அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்

# ஸஹீஹுல் புகாரி

## (கருத்துக்களின் தமிழ் மொழிபெயர்ப்பு)

## 7 பாகமும் இணைந்தது

# அத்தியாய அட்டவணை

# பாகம் 1

## அத்தியாயம் - 1 - இறைச்செய்தியின் ஆரம்பம்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

### நபி(ஸல்) அவர்களுக்கு இறைச்செய்தியின் வருகை எவ்வாறு துவங்கியது?

ஹதீஸ் 1. செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன. ஒவ்வொருவருக்கும் அவர் எண்ணியதே கிடைக்கிறது. ஒருவரின் ஹிஜ்ரத் (துறத்தல்) உலகத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தால் அதையே அவர் அடைவார். ஒரு பெண்ணை நோக்கமாகக் கொண்டால் அவளை மணப்பார். எனவே, ஒருவரின் ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டதோ அதுவாகவே அமையும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உமர் இப்னு கத்தாப்(ரலி) மேடையிலிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 2. ஹாரிஸ் இப்னு ஹிஷாம்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம், நபி அவர்களே! தங்களுக்கு இறைச்செய்தி எவ்வாறு வருகிறது? எனக் கேட்டதற்கு, சில வேளைகளில் அது மணி ஓசையைப் போன்று என்னிடம் வரும். அவ்வாறு வருவது எனக்கு மிகக் கடினமாக இருக்கும். அவர் (வானவர்) கூறியதை நான் நினைவுபடுத்திய நிலையில் அவர் என்னைவிட்டுப் பிரிந்துவிடுவார். மேலும் சில வேளைகளில் அ(வ்வான)வர் ஓர் ஆடவர் போன்று எனக்குக் காட்சியளித்து, என்னுடன் உரையாடுவார். அப்போது அவர் கூறுவதை நினைவிலிருத்திக் கொள்வேன் என்று நபி(ஸல்) கூறினார்கள் என ஆயிஷா(ரலி) குறிப்பிட்டார். மேலும்,
கடும் குளிரான நாள்களில் நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) இறங்குவதை கண்டேன். அவர் (வானவர்) நபி(ஸல்) அவர்களைவிட்டு விலகிச் செல்லும்போது (குளிரிலும்) அவர்களின் நெற்றியிலிருந்து வியர்வை சொட்டும் என ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3. ஆயிஷா(ரலி) கூறினார். நபி(ஸல்) அவர்களுக்குத் துவக்கத்தில் இறைச்செய்தி தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகளிலேயே வந்தது. அப்போது அவர்கள் எந்தக் கனவு கண்டாலும் அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போன்று தெளிவாக இருக்கும். பின்னர் தனிமையிலிருப்பது அவர்களின் விருப்பமாயிற்று. ஹிரா குகையில் அவர்கள் தனித்திருந்தார்கள். தங்களின் குடும்பத்தாரிடம் திரும்பி வருவதற்கு முன் பல இரவுகள் (அங்கே தங்கியிருந்து) வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டிருந்தார்கள். அந்த நாள்களுக்கான உணவைத் தம்மோடு கொண்டு செல்வார்கள். (அது முடிந்ததும்) மீண்டும் (தங்களின் துணைவியார்) கதீஜா(ரலி) அவர்களிடம் திரும்புவார்கள். அதே போன்று பல நாள்களுக்குரிய உணவைக் கொண்டு செல்வார்கள். இந்த நிலை ஹிரா குகையில் அவர்களுக்கு சத்தியம் வரும் வரை நீடித்தது. (ஒருநாள்) ஒரு வானவர் அவர்களிடம் வந்து, ஓதும் என்றார். அதற்கவர்கள் நான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்றார்கள். நபி(ஸல்) அவர்கள் இந்நிலையைப் பின் வருமாறு விளக்கினார்கள். அவர் என்னைப் பிடித்து நான் சிரமப்படும் அளவிற்கு இறுகக்கட்டியணைத்தார். பிறகு என்னைவிட்டுவிட்டு மீண்டும் ஓதும் என்றார். (அப்போதும்) நான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்றேன். இரண்டாவது முறையும் அவர் என்னைப் பிடித்து நான் சிரமப்படும் அளவிற்கு இறுகக்கட்டி அணைத்து என்னை விட்டுவிட்டு மீண்டும் ஓதும் என்றார். (அப்போதும்) நான் ஓதத் தெரிந்தவனில்லையே! என்றேன். அவர் என்னைப் பிடித்து மூன்றாவது முறையும் கட்டி அணைத்து விட்டுவிட்டு, படைத்தவனாகிய உம்முடைய இரட்சகனின் திருப்பெயரால் ஓதும்! அவனே மனிதனை அலக்கில் (கருவளர்ச்சியின் ஆரம்பநிலை) இருந்து

படைத்தான். ஓதும்! உம்முடைய இரட்சகன் கண்ணியம் மிக்கவன் என்றார். மேலும், ஆயிஷா (ரலி) கூறினார். பிறகு இதயம் படபடத்தவர்களாக அந்த வசனங்களுடன் (தம் துணைவியார்) குவைலிதின் மகள் கதீஜா (ரலி) விடம் நடந்த செய்தியைத் தெரிவித்துவிட்டுத் தமக்கு ஏதும் நேர்ந்து விடுமோ என தாம் உறுதியாக அஞ்சுவதாகவும் கூறினார்கள். அப்போது கதீஜா (ரலி) அவர்கள் அவ்வாறு கூறாதீர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்தமாட்டான் (ஏனெனில்) தாங்கள் உறவினர்களுடன் இணங்கி இருக்கிறீர்கள் (சிரமப்படுவோரின்) சுமைகளைத் தாங்கள் சுமந்து கொள்கிறீர்கள் வறியவர்களுக்காக உழைக்கிறீர்கள் விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள் உண்மையான சோதனைகளில் (ஆட்பட்டோருக்கு) உதவி புரிகிறீர்கள் என்றார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்களைத் தம் தந்தையின் உடன் பிறந்தவரான நவ்ஃபல் என்பவரின் மகன் வராகவிடம் அழைத்துச் சென்றார்கள். நவ்ஃபல், அசது என்பவரின் மகனும் அசது, அப்துல் உஸ்ஸாவின் மகனுமாவார்.
வராக அறியாமைக் காலத்திலேயே கிறித்தவ சமயத்தைத் தழுவியவராக இருந்தார். மேலும் அவர் ஹீப்ரு மொழியில் எழுதத் தெரிந்தவராகவும் இஞ்ஜீல் வேதத்தை, ஹீப்ரு மொழியில் அவர் எழுத வேண்டும் என்று அல்லாஹ் நாடிய அளவுக்கு எழுதுகிறவராகவும் கண் பார்வையற்ற பெரும் வயோதிகராகவும் இருந்தார். அவரிடம் கதீஜா (ரலி), என் தந்தையின் சகோதரன் மகனே! உம் சகோதரன் மகன் கூறுவதைக் கேளுங்கள் என்றார்கள். அப்போது வரகா நபி(ஸல்) அவர்களிடம், என் சகோதரர் மகனே! நீர் எதைக் கண்டீர்? எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள் தாம் பார்த்த செய்திகளை அவரிடம் கூறினார்கள். (அதைக் கேட்டதும்) வரகா, (நபி(ஸல்) அவர்களிடம்) இவர்தாம், மூஸாவிடம் இறைவன் அனுப்பிய நாமூஸ் (ஜிப்ரீல்) ஆவார் என்று கூறிவிட்டு, உம்முடைய சமூகத்தார் உம்மை உம்முடைய நாட்டிலிருந்து வெளியேற்றும் சமயத்தில் நான் உயிருடன் திடகாத்திரமான இளைஞனாக இருந்திருக்க வேண்டுமே! என்றும் அங்கலாய்த்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள், மக்கள் என்னை வெளியேற்றவா போகிறார்கள்? என்று கேட்டார்கள். அதற்கவர்கள் ஆம்! நீர் கொண்டு வந்திருப்பது போன்ற சத்தியத்தைக் கொண்டு வந்த எந்த மனிதரும் (மக்களால்) பகைத்துக் கொள்ளப்படாமல் இருந்ததில்லை. (நீர் வெளியேற்றப்படும்) அந்நாளை நான் அடைந்தால் உமக்குப் பலமான உதவுவேன் என்று கூறினார். அதன்பின்னர் வரகா நீண்ட நாள் வாழாமல் இறந்துவிட்டார். இந்த முதற் செய்தியுடன் வஹீ (இறைச்செய்தி) சிறிது காலம் நின்று போயிற்று.

ஹதீஸ் 4. நான் நடந்து சென்றுகொண்டிருந்தபோது வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு என் பார்வையை உயர்த்திப் பார்த்தேன். அப்போது ஹிரா குகையில் என்னிடம் வந்த அதே வானவர் வானத்துக்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருக்கக் கண்டு அச்சமுற்றேன். (வீட்டிற்குத்) திரும்பி வந்து (கதீஜாவிடம்) என்னைப் போர்த்துங்கள் என்றேன். அப்போது, போர்வை போர்த்தியவரே எழும்! (மக்களுக்கு) எச்சரிக்கை செய்யும்! (திருக்குர்ஆன் 74:01) என்பது தொடங்கி அசுத்தங்களைவிட்டு ஒதுங்கி விடும்! என்பது வரை ஐந்து வசனங்களை இறைவன் அருளினான் என் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என வஹீ (இறைச்செய்தி) நின்று போயிருந்த இடைக் காலத்தைப் பற்றிக் கூறும்போது ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள். அதன் பின்னர் வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அடிக்கடி தொடர்ந்து வரலாயிற்று என்றும் அவர் கூறினார்.

ஹதீஸ் 5. அவரசப்பட்டு உங்கள் நாவை அசைக்காதீர்கள் (திருக்குர்ஆன் 75:16) என்ற திருக்குர்ஆன் வசனத்தை இப்னு அப்பாஸ்(ரலி) விளக்கும்போது, நபி(ஸல்) அவர்களுக்கு இறைச்செய்தி அருளப்படும்போது மிகுந்த சிரமம் ஏற்பட்டது. இது அவர்களின் உதடுகளை அவர்கள் அசைப்பதன் மூலம் புலனாயிற்று. வஹீ (இறைச்செய்தி)யை (மனனம் செய்ய) அவசரப்பட்டு உங்களுடைய நாவை அசைக்காதீர்கள். ஏனெனில் அதனை (உங்கள் நெஞ்சில்) ஒன்று சேர்ப்பதும் (உங்கள் நெஞ்சில்) ஒன்று சேர்ப்பதும் (உங்கள் நாவின் மூலம்) ஓத வைப்பதும் நம்முடைய பொறுப்பாகும். எனவே நாம் அதனைச் செவி தாழ்த்திக் கேட்பீராக - பின்னர் நீர் அதனை ஓதும்படிச் செய்வதும் நம்முடைய பொறுப்பாகும் (திருக்குர்ஆன் 75:16-19) என்ற வசனங்களை அப்போது அல்லாஹ் அருளினான் என்று கூறிவிட்டு, நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு உதடுகளை அசைத்தது போன்று அசைக்கிறேன் என்று சொல்லித் தங்கள் இரண்டு உதடுகளையும் இப்னு அப்பாஸ்(ரலி) அசைத்துக் காட்டினார்கள்.
இந்த ஹதீஸை இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்து ஸயீது இப்னு ஜுபைர் அறிவித்தபோது, இப்னு அப்பாஸ்(ரலி) தங்களின் இரண்டு உதடுகளையும் அசைத்தது போன்று அசைக்கிறேன் என்று கூறி அசைத்துக் காட்டினார்கள்.
மேலும், இப்னு அப்பாஸ் தொடர்ந்து,
அதன் பின்னர் நபி(ஸல்) அவர்களிடம் ஜிப்ரயீல்(அலை) வரும்போது (அவர்கள் ஓதுவதை) செவி தாழ்த்திக் கேட்பதை வழக்கமாக்கினார்கள். ஜிப்ரீல் சென்றதும் அவர்கள் ஓதியது போன்றே நபி(ஸல்) அவர்களும் ஓதினார்கள் என ஸயீது இப்னு ஜுபைர் கூறினார்.

ஹதீஸ் 6. நபி(ஸல்) அவர்கள் மனிதர்களில் மிகப் பெரும் கொடையாளியாகத் திகழ்ந்தார்கள். (சாதாரண நாள்களை விட) ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களை ரமழான் மாதத்தில் சந்திக்கும்போது நபி(ஸல்) மிக அதிகமாக வாரி வழங்கும் கொடையாளியாகத் திகழ்ந்தார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள் ரமழான் மாதத்தின் ஒவ்வொரு இரவிலும் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்து (அது வரை) அருளப்பட்டிருந்த) குர்ஆனை நினைவுபடுத்துவார்கள். இருவருமாகத் திருக்குர்ஆனை ஓதும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். தொடர்ந்து வீசும் காற்றை விட (வேகமாக) நபி(ஸல்) அவர்கள் நல்ல காரியங்களில் மிக அதிகமாக வாரி வழங்கும் கொடையாளியாகவே திகழ்ந்தார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 7. (குறைஷிகளின் தலைவர்) அபூ சுஃப்யானிடமும் குறைஷிகளில் இறைமறுப்பாளர்களிடமும் நபி(ஸல்) அவர்கள் (ஹுதைபிய்யா என்ற இடத்தில்) ஓர் உடன்படிக்கை செய்திருந்தார்கள். அச்சமயத்தில் (குறைஷிகளில் சிலர்) ஒட்டகங்களில் வியாபாரிகளாக சிரியான நாட்டிற்குப் போயிருந்தார்கள். அந்தக் குறைஷி வணிகக் கூட்டத்தில் ஒருவராகச் சென்றிருந்த அபூ சுஃப்யானை (ரோமபுரி மன்னர்) ஹெர்குலிஸ், பைத்துல் முகத்தஸ் ஆலயத்தில் முகாமிட்டிருந்த தம்மிடம் அழைத்து வரும்படித் தூதரை அனுப்பினார். அந்தத் தூதர்கள் அபூ சுஃப்யானிடம் வந்து சேர்ந்தார்கள். ரோமாபுரியின் அரசப் பிரதிநிதிகள் சூழ அமர்ந்திருக்கும் தம் அவைக்கு அவர்களை அழைத்திருந்தார். மன்னர் தம் மொழி பெயர்ப்பாளரையும் அழைத்து வரக்கூறினார்.

அபூ சுஃப்யான் இது குறித்துக் கூறும்போது, (எங்களிடம்) மன்னர் தம்மை இறைவனின் திருத்தூதர் என்று கருதிக் கொண்டிருக்கும் அம்மனிதருக்கு உங்களில் மிக நெருங்கிய உறவினர் யார்? எனக் கேட்டார். நானே அவருக்கு மிக நெருங்கிய உறவினன் எனக் கூறினேன். உடனே மன்னர், (தம் அதிகாரியிடம்) அவரை என் அருகே அழைத்து வாருங்கள் அவருடன் வந்திருப்பவர்களையும் என் பக்கத்தில் கொண்டு வந்து அவருக்குப் பின்னால்

நிறுத்துங்கள் என்று ஆணையிட்டார். பின்னர் தம் மொழி பெயர்ப்பாளரிடம், நான் அந்த மனிதரைப் பற்றி (அபூ சுஃப்யானிகிய) இவரிடம் கேட்பேன். இவர் என்னிடம் பொய்யுரைத்தால் அதை என்னிடம் கூறி விட வேண்டும் என்று அவருடன் வந்திருப்பவர்களிடம் மொழி பெயர்த்துச் சொல் என ஆணையிட்டார். நான் பொய் கூறினார்கள் என இவர்கள் சொல்லி விடுவார்களோ என்ற நாணம் மாத்திரம் அப்போது எனக்கு இல்லை என்றால் இறைவன் மீது ஆணையாக நபி(ஸல்) அவர்களைப் பற்றிப் பொய்யுரைத்திருப்பேன்.

பிறகு மன்னர் என்னிடம் கேட்ட முதல் கேள்வி, உங்களில் அவரின் குலம் எத்தகையது? அதற்கு, அவர் எங்களில் சிறந்த குலத்தைச் சார்ந்தவர் என்றேன். இவருக்கு முன்னர் உங்களில் யாரேனும் எப்போதாவது இந்த வாதத்தைச் செய்ததுண்டா? என்று கேட்டார். இல்லை என்றேன். இவரின் முன்னோர்களில், எவரேனும் மன்னர்களாக இருந்திருக்கிறார்களா? என்றார். இல்லை என்றேன். அவரைப் பின்பற்றுவோர் மக்களில் சிறப்பு வாய்ந்தவர்களா? அல்லது சாமானியர்களா? என்றார். மக்களில் சாமானியர்கள் தாம் என்றேன். அவரைப் பின்பற்றுவோர் அதிகரிக்கின்றனரா? அல்லது குறைகின்றனரா? என்று வினவினார். அவர்கள் அதிகரித்துச் செல்கின்றனர் என்றேன். அவரின் மார்க்கத்தில் நுழைந்த பின் அதன் மீது அதிருப்தியுற்று யாரேனும் மதம் மாறியிருக்கின்றனரா? என்று கேட்டார். நான் இல்லை என்றேன். அவர் இவ்வாறு வாதிப்பதற்கு முன் அவர் பொய் சொல்லக் கூடியவர் என்று எப்போதாவது நீங்கள் சந்தேகித்ததுண்டா? என்றார். நான் இல்லை என்றேன். அவர் வாக்கு மீறியது உண்டா? என்றார். (இதுவரை) இல்லை என்று சொல்லிவிட்டு, நாங்கள் இப்போது அவருடன் ஓர் உடன் படிக்கை செய்துள்ளோம். அதில் அவர் எப்படி நடந்து கொள்ளப் போகிறார் என்பது எங்களுக்குத் தெரியாது என்றேன். அப்போதைக்கு (நபி(ஸல்) மீது குறை கற்பிக்க) அந்த வார்த்தையைவிட்டால் வேறு எந்த வார்த்தையையும் என்னுடைய பதிலில் நுழைத்திட எனக்கு வாய்ப்பில்லை! அவருடன் நீங்கள் போரிட்டிருக்கிறீர்களா? என்று கேட்டார். ஆம் என்றேன். அவருடன் நீங்கள் நடத்திய போரின் முடிவுகள் எவ்வாறிருந்தன? என்றார். எங்களுக்கும் அவருக்குமிடையே வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வந்திருக்கின்றன. சில சமயம் அவர் எங்களை வென்றிருக்கிறார் சில சமயம் நாங்கள் அவரை வென்றிருக்கிறோம் என்றேன். அவர் உங்களுக்கு என்னதான் போதிக்கிறார்? என்று கேட்டார். அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள் அவனுக்கு எதனையும் இணையாக்காதீர்கள் உங்கள் முன்னோர்கள் கூறி வந்தவற்றையெல்லாம்விட்டுவிடுங்கள் என்கிறார். தொழுகை, உண்மை, கற்பு நெறி, உறவினர்களுடன் இணங்கி இருத்தல் போன்ற பண்புகளை எங்களுக்கு ஏவுகிறார் என்றேன்.

மன்னர் தம் மொழி பெயர்ப்பாளரிடம் மொழி பெயர்க்கச் சொன்னதாவது் அவரின் குலத்தைப் பற்றி உம்மிடம் விசாரித்தேன். அதற்கு நீர் உங்களில் அவர் உயர் குலத்தைச் சேர்ந்தவர் தாம் என்று குறிப்பிட்டீர். எல்லா நபிகளும் அப்படித்தான். அவர்களின் சமூகத்திலுள்ள உயர் குலத்தில்தான் அனுப்பப்பட்டுள்ளார்கள். உங்களில் யாரேனும் இந்த வாதத்தை இதற்கு முன் செய்ததுண்டா? என்று கேட்டேன். அதற்கு நீர் இல்லை என்று குறிப்பிட்டீர். இவருக்கு முன்னர் யாரேனும் இவ்வாதத்தைச் செய்திருந்தால், முன்னர் செய்யப்பட்டு வந்த ஒரு வாதத்தைப் பின்பற்றித் தான் இவரும் செய்கிறார் என்று கூறியிருப்பேன். இவரின் முன்னோர்களில் யாரேனும் மன்னராக இருந்திருக்கிறார்களா என்று உம்மிடம் நான் கேட்டபோது, இல்லை என்று சொன்னீர். இவரின் முன்னோர்களில் எவரேனும் மன்னராக இருந்திருந்தால், தம் முன்னோரின் ஆட்சியை அடைய விரும்பும் ஒருவர் இவர் என்று சொல்லியிருப்பேன். இவ்வாதத்தைச் செய்வதற்கு முன் அவர் பொய் சொல்வதாக நீங்கள் அவரைச் சந்தேகித்ததுண்டா? என்று உம்மிடம் கேட்டேன். அதற்கு நீர் இல்லை என்று குறிப்பிட்டீர். மக்களிடம் பொய் சொல்லத்

துணியாத ஒருவர் இறைவன் முது பொய்யுரைக்கத் துணியமாட்டார் என்றே உறுதியாக நம்புகிறேன். மக்களில் சிறப்பு வாய்ந்தவர்கள் அவரைப் பின்பற்றுகின்றனரா? அல்லது சாமானியர்களா? என்று கேட்டேன். சாமானிய மக்கள் தாம் அவரைப் பின்பற்றுகின்றனர் என்று குறிப்பிட்டீர். அப்படிப்பட்டவர்கள் தாம் நபிகளை (துவக்கத்தில்) பின்பற்றுவோராய் இருந்திருக்கிறார்கள். அவரைப் பின்பற்றுகிறவர்கள் அதிகரிக்கின்றனரா அல்லது குறைகின்றனரா என்றும் உம்மிடம் கேட்டேன். அவர்கள் அதிகரித்துச் செல்கின்றனர் என்று குறிப்பிட்டீர். இறை நம்பிக்கை, நினைவு பெறும் வரை அப்படித்தான் (வளர்ந்து கொண்டே) இருக்கும். அவரின் மார்க்கத்தில் நுழைந்த பின்னர் யாரேனும் அம்மார்க்கத்தின் மீது அதிருப்தியடைந்து மதம் மாறி இருக்கின்றனரா? என்று உம்மிடம் கேட்டேன். நீர் இல்லை என்று குறிப்பிட்டீர். அப்படித்தான் இதயத்தில் நுழைந்த இறை நம்பிக்கையின் எழில் (உறுதியானது). அவர் (எப்போதேனும்) வாக்கு மீறியதுண்டா? என உம்மிடம் நான் கேட்டபோது, இல்லை என்றீர். (இறைவனின்) திருத்தூதர்கள் அப்படித்தான் வாக்கு மீற மாட்டார்கள். அவர் உங்களுக்கு எதைக் கட்டளையிடுகிறார்? என்று உம்மிடம் கேட்டேன். அல்லாஹ்வையே வணங்க வேண்டும் என்றும் அவனுக்கு எதனையும் இணையாக்கக் கூடாதென்றும் உங்களுக்கு அவர் ஏவுவதாகவும் சிலை வணக்கங்களிலிருந்து அவர் உங்களைத் தடுப்பதாகவும் தொழுகை, உண்மை, கற்புநெறி ஆகியவற்றை உங்களுக்கு அவர் ஏவுவதாகவும் நீர் கூறினீர். நீர் சொல்லியது அனைத்தும் உண்மையானால் (ஒரு காலத்தில்) என்னுடைய இரண்டு பாதங்களுக்குமுள்ள இந்த இடத்தையும் அவர் ஆளுவார். (இப்படிப்பட்ட) ஓர் நபி (வெகு விரைவில்) தோன்றுவார் என்று முன்பே அறிந்திருந்தேன். ஆனால் அவர் (அரபிகளாகிய) உங்களிலிருந்து தாம் தோன்றுவார் என்று நான் கருதியிருக்கவில்லை. அவரைச் சென்றடையும் வழியை நான் அறிந்திருந்தால் மிகுந்த சிரமப்பட்டாவது அவரைச் சந்தித்திருப்பேன். (இப்போது) நான் அவரருகே இருந்தால் அவரின் பாதங்களைக் கழுவி விடுவேன்.

புஸ்ராவில் ஆளுநர் மூலம் ஹெர்குலிஸ் மன்னரிடம் கொடுப்பதற்காக திஹ்யா வசம் நபி(ஸல்) அவர்கள் கொடுத்தனுப்பிய கடிதத்தைத் தம்மிடம் கொடுக்குமாறு மன்னர் ஆணையிட்டார். ஆளுநர் அதனை மன்னரிடம் ஒப்படைத்தார். மன்னர் அதனைப் படித்துப் பார்த்தார். அந்தக் கடிதத்தில்,
அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமான முஹம்மத் என்பார், ரோமாபுரிச் சக்கரவர்த்தி ஹெர்குலிஸுக்கு எழுதிக் கொள்வது: நேர் வழியைப் பின்பற்றுவோரின் மீது சாந்தி நிலவட்டுமாக! நிற்க, இஸ்லாத்தைத் தழுவுமாறு உமக்கு அழைப்பு விடுக்கிறேன்! நீர் இஸ்லாத்தை ஏற்பீராக! நீர் ஈடேற்றம் பெற்றிடுவீர்! அல்லாஹ் உமக்கு இரண்டு மடங்கு சன்மானம் வழங்குவான். (இவ்வழைப்பை) நீர் புறக்கணித்தால் (உம்முடைய) குடி மக்களின் பாவமும் உம்மைச் சாரும். வேதத்தை உடையவர்களே! நாம் அல்லாஹ்வைத் தவிர (வேறு எவரையும்) வணங்கக் கூடாது அவனுக்கு எதனையும் இணையாக்கக் கூடாது அல்லாஹ்வைவிட்டுவிட்டு நம்மில் சிலர் சிலரை நம்முடைய இரட்சகனாக ஆக்கிக் கொள்ளக் கூடாது என்ற எங்களுக்கு உங்களுக்கும் பொதுவான ஒரு கொள்கையை நோக்கி வந்து விடுங்கள். (இக் கொள்கையை) நீங்கள் (ஏற்க மறுத்து) புறக்கணித்தால், நாங்கள் நிச்சயாமாக (அந்த ஒரே இறைவனுக்குக் கீழ்ப்படிந்த) முஸ்லிம்கள் என்பதற்கு நீங்களே சாட்சிகளாக ஆகி விடுங்கள்
என்று கூறப்பட்டிருந்தது. மன்னர் தாம் சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லி, நபி(ஸல்) அவர்களின் கடிதத்தைப் படித்து முடித்ததும் அங்கே ஒரே கூச்சலும் குழப்பமும் மிகுந்து குரல்கள் உயர்ந்து கொண்டே போயின. நாங்கள் அங்கிருந்து வெளியேற்றப்பட்டோம். அப்போது என்னுடன் வந்தவர்களிடம், ரோமர்களின் மன்னன் அவரைக் கண்டு அஞ்சும் அளவுக்கு

முகம்மதின் காரியம் இப்போது மேலோங்கிவிட்டது என்று கூறினேன். (அப்போதிருந்தே) அவர்கள் தாம் வெற்றியடைவார்கள் என்ற நம்பிக்கையில் திளைத்தவனாகவே இருந்து வந்தேன். முடிவில் அல்லாஹ் எனக்குள்ளேயும் இஸ்லாத்தை நுழைத்துவிட்டான்.
(எங்கள் மன்னர் அழைத்த காரணம் பற்றி) சிரியாவிலுள்ள கிறித்தவர்களின் தலைமைக் குருவும் ரோமாபுரியின் மாமன்னர் ஹெர்குஸிலின் அருமை நண்பரும் அல்அக்ஸா ஆலயத்தின் நிர்வாகியுமான இப்னு நாத்தூர் என்பார், கூறினார்.
மன்னர் அல் அக்ஸா ஆலயத்திற்கு வருகை தந்தபோது ஒரு நாள் கவலை தோய்ந்த முகத்தினராகக் காணப்பட்டார். அப்போது அவரின் அரசவைப் பிரதானிகளில் சிலர் மன்னரிடம் தங்களின் கவலை தோய்ந்த இந்தத் தோற்றம் எங்களுக்குக் கவலையைத் தருகிறது என்று கூறினார்கள். ஹெர்குலிஸ் மன்னர் விண் கோள்களை ஆய்ந்து சோதிடம் சொல்லுவதில் வல்ல வராயிருந்தார். மன்னரின் கவலைக்குக் காரணமென்னவென்று வினவியவர்களிடம் அவர், இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்து கொண்டிருந்தபோது விருத்த சேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக அறிந்தேன் என்று கூறிவிட்டு, அறிந்தேன் என்று கூறிவிட்டு, இக்கால மக்களில் விருத்தசேதனம் செய்து கொள்ளும் வழக்கமுடையவர்கள் யார்? என வினவினார். யூதர்களைத் தவிர வேறு யாரும் விருத்த சேதனம் செய்து கொள்வதில்லை அவர்களைப் பற்றி நீங்கள் கவலைப்படாதீர்கள் உங்கள் ஆட்சிக்குட்பட்ட நகரங்களுக்கெல்லாம் எழுதி அங்குள்ள யூதர்களைக் கொன்று விடுமாறு கட்டளையிடுங்கள் என்றார்கள். இவ்வாறு அவர்கள் உரையாடிக் கொண்டிருக்கும் போதே நபி(ஸல்) அவர்களைப் பற்றிய தகவல் ஒன்றைக் கொண்டு வந்திருக்கும் ஒரு மனிதரை கஸ்ஸான் என்ற கோத்திரத்தின் குறுநில மன்னர் ஹெர்குலிஸிடம் அனுப்பியிருந்தார். அம்மனிதர் அவரின் முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டார். அவரிடம் தகவல்களைப் பெற்ற ஹெர்குலிஸ், இவரை அழைத்துச் சென்று இவர் விருத்த சேதனம் செய்திருக்கிறாரா? அல்லவா? சோதியுங்கள் என்று ஆணையிட்டார். அவரை அழைத்துச் சென்று பரிசோதித்தவர்கள் அவர் விருத்த சேதனம் செய்திருப்பதாகக் கூறினார்கள். அவரிடம் அரபிகளின் வழக்கம் பற்றி மன்னர் விசாரித்தபோது, அவர்கள் விருத்த சேதனம் செய்து கொள்ளும் வழக்கமுடையவர்கள் தாம் என்றார். உடனே ஹெர்குலிஸ், அவர் தாம் - (முஹம்மத்(ஸல்) இக்காலத்தின் மன்னராவார் அவர் தோன்றிவிட்டார் என்று கூறினார். பின்னர் ரோமாபுரியிலிருந்த, தமக்கு நிகரான கல்வியறிவும் ஞானமும் பெற்றிருந்த தம் நண்பர் ஒருவருக்கு ஒரு கடிதம் எழுதிவிட்டு ஹிம்ஸ் என்ற நகரத்திற்குப் பயணமானார். அவர் ஹிம் ஸுக்குப் போய் சேர்வதற்குள் பதில் கடிதம் வந்தது. அக்கடிதத்தில், ஹெர்குலிஸின் கருத்துப்படியே, நபீன் வருகை பற்றியும் அத்தூதர் இவர் தாம் என்றும் எழுதப்பட்டிருந்தது.

(இதன் பிறகே மன்னர் எங்களை அவரின் அவைக்கு அழைத்தார். எங்களைச் சந்தித்த பின் நடந்ததாவது:)

ஹிம்ஸ் நகரிலிருந்த தம் கோட்டை ஒன்றிற்கு வருமாறு ரோமாபுரியின் பிரமுகர்கள் அனைவருக்கும் மன்னர் ஆணையிட்டார். (அவர்கள் வந்து சேர்ந்ததும்) அந்தக் கோட்டையின் வாயில்களை எல்லாம் பூட்டி விடும்படி உத்தரவிட்டார். கோட்டையின் வாயில்கள் அடைக்கப்பட்டன. பின்னர் மன்னர் அப்பிரமுகர்கள் முன் தோன்றி ரோமா புரியினரே! நீங்கள் வெற்றியும் நேர்வழியும் பெற வேண்டும் என்றும் உங்கள் ஆட்சி நிலைத்திருக்க வேண்டும் என்றும் நீங்கள் விரும்பினால் இந்த இறைத்தூதரை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று கூறினார். (இதைக் கேட்டவுடனே) காட்டுக் கழுதைகள் வெருண்டோடுவதைப் போன்று கோட்டை வாசல்களை நோக்கி அவர்கள் வெருண்டோடினார்கள். வாசல் அருகில் சென்றதும் அவை தாளிடப்பட்டிருப்பதை அறிந்தார்கள். அவர்கள் வெருண்டோடியதையும் நபி(ஸல்) அவர்களின் மீது

நம்பிக்கை கொள்ள மாட்டார்கள் என்பதையும் மன்னர் பார்த்ததும் அவர்களை என்னிடம் திருப்பியனுப்புங்கள் என்று (காவலர்களுக்குக்) கட்டளையிட்டார். (அவர்கள் திரும்பி வந்ததும்) நீங்கள் உங்கள் மதத்தில் எவ்வளவு உறுதியுடன் இருக்கிறீர்கள் என்பதைச் சோதிப்பதற்காகவே நான் சற்று முன்னர் கூறிய வார்த்தைகளை கூறினேன். (இப்போது உங்கள் உறுதியை) சந்தேகமற அறிந்து கொண்டேன் என்று அவர் கூறியதும், அனைவரும் அவருக்குச் சிரம் பணிந்தனர். அவரைப் பற்றித் திருப்தியுற்றார்கள். ஹெர்குலிஸ் மன்னரைப் பற்றிக் கிடைத்த கடைசித் தகவல் இதுவாகவே இருக்கிறது என இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

# அத்தியாயம் - 2 - ஈமான் எனும் இறைநம்பிக்கை

### ஐந்து காரியங்களின் மீது இஸ்லாம் நிறுவப்பட்டுள்ளது

ஹதீஸ் 8. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வையன்றி வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் அவர்கள் நபி என்றும் உறுதியாக நம்புதல், தொழுகையை நிலை நிறுத்துதல், ஸகாத்து வழங்குதல், ஹஜ் செய்தல், ரமாலானில் நோன்பு நோற்றல், ஆகிய ஐந்து காரியங்களின் மீது இஸ்லாம் நிறுவப்பட்டுள்ளது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### ஈமான் எனும் இறைநம்பிக்கையின் காரியங்கள்.

ஹதீஸ் 9. ஈமான் எனும் இறைநம்பிக்கை அறுபதுக்கும் மேற்பட்ட கிளைகளாக உள்ளது. வெட்கம் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஒரு கிளையாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### பிற முஸ்லிம்களுக்குத் தம் நாவினாலும் கையினாலும் தொல்லை தராதவரே முஸ்லிம்

ஹதீஸ் 10. "பிற முஸ்லிம்கள் எவருடைய நாவு, கையின் தொல்லைகளிலிருந்து பாதுகாப்புப் பெறுகிறார்களோ அவரே முஸ்லிமாவார். மேலும் அல்லாஹ்வால் தடுக்கப்பட்டவற்றைவிட்டு ஒதுங்கியவரே முஹாஜிர் எனும் துறந்தவராவார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### இஸ்லாத்தில் சிறந்தது எது?

ஹதீஸ் 11. நபி அவர்களே! இஸ்லாத்தில் சிறந்தது எது? என்று நபித்தோழர்கள் கேட்டதற்கு எவருடைய நாவிலிருந்தும் கரத்திலிருந்தும் பிற முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருக்கிறாரோ அவரின் செயலே சிறந்தது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### உணவளிப்பதும் இஸ்லாத்தின் ஓரம்சம்

ஹதீஸ் 12. ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தில் சிறந்தது எது எனக் கேட்டதற்கு, (பசித்தோருக்கு) நீர் உணவளிப்பதும் நீர் அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் ஸலாம் கூறுவதுமாகும் என்றார்கள் என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### ஒருவர் தமக்கு விரும்புவதையே தம் சகோதரனுக்கும் விரும்புவது ஈமான் எனும் நம்பிக்கையைச் சேர்ந்ததே

ஹதீஸ் 13. உங்களில் ஒருவர் தமக்கு விரும்புவதையே தம் சகோதரனுக்கும் விரும்பும் வரை (முழுமையான) இறைநம்பிக்கையாளராக மாட்டார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### நபி(ஸல்) அவர்களை நேசிப்பது ஈமான் எனும் இறைநம்பிக்கையில் ஓரம்சம்.

ஹதீஸ் 14. என்னுடைய உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக, உங்களில் ஒருவருக்கு அவரின் தந்தையையும் அவரின் மக்களையும் விட நான் மிக்க அன்பானவராகும் வரை அவர் ஈமான் எனும் இறைநம்பிக்கை உள்ளவராக மாட்டார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 15. உங்களில் ஒருவருக்கு அவரின் தந்தை, அவரின் குழந்தைகள், ஏனைய மக்கள் அனைவரையும் விட நான் மிக அன்பானவராகும் வரை அவர் (உண்மையான) இறைநம்பிக்கையாளராக மாட்டார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### ஈமான் எனும் இறைநம்பிக்கையின் சுவை.

ஹதீஸ் 16. எவரிடம் மூன்று தன்மைகள் அமைந்துவிட்டனவோ அவர் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் சுவையை உணர்ந்தவராவார். (அவை) அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒருவருக்கு மற்றெதையும் விட அதிக நேசத்திற்குரிய வராவது, ஒருவர் மற்றொருவரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது, நெருப்பில் வீசப்படுவதை வெறுப்பது போல் இறை நிராகரிப்புக்குத் திரும்பிச் செல்வதை வெறுப்பது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### அன்சாரிகளை நேசிப்பது ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 17. ஈமான் எனும் இறைநம்பிக்கையின் அடையாளம் அன்சாரிகளை நேசிப்பதாகும். நயவஞ்சகத்தின் அடையாளம் அன்சாரிகளை வெறுப்பதாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 18. அல்லாஹ்விற்கு இணையாக எதனையும் கருதுவதில்லை திருடுவதில்லை விபச்சாரம் செய்வதில்லை உங்கள் குழந்தைகளைக் கொல்வதில்லை நிகழ்காலத்திலும் வருங்காலத்திலும் (யார் மீதும்) அவதூறு கூறுவதில்லை எந்த நல்ல காரியத்திலும் (எனக்கு) மாறு செய்வதில்லை என்று என்னிடம் ஒப்பந்தம் செய்யுங்கள். உங்களில், (அவற்றை) நிறைவேற்றுகிறவரின் நற்கூலி அல்லாஹ்விடம் உள்ளது. மேற்கூறப்பட்ட (குற்றங்களில்) எதையாவது ஒருவர் செய்து, (அதற்காக) இவ்வுலகில் தண்டிக்கப்பட்டால் அது அவருக்குப் பரிகாரமாம் விடும். மேற்கூறப்பட்டவற்றில் எதையாவது ஒருவர் செய்து, பின்னர் அல்லாஹ் அதனை (யாருக்கும் தெரியாமல்) மறைத்துவிட்டால் அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் இருக்கிறார். அவன் நாடினால் அவரை மன்னிப்பான் அவன் நாடினால் அவரைத் தண்டிப்பான் நபி(ஸல்) அவர்கள் தம்மைச் சுற்றித் தோழர்களில் ஒரு குழு அமர்ந்திருக்கும்போது கூறினார்கள்.
உடனே நாங்களும் அவ்வாறு நடப்போம் என்று அவர்களிடம் உறுதிமொழி எடுத்தோம் என பத்ருப் போரில் பங்கெடுத்தவரும் அகபா உடன்பாடு நடந்த இரவில் பங்கெடுத்த தலைவர்களில் ஒருவருமான உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### குழப்பங்களைவிட்டு ஒதுங்கிவிடுவது மார்க்கத்தின் ஓரம்சம்.

ஹதீஸ் 19. ஒரு காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. அன்று முஸ்லிமின் செல்வங்களில் ஆடுதான் சிறந்தது. குழப்பங்களிலிருந்து மார்க்கத்தைக் காப்பாற்றிக் கொள்ள அந்த ஆட்டைக் கூட்டிக் கொண்டு அவன் மலைகளின் உச்சியிலும் மழை பெய்யும் இடங்களிலும் சென்று வாழ்வான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஸயீத் அல் குத்ரி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### நான் உங்கள் அனைவரிலும் இறைவனைப் பற்றி மிக அதிகமாக அறிந்தவன் என்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று.

ஹதீஸ் 20. நல்லவற்றை(ச் செய்யுமாறு) நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்குக் கட்டளையிட்டால் அத்தோழர்களால் இயன்ற செயல்களையே ஏவுவார்கள். இதனை அறிந்த நபித்தோழர்கள், நபி அவர்களே! நிச்சயமாக அல்லாஹ் தங்களின் முன் பின் பாவங்களை மன்னித்துவிட்டான். ஆனால், எங்கள் நிலையோ தங்களின் நிலையைப் போன்றதன்று என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்களின் முகத்தில் கோபத்தின் அறிகுறி தெரியும் அளவு கோபப்பட்டார்கள். பின்னா, நிச்சயமாக உங்கள் அனைவரையும் விட நான் அல்லாஹ்வை நன்கு அறிந்தவனும் அவனை அதிகம் அஞ்சுபவனுமாவேன் என்று நபி(ஸல்) கூறினார்கள் என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நெருப்பில் எறியப்படுவதை வெறுப்பது போல் ஒருவர் இறைமறுப்பின் பால் திரும்புவதை வெறுப்பது ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 21. எவரிடம் மூன்று தன்மைகள் அமைந்துவிட்டனவோ அவர் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் சுவையை உணர்ந்தவராவார். (அவை) அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒருவருக்கு மற்ற அனைத்தையும் விட அதிக நேசத்திற்குரியராவது ஒருவர் மற்றொரு வரை அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது குப்ரிலிருந்து அல்லாஹ் அவரை விடுத்த பின், நெருப்பில் வீசப்படுவதை வெறுப்பது போன்று இறைமறுப்புக்குத் திரும்பிச் செல்வதை வெறுப்பது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறை நம்பிக்கையாளர்களிடையே செயல்களில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகள்.

ஹதீஸ் 22. (மறுமையில் விசாரணைகள் முடிந்த பின்) சொர்க்க வாசிகள் சொர்க்கத்திலும் நரக வாசிகள் நரகத்திலும் நுழைந்து விடுவார்கள். பின்னர் உள்ளத்தில் கடுகளவேனும் ஈமான் எனும் இறைநம்பிக்கை இருப்பவரை (நரகத்திலிருந்து) வெளியேற்றி விடுங்கள் என்று அல்லாஹ் கட்டளையிடுவான். உடனே அவர்கள் கறுத்தவர்களாக அதிலிருந்து வெளியேற்றப்பட்டு ஹயாத் என்ற ஆற்றில் போடப்படுவார்கள். இந்த ஹதீஸை அறிவிப்பவர்களில் ஒருவரான மாலிக், ஆற்றின் பெயர் ஹயா என்று நபி(ஸல்) கூறினார்களோ என்று சந்தேகப்படுகிறார்... அவ்வாறு அவர்கள் அந்த ஆற்றில் போடப்பட்டதும் பெரும் வெள்ளம் பாயும் ஓடைக் கரையில் விதைகள் முளைப்பது போன்று பொலிவடைவார்கள். அவை வளைந்து மஞ்சள் நிறமாக இருப்பதை நீர் பார்த்ததில்லையா? என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(குறிப்பு:) இதே ஹதீஸை உஹைப் அறிவிக்கும்போது (ஹயா அல்லது ஹயாத் என்று) சந்தேகத்தோடு அறிவிக்காமல் ஹயாத் என்னும் ஆறு என்று உறுதியாகக் குறிப்பிடுகிறார். மேலும் கடுகளவேனும் ஈமான் எனும் இறைநம்பிக்கை என்பதற்குப் பதிலாகக் கடுகளவேனும் நன்மை என்ற வார்த்தையையும் குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 23. நான் உறங்கிக் கொண்டிருக்கும்போது கனவில் மக்களில் சிலரைப் பார்த்தேன். அவர்களின் மீது (பல விதமான) சட்டைகள் அணிவிக்கப்பட்டிருக்கும் நிலையில் என்னிடம் எடுத்துக் காட்டாப்பட்டனர். அச்சட்டைகளில் சில அவர்களின் மார்பு வரை நீண்டிருந்தன் இன்னும் சில அதற்கும் குறைவாக இருந்தன. உமர் இப்னு கத்தாப் (தரையில்) இழுபடும் அளவு (நீண்ட) சட்டை அணிந்தவர்களாக என்னிடம் எடுத்துக் காட்டப்பட்டார்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது நபித்தோழர்கள், நபி அவர்களே! (சட்டைக்கு) என்ன விளக்கம் தருகிறீர்கள்? எனக் கேட்டதற்கு மார்க்கம் என்று நபி(ஸல்) அவர்கள் விளக்கம் தந்தார்கள் என அபூ ஸயீதுல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

வெட்கம் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 24. அன்சாரிகளைச் சேர்ந்த ஒருவர் தம் சகோதரர் (அதிகம்) வெட்கப்படுவதைக் கண்டித்துக் கொண்டிருந்தபோது அவ்வழியே நபி(ஸல்) அவர்கள் சென்றார்கள். உடனே, அவரை(க் கண்டிக்காதீர்கள்)விட்டு விடுங்கள். ஏனெனில், நிச்சயமாக வெட்கம் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சமாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(அல்லாஹ்விற்கு இணை கற்பிக்கும்) அவர்கள் பாவமன்னிப்புக் கோரி, தொழுகையையும் நிலைநிறுத்தி ஜகாத்தையும் வழங்கி வந்தால் அவர்களை அவர்களின் வழியில்விட்டு விடுங்கள் என்ற வசனம். (திருக்குர்ஆன் 09:05)

ஹதீஸ் 25. மனிதர்கள், வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வையன்றி வேறுயாருமில்லை முஹம்மத் நபி என்று உறுதியாக நம்பி, தொழுகையை நிலை நிறுத்தி, ஸகாத்தும் கொடுக்கும் வரை அவர்களுடன் போரிட வேண்டும் என்று நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். இவற்றை அவர்கள் செய்து விடுவார்களானால் தம் உயிர், உடைமைகளை என்னிடமிருந்து பாதுகாத்துக் கொள்வார்கள்.. இஸ்லாத்தின் வேறு உரிமைகளில் (அவர்கள் வரம்பு மீறனாலே) தவிர! மேலும் அவர்களின் விசாரணை இறைவனிடமே உள்ளது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஈமான் என்றாலே நற்செயல் தான் என்று சிலர் வாதிடுகின்றனர்

ஹதீஸ் 26. செயல்களில் சிறந்தது எது? என்று நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டதற்கு, அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்பிக்கை கொள்வது என்றார்கள். பின்னர் எது? என வினவப்பட்டதற்கு, இறைவழியில் போரிடுதல் என்றார்கள். பின்னர் எது? என்று கேட்கப்பட்டதற்கு, அங்கீகரிக்கப்படும் ஹஜ் என்றார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மனப்பூர்வமாக அன்றி, உயிருக்குப் பயந்தோ தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவோ இஸ்லாத்தை ஏற்றால் (அது அல்லாஹ்விடம்) அங்கீகரிக்கப்படாது.

ஹதீஸ் 27. நபி(ஸல்) அவர்களுடன் நான் அமர்ந்திருந்தபோது, நபி(ஸல்) ஒரு குழுவினருக்குக் கொடுத்தார்கள். ஒருவரைவிட்டுவிட்டார்கள். அவர் எனக்கு மிகவும் வேண்டியவராவார். அப்போது நான், நபி அவர்களே! ஏன் அவரைவிட்டு விட்டீர்கள்? அல்லாஹ்வின் மீது ஆணையாக அவரை நான் இறைநம்பிக்கையாளர் என்றே கருதுகிறேன் என கேட்டதற்கு, அவரை முஸ்லிம் என்றும் சொல் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். சிறிது நேரம் நான் மவுனமாக இருந்தேன். தொடர்ந்து நான் அவரைப் பற்றி நான் அறிந்திருந்த விஷயத்தை என்னையும் மீறி மீண்டும் மீண்டும் கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் பழைய பதிலையே கூறிவிட்டு, ஸஅதே! நான் ஒரு மனிதருக்குக் கொடுக்கிறேன் ஆனால் நான் கொடுக்காதவர் என்னிடம் மிக நேசமானவராக இருக்கிறார். (அவருக்கு நான் கொடுத்ததற்கு) காரணம், ஏதும் கொடுக்காதிருந்தால் (குற்றம் இழைத்து அதனால்) அவரை இறைவன் நரகில் முகம் குப்புறத் தள்ளி விடுவானோ என்ற அச்சம் தான் என்றார்கள் என ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஸலாமைப் பரப்புவதும் இஸ்லாத்தின் ஓரம்சம்.

ஹதீஸ் 28. ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் இஸ்லாமி(யப் பண்புகளி)ல் சிறந்தது எது? என்று கேட்டார். நீர் உணவளிப்பதும், அறிந்தவர்களுக்கும் அறியாதவர்களுக்கும் ஸலாம் கூறுவதுமாகும் என்று நபி(ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கணவனின் உதவிகளுக்கு நன்றி மறப்பவளாக நடப்பது் நிராகரிப்பு என்பது ஏற்றத் தாழ்வுடையது.

ஹதீஸ் 29. எனக்கு நரகம் காட்டப்பட்டது. அதில் பெரும்பாலோர் பெண்களாகக் காணப்பட்டனர். ஏனெனில், அவர்கள் நிராகரிப்பவர்களாக இருந்தனர் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது, இறைவனையா அவர்கள் நிராகரிக்கிறார்கள்? எனக் கேட்கப்பட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், கணவனை நிராகரிக்கிறார்கள். உதவிகளை நிராகரிக்கிறார்கள். அவர்களில் ஒருத்திக்குக் காலம் முழுவதும் நீ நன்மைகளைச் செய்து கொண்டேயிருந்தது, பின்னர் (அவளுக்குப் பிடிக்காத) ஒன்றை உன்னிடம் கண்டுவிட்டாளானால் உன்னிடமிருந்து ஒருபோதும் நான் ஒரு நன்மையையும் கண்டதில்லை என்று பேசிவிடுவாள் என்றார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பாவங்கள் அறியாமைக் காலச் செயல்களாகும்.

ஹதீஸ் 30. நான் அபூ தர்(ரலி)யை (மதீனாவிற்கு அருமிலுள்ள) ரபதா என்ற இடத்தில் சந்தித்தேன். அப்போது அவரின் மீது ஒரு ஜோடி ஆடையும் (அவ்வாறே) அவரின் அடிமை மீது ஒரு ஜோடி ஆடையும் கிடப்பதைப் பார்த்தேன். நான் (ஆச்சரியமுற்றவனாக) அதைப் பற்றி அவரிடம் கேட்டதற்கு, நான் (ஒருமுறை) ஒரு மனிதரை ஏசிவிட்டு அவரின் தாயையும் குறை கூறி விட்டேன். அப்போது நபியவர்கள் கூறினார்கள்: அபூ தர், அவரையும் தாயையும் சேர்த்துக் குறை கூறி விட்டீரே! நீர் அறியாமைக் காலத்துப் பழக்கம் குடி கொண்டிருக்கும் மனிதராகவே இருக்கிறீர்! உங்களுடைய அடிமைகள் உங்களின் சகோதரர்களாவர். அல்லாஹ்தான் அவர்களை உங்கள் அதிகாரத்தின் கீழ் வைத்திருக்கிறான். எனவே ஒருவரின் சகோதரர் அவரின் அதிகாரத்தின் கீழ் இருந்தால் அவர், தாம் உண்பதிலிருந்து அவருக்கும் புசிக்கக் கொடுக்கட்டும். தாம் உடுத்துவதிலிருந்து அவருக்கும் உடுத்தக் கொடுக்கட்டும். அவர்களின் சக்திக்கு மீறிய பணிகளைக் கொடுத்து அவர்களைச் சிரமப்படுத்த வேண்டாம். அவ்வாறு அவர்களை நீங்கள் சிரமமான பணியில் ஈடுபடுத்தினால் நீங்கள் அவர்களுக்கு உதவியாயிருங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் (இதனால்தான் நான் அணிவது போல் என் அடிமைக்கும் உடை அளித்தேன் என அபூதர் கூறினார் என மஃரூர் கூறினார்.

இறைநம்பிக்கையாளர்களில் இரண்டு சாரார் தங்களுக்குள் சண்டையிட்டால் அவ்விருவருக்குமிடையே சமரசம் செய்து வையுங்கள் திருக்குர்ஆன் 49:09) என்ற இறைவசனம்.

ஹதீஸ் 31. இவருக்கு (அலீ(ரலி)க்கு) உதவுவதற்காகப் போய்க் கொண்டிருந்தேன். அப்போது அபூ பக்ரா(ரலி) என்னைச் சந்தித்து எங்கே செல்கிறீர்? எனக் கேட்டார். நான் இவருக்கு உதவப் போகிறேன் என்றேன். அதற்கவர் நீர் திரும்பிச் செல்லும் ஏனெனில், இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் சண்டையிட்டால் அதில் கொன்றவர், கொல்லப்பட்டவர் இருவருமே நரகத்திற்குத்தான் செல்வார்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அப்போது, நபி அவர்களே! இவரோ கொலை செய்தவர் (நரகத்திற்குச் செல்வது சரி) கொல்லப்பட்டவரின் நிலை என்ன? (அவர் ஏன் நரகம் செல்ல வேண்டும்?) என்று கேட்டதற்கு, அவர் அவரைக் கொல்ல வேண்டுமென்று பேராசை கொண்டிருந்தார் என்று கூறினார்கள் என கூறினார் என அஹ்னஃப் இப்னு கைஸ் அவர்கள் கூறினார்கள்.

அக்கிரமங்களில் ஏற்றத் தாழ்வு உண்டு.

ஹதீஸ் 32. இறைநம்பிக்கை கொண்டு அதில் அக்கிரமத்தைக் கலக்காதவர்களுக்கே (இம்மையிலும் மறுமையிலும்) அச்சமற்ற நிலை உண்டு. மேலும் அவர்களே நேர்வழி பெற்றவர்களுமாவார் (திருக்குர்ஆன் 06:82) என்ற இறைவசனம் அருளப்பட்டபோது நபித்தோழர்கள் நம்மில் யார் அக்கிரமம் செய்யாமலிருக்க முடியும்? எனக் கேட்டனர். அப்போது, நிச்சயமாக (அல்லாஹ்வுக்கு எவரையும்) இணையாக்குவதுதான் மிகப் பெரும் அக்கிரமம் (திருக்குர்ஆன் 31:13) என்ற வசனத்தை அல்லாஹ் அருளினான் என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### நயவஞ்சகனின் அறிகுறிகள்.

ஹதீஸ் 33. நயவஞ்சகனின் அறிகுறிகள் மூன்று. பேசினால் பொய்யே பேசுவான் வாக்களித்தால் மீறுவான் நம்பினால் துரோகம் செய்வான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 34. நான்கு பண்புகள் எவனிடம் உள்ளனவோ அவன் வடிகட்டிய முனா∴பிக் ஆவான். அவற்றில் ஏதேனும் ஒன்று யாரிடமேனும் இருந்தால் அதை விட்டொழிக்கும் வரை நயவஞ்சகத்தின் ஒரு பண்பு அவனிடம் இருந்து கொண்டே இருக்கும். நம்பினால் துரோகம் செய்வான் பேசினால் பொய்யே பேசுவான் ஒப்பந்தம் செய்தால் அதை மீறுவான் விவாதம் புரிந்தால் நேர்மை தவறிப் பேசுவான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### லைலத்துல் கத்ர் எனும் கண்ணியமிக்க இரவில் நின்று வணங்குவது ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 35. நம்பிக்கை கொண்டவராகவும் நன்மையை எதிர்பார்த்தவராகவும் லைலத்துல் கத்ர் எனும் புனித இரவில் நின்று வணங்குகிறவரின் முந்தைய குற்றங்கள் மன்னிக்கப்படும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.
அறப்போரிடுவதும் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 36. இறைவனையும் நபிகளையும் நம்பியதற்காக மட்டும் இறைவழியில் போரிடுவதற்குப் புறப்பட்டுச் சென்றவரைக் கூலியைப் பெற்றவராகவோ, போர் ஆதாயங்களைப் பெற்றவராகவோ திரும்பக் கொண்டு சேர்க்கும் பொறுப்பை அல்லது அவரைச் சொர்க்கத்தில் சேர்க்கும் பொறுப்பை அல்லாஹ் ஏற்றுள்ளான். என்னுடைய சமுதாயத்திற்கு நான் சிரமத்தைக் கொடுத்து விடுவேனோ என்று (அச்சம்) மட்டும் இல்லையானால் (நான்) அனுப்பும் எந்த இராணுவத்திற்குப் பின்னரும் (நானும் போகாமல்) உட்கார்ந்திருக்கமாட்டான். நிச்சயமாக நான் இறைவழியில் கொல்லப்பட்டு மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டு மீண்டும் கொல்லப்பட்டு, மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டு மீண்டும் கொல்லப்படுவதையே விரும்புகிறேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### ரமலானில் உபரியாகத் தொழுவதும் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ்37. நம்பிக்கை கொண்டு (நற் கூலியை) எதிர்பார்த்து ரமலான் மாதத்தில் நின்று வணங்குகிறவரின் முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்பட்டு விடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### நன்மையை எதிர்பார்த்தவராக ரமலானில் நோன்பு நோற்பது ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 38. நம்பிக்கை கொண்டு, நன்மையை எதிர்பார்த்து ரமலான் மாதம் நோன்பு நோற்பவரின் முந்தைய பாவங்கள் மன்னிக்கப்படும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### இஸ்லாமிய மார்க்கம் எளிதானது.

ஹதீஸ் 39. நிச்சயமாக இந்த மார்க்கம் எளிதானது. இம்மார்க்கத்தை எவரும் (தமக்கு) சிரமமானதாக ஆக்கினால், அவரை அது மிகைத்துவிடும். எனவே, நடுநிலைமையையே மேற்கொள்ளுங்கள். இயன்றவற்றைச் செய்யுங்கள் நற்செய்தியையே சொல்லுங்கள் காலையிலும் மாலையிலும் இரவில் சிறிது நேரமும் (அல்லாஹ்விடம்) உதவி தேடுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தொழுகையும் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 40. நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்த ஆரம்பத்தில் அவர்களின் பாட்டனார்களி(ன் வம்சா வழியினரி)டம் அல்லது அன்சாரிகளைச் சேர்ந்த அவர்களின் மாமன்மார்களி(ன் வம்சா வழியினரி)டம் தங்கியிருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் பதினாறு அல்லது பதினேழு மாதங்கள் பைத்துல் முகத்தஸை நோக்கியே தொழுது வந்தார்கள். (இருப்பினும்) தொழுகையில் தாம் முன்னோக்கித் தொழும் திசை (மக்காவிலுள்ள) கஅபா ஆலயமாக இருக்க வேண்டும் என்பதே அவர்களின் விருப்பமாக இருந்தது. (கஅபாவை நோக்கி) நபி(ஸல்) அவர்கள் தொழுத முதல் தொழுகை அஸர் தொழுகையாகும். அவர்களுடன் மற்றவர்களும் தொழுதார்கள். நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்து தொழுதவர்களில் ஒருவர் அங்கிருந்து புறப்பட்டு வேறு ஒரு பள்ளிவாசலுக்கருகே சென்றார். அங்கே பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுது கொண்டிருந்தவர்களிடம், நான் இறைவன் மீது ஆணையாக மக்காவை (கஅபாவை) முன்னோக்கி நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்து தொழுதுவிட்டு வருகிறேன் என்று கூறினார். உடனே மக்கள் (தொழுகையில்) அப்போதிருந்த நிலையிலிருந்த படியே கஅபாவை நோக்கித் திரும்பினார்கள். நபி(ஸல்) அவர்கள் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுது வந்தது யூதர்களுக்கும் ஏனைய வேதக்காரர்களுக்கும் மகிழ்ச்சியாகவே இருந்து வந்தது. (தொழுகையில்) தம் முகத்தை நபி(ஸல்) அவர்கள் கஅபா நோக்கித் திரும்பினார்கள். நபி(ஸல்) அவர்கள் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுது வந்தது யூதர்களுக்கும், மற்ற வேதக்காரர்களுக்கும் மகிழ்ச்சியாகவே இருந்து வந்தது. (தொழுகையில்) தம் முகத்தை நபி(ஸல்) அவர்கள் கஅபா நோக்கித் திருப்பிக் கொள்ள ஆரம்பித்ததும் அவர்கள் அதை வெறுக்க ஆரம்பித்தார்கள்.
மற்றோர் அறிவிப்பில், தொழுகையில் முன்னோக்கித் தொழும் திசையான கிப்லா மாற்றப்படுவதற்கு முன்னர் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுத காலத்திலேயே சிலர் இறந்துவிட்டனர் சிலர் கொல்லப்பட்டுவிட்டனர். நாங்கள் அவர்களைப் பற்றி என்ன கூறுவது? என்று அறியாதவர்களாயிருந்தோம். அப்போது, உங்கள் நம்பிக்கையை அல்லாஹ் வீணாக்க மாட்டான் என்ற வசனத்தை அல்லாஹ் அருளினான்! என்று காணப்படுகிறது என பராவு அவர்கள் கூறினார்கள்.

## ஒரு மனிதரின் இஸ்லாம் அழகு பெறுவது.

ஹதீஸ் 41. ஓர் அடியார் இஸ்லாத்தைத் தழுவி, அவரின் இஸ்லாம் அழகு பெற்றுவிட்டால் அவர் அதற்கு முன் செய்த அனைத்துத் தீமைகளையும் அல்லாஹ் மாய்த்து விடுகிறான். அதன் பின்னர் ம்ஸாஸ் (உலகில் சக மனிதனுக்கு இழைக்கப்படும் குற்றங்களுக்குரிய தண்டனை) உண்டு! (அவர் செய்யும்) ஒவ்வொரு நல்லறத்திற்கும் அது போன்ற பத்து முதல் எழுநூறு வரை நன்மைகள் பதியப்படும். (அவர் புரியும்) ஒவ்வொரு தீமைக்கும் (தண்டனையாக) அதைப் போன்றதுதான் உண்டு. அதையும் அல்லாஹ் அவருக்கு மன்னித்து விட்டால் அதுவும் கிடையாது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 42. உங்களில் ஒருவர் தம் இஸ்லாத்தை அழகாக்கினால் அவர் செய்யும் ஒவ்வொரு நன்மையும் பத்து மடங்கிலிருந்து எழு நூறு மடங்கு வரை பதிவு செய்யப்படும். அவர் செய்யும்

ஒவ்வொரு தீமைக்கும் அது போன்றே பதிவு செய்யப்படும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### நிரந்தரமாகச் செய்யப்படும் நல்லறங்களே அல்லாஹ்விற்கு விருப்பமானவை.

ஹதீஸ் 43. என்னிடம் ஒரு பெண் அமர்ந்திருக்குகிபோது நபி(ஸல்) அவர்கள் அங்கே வந்தார்கள். யார் இந்தப் பெண்மணி? என்று கூறிவிட்டு அவள் (அதிகமாக) தொழுவது பற்றிப் புகழ்ந்து கூறினேன். அப்போது நபி(ஸல்) போதும் நிறுத்து! நற்செயல்களில் உங்களால் முடிந்தவற்றைச் செய்து வாருங்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக நீங்கள் சலிப்படையும் வரை அல்லாஹ் சலிப்படைவதில்லை! மேலும் மார்க்கத்தின் நல்லறங்களில் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானது, நிரந்தரமாகச் செய்யும் நற்செயல்கள் தாம் என்று கூறினார்கள் என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### ஈமான் எனும் இறைநம்பிக்கை அதிகரிப்பதும், குறைவதும்

ஹதீஸ் 44. தம் உள்ளத்தில் ஒரு வால் கோதுமையின் அளவு நன்மை இருக்கும் நிலையில் லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவர் நரகிலிருந்து வெளியேறி விடுவார். மேலும், தம் இதயத்தில் ஒரு கோதுமையின் அளவு நன்மை இருக்கும் நிலையில் லாயிலாஹ இல்லல்லாஹ் சொன்னவரும் நரகிலிருந்து வெளியேறி விடுவார். மேலும், தம் உள்ளத்தில் ஓர் அணு அளவு நன்மை இருக்கும் நிலையில் லாயிலாஹ இல்லல்லாஹ் கூறியவரும் நரகிலிருந்து வெளியேறி விடுவார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) நன்மை என்று கூறினார்கள் என மேற்கண்ட நபி மொழியில் குறிப்பிட்டிருக்கும் இடங்களிலெல்லாம் ஈமான் எனும் நம்பிக்கை என்று குறிப்பிட்டதாக அனஸ்(ரலி) அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பில் காணப்படுகிறது.

ஹதீஸ் 45. யூதர்களில் ஒருவர் உமர்(ரலி) அவர்களிடம் அமீருல் முமினீன் அவர்களே! நீங்கள் உங்கள் வேதத்தில் ஓதிக் கொண்டிருக்கும் ஒரு வசனம் யூதர்களாகிய எங்களின் மீது இறங்கியிருந்தால் அந்நாளை நாங்கள் ஒரு பெருநாளாக்கிக் கொண்டிருப்போம் என்றார். அதற்கு உமர்(ரலி) அது எந்த வசனம்? எனக் கேட்டார்கள். அதற்கவர் கூறினார்.

இன்றைய தினம் உங்களின் மார்க்கத்தை உங்களுக்கு நினைவுபடுத்திவிட்டேன். உங்களின் மீது என்னுடைய அருள் கொடையை முழுமைப்படுத்தி விட்டேன். இஸ்லாத்தையே உங்களுக்கான மார்க்கமாகத் திருப்தி (யுடன் அங்கீகரித்துக்) கொண்டேன் (திருக்குர்ஆன் 05:03) (இந்தத் திருவசனம்தான் அது). அதற்கு உமர்(ரலி) அவ்வசனம் எந்த நாளில் எந்த இடத்தில் வைத்து நபி(ஸல்) அவர்களின் மீது இறங்கியது என்பதை நாங்கள் அறிவோம். அரஃபாப் பெருவெளியில் ஒரு வெள்ளிக்கிழமை தினத்தில் நபி(ஸல்) அவர்கள் நின்று கொண்டிருக்கும்போதுதான் (அவ்வசனம் அருளப்பட்டது) என்றார்கள் என தாரிக் இப்னு ஷிஹாப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### ஸகாத் இஸ்லாத்தின் ஓரம்சம்.

ஹதீஸ் 46. நஜ்த் என்ற ஊரைச் சார்ந்த ஒருவரை தலை பரட்டையாக நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். அவரின் குரல் செவியில் ஒலித்தது. ஆனால் அவர் என்ன சொல்கிறார் என்பது புரியவில்லை. நபி(ஸல்) அவர்களின் அருகில் வந்ததும் இஸ்லாத்தைப் பற்றிக் கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் இஸ்லாம் (என்பது) இரவிலும் பகலிலும் ஐவேளைத் தொழுகைகள் என்றார்கள். உடனே அவர் அத்தொழுகையைத் தவிர வேறு (தொழுகை) ஏதாவது என் மீது கடமை உண்டா? என்றார். அதற்கவர்கள் நீர் விரும்பிச் செய்தாலே ஒழிய வேறு இல்லை என்றார்கள். அடுத்து ரமலான் மாதம் நோன்பு நோற்பதுமாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அவர் அதைத்தவிர வேறு ஏதேனும் (நோன்பு) என் மீது

கடமையுண்டா? என்றார். அதற்கவர்கள் நீர் விரும்பிச் செய்தாலே ஒழிய வேறு இல்லை என்றார்கள். அவரிடம் நபி(ஸல்) அவர்கள் ஸகாத் பற்றியும் கூறினார்கள். அதற்கவர் அதைத் தவிர வேறு தர்மங்கள் கடமையில்லை என்றார்கள். உடனே அம்மனிதர் அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் இவற்றை விட கூட்டவும் மாட்டேன் குறைக்கவும் மாட்டேன் என்று கூறியவாறு திரும்பிச் சென்றார். அப்போது இவர் கூறியதற்கேற்ப நடந்தால் வெற்றியடைந்துவிட்டார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என தல்ஹா இப்னு உபைதுல்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## இறந்தவர்களை அடக்கம் செய்வதற்காகப் பின்தொடர்ந்து செல்வது ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓரம்சம்.

ஹதீஸ் 47. நம்பிக்கை கொண்டவராகவும், நன்மையை எதிர் பார்த்தவராகவும் ஒரு முஸ்லிமின் ஜனாஸாவைப் பின்தொடர்ந்து சென்று அதற்காகப் பிரார்த்தனைத் தொழுகை நடத்தப்பட்டு, அது அடக்கம் செய்யப்படும் வரை அதனுடன் இருந்தவர் நிச்சயமாக நன்மையின் இரண்டு குவியலைப் பெற்றுத் திரும்புவார். ஒவ்வொரு குவியலும் உஹது மலை போன்றதாகும். அதற்காகப் பிரார்த்தனை தொழுகையை மட்டும் முடித்துவிட்டு அதனை அடக்கம் செய்யும் முன்னர் திரும்பி விடுகிறவர் ஒரு குவியல் நன்மையை மட்டும் பெற்றுத் திரும்புவார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தான் அறியாத விதத்தில் தன்னுடைய நல்லறங்கள் பாழ்பட்டுப் போய் விடுமோ என இறைநம்பிக்கையாளர் அஞ்சுவது.

ஹதீஸ் 48. நான் அபூ வாயிலிடம் முர்ஜிஆ பற்றிக் கேட்டபோது, ஒரு முஸ்லிமை ஏசுவது பாவம் அவனுடன் போரிடுவது, கொலை செய்வது இறை நிராகரிப்பாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் வழியாக என்னிடம் கூறினார் என ஜுபைத் அவர்கள் கூறினார்கள்.

(குறிப்பு) இறை நம்பிக்கையாளர் செய்யும் எந்தப் பாவத்திற்கும் தண்டனை கிடையாது என்று சொல்லும் வழி கெட்ட பிரிவினர் முர்ஜிஆ எனப்படுவர்.

ஹதீஸ் 49. நபி(ஸல்) அவர்கள் லைலத்துல் கத்ரு பற்றி (அது எந்த இரவு என்று) அறிவிப்பதற்காகத் (தம் வீட்டிலிருந்து) வெளியே வந்தார்கள். அப்போது இரண்டு முஸ்லிம்கள் சச்சரவு செய்து கொண்டிருந்தார்கள். (இதைக் கண்ணுற்ற நபி(ஸல்) அவர்கள்) லைலத்துல் கத்ர் பற்றி உங்களுக்கு அறிவிப்பதற்காக நான் (வீட்டைவிட்டு) வெளியேறினேன். அப்போது இன்னின்ன மனிதர்கள் தமக்குள் சச்சரவு செய்து கொண்டிருந்தனர். உடனே அது (என் நினைவிலிருந்து) அகற்றப்பட்டுவிட்டது. அதுவும் உங்களுக்கு ஒரு நன்மையாக இருக்கலாம். (ரமலான் மாதத்தின் இருபத்த) ஏழு (இருபத்து) ஒன்பது (இருபத்து) ஐந்து ஆகிய இரவுகளில் அதனைப் பெற முயலுங்கள் என்று கூறினார்கள் என உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஈமான், இஸ்லாம், இஹ்ஸான், மறுமை நாளின் ஞானம் ஆகியவற்றைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல்(அலை) கேட்டதும் அதற்கு நபி(ஸல்) அவர்கள் வழங்கிய பதிலும்.

ஹதீஸ் 50. நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் மக்களுக்கிடையில் இருந்தபோது ஒருவர் அவர்களிடம் வந்து ஈமான் என்றால் என்ன? என்று கேட்டதற்கு ஈமான் என்பது அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய சந்திப்பையும் அவனுடைய தூதர்களையும் நீர் நம்புவது. மேலும், மரணத்திற்குப் பின் எழுப்பப்படுவதையும் நீர் நம்புவது. மேலும், மரணத்திற்குப் பின் எழுப்பப்படுவதையும் நீர் நம்புவது எனக் கூறினார்கள். அடுத்து இஸ்லாம் என்றால் என்ன? என்று கேட்டதற்குவர்கள் கூறினார்கள். இஸ்லாம் என்பது அல்லாஹ்வுக்கு (எதனையும்) நீர் இணையாகக் கருதாத நிலையில் அவனை நீர் வணங்குவதும்

தொழுகையை நிலை நிறுத்தி வருவதும் கடமையாக்கப்பட்ட ஸகாத்தை நீர் வழங்கி வருவதும் ரமலான் மாதம் நீர் நோன்பு நோற்பதுமாகும் என்று கூறினார்கள்.
அடுத்து இஹ்ஸான் என்றால் என்ன? என்று அவர் கேட்டதற்குவர்கள் கூறினார்கள்: (இஹ்ஸான் என்பது) அல்லாஹ்வை (நேரில்) காண்பதைப் போன்று நீர் வணங்குவதாகும். நீர் அவனைப் பார்க்காவிட்டாலும் நிச்சயமாக அவன் உம்மைப் பார்த்துக் கொண்டே இருக்கிறான் என்றார்கள் அடுத்து மறுமை நாள் எப்போது? என்று அம்மனிதர் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அதைப் பற்றிக் கேட்கப்பட்டவர் (நான்) அதைப் பற்றிக் கேட்கிற உம்மை விட மிக்க அறிந்தவரல்லர். (வேண்டுமானார்) அதன் (சில) அடையாளங்களைப் பற்றி உமக்குச் சொல்கிறேன். அவை, ஓர் அடிமைப் பெண் தனக்கு எஜமானாகப் போகிறவனை ஈன்றெடுத்தல் மேலும் கறுப்பு நிற ஒட்டகங்களை மேய்த்துக் கொண்டிருந்த மக்கள் உயர்ந்த கட்டிடங்கள் கட்டித் தமக்குள் பெருமையடித்துக் கொள்ளல். ஐந்து விஷயங்களை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறியமாட்டார் என்று கூறிவிட்டு, பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள். மறுமை நாளைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது. (திருக்குர்ஆன் 31:34) பின்னர் அம்மனிதர் திரும்பிச் சென்றார். அவரை அழைத்து வாருங்கள் என்றார்கள். சென்று பார்த்தபோது அவரைக் காணவில்லை. அப்போது, இவர்தான் ஜிப்ரீல். மக்களுக்கு அவர்களின் மார்க்கத்தைக் கற்றுக் கொடுக்க வந்திருக்கிறார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.
ஜிப்ரீல்(அலை) அவர்களின் கேள்விகளுக்கு நபி(ஸல்) அவர்கள் அளித்த பதில்கள் அனைத்தும் நம்பிக்கையைச் சேர்ந்தது என்று புகாரி ஆகிய நான் கூறுகிறேன்.
ஹதீஸ் 51. நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றுவோர் அதிகமாக்கிக் கொண்டு செல்கிறார்களா? அல்லது குறைந்து போகிறார்களா? என நான் உம்மிடம் கேட்டேன். இல்லை அவர்கள் அதிகமாம்க் கொண்டே செல்கிறார்கள் என நீர் கூறினீர்! அப்படித்தான் ஈமான். அது முழுமையடையும் வரை (அதிகமாக்கிக் கொண்டே) இருக்கும். அவரின் மார்க்கத்தில் நுழைந்த பின் அதன் மீது அதிருப்தியுற்று எவராவது மதம் மாறியிருக்கின்றனரா? என்று நான் உம்மிடம் கேட்டேன். அவ்வாறெல்லாம் ஒன்றுமில்லை என நீர் கூறினீர். ஈமான் என்பது அப்படித்தான்! அதன் தெளிவு இதயங்களில் கலந்து விடும்போது அதனை எவரும் வெறுக்க மாட்டார்கள் என்று ஹெர்குலிஸ் தம்மிடம் கேட்டதாக அபூ சுஃப்யான்(ரலி) கூறினார் என அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தன்னுடைய மார்க்கத்திற்காகப் பாவமான காரியங்களிலிருந்து விலகியிருப்பதன் சிறப்பு.

ஹதீஸ் 52. அனுமதிக்கப்பட்டவையும் மிகத் தெளிவானவை. மேலும் அனுமதிக்கப்படாதவையும் தெளிவானவையாய் இருக்கின்றன. இவ்விரண்டிற்கும் இடையில் சந்தேகத்திற்கு இடமானவையும் இருக்கின்றன அவற்றை மக்களில் பெரும்பாலலோர் அறிய மாட்டார்கள். எனவே, சந்தேகத்திற்கு இடமானவற்றைத் தவிர்த்துக் கொள்கிறவர் தம் மார்க்கத்திற்கும் தம் மானம் மரியாதைகளுக்கும் களங்கம் ஏற்படுத்துவதிலிருந்து விலம் விடுகிறார். சந்தேகத்திற்கிடமானவைகளில் விழுகிறவர் வேலியோரங்களில் (கால் நடைகளை) மேய்ப்பவரைப் போன்றவராவார். அவர் வேலிக்குள்ளேயே (கால்நடைகளை) மேயவிட நேரும். எச்சரிக்கை! ஒவ்வொரு மன்னனுக்கும் ஓர் எல்லை இருக்கிறது. எச்சரிக்கை! நிச்சயம் அல்லாஹ்வின் பூமியில் அவனுடைய எல்லைகள் அவனால் தடை செய்யப்படடவையாகும். எச்சரிக்கை! உடலில் ஒருசதைத் துண்டு இருக்கிறது. அது சீர் பெற்று விட்டால் உடல் முழுவதும் சீர் பெற்று விடும். அது சீர் குலைந்துவிட்டால் முழு உடலும் சீர்குலைந்து விடும். புரிந்து கொள்ளுங்கள். அதுதான் இதயம்! என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என நுஃமான் இப்னு பஷீர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## கனீமத் (போரில் கிடைத்த) பொருட்களில் ஐந்தில் ஒரு பங்கை வழங்குதல் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஓர் அம்சம்.

ஹதீஸ் 53. நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுடனிருந்தபோது அவர்கள் என்னைக் கட்டிலில் அமரச் செய்து, என்னிடம் நீர் (மொழி பெயர்ப்பாளராக) தங்கிவிடும். அதற்காக நான் என்னுடைய செல்வத்திலிருந்து உமக்கு ஒரு பங்கு தருகிறேன் என்றார்கள். நான் அவர்களோடு இரண்டு மாதங்கள் தங்கினேன். பின்னர் அவர் என்னிடம், அப்துல் கைஸின் தூதுக் குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தபோது, வந்திருக்கும் இம்மக்கள் யார்? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கு அவர்கள் ரபீஆ வசம்சத்தினர் என்றார்கள். நபி(ஸல்) அவர்கள் வருக! வருக! உங்கள் வருகை நல் வருகையாகுக என்று வரவேற்றார்கள். நபி அவர்களே! நாங்கள் யுத்தம் தடை செய்யப்பட்ட மாதங்களிலே தவிர (வேறு மாதங்களில்) தங்களைச் சந்திக்க முடியாது. காரணம் எங்களுக்கும் தங்களுக்குடையில் இஸ்லாத்தை இதுவரை ஏற்றுக் கொள்ளாத முளர் வம்சத்தினர். வாழ்கிறார்கள். எனவே திட்டவட்டமான சில கட்டளை எங்களுக்குக் கூறுங்கள். அவற்றை நாங்கள் (இங்கே வராமலே) எங்கள் பின்னால் தங்கிவிட்டவர்களுக்கு அறிவிப்போம். அதன் மூலம் நாங்களும் சுவர்க்கம் செல்வோம் என்றார்கள். மேலும் நபி(ஸல்) அவர்களிடம் சில வகை பானங்களைப் பற்றியும் கேட்டபோது, நபி(ஸல்) அவர்கள் நான்கு காரியங்களை அவர்களிடம் ஏவினார்கள் நான்கு காரியங்களை அவர்களுக்குத் தடை செய்தார்கள். அல்லாஹ் ஒருவனையே நம்புமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டு அல்லாஹ் ஒருவனை நம்புவது என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? என்றும் கேட்டார்கள். அதற்கவர்கள், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் தாம் நன்கு அறிந்தவர்கள் என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், வணங்கி வழிபடுவதற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் நபி என்றும் உறுதியாக நம்புவது தொழுகையை நிலை நிறுத்துவது மேலும் ஸகாத் வழங்குவது ரமலான் மாதம் நோன்பு நோற்பது போரில் கிடைக்கும் பொருட்களிலிருந்து ஐந்தில் ஒரு பங்கை நீங்கள் வழங்குவது. மேலும் தடை செய்த நான்கு விஷயங்கள் (மது வைத்திருந்த) மண் சாடிகள், சுரைக் குடுக்கைகள், பேரீச்சை மரத்தின் அடிமரத்தைக் குடைந்து தயாரித்த மரப்பீப்பாய்கள், தார் பூசப்பட்ட பாத்திரங்கள். (பின்னர் இத்தடை அகற்றப்பட்டது) இவற்றை நன்கு மனதில் பதிய வைத்துக்கொண்டு (இங்கே வராதவர்களுக்கு) அறிவித்து விடுங்கள் என்று கூறினார்கள் என கூறினார் என அபூ ஜம்ரா அறிவித்தார்

செயல் அனைத்தும் எண்ணத்தையும் நோக்கத்தையும் பொறுத்ததாகும்.
மேலும் ஒவ்வொரு மனிதருக்கும் அவரவர் எண்ணியதே கிடைக்கும்.

ஹதீஸ் 54. செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கிறது. எனவே எவருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வுடையவும் அவனுடைய தூதருடையவும் கட்டளைக்கேற்ப அமையுமோ அவரின் ஹிஜ்ரத்தை அவ்வாறே அல்லாஹ் கருதுவான். மேலும் ஒருவரின் ஹிஜ்ரத் உலகத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தால் அதையே அடைவார். ஒரு பெண்ணை நோக்கமாகக் கொண்டால் அவளை மணந்து கொள்வார். எனவே இவர்களின் ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டுள்ளதோ அதுவாகவே அமைந்து விடுகிறது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 55. ஒரு மனிதன் அல்லாஹ்விடம் நன்மையை எதிர்பார்த்தவனாகத் தன் குடும்பத்திற்குச் செலவு செய்தால் அது அவனுக்குத் தர்மமாம்விடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 56. அல்லாஹ்வின் திருப்தியை மட்டுமே நாடி நீர் எதைச் செலவு செய்தாலும் அதற்காக கூலி வழங்கப்படுவீர். உம்முடைய மனைவியின் வாயில் (அன்புடன்) நீர் ஊட்டும் ஒரு கவள

உணவு உட்பட என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஸஃது இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும், முஸ்லிம்களின் தலைவர்களுக்கும் மக்களுக்கும் நன்மையை நாடுவதே மார்க்கம் என்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று.

ஹதீஸ் 57. நான் நபி(ஸல்) அவர்களிடம் தொழுகையை நிலை நிறுத்துவதாகவும், ஸக்காத் வழங்குவதாகவும், ஒவ்வொரு முஸ்லிமுக்கும் நன்மையே நாடுவதாகவும் உறுதி மொழி எடுத்தேன்ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 58. (முஆவியாவின் ஆட்சிக் காலத்தில் ஆளுனராக இருந்த) முகீரா இப்னு ஷுஅபா(ரலி) இறந்த நாளில் ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) எழுந்து மேடையில் நின்று இறைவனைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, புதிய தலைவர் வரும் வரை இணையற்ற ஏக இறைவனுக்கு அஞ்சுவதையும், அடக்கத்தையும், அமைதியையும் கடமையாகக் கொள்ளுங்கள். இதோ இப்போது உங்களின் புதிய தலைவர் வந்து கொண்டிருக்கிறார் என்றார்.
பின்னர் தொடர்ந்து, (இறந்த) தலைவருக்காகப் பிழை பொறுக்கத் தேடுங்கள். ஏனெனில் அவர், பாவம் மன்னிக்கப்படுவதை விரும்பக்கூடியவராக இருந்தார் என்றார். மேலும், நான் ஒரு முறை நபி(ஸல்) அவர்களிடம் சென்று இஸ்லாத்தைத் தழுவுவதாகத் தங்களிடம் உறுதி மொழி எடுக்க வந்திருக்கிறேன் என்றேன். அப்போது அவர்கள், முஸ்லிம்கள் ஒவ்வொருவருக்கும் நலம் நாட வேண்டும் என்று எனக்கு நிபந்தனை விதித்தார்கள். அதன்படி உறுதி மொழி கொடுத்தேன். இந்தப் பள்ளி வாசலுக்கு உரியவன் மீது ஆணையாக நிச்சயமாக நான் உங்களுக்கு நலம் நாடுபவனாக இருக்கிறேன் என்றார்.
பின்னர் பாவமன்னிப்புத் தேடியவர்களாக (மேடையைவிட்டு) இறங்கினார்கள் ஜியாத் இப்னு இலாகா அவர்கள் கூறினார்கள்

# அத்தியாயம் - 3 - கல்வி

அல்லாஹ் கூறினான்

“உங்களில் இறைநம்பிக்கையாளர்களுக்கும், கல்வி கொடுக்கப்பட்டவர்களுக்கும் பல படித்தரங்களை அல்லாஹ் உயர்த்துகிறான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கு அறிபவன்.“ (திருக்குர்ஆன் 58:11)

“என்னுடைய இறைவா! எனக்கு நீ ஞானத்தை அதிகமாக்குவாயாக!“ (திருக்குர்ஆன் 20:114) என்ற அல்லாஹ்வின் கூற்று.

## ஒருவர் தம் பேச்சில் ஈடுபட்டிருககும்போது எவரேனும் கல்வியைப் பற்றிக் கேள்வி கேட்டால், அவர் தம் பேச்சை முடித்துக் கொண்டு, கேள்வி கேட்பவருக்கு மறுமொழி அளிப்பது.

ஹதீஸ் 59. ‘ஓர் அவையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களுக்கு அறிவுரை வழங்கிக் கொண்டிருந்தபோதுஅவர்களிடம் நாட்டுப் புறத்து அரபி ஒருவர் வந்தார். ‘மறுமை நாள் எப்போது?‘ எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் பேச்சைத் தொடர்ந்து கொண்டிருந்தார்கள். அப்போது (அங்கிருந்த) மக்களில் சிலர் ‘நபி(ஸல்) அவர்கள் அம்மனிதர் கூறியதைச் செவியுற்றார்கள் எனினும் அவரின் இந்தக் கேள்வியை அவர்கள் விரும்பவில்லை‘ என்றனர். வேறு சிலர், ‘அவர்கள் அம்மனிதர் கூறியதைச் செவியுறவில்லை‘ என்றனர். முடிவாக நபி(ஸல்) அவர்கள் தங்களின் பேச்சை முடித்துக் கொண்டு, ‘மறுமை நாளைப் பற்றி (என்னிடம்) கேட்டவர் எங்கே?‘ என்று கேட்டார்கள். உடனே (கேட்டவர்)‘ இறைத்தூதர் அவர்களே! இதோ நானே‘ என்றார். அப்போது கூறினார்கள்.‘ அமானிதம் பாழ்படுத்தப்பட்டால் நீர் மறுமை நாளை எதிர் பார்க்கலாம்.“ அதற்கவர், ‘அது எவ்வாறு பாழ் படுத்தப்படும்?‘ எனக் கேட்டதற்கு, ‘எந்தக் காரியமாயினும் அது, தகுதியற்றவர்களிடம் ஒப்படைக்கப்பட்டால் நீர் மறுமை நாளை எதிர்பாரும்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கல்வியை உரத்த குரலில் போதிப்பது.

ஹதீஸ் 60. ‘நாங்கள் மேற்கொண்ட பயணம் ஒன்றில் நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குப் பின்னே வந்து கொண்டிருந்தார்கள். தொழுகையின் நேரம் எங்களை நெருங்கிவிட்ட நிலையில் நாங்கள் உளூச் செய்து கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நாங்கள் எங்கள் கால்களைத் தண்ணீரால் தடவிக் கொண்டிருந்தோம். (அதைக் கண்டதும்) ‘குதிங்கால்களைச் சரியாகக் கழுவாதவர்களுக்கு நரகம் தான்!‘ என்று இரண்டு அல்லது மூன்று முறை தம் குரலை உயர்த்தி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

## ஹதீஸ் துறை நிபுணர் ஹத்தஸனா (எமக்கு அறிவித்தார்) அஹ்பரனா (எமக்கு தகவல் தந்தார்) அன்பஅனா (எமக்கு செய்தி கூறினார்) என்று கூறுவது.

ஹத்தஸனா அஹ்பரனா, அன்பஅனா, சமிஃது (செவியுற்றேன்) என்ற நான்கு வார்த்தைகளையும் இப்னு உயைனா என்பவர் ஒரே கருத்துடைய வார்த்தைகளாகவே கருதினார். அப்துல்லாஹ்

(இப்னு மஸ்வூத்)(ரலி) (ஒரு நபி மொழியை அறிவிக்கும் போது) உண்மை சொல்பவர்களும் உண்மைப்படுத்தப்பட்டவர்களுமான இறைத்தூதர் எமக்கு அறிவித்தார்கள் (ஹத்தஸனா) எனக் கூறுவார்கள். நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஒரு வார்த்தையை செவியுற்றேன் (சமிஃது) என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்)(ரலி) கூறுவார்களாம். என ஷக்கீக் அறிவித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எமக்கு இரண்டு ஹதீஸ்களை (ஹத்தஸனா) அறிவித்தார்கள் என ஹுதைபா(ரலி) கூறினார். இப்னு அப்பாஸ்(ரலி), அனஸ்(ரலி), அபூ ஹுரைரா(ரலி) ஆகியோர் நபி(ஸல்) அவர்கள் இறைவன் புறத்தில் இருந்து சில செய்திகளை அறிவிக்கும்போது 'யர்வி' (தெரிவித்தார்கள்) என்ற வார்த்தையைப் பயன்படுத்தி இருக்கிறார்கள்.

ஹதீஸ் 61. 'மரங்களில் இப்படியும் ஒருவகை மரம் உண்டு. அதன் இலை உதிர்வதில்லை. அது முஸ்லிமுக்கு உவமையாகும். அது என்ன மரம் என்பதை எனக்கு அறிவியுங்கள்?' என்று நபி(ஸல்) கேட்டார்கள். அப்போது மக்களின் எண்ணங்கள் நாட்டு மரத்தின் பால் திரும்பியது. நான் அதை பேரீச்சை மரம்தான் என்று கூற வெட்கப்பட்டு அதைச் சொல்லாமல் இருந்தேன். பின்னர் 'இறைத்தூதர் அவர்களே! அது என்ன மரம் என்று எங்களுக்கு அறிவியுங்கள்' என தோழர்கள் கேட்டார்கள். அதற்கு அவர்கள் 'பேரீச்சை மரம்' என்றார்கள்" என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## மக்களின் அறிவுத் திறனைச் சோதிப்பதற்காக ஒரு தலைவர் மக்களிடமே கேள்வி கேட்பது.

ஹதீஸ் 62. 'மரங்களில் இப்படியும் ஒருவகை மரம் உண்டு. அதன் இலை உதிர்வதில்லை. அது முஸ்லிமுக்கு உவமையாகும். அது என்ன மரம் என்பதை எனக்கு அறிவியுங்கள்?' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கேட்டபோது மக்களின் எண்ணங்கள் நாட்டு மரத்தின் பால் திரும்பியது. நான் அதை பேரீச்சை மரம்தான் என்று கூற வெட்கப்பட்டு அதைச் சொல்லாமல் இருந்தேன். பின்னர் இறைத்தூதர் அவர்களே! அது என்ன மரம் என்று எங்களுக்கு அறிவியுங்கள்' எனத் தோழர்கள் கேட்டதற்கு, 'பேரீச்சை மரம்' என்றார்கள்" என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## கற்பித்தல்

"ஞானத்தை எனக்கு அதிகமாக்கு என்று (நபியே!) நீர் கூறும்!" (திருக்குர்ஆன் 20:114) என்ற இறைவசனம்.

ஹதீஸ் துறை அறிஞர் ஒருவரிடம் (பயிலும் மாணவர்கள் ஹதீஸ்களை) படித்துக்காட்டுவது எடுத்துச் சொல்வது.

ஹஸன் (அல் பஸரி), சுஃப்யான் (அஸ்ஸவ்ரீ), மாலிக் (இப்னு அனஸ்) ஆகியோர் இவ்வாறு படித்துக் காட்டுவதன் மூலம் ஆசிரியரின் அங்கீகாரம் பெறுவதை அனுமதிக்கப்பட்ட முறையாகக் கருதுகிறார்கள்.

ளிமாம் இப்னு ஸஃலபா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்து 'நாங்கள் (ஐந்து வேளைத்) தொழுது வர வேண்டும் என அல்லாஹ்வா தாங்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறான்?' எனக் கேட்டார்கள். நபி(ஸல்) 'ஆம்!" என்றார்கள். தம் கூட்டத்தினருக்கு அதை ளிமாம்(ரலி) அறிவித்ததும் அவர்கள் அனைவரும் (அவர் கூறியவற்றை) ஏற்றார்கள்.

எனவே இது, ஆசிரியரிடம் மாணவர் படித்துக்காட்டும் முறையாகும். (இம்முறையைக் கடைபிடிக்க) ளிமாம் இப்னு ஸஃலபா(ரலி) அவர்களின் ஹதீஸையே சிலர் ஆதாரமாக எடுத்துக் கொள்கின்றனர்.

இமாம் மாலிக் அவர்கள் இதற்கு மற்றொரு சான்றை ஆதாரமாகக் கொள்கிறார்கள். அதாவது எழுதப்பட்ட படிவம் மக்களிடம் வாசித்துக் காட்டப்படும். அதனை முழுவதுமாகக் கேட்டு அவர்கள் இன்னார் எங்களுக்கு அங்கீகாரம் அளித்தார் எனக் கூறுவார்கள். மேலும் (சில சமயம்) அவர்களிடம் அது (மனனமாகவும்) சொல்லிக் காட்டப்படும். கற்றுக் கொடுத்தவரிடமும் அது சொல்லி காட்டப்படும் (இவைகளெல்லாம் கற்றவருக்குரிய சான்றுகளாகக் கருதப்பட்டதால்) கற்றவர் மற்றவர்களிடம் எனக்கு இன்னார் கற்றுத் தந்தார் என்றே கூறுவார்கள். இந்த மரபை இமாம் மாலிக் அவர்கள் ஆதாரமாகவும் தம் கருத்துக்குச் சான்றாகக் கொள்கிறார்கள்.

ஒரு நபிமொழி அறிஞரிடம் (மாணவர்) படித்துக் காட்டுவதன் மூலம் அங்கீகாரம் பெறுவது குற்றமில்லை என ஹஸன் (அல்பஸரீ) அவர்கள் கூறினார்கள்.

நபிமொழித் துறை வல்லுனரிடம் மாணவர் ஒருவரால் நபிமொழிகள் படித்துக் காண்பிக்கப்பட்டு (அவரின் அங்கீகாரம் பெற்று)விட்டால், அவர் எனக்கு (இதை) அறிவித்தார் என்று (அம்மாணவர்) கூறுவது குற்றமில்லை என ஸுப்யான் (அஸ்ஸவ்ரி) அவர்கள் கூறுகிறார்கள்.

ஒரு நபிமொழித் துறை அறிஞரிடம் (மாணவர்) படித்துக் காட்டு(வதன் மூலம் ஆசிரியரிடம் அங்கீகாரம் பெறு)வதும் அந்த அறிஞர் (மாணவருக்கு) படித்துக் காட்டு(வதன் மூலம் அங்கீகாரம் தரு)வதும் சமம்தான் என ஸுப்யான் (அஸ்ஸவ்ரி) இமாம் மாலிக் ஆகியோர் கூறினார்கள்கள் என அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 63. நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தபோது ஒட்டகத்தின் மீது அமர்ந்தவராக ஒருவர் பள்ளிக்குள் நுழைந்தார். பள்ளியிலுள்ளே ஒட்டகத்தைப் படுக்க வைத்துப் பின்னர் அதனைக் கட்டினார். பின்பு அங்கு அமர்ந்திருந்தர்களிடம் 'உங்களில் முஹம்மத் அவர்கள் யார்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்களோ மக்களிடையே சாய்ந்து அமர்ந்திருந்தார்கள். 'இதோ சாய்ந்து அமர்ந்திருக்கும் இந்த வெண்மை மனிதர்தாம் (முஹம்மத்(ஸல்) அவர்கள்)' என்று நாங்கள் கூறினோம். உடனே அம்மனிதர் நபி(ஸல்) அவர்களை 'அப்துல் முத்தலிபின் பேரரே!' என்றழைத்தார். அதற்கு நபியவர்கள் 'என்ன விஷயம்?' என்று கேட்டார்கள். அப்போது அம்மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் 'நான் உங்களிடம் சில கேள்விகள் கேட்கப் போகிறேன். சில கடினமான கேள்விகளையும் கேட்கப் போகிறேன். அதற்காக நீங்கள் என் பேரில் வருத்தப்படக் கூடாது' என்றார். அதற்கவர்கள் 'நீர் விரும்பியதைக் கேளும்' என்றார்கள். உடனே அம்மனிதர் 'உம்முடையம் உமக்கு முன்னிருந்தோரதும இரட்சகன் மீது ஆணையாகக் கேட்கிறேன் அல்லாஹ்தான் உம்மை மனித இனம் முழுமைக்கும் தூதராக அனுப்பினானா?' என்றார். அதற்கு அவர்கள் 'அல்லாஹ் சாட்சியாக ஆம்!' என்றார்கள். அடுத்து அவர் 'அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு உம்மிடம் கேட்கிறேன் அல்லாஹ்தான் இரவிலும், பகலிலுமாக நாங்கள் ஐந்து நேரத் தொழுகையைத் தொழுது வரவேண்டுமென்று உமக்குக் கட்டளையிட்டிருக்கிறானா?' என்றார். அதற்கவர்கள் 'ஆம்! அல்லாஹ் சாட்சியாக' என்றார்கள். அடுத்து அவர் 'இறைவன் மீது ஆணையாக உம்மிடம் கேட்கிறேன் அல்லாஹ்தான் ஒவ்வோர் ஆண்டிலும் குறிப்பிட்ட இந்த மாதத்தில் நாங்கள் நோன்பு நோற்க வேண்டும் என்று உமக்குக் கட்டளையிட்டிருக்கிறானா?' என்றார். அதற்கவர்கள் 'ஆம்! அல்லாஹ் சாட்சியாக' என்றார்கள். அடுத்து அவர், 'இறைவன் மீது ஆணையாக உம்மிடம் கேட்கிறேன் அல்லாஹ்தான் எங்களில் வசதி படைத்தவர்களிடமிருந்து இந்த (ஸகாத் என்னும்) தர்மத்தைப் பெற்று எங்களில் வறியவர்களுக்கு நீர் அதனை வினியோகிக்க வேண்டுமென்று உமக்குக் கட்டளையிட்டிருக்கிறானா?' என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'ஆம் (இறைவன் மீது சாட்சியாக' என்றார்கள். உடனே அம்மனிதர் 'நீங்கள் (இறைவனிடமிருந்து) கொண்டு வந்தவற்றை நான் நம்பி ஏற்கிறேன்' என்று கூறிவிட்டு 'நான், என்னுடைய கூட்டத்தார்களில் இங்கு வராமல் இருப்பவர்களின் தூதுவனாவேன். நான்தான் ளிமாம் இப்னு ஸஃலபா, அதாவது

பனா ஸஃது இப்னு பக்ர் சகோதாரன்' என்றும் கூறினார்" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## ஆசிரியர் மாணவரிடம் ஒரு நபிமொழிச் சுவடியை ஒப்படைப்பது. கல்வியை மார்க்க அறிஞர்கள் பிற ஊர்களுக்கு எழுதி அனுப்புதல்.

'உஸ்மான்(ரலி) திருக்குர்ஆனைப் பல பிரதிகள் எடுத்து அவற்றை நாட்டின் பல பகுதிகளுக்கும் அனுப்பினார்கள்' என்று அனஸ்(ரலி) கூறினார்.

இதை அனுமதிக்கப்பட்ட ஒன்றாக மாலிக் இப்னு அனஸ், யஹ்யா இப்னு சயீது, அப்துல்லாஹ் இப்னு உமர் போன்றோரும் கருதியுள்ளார்கள்.

நபிமொழிச் சுவடியை ஒப்படைக்கலாம் என்பதற்கு ஹிஜாஸ் வாசிகள் பின்வரும் ஹதீஸை ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள். ஒரு சிறு படையின் தளபதியாக அனுப்பப்பட்ட ஒருவரிடம் நபி(ஸல்) அவர்கள் ஒரு தபால் எழுதிக் கொடுத்து இன்ன இடத்தை நீர் அடையும் வரை அதனைப் படிக்கக் கூடாது என்று சொல்லியனுப்பினார்கள். அதன்படி அவர்கள் அந்த இடத்தை அடைந்ததும்தான் அதனை(த் தம்முடன் வந்த) ஏனைய மக்களுக்குப் படித்துக்காட்டி நபி(ஸல்) அவர்களின் கட்டளையை அவர்களுக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 64 'நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம் தம் மடல் ஒன்றைக் கொடுத்து அனுப்பி அதனை பஹ்ரைன் நாட்டு மன்னரிடம் ஒப்படைக்குமாறு கட்டளையிட்டார்கள். அவ்வாறு அம்மனிதர் பஹ்ரைன் மன்னரிடம் ஒப்படைத்தார். அவர் அதை (பாரசீக மன்னன்) கிஸ்ராவிடம் ஒப்படைத்துவிட்டார். அதனைக் கிஸ்ரா படித்துப் பார்த்துவிட்டுக் கிழித்து எறிந்தான். '(இச்செய்தியைக் கேள்விப்பட்டதும்) நபி(ஸல்) 'அவர்கள் முற்றாகச் சிதறடிக்கப்பட வேண்டும்" என்று அவர்களுக்கு எதிராக (இறைவனிடம்) பிரார்த்தித்தார்கள்" என அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸை அறிவிக்கும் இப்னுஷிஹாப் என்பவர் இப்னுல் முஸய்யப் அவர்கள் இவ்வாறுகூறினார்கள்' என கருதுகிறேன் என்றார்.

ஹதீஸ் 65. நபி(ஸல்) அவர்கள் ஒரு மடல் எழுதிடும்படிக் கூறினார்கள். அல்லது எழுதிட நாடினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் 'அவர்கள் எந்த மடலையும் முத்திரையிடப்படாமல் படிக்கமாட்டார்கள்' என்றும் சொல்லப்பட்டது. உடனே வெள்ளியில் ஒரு மோதிரம் செய்தார்கள். அதில் பொறிக்கப்பட்டிருந்த வாக்கியம் 'முஹம்மத் ரஸுலுல்லாஹ்" என்பதாகும். நபி(ஸல்) அவர்களின் கையில் அம்மோதிரம் இருக்கும் நிலையில் அதன் (பளிச்சிடும்) வெண்மையை (இப்போதும் நேரில்) நான் பார்த்துக் கொண்டிருப்பது போலிருக்கிறது" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(இந்த நபிமொழி அறிவிப்பவர்களில் ஒருவரான ஷுஅபா கூறுகிறார்கள்: எனக்கு இதனை அறிவித்த) கத்தாதா அவர்களிடம், 'அதில் பொறிக்கப்பட்டிருந்த வாக்கியம் 'முஹம்மத் ரசூலுல்லாஹ்' என்றிருந்தது என்று உங்களிடம் யார் கூறியது? எனக் கேட்டேன். அதற்கவர் 'அனஸ்(ரலி) தாம் கூறினார்கள்' என்றார்.

## ஓர் அவையில் கடைசியில் அமரலாம். வட்டமாக அமர்ந்து இருப்பவர்களுக்கிடையில் இடைவெளி இருந்தால் அதிலும் அமரலாம்.

ஹதீஸ் 66. 'நபி(ஸல்) அவர்கள் மக்களுடன் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தபோது மூன்றுபேர் வந்து கொண்டிருந்தனர். அவர்களில் இருவர் நபி(ஸல்) அவர்களை முன்னோக்கி வந்தனர்.

மற்றொருவர் சென்றார். அவ்விருவரும் நபி(ஸல்) அவர்களின் சபையில் வந்து நின்றார்கள். அவ்விருவரில் ஒருவர் வட்டமான அந்தச் சபையில் ஓர் இடைவெளியைக் கண்டபோது அதில் அமர்ந்தார். மற்றவரோ சபையின் பின்னால் அமர்ந்து வெட்கப்பட்டு (கடைசியில் உட்கார்ந்து)விட்டார். எனவே அல்லாஹ்வும் வெட்கப்பட்டான். மூன்றாமவரோ அலட்சியப்படுத்திச் சென்றார். எனவே அல்லாஹ்வும் அவரை அலட்சியப்படுத்தினான்" என அபூ வாக்கித் அல் லைஸீ(ரலி) அறிவித்தார்.

### "நேரில் கேட்டவரை விடக் கேட்டவரிடம் கேட்கும் எத்தனையோ பேர் நன்கு புரிந்து கொள்கிறார்கள்" என்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று.

ஹதீஸ் 67. 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓர் ஒட்டகத்தின் மீது அமர்ந்திருந்தார்கள். ஒருவர் அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார். அப்போது அவர்கள், 'இது எந்த நாள்?' என்று கேட்டார்கள். அந்த நாளுக்கு இன்னும் ஒரு பெயர் சூட்டுவார்களோ என்று கருதி நாங்கள் மௌனமாக இருந்தோம். 'இது நஹ்ருடைய (துல்ஹஜ் மாதம் பத்தாம்) நாள் அல்லவா?' என்றார்கள். அதற்கு 'ஆம்' என்றோம். அடுத்து இது 'எந்த மாதம்?' என்றார்கள். அந்த மாதத்துக்கு இன்னும் ஒரு பெயர் சூட்டுவார்களோ என்று கருதி நாங்கள் மௌனமாக இருந்தோம். 'இது துல்ஹஜ் மாதமல்லவா?' என்றார்கள். நாங்கள் 'ஆம்!' என்றோம். அடுத்து '(புனிதமான) இந்த ஊரில், இந்த மாதத்தில், இன்றைய தினம் எவ்வளவு புனிதமானதோ, அதுபோன்று, உங்களின் உயிர்களும், உடைமைகளும் புனிதம் வாய்ந்தவையாகும்' என்று கூறிவிட்டு 'இங்கே வருகை தந்திருப்பவர் வராதவருக்கு இச்செய்தியைக் கூறி விடவேண்டும் ஏனெனில், வருகை தந்திருப்பவர் அவரை விட நன்கு புரிந்து கொள்ளும் ஒருவருக்கு அச்செய்தியை எடுத்துச் சொல்லி விடக் கூடும்' என்றார்கள்" என அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

### சொல்வதற்கும் செயல்படுவதற்கு முன்னால் அறிந்து கொள்ளுதல்.

அல்லாஹ் கூறினான்.

"(நபியே!) அறிந்து கொள்ளும். வணங்கி வழிபடுவதற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை." (திருக்குர்ஆன் 47:19) இங்கே அறிந்து கொள்வதைப் பற்றி முதலில் கூறியுள்ளான்.

மேலும், நிச்சயமாக அறிஞர்கள் இறைத்தூதரின் வாரிசுகளாவர். அவர்கள் அறிவைத்தான்விட்டுச் சென்றுள்ளார்கள். இந்த அறிவைப் பெற்றவரே நிறைய பாக்கியம் பெற்றவராவர்.

"கல்வியைத் தேடி ஒருவர் ஒரு வழியில் சென்றால் அவருக்குச் சுவர்க்கத்திற்குச் செல்லும் வழியை அல்லாஹ் இலகுவாக்குகிறான்."

அல்லாஹ் கூறினான்: 'நிச்சயமாக அல்லாஹ்வின் அடியார்களில் அவனை அஞ்சுபவர்கள்தாம் அறிஞர்கள்" (திருக்குர்ஆன் 35:28)

மேலும் அல்லாஹ் கூறினான் 'அதனை அறிஞர்களைத் தவிர (வேறெவரும்) புரிந்து கொள்ள மாட்டார்கள்." (திருக்குர்ஆன் 29:43)

மேலும் அல்லாஹ் கூறினான்: 'நாங்கள் (செவி தாழ்த்திக்) கேட்டிருந்தாலோ, அவற்றைப் புரிந்து கொண்டிருந்தாலோ (இன்று) நரக வாசிகளாய் நாங்கள் இருந்திருக்க மாட்டோம் என்று (நிராகரிப்பாளர்கள் மறுமையில்) கூறுவார்கள்." (திருக்குர்ஆன் 67:10)

மேலும் கூறுகிறான்:

"அறிந்தவர்களும் அறியாதவர்களும் சமமாவார்களா?' (திருக்குர்ஆன் 39:09)

“ஒருவருக்கு அல்லாஹ் ஒரு நன்மையை நாடினால் அவரை (மார்க்கத்தில்) விளக்கமுடையவராக ஆக்கி விடுகிறான்‘ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மேலும் ‘மார்க்க ஞானம் என்பது கற்றுக் கொள்வதன் மூலம்தான் கிடைக்கும்“ (என்றும் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்).

அபூ தர் (ரலி) தம் பிடரியைச் சுட்டிக்காட்டி ‘இதன் மீது நீங்கள் வாளை வைத்து நபி (ஸல்) அவர்களிடம் நான் செவியுற்ற ஒரு செய்தியைச் சொல்லக் கூடாது என்று தடுத்தாலும் நான் அதனைச் சொல்வேன்‘ என்றார்கள்.

“(மக்களே!) ரப்பானிகளாய், விவேகம் மிக்கவர்களாய், அறிஞர்களாய் ஆம் விடுங்கள்.‘ ‘ரப்பானி‘ என்பவர் மக்களுக்குப் பெரிய விஷயங்களைச் சொல்வதற்கு முன்னால் சிறிய விஷயங்களைப் படிப்படியாகப் போதிப்பவராவார்“ என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்.

## மக்கள் சலிப்படையாதிருக்க நபி (ஸல்) அவர்கள் பக்குவமாகப் போதனை செய்ததும், கல்வி புகட்டியதும்

ஹதீஸ் 68. ‘எங்களுக்குச் சலிப்பேற்பட்டு விடக் கூடும் என்று அஞ்சிப் பல்வேறு நாள்களிலும் கவனித்து எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அறிவுரை வழங்குபவர்களாக இருந்தார்கள்“ என இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 69. ‘இலகுவாக்குங்கள் சிரமத்தைக் கொடுக்காதீர்கள். மேலும் நல்லவற்றையே சொல்லுங்கள். சலிப்படைந்து ஓடிவிடுமாறு செய்யாதீர்கள் வெறுப்பூட்டாதீர்கள்‘ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அனஸ் (ரலி) அறிவித்தார்.

## அறிவுரை வழங்குவதற்காகக் கற்றவர்களுக்குகென்று குறிப்பிட்ட நாள்களை ஒதுக்குதல்

ஹதீஸ் 70. ‘அப்துல்லாஹ் (இப்னு மஸ்வூத்) (ரலி) ஒவ்வொரு வியாழக்கிழமை அன்றும் மக்களுக்கு அறிவுரை கூறும் வழக்கம் உடையவர்களாய் இருந்தார். அப்போது (ஒரு நாள்) ஒருவர் அவர்களிடம் ‘அபூ அப்துர் ரஹ்மானே! தாங்கள் ஒவ்வொரு நாளும் எங்களுக்கு அறிவுரை பகர்ந்திட வேண்டும் என பெரிதும் விரும்புகிறேன்‘ என்றார். அதற்கு (உங்களைச் சலிப்படையச் செய்து விடுவேனோ என்று அஞ்சுவதுதான் இதைவிட்டும் என்னைத் தடுக்கிறது. நான் உங்களுக்குச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளைக் கவனித்து அறிவுரை கூறுகிறேன். அவ்வாறுதான் நபி (ஸல்) அவர்கள் நாங்கள் சலிப்படைவதை அஞ்சி எங்களுக்கு அறிவுரை கூறிவந்தார்கள்‘ என்றார்“ எனஅபூ வாயில் அறிவித்தார்.

## அல்லாஹ் யாருக்கு மிகப் பெரும் நன்மையை நாடுகிறானோ அவரை மார்க்கத்தில் விளக்கம் பெற்றவராக ஆக்கி விடுகிறான்.

ஹதீஸ் 71. ‘எவருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகிறானோ அவரை மார்க்கத்தில் விளக்கம் பெற்றவராக ஆக்கி விடுகிறான். (போர் ஆதாயங்களை) அல்லாஹ் கொடுப்பவனாக இருக்கிறான். நான் அதை வினியோகிப்பவனாக இருக்கிறேன். இந்தச் சமுதாயத்தில் ஒருசாரார் அல்லாஹ்வின் கட்டளையைப் பேணுவதில் நிலைத்தே இருப்பார்கள். மறுமை நாள் வரும் வரை அவர்களுக்கு மாறு செய்பவர்களால் எந்தத் தீங்கும் செய்து விட முடியாது‘ இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என முஆவியா (ரலி) தம் சொற்பொழிவில் குறிப்பிட்டார்கள்.

## கல்வியில் விளக்கம் பெறுவது.

ஹதீஸ் 72. நான் இப்னு உமர் (ரலி) உடன் மதீனா வரை சென்றபோது அவர் வாயிலாக ‘நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தபோது ஒரு பேரீச்ச மரக் குருத்து கொண்டு வரப்பட்டது. அதைக் கண்டதும் ‘மரங்களில் ஒரு வகை மரமுள்ளது அது முஸ்லிமுக்கு

உவமானமாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அது பேரீச்ச மரம்தான் என்று நான் கூறிட எண்ணினேன். ஆனால் அப்போது நான் அங்கிருந்தவர்களிலெல்லாம் வயதில் மிக்க இளையவனாயிருந்ததால் மௌனமாயிருந்து விட்டேன். அப்போது நபி(ஸல்) 'அது பேரீச்ச மரம்!" என்றார்கள்' என்ற ஒரே ஒரு ஹதீஸைத் தவிர (வேறெதனையும்) அறிவித்தாக நான் கேட்டதில்லை" என முஜாஹித் அறிவித்தார்.

## கல்வி மற்றும் ஞானத்தில் தாமும் பிறரைப் போன்று சிறந்து விளங்க ஆர்வம் காட்டுதல்

"நீங்கள் தலைவர்களாக்கப்படுவதற்கு முன்னர் இஸ்லாமியச் சட்ட ஞானங்களைத் தெரிந்து கொள்ளுங்கள்" என்று உமர்(ரலி) கூறினார்.

"நீங்கள் தலைவர்களாக்கப்பட்ட பிறகும் மார்க்க விளக்கங்களைப் பெறுங்கள். (ஏனெனில்) நபி(ஸல்) அவர்களின் தோழர்கள் தங்களின் முதுமையிலும் கல்வி கற்றுள்ளார்கள்"என்று நான் (புகாரி) கூறுகிறேன்.

ஹதீஸ் 73. 'ஒருவருக்கு அல்லாஹ் வழங்கிய செல்வத்தை அவர் நல்ல வழியில் செலவு செய்தல் இன்னொருவருக்கு அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி, அதற்கேற்ப அவர் தீர்ப்பு வழங்குபவராகவும் கற்றுக் கொடுப்பவராகவும் இருப்பது ஆகிய இரண்டு விஷயங்களைத் தவிர வேறு எதிலும் பேராசை கொள்ளக் கூடாது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

கிழ்று (அலை) அவர்களுடன் மூஸா(அலை) அவர்கள் கடலில் சென்று. 'உமக்கு இறைவனால் கற்றுத் தரப்பட்ட நல்லவற்றை எனக்கு நீர் கற்றுத் தரவேண்டும் என்ற அடிப்படையில் நான் உம்மைப் பின் தொடரட்டுமா?' (திருக்குர்ஆன் 18:66) என்று கிழ்று (அலை) அவர்களிடம் மூஸா நபி கேட்டார்கள்" என்று அல்லாஹ் கூறினான்.

ஹதீஸ் 74. '(மூஸா(அலை) அவர்கள் ஓர் அடியாரைத் தேடிச் சென்றதாக அல்லாஹ் கூறும்) அடியார் யார்? என்பதில் இப்னு அப்பாஸும், ஹுர்ரு இப்னு கைஸு அல் பஸாரிய்யு என்பாரும் தர்க்கித்தனர். 'அவர் கிழ்றுதான்' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். அப்போது அந்த வழியாக உபை இப்னு கஅப்(ரலி) சென்றார். அவரை இப்னு அப்பாஸ்(ரலி) அழைத்து, 'நானும் என்னுடைய இந்தத் தோழரும் மூஸா(அலை) யாரைச் சந்திக்கச் செல்வதற்கு இறைவனிடம் வழிகாட்டும்படி கேட்டார்களோ அந்தத் தோழர் விஷயத்தில் (அவர் யார்? என்று) தர்க்கித்துக் கொண்டோம். நபி(ஸல்) அவர்கள் அது விஷயமாக எதுவும் கூறக் கேட்டிருக்கிறீர்களா?' என்று கேட்டார்கள்! அதற்கு உபை இப்னு கஃபு(ரலி), 'ஆம்!' என்று கூறிவிட்டுத் தொடர்ந்து, 'மூஸா(அலை) அவர்கள் இஸ்ரவேலர்களின் பிரமுகர்களுக்கிடையில் இருந்த ஒரு சமயத்தில் ஒருவர் வந்தார். '(மூஸா அவர்களே!) உம்மை விடச் சிறந்த அறிஞர் ஒருவரை நீர் அறிவீரா?' எனக் கேட்டதற்கு மூஸா(அலை) அவர்கள் 'இல்லை!' என்றார்கள். அப்போது இறைவன் 'ஏன் இலை? என்னுடைய அடியார் கிழ்று இருக்கிறார்களே!" என்று மூஸா(அலை) அவர்களுக்கு அறிவித்தான். உடனே மூஸா(அலை) அவர்கள் அவரைச் சந்திக்கும் வழி என்னவென்று இறைவனிடம் கேட்டார்கள். அதற்கு இறைவன் மீனை அவர்களுக்கொரு அடையாளமாக ஏற்படுத்தினான். மேலும் அவர்களிடம் 'இந்த மீனை எங்கே தொலைத்து விடுகிறீரோ அங்கிருந்து வந்த வழியே திரும்பி விட வேண்டும்! அப்போது அவரை (அங்கு) நீர் சந்திப்பீர்" என்று சொல்லப்பட்டது. அது போன்று (தம்முடன் கொண்டு வந்த) மீன் கடலில் தொலைந்து போவதை எதிர் பார்த்தவர்களாகத் தம் பயணத்தைத் தொடர்ந்தார்கள். அப்போது மூஸா(அலை) அவர்களுடன் வந்த இளைஞர் 'நாம் ஒரு பாறை ஓரமாக ஒதுங்கியபோது அந்த இடத்தில் மீனை மறந்து விட்டேன். (உண்மையில்) நினைவு படுத்துவதைவிட்டும் என்னை மறக்கடித்தவன் ஷைத்தானைத் தவிர வேறு யாருமில்லை' என்று மூஸா(அலை) அவர்களிடம்

கூறியபோது 'அட! அது தானே நாம் தேடி வந்த அடையாளம்!' என்று மூஸா(அலை) அவர்கள் கூறிவிட்டு இருவருமாகத் தாம் வந்த வழியை நோக்கிப் பேசிக் கொண்டே திரும்பினார்கள். அங்கே கிழ்று (அலை) அவர்களைக் கண்டார்கள். மூஸா, கிழ்று இருவர் விஷயத்தைத்தான் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்' என்று கூறினார்" என உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் அறிவித்தார்.

## "இறைவா! இவருக்கு வேத ஞானத்தைக் கற்றுக் கொடு' என்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று

ஹதீஸ் 75. 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை அணைத்து 'இறைவா! இவருக்கு வேத ஞானத்தைக் கற்றுக் கொடு' என்று கூறினார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## சிறுவர்களின் கேள்வித் திறன் எப்போது சீராகும்?

ஹதீஸ் 76. 'நான் பெட்டைக் கழுதை ஒன்றின் மீது சென்று கொண்டிருந்தேன். அந்நாளில் நான் பருவ வயதை நெருங்கிக் கொண்டிருந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மினாவில் தடுப்பு எதையும் முன்னோக்காதவர்களாகத் (திறந்த வெளியில்) தொழுது கொண்டிருந்தார்கள். கழுதையை மேயவிட்டுவிட்டு (தொழுவோரின்) வரிசையினிடையே கடந்து சென்று ஒரு வரிசையில் நானும் புகுந்து கொண்டேன். என்னுடைய அச்செயலை யாரும் ஆட்சேபிக்கவில்லை" என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

77. 'நான் ஐந்து வயது சிறுவனாக இருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் ஒரு வாளியிலிருந்து (தண்ணீரை எடுத்துத் தம் வாயில் வைத்து) என் முகத்தில் ஒரு முறை உமிழ்ந்ததை நான் (இப்போதும்) நினைவில் வைத்திருக்கிறேன்" என மஹ்மூது இப்னு ரபீவு(ரலி) கூறினார்.

## கல்வியைத் தேடிப் புறப்படுதல்

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) ஒரே ஒரு நபிமொழியைத் தெரிவதற்காக அப்துல்லாஹ் இப்னு உனைஸ்(ரலி) அவர்களை நோக்கி ஒரு மாதத் தொலை தூரத்திற்குப் பயணம் சென்றார்கள்

ஹதீஸ் 78. '(மூஸா(அலை) அவர்கள் ஓர் அடியாரைத் தேடிச் சென்றதாக அல்லாஹ் கூறும்) அடியார் யார்? என்பதில் இப்னு அப்பாஸும் ஹுர்ரு இப்னு கைஸு அல் பஸரிய்யு என்பாரும் தர்க்கித்தனர். அப்போது அந்த வழியாக உபை இப்னு கஅப்(ரலி) சென்றார்கள். அவரை இப்னு அப்பாஸ்(ரலி) அழைத்து, 'நானும் என்னுடைய இந்தத் தோழரும் மூஸா(அலை) யாரைச் சந்திக்கச் செல்வதற்கு இறைவனிடம் வழி காட்டும் படி கேட்டார்களோ அந்தத் தோழர் விஷயத்தில் (அவர் யார்? என்று) தர்க்கித்துக் கொண்டோம். நபி(ஸல்) அவர்கள் அது விஷயமாக எதுவும் கூறக் கேட்டிருக்கிறீர்களா?' என்று கேட்டதற்கு உபை இப்னு கஃபு(ரலி) 'ஆம்!' என்று கூறிவிட்டுத் தொடர்ந்து, 'மூஸா(அலை) அவர்கள் இஸ்ரவேலர்களின் பிரமுகர்களுக்கிடையில் இருந்த ஒரு சமயத்தில் ஒருவர் வந்தார். '(மூஸா அவர்களே!) உம்மைவிடச் சிறந்த அறிஞர் ஒருவரை நீர் அறிவீரா?' எனக் கேட்டார்! அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'இல்லை' என்றார்கள். அப்போது இறைவன் 'ஏன் இல்லை? என்னுடைய அடியார் கிழ்று இருக்கிறாரே!" என்று மூஸா(அலை) அவர்களுக்கு அறிவித்தான். உடனே மூஸா(அலை) அவர்கள் அவரைச் சந்திக்கும் வழி என்னவென்றும் இறைவனிடம் கேட்டார்கள். அதற்கு இறைவன் மீனை அவர்களுக்கொரு அடையாளமாக்கினான். மேலும் அவர்களிடம் கூறப்பட்டது. 'இந்த மீனை எங்கே நீர் தொலைத்து விடுகிறீரோ அங்கிருந்து வந்த வழியே திரும்பி விட வேண்டும்! அப்போது அவரை அங்கு நீர் சந்திப்பீர்" அது போன்று (தம்முடன் கொண்டு வந்த) மீன் கடலில் தொலைந்து போவதை எதிர் பார்த்தவர்களாகத் தம் பயணத்தைத்

தொடர்ந்தார்கள்.

அப்போது மூஸா(அலை) அவர்களுடன் வந்த இளைஞர் ‘நாம் ஒரு பாறை ஓரமாக ஒதுங்கியபோது அந்த இடத்தில் மீனை மறந்து விட்டேன். (உண்மையில்) நினைவுபடுத்துவதைவிட்டும் என்னை மறக்கடித்தவன் ஷைத்தானைத் தவிர வேறு யாருமில்லை‘ என்று மூஸா(அலை) அவர்களிடம் கூறியபோது ‘அட! அது தானே நாம் தேடி வந்த அடையாளம்!‘ என்று மூஸா(அலை) அவர்கள் கூறிவிட்டு இருவருமாகத் தாம் வந்த வழியை நோக்கிப் பேசிக் கொண்டே திரும்பினார்கள். அங்கே கிள்று(அலை) அவர்களைக் கண்டார்கள். மூஸா, கிள்று இருவர் விஷயத்தைத்தான் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்‘ என்று கூறினார்“ என உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் அறிவித்தார்.

## கற்போர் மற்றும் கற்பிப்போரின் சிறப்பு

ஹதீஸ் 79. ‘அல்லாஹ் என்னை நேர்வழி மற்றும் ஞானத்துடன் அனுப்பியதற்கு உவமையாவது, நிலத்தில் விழுந்த பெருமழை போன்றதாகும். அவற்றில் சில நிலங்கள் நீரை ஏற்று ஏராளமான புற்களையும் செடி, கொடிகளையும் முளைக்கச் செய்தன. வேறு சில தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ளும் தரிசு நிலங்களாகும். அதனை இறைவன் மக்களுக்குப் பயன்படச் செய்தான். அதனை மக்கள் அருந்தினர் (தம் கால் நடைகளுக்கும்) புகட்டினார் விவசாயமும் செய்தனர். அந்தப் பெருமழை இன்னொரு வகை நிலத்திலும் விழுந்தது. அது (ஒன்றுக்கும் உதவாத) வெறும் கட்டாந்தரை. அது தண்ணீரைத் தேக்கி வைத்துக் கொள்ளவும் இல்லை புற்பூண்டுகளை முளைக்க விடவுமில்லை. இதுதான் அல்லாஹ்வின் மார்க்கத்தில் விளக்கம் பெற்று நான் கொண்டு வந்த தூதினால் பயனடைந்து, கற்றுத் தெரிந்து பிறருக்கும் கற்றுக் கொடுத்தவருக்கும் நான் கொண்டு வந்த தூதை ஏறிட்டுப் பாராமலும் நான் கொண்டு வந்த அல்லாஹ்வின் நேர் வழியை ஏற்றுக் கொள்ளாமலும் வாழ்கிறவனுக்கும் உவமையாகும்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## கல்வி மறைவதும் அறியாமை வெளிப்படுவதும்.

“சிறிதளவேனும் கல்வி இருக்கிறவர் (அதைப் பயன்படுத்தாமல்) தம்மைப் பாழ்படுத்தக் கூடாது“ என்று ரபீஆ கூறினார்.

ஹதீஸ் 80. ‘கல்வி மக்களிடமிருந்து மறைந்து விடுவதும் அறியாமை நிலைத்து விடுவதும் மது அருந்தப் படுவதும் வெளிப்படையாய் விபசாரம் நடப்பதும் மறுமை நாளின் அடையாளங்களில் சிலவாகும்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 81. ‘எனக்குப் பின்னர் வேறு எவரும் உங்களுக்கு அறிவிக்க முடியாத நபிமொழி ஒன்றை (இப்போது) நான் உங்களுக்கு அறிவிக்கப் போகிறேன். ‘கல்வி குறைந்து போய் விடுவதும் அறியாமை வெளிப்படுவதும் வெளிப்படையாய் விபச்சாரம் நடப்பதும் ஐம்பது பெண்களுக்கு அவர்களை நிர்வகிக்கும் ஒரே ஆண் என்ற நிலமை வரும் அளவுக்குப் பெண்கள் மிகுதியாவதும் ஆண்கள் குறைந்து விடுவதும் மறுமை நாளின் சில அடையாளங்களாகும்‘ என்று இறைத்தூதர்(ஸல்) கூறக் கேட்டிருக்கிறேன்“ என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## கல்வியின் சிறப்பு.

ஹதீஸ் 82. ‘நான் உறங்கிக் கொண்டிருந்த வேளையில் (என்னுடைய கனவில்) ஒரு பால் கோப்பை என்னிடம் கொண்டு வரப்பட்டது. உடனே (அதிலிருந்த பாலை நான்) தாகம் தீருமளவு குடித்து அது என்னுடைய நகக் கண்கள் வழியாக வெளியேறுவதைப் பார்த்தேன். பின்னர் மீத மிருந்ததை உமர் இப்னு கத்தாப் அவர்களுக்குக் கொடுத்தேன்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது நபித் தோழர்கள் இறைத்தூதர் அவர்களே! அந்தப்

பாலுக்குத் தாங்கள் என்ன விளக்கம் தருகிறீர்கள்?' என்று கேட்டதற்கு 'கல்வி' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

### பிராணிகளின் மீதும், ஏனையவற்றின் மீதும் நின்ற நிலையில் தீர்ப்பளித்தல்

ஹதீஸ் 83. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் இறுதி ஹஜ்ஜின்போது மினாவில் நின்றிருந்தார்கள். மக்கள் அவர்களிடம் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தனர். அப்போது ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து 'நான் மார்க்கச் சட்டங்கள் அறிந்தவனல்ல. எனவே, மினாவில் குர்பானி கொடுப்பதற்கு முன் என் தலைமுடியைக் களைந்து விட்டேன்' என்றார். அதற்கவர்கள் 'பரவாயில்லை நீர் இப்போது குர்பானி கொடுக்கலாம்' என்றார்கள். அப்போது இன்னொருவர் நான் அறியாதவன் எனவே, கல் எறிவதற்கு முன்பே நான் குர்பானி கொடுத்து விட்டேன்' என்றார். அதற்கு நபியவர்கள் 'பரவாயில்லை எறிந்து கொள்ளும்!' என்றார்கள். முந்தியோ பிந்தியோ செய்துவிட்டதாகக் கேட்கப்பட்ட போதெல்லாம் 'பரவாயில்லை! செய்து கொள்ளுங்கள்' என்றே பதில் கூறிக் கொண்டிருந்தார்கள்''என அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்.

### கை அல்லது தலையினால் சைகை செய்து தீர்ப்பு வழங்குதல்

ஹதீஸ் 84. 'நபி(ஸல்) அவர்களிடம் ஹஜ்ஜின்போது பல கேள்விகள் கேட்கப்பட்டன. அப்போது 'நான் கல்லெறிவதற்கு முன்பே குர்பானி கொடுத்து விட்டேன்' என்று ஒருவர் கேட்டார். நபி(ஸல்) அவர்கள் 'பரவாயில்லை' எனத் தம் கையால் சைகை செய்தார்கள். மற்றொருவர், 'பலியிடு முன் தலை முடியைக் களைந்து விட்டேன்' என்றார். நபி அவர்கள் 'பரவாயில்லை' எனத் தம் கையால் சைகை செய்தார்கள்'' என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 85. '(ஒரு காலத்தில்) கல்வி பறிக்கப்பட்டு விடும். அறியாமையும் குழப்பங்களும் பரவிவிடும். கொந்தளிப்பு மிகுந்து விடும்'' அப்போது 'இறைத்தூதர் அவர்களே! கொந்தளிப்பு என்றால் என்ன?' என வினவப்பட்டதற்கு, தம் கையால் கொலை செய்வதைப் போல் நபி(ஸல்) பாவனை செய்து காட்டினார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 86 'ஆயிஷா(ரலி) தொழுது கொண்டிருந்தார். மக்களும் தொழுதார்கள். நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் வந்து, 'மக்களுக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டேன். ஆயிஷா(ரலி) வானை நோக்கிச் சுட்டிக் காட்டினார். (தொழுகையில் பேசக் கூடாது என்பதால்), 'ஸுப்ஹானல்லாஹ்' என்றும் கூறினார். அப்போது 'இது (ஏதாவது) அடையாளமா?' என நான் கேட்டதற்கு, ஆயிஷா(ரலி), 'ஆமாம் அப்படித்தான்' என்று தலையால் சைகை செய்தார்கள். உடனே நானும் (தொழுகையில்) நின்று கொண்டேன். (நீண்ட நேரம் நின்றதால்) நான் மயக்கமுற்றேன். (மயக்கத்தைப் போக்க) என்னுடைய தலையின் மீது தண்ணீரை ஊற்றினேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் உரையில் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து, 'எனக்கு இது வரை காட்டப்படாத சுவர்க்கம், நரகம் உட்பட அத்தனைப் பொருட்களையும் இந்த இடத்திலேயே கண்டேன். மேலும் எனக்கு அறிவிக்கப்பட்டது. நிச்சயமாக நீங்கள் உங்கள் மண்ணறைகளில் மஸீஹுத் தஜ்ஜால் என்பவனுடைய குழப்பத்துக்கு நிகரான சோதனைக்கு உள்ளாக்கப்படுவீர்கள். (அப்போது மண்ணறையில் அடக்கம் செய்யப்பட்டவரிடம்) 'இந்த மனிதரைப் பற்றி உமக்கு என்ன தெரியும்?' என்று கேட்கப்படும். நம்பிக்கையாளர் 'அவர்கள் இறைத்தூதர் முஹம்மத்(ஸல்) ஆவார்கள் அவர்கள் எங்களுக்குத் தெளிவான சான்றுகளையும் நேர்வழியையும் கொண்டு வந்தார்கள் நாங்கள் (அவர்களின் அழைப்பை) ஏற்றோம்' அவர்களைப் பின் பற்றினோம் அவர்கள் முஹம்மத்(ஸல்) அவர்கள்தாம்' என்று மும்முறை கூறுவார். அப்போது '(சுவனப் பேரின்பங்களைப் பெறத்) தகுதி பெற்றவராக நீர்

(நிம்மதியாக) உறங்குவீராக!' என்றும் 'நிச்சயமாகவே நீர் நபி(ஸல்) அவர்களைப் பற்றி இத்தகைய உறுதியான நம்பிக்கையுடையவராகவே (உலகில்) இருந்தீர் என்று நாமறிவோம்' என்றும் கூறப்படும். நயவஞ்சகனோ 'எனக்கு எதுவும் தெரியாது மக்கள் அவரைப் பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருக்கக் கேட்டிருக்கிறேன். எனவே நானும் அது போன்று கூறினேன்' என்பான்' என்று கூறினார்கள்" என அஸ்மா(ரலி) அறிவித்தார்.

"அஸ்மா(ரலி) இந்த ஹதீஸை அறிவிக்கும்போது 'நிகரான' என்ற இடத்தில் 'அடுத்த படியான' என்று கூறினார்களா? 'நயவஞ்சகன்' என்ற இடத்தில் 'சந்தேகத்துடன் இருந்தவன்' என்று கூறினார்களா? என்பது எனக்கு நினைவில்லை" என்று ஃபாத்திமா கூறினார்.

### ஈமான், மார்க்கக் கல்வி ஆகியவற்றை நினைவில் வைத்துக் கொள்ளும் படியும் அவற்றை அவர்களுக்கப்பால் (ஊரில்) உள்ளவர்களிடம் (சென்று) அறிவிக்கும் படியும் அப்துல் கைஸின் தூதுக்குழுவிடம் நபி(ஸல்) அவர்கள் தூண்டியது.

"நீங்கள் உங்கள் குடும்பத்தாரிடம் திரும்பிச் சென்று அவர்களுக்கு (நான் கூறியவற்றைக்) கற்றுக் கொடுங்கள்' என்று எங்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று (தூதுக் குழுவில் ஒருவராய் வந்த) மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 87. 'இப்னு அப்பாஸுக்கும் மக்களுக்குமிடையில் நான் மொழிபெயர்க்கக் கூடியவனாக இருந்தேன். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். அப்துல் கைஸின் தூதுக் குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் வந்திருந்தபோது 'வந்திருக்கும் இம்மக்கள் யார்?' அல்லது 'வந்திருக்கும் இவ்வம்சத்தினர் யார்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கு 'அவர்கள் 'ரபீஆ' வம்சத்தினர்' என்றார்கள். '(தாமாக இஸ்லாத்தை ஏற்க வந்துவிட்டதால்) இழிவுபடுத்தப்படாத நிலையிலும் பின்னர் வருந்தாத நிலையிலும் இம்மக்களின் அல்லது இத்தூதுக்குழுவினரின் வருகை - நல்வகையாகுக!' என்று நபி(ஸல்) அவர்கள் வாழ்த்துக் கூறினார்கள். அப்போது அம்மக்கள் 'நாங்கள் மிக தூரமான ஊரிலிருந்து உங்களிடம் வந்துள்ளோம். எங்களுக்கும் உங்களுக்குமிடையில் இது வரை இஸ்லாத்தை ஏற்காதவர்களான 'முளர்' கூட்டத்தினர் குறுக்கே வாழ்கிறார்கள். எனவே யுத்தம் புரிவதற்குத் தடை செய்யப்பட்ட புனித மாதங்களிலேயே தவிர (வேறு மாதங்களில்) தங்களைச் சந்திக்க வர முடியாது. எனவே சில விஷயங்களை எங்களுக் கட்டளையிடுங்கள். அவற்றை நாங்கள் (இங்கே வராமல்) எங்களுக்குப் பின்னே தங்கிவிட்டவர்களுக்கு அறிவிப்போம். அதன் மூலம் நாங்கள் (இங்கே வராமல்) எங்களுக்குப் பின்னே தங்கிவிட்டவர்களுக்கு அறிவிப்போம். அதன் மூலம் நாங்கள் சுவர்க்கமும் செல்வோம்' என்று கேட்டுக் கொண்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் நான்கு விஷயங்களை ஏவினார்கள் நான்கு விஷயங்களைத் தடை செய்தார்கள். அல்லாஹ் ஒருவனையே நம்புமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு, 'அல்லாஹ் ஒருவனையே நம்புவது என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். அதற்கவர்கள் 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்' என்றார்கள். அதற்கு 'வணங்கி வழிபடுவதற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் இறைத்தூதர் என்றும் உறுதியாக நம்புவது தொழுகையை நிலை நிறுத்துவது ஸகாத் வழங்குவது ரமலான் மாதம் நோன்பு நோற்பது போரில் கிடைக்கும் பொருட்களிலிருந்து ஐந்தில் ஒரு பங்கை (அல்லாஹ்விற்காக) நீங்கள் வழங்கி விடுவது ஆகிய இவையே ஈமான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும் (மது வைத்திருந்த) சுரைக் குடுக்கைகள், மண்ஜாடிகள், தார் பூசப்பட்ட பாத்திரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தக் கூடாது என்று அவர்களுக்குத் தடை விதித்தார்கள். (இத்தடை பின்னர் நீக்கப்பட்டது) 'இவற்றை நன்கு மனதில் பதிய வைத்துக் கொண்டு (இங்கே வராமல்) உங்கள் பின்னே (உங்களை

எதிர்பார்த்து) இருப்போரிடம் சென்று அறிவித்து விடுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஜம்ரா அறிவித்தார்.

"ஒரு வேளை 'பேரீச்சை மரத்தின் அடி மரத்தைக் குடைந்து தயாரித்த மரப் பீப்பாய்கள்' என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறியிருக்கலாம்" என ஷுஅபா கூறினார்.

## ஒரு சட்டப் பிரச்சினை(யின் தீர்வு)க்காகப் பயணம் மேற்கொள்வதும் அதைத் தன் குடும்பத்தினருக்குக் கற்றுக் கொடுப்பதும்.

**ஹதீஸ் 88.** 'நான் அபூ இஹாப் இப்னு அஜீஸ் என்பவரின் மகளை மணந்தேன். அப்போது ஒரு பெண்மணி என்னிடம் வந்து, 'நான் உக்பாவுக்கும் அவர் மணந்துள்ள பெண்ணுக்கும் (அவர்களின் குழந்தைப் பருவங்களில்) பாலூட்டியிருக்கிறேன்' என்றார். அதற்கு நான் 'நீங்கள் எனக்குப் பால் கொடுத்ததே எனக்குத் தெரியாது. மேலும் (இத்தகவலை) எனக்கு (இதற்குமுன்) நீங்கள் சொல்லவுமில்லையே' என்று கூறினேன். உடனே (மக்காவில் வாழ்ந்திருந்த நான்) மதீனாவிலிருந்த நபி(ஸல்) அவர்களை நோக்கிப் பயணமானேன். அங்கு சென்று அவர்களிடம் இந்தப் பிரச்சினை பற்றி விளக்கம் கேட்டேன். உடனே நபி(ஸல்) அவர்கள் '(நீர் அந்தப் பெண்ணுக்குச் சகோதரன் என்று) சொல்லப்பட்டுவிட்ட நிலையில் எப்படி (உறவு கொள்வீர்)?' என்று கேட்டார்கள். உடனே நான் அப்பெண்ணை விவாரத்ச் செய்துவிட்டேன். அந்தப் பெண்ணும் வேறொரு கணவனை மணந்தார்" என உக்பா இப்னு அல்ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

## முறை வைத்துக்கற்றல்.

**ஹதீஸ் 89.** 'நானும் அன்சாரித் தோழர்களில் ஒருவரான என்னுடைய அண்டை வீட்டுக்காரரும் உமய்யா இப்னு ஜைது என்பவரின் சந்ததிகள் வசித்து வந்த இடத்தில் வாழ்ந்து வந்தோம். அது மதீனாவின் உயரமான இடங்களில் ஒன்றாகும். நபி(ஸல்) அவர்களின் அவைக்கு நாங்கள் முறை வைத்துச் சென்று வந்தோம். ஒரு நாள் அவர் செல்வார் ஒரு நாள் நான் செல்வேன். நான் சென்று நபி(ஸல்) அவர்களுக்கு இறைவனிடமிருந்து அறிவிக்கப்பட்ட செய்தி மற்றும் ஏனைய செய்திகள் முழுவதையும் அவருக்காகக் கொண்டு வந்து (அவரிடம் அறிவித்து) விடுவேன். அது போன்று அவர் சென்றுவரும் போதும் அவ்வாறே செய்வார். அவரின் முறை வந்தபோது என்னுடைய அன்சாரித் தோழர், சென்றுவிட்டு வந்த என் வீட்டுக் கதவை மிக வேகமாகத் தட்டினார். 'அவர் அங்கே இருக்கிறாரா?' என்றும் கேட்டார். நான் பதறிப்போய் வந்தேன். அப்போது அவர் (நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவியரை விவாகரத்துச செய்துவிட்டார்கள் என்ற வதந்தியைக் கேள்விப்பட்டு) 'ஏதோ ஒரு பெரிய காரியம் நடந்திருக்கிறது' என்றார். உடனே நான் (என் மகள்) ஹஃப்ஸாவிடம் சென்றேன். அங்கே அவர் அழுது கொண்டிருந்தார். 'நபி(ஸல்) அவர்கள் உங்களையெல்லாம் விவாகரத்துச் செய்துவிட்டார்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர் 'எனக்குத் தெரியவில்லை' என்றார். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் சென்று 'தங்களின் துணைவியர்களை விவாகரத்துச் செய்து விட்டீர்களா?' என்று நின்ற நிலையில் கேட்டேன். அதற்கவர்கள் 'இல்லையே' என்றார்கள். உடனே நான் 'அல்லாஹ் மிகப் பெரியவன்' என்று சொன்னேன்" என உமர்(ரலி) அறிவித்தார்.

## அறிவுரை கூறும் போதும் கல்வி கற்றுக் கொடுக்கும் போதும் தமக்குப் பிடிக்காத ஒன்றைக் காணும்போது கோபமடைதல்.

**ஹதீஸ் 90.** 'ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் 'இறைத்தூதர் அவர்களே! இன்னார் (தொழுகை நடத்தும் போது) தொழுகையை எங்களுக்கு நீட்டிக் கொண்டே போவதால் என்னால் பெரும்பாலும் (கூட்டுத்) தொழுகையைப் பெறவே முடிவதில்லை' என்று கூறினார். (இதைக்

கேட்ட நபி(ஸல்) அவர்கள் உரையாற்றலானார்கள்.) அவர்கள் தங்களின் உரையில் அன்றைய தினம் கடுமையாகக் கோபப்பட்டது போல் கோப்பட்டதை நான் பார்த்தே இல்லை! (அவ்வுரையில்) 'மக்களே! நீங்கள் நிச்சயமாகவே வெறுப்புக் கொள்ளும் படியே நடந்து கொள்கிறீர்கள். மக்களுக்குத் தொழுகை நடத்துபவர் அதை இலகுவாக்கட்டும். ஏனெனில், தொழவந்தவர்களில் நோயாளிகள், நலிவுற்றவர்கள், தேவைகளுடையவர்கள் இருப்பார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ மஸ்வூத்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 91. 'நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வழியில் கண்டெடுக்கப்பட்ட பொருளைப் பற்றி (சட்டம்) கேட்டதற்கு, 'அதனைக் கட்டியிருக்கும் கயிற்றைப் பற்றி, அந்தப் பொருளிருக்கும் பாத்திரத்தைப் பற்றி, பொருளுக்குப் போடப்பட்டிருக்கும் உறையைப் பற்றி (அதன் முழு விவரங்களை) நீர் அறிந்து வைத்துக் கொள்! பிறகு ஓராண்டு காலம் அதனைப் பற்றி விளம்பரப்படுத்துவீராக! அதற்குப் பிறகு அதனை நீர் பயன்படுத்திக் கொள். அதன் உரிமையாளர் அதனைக் கேட்டு வந்தால் அதனை அவரிடம் ஒப்படைத்து விடு!' என்றுத கூறினார்கள். 'அப்படியானால் வழி தவறி வந்துவிட்ட ஒட்டகத்தைப் பற்றிய சட்டம் என்ன?' என்று அவர் கேட்டார். உடனே தம் கன்னங்கள் இரண்டும் சிவந்து போகும் அளவு அல்லது அவர்களின் முகம் சிவந்து போகும் அளவுக்கு - கோபப்பட்டவர்களாக, 'கால் குளம்புகளும் அதற்கான தண்ணீரும் அதனுடன் இருக்க அதனை நீர் ஏன் பிடிக்கப் போகிறீர்? அது நீர் நிலைகளுக்குச் சென்று நீர் அருந்திக் கொள்ளும். மரங்களை மேய்ந்து கொள்ளும். எனவே, அதனை அதன் உரிமையாளரே பிடித்துக் கொள்ளும் வரை அதன் போக்கில்விட்ட விடுவீராக!' என்று கூறினார்கள். 'அப்படியானால் வழி தவறி வந்து விடும் ஆட்டின் சட்டம் என்ன?' என்று கேட்டார். 'அது உமக்கே உரியது. அல்லது (அதனைப் பிடிக்கும்) உம்முடைய அந்த சகோதரருக்குரியது. (அவ்வாறு அதனைப் பிடிக்காவிட்டால்) அது ஓநாய்க்குச் சொந்தமாம் விடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என ஜைத் இப்னு காலிது அல் ஜுஹைனீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 92. 'நபி(ஸல்) அவர்களுக்குப் பிடிக்காத பல விஷயங்கள் பற்றி அவர்களிடம் கேட்கப்பட்டது. அவர்களிடம் அது பற்றி அதிகமாகக் கேள்விகள் தொடுக்கப்பட்டபோது கோபப்பட்டார்கள். பின்னர் மக்களிடம் 'நீங்கள் நாடிய எதைப் பற்றி வேண்டுமானாலும் என்னிடம் கேளுங்கள்' எனக் கூறினார்கள். அப்போது ஒருவர். 'யார் என்னுடைய தந்தை?' என்று கேட்டதற்குவர்கள் 'ஹுதாபாதான் உம்முடைய தந்தை' என்றார்கள். உடனே வேறொருவர் எழுந்து 'என்னுடைய தந்தை யார்? இறைத்தூதர் அவர்களே!' என்று கேட்க 'உம்முடைய தந்தை ஷைபா என்பவரிடம் அடிமையாயிருந்த சாலிம் என்பவர் தாம்' என்றார்கள். (இக் கேள்விகளின் மூலம்) நபி(ஸல்) அவர்களின் முகத்தில் தென்பட்ட (கோபத்)தைக் கண்ட உமர்(ரலி) 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் மெய்யாகவே மகத்துவமும், கண்ணியமும் மிக்க இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருகிறோம்' என்றார்கள்" அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## தலைவரிடமும், நபிமொழித் துறை அறிஞரிடமும் முழந்தாளிட்டு அமர்தல்

ஹதீஸ் 93. 'நபி(ஸல்) அவர்கள் (தம் வீட்டிலிருந்து) வெளியே வந்தபோது அங்கு நின்றிருந்த அப்துல்லாஹ் இப்னு ஹுதா∴பா 'யார் என் தந்தை?' எனக் கேட்டார். அதற்கு 'உன்னுடைய தந்தை ஹுதா∴பா' என்று கூறிவிட்டு 'என்னிடம் கேளுங்கள்!' என்று அதிகமாகக் கூற ஆரம்பித்துவிட்டார்கள். உடனே உமர்(ரலி) முழந்தாளிட்டு அமர்ந்து 'நாங்கள் அல்லாஹ்வை எங்களைப் படைத்துப் பரிபாலிக்கும் அதிபதி என்றும், இஸ்லாத்தை (சரியான) மார்க்கமென்றும், முஹம்மத்(ஸல்) அவர்களை இறைத்தூதர் என்றும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டோம்' என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் அமைதியாகிவிட்டார்கள்" அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## தான் சொல்வது நன்கு புரிந்து கொள்ளப்பட வேண்டும் என்பதற்காக ஒரு செய்தியை மும்முறை கூறுதல்

(ஒரு முறை பெரும் பாவங்களைப் பற்றி நபி(ஸல்) அவர்கள் சொல்லும் போது) 'எச்சரிக்கையாக இருங்கள்! பொய் சாட்சி சொல்வதும் அவற்றில் ஒன்று தான்" எனத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

"(நபி(ஸல்) அவர்கள் தங்களின் இறுதி ஹஜ்ஜின்போது ஆற்றிய பேருரையின் கடைசியில்) 'நான் எல்லாவற்றையும் (உங்களுக்கு) சமர்ப்பித்து விட்டேனா?' என்று மும்முறை கேட்டார்கள்" என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 94. 'நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கூறினால் மூன்று முறை ஸலாம் கூறுவார்கள் ஏதாவது ஒரு வார்த்தையைப் பேசினால் அதனை மூன்று முறை திரும்பக் கூறுவார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 95. 'நபி(ஸல்) அவர்கள் ஏதாவது ஒரு வார்த்தை பேசினால் அது அவர்களிடமிருந்து நன்கு புரிந்து கொள்ளப்பட வேண்டும் என்பதற்காக மும்முறை அதைத் திரும்பக் கூறுவார்கள். ஏதாவது ஒரு சமூகத்தாரிடம் சென்றால் மும்முறை ஸலாம் கூறுவார்கள்" அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 96. 'நாங்கள் சென்ற பயணம் ஒன்றில் நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்தார்கள். அஸர் தொழுகையின் நேரம் நெருங்கிவிட்ட நிலையில் நாங்கள் உளூச் செய்து கொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் எங்களை வந்தடைந்தார்கள். அப்போது நாங்கள் எங்கள் கால்களைத் தண்ணீரால் தடவிக் கொண்டிருந்தோம். (அதைக் கண்டதும்) 'குதிங்கால்களைச் சரியாகக் கழுவாதவர்களுக்கு நரகம் தான்!' என்று இரண்டு அல்லது மூன்று முறை தம் குரலை உயர்த்திக் கூறினார்கள்"அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## அடிமைப் பெண்ணுக்கும், தம் குடும்பத்தாருக்கும் ஒருவர் கல்வி கற்றுக் கொடுத்தல்

ஹதீஸ் 97. 'மூன்று மனிதர்களுக்கு (அல்லாஹ்விடம்) இரண்டு விதமான கூலிகள் உள்ளன. ஒருவர் வேதக்காரர்களில் உள்ளவர். இவர் தம் (சமூகத்திற்கு அனுப்பப்பட்ட) தூதரையும், முஹம்மதையும் நம்பியவர். மற்றொருவர் தம் இறைவனின் கடமைகளையும், தம் எஜமானுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும் நிறைவேற்றும் அடிமை. மூன்றாமவர் தம்மிடத்திலுள்ள ஓர் அடிமைப் பெண்ணுக்கு ஒழுக்கப் பயிற்சி அளித்து, அந்தப் பயிற்சியை அழகுறச் செய்து, அவளுக்கு மார்க்கச் சட்டங்களைக் கற்பித்து, கற்றுத் தந்ததையும் அழகுறச் செய்து, பின்னர் அவளை அடிமைத்தளையிலிருந்து விடுவித்து அவளை மணந்தவர். இம்மூவருக்கும் இரண்டு விதக் கூலிகள் உண்டு' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

"இதை எந்தப் பகரமும் இல்லாமல் உமக்கு நாம் வழங்கி விட்டோம். முன்னர் இதை விடச் சின்னப் பிரச்சினைகளுக்காக மதீனாவுக்கு (வாகனங்களில்) பயணம் மேற்கொள்ளப்பட்டதுண்டு" என்று (தம்மிடம் சட்ட விளக்கம் கேட்டு வந்தவரிடம்) ஆமிர் கூறினார்.

## தலைவர் பெண்களுக்கு அறிவுரை வழங்குவதும், அவர்களுக்கு போதனை செய்வதும்.

ஹதீஸ் 98. 'பெண்களுக்கு (தம் உரையைக்) கேட்க வைக்க முடியவில்லை என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கருதி, பிலால்(ரலி) அவர்களுடன் பெண்கள் பகுதிக்குச் சென்றார்கள். அங்கு அவர்களுக்கு அறிவுரை கூறிவிட்டு அவர்களிடம் தர்மம் செய்யும்படி

ஏவினார்கள். உடனே பெண்கள் தம் காதணிகளையும், மோதிரத்தையும் கழற்றிப் போட ஆரம்பித்தார்கள். பிலால்(ரலி) தம் ஆடையி(ன் ஒரு புறத்தை விரித்து அதி)ல் அவற்றைப் பெற்றுக் கொண்டே சென்றார்கள்" இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

### நபி(ஸல்) அவர்கள் பற்றிய செய்திகளின் மீது பேரவாக் கொள்ளுதல்.

ஹதீஸ் 99. 'இறைத்தூதர் அவர்களே! மறுமை நாளில் தங்களின் பரிந்துரைக்குத் தகுதி படைத்த மனிதர் யார்?' என்று நபி(ஸல்) அவர்களிடம் நான் கேட்டபோது, 'அபூ ஹுரைராவே! என்னைப் பற்றிய செய்திகளின் மீது உமக்கிருக்கும் பேராவால் எனக்குத் தெரியும். எனவே, இச்செய்தியைப் பற்றியும் உமக்கு முன்னர் யாரும் என்னிடம் கேட்க மாட்டார்கள் என நான் நம்பியிருந்தேன்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு, 'மறுமை நாளில் மக்கள் அனைவரிலும் என் பரிந்துரைக்குத் தகுதி பெற்றவர் யாரெனில், உள்ளத்திலிருந்து - தூய்மையான எண்ணத்துடன் 'வணங்கி வழிபடுவதற்குரியவன் அல்லாஹ்வையன்றி வேறு யாருமில்லை என்று சொன்னவர்தாம்' என்று கூறினார்கள்" அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

### கல்வி அகற்றப்படுதல்.

"நபி(ஸல்) அவர்களின் பொன் மொழிகளை ஆராய்ந்து அதனை எழுதிக் கொள்வீர்களாக! ஏனெனில், மார்க்கக் கல்வி அழிந்து விடுமென்றும், (மார்க்க) அறிஞர்கள் (இவ்வுலகைவிட்டுச்) செல்வார்கள் என்றும் நான் அஞ்சுகிறேன். (அவர் அவ்வாறு எழுதியபோது) நபிமொழிகளைத் தவிர வேறு எதையும் ஏற்கக் கூடாது. (அறிஞர்கள்) அறிவைப் பரப்பட்டும் அறியாதவர்களுக்கு அது கற்றுக் கொடுக்கப்படும் வரை அவர்கள் (ஓரிடத்தில் நிலையாக) அமர்ந்து கொள்ளட்டும். ஏனெனில், கல்வி மறைக்கப்படாத வரை அது பாதுகாக்கப்படும் அழிந்துவிடாது" என்று உமர் இப்னு அப்தில் அஜீஸ் (மதீனாவின் ஆளுநராயிருந்த) அபூ பக்ரு இப்னு ஹஸ்முக்கு எழுதினார்.

ஹதீஸ் 100. 'நிச்சயமாக அல்லாஹ் கல்வியை(த் தன்னுடைய) அடியார்களிடமிருந்து ஒரேயடியாகப் பறித்து விட மாட்டான். ஆயினும் அறிஞர்களைக் கைப்பற்றுவதன் மூலமே அவன் கல்வியைக் கைப்பற்றுவான். கடைசியாக ஓர் அறிஞர் கூட மீதமில்லாமல் ஆக்கிவிட்டதும் மக்கள் அறிவீனர்களைத் தம் தலைவர்களாக்கிக் கொள்வார்கள். அவர்களிடம் கேள்விகள் கேட்கப்பட்டு அறிவின்றியே மார்க்கத் தீர்ப்பும் வழங்குவார்கள். (இதன் மூலம்) தாமும் வழி கெட்டு(ப் பிறரையும்) வழி கெடுப்பார்கள்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்.

### கல்விக்காகத் தனியே ஒரு நாளைப் பெண்களுக்கென ஒதுக்கலாமா?

ஹதீஸ் 101. '(நாங்கள் உங்களை அணுகும் மார்க்க விளக்கங்களை கேட்க முடியாதவாறு) தங்களிடம் (எப்போதும்) ஆண்களே எங்களை மிகைத்து நிற்கிறார். எனவே, தாங்களாகவே எங்களுக்கென்று ஒரு நாளை ஏற்பாடு செய்யுங்கள்' என்று பெண்கள் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டுக் கொண்டார்கள். அவர்களும் அப்பெண்களுக்கென ஒரு நாளை வாக்களித்து, அந்நாளில் அவர்களைச் சந்தித்து அவர்களுக்கு அறிவுரை பகர்ந்தார்கள். (மார்க்கக் கட்டளைகளை) ஏவினார்கள். அவர்கள் தங்களின் அறிவுரையில் 'உங்களில் ஒரு பெண் தன் குழந்தைகளில் மூவரை (மரணத்தின் மூலம்) இழந்துவிட்டாள் என்றால் அந்தக் குழந்தைகள் அப்பெண்ணை நரகத்துக்குச் செல்லாமல் தடுத்துவிடக் கூடியவர்களாக இருப்பார்கள்' என்று கூறினார்கள். அப்போது ஒரு பெண், 'இரண்டு குழந்தைகளை ஒருத்தி இழந்துவிட்டால்?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், 'இரண்டு, குழந்தைகளை ஒருத்தி இழந்துவிட்டாலும் தான்' என்று கூறினார்கள்" அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 102. 'பருவ வயதை அடையாத மூன்று குழந்தைகளை (ஒரு பெண் பறிகொடுத்தால்

அவளை நரகத்திலிருந்து காக்கும் திரையாக அக்குழந்தைகள் இருப்பார்கள்)' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் வாயிலாக இடம் பெற்றுள்ளது.

## கேட்ட செய்தியை (தெளிவாகப்) புரிந்து கொள்ளும் வரை மீண்டும் மீண்டும் அதைப் பற்றிக் கேட்பது

ஹதீஸ் 103. 'நபி(ஸல்) அவர்களின் மனைவி ஆயிஷா(ரலி) தமக்குத் தெரியாத ஒரு செய்தியைக் கேட்டால் அதனை அவர்கள் நன்கு புரிந்து கொள்ளும் வரை மீண்டும் மீண்டும் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள். '(மறுமையில்) விசாரணை செய்யப்பட்டவர் தண்டிக்கப்படுவார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது, 'மிக எளிதான விசாரணையாகவே விசாரிக்கப்படுவார்' என்று அல்லாஹ் (திருக்குர்ஆன் 84:08) கூறவில்லையா?' என ஆயிஷா(ரலி) கேட்டார்கள். அதற்க நபி(ஸல்) அவர்கள், 'அது (ஒருவர் செய்தவற்றை அவருக்கு) எடுத்துக் காட்டுவதாகும். எனினும், எவனிடம் துருவி விசாரிக்கப்படுகிறதோ அவன் அழிந்துவிடுவான்' என்று கூறினார்கள்" என இப்னு அபீ முலைக்கா அறிவித்தார்.

"இங்கே வருகை தந்திருப்பவர்கள் (தாம் பெற்ற) கல்வியை வராதவர்களுக்குத் தெரிவித்து விடட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் ஹஜ்ஜின்போது ஆற்றிய உரையில்) கூறினார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 104. 'அம்ர் இப்னு ஸயீது என்பவர் (யஸீதுடைய ஆட்சியின் போது) மக்காவை நோக்கி ஓர் இராணுவத்தை அனுப்பியபோது, 'தலைவரே! மக்கா வெற்றிக்கு மறுநாள் நபி(ஸல்) அவர்கள் நின்ற நிலையில் ஆற்றிய உரையை என்னுடைய இரண்டு காதுகளும் கேட்டிருக்கின்றன. என் உள்ளம் அதை நினைவில் வைத்திருக்கிறது. நபி(ஸல்) அவர்கள் உரையாற்றியபோது என் கண்கள் இரண்டும் அவர்களைப் பார்த்திருக்கின்றன. அவ்வுரையில் அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றினார்கள். பின்னர் 'இந்த மக்கா நகரை மனிதர்களில் யாரும் புனித(நகர)மாக்கவில்லை. அல்லாஹ்தான் இதனைப் புனித நகரமாக்கினான். எனவே, அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பியிருக்கும் எந்த மனிதனும் இங்கே இரத்தத்தை ஓட்டுவதோ, இதன் மரம், செடி, கொடிகளை வெட்டுவதோ கூடாது. இறைத்தூதர் இங்கு (ஒரு சிறு) போரிட்டதை ஆதாரமாகக் கொண்டு எவராவது அவ்வாறு இங்கே போரிடுவது அனுமதிக்கப்பட்டது என்று கருதினால், (அவர் தெரிந்து கொள்ளட்டும்) நிச்சயமாக அல்லாஹ் தன் தூதருக்கு (மட்டுமே) அனுமதியளித்தான் உங்களுக்கு அவன் அனுமதிக்கவில்லை என்று அவரிடம் கூறுங்கள். எனக்குக் கூட அவன் அனுமதியளித்தது பகல் பொழுதின் சிறிது நேரத்திற்கு மட்டும் தான். பின்னர் இன்று அதன் புனிதம் நேற்றுள்ள அதன் புனிதம் போல் வந்துவிட்டது. (இச்செய்தியை இங்கே) வராதிருப்பவர்களுக்கு வந்திருப்பவர்கள் தெரிவித்து விடட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்று நான் அவரிடம் கூறினேன். 'அதற்கு அம்ர் இப்ன ஸயீது என்ன கூறினார் என கேட்டேன். 'அதற்கு அம்ர் இப்னு ஸயீது என்ன கூறினார்? என்று அங்கிருந்தவர்கள் என்னிடம் கேட்டனர். 'அபூ ஷுரைஹ்வே! உம்மைவிட நான் (இதைப் பற்றி) நன்கு அறிவேன் நிச்சயமாக மக்கா நகர் ஒரு பாவிக்கோ, மரண தண்டனைக்குப் பயந்து (மக்காவுக்குள்) ஓடி வந்தவனுக்கோ, திருட்டுக் குற்றம் புரிந்துவிட்டு ஓடி வந்தவனுக்கோ பாதுகாப்பளிக்காது' என்று கூறினார்' என்றேன்" அபூ ஷுரைஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 105. 'மக்களே! உங்கள் உயிர்களும், உடைமைகளும் உங்களின் இந்தப் புனித மாதத்தில் இந்த நாளின் புனிதத்தைப் போன்று உங்களின் மீது புனிதமானவையாய் இருக்கின்றன. அறிந்து கொள்ளுங்கள். உங்களில் இங்கே வருகை தந்திருப்பவர்கள்

வராதவர்களுக்கு (இச்செய்தியைச்) சமர்ப்பித்து விடட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இறுதி ஹஜ்ஜின்போது ஆற்றிய பேருரையில்) கூறினார்கள்'' என அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

அபூ பக்ராவின் மகனிடமிருந்து இச்செய்தியைக் கேட்ட முஹம்மத் இப்னு ஸீரீன் '(உங்கள் உடைமைகளும் என்பதற்கடுத்து) 'உங்கள் மானமரியாதைகளும்' என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் கருதுகிறேன்'' என்றார். 'இறைத்தூதர் உண்மையே கூறினார்கள். அவர்களின் அந்த உரையில் 'நான் (எனக்கு அறிவிக்கப்பட செய்தியைச்) சமர்ப்பித்து விட்டேனா?' என்று இரண்டு முறை மக்களைப் பார்த்துக் கேட்டதும் அடங்கியிருந்தது'' என்றும் குறிப்பிட்டார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் மீது பொய் கூறுவது பாவம்.

ஹதீஸ் 106. 'என் மீது இட்டுக்கட்டிச் சொல்லாதீர்கள். ஏனெனில், என் மீது எவன் இட்டுக்கட்டிச் சொல்வானோ அவன் நரகத்தில் நுழைவான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என அலீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 107. '(தந்தையே! உங்களைப் போன்று நபி(ஸல்) அவர்களுடன் நட்புகொண்ட) இன்னின்னாரெல்லாம் நபி(ஸல்) அவர்கள் பற்றி (அதிகமாக) அறிவிப்பது போல், தாங்கள் அவர்களைப் பற்றி அறிவிப்பதை நான் கேள்விப்பட்ட தேயில்லையே! ஏன்?' என்று என்னுடைய தந்தை ஸுபைர்(ரலி) அவர்களிடம் நான் கேட்டதற்கு, 'இதோ பார்! நான் (பெரும்பாலும்) நபி(ஸல்) அவர்களைப் பிரிந்திருந்ததே இல்லை. ஆயினும் 'என் மீது இட்டுக் கட்டிச் செல்பவர் தன்னுடைய இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறக்கேட்டிருக்கிறேன்' (எனவேதான் நான் அதிகமாக அறிவிக்கவில்லை)' என்றார்கள்'' என அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 108. 'என் மீது, எவன் வேண்டுமென்றே இட்டுக்கட்டுகிறவன் நரகத்தில் தன்னுடைய இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளட்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதால்தான், உங்களுக்கு நான் அதிகமான நபிமொழிகளை எடுத்துரைக்காமல் என்னைத் தடுத்துக் கொள்கிறேன்'' என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 109. 'நான் கூறாத ஒன்றை கூறினார்கள்' என்று கூறியவர் தன்னுடைய இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என ஸலமா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 110. 'என்னுடைய இயற்பெயரை நீங்களும் சூட்டிக் கொள்ளுங்கள் (அபுல் காஸிம் என்ற) சிறப்புப் பெயரை உங்கள் சிறப்புப் பெயராக்கிக் கொள்ளாதீர்கள். கனவில் என்னைக் கண்டவர், என்னையே கண்டவராவார். ஏனெனில், ஷைத்தான் என் வடிவத்தில் காட்சியளிக்கமாட்டான். மேலும் என் மீது வேண்டுமென்றே இட்டுக் கட்டிக் கூறுபவன் நரகத்தில் தன்னுடைய இருப்பிடத்தை அமைத்துக் கொள்ளட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கல்வியை எழுதி வைத்தல்.

ஹதீஸ் 111. 'உங்களிடம் (எழுதி வைக்கப்பட்ட) ஏடு ஏதாவது உள்ளதா? என்று அலீ(ரலி) அவர்களிடம் நான் கேட்டதற்கு, '(திருக்குர்ஆன் என்ற) அல்லாஹ்வின் வேதத்தையும் ஒரு முஸ்லிமான மனிதருக்கு வழங்கப்படும், விளக்கத்தையும், இந்த ஏட்டில் இருப்பவற்றையும் தவிர, வேறு ஒன்றுமில்லை' என்று அவர் கூறினார். 'அந்த ஏட்டில் என்னதான் இருக்கிறது?' என்று நான் கேட்டதற்கு, 'நஷ்ட ஈடுகளைப் பற்றியும் சிறைக்கைதிகளை விடுவிப்பது பற்றியும் (சத்தியத்தை) நிராகரிப்பவன் கொலை செய்யப்பட்டதற்காக ஒரு முஸ்லிம் கொல்லப்படக்

கூடாது' என்ற சட்டங்களும் இதிலுள்ளன' என்று கூறினார்கள்" என அபூ ஜுஹைஃபா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 112. 'பனா லைஸ் கூட்டத்தார் குஸாஆ கூட்டத்தாரில் ஒருவரைக் கொலை செய்ததற்குப் பிரதியாக அவர்களில் ஒருவரை குஸாஆ கூட்டத்தார் மக்கா வெற்றியடைந்த ஆண்டில் கொன்றுவிட்டார்கள். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டவுடன் தம் வாகனத்தில் அமர்ந்தவர்களாக, 'சந்தேகத்திற்குமின்றி அல்லாஹ் இந்த(ப் புனித) மக்கா மாநகரில் கொலையைத் தடை செய்துள்ளான். மேலும் மக்காவாசிகளின் மீது அல்லாஹ் தன்னுடைய தூதரையும், இறைநம்பிக்கையாளர்களையும் ஆதிக்கம் செலுத்த வைத்தான். எச்சரிக்கை! மக்காவில் யுத்தம் செய்வது எனக்கு முன்னர் யாருக்கும் அனுமதிக்கப்பட்டதில்லை எனக்குப் பின்னரும் எவருக்கும் அனுமதிக்கப்படப் போவதுமில்லை. எச்சரிக்கை! எனக்கு கூட (அது) பகலின் சிறிது நேரம்தான் அனுமதிக்கப்பட்டிருந்தது. எச்சரிக்கை! சந்தேகத்திற்கிடமின்றி இப்போதிருந்தே (முழுமையாகத்) தடை செய்யப்பட்டுவிட்டது. எனவே, இந்நகரின் முட்செடிகள் அகற்றப் படக் கூடாது. இதன் மரங்கள் வெட்டப்ப படக் கூடாது. இங்கே தவறி விழும் பொருட்களை (அவற்றைப் பற்றி மக்களுக்கு) விளம்பரம் செய்பவரைத் தவிர (யாரும்) எடுக்கக் கூடாது. ஒருவர் (இனிமேல்) கொலை செய்யப்பட்டால் அவரின் குடும்பத்தார்கள் நட்ட ஈடு பெறுதல் அல்லது பழிக்கு பழி வாங்குதல் என்ற இரண்டில் அவர்கள் விரும்பியதைத் தேர்வு செய்யலாம்' என்று ஓர் உரை நிகழ்த்தினார்கள்.

அப்போது யமன் வாசிகளில் ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! இ(ந்தப் பிரசங்கத்)தை எனக்கு எழுதித் தரச்சொல்லுங்கள்' என்று கேட்டார். 'இவருக்கு எழுதிக் கொடுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது குறைஷிகளில் ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! (மக்காவின் செடி கொடிகளை வெட்டக் கூடாது என்பதிலிருந்து) வாசனைப் புற்களில் ஒருவகையான 'இத்கிர்' என்ற தாவரத்துக்கு விதிவிலக்கு அளியுங்கள் ஏனெனில், நாங்கள் அதனை எங்கள் வீடுகளி(ன் கூரைகளி)லும் எங்கள் மண்ணறைகளிலும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் 'இத்கிர்' என்ற வாசனைப் புற்களைத் தவிர' என்றார்கள்" அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸைப் பதிவு செய்த புகாரி அவர்கள் 'கொலை' என்ற இடத்தில் யானைப் படைகள் என்று இருந்தோ" என தாம் எண்ணுவதாகக் கூறினார்.

ஹதீஸ் 113. 'நபி(ஸல்) அவர்களின் தோழர்களில் எவரும் என்னை விட அதிகமான ஹதீஸ்களை அறிவிக்கவில்லை, அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களைத் தவிர. அவர்களிடம் கொஞ்சம் நபிமொழிகள் இருந்தன. காரணம் அவர்கள் (ஹதீஸ்களை) எழுதி வைத்துக் கொள்வார்கள். நான் (நினைவில் வைத்துள்ளேன்) எழுதி வைத்ததில்லை" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 114. 'நபி(ஸல்) அவர்களின் மரண வேதனை அதிகமானபோது 'என்னிடம் ஓர் ஏட்டைக் கொண்டு வாருங்கள். எனக்குப் பிறகு நீங்கள் வழி தறவி விடாதவாறு ஒரு மடலை நான் உங்களுக்கு எழுதித் தருகிறேன்' என்று கூறினார்கள். 'நபி(ஸல்)அவர்களுக்கு வேதனை அதிகமாம்விட்டது நம்மிடம் அல்லாஹ்வின் வேதம் இருக்கிறது. அது நமக்குப் போதுமானது' என்று உமர்(ரலி) கூறினார். உடனே (தோழர்களுக்கிடையில்) கருத்து வேறுபாடு எழுந்து கூச்சலும் குழப்பமும் மிகுந்துவிட்டன. இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், 'என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள் என் முன்னிலையில் (இதுபோன்ற) சச்சரவுகள் எதுவும் இருக்கக் கூடாது' என்றார்கள்.

'நபி(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் (எழுத நினைத்த) மடலுக்கும் குறுக்கே தடையாக

நிகழ்ந்துவிட்ட சோதனை பெரும் சோதனைதான்' என்று கூறியவராக அங்கிருந்து இப்னு அப்பாஸ் (ரலி) வெளியேறிவிட்டார்" என இப்னு அப்பாஸ் (ரலி) வாயிலாக உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் அறிவித்தார்.

## இரவில் கற்பதும் போதிப்பதும்.

**ஹதீஸ் 115.** 'ஓர் இரவில் தூக்கத்திலிருந்து எழுந்த நபி (ஸல்) அவர்கள் (அச்சரியமாக) 'அல்லாஹ் தூய்மையானவன்! இந்த இரவில்தான் எத்தனை சோதனைகள் இறக்கப்பட்டிருக்கின்றன. திறந்து விடப்பட்ட அருட்பேறுகள்தான் என்னென்ன?' என்று கூறிவிட்டு, 'தம் அறைகளில் உறங்கிக் கொண்டிருக்கும் பெண்களை (தம் மனைவிமார்களை இறை வணக்கத்திற்காக தூக்கத்வைிட்டும்) எழுப்புங்கள். ஏனெனில், இவ்வுலகில் ஆடை அணிந்தவர்களாகயிருக்கும், எத்தனையோ பெண்கள் மறுமையில் நிர்வாணமாக இருப்பார்கள்' என்று கூறினார்கள்" என உம்மு ஸலமா (ரலி) அறிவித்தார்.

## கல்வி குறித்து இரவில் பேசுதல்

**ஹதீஸ் 116.** 'நபி (ஸல்) அவர்கள் தங்களின் ஆயுளின் கடைசிக் காலத்தில் இஷாத் தொழுகை நடத்தினார்கள். ஸலாம் கொடுத்ததும் எழுந்து நின்று, 'இன்றைய இந்த இரவை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இன்றிலிருந்து (சரியாக) ஒரு நூற்றாண்டின் துவக்கத்தில் இப்போது பூமியின் மேல் இருக்கக் கூடியவர்களில் ஒருவர் கூட எஞ்சியிருக்க மாட்டார்கள்' என்று கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

**ஹதீஸ் 117.** 'என்னுடைய சிறிய தாயாரும் நபி (ஸல்) அவர்களின் மனைவியுமான மைமூனா பின்து அல் ஹாரிஸ் (ரலி) அவர்களின் வீட்டில் நபி (ஸல்) அவர்கள் தங்கியிருந்த இரவில் நானும் தங்கியிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் இஷா தொழுகை நடத்திவிட்டுப் பின்னர் தம் வீட்டிற்கு வந்து நான்கு ரக்அத்துகள் தொழுதுவிட்டு உறங்கினார்கள். பின்னர் எழுந்து 'பையன் தூங்கிவிட்டானோ?' அல்லது அது போன்ற ஒரு வார்த்தை கூறி விசாரித்துவிட்டு மீண்டும் தொழுகைக்காக நின்றார்கள். நானும் (அவர்களுடன்) அவர்களின் இடப் பக்கமாகச் சென்று நின்றேன். உடனே என்னை அவர்களின் வலப் பக்கத்தில் இழுத்து நிறுத்திவிட்டு (முதலில்) ஐந்து ரகஅத்துகளும், பின்னர் இரண்டு ரகஅத்துகளும் தொழுதுவிட்டு அவர்களின் குறட்டையொலியை நான் கேட்குமளவுக்கு ஆழ்ந்து உறங்கினார்கள். பிறகு (சுப்ஹுத்) தொழுகைக்குப் புறப்பட்டார்கள்" இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

## கல்வியை மனனம் செய்தல்

**ஹதீஸ் 118.** 'அபூ ஹுரைரா (ரலி) அதிகமாக நபிமொழிகளை அறிவிக்கிறாரோ என மக்கள் கூறிக் கொண்டிருக்கிறார்கள். அல்லாஹ்வின் வேதத்தில் இரண்டு வசனங்கள் மாத்திரம் இல்லையென்றால் நான் ஒரு நபிமொழியைக் கூட அறிவித்திருக்க மாட்டேன்' என்று அபூ ஹுரைரா (ரலி) கூறிவிட்டு, 'நாம் நேர்வழியையும் தெளிவான சான்றுகளையும் அருளி மக்களுக்காக அவற்றை வேதத்தில் நாம் தெளிவாகக் கூறிய பின்னரும் யார் அவற்றை மறைக்கிறார்களோ அவர்களை நிச்சயமாக அல்லாஹ் தன் அருளுக்கு அருகதையற்றவர்களாக்கி விடுகிறான். மேலும் (தீயோரை) சபிப்ப(வர்களான இறைநம்பிக்கையாளர்களும் வான)வர்களும் அவர்களைச் சபிக்கின்றனர். ஆயினும் அவர்களில் யார் (தம் குற்றங்களிலிருந்து) மீண்டு, மேலும் (தம்மைச்) சீர்திருத்தி இன்னும் (தாம் மறைத்தவற்றை மக்களுக்குத்) தெளிவுபடுத்தியும் விடுகின்றனரோ அவர்களைத் தவிர. (அவ்வாறு தம்மைத் திருத்திய) அவர்களை நான் மன்னித்து விடுவேன். நான் மிக்க மன்னிப்பவனும் அருளுவதில் அளவற்ற வனுமாவேன்" (திருக்குர்ஆன் 02:159-160) என்ற இரண்டு வசனங்களையும் ஓதிக் காட்டினார்கள். மேலும் தொடர்ந்து

'மக்காவிலிருந்து ஹிஜ்ரத்துச் செய்து மதீனாவிற்கு வந்த எங்கள் சகோதரர்களோ வியாபாரம் பேரங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். மதீனாவிலிருந்த அன்ஸாரித் தோழர்களோ தங்கள் (விவசாய) செல்வங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் இந்த அபூ ஹுரைராவோ முழுக்க முழுக்க (வேறு வேலைகளில் ஈடுபடாமல்) பட்டினியாக நபி(ஸல்) அவர்களுடனேயே இருந்தேன். மற்றவர்கள் வருகை தராத இடங்களுக்கெல்லாம் நான் செல்வேன். அவர்கள் மனப்படாமகி செய்யாதவற்றையெல்லாம் மனப்படாம் செய்து கொண்டிருந்தேன்' என்று கூறினார்கள்" அஃரஜ் என்பவர் அறிவித்தார்.

ஹதீஸ் 119. 'இறைத்தூதர் அவர்களே! நான் தங்களிடமிருந்து ஏராளமான பொன் மொழிகளைக் கேட்கிறேன். (ஆயினும்) அவற்றை மறந்து விடுகிறேன் என நான் நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அதற்கு 'உம்முடைய மேலங்கியை விரியும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். நானும் அதனை விரித்தேன். தம் இரண்டு கைகளாலும் இரண்டு கை நிறையளவு அள்ளி (எடுப்பது போன்று பாவனை செய்து)விட்டுப் பின்னர், 'அதனை (நெஞ்சோடு) நீர் அணைத்துக் கொள்வீராக!" என்றார்கள். நானும் உடனே அதனை என் நெஞ்சுடன் அணைத்துக் கொண்டேன். அதன் பின்னர் நான் எதனையும் மறந்ததே இல்லை" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 120. 'இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து (கற்ற) இரண்டு (வகையான கல்விப்) பாத்திரங்களை நான் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறேன். அவற்றில் ஒன்றை நான் (மக்களிடம்) பரப்பி விட்டேன் இன்னொன்றை நான் பரப்பியிருந்தால் என அடித்தொண்டை வெட்டப்பட்டிருக்கும்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அறிஞர்களின் போதனைகளுக்குச் செவி சாய்த்தல்.

ஹதீஸ் 121. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் இறுதி ஹஜ்ஜின்போது (மக்களுக்கு உரையாற்றிய நேரத்தில்) என்னிடம் 'மக்களை அமைதியுடன் செவி தாழ்த்திக் கேட்கும் படி செய்வீராக!" என்று கூறினார்கள். (மக்கள் அமைதியுற்ற பின்னர்) 'எனக்குப் பிறகு நீங்கள் ஒருவர் கழுத்தை ஒருவர் வெட்டிக் கொள்ளும் இறைமறுப்பாளர்களாக மாறி விடவேண்டாம்' என்று கூறினார்கள்" என ஜரீர்(ரலி) அறிவித்தார்.

## ஓர் அறிஞரிடம் 'மக்களில் பேரறிஞர் யார்?' என்று கேட்கப்பட்டால் இதைப் பற்றிய ஞானம் அல்லாஹ்வுக்கே உரியது என்று கூறுவது விரும்பத்தக்கது.

ஹதீஸ் 122. '(ம்ள்ரு(அலை) அவர்களைச் சந்தித்த) மூஸா அலை அவர்கள், இஸ்ராவேலர்களின் நபியாக அனுப்பப்பட்ட மூஸா அல்லர் அவர் வேறு மூஸா' என்று நவ்ஃபுல் பக்காலி என்பவர் கருதிக் கொண்டிருக்கிறாரே என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள் 'இறைவனின் பகைவராகிய அவர் பொய் கூறுகிறார். எங்களுக்கு உபய்யுபின் கஅபு(ரலி), நபி(ஸல்) கூறினார்கள் என அறிவித்தாவது: (இறைவனின்) தூதராகிய மூஸா(அலை) அவர்கள் இஸ்ரவேலர்களுக்கிடையே உரையாற்ற நின்றார்கள். அப்போது 'மக்களில் பேரறிஞர் யார்?' என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு, தாமே பேரறிஞன் என்று அவர்கள் பதில் கூறிவிட்டார்கள். அவர்கள் இது பற்றிய ஞானம் அல்லாஹ்வுக்கே உரியது என்று கூறாததால் அல்லாஹ் அவர்களைக் கண்டித்து, 'இரண்டு கடல்கள் சங்கமமாகும் இடத்தில் என் அடியார்களில் ஒருவர் இருக்கிறார். அவர் தாம் உம்மை விடப் பேரறிஞர்' என்று அவர்களுக்குச் செய்தி அறிவித்தான். அதற்கவர்கள் 'என் இறைவனே! அவரை நான் சந்திக்க என்ன வழி?' என்று கேட்டார்கள். 'கூடை ஒன்றில் ஒரு மீனைச் சுமந்து (பயணம்) செல்வீராக! அம்மீனை எங்கே தொலைத்து விடுகிறீரோ அங்கேதான் அவர் இருப்பார்' என்று அவர்களிடம் கூறப்பட்டது. உடனே அவர்கள் தம் பணியாளான ~ஷஃ இப்னு நூன் என்பாருடன் ஒரு மீனைக்

கூடையில் சுமந்து கொண்டு நடக்க ஆரம்பித்தார்கள். (நெடு நேரம் நடந்த களைப்பில்) இருவரும் ஒரு பாறையை அடைந்ததும் படுத்து உறங்கிவிட்டார்கள். உடனே கூடையிலிருந்த மீன் மெல்ல நழுவி கடலில் தன் வழியே நீந்திப் போக ஆரம்பித்துவிட்டது. (மீன் காணாமல் போனது மூஸாவுக்கும் அவரின் பணியாளுக்கும் வியப்பளித்தது. அவ்விருவரும் அன்றைய மீதிப்போது முழுவதும் நடந்து போய்க் கொண்டே இருந்தார்கள். பொழுது விடிந்ததும் (அது வரை களைப்பை உணராத) மூஸா(அலை) தம் பணியாளரிடம், 'இந்தப் பயணத்தின் மூலம் நாம் (மிகுந்த) சிரமத்தைச் சந்தித்து விட்டோம். எனவே நம்முடைய காலை உணவை எடுத்து வா?' என்றார்கள். (சந்திப்பதற்காகக்) கட்டளையிடப்பட்டிருந்த இடத்தைத் தாண்டும் வரை எந்த விதச் சிரமத்தையும் அவர்கள் உணரவில்லை. அப்போது பணியாளர் அவர்களிடம் 'பார்த்தீர்களா? நாம் அந்தப் பாறையில் தங்கியிருந்தபோது (தான் அந்த மீன் ஓடியிருக்க வேண்டும்) நானும் மீனை மறந்து விடடேன்' என்றார். '(அட!) அது தானே நாம் தேடி வந்த இடம்' என்று மூஸா(அலை) அவர்கள் கூறிவிட்டு, இருவருமாகத் தம் காலடிச் சுவடுகளைப் பின்தொடர்ந்தவர்களாய் (வந்தவழியே) திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். இருவரும் அந்தக் குறிப்பிட்ட பாறையைச் சென்றடைந்ததும் ஆடை போர்த்தியிருந்த ஒரு மனிதரைக் கண்டார்கள். உடனே மூஸா(அலை) அவர்கள் (அம்மனிதருக்கு) ஸலாம் கூறினார்கள். அப்போது கிள்று அவர்கள் 'உம்முடைய ஊரில் ஸலாம் (கூறும் பழக்கம்) ஏது?' என்று கேட்டார்கள். 'நான்தான் மூஸா' என்றார்கள். 'இஸ்ரவேலர்களுக்கு நபியாக அனுப்பப்பட்ட மூஸாவா?' என கிள்று அவர்கள் கேட்டார்கள். அதற்கு 'ஆம்!' என்று கூறினார்கள். 'உமக்கு (இறைவனால்) கற்றுத் தரப்பட்டதிலிருந்து எனக்குக் கற்றுத் தருவதற்காக உம்மை நான் பின்பற்றி வரட்டுமா?' என்று கேட்டார்கள். கிள்ரு (அலை) அவர்கள், 'நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையோடிருக்க ஆற்றல் பெறமாட்டீர்! மூஸாவே! இறைவன் தன்னுடைய ஞானத்திலிருந்து எனக்குக் கற்றுத் தந்தது எனக்கிருக்கிறது. அதனை நீர் அறிய மாட்டீர். அவன் உமக்குக் கற்றுத் தந்திருக்கிற வேறொரு ஞானம் உமக்கிருக்கிறது. அதனை நான் அறிய மாட்டேன்' என்று கூறினார். அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'உம்முடைய உத்தரவை மீறாத முறையில் அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளனாகக் காண்பீர்!' என்றார்கள். (முடிவில்) இருவரும் கப்பல் எதுவும் கிடைக்காத நிலையில் கடற்கரை ஓரமாகவே நடந்து சென்றார்கள். அவ்விருவரையும் ஒரு கப்பல் கடந்து சென்றது. தங்களையும் (அக்கப்பலில்) ஏற்றிக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார்கள். அவர்கள் கிள்று அவர்களை அறிந்திருந்ததால் அவ்விருவரையும் கட்டணம் ஏதுமின்றிக் கப்பலில் ஏற்றினார்கள்.

ஒரு சிட்டுக்குருவி வந்து கப்பலின் ஓரத்தில் அமர்ந்து கடலில் ஒன்றிரண்டு முறை கொத்தியது. அப்போது கிள்று அவர்கள், 'மூஸா அவர்களே! இச்சிட்டுக் குருவி கொத்தியதால் கடலில் எவ்வளவு குறையுமோ அது போன்ற அளவுதான் என்னுடைய ஞானமும் அளவுதான் என்னுடைய ஞானமும் உம்முடைய ஞானமும் அல்லாஹ்வின் ஞானத்திலிருந்து குறைத்து விடும்' என்று கூறினார்கள். (சற்று நேரம் கழித்ததும்) கப்பலின் பலகைகளில் ஒன்றை கிள்று (அலை) கழற்றினார்கள். இதைக் கண்ட மூஸா(அலை) அவர்கள் 'நம்மைக் கட்டணம் ஏதுமின்றி ஏற்றிய இந்த மக்கள் மூழ்கட்டும் என்பதற்காக, வேண்டுமென்று கப்பலை உடைத்து விட்டீரே?' என்று கேட்டார்கள். 'மூஸாவே! நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையோடிருக்க ஆற்றல் பெறமாட்டீர் என்று நான் (முன்பே உமக்குச்) சொல்லவில்லையா? என்று கிள்று அவர்கள் கேட்டார்கள். அதற்கவர்கள், 'நான் மறந்துவிட்டதற்காக என்னை நீர் (குற்றம்) பிடித்து விடாதீர்' என்று கேட்டுக் கொண்டார்கள். எனவே முதற் பிரச்சினை மூஸாவிடமிருந்து மறதியாக ஏற்பட்டுவிட்டது. (கடல் வழிப் பயணம் முடிந்து) மீண்டும் இருவரும் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு சிறுவன் ஏனைய சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தான். கிள்று அவர்கள் அதன் தலையை மேலிருந்து பிடித்து (இழுத்து)த் தம் கையால் (திரும்) தலையை

முறித்துவிட்டார்கள். உடனே மூஸா(அலை) அவர்கள் 'யாரையும் கொலை செய்யாத (ஒரு பாவமும் அறியாத) தூய்மையான ஆத்மாவைக் கொன்று விட்டீரே?' என்று கேட்டார்கள். அதற்கு கிள்று அவர்கள் 'மூஸாவே! நிச்சயமாக நீர் என்னுடன் பொறுமையாயிருக்க முடியாது என்று உம்மிடம் நான் முன்பே சொல்லவில்லையா?' என்று கேட்டார்கள். இந்த வார்த்தை முந்திய வார்த்தையை விட மிக்க வலியுறுத்தலுடன் கூடியது என இந்த ஹதீஸ் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு உயைனா என்பவர் கூறுகிறார். மீண்டும் இருவரும் (சமாதானமாம்) நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். முடிவாக ஒரு கிராமத்தவரிடம் வந்து அவர்களிடம் உணவு கேட்டார்கள். அவ்வூரார் அவர்களுக்கு உணவளிக்க மறுத்துவிட்டார்கள். அப்போது அக்கிராமத்தில் ஒரு சுவர், கீழே விழுந்து விடும் நிலையிருக்கக் கண்டார்கள். உடனே கிள்று அவர்கள் தங்களின் கையால் அச்சுவரை நிலை நிறுத்தினார்கள். (இதைப் பார்த்துக் கொண்டிருந்த) மூஸா(அலை) அவர்கள் 'நீர் விரும்பியிருந்தால் இதற்காக ஏதாவது கூலி பெற்றிருக்கலாமே!' என்று அவர்களிடம் கேட்டார்கள். உடனே கிள்று அவர்கள், 'இதுதான் எனக்கும் உமக்கிடையே பிரிவினையாகும்' என்று கூறிவிட்டார்கள்."

(இச்சம்பவத்தை) நபி(ஸல்) அவர்கள் (சொல்லிவிட்டு) 'மூஸா மாத்திரம் சற்றுப் பொறுமையாக இருந்திருந்தால் அவ்விருவரின் விஷயங்களிலிருந்தும் நமக்கு இன்னும் (நிறைய) வரலாறு கூறப்பட்டிருக்கும். அல்லாஹ் மூஸாவிற்கு அருள் புரிவானாக!' என்று கூறினார்கள்" என ஸயீது இப்னு ஜுபைர்(ரலி) அறிவித்தார்.

### அமர்ந்திருக்கும் அறிஞரிடம் நின்றவாறு கேள்வி கேட்டல்.

ஹதீஸ் 123. 'ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து 'இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவர் (தனிப்பட்ட) கோபத்திற்காகப் போராடுகிறார். (இன்னொருவர்) தம் குலப்பெருமைகளைக் காக்கும் சீற்றத்துடன் போரிடுகிறார். இவற்றில் இறைவழியில் செய்யப்படும் போர் எது?' என்று கேட்டார். உடனே நபி(ஸல்) அவர்கள், அவரை நோக்கித் தம் தலையை உயர்த்தி, 'அல்லாஹ்வின் கொள்கை (இவ்வுலகில்) மேலோங்குவதற்காக (மட்டும்) போர் புரிகிறவர் தாம் மகத்துவமும் கண்ணியமுமிக்க இறைவழியில் போரிட்டவராவார்' என்று கூறினார்கள். கேள்வி கேட்டவர் நின்றிருந்தால்தான் நபி(ஸல்) அவர்கள் தம் தலையை உயர்த்தினார்கள்" என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

### (ஹஜ்ஜின்போது கல்லெறிய வேண்டிய இடங்களில்) கல்லெறியும் சமயத்தில் மார்க்கம் பற்றிக் கேட்பதும் பதிலளிப்பதும்.

ஹதீஸ் 124. நபி(ஸல்) அவர்களிடம் (கல்லெறியும் இடமான) ஜம்ரத் என்ற இடத்தில் கேள்வி கேட்கப்பட்டதை கண்டேன். அப்போது ஒருவர் 'இறைத்தூதர் அவர்களே! நான் (கல்) எறிவதற்கு முன்பே (பிராணியைப்) பலியிட்டு விட்டேன்' என்றார். அதற்கவர்கள் 'குற்றமில்லை இப்போது கல்லெறிந்து விடும்" என்றார்கள். மற்றொருவர் 'இறைத்தூதர் அவர்களே! நான் பிராணியைப் பலியிடுவதற்கு முன்பே மொட்டையடித்து விட்டேன்' என்றார். அதற்கவர்கள், 'அதனால் குற்றமில்லை பலியிட்டுவிடும்" என்றார்கள். (இது போன்ற செயல்களை) முந்தியோ பிந்தியோ செய்யப்பட்டுவிட்டதாக அவர்களிடம் கேட்கப்பட்ட கேள்விகளுக்கெல்லாம் 'குற்றமில்லை இப்போது செய்து கொள்ளுங்கள்' என்றே பதில் கூறிக் கொண்டிருந்தார்கள்" அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

### "ஞானத்தில் (மிகக்) குறைந்த அளவே தவிர உங்களுக்கு வழங்கப் படவில்லை" (திருக்குர்ஆன் 17:85) என்ற அல்லாஹ்வின் திருவசனம்.

ஹதீஸ் 125. பேரீச்ச மட்டை ஒன்றைக் கையில் ஊன்றியவர்களாக, நபி(ஸல்) அவர்கள்

மதீனாவில் மக்கள் சஞ்சாரம் இல்லாத ஒரு பாழ் வெளியில் சென்றபோது அவர்களுடன் நானும் சென்று கொண்டிருந்தேன். அப்போது யூதர்களின் குழு ஒன்றை அவர்கள் கடந்து சென்றார்கள். அப்போது அவர்களில் ஒருவர் மற்றவரிடம் 'ரூஹை (உயிர்) பற்றி அவரிடம் கேளுங்கள்' என்றார். அவர்களின் இன்னொருவர் 'அவரிடம் அதைப் பற்றிக் கேட்காதீர்கள் உங்களுக்குப் பிடிக்காத எதையும் அவர் சொல்லப் போவதில்லை' என்றார். அவர்களில் மற்றொருவரோ, '(இல்லை!) இறைவன் மீது ஆணையாக நாம் (அதைப் பற்றி) அவரிடம் கேட்டே விடுவோம்' என்றார். (முடிவில்) அவர்களில் ஒருவர் எழுந்து, 'அபுல் காஸிம் அவர்களே! ரூஹு என்றால் என்ன? என்று கேட்டார். உடனே நபி(ஸல்) அவர்கள் மௌனமானார்கள். 'அவர்களுக்கு இறைவனிடமிருந்து இப்போது செய்தி அறிவிக்கப்படுகிறது' என்று என்னுடைய மனதிற்குள் நினைத்தபடி நான் நின்று கொண்டிருந்தேன். (இறைச் செய்தி வரும்போது ஏற்படும் சிரமம் விலம்) அவர்கள் தெளிவடைந்தபோது '(நபியே!) உம்மிடம் அவர்கள் ரூஹைப் பற்றிக் கேட்டார்கள். ரூஹு என்பது என் இறைவனுடைய கட்டளையைச் சார்ந்ததாகும். ஞானத்தில் (மிகக்) குறைந்த அளவே தவிர அவர்கள் கொடுக்கப்படவில்லை என்று நீர் (பதில்) கூறும்!' (திருக்குர்ஆன் 17:85) என்று (திருக்குர்ஆன் வசனத்தை) கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

("ஞானத்தில் குறைந்த அளவே தவிர நீங்கள் கொடுக்கப்படவில்லை" என்று பரவலாக ஓதப்படுவதற்கு மாற்றமாக) 'அவர்கள் கொடுக்கப்படவில்லை" என்றே எங்கள் ஓதுதலில் காணப்படுகிறது என அஃமஷ் கூறினார்.

## மக்கள் தவறாக விளங்கி விபரீத முடிவுக்கு வந்து விடக் கூடும் என்று அஞ்சி சிறந்த ஒன்றைவிட்டு விடுவது.

**ஹதீஸ் 126.** 'ஆயிஷா(ரலி) உம்மிடம் நிறைய இரகசியங்களைத் தெரிவிப்பவர்களாயிருந்தார்களே! அவர்கள் கஅபாவைப் பற்றி உம்மிடம் என்ன தகவல் சொல்லியிருக்கிறார்கள்?' என என்னிடம் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கேட்டார்கள்.

'ஆயிஷாவே! உம்முடைய சமூகத்தார்க(ளான குறைஷிக)ள் குஃப்ரைவிட்டு (இஸ்லாத்திற்கு வந்த) காலம் மட்டும் சமீபத்தியதாக இல்லாமலிருந்தால் நான் கஅபாவை இடித்துவிட்டு அதனை மக்கள் உள்ளே நுழைவதற்கு ஒரு வாசலும் வெளியேறுவதற்கு விசாலமாக வேறொரு இரண்டு வாசல்களை அமைத்திருப்பேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' என ஆயிஷா(ரலி) கூறினார்' என்றேன்" அஸ்வத் அறிவித்தார்.

இப்னு ஸுபைரின் ஆட்சிக் காலத்தில் கஅபாவிற்கு இரண்டு வாசல்கள் அமைத்து அதனைச் செய்து காட்டினார்கள்.

## ஒரு சாரார் (ஒன்றைப்) புரிந்து கொள்ள மாட்டார்கள் என்ற அதிருப்தியில் புரிந்து கொள்ளாதோரை விடுத்துப் புரிந்து கொள்ளும் ஒரு சாராருக்குத் தனிப்பட்ட முறையில் கற்றுக் கொடுத்தல்.

**ஹதீஸ் 127.** 'மக்களிடம் அவர்கள் புரிந்து கொள்பவற்றையே பேசுங்கள். அல்லாஹ்வும், அவனுடைய தூதரும் பொய்யர்களென கருதப்படுவதை நீங்கள் விரும்புவீர்களா?' என்று அலீ(ரலி) கூறினார்.

**ஹதீஸ் 128.** 'ஒரே வாகனத்தின் மீது முஆது(ரலி) நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னே அமர்ந்திருக்கும் நிலையில், நபி(ஸல்) அவர்கள் 'முஆதே!" என்று அழைத்தார்கள். 'இதோ உள்ளேன் இறைத்தூதர் அவர்களே! (கட்டுப்படுவதைப்) பெரும் பேறாகவும் கருதுகிறேன்' என்று முஆத்(ரலி) கூறினார். 'முஆதே!' என்று என மீண்டும் நபி(ஸல்) அவர்கள் அழைத்தார்கள்.

'இதோ உள்ளேன் இறைத்தூதர் அவர்களே! (கட்டுப்படுவதைப்) பெரும் பேறாகவும் கருதுகிறேன்' என மீண்டும் முஆத்(ரலி) கூறினார். இவ்வாறு மூன்று முறை கூறப்பட்டது. பிறகு 'தன் உள்ளத்திலிருந்து உண்மையான எண்ணத்துடன் வணங்கி வழிபடுவதற்குரிய இறைவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்றும், முஹம்மத் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்றும் உறுதியாக நம்பும் எவரையும் அல்லாஹ் நரகத்திற்குச் செல்ல விட மாட்டேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது 'இறைத்தூதர் அவர்களே! இச்செய்தியை நான் மக்களுக்கு அறிவித்து விடலாமா? அவர்கள் மகிழ்ந்து போவார்களே!' என்று முஆத் கேட்டதற்கு 'அவ்வாறு நீர் அறிவிக்கும் அச்சமயத்தில் (இது மட்டும் போதுமே என்று) அவர்கள் அசட்டையாக இருந்துவிடுவார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(கல்வியை மறைத்த) குற்றத்திலிருந்து தப்புவதற்காக தம் மரணத் தருவாயில்தான் இந்த ஹதீஸை முஆத்(ரலி) அறிவித்திருக்கிறார்கள்.

ஹதீஸ் 129. 'அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காத நிலையில் அல்லாஹ்வைச் சந்திக்கிறவர் சுவர்க்கம் புகுவார்' என்று முஆத்(ரலி) அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கு முஆத்(ரலி) 'இந்த நல்ல செய்தியை நான் மக்களுக்குச் சொல்லலாமா?' எனக் கேட்டார்கள். 'வேண்டாம் அவர்கள் அசட்டையாக இருந்து விடுவார்கள் என நான் அஞ்சுகிறேன்' என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## கற்பதில் வெட்கப்படுதல்

"(கற்றுக் கொள்வதற்கு) வெட்கப்படுபவனும், (எல்லாம் தெரியுமென) அகந்தை கொள்பவனும் கல்வியைக் கற்றுக் கொள்ளவே மாட்டான்' என்று முஜாஹிது கூறினார்.

'பெண்களில் சிறந்தவர்கள் (மதீனத்துப் பெண்களான) அன்ஸாரிப் பெண்களே. (ஏனெனில்) மார்க்கத்தைக் கற்றுக் கொள்வதற்கு வெட்கம் ஒருபோதும் அவர்களுக்குத் தடையாக இருந்ததில்லை' என ஆயிஷா(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 130. 'உம்முஸுலைம்(ரலி) என்ற பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நிச்சயமாக அல்லாஹ் சத்தியத்தை எடுத்துச் சொல்வதற்கு வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்கு ஸ்கலிதமானால் அவளின் மீது குளிப்பு கடமையாகுமா?' என்று கேட்டதற்கு 'ஆம்! அவள் நீரைக் கண்டால்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (இதைக் கேட்டுக் கொண்டிருந்த) உம்மு ஸலமா(ரலி) தம் முகத்தை (வெட்கத்தால்) மூடிக் கொண்டு, 'பெண்களுக்கும் ஸ்கலிதம் ஏற்படுமா' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நன்றாய் கேட்டாய்! ஆம்! அப்படி இல்லையென்றால் அவளுடைய குழந்தை எதனால் அவளைப் போன்றும் இருக்கிறது?' என்று கேட்டார்கள்" என ஸைனப் பின்து உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 131. 'ஒரு மரம் உள்ளது. அம்மரத்தின் இலைகள் உதிர்வதில்லை. அம்மரம் இறைநம்பிக்கையாளனுக்கு உவமையாகும். அது என்ன மரம் என்று கூறுங்கள்" என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டனர். மக்களின் சிந்தனை கிராமப் புறத்தில் உள்ள மரங்களின் பால் சென்றது. அது பேரீச்சை மரம்தான் என்று எனக்குத் தோன்றியது. (நான் சிறுவனாக இருந்ததால் அதைக் கூற) வெட்கமடைந்ததேன். அப்போது மக்கள் 'இறைத்தூதர் அவர்களே! நீங்களே கூறுங்கள்' என்றனர். 'அது பேரீச்சை மரம் தான்' என்று நபி(ஸல்) கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

பின்னர் என் தந்தையிடம் என் மனதில் தோன்றிய விஷயத்தை கூறினேன். அதைக் கேட்ட

அவர்கள் 'நீ அதைக் கூறியிருந்தால் இன்னின்ன எனக்குக் கிடைப்பதை விட அது எனக்கு மிகவும் விருப்பமானதாக இருந்திருக்கும்' என்றார்" என்றும் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

## வெட்கப்பட்டுப் பிறரைக் கேள்வி கேட்கச் செய்தல்.

ஹதீஸ் 132. 'மதி (அதிக உணர்ச்சியினால் ஏற்படும் கசிவு) வெளியாகும் ஆடவனாக நான் இருந்தேன். (இது பற்றி அறிய) மிக்தாத்(ரலி) அவர்களை நபி(ஸல்) அவர்களிடம் கேட்குமாறு ஏவினேன். அவர் அது பற்றி அவர்களிடம் வினவினார். 'அதற்காக உளூச் செய்வதுதான் கடமை. (குளிக்க வேண்டிய கட்டாயமில்லை)' என்று நபி(ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்" என அலீ(ரலி) அறிவித்தார்.

## பள்ளிவாசலில் கற்பதும் கற்றுக் கொடுப்பதும்.

ஹதீஸ் 133. 'ஒருவர் பள்ளிவாசலில் எழுந்து நின்று நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் எங்கிருந்து இஹ்ராம் கட்டவேண்டும் எனக் கட்டளையிடுகிறீர்கள்?' என்று கேட்டபோது 'மதீனா வாசிகள் 'துல்ஹுலைஃபா' என்ற இடத்திலிருந்தும், ஷாம் வாசிகள் 'ஜுஹ்ஃபா' என்ற இடத்திலிருந்தும் நஜ்த் வாசிகள் 'கர்ன்' என்ற இடத்திலிருந்தும் இஹ்ராம் கட்ட வேண்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அப்துல்லா இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"யமன்' வாசிகள் 'யலம்லம்' என்ற இடத்திலிருந்து இஹ்ராம் கட்ட வேண்டும் என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என சிலர் கருதிக் கொண்டிருக்கிறார்கள். அல்லாஹ்வின் தூதரிடமிருந்து இந்த வார்த்தை வந்ததாக எனக்குத் தெரியவில்லை" என்றும் இப்னு உமர்(ரலி) கூறினார்.

## கேட்கப் பட்டதற்கு விரிவாகப் பதில் கூறுதல்.

ஹதீஸ் 134. 'ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் இஹ்ராம் கட்டியவர் அணிய வேண்டிய ஆடைகளைப் பற்றிக் கேட்டதற்கு, 'சட்டை, தலைப்பாகை, கால்சட்டைகள், முக்காடு (அல்லது தொப்பி), பச்சைச் சாயம் தோய்த்த ஆடை, அல்லது சிவப்புக் குங்குமச் சாயம் தோய்த்த ஆடை ஆகியவற்றை (இஹ்ராம் கட்டியவர்) அணியக் கூடாது. பாதணிகள் கிடைக்கவில்லையானால் (கணுக்கால்வரை) உயரமான காலுறைகளை அவர் அணிந்து கொள்ளலாம். (ஆனால்) கணுக்காலுக்குக் கீழே உயரம் குறையும் வரை அவ்விரண்டையும் வெட்டிவிடட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

# அத்தியாயம் - 4 - உளூச் செய்வது

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ் கூறினான்:

“இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் தொழுவதற்காக நிற்க நாடினால் (அதற்கு முன்னர்) உங்கள் முகங்களையும், கைகளை முழங்கை வரையும் கால்களை கணுக்கால்கள் வரையும் கழுவிக் கொள்ளுங்கள். உங்கள் தலைகளை (ஈரக் கையால்) தடவிக் கொள்ளுங்கள்.“ (திருக்குர்ஆன் 05:06)

உளூச் செய்யும்போது உறுப்புக்களை ஒரு முறை கழுவுவதுதான் கட்டாயம் என்பதை நபி(ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தினார்கள். மேலும் அவர்களே அவ்வுறுப்புக்களை இரண்டிரண்டு முறைகளும் மும்மூன்று முறைகளும் கழுவி உளூச் செய்திருக்கிறார்கள். மூன்று முறைக்கு மேல் அதிகப்படுத்தியது இல்லை.

நபி(ஸல்) அவர்களின் செயல் முறைக்கு மாற்றம் செய்வதையும் உளூச் செய்வதில் (மூன்று முறை என்ற அந்த) வரம்பை மீறுவதையும் மார்க்க அறிஞர்கள் வெறுத்திருக்கிறார்கள்.

### உடல் தூய்மையின்றித் தொழுகை ஏற்கப்படாது.

ஹதீஸ் 135. ‘சிறு தொடக்கு ஏற்பட்டவன் உளூச் செய்யும் வரை அவனுடைய தொழுகை ஏற்கப்படாது“ என்று நபி(ஸல்) கூறினார்கள் என அபூஹுரைரா(ரலி) கூறியபோது, ஹள்ர மவ்த் என்ற இடத்தைச் சேர்ந்த ஒருவர் ‘அபூ ஹுரைராவே! சிறு தொடக்கு என்பது என்ன? என்று கேட்டதற்கு அவர்கள் ‘சப்தத்துடனோ சப்தமின்றியோ காற்றுப் பிரிவது‘ என்றார்கள்“ ஹம்மாம் இப்னு முனப்பஹ் அறிவித்தார்.

### உளூவின் சிறப்பு மற்றும் உளூச் செய்தவர்கள் முகம், கைகள், கால்களில் ஒளியுடன் மறுமையில் வருதல்

ஹதீஸ் 136. ‘பள்ளிவாசலின் மேல் புறத்தில் அபூ ஹுரைரா(ரலி) அவர்களுடன் நானும் ஏறிச் சென்றேன். அபூ ஹுரைரா(ரலி) உளூச் செய்தார். (உளூச் செய்து முடித்ததும்) ‘நிச்சயமாக என்னுடைய சமுதாயத்தவர்கள் மறுமை நாளில் உளூவின் சுவடுகளால் முகம், கை கால்கள் ஒளிமயமானவர்களே! என்று அழைக்கப்படுவார்கள். எனவே, உங்களில் விரும்பியவர் தம் ஒளியை அதிகப்படுத்திக் கொள்ளட்டும்“ என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதைச் கேட்டிருக்கிறேன்‘ என்றார்கள்“ நுஅய்கி அல் முஜ்மிர் அறிவித்தார்.

### உளூ முறிந்தது உறுதியாகத் தெரியும் வரை சந்தேகத்தினால் மீண்டும் உளூ தேவையில்லை.

ஹதீஸ் 137. ‘தொழும்போது காற்றுப் பிரிவது போன்ற உணர்வு ஏற்படுவதாக நபி(ஸல்) அவர்களிடம் நான் முறையிட்டதற்கு, ‘நாற்றத்தை உணரும் வரை அல்லது சப்தத்தைக் கேட்கும வரை தொழுகையிலிருந்து திரும்ப வேண்டாம்‘ என்று அவர்கள் கூறினார்கள்“ என அப்துல்லாஹ் இப்னு ஸைத் இப்னு ஆஸிம்(ரலி) அறிவித்தார்.

### உளூவை இலகுவாக்குதல்.

ஹதீஸ் 138. ‘நபி(ஸல்) அவர்கள் குறட்டை விடும் அளவுக்கு உறங்கிய பின்பு (எழுந்து) தொழுதனர். நான் என்னுடைய சிறிய தாயார் மைமூனா(ரலி) அவர்களின் வீட்டில் ஓரிரவு

தங்கியிருந்தேன். நபி(ஸல்) அவர்கள் அந்த இரவின் ஆரம்பத்திலேயே எழுந்தார்கள். (பின்னர் தூங்கினார்கள்) இரவின் சிறு பகுதி ஆனதும் மீண்டும் எழுந்து, தொங்க விடப்பட்டிருந்த ஒரு பழைய தோல் துருத்தியிலிருந்து, (தண்ணீர் எடுத்து) சுருக்கமாக உளூச் செய்தார்கள் பிறகு தொழுவதற்கு நின்றார்கள். நானும் அவர்கள் உளூச் செய்தது போன்று சுருக்கமாக உளூச் செய்துவிட்டு, நபி(ஸல்) அவர்களின் அருகே வந்து அவர்களின் இடப்பக்கத்தில் நின்றேன். உடனே நபி(ஸல்) அவர்கள் என்னைத் திருப்பி அவர்களின் வலப்பக்கமாக நிற்கச் செய்தார்கள். பின்னர்அவர்கள் அல்லாஹ் நாடிய அளவு தொழுதுவிட்டுப் பின்னர் மீண்டும் ஒருக்களித்துப் படுத்து குறட்டைவிட்டு உறங்கினார்கள். பின்னர் கூட்டுத் தொழுகைக்காக அவர்களை அழைத்தார். உடனே எழுந்து அவருடன் (ஸுப்ஹு) தொழுகைக்குச் சென்று மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். ஆனால் அவர்கள் (திரும்ப) உளூச் செய்யவில்லை“ என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸை அறிவிப்பவர்களில் ஒருவரான அம்ர் என்பவர் ‘சுருக்கமாக உளூச் செய்தார்கள்‘ என்பதோடு ‘குறைவாக‘ என்ற வார்த்தையையும் சேர்த்துக் கூறினார். அம்ர் என்பவரிடம் ‘சிலர் இறைத்தூதரின் கண்கள்தாம் உறங்கும், அவர்களின் உள்ளம் உறங்காது என்று கூறுகிறார்களே! (அது உண்மையா?)‘ என நாங்கள் கேட்டதற்கு, ‘நபிமார்களின் கனவு இறைவனிடமிருந்து வரும் செய்தி (யான வஹீ)க்கு சமமாகும்‘ என்று உபைது இப்னு உமைர் கூறத் தாம் கேட்டிருப்பதாகவும், அதற்குச் சான்றாக“ உன்னை நான் அறுத்துப் பலியிடுவதாக என் உறக்கத்தில் கனவு கண்டேன்“ (திருக்குர்ஆன் 37:102) என்ற இறை வசனத்தை அவர் ஓதிக் காட்டியதாகவும் சு..ப்யான் அவர்கள் கூறுகிறார்கள்.

## முழுமையாக உளூச் செய்தல்

“உளூவை முழுமையாகச் செய்தல் என்பதன் கருத்து நன்கு தூய்மைப்படுத்துதல் என்பதுதான்“ என இப்னு உமர்(ரலி) குறிப்பிட்டார்.

ஹதீஸ் 139. ‘(ஹஜ்ஜில்) நபி(ஸல்) அவர்கள் அர..பாவிலிருந்து (முஸ்தலி..பா) சென்று கொண்டிருந்தார்கள். வழியில் ஒரு கணவாயில் வாகனத்தைவிட்டு இறங்கிச் சிறுநீர் கழித்தார்கள். பின்னர் சுருக்கமாக உளூச் செய்தார்கள். அப்போது, ‘இறைத்தூதர் அவர்களே! தாங்கள் தொழப் போகிறீர்களா?‘ என்று நான் கேட்டதற்கு, ‘தொழுகை உமக்கு முன்னர் (முஸ்தலி..பாவில்) நடைபெறும்‘ என்று கூறிவிட்டு வாகனத்தில் ஏறினார்கள். முஸ்தலி..பா என்ற இடம் வந்ததும்.

இறங்கி மீண்டும் உளூச் செய்தார்கள். இப்போது உளூவை முழுமையாகச் செய்தார்கள். மக்ரிப் தொழுகை நடைபெறப் போகிறது என்று அறிவிக்கப்பட்டதும், நபி(ஸல்) அவர்கள் மக்ரிப் தொழுகை நடத்தினார்கள். பின்னர் ஒவ்வொருவரும் தத்தம் ஒட்டகங்களைத் தங்குமிடங்களில் படுக்க வைத்தார்கள். பின்னர் இஷாத் தொழுகை நடைபெறப் போகிறது என்று அறிவிக்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் இஷாத் தொழுகை நடத்தினார்கள். (மக்ரிப், இஷா ஆகிய) இரண்டு தொழுகைகளுக்கிடையில் (வேறு எதுவும்) அவர்கள் தொழவில்லை“ என உஸமா இப்னு ஜைத்(ரலி) அறிவித்தார்.

## ஒரு கை நிறையத் தண்ணீர் எடுத்து இரண்டு கைகளையும் சேர்த்து முகத்தைக் கழுவுதல்.

ஹதீஸ் 140. ‘இப்னு அப்பாஸ்(ரலி) உளூச் செய்தார்கள். அப்போது ஒரு கைத் தண்ணீரை அள்ளி அதைக் கொண்டு தம் முகத்தைக் கழுவினார்கள். அதாவது ஒரு கைத் தண்ணீர் எடுத்து அதன் மூலமே தம் வலக்கையைக் கழுவினார்கள். பின்னர் இன்னொரு கையால்

தண்ணீர் அள்ளித் தம் இடக்கையைக் கழுவினார்கள். பின்னர் ஈரக் கையால் தம் தலையைத் தடவினார்கள். பின்னர் இன்னொரு கைத் தண்ணீர் அள்ளி அதனை தம் வலக்காலில் கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றி அதனைக் கழுவினார்கள். பின்னர் இன்னொரு கைத் தண்ணீர் அள்ளித் தம் இடக்காலில் ஊற்றிக் கழுவினார்கள். 'இப்படித்தான் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்ய பார்த்தேன்' என்றும் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்" என அதாவு இப்னு யஸார்(ரலி) அறிவித்தார்.

## உடலுறவின் போதும், எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வின் பெயரைக் கூறுதல்

ஹதீஸ் 141. 'உங்களில் ஒருவர் தம் மனைவியுடன் உடலுறவு கொள்ளச் செல்லும்போது 'அல்லாஹ்வின் திரு நாமத்தைக் கொண்டு உடலுறவு கொள்ளப் போகிறேன். இறைவா! எங்களைவிட்டு ஷைத்தானைத் தூரமாக்கு! (இந்த உறவு மூலம்) நீ எங்களுக்கு அளிக்கப் போகும் (குழந்தைப்) பேற்றிலும் ஷைத்தானை அப்புறப்படுத்து' என்று சொல்லிவிட்டு உறவு கொண்டு அதன் மூலம் அவ்விருவருக்கும் குழந்தை வழங்கப்படுமானால் அக்குழந்தைக்கு ஷைத்தான் எந்த தீங்கும் விளைவிப்பதில்லை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## கழிப்பிடம் செல்லும்போது சொல்ல வேண்டியவை

ஹதீஸ் 142. 'கழிப்பிடத்திற்குச் சென்றபோது, 'இறைவா! அருவருக்கத் தக்க செயல்கள், இழிவான பண்பாடுகள் ஆகியவற்றைத் தூண்டும் ஷைத்தானைவிட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்' என்று கூறும் வழக்கமுடையவர்களாக நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## கழிப்பிடத்தில் தண்ணீர் வைத்தல்

ஹதீஸ் 143. 'நபி(ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குச் சென்றதும் நான் அவர்களுக்காகத் தண்ணீர் வைத்தேன். அவர்கள் வெளியே வந்ததும் 'இந்தத் தண்ணீரை யார் வைத்தது?' என்று கேட்டதற்கு (என்னைப் பற்றி) கூறப்பட்டது. உடனே 'இறைவா! இவருக்கு மார்க்கத்தில் நல்ல ஞானத்தைக் கொடுப்பாயாக' என்று பிரார்த்தித்தார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## மலஜலம் கழிக்கும்போது கிப்லாவை முன்னோக்கக் கூடாது. கட்டிடம் அல்லது சுவர் இருந்தால் தவறில்லை.

ஹதீஸ் 144. 'உங்களில் ஒருவர் மலம் கழிக்கச் சென்றால் அவர் கிப்லாவை முன்னோக்கக் கூடாது. தம் முதுகுப் புறத்தால் (அதை) பின்னால் ஆக்கவும் கூடாது. (எனவே) கிழக்கு நோக்கியோ, மேற்கு நோக்கியோ திரும்பிக் கொள்ளுங்கள்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ அய்~பில் அன்ஸாரி(ரலி) அறிவித்தார்.

(குறிப்பு: மேற்கூறப்பட்ட ஹதீஸ், கிப்லா தெற்கு வடக்காக அமைந்த மதீனா, யமன், சிரியா போன்ற நாடுகளில் வாழும் மக்களுக்கே பொருந்தும்.)

## இரண்டு செங்கற்களின் மீது அமர்ந்து மலம் கழித்தல்.

ஹதீஸ் 145. 'நீர் உம்முடைய தேவைக்காக (மலம் கழிக்க) உட்கார்ந்தால் கிப்லாவையோ, பைத்துல் முகத்தஸ்ஸையோ முன்னோக்கக் கூடாது என்று சிலர் சொல்கிறார்கள். ஆனால் நான் ஒருநாள் எங்கள் வீட்டின் கூரையின் மீது (ஒரு வேலையாக) ஏறினேன். அப்போது (தற்செயலாக) நபி(ஸல்) இரண்டு செங்கற்களின் மீது பைத்துல் முகத்தஸ்ஸை முன்னோக்கியவர்களாக மலம் கழிக்க அமர்ந்திருக்கக் கண்டேன்" என அப்துல்லாஹ் இப்னு

உமர்(ரலி) அறிவித்தார்.

இச்செய்தியை அவர்களிடமிருந்து அறிவிக்கும் வாஸிவு இப்னு ஹப்பான் அவர்களை (தொழுது முடித்த பிறகு) நோக்கி இப்னு உமர்(ரலி) 'நீரும் பிட்டங்களை பூமியில் அழுத்தித் தொழுபவர்களைச் சார்ந்தவர்தாம் போலும்" என்று கூறினார்கள். அதற்கு வாஸிவு, 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக நான் அவர்கள் குறை சொன்னவாறு தொழுதேனா என்பதை அறிய மாட்டேன்" என்று கூறினார்.

"பூமியுடன் (தன் பிட்டங்களை) அப்பியவராகவும், பிட்டங்களைப் பூமியைவிட்டு அகற்றாதவராகவும் ஸஜ்தா செய்து தொழுபவரைத்தான் (இப்னு உமர்) அவர்கள் குறிப்பிட்டார்கள்" என இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இமாம் மாலிக் கூறினார்.

## பெண்கள் மலஜலம் கழிப்பதற்காக (நடமாட்டமில்லாத) வெட்ட வெளிகளுக்குப் புறப்பட்டுச் செல்லுதல்.

ஹதீஸ் 146. 'நபி(ஸல்) அவர்களின் மனைவியர் கழிப்பிடம் நாடி வெட்ட வெளிப் பொட்டல்களுக்கு இரவு நேரங்களில் (வீட்டைவிட்டு) வெளியே செல்லும் வழக்கமுடையவர்களாயிருந்தார்கள். வெட்ட வெளி பொட்டல் என்பது விசாலமான திறந்த வெளியாகும். நபி(ஸல்) அவர்களிடம், 'உங்கள் மனைவியரை (வெளியே செல்லும் போது) முக்காடிட்டு மறைத்துக் கொள்ளச் சொல்லுங்கள்' என உமர்(ரலி) சொல்லிக் கொண்டிருந்தார். ஆயினும் நபி(ஸல்) அவர்கள் அதைச் செயல்படுத்தவில்லை. நபி(ஸல்) அவர்களின் மனைவி ஸவ்தா(ரலி) இஷா நேரமான ஓர் இரவில் (கழிப்பிடம் நாடி) வீட்டைவிட்டு வெளியே சென்றார். நபி(ஸல்) அவர்களின் மனைவியரில் அவர்களே உயரமான பெண்மணியாக இருந்தார்கள். அவர்களைப் பார்த்த உமர்(ரலி), 'ஸவ்தாவே! உங்களை யார் என்று புரிந்து கொண்டோம்' என்றார். (அப்போதாவது பெண்கள்) முக்காடிடுவது பற்றிய குர்ஆன் வசனம் அருளப்படாதா என்ற பேராசையில் உரத்து அழைத்தார். அப்போதுதான் பெண்கள் முக்காடு போடுவது பற்றிய வசனத்தை அல்லாஹ் அருளினான்" ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 147. '(நபி வீட்டுப்) பெண்களே! நீங்கள் உங்கள் தேவைக்காக வெளியே செல்ல (இப்போதும்) உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டே உள்ளது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

"வெளியே செல்ல' என்பதற்கு 'கழிப்பிடம் நாடி' என்பதே நபி(ஸல்) அவர்களின் கருத்தாகும்" என இந்த ஹதீஸ் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் குறிப்பிடுகிறார்.

## வீடுகளில் (வீட்டுக் கழிப்பறைகளில்) மலம் கழித்தல்.

ஹதீஸ் 148. 'ஹஃப்ஸா(ரலி)வின் வீட்டுக்கூரை மீது ஒரு வேலையாக நான் ஏறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் சிரியாவை முன்னோக்கியும் கிப்லாவின் திசையைப் பின்னோக்கியும் அமர்ந்தவர்களாகத் தம் (இயற்கைத்) தேவையை நிறைவேற்றிக் கொண்டிருக்கக் கண்டேன்" என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 149. 'எங்கள் வீட்டுக் கூரை மீது ஒரு நாள் ஏவினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் இரண்டு செங்கற்களின் மீது பைத்துல் முகத்தஸ்ஸை முன்னோக்கியவர்களாக அமர்ந்திருக்கக் கண்டேன்" என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## தண்ணீரால் தூய்மைப்படுத்துதல்.

ஹதீஸ் 150. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் தேவைக்காக வெளியே சென்றால், நானும் சிறுகூன் ஒருவனும் தண்ணீர் நிரம்பிய சிறிய தோல் பாத்திரம் ஒன்றை எங்களுடன் கொண்டு

செல்வோம். அந்தத் தண்ணீர் மூலம் நபி(ஸல்) அவர்கள் தூய்மைப்படுத்திக் கொள்வார்கள்" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

### ஒருவர் தம் தேவையை நிறைவேற்றிய பின்னர் சுத்தப்படுத்த மற்றவர் தண்ணீர் எடுத்துச் செல்லுதல்.

"நபி(ஸல்) அவர்களின் இரண்டு காலணிகள், அவர்கள் சுத்தம் செய்வதற்குரிய தண்ணீர், மற்றும் தலையணையை எடுத்துச் சென்ற இப்னு மஸ்வூத்(ரலி) 'உங்களிடம் (கூஃபாவில் இவ்வழக்கம்) இல்லையா?' என்று கேட்டார்கள்"என அபுத்தர்தா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 151. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் தேவைக்காக வெளியே சென்றால், நானும் சிறுவன் ஒருவனும் தண்ணீர் நிரம்பிய சிறிய தோல் பாத்திரம் ஒன்றை எங்களுடன் கொண்டு செல்வோம். அந்தத் தண்ணீரின் மூலம் நபி(ஸல்) அவர்கள் தூய்மைப்படுத்திக் கொள்வார்கள்" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

### கழிப்பிடம் செல்லும்போது தண்ணீருடன் ஒரு கைத்தடியையும் எடுத்துச் செல்லுதல்

ஹதீஸ் 152. 'நபி(ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குச் செல்லும்போது நானும் ஒரு சிறுவரும் தண்ணீர் நிரம்பிய தோல் பாத்திரத்தையும், ஒரு கைத்தடியையும் சுமந்து செல்வோம். (தேவையை முடித்ததும்) அவர்கள் தண்ணீரால் தூய்மைப்படுத்திக் கொள்வார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

'கைத்தடி என்பது அதன் மேற்புறத்தில் பூண் இடப்பட்டுள்ள கைத்தடியாகும்' என்று ஷுஅபா குறிப்பிடுகிறார்.

### வலக்கரத்தால் சுத்தம் செய்தல் விலக்கப்பட்டிருக்கிறது

ஹதீஸ் 153. 'உங்களில் ஒருவர் (எதை) அருந்தினாலும் அந்தப் பாத்திரத்திற்குள் அவர் மூச்சு விட வேண்டாம். தம் வலக்கரத்தால் சுத்தம் செய்யவும் வேண்டாம். (பானங்கள்) அருந்தும்போது குடிக்கும் பாத்திரத்திற்குள் மூச்சு விடவும் வேண்டாம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ கதாதா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 154 உங்களில் ஒருவர் சிறுநீர் கழித்தால் அவர் தன்னுடைய வலக்கரத்தால் அதைத் தொடவேண்டாம். இன்னும் வலக்கரத்தால் சுத்தம் செய்யவும் வேண்டாம். (குடிப்பவர்) தன்னுடைய பாத்திரத்தில் மூச்சுவிடவேண்டாம் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் அபூ கதாதா தன்னுடைய தந்தையின் வாயிலாக அறிவித்தார்.

### கற்களால் சுத்தம் செய்தல்.

ஹதீஸ் 155. 'நபி(ஸல்) அவர்கள் இயற்கைத் தேவைக்காக வெளியே சென்றபோது அவர்களைத் தொடர்ந்து சென்றேன். அவர்கள் திரும்பிப் பார்க்காமலேயே சென்றார்கள். அவர்களின் அருகில் நான் சென்றபோது, 'சுத்தம் செய்வதற்காக எனக்குச் சில கற்களைக் கொண்டு வாரும். எலும்புகளையோ, விட்டையையோ கொண்டு வரவேண்டாம்" என்று கூறினார்கள். நான் (கற்களைப் பொறுக்கி) என்னுடைய ஆடையின் ஓரத்தில் எடுத்துக் கொண்டு வந்து நபி(ஸல்) அவர்களின் பக்கத்தில் வைத்துவிட்டுத் திரும்பினேன். நபி(ஸல்) அவர்கள் மலஜலம் கழித்த பின்னர் அக்கற்களால் சுத்தம் செய்தார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

### விட்டையால் மலஜலம் சுத்தம் செய்யக் கூடாது.

ஹதீஸ் 156. 'நபி(ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்குச் சென்றபோது, மூன்று கற்களைக் கொண்டு

வருமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள். நான் இரண்டு கற்களைப் பெற்றுக் கொண்டேன். மூன்றாவது கல்லைத் தேடிப் பார்த்தேன். கிடைக்கவில்லை. ஒரு விட்டையை எடுத்துக் கொண்டு வந்தேன். அவர்கள் விட்டையை எறிந்துவிட்டு 'இது அசுத்தமானது' என்று கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## உளூவில் (ஒவ்வொரு உறுப்பையும்) ஒருமுறை கழுவுதல்.

ஹதீஸ் 157. 'நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்யும்போது அவர்களின் உறுப்புக்களை ஒவ்வொரு முறை கழுவினார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## (தலையைத் தவிர மற்ற உறுப்புக்களை) இரண்டு முறை கழுவுதல்.

ஹதீஸ் 158. 'நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தபோது அவர்கள் உறுப்புக்களை இரண்டிரண்டு முறை கழுவினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அறிவித்தார்.

## (தலையைத் தவிர மற்ற உறுப்புக்களை) மும்முறை கழுவுதல்

ஹதீஸ் 159. 'உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லித் தம் இரண்டு முன் கைகளில் மூன்று முறை ஊற்றிக் கழுவினார். பின்னர் தம் வலக்கரத்தைப் பாத்திரத்தில் செலுத்தி, வாய்க் கொப்புளித்து, மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தினார். பின்னர் தம் முகத்தை மூன்று முறை கழுவினார். தம் இரண்டு கைகளையும் மூட்டுவரை மூன்று முறை கழுவினார். பின்பு தலையை ஈரக் கையால் தடவினார். பின்னர் தம் இரண்டு கால்களையும் கரண்டை வரை மூன்று முறை கழுவினார். பின்னர் 'யாரேனும் என்னுடைய இந்த உளூவைப் போன்று செய்து, பின்னர் தீய எண்ணங்களுக்கு இடம் தராமல் இரண்டு ரக்அத்துகள் தொழுதால் அவர் முன்னர் செய்த (சிறு) பாவங்கள் மன்னிக்கப்படும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என உஸ்மான்(ரலி) கூறினார்" ஹும்ரான் அறிவித்தார்.

ஹதீஸ் 160. 'உஸ்மான்(ரலி), உளூச் செய்யும்போது (மக்களிடம்) 'நான் ஒரு ஹதீஸை உங்களுக்குச் சொல்லட்டுமா? ஒரு வசனம் மட்டும் இல்லையானால் அதை நான் உங்களுக்குச் சொல்லியிருக்க மாட்டேன்' என்று கூறிவிட்டு, 'ஒரு மனிதன் அழகிய முறையில் உளூச் செய்து, தொழவும் செய்வானாயின் அவன் தொழுது முடிக்கும் வரை அவனுக்கும் தொழுகைக்கும் இடையிலுள்ள பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை கேட்டிருக்கிறேன் என்றார்கள்" ஹும்ரான் அறிவித்தார்.

அது எந்த வசனம் என்று குறிப்பிடும்போது 'நாம் அருளிய தெளிவான அத்தாட்சிகளையும், நேர் வழியையும் அதனை நாம் வேதத்தில் மனிதர்களுக்கும் விளக்கிய பின்னரும் மறைப்பவர்களை அல்லாஹ் சபிபிக்கிறான் மேலும் அவர்களைச் சபிப்பவர்களும் சபிக்கிறார்கள்' (திருக்குர்ஆன் 02:159) என்ற வசனமாகும்" என உர்வா கூறினார்.

## உளூவின்போது மூக்கிற்குத் தண்ணீர் செலுத்திச் சீந்துதல்.

ஹதீஸ் 161. 'உளூச் செய்பவர் மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தி வெளியாக்கட்டும் மலஜலம் கழித்துவிட்டுக் கல்லால் சுத்தம் செய்பவர் ஒற்றைப் படையாகச் செய்யவும்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கற்களால் சுத்தம் செய்யும்போது ஒற்றைப் படையாகச் செய்தல்.

ஹதீஸ் 162. 'உங்களில் ஒருவர் உளூச் செய்தால் தம் மூக்கிற்குத் தண்ணீர்ச் செலுத்திப் பின்னர் அதை வெளியாக்கட்டும். மலஜலம் கழித்துவிட்டுக் கல்லால் சுத்தம் செய்பவர் ஒற்றைப் படையாகச் செய்யட்டும். உங்களில் ஒருவர் விழித்தெழுந்தால் அவர், தாம் உளூச் செய்யும்

தண்ணீரில் தம் கையை நுழைப்பதற்கு முன்னர் கழுவிக் கொள்ளட்டும். ஏனென்றால், (தூங்கத்தில்) தம் கை எங்கே இருந்தது என்பதை உங்களில் எவரும் அறியமாட்டார்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## உளூச் செய்யும்போது கால்களை முழுமையாகக் கழுவ வேண்டும் தடவுவது போதாது.

ஹதீஸ் 163. 'நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஒரு பயணத்தில் இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் எங்களைவிட்டும் பின்தங்கிவிட்டாக்ள். நாங்கள் அஸர் நேரத்தை அடைந்தபோது எங்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நாங்கள் உளூச் செய்து கொண்டிருந்தோம். (கால்களைக் கழுவாமல்) கால்களில் ஈரக்கையால் தடவிக் கொண்டிருந்தோம். அப்போது, 'இத்தகைய குதிங்கால்களை நரகம் தீண்டட்டும்' என்று இரண்டு அல்லது மூன்று முறை உரத்த குரலில் நபி (ஸல்) கூறினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அறிவித்தார்.

## உளூச் செய்யும்போது வாய் கொப்பளித்தல்.

ஹதீஸ் 164. 'உஸ்மான் இப்னு அஃப்பான் (ரலி) ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லித் தம் இரண்டு முன் கைகளில் மூன்று முறை ஊற்றிக் கழுவினார்கள். பின்னர் தம் வலக்கரத்தைப் பாத்திரத்தில் செலுத்தி, வாய்க் கொப்பளித்து, மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தித் சீந்தினார்கள். பின்னர் தம் முகத்தை மூன்று முறை கழுவினார்கள். பின்பு தலையை ஈரக் கையால் தடவினார்கள். பின்னர் தம் இரண்டு கால்களையும் கரண்டை வரை மூன்று முறை கழுவினார்கள். பிறகு 'நான் உளூச் செய்வதைப் போன்றே நபி (ஸல்) அவர்கள் உளூச் செய்வதை பார்த்திருக்கிறேன்' என்று கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்கள் என்னிடம், 'யாரேனும் என்னுடைய இந்த உளூவைப் போன்று செய்து, பின்னர் தீய எண்ணங்களுக்கு இடம் தராமல் இரண்டு ரக்அத்துகள் தொழுதால் அவர் முன்னர் செய்த (சிறு) பாவங்களை அல்லாஹ் மன்னிக்கிறான்" என்று கூறினார்கள் என்றார்கள்" என ஹும்ரான் அறிவித்தார்.

## குதிகால்களைக் கழுவுதல்.

இப்னுஸீரின் உளூச் செய்யும்போது மோதிரம் அணிந்திருக்கும் இடத்தையும் கழுவக் கூடியவராக இருந்தார்கள்.

ஹதீஸ் 165. 'மக்கள் உளூச் செய்யும் தொட்டியிலிருந்து உளூச் செய்து கொண்டிருந்தபோது அவ்வழியே சென்ற அபூ ஹுரைரா (ரலி) (எங்களைப் பார்த்து) 'உளூவை முழுமையாகச் செய்யுங்கள். நிச்சயமாக அபுல் காஸிம் (முஹம்மத் (ஸல்) அவர்கள் 'குதிகால்களை சரியாகக் கழுவாதவர்களுக்கு நரகம் தான்' என்று கூறினார்கள்' என்றார்கள்" என முஹம்மத் இப்னு ஸியாத் அறிவித்தார்.

## செருப்பு அணிந்திருந்தாலும் இரண்டு கால்களையும் கழுவ வேண்டும் தடவுதல் கூடாது.

ஹதீஸ் 166. 'உபைது இப்னு ஜுரைஜ் என்பவர் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களிடம், 'அப்துர்ரஹ்மானின் தந்தையே! உங்கள் தோழர்களில் எவரும் செய்யாத நான்கு விஷயங்களை நீங்கள் செய்வதை காண்கிறேன்' என்றார். 'இப்னு ஜுரைஜே! அவை யாவை?' என இப்னு உமர் (ரலி) கேட்டதற்கு, '(தவாஃபின்போது) கஅபதுல்லாஹ்வின் நான்கு மூலைகளில் யமன் தேசத்தை நோக்கியுள்ள (ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானி ஆகிய) இரண்டு மூலைகளைத் தவிர மற்ற மூலைகளை நீங்கள் தொடுவதில்லை என்பதை பார்த்தேன். முடியில்லாத தோல் செருப்பை நீங்கள் அணிவதைப் பார்க்கிறேன். நீங்கள் ஆடையில் மஞ்சள் நிறத்தால் சாயம் பூசுவதைப் பார்க்கிறேன். மேலும் நீங்கள் மக்காவில் இருந்தபோது (துல்ஹஜ் மாத) பிறையைக்

கண்டதுமே மக்கள் இஹ்ராம் அணிந்த நிலையில் நீங்கள் (துல்ஹஜ் மாதம்) எட்டாவது நாள்தான் இஹ்ராம் அணிந்ததைப் பார்த்தேன்' என்று இப்னு ஜுரைஜ் கூறியதற்கு, 'கஅபதுல்லாஹ்வின் மூலைகளைப் பொருத்த வரை நபி(ஸல்) அவர்கள் யமன் நாட்டை நோக்கியுள்ள இரண்டு மூலைகளைத் தவிர எதையும் தொட நான் காணவில்லை. முடியில்லாத செருப்பைப் பொருத்த வரையில் நபி(ஸல்) அணிந்து முடியில்லாத செருப்பை அணிந்து உளூச் செய்வதை பார்த்தேன். எனவே அதை அணிவதை நான் பிரியப்படுகிறேன். மஞ்சள் நிறத்தைப் பொருத்த வரை நபி(ஸல்) அவர்கள் ஆடையில் மஞ்சள் சாயம் பூசுவதை பார்த்தேன். எனவே அதைக் கொண்டு சாயம் பூசுவதை விரும்புகிறேன். இஹ்ராம் அணிவதைப் பொருத்தவரை நபி(ஸல்) அவர்கள் தங்கள் வாகனம் அவர்களை ஏற்றிக் கொண்டு (எட்டாம் நாள்) புறப்படும் வரை அவர்கள் இஹ்ராம் அணிவதை நான் பார்த்ததில்லை' என்று அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்" என ஸயீத் அல் மக்புரி அறிவித்தார்.

## உளூச் செய்வதிலும், குளிப்பதிலும் வலப்புறத்திலிருந்து ஆரம்பித்தல்

ஹதீஸ் 167. 'நபி(ஸல்) அவர்களின் மகள் ஜைனப்(ரலி)யின் ஜனாஸாவை கழுவும் பெண்களிடம் நபி(ஸல்) அவர்கள், 'அவரின் வலப்புறத்திலிருந்து கழுவ ஆரம்பியுங்கள். மேலும் அவரின் உளூவின் உறுப்புகளையும் கழுவுங்கள்' என்று கூறினார்கள்" உம்மு அதிய்யா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 168. 'நபி(ஸல்) அவர்கள் செருப்பு அணிவதிலும், தலை முடி சீவுவதிலும், சுத்தம் செய்வதிலும், தங்களின் எல்லா விஷயங்களையும் வலப்புறத்தைக் கொண்டு ஆரம்பிப்பதை விரும்பக் கூடியவர்களாக இருந்தார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## தொழுகையின் நேரம் வந்ததும் தண்ணீரைத் தேடுதல்.

"ஸுப்ஹுத் தொழுகையின் நேரம் வந்ததும் தண்ணீர் தேடப்பட்டது. தண்ணீர் கிடைக்கவில்லை. அப்போது தயம்முமுடைய வசனம் அருளப்பட்டது" என ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 169. 'அஸர் தொழுகையின் நேரம் நெருங்கியபோது நபி(ஸல்) அவர்களை பார்த்தேன். மக்கள் உளூச் செய்வதற்குத் தண்ணீரைத் தேடினார்கள். தண்ணீர்ம்டைக்கவில்லை. நபி(ஸல்) அவர்களிடம் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வரப்பட்டது. தண்ணீர் உள்ள பாத்திரத்தில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் கையை வைத்து அப்பாத்திரத்திலிருந்து உளூச் செய்யுமாறு மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். நபி(ஸல்) அவர்களின் விரல்களின் கீழேயிருந்தது அங்கிருந்த கடைசி நபர் உளூச் செய்து முடிக்கும் வரை தண்ணீர் சுரந்து கொண்டிருந்ததை பார்த்தேன்" என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## மனிதர்களின் முடி கழுவிய தண்ணீர்.

மனித முடியிலிருந்து கயிறுகளும் நூல்களும் திரித்தெடுப்பதை அதா இப்னு அபீ ரபாஹ் குற்றம் எனக் கருதவில்லை. இவ்வாறே நாய் குடித்து மீதி வைத்த தண்ணீரையும் நாய் பள்ளியில் நடந்து சென்றால் அந்த இடத்தையும் அசுத்தமென அவர் கருதவில்லை.

"தண்ணீர் உள்ள ஒரு பாத்திரத்தில் நாய் நக்கி அந்தத் தண்ணீரைத் தவிர வேறு தண்ணீர் இல்லையென்றால் அந்த தண்ணீரில் உளூச் செய்யலாம்" என ஸுஹ்ரி கூறுகிறார்.

"ஸுஹ்ரி சொல்லுகிற இச்சட்டம் 'நீங்கள் தண்ணீரைப் பெறாவிட்டால் சுத்தமான மண்ணில் தயம்மும் செய்யுங்கள்" (திருக்குர்ஆன் 04:43) எனும் இறைவசனத்திலிருந்து பெறப்படுகிறது. (ஏனெனில் தண்ணீர் என்று பொதுவாக அல்லாஹ் கூறுவதால்) நாய் நக்கியதும் தண்ணீர்தான் என்றாலும் உளூச் செய்பவரின் மனதில் உறுத்தல் ஏற்படுகிறது. எனவே அந்தத் தண்ணீரில்

உளூச் செய்வதுடன் தயம்மும் செய்து கொள்ள வேண்டும்“ என சுஃப்யான் கூறினார்.

ஹதீஸ் 170. ‘அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து அல்லது அனஸின் குடும்பத்தாரிடமிருந்து நாங்கள் பெற்ற, நபி(ஸல்) அவர்களின் முடி எங்களிடம் உள்ளது என அபீதா என்பவரிடம் கூறினேன். அப்போது அவர், ‘நபி(ஸல்) அவர்களின் ஒரு முடி என்னிடம் இருப்பது உலகம் மற்றும் அதிலுள்ளவற்றையும் விட எனக்கு மிக விருப்பமானதாகும்‘ என்று கூறினார்“ முஹம்மத் இப்னு ஸீரின் அறிவித்தார்.

ஹதீஸ் 171. ‘நபி(ஸல்) அவர்கள் (ஹஜ்ஜில்) தங்கள் தலை முடியைக் களைந்தார்கள். அவர்களின் முடியிலிருந்து முதன் முதலாக அபூ தல்ஹா(ரலி) எடுத்தார்“ அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 172. ‘உங்களில் ஒருவரின் (தண்ணீர்) பாத்திரத்தில் நாய் குடித்தால் அவர் அப்பாத்திரத்தை ஏழு முறை கழுவட்டும்“ இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என்று என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 173. ‘ஒரு நாய் தாகத்தின் காரணமாக ஈர மண்ணை (நக்கி) சாப்பிடுவதை ஒருவர் பார்த்தார். உடனே அவர், தான் அணிந்திருந்த காலுறையை எடுத்து அதில் தண்ணீர் மொண்டு அந்நாய் தாகம் தீரும் வரை கொடுத்தார். எனவே அல்லாஹ் அம்மனிதருக்கு கருணை காட்டி அவரைச் சுவர்க்கத்தில் புகத்தினான்‘ இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என்று என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 174. ‘நபி(ஸல்) அவர்களின் காலத்தில் நாய்கள் பள்ளிவாசலின் உள்ளே வந்தும் அதில் சிறுநீர் கழித்தும் சென்று கொண்டிருந்தன. அதற்காக அதில் எவரும் தண்ணீர் தெளிக்கவில்லை“ என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 175. (நாயின் மூலம் வேட்டையாடுவதைப் பற்றி) நபி(ஸல்) அவர்களிடம் நான் கேட்டபோது, ‘வேட்டைக்காகப் பயிற்சி அளிக்கப்பட்ட நாயை நீர் அனுப்பி, அது (பிராணியை) கொன்றால் அதை நீர் சாப்பிடு! வேட்டை நாய் வேட்டையாடப்பட்ட பிராணியிலிருந்து (எதையேனும்) சாப்பிட்டிருக்குமானால் அதை நீர் சாப்பிடாதே! ஏனெனில், அது தனக்காகவே அதைப் பிடித்திருக்கிறது‘ என்று கூறியபோது, ‘என்னுடைய நாயை அனுப்புகிறேன் ஆனால் (வேட்டையில்) அதோடு வேறொரு நாயையும் காண்கிறேன்?‘ என்று கேட்டேன். ‘அப்படியானால் அதை நீர் சாப்பிடாதே! (ஏனெனில், நீர் உம்முடைய நாயைத்தான் இறைவனின் பெயர் சொல்லி அனுப்பினீரே தவிர வேறு நாய்க்கு நீர் இறைவனின் பெயர் சொல்லவில்லை‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அதீய் இப்னு ஹாதிம்(ரலி) அறிவித்தார்.

## முன் பின் இரண்டு துவாரங்களிலிருந்து ஏதும் வெளியாவதால் மட்டுமே உளூ முறியும்.

அல்லாஹ் கூறினான்:

“உங்களில் ஒருவர் மலம் கழித்தால் (உளூச் செய்ய வேண்டும்)“ (திருக்குர்ஆன் 04:43) (உளூச் செய்த பின்) ஒருவரின் பின் துவாரத்திலிருந்து புழு அல்லது முன் துவாரத்திலிருந்து பேன் போன்ற ஏதாவது வெளியாகுமானால் அவர் உளூவை திரும்பச் செய்ய வேண்டும்“ என்று அதா இப்னு ரபாஹ் கூறினார்.

“ஒருவர் தொழுகையில் சப்தமாகச் சிரித்தால் அந்தத் தொழுகையைத் திரும்பத் தொழ வேண்டும் உளூவை திரும்பச் செய்ய வேண்டியதில்லை“ என்று ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்.

“ஒருவர் தம் உடலிலுள்ள முடியையோ, நகங்களையோ களைவதால் அல்லது தம் காலுறையைக் கழற்றுவதால் உளூவைத் திரும்பச் செய்ய வேண்டியதில்லை“ என்று ஹஸனுல் பஸரி கூறினார்.

“தொடக்கு ஏற்பட்டால்தான் உளூவைத் திரும்பச் செய்ய வேண்டும்“ என்று அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

“தாதுர் ரிகா‘ என்ற யுத்த காலத்தில் (எங்களுடன்) நபி(ஸல்) அவர்களும் இருந்தார்கள். அந்த யுத்தத்தில் ஒருவர் அம்பால் குத்தப்பட்டார். (குத்தப்பட்ட இடத்திலிருந்து) இரத்தம் பீரீட்டு ஓடிக் கொண்டிருந்தபோதே, அவர் ருகூவு ஸுஜுதுகளைச் செய்து தொழுது கொண்டேயிருந்தார்‘ என்று ஜாபிர் கூறினார்கள்“ என அறிவிக்கப்படுகிறது.

“தங்களின் உடலில் காயங்கள் இருக்கும் நிலையில் முஸ்லிம்கள் தொழக் கூடியவர்களாக இருந்தார்கள்“ என்று ஹஸன் கூறினார்.

“இரத்தம் வெளியாவதால் உளூவைத் திரும்பச் செய்ய வேண்டியதில்லை“ என்று தாவூஸ், முஹம்மத் இப்னு அலி, அதாவு மற்றும் ஹிஜாஸ் வாசிகள் ஆகியோர் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) ஒரு கொப்புளத்தை நசுக்கினார்கள். அதிலிருந்து இரத்தம் வெளியானது. ஆனால் அவர்கள் உளூவை திரும்பச் செய்யவில்லை.

இப்னு அபீ அவ்ஃபா இரத்தமாகத் துப்பினார் (அதற்காக உளூவைத் திரும்பச் செய்யாமலே) தம் தொழுகையை நிறைவேற்றினார்.

“ஒருவர் இரத்தம் குத்தி எடுத்தால் அவர் அந்த இடத்தை மட்டும் கழுவினால் போதும். (உளூவை திரும்பச் செய்ய வேண்டியதில்லை)“ என்று இப்னு உமர்(ரலி) மற்றும் ஹஸனும் கூறினார்கள்.

ஹதீஸ் 176. ‘ஹதஸ்‘ ஏற்படாதவரை, தொழுகையை எதிர்பார்த்து பள்ளியில் இருக்கக் கூடியவர் தொழுகையில் இருப்பவராகவே கருதப்படுவார்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) சொன்னபோது, அரபி சரியாகப் புரியாத ஒருவர் ‘அபூ ஹுரைராவே! ‘ஹதஸ்‘ என்றால் என்ன?‘ என்று கேட்டதற்கு அவர் ‘பின் துவாரத்திலிருந்து வெளியாகும் சப்தம்‘ என்று கூறினார்“ என ஸயீத் அல் மக்புரி அறிவித்தார்.

ஹதீஸ் 177. ‘காற்றுப் பிரியும் சப்தத்தைக் கேட்கும் வரை அல்லது நாற்றத்தை உணரும் வரை (தொழுபவர் தொழுகையைவிட்டு) திரும்பிச் செல்லக் கூடாது‘ இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என்று என அப்துல்லாஹ் இப்னு ஜைது(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 178. ‘மதி எனும் காம நீர் வெளியாகும் ஆடவனாக இருந்தேன். (அததைப் பற்றி) கேட்க வெட்கப்பட்டு, மிக்தாத் என்பவரை நபி(ஸல்) அவர்களிடம் கேட்குமாறு பணித்தேன். அவர் அது பற்றி அவர்களிடம் கேட்டதற்கு, ‘அதற்காக உளூச் செய்வதுதான் கடமை. (குளிக்க வேண்டிய கட்டாயமில்லை)‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அலீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 179. ‘ஒருவர் (தம் மனைவியுடன்) உடலுறவு கொண்டு இந்திரியம் வெளியாகவில்லையானால் அவரின் சட்டம் என்ன? என்று நான் உஸ்மான்(ரலி) அவர்களிடம் கேட்டதற்கு, ‘அவர் தம் ஆண் குறியைக் கழுவிவிட்டு, தொழுகைக்கு செய்வது போன்று உளூச் செய்ய வேண்டும். இதை நான் நபி(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டேன்‘ என உஸ்மான்(ரலி) கூறினார். மேலும் இது பற்றி அலி, ஸுபைர், தல்ஹா, உபை இப்னு கஅப் (ரலி) ஆகியோரிடம் நான் கேட்டதற்கு, அவர்களும் இவ்வாறே கூறினார்கள்“ ஸைத் இப்னு காலித்(ரலி)

அறிவித்தார்.

ஹதீஸ் 180. 'நபி(ஸல்) அவர்கள் அன்சாரித் தோழாகளில் ஒருவரை அழைத்து வருமாறு ஆளனுப்பினார்கள். தலையிலிருந்து தண்ணீர் சொட்டும் நிலையில் அவர் வந்தார். இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் 'உம்மை அவசரப்படுத்தி விட்டோம் போலும்?' என்றார்கள். அதற்கு அவர் 'ஆம்' என்றார். 'நீர் (மனைவியோடு உடலுறவு கொள்ளும்போது) அவசரப்பட்டு எடுத்தால், அல்லது இந்திரியம் வெளியாகாமலிருந்தால், அதற்காக நீர் உளூச் செய்ய வேண்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என அபூ சயீதுல்குத்ரி(ரலி) அறிவித்தார்.

## ஒருவர் மற்றவருக்கு உளூச் செய்ய உதவுதல்

ஹதீஸ் 181. 'நபி(ஸல்) அவர்கள் அர∴பா மைதானத்திலிருந்து (முஸ்தலி∴பாவை நோக்கி) வந்து கொண்டிருந்தபோது ஒரு பள்ளத்தாக்கில் சென்று அங்கு (இயற்கைத்) தேவையை நிறைவேற்றினார்கள். பின்னர், நான் நபி(ஸல்) அவர்களுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொடுத்தேன். அவர்கள் உளூச் செய்தார்கள். 'இறைத்தூதர் அவர்களே! நீங்கள் இப்போது தொழப் போகிறீர்களா?' என்று நான் கேட்டதற்கு, 'தொழும் இடம் உமக்கு முன்னால் (முஸ்தலி∴பா என்ற இடத்தில்) வருகிறது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என உஸாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 182. 'நான் ஒரு பயணத்தில் நபி(ஸல்) அவர்களோடு இருந்தேன். நபி(ஸல்) அவர்கள் (இயற்கைத்) தேவைக்காகச் சென்றார்கள். நான் நபி(ஸல்) அவர்களுக்கு தண்ணீர் ஊற்றினேன். அதில் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். அப்போது தங்கள் முகத்தையும் இரண்டு கைகளையும் தழுவினார்கள். காலுறைகளின் மீது தடவினார்கள்'' என முகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

## தொடக்கான பின்னரும் மற்ற சந்தர்ப்பங்களிலும் குர்ஆன் ஓதுதல்

''குளிக்கும் அறையில் குர்ஆன் ஓதுவதும் உளூவின்றிக் கடிதம் எழுதுவதும் குற்றமில்லை'' என்றும், (குளிக்கும் அறையில் இருப்பவர்கள்) கீழாடை அணிந்தவர்களாக இருந்தால் அவர்களுக்கு நீ ஸலாம் சொல்லு அவ்வாறில்லை என்றால் நீ ஸலாம் சொல்லாதே'' என்றும் இப்ராஹீம் நகயீ கூறினார்.

ஹதீஸ் 183. 'நபி(ஸல்) அவர்களின் மனைவியும் என்னுடைய சிறிய தாயாருமான மைமூனாவின் வீட்டில் நான் தலையணையின் பக்க வாட்டில் சாய்ந்து தூங்கினேன். நபி(ஸல்) அவர்களும் அவர்களின் மனைவியும் அதன் மற்ற பகுதியில் தூங்கினார்கள். இரவின் பாதிவரை - கொஞ்சம் முன் பின்னாக இருக்கலாம் - நபி(ஸல்) தூங்கினார்கள். பின்னர் விழித்து அமர்ந்து தங்களின் கையால் முகத்தைத் தடவித் தூக்கக் கலக்கத்தைப் போக்கினார்கள். பின்னர் ஆலு இம்ரான் என்ற அத்தியாயத்தின் இறுதியிலுள்ள பத்து வசனங்களை ஓதினார்கள். பின்னர் எழுந்து சென்று தொங்கவிடப்பட்டிருந்த பழைய தோல் பையிலிருந்து (தண்ணீர் எடுத்து) உளூச் செய்தார்கள். அவர்களின் உளூவை நல்ல முறையில் செய்தார்கள். பின்னர் தொழுவதற்காக எழுந்தார்கள். நானும் எழுந்து நபி(ஸல்) அவர்கள் செய்தது போன்று (உளூ) செய்துவிட்டு நபி(ஸல்) அவர்களின் அருகில் சென்று நின்றேன். அவர்கள் தங்களின் வலக்கரத்தை என் தலைமீது வைத்தார்கள். என்னுடைய வலக்காதைப் பிடித்து (அவர்களின் வலப்பக்கம்) நிறுத்தினார்கள். இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். மேலும் இரண்டு ரக்அத்துகள், மீண்டும் இரண்டு ரக்அத்துகள், இன்னும் இரண்டு ரக்அத்துகள் மறுபடியும் இரண்டு ரக்அத்துகள் மேலும் இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள் பின்பு வித்ரு தொழுதார்கள். பின்னர் பாங்கு சொல்பவர் வரும் வரை சாய்ந்து படுத்தார்கள். பிறகு எழுந்து சுருக்கமாக இரண்டு ரக்அத்துகள்

தொழுதுவிட்டு சுபுஹுத் தொழுகைக்காக (வீட்டைவிட்டு) வெளியே சென்றார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## உணர்வற்ற நிலையில் மயங்கினாலே தவிர உளூ நீங்காது

ஹதீஸ் 184. 'ஒரு சூரிய கிரகணத்தன்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் சென்றேன். ஆயிஷா(ரலி) தொழுது கொண்டிருந்தார்கள். மக்களும் தொழுதார்கள். நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் வந்து, 'மக்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது?' என்று கேட்டேன். (தொழுகையில் நின்ற) ஆயிஷா(ரலி) வானை நோக்கித் தம் கையால் சுட்டிக் காட்டினார்கள். (தொழுகையில் பேசக் கூடாது என்பதை உணர்த்துவதற்காக) 'ஸுப்ஹானல்லாஹ்' என்றும் கூறினார்கள். அப்போது இது (ஏதாவது) அடையாளமா? என்று நான் கேட்டதற்கு ஆயிஷா(ரலி) 'ஆமாம் அப்படித்தான்' என்று தலையால் சைகை செய்தார்கள். உடனே நானும் (தொழுகையில்) நின்று கொண்டேன். (நீண்ட நேரம் நின்றதால்) நான் மயக்கமுற்றேன். (அதனால்) என் தலை மீது தண்ணீரை ஊற்றினேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் உரையில் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, 'எனக்கு இது வரை காட்டப்படாத சுவர்க்கம் நரகம் உட்பட அத்தனைப் பொருட்களையும் இந்த இடத்திலேயே கண்டேன். மேலும் நிச்சயமாக நீங்கள் உங்கள் மண்ணறைகளில் மஸீஹுத் தஜ்ஜால் என்பவனின் குழப்பத்துக்கு நிகரான சோதனைக்கு உள்ளாக்கப்படுவீர்கள். (அப்போது மண்ணறையில் அடக்கம் செய்யப்பட்டவரிடம்) 'இந்த மனிதரைப் பற்றி உமக்கு என்ன தெரியும்?' என்று கேட்கப்படும். நம்பிக்கையாளர், எங்களிடம் நேர் வழியையும் தெளிவான சான்றுகளையும் கொண்டு வந்தார்கள். நாங்கள் ஏற்று நம்பிப் பின் பற்றினோம்' என்று கூறுவார். அப்போது 'நல்லவராய் நீர் உறங்குவீராக!' என்றும் 'நிச்சயமாகவே நீர் நபி(ஸல்) அவர்களைப் பற்றி இத்தகைய உறுதியான நம்பிக்கையுடையவராகவே இருந்தீர் என்றும் அறிவோம்' என (வானவர்களால்) கூறப்படும். நயவஞ்சகனோ 'எனக்கு எதுவும் தெரியாது. மக்கள் அவரைப் பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருக்கக் கேட்டிருக்கிறேன். எனவே நானும் அது போன்று கூறினேன்' என்பான்' என எனக்கு அறிவிக்கப்பட்டது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அஸ்மா(ரலி) அறிவித்தார்.

"அஸ்மா(ரலி) இந்த ஹதீஸை அறிவித்தபோது 'நிகரான' என்ற இடத்தில் 'அடுத்த படியான' என்று கூறினார்களா? 'நம்பிக்கையாளர்' என்ற இடத்தில் 'உறுதியிலிருப்பவர்' என்று கூறினார்களா? 'நயவஞ்சகன் என்ற இடத்தில் 'சந்தேகத்துடன் இருந்தவன்' என்று கூறினார்களா? என்பது எனக்கு நினைவில்லை என்று கூறினார்" என்று ஃபாத்திமா கூறினார்.

## "உங்களுடைய தலையையும் தடவுங்கள்" (திருக்குர்ஆன் 05:06) என்ற அல்லாஹ்வின் சொல்லை ஆதாரமாகக் கொண்டு (உளூவில்) தலையை முழுவதும் தடவுதல்

மேலும், 'ஒரு பெண் ஆணைப் போன்று தன்னுடைய தலையை முழுவதுத் தடவ வேண்டும்" என இப்னுல் முஸய்யப் கூறினார்.

"(உளூவில்) தலையின் சிறிதளவு மட்டும் தடவினால் போதுமானதா?' என இமாம் மாலிம்டம் கேட்கப்பட்டதற்கு, பின்வரும் ஹதீஸை ஆதாரமாகக் கூறினார்.

ஹதீஸ் 185. 'அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்களிடம் ஒருவர் வந்து, 'நபி(ஸல்) அவர்கள் எப்படி உளூச் செய்தார்கள்? என்பதை எனக்கு நீர் செய்து காட்ட முடியுமா? எனக் கேட்டதற்கு அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) 'ஆம்' என்று கூறித் தண்ணீர் கொண்டு வரக் கூறினார். அதைத் தம் இரண்டு முன் கைகளிலும் ஊற்றி இருமுறை கழுவினார். பின்னர் மூன்று வாய் கொப்புளித்து, மூக்கிற்குத் தண்ணீர் செலுத்திச் சீந்தினார். பின்னர் தம் முகத்தை மூன்று முறை கழுவினார். பின்னர் தம் இரண்டு கைகளையும் மூட்டுவரை இரண்டு இரண்டு முறை

கழுவினார். பின்னர் தம் இரண்டு கைகளையும் தலையில் வைத்து முன்னே கொண்டு சென்று பின்பு கைகளைப் பின்னே கொண்டு வந்து தலையைத் தடவினார். அதாவது தம் இரண்டு கைகளையும் தலையின் முன்பகுதியில் வைத்து பிடரி வரை கொண்டு சென்று பிறகு அப்படியே எந்த இடத்திலிருந்து தடவ ஆரம்பித்தாரோ அந்த இடத்திற்கு திரும்பக் கொண்டு வந்தார். பின்னர் தம் இரண்டு கால்களையும் கழுவினார்“ என யஹ்யா அல் மாஸினி அறிவித்தார்.

### இரண்டு கால்களையும் கரண்டை வரை கழுவுதல்

ஹதீஸ் 186. ‘அம்ர் இப்னு அபீ ஹஸன், அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்களின் உளூவைப் பற்றிக் கேட்டபோது அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி, நபி(ஸல்) அவர்கள் செய்தது போன்று, உளூச் செய்து காட்டினார். பாத்திரத்திலிருந்து தண்ணீரைத் தம் கையில் ஊற்றி முன் இரண்டு கைகளையும் மூன்று முறை வாய் கொப்புளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்திச் சீந்தினார். பின்னர் தம் கையைப் பாத்திரத்தில் நுழைத்து மூன்று முறை முகத்தைக் கழுவினார். பின்னர் தம் இரண்டு கைகளையும் மூட்டு வரை இரண்டு முறை கழுவினார். பின்னர் தம் கையை (பாத்திரத்தில்) நுழைதது தம் தலையைத் தடவினார். இரண்டு கையையும் தலையில் வைத்து முன் பக்கத்திலிருந்து பின் பக்கம் கொண்டு வந்து பின்னர் பின் பக்கமிருந்து முன் பக்கம் கொண்டு வந்தார். இவ்வாறு ஒரு முறை செய்தார். பின்னர் தம் இரண்டு கால்களையும் கரண்டை வரை கழுவினார்“ யஹ்யா அல் மாஸினி அறிவித்தார்.

### மனிதர்கள் உளூச் செய்துவிட்டு மீதி வைத்த தண்ணீரைப் பயன்படுத்துதல்.

தாம் பல் துலக்கிவிட்டு மீதி வைத்த தண்ணீரில் உளூச் செய்யுமாறு தம் குடும்பத்தினரை ஜரீர் இப்னு அப்தில்லாஹ் அனுமதித்தார்.

ஹதீஸ் 187. ‘நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் நடுப்பகலில் எங்களிடம் புறப்பட்டு வந்தார்கள். அவர்களுக்கு உளூச் செய்யத் தண்ணீர் கொண்டு வரப்பட்டு அதில் அவர்கள் உளூச் செய்தார்கள். அவர்கள் மீதி வைத்த தண்ணீரிலிருந்து மக்கள் எடுத்து அதை தங்களின் மீது தடவினார்கள். நபி(ஸல்) அவர்கள் லுஹரையும் அஸரையும் இரண்டு இரண்டு ரக்அத்துக்களாக தொழுதார்கள். அவர்களுக்கு முன்னால் ஒரு கைத்தடி இருந்தது“ என அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 188. ‘நபி(ஸல்) அவர்கள், தண்ணீர் உள்ள ஒரு பாத்திரத்தைக் கொண்டு வரச் சொல்லி அதில் தங்கள் இரண்டு கைகளையும் தங்கள் முகத்தையும் கழுவினார்கள். அதில் தண்ணிரைத் துப்பினார்கள். பின்னர் என்னிடமும் பிலால் அவர்களிடமும் இதிலிருந்து நீங்கள் இருவரும் குடியுங்கள் உங்களின் முகத்திலும் கழுத்திலும் ஊற்றிக் கொள்ளுங்கள்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 189. ‘தாம் குழந்தையாக இருந்தபோது தம் வீட்டிலுள்ள கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து அதை நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தில் உமிழ்ந்ததாக மஹ்மூத் இப்னு ரபீய்(ரலி) என்னிடம் கூறினார்கள்“ என இப்னுஷிஹாப் அறிவித்தார்.

“நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தால் அவர்கள் மீதி வைக்கிற தண்ணீரை எடுத்துக் கொள்வதில் ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக் கொள்வார்கள்“ என்று உர்வா என்பவர் மிஸ்வர் என்பவர் வழியாகவும் மற்ற ஒருவர் வழியாகவும் அறிவித்தார். இவ்விருவரும் ஒருவர் மற்றவரை மெய்ப்பிக்கிறார்கள்.

ஹதீஸ் 190. ‘என்னுடைய சிறிய தாயார் என்னை நபி(ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று ‘இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகன் இரண்டு பாதங்களிலும் வேதனையால்

கஷ்டப்படுகிறான்' எனக் கூறியபோது, நபி(ஸல்) அவர்கள் என்னுடைய தலையைத் தடவி என்னுடைய அபிவிருத்திக்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். அவர்கள் மீதி வைத்த தண்ணீரிலிருந்து நான் குடித்தேன். பின்னர் நபி(ஸல்) அவர்களின் முதுகிற்குப் பின்னால் எழுந்து நின்றேன். அப்போது அவர்களின் இரண்டு புஜங்களுக்கிடையில் நபித்துவத்தின் முத்திரையை பார்த்தேன். அது ஒரு புறா முட்டை போன்று இருந்தது" என ஸாயிப் இப்னு யஸீது(ரலி) அறிவித்தார்.

## ஒரு கை நீரில் வாய் கொப்புளித்து மூக்கிற்கும் தண்ணீர் செலுத்துதல்.

ஹதீஸ் 191. 'அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) பாத்திரத்திலிருந்து தண்ணீரைத் தம் இரண்டு முன் கைகளிலும் ஊற்றிக் கழுவினார். பின்பு ஒரே கையில் தண்ணீரை எடுத்து வாய் கொப்புளித்து மூக்கிற்கும் தண்ணீர் செலுத்தினார். இவ்வாறு மூன்று முறை செய்தார். பின்னர் தம் இரண்டு கைகளையும் மூட்டு வரை இரண்டு இரண்டு முறை கழுவினார். மேலும் தம் தலையைத் தடவினார். (இரண்டு கையால்) மேலும் தம் தலையைத் தடவினார். (இரண்டு கையால்) தலையின் முன் புறமும் பின்புறமும தடவினார். மேலும் தம் இரண்டு கால்களையும் கரண்டை வரை கழுவினார். பின்னர், இதுதான் நபி(ஸல்) அவர்களின் உளூ என்று கூறினார்" யஹ்யா அல் மாஸினி அறிவித்தார்.

## தலைக்கு ஒரு முறை மஸஹ் செய்தல்.

ஹதீஸ் 192. 'அம்ர் இப்னு அபீ ஹஸன், அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) என்பவரிடம் நபி(ஸல்) அவர்களின் உளூவைப் பற்றிக் கேட்டபோது, ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச்சொல்லி, உளூச் செய்து காட்டினார். பாத்திரத்திலிருந்து தண்ணீரைத் தம் கையில் ஊற்றி முன் இரண்டு கைகளையும் மூன்று முறை கழுவினார். பின்னர் தம் கையைப் பாத்திரத்தில் நுழைத்து (தண்ணீர் எடுத்து) மூன்று முறை வாய் கொப்பளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்திச் சீந்தினார். இவ்வாறு மூன்று முறை செய்தார். பின்னர் தம் கையைப் பாத்திரத்தில் நுழைத்து மூன்று முறை முகத்தைக் கழுவினார். பின்னர் தம் கையைப் பாத்திரத்தில் நுழைத்து இரண்டு முறை கழுவினார். பின்னர் தம் கையைப் பாத்திரத்தில் நுழைத்துத் தம் தலையைத் தடவினார். இரண்டு கைகளையும் தலையில் வைத்து முன் பக்கத்திலிருந்து பின் பக்கம் கொண்டு வந்து பின்னர் பின் பக்கமிருந்து முன் பக்கம் கொண்டு வந்தார். இவ்வாறு ஒரு முறை செய்தார். பின்னர் தம் இரண்டு கால்களையும் கரண்டை வரை கழுவினார்" என யஹ்யா அல் மாஸினி அறிவித்தார்.

## ஒருவர் தம் மனைவியுடன் உளூச் செய்வதல் மற்றும் ஒரு பெண் உளூச் செய்து மீதம் வைத்த தண்ணீரைப் பயன்படுத்துதல்

உமர்(ரலி) ஒரு கிருஸ்துவப் பெண்ணின் வீட்டிலிருந்து வென்னீரில் உளூச் செய்தார்கள்.

ஹதீஸ் 193. 'நபி(ஸல்) அவர்களின் காலத்தில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து (ஓரிடத்தில்) உளூச் செய்வார்கள்" என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்த தண்ணீரை மயக்கமுற்றவரின் மீது ஊற்றியது

ஹதீஸ் 194. 'நான் நோயுற்றிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னை நலம் விசாரிக்க வந்தார்கள். நான் மயநிலையில் இருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்துவிட்டு அந்தத் தண்ணீரை என் மீது ஊற்றினார்கள். உடனே நான் மயக்கத்திலிருந்து (தெளிந்து) உணர்வு பெற்றேன். அப்போது நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! என்னுடைய சொத்துக்கு வாரிசு யார்? என்னுடன் உடன் பிறப்புகள் மட்டுமே எனக்கு வாரிசாகும் நிலையில் நான் உள்ளேனே?' என்று நான் கேட்டபோது பாகப்பிரிவினை பற்றிய

(திருக்குர்ஆன் 04:176-வது) வசனம் அருளப்பட்டது" என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

## துணிகள் துவைக்கப்படும் தொட்டியிலும் வாய் சுருங்கிய மரப்பாத்திரம், மரம் மற்றும் கற்களினாலான பாத்திரங்களிலும் உளூச் செய்தல், குளித்தல்.

ஹதீஸ் 195. 'தொழுகையின் நேரம் வந்தபோது சமீபத்தில் வீடு உள்ளவர்கள் (உளூச் செய்வதற்காக) தங்களின் வீடுகளுக்குச் சென்றனர். மற்றவர்கள் தங்கிவிட்டனர். அப்போது, நபி(ஸல்) அவர்களிடம் தண்ணீர் நிரம்பிய ஒரு கல் தொட்டி கொண்டு வரப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அதில் தங்களின் கையை விரித்துக் கழுவ முடியாத அளவிற்கு (அதன் வாய்) சிறியதாக இருந்தது. எஞ்சியிருந்த அனைவரும் அதில் உளூச் செய்தார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

"அனஸ்(ரலி) அவர்களிடம் 'நீங்கள் எத்தனை பேர்கள் இருந்தீர்கள்' என்று நாம் கேட்டதற்கு 'எண்பதுக்கும் அதிகமானவர்கள் இருந்தோம்' எனக் கூறினார்" என ஹுமைத் அறிவித்தார்.

196. 'நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் உள்ள ஒரு பாத்திரத்தைக் கொண்டு வரச் சொல்லி அதில் தங்களின் இரண்டு கைகளையும் முகத்தையும் கழுவிவிட்டு அதில் உமிழ்ந்தார்கள்" என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

197. 'நபி(ஸல்) அவர்கள் (எங்களிடம்) வந்தபோது செம்பினாலான ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தோம். அதில் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். தங்களின் முகத்தையும் மூன்று முறையும் கைகளை இரண்டு முறையும் கழுவினார்கள். மேலும் தங்களின் தலையைத் தடவினார்கள். (தங்கள் கைகளைத் தலையில் வைத்து) முன் பக்கத்திலிருந்து பின் பக்கம் கொண்டு வந்துவிட்டு, திரும்ப முன் பக்கம் கொண்டு சென்றார்கள். மேலும் தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள்" என அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 198. 'நபி(ஸல்) அவர்களுக்கு நோய் அதிகமாம் வேதனை கடுமையானபோது, என்னுடைய வீட்டில் தங்கி சிகிச்சை பெறுவதற்காகத் தங்கள் இதர மனைவிகளிடம் அவர்கள் அனுமதி கேட்டதற்கு அவர்களும் அனுமதி வழங்கினார்கள். (ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் வேறு ஒரு மனிதருக்குமிடையில் (தொங்கியவர்களாக) வெளியில் வந்தார்கள். (அவர்களின் கால்களைச் சரியாக ஊன்ற முடியாததால்) பூமியில் அவர்களின் இரண்டு கால்களும் கோடிட்டுக் கொண்டே சென்றன.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் வீட்டிற்குள் சென்று அவர்களின் வேதனை அதிகரித்தபோது 'வாய் திறக்கப்படாத ஏழு தோல்பை தண்ணீரை என் மீது ஊற்றுங்கள். நான் மக்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும்' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் மனைவியருள் ஒருவரான ஹப்ஸா(ரலி) அவர்களுக்குச் சொந்தமான ஒரு கல் தொட்டியில் நபி(ஸல்) அவர்களை அமர வைத்து, அவர்கள் 'போதும்' என்று சொல்லும் வரை அவர்களின் மீது தண்ணீரை ஊற்றினோம். பின்னர் மக்களுக்கு உபதேசம் செய்வதற்காக வெளியில் வந்தார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

"இது பற்றி அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் நான் கேட்டபோது, 'நபி(ஸல்) அவர்களைத் தாங்கிச் சென்ற இருவரில்) இரண்டாமவர் யார் என்பது உமக்குத் தெரியுமா? என்று இப்னு அப்பாஸ்(ரலி) கேட்டார். நான் 'தெரியாது' என்றேன். 'அவர் தாம் அலீ(ரலி)' எனக் கூறினார்" என (இந்த ஹதீஸ் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உபைதுல்லாஹ் கூறுகிறார்.

## தட்டையான பாத்திரத்தில் உளூச் செய்தல்

ஹதீஸ் 199. 'என்னுடைய தந்தையின் உடன் பிறந்தார். (அமர் இப்னு அபீ ஹஸன்) அடிக்கடி உளூச் செய்பவராக இருந்தார். இவர் அப்துல்லாஹ் இப்னு ஜைத் அவர்களிடம், 'நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு உளூச் செய்ய நீர் கண்டீர் என்பதை எனக்கு அறிவிப்பீராக' எனக் கேட்டார். அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) ஒரு தட்டையான பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச்சொல்லி, அதிலிருந்து தம் கையில் ஊற்றி மூன்று முறை கழுவினார். பின்னர் தம் கையை அந்தப் பத்திரத்தில் நுழைத்துத் தண்ணீர் எடுத்து மூன்று முறை ஒரே கை தண்ணீரால் வாய் கொப்புளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்திச் சீந்தினார். பின்னர் தம் கையை(ப் பாத்திரத்தில்) நுழைத்துத் தண்ணீர் கோரி மூன்று முறை முகத்தைக் கழுவினார். பின்னர் தம் இரண்டு கைகளையும் மூட்டு வரை இரண்டிரண்டு முறை கழுவினார். பின்னர் தம் கையால் தண்ணீர் எடுத்துத் தம் தலையின் முன் பக்கமிருந்து பின் பக்கமும் பின் பக்கமிருந்து முன் பக்கம் பின் பக்கமிருந்து முன் பக்கமும் கொண்டு சென்று தலையைத் தடவினார். பின் தம் இரண்டு கால்களையும் கழுவிவிட்டு 'இப்படித்தான் நபி(ஸல்) உளூச் செய்ய பார்த்தேன்' என்று கூறினார்கள்" யஹ்யா அல் மாஸினி அறிவித்தார்.

ஹதீஸ் 200. 'நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் பாத்திரத்தைக் கொண்டு வரக் கூறிபோது தண்ணீருடன் வாய் விசாலமான ஒரு பாத்திரம் கொண்டு வரப்பட்டது. அதில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் விரல்களை வைத்தபோது அவர்களின் விரல்களுக்கிடையிலிருந்து நீர் ஊற்று சுரப்பதை பார்த்தேன். அதிலிருந்து எழுபதிலிருந்து எண்பது பேர் வரை உளூச் செய்ததை நான் கணக்கிட்டேன்" அனஸ்(ரலி) அறிவித்தார்.

## ஒரு 'முத்து' (இரண்டு கைகளின் கொள்ளவு) தண்ணீரில் உளூச் செய்தல்

ஹதீஸ் 201. 'நபி(ஸல்) அவர்கள் நான்கு 'முத்து'விலிருந்து ஐந்து 'முத்து' வரை உள்ள தண்ணீரில் குளிப்பார்கள். ஒரு 'முத்து' அளவு தண்ணீரில் உளூச் செய்வார்கள்" அனஸ்(ரலி) அறிவித்தார்.

## (உளூவில்) காலுறைகளின் மீது மஸஹ் செய்தல்.

ஹதீஸ் 202. 'நபி(ஸல்) அவர்கள் (ஒருமுறை உளூச் செய்தபோது) இரண்டு காலுறைகளின் மீது மஸஹ் செய்தார்கள்" என ஸஃது இப்னு அபீ வக்காஸ்(ரலி) கூறினார். அப்துல்லாஹ் இப்னு உமர் (தம் தந்தை) உமர்(ரலி) அவர்களிடம் இது பற்றிக் கேட்டபோது 'ஆம்! நபி(ஸல்) அவர்களைப் பற்றிய ஒரு செய்தியை ஸஃது உனக்கு அறிவித்தால் அது பற்றி வேறு யாரிடமும் கேட்காதே' என்று உமர்(ரலி) கூறினார்" என ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 203. 'நபி(ஸல்) அவர்கள் (இயற்கைத்) தேவையை நிறைவேற்றுவதற்காக வெளியே சென்றபோது ஒரு பாத்திரத்தில் தண்ணீருடன் அவர்களை பின்தொடர்ந்து சென்றேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் தேவையை நிறைவேற்றிவிட்டு வந்தபோது அவர்களுக்குத் தண்ணீர் ஊற்றினேன். (அதில்) நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்துவிட்டு இரண்டு காலுறைகளின் மீது மஸஹ் செய்தார்கள்" என முகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 204. 'நபி(ஸல்) அவர்கள் (உளூவில்) தங்களுடைய தலைப்பாகையின் மீதும் இரண்டு காலுறைகளின் மீதும் மஸஹ் செய்ததை பார்த்தேன்" என அம்ர் இப்னு உமய்யா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 205 அம்ர் பின் உமய்யா அள்ளம்ரீ (ரலி) அவர்கள் வுறியதாவது,, நபி (ஸல்) அவர்கள் (தயம்மம் போது) தமது தலைப்பாகையின் மீதும் தமது இரு காலுறைகள் மீதும் (ஈரக்கையால்) தடவிக் கொண்டதை நான் பார்த்தேன்.

## இரண்டு கால்களும் சுத்தமான நிலையில் காலுறையை அணிதல்.

ஹதீஸ் 206. ‘நான் ஒரு பயணத்தின்போது நபி(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அவர்கள் (உளூச் செய்தபோது) அவர்களின் இரண்டு காலுறைகளையும் கழற்றுவதற்குக் குனிந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘அதைவிட்டுவிடும். கால்கள் இரண்டும் சுத்தமாக இருக்கும்போதுதான் உறைகளை அணிந்தேன்‘ என்று கூறிவிட்டு அவ்விரு காலுறைகளின் மீதும் மஸஹ் செய்தார்கள்“ என முகீரா(ரலி) அறிவித்தார்.

## ஆட்டிறைச்சி மற்றும் மாவு சாப்பிடுவதால் உளூச் செய்ய வேண்டியதில்லை.

அபூ பக்ர், உமர், உஸ்மான்(ரலி) ஆகியோர் சாப்பிட்ட பின் உளூச் செய்யவில்லை.

ஹதீஸ் 207. ‘நபி(ஸல்) அவர்கள் (சமைக்கப்பட்ட) ஓர் ஆட்டின் தொடைப் பகுதி இறைச்சியைச் சாப்பிட்ட பின் உளூச் செய்யாமலேயே தொழுதார்கள்“ என அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 208. ‘நபி(ஸல்) அவர்கள் ஆட்டின் தொடை இறைச்சியை வெட்டிச் சாப்பிட்டுக் கொண்டிருந்ததை பார்த்தேன். அப்போது தொழுகைக்காக அழைக்கப்பட்டது. உடனே கத்தியைப் போட்டுவிட்டுத் தொழுதார்கள் உளூச் செய்யவில்லை“ அம்ர் இப்னு உமய்யா(ரலி) கூறினார்.

## மாவு சாப்பிட்ட பின்னர் உளூச் செய்யாமல் வாய் கொப்பளித்தல்

ஹதீஸ் 209. ‘கைபர் போர் நடந்த ஆண்டு நபி(ஸல்) அவர்களுடன் கைபருக்குச் சென்றேன். கைபரை அடுத்துள்ள ஸஹ்பா என்ற இடத்தை அடைந்ததும் நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுகையைத் தொழுதார்கள். பின்னர் பயண உணவைக் கொண்டு வரும் படிக் கூறினார்கள். அப்போது மாவைத் தவிர வேறு எதுவும் கொண்டு வரப்படவில்லை. அதைக் குழைக்கும் படி கட்டளையிட்டார்கள். அது குழைக்கப்பட்டதும் அதை நபி(ஸல்) அவர்களும் நாங்களும் சாப்பிட்டோம். பின்னர் மக்ரிப் தொழுகைக்காகச் சென்றபோது வாயை (மட்டும்) கொப்புளித்தார்கள். நாங்களும் வாய் கொப்புளித்தோம். பின்னர் (அதற்காக) உளூச் செய்யாமலேயே தொழுதார்கள்“ என ஸுவைது இப்னு நுஃமான்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 210. ‘நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் ஆட்டுத் தொடை இறைச்சியைச் சாப்பிட்டார்கள். பின்னர் (அதற்காக) உளூச் செய்யாமலேயே தொழுதார்கள்“ என மைமூனா(ரலி) அறிவித்தார்.

## பால் குடித்தால் வாய் கொப்புளிக்க வேண்டுமா?

ஹதீஸ் 211. ‘நபி(ஸல்) அவர்கள் பால் குடித்து, வாய் கொப்புளித்துவிட்டு, அதிலே கொழுப்பு இருக்கிறது‘ என்று கூறினார்கள்“ என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## தூங்கினால் உளூச் செய்தலும் சிறு தூக்கத்திற்காக உளூச் செய்யாமலிருத்தலும்

ஹதீஸ் 212. ‘உங்களில் ஒருவர் தொழுது கொண்டிருக்கும்போது கண் அயர்ந்தால், அவரைவிட்டும் தூக்கக் கலக்கம் நீங்கும் வரை அவர் (தொழுவதை விட்டுவிட்டு) தூங்கட்டும். உங்களிலே அவர் கண் அயர்ந்து கொண்டே தொழுதால் அவர் (தொழுகையில்) பாவ மன்னிப்புக் கோருகிறாரா, தன்னைப் பழிக்கிறாரா என்பது அவருக்குத் தெரியாது‘ என்று‘ இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“ என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 213. ‘உங்களில் ஒருவர் தொழுகையில் கண் அயர்ந்தால், தாம் என்ன ஓதுகிறோம்

என்பதை(ச் சரியாக) அறிந்துகொள்ளும் வரை (தொழுவதை நிறுத்திவிட்டு) தூங்கட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## உளூ முறிவதற்கான காரணம் எதுவும் நிகழாமலேயே உளூச் செய்தல்

ஹதீஸ் 214. 'நபி(ஸல்) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்காகவும் உளூச் செய்வார்கள்' என அனஸ்(ரலி) கூறியபோது, 'நீங்கள் எப்படிச் செய்வீர்கள்?' என அனஸ்(ரலி) அவர்களிடம் நான் கேட்டதற்கு, 'உளூவை முறிக்கும் செயல்கள் நிகழாமலிருக்கும் போதெல்லாம் ஒரே உளூவே எங்களுக்குப் போதுமானதாகவே இருந்தது' என்று அனஸ்(ரலி) கூறினார்" அம்ர் இப்னு ஆமிர் அறிவித்தார்.

ஹதீஸ் 215. 'கைபர் போர் நடந்தவருடம் நபி(ஸல்) அவர்களுடன் கைபருக்குச் சென்றோம். 'ஸஹ்பா' எனும் இடத்தை அடைந்ததும் நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு (அஸர்) தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும் (பயண) உணவைக் கொண்டு வரும் படி கூறினார்கள். அப்போது மாவைத் தவிர வேறு எதுவும் கொண்டு வரப்படவில்லை. நாங்கள் சாப்பிட்டோம் குடித்தோம். பின்னர் மக்ரிப் தொழுகைக்காகச் சென்றார்கள். அப்போது வாயை (மட்டும்) கொப்பளித்து, உளூச் செய்யாமலேயே எங்களுக்கு மக்ரிப் தொழுகை நடத்தினார்கள்" என ஸுவைத் இப்னு நுஃமான்(ரலி) அறிவித்தார்.

## சிறுநீர் கழிக்கும்போது மறைக்காதிலிருப்பது பெரும் பாவமாகும்

ஹதீஸ் 216. நபி(ஸல்) அவர்கள் மக்கா அல்லது மதீனாவில் ஒரு தோட்டத்தின் பக்கமாகச் சென்று கொண்டிருந்தபோது, கப்ரில் வேதனை செய்யப்படும் இரண்டு மனிதர்களின் சப்தத்தைச் செவியுற்றார்கள். அப்போது, 'இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரிய விஷயத்திற்காக (பாவத்திற்காக) இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படவில்லை" என்று சொல்லிவிட்டு, 'இருப்பினும் (அது பெரிய விஷயம்தான்) அவ்விருவரில் ஒருவர், தாம் சிறு நீர் கழிக்கும்போது மறைப்பதில்லை. மற்றொருவர், புறம்பேசித் திரிந்தார்' என்று கூறிவிட்டு ஒரு பேரீச்ச மட்டையைக் கொண்டு வரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு கப்ரின் மீதும் ஒரு துண்டை வைத்தார்கள். அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் 'நீங்கள் ஏன் இவ்வாறு செய்தீர்கள்?' என்று கேட்கப்பட்டதற்கு, 'அந்த இரண்டு மட்டைத் துண்டுகளும் காயாமல் இருக்கும் போதெல்லாம் அவர்கள் இருவரின் வேதனை குறைக்கப்படக் கூடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## சிறுநீர் கழித்த பின்னர் கழுவுதல்

"அவர் சிறு நீர் கழிக்கும்போது மறைப்பதில்லை" என்று கப்ரில் வேதனை செய்யப்படுபவரைப் பற்றி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மனிதர்களின் சிறுநீரைத் தவிர வேறு எதையும் அவர்கள் குறிப்பிடவில்லை.

ஹதீஸ் 217. 'நபிஸல்) அவர்கள் இயற்கைத் தேவையை நிறைவேற்றச் செல்வார்களானால் அவர்களுக்காக தண்ணீர் கொண்டு செல்வேன். அதைக் கொண்டு அவர்கள் சுத்தம் செய்வார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 218. 'நபி(ஸல்) அவர்கள் இரண்டு கப்ருகளைக் கடந்து சென்றபோது 'இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஒரு பெரிய விஷயத்திற்காக (பாவத்திற்காக) இவர்கள் இருவரும் வேதனை செய்யப்படவில்லை. அவ்விருவரில் ஒருவர், தாம் சிறுநீர் கழிக்கும்போது மறைப்பதில்லை. மற்றொருவர், புறம்பேசித் திரிந்தார்' என்று கூறிவிட்டு, ஒரு

பசுமையான பேரீச்ச மட்டையைக் கொண்டு வரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து ஒவ்வொரு கப்ரின் மீதும் ஒரு துண்டை வைத்தார்கள். அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! நீங்கள் ஏன் இவ்வாறு செய்தீர்கள்?' என கேட்கப்பட்டபோது 'அந்த இரண்டு மட்டைத் துண்டுகளும் காயாமல் இருக்கும் போதெல்லாம் அவர்கள் இருவரின் வேதனை குறைக்கப்படக் கூடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இப்னுஅப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## பள்ளிவாசலில் சிறுநீர் கழித்த கிராமவாசியை, அவர் சிறுநீர் கழிக்கும் வரை நபி(ஸல்) அவர்களும், மக்களும் விட்டுவிட்டது

**ஹதீஸ் 219.** 'ஒரு கிராமவாசி பள்ளியினுள் சிறுநீர் கழிப்பதை நபி(ஸல்) அவர்கள் கண்டபோது, 'அவரைவிட்டு விடுங்கள்' என்று கூறிவிட்டு, அவர் சிறுநீர் கழித்து முடித்த பின்னர் தண்ணீர் கொண்டு வரச் செய்து அதன் மீது ஊற்றினார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## பள்ளிவாசலில் சிறுநீர் கழித்துவிட்டால் அதன் மீது தண்ணீர் ஊற்றுதல்.

**ஹதீஸ் 220.** 'ஒரு கிராமவாசி பள்ளிவாசலில் சிறுநீர் கழித்துவிட்டார். உடனே மக்கள் அவரைப் பிடித்தனர். நபி(ஸல்) அவர்கள் 'அவரைவிட்டு விடுங்கள் அவர் கழித்த சிறுநீரின் மீது ஒரு வாளித் தண்ணீரை ஊற்றுங்கள். நீங்கள் (எளிமையான மார்க்கத்தில்) நளினமாக எடுத்துச் சொல்பவர்களாக அனுப்பப்பட்டுள்ளீர்கள். கடினமாக எடுத்துச் சொல்லக் கூடியவர்களாக நீங்கள் அனுப்பப்படவில்லை' என்று கூறினார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

**ஹதீஸ் 221.** 'ஒரு கிராமவாசி வந்து பள்ளிவாசலின் ஒரு பகுதியில் சிறுநீர் கழித்தார். அப்போது அவரை மக்கள் விரட்டினார்கள். (இதைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள், அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். அம்மனிதர் சிறுநீர் கழித்து முடித்த பின்னர், ஒரு வாளியில் தண்ணீர் கொண்டு வரக் கட்டளையிட்டார்கள். அது சிறுநீரின் மீது ஊற்றப்பட்டது" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## சிறு குழந்தைகளின் சிறுநீர்

**ஹதீஸ் 222.** 'நபி(ஸல்) அவர்களிடம் ஓர் ஆண் குழந்தை கொண்டு வந்து கொடுக்கப்பட்டது. அக்குழந்தை, அவர்களின் ஆடையில் சிறுநீர் கழித்துவிட்டது. அப்போது (கொஞ்சம்) தண்ணீர் கொண்டு வரச் செய்து அதைச் சிறுநீர் பட்ட இடத்தில் ஊற்றினார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

**ஹதீஸ் 223.** '(தாய்ப் பாலைத் தவிர வேறு) உணவு சாப்பிடாத என்னுடைய சிறிய ஆண் குழந்தையை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தேன். நபி(ஸல்) அவர்கள் அக்குழந்தையைத் தங்களின் மடியில் உட்கார வைத்தபோது, அக்குழந்தை நபி(ஸல்) அவர்களின் ஆடையில் சிறுநீர் கழித்துவிட்டது. உடனே தண்ணீர் கொண்டு வரச் செய்து (சிறுநீர் பட்ட இடத்தில்) தெளித்தார்கள் அதைக் கழுவவில்லை" என உம்மு கைஸ்(ரலி) அறிவித்தார்.

## நின்றும் உட்கார்ந்தும் சிறுநீர் கழித்தல்

**ஹதீஸ் 224.** 'நபி(ஸல்) அவர்கள் ஒரு சமூகத்தாரின் குப்பை கூளங்கள் பேகுதி இடத்தில் நின்று சிறுநீர் கழித்தார்கள். பின்னர் தண்ணீர் கொண்டு வரக் கூறினார்கள். நான் தண்ணீர் கொண்டு வந்தேன். அதில் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள்" என ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

## மற்றொருவர் பக்கத்தில் சிறுநீர் கழிப்பதும் சுவற்றினால் மறைத்துக் கொள்வதும்.

ஹதீஸ் 225. 'நானும் நபி(ஸல்) அவர்களும் நடந்து சென்று கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் ஒரு சுவரின் பின்னாலுள்ள ஒரு கூட்டத்தாரின் குப்பை மேட்டிற்கு வந்தார்கள். உங்களில் ஒருவர் எவ்வாறு நிற்பாரோ அதைப் போன்று நின்றவர்களாகச் சிறுநீர் கழித்தார்கள். அப்போது நான் கொஞ்சம் ஒதுங்கிச் சென்றேன். உடனே நபி(ஸல்) அவர்கள் என் பக்கம் கை அசைத்து அழைத்தார்கள். நான் வந்து அவர்கள் தங்கள் தேவையை நிறைவேற்றும் வரை அவர்களின் பின் பக்கம் நின்று கொண்டிருந்தேன்" என ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

## பிறரின் குப்பை மேட்டில் சிறுநீர் கழித்தல்

ஹதீஸ் 226. 'அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) சிறுநீர் விஷயத்தில் மிகக் கண்டிப்பானவராக இருந்தார். 'இஸ்ரவேலர் சமூகத்தினரில் யாருடைய ஆடையிலாவது சிறுநீர் பட்டால் அப்பாகத்தைக் கத்தரித்து விடக் கூடியவர்களாக இருந்தார்கள்' எனக் கூறுவார். 'அவர் இந்தப் போக்கை மாற்றிக் கொள்ளலாமே' என ஹுதைஃபா(ரலி) கூறிவிட்டு 'நபி(ஸல்) அவர்கள் ஒரு சமூகத்தாரின் குப்பை மேட்டிற்கு வந்து நின்று சிறுநீர் கழித்தார்கள்' என்று கூறினார்" என அபூ வாயில் அறிவித்தார்.

## இரத்தம் பட்ட இடத்தைக் கழுவுதல்

ஹதீஸ் 227. 'ஒரு பெண், நபி(ஸல்) அவர்களிடம் வந்து 'எங்களில் ஒருத்தியின் துணியில் மாதவிடாய் இரத்தம் பட்டால், அவள் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டதற்கு, 'அந்த இடத்தைச் சுரண்ட வேண்டும் பின்னர் அதைத் தண்ணீரால் தேய்த்துக் கழுவ வேண்டும் பின்னர் அந்தத் துணியுடன் நீ தொழலாம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அஸ்மா பின்த் அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 228. 'அபூ ஹுபைஷ் என்பவரின் மகள் ஃபாத்திமா என்ற பெண், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் அதிகம் உதிரப்போக்குள்ள ஒரு பெண். நான் சுத்தமாவதில்லை. எனவே நான் தொழுகையைவிட்டு விடலாமா?' எனக் கேட்டதற்கு, 'இல்லை! அது ஒருவித நோயால் ஏற்படுவதாகும். அது மாதவிடாய் இரத்தமன்று. உனக்கு மாதவிடாய் வரும்போது தொழுகையைவிட்டு விடு அது நின்றுவிட்டால் இரத்தம் பட்டு இடத்தைக் கழுவிவிட்டுத் தொழுகையை நிறைவேற்று' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். 'பின்னர் அடுத்த மாதவிடாய் வரும் வரை ஒவ்வொரு தொழுகைக்கும் நீ உளூச் செய்து கொள்' என்றும் நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம் கூறினார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## இந்திரியம் பட்ட ஆடையைச் சுரண்டிக் கழுவுவதும் பெண்ணிடமிருந்து படுவதைக் கழுவுவதும்.

ஹதீஸ் 229. 'நான் நபி(ஸல்) அவர்களின் ஆடையில் இந்திரியம் பட்ட இடத்தைக் கழுவுவேன். அந்த ஆடையோடு நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்குச் செல்வார்கள். ஆடையில் ஈரம் தெளிவாகத் தெரியும்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 230. 'ஆயிஷா(ரலி) அவர்களிடம் ஆடையில் படும் இந்திரியத்தைப் பற்றி நான் கேட்டதற்கு, ' நபி(ஸல்) அவர்களின் ஆடையில் பட்ட இந்திரியத்தைக் கழுவுவேன். அந்த ஆடையோடு நபி(ஸல்) அவர்கள் தொழுவதற்காகச் செல்வார்கள். கழுவியதால் ஏற்பட்ட ஈரம் அவர்களின் ஆடையில் ஆங்காங்கே காணப்படும்' என்று கூறினார்கள்" என சுலைமான் இப்னு யஸார் கூறினார்.

## இந்திரியம் போன்றவை பட்ட இடத்தைக் கழுவியும் அதன் அடையாளம் மாறாதிருந்தால் என்ன செய்வது?

ஹதீஸ் 231. ‘ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஆடையில் படும் இந்திரியத்தைப் பற்றி நான் கேட்டதற்கு, ‘நபி (ஸல்) அவர்களின் ஆடையில் பட்ட இந்திரியத்தைக் கழுவுவேன். அந்த ஆடையோடு நபி (ஸல்) அவர்கள் தொழுவதற்காகச் செல்வார்கள். கழுவியதால் ஏற்பட்ட ஈரம் அவர்களின் ஆடையில் ஆங்காங்கே காணப்படும்‘ என்று கூறினார்கள்“ சுலைமான் இப்னு யஸார் அறிவித்தார்.

ஹதீஸ் 232. ‘நபி (ஸல்) அவர்களின் ஆடையிலிருந்த இந்திரியத்தைத் தாம் கழுவியதாகவும் அந்த ஆடையில் ஆங்காங்கே சில இடங்களில் அதன் ஈரத்தைப் பார்த்ததாகவும் ஆயிஷா (ரலி) கூறினார்“ என சுலைமான் இப்னு யஸார் அறிவித்தார்.

## ஒட்டகம், ஆடு மற்றும் பிற கால்நடைகளின் சிறுநீர் மற்றும் அவை கட்டப்படும் தொழுவங்கள்

அபூ மூஸா (ரலி) தம்மருகே சாணமும் வெட்டவெளியும் இருக்கும் நிலையில் ‘தாருல் பரீத்‘ என்ற இடத்தில் தொழுதுவிட்டு, (சாணமிருந்து இடத்தையும் வெட்ட வெளியையும் குறித்து) ‘இந்த இடமும் அந்த இடமும் சமமே“ என்றார்கள்.

ஹதீஸ் 233. ‘உகல்‘ அல்லது ‘உரைனா‘ கோத்திரத்திலிருந்து சிலர் மதீனாவிற்கு வந்திருந்தனர். மதீனா (வின் சீதோசம்) அவர்களுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. எனவே ஒட்டகங்களிடத்தில் பாலையும் அதன் சிறு நீரையும் அருந்துமாறு அவர்களுக்கு நபி (ஸல்) கட்டளையிட்டார்கள். உடனே அவர்கள் அதன் மூலம் நோயிலிருந்து நிவாரணம் அடைந்ததும் நபி (ஸல்) அவர்களின் கால் நடை மேய்ப்பாளரைக் கொலை செய்துவிட்டுக் கால்நடைகளைத் தங்களோடு ஓட்டிச் சென்றனர். இச்செய்தி மறு நாள் காலை நபி (ஸல்) அவர்களுக்குக் கிடைத்ததும் அவர்களைப் பின்தொடர்ந்து (பிடித்து வர) சிலரை அனுப்பினார்கள். அன்று நண்பகலில் அவர்கள் பிடித்துக் கொண்டு வரப்பட்டார்கள். உடனே நபி (ஸல்) அவர்களின் கட்டளைப்படி அவர்களின் கைகளும் கால்களும் வெட்டப்பட்டு, அவர்களின் கண்கள் தோண்டி எடுக்கப்பட்டன. ‘ஹர்ரா‘ என்ற (கரும்பாறை நிறைந்த) இடத்தில் அவர்கள் எறியப்பட்டார்கள். அவர்கள் தண்ணீர் கேட்டும் அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்கப்படவில்லை“ என அனஸ் (ரலி) அறிவித்தார்

“இவர்கள் திருடினார்கள் கொலை செய்தார்கள் நம்பிக்கை கொண்ட பின்னர் நிராகரித்தார்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எதிராகப் போருக்குத் தயாராம்விட்டார்கள்“ என்று அபூ கிலாபா கூறினார்.

ஹதீஸ் 234. ‘பள்ளி வாசல் கட்டப்படுவதற்கு முன்னர், நபி (ஸல்) அவர்கள் ஆட்டுத் தொழுவத்தில் தொழுதார்கள்“ என அனஸ் (ரலி) அறிவித்தார்.

## தண்ணீரிலும் நெய்யிலும் அசுத்தம் விழுந்தால் என்ன செய்வது?

“தண்ணீரின் நிறம், மணம், ருசி ஆகியவை மாறாதிருக்கும் வரை அந்தத் தண்ணீரைப் பயன்படுத்துவது தவறில்லை“ என்று ஸுஹ்ரி கூறினார்.

“இறந்த பறவைகளின் இறக்கைகள் தண்ணீரில் விழுவதால் குற்றமில்லை“ என்று ஹம்மாத் குறிப்பிட்டார்.

“நான், மூத்த அறிஞர்கள் பலரையும் சந்தித்திருக்கிறேன். இறந்துவிட்ட யானை போன்ற மிருகங்களின் எலும்புகளைத் தலை வாருவதற்கும் எண்ணெய் வைத்துக் கொள்வதற்கும்

பயன்படுத்துவதை அவர்கள் குற்றமாகக் கருதவில்லை" என்று ஸுஹ்ரி கூறினார்.

"யானைத் தந்தத்தை விற்பனை செய்வதில் குற்றமில்லை" என்று இப்னு ஸீரீன் மற்றும் இப்ராஹீம் கூறினார்கள்.

ஹதீஸ் 235. 'நெய்யில் விழுந்துவிட்ட எலியைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு, 'அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் எடுத்து எறிந்துவிட்டு உங்கள் நெய்யை நீங்கள் சாப்பிடுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என மைமூனா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 236. 'நெய்யில் விழுந்துவிட்ட எலியைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு 'அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் எடுத்தெறிந்துவிட்டு உங்கள் நெய்யை நீங்கள் சாப்பிடுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என மைமூனா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 237. 'இறைவழியில் ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் ஒவ்வொரு காயமும் ஈட்டியால் குத்தப்படும்போது இருந்தது போல் மறுமை நாளில் அப்படியே இருக்கும். அதிலிருந்து இரத்தம் பீறிட்டு ஓடும். ஆனால் அதன் நிறயம் இரத்தத்தினுடைய நிறமாக இருந்தாலும் அதன் வாடை கஸ்தூரி வாடையாகவே இருக்கும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தேங்கி நிற்கும் தண்ணீரில் சிறுநீர் கழித்தல்

ஹதீஸ் 238. 'நாம் (காலத்தால்) பிந்தியவர்களாகவும் (அந்தஸ்தால்) முந்தியவர்களாகவும் இருக்கிறோம்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 239. 'ஓடாமல் தேங்கி நிற்கும் தண்ணீரில் உங்களில் எவரும் சிறுநீர் கழித்துவிட்டுப் பின்னர் அதில் குளிக்க வேண்டாம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தொழுது கொண்டிருப்பவரின் முதுகின் மீது அசுத்தமான பொருட்களோ, இறந்த பிராணிகளோ போடப்படுமானால் அதனால் அவரின் தொழுகை வீணாவதில்லை

"இப்னுஉமர் அவர்கள் தொழுகையில் நிற்கும்போது தங்களின் ஆடையில் இரத்தம் இருப்பதைக் கண்டால் (தொழுகையில் இருந்தவாறே) அந்த ஆடையை மாற்றிவிட்டுத் தங்களின் தொழுகையைத் தொடர்வார். "

"ஒருவர் தொழுது கொண்டிருக்கும்போது தங்களின் ஆடையில் இரத்தமோ, இந்திரியமோ இருக்கக் கண்டாலோ, தாம் கிப்லாவுடைய திசையைவிட்டுவிட்டு வேறு திசையில் தொழுவதாகக் கண்டாலோ, தயம்மும் செய்து தொழுது கொண்டிருக்கும்போது அந்த நேரத்தில் தண்ணீர் கிடைத்துவிட்டாலோ தொழுகையை திருப்பித் தொழ வேண்டியதில்லை" என்று இப்னுல் முஸய்யப், ஷஅபீ கூறினார்கள்.

ஹதீஸ் 240. 'நபி(ஸல்) அவர்கள் கஅபதுல்லாஹ்வில் தொழுது கொண்டிருந்தபோது அபூ ஜஹ்லும் அவனுடைய தோழர்களும் அங்கே அமர்ந்திருந்தனர். அவர்களில் சிலர் சிலரைப் பார்த்து 'இன்ன குடும்பத்தினரின் அறுக்கப்பட்ட ஒட்டகத்தின் கர்ப்பப்பையைக் கொண்டு வந்து முஹம்மத் ஸஜ்தாச் செய்யும்போது அவருடைய முதுகின் மீது போடுவதற்கு உங்களில் யார் தயார்?' என்று கேட்டனர். அப்போது அக்கூட்டத்தில் மிக இழிந்த ஒருவன் அதைக் கொண்டு வந்தான். நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்வதைப் பார்த்ததும் அவர்களின் இரண்டு

புஜங்களுக்கிடையில் போட்டுவிட்டான். அதை நான் பார்த்துக் கொண்டுதானிருந்தேன். ஆனால், அதைத் தடுத்து நிறுத்த எனக்கு அன்று சக்தி இருக்கவில்லை. இந்நிகழ்ச்சியைப் பார்த்து அங்கு அமர்ந்திருந்த இறைமறுப்பாளர்கள் ஒருவரின் மீது ஒருவர் விழுந்து சிரித்தனர். நபி(ஸல்) அவர்களோ தலையை உயர்த்த முடியாதவர்களாக ஸஜ்தாவிலேயே இருந்தார்கள். அப்போது ஃபாத்திமா(ரலி) அங்கே வந்து, நபி(ஸல்) அவர்களின் முதுகின் மீது போடப்பட்டிருந்ததை எடுத்து அப்புறப்படுத்தினார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் தங்களின் தலையை உயர்த்தி 'யா அல்லாஹ்! குறைஷிகளை நீ கவனித்துக் கொள்வாயாக' என்று மூன்று முறை கூறினார்கள். அவர்களுக்குக் கேடாக நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தது குறைஷிகளுக்கு பெரும் கவலையை ஏற்படுத்தியது. ஏனெனில், 'அந்நகரில் கேட்கப்படும் பிரார்த்தனைகள் அங்கீகரிக்கப்படும்' என அவர்களும் நம்பியிருந்தார்கள்.

பின்னர் நபி(ஸல்) அவர்கள் (அங்கிருந்தோரின்) பெயர்களைக் குறிப்பிட்டு, 'யா அல்லாஹ்! அபூ ஜஹ்ல், உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா, உமய்யா இப்னு கலப், உக்பா இப்னு அபீ முயீத் ஆகியோரை நீ கவனித்துக் கொள்வாயாக!' என்று கூறினார்கள். ஏழாவது ஒரு நபரின் பெயரை நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள். அதை நான் மறந்துவிட்டேன். என்னுடைய உயிர் எவன் கையிலிருக்கிறதோ அந்த அல்லாஹ்வின் மீது ஆணையாக நபி(ஸல) அவர்க்ள குறிப்பிட்ட அனைவரும் பத்ருப் போர்க்களத்தில் 'கலீப்' என்ற பாழ் கிணற்றில் செத்து வீழ்ந்து கிடந்ததை பார்த்தேன்" என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## ஆடைகளில் எச்சில் சளி போன்றவை படுதல்

"ஹுதைபிய்யா உடன்படிக்கையின்போது நபி(ஸல்) வெளியே சென்றார்கள். அப்போது அவர்கள் வாயிலுள்ள சளியை உமிழும்போது அது அங்கிருந்த எவரேனும் ஒருவரின் கையில்தான் விழும். அப்போது அவர் அதைத் தங்களின் முகத்திலும் தங்களின் தோளிலும் தடவிக் கொள்வார்" என்று உர்வா குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 241. 'நபி(ஸல்) அவர்கள் தங்களின் ஆடையில் உமிழ்ந்தார்கள்" என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## திராட்சை ரசம், மது பானம் ஆகியவற்றில் உளூச் செய்தல் கூடாது

"இவற்றில் உளூச் செய்வதை ஹஸன், அபுல் ஆலியா ஆகியோர் வெறுத்துள்ளார்கள்.

"(தண்ணீர் இல்லையானாலும்) திராட்சை ரசம், பால் ஆகியவற்றில் உளூச் செய்வதை விட, தயம்மும் செய்வதே எனக்கு மிக விருப்பமானது" என்று குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 242. 'போதை தரும் ஒவ்வொரு பானமும் விலக்கப்பட்டதாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## ஒரு பெண் தன் தந்தையின் முகத்திலுள்ள இரத்தத்தைக் கழுவுதல்

"என்னுடைய காலைத் தடவி விடுங்கள். அது வேதனையாக இருக்கிறது" என்று அபுல் ஆலியா கூறினார்.

ஹதீஸ் 243. 'ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாயிதி(ரலி) அவர்களிடம் மக்கள் வந்து, 'நபி(ஸல்) அவர்களின் காயத்திற்கு எதனால் சிகிச்சை செய்யப்பட்டது?' என்று கேட்டபோது, எனக்கும் கேள்வி கேட்கப்பட்டவருக்குமிடையில் யாரும் இருக்கவில்லை. 'இந்த விஷயத்தை என்னை விட அதிகம் தெரிந்தவர் யாரும் எஞ்சியிருக்கவில்லை. அலீ(ரலி) தங்களின் கேடயத்தைக் கொண்டு வந்தார். அதில் தண்ணீர் இருந்தது. ஃபாத்திமா(ரலி) அந்தத் தண்ணீரால் நபி(ஸல்)

அவர்களின் முகத்திலிருந்த இரத்தத்தைக் கழுவினார். ஒரு பாய் எடுக்கப்பட்டு அது கரிக்கப்பட்டது. பின்னர் அந்தச் சாம்பல் நபி(ஸல்) அவர்களின் காயத்தில் பூசப்பட்டது' என்று ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாயிதி(ரலி) கூறினார்" என அபூ ஹாஸிம் அறிவித்தார்.

## பல் துலக்குதல்

"ஓர் இரவு நபி(ஸல்) அவர்களிடம் தங்கினேன். அவர்கள் பல் துலக்கினார்கள்" என்று இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 244. 'நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றிருந்தேன். அப்போது அவர்கள், தங்களின் கையிலுள்ள ஒரு குச்சியால் பல் துலக்கியபோது 'உவ் உவ்' என்றதைக் கண்டேன். குச்சியோ அவர்களின் வாயில் இருந்தது. இவ்வாறு செய்தது அவர்கள் வாந்தி எடுப்பது போன்றிருந்தது" அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 245. 'நபி(ஸல்) அவர்கள் இரவு (தூக்கத்திலிருந்து) விழிக்கும்போது தங்களின் வாயைக் குச்சியால் சுத்தம் செய்வார்கள்" என ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

## வயதில் மூத்தவரிடம் பல் துலக்கும் குச்சியைக் கொடுத்தல்

ஹதீஸ் 246. 'நான் ஒரு குச்சியைக் கொண்டு பல் துலக்குவதாகக் (கனவு) கண்டேன். அப்போது என்னிடம் இரண்டு மனிதர்கள் வந்தார்கள். அவ்விருவரில் ஒருவர் வயதில் பெரியவராக இருந்தார். அவ்விருவரில் வயதில் சிறியவரிடம் பல் துலக்கும் குச்சியைக் கொடுத்தேன். அப்போது, 'வயதில் மூத்தவரை முற்படுத்துவீராக!' என்று என்னிடம் கூறப்பட்டது. உடனே அவ்விருவரில் வயதில் பெரியவருக்கு அக்குச்சியைக் கொடுத்தேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## உளூவுடன் தூங்குதல்

ஹதீஸ் 247. 'நீ உன்னுடைய படுக்கைக்குச் செல்லும்போது தொழுகைக்குச் செய்வது போல் உளூச் செய்து கொள். பின்னர் உன்னுடைய வலக்கைப் பக்கமாகச் சாய்ந்து படுத்துக் கொள். பின்னர் 'யா அல்லாஹ்! நான் என்னுடைய முகத்தை உன்னிடம் ஒப்படைத்தேன். என்னுடைய காரியங்களை உன்னிடம் விட்டுவிட்டேன். என்னுடைய முதுகை உன் பக்கம் சாய்த்து விட்டேன். உன்னிடத்தில் ஆதரவு வைத்தவனாகவும் உன்னைப் பயந்தவனாகவும் இதைச் செய்கிறேன். உன்னைவிட்டுத் தப்பிச் செல்லவும் உன்னைவிட்டு ஒதுங்கி விடவும் உன் பக்கமே தவிர வேறிடம் இல்லை. யா அல்லாஹ்! நீ இறக்கிய உன்னுடைய வேதத்தை நான் நம்பினேன். நீ அனுப்பிய உன்னுடைய நபியையும் நம்பினேன்' என்ற பிரார்த்தனைய நீ செய்து கொள். (இவ்வாறு நீ சொல்லிவிட்டு உறங்கினால்) அந்த இரவில் நீ இறந்துவிட்டால் நீ தூய்மையானவனாய் ஆம்விடுகிறாய். இந்தப் பிரார்த்தனையை உன்னுடைய (இரவின்) கடைசிப் பேச்சாக ஆக்கிக் கொள்" என்று என்னிடம் இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்

நான் நபி(ஸல்) அவர்களிடம் இந்தப் பிரார்த்தனையைத் திரும்ப ஓதிக் காண்பித்தேன். அப்போது 'நீ அனுப்பிய உன்னுடைய நபியையும் நம்பினேன் என்பதற்குப் பதிலாக உன்னுடைய ரஸூலையும் நம்பினேன் என்று சொன்னேன். உடனே நபி(ஸல்) அவர்கள் 'இல்லை, நீ அனுப்பிய உன்னுடைய நபியை நம்பினேன் என்று சொல்லும்' என எனக்குத் திருத்திக் கொடுத்தார்கள்" என பராவு இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

# அத்தியாயம் - 5 - குளித்தல்

## குளிப்பதற்கு முன்னர் உளூச் செய்தல்

ஹதீஸ் 248 நபி(ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும்போது முதலாவதாகத் தங்களின் இரண்டு முன்கைகளையும் கழுவுவார்கள். பின்னர் தொழுகைக்கு உளூச் செய்வது போல் உளூச் செய்வார்கள். பின்னர் விரல்களைத் தண்ணீரில் மூழ்கச் செய்து அதைக் கொண்டு தலை முடியின் அடிப்பாகத்தைக் கோதுவார்கள். பின்னர் அவர்கள் தலையின் மீது மூன்று முறை கையினால் தண்ணீரைக் கோரி ஊற்றுவார்கள். பின்னர் தங்களின் உடல் முழுவதும் தண்ணீரை ஊற்றுவார்கள் ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 249 நபி(ஸல்) அவர்கள் கால்களைவிட்டுவிட்டு தொழுகைக்கு உளூச் செய்வது போன்று உளூச் செய்வார்கள். மேலும் தங்கள் மர்மஸ்தலத்தையும் உடலில் பட்ட அசுத்தங்களையும் கழுவுவார்கள். பின்னர் தங்களின் மீது தண்ணீரை ஊற்றுவார்கள். பின்னர் சிறிது நகர்ந்து நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவுவார்கள். இதுதான் நபி(ஸல்) அவர்களின் கடமையான குளிப்பாக இருந்தது என மைமூனா(ரலி) கூறினார்கள்.

## மனைவியுடன் குளித்தல்

ஹதீஸ் 250 ஃபரக் என்ற ஒரு பாத்திரத்திலிருந்து நானும் நபி(ஸல்) அவர்களும் சேர்ந்து குளித்தோம் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

(குறிப்பு: ஃபரக் என்பது இரண்டு கை கொள்ளளவு தண்ணீரின் பன்னிரண்டு மடங்காகும்)

## ஒரு ஸாஉ அளவுள்ள தண்ணீரில் குளித்தல்

(குறிப்பு: ஸாஉ என்பது இரண்டு கை கொள்ளளவு தண்ணீரின் நான்கு மடங்காகும்.)

ஹதீஸ் 251 நானும் ஆயிஷா(ரலி) அவர்களின் சகோதரரும் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றிருந்தோம். அவர்களிடம் அவர்களின் சகோதரர் நபி(ஸல்) அவர்களின் குளிப்பு எப்படியிருந்தது? என்று கேட்டதற்கு, ஸாவு போன்ற ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லிக் குளித்தார்கள். தம் தலையின் மீது தண்ணீரை ஊற்றினார்கள். அவர்களுக்கும் எங்களுக்குமிடையில் ஒரு திரை இருந்தது என்று ஆயிஷா(ரலி) கூறினார் என அபூ ஸலமா கூறினார்கள்.

ஹதீஸ் 252 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களுடன் நானும் என்னுடைய தந்தையும் வேறு சிலரும் அமர்ந்திருந்தபோது, அவர்களிடம் குளிப்பைப் பற்றி நாங்கள் கேட்டதற்கு, ஒரு ஸாவு அளவு தண்ணீர் போதும் என்று கூறினார். அப்போது ஒருவர் அந்தத் தண்ணீர் எனக்குப் போதாது என்றதற்கு, உன்னை விடச் சிறந்த, உன்னை விட அதிகமான முடி வைத்திருந்த (நபி(ஸல்) அவர்களுக்கு அந்த அளவு தண்ணீர் போதுமானதாக இருந்தது என்று கூறினார். பின்னர் ஒரே ஆடையை அணிந்தவராக எங்களுக்குத் தொழுகை நடத்தினார் என அபூ ஜஅஃபர் கூறினார்கள்.

ஹதீஸ் 253 நபி(ஸல்) அவர்களும் (அவர்களின் மனைவி) மைமூனா(ரலி) அவர்களும் சேர்ந்து ஒரே பாத்திரத்திலிருந்து குளிப்பவர்களாக இருந்தார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் ஒரு ஸாவு அளவுள்ள பாத்திரம் என்று கூறப்பட்டுள்ளது.

## தலையில் மூன்று முறை தண்ணீரை ஊற்றுதல்

ஹதீஸ் 254 நானோ மூன்று முறை என்னுடைய தலையில் தண்ணீரை ஊற்றுவேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறி தாங்களின் இரண்டு கைகளால் சைகை செய்து காட்டினார் என ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 255 நபி(ஸல்) அவர்கள் (குளிக்கும் போது) மூன்று முறை தங்கள் தலையில் தண்ணீர் ஊற்றக் கூடியவர்களாக இருந்தார்கள் என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 256 உன் தந்தையின் சகோதரர் மகனான ஹஸன் இப்னு முஹம்மத் இப்னி அல்ஹனஃபிய்யா என்னிடம் கடமையான குளிப்பு எப்படி? எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள் மூன்று கை நிறையத் தண்ணீர் எடுத்து அதைத் தங்களின் தலையில் ஊற்றுவார்கள் பின்னர் உடல் முழுவதும் ஊற்றுவார்கள் எனக் கூறினேன். அப்போது நான் அதிகமான முடியுடையவனாக இருக்கிறேனே? என ஹஸன் கூறியதற்கு, நபி(ஸல்) அவர்கள் உம்மை விட அதிக முடியுடையவர்களாக இருந்தார்கள் என்று கூறினேன் என என்னிடம் ஜாபிர்(ரலி) கூறினார் என அபூ ஜஅஃபர் கூறினார்கள்.

## குளிக்கும்போது ஒருமுறை தண்ணீர் ஊற்றுதல்

ஹதீஸ் 257 நபி(ஸல்) அவர்கள் குளிப்பதற்காக நான் தண்ணீர் வைத்தபோது, அவர்கள் தங்களின் இரண்டு முன் கைகளையும் இரண்டு அல்லது மூன்று முறை கழுவினார்கள். தங்களின் இடக்கையில் தண்ணீரை ஊற்றித் தங்களின் மர்மஸ்தலங்களைக் குழுவினார்கள். தங்களின் கையைப் பூமியில் தேய்த்துக் கழுவினார்கள். பின்னர் வாய் கொப்புளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தினார்கள். தங்களின் முகத்தையும் இரண்டு கையையும் கழுவினார்கள். தங்களின் உடம்பில் தண்ணீரை ஊற்றினார்கள். பின்னர் தாம் குளித்துக் கொண்டிருந்த இடத்திலிருந்து சிறிது மாறி நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள் என மைமூனா (ரலி) கூறினார்கள்.

## ஹிலாப் என்னும் பாத்திரத்தில் குளித்தல் குளிக்கும்போது நறுமணம் தேய்த்தல்

(ஹிலாப் - ஒட்டகத்தில் ஒருமுறை கறக்கப்படும் பாலின் கொள்ளளவுள்ள ஒரு பாத்திரம்)

ஹதீஸ் 258 நபி(ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும்போது ஹிலாப் பாத்திரம் போன்ற ஒன்றை கொண்டு வரச் செய்து அதிலிருந்து தங்களின் கையில் அள்ளித் தங்களின் தலையின் வலப்புறம் ஊற்றுவார்கள். பின்னர் இடப்புறம் ஊற்றுவார்கள். பின்னர் தங்களின் இரண்டு கைகளால் தலையைத் தேய்ப்பார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## கடமையான குளிப்பின்போது வாய் கொப்புளித்து மூக்கில் தண்ணீர் செலுத்துதல்

ஹதீஸ் 259. நபி(ஸல்) அவர்கள் குளிப்பதற்குத் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் தங்களின் வலக்கரத்தால் தங்களின் இடக்கையில் தண்ணீரை ஊற்றி இரண்டு கைகளையும் கழுவினார்கள். தங்களின் மர்மஸ்தலத்தைக் கழுவினார்கள். தங்களின் கையைப் பூமியில் மண் மூலம் தேய்த்துக் கழுவினார்கள். வாய் கொப்புளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தினார்கள். பின்னர் தங்களின் முகத்தைக் கழுவினார்கள். மேலும் தம் தலையின் மீது தண்ணீர் ஊற்றினார்கள். பின்னர் சிறிது ஒதுங்கி நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள். அவர்களிடம் துவாலை கொடுக்கப்பட்டது. ஆனால் அவர்கள் அதில் துடைக்கவில்லை மைமூனா(ரலி) கூறினார்கள்.

## கை நன்றே சுத்தமாவதற்கு கையை மண்ணில் தேய்த்துக் கழுவுதல்

ஹதீஸ் 260. நபி(ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றியபோது (முதலில்) தங்களின் மர்மஸ்தலத்தைத் தங்கயின் கையினால் கழுவினார்கள். பின்னர், கையைச் சுவரில் தேய்த்துக் கழுவினார்கள். தொழுகைக்குரிய உளூவைச் செய்தார்கள். குளித்து முடித்துத் தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

## குளிப்புக் கடமையானவர் கையில் எவ்வித அசுத்தமும் இல்லாதபோது கையைக் கழுவுவதற்கு முன்னர் கையைத் தண்ணீர்ப் பாத்திரத்தில் நுழைக்கலாமா?

ஹதீஸ் 261. நானும் நபி(ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்திலிருந்து குளிப்போம். அப்போது எங்கள் இருவரின் கைகளும் அந்தப் பாத்திரத்தில் மாறி மாறிச் செல்லும் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 262 நபி(ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும்போது தங்களின் கையைக் கழுவுவார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 263. நானும் நபி(ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்தில் கடமையான குளிப்பைக் குளித்தோம் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 264. நபி(ஸல்) அவர்களும் அவர்களின் மனைவியரில் ஒருவரும் சேர்ந்து ஒரே பாத்திரத்திலிருந்து கடமையான குளிப்புக் குளிப்பார்கள் என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்.

## குளிப்பு மற்றும் உளூவிற்கிடையில் சிறிது நேரம் இடைவெளி ஏற்படுத்துதல்

ஹதீஸ் 265. நபி(ஸல்) அவர்கள் குளிப்பதற்காக, நான் தண்ணீர் வைத்தபோது, அவர்கள் தங்களின் இரண்டு முன்கைகளில் தண்ணீர் ஊற்றி இரண்டு அல்லது மூன்று முறை கழுவினார்கள். பின்னர் தங்களின் இடக்கையில் தண்ணீரை ஊற்றி மர்மஸ்தலத்தைக் கழுவினார்கள். தங்களின் கையைப் பூமியில் தேய்த்துக் கழுவினார்கள். வாய் கொப்புளித்து மூக்கிற்குத் தண்ணீர் செலுத்தினார்கள். தங்களின் முகத்தையும் இரண்டு கைகளையும் கழுவினார்கள். தலையை மூன்று முறை கழுவினார்கள். தங்களின் உடம்பில் தண்ணீரை ஊற்றினார்கள். பின்னர் தாம் குளித்துக் கொண்டிருந்த இடத்திலிருந்து சிறிது நகர்ந்து நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

## குளிக்கும்போது வலக்கையால் தண்ணீர் எடுத்து இடக்கையில் ஊற்றுதல்

ஹதீஸ் 266. நபி(ஸல்) அவர்கள் குளிப்பதற்காக நான் தண்ணீர் வைத்துத் திரையிட்டேன். நபி(ஸல்) அவர்கள் தண்ணீரைத் தங்களின் கையில் ஊற்றி ஒரு முறையோ, இரண்டு முறையோ கழுவினார்கள். பின்னர் தங்களின் வலக்கரத்தால் இடக்கரத்தில் தண்ணீர் ஊற்றித் தங்களின் மர்மஸ்தலத்தைக் கழுவினார்கள். தங்களின் கையைச் சுவரில் அல்லது பூமியில் தேய்த்துக் கழுவினார்கள். வாய்க்கும் மூக்கிற்கும் தண்ணீர் செலுத்தினார்கள். மேலும் தங்களின் முகத்தையும் இரண்டு கைகளையும், தலையையும் கழுவினார்கள். தங்களின் உடல் முழுவதும் தண்ணீர் ஊற்றினார்கள். பின்னர், சிறிது நகர்ந்து நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள். பின்னர் நான் அவர்களிடம் ஒரு துவாலையைக் கொடுத்தேன். அப்போது, வேண்டாம் என்பது போல் தங்களின் கையினால் சைகை செய்தார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள். இரண்டு முறை கை கழுவினார்கள் என்பதோடு மூன்றாவது முறை கழுவினார்கள் என்று மைமூனா(ரலி) கூறினார்களா இல்லையா என எனக்குத் தெரியாது என்று இந்த ஹதீஸ் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸுலைமான் கூறினார்.

## மனைவியுடன் ஒருமுறை உறவு கொண்ட பின்னர் மீண்டும் உறவு கொள்ளுதல் மற்றும் பல மனைவியருடன் உறவு கொண்ட பின்னர் ஒருமுறை குளித்தல்

ஹதீஸ் 267. (நான் நறுமணப் பொருளைப் பயன்படுத்திக் காலையில் இஹ்ராம் அணிந்தவனாக இருக்க விரும்பவில்லை என்று அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறியதை நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறியபோது) அல்லாஹ் அப்துர் ரஹ்மானின் தந்தைக்கு ரஹ்மத் செய்வானாக! நான் நபி(ஸல்) அவர்களுக்கு மணப் பொருட்களைப் பூசுவேன். அவர்கள் தங்களின் மனைவியருடன் இரவு தங்கிவிட்டுப் பின்னர் காலையில் இஹ்ராம் அணிந்தவர்களாக இருப்பார்கள். அவர்களிடமிருந்து நறுமணம் கமழும் என ஆயிஷா(ரலி) கூறினார் என முஹம்மத் இப்னு முன்தஷிர் கூறினார்கள்.

ஹதீஸ் 268. நபி(ஸல்) அவர்கள் இரவில் அல்லது பகலில் தங்களின் மனைவிமார்களிடம் குறிப்பிட்ட நேரத்தில் தங்கக் கூடியவர்களாக இருந்தார்கள். அவர்களின் மனைவியர் பதினோரு பேர் இருந்தார்கள் என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறியபோது நான் அவரிடம், அதற்கு நபி(ஸல்) அவர்கள் சக்தி பெறுவார்களா? என்று நான் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்களுக்கு முப்பது பேர்களுடைய சக்தி கொடுக்கப்பட்டுள்ளது என நாங்கள் பேசிக் கொள்வோம் என அனஸ்(ரலி) கூறினார் என கதாதா கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் நபி(ஸல்) அவர்களுக்கு (அந்நேரத்தில்) ஒன்பது மனைவியர் இருந்தனர் என்று கூறப்பட்டுள்ளது.

## மதி எனும் காம நீர் வெளியானால் அதைக் கழுவுவதும் அதற்காக உளூச் செய்வதும்

ஹதீஸ் 269. நான் அதிகமாக மதி எனும் காம நீர் வெளிப்படுபவனாக இருந்தேன். நான் நபி(ஸல்) அவர்களின் மகளுடைய கணவன் என்பதால் இது பற்றி அவர்களிடம் கேட்டு வருவதற்கு ஒருவரை அனுப்பினேன். அவர் சென்று கேட்டபோது, நீ உன்னுடைய உறுப்பைக் கழுவிவிட்டு உளூச் செய்து கொள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அலீ(ரலி) கூறினார்கள்.

## ஏற்கனவே நறுமணம் பூசியவர் குளித்தவிட்டு இஹ்ராம் கட்டும்போதும் நறுமணத்தின் அடையாளம் இருந்தால் என்ன செய்வது?

ஹதீஸ் 270. (நான் நறுமணப் பொருளைப் பயன்படுத்தி, காலையில் இஹ்ராம் அணிந்தவனாக இருக்க விரும்பவில்லை என்று அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறியதை ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் கூறியபோது) நான் நபி(ஸல்) அவர்களுக்கு நறுமணப் பொருட்களைப் பூசுவேன். அவர்கள் தங்களின் மனைவியருடன் இரவு தங்கிவிட்டுப் பின்னர் காலையில் இஹ்ராம் அணிந்தவர்களாக இருப்பார்கள் என்று ஆயிஷா(ரலி) கூறினார் என முஹம்மத் இப்னு முன்தஷிர் கூறினார்கள்.

ஹதீஸ் 271. நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்தவர்களாக இருக்கும் நிலையில் அவர்களின் தலை முடிக்கிடையில் நறுமணத்தின் பளபளப்பை நான் (இன்றும்) பார்ப்பது போன்று இருக்கிறது என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## தலை முடியைக் கோதுதல் மற்றும் தலையின் தோல் நன்றாக நனைந்ததைத் தெரிந்த பின்னர் முடியின் மீது தண்ணீரை ஊற்றுதல்

ஹதீஸ் 272. நபி(ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும்போது தங்களின் இரண்டு கைகளையும் கழுவுவார்கள். தொழுகைக்குரிய உளூவைச் செய்வார்கள். பின்னர் குளிக்கத் துவங்குவார்கள். தங்களின் கையால் தலை முடியைக் கோதுவார்கள். தலையின் தோல்

நனைந்தது தெரிய வந்ததும் தலையின் மீது மூன்று முறை தண்ணீரை ஊற்றுவார்கள். பின்னர் உடலின் இதர பாகங்களைக் கழுவுவார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 273. நபி(ஸல்) அவர்களும் நானும் ஒரே பாத்திரத்திலிருந்து குளிப்போம். நாங்கள் இருவரும் சேர்ந்து பாத்திரத்திலிருந்து தண்ணீரை அள்ளுவோம் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

### கடமையான குளிப்பிற்காக உளூச் செய்து உடம்பு முழுவதும் கழுவிய பின்னர் உளூவின் உறுப்புகளை மீண்டும் கழுவாதிருத்தல்

ஹதீஸ் 274. நபி(ஸல்) அவர்கள் குளிப்பதற்காக தண்ணீர் வைத்தேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் வலக்கையால் தண்ணீரைத் தங்களின் இடக்கையில் ஊற்றி இருமுறையோ, மும்முறையோ கழுவினார்கள். பின்னர் தங்களின் மர்மஸ்தலத்தைக் கழுவினார்கள். தங்களின் கையைச் சுவரில் அல்லது பூமியில் இரண்டு அல்லது மூன்று முறை தேய்த்துக் கழுவினார்கள். பின்னர் வாய்க்கொப்புளித்து, மூக்கிற்கும் தண்ணீர் செலுத்தினார்கள். மேலும் தங்களின் முகத்தையும் இரண்டு கைகளையும் கழுவினார்கள். தங்களின் தலையில் தண்ணீர் ஊற்றி உடம்பைக் கழுவினார்கள். பின்னர், சிறிது தள்ளி நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள் நான் அவர்களிடம் துவாலையைக் கொடுத்தேன். அவர்கள் அதை விரும்பாமல் தங்களின் கைகளால் தண்ணீரை வழித்தார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

### பள்ளிவாசலில் இருக்கும்போது குளிப்பு கடமையானது நினைவுக்கு வந்தால் தயம்மும் போதுமென இருக்காமல் வெளியேறவேண்டும்

ஹதீஸ் 275. தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டது. வரிசைகள் சரி செய்யப்பட்டன. நபி(ஸல்) அவர்கள் வீட்டிலிருந்து வெளியே வந்தார்கள். தொழுகைக்காக அவர்களின் இடத்தில் போய் நின்றதும் குளிப்பு கடமையானது நினைவிற்கு வந்தால் எங்களைப் பார்த்து உங்களுடைய இடத்திலேயே நில்லுங்கள் என்று கூறிவிட்டு (வீட்டிற்குள்) சென்றார்கள். பின்னர், அவர்கள் குளித்துவிட்டுத் தலையிலிருந்து தண்ணீர் சொட்டச் சொட்ட வந்தார்கள். தக்பீர் சொல்லித் தொழுகை நடத்தினார்கள். நாங்கள் அவர்களுடன் தொழுதோம் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

### கடமையான குளிப்பிற்குப் பின்னர் இரண்டு கைகளையும் உதறுதல்

ஹதீஸ் 276. நபி(ஸல்) அவர்கள் குளிப்பதற்காகத் தண்ணீர் வைத்து ஓர் ஆடையால் திரையிட்டேன். அவர்கள் தண்ணீரைத் தங்களின் கைகளில் ஊற்றிக் கழுவினார்கள். பின்னர் வலக்கரத்தால் இடக்கரத்தில் தண்ணீர் ஊற்றித் தங்களின் மர்மஸ்லத்தைக் கழுவினார்கள். தங்களின் கையைப் பூமியில் தேய்த்துக் குழுவினார்கள். வாய்க் கொப்புளித்து மூக்கிற்கும் தண்ணீர் செலுத்தினார்கள். மேலும் தங்களின் முகத்தையும் இரண்டு கைகளையும் கழுவினார்கள். தங்களின் தலையிலும் உடல் முழுவதும் தண்ணீர் ஊற்றினார்கள். பின்னர், சிறிது தள்ளி நின்று தங்களின் இரண்டு கால்களையும் கழுவினார்கள். நான் அவர்களிடம் ஒரு துவாலையைக் கொடுத்தேன். அதை வாங்கவில்லை. தங்களின் கைகளால் தண்ணீரை வழித்துவிட்டுச் சென்றார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

### குளிக்கும்போது தலையின் வலப்பக்கத்திலிருந்து ஆரம்பித்தல்

ஹதீஸ் 277. எங்களில் எவருக்குக் குளிப்புக் கடமையானாலும் மூன்று முறை இரண்டு கைகளால் தண்ணீர் எடுத்துத் தலையின் மீது ஊற்றுவோம். பின்னர், கையால் தண்ணீரை அள்ளி வலப்பக்கம் ஊற்றுவோம். மற்றொரு கையினால் தண்ணீர் எடுத்து இடப்பக்கம் ஊற்றுவோம் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## அறைக்குள் தனியாகக் குளிக்கும்போது நிர்வாணமாகக் குளிக்கலாம். மறைத்துக் கொண்டு குளிப்பதே சிறந்தது.

ஹதீஸ் 278. இஸ்ரவேலர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தவர்களாக, நிர்வாணமாகவே குளிப்பார்கள். மூஸா (அலை) அவர்கள் தனித்தே குளிப்பார்கள். இதனால் அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா விரை வீக்கமுடையவர். எனவே அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை என இஸ்ரவேலர்கள் கூறினார்கள். ஒரு முறை மூஸா (அலை) அவர்கள் குளிப்பதற்காகச் சென்றபோது, தங்களின் ஆடைகளை ஒரு கல்லின் மீது வைத்துவிட்டுக் குளிக்கச் சென்றார்கள். அவர்களின் ஆடையோடு அந்தக்கல் ஓடிவிட்டது. உடனே மூஸா (அலை) அவர்கள் அதைத் தொடர்ந்து கல்லே! என்னுடைய ஆடை! என்று சப்தமிட்டுச் சென்றார்கள். அப்போது, இஸ்ரவேலர்கள் மூஸா (அலை) அவர்களின் மர்மஸ்தலத்தைப் பார்த்துவிட்டு அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸாவிற்கு எந்தக் குறையுமில்லை என்று கூறினார்கள். மூஸா (அலை) அவர்கள் தங்களின் ஆடையை எடுத்துக் கொண்டு அந்தக் கல்லை அடிக்க ஆரம்பித்தார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

அல்லாஹ்வின் மீது ஆணையாக மூஸா (அலை) அவர்கள் கல்லைக் கொண்டு அந்த கல்லின் மீது ஆறோ ஏழோ அடி அடித்தார்கள் என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்.

ஹதீஸ் 279. அய்யூப் (அலை) அவர்கள் நிர்வாணமாக குளித்துக் கொண்டிருந்தபோது தங்க வெட்டுக்கிளி ஒன்று அவர்களின் மீது விழுந்தது. அதை அய்யூப் (அலை) அவர்கள் தங்களின் ஆடையில் எடுத்தார்கள். உடனே அவர்களின் இரட்சகன் அவர்களை அழைத்து அய்யூபே! நீர் பார்க்கிற இதைவிட்டு உம்மை தேவையற்றவராக நான் ஆக்கவில்லையா? எனக் கேட்டான். அதற்கு உன் கண்ணியத்தின் மீது ஆணையாக அப்படித்தான் எனினும் உன்னுடைய பரகத்தைவிட்டு நான் தேவையற்றவனாக இல்லை என அய்யூப் (அலை) அவர்கள் கூறினார்கள் என் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

## குளிக்கும்போது மனிதர்களின் பார்வையைவிட்டு மறைத்தல்

ஹதீஸ் 280. மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் நபி (ஸல்) அவர்களிடம் சென்றிருந்தேன். அப்போது அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களை ஃபாத்திமா (ரலி) மறைத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது, நபி (ஸல்) (என்னைச் சுட்டிக்காட்டி) இது யார்? என்று கேட்டார்கள். நான் உம்மு ஹானி என்றேன் என உம்முஹானி (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 281 நபி (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றிக் கொண்டிருந்தபோது அவர்களுக்கு நான் திரையிட்டேன். அவர்கள் தங்களின் இரண்டு கைகளையும் கழுவினார்கள். தங்களின் வலக் கரத்தால் தங்களின் இடக்கையில் ஊற்றினார்கள். தங்களின் மர்மஸ்தலத்தையும் அவர்கள் மேனியில் பட்டதையும் கழுவினார்கள். தங்களின் கையைச் சுவரின் மீதோ, பூமியிலோ தேய்த்தார்கள். பின்னர், தொழுகைக்குரிய உளூவைச் செய்தார்கள். இரண்டு கால்களையும் கழுவவில்லை. பிறகு அவர்கள் தங்களின் உடம்பின் மீது தண்ணீரை ஊற்றினார்கள். பின்னர் சிறிது தள்ளி நின்று தங்களின் இரண்டு பாதங்களையும் கழுவினார்கள் மைமூனா (ரலி) கூறினார்கள்.

## பெண்களுக்கு ஸ்கலிமாதல்

ஹதீஸ் 282. அபூ தல்ஹாவின் மனைவி உம்மு ஸுலைம் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நபி அவர்களே! நிச்சயமாக அல்லாஹ் சத்தியத்தை எடுத்துச் சொல்வதற்கு வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்கு ஸ்கலிதமானால் அவளின் மீது குளிப்பு கடமையாகுமா? என்று கேட்டதற்கு தண்ணீரைக் கண்டால் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உம்மு ஸலமா(ரலி) கூறினார்.

## குளிப்புக் கடமையானவனின் வியர்வையும் முஸ்லிம் அசுத்தமாவதில்லை என்பதும்

ஹதீஸ் 283. நான் குளிப்புக் கடமையான நிலையில் மதீனாவின் ஒரு தெருவில் நின்றிருந்தபோது நபி(ஸல்) என்னைச் சந்தித்தார்கள். அப்போது, நான் நழுவி விட்டேன். குளித்துவிட்டுப் பின்னர் வந்தேன். நபி(ஸல்) அவர்கள் அபூ ஹுரைரா! எங்கு நழுவி விட்டீர்? என்று கேட்டதற்கு, குளிப்புக் கடமையாகியிருந்தேன் எனவே நான் சுத்தமில்லாமல் உங்கள் அருகே அமர்வதை வெறுத்தேன் என்றேன். அப்போது ஸுப்ஹானல்லாஹ்! ஒரு முஸ்லிம் அசுத்தமாகவே மாட்டான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## குளிப்புக் கடமையானவர் கடை வீதி போன்ற இடங்களில் நடந்து செல்லுதல்

ஹதீஸ் 284. நபி(ஸல்) அவர்கள் ஒரே இரவில் எல்லா மனைவியரிடமும் சென்று வருவார்கள். அன்று அவர்களுக்கு ஒன்பது மனைவியர் இருந்தனர் என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 285. நான் குளிப்புக் கடமையாகியிருந்த இருந்த நிலையில் என்னை நபி(ஸல்) அவர்கள் சந்தித்து என்னுடைய கையைப் பிடித்தார்கள். நான் அவர்களோடு நடந்தேன். அவர்கள் அமர்ந்த உடன் நான் நழுவிச் சென்று கூடாரத்தில் போய்க் குளித்துவிட்டு வந்தேன். அப்போது நபி(ஸல்) உட்கார்ந்திருந்தார்கள். அபூ ஹுர்ரே! எங்கே சென்று விட்டீர்? என்று கேட்டார்கள். நான் அவர்களுக்கு நடந்த விஷயத்தைக் கூறினேன். அப்போது ஸுப்ஹானல்லாஹ்! அபூ ஹுர்ரே! நிச்சயமாக இறைநம்பிக்கையாளன் அசுத்தமாவதில்லை என்று நபி(ஸல்) கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## குளிப்புக் கடமையான ஒருவன் குளிப்பை நிறைவேற்றாமல் உளூ மட்டும் செய்து வீட்டில் தங்குதல்

ஹதீஸ் 286. நபி(ஸல்) அவர்கள் குளிப்புக் கடமையாக இருக்கும் நிலையில் தூங்கியிருக்கிறார்களா? என ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் கேட்டதற்கு ஆம்! (தூங்கும் முன்) உளூச் செய்து கொள்வார்கள் என்று ஆயிஷா(ரலி) கூறினார் என அபூ ஸலமா கூறினார்கள்.

## குளிப்புக் கடமையானவர் தூங்குதல்

ஹதீஸ் 287. நம்மில் ஒருவர் குளிப்புக் கடமையான நிலையில் தூங்கலாமா? என உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு ஆம்! உங்களில் ஒருவர் குளிப்புக் கடமையானவராக இருக்கும்போது உளூச் செய்துவிட்டுத் தூங்கலாம் என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## குளிப்புக் கடமையானவன் தூங்க விரும்பினால் உளூச் செய்துவிட்டுத் தூங்கலாம்

ஹதீஸ் 288. நபி(ஸல்) அவர்கள் குளிப்புக் கடமையான நிலையில் தூங்க நினைத்தால், தங்கள் மர்மஸ்தலத்தைக் கழுவிவிட்டுத் தொழுகைக்குரிய உளூச் செய்வார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 289. நம்மில் ஒருவர் குளிப்புக் கடமையான நிலையில் தூங்கலாமா? என உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு ஆம்! உங்களில் ஒருவர் குளிப்புக் கடமையானவராக இருக்கும்போது உளூச் செய்துவிட்டுத் தூங்கலாம் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 290. இரவு நேரத்தில் தமக்குக் குளிப்புக் கடமையாகி விடுகிறது என உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கூறியதற்கு உளூச் செய்யும் உம்முடைய உறுப்பைக் கழுவிவிட்டு நீர் தூங்கும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## ஆண், பெண் உறுப்புகள் சந்தித்துவிட்டால் என்ன செய்யது?

ஹதீஸ் 291. ஒருவர் தம் மனைவியின் (இரண்டு கால், இரண்டு கை ஆகிய) நான்கு கிளைகளுக்கிடையில் அமர்ந்து, அவளுடன் உறவு கொள்பவரின் மீது குளிப்புக் கடமையாகிறது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## உடலுறவின்போது பெண்ணுறுப்பிலிருந்து பட்டவற்றைக் கழுவுவது பற்றியது

ஹதீஸ் 292. ஒருவர் தம் மனைவியுடன் உறவு கொள்ளும்போது இந்திரியம் வெளியாகாமலிருந்தால் அவரின் மீது குளிப்புக் கடமையாகுமா? என உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களிடம் நான் கேட்டதற்கு, தொழுகைக்குச் செய்வது போன்ற உளூவைச் செய்து கொள்ள வேண்டும் தம் உறுப்பைக் கழுவிக் கொள்ள வேண்டும் என்பதைத்தான் நபி(ஸல்) அவர்கள் சொல்ல கேட்டிருக்கிறேன் என உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) பதிலளித்தார். மேலும், இது விஷயமாக அலீ இப்னு அபீ தாலிப், ஸுபைர் இப்னு அவ்வாம், தல்ஹா இப்னு உபைதில்லாஹ், உபை இப்னு கஅப்(ரலி) ஆகிய நபித்தோழர்களிடம் கேட்டேன். அவர்களும் இவ்வாறுதான் கூறினார்கள். இவ்வாறே நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ அய்யூப் அல் அன்ஸாரி(ரலி) கேட்டதாக உர்வா கூறினார் என ஜைத் இப்னு காலித் அல் ஜுஹைனி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 293. நபி(ஸல்) அவர்களிடம், நபி அவர்களே! ஒருவர் தங்களின் மனைவியிடம் உறவு கொண்ட பின்னரும் இந்திரியம் வெளியாகாமலிருந்தால் அவரின் மீது குளிப்புக் கடமையாகுமா? என நான் கேட்டதற்கு, மனைவியிடமிருந்து பட்ட இடத்தைக் கழுவ வேண்டும் பின்னர் உளூச் செய்து தொழுது கொள்ளலாம் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உபை இப்னு கஅப்(ரலி) கூறினார்கள்.

குளிப்பதுதான் சிறந்தது. ஆனால் இந்த ஹதீஸ் கடைசிக் கட்டளையாக இருந்தது. இதில் கருத்து வேறுபாடு உள்ளது என்பதற்காகத்தான் இந்த ஹதீஸை இங்கு குறிப்பிட்டேன் என்று அபூ அப்தில்லாஹ் (புகாரி) ஆகிய நான் கூறுகிறேன்.

# அத்தியாயம் - 6 - மாதவிடாயின் ஆரம்பம்.

## மாதவிடாய் ஏற்பட்டால் என்ன செய்வது?

ஹதீஸ் 294. நாங்கள் ஹஜ் செய்வதற்காக மதீனாவிலிருந்து புறப்பட்டுச் சென்றோம். ஸரிஃப் என்ற இடத்தை அடைந்ததும் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், நான் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அழுது கொண்டிருந்த என்னைப் பார்த்து, உனக்கு என்ன? மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று கேட்டார்கள். நான் ஆம்! என்றேன். இந்த மாதவிடாய் ஆதமுடைய பெண் மக்களின் மீது அல்லாஹ் ஏற்படுத்தியது. எனவே கஅபதுல்லாஹ்வைத் வலம்வருவதைத் தவிர ஹாஜிகள் செய்கிற மற்ற அனைத்தையும் நீ செய்து கொள் என்று கூறிவிட்டு நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவியருக்காக மாட்டைக் குர்பானி கொடுத்தார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் ஏற்பட்ட பெண் தன்னுடைய கணவனின் தலையைக் கழுவுவதும் அவரின் தலை முடியைச் சீவி விடுவதும்

ஹதீஸ் 295. நான் மாதவிடாயுடன் இருக்கும் நிலையில் நபி(ஸல்) அவர்களின் தலை முடியைச் சீவி விடுவேன் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 296. ஒருவர் தம் மனைவி குளிப்புக் கடமையான நிலையில் தம்முடன் நெருங்கலாமா? மாதவிடாய்க்காரி தமக்குப் பணிவிடை செய்யலாமா? என்று உர்வாவிடம் கேட்டதற்கு உர்வா அது எல்லாமே என்னிடம் சிறிய விஷயம்தான். (என் மனைவியர்) எல்லோருமே எனக்குப் பணிவிடை செய்வார்கள். அவ்வாறு செய்வதில் யார் மீதும் எந்தக் குற்றமுமில்லை. ஆயிஷா(ரலி)வுக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் நிலையில் அவர்கள் நபி(ஸல்) அவர்களின் தலை முடியைச் சீவி விடுவார்கள். என ஆயிஷா(ரலி) என்னிடம் கூறினார் என்றார் என ஹிஷாம் கூறினார்கள்.

## மனைவிக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது அவளின் மடியில் தலையை வைத்துக் கணவன் (குர்ஆன்) ஓதுவதல்

ஹதீஸ் 297. எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் என்னுடைய மடியில் சாய்ந்து கொண்டு குர்ஆனை ஓதும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## பிரசவத் தீட்டைக் குறிக்கும் நிஃபாஸ் என்னும் சொல்லை மாதவிடாய்க்கும் பயன்படுத்துதல்

ஹதீஸ் 298. நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போர்வையைப் போர்த்திப் படுத்துக் கொண்டிருந்தபோது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. மாதவிடாய்க் காலத்தில் அணியும் துணியை எடுப்பதற்காக நபி(ஸல்) அவர்களுக்குத் தெரியாதவாறு அந்த இடத்தைவிட்டு நகர்ந்தேன். உனக்கு நிஃபாஸ் (மாதவிடாய்) ஏற்பட்டுவிட்டதா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். ஆம் என்றேன். ஆயினும் அவர்கள் என்னை அருகில் வரக் கூறினார்கள். நான் அவர்களோடு போர்வைக்குள் படுத்துக் கொண்டேன் என உம்முஸலமா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் ஏற்பட்டவளை அணைத்துக் கொள்ளுதல்

ஹதீஸ் 299. நானும் நபி(ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்தில் (ஒன்றாக நீரள்ளி) கடமையான குளிப்பைக் குளித்தோம் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 300. எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது என் இடுப்பில் ஆடையைக் கட்டிக் கொள்ளுமாறு நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கூறுவார்கள். (நான் அவ்வாறே செய்வேன்) அவர்கள் என்னை அணைத்துக் கொள்வார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 301. நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இஃதிகாப் இருக்கும்போது அங்கிருந்தவாறே என் (அறையின்) பக்கம் தலையைக் காட்டுவார்கள். நான் மாதவிடாய்க் காரியாக இருக்கும் நிலையில் அவர்களின் தலையைக் கழுவுவேன் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 302. எங்களில் ஒருவருக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் நிலையில் அணைத்துக் கொள்ள நபி(ஸல்) அவர்கள் விரும்பினால் மாதவிடாய் போகும் இடத்தைத் துணியால் கட்டிக் கொள்ளுமாறு கட்டளையிட்டுவிட்டு அவரை அணைத்துக் கொள்வார்கள். நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனதைக் கட்டுப்படுத்திக் கொள்வது போன்று உங்களில் யார் தன்னுடைய மனதைக் கட்டுப்படுத்திக் கொள்ளமுடியும்? என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 303. நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவியரில் ஒருவருக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் நிலையில் அணைத்துக் கொள்ள விரும்பினால் கீழாடையைக் கட்டிக் கொள்ளுமாறு கட்டளையிடுவார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் ஏற்பட்டவள் நோன்பைவிட்டு விடுவதல்

ஹதீஸ் 304. ஹஜ்ஜுப் பெருநாளன்றோ நோன்புப் பெருநாளன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்று, பெண்கள் சமூகமே! தர்மம் செய்யுங்கள்! ஏனெனில், நரக வாசிகளில் அதிகமாக இருப்பது நீங்களே என எனக்குக் காட்டப்பட்டது என்று கூறினார்கள். நபி அவர்களே! ஏன் என்று அப்பெண்கள் கேட்டதற்கு, நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள் கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக இருக்கிறீர்கள் மார்க்கக் கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு மன உறுதியான கணவனின் புத்தியை மாற்றி விடக்கூடியவர்களாக உங்களை விட வேறு யாரையும் நான் காணவில்லை என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது நபி அவர்களே! எங்களுடைய மார்க்கக் கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன என்று பெண்கள் கேட்டனர். ஒரு பெண்ணின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியில் பாதியாகக் கருதப்படவில்லையா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டததற்கு, ஆம் என அப்பெண்கள் பதில் கூறினர். அதுதான் அவர்கள் அறிவு குன்றியவர்கள் என்பதைக் காட்டுகிறது் ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கும் ஆம்! எனப் பெண்கள் பதில் கூறினர். அதுதான் பெண்கள் மார்க்கக் கடமையில் குறைவானவர்களாக இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும் என்று நபி(ஸல்) கூறினார்கள் என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய்ப் பெண் கஅபதுல்லாஹ்வை வலம் வருவதைத் தவிர்த்து ஹஜ்ஜின் எல்லாக் கடமைகளையும் நிறைவேற்றுதல்

ஹதீஸ் 305. நாங்கள் ஹஜ் செய்வதற்காக (மதீனாவிலிருந்து) புறப்பட்டுச் சென்றோம். ஸரிஃப் என்ற இடத்தை அடைந்ததும் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள் நான் இருந்த இடத்திற்கு வந்தார்கள், அழுது கொண்டிருந்த என்னைப் பார்த்து, ஏனழுகிறாய்? என்று கேட்டார்கள். இவ்வாண்டு நான் ஹஜ் செய்ய முடியாது என்று கருதுகிறேன் என்றேன். உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று கேட்டார்கள். நான் ஆம்! என்றேன்.

அப்போது இந்த மாதவிடாய் ஆதமுடைய பெண் மக்களின் மீது அல்லாஹ் ஏற்படுத்தியது. எனவே கஅபதுல்லாஹ்வைத் வலம்வருவதைத் தவிர்த்து ஹாஜிகள் செய்கிற மற்ற அனைத்தையும் செய்து கொள் என்று கூறினார்கள் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

## பெண்களின் உதிரப் போக்கு

ஹதீஸ் 306. பாத்திமா பின்த் அபீ ஹுபைஷ் என்ற பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, நபி அவர்களே! நான் (இரத்தப் போக்கிலிருந்து) சுத்தமாவதே இல்லை. எனவே நான் தொழுகையைவிட்டு விடலாமா? என்று கேட்டதற்கு, அது ஒரு நரம்பு நோய். அது மாதவிடாயன்று. மாதவிடாய் ஏற்படும்போது தொழுகையைவிட்டு விடு. மாதவிடாய்க் காலம் கழிந்ததும் இரத்தத்தைச் சுத்தம் செய்துவிட்டுத் தொழுது கொள் என்று நபி (ஸல்) கூறினார்கள் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் இரத்தத்தைக் கழுவுதல்

ஹதீஸ் 307. ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, நபி அவர்களே! எங்களில் ஒரு பெண்ணின் துணியில் மாதவிடாய் இரத்தம் பட்டால் அவள் எவ்வாறு (சுத்தம்) செய்ய வேண்டும்? என்று கேட்டதற்கு, உங்களில் ஒருத்தியின் ஆடையில் மாதவிடாய் இரத்தம் பட்டால் அதைச் சுரண்டிவிட்டுப் பின்னர் அந்த இடத்தில் தண்ணீர் தெளித்து விடட்டும். அதன் பின்னர் அந்த ஆடையுடன் தொழுது கொள்ளலாம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 308. எங்களில் ஒருவருக்கு மாதவிடாய் ஏற்படும்போது அவர் தன்னுடைய ஆடையில் இரத்தம் பட்ட இடத்தைச் சுத்தம் செய்வதற்காகஆடையிலிருந்து இரத்தைதச் சுரண்டிவிட்டு, அந்த இடத்தைக் கழுவியப் பின்னர் ஆடையின் இதர இடங்களிலும் தண்ணீர் தெளித்து அந்த ஆடையுடன் தொழுவார் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

## உதிரப் போக்குள்ளவர் பள்ளி வாசலில் இஃதிகாப் இருத்தல்

ஹதீஸ் 309. நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் ஒருவர் உதிரப் போக்கினால் இரத்தத்தைக் காண்பவராக இருந்த நிலையில் நபி (ஸல்) அவர்களுடன் இஃதிகாப் இருந்தார்கள். சில வேளை இரத்தத்தின் காரணமாக தமக்குக் கீழே ஒரு தட்டை வைத்துக் கொள்வார்கள் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 310. நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் ஒருவர் மஞ்சள் நிற உதிரப் போக்கு இரத்தத்தைக் காணும்போது தமக்கடியில் ஒரு தட்டை வைத்து நபி (ஸல்) அவர்களுடன் இஃதிகாப் இருந்தவாறு தொழுதார் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 311. இறைநம்பிக்கையாளர்களின் தாயான ஒருவர் உதிரப் போக்குள்ள நிலையிலும் இஃதிகாப் இருந்தார் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் ஏற்பட்ட துணியுடன் ஒரு பெண் தொழலாமா?

ஹதீஸ் 312. எங்களில் ஒருவருக்கு ஓர் ஆடை மட்டுமே இருக்கும். அதில்தான் அவரின் மாதவிடாய் ஏற்படும். ஏதாவது இரத்தம் அந்த ஆடையில் பட்டால் தங்களின் எச்சிலைத் தொட்டு அந்த இடத்தில் வைத்துத் தங்களின் நகத்தால் சுரண்டி விடுவார்கள் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

## மாதவிடாயிலிருந்து நீங்கும் குளியலின்போது நறுமணத்தைப் பயன்படுத்தல்

ஹதீஸ் 313. இறந்தவர்களுக்காக மூன்று நாள்களுக்கு மேல் துக்கத்தை வெளிப்படுத்துவதற்கு தடுக்கப்பட்டுள்ளோம். ஆனால் கணவன் இறந்த பின்னர் அவனுடைய மனைவி நான்கு மாதம் பத்து நாள்கள் துக்கத்தை வெளிப்படுத்த வேண்டும். இந்த நாள்களில் நாங்கள் சுருமா இடவோ, மணப் பொருட்களைப் பூசவோ, சாயமிடப் பட்ட ஆடைகளை அணியவோ கூடாது. ஆனால் நெய்வதற்கு முன் நூலில் சாயமிடப்பட்டு தயாரிக்கப்பட்ட ஆடைகளை அணியலாம். எங்களில் ஒருத்தி மாதவிடாயிலிருந்து நீங்கக் குளிக்கும்போது மணப் பொருளைப் பயன்படுத்துவது அனுமதிக்கப்பட்டுள்ளது. மேலும் ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வதைவிட்டும் தடுக்கப்பட்டுள்ளோம் என உம்மு அதிய்யா (ரலி) கூறினார்கள்.

### மாதவிடாயிலிருந்து சுத்தமாக்கக் குளிக்கும் பெண் தன்னுடைய உடலைத் தேய்த்துக் கழுவ வேண்டும் என்பதும், எப்படிக் குளிக்க வேண்டும் இரத்தம் செல்லும் இடத்தில் கஸ்தூரி வைக்கப்பட்ட பஞ்சை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதும்

ஹதீஸ் 314. ஒரு பெண், நபி (ஸல்) அவர்களிடம் வந்து மாதவிடாய் நின்ற பின்பு எப்படிக் குளிக்க வேண்டும்? என கேட்டபோது, நபி (ஸல்) அவர்கள் அவள் குளிக்கும் முறையை அவளுக்குக் கூறிவிட்டு, கஸ்தூரி வைக்கப்பட்ட பஞ்சை எடுத்து அதனால் நீ சுத்தம் செய் என்றார்கள். அப்போது நான் எப்படிச் சுத்தம் செய்ய வேண்டும்? என அப்பெண் கேட்டார். அதைக் கொண்டு நீ சுத்தம் செய் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மீண்டும் அந்தப் பெண் எப்படி? என்று கேட்டபோது ஸுபஹானல்லாஹ்! சுத்தம் செய்து கொள்! என்று கூறினார்கள். உடனே நான் அந்தப் பெண்ணை என் பக்கம் இழுத்து கஸ்தூரி கலந்த பஞ்சைக் கொண்டு இரத்தம் பட்ட இடத்தில் வைத்துச் சுத்தம் செய் என்று அவளிடம் கூறினேன் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

### மாதவிடாயில் இருந்து விலகிய பெண் குளித்தல்

ஹதீஸ் 315. அன்ஸாரிப் பெண்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து மாதவிடாயில் இருந்த நான் சுத்தமாவதற்காக எவ்வாறுக் குளிக்க வேண்டும்? எனக் கேட்டார். கஸ்தூரி கலந்த பஞ்சை எடுத்து நீ சுத்தம் செய் என மூன்று முறை நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். பின்னர் அவர்கள் வெட்கப்பட்டுத் தங்களின் முகத்தைத் திருப்பினார்கள். அல்லது அதைக் கொண்டு நீ சுத்தம் செய் என்று கூறினார்கள். அப்போது நான் அந்தப் பெண்ணைப் பிடித்து என் பக்கம் இழுத்து நபி (ஸல்) அவர்கள் என் பக்கம் இழுத்து நபி (ஸல்) அவர்கள் என்ன குறிப்பிடுகிறார்கள் என்பதை அவளுக்கு விளக்கினேன் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

### மாதவிடாய் நின்ற பின்பு குளிக்கும்போது சீப்பினால் தலையை வாருதல்

ஹதீஸ் 316. நான் நபி (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜதுல் வதாவின்போது இஹ்ராம் அணிந்தேன். அறுத்துக் கொடுப்பதற்குரிய கால் நடையைக் கொண்டுவராத ஹஜ்ஜின் தமத்துவ் என்ற வகையை நிறைவேற்றுபவர்களுடன் இருந்தேன். மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதை உணர்ந்தேன். அரஃபாவின் இரவு வரும் வரை நான் சுத்தமாகவில்லை. அப்போது நான் நபி (ஸல்) அவர்களிடம் நபி அவர்களே! இன்று அரஃபாவின் இரவு. நான் உம்ராச் செய்துவிட்டுத் திரும்ப இஹ்ராம் அணிந்து ஹஜ் செய்வதாக நினைத்திருந்தேன் என்றேன். உன்னுடைய தலைமுடியை அவிழ்த்து அதை வாரிவிட்டு உம்ரா செய்வதை நிறுத்தி விடு. (ஹஜ்ஜிற்கு இஹ்ராம் அணிந்து கொள்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவ்வாறே நானும் செய்தேன். ஹஜ்ஜின் கிரியைகளை முடித்த பின்பு, ஹஸ்பாவில் தங்கிய இடத்திலிருந்து தன்யீம் என்ற இடத்திற்குச் சென்று, எனக்கு விடுபட்ட உம்ராவிற்கு அங்கிருந்து இஹ்ராம் அணிந்து வருவதற்காக என்னை கூட்டிச் செல்லுமாறு (என் சகோதரர்) அப்துர்ரஹ்மானிடம் நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் என ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் நின்ற பின்னர் குளிக்கும்போது பெண் தன்னுடைய தலை முடியை அவிழ்த்தல்

ஹதீஸ் 317. துல்ஹஜ் மாதப் பிறையைப் பயணத்தில் அடையும் நிலையில் புறப்பட்டோம். அப்போது உம்ராச் செய்ய விரும்புவோர் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து கொள்ளட்டும். நான் என்னுடன் அறுத்துக் கொடுப்பதற்குரிய பிராணியைக் கொண்டு வராதிருந்தால் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்திருப்பேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது சிலர் உம்ராவிற்காக வேறு சிலர் ஹஜ்ஜிற்காகவும் இஹ்ராம் அணிந்தனர். உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தவர்களுடன் இருந்தேன். நான் மாதவிடாயுடன் இருந்தபோது அரஃபா நாள் வந்தது. நபி(ஸல்) அவர்களிடம் இது பற்றி முறையிட்டேன். நீ உன்னுடைய உம்ராவைவிட்டு விடு உன்னுடைய தலைமுடியை அவிழ்த்து அதை வாரி விடு பின்னர் ஹஜ்ஜிற்காக இஹ்ராம் அணிந்து கொள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நானும் அவ்வாறே செய்தேன். ஹஸ்பாவில் தங்கிய இரவு என்னுடைய சகோதரர் அப்துர் ரஹ்மானை நபி(ஸல்) என்னுடன் அனுப்பினார்கள். தன்யீம் என்ற இடத்திற்குச் சென்று எனக்கு விடுபட்ட உம்ராவிற்காக அங்கிருந்து இஹ்ராம் அணிந்தேன் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## கர்ப்பத்திலுள்ள சதைத் துண்டு முழுமையடைந்தும் முழுமையடையாமலும் இருக்கம் நிலை

ஹதீஸ் 318. அல்லாஹ் கர்ப்பப் பையில் ஒரு வானவரை நியமிக்கிறான். கர்ப்பப் பையில் விந்து செலுத்தப்பட்ட பின்னர் அதன் ஒவ்வொரு நிலையிலும் மாற்றம் ஏற்படும்போது அந்த வானவர், யா அல்லாஹ்! இப்போது விந்தாக இருக்கிறது. யா அல்லாஹ்! இப்போது அலக் (கருப்பைச் சுவற்றின் தொங்கும்) எனும் நிலையில் இருக்கிறது. யா அல்லாஹ்! இப்போது சதைத் துண்டாக இருக்கிறது என்று கூறிவருவார். அல்லாஹ் அதை உருவாக்க நாடினால் அது ஆணா? பெண்ணா? நல்லவனா? கெட்டவனா? என்பதையும் அவனுக்குச் கொடுக்கவிருக்கும் செல்வம் எவ்வளவு? அவனுடைய வாழ்நாள் எவ்வளவு? என்பதையும் கூறிவிடுகிறான். மனிதன் தன் தாயின் வயிற்றில் இருக்கும் போதே இவை எழுதப்பட்டு விடுகின்றன என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் ஏற்பட்டுவிட்ட பெண் ஹஜ்ஜிற்காகவும் உம்ராவிற்காகவும் இஹ்ராம் அணிவது எப்படி?

ஹதீஸ் 319. நபி(ஸல்) அவர்களின் இறுதி ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்களோடு சென்றோம். எங்களில் உம்ரா செய்வதற்காக இஹ்ராம் அணிந்தவர்களும் இருந்தனர். ஹஜ் செய்வதற்காக இஹ்ராம் அணிந்தவர்களும் இருந்தனர். நாங்கள் மக்காவை அடைந்ததும் உங்களில் குர்பானிப் பிராணியைத் தம்முடன் கொண்டு வராமல் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தவர்கள் (உம்ரா கடமைகளை நிறைவேற்றிவிட்டு) இஹ்ராமிலிருந்து விலம்க் கொள்ளலாம். உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து தங்களுடன் குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்திருப்பவர்கள் தங்களின் குர்பானியைப் பத்தாவது நாளன்று அறுக்கும் வரை தங்களின் இஹ்ராமிலிருந்து விலக வேண்டாம். ஹஜ்ஜிற்காக மட்டும் இஹ்ராம் அணிந்திருப்பவர்கள் தங்களின் ஹஜ்ஜை நிறைவேற்றட்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. அது அரஃபா நாள் வரை நீடித்தது. நான் உம்ராவிற்காகத்தான் இஹ்ராம் அணிந்திருந்தேன். (இதை நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன்) என்னுடைய தலை முடியை அவிழ்த்துவிட்டு அதை வாரி விடுமாறும், நான் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்ததைவிட்டுவிட்டுத் திரும்ப ஹஜ்ஜிற்காக இஹ்ராம் அணிந்து கொள்ளுமாறும் எனக்குக் கட்டளையிட்டார்கள். நான் அவ்வாறே செய்தேன். என்னுடைய ஹஜ்ஜை நிறைவேற்றிய பின்னர் என்னுடன் (என்னுடைய சகோதரர்) அப்துர்ரஹ்மானை அனுப்பி,

தன்யீம் என்ற இடத்திலிருந்து எனக்குவிடுபட்ட உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து வருமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாயின் ஆரம்பமும் அதன் கடைசியும்

ஹதீஸ் 320. பாத்திமா பின்த் அபீ ஹுபைஷ் என்ற பெண் உதிரப் போக்குடையவராக இருந்தார். நபி(ஸல்) அவர்களிடம் அப்பெண் (இது குறித்து) கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் அது ஒரு நரம்பு நோய். அது மாதவிடாய் இரத்தமன்று. மாதவிடாய் ஏற்படும்போது தொழுகையைவிட்டுவிடு. மாதவிடாய்க் காலம் கழிந்ததும் குளித்துவிட்டுத் தொழுது கொள் என்று கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய்க் காலத்தில் விடுபட்ட தொழுகைகளை மீண்டும் தொழ வேண்டியதில்லை

ஹதீஸ் 321. பெண்கள் மாதவிடாயிலிருந்து சுத்தமான பின்னர் தொழுதால் மட்டும் போதுமா? என்று ஒரு பெண் ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டதற்கு, நீ ஹரூர் எனும் இடத்தைச் சார்ந்த பெண்ணா? நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருக்கும்போது எங்களுக்கு மாதவிடாய் ஏற்படும். அப்போது எங்களிடம் விடுபட்ட தொழுகையைத் தொழுமாறு ஏவ மாட்டார்கள் என்று அல்லது அத்தொழுகையை நாங்கள் தொழ மாட்டோம் என்று ஆயிஷா(ரலி) கூறினார் என முஆதா கூறினார்கள்.

## மாதவிடாய் இரத்தம் பட்ட ஆடையை அணிந்திருக்கும் பெண்ணுடன் கணவன் தூங்குதல்

ஹதீஸ் 322. நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போர்வையைப் போர்த்திப் படுத்துக் கொண்டிருந்தபோது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. மாதவிடாய்க் காலத்தில் அணியும் துணியை எடுப்பதற்காக நபி(ஸல்) அவர்களுக்குத் தெரியாதவாறு அந்த இடத்தைவிட்டு நகர்ந்து அதை அணிந்தேன். உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். ஆம் என்றேன். ஆயினும், அவர்கள் என்னை(த் தம்மருகில்) அழைத்தார்கள். நான் அவர்களோடு போர்வைக்குள் படுத்துக் கொண்டேன் என்றும்,

நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும்போது என்னை முத்தமிடுவார்கள். நானும் நபி(ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்திலிருந்து கடமையான குளிப்பை நிறைவேற்றுவோம் என்றும் உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

## சுத்தமாக இருக்கும்போது அணியும் துணி அல்லாது மாதவிடாய்க் காலத்திற்கெனத் தனியாகத் துணியை வைத்தல்

ஹதீஸ் 323. நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போர்வையைப் போர்த்திப்படுத்துக் கொண்டிருந்தேன். அப்போது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. மாதவிடாய்க் காலத்தில் அணியும் துணியை எடுப்பதற்காக நபி(ஸல்) அவர்களுக்குத் தெரியாதவாறு அந்த இடத்தைவிட்டு நகர்ந்தேன். உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று நபி(ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் அவர்களோடு போர்வைக்குள் படுத்துக்கொண்டேன் என உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய்ப் பெண்கள் இரண்டு பெருநாள் தொழுகைகளிலும் கலந்து முஸ்லிம்களுக்கான பிரச்சாரத்தில் பங்கெடுத்தல் மற்றும் தொழும் இடத்தைவிட்டு அவர்கள் விலகி இருத்தல்

ஹதீஸ் 324. நாங்கள் இரண்டு பெருந்நாள்களிலும் தொழும் இடத்திற்குச் செல்வதைவிட்டும் எங்கள் குமரிப் பெண்களைத் தடுத்துக் கொண்டிருந்தோம். அப்போது ஒரு பெண் வந்து பனீ கல∴ப் வம்சத்தினரின் இல்லத்தில் தங்கியிருந்தார். அவர் தங்களின் சகோதரி (உம்மு அதிய்யா) வழியாக வந்த செய்தியை கூறினார்கள். அவரின் சகோதரி (உம்மு அதிய்யா) நபி(ஸல்) அவர்களோடு தம் கணவர் பங்கெடுத்த பன்னிரண்டு போர்களில் ஆறு போர்களில் கணவரோடு இருந்தார்.

நாங்கள் போர்க்களத்தில் காயமுற்றவர்களுக்குச் சிகிச்சையளிப்போம். நோயாளியைக் கவனிப்போம். நான் நபி(ஸல்) அவர்களிடம் எங்களில் ஒருத்திக்கு மேலங்கி இல்லாவிட்டால் (பெரு நாள் தொழுகைக்கு) செல்லாமல் இருப்பது குற்றமா? என நான் கேட்டதற்கு, அவளுடைய தோழி தன்னுடைய உபரியான மேலங்கியை அவளுக்கு அணியக் கொடுக்கட்டும். அவள் நன்மையான காரியங்களிலும் முஸ்லிம்கதளின் பிரச்சாரத்திலும் கலந்து கொள்ளட்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்.

உம்மு அதிய்யா(ரலி) வந்தபோது நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூற நீங்கள் கேட்டீர்களா? என நான் கேட்டதற்கு என்னுடைய தந்தை அர்ப்பணமாகட்டும் ஆம்! கேட்டேன் எனக் கூறினார். இவர் நபி(ஸல்) அவர்களின் பெயரைக் கூறும் போதெல்லாம் என்னுடைய தந்தை அர்ப்பணமாகட்டும் என்பதையும் சேர்த்தே கூறுவார்.

கன்னிப் பெண்களும் மாதவிடாய்ப் பெண்களும் (பெருந்நாளன்று) வெளியே சென்று நன்மையான காரியங்களிலும் முஸ்லிம்களின் பிரச்சாரத்திலும் பங்கு கொள்வார்கள். பெருநாள் தொழுகை நடக்கும் இடத்திற்குச் செல்லும் மாதவிடாய்ப் பெண்கள் தொழும் இடத்தைவிட்டு ஒதுங்கி இருப்பார்கள் என்றும் உம்மு அதிய்யா(ரலி) கூறினார். இதைக் கேட்ட நான் மாதவிடாய்ப் பெண்களுமா? எனக் கேட்டதற்கு, மாதவிடாய்ப் பெண் அர∴பாவிலும் மற்ற (மினா முஸ்தலி∴பா போன்ற) இடங்களுக்கும் செல்வதில்லையா? என்று உம்மு அதிய்யா(ரலி) கேட்டார் என ஹ∴ப்ஸா கூறினார்கள்.

## ஒரு பெண்ணுக்கு ஒரு மாதத்தில் மூன்று நாள்கள் மாதவிடாய் ஏற்படுவதும், மாதவிடாய், கர்ப்பம் ஆகிய இரண்டிலும் சம்பந்தப்பட்ட பெண் கூறுவது ஏற்கப்படுவதும்

ஹதீஸ் 325. பாத்திமா பின்த் அபீ ஹுபைஷ் என்ற பெண், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நபி அவர்களே! நான் (இரத்தப் போக்கிலிருந்து) சுத்தமாவதே இல்லை. எனவே நான் தொழுகையை விடலாமா? என்று கேட்டதற்கு, கூடாது. அது ஒரு நரம்பு நோய் மாதவிடாய் இரத்தமன்று. மாதவிடாய் ஏற்படும் நாள்களின் அளவுக்குத் தொழுகையைவிட்டுவிடு. பின்னர் தொழுது கொள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## மாதவிடாய் அல்லாத நாள்களில் மஞ்சளாகவோ மண் நிறமாகவோ வெளிப்படும் இரத்தம்.

ஹதீஸ் 326. மாதவிடாய் அல்லாத நாள்களில் வெளிப்படும் மஞ்சள் நிற இரத்தத்தையும் ஒருவகை மண்நிற இரத்தத்தையும் மாதவிடாயாக நாங்கள் கருதுவதில்லை என உம்மு அதிய்யா(ரலி) கூறினார்கள்.

## உதிரப்போக்கு நோய்

ஹதீஸ் 327. உம்மு ஹபீபா என்ற பெண் ஏழு ஆண்டுகள் உதிரப் போக்குடையவராக இருந்தார். இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்டபோது, குளிக்குமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டு, இது ஒரு நோய் என்று கூறினார்கள். (இதனால்) ஒவ்வொரு தொழுகைக்கும் அப்பெண் குளிப்பவராக இருந்தார் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## ஹஜ்ஜின் இஃபாளா என்ற தவாஃப் செய்த பின்னர் ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் என்ன செய்வது?

ஹதீஸ் 328. ஹஜ்ஜின்போது நான் நபி(ஸல்) அவர்களிடம் ஸஃபியாவுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது எனக் கூறினேன். அதற்கு நபியவர்கள் அவள் நம்மைப் பயணத்தைவிட்டு நிறுத்தி விடுவாள் போலிருக்கிறதே! உங்களுடன் அவள் தவாஃப் செய்யவில்லையா? என்று கேட்டார்கள். தவாஃப் செய்துவிட்டார் என (அங்கிருந்தோர்) கூறினார்கள். அப்படியானால் புறப்படுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 329 இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

ஹஜ்ஜில் ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் (தவாஃப் செய்யாமல்) வீடு திரும்புதல் அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

ஹதீஸ் 330. ஹஜ்ஜில் ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் சுத்தமான பின்னர் தவாஃபை நிறைவேற்றிவிட்டுத்தான் வீடு செல்ல வேண்டும் என இப்னு உமர் ஆரம்பகாலத்தில் சொல்லியிருந்தார். ஆனால் பின்னர் அவள் வலம் வராமலே வீடு திரும்பலாம் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார் என தாவூஸ் கூறினார்கள்.

## உதிரப்போக்குடையவள் சுத்தமாகி விட்டால் என்ன செய்வது?

ஹதீஸ் 331. மாதவிடாய் ஏற்படும்போது தொழுகையைவிட்டுவிடு. மாதவிடாய்க் காலம் கழிந்ததும் இரத்ததைச் சுததம் செய்துவிட்டுத் தொழுது கொள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## பிரசவ நேரத்தில் இறக்கும் பெண்களுக்கு ஜனாஸாத் தொழுகை நடத்தும் முறை

ஹதீஸ் 332. ஒரு பெண் பிரசவ நேரத்தில் இறந்தபோது அவருக்கு நபி(ஸல்) ஜனாஸாத் தொழுகை நடத்தினார்கள். தொழுகையின்போது ஜனாஸாவின் நடுப்பகுதிக்கு நேராக நின்றார்கள் என ஸமுரா இப்னு ஜுன்துப்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 333. எனக்கு மாதவிடாய் ஏற்படும்போது நான் தொழுவதில்லை. அந்நிலையில் நபி(ஸல்) அவர்களின் பள்ளிவாசலின் அருகில் படுத்திருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் சிறிய பாயில் தொழுது கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 334. நாங்கள் ஒரு பயணத்தில் நபி(ஸல்) அவர்களுடன் சென்றோம். பைதாவு அல்லது தாத்துல் ஜைஷ் என்ற இடத்தை வந்தடைந்ததும் என்னுடைய கழுத்தணி அறுந்து (தொலைந்து)விட்டது. அதைத்தேடுவதற்காக நபி(ஸல்) அவர்களும் மற்றவர்களும் அந்த இடத்தில் தங்கினோம். நாங்கள் தங்கிய இடத்தில் தண்ணீர் இல்லை. அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சிலர் வந்து, (உங்கள் மகளான) ஆயிஷா செய்ததை நீங்கள் பார்த்தீர்களா? நபி(ஸல்) அவர்களையும் மக்களையும் இங்கே தங்கச் செய்துவிட்டார். அவர்கள் தங்கிய இடத்திலும் தண்ணீர் இல்லை அவர்களுடனும் தண்ணீர் எடுத்து வரவில்லை என்று முறையிட்டனர். அபூ பக்ர்(ரலி) (என்னருகே) வந்தபோது நபி(ஸல்) அவர்கள் தங்களின் தலையை என்னுடைய மடி மீது வைத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நபி(ஸல்) அவர்களையும் மக்களையும் தங்க வைத்துவிட்டாயே? அவர்கள் தங்கிய இடத்திலும் தண்ணீர்

இல்லை அவர்களிடமும் தண்ணீர் இல்லை என்று கூறினார்கள். அவர்கள் எதைச் சொல்ல அல்லாஹ் நாடினானோ அதையெல்லாம் சொல்லிவிட்டு, தங்களின் கையால் என்னுடைய இடுப்பில் குத்தினார்கள். நபி(ஸல்) அவர்களின் தலை என் மடியின் மீது இருந்ததால் நான் அசையாது இருந்தேன். நபி(ஸல்) அவர்கள் காலையில் விழித்தெழுந்தபோதும் தண்ணீர் கிடைக்கவில்லை. அப்போது அல்லாஹ் தயமத்தின் வசனத்தை அருளினான். எல்லோரும் தயம்மும் செய்தார்கள்.

இது பற்றிப் பின்னர் உஜைத் இப்னு ஹுளைர்(ரலி) அபூ பக்ரின் குடும்பத்தார்களே! உங்களின் மூலமாக ஏற்பட்ட பரக்கத்துக்களில் இது முதலாவதாக இல்லை. (இதற்கு முன்பும் உங்களின் மூலம் எத்தனையோ பரக்கத்துக்கள் ஏற்பட்டுள்ளன) எனக் கூறினார். அப்போது நான் இருந்த ஒட்டகத்தை எழுப்பியபோது அதனடியில் (காணாமல் போன) என் கழுத்தணி கிடந்ததைக் கண்டோம்என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

# அத்தியாயம் -7 - தயம்மும்

நீங்கள் தண்ணீரைப் பெறவில்லையானால் சுத்தமான மண்ணைத் தேடி அதனால் உங்கள் முகங்களையும் கைகளையும் தடவிக் கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 05:06)

ஹதீஸ் 335. எனக்கு முன்னர் யாருக்கும் கொடுக்கப்படாத ஐந்து விஷயங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. எதிரிகளுக்கும் எனக்குமிடையில் ஒரு மாத காலம் பயணம் செய்யும் இடைவெளியிருந்தாலும் அவர்களின் உள்ளத்தில் பயம் ஏற்படுத்தப்படுவதன் மூலம் நான் உதவப்பட்டுள்ளேன். பூமி முழுவதும் சுத்தம் செய்யத் தக்கதாகவும் தொழுமிடமாகவும் எனக்கு ஆக்கப்பட்டுள்ளது. என்னுடைய சமுதாயத்தில் தொழுகையின் நேரத்தை அடைந்தவர் (இருக்கும் இடத்தில்) தொழுதுகொள்ளட்டும்! போரில் கிடைக்கிற பொருள்கள் எனக்கு ஹலாலாக்கப்பட்டுள்ளன. எனக்கு முன்பு ஹலாலாக்கப்பட்டதில்லை. (மறுமையில்) சிபாரிசு செய்யும் வாய்ப்புக் கொடுக்கப்பட்டுள்ளேன். ஒவ்வொரு நபியும் தங்களின் சமூகத்திற்கு மட்டுமே நபியாக அனுப்பட்டார்கள். ஆனால், மனித இனம் முழுமைக்கும் நபியாக அனுப்பப்பட்டுள்ளேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

### தண்ணீரோ மண்ணோ கிடைக்க வில்லையானால் என்ன செய்வது?

ஹதீஸ் 336. ஆயிஷா (தங்களின் சகோதரி) அஸ்மாவிடமிருந்து ஒரு கழுத்தணியை இரவல் வாங்கியிருந்தார். அந்தக் கழுத்தணி காணாமல் போனது. இதை அறிந்த நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதரை அனுப்பி அந்தக் கழுத்தணியைத் தேடி வருமாறு கூறினார்கள். தேடிப்போனவர் அதைக் கண்டெடுத்தார். தேடிப் போன அந்த இடத்தில் தொழுகையின் நேரம் வந்துவிட்டது. அவர்களிடம் தண்ணீர் இருக்கவில்லை. எனவே (உளூவின்றித்) தொழுதுவிட்டார். இதைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டார். அப்போது அல்லாஹ் தயம்முடைய வசனத்தை அருளினான். அப்போது உஜைத் இப்னு ஹுளைர் என்பவர் ஆயிஷா(ரலி) அவர்களிடம் அல்லாஹ் உங்களுக்கு நற்கூலியைத் தருவானாக! அல்லாஹ்வின் மீது ஆணையாக நீங்கள் வெறுக்கக் கூடிய எந்த ஒரு விஷயம் உங்களுக்கு ஏற்பட்டாலும், அதை உங்களுக்கும் மற்ற முஸ்லிம்களுக்கும் நலமானதாக அல்லாஹ் ஆக்கி விடுகிறான் என்று கூறினார் என உர்வா கூறினார்கள்.

ஹதீஸ் 337. நானும் நபி(ஸல்) அவர்களின் மனைவியான மைமூனாவின் அடிமை அப்துல்லாஹ் இப்னு யஸாரும் அபூ ஜுஹைம் இப்னு அல்ஹாரிது இப்னு அஸ்ஸிம்மத்தில் அன்ஸாரி(ரலி) அவர்களிடம் சென்றோம். எங்களிடம் நபி(ஸல்) அவர்கள் பீர்ஜமல் என்ற இடத்திலிருந்து வந்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர் அவர்களை சந்தித்து ஸலாம் கூறியதற்கு, நபி(ஸல்) அவர்கள் பதில் சொல்லாமல் ஒரு சுவர் பக்கம் சென்று (அதில் கையை அடித்து) தங்களின் முகத்தையும் இரண்டு கைகளையும் தடவிய பின்னர் அவரின் ஸலாத்திற்கு பதில் கூறினார்கள் என்று அபூ ஜுஹைம்(ரலி) கூறினார் என உமைர் என்பவர் கூறினார்கள்.

## தயம்மும் செய்பவர் (மண்ணில் அடித்த பின்னர்) இரண்டு கைகளிலும் ஊதவேண்டுமா?

ஹதீஸ் 338. ஒருவர் உமர்(ரலி) அவர்களிடம் வந்து நான் குளிப்புக் கடமையானவனாக ஆம்விட்டேன். தண்ணீர் கிடைக்கவில்லை. என்ன செய்யவேண்டும்? என்று கேட்டபோது, அங்கிருந்த அம்மார் இப்னு யாஸிர்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம், நானும் நீங்களும் ஒரு பயணத்தில் சென்றோம். (அப்போது தண்ணீர் கிடைக்காததால்) நீங்கள் தொழவில்லை நானோ மண்ணில் புரண்டுவிட்டுத் தொழுதேன். இந்நிகழ்ச்சியை நபி(ஸல்) அவர்களிடம் நான் சொன்னபோது நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கைகளையும் தரையில் அடித்து, அவற்றில் ஊதிவிட்டு அவ்விரு கைகளால் தங்களின் முகத்தையும் இரண்டு முன்கைகளையும் தடவிக் காண்பித்து இவ்வாறு செய்திருந்தால் அது உனக்குப் போதுமானதாக இருந்தது எனக் கூறிய சம்பவம் உங்களுக்கு நினைவில்லையா? என்று கேட்டார்கள் என அப்துர்ரஹ்மான் அப்ஸா(ரலி) கூறினார்.

## முகத்தையும் இரண்டு முன் கைகளையும் தடவுவதே தயம்மும்

ஹதீஸ் 339. முந்திய ஹதீஸ் இங்கே இடம் பெறுகிறது. அத்துடன் ஷுஅபா என்பவர் இரண்டு கைகளால் பூமியில் அடித்து அவற்றைத் தம் வாயின் பக்கம் நெருக்கி (ஊதிவிட்டு) பின்னர் தம் முகத்தையும் இரண்டு முன் கைகளையும் தடவினார் என்று குறிப்பிட்டார் எனக் குறிப்பிடப்படுகிறது.

ஹதீஸ் 340. நான் உமர்(ரலி) அவர்களிடமிருந்தேன். அப்போது அம்மார் இப்னு யாஸிர்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் நாம் ஒரு பயணத்தில் சென்றபோது குளிப்புக் கடமையாகிவிட்டது என்று கூறி (தயம்மும் செய்து காட்டினார்கள். அப்போது) இரண்டு கைகளிலும் ஊதிக் காட்டினார்கள் என அப்துர்ரஹ்மான் இப்னு அப்ஸா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 341. அப்துர்ரஹ்மான் (பின் அப்ஸா-ரலி) அவர்கள் கூறியதாவது, அம்மார் (ரலி) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம், மண்ணில் புரண்ட நான் நபி (!ல்) அவர்களிடம் வந்(து நடந்ததைத் தெரிவித்தேன். அப்பொது நபி (!ல்) அவர்கள் முகமும் (மணிக்கட்டு வரை) இருகைகளும் உமக்கு (தயம்மும் செய்யப்) பொதும் என்று சொன்னார்கள்.

ஹதீஸ் 342. முந்திய ஹதீஸே இங்கு மீண்டும் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 343. நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கைகளையும் தரையில் அடித்துத் தங்களின் முகத்தையும் இரண்டு முன் கைகளையும் தடவிக் காண்பித்தார்கள் என அம்மார்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 344. நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணம் சென்றோம். இரவின் கடைசி நேரம் வந்தபோது எங்களுக்கு தூக்கம் மேலிட்டது. பயணிக்கு அதைவிட இன்பமான தூக்கம் எதுவும் இருக்க முடியாது. அந்தத் தூக்கத்திலிருந்து எங்களை (அதிகாலை) சூரிய வெப்பம்தான் எழுப்பியது. முதல் முதலாகத் தூக்கத்திலிருந்து எழுந்தவர் இன்னவர், அடுத்த இன்னவர் அவரை அடுத்து இன்னவர் இந்த ஹதீஸ் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூ ரஜா எழுந்தவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டுக் கூறினார். அவருக்கு அடுத்த அறிவிப்பாளரான அவ்ஃப் அவர்களின் பெயர்களை மறந்துவிட்டார். நான்காவதாகத் தூக்கத்திலிருந்து எழுந்தவர் உமர் இப்னு கத்தாப்(ரலி) ஆவார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தூங்கினால் அவர்கள் தாமாகவே தூக்கத்திலிருந்து விழிக்கும் வரை வேறு யாராலும் எழுப்பப்பட மாட்டார்கள். காரணம் அவர்களின் தூக்கத்தில் என்ன செய்தி வருமென்பது எங்களுக்குத் தெரியாது. உமர்(ரலி) தூக்கத்தைவிட்டு எழுந்து மக்களுக்கு ஏற்பட்ட (ஸுப்ஹ் தொழுகை தவறிப்போன) இந்நிலையைப் பார்த்ததும் அல்லாஹு அக்பர்!

என்று சப்தமிட்டார். அவர் திடகாத்திரமான மனிதராக இருந்தார். அவர் சப்தமிட்டுத் தக்பீர் முழங்கிக் கொண்டே இருந்தார். அவர்களின் சப்தத்தைக் கேட்டு நபி(ஸல்) அவர்களும் தூக்கத்திலிருந்து எழுந்தார்கள். உடனே மக்கள் தங்களுக்கு ஏற்பட்ட இந்நிலையை நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டார்கள். அப்போது அதனால் எந்தப் பாதிப்புமில்லை. நீங்கள் இங்கிருந்து புறப்படுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு, அந்த இடத்தைவிட்டும் புறப்பட்டார்கள். சிறிது தூரம் சென்றதும் அங்கே தங்கி உளூச் செய்யத் தண்ணீர் கொண்டு வரச் செய்து அதில் உளூச் செய்தார்கள். தொழுகைக்காக அழைப்புக் கொடுக்கப்பட்டது. மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். நபி(ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துவிட்டு திரும்பிப் பார்த்தபோது, அங்கு ஒருவர் கூட்டத்துடன் தொழாமல் தனியாக இருந்தார். ஜமாஅத்துடன் நீர் தொழாமலிருக்கக் காரணமென்ன? என்று அவரிடம் கேட்டபோது, எனக்குக் குளிப்புக் கடமையாகிவிட்டது. தண்ணீர் இல்லை என்று அவர் கூறினார். மண்ணில் தயம்மும் செய். அது உனக்குப் போதுமானது என்று நபி(ஸல்) அவர்கள் அவரிடம் கூறினார்கள்.

பின்னர் நபி(ஸல்) அவர்கள் பயணத்தைத் தொடங்கினார்கள். அப்போது மக்கள் அவர்களிடம் சென்று தாகமாக இருக்கிறது் தண்ணீர் இல்லை என முறையிட்டார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்திலிருந்து இறங்கி, ஒரு மனிதரையும் அவர் பெயரை அபூ ரஜா குறிப்பிட்டார்கள். அவ்ஃப் என்பவர் மறந்துவிட்டார். அலீ(ரலி) அவர்களையும் அழைத்து நீங்கள் இருவரும் சென்று தண்ணீரைத் தேடுங்கள் என்று கூறினார்கள். அவர்கள் இருவரும் தண்ணீரைத் தேடிச் சென்று கொண்டிருந்தபோது, வழியில் ஒரு பெண்ணைச் சந்தித்தார்கள். அவள் ஓர் ஒட்டகத்தின் மீது இரண்டு தோல் பைகளில் தண்ணீர் வைத்துக் கொண்டு அதற்கிடையில் அமர்ந்திருந்தாள்.

தண்ணீர் எங்கே கிடைக்கிறது? என்று அவ்விருவரும் அப்பெண்ணிடம் கேட்டனர். தண்ணீர் ஒரு நாள் பயண தூரத்தில் இருக்கிறது. எங்களுடைய ஆண்கள் தண்ணீருக்காகப் பின்தங்கிவிட்டனர் என அப்பெண் கூறினாள். அப்படியானால் நீ புறப்படு என்று அவ்விருவரும் அப்பெண்ணிடம் கூறினார்கள். எங்கே? என்று அவள் கேட்டாள். அல்லாஹ்வின் தூதரிடம் என்று கூறினார்கள். மதம் மாறியவர் என்று கூறப்படுகிறாரே அவரிடத்திலா? என்று அப்பெண் கேட்டாள். நீ கூறுகிற அவரேதான் என்று கூறிவிட்டு அவளை நபி(ஸல்) அவர்களிடம் அழைத்து வந்து நடந்ததைக் கூறினார்கள்.

அந்தப் பெண்ணை அவளுடைய ஒட்டகத்திலிருந்து இறங்கச் செல்லுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு, ஒரு பாத்திரத்தைக் கொண்டு வரச் சொல்லி, அந்த இரண்டு தோல் பைகளிலிருந்த தண்ணீரைப் பாத்திரங்களில் நிரப்பினார்கள். பின்னர் அந்த இரண்டு தோல் பைகளின் அடிப்புற வாயைக் கட்டிவிட்டுத் தண்ணீர் செலுத்தும் மேற்புற வாயைக் கட்டாமல்விட்டுவிட்டார்கள். எல்லோரும் வந்து தண்ணீர் குடியுங்கள். சேகரித்து வையுங்கள் என்று மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. விரும்பியவர்கள் குடித்தார்கள் விரும்பியவர்கள் பாத்திரங்களில் எடுத்து வைத்தார்கள். குளிப்புக் கடமையான அவர்தாம் கடைசியாக வந்தவர். அவருக்கு ஒரு பாத்திரம் தண்ணீர் கொடுத்து, இதைக் கொண்டு போய் உம் மீது ஊற்றிக் கொள்ளும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்தப் பெண் தன்னுடைய தண்ணீர் எந்தெந்த வகையிலெல்லாம் பயன்படுத்தப்படுகிறது என்பதைக் கவனித்துக் கொண்டே நின்றாள். அல்லாஹ்வின் மீது ஆணையாக அவளுடைய உள்ளத்தில் நபி(ஸல்) மீது இருந்த வெறுப்பு நீங்கிவிட்டது. அந்த இரண்டு தோல் பைகளிலிருந்து முதலில் தண்ணீரை எடுக்கும்போது இருந்ததை விட அதிகமான தண்ணீர் பிறகு அத்தோல் பையில் இருப்பது போன்று எங்களுக்குத் தெரிந்தது. (தண்ணீர் குறையவில்லை.) அந்தப் பெண்ணுக்கு ஏதாவது சேகரித்துக் கொடுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவளுக்காகப் பேரீச்சம்

பழம், மாவு போன்றவற்றைச் சேகரித்தார்கள். அவளுக்குப் போதுமான உணவு சேர்ந்தது. அதைத் துணியில் வைத்துக் (கட்டி) அவளை ஒட்டகத்தின் மீது அமரச் செய்து உணவுப் பொட்டலமுள்ள துணியை அவளுக்கு முன்னால் வைத்தார்கள். பின்னர், அந்தப் பெண்ணிடம் உன்னுடைய தண்ணீரிலிருந்து எதையும் நாங்கள் குறைக்கவில்லை அல்லாஹ்தான் எங்களுக்குத் தண்ணீர் புகட்டினான் என்பதைத் தெரிந்து கொள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அந்தப் பெண் தன்னுடைய குடும்பத்தினரிடம் குறிப்பிட்ட நேரத்தை விடத் தாமதமாக வந்தபோது, பெண்ணே! நீ பிந்தி வரக்காரணமென்ன? என்று கேட்டதற்கு ஓர் ஆச்சரியமான விஷயம் நிகழ்ந்தது. இரண்டு மனிதர்கள் என்னைச் சந்தித்து மதம் மாறியவர் என்று கூறப்படக் கூடிய அந்த மனிதரிடம் என்னை அழைத்துச் சென்றனர். அவர் இப்படியெல்லாம் செய்தார் (என நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினாள்.)

அவள் தன் கையின் நடுவிரலையும், ஆட்காட்டி விரலையும் வானத்தின் பக்கம் உயர்த்தி, அல்லாஹ்வின் மீது ஆணையாக இந்த வானத்திற்கும் இந்த பூமிக்கும் இடையிலுள்ள சூனியக்காரர்களில் அவர் மிகச் சிறந்தவராக இருக்க வேண்டும். அல்லது அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர் இறைத்தூதராக இருக்க வேண்டும் என்று கூறினாள்.

பின்னர் முஸ்லிம்கள் அந்தப் பெண்ணைச் சுற்றி வாழ்ந்தவர்களை எதிர்த்துப் போராடினார்கள். அப்போது அந்தப் பெண் எந்தக் குடும்பத்தைச் சார்ந்துள்ளாளோ அந்தக் குடும்பத்தை அவர்கள் ஒன்றும் செய்யவில்லை.

ஒரு முறை அந்தப் பெண் தங்களின் கூட்டத்தாரிடம், இந்த முஸ்லிம்கள் வேண்டுமென்றே (உங்களிடம் போரிடாமல்) உங்களைவிட்டு விடுகிறார்கள் என்றே கருதுகிறேன். எனவே நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ள விரும்புகிறீர்களா? என்று கேட்டபோது அவர்கள் எல்லோரும் அவளுடைய பேச்சுக்குக் கட்டுப்பட்டு இஸ்லாத்தில் இணைந்தார்கள் என இம்ரான்(ரலி) கூறினார்கள்.

## குளிப்பதால் நோயோ, மரணமோ ஏற்படுமென குளிப்புக் கடமையானவர் பயந்தாலோ, குறைவாக இருக்கும் தண்ணீரில் உளூச் செய்தால் தாகத்தால் சிரமப்படுவோம் என்று அஞ்சினாலோ மண்ணில் தயம்மும் செய்யலாம்

ஹதீஸ் 345. (குளிப்புக் கடமையானவருக்குத்) தண்ணீர் கிடைக்காவிட்டாலும் அவர் தொழ வேண்டாமல்லவா? என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, இந்த விஷயத்தில் நாம் சலுகையளித்தால் குளிர் ஏற்பட்டால் கூட மக்கள் தயம்மும் செய்து தொழ ஆரம்பித்து விடுவார்கள் என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), அம்மார் இப்னு யாஸிர்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் (தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்தால் போதுமானது என்று) சொன்ன செய்தியை நீர் என்ன செய்வீர்? என்று அவர் கேட்டார். அதற்கு, (அம்மார்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் அச்செய்தியைக் கூறியபோது) அதை உமர்(ரலி) ஏற்றுக் கொள்ளவில்லை என்பது உமக்குத் தெரியாதா? என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கேட்டார்.

இதற்காகத்தான் தயம்மும் செய்வதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) வெறுத்திருக்கக் கூடுமோ? என ஷகீக் அவர்களிடம் நான் கேட்டதற்கு, அவர் ஆம்! எனப் பதிலளித்தார்கள் என அஃமஷ் கூறினார்கள்.

ஹதீஸ் 346. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அபூ மூஸ அல் அஷ்அரி(ரலி) ஆகியோருடன் நானும் இருந்தபோது அபூ மூஸா(ரலி) அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் அபூ அப்திர்ரஹ்மானே! குளிப்புக் கடமையானவருக்குத் தண்ணீர் கிடைக்காவிட்டால் அவர் என்ன செய்ய வேண்டும்? என்று கேட்டதற்கு, தண்ணீர் கிடைக்கும் வரை அவர் தொழ வேண்டியதில்லை என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறியபோது, நபி(ஸல்) அவர்கள் அம்மார் இப்னு யாஸிர்(ரலி) அவர்களிடம், தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்தால் போதுமானது என்று சொன்ன செய்தியை நீர் என்ன செய்வீர்? என அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, (அம்மார்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் அச்செய்தியைக் கூறிய போது) அதை உமர்(ரலி) ஏற்றுக் கொள்ளவில்லை என்பது உமக்குத் தெரியாதா? என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) பதில் கூறினார். அப்போது, அம்மார்(ரலி) அறிவிப்பதைவிட்டு விடுங்கள். தண்ணீர் கிடைக்காவிட்டால் தயம்மும் செய்து கொள்ளுங்கள் என்ற இந்த இறைவசனத்தை என்ன செய்வீர்கள்? என்று அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, இந்த விஷயத்தில் நாம் அவர்களுக்கு அனுமதி வழங்கிவிட்டால் யாருக்காவது தண்ணீர் கொஞ்சம் குளிராகத் தெரிந்தால் அதில் உளூச் செய்வதைவிட்டுவிட்டு தயம்மும் செய்வார் என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) தாம் சொல்லக்கூடிய இந்த வார்த்தையின் விபரீதத்தைப் புரியாமலே சொல்லிவிட்டார்.

இதற்காகத்தான் தயம்மும் செய்வதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) வெறுத்திருக்கக் கூடுமோ? என ஷகீம்டம் நான் கேட்டதற்கு அவர் ஆம்! என்றார் என அஃமஷ் கூறினார்கள்.

### ஒரு முறை (கைகளால் மண்ணில்) அடிப்பதே தயம்மும் எனப்படும்

ஹதீஸ் 347. நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) மற்றும் அபூ மூஸல் அஷ்அரி(ரலி) ஆகிய இருவருடன் அமர்ந்திருந்தேன். அபூ மூஸா(ரலி) அப்துல்லாஹ் இப்னுமஸ்வூத்(ரலி) அவர்களிடம் குளிப்புக் கடமையானவர் ஒரு மாத காலம் வரை தண்ணீரைப் பெறவில்லையானால் அவர் தயம்மும் செய்து தொழ வேண்டியதில்லையா? மாயிதா என்ற அத்தியாயத்தில் வரும், நீங்கள் தண்ணீரைப் பெறவில்லையானால் சுத்தமான மண்ணில் தயம்மும் செய்யுங்கள் என்ற வசனத்தை என்ன செய்வீர்கள்? என்று கேட்டதற்கு, இந்த விஷயத்தில் பொது அனுமதி கொடுக்கப்பட்டால், தண்ணீர் கொஞ்சம் குளிராக இருக்கும் போதெல்லாம் (மக்கள்) தண்ணீரில் உளூச் செய்வதைவிட்டுவிட்டு மண்ணில் தயம்மும் செய்து விடுவார்கள் என்று அப்துல்லா இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார். அப்போது இதற்காகத்தான் தயம்மும் செய்வதை நீங்கள் வெறுத்தீர்களா? என்று நான் கேட்டதற்கு ஆம்! என்று பதிலளித்தபோது, என்னை ஒரு வேலைக்காக நபி(ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தபோது எனக்குக் கிடைக்கவில்லை. எனவே பிராணிகள் மண்ணில் புரளுவது போன்று புரண்டேன். இச்செய்தியை நபி(ஸல்) அவர்களிடம் நான் சொன்னபோது நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கைகளால் பூமியில் ஓர் அடி அடித்து, பின்னர் இரண்டு கைகளையும் தட்டிவிட்டு, தங்களின் வலக்கரத்தால் இடது புறங்கையைத் தடவினார்கள். அல்லது தங்களின் இடக்கரத்தால் வலப்புறங்கையைத் தடவினார்கள். பின்னர் இரண்டு கைகளால் தங்களின் முகத்தைத் தடவிவிட்டு இப்படிச் செய்வது உமக்குப் போதுமானதாக இருந்தது என்று கூறினார்கள் என்ற செய்தியை உமர்(ரலி) அவர்களிடம், அம்மார் சொன்னதை நீங்கள் கேள்விப்படவில்லையா? என அபூ மூஸா(ரலி) கேட்டதற்கு, அம்மார் சொன்னதில் உமர்(ரலி) திருப்திப்படவில்லை என்பது உமக்குத் தெரியாதா? என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) திரும்பக் கேட்டார் என ஷகீக் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்: நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), அபூ மூஸா(ரலி) ஆகிய இருவருடன் அமர்ந்திருந்தபோது, அபூ மூஸா(ரலி), அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களை நோக்கி என்னையும் உங்களையும் நபி(ஸல்) அவர்கள் (ஒரு வேலைக்காக) அனுப்பியபோது எனக்குக் குளிப்புக் கடமையாகி மண்ணில் நான் புரண்டதும், பின்னர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து நடந்த விஷயத்தைச் சொன்னபோது நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தையும் இரண்டு முன் கைகளையும் ஒரு முறை தடவிவிட்டு இப்படி நீர் செய்திருந்தால் அது உமக்குப் போதுமானது என்று கூறினார்கள் என உமர்(ரலி) அவர்களிடம் அம்மார்(ரலி) கூறியதை நீர் கேள்விப்பட்டதில்லையா என அபூ மூஸா(ரலி) கேட்டார் என ஷகீக் வாயிலாக யஃலா கூறினார்கள்.

ஹதீஸ் 348. ஒருவர் ஜமாஅத்துடன் தொழாமல் தனியாக இருப்பத்தைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், நீர் ஏன் ஜமாஅத்துடன் தொழவில்லை? என்று கேட்டார்கள். அதற்கு அவர், நபி அவர்களே! எனக்குக் குளிப்புக் கடமையாகிவிட்டது. தண்ணீர் கிடைக்கவில்லை என்று கூறியபோது மண்ணில் தயம்மும் செய்யும்! அது உமக்குப் போதுமானது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இம்ரான் இப்னு ஹுஸைன் அல் குஸாயீ(ரலி) கூறினார்கள்.

# அத்தியாயம் - 8 - தொழுகை

## மிஃராஜின்போது தொழுகை எவ்வாறு கடமையாக்கப்பட்டது?

ஹதீஸ் 349. நான் மக்காவில் இருந்தபோது என்னுடைய வீட்டு முகடு திறக்கப்பட்டது. (அது வழியாக) ஜிப்ரீல் (அலை) இறங்கி என்னுடைய நெஞ்சைப் பிளந்தார்கள். அதை ஸம்ஸம் தண்ணீரால் கழுவினார்கள். பின்னர் ஈமான் எனும் இறைநம்பிக்கை மற்றும் ஞானத்தினால் நிரப்பப்பட்ட ஒரு தங்கத் தட்டைக் கொண்டு வந்து என்னுடைய நெஞ்சில் கொட்டிவிட்டு, அதை மூடி கையைப் பிடித்து முதல் வானத்திற்கு என்னை ஏற்றிச் சென்றார்கள். முதல் வானத்தை அடைந்ததும் அந்த வானத்தின் காவலரிடம் திற என்றார்கள். அவ்வானவர், யார் அவர்? என்று வினவியதற்கு நானே ஜிப்ரீல் என்று பதில் கூறினார். அதற்கு அவ்வானவர், உம்முடன் எவரேனும் இருக்கிறார்களா? எனக் கேட்டார். ஜிப்ரீல் ஆம்! என்னுடன் முஹம்மத் இருக்கிறார்கள் என்று கூறினார்கள். அதற்கு வானவர் அவர் அழைக்கப்பட்டிருக்கிறாரா? எனக் கேட்டார். ஜிப்ரீல் ஆம் என்றார்கள்.

வானவர், முதல் வானத்தைத் திறந்ததும் நாங்கள் அவ்வானத்தில் ஏறினோம். அப்போது அங்கு ஒருவர் அமர்ந்திருந்தார். அவரின் வலப்பக்கம் சில மனிதர்களும் இடது மக்களும் சில மனிதர்களும் காணப்பட்டார்கள். அவர் தங்களின் வலப்பக்கமுள்ள மனிதர்களைப் பார்த்தால் சிரிக்கிறார். தங்களின் இடப்பக்கமுள்ளவர்களைப் பார்த்தால் அழுகிறார்.

இந்நிலையிலுள்ள அவர் நல்ல நபியே! வருக! நல்ல மகனே வருக! என்றார். அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் இவர் யார்? என கேட்டேன். இவர் தாம் ஆதம். அவரின் வலப்பக்கமும் இடப்பக்கமும் உள்ளவர்கள் அவரின் சந்ததிகளிலுள்ள மனிதர்கள். வலப்பக்கமுள்ளவர்கள் சுவர்க்கவாசிகள் இடப்பக்கமுள்ளவர்கள் நரகவாசிகள். (எனவேதான்) அவர் தங்களின் வலப்பக்கம் பார்த்துச் சிரிக்கிறார் தங்களின் இடப்பக்கம் பார்த்து அழுகிறார் என்று கூறினார்கள்.

பின்னர், ஜிப்ரீல் (அலை) என்னை இரண்டாவது வானத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அந்த வானத்தில் காவலரிடம் திற எனக் கூறினார். முதல் வானத்தின் காவலர் கேட்ட கேள்விகளைப் போன்றே இவரும் கேட்டுவிட்டுத் திறந்தார். இந்த ஹதீஸை அறிவிக்கும் அனஸ் (ரலி), வானங்களில் ஆதம், இத்ரீஸ், மூஸா, ஈஸா, இப்ராஹீம் (அலை) ஆகிய நபிமார்களைக் கண்டதாக நபி (ஸல்) குறிப்பிட்டார்கள். முதல் வானத்தில் ஆதம் (அலை) அவர்களையும் ஆறாவது வானத்தில் இப்ராஹீம் (அலை) அவர்களையும் கண்டதாகக் குறிப்பிட்டார்கள். மற்ற நபிமார்களைக் கண்ட இடத்தைக் கூறவில்லை என்று கூறினார்.

ஜிப்ரீல் (அலை) என்னை அழைத்துக்கொண்டு இத்ரீஸ் (அலை) பக்கமாகச் சென்றபோது நல்ல நபியே! வருக! நல்ல சகோதரரே வருக! என இத்ரீஸ் (அலை) கூறியபோது இம்மனிதர் யார்? என நான் கேட்டதற்கு, இவர் இத்ரீஸ் (அலை) என ஜிப்ரீல் (அலை) பதில் கூறினார்கள்.

பின்னர் மூஸா (அலை) பக்கமாக நான் சென்றபோது நல்ல நபியே வருக! நல்ல சகோதரரே வருக! எனக் கூறினார்கள். இவர் யார்? என நான் கேட்டதற்கு, இவர்தான் மூஸா (அலை) என ஜிப்ரீல் கூறினார்கள்.

பின்னர் ஈஸா (அலை) பக்கமாகச் சென்றபோது நல்ல நபியே! வருக! நல்ல சகோதரரே வருக! எனக் கூறினார்கள். இவர் யார்? என நான் கேட்டதற்கு, இவர் ஈஸா (அலை) என ஜிப்ரீல் (அலை) கூறினார்கள்.

பின் இப்ராஹீம்(அலை) பக்கமாக நான் சென்றபோது நல்ல நபியே வருக! நல்ல மகனே வருக! என்றார்கள். இவர் யார்? என ஜிப்ரீல்(அலை) அவர்களிடம் நான் கேட்டதற்கு, இவர் இப்ராஹீம்(அலை) என்று கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அபூ ஹப்பா அல் அன்ஸாரி(ரலி) ஆகியோர் அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பில், பின்னர் நான் மேலே கொண்டு செல்லப்பட்டேன். நான் ஏணியில் ஏறிச் சென்றபோது எழுது கோல்களால் எழுதும் சப்தத்தை செவியுற்றேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். த (தொடர்ந்து)

அல்லாஹ் என்னுடைய உம்மத்தின் மீது ஐம்பது நேரத் தொழுகையைக் கடமையாக்கினான். (அதை ஏற்று) திரும்பி வந்து கொண்டிருந்தபோது, மூஸா(அலை) அவர்களின் பக்கமாகச் நான் சென்றபோது உங்கள் சமுதாயத்திற்கு அல்லாஹ் எதைக் கடமையாக்கினான்? என அவர்கள் கேட்டார்கள். ஐம்பது நேரத் தொழுகையைக் கடமையாக்கினான் என்றேன். நீங்கள் உங்களுடைய இறைவனிடம் திரும்பச் செல்லுங்கள். உங்கள் சமூகம் அதற்கு சக்தி பெறாது என மூஸா(அலை) கூறினார்கள். நான் திரும்பச் சென்றபோது அதில் கொஞ்சத்தை அல்லாஹ் குறைத்தான். (அதை ஏற்றுக் கொண்டு) நான் மூஸா(அலை) அவர்களிடம் வந்து கொஞ்சம் குறைத்துள்ளான் என்றேன். நீங்கள் உங்களுடைய இறைவனிடம் திரும்பச் செல்லுங்கள். உங்கள் சமூகம் அதற்கு(ம்) சக்தி பெறாது என்றார்கள். நான் திரும்பிச் சென்றேன். அதில் (இன்னும்) கொஞ்சம் குறைத்தான். நான் மூஸா(அலை) அவர்களிடம் வந்தேன். (இன்னும் கொஞ்சம் குறைத்தான் என்றேன்). நீங்கள் உங்களுடைய இறைவனிடம் திரும்பச் செல்லுங்கள். உங்களின் சமூகம் அதற்கு சக்தி பெறாது என்றார்கள். நாம் திரும்பச் சென்றபோது ஐந்து நேரத் தொழுகையைக் கடமையாக்குகிறேன். அது ஐம்பதிற்கு சமம் என்னுடைய சொல்லில் எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை என்று அல்லாஹ் கூறினான். நான் மூஸா(அலை) அவர்களிடம் வந்தபோது உங்களுடைய இறைவனிடம் சென்று இதையும் குறைக்குமாறு கூறுங்கள் என்றார்கள். இனிமேல் என்னுடைய இறைவனிடம் (குறைத்துக் கேட்பதற்கு) வெட்கப்படுகிறேன் என்று கூறினேன். பின்னர் ஜிப்ரீல்(அலை) என்னை ஸித்ரதுல் முன்தஹா என்னும் இடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அதைப் பல வண்ணங்கள் சூழ்ந்திருந்தன. அது என்ன என்பது எனக்குப் புலப்படவில்லை. பின்னர் சுவர்க்கத்தில் புகுத்தப்பட்டேன். அதில் முத்துக்களால் உள்ள கயிறுகளைப் பார்த்தேன். சுவர்க்கத்தின் மண் கஸ்தூரியாக இருந்தது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ தர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 350. அல்லாஹ் தொழுகையைக் கடமையாக்கியபோது ஊரிலிருந்தாலும் பயணத்திலிருந்தாலும் இரண்டிரண்டு ரக்அத்துகளாகக் கடமையாக்கினான், பயணத்தில் தொழுகை இரண்டு ரகஅத்தாகவே ஆக்கப்பட்டுப் பயணம் அல்லாத போதுள்ள தொழுகை அதிகரிக்கப்பட்டது என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## ஆடையணிந்து தொழுவதன் அவசியமும் ஒரே துணியை அணிந்து தொழுவதும்

ஹதீஸ் 351. இரண்டு பெருநாள்களிலும் மாதவிடாய்ப் பெண்களையும் வீட்டில் இருக்கிற கன்னிப் பெண்களையும் வெளியேற்றி (தொழும் திடலுக்குப்) அழைத்துவருமாறும், அப்பெண்கள்

வீட்டிலிருந்து வெளியாகி முஸ்லிம்கள் தொழுகிற இடத்திற்குச் சென்று அவர்களின் பிரச்சாரத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்றும், தொழும் இடத்தைவிட்டு மாதவிடாய்ப் பெண்கள் ஒதுங்கியிருக்க வேண்டும் என்றும் கட்டளையிடப்பட்டோம்.

நபி(ஸல்) அவர்களின் இந்தக் கட்டளையைக் கேட்டுக் கொண்டிருந்த பெண்களில் ஒருவர் நபி அவர்களே! எங்களில் எவருக்கேனும் அணிந்து கொள்வதற்கு மேலாடை இல்லையெனில் என்ன செய்வது? எனக் கேட்டதற்கு, அவளுடைய தோழி தன்னுடைய (உபரியான) மேலாடையை இவளுக்கு அணியக் கொடுக்கட்டும் என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள் என உம்மு அதிய்யா(ரலி) கூறினார்கள்.

## தொழுகையின்போது அணியும் வேஷ்டியை (மேல் முனைகளை)ப் பிடரியில் முடிச்சுப் போட்டுக் கொள்வது.

ஹதீஸ் 352. ஜாபிர்(ரலி) ஒரே வேஷ்டியை அணிந்து கொண்டு அதைத் தங்களின் பிடரியில் முடிச்சுப் போட்டவர்களாகத் தொழுதார்கள். அவர்களின் இதர ஆடைகளோ துணி தொங்க விடப்படும் கம்பில் தொங்கிக் கொண்டிருந்தன. இவர்களிடம் ஒருவர், ஒரே வேஷ்டியிலா தொழுகிறீர்கள்? என்று கேட்டதற்கு உன்னைப் போன்ற மடையவர்கள் என்னைப் பார்க்க வேண்டுமென்பதற்காகவே இவ்வாறு செய்தேன். நபி(ஸல்) அவர்களின் காலத்தில் எங்களில் யாருக்குத்தான் இரண்டு ஆடைகள் இருந்தன? என்று ஜாபிர்(ரலி) கேட்டார் என முஹம்மத் இப்னு அல் முன் கதிர் கூறினார்கள்.

ஹதீஸ் 353. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) ஒரே ஆடையை அணிந்தவர்களாகத் தொழுதுவிட்டு நபி(ஸல்) அவர்கள் ஒரே ஆடையை அணிந்து தொழுததைக் கண்டேன் என்று கூறினார்கள் என முஹம்மத் இப்னு அல் முன்கதிர் என்பவர் கூறினார்கள்.

## ஒரே ஆடையை (உடலில்) சுற்றிக் கொண்டு தொழுதல்

ஹதீஸ் 354. நபி(ஸல்) அவர்கள் ஒரே ஆடையை அணிந்து, அதன் இரண்டு ஓரத்தையும் இரண்டு தோள்களின் மீது மாற்றிப் போட்டு தொழுதார்கள் என உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 355. உம்மு ஸலமா(ரலி) அவர்களின் வீட்டில் நபி(ஸல்) அவர்கள் ஒரே ஆடையை அணிந்து, அதன் இரண்டு ஓரத்தையும் இரண்டு தோள்களின் மீது மாற்றிப் போட்டு தொழுதார்கள் என உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 356. உம்மு ஸலமா(ரலி) அவர்களின் வீட்டில் நபி(ஸல்) அவர்கள் ஒரே ஆடையை அணிந்து, அதன் இரண்டு ஓரத்தையும் இரண்டு தோள்களின் மீது மாற்றிப் போட்டு தொழுததை பார்த்திருக்கிறேன் என உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 357. மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டு, நான் நபி(ஸல்) அவர்களிடம் நான் சென்றிருந்தபோது அவர்கள் குளித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களின் மகள் ஃபாத்திமா(ரலி) நபி(ஸல்) அவர்களுக்குத் திரையிட்டார். நான் நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் சொன்னேன். அப்போது, யாரவர்? எனக் கேட்டார்கள். நான் அபூ தாலிபின் மகள் உம்முஹானி என்றேன். உடனே, உம்முஹானியே! வருக! என்றார்கள். நபி(ஸல்) குளித்து முடித்த பின்னர் ஒரே ஆடையைச் சுற்றியவர்களாக எட்டு ரக்அத்துகள் தொழுதார்கள். அவர்கள் தங்கள் தொழுகையை முடித்ததும் நபி அவர்களே! என்னுடைய சகோதரர் நான் அடைக்கலம் அளித்திருக்கும் ஹுபைராவின் மகனைக் கொலை செய்ய எண்ணியுள்ளார் என்று நான்

கூறியபோது உம்மு ஹானியே! நீ அடைக்கலம் அளித்திருப்பவருக்கு நாங்களும் அடைக்கலம் அளிக்கிறோம் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். இச்சம்பவம் முற்பகலில் நடந்தது என உம்மு ஹானி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 358. ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் ஒரே ஆடையை அணிந்து தொழுவதைப் பற்றிக் கேட்டதற்கு, உங்களில் ஒவ்வொருவருக்கும் இரண்டு ஆடைகள் இருக்கின்றனவா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## ஒரு ஆடை மட்டும் அணிந்து தொழும்போது அதைத் தோளின் மீது போட்டுக் கொள்ள வேண்டும்

ஹதீஸ் 359. உங்களில் ஒருவர் தன்னுடைய தோளின் மீது எதுவும் இல்லாதிருக்க ஓர் ஆடையை மட்டும் அணிந்து தொழ வேண்டாம் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 360. ஓர் ஆடையை மட்டும் அணிந்து தொழுபவர் அந்த ஆடையின் இரண்டு ஓரத்தையும் மாற்றி அணியட்டும் (அதாவது வலப்புற ஓரத்தை இடது தோளிலும் அணியட்டும்) என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## ஆடை இறுக்கமாக இருந்தால் என்ன செய்வது?

ஹதீஸ் 361. நாங்கள் ஓர் ஆடை மட்டும் அணிந்து தொழுவது பற்றி ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம் கேட்டதற்கு, நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்றிருந்தேன். ஒரு நாள் இரவு என்னுடைய ஒரு வேலைக்காக நபி(ஸல்) அவர்களை நான் சந்தித்தபோது அவர்கள் தொழுது கொண்டிருந்தார்கள். என் மீது ஒரே ஓர் ஆடை மட்டுமே இருந்தது. அதை நான் சேர்த்து நெருக்கமாகச் சுற்றிக் கொண்டு நபி(ஸல்) அவர்களின் அருகில் நின்று தொழுதேன். அவர்கள் தொழுகையை முடித்ததும், ஜாபிரே! என்ன இரவு நேரத்தில் வந்திருக்கிறீர்? என்று கேட்டார்கள். நான் வந்த நோக்கத்தை அவர்களிடம் சொன்னேன். சொல்லி முடித்ததும் இது என்ன? கை கால்கள் வெளியே தெரியாமல் (துணியால்) நெருக்கமாகச் சுற்றியிருப்பதைப் பார்க்கிறேன் என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான் இது இறுக்கமான ஆடை என்று நான் கூறியதும் நபி(ஸல்) அவர்கள், ஆடை விசாலமானதாக இருந்தால் அதன் ஓர் ஓரத்தை வலது தோளிலும் மற்றொரு ஒரத்தை இடது தோளிலுமாக அணிந்து கொள்ளுங்கள். ஆடை சிறிதாக இருந்தால் அதை இடுப்பில் அணிந்து கொள்ளுங்கள் என்றார்கள் என்று ஜாபிர்(ரலி) விடையளித்தார்கள் என ஸயீத் இப்னு அல்ஹாரிஸ் கூறினார்கள்.

ஹதீஸ் 362. சில ஆண்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் சிறுவர்களைப் போன்று தங்களின் (சிறிய) வேஷ்டியை தங்களின் கழுத்திலிருந்தே கட்டியிருந்தனர். (இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் ஆண்களின் பின்னால் தொழுது கொண்டிருந்த) பெண்களிடம், ஆண்கள் ஸுஜூதிலிருந்து எழுந்து அமரும் வரை நீங்கள் உங்களுடைய தலைகளை ஸுஜூதிலிருந்து உயர்த்த வேண்டாம் என்று கூறினார்கள் என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்கள்.

## ஷாம் (சிரியா) நாட்டுக் குளிர் ஆடையை அணிந்து தொழுதல்

ஹதீஸ் 363. நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்றபோது, முகீராவே! தண்ணீர்ப் பாத்திரத்தை எடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நான் அதை எடுத்துக் கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் நடந்து சென்று என் கண்ணுக்குத் தெரியாத மறைவான இடத்திற்குச் சென்று அவர்களின் இயற்கைத் தேவையை நிறைவேற்றினார்கள். அப்போது அவர்கள் ஷாம் (சிரியா) நாட்டுக் குளிர் ஆடையை அணிந்திருந்தார்கள். உளூச் செய்வதற்காக அதிலிருந்து தங்களின் கையை வெளியே எடுக்க முயன்றார்கள். அதன் கை இறுக்கமாக இருந்ததால் தங்களின் கையை அந்த ஆடையின் கீழ்ப்புறமாக வெளியே எடுத்தார்கள். நான் அவர்களுக்குத் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் தொழுகைக்குரிய உளூவைச் செய்தார்கள். தங்களின் இரண்டு காலுறைகளின் மீதும் (அவற்றைக் கழுவாமல்) ஈரக்கையால் மஸஹ் செய்து (தடவி) தொழுதார்கள் என முகீரா இப்னு ஷுஅபா(ரலி) கூறினார்கள்.

## தொழுகையின் போதும் மற்ற நேரங்களிலும் நிர்வாணமாக இருக்கக் கூடாது

ஹதீஸ் 364. நபி(ஸல்) அவர்கள், (சிறு வயதில்) கஅபதுல்லாஹ்வின் கட்டுமானப் பணி நடந்தபோது அதைக் கட்டுபவர்களோடு கற்களை எடுத்துச் சென்றார்கள். அப்போது அவர்கள் ஒரு வேஷ்டி அணிந்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் என் சகோதரனின் மகனே! உன் வேஷ்டியை அவிழ்த்து அதை உன் தோளின் மீது வைத்து அதன் மேல் கல்லை எடுத்துச் சுமந்து வரலாமே என்று நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அவ்வாறே நபி(ஸல்) வேஷ்டியை அவிழ்த்து அதைத் தங்களுடைய தோளின் மீது வைத்தார்கள். வைத்ததும் அவர்கள் மயக்கமுற்றுக் கீழே விழுந்தார்கள். அதற்கு பின்னர் நபி(ஸல்) அவர்கள் நிர்வாணமாக ஒருபோதும் காட்சியளிக்கவில்லை என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

## சட்டை, முழுக்கால் சட்டை, அரைக்கால் சட்டை, மேலங்கி போன்றவற்றை அணிந்து தொழுதல்

ஹதீஸ் 365 ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் ஓர் ஆடையை மட்டும் அணிந்து தொழுவது பற்றிக் கேட்டதற்கு உங்களில் எல்லோரும் இரண்டு ஆடைகளை வைத்திரக்கிறார்களா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

(உமர்(ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில்) பின்னர் ஒருவர் உமர்(ரலி) அவர்களிடம் இது விஷயமாக கேட்டதற்கு அல்லாஹ் உங்களுக்கு விசாலமாக்கியிருந்தால் நீங்களும் விசாலமாக்கிக் கொள்ளுங்கள் என்று கூறினார். சிலர் எல்லா ஆடைகளையும் அணிந்து தொழுதார்கள். வேறு சிலர் ஒரு வேஷ்டியும் ஒரு மேலாடையும் அணிந்து தொழுதார்கள். இன்னும் சிலர் ஒரு வேஷ்டியும் ஒரு மேலங்கியும் அணிந்து தொழுதார்கள். வேறு சிலர் முழுக்கால் சட்டை, மேல் போர்வையும் அணிந்து தொழுதார்கள். வேறு சிலர் முழுக்கால் சட்டையும் மேல் அங்கியும் அணிந்து சிலர் தொழுதார்கள். அரைக்கால் சட்டையும் மேல் அங்கியும் அணிந்து சிலர் தொழுதார்கள். அரைக்கால் சட்டையும் சட்டையும் அணிந்தவராகச் சிலர் தொழுதார்கள். இவ்வாறு பல விதமாகத் தொழலானார்கள். வேஷ்டியும் சட்டையும் என்பதற்குப் பதிலாக வேஷ்டியும் மேல் போர்வையும் என்று உமர்(ரலி) கூறியதாக நான் நினைக்கிறேன் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 366. ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிய விரும்புகிறவர் எந்த ஆடையை அணிய வேண்டும் என்று ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு சட்டை, முழுக்கால் சட்டை, தொப்பி, குங்குமச் சாயம் பட்ட ஆடை, சிவப்புச் சாயமிடப்பட்ட ஆடை ஆகியவற்றை அணியக் கூடாது. யாருக்காவது செருப்பு கிடைக்காமலிருந்தால் தோலினாலான காலுறை அணிந்து கொள்ளலாம்.

அந்தத் தோலுறையில் கரண்டைக்குக் கீழே இருக்கும் வகையில் மேல் பாகத்தை வெட்டி விட வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

### அவசியம் மறைக்க வேண்டிய பகுதிகள்

ஹதீஸ் 367. கையை வெளியே எடுக்க இயலாத அளவுக்கு இறுக்கமாக ஆடையைச் சுற்றிக் கொள்வதையும் ஒரே ஆடையை அணிந்திருக்கும்போது, மர்மஸ்தானம் தெரியும் படியாக இரண்டு முழங்கால்களையும் நாட்டி வைத்து உட்காருவதையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள் என அபூ ஸயீத் அல் குத்ரி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 368. முனாபதா முலாமஸா எனும் இருவகை வியாபாரங்களையும், கையை வெளியே எடுக்க இயலாத அளவுக்கு இறுக்கமாக ஆடையைச் சுற்றிக் கொள்வதையும், ஒரே ஆடையை அணிந்திருக்கும்போது, இரண்டு முட்டுக் கால்களையும் நாட்டி வைத்து உட்காருவதையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

(குறிப்பு: முனாபதா குறிப்பிட்ட ஒரு பொருளை எடுத்து எறியும்போது அது எந்தப் பொருளின் மீது படுகிறதோ அந்தப் பொருளை இவ்வளவு விலைக்குத் தருகிறேன் என்று கூறி விற்பதைக் குறிக்கும்.

முலாமஸா குவிக்கப்பட்ட பொருட்களைப் பிரித்துப் பார்க்கவிடாமல் அதைத் தொட்டுப் பார்க்க மட்டுமே அனுமதித்து விற்பதைக் குறிக்கும்.)

ஹதீஸ் 369. ஹஜ்ஜத்துல்வதாவிற்கு முந்திய ஆண்டு அபூ பக்ர்(ரலி) (அவர்களின் தலைமையில் நான் ஹஜ்ஜுக்குச் சென்றபோது) என்னை அறிவிப்புச் செய்பவர்களுடன் துல்ஹஜ் மாதம் பத்தாம் நாள் அனுப்பி வைத்தார்கள். நாங்கள் மினாவில் நின்று, அறிந்து கொள்ளுங்கள்! இந்த ஆண்டிற்குப் பிறகு எந்த முஷ்ரிக்கும் ஹஜ் செய்யக் கூடாது. நிர்வாணமாக யாரும் கஅபாவை வலம் வரக்கூடாது என்று அறிவித்தோம்.

பின்னர் நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களை அனுப்பி, திருக்குர்ஆனின் 9-வது அத்தியாயத்தில் ஒப்பந்த முறிவு பற்றிக் கூறப்படும் (முதல் இருபது வசனங்கள்) விஷயத்தை அறிவிக்குமாறு கட்டளையிட்டார்கள்.

எங்களுடன் அலீ(ரலி) அவர்களும் துல்ஹஜ் மாதம் பத்தாவது நாள் மினாவில் நின்று இந்த ஆண்டிற்குப் பிறகு இணைவைப்பாளர் எவரும் ஹஜ் செய்யக்கூடாது் கஅபாவை எவரும் நிர்வாணமாக வலம் வரக் கூடாது என்று கூறினார்கள்கள் அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

### மேலாடையின்றித் தொழுவது.

ஹதீஸ் 370. ஜாபிர்(ரலி) ஒரே வேஷ்டியை சுற்றிக் கொண்டு தொழுதார். அவரின் மேலாடை தனியாக வைக்கப்பட்டிருந்தது. தொழுது முடித்ததும் அப்துல்லாஹ்வின் தந்தையே! உங்களுடைய மேலாடையைத் தனியே வைத்துவிட்டுத் தொழுகிறீர்களா? என்று நாங்கள் கேட்டதற்கு, ஆம்! உங்களைப் போன்ற மடையர்கள் என்னைப் பார்க்க வேண்டுமென்பதை விரும்பினேன். நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு தொழுததை நான் பார்த்திருக்கிறேன் என்றார்கள் என முஹம்மத் இப்னு அல் முன்கதிர் கூறினார்கள்.

### தொடை மறைக்க வேண்டிய பகுதியா?

ஹதீஸ் 371. நபி(ஸல்) அவர்கள் கைபர் போருக்கு ஆயத்தமானார்கள். அங்கே நாங்கள் அதிகாலைத் தொழுகையை அதிகாலையின் வெண்மை தெரியும் முன்னர் தொழுதோம். பின்னர் நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் ஏறினார்கள். அபூ தல்ஹா(ரலி) அவர்களும் ஏறினார். அவர்களுக்குப் பின்னால் நான் ஏறி அமர்ந்தேன். நபி(ஸல்) அவர்கள் கைபர்

கணவாயினுள் சென்றார்கள். என்னுடைய மூட்டு நபி(ஸல்) அவர்களின் தொடையைத் தொட்டது. பின்னர் நபி(ஸல்) அவர்கள் தங்களின் தொடையிலிருந்த வேஷ்டியை நீக்கினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் தொடையின் வெண்மையை பார்த்தேன். நபி(ஸல்) அவர்கள் ஊருக்குள்ளே நுழைந்தபோது அல்லாஹ் பெரியவன்! கைபர் வீழ்ந்துவிட்டது! நிச்சயமாக நாம் ஒரு (எதிரிக்) கூட்டத்திடம் பகைமையுடன் இறங்கினால் எச்சரிக்கப்பட்ட அம்மக்களின் காலை நேரம் மோசமானதாம்விடும் என்று மும்முறை கூறினார்கள். அவ்வூர் மக்கள் தங்களின் வேலைகளுக்காக வெளியே வந்தபோது நபி(ஸல்) அவர்களைப் பார்த்ததும், முஹம்மதும் அவரின் பட்டாளமும் வந்துள்ளார்கள் என்று (பதட்டமாகக்) கூறினார்கள்.

நாங்கள் கைபரைப் பலவந்தமாகக் கைப்பற்றினோம். போர்க் கைதிகளெல்லாம் ஒன்று சேர்க்கப்பட்டபோது திஹ்யா என்ற நபித்தோழர் வந்து நபி அவர்களே! கைதிகளிலுள்ள ஒரு பெண்ணை எனக்குக் கொடுங்கள் என்று கேட்டார். நீர் போய் ஒரு பெண்ணை தேர்ந்தெடுத்துக் கொள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவர் சென்று ஸஃபிய்யா பின்த் ஹுயய் என்ற பெண்ணைத் தேர்ந்தெடுத்தார். அப்போது ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நபி அவர்களே! குறைளா மற்றும் நளீர் என்ற குலத்தின் தலைவி ஸஃபிய்யா பின்த் ஹுயய் என்ற பெண்ணையா திஹ்யாவிற்குக் கொடுத்துள்ளீர்கள். அந்தப் பெண் தங்களுக்கே தகுதியானவள் என்றார். அப்போது அப்பெண்ணையும் திஹ்யாவையும் அழைத்து வாரும் என்று நபி(ஸல்) அவர்கள் அவரிடம் கூறினார்கள். அப்பெண் அழைத்து வரப்பட்டார். அப்பெண் வந்ததும் நீ கைதிகளிலிருந்து வேறொரு பெண்ணைத் தேர்ந்தெடுத்துக் கொள் என்ற திஹ்யாவிடம் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நபி(ஸல்) அப்பெண்ணை விடுதலை செய்து பின்னர் அவரைத் திருமணம் செய்தார்கள்.

இந்த ஹதீஸை அறிவிக்கிற அனஸ்(ரலி) அவர்களிடம் ஸாபித் என்ற தோழர், அபூ ஹம்சாவே நபி(ஸல்) அப்பெண்ணுக்கு எவ்வளவு மஹர் கொடுத்தார்கள்? என்று கேட்டதற்கு அவரையே மஹராகக் கொடுத்தார்கள் அதாவது அவரை விடுதலை செய்து பின்னர் மணந்தார்கள் எனக் கூறினார்.

நாங்கள் (கைபரிலிருந்து) திரும்பி வரும் வழியில் ஸஃபிய்யா அவர்களை உம்மு ஸுலைம்(ரலி) மணப்பெண்ணாக ஆயத்தப்படுத்தி நபி(ஸல்) அவர்களிடம் இரவில் ஒப்படைத்தார். மறுநாள் காலை நபி(ஸல்) அவர்கள் புது மாப்பிள்ளையாகத் தோன்றினார்கள். அப்போது நபி(ஸல்) ஒரு விரிப்பை விரித்து உங்களில் யாரிடமாவது ஏதாவது (சாப்பிடுகிற) பொருள்கள் இருந்தால் கொண்டு வந்து இதில் போடுங்கள் என்று கூறினார்கள். உடனே ஒருவர் பேரீச்சம் பழத்தைக் கொண்டு வந்தார். வேறு ஒருவர் நெய்யைக் கொண்டு வந்தார். ஒருவர் மாவைக் கொண்டு வந்தார். (இப்படி எல்லோரும் கொண்டுவந்த) அவற்றையெல்லாம் சேர்த்து ஒன்றாகக் கலந்தார்கள். அது நபி(ஸல்) அவர்களின் வலீமா எனும் மணவிருந்தாக அமைந்தது என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## ஒரு பெண் எத்தனை ஆடைகளை அணிந்தவளாகத் தொழவேண்டும்

ஹதீஸ் 372. நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுகையைத் தொழுவார்கள். இறைநம்பிக்கையுள்ள பெண்கள் ஆடைகளால் தங்களின் உடல் முழுவதையும் சுற்றி மறைத்தவர்களாக அவர்களுடன் தொழுவார்கள். பின்னர் தங்களின் வீடுகளுக்குச் செல்வார்கள். அவர்கள் யார் யார் என்பதை (வெளிச்சமின்மையால்) யாரும் அறியமாட்டார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## வண்ணங்களுள்ள ஓர் ஆடையை அணிந்து தொழும்போது அந்த வண்ணங்கள் பார்வையை ஈர்த்தால் என்ன செய்வது?

ஹதீஸ் 373. நபி(ஸல்) அவர்கள் பல வண்ணங்கள் உள்ள ஓர் ஆடையை அணிந்து தொழுதபோது அந்த வண்ணங்களின் பக்கம் பார்வையைச் செலுத்தினார்கள். அவர்கள் தொழுகையை முடித்ததும், என்னுடைய இந்த ஆடையை எடுத்துச் சென்று அபூ ஜஹ்மிடம் கொடுத்துவிட்டு, அவரின் (வண்ணங்கள் இல்லாத) ஆடையைக் கொண்டு வாருங்கள். இந்த ஆடை சிறிது நேரத்திற்கு முன்னர் என்னுடைய தொழுகையைவிட்டு என் கவனத்தைத் திருப்பிவிட்டது என்று கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பின்படி, நான் தொழுகையில் நிற்கும்போது அந்த ஆடையின் வண்ணங்களைப் பார்ப்பதால் அது என்னைக் குழப்பி விடுமோ என அஞ்சினேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று உள்ளது.

## சிலுவையோ உருவப்படங்களோ பொறிக்கப்பட்ட துணியில் தொழுதால் தொழுகை பாழாம் விடுமா? அதிலிருந்து தடுக்கப்பட்டது எது?

ஹதீஸ் 374. ஆயிஷா(ரலி) அவர்களிடம் (உருவப் படங்கள் நிறைந்த) ஒரு திரை இருந்தது. அதனால் தங்களின் வீட்டின் ஓர் ஓரத்தை மறைத்திருந்தார்கள். இதைக் கண்ட நபி(ஸல்) ஆயிஷா(ரலி) அவர்களிடம் உன்னுடைய இந்தத் திரையை நம்மைவிட்டும் அகற்றி விடு. அதிலுள்ள படங்கள் நான் தொழுது கொண்டிருக்கும்போது (என் எண்ணத்தில்) குறுக்கிடுகின்றன என்று கூறினார்கள் என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## பட்டினால் நெய்யப்பட்ட மேல் அங்கியை அணிந்து தொழுதுவிட்டுப் பின்னர் அதைக் கழற்றி விடுதல்

ஹதீஸ் 375. நபி(ஸல்) அவர்களுக்குப் பட்டினாலான மேல் அங்கி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அதை அவர்கள் அணிந்து தொழுதார்கள். தொழுகையை முடித்த பின்னர் அந்த அங்கியில் வெறுப்புற்றவர்களைப் போன்று வேகமாக அதைக் கழற்றி எறிந்துவிட்டுப் பயபக்தியுடையவர்களுக்கு இந்த ஆடை உகந்ததன்று என்று கூறினார்கள் என உக்பா இப்னு ஆமிர்(ரலி) கூறினார்.

## சிவப்பு நிற ஆடையுடன் தொழுதல்.

ஹதீஸ் 376. தோலினால் செய்யப்பட்ட சிவப்பு நிற மேலங்கியை நபி(ஸல்) அவர்கள் அணிந்திருக்கப் பார்த்தேன். மேலும் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்த தண்ணீரை பிலால்(ரலி) எடுத்துச் செல்வதையும் அந்தத் தண்ணீரை எடுப்பதில் மனிதர்கள் போட்டி போட்டுக் கொள்வதையும் கண்டேன். அந்தத் தண்ணீரைப் பெற்றவர் அதைத் தங்களின் உடம்பில் தடவினார். அந்தத் தண்ணீர் பெறாதவர் தண்ணீரைப் பெற்ற தம் நண்பரின் கையில் உள்ள ஈரத்தைத் தொட்டு(த் தடவி)க் கொண்டார்.

பிலால்(ரலி) ஒரு கைத்தடியை எடுத்து நாட்டினார். நபி(ஸல்) அவர்கள் ஒரு சிவப்பு நிற மேல் அங்கியை அணிந்து ஆயத்தமாம் அந்தத் தடியை(த் தடுப்பாக) வைத்து இரண்டு ரக்அத் ஜமாஅத்தாகத் தொழுதார்கள். அந்தக் கம்பிற்கு அப்பால் மனிதர்களும் ஆடு மாடுகளும் குறுக்கே செல்வதைப் பார்த்தேன் என அபூ ஜுஹைஃபா(ரலி) கூறினார்கள்.

## மாடியிலும், மேடையிலும், மரப் பலகையிலும் தொழுதல்

ஹதீஸ் 377. ஸஹ்ல் இப்னு ஸஅதிடம் (நபி(ஸல்) அவர்களின் பிரசங்க) மேடை எதனால் செய்யப்பட்டது? என்று (மக்கள்) கேட்டார்கள். அவர், (இப்போது வாழும்) மனிதர்களில் இது பற்றி என்னை விட அதிகம் தெரிந்தவர்கள் எவருமில்லை. அது ஒரு வகைக் காட்டு மரத்தினால் செய்யப்பட்டது. இன்னாருடைய அடிமையான இன்னார்தாம் அதை நபி(ஸல்) அவர்களுக்குச் செய்து கொடுத்தார். அது செய்யப்பட்டு அதற்குரிய இடத்தில் வைக்கப்பட்டதும் அதன் மீது நபி(ஸல்) அவர்கள் நின்று கிப்லாவை முன்னோக்கி(த் தொழுகைக்குத்) தக்பீர் கூறினார்கள். அவர்களுக்குப் பின்னால் மக்களெல்லாம் நின்று தொழுதார்கள். நபி(ஸல்) அவர்கள் ஓதிவிட்டு ருகூவு செய்தார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் ருகூவு செய்தார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் தலையை உயர்த்திப் பின்னால் வந்து தரையில் ஸுஜுது செய்தார்கள். பின்னர் மிம்பரின் மீது ஏறி நின்றார்கள். பின்னர் ருகூவு செய்தார்கள். தலையை உயர்த்திப் பின்னால் வந்து தரையில் ஸஜ்தாச் செய்தார்கள். இதுதான் அந்த மேடையின் நிலையாகும் என்றார் என அபூ ஹாஸிம் கூறினார்கள்.

ஹதீஸ் 378. ஒருமுறை நபி(ஸல்) அவர்கள் குதிரையில் சென்று கொண்டிருந்தபோது கீழே விழுந்துவிட்டார்கள். இதனால் அவர்களுக்கு மூட்டுக்காலில் அல்லது புஜத்தில் முறிவு ஏறபட்டுவிட்டது. ஒரு மாத காலம் தங்களின் மனைவியரிடம் செல்வதில்லை எனச் சத்தியம் செய்தார்கள். பேரீச்ச மரத்தினால் செய்யப்பட்ட ஒரு பரணில் அமர்ந்தார்கள். அவர்களின் தோழர்கள் அவர்களை நோய் விசாரிப்பதற்காக வந்தபோது (அந்தப்பரணியில்) அமர்ந்தவர்களாகவே அவர்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். வந்தவர்கள் நின்று தொழுதார்கள். ஸலாம் கொடுத்த பின்னர் நபி(ஸல்) அவர்கள் பின்பற்றப்படுவதற்காகவே இமாம் ஏற்படுத்தப்பட்டுள்ளார். எனவே, அவர் தக்பீர் சொன்னால் நீங்களும் சொல்லுங்கள் அவர் ருகூவு செய்தால் நீங்களும் செய்யுங்கள் அவர் ஸஜ்தாச் செய்தால் நீங்களும் செய்யுங்கள் அவர் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள் எனக் கூறினார்கள். நாள்கள் சென்றதும் நபி(ஸல்) அவர்கள் அந்தப் பரணிலிருந்து இறங்கினார்கள். நபி அவர்களே! ஒரு மாத காலம் என்று நீங்கள் சத்தியம் செய்தீர்களே! எனத் தோழர்கள் கேட்டபோது இந்த மாதம் இருபத்தி ஒன்பது நாள்கள் தாம் என்று கூறினார்கள் என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## ஸுஜுது செய்யும்போது தொழுகையாளியின் ஆடை தன்னுடைய மனைவியின் மீது பட்டால் என்ன செய்வது?

ஹதீஸ் 379. நபி(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போது நான் அவர்களுக்கு எதிரில் படுத்திருந்தேன். அப்போது நான் மாதவிடாயுடன் இருந்தேன். நபி(ஸல்) அவர்கள் ஸுஜுது செய்யும்போது, சில வேளை அவர்களின் ஆடை என் மீது படும். அவர்கள் ஒரு விரிப்பின் மீது தொழுதார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

பாயில் தொழுதல்

ஹதீஸ் 380. என்னுடைய பாட்டியார் முலைக்கா, நபி(ஸல்) அவர்களுக்காக உணவைச் சமைத்து அவர்களை அழைத்தார். நபி(ஸல்) அவர்கள் சாப்பிட்ட பின்னர் எழுந்திருங்கள்! உங்களுக்கு நான் தொழுகை நடத்துகிறேன் என்று கூறினார்கள். நான் புழக்கத்தினால் கறுத்திருந்த எங்களின் ஒரு பாயை எடுத்து அதில் சிறிது தண்ணீர் தெளித்து விரித்தேன். அப்பாயில் நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றார்கள். அவர்களுக்குப் பின்னால் நானும் (எங்களுடன் வாழும்) அனாதையும் நின்றோம். எங்களுக்குப் பின்னால் பாட்டி (முலைக்கா) நிற்குமாறு வரிசைகளை ஒழுங்குபடுத்தினேன். நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு இரண்டு ரக்அத் தொழுகை நடத்திவிட்டுச் சென்றார்கள் என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## சிறு விரிப்பின் மீது தொழுதல்

ஹதீஸ் 381. நபி(ஸல்) அவர்கள் (சிறு) விரிப்பின் மீது தொழுதார்கள் என மைமூனா(ரலி) கூறினார்கள்.

## ஜமுக்காளத்தின் மீது தொழுதல்

ஹதீஸ் 382. நான் நபி(ஸல்) அவர்களுக்கு முன்பாகத் தூங்கிக் கொண்டிருப்பேன். என்னுடைய இரண்டு கால்களும் அவர்களை முன்னோக்கியிருக்கும். அவர்கள் ஸுஜுது செய்யும்போது என்னை விரலால் குத்துவார்கள். அப்போது நான் என்னுடைய இரண்டு கால்களையும் மடக்கிக் கொள்வேன். அவர்கள் நிலைக்கு வந்துவிட்டால் இரண்டு கால்களையும் (மறுபடியும்) நீட்டிக் கொள்வேன். அந்த நாள்களில் (எங்களின்) வீடுகளில் விளக்குகள் கிடையாது என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 383. நபி(ஸல்) அவர்கள் என்னுடைய படுக்கை விரிப்பில் தொழுதபோது அவர்களுக்கும் கிப்லாவுக்குமிடையில் குறுக்கே ஜனாஸா கிடப்பது போல் நான் கிடப்பேன் என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 384. நபி(ஸல்) அவர்கள் தங்களின் படுக்கை விரிப்பில் தொழும்போது அவர்களுக்கும் கிப்லாவுக்குமிடையில் குறுக்கே ஜனாஸா கிடப்பது போல் ஆயிஷா(ரலி) கிடப்பார்கள் என உர்வா கூறினார்கள்.

## கடுமையான வெப்ப காலத்தில் துணியின் மீது ஸுஜுது செய்தல்

ஹதீஸ் 385. நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழும்போது எங்களில் சிலர் கடுமையான வெயிலின் காரணமாக ஆடையின் ஒரு பகுதியை ஸுஜுது செய்யுமிடத்தில் வைத்துக் கொள்வோம் என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

## செருப்பணிந்து தொழுதல்

ஹதீஸ் 386. நான் நபி(ஸல்) அவர்கள் செருப்பணிந்து தொழுதிருக்கிறார்களா? என்று அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் நான் கேட்டதற்கு, ஆம் என்றார்கள் என ஸயீது இப்னு யஸீத் அல் அஸ்தி கூறினார்கள்.

## காலுறைகள் அணிந்து தொழுதல்

ஹதீஸ் 387. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) சிறுநீர் கழித்தப் பின்னர் உளூச் செய்து, தம் இரண்டு காலுறையின் மீது மஸஹ் செய்துவிட்டு எழுந்து தொழுததைக் கண்டேன். இது பற்றி ஜரீர்(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்வதை பார்த்திருக்கிறேன் என்று கூறினார்கள் என ஹம்மாம் இப்னு ஹாரிஸ் கூறினார்கள்.

காலுறைகளின் மீது மஸஹ் செய்து தொழலாம் என்ற கருத்திலுள்ள அறிஞர்களுக்கு ஜரீர்(ரலி) அவர்களின் இச்செயல் மிகச் சிறந்த சான்றாகும். காரணம் ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி), நபி(ஸல்) அவர்களின் காலத்தில் கடைசியாக இஸ்லாத்தைத் தழுவியவராவார் என்று இப்ராஹீம் குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 388. நான் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்வதற்காக தண்ணீர் ஊற்றினேன். அவர்கள் உளூச் செய்யும்போது (கால்களைக் கழுவாமல்) காலுறைகளின் மீது மஸஹ் செய்து தொழுதார்கள் என முகீரா இப்னு ஷுஅபா(ரலி) கூறினார்கள்.

## தொழுகையில் ஸுஜுதை முழுமையாகச் செய்யாவிட்டால் ஏற்படும் விளைவு

ஹதீஸ் 389. தங்களின் தொழுகையில் ருகூவு ஸுஜுதைச் சரியாகச் செய்யாத ஒருவரைப் பார்த்த ஹுதைஃபா (ரலி) அவர் தொழுகையை முடித்த பின்னர், நீர் தொழவில்லை இந்த நிலையில் நீர் மரணித்தால் நபி (ஸல்) அவர்களின் ஸுன்னத்தின் மீது மரணித்தவராக மாட்டீர் என்று கூறினார் என அபூ வாயில் கூறினார்கள்.

## ஸுஜுது செய்யும்போது தன் இரண்டு புஜத்தையும் விரித்து விலாவோடு (கைகள்) ஒட்டாமல் வைத்தல்

ஹதீஸ் 390. நபி (ஸல்) அவர்கள் தொழுகையில் (ஸுஜுது செய்யும் போது) தங்களின் இரண்டு அக்குளின் வெண்மை தெரியும் அளவுக்குத் தங்களின் இரண்டு கைகளையும் விரித்து வைப்பார்கள் என மாலிக் இப்னு புஹைனா (ரலி) கூறினார்கள்.

## கிப்லாவை முன்னோக்குவதன் சிறப்பு

(ஸஜ்தாவின் போது) தன்னுடைய இரண்டு கால்களின் விரல்களால் கிப்லாவை முன்னோக்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்களின் குறிப்பிட்டார்கள் என அபூ ஹுமைத், குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 391. நம்முடைய தொழுகையைத் தொழுது, நம்முடைய கிப்லாவை முன்னோக்கி, நாம் அறுப்பதைப் புசித்து வருகிறவர்தாம் முஸ்லிம். அப்படிப்பட்டவர் அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் பொறுப்பில் இருக்கிறார். எனவே அவரின் பொறுப்பு விஷயத்தில் அல்லாஹ்வின் ஒப்பந்தத்தை முறிக்காதீர்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 392. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாருமில்லை என்று மக்கள் (சான்று) கூறும் வரை அவர்களோடு போராட வேண்டுமென்று நான் ஏவப்பட்டுள்ளேன். அந்த (லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற) கலிமாவை அவர்கள் கூறி, நம்முடைய தொழுகையைத் தொழுது, நம்முடைய கிப்லாவை முன்னோக்கி, நாம் அறுப்பது போல் அறுத்து வருவார்களானால், தக்க காரணமின்றி அவர்களின் உயிர், பொருளுக்குச் சேதம் ஏற்படுத்துவது நமக்கு விலக்கப்பட்டுள்ளது. அவர்களின் விசாரணை அல்லாஹ்வின் நாட்டத்தைப் பொறுத்தாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ் (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 393. ஹம்ஸாவின் தந்தையே! ஓர் அடியானுடைய உயிருக்கும் பொருளுக்கும் சேதம் ஏற்படுத்துவதைத் தடை செய்வது எது? எனநான் அனஸ் (ரலி) அவர்களிடம் கேட்டதற்கு, வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று சான்று கூறி, நம்முடைய கிப்லாவை முன்னோக்கி, நம்முடைய தொழுகையைத் தொழுது, நாம் அறுத்தவற்றை சாப்பிட்டு வருகிறவர் முஸ்லிம். ஒவ்வொரு முஸ்லிமுக்கும் உரிய உரிமைகள் அவருக்கும் உண்டு. ஒவ்வொரு முஸ்லிமுக்கும் (குற்றம் புரிவதால்) என்ன தண்டனை உண்டோ அது அவருக்கும் உண்டு என்று அனஸ் (ரலி) கூறினார் என மைமூன் இப்னு ஸியாஹ் கூறினார்கள்.

## மதீனா, ஷாம் (சிரியா) வாசிகள் மற்றும் கிழக்கில் வசிப்பவர்களின் கிப்லா

ஹதீஸ் 394. நீங்கள் மலம் கழிக்கச் சென்றால் கிப்லாவை முன்பக்கமாகவோ பின்பக்கமோ ஆக்கி உட்காராதீர்கள். கிழக்குத் திசையையோ மேற்குத் திசையையோ முன்னோக்குங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ அய்யூபுல் அன்சாரி (ரலி) அறிவித்துவிட்டுத் தொடர்ந்து, நாங்கள் ஷாம் நாட்டிற்குச் சென்றிருந்தபோது அங்கே கிப்லாவுக்கு எதிரில் அமரும் விதத்தில் கழிப்பறைகள் கட்டப்பட்டிருந்ததைக் கண்டோம். அதைவிட்டு நாங்கள் திரும்பி அமர்ந்து அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் தேடினோம் எனக் கூறினார்.

## இப்ராஹீம் நின்று தொழுத இடத்தைத் தொழும் இடமாக ஆக்கிக் கொள்ளுங்கள் (திருக்குர்ஆன் 02:125) என்ற இறைவசனம்.

ஹதீஸ் 395. உம்ராவிற்காக (இஹ்ராம் அணிந்து) வந்த ஒருவர் கஅபாவைச் சுற்றி வந்தார். ஸஃபா, மர்வாவிற்கிடையில் ஸயீ செய்யவில்லை. இவர் தன்னுடைய மனைவியிடம் உடலுறவு கொள்ளலாமா? என இப்னு உமர்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டதற்கு, நபி(ஸல்) அவர்கள் மக்கா வந்தபோது ஏழு முறை கஅபாவை வலம்வந்தார்கள். மகாம் இப்ராஹீம் எனும் இடத்தில் இரண்டு ரகஅத்துகள் தொழுதார்கள். ஸஃபா, மர்வாவிற்கிடையில் ஸயீ செய்தார்கள். உங்களுக்கு நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறது என இப்னு உமர்(ரலி) கூறினார் என அம்ர் இப்னு தீனார் கூறினார்கள்.

ஹதீஸ் 396. ஜாபிர் இப்னு அப்தில்லா(ரலி) அவர்களிடம் இது பற்றிக் நாங்கள் கேட்டதற்கு, ஸஃபா, மர்வாவிற்கிடையில் ஸயீ செய்து முடிக்கும் வரை தங்களின் மனைவியை நெருங்கக் கூடாது என்று கூறினார்கள் என அம்ர் இப்னு தினார் என்பவர் கூறினார்கள்.

ஹதீஸ் 397. சிலர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் வந்து, இதோ நபி கஅபாவில் நுழைந்துவிட்டார்கள் என்று கூறினார்கள். இப்னு உமர் முன்னோக்கி வந்தபோது நபி(ஸல்) அவர்கள் வெளியே வந்துவிட்டார்கள். அப்போது பிலால்(ரலி) இரண்டு வாசல்களுக்கிடையில் நின்றிருந்தார். கஅபாவின் உள்ளே நபி(ஸல்) அவர்கள் தொழுதார்களா? என அவரிடம் கேட்டதற்கு, ஆம் என்று சொல்லிவிட்டு, நீர் கஅபாவின் உள்ளே நுழையும்போது இடப்பக்கம் இருக்கிற இரண்டு தூண்களுக்கிடையில் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் வெளியே வந்து கஅபாவின் வாசலுக்கு முன்பாக நின்று இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் என்று பிலால்(ரலி) கூறினார் என முஜாஹித் கூறினார்கள்.

ஹதீஸ் 398. நபி(ஸல்) அவர்கள் கஅபாவின் உள்ளே நுழைந்ததும் அதன் எல்லா ஓரங்களிலும் நின்று பிரார்த்தித்தார்கள். அதிலிருந்து வெளியாகும் வரை அவர்கள் தொழவில்லை. வெளியே வந்தபின்பு கஅபாவின் முன்பாக நின்று இரண்டு ரக்அத்துகள் தொழுதுவிட்டு இதுதான் கிப்லா என்று கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

## எங்கிருந்தாலும் (தொழுகையில்) கிப்லாவையே முன்னோக்க வேண்டும்

ஹதீஸ் 399. நபி(ஸல்) அவர்கள் பதினாறு அல்லது பதினேழு மாதங்கள் பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுதார்கள். நபி(ஸல்) அவர்கள் கஅபாவை நோக்கித் தொழ வேண்டுமென ஆசைப்பட்டார்கள். அப்போது நீர் வானத்தை நோக்கி உம்முடைய முகத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டிருப்பதை அறிவோம் (திருக்குர்ஆன் 02:144) என்ற வசனத்தை அல்லாஹ் அருளினான். உடனே கஅபாவை முன்னோக்கித் தொழ ஆரம்பித்தார்கள். (யூதர்களின் சில அறிவீனர்கள்) அவர்கள் முன்னர் நோக்கியிருந்த கிப்லாவைவிட்டுத் திருப்பிவிட்டது எது? என்று கேட்கின்றனர். ம்ழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியன. தான் நாடியோரை அவன் நேர்வழியில் நடத்துவான் என்று (நபியே!) கூறும்! (திருக்குர்ஆன் 02:142) என்ற வசனம் அருளப்பட்டதும் ஒருவர் நபி(ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டு வெளியே வந்து அன்ஸாரிக் கூட்டத்தாரிடம் சென்றார். அவர்கள் பைத்துல் முகத்தஸை நோக்கி அஸர் தொழுது கொண்டிருந்தபோது, நான் நபி(ஸல்) அவர்களுடன் தொழுதேன். அவர்கள் கஅபாவை முன்னோக்கித் தொழுதார்கள் என்று நான் சாட்சி சொல்கிறேன் என்று அவர் அவர்களிடம் கூறினார். உடனே தொழுது கொண்டிருந்தவர்கள் கஅபாவை முன்னோக்கித் திரும்பினார்கள் என பராஉ இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 400. நபி(ஸல்) அவர்கள் தங்களுடைய வாகனத்தின் மீது அமர்ந்து, அது செல்கிற திசையை நோக்கித் தொழுபவர்களாக இருந்தார்கள். கடமையான தொழுகையைத் தொழ விரும்பினால் வாகனத்திலிருந்து கீழே இறங்கி கிப்லாவை முன்னோக்கித் தொழுவார்கள் என ஜாபிர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 401. நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை தொழுதார்கள் - கூட்டினார்களா குறைத்தார்களா என்பது எனக்குத் தெரியாது என இப்ராஹீம் கூறுகிறார் - தொழுகையை முடித்து ஸலாம் கூறியதும் நபி அவர்களே! தொழுகையில் ஏதாவது மாற்றம் ஏற்பட்டுள்ளதா? என்று கேட்கப்பட்டது. அது என்ன (அப்படியென்றால் என்ன)? என்று நபி(ஸல்) கேட்டதும், நீங்கள் இப்படியல்லவா தொழுதீர்கள் என அங்கிருந்தவர்கள் கூறினார்கள். (நீட்டியிருந்த) தங்களின் கால்களை நபி(ஸல்) மடக்கி, கிப்லாவை முன்னோக்கி இரண்டு ஸஜ்தாக்கள் செய்துவிட்டுப் பின்னர் ஸலாம் கூறினார்கள். அதன் பின்னர் அவர்கள் எங்களை முன்னோக்கித் திரும்பியமர்ந்து, தொழுகையில் ஏதாவது மாற்றங்கள் செய்யப்படுமானால் அதை உங்களுக்குத் தெரிவித்து விடுவேன். என்றாலும் நானும் உங்களைப் போன்ற மனிதன்தான். நீங்கள் மறந்து விடுவதைப் போன்று நானும் மறந்து விடுவேன். நான் (எதையாவது) மறந்துவிட்டால் எனக்கு ஞாபகப்படுத்துங்கள். உங்களில் ஒருவர் தங்களின் தொழுகையில் சந்தேகித்தால் உறுதியானதை அவர் தீர்மானிக்கட்டும். அத்தீர்மானத்தின் அடிப்படையில் தொழுகையைப் பூர்த்தி செய்து ஸலாம் சொல்லிய பின்னர் இரண்டு ஸஜ்தாக்கள் செய்யட்டும் என்று கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

**கிப்லாவை முன்னோக்குவதன் அவசியமும் மறதியாகக் கிப்லா அல்லாத திசை நோக்கித் தொழுதவர், தான் தொழுத தொழுகையை மீண்டும் தொழ வேண்டியதில்லை என்பதும்.**

ஹதீஸ் 402 மூன்று விஷயங்களில் இறைவன் என் கருத்துக்கேற்ப வஹி அருளியுள்ளான். அவை, நபி அவர்களே! மகாமு இப்ராஹீம் என்ற இடத்தில் தொழுமிடத்தை நாம் ஆக்கிக் கொள்ளலாமே! என்று நான் கூறியபோது, மகாமு இப்ராஹீமில் நீங்கள் தொழுமிடத்தை ஆக்கிக் கொள்ளுங்கள்! (திருக்குர்ஆன் 02:125) என்ற வசனம் அருளப்பட்டது. நபி அவர்களே! தங்களின் மனைவியருடன் உரையாட வருபவர்களில் நல்லவர்களும் கெட்டவர்களும் உள்ளனர். எனவே தங்களை அன்னிய ஆண்களிடமிருந்து மறைத்துக் கொள்ளுமாறு தங்களின் மனைவியருக்கு தாங்கள் உத்திரவிடலாமே! என்றேன். அப்போது ஹிஜாப் (பர்தா) பற்றிய வசனம் அருளப்பட்டது. நபி(ஸல்) அவர்களின் மனைவியர் அனைவரும் சேர்ந்து நபி(ஸல்) அவர்களுக்கு ஆத்திரமூட்டும் விதமாக நடந்தபோது நபி(ஸல்) அவர்கள் உங்களை விவாகரத்துச் செய்தால் உங்களை விடச் சிறந்த மனைவியரை உங்களுக்குப் பதிலாக இறைவன் அவர்களுக்கு ஆக்கிவிடுவான் என்று கூறினேன். நான் கூறியவாறே (திருக்குர்ஆன் 66:05) வசனம் அருளப்பட்டது என உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 403. குபா பள்ளி வாசலில் மக்கள் ஸுபுஹ் தொழுது கொண்டிருந்தபோது அவர்களிடம் ஒருவர் வந்து, சென்ற இரவில் கஅபாவை முன்னோக்கித் தொழுமாறு நபி(ஸல்) அவர்களுக்கு இறைவசனம் அருளப்பட்டது என்று கூறினார். (பைத்துல் முகத்தஸ் இருக்கும் திசையான) ஷாம் நாட்டை நோக்கித் தொழுது கொண்டிருந்த அவர்கள் அப்படியே கஅபாவை நோக்கித் திரும்பினார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 404. நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) லுஹர் தொழுகையை ஐந்து ரக்அத்களாகத் தொழுதார்கள். அப்போது, நபி அவர்களே! தொழுகை(யின் ரக்அத்கள்) அதிகமாக்கப்பட்டுவிட்டனவா? என்று நபித்தோழர்கள் கேட்டதற்கு, ஏன் இவ்வாறு (வினவுகிறீர்கள்?) என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நீங்கள் ஐந்து ரக்அத்கள்

தொழுதுவிட்டீர்கள் என்று நபித்தோழர்கள் கூறினார்கள். (மக்களை நோக்கி அமர்ந்திருந்த) நபி(ஸல்) அவர்கள் தங்களின் கால்களை மடக்கி (கிப்லாவை நோக்கி) இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள் என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

பள்ளிவாசலில் (உமிழப்பட்ட) எச்சிலைக் கையால் சுரண்டி அப்புறப்படுத்துவது.

ஹதீஸ் 405 அனஸ்(ரலி) கூறினார்கள்.

கிப்லாத் திசையில் (உள்ள சுவற்றில்) நபி(ஸல்) அவர்கள் சளியைக் கண்டார்கள். இது அவர்களுக்கு மனவருத்தத்தை ஏற்படுத்தியது. அதன் பிரதிபலிப்பு அவர்களின் முகத்திலும் காணப்பட்டது. அவர்கள் எழுந்து தம் கையால் அதைச் சுரண்டினார்கள். நிச்சயமாக உங்களில் ஒருவர் தொழுகையில் நிற்கும்போது அவர் தம் இறைவனிடம் அந்தரங்கமாக உரையாடுகிறார். அவருக்கும் கிப்லாவுக்கும் இடையே அவரின் இறைவன் இருக்கிறான். எனவே எவரும் கிப்லாத் திசை நோக்கி உமிழக் கூடாது! தங்களின் இடப்புறமோ, தம் பாதங்களுக்கு அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று நபி(ஸல்) கூறிவிட்டுத் தம் மேலங்கியின் ஒரு பகுதியைப் பிடித்து அதில் உமிழ்ந்து அதன் ஒரு பகுதியை மறுபகுதியுடன் கசக்கிவிட்டு அல்லது இவ்வாறு அவர் செய்து கொள்ளட்டும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 406 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கிப்லாத் திசையில் உள்ள சுவற்றில் எச்சிலைக் கண்டார்கள். அதைச் சுரண்டிவிட்டு மக்களை நோக்கி உங்களில் ஒருவர் தொழுது கொண்டிருக்கும்போது தம் முகத்துக்கு எதிராக உமிழலாகாது் ஏனெனில் அவர் தொழும்போது இறைவன் அவருக்கு முன்னிலையில் இருக்கிறான் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 407 ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கிப்லாத் திசையில் உள்ள சுவற்றில் எச்சிலையோ சளியையோ கண்டுவிட்டு அதைச் சுரண்டி (அப்புறப்படுத்தி)னார்கள்.

பள்ளியில் உமிழப் பட்ட சளியைச் சிறு கற்களால் சுரண்டி அப்புறப்படுத்துதல்.

ஹதீஸ் 408 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளி வாசலின் சுவற்றில் (உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுரண்டினார்கள். பின்னர் உங்களில் எவருக்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துக்கு நேராகவோ தம் வலப் புறமாகவோ உமிழலாகாது் தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

ஹதீஸ் 409 அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளி வாசலின் சுவற்றில் (உமிழப் பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுரண்டினார்கள். பின்னர் உங்களில் எவருக்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துக்கு நேராகவோ தம் வலப்புறமாகவோ உமிழலாகாது. தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

## தொழும்போது வலப்புறம் துப்பலாகாது.

ஹதீஸ் 410 அபூ ஸயீத் அல்குத்ரி(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளி வாசலின் சுவற்றில் (உமிழப் பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுரண்டினார்கள். பின்னர் உங்களில் எவருக்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துக்கு நேராகவோ தம் வலப் புறமாகவோ உமிழலாகாது் தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

ஹதீஸ் 411 அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலின் சுவற்றில் (உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுரண்டினார்கள். பின்னர் உங்களில் எவருக்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துககு நேராகவோ தம் வலப் புறமாகவோ உமிழலாகாது் தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

ஹதீஸ் 412 தமக்கு முன் புறமோ தம் வலப் புறமோ உங்களில் எவரும் உமிழலாகாது. எனினும் தம் இடப்புறமோ தம் காலுக்கடியிலோ உமிழலாம். என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## இடப் புறமோ இடது காலுக்கடியிலோ உமிழலாம்.

ஹதீஸ் 413 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நிச்சயமாக ஒரு இறைநம்பிக்கையாளர் தொழுகையில் இருக்கும்போது தம் இறைவனிடம் அந்தரங்கமாக உரையாடுகிறார். எனவே தங்களின் முன்புறமோ வலப்புறமோ அவர் உமிழ வேண்டாம். எனினும் இடப்புறமோ தம் காலுக்கடியிலோ உமிழலாம். என அனஸ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 414 அபூ ஸயீத் அல்குத்ரி(ரலி) கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலின் சுவற்றில் (உமிழப்பட்டிருந்த) சளியைக் கண்டு சிறு கல்லை எடுத்து அதைச் சுரண்டினார்கள். பின்னர் உங்களில் எவருக்கேனும் சளி உமிழ வேண்டிய அவசியம் ஏற்பட்டால் தம் முகத்துக்கு நேராகவோ தம் வலப்புறமாகவோ உமிழலாகாது. தம் இடப்புறமோ தம் இடது பாதத்தின் அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று கூறினார்கள்.

## பள்ளிவாசலில் உமிழ்ந்தற்குரிய பரிகாரம்.

ஹதீஸ் 415 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பள்ளிவசாலில் உமிழ்வது குற்றமாகும். அதை மண்ணுக்கடியில் மறைப்பது அதற்கரிய பரிகாரமாகும். என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

## பள்ளிவாசலில் சளியை மண்ணுக்கடியில் மறைத்தல்.

ஹதீஸ் 416 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் உங்களில் ஒருவர் தொழுகைக்காக நிற்கும்போது தமக்கு முன்புறம் உமிழலாகாது. ஏனெனில் அவர் தொழுது கொண்டிருக்கும் வரை தம் இறைவனிடம் அந்தரங்கமாக உரையாடிக் கொண்டிருக்கிறார். (அது போல்) தம் வலப்புறமும் உமிழலாகாது. ஏனெனில் அவரின் வலப்புறத்தில் வானவர் ஒருவர் இருக்கிறார். தம் இடப்புறம் உமிழட்டும். அல்லது தம் பாதங்களுக்கடியில் உமிழ்ந்து அதை மண்ணுக்கடியில் மறைக்கட்டும். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## ஒருவருக்கு எச்சில் மிகைத்து விடும்போது தம் ஆடையின் ஒரு பகுதியில் உமிழ்ந்து கொள்ளலாம்.

ஹதீஸ் 417 அனஸ் (ரலி) கூறினார்கள்.

கிப்லாத் திசையில் (உள்ள சுவற்றில்) நபி(ஸல்) அவர்கள் சளியைக் கண்டார்கள். அவர்களின் முகத்தில் அதிருப்தி காணப்பட்டது. அவர்கள் எழுந்து தம் கையால் அதைச் சுரண்டினார்கள். நிச்சயமாக உங்களில் ஒருவர் தொழுகையில் நிற்கும்போது அவர் தம் இறைவனிடம் அந்தரங்கமாக உரையாடுகிறார். அவருக்கும் கிப்லாவுக்கும் இடையே அவரின் இறைவன் இருக்கிறான். எனவே எவரும் கிப்லாத் திசை நோக்கி உமிழக் கூடாது! தங்களின் இடப்புறமோ தம் பாதங்களுக்கு அடியிலோ அவர் உமிழ்ந்து கொள்ளட்டும்! என்று நபி(ஸல்) கூறிவிட்டுத் தம் மேலங்கியின் ஒரு பகுதியைப் பிடித்து அதில் உமிழ்ந்து அதன் ஒரு பகுதியை மறு பகுதியுடன் கசக்கிவிட்டு அல்லது இவ்வாறு அவர் செய்து கொள்ளட்டும் என்று கூறினார்கள்.

## தொழுகையைக் குறைவின்றிப் பூர்த்தி செய்யுமாறு இமாம் மக்களுக்குப் போதிப்பதும் கிப்லாவை நினைவுபடுத்துவதும்.

ஹதீஸ் 418 என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் கிப்லாத் திசையில் மட்டும் பார்க்கிறேன் என்று நீங்கள் கருதுகிறீர்களா? அல்லாஹ்வின் மீது ஆணையாக நீங்கள் அடக்கமாக இருப்பதும் உங்களின் ருகூவும் எனக்குத் ரெியாமலிருப்பதில்லை. நிச்சயமாக என்னுடைய முதுகுக்குப் பின் புறம் உங்களை நான் பார்க்கிறேன்.

என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 419 அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு ஒரு தொழுகை நடத்தினார்கள்! பிறகு மேடை மீது ஏறித் தொழுகையைப் பற்றியும் ருகூவும் பற்றியும் போதித்தார்கள். (உங்களை முன் புறமாக) நான் காண்பது போன்றே என்னுடைய பின்புறமாகவும் உங்களைக் காணுகிறேன் என்று கூறினார்கள்.

## இன்ன கூட்டத்தினரின் பள்ளிவாயில் என்று ஒரு பள்ளி பற்றிக் கூறலாமா?

ஹதீஸ் 420 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் குதிரைகளுக்கிடையே போட்டி நடத்தியபோது, பயிற்சி பெற்ற குதிரைகள் ஹஃப்யா என்ற இடத்திலிருந்து ஸனிய்யதுல் வதா என்ற இடம் வரை ஓட வேண்டும் என்றும் பயிற்சியளிக்கப்படாத குதிரைகள் ஸனியதுல் வதா என்ற இடத்திலிருந்து பனுஸுரைக் கூட்டத்தினரின் பள்ளிவாசல் வரை ஓட வேண்டும் என்றும் இலக்கு நிர்ணயித்தார்கள். அப்போட்டியில் நானும் பங்கெடுத்துக் கொண்டேன்.

## பள்ளி வாசலில் பொருட்களைப் பங்கீடு செய்வதும் பள்ளி வாசலில் பழக் குலைகளைத் தொங்க விடுவதும்.

ஹதீஸ் 421 அனஸ் (ரலி) கூறினார்கள்.

பஹ்ரைன் நாட்டிலிருந்து சில பொருள்கள் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டன. அவற்றைப் பள்ளிவாசலிலேயே கொட்டுங்கள்! என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்ட பொருட்களிலேயே அதுதான் மிக அதிக அளவாக இருந்தது. அதற்கு எந்த மதிப்புமளிக்காமல் நபி(ஸல்) அவர்கள் தொழச் சென்றார்கள். தொழுது முடிந்ததும் அப்பொருட்களின் அருகில் அமர்ந்து கொண்டு காண்பவர்களுக்கெல்லாம் வழங்கி

கொண்டிருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ்(ரலி) வந்து நபி அவர்களே! (பத்ருப் போரில் முஸ்லிம்களால் கைதிகளாகப் பிடிக்கப்பட்ட) நானும் (என் சகோதரர் அபூ தாலியுடை மகன்) அகீலும் வடுதலை பெறுவதற்காக (நான் பெறும் தொகையை)ப் பணயமாக வழங்கியுள்ளேன். எனவே எனக்கு (தாராளமாக) வழங்குங்கள்! என்று கேட்டார்கள்.

(உமக்குத் தேவையான அளவுக்கு) அள்ளிக் கொள்வீராக! என்று நபி(ஸல்) கூறியதும் அப்பாஸ்(ரலி) தங்களின் துணியில் அது கொள்ளுமளவுக்கு அள்ளினார்கள். பின்னர் அதைத் தூக்க அவர் முயன்றபோது அவரால் இயலவில்லை.

நபி அவர்களே! யாரையாவது என் மீது இதைத் தூக்கி விடச் சொல்லுங்களேன் என்று அவர் கேட்டதற்கு முடியாது என்று நபி(ஸல்) கூறினார்கள். அப்படியானால் நீங்களாவது என் மீது இதைத் தூக்கி வையுங்கள்! என்று அவர் கேட்க, நபி(ஸல்) அவர்கள் முடியாது என்றனர்.

அதில் சிறிதளவை அள்ளி வெளியே போட்டுவிட்டு அவர் தூக்க முயன்றார். அப்போதும் அவரால் இயலவில்லை. நபி அவர்களே! யாரையாவது என் மீது தூக்கி வைக்கச் செய்யுங்கள்! என்று அவர் கேட்க, நபி(ஸல்) அவர்கள் முடியாது என்றனர். நீங்களாவது தூக்கி விடுங்களேன் என்று அவர் கேட்க, அதற்கு முடியாது என்றனர்.

மேலும் சிறிதளவை அள்ளி வெளியில் போட்டுவிட்டு அதைத் தம் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு அப்பாஸ்(ரலி) நடக்கலானார். அவர் மறையும் வரை நபி(ஸல்) அவர்கள், அவரின் பேராசையை எண்ணி வியந்தவர்களாக அவரையே பார்த்துக் கொண்டிருந்தனர். நபி(ஸல்) அவர்கள் அவ்விடத்திலிருந்து எழும்போது ஒரு வெள்ளிக் காசு கூட மீதமாக இருக்கவில்லை.

### பள்ளிவாசலில் வைத்து விருந்துக்கு அழைப்பதும் பள்ளிவாசலிலேயே அதை ஏற்றுக் கொள்வதும்.

ஹதீஸ் 422 அனஸ்(ரலி) கூறினார்கள்.

பள்ளிவாசலில் சில மக்களுடன் நபி(ஸல்) அவர்கள் அமர்ந்திருந்தனர். நான் (அவர்களை நோக்கி) எழுந்து சென்றேன். உம்மை அபூ தல்ஹா அனுப்பினாரா? என்று நபி(ஸல்) கேட்க நான் ஆம் என்றேன். விருந்துக்கா? என்று அவர்கள் கேட்க நான் ஆம் என்றேன். தம்முடன் இருந்தவர்களை நோக்கி எழுந்திருங்கள்! என்று கூறிவிட்டு நபி(ஸல்) அவர்கள் நடந்தார்கள். நானும் அவர்களுடன் நடந்தேன்.

### பள்ளிவாசலில் வழக்குகளைத் தீர்ப்பளிப்பதும் பள்ளிவாசலில் லிஆன் செய்வதும்.

(குறிப்பு: தன் மனைவி மற்றோர் ஆணுடன் உறவு கொண்டாள் என்று கணவன் குற்றம் சுமத்தி, இதற்கு நான்கு சாட்சிகளையும் கொண்டு வராதபோது மனைவியும் அக்குற்றத்தை மறுத்தால், அவ்விருவரும் நான்கு முறை அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து தாங்கள் உண்மையாளர்கள் எனக் கூற வேண்டும். ஐந்தாவது முறையில் தாம் பொய் சொல்லி இருந்தால் தம் மீது அல்லாஹ்வின் சாபம் இறங்கட்டும் என்று இருவரும் கேட்க வேண்டும். இதுவே லிஆன் எனப்படும். இவ்வாறு செய்த பின் அவ்விருவரும் ஒரு காலத்திலும் சேர முடியாது.)

ஹதீஸ் 423 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்கள்.

நபி அவர்களே! ஒருவர் தம் மனைவியுடன் மற்றோர் ஆடவனைக் காண நேர்ந்தால் அவனைக் கொன்று விடலாமா? என்று ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார். (அது கூடாது! மாறாக இருவரும் லிஆன் செய்ய வேண்டும் என்று நபி(ஸல்) கூறியதும்) அவ்விருவரும் பள்ளியிலேயே லிஆன் செய்தனர். நான் அதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

## ஒருவர் ஓர் இல்லத்திற்குச் சென்றால் அவர் விரும்பிய இடத்தில் தொழுது கொள்ளலாம் அல்லது (வீட்டாரால்) அனுமதிக்கப்பட்ட இடத்தில் தொழலாம். (அவ்விடத்தின் தூய்மை பற்றி) துருவி விசாரிக்க வேண்டியதில்லை.

**ஹதீஸ் 424 இத்பான் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.**

நபி(ஸல்) அவர்கள் என்னுடைய இல்லத்திற்கு வருகை தந்தனர். உம்முடைய வீட்டில் உமக்காக நான் எந்த இடத்தில் தொழ வேண்டுமென விரும்புகிறீர் என்று என்னிடம் கேட்டனர். நான் ஓர் இடத்தைக் காட்டியதும் நபி(ஸல்) அவர்கள் தக்பீர் கூறி(த் தொழலா)னார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் வரிசையாக நின்றோம். இரண்டு ரக்அத்களை நபி(ஸல்) தொழுதார்கள்.

## வீடுகளிலேயே பள்ளியை அமைத்துக் கொள்வது.

**ஹதீஸ் 425 இத்பான் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.**

நான் நபி(ஸல்) அவர்களிடம், நபி அவர்களே! நான் என் சமூகத்தினருக்குத் தொழுகை நடத்துபவனாக இருக்கிறேன். என் பார்வை குறைந்துவிட்டது. மழைக் காலங்களில் எனக்கும் என் சமூகத்தினருக்குமிடையே தண்ணீர் ஓடுவதால் அவர்களின் பள்ளிக்கு சென்று என்னால் தொழுகை நடத்த முடிவதில்லை. எனவே நபி அவர்களே! தாங்கள் என் இல்லத்திற்கு வந்து ஓர் இடத்தில் தொழ வேண்டும். அவ்விடத்தை (என்னுடைய) தொழுமிடமாக நான் ஆக்கிக் கொள்ள விரும்புகிறேன் என்றேன்.

இன்ஷா அல்லாஹ் செய்கிறேன் என்று நபி(ஸல்) கூறிவிட்டு மறு நாள் சூரியன் உயரும்போது அபூ பக்ர்(ரலி) உடன் வந்து (வீட்டின் உள்ளே வர) அனுமதி கோரினர். அனுமதித்தேன். வீட்டில் நுழைந்ததும் உட்காராமலேயே உம்முடைய வீட்டில் எந்த இடத்தில் நான் தொழவேண்டுமென விரும்புகிறீர்? என்று கேட்டார்கள். வீட்டின் ஒரு பகுதியை நான் அவர்களுக்குக் காட்டினேன். நபி(ஸல்) அவர்களுக்குக் காட்டினேன். நபி(ஸல்) அவர்கள் (அவ்விடம் நின்று) தக்பீர் கூறினார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் வரிசையாக நின்றோம். இரண்டு ரக்அத்களாக அவர்கள் தொழுகை நடத்திய பின்னர் ஸலாம் கொடுத்தார்கள்.

மாமிசமும் மாவும் கலந்து நபி(ஸல்) அவர்களுக்காக நாங்கள் தயாரித்திருந்த உணவை உண்டு செல்லுமாறு அவர்களை நாங்கள் வற்புறுத்தினோம். (நபி(ஸல்) வந்ததைக் கேள்வியுற்ற) அப்பகுதியைச் சேர்ந்த பல ஆடவர்கள் என்னுடைய வீட்டில் வந்து குழுமினார்கள். அவர்களில் சிலர் மாலிக் இப்னு துகைஷின் எங்கே? என்று கேட்க, அவர்களில் ஒருவர் அவர் ஒரு முனாபிக் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்காதவர் (எனவேதான் நபியைக் காணவரவில்லையா) என்று கூறினார்.

அதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், அவ்வாறு கூறாதீர்! அல்லாஹ்வின் பொருத்தத்தை நாடி அவர் லாயிலாஹ இல்லல்லாஹ் எனக் கூறியிருப்பதை நீர் அறியமாட்டீரா? என்று கேட்டனர். அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே இதை நன்கறிந்தவர்கள் அவர் நயவஞ்சகர்களுக்கு நல்லது செய்வதாக நாங்கள் அறிகிறோம் என்று அவர் கூறினார்.

அல்லாஹ்வின் பொருத்தம் நாடி, லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறியவரின் மீது நரகத்தை இறைவன் விலக்கிவிட்டான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## பள்ளியில் நுழையும் போதும் வேறு சந்தர்ப்பங்களிலும் வலப்பக்கத்துக்கு முதலிடம் அளித்தல்.

ஹதீஸ் 426 ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் செருப்பணியும்போது தலை வாரும் போதும் உளூச் செய்யும் போதும் இன்னும் எல்லா விஷயங்களிலும் இயன்றளவு வலப் பக்கத்தைக் கொண்டு ஆரம்பிப்பதை விரும்பக் கூடியவர்களாக இருந்தனர்.

## அறியாமைக் காலத்தில் வாழ்ந்த இணை வைப்பாளர்களின் கப்ருகள் தோண்டப்பட்டு அவ்விடத்தில் பள்ளிவாசல் கட்டலாமா?

ஹதீஸ் 427 ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

உம்மு ஹபீபா (ரலி) வும் உம்மு ஸலமா (வும்) தாங்கள் அபீ ஸீனியாவில் கண்ட உருவங்கள் இடம் பெற்ற கோவிலைப் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். அப்போது நபி (ஸல்) அவர்களில் நல்ல மனிதர் ஒருவர் வாழ்ந்து மரணித்துவிட்டால் அவரின் அடக்கத் தலத்தின் மேல் வண்ணக்கத்தலத்தை அவர்கள் எழுப்பி விடுவார்கள். அந்த நல்லவர்களின் உருவங்களையும் அதில் பதித்து விடுவார்கள். மறுமை நாளில் அல்லாஹ்வின் சன்னிதியில் அவர்கள் தாம் படைப்பினங்களில் மிகவும் கெட்டவர்களாவர் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 428 அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் .0வுக்கு வந்தபோது மதீனாவின் மேற்புறத்தில் வசித்து வந்த பனுஅம்ர் இப்னு அவ்ஃபு எனும் கோத்திரத்தினருடன் பதினான்கு நாள்கள் தங்கினார்கள். பின்னர் பனுநஜ்ஜார் கூட்டத்தினரை அழைத்து வருமாறு கூறினார்கள். (தங்கள்) வாள்களைத் தொங்கவிட்டவர்களாக அவர்கள் வந்தனர். நபி (ஸல்) அவர்கள் தம் வாகனத்தின் மீது அமர்ந்திருந்ததும் வாகனத்தில் அவர்களுக்குப் பின்னால் அபூ பக்ரு (ரலி) அமர்ந்திருந்ததும் அவர்களைச் சுற்றி பனுநஜ்ஜார் கூட்டத்தினர் நின்றதும் இன்னும் என் கண் முன்னே நிழலாடுகிறது.

நபி (ஸல்) அவர்களின் ஒட்டகம் அபூ அய்யூப் (ரலி) வீட்டுக்கு முன்னாலுள்ள பகுதியில் அவர்களை இறக்கியது. தொழுகையின் நேரத்தை (எப்போது) எங்கே அடைகிறார்களோ அங்கே தொழுவது நபி (ஸல்) அவர்களின் வழக்கமாக இருந்தது. ஆடுகள் கட்டுமிடங்களில் கூட தொழக் கூடியவர்களாக நபி (ஸல்) அவர்கள் இருந்தனர். அவர்கள் பள்ளிவாசல் கட்டும் படி ஏவினார்கள்.

பனுநஜ்ஜார் கூட்டத்தினரை அழைத்து வரச் சொல்லி அவர்களிடம் உங்களின் இந்தத் தோட்டத்தை எனக்கு விலைக்குத் தாருங்கள்! என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டனர். அதற்கு அவர்கள் இதற்காக விலையை அல்லாஹ்விடமே நாங்கள் எதிர்பார்க்கிறோம் என்றனர். (அவ்விடத்தில்) பள்ளிவாசல் கட்டுமாறு நபி (ஸகூறினார்கள்.

## ஆட்டுத் தொழுவங்களில் தொழுவது.

ஹதீஸ் 429 ஷுஅபா (பின் அல்ஹஜ்ஜாஜ் ரஹ்) அவர்கள் கூறியதாவது,, †நபி (ஸல்) அவர்கள் ஆட்டுத் தொழுவங்களில் தொழுபவர்களாக இருந்தார்கள்† என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாக அபுத்தய்யாஹ் (ரஹ்) அவர்கள் அறிவித்துவந்தார்கள். பின்னர் †பள்ளி வாசல் கட்டப்படுவதற்கு முன்னால் நபி (ஸல்) அவர்கள் (அவ்வாறு) ஆட்டுத் தொழுவங்களில் தொழுபவர்களாகஇருந்தார்கள்† என்று (காலவரையறையுடன் சேர்த்துக்) கூறக் கேட்டேன்.

## ஒட்டகங்கள் கட்டுமிடங்களில் தொழுதல்.

ஹதீஸ் 430 நா.:பிவு அறிவித்தார்.

இப்னு உமர்(ரலி) தங்களின் ஒட்டகத்தை நோக்கித் தொழுதுவிட்டு, 'நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு தொழுவதை பார்த்திருக்கிறேன்' என்றார்கள்.

## தனக்கு முன்னால் அடுப்போ நெருப்போ அல்லது (பிறரால்) வணங்கப்படும் ஏதோ ஒன்று இருக்கும்போது அவற்றுக்கு மதிப்பளிக்காமல் அல்லாஹ்வை எண்ணித் தொழுவது.

"நான் தொழுது கொண்டிருக்கும்போது எனக்கு நரகம் எடுத்துக் காட்டப்பட்டது" என்று நபி(ஸல்) கூறினார்கள் என அனஸ்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 431 அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

சூரிய கிரகணம் ஏற்பட்ட சமயத்தில் நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள். பின்னர் 'இன்று எனக்கு நரகம் எடுத்துக் காட்டப்பட்டது. அது போன்ற (மோசமான) கோரக் காட்சி எதையும் நான் கண்டதில்லை' எனக் கூறினார்கள்.

## அடக்க ஸ்தலங்களில் தொழலாகாது.

ஹதீஸ் 432 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"உங்கள் இல்லங்களிலும் சில தொழுகைகளைத் தொழுங்கள்! அவற்றை அடக்கஸ்தலங்களாக ஆக்கி விடாதீர்கள்!"

என அப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## இறைவனின் வேதனை இறங்கிய இடங்களிலும் உயிருடன் மனிதர்கள் புதையுண்ட இடங்களிலும் தொழுவது.

(நம்ரூத் கூட்டத்தினர்) உயிருடன் புதையுண்டோ பாபிலோன் எனுமிடத்தில் அலீ(ரலி) தொழ விரும்பவில்லை எனக் கூறப்படுகிறது.

ஹதீஸ் 433 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"இறைவனால் தண்டிக்கப்பட்ட இந்த (ஸமூத் கூட்டத்தினரின்) இடத்திற்கு அழுதவர்களாகவே தவிர நீங்கள் செல்ல வேண்டாம்! நீங்கள் அழுதவர்களாக இல்லையென்றால் அவ்விடத்திற்குச் செல்லாதீர்கள்! அவர்களுக்கு ஏற்பட்டது உங்களுக்கும் ஏற்பட்டு விடக் கூடாது."

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## கிறிஸ்தவ ஆலயங்களில் தொழலாமா?

'உருவச் சிலைகள் இருக்கிற காரணத்தினால் உங்கள் ஆலயங்களில் நாங்கள் நுழைய மாட்டோம்" என்று உமர்(ரலி) (ஷாம் நாட்டுக் கிறிஸ்தவர்களிடம்) கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) உருவச் சிலைகள் இல்லாத கிறிஸ்தவ ஆலயங்களில் தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 434 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உம்முஸலமா(ரலி) அபீ ஸீனியாவில் தாம் கண்ட கோவிலைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். அது 'மாரியா' என்று சொல்லப்படுகிறது. அதில் கண்ட உருவங்களையும்

உம்மு ஸலமா (ரலி) குறிப்பிட்டார்கள். அப்போது நபி (ஸல்), 'அவர்களில் நல்ல மனிதர் ஒருவர் வாழ்ந்து மரணித்துவிட்டால் அவரின் அடக்கத் தலத்தின் மேல் வணக்கத் தலத்தை அவர்கள் எழுப்பி விடுவார்கள். அந்த நல்லவர்களின் உருவங்களையும் அதில் பதித்து விடுவார்கள். அல்லாஹ்வின் சன்னிதியில் அவர்கள் தாம் படைப்பினங்களில் மிகவும் கெட்டவர்களாவர்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 435 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மரண வேளை நெருங்கியபோது தங்களின் போர்வையைத் தம் முகத்தின் மீது போடுபவர்களாகவும் மூச்சுத் திணறும்போது அதைத் தம் முகத்தைவிட்டு அகற்றுபவர்களாகவும் இருந்தனர். இந்த நிலையில் அவர்கள் இருக்கும்போது 'தங்கள் நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கத் தலங்களாக ஆக்கிய யூத கிறிஸ்தவர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் ஏற்படட்டும்!" எனக் கூறி அவர்களின் செய்கை பற்றி எச்சரித்தார்கள்.

ஹதீஸ் 436 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மரண வேளை நெருங்கியபோது தங்களின் போர்வையைத் தங்களின் முகத்தின் மீது போடுபவர்களாகவும் மூச்சுத் திணறும்போது அதைத் தம் முகத்தைவிட்டு அகற்றுபவர்களாகவும் இருந்தனர். இந்த நிலையில் அவர்கள் இருக்கும்போது 'தங்கள் நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக ஆக்கிய யூத கிறிஸ்தவர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் ஏற்படட்டும்" எனக் கூறி அவர்களின் செய்கை பற்றி எச்சரித்தார்கள்.

ஹதீஸ் 437 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"தங்கள் நபிமார்களின் அடக்கஸ்தலங்களை வணக்கஸ்தலங்களாக ஆக்கிய யூதர்களை அல்லாஹ் நாசமாக்குவானாக!" என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## "பூமி முழுவதும் எனக்குத் தொழுமிடமாகவும் தூய்மை செய்யத் தக்கதாகவும் ஆக்கப்பட்டுள்ளது" என்ற நபிமொழி.

ஹதீஸ் 438 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"எனக்கு முன்னர் (நபிமார்கள்) யாருக்கும் கொடுக்கப்படாத ஐந்து விஷயங்கள் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. எதிரிகளுக்கும் எனக்குமிடையில் ஒரு மாத காலம் பயணம் செய்யும இடைவெளியிலிருந்தாலும் அவர்களின் உள்ளத்தில் பயம் ஏற்படுத்தப்படுவதன் மூலம் நான் உதவப்பட்டுள்ளேன். பூமி முழுவதும் சுத்தம் செய்யத்தக்கதாகவும் தொழுமிடமாகவும் எனக்கு ஆக்கப்பட்டுள்ளது. என்னுடைய சமுதாயத்தில் தொழுகையின் நேரத்தை அடைந்தவர் (தான் இருக்கும் இடத்தில்) தொழுது கொள்ளட்டும்! போரில் கிடைக்கிற பொருள்கள் எனக்கு ஹலாலாக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு நபியும் தங்களின் சமூகத்திற்கு மட்டுமே நபியாக அனுப்பப்பட்டார்கள். ஆனால், நான் மனித இனம் முழுமைக்கும் நபியாக அனுப்பப்பட்டுள்ளேன். (மறுமையில் என்னுடைய உம்மத்துக்காக) சிபாரிசு செய்யும் வாய்ப்பு கொடுக்கப்பட்டுள்ளேன்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

## பெண்கள் பள்ளிவாசலில் உறங்குவது பற்றியது.

ஹதீஸ் 439. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஓர் அரபுக் கோத்திரத்திற்கு அடிமையாக இருந்து, பின்னர் அவர்களால் விடுதலை செய்யப்பட்டு, அவர்களுடன் வசித்து வந்த கறுப்பு அடிமைப் பெண் தன் கடந்த கால நிகழ்ச்சியைப் பின் வருமாறு என்னிடம் தெரிவித்தார்.

'நான் அவர்களுடனிருக்கும்போது அவர்களைச் சேர்ந்த சிறுமி ஒருத்தி சிவப்புத் தோலில் முத்துப் பதிக்கப் பட்ட ஓர் ஆபரணத்துடன் வந்தாள். அதை அவள் கழற்றி வைத்தாள். அல்லது அது தானாகக் கீழே விழுந்தவிட்டது. அப்போது அவளருகே வந்த சிறு பருந்து ஒன்று, கீழே போடப்பட்ட அந்த ஆபரணத்தை மாமிசம் என எண்ணித் தூக்கிச் சென்றது. அவர்கள் தேடிப் பார்த்தபோது கிடைக்கவில்லை. அவர்கள் என்னைச் சந்தேகிக்கலானார்கள். என்னுடைய மர்மஸ்தானம் உட்படப் பல இடங்களிலும் அவர்கள் தேடிப் பார்த்தார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் அவர்களுடன் நின்றிருந்தபோது அந்தச் சிறிய பருந்து (திரும்பவும்) வந்த அதைக் கீழே போட்டதும் அவர்களுக்கருகில் அது விழுந்தது. எதைப் பற்றி என்னைச் சந்தேகித்தீர்களோ அதுதான் இது. நான் அதைத் திருடுவதைவிட்டுப் பரிசுத்தமானவள் என்று கூறினேன். இதன்பிறகு நபி(ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாத்தை தழுவினேன்'

அந்தப் பெண்ணுக்குப் பள்ளி வாசலில் கூடாரம் ஒன்று இருந்தது. அதிலிருந்து என்னிடம் வந்து அப்பெண் பேசிக் கொண்டிருப்பாள். என்னைச் சந்திக்கும் போதெல்லாம் பின்வரும் பாடலை அவள் பாடாமலிருந்ததில்லை.

'அந்த ஆபரணம் சம்பந்தப்பட்ட அந்த நாள் நம்முடைய இறைவனின் அற்புதங்களில் ஒன்றாகும்.

தெரிந்து கொள்ளுங்கள்! அவன்தான், இறைமறுப்பாளர்களின் ஊரிலிருந்து நிச்சயமாக என்னைக் காப்பாற்றினான்'. (இது கவிதையின் பொருள்). இந்தக் கவிதையை அடிக்கடி என்னிடம் கூறுகிறாயே என்ன விஷயம் என்று நான் அப்பெண்ணிடம் கேட்டபோது மேற்கண்ட நிகழ்ச்சியை அவள் என்னிடம் கூறினாள்.

## பள்ளியில் ஆண்கள் உறங்குதல்.

'உகல்' என்ற கோத்திரத்தைச் சேர்ந்த சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து (பள்ளிவாசலின்) திண்ணையில் தங்கினார்கள் என்று அனஸ்(ரலி) கூறினார்.

திண்ணைத் தோழர்கள் ஏழைகளாக இருந்தனர் என்று அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ரு(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 440. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் ஃபாதிமாவின் இல்லத்திற்கு வந்தபோது அலீ(ரலி)யைக் காணவில்லை. 'உன் பெரிய தந்தையின் மகன் எங்கே?' என்று ஃபாதிமா(ரலி) விடம் கேட்டார்கள். 'எனக்கும் அவருக்கும் சிறிய மனஸ்தாபம் இருந்தது கோபித்துக் கொண்டு சென்றார் என்னிடம் தங்கவில்லை' என்று ஃபாதிமா(ரலி) கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் 'அவர் எங்கே என்று பார்த்து வாரும்!'' என்று ஒருவரை அனுப்பினார்கள். அவர் வந்து, 'அலி பள்ளிவாசலில் உறங்கிக் கொண்டிருக்கிறார்' என்றார். நபி(ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்தபோது அலீ(ரலி) தங்களின் மேலாடை விலகியவராகவும் மேனியில் மண் படிந்தவராகவும் ஒரு பக்கமாகப் படுத்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அவரின் மேனியில் படிந்திருந்த மண்ணைத் தட்டிவிட்டு 'மண்ணின் தந்தையே எழும்! மண்ணின் தந்தையே எழும்!'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 442. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

திண்ணைத் தோழர்களில் எழுபது நபர்களை பார்த்திருக்கிறேன். அவர்களில் எவருக்குமே மேலாடை இருந்ததில்லை. அவர்களில் சிலரிடம் வேட்டி மட்டும் இருந்தது. (வேறுசிலரிடம்) தங்கள் கழுத்திலிருந்து கட்டிக் கொள்ளத்தக்க ஒரு போர்வை இருந்தது. (அவ்வாறு கட்டிக் கொள்ளும்போது) சிலரின் போர்வை கரண்டைக்கால் வரையும் இருக்கும். வேறு சிலரின் போர்வை கால்களில் பாதியளவு வரை இருக்கும். தங்களின் மறைவிடங்களைப் பிறர் பார்த்து விடலாகாது என்பதற்காகத் தம் கைகளால் துணியைச் சேர்த்துப் பிடித்துக் கொள்வார்கள்.

## பயணத்திலிருந்து திரும்பியதும் தொழுவது.

நபி(ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பியதும் முதலில் பள்ளி வாசலுக்குச் சென்று தொழுபவர்களாக இருந்தனர் என்று கஃபு இப்னு மாலிக்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 443. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருக்கும்போது நான் அவர்களிடம் வந்தேன். 'இரண்டு ரக்அத் தொழுவீராக!" என்று கூறினார்கள். எனக்கு நபி(ஸல்) தர வேண்டிய கடன் ஒன்றும் இருந்தது. அந்தக் கடனை திருப்பி தந்ததுடன் மேலதிகமாகவும் தந்தார்கள்.

(இந்த ஹதீஸின் மூன்றாவது அறிவிப்பாளரான) மிஸ்அர் 'முற்பகல் நேரத்தில் வந்தேன்' என்று ஜாபிர்(ரலி) கூறினார் எனக் குறிப்பிடுகிறார்.

## பள்ளிவாசலுக்குச் சென்றதும் இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும்.

ஹதீஸ் 444. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"உங்களில் எவரும் பள்ளிவாசலுக்குச் சென்றால் உட்காருவதற்கு முன்பு இரண்டு ரக்அத்கள் தொழட்டும்!"

என அபூ கதாதா(ரலி) அறிவித்தார்.

## பள்ளிவாசலில் இருக்கும்போது சிறு தொடக்கு ஏற்படுதல்.

ஹதீஸ் 445. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"ஒருவர் எந்த இடத்தில் தொழுதாரோ அந்த இடத்திலேயே அமர்ந்திருக்கும்போது அவருக்காக வானவர்கள் பிரார்த்தனை செய்கிறார்கள். ஆனால் உளூ முறிந்து விடாமலிருக்க வேண்டும். 'இறைவா! இவரை மன்னித்து விடு! இறைவா! இவருக்கு அருள் புரி!" என்று கூறுகிறார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## நபியின் பள்ளிவாசலின் கட்டுமானம்.

நபி(ஸல்) அவர்களின் பள்ளிவாயிலின் மேற்கூரை பேரீச்ச மரம் ஓலையால் வேயப்பட்டதாக இருந்தது என்று அபூ ஸயீத்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

உமர்(ரலி), பள்ளியை (விரிவாகக்) கட்ட உத்தரவிட்டபோது 'மக்களை மழையிலிருந்து பாதுகாக்கும் விதமாகக் கட்டுவீராக! மஞ்சள், சிகப்பு வர்னங்கள் தீட்டுவதை எச்சரிக்கிறேன். அதனால் மக்களின் கவனம் திசை திரும்பிவிடும்' எனக் கூறினார்கள்.

(ஒரு காலத்தில்) மக்கள் பள்ளிவாசலின் மூலம் பெருமையடித்துக் கொள்வார்கள். (வணக்க வழிபாடுகளின் மூலம்) மிகக் குறைவாகவே தவிர அதைக் கண்ணியப் படுத்தமாட்டார்கள் என்று அனஸ்(ரலி) குறிப்பிட்டார்கள்.

யூத கிறிஸ்தவர்கள் தங்கள் ஆலயங்களை அலங்கரித்தது போன்றே பள்ளியை நீங்களும் அலங்கரிக்கிறீர்கள் என்று இப்னு அப்பாஸ்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 446. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் 'மஸ்ஜிதுன்னபி'யுடைய சுவர்கள் செங்கற்களாலும் அதன் கூரை பேரீச்ச மர ஓலையாலும் தூண்கள் பேரீச்ச மரங்களாலும் அமைந்திருந்தன. அபூ பக்ரு(ரலி) (தம் ஆட்சியின் போது) அதில் எந்த விரிவாக்கமும் செய்யவில்லை என்றாலும் உமர்(ரலி) அதை விரிவுபடுததினார்கள். நபி(ஸல்) காலத்தில் இருந்தது போன்றே செங்கல்,

பேரீச்ச மர ஓலை, பேரீச்ச மரம் ஆகியவற்றைக் கொண்டே விரிவுபடுத்தினார்கள்.

பின்னர் உஸ்மான் (ரலி) அந்தப் பள்ளியில் அனேக விஷயங்களை அதிகமாக்கினார்கள். சித்திர வேலைகள் செய்யப்பட்ட கற்களாலும் சுண்ணாம்புக் காரையாலும் அதன் சுவர்களைக் கட்டினார்கள். சித்திர வேலைகள் செய்யப்பட்ட கற்களால் அதன் தூண்களை எழுப்பினார்கள். அதன் கூரையைத் தேக்கு மரத்தால் அமைத்தார்கள்.

## “பள்ளிவாசல் கட்டும் பணியில் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பது.

“தாங்கள் இறைமறுப்பாளர்களே எனத் தங்களுக்குத் தாங்களே சான்று பகர்ந்த இறைமறுப்பாளர்களுக்கு அல்லாஹ்வின் பள்ளியை நிர்வம்க்க எந்த உரிமையும் இல்லை. அவர்களின் (நல்) அறங்கள் பாழாம்விட்டன. நரகில் அவர்கள் நிரந்தரமாகத் தங்குவார்கள். யார், அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பி, தொழுகையை நிலை நாட்டி, ஸகாத்தும் கொடுத்து, அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் அஞ்சவில்லையோ அவர்கள் தாம் இறைவனின் பள்ளிவாயில்களை நிர்வம்க்கத் தகுந்தோர். அவர்கள் தாம் நேர்வழி பெற்றவர்களாவர்.“ (திருக்குர்ஆன் (திருக்குர்ஆன் 9:17, 18)

ஹதீஸ் 447 இக்ரிமா அறிவித்தார்.

இப்னு அப்பாஸ் (ரலி) என்னிடமும் அவர் மகன் அலியிடமும் ‘நீங்களிருவரும் அபூ ஸயீத் (ரலி) அவர்களிடம் சென்று அவர் அறிவிக்கும் செய்தியைச் செவிமடுத்து வாருங்கள்!‘ எனக் கூறினார்கள். நாங்கள் சென்றோம். அபூ ஸயீத் (ரலி) தங்களின் தோட்டத்தைச் சரி செய்து கொண்டிருந்தார்கள். (எங்களைக் கண்டதும் தங்களின் மேலாடையைப் போர்த்திக் கொண்டு (பல செய்திகளை) எங்களுக்குக் கூறலானார்கள். பள்ளிவாசல் கட்டப்பட்ட செய்தியைக் கூறும்போது ‘நாங்கள் ஒவ்வொரு செங்கல்லாகச் சுமப்பவர்களாக இருந்தோம். (ஆனால்) அம்மார் (ரலி) இரண்டிரண்டு செங்கற்களாகச் சுமக்கலானார். அதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் அவரின் மேனியில் படிந்த மண்ணைத் தட்டிவிட்டு ‘பாவம் அம்மார்! இவரை அக்கிரமக்காரக் கூட்டம் கொலை செய்யும்! இவர் அவர்களைச் சுவர்க்கத்திற்கு அழைப்பார். அவர்களோ இவரை நரகத்திற்கு அழைப்பார்கள்.“ என்று கூறினார்கள். அதற்கு அம்மார் (ரலி) ‘அந்தக் குழப்பங்களைவிட்டும் அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன்‘ என்று கூறினார்கள்‘ என அபூ ஸயீத் (ரலி) குறிப்பிட்டார்கள்.

## பள்ளி கட்டுவதற்கும் மிம்பர் அமைப்பதற்கும் கொல்லர்கள், தச்சர்கள் மற்றும் பணியாட்களின் உதவியை நாடுதல்.

ஹதீஸ் 448. ஸஹ்ல் (ரலி) அறிவித்தார்.

“நான் உட்கார்ந்து கொள்வதற்காக எனக்கு மரத்தினால் மேடையைச் செய்து தருமாறு உன்னுடைய ஊழியரிடம் கூறு“ என்று ஒரு பெண்ணுக்கு நபி (ஸல்) அவர்கள் சொல்லியனுப்பினார்கள்.

ஹதீஸ் 449. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

‘இறைத்தூதர் அவர்களே! தாங்கள் உட்கார்ந்து கொள்வதற்காக ஒரு மேடையை உங்களுக்குச் செய்து தரட்டுமா? என்னிடம் தச்சு வேலை தெரிந்த ஊழியர் ஒருவர் இருக்கிறார்.‘ என்று ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு நபி (ஸல்) அவர்கள் ‘நீ விரும்பினால் செய்து தா!‘ என்றனர். அப்பெண் மேடை செய்து கொடுத்தார்.

## பள்ளிவாசல் கட்டியவருக்குக் கிடைக்கும் வெகுமதி.

ஹதீஸ் 450. உபைதுல்லாஹ் அல் கவ்லானி அறிவித்தார்.

உஸ்மான்(ரலி) பள்ளியை விரிவுபடுத்தியபோது 'நீங்கள் மிகவும் விரிவு படுத்தி விட்டீர்கள்' என்று மக்கள் அவர்களிடம் ஆட்சேபனை செய்தார்கள். அதற்கு 'அல்லாஹ்வின் திருமுகத்தை நாடி, பள்ளிவாசல் ஒன்றைக் கட்டியவர் அது போன்ற ஒன்றைச் சுவர்க்கத்தில் அவருக்காக அல்லாஹ் கூறினான்" என்று நபி(ஸல்) கூற செவியுற்றுள்ளேன்' என உஸ்மான்(ரலி) கூறினார்.

## பள்ளியினுள் செல்லும்போது அம்பின் முனைப் பகுதியைப் பிடித்துக் கொள்ளுதல்.

ஹதீஸ் 451. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் அம்பை எடுத்துக் கொண்டு பள்ளியில் நடந்ததைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள் 'அதன் (கூரான) முனைப் பகுதியைப் பிடித்துக் கொள்வீராக!" என்று கூறினார்கள்.

## பள்ளி வழியாகக் கடந்து செல்லல்.

ஹதீஸ் 452. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"அம்புடன் நம்முடைய பள்ளிவாயில்களிலோ கடை வீதிகளிலோ நடப்பவர்கள் அம்பின் முனைப் பகுதியைப் பிடித்துக் கொள்ள வேண்டும். தம் கையால் எந்த விசுவாசியையும் காயப்படுத்தலாகாது. "

என அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

## பள்ளிவாசலில் கவிதை பாடுதல்.

ஹதீஸ் 453. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான்பின் அவ்ஃப் அறிவித்தார்.

ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம் 'அபூ ஹுரைராவே! அல்லாஹ்வை முன்னிறுத்தி நான் உம்மிடம் கேட்கிறேன். நபியவர்கள், 'ஹஸ்ஸானே! இறைத்தூதர் சார்பாக நீர் அவர்களுக்கு (உம் கவிதை மூலம்) பதிலளிப்பீராக!" என்றும் (இறைவா! ஹஸ்ஸானை ஜிப்ரீல்(அலை) மூலம் வலுப்படுத்துவாயாக!" என்றும் கூறியதை நீர் செவியுற்றீர் அல்லவா?' என்று கேட்டபோது அபூ ஹுரைரா(ரலி) 'ஆம்' என்றனர்.

## பள்ளியில் ஈட்டியுடன் செல்வது.

ஹதீஸ் 454. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

அபூ ஸீனிய(வீர)ர்கள் பள்ளியில் (வீர) விளையாட்டு விளையாடும்போது, என் அறை வாசலில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் மேலாடையால் என்னை மறைத்த நிலையில் (வீர) விளையாட்டை பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஹதீஸ் 455. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

அபீ ஸீனியர்கள் தங்கள் ஈட்டிகளின் மூலம் பயிற்சி செய்துகொண்டிருந்தபோது அதனருகில் நபி(ஸல்) அவர்கள் இருக்க பார்த்திருக்கிறேன்.

## பள்ளிவாசலுள்ள மேடை மீது நின்று விற்பது, வாங்குவது பற்றிக் குறிப்பிடுவது.

ஹதீஸ் 456. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

அடிமையாக இருந்த பரீரா(ரலி) என்ற பெண்மணி, (தங்களின் எஜமானர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து) விடுதலைப் பத்திரம் எழுதிக் கொள்வதற்காக என் உதவியை

நாடினார். அதற்கு 'நீ விரும்பினால் உன் எஜமானருக்குரியதை நானே கொடுத்து விடுகிறேன் (உன் மரணத்திற்குப் பின் வாரிசாவது போன்ற) உரிமை எனக்கு வர வேண்டும்' என்று கூறினேன்.

ஆனால் அப்பெண்ணின் எஜமானர்கள் என்னிடம 'நீங்கள் விரும்பினால் பரீரா தர வேண்டியதைத்தந்து (நீங்கள் விடுதலை செய்து) கொள்ளலாம். ஆனால் உரிமை எங்களுக்கு வர வேண்டும்' என்று கூறினார்கள்.

இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் நான் கூறியபோது 'நீ அவளை விலை கொடுத்து வாங்கி விடுதலை செய்து விடு! விடுதலை செய்தவருக்கே உரிமையுண்டு" என்று கூறிவிட்டு மேடை மீது ஏறி 'அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத நிபந்தனைகளை விதிப்பவர்களுக்கு என்ன வந்துவிட்டது?' அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத நிபந்தனைகளை விதிக்கிறவர், நூறு முறை அந்த நிபந்தனையை வலியுறுத்தினாலும் அதற்கான உரிமை அவருக்கு இல்லை' என்று கூறினார்கள்.

## பள்ளிவாசலில் கடனைக் கேட்பதும் அதைத் திருப்பிக் கொடுக்குமாறு பள்ளியிலேயே வற்புறுத்துவதும்.

ஹதீஸ் 457. கஃபு இப்னு மாலிக்9ரலி) அறிவித்தார்.

இப்னு அபீ ஹத்ரத்(ரலி) அவர்களிடம் கொடுத்திருந்த கடனை நான் பள்ளிவாசல்லி வைத்துக் கேட்டேன். எங்களிருவரின் குரல்கள் உயர்ந்தன. தங்களின் வீட்டில் இருந்த நபி(ஸல்) அவர்களும் இந்தச் சப்தத்தைக் கேட்டார்கள். உடனே தம் அறையின் திரையை விலக்கிக் கொண்டு வெளியே வந்து 'கஃபே!" என்று கூப்பிட்டார்கள். 'இதோ வந்தேன் இறைத்தூதர் அவர்களே!' என்றேன். 'பாதி' என்பதைக் காட்டும் விதமாகச் சைகை மூலம் காட்டி 'உம்முடைய கடனில் இவ்வளவைத் தள்ளுபடி செய்வீராக!" என்று கூறினார்கள். 'அவ்வாறே செய்கிறேன் அல்லாஹ்வின்தூதரே!' என்று கூறினேன். (கடன் பெற்ற) இப்னு அபீ ஹத்ரத்(ரலி) அவர்களிடம் 'எழுவீராக! பாதியை நிறைவேற்றுவீராக!" என்று நபி(ஸல்) கூறினார்கள்.

## பள்ளிவாசலைப் பெருக்குவதும் அதில் கிடக்கும் துண்டுத் துணிகள், குச்சிகள் அசுத்தங்களை அப்புறப் படுத்துவதும்.

ஹதீஸ் 458. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

பள்ளிவாசலைப் பெருக்குபவராக இருந்த ஒரு கறுத்த ஆண் அல்லது கறுத்த பெண்மணி இறந்துவிட்டார். அவரைப் பற்றி நபி(ஸல்) அவர்கள் விசாரித்தபோது அவர் இறந்துவிட்டதாகக் கூறினார்கள். 'இதை (முன்பே) என்னிடம் நீங்கள் சொல்லியிருக்க வேண்டாமா? அவரின் அடக்கத் தலத்தை எனக்குக் காட்டுங்கள்! என்று நபி(ஸல்) கூறிவிட்டு அவரின் அடக்கத்தலத்துக்கு வந்து அவருக்கு (ஜனாஸா) தொழுகை நடத்தினார்கள்.

## மது பானங்கள் விற்பது விலக்கப்பட்டது என்று பள்ளிவாசலில் அறிவிப்பது.

ஹதீஸ் 459. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

'பகரா' அத்தியாயத்தில் வட்டி (விலக்கப்பட்டது என்பது) பற்றிய வசனங்கள் இறங்கியபோது நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலுக்குச் சென்று மக்களுக்கு அவ்வசனங்களை ஓதிக் காட்டினார்கள். மதுபானங்கள் விற்பதும் விலக்கப்பட்டது என அறிவித்தார்கள்.

## பள்ளிவாசலுக்கெனப் பணியாளர்கள் இருப்பது.

"என் கர்ப்பத்தில் வளரும் குழந்தையை இறைவா! உனக்காக நான் நேர்ச்சை செய்தேன்'

(திருக்குர்ஆன் 3:35) என்ற வசனம் பற்றிக் குறிப்பிடும்போது 'பள்ளி வாசலில் பணி செய்தவற்காக' என்று இப்னு அப்பாஸ் (ரலி) விளக்கமளித்தார்கள்.

ஹதீஸ் 460. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஓர் ஆண் அல்லது பெண்மணி பள்ளிவாசலைப் பெருக்குபவராக இருந்தார். அவர் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும் என்று மேற்கூறிய செய்தியை அபூ ஹுரைரா (ரலி) குறிப்பிட்டார்கள்.

## கைதிகளையும் குற்றவாளிகளையும் பள்ளிவாசலில் கட்டிவைப்பது.

ஹதீஸ் 461. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"இஃப்ரீத் என்ற ஜின் நேற்றிரவு என் முன் திடீரெனத் தோன்றி என்தொழுகையைக் கெடுக்க முயன்றது. அதைப் பிடிப்பதற்கான சக்தியை இறைவன் எனக்கு வழங்கினான். காலையில் நீங்கள் அனைவரும் அதைக் காண வேண்டுமென இந்தப் பள்ளிவாசலிலுள்ள ஒரு தூணில் அதைக் கட்டி வைக்க எண்ணினேன். 'இறைவா! எனக்குப் பின் வேறு எவருக்கும் நீ வழங்காத ஓர் ஆட்சியை எனக்கு நீ வழங்குவாயாக' (திருக்குர்ஆன் 38:35) என்ற என் சகோதரர் ஸுலைமான் (அலை) அவர்களின் பிரார்த்தனை எனக்கு நினைவு வந்தால் அதை விரட்டி அடித்து விட்டேன்."

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## இஸ்லாத்தைத் தழுவும்போது குளிப்பதும் பள்ளிவாசலில் கைதியைக் கட்டி வைப்பதும்.

குற்றவாளியைப் பள்ளிவாசலின் தூணில் கட்டி வைக்குமாறு ஷுரைஹ் தீர்ப்பளிப்பது வழக்கம்.

ஹதீஸ் 462. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

'நஜ்து' பிரதேசத்தை நோக்கிச் சிறிய குதிரைப் படை ஒன்றை நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர்கள் பனூ ஹனீஃபா என்ற கூட்டத்தைச் சேர்ந்த ஸுமாமா இப்னு அஸால் என்பவரைப் பிடித்து வந்து பள்ளிவாசலிலுள்ள ஒரு தூணில் கட்டி வைத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அவரை நோக்கி வந்து 'ஸுமாமாவை அவிழ்த்து விடுங்கள்!' என்றனர். அவர் பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த குட்டைக்குச் சென்று குளித்தார். பின்னர் பள்ளிவாசலுக்கு வந்து 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்' என்று கூறினார்.

## நோயாளிகளுக்காகவும் மற்றவர்களுக்காகவும் பள்ளிவாசலில் கூடாரம் அமப்பது.

ஹதீஸ் 463. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

அகழ்ப் போரின்போது ஸஃது இப்னு முஆத் (ரலி) கை நரம்பில் தாக்கப் பட்டார். அவரை அருகிலிருந்து நோய் விசாரிப்பதற்கு ஏற்பப் பள்ளிலேயே அவருக்குக் கூடாரம் ஒன்றை நபி (ஸல்) ஏற்படுத்தினார்கள். அதற்கு அருகில் கூடாரம் அமைந்திருந்த பனூ கிஃபார் குலத்தினருக்கு ஸஃதுடைய கூடாரத்திலிருந்து பாயும் இரத்தம் அச்சத்தை ஏற்படுத்தியது. 'கூடார வாசிகளே! உங்கள் தரப்பிலிருந்து எங்களை நோக்கிப் பாய்கின்றதென்ன?' என்று கேட்டக் கொண்டு அங்கே பார்த்தபோது காயத்திலிருந்து இரத்தம் வடிய ஸஃது (ரலி) இருந்தார்கள். அந்தக் காயத்தினாலேயே மரணமும் அடைந்தார்கள்.

## தேவை ஏற்படும்போது பள்ளிக்குள் ஒட்டகத்தைக் கொண்டு செல்வது.

நபி(ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீது அமர்ந்து தவா.ஃப் செய்தார்கள் என்று இப்னு அப்பாஸ்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 464. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

என் உடல் நலக்குறைவு பற்றி நபி(ஸல்) அவர்களிடம நான் முறையிட்டபோது ‘ஜனங்களுக்குப் பின்னால் வாகனத்தில அமர்ந்து கொண்டு நீ தவா.ஃப் செய்து கொள்!“ என்று கூறினார்கள். நான் அவ்வாறு தவா.ஃப் செய்யும்போது நபி(ஸல்) அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமின் ஒரு பகுதியில் ‘தூர்‘ என்ற அத்தியாயத்தை ஓதித் தொழுது கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 465. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபித்தோழர்களில் இரண்டு மனிதர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (பள்ளிவாசலைவிட்டும்) இருள் சூழ்ந்த இரவில் (தங்கள் இல்லங்களுக்கு) புறப்பட்டார்கள். அவ்விருவருக்கும் முன்னால் இரண்டு விளக்குகள் போன்று எதுவோ ஒளி வீசிக் கொண்டிருந்தது. (அவ்விருவரும் தத்தம் வழியில் பிரிந்து சென்ற போது) ஒவ்வொருவருடனும் விளக்குபோன்ற ஒன்று அவர்கள் தம் இல்லங்களை அடையும் வரை ஒளி வீசிக் கொண்டிருந்தது.

## பள்ளிவாசலில் நுழைவாயில் அமைப்பதும் நடைபாதை ஏற்படுத்துவதும்.

ஹதீஸ் 466. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு சொற்பொழிவில் ‘அல்லாஹ், தன்னிடம் உள்ளவை வேண்டுமா? இவ்வுலகம் வேண்டுமா? எனத் தேர்ந்ததெடுக்க ஓர் அடியாருக்குச் சுதந்திரம் அளித்தான். அந்த அடியார் அல்லாஹ்விடம் உள்ளதையே தேர்ந்தெடுத்தார்“ என்றார்கள். (இதைக் கேட்ட) அபூ பக்ரு(ரலி) அழலானார்கள். ‘இந்த மதுஹகூழ் ஏன் அழகிறார்? தன்னிடம் உள்ளது வேண்டுமா? இவ்வுலகம் வேண்டுமா என்று ஓர் அடியாருக்குச் சுதந்திரம் அளித்தபோது அந்த அடியார் இறைவனிடம் உள்ளதைத் தேர்ந்தெடுத்தால் அதற்காக அழ வேண்டுமா என்ன?‘ என்று நான் மனதிற்குள் கூறிக் கொண்டேன். அந்த அடியார் நபி(ஸல்) அவர்கள் தாம். (தங்களின் மரணத்தையே அவ்வாறு குறிப்பிட்டார்கள் என்பதைப் பிறகு அறிந்து கொண்டேன்) அபூ பக்ரு(ரலி) எங்களை விட அறிவில் சிறந்தவராக இருந்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“அபூ பக்ரே! அழ வேண்டாம்! நட்பின் மூலமும் செல்வத்தின் மூலமும் மனிதர்களிலேயே எனக்குப் பேருதவியாக இருந்தவர் அபூ பக்ரு தான். என் உம்மத்தில் யாரையேனும் நான் உற்ற நண்பராக ஏற்றுக் கொள்வதென்றால் அபூ பக்ரையே ஏற்றிருப்பேன். என்றாலும் இஸ்லாம் என்ற அடிப்படையிலான சகோதரத்துவமும் நேசமும்தான் (இஸ்லாத்தில்) உண்டு. பள்ளியில் (என் இல்லத்திற்கு வருவதற்காக) உள்ள அபூ பக்ரின் வாசல் தவிர ஏனைய வாசல்கள் அடைக்கப்பட வேண்டும்.“

ஹதீஸ் 467. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எந்த நோயினால் மரணமடைந்தார்களோ அந்த நோயின்போது தம் தலையில் ஒரு துணியால் கட்டுப் போட்டவர்களாக வெளியே வந்து மேடை மீது அமர்ந்து அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பின்பு ‘தம் உயிராலும் பொருளாலும் எனக்கு அபூ குஹா.ஃபாவின் மகன் அபூ பக்ரை விட வேறெவரும் பேருதவியாக எவரையேனும் உற்ற நண்பராக நான் ஏற்படுத்திக் கொள்வதென்றால் அபூ பக்ரையே ஏற்படுத்திக் கொள்வேன். என்றாலும் (தனிப்பட்ட உதவிகளுக்காக நேசிப்பதை விட) இஸ்லாமிய அடிப்படையிலான நேசமே சிறந்தது. அபூ பக்ரின் வழியைத் தவிர என்னிடம் வருவதற்காகப் பள்ளிவாசலிலுள்ள எல்லா வழிகளையும்

அடைத்து விடுங்கள்!“ என்று கூறினார்கள்.

## கஅபாவுக்கும் பிற பள்ளிவாசல்களுக்கும் வாசல்கள் ஏற்படுத்துவதும் அதை மூடுவதும்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் பள்ளிவாசலின் நுழைவாயில்களை நீர் பார்த்திருக்க வேண்டுமே! என்று அப்துல் மலிக்கிடம் இப்னு அபீ முலைகா கூறினார்.

ஹதீஸ் 468. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) (மக்காவை வெற்றி கொண்டு) மக்காவிற்கு வந்தபோது (கஅபாவின் சாவியை வைத்திருந்த உஸ்மான் இப்னு தல்ஹா (ரலி) வை அழைத்தனர். அவர் (கஅபாவின்) வாசலைத் திறந்தார். நபி (ஸல்) அவர்களும் பிலால் (ரலி), உஸாமாபின் ஸைத் (ரலி), உஸ்மான் இப்னு தல்ஹா (ரலி) ஆகியோரும் (உள்ளே) சென்று கதவை மூடிவிட்டனர். சிறிது நேரம் கழித்து வெளியே வந்தனர். நான்விரைந்து சென்று பிலால் (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் அதில் தொழுதார்களா? என்று கேட்டேன். ‘தொழுதார்கள்‘ என்று பிலால் கூறினார். எந்த இடத்தில்? என்று கேட்டதற்கு ‘இரண்டு தூண்களுக்கிடையே‘ என்று கூறினா. எத்தனை ரக்அத்கள் தொழுதார்கள் என்று கேட்கத் தவறி விட்டேன்.

## இணை வைப்பவர் பள்ளியில் நுழைவது.

ஹதீஸ் 469. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

‘நஜ்து‘ பிரதேசத்தை நோக்கிச் சிறிய குதிரைப் படை ஒன்றை நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அவர்கள் பனூ ஹனீஃபா என்ற கூட்டத்தைச் சேர்ந்த ஸுமாமா இப்னு அஸால் என்பவரைப் பிடித்து வந்து பள்ளிவாசலிலுள்ள ஒரு தூணில் கட்டி வைத்தார்கள்.

## பள்ளிவாசலில் சப்தங்களை உயர்த்துவது.

ஹதீஸ் 470. ஸாயிப் இப்னு யஸீத் (ரலி) அறிவித்தார்.

நான் பள்ளி வாசலில் நின்றிருந்தபோது ஒருவர் என் மீது சிறு கல்லை எறிந்தார். நான் திரும்பிப் பார்த்தபோது உமர் இப்னு அல்கத்தாப் (ரலி) நின்றிருந்தார்கள். ‘நீ சென்று (அதோ) அந்த இருவரையும் என்னிடம் அழைத்து வா!“ என்றார்கள். அவ்விருவரையும் அவர்களிடம் கூட்டிக் கொண்டு வந்தேன். நீங்கள் இருவரும் எங்கிருந்து வருகிறீர்கள்?‘ என்று உமர் (ரலி) கேட்க, ‘நாங்கள் தாயிஃப் வாசிகள்‘ என்று அவர்கள் கூறினர். ‘அல்லாஹ்வின் தூதருடைய பள்ளி வாசலில் சப்தங்களை நீங்கள் உயர்த்தியதற்காக நீங்கள் இவ்வூரைச் சேர்ந்தவர்களாக இருந்தால் உங்களிருவரையும் (சவுக்கால்) அடித்திருப்பேன்‘ என்று உமர் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 471. கஃபு இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

இப்னு அபீ ஹத்ரத் (ரலி) அவர்களிடம் கொடுத்திருந்த கடனை நான் பள்ளி வாசலில் வைத்துக் கேட்டேன். எங்களிருவரின் குரல்கள் உயர்ந்தன. தங்களின் வீட்டில் இருந்த நபி (ஸல்) அவர்களும் இந்த சப்தத்தைக் கேட்டார்கள். உடனே தம் அறையின் திரையை விலக்கிக் கொண்டு வெளியே வந்து ‘கஃப் இப்னு மாலிக்! கஃபே‘ என்று கூப்பிட்டார்கள். இதோ வந்தேன் இறைத்தூதர் அவர்களே! என்றேன். ‘பாதியைத் தள்ளுபடி செய்வீராக! என்பதைக் காட்டும் விதமாகச் சைகை செய்தார்கள். அவ்வாறே செய்கிறேன் இறைத்தூதர் அவர்களே! என்று கூறினேன். (கடன் பெற்ற) இப்னு அபீ ஹத்ரத் (ரலி) யை நோக்கி ‘எழுவீராக! பாதியை நிறைவேற்றுவீராக!“ என்று நபி (ஸல்) கூறினார்கள்.

## பள்ளிவாசலில் அமர்வதும் வட்டமாகக் கூடியிருப்பதும்.

ஹதீஸ் 472. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மேடை மீது இருக்கும்போது 'இரவுத் தொழுகை பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என்று ஒருவர் கேட்டார். 'இரண்டிரண்டாகத் தொழ வேண்டும். ஸுப்ஹை தொழ முடியாது என்று அஞ்சினால்ய ஒரு ரக்அத் தொழலாம். அவர் தொழுதது அவருக்கு வித்ராக அமையும். உங்களின் கடைசித் தொழுகையாக வித்ரை ஆக்கிக் கொள்ளுங்கள்! என்று நபி(ஸல்) கூறினார்கள்.

ஹதீஸ் 473. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது 'இரவுத் தொழுகை எவ்வாறு?' என்று ஒருவர் கேட்டார். 'இரண்டிரண்டாகத் தொழ வேண்டும். ஸுப்ஹை (தொழ முடியாத என்று) அஞ்சினால் ஒரு ரக்அத் தொழலாம். நீர் தொழுதது உமக்கு வித்ராக அமையும்' என்று நபி(ஸல்) கூறினார்கள்.

ஹதீஸ் 474. அபூ வாகித் அல்லைஸீ அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருக்கும்போது மூன்று நபர்கள் வந்தனர். அவர்களில் இருவர் நபி(ஸல்) அவர்களை நோக்கி வந்தனர். ஒருவர் சென்றார். அந்த இருவரில் ஒருவர் (சபையில்) சிறிது இடைவெளியைக் கண்டு அங்கே உட்கார்ந்தார். மற்றவர் சபையினரின் பின்னால் உட்கார்ந்தார். நபி(ஸல்) அவர்கள் (சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி) முடித்தபோது, 'அந்த மூவரைப் பற்றியும் நான் உங்களுக்குக் கூறட்டுமா?' என்று கேட்டுவிட்டு 'ஒருவர் அல்லாஹ்வின் பக்கம் நெருங்கினார் அல்லாஹ்வும் அவரை நெருக்கமாக ஆக்கிக் கொண்டான். மற்றவர் வெட்கப் பட்டார் அல்லாஹ்வும் அவர் விஷயத்தில் வெட்கப் பட்டான் (அதாவது அவரைக் கருணைக் கண் கொண்டு பார்க்கவில்லை) இன்னொருவரோ அலட்சியமாகச் சென்றார்) அல்லாஹ்வும் அவரை அலட்சியம் செய்துவிட்டான்'' என்று கூறினார்கள்.

## பள்ளிவாசலில் மல்லாந்து படுப்பதும் கால்களை நீட்டுவதும்.

ஹதீஸ் 475. அப்துல்லாஹ் இப்னு ஸைத் இப்னி ஆஸிம்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு காலின் மேல் இன்னொரு காலைப் போட்டுக் கொண்டு பள்ளிவாசலில் மல்லாந்து படுத்திருந்ததை கண்டேன்.

உமர்(ரலி), உஸ்மான்(ரலி) ஆகியோரும் இவ்வாறு செய்பவர்களாக இருந்ததை ஸயீத் இப்னு அல்முஸய்யப் குறிப்பிடுகிறார்.

## மக்களுக்கு இடையூறு இல்லாத வகையில் பாதையில் பள்ளி கட்டுவது.

ஹதீஸ் 476. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

என் தாய் தந்தையர் எனக்கு விபரம் தெரிந்தது முதல் இஸ்லாத்தைக் கடைபிடிப்பவர்களாகவே இருந்தனர். நபி(ஸல்) அவர்கள் காலையிலும் மாலையிலும் எங்களிடம் வராமல் இருந்ததில்லை. பின்னர் ஒரு பள்ளி கட்ட வேண்டும் என்று அபூ பக்ரு அவர்களுக்குத் தோன்றியபோது தம் வீட்டின் வெளிப்புறத்தில் பள்ளி ஒன்றைக் கட்டினாக்ள். அதில் தொழுது கொண்டும் குர்ஆனை ஓதிக் கொண்டுமிருப்பார்கள். இணை வைப்பவர்களின் பெண்களும் குழந்தைகளும் அவரை வியப்புடன் பார்த்துக் கொண்டிருப்பார்கள். அபூ பக்ரு மிகுதியாக அழுபவராக இருந்தார். குர்ஆனை ஓதும்போது அவரால் தம் கண்களைக் கட்டுப் படுத்திக் கொள்ள இயலாது. இணை வைக்கும் குறைஷிப் பிரமுகர்களுக்கு இது கலக்கத்தை ஏற்படுத்துவதாக இருந்தது.

## கடைவீதியிலுள்ள பள்ளிவாசலில் தொழுவது.

மூடப்பட்ட வீட்டுக்குள் அமைந்த பள்ளிவாசலில் இப்னு உமர்(ரலி) தொழுதார்கள்.

ஹதீஸ் 477. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"ஒருவர் தன்னுடைய வீட்டில் தொழுவதை விடவும் கடை வீதியில் தொழுவதை விடவும் ஜமாஅத்துடன் தொழுவது இருபத்தி ஐந்து மடங்கு மதிப்பில் அதிகமானதாகும். உங்களில் ஒருவர் உளூச் செய்து, அதை அழகுறச் செய்து, தொழுகிற ஒரே நோக்கத்தில் பள்ளிவாசலுக்கு வந்தால் அவர் பள்ளிவாசலுக்கு வரும் வரை எடுத்து வைக்கும் ஒவ்வொரு எட்டுக்கும் அவருக்குப் படித்தரத்தை அல்லாஹ் உயர்த்துகிறான் ஒரு பாவத்தை அவரைவிட்டு நீக்குகிறான். தொழுகையை எதிர் பார்த்து அவர் பள்ளிவாசலில் அமர்ந்திருக்கும்போது அவர் தொழுது கொண்டிருப்பவராகவே கருதப் படுகிறார். தொழுத இடத்திலேயே அவர் இருக்கும் வரை அவருக்காக வானவர்கள் பிரார்த்தனை செய்கிறார்கள். சிறு தொடக்கு மூலம் வானவர்களுக்கத் தொல்லை அளிக்காத வரையில் 'இறைவா! இவரை மன்னித்து விடு! இறைவா இவருக்கு அருள் புரி!' என்று வானவர்கள் கூறுகின்றனர்."

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பள்ளிவாசலிலும் மற்ற இடங்களிலும் இரண்டு கை விரல்களையும் கோர்த்துக கொள்வது.

ஹதீஸ் 478. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கை விரல்களையும் கோர்த்தார்கள்.

ஹதீஸ் 479. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கைவிரல்களையும் கோர்த்தார்கள்.

ஹதீஸ் 480. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தம் கைகளைக் கோர்த்துக் காட்டி) 'அப்துல்லாஹ் இப்னு அம்ரே! மக்களில் மகாமட்டமானவர்களுடன் இப்படி நீ வாழ நேர்ந்தால் உன் நிலை என்னாகும்?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 481. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

"ஒரு கட்டிடித்தின் ஒரு பகுதி இன்னொரு பகுதியை எப்படி வலுப்படுத்திக் கொண்டிருக்கிறதோ அது போன்றே ஒரு இறைநம்பிக்கையாளர் இன்னொரு இறைநம்பிக்கையாளர் விஷயத்தில் நடக்க வேண்டும்" என்று நபி(ஸல்) கூறிவிட்டுத் தம் விரல்களைக் கோர்த்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 482. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மாலை நேரத் தொழுகைகளில் ஒன்றை இரண்டு ரக்அத்களாக எங்களுக்குத் தொழுகை நடத்திவிட்டு ஸலாம் கொடுத்துவிட்டார்கள். பள்ளியில் நாட்டப்பட்டுள்ள மரத்தினருகே சென்று கோபமுற்றவர்களைப் போல் அதில் சாய்ந்தார்கள். தங்களின் வலது கரத்தை இடது கரத்தின் மேல் வைத்துக் கை விரல்களைக் கோர்த்தார்கள். தம் வலது கன்னத்தை இடக்கையின் மீது வைத்தார்கள். அவசரக் காரர்கள் பள்ளியின் பல வாயில்கள் வழியாக வெளிப்பட்டுத் 'தொழுகை குறைக்கப்பட்டுவிட்டது' என்று பேசிக் கொண்டார்கள். அபூ பக்ரு(ரலி), உம்ர்(ரலி) ஆகியோர் அக்கூட்டத்திலிருந்தனர். (இது பற்றி) நபி(ஸல்) அவர்களிடம் கேட்க அஞ்சினார்கள். அந்தக் கூட்டத்தில் இரண்டு கைகளும் நீளமான ஒருவர் இருந்தார். துல்யதைன் (இரண்டு கைகள் நீளமானவர்) என்று அவர் குறிப்பிடப்படுவார்.

அவர் 'இறைத்தூதர் அவர்களே! தொழுகை குறைக்கப்பட்டுவிட்டதோ? அல்லது தாங்கள் மறந்து விட்டீர்களா? என்று கேட்டார். 'குறைக்கப்படவும் இல்லை. நான் மறக்கவுமில்லை" என்று நபி(ஸல்) கூறிவிட்டு (மக்களை நோக்கி) 'துல்யதைன் கூறுவது சரிதானா?' என்று கேட்க 'ஆம்' என்றனர் மக்கள்.

(தொழுமிடத்திற்குச்) சென்று விடுபட்டதைத் தொழுது ஸலாம் கொடுத்தார்கள். பிறகு தக்பீர் கூறி (தொழுகையில் செய்யும்) ஸஜ்தாவைப் போல் அல்லது அதை விட நீண்ட ஸஜ்தாவைச் செய்து, பின் தலையை உயர்த்தித் தக்பீர் கூறினார்கள். பிறகு தக்பீர் கூறி(த் தொழுகையில் செய்யும்) ஸஜ்தாவைப் போல் அல்லது அதை விட நீண்டதாக ஸஜ்தா செய்து ஸலாம் கொடுத்தார்கள். அபூ ஹுரைரா(ரலி) லுஹர், அஸர் தொழுகை என்று கூறாமல் குறிப்பாக ஒரு தொழுகையைக் கூறினார்கள் என்றும் தாம் அதை மறந்துவிட்டதாகவும் இப்னுஸீரீன் குறிப்பிடுகிறார்.

## நபி(ஸல்) அவர்கள் தொழுத பல்வேறு இடங்களும் மதீனாவின் சாலைகளில் அமைந்துள்ள பள்ளிவாயில்களும்.

ஹதீஸ் 483. மூஸா இப்னு உக்பா அறிவித்தார்.

ஸாலிம் இப்னு அப்தில்லாஹ் பாதையோரத்தில் அமைந்த சில இடங்களைத் தேர்ந்தெடுத்து அங்கே தொழுவார்கள். தம் தந்தை இப்னு உமர்(ரலி) அவ்விடங்களில் தொழுததாகவும் அவ்விடங்களில் நபி(ஸல்) தொழுததை அவரின் தந்தை பார்த்திருப்பதாகவும் குறிப்பிடுவார்கள். இப்னு உமர்(ரலி) அவ்விடங்களில் தொழுததாக நாஃபிவு அவர்களும் என்னிடம கூறினார். ஸாலிம், நாஃபிவு இருவரும் அனைத்து இடங்களைப் பற்றியும் ஒரே கருத்தைக் கூறினார்கள் என்றாலும் அவ்விருவரும் ஷரஃபுர் ரவ்ஹா என்று இடத்தில் அமைந்த பள்ளி விஷயத்தில் மாறுபட்ட கருத்தைத் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 484. நாஃபிவு அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ், உம்ராவுக்காக மக்கள் செல்லும்போது 'துலஹுலைஃபா'வில் பள்ளிவாசல் ஒன்று அமைந்துள்ள இடத்தில் இருந்த முள் மரத்தினடியில் இளைப்பாறுவார்கள். அந்த வழியாக ஹஜ்ஜு, உம்ரா மற்றும் போரிடுதல் போன்றவற்றுக்காகச் செல்லும்போது 'பத்னுல்வாதீ' என்ற பள்ளத்தாக்கு வழியாகப் புறப்பட்டு வந்து அந்தப் பள்ளதாக்கின் மேற்குப் புறஓரத்தில் ஒட்டகையைப் படுக்கச் செய்து ஸுபுஹ் வரை ஓய்வெடுப்பார்கள். ஓய்வெடுக்கும் அந்த இடம் பாறையில் அமைந்துள்ள பள்ளிவாசலும் இல்லை பள்ளியின் அரும்லுள்ள மணற்குன்றுமில்லை என்று இப்னு உமர்(ரலி) குறிப்பிட்டார்கள்.

அங்கு பெரிய பள்ளம் ஒன்று இருந்தது. அவ்விடத்தில் இப்னு உமர்(ரலி) தொழுவார்கள். அதன் உட்புறத்தில் மணற் திட்டு இருந்தது. அங்கு நபி(ஸல்) அவர்கள் தொழுதிருக்கிறார்கள். தற்போது அந்தப் பள்ளத்திற்கு அருகிலிருந்த மணல் மேட்டைத் தண்ணீர் அரித்துக் கொண்டு வந்ததால் அது மூடப்பட்டுவிட்டது.

ஹதீஸ் 485. நாஃபிவு அறிவித்தார்.

'நபி(ஸல்) அவர்கள் ஷரபுர்ரவ்ஹா எனும் இடத்திலுள்ள பெரிய பள்ளிவாசலுக்கு அரும்லுள்ள சின்னப் பள்ளிவாசல் இருக்கும் இடத்தில் தொழுதிருக்கிறார்கள்.' என்று இப்னு உமர்(ரலி) என்னிடம் கூறிவிட்டு, அந்த இடத்தை அடையாளம் கூறும்போது '(நீ மதீனாவிலிருந்து) மக்கா செல்லும வழியில் பாதையின் வலப்புறம் அமைந்த பெரிய பள்ளியில் நீ கிப்லா பக்கம் நோக்கி நின்றால் அந்த இடம், உன் வலப்புறத்தில் இருக்கும். அந்த இடத்திற்கும் நபி(ஸல்) அவர்கள் தொழுத இடத்திற்கும் தூரம் உள்ளது என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 486. நாஃபிவு அறிவித்தார்.

(மதீனாவிலிருந்து மக்கா செல்லும் வழியில்) ரவ்ஹா எனுமிடம் உள்ளது. அவ்விடத்தில் ஒரு பள்ளிவாயில் இருக்கிறது. அப்பள்ளியிலிருந்து பாதையோரமாகப் பார்வை எட்டும் தொலைவின் இறுதியில் 'இரக்' எனும் பகுதி உள்ளது. அப்பகுதியில் இப்னு உமர்(ரலி) தொழுவார்கள். அந்த இடத்தில் பள்ளி ஒன்றும் கட்டப்பட்டிருந்தது. ஆயினும் அந்தப் பள்ளியில் இப்னு உமர்(ரலி) தொழுவதில்லை. தம் இடது புறத்தில் அந்தப் பள்ளிவாசல் இருக்குமாறும் அந்தப் பள்ளியை விட சற்று முன்னால் நின்றும் தொழுவார்கள். நபி(ஸல்) அவர்கள் அந்த இடத்தில் தொழுததால் இப்னு உமர்(ரலி) அவ்வாறு தொழுவார்கள்.

'ரவ்ஹா' எனும் இடத்திலிருந்து அவர்கள் புறப்பட்டு (மக்காவுக்கு) வரும்போது இரக்கை அடையுமுன் லுஹா தொழ மாட்டார்கள். இரக்குக்கு வந்து லுஹர் தொழுவார்கள். மக்காவிலிருந்து (மதினாவுக்குத்) திரும்பி வரும்போது ஸுபுஹுக்குச் சற்று முன்னதாக, அல்லது ஸஹர் நேரத்தின் கடைசியில் இரக்கைக் கடக்க நேர்ந்தால் அங்கேயே ஓய்வெடுத்துவிட்டு ஸுபுஹ் தொழுவார்கள்.

ஹதீஸ் 487. நாஃபிவு அறிவித்தார்.

(மதீனாவிலிருந்து மக்கா) செல்லும் வழியில் வலப்புறம் அமைந்த 'ருவைஸா' எனும் சிற்றூருக்கு அரும்லுள்ள பெரிய மரத்தடியில் நபி(ஸல்) அவர்கள் இளைப்பாறுவார்கள். அவ்வூரினி எல்லையிலிருந்து இரண்டு மைல் தொலைவில் அம்மரம் இருந்தது. அம்மரத்தின் கிளைகள் முறிந்து போய் அடிமரம் மட்டும் உள்ளதுழூ அதன் நடுவில் பொந்து ஏற்பட்டிருந்தது. அதனருகே மணல் திட்டுக்கள் அனேகம் இருக்கின்றன. அந்த இடத்திலுள்ள மிருதுவான, விசாலமான திடலில்தான் நபி(ஸல்) அவர்கள் பயணத்தின்போது இளைப்பாறுவார்கள் என்று இப்னு உமர்(ரலி) என்னிடம் கூறினார்கள்.

ஹதீஸ் 488. நாஃபிவு அறிவித்தார்.

'அர்ஜ் எனும் ஊருக்குப் பின் புறத்திலுள்ள நீரோடையின் ஓரத்தில் (உள்ள பள்ளிவாயிலில்) நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள்' என இப்னு உமர்(ரலி) என்னிடம் கூறினார். அர்ஜ் எனுமிடம் (மதீனாவிலிருந்து) ஹல்பா செல்லும் வழியில் அமைந்துள்ளது. பாதையின் வலப்புறம் அமைந்துள்ள அப்பள்ளிவாயிலினருகில் கற்கள் நாட்டப்பட்ட இரண்டு மூன்று அடக்கத்தலங்கள் உள்ளன. அப்பாதையிலிருந்து பல கிளைப் பாதைகளும் பிரிகின்றன. அக்கிளைப் பாதைகளில் ஒன்றில் அர்ஜ் எனும் ஊருக்குள் நுழைந்து (ஓடைக் கரையில் அமைந்துள்ள) அப்பள்ளி வாயிலில் சூரியன் சாய்ந்து நண்பகலானதும் லுஹர் தொழுவார்கள்.

ஹதீஸ் 489. நாஃபிவு அறிவித்தார்.

'ஹர்ஷா' எனும் மலைக்கருகில் (மதீனாவிலிருந்து செல்லும்) பாதையின் இடப்புறம் அமைந்த (ஓடையின் அரும்லுள்ள) மரங்களின் கீழ் இளைப்பாறுவார்கள். அந்த ஓடை 'ஹர்ஷா' எனும் மலையை ஒட்டிச் செல்கிறது. அந்த மலைக்கும் நபி(ஸல்) தங்கிய இடத்திற்குமிடையே அம்பு எய்தால் எவ்வளவு தூரமிருக்கும். இப்னு உமர்(ரலி) அம்மரங்களிலேயே மிகப் பெரிய மரத்தினருகில் தொழும் வழக்கமுடையவர்களாயிருந்தார்கள்.

ஹதீஸ் 490. நாஃபிவு அறிவித்தார்.

'மர்ருள்ளஹ்ரான்' எனும் இடத்திற்கரும்லுள்ள ஓடையில் நபி(ஸல்) அவர்கள் இளைப்பாறுவார்கள். அந்த ஓடை (மக்காவிலிருந்து) மதீனா செல்லும் வழியிலுள்ளது. நீ மக்கா செல்லும் வழியிலுள்ளது. நீ மக்கா செல்லுமபோது 'ஸப்ராவாத்' என்ற இடத்தைக் கடந்ததும் சாலையின் இடப்புறம் அது உள்ளது. அந்தச் சாலைக்கும் நபி(ஸல்) அவர்கள்

இளைப்பாறிய இடத்திற்கும் ஒரு கல்லெறியும் தூரமே உண்டு' என இப்னு உமர்(ரலி) என்னிடம் கூறினார்கள்.

ஹதீஸ் 491. நா∴பிவு அறிவித்தார்.

'நபி(ஸல்) அவர்கள் (மதீனாவிலிருந்து) மக்கா செல்லும் 'தூத்துவா' என்ற இடத்தில் இரவு நேரம் தங்கிவிட்டு அங்கேயே காலையில் ஸுபுஹ் தொழுவார்கள்' என இப்னு உமர்(ரலி) கூறினார். நபி(ஸல்) அவர்கள் தொழுத இடம் அங்குள்ள கெட்டியான மேட்டின் மேல் அமைந்துள்ளது. அது, தற்போது பள்ளிவசால் காட்டப்பட்டுள்ள இடமன்று, அது அந்தப் பள்ளிக்குக் கீழ்ப்புறமாக அமைந்த இடமாகும்.

ஹதீஸ் 492. நா∴பிவு அறிவித்தார்.

நபி(ஸல்)அவர்கள் ஒரு கணவாயிலும் தொழுதிருக்கிறார்கள். உயரமான மலைக்கும் அதன் அரும்லுள்ள மற்றொரு மலைக்கும் இடைப்பட்ட அந்தக் கணவாய் கஅபாவுக்கு நேராக அமைந்திருக்கும். தற்போது அங்குள்ள பள்ளிவாசல் இருக்கும் மேட்டைத் தம் இடது புறமாக ஆக்கி, அந்தப் பள்ளியிலிருந்து பத்து முழ தூரத்திலுள்ள கறுப்பு மேட்டில் நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள் என்று இப்னு உமர்(ரலி) என்னிடம் கூறினார்கள்.

*(குறிப்பு: இந்தப் பாடத்திலுள்ள பத்து ஹதீஸ்களையும் சில பேர் ஒரு ஹதீஸாகக் கணக்கிட்டுள்ளதால் எண்களில் வித்தியாசம் ஏற்படும் என்பதைக் கவனத்தில் கொள்ளவும்.)*

## இமாம் வைத்துள்ள தடுப்பே பின்பற்றுவோர்க்கும் போதுமானது.

ஹதீஸ் 493. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் 'மினா' எனுமிடத்தில் சுவர் (போன்ற தடுப்பு) எதுவுமின்றித் தொழுகை நடத்திக் கொண்டிருக்கும்போது பெட்டைக் கழுதையின் மீது ஏறிக் கொண்டு அங்கே வந்தேன். அந்தச் சந்தர்ப்பத்தில் பருவ வயதை நெருங்கி இருந்தேன். மேய்வதற்காகக் கழுதையை அவிழ்த்துவிட்டுவிட்டு ஸ∴புக்கு முன்னே நடந்து சென்று வரிசையில் சேர்ந்து கொண்டேன். இதனை எவரும் ஆட்சேபிக்க வில்லை.

ஹதீஸ் 494. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பெருநாள் அன்று (தொழுகை நடத்துவதற்காகத் திடல் நோக்கிச்) செல்லும்போது ஈட்டியை எடுத்து வருமாறு கூறுவார்கள். அவர்களுக்கு முன்னால் அது நாட்டப்பட்டதும் அதை நோக்கித் தொழுவார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னே இருப்பார்கள். பயணத்தின் போதும் இவ்வாறு செய்பவர்களாக இருந்தனர். இதனால்தான் (நம்முடைய) தலைவர்களும் அவ்வாறு செய்கின்றனர்.

ஹதீஸ் 495. அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் 'பத்ஹா' எனுமிடத்தில் லுஹரையும் அஸரையும் இரண்டிரண்டு ரக்அத்களாக தொழுகை நடத்தினார்கள்.. அவ்ாகளுக்கு முன்பு கைத்தடி ஒன்றுஇருந்தது. அதற்கு முனனால் கழுதையும் பெண்களும் நடப்பவர்களாக இருந்தனர்.

## தடுப்புக்கும் தொழுபவர்களுக்கும் எவ்வளவு இடைவெளி இருக்க வேண்டும்.

ஹதீஸ் 496. ஸஹ்ல் இப்னு ஸ∴து(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தொழுமிடத்துக்கும் சுவற்றுக்குமிடையே ஓர் ஆடு நடக்குமளவுக்கு இடைவெளி இருக்கும்.

ஹதீஸ் 497. ஸலமா இப்னு அல் அக்வஃ(ரலி) கூறினார்.

மேடைப் பகுதியிலுள்ள சுவர் பக்கம் (நபி(ஸல்) தொழும் போது) ஓர் ஆடு கடந்து செல்ல முடியாத அளவு இடைவெளியே இருந்தது.

## ஈட்டியை நோக்கித் தொழுவது.

ஹதீஸ் 498. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தொழுவதற்காக ஈட்டி நாட்டப்படும். அவர்கள் அதை நோக்கித் தொழுவார்கள்.

## கைத்தடியை நோக்கித் தொழுவது.

ஹதீஸ் 499. அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

நண்பகலில் நபி(ஸல்) அவர்கள் எங்களை நோக்கி வந்தனர். தண்ணீர் கொண்டு வரப்பட்டது. உளூச் செய்து எங்களுக்கு லுஹரையும் அஸரையும் தொழுகை நடத்தினார்கள். அவர்களுக்கு முன்னால் கைத்தடி ஒன்று இருந்தது. அந்தக் கைத்தடிக்கு முன்னால் பெண்களும் கழுதைகளும் சென்று கொண்டிருந்தனர்.

ஹதீஸ் 500. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கழிப்பிடம் செல்லும்போது நானும் மற்றொரு சிறுவரும் கைத்தடியையும் தண்ணீர்ப் பாத்திரத்தையும் எடுத்துக் கொள்வோம். அவர்கள் தம் தேவையை முடித்ததும் (உளூச் செய்வதற்காக) தண்ணீர் ஊற்றுவோம்.

## மக்கா உட்பட எல்லா இடங்களிலும் தொழுபவர் தமக்கு முன் 'தடுப்பு' வைத்துக் கொள்ளவேண்டும்.

ஹதீஸ் 501. அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் நண்பகலில் புறப்பட்டு, தமக்கு முன்னால் கைத்தடியைத் தடுப்பாக வைத்து 'பத்ஹா' என்ற இடத்தில் லுஹரையும் அஸரையும் இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழுகை நடத்தினார்கள். (தொழுகைக்காக) அவர்கள் உளூச் செய்தபோது அவர்களின் மீதும் வைத்த தண்ணீரை மக்கள் (தம்மேனியில்) தடவினார்கள்.

## தூண்களை நோக்கித் தொழுவது.

(பள்ளிவாசலிலுள்ள) தூண்களில் சாய்ந்திருப்பவர்களை விடத் தொழுபவர்களே அதற்கு அதிக அரிமை உடையவர்கள் உமர்(ரலி) கூறினார். ஒருவர் இரண்டு தூண்களுக்கு இடையே தொழுது கொண்டிருந்ததைக் கண்ட உமர்(ரலி), அவரை ஒரு தூணின் அருகில் நிறுத்தி இதை நோக்கித் தொழுவீராக!" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 502. யஸீத் இப்னு அபீ உபைத் கூறினார்.

நான் ஸலமா பனீ அல் அக்வஃ(ரலி) உடன் (பள்ளிக்கு) செல்பவர்களாக இருந்தேன். ஸலமா(ரலி) குர்ஆன் வைக்கப்படும் இடத்தில் அமைந்த தூணருகே தொழுவார்கள். அபூ முஸ்லிம் அவர்களே! இந்தத் தூணை தேர்ந்தெடுத்துத் தொழுகிறீர்களே?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் இந்த இடத்தில் தொழுவதற்குச் சிரத்தை எடுப்பவர்களாக இருந்ததை பார்த்திருக்கிறேன்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 503. அனஸ்(ரலி) அறிவித்தார்.

ம∴ரிபு(க்கு பாங்கு சொன்னது) முதல் நபி(ஸல்) அவர்கள் வெளியே வரும் வரை முதிய நபித்தோழர்கள் (இரண்டு ரக்அத்கள் முன் ஸுன்னத் தொழுவதற்காகத்) தூண்களை நோக்கி விரைவார்கள்.

## ஜமாஅத் அல்லாத தொழுகைகளைத் தூண்களுக்கிடையே தொழுவது.

ஹதீஸ் 504. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களும் உஸாமா இப்னு ஸைத்(ரலி), பிலால்(ரலி), உஸ்மான் இப்னு தல்ஹா(ரலி) ஆகியோரும் கஅபாவுக்குள் நுழைந்தனர். நீண்ட நேரம் உள்ளிருந்துவிட்டு வெளியே வந்தனர். முதல் நபராக அவர்களைப் பின்தொடர்ந்து சென்று நபி(ஸல்) அவர்கள் எந்த இடத்தில் தொழுதனர்?' என்று பிலால்(ரலி) அவர்களிடம் கேட்டேன். 'முதலிலுள்ள இரண்டு தூண்களுக்கு இடையில்' என்று பிலால்(ரலி) விடையளித்தார்கள்.

ஹதீஸ் 505. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களும் பிலால்(ரலி), உஸாமா இப்னு ஸைத்(ரலி) உஸ்மான்பின் தல்ஹா(ரலி) ஆகியோரும் கஅபாவுக்குள் நுழைந்து கதவை அடைத்துக் கொண்டு (நீண்ட நேரம்) உள்ளே இருந்தார்கள். வெளியே வந்த பிலால்(ரலி) அவர்களிடம் 'நபி9ஸல்) அவர்கள் உள்ளே என்ன செய்தார்கள்?' என்று கேட்டேன். 'ஒரு தூண் தம் வலப்பக்கமும் மற்றொரு தூண் தம் இடப்பக்கமும் மூன்று தூண்கள் பின்புறமும் இருக்குமாறு தொழுதார்கள்' என்று பிலால்(ரலி) விடையளித்தார்கள். அன்றைய தினம் கஅபாவுக்குள் ஆறு தூண்கள் இருந்தன. மற்றோர் அறிவிப்பில் 'வலப்பக்கம் இரண்டு தூண்கள்' என்று கூறப்படுகிறது.

ஹதீஸ் 506. நா∴பிவு அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கஅபாவுக்குள் நுழையும்போது கஅபாவின் உள்ளே நேராகச் சென்று வாசல் தம் முதுகுக்குப் பின் இருக்குமாறும் தமக்கும் எதிர் சுவற்றுக்குமிடையே மூன்று முழ இடைவெளி இருக்கும் விதமாகவும் நின்று தொழுவார்கள். அதாவது நபி(ஸல்) அவர்கள் எந்த இடத்தில் தொழுததாக பிலால்(ரலி) அறிவித்தார்களோ அந்த இடத்தைத் தேடித் தொழுவார்கள். 'கஅபாவின் எந்தப் புறத்தில் நின்று தொழுதாலும் அதில் தவறில்லை' என்றும் கூறுவார்கள்.

## ஒட்டகம், சாய்மானம், மரம் ஆகியவற்றைத் தடுப்பாக வைத்துத் தொழுதல்.

ஹதீஸ் 507. நா∴பிவு அறிவித்தார்.

'நபி(ஸல்) அவர்கள் தங்களின் ஒட்டகத்தைக் குறுக்கே நிறுத்தி அதை நோக்கித் தொழுவார்கள்' என்று இப்னு உமர்(ரலி) கூறினார். 'ஒட்டகம் மிரண்டு ஓடிவிட்டால்...?' என்று கேட்டேன். 'ஒட்டகத்தின் மீது அமைக்கப்படும் சாய்மானத்தை எடுத்து அதை நோக்கித் தொழுவார்கள்' என்று கூறியதுடன் அவரும் அவ்வாறே செய்வார்.

## கட்டிலை நோக்கித் தொழுவது.

ஹதீஸ் 508. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(பெண்கள், நாய்கள், கழுதைகள் தொழுபவருக்குக் குறுக்கே சென்றால் தொழுகை முறிந்து விடும் என்று கூறுவதன் மூலம்) எங்களை நாய்களுக்கும் கழுதைகளுக்கும் சமமாக்கி விட்டீர்களே! நான் கட்டிலில் படுத்திருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் கட்டிலுக்கு நேராக நின்று தொழுவார்கள். அவர்களுக்கு நேராக நின்று தொழுவார்கள். அவர்களுக்கு நேராகக் கால்களை நீட்டுவது எனக்குப் பிடிக்காததால் கட்டிலின் கால்கள் வழியாக நழுவிச் சென்று விடுவேன்.

## தொழுபவருக்கு முன் நடந்து செல்பவரைத் தொழுபவர் தடுப்பது.

தொழுகையின் இருப்பின் போதும் கஅபாவில் தொழுத போதும் தமக்குக் குறுக்கே சென்ற வரை இப்னு உமர் (ரலி) தடுத்திருக்கிறார்கள். 'தடுக்கும்போது அவர் எதிர்த்தால் அவருடன் சண்டை செய்தாவது தடு' என்றும்கூறுவார்கள்.

ஹதீஸ் 509. அபூ ஸாலிஹ் அறிவித்தார்.

எவரும் குறுக்கே செல்லாமலிருக்கத் தடுப்பு வைத்துக் கொண்டு அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) ஒரு வெள்ளிக்கிழமையன்று தொழுது கொண்டிருந்தார்கள். பனா அபூ முயீத் என்ற கூட்டடத்தைச் சேர்ந்த இளைஞரொருவர் குறுக்கே செல்ல முயன்றார். உடனே அபூ ஸயீத் (ரலி) அவரின் நெஞ்சில் கையால் தள்ளினார்கள். வேறு வழியேதும் உள்ளதா என்று அந்த இளைஞர் கவனித்தபோது, அபூ ஸயீத் (ரலி) யின் குறுக்கே செல்வதைத் தவிர அவருக்கு வேறு வழிதென்படவில்லை. எனவே மீண்டும் அவர்களுக்குக் குறுக்கே செல்ல முயன்றார். முன்பை விடக் கடுமையாக அபூ ஸயீத் (ரலி) அவரைத் தள்ளினார்கள். அதனால் அவருக்குப் பாதிப்பு ஏற்பட்டது. உடனே அவர் (அட்சித் தலைவராக இருந்த) மர்வானிடம் சென்று இது பற்றி முறையிட்டார். அவரைத் தொடர்ந்து அபூ ஸயீத் (ரலி) மர்வானிடம் சென்றார்கள். 'உமக்கும் உம் சகோதரர் மகனுக்குமிடையே என்ன பிரச்சினை?' என்று மர்வான் கேட்டார். 'உங்களில் எவரேனும் தமக்கு முன்னால் 'தடுப்பு' வைத்துத் தொழும்போது, எவரேனும் குறுக்கே செல்ல முயன்றால் அவரைத் தடுக்க வேண்டும் அதை அவர் எதிர்த்தால் அவருடன் சண்டையிட வேண்டும். ஏனெனில் அவர் நிச்சயம் ஷைத்தானாவார்" என்று நபி (ஸல்) அவர்கள் கூற செவியுற்றுள்ளேன்' என அபூ ஸயீத் (ரலி) கூறினார்.

## தொழுபவருக்குக் குறுக்கே செல்வது குற்றமாகும்.

ஹதீஸ் 510. புஸ்ரு இப்னு ஸயீத் அறிவித்தார்.

தொழுபவரின் குறுக்கே செல்பவர் பற்றி நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றதை அறிந்து வருமாறு என்னை அபூ ஜுஹைம் (ரலி) அவர்களிடம் ஸைத் இப்னு காலித் (ரலி) அனுப்பு வைத்தார். 'தொழுபவருக்குக் குறுக்கே செல்பவர், அதனால் தமக்கு ஏற்படும் பாவத்தைப் பற்றி அறிந்திருந்தால் அவருக்குக் குறுக்கே செல்வதற்குப் பதில் நாற்பது நாள்கள் நின்று கொண்டிருப்பது அவருக்கு நல்லதாகத் தோன்றும்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஜுஹைம் (ரலி) விடையளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபுன் னழ்ரு என்பவர் 'நாற்பது ஆண்டுகள்" என்று கூறினார்களா? அல்லது 'நாற்பது மாதங்கள்' அல்லது 'நாற்பது நாள்கள்' என்று கூறினார்களா? என்பது சரியாக தமக்கு நினைவில்லை என்கிறார்.

## ஒருவர் தொழும்போது மற்றொரு மனிதரை நோக்கித் தொழலாமா?

ஒருவர் இன்னொரு மனிதரை நோக்கித் தொழுவதை உஸ்மான் (ரலி) வெறுத்துள்ளனர். இதனால் தொழுபவரின் கவனம் சிதறும் என்பதால்தான் இந்த சிலை. கவனம் சிதறாது என்றால் அதனால் தவறில்லை ஒருவர் இன்னொரு மனிதரின் தொழுகையை முறித்து விடு முடியாது என்று ஸைத் இப்னு ஸாபித் (ரலி) குறிப்பிட்டுள்ளார்கள்.

ஹதீஸ் 511. மஸ்ருக் அறிவித்தார்.

ஆயிஷா (ரலி) அவர்களிடம் தொழுகையை முறிக்கும் காரியங்கள் பற்றிப் பேசப்பட்டது. சிலர் நாயும் கழுதையும் பெண்ணும் (தொழுபவருக்குக் குறுக்கே சென்றால்) தொழுகையை முறிப்பர் என்று கூறினர். அதைக் கேட்ட ஆயிஷா (ரலி) 'எங்களை நாய்களோடு ஒப்பிட்டு விட்டீர்களே!

நிச்சயமாக கிப்லாவுக்கும் நபி(ஸல்) அவர்களுக்குமிடையே கட்டிலில் நான் படுத்திருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள். அப்போது எனக்கு ஏதேனும் தேவை ஏற்பட்டால் நபி(ஸல்) அவர்களை (நேருக்கு நேர்) எதிர் கொள்வதை விரும்பாமல் நழுவி விடுவேன்' என்றார்கள்.

## தூங்குபவரை நோக்கித் தொழுவது.

ஹதீஸ் 512. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போது நான் அவர்களின் விரிப்பில் அவர்களுக்குக் குறுக்கே உறங்கிக் கொண்டிருப்போன். அவர்கள் வித்ருத தொழ எண்ணும்போது என்னை எழச் செய்வார்கள். அதன்பின்னர் வித்ருத் தொழுவேன்.

## பெண்ணை நோக்கி உபரியான தொழுகைகளைத் தொழுவது.

ஹதீஸ் 513. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுக்கு முன்னே உறங்கிக் கொண்டிருப்பேன். என் கால்களிரண்டும் அவர்களின் முகத்துக்கு நேராக இருக்கும். அவர்கள் ஸஜ்தா செய்யும்போது (விரலால் என் காலில்) குத்துவார்கள். நான் கால்களை மடக்கிக் கொள்வேன். அவர்கள் எழுந்ததும கால்களை நீட்டிக் கொள்வேன். அன்றைய காலத்தில் (எங்கள்) வீடுகளில் விளக்குகள் கிடையாது.

## தொழும்போது எதுகுறுக்கே சென்றாலும் தொழுகை முறியாது.

ஹதீஸ் 514. மஸ்ரூக் அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்களிடம் தொழுகையை முறிக்கும் காரியங்கள் பற்றிப் பேசப்பட்டது. சிலர் நாயும் கழுதையும் பெண்ணும் (தொழுபவருக்குக் குறுக்கே சென்றால்) தொழுகையை முறிப்பர் என்று கூறினர். அதைக் கேட்ட ஆயிஷா(ரலி) 'எங்களை கழுதைகளுடனும் நாய்களுடனும் ஒப்பிட்டு விட்டீர்களே! நிச்சயமாக கிப்லாவுக்கும் நபி(ஸல்) அவர்களுக்குமிடையே கட்டிலில் நான் படுத்திருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள். அப்போது எனக்கு ஏதேனும் தேவை ஏற்பட்டால் எழுந்து அமர்வது நபி(ஸல்) அவர்களுக்குத் தொல்லை தராமல் அவர்களின் கால் வழியாக நழுவி விடுவேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 515. ஸுஹ்ரி அறிவித்தார்.

நான் என் தந்தையின் உடன் பிறந்தாரிடம் எவை (குறுக்கே சென்றால்) தொழுகை முறிக்கும் என்று கேட்டேன். அதற்கவர் 'எதுவும் முறிக்காது' என்று கூறிவிட்டு, 'நபி(ஸல்) அவர்களின் குடும்பத்திற்குரிய விரிப்பில், கிப்லாவுக்கும் நபி(ஸல்) அவர்களுக்கும்போது நபி(ஸல்) இரவில் தொழுவார்கள்' என்று ஆயிஷா(ரலி) கூறினார் என குறிப்பிட்டார்.

## தொழும்போது சிறுமியைத் தோளில் தூக்கி வைத்துக கொள்ளலாமா?

ஹதீஸ் 516. அபூ கதாதா அல் அன்ஸாரி(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் மகள் ஸைனப் அவர்களின் குழந்தை 'உமாமா'வைத் (தோளில்) சுமந்த நிலையில் தொழுதிருக்கிறார்கள். ஸஜ்தாவுக்குச் செல்லும்போது இறக்கி விடுவார்கள். நிற்கும்போது தூக்கிக் கொள்வார்கள்.

## மாதவிடாய்க் காரியானவள் படுத்திருக்கும் விரிப்பை நோக்கித் தொழலாமா?

ஹதீஸ் 517. மைமூனா(ரலி) அறிவித்தார்.

என்னுடைய விரிப்பு நபி(ஸல்) அவர்கள் தொழும் விரிப்புடன் பட்டுக் கொண்டிருக்கும். சில

சமயம் நான் விரிப்பில் இருக்கும்போது அவர்களின் ஆடை என் மேல் படுவதுண்டு.

ஹதீஸ் 518. மைமூனா(ரலி) அறிவித்தார்.

“நான் மாதவிடாய்க்காரியாக இருக்கும் சமயத்தில் நபி(ஸல்) அவர்களின் அருகே படுத்துறங்குவேன். அவர்கள் ஸஜ்தாச் செய்யும்போது அவர்களின் ஆடை என் மேல் படுவதுண்டு.

## ஸஜ்தாவுக்குச் செல்லும்போது மனைவியை விரலால் குத்தலாமா?

ஹதீஸ் 519. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுக்கும் கிப்லாவுக்கும் இடையே உறங்கிக் கொண்டிருப்பேன். அவர்கள் ஸஜ்தாச் செய்யும்போது (விரலால்) என் காலில் குத்துவார்கள். நான் கால்களை மடக்கிக் கொள்வேன். இவ்வாறிருக்க எங்களை நாய்களுக்கும் கழுதைகளுக்கும் சமமாக்கி விட்டீர்களே?

## தொழுபவர் மீதுள்ள அசுத்தங்களை ஒரு பெண் அகற்றலாமா?

ஹதீஸ் 520. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கஅபாவினருகில் தொழுது கொண்டிருந்தார்கள். அப்போது குரைஷிகள் தங்கள் சபையில் குழுமியிருந்தனர். ‘இந்த முகஸ்துதி விரும்பியை நீங்கள் பார்க்கவில்லையா?‘ என்று அவர்களில் ஒருவன் கேட்டான். இன்னாருடைய (அறுக்கப்பட்ட) ஒட்டகத்தினருகில் சென்று அதன் சாணத்தையும் இரதத்தையும் மற்றும் கருப்பையையும் எடுத்து வந்து இவர் ஸஜ்தாச் செய்யும் வரை காத்திருந்து அதை இவரின் இரண்டு தோள் புஜத்திலும் போட்டுவிட உங்களில் யார் தயார்?‘ என்று அவன் கேட்டான்.

அவர்களில் மிக மோசமான ஒருவன் அதற்கு முன் வந்தான். நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்தபோது அதை அவர்களின் தோள் புஜத்தில் போட்டான். நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாவிலேயே கிடந்தார்கள். ஒருவரின் மீது ஒருவர் சாய்ந்து விடும் அளவுக்குக் குரைஷிகள் சிரிக்கலானார்கள். சிறுமியாக இருந்த ஃபாதிமா(ரலி) அவர்களிடம் ஒருவர் சென்று இதைத் தெரிவித்ததும் அவர்கள் ஓடோடி வந்தார்கள். அவர்கள் வந்து அசுத்தங்களை அகற்றும் வரை ஸஜ்தாவிலேயே நபி(ஸல்) அவர்கள் கிடந்தார்கள். பின்பு குரைஷிகளை ஃபாதிமா(ரலி) ஏச ஆரம்பித்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் ‘இறைவா! குரைஷிகளை நீ பார்த்துக் கொள்! இறைவா! குரைஷிகளை நீ பார்த்துக் கொள்! இறைவா! குரைஷிகளை நீ பார்த்துக் கொள்!“ என்று கூறிவிட்டு ‘அம்ர் இப்னு ஹிஷாம், உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உக்பா, உமய்யா இப்னு கலப், உக்பா இப்னு அபீ முயீத், உமாரா இப்னு வலீத் ஆகியோரை இறைவா! நீ பார்த்துக் கொள்! என்று கூறினார்கள்.

அல்லாஹ்வின் மீது அணையாக பத்ருப் போரில் இவர்களெல்லாம் வேரற்ற மரங்கள் போல் மாண்டு மடிந்ததையும் பத்ருக்களத்திலுள்ள பாழடைந்த கிணற்றில் இவர்கள் போடப் பட்டதையும் பார்த்தேன்.

“பாழடைந்த கிணற்று வாசிகள் சாபத்திற்கு ஆளானார்கள்“ என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

# அத்தியாயம் - 9 - தொழுகையின் நேரங்கள்

## தொழுகையின் சிறப்பும் அவற்றின் நேரங்களும்.

ஹதீஸ் 521. ஸுஹ்ரி கூறினார்கள்.

உமர் இப்னு அப்தில அஸீஸ் ஒரு நாள் தொழுகையைத் தாமதப் படுத்திவிட்டார்கள். அப்போது உர்வா இப்னு ஸுபைர் அவரிடம் வந்து பின்வரும் நிகழ்ச்சியைக் கூறி (அவரின் செயலைக் கண்டிக்கலா)னார்கள்.

இராக்கில் இருக்கும்போது ஒரு நாள் முகீரா இப்னு ஷுஅபா(ரலி) தொழுகையைத் தாமதப் படுத்திவிட்டார்கள். அப்போது அபூ மஸ்வூத் அல் அன்ஸாரி(ரலி), அவரிடம் வந்து, முகீராவே! இது என்ன? ஜிப்ரீல்(அலை) அவர்கள் இறங்கி (ஃபஜ்ருத்) தொழ, நபி(ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்பு (லுஹர்) தொழ, நபி(ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்பு (அஸர்) தொழ நபி(ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்பு (மக்ரிப்) தொழ நபி(ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின் இஷா தொழ, நபி(ஸல்) அவர்களும் தொழுதார்கள். பின்னர் நபியிடம் இந்நேரங்களில் தொழ வேண்டும் என்றே உமக்குக் கட்டளையிடப் பட்டுள்ளது என்றும் ஜிப்ரீல்(அலை) அவர்கள் கூறினார்கள். இதை நீர் அறியவில்லையா? என்று கேட்டார்கள்.

(இந்த நிகழ்ச்சியை உர்வா இப்னு ஸுபைர், உமர் இப்னு அப்தில் அஸீஸ் அவர்களிடம் கூறிய போது) உர்வாவே நீர் கூறுவது என்னவென்பதைக் கவனித்துப் பாரும்! நபி(ஸல்) அவர்களுக்குத் தொழுகையின் நேரத்தை ஜிப்ரீல்(அலை) அவர்கள் நிர்ணயித்தார்களா? என்று உமர் இப்னு அப்தில் அஸீஸ் கேட்டார்கள்.

ஹதீஸ் 522. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

சூரிய(னி)ன் (ஒளி) என் அறையில் (மறையாமல்) விழுந்து கொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுவார்கள்.

## இறைவனின் பால் திரும்பியவர்களாக அவனையே அஞ்சுங்கள்! தொழுகையை நிலை நாட்டுங்கள்! இணை வைப்போரில் ஆகி விடாதீர்கள் (திருக்குர்ஆன் 30:31) என்ற இறைவசனம்.

ஹதீஸ் 523. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

அப்துல் கைஸ் குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து நாங்கள் ரபீஆ எனும் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். (போரிடுதல்) விலக்கப்பட்ட மாதத்தில் தவிர (ஏனைய மாதங்களில்) உங்களிடம் நாங்கள் வர இயலாது. எனவே உங்களிடமிருந்து பெற்றுச் சென்று எங்களுக்குப் பின்னாலுள்ளவர்களையும் அதன் பால் அழைக்கக்கூடிய விஷயங்களை எங்களுக்குக் கட்டளையிடுங்கள்! என்று கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், நான்கு காரியங்களை உங்களுக்கு ஏவுகிறேன். அவையாவன: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை நிச்சயமாக நான் அல்லாஹ்வின் தூதராவேன் என்று உறுதியாக நம்புவது தொழுகையை நிலைநாட்டுவது, ஸகாத் கொடுத்து வருவது, கனீமத் (போரில் வென்ற பின் எதிரிகளிடமிருந்து கைப்பற்றப்பட்ட) பொருட்களில் ஐந்தில் ஒரு பகுதியை பொதுமக்கள் நன்மைக்காக) என்னிடம் ஒப்படைத்து விடுதல், நான்கு காரியங்களைவிட்டு உங்களை நான்

தடுக்கிறேன். அவையாவன: (மது பானங்கள் வைத்திருந்த) சுரைக்குடுக்கை, வாய் குறுகலான சுட்ட மண் குடுவை, தார் பூசப்பட்ட பாத்திரம், பேரீச்ச மரத்தின் அடிப்பகுதியைக் குடைந்து செய்யப்பட்ட பாத்திரம் ஆகியவற்றை(ப் பயன்படுத்துவதை)விட்டும் உங்களைத் தடுக்கிறேன் என்று கூறினார்கள்.

குறிப்பு: போதைப் பொருள்களுக்காகப் பயன்படுத்தப் பட்ட இப்பாத்திரங்களைப் பயன்படுத்தலாகாது என்ற தடை, பின்னர் நபி(ஸல்) அவர்களால் விலக்கிக் கொள்ளப்பட்டது என்பதைக் கவனத்தில் கொள்க!)

## தொழுகையை நிலைநிறுத்துவதாக உறுதிப் பிரமாணம் பெறுவது.

ஹதீஸ் 524. ஜரீர்பின் அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

தொழுகையை நிலைநாட்டுவது ஸகாத் கொடுப்பது, முஸ்லிம்கள் அனைவருக்கும் நல்லதையே நாடுவது ஆகிய காரியங்களுக்காக நான் அல்லாஹ்வின் தூதரிடம் உறுதிப் பிரமாணம் எடுத்தேன்.

## தொழுகை (பாவங்களின்) பரிகாரம்.

ஹதீஸ் 525. ஹுதைஃபா(ரலி) கூறினார்கள்.

நாங்கள் உமர்(ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தபோது, நபி(ஸல்) அவர்கள் ஃபித்னாவைப் பற்றிக் கூறியதை உங்களில் அறிந்திருப்பவர் யார்? என்று கேட்டார்கள். (ஃபித்னா என்ற வார்த்தைக்குச் சோதனைகள், துன்பங்கள் என்று பொருளும் குழப்பங்கள் என்ற பொருளும் உண்டு.) நபி(ஸல்) அவர்கள் கூறிய மாதிரியே நான் அதை அறிந்திருக்கிறேன் என்றேன். அதற்கு உமர்(ரலி) நீர் அதற்குத் தகுதியானவர் தாம் என்றனர். ஒரு மனிதன் தம் குடும்பத்தினரிடமும் தம் சொத்துக்களிலும் தம் குழந்தைகளிடமும் தம் அண்டை வீட்டாரிடமும் (அளவு கடந்த நேசம் வைப்பதன் மூலம்) ஃபித்னாவில் (சோதனையில்) ஆழ்த்தப்படும்போது, தொழுகை, நோன்பு, தர்மம், (நல்லதை) ஏவுதல், (தீமையை) விலக்குதல் ஆகிய காரியங்கள் அதற்குப் பரிகாரமாகும் என்றும் நான் விடையளித்தேன்.

அதற்கு உமர்(ரலி), நான் இதைக் கருதவில்லை என்றனர். கடலலை போல் அடுக்கடுக்காக ஏற்படும் (நபிகளால் முன்னறிவிக்கப்பட்ட) ஃபித்னா (குழப்பங்கள்) பற்றியே கேட்கிறேன் என்று கூறினார்கள். இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அந்தக் குழப்பங்களுக்கும் உங்களுக்கும் யாதொரு சம்மந்தமுமில்லை. உங்களுக்கும் அந்தக் குழப்பங்களுக்கு மிடையே மூடப்பட்ட கதவு உள்ளது என கூறினேன். அக்கதவு திறக்கப்படுமா? உடைக்கப்படுமா? என உமர்(ரலி) கேட்டார்கள். நான் உடைக்கப்படும் என்றேன். அப்படியாயின் அது ஒருக்காலும் மூடப்படாது என்று உமர்(ரலி) கூறினார்.

ஷகீக் கூறினார். அந்தக் கதவு எதுவென உமர்(ரலி) அறிவார்களா? என்று ஹுதைஃபா(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். ஆம்! பகலுக்குப் பின்னர் இரவு என்பதை அறிவது போல் அதை உமர்(ரலி) அறிவார்கள். பொய்கள் கலவாத செய்தியையே நான் அவர்களுக்கு அறிவித்தேன் என்று ஹுதைஃபா(ரலி) கூறினார். அந்தக் கதவு எதுவென ஹுதைஃபா(ரலி) அவர்களிடம் கேட்க நாங்கள் அஞ்சி, மஸ்ரூக்கைக் கேட்கச் செய்தோம். அதற்கு ஹுதைஃபா(ரலி) அந்தக் கதவு உமர்(ரலி) தாம் என்றார்கள்.

ஹதீஸ் 526. இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

ஒருவர் அன்னியப் பெண்ணை முத்தமிட்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்து (பரிகாரம் கேட்டு) இந்த விபரத்தைக் கூறினார். பகலின் இரண்டு ஓரங்களிலும் இரவின் ஒரு பகுதியிலும் தொழுகையை நிலை நிறுத்துவீராக! நிச்சயமாக நல்ல காரியங்கள் தீய காரியங்களை அகற்றிவிடும் (திருக்குர்ஆன் 11:114) என்ற வசனத்தை இறைவன் அருளினான். அப்போது அந்த மனிதர் நபி அவர்களே! இது எனக்கு மட்டுமா? என்று கேட்டதற்கு என் சமுதாயம் முழுமைக்கும் என்று நபி(ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.

### தொழுகையை உரிய நேரத்தில் தொழுவதன் சிறப்பு:

ஹதீஸ் 527. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான செயல் எது? என்று நபி(ஸல்) அவர்களிடம் நான் கேட்டபோது, தொழுகையை அதற்குரிய நேரத்தில் தொழுவதாகும் என்று பதில் கூறினார்கள். அதற்கு அடுத்து எது? என்றேன். பெற்றோருக்கு நன்மை செய்தல் என்றார்கள். அதற்கு அடுத்து எது? என்றேன். இறைவழியில் அறப்போர் புரிதல் என்றனர். எனக்கு இவற்றை நபி(ஸல்) அவர்கள் அறிவித்தனர். (கேள்வியை) மேலும் நான் அதிகப்படுத்தியிருந்தால் நபி(ஸல்) அவர்களும் மேலும் சொல்லியிருப்பார்கள்.

### ஐவேளைத் தொழுகைகள் பாவங்களின் பரிகாரங்களாகும்.

ஹதீஸ் 528. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

உங்களில் ஒருவரின் வாசலில் ஆறு ஒன்று (ஓடிக் கொண்டு) இருக்கிறது. அதில் அவர் தினமும் ஐந்து முறை குளிக்கிறார். அவரின் மேனியிலுள்ள அழுக்குகளில் எதுவும் எஞ்சியிருக்குமா எனக் கூறுங்கள் என்று தோழர்களிடம் நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவரின் அழுக்குகளில் சிறிதளவும் எஞ்சியிராது என நபித் தோழர்கள் கூறினர். இது ஐவேளைத் தொழுகைகளின் உவமையாகும். இதன் மூலம் அல்லாஹ் பாவங்களை அகற்றுகிறான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### தொழுகையை உரிய நேரங்களில் தொழாமல் பாழ் படுத்துவது.

ஹதீஸ் 529. கைலான் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் இருந்தவற்றில் எதனையும் (இன்று) என்னால் காண முடியவில்லை என்று அனஸ்(ரலி) குறிப்பிட்டார்கள். தொழுகை இருக்கிறதே என்று அவர்களிடம் கேட்கப் பட்டது. அதில் கூட செய்வதையெல்லாம் நீங்கள் (கூடக் குறைய) செய்து விடவில்லையோ? எனத் திருப்பிக் கேட்டார்கள்.

ஹதீஸ் 530. ஸுஹ்ரீ கூறினார்கள்.

அனஸ் இப்னு மாலிக்(ரலி) டமாஸ்கஸ் நகரிலிருக்கும்போது நான் அவர்களிடம் சென்றேன். அவர்கள் அழுது கொண்டிருந்தனர். ஏன் அழுகிறீர்கள்? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் காலத்தில் நான் கண்டவைகளில் இந்தத் தொழுகையைத் தவிர வேறு எதனையும் என்னால் (இன்றைய சமூகத்தில்) காண முடியவில்லை. அந்தத் தொழுகையும் கூட பாழ்படுத்தப் பட்ட நிலையிலுள்ளது என அனஸ்(ரலி) கூறினார்.

### தொழுபவர் தம் இறைவனுடன் உரையாடுகிறார்.

ஹதீஸ் 531. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் ஒருவர் தொழும்போது தம் இறைவனிடம் தனிமையில் உரையாடுகிறார். எனவே தம் வலப்புறம் துப்ப வேண்டாம். எனினும் தம் இடது பாதத்திற்குக் கீழே துப்பிக் கொள்ளலாம்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 532. அனஸ்(ரலி) கூறினார்கள், நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். ஸஜ்தாவில் நடுநிலையைக் கடைப்பிடியுங்கள்! கைகளை நாய் விரிப்பது போல் விரிக்கலாகாது! துப்பும்போது தமக்கு முன்புறமோ தம் வலப்புறமோ துப்பலாகாது! ஏனெனில் அவர் தம் இறைவனுடன் தனிமையில் உரையாடிக் கொண்டிருக்கிறார்.

## கடுமையான வெப்பத்தில் லுஹரைத் தாமதப் படுத்துவது.

ஹதீஸ் 533. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வெப்பம் கடுமையாகும்போது (வெப்பம் தணியும் வரை) லுஹரைத் தாமதப் படுத்துங்கள்! ஏனெனில் கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்பாடாகும்.

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 534. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வெப்பம் கடுமையாகும்போது (வெப்பம் தணியும் வரை) லுஹரைத் தாமதப் படுத்துங்கள்! ஏனெனில் கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்பாடாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 535. அபூ தர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் முஅத்தின், லுஹருக்கு பாங்கு சொல்ல முற்பட்டபோது நபி(ஸல்) அவர்கள் கொஞ்சம் பொறு கொஞ்சம் பொறு என்று கூறிவிட்டு, கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்படாகும். எனவே வெப்பம் கடுமையாகும்போது (லுஹர்) தொழுகையைத் தாமதப் படுத்துங்கள்! என்றார்கள். மணல் திட்டுகளின் நிழலை நாங்கள் பார்க்கும் வரை நபி(ஸல்) அவர்கள் தாமதப் படுத்துங்கள்! என்றார்கள். மணல் திட்டுகளின் நிழலை நாங்கள் பார்க்கும் வரை நபி(ஸல்) அவர்கள் தாமதப் படுத்துவார்கள். (சூரியன் நன்றாகச் சாய்ந்து அஸருக்குச் சற்று முன்பாகத்தான் மணல் திட்டுகளின் நிழல் தென்படும்.)

ஹதீஸ் 536. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வெப்பம் கடுமையாகும்போது (வெப்பம் தணியும் வரை) லுஹரைத் தாமதப் படுத்துங்கள்! ஏனெனில் கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்படாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 537. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவா! என்னுடைய ஒரு பகுதி, மறுபகுதியைச் சாப்பிட்டுவிட்டது என்று நரகம் இறைவனிடம் முறையிட்டது. கோடையில் ஒரு மூச்சு விடுவதற்கும் குளிரில் ஒரு மூச்சு விடுவதற்கும் இறைவன் அதற்கு அனுமதி வழங்கினான். கோடை காலத்தில் நீங்கள் காணும் கடுமையான வெப்பமும் குளிர் காலத்தில் நீங்கள் உணரும் கடும் குளிரும் அதன் வெளிப்பாடுகள் தாம். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 538. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

வெப்பம் கடுமையாகும்போது (வெப்பம் தணியும் வரை) லுஹரைத் தாமதப்படுத்துங்கள்! ஏனெனில், கடுமையான வெப்பம் நரகத்தின் வெப்பக் காற்றின் வெளிப்படாகும்.

என அபூ ஸயீது(ரலி) கூறினார்கள்.

## பயணத்தில் லுஹரைத் தாமதப் படுத்துவது.

ஹதீஸ் 539. அபூ தர்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்திலிருந்தோம். முஅத்தின் லுஹருக்கு பாங்கு சொல்ல முனைந்தபோது, கொஞ்சம் பொறு என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். பின்னர் மீண்டும் பாங்கு சொல்ல அவர் முனைந்தபோது கொஞ்சம் பொறு என்றனர். மணல் திட்டுகளின் நிழலை நாங்கள் பார்க்கும் வரை தாமதப்படுத்தினார்கள். கடுமையான வெப்பம், நரக வெப்பத்தின் வெளிப்பாடாகும். எனவே வெப்பம் கடுமையாகும்போது (லுஹர்) தொழுகையைத் தாமதப் படுத்துங்கள்! என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## சூரியன் சாய்ந்த பின்பே லுஹர் நேரம் ஆரம்பமாகிறது.

ஹதீஸ் 540. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் சூரியன் சாய்ந்தபோது வெளியே வந்து லுஹர் தொழுதார்கள். மிம்பர் (மேடை) மீது ஏறி உலக முடிவு நாள் பற்றியும் குறிப்பிட்டார்கள். அந்நாளில் பயங்கரமான பல காரியங்கள் நிகழும் என்றும் குறிப்பிட்டார்கள். எதைப் பற்றியேனும் எவரேனும் கேட்க விரும்பினால் அவர் என்னிடம் கேட்கலாம். இந்த இடத்தில் நான் இருக்கும் வரை நீங்கள் எதைப் பற்றிக் கேட்டாலும் உங்களுக்கு அறிவிக்காதிருக்க மாட்டேன் என்றும் குறிப்பிட்டார்கள். மக்கள் மிகுதியாக அழலானார்கள். நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கேளுங்கள் என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஹுதாபா என்பவரின் மகன் அப்துல்லாஹ் என்பவர் எழுந்து என் தந்தை யார்? என்று கேட்டார். உன் தந்தை ஹுதாபா என்று நபி(ஸல்) கூறிவிட்டு என்னிடம் கேளுங்கள் என்று மிகுதியாகக் குறிப்பிட்டார்கள். (இந்நிலையைக் கண்ட) உமர்(ரலி) மண்டியிட்டமர்ந்து அல்லாஹ்வை இரட்சகனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத்(ஸல்) அவர்களை நபி என்றும் நாங்கள் திருப்தியுடன் ஏற்றோம் என்று கூறியதும் நபி(ஸல்) அவர்கள் மவுனமானார்கள். பின்னர் சற்று முன் இந்தச் சுவற்றின் நடுவில் சுவர்க்கமும் நரகமும் எனக்கு எடுத்துக் காட்டப்பட்டன. (அவ்விடத்தில் கண்டது போல்) நல்லதையும் கெட்டதையும் நான் கண்டிருக்கவில்லை என்றார்கள்.

ஹதீஸ் 541. அபூ பர்ஸா(ரலி) கூறினார்கள்.

எங்களில் ஒருவர் தம் அருகிலிருப்பவரை அறிந்து கொள்ளும் (அளவில் வெளிச்சம் ஏற்படும்) சமயத்தில் நபி(ஸல்) அவர்கள் ஸுப்ஹுத் தொழுபவர்களாக இருந்தனர். அறுபது (வசனங்கள்) முதல் நூறு வரை ஸுப்ஹில் ஓதுவார்கள். சூரியன் (உச்சியிலிருந்து) சாயும்போது லுஹர் தொழுபவர்களாக இருந்தனர். அஸரையும் தொழுவார்கள். (அஸர் தொழுகையை நிறைவேற்றிய) எங்களில் ஒருவர் மதீனாவின் கடைக் கோடிக்குச் சென்றுவிட்டுத் திரும்பி வந்தால் சூரியன் உயிரிடன் (அதாவது ஒளி குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும்.

இந்த ஹதீஸை அபூ பர்ஸாவிடமிருந்து அறிவிக்கும் அபுல் மின்ஹால், மக்ரிப் பற்றி அபூ பர்ஸா(ரலி) கூறியதை நான் மறந்து விட்டேன். இஷாவை இரவின் மூன்றில் ஒரு பகுதி இருக்கும் வரை அல்லது இரவின் பாதி வரை தாமதப் படுததுவது பற்றிப் பெருட்படுத்த மாட்டார்கள் என அபூ பர்ஸா(ரலி) குறிப்பிட்டார்கள் என்கிறார்.

ஹதீஸ் 542. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நண்பகலில் நபி(ஸல்) அவர்களின் பின்னே தொழும்போது வெப்பத்தைத் தவிர்ப்பதற்காக எங்கள் ஆடைகளின் மீது ஸஜ்தாச் செய்பவர்களாக இருந்தோம்.

## லுஹரை அஸர் வரை தாமதப் படுத்துவது.

ஹதீஸ் 543. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கன் மதீனாவில் மக்ரிப், இஷாவை ஏழு ரக்அத்களாகவும் லுஹர் அஸரை எட்டு ரக்அத்களாகவும் தொழுகை நடத்தினார்கள்.

(இப்னு அப்பாஸ்(ரலி) வழியாக இதை அறிவிக்கும்) ஜாபிர் இப்னு ஸைதிடம் இது மழை நாளின்போது நடந்திருக்கலாமோ? என்று அய்யூப் கேட்டபோது இருக்கலாம் என்று பதிலளித்தார்கள்.

## அஸர் நேரம்.

ஹதீஸ் 544. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

சூரியன் (ஒளி) என் அறையிலிருந்து விலகாத நிலையில் நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 545. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

சூரிய(னி)ன் (ஒளி) என்னுடைய அறையில் விழுந்து கொண்டிருக்கும்போது நிழல் என் அறையைவிட்டும் உயராதபோது நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுதார்கள்.

ஹதீஸ் 546. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

சூரிய(னி)ன் (ஒளி) என்னுடைய அறையில் விழுந்து கொண்டிருக்கும்போது நிழல் என் அறையைவிட்டும் உயராதபோது நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுதார்கள்.

ஹதீஸ் 547. ஸய்யார் இப்னு ஸலாமா கூறினார்.

நானும் என்னுடைய தந்தையும் அபூ பர்ஸா(ரலி) அவர்களிடம் சென்றோம். கடமையான தொழுகையை நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுவார்கள்? என்று என் தந்தை கேட்டார். நீங்கள் முதல் தொழுகை என்று கூறக்கூடிய நண்பகல் தொழுகையை (நடுவானிலிருந்து) சூரியன் சாயும்போது நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள். எங்களில் ஒருவர் (அஸர் தொழுதுவிட்டு) மதீனாவின் கடைக் கோடியிலுள்ள தம் இடத்திற்குத் திரும்பும்போது சூரியன் உயிருடன் (ஒளி குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும் என்றார்கள் மக்ரிப் பற்றி அபூ பர்ஸா(ரலி) கூறியதை நான் மறந்துவிட்டேன். கடைசித் தொழுகை என்று நீங்கள் குறிப்பிடக் கூடிய இஷாவைப் பிற்படுத்துவதை விரும்புபவர்களாக நபி(ஸல்) அவர்கள் இருந்தனர். இஷாவுக்குப் இப்னு பேசிக் கொண்டிருப்பதையும் நபி(ஸல்) அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தனர். அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதி நபி(ஸல்) அவர்ள வைகறைத் தொழுகையைத் தொழுது முடிக்கும்போது ஒருவர் தம் அருகில் அமர்ந்திருப்பவரை அறிந்து கொள்ள முடியும் என அபூ பர்ஸா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 548. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் அஸர் தொழுதுவிட்டு,மதீனாவிலுள்ள (குபா-பகுதியில் இருந்த) பனுஅம்ர் இப்னு அவ்வு குலத்தாரிடம் சென்றால் அவர்கள் அஸர் தொழுது கொண்டிருப்பதைக் காண்போம்.

ஹதீஸ் 549. அபூ உமாமா கூறினார்கள்.

நாங்கள் உமர்பின் அப்துல அஸீஸுடன் லுஹர் தொழுதோம். பின்னர் (அங்கிருந்து) புறப்பட்டு அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் சென்றபோது அவர்கள் அஸர் தொழுது கொண்டிருக்கக் கண்டோம். என் தந்தையின் உடன் பிறந்தவரே! இப்போது நீங்கள் தொழுதது என்ன தொழுகை? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் அஸர் தொழுகை! நபி(ஸல்) அவர்களுடன் இவ்வாறே நாங்கள் தொழுபவர்களாக இருந்தோம் என்றார்கள்.

ஹதீஸ் 550. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

சூரியன் உயரத்தில் ஒளி வீசிக் கொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுபவர்களாக இருந்தனர். மேட்டுப பாங்கான பகுதிக்குச் செல்பவர் அங்கே சென்றடையும்போது சூரியன் உயரத்திலேயே இருக்கும். சில மேட்டுப் பாங்கான பகுதிகள் மதீனாவிலிருந்து நான்கு மைல் அல்லது கிட்டததட்ட அந்த அளவு தூரத்தில் அமைந்திருந்தன.

ஹதீஸ் 551. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் அஸர் தொழுது முடித்த பின் எங்களில் குபா என்ற இடத்திற்குச் செல்பவர்கள் அங்கே சென்றடையும்போது சூரியன் உயரத்திலேயே இருக்கும்.

அஸர் தொழுகை தவறிவிட்டவனின் பாவம்.

ஹதீஸ் 552. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் யாருக்கு அஸர் தொழுகை தவறிவிட்டதோ அவன் குடும்பமும் சொத்துக்களும் அழிக்கப் பட்டவனைப்போன்று இருக்கிறான். என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## அஸர் தொழுகையைவிட்டவனின் நிலை.

ஹதீஸ் 553. அபுல் மலீஹ் கூறினார்கள்.

மேகம் சூழ்ந்த ஒரு நாளில் புரைதா(ரலி)வுடன் ஒரு போரில் நாங்கள் ஈடுபட்டிருந்தோம். அப்போது அவர்கள், அஸர் தொழுகையை முன் வேளையில் நிறைவேற்றுங்கள். ஏனெனில் அஸர் தொழுகையைவிட்டு விடுகிறவரின் செயல்கள் நிச்சயமாக அழிந்து விடுகின்றன என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார் என்று குறிப்பிட்டார்கள்.

## அஸர் தொழுகையின் சிறப்பு

ஹதீஸ் 554. ஜரீர்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் முழு நிலவுள்ள இரவில் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள் முழு நிலவை நோக்கி இந்த நிலவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பது போல் நிச்சயமாக உங்களுடைய இறைவனைக் காண்பீர்கள்! சூரியன் உதிக்கும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்றவற்றால்) நீங்கள் மிகைக்கப்படாதிருக்க இயலுமானால் அதைச் செய்யுங்கள்! என்று கூறிவிட்டு, சூரியன் உதிக்கும் முன்னரும் மறையும் முன்னரும் உம்முடைய இறைவனின் புகழைத் துதிப்பீராக! (திருக்குர்ஆன் 50:39) என்ற இறைவசனத்தையும் ஓதிக் காண்பித்தார்கள்.

ஹதீஸ் 555. என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவு நேரத்து வானவர்களும் பகல் நேரத்து வானவாக்ளும் தொடர்ந்து உங்களிடம் ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டிருப்பார்கள். பஜ்ருத் தொழுகையிலும் அஸர் தொழுகையிலும் இரண்டு சாராரும் சந்திக்கின்றனர். பின்னர் உங்களடன் இரவு தங்கியவர்கள் மேலேறிச் செல்கின்றனர். என் அடியார்களை எந்த நிலையில்விட்டு வந்தீர்கள்? என்று அவர்களிடம் இறைவன் இது பற்றி தெரிந்து கொண்டே விசாரிப்பான். அவர்கள் தொழுது கொண்டிருக்கும்

போதே அவர்களிடம் சென்றோம். அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போதே அவர்களைவிட்டுவிட்டு வருகிறோம் என்று அவர்கள் விடையளிப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 556. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

சூரியன் மறைவதற்கு முன் அஸர் தொழுகையில் ஒரு ஸஜ்தாவை (ஒரு ரக்அத்தை) அடைந்தால் அவர் தம் தொழுகையை முழுமைப் படுத்தட்டும்! ஸுப்ஹுத் தொழுகையில் ஒரு ஸஜ்தாவை (ஒரு ரக்அத்தை) சூரியன் உதிக்கு முன் அடைந்தால் அவர் தம் தொழுகையை முழுமைப்படுத்திக் கொள்ளட்டும்!

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 557. நபி(ஸல்) அவர்கள் கூறினார்களள.

உங்களுக்கு முன் சென்ற சமுதாயத்துடன் நீங்கள் வாழும் காலத்தை ஒப்பிடும்போது நீங்கள் (இவ்வுலகில்) வாழ்ந்து அஸரிலிருந்து சூரியன் மறையும் வரை உள்ள நேரம் போன்றதேயாகும். தவ்ராத்திற்குரியவர்கள் தவ்ராத் வழங்கப்பட்டார்கள். நடுப்பகல் வரை அவர்கள் வேலை செய்து ஓய்ந்தார்கள். (ஒவ்வொருவரும்) ஒவ்வொரு கீராத் கூலி கொடுக்கப்பட்டார்கள். பின்னர் இஞ்ஜீல் உடையவர்கள் இஞ்ஜீல் வழங்கப்பட்டார்கள். அவர்கள் (நண்பகலிலிருந்து) அஸர் வரை வேலை அவர்களும் ஓய்ந்தார்கள். அவர்களும் ஒவ்வொரு கீராத் கூலி வழங்கப்பட்டார்கள். பின்னர் நாம் குர்ஆன் வழங்கப்பட்டோம். (அஸரிலிருந்து) சூரியன் மறையும் வரை நாம் வேலை செய்தோம். இரண்டிரண்டு கீராத் வழங்கப்பட்டோம்.

எங்கள் இறைவா! இவர்களுக்கு மாத்திரம் இரண்டிரண்டு கீராத்கள் வழங்கியுள்ளாய். எங்களுக்கோ ஒவ்வொரு கீராத் வழங்கி இருக்கிறாய். நாங்கள் அவர்களை விடவும் அதிக அளவு அமல் செய்திருக்கிறோமே! என்று இரண்டு வேதக்காரர்களும் கேட்பார்கள். அதற்கு இறைவன் உங்களின் கூலியில் எதையும் நான் குறைத்திருக்கிறேனா? என்று கேட்பான். அவர்கள் இல்லை என்பர். அது என்னுடைய அருட்கொடை! நான் விரும்பியவர்களுக்கு அதனை வழங்குவேன் என்று இறைவன் விடையளிப்பான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

(குறிப்பு: கீராத் என்பது உஹது மலையளவு தங்கள் என்று வேறு ஹதீஸ்களில் விளக்கம் கூறப்படுகிறது.)

ஹதீஸ் 558. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் யூதர்கள், கிறித்தவர்கள், முஸ்லிம்கள் ஆகியோருக்குரிய உவமையாவது. கீழ்காணும் உவமையைப் போன்றதாகும். ஒருவர் ஒரு கூட்டத்தினரை (காலையிலிருந்து) இரவு வரை வேலை செய்ய வேண்டும் என்று வேலைக்கு அமர்த்தினார். அவர்கள் நண்பகல் வரை வேலை செய்துவிட்டு, எங்களுக்கு உம்முடைய கூலி தேவையில்லை என்று கூறிவிட்டனர். பிறகு அந்த மனிதர் மற்றும் ஒரு கூட்டத்தினரைக் கூலிக்கு அமர்த்தி இந்த எஞ்சிய நாளின் கூலியை) நான் முன்பு கூறியவாறு தருகிறேன் என்றார். அவர்கள் அஸர் தொழுகையின் நேரம் வரை வேலை செய்தார்கள். நாங்கள் செய்த வேலை உமக்கே இருக்கட்டும்! (கூலி எதுவும் எங்களுக்குத் தேவையில்லை) என்றனர். இதன் பின்னர் மற்றொரு கூட்டத்தினரை அவர் கூலிக்கு அமர்த்தினார். அவர்கள் அந்த நாளின் எஞ்சீய பகுதியில் சூரியன் மறையும் வரை வேலை செய்தனர். அந்த இரண்டு கூட்டத்தினரின் கூலியையும் அவர்கள் பெற்றார்கள். என அபூ மூஸா(ரலி) கூறினார்கள்.

## மஃரிபு நேரம் பற்றியது.

நோயாளி ம..ரிபையும் இஷாவையும் ஜம்வு செய்யலாம் என அதா.. குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 559. ராபிவு இப்னு கதீஜ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுடன் ம..ரிபைத் தொழுதுவிட்டு எங்களல் ஒருவர் திரும்பி அம்பு எய்தால் அவர் அம்பு விழும் இடத்தைப் பார்க்க முடியும். (அதாவது அந்த அளவு வெளிச்சம் இருக்கும்.)

ஹதீஸ் 560. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் நண்பகலில் லுஹர் தொழுவார்களே. சூரியன் தெளிவாக இருக்கும்போது அஸர் தொழுவார்கள். சூரியன் மறைந்ததும் மக்ரிப் தொழுவார்கள். இஷாவை சில நேரம் முன்னேரத்திலும் சில நேரம் பின்னேரத்திலும் தொழுவார்கள். அதாவது மக்கள் ஒன்று சேர்ந்துவிட்டால் முற்படுத்துவார்கள். மக்கள் வருவதற்கு தாமதமானால் தாமதப் படுத்துவார்கள். ஸுப்ஹைக் காலை வெளிச்சம் வருவதற்கு முன்னால் தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 561. ஸலமா(ரலி) கூறினார்கள். சூரியன் அடிவானத்தில் மறைந்ததும் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் மக்ரிப் தொழுபவர்களாக இருந்தோம்.

ஹதீஸ் 562. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள். (மக்ரிப் இஷாவை) ஏழு ரக்அத்களாக ஒரே நேரத்திலும் (லுஹர் அஸரை) எட்டு ரக்அத்களாக ஒரே நேரத்திலும் நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள்.

## மக்ரிப் தொழுகையை இஷாத் தொழுகை எனக் கூறலாகாது.

ஹதீஸ் 563. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மக்ரிப் தொழுகையை இஷா (இரவுத் தொழுகை) என நாட்டுப்புற அரபிய்கள் குறிப்பிடுகின்றனர். நீங்கள் மக்ரிப் எனக் கூறும் விஷயத்தில் உங்களை அவர்கள் வென்று விட வேண்டாம்..

என அப்துல்லாஹ் அல்முஸ்னீ(ரலி) கூறினார்கள்.

## இஷாத் தொழுகையை அதமா என்றும் குறிப்பிடலாம்.

முனாபிக்களுக்கு மிகவும் சிரமான தொழுகை இஷாவும் ..பஜ்ருமாகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) குறிப்பிட்டார்கள். அதமாவிலும் ..பஜ்ரிலும் இருக்கும் நன்மைகளை அவர்கள அறிவார்களேயானால் (விரைந்து வருவர்) என்றும் நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள். இஷாத் எனக் குறிப்பிடுவதே சிறப்பாகும் என (நான்) புகாரி) கூறுகிறேன். இஷாஎனக் குறிப்பிடுவதால் இஷாத் தொழுகையின்போது நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் முறை வைத்துச் செல்பவர்களாக இருந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் அதமாவாக (அதாவது பிற்படுத்தி)த் தொழுதார்கள் என அபூ மூஸா(ரலி) குறிப்பிட்டுள்ளனர். நபி(ஸல்) அவர்கள் இஷாவை அதமாவாகத் தொழுதார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) ஆயிஷா(ரலலி) ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர். அதமாவைப் பிற்படுத்தி நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள் என ஆயிஷா(ரலி) குறிப்பிட்டதாகச் சிலர் குறிப்பிட்டுள்ளனர். நபி(ஸல்) அவர்கள் இஷாவைத் தொழுபவர்களாக இருந்தனர் என ஜாபிர்(ரலி) குறிப்பிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் இஷாவைப் பிற்படுத்துபவர்களாக இருந்தனர் என அபூ பர்ஸா(ரலி) குறிப்பிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் கடைசி இஷாவைப் பிறபடுத்தினார்கள் என அனஸ்(ரலி) கூறினார். நபி(ஸல்) அவர்கள் ம..ரிவையும், இஷாவையும் தொழுதனர் என இப்னு உமர்(ரலி), அபூ அய்யூப்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோர் குறிப்பிட்டனர். (இவற்றிலிருந்து இஷாவை அதமா என்றும் இஷா என்றும் கூறலாம் என்பது தெரிகிறது).

ஹதீஸ் 564. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள், மக்களால் அதமா எனக் கூறப்பட்டு வந்த இஷாத் தொழுகையை எங்களுக்கு தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்து எங்களை நோக்கி இந்த இரவைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? பூமியின் மேற்பரப்பில் இருக்கும் எவரும் இந்த இரவிலிருந்து நூறாவது ஆண்டின் துவக்கத்தில் வாழ மாட்டார்கள் எனக் குறிப்பிட்டார்கள்.

## மக்கள் கூடுவதற்கேற்ப, அல்லது தாமதிப்பதற்கேற்ப இஷா நேரத்தை அமைத்துக் கொள்வது.

ஹதீஸ் 565. முஹம்மத் இப்னு அம்ர் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் தொழுகை பற்றி ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கவர்கள் நபி(ஸல்) அவர்கள் லுஹர்த் தொழுகையை நண்பகலிலும் அஸர்த் தொழுகையைச் சூரியன் ஒளி வீசிக் கொண்டிருக்கும் போதும் மக்ரிப் தொழுகையைச் சூரியன் மறைந்தவுடனும் தொழுவார்கள். மக்கள் கூடிவிட்டால் இஷாவை முன்னேரத்திலும் மக்கள் குறைவாக இருந்தால் தாமதப் படுத்தியும் தொழுவார்கள். ஸுப்ஹை இருளில் தொழுவார்கள் என விடையளித்தார்கள்.

## இஷாவின் சிறப்பு

ஹதீஸ் 566. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

இஸ்லாம் நன்கு பரவுவதற்கு முன்னர் நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவு இஷாவைப் பிற்படுத்தினார்கள். பெண்களும் சிறுவர்களும் உறங்கிவிட்டனர் என உமர்(ரலி) தெரிவிக்கும் வரை நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்த வரவில்லை. அதன்பின்னர் வந்து பள்ளியிலுள்ளவர்களை நோக்கி இப்பூமியிலுள்ளவர்களில் உங்களைத் தவிர வேறு எவரும் இதை எதிர்பார்த்துக் காத்திருக்கவில்லை என்றார்கள்.

ஹதீஸ் 567 அபூ மூஸா(ரலி) கூறினார்கள்.

நானும் என்னுடன் கப்பலில் வந்த என் தோழர்களும் புத்ஹான் எனும் தோட்டத்தில் தங்கினோம். நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் இருந்தனர். ஒவ்வொரு இரவும் இஷாத் தொழுகைக்கு எங்களில் ஒரு (சிறு) கூட்டத்தினர் முறை வைத்து நபி(ஸல்) அவர்களிடம் செல்பவர்களாக இருந்தோம். நானும் என் தோழர்களும் (எங்கள் முறையின் போது) நபி(ஸல்) அவர்களைச் சந்தித்தோம். அவர்கள் தங்களின் காரியத்தில் ஈடுபட்டிருந்ததால் நள்ளிரவு நேரம் வரும் வரை இஷாவைத் தாமதப் படுத்தினார்கள். பின்னர் புறப்பட்டு வந்து மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும் வந்திருந்தோரை நோக்கி அப்படியே இருங்கள்! இந்த நேரத்தில் உங்களைத் தவிர வேறு எவரும் தொழவில்லை. இது அல்லாஹ் உங்களுக்குச் செய்த அருட்கொடைகளில் ஒன்றாகும் எனக் குறிப்பிட்டார்கள். நபி(ஸல்) அவாகளிடமிருந்து இதைக் கேட்டதனால் நாங்கள் மகிழ்வுற்றோம்.

## இஷாவுக்கு முன் உறங்கலாகாது.

ஹதீஸ் 568. அபூ பர்ஸா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஷாவுக்கு முன் உறங்குவதையும் இஷாவுக்குப் பின் பேசுவதையும் வெறுப்பவர்களாக இருந்தனர்.

## இஷாவுக்கு முன்னர் தன்னை மீறி உறங்குதல்.

ஹதீஸ் 569. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இஷாவைத் தாமதப் படுத்தினார்கள். சிறுவர்களும் பெண்களும் உறங்கிவிட்டனர் தொழுகை நடத்த வாருங்கள்!ங் என்று உமர் (ரலி) அழைக்கும் வரை நபி (ஸல்) அவர்கள் வரவில்லை. பிறகு வந்து உங்களைத் தவிர இப்பூமியிலுள்ளவர்களில் வேறு எவரும் இந்தத் தொழுகைக்காகக் காத்துக் கொண்டிருக்கவில்லை எனக்குறிப்பிட்டார்கள். அன்றைய தினத்தில் மதீனாவைத் தவிர வேறு எங்கும் தொழுகை நடைபெற்றுக் கொண்டிருக்கவில்லை. செம்மேகம் மறைந்தது முதல் இரவின் மூன்று பாகத்தில் முந்திய பகுதி முடியும் வரை இஷாத் தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 570. இப்னு உமர் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தம் அலுவல் காரணமாக ஓர் இரவு இஷாவைப் பிற்படுத்தினார்கள். நாங்கள் பள்ளியிலேயே உறங்கிப் பின்னர் விழித்தோம் பிறகு எங்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்து உங்களைத் தவிர பூமியிலுள்ளவர்களில் வேறு எவரும் இத்தொழுகைக்காகக் காத்திருக்கவில்லை என்றார்கள். தூக்கம் தம்மை மீறிப் போய் விடும் என்று அச்சமில்லாதபோது இஷாவை முன்னேரம் தொழுவதையோ பின்னேரம் தொழுவதையோ ஒரு பொருட்டாக இப்னு உமர் (ரலி) கொள்ளமாட்டார்கள். (அதாவது இரண்டையும் சமமாகக் கருதுவார்கள்) மேலும் இஷாவுக்கு முன் உறங்குபவர்களாகவும் இருந்தனர் என்று நாஃபிவு கூறுகிறார்.

ஹதீஸ் 571. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஓர் இரவு இஷாவைத் தாமதப் படுத்தினார்கள். மக்கள் எல்லாம் உறங்குவதும் விழிப்பதும் மீண்டும் உறங்குவதும் விழிப்பதுமாக இருந்தனர். அப்போது உமர் (ரலி) எழுந்து தொழுகை எனக் கூறினார்கள். உடன் நபி (ஸல்) அவர்கள் தலையிலிருந்து நீர் சொட்டத் தம் கையைத் தலையில் வைத்தவர்களாகப் புறப்பட்டதை இன்று பார்ப்பது போலுள்ளது. என் சமுதாயத்திற்குச் சிரமமாகாது என்றால் அவர்களை இந்த நேரத்த்ல தொழுமாறு கட்டளையிட்டிருப்பேன் என்று அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு தம் கைகளைத் தலையில் வைத்தார்கள் என்று நான் அதா அவர்களிடம் விளக்கம் கேட்டபோது அவர்கள் தம் விரல்களைச் சற்று விரித்து, விரல்களின் முனைகளைத் தலை உச்சியில் வைத்து அவர்களின் பெருவிரல், காது ஓரங்கள், நெற்றிப் பொட்டு, தாடியின் ஓரங்கள் ஆகியவற்றில் படுமாறு அழுத்தித் தடவி, இப்னு அப்பாஸ் (ரலி) செய்து காட்டியது போல் செய்து காட்டினார்கள் என்று இப்னு ஜுரைஜ் குறிப்பிடுகிறார்.

## இஷா நேரம் பாதி இரவு வரை உள்ளது.

நபி (ஸல்) அவர்கள் இஷாவைப் பிற்படுத்துவதை விரும்பக் கூடியவர்களாக இருந்தனர் என்று அபூ பர்ஸா (ரலி) குறிப்பிட்டுள்ளார்கள்.

ஹதீஸ் 572. அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையைப் பாதி இரவு வரை பிற்படுத்தினார்கள். பின்பு தொழுதுவிட்டு உறங்கிவிட்டனர். தொழுகைக்காகக் காத்துக் கொண்டிருக்கும் வரை நீங்கள் தொழுகையிலேயே இருக்கிறீர்கள்! என்று நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

அன்றிரவு அவர்கள் அணிந்திருந்த மோதிரத்தின் பிரகாசத்தை இப்போது பார்ப்பது போலுள்ளது.

## ஃபஜ்ருத் தொழுகையின் சிறப்பு.

ஹதீஸ் 573. ஜரீர்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் முழு நிலவுள்ள இரவில் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள் முழு நிலவை நோக்கி இந்த நிலவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பது போல் நிச்சயமாக உங்களுடைய இறைவனைக் காண்பீர்கள்! சூரியன் உதிக்கும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்றவற்றால்) நீங்கள் மிகைக்கப் படாதிருக்க இயலுமானால் அதைச் செய்யுங்கள்! என்று கூறிவிட்டு, சூரியன் உதிக்கும் முன்னரும் மறையும் முன்னரும் உம்முடைய இறைவனின் புகழைத் துதிப்பீராக! (திருக்குர்ஆன் 50:39) என்ற இறைவசனத்தையும் ஓதிக் காண்பித்தார்கள்.

ஹதீஸ் 574. பகலின் வெப்பம் குறைந்த இரண்டு நேரத் தொழுகைகளை (அதாவது பஜ்ருத், அஸர் தொழுகைகளை முறையாகத்) தொழுகிறவர் சுவர்க்கத்தில் நுழைவார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா(ரலி) கூறினார்கள்.

ஃபஜ்ருடைய நேரம்.

ஹதீஸ் 575. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் ஸஹர் செய்துவிட்டுப் பின்னர் (ஃபஜ்ர்) தொழுகைக்குத் தயாரானோம். )

ஸஹருக்கும் தொழுகைக்குமிடையே எவ்வளவு இடைவெளி இருக்கும்? என்று கேட்டேன். அதற்கு ஸைத் இப்னு ஸாபித்(ரலி) ஐம்பது அல்லது அறுபது வசனங்கள் (ஓதும்) நேரம் என்று பதிலளித்தார்கள் என அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 576. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) ஸைத் இப்னு ஸாபித்(ரலி) இருவரும் ஸஹ்ர் செய்தனர். நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்குத் தயாராகித் தொழுதார்கள்.

ஸஹர் முடிப்பதற்கும் தொழுகையைத் துவக்குவதற்கும் எவ்வளவு இடைவெளி இருக்கும்? என்று நாங்கள் அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டோம். ஒரு மனிதா ஐம்பது வசனங்கள் ஓதும் அளவு நேரம் என்று கூறினார்கள் என கதாதா கூறுகிறார்கள்.

ஹதீஸ் 577. ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) கூறினார்கள்.

நான் என் இல்லத்தில் ஸஹர் செய்துவிட்டு, நபி(ஸல்) அவர்களுடன் ஃபஜ்ருத் தொழுகையில் கலந்து கொள்வதற்காக அவசரமாகப் புறப்படுபவனாக இருந்தேன்.

ஹதீஸ் 578. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

இறைநம்பிக்கையுள்ள பெண்கள் தங்களின் ஆடைகளால் போர்த்திக் கொண்டு நபி(ஸல்) அவர்களுடன் ஃபஜ்ருத் தொழுகையில் பங்கெடுப்பவர்களாக இருந்தனர். தொழுகை முடிந்ததும் தங்களின் இல்லங்களுக்குத் திரும்புவார்கள். இருட்டின் காரணமாக அவர்களை ஒருவரும் அறிந்து கொள்ளமுடியாது.

ஃபஜ்ருத் தொழுகையில் ஒரு ரக்அத்தை அடைந்தால்...

ஹதீஸ் 579. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

சூரியன் உதிப்பதற்கு முன் ஸுப்ஹுடைய ஒரு ரக்அத்தை அடைந்து கொள்பவர் ஸுப்ஹை அடைந்து கொள்கிறார். சூரியன் மறைவதற்கு முன் அஸருடைய ஒரு ரக்அத்தை அடைந்து கொள்பவர் அஸர் தொழுகையை அடைந்து கொள்கிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## பொதுவாகத் தொழுகையில் ஒரு ரக்அத்தை அடைந்தால்...

ஹதீஸ் 580. என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகையில் ஒரு ரக்அத்தை (அதற்குரிய நேரத்தில்) அடைந்து கொள்பவர் அந்தத் தொழுகையை அடைந்து கொள்கிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## சூரியன் உதிக்கும் வரை ஃபஜ்ருக்குப் பின் தொழலாகாது.

ஹதீஸ் 581. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

ஸுப்ஹுக்குப் பிறகிலிருந்து சூரியன் உதிக்கும் வரை தொழுவதையும் அஸருக்குப் பிறகிலிருந்து சூரியன் மறையும் வரை தொழுவதையும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள் என நம்பிக்கைக்குரிய பலர் என்னிடம் கூறியுள்ளனர். அவர்களில் எனக்கு மிகவும் விருப்பமானவர் உமர்(ரலி) ஆவார்.

ஹதீஸ் 582. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள:

சூரியன் உதிக்கும் நேரத்தையோ மறையும் நேரத்தையோ உங்கள் தொழுகைக்காக நாடாதீர்கள்.

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 583. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சூரியன் உதிக்கத் துவங்கும்போது அது (முழுமையாக) உயரும் வரை தொழுவதைத் தாமதப்படுத்துங்கள்! சூரியன் மறையத் துவங்கும்போது அது முழுமையாக மறையும் வரை தொழுகையைப் பிற்படுத்துங்கள்!

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 584. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

இரண்டு வியாபாரங்களைவிட்டும் ஆடை அணியும் இரண்டு முறைகளைவிட்டும் இரண்டு தொழுகைகளைவிட்டும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள். (இரண்டு தொழுகைகளாவன) ஃபஜ்ருக்குப் பிறகிலிருந்து சூரியன் உதிக்கும் வரை தொழுவதையும் அஸருக்குப் பிறகிலிருந்து சூரியன் மறையும் வரை தொழுவதையும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள். (ஆடை அணியும் இரண்டு முறைகளாவன) ஓர் ஆடை மட்டும் உள்ளபோது தம் கைகள் உள்ளே இருக்குமாறு சுற்றி அதை அணிந்து கொள்வதையும் மர்ம உறுப்பு வானுக்குத் தெரியுமாறு ஓர் ஆடையை முழங்காலைச் சுற்றிக் கட்டிக் கொள்வதையும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள். முனாபதா, முலாமஸா என்ற இரண்டு வியாபாரங்களைவிட்டும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள்.

(குறிப்பு: இந்தக் கல் எந்தப் பொருளின் மீது விழுகிறதோ அந்தப் பொருளை இவ்வளவு விலைக்குத் தருகிறேன் என்று கூறி விற்பது முனாபதா எனப்படும். குவிக்கப்பட்ட பொருட்களைப் பிரித்துப் பார்க்கவிடாமல் அதைத் தொட்டுப் பார்க்க மட்டுமே அனுமதிக்கும் வியாபாரம் முலாமஸா எனப்படும்)

### சூரியன் மறையும் முன் தொழுவதை நாடலாகாது.

ஹதீஸ் 585. என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சூரியன் உதிக்கும் போதும் சூரியன் மறையும் போதும் உங்களில் ஒருவர் தொழுவதை (வேண்டுமென்றே) நாட வேண்டாம்!

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 586. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஸுப்ஹுக்குப் பிறகிலிருந்து சூரியன் உயரும் மறையும் வரை எந்தத் தொழுகையும் இல்லை.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 587. முஆவியா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் தோழமை கொண்டிருந்தோம். அவர்கள் தொழுது நாங்கள் பார்க்காத ஒரு தொழுகையை நீங்கள் தொழுகிறீர்கள். நபி(ஸல்) அவர்கள் அதைத் தடுத்துமிருக்கிறார்கள். அதுதான் அஸருக்குப் பின் இரண்டு ரக்அத்கள்.

ஹதீஸ் 588. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஃபஜ்ருக்குப் பிறகிலிருந்து சூரியன் உதிக்கும் வரை அஸருக்குப் பிறகிலிருந்து சூரியன் மறையும் வரை ஆகிய இரண்டு தொழுகைகளைவிட்டும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள்.

### ஃபஜ்ரு, அஸர் தொழுகைகளுக்குப் பின்பு தவிர மற்ற நேரங்களில் தொழுவது தவறில்லை.

உமர்(ரலி), இப்னு உமர்(ரலி) அபூ ஹுஸயீத்(ரலி), அபூ ஹுரைரா(ரலி) ஆகியோர் இது பற்றி அறிவித்துள்ளனர்.

ஹதீஸ் 589. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

என் தோழர்களை தொழக்கண்டது போன்றே நான் தொழுகிறேன். இரவிலும் பகலிலும் விரும்பியதைத் தொழும் எவரையம் தடுக்க மாட்டேன். எனினும் சூரியன் உதிக்கும் நேரத்தையோ மறையும் நேரத்தையோ (தொழுகைக்காக) வேண்டுமென்றே நாடாதீர்கள்!

### விடுபட்ட தொழுகைகள் போன்றவற்றை அஸருக்குப் பின் தொழலாம்.

நபி(ஸல்) அவர்கள் அஸருக்குப் பின் இரண்டுரக்அத்கள் தொழுதுவிட்டு ளுஹருக்குப் பின் இரண்டு ரக்அத்கள் தொழுவதைவிட்டும் அப்துல் கைஸ் கூட்டத்தினர் என் கவனத்தைத் திருப்பிவிட்டனர் (அதையே இப்போது தொழுதேன்) என்று கூறினார்கள் என உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 590. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களைக் கொண்டு சென்றவன் மேல் ஆணையாக! அஸருக்குப் பின் இரண்டு ரக்அத்களை இறைவனைச் சந்திக்கும் வரை நபி(ஸல்) அவர்கள்விட்டு விடவில்லை. தொழுவதற்குச் சிரமப்படும் நிலையை அடைந்த பிறகே மரணம் அடைந்தார்கள். அஸருக்கு

பின்னுள்ள இரண்டு ரக்அத்களை பெரும்பாலும் உட்கார்ந்தே தொழுபவர்களாக இருந்தனர். தம் உம்மத்தினருக்குச் சிரமத்தை ஏற்படுத்துவதை அஞ்சிப் பள்ளியில் அந்த இரண்டு ரக்அத்களை தொழ மாட்டார்கள். தம் உம்மத்தினருக்கு இலேசானதையே நபி(ஸல்) அவர்கள் விரும்புவார்கள்.

ஹதீஸ் 591. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

என் சகோதரியின் மகனே! அஸருக்குப் பின் இரண்டு ரக்அத்களை நபி(ஸல்) அவர்கள் என்னிடம் (தங்கும் போது) ஒருபோதும்விட்டதில்லை.

ஹதீஸ் 592. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

இரண்டு தொழுகைகளை இரகசியமாகவோ பம்ரங்கமாகவோ நபி(ஸல்) அவர்கள்விட்டதேயில்லை. அவை ஸுப்ஹுத் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்கள், அஸர் தொழுகைக்குப் பின் இரண்டு ரக்அத்கள்.

ஹதீஸ் 593 ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அஸருக்குப் பின் எந்த நாளில் என்னிடம் வந்தாலும் இரண்டு ரக்அத்கள் தொழாமல் இருந்ததில்லை.

## மேகம் சூழ்ந்த தினத்தில் தொழுகையை விரைந்து தொழுதல்.

ஹதீஸ் 594 அபுல் மலீஹ் கூறினார்கள்.

மேகம் சூழ்ந்த ஒரு நாளில் புரைதா(ரலி)வுடன் ஒரு போரில் நாங்கள் ஈடுபட்டிருந்தோம். அப்போது அவர்கள், அஸர் தொழுகையை முன்வேளையில் நிறைவேற்றுங்கள். ஏனெனில் அஸர் தொழுகையைவிட்டு விடுகிறவரின் செயல்கள் நிச்சயமாக அழிந்து விடுகின்றன என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளானர் என்று குறிப்பிட்டார்கள்.

## நேரம் சென்ற பிறகும் பாங்கு சொல்வது.

ஹதீஸ் 595 அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

நாங்கள் இரண்டு இரவு நபி(ஸல்) அவர்களுடன் பயணம் செய்து கொண்டிருந்தோம். அப்போது சிலர் நபி அவர்களே! எங்களைச் சற்று இளைப்பாறச் செய்யலமே! என்று கேட்டனர். நீங்கள் தொழுகையைவிட்டும் உறங்கி விடுவீர்களோ என அஞ்சுகிறேன் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது பிலால் நான் உங்களை எழுப்பி விடுகிறேன் என்று கூறியதும் அனைவரும் படுத்தனர். பிலால்(ரலி) தம் முதுகைத் தம் கூடாரத்தின் பால் சாய்த்தார். அவரையும் மீறி உறங்கிவிட்டார். சூரியனின் ஒரு பகுதி உதித்த பின்பே நபி(ஸல்) அவர்கள் விழித்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் பிலாலே! நீர் சொன்னது என்னவாயிற்று? என்று கேட்டார்கள். இது போன்ற தூக்கம் எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதில்லை என்று பிலால்(ரலி) கூறினார். நிச்சயமாக இறைவன் உங்கள் உயிர்களை அவன் விரும்பியபோது கைப்பற்றிக் கொள்கிறான் அவன் விரும்பியபோது திரும்பவும் ஒப்படைக்கிறான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு (பிலாலை நோக்கி) பிலாலே! எழுந்து தொகைக்கு பாங்கு சொல்வீராக! என்றார்கள். (பின்னர்) உளூச் செய்துவிட்டுச் சூரியன் உயர்ந்து பிரகாசம் ஏற்பட்டபோது தொழுதார்கள்.

## தொழுகை நேரம் முடிந்த பிறகு மக்களுக்கு ஜமாஅத் தொழுகை நடத்துவது.

ஹதீஸ் 596 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

அகழ்ப்போரின்போது சூரியன் மறைந்த பின் உமர்(ரலி) குரைஷிக் இறைமறுப்பாளர்களை ஏசிக் கொண்டே வந்து நபி அவர்களே! சூரியன் மறையும் வரை நான் அஸர் தொழவில்லையே என்று

கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக நானும் அஸர் தொழவில்லை என்று கூறினார்கள். நாங்கள் புத்ஹான் எனும் பள்ளத்தாக்கை நோக்கிச் சென்றோம். நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுகைக்காக உளூச் செய்தார்கள். நாங்களும் அதற்காக உளூச் செய்தோம். சூரியன் மறைந்த பின் அஸர் தொழுதார்கள். அதன்பின்னர் மக்ரிப் தொழுதார்கள்.

### ஒரு தொழுகையை ஒருவன் மறந்துவிட்டால் நினைவு வந்ததும் அதைத் தொழ வேண்டும். அந்தத் தொழுகையைத் தவிர (கூடுதலாக) வேறு எதையும் தொழ வேண்டியதில்லை.

ஹதீஸ் 597 என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யாரேனும் ஒரு தொழுகையை மறந்துவிட்டால் நினைவு வந்ததும் அவர் அதைத் தொழட்டும்! இதைத் தவிர அதற்கு வேறு பரிகாரம் எதுவுமில்லை.

என்னைத் தியானிப்பதற்காகத் தொழுகையை நிலை நிறுத்துவீராக (திருக்குர்ஆன்ஹதீஸ்ஹதீஸ் 20:14) என்ற வசனத்தையும் ஓதிக் காட்டினார்கள்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

### தவறிய தொழுகைகளை ஒன்றன் பின் ஒன்றாகத் தொழுவது.

ஹதீஸ் 598 ஜாபிர்(ரலி) கூறினார்கள்.

அகழ்ப்போர் தினத்தில் நிராகரிப்பவர்களை உமர்(ரலி) ஏசிக் கொண்டே வந்து சூரியன் மறையும் வரை நான் அஸர் தொழ இயலவில்லை என்று கூறினார்கள். நாங்கள் புத்ஹான் எனும் பள்ளத்தாக்கில் இறங்கினோம். சூரியன் மறைந்த பின் நபி(ஸல்) அவர்கள் அஸர் தொழுதுவிட்டுப் பின்னர் மக்ரிப் தொழுதார்கள்.

### இஷாவுக்குப் பின் பேசிக் கொண்டிருப்பது கூடாது.

ஹதீஸ் 599 அபுல் மின்ஹால் கூறினார்கள்.

நானும் என்னுடைய தந்தையும் அபூ பர்ஸா(ரலி) அவர்களிடம் சென்றோம். கடமையான தொழுகைகளை நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுவார்கள்? என்று என் தந்தை கேட்டார்கள். நீங்கள் முதல் தொழுகை என்று கூறக் கூடிய நண்பகல் தொழுகையை (நடுவானிலிருந்து) சூரியன் சாயும்போது நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள். (பின்னர்) அஸர் தொழுவார்கள். எங்களில் ஒருவர் (அஸர் தொழுதுவிட்டு) மதீனாவின் கடைக் கோடியிலுள்ள தம் இடத்திற்குத் திரும்பும்போது சூரியன் உயிருடன் (ஒளி குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும் என்றார்கள் - மக்ரிப் பற்றி அபூ பர்ஸா(ரலி) கூறியதை நான் மறந்து விட்டேன்.. கடைசித் தொழுகை என்று நீங்கள் குறிப்பிடக் கூடிய இஷாவைப் பிற்படுத்துவதை விரும்புபவர்களாக நபி(ஸல்) அவர்கள் இருந்தனர். இஷாவுக்கு முன் உறங்குவதையும் இஷாவுக்குப் பின் பேசிக் கொண்டிருப்பதையும் நபி(ஸல்) அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தனர். அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதி நபி(ஸல்) அவர்கள் வைகறைத் தொழுகையைத் தொழுது முடிக்கும்போது ஒருவர் தம் அருகில் அமர்ந்திருப்பவரை அறிந்து கொள்ள முடியும் என அபூ பர்ஸா(ரலி) கூறினார்.

## இஷாவுக்குப் பின் நல்ல விஷயங்கள், மார்க்கச் சட்டங்கள் பற்றிப் பேசிக் கொண்டிருப்பது.

ஹதீஸ் 600 குர்ரா இப்னு காலித் கூறினார்கள்.

நாங்கள் ஹஸனை (ஹஸன் பஸரீ) எதிர்பார்த்துக் காத்திருந்தோம். அவர் எங்களிடம் தாமதமாக வந்தார். (அவர் வழக்கம் போல் எங்களுடன் அமர்ந்துவிட்டுப் பிறகு) எழுந்து செல்வதற்கான நேரமும் நெருங்கியது. அப்போது அவர் வந்து நம்முடைய அண்டை வீட்டார் நம்மை அழைத்தனர். (அதுதான் தாமதத்தின் காரணம்) என்றார். நாங்கள் ஓர் இரவு நபி(ஸல்) அவர்களை எதிர்பார்த்துக கொண்டிருந்தோம். பாதி இரவாகும்போது நபி(ஸல்) அவர்கள் வந்து எங்களுக்கு (இஷா) தொழுகை நடத்தினார்கள். பிறகு எங்களுக்குச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அறிந்து கொள்க! மக்களெல்லாம் தொழுதுவிட்டு உறங்கிவிட்டனர். தொழுகையை எதிர் பார்த்துக் காத்துக் கொண்டிருக்கும் வரை நீங்கள் தொழுகையிலே இருக்கிறீர்கள் என்றும் குறிப்பிட்டார்கள். இதை அனஸ்(ரலி) அறிவித்ததாக ஹஸன் குறிப்பிட்டார். நன்மையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போதெல்லாம் மக்கள் நன்மையிலே இருக்கின்றனர் என்றும் ஹஸன் குறிப்பிட்டார்.

ஹதீஸ் 601 இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தம் கடைசிக் காலத்தில் இஷாத் தொழுகை நடத்தினார்கள். ஸலாம் கொடுத்ததும் நபி(ஸல்) அவர்கள் எழுந்து இந்த இரவைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? (இன்றிலிருந்து) நூறாம் ஆண்டின் துவக்கத்தில் இன்று பூமியில் இருக்கும் எவரும் எஞ்சியிருக்க மாட்டார்கள் என்று குறிப்பிட்டார்கள். நூறு ஆண்டுகளுக்குப் பின் நடப்பது பற்றி (உலகம் அழிந்து விடுமோ என்று) தவறான முறையில் மக்கள் விளங்கினர். நபி(ஸல்) அவர்கள் கூறியது இன்று பூமியில் இருப்பவர்களில் எவரும் நூறு ஆண்டுகளுக்குப் பின் இருக்க மாட்டார்கள் என்பதைத் தான். இதன் மூலம் அன்று இருந்த சமுதாயம் நூறு ஆண்டுகளுக்குள் முடிந்து போவர் என்பதையே நபி(ஸல்) அவர்கள் கருதினார்கள்.

## விருந்தினருடனும் குடும்பத்தினருடன் இரவில் பேசிக் கொண்டிருத்தல்.

ஹதீஸ் 602 அப்துர்ரஹ்மான் இப்னு அபீ பக்ரு(ரலி) கூறினார்கள்.

திண்ணைத் தோழர்கள் ஏழ்மை வயப்பட்ட மனிதர்களாக இருந்தனர். நபி(ஸல்) அவர்கள் இருவருக்குரிய உணவு யாரிடம் உள்ளதோ அவர் மூன்றாமவ(ராக திண்ணைத் தோழர் ஒருவ)ரை அழைத்துச செல்லட்டும்! நான்கு பேருக்குரிய உணவு இருந்தால் ஐந்தாவது, ஆறாவது நபர்களாக திண்ணைத் தோழர்களை அழைத்துச் செல்லட்டும்! எனக் கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) மூன்று நபர்களை அழைத்துச் சென்றனர். நபி(ஸல்) அவர்கள் பத்து நபர்களை அழைத்துச் சென்றனர். (வீட்டில்) நானும் என் தந்தை (அபூ பக்ரும்) தாயும் என்னுடைய வீட்டிற்கும் (என் தந்தை) அபூ பக்ருடைய வீட்டிற்கும் கூட்டாகப் பணி செய்து வரும் வேலையாளும இருந்தோம் என் மனைவியும் என்று அவர் குறிப்பிட்டாரா இல்லையா என்று அடுத்த அறிவிப்பாளர் சந்தேகம் தெரிவிக்கிறார்.

அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் இரவு உணவு அருந்திவிட்டு, இஷாத் தொழும் வரை அங்கேயே தங்கிவிட்டு இரவில் அல்லாஹ் நாடிய அளவு கழிந்த பின் (வீட்டிற்கு) வந்தனர்.

உங்கள் விருந்தினரைவிட்டுவிட்டு எங்கே தங்கி விட்டீர்? என்று அவர்களின் மனைவி கேட்டனர். அதற்கு அபூ பக்ர்(ரலி), அவர்களுக்கு இன்னும் நீ இரவு உணவு அளிக்கவில்லையா? என்று திருப்பிக் கேட்டார்கள். உணவை முன் வைத்த பின்பும் நீங்கள் வருவது வரை அவர்கள்

உண்ண மறுத்துவிட்டனர் என்று மனைவி கூறினார். (என் தந்தை கோபிப்பார் என்பதை அறிந்த) நான் சென்று ஒளிந்து கொண்டேன்.

அறிவிலியே! மூக்கறுபடுவாய்! என ஏசினார்கள். பிறகு மகிழ்வற்ற நிலையில் சாப்பிடுங்கள்! அல்லாஹ்வின் மேல் ஆணையாக ஒருபோதும் நான் சாப்பிட மாட்டோம் என்று (தம் குடும்பத்தினரை நோக்கிக்) கூறினார்கள்.

நாங்கள் உணவின் ஒவ்வொரு கவளத்தையும் எடுத்துச் சாப்பிடும்போது அதன் அடிப்புறத்திலிருந்து அதை விட அதிகமாக வளர்ந்து கொண்டே இருந்தது. அனைவரும் வயிறு நிரம்ப உண்டார்கள். அதற்கு முன்னிருந்ததை விட உணவு அதிகமாக இருந்தது. முன்பிருந்த அளவு அல்லது அதை விட அதிகமாக உணவு இருப்பதைக் கண்ட அபூ பக்ரு(ரலி) பனு∴பிராஸ் சகோதரியே! இது என்ன? என்று (தம் மனைவியிடம்) வினவினார்கள்.

அதற்கவர் என் கண் குளிர்ச்சியின் மேல் ஆணை! இதன் காரணம் எனக்குத் தெரியவில்லை. ஆனால் முன்பிருந்ததை விட மூன்று மடங்கு இப்போது அதிகமாக உணவு உள்ளது என்றார். பிறகு அபூ பக்ரும் சாப்பிட்டார்கள். சாப்பிட மாட்டேன் என்று சத்தியம் செய்தது ஷைத்தானிடமிருந்து ஏற்பட்டுவிட்டது ஒரு கவளத்தை எடுத்து உண்டார்கள். பின்பு நபி(ஸல்) அவர்களிடம் எஞ்சிய உணவை எடுத்துச் சென்றார்கள். காலை வரை அது அங்கேயே இருந்தது.

எங்களுக்கும் ஒரு கூட்டத்தினருக்குமிடையே உடன் படிக்கை ஒன்று இருந்தது. அந்தக் கெடு முடிந்துவிட்டது. (அது சம்பந்தமாக நபி(ஸல்) அவர்களிடம் வந்திருந்தவர்களை) பன்னிரெண்டு பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு தலைவரின் கீழ் அமைத்தோம். அவர்களில் ஒவ்வொருவருடனும் எத்தனை பேர் இருந்தனர் என்பதை அல்லாஹ்வே அறிவான். அவர்கள் அனைவரும் அந்த உணவிலிருந்து சாப்பிட்டார்கள்.

# அத்தியாயம் -10 - பாங்கின் ஆரம்பம்

அல்லாஹ் கூறினான்: நீங்கள் தொழுகைக்கு அழைத்தால் அதனை அவர்கள் பரிகாசமாகவும் விளையாட்டாகவும் எடுத்துக் கொள்வார்கள். இதற்குக் காரணம் அவர்கள் அறிவில்லாத மக்களாக இருப்பதேயாகும். (திருக்குர்ஆன் 5:58)

மேலும், அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! ஜும்ஆ நாளில் தொழுகைக்காக நீங்கள் அழைக்கப்பட்டால் வியாபாரத்தைவிட்டுவிட்டு அல்லாஹ்வைத் தியானிக்க (ப்பள்ளி வசாலுக்கு) விரைந்து செல்லுங்கள் (திருக்குர்ஆன் 62:09)

ஹதீஸ் 603 அனஸ்(ரலி) கூறினார்கள்.

(தொழுகைக்காக மக்களை அழைப்பது பற்றி ஆலோசனை நடந்த போது) சிலர் நெருபபை மூட்டுவோம் என்றனர். சிலர் மணி அடிப்பதன் மூலம் அழைக்கலாம் என்றனர். அவையெல்லாம் யூத, கிறித்தவ கலாச்சாரம் என்று (சிலரால் மறுத்துக்) கூறப்பட்டது. அப்போது பாங்கின் வாசகங்களை இரட்டை இரட்டையாகவும் இகாமத்தை ஒற்றைப் படையாகவும் கூறுமாறு பிலால்(ரலி) ஏவப்பட்டார்கள்.

ஹதீஸ் 604 இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

முஸ்லிம்கள் (மக்காவிலிருந்து) மதீனாவிற்கு வந்தபோது தொழுகைக்கு அழைப்புக் கொடுக்கப்படுவதில்லை. அவர்க ஒன்று கூடி நேரத்தை முடிவு செய்து கொள்வார்கள். ஒரு நாள் இது பற்றி எல்லோரும் கலந்தாலோசித்தனர். அப்போது சிலர், கிறித்தவர்களைப் போன்று மணி அடியுங்கள் என்றனர். வேறு சிலர் யூதர்கள் வைத்திருக்கிற கொம்பைப் போன்று நாமும் கொம்பூதலாமே என்றனர். அப்போது உமர்(ரலி) தொழுகைக்காக அழைக்கிற ஒருவரை ஏற்படுத்தக் கூடாதா? என்றனர். உடனே பிலால்(ரலி) அவர்களிடம் பிலாலே! எழுந்து தொழுகைக்காக அழையும் என்று நபி(ஸல்) கூறினார்கள்.

## பாங்கின் வாசகங்களை இரட்டை இரட்டையாகச் சொல்ல வேண்டும்.

ஹதீஸ் 605 அனஸ்(ரலி) கூறினார்கள்.

பாங்கின் வாசகங்களை இரட்டை இரட்டையாகவும் கத்காமதிஸ்ஸலாத் என்பதைத் தவிர உள்ள இகாமத்தின் வாசகங்களை ஒற்றையாகவும் சொல்லுமாறு பிலால்(ரலி) கட்டளையிடப்பட்டார்கள்.

ஹதீஸ் 606. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்.

மக்களின் எண்ணிக்கையில் அதிகமானபோது, அவர்கள் அறிந்திருக்கிற ஏதாவது ஒரு முறையில் தொழுகையின் நேரத்தை அறிந்து கொள்ள ஆலோசித்தனர். அப்போது, நெருப்பை மூட்டுவதன் மூலமோ மணி அடிப்பதன் மூலமோ அறிந்து கொள்ளலாம் எனக் கருத்துச சொல்லப்பட்டது. ஆனால் பாங்கின் வாசகங்களை இரட்டை இரட்டையாகவும் இகாமத்தின் வாசகங்களை ஒற்றையாகவும் சொல்லுமாறு பிலால்(ரலி) கட்டளையிடப்பட்டார்கள்.

## இகாமத்தின் வாசகங்களில் கத்காமதிஸ்ஸலாத் என்பதைத் தவிர மற்றவை ஒற்றைப்படையாகச் சொல்லப்படவேண்டும்.

ஹதீஸ் 607 அனஸ் (ரலி) கூறினார்கள்.

பாங்கின் வாசகங்களை இரட்டை இரட்டையாகவும் கத்காமதிஸ்ஸலாத் என்பதைத் தவிர உள்ள இகாமத்தின் வாசகங்களை ஒற்றையாகவும் சொல்லுமாறு பிலால் (ரலி) கட்டளையிடப்பட்டார்கள்.

## பாங்கு சொல்வதன் சிறப்பு.

ஹதீஸ் 608 என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகைக்காக (பாங்கு என்ற) அழைப்புக் கொடுக்கப்படும்போது, பாங்கு சப்தத்தைக் கேட்கக் கூடாது என்பதற்காகச் சப்தமாகக் காற்றுப் பிரிந்தவனாக ஷைத்தான் புறமுதுகு காட்டி ஓடுகிறான். பாங்கு சொல்லி முடிந்ததும் திரும்பி வருகிறான். தொழுகைக்கு இகாமத் கூறும் போதும் ஓடுகிறான். இகாமத் சொல்லி முடிந்ததும் முன்னோக்கி வந்து தொழுகையாளிக்கும் அவரின் மனதிற்குமிடையில் இருந்து கொண்டு தொழுகையாளி அவரின் மனதிற்குமிடையில் இருந்து கொண்டு தொழுகையாளி அதற்கு முன்பு வரை நினைத்திராத விஷயங்களையெல்லாம் அவருக்கு நினைவூட்டி, இதை நீ நினைத்துப் பார் அதை நீ நினைத்துப் பார், என்று சொல்லிக் கொண்டு இருப்பான். தொழுகையாளி தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்று சந்தேகம் ஏற்படும் அளவிற்கு ஷைத்தான் அவ்வாறு செய்து கொண்டிருப்பான்.

என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

## உரத்த குரலில் பாங்கு சொல்வது.

ஹதீஸ் 609 அப்துல்லாஹ் இப்னு அப்திர் ரஹ்மான் கூறினார்கள்.

அபூ ஸயீதுல் குத்ரீ (ரலி) என்னிடம் நீர் ஆடுகளை மேய்ப்பதிலும் காட்டுப் புறங்களுக்குச் செல்வதிலும் ஆசைப்படுவதை காண்கிறேன். நீர் ஆடுகளுடன் சென்றால் அல்லது காட்டுப் புறம் சென்றால் தொழுகைக்காக பாங்கு சொல்லும்போது குரல் உயர்த்திச் சொல்வீராக! காரணம், முஅத்தினுடைய பாங்கு சப்தத்தைக் கேட்கிற ஜின்னாக இருந்தாலும் மனிதனாக இருந்தாலும் வேறு எதுவாக இருந்தாலும் அவருக்காக மறுமை நாளில் பரிந்துரை செய்வார்கள் எனக் கூறிவிட்டு, இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் சொல்ல, கேட்டேன் என்றும் கூறினார்கள்.

## பாங்கின் மூலம் உயிரைக் காத்துக்கொள்ளல்.

ஹதீஸ் 610 அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் எந்தக் கூட்டத்தினரோடாவது போரிடுவதாக இருந்தால் களத்தில் ஸுபுஹ் நேரம் வரும் வரை எங்களைப் போரில் ஈடுபடுத்த மாட்டார்கள். ஸுபுஹ் நேரம் வந்ததும் கவனிப்பார்கள். எதிர் தரப்பிலிருந்து பாங்கு சொல்லும் சப்தம் கேட்டால் தாக்காமலிருப்பதும் கேட்கவில்லையானால் திடீர்த் தாக்குதல் நடத்துவதும் நபி (ஸல்) அவர்களின் வழக்கமாக இருந்தது. இந்நிலையில் நாங்கள் கைபரை நோக்கிப் புறப்பட்டோம். இரவு நேரத்தில் அந்த இடத்தைச் சென்றடைந்தோம். ஸுபுஹ் நேரம் வந்ததும் பாங்கு சப்தம் கேட்காததால் நபி (ஸல்) அவர்கள் வாகனத்தில் ஏறினார்கள். நான் அபூ தல்ஹாவுக்குப் பின்னால் அவரின் வாகனத்தில் ஏறிக் கொண்டேன். என்னுடைய பாதம் நபி (ஸல்) அவர்களின் பாதத்தில் (அடிக்கடி) படும் (அளவுக்கு நெருக்கமாகச் சென்றோம்), அப்போது கைபர் வாசிகள் தங்களின் மண் வெட்டிகளையும் தானியம் அளக்கும் (மரக்கால் போன்ற) அளவைகளையும் எடுத்துக் கொண்டு எங்களை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களைப் பார்த்ததும்

(கிலியுடன்) அல்லாஹ்வின் மீது ஆணையாக அதோ முஹம்மத்! அவரின் படை! என்றனர். நபி(ஸல்) அவர்கள், அம்மக்களைக் கண்டதும் அல்லாஹு அக்பர்! அல்லாஹு அக்பர்! கைபர் வீழ்ந்தது! நாம் ஒரு கூட்டத்தினரைத் தாக்கினால், அவர்களின் காலைப்போது கெட்டதாயிருக்கும் என்றார்கள்.

## பாங்கு சொல்வதைக் கேட்டால் கூற வேண்டியவை.

ஹதீஸ் 611 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பாங்கு சொல்லப்படுவதை நீங்கள் செவியுற்றால் முஅத்தின் சொல்வது போல் நீங்களும் சொல்லுங்கள்.

என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 612 ஈஸா இப்னு தல்ஹா கூறினார்கள்.

முஆவியா(ரலி) ஒரு நாள் பாங்கு சப்தத்தைச் செவியுறபோது அஷ்ஹது அன்ன முஹம்மத்ர் ரஸூலுல்லாஹ் என்பது வரை முஅத்தின் சொல்வது போன்றே கூறினார்கள்.

ஹதீஸ் 613 யஹ்யா கூறினார்கள்.

முஅத்தின் ஹய்ய அலஸ்ஸலாத் என்று கூறும்போது அதைச் செவியுறுபவர் லாஹவ்ல வலா குவ்வத இல்லாபில்லாஹ் என்று சொல்ல வேண்டும். இவ்வாறுதான் உங்கள் நபியவர்கள் சொல்லக் கேட்டுள்ளேன் என முஆவியா(ரலி) கூறினார் என எங்கள் சகோதரர்களில் சிலர் அறிவித்துள்ளனர்.

## பாங்கு முடிந்த பின் கூறும் துஆ

ஹதீஸ் 614 பாங்கு சொல்வதைக் கேட்ட பின், பூரணமான இந்த அழைப்பின் இரட்சகனான அல்லாஹ்வே! நிலையான தொழுகைக்குரியவனே! முஹமமது நபி(ஸல்) அவர்களுக்கு வஸீலா என்ற அந்தஸ்தையும் சிறப்பையும் வழங்குவாயாக! நீ வாக்களித்தவாறு புகழுக்குரிய இடத்தில் அவர்களை எழுப்புவாயாக! என்ற துஆவை ஓதுகிறவருக்கு மறுமை நாளில் என்னுடைய பரிந்துரை கிடைத்து விடுகிறது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

## பாங்கு சொல்வதற்காகப் போட்டி போடுவது.

யார் பாங்கு சொல்வது என் விஷயத்தில் சிலர் தர்க்கித்தனர். அவர்களிடையில் ஸஃத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள்.

ஹதீஸ் 615 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பாங்கு சொல்வதற்குரிய நன்மையையும் முதல் வரிசையில் நின்று (தொழுவதற்குரிய) நன்மையையும் மக்கள் அறிவார்களானால் அதற்காக அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு வருவர். யாருக்கு அந்த இடம் கொடுப்பது என்பதில் சீட்டுக் குலுக்கியெடுக்கப்படும் நிலையேற்பட்டாலும் அதற்கும் தயாராம் விடுவர். தொழுகையை ஆரம்ப நேரத்தில் நிறைவேற்றுவதிலுள்ள நன்மையை அறிவார்களானால் அதற்காக விரைந்து செல்வார்கள். ஸுபுஹ் தொழுகையிலும் இஷா (அதமா)த் தொழுகையிலும் உள்ள நன்மையை அறிவார்களானால் தவழ்ந்தாவது (ஜமாஅத்) தொழுகைக்கு வந்து சேர்ந்து விடுவார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## பாங்கு சொல்பவர் இதர பேச்சுக்கள் பேசுவது.

ஹதீஸ் 616 அப்துல்லாஹ் இப்னு ஹாரிஸ் கூறினார்கள்.

மழையினால் சேறு ஏற்பட்டிருந்த ஒரு நாளில் இப்னு அப்பாஸ்(ரலி) ஜும்ஆப் பிரசங்கம் செய்தார்கள். பாங்கு சொல்பவர் ஹய்ய அலஸ்ஸலாஹ் என்று சொல்ல ஆரம்பித்தபோது உங்கள் கூடாரங்களிலேயே தொழுது கொள்ளுங்கள் என்று மக்களுக்கு அறிவிக்குமாறு கட்டளையிட்டார்கள். அப்போது அங்கிருந்தவர்கள் சிலர் சிலரை ஆச்சரியமாகப் பார்த்தனர். இந்த பாங்கு சொல்பவரை விடவும் சிறந்தவர்களான நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆ கட்டாயமானதாக இருந்தும் கூடு அவ்வாறு செய்திருக்கிறார்கள்! என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## தொழுகையின் நேரத்தை அறிவிக்கிற உதவியாளர் இருந்தால் பார்வையிழந்த வரும் பாங்கு சொல்லாம்.

ஹதீஸ் 617 என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிலால் இரவி(ன் கடைசியி)ல் பாங்கு சொல்வார். அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் (ஸுப்ஹுக்கு) பாங்கு சொல்லும் வரை உண்ணுங்கள் பருகுங்கள்.

இதை அறிவிக்கும் இப்னு உமர்(ரலி) அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் கண்பார்வை இல்லாதவராக இருந்தார். அவரிடம் ஸுபுஹ்நேரம் வந்துவிட்டது என்று கூறப்பட்டால்தான் பாங்கு சொல்வார் என்று கூறினார்கள்.

## ஃபஜர் நேரம் வந்த பின் பாங்கு சொல்வது.

ஹதீஸ் 618 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

அதிகாலை வெண்மை தோன்றி முஅத்தின் ஸுப்ஹுக்கு பாங்கு கூறியதற்கும் இகாமத் கூறுவதற்கும் இடையே நபி(ஸல்) அவர்கள் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.

ஹதீஸ் 619 ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஸுப்ஹுத் தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டதற்கும் இகாமத்திற்குமிடையில் சுருக்கமாக இரண்டு ரக்அத்துகள் நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள்.

ஹதீஸ் 620 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிலால் இரவி(ன் கடைசியி)ல் பாங்கு சொல்வார். அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் (ஸுப்ஹுக்கு) பாங்கு சொல்லும் வரை உண்ணுங்கள் பருகுங்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## ஸுப்ஹ் நேரத்துக்கு முன் பாங்கு சொல்வது.

ஹதீஸ் 621 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் ஸஹர் உணவு உண்ணுவதிலிருந்து பிலாலின் பாங்கு உங்களைத் தடை செய்து விடவேண்டாம். இரவில் தூங்கிக் கொண்டிருப்பவர்களை எழுப்புவதற்காகவும் தொழுது கொண்டிருப்பவர்கள் திரும்பி வருவதற்காகவும்தான் பிலால் பாங்கு சொல்கிறாரே தவிர ஸுப்ஹு நேரம் வந்துவிட்டது என்பதை அறிவிப்பதற்காக அன்று. இவ்வாறு கூறிவிட்டுத் தம் கை விரலை மேலும் கீழுமாக உயர்த்தி சைகை செய்தார்கள்.

என இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 622 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிலால் இரவி(ன் கடைசியி)ல் பாங்கு சொல்வார். அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் (ஸுப்ஹுக்கு) பாங்கு சொல்லும் வரை உண்ணுங்கள் பருகுங்கள்

என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 623 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிலால் இரவி(ன் கடைசியி)ல் பாங்கு சொல்வார். அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் (ஸுப்ஹுக்கு) பாங்கு சொல்லும் வரை உண்ணுங்கள் பருகுங்கள்.

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் எவ்வளவு இடைவெளி இருக்கவேண்டும்? இகாமத் சொல்வதற்காக யாரை எதிபார்க்க வேண்டும்?

ஹதீஸ் 624 என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வொரு பாங்குக்கும் இகாமத்துக்குமிடையில் ஒரு தொழுகை உண்டு. விரும்பியவர்கள் தொழலாம்.

என அப்துல்லாஹ் இப்னு முகப்பல்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 625 அனஸ்(ரலி) கூறினார்கள்.

முஅத்தின் பாங்கு சொன்னதும் நபி(ஸல்) அவர்கள் (தொழுகைக்கு) வருவதற்கு முன் நபித் தோழர்கள் (ஸுன்னத் தொழுவதற்காக) தூண்களை நோக்கி விரைவார்கள். இவ்வாறே பாங்கிற்கும் இகாமத்துக்கும் இடையில் (அதிக நேரம்) இல்லாமலிருந்தும் மஃரிபுக்கும் முன்பு இரண்டு ரக்அத் தொழுதார்கள்.

## இகாமத் சொல்வதை எதிர் பார்த்து இருப்பது.

ஹதீஸ் 626 ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஃபஜ்ரு நேரம் வந்து, முஅத்தின் ஃபஜ்ருக்கு பாங்கு சொன்னதற்கும் ஃபஜ்ருத் தொழுகைக்கும் இடையே நபி(ஸல்) அவர்கள் எழுந்து சுருக்கமாக அவர்கள் எழுந்து சுருக்கமாக இரணடு ரக்அத்துகள் தொழுவார்கள். இகாமத் சொல்வதற்காக முஅத்தின் அவர்களிடம் வரும் வரை வலப்புறம் சாய்ந்து படுத்துக் கொள்வார்கள்.

## விரும்பியவர் பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் தொழுவது கொள்வது.

ஹதீஸ் 627 அப்துல்லாஹ் இப்னு முகப்பல்(ரலி) கூறினார்கள்.

ஒவ்வொரு பாங்குக்கும் இகாமத்துக்குமிடையில் ஒரு தொழுகை உண்டு என்று நபி(ஸல்) அவர்கள் இரண்டு முறை கூறிவிட்டு மூன்றாம் முறை விரும்பியவர்கள் தொழலாம் என்றார்கள்.

## பிராயாணத்தின்போது ஒரே முஅத்தின் பாங்கு சொல்ல வேண்டும்.

ஹதீஸ் 628 மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

நான் எங்கள் கூட்டத்தினர் சிலருடன் நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்களுடன் இருபது நாள்கள் தங்கியிருந்தோம். அவர்கள் இரக்க குணமுடையவர்களாகவும் மென்மையானவர்களாகவும் இருந்தார்கள். எங்கள் குடும்பத்தாரிடம் நாங்கள் செல்ல வேண்டுமென்ற எங்கள் ஆர்வத்தைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் நீங்கள் சென்று அவர்களுடன் தங்கி அவர்களுக்கு மார்க்கத்தைக் கற்றுக் கொடுங்கள். தொழுங்கள். தொழுகையின் நேரம்

வந்து விடுமானால் உங்களில் ஒருவர் பாங்கு சொல்லட்டும் உங்களில் பெரியவர் இமாமா இருக்கட்டும் என்று கூறினார்கள்.

**பயணிகள் கூட்டமாகச் செல்லும்போது பாங்கு, இகாமத் சொல்வதும் (ஹஜ்ஜின போது) அர∴பாவிலும் முஸ்தலி∴பாவிலும் நடந்து கொள்ளும் விதமும் குளிரான இரவுகளிலும் மழை பெய்யும் இரவுகளிலும் கூடாரங்களில் தொழுது கொள்ளுங்கள் என்று முஅத்தின் அறிவிப்புச் செய்வதும்.**

ஹதீஸ் 629 அபூ தர்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் சென்றிருந்தோம். (லுஹர் தொழுகைக்கு) முஅத்தின் பாங்கு சொல்ல ஆயத்தமானபோது கொஞ்சம் பொறு என்று நபி(ஸல்) அவர்கள் முஅத்தினிடம் கூறினார்கள். சிறிது நேரம் கழித்து முஅத்தின் பாங்கு சொல்லத் தயாரான போதும் மலைக் குன்றுகளின் நிழல் அதே அளவிற்குச் சமமாகும் வரை (பாங்கு சொல்வதைப்) பிற்படுத்துங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் முஅத்தினிடம் கூறிவிட்டு, நிச்சயமாக இந்தக் கடும் வெப்பம் நரக வெப்பத்தின் வெளிப்பாடாகும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 630. மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

பயணத்தை மேற்கொள்ள விரும்பிய இருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்போது அவர்களிடம் நீங்கள் இருவரும் பயணம் புறப்பட்டுச் சென்றால், தொழுகைக்காக பாங்கு சொல்லிப் பின்னர் இகாமத்தும் சொல்லுங்கள். பின்னர் உங்களில் பெரியவர் இமாமாக நின்று தொழுகை நடத்தட்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 631 மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

சம வயதுடைய இளைஞர்களான நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் சென்றோம். அவர்களுடன் இருபது நாள்கள் தங்கினோம். நபி(ஸல்) அவர்கள் இரக்க குணமுடையவர்களாகவும் மென்மையானவர்களாகவும் இருந்தார்கள். நாங்கள் எங்கள் குடும்பத்தினரிடம் செல்ல ஆசைப்படுவதை அறிந்த நபி(ஸல்) அவர்கள் ஊரிலிருக்கும் எங்கள் குடும்பத்தினரைப் பற்றி விசாரித்தார்கள். நாங்கள் அவர்களைப் பற்றி விவரித்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் உங்கள் குடும்பத்தினரிடம் திரும்பிச் சென்று தங்குங்கள். அவர்களுக்குக் கற்றுக் கொடுங்கள். என்னை எவ்வாறு தொழக கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள். தொழுகை நேரம் வந்ததும் உங்களில் ஒருவர் பாங்கு சொல்லட்டும் உங்களில் மூத்தவர் உங்களுக்கு இமாமத் செய்யட்டும் என்று கூறினார்கள். மேலும் அவர்கள் சொன்ன சில செய்திகள் எனக்கு நினைவிலில்லை.

ஹதீஸ் 632 நா∴பிவு கூறினார்கள்.

மக்காவை அடுத்துள்ள ளஜ்னான் என்ற ஊரில் மிகக் குளிரான ஓர் இரவில் இப்னு உமர்(ரலி) பாங்கு கூறினார்கள். அதன் கடைசியில் உங்களுடைய கூடாரங்களிலேயே தொழுது கொள்ளுங்கள் என்றும் கூறினார்கள். மேலும் பயணத்தின்போது, குளிரான இரவிலும் மழை பெய்யும் மழைபெய்யும் இரவிலும் முஅத்தின் பாங்கு சொல்லும்போது அதன் கடைசியில் உங்களுடைய கூடாரங்களிலேயே தொழுது கொள்ளுங்கள் என்று சொல்லுமாறு முஅத்தினுக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடுவார்கள் என்றும் இப்னு உமர்(ரலி) கூறினார்:

ஹதீஸ் 633 அபூ ஜுஹைஃபா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அப்தஹ் என்ற இடத்தில் இருந்தபோது அங்கு வந்த பிலால்(ரலி) தொழுகை நேரம் (வந்துவிட்டது) பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். பின்னர் பிலால்

ஒரு கைத்தடியை எடுத்து வந்து அதை நபி(ஸல்) அவர்கள் முன் நாட்டிவிட்டுத் தொழுகைக்காக இகாமத் கூறினார்கள்.

### முஅத்தின் பாங்கு சொல்லும்போது தம் வாயை அங்கு மிங்குமாக அசைக்கலாமா? பாங்கு சொல்லும்போது (வலப்பக்கமும் இடப்பக்கமும்) திரும்ப வேண்டுமா?

பிலால்(ரலி) பாங்கு சொல்லும்போது தம் இரண்டு கை விரல்களைக் காதுகளில் வைத்துக் கொள்வார்கள்.

இப்னு உமர்(ரலி) பாங்கு சொல்லும்போது இரண்டு விரல்களைக் காதுகளில் வைக்க மாட்டார்கள்.

உளூ இல்லாமல் பாங்கு சொல்வதில் தவறில்லை என இப்ராஹீம் அந்நகயீ கூறினார்கள்.

பாங்கு சொல்வதற்கு உளூச் செய்வது அவசியமும் ஸுன்னத்தாகும் என அதா:. கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் எல்லா நிலைகளிலும் அல்லாஹ்வை நினைப்பவர்களாக இருந்தார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 634 அபூ ஜுஹைஃபா(ரலி) கூறினார்கள்.

பிலால்(ரலி) பாங்கு சொல்லும்போது (பாங்கை நீட்டிச் சொல்வதற்காக) தம் வாயை அங்கும் இங்குமாக அசைப்பதைப் பார்த்தேன்.

### தொழுகை எங்களுக்குத் தவறிவிட்டது என ஒருவர் சொல்லாம்.

ஹதீஸ் 635 அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் சிலர் வேகமாக வரும் சப்தத்தைச் செவியுற்றார்கள். தொழுகையை முடித்ததும் உங்களுக்கு என்ன? (இவ்வளவு வேகமாக வந்தீர்கள்) என்று அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு (ஜமாஅத்) தொழுகைக்காக விரைந்து வந்தோம் என்று பதில் கூறினர். அவ்வாறு செய்யாதீர்கள். தொழுகைக்கு வரும்போது அமைதியான முறையில் வாருங்கள். உங்களுக்குக் கிடைத்த ரக்அத்தை ஜமாஅத்துடன் தொழுங்கள். உங்களுக்குத் தவறிப் போனதைப் பூர்த்தி செய்யுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### தொழுகைக்காகச் செல்லும்போது விரைந்து செல்லலாகாது. அமைதியாகவும் கண்ணியமான முறையிலும் செல்லவேண்டும்.

உங்களுக்குக் கிடைத்த ரக்அத்துகளை (ஜமாஅத்துடன்) தொழுங்கள் விடுபட்டதைப் பூர்த்தி செய்யுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 636 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் இகாமத் சொல்லுவதைச் செவியுற்றால் தொழுகைக்குச் செல்லுங்கள். அப்போது நீங்கள் அமைதியான முறையிலும் கண்ணியமாகவும் செல்லுங்கள். அவசரமாகச் செல்லாதீர்கள். உங்களுக்குக் கிடைத்த ரக்அத்களை (ஜமாஅத்துடன்) தொழுங்கள் உங்களுக்குத் தவறிப் போனதைப் பூர்த்தி செய்யுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## தொழுகைக்கு இகாமத் சொல்லும்போது இமாம் வருவதைக் கண்டால் மக்கள் எப்போது எழுந்திருக்க வேண்டும்?

ஹதீஸ் 637 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் என்னை நீங்கள் பார்க்கும் வரை எழுந்திருக்க வேண்டாம்.

என அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

## தொழுகைக்கு அவசரப்பட்டு விரைந்து செல்லக் கூடாது. அமைதியாகவும் கண்ணியமாகவும் செல்ல வேண்டும்.

ஹதீஸ் 638 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் என்னை நீங்கள் பார்க்கும் வரை எழுந்திருக்க வேண்டாம். அமைதியைக் கடைபிடியுங்கள். என அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

## (இகாமத் சொன்ன பிறகு) ஏதாவது காரணத்திற்காகப் பள்ளியிலிருந்து வெளியே செல்லாமா?

ஹதீஸ் 639 அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

இகாமத் சொல்லப்பட்டு, வரிசைகள் சரி செய்யப்பட்டவுடன் நபி(ஸல்) அவர்கள் (தொழுகை நடத்த) வந்தார்கள். அவர்களின் இடத்தில் நின்றதும் அவர்கள் தக்பீர் சொல்வார்கள் என்று நாங்கள் எதிர்பார்த்தோம். ஆனால் உங்கள் இடத்திலேயே நில்லுங்கள் என்று கூறிவிட்டுத் திரும்பிவிட்டார்கள். அவர்கள் குளித்துவிட்டுத் தலையில் நீர் சொல்ல எங்களிடம் வரும் வரை நாங்கள் அப்படியே நின்றிருந்தோம்.

## இகாமத் சொன்ன பின்பு இமாம், மஃமூம்களிடம் உங்கள் இடத்திலேயே நில்லுங்கள் என்று சொல்லிவிட்டுச் சென்று விடுவதும் அவர் திரும்பி வரும் வரை அவரை எதிர்பார்த்து நிற்பதும்.

ஹதீஸ் 640 அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள். தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டது. மக்கள் தங்கள் வரிசைகளைச் சரி செய்தனர். நபி(ஸல்) அவர்கள் வந்து முன்னே நின்றார்கள். அவர்களின் மீது குளிப்புக் கடமையாகி இருந்தால், உங்கள் இடத்திலேயே நில்லுங்கள் என்று கூறிவிட்டுக் குளிக்கச் சென்றார்கள். பின்னர் தலையிலிருந்து நீர் சொட்ட வந்து எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

## ஒருவர் நாம் தொழவில்லை என்று சொல்லலாம்.

ஹதீஸ் 641 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

கந்தக் போரின்போது நபி(ஸல்) அவர்களிடம் உமர்(ரலி) வந்து நபி அவர்களே! சூரியன் மறையும் வரை நான் (அஸர்) தொழவில்லை என்றார்கள். நோன்பு வைத்திருந்தவர்கள் நோன்பு துறந்த பின் இது நடந்தது. அதற்கு நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக நானும் தொழவில்லை என்றார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் புத்ஹான் என்ற இடத்திற்குச் சென்றார்கள். உளூச் செய்து அஸர் தொழுதார்கள். அதன் பிறகு மஃரிபு தொழுதார்கள்.

## இகாமத் சொன்ன பின் இமாமுக்கு ஏதாவது தேவை ஏற்படுவது.

ஹதீஸ் 642 அனஸ் (ரலி) கூறினார்கள்.

தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்ட பின் நபி (ஸல்) அவர்கள் பள்ளியின் பக்கத்தில் ஒரு மனிதரோடு அந்தரங்கமாக உரையாடிக் கொண்டிருந்தார்கள். தொழுகைக்கு வராமல் நீண்ட நேரம் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததால் மக்கள் தூங்கிவிட்டனர்.

## தொழுகைக்கு இகாமத் சொன்ன பின் பேசுவது.

ஹதீஸ் 643 ஹுமைத் கூறினார்கள்.

நான் தாபித் அல் புனானி இடம் தொழுகைக்கு இகாமத் சொன்ன பின்பேசக் கூடியவரைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர், தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்ட பின் ஒருவர் வந்து நபி (ஸல்) அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அதனால் அவர்கள் தொழுகைக்குத் தாமதமாக வந்தார்கள் என்று அனஸ் (ரலி) அறிவிக்கும் ஹதீஸைக் கூறினார்.

## ஜமாஅத் தொழுகையின் அவசியம்.

ஹதீஸ் 644 என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய உயிர் எவனுடைய கரத்திலிருக்கிறதோ அந்த அல்லாஹ்வின் மீது ஆணையாக! விறகுகளைக் கொண்டு வருமாறு நான் கட்டளையிட்டு அதன் படி விறகுகள் கொண்டு வரப்பட்டுப் பின்னர் தொழுகைக்கு அழைக்குமாறு நான் உத்தரவிட்டு, அதன்படி அழைக்கப்பட்டுப் பின்னர் ஒருவரை மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு கட்டளையிட்டு, அதன் படி அவர் தொழுகை நடத்திப் பின்னர் தொழுகைக்கு வராமலிருக்கிற ஆண்களின் வீடுகளுக்குச் சென்று வீட்டோடு அவர்களை எரிப்பதற்கு நான் நினைத்ததுண்டு. என்னுடைய உயிர் யாருடைய கையில் இருக்கிறதோ அவரின் மீது ஆணையாகப் பள்ளியில் ஒரு துண்டு இறைச்சி, அல்லது ஆட்டுக் குளம்பு கொடுக்கப்படுகிறது என்று அவர்கள் எவரேனும் அறிவார்களானால் நிச்சயமாக இஷாத் தொழுகைக்காக ஜமாஅத்திற்கு வந்து விடுவார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

## ஜமாஅத்தாகத் தொழுவதன் சிறப்பு.

ஹதீஸ் 645 என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தனியாகத் தொழுவதை விட ஜமாஅத்தாகத் தொழுவது இருபத்தேழு மடங்கு சிறந்ததாகும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 646 என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தனியாகத் தொழுவதை விட ஜமாஅத்தாகத் தொழுவது இருபத்தைந்து மடங்கு சிறந்ததாகும்.

என அபூ ஸயீதுல் குத்ரீ (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 647 என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தம் வீட்டில் அல்லது கடை வீதியில் தொழுவதை விட ஜமாஅத்துடன் தொழுவது இருபத்தி ஐந்து மடங்கு சிறந்ததாக இருக்கிறது. அதாவது, ஒருவர் உளூச் செய்து, அதை அழகாகவும் செய்து, பின்னர் தொழ வேண்டுமென்ற எண்ணத்திலேயே பள்ளிவாசலுக்குப் புறப்பட்டால் அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடிக்கும் அல்லாஹ் ஓர் அந்தஸ்தை உயர்த்துகிறான். ஒரு பாவத்தை அழிக்கிறான். அவர் தொழுமிடத்தில் அவருக்காக வானவர்கள் பிரார்த்திக்கின்றனர். தங்கள் பிரார்த்தனையில் இறைவா! நீ இந்த மனிதனின் மீது அருள்

புரிவாயாக! உன்னுடைய கருணையை அவருக்குச் சொரிவாயாக! என்றும் கூறுவார்கள். உங்களில் ஒருவர் தொழுகையை எதிர்பார்த்திருக்கும் போதெல்லாம் அவர் தொழுகையிலேயே இருக்கிறார்.

என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

## ஸுப்ஹுத் தொழுகையை ஜமாஅத்துடன் நிறைவேற்றுவதன் சிறப்பு.

ஹதீஸ் 648 என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தனியாகத் தொழுவதைவிடக் கூட்டாகத் தொழுவது இருபத்தைந்து மடங்கு சிறப்புடையதாகும். ஸுப்ஹுத் தொழுகையின்போது பகல் நேர வானவர்களும் இரவு நேர வானவர்களும் ஒன்று சேருகிறார்கள்.

இதை அபூ ஹுரைரா (ரலி) அறிவித்துவிட்டு, நீங்கள் விரும்பினால் நிச்சயமாக ஸுப்ஹு நேரத்தில் ஓதப்படும் குர்ஆன், சாட்சி கூறக்கூடியதாக இருக்கிறது (திருக்குர்ஆன் 17:78) என்ற வசனத்தை ஓதுங்கள் என்றார்கள்.

ஹதீஸ் 649 என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தனியாகத் தொழுவதை விட ஜமாஅத்தாகத் தொழுவது இருபத்தேழு மடங்கு சிறந்ததாகும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 650 உம்மு தர்தா (ரலி) கூறினார்கள்.

அபூ தர்தா கோபமாக என்னிடம் வந்தார்கள். நீங்கள் கோபமாக இருக்கக் காரணம் என்ன? என்று கேட்டேன். அதற்கு, அல்லாஹ்வின் மீது ஆணையாக நபி(ஸல்) அவர்களின் சமூகம் கூட்டாகத் தொழுகிறார்கள் என்பதைத் தவிர வேறு எதையும் அவர்களிடம் நான் காணவில்லை! எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 651 யார் நீண்ட தூரத்திலிருந்து நடந்து தொழுகைக்கு வருகிறார்களோ அவர்களுக்கு மற்ற எல்லோரையும் விட அதிகம் நன்மை உண்டு. ஜமாஅத் தொழுகையை எதிர்பார்த்திருந்து இமாமுடன் தொழுகிறவருக்குத் தனியாகத் தொழுதுவிட்டுத் தூங்கி விடுபவரை விட அதிகம் நன்மையுண்டு என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா (ரலி) கூறினார்கள்.

## லுஹர் தொழுகையை ஆரம்ப நேரத்தில் தொழுவதன் சிறப்பு.

ஹதீஸ் 652 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் (தொழுவதற்காக) நடந்து வரும் பாதையில் ஒரு முள் மரக்கிளை கிடப்பதைக் கண்டு, அதை அந்தப் பாதையைவிட்டும் அகற்றும் பணியில் ஈடுபட்டார். அப்பணி அவரை (ஆரம்ப நேரத்தில் தொழுவதைவிட்டும்) பிற்படுத்திவிட்டது. இப்படிப்பட்ட அந்த மனிதருக்கு அல்லாஹ் நன்றி செலுத்துகிறான். அவருக்குப் பாவமன்னிப்பும் அளிக்கிறான். என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 653 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் குத்திக் கொல்லப்படுபவன், வயிற்றுப் போக்கில் இறப்பவன், தண்ணீரில் மூழ்கி மரிப்பவன், இடிபாடுகளுக்கிடையில் சிக்கி இறப்பவன், போரில் கொல்லப்படுபவன் ஆகிய ஐந்து பேர்களும் ஷஹீதுகள் ஆவார்கள். பாங்கு சொல்வதிலும் தொழுகையின் முதல்வரிசையிலும் உள்ள நன்மையை மக்கள் அறிவார்களாயின் அதற்காகப் போட்டி போட்டு முந்தி வந்து, அதன் விளைவாக அவர்களிடையில் சீட்டுக் குலுக்கி எடுக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டாலும் அதற்கும் அவர்கள் தயாராம் விடுவார்கள். என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 654 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகையை ஆரம்ப நேரத்தில் தொழுவதன் சிறப்பை மக்கள் அறிவார்களானால் அதற்காக விரைந்து செல்வார்கள். ஸுப்ஹ் தொழுகையிலும் அதமா(இஷா)த் தொழுகையிலும் உள்ள நன்மையை அறிவார்களானால் தவழ்ந்தாவது (ஜமாஅத்) தொழுகைக்கு வந்து சேர்ந்து விடுவர்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## அதிகமான காலடிகளின் மூலம் நன்மையை நாடுவது.

ஹதீஸ் 655 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஸலமாவின் மக்களே! காலடிகளை அதிகம் வைப்பதன் மூலம் நன்மையை நீங்கள் நாட வேண்டாமா?

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 656 அனஸ்(ரலி) கூறினார்கள்.

பனு ஸலமா கூட்டத்தினர் தங்கள் இல்லங்களை நபி(ஸல்) அவர்களின் சமீபத்தில் அமைத்துத் தங்க நினைத்தனர். மதீனாவில் வீடுகளைக் காலி செய்வதை நபி(ஸல்) அவர்கள் வெறுத்தார்கள். நீங்கள் அதிகமாகக் காலடிகள் எடுத்து வைத்து(த் தொழ வருவதன் மூலம்) நன்மையைப் பெற வேண்டாமா? நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

## இஷாத் தொழுகையை ஜமாஅத்தாகத் தொழுவதன் சிறப்பு.

ஹதீஸ் 657 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஸுப்ஹு, இஷா ஆகிய தொழுகைகளை விட முனாஃபிக் (வேடதாரி)களுக்குப் பாரமான தொழுகை வேறு எதுவும் இல்லை. அந்த இரண்டு தொழுகைகளையும் (ஜமாஅத்தாகத்) தொழுவதிலுள்ள நன்மையை மக்கள் அறிவார்களானால் தவழ்ந்தாவது அத்தொழுகைக்கு வந்து சேர்ந்து விடுவார்கள். இகாமத் சொல்லுமாறு முஅத்தினுக்கு நான் கட்டளையிட்டுப் பின்னர் ஒருவரை இமாமாக நின்று தொழுகை நடத்துமாறு கூறி, அதன் பின்பு எவரேனும் தொழுகைக்கு வராமல் இருந்தால் அவர்களைத் தீயிட்டுக் கொளுத்த நான் நினைத்தேன்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## இரண்டு பேரும் அதற்கு மேலும் உள்ளவர்கள் ஜமாஅத்தாகும்.

ஹதீஸ் 658 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகை நேரம் வந்ததும் நீங்கள் பாங்கு, இகாமத் சொல்லுங்கள். உங்களில் மூத்தவர் உங்களுக்கு இமாமத் செய்யட்டும். என மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

## தொழுகையை எதிர் பார்த்துப் பள்ளிவாசலில் உட்கார்ந்திருப்பதும் பள்ளி வாசல்களின் சிறப்பும்.

ஹதீஸ் 659 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தாம் தொழுமிடத்தில் உளூவுடன் இருக்கும் போதெல்லாம் அவருக்காக வானவர்கள் பிரார்த்திக்கிறார்கள். தங்கள் பிரார்த்தனையில், இறைவா! இவரை மன்னித்து விடு! இவருக்கு நீ கருணை புரி! என்றும் கூறுவார்கள். உங்களில் ஒருவர் தொழுவதற்காகக் காத்திருந்து தொழுகைதான் அவரைத் தம் மனைவி மக்களிடம் செல்ல விடாமல் தடுத்து

நிறுத்தியிருக்குமானால் அவர் தொழுகையில் இருப்பவராகவே கருதப்படுவார் என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 660 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழல் இல்லாத நாளான மறுமை நாளில் அல்லாஹ் தம் நிழலை ஏழு பேர்களுக்கு அளிக்கிறான். அவர்கள் நீதியை நிலை நாட்டும் தலைவர், அல்லாஹ்வின் வணக்க வழிபாட்டில் ஊறிய இளைஞர், பள்ளி வாசல்களுடன் தம் உள்ளத்தைத் தொடர்பு படுத்திய ஒருவர், அல்லாஹ்விற்காகவே இணைந்து அல்லாஹ்விற்காகவே பிரிகிற இரண்டு நண்பர்கள், உயர் அந்தஸ்திலுள்ள அழகான ஒரு பெண் தவறான வழிக்குத் தம்மை அழைக்கிறபோது, நான் அல்லாஹ்வை அஞ்சுகிறேன் என்று சொல்லும் மனிதர், தம் வலக்கரம் செய்யும் தர்மத்தை இடக்கரம் அறியாதவாறு இரகசியமாகச் செய்பவர், தனிமையில் இருந்து அல்லாஹ்வை நினைத்துக் கண்ணீர் சிந்துபவர் என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 661. ஹுமைத் கூறினார்:

நபி (ஸல்) அவர்கள் மோதிரம் அணிந்திருந்தார்களா? என்று அனஸ் (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு, ஆம்! ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை இரவின் நடுப்பகுதி வரை தாமதப் படுத்தினார்கள். அவர்கள் தொழுது முடித்த பின்னர் எங்கள் பக்கம் வந்து மக்கள் தொழுதுவிட்டுத் தூங்கிவிட்டனர். நீங்கள் தொழுகையை எதிர் பார்த்து இருக்கும் போதெல்லாம் தொழுகையல் இருந்தவர்களாகவே கருதப்படுவீர்கள் எனக் கூறினார்கள். நபி (ஸல்) அவர்களின் மோதிரம் மின்னியதை நான் இப்பொழுது பார்ப்பதுபோல் இருக்கிறது என்று அனஸ் (ரலி) கூறினார்.

## காலையிலும் மாலையிலும் பள்ளிவாயிலுக்குச் செல்பவரின் சிறப்பு

ஹதீஸ் 662. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

பள்ளிவாசலுக்கு ஒருவர் காலையிலோ மாலையிலோ சென்றால், அவர் காலையிலும் மாலையிலும் செல்லும் போதெல்லாம் சுவர்க்கத்தில் அவருக்கு உரிய இடத்தை அல்லாஹ் தயார் செய்கிறான்.

என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

## தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் கடமையான தொழுகையைத் தவிர வேறு தொழுகையில்லை.

ஹதீஸ் 663. அப்துல்லாஹ் இப்னுமாலிக் (ரலி) கூறினார்கள்.

இகாமத் சொல்லப்பட்ட பின்னர் ஒருவர் இரண்டு ரக்அத்கள் தொழுவதை நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள். நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்த பின்னர் மக்கள் அம்மனிரைச் சூழ்ந்தனர். ஸுப்ஹு நான்கு ரக்அத்களா? ஸுப்ஹு நான்கு ரக்அத்களா? என்று அம்மனிரைப் பார்த்து நபி (ஸல்) அவர்கள் (கோபமாகக்) கேட்டார்கள்.

## ஜமாஅத்தைவிட்டு விடுதற்குரிய நோய்கள்.

ஹதீஸ் 664. அஸ்வத் கூறினார்:

ஒரு முறை நாங்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம் தொழுகையை விடாமல் தொழுவது பற்றியும் தொழுகைக்கு முக்கியத்துவம் கொடுப்பது பற்றியும் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது ஆயிஷா (ரலி), நபி (ஸல்) அவர்கள் தாம் மரணிப்பதற்குச் சில நாள்களுக்கு முன் நோய்வாய்ப் பட்டிருந்தார்கள். தொழுகையின் நேரம் வந்த பொழுது பாங்கும் சொல்லப்பட்டது. அப்பொழுது மக்களுக்குத் தொழுகை நடத்தும் படி அபூ பக்கரிடம் சொல்லுங்கள் நபி (ஸல்) அவர்கள்

கூறினார்கள். அதற்கு அபூ பக்ர் மென்மையான உள்ளமுடையவர் உங்களுடைய இடத்தல் நின்று தொழுகை நடத்த அவரால் முடியாது என்று சொல்லப்பட்டது. திரும்பவும் நபி(ஸல்) அவர்கள் முதலில் கூறியவாறே கூறினார்கள். திரும்பவும் அவர்களுக்கு அதே பதிலே சொல்லப்பட்டது. மூன்றாவது முறையும் அவ்வாறே நடந்தது. அப்போது, நீங்கள் நபி யூஸுபின் (அழகைக் கண்டு கையை அறுத்த) பெண்களைப் போன்று இருக்கிறீர்கள். மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு அபூ பக்ரிடம் சொல்லுங்கள்! என நபி(ஸல்) அவர்கள் மீண்டும் கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) வெளியே வந்து தொழுகை நடத்தினார்கள். நபி(ஸல்) அவர்கள் தமக்குச் சிறிது சுகம் கிடைத்ததை உணர்ந்தபோது, இரண்டு ஸஹாபாக்களின் தோள்களின் மீது இரண்டு கைகளையும் போட்டவாறு, கால்களைத் தரையில் கோடிட்டவாறு புறப்பட்டதை பார்த்தேன். நபி(ஸல்) அவர்களைக் கண்ட அபூ பக்ர்(ரலி) இமாமுடைய இடத்திலிருந்து பின்வாங்க முயன்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் கையினால், உங்கள் இடத்திலேயே இருங்கள் என்று சைகை செய்தார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் கொண்டு வரப்பட்டு அபூ பக்ர்(ரலி)யின் பக்கத்தில் அமர்த்தப் பட்டார்கள் என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள். அவர்களின் தொழுகையைப் பின்பற்றி அபூ பக்ரும் அபூ பக்ருடைய தொழுகையைப் பின்பற்றி மக்களும் தொழுதார்களா? என்று அஃமஷ் இடம் கேட்கப் பட்டபோது ஆம் எனத் தம் தலையை அசைத்துப் பதில் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் நபி(ஸல்) அவர்கள் வந்து அபூ பக்ர்(ரலி) உடைய இடப்பக்கமாக அமர்ந்தார்கள். அபூ பக்ர்(ரலி) நின்று தொழுதார்கள் எனக் காணப்படுகிறது.

ஹதீஸ் 665. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் நோய் அதிகமாம் அதனால் வேதனை கடுமையானபோது, என்னுடைய வீட்டில் தங்கிச் பெறுவதற்காக மற்ற மனைவியரிடம் அனுமதி கேட்டார்கள். அவர்களும் அனுமதி வழங்கினர். அவர்கள் வெளியில் வரும்பொழுது இரண்டு பேர்களுக்கிடையில் தொங்கியவாறு வந்தார்கள். அப்போது அவர்களின் கால் விரல்கள் பூமியில் கோடிட்டுக் கொண்டிருந்தன. நபி(ஸல்) அவர்கள் அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் வேறு ஒரு மனிதருக்கும் இடையில்தான் தொங்கிக் கொண்டு வந்தார்கள்.

இந்த விஷயத்தை உபைதுல்லாஹ், இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கூறியபோது, ஆயிஷா(ரலி) பெயர் குறிப்பிடாத அந்த இரண்டாவது மனிதர் யார் என்று உமக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். இல்லை என உபைதுல்லாஹ் பதிலளித்தார். அவர் தாம் அலீ இப்னு அபீ தாலிப் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## மழையின் போதும் வேறு காரணங்களுக்காகவும் கூடாரங்களில் தொழுது கொள்வது அனுமதிக்கப்பட்டது.

ஹதீஸ் 666. நாஃபிவு கூறினார்:

குளிரும் காற்றும் நிறைந்த ஓர் இரவில் தொழுகைக்காக இப்னு உமர்(ரலி) பாங்கு சொன்னார்கள். பின்னர் உங்கள் கூடாரங்களிலேயே தொழுது கொள்ளுங்கள் என்றார்கள். குளிரும் மழையுமுள்ள இரவுகளில் கூடாரங்களிலே தொழுங்கள் என்று கூறுமாறு நபி(ஸல்) அவர்கள் முஅத்தினுக்கு உத்தரவிடுவார்கள் என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 667. மஹ்மூத் இப்னு ரபீஃ கூறினார்:

பார்வையற்ற இத்பான்பின் மாலிக் தம் சமுதாயத்திற்கு இமாமத் செய்பவராக இருந்தார். (ஒரு நாள்) நபி(ஸல்) அவர்களிடம், நபி அவர்களே! இருட்டும் வெள்ளமுமாக இருக்கிறது! நானோ பார்வையற்றவன். எனவே நீங்கள் என் வீட்டில் வந்து தொழுங்கள். அவ்விடத்தை நான்

தொழுமிடமாக்கிக் கொள்கிறேன் என்றார். நபி(ஸல்) அவர்கள் அவரிடம் சென்று நான் எங்கே தொழ வேண்டும் என விரும்புகிறீர்? என்று கேட்டார்கள். அவர் வீட்டில் ஓர் இடத்தைக் காட்டினார். அவ்விடத்தை நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள்.

## பள்ளிக்கு வந்திருப்பவர்களுடன் (வராதவர்களைவிட்டுவிட்டு) இமாம் தொழுகை நடத்தலாமா? மழைக் காலத்தில் ஜும்ஆப் பிரசங்கம் செய்ய வேண்டுமா?

ஹதீஸ் 668. அப்துல்லாஹ் இப்னு ஹாரிஸ் கூறினார்:

மழையினால் சேறு ஏற்பட்டிருந்த ஒரு நாளில் இப்னு அப்பாஸ்(ரலி) ஜும்ஆப் பிரசங்கம் செய்தார்கள். பாங்கு சொல்பவர் ஹய்ய அலஸ் ஸலாஹ் என்று சொல்ல ஆரம்பித்தபோது உங்கள் கூடாரங்களிலேயே தொழுது கொள்ளுங்கள் என்று மக்களுக்கு அறிவிக்கமாறு கட்டளையிட்டார்கள். அப்போது அங்கிருந்தவர்கள் ஒருவருக்கொருவர் ஆச்சரியமாகப் பார்த்தனர். இந்த பாங்கு சொல்பவரை விடவும் சிறந்தவர்களான நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆ கட்டாயமானதாக இருந்தும் கூட அவ்வாறு செய்திருக்கிறார்கள் என இப்னு அப்பாஸ் கூறினார்கள்.

ஹதீஸ் 669. அபூ ஸயீதுல் குத்ரீ(ரலி) கூறினார்கள்.

ஒரு நாள் மழை பெய்து, அதனால் பள்ளி வாசலின் முகடு ஒழுக ஆரம்பித்தது. பேரீச்ச மட்டையினால் பள்ளி வாசல் முகடு வேயப்பட்டிருந்தது. தொழுகைக்காக இகாமத் சொல்லப் பட்டு நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தும்போது தண்ணீரும் மண்ணும் கலந்த இடத்தில் ஸுஜூத செய்வதை பார்த்தேன். அவர்களின் நெற்றியில் மண் படிந்திருந்ததையும் கண்டேன்.

ஹதீஸ் 670. அனஸ்(ரலி) கூறினார்கள்.

அன்ஸாரிகளில் ஒருவர் தம் உடல் பருமனாக இருந்த காரணத்தினால், என்னால் உங்களுடன் தொழ முடியவில்லை எனக் கூறி, நபி(ஸல்) அவர்களுக்காக உணவு சமைத்து அவர்களைத் தம் வீட்டிற்கு அழைத்தார். நபி(ஸல்) அவர்கள் அவரின் வீட்டிற்கு வந்தபோது, ஒரு பாயை விரித்து அதில் சிறிது தண்ணீர் தெளித்துப் பதப்படுத்தினார். அப்பாயில் நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

ஜாருத் குடும்பத்தைச் சார்ந்த ஒருவர் நபி(ஸல்) அவர்கள் ளுஹா தொழுகை தொழுதார்களா? என்று அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டதற்கு அன்றைய தினத்தைத் தவிர அவர்கள் ளுஹா தொழுததை நான் பார்க்கவில்லை என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## உணவு முன்னே இருக்கும்போது தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால்...

இப்னு உமர்(ரலி) உணவு அருந்திவிட்டுத்தான் தொழுகைக்குச் செல்வார்கள்.

ஒருவர் தம் தேவைகளை முற்படுத்திவிட்டுத் தொழுகைக்கு வரும்போது அவரின் உள்ளம் மற்ற எண்ணங்களைவிட்டும் காலியாக இருக்கிறது. எனவே ஒருவர் தம் (உணவுத்) தேவையை முற்படுத்துவது அவரின் ஞானத்திலுள்ளதாகும் என அபுத்தர்தா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 671. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவு நேர உணவு வைக்கப்பட்டுத் தொழுகைக்காக இகாமத்தும் சொல்லப் படுமானால் நீங்கள் உணவை முதலில் அருந்துங்கள்.

என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 672. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவு நேர உணவு தயாராம் விடுமானால் மஃரிபுத் தொழுகையைத் தொழுவதற்கு முன்னால் இரவு உணவை அருந்துங்கள். உங்கள் உணவை(த் தொழுகையை விட) முற்படுத்துங்கள்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 673. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உங்களில் ஒருவரின் இரவு உணவை வைக்கப்பட்டு (மஃரிபுத்) தொழுகைக்கு இகாமத்தும் சொல்லப்பட்டு விடுமானால் முதலில் உணவை அருந்துங்கள். உணவை உண்டு முடிவது வரை (தொழுகைக்காக) அவசரப்பட வேண்டாம்.)

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

இப்னுஉமர்(ரலி), உணவுவைக்கப் பட்டுத் தொழுகைக்கு இகாமத்தும் சொல்லப்படுமானால் உணவு அருந்தி முடிவது வரை தொழுகைக்கு வர மாட்டார்கள். அவர்கள் உணவு அருந்திக் கொண்டிருக்கும்போது இமாம் ஓதுவதைச் செவியுறுவார்கள் என நாஃபிவு கூறுகிறார்.

ஹதீஸ் 674. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உங்களில் ஒருவர் உணவு அருந்திக் கொண்டு இருக்கும்போது தொழுகைக்கு இகாமத்தும் சொல்லப்பட்டால், தம் தேவைகளை முடிப்பதற்கு முன்பாக அவசரப் பட்டு எழுந்து விட வேண்டாம்.

என இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## தொழுகைக்கு இமாம் அழைக்கப்படும்போது, அவரின் கையில் உணவுப் பொருள்கள் ஏதாவது இருந்தால் என்ன செய்ய வேண்டும்?

ஹதீஸ் 675. அம்ர் இப்னு உமய்யா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஆட்டுத் தொடைக் கறியை வெட்டித் துண்டாக்கிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். தொழுகைக்கு அழைக்கப்பட்டதும் கத்தியை எறிந்துவிட்டு எழுந்து உளூச் செய்யாமல் தொழுதார்கள்.

## ஒருவர் தம் வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருக்கும்போது இகாமத் சொல்லப் பட்டால் என்ன செய்வது.

ஹதீஸ் 676. அஸ்வத் கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் தங்களின் வீட்டில் என்ன செய்வார்கள் என ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்குத் தம் குடும்பத்திற்கு வீட்டு வேலைகளில் ஒத்தாசை செய்வார்கள் தொழுகை நேரம் வந்ததும் தொழுகைக்காக வெளியே செல்வார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்.

## நபி(ஸல்) அவர்களின் தொழுகையையும் அவர்களின் வழிமுறையையும் கற்றுக் கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்தில் மக்களுக்குத் தொழுகை நடத்துவது.

ஹதீஸ் 677. அபூ கிலாபா கூறினார்:

எங்களுடைய பள்ளி வாசலுக்கு மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) வந்து இப்போது நான் தொழ விரும்பாவிட்டாலும்) நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு தொழக் கண்டேனோ அவ்வாறு உங்களுக்கு நான் தொழுகை நடத்துகிறேன் என்று கூறினார்கள்.

நான் அபூ கிலாபாவிடம் நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுதார்கள் என்று கேட்டேன். (அதற்கு அம்ர் இப்னு ஸலாமா என்ற) இந்த முதியவர் தொழுதது போன்று தொழுதார்கள்

எனக் கூறினார்கள். அந்த மனிதர் வயதானவராக இருந்தார். முதல் ரக்அத்திலிருந்து இரண்டாவது ரக்அத்திற்காக ஸுஜூதிலிருந்து எழும்போது இருப்பில் அமர்ந்து பின்னர் நிலைக்கு வருவார் என்று அய்யூப் கூறினார்கள்.

## அறிவு ஞானமும் சிறப்பும் உடையவர் தாம் இமாமத் செய்வதற்குத் தகுதியுடையவர்.

ஹதீஸ் 678 அபூ மூஸா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோயுற்றார்கள். அவர்களின் நோய் கடுமையானபோது, அபூ பக்ரை மக்களுக்குத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்றார்கள். அப்போது ஆயிஷா (ரலி) அவர் இளகிய மனதுடையவர். நீங்கள் நின்ற இடத்தில் அவர் நின்றால், அவரால் மக்களுக்குத் தொழுகை நடத்த முடியாது என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் மீண்டும் அபூ பக்ரை மக்களுக்குத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்றார்கள். ஆயிஷா (ரலி) தாம் கூறியதைத் திரும்பவும் கூறினார்கள். அபூ பக்ரை மக்களுக்குத் தொழுகை நடத்தச் சொல்! நிச்சயமாகப் பெண்களாகிய நீங்கள் யூஸுஃப் நபியின் தோழிகளாக இருக்கிறீர்கள் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அபூ பக்ரிடம் ஒருவர் வந்து (சொன்னார்). நபி (ஸல்) அவர்கள் உயிருடனிருக்கும்போது அபூ பக்ர் (ரலி) (இமாமாக நின்று) தொழுகை நடத்தினார்கள்.

ஹதீஸ் 679 ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோயுற்றிருந்தபோது மக்களுக்குத் தொழுகை நடத்தும் படி அபூ பக்ரிடம் கூறுங்கள் எனக் கூறினார்கள். அதற்கு, அபூ பக்ர் உங்களுடைய இடத்தில் நின்று தொழுகை நடத்துவார்களானால், அவர்கள் அழுவதன் காரணத்தினால் மக்களுக்குக் குர்ஆனைக் கேட்கச் செய்ய அவர்களால் முடியாது. எனவே, உமர் மக்களுக்குத் தொழுகை நடத்தட்டும் என நான் நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன்.

மேலும், அபூ பக்ர் உங்கள் இடத்தில் நின்று தொழுகை நடத்தினால் அதிகம் அவர் அழுவதனால் மக்களுக்குக் குர்ஆனைக் கேட்கச் செய்ய அவரால் முடியாது. எனவே, தொழுகை நடத்தும்படி உமருக்குக் கட்டளையிடுங்கள் நபி (ஸல்) அவர்களிடம் கூறும் படி ஹஃப்ஸா (ரலி) விடமும் கூறினேன்.

அவ்வாறே ஹஃப்ஸா (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் கூறியபோது, நிறுத்து! நிச்சயமாக நீங்கள் தாம் நபி யூஸுஃபின் (அழகைக் கண்டு கையை அறுத்த) தோழிகள் போன்றவர்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு அபூ பக்ரிடம் கூறுங்கள் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது ஹஃப்ஸா (ரலி) என்னிடம் உன்னால் நான் எந்த நன்மையும் அடையவில்லை எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 680 அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மரண நோயின்போது அபூ பக்ர் (ரலி) மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். திங்கட்கிழமை அன்று தொழுகையில் வரிசையாக நின்று தொழுது கொண்டிருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் நின்றவாறு தங்கள் அறையின் திரையை நீக்கி எங்களைப் பார்த்தார்கள். அப்போது அவர்களின் முகம் புத்தகத்தின் காம்தம் போன்று பிரகாசித்தது. பின்னர் அவர்கள் புன்னகை செய்து சிரித்தார்கள். நபி (ஸல்) அவர்களைப் பார்த்ததனால் ஏற்பட்ட மகிழ்ச்சியின் காரணமாக நாங்கள் சோதிக்கப்பட்டு விடுவோமோ என்று அஞ்சினோம். நபியைப் பார்த்த அபூ பக்ர் (ரலி), நபியவர்கள் தொழுகைக்கு வருகிறார்கள் எனக் கருதித் தமக்குப் பின்னாலுள்ள வரிசையில் சேர்வதற்காகப் பின் வாங்கினார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் உங்களுடைய தொழுகையைப் பூர்த்தி செய்யுங்கள் என்று சைகை செய்துவிட்டு அறையின் உள்ளே சென்று திரையைப் போட்டுவிட்டார்கள். அன்றைய தினத்தில்தான் நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள்.

ஹதீஸ் 681. அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மூன்று நாள்களாக வெளியில் வரவில்லை. தொழுகைக்கு இகாமத் சொல்லப் பட்டதும் அபூ பக்ர் (ரலி) தொழுகை நடத்துவதற்கு முன் சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்களின் அறையின் திரையை உயர்த்திப் பார்த்தார்கள். நபி (ஸல்) அவர்கள் எங்களுக்குத் தோற்றமளித்தபோது அவர்களின் முகத்தை விடவும் மகிழ்ச்சியான எந்த ஒரு காட்சியையும் நாங்கள் பார்த்ததில்லை. நபி (ஸல்) அவர்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துத் தொழுகை நடத்துமாறு தங்கள் கையினால் சைகை செய்து, திரையைப் போட்டு (விட்டு உள்ளே சென்று) விட்டார்கள். பின்னர் அவர்கள் மரணமடைந்துவிட்டார்கள்.

682. அப்துல்லாஹ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களுக்கு வேதனை அதிகமானபோது தொழுகையைப் பற்றி அவர்களிடம் கூறப்பட்டது. அபூ பக்ரை மக்களுக்குத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்றார்கள். ஆயிஷா (ரலி), அபூ பக்ர் இளகிய உள்ளம் படைத்தவர் அவர் (குர்ஆனை) ஓதினால் அழுகை அவரை மிகைத்து விடும் என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், அவரைத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்றார்கள். ஆயிஷா (ரலி) தம் பதிலையே திரும்பச் சொன்னார்கள். நபி (ஸல்) அவர்கள் மீண்டும் அபூ பக்ரைத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள். நீங்கள் யூஸுஃப் நபியின் தோழிகளாக இருக்கிறீர்கள் என்றார்கள்.

## நோயின் காரணத்தினால் தொழுகையில் இமாமின் பக்கத்தில் நிற்கலாமா?

ஹதீஸ் 683. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தங்களின் நோயின்போது அபூ பக்ர் (ரலி) அவர்களை, தொழுகை நடத்தக் கட்டளையிட்டார்கள். அபுபக்ர் (ரலி) சில நாள்கள் தொழுகை நடத்தினார்கள். நபி (ஸல்) அவர்கள் தங்களின் நோய் சற்றுக் குறைந்ததை உணர்ந்து வெளியே வந்தார்கள். அப்போது அபூ பக்ர் (ரலி) மக்களுக்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்களை அபூ பக்ர் (ரலி) பார்த்ததும் பின்வாங்கலானார்கள். அப்படியே இருங்கள் நபி (ஸல்) அவர்கள் சைகை செய்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அபூ பக்ர் (ரலி) உடைய விலாப் புறத்தை ஒட்டி அமர்ந்தார்கள். அபூ பக்ர் (ரலி) நபி (ஸல்) அவர்களையும் மக்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களையும் பின்பற்றித் தொழுதனர்.

## ஒருவர் மக்களுக்கு இமாமத் செய்ய முன் சென்றபோது முதல் இமாம் வந்துவிட்டால் முன் சென்ற இமாம் பின் வாங்கினாலும் பின்வாங்காவிட்டாலும் தொழுகை கூடிவிடும்.

ஹதீஸ் 684. ஸஹ்ல் இப்னு ஸஃது அஸ்ஸாயிதி (ரலி) கூறினார்கள்.

அம்ர் இப்னு அவ்ப் குடும்பத்தாரிடையே சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக நபி (ஸல்) அவர்கள் சென்றிருந்தபோது, அங்கு தொழுகையின் நேரம் வந்துவிட்டது. அப்போது முஅத்தின், அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் சென்று, நான் இகாமத் சொல்லட்டுமா! நீங்கள் தொழுகை நடத்துகிறீர்களா? என்று கேட்டதற்கு அபூ பக்ர் (ரலி) ஆம்! என்று கூறிவிட்டுத் தொழுகை நடத்த ஆரம்பித்தார்கள். மக்கள் தொழுது கொண்டிருக்கும்போது நபி (ஸல்) அவர்கள் வந்துவிட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் வரிசைகளை விலக்கிக் கொண்டு முன் வரிசையில் வந்து நின்றார்கள். இதைக் கண்ட மக்கள் (இமாமுக்கு நினைவூட்டுவதற்காக) கை தட்டினார்கள். இமாமாக நின்ற அபூ பக்ர் (ரலி) தம் தொழுகையில் திரும்பிப் பார்க்க மாட்டார்கள். மக்கள் அதிகமாகக் கை தட்டியபோது திரும்பிப் பார்க்க மாட்டார்கள். மக்கள் அதிகமாகக் கை தட்டியபோது திரும்பிப் பார்த்தார்கள். அங்கே நபி (ஸல்) அவர்களைக் கண்டார்கள். நபி (ஸல்) அவர்கள், அபூ பக்ர் (ரலி) யைப் பார்த்து, உங்களுடைய இடத்திலேயே நில்லுங்கள் என்று

சைகை செய்தார்கள். தமக்கு நபி(ஸல்) அவர்கள் இந்த அனுமதியை வழங்கியதற்காக அபூ பக்ர்(ரலி) தம் கைகளை உயர்த்தி அல்லாஹ்வுக்கு நன்றி செல்லுத்தினார்கள். பின்னர் அபூ பக்ர்(ரலி), பின்வாங்கி முன் வரிசையில் நின்றார்கள். நபி(ஸல்) அவர்கள் முன்னே சென்று தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும், அபூ பக்ரே! நான் உங்களுக்குக் கட்டளையிட்ட பின்னரும் நீங்கள் ஏன் உங்கள் இடத்தில் நிற்காமல் ஏன் உங்கள் இடத்தில் நிற்காமல் பின் வாங்கி விட்டீர்கள் என்று கேட்டார்கள். அதற்கு, அபூ குஹாபாவின் மகனான அபூ பக்ர் அல்லாஹ்வின் தூதரின் முன் நின்று தொழுகை நடத்துவது சரியில்லை என அபூ பக்ர்(ரலி) கூறினார். பின்னர் நபி(ஸல்) அவர்கள் மக்களைப் பார்த்து, நீங்கள் எதற்காக அதிகமாகக் கை தட்டினீர்கள்? ஒருவருக்கு அவரின் தொழுகையில் சந்தேகம் ஏற்படுமானால் அவர் சுப்ஹானல்லாஹ் என்று கூறட்டும். அவ்வாறு தஸ்பீஹ் சொல்லும்போது சொன்னவர் பக்கம் (இமாம்) திரும்பிப் பார்க்க வேண்டும். கை தட்டுவது பெண்களுக்குத் தான் என்று கூறினார்கள்.

குர்ஆனை மனனம் செய்திருப்பதில் எல்லோரும் சமமாக இருப்பார்களானால் அவர்களில் மூத்தவர் இமாமத் செய்யட்டும்.

ஹதீஸ் 685. மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

இளைஞர்களான நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் சென்றோம். அவர்களுடன் ஏறத்தாழ இருபது நாள்கள் தங்கியிருந்தோம். நபி(ஸல்) அவர்கள் இரக்க குணமுடையவர்களாக இருந்ததால் நீங்கள் உங்கள் ஊர்களுக்குச் சென்று அவர்களுக்குக் கற்றுக் கொடுங்கள்! என்றும் இன்னின்ன தொழுகையை இன்னின்ன நேரத்தில் தொழுங்கள் என்றும் தொழுகை நேரம் வந்ததும் உங்களில் ஒருவர் பாங்கு சொல்லி, மூத்தவர் இமாமத் செய்ய வேண்டும் என்றும் கூறினார்கள்.

## ஓர் இமாம் வேறொரு குழுவைச் சந்திக்கச் சென்றால் அவர்களுக்கு இமாமத் செய்யலாம்.

ஹதீஸ் 686. இத்பான் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (என் வீட்டிற்குள் நுழைய) அனுமதி கேட்டார்கள். நான் அனுமதி கொடுத்தேன். உம் வீட்டில் எங்கே நான் தொழ வேண்டுமென நீர் விரும்புகிறீர் என்றார்கள். நான் விரும்பிய இடத்தை அவர்களுக்குக் காட்டினேன். அவர்கள் நின்றதும் நாங்கள் அவர்களுக்குப் பின்னால் அணி வகுத்தோம். அவர்கள் ஸலாம் கொடுத்தார்கள். நாங்களும் ஸலாம் கொடுத்தோம்.

இமாம் ஏற்படுத்தப் படுவது பின் பற்றப்பட வேண்டுமென்பதற்காகவே.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் மரண நோயின்போது உட்கார்ந்தவாறு மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

இமாம் தம் தலையை உயர்த்துவதற்கு முன்னால் ஒருவர் தம் தலையை உயர்த்திவிட்டால், அந்த அளவு காத்திருந்துவிட்டு இமாமைத் தொடர வேண்டும் என்று இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

இமாமுடன் இரண்டு ரக்அத்கள் தொழுபவர் முதல் ரக்அத்தில் இமாமுடன் ஸுஜூது செய்ய முடியாமல் போகும்போது இரண்டாவது ரக்அத்திற்குரிய இரண்டு ஸுஜூதுகளையும் செய்துவிட்டுப் பின்னர் முதல் ரக்அத்திற்குரிய ஸுஜூதை அவர் செய்ய வேண்டும். ஒருவர் ஒரு ஸுஜூது செய்ய மறந்து, நிலைக்கு வந்துவிட்டால் அவர் அந்த ஸுஜூதைத் திரும்பச் செய்யவேண்டும் என ஹஸன்(பஸரீ) கூறுகிறார்.

ஹதீஸ் 687. உபைதுல்லாஹ் கூறினார்:

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று நபி(ஸல்) அவர்கள் நோயுற்றபோது நடந்த நிகழ்ச்சியை எனக்குச் சொல்வீர்களா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம்! நபி(ஸல்) அவர்களுக்கு நோய் கடுமையானபோது மக்கள் தொழுதுவிட்டார்களா? என்று கேட்டார்கள். இல்லை, அவர்கள் உங்களை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறினோம். அப்போது பாத்திரத்தில் எனக்குத் தண்ணீர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் தண்ணீர் வைத்தோம். அதில் அவர்கள் குளித்துவிட்டு எழுந்திருக்க முயன்றார்கள். அப்போது அவர்கள் மயங்கி விழுந்துவிட்டார்கள். பின்னர் அவர்களின் மயக்கம் தெளிந்தபோது, மக்கள் தொழுதுவிட்டார்களா? என்று கேட்டார்கள். இல்லை அவர்கள் உங்களை எதிர்பார்த்து இருக்கிறார்கள் என்று சொன்னோம்.

அப்போது பாத்திரத்தில் எனக்குத் தண்ணீர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் தண்ணீர் வைத்தோம். அவர்கள் உட்கார்ந்து குளித்துவிட்டு எழுந்திருக்க முயன்றார்கள். அப்போது அவர்கள் மயங்கி விழுந்துவிட்டார்கள். பின்னர் அவர்களின் மயக்கம் தெளிந்தபோது, மக்கள் தொழுதுவிட்டார்களா? என்று கேட்டார்கள். இல்லை அவர்கள் உங்களை எதிர்பார்த்து இருக்கிறார்கள் என்று சொன்னோம். அப்போது பாத்திரதத்தில் எனக்குத் தண்ணீர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் தண்ணீர் வையுங்கள் என்றார்கள். அவ்வாறே நாங்கள் தண்ணீர் வைத்தோம். அவர்கள் உட்கார்ந்து குளித்துவிட்டு எழுந்திருக்க முயன்றார்கள். அப்போது அவர்கள் மயங்கி விழுந்துவிட்டார்கள். பின்னர் அவர்களின் மயக்கம் தெளிந்தபோது, மக்கள் தொழுதுவிட்டார்களா? என்று கேட்டார்கள். இல்ல் நபி அவர்களே! அவர்கள் உங்களை எதிர்பார்த்து இருக்கிறார்கள் என்றோம். அப்போது மக்கள் பள்ளிவாசலில் இஷாத் தொழுகைக்காக நபி(ஸல்) அவர்களை எதிர்பார்த்திருந்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள், ஒருவரை அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் அனுப்பி மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு கூறினார்கள். அம்மனிதர் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் வந்து நபி(ஸல்) அவர்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு உங்களுக்குக் கட்டளையிட்டார்கள் என்றார்கள். அபூ பக்ர்(ரலி) இளகிய உள்ளமுடையவர்களாக இருந்தார்கள். எனவே உமர்(ரலி) அவர்களிடம், உமரே! நீங்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துங்கள் என்றார்கள். அதற்கு, நீங்கள் தாம் தகுதியனாவர்கள் என்று உமர்(ரலி) கூறிவிட்டார்கள். அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்கள் நோயுற்ற அந்த நாள்களிலே மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்களுக்குக் கொஞ்சம் சுகம் கிடைத்தபோது, அப்பாஸ்(ரலி) மற்றும் ஒருவரின் உதவியோடு லுஹர் தொழுகைக்காக வெளியே வந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) மக்களுக்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் வருவதைக் கண்ட அபூ பக்ர்(ரலி) தம் இடத்திலிருந்து பின் வாங்கினார்கள். அப்போது பின் வாங்க வேண்டாம் என அவர்களுக்கு சைகை செய்தார்கள். தம்மை அழைத்து வந்த இருவரிடமும், என்னை அபூ பக்ரின் அருகில் அமர்த்துங்கள் எனக் கூறினார்கள். அவ்வாறே அவர்கள் உட்காரவும் வைத்தார்கள். நபி(ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து அபூ பக்ர்(ரலி) தொழுதார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்களைப் பின்தொடர்ந்து மக்கள் தொழுதார்கள். நபி(ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுதார்கள்.

நான் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்றிருந்தபோது, நபி(ஸல்) அவர்கள் நோயுற்றிருந்ததைப் பற்றி ஆயிஷா(ரலி) எனக்கு அறிவித்ததை நான் உங்களுக்குக் கூறவா? என்று கேட்டேன். அதற்கு சொல்லுங்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். அப்போது ஆயிஷா(ரலி) சொன்னதை அறிவித்தேன். அதில் எதையும் அவர்கள் மறுக்கவில்லை என்றாலும், அப்பாஸ்(ரலி) உடன் நபி(ஸல்) அவர்களை அழைத்துச் சென்ற இன்னொரு மனிதரின் பெயரை

ஆயிஷா (ரலி) சொன்னார்களா? என்று கேட்டார்கள். இல்லை என்றேன். அவர் தாம் அலீ (ரலி) எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 688. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோயுற்றபோது, தங்கள் வீட்டிலேயே உட்கார்நது தொழுதார்கள். அவர்களின் பின்னால் சிலர் நின்றவாறே தொழுதார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், அமரும் படி சைகை செய்தார்கள் அவர்கள் தொழுது முடித்த பின்னர் இமாம் பின்பற்றப்படுவதற்காகவே நியமிக்கப்பட்டுள்ளார் அவர் ருகூவு செய்தால் நீங்களும் ருகூவு செய்யுங்கள் அவர் தலையை உயர்த்தினால் நீங்களும் தலையை உயர்த்துங்கள் அவர் உட்கார்ந்து தொழுதால் நீங்களும் உட்கார்ந்து தொழுங்கள் எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 689. அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை குதிரையின் மீது ஏறியபோது கீழே விழுந்துவிட்டார்கள். அதனால் அவர்களின் வலது விலாப் புறத்தில் அடி பட்டது. எனவே அவர்கள் ஒரு தொழுகையை உட்கார்ந்தவாறே தொழுதார்கள். நாங்களும் அவர்களுக்குப் பின்னால் உட்கார்ந்தவாறுதொழுதோம் நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்ததும் இமாம் பின்பற்றப் படுவதற்ககாகவே நியமிக்கப்பட்டுள்ளார். அவர்கள் நின்று தொழுதால் நின்று நீங்களும் நின்று தொழுங்கள். அவர் ருகூவு செய்தால் நீங்களும் ருகூவு செய்யுங்கள். அவர் தலையை உயர்த்தினால் நீங்களும் தலையை உயர்த்துங்கள். அவர் ஸமி அல்லாஹுூூ லிமன் ஹமீதா என்று சொன்னால் நீங்கள் ரப்பனா வலகல் ஹம்து என்று செல்லுங்கள். அவர் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள். அவர் உட்கார்ந்தது தொழுதால் நீங்கள் எல்லோரும் உட்கார்ந்து எதாழுங்கள். என்று கூறினார்கள். இமாம் உட்கார்ந்து எதொழுதால் நீங்களும் உட்கார்ந்து தொழுங்கள் என்று கூறியது நபி(ஸல்) அவர்களுக்கு விபத்தின்போது ஏற்பட்ட முந்தைய நோயின்போது ஆகும். மரண நோயின்போது நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுதபோது அவர்களுக்கு பின்னால் மக்கள் நின்று தொழுதார்கள். அவர்களை உட்காருமாறு நபி (ஸல்) அவர்கள் கூறவில்லை. கடைசியாக உள்ளஉள்ளதைதான் எடுத்துக் கொள்ள வேண்டும். கடைசியாக உள்ளது நபி (ஸல்) அவர்களின் இச்செயல்தான் என ஹுமைதி குறிப்பிடுகிறார்கள்.

## இமாமுக்கு பின்னால் நிற்பவர் எப்போது சுஜூது செய்ய வேண்டும்.

இமாம் ஸுஜூது செய்தால் நீங்களும் ஸுஜூது செய்யுங்கள் என அனஸ் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 690. பராவு (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா என்று சொல்லி முடித்து ஸுஜூதுக்குச் சென்று தலையைப் பூமியில் வைப்பது வரை எங்களில் யாரும் ஸுஜூதுக்காகத் தம் முதுகை வளைக்க மாட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் ஸுஜூதுக்குச் சென்ற பின்புதான் நாங்கள் ஸுஜூது செய்வோம்.

## இமாமுக்கு முந்தித் தம் தலையை உயர்த்துவது குற்றமாகும்.

ஹதீஸ் 691. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தொழுகையில் இமாமை முந்தித் தம் தலையை உயர்த்துவதால் அவரின் தலையைக் கழுதையுடை தலையாகவோ அல்லது அவரின் உருவத்தைக் கழுதையுடைய உருவமாகவோ அல்லாஹ் ஆக்கி விடுவதை அஞ்ச வேண்டாமா?.

என அபூ ஹுரைரா (ரலி) கூறினார்கள்.

## அடிமையும் விடுதலை செய்யப்பட்ட அடிமையும் இமாமத் செய்வது.

ஆயிஷா(ரலி)யின் அடிமை தக்வான் என்பவர் ஆயிஷா(ரலி)வுக்கு இமாமாக நின்று குர்ஆனைப் பார்த்து ஓதுவார்.

தவறான முறையில் பிறந்தவன், கிராமவாசி, பருவமடையாதவன் ஆகியோர் தொழுகை நடத்துவது கூடும். அல்லாஹ்வின் வேதத்தை நன்றாக ஓதக் கூடியவர்கள் மக்களுக்கு இமாமாக நின்று தொழுகை நடத்தட்டும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 692. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

முதன் முறையாக மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய் வந்தவர்கள், குபா என்ற பகுதியிலுள்ள உஸ்பா என்ற இடத்தில் தங்கினார்கள். நபி(ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்து மதீனாவிற்கு வருவதற்கு முன்புவரை அபூ ஹுதைபா(ரலி) அவர்களின், அடிமை, ஸாலிம் தாம் மக்களுக்கு இமாமாகத் தொழுகை நடத்தினார். அவர் குர்ஆனை அதிகம் ஓதிய வராக இருந்தார்.

ஹதீஸ் 693. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உங்களுக்குத் தலைவராக நியமிக்கப் படுபவர் கருப்பு நிறமுடைய (நீக்ரோவான) உலர்ந்த திராட்சைப் பழம் போன்ற தலையை உடையவராக இருந்தாலும் அவருக்குக் கட்டுப்படுங்கள். அவர்சொல்வதைக் கேட்டு நடங்கள்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

## இமாமாகத் தொழுகை நடத்துபவர் முழுமையாகத் தொழவில்லையானால் பின்னால் நிற்பவர் முழுமைப் படுத்த வேண்டும்.

ஹதீஸ் 694. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இமாமாக நியமிக்கப் படுகின்ற) அவர்கள் உங்களுக்குத் தொழுகை நடத்துவார்கள் அவர்கள் சரியாகத் தொழுவார்களானால் உங்களுக்கும் அதன் நன்மை கிடைக்கும் அவர்கள் தவறு செய்வார்களானால் அதற்குரிய தீமை அவர்களுக்கு உண்டு. உங்களுக்கு நீங்கள் செய்ததற்குரிய நன்மை கிடைக்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## குழப்பம் விளைவிப்பவனும் பித்அத்கள் செய்பவனும் இமாமத் செய்வது.

ஹதீஸ் 695. உபைதுல்லா இப்னு அதீ கூறினார்:

உஸ்மான்(ரலி) முற்றுகையிடப் பட்டிருந்தபோது, நான் அவர்களிடம் சென்று நீங்கள் மக்களக்குத் தொழுகை நடத்துகிற இமாமாக இருக்கின்றீர்கள். உங்களின் மீது சோதனை ஏற்பட்டிருப்பதை காண்கிறோம். இந்நிலையில் எங்களுக்குக் குழப்பம் விளைவிக்கிறவர். இமாமாகத் தொழுகை நடத்துகிறார். அதனால் நாங்கள் மனவேதனை அடைகிறோம் என்று கூறினேன். அதற்குத் தொழுகை, மக்கள் செய்கிற செயல்களில் மிகச் சிறந்த செயலாகும். மக்கள் அதை அழகான முறையில் செய்யும்போது நீயும் அவர்களோடு தொழு. அவர்கள் அதில் தவறிழைக்கிறபோத அத்தவறுகளைவிட்டும் நீ ஒதுங்கிக் கொள் என உஸ்மான்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 696. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்குத் தலைவராக நியமிக்கப் படுபவர் கருப்பு நிறமுடைய (நீக்ரோவான) உலர்ந்த திராட்சைப் பழம் போன்ற தலையை உடையவராக இருந்தாலும் அவருக்குக் கட்டுப்படுங்கள். அவர் சொல்வதைக் கேட்டு நடங்கள்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

பேடியை (ஆணும் பெண்ணுமற்றவர்) பின்பற்றி அவசியமேற்பட்டால் தவிர தொழக் கூடாது என ஸுஹ்ரி கூறுகிறார்.

## இரண்டு பேர் மட்டும் ஜமாஅத்தாகத் தொழும்போது இரண்டாமவர் இமாமுக்கு வலப்புறம் இமாமோடு சேர்ந்து நிற்பது.

ஹதீஸ் 697. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

என் சிறிய தாயார் மைமூனா(ரலி) வீட்டில் நான் தங்கியிருந்த இரவில் நபி(ஸல) அவர்கள் இஷாத் தொழுதார்கள். பின்னர் (வீட்டிற்கு) வந்து நான்கு ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் தூங்கி எழுந்தார்கள். நான் சென்று அவர்களின் இடப்புறம் நின்றேன். என்னைத் தம் வலப்புறமாக்கினார்கள். ஐந்து ரக்அத்கள் தொழுது, பின்னர் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவர்களின் குறட்டையொலியை நான் கேட்குமளவுக்கு (ஆழ்ந்து) உறங்கினார்கள். பின்னர் (ஸுபுஹ்) தொழுகைக்குச் சென்றார்கள்.

## ஒருவர் இமாமுடைய இடப்பக்கம் நிற்கும்போது இமாம் (தொழுகையில் இருந்தவாறே) அந்த மனிதரைத் தம் கையால் வலப்பக்கமாக நிறுத்துவதனால் இருவரின் தொழுகையும் பாழாகி விடாது.

ஹதீஸ் 698. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

(என்னுடைய சிறிய தாயார்) மைமூனா(ரலி)வுடைய வீட்டில் நபி(ஸல்) அவர்கள் இருந்து இரவில் நான் தூங்கினேன். அவர்கள் உளூச் செய்து தொழுவதற்காக நின்றார்கள். நான் சென்று அவர்களின் இடப்பக்கமாக நின்றேன். அப்போது அவர்கள் என்னைப் பிடித்து அவர்களின் வலப்பக்கமாக நிறுத்தினார்கள். பின்னர் பதின்மூன்று ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் அவர்கள் குறட்டை வெளியாகும் அளவிற்குத் தூங்கிவிட்டார்கள். அவர்கள் தூக்கத்தில் குறட்டை விடும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். பின்னர் முஅத்தின் வந்தபோது பள்ளிக்குச் சென்று தொழுகை நடத்தினார்கள். அவர்கள் உளூச் செய்ய வில்லை.

## இமாமத் செய்யும் எண்ணமில்லாமல் தொழுபவரை மற்றவர்கள் பின்பற்றித் தொழுவது.

ஹதீஸ் 699. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

என்னுடைய சிறிய தாயார் (மைமூனா(ரலி)) வீட்டில் நான் இரவு தங்கினேன். நபி(ஸல்) அவர்கள் இரவில் எழுந்து தொழலானார்கள். அவர்களோடு நானும் தொழுவதற்காக அவர்களின் இடப்பக்கம் நின்றேன். அப்போது (தொழுகையில் நின்றவாறே) என் தலையைப் பிடித்து அவர்களின் வலப்பக்கம் நிறுத்தினார்கள்.

## இமாம் தொழுகையை நீட்டித் தொழும்போது, அவசியத் தேவையுள்ளவர்கள் இமாமைவிட்டு விலகித் தனித்துத் தொழுதல்.

ஹதீஸ் 700. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

முஆத் இப்னு ஜபல்(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுத் தம் சமுதாயத்தினரிடம் சென்று அவர்களுக்கு இமாமாகத் தொழுகை நடத்துபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 701. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

முஆத் இப்னு ஜபல்(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுத் தம் குழுவினரிடம் சென்று அவர்களுக்கு இமாமாகத் தொழுகை நடத்துவது வழக்கம். (ஒரு முறை) இஷாத் தொழுகை

நடத்தும்போது அல்பகரா அத்தியாயத்தை ஓதினார்கள். அப்போது ஒருவர்(தொழுகையை)விட்டும் விலகிச் சென்றார். (தொழுது முடித்ததும்) முஆத் இப்னு ஜபல்(ரலி) அவரைக் கண்டித்தார்கள். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிய வந்தபோது (நீரென்ன) குழப்பவாதியா? என்று மும்முறை நபி(ஸல்) அவர்கள் முஆத்(ரலி)ஐ நோக்கிக் கூறினார்கள். மேலும், நடுத்தரமான இரண்டு அத்தியாயங்களை ஓதித் தொழுமாறு அவருக்குக் கட்டளையிட்டார்கள்.

ஜாபிர்(ரலி) அவர்களிடமிருந்து இதை அறிவிக்கும் அம்ர் அந்த இரண்டு அத்தியாயங்களை எவையென ஜாபிர்(ரலி) குறிப்பிட்டார்கள். அது எனக்கு நினைவில் இல்லை என்றும் குறிப்பிட்டார்கள்.

### இமாம் தொழுகையில் குறைந்த நேரம் நிற்றலும் ருகூவு ஸஜ்தாக்களைப் பூரணமாக நிறைவேற்றலும்.

ஹதீஸ் 702. அபூ மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்)! இந்த மனிதர் எங்களுக்குத் தொழுகையை நீட்டுவதால் நான் ஃபஜ்ருத் தொழுகையின் ஜமாஅத்துக்குச் செல்வதில்லை என்று ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கூறினார். இதைக் கேட்டதும் நபி(ஸல்) அவர்கள் முன் எப்போதும் அடைந்திராத கோபத்தை அன்றைய தினம் அடைந்தார்கள். (வணக்க வழிபாடுகளில்) வெறுப்பை ஏற்படுத்துபவர்களும் உங்களிலுள்ளனர். உங்களில் எவரேனும் மக்களுக்குத் தொழுகை நடத்தினால் சுருக்கமாக நடத்தட்டும்! ஏனெனில் மக்களில் பலவீனர்கள், முதியோர், அலுவல்கள் உள்ளவர்கள் இருக்கிறார்கள் என்று அப்போது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### தனித்துத் தொழுபவர் விரும்பிய அளவுக்குத் தொழுகையை நீட்டிக் கொள்ளலாம்.

ஹதீஸ் 703. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மற்றவர்களுக்குத் தொழுகை நடத்துபவர் சுருக்கமாகவே நடத்தட்டும்! ஏனெனில் பலவீனர்கள், நோயாளிகள், முதியவர்கள் அவர்களிலுள்ளனர். தனித்துத் தொழும்போது அவர் விரும்பும் அளவுக்கு நீட்டிக் கொள்ளலாம்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

### இமாம் தொழுகையை நீட்டும்போது அதுபற்றித் தலைவரிடம் முறையிடுவது.

தம் மகன் தொழுகையை நீட்டியபோது மகனே! நீண்ட நேரம் தொழுகை நடத்திவிட்டீரே! என்று அபூ உஸைத் கண்டித்துள்ளனர்.

ஹதீஸ் 704. அபூ மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

நபி! இந்த மனிதர் எங்களுக்குத் தொழுகையை நீட்டுவதால் நான் ஃபஜ்ருத் தொழுகையின் ஜமாஅத்துக்குச் செல்வதில்லை என்று ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கூறினார். இதைக் கேட்டதும் நபி(ஸல்) அவர்கள் முன் எப்போதும் அடைந்திராத கோபத்தை அன்றைய தினம் அடைந்தார்கள். (வணக்க வழிபாடுகளில்) வெறுப்பை ஏற்படுத்துபவர்களும் உங்களிலுள்ளனர். உங்களில் எவரேனும் மக்களுக்குத் தொழுகை நடத்தினால் சுருக்கமாக நடத்தட்டும்! ஏனெனில், மக்களில் பலவீனர்கள், முதியோர், அலுவல்கள் உள்ளவர்கள் இருக்கின்றனர் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 705. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

ஒருவர் (தண்ணீர் இறைப்பதற்குரிய) இரண்டு கமலைகளை எடுத்துக் கொண்டு இருள் சூழ்ந்த நேரத்தில் வந்தார். முஆத்(ரலி) (இஷாத்) தொழுகை நடத்திக் கொண்டிருப்பதைப் பார்த்ததும்

தம் கமலைகளை வைத்துவிட்டு முஆத்(ரலி) உடன் தொழுகையில் சேர்ந்தார். முஆத்(ரலி) பகரா அல்லது நிஸா அத்தியாயத்தை ஓதலானார்கள். உடனே அந்த மனிதர் (தொழுகையை)விட்டுவிட்டுச்) சென்றார்.

இது பற்றி முஆத்(ரலி) குறை கூறியது அந்த மனிதருக்குத் தெரியவந்தபோது, நபி(ஸல்) அவர்களிடம் வந்து இது பற்றி முறையிட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் முஆதே! நீர் குழப்பம் ஏற்படுத்துபவரா? என்று மும்முறை கேட்டார்கள். ஸப்பிஹிஸ்மரப்பி, வஷ்ஷம்ஸி வளுஹாஹா வல்லைலி இதாயக்ஷா ஆகிய அத்தியாயங்களை ஓதி நீர் தொழுகை நடத்தக் கூடாதா? நிச்சயமாக உமக்குப் பின்னால் முதியவர்கள், பலவீனர்கள், அலுவலுடையவர்கள் உள்ளனர் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தொழுகையைச் சுருக்கமாகவும் (அதே சமயம்) பூரணமாகவும் தொழுவது.

ஹதீஸ் 706. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகையைச் சுருக்கமாகவும் (எந்த ஒன்றும் விடுபடாமல்) பூரணமாகவும் தொழுபவர்களாக இருந்தனர்.

## குழந்தையின் அழுகுரலைக் கேட்கும்போது தொழுகையைச் சுருக்கமாகத் தொழுவது.

ஹதீஸ் 707. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீண்ட நேரம் தொழுகை நடத்தும் எண்ணத்துடன் நான் தொழுகையைத் துவக்குகிறேன். அப்போது குழந்தையின் அழுகுரலை கேட்கிறேன். (எனக்குப் பின்னால் தொழுது கொண்டிருக்கும்) அந்தக் குழந்தையின் தாயாருக்குச் சிரமமளிக்கக் கூடாது என்பதனால் தொழுகையைச் சுருக்கமாக முடித்து விடுகிறேன்.

என அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 708. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களை விடத்தொழுகையைச் சுருக்கமாகவும் (அதே சமயம்) பூரணமாகவும் தொழுகை நடத்தக் கூடிய வேறு எந்த இமாமின் பின்னாலும் நான் தொழுதது கிடையாது. ஒரு குழந்தையின் அழுகுரலை அவர்கள் கேட்க நேர்ந்தால், அக்குழந்தையின் தாயாருக்குச் சஞ்சலம் ஏற்பட்டு விடுமோ என்ற அச்சத்தில் தொழுகையைச் சுருக்கமாகவே முடித்துக் கொள்வார்கள்.

ஹதீஸ் 709. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நீண்ட நேரம் தொழுகை நடத்தும் எண்ணத்துடன் நான் தொழுகையைத் துவக்குகிறேன். அப்போது குழந்தையின் அழுகுரலை கேட்கிறேன். (எனக்குப் பின்னால் தொழுது கொண்டிருக்கும்) அந்தக் குழந்தையின் தாயாருக்குச் சிரமமளிக்கக் கூடாது என்பதனால் தொழுகையைச் சுருக்கமாக முடித்து விடுகிறேன்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 710. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீண்ட நேரம் தொழுகை நடத்தும் எண்ணத்துடன் நான் தொழுகையைத் துவக்குகிறேன். அப்போது குழந்தையின் அழுகுரலை கேட்கிறேன். (எனக்குப் பின்னால் தொழுது கொண்டிருக்கும்) அந்தக் குழந்தையின் தாயாருக்குச் சிரமமளிக்கக் கூடாது என்பதனால் தொழுகையைச் சுருக்கமாக முடித்துவிடுகிறேன்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

### தொழுதவர், பிறகு அதே தொழுகையைத் தம் குழுவினருக்குத் நடத்துவது.

ஹதீஸ் 711. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்கள்.

முஆத் இப்னு ஜபல் (ரலி) நபி (ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுத் தம் சமுதாயத்தினரிடம் சென்று அவர்களுக்கு இமாமாகத் தொழுகை நடத்துபவர்களாக இருந்தனர்.

### இமாம் தக்பீர் கூறுவதை மற்றொருவர் உரத்துக் கூறுதல்.

ஹதீஸ் 712. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மரணிப்பதற்கு முன் நோய்வாய்ப் பட்டிருந்தபோது பிலால் (ரலி) வந்து தொழுகை பற்றி அவர்களிடம் கூறினார்கள்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அபூ பக்ரைத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்றார்கள். அதற்கு நான் அவர் இளகிய மனம் படைத்தவர். உங்கள் இடத்தில் அவர் நின்றால அழுதுவிடுவார். அவரால் ஓத இயலாது என்று கூறினேன். அபூ பக்ரைத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்று மீண்டும் கூறினார்கள். நானும் முன் போன்றே கூறினேன். நானும் முன் போன்றே கூறினேன். மூன்றாவது அல்லது நான்காவது முறை நீங்கள் யூஸுஃப் நபியின்தோழியராக இருக்கிறீர்கள். அபூ பக்ரைத் தொழுகை நடத்தச் சொல்லுங்கள் என்றனர். (அதன்பின்னர்) அபூ பக்ர் தொழுகை நடத்தினார். நபி (ஸல்) அவர்கள் கால்கள் தரையில் இழுபடுமாறு இரண்டு மனிதர்களுக்கிடையே தொங்கியவா்களாக (ப்பள்ளிக்குச்) சென்றனர். அவர்களைக் கண்ட அபூ பக்ர் (ரலி) பின்வாங்க முயன்றார்கள். தொழுகையை நடத்துமாறு அவருக்கு நபி (ஸல்) அவர்கள் சைகை செய்தார்கள். அபூ பக்ர் (ரலி) யின் வலப்புறமாக நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்தனர். நபி (ஸல்) அவர்கள் கூறும் தக்பீரை அபூ பக்ர் (ரலி) மற்றவர்களுக்குக் கேட்கச் செய்தார்கள்.

### இமாமைப் பின்பற்றித் தொழுபவரை மற்றவர்கள் பின்பற்றித் தொழுவது.

என்னைப் பின்பற்றி நீங்கள் தொழுங்கள்! உங்களுக்குப் பின்னாலுள்ளவர்கள் உங்களைப் பின்பற்றித் தொழட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவிக்கப்படுகின்றது.

ஹதீஸ் 713. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோயுற்றிருந்தபோது பிலால் (ரலி) வந்து தொழுகை பற்றி கூறினார்கள். மக்களுக்காகத் தொழுகை நடத்தும்படி அபூ பக்ரிடம் கூறுங்கள் எனக் கூறினார்கள். அதற்கு, அபூ பக்ர் உங்களுடைய இடத்தில் நின்று தொழுகை நடத்துவார்களானால், அவர்கள் அழுவதன் காரணத்தினால் மக்களுக்குக் குர்ஆனை கேட்கச் செய்ய அவர்களால் முடியாது. எனவே உமர் மக்களுக்குத் தொழுகை நடத்தட்டும் என நான் நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன்.

மேலும், அபூ பக்ர் உங்கள் இடத்தில் நின்று தொழுகை நடத்தினால் அதிகம் அவர் அழுவதனால் மக்களுக்குக் குர்ஆனைக் கேட்கச் செய்ய அவரால் முடியாது. எனவே, தொழுகை நடத்தும் படி உமருக்குக் கட்டளையிடங்கள் நபி (ஸல்) அவர்களிடம் கூறும்படி உமருக்குக் கட்டளையிடுங்கள் நபி (ஸல்) அவர்களிடம் கூறும் படி ஹப்ஸா (ரலி) அவர்களிடமும் கூறினேன். அவர், நிச்சயமாக நீங்கள் தாம் நபி யூஸுஃபின் (அழகைக் கண்டு கையை அறுத்த) தோழிகள் போன்றவர்கள். மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு அபூ பக்ரிடம் கூறுங்கள் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூ பக்ர் (ரலி) தொழுகையைத் துவக்கினார்கள். நபி (ஸல்) அவர்கள், தம் நோய் இலேசாகுவதை உணர்ந்து தரையில் கால்கள் இழுபட இரண்டு மனிதர்களுக்கு இடையே தொங்கிக் கொண்டு பள்ளிக்குச் சென்றார்கள். நபி (ஸல்) அவர்கள் வருவதை உணர்ந்த அபூ பக்ர் (ரலி) பின்வாங்க முயன்றார்கள். நபி (ஸல்) அவர்கள் அவரை நோக்கிச் சைகை செய்துவிட்டு அபூ பக்ரின் இடப் புறம் அமர்ந்தார்கள். அபூ பக்ர் (ரலி) நின்று

தொழுதார்கள். நபி(ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுதார்கள். அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றித் தொழுதார்கள். மக்கள் அபூ பக்ர்(ரலி)யைப் பின்பற்றித் தொழுதனர்.

## இமாமுக்குச் சந்தேகம் ஏற்பட்டால் மஃமூம்களின் கூற்றை ஏற்றுக் கொள்ளலாமா?

ஹதீஸ் 714. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (நான்கு ரக்அத் தொழுகையை) இரண்டு ரக்அத்களில் முடித்துவிட்டார்கள். நபி அவர்களே! தொழுகை(யின் ரக்அத்கள்) குறைந்துவிட்டனவா? அல்லது நீங்கள் மறந்த விட்டீர்களா? என்று துல்யதைன் கேட்டார். துல்யதைன் கூறுவது உண்மையா? நபி(ஸல்) அவர்கள் கேட்க, மக்கள், ஆம் என்றனர். உடன், மற்றும் இரண்டு ரக்அத்களை நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தி ஸலாம் கொடுத்தார்கள். பின்பு தக்பீர் கூறி முன்பு செய்தது போன்று, அல்லது அதை விடவும் நீண்ட ஸஜ்தாச் செய்தார்கள்.

ஹதீஸ் 715. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர் தொழுகையை இரண்டு ரக்அத்தாகத் தொழுகை நடத்தினார்கள். இரண்டு ரக்அத்கள் தானே தொழுகை நடத்தினீர்கள்? என்று கூறப்பட்டது. பின்னர் இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தியப் பின்பு ஸலாம் கூறி, இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள்.

## இமாம் தொழுகையில் அழலாமா?

என்னுடைய கவலையையும் துக்கத்தையும் அல்லாஹ்விடமே முறையிடுகிறேன் (திருக்குர்ஆன் 12:86) என்ற வசனத்தை (தொழுகையில்) உமர்(ரலி) ஓதியபோது அவர்களின் அழுகுரலைக் கடைசி வரிசையில் நின்ற நான்கேட்டேன் என அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத் குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 716. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோயுற்றிருந்தபோது மக்களுக்குத் தொழுகை நடத்தும் படி அபூ பக்ரிடம் கூறுங்கள் எனக் கூறினார்கள். அதற்கு, அபூ பக்ர் உங்களுடைய இடத்தில் நின்று தொழுகை நடத்துவார்களானால், அவர்கள் அழுவதன் காரணத்தினால் மக்களுக்குக் குர்ஆனைக் கேட்கச் செய்ய அவர்களால் முடியாது. எனவே உமர் மக்களுக்குத் தொழுகை நடத்தட்டும் என நான் நபி(ஸல்) அவர்களிடம் கூறினேன்.

மேலும், அபூ பக்ர் உங்கள் இடத்தில் நின்று தொழுகை நடத்தினால் அதிகம் அவர் அழுவதனால் மக்களுக்குக் குர்ஆனைக் கேட்கச் செய்ய அவரால் முடியாது. எனவே தொழுகை நடத்தும் படி உமருக்குக் கட்டளையிடுங்கள் நபி(ஸல்) அவர்களிடம் கூறும் படி ஹப்ஸா(ரலி) அவர்களிடம் கூறினேன்.

அவர்களிடம் கூறியபோது, நிறுத்து, நிச்சயமாக நீங்கள் தாம் நபி யூஸுஃபின் (அழகைக் கண்டு கையை அறுத்த) தோழிகள் போன்றவர்கள். மக்களுக்குத் தொழுகை நடத்துமாறு அபூ பக்ரிடம் கூறுங்கள் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது ஹப்ஸா(ரலி) என்னிடம் உன்னால் நான் எந்த நன்மையும் அடையவில்லை எனக் கூறினார்கள்.

## இகாமத் கூறும் போதும் அதன் பின்னரும் வரிசைகளை ஒழுங்கு படுத்துவது.

ஹதீஸ் 717. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் உங்களின் வரிசைகளை நேராக அமைத்துக் கொள்ளுங்கள்! இல்லையெனில் அல்லாஹ் உங்கள் முகங்களை மாற்றி விடுவான்.

என நுஃமான் இப்னு பஷீர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 718. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வரிசைகளை நேராக்கிக் கொள்ளுங்கள்! நிச்சயமாக நான் என்னுடைய முதுகுக்குப் பின்புறமும் உங்களைக் காணுகிறேன்.

என அனஸ்(ரலி) கூறினார்கள்.

### வரிசைகளை ஒழுங்கு படுத்தும்போது இமாம், மக்கள் பக்கம் முன்னோக்குவது.

ஹதீஸ் 719. அனஸ்(ரலி) கூறினார்கள்.

தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் எங்கள் பக்கம் முன்னோக்கி, வரிசைகளை நேராக்குங்கள்! நெருக்கமாக நில்லுங்கள்! ஏனெனில் என் முதுகுக்குப் பின் புறமாகவும் உங்களை நான் காணுகிறேன் என்றார்கள்.

ஹதீஸ் 720. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூழ்கி இறந்தவர்களும் காலராவில் இறந்தவர்களும் வயிற்றோட்டத்தில் இறந்தவர்களும் கட்டிடம் இடிந்து விழுந்து இறந்தவர்களும் ஷஹீத்களாவர். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 721. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(ஜமாஅத் தொழுகைக்கு) முந்தி வருவதில் உள்ளதை (சிறப்பு) மக்கள் அறிந்தால் அதற்காகப் போட்டி போடுவார்கள். ஸுபுஹ், இஷாத் தொழுகைகளின் சிறப்பை மக்கள் அறிந்தால் தவழ்ந்தேனும் அதற்காக வந்து சேர்வார்கள். முதல் வரிசையின் சிறப்பை அவர்கள் அறிந்தால் (போட்டி ஏற்படும் போது) சீட்டுக் குலுக்கி (யார் முதல் வரிசையில் நிற்பது என்பதை)த் தீர்மானிப்பார்கள். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

### வரிசையை ஒழுங்கு படுத்துதல் தொழுகையை நிறைவு செய்யக் கூடியவைகளில் ஒன்றாகும்.

ஹதீஸ் 722. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பின்பற்றப் படுவதற்காகவே இமாம் ஏற்படுத்துப் பட்டுள்ளார். அவருக்கு முரண் படாதீர்கள்! அவர் ருகூவு செய்யும்போது நீங்களும் ருகூவு செய்யுங்கள்! அவர் ஸமிஅல் லாஹுலிமன் ஹமிதா என்று கூறும்போது நீங்கள் ரப்பனாலகல்ஹம்து எனக் கூறுங்கள்! அவர் ஸஜ்தாச் செய்யுங்கள்! அவர் ஸஜ்தாச் செய்யும்போது நீங்களும் ஸஜ்தாச் செய்யுங்கள்! அவர் உட்கார்ந்து தொழும்போது நீங்களும் உட்கார்ந்து தொழுங்கள்! தொழுகையில் வரிசைகளை ஒழுங்குபடுத்திக் கொள்ளுங்கள்! ஏனெனில், வரிசையை ஒழுங்கு படுத்துவது தொழுகையை அழகுறச் செய்வதாகும். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 723. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வரிசையை ஒழுங்கு படுத்துங்கள்! வரிசைகளை ஒழுங்கு படுத்துவது தொழுகையை நிலை பெறச் செய்வதாகும். என அனஸ்(ரலி) கூறினார்கள்.

### வரிசைகளை நிறைவு செய்யாதிருப்பது குற்றம்.

ஹதீஸ் 724. பஷீர் இப்னு யஸார் கூறினார்:

அனஸ்(ரலி) மதீனா வந்தபோது, நபி(ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் அறிந்துள்ள நடைமுறைக்கு மாற்றமாக எங்களிடம் எதையேனும் காண்கிறீர்களா? என்று கேட்கப்பட்டது. நீங்கள் வரிசைகளை ஒழுங்குபடுத்திக் கொள்வதில்லை என்பதைத் தவிர வேறு எந்தத் தவறையும் உங்களிடம் நான் காணவில்லை என்று அனஸ்(ரலி) கூறினார்.

## தோள் புஜத்துடன் தோள் புஜத்தையும் பாதங்களுடன் பாதங்களையும் சேர்த்து வரிசையில் நிற்பது.

எங்களில் ஒருவர் தம் கரண்டைக் காலை மற்றவரின் கரண்டையுடன் சேர்த்ததைப் பார்த்திருக்கிறேன் என்று நுஃமான் இப்னு பஷீர்(ரலி) குறிப்பிடுகின்றனர்.

ஹதீஸ் 725. அனஸ்(ரலி) கூறினார்: உங்கள் வரிசைகளை ஒழுங்கு படுத்திக் கொள்ளுங்கள்! நிச்சயமாக நான் என்னுடைய முதுகுக்குப் பின்புறமும் உங்களைக் காண்கிறேன் நபி(ஸல்) அவர்கள் கூறியதும் எங்களில் ஒருவர் தம் தோள் புஜத்தை மற்றவரின் தோள் புஜத்துடனும் தம் பாதத்தை மற்றவரின் பாதத்துடனும் சேர்த்துக் கொள்ளலானார்கள்.

## இடப் புறமாக நிற்பவரை இமாம் தம் வலப்புறமாகக் கொண்டு வந்தால் அவரின் தொழுகை பூரணமாக நிறைவேறும்.

ஹதீஸ் 726. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

ஓர் இரவு நான் நபி(ஸல்) அவர்களுடன் தொழும்போது அவர்களின் இடப்புறமாக நின்றேன். அப்போது அவர்கள் என் தலையின் பின்புறத்தைப் பிடித்துத் தம் வலப்புறத்தில் என்னை நிறுத்தினார்கள். தொழுததும் உறங்கிவிட்டார்கள். முஅத்தின் வந்ததும் எழுந்து உளூச் செய்யாமலே தொழுதார்கள்.

## இமாமுக்குப் பின் நிற்கும் ஒரு பெண் கூட வரிசையாகக் கருதப்படுவார்.

ஹதீஸ் 727. அனஸ்(ரலி) கூறினார்கள்.

எங்களின் வீட்டில் நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றி நானும் மற்றொரு சிறுவரும் தொழுதோம். என் தாயார் உம்முஸுலைம்(ரலி) எங்களுக்குப் பின் நின்று தொழுதார்கள்.

## பள்ளிவாசலின் வலப்புறத்திலும் இமாமுக்கு வலப்புறத்திலும் நிற்பது.

ஹதீஸ் 728. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

ஓர் இரவு நான் நபி(ஸல்) அவர்களின் இடப்புறம் நின்று தொழுதேன். அவர்கள் பின்புறமாக என்னுடைய கையைப் பிடித்து தம் வலப்புறத்தில் என்னை நிறுத்தினார்கள்.

## இமாமுக்கும் மக்களுக்குமிடையே சுவர் அல்லது திரை இருக்கலாமா?

உனக்கும் இமாமுக்குமிடையே ஓர் ஆறு ஓடிக் கொண்டிருந்தாலும் அவரைப் பின்பற்றித் தொழுவதில் தவறில்லை என்று ஹஸன் அல்பஸரீ குறிப்பிட்டார்கள்.

இமாமுடைய தக்பீர் செவியில் விழுமானால் இருவருக்கிடையே சுவரோ நடைபாதையோ இருந்தாலும் பின்பற்றலாம் என்று அபூ மிஜ்லஸ் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 729. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இரவில் தம் அறையில் தொழுபவர்களாக இருந்தனர். அவர்களின் தலையை மக்கள் பார்க்கும் அளவுக்கு அந்த அறையின் சுவர் குட்டையாக இருந்தது. மக்கள் அவர்களைப் பின்பற்றித் தொழலானார்கள். மறுநாள் காலையில் மக்கள் இது பற்றிப் பேசிக் கொள்ள ஆரம்பித்தனர். இரண்டாம் நாளில் நபி(ஸல்) அவர்கள் தொழுதபோது மக்களும் அவர்களைப் பின்பற்றித் தொழலானார்கள். இவ்வாறு இரண்டு மூன்று இரவுகள் செய்யலானார்கள். அதன்பின்னர் நபி(ஸல்) அவர்க ள் தொழவராமல் உட்கார்ந்துவிட்டார்கள். காலையில் மக்கள் இது பற்றிப் பேசிக் கொள்ளலானார்கள். இரவுத் தொழுகை உங்களின் மீது கடமையாக்கப்பட்டு விடுமோ என்று நான் அஞ்சினேன் (அதனாலேயே வரவில்லை.) என்று கூறினார்கள்.

## இரவுத் தொழுகை

ஹதீஸ் 730. ஆயிஷா (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்களிடம் பாய் ஒன்று இருந்தது. பகலில் அதை விரித்துக் கொள்வார்கள். இரவில் அதையே அறை போன்று அமைத்துக் கொண்டு தொழுவார்கள். மக்கள் அவர்களருகே விரைந்து வந்து அவர்களைப் பின்பற்றித் தொழுவார்கள்.

ஹதீஸ் 731 ஜைத் பின் ஜாபித் (ரலி) அவர்கள் கூறியதாவது,, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் பாயால் ஒரு சிறிய அறையை அமைத்துக்கொண்டார்கள்- சில இரவுகள் (அதனைத் தடுப்பாக வைத்துக்கொண்டு) அதனுள் தொழுதார்கள். அப்போது அவர்களுடைய தோழர்களில் சிலர் அவர்களைப் பின்பற்றித் தொழுதனர். அவர்கள் (தம்மைப் பின் பற்றித் தொடர்ந்து தொழுவது) பற்றி நபி (ஸல்) அவர்கள் அறிந்த போது (அந்த இடத்திற்கு வராமல் தம் இல்லத்திலேயே) அமந்து கொள்ள ஆரம்பித்தார்கள். பின்பு (மக்களை நோக்கி) அவர்கள் புறப்பட்டு வந்து ††உங்களது செயல்களை நான் கண்டறிந்தேன். மக்களே (உபரியானத் தொழுகைகளை) உங்கள் வீடுகளிலேயே தொழுது கொள்ளுங்கள். ஒரு மனிதர் தம் வீட்டில் தொழும் தொழுகையே தொழுகையில் சிறந்ததாகும். ஆனால் கடமையாக்கப்ட்ட தொழுகையைத் தவிர†† என்று கூறினார்கள். மற்றோரார் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## தொழுகையைத் ஆரம்பிக்கும்போது தக்பீர் கூறுவது அவசியம்.

ஹதீஸ் 732. அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் குதிரையில் ஏறிச் சென்றபோது அவர்களின் வலப்பக்கம் பிசம்க் கொண்டது. அன்று ஏதோ ஒரு தொழுகையை உட்கார்ந்து தொழுகை நடத்தினார்கள். நாங்களும் அவர்களுக்குப் பின்னால் உட்கார்ந்து தொழுதோம். ஸலாம் கொடுத்ததும், இமாம் ஏற்படுத்தப்பட்டிருப்பது அவர் பின்பற்றப்பட வேண்டும் என்பதற்காகவே, எனவே அவர் நின்று தொழுதால் நீங்களும் நின்று தொழுங்கள். அவர் ருகூவு செய்யும் பொழுது நீங்களும் ருகூவு செய்யுங்கள். அவர் (ருகூவிலிருந்து) நிமிரும்போது நீங்களும் நிமிருங்கள். அவர் ஸஜ்தாச் செய்யுங்கள். அவர் ஸமியல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறும்போது ரப்பனா வலக் கல்ஹம்து எனக் கூறுங்கள் என நபி (ஸல்) கூறினார்கள்.

ஹதீஸ் 733. அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் குதிரையிலிருந்து விழுந்ததால் சுளுக்கு ஏற்பட்டது. அப்போது எங்களுக்கு உட்கார்ந்து தொழுகை நடத்தினார்கள். நாங்களும் அவர்களுடன் உட்கார்ந்து தொழுதோம். தொழுது முடித்ததும் நபி (ஸல்) அவர்கள் இமாம் ஏற்படுத்தப் படுவது பின்பற்றப் படுவதற்கே. எனவே தக்பீர் கூறுங்கள். அவர் ருகூவு செய்யும்போது நீங்களும் ருகூவு செய்யுங்கள். அவர் (ருகூவிலிருந்து) நிமிரும்போது நீங்களும் நிமிருங்கள். அவர் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா எனக் கூறும்போது ரப்பனா லகல் ஹம்து எனக் கூறுங்கள். அவர் ஸஜ்தாச் செய்யும்போது நீங்களும் ஸஜ்தாச் செய்யுங்கள் எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 734. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இமாம் ஏற்படுத்தப் பட்டிருப்பது பின்பற்றப் படுவதற்கே. எனவே அவர் தக்பீர் கூறும்போது நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் ருகூவு செய்யும்போது நீங்களும் ருகூவு செய்யுங்கள். அவர் ஸமி அல்லாஹு லிமன் ஹதைா எனக் கூறும்போது நீங்கள் ரப்பனா வலக்கல் ஹம்து எனக் கூறுங்கள். அவர் ஸஜ்தாச் செய்யுங்கள். அவர் உட்கார்ந்து தொழுகை நடத்தும்போது

நீங்களும் அவரோடு சேர்ந்து உட்கார்நது தொழுங்கள். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## தொழுகையைத் ஆரம்பிக்கும்போது முதல் தக்பீரில் இரண்டு கைகளையும் உயர்த்துவது.

ஹதீஸ் 735. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகையைத் ஆரம்பிக்கும் போதும் ருகூவுக்காகத் தக்பீர் கூறும் போதும் ருகூவிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தம் தோள்களுக்கு நேராகத் தம் தோள்களுக்கு நேராகத் தம் கைகளை உயர்த்துவார்கள். ருகூவிலிருந்து உயரும்போது ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா, ரப்பனா வலகல் ஹம்து என்று கூறுவார்கள். ஸஜ்தாவுக்குச் செல்லும்போது இவ்வாறு செய்ய மாட்டார்கள்.

## ஆரம்பத் தக்பீரின் போதும் ருகூவுக்குச் செல்லும் போதும் ருகூவிலிருந்து உயரும் போதும் இரண்டு கைகளையும் உயர்த்துவது.

ஹதீஸ் 736. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகையைத் ஆரம்பிக்கும்போது தம் தோள் புஜங்களுக்கு நேராக இரண்டு கைகளையும் உயர்த்துவதை பார்த்திருக்கிறேன். ருகூவுக்காகத் தக்பீர் கூறும் போதும் இவ்வாறு செய்ததை பார்த்திருக்கிறேன். ருகூவிலிருந்து தலையை உயர்த்தும் போதும இவ்வாறு செய்வார்கள். ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்றும் அப்போது கூறுவார்கள். ஸஜ்தாவின்போது இவ்வாறு செய்யமாட்டார்கள்.

ஹதீஸ் 737. அபூ கிலா∴பா கூறினார்:

மாலிக் இப்னு அல் ஹுவைரிஸ்(ரலி) தொழும்போது தக்பீர் கூறித் தம் கைகளை உயர்த்தினார்கள். ருகூவுக்குச் செல்லும் போதும் தம் கைகளை உயர்த்தினார்கள். ருகூவிலிருந்து தம் கைகளை உயர்த்தினார்கள். நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்துள்ளதாகவும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

## கைகளை எவ்வளவு தூரம் உயர்த்த வேண்டும்?

நபி(ஸல்) அவர்கள் தோள் புஜம் வரை கையை உயர்த்தியதாக அபூ ஹுமைத்(ரலி) தம் தோழர்களிடம் கூறினார்.

ஹதீஸ் 738. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகையில் தக்பீர் கூறினார்கள். தக்பீர் கூறும் போதே தம் கைகளைத் தம் தோள் புஜங்களுக்கு நேராக உயர்த்தினார்கள். ருகூவுக்குத் தக்பீர் கூறிய போதும் இவ்வாறு செய்தார்கள். ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறிய போதும் இவ்வாறு செய்தார்கள். ரப்பனா வலகல் ஹம்து என்றும் கூறினார்கள். ஸஜ்தாவுக்குச் செல்லும் போதும் ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தும் போதும் இவ்வாறு செய்ய மாட்டார்கள்.

## இரண்டாம் ரக்அத் முடித்து எழும் போதும் கைகளை உயர்த்த வேண்டும்.

ஹதீஸ் 739. நாபி∴வு கூறினார்:

இப்னு உமர்(ரலி) தொழுகையைத் ஆரம்பிக்கும்போது தக்பீர் கூறித் தம் கைகளை உயர்த்துவார்கள். ருகூவுக்குச் செல்லும் போதும் தம் கைகளை உயர்த்துவார்கள். ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா எனக் கூறும் போதும் தம் கைகளை உயர்த்துவார்கள். இரண்டாம் ரக்அத் முடித்து எழும்போதும் தம் கைகளை உயர்த்துவார்கள். நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்ததாகவும் குறிப்பிட்டார்கள்.

### வலக்கையை இடக்கையின் மேல் வைப்பது.

ஹதீஸ் 740. ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) கூறினார்கள்.

தொழும்போது ஒருவர் தம் வலக் கையை இடது குடங்கை மீது வைக்க வேண்டுமெனக் கட்டளையிடப் பட்டிருந்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூ ஹாஸிம் இவ்வாறு ஏவியது நபி(ஸல்) அவர்கள் என்று கருதுகிறேன் என்றார்.

### தொழுகையில் உள்ளச்சமும் பணிவும் இருக்க வேண்டியது அவசியம்.

ஹதீஸ் 741. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் கிப்லாத் திசையில் மட்டும்தான் கவனித்துக் கொண்டிருக்கிறேன் என்று நீங்கள் நினைக்கின்றீர்களா? அல்லாஹ்வின் மேல் ஆணையாக உங்களின் ருகூவும் பணிவும் எனக்குத் தெரியாமல் போவதில்லை. என் முதுகுக்குப் பின் புறமாகவும் நான் உங்களைப் பார்க்கிறேன். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 742. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் மேல் ஆணையாக ருகூவையும் ஸஜ்தாவையும் ஒழுங்காகச் செய்யுங்கள்! நான் எனக்குப் பின்புறமாக - அல்லது என் முதுகுக்குப் பின் நீங்கள் ருகூவு செய்யும் போதும் ஸஜ்தாச் செய்யும் போதும்உங்களைப் பார்க்கிறேன். என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

### தக்பீர் கூறிய பிறகு ஓத வேண்டியவை.

ஹதீஸ் 743. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) ஆகியோரும் அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன் என்றே தொழுகையைத் துவக்குபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 744. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தக்பீருக்கும் கிராஅத்துக்கும் இடையே சற்று நேரம் மவுனமாக இருப்பார்கள். நபி அவர்களே! என் தந்தை தாய் தங்களுக்கு அர்ப்பணம். தக்பீருக்கும் கிராஅத்துக்குமிடையே நீங்கள் மவுனமாக இருக்கும் சமயத்தில் என்ன கூறுவீர்கள்? என்று கேட்டேன். இறைவா! கிழக்குக்கும் மேற்குக்குமிடையே நீ ஏற்படுத்திய தூரத்தைப் போல், எனக்கும் ன் தவறுகளுக்குமிடையே நீ தூரத்தை ஏற்படுத்துவாயாக! இறைவா! வெண்மையான ஆடை அழுக்கிலிருந்து தூய்மைப் படுத்தப் படுவது போல் என் தவறுகளைவிட்டும் என்னைத் தூய்மைப் படுத்துவாயாக! தண்ணீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளைக் கழுவுவாயாக! என்று நான் கூறுவேன் என்றார்கள்.

ஹதீஸ் 745. அஸ்மா பின்த் அபூ பக்ர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத் தொழுகையைத் தொழுதார்கள். அப்போது நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். பின்னர் ருகூவை நீட்டினார்கள். (ருகூவிலிருந்து எழுந்து) நிற்கும் போதும் நீண்ட நேரம் நின்றார்கள். பின்னர் (மற்றொரு) ருகூவு செய்தார்கள். அதையும் நீட்டினார்கள். பின்பு ருகூவிலிருந்து உயர்ந்து, பின்னர் ஸஜ்தாச் செய்தபோது ஸஜ்தாவை நீட்டினார்கள். பின்னர் ஸஜ்தாவிலிருந்து எழுந்தார்கள். பின்பு (மற்றொரு) ஸஜ்தாச் செய்தபோது அதையும் நீட்டினார்கள். பின்பு (இரண்டாம் ரக்அத்துக்காக) எழுந்து நீண்ட நேரம் நின்றார்கள். (ருகூவிலிருந்து எழுந்து) நீண்ட நேரம் நின்றார்கள். பின்னர் (மற்றொரு) ருகூவை நீட்டினார்கள். பின்பு ருகூவிலிருந்து உயர்ந்து, பின்னர் ஸஜ்தாச் செய்தபோது அதையும்

நீட்டினார்கள். பின்னர் ஸஜ்தாவிலிருந்து எழுந்தார்கள். பின்பு (மற்றொரு) ஸஜ்தாச் செய்த போதும் நீட்டினார்கள். பின்னர் தொழுகையை முடித்துவிட்டு, சுவர்க்கம் என் அருகில் தென்பட்டது எனக்குச் சக்தி இருந்திருக்குமானால் அதன் குலைகளில் ஒன்றை உங்களிடம் தந்திருப்பேன். இறைவா! நானும் இவர்களுடனே இருந்து விடுவேனோ? என்று நான் எண்ணும் அளவுக்கு நரகம் என் அருகில் நெருங்கியது. அந்த நரகத்தில் ஒரு பெண்ணைப் பூனை ஒன்று பிராண்டிக் கொண்டிருந்தது. இவள் இந்த நிலையை அடைந்திடக் காரணம் என்ன? என்று கேட்டேன். இவள் இந்தப் பூனையைக் கட்டி வைத்துவிட்டாள். தானும் அதற்கு உணவளிக்கவில்லை பூமியிலுள்ள சிறு உயிரினங்களை உண்ணட்டும் என்று அதை இவள் அவிழ்த்து விடவுமில்லை அப்பூனை பசியால் இறந்துவிட்டது என்று (வானவர்கள்) கூறினார்கள் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தொழும்போது இமாமை நோக்கிப் பார்வையைத் திருப்பலாமா?

கிரகணத் தொழுகையை நபி(ஸல்) அவர்கள் தொழும்போது நான் வாங்கியதை நீங்கள் பார்த்த சமயத்தில், நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியை விழுங்கக் கூடியதாக பார்த்தேன் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஆயிஷா(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 746. அபு மஃமர் கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் லுஹரிலும் அஸரிலும் (எதையேனும்) ஓதுவார்களா? என்று கப்பாப்(ரலி) அவர்களிடம் கேட்டோம். அதற்கவர் ஆம் என்றார். நீங்கள் அதை எப்படி அறிந்து கொண்டீர்கள்? என்று நாங்கள் கேட்டோம். நபி(ஸல்) அவர்களின் தாடி அசைவதிலிருந்து இதை அறிந்து கொள்வோம் என்று கப்பாப்(ரலி) பதிலளித்தார்.

ஹதீஸ் 747. பராவு(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழும்போது, அவர்கள் ருகூவிலிருந்து தலையை உயர்த்தி ஸஜ்தாவுக்குச் சென்றதை நாங்கள் பார்க்கும் வரை நின்று கொண்டிருப்போம்.

ஹதீஸ் 748. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது (அதற்காகத்) தொழுதார்கள். நபி அவர்களே! நீங்கள் நின்ற இடத்தில் எதையோ பிடிக்க முயன்றுவிட்டுப் பின்வாங்கினீர்களே? என்று நபித்தோழர்கள் கேட்டனர். எனக்குச் சுவர்க்கம் எடுத்துக் காட்டப் பட்டது. அதிலிருந்து ஒரு குலையைப் பிடித்தேன். அதை நான் எடுத்திருந்தால் உலகம் உள்ளளவும் அதை நீங்கள் புசித்திருப்பீர்கள் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 749. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்திவிட்டு மேடையில் ஏறினார்கள். அப்போது கிப்லாத் திசையில் தம் கைகளால் சைகை செய்தார்கள். நான் உங்களுக்குத் தொழுகை நடத்தியபோது இந்தச் சுவற்றில் சுவர்க்கத்தையும் நரகத்தையும் உருவமாக கண்டேன். நன்மை, தீமைகளின் விளைவுகளை இன்று கண்டது போல் என்றுமே நான் கண்டதில்லை என்று மும்முறை நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தொழும்போது வானத்தை பார்ப்பது.

ஹதீஸ் 750. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். தொழும்போது தங்கள் பார்வைகளை வானத்தில் உயர்த்துகிறவர்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது?இதைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும். இல்லையெனில் அவர்களின் பார்வை பறிக்கப்பட்டுவிடும். என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

## தொழுகையில் திரும்பிப் பார்ப்பது.

ஹதீஸ் 751. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

தொழுகையில் திரும்பிப் பார்ப்பது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். ஓர் அடியானுடைய தொழுகையை ஷைத்தான் அதன் மூலம் பறித்துச் செல்கிறான் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 752. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

கோடுகள் போடப் பட்ட ஒரு மேலாடை அணிந்து நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள். இதன் கோடுகள் என் கவனத்தைத் திருப்பிவிட்டன. இதை அபூ ஜஹ்மிடம் கொடுத்துவிட்டு மற்றோர் ஆடையைக் கொண்டு வாருங்கள்! என்று கூறினார்கள்.

## தொழும்போது ஏற்படும் தேவைகளுக்காகத் திரும்பிப் பார்க்கலாமா?

அபூ பக்ர்(ரலி) தொழுகை நடத்தும்போது நபி(ஸல்) அவர்களைத் திரும்பிப் பார்த்தார்கள் என்று ஸஹ்ல் (ரலி) குறிப்பிட்டுள்ளார்கள்.

ஹதீஸ் 753. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களை கிப்லாத் திசையிலுள்ள சுவற்றில் எச்சிலைக் கண்டார்கள். அதைச் சுரண்டிவிட்டு மக்களை நோக்கி, உங்களில் ஒருவர் தொழுது கொண்டிருக்கும்போது தம் முகத்துக்கு எதிராக உமிழலாகாது் ஏனெனில் அவர் தொழும்போது இறைவன் அவருக்கு முன்னிலையில் இருக்கிறான் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 754. அனஸ் (ரலி) கூறினார்

(அபூ பக்ர்(ரலி) இமாமாக நிற்க) முஸ்லிம்கள் ஃபஜ்ருத் தொழுது கொண்டிருந்தபோது, நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி)வின் அறையிலுள்ள திரையை விலக்கி மக்கள் அணிவகுத்து நிற்பதைப் பார்த்தார்கள். அது மக்களுக்குத் திடுக்கத்தை ஏற்படுத்தியது. நபி(ஸல்) அவர்கள் புன்னதை செய்தார்கள். நபி(ஸல்) அவர்கள் பள்ளிக்கு வரப்போகிறார்கள் என்று எண்ணி அபூ பக்ர் (ரலி) பின்னால் நகர்ந்து வரிசையில் சேர்ந்து கொள்ள முற்பட்டார்கள். தங்கள் தொழுகைகளே குழம்பிப் போகுமோ என்று முஸ்லிம்கள் எண்ணலானார்கள். உங்கள் தொழுகையைப் பூரணமாக்குங்கள்! நபி(ஸல்) அவர்கள் சைகை செய்துவிட்டுத் திரையைத் தொங்கவிட்டார்கள். அன்றைய தினத்தின் இறுதியில் நபி(ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள்.

## பயணத்தின் போதும் ஊரிலிருக்கும் போதும் தொழும் எல்லாத் தொழுகைகளிலும் இமாமும் மஃமூம்களும் அவசியம் (குர்ஆன்) ஓதியாக வேண்டும் என்பதும் எந்தெந்தத் தொழுகைகளில் சப்தமிட்டு ஓத வேண்டும்? எந்தெந்தத் தொழுகைகளில் சப்தமின்றி ஓத வேண்டும்? என்பதும்.

ஹதீஸ் 755. ஜாபிர் இப்னு ஸமுரா (ரலி) கூறினார்கள்.

(கூஃபாவில் அதிகாரியாக இருந்த) ஸஃது இப்னு அபீ வக்காஸ் (ரலி) மீது கூபா வாசிகளில் சிலர் உமர் (ரலி) அவர்களிடம் புகார் கூறினார்கள். அவர் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்பதும் அவர்களின் புகார்களில் ஒன்றாக இருந்தது. உடனே உமர் (ரலி) அவரை நீக்கிவிட்டு அம்மார் (ரலி)ஐ அதிகாரியாக நியமித்தார்கள். ஸஃதை (மதீனாவுக்கு) வரவழைத்து அபூ இஸ்ஹாக்! நீங்கள் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்று கூஃபா வாசிகளில் சிலர் கூறுகின்றனரே! என்று கேட்டார்கள்.

அதற்கு ஸஃது (ரலி) அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி(ஸல்) அவர்கள் தொழுது காட்டிய

முறைப் படியே தொழுகை நடத்தினேன். அதில் எந்தக் குறையும் வைக்கவில்லை. இஷாவுடைய முதல் இரண்டு ரக்அத்களில் நீண்ட நேரம் ஓதியும் பின் இரண்டு ரக்அத்களில் சுருக்கமாக ஓதியும் தொழுகை நடத்துகிறேன் என்று பதிலளித்தார்கள். உம்மைப் பற்றி நம்முடைய கருத்தும் அதுவே என்று உமர்(ரலி) கூறினார்.

அதன்பின்னர் ஒரு நபரை அல்லது சில நபர்களை ஸஃது(ரலி) உடனே கூஃபாவுக்கு அனுப்பி, ஸஃதைப் பற்றிக் கூஃபா வாசிகளிடம் விசாரிக்கச் சொன்னார்கள். விசாரிக்கச் சென்றவர் ஒரு பள்ளிவாசல் விடாமல் அவரைப் பற்றி விசாரித்தபோது அனைவரும் ஸஃதைப் ற்றி நல்ல விதமாகவே கூறினார்கள். பனூஅபஸ் கூட்டத்தாரின் பள்ளி வாசலில் விசாரித்தபோது, அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த அபூ ஸஃதா எனப்படும் உஸாமா இப்னு கதாதா என்பவர் எழுந்து, நீங்கள் விசாரிப்பதால் நான் சொல்கிறேன். ஸஃது அவர்கள் தம்து படையிலுள்ளவர்களிடம் எளிமையாக நடப்பதில்லை (பொருட்களை) சமமாகப் பங்கிடுவதில்லை தீர்ப்பு வழங்குவதில் நீதியாக நடப்பதில்லை என்று புகார் கூறினார்.

இதைக் கேட்ட ஸஃது(ரலி) அல்லாஹ்வின் மேல் ஆணையாக! மூன்று பிரார்த்தனைகளை (உமக்கெதிராக) நான் செய்யப் போகிறேன் என்று கூறிவிட்டு, இறைவா! உன்னுடைய இந்த அடியார் (அவரின் புகாரில்) பொய்யராகவும் புகழ் விரும்பிப் புகார் கூறுபவராகவும் இருந்தால் அவரின் ஆயுளை அதிகப் படுத்துவாயாக! அவரின் வறுமையையும் அதிகப் படுத்துவாயாக! அவரைப் பல சோதனைகளுக்கு ஆளாக்குவாயாக! என்று பிரார்த்தனை செய்தார்கள்.

இதன் பிறகு அந்த மனிதரிடம் எவரேனும் நலம் விசாரித்தால் சோதனைக்காளான முதுபெரும் வயோதிகனாம் விட்டேன். ஸஃதின் பிரார்த்தனை என் விஷயத்தில் பலித்துவிட்டது எனக் கூறக் கூடியவராம்விட்டார். ஜாபிர்(ரலி) வழியாக இதை அறிவிக்கும் அப்துல் மலிக் இப்னு உமைர் அதன் பிறகு நானும் அவரைப் பார்த்திருக்கிறேன் முதுமை யினால் அவரின் புருவங்கள் அவரின் கண்களை மறைத்திருந்தன. பாதைகளில் நடந்து செல்லும் பெண்களின் மீது (பார்வை பறி போனதால்) மோதிக் கொள்வார் இந்த நிலையில் அவரை பார்த்திருக்கிறேன் என்று குறிப்பிட்டார்.

ஹதீஸ் 756. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

திருக்குர்ஆனின் தோற்றுவாயை (அல்ஹம்து சூராவை) ஓதாதவருக்குத் தொழுகை கூடாது. இதை உபாதா இப்னு ஸாமித்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 757. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்தார்கள். ஒரு மனிதரும் (அந்த நேரத்தில்) பள்ளிக்கு வந்து தொழலானார். (தொழுது முடித்ததும்) நபி(ஸல்) அவர்களுக்கு அவர் ஸலாம் கூறினார். நபி(ஸல்) அவர்கள் பதில் ஸலாம் கூறினார்கள்.

அந்த மனிதர் முன்பு தொழுதது போன்றே மீண்டும் தொழுதுவிட்டு வந்து நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினார். திரும்பவும் தொழுவீராக! நீர் தொழவே இல்லை நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். இவ்வாறு மூன்று முறை நடந்தது. அதன் பிறகு அந்த மனிதர் சத்திய மார்க்கத்துடன் உங்களை அனுப்பியுள்ள இறைவன் மீது ஆணையாக இவ்வாறு தொழுவதைத் தவிர வேறு எதையும் நான் அறிந்திருக்கவில்லை! எனவே எனக்குக் கற்றுத் தாருங்கள்! என்று கேட்டார்.

நீர் தொழுகைக்காக நின்றதும் தக்பீர் கூறும்! பின்னர் குர்ஆனில் உமக்குத் தெரிந்தவற்றை ஓதும்! பின்னர் அமைதியாக ருகூவு செய்வீராக! பின்னர் ருகூவிலிருந்து எழுந்து சரியான நிலைக்கு வருவீராக! பின்னர் நிதானமாக ஸஜ்தா செய்வீராக! ஸஜ்தாவிலிருந்து எழுந்து

நிதானமாக உட்கார்வீராக! இவ்வாறே உம்முடைய எல்லாத் தொழுகையிலும் செய்து வருவீராக! என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 758. ஜாபிர் இப்னு ஸமுரா(ரலி) கூறினார்கள்.

ஸஃது(ரலி) உமர்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள தொழுதது போல் நான் அவர்களுக்கு மஃரிபு, இஷாத் தொழுகைகளை நடத்தினேன். அதில் நான் எந்தக் குறைவும் செய்யவில்லை. முதலிரண்டு ரக்அத்களில் நீளமாகவும் பிந்திய இரண்டு ரக்அத்துகளில் சுருக்கமாகவும் ஓதுவேன் என்றார்கள். இதைக் கேட்ட உமர்(ரலி) நாமும் உம்மைப் பற்ற அவ்வாறே எண்ணுகிறோம் என்றார்கள்.

## லுஹரில் ஓத வேண்டியவை

ஹதீஸ் 759. அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

லுஹர் தொழுகையின் முதலிரண்டு ரக்அத்களில் அல்ஹம்து அத்தியாயத்தையும் வேறு இரண்டு அத்தியாயங்களையும் நபி(ஸல்) அவர்கள் ஓதுவார்கள். (அந்த இரண்டு ரக்அத்களில்) முதல் ரக்அத்தில் நீண்ட அத்தியாயத்தையும் இரண்டாம் ரக்அத்தில் சிறிய அத்தியாயத்தையும் ஓதுவார்கள். சில சயமங்களில் சில வசனங்களை எங்களுக்குக் கேட்குமாறும் ஓதுவார்கள். அஸர் தொழுகையில் (முதல் இரண்டு ரக்அத்களில்) அல்ஹம்து அத்தியாயத்தையும் வேறு இரண்டு அத்தியாயங்களையும் ஓதுவார்கள். ஸுபுஹ் தொழுகையின் முதல் ரக்அத்தில் நீண்ட நேரம் ஓதுவார்கள். இரண்டாம் ரக்அத்தில் குறைந்த நேரம் ஓதுவார்கள்.

ஹதீஸ் 760. அபூ மஃமர் கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் லுஹரிலும் அஸரிலும் (எதையேனும்) ஓதுவார்களா? என்று கப்பாப்(ரலி) அவர்களிடம் கேட்டோம். அதற்கவர் ஆம் என்றார். நீங்கள் அதை எப்படி அறிந்து கொண்டீர்கள்? என்று நாங்கள் கேட்டோம். நபி(ஸல்) அவர்களின் தாடி அசைவதிலிருந்து இதை அறிந்து கொள்வோம் என்று கப்பாப்(ரலி) பதிலளித்தார்.

## அஸர் தொழுகையில் ஓத வேண்டியவை.

ஹதீஸ் 761. அபூ மஃமர் கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் லுஹரிலும் அஸரிலும் (எதையேனும்) ஓதுவார்களா? என்று கப்பாப்(ரலி) அவர்களிடம் கேட்டோம். அதற்கவர் ஆம் என்றார். நீங்கள் அதை எப்படி அறிந்து கொண்டீர்கள்? என்று நாங்கள் கேட்டோம். நபி(ஸல்) அவர்களின் தாடி அசைவதிலிருந்து இதை அறிந்து கொள்வோம் என்று கப்பாப்(ரலி) பதிலளித்தார்.

ஹதீஸ் 762. ஆபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

லுஹர் தொழுகையின் முதலிரண்டு ரக்அத்களில் அல்ஹம்து அத்தியாயத்தையும் வேறு இரண்டு அத்தியாயங்களையும் நபி(ஸல்) அவர்கள் ஓதுவார்கள்.

## மக்ரிப் தொழுகையில் ஓத வேண்டியவை.

ஹதீஸ் 763. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நான் வல்முர்ஸலாதி உர்பன் என்ற அத்தியாயத்தை ஓதும்போது அதனைச் செவியுற்ற (என் தாயார்) உம்முல் ஃபழ்லு(ரலி), அருமை மகனே! அல்லாஹ்வின் மீது ஆணையாக, மக்ரிப் தொழுகையில் நபி(ஸல்) அவர்கள் இந்த அத்தியாயத்தை ஓதியதுதான் நான் அவர்களிடமிருந்து கடைசியாக செவியுற்றதாகும். நீ அதை ஓதியதன் மூலம் எனக்கு நினைவுபடுத்திவிட்டாய் என்று கூறினார்.

ஹதீஸ் 764. மர்வான் இப்னு அல்ஹகம் கூறினார்:

மக்ரிப் தொழுகையில் சிறிய அத்தியாயங்களை நீங்கள் ஓதுகிறீர்களா? நபி(ஸல்) அவர்கள் இரண்டு பெரிய அத்தியாயங்களில் மிகவும் பெரிய அத்தியாயத்தை ஓத செவியுற்றுள்ளேன் என என்னிடம் ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்.

### மக்ரிப் தொழுகையில் சப்த மாக ஓதுதல்.

ஹதீஸ் 765. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்ரிப் தொழுகையில் தூர் அத்தியாயத்தை ஓதும்போது செவியுற்றேன்.

### இஷாத் தொழுகையில் சப்தமாக ஓதுவது.

ஹதீஸ் 766. அபூ ராஃபிவு கூறினார்:

அபூ ஹுரைரா(ரலி) உடன் நான் இஷாத் தொழுதபோது இதஸ்ஸமாவுன் ஷக்கத் என்ற அத்தியாயத்தை ஓதி (அதில் ஸஜ்தாவுடைய இடம் வந்ததும்) ஸஜ்தாச் செய்தார்கள். இது பற்றி அவர்களிடம் நான் கேட்டபோது, நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் (இந்த அத்தியாயத்திற்காக) நான் ஸஜ்தாச் செய்திருக்கிறேன். (மறுமையில்) அவர்களைச் சந்திக்கும் வரை (அதாவது மரணிக்கும் வரை) நான் அதை ஓதி ஸஜ்தாச் செய்து கொண்டுதானிருப்பேன் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 767. பராவு இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு பயணத்தின்போது இஷாத் தொழுகையின் ஒரு ரக்அத்தில் வத்தீனி வஸ்ஸைத் தூனி என்ற அத்தியாயத்தை ஓதினார்கள்.

### இஷாத் தொழுகையில் ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதுவது.

ஹதீஸ் 768. அபூ ராஃபிவு கூறினார்:

அபூ ஹுரைரா(ரலி) உடன் நான் இஷாத் தொழுதபோது இதஸ்ஸமாவுன் ஷக்கத் என்ற அத்தியாயத்தை ஓதி (அதில் ஸஜ்தாவுடைய இடம் வந்ததும்) ஸஜ்தாச் செய்தார்கள். இது பற்றி அவர்களிடம் நான் கேட்டபோது, நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் (இந்த அத்தியாயத்திற்காக) நான் ஸஜ்தாச் செய்திருக்கிறேன். (மறுமையில்) அவர்களைச் சந்திக்கும் வரை (அதாவது மரணிக்கம் வரை) நான் அதை ஓதி ஸஜ்தாச் செய்து கொண்டுதானிருப்பேன் என்று கூறினார்கள்.

### இஷாவில் ஓதுவது.

ஹதீஸ் 769. பராவு இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்கள்.

இஷாத் தொழுகையில் வத்தீனி வஸ்ஸைத்தூனி என்ற அத்தியாயத்தை நபி(ஸல்) அவர்கள் ஓத செவியுற்றுள்ளேன். அவர்களை விட அழகிய குரலில் வேறெவரும் ஓத நான் செவியுற்றதில்லை.

### முதலிரண்டு ரக்அத்களில் நீண்ட நேரமும் பின் இரண்டு ரக்அத்களில் குறைந்த நேரமும் ஓதுவது.

ஹதீஸ் 770. ஜாபிர் இப்னு ஸமுரா(ரலி) கூறினார்கள்.

தொழுகை நடத்துவது உட்பட எல்லா விஷயங்களிலும் மக்கள் உம்மைப் பற்றிப் புகார் செய்துள்ளனர் என்று உமர்(ரலி) ஸஃது(ரலி) அவர்களிடம் கூறினார்கள். அதற்கு ஸஃது(ரலி) முதலிரண்டு ரக்அத்களில் நீளமாகவும் பிந்திய இரண்டு ரக்அத்களில் சுருக்கமாகவும் ஓதுவேன். நபி(ஸல்) அவர்களின் தொழுகையை அப்படியே பின்பற்றுவதில் நான் எந்தக் குறையும்

செய்யவில்லை என்றார்கள். இதைக் கேட்ட உமர்(ரலி) நாமும் உம்மைப் பற்றி அவ்வாறே எண்ணுகிறோம் என்றார்கள்.

### ஃபஜ்ருத் தொழுகையில் ஓத வேண்டியவை.

ஃபஜ்ருத் தொழுகையில் தூர் அத்தியாயத்தை நபி(ஸல்) அவர்கள் ஓதியதாக உம்மு ஸலமா(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 771. ஸய்யார் இப்னு ஸலாமா கூறினார்:

நானும் என்னுடைய தந்தையும் அபூ பர்ஸா(ரலி) அவர்களிடம் சென்றோம். கடமையான தொழுகைகளை நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு தொழுவார்கள்? என்று நாங்கள் கேட்டோம். நீங்கள் முதல் தொழுகை என்று கூறக் கூடிய நண்பகல் தொழுகையை (நடு வானிலிருந்து) சூரியன் சாயும்போது நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள். (பின்னர்) அஸர் தொழுவார்கள். எங்களில் ஒருவர் (அஸர் தொழுதுவிட்டு) மதீனாவின் கடைக் கோடியிலுள்ள தம் இடத்திற்குத் திரும்பும்போது சூரியன் உயிருடன் (ஒளி குன்றாமல்) இருந்து கொண்டிருக்கும் என்றார்கள். மக்ரிப் பற்றி அபூ பர்ஸா(ரலி) கூறியதை நான் மறந்துவிட்டேன். கடைசித் தொழுகை என்று நீங்கள் குறிப்பிடக் கூடிய இஷாவைப் பிற்படுத்துவதை நபி(ஸல்) அவர்கள் விரும்புபவர்களாக இருந்தனர். இஷாவுக்கு முன் உறங்குவதையும் இஷாவுக்குப் பின் பேசிக் கொண்டிருப்பதையும் நபி(ஸல்) அவர்கள் வெறுப்பவர்களாக இருந்தனர். அறுபது முதல் நூறு வசனங்கள் வரை ஓதி வைகறைத் தொழுகையைத் தொழுது முடிக்கும்போது ஒருவர் தம் அருகில் அமர்ந்திருப்பவரை அறிந்து கொள்ள முடியும் என அபூ பர்ஸா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 772. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

எல்லாத் தொழுகைகளிலும் ஓதப் பட வேண்டும். நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குக் கேட்கும் விதமாக ஓதியவற்றை உங்களுக்கக் கேட்கும் விதமாக ஓதுகிறோம். நபி(ஸல்) அவர்கள் சப்தமின்றி ஓதியதை நாங்களும் சப்தமின்றி ஓதுகிறோம். அல்ஹம்து அத்தியாயத்தை மட்டும் ஓதினால் அது போதுமாகும். அதை விட அதிகமாக ஓதினால் அது சிறந்ததாகும்.

### ஃபஜ்ருத் தொழுகையில் சப்தமிட்டு ஓதுவது.

நபி(ஸல்) அவர்கள் தூர் அத்தியாயத்தை ஓதித் தொழும்போது நான் மக்களுக்குப் பின்னால் வலம்வந்து கொண்டிருந்தேன் என்று உம்மு ஸலமா(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 773. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள். நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களில் சிலரும் உக்காழ் எனும் சந்தையை நோக்கிப் புறப்பட்டனர். (இந்த நேரத்தில்) ஷைத்தான்களுக்கு வானுலகச் செய்திகள் தெரிவது தடுக்கப்பட்டுவிட்டது. (ஒட்டுக் கேட்கச் சென்ற) ஷைத்தான்களின் மீது தீப்பந்தங்கள் எறிய பட்டன. (ஒட்டுக் கேட்கச் சென்ற) ஷைத்தான்கள் தம் தலைவர்களிடம் (ஒரு செய்தியும் கிடைக்காமல்) திரும்பியபோது உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். வானத்துச் செய்திகள் எங்களுக்குத் தடுக்கப்பட்டுவிட்டன. எங்களின் மீது தீப்பந்தங்கள் எறியப்படுகின்றன என்று அந்த ஷைத்தான்கள் கூறினர். புதியதொரு நிகழ்ச்சி ஏதேனும் ஏற்பட்டிருக்க வேண்டும். அதன் காரணமாகவே தடுக்கப்பட்டிருக்க வேண்டும். எனவே நீங்கள் கீழ்த்திசை, மேல்த்திசை எங்கனும் சென்று என்னவென்று ஆராயுங்கள்! என்று தலைவர்கள் கூறினர். ஷைத்தான்கள் திஹாமா எனும் பகுதியை நோக்கிச் சென்றனர். உக்காழ் சந்தைக்குச் செல்லும் வழியில் பேரீச்ச மரங்களுக்கு அருகில் நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்கு ஃபஜ்ருத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். அதில் ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை அந்த ஷைத்தான்கள் கேட்டபோது, வானத்துச் செய்திகள் தடுக்கப்பட இந்தக் குர்ஆனே காரணம் என்று கூறிக்

கொண்டு தம் தலைவர்களிடம் சென்று, எங்கள் சமுதாயமே! நிச்சயமாக நாங்கள் ஆச்சரியமான ஒரு வேதத்தைச் செவிமடுத்தோம். அது நேர்வழியைக் காட்டுகின்றது. எனவே அதை நாங்கள் நம்பினோம். எங்கள் இறைவனுக்கு நாங்கள் இணை வைக்கவே மட்டோம் என்று கூறினர். உடனே அல்லாஹ் ஜின் எனும் அத்தியாயத்தை இறக்கியருளினான். நபி(ஸல்) அவர்களுக்கு அந்த அத்தியாயத்தல் அறிவிக்கப்படுவது ஜின்கள் கூறியதைப் பற்றியே. (ஷைத்தான்கள் கூறியதைப் பற்றி அல்ல.)

ஹதீஸ் 774. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இறைவன் உத்தரவுக்கேற்பவே (சில தொழுகைகளில்) சப்தமிட்டு ஓதினார்கள். இறைவன் உத்தரவுக்கேற்ப (சில தொழுகைகளில்) சப்தமின்றி ஓதினார்கள். (ஏனெனில்) உம்முடைய இறைவன் மறப்பவனல்ல (திருக்குர்ஆன் 19:64) என்றும் அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உண்டு (திருக்குர்ஆன் 33:21) என்றும் அல்லாஹ் கூறினான்.

## ஒரு ரக்அத்தில் இரண்டு அத்தியாயங்களை ஓதுவதும் அத்தியாயத்தின் கடைசி வசனங்களை மட்டும் ஓதுவதும் அத்தியாயங்களை முன் பின்னாக ஓதுவதும் ஓர் த்தியாயத்தின் ஆரம்பப் பகுதியை மட்டும் ஓதுவதும்.

நபி(ஸல்) அவர்கள் அல்மு∴மினான் என்ற அத்தியாயத்தை ஸுபுஹ் தொழுகையில் ஓதிக் கொண்டிருக்கும்போது, மூஸா(அலை), ஹாரூன்(அலை) பற்றிக் கூறப்படும் வசனங்களோ, ஈஸா(அலை) அவர்கள் பற்றிக் கூறப்படும் வசனங்களோ வந்ததும் அவர்களுக்கு இருமல் ஏற்பட்டது. உடனே ருகூவு செய்தார்கள் என்று அப்துல்லாஹ் இப்னு ஸாயிப் வழியாக அறிவிக்கப்படுகிறது.

உமர்(ரலி) முதல் ரக்அத்தில் பகரா அத்தியாயத்திலிருந்து நூற்றி இருபது வசனங்களை ஓதினார்கள். இரண்டாம் ரக்அத்தில் 100 வசனங்களுக்குக் குறைவாக உள்ள அத்தியாயங்களில் ஒன்றை ஓதினார்கள்.

அஹ்ன∴ப் முதல் ரக்அத்தில் ∴கஹ்∴பு அத்தியாயத்தையும் இரண்டாம் ரக்அத்தில் யூஸு∴ப் அல்லது யூனுஸ் அத்தியாயத்தையும் ஓதினார். உமர்(ரலி) ஸுபுஹ் தொழுகையில் இவ்விரண்டு அத்தியாயங்களையும் ஓதித் தொழுத போது அவர்களுக்குப் பின்னே தாமும் தொழுததாகவும் அஹ்ன∴ப் குறிப்பிட்டார்.

இப்னு மஸ்வூத்(ரலி), அன்∴பால் அத்தியாயத்தையும் நாற்பது வசனங்களையும் இரண்டாம் ரக்அத்தில் நடுத்தர அத்தியாயங்களையும் ஒன்றையும் ஓதியுள்ளனர்.

இரண்டு ரக்அத்களிலும் ஒரே அத்தியாயத்தையும் அல்லது ஓர் அத்தியாயத்தை(ப் பகுதி பகுதியாக) இரண்டு ரக்அத்களிலும் ஓதுவது பற்றியும் கதாதா குறிப்பிட்டபோது எல்லாம் அல்லாஹ்வின் வேதமே என்றார்கள்.

ஹதீஸ் 774-(அ) அனஸ்(ரலி) கூறினார்கள்.

அன்ஸார்களில் ஒருவர் குபா எனும் பள்ளியில் இமாமத் செய்பவராக இருந்தார்கள். அவர் தொழுகையில் எந்த அத்தியாயத்தை ஓதுவதற்கு முன்பும் குல்ஹுவல்லாஹு அஹத் எனும் அத்தியாயத்தையும் ஓதி விட்டே மற்ற அத்தியாயத்தை ஓதுபராக இருந்தார். ஒவ்வொரு ரக்அத்திலும் இப்படியே செய்பவராக இருந்தார். நீர் இந்த (குல்ஹுவல்லாஹு) அத்தியாயத்தை ஓதிவிட்டு அது போதாதெனக் கருதி மற்றோர் அத்தியயத்தையும் ஓதுகின்றீர்! இந்த அத்தியாயத்தை மட்டும் ஓதும்! அல்லது இதைவிட்டுவிட்டு வேறொரு அத்தியாயத்தை ஓதும்!

என்று மக்கள் அவரிடம் கேட்டார்கள். அதற்கு அவர் நான் இதைவிட்டு விட மாட்டேன். நீங்கள் விரும்பினால் இவ்வாறு ஓதியே உங்களுக்கு இமாமத் செய்கிறேன். நீங்கள் விரும்பாவிட்டால் உங்களுக்கு இமாமத் செய்வதைவிட்டு விடுகிறேன் என்றார்.

அம்மக்கள் அவரைச் சிறந்தவராகக் கருதியதால் வேறெவரும் தங்களுக்கு இமாமத் செய்வதை அவர்கள் விரும்பவில்லை. (இந்நிலையில்) நபி(ஸல்) அவர்கள், அம்மக்களிடம் (ஒரு முறை வந்தபோது, மக்கள்) இச்செய்தியைத் தெரிவித்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் இன்னாரே! உம்முடைய தோழர்கள் உம்மை வலியுறுத்துவது போல் நீர் செய்வதற்கு என்ன தடை? ஒவ்வொரு ரக்அத்திலும் இந்த அத்தியாயத்தையே நீர் அவசியமாக்கியது ஏன்? என்று கேட்டார்கள்.

அதற்கு அவர் நான் அந்த அத்தியாயத்தை விரும்புகிறேன் என்றார். நிர் அந்த அத்தியாயத்தை விரும்புவது உம்மைச் சுவனத்தில் சேர்க்கும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 775. அபூ வாயில்(ரலி) கூறினார்கள்.

ஒருவர் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் வந்து நான் முஃபஸ்ஸல் அத்தியாயங்களை ஒரு ரக்அத்தில் ஓதினேன் என்றார். (முஃபஸ்ஸல் என்பது காஃப் அத்தியாயம் முதல் குர்ஆனின் கடைசி வரை உள்ள அத்தியாயங்களாகும். இவ்வளவு அத்தியாயங்களாகும். இவ்வளவு அத்தியாயங்களையும் ஒரே ரக்அத்தில் ஓதியதாகக் கூறிவிட்டு இது சரியா? என்று அவர் கேள்வி கேட்டார்.)

கவிதைகளைப் படிப்பது போல் அவசரம் அவசரமாகப் படித்தீரா? நபி(ஸல்) அவர்கள் முஃபஸ்ஸல் அத்தியாயங்களில் ஒரே மாதிரியான அளவில் அமைந்த இரண்டிரண்டு அத்தியாயங்களை ஒரே ரக்அத்தில் ஒதியதை நான் அறிந்துள்ளேன் என்று இப்னு மஸ்வூத்(ரலி) கூறிவிட்டு நபி(ஸல்) அவர்கள் சேர்த்து ஓதிய முஃபஸ்ஸல் அத்தியாயங்களில் இருபது அத்தியாயங்களையும் குறிப்பிட்டார்கள்.

பிந்திய இரண்டு ரக்அத்களிலும் ஃபாதிஹா அத்தியாயத்தை ஓத வேண்டும்.

ஹதீஸ் 776. அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர் தொழுகையின் முதலிரண்டு ரக்அத்களில் அல்ஹம்து அத்தியாயத்தையும் துணை அத்தியாயங்களிரண்டையும் ஓதுவார்கள். பிந்திய இரண்டு ரக்அத்களில் அல்ஹம்து அத்தியாயத்தை ஓதுவார்கள். ஒரு சில வசனங்களை எங்களுக்குக் கேட்குமளவுக்கும் ஒதுவார்கள். இரண்டாவது ரக்அத்தை விட முதல் ரக்அத்தில் நீளமாக ஓதுவார்கள். இவ்வாறே அஸரிலும் ஸுபுஹிலும் செய்வார்கள்.

## லுஹரிலும் அஸரிலும் சப்தமின்றி ஓதுவது.

ஹதீஸ் 777. அபூ மஃமர் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் லுஹரிலும் அஸரிலும் ஓதுபவர்களாக இருந்தார்களா? என்று கப்பாப்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றனர். இதை எப்படி நீங்கள் அறிந்து கொண்டீர்கள்? என்று திரும்பவும் நாங்கள் கேட்டோம். அதற்கு கப்பாப்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் தாடியின் அசைவு மூலம் அறிந்து கொண்டேன் என்று விடையளித்தார்கள்.

## இமாம் ஒரு சில வசனங்களை மற்றவர்களுக்குக் கேட்கும் வகையில் ஓதுவது.

ஹதீஸ் 778. அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர்த் தொழுகையிலும் அஸர்த் தொழுகையிலும் ஸூரத்துல் ஃபாத்திஹாவுடன் மற்றோர் அத்தியாயத்தையும் ஓதுபவர்களாக இருந்தனர். சில நேரங்களில்

(சில வசனங்களை) எங்களுக்குக் கேட்கும் படி ஓதுவார்கள். (இரண்டாவது ரக்அத்தை விட) முதலாவது ரக்அத்தை நீளமாக்குவார்கள்.

## முதல் ரக்அத்தில் நீண்ட நேரம் ஓதுவது.

ஹதீஸ் 779. அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர்த் தொழுகையில் முதலாவது ரக்அத்தை நீளமாக்கி இரண்டாவது ரக்அத்தைச் சுருக்கித் தொழுபவர்களாக இருந்தனர். இதைப் போன்று ஸுபுஹுத் தொழுகையிலும் செய்பவர்களாக இருந்தனர்.

## இமாம் சப்தமிட்டு ஆமின் கூறுவது.

ஆமின் என்பது பிரார்த்தனையாகும் என்று அதாஃ குறிப்பிட்டார்கள்.

இப்னுஸ் ஸுபைர்(ரலி) மற்றும் அவரைப் பின்பற்றித் தொழுவோர் பள்ளி வாசல் எதிரொலிக்கும் அளவுக்கு ஆமின் கூறுபவர்களாக இருந்தனர்.

அபூ ஹுரைரா(ரலி) இமாமை அழைத்து ஆமின் கூறும் வாய்ப்பை எனக்குத் தவறும்படிச் செய்து விடாதீர் என்று கூறுவார்கள். (அதாவது ஆமின் கூறும் அளவுக்கு மஃமூம்களுக்கு அவகாசம் தந்து அடுத்த அத்தியாயத்தை துவக்குவீராக! என்பது இதன் கருத்து.

இப்னு உமர்(ரலி), ஆமின் கூறுவதை விடாமலும் ஆமீன் கூறுவதில் ஆர்வமூட்டுபவர்களாகவும் இருந்தனர். இதில் நிறைய நன்மைகள் இருப்பதாக அவர்கள் கூற கேட்டிருக்கிறேன் என்று நாஃபிவு குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 780. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்.

இமாம் ஆமின் கூறும்போது நீங்களும் ஆமின் கூறுங்கள்! ஒருவர் கூறும் ஆமீன் வானவர்கள் கூறும் ஆமினுடன் ஒத்து அமையாயின் அவரின் முன்சென்ற பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஆமீன் என்று கூறுபவர்களாக இருந்தார்கள் என இப்னு ஷிஹாப் குறிப்பிடுகிறார்.

## ஆமீன் கூறுவதன் சிறப்பு

ஹதீஸ் 781. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்:

உங்களில் யாரேனும் ஆமீன் கூறினால் வானுலகத்தில் வானவர்களும் ஆமீன் கூறுகின்றனர். இவ்வாறு வானவர்கள் கூறும் ஆமினுடன் எவருடைய ஆமீன் ஒத்து வருகிறதோ அவரின் முன் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## மஃமூம் சப்தமிட்டு ஆமீன் கூறுவது:

ஹதீஸ் 782. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்:

இமாம் கைருல் மக்லூபி அலை ஹிம் வலழ்ழாலீன் என்று கூறும்போது நீங்கள் ஆமீன் கூறுங்கள்! ஏனெனில் ஒருவர் கூறும் ஆமின் வானவர்கள் கூறும் ஆமினுன் ஒத்து அமையாயின் அவரின் முன்சென்ற பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## வரிசையில் சேர்வதற்கு முன்பே ருகூவு செய்யலாமா?

ஹதீஸ் 783. அபூ பக்கரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்திக் கொண்டிருக்கும்போது ருகூவு செய்தார்கள். நான் வரிசையில் வந்து சேர்வதற்கு முன்பே ருகூவு செய்து விட்டேன். இது பற்றிப் பிறகு நபி(ஸல்) அவர்களிடம் நான் கேட்டபோது, அல்லாஹ் உன்னுடைய ஆர்வத்தை அதிகப் படுத்துவானாக! இனிமேல் இப்படிச் செய்யாதே! என்று கூறினார்கள்.

### ருகூவுவின்போது தக்பீரை முழுமையாகக் கூறுவது:

ஹதீஸ் 784. முதர்ரிஃப் கூறினார்கள்.

பஸரா நகரில் அலீ(ரலி)யைப் பின்பற்றி இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) தொழுதார்கள். (அலீ(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் தொழுத தொழுகையை நினைவு படுத்தும் வகையில் தொழுகை நடத்துகிறார்! நபி(ஸல்) அவர்கள் குனியும் போதும் தாழும் போதும் தக்பீர் கூறுபவர்களாக இருந்தனர் என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 785. அபூ ஸலமா கூறினார்கள்.

குனியும் போதும் நிமிரும் போதும் தக்பீர் கூறி அபூ ஹுரைரா(ரலி) தொழுகை நடத்திவிட்டு நான் உங்களுக்கு நபி(ஸல்) அவர்களின் தொழுகை போன்றே தொழுது காட்டினேன் என்றும் கூறினார்கள்.

### ஸஜ்தாவின் போதும் தக்பீரை முழுமையாகக் கூறுவது.

ஹதீஸ் 786. முதர்ரிஃப் கூறினார்கள்.

நானும் இம்ரான் இப்னு ஹுஸைனும் அலீ(ரலி)யைப் பின் பற்றித் தொழுதோம். அலீ(ரலி) ஸஜ்தாச் செய்யும் போதும் தக்பீர் கூறினார்கள். ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தும் போதும தக்பீர் கூறினார்கள். இரண்டு ரக்அத்தை முடித்து எழும்போதும் தக்பீர் சொன்னார்கள். தொழுகையை முடித்த பிறகு என் கையைப் பிடித்துக்கொண்டு இவர் நபி(ஸல்) அவர்களின் தொழுகையை எனக்கு நினைவு படுத்திவிட்டார் என்று இம்ரான்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 787. இக்ரிமா கூறினார்கள்.

ஒருவர் மகாமு இப்ராஹீம் எனுமிடத்தில் தொழுவதைக் கண்டேன். அவர் குனியும் போதும் நிமிரும் போதும் எழும்போதும் தாழும் போதும் தக்பீர் கூறினார். இது பற்றி இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் நான் கேட்டபோது, இது நபி(ஸல்) அவர்கள் தொழுது தொழுகை போல் இல்லையா? தாயற்றுப் போவாய் என்று குறிப்பிட்டார்கள்.

### ஸஜ்தாவிலிருந்து எழும்போது தக்பீர் கூறுவது.

ஹதீஸ் 788. இக்ரிமா கூறினார்கள்.

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் வந்து இவர் ஒரு மடையர் என்றேன். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) உன் தாய் உன்னை இழந்து விடட்டும் அம்மனிதர் நபி(ஸல்) அவர்களின் வழி முறையைச் செயல் படுத்திவிட்டார் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 789. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகையைத் ஆரம்பிக்கும்போது தக்பீர் கூறுவார்கள். ருகூவிலிருந்து முதுகை நிமிர்ததும்போது ஸமிஅல்லாஹுலிமன் ஹமிதா என்று கூறுவார்கள். பின்பு நிலைக்கு வந்து ரப்பனா லகல் ஹம்து மற்றோர் அறிவிப்பில் வலகல் ஹம்து என்பார்கள். பின்பு (ஸஜ்தாவுக்காகக்) குனியும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு தலையை (ஸஜ்தாவிலிருந்து)

உயர்த்தும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு (இரண்டாவது) ஸஜ்தாச் செய்யும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு அதிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தக்பீர் கூறுவார்கள். பின்பு அதிலிருந்து தலையை உயர்த்தும் போதும் தக்பீர் கூறுவார்கள். இவ்வாறே தொழுகையின் எல்லா ரக்அத்களிலும் செய்வார்கள். இரண்டாம் ரக்அத்திலும் எழும் போதும் தக்பீர் கூறுவார்கள்.

### ருகூவின்போது உள்ளங்களை மூட்டுக் கால்களின் மீது வைப்பது.

நபி(ஸல்) அவர்கள் ருகூவின்போது தம் கைகளை மூட்டுக் கால்களின் மீது படியுமாறு வைப்பார்கள் என்று அபூ ஹுமைத்(ரலி) தம் சகாக்கள் மத்தியில் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 790. முஸ்அப் இப்னு ஸஃது கூறினார்கள்.

நான் என்னுடைய தந்தையின் விலாப் பக்கமாக நின்று தொழுதேன். அப்போது ருகூவின்போது என்னுடைய இரண்டு கைகளையும் இரண்டு தொடைகளின் இடுக்கில் வைத்துக் கொண்டேன். இதை என் தந்தை தடுத்து, நாங்கள் இவ்வாறு செய்து கொண்டிருந்தோம். அதைவிட்டும் நாங்கள் தடுக்கப்பட்டு எங்கள் கைகைள மூட்டுக்கால்களின் மீது வைக்குமாறு உத்தரவிடப் பட்டோம் என்றார்.

### ருகூவைப் பூரணமாகச் செய்யாவிட்டால் (ஏற்படும் குற்றம்)

ஹதீஸ் 791. ஸைத் இப்னு வஹ்பு கூறினார்கள்.

ருகூவையும் ஸுஜூதையும் பூரணமாகச் செய்யாத ஒரு மனிதரை ஹுதைஃபா(ரலி) கண்டனர். அப்போது அவர்கள் நீர் தொழவே இல்லை. இந்த நிலையில் நீர் மரணித்துவிட்டால் முஹம்மத்(ஸல்) அவர்களின் மார்க்கத்தில் மரணித்தவராக மாட்டீர் என்றார்கள்.

### ருகூவின்போது முதுகைச் சமமாக வைப்பது.

நபி(ஸல்) அவர்கள் ருகூவு செய்யும்போது தம் முதுகைச் செவ்வையாக ஆக்கினார்கள். என்று அபூ ஹுமைத்(ரலி) தம் தோழர்கள் மத்தியில் குறிப்பிட்டார்கள்.

### ருகூவில் குனிவதற்கும் நிமிர்வதற்கும் உரிய வரம்பு.

ஹதீஸ் 792. பரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் ருகூவும் அவர்களின் ஸஜ்தாவும் இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையிலான இடைவெளியும் ருகூவிலிருந்து எழுந்து நிமிர்தலும் நிற்றல், உட்கார்தல் நீங்கலாக அனைத்தும் ஏறத்தாழ சமஅளவில் அமைந்திருந்தன.

### பூரணமாக ருகூவு செய்யாதவர் திரும்பவும் தொழ வேண்டும்.

ஹதீஸ் 793. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிக்கு வந்தார்கள். ஒரு மனிதரும் (அந்த நேரத்தில்) பள்ளிக்கு வந்து தொழலானார். (தொழுது முடித்ததும்) நபி(ஸல்) அவர்களுக்கு அவர் ஸலாம் கூறினார். நபி(ஸல்) அவர்கள் பதில் ஸலாம் கூறினார்கள். பின்பு திரும்பவும் நீர் தொழுவீராக? நீர் தொழவே இல்லை என்றும் கூறினார்கள்.

அந்த மனிதர் முன்பு தொழுதது போன்றே மீண்டும் தொழுதுவிட்டு வந்து நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினார். திரும்பவும் தொழுவீராக! நீர் தொழவே இல்லை நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (இவ்வாறு மூன்று முறை நடந்தது). அதன் பிறகு அந்த மனிதர் சத்தியமார்க்கத்துடன் உங்களை அனுப்பியுள்ள இறைவன் மீது ஆணையாக இவ்வாறு

தொழுவதைத் தவிர வேறு எதையும் நான் அறிந்திருக்கவில்லை! எனவே எனக்குக் கற்றுத் தாருங்கள்! என்று கேட்டார்.

நீர் தொழுகைக்காக நின்றதும் தக்பீர் கூறும்! பின்னர் குர்ஆனில் உமக்குத் தெரிந்தவற்றை ஓதும்! பின்னர் அமைதியாக ருகூவு செய்வீராக! பின்னர் ருகூவிலிருந்து எழுந்து சரியான நிலைக்கு வருவீராக! பின்னர் நிதானமாக ஸஜ்தாச் செய்வீராக! ஸஜ்தாவிலிருந்து எழுந்து நிதானமாக உட்கார்வீராக! இவ்வாறே உம்முடைய எல்லாத் தொழுகையிலும் செய்து வருவீராக! நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ருகூவில் துஆக் கேட்பது.

ஹதீஸ் 794. நபி(ஸல்) அவர்கள் தங்களின் ருகூவிலும் ஸஜ்தாவிலும் இறைவா! நீ தூயவன் உன்னைப் புகழ்கிறேன் என்னை மன்னித்து விடு! என்று கூறக்கூடியவர்களாக இருந்தார்கள் என ஆயிஷா(ரலி) அவிறித்தார்.

## ருகூவிலிருந்து எழுந்ததும் இமாமும் பின்தொடர்பவர்களும் கூற வேண்டியவை.

ஹதீஸ் 795. நபி(ஸல்) அவர்கள் ஸமிஅல்லாஹுலிமன் ஹமிதா எனக் கூறியபின் அல்லாஹும்ம ரப்பனா வ லகல்ஹம்து என்றும் கூறுவார்கள். மேலும் ருகூவு செய்யும் போதும் ருகூவிலிருந்து உயரும் போதும் தக்பீர் கூறுவார்கள். இரண்டு ஸஜ்தாக்களை முடித்து எழும்போதும் அல்லாஹு அக்பர் எனக் கூறுவார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## அல்லாஹும்ம ரப்பனா லகல்ஹம்து என்று கூறுவதன் சிறப்பு.

ஹதீஸ் 796. இமாம் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறும்போது நீங்கள் அல்லாஹும்ம ரப்பனா லகல் ஹம்து எனக் கூறுங்கள்! யாருடைய இந்தக் கூற்று வானவர்களின் கூற்றுடன் ஒத்து அமைகிறதோ அவரின் முன்பாவங்கள் மன்னிக்கப்படுகின்றனநபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 797. அபூ ஸலமா கூறினார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) லுஹர், இஷா, ஸுபுஹ் தொழுகைகளின் கடைசி ரக்அத்துகளில் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறியபிறகு குனூத் ஓதுவார்கள். அதில் இறைநம்பிக்கையாளர்களுக்காக பிரார்த்திப்பார்கள். இறைமறுப்பாளர்களைச் சபிப்பார்கள்.

ஹதீஸ் 798. அனஸ்(ரலி) கூறினார்கள்.

மக்ரிப், ஃபஜ்ர் ஆகிய தொழுகைகளில் குனூத் ஓதுதல் நபி(ஸல்) காலத்தில் இருந்தது.

ஹதீஸ் 799. ரிஃபாஆ இப்னு ராஃபிவு(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் பின்னே ஒரு நாள் தொழுது கொண்டிருந்தோம். அவர்கள் ருகூவிலிருந்து தலையை உயர்த்தியபோது ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா எனக் கூறினார்கள். அவர்களுக்குப் பின்னாலிருந்த ஒருவர் ரப்பனா வ லகல் ஹம்து ஹம்தன் கஸீரன் தய்யிபன் முபாரகன் ஃபீஹி என்று கூறினார். தொழுது முடித்ததும் இந்த வார்த்தைகளைக் கூறியவர் யார்? நபி(ஸல்) கேட்டார்கள். அந்த மனிதர் நான் என்றார். முப்பதுக்கும் மேற்பட்ட வானவர்கள் இதைப் பதிவு செய்வதில் போட்டி போட்டதை கண்டேன் நபி(ஸல்) கூறினார்கள்.

## ருகூவிலிருந்து தலையை உயர்த்தும்போது நிதானத்தை மேற்கொள்ளல்.

நபி(ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து நிமிரும்போது நன்கு, நேராக நிமிர்வார்கள் என்று அபூ ஹுமைத் கூறினார்கள்.

ஹதீஸ் 800. ஸாபித் கூறினார்கள்.

அனஸ்(ரலி) எங்களுக்கு நபி(ஸல்) அவர்கள் தொழுதது போல் தொழுது காட்டினார்கள். அத்தொழுகையில் ருகூவிலிருந்து தம் தலையை உயர்த்தியதும் மறந்துவிட்டார்களோ என்று நாங்கள் பேசிக் கொள்ளும் அளவுக்கு நிற்பார்கள்.

ஹதீஸ் 801. பராவு இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் ருகூவும் ஸுஜூதும் ருகூவிலும் எழுந்து நிற்கும் நேரமும் இரண்டு ஸஜ்தாக்களுக்கு இடைப் பட்ட நேரமும் ஏறக்குறைய ஒரே அளவாக இருந்தன.

ஹதீஸ் 802. அபூ கிலாபா கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் தொழுகை எவ்வாறு இருந்தது என்பதை மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ்(ரலி) எங்களுக்குத் தொழுது காட்டினார்கள். இவ்வாறு அவர்கள் செய்து காட்டியது எந்தத் தொழுகையின் நேரமாகவும் இருக்கவில்லை. அவர்கள் நின்றார்கள். நன்கு நின்றார்கள். பின்னர் ருகூவு செய்தார்கள். பின்னர் தம் தலையை உயர்த்திச் சிறிது நேரம் மவுனமாக நின்றார்கள்.

பின் நம்முடைய பெரியார் அபூ புரைத் தொழுவது போன்றே மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ் தொழுது காட்டினார்கள்.

இந்த அபூ புரைத் தொழும்போது (இரண்டாம்) ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்திச் சற்று நேரம் உட்கார்ந்துவிட்டு (இரண்டாம் ரக்அத்துகளாக) எழுக்கூடியவராக இருந்தார் என்று அய்யூப் குறிப்பிடுகிறார்.

### ஸஜ்தாச் செய்யும்போது தக்பீர் கூறுதல்.

இப்னு உமர்(ரலி) மூட்டுக் கால்களைத் தரையில் வைப்பதற்கு முன் கைகளை வைப்பவர்களாக இருந்தனர் என்று நாஃபிவு குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 803. அபூ ஸலமாவும் அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மானும் கூறினார்கள்.

கடமையான தொழுகைகளிலும் அது அல்லாத (உபரித்) தொழுகைகளிலும் ரமளானிலும் ரமளான் அல்லாத நாள்களிலும் ஒவ்வொரு தொழுகையிலும் அபூ ஹுரைரா(ரலி)தக்பீர் சொல்பவர்களாக இருந்தனர். நிற்கும்போது அவர்கள் தக்பீர் கூறுவார்கள். பின்னர் ருகூவு செய்யும்போது தக்பீர் கூறுவார்கள். பின்னா ஸஜ்தாச் செய்வதற்கு முன் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா ரப்பனா வ லகல் ஹம்து என்று கூறுவார்கள். பின்னர் ஸஜ்தாவுக்காகக் குனியும்போது அல்லாஹுஅக்பர் என்று கூறுவார்கள். பின்னர் ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தும்போது தக்பீர் கூறுவார்கள் பின்னர் (இரண்டாம்) ஸஜ்தாச் செய்யும்போது தக்பீர் கூறுவார்கள். பின்னர் ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தும்போது தக்பீர் கூறுவார்கள். பின்னர் இரண்டாம் ரக்அத்தில் உட்கார்ந்துவிட்டு எழும்போது தக்பீர் கூறுவார்கள். தொழுகை முடியும் வரை ஒவ்வொரு ரக்அத்திலும் இவ்வாறே செய்வார்கள்.

பின்னர் தொழுகையை முடித்தபின் என்னுடைய உயிர் எவன் வசத்திலுள்ளதோ அவன் மீது ஆணையாக! அல்லாஹ்வின் தூதரின் தொழுகையைப் போன்றே உங்களுக்கு நான் தொழுது காட்டுகிறேன். உலகைப் பிரியும் வரை இதுவே நபி(ஸல்) அவர்களின் தொழுகையாக இருந்தது என்றும் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 804. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து தலையை உயர்த்தி ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா ரப்பனா

வலகல் ஹம்து என்று கூறிய பின் சில மனிதர்களின் பெயர்களைக் குறிப்பிட்டு அவர்களுக்காக துஆச் செய்வார்கள். இறைவா! வலீத் இப்னு அல்வலீத், ஸலமா இப்னு ஹிஷாம், அய்யாஷ் இப்னு அபீ ரபீஆ மற்றும் இறைநம்பிக்கையாளர்களில் பலவீனர்களை நீ காப்பாற்றுவாயாக! இறைவா! முளர் கூட்டத்தின் மீது உன்னுடைய பிடியை இறுக்குவாயாக! யூஸுஃப்(அலை) அவர்களின் காலத்தில் ஏற்பட்ட (பஞ்சமான ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும்) பஞ்சத்தை ஏற்படுத்துவாயாக! நபி(ஸல்) அவர்கள் கூறுவார்கள். (மதீனாவுக்கு) மேல்த் திசையில் வாழ்ந்த முளர் கூட்டத்தினர் அன்றைய தினம் நபி(ஸல்) அவர்களுக்கு எதிரிகளாய் இருந்தனர்.

ஹதீஸ் 805. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை குதிரையின் மீது ஏறியபோது கீழே விழுந்துவிட்டார்கள். அதனால் அவர்களின் வலது விலாப் புறத்தில் அடி பட்டது. அவர்களை நாங்கள் நோய் விசாரிக்கச் சென்றோம். தொழுகை நேரம் வந்ததும் தொழுகையை உட்கார்ந்தவாறே தொழுதார்கள். நாங்களும் (அவர்களுக்குப் பின்னால்) உட்கார்ந்தவாறு தொழுதோம். நபி(ஸல்) அவர்கள், தொழுகையை முடித்ததும், இமாம் பின்பற்றப் படுவதற்காகவே நியமிக்கப்பட்டுள்ளார்! அவர் தக்பீர் கூறினால் நீங்களும் தக்பீர் கூறுங்கள் அவர் ருகூவு செய்தால் நீங்களும் ருகூவு செய்யுங்கள் அவர் (தலையை) உயர்த்தினால் நீங்களும் (தலையை) உயர்த்துங்கள் அவர் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று சொன்னால் நீங்கள் ரப்பனா வலகல் ஹம்து என்று சொல்லுங்கள் அவர் ஸஜ்தாச் செய்தால் நீங்களும் ஸஜ்தாச் செய்யுங்கள் என்று கூறினார்கள்.

## ஸஜ்தாவின் சிறப்பு

ஹதீஸ் 806. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி அவர்களே! கியாமத் நாளில் எங்கள் இறைவனை நாங்கள் காண முடியுமா? என்று சிலர் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், மேகம் மறைக்காத முழு நிலவைக் காண்பதில் நீங்கள் ஐயம் கொள்வீர்களா? என்று கேட்டார்கள். நபித்தோழர்கள் நபி அவர்களே! இல்லை என்றார்கள். மீண்டும் நபி(ஸல்) அவர்கள், மேகம் மறைக்காத சூரியனைக் காண்பதில் நீங்கள் ஐயம் கொள்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கும் நபித்தோழர்கள் இல்லை என்றனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள் இதே போல்தான் நீங்கள் உங்களின் இறைவனைக் காண்பீர்கள் என்று கூறினார்கள்.

தொடர்ந்து, கியாமத் நாளில் மக்களெல்லாம் ஒன்று திரட்டப் பட்டதும் யார் எதனை வணங்கினார்களோ அதைப் பின் பற்றிச் செல்லட்டும் என்று இறைவன் கூறுவான். சிலர் சூரியனைப் பின்பற்றுவர். வேறு சிலர் சந்திரனைப் பின்பற்றுவர். மற்றும் சிலர் தீய சக்திகளைப் பின்பற்றுவர். இந்த சமூகம் முனாஃபிக்குகள் உட்பட அதே இடத்தில் நிற்பர்.

அப்போது இறைவன் அவர்களை நோக்கி நானே உங்களுடைய இறைவன் என்பான்! அதற்கு அவர்கள் எங்கள் இறைவன் எங்களிடம் வரும் வரை நாங்கள் இங்கேயே இருப்போம் எங்கள் இறைவன் எங்களிடம் வந்தால் அவனை நாங்கள் அறிந்து கொள்வோம் என்பார்கள். பின்னர் அல்லாஹ் அவர்களிடம் வந்து நானே உங்களுடைய இறைவன் என்பான். அதற்கு அவர்கள் நீயே எங்களின் இறைவன் என்பார்கள்.

பின்பு அவர்களை இறைவன் அழைப்பான். நரகத்தின் மேற்பரப்பில் பாலம் ஒன்று ஏற்படுத்தப் படும். நபிமார்கள் தத்தம் சமுதாயத்தினருடன் அதைக் கடப்பார்கள். அவ்வாறு அதைக் கடப்பார்கள். அவ்வாறு கடந்து செல்பவர்களில் நானே முதல் நபராக இருப்பேன். அன்றைய தினத்தில் இறைத் தூதர்களைத் தவிர எவரும் பேச மாட்டார்கள். இறைவா காப்பாற்று!

இறைவா காப்பாற்று! என்பதே அன்றைய தினம் நபிகளின் பேச்சாக இருக்கும். (மேலும் தொடர்ந்து) நரகத்தில் கருவேல மரத்தின் முள்ளைப் பார்த்திருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். நபித்தோழர்கள் ஆம் என்றனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள் நிச்சயமாக அது கருவேல மரத்தின் முள் போன்றே இருக்கும். என்றாலும் அதன் பருமனை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறியமாட்டார்கள். அது மனிதர்களின் (தீய) செயல்களுக்கேற்ப அவர்களை இழுக்கும். நல்லறங்கள் முழுவதும் அழிக்கப் பட்டவர்களும் அவர்களும் இருப்பர். கடுகளவு அமல்கள் எஞ்சியிருந்து அதனால் (முடிவில்) வெற்றி பெற்றவர்களும் அவர்களில் இருப்பர்.

நரக வாசிகளில் அல்லாஹ் நாடுபவர்களுக்கு அருள் செய்ய எண்ணும்போது, அல்லாஹ்வை வணங்கிக் கொண்டிருந்தவர்களை நரகிலிருந்து வெளியேற்றுமாறு வானவர்களுக்கு உத்தரவிடுவான். வானவர்கள் அவர்களை வெளியேற்றுவார்கள். ஸஜ்தாச் செய்த அடையாளத்தை வைத்து இவர்களை வானவர்கள் அடையாளம் காண்பார்கள்.

ஸஜ்தாச் செய்ததனால் (ஏற்பட்ட) வடுக்களை நரகம் தீண்டுவதை நரகத்திற்கு அல்லாஹ் ஹராமாக ஆக்கிவிட்டான். அவர்கள் நரகிலிருந்து வெளியேற்றப் படுவார்கள். ஸஜ்தாவின் வடுவைத் தவிர மனிதனின் முழு உடம்பையும் நரகம் சாப்பிட்டு விடும். நரகிலிருந்து கரிந்தவர்களாக வெளியேறுவார்கள். அவர்களின் மீது உயிர்த் தண்ணீர் (மாவுல் ஹயாத்) தெளிக்கப்படும். ஆற்றோரத்தில் தானியம் வளர்வது போல் அவர்கள் செழிப்பாவார்கள். பின்னர் அடியார்களுக்கிடையே அல்லாஹ் தீர்ப்பை முடித்து வைப்பான்.

முடிவில் ஒரு மனிதன் சுவர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே தங்குவான். நரக வாசிகளில் கடைசியாக இவன்தான் சுவர்க்கம் செல்பவன். நரக வாசிகளில் கடைசியாக இவன்தான் சுவர்க்கம் செல்பவன். அவனுடைய முகம் நரகை நோக்கிய நிலையில் இருப்பான். அப்போது அந்த மனிதன் இறைவா! என் முகத்தை நரகத்தைவிட்டும் திருப்புவாயாக! அதனுடைய காற்று என்னை வெளுகச் செய்துவிட்டது. அதனுடைய சூடு என்னைக் கரித்துவிட்டது என்பான்.

அதற்கு இறைவன் இவ்வாறு செய்தால் வேறு எதனையும் நீ கேட்காதிருப்பாயா? என்று கேட்பான். அதற்கு அம்மனிதன் உன் கண்ணியத்தின் மேல் ஆணையாக வேறு ஒன்றையும் கேட்க மாட்டேன் என்பான். அல்லாஹ் அவனிடம் இது பற்றி உறுதி மொழியும் ஒப்பந்தமும் செய்து அவன் நாடியதைக் கொடுப்பான். அவனுடைய முகத்தை நரகத்தைவிட்டும் திருப் விடுவான்.

சுவர்க்கத்தின் பால் அவனுடைய முகத்தைத் திருப்பியதும் அம்மனிதன் சுவர்க்கத்தின் செழிப்பைக் காண்பான். நீண்ட நேரம் மவுனமாக இருப்பான். நீண்ட நேரம் மவுனமாக இருப்பான். பிறகு இறைவா! என்னைச் சுவர்க்கத்தின் வாசலுக்கு அருகில் கொண்டு செல்வாயாக! என்று கேட்பான். அதற்கு இறைவன் முன்பு கேட்டதைத் தவிர வேறு எதனையும் கேட்க மாட்டேன் என்று என்னிடம் நீ உறுதி மொழி அளிக்கவில்லையா? என்று கேட்பான். அதற்கு அம்மனிதன் இறைவா! உன்னுடைய படைப்பினங்களில் நான் மிகவும் துர்பாக்கியசாலியாக ஆகாமலிருக்க வேண்டும் என்பான். அதற்கு இறைவன் நீ கேட்டதைக் கொடுத்துவிட்டால் வேறு எதனையும் கேட்காமலிருப்பாயா? என்று கேட்பான். அம்மனிதன் கேட்க மாட்டேன். உன்னுடைய கண்ணியத்தின் மேல் ஆணையாக வேறு எதனையும் கேட்க மாட்டேன் என்பான்.

இது பற்றி அவனிடம் உறுதிமொழியும் ஒப்பந்தமும் எடுத்துக் கொண்டு அவன் நாடியதைக் கொடுப்பான். அவனைச் சுவர்க்கத்தின் வாசலுக்கருகில் கொண்டு செல்வான். வாசலுக்கு அம்மனிதன் சென்றதும் அதன் கவர்ச்சியையும் அதிலுள்ள செழிப்பையும் மகிழ்ச்சியையும் காண்பான். நீண்ட நேரம் மவுனமாக இருப்பான் அதன்பின்னர் இறைவா! என்னைச்

சுவர்க்கத்தின் உள்ளே கொண்டு செல்வாயாக! என்பான். ஆதமுடைய மகனே! ஏன் வாக்குமாறுகிறாய்? முன்பு கொடுத்ததைத் தவிர வேறு எதனையும் கேட்க மாட்டேன் என்று என்னிடம் நீ உறுதி மொழி எடுக்கவில்லையா? என்று இறைவன் கேட்பான்.

அதற்கு அம்மனிதன் இறைவா! உன்னுடைய படைப்பினங்களில் மிகவும் துர்பாக்கிய சாலியாக என்னை ஆக்கி விடாதே! என்பான். இம்மனிதன்னுடைய நிலை கண்டு இறைவன் சிரிப்பான். பின்பு சுவர்க்கத்தில் நுழைவதற்கு அவனுக்கு இறைவன் அனுமதி அளிப்பான்.

அதன்பின்னர் இறைவன் அம்மனிதனை நோக்கி நீ விரும்பக் கூடியதையெல்லாம் விரும்பு என்பான். அம்மனிதன் விரும்பக் கூடியதை எல்லாம் விரும்புவான். அவன் விருப்பத்தை(க் கூறி) முடித்த பின் இறைவன் அம்மனிதனுக்கு (அவன் கேட்க மறந்ததையெல்லாம்) நினைவு படுத்தி இதை விரும்பு, அதை விரும்பு என்று (இறைவனே) சொல்லிக் கொடுப்பான். முடிவில் அவனுடைய ஆசைகளைச் சொல்லி முடித்தவின் நீ கேட்டதும் அது போல் இன்னொரு மடங்கும் உனக்கு உண்டு என இறைவன் கூறுவான் என்றார்கள்.

இச்செய்தியை அறிவித்த அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம் அபூ ஸயீத்(ரலி) உனக்கு நீ கேட்டதும் அது போன்ற பத்து மடங்கும் கிடைக்கும் என்று இறைவன் கூறுவதாக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று ஆட்சேபித்தார்கள்.

அதற்கு அபூ ஹுரைரா(ரலி) ஒரு மடங்கு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றுதான் நினைக்கிறேன் என்றார்கள். அதற்கு அபூ ஸயீத்(ரலி) பத்து மடங்கு நபி(ஸல்) அவர்கள் கூற செவியுற்றுள்ளேன் என்றார்கள்.

### ஸஜ்தாவின்போது கைகளை விரித்து வைப்பது.

ஹதீஸ் 807. அப்துல்லாஹ் இப்னு மாலிக் இப்னி புஹைனா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழும்போது (ஸஜ்தாவில்) அவர்களின் அக்குள் வெண்மை தென்படும் அளவுக்கு இரண்டு கைகளையும் விரிப்பார்கள்.

### ஸஜ்தாவின்போது கால்விரல்களைக் கிப்லாவை நோக்கி வைப்பது.

நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்ததாக அபூ ஹுமைத்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

### ஸஜ்தாவைப் பூரணமாகச் செய்யாவிட்டால் ஏற்படும் கேடுகள்.

ஹதீஸ் 808. அபூ வாயில் கூறினார்கள்.

ருகூவையும் ஸுஜுதையும் பூரணமாகச் செய்யாத ஒரு மனிதரை ஹுதைஃபா(ரலி) கண்டார்கள். அம்மனிதர் தொழுது முடித்தபோது அவரை நோக்கி நீ தொழவில்லை இந்நிலையில் நீ மரணித்துவிட்டால் நபி வழி அல்லாத வேறு வழியில் நீ மரணித்தவனாவாய் என்று கூறினார்கள்.

### ஏழு உறுப்புகள் தரையில் படுமாறு ஸஜ்தாச் செய்தல்.

ஹதீஸ் 809. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நெற்றி, இரண்டு கைகள், இரண்டு மூட்டுக் கால்கள், இரண்டு கால்கள் ஆகிய ஏழு உறுப்புகள் படுமாறு ஸஜ்தாச் செய்யும் படி நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடப் பட்டார்கள். ஆடையோ முடியோ (தரையில் படாதவாறு) தடுக்கக் கூடாது என்றும் கட்டளையிடப் பட்டார்கள்.

ஹதீஸ் 810. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். ஏழு உறுப்புகள் படுமாறு ஸஜ்தாச் செய்யும் படி நாம் கட்டளையிடப் பட்டோம். ஆடையோ முடியோ (தரையில் படாதவாறு) தடுக்கக் கூடாது என்றும் கட்டளையிடப் பட்டோம்.

என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 811. பராவு(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் நாங்கள் தொழுது கொண்டிருந்தோம். அவர்கள் ஸமி அல்லாஹுலிமன் ஹமிதா என்று சொல்லி முடித்து (ஸுஜுதுக்குச் சென்று) எங்களில் யாரும் (ஸுஜூதுக்காகத்) தம் முதுகை வளைக்க மாட்டார்கள்.

மூக்கு தரையில் படாதவாறு ஸஜ்தாச் செய்தல்.

ஹதீஸ் 812. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நெற்றி, இரண்டு கைகள், இரண்டு மூட்டுக் கால்கள், இரண்டு பாதங்களின் முனைகள் ஆகிய ஏழு உறுப்புக்கள் படுமாறு ஸஜ்தாச் செய்யும் படி நான் கட்டளையிடப் பட்டுள்ளேன். ஆடையோ முடியோ (தரையில் படாதவாறு) தடுக்கக் கூடாது என்றும் கட்டளையிடப் பட்டுள்ளேன். நெற்றியைக் குறிப்பிடும்போது தம் கையால் மூக்கை அடையாளம் காட்டினார்கள். என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

களி மண் மீது ஸஜ்தாச் செய்வது. மூக்கு, தரையில் படுமாறு ஸஜ்தாச் செய்வது.

ஹதீஸ் 813. அபூ ஸலமா கூறினார்கள்

நான் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களிடம் சென்றேன். எங்களுடன் தாங்கள் பேரீச்ச மரத்தோட்டத்திற்கு வந்தால் நாம் பேசிக் கொண்டிருக்கலாமே என்று கேட்டேன். அவர்களும் புறப்பட்டனர். லைலதுல் கத்ரு இரவு பற்றி நீங்கள் நபி(ஸல்) அவர்களிடம் செவியுற்றதை எனக்குக் கூறுங்கள்! என்று கேட்டேன்.

அப்போத அபூ ஸயீத்(ரலி), நபி(ஸல்) அவர்கள் ரமளானின் முதல் பத்து நாள்கள் இஃதிகாப் இருந்தார்கள். நாங்களும் அவர்களுடன் இஃதிகாக் இருந்தோம். அவர்களிடம் ஜிப்ரீல்(அலை) வந்து நீங்கள் தேடக் கூடியது (லைலத்துல் கத்ரு) உங்களுக்கு இனி வரும் (நாள்களிலுள்ளது) என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் நடுப் பத்து நாள்கள் இஃதிகாப் இருந்தார்கள். நாங்களும் அவர்களுடன் இஃதிகாப் இருந்தோம். அவர்களிடம் ஜிப்ரீல்(அலை) வந்து, நீங்கள் தேடக் கூடியது உங்களுக்கு இனி வரும் (நாள்களிலுள்ளது) என்றார்கள்.

ரமளான் இருபதாம் நாள் காலையில் நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு செய்ய எழுந்தார்கள். யார் நபியுடன் இஃதிகாப் இருந்தார்களோ அவர்கள் திரும்பிச் செல்லட்டும்! லைலத்துல் கத்ரு இரவு பற்றி எனக்குக் காட்டப்பட்டது. நான் மறக்கடிக்கப் பட்டு விட்டேன். நிச்சயமாக அது கடைசிப் பத்து நாள்களில் ஒற்றையான நாளிலுள்ளது. நான் களிமண் மீதும் தண்ணீர் மீதும் ஸஜ்தாச் செய்வது போல் கண்டேன் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(அக்காலத்தில்) பள்ளிவாசலின் முகடு பேரீச்ச மட்டைகளால் அமைந்திருந்தது. வானத்தில் (மழைக்கான) எந்த அறிகுறியும் நாங்கள் காணவில்லை. திடீரென மேகம் திரண்டு மழை பொழிந்தது. அப்போது எங்களுக்கு நபி(ஸல்) வர்கள் தொழுகை நடத்தினார்கள். நபி(ஸல்) அவர்களின் நெற்றி மீதும் மூக்கு மீதும் களிமண், தண்ணீரின் அடையாளத்தை கண்டேன். அவர்கள் கண்ட கனவை மெய்ப்பிப்பதாக இது அமைந்தது என்று குறிப்பிட்டார்கள்.

(தொழும் முன்) ஆடையைச் சரி செய்வது, இறுக்கமாகக் கட்டிக் கொள்வது் மறைவிடங்கள் தெரிந்து விடாமலிருப்பதற்காக ஆடையைச் சேர்த்துப் பிடித்துக் கொள்வது.

ஹதீஸ் 814. ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) கூறினார்கள்.

(நபி(ஸல்) அவர்கள் காலத்து) மக்கள் சிறிதாக இருந்த தங்களின் கீழாடையைப் பிடரிகளின்

மீது கட்டிக் கொண்டு நபி(ஸல்) அவர்களுடன் தொழுபவர்களாக இருந்தனர். (ஸஜ்தாவின் போது) ஆண்கள் ஸஜ்தாச் செய்து உட்காரும் வரை நீங்கள் உங்கள் தலையை உயர்த்த வேண்டாம் என்று பெண்களுக்குக் கூறப்பட்டிருந்தது.

### தலை மயிர் தரையில் படாதவாறு தடுக்கக் கூடாது.

ஹதீஸ் 815. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

ஏழு உறுப்புகள் படுமாறு ஸஜ்தாச் செய்யும் படி நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடப் பட்டார்கள். ஆடையோ முடியோ (தரையில் படாதவாறு) தடுக்கக் கூடாது என்றும் கட்டளையிடப் பட்டார்கள்.

### தொழும்போது ஆடை தரையில் படுவதைத் தடுக்கக் கூடாது.

ஹதீஸ் 816. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்:

ஏழு உறுப்புகள் படுமாறு ஸஜ்தாச் செய்யும் படி நான் கட்டளையிடப் பட்டுள்ளேன். ஆடையோ முடியோ (தரையில் படாதவாறு) தடுக்கக் கூடாது என்றும் கட்டளையிடப் ப்டடுள்ளேன்.

என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

### ஸஜ்தாவில் துதிப்பதும் பிரார்த்திப்பதும்.

ஹதீஸ் 817. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் ருகூவிலும் ஸஜ்தாவிலும் ஸுப்ஹான கல்லாஹும்ம ரப்பனா வபிஹம்திக அல்லாஹும்ம:பிர்லி (இறைவா! உன்னைப் போற்றுகிறோம் இறைவா! என்னை மன்னித்து விடு) என்று அதிகமதிகம் கூறுவார்கள். (இதாஜாஅ... என்ற அத்தியாயத்தில் கூறப்படும்) குர்ஆனின் கட்டளையை இதன் மூலம் செயல் படுத்துவார்கள்.

### இரண்டு ஸஜ்தாக்களுக்கும் இடைப்பட்ட நேரம்.

ஹதீஸ் 818. அபூ கிலாபா கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுது காட்டியதை உங்களுக்கு நான் செய்து காட்டட்டுமா? என்று மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) தம் தோழர்களிடம் கேட்டார்கள். இது எந்தத் தொழுகையின் நேரமாகவும் இருக்கவில்லை. (அவர்கள் தொழுது காண்பித்த போது) அவர்க ளநின்றார்கள். பின்னர் ருகூவு செய்தார்கள். தக்பீர் கூறினார்கள். பின்பு தலையை உயர்த்திச் சிறிது நேரம் நின்றார்கள். பின்பு ஸஜ்தாச் செய்து, பின்பு தலையை உயர்த்திச் சிறிது நேரம் இருந்தார்கள். இதோ நம்முடைய பெரியார் அம்ர் இப்னு ஸலமா தொழுவது போன்றே அந்த நபித்தோழர் தொழுது காண்பித்தார்கள்.

அந்தப் பெரியவர் அம்ர் இப்னு ஸலமா தொழும் போது மூன்றாம் ரக்அத்திலோ, நான்காம் ரக்அத்திலோ உட்கார்ந்து விடடு எழுபவராக இருந்தார்கள். ஆனால், மக்கள் அவ்வாறு செய்வதை என்னால் காண முடியவில்லை என்று அய்யூப் என்பவர் குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 819. மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து (சில நாள்கள்) தங்கினோம். (நாங்கள் ஊர் திரும்பும் போது) நீங்கள் உங்கள் குடும்பத்தாரிடம் சென்றதும், இன்னின்ன தொழுகைகளை இன்னின்ன நேரத்தில் தொழுங்கள். தொழுகை நேரம் வந்ததும் உங்களில் ஒருவர் பாங்கு சொல்லட்டும். உங்களில் முதியவர் உங்களுக்கு இமாமத் செய்யட்டும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 820. பராவு இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் ருகூவும் ஸுஜூதும் இரண்டு ஸஜ்தாக்களுக்கு இடைப்பட்ட நேரமும் ஏறக்குறைய ஒரே அளவாக இருந்தன.

ஹதீஸ் 821. ஸாபித் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்தியது போல் நான் உங்களுக்குத் தொழுகை நடத்துவதில் எந்த குறையும் வைக்க மாட்டேன் என்று அனஸ்(ரலி) கூறினார். அவர்கள், ருகூவிலிருந்து தலையை உயர்த்தி, அவர்கள் மறந்துவிட்டார்களோ என்று கூறுமளவு நிற்பார்கள். மேலும் இரண்டு ஸஜ்தாக்களுக்கிடையில் அவர்கள் மறந்துவிட்டார்களோ என்று நினைக்குமளவு அமர்ந்திருப்பார்கள். அனஸ்(ரலி) செய்தது போல் உங்களிடம் நான் காணவில்லை.

### ஸஜ்தாவின்போது கைகளை விரிக்கலாகாது.

நபி(ஸல்) அவர்கள் கைகளை விரித்துக் கொள்ளாமலும் மூடிக் கொள்ளாமலும் ஸஜ்தாச் செய்தார்கள் என்று அபூ ஹுமைத்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 822. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்:

ஸஜ்தாவில் நடுநிலையைக் கடைபிடியுங்கள். உங்களில் எவரும் நாய் விரிப்பதைப் போல் கைகளை விரிக்கக் கூடாது.

என அனஸ்(ரலி) கூறினார்கள்

### ஒற்றையான ரக்அத்களை முடித்ததும் உட்கார்ந்துவிட்டு எழுவது.

ஹதீஸ் 823. மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுததை பார்த்திருக்கிறேன். அவர்கள் தொழுகையின் ஒற்றைப் படையிலான ரக்அத்களின்போது உட்காராமல் (அடுத்த ரக்அத்துக்காக) ஏழமாட்டார்கள்.

### ஒருரக்அத்தை முடித்து அடுத்த ரக்அத்துக்காக எப்படி எழுவது?

ஹதீஸ் 824. அபூ கிலாபா கூறினார்கள்.

எங்களுடைய பள்ளி வாசலுக்கு மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) வந்து இப்போது நான் தொழ விரும்பாவிட்டாலும்) நபி(ஸல்) அவர்களை எவ்வாறு தொழக் கண்டேனோ அவ்வாறு உங்களுக்கு நான் தொழுகை நடத்துகிறேன் என்று கூறிவிட்டு எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

நான் அபூ கிலாபாவிடம் அவரின் தொழுகை எவ்வாறு இருந்தது என்று கேட்டேன். அதற்கு அபூ கிலாபா (அம்ர் இப்னு ஸலமா என்ற) இந்த முதியவர் தொழுதது போன்று இருந்தது எனக் கூறினார்கள். அந்த முதியவர் தக்பீரைப் பூரணமாகக் கூறுவார். முதல் ரக்அத்திலிருந்து இரண்டாவது ரக்அத்திற்காக ஸுஜூதிலிருந்து எழும்போது இருப்பில் அமர்ந்து பின்னர் நிலைக்கு வருவார் என அய்யூப் கூறினார்.

### இரண்டாம் ஸஜ்தாவிலிருந்து எழும்போது தக்பீர் கூற வேண்டும்.

இரண்டாம் ஸஜ்தாவிலிருந்து எழும்போது இப்னுஸ் ஸுபைர் தக்பீர் கூறுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 825. ஸயீத் இப்னு அல்ஹாரிஸ் கூறினார்:

எங்களுக்கு அபூ ஸயீத்(ரலி) தொழுகை நடத்தினார்கள். அப்போது ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்தும் போதும் ஸஜ்தாச் செய்யும் போதும் ஸஜ்தாவிலிருந்து எழும் போதும் இரண்டாம் ரக்அத்திலிருந்து எழும் போதும் சப்தமாகத் தக்பீர் கூறினார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறே செய்ததை நான் பார்த்துள்ளேன் என்றும் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 826. முதர்ரிப் கூறினார்கள்.

நானும், இம்ரானும் அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களின் பின்னே தொழுதோம். அவர்கள் ஸஜ்தாவின்போது தக்பீர் கூறினார்கள். (ஸஜ்தாவிலிருந்து எழும் போதும் தக்பீர் கூறினார்கள்.) இரண்டாம் ரக்அத்திலிருந்து எழும் போதும் தக்பீர் கூறினார்கள். ஸலாம் கொடுத்து முடித்ததும் இம்ரான் (ரலி) என் கையைப் பிடித்து, நிச்சயமாக இவர் முஹம்மத்(ஸல்) அவர்களின் தொழுகை போன்றே தொழுது காட்டியுள்ளார் என்றோ முஹம்மத்(ஸல்) அவர்களின் தொழுகையை இவர் எனக்கு நினைவு படுத்திவிட்டார் என்றோ குறிப்பிட்டார்கள்.

## தஷஹ்ஹுதின்போது உட்காரும் முறை.

உம்முத் தர்தா(ரலி) தம் தொழுகையில் ஆண்கள் உட்காருவது போன்றே உட்கார்வார்கள். அவர்கள் மார்க்கச் சட்டங்களை நன்கு விளங்கயி பெண்மணியாக இருந்தார்கள்.

ஹதீஸ் 827. அப்துல்லாஹ் கூறினார்கள்.

(என்னுடைய தந்தை) இப்னு உமர்(ரலி) தொழுகையில் உட்காரும்போது சம்மணமிட்டு உட்காருவதை பார்த்தேன். சிறு வயதினனாக இருந்த நானும் அவ்வாறே உட்கார்ந்தேன். இதைக் கண்ட இப்னு உமர்(ரலி) தொழுகையில் உட்காரும் முறை என்னவென்றால் உன் வலது காலை நாட்டி வைத்து இடது காலைப் படுக்கை வசமாக வைப்பது தான் என்று கூறினார்கள். அப்படியானால் நீங்கள் மட்டும் சம்மணமிட்டு அமர்கிறீர்களே என்று கேட்டேன். அதற்கு இப்னு உமர்(ரலி) என் கால்கள் என்னைத் தாங்காது என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 828. முஹம்மத் இப்னு அம்ர் கூறினார்:

நான் சில நபித் தோழர்களுடன் அமர்ந்திருந்தேன். நபி(ஸல்) அவர்களின் தொழுகையைப் பற்றி அப்போது பேசிக் கொண்டோம். அங்கிருந்த அபூ ஹுமைத் அஸ்ஸாயிதீ(ரலி) நபி(ஸல்) அவர்களின் தொழுகை பற்ற உங்களில் நான் மிகவும் அறிந்திருக்கிறேன். நபி(ஸல்) அவர்கள் தக்பீர் கூறும்போது தம் இரண்டு கைகளையும் தம் தோள் புஜங்களுக்கு நேராக உயர்த்துவார்கள். ருகூவு செய்யும்போது இரண்டு கைகளையும் மூட்டுக் கால்களின் மீது படியச் செய்வார்கள். பின்னர் தம் முதுகை (வளைவு இன்றி) நேராக்குவார்கள். (ருகூவிலிருந்து) தலையை உயர்த்தும்போது ஒவ்வொரு மூட்டும் அதனுடைய இடத்துக்கு வரும் அளவுக்கு நிமிர்வார்கள். அவர்கள் ஸஜ்தாச் செய்யும்போது தம் கைகளை விரிக்காமலும் மூடிக் கொள்ளாமலும் வைப்பார்கள். தம் கால் விரல்களின் முனைகளைக் கிப்லாவை நோக்கச் செய்வார்கள். இரண்டாவது ரக்அத்தில் அமரும்போது இடது கால் மீது அமர்ந்து வலது காலை நாட்டி வைப்பார்கள். கடைசி ரக்அத்தில் உட்காரும்போது இடது காலை (வலப் புறமாகக்) கொண்டு வந்து, வலது காலை நாட்டி வைத்துத் தம் இருப்பிடம் தரையில் படியுமாறு உட்கார்வார்கள் எனக் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் இரண்டாம் ரக்அத்தில் உட்காரமலே எழுந்துவிட்டு மீண்டும் உட்காரவில்லை. எனவே முதல் இருப்பு கட்டாயமானதல்ல.

ஹதீஸ் 829. அப்துல்லாஹ் இப்னு புஹைனா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை லுஹர் தொழுகை நடத்தினார்கள். அப்போது இரண்டாம் ரக்அத்தில் உட்காரமலே எழுந்துவிட்டார்கள். மக்களும் அவர்களுடன் எழுந்துவிட்டார்கள். தொழுகையை முடிக்கும் தருணத்தில், நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுக்கப் போகிறார்கள் என்று மக்கள் எதிர்பார்த்திருந்தபோது,உட்கார்ந்த நிலையிலேயே தக்பீர் கூறினார்கள். ஸலாம் கொடுப்பதற்கு முன் இரண்டு ஸஜ்தாக்கள் செய்துவிட்டுப் பின்னர் ஸலாம் கொடுத்தார்கள்.

## முதல் தஷஹ்ஹுத்

ஹதீஸ் 830. அப்துல்லாஹ் இப்னு புஹைனா (ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை எங்களுக்கு லுஹர் தொழுகை நடத்தினார்கள். அப்போது ஓர் இருப்பு கடமையான நிலையில் (இரண்டாம் ரக்அத்தில் உட்காராமலே) எழுந்துவிட்டார்கள். தொழுகையின் இறுதியை அடைந்ததும உட்கார்ந்த நிலையில் இரண்டு ஸஜ்தாக்கள் செய்தனர்.

## கடைசித் தஷஹ்ஹுத்

ஹதீஸ் 831. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார்கள்.

நாங்கள்நபி(ஸல்) அவர்களின் பின்னால் தொழும்போது அஸ்ஸலாமு அலா ஜிப்ரீல், வமீ காயீல், அஸ்ஸலாமு அலா ஃபுலான் என்று கூறுபவர்களாக இருந்தோம். நபி(ஸல்) அவர்கள் எங்களை நோக்கித் திரும்பி, நிச்சயமாக அல்லாஹ்தான் ஸலாம் ஆக இருக்கிறான். உங்களில் ஒருவர் தொழும்போது காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுக்களும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே உங்களின் மீது ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் பரகத்தும் ஏற்படட்டுமாக! எங்களின் மீது அல்லாஹ்வின் நல்லடியார்கள் அனைவர் மீதும் ஸலாம் உண்டாகட்டும் என்று கூறட்டும். இதை நீங்கள் கூறினால் வானம் பூமியிலுள்ள அனைத்து நல்லடியார்களுக்கும் ஸலாம் கூறினார்கள் என அமையும். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்று உறுதியாக நம்புகிறேன். மேலும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாக இருக்கிறார்கள் என்று உறுதியாக நம்புகிறேன் என்றும் கூறட்டும் எனக் கூறினார்கள்.

## ஸலாம் கொடுப்பதற்கு முன் ஓத வேண்டிய துஆ.

ஹதீஸ் 832. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

இறைவா! கப்ருடைய வேதனையைவிட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். தஜ்ஜாலின் குழப்பத்தைவிட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். வாழும் போதும் மரணிக்கும் போதும் ஏற்படும் குழப்பத்தைவிட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். பாவங்களைவிட்டும் கடனைவிட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன் நபி(ஸல்) அவர்கள் தொழுகையில் துஆச் செய்தவார்கள். தாங்கள் கடனைவிட்டும் அதிமாகப் பாதுகாப்புத் தேடும் காரணம் என்ன? என்று ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டபோது ஒரு மனிதன் கடன் படும்போது பொய் பேசுகிறான் வாக்களித்துவிட்டு அதை மீறுகிறான் நபி(ஸல்) அவர்கள் விளக்கமளித்தார்கள்.

ஹதீஸ் 833. ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் தொழுகையில் தஜ்ஜாலின் குழப்பத்தைவிட்டும் பாதுகாப்புத் தேடுவதை செவியுற்றுள்ளேன்.

ஹதீஸ் 834. அபூ பக்ர் (ரலி) கூறினார்கள்.

என்னுடைய தொழுகையில் நான் கேட்பதற்கு ஒர துஆவை எனக்குக் கற்றுத் தாருங்கள் நபி(ஸல்) அவர்களிடம் நான் கேட்டபோது இறைவா! எனக்கு நான் பெருமளவு அநீதி இழைத்து விட்டேன். உன்னைத் தவிர பாவங்களை எவரும் மன்னிக்க முடியாது. எனவே மன்னிப்பு வழங்குவாயாக! மேலும் எனக்கு அருள் புரிவாயாக! நிச்சயமாக நீ மன்னிப்பவனும் அருள் புரிபவனுமாவாய் என்று சொல்வீராக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தஷஹ்ஹுதுக்குப் பின் விரும்பிய துஆவைக் கேட்டுக் கொள்ளலாம் அது கட்டாயமில்லை.

ஹதீஸ் 835. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருக்கும்போது அடியார்கள் சார்பாக அல்லாஹ்வுக்கு ஸலாம் உண்டாகட்டும். இன்னின்னாருக்கு ஸலாம் உண்டாகட்டுமாக என்று கூறிக் கொண்டிருந்தோம். (இதனை அறிந்த நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் மீது ஸலாம் உண்டாகட்டுமாக என்று கூறாதீர்கள். ஏனெனில் அல்லாஹ்வே ஸலாமாக இருக்கிறான். எனினும் காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே உங்களின் மீது ஸலாமும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் பரகத்தும் ஏற்படட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் ரஹ்மத்தும் பரகத்தும் ஏற்படட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் அனைவர் மீதும் ஸலாம் உண்டாகட்டும் என்று கூறட்டும். இதை நீங்கள் கூறினால் வானம் பூமியிலுள்ள அனைத்து நல்லடியார்களுக்கும் ஸலாம் கூறினார்கள் என அமையும். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்று உறுதியாக நம்புகிறேன். மேலும் முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாக இருக்கிறார்கள் என்று உறுதியாக நம்புகிறேன் என்று கூறுங்கள். இவ்வாறு கூறும்போது வானம் பூமியிலுள்ள எல்லா அடியாருக்கும் நீங்கள் ஸலாம் கூறியவர்களாவீர்கள். இதன் பிறகு உங்களுக்கு விருப்பமாக துஆவைத் தேர்ந்தெடுத்து அதன் மூலம் பிரார்த்தியுங்கள் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தொழுது முடிக்கும் வரை நெற்றி, மூக்கில் படிந்த மண்ணைத் துடைக்காமலிருப்பது.

பின்வரும் ஹதீஸின் அடிப்படையில் தொழும்போது நெற்றியைத் துடைக்கலாகாது என்று ஹுமைதீ கூறுகிறார்.

ஹதீஸ் 836. அபூ ஸயீதுல் குத்ரீ(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தண்ணீரும் மண்ணும் கலந்த இடத்தில் ஸுஜூது செய்வதை பார்த்தேன். அவர்களின் நெற்றியில் மண் படிந்திருந்ததையும் கண்டேன்.

## ஸலாம் கொடுப்பது.

ஹதீஸ் 837. உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுத்தவுடன் பெண்கள் எழுந்து விடுவார்கள். நபி(ஸல்) அவர்கள் எழுவதற்கு முன் சற்று நேரம் அமர்ந்திருந்தார்கள்.

பெண்கள் ஆண்களைச் சந்திக்காத வகையில் திரும்பிச் செல்வதற்காக நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு தங்கியிருந்ததாக கருதுகிறேன் என்று இப்னு ஷிஹாப் குறிப்பிடுகிறார்.

## இமாம் ஸலாம் கொடுக்கும் போதே மற்றவர்களும் ஸலாம் கொடுப்பது.

இமாம் ஸலாம் கொடுக்கும்போது பின்னால் தொழுபவர்களும் ஸலாம் கொடுப்பதை இப்னு உமர்(ரலி) விரும்பக் கூடியவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 838. இத்பான்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுவோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுக்கும்போது நாங்களும் ஸலாம் கொடுப்போம்.

## இமாமுக்குப் பதில் ஸலாம் கூறாமல் தொழுகைக்காக மட்டும் ஸலாம் கொடுப்பது.

ஹதீஸ் 839 , 840. இத்பான் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம், நபி அவர்களே! நான் என் சமூகத்தினருக்குத் தொழுகை

நடத்துபவனாக இருக்கிறேன். என் பார்வை குறைந்துவிட்டது. மழைக் காலங்களில் எனக்கும என் சமூகத்தினரின் பள்ளிவாயிலுக்குமிடையே தண்ணீர் ஓடுகிறது. எனவே தாங்கள் என் இல்லத்திற்கு வந்து ஓர் இடத்தில் தொழ வேண்டும். அவ்விடத்தை (என்னுடைய தொழுமிடமாக) நான் ஆக்கிக் கொள்ள விரும்புகிறேன் என்றேன். இன்ஷா அல்லாஹ் செய்கிறேன் நபி(ஸல்) அவர்கள் கூறி வ்டடு மறுநாள் நண்பகலில் அபூ பக்ர்(ரலி) உடன் வந்து (வீட்டின் உள்ளே வர) அனுமதி கோரினர். அனுமதித்தேன். வீட்டில் நுழைந்ததும் உட்காரமலேயே உம்முடைய வீட்டில் எந்த இடத்தில் நான் தொழ வேண்டுமென விரும்புகிறீர்? என்று கேட்டார்கள். வீட்டின் ஒரு பகுதியை நான் அவர்களுக்குக் காட்டினேன். நபி(ஸல்) அவர்கள் அவ்விடத்தில் நின்றார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் வரிசையாக நின்றோம். பின்னர் ஸலாம் கொடுத்தார்கள். அவர்கள் ஸலாம் கொடுத்தபோது நாங்களும் ஸலாம் கொடுத்தோம்.

அல்லாஹ்வின் பொருத்தம் நாடி லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறுகிறவரின் மீது நரகத்தை இறைவன் ஹராமாக்கிவிட்டான் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தொழுகைக்குப் பின் ஓத வேண்டிய திக்ருகள்.

ஹதீஸ் 841. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்கள்.

மக்கள் கடமையான தொழுகையை முடிக்கும்போது சப்தமாகத் திக்ரு செய்யும் நடைமுறை நபி(ஸல்) அவர்கள் காலத்தில் இருந்தது. இந்த திக்ரின் சப்தத்தைக் கேட்டு மக்கள் தொழுகையை முடித்துவிட்டார்கள் என்பதை நான் அறிந்து கொள்வேன்.

ஹதீஸ் 842. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகையை முடித்துவிட்டார்கள் என்பதைத் தக்பீர் மூலம் நான் அறிந்து கொள்வேன்.

ஹதீஸ் 843. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஏழை மக்கள் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து பொருளாதாரச் செல்வம் பெற்றவர்கள் உயர்வான பதவிகளையும் நிலையான பாக்கியத்தையும் பெற்றுக் கொள்கிறார்கள். நாங்கள் தொழுவது போன்றே அவர்களும் தொழுகிறார்கள். மேலும் நாங்கள் நோன்பு வைப்பது போன்றே அவர்களும் நோன்பு நோற்கின்றனர். ஆயினும் அவர்களுக்குப் பொருளாதாரச் சிறப்பு இருப்பதனால் தங்கள் பொருளாதாரத்தின் மூலம் ஹஜ் செய்கின்றனர்உம்ராச் செய்கின்றனர் அறப்போரிடுகின்றனர் தர்மமும் செய்கின்றனர். (ஏழைகளாகிய நாங்கள் இவற்றைச் செய்ய முடிவதில்லை) என்று முறையிட்டனர்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் நான் உங்களுக்கு ஒரு காரியத்தைக் கற்றுத் தருகிறேன். அதை நீங்கள் செய்து வந்தால் உங்களை முந்திவிட்டவர்களை நீங்களும் பிடித்து விடுவீர்கள். உங்களுக்குப் பிந்தி வருபவர்கள் உங்களைப் பிடிக்க இயலாது. நீங்கள் எந்த மக்களுடன் வாழ்கிறீர்களோ அவர்களும அந்தக் காரியத்தைச் செய்தால் தவிர அவர்களில் நீங்கள் மிகச் சிறந்தவராவீர்கள். (அந்த காரியமாவது) ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் 33முறை இறைவனைத் துதியுங்கள் 33 முறை இறைவனைப் புகழுங்கள் 33 முறை இறைவனைப் பெருமைப படுத்துங்கள் என்று கூறினார்கள். நாங்கள் இது விஷயத்தில் பலவாறாகக் கூறிக் கொண்டோம். சிலர் ஸுப்ஹானல்லாஹ் 33 முறையும், அல்ஹம்துலில்லாஹ் 33 முறையும் அல்லாஹு அக்பர் 33 முறையும் கூறலானோம். நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று இது பற்றிக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஸுப்ஹானல்லாஹி வல் ஹம்து லில்லாஹி வல்லாஹு அக்பர் என்று 33 முறை கூறுங்கள். இதனால் ஒவ்வொரு வார்த்தையையும் 33 முறை

கூறினார்கள் என அமையும். என்று விளக்கம் தந்தார்கள்.

ஹதீஸ் 844. முகீரா இப்னு ஷுஅபா (ரலி) கூறினார்கள்.

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர எவருமில்லை. அவன் ஏகன், அவனுக்கு நிகராக எவருமில்லை. ஆட்சி அவனுக்கு உரியது. புகழும் அவனுக்கு உரியது. அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுள்ளவன். இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவன் இல்லை. நீ தடுத்தலைக் கொடுப்பவன் இல்லை. எந்த மதிப்புடையவனும் உன்னிடம் எந்த பயனுமளிக்க முடியாது நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு கடமையான தொழுகைக்குப் பின்பும் கூறக்கூடியவர்களாக இருந்தனர்.

## ஸலாம் கொடுத்ததும் இமாம் மக்களை நோக்கித் திரும்புவது.

ஹதீஸ் 845. ஸமுரா இப்னு ஜுன்துப் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தொழுகையை முடித்ததும் எங்களை நேராக நோக்கித் திரும்புவார்கள்.

ஹதீஸ் 846. ஸைத் இப்னு காலித் அல்ஜுஹனீ (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஹுதைபிய்யா எனுமிடத்தில் எங்களுக்கு ஸுபுஹ் தொழுகை நடத்தினார்கள். அன்றிரவு மழை பெய்திருந்தது. தொழுது முடித்ததும் மக்களை நோக்கி, உங்களுடைய இறைவன் என்ன கூறினான் என்பதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள். அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே இதைப் பற்றி நன்கு அறிந்தவர்கள் என்று நாங்கள் கூறினோம்.

என்னை விசுவாசிக்கக் கூடியவர்களும் என்னை நிராகரிக்கக் கூடியவர்களுமான என் அடியார்கள் இரண்டு பிரிவுகளாக ஆனார்கள். அல்லாஹ்வின் கருணையினாலும் அவனுடைய அருட்கொடையினாலும் நமக்கும் மழை பொழிந்தது எனக் கூறுபவர்கள் என்னை நம்பி, நட்சத்திரங்களை மறுத்தவர்களாவர். இந்த நட்சத்திரத்தினால் எங்களுக்கு மழை பொழிந்தது எனக் கூறுபவர்கள் என்னை நிராகரித்து, நட்சத்திரங்களை விசுவாசித்தவர்களாவர் என்று இறைவன் கூறினான் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 847. அனஸ் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (இஷாத்) தொழுகையைப் பாதி இரவு வரை தாமதப் படுத்திப் பின்னர் எங்களிடம் வந்தார்கள். தொழுது முடித்ததும் எங்களை நேராக நோக்கி நிச்சயமாக மக்கள் தொழுதுவிட்டு உறங்கிவிட்டனர். நீங்கள் தொழுகையை எதிர்பார்த்திருப்பதால் தொழுகையில் இருப்பவர்களாகவே ஆவீர்கள் என்று கூறினார்கள்.

## ஸலாம் கொடுத்த பின் தொழுத இடத்திலேயே இமாம் அமர்ந்திருப்பது.

ஹதீஸ் 848. நாஃபிவு கூறினார்கள்.

இப்னு உமர் (ரலி) கடமையான தொழுகையைத் தொழுத இடத்திலேயே (ஸுன்னத்தான தொழுகைகளைத்) தொழுபவர்களாக இருந்தனர். அபூ பக்ர் (ரலி) அவர்களின் பேரர் காஸிம் இப்னு முஹம்மத் இவ்வாறு தொழுதுள்ளனர். இமாம் கடமையான தொழுகையைத் தொழுத இடத்தில் உபரியான தொழுகைகளைத் தொழக் கூடாது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்துள்ளனர். அது ஆதாரப் பூர்வமானது அன்று.

ஹதீஸ் 849. உம்மு ஸலமா (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஸலாம் கொடுத்ததும் அதே இடத்திலேயே சிறிது நேரம் இருப்பார்கள்.

பெண்கள் தம் இல்லம் திரும்பிச் செல்வதற்காகவே அப்படித் தங்கியுள்ளனர் என்று நாம்

கருதுகிறோம் என இப்னு ஷிஹாப் குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 850. உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுப்பார்கள். அவர்கள் இல்லம் செல்வதற்கு முன் பெண்கள் தம் இல்லங்களுக்குச் செல்வார்கள்.

## தொழுகை நடத்திவிட்டு, ஏதேனும் தேவை நினைவுக்கு வந்தவுடன் மக்களைத் தாண்டி இமாம் செல்வது.

ஹதீஸ் 851. உக்பா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றி மதீனாவில் நான் அஸர் தொழுதேன். அவர்கள் ஸலாம் கொடுத்ததும் மக்களைத் தாண்டி தம் மனைவியரில் ஒருவரின் இல்லத்துக்கு வேகமாகச் சென்றார்கள். அவர்களின் விரைவைக் கண்டு மக்கள் திடுக்குற்றனர். உடனே நபி(ஸல்) அவர்கள் திரும்ப வந்து, தாம் விரைவாகச் சென்றது பற்றி மக்கள் வியப்பில் ஆழ்ந்திருப்பதைக் கண்டார்கள். என்னிடம் இருந்த (ஜகாத் நிதியான) வெள்ளிக் கட்டி ஒன்று நினைவுக்கு வந்தது. அது என் கவனத்தைத் திருப்பி விடுவதை நான் விரும்பவில்லை. அதைப் பங்கீடு செய்யுமாறு கூறிவிட்டு வந்தேன் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## தொழுது முடித்த பின் வலப்புறமாகவும் இடப்புறமாகவும் திரும்பி அமர்ந்து கொள்வது.

அனஸ்(ரலி) தம் வலப்புறமும் இடப்புறமும் திரும்பி உட்காரும் வழக்கமுடையவர்களாக இருந்தனர். வலப்புறம் மட்டுமே திரும்புவதை வலியுறுத்தக் கூடியவர்களைக் குறை கூறுபவர்களாகவும் இருந்தனர்.

ஹதீஸ் 852. இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்கள்.

வலப்புறம் தான் திரும்ப வேண்டும் என்று எண்ணிக் கொள்வதன் மூலம் தன்னுடைய தொழுகையில் ஷைத்தானுக்குச் சிறிதளவும் இடமளித்திட வேண்டாம். நபி(ஸல்) அவர்கள் பல சமயங்களில் தம் இடப்புறம் திரும்பக் கூடியவர்களாக இருந்தனர்.

## பச்சை வெங்காயம், பூண்டு போன்றவற்றை உண்ணுதல்.

பசியின் காரணமாகவோ வேறு காரணங்களுக்காகவோ யாரேனும் வெங்காயம், பூண்டு ஆகியவற்றை உண்டால் நம்முடைய பள்ளிவாசலை அவர் நெருங்க வேண்டாம் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 853. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

இந்த (வெங்காயச்) செடியிலிருந்து சாப்பிடுகிறவர் நம்முடைய பள்ளியை நெருங்க வேண்டாம் என்று கைபர் போரின்போது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 854. ஜாபிர்(ரலி) கூறினார்கள்.

இந்த (வெங்காயச்) செடியிலிருந்து சாப்பிடுகிறவர் நம்முடைய பள்ளிக்கு வர வேண்டாம் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதை ஜாபிர்(ரலி) வாயிலாக அறிவிக்கும் அதா∴ இடம் எதனால் இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்? என்று இப்னு ஜுரைஜ் கேட்டதற்கு சமைக்கப் படாத பச்சை வெங்காயத்தையே நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டிருக்க வேண்டும் என்று அதா∴ விளக்கமளித்தார்.

மற்றோர் அறிவிப்பில் அதன் துர்வாடையையே நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டிருக்க வேண்டும் என்று அதா∴ கூறினார்கள் எனக் காணப்படுகிறது.

ஹதீஸ் 855. ஜாபிர்(ரலி) கூறினார்கள்.

பூண்டு, வெங்காயம் ஆகியவற்றைச் சாப்பிடுகிறவர் நம்முடைய பள்ளியைவிட்டு விலம் அவரின் இல்லத்திலேயே அமர்ந்து கொள்ளட்டும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் பல விதமான துர்வாடையுடைய தாவரங்கள் கொண்டு வரப்பட்டன. அது பற்றி நபி(ஸல்) அவர்கள் விபரம் கேட்டபோது அதிலுள்ள கீரை வகைகள் பற்றி விளக்கம் தரப்பட்டது.

தம்முடன் இருந்த ஒரு தோழருக்கு அதைக் கொடுக்குமாறு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்தத் தோழர் சாப்பிட விரும்பாமலிருப்பதைக் கண்டபோது நீர் உண்ணுவீராக! நீர் சந்திக்காத (பல விதமான) மக்களிடம் நான் தனிமையில் உரையாட வேண்டியுள்ளது. (இதன் காரணமாகவே நான் சாப்பிடவில்லை.) நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 856.. அப்துல் அஸீஸ் கூறினார்கள்.

ஒருவர் அனஸ்(ரலி) அவர்களிடம் வெங்காயம் பற்றி நபி(ஸல்) அவர்கள் என்ன கூறினார்கள் என்று கேட்டதற்கு அனஸ்(ரலி) அச்செடியிலிருந்து (விளைவதை) உண்ணுகிறவர் நம்மை நெருங்க வேண்டாம் அல்லது நம்முடன் தொழ வேண்டாம் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் குறிப்பிட்டார்கள்.

## சிறுவர்கள் உளூச் செய்வதும் உளூவும் குளிப்பும் கடமையாவதும் ஜமாஅத், பெருநாள்கள், ஜனாஸா ஆகிய தொழுகைகளில் அவர்கள் பங்கெடுப்பதும் அவர்கள் அணி வகுத்து நிற்பதும்.

ஹதீஸ் 857. ஸுலைமான் ஷைபானி கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் தனியாக இருந்த ஒரு கப்ருக்கருகே சென்று (ஜனாஸாவுக்காகத்) தொழுகை நடத்தினார்கள். மக்களும் அணி வகுத்து நின்றனர் நபி(ஸல்) அவர்களுடன் அப்போது சென்றிருந்த ஒருவர் எனக்குக் கூறினார் என்று ஷஃபீ சொன்னார். அவரிடம் நான் அபூ அம்ரே உமக்கு இதைக் கூறியவர் யார்? என்று கேட்டேன். இப்னு அப்பாஸ்(ரலி) என்று அவர் பதில் கூறினார்.

ஹதீஸ் 858. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்:

ஜும்ஆ நாளில் குளிப்பது, பருவம் அடைந்த ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 859. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

என்னுடைய சிறிய தாயார் மைமூனா(ரலி) வீட்டில் நான் ஓரிரவு தங்கினேன். இரவில் ஒரு பகுதி கழிந்ததும் நபி(ஸல்) (உறக்கத்திலிருந்து) விழித்தார்கள். பின்னர் எழுந்து சென்று தொங்கவிடப்பட்டிருந்த தோல் பையிலிருந்து சுருக்கமாக உளூச் செய்தார்கள். பின்னர் எழுந்து தொழலானார்கள். நானும் எழுந்து நபி(ஸல்) செய்தது போன்று உளூச் செய்து அவர்களின் இடப்புறமாக நின்று கொண்டேன். அவர்கள் என்னைப் பிடித்துத் தம் வலப்புறமாக நிறுத்தினார்கள். பின்னர் அல்லாஹ் நாடியதைத் தொழுதுவிட்டு குறட்டைவருமளவு படுத்துறங்கினார்கள். அவர்களிடம் (ஸுப்ஹ்) தொழுகை பற்றி முஅத்தின் அறிவிப்பதற்கு வந்தபோது அவருடன் தொழுகைக்காகச் சென்றார்கள். (மீண்டும்) உளூச் செய்யாமலே தொழுகை நடத்தினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் கண்கள் உறங்கும் உள்ளம் உறங்காது என்று சிலர் கூறுகிறார்களே

என்று அம்ரிடம் கேட்டேன். அதற்கவர், நபிமார்களின் கனவுகள் வஹீயாகும் என்று கூறிவிட்டு,மகனே! உன்னை நான் அறுப்பதாகக் கனவு கண்டேன். (திருக்குர்ஆன் 37:102) என்ற வசனத்தை ஓதிக் காட்டினார்கள் என சுஃப்யான் கூறுகிறார்.

ஹதீஸ் 860. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

என்னுடைய பாட்டி முலைக்கா(ரலி) விருந்து தயாரித்து நபி(ஸல்) அவர்களை (விருந்துண்ண) அழைத்தார். நபி(ஸல்) அவர்கள் விருந்துண்டார்கள். பின்னர், எழுங்கள் உங்களுக்கு நான் தொழுகை நடத்துகிறேன் என்றார்கள். நான் புழக்கத்தினால் கறுத்துப் போய்விட்ட ஒரு பாயருகே சென்று தண்ணீரால் அதைப் பதப்படுத்தினேன். நபி(ஸல்) அவர்கள் (இமாமாக) நின்றார்கள். என்னுடன் (எங்கள் வீட்டில் வளரும்) அனாதைச் சிறுவரும் நின்றார். பாட்டி எங்களுக்குப் பின்னால் நின்றார். நபி(ஸல்) எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள்.

ஹதீஸ் 861. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நான் ஒரு பெட்டைக் கழுதையின் மேல் ஏறி வந்தேன். அப்போது நான் பருவம் அடையும் வயதை நெருங்கியவனாம் இருந்தேன். நபி(ஸல்) அவர்கள் மினாவில் (முன்னால்) சுவர் எதுவுமின்றித் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். நான் வரிசைகளுக்கிடையே கடந்து சென்று (கழுதையிலிருந்து) இறங்கிக் கழுதையை மேய்வதற்காக அவிழ்த்து விட்டேன். பின்னர் விரிசையில் சேர்ந்து கொண்டேன். இது விஷயமாக எவரும் என்னைக் கண்டிக்கவில்லை.

ஹதீஸ் 862. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை ஒரு நாள் தாமதப் படுத்தினார்கள். பெண்களும் சிறுவர்களும் உறங்கிவிட்டனர் என்று உமர்(ரலி) கூறியதும் நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து இந்தப்பூமியில் உங்களைத் தவிர வேறு எவரும் இந்தத் தொழுகையைத் தொழவில்லை என்று கூறினார்கள். அன்றைய தினம் மதீனா வாசிகளைத் தவிர வேறு எவரும் தொழுபவர்களாக இருக்கவில்லை.

ஹதீஸ் 863. அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ் கூறினார்:

நபி(ஸல்) அவர்களுடன் (பெருநாள் தொழுகைக்காக வெளியில்) நீங்கள் சென்றதுண்டா? என்று ஒருவர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) ஆம்! எனக்கு அவர்களுடன் நெருக்கமான உறவு இல்லாதிருந்தால் சிறு வயதுடைய நான் அதில் கலந்து கொண்டிருக்க முடியாது. கஸீர் இப்னு ஸல்த்(ரலி) உடைய இல்லத்தினருகில் உள்ள மேடைக்கு நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். பின்னர், சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பின்னர் பெண்கள் பகுதிக்கு வந்து அவர்களுக்கப் போதனை செய்தார்கள். தர்மம் செய்யுமாறு அவர்களுக்கு வலியுறுத்தினார்கள். பெண்கள் தம் ஆபரணங்களை எடுத்து, பிலால்(ரலி) (ஏந்திய) ஆடையில் போடலானார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்களும் பிலாலும் இல்லம் திரும்பினார்கள் என்று விடை அளித்தார்கள்.

## இரவிலும் இருட்டிலும் பெண்கள் பள்ளிவாசலுக்குச் செல்வது.

ஹதீஸ் 864. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு நாள்) இஷாவைத் தாமதப் படுத்தினார்கள். பெண்களும் சிறுவர்களும் உறங்கிவிட்டனர் என்று உமர்(ரலி) கூறியதும் நபி(ஸல்) புறப்பட்டு வந்தார்கள். இப்பூமியில் வசிப்பவர்கள் உங்களைத் தவிர வேறெவரும் இத்தொழுகையை எதிர் பார்த்திருக்க வில்லை என்றார்கள். அந்த நாள்களில் மதீனாவைத் தவிர வேறெங்கும் தொழுகை நடத்தப் படவில்லை.

இஷாவை அடிவானத்தின் செம்மை மறைந்ததிலிருந்து இரவின் மூன்றில் ஒரு பகுதி கழிவது வரை மக்கள் தொழுது வந்தனர்.

ஹதீஸ் 865. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களிடம், பெண்கள் இரவில் பள்ளிவாசலுக்குச் செல்ல அனுமதி கோரினால் அவர்களுக்கு அனுமதி வழங்குங்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## தொழுது முடித்துவிட்டு இமாம் எழுவதை எதிர்பார்த்து மக்கள் அமர்ந்திருப்பது.

ஹதீஸ் 866. உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் பெண்கள், கடமையான தொழுகையில் ஸலாம் கொடுத்த பின் எழுந்து செல்வார்கள். நபி(ஸல்) அவர்களும் அவர்களுடன் தொழுத ஆண்களும் அல்லாஹ் நாடும் அளவுக்கு அமர்ந்திருப்பார்கள். நபி(ஸல்) அவர்கள் எழுந்ததும் ஆண்களும் எழுந்து விடுவார்கள்.

ஹதீஸ் 867. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸுபுஹ் தொழுது முடித்ததும் பெண்கள் போர்வைகளால் போர்த்திக் கொண்டு (வீடுகளுக்குப்) புறப்படுவார்கள். இருட்டின் காரணத்தால் அவர்கள் யாரென அறியப்பட மாட்டார்கள்.

ஹதீஸ் 868. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் தொழுகையை நீட்டும் எண்ணத்துடன் தொழுகையில் நிற்கிறேன். அப்போது குழந்தையின் அழுகுரலைக் கேட்டவுடன் அக்குழந்தையின் தாய்க்குச் சிரமம் அளிக்கக் கூடாது என்பதற்காக என் தொழுகையைச் சுருக்கிக் கொள்கிறேன்.

என அபூ கதாதா அல் அன்ஸாரி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 869. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

பெண்கள் இன்று நடந்து கொள்ளும் முறையை நபி(ஸல்) அவர்கள் (இன்று கண்டிருந்தால்) பனுஇஸ்ராயீல் சமுதாயப் பெண்கள் தடுக்கப்பட்டது போல் இந்தப் பெண்களையும் (பள்ளிக்கு வருவதைவிட்டும்) தடுத்திருப்பார்கள்.

இதனை அறிவித்த உம்ராவிடம் பனு இஸ்ராயீல் பெண்கள் தடுக்கப்பட்டிருந்தார்களா? என்று கேட்டேன். அதற்கு அவர் ஆம் என்றார் என்று யஹ்யா இப்னு ஸயீத் கூறினார்கள்கள்.

## ஆண்களுக்குப் பின்னால் பெண்களும் தொழுவது.

ஹதீஸ் 870. உம்முஸலமா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுத்ததும் பெண்கள் எழுந்து விடுவார்கள். நபி(ஸல்) அவர்கள் அதே இடத்தில் சிறிது நேரம் அமர்ந்திருப்பார்கள்.

ஆண்களில் எவரும் பெண்களை நெருங்குவதற்கு முன்னால் பெண்கள் திரும்பிச் செல்வதற்காகவே இப்படி நபி(ஸல்) செய்திருக்கிறார்கள் என்று கருதுகிறேன் என ஸுஹ்ரி கூறுகிறார்.

ஹதீஸ் 871 அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உம்மு ஸுலைம்(ரலி) உடைய வீட்டில் தொழுதார்கள். நானும் (எங்கள்

இல்லத்தில் வளர்ந்த) அனாதைச் சிறுவரும் அவர்கள் பின் நின்றோம். உம்மு ஸுலைம்(ரலி) எங்களுக்குப் பின்னே நின்றார்.

## ஸுபுஹ் தொழுததும் பெண்கள் விரைவாகப் பள்ளியைவிட்டு வெளியேறுவதும் பெண்கள் குறைந்த நேரமே பள்ளியில் தங்குவதும்.

ஹதீஸ் 872. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸுபுஹ் தொழுகையை இருட்டில் தொழுவார்கள். இறைநம்பிக்கையுள்ள பெண்கள் (இல்லம்) திரும்புவார்கள். இருட்டின் காரணத்தால் அவர்கள் (யாரென) அறியப்பட மாட்டார்கள். அவர்கள் ஒருவர் மற்றொருவரை அறிய மாட்டார்கள்.

## பள்ளிக்குச் செல்வதற்காகப் பெண்கள் தம் கணவரிடம் அனுமதி பெறுவது.

ஹதீஸ் 873. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்கள்:

உங்களின் மனைவியர் (பள்ளிக்குச் செல்ல) அனுமதி கேட்டால் அதை மறுக்க வேண்டாம்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

## ஆண்களுக்குப் பின் பெண்களும் தொழுவது.

ஹதீஸ் 874. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உம்மு ஸுலைம்(ரலி) உடைய வீட்டில் தொழுதார்கள். நானும் (எங்கள் இல்லத்தில் வளர்ந்த) அனாதைச் சிறுவரும் அவர்கள் பின் நின்றோம். உம்மு ஸுலைம்(ரலி) எங்களுக்குப் பின்னே நின்றார்.

ஹதீஸ் 875. உம்மு ஸலமா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுத்ததும் பெண்கள் எழுந்து விடுவார்கள். நபி(ஸல்) அவர்கள் அதே இடத்தில் சிறிது நேரம் அமர்ந்திருப்பார்கள்.

ஆண்களில் எவரும் பெண்களை நெருங்குவதற்கு முன்னால் பெண்கள் திரும்பிச் செல்வதற்காகவே இப்படி நபி(ஸல்) செய்திருக்கிறார்கள் என்று கருதுகிறேன் என ஸுஹ்ரி கூறுகிறார்.

# அத்தியாயம் - 11 - ஜும்ஆ கடமை

ஜும்ஆ நாளில் தொழுகைக்கு அழைக்கப்பட்டதும் அல்லாஹ்வை நினைவு கூர விடுங்கள்! வியாபாரத்தைவிட்டு விடுங்கள்! இதுதான் உங்களுக்குச் சிறந்ததாகும். நீங்கள் இதை அறிந்து கொள்ளுங்கள் (திருக்குர்ஆன் 62:09) என்று அல்லாஹ் கூறினான்.

ஹதீஸ் 876. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாம் (பிறப்பால்) பிந்தியவர்கள். மறுமையில் முந்தியவர்களாவோம். எனினும் அவர்கள் நமக்கு முன்பே வேதம் கொடுக்கப்பட்டார்கள். அவர்களுக்குக் கடமையாக்கப் பட்ட இந்த நாளில் அவர்கள் முரண்பட்டனர். அல்லாஹ் நமக்கு நேர்வழி காட்டினான். மக்கள் நம்மையே பின்தொடர்கிறார்கள். (எவ்வாறெனில், நமக்கு இன்று ஜும்ஆ என்றால்) நாளைக்கு யூதர்களும் அதற்கு மறு நாள் கிறித்தவர்களும் வார வழிபாடு நடத்துகின்றனர்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

### ஜும்ஆ தினத்தில் குளிப்பதன் சிறப்பும் சிறுவர்களுக்கும் பெண்களும் ஜும்ஆ கடமையா என்பதும்.

ஹதீஸ் 877. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் உங்களில் எவரும் ஜும்ஆவுக்கு வந்தால் குளித்துக் கொள்ளட்டும் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 878. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் உமர்(ரலி) சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது ஆரம்ப காலத்திலேயே ஹிஜ்ரத் செய்த நபித்தோழர் ஒருவர் வந்தார். அவரை உமர்(ரலி) அழைத்து ஏனிந்தத் தாமதம்? என்று கேட்டார்கள். அதற்கு அவர் நான் அலுவலில் ஈடுபட்டு விட்டேன். பாங்கு சப்தத்தைக் கேட்டு(க் குளிக்காமல்) உளூ மட்டும் செய்துவிட்டு வேகமாக வருகிறேன் என்று கூறினார். அதற்கு உமர்(ரலி) உளூ மட்டும்தான் செய்தீரா? நபி(ஸல்) அவர்கள் குளிக்குமாறு கட்டளையிட்டுள்ளனர் என்பது உமக்குத் தெரியுமே! என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 879. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்ஜும்ஆ நாளில் குளிப்பது பருவமடைந்த ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும். என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) கூறினார்கள்.

### ஜும்ஆவுக்காக நறுமணம் பூசுவது.

ஹதீஸ் 880. அபூ ஸயீத்(ரலி) கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் குளிப்பது பருவமடைந்த ஒவ்வொருவருக்கும் கடமையாகும். மேலும் பல் துலக்குவதும் கிடைக்குமானால் நறுமணம் பூசுவதும் கடமையாகும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அபூ ஸயீத்(ரலி) வழியாக இதை அறிவிக்கும் அம்ர் இப்னு ஸுலைம் குளிப்பது அவசியம் என்பதை நான் உறுதியாக அறிவேன். ஆனால் பல் குலக்குவதும் நறுமணம் பூசுவதும் கடமையா இல்லையா என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஹதீஸில் அப்படித்தான் உள்ளது என்று குறிப்பிட்டார்கள்.

### ஜும்ஆவின் சிறப்பு

ஹதீஸ் 881. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஜும்ஆ நாளில் கடமையான குளிப்புப் போல் குளித்துவிட்டுப் (பின்னர்) பள்ளிக்கு வந்தால் ஓர்

ஒட்டகத்தை இறைவழியில் குர்பானி கொடுத்தவர் பாதையில் குர்பானி கொடுத்தவர் போலாவார். இரண்டாம் நேரத்தில் வந்தால் ஒரு மாட்டைக் குர்பானி கொடுத்தவர் போலாவார். மூன்றாம் நேரத்தில் வந்தால் கொம்புடைய ஆட்டைக் குர்பானி கொடுத்தவர் போலாவார். நான்காம் நேரத்தில் வந்தால் ஒரு கோழியைக் குர்பானி கொடுத்தவர் போலாவார். ஐந்தாம் நேரத்தில் வந்தால் முட்டையைக் குர்பானி கொடுத்தவர் போலாவார். இமாம் பள்ளிக்குள் வந்துவிட்டால் வானவர்கள் ஆஜராம்ப் போதனையைக் கேட்கிறார்கள். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 882. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் உமர்(ரலி) சொற்பொழிவு நிகழ்த்தும்போது ஒருவர் வந்தார். தொழுகைக்கு ஏன் தாமதமாக வருகிறீர்? என்று உமர்(ரலி) கேட்டார்கள். அதற்கு அவர் நான் பாங்கைக் கேட்டதும் உளூச் செய்வதற்குத் தவிர (குளிப்பதற்கு) நேரமில்லை என்றார். அதற்கு, உங்களில் ஒருவா ஜும்ஆவுக்குச் செல்வதாயிருந்தால் குளித்துக் கொள்ளட்டும் நபி(ஸல்) அவர்கள் கூறியதை நீர் கேள்விப் படவில்லையா? என்று உமர்(ரலி) கேட்டார்கள்.

## ஜும்ஆவுக்காக எண்ணெய் தேய்ப்பது.

ஹதீஸ் 883. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஜும்ஆ நாளில் குளித்துவிட்டு இயன்றவரை சுத்தமாகித் தமக்குரிய எண்ணெய்யைத் தேய்த்துக் கொண்டு தம் வீட்டிலுள்ள நறுமணத்தைப் பூசிக் கொண்டு பள்ளிக்கு வந்து (அங்கு நெருக்கமாக அமர்ந்திருக்கும்) இரண்டு நபர்களைப் பிரித்துவிடாமல், தமக்கு விதிக்கப் பட்டதைத் தொழுதுவிட்டு, இமாம் உரையாற்றத் தொடங்கியதும் வாய் மூடி மவுனமாக இருந்தால் அந்த ஜும்ஆவுக்கும் அடுத்த ஜும்ஆவுக்கும் இடையிலான பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. என ஸல்மான் பார்ஸி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 884. தாவூஸ் கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் உங்களுக்குக் குளிப்புக் கடமையாக இல்லாவிட்டாலும் உங்கள் தலையைக் கழுவிக் கொள்ளுங்கள் குளியுங்கள் மேலும் நறுமணம் பூசிக் கொள்ளுங்கள் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனச் சிலர் கூறுகிறார்களே என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு குளிப்பைப் பொறுத்த வரை சரிதான் நறுமணம் பற்றி எனக்குத் தெரியாது என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 885. தாவூஸ் கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் குளிப்பது பற்றி நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறியபோது நறுமணப் பொருளோ எண்ணெய்யோ ஒருவரின் இல்லத்தில் இருந்தால் அதைப்பூசிக் கொள்ள வேண்டுமா? என்று அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் எனக்குத் தெரிய வில்லை என்று விடையளித்தார்கள்.

## இருப்பவற்றில் அழகானதை அணிவது.

ஹதீஸ் 886. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

பள்ளியின் நுழைவாயிலில் பட்டாடை ஒன்றை (விற்பனை செய்வதை) உமர்(ரலி) பார்த்தார்கள். அப்போது நபி அவர்களே! இதை நீங்கள் விலைக்கு வாங்கி ஜும்ஆ நாளிலும் தூதுக் குழுவைச் சந்திக்கும் போதும் அணிந்து கொள்ளலாமே நபி(ஸல்) அவர்களிடம் உமர்(ரலி) கேட்டார்கள். மறுமையில் இந்தப் பாக்கியம் அற்றவர்களின் ஆடையே இது நபி(ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள்.

பின்னர் நபி(ஸல்) அவர்களுக்குச் சில பட்டாடைகள் வந்தன. அதில் ஓர் ஆடையை

உமர்(ரலி)க்குக் கொடுத்தனர். அதற்கு உமர்(ரலி) பட்டாடை பற்றி வேறு விதமாக நீங்கள் கூறிவிட்டு அதை எனக்குக் கொடுக்கின்றீர்களே என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் நீர் அணிவதற்காக இதை உமக்கு நான் தரவில்லை என்று கூறினார்கள். அந்த ஆடையை மக்காவில் இருந்த முஷ்ரிக்கான தம் சகோதரருக்கு உமர்(ரலி) வழங்கினார்கள்.

## ஜும்ஆ நாளில் பல்துலக்குவது.

நபி(ஸல்) அவர்கள் பல் துலக்குவார்கள் என அபூ ஸயீத்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 887. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என் சமுதாயத்திற்குச் சிரமமாம் விடும் என்று இல்லாவிட்டால் ஒவ்வொரு தொழுகைக்கும் பல் துலக்குமாறு நான் கட்டளையிட்டிருப்பேன். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 888. நபி(ஸல்) அவர்கள் கூறினார்: நபி(ஸல்) அவர்கள் இரவில் (உறங்கி) எழுந்ததும் பல் துலக்குவார்கள்.

ஹதீஸ் 889 ஹுதைபா (ரலி) அவர்கள் கூறியதாவது „ நபி (ஸல்) அவர்கள் இரவில் (தொழுகைக்காக) எழும்போது பல்துலக்கு(ம் குச்சியால் வாயை சுத்தம் செய்)வார்கள்.

## பிறரின் பல் துலக்கும் பொருளால் பல் துலக்குவது.

ஹதீஸ் 890. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

(நபி(ஸல்) அவர்களின் மரணவேளையில்) அபூ பக்ருடைய மகன் அப்துர் ரஹ்மான் வந்தார். அவரிடம் அவர் பல் துலக்கப் பயன்படுத்தும் குச்சி ஒன்றும் இருந்தது. அதனை நபி(ஸல்) அவர்கள் பார்த்தார்கள். (அவர்களின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட நான்) அப்துர் ரஹ்மானே! அந்தக் குச்சியைக் கொடுப்பீராக! என்றேன். அவர் கொடுத்ததும் அதை வெட்டி, மென்று நபி(ஸல்) அவர்களிடம் கொடுத்தேன். என் நெஞ்சில் சாய்ந்து கொண்டு நபி(ஸல்) அவர்கள் பல் துலக்கினார்கள் என்று ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

## ஜும்ஆ நாளில் ஃபஜ்ர் தொழுகையில் ஓத வேண்டியவை.

ஹதீஸ் 891. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆ நாளின் ஃபஜ்ர் தொழுகையில் அலிஃப் லாம் மீம் ஸஜ்தாவையும் ஹல்அதா அலல் இன்ஸான் என்ற அத்தியாயத்தையும் ஓதக் கூடியவர்களாக இருந்தனர்.

## நகரங்களிலும் கிராமங்களிலும் ஜும்ஆ நடத்தலாம்.

ஹதீஸ் 892. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் பள்ளிவாசலில் நடத்தப் பட்ட ஜும்ஆவுக்கு அடுத்து பஹ்ரைனில் உள்ள ஜுவாஸா எனும் கிராமத்தில் அப்துல் கைஸ் பள்ளியில்தான் முதன்முதலாக ஜும்ஆ நடந்தது.

ஹதீஸ் 893. யூனுஸ் கூறினார்கள்.

அய்லாவின் அதிகாரியாக இருந்த ருஸைக் இப்னு ஹகீம், வாதில்குரா கிராமத்தில், தாம் ஜும்ஆ நடத்தலாமா என இப்னு ஷிஹாபுக்கு எழுதிக் கேட்டார். அப்போது நானும் அவருடன் இருந்தேன். அக்கிரமாத்தில் சூடான் நாட்டவரும் பிறரும் இருந்தனர். இப்னு ஷிஹாப், ஜும்ஆ நடத்துமாறு ருஸைக் இப்னு ஹகீமுக்குக் கட்டளையிட்டார்கள். இப்னு உமர்(ரலி) வழியாக ஸாலிம் அறிவிக்கும் பின்வரும் நபிமொழியை அதற்கு ஆதாரமாக காட்டினார்கள்.

உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்கள் தம் பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் பற்றி ஒவ்வொருவரும் விசாரிக்கப் படுவீர்கள். தலைவர் பொறுப்பாளியாவார். அவர் தம் குடிமக்கள்

பற்றி விசாரிக்கப் படுவார்கள். ஓர் ஆண் மகன் தன் குடும்பத்துக்குப் பொறுப்பாளியாவான். தன் பொறுப்பிலுள்ளவர்கள் பற்றி அவனும் கேட்கப் படுவான். ஒரு பெண், கணவனின் வீட்டுக்குப் பொறுப்பாளியாவாள். அவள் தன்னுடைய பொறுப்பிலுள்ளவர்கள் பற்றி விசாரிக்கப்படுவாள். ஓர் ஊழியன் தன் முதலாளியின் செல்வத்துக்குப் பொறுப்பாளியாவான். அவன் தன்னுடைய பொறுப்பு பற்றி விசாரிக்கப் படுவான்.

ஓர் ஆண் மகன் தன் தந்தையின் செல்வத்துக்குப் பொறுப்பாளியாவான் என்றும் கூறினார்கள் எனக் கருதுகிறேன்.

## ஜும்ஆவுக்கு வராத சிறுவர் மற்றும் பெண்களின் மீது குளிப்பு அவசியமா?

யாருக்கு ஜும்ஆ கடமையோ அவரே குளிப்பது அவசியம் என்று இப்னு உமர்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 894. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் உங்களில் எவரும் ஜும்ஆவுக்கு வந்தால் குளித்துக் கொள்ளட்டும். என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 895. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்ஜும்ஆ நாளில் குளிப்பது பருவமடைந்த ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும். என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 896. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாம் (பிறப்பால்) பிந்தியவர்கள் மறுமையில் முந்தியவர்களாவோம். எனினும் அவர்கள் நமக்கு முன்பே வேதம் கொடுக்கப் பட்டார்கள். அவர்களுக்குக் கடமையாக்கப் பட்ட இந்த நாளில் அவர்கள் முரண்பட்டனர். அல்லாஹ் நமக்கு நேர்வழி காட்டினான். மக்கள் நம்மையே பின்தொடர்கிறார்கள். (எவ்வாறெனில், நமக்கு இன்று ஜும்ஆ என்றால்) நாளைக்கு யூதர்களுக்கு அதற்கு மறுநாள் கிறித்தவர்களும் வார வழிபாடு நடத்துகின்றனர்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 897. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் ஏழு நாள்களுக்கு ஒரு முறை தலையையும் மேனியையும் கழுவிக் குளிப்பது ஒவ்வொரு முஸ்லிமுக்கும் கடமையாகும். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 898. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்ஏழு நாள்களுக்கு ஒரு முறை குளிப்பது அல்லாஹ்வுக்காக ஒவ்வொரு முஸ்லிமும் செய்ய வேண்டிய கடமையாகும். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 899. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். பெண்கள் இரவில் பள்ளிக்குச் செல்வதற்கு நீங்கள் அனுமதியுங்கள். இதை இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 900. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

உமர்(ரலி) உடைய மனைவியரில் ஒருவர் ஸுப்ஹ், இஷாத் தொழுகைகளைப் பள்ளியில் ஜமாஅத்தாகத் தொழச் செல்வார். அவரிடம் உங்கள் கணவர்) உமர்(ரலி) ரோஷக்காரராகவும் இதை விரும்பாதவராகவும் இருப்பதைத் தெரிந்து கொண்டே நீங்கள் ஏன் (பள்ளிக்குச்) செல்கிறீர்கள் என்று கேட்கப் பட்டது. அதற்கு அவர் என்னைத் தடுக்க முடியாது. ஏனெனில் பெண்கள் பள்ளிக்குச் செல்வதை நீங்கள் தடுக்காதீர்கள் நபி(ஸல்) கூறியுள்ளனர் என்று பதிலுரைத்தார்.

## மழையின்போது ஜும்ஆவுக்குச் செல்லாமலிருக்க அனுமதி.

ஹதீஸ் 901. அப்துல்லாஹ் இப்னு அல் ஹாரிஸ் கூறினார்கள்.

பாங்கு சொல்பவரிடம் ஒரு மழை நாளில் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸூலுல்லாஹ் என்று (பாங்கில்) கூறிய பிறகு ஹய்ய அலஸ்ஸலாஹ் (தொழுகைக்கு வாருங்கள்) என்பதைக் கூறாமல் உங்கள் வீடுகளிலேயே தொழுது கொள்ளுகள் என்று கூறும் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். (இவ்வாறு கூறியதை) மக்கள் வெறுப்பது போல் இருந்தபோது என்னை விட மிகவும் சிறந்தவ(ரான நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்துள்ளனர் என்று நிச்சயமாக ஜும்ஆ அவசியமானது தான் எனினும், நீங்கள் சேற்றிலும் சகதியிலும் நடந்து வந்து அதனால் உங்களுக்குச் சிரமம் தருவதை நான் விரும்பவில்லை என்றும் குறிப்பிட்டார்கள்.

## எவ்வளவு தொலைவிலிருந்தால் ஜும்ஆவுக்கு வர வேண்டும்? எவர் மீது ஜும்ஆ கடமை?

அல்லாஹ் கூறினான்:

ஜும்ஆ நாளில் தொழுகைக்காக அழைக்கப் பட்டால் இறைவனை நினைவு கூர விரையுங்கள்.

ஜும்ஆ நடைபெறும் ஊரில் தொழுகைக்கான அழைப்பை நீ கேட்டாலும் கேட்காவிட்டாலும் தொழுகைக்குச் செல்வது உனக்குக் கடமையாகும் என அதாஃ கூறுகிறார். அனஸ்(ரலி) தம் மாளிகையில் இருக்கும்போது ஜும்ஆத் தொழுவார்கள். சில பொழுது ஜும்ஆத் தொழ மாட்டார்கள். அனஸ்(ரலி) உடைய மாளிகை (பஸரா நகரின் எல்லையிலுள்ள) ஸாவியா எனுமிடத்திலிருந்து இரண்டு பர்ஸக் (சுமார் ஆறு மைல்கள்) தொலைவில் இருந்தது.

ஹதீஸ் 902. ஆயிஷா(ரலி) கூறினார்கள். (மதீனாவுக்கு நான்கு மைல் தொலைவிலுள்ள) மேட்டுப் பகுதியிலிருந்தும் தங்கள் இல்லங் களிலிருந்தும் மக்கள் ஜும்ஆ நாளில் முறை வைத்து (மதீனாவுக்கு) வந்து கொண்டிருந்தார்கள். புழுதிகளில் அவர்கள் நடந்து வருவதால் அவர்கள் மேல் புழுதி யும் வியர்வையும் படிந்து விடும். அவர்களிடமிருந்து வியர்வை வெளியேறும். (இந்த நிலையில்) அவர்களில் ஒருவர் நபி(ஸல்) அவர்கள் என்னுடனிருக்கும்போது வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் இந்த தினத்துக்காக நீங்கள் தூய்மையாகிக் கொள்ளக் கூடாதா? என்று கேட்டார்கள்.

## சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்ததும் ஜும்ஆ நேரம் வந்து விடுகிறது.

உமர், அலீ, நுஃமான் இப்னு பஷீர், அம்ர் இப்னு ஹுரைஸ் ஆகிய நபித்தோழர்களின் வழியாக இக்கருத்து அறிவிக்கப் படுகின்றது.

ஹதீஸ் 903. யஹ்யா இப்னு ஸயீத் கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் குளிப்பது பற்றி நான் அம்ராவிடம் கேட்டேன். அதற்கு அம்ரா அன்றைய மக்கள் உழைப்பாளர்களாக இருந்தனர். அவர்கள் ஜும்ஆவுக்கு வரும்போது அதே கோலத்துடனேயே வந்து விடுவார்கள். இதனால்தான் நீங்கள் குளித்துக் கொள்ளலாமே என்று கூறப்பட்டது என ஆயிஷா(ரலி) கூறினார் என விடையளித்தார்.

ஹதீஸ் 904. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

சூரியன் சாயும் நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆத் தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 905. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நாங்கள் ஜும்ஆவை அதன் ஆரம்ப நேரத்தில் தொழுவோம். ஜும்ஆவுக்குப் பிறகு (கைலூலா எனும்) முற்பகல் உறக்கம் கொள்வோம்.

## ஜும்ஆ நாளில் வெயில் கடுமையாக இருக்கும்போது என்ன செய்வது?

ஹதீஸ் 906. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் குளிர் கடுமையாக இருக்கம்போது ஜும்ஆத் தொழுகையை ஆரம்ப நேரத்தில் தொழுவார்கள். கோடை கடுமையாக இருக்கும்போது ஜும்ஆவைத் தாமதமாக்குவார்கள்.

## ஜும்ஆவுக்காக நடந்து வருவது.

ஹதீஸ் 907. அபாயா இப்னு ரி∴பாஆ கூறினார்கள். நான் ஜும்ஆவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தபோது அபூ அபஸ்(ரலி) என்னைச் சந்தித்தார்கள். அப்போது இறைவழியில் எவருடைய பாதங்களில் புழுதி படிகிறதோ அவரை நரகைவிட்டும் இறைவன் விலக்குகிறான் நபி(ஸல்) அவர்கள் கூற செவியுற்றுள்ளேன் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 908. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் ஓடி வராதீர்கள். நடந்தே வாருங்கள். நிதானத்தைக் கடைப்பிடியுங்கள். கிடைத்ததைத் தொழுங்கள். தவறியதைப் பூர்த்தி செய்யுங்கள். என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் 909. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னை நீங்கள் காணும் வரை (தொழுவதற்காக) எழாதீர்கள்! நிதானத்தைப் கடைப்பிடியுங்கள். என அபூ கதாதா(ரலி) கூறினார்கள்.

## ஜும்ஆ நாளில் (பள்ளிவாயலில் அமர்ந்திருக்கும்) இருவரைப் பிரிக்கக்கூடாது.

ஹதீஸ் 910. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஜும்ஆ நாளில் ஒருவர் குளித்து, இயன்றவரை தூய்மையாகிப் பிறகு எண்ணெய் தேய்த்து நறுமணம் பூசி, (ஜும்ஆவுக்குப்) புறப்பட்டு (அமர்ந்திருக்கும்) இருவரைப் பிரிக்காமல் அவருக்கு விதிக்கப் பட்டதைத் தொழுது, பிறகு இமாம் வந்ததும் மவுனம் காத்தால் அந்த ஜும்ஆவுக்கும் அடுத்த ஜும்ஆவுக்கும் இடைப் பட்ட குற்றங்கள் மன்னிக்கப்படும். என ஸல்மான் அல் ∴பார்ஸி(ரலி) கூறினார்கள்.

## ஜும்ஆ நாளில் ஒருவர் தம் சகோதரரை எழுப்பிவிட்டு அந்த இடத்தில் அமரக் கூடாது.

ஹதீஸ் 911. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஒருவர் தம் சகோதரரை அவரின் இடத்திலிருந்து கிளப்பிவிட்டு அவ்விடத்தில் உட்கார்வதை நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ளனர்.

ஜும்ஆவிலா? என்று நா∴பிவு இடம் தாம் கேட்டபோது, ஜும்ஆவிலும் ஜும்ஆ அல்லாத மற்ற சமயங்களிலும் தான் என்று நா∴பிவு விடையளித்ததாக இப்னு ஜுரைஜ் குறிப்பிடுகிறார்.

## ஜும்ஆவின் பாங்கு

ஹதீஸ் 912. ஸாயிப் இப்னு யஸீத்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்திலும் அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) காலங்களிலும் ஜும்ஆ நாளில் இமாம் மிம்பரில் அமர்ந்த பின் பாங்கு சொல்லப்பட்டு வந்தது. உஸ்மான்(ரலி) காலத்தில் மக்கள் பெருகியபோது கடை வீதியில் (பாங்கு, இகாமத் தவிர) மூன்றாவது அழைப்பு அதிகமானது.

## ஜும்ஆ நாளில் ஒரு முஅத்தினே பாங்கு சொல்லவேண்டும்.

ஹதீஸ் 913. ஸாயிப் இப்னு யஸீத்(ரலி) கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் மூன்றாவது அறிவிப்பை அதிகப் படுத்தியவர் உஸ்மான்(ரலி) ஆவார். மதீனாவாசிகள் பெருகியபோது (இவ்வாறு செய்தார்கள்) நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு முஅத்தின்

மட்டுமே இருந்தார். இமாம் மிம்பரில் அமர்ந்த நேரத்தில் ஜும்ஆவின் பாங்கு அமைந்திருந்தது.

### பாங்கைக் கேட்கும்போது மிம்பரில் அமர்ந்துள்ள இமாமும் அதற்குப் பதில் கூற வேண்டும்.

ஹதீஸ் 914. அபூ உமாமா (ரலி) கூறினார்கள்.

முஆவியா (ரலி) மிம்பரில் அமர்ந்திருந்தபோது முஅத்தின் பாங்கு சொன்னார். அவர் அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் என்று கூறியதும் முஆவியா (ரலி)வும் அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் என்றார்கள்.

முஅத்தின் அஷ்ஹது அல் லாயிலாஹ இல்லல்லாஹ் என்று கூறியதும் நானும் (அவ்வாறே நம்புகிறேன்) எனக் கூறினார்கள். முஅத்தின் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரஸுலுல்லாஹ் எனக் கூறியதும் நானும் என்றார்கள்.

பாங்கு சொல்லி முடித்தும், மக்களே! முஅத்தின் பாங்கு சொன்னபோது நான் கூறிய இதே வார்த்தையை இதே இடத்தில் நபி (ஸல்) அவர்கள் கூற செவியுற்றுள்ளேன் என்று முஆவியா (ரலி) குறிப்பிட்டார்கள்.

### பாங்கு சொல்லும்போது இமாம் மிம்பரில் அமர்ந்திருக்க வேண்டும்.

ஹதீஸ் 915. ஸாயிப் இப்னு யஸீத் (ரலி) கூறினார்கள்.

மக்கள் பெருகியபோது ஜும்ஆ நாளின் இரண்டாம் அறிவிப்பை உஸ்மான் (ரலி) ஏற்படுத்தினார்கள். (அதற்கு முன்னர்) இமாம் அமரும்போது பாங்கு சொல்வது மட்டுமே இருந்தது.

### குத்பாவின்போது பாங்கு சொல்வது.

ஹதீஸ் 916. ஸாயிப் இப்னு யஸீத் (ரலி) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் காலத்திலும் அபூ பக்ர் (ரலி), உமர் (ரலி) காலங்களிலும் ஜும்அ நாளில் இமாம் மிம்பரில் அமர்ந்த பின் பாங்கு சொல்லப்பட்டு வந்தது. உஸ்மான் (ரலி) காலத்தில் மக்கள் பெருகியபோது கடை வீதியில் (பாங்கு இகாமத் தவிர) மூன்றாவது அழைப்பு அதிகமானது. இத நிலைபெற்றுவிட்டது.

### மிம்பர் மீது நின்று சொற்பொழிவு நிகழ்த்துவது.

நபி (ஸல்) அவர்கள் மிம்பர் மீது நின்று சொற்பொழிவு நிகழ்த்தினார்கள் என்று அனஸ் (ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 917. அபூ ஹாஸிம் இப்னு தீனார் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மிம்பர் எந்த மரத்தினாலானது என்று சர்ச்சை செய்த நிலையில் சில மனிதர்கள் ஸஹ்ல் இப்னு ஸஃது (ரலி) அவர்களிடம் வந்து இது பற்றிக் கேட்டனர். அதற்கு ஸஹ்ல் இப்னு ஸஃது (ரலி) அல்லாஹ்வின் மீது ஆணையாக அது எந்த மரத்தினாலானது என்பதை அறிவேன். அது தயாரிக்கப் பட்ட முதல் நாளிலேயே அதை நான் பார்த்துள்ளேன். நபி (ஸல்) அவர்கள் முதன் முதலில் அதில் அமர்ந்த நாளிலும் அதை நான் பார்த்திருக்கிறேன் என்று கூறிவிட்டுப் பின்வரும் நிகழ்ச்சியைக் கூறலானார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு பெண்மணியிடம் -- அப்பெண்மணியின் பெயரையும் ஸஹ்ல் குறிப்பிட்டார்கள். ஆளனுப்பி நான் மக்களிடம் பேசும்போது அமர்ந்து கொள்வதற்காகத் தச்சு வேலை தெரிந்த உன்வேலைக்காரரிடம் எனக்கொரு மேடை செய்து தரச் சொல்! எனச்

சொல்லியனுப்பினார்கள். அப்பெண்மணி அவ்வாறே தம் ஊழியரிடம் கூறினார். மதீனாவின் சமீபத்தில் காபா எனும் பகுதியிலுள்ள கருவேல மரத்திலிருந்து அதைச் செய்து அவர் அப்பெண்ணிடம் கொண்டு வந்தார். உடனே அப்பெண் அதை நபி(ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார். நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டதற்கேற்ப இவ்விடத்தில் அது வைக்கப்பட்டது.

அதன் பிறகு நபி(ஸல்) அவர்கள் அதன் மீதே தொழுததை - அதன் மீதே தக்பீர் கூறியதையும் அதன் மீதே ருகூவு செய்ததையும் அதன் பிறகு மிம்பரின் அடிப்பாகத்திற்குப் பின் பக்கமாக இறங்கி அதில் ஸஜ்தா செய்துவிட்டு மீண்டும் மேலேறியதையும் - நான் பார்த்துள்ளேன். தொழுது முடித்ததும் மக்களை நோக்கி மக்களே நீங்கள் என்னைப் பின்பற்ற வேண்டுமென்பதற்காகவும் என் தொழுகையை நீங்கள் அறிந்து கொள்வற்காகவுமே நான் இவ்வாறு செய்தேன் என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 918. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நின்று கொள்வதற்காகப் பேரீச்ச மரத்தின் கட்டை ஒன்று இருந்தது. மிம்பர் செய்யப்பட்ட பின் அந்தப் பேரீச்ச மரக்கட்டையிலிருந்து சூல் கொண்ட ஒட்டகத்தின் சப்தம் போன்றதை நாங்கள் செவியுற்றோம். நபி(ஸல்) அவர்கள் மிம்பரிலிருந்து இறங்கி அதன் மீது தம் கையை வைக்கும் வரை (அந்தச் சப்தம் கேட்டுக் கொண்டே இருந்தது).

ஹதீஸ் 919. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

ஜும்ஆவுக்கு வருபவர் குளித்துக் கொள்ளட்டும் என்று மிம்பரில் நின்று உரையாற்றும்போது நபி(ஸல்) கூறினார்கள்.

## நின்ற நிலையில் உரையாற்றுவது.

ஹதீஸ் 920. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நீங்கள் இப்போது செய்து வருவது போன்றே நபி(ஸல்) அவர்கள் நின்ற நிலையில் உரை நிகழ்த்திவிட்டுப் பிறகு உட்கார்ந்து, பிறகு எழக்கூடியவர்களாக இருந்தனர்.

## இமாம் சொற்பொழிவு நிகழ்த்தும்போது அவர் மக்களையும் மக்கள் அவரையும் முன்னோக்குவது.

இப்னு உமர்(ரலி), அனஸ்(ரலி) ஆகியோர் இமாமை முன்னோக்குபவர்களாக இருந்துள்ளனர்.

ஹதீஸ் 921. அபூ ஸயீத் அல்குத்ரி(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் மிம்பர் மீது அமர்ந்தனர். நாங்கள் (கீழே) அவர்களைச் சுற்றி அமர்ந்தோம்.

## இறைவனைப் புகழ்ந்த பின் அம்மாபஃது என்று கூறுவது.

நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்துள்ளனர்.

ஹதீஸ் 922. அஸ்மா(ரலி) கூறினார்கள்.

மக்கள் (கிரகணத் தொழுகை) தொழுது கொண்டிருந்தபோது நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று மக்களுக்கு என்று அவர்களிடம் கேட்டேன். ஆயிஷா(ரலி) தம் தலையால் வானை நோக்கிச் சைகை செய்தார்கள். இது ஏதாவது அடையாளமா? என்று கேட்டேன். ஆம் எனத் தலையால் சைகை செய்தார்கள். எனக்கு மயக்கம் ஏற்படும் அளவுக்குத் தொழுகையை நபி(ஸல்) அவர்கள் நன்கு நீட்டினார்கள். என் விலாப் புறத்தில் தண்ணீர் நிரம்பிய தோல்பை ஒன்றிருந்தது. அதைத் திறந்து (மயக்கம் நீங்க) என் தலையில் தண்ணீரை ஊற்றிக்

கொண்டேன். கிரகணம் நீங்கியபோது நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்தார்கள். பின்னர் மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். பிறகு அம்மாப∴து என்று கூறினார்கள்.

அன்ஸாரிப் பெண்களில் சிலர் கூச்சலிட்டனர். அவர்களை அமைதிப் படுத்துவதற்காக நான் சென்றேன். பின்னர் ஆயிஷா(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் என்ன உரையாற்றினார்கள் என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

என்னுடைய இந்த இடத்தில் சொர்க்கம், நரகம் உட்பட நான் இது வரை காணாத அனைத்தும் எனக்குக் காட்டப் பட்டன. மேலும் கப்ருகளில் தஜ்ஜாலின் குழப்பத்துக்கு நிகரான குழப்பத்துக்கு நீங்கள் உள்ளாவீர்கள். உங்களில் ஒருவரிடம் இந்த மனிதரை நபி(ஸல்) அவர்களைப் பற்றி நீ என்ன அறிந்திருக்கிறாய் என்று (வானவர்களால்) கேட்கப்படும். அதற்கு நம்பிக்கையாளர் உறுதியிலிருந்தவர் இவர்கள் நபி முஹம்மத்(ஸல்) ஆவார்கள். எங்களிடம் தெளிவான சான்றுகளையும் நேர்வழிகளையும் கொண்டு வந்தார்கள். நாங்கள் அவரின் அழைப்பை நம்பி ஏற்றோம் அவரை நம்பிப் பின் பற்றினோம் எனக் கூறுவார். அவரிடம் நல்லவராக உறங்குவீராக! நீர் (உலகில் இருந்த காலத்தில்) இவ்வாறு நம்பிக்கை கொண்டிருந்தீர் என்பதை நிச்சயமாக நாமறிவோம் எனக் கூறப்படும். இம்மனிதரைப் பற்றி நீர் அறிந்திருந்தது என்ன என்று கேட்கப்படும்போது நயவஞ்சகன் சந்தேகத்திலிருந்தவன் இவரைப் பற்றி எனக்குத் தெரியாது மக்கள் ஏதோ சொன்னார்கள் நானும் சொன்னேன் எனக் கூறுவான் நபி(ஸல்) உரையாற்றினார்கள்.

ஹதீஸ் 923. அம்ர் இப்னு தக்லீபு(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் சில பொருள்கள் அல்லது கைது செய்யப் பட்டவர்கள் கொண்டு வரப்பட்டுப் பங்கிட்டுக் கொடுத்தபோது சிலருக்குக் கொடுத்தும் வேறு சிலருக்குக் கொடுக்காமலும்விட்டுவிட்டனர்.

யாருக்குக் கொடுக்காமல்விட்டுவிட்டார்களோ அவர்கள் குறை கூறுவதாக நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிய வந்தபோது, அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றிவிட்டு அம்மாப∴து எனக் கூறி அல்லாஹ்வின் மீது ஆணையாக நான் சிலருக்குக் கொடுக்கிறேன். (கொடுக்காமல்) யாரைவிட்டு விடுகிறேனோ அவர் நான் கொடுப்பவரை விட எனக்கு விருப்பமானவர். அவர்களின் உள்ளத்தில் அதிர்ச்சியும் பயமும் இருப்பதை நான் அறிந்த காரணத்தினாலேயே நான் சிலருக்குக் கொடுக்கிறேன். வேறு சிலரின் உள்ளங்களில் போதுமென்ற பண்பையும் நல்ல குணத்தையும் அவர்களைவிட்டு விடுகிறேன். இவர்களில் அம்ர் இப்னு தக்லீபும் ஒருவராவார் என்று கூறினார்கள்.

அல்லாஹ்வின் மீது ஆணையாக, நபி(ஸல்) அவர்கள் என்னைப் பற்றிக் கூறிய இந்த வார்த்தை சிகப்பு நிற ஒட்டகம் எனக்குக் கிடைப்பதை விட விருப்பமானதாக அமைந்தது.

ஹதீஸ் 924. ஆயிஷா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நள்ளிரவில் (வீட்டைவிட்டுப்) புறப்பட்டுப் பள்ளியில் தொழுதார்கள். சிலர் அவர்களின் தொழுகையைப் பின்பற்றித் தொழலானார்கள். காலையில் மக்கள் இது பற்றிப் பேசலானார்கள். (மறுநாள்) அதை விட அதிகமானவர்கள் திரண்டு நபி(ஸல்) அவர்களுடன் தொழுதனர். காலையில் இது பற்றி மக்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர். மூன்றாம் இரவில் பள்ளியில் மக்கள் மேலும் அதிகமானார்கள். நபி(ஸல்) அவர்கள் (பள்ளிக்கு) வந்ததும் மக்கள் அவர்களைப் பின்பற்றித் தொழலானர்கள்.

நான்காம் இரவு வந்தபோது மக்கள் அதிகரித்தால் பள்ளி இடம் கொள்ளவில்லை. நபி(ஸல்) அவர்கள் ஸுப்ஹுத் தொழுகைக்குத்தான் வந்தார்கள். ∴பஜ்ருத் தொழுகையை முடித்த பின் மக்களை நோக்கி இறைவனைப் புகழ்ந்து அம்மா ப∴து எனக் கூறிவிட்டு நீங்கள் வந்திருந்தது

எனக்குத் தெரியாமல் இல்லை எனினும் இரவுத் தொழுகை கடமையாக்கப் பட்டு அதை உங்களால் நிறைவேற்ற இயலாது போய் விடுமோ என்று அஞ்சினேன். (இதனால்தான் இரவு நான் வரவில்லை) என்று கூறினார்கள்.

ஹதீஸ் 925. அபூ ஹுமைத் அஸ்ஸாயிரு(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு மாலைப் பொழுதில் எழுந்து ஏகத்துவ உறுதிமொழி கூறி இறைவனை அவனுடைய தகுதிக்கேற்பப் புகழ்ந்துவிட்டுப் பிறகு அம்மா பஃது என்றார்கள்.

ஹதீஸ் 926. மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எழுந்து நின்று ஏகத்துவ உறுதிமொழி கூறிவிட்டு அம்மா பஃது என்று கூறி(த் தம் சொற்பொழிவைத் துவக்கி)யதை செவியுற்றுள்ளேன்.

ஹதீஸ் 927. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மிம்பர் மீது ஏறினார்கள். தம் தோள் புஜத்தின் மீது மேலாடையைச் சுற்றிக் கொண்டு, கருநிறத் துணியால் தலையில் கட்டுப் போட்டுக் கொண்டு அவர்கள் அமர்ந்த கடைசி அமர்வாகும் அது.

பிறகு அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றி, மக்களே என்னருகே வாருங்கள் என்றதும் மக்கள்அவர்களை நோக்கி விரைந்து நகர்ந்தனர். பிறகு அம்மா பஃது எனக் கூறினார்கள். அதன் பின்னர் மற்ற மக்கள் பெருகும்போது, இது அன்ஸார்கள் எண்ணிக்கையில் குறைவார்கள். முஹம்மதுடைய சமுதாயத்தவர்களில் பொறுப்புக்கு வருகிறவர் யாருக்காவது நன்மையோ, தீமையோ செய்ய சக்தி பெற்றால் நல்லவர்களிடமிருந்து (நல்லவதை) ஏற்று அவர்களில் கெட்டவர்களை அலட்சியம் செய்து விடவும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ஜும்ஆ நாளில் இரண்டு சொற்பொழிவுகளுக்கிடையே அமர்வது.

ஹதீஸ் 928. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள். அவ்விரண்டுக்குமிடையே அமர்வார்கள்.

## சொற்பொழிவைச் செவிதாழ்த்திக் கேட்பது.

ஹதீஸ் 929. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஜும்அ நாள் வந்துவிட்டால் வானவர்கள் பள்ளியின் நுழைவாயிலில் நின்று கொண்டு முதலில் வருபவரையும் அதைத் தொடர்ந்து வருபவர்களையும் வரிசைப்படி பதிவு செய்கிறார்கள். முதலில் வருபவர் ஒட்டகத்தைக் குர்பானி கொடுத்தவரைப் போன்றும் அதற்கடுத்து வருபவர் மாட்டைக் குர்பானி கொடுத்தவர் போன்றும் அதன் பிறகு ஆடு, பிறகு கோழி, பிறகு முட்டை ஆகியவற்றைக் குர்பானி கொடுத்தவர் போலவுமாவார்கள். இமாம் வந்துவிட்டால் வானவர்கள் தங்கள் ஏடுகளைச் சுருட்டிவிட்டுச் சொற்பொழிவைக் கேட்க ஆரம்பித்து விடுவார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## இமாம் சொற்பொழிவு நிகழ்த்தும்போது ஒருவர் வருவதை இமாம் கண்டால், அவரை இரண்டு ரக்அத்கள் தொழுமாறு கட்டளையிடுவது.

ஹதீஸ் 930. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒருவர் வந்தார். உடனே நபி(ஸல்) அவர்கள் நீர் தொழுது விட்டீரா? என்று கேட்டார்கள். அதற்கவர்

இல்லை என்றார். எழுந்து தொழுவீராக! என்று கூறினார்கள்.

### இமாம் சொற்பொழிவு நிகழ்த்தும்போது வருபவர் சிறிய அளவில் இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும்.

ஹதீஸ் 931. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்

ஜும்ஆ நாளில் நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒருவர் வந்தார். உடனே நபி(ஸல்) அவர்கள் நீர் தொழுது வீட்டீரா? என்று கேட்டார்கள். அதற்கவர் இல்லை என்றார். (எழுந்து) இரண்டு ரக்அத் தொழுவீராக! என்று கூறினார்கள்.

### சொற்பொழிவின்போது இரண்டு கைகளையும் உயர்த்தவது.

ஹதீஸ் 932. அனஸ் (ரலி) கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒருவர் எழுந்து நபி அவர்களே! கால் நடைகள் அழிந்துவிட்டன. ஆடுகளும் அழிந்துவிட்டன. எங்களுக்கு மழை பொழிவிக்க அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்றார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கைகளையும் நீட்டித் பிரார்த்தித்தார்கள்.

### ஜும்ஆச் சொற்பொழிவின் இடையில் மழை வேண்டிப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 933. அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் ஒரு முறை மக்களைப் பஞ்சம் வாட்டியது. ஜும்ஆ நாளில் நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒரு கிராமவாசி எழுந்து, நபி அவர்களே! செல்வங்கள் அழிந்துவிட்டன. குழந்தை குட்டிகள் பசியால் வாடுகின்றனர். எனவே எங்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் இரண்டு கைகளையும் உயர்த்தி தம் இரண்டு கைகளையும் உயர்த்தினார்கள். அந்த நேரத்தில் வானத்தில் எந்த மழை மேகத்யையும் நாங்கள் பார்க்கவில்லை. என் உயிர் எவனுடைய கைவசனம் உள்ளதோ அவன் மேல் ஆணையாக நபி(ஸல்) அவர்கள் தம் கைகளைக் கீழே இறக்கும் முன்பாக மலைகளைப் போல் மேகங்கள் திரண்டு வந்தன. நபி(ஸல்) அவர்கள் மிம்பரிலிருந்து இறங்குவதற்குள்ளாக மழை கொட்டி அவர்களின் தாடியிலிருந்து வழிந்ததை நான் பாத்தேன். அன்றைய தினமும் அதற்கடுத்த நாளும் அதற்குமடுத்த நாளும் அதற்கு மறு ஜும்ஆ வரையிலும் எங்களுக்கு மழை பொழிந்தது.

(மறு ஜும்ஆவில்) அதே கிராமவாசி அல்லது வேறொருவர் எழுந்து நபி அவர்களே! கட்டிடங்கள் இழுந்து விழுகின்றன. செல்வங்கள் மூழ்குகின்றன. எனவே எங்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்றார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் கைகளை உயர்த்தி இறைவா! எங்கள் சுற்றுப் புறங்களை நோக்கி (இதை அனுப்புவாயாக!) எங்களுக்குக் கேடு தருவதாக (இம்மழையை) ஆக்கி விடாதே! என்று கூறினார்கள். மேகம் உள்ள பகுதியை நோக்கி நபி(ஸல்) அவர்கள் சைகை செய்த போதெல்லாம் அம்மேகம் விலகிச் சென்றது. மதீனா நகர் பெரும் பள்ளமாக மாறியது. (இம்மழையால்) கனாத் எனும் ஓடை ஒரு மாதம் ஓடியது. பல்வேறு பகுதிகளிலிருந்து வருபவர்களும் இம்மழையைப் பற்றிப் பேசாமலிருந்ததில்லை.

### வெள்ளிக் கிழமை இமாம் சொற்பொழிவு செய்யும்போது மவுனமாக இருப்பது.

தம் பக்கத்திலிருப்பவரிடம் மவுனமாக இரு என்று எவரேனும் கூறிவிட்டால் அவர் பாழாக்கி விட்டார்.

இமாம் பேசும்போது வாய் மூடி இருக்க வேண்டும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என

ஸல்மான்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 934. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இமாம் சொற்பொழிவு நிகழ்த்தும்போது உன் அருகிலிருப்பவரிடம் வாய்மூடு! என்று கூறினால் நீ வீணான காரியத்தில் ஈடுபட்டுவிட்டாய்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

## ஜும்ஆ நாளிலுள்ள சிறப்பான நேரம்.

ஹதீஸ் 935. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆ நாளைப் பற்றிக் குறிப்பிடும்போது ஜும்ஆ நாளில் ஒரு நேரம் உண்டு என்று கூறிவிட்டு அந்த நேரம் மிகவும் குறைந்த நேரமே என்பதைத் தம் கையால் சைகை செய்து காட்டினார்கள். அந்த நேரத்தில் ஒரு முஸ்லிமான அடியார் தொழுகையில் நின்று அல்லாஹ்விடம் எதையேனும் கேட்டால் அதை அவருக்கு அல்லாஹ் கொடுக்காமலிருப்பதில்லை என்றும் குறிப்பிட்டார்கள்.

## ஜும்ஆத் தொழுகை நடக்கும்போது சிலர் இமாமைவிட்டு விலம்னால் இமாமுடைய தொழுகையையும் அவருடன் சேர்ந்து தொழும் ஏனையோரின் தொழுகையும் செல்லத் தக்கதாகும்.

ஹதீஸ் 936. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (ஜும்ஆத்) தொழுது கொண்டிருந்தபோது உணவுப் பொருட்களை ஏற்றி, ஒட்டகப் பொருட்களை ஏற்றிக் கொண்டு ஒட்டகக் கூட்டம் ஒன்று வந்தது. அதை நோக்கி மக்கள் சென்றுவிட்டனர். பன்னிரெண்டு நபர்களைத் தவிர வேறு எவரும் எஞ்சியிருக்கவில்லை. இந்த நேரத்தில் தான், அவர்கள் வணிகப் பொருட்களையோ கவனத்தை ஈர்க்கக் கூடியதையோ கண்டால் உம்மை நிலையில்விட்டுவிட்டு அதை நோக்கிச் சென்று விடுகின்றனர் (திருக்குர்ஆன் 62:11) என்ற வசனம் அருளப்பட்டது.

## ஜும்ஆவுக்கு முன்பும் பின்பும் உள்ள தொழுகை

ஹதீஸ் 937. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹருக்கு முன் இரண்டு ரக்அத்களும் பின் இரண்டு ரக்அத்களும் தொழுபவர்களாகவும் மஃரிபுக்குப் பிறகு தம் வீட்டில் இரண்டு ரக்அத்கள் தொழுபவர்களாகவும் இஷாவுக்குப் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுபவர்களாகவும் இருந்தனர். ஜும்ஆவுக்குப் பின் (வீட்டுக்குப்) புறப்பட்டுச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுபவர்களாகவும் இருந்தனர்.

## ஜும்ஆத் தொழுகை முடிக்கப் பட்டதும் பூமியில் பரந்து சென்று அல்லாஹ்வின் அருளைத் தேடுங்கள் என்ற அல்லாஹ்வின் கூற்று.

ஹதீஸ் 938. ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) கூறினார்கள்.

எங்களில் ஒரு பெண்மணி இருந்தார். அவர் தம் விளை நிலத்தின் வாய்க்கால் ஓரத்தில் ஒரு வகை கீரைச் செடியைப் பயிரிடுவார். வெள்ளிக்கிழமை வந்துவிட்டால் வேருடன் அச்செடியைப் பிடிங்கி வந்து அதை ஒரு பாத்திரத்தில் போடுவார். பிறகு அதன் மீது கோதுமையில் ஒரு கைப்பிடி அளவு போட்டு அரைப்பார் அந்தக் கீரைச் செடியின் தண்டுப் பகுதிதான் அந்த உணவுக்கே மாமிசம் போல் அமையும். நாங்கள் ஜும்ஆத் தொழுதுவிட்டுத் திரும்பி அவருக்கு ஸலாம் கூறுவோம். அவர் எங்களுக்கு உணவு படைப்பார். அதை நாங்கள் விழுங்குவோம்.

அவரின் இந்த உணவுக்காக நாங்கள் ஜும்ஆ நாளை விரும்புவோம்.

ஹதீஸ் 938. ஸஹ்ல் இப்னு ஸஃது (ரலி) கூறினார்கள்.

எங்களில் ஒரு பெண்மணி இருந்தார். அவர் தம் விளை நிலத்தின் வாய்க்கால் ஓரத்தில் ஒரு வகை கீரைச் செடியைப் பயிரிடுவார். வெள்ளிக்கிழமை வந்துவிட்டால் வேருடன் அச்செடியைப் பிடிங்கி வந்து அதை ஒரு பாத்திரத்தில் போடுவார். பிறகு அதன் மீது கோதுமையில் ஒரு கைப்பிடி அளவு போட்டு அரைப்பார் அந்தக் கீரைச் செடியின் தண்டுப் பகுதிதான் அந்த உணவுக்கே மாமிசம் போல் அமையும். நாங்கள் ஜும்ஆத் தொழுதுவிட்டுத் திரும்பி அவருக்கு ஸலாம் கூறுவோம். அவர் எங்களுக்கு உணவு படைப்பார். அதை நாங்கள் விழுங்குவோம். அவரின் இந்த உணவுக்காக நாங்கள் ஜும்ஆ நாளை விரும்புவோம்.

ஹதீஸ் 939. ஸஹ்ல் இப்னு ஸஃது (ரலி) கூறினார்கள்.

ஜும்ஆவுக்குப் பிறகுதான் நாங்கள் முற்பகல் தூக்கத்தையும் காலை உணவையும் கொள்வோம்.

## ஜும்ஆவுக்குப் பிறகு காலை உறக்கம் கொள்வது.

ஹதீஸ் 940. அனஸ் (ரலி) கூறினார்கள்.

ஜும்ஆவுக்கு முற்பகலிலேயே சென்றுவிட்டு அதன் பின்பே நாங்கள் முற்பகல் தூக்கம் மேற்கொள்வோம்.

ஹதீஸ் 941. ஸஹ்ல் (ரலி) கூறினார்கள்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஜும்ஆத் தொழுவோம். அதன் பிறகே முற்பகல் தூக்கம் நிகழும்

## அத்தியாயம் - 12 - அச்சமான நேரத்தில் தொழுவது.

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் பூமியில் பயணம் செய்து நிராகரிப்பவர்கள் உங்களைத் தாக்கக் கூடும் என்று நீங்கள் அஞ்சினால் தொழுகையைச் சுருக்கிக் கொள்வது உங்களின் மீது குற்றமாகாது. நிச்சயமாக நிராகரிப்பவர்கள் உங்களுக்குப் பம்ரங்க விரோதிகளாக உள்ளனர். நபியே நீர் அவர்களுடன் இருக்கும்போது அவர்களுக்கு (ப் போர்க்களத்தில்) தொழுகை நடத்தினால் ஒரு பிரிவினர் தங்கள் ஆயுதங்களைத் தாங்கியவர்களாக உம்முடன் நின்று தொழட்டும்! அவர்கள் ஸஜ்தாச் செய்ததும் அவர்கள் உங்களுக்குப் பின்னால் செல்லட்டும் தொழாத அடுத்த பிரிவினர் வந்து உம்முடன் தொழட்டும். அவர்களும் தங்கள் ஆயுதங்களையும் எச்சரிக்கை உணர்வையும எடுத்துக் கொள்ளட்டும். நிராகரிப்பவர்கள். நீங்கள் உங்கள் ஆயுதங்களிலும் தளவாடங்களிலும் கவனக்குறைவாக இருப்பதையும் திடீரென உங்களைத் தாக்குவதையும் விரும்புகின்றனர். மழையினால் உங்களுக்கு இடையூறு இருந்தால் அல்லது நீங்கள் நோயாளிகளாக இருந்தால் உங்கள் ஆயுதங்களை(க் கீழே) வைத்து விடுவது உங்களின் மீது குற்றமாகாது. (ஆனாலும்) எச்சரிக்கை உணர்வைப் பிடித்துக் கொள்ளுங்கள்! நிச்சயமாக இறைவன் நிராகரிப்பவர்களுக்கு இழிவு தரும் வேதனையைத் தயார் படுத்தி வைத்துள்ளான். (திருக்குர்ஆன் 4:101, 102)

ஹதீஸ் 942. ஷுஜப் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் போர்க்களத் தொழுகையைத் தொழுதுள்ளார்களா? என்று ஸுஹ்ரீ இடம் கேட்டேன்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்து நஜ்துப் பகுதியில் போரிட்டிருக்கிறேன். நாங்கள் எதிரிகளை நேருக்கு நேர் சந்தித்து அணிவகுத்தோம். நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். ஒரு பிரவினர் அவர்களுடன் இணைந்து தொழலானார்கள். மற்றொரு கூட்டத்தினர் எதிரிகளைச் சந்தித்தனர். நபி(ஸல்) அவர்கள் தம்முடன் உள்ளவர்களுடன் ஒரு ருகூவும் இரண்டு ஸஜ்தாக்களும் செய்தனர். பிறகு தொழாத கூட்டத்தினரின் இடத்திற்கு நாங்கள் செல்ல, அந்தக் கூட்டத்தினர் வந்தனர். அவர்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு ருகூவும் இரண்டு ஸஜ்தாக்களும் செய்தனர். பிறகு நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுத்தனர். உடனே இவர்களில் ஒவ்வொருவரும் எழுந்து தமக்காக ஒரு ருகூவும் இரண்டு ஸஜ்தாக்களும் செய்தனர் என்ற விபரத்தை அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூற அதை ஸாலிம் தமக்கு அறிவித்ததாக ஸுஹ்ரீ விடையளித்தார்.

### நின்றும், வாகனத்தின் மீது அமர்ந்தும், போர்க்களத் தொழுகையைத் தொழலாம்.

ஹதீஸ் 943. நா∴பிவு கூறினார்கள்.

(தனியாகப் பிரிந்து வர முடியாத அளவுக்கு எதிரிகளுடன்) கலந்துவிட்டால் நின்று கொண்டே ஸஹாபாக்கள் தொழுவார்கள் என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

எதிரிகள் இதை விடவும் அதிகமாக இருந்தால் அவர்கள் நின்று கொண்டோ வாகனத்தில் அமர்ந்து கொண்டோ தொழலாம் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

### போர்க்களத் தொழுகையில் ஒருவர் மற்றவருக்குப் பாதுகாப்பாக இருத்தல்.

ஹதீஸ் 944. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்காக நின்றார்கள். மக்களும் அவர்களுடன் நின்றனர். நபி(ஸல்) அவர்கள் தக்பீர் கூற அனைவரும் தக்பீர் கூறினர். நபி(ஸல்) அவர்கள் ருகூவு செய்தபோது அவர்களில் சிலர் (மட்டும்) ருகூவு செய்தனர். நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்தபோது அவர்களுடன் ஸஜ்தாச் செய்தனர்.

பிறகு இரண்டாவது ரக்அத்துக்காக நபி(ஸல்) அவர்கள் எழுந்தபோது ஸஜ்தாச் செய்தவர்கள் எழுந்து தங்கள் சகோதரர்களைப பாதுகாக்கும் பணியில் ஈடுபட, மற்றொரு கூட்டத்தினர் வந்து ருகூவு செய்து ஸஜ்தாவும் செய்தனர். மக்கள் அனைவரும் தொழுகையில்தான் ஈடுபட்டிருந்தார்கள். ஆயினும் ஒருவர் மற்றவரைப் பாதுகாப்பவர்களாக இருந்தனர்.

கோட்டைகளை முற்றுகை யிட்டு வெல்லும் போதும் எதிரிகளைக் களத்தில் சந்திக்கும் போதும் தொழ வேண்டும். வெற்றி நெருங்கிய நிலையில் அவர்களுக்குத் தொழ இயலாவிட்டால் ஒவ்வொருவரும் தனியாகச் சைகை மூலம் தொழ வேண்டும். சைகை மூலம் தொழ இயலாவிட்டால் போர் முடிவுக்கு வரும்வரை அல்லது அச்சமற்ற நிலையை அடையும் வரை தொழுகையைத் தாமதப் படுத்தி அதன் பின்னர் இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும். அதற்கும் அவர்களுக்கு இயலாவிட்டால் ஒரு ருகூவும் இரண்டு ஸஜ்தாவும் செய்வார்கள். தக்பீர் கூறுவது மட்டும் போதாது. அச்சமற்ற நிலை வரும் வரை அவர்கள் பிற்படுத்தலாம் என அவ்ஸாயீ, மக்ஹூல் ஆகியோர் கூறுகின்றனர்.

துஸ்தர் எனும் ஊரில் அமைந்த கோட்டையை ஃபஜ்ரு தோன்றும் வேளையில் நாங்கள் முற்றுகையிட்டோம். போர் கடுமையாக மூண்டது. தொழ இயலவில்லை. நண்பகலில் தவிர எங்களால் தொழ முடியவில்லை. அபூ மூஸா(ரலி) உடன் நாங்கள் அதைத் தொழுதோம். எங்களுக்கு வெற்றி கிடைத்தது. அந்த ஒரு தொழுகை அளித்த மகிழ்ச்சியை இவ்வுலகமும் அதிலுள்ளவையும் எனக்கு அளிக்க முடியாது என்று அனஸ்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 945. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்கள்.

அகழ்ப்போரின்போது குரைஷி இறைமறுப்பாளர்களை ஏசிக் கொண்டே உமர்(ரலி) வந்து நபி அவர்களே! சூரியன் மறையத் துவங்கும் வரை நான் அஸர் தொழவில்லை என்றனர். அதற்கு நபி(ஸல்) அவர்க அல்லாஹ்வின் மீது அணையாக நானும் இது வரை அஸர் தொழ வில்லை என்று கூறிவிட்டு, புத்ஹான் என்னுமிடத்திற்குச் சென்று உளூச் செய்துவிட்டு, சூரியன் மறைந்த பிறகு அஸரையும் அதன் பின்னர் மஃரிபையும் தொழுதனர்.

## எதிரிகளைத் தேடிச் செல்பவரும் எதிரிகளால் தேடப்படுவரும் வாகனத்தின் மீது சைகை மூலம் தொழலாம்.

ஷுரஹ்பீல் இப்னு ஸகித் என்பவரும் அவரின் தோழர்களும் வாகனத்தின் மீதே தொழுதது பற்றி அவ்ஸாயீ இடம் கேட்டேன். நேரம் தப்பிவிடும் என்று அஞ்சினால் அது கூடும் என்பதே நம்முடைய கருத்தாகும் என அவர் குறிப்பிட்டார் என வலீத், கூறுகிறார். மேலும் வலீத் பின் வரும் ஹதீஸையும் தமக்குச் சான்றாகக் கொள்கிறார்.

ஹதீஸ் 946. இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.

அஹ்ஸாப் யுத்தத்திலிருந்து திரும்பியபோது எங்களிடம் நபி(ஸல்) அவர்கள் பனு குரைலாக் கூட்டத்தினர் வசிக்கும் இடத்தை நீங்கள் அடையும் வரை அஸர் தொழ வேண்டாம் என்று கூறினார்கள். வழியிலேயே அஸர் நேரத்தை அடைந்தோம். பனுகுரைலாக் கூட்டத்தினர் வசிக்கும் இடத்தை அடையும் வரை நாம் அஸர் தொழவேண்டாம் என்று சிலர் கூறினர். வேறு சிலர் இந்த அர்த்தத்தில் நபி(ஸல்) அவர்கள் கூறவில்லை எனவே நாம் தொழுவோம் என்றனர். இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோது அவர்களில் எவரையும் நபி(ஸல்)

அவர்கள் குறை கூறவில்லை. இருள் இருக்கும் போதும் அதிகாலையிலும் ஸுப்ஹுத் தொழுவதும் தாக்குதலின் போதும் போர்க்களத்திலும் தொழுவதும். இருள் இருக்கும் போதும் அதிகாலையிலும் ஸுப்ஹுத் தொழுவதும் தாக்குதலின் போதும் போர்க்களத்திலும் தொழுவதும்.

ஹதீஸ் 947. அனஸ்(ரலி) கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இருட்டிலேயே ஸுப்ஹுத் தொழுதுவிட்டு வாகனத்தில் ஏறினார்கள். பிறகு அல்லாஹ் மிகப் பெரியவன்! கைபர் வீழ்ந்தது! ஒரு கூட்டத்தினரின் மீது நாம் தாக்குதல் தொடுத்தால் அவர்களின் முடிவு கெட்டதாக அமையும்! என்று கூறினார்கள்.

கைபர் வாசிகள் வீதிகளில் ஓடிக் கொண்டே முஹம்மதும் அவரின் படையினரும் வந்துவிட்டனர் என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், எதிரிகளின் மீது தாக்கதல் தொடுத்தார்கள். போரில் ஈடுபட்டவர்களைக் கொன்றார்கள். சிறுவர்களைக் கைதிகளாகப் பிடித்தார்கள். (கைதியாகப் பிடிபட்ட) ஸஃபிய்யா(ரலி) திஹ்யா அல்கல்பீக்குக் கிடைத்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களுக்குக் கிடைத்தார்கள். அவரை விடுதலை செய்ததையே மஹராக ஆக்கி அவரை நபி(ஸல்) அவர்கள் மணந்தார்கள்.

இச்செய்தியை ஸாபித் கூறுகையில் அவரிடம் அபூ முஹம்மதே! நபி(ஸல்) அவர்கள் என்ன மஹர் கொடுத்தார்கள் என்பதை அனஸ்(ரலி) அவர்களிடம் நீங்கள் கேட்டீர்களா? என்று அப்துல் அஸீஸ் கேட்டபோது, அவரின் விடுதலையையே மஹராக ஆக்கியதாகக் கூறிவிட்டுப் புன்முறுவல் பூத்தார். இந்தத் தகவவை ஹம்மாத் கூறினார்கள்.

# அத்தியாயம் - 13 - இரு பெருநாட்கள்

## இரண்டு பெருநாள்களில் அலங்கரித்துக் கொள்வது.

ஹதீஸ் 948. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கடைவீதியில் விற்பனை செய்யப்பட்ட பட்டுக் குளிராடை ஒன்றை உமர்(ரலி) எடுத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்து நபி அவர்களே! இதை விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள் பெருநாளிலும் தூதுக்குழுவினரைச் சந்திக்கும் பொழுதும் நீங்கள் அலங்கரித்துக் கொள்ளலாம் என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இது (மறுமைப்)பேறு அற்றவர்களின் ஆடையாகும் எனக் கூறினார்கள். சிறிது காலம் கடந்தது. பிறகு நபி(ஸல்) அவர்கள் பட்டுக் குளிராடை ஒன்றை உமர்(ரலி) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்கள். அதை எடுத்துக் கொண்டு உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். நபி அவர்களே! இது (மறுமைப்) பேறு பெறாதவர்களின் ஆடை எனக் கூறிவிட்டு இதை எனக்குக் கொடுத்தனுப்பியுள்ளீர்களே என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் இதை நீர் விற்றுக் கொள்ளும்! அல்லது இதன் மூலம் உம் தேவைகளை பூர்த்தி செய்து கொள்ளும்! என்று கூறினார்கள்.

பெருநாள் தினத்தில் போர்க்கருவிகளையும் கேடயத்தையும் பயன்படுத்துவது.

ஹதீஸ் 949. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

புஆஸ் (எனும் போர்) பற்றிய பாடல்களை இரண்டு சிறுமிகள் என்னிடம் பாடிக் காட்டிக் கொண்டிருந்தபோது என்னிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். படுக்கையில் சாய்ந்து தம் முகத்தை (வேறு புறமாகத்) திருப்பினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) வந்து நபி(ஸல்) அவர்களின் அருகில் ஷைத்தானின் இசைக்கருவிகளா? என்று கூறி என்னைக் கடிந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ரை நோக்கி அவ்விருவரையும்விட்டு விடுங்கள் என்றனர். அபூ பக்ர்(ரலி) அவர்களின் கவனம் வேறு புறம் திரும்பியபோது, அவ்விரு சிறுமிகளையும் விரல்களால் குத்தி (வெளியேறி விடுமாறு கூறி)னேன். அவ்விருவரும வெளியேறிவிட்டனர்.

ஹதீஸ் 950. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு பெருநாளின்போது சூடான் நாட்டவர்கள் போர்க் கருவிகளையும் கேடயங்களையும் வைத்து விளையாடினார்கள். நபி(ஸல்) அவர்கள் தாமாகவோ, நான் கேட்டதற்காகவோ நீ பார்க்க ஆசைப் படுகிறாயா? எனக் கேட்டார்கள். நான் ஆம் என்றேன். அவர்கள் என்னைத் தமக்குப் பின்புறமாக என் கன்னம் அவர்களின் கன்னத்தில் படுமாறு நிற்க வைத்தனர்.

(பிறகு அவர்களை நோக்கி) அர்பிதாவன் மக்களே! விளையாட்டைத் தொடருங்கள் என்று கூறினார்கள். நான் பார்த்துச் சலித்தபோது உனக்குப் போதுமா? என்று கேட்டார்கள். நான் ஆம் என்றேன். அப்படியானால் (உள்ளே) போ! என்று கூறினார்கள்.

## இரண்டு பெருநாள்களிலும் முஸ்லிம்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்.

ஹதீஸ் 951. பரா...(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாம் முதலில் தொழுகையை ஆரம்பிப்போம். அதன்பின்னர் (இல்லம்) திரும்பி அறுத்துப் பலியிடுவோம். இவ்வாறு செய்கிறவர் நம்முடைய வழிமுறையைப் பேணியவராவார் நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவில் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 952. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

புஆஸ்(எனும் பழமையான போர்) பற்றி அன்ஸார்கள் புனைந்துள்ளவற்றை அன்ஸாரிகளைச்

சேர்ந்த இரண்டு சிறுமிகள் என்முன்னே பாடிக் கொண்டிருந்தபோது அபூ பக்ர்(ரலி) வந்தார்கள். அவ்விரு சிறுமியரும் பாடம்கள் அல்லர். அல்லாஹ்வின் தூதருடைய இல்லத்தில் ஷைத்தானின் இசைக் கருவிகளா? என்று அபூ பக்ர்(ரலி) கேட்டார்கள். இது நடந்தது ஒரு பெருநாளின் போதாகும். அப்போது நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ரே! ஒவ்வொரு சமுதாயத்திற்கும் பெருநாள்கள் உள்ளன. இது நம்முடைய பெருநாளாகும் என்று கூறினார்கள்.

### நோன்புப் பெருநாளில் தொழச் செல்வதற்கு முன்பே சாப்பிடுவது.

ஹதீஸ் 953. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

சில பேரீச்சம் பழங்களை உண்ணாமல் நோன்புப் பெருநாளில் (தொழுகைக்கு) நபி(ஸல்) அவர்கள் புறப்பட மாட்டார்கள்.

மற்றோர் அறிவிப்பில் அவற்றை ஒற்றைப்படை எண்ணிக்கையில் உண்பார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

### ஹஜ் பெருநாள் தினத்தில் (தொழுகைக்கு முன்பே) உண்ணுதல்.

ஹதீஸ் 954. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(பெருந்நாள்) தொழுகைக்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுக்கிறவர் திரும்பவும் அறுக்கட்டும்! நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள். அப்போது ஒருவர் எழுந்து மாமிசம் விரும்பி உண்ணக் கூடிய நாளாகும் இத் சதைப் பற்றுள்ள இரண்டு ஆடுகளை விட எனக்கு விருப்பமான ஆறு மாதம் நிரம்பிய ஆட்டுக் குட்டி ஒன்றும் என்னிடம் உள்ளது என்று கூறித் தம் அண்டை வீட்டார்(களுக்கும் கொடுக்க வேண்டியுள்ளது) பற்றியும் குறிப்பிட்டார். (தொழுகைக்கு முன்பே அறுப்பதற்கு மேற்கண்ட காரணங்களால் அவர் அனுமதி கேட்டார்) அவருக்கு நபி(ஸல்) சலுகை வழங்கினார்கள். இந்தச் சலுகை மற்றவர்களுக்கும் உண்டா இல்லையா? என்பது எனக்குத் தெரியவில்லை.

ஹதீஸ் 955. பராஃ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருந்நாள்தினத்தில் தொழுகைக்குப் பின் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். (அவ்வுரையில்) நம்முடைய தொழுகையைத் தொழுது, (அதன் பிறகு) நாம் குர்பானி கொடுப்பதுபோன்று கொடுக்கிறவரே உண்மையில் குர்பானி கொடுத்தவராவார். தொழுகைக்கு முன்பே அறுத்து விடுகிறவர் தொழுகைக்கு முன் (தமக்காக) அறுத்தவராவார். குர்பானி கொடுத்தவரல்லர். என்று குறிப்பிட்டார்கள்.

அப்போது அபூ புர்தா இப்னு நியார்(ரலி), நபி அவர்களே! இன்றைய தினம் உண்ணுவதற்கும் பருகுவதற்கும் உரிய தினமாகும் என்று விளங்கி நான் தொழுகைக்கு முன்பே என் ஆட்டை அறுத்துவிட்டேன். என் வீட்டில் அறுக்கப்படும் ஆடுகளில் என்னுடைய ஆடே முதன் முதலில் அறுக்கப்படுவதாக அமைய வேண்டும் என்றும் விரும்பி (அறுத்து) விட்டேன். எனவே நான் தொழுகைக்கு வருவதற்கு முன்பே என் ஆட்டை அறுத்து (அதையே) காலை உணவாகவும் உட்கொண்டேன் என்றார். அப்போது நபி(ஸல்) உம்முடைய ஆடு மாமிசத்திற்காக அறுக்கப்பட்ட ஆடாகத்தான் கருதப்படும் என்று கூறினார்கள். அப்போது அவர் நபி அவர்களே! என்னிடம் ஓராண்டு நிறையாத ஆட்டுக்குட்டிகள் உள்ளன. எங்களிடம் இரண்டு ஆடுகளை விட விருப்பமாக ஆறு மாதம் நிரம்பிய ஆட்டுக் குட்டி ஒன்று உள்ளது. அதை அறுப்பது எனக்குப் போதுமா? என்று கேட்டார். ஆம்! இனிமேல் உம்மைத் தவிர வேறு எவருக்கும் அது பொருந்தாது நபி(ஸல்) விடையளித்தார்கள்.

### பெருநாள் தொழுகைக்காக மிம்பர் இல்லாத திடலுக்குச் செல்வது.

ஹதீஸ் 956. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாளிலும் ஹஜ்ஜுப் பெருநாளிலும் (பள்ளியில் தொழாமல்) திடலுக்குச் செல்பவர்களாக இருந்தனர். அவர்கள் முதன் முதலில் தொழுகையையே துவக்குவார்கள். தொழுது முடித்து எழுந்து மக்களை முன்னோக்குவார்கள். மக்களெல்லாம் தங்கள் வரிசைகளில் அப்படியே அமர்ந்திருப்பார்கள். அவர்களுக்குப் போதனைகள் செய்வார்கள். (வலியுறுத்த வேண்டியதை) வலியுறுத்துவார்கள் (கட்டளையிடவேண்டியதை) கட்டளையிடுவார்கள். ஏதேனும் ஒரு பகுதிக்குப் படைகளை அனுப்ப வேண்டியிருந்தால் அனுப்புவார்கள். எதைப் பற்றியேனும் உத்தரவிட வேண்டியருந்தால் உத்தரவிடுவார்கள். பின்னர் (இல்லம்) திரும்புவார்கள்.

மதீனாவின் ஆளுநராக இருந்த மர்வானுடன் நோன்புப் பெருநாள் தொழுகையையோ, ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையையோ தொழச் செல்லும் வரை மக்கள் இவ்வாறே கடைப்பிடித்து வந்தனர். (மர்வான் ஆட்சியில் ஒரு நாள்) நாங்கள் தொழுழ் திடலுக்கு வந்தபோது க?ர் இப்னு ஸல்த் என்பவர் உருவாக்கிய மேடை ஒன்று அங்கே திடீரெனக் காணப்பட்டது. அப்போது மர்வான் தொழுவதற்கு முன்பே அதில் ஏறமுயன்றார். நான் அவரின் ஆடையைப் பிடித்து இழுத்தேன். அவர் என்னை இழுத்தார். முடிவில் அவர் மேடையில் ஏறித் தொழுகைக்க முன்பே உரை நிகழ்த்தலானார். அப்போது நான் அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் (நபி வழியை) மாற்றி விட்டீர்கள் என்று கூறினேன்.

அதற்கு மர்வான் நீ விளங்கி வைத்திருக்கும் நடைமுறை மலையேறிவிட்டது என்றார். நான் விளங்காத (இந்தப் புதிய) நடைமுறையை விட நான் விளங்கி வைத்துள்ள நடைமுறை அல்லாஹ்வின் மீது ஆணையாகமிகச் சிறந்ததாகும் என கூறினேன்.

அதற்கு மர்வான் மக்கள் தொழுகைக்ப் பிறகு இருப்பதில்லை எனவே நான் தொழுகைக்கு முன்பே உரையை அமைத்துக் கொண்டேன் என்று கூறினார்.

## பெருநாள் தொழுகைக்காக நடந்தும் வாகனத்திலும் செல்லலாம். பாங்கு இகாமத்தும் இல்லாமல் தொழ வேண்டும்.

ஹதீஸ் 957. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருந்ாள், ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகைகளைத் தொழுதுவிட்டுப் பிறகு உரை நிகழ்த்துவார்கள்.

ஹதீஸ் 958. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாள் தொழுகை தொழப் புறப்பட்டுச் சென்று, உரை நிகழ்த்துவதற்கு முன் தொழுதார்கள்.

ஹதீஸ் 959. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) காலத்தில் நோன்புப் பெருநாளில் தொழுகைக்காகப் பாங்கு சொல்லப்பட்டதில்லை தொழுகைக்குப் பிறகே உரையும் அமைந்திருந்தது.

ஹதீஸ் 960. ஜாபிர்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோர் கூறினார்கள்:

நோன்புப் பெருநாளிலும் ஹஜ்ஜுப் பெருநாளிலும் பாங்கு சொல்லப்பட்டதில்லை.

ஹதீஸ் 961. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (பெருநாள் தொழுகைக்குத்) தயாராகித் தொழுகையைத் துவக்கினார்கள். பிறகு மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். நபி(ஸல்) அவர்கள் (உரை நிகழ்த்தி) முடித்து

இறங்கிப் பெண்கள் பகுதிக்குச் சென்று பிலால்(ரலி) உடைய கை மீது சாய்ந்து கொண்டு பெண்களுக்குப் போதனை செய்தார்கள்.

பிலால்(ரலி) தம் ஆடையை ஏந்திக் கொள்ள, பெண்கள் தங்கள் தர்மத்தை அதில் போடலானார்கள். உரை நிகழ்த்தி முடித்துவிட்டுப் பெண்கள் பகுதிக்குச் சென்று அவர்களுக்குப் போதனை செய்வது இன்றைக்கும் இமாம்களின் மீது கடமை என நீங்கள் கருதுகிறீர்களா? என அதா..விடம் கேட்டேன். அதற்கு நிச்சயமாக அது அவர்களுக்குக் கடமைதான். அவர்கள் எப்படி இதைச் செய்யாமலிருக்க முடியும்? என்று கேட்டார் என இப்னு ஜுரைஜ் கூறுகிறார்.

## தொழுகைக்குப் பிறகு உரை நிகழ்த்துவது

ஹதீஸ் 962. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான், நபி(ஸல்) அவர்கள், அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி), உஸ்மான்(ரலி) ஆகியோருடன் பெருநாள் தொழுகையில் பங்கெடுத்துள்ளேன். அவர்கள் அனைவரும் உரை நிகழ்த்துவதற்கு முன்பே தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 963. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோர் இரண்டு பெருந்நாள்களிலும் உரை நிகழ்த்துவதற்கு முன் தொழுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 964. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாளில் இரண்டு ரக்அத்கள் தொழதனர். அதற்கு முன்னம் பின்னும் எதையேனும் தொழவில்லை. பிறகு பெண்கள் பகுதிக்கு வந்தனர். அவர்களுடன் பிலால்(ரலி) இருந்தார். தர்மம் செய்வதன் அவசியம் குறித்து அவர்களுக்கு நபி(ஸல்) விளக்கினார்கள். பெண்கள் (தங்கள் பொருட்களைப்) போடலானார்கள். சில பெண்கள் தங்கள் கழுத்து மாலையையும் வளையல்களையும் போடலானார்கள்.

ஹதீஸ் 965. பராவு இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இன்றைய தினத்தில் நாம் முதலில் செய்ய வேண்டியது தொழுவதாகும். பிறகு (இல்லம்) திரும்பி அறுத்துப் பலியிடுதலாகும். இவ்வாறு செய்கிறவர் நம்முடைய வழிமுறையில் நடந்தவராவார். தொழுகைக்கு முன்னர் அறுக்கிறவர் அறுத்தது, தம் குடும்பத்திற்காக அவர் ஒதுக்கிய மாமிசமாகும். அது குர்பானியில் சேராது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அபூ புர்தா இப்னு நியார் என்று அழைக்கப்படும் அன்ஸார்களில் ஒருவர் நபி அவர்களே! நான் (முன்பே) அறுத்து விட்டேன். என்னிடம் ஓராண்டு நிறைந்த ஆட்டைவிடச் சிறந்த ஆறு மாதக் குட்டி ஒன்று உள்ளது. (அதை அறுக்கலாமா?) என்று கேட்டார்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஒரு வயது ஆட்டுக்குப் பதிலாக அதை நீ அறுத்துக் கொள்! இனி மேல் உன்னைத் தவிர வேறு எவருக்கும் அது பொருந்தாது என்று விடையளித்தார்கள்.

## பெருநாளின் போதம் ஹரம் எல்லையிலும் ஆயுதங்களை எடுத்துச் செல்லலாகாது.

எதிரிகள் பற்றிய அச்சம் இருந்தால் தவிர மற்ற சந்தர்ப்பங்களில் பெருநாள் தினத்தில் ஆயுதங்களை எடுத்துச் செல்லத் தடுக்கப்பட்டார்கள் என்று ஹஸன்(பஸர்) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 966. ஸயீத் இப்னு ஜுபைர் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) உடைய பாதத்தின் மையப் பகுதியில் அம்பு தாக்கி அவர்களின் பாதம் வாகனத்துடன் ஒட்டிக் கொண்ட சமயத்தில் நான் அவர்களுடன் இருந்தேன். நான் (கீழே) இறங்கி அதைப் பிடுங்கினேன். இது மினாவில் இருந்தபோது நடந்தது.

இச்செய்தி ஹஜ்ஜாஜு(பின் யூஸுஃபு)க்குக் கிடைத்து அவர் நோய் விசாரிக்க வந்தார். உம்மைத் தாக்கியவர் யாரென்று தெரிந்தால் (நடவடிக்கை எடுப்போம்) என்று அப்போது குறிப்பிட்டார்.

அதற்கு இப்னு உமர்(ரலி) நீர் தாம் தாக்கினீர் என்றார்கள். அது எப்படி? என்று ஹஜ்ஜாஜ் கேட்டார். ஆயுதம் கொண்டு செல்லக் கூடாத நாளில் நீர் தாம் ஆயுதம் தரித்தீர்! ஹரம் எல்லையில் ஆயுதங்கள் கொண்டு செல்லப்படக் கூடாது என்ற நிலையில் நீர் ஹரம் எல்லையில் ஆயுதங்களை நடமாட விட்டீர் என்று இப்னு உமர்(ரலி) குறிப்பிட்டார்.

ஹதீஸ் 967. ஸயீத் இப்னு அம்ர் ( அறிவித்தார்) இப்னு உமர்(ரலி) அவர்களிடம் ஹஜ்ஜாஜ் வந்தார். அப்போது நானும் அவர்களுடனிருந்தேன். இப்னு உமர்(ரலி) எப்படி இருக்கிறார்? என்று (என்னிடம்) கேட்டார். நலமாக உள்ளார் என்று கூறினேன்.

பிறகு இப்னு உமர்(ரலி) அவர்களிடம் உம்மைத் தாக்கியவர் யார்? என்று ஹஜ்ஜாஜ் கேட்டார். அயுதங்களை எடுத்துச் செல்லக் கூடாத நாளில் ஆயுதங்களை எடுத்துச் செல்ல உத்தரவிட்டவரே என்னைத் தாக்கியவர் என்று ஹஜ்ஜாஜை மனதில் வைத்துக் குறிப்பிட்டார்கள்.

## பெருநாள் தொழுகைக்குக் காலையிலேயே செல்வது.

(லுஹா எனும்) உபரித் தொழுகை நேரத்தில், இந்நேரம் நாங்கள் நபி(ஸல்) காலத்தில் (பெருந்நாள்) தொழுது முடித்துவிடுவோம் என்று அப்துல்லாஹ் இப்னு புஸ்ர்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 968. பராவு இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜுப் பெருநாளில் நபி(ஸல்) எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். (அவ்வுரையில்) இன்றைய தினத்தில் நாம் முதலில் செய்ய வேண்டியது தொழுவதாகும். பிறகு (இல்லம்) திரும்பி அறுத்துப் பலியிடுதலாகும். இவ்வாறு செய்கிறவர் நம்முடைய வழிமுறையில் நடந்தவராவார். தொழுகைக்கு முன்னர் அறுக்கிறவர் அறுத்தது, தம் குடும்பத்திற்காக. அவசரப்பட்டுவிட்டார் அது குர்பானியில் சேராது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அபூ புர்தா இப்னு நியார் எழுந்து நபி அவர்களே! நான் தொழுவதற்கு முன்பே அறுத்து விட்டேன். என்னிடம் ஓராண்டு நிறைந்த ஆட்டை விடச் சிறந்த ஆறுமாதக் குட்டி ஒன்று உள்ளது (அதை அறுக்கலாமா?) என்று கேட்டார்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஒரு வயது ஆட்டுக்குப் பதிலாக அதை நீ அறுத்து கொள்! இனி மேல் உன்னைத் தவிர வேறு எவருக்கும் அது பொருந்தாது என்று விடையளித்தார்.

## அய்யாமுத் தஷ்ரீக் (எனும் துல்ஹஜ் 11, 12, 13 ஆகிய) நாள்களில் நல்லறங்கள் செய்வதன் சிறப்பு.

அறிமுகமான நாள்களில் அல்லாஹ்வின் பெயரை நினைவு கூர்வர் என்று (திருக்குர்ஆன் 22:28) வசனத்திற்கு விளக்கமளிக்கும்போது துல்ஹஜ்ஜின் பத்து நாள்கள் என்றும், குறிப்பிட்ட நாள்களில் இறைவனை நினைவு கூர்வார்கள் (திருக்குர்ஆன் 02:22) என்ற வசனத்திற்கு விளக்கமளிக்கும்போது அய்யாமுத்தஷ்ரீக் நாள்கள் என்றும் இப்னு அப்பாஸ்(ரலி) விளக்கமளித்தார்கள்.

இப்னு உமர்(ரலி), அபூ ஹுரைரா(ரலி) ஆகிய இருவரும் பத்து நாள்களும் கடை வீதிக்குச் சென்று தக்பீர் கூறுவார்கள். மக்களும் அவர்களுடன் தக்பீர் கூறுவார்கள்.

ந∴பிலான தொழுகைகளுக்குப் பின் முஹம்மத் இப்னு அலீ தக்பீர் கூறுபவராக இருந்தார்.

ஹதீஸ் 969. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(துல்ஹஜ்) பத்து நாள்களில் செய்யும் எந்த நல்லறமும் அய்யாமுத் தஷ்ரீக் நாள்களில் செய்யும் எந்த நல்லறத்தையும் விடச் சிறந்ததல்ல நபி(ஸல்) கூறினார்கள். ஜிஹாதை விடவுமா? என்று நபித் தோழர்கள் கேட்டனர். தன்உயிரையும் பொருளையும் பணயம் வைத்துப் புறப்பட்டு இரண்டையும் (இறைவழியில்) இழந்துவிட்டவன் செய்த ஜிஹாதைத் தவிர நபி(ஸல்) கூறினார்கள்.

## (துல்ஹஜ் 10, 11, 12, 13 ஆகிய) மினாவின் நாள்களிலும் அர∴பாவுக்குப் புறப்படம் போதும் தக்பீர் கூறுவது.

உமர்(ரலி) மினாவில் தம் கூடாரத்தில் தக்பீர் கூறுவார்கள். அதைப் பள்ளியில் உள்ளவர்கள் செவியுற்று அவர்களும் தக்பீர் கூறுவார்கள். மேலும் கடைவீதியில் உள்ளவர்களும் தக்பீர் கூறுவார்கள். முடிவில் மினா தக்பீர் முழக்கத்தால் அதிரும்.

மேற்கண்ட நாள்களில் தொழுகைக்குப் பிறகும் படுக்கையிலும் கூடாரத்திலும் அமரும் போதும் நடக்கும் போதும் இப்னு உமர்(ரலி) தக்பீர் கூறுபவர்களாக இருந்தனர்.

மைமூனா(ரலி) நஹ்ருடைய நாளில் (தல்ஹஜ் 10 ஆம்நாள்) தக்பீர் கூறுபவர்களாக இருந்தனர். அபான் இப்னு உஸ்மான், உமர் இப்னு அப்தில் அஜீஸ் ஆகியோரைப் பின்தொடர்ந்து தஷ்ரீக் நாள்களின் (11, 12, 13) இரவுகளில் ஆண்களுடன் பெண்களும் பள்ளியில் தக்பீர் கூறுபவர்களாக இருந்தனர்.

ஹதீஸ் 970. முஹம்மத் இப்னு அபீ பக்ர் அஸ்ஸ∴பீ அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் மினாவிலிருந்து அர∴பாவுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும்போது அனஸ்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்களுடன் நீங்கள் எவ்வாறு தல்பியா கூறிக் கொண்டிருந்தீர்கள்? என்று கேட்டேன். அதற்கவர்கள் தல்பியா கூறியவர்கள் தல்பியா கூறினர் அது ஆட்சேபிக்கப் படவில்லை தக்பீர் கூறியவர் தக்பீர் கூறினர் அதுவும் ஆட்சேபிக்கப் படவில்லை என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 971. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பெருநாளில் (தொழும் திடலுக்கு) நாங்கள் புறப்பட வேண்டுமெனவும் கூடாரத்திலுள்ள கன்னிப் பெண்களையும் மாதவிடாய் ஏற்பட்டுள்ள பெண்களையும் புறப்படச் செய்ய வேண்டுமெனவும் நாங்கள் கட்டளையிடப் பட்டிருந்தோம். பெண்கள் ஆண்களுக்குப் பின்னால் இருப்பார்கள். ஆண்களின் தக்பீருடன் அவர்களும் தக்பீர் கூறுவார்கள். ஆண்களின் துஆவுடன் அவர்களும் துஆச் செய்வார்கள். அந்த நாளின் பரக்கத்தையும் புனிதத்தையும் அவர்கள் எதிர்ப்பார்கள்.

## பெருநாளில் ஈட்டியைத் தடுப்பாக வைத்துத் தொழுதல்.

ஹதீஸ் 972. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நோன்புப் பெருநாளிலும் ஹஜ்ஜுப் பெருநாளிலும் (திடலில் தொழுவதால் தடுப்பாக) நபி(ஸல்) அவர்களுக்கு முன்னால் ஓர் ஈட்டி நாட்டப்படும். நபி(ஸல்) அவர்கள் (அதை நோக்கித்) தொழுவார்கள்.

## பெருநாளில் இமாமுக்கு முன்னால் ஈட்டியை அல்லது கைத்தடியை எடுத்துச் செல்வது.

ஹதீஸ் 973. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (பெருநாள் தொழுகைக்காகத்) தொழும் திடலுக்குப் புறப்படுவார்கள். அவர்களுக்கு முன்பே கைத்தடி எடுத்துச் செல்லப் பட்டுத் தொழும் இடத்தில் அவர்களுக்கு முன்னால் நாட்டப்படும். அதை நோக்கி நபி(ஸல்) தொழுவார்கள்.

### தொழும் திடலுக்கு மாதவிடாயுள்ளோருட்பட எல்லாப் பெண்களும் புறப்பட்டுச் செல்வது.

ஹதீஸ் 974. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கன்னிப் பெண்களையும் மாதவிடாயுள்ள பெண்களையும் (தொழும் திடலுக்குப்) புறப்படச் செய்யும்படி எங்களை ஏவினார்கள். மாதவிடாயுள்ள பெண்கள் தொழுமிடத்தைவிட்டு விலகியிருப்பார்கள்.

### தொழும் திடலுக்குச் சிறுவர்களும் புறப்படுவது.

ஹதீஸ் 975. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் (சிறுவனாக இருக்கும் போது) நோன்புப் பெருநாளிலோ ஹஜ்ஜுப் பெருநாளிலோ நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டேன். அவர்கள் தொழுதுவிட்டு உரை நிகழ்த்தினார்கள். பிறகு பெண்கள் (பகுதிக்கு) வந்து அவர்களுக்குப் போதனையும் அறிவுரையும் வழங்கினார்கள். தர்மம் செய்யுமாறும் அவர்களை வலியுறுத்தினார்கள்.

### பெருநாள் உரையின்போது இமாம் மக்களை நோக்கியவாறு இருக்கவேண்டும்.

நபி(ஸல்) அவர்கள் மக்களை முன்னோக்கி நின்றார்கள் என்று அபூ ஸயீத்(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 976. பரா:(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாளில் பகீ: எனுமிடத்திற்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். பின்னர் எங்களை நோக்கி, இன்று நாம் செய்யும் முதல் காரியம் தொழுகையை நிறைவேற்றுவது. பின்னர்(இல்லம்) திரும்பி (குர்பானிப் பிராணியை) அறுப்பது. இவ்வாறு தொழுகைக்கு முன் அறுத்துவிட்டவர் தம் குடும்பத்தாருக்காக, அவசரமாக அறுத்தவராவார். அது குர்பானியாகாது எனக் கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து, நபி அவர்களே! நான் (தொழுகைக்கு முன்பே) அறுத்துவிட்டேன். என்னிடம் ஒரு வயதுடைய ஆட்டை விடச் சிறந்த ஆறு மாதக் குட்டி ஒன்று இருக்கிறது. (அதை அறுக்கலாமா?) என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அதை அறுப்பீராக! உமக்குப் பின் மற்றவர்களுக்கு இது பொருந்தாது என்று கூறினார்கள்.

### தொழும் திடலில் அடையாளத்தை ஏற்படுத்துவது.

ஹதீஸ் 977. அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ் கூறினார்:

நீங்கள் நபி(ஸல்) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் பங்கெடுத்ததுண்டா? என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள், ஆம்! (நபி(ஸல்) அவர்களுடன்) நெருக்கமான உறவு எனக்கு இல்லாவிட்டால் நான் சிறுவனாக இருந்த நிலையில் அதில் கலந்து கொண்டிருக்க முடியாது என்று கூறிவிட்டு நபி(ஸல்) அவர்கள் கஸீர் இப்னு ஸல்த் என்பவரின் இல்லத்தினருகில் இருந்த அடையாளத்திற்கு வந்தார்கள். பிறகு தொழுதுவிட்டு உரை நிகழ்த்தினார்கள். பிறகு பெண்களிடம் வந்தார்கள். அவர்களுடன் பிலால்(ரலி) இருந்தார்கள். பெண்களுக்குப் குனித்து தம் கைகளால் பிலாலுடைய துணியில் பொருட்களைப்

போட்டதை பார்த்தேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் பிலால்(ரலி) உடன் தம் இல்லத்திற்கு புறப்பட்டனர் என்றார்கள்.

## பெருநாளில் பெண்களுக்கு இமாம் போதனை செய்வது.

ஹதீஸ் 978. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாளில் எழுந்து தொழுதார்கள். தொழுகையை முதலில் நடத்திவிட்டுப் பிறகு உரை நிகழ்த்தினார்கள். உரை முடித்து இறங்கிப் பெண்களிடம் சென்று பிலாலுடைய கையில் சாய்ந்து கொண்டு அவர்களுக்குப் போதனை செய்தார்கள். பிலால்(ரலி) தம் ஆடையை ஏந்திக் கொண்டிருந்தார்கள். பெண்கள் (தங்களின்) தர்மத்தை அதில் போடலானார்கள்.

(ஜாபிர் வழியாக இதை அறிவிக்கும்) அதா..விடம் பித்ரு ஸதகாவையா? என்று கேட்டேன். அதற்கவர் இல்லை! அப்போது அவர்களாக விரும்பிச் செய்த தர்மத்தையே போட்டனர். கால் விரலில் அணிந்து கொள்ளும் மெட்டிகளையும் அவர்கள் போட்டுள்ளனர் என்று விடையளித்தார்.

இமாம் பெண்களுக்கும் போதனை செய்வது அவசியமானது என்று நீங்கள் கருதுகிறீர்களா? என அதா..விடம் கேட்டேன். அதற்கவர் நிச்சயமாக அவர்களுக்கு அது கடமை தான். அதை அவர்கள் எப்படிச் செய்யாமலிருக்க முடியும்? என்று பதிலளித்தார் என இப்னு ஜுரைஜ் அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 979. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடனும் அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி), உஸ்மான்(ரலி) ஆகியோருடனும் நோன்புப் பெருநாள் தொழுகையில் பங்கெடுத்துள்ளேன். உரை நிகழ்த்துவதற்கு முன் தொழுகை நடத்துபவர்களாக அவர்கள் இருந்தனர். அதன் பிறகே உரை நிகழ்த்துவார்கள். நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டார்கள். அவர்கள் மக்களைத் தம் கைகளால் அமரச் செய்தது இன்றும் நான் பார்ப்பது போலுள்ளது. பிறகு ஆண்களை (வரிசையினூடே) பிளந்து கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள். நபியே உம்மிடம் இறைநம்பிக்கையுள்ள பெண்கள் உறுதி மொழி எடுக்க வரும் போது (திருக்குர்ஆன் 60:12) என்ற வசனத்தை ஓதினார்கள். ஓதி முடித்துவிட்டு இந்த உறுதிமொழியில் நீங்கள் நிலையாக இருப்பீர்களா? என்று கேட்டார்கள். எவரும் விடையளிக்கவில்லை. ஒரு பெண் மட்டுமே ஆம் என்றார். அவர் யாரென்று அறிவிப்பாளர் ஹஸனுக்குத் தெரியவில்லை - பிலால் தம் ஆடையை ஏந்தினார்.

வாருங்கள்! தாய் தந்தையரை அர்ப்பணிக்க வாருங்கள்! என்று பிலால் கூறினார். மோதிரங்களையும் மெட்டிகளையும் பிலாலின் ஆடையில் அப்பெண்கள் போடலானார்கள்.

## பெருநாள் தொழுகை தொழச் செல்லப் பெண்களுக்கு மேலங்கி இல்லாவிட்டால் என்ன செய்வது?

ஹதீஸ் 980. ஹ..ப்ஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் இரண்டு பெருநாள்களிலும் தொழும் இடத்திற்குச் செல்வதை விட்டும் எங்கள் குமரிப் பெண்களைத் தடுத்துக் கொண்டிருந்தோம். அந்தச் சமயத்தில் ஒரு பெண் வந்து பனீ கல..ப் வம்சத்தினரின் இல்லத்தில் தங்கியிருந்தார். அவர் தம் சகோதரி (உம்மு அதிய்யா) வழியாக வந்த செய்தியை அவர்கள் கூறினார்கள். அவரின் சகோதரி (உம்மு அதிய்யா) நபி(ஸல்) அவர்களோடு தம் கணவர் பங்கெடுத்த பன்னிரண்டு போர்களில் ஆறு போர்களில் கணவரோடு இருந்தவராவார்.

உம்மு அதிய்யா கூறினார்:

நாங்கள் போர்க்களத்தில் காயமுற்றவர்களுக்குச் சிகிச்சையளிப்போம். நோயாளிகளைக் கவனிப்போம். நான் நபி(ஸல்) அவர்களிடம் எங்களில் ஒருத்திக்கு மேலங்கி இல்லாவிட்டால் (பெருநாள் தொழுகைக்குச்) செல்லாமல் இருப்பது குற்றமா? எனக் கேட்டேன். அதற்கு, அவளுடைய தோழி தன்னுடைய உபரியான மேலங்கியை அவளுக்கு அணியக் கொடுக்கட்டும். அவள் நன்மையான காரியங்களிலும் முஸ்லிம்களுடைய பிரச்சாரத்திலும் கலந்து கொள்ளட்டும். நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உம்மு அதிய்யா(ரலி) (என்னிடம்) வந்தபோது நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூற நீங்கள் கேட்டீர்களா? என கேட்டேன். அதற்கு என்னுடைய தந்தை அர்ப்பணமாகட்டும் ஆம்! கேட்டேன் எனக் கூறினார்கள். இவர் நபி(ஸல்) அவர்களின் பெயரைக் கூறும் போதெல்லாம் என்னுடைய தந்தை அர்ப்பணமாகட்டும் என்பதையும் சேர்த்தே கூறுவார்.

கன்னிப் பெண்களும் மாதவிடாய் பெண்களும் (பெருநாள் அன்று) வெளியே சென்று நன்மையான காரியங்களிலும் முஸ்லிம்களுடைய பிரச்சாரத்திலும் பங்கு கொள்வார்கள். பெருநாள் தொழுகை நடக்கும் இடத்திற்குச் செல்லும் மாதவிடாய்ப் பெண்கள் தொழும் இடத்தைவிட்டு ஒதுங்கி இருப்பார்கள் என்றும் உம்மு அதிய்யா(ரலி) கூறினார். இதைக் கேட்ட நான் மாதவிடாய்ப் பெண்களுமா? (பெருநாள் தொழுகை நடக்கும் இடத்திற்குச் செல்வார்கள்) எனக் கேட்டபோது, மாதவிடாயுள்ள பெண் அர..பாவிலும் மற்ற (மினா, முஸ்தலி..பா போன்ற) இடங்களுக்கும் செல்வதில்லையா? என உம்மு அதிய்யா(ரலி) கேட்டார்கள்.

### தொழுமிடத்திலிருந்து மாதவிடாய் ஏற்பட்டவர்கள் விலகி இருப்பது.

ஹதீஸ் 981. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கன்னிப் பெண்களையும் மாதவிடாயுள்ள பெண்களையும் (தொழும் திடலுக்குப்) புறப்படச் செய்யும்படி எங்களை ஏவினார்கள். மாதவிடாயுள்ள பெண்கள் தொழுமிடத்தைவிட்டு விலகியிருப்பார்கள்.

### தொழும் திடலிலேயே ஆடு மாடுகளையும் ஒட்டகங்களையும் அறுப்பது.

ஹதீஸ் 982. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தொழும் திடலிலேயே ஆடு மாடுகளையும் ஒட்டகங்களையும் அறுப்பவர்களாக இருந்தனர்.

### பெருநாள் உரையின்போது இமாமும் மக்களும் இடையே பேசிக் கொள்வதும் உரை நிகழ்த்தும்போது இமாமிடம் கேள்விகள் கேட்பதும்.

ஹதீஸ் 983. பராவு இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள் தினத்தில் தொழுகைக்குப் பின் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். (அவ்வுரையில்) நம்முடைய தொழுகையைத் தொழுது, (அதன் பிறகு) நாம் குர்பானி கொடுப்பது போல் குர்பானி கொடுக்கிறவரே உண்மையில் குர்பானி கொடுத்தவராவார். ஒருவர் தொழுகைக்கு முன்பே அறுப்பது மாமிசத்திற்காக அறுக்கப்பட்டதாகும் என்று குறிப்பிட்டார்கள்.

அப்போது அபூ புர்தா இப்னு நியார்(ரலி) எழுந்து, நபி அவர்களே! இன்றைய தினம் உண்ணுவதற்கும் பருகுவதற்கும் உரிய தினமாகும் என்று விளங்கி நான் தொழுகைக்கு முன்பே என் ஆட்டை அறுத்து விட்டேன். நானும் என்னுடைய குடும்பத்தினரும் அண்டை வீட்டாரும்

சாப்பிட்டு விட்டோம் என்றார். அப்போது நபி(ஸல்) அது மாமிசத்திற்காக அறுக்கப்பட்ட ஆடாகத்தான் கருதப்படும் என்று கூறினார்கள். அப்போது அவர் நபி அவர்களே! என்னிடம் சதைப்பற்றுள்ள இரண்டு ஆடுகளை விடச் சிறந்த, ஆறுமாதம் நிரம்பிய ஆட்டுக் குட்டி ஒன்று உள்ளது. அதை அறுப்பது எனக்குப் போதுமா? என்று கேட்டார். ஆம்! இனிமேல் உம்மைத் தவிர வேறு எவருக்கும் அது பொருந்தாது நபி(ஸல்) விடையளித்தார்கள்.

ஹதீஸ் 984. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகை தொழுகை நடத்திவிட்டு உரை நிகழ்த்தினார்கள். தொழுகைக்கு முன் (குர்பானிப் பிராணிகளை) அறுத்தவர் மீண்டும் அறுக்குமாறு கட்டளையிட்டார்கள். அப்போது அன்ஸார்களைச் சேர்ந்த ஒருவர் எழுந்து, நபி அவர்களே! எனக்கு வறுமை நிறைந்த அண்டை வீட்டார் உள்ளனர். (அவர்களுக்கு முன்பே நான் அறுத்து விட்டேன் என்னிடம் கொழுத்த இரண்டு ஆடுகளை விட விருப்பமான ஆறு மாதக் குட்டி ஒன்று உள்ளது. (அதை அறுக்கலாமா?) என்று கேட்டார். அவருக்கு நபி(ஸல்) அவர்கள் அனுமதி வழங்கினார்கள்.

ஹதீஸ் 985. ஜுன்தப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாள் தினத்தில் தொழுதுவிட்டு உரை நிகழ்த்தினார்கள். பிறகு பலியிட்டார்கள். தொழுகைக்கு முன் அறுத்தவர் மற்றொன்றை அறுக்கட்டும்! அறுக்காதவர் அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கட்டும் என்றார்கள்.

### பெருநாள் தொழுகை தொழுதுவிட்டுத் திரும்பும்போது வேறு பாதையில் வருவது.

ஹதீஸ் 986. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பெருநாள் வந்துவிட்டால் நபி(ஸல்) அவர்கள் (போவதற்கும் வருவதற்கும்) பாதைகளை மாற்றிக் கொள்வார்கள்.

பெருநாள் தொழுகை தவறிவிட்டால் இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும்.

பெண்களும் வீடுகளிலும் குக்கிராமங்களிலும் இருப்போரும் இவ்வாறே செய்ய வேண்டும். ஏனெனில் இது இஸ்லாமியர்களின் பெருநாள் நபி(ஸல்) கூறியுள்ளனர்.

அனஸ்(ரலி) பஸராவுக்கு ஒதுக்குப் புறமாக அமைந்த) ஸாவியா என்ற இடத்தில் தம் அடிமையையும் தம் மனைவி மக்களையும் திரட்டி நகர வாசிகள் தொழுதது போல் தொழுதார்கள். அவர்கள் தக்பீர் கூறுவது போல் தக்பீர் கூறினார்கள்.

கிராமப் புறங்களில் வசிப்பவர்கள் பெருநாள் தினத்தில் ஒன்று கூடி இமாம் செய்வது போன்றே இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும் என்று இக்ரிமா கூறினார்.

ஒருவருக்குப் பெருநாள் தொழுகை தவறிவிட்டால் அவர் இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும் என்று அதாஃ குறிப்பிட்டுள்ளார்.

ஹதீஸ் 987. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

என் அருகே இரண்டு சிறுமியர் தஃப் எனும் கொட்டு அடித்துக் கொண்டிருந்தனர். நபி(ஸல்) அவர்கள் தம் ஆடையால் போர்த்திக் கொண்டிருந்தனர். அப்போது அபூ பக்ர்(ரலி) வந்து அவ்விருவரையும் விரட்டினார்கள். நபி(ஸல்) அவர்கள் தம் முகத்தைவிட்டும் ஆடையை விலக்கி அபூ பக்ரே! அவ்விருவரையும்விட்டு விடுவீராக! ஏனெனில் இவை பெருநாள்களாகும் என்று கூறினார்கள். அந்த நாள்கள் மினவின் நாள்களாக (10, 11, 12, 13) அமைந்திருந்தன.

ஹதீஸ் 988. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபிசீனிய வீரர்கள் பள்ளியில் வீர விளையாட்டில் ஈடுபட்டிருந்தபோது நான் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன். நபி(ஸல்) அவர்கள் என்னை மறைத்துக் கொண்டிருந்தார்கள். அவ்வீரர்களை உமர்(ரலி) விரட்டலானார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (உமரே!) அவர்விட்டு அபீசீனியர்களை நோக்கி அர்பிதாவின் மக்களே! அச்சமின்றி விளையாடுங்கள்! என்று கூறினார்கள்.

## பெருநாள் தொழுகைக்கு முன்பும் பின்பும் தொழலாமா?

இப்னு அப்பாஸ்(ரலி) பெருநாள் தொழுகைக்கு முன் (வேறு தொழுகைகள்) தொழுவதை வெறுப்பவர்களாக இருந்தனர் என்று ஸயீத் குறிப்பிடுகிறார்.

ஹதீஸ் 989. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோன்புப் பெருநாள் தினத்தில் புறப்பட்டு இரண்டு ரக்அத்கள் தொழுதனர். அதற்கு முன்பும் பின்பும் எதையும் அவர்கள் தொழவில்லை. அவர்களுடன் பிலாலும் சென்றனர்

# அத்தியாயம் - 14 - வித்ருத் தொழுகை

## வித்ருத் தொழுகை எப்படி?

ஹதீஸ் 990. இப்னு உமர்(ரலி) அறிவித்தார் :

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் இரவுத் தொழுகை பற்றிக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழ வேண்டும். உங்களில் எவரும் ஸுப்ஹுத் தொழுகை பற்றி அஞ்சினால் அவர் ஒரு ரக்அத் தொழட்டும். அவர் (முன்னர்) தொழுவற்றை அது ஒற்றையாக ஆக்கி விடும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 991. நா∴பிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) (மூன்று ரக்அத்களில்) இரண்டு ரக்அத்களுக்கும் ஒரு ரக்அத்துக்குமிடையே ஸலாம் கொடுப்பார்கள். (அவ்விடைவெளியில்) தம் சில தேவைகள் பற்றியும் (குடும்பத்தினருக்குக்) கட்டளையிடுவார்கள்.

ஹதீஸ் 992. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

என்னுடைய சிறிய தாயார் மைமூனா(ரலி) அவர்களின் வீட்டில் நான் ஒரு நாள் இரவு தங்கினேன். நான் தலையணையின் பக்கவாட்டில் சாய்ந்து தூங்கினேன். நபி(ஸல்) அவர்களும் அவர்களின் மனைவியும் தூங்கினார்கள். இரவின் பாதி வரை கொஞ்சம் முன் பின்னாக இருக்கலாம். நபி(ஸல்) தூங்கினார்கள். பின்னர் விழித்து தங்களின் கையால் முகத்தைத் தடவித் தூக்கக் கலக்கத்தைப் போக்கினார்கள். பின்னர் ஆலு இம்ரான் என்ற அத்தியாயத்தின் இறுதியிலுள்ள பத்து வசனங்களை ஓதினார்கள். பின்னர் எழுந்து சென்று தொங்கவிடப் பட்டிருந்த பழைய தோல் பையிலிருந்து (தண்?ர்) எடுத்து உளூச் செய்தார்கள். அவர்களின் உளூவை நல்ல முறையில் செய்தார்கள். பின்னர் தொழுவதற்காக எழுந்தார்கள். நானும் எழுந்து நபி(ஸல்) அவர்கள் செய்தது போன்று (உளூச்) செய்துவிட்டு நபி(ஸல்) அவர்களின் அருகில் போய் நின்றேன். அவர்கள் தங்கள் வலக்கரத்தை என் தலை மீது வைத்தார்கள். என்னுடைய காதைப் பிடித்து (அவர்களின் வலப்பக்கம்) நிறுத்தினார்கள். இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். மேலும் இரண்டு ரக்அத்கள், மீண்டும் இரண்டு ரக்அத்கள் மறுபடியும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பின்பு வித்ருத் தொழுதார்கள். பின்னர் பாங்கு சொல்பவர் வரும் வரை சாய்ந்து படுத்தார்கள். பிறகு எழுந்து மற்றும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். இரண்டு ரக்அத்துகள் தொழுதுவிட்டு ஸுபுஹுத் தொழுகைக்காக (வீட்டைவிட்டு) வெளியே சென்றார்கள்.

ஹதீஸ் 993. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இரவுத் தொழுகை இரண்டிரண்டு ரக்அத்களே! நீ முடித்துக் கொள்ள நாடினால் ஒரு ரக்அத்தைத் தொழு! அது முன்னர் தொழுததை ஒற்றையாக ஆக்கி விடும். என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(இரண்டாவது அறிவிப்பாளராகிய) காஸிம், மக்கள் மூன்று ரக்அத்களை வித்ராகத் தொழுவதை நாம் காண்கிறோம். எல்லாமே அனுமதிக்கப் பட்டது தாம். இதில் எப்படிச் செய்தாலும் குற்றமில்லை என கருதுகிறேன் என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 994. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பதினொரு ரக்அத்கள் தொழுபவர்களாக இருந்தனர். அதுவே அவர்களின் இரவுத் தொழுகையாக இருந்தது. அத்தொழுகையில் ஒரு ஸஜ்தாவை உங்களில் ஒருவர்

ஐம்பது வசனங்கள் ஓதும் நேரம் நீட்டுவார்கள். ஃபஜ்ருத் தொழுகைக்கு முன் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். முஅத்தின் (ஃபஜர்) தொழுகைக்கு (அழைக்க) அவர்களிடம் வரும் வரை வலப்புறம் சாய்ந்து படுத்திருப்பார்கள்.

## வித்ருத் தொழுகையின் நேரம்.

தூங்குவதற்கு முன் வித்ருத் தொழுமாறு எனக்கு நபி(ஸல்) கட்டளையிட்டார்கள் என அபூ ஹுரைரா(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 995. அனஸ் இப்னு ஸிரீன் அவர்கள் கூறினார்கள்.

ஃபஜ்ருத் தொழுகைக்கு முன்னுள்ள (ஸுன்னத்) இரண்டு ரக்அத்களில் நீண்ட அத்தியாயங்களை நாங்கள் ஓதலாமா? என்று இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் இரவில் இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழுவார்கள். ஒரு ரக்அத்தைக் கொண்டு அவற்றை ஒற்றையாக்குவார்கள். பாங்கு சொல்லி முடித்தவுடன் விரைந்து இரண்டு ரக்அத்களைத் தொழுவார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 996. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இரவின் எல்லா நேரங்களிலும் நபி(ஸல்) அவர்கள் வித்ருத் தொழுகிறார்கள். (சில சமயம்) அவர்களின் வித்ரு ஸஹர் வரை நீண்டுவிடும்.

## நபி(ஸல்) அவர்கள் தம் குடும்பத்தினரை வித்ருத் தொழுகைக்காக உறக்கத்திலிருந்து எழுப்பியது

ஹதீஸ் 997. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களின் விரிப்பில் குறுக்கே உறங்கிக் கொண்டிருக்கும் பொழுது நபி(ஸல்) அவர்கள் வித்ருத தொழ எண்ணும்போது என்னை எழுப்புவார்கள். நானும் தொழுவேன்.

## ஒருவர் தம் நாளின் கடைசித் தொழுகையாக வித்ரை ஆக்கிக் கொள்வது.

ஹதீஸ் 998. நபி ஸல் அவர்கள் கூறினார்கள்:

இரவின் கடைசித் தொழுகையாக வித்ரை ஆக்கிக் கொள்ளுங்கள்.

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## வாகனத்தில் அமர்ந்தவாறு வித்ருத் தொழுவது

ஹதீஸ் 999 ஸயீத் இப்னு யஸார் அறிவித்தார் நான் மக்கா செல்லும் வழியில் அப்துல்லாஹ் இப்னுஉமர்(ரலி) உடன் இரவு பயணம் மேற்கொண்டிருந்தேன் ?ப்ஹை (நெருங்குவதை) அஞ்சிய நாங்கள் வாகனத்திலிருந்து இறங்கி வித்ருத் தொழுதுவிட்டுப் பின்னர் அவர்களுடன் சேர்ந்து கொண்டேன் அப்போது அவர்கள் எங்கே சென்றிருந்தீர் என்று கேட்டனர் நான் ?ப்ஹை அஞ்சி வாகனத்திலிருந்து இறங்கி வித்ருத் தொழுதேன் என்றேன் அதற்கவர்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உமக்கு அழகிய முன்மாதிரி இல்லையா? என்று கேட்டார்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக இருக்கிறேன் என்றேன் அப்போது இப்னு உமர்(ரலி) நபி(ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீதமர்ந்து வித்ருத் தொழுதிருக்கிறார்கள் எனக் கூறினார்கள்

## பயணத்தில் வித்ருத் தொழுவது

ஹதீஸ் 1000 இப்னு உமர்(ரலி) கூறியதாவது

நபி(ஸல்) அவர்கள் பயணத்தின்போது வாகணத்தின் மீதமர்ந்து தொழுவார்கள் கடமையான தொழுகை தவிர (உபரியான) இரவுத் தொழுகைகளை வாகனம் எத்திசையில் சென்றாலும்

தொழுது கொண்டிருப்பார்கள் தம் வாகனத்தின் மீதமர்ந்தே வித்ரும் தொழுவார்கள்

## ருகூவுக்கு முன்பும் பின்பும் குனூத் ஓதுதல்

ஹதீஸ் 1001 முஹம்மது கூறினார் நபி(ஸல்) அவர்கள் ?ப்ஹில் குனூத் ஓதி இருக்கிறார்களா? என்று அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் ஆம் என்றனர். ருகூவுக்கு முன்பு குனூத் ஓதி இருக்கிறார்களா? என்று மீண்டும் இருக்கிறார்களா? என்று மீண்டும் அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு ருகூவுக்குப் பின்பு சிறிது காலம் (நபி(ஸல்) அவர்கள் குனூத் ஓதினார்கள்) என விடையளித்தார்கள்.

ஹதீஸ் 1002. ஆஸிம் அவர்கள் கூறினார்கள்.

குனூத் பற்றி அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் குனூத் (நபி(ஸல்) அவர்கள் காலத்தில்) நடைமுறையில் இருந்தது தான் என்று விடையளித்தார்கள். ருகூவுக்கு முன்பா? பின்பா? என்று கேட்டேன். அதற்கு ருகூவுக்கு முன்பு தான் என்று கூறினார்கள். ருகூவுக்குப் பிறகு என்று நீங்கள் கூறினார்கள் என ஒருவர் எனக்குக் கூறினாரே என்று அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அவர் பொய் சொல்லி இருக்கிறார். நபி(ஸல்) அவர்கள் ருகூவுக்குப் பிறகு ஒரு மாதம்தான் குனூத் ஓதினார்கள். நபி(ஸல்) அவர்கள் குர்ஆனை மனனம் செய்த சுமார் எழுபது நபர்களை இணை வைப்பவர்களில் ஒரு கூட்டத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள். இவர்கள் அந்த முஷ்ரீகீன்களைவிடக் குறைந்த எண்ணிக்கையினராக இருந்தனர். அவர்களுக்கும் நபி(ஸல்) அவர்களுக்குமிடையே ஓர் உடன்படிக்கையும் இருந்தது. (அந்த முஷ்ரிகீன்கள் எழுபது நபர்களையும் கொன்றுவிட்டனர்.) அப்போது நபி(ஸல்) அவர்கள் முஷ்ரீகீன்களுக்கு எதிராக ஒரு மாதம் குனூத் ஓதினார்கள் என்று அனஸ்(ரலி) விடையளித்தார்கள்.

ஹதீஸ் 1003. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ரி∴ல், தக்வான் ஆகிய கூட்டத்தினருக்கு எதிராக நபி(ஸல்) அவர்கள் ஒரு மாதம் குனூத் ஓதினார்கள்.

ஹதீஸ் 1004. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ம∴ரிபிலும் ∴பஜ்ரிலும் குனூத் ஓதுதல் (நபி(ஸல்) அவர்களின் காலத்தில் இருந்தது.

# அத்தியாயம் - 15 - மழை வேண்டுதல்

## மழை வேண்டி வெளியே செல்வது

ஹதீஸ் 1005. அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டி(த் தொழும் திடலுக்கு)ப் புறப்பட்டார்கள். (அப்போது) தம் மேலாடையை மாற்றிப் போட்டுக் கொண்ட்ார்கள்.

## யூஸுஃப் நபியின் காலத்துப் பஞ்சத்தைப் போல் இவர்களுக்கும் பஞ்சத்தை எற்படுத்துவாயாக நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தது.

ஹதீஸ் 1006. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் கடைசி ரக்அத்தின் ருகூவிலிருந்து தலையை உயர்த்தியதும் இறைவா! அய்யாஷ் இப்னு அபீ ரபீஆவைக் காப்பாற்று இறைவா! ஸலமாபின் ஹிஷாமைக் காப்பாற்று. இறைவா! வலீத் இப்னு வலீதைக் காப்பாற்று. இறைவா! நம்பிக்கையாளர்களில் பலவீனர்களைக் காப்பாற்று. இறைவா! முழர் கூட்டத்தினர் மீது உன்னுடைய பிடியை இறுக்குவாயாக! இவர்களுக்கு யூஸுஃப் நபியின் காலத்துப் பஞ்சத்தைப் போல் பஞ்சத்தை ஏற்படுத்துவாயாக! என்று கூறுபவர்களாக இருந்தனர். மேலும் கிஃபார் கூட்டத்தை அல்லாஹ் மன்னிப்பானாக! அஸ்லம் கூட்டத்தை அல்லாஹ் காப்பாற்றுவானாக! என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறுவிர்கள்.

ஹதீஸ் 1007. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மக்கள் (இஸ்லாத்தைப்) புறக்கணிக்கக் கண்ட நபி(ஸல்) அவர்கள் யூஸுஃப் நபி காலத்து ஏழாண்டுப் பஞ்சம் போல் இவர்களுக்கு ஏழாண்டுப் பஞ்சத்தை ஏற்படுத்துவாயாக! என்று பிரார்த்தித்தனர். அவர்களுக்குப் பஞ்சம் ஏற்படுத்துவாயாக! என்று பிரார்த்தித்தனர். அவர்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டு அனைத்தையும் வேரறுத்தது. தோல்கள், பிணங்கள் ஆகியவற்றை உண்ணலானார்கள். அவர்கள் (மழை மேகம் தென்படுகிறதோ என்று) வானத்தைப் பார்க்கும்போது பசியினால் புகை மூட்டத்தையே காண்பார்கள். இந்நிலையில் அபூ ஸுப்யான் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, முஹம்மதே! நீர் இறைவனுக்குக் கட்டுப்பட வேண்டும் என்றும் உறவினர்களோடு இணைந்து வாழ வேண்டுமென்வும் கூறுகிறீர். உம்முடைய கூட்டத்தினரோ அழிந்து கொண்டிருக்கிறார்கள். எனவே அவர்களுக்காக அல்லாஹ்விடம் துஆச் செய்யும் என்று கூறினார். அப்போது பின்வரும் வசனங்களை அல்லாஹ் கூறினான்.

எனவே, வானம் ஒரு தெளிவான புகையைக் கொண்டு வரும் நாளை நீர் எதிர்பாரும்!

(அப்புகை) மனிதர்களைச் சூழ்ந்து கொள்ளும் இது நோவினை செய்யும் வேதனையாகும்.

எங்கள் இறைவனே! நீ எங்களைவிட்டும் இந்த வேதனையை நீக்குவாயாக! நிச்சயமாக நாங்கள் நம்பிக்கையாளர்களாக இருக்கிறோம் (எனக் கூறுவர்).

நினைவுறுத்தும் நல்லுபதேசம் அவர்களுக்கு எவ்வாறு (அந்நேரம் பயனளிக்கும்? (முன்னமேயே சத்தியத்தை) விளக்குபவரான தூதர் அவர்களிடம் வந்திருக்கிறார்கள்.

அவர்கள் அவரைவிட்டுப் பின்வாங்கி (மற்றவர்களால் இவர்) கற்றுக் கொடுக்கப்பட்டவர் பைத்தியக்காரர் எனக் கூறினர்.

நிச்சயமாக! நாம் வேதனையைச் சிறிது (காலத்திற்காக) விலக்குவோம் (ஆனால், பின்னரும்)

நீங்கள் நிச்சயமாகத் (தீமையின் பக்கம்) திரும்புவர்களே.

ஒரு நாள் நாம் (உங்களைப்) பெரும் பிடியாகப் பிடிப்போம் நிச்சயமாக (அந்நாளில்) நாம் பழிதீர்ப்போம். (திருக்குர்ஆன்: 44:10-16)

கடுமையான பிடி என்பது பத்ருப் போரில் ஏற்பட்டது புகை மூட்டமும் கடுமையான பிடியும் நடந்தேறியது. அதுபோல் ரூம் அத்தியாயத்தில் கூறப்பட்ட முன்னறிவிப்பும் நிறைவேறியது.

### பஞ்சம் ஏற்படும் பொழுது மழைக்காகப் பிரார்த்திக்குமாறு மக்கள் இமாமிடம் முறையிடுவது.

ஹதீஸ் 1008. அப்துல்லாஹ் இப்னு தீனார் அவர்கள் கூறினார்கள்.

இவர் வெண்மை நிறத்தவர் இவரால் மழை வேண்டப்படும். இவர் அனாதைகளுக்குப் புகலிடமாகவும் விதவைகளுக்குக் காவலராகவும் திகழ்கிறார் என்று அபூ தாலிப் பாடிய கவிதையை இப்னு உமர்(ரலி) எடுத்தாள்பவராக இருந்தனர்.

ஹதீஸ் 1009. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்தித்தபோது அவர்களின் முகத்தை நான் பார்த்துக் கொண்டிருந்தேன். அவர்கள் கீழே இறங்குவதற்குள் ஒவ்வொரு கூரையிலிருந்தும் தண்ணீர் வழிந்தோடியது.

இவர் வெண்மை நிறத்தவர். இவரால் மழை வேண்டப்படும். இவர் அனாதைகளுக்குப் புகலிடமாகவும் விதவைகளுக்குக் காவலராகவும் திகழ்கிறார் என்ற அபூ தாலிபின் கவிதையை அப்பொழுது நான் நினைத்துக் கொள்வேன்.

ஹதீஸ் 1010. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மக்களுக்குப் பஞ்சம் ஏற்படும் பொழுது உமர்(ரலி), அப்பாஸ்(ரலி) மூலம் (அல்லாஹ்விடம்) மழை வேண்டுபவர்களாக இருந்தனர். இறைவா! நாங்கள் எங்கள் நபியை உன்னிடம் பிரார்த்திக்கக் கோருவோம். நீ எங்களுக்கு மழை வழங்கினாய். (இப்போது) எங்கள் நபியின் தந்தையின் உடன் பிறந்தாரை உன்னிடம் பிரார்த்திக்கக் கோருகிறோம். எங்களுக்கு மழை வழங்குவாயாக! என்று உமர்(ரலி) கூறுவார்கள். அவர்களுக்கு மழை பொழியும்.

### மழை வேண்டும்போது மேலாடையை மாற்றிப் போட்டுக் கொள்வது.

ஹதீஸ் 1011. அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டும்போது தம் மேலாடையை மாற்றிப் போட்டார்கள்.

ஹதீஸ் 1012. அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் திடலுக்குச் சென்று மழை வேண்டினார்கள். அப்போது கிப்லாவை நோக்கியவர்களாகத் தம் மேலாடையை மாற்றிப் போட்டு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

### இறைவனின் கட்டளைகள் புறக்கணிக்கப் படும்போது அல்லாஹ் பஞ்சத்தால் மக்களைத் தண்டித்தல்.

### ஜும்ஆ நடைபெறும் பள்ளிவாயிலில் மழை வேண்டுதல்.

ஹதீஸ் 1013. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் நபி(ஸல்) அவர்கள் நின்று உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது மிம்பர்த் திசையிலுள்ள வாசல் வழியாக ஒருவர் வந்தார். நின்றவாறே நபி(ஸல்) அவர்களை நோக்கி நபி அவர்களே! கால் நடைகள் அழித்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. எனவே

எங்களுக்கு மழை பொழியச் செய்யுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் கைகளை உயர்ததி, இறைவா! எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! இறைவா! எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! இறைவா! எங்களுக்கு மழை பொழியச் செய்வாயாக! என்று பிரார்த்தித்தார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக வானத்தில் திரண்ட மேகத்தையோ பிரித்து கிடக்கும் மேகங்களையோ (மழைக்குரிய) எந்த அறிகுறிகளையோ நாங்கள் காணவில்லை. எங்களுக்கும் (அதாவது மதீனாவுக்கும்) ஸல்ஃ என்னம் மலைக்குமிடையே எந்த வீடும் கட்டிடமும் இருக்கவில்லை. (வெட்டவெளியாக இருந்தது) அப்போது அம்மலைக்குப் பின் புறமிருந்து கேடயம் போன்று ஒரு மேகம் தோன்றி வானத்தின் மையப் பகுதிக்கு வந்து சிதறி மழை பொழிந்தது. அல்லாஹ்வின் மீது ஆணையாக ஆறு நாள்கள் சூரியனையே நாங்கள் பார்க்கவில்லை. அடுத்த ஜும்ஆவில் நபி(ஸல்) அவர்கள் நின்று உரை நிகழ்த்தும்போது ஒருவர் அதே வாசல் வழியாக வந்தார். நின்றவாறே நபி(ஸல்) அவர்களை நோக்கி நபி அவர்களே! செல்வங்கள் அழிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. எனவே மழையை நிறுத்துமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்றார். உடன் நபி(ஸல்) அவர்கள் தம் கையை உயர்த்தி, இறைவா! எங்கள் சுற்றுப் புறங்களில் (இம்மழையைப் பொழியச் செய்வாயாக!) எங்களுக்குப் பாதகமாக இதை நீ ஆக்கி விடாதே. இறைவா! மணற்குன்றுகள், மலைகள், ஓடைகள், விளை நிலங்கள் ஆகியவற்றின் மீது (இம்மழையைப் பொழியச் செய்வாயாக!) என்று பிரார்த்தித்தார்கள். உடனே மழை நின்றது. நாங்கள் வெயிலில் நடந்து சென்றோம்.

இரண்டாவதாக வந்த மனிதர் முதலில் வந்தவர்தாமா? என்று அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் தெரியாது என்றனர் என ஷரீக் கூறுகிறார்.

## ஜும்ஆ உரை நிகழ்த்தும்போது கிப்லாவை நோக்கால் மழை வேண்டிப் பிரார்த்தித்தல்.

ஹதீஸ் 1014. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஜும்ஆ நாளில் நபி(ஸல்) அவர்கள் நின்று உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது தாருல்களா எனும் வாசல் வழியாக ஒருவர் வந்தார். நின்றவாறே நபி(ஸல்) அவர்களை நோக்கி, நபி அவர்களே! செல்வங்கள் அழிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. எனவே எங்களுக்கு மழை பொழியச் செய்யுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் கைகளை உயர்த்தி, இறைவா! எங்களுக்கு மழை ொழியச் செய்வாயாக! என்று பிரார்த்தித்தார்கள். அல்லாஹ்வின் மீது அணையாக வானத்தில் திரண்ட மேகத்தையோ பிரிந்து கிடக்கும் மேகங்களையோ நாங்கள் காணவில்லை. எங்களக்கும் (அதாவது மதீனாவுக்கும்) ஸல்ஃ என்னும மலைக்குமிடையே எந்த வீடும் கட்டிடமும் இருக்கவில்லை. (வெட்ட வெளியாக இருந்தது.) அப்போது அம்மலைக்கப் பின்புறமிருந்து கேடயம் போன்று ஒரு மேகம் தோன்றி வானத்தின் மையப் பகுதிக்கு வந்து சிதறி மழை பொழிந்தது. அல்லாஹ்வின் மீது ஆணையாக, ஆறு நாள்கள் சூரியனையே நாங்கள் பார்க்கவில்லை. அடுத்த ஜும்ஆவில் நபி(ஸல்) அவர்கள் நின்று உரைநிகழ்த்தும்போது ஒருவர் அதே வாசல் வழியாக வந்தார். நின்றவாறே நபி(ஸல்) அவர்களை நோக்கி, நபி அவர்களே! செல்வங்கள் அழிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. எனவே மழையை நிறுத்துமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்றார். உடன் நபி(ஸல்) அவர்கள் தம் கைகளை உயர்த்தி இறைவா! எங்கள் சுற்றுப் புறங்களில் (இம்மழையைப் பொழியச் செய்வாயாக!) எங்களுக்குப் பாதகமாக இதை நீ ஆக்கிவிடாதே. இறைவா! மணற்குன்றுகள், மலைகள், ஓடைகள், விளைநிலங்கள் ஆகியவற்றின் மீது (இம்மழையைப் பொழியச் செய்வாயாக!) என்று பிரார்த்தித்தார்கள். உடனே மழை நின்றது. நாங்கள் வெயிலில் நடந்து சென்றோம்.

இரண்டாவதாக வந்த மனிதர்முதலில் வந்தவர் தாமா? என்று அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் தெரியாது என்றனர் என ஷரீக் கூறுகிறார்.

## மேடை மீது நின்று மழை வேண்டிப் பிரார்த்தித்தல்.

ஹதீஸ் 1015. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆ நாளில் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒருவர் வந்தார். நபி அவர்களே! மழை பொய்ந்துவிட்டது. எங்களுக்கு மழை பொழியச் செய்யுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கூறினார் நபி(ஸல்) அவர்கள் துஆச் செய்ததும் மழை பொழிந்தது. எங்களால் எங்கள் இல்லங்களுக்குச் செல்ல இயலவில்லை. அடுத்த ஜும்ஆ வரை மழை நீடித்தது. அப்போது அந்த மனிதரோ அல்லது இன்னொரு மனிதரோ எழுந்து நபி அவர்களே! இம் மழையை எங்களைவிட்டும் (வேறு பகுதிக்குத் திருப்பி விடுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் இறைவா! எங்கள் சுற்றுப் புறங்களில் (பொழியச் செய்வாயாக) எங்களுக்கு எதிரானதாக (இம்மழையை) ஆக்கிவிடாதே என்று பிரார்த்தித்தார்கள். உடனே மேகம் வலப்புறமும் இடப்புறமுமாகப் பிரிந்து சென்று வேறு பகுதிகளில் மழை பொழிந்தது. மதீனாவில் மழை பொழியவில்லை.

## மழை வேண்டித் தனித்தொழுகை நடத்தாமல் ஜும்ஆத் தொழுகையை அதற்குப் பயன்படுத்திக் கொள்வது

ஹதீஸ் 1016. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து கால்நடைகள் அழிந்துவிட்டன் பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன என்றார். நபி(ஸல்) அவர்கள் துஆச் செய்தனர். அந்த ஜும்ஆவிலிருந்து மறு ஜும்ஆவரை எங்களுக்கு மழை பொழிந்தது. பின்னர் அதே மனிதர் வந்து, வீடுகள் இடிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. கால்நடைகள் அழிந்துவிட்டன. மழையை நிறுத்துமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்றார். நபி(ஸல்) அவர்கள் எழுந்து இறைவா! மணற்குன்றுகளின் மீதும் மலைகளின் மீதும் ஓடைகளிலும் விளைநிலங்களிலும் (இம்மழையைத் திருப்புவாயாக!) என்றுபிரார்த்தனை செய்தார்கள். உடைகளைக் கழுவுவது போல் அம்மழை மதீனாவைக் கழுவியது.

## பெருமழையில் பாதைகள் துண்டிக்கப்படும்போது துஆச் செய்தல்

ஹதீஸ் 1017. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து கால்நடைகள் அழிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. எனவே அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்றார். நபி(ஸல்) அவர்கள் துஆச் செய்தனர். அந்த ஜும்ஆவிலிருந்து மறு ஜும்ஆவரை எங்களுக்கு மழை பொழிந்தது. பின்னர் ஒருவர் வந்து, வீடுகள் இடிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. கால்நடைகள் அழிந்துவிட்டன என்றார். நபி(ஸல்) அவர்கள் இறைவா! மணற்குன்றுகளின் மீதும் மலைகளின் மீதும் ஓடைகளிலும் விளை நிலங்களிலும் (இம்மழையைத் திருப்புவாயாக!) என்று பிரார்த்தனை செய்தார்கள். உடைகளைக் கழுவுவது போல் அம்மழை மதீனாவைக் கழுவியது.

## ஜும்ஆ நாளில் மழை வேண்டும்போது மேலாடையை மாற்றிப் போட வேண்டிய அவசியமில்லை.

ஹதீஸ் 1018. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

செல்வம் அழிவது பற்றியும் மக்கள் சிரமப் படுவது பற்றியும் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டார். நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டார். நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப்

பிரார்த்தித்தார்கள்.

இதில் நபி(ஸல்) அவர்கள் கிப்லாவை முன்னோக்கியதாகவும் மேலாடையை மாற்றிப் போட்டதாகவும் கூறப்படவில்லை என்று இஸ்ஹாக் இப்னு அப்தில்லாஹ் கூறுகிறார்.

## மழைக்காக பிராாத்திக்க இமாமை மக்கள் கேட்டால் அதை அவர் மறுக்கக் கூடாது.

ஹதீஸ் 1019. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நபி அவர்களே! கால்நடைகள் அழிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. எனஅவ அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்! என்றார். நபி(ஸல்) அவர்கள் துஆச் செய்தனர். அந்த ஜும்ஆவிலிருந்து மறு ஜும்ஆவரை எங்களுக்கு மழை பொழிந்தது. பின்னர் ஒருவர் வந்து வீடுகள் இடிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. கால்நடைகள் அழிந்துவிட்டன என்றார். நபி(ஸல்) அவர்கள் இறைவா! மணற்குன்றுகளின் மீதும் மலைகளின் மீதும் ஓடைகளிலும் விளை நிலங்களிலும் (இம்மழையைத் திருப்புவாயாக!) என்று பிரார்த்தித்தனை செய்தார்கள். உடைகளைக் கபவுவது போல் அம்மனை மதீனாவைக் கழுவியது.

## பஞ்சத்தின்போது இணை வைப்பவர்கள் முஸ்லிம்களின் பிரார்த்தனையைக் கோரியது.

ஹதீஸ் 1020. இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

குறைஷிகள் இஸ்லாத்தை மறுத்தபோது அவர்களுக்கெதிராக நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். இதனால் அவர்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டு அழிவுக்கு நெருங்கினார்கள். செத்தவற்றையும் எலும்புகளையும் கூட உண்ணலானார்கள். இந்நிலையில் அபூ சுஃப்யான், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, ஹம்மதே! உறவினர்களோடு இணைந்து வாழுமாறு கூறுகிறீர். உம்முடைய கூட்டத்தினர் அழிந்து கொண்டிருக்கிறார்கள் . எனவே அல்லாஹ்விடம் துஆச் செய்வீராக! என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வானம் தெளிவான புகை மூட்டத்தை வெளிப்படுத்தும் நாளை எதிர் பார்ப்பீராக! (திருக்குர்ஆன் 44:10) என்ற வசனத்தை ஓதினார்கள். பின்னர் குரைஷிகள் நிராகரிப்பிற்கே திரும்பினார்கள். இதையே அவர்களைப் பெரும்பிடியாக நாம் பிடிக்கக் கூடியநாளில் (திருக்குர்ஆன் 44:16) என்ற வசனம் கூறுகிறது. இது பத்ருப் போரின்போது நிறைவேறியது.

நபி(ஸல்) அவர்கள் துஆச் செய்ததும் மழை பொழிந்தது. ஏழு நாள்கள் மழை நீடித்தது. பெருமழை குறித்து மக்கள் முறையிட்டபோது இறைவா! எங்கள் சுற்றுப் புறங்களில் (இம்மழையைத் திருப்புவாயாக!) எங்களுக்கு எதிரானதாக ஆக்கி விடாதே! நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். உடனே மேகம் விலகியது. அவர்களின் சுற்றுப் புறத்தில் மழை பொழிந்தது.

## மழை அதிகமாகும்போது வேறு பகுதிக்குத் திரும்பி விடுமாறு பிரார்த்தித்தல்.

ஹதீஸ் 1021. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை உரை நிகழ்த்தும்போது மக்கள் எழுந்து சப்தமிட்டனர். நபி அவர்களே! மழை பொய்த்துவிட்டது. மரங்கள் சுரும்விட்டன. கால்நடைகள் அழிந்துவிட்டன. எனவே மழை பொழிச் செய்யுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கேட்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் இறைவா! எங்களுக்கு மழை பொழியச் செய் என்று இரண்டு முறை கூறினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக, அப்போது வானத்தில் எந்த மேகத்தையும் நாங்கள் காணவில்லை. திடீரென மேகம் தோன்றி மழை பொழிந்தது. நபி(ஸல்) அவர்கள் மிம்பரிலிருந்து இறங்கித் தொழுகை நடத்தினார்கள். மழை அடுத்த ஜும்ஆ வரை நீடித்தது. பூபூ(அடுத்த ஜும்ஆவில்) நபி(ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தும்போது வீடுகள்

இடிந்துவிட்டன. பாதைகள் துண்டிக்கப்பட்டுவிட்டன. மழையை நிறுத்துமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். என்று மக்கள் உரத்த குரலில் கூறினர். நபி(ஸல்) அவர்கள் புன்னகை செய்தார்கள். பின்னர் இறைவா! எங்கள் சுற்றுப்புறங்களுக்கு (இதைத் திருப்புவாயாக!) எங்களுக்கு எதிரானதாக இதை ஆக்கிவிடாதே என்று பிரார்த்தித்தார்கள். உடனே மதீனாவைவிட்டு மழை விலகியது. அதன் சுற்றுப் புறங்களில் மழை பெய்யத் துவங்கியது. மதீனாவில் ஒரு துளியும் விழவில்லை. மதீனாவை நான் பார்த்தபோது அது ஒரு குன்றின் மீது அமைந்திருப்பதைப் போல் இருந்தது.

## நின்று கொண்டே மழை வேண்டிப் பிரார்த்தித்தல்

ஹதீஸ் 1022. அபூ இஸ்ஹாக் அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு யஜீது(ரலி) (மழைத் தொழுகை நடத்தப்) புறப்பட்டார்கள். அவர்களுடன் பராஃ(ரலி), ஜைத் இப்னு அர்கம்(ரலி) ஆகியோரும் சென்றனர். அப்துல்லாஹ் இப்னு யஜீது(ரலி) மழை வேண்டிப் பிரார்த்தித்தார்கள். மிம்பரில் ஏறாமல் தரையில் நின்று உரை நிகழ்த்தினார்கள். பின்னர் பாவமன்னிப்புத் தேடினார்கள். பிறகு சப்தமக ஓதி, இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். பாங்கும் இகாமத்தும் சொல்லவில்லை.

ஹதீஸ் 1023. அப்துல்லாஹ் இப்னு யஜீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திக்க மக்களோடு சென்றனர். நின்றவாறு அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள். பிறகு கிப்லாவை நோக்கித் திரும்பினார்கள். தம் மேலாடையையும் மாற்றிப் போட்டார்கள். அவர்களுக்கு மழை பொழிந்தது.

## மழை வேண்டித் தொழும்போது சப்தமாக ஓதுவது.

ஹதீஸ் 1024. அப்துல்லாஹ் இப்னு யஜீது(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திக்கப் புறப்பட்டார்கள். கிப்லாவை நோக்கித் பிரார்த்தித்தார்கள். தம் மேலாடையை மாற்றிப் போட்டார்கள். பின்னர் சப்தமாக ஓதி இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள்.

## இமாம் மக்களுக்கு முதுகைக் காட்டுவது.

ஹதீஸ் 1025. அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்கள் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திக்கப் புறப்பட்டபோது அவர்களை பார்த்தேன். அப்போது அவர்கள் மக்களுக்கு முதுகைக் காட்டிக் கிப்லாவை நோக்கிப் பிரார்த்தித்தார்கள். பிறகு தம் மேலாடையை மாற்றிப் போட்டார்கள். பின்னர் சப்தமாக ஓதி எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள்.

## மழைத் தொழுகை இரண்டு ரக்அத்கள்

ஹதீஸ் 1026. அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்தித்தபோது இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். அப்போது தம் மேலாடையை மாற்றிப் போட்டார்கள்.

திடலுக்குச் சென்று மழை வேண்டிப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 1027. அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திக்கத் திடலுக்குச் சென்றார்கள். கிப்லாவை நோக்கி இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். தம் மேலாடையை மாற்றிப்போட்டார்கள்.

மற்றோர் அறிவிப்பில் தம் ஆடையின் வலப்புறத்தைை இடது தோளின் மீது போட்டார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

### மழை வேண்டிப் பிரார்த்திக்கம்போது கிப்லாவை முன்னோக்குதல்.

ஹதீஸ் 1028. அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (மழைத் தொழுகையைத்) தொழுவதற்காகத் திடலுக்குப் புறப்பட்டார்கள். துஆச் செய்தபோது அல்லது துஆச் செய்ய நாடியபோது கிப்லாவை முன்னோக்கினார்கள். தம் மேலாடையை மாற்றிப் போட்டார்கள்.

### மழை வேண்டிப் பிரார்த்திக்கும்போது இமாமுடன் சேர்ந்து மக்களம் கைகளை உயர்த்துவது.

ஹதீஸ் 1029. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு வெள்ளிக் கிழமையன்று ஒரு கிராமவாசி நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். நபி அவர்களே! கால்நடைகள் அழிந்துவிட்டன. குடும்பமும் அழிந்தது. மக்களும் அழிந்தார்கள் என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் பிரார்த்திப்பதற்காகத் தம் கைகளை உயர்த்தினார்கள். அவர்களுடன் சேர்ந்து மக்களும் கைகளை உயர்த்திப் பிரார்த்தித்தார்கள். நாங்கள் பள்ளியைவிட்டு வெளியே வருவதற்குள் மழை பெய்தது. அடுத்த ஜும்ஆ வரை எங்களுக்கு மழை நிடித்தது. அதே மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து நபி அவர்களே! பயணம் செல்வோர் கஷ்டப் படுகின்றனர். பாதை அடைபட்டுவிட்டது என்றார்.

ஹதீஸ் 1030. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் அக்குள் வெண்மையை நான் பார்க்கும் அளவுக்கு (துஆச் செய்யும் போது) தம் கைகளை உயர்த்தினார்கள்.

### மழை வேண்டிப் பிரார்த்திக்கும்போது இமாம் கைகளை உயர்த்துவது.

ஹதீஸ் 1031. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப்பிரார்த்திக்கும்போது தவிர எந்தப் பிரார்த்தனையிலும் தம் கைகளை உயர்த்த மாட்டார்கள். (மழை வேண்டிப் பிரார்த்திக்கும் போது) தம் அக்குள் வெண்மை காணப்படும் அளவிற்கு உயர்த்துவார்கள்.

### மழை பொழியும்போது கூற வேண்டியவை

ஹதீஸ் 1032. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மழையைக் காணும்போது பயனுள்ள மழையாக (ஆக்குவாயாக!) என்று கூறுவார்கள்.

### தாடியில் தணணீர் வடியும் அளவிற்கு மழையில் நனைவது

ஹதீஸ் 1033. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் மக்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள் வெள்ளிக்

கிழமையன்று மிம்பரில் உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது ஒரு கிராமவாசி எழுந்தார். நபி அவர்களே! செல்வங்கள் அழிந்துவிட்டன. குடும்பத்தினர் பட்டினியில் வாடுகின்றனர். எங்களுக்கு மழை பொழியச் செய்யுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று அவர் கூறினார். நபி(ஸல்) அவர்கள் (பிரார்த்திப்பதற்காகத்) தம் கைகளை உயர்த்தினார்கள். அப்போது வானத்தில் மேகம் எதுவும் இருக்கவில்லை. திடீரென மலைகளைப் போன்று மேகங்கள் திரண்டன. நபி(ஸல்) அவர்கள் மிம்பரிலிருந்து இறங்குவதற்குள் அவர்களின் தாடி வழியாக மழைத் தண்?ர் வடிந்ததை கண்டேன். அன்றைய தினமும் மறுநாளும் மூன்றாவது நாளும் அதற்கடுத்த ஜும்ஆவரையுள்ள நாள்களிலும் எங்களுக்கு மழை பொழிந்தது. அப்போது அதே கிராமவாசி அல்லது வேறொருவர் எழுந்து நபி அவர்களே! கட்டிடங்கள் இடிந்துவிட்டன. செல்வங்கள் மூழ்கிவிட்டன. எங்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். என்றார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் கைகளை உயர்த்தினார்கள். இறைவா! எங்கள் சுற்றுப்புறங்களுக்கு (இதைத் திருப்புவாயாக!) எங்களுக்கு எதிரானதாக இதை ஆக்கிவிடாதே என்று கூறினார்கள். அவர்கள் வானத்தை நோக்கித் தம்கையால் சைகை செய்த போதெல்லாம் மேகங்கள் விலகிச் சென்றன. முடிவில் மதீனா ஒரு குன்றின் மீது அமைந்திருப்பதைப் போல் மாறியது. கனாத் எனும் ஓடை ஒரு மாதம் ஓடியது. எப்பகுதியிலிருந்து வரக்கூடியவர்களும் இம்மழையைப் பற்றிப் பேசாமலில்லை.

### காற்று வீசும் போது...

ஹதீஸ் 1034. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கடுமையான காற்று வீசும்போது நபி(ஸல்) அவர்கள் முகத்தில் ஏற்படும் மாறுதல் அனைவருக்கும் தெரியும்.

### மழைக்காற்றின் மூலம் நான் உதவப்பட்டுள்ளேன் நபி(ஸல்) அவர்களின் கூற்று.

ஹதீஸ் 1035. நபி(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

நான் மழைக்காற்றின் மூலம் உதவப்பட்டுள்ளேன். ஆது கூட்டத்தினர் வெப்பக் காற்றினால் அழிக்கப்பட்டனர். என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

### பூகம்பங்களும் கியாம நாளின் அடையாளங்களும்.

ஹதீஸ் 1036. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கல்வி பறிக்கப்படும் வரை பூகம்பங்கள் அதிகமாகும் வரை - காலம் சுருங்கும் வரை - குழப்பங்கள் தோன்றும் வரை - கொலை செய்தல் அதிகமாகும் வரை- உங்களிடம் செல்வம் செழிக்கும் வரை - கியாம நாள் ஏற்படாது. என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1037. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறைவா! எங்கள் ஷாம் நாட்டிற்கும் யமன் நாட்டிற்கும் நீ பரக்கத் செய்வாயாக! நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது மக்கள் எங்கள் நஜ்து நாட்டிற்கும் (பிரார்த்தியுங்கள்) என்றனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள் அங்குதான் குழப்பங்களும் பூகம்பங்களும் ஏற்படும். அங்கு தான்ஷைத்தானின் கொம்பு தோன்றும் என்று கூறினார்கள்.

### உங்களுக்கு (வழங்கப்பட்ட) செல்வத்தை நீங்கள் மறுக்கிறீர்கள் என்ற இறைவசனம்.

ஹதீஸ் 1038. ஸைத் இப்னு காலித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவு மழை பொழிந்த பின் ஹுதைபிய்யா எனுமிடத்தில் எங்களுக்கு ஸுப்ஹுத் தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும் மக்களை நோக்கி உங்களுடைய இறைவன் என்ன கூறினான் என்று அறிவீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு மக்கள்

அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள் என்றனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், என்னுடைய அடியார்களில் என்னை நம்பியவர்களும் என்னை நிராகரிப்பவர்களும் இருக்கின்றனர். அல்லாஹ்வின் அருளால், அவனுடைய கருணையால் எங்களுக்கு மழை பொழிந்தது என்று கூறுகிறவரே என்னை நம்பியவர். நட்சத்திரங்களை நிராகரித்தவர். இன்னின்ன நட்சத்திரங்களால் எங்களுக்கு மழை பொழிந்தது என்று கூறுகிறவரே என்னை நிராகரித்து நட்சத்திரங்களை நம்பியவர் என்று அல்லாஹ் கூறினார்கள் எனக் குறிப்பிட்டார்கள்.

## மழை எப்போது வருமென்பதை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறிய முடியாது.

ஐந்து காரியங்களை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறிய முடியாது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1039. ஐந்து காரியங்களை அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் அறிய முடியாது. நாளை என்ன நடக்கும் என்பதை எவரும் அறிய முடியாது. கருவறைகளிலுள்ள நிலைமைகளை எவரும் அறிய முடியாது. ஒருவர் நாளை எதைச் சம்பாதித்தார் என்று அறிய முடியாது. ஒருவர் தாம் எந்த இடத்தில் மரணிப்போம் என்பதை அறிய முடியாது. மழை எப்போது வருமென்பதையும் எவரும் அறிய முடியாது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

# அத்தியாயம் -16- கிரகணங்கள்

## சூரிய கிரகணத்தின்போது தொழுவது.

ஹதீஸ் 1040. அபூ பக்ரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தபோது சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே நபி(ஸல்) அவர்கள் தங்களின் ஆடையை இழுத்துக் கொண்டு பள்ளிக்குள் நுழைந்தோம். நாங்களும் நுழைந்தோம். கிரகணம் விலகும் வரை எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். பிறகு சூரியனுக்கும் சந்திரனுக்கும் எவருடைய மரணத்திற்காகவும் கிரகணம் பிடிப்பதில்லை. எனவே நீங்கள் கிரகணங்களைக் கண்டால் தொழுங்கள். அவை விலகும் வரை பிரார்த்தியுங்கள் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1041. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எந்த மனிதனின் மரணத்திற்காகவும் சூரியனுக்கும் சந்திரனுக்கும் கிரகணம் பிடிப்பதில்லை. அவை அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் இரண்டு அத்தாட்சிகளாகும். எனவே நீங்கள் கிரகணங்களைக் கண்டால் எழுந்து தொழுங்கள். என அபூ மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1042. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எந்த மனிதனின் மரணத்திற்காகவும் வாழ்வுக்காகவோ சூரியனுக்கும் சந்திரனுக்கும் கிரகணம் பிடிப்பதில்லை. அவை அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் இரண்டு அத்தாட்சிகளாகும். எனவே நீங்கள் கிரகணங்களைக் கண்டால் தொழுங்கள். என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1043. முகீரா இப்னு ஷுஉபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (அவர்களின் மகன்) இப்ராஹீம்(ரலி) மரணித்த அன்று சூரிய கிரகணம் ஏற்பட்டது. இப்ராஹீமின் மரணத்திற்காகவே சூரிய கிரகணம் ஏற்பட்டதாக மக்கள் பேசிக் கொண்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் சூரியனுக்கும் சந்திரனுக்கும் எவருடைய மரணத்திற்காகவோ எவருடைய வாழ்வுக்காகவோ கிரகணம் பிடிப்பதில்லை. எனவே நீங்கள் (கிரகணத்தைக்) கண்டால் தொழுது அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கூறினார்கள்.

## கிரகணத்தின்போது தர்மம் செய்தல்.

ஹதீஸ் 1044. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. மக்களுக்கு நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள். (அத்தொழுகையில்) நீண்ட நேரம் நின்றார்கள். (ருகூவிலிருந்து) எழுந்து நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையை விடக் குறைந்ததாக இருந்தது. பின்னர் மற்றொரு ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைந்ததாக இருந்தது. பின்னர் நீண்ட நேரம் ஸஜ்தாச் செய்தார்கள். பின்னர் முதல் ரக்அத்தில் செய்தது போன்றே இரண்டாம் ரக்அத்திலும் செய்தார்கள். கிரகணம் விலகியதும் தொழுகையை முடித்தார்கள். மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். (அவ்வுரையில்) அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றிவிட்டு, சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும். எவருடைய மரணத்திற்கோ எவருடைய வாழ்வுக்கோ அவற்றுக்குக் கிரகணம் பிடிப்பதில்லை. கிரகணத்தை நீங்கள் கானும்போது அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். அவனைப் பெருமைப் படுத்துங்கள்

தொழுங்கள் தர்மம் செய்யுங்கள் என்று குறிப்பிட்டார்கள். மேலும் தொடர்ந்து முஹம்மதின் சமூதாயமே! ஓர் ஆணோ, பெண்ணோ விபச்சாரம் செய்யும்போது அல்லாஹ் கடுமையாக ரோசம் கொள்கிறான். முஹம்மதின் ரோசம் கொள்கிறான். முஹம்மதின் சமுதாயமே! நான் அறிவதை நீங்கள் அறிந்தால் குறைவாகச் சிரித்து அதிகமாக அழுவீர்கள் என்றும் குறிப்பிட்டார்கள்.

## கிரகணத் தொழுகைக்கு அஸ்ஸலாத்து ஜாமிஆ என்று அழைப்புக் கொடுப்பது.

ஹதீஸ் 1045. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது அஸ்ஸலாத்து ஜாமிஆ(தொழுகைக்குத் தயாராகுக!) என்று அழைப்புக் கொடுக்கப்பட்டது.

## கிரகணத்தின்போது இமாம் உரை நிகழ்த்துவது:

நபி(ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தியதாக ஆயிஷா(ரலி) அஸ்மா(ரலி) ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர்.

ஹதீஸ் 1046. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே அவர்கள் பள்ளிக்குச் சென்றார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் அணி வகுத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் தக்பீர் கூறினார்கள். நீண்ட நேரம் ஓதினார்கள். பின்னர் தக்பீர் கூறி நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். பின்னர் ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறி நிமிர்ந்தார்கள். ஸஜ்தாவுக்குச் செல்லாமல் நீண்ட நேரம் -முதலில் ஓதியதை விடக் குறைந்த நேரம்- ஓதினார்கள். பின்னர் தக்பீர் கூறி முதல் ருகூவை விடக் குறைந்த அளவு ருகூவுச் செய்தார்கள். பிறகு ஸமிஅல்லாஹு லிமன் ஹதிமா ரப்பனா வ லகல் ஹம்து என்று கூறிவிட்டு ஸஜ்தாச் செய்தார்கள். இது போன்றே மற்றொரு ரக்அத்திலும் செய்தார்கள். (இரண்டு ரக்அத்களில்) நான்கு ருகூவுக்களும் நான்கு ஸஜ்தாக்களும் செய்தார்கள். (தொழுகை) முடிவதற்கு முன் கிரகணம் விலகியது. பிறகு எழுந்து அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்ப புகழ்ந்தார்கள். பின்னர் இவ்விரண்டும் (சூரியன், சந்திரன்) அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும். எவருடைய மரணத்திற்கோ வாழ்விற்கோ அவற்றுக்குக் கிரகணம் பிடிப்பதில்லை. நீங்கள் கிரகணத்தைக் காணும்போது விரைந்து தொழுங்கள் என்று கூறினார்கள்.

நான் உர்வாவிடம் உங்கள் சகோதரர் மதீனாவில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது ஸுப்ஹுத் தொழுகை போல் இரண்டு ரக்அத் தொழுததைத் தவிர வேறு எதையும் செய்யவில்லயே என்று கேட்டேன. அதற்கு அவர், ஆம்! அவர் நபி வழிக்கு மாற்றம் செய்துவிட்டார் என்று விடையளித்தார் என க?ர் இப்னு அப்பாஸ் குறிப்பிட்டார்.

## சந்திர கிரகணத்திற்குப் பயன்படுத்தும் வார்த்தையைச் சூரிய கிரகணத்திற்கும் பயன் படுத்தலாமா?

ஹதீஸ் 1047. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

சூரிய கிரகணம் ஏற்பட்டபோது நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள். நின்று தக்பீர் கூறினார்கள். நீண்ட நேரம் ஓதினார்கள். பின்னர் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். பின்னர் தலையை உயர்த்தி ஸமில்லாஹு லிமன்ஹமிதா என்றார்கள். எழுந்து முன்போன்றே நின்றார்கள். பின்னர் நீண்ட நேரம் ஓதினார்கள். இது முன்பு ஓதியதை விடக்குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முந்தைய ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ஸஜ்தாச் செய்தார்கள். அடுத்த ரக்அத்களிலும் இது போன்றே செய்தார்கள். சூரிய கிரகணம் விலகியபோது ஸலாம் கொடுத்து மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள்.

(அவ்வுரையில்) சூரியன் சந்திரன் ஆகிய இரண்டும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும். எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ அவற்றிற்குக் கிரகணம் பிடிப்பதில்லை. கிரகணத்தை நீங்கள் காணும்போது தொழுகைக்கு விரையுங்கள் என்று கூறினார்கள்.

(குறிப்பு: திருக்குர்ஆன் (திருக்குர்ஆன் 75:08) என்ற) வசனத்தில் சந்திர கிரகணத்திற்குப் பயன் படுத்தப் பட்டவார்த்தையை இந்த ஹதீஸில் நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத்திற்குப் பயன் படுத்தியுள்ளார்கள். )

## கிரகணத்தின் மூலம் மனிதர்களை அல்லாஹ் எச்சரிக்கிறான் என்ற நபிமொழி.

ஹதீஸ் 1048. நபி(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் இரண்டு அத்தாட்சிகள். எவருடைய மரணத்திற்காகவும் அவற்றிற்குக் கிரகணம் பிடிப்பதில்லை. மாறாக அதன் மூலம் அல்லாஹ தன்னுடைய அடியார்களை எச்சரிக்கிறான்.

என அபூ பக்ரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## கிரகணத்தின்போது கப்ருடைய வேதனையைவிட்டும் பாதுகாப்புத் தேடுதல்.

ஹதீஸ் 1049 , 1050 ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு யூதப் பெண்மணி என்னிடம் யாசிக்க வந்தாள். அப்போது அவள் கப்ருடைய வேதனையிலிருந்து உன்னை அல்லாஹ் காப்பானாக! என்று கூறினாள். நான் நபி(ஸல்) அவர்களிடம் மனிதர்கள் கப்ருகளிலும் வேதனை செய்யப்படுவார்களாயூ என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், கப்ருடைய வேதனையைவிட்டும் நானும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறினார்கள்.

பின்னர் ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் வாகனத்தில் புறப்பட்டார்கள். அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டது. முற்பகல் நேரத்தில் (இல்லம்) திரும்பினார்கள். பின்னர் தொழலானார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் நின்றார்கள். (அத்தொழுகையில்) நீண்ட நேரம் நின்றார்கள். பின்னர் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். (ருகூவிலிருந்து நிமிர்ந்து நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பின்னர் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது மதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு (ருகூவிலிருந்து) நிமிர்ந்து ஸஜ்தாச் செய்தார்கள். பிறகு நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நிலையில் நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் ரக்அத்தின் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவைவிடக் குறைவானதாக இருந்தது. பிறகு (ருகூவிலிருந்து) நிமிர்ந்து ஸஜ்தாச் செய்தார்கள். தொழுது முடித்து அல்லாஹ் நாடிய செய்திகளை மக்களுக்குச் சொன்னார்கள். பின்னர் கப்ருடைய வேதனையிலிருந்து பாதுகாப்புத் தேடுமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

## கிரகணத் தொழுகையில் நீண்ட நேரம் ஸஜ்தாச் செய்தல்.

ஹதீஸ் 1051. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது அஸ்ஸலாத்து ஜாமிஆ என்று அழைப்புக் கொடுக்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் ஒரு ரக்அத்தில் இரண்டு ருகூவுகள் செய்தார்கள். பின்னர் எழுந்து மற்றொரு ரக்அத்திலும் இரண்டு ருகூவுகள் செய்தார்கள். பின்னர் அமர்ந்தார்கள். அதன் பிறகு கிரகணம் விலகியது.

அன்று செய்த ஸஜ்தாவைப் போல் நீண்ட ஸஜ்தாவை நான் செய்ததில்லை என்று ஆயிஷா(ரலி) குறிப்பிட்டார்கள்.

### கிரகணத் தொழுகையை ஜமாஅத்தாகத் தொழுவது.

இப்னு அப்பாஸ்(ரலி) ஸம்ஸம் கிணற்றிற்கு அருகே மக்களுக்கு ஜமாஅத்தாகக் கிரகணத் தொழுகை நடத்தினார்கள். அவர்களின் மகன் அலி, இப்னு உமர்(ரலி) ஆகியோரும் இவ்வாறு செய்துள்ளனர்.

ஹதீஸ் 1052. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அப்போது தொழுதார்கள். அத்தொழுகையில் பகரா அத்தியாயம் ஓதுமளவுக்கு நீண்ட நேரம் நின்றார்கள். பின்னர் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். (ருகூவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு ஸஜ்தாச் செய்தார்கள். பின்னர் நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு (ருகூவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு ஸஜ்தாச் செய்தார்கள். கிரகணம் விலகிய நிலையில் தொழுது முடித்தார்கள். (முடித்ததும்) சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் இரண்டு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ அவற்றிற்குக் கிரகணம் பிடிப்பதில்லை. எனவே கிரகணத்தை நீங்கள் கண்டால் அல்லாஹ்வை நினைவு கூருங்கள். என்று நபி(ஸல) அவர்கள் கூறினார்கள். அப்போது நபித் தோழர்கள் நபி அவர்களே! நீங்கள் எதையோ பிடிக்க முயன்று பிறகு பின் வாங்கியது போல் நாங்கள் கண்டோமே ( அது ஏன்?) என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் நான் சொர்க்கத்தைப் பார்த்தேன். அதன் ஒரு குலையைப் பிடிக்க முயன்றேன். அதை நான் பிடித்திருந்தால் இந்த உலகம் உள்ளளவும் நீங்கள் அதை உண்பீர்கள். மேலும் நரகத்தையும் கண்டேன். அதை விட மோசமான காட்சியை ஒருபோதும் நான் கண்டதில்லை. மேலும் நரகவாசிகளில் பெண்களையே அதிகமாகக் கண்டேன் என்று கூறினார்கள். நபி அவர்களே! அது ஏன்? என்று நபித்தோழர்கள் கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள் பெண்கள் நிராகரிப்பதன் காரணத்தினால் என்று விடையளித்தனர். அல்லாஹ்வையோ நிராகரிக்கிறார்கள் என்று கேட்கப்பட்டதற்குக் கணவனை நிராகரிக்கிறார்கள் காலமெல்லாம் ஒரத்திக்கு நீ உதவிகள் செய்து உன்னிடம் ஏதேனும் ஒரு குறையைக் கண்டால் உன்னிடம் எந்த நன்மையையும் நான் காணவில்லை என்று கூறி விடுவாள் என்று விடையளித்தார்கள்.

### கிரகணத் தொழுகையை ஆண்களுடன் பெண்களும் சேர்ந்து தொழுவது

ஹதீஸ் 1053. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு சூரிய கிரகணத்தின்போது ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் சென்றேன். அப்போது

ஆயிஷா(ரலி)வும் மக்களும் தொழுது கொண்டிருந்தனர். நான் மக்களுக்கு என்ன நேர்ந்தது என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி) தம் கையால் வானத்தை நோக்கிச் சைகை செய்து ஸுப்ஹானல்லாஹ் என்று கூறினார்கள். ஏதேனும் அடையாளமா? என்று கேட்டேன். ஆம் என்பது போல் சைகை செய்தார்கள். எனக்கு மயக்கம் ஏற்படும் அளவுக்கு நானும் (தொழுகையில்) நின்றேன். பின்னர் என் தலையில் தண்?ரை ஊற்றிக் கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றிவிட்டு நான் இதுவரை காணாத அனைத்தையும் இந்த இடத்தில் கண்டேன் சொர்க்கம், நரகம் உட்பட, மேலும் கப்ருகளில் தஜ்ஜாலின் சோதனை போல் அல்லது அதுற்கு நெருக்கமான அளவுக்கு நீங்கள் சோதிக்கப்படுவீர்கள் என்று எனக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டிருக்கிறது. உங்களில் ஒருவரிடம் வானவர் வந்து இம்மனிதரைப் பற்றி உம்முடைய முடிவு என்ன? என்று கேட்பார். நம்பிக்கையாளர் உறுதியுடனிருந்தவர் அவர்கள் முஹம்மது நபியாவார்கள். எங்களிடம் தெளிவான மார்க்கத்தையும் நேர்வழியையும் கொண்டு வந்தார்கள். நாங்கள் அவர்களின் அழைப்பை ஏற்று, நம்பிப் பின் பற்றினோம் என்று கூறுவார். அவரிடம், நல்லவராக நீர் உறங்குவீராக! நிர் நம்பிக்கையாளராக இருந்ததை நாம் நிச்சயமாக அறிவோம் என்று கூறப்படும். நயவஞ்சகர் சந்தேகத்திலிருந்தவர் (இக்கேள்விக்குப் பதில் அளிக்கும் போது) மக்கள் எதையோ சொன்னார்கள் நானும் சொன்னேன். எனக்கு எதுவும் தெரியாது என்று விடையளிப்பார் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### சூரிய கிரகணத்தின்போது அடிமைகளை விடுதலை செய்வது விரும்பத்தக்கது.

ஹதீஸ் 1054. அஸ்மா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத்தின்போது அடிமைகளை விடுதலை செய்யுமாறு கட்டளையிட்டார்கள்.

### கிரகணத் தொழுகையைப் பள்ளியில் தொழுவது:

ஹதீஸ் 1055 ~ 1056 ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு யூதப் பெண்மணி என்னிடம் யாசிக்க வந்தாள். அப்போது அவள் கப்ருடைய வேதனையிலிருந்து உன்னை அல்லாஹ் காப்பானாக! என்று கூறினாள். நான் நபி(ஸல்) அவர்களிடம் மனிதர்கள் கப்ருகளிலும் வேதனை செய்யப்படுவார்களா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் கப்ருடைய வேதனையைவிட்டும் நானும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்றார்கள்.

பின்னர் ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் வாகனத்தில் புறப்பட்டார்கள். அப்போது சூரிய கிரகணம் ஏற்பட்டது. முற்பகல் நேரத்தில் இல்லம் திரும்பினார்கள். பின்னர் தொழலானார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் நின்றார்கள். (அத்தொழுகையில்) நீண்ட நேரம் நின்றார்கள். பின்னர் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். (ருகூவிலிருந்து) நிமிர்ந்து நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் நிலையைவிடக் குறைவானதாக இருந்தது. பின்னர் நீண்ட நேரம் ஸஜ்தாச் செய்தார்கள். இது முதல் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் நின்றார்கள். இது முதல் ரக்அத்தின் நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. ஸஜ்தாச் செய்தார்கள். அது முதல் ஸஜ்தாவை விடக் குறைவானதாக இருந்தது. தொழுது முடித்து அல்லாஹ் நாடிய செய்திகளை மக்களுக்குச் சொன்னார்கள். பின்னர் கப்ருடைய வேதனையிலிருந்து பாதுகாப்புத் தேடுமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

### எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ சூரிய கிரகணம் ஏற்படுவதில்லை.

இது பற்றி அபூ பக்ரா(ரலி) பூகீரா(ரலி), அபூ பூஸா(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி), இப்னு உமர்(ரலி) ஆகியோர் அறிவித்துள்ளனர்.

ஹதீஸ் 1057. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

சூரியனுக்கும் சந்திரனுக்கும் எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ கிரகணம் பிடிப்பதில்லை. அவ்விரண்டும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும். எனவே கிரகணத்தைக் காணும்போது நீங்கள் தொழுங்கள். என இப்னு மஸ்வூத்(ரலி) அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 1058. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள் எழுந்து மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். நீண்ட நேரம் ஓதினார்கள். நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தி மீண்டும் நீண்ட நேரம் ஓதினார்கள். இது முதலில் ஓதியதை விடக்குறைவானதாக இருந்தது. பிறகு மீண்டும் நீண்ட நேரம் ருகூவுச் செய்தார்கள். இது முதல் ருகூவை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு தலையை உயர்த்தி இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். பின்னர் எழுந்து இரண்டாம் ரக்அத்திலும் இவ்வாறே செய்தார்கள். பின்னர் எழுநது (மக்களை நோக்கி) சூரியனுக்கும் சந்திரனுக்கும் எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ கிரகணம் பிடிப்பதில்லை. அவ்விரண்டும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவையாகும். அவற்றைத் தன்னுடைய அடியார்களுக்கு அல்லாஹ் காட்டுகிறான். எனவே கிரகணத்தை நீங்கள் காணும்போது தொழுகைக்கு நீங்கள் விரையுங்கள் என்று கூறினார்கள்.

## கிரகணத்தின்போது இறைவனை நினைவு கூர்தல்.

ஹதீஸ் 1059. அபூ பூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

சூரிய கிரகணம் ஏற்பட்டபோது நபி(ஸல்) அவர்கள் கியாமத் நாள் வந்துவிட்டதோ என்று அஞ்சித் திடுக்குற்று எழுந்தார்கள். உடனே பள்ளிக்கு வந்து தொழுதார்கள். நிற்பது, ருகூவுச் செய்வது, ஸஜ்தாச் செய்வது ஆகியவற்றை நான் அதுவரை பார்த்திராத அளவுக்கு நீட்டினார்கள். (பின்னர் மக்களை நோக்கி) இந்த அத்தாட்சிகள் எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ ஏற்படுவதில்லை. எனினும் தன்னுடைய அடியார்களை எச்சரிப்பதற்காக அல்லாஹ் அனுப்புகிறான். இவற்றில் எதையேனும் நீங்கள் கண்டால் இறைவனை நினைவு கூரவும் பிரார்த்திக்கவும் பாவமன்னிப்புத் தேடவும் விரையுங்கள் என்று கூறினார்கள்.

## கிரகணத்தின்போது பிரார்த்தித்தல்

நபி(ஸல்) அவர்கள் வழியாக ஆயிஷா(ரலி), அபூ பூஸா(ரலி) ஆகியோர் இது குறித்து அறிவித்துள்ளனர்.

ஹதீஸ் 1060. முகீரா இப்னு ஷுஉபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இப்ராஹீம்(ரலி) மரணித்த நேரத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது.

இப்ராஹீமின் மரணத்திற்காகக் கிரகணம் ஏற்பட்டது என்று மக்கள் பேசிக் கொண்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள், சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் இரண்டு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவோ வாழ்விற்காகவோ கிரகணம் ஏற்படுவதில்லை. எனவே நீங்கள் கிரகணத்தைக் கண்டால் அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். அது விலகும் வரை தொழுங்கள் என்று கூறினார்கள்.

## கிரகணத் தொழுகையின் சொற்பொழிவில் அம்மா பஃது என்று கூறுவது.

ஹதீஸ் 1061. அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

கிரகணம் விலகியபோது நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்து உரை நிகழ்த்தினார்கள். (அவ்வுரையில்) அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்பப் புகழ்ந்துவிட்டு அம்மாபஃது என்றார்கள்.

## சந்திர கிரகணத்தின் போதும் தொழுதல்

ஹதீஸ் 1062. அபூ பக்ரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டபோது இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

ஹதீஸ் 1063. அபூ பக்ரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் தங்களின் மேலாடையை இழுத்தவர்களாகப் பள்ளிக்குச் சென்றார்கள். மக்களும் அவர்களை நோக்கி விரைந்தனர். நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். கிரகணம் விலகியதும் சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் இரண்டு அத்தாட்சிகளாகும். எவருடைய மரணத்திற்காகவும் அவற்றிற்குக் கிரகணம் பிடிப்பதில்லை. எனவே மரணத்திற்காகவும் அவற்றிற்குக் கிரகணம் பிடிப்பதில்லை. எனவே கிரகணம் பிடித்தால் அது விலகும்வரை தொழுங்கள் பிரார்த்தியுங்கள் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அவர்களின் மகன் மரணித்தபோது மக்கள் பேசியதற்கு மறுப்பாகவே இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

## கிரகணத் தொழுகையில் முதல் ருகூவை நீட்டல்.

ஹதீஸ் 1064. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்களில் நான்கு ருகூவுச் செய்து கிரகணத் தொழுகையை மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். அதில் முதல் ருகூவை நீண்ட நேரமும் அதற்கடுத்த ருகூவை அதைவிடக் குறைந்த நேரமும் செய்தார்கள்.

## கிரகணத் தொழுகையில் சப்தமிட்டு ஓதுதல்.

ஹதீஸ் 1065. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கிரகணத்தொழுகையில் சப்தமிட்டு ஓதினார்கள். ஓதி முடித்ததும் தக்பீர் கூறி ருகூவுச் செய்தார்கள். ருகூவிலிருந்து நிமிர்ந்ததும் ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா, ரப்பனா வ லகல் ஹம்து என்று கூறினார்கள். பிறகு மீண்டும் ஓதினார்கள். இவ்வாறு இரண்டு ரக்அத்களில் நான்கு ருகூவுகளும் நான்கு ஸஜ்தாக்களும் செய்தார்கள்.

ஹதீஸ் 1066. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது தொழுகைக்குரிய தயாராகுங்கள் என்று அழைப்பதற்காக ஒருவரை நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். (மக்கள் கூடியதும்) முன்னே சென்று இரண்டு ரக்அத்களில் நான்கு ருகூவுகளும் நான்கு ஸஜ்தாக்களும் செய்து தொழுகை நடத்தினார்கள்.

உங்கள் சகோதரர் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் மதீனாவில் கிரகணத் தொழுகை தொழும்போது ஸுப்ஹுத் தொழுகை போல் இரண்டு ரக்அத்கள் தொழுததைத் தவிர வேறு

எதையும் செய்ய வில்லையே என உர்வாவிடம் கேட்டேன். அதற்கவர் ஆம் அவர் நபிவழிக்கு மாறுசெய்துவிட்டார் என்று கூறினார் என ஸுஹ்ரி குறிப்பிட்டார்.

# அத்தியாயம் -17- குர்ஆனிலுள்ள ஸஜ்தா வசனங்கள்

## குர்ஆனிலுள்ள ஸஜ்தா வசனங்கள் ஓதும்போது ஸஜ்தாச் செய்வது நபிவழி.

ஹதீஸ் 1067. இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்காவில் நஜ்மு அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்தார்கள். ஒரு முதியவரைத் தவிர அவர்களுடன் இருந்த அனைவரும் ஸஜ்தாச் செய்தனர். அம்முதியவர் ஒரு கையில் சிறிய கற்களையோ மண்ணையோ எடுத்துத் தம் நெற்றிக்குக் கொண்டு சென்று இவ்வாறு செய்வது எனக்குப் போதும் என்று கூறினார். பின்னர் அவர் காபிராகக் கொல்லப் பட்டதை பார்த்தேன்.

## ஸஜ்தா அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்தல்

ஹதீஸ் 1068. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் வெள்ளிக்கிழமை ஃபஜ்ர் தொழுகையில் அலிஃப் லாம் மீம் தன்ஜீல் என்ற ஸஜ்தா அத்தியாயத்தையும் ஹல்அத்தா அலல் இன்ஸான் என்ற அத்தியாயத்யையும் ஓதினார்கள்.

## ஸாத் அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்தல்

ஹதீஸ் 1069. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஸாத் அத்தியாயம் ஓதப்படும்போது ஸஜ்தாக் கட்டாயமில்லை. (ஆனால்) நபி(ஸல்) அவர்கள் அந்த அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்ததை பார்த்திருக்கிறேன்.

## நஜ்மு அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்தல்.

ஹதீஸ் 1070 இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்காவில் நஜ்மு அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்தார்கள். அக்கூட்டத்தில் ஒருவரைத் தவிர அவர்களுடன் இருந்த அனைவரும் ஸஜ்தாச் செய்தனர். அவர் ஒரு கையில் சிறிய கற்களையோ மண்ணையோ எடுத்துத் தம் நெற்றிக்குக் கொண்டு சென்று இவ்வாறு செய்வது எனக்குப் போதும் என்று கூறினார். பின்னர் அவர் இறைமறுப்பாளராகக் கொல்லப்பட்டதை பார்த்தேன்.

## முஸ்லிம்கள் இணைவைப்பவர்களுடன் சேர்ந்து ஸஜ்தாச் செய்தல்

இணை வைப்பவர் அசுத்தமானவர் என்பதால் அவர் உளூச் செய்ய முடியாது.

இப்னு உமர்(ரலி) உளூவுடன் ஸஜ்தாச் செய்பவர்களாக இருந்தனர்

ஹதீஸ் 1071. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நஜ்மு அத்தியாயத்தை ஓதி ஸஜ்தாச் செய்தார்கள். அவர்களுடன் இருந்த முஸ்லிம்களும் இணைவைப்பவர்களும் ஏனைய மக்களும் ஜின்களும் ஸஜ்தாச் செய்தனர்.

## ஸஜ்தா வசனத்தை ஓதி ஸஜ்தாச் செய்யாமல் இருந்தால்

ஹதீஸ் 1072. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் நஜ்மு அத்தியாயத்தை ஓதிக் காட்டினேன். அப்போது அவர்கள் ஸஜ்தாச் செய்யவில்லை.

ஹதீஸ் 1073. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் நஜ்மு அத்தியாயத்தை ஓதிக் காட்டினேன். அப்போது அவர்கள் ஸஜ்தாச் செய்யவில்லை.

### இதஸ்ஸமாவுன் ஷக்கத் அத்தியாயத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்தல்.

ஹதீஸ் 1074. அபூ ஸலமா அவர்கள் கூறினார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) இதஸ்ஸமாவுன் ஷக்கத் அத்தியாயத்தை ஓதி ஸஜ்தாச் செய்தார்கள். நான் அவர்களிடம் நீங்கள் ஸஜ்தாச் செய்ததை நான் பார்த்தேனே என்றேன். அதற்கு அபூ ஹுரைரா(ரலி) நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்ததை நான் பார்த்திருக்காவிட்டால் நானும் ஸஜ்தாச் செய்திருக்க மாட்டேன் என்று விடையளித்தார்கள்.

### ஓதுபவர் ஸஜ்தாச் செய்யும்போது கேட்பவரும் ஸஜ்தாச் செய்ய வேண்டும்.

சிறுவரான தமீம் இப்னு ஹத்லம், இப்னு மஸ்வூத்(ரலி) முன்னிலையில் ஸஜ்தா வசனத்தை ஓதினார். அவரிடம் இப்னு மஸ்வூத்(ரலி) நீர் ஸஜ்தாச் செய்வீராக! ஏனெனில் இந்த விஷயத்தில் நீரே நமக்கு இமாமாக இருக்கிறீர் என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1075. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்யும் வசனத்தை எங்களுக்கு ஓதிக் காட்டும்போது அவர்கள் ஸஜ்தாச் செய்வார்கள். எங்களுக்கு நெற்றியை வைக்க இடமில்லாத அளவுக்கு நாங்கள் அனைவரும் ஸஜ்தாச் செய்வோம்.

### இமாம் ஸஜ்தா வசனத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்வதற்காக மக்கள் நெருக்கியடித்துக் கொள்வது.

ஹதீஸ் 1076. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் இருக்கும்போது ஸஜ்தாச் செய்யும் வசனத்தை எங்களுக்கு ஓதிக் காட்டுவார்கள். அப்போது அவர்கள் ஸஜ்தாச் செய்வார்கள். எங்களுக்கு நெற்றியை வைக்க இடமில்லாத அளவுக்கு நெருக்கியடித்துக் கொண்டு நாங்கள் அனைவரும் ஸஜ்தாச் செய்வோம்.

### ஸஜ்தாச் செய்வது கட்டாயமில்லை.

ஒருவர் இன்னொருவர் ஓதும் ஸஜ்தா வசனத்தை உட்காராமல் போகிற போக்கில் செவியுற்றால்,, (ஸஜ்தாச் செய்ய வேண்டுமா?) என்று இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) இடம் கேட்கப் பட்டது. அதற்கவர்கள் அவர் உட்கார்ந்து கேட்டால்தான் என்ன? என்று திரும்பிக் கேட்டார்கள். இதன் மூலம் ஸஜ்தாச் செய்வது கடமையில்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். (ஒரு கூட்டத்தினர் ஸஜ்தா வசனத்தை ஓதி ஸஜ்தாச் செய்து கொண்டிருக்கும்போது அவர்களைக் கடந்து சென்ற) ஸல்மான்(ரலி) நாம் இதற்காக இங்கு வரவில்லை என்று கூறினார்கள்.

செவி தாழ்த்திக் கேட்போரின் மீதே ஸஜ்தாக் கடமை என்று உஸ்மான்(ரலி) குறிப்பிட்டார்கள்

ஸாயிப் இப்னு யஜீத்(ரலி), பிரசங்கம் செய்பவர் ஸஜ்தா வசனத்தை ஓதும்போது ஸஜ்தாச் செய்ய மாட்டார்கள்.

ஹதீஸ் 1077. ரபீஆ இப்னு அப்தில்லா அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) ஒரு வெள்ளிக்கிழமை மிம்பரில் நின்று நஹ்ல் அத்தியாயத்தை ஓதினார்கள். (அதிலுள்ள) ஸஜ்தா வசனத்தை அடைந்ததும் இறங்கி ஸஜ்தாச் செய்தார்கள். மக்களும் ஸஜ்தாச் செய்தனர். அடுத்த ஜும்ஆ வந்தபோது அதே அத்தியாயத்தை ஓதினார்கள். அப்போது ஸஜ்தா வசனத்தை அடைந்ததும் (மக்களை நோக்கி) மனிதர்களே! நாம் ஸஜ்தா வசனத்தை ஓதியிருக்கிறோம். ஸஜ்தாச் செய்கிறவர் நல்லதைச் செய்தவராவார். அவரின் மீது எந்தக் குற்றமுமில்லை என்று கூறினார்கள். மேலும் அவர்கள் ஸஜ்தாச் செய்யவில்லை.

நாமாக விரும்பிச் செய்தால் தவிர ஸஜ்தாவை அல்லாஹ் நம்மீது கடமையாக்கவில்லை என்று இப்னு உமர்(ரலி) கூறினார் என நாபி:உ குறிப்பிட்டார்கள்.

## தொழுகையில் ஸஜ்தா வசனத்தை ஓதி ஸஜ்தாச் செய்தல்

ஹதீஸ் 1078. அபூ ராபிவு அவர்கள் கூறினார்கள்.

நான் அபூ ஹுரைரா(ரலி) உடன் இஷாத் தொழுதேன். அவர்கள் இதஸ்ஸமாவுன் ஷக்கத் என்ற அத்தியாயத்தை ஓதி, ஸஜ்தாச் செய்தார்கள். இது என்ன? என்று கேட்டேன். அதற்கு, நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் இந்த வசனத்திற்காக நான் ஸஜ்தாச் செய்துள்ளேன். நபி(ஸல்) அவர்களைச் சந்திக்கும் வரை நான் செய்து கொண்டே இருப்பேன் என்று அபூ ஹுரைரா(ரலி) விடையளித்தார்கள்.

## கூட்ட நெரிசலினால் ஸஜ்தாச் செய்வதற்கு இடம் கிடைக்காமல் போவது.

ஹதீஸ் 1079. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸஜ்தாச் செய்யும் வசனத்தை எங்களுக்கு ஓதிக் காட்டும்போது அவர்கள் ஸஜ்தாச் செய்வார்கள். எங்களுக்கு நெற்றியை வைக்க இடமில்லாத அளவுக்கு நாங்கள் அனைவரும் ஸஜ்தாச் செய்வோம்.

# அத்தியாயம் -18- கஸ்ருத் தொழுகை

## எத்தனை நாள்கள் வெளியூரில் தங்கினால் கஸ்ருத் தொழலாம்? (கஸ்ரு சுருக்கித் தொழுதல்)

ஹதீஸ் 1080. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (மக்காவில்) பத்தொன்பது நாள்கள் தங்கினார்கள். அந்நாள்களில் கஸ்ருச் செய்தார்கள். நாங்களும் பத்தொன்பது நாள்களுக்குப் பயணம் மேற்கொண்டால் கஸ்ருச் செய்வோம். (அதை விட) அதிகமானால் முழுமையாகத் தொழுவோம்.

ஹதீஸ் 1081. யஹ்யா இப்னு அபீ இஸ்ஹாக் அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் மதீனாவிலிருந்து மக்காவை நோக்கி நபி (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். நபி (ஸல்) அவர்கள் மதீனா திரும்பும் வரை இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழுதார்கள் என்று அனஸ் (ரலி) கூறியபோது நீங்கள் மக்காவில் எவ்வளவு நாள்கள் தங்கினீர்கள் என்று கேட்டேன். அதற்கவர்கள் பத்து நாள்கள் தங்கினோம் என்று விடையளித்தார்கள்.

## மினாவில் கஸ்ருத் தொழுதல்

ஹதீஸ் 1082. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

நான் நபி (ஸல்) அவர்களுடனும் அபூ பக்ர் (ரலி), உமர் (ரலி) ஆகியோருடனும் உஸ்மான் (ரலி) உடைய ஆட்சிக் காலத்தின் ஆரம்பக்கட்டத்தில் உஸ்மான் (ரலி) உடனும் மினாவில் இரண்டு ரக்அத்களாகத் தொழுதேன். பின்னர் உஸ்மான் (ரலி) நான்கு ரக்அத்களாகத் தொழலானார்கள்.

ஹதீஸ் 1083. ஹாரிஸா இப்னு வஹப் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மினாவில் எதிரிகளைப் பற்றி எந்த அச்சமும் இல்லாத நிலையில் இரண்டு ரக்அத்களாக எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

ஹதீஸ் 1084. அப்துர் ரஹ்மான் இப்னு யஜீத் அவர்கள் கூறினார்கள்.

உஸ்மான் (ரலி) மினாவில் எங்களுக்கு நான்கு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். இது பற்றி இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடம் கூறப்பட்டபோது இன்னாலில்லாஹி வ இன்னாஇலைஹி ராஜிஊன் என்று கூறினார்கள். பின்னர் நான் நபி (ஸல்) அவர்களுடன் இரண்டு ரக்அத்களாகத் தொழுதிருக்கிறேன். அபூ பக்ர் (ரலி) உடனும் மினாவில் இரண்டு ரக்அத்களாகத் தொழுதிருக்கிறேன். உமர் (ரலி) உடனும் மினாவில் இரண்டு ரக்அத்களாகத் தொழுதிருக்கிறேன். இந்த நான்கு ரக்அத்களுக்குப் பகரமாக ஒப்புக் கொள்ளப்பட்ட இரண்டு ரக்அத்கள் எனக்குப் போதும் என்று கூறினார்.

## ஹஜ்ஜின்போது நபி (ஸல்) அவர்கள் எத்தனை நாள்கள் தங்கினார்கள்?

ஹதீஸ் 1085. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் துலஹஜ் மாதம் நான்காம் நாள் காலையில் ஹஜ்ஜிற்கு இஹ்ராம் கட்டியவர்களாக வந்து சேர்ந்தனர். பலியிடப்படும் பிராணியைக் கொண்டு வந்திருப்பவரைத் தவிர மற்றவர்கள் ஹஜ்ஜை உம்ராவாக மாற்றிக் கொள்ளுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

## எவ்வளவு தொலைவு பயணம் செய்யும்போது கஸ்ருச் செய்யலாம்?

நபி(ஸல்) அவர்கள் ஒரு பகல் ஓர் இரவைப் பயணம் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

இப்னு உமர்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோர் நாற்பத்தெட்டு மைல் தொலைவிற்குப் பயணம் செய்யும்போது கஸ்ருச் செய்பவர்களாகவும் நோன்பை விடுபவர்களாகவும் இருந்தனர்.

ஹதீஸ் 1086. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

எந்தப் பெண்ணும் மணம் முடிக்கத் தகாத ஆண் உறவினருடன் தவிர மூன்று நாள்களுக்கான பயணத்தை மேற்கொள்ளக் கூடாது.

இதை இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1087. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். எந்தப் பெண்ணும் மணம் முடிக்கத் தகாத ஆண் உறவினருடன் தவிர முன்று நாள்களுக்கான பயணத்தை மேற்கொள்ளக்கூடாது.

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1088. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பக் கூடிய எந்தப் பெண்ணும் ஒரு பகல் ஓர் இரவு தொலைவுடைய பயணத்தை மணம் முடிக்கத் தகாத ஆண் உறவினர் இல்லாமல் மேற்கொள்வது கூடாது. என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஒருவர் தம் இல்லத்தைவிட்டுப் புறப்பட்டதும் கஸ்ருச் செய்யலாம்.

அலீ(ரலி) (வெளியூர்) புறப்பட்டுச் செல்லும்போது (உள்ளூரிலுள்ள) வீடுகள் கண்களுக்குத் தெரியும் போதே கஸ்ருச் செய்தார்கள். திரும்பி வந்தபோது இதோ கூஃபா வந்துவிட்டது என்று அவர்களிடம் கூறப்பட்டது. அப்போது அவர்கள் இல்லை! நாம் ஊருக்குள் நுழையும் வரை (கஸ்ருச் செய்வோம்) என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1089. அனஸ்(ரலி) கூறினார்கள்

நான் நபி(ஸல்) அவர்களுடன் லுஹர்த் தொழுகையை மதீனாவில் நான்கு ரக்அத்களாகத் தொழுதேன். துல்ஹுலைஃபாவில் இரண்டு ரக்அத்களாகத் தொழுதேன்.

ஹதீஸ் 1090. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

தொழுகை ஆரம்பத்தில் இரண்டு ரக்அத்களாகத்தான் கடமையாக்கப்பட்டது. பயணத் தொழுகை அவ்வாறே நீடித்தது. (சொந்த) ஊரில் தொழும் தொழுகை (நான்கு ரக்அத்களாக) முழுமை படுத்தப்பட்டது.

நான் உர்வாவிடம் ஆயிஷா(ரலி) ஏன் முழுமையாக தொழுதனர் என்று கேட்டேன். அதற்கவர், உஸ்மான்(ரலி) விளங்கியது போல் அவரும் விளங்கிவிட்டார். (அதாவது மக்காவைச் சொந்த ஊராக இருவரும் கருதிவிட்டனர்) என்று விடையளித்தார்.

## மஃரிபுத் தொழுகையைப் பயணத்திலும் மூன்று ரக்அத்களாகத் தொழுதல்.

ஹதீஸ் 1091. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அவசரமாகப் புறப்படுவதாக இருந்தால் மஃரிபைத் தாமதப் படுத்தி இஷாவுடன் சேர்த்துத் தொழுவார்கள்.

இப்னு உமர்(ரலி) இவ்வாறே செய்வார்கள் என்று நாஃபிவு கூறுகிறார்.

ஹதீஸ் 1092. ஸாலிம் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) முஸ்தலிஃபா-வில் மஃரிபையும் இஷாவையும் ஜம்உச் செய்து தொழுவார்கள். ஒரு முறை இப்னு உமர்(ரலி) மஃரிபைத் தாமதப் படுத்தினார்கள். அவர்களின் மனைவி ஸஃபியா(ரலி) உடல் நலம் குன்றி இருந்தார்கள். (அவர்களைப் பார்க்கச் சென்று கொண்டிருந்தார்கள்) அவர்களிடம் தொழுகை என்று நினைவு படுத்தினேன். அப்போதும் நட என்றார்கள். இரண்டு அல்லது மூன்று மைல்கள் நடந்ததும வாகனத்தில் இருந்து இறங்கித் தொழுதார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் அவசரமாகப் புறப்பட நேர்ந்தால் இப்படித்தான் தொழுவார்கள் என்று குறிப்பிட்டார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள் அவசரமாகப் புறப்பட நேர்ந்தால் மஃரிபைத் தாமதப் படுத்தி மூன்றுரக்அத்கள் தொழும் ஸலாம் கொடுப்பார்கள். பின்னர் பெரிய இடைவெளி ஏதுமின்றி இஷாவுக்கு இகாமத் சொல்லி இரண்டு ரக்அத்களாகத் தொழுவார்கள். பின்னர் ஸலாம் கொடுப்பார்கள். இஷாவிலிருந்து நள்ளிரவில் எழுவது வரை உபரியான தொழுகைகள் தொழ மாட்டார்கள். எனக் குறிப்பிட்டார்கள்.

## வாகனம் எத்திசையில் சென்றாலும் அதன் மீதமர்ந்து உபரியான தொழுகைகளைத் தொழுதல்

ஹதீஸ் 1093. ஆமிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களை வாகனம் எத்திசையில் கொண்டு சென்றாலும் அவர்கள் வாகனத்தின் மீதமர்ந்து தொழுவதை பார்த்திருக்கிறேன்.

ஹதீஸ் 1094. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் வாகனத்தில் செல்லும்போது கிப்லா அல்லாத திசையை நோக்கி உபரியான தொழுகைகளைத் தொழுதிருக்கிறார்கள்.

ஹதீஸ் 1095. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) தம் வாகனத்தில் அமர்ந்து உபரியான தொழுகைகளையும் வித்ருத் தொழுகைகளையும் தொழுதுவிட்டு நபி(ஸல்) அவர்கள் அவ்வாறு செய்ததாகவும் குறிப்பிட்டார்கள்.

## வாகனத்தில் அமர்ந்து சைகை செய்து தொழுதல்

ஹதீஸ் 1096. அப்தில்லாஹ் இப்னு தீனார் அவர்கள் கூறினார்கள். இப்னு உமர்(ரலி) பயணத்தின்போது வாகனம் எத்திசையில் சென்றாலும் அதன் மீதமர்ந்து சைகை செய்து தொழுவார்கள். அவ்வாறு செய்ததாகவும் குறிப்பிடுவார்கள்.

## கடமையான தொழுகைகளைத் தொழும்போது வாகனத்தில் இருந்து இறங்கவேண்டும்.

ஹதீஸ் 1097. ஆமிர் இப்னு ரபிஆ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் வாகனத்தின் மீதமர்ந்து வாகனம் எத்திசையில் சென்றாலும் தம் தலையால் சைகை செய்து உபரியான தொழுகைகளைத் தொழுவார்கள். கடமையான தொழுகையின்போது இவ்வாறு செய்ய மாட்டார்கள்.

ஹதீஸ் 1098. ஸாலிம் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) இரவில் பயணம் செய்யும்போது தம் வாகத்தின் மீதமர்ந்து தொழுவார்கள். அவர்களின் முகம் எத்திசையில் இருக்கிறதென்பதைப் பற்றிக் கவலைப் பட மாட்டார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள் எத்திசையில் சென்றாலும் வாகனத்தின் மீது அமர்ந்து உபரியான தொழுகைகளையும் வித்ரையும் தொழுவார்கள் என்றாலும் கடமையான தொழுகைகளை வாகனத்தின் மீதமர்ந்து தொழ மாட்டார்கள் என்றும் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1099. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் அமர்ந்து கிழக்கு நோக்கித் தொழுவார்கள். கடமையான தொழுகையைத் தொழ விரும்பும்போது வாகனத்திலிருந்து இறங்கிக் கிப்லாவை நோக்குவார்கள்.

கழுதையின் மீது அமர்ந்து உபரியான தொழுகைகளைத் தொழுதல்.

ஹதீஸ் 1100. அனஸ் இப்னு சீரின் அவர்கள் கூறினார்கள்.

அனஸ்(ரலி) ஸிரியாவிலிருந்து வந்தபோது அவர்களை நாங்கள் எதிர் கொண்டோம். ஐனூத்தம்ர் என்ற இடத்தில் அவர்களை நாங்கள் சந்தித்தோம். அப்போது அவர்களின் முகம் கிப்லாவுக்கு இடப்புறமாக இருக்கும் நிலையில் கழுதையின் மீது அமர்ந்து அவர்கள் தொழுததை பார்த்தேன். கிப்லா அல்லாத திசையில் நீங்கள் தொழுகிறீர்களே என்று கேட்டேன். அதற்கவர்கள் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்ததை நான் பார்த்திருக்காவிட்டால் நான் இவ்வாறு செய்திருக்க மாட்டேன் என்று விடையளித்தார்கள்.

பயணத்தின்போது தொழுகைக்கு முன்பும் பின்பும் உபரியான தொழுகையைத் தொழ வேண்டியதில்லை.

ஹதீஸ் 1101. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டிருந்தேன். அவர்கள் பயணத்தில் உபரித் தொழுகைகளைத் தொழுததை நான் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன் மாதிரி இருக்கிறது என்று அல்லாஹ் கூறினான்.

ஹதீஸ் 1102. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டிருந்தேன். அவர்கள் பயணத்தின்போது இரண்டு ரக்அத்களை விட அதிகமாகத் தொழமாட்டார்கள். அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி), உஸ்மான்(ரலி) ஆகியோரும் இவ்வாறே செய்துள்ளனர்.

கடமையான தொழுகைகளுக்கு முன்னரும் பின்னரும் தவிர மற்ற சமயங்களில் பயணத்தில் உபரியாகத் தொழுவது.
நபி(ஸல்) அவர்கள் பயணத்தின்போது ஃபஜ்ருடைய முன் ஸுன்னத்தைத் தொழுதிருக்கிறார்கள்.

ஹதீஸ் 1103 இப்னு அபீ லைலா கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் ளுஹாத் தொழுததாக உம்மு ஹானி(ரலி)யைத் தவிர வேறு எவரும் அறிவித்ததில்லை. நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது என்னுடைய இல்லத்தில் குளித்துவிட்டு எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். அதை விடச் சுருக்கமாக வேறு எந்தத் தொழுகையையும் அவர்கள் தொழுததை நான் பார்த்ததில்லை. ஆயினும் ருகூவையும் ஸஜ்தாவையும் முழுமையாகச் செய்தார்கள் என்று உம்மு ஹானி(ரலி) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1104. ஆமிர் இப்னு ரபீஆ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இரவில் பயணத்தின்போது தம் வாகனத்தின் மீது அமர்ந்து அது செல்லும் திசையில் உபரியான தொழுகைகளைத் தொழுததை பார்த்திருக்கிறேன்.

ஹதீஸ் 1105. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தின் மீதமர்ந்து அது செல்லும் திசையில் உபரித் தொழுகைகளைத் தொழுவார்கள். (ருகூவு, ஸஜ்தாச் செய்யும் போது) தம் தலையால் சைகை செய்வார்கள்.

இப்னு உமர்(ரலி) இவ்வாறு செய்ததாக அவர்கள் மகன் ஸாலிம் கூறுகிறார்.

## பயணத்தின்போது ம∴ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதல்

ஹதீஸ் 1106. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அவசரமாகப் பயணம் செய்யும்போது ம∴ரிபையும் இஷாவையும் ஜம்உச் செய்வார்கள்.

ஹதீஸ் 1107. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பயணத்தில் இருக்கும்போது லுஹர் அஸரையும் மக்ரிப் இஷாவையும் ஜம்உச் செய்து தொழுவார்கள்.

ஹதீஸ் 1108. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பயணத்தின்போது மக்ரிப் இஷாவை ஜம்உச் செய்வார்கள்.

## மக்ரிப் இஷாவை ஜம்வுச் செய்யும்போது பாங்கும் இகாமத்தும் சொல்ல வேண்டுமா?

ஹதீஸ் 1109. ஸாலிம் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) அவசரமாகப் பயணம் மேற்கொள்ளும்போது மக்ரிப் தொழுகையைத் தாமதப் படுத்தி இஷாவையும் ம∴ரிபையும் ஜம்உச் செய்வார்கள். நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்ததாகவும் குறிப்பிடுவார்கள். மேலும் ம∴ரிபுக்கு இகாமத் சொல்லி மூன்று ரக்அத் தொழுது ஸலாம் கொடுப்பார்கள். பெரிய இடைவெளி ஏதுமின்றி இஷாவுக்கு இகாமத் சொல்லி இரண்டு ரக்அத்கள் தொழுது ஸலாம் கொடுப்பார்கள். அவ்விரு தொழுகைகளுக்குமிடையே எதனையும் தொழ மாட்டார்கள். இஷாவிலிருந்து நள்ளிரவு வரை எதையும் தொழ மாட்டார்கள்.

ஹதீஸ் 1110. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பயணத்தின்போது மக்ரிப் இஷாவை ஜம்உச் செய்வார்கள்.

## சூரியன் உச்சியிலிருந்து சாய்வதற்கு முன் பயணத்தை மேற்கொண்டால் லுஹரைத் தாமதப் படுத்தி அஸருடன் ஜம்உச் செய்யலாம்.

ஹதீஸ் 1111. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் சூரியன் உச்சியிலிருந்து சாய்வதற்கு முன் பயணத்தை மேற்கொண்டால் லுஹரை அஸர் வரை தாமதப் படுத்தி ஜம்உச் செய்வார்கள். சூரியன் சாய்ந்த பிறகு புறப்பட்டால் லுஹர்த் தொழுதுவிட்டுப் புறப்படுவார்கள்.

## சூரியன் சாய்ந்த பிறகு புறப்பட்டால் லுஹர்த் தொழுதுவிட்டுப் புறப்பட வேண்டும்.

ஹதீஸ் 1112. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் சூரியன் உச்சியிலிருந்து சாய்வதற்கு முன் பயணத்தை மேற்கொண்டால் லுஹரை அஸர் வரை தாமதப் படுத்தி ஜம்உச் செய்வார்கள். சூரியன் சாய்ந்த பிறகு புறப்பட்டால் லுஹர்த் தொழுதுவிட்டுப் புறப்படுவார்கள்.

## உட்கார்ந்து தொழுவது

ஹதீஸ் 1113. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோயுற்றிருக்கும்போது தம் இல்லத்தில் உட்கார்ந்து தொழுதார்கள். அவர்களுக்குப் பின்மக்கள் நின்று தொழுதார்கள். அப்போது உட்காருமாறு மக்களுக்குச் சைகை செய்தார்கள். தொழுது முடித்ததும் இமாம் ஏற்படுத்தப்பட்டிருப்பது பின்பற்றப்படுவதற்கே. எனவே அவர் ருகூவுச் செய்யுங்கள் அவர் (ருகூவிலிருந்து) நிமிரும்போது நீங்களும் நிமிருங்கள் நபி(ஸல்) குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 114. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் குதிரையிலிருந்து கீழே விழுந்ததால் அவர்களின் வலது புறத்தில் காயம் ஏற்பட்டது. அவர்களை நோய் விசாரிக்க நாங்கள் சென்றோம். தொழுகை நேரம் வந்ததும் அவர்கள் உட்கார்ந்து தொழுதார்கள். நாங்களும் உட்கார்ந்து தொழுதோம். (தொழுது முடித்ததும்) இமாம் ஏற்படுத்தப்பட்டிருப்பது அவர் பின் பற்றப்படுவதற்கே. அவர் தக்பீர் கூறும்போது நீங்களும் தக்பீர் கூறுங்கள். அவர் ருகூவுச் செய்யும்போது நீங்களும் ருகூவுச் செய்யுங்கள். (ருவுவிலிருந்து) அவர் நிமிரும்போது நீங்களும் நிமிருங்கள். அவர் ஸமி அல்லாஹு லிமன் ஹமிதா என்று கூறும்போது நீங்கள் ரப்பனா வ லகல் ஹம்து என்று கூறுங்கள் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1115. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் மூல வியாதி உடையவனாக இருந்ததால் நபி(ஸல்) அவர்களிடம் உட்கார்ந்து தொழுவது பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள் நின்று தொழுதால் அது சிறந்ததாகும். உட்கார்ந்து தொழுதால் நின்று தொழுபவரின் கூலியில் பாதியே அவருக்கு உண்டு. படுத்துத் தொழுதால் உட்கார்ந்து தொழுபவரின் கூலியில் பாதியே அவருக்கு உண்டு என்று விடையளித்தார்கள்.

## உட்கார்ந்து தொழுபவர் சைகையால் தொழலாம்.

ஹதீஸ் 1116. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் மூல வியாதி உடையவனாக இருந்தால் நபி(ஸல்) அவர்களிடம் உட்கார்ந்து தொழுவது பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள் நின்று தொழுதால் அது சிறந்ததாகும். உட்கார்ந்து தொழுதால் நின்று தொழுபவரின் கூலியில் பாதியே அவருக்கு உண்டு. படுத்துக் தொழுதால் உட்கார்ந்து தொழுபவரின் கூலியின் பாதியே அவருக்கு உண்டு என்று விடையளித்தார்கள்.

## உட்கார்ந்து தொழ முடியாவிட்டால் படுத்துத் தொழலாம்.

இவ்வாறு தொழும்போது கிப்லாவை நோக்கித் திரும்ப முடியாவிட்டால் எந்தப் புறம் வேண்டுமானாலும் தொழலாம் என்று அதாவு கூறுகிறார்.

ஹதீஸ் 1117. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

எனக்கு மூலம் இருந்தது. எவ்வாறு தொழுவது நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், நீ நின்று தொழு இயலாவிட்டால் உட்கார்ந்து தொழு. அதற்கும் இயலாவிட்டால் படுத்துத் தொழு என்று விடையளித்தார்கள்.

## உட்கார்ந்து தொழுமபோது நோய் நீங்கிவிட்டால் அல்லது நோயின் கடுமை குறைந்துவிட்டால் எஞ்சியதை எழுந்து தொழலாம்.

ஒரு நோயாளி விரும்பினால் இரண்டு ரக்அத்களை நின்றும் இரண்டு ரக்அத்களை அமர்ந்தும் தொழலாம் என்று ஹஸன் கூறுகிறார்.

ஹதீஸ் 1118. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் முதுமையை அடையும் வரை இரவுத் தொழுகையை உட்கார்ந்து தொழ நான் பார்த்ததில்லை. முதுமையான காலத்தில் அவர்கள் உட்கார்ந்த நிலையில் ஓதுவார்கள். ருகூவுச் செய்ய எண்ணும்போது எழுந்து முப்பது அல்லது நாற்பது வசனங்கள் ஓதிவிட்டுப் பிறகு ருகூவுப் செய்வார்கள்.

ஹதீஸ் 1119. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உட்கார்ந்து தொழுவார்கள். உட்கார்ந்த நிலையில் ஓதுவார்கள். ஓத வேண்டியதில் முப்பது அல்லது நாற்பது வசனங்கள் எஞ்சியிருக்கும்போது எழுந்து நின்று அதை ஓதிவிட்டு ருகூவுச் செய்வார்கள். பின்னர் ஸஜ்தாச் செய்வார்கள். இரண்டாம் ரக்அத்திலும் இது போன்றே செய்வார்கள். தொழுது முடித்ததும் நான் விழித்துக் கொண்டிருந்தால் என்னுடன் பேசிக் கொண்டிருப்பார்கள். நான் உறங்கிவிட்டால் அவர்களும் படுத்து விடுவார்கள்.

# அத்தியாயம் -19- தஹஜ்ஜுத்

## இரவில் தஹஜ்ஜுத் தொழுதல்.

அல்லாஹ் கூறினான்: இரவில் நீர் தஹஜ்ஜுத் தொழுவீராக! (திருக்குர்ஆன் 17:79)

ஹதீஸ் 1120. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தஹஜ்ஜுத் தொழுவதற்காக இரவில் எழுந்ததும் இறைவா! உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள், பூமி அவற்றிலுள்ளவை அனைத்தையும் நிர்வம்ப்பவன் நீயே! உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள் பூமி அவற்றிலுள்ளவற்றின் உரிமை உனக்கே உரியது. உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள் பூமி ஆகியவற்றின் ஒளி நீயே! உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள் பூமிக்கு அரசன் நீயே! உனக்கே புகழ் அனைத்தும். நீ உண்மையாளன். உன் வாக்குறுதி உண்மை. உன்னுடைய சந்திப்பு உண்மை. உன்னுடைய கூற்று உண்மை. சொர்க்கம் உண்மை. நரகம் உண்மை. நபிமார்கள் உண்மையாளர்கள். முஹம்மது உண்மையாளர். மறுமை நாள் உண்மை. இறைவா! உனக்கே கட்டுப்பட்டேன். உன்னையே நம்பினேன். உன்மீது உறுதியான நம்பிக்கை வைத்துள்ளேன். உன்னிடமே திரும்புகிறேன். உன்னிடமே நீதி கேட்பேன். எனவே நான் முந்திச் செய்த, பிந்திச் செய்கின்ற, இரகசியமாகச் செய்த, பம்ரங்கமாகச் செய்த பாவங்களை மன்னித்துவிடு. நீயே (சிலரை) முற்படுத்துபவன், (சிலரை) பிற்படுத்துபவன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை. உன்னுடைய உதவியின்றி நமை செய்யும் ஆற்றலோ தீமையிலிருந்து விடுபடும் ஆற்றலோ இல்லை என்று கூறிவார்கள்.

## இரவுத் தொழுகையின் சிறப்பு

ஹதீஸ் 1121 ் 1122 இப்னு உமர்(ரலி) கூறியதவாது.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் ஒருவர் கனவு கண்டால் அதை நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துரைப்பது வழக்கம். நானும் ஒரு கனவு கண்டு அதை நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துரைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அப்போது நான் இளைஞனாகவும் பள்ளிவாசலில் உறங்கக் கூடியவனாகவும் இருந்தேன். இரண்டு வானவர்கள் என்னைப் பிடித்து நரகத்திற்குக் கொண்டு சென்றார்கள். கிணறுக்குச் சுற்றுச் சுவர் கட்டப்பட்டது போல் அந்த நரகத்திற்கும் கட்டப்பட்டிருந்தது அதற்கு இரண்டு கொம்புகளும் இருந்தன. அதில் எனக்குத் தெரிந்த சில மனிதர்களும் கிடந்தனர். அப்போது நான் நரகத்தைவிட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறினேன். அப்போது வேறு ஒரு வானவர் என்னைச் சந்தித்து நீர் பயப்படாதீர் என்று கூறினார். இவ்வாறு நான் கனவு கண்டேன். இக்கனவை ஹஃப்ஸா(ரலி) அவர்களிடம் கூறினேன். அவர்கள் நபி(ஸல்) அவக்ாள் அப்துல்லாஹ் இரவில் தொழுபவராக இருந்தால் அவர் மனிதர்களிலே மிகவும் நல்லவர் என்று கூறினார்கள். அதன் பின்னர் இரவில் குறைந்த நேரமே தவிர நான் உறங்குவதில்லை.

## இரவுத் தொழுகையில் நீண்ட நேரம் ஸஜ்தாச் செய்தல்.

ஹதீஸ் 1123. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பதினொரு ரக்அத்கள் தொழுவார்கள். அதுவே அவர்களின் (வழக்கமான) தொழுகையாக இருந்தது. அத்தொழுகையில் உங்களில் ஒருவர் ஐம்பது வசனங்கள் ஓதக் கூடிய நேரம் ஒரு ஸஜ்தாச் செய்வார்கள். ஃபஜ்ருத் தொழுகைக்கு முன்னால் இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டு ஃபஜ்ருத் தொழுகைக்காக முஅத்தின் அழைக்கும் வரை வலப்புறம்

சாய்ந்து படுத்துக் கொள்வார்கள்.

## நோயாளி இரவுத் தொழுகையைவிட்டு விடலாம்.

ஹதீஸ் 1124. ஜுன்துப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோயுற்றபோது ஓர் இரவோ, இரண்டு இரவுகளோ தொழவில்லை.

ஹதீஸ் 1125. ஜுன்துப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) சில நாள்கள் வரவில்லை. அப்போது குறைஷிக் கூட்டத்தைச் சார்ந்த ஒரு பெண்மணி இவரின் ஷைத்தான் இவரைவிட்டுவிட்டான் என்று கூறினாள். அப்போது முற்பகல் மீதும் இரவின் மீதும் ஆணையாக உம்முடைய இறைவன் உம்மைவிட்டு விடவுமில்லை உம்மீது கோபம் கொள்ளவுமில்லை (திருக்குர்ஆன் 93:1,2,3) என்ற வசனம் அருளப்பட்டது.

இரவுத் தொழுகையையும் உபரியான தொழுகைகளையும் கட்டாயப் படுத்தாமல் நபி(ஸல்) அவர்கள் ஆர்வமூட்டியது.

நபி(ஸல்) அவர்கள் ஃபாத்திமா(ரலி)யையும் அலீ(ரலி)யையும் இரவுத் தொழுகைக்காக எழுப்பி விடுவார்கள்.

ஹதீஸ் 1126. உம்மு ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவு விழித்ததும், ஸுப்ஹானல்லாஹ்! இந்த இரவில்தான் எத்தனை சோதனைகள் இறக்கப்பட்டுள்ளன? எத்தனை பொக்கிஷங்கள் திறக்கப்பட்டுள்ளன. அறைகளில் உள்ள பெண்களை எழுப்பி விடுவோர் யார்? இவ்வுலகில் ஆடை அணிந்திருந்த எத்தனையோ பேர் மறுமையில் நிர்வாணிகளாக இருப்பார்கள் என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1127. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவில் என்னிடமும் ஃபாத்திமா(ரலி) அவர்களிடமும் வந்தார்கள். நீங்கள் இருவரும் தொழவில்லையா? என்று கேட்டார்கள். அப்போது நான் நபி அவர்களே! எங்களின் உயிர்கள் அல்லாஹ்வின் கையிலுள்ளன. அவன் எழும்பும்போதே நாங்கள் எழ முடியும் என்று கூறினேன். இதை நான் கூறியபோது எனக்கு எந்த மறுமொழியும் கூறாமல் திரும்பிச் செல்லலானார்கள். பின்னர் தம் தொடையில் அடித்து மனிதன் அதிகமாகத் தர்க்கம் செய்பவனாக இருக்கிறான் (திருக்குர்ஆன் 18:54) என்று கூறிக் கொண்டே திரும்பிச் சென்றார்கள்.

ஹதீஸ் 1128. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் சில அமல்களைச் செய்ய விரும்புவார்கள். (ஆனால்) சில சமயம் அவற்றைச் செய்ய மாட்டார்கள். மக்களும் அதைச் செய்து அவர்களின் மீது அது அச்சமே இதற்கு காரணம். நபி(ஸல்) அவர்கள் ஒருபோதும் லுஹாத் தொழுததில்லை. நான் லுஹாத் தொழுது வருகிறேன்.

ஹதீஸ் 1129. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவில் பள்ளிவாயிலில் தொழுதார்கள். அவர்களைப் பின்பற்றி மக்களும் தொழுதார்கள். மறுநாள் நபி(ஸல்) அவர்கள் தொழதபோது மக்கள் அதிகமானார்கள். மூன்றாவது இரவிலோ நான்காவது இரவிலோ மக்கள் திரண்டபோது நபி(ஸல்) அவர்கள் வரவில்லை. ஸுப்ஹு நேரம் வந்ததும் நீங்கள் செய்ததை நிச்சயமாக நான் பார்த்துக்

கொண்டுதான் இருந்தேன். உங்கள்மீது இத்தொழுகை கடமையாக்கப் பட்டு விடுமோ என்று நான் அஞ்சியதுதான் உங்களிடம் வராமல் என்னைத் தடுத்துவிட்டது என்று கூறினார்கள். இது ஒரு ரமலான் மாதத்தில் நடந்ததாகும்.

## நபி(ஸல்) அவர்களின் இரவுத் தொழுகை.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் கால்கள் வீங்கும் அளவுக்கு நின்று வணங்குவார்கள்.

ஹதீஸ் 1130. முகீரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

சில சமயம் நபி(ஸல்) அவர்கள் கால்கள் வீங்கும் அளவுக்கு நின்று தொழுவார்கள். இதுபற்றி அவர்களிடம் கேட்கப்படும்போது நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா? என்று கேட்பார்கள்.

## ஸஹர் நேரத்தில் உறங்குதல்

ஹதீஸ் 1131. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ்விற்கு மிகவிருப்பமான தொழுகை தாவூது(அலை) அவர்களின் தொழுகையாகும். அல்லாஹ் விற்கு மிக விருப்பமான நோன்பு தாவூது(அலை) அவர்களின் நோன்பாகும். அவர்கள் பாதி இரவு வரை தூங்குவார்கள். பிறகு இரவில் மூன்றில் ஒரு பகுதி நேரம் தொழுவார்கள். பிறகு ஆறில் ஒரு பகுதி நேரம் உறங்குவார்கள். மேலும் ஒரு நாள் நோன்பு வைத்து ஒரு நாள் நோன்பைவிட்டு விடுவார்கள்.

இதை அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1132. மஸ்ரூக் அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுக்கு விருப்பமான அமல் எது என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள் தொடர்ந்து செய்யும் அமல் என்று விடையளித்தார்கள். (இரவில்) நபி(ஸல்) அவர்கள் எப்போது எழுவார்கள் என்று கேட்டேன். அதற்கவர்கள் சேவல் கூவும்போது எழுவார்கள் என்று விடையளித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில் சேவல் கூவும்போது எழுந்து தொழுவார்கள் என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 1133. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் (இருக்கும்போது) ஸஹர் நேரம் வரும் வரை உறங்காமல் இருந்ததில்லை.

## ஸஹர் செய்ததும் உறங்காமல் ஸுப்ஹுத் தொழுதல்

ஹதீஸ் 1134. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறியவதாவது:

நபி(ஸல்) அவர்களும் ஸைத் இப்னு ஸாபித்(ரலி) வும் ஸஹர் செய்தனர். ஸஹர் செய்து முடித்ததும், நபி(ஸல்) அவர்கள் (ஃபஜ்ர்) தொழுகைக்கு தயாராகித் தொழுதார்கள்.

அவர்கள் ஸஹர் செய்ததற்கும் தொழுததற்கும் இடையே எவ்வளவு நேரம் இருந்தது என்று அனஸ்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கவர்கள் ஒருவர் ஐம்பது வசனங்கள் ஓதக்கூடிய நேரம் என்று விடையளித்தார்கள்.

## இரவுத் தொழுகையில் நீண்ட நேரம் நிற்பது.

ஹதீஸ் 1135. அபூ வாயில் அவர்கள் கூறினார்கள்.

நான் ஓர் இரவு நபி(ஸல்) அவர்களுடன் தொழுதேன். நான் தவறான ஒரு முடிவுக்கு வருமளவுக்கு அவர்கள் நின்று கொண்டே இருந்தார்கள் என்று இப்னு மஸ்வூத்(ரலி) கூறியபோது அந்தத் தவறான முடிவு எது? என்று கேட்டேன். அதற்கவர்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுவதைவிட்டுத் தொழுகையை முறித்து விடலாம் என்று எண்ணினேன் என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 1136. ஹுதைஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தஹஜ்ஜுத் தொழுவதற்காக இரவில் எழும்போது பல் துலக்குவார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் இரவில் எப்படி, எத்தனை (ரக்அத்கள்) தொழுதார்கள்?

ஹதீஸ் 1137. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் நபி அவர்களே! இரவுத் தொழுகை எவ்வாறு? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் இரண்டிரண்டு ரக்அத்களாகத் தொழ வேண்டும். ஸுப்ஹை (நேரம் வந்துவிடுமென) நீர் அஞ்சினால் ஒரு ரக்அத் வித்ருத் தொழுவீராக என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 1138. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் இரவில் பதின்மூன்று ரக்அத்கள் தொழுது வந்தனர்.

ஹதீஸ் 1139. மஸ்ரூக் கூறியதாது:

நபி(ஸல்) அவர்களின் இரவுத் தொழுகை பற்றி ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள் ஃபஜ்ருடைய ஸுன்னத் (சில பதினொரு ரக்அத்கள், (சில சமயம்) ஒன்பது ரக்அத்கள், சில சமயம் ஏழு ரக்அத்கள், (நபி(ஸல்) அவர்கள் தொழுவார்கள் என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 1140. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய முன் ஸுன்னத் வித்ரு ஆகியவற்றைச் சேர்த்து இரவில் பதின்மூன்று ரக்அத்கள் தொழுவார்கள்.

## முழு இரவும் தொழுவது மாற்றப்பட்டுவிட்டது.

அல்லாஹ் கூறினான்:

போர்வை போர்த்திக் கொண்டிருப்பவரே! (இரவில் - சிறிது நேரம் தவிர்த்து (தொழுகைக்காக எழுந்து) நிற்பீராக! அதில் பாதி (நேரம்) அல்லது அதில் சிறிது குறைத்துக் கொள்வீராக! அல்லது அதைவிடச் சற்று அதிகப்படுத்திக் கொள்வீராக! மேலும் குர்ஆனைத் தெளிவாகவும் நிறுத்தி, நிறுத்தியும் ஓதும்! நிச்சயமாக, நாம் விரைவில் கனமான உறுதியான ஒரு வாக்கை உம்மீது இறக்கி வைப்போம். நிச்சயமாக இரவில் எழு(ந்திருந்து வணங்கு)வது (அகத்தையும் புறத்தையும்) ஒருங்கிணைக்க வல்லது. மேலும் வாக்கையும் செவ்வைப்படுத்த வல்லது.

மேலும் அல்லாஹ் கூறினான்.

நிச்சயமாக நீரும், உம்முடன் இருப்போரில் ஒரு கூட்டத்தாரும் இரவில் மூன்றில் இரண்டு பாகங்களுக்குச் சமீபமாகவோ, இன்னும் அதில் பாதியோ இன்னும் இதில் மூன்றில் ஒரு பாகத்திலோ (வணக்கத்திற்காக) நிற்கிறீர்கள் என்பதை உம்முடைய இறைவன் நிச்சயமாக அறிவான் அல்லாஹ்வே இரவையும் பகலையும் அளவாகக் கணக்கிடுகிறான் அதை நீங்கள் சரியாகக் கணக்கிட்டுக் கொள்ள மாட்டீர்கள் என்பதையும் அவன் அறிகிறான் எனவே, அவன் உங்களுக்கு மன்னிப்பு அளித்துவிட்டான். எனவே, நீங்கள் குர்ஆனில் உங்களுக்குச் சுலபமான அளவு ஓதுங்கள். (ஏனெனில்) நோயாளிகளும் அல்லாஹ்வின் அருளைத் தேடியவாறு பூமியில் செல்லும் வேறு சிலரும் இறைவழியில் போரிடும் மற்றும் சிலரும் உங்களில் இருப்பார்கள் என்பதை அவன் அறிகிறான். எனவே, அவன் உங்களுக்கு அல்லாஹ்வின் அருளைத் தேடியவாறு பூமியில் செல்லும் வேறு சிலரும் இறைவழியில் போர் செய்யும் மற்றும் சிலரும் உங்களில் இருப்பார்கள் என்பதை அவன் அறிகிறான். எனவே, அதிலிருந்து உங்களுக்குச் சுலபமான அளவே ஓதங்கள் தொழுகையை முறையாக நிலை நிறுத்துங்கள் இன்னும் ஜகாத்தும் கொடுத்து வாருங்கள். அன்றியும் (தேவைப்படுவோருக்கு) அல்லாஹ்வுக்காக அழகான கடனாகக் கடன் கொடுங்கள் நன்மைகளில் எவற்றை நீங்கள் உங்கள் ஆத்மாக்களுக்காகச் செய்து (மறுமைக்காக) முற்படுத்துகிறீர்களோ, அவற்றை நீங்கள் அல்லாஹ்விடம் மிகவும் மேலானதாகவும், நற்கூலியில் மகத்தானதாகவும் காண்பீர்கள். அன்றியும் அல்லாஹ்விடமே மன்னிப்புக் கோருங்கள் - நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவன் மிக்க கிருபையுடையவன். (திருக்குர்ஆன் 73:1-6, 20)

ஹதீஸ் 1141. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோன்பு தோற்கமாட்டார்களோ என்று நாங்கள் நினைக்குமளவுக்கு நோன்பைத் தொடர்ந்துவிட்டு விடுவார்கள். நோன்பை விட மாட்டார்களோ என்று நாங்கள் நினைக்குமளவுக்குத் தொடர்ந்து நோன்பு நோற்பார்கள். நீர் அவர்களைத் தொழக் கூடியவர்களாகப் பார்க்க விரும்பினால் அவ்வாறே பார்ப்பீர். அவர்களைத் தூங்கக் கூடியவர்களாகப் பார்க்க விரும்பினால் அவ்வாறே பார்ப்பீர்!

### இரவில் தொழாவிட்டால் ஷைத்தான் பிடரியில் முடிச்சுப் போடுகிறான்.

ஹதீஸ் 1142. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உங்களில் ஒருவர் உறங்கும்போது பிடரியில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போடுகிறான். ஒவ்வொரு முடிச்சின் போதும் இரவு இன்னும் இருக்கிறது, உறங்கு என்று கூறுகிறான். அவர் விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் ஒரு முடிச்சு அவிழ்கிறது. அவர் உளூச் செய்தால் இன்னொரு முடிச்சு அவிழ்கிறது. அவர் தொழுதால் மற்றொரு முடிச்சும் அவிழ்கிறது. அவர் மகிழ்வுடனும் மன அமைதியுடனும் காலைப் பொழுதை அடைகிறார். இல்லையெனில் அமைதியற்றவராக, சோம்பல் நிறைந்தவராகக் காலைப் பொழுதை அடைகிறார்.

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1143. ஸமுரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கனவில் கண்ட தலை நசுக்கப்படும் மனிதரைப் பற்றிக் குறிப்பிட்டு அவர் குர்ஆனைக் கற்று தொழுகையைத் தொழாமல் உறங்கியவர் என்று விளக்கமளித்தார்கள்.

### தொழாமல் உறங்குபவரின் காதில் ஷைத்தான் சிறுநீர் கழிக்கிறான்.

ஹதீஸ் 1144. அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் விடியும் வரை தூங்கி கொண்டே இருக்கிறார். தொழுகைக்கு எழுவதில்லை நபி (ஸல்)

அவர்களிடம் கூறப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஷைத்தான் அவர் காதில் சிறுநீர் கழித்துவிட்டான் என்று விடையளித்தார்கள்.

## இரவின் கடைசியில் தொழுவதும் துஆ செயவதும்

அல்லாஹ் கூறினான்

அவர்கள் இரவில் குறைவாகவே உறங்குகிறார்கள். ஸஹர் நேரத்தில் பாவமன்னிப்புத் தேடுகிறார்கள். (திருக்குர்ஆன் 51:17)

ஹதீஸ் 1145. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நம்முடைய இறைவன் ஒவ்வொரு இரவும் கீழ் வானத்திற்கு இறங்கி இரவில் மூன்றில் ஒரு பகுதி இருக்கும்போது, என்னிடம் யாரேனும் பிரார்த்தித்தால் அதை நான் அங்கீகரிக்கிறேன். யாரேனும் என்னிடம் கேட்டால் அவருக்கு கொடுக்கிறேன். யாரேனும் என்னிடம் பாவமன்னிப்புக் கே காரினால் அவரை நான் மன்னிக்கிறேன் என்று கூறுவான். என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## இரவின் ஆரம்ப நேரத்தில் உறங்கிவிட்டுப் பிற்பகுதியில் விழித்திருத்தல்.

(இரவின் ஆரம்ப நேரத்தில் தொழமுயன்ற) அபூ தர்தா(ரலி) அவர்களிடம் உறங்குவீராக! இரவின் கடைசிப் பகுதியில் எழுவீராக! இதை அறிந்த நபி(ஸல்) அவர்கள் ஸல்மான கூறுவது உண்மையே! என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1146. அஸ்வத் அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் இரவுத் தொழுகை எவ்வாறு இருந்தது என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்,இரவின் ஆரம்ப நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் உறங்குவார்கள். இரவின் கடைசியில்எழுந்து தொழுவார்கள். பிறகு படுக்கைக்குச் செல்வார்கள். முஅத்தின் பாங்கு சொன்னதும் விழித்துக் குளிக்க வேண்டிய அவசியம் இருந்தால் குளிப்பார்கள். இல்லாவிட்டால் உளூச் செய்துவிட்டு (தொழுகைக்காகப்) புறப்படுவார்கள் என்று விடையளித்தார்கள்.

## ரமலானிலும் ரமலான் அல்லாத மாதத்திலும் நபி(ஸல்) அவர்கள் தொழுத முறை

ஹதீஸ் 1147. அபூ ஸலமா அவர்கள் கூறினார்கள். ரமலானில் நபி(ஸல்) அவர்களின் தொழுகை எவ்வாறு இருந்தது என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள் நபி(ஸல்) அவர்கள் ரமலானிலும் பதினொரு ரக்அத்களை விட அதிகமாகத் தொழுவார்கள் அதன் அழகையும் நீளத்தையும் நீ கேட்காதே! பின்னர் நான்கு ரக்அத்கள் தொழுவார்கள். அதன் அழகையும் நீளத்தையும் நீ கேட்காதே! பின்னர் மூன்று ரக்அத்கள் தொழுவார்கள் என்று விடையளித்தார்கள்.

நபி அவர்களே! வித்ருத் தொழுவதற்கு முன் நீங்கள் உறங்குவீர்களா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஆயிஷாவே! என் கண்கள் தாம் உறங்குகின்றன. என் உள்ளம் உறங்குவதில்லை என்று விடையளித்தார்கள் என்றும் ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1148. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இரவுத் தொழுகையில் உட்கார்ந்த நிலையில் ஓதியதை நான் பார்த்ததில்லை. அவர்கள் முதுமையடைந்தபோது உட்கார்ந்த நிலையில் ஓதினார்கள். முப்பது அல்லது நாற்பது வசனங்கள் எஞ்சியிருக்கும்போது எழுந்து நின்று அதை ஓதிவிட்டுப் பிறகு

ருகூவு செய்தார்கள்

### இரவிலும் பகலிலும் உளூவுடன் இருப்பதன் சிறப்பும் உளூச் செய்த பின் தொழுவதன் சிறப்பும்.

ஹதீஸ் 1149. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு ஃபஜ்ருத் தொழுகையின்போது பிலால் (ரலி) அவர்களிடம் பிலாலேஸ இஸ்லாத்தில் இணைந்த பின் நீர் செய்த சிறந்த அமல் பற்றிக் கூறும்! ஏனெனில் உம்முடைய செருப்போசையை சொர்க்கத்தில் கேட்டேன் நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு பிலால் (ரலி) இரவிலோ, பகலிலோ நான் உளூச் செய்தால் அவ்வுளூவின் மூலம் நான் தொழ வேண்டுமென்று நாடியதைத் தொழாமல் இருப்பதில்லை. இதுதான் என்னுடைய செயல்களில் சிறந்த செயல் என்று விடையளித்தார்கள்.

### வணக்க வழிபாடுகளில் சிரமப்படுவதைக் கை விட வேண்டும்.

ஹதீஸ் 1150. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (பள்ளிக்கு) வந்தபோது இரண்டு தூண்களுக்கிடையில் நீண்ட கயிறு ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. இந்தக் கயிறு ஏன்? நபி (ஸல்) அவர்கள் கேட்டார்க. அதற்கு மக்கள், இது ஸைனபு (ரலி)க்கு உரியதாகும் அவர் (நின்று தொழும் போது) சோர்வடைந்தால் இந்தக் கயிற்றில் சாய்ந்து கொள்வார் என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், கூடாது. இதை அவிழ்த்து விடுங்கள். உங்களில் ஒருவர் உற்சாகத்துடன் இருக்கும்போது தொழ வேண்டும். சோர்வடைந்தால் உட்கார்ந்து விட வேண்டும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1151. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

பனுஅஸத் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி என்னிடம் இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் வந்து யார் இவர்? என்று கேட்டார்கள். அதற்கு நான் இவர் இரவெல்லாம் உறங்க மாட்டார். தொழுது கொண்டே இருப்பார் என்று கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் நிறுத்து! அமல்களில் உங்களால் இயன்றதையே செய்யுங்கள். நிச்சயமாக இறைவன் நீங்கள் சலிப்படையும் வரை சலிப்படைய மாட்டான் என்று கூறினார்கள்.

### இரவில் தொழும் வழக்கமுடையவர் அதை விடக்கூடாது.

ஹதீஸ் 1152. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் என்னிடம், அப்துல்லாஹ்வே! இரவில் தொழும் வழக்கமுடையவர் திடீரென அதைவிட்டதைப் போன்று நீர் ஆம்விடாதீர் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1153. அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் என்னிடம் நீர் இரவெல்லாம் நின்று வணங்குவதாகவும் பகலெல்லாம் நோன்பு நோற்பதாகவும் எனக்குத் தெரிய வருகிறதே என்று கேட்டார்கள். அதற்கு நான் அப்படித்தான் செய்கிறேன் என்று விடையளித்தேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீர் இவ்வாறு செய்தால் உம்முடைய கண்கள் பலவீனப்படும். உடல் நலியும் - உம்முடைய குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உமக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உள்ளன. எனவே நீர் (சில நாள்கள்)விட்டு விடுவீராக! (சிறிது நேரம்) தொழுவீராக! (சிறிது நேரம்) உறங்குவீராக! என்று கூறினார்கள்.

### இரவில் விழித்துத் தொழுவதன்சிறப்பு:

ஹதீஸ் 1154. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

யார் இரவில் விழித்து வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாரும் இல்லை. அவன் ஏகன் அவனுக்கு நிகரானவர் இல்லை ஆட்சியும் அவனுக்குரியது புகழும் அவனுக்குரியது அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுள்ளவன். அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும். அவன் தூயவன் அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாரும் இல்லை. அவன் தூயவன் அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாரும் இல்லை. அவன் மிகப்பெரியவன் நன்மை செய்யும் ஆற்றலும் தீமையில் இருந்து விடுபடுவதும் அவனைக் கொண்டே இருக்கிறது என்று கூறிவிட்டு இறைவா! என்னை மன்னித்துவிடு என்றோ, வேறு பிரார்த்தனைகளையோ செய்தால் அவை அங்கீகரிக்கப்படும். உளூச் செய்து தொழுதால் அத்தொழுகைஒப்புக் கொள்ளப்படும்.

என உபதா இப்னு ஸாமித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1155. ஹைஸம் இப்னு அபீ ஸினான் அவர்கள் கூறினார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) தம் உரையின்போது நபி(ஸல்) அவர்கள் பற்றி அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) இயற்றிய பின்வரும் கவிதையை எடுத்துக் கூறினார்கள்.

எங்களிடம் நபி இருக்கிறார்கள். ஃபஜ்ரு நேரம் வந்ததும் அவனுடைய வேதத்தை அவர்கள் ஓதுகிறார்கள். நாங்கள் வழிகேட்டில் இருந்த பின் எங்களுக்கு அவர்கள் நேர்வழி காட்டினார்கள். அவர்கள் கூறியது நடந்தேறும் என்று எங்கள் உள்ளங்கள் உறுதியாக நம்புகின்றன. இணை வைப்பவர்கள் படுக்கையில் அழுந்திக் கிடக்கும்போது அவர்கள் படுக்கையிலிருந்து எழுந்து தொழுவார்கள்.

ஹதீஸ் 1156, 1157 ¸ 1158

இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் நான் கண்ட ஒரு கனவில் என்னுடைய கையில் பட்டுத் துணி ஒன்று இருந்தது. நான் சொர்க்கத்தில் எந்த இடத்திற்குச் செல்ல விரும்பினாலும் அது என்னைக் கொண்டு செல்லும்போது என்னிடம் இருவர் வந்து என்னை நரகத்திற்குக் கொண்டு செல்ல முயன்றார்கள். அப்போது அவர்களை ஒரு வானவர் சந்தித்து இவரைவிட்டு விடுங்கள் என்று கூறிவிட்டு என்னிடம் பயப்படாதீர்! என்று கூறினார்கள். என்னுடைய கனவை ஹஃப்ஸா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கூறியபோது அப்துல்லாஹ் இரவில் தொழுபவராக இருந்தால் மனிதர்களில் அவர் மிக நல்லவர் என்று கூறினார்கள். அதன் பிறகு நான் இரவில் தொழுபவனாகி விட்டேன்.

நபித்தோழர்கள் லைலத்துல் கத்ர் இரவு இருபத்தி ஏழாம் இரவு என்று கனவு கண்டு நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் உங்கள் கனவைப் போல் கனவு கண்டேன். அது கடைசிப் பத்து நாள்களில்தான் அமைந்துள்ளது. லைலத்துல் கத்ர் இரவை அடைய முயல்கிறவர் கடைசிப் பத்தில் தேடட்டும் என்று கூறினார்கள்.

## ஸுப்ஹுடைய ஸுன்னத்தை விடாமல் தொழுதல்

ஹதீஸ் 1159. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஷாத் தொழுதுவிட்டுப் பின்னர் எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். மேலும் உட்கார்ந்து இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். ஸுப்ஹுடைய பாங்குக்கும் இகாமத்துக்குமிடையே இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவற்றை நபி(ஸல்) அவர்கள் ஒருபோதும்விட்டது இல்லை.

## ஃபஜ்ருடைய ஸுன்னத் தொழுத பின் வலப்புறம் சாய்ந்து படுத்துக் கொள்வது.

ஹதீஸ் 1160. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய ஸுன்னத் தொழுததும் வலப்புறம் சாய்ந்து படுத்துக் கொள்வார்கள்.

**ஃபஜ்ருடைய ஸுன்னத்திற்குப் பிறகு படுக்காமல் பேசிக் கொண்டிருக்கலாம்.**

ஹதீஸ் 1161. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய ஸுன்னத் தொழுததும் நான் விழித்திருந்தால் என்னுடன் பேசிக் கொண்டிருப்பார்கள். இல்லாவிடில் தொழுகைக்கு அழைக்கும் வரை படுத்துக் கொள்வார்கள்.

ஹதீஸ் 1162. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் குர்ஆனுடைய அத்தியாயங்களை எங்களுக்குக் கற்றுத் தந்தது போல் எல்லாக் காரியங்களிலும் நல்லதைத் தேர்வு செய்யும் முறையையும் கற்றுத் தந்தார்கள். அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவருக்கு ஏதேனும் பிரச்சினை ஏற்பட்டால் கடமையல்லாத இரண்டு ரக்அத்களை அவர் தொழட்டும். பின்னர் இறைவா! உனக்கு ஞானம் இருப்பதால் உன்னிடம் நல்லதை வேண்டுகிறேன். உனக்கு வல்லமை இருப்பதால் உன்னிடம் வல்லமையை வேண்டுகிறேன். உன்னுடைய மகத்தான அருளை உன்னிடம் வேண்டுகிறேன். நீ அனைத்திற்கும் அறிகிறாய். நான் அறிய மாட்டேன். மறைவான என்னுடைய இந்தக் காரியம் என்னுடைய மார்க்கத்திற்கும் என்னுடைய வாழ்க்கைக்கும் என்னுடைய மறுமைக்கும் சிறந்தது என்று நீ அறிந்தால் அதற்குரிய ஆற்றலை எனக்குத் தா! அதை எனக்கு பரக்கத் செய்! இந்தக் காரியம் என்னுடைய மார்க்கத்திற்கும் என்னுடைய வாழ்க்கைக்கும் கெட்டது என்று நீ அறிந்தால் என்னைவிட்டு இந்தக் காரியத்தையும் இந்தக் காரியத்தையும்விட்டு என்னையும் திருப்பி விடு. எங்கிருந்தாலும் எனக்கு நல்லவற்றிற்கு ஆற்றலைத் தா! திருப்தியைத் தா! என்று கூறட்டும். அதன் பிறகு தம் தேவையைக் குறிப்பிடட்டும்.

ஹதீஸ் 1163. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் பள்ளியில் நுழைந்ததும் இரண்டு ரக்அத்கள் தொழாமல் உட்கார வேண்டாம்.

என அபூ கதாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1164. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தி முடித்தார்கள்.

ஹதீஸ் 1165. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள். நான் நபி(ஸல்) அவர்களுடன் லுஹருக்கு முன் இரண்டு ரக்அத்களையும் லுஹருக்குப் பின இரண்டு ரக்அத்களையும் ஜும்ஆவுக்குப் பின் இரண்டு ரக்த்களையும் மஃரிபுக்குப் பின் இரண்டு ரக்அத்களையும் இஷாவுக்குப் பின் இரண்டு ரக்அத்களையும் தொழுதிருக்கிறேன்.

ஹதீஸ் 1166. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உங்களில் ஒருவர் இமாம் உரை நிகழ்த்தும்போது வந்தால் இரண்டு ரக்அத்கள் தொழட்டும் என்று தம் சொற்பொழிவின்போது நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1167. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

என்னுடைய வீட்டிற்குச் சிலர் வந்து நபி(ஸல்) அவர்கள் கஅபாவுக்குள் நுழைந்துவிட்டனர். என்று கூறினார்கள். உடன் நான் புறப்பட்டுச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள் வெளியே வந்து கொண்டிருந்தார்கள். பிலால்(ரலி) கஅபாவின் வாசலில் நின்றார்கள். நான் பிலாலிடம், பிலாலே!

நபி(ஸல்) அவர்கள் கஅபாவில் தொழுதார்களா? என்று கேட்டேன். அதற்கவர்கள் ஆம் என்றனர். எந்த இடத்தில் என்று கேட்டேன். இந்த இரண்டு தூண்களுக்கிடையே தொழுதுவிட்டுப் பின்னர் வெளியே வந்து கஅபாவை நோக்கி இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் என்று விடையளித்தார்கள்.

லுஹாவுடைய இரண்டு ரக்அத்களைத் தொழுமாறு நபி(ஸல்) அவர்கள் என்னை வலியுறுத்தினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) குறிப்பிட்டார்கள். நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் நண்பகலில் என்னுடைய இல்லம் வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் நாங்கள் அணி வகுத்தோம். இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் என்று இத்பான்(ரலி) குறிப்பிட்டார்கள்.

### ஃபஜ்ருடைய ஸுன்னத்திற்குப் பிறகு பேசிக் கொண்டிருப்பது.

ஹதீஸ் 1168. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்)அவர்கள் ஃபஜ்ருடைய ஸுன்னத் தொழுததும் நாண் விழித்திருந்தால் என்னுடன் பேசிக் கொண்டிருப்பார்கள். இல்லாவிடில் தொழுகைக்கு அழைக்கும் பணி படுத்தக் கொள்வார்கள்.

### ஃபஜ்ருடைய ஸுன்னத்தைப் பேணித் தொழுதல்.

ஹதீஸ் 1169. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ருடைய ஸுன்னத் அளவிற்கு வேறு எந்த உபரித் தொழுகைக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்ததில்லை.

### ஃபஜ்ருடைய ஸுன்னத்தில் ஓத வேண்டியவை.

ஹதீஸ் 1170. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இரவில் பதின்மூன்று ரக்அத்கள் தொழுவார்கள். ஃபஜ்ருடைய பாங்கைக் கேட்டதும் சுருக்கமாக இண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.

ஹதீஸ் 1171. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸுப்ஹுக்கு முன் இரண்டு ரக்அத்களில் அல்ஹம்து ஓதினார்களா? என்று நான் நினைக்குமளவுக்குச் சுருக்கமாகத் தொழுவார்கள்.

### கடமையான தொழுகைக்குப் பின் உபரியான தொழுகைகளைத் தொழுதல்.

ஹதீஸ் 1172. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் லுஹருக்கு முன் இரண்டு ரக்அத்களையும் லுஹருக்குப் பின் இரண்டு ரக்அத்களையும் மஃரிபுக்குப் பின் இரண்டு ரக்அத்களையும் இஷாவுக்குப் பின் இரண்டு ரக்அத்களையும் ஜும்ஆவுக்குப் பின் இரண்டு ரக்அத்களையும் தொழுதிருக்கிறேன். மக்ரிப், இஷா (உடைய ஸுன்னத்) தொழுகைகளை அவர்களின் வீட்டில் தொழுதிருக்கிறேன்.

ஹதீஸ் 1173. ஹஃப்ஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ர் நேரம் வந்ததும் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். அந்நேரம் நான் நபி(ஸல்) அவர்களிடம் செல்லாத நேரமாக இருந்தது.

## கடமையான தொழுகைக்குப் பின் உபரியான தொழுகைகளைத் தொழாமல் இருப்பது.

ஹதீஸ் 1174. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் (லுஹர், அஸர் தொழுகைகளை) சேர்ந்தார்ப்போல் எட்டு ரக்அத்களும் (மக்ரிப், இஷாத் தொழுகைகளை) சேர்ந்தார்ப்போல் ஏழு ரக்அத்களும் தொழுதிருக்கிறேன்.

அபூ ஷஹ்ஸாவிடம் நபி(ஸல்) அவர்கள் லுஹரை அதன் கடைசி நேரத்திலும் அஸரை அதன் கடைசி நரத்திலும் இஷாவை அதன் ஆரம்பத்திலும் தொழுதிருப்பார்கள் என்றே கருதுகிறேன் எனக் கூறினேன். அதற்கவர் நானும் அவ்வாறே கருதுகிறேன் என்றார் என அம்ர் குறிப்பிடுகிறார்.

## பயணத்தின்போது லுஹாத் தொழுவது

ஹதீஸ் 1175. முவர்ரிக் அவர்கள் கூறினார்கள்.

நீங்கள் லுஹாத் தொழுவது உண்டா? என்று இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் இல்லை என்றார்கள். உமர் தொழுவார்களா? என்று கேட்டேன். அதற்கவர்கள் இல்லை என்றார்கள். அபூ பக்ர்(ரலி) தொழுவார்களா? என்று கேட்டேன். அதற்கும் இல்லை என்றார்கள். நபி(ஸல்) அவர்கள் தொழுவார்களா? என்று கேட்டேன். அது தெரியவில்லை என்றார்கள்.

ஹதீஸ் 1176. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹாத் தொழுதாக உம்முஹானி(ரலி)யைத் தவிர வேறு எவரும் அறிவிக்கவில்லை நபி(ஸல்) அவர்கள் என்னுடைய இல்லத்திற்கு மக்கா வெற்றியின்போது வந்து குளித்துவிட்டு எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். அதை விடச் சுருக்கமாக வேறு எந்தத் தொழுகைகளையும் அவர்கள் தொழ தொழுகைகளையும் அவர்கள் தொா நான் பார்த்ததில்லை. ஆயினும் அவர்கள் ருகூவையும் ஸுஜூதையும் முழுமையாகச் செய்தார்கள் என்று உம்முஹானி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## லுஹாத் தொழுவது அவசியம் இல்லை.

ஹதீஸ் 1177. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹாத் தொழ நான் பார்த்ததில்லை. ஆனால் தொழுவேன்.

## உள்ளூரில் லுஹாத் தொழுவது.

ஹதீஸ் 1178. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நோன்பு நோற்குமாறும் லுஹாத் தொழுமாறும் வித்ருத் தொழுதுவிட்டு உறங்குமாறும் மூன்று விஷயங்களை நபி(ஸல்) அவர்கள் எனக்கு வலியுறுத்தினார்கள். நான் மரணிக்கும் வரை அவற்றை விடமாட்டேன்.

ஹதீஸ் 1179. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உடல் பருமனாக இருந்த ஓர் அன்ஸாரித் தோழர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து உங்களுடன் நின்று என்னால் தொழ முடிவதில்லை என்று கூறினார். மேலும் அவர்களுக்காக உணவு சமைத்துத் தம் இல்லத்திற்கு அழைத்தார். அவர்கள் தொழுவதற்காகப் பாயில் ஓர் ஓரத்தில் தண்ணீர் தெளித்து பதப்படுத்தினார். நபி(ஸல்) அவர்கள் அதன் மீது இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹாத் தொழுவார்களா? என்று அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள் அன்றைய தினம் தவிர வேறு எப்போதும் அவர்கள் தொழ நான் பார்த்ததில்லை என விடையளித்தார்கள் என்று இப்னுல் ஜாரூத் குறிப்பிட்டார்.

## லுஹருக்குப் முன் இரண்டு ரக்அத்கள் தொழுவது.

ஹதீஸ் 1180. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹருக்கு முன் இரண்டு ரக்அத்கள் லுஹருக்குப் பின் இரண்டு ரக்அத்கள் மஃரிபிற்குப் பின் வீட்டில் இரண்டு ரக்அத்கள் இஷாவிற்குப் பின் வீட்டில் இரண்டு ரக்அத்கள் ஸுப்ஹுக்கு முன் இரண்டு ரக்அத்கள் ஆகிய பத்து ரக்அத்களைத் தொழுததை நான் நினைவில் வைத்திருக்கிறேன். ஸுப்ஹுக்கு முன் உள்ள அந்த நேரம் நபி(ஸல்) அவர்களிடம் யாரும் செல்ல முடியாத நேரமாகும்.

ஹதீஸ் 1181. ஹஃப்ஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

முஅத்தின் பாங்கு சொல்லி ஸுப்ஹு நேரம் வந்ததும் நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள்.

ஹதீஸ் 1182. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹருக்கு முன் நான்கு ரக்அத்களையும் ஸுப்ஹுக்கு முன் இரண்டு ரக்அத்களையும்விட்டதில்லை.

## மஃரிபுக்கு முன் தொழுவது

ஹதீஸ் 1183. அப்துல்லாஹ் அல் முஸ்னி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மஃரிபுக்கு முன் நீங்கள் தொழுங்கள். மஃரிபுக்கு முன் தொழுங்கள். மஃரிபுக்கு முன் விரும்புயவர்கள் தொழுங்கள் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள் அதை ஒரு ஸுன்னத்தாகக் கருதக்கூடாது. என்பதற்காகவே இவ்வாறு குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1184. மர்ஸத் இப்னு அப்தில்லாஹ் அவர்கள் கூறினார்கள்.நான் உக்பா இப்னு ஆமிர்(ரலி) அவர்களிடம் சென்று அபூ தமீம் மஃரிபுக்கு முன் இரண்டு ரக்அத்கள் தொழுகிறார்களே, உங்களுக்கு இத ஆச்சரியமாக இல்லையா? என்று கேட்டேன். அதற்கவர்கள் நபி(ஸல்) அவர்கள் காலத்தில் நாங்கள் அவ்வாறு செய்து வந்தோம் என்று விடையளித்தார்கள். இப்போது ஏன்விட்டுவிட்டீர்கள்? என்று கேட்டேன். அதற்கவர்கள் அலுவல்களே காரணம் என்றார்கள்.

## உபரித் தொழுகைகளை ஜமாஅத்தாகத் தொழுவது.

ஹதீஸ் 1185 ~ 1186 இத்பான் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று, நான் பனுஸாலிம் என்ற என் சமூகத்தினருக்குத் தொழுகை நடத்துபவனாக இருக்கிறேன். என் பார்வை குறைந்துவிட்டது. மழைக் காலங்களில் எனக்கும் என் சமூகத்தினரின் பள்ளிவாசலுக்கும் இடையே தண்ணீர் ஓடுகிறது. அதைக் கடந்து அவர்களின் பள்ளிக்கு வருவது சிரமமாக உள்ளது. எனவே தாங்கள் என் இல்லத்திற்கு வந்து ரு இடத்தில் தொழ வேண்டும். அவ்விடத்தை (என்னுடைய) தொழுமிடமாக ஆக்கிக் கொள்ளவிரும்புகிறேன் என்றேன். செய்கிறேன் நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டுமறுநாள் நண்பகலில் கூறிவிட்டு மறுநாள் நண்பகலில் அபூ பக்ர்(ரலி) உடன் வந்து (வீட்டின் உள்ளே வர) அனுமதி கோரினார். அனுமதித்தேன்.. விட்டில் நுழைந்ததும் உட்காராமலேயே நுழைந்தததும் உட்காராமலேயே உம்முடைய வீட்டில் எந்த இடத்தில் நான் தொழ வேண்டுமென விரும்புகிறீர்?

என்று கேட்டார்கள். வீட்டில் நான் விரும்பிய ஒரு பகுதியை அவர்களுக்குக் காட்டினேன். நபி(ஸல்) அவர்கள் அவ்விடத்தில் நின்று தக்பீர் கூறினார்கள். நாங்கள் வரிசையாக நின்றோம். இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தியப் பின்னர் ஸலாம் கொடுத்தார்கள். அவர்கள் ஸலாம் கொடுத்தபோது நாங்களும் ஸலாம் கொடுத்தார்கள். அவர்கள் ஸலாம் கொடுத்தபோது நாங்களும் ஸலாம் கொடுத்தோம். அவர்களுக்காக விருந்து சமைத்து அவர்களை வற்புறுத்தினேன். என்னுடைய வீட்டிற்கு நபி(ஸல்) அவர்கள் வந்ததைக் கேள்விப்பட்ட கிக்கள் என்னுடைய வீட்டில் குழுமினார்கள். அவர்கள் ஒருவர் மாலிக் ஏன் வரவில்லை என்று கேட்டார். மற்றொரு மனிதர் அவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்காத ஒரு முனாபிக் என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவ்வாறு கூறாதே! அவர் அல்லாஹ்வின் திருப்தியை நாடி லாயிலாஹ இல்லல்லாஹு என்று கூறியதை நீர் அறிய மாட்டீரா? என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர் அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையாக அவரின் நேசமும் அவரின் உரையாடலும் முனாபிக்களிடமே இருப்பதை நாங்கள் பார்க்கிறோம் என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடி லாயிலாஹ இல்லல்லாஹு சொல்கிறவருக்கு நரகை அல்லாஹ் ஹராமாக்கிவிட்டான் என்று குறிப்பிட்டார்கள்.

இச்செய்தியை அபூ அய்யூப்(ரலி) அவர்களிடம் நான் கூறியபோது அதை ஆட்சேபித்தார்கள். நீ கூறிய செய்தியை நபி(ஸல்) அவர்கள் கூறியிருக்க மாட்டார்கள் என்றே கருதுகிறேன் என்றும் கூறினார்கள். இது எனக்குப் பெரும் கவலையளித்தது. இந்தப் போரிலிருந்து அல்லாஹ் என்னை உயிரோடு திரும்பச் செய்தால், இத்பான்(ரலி) அவரின் பள்ளியில் உயிரோடு இருந்தால் இது பற்றி அவரிடம் கேட்க வேண்டும் என்று உறுதி எடுத்துக் கொண்டேன். ஊர் திரும்பி ஹஜ்ஜுக்கோ உம்ராவுக்கோ இஹ்ராம் அணிந்து மதீனாவிற்கு வந்தபோது பனுஸாலிம் இத்பான்(ரலி) பார்வையிழந்தவராகத் தம் சமுதாயத்திற்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார். தொழுது ஸலாம் சொல்லி நான் யார் என்பதையும் கூறினேன். பிறகு இச்செய்தியைப் பற்றியும் திரும்ப விசாரித்தேன். முதலில் எனக்குக்க் கூறியவாறே இப்போதும் எனக்கு இச்செய்தியைக் கூறினார் என்று மஃமூத் இப்னு ரபீஉ கூறினார்.

## வீட்டில் உபரியான தொழுகை தொழுதல்

ஹதீஸ் 1187. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். உங்களின் இல்லங்களிலும் சில தொழுகைகளைத் தொழுங்கள். அவறைக் கப்ருகளாக ஆக்கி விடாதீர்கள்.

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## அத்தியாயம் - 20 - மக்கா, மதீனாவுடைய பள்ளிவாயிலில் தொழுவதன் சிறப்பு

ஹதீஸ் 1188. அபூ ஸயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களிடமிருந்து நான்கு செய்திகளை கேட்டேன். (1197வது ஹதீஸில் இது விவரமாகக் கூறப்படுவதைக் காண்க)

ஹதீஸ் 1189. நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதன் னபவி, மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளிகளைத் தவிர (அதிக நன்மையை எதிர்பார்த்து)ப் பயணம் மேற்கொள்ளக் கூடாது.

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1190. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மஸ்ஜிதுல் ஹராமைத் தவிர ஏனைய பள்ளிகளில் தொழுவதை விட என்னுடைய பள்ளியில் தொழுவது ஆயிரம் தொழுகைகளை விடச் சிறந்ததாகும். என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

குபாப் பள்ளிவாசல்

ஹதீஸ் 1191. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர் (ரலி) இரண்டு நாள்கள் தவிர வேறு நாள்களில் லுஹாத் தொழ மாட்டார்கள். மக்காவுக்கு அவர்கள் வரக்வடிய நாளில் லுஹா நேரத்தில் வந்து கஅபாவைத் வலம்வந்து மக்காமே இப்ராஹீம் எனும் இடத்தில் இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். குபாப் பள்ளிக்கு ஒவ்வொரு சனிக்கிழமை அன்றும் சென்று பள்ளிக்குள் நுழைந்ததும் தொழாமல் வெளியே வர மாட்டார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் குபாப் பள்ளிக்கு நடந்தும் வாகனத்திலும் வரும் வழக்கம் உடையவராக இருந்தனர் என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 1192. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் என்னுடைய தோழர்கள் செய்தது போன்றே செய்கிறேன். இரவிலோ, பகலிலோ எந்த நேரத்திலும் தொழுபவரை தடுக்க மாட்டேன். ஆயினும் சூரியன் உதிக்கும் நேரத்தையும் மறையும் நேரத்தையும் நீங்கள் தேர்ந்தெடுக்காதீர்கள்.

### ஒவ்வொரு சனிக்கிழமையும் குபாப் பள்ளிக்குச் செல்வது

ஹதீஸ் 1193. அப்துல்லாஹ் இப்னு தீனார் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர் (ரலி) ஒவ்வொரு சனிக்கிழமையும் குபாப் பள்ளிக்கு வருவார்கள் நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு சனிக்கிழமைகளிலும் நடந்தும் வாகனத்திலும் குபாப் பள்ளிக்கு வருவார்கள் என்று அறிவித்தார்கள்.

### குபாப் பள்ளிக்கு நடந்தும் வாகனத்திலும் வருவது.

ஹதீஸ் 1194. நபி (ஸல்) அவர்கள் குபாப் பள்ளிக்கு நடந்தும் வாகனத்திலும் வருவார்கள். மற்றோர் அறிவிப்பில் அங்கே இரண்டு ரகஅத்கள் தொழுவார்கள் என்று உள்ளது.

### நபி (ஸல்) அவர்களின் அடக்கத்தலத்திற்கும் மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதியின் சிறப்பு:

ஹதீஸ் 1195. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய வீட்டிற்கும் என்னுடைய மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சுவர்க்கத்தின் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும்.

என அப்துல்லாஹ் இப்னு ஜைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1196. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய வீட்டிற்கும் என்னுடைய மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சுவர்க்கத்தின் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும். என்னுடைய மிம்பர், என்னுடைய ஹவ்லுல் கவ்ஸர் அருகிலுள்ளது. என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## பைத்துல முகத்தஸ் பள்ளி

ஹதீஸ் 1197. அபூ ஸயீத் அல் குத்ரி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எனக்கு நான்கு விஷயங்களைக் கூறினார்கள்.

1. இரண்டு நாள்கள் பயணம் செய்யும் பெண்மணி கணவனோ, மணம் முடிக்கத்தகாத ஆண் உறவினரோ துணையாக இல்லாமல் பயணம் செய்யக்கூடாது.

2. நோன்புப் பெருநாள் ஹஜ்ஜுப் பெருநாள் ஆகிய இரண்டு நாள்களும் நோன்பு நோற்கக்கூடாது.

3. ஸுப்ஹுத் தொழுததிலிருந்து சூரியன் உதிக்கும் வரையும் அஸர் தொழுததிலிருந்து சூரியன் மறையும் வரையும் தொழக்கூடாது.

4. மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுன் னபவி, மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளிகளைத் தவிர (அதிக நன்மையை எதிர் பார்த்து) பயணம் மேற்கொள்ளக்கூடாது.

## (முதல் பாகம் முற்றிற்று)

# பாகம் 2

## அத்தியாயம் 21 தொழுகையில் செய்யும் பிற செயல்கள்

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

(தொழுகைக்குள் கட்டுப்படாத, தொழுகைக்கு உதவக்கூடிய செயல்கள்)

### தொழுகையுடன் சம்பந்தப்பட்ட காரியங்களில் கைகளைப் பயன்படுத்தலாம்.

"ஒருவர் தொழும்போது தம் உடலில் எந்தப் பகுதியையும் பயன்படுத்தலாம்" என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்.

அபூ இஸ்ஹாக் தொழும்போது தம் தொப்பியைக் கழற்றியும் மாட்டியும் இருக்கிறார்.

அலீ (ரலி) தொழும்போது தம் மேனியில் சொரிந்து கொள்ளும் நேரம் அல்லது தம் ஆடையைச் சரி செய்து கொள்ளும் நேரம் தவிர மற்ற நேரங்களில் தம் கையை இடதுகை மணிக்கட்டில் வைத்திருப்பார்கள்.

ஹதீஸ் 1198. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் என் சிறிய தாயார் மைமூனா (ரலி) யின் வீட்டில் ஓர் இரவு தங்கினேன். ஒரு தலையணையின் அகலப்பகுதியில் படுத்துக் கொண்டேன். நபி (ஸல்) அவர்களும் அவர்களின் மனைவி (மைமூனா) வும் அந்தத் தலையணையின் நீளப்பகுதியில் படுத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் இரவின் பாதிவரை அல்லது அதற்குச் சற்று முன்புவரை அல்லது அதற்குச் சற்றுப் பின்பு வரை தூங்கினார்கள். பிறகு அவர்கள் விழித்து அமர்ந்தார்கள். தம் கையால் தம் முகத்திலிருந்து தூக்க (க் கலக்க) த்தை விலக்கிவிட்டு 'ஆல இம்ரான்' அத்தியாயத்தின் கடைசிப் பத்து வசனங்களை ஓதினார்கள். பிறகு தொங்க விடப்பட்ட தோல் பாத்திரத்தை நோக்கிச் சென்று அதிலிருந்து அழகிய முறையில் உளூச் செய்து தொழலானார்கள். நானும் எழுந்து அவர்கள் செய்தது போன்றே செய்து, அவர்களின் (இடது) விலாப் புறத்தில் நின்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்களின் வலது கரத்தை என் தலைமீது வைத்து என்னுடைய வலது காதைப் பிடித்து (வலது புறத்திற்கு) திருப்பினார்கள். இரண்டு ரக்அத்கள், பின் இரண்டு ரக்அத்கள் மேலும் இரண்டு ரக்அத்கள் இன்னும் இரண்டு ரக்அத்கள், பிறகு இரண்டு ரக்அத்கள், மீண்டும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் வித்ரு தொழுதுவிட்டுப்படுத்தார்கள். முஅத்தின் வந்ததும் எழுந்து சிறிய அளவில் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு (பள்ளிக்குப்) புறப்பட்டு ஸுபுஹ் தொழுகை நடத்தினார்கள். அர்ஷ

### தொழுகையில் பேசக் கூடாது

ஹதீஸ் 1199. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ஆரம்ப காலத்தில்) நபி (ஸல்) அவர்கள் தொழும்போது அவர்களுக்கு நாங்கள் ஸலாம் கூறுவோம். அவர்கள் எங்களுக்கு பதில் ஸலாம் கூறுவார்கள். நாங்கள் (அபீஸீனியாவின் மன்னர்) நஜ்ஜாஷியிடமிருந்து திரும்பியபோது அவர்களுக்கு ஸலாம் கூறினோம். எங்களுக்கு

ஸலாம் கூறவில்லை. (தொழுது முடித்ததும்)'நிச்சயமாக தொழுகைக்கு என்று சில அலுவல்கள் உள்ளன'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1200. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) காலத்தில் நாங்கள் தொழுகையில் பேசிக் கொண்டிருந்தோம். எங்களில் ஒருவர் தம் தோழரிடம் (சொந்தத்) தேவை குறித்துப் பேசுவார். இந்நிலையில்'தொழுகைகளில் பேணுதலாக இருங்கள்'' என்ற (திருக்குர்ஆன் 02:238) வசனம் அருளப்பட்டது. அதன்பின்னர் பேசக் கூடாது என்று கட்டளையிட்டோம்.

## தொழுகையில் (இமாமுக்கு) ஏற்படும் தவறுகளை உணர்த்த)'ஸுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ்' என்று ஆண்கள் கூறலாம்.

ஹதீஸ் 1201. ஸஹ்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பனு அம்ர் இப்னு அவ்ஃப் கூட்டத்தினரிடையே சமரசம் செய்து வைப்பதற்காக நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டார்கள். தொழுகை நேரம் வந்ததும் பிலால்(ரலி) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் வந்து'நபி(ஸல்) அவர்கள் (தங்கள் பணியின் நிமித்தமாக நேரத்தோடு வந்து சேர்வதிலிருந்து) தடுக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே, நீங்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துகிறீர்களா?' என்று கேட்டார். 'நீர் விரும்பினால் செய்கிறேன்'' என அபூ பக்ர்(ரலி) கூறினார். பிலால்(ரலி) தொழுகைக்கு இகாமத் கூறியதும் அபூ பக்ர்(ரலி) முன்னே சென்று தொழுகை நடத்த ஆரம்பித்தார். சற்று நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் வரிசைகளைப் பிளந்து கொண்டு நடந்து வந்து முதல் வரிசையில் நின்றார்கள். உடனே மக்கள் கைதட்டலானார்கள். அபூ பக்ர்(ரலி) தொழுகையில் திரும்பிப் பார்க்காதவராக இருந்தார். மக்கள் கைதட்டலை அதிகரித்தபோது அபூ பக்ர்(ரலி) திரும்பிப் பார்த்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வரிசையில் நிற்பதைக் கண்டார். 'அங்கேயே நிற்பீராக'' என்று நபி(ஸல்) அவர்கள் சைகை மூலம் தெரிவித்தார்கள். அபூ பக்ர்(ரலி) தம் கைகளை உயர்த்தி அல்லாஹ்வைப் புகழ்ந்து (திரும்பாமல்) பின்புறமாகவே நடந்து பின்னால் நின்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் முன்னே சென்று தொழுகை நடத்தினார்கள்.

## தொழும்போது அறியாத நிலையில் ஒருவரின் பெயரைக் குறிப்பிட்டு அல்லது அவரை நோக்கி ஸலாம் கூறுதல்

ஹதீஸ் 1202. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

தொழுகையில் அத்தஹிய்யாத் ஓதும்போது ஒருவரின் பெயரைக் குறிப்பிட்டு ஒருவரின் மீது மற்றவர் ஸலாம் கூறி வந்தோம். இதைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்கள்'சொல், செயல், பொருள் வடிவிலான எல்லாக் காணிக்கைகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே உங்களின் மீது அல்லாஹ்வின் சாந்தியும் அருளும் அபிவிருத்தியும் ஏற்படட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்களின் மீதும் அல்லாஹ்வின் சாந்தி ஏற்படட்டுமாக! வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்று உறுதியாக நம்புகிறேன். முஹம்மத்(ஸல்), அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாவார்கள் என்றும் உறுதியாக நம்புகிறேன்'' என்று கூறுங்கள்! இவ்வாறு நீங்கள் கூறினால் வானம், பூமியிலுள்ள எல்லா நல்லடியார்களுக்கும் ஸலாம் கூறியவர்களாவீர்கள்' எனக் குறிப்பிட்டார்கள்.

## பெண்கள் (தொழுகையில் ஏற்படும் தவறுகளைச் சுட்டிக் காட்ட) கை தட்டுதல்

ஹதீஸ் 1203. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

தஸ்பீஹ் கூறுதல் ஆண்களுக்குரியதும் கைதட்டுதல் பெண்களுக்குரியதாகும். "

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1204. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்..

தஸ்பீஹ் கூறுதல் ஆண்களுக்குரியதும் கைதட்டுதல் பெண்களுக்குரியதுமாகும்.

என ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தொழுபவர் ஏதேனும் பிரச்சினைகளுக்காகப் பின்புறமாகவோ முன்புறமாகவோ நகருதல்

இதுபற்றிய நபிவழியை ஸஹ்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1205. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

முஸ்லிம்கள் திங்கட்கிழமை பஜ்ரு தொழுகை தொழுது கொண்டிருந்தனர். அபூ பக்ர்(ரலி) மக்களுக்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார். (மரணத் தருவாயிலிருந்த) நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா(ரலி)யின் அறையிலுள்ள திரையை விலக்கி அணிவகுத்து நிற்கும் மக்களைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே புன்கைத்தவாறு திடீரென அவர்களிடம் வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்த வரப்போகிறார்கள் என்று எண்ணி அபூ பக்ர்(ரலி) திரும்பாமல் பின்புறமாக விலகலானார். நபி(ஸல்) அவர்களைக் கண்ட மகிழ்ச்சியின் காரணமாக மக்களுக்குத் தொழுகையின் கவனம் மாறியது. நபி(ஸல்) அவர்கள்'நீங்கள் தொழுது முடியுங்கள்' என்று தம் கையால் சைகை செய்துவிட்டு அறைக்குள் நுழைந்து திரையைத் தொங்கவிட்டார்கள். அன்றைய தினம் மரணித்துவிட்டார்கள்.

## தொழுது கொண்டிருக்கும் மகனைத் தாய் அழைத்தால்..?

ஹதீஸ் 1206. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்..

(முன் காலத்தில்) ஒரு பெண் வழிபாட்டு அறையிலிருந்த தம் மகனை'ஜுரைஜ்' என்று அழைத்தார்!'இறைவா! நான் தொழுது கொண்டிருக்க என் தாய் என்னை அழைக்கிறாரே!"என்று ஜுரைஜ் (மனத்திற்குள்) கூறினார். மீண்டும்'ஜுரைஜ்' என்று அப்பெண் அழைத்தபோது.'இறைவா! நான் தொழுது கொண்டிருக்க என் தாய் அன்னை அழைக்கிறாரே!"என்று ஜுரைஜ் (மனத்திற்குள்) கூறினார். மீண்டும் அப்பெண்'ஜுரைஜ்' என்று அழைத்தபோது'இறைவா! நான் தொழுது கொண்டிருக்க என் தாய் என்னை அழைக்கிறாரே'' என்று (மனத்திற்குள்) கூறினார். அப்போது அப்பெண்'இறைவா! விபச்சாரிகளின் முகத்தில் விழிக்காமல் ஜுரைஜ் மரணிக்கக் கூடாது'' என்று பிரார்த்தித்தார். ஆடு மேய்க்கும் பெண்ணொருத்தி ஜுரைஜுடைய ஆசிரமத்திற்கு வந்து செல்பவளாக இருந்தாள். அவள் ஒரு குழந்தையைப் பெற்றாள். இந்தக் குழந்தை யாருக்குப் பிறந்தது என்று அவளிடம் கேட்கப்பட்டபோது'ஜுரைஜுக்குதான் அவர் தம் ஆசிரமத்திலிருந்து இறங்கி வந்து இவ்வாறு செய்துவிட்டார்' என்று அவள் கூறினாள்.'தன்னுடைய குழந்தையை எனக்குப் பிறந்தது எனக் கூறும் அப்பெண் எங்கே?' என்று ஜுரைஜ் கேட்டுவிட்டு அவள் பெற்ற குழந்தையை நோக்கி'சிறுவனே! உன் தந்தை யார்?' எனக்

கேட்டதற்கு அக்குழந்தை'ஆடுமேய்க்கும் இன்னார்' என விடையளித்தது. என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தொழும்போது சிறு கற்களை அப்புறப்படுத்துதல்

ஹதீஸ் 1207. முஐகீப் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஸஜ்தாச் செய்யும்போது மண்ணைச் சமப்படுத்திய மனிதரை நோக்கி'நீர் இவ்வாறு செய்வதென்றால் ஒரு முறை மட்டும் செய்வீராக.' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ஸஜ்தாவின்போது ஆடையைத் தரையில் விரித்தல்

ஹதீஸ் 1208. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

கடுமையான வெப்பத்தில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தொழுதிருக்கிறோம். எங்களில் ஒருவருக்குத் தம் முகத்தைத் தரையில் வைக்க இயலாவிட்டால் தம் ஆடையை விரித்து அதில் ஸஜ்தாச் செய்வார்.

## தொழும்போது செய்ய அனுமதிக்கப்பட்ட புறச் செயல்கள்.

ஹதீஸ் 1209. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தொழும்போது நபி (ஸல்) அவர்களை நோக்கி என் கால்களை நான் நீட்டிக் கொண்டிருப்பேன். அவர்கள் ஸஜ்தாச் செய்யும்போது என்னை விரலால் குத்துவார்கள். உடனே கால்களை மடக்கிக் கொள்வேன். அவர்கள் எழுந்ததும் கால்களை நீட்டிக் கொள்வேன்.

ஹதீஸ் 1210. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு தொழுகையைத் தொழுதார்கள். (தொழுது முடித்ததும்) ஷைத்தான் எனக்குக் காட்சி தந்து என் தொழுகையை முறித்துவிட முயன்றான். அவனை அல்லாஹ் எனக்கு அடிபணியச் செய்தான். அவனை நான் பிடித்துக் கொண்டேன். அவனை ஒரு தூணில் கட்டி வைத்து காலையில் நீங்களெல்லாம் பார்க்க வேண்டுமென விரும்பினேன். எனக்குப் பின் யாருக்கும் வழங்காத ஆட்சியை எனக்கு வழங்கு (திருக்குர்ஆன் 38:35) என்று சுலைமான் நபி (ஸல்) அவர்கள் கூறியதை நினைவுக்குக் கொண்டு வந்தேன். (அதனால் அவனைவிட்டு விட்டேன்) இழிந்தநிலையில் அவனை அல்லாஹ் ஓடச் செய்துவிட்டான் என்று கூறினார்கள்.

## ஒருவர் தொழும்போது அவரின் வாகனம் ஓடிவிட்டால்

ஒருவரின் ஆடையைத் திருடன் எடுத்துச் சென்றால் தொழுகையைவிட்டுவிட்டு திருடனை விரட்டிச் செல்லலாம் என்று கதாதா கூறுகிறார்.

ஹதீஸ் 1211. அஸ்ரக் இப்னு கைஸ் அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் அஹ்வாஸ் எனுமிடத்தில் ஹருரிய்யாக் கூட்டத்தினருடன் போரிட்டுக் கொண்டிருந்தோம். அப்போது ஆற்றோரத்தில் ஒருவர் தம் வாகனத்தின் கடிவாளத்தை ஒரு கையில் பிடித்து தொழுது கொண்டிருந்தார். வாகனம் அவரை இழுக்க அவரும் அதைத் தொடர்ந்தார். அவர் அபூ பர்ஸா (ரலி) என்ற நபித்தோழராவார். அப்போது காரிஜிய்யாக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர்'இறைவா! இந்தக் கிழவரைத் தண்டிப்பாயாக!' எனக் கூறினார். அந்தப் பெரியவர் தொழுது முடித்ததும்'நீங்கள் கூறியதை கேட்டுக் கொண்டுதானிருந்தேன். நான் நபி (ஸல்) அவர்களுடன் ஆறு அல்லது ஏழெட்டுப் போர்களில் பங்கெடுத்திருக்கிறேன். நபி (ஸல்) அவர்கள்

மார்க்கத்தை இலகுவாக்கியிருப்பதையும் பார்த்திருக்கிறேன். என் வாகனத்தை அதன் மேயும் இடத்துக்கு ஓடவிட்டுவிட்டு கவலையுடன் நான் செல்வதைவிட என் வாகனத்துடன் திரும்பிச் செல்வதே எனக்கு விருப்பமானது எனக் கூறினார்.

ஹதீஸ் 1212. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு முறை சூரியக் கிரகணம் ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள் எழுந்துநின்று நீண்ட அத்தியாயம் ஒன்றை ஓதித் தொழுதார்கள். பிறகு நீண்ட நேரம் ருகூவு செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தி மற்றோர் அத்தியாயத்தை ஓதினார்கள். பிறகு மற்றொரு ருகூவு செய்து முடித்தார்கள். ஸஜ்தாவும் செய்தார்கள். இவ்வாறே இரண்டாம் ரக்அத்திலும் செய்தார்கள். பின்னர்'சூரிய, சந்திர கிரகணங்கள் இரண்டும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவை. எனவே இவற்றை நீங்கள் கண்டால் அவை உங்களைவிட்டு விலக்கப்படும் வரை தொழுங்கள்! எனக்கு வாக்களிக்கப்பட்ட அனைத்தையும் இந்த இடத்தில் கண்டேன். நான் முன்னே செல்வது போல் நீங்கள் என்னைக் கண்டபோது சொர்க்கத்தின் ஒரு திராட்சைப் பழக்கொத்தைப் பிடிக்க முயன்றேன். நான் பின்னே செல்வது போல் என்னை நீங்கள் கண்டபோது நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியை அழித்துக் கொண்டிருந்ததைக் கண்டேன். நரகத்தில் அம்ர் இப்னு லுஹை என்பவனையும் கண்டேன். அவன்தான் ஸாயிபத் எனும் (கால்நடைகளை சிலைகளுக்கு நேர்ச்சை செய்யும்) வழிபாட்டை உருவாக்கியவன்'' என்று கூறினார்கள்.

## தொழும்போது எச்சில் உமிழ்வதும் வாயால் ஊதுவதும் கூடும்.

“நபி(ஸல்) அவர்கள் கிரகணத் தொழுகையில் ஸஜ்தாவில் ஊதியுள்ளனர்'' என்று அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 1213. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கிப்லாத் திசையில் (சுவரில்) எச்சிலைக் கண்டார்கள். பள்ளியில் இருந்தவர்களைக் கடிந்ததுடன்'அல்லாஹ் உங்களுக்கு முன்னே இருக்கிறான். எனவே, யாரேனும் தொழுது கொண்டிருந்தால் கண்டிப்பாக எச்சில் உமிழ வேண்டாம்' எனக் கூறிவிட்டு இறங்கி வந்து தம் கையால் அதைச் சுரண்டினார்கள்.

“உங்களில் யாரேனும் உமிழ்ந்தால் தம் இடப்புறத்தில் உமிழட்டும்'' என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1214. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தொழும்போது தம் இறைவனுடன் உரையாடுகிறார். எனவே, தமக்கு முன்னாலோ, வலப்புறமாகவோ எச்சில் துப்பவேண்டாம். எனினும் இடதுபுறமாக தம் இடது பாதத்தின் அடியில் துப்பட்டும். என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தொழுகையில் ஏற்படும் தவறுகளை ஆண்கள் (சட்டம்) தெரியாத நிலையில் கைதட்டி உணர்த்தினால் அவர்களின் தொழுகை பாழாகாது.

இதுபற்றி நபி(ஸல்) வழியாக ஸஹ்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தொழுது கொண்டிருப்பவரிடம் மற்றவர் முன்னே செல்! காத்திரு என்று கூறும்போது தொழுபவர் அவ்வாறு செய்தால் அதில் தவறில்லை.

ஹதீஸ் 1215. ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மக்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழும்போது சிறிதாக இருந்த தம் வேட்டிகளைக் கழுத்தில் கட்டிக்கொள்வார்கள். இதன் காரணமாகவே'ஆண்கள் (ஸஜ்தாவிலிருந்து எழுந்து) உட்காரும்வரை நீங்கள் (ஸஜ்தாவிலிருந்து) தலையை உயர்த்தாதீர்கள் என்று பெண்களிடம் கூறப்பட்டது.

## தொழும்போது ஸலாமுக்குப் பதில் கூறக்கூடாது.

ஹதீஸ் 1216. அப்துல்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழும்போது அவர்களுக்கு நான் ஸலாம் கூறுவேன். அவர்கள் பதில் ஸலாம் கூறுவார்கள். நாங்கள் (அபீ ?னியாவிலிருந்து) திரும்பி வந்தபோது அவர்களுக்கு ஸலாம் கூறினேன். எனக்கு பதிலளிக்கவில்லை. தொழுது முடித்ததும் நிச்சயமாக தொழுகைக்கு என்று சில அலுவல்கள் உள்ளன என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1217. ஜாபிர்பின் அப்துல்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என்னை தம் அலுவல் விஷயமாக (வெளியூ) அனுப்பினார்கள். நான் அந்த வேலையை முடித்துத் திரும்பி வந்து நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினேன். அவர்கள் எனக்கு மறுமொழி கூறவில்லை. என் மனதில் அல்லாஹ்வுக்கு மட்டுமே தெரிந்த சில எண்ணங்கள் தோன்றின. நான் தாமதமாக வந்ததால் என்மேல் நபி(ஸல்) கோபமாக இருக்கக் கூடும் என்று மனதிற்குள் கூறிக் கொண்டேன். பிறகு மறுபடியும் ஸலாம் கூறினேன். அவர்கள் பதில் கூறவில்லை. முன்பைவிடக் கடுமையாக சந்தேகங்கள் ஏற்பட்டன. பின்னர் மீண்டும் ஸலாம் கூறினேன். எனக்கு பதில் ஸலாம் கூறிவிட்டு நான் தொழுது கொண்டிருந்ததால்தான் உமக்குப் பதில் கூறவில்லை என்று கூறினார்கள். (நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தபோது) கிப்லா அல்லாத திசையை நோக்கி தம் வாகனத்தின் மீதமர்ந்து தொழுது கொண்டிருந்தனர்.

## தொழும்போது ஏதேனும் பிரச்சினைகள் ஏற்பட்டால் கைகளை உயர்த்துதல்

ஹதீஸ் 1218. ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) அவர்கள் கூறினார்கள்.

குபாவில் இருந்த பனு அம்ர் இப்னு அவ்பு கூட்டத்தினரிடையே தகராறு இருப்பதாக நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி கிடைத்தது. அவர்களிடையே சமரசம் செய்வதற்காக நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் புறப்பட்டனர். நபி(ஸல்) அவர்கள் வரத் தாமதமானது. தொழுகை நேரம் நெருங்கியது. அப்போது பிலால்(ரலி), அபூ பக்ர்(ரலி)யிடம் வந்து'அபூ பக்ரே!"நபி(ஸல்) வருவதற்குத் தாமதமாகிறது் தொழுகை நேரம் நெருங்கிவிட்டது. எனவே, மக்களுக்கு நீங்கள் தொழுகை நடத்துகிறீர்களா? என்று கேட்டார். நீர் விரும்பினால் நடத்துகிறேன் என்று அபூ பக்ர்(ரலி) கூறினார். பிலால்(ரலி) தொழுகைக்கு இகாமத் சொன்னதும் அபூ பக்ர்(ரலி) முன்னே சென்றார். மக்களுக்கு (தொழுகை நடத்த) தக்பீர் கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வரிசைகளைப் பிளந்து கொண்டு வந்து (முதல்) வரிசையில் நின்றார்கள். உடனே, மக்கள் கைதட்டலானார்கள். அபூ பக்ர்(ரலி) தொழுகையில் திரும்பிப் பார்க்கமாட்டார். ஆயினும் மக்கள் அதிகமாக கை தட்டியதால் திரும்பிப் பார்த்தார். (வரிசையில்) நபி(ஸல்) நின்றிருந்தார்கள். தொழுகையைத் தொடருமாறு அவருக்கு நபி(ஸல்)அவர்கள் சைகை செய்தார்கள். அபூ பக்ர்(ரலி), தமக்கையை உயர்த்தி அல்லாஹ்வைப் புகழ்ந்து அப்படியே (திரும்பாமல்) பின்னால் நகர்ந்து வரிசையில் நின்றார். நபி(ஸல்) அவர்கள் முன்னே சென்று மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்ததும் மக்களை நோக்கி'மக்களே! தொழுகையில் ஏதும் பிரச்சினை ஏற்பட்டால் ஏன் கைகளைத் தட்டுகிறீர்கள்? கைதட்டுதல் பெண்களுக்குரியதாகும்.

எனவே, தொழும்போது யாருக்கேனும் பிரச்சினை ஏற்பட்டால்'ஸுப்ஹானல்லாஹ்' எனக் கூறட்டும்'' என்றார்கள். பிறகு அபூ பக்ரை நோக்கி'அபூ பக்ரே! நான் உமக்கு சைகை செய்த பிறகும் மக்களுக்குத் தொழுகை நடத்த மறுத்ததேன்?' எனக் கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி), 'நபி(ஸல்) முன்னிலையில் அபூ குஹாஃபாவின் மகனுக்குத் தொழுகை நடத்தும் தகுதியில்லை'' எனக் கூறினார்.

## தொழும்போது இடுப்பில் கையை வைத்தல்

ஹதீஸ் 1219. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

தொழும்போது இடுப்பில் கை வைப்பது தடுக்கப்பட்டுள்ளது.

மற்றோர் அறிவிப்பில் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஹதீஸ் 1220. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் இடுப்பில் கை வைத்து தொழுவது தடுக்கப்பட்டுள்ளது.

## தொழும்போது எதைப்பற்றியாவது சிந்தித்தல்

நான் தொழுது கொண்டிருக்கும் போதே படைகளை (போருக்கு) தயார்படுத்து(வதற்கான வழிமுறைகளைச் சிந்திக்)கிறேன் என்று உமர்(ரலி) கூறியுள்ளனர்.

ஹதீஸ் 1221. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் அஸர் தொழுதேன். அவர்கள் ஸலாம் கொடுத்ததும் வேகமாக எழுந்து தம் மனைவியின் இல்லத்திற்குச் சென்றுவிட்டுத்திரும்பினார்கள். தம் விரைவைக் கண்டு மக்கள் ஆச்சரியப்படுவதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள்'நான் தொழுது கொண்டிருக்கும்போது எங்களிடம் அது ஒரு மாலைப்பொழுதோ, ஓர் இரவுப் பொழுதோ இருப்பதை நான் விரும்பவில்லை. எனவே, அதைப் பங்கிட்டு வழங்குமாறு கட்டளையிட்டேன்'' என விளக்கினார்கள்.

ஹதீஸ் 1222. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

தொழுகைக்கு பாங்கு சொல்லப்பட்டதும் பாங்கைக் கேட்கக் கூடாது என்பதற்காக ஷைத்தான் காற்றுவிட்டவனாக ஓடுகிறான். பாங்கு முடிந்ததும் முன்னே வருகிறான். இகாமத் சொல்லப்பட்டதும் திரும்பி ஓடுகிறான். இகாமத் முடிந்ததும் முன்னே வருகிறான். தொழுது கொண்டிருக்கும் மனிதரிடம்'நீ இதுவரை நினைத்திராதவற்றையெல்லாம் நினைத்துப்பார்'' என்று கூறுவான். முடிவில் அம்மனிதர் தாம் எத்தனை ரக்அத்கள் தொழுதோம் என்பதை அறியாதவராம் விடுவார். என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"இவ்வாறு மறதி ஏற்பட்டால் அமர்ந்த நிலையில் இரண்டு ஸஜ்தாக்கள் செய்யவேண்டும்'' என்று அபூ ஹுரைரா(ரலி) கூறினார் என அபூ ஸலமா கூறுகிறார்.

ஹதீஸ் 1223. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ ஹுரைரா அதிகம் (ஹதீஸ்களை) அறிவிப்பதாக மக்கள் (குறை) கூறுகின்றனர். நான் ஒரு மனிதரைச் சந்தித்து நேற்றிரவு இஷாவில் நபி(ஸல்) அவர்கள் எந்த அத்தியாயத்தை ஓதினார்கள்? என்று கேட்டேன். அவர் தெரியாது என்றார். நீர் அத்தொழுகையில் கலந்து கொள்ள வில்லையா? என்று கேட்டேன். கலந்து கொண்டேன் என்றார். அவரிடம் நான்'அதை அறிவேன். இன்னின்ன அத்தியாயங்களையே நபி(ஸல்) அவர்கள் ஓதினார்கள்'' என்றேன்.

## அத்தியாயம் 22 தொழுகையில் ஏற்படும் மறதி

### கடமையான தொழுகையின் முதல் தஷஹ்ஹுத் இருப்பில் அமராமல் மறதியால் எழுந்துவிட்டால்...?

ஹதீஸ் 1224. அப்துல்லாஹ் இப்னு புஹைனா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு ஏதோ ஒரு தொழுகையைத் தொழுகை நடத்தினார்கள். (அத்தொழுகையில்) இரண்டு ரக்அத்தை முடித்தபோது அமரால் (மூன்றாவது ரக்அத்துக்காக) எழுந்துவிட்டார்கள். எனவே, மக்களும் நபி(ஸல்) அவர்களோடு எழுந்துவிட்டார்கள். தொழுகை முடியும் தருவாயில் நாங்கள் நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுப்பதை எதிர்பார்த்திருந்தபோது, அந்த இருப்பிலேயே ஸலாத்திற்கு முன் தக்பீர் கூறி, இரண்டு ஸஜ்தாக்கள் செய்துவிட்டு ஸலாம் கொடுத்தார்கள்.

ஹதீஸ் 1225. அப்துல்லாஹ் இப்னு புஹைனா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

லுஹர் தொழுகை நடத்திய நபி(ஸல்) அவர்கள் இரண்டாம் ரக்அத்தில் அமராமல் எழுந்துவிட்டார்கள். தொழுகையை முடிக்கும்போது இரண்டு ஸஜ்தாச் செய்தார்கள். அதன்பின்னர் ஸலாம் கொடுத்தார்கள்.

### (மறதியாக) ஐந்து ரக்அத்கள் தொழுதுவிட்டால்..

ஹதீஸ் 1226. அப்துல்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் லுஹரில் ஐந்து ரக்அத்கள் தொழுதார்கள். உடனே அவர்களிடம் தொழுகை அதிகமாக்கப்பட்டுவிட்டதா? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்'என்ன விஷயம்?' எனக் கேட்டார்கள்.'நீங்கள் ஐந்து ரக்அத்கள் தொழுகை நடத்தினீர்கள்' என ஒருவர் கூறினார். நபி(ஸல்) அவர்கள் ஸலாம் கொடுத்ததற்குப் பின்னர் இரண்டு ஸஜ்தாச் செய்தார்கள்.

### (நான்கு ரக்அத் தொழுகையில்) இரண்டாவது அல்லது மூன்றாவது ரக்அத்தில் (மறதியாக) ஸலாம் கொடுத்துவிட்டால் வழக்கமான ஸஜ்தாவைப் போன்றோ அல்லது அதைவிட சற்று நீளமாகவோ இரண்டு ஸஜ்தாச் செய்வது.

ஹதீஸ் 1227. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு லுஹரையோ அஸரையோ தொழுதுவிட்டு ஸலாம் கொடுத்தார்கள். அப்போது துல்யதைன்(ரலி)'நபி அவர்களே! தொழுகை குறைக்கப்பட்டுவிட்டதா?' எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களிடம்,'இவர் கூறுவது உண்மைதானா?' எனக் கேட்டபோது அவர்களும்'ஆம்'' என்றார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் பிந்திய இரண்டு ரக்அத்களைத் தொழுகை நடத்திவிட்டு இரண்டு ஸஜ்தாக்களும் செய்தார்கள்.

"உர்வா இப்னு ஸுபைர் மக்ரிப் தொழுகை நடத்தியபோது இரண்டு ரக்mj;jpலேயே ஸலாம் கொடுத்துவிட்டுப் பேசியும்விட்டார். பின்பு (நினைவு வந்ததும்) மீதம் உள்ளதைத் தொழுதார்.

பின்னர் இரண்டு ஸஜ்தாச் செய்துவிட்டு இவ்வாறே நபி(ஸல்) அவர்கள் செய்தார்கள் எனக் கூறினார்‘‘ என ஸஅத் அவர்கள் கூறினார்கள்.

## ஸஜ்தா ஸஹ்வின்போது தஷஹ்ஹுத் ஓதாமல் இருத்தல்.

அனஸ்(ரலி), ஹஸன் ஆகியோர் (ஸஜ்தாச் செய்துவிட்டு) ஸலாம் கொடுத்தார்கள் தஷஹ்ஹுத் ஓதவில்லை.

(அதில்) தஷஹ்ஹுத் ஓதவேண்டியதில்லை என கதாதா கூறுகிறார்.

ஹதீஸ் 1228. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்துடன் தொழுகையை முடித்தபோது துல்யதைன்(ரலி),‘நபி அவர்களே! தொழுகை சுருக்கப்பட்டுவிட்டதா? அல்லது நீங்கள் மறந்து விட்டீர்களா?’ எனக் கேட்டார்.’துல்யதைன் கூறுவது உண்மைதானா?’ என்று நபி(ஸல்) அவர்கள் கேட்க, மக்களும்’ஆம்’ என்றார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் பிந்தைய இண்டு ரக்அத்களைத் தொழுதுவிட்டு ஸலாம் கொடுத்தார்கள். பின்பு தக்பீர் கூறித் தம் வழக்கமான ஸஜ்தாவைப் போன்றோ அல்லது அதைவிட சற்று நீண்டதாகவோ ஸஜ்தாச் செய்து, பின் (அதிலிருந்து) எழுந்தார்கள். (தஷஹ்ஹுத் ஓதவில்லை.)

ஸலமா இப்னு அல்கமா கூறுகிறார்: நான் முஹம்மத் இப்னு ?ரீனிடம் ஸஜ்தா ஸஹ்வில் தஷஹ்ஹுத் உண்டா? எனக் கேட்டேன். அதற்கவர், அபூ ஹுரைரா(ரலி) உடைய அறிவிப்பில் தஷஹ்ஹுத் இல்லைதான் என்றார்‘

## ஸஜ்தா ஸஹ்வின்போது தக்பீர் கூறுவது

ஹதீஸ் 1229. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மாலைத் தொழுகைகளில் ஒரு தொழுகையை நடத்திய நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்திலேயே ஸலாம் கொடுத்துவிட்டார்கள். (அநேகமாக அது அஸர்த் தொழுகை என்றே நினைக்கிறேன் என முஹம்மது இப்னு ?ரீன் கூறுகிறார்.) பின்பு எழுந்து பள்ளிவாசலின் முற்பகுதியிலிருக்கும் மரக்கட்டையின் பக்கம் சென்று அதன்மேல் தம் கையை ஊன்றி நின்றார்கள். அங்கே இருந்தவர்களில் அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) இருவரும் நபி(ஸல்) அவர்களிடம் அது பற்றிப் பேசப் பயந்து கொண்டிருந்தபோது பள்ளியிலிருந்து வேகமாக வெளியேறி மக்கள்,‘தொழுகை சுருக்கப்பட்டுவிட்டதோ’ எனப் பேசினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களால் துல்யதைன் என அழைக்கப்படும் ஒருவர்’நீங்கள் மறந்து விட்டீர்களா அல்லது தொழுகை சுருக்கப்பட்டுவிட்டதா?’ எனக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘நான் மறக்கவும் இல்லை. (தொழுகை) சுருக்கப்படவும் இல்லை‘‘ என்றவுடன்’இல்லை நிச்சயமாக நீங்கள் மறந்து விட்டீர்கள்’ என அவர் கூறினார். நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்திவிட்டு ஸலாம் கொடுத்தார்கள். பின்பு தக்பீர் கூறித் தம் வழக்கமான ஸஜ்தாவைப் போன்றோ அல்லது அதைவிட நீண்டதாகவோ ஸஜ்தாச் செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தித் தக்பீர் கூறினார்கள். மீண்டும் தலையை (பூமியில்) வைத்துத் தக்பீர் கூறினார்கள். தம் வழக்கமான ஸஜ்தாவைப் போன்றோ அல்லது அதைவிட நீண்டதாகவோ ஸஜ்தாச் செய்து, பின்பு தம் தலையை உயர்த்தியாவாறே தக்பீர் கூறினார்கள்.

ஹதீஸ் 1230. அப்துல்லாஹ் இப்னு புஹைனா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர் தொழுகையில் முதல் இருப்பில் அமராமல் எழுந்துவிட்டார்கள். தொழுகையை நிறைவு செய்தபோது ஸலாம் கொடுப்பதற்கு முன்னால் முதல் இருப்பில் அமர மறந்ததற்குப் பரிகாரமாக ஒவ்வொரு ஸஜ்தாவிலும் தக்பீர் கூறி இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள். உடனே மக்களும் நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்து அந்த இரண்டு ஸஜ்தாக்களையும் செய்தனர்.

## தொழுத ரக்அத்கள் மூன்றா அல்லது நான்கா எனத் தெரியவில்லையென்றால் கடைசி இருப்பின்போது இரண்டு ஸஜ்தாக்கள் செய்வது.

ஹதீஸ் 1231. 'தொழுகைக்காக பாங்கு சொல்லப்பட்டால் பாங்கு சப்தம் தனக்குக் கேட்காமலிருப்பதற்காக ஷைத்தான் பின் துவாரத்தின் வழியாகக் காற்றுவிட்டவனாக ஓடி விடுகிறான். பாங்கு முடிந்ததும் திரும்பி வந்து இகாமத் கூறப்பட்டதும் மீண்டும் ஓடுகிறான். இகாமத் முடிந்ததும் மீண்டும் வந்து தொழுபவரின் உள்ளத்தில் ஊடுருவி'இதை இதையெல்லாம் நினைத்துப்பார்' எனக் கூறி, அவர் இதுவரை நினைத்துப் பார்த்திராதவற்றையெல்லாம் நினைவூட்டி அவர் எத்தனை ரக்அத்கள் தொழுதார் என்பதை மறக்கடிக்கிறான். உங்களில் ஒருவருக்குத் தாம் தொழுத ரக்அத்களில் மூன்றா அல்லது நான்கா என்று தெரியவிட்டால் (கடைசி) இருப்பில் இரண்டு ஸஜ்தாச் செய்து கொள்ளட்டும்' நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## கடமையான தொழுகையிலும் உபரியான தொழுகையிலும் ஸஜ்தா ஸஹ்வு செய்தல்.

இப்னு அப்பாஸ்(ரலி) வித்ருத் தொழுத பின் இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்.

ஹதீஸ் 1232. 'உங்களில் ஒருவர் தொழத் தயாரானால் அவரிடம் ஷைத்தான் ஊடுருவி, அவர் எத்தனை ரக்அத் தொழுதார் என்பதையே அறியாத அளவுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தி விடுகிறான். எனவே, உங்களில் ஒருவருக்கு இவ்வாறான நிலைமை ஏற்பட்டால் (கடைசி) இருப்பில் இருந்தவாறே இரண்டு ஸஜ்தாச் செய்யட்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்' என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தொழுது கொண்டிருப்பவரிடம் யாரேனும் பேச்சுக் கொடுத்தால் தொழுபவர் அதைச் செவியேற்பதும் கையால் சைகை செய்வதும்.

ஹதீஸ் 1233. குரைபு அவர்கள் கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி), அப்துர்ரஹ்மான் இப்னு அஸ்ஹர்(ரலி) ஆகியோர் என்னிடம் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று எங்கள் அனைவரின் ஸலாமையும் அவருக்குக் கூறும்! அஸருக்குப் பின் இரண்டு ரக்அத் தொழுவது பற்றி அவரிடம் கேட்பீராக! நபி(ஸல்) அவர்கள் அதை தடை செய்ததாக எங்களுக்குச் செய்தி கிடைத்திருக்க. அத் தொழுகையை (ஆயிஷாவே!) நீங்கள் தொழுவதாகக் கேள்விப்படுகிறோம் என்று கேட்பீராக!"என்று கூறினார்கள். (மேலும்) இப்னு அப்பாஸ்(ரலி), தாமும் உமரும், இவ்வாறு (அஸருக்குப் பின்) தொழுபவர்களை அடிப்பவர்களாக இருந்ததையும் தெரிவிக்கச் சொன்னார்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று, நான் அனுப்பப்பட்ட விஷயத்தைக் கூறினேன். அதற்கு ஆயிஷா(ரலி)'நீர் உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் கேளும்' எனக் கூறினார். நானும் இம்மூவரிடம் திரும்பி வந்து ஆயிஷா(ரலி) கூறியதைச் சொன்னேன். உம்மு ஸலமா(ரலி)

அவர்களிடம் சென்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்ட கேள்வியைக் கேட்குமாறு மீண்டும் அனுப்பினார்கள். (உடனே நான் உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் நான் உம்மு ஸலமா(ரலி) விடம் வந்து விஷயத்தைக் கூறியபோது) நபி(ஸல்) அவர்கள் இவ்விரு ரக்அத்களைத் தடை செய்ததை கேட்டுள்ளேன். பிறகு அவர்கள் அஸர் தொழுதுவிட்டு இரண்டு ரக்அத்கள் தொழுததை பார்த்தேன். தொழுதுவிட்டு என்னுடைய வீட்டிற்கு வந்தார்கள். அப்போது என்னுடன் அன்ஸாரிகளில் பனு ஹராம் எனும் கோத்திரத்தைச் சேர்ந்த பெண்கள் சிலர் இருந்தனர். அவர்களில் ஒரு பெண்ணை, தொழுது கொண்டிருக்கும் நபி(ஸல்) அவர்களிடம் அனுப்பி,'நீ அவர்களுக்கு அருகில் சென்று நபி அவர்களே! நீங்கள் இந்த இரண்டு ரக்அத்கள் தொழுவதைத் தடுத்ததை கேட்டிருக்கிறேன். ஆனால், இப்போது தாங்களே அதைத் தொழுவதை நான் பார்க்கிறேனே? என நான் கேட்டதாக அவர்களிடம் நீ கூறு. அவர்கள் தம் கைகளினால் சைகை செய்தால் நீ பின்வாங்கிவிடு எனக் கூறி அனுப்பினேன். அப்பெண்ணும் கூறப்பட்டது போன்றே செய்தார். நபி(ஸல்) அவர்கள் தம் சைகளால் சைகை செய்தபோது அப்பெண்மணி திரும்பி வந்துவிட்டார். தொழுகையை முடித்த நபி(ஸல்) அவர்கள்,'அபூ உமய்யாவின் மகளே! அஸருக்குப் பின்னால் (தொழுத) இரண்டு ரக்அத்தைப் பற்றிக் கேட்டாய். அப்துல் கைஸ் கிளையைச் சேர்ந்தவர்கள் வந்ததால் லுஹருக்குப் பின்னாலுள்ள இரண்டு ரக்அத்கள் தொழ முடியவில்லை அத்தொழுகையை இந்த இரண்டு ரக்அத்களாகும்'' என்றார்கள் என உம்மு ஸலாமா(ரலி) விடையளித்தார்கள்.

## தொழுகையில் சைகை செய்வது.

இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து உம்மு ஸலமா(ரலி) அறிவித்ததாக, குரைப் கூறுகிறார்.

ஹதீஸ் 1234. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அம்ர் இப்னு அவ்ஃப் கோத்திரத்தார்களிடையே ஏதோ பிரச்சினை ஏற்பட்டு இருப்பதாக நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி கிடைத்தது. எனவே, நபி(ஸல்) அவர்கள் தம் தோழர் சிலருடன் அங்கு சென்று அக்கோத்திரத்தார்களிடையே சமாதானம் செய்வதில் ஈடுபட்டிருந்தபோது தொழுகையின் நேரம் நெருங்கிவிட்டது. அப்போது பிலால்(ரலி), அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் வந்து'அபூ பக்ரே! நபி(ஸல்) அவர்கள் (தங்கள் பணியின் நிமித்தமாக நேரத்தோடு வந்து சேர்வதிலிருந்து) தடுக்கப்பட்டிருக்கிறார்கள். தொழுகையின் நேரமும் நெருங்கிவிட்டது. எனவே, தாங்கள் மக்களுக்குத் தொழுகை நடத்துகிறீர்களா?' எனக் கேட்டதற்கு அபூ பக்ர்(ரலி)'நீர் விரும்பினால் செய்கிறேன்'' என்றவுடன் பிலால்(ரலி) இகாமத் கூற அபூ பக்ர்(ரலி) முன்னின்று மக்களுக்குத் தொழுகை நடத்துவதற்காகத் தக்பீர் கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வரிசைகளினடே வந்து (முதல்) வரிசையில் நின்றார்கள். (இதைக் கண்ட) மக்கள் கைதட்டலானார்கள். தொழுகையில் திரும்பும் வழக்கமில்லாத அபூ பக்ர்(ரலி) மக்கள் கைதட்டலை அதிகரித்தபோது திரும்பி (முதல் வரிசையில்) நபி(ஸல்) அவர்கள் நிற்பதைக் கண்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ரைப் பார்த்துத் தொழுகையைத் தொடரும்படி சைகை செய்தார்கள். எனினும், அபூ பக்ர்(ரலி) தம் கைகளை உயர்த்தி இறைவனைப் புகழ்ந்து திரும்பாமல் பின் நோக்கி வந்து (முதல்) வரிசையில் நின்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் முன் சென்று மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். தொழுகையை முடித்ததும் மக்களை முன்னோக்கி'மக்களே! தொழுகையில் (இதே போன்று) ஏதாவது நிகழ்ந்துவிட்டால் நீங்கள் ஏன் கை தட்டுகிறீர்கள்? கை தட்டுதல் பெண்களுக்குரிய செயலாகும். எனவே, யாருக்கேனும் தம் தொழுகையில் ஏதேனும் நிகழ்ந்துவிட்டால்'ஸுப்ஹானல்லாஹ்' எனக் கூறட்டும். ஏனெனில்,

ஸுப்ஹானல்லாஹ்வைக் கேட்கிறவர் இந்தப் பக்கம் தம் கவனத்தைச் செலுத்துவார்' எனக் கூறினார்கள். பிறகு (அபூ பக்ர்(ரலி) அவர்களிடம்)'அபூ பக்ரே! நான் உம்மை நோக்கிச் சைகை செய்தபோது மக்களுக்குத் தொடர்ந்து தொழுகை நடத்துவதிலிருந்து உம்மைத் தடுத்தது எது?' எனக் கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி)'நபி முன்னிலையில் தொழுகை நடத்து அபூ குஹாஃபாவின் மகனுக்குத் தகுதியற்ற செயலாகும்'' எனக் கூறினார்.

ஹதீஸ் 1235. அஸ்மா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றபோது மக்களோடு அவர் நின்று தொழுது கொண்டிருப்பதைப் பார்த்தேன். நான் அவரிடம்'' மக்களுக்கு என்ன வாயிற்று?' எனக் கேட்டேன். ஆயிஷா(ரலி) தம் தலையால் வானத்தின் பக்கம் சைகை செய்தார். நான்'(இறை) அத்தாட்சியா?' எனக் கேட்டதற்கு'ஆம்'' எனத் தம் தலையால் சைகை செய்தார்.

ஹதீஸ் 1236. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோயுற்றபோது தம் வீட்டில் உட்கார்ந்தவாறு தொழுகை நடத்தினார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் நின்று கொண்டு தொழுதார்கள். எனவே, நபியவர்கள் மக்களை நோக்கி உட்காருமாறு சைகை செய்தார்கள். தொழுகையை முடித்துவிட்டு'இமாம் ஏற்படுத்தப்பட்டிருப்பதே பின்பற்றப்படுவதற்காகத்தான்! எனவே, அவர் ருகூவுச் செய்தால் நீங்களும் ருகூவுச் செய்யுங்கள் அவர்(தலையை) உயர்த்தினால் நீங்களும் உயர்த்துங்கள்'' என்று கூறினார்கள்.

# அத்தியாயம் 23 ஜனாஸாவின் சட்டங்கள்

## கடைசிக் காலத்தில் லா இலாஹ இல்லல்லாஹ் கூறுபவனின் நிலை.

“சொர்க்கத்தின் திறவுகோல் லாஇலாஹ இல்லல்லாஹ் (எனக் கூறுவது) தானே!”என வஹ்ப் இப்னு முனப்பிஹ் என்பவரிடம் வினவப்பட்டது. அதற்கவர் ஆம்! ஆயினும் திறவுகோலுக்குப் பற்கள் இருக்க வேண்டுமல்லவா? எனவே, உன்னிடம் பற்களுள்ள திறவுகோல் இருந்தால்தான் அதன் மூலம் உனக்காக அ(ந்தச் சொர்க்கமான)து திறக்கப்படும்: இல்லையேல் அது உனக்குத் திறக்கப்படாது‘‘ எனக் கூறினார்.

ஹதீஸ் 1237. ’‘என்னுடைய இரட்கனிடமிருந்து ஒரு(வான)வர் என்னிடம் வந்து ஒரு செய்தியை ஒரு சுபச் செய்தியை அவர்கள் கூறினார்கள். அதாவது என்னுடைய சமுதாயத்தில் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்காமல் மரணிக்கிறவர் சொர்க்கத்தில நுழைவார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே, நான்’அவர் விபச்சாரத்திலோ திருட்டிலோ ஈடுபட்டிருந்தாலுமா?’ எனக் கேட்டேன்.’அவர் விபச்சாரத்திலோ திருட்டிலோ ஈடுபட்டிருந்தாலும்தான் என அவர்கள் கூறினார்கள்‘‘ என அபூ தர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1238. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“அல்லாஹ்வுக்கு இணைவைத்தவராக மரித்தவர் நிச்சயமாக நரகத்தில் நுழைந்துவிட்டார்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.’(அப்படியாயின்) அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காமல் மரணிக்கிறவர் நிச்சயமாகச் சொர்க்கத்தில் நுழைவார்‘‘ என நான் கூறுகிறேன்.

## ஜனாஸாவைப் பின்தொடர்தல் பற்றிய கட்டளை.

ஹதீஸ் 1239. பராவு இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களக்கு ஏழு விஷயங்களை(ச் செய்யும்படி) கட்டளையிட்டு ஏழு விஷயங்களை தடை செய்தார்கள். ஜனாஸாவை பின் தொடரும் படியும், நோயாளியை நலம் விசாரிக்கும் படியும், விருந்துக்கு அழைப்பவரின் அழைப்பை ஏற்றுக் கொள்ளும் படியும். அநீதி இழைக்கப்பட்டவருக்கு உதவும்படியும், செய்த சத்தியத்தையும் பூரணமாக நிறைவேற்றும் படியும். ஸலாமுக்கு பதில் கூறும்படியும். தும்முபவருக்கு அவர் அல்ஹம்துலில்லாஹ்.. எல்லாப் புகழும் இறைவனுக்கே! என கூறினால் அருகிலிருப்பவர் யர்ஹமுகல்லாஹ்.. இறைவன் உங்களுக்கு கருணை காட்டுவானாக’ என மறுமொழி கூறும்படியும் கட்டளையிட்டார்கள். வெள்ளிப் பாத்திரங்களைப் பயன்படுத்துவதிலிருந்தும், ஆண்கள் தங்க மோதிரம் அணிவதிலிருந்தும் கலப்படமில்லாத பட்டையும், அலங்காரப் பட்டையும் எம்ப்திய பட்டையும், தடித்த பட்டையும் அணிவதிலிருந்தும் எங்களை தடைசெய்தார்கள்.

ஹதீஸ் 1240. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஐந்து. அவை ஸலாமுக்கு பதிலுரைப்பது, நோயாளியை விசாரிப்பது, ஜனாஸாவப் பின்தொடர்வது, விருந்தழைப்பை ஏற்றுக் கொள்வது. தும்முபவருக்கு மறுமொழி கூறுவது ஆகியவையாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஜனாஸா கஃபன் செய்யப்பட்டபின் அவ்விடத்திற்குச் செல்லல்.

ஹதீஸ் 1241. ஆயிஷா(ரலி) அவர்களின் மரணச் செய்தியைக் கேள்விப்பட்ட) அபூ பக்ர்(ரலி) ஸுன்ஹ் என்னும் இடத்திலுள்ள தம் வீட்டிலிருந்து குதிரையில் மஸ்ஜிது(ன்னபவீ)க்கு வந்திறங்கி, யாரிடமும் பேசாமல் நேரடியாக என் அறைக்குள் நுழைந்தார். அங்கு நபி(ஸல்) அவர்களை அடையாளமிடப்பட்ட போர்வையால் போர்த்தப்பட்ட நிலையில் கண்டார். உடனே, அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் முகத்திலிருந்த துணியை அகற்றிவிட்டு, அவர்களின் மேல் விழுந்து முத்தமிட்டுவிட்டு, அழுதார். பின்பு,'நபி அவர்களே! என்னுடைய தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணம். அல்லாஹ் தங்களுக்கு இரண்டு மரணங்களை ஏற்படுத்தவில்லை. உங்களின் மீது விதிக்கப்பட்ட அந்த மரணத்தை தாங்கள் அடைவது விட்டீர்கள்' என்று கூறினார்.

ஹதீஸ் 1242. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(நபி(ஸல்) அவர்களின் உடலைப் பார்த்துவிட்டு) அபூ பக்ர்(ரலி) வெளியில் வந்தார். அப்போது உமர்(ரலி) மக்களிடம் (கோபமாகப்) பேசிக் கொண்டிருந்ததைக் கண்டதும் அவரை உட்காருமாறு கூறினார். உமர்(ரலி) உட்கார மறுத்ததும் மீண்டும் உட்காருமாறு கூறினார். உமர்(ரலி) மீண்டும் மறுக்கவே அபூ பக்ர்(ரலி) இறைவனைப் போற்றிப் புகழ்ந்து உரை நிகழ்த்தினார். உடனே, மக்கள் உமர்(ரலி) பக்கமிருந்து அபூ பக்ர்(ரலி) பக்கம் திரும்பிவிட்டனர். அப்போது அபூ பக்ர்(ரலி)'உங்களில் முஹம்மதை வணங்கிக் கொண்டிருந்தவர்கள் அறிந்து கொள்ளட்டும்! நிச்சயமாக முஹம்மத் இறந்துவிட்டார். அல்லாஹ்வை வணங்கிக் கொண்டிருப்போர் அறிந்து கொள்ளட்டும்! நிச்சயமாக அல்லாஹ் என்றென்றும் உயிரோடிருப்பவன்: மரணிக்கமாட்டான். மேலும், அல்லாஹ் கூறினான்: முஹம்மது (ஓர் இறைத்) தூதரேயன்றி வேறில்லை. அவருக்கு முன்னரும் (அல்லாஹ்வின்) தூதர்கள் பலர் (காலம்) சென்றார்கள்: அவர் இறந்துவிட்டால் அல்லது கொல்லப்பட்டால் நீங்கள் உங்கள் கால் சுவடுகளின் வழியே (புறங்காட்டித்) திரும்பிவிடுவீர்களா? அப்படி யாரேனும் கால் சுவடுகளின் வழியே (புறங் காட்டித்) திரும்பினால் அவர் அல்லாஹ்வுக்கு எவ்விதத் தீங்கும் செய்துவிட முடியாது: அன்றியும் அல்லாஹ் நன்றியுடையோருக்கு அதிசீக்கிரத்தில் நற்கூலியை வழங்குவான்“' (திருக்குர்ஆன் 3:144) என்றார்.

அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூ பக்ர்(ரலி) இவ்வசனத்தை அங்கு ஓதிக்காட்டும் வரை அல்லாஹ் இவ்வசனத்தை அருளியிருந்ததையே மக்கள் அறிந்திருக்கவில்லை என்பதைப் போன்றும் அபூ பக்ர்(ரலி) மூலமாகத்தான் இதையவர்கள் அறிந்ததைப் போன்றும் அங்கிருந்த ஒவ்வொருவரும் இதனை ஓதிக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 1243. நபி(ஸல்) அவர்களிடம் பைஅத் செய்திருந்த அன்சாரிப் பெண்மணியான உம்முல் அலா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“(மதீனாவுக்கு வந்த) முஹாஜிர்களில் யார் யாருடைய வீட்டில் தங்குவது என்பதையறிய சீட்டுக் குலுக்கிப் போட்டுக் கொண்டிருந்தபோது உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) எங்கள் வீட்டில் தங்குவது என முடிவானது. அதன்படி அவரை எங்கள் வீட்டில் தங்க வைத்தோம். பிறகு அவர் நோயுற்று மரணமடைந்தார். அவரின் உடல் குளிப்பாட்டப்பட்டு அவரின் ஆடையிலேயே கஃபனிடப்பட்டதும் நபி(ஸல்) அவர்கள் அங்கு வந்தார்கள். நான் (உஸ்மானை நோக்கி),'ஸாயிபின் தந்தையே! உம் மீது இறையருள் உண்டாகட்டும்! அல்லாஹ் உம்மைக் கண்ணியப்படுத்தியுள்ளான் என்பதற்கு நான் சாட்சி கூறுகிறேன்' எனக் கூறினேன். உடனே,

நபி(ஸல்) அவரை அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ளான் என்பது உனக்கெப்படித் தெரியும்?' என்று கேட்டார்கள்.

"நபி அவர்களே! என்னுடைய தந்தை உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். பின் யாரைத்தான் அல்லாஹ் கண்ணியப்படுத்துவான்?' என கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'இவர் மரணமடைந்துவிட்டார். எனவே, அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவர் விஷயத்தில் நன்மையையே விரும்புகிறேன். ஆயினும் நான் அல்லாஹ்வின் தூதராக இருந்தும் என்னுடைய நிலைமை (நாளை) என்னவாகும் என்பது எனக்குத் தெரியாது' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அதற்குப் பிறகு நான் யார் விஷயத்திலும் (அவ்வாறு) பாராட்டிக் கூறுவதேயில்லை."

ஹதீஸ் 1244. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

என்னுடைய தந்தை கொல்லப்பட்டுக் கிடந்தபோது நான் அவரின் முகத்தின மீதிருந்த துணியை அகற்றிவிட்டு அழுதேன். அப்போது (அங்கிருந்தவர்கள்) என்னைத் தடுத்தார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் என்னைத் தடுக்கவில்லை. பிறகு என்னுடைய மாமி ஃபாத்திமா(ரலி)வும் அழ ஆரம்பித்துவிட்டார். அப்போது, 'நீங்கள் அழுதாலும் அழாவிட்டாலும் நீங்கள் அவரைத் தூக்கும் வரை வானவர்கள் அவருக்குத் தங்களின் இறக்கைகளால் தொடர்ந்து நிழல கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள்."... என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## மரணமுற்றவரின் குடும்பத்தினருக்கு மரணச் செய்தியறிவித்தல்.

ஹதீஸ் 1245. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நஜ்ஜாஷி(மன்னர்) இறந்த அன்று அவரின் மரணச் செய்தியை மக்களுக்கு அறிவித்தார்கள். பிறகு தொழுமிடத்திற்கு வந்து மக்களை வரிசைப்படுத்தி நிற்க வைத்து, நான்கு தக்பீர்கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள்.

ஹதீஸ் 1246. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"(மூத்தா போரில்) ஸைத்(ரலி) கொடியைப் பற்றியிருந்தார். அவர் கொல்லப்பட்டதும் அதை ஜஅஃபர்(ரலி) பற்றினார். அவர் கொல்லப்பட்டதும் அதை அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) பற்றினார். பிறகு அவரும் கொல்லப்பட்டார்' என்று நபி(ஸல்) கூறிக்கொண்டிருந்தபோது அவர்களின் இரண்டு கண்களிலிருந்து கண்?ர் வழிந்தது. பிறகு, '(ஏற்கெனவே) நியமிக்கப்பட்டாதிருந்த காலித் இப்னு வலீத்(ரலி) அக்கொடியைப் பற்றினார். அவருக்கே வெற்றி கிடைத்துவிட்டது என்றும் கூறினார்கள்.

## ஜனாஸாத் தொழுகையை(த் தலைவருக்கு) அறிவித்தல்.

"நீங்கள் (ஜனாஸாத் தொழுகிறபோது) எனக்குத் தகவல் அளித்திருக்கக் கூடாதா' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1247. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(நோயுற்றிருந்த) ஒருவரை நபி(ஸல்) அவர்கள் வழக்கமாக விசாரிப்பவர்களாக இருந்தார்கள். ஒரு நாள் இரவு அவர் இறந்துவிட்டார். அவரை மக்கள் இரவிலேயே அடக்கம் செய்துவிட்டனர். மறுநாள் காலையில் நபி(ஸல்) அவர்களுக்கு இச்செய்தியை மக்கள் தெரிவித்ததும்'இதை அப்போதே எனக்கு நீங்கள் அறிவிக்காததன் காரணமென்ன?' எனக் கேட்டார்கள். அதற்கு மக்கள், 'கடுமையான இருள் சூழ்ந்த இரவு நேரமாக இருந்ததால் உங்களுக்குச் சிரமம்

கொடுக்க நாங்கள் விரும்பவில்லை' என்றனர். உடனே நபி(ஸல்) அவர்கள், அவரின் கப்ருக்கு வந்து ஜனாஸாத் தொழுகை தொழுகை நடத்தினார்கள்.

## தம் குழந்தை இறந்தும் பொறுமையுடன் இறை வெகுமதியை எதிர்பாப்பவரின் சிறப்பு.

அல்லாஹ் கூறினான்:

பொறுமையுடையோருக்கு (நபியே!) நீர் நற்செய்தி கூறும்! (திருக்குர்ஆன் 02:155)

ஹதீஸ் 1248. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஒரு முஸ்லிமுக்கு பருவமடையாத மூன்று (குழந்தைகள்) மரணித்துவிட்டால் அவர், அக்குழந்தைகளின் மீது காட்டிய இரக்கத்தின் காரணத்தால் அவரை அல்லாஹ் சொர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்வான். "

என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1249. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பெண்கள் நபி(ஸல்) அவர்களிடம் (வந்து)'எங்களுக்கும் ஒரு நாள் (உபதேசத்திற்காக) ஒதுக்குங்களேன் எனக் கேட்டார்கள். நபி(ஸல்) பெண்களுக்கு (ஒருநாள்) உபதேசம் செய்தார்கள். அதில்'ஒரு பெண்ணுக்கு மூன்று குழந்தைகள் இறந்துவிட்டதால் அவர்கள் அப்பெண்ணை நரகத்திலிருந்து காக்கும் திரையாக ஆம்விடுவார்கள்' எனக் கூறியதும் ஒரு பெண்'இரண்டு குழந்தைகள் இறந்தால்?' எனக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்'இரண்டு குழந்தை இறந்தாலும் தான்' என்றார்கள்.

ஹதீஸ் 1250. மேற்கூறிய ஹதீஸில் அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் அறிவிப்பில், 'பருவமடையாத (குழந்தைகள்)' என்ற வாசகம் அதிகப்படியாக உள்ளது.

ஹதீஸ் 1251. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஒரு முஸ்லிமுடைய மூன்று குழந்தைகள் இறந்துவிட்டால் எல்லோருமே நரகைக் கடந்து சென்றாக வேண்டும் என்ற அடிப்படையில், அந்த நேரம் மட்டுமே தவிர அவர் நரகின் பக்கம் செல்லவே மாட்டார். என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(எல்லோருமே நரகத்தைக் கடந்து சென்றதாக வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.)'அதனை (நரம்னை)க் கடக்காமல் செல்பவர் உங்களில் யாரும் இல்லை' என்ற (திருக்குர்ஆன் 19:71) இறைவசனத்தின் அடிப்படையில்தான் என்று புகாரி ஆகிய நான் கூறுகிறேன்.

## கப்ருக்கருகில் இருக்கும் பெண்ணிடம்'நீ பொறுமையாயிரு' என ஆண் கூறுவது.

ஹதீஸ் 1252. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கப்ருக்கருகில் அழுது கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கடந்து சென்ற நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம், 'அல்லாஹ்வைப் பயந்து கொள்! பொறுமையாயிரு!"எனக் கூறினார்கள்.

## இலந்தையிலை கலந்த நீரால் மய்யித்தைக் குளிப்பாட்டி உளூச் செய்வித்தல்.

ஸயீத் இப்னு ஸைத்(ரலி) உடைய மகன் மரணமடைந்ததும் இப்னு உமர்(ரலி) அவருக்கு நறுமணம் பூசி அவரைச் சுமந்து சென்றார். (இதன் காரணமாக உளூ முறிந்து விடாததால்) உளூச் செய்யாமலேயே ஜனாஸாத் தொழுகை நடத்தினார்.

முஸ்லிம் உயிருடனிருக்கும் போதும் மரணித்துவிட்டாலும் அசுத்தமாவதில்லை என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

(மரணித்துவிட்ட முஸ்லிம்) அசுத்தம் என்றிருந்தால் நான் அந்த மய்யித்தைத் தொட்டிருக்க மாட்டேன் என ஸஅத்(ரலி) கூறினார். மேலும், இறைநம்பிக்கையாளர் அசுத்தமாவதில்லை என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1253. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் மகள் மரணித்துவிட்டபோது எங்களிடம் வந்து,'அவரை இலந்தை இலை கலந்த நீரால் மூன்று அல்லது ஐந்து, தேவையெனக் கருதினால் அதற்கதிகமான முறை குளிப்பாட்டுங்கள் இறுதியில் கற்பூரத்தைச் சிறிது சேர்த்துக் கொள்ளுங்கள் குளிப்பாட்டி முடிந்ததும் அவர்களுக்கு அறிவித்தோம். அவர்கள் வந்து தம் கீழாடையைத் தந்து,'இதை அவரின் உடலில் சுற்றுங்கள்'' எனக் கூறினார்கள்.

## ஒற்றைப் படையாகத் தண்ணீர ஊற்றிக் குளிப்பாட்டுவது விரும்பத்தக்கது.

ஹதீஸ் 1254. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மகளை நாங்கள் குளிப்பாட்டிக் கொண்டிருந்தோம். அப்போது அங்கு வந்த நபி(ஸல்) அவர்கள்,'அவரை இலந்தை இலை கலந்த நீரால் மூன்று அல்லது ஐந்து அல்லது அதற்கும் அதிகமான முறை குளிப்பாட்டுங்கள் கடைசியில் கற்பூரத்தைச் சேர்த்துக் கொள்ளுங்கள். குளிப்பாட்டி முடித்ததும் எனக்கு அறிவியுங்கள்' எனக் கூறினார்கள். முடிந்ததும் நாங்கள் அவர்களுக்கு அறிவித்தோம். அப்போது அவர்கள் தங்களின் கீழாடையைத் தந்து,'இதை அவரின் உடலில் சுற்றுங்கள்' எனக் கூறினார்கள்.

ஹஃப்ஸா(ரலி)வின் அறிவிப்பில்,'ஒற்றைப் படையாக (த் தண்ணீர ஊற்றி)க் குறிப்பாட்டுங்கள் மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு முறை (தண்ணீர ஊற்றுங்கள்) அவரின் வலப்புறத்திலிருந்தும் உளூச் செய்ய வேண்டிய பகுதிகளிலிருந்தும் துவங்குங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும்'நாங்கள் அவர்களுக்கு தலைவாரி மூன்று சடைகள் பின்னினோம்'' என உம்மு அதிய்யா(ரலி) கூறினார் என்றும் உள்ளது என அய்?ப் குறிப்பிடுகிறார்.

## (குளிப்பாட்டுதலை) மய்யித்தின் வலப்புறத்திலிருந்து ஆரம்பித்தல்.

ஹதீஸ் 1255. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மகளைக் குளிப்பாட்டும்போது,'அவரின் வலப்புறத்திலிருந்தும் உளூச் செய்யவேண்டிய பகுதியிலிருந்தும் ஆரம்பியுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## மய்யித்தைக் குளிப்பாட்டும்போது உளூச் செய்ய வேண்டிய பகுதிகளிலிருந்து ஆரம்பித்தல்.

ஹதீஸ் 1256. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மகளை நாங்கள் குளிப்பாட்டிக் கொண்டிருந்தபோது,'மய்யித்தின் வலப்புறத்திலிருந்தும் அதன் உளூச் செய்யவேண்டிய பகுதிகளிலிருந்தும் ஆரம்பியுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## பெண் மய்யித், ஆணின் கீழாடையால் கஃபனிடப்படலாமா?

ஹதீஸ் 1257. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மகள் மரணித்ததும் அவர்கள்,'அவரை மூன்று அல்லது ஐந்து அல்லது நீங்கள் தேவையெனக் கருதினால் அதற்கும் அதிகமான முறை குளிப்பாட்டுங்கள் குளிப்பாட்டி முடித்ததும் எனக்குத் தெரிவியுங்கள்' எனக் கூறினார்கள். குளிப்பாட்டி முடித்து அவர்களுக்குத் தெரிவித்ததும் தம் இடுப்பிலிருந்து கீழாடையைக் களைந்து'இதை அவரின் உடம்பில் சுற்றுங்கள்'' என்று கூறினார்கள்.

## (மய்யித்தைக் குளிப்பாட்டும் போது) கடைசியில் கற்பூரத்தைப் பயன்படுத்துதல்.

ஹதீஸ் 1258. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் ஒரு மகள் மரணித்துவிட்டதும் நபி(ஸல்) அவர்கள் (எங்களிடம்) வந்து'அவரை மூன்று அல்லது ஐந்து அல்லது தேவையென நீங்கள் கருதினால் அதற்கும் அதிகமான முறை இலந்தை இலை கலந்த நீரால் குளிப்பாட்டுங்கள் கடைசியில் சிறிது கற்பூரத்தைச் சேர்த்துக் கொள்ளுங்கள் குளிப்பாட்டி முடித்ததும் எனக்குத் தெரிவியுங்கள்' எனக் கூறினார்கள். குளிப்பாட்டிய பின் நாங்கள் அவர்களுக்குத் தெரிவித்ததும் தம் கீழாடையைத் தந்து,'இதை அவரின் உடம்பில் சுற்றுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1259. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"அவரை மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு அல்லது நீங்கள் தேவையெனக் கருதினால் அதற்கும் அதிகமான முறை குளிப்பாட்டுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

'நாங்கள் அந்த மய்யித்தின் தலையில் மூன்று சடைகளை முடிந்தோம்' என உம்மு அதிய்யா(ரலி) கூறினார் என ஹஃப்ஸா(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

## பெண் மய்யித் குளிப்பாட்டப்படும்போது சடைகளை அவிழ்த்துவிடல்.

குளிப்பாட்டப்படும்போது மய்யித்தின் சடை அவிழ்க்கப்படுவது தவறில்லை என இப்னு ?ரீன் குறிப்பிட்டுள்ளார்.

ஹதீஸ் 1260. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மகளின் மய்யித்திற்குத் தலை(முடி)யில் பெண்கள் மூன்று சடைகளைப் பின்னியிலிருந்தார்கள். பிறகு அவற்றைப் பிரித்துக் கழுவிவிட்டுப் பிறகு மீண்டும் மூன்று சடைகள் பின்னினார்கள்.

## (பெண்) மய்யித்தின் உடம்பில் துணியைச் சுற்றுவது எப்படி?

"(கஃபனுடைய) ஐந்து துணிகளில் ஒன்றால் மேலாடைக்கு உள்ளே தொடைகளையும் இடுப்பையும் சுற்றிக் கட்டவேண்டும்'' என ஹஸன் கூறுகிறார்.

ஹதீஸ் 1261. இப்னு ?ரின் அவர்கள் கூறினார்கள்.

(நபி(ஸல்) அவர்களிடம்) உடன் படிக்கை செய்திருந்த அன்ஸாரிப் பெண்மணியான உம்மு அதிய்யா(ரலி) தம் மகனைத் தேடி பஸராவுக்குச் வந்தார். மகனைச் சந்திக்க முடியவில்லை. அப்போது அவர் எங்களிடம் சொன்னதாவது. 'நபி(ஸல்) அவர்களின் மகளை நாங்கள் குளிப்பாட்டிக் கொண்டிருந்தபோது அங்கு வந்த நபி(ஸல்) அவர்கள், 'மய்யித்தை மூன்று அல்லது ஐந்து அல்லது நீங்கள் தேவையெனக் கருதினால் அதற்கும் அதிகமான முறை இலந்தை இலை கலந்த நீரால் குளிப்பாட்டுங்கள் மேலும் கடைசியில் கற்பூரத்தைச் சேர்த்துக் கொள்ளுங்கள் குளிப்பாட்டி முடித்ததும் எனக்குத் தெரிவியுங்கள்' எனக் கூறினார்கள். குளிப்பாட்டி முடித்ததும் தம் கீழாடையைத் தந்து. 'இதை அவரின் உடலில் சுற்றுங்கள்'' என்றும் கூறினார்கள். அதற்கதிமாக எதையும் கூறவில்லை.

“நபி(ஸல்) அவர்களின் புதல்விகளுள் இவர் யார் என்று எனக்குத் தெரியவில்லை'' என்று அய்?ப் கூறுகிறார். பெண் மய்யித்துக்கு இடுப்பில் துணியைக் கட்டத் தேவையில்லை ஆயினும் சுற்ற வேண்டும் என்றே இப்னு ?ரீன் கட்டளையிட்டு வந்தார்.

## பெண் மய்யித்தின் முடி மூன்ற சடைகளாகப் பின்னப்படுதல்.

ஹதீஸ் 1262. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் மகளின் முடியை மூன்று சடைகளாகப் பின்னினோம்.

“மூன்று சடைகள் என்பது முன் நெற்றிப் பகுதியில் ஒன்றும் பிடரிப்பகுதியில் இரண்டுமாகும்'' என சுஃப்யான் குறிப்பிட்டுள்ளார்.

## பெண் மய்யித்தின் முடி அதன் பின்புறம் தொங்க விடப்படுதல்.

ஹதீஸ் 1263. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மகள்களில் ஒருவர் மரணமாம்விட்டதும் நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து, 'மய்யித்தை இலந்தை இலை கலந்த நீரால் மூன்ற அல்லது ஐந்து அல்லது நீங்கள் தேவையெனக் கருதினால் அதற்கும் அதிகமாக ஒற்றைப் படையாகக் குளிப்பாட்டுங்கள். கடைசியில் சிறிது கற்பூரத்தைச் சேர்த்துக் கொள்ளுங்கள். குளிப்பாட்டி முடிந்ததும் எனக்குத் தெரிவியுங்கள்' எனக் கூறினார்கள். குளிப்பாடடி முடிந்து தெரிவித்ததும் தம் கீழாடையை (மய்யித்தில் சுற்றுவதற்கு)த் தந்தார்கள். மேலும், நாங்கள் மய்யித்தின் முடியை மூன்று சடைகளாகப் பின்னி அதை மய்யித்தின் முதுகுப்புறமாகப் போட்டு வைத்தோம்.

## கஃபனுக்கு வெண்மையான ஆடையைப் பயன்படுத்துதல்.

ஹதீஸ் 1264. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் யமன் சேதத்தின் பருத்தியினாலான வெண்ணிறமுள்ள மூன்று துணிகளால் கஃபன் செய்யப்பட்டார்கள். அம்மூன்றில் சட்டையோ தலைப் பாகையோ இருக்கவில்லை.

## இரண்டு ஆடைகளில் கஃபனிடுதல்

ஹதீஸ் 1265. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(இஹ்ராம் அணிந்த) ஒருவர் அரஃபா மைதானத்தில் தம் வாகனத்தின் மீதிருந்தார். திடீரென தன்னுடைய வாகனத்திலிருந்து அவர் கீழே விழுந்துவிட்டார். அது அவரின் கழுத்தை முறித்துக்

கொன்றுவிட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்'அவரின் உடலை இலந்தை இலை கலந்த நீரால் குளிப்பாட்டி இரண்டு ஆடைகளால் கஃபனிடுங்கள் அவரின் உடலுக்கு நறுமணம் பூசவேண்டாம் அவரின் தலையை மறைக்கவும் வேண்டாம் ஏனெனில் (இஹ்ராம் அணிந்திருந்த) அவர் கியாமத் நாளில் தல்பியா சொல்லிக் கொண்டிருப்பவராக எழுப்பப்படுவார்'' எனக் கூறினார்.

## மய்யித்திற்கு நறுமணமிடல்

ஹதீஸ் 1266. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(இஹ்ராம் அணிந்த) ஒருவர் அரஃபா மைதானத்தில் அல்லாஹ்வின் தூதருடன் தம் வாகனத்தின் மீதிருந்தார். திடீரென அவர், தன்னுடைய வாகனத்திலிருந்து கீழே விழுந்துவிட்டார் அது அவரின் கழுத்தை முறித்துவிட்டார். (அப்போது நபி(ஸல்) அவர்கள்'அவரின் உடலை இலந்தை இலை கலந்த நீரால் குளிப்பாட்டி இரண்டு ஆடைகளால் கஃபனிடுங்கள் அவரின் உடலுக்கு நறுமணம் பூச வேண்டாம் அவரின் தலையை மறைக்கவும் வேண்டாம்: ஏனெனில் (இஹ்ராம் அணிந்திருந்த) அவர் கியாமத் நாளில் தல்பியா (லப்பைக் அல்லஹும்ம லப்பைக்...) சொல்லிக் கொண்டிருப்பவராக எழுப்பப்படுவார்'' எனக் கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர் இறந்தால் அவரின் உடல் கஃபனிடப்படுவது எப்படி?

ஹதீஸ் 1267. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இஹ்ராம் அணிந்திருந்த ஒருவர் நபி(ஸல்) அவர்களுடன் (அரஃபாவில்) இருந்தபோது அவரின் ஒட்டகம் கழுத்தை முறித்துக் கொன்றுவிட்டது. (எனவே, அவர் இறந்துவிட்டார்). அப்போது நபி(ஸல்) அவர்கள்'அவரின் உடலை இலந்தை இலை கலந்த நீரால் குளிப்பாட்டி இரண்டு ஆடைகளால் கஃபனிடுங்கள் நறுமணம் பூச வேண்டாம். அவரின் தலையை மூடவும் வேண்டாம் ஏனெனில் அவரை அல்லாஹ் மறுமை நாளில் தல்பியா சொல்லிக் கொண்டிருப்பவராக எழுப்புவான்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1268. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இஹ்ராம் அணிந்திருந்த ஒருவர் அரஃபாவில் நபி(ஸல்) அவர்களுடன் தங்கியிருந்தபோது தன்னுடைய வாகனத்திலிருந்து கீழே விழுந்துவிட்டார். அது அவரின் கழுத்தை முறித்துக் கொன்றுவிட்டது. என அய்?ப் என்பவர் கூறுகிறார். வாகனம் அவரைக் கீழே வீழ்த்தியதால் அவரின் எலும்புகள் முறிந்துவிட்டன என அம்ர் கூறுகிறார். எனவே, அவர் இறந்துவிட்டார். நபி(ஸல்) அவர்கள்,'அவரின் உடலை இலந்தை இலை கலந்த நீரால் குளிப்பாட்டி இரண்டு ஆடைகளில் கஃபனிடுங்கள் அவருக்கு நறுமணம் பூச வேண்டாம் அவரின் தலையை மறைக்கவும் வேண்டாம் ஏனெனில் அவர் மறுமை நாளில் தல்பியாக் கூறிக்கொண்டிருப்பவராக எழுப்பப்படுவார்'' எனக் கூறினார்கள்.

## தைக்கப்பட்ட அல்லது தைக்கப்படாத மேல் சட்டையால் கஃபனிடுதலும் மேல் சட்டையின்றிக் கஃபனிடப்பட்டவரின் நிலையும்.

ஹதீஸ் 1269. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை இறந்துவிட்டான். அப்போது அவனுடைய (முஸ்லிமான) மகன், நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'நபி அவர்களே! உங்கள் சட்டையைத் தாருங்கள். அவரை அதில் கஃபன் செய்யவேண்டும் மேலும் நீங்கள் அவருக்கு ஜனாஸாத் தொழுது. அவருக்காகப் பாவமன்னிப்பும் கேட்கவேண்டும்'' என்று கூறினார். உடனே

நபி(ஸல்) அவர்கள் தங்களின் சட்டையை அவருக்குக் கொடுத்துவிட்டு, '(ஆயத்தமானதும்) எனக்குத் தெரிவியுங்கள் நான் ஜனாஸாத் தொழுகை நடத்துவேன்'' என்றார்கள். பிறகு அறிவிக்கப்பட்டதும் நபி(ஸல்) அவர்கள் அவனுக்கு ஜனாஸாத் தொழ நாடியபோது, உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களை இழுத்து,'நயவஞ்சகர்களுக்கு ஜனாஸாத் தொழக்கூடாது என அல்லாஹ் உங்களைத் தடுக்கவில்லையா?' எனக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்'(ஜனாஸாத் தொழுவது, தொழமலிருப்பது என) இரண்டில் எதையும் தேர்ந்ததெடுத்துக் கொள்ளும் உரிமை எனக்கு உள்ளது' எனக் கூறிவிட்டு,'நீர் நயவஞ்சகர்களுக்குப் பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லது தேடாமலிருந்தாலும் சமமே! நீர் அவர்களுக்காக எழுபது முறை பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லாஹ் அவர்களை மன்னிக்கப் போவதே இல்லை'' என்ற (திருக்குர்ஆன் 09:80) வசனத்தை ஓதிக்காட்டிவிட்டு ஜனாஸாத் தொழுதார்கள். உடனே'அ(ந்நய)வ(ஞ்சக)ர்களில் யாரேனும் இறந்தால் அவர்களுக்காக ஒருபோதும் (ஜனாஸாத்) தொழ வேண்டாம்'' என்ற (திருக்குர்ஆன் 09:84) வசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 1270. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள். அப்துல்லாஹ் இப்னு உபை கப்ரில் வைக்கப்பட்ட பின் அங்கு வந்த நபி(ஸல்) அவனுடைய உடலை வெளியிலெடுக்க செய்து அவன் உடலில் தம் எச்சிலை உமிழ்ந்துவிட்டுத் தம் சட்டையை அவனுக்கு அணிவித்தார்கள்.

## மேல் சட்டையின்றிக் கஃபனிடுதல்

ஹதீஸ் 1271. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மூன்று வெண்ணிறப் பகுதி ஆடைகளால் கஃபனிடப்பட்டார்கள்: அவற்றில் சட்டையோ, தலைப்பாகையோ இருக்கவில்லை.

ஹதீஸ் 1272. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் உடல் மூன்று துணிகளில் கஃபனிடப்பட்டது: அவற்றில் சட்டையோ தலைப்பாகையோ இருக்கவில்லை.

## தலைப்பாகையின்றிக் கஃபனிடுதல்

ஹதீஸ் 1273. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் உடல் (யமன் நாட்டுப்) பருத்தியாலான வெண்மையான மூன்று ஆடைகளால் கஃபனிடப்பட்டது: அவற்றில் சட்டையோ தலைப்பாகையோ இருக்கவில்லை.

(மய்யித்விட்டுச் சென்ற பொருளைப் பங்கிடுவதற்கு முன்) மொத்தச் சொத்திலிருந்து கஃபனுக்குச் செலவிடல்.

அதா, ஸுஹ்ரீ, அம்ர்ப்னு தீனார். கதாதா ஆகியோர் இக்கருத்துடையவர்கள். அதில் நறுமண ஏற்பாட்டிற்கும் மொத்தச் சொத்திலிருந்து செலவு செய்யலாம் என அம்ர்ப்னு தீனார் குறிப்பிடுகிறார். இப்ராஹீம் கூறும்போது முதலில் கஃபனுக்கும் பிறகு கடனைத் தீர்க்கவும் செலவிடவேண்டும்: பிறகு வஸிய்யத்தை நிறைவேற்ற வேண்டும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும், கப்ரு தோண்டுவது மற்றும் குளிப்பாட்டுவதற்கான கூலியும் கஃபன் செலவில் சேர்ந்ததே என சுஃப்யான் கூறினார்.

ஹதீஸ் 1274. இப்ராஹீம் இப்னு அப்திர் ரஹ்மான் அவர்கள் கூறினார்கள்.

ஒருநாள். அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் அவரின் உணவு கொண்டு வந்து வைக்கப்பட்டது. உடனே அவர்,'முஸ்அப் இப்னு உமைர்(ரலி) கொல்லப்பட்டபோது.. அவர்

என்னைவிடச் சிறந்தவராக இருந்தார். அவருக்குக் கஃபனிடுவதற்கு ஒரு சால்வையைத் தவிர வேறெதுவும் கிடைக்கவில்லை. ஹம்ஸா(ரலி) அல்லது வேறொருவர் கொல்லப்பட்டபோது.. அவரும் என்னைவிடச் சிறந்தவரே... அவருக்குக் கஃபனிடுவதற்கும் ஒரு சால்வையைத் தவிர வேறெதுவும் கிடைக்கவில்லை. எனவே, நல்லவை(க்கான நற்கூலி)களெல்லாம் எனக்கு இவ்வுலக வாழ்விலேயே முன் கூட்டியே கொடுக்கப்பட்டுவிடுமோ என நான் அஞ்சுகிறேன்!"எனக் கூறிவிட்டு அழ ஆரம்பித்துவிட்டார்.

## கஃபனிடுவதற்கு ஓர் ஆடை மட்டுமே இருந்தால்...?

ஹதீஸ் 1275. இப்ராஹீம் அவர்கள் கூறினார்கள்.

நோன்பாளியாக இருந்த அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் (நோன்பை நிறைவு செய்வதற்காக) உணவு கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்,'என்னை விடச் சிறந்தவரான முஸ்அப் இப்னு உமைர்(ரலி) கொல்லப்பட்டபோது அவரின் உடல் ஒரு சால்வையால் கஃபனிடப்பட்டது. அப்போது அவரின் தலைமறைக்கப்பட்டால் அவரின் கால்கள் வெளியில் தெரிந்தன. கால்கள் மறைக்கப்பட்டால் தலை வெளியில் தெரிந்தது, மேலும், ஹம்ஸா(ரலி) அவர்களும் கொல்லப்பட்டபோது அவரும் என்னைவிடச் சிறந்தவர் தாம் (அவரின் நிலையும் அவ்வாறே இருந்தது) பிறகுதான் உலக வசதி வாய்ப்புக்கள் எங்களுக்கு விசாலமாக்கப்பட்டன. அல்லது உலகத்திலுள்ள அனைத்தும் எங்களுக்குக் கொடுக்கப்பட்டன. எனவே, எங்களின் நன்மைகளெல்லாம் (முற்கூட்டியே) உலம்லேயே கொடுக்கப்பட்டு விடுமோ என நான் அஞ்சுகிறேன்' எனக் கூறிவிட்டு உணவைத் தவிர்த்துவிட்டு அழ ஆரம்பித்துவிட்டார்கள்.

## கஃபனிடுவதற்கு ஓர் ஆடை மட்டுமே இருந்தால்...?

ஹதீஸ் 1275 இப்ராஹீம் அறிவித்தார் :

நோன்பளியாக இருந்த அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் (நோன்பை நிறைவு செய்வதற்காக ) உணவு கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்,'என்னை விடச் சிறந்தவரான முஸ்அப் இப்னு உமைர்(ரலி) கொல்லப்பட்டபோது அவரின் உடல் ஒரு சால்வையால் கஃபனிடப்பட்டது. அப்போது அவரின் தலைமறைக்கப்பட்டால் அவரின் கால்கள் வெளியில் தெரிந்தன: கால்கள் மறைக்கப்பட்டால் தலை வெளியில் தெரிந்தது. மேலும் ஹம்ஃா(ரலி) அவர்களும் கொல்லப்பட்டபோது அவரும் என்னைவிடச் சிறந்தவர்தாம் -- (அவரின் நிலையும் அவ்வாறே இருந்தது) பிறகுதான் உலக வசதி வாய்ப்புக்கள் எங்களுக்கு விசாலமாக்கப்பட்டன. அல்லது உலகத்திலுள்ள அனைத்தும் எங்களுக்குக் கொடுக்கப்பட்டன. எனவே எங்களின் நன்மைகளெல்லாம் (முற்கூட்டியே) உலம்லேயே கொடுக்கப்பட்டு விடுமோ என நான் அஞ்சுகிறேன்' எனக் கூறிவிட்டு உணவைத் தவிர்த்துவிட்டு அழ ஆரம்பித்துவிட்டார்கள்.

## போதிய துணியின்றிக் கஃபனிடப்படும்போது மய்யித்தின் தலைமட்டுமோ அல்லது கால்கள் மட்டுமோ தாம் மறைக்கப்பட முடியும் என்ற நிலையேற்பட்டால் தலையையே மறைக்கவேண்டும்.

ஹதீஸ் 1276கப்பாப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அல்லாஹ்வுக்காகவே ஹிஜ்ரத் செய்தோம். எங்களுக்கான கூலி அல்லாஹ்விடமுள்ளது. எங்களில் சிலர் தம் கூலியை (இவ்வுலகத்தில்) உண்ணாமல் இறந்துள்ளனர். அவர்களில் முஸ்அப் இப்னு உமைர்(ரலி) ஒருவர். எங்களில் வேறு சிலர் (இவ்வுலகில்) பூத்துக் குலுங்கிச் செழித்து அனுபவித்ததும் உண்டு.

முஸ்அப் இப்னு உமைர்(ரலி) உஹதுப் போரில் கொல்லப்பட்டார். அவரின்மு உடலைக் கஃபன் செய்வதற்கு ஒரேயொரு சால்வை மட்டுமே இருந்தது. அதன் மூலம் அவரின் தலையை மறைத்தால் கால்கள் வெளியில் தெரிந்தன: கால்களை மறைத்தால் தலை வெளியில் தெரிந்தது. அப்போது அவரின் தலையைத் துணியால் மறைத்துவிட்டு அவரின் கால்களை இத்கிர் என்ற புல்லைப் போட்டு மறைக்குமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் முன்கூட்டியே கஃபன் துணியைத் தயாராக வைத்தவரை நபி(ஸல்) அவர்கள் ஆட்சேபிக்கவில்லை.

ஹதீஸ் 1277 அபூ ஹாஸிம் அவர்கள் கூறினார்கள்.

“ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் புர்தா -- குஞ்சங்கட்டப்பட்ட ஒரு சால்வையைக் கொண்டு வந்தார் என்று ஸஹ்ல்(ரலி) கூறிவிட்டு --“புர்தா என்றால் என்ன என்பது உங்களுக்குத் தெரியுமா?’ என்று கேட்டபோது (அங்கிருந்தோர்)’ஆம்! புர்தா என்பது சால்வைதானே! என்றனர். ஸஹ்ல்’ஆம்’ எனக் கூறிவிட்டு மேலும், அப்பெண்மணி’நான் என்னுடைய கையாலேயே இதை நெய்திருக்கிறேன். இதனை உங்களுக்கு அணிவிபக்கவே நான் கொண்டு வந்தேன்‘‘ என்றதும் அது தேவையாயிருந்ததால் நபி(ஸல்) அவர்கள் அதைப் பெற்றார்கள். பிறகு அவர்கள் அதைக் கீழாடையாக அணிந்து எங்களிடம் வந்தபோது ஒருவர்’இது எவ்வளவு அழகாக இருக்கிறது! எனக்கு இதை நீங்கள் அணிவித்து விடுங்கள்‘‘ என்று கேட்டார். உடனே அங்கிருந்தோர்’நீர் செய்வது முறையன்று நபி(ஸல்) அவர்களுக்கு அது தேவைப்பட்டதால் அதை அணிந்திருக்கிறார்கள். நபி(ஸல்) அவர்கள் கேட்பவர்களுக்குக் கொடுக்காமலிருக்க மாட்டார்கள் என்று தெரிந்து கொண்டே நீர் அதை அவர்களிடன் கேட்டு விட்டீரே’ எனக் கூறினார்கள். அதற்கவர் ஃஃஅல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அதை (சாதாரணமாக) அணிந்து கொள்வதற்ககாகக் கேட்கவில்லை: அது எனக்கு கஃபனாக ஆம் விடவேண்டும் என்றே கேட்டேன்‘‘ என்றார்.’பின்பு அது அவருக்குக் கஃபனாகவே ஆம்விட்டது‘‘ என்று ஸஹ்ல் கூறினார்.

## ஜனாஸாவைப் பெண்கள் பின்தொடர்தல்.

ஹதீஸ் 1278 உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஜனாஸாவைப் பின் தொடந்து செல்ல (பெண்களாகிய) நாங்கள் (நபி(ஸல்) அவர்களால்) தடுக்கப்பட்டிருந்தோம்: ஆனால் வன்மையாக நாங்கள் தடுக்கப்படவில்லை.

## கணவர் அல்லாதவருக்காகப் பெண் துக்கம் கடைப்பிடித்தல்.

ஹதீஸ் 1279 முஹம்மத் இப்னு ?ரீன் அவர்கள் கூறினார்கள்.

தம் மகன் இறந்த மூன்றாம் நாள் உம்மு அதிய்யா(ரலி) மஞ்சள் நிறவாசனைப் பொருளைப் பூசினார். மேலும்,‘கணவனைத் தவிர வேறு யாருக்காகவும் மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாது என்று நாங்கள் தடுக்கப்பட்டிருந்தோம்’ என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 1280 ஜைனப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ சுப்யான்(ரலி) அவர்களின் மரணச் செய்தி சிரியாவிலிருந்து வந்த மூன்றாம் நாள் (அவரின் மகள்) உம்மு ஹபீபா(ரலி) மஞ்சள் நிற வாசனை திரவியத்தை வரவழைத்து தம் கன்னங்களிலும் முழங்கைகளிலும் தடவினார்கள். மேலும்,‘அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியுள்ள ஒரு பெண் தன்னுடைய கணவன் இறந்தாலே தவிர வேறு யார் இறந்தாலும் மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாது கணவன் இறந்தால் மட்டும் நான்கு

மாதமும் பத்து நாள்களும் துக்கம் கடைப்பிடிக்க வேண்டும்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை நான் கேள்விப்பட்டிராவிட்டால் இ(ந்த வாசனைத் திரவியமான)து எனக்குத் தேவையற்றதுதான்‘‘ எனக் கூறினார்.

ஹதீஸ் 1281. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியுள்ள பெண், தன்னுடைய கணவனைத் தவிர வேறு யாருடைய மரணத்திற்கும் மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாது கணவன் இறந்தால் மட்டும் நான்கு மாதங்களும் பத்து நாள்களும் துக்கம் கடைப்பிடிக்க வேண்டும்.“

என உம்மு ஹபீபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1282. ஜைனப் பின்து அபீ ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான், தம் சகோதரரை இழந்திருந்த ஜைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) இடம் சென்றேன். அவர் நறுமணம் பூசி,‘இது எனக்குத் தேவையில்லைதான் ஆயினும்’அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பக்கூடிய பெண் தன்னுடைய கணவனைத் தவிர வேறு யாருடைய மரணத்திற்கும் மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் அனுசரிக்கக் கூடாது தன்னுடைய கணவன் இறந்துவிட்டால் நான்கு மாதங்களும் பத்து நாள்களும் துக்கம் கடைப்பிடிக்க வேண்டும்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் மிம்பரில் நின்றவாறு கூற கேட்டிருக்கிறேன்‘‘ என்றார்.

## கப்ரை ஸியாரத் செய்வது.

ஹதீஸ் 1283. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கப்ருக்கருகில் அழுது கொண்டிருந்த ஒரு பெண்ணை நபி(ஸல்) அவர்கள் கடந்து சென்றபோது,‘அல்லாஹ்வை அஞ்சிக் கொள்! பொறுமையாக இரு!”என்றார்கள். அதற்கு அப்பெண், என்னைவிட்டு அகன்று செல்வீராக! எனக்கேற்பட்ட இத்துன்பம் உமக்கேற்பட வில்லை’ என்று நபி(ஸல்) அவர்கள் யாரென அறியாமல் கூறினாள். அ(வளிடம் உரையாடிய)வர் நபியெனக் கூறப்பட்டதும் அப்பெண் நபி(ஸல்) அவர்கள் இருக்குமிடத்திற்கு வந்தாள். அங்கே காவலாளிகள் எவருமில்லை.’நான் உங்களை (யாரென) அறியவில்லை‘‘ என்று நபி(ஸல்) அவர்களிடம் கூறினாள்.’பொறுமை என்பது, துன்பம் ஏற்பட்டவுடன் (கைக் கொள்வதே)’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## “குடும்பத்தார் அழுவதால் மய்யித் வேதனை செய்யப்படும்‘‘ என்ற நபியின் கூற்று.

ஒப்பாரி வைப்பதை வழக்கமாகக் கொண்ட ஒருவன் இறந்தால் அவனுக்குத்தான் இந்த நிலை.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

“உங்களையும் உங்கள் குடும்பத்தினரையும் நரகத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்‘‘ (திருக்குர்ஆன் 66:01)

நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்:

“உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளராவார் அவர் தம் பொறுப்பிலுள்ளவர்கள் பற்றி விசாரிக்கப்படுவார்!“

ஒப்பாரி வைக்கும் வழக்கமில்லாத ஒருவன் இறந்துவிட்டால் இந்த நிலை இல்லை. ஏனெனில், அவனுடைய நிலை'ஒருவர் சுமையை மற்றவர் சுமக்க மாட்டார்'' என்ற (திருக்குர்ஆன் 06:164) இறை வசனத்தை மேற்கோள் காட்டி ஆயிஷா(ரலி) கூறியுள்ளதைப் போன்றதாகும்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

பளுவான (பாவச்) சுமையைச் சுமப்பவன். அதில் (சிறிதேனும்) சுமந்து கொள்ளும்படி (வேறொருவளனை) அழைத்தாலும் அதில் சிறிதளவு கூட அவ்வாறு சுமந்து கொள்ளப்படாது: (அல்குர்ஆன 35:18)

மேலும், ஒப்பாரி இன்றி அழ அனுமதியுண்டு.

"அநியாயமாக யார் கொல்லப்பட்டாலும் ஆதமின் முதல் மகனுக்கு அந்த இரத்தத்தில் (கொலையில்) ஒரு பங்குண்டு'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். கொலை செய்வதை ஆரம்பித்து வைத்தவன் அவனே என்பதே இதன் காரணம்.

ஹதீஸ் 1284. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

தம் மகன் மரணத் தருவாயில் இருப்பதால் உடனே வரும்படி நபி(ஸல்) அவர்களின் மகள் (ஜைனப்(ரலி) நபியவர்களுக்குச் செய்தியனுப்பினார். நபி(ஸல்) அவர்கள், தம் மகளுக்கு ஸலாம் கூறி அனுப்பியதோடு,'எத்ததும் கொடுத்ததும் அல்லாஹ்வுக்குரியதே! ஒவ்வொன்றுக்கும் அவனிடம் ஒரு குறிப்பிட்ட தவணையுண்டு. எனவே பொறுமையைக் கைக்கொண்டு நன்மையை எதிர்பாரும்!"என்றும் கூறி அனுப்பினார்கள். அப்போது அவர்களின் மகள் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு, கண்டிப்பாக வரவேண்டும் எனக் கூறியனுப்பினார். உடனே நபி(ஸல்) அவர்கள் எழுந்தார்கள். அவர்களுடன் ஸஅத் இப்னு உபாதா, முஆத் இப்னு ஜபல், உபை இப்னு கஅபு, ஸைத் இப்னு ஸாபித்(ரலி) ஆகியோரும் மற்றும் பலரும் எழுந்தனர்.

(வீட்டுக்குச் சென்ற) நபி(ஸல்) அவர்களிடம், சுவாசிக்க முடியாமல் மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும் குழந்தையைக் காட்டினார்கள்.. இற்றுப்போன பழைய தோற் துருத்தி போல் குழந்தையின் மார்பு ஏறி இறங்கியது. நபி(ஸல்) அவர்களின் கண்கள் நீர் சொரிந்தன.'நபி அவர்களே! என்ன இது? (அழுகிறீர்கள்) என ஸஅத்(ரலி) கேட்டதற்கு நபி(ஸல்),'இது அல்லாஹ் தன் அடியார்களின் உள்ளங்களில் ஏற்படுத்திய இரக்க உணர்வாகும். நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களில் இரக்கமுடையவர்க்கே இரக்கம் காட்டுகிறான்'' என்றார்கள்.

ஹதீஸ் 1285. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தம் மகள் (ஒருவரை அடக்கம் செய்யும்போது) நாங்கள் அங்கே இருந்தோம். தம் இரண்டு கண்களிலிருந்தும் நீர்வழிய கப்ருக்கருகே அமர்ந்திருந்த நபி(ஸல) அவர்கள்,'இன்றிரவு தம் மனைவியோடு கூடாதவர் யாரேனும் உங்களில் உண்டா?' என வினவினார்கள்.'நான் உள்ளேன்' என அபூ தல்ஹா(ரலி) கூறியவுடன் அவரை கப்ரில் இறங்குமாறு நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவரும் (நபியவர்களின் மகளுடைய) கப்ரில் இறங்கினார்.

ஹதீஸ் 1286, ஹதீஸ் 1287 ~ ஹதீஸ் 1288

அப்துல்லாஹ் இப்னு உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

மக்காவில் உஸ்மான்(ருலி) அவர்களின் மகள் இறந்தபோது நாங்கள் (ஜனாஸாவில்) கலந்து கொள்வதற்காக அங்கு சென்றோம். அங்கு இப்னு உமர்(ரலி) இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோர்

வந்திருந்தனர். நான் அவர்களிருவருக்கும் நடுவில் அல்லது ஒருவருக்கருகில் அமர்ந்தபோது மற்றொருவர் வந்து என்னருகில் அமர்ந்தார். அப்போது அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) உஸ்மான்(ரலி) உடைய மகன் அம்ர்(ரலி) அவர்களிடம்'நீ (சப்தமிட்டு) அழுவர்களைத் தடை செய்ய வேண்டாமா? ஏனெனில் நபி(ஸல்) அவர்கள்'குடும்பயீதனர் (சப்தமாக) அழுவதன் காரணமாக மய்யித்திற்கு வேதனை கொடுக்கப்படுகிறது' எனக் கூறினார்கள்" என்றார். உடனே இப்னு அப்பாஸ்(ரலி) உமர்(ரலி) இதே போன்ற சில ஹதீஸ்களைக் கூறிக் கொண்டிருந்தார். நான் உமர்(ரலி) அவர்களுடன் மக்காவிலிருந்து புறப்பட்டேன். நாங்கள் பைதா எனும் இடத்தை அடைந்தோம். அங்கு சமுரா என்னும் ஒரு(வகையான காட்டு) மரத்தின் நிழலில் ஒரு வாகனக் கூட்டம் நிற்பதைக் கண்டோம்.'நீ சென்று அவ்வாகனக் கூட்டம் யாதெனப் பார்த்துவா!"என உமர்(ரலி) என்னை அனுப்பினார். நான் அங்கு சென்று பார்த்தபோது அங்கே ஸுஹைப்(ரலி) இருந்தார். அதை உமர்(ரலி) கூறினார். நான் ஸுஹைப் இடம் சென்று,'அமீருல் மூமீனின் அவர்களைச் சந்திக்கப் புறப்படு' எனக் கூறினேன். பின்னர் சிறிது காலம் கழித்து உமர்(ரலி) அவர்களிடம் மரணக் காயமுற்றிருந்தபோது'சகோதரனே! நண்பனே!' எனக் கூறி அழுதவராக ஸுஹைப்(ரலி) (வீட்டினுள்) நுழைந்தார். அப்போது உமர்(ரலி)'ஸுஹைபே! எனக்காகவா நீர் அழுகிறீர்? குடும்பத்தினர் (சப்தமாக) அழுவதன் காரணமாக மய்யித் வேதனை செய்யப்படுகிறது என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்களல்லவா?' என்றார். உமர்(ரலி) இறந்தபோது (அவர்) இறப்பதற்கு முன் கூறிய செய்தியை ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறினேன். அதற்கு ஆயிஷா(ரலி),'அல்லாஹ் உமருக்குக் கிருபை செய்வானாக! அல்லாஹ்வின் மீது சத்தியமாக!'நபி(ஸல்) அவர்கள் குடும்பத்தினர் அழுவதன் காரணமாக மூமினை அல்லாஹ் வேதனை செய்வான்' எனக் கூறவில்லை: மாறாக'குடும்பத்தினர் சப்தமாக அழுவதன் காரணத்தினால் காஃபிருக்கு வேதனை அதிகமாக்கப்படும்" என்றே நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்" என்று கூறி,'ஓர் ஆத்மாவின் பாவச் சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது" (திருக்குர்ஆன் 6:164) என்ற குர்ஆனின் வசனமே உங்களுக்கு (சான்றுரைக்கப்) போதுமே" என்றும் கூறினார்கள்.

இதைக்கூறி முடித்த பொழுது'சிரிக்கச் செய்பவனும் அழவைப்பவனும் அவனே" (திருக்குர்ஆன் 53:43) என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

"அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இப்னு அப்பாஸ்(ரலி) உடைய இச்சொல்லைச் செவியுற்ற அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) இதைப் பற்றி எந்த ஆட்சேபணையும் செய்யவில்லை" என்று இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1289. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"இப்பெண் இறந்ததற்காக இவர்கள் அழுது கொண்டிருக்கிறார்கள் அவளோ கப்ரில் வேதனை செய்யப்படுகிறாள்" என்று ?தப் பெண்ணொருத்தி இறந்ததற்காக அவளுடைய குடும்பத்தார் அழுது கொண்டிருப்பதைப் பார்த்தபோதுதான் நபி(ஸல்) கூறினார்கள். (இறைநம்பிக்கையாளர்களின் விஷயத்தில் கூறவில்லை.)

ஹதீஸ் 1290. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) மரணக் காயமுற்றிருந்தபோது'சகோதரரே!' எனக் கூறியவராக ஸுஹைப்(ரலி) சப்தமிட்டு அழத் தொடங்கினார். அப்போது உமர்(ரலி)'உயிருடனிருப்பவர்கள் அழுவதன்

காரணமாக மய்யித் வேதனை செய்யப்படுகிறது என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை நீர் அறியவில்லையா?' எனக் கேட்டார்.

## இறந்தவர்களுக்காக ஒப்பாரி வைத்து அழுவது வெறுக்கத் தக்கது.

"அபூ ஸலைமானின் (காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களின் மரணத்திற்காக அழுது கொண்டிருக்கும் இப்பெண்களை இந்நிலையிலேயே (தடுக்காமல்)விட்டு விடுங்கள். அவர்கள் தம் தலையில் மண்ணை வாரிப் போட்டாலோ, சப்தமிட்டு அழுதாலோ அவர்களைத் தடுத்துவிடுங்கள்" என உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1291. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"என் மீது கூறும் பொய் (உங்களில்) ஒருவரின் மீது கூறும் பொய்யைப் போன்றதன்று. என் மீது வேண்டுமென்றே பொய்யுரைக்கிறவன் தன் இருப்பிடத்தை நரகத்தில் ஆக்கிக் கொள்ளட்டும் மேலும் ஒப்பாரி வைக்கப்படுவதன் காரணமாக மய்யித் வேதனை செய்யப்படுகிறது."

என முகீரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1292. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஒப்பாரி வைக்கப்படுவதால் கப்ரிலிருக்கும் மய்யித் வேதனை செய்யப்படுகிறது.'

என உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஷுஉபாவின் அறிவிப்பில், உயிருள்ளவர்கள் (ஒப்பாரிவைத்து) அழுவதன் காரணமாக மய்யித் வேதனை செய்யப்படுகிறது எனக் காணப்படுகிறது.

ஹதீஸ் 1293. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உஹதுப் போர் தினத்தன்று உறுப்புக்கள் சிதைக்கப்பட்ட நிலையில் என் தந்தையின் உடல் கொண்டு வரப்பட்டு நபி(ஸல்) அவர்களின் முன்னிலையில் வைக்கப்பட்டது. அவ்வுடல் மீது ஒரு துணி போர்த்தப்பட்டிருந்தது. அப்போது நான் சென்று அந்தத் துணியை நீக்கி (என் தந்தையை)ப் பார்க்க நாடினேன். எனினும் என் கூட்டத்தினர் என்னைத் தடுத்தனர். நான் மீண்டும் சென்று துணியை நீக்க முனைந்தேன். மீண்டும் என் கூட்டத்தினர் என்னைத் தடுத்துவிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (ஜனாஸாவை தூக்கும்படி) கட்டளையிட்டார்கள். (ஜனாஸா) தூக்கப்பட்டபோது ஒரு பெண் சப்தமாக அழுவதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், 'யார் அந்தப் பெண்?' என வினவினார்கள். அம்ர்டைய மகள் என்றோ அல்லது அம்ர்டைய சகோதரி என்றோ (கூடியிருந்தோர்) கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'நீ ஏன் அழுகிறாய்? நீ அழுதாலும் அழாவிட்டாலும் ஜனாஸா உயர்த்தப்படும்வரை வானவர்கள் தங்களின் இறக்கைகளை விரித்து நிழல் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்" என்றார்கள்.

## (துக்கத்தில்) ஆடையைக் கிழித்துக் கொள்பவன் நம்மைச் சார்ந்தவன் அல்லன்.

ஹதீஸ் 1294. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"(துன்பத்தில்) தன்னுடைய கன்னத்தில் அறைந்து கொள்பவனும் ஆடையைக் கிழித்துக கொள்பவனும் அறியாமைக் காலத்துச் சொற்களைப் பயன்படுத்துபவனும் நம்மைச் சார்ந்தவன் அல்லன்!"என அப்துல்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஸஅத் இப்னு கவ்லா(ரலி)வுக்கு நபி(ஸல்) அவர்கள் இரங்கல் தெரிவித்தது.

ஹதீஸ் 1295. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறுதி ஹஜ்ஜின்போது கடும் நோயினால் பாதிக்கப்பட்டிருந்த என்னை விசாரிக்க வரும் வழக்கமுடையவர்களாக நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள். அப்போது நான் அவர்களிடம்'நபி அவர்களே! நான் மரணத் தருவாயை அடைந்து விட்டேன். நான் செல்வந்தன் என்னுடைய ஒரு மகளைத் தவிர வேறு வாரிசுக்காரர்களில்லை: எனவே, என்னுடைய பொருளில் மூன்றில் இரண்டு பங்கை நான் தர்மம் செய்து விடட்டுமா?' எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'வேண்டாம்'' என்றார்கள். பின்னர் நான்'பாதியைக் கொடுக்கட்டுமா?' எனக் கேட்டேன். அதற்கும் நபி(ஸல்) அவர்கள்,'வேண்டாம் மூன்றில் ஒரு பங்கை வேண்டுமானால் தர்மம் செய்துவிடும். அதுவும் அதிகம்தான் ஏனெனில், உம்முடைய வாரிசுக்காரர்களை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாகவிட்டுச் செல்வதைவிட பிறரிடம் தேவையற்றவர்களாகவிட்டுச் செல்வதே சிறந்தது. இறை உவப்பையே நோக்கமாகக் கொண்டு நீர் செய்கிற எந்த ஒரு செலவானாலும் சரி. அதற்காக உமக்கு நன்மை கொடுக்கப்படும் நீர் உம் மனைவியின் வாயில் இடுகிற உணவுக் கவளத்திற்கும் கூட உமக்கு நண்மையுண்டு'' என்று கூறினார்கள்.

நான் அவர்களிடம்'நபி அவர்களே! (என்னுடைய தோழர்களெல்லாம் மதீனாவுக்குச் செல்வார்கள்) நான் மட்டும் இங்கு (மக்காவில்) பின் தங்கியவனாக ஆம்விடுவேனே!' எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நீர் இங்கு இருந்தபோதிலும் நல்லறங்கள் செய்து கொண்டே இருந்தால் உம்முடைய அந்தஸ்தும் மேன்மையும் அதிகரித்துக் கொண்டே இருக்கும்' எனக் கூறிவிட்டு,'உம்மை வைத்துச் சில கூட்டத்தினர் நன்மையடைவதற்காகவும் மற்ற சிலர் துன்பம் அடைவதற்காகவும் நீர் இங்கேயே தங்க வைக்கப்படலாம்'' என்று கூறிவிட்டு,'யாஅல்லாஹ்! என்னுடைய தோழர்களின் ஹிஜ்ரத்தைப் பூரணமாக்குவாயாக! அவர்களைத் தங்கள் கால் சுவடுகளின் வழியே (முந்திய இணைவைக்கும் மார்க்கத்திற்கே) திரும்பிச் செல்லும்படி செய்துவிடாதே!"எனப் பிரார்த்தித்தார்கள். நோயாளியிருந்த ஸஅத் இப்னு கவ்லா(ரலி) மக்காவிலேயே இறந்துவிட்டதற்காக'பாவம் ஸஃது இப்னு கவ்லா (அவர் நினைத்து நடக்கவில்லை)'' என்று நபி(ஸல்) அவர்கள் இரங்கல் தெரிவித்தார்கள்.

## துக்கத்தை அறிவிக்க மொட்டையடித்துக் கொள்வது தடுக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 1296. அபூ புர்தா இப்னு அபீ மூஸா அவர்கள் கூறினார்கள்.

(என் தந்தை) அபூ மூஸா தம் கடுமையான மரண வேதனையால் மயக்கமடைந்துவிட்டார். அவரின் தலை அவரின் மனைவியின் மடியில் இருந்தது. (தம் மனைவியின் எந்தப் பேச்சுக்கும்) அவரால் பதில் சொல்ல முடியவில்லை. பின்பு மயக்கம் தெளிந்தபோது,'நிச்சயமாக நபி(ஸல்) அவர்கள் (துன்பத்தின் போது) அதிகச் சப்தமிட்டு அழும் பெண்ணைவிட்டும் மொட்டையடித்துக் கொள்ளும் பெண்ணைவிட்டும் ஆடைகளைக் கிழித்துக் கொள்ளும் பெண்ணைவிட்டும் தம்மை விலக்கினார்கள். நபி(ஸல்) அவர்கள் தம்மைவிலக்கிக் கொண்டவரிடமிருந்து நானும் விலம்க்கொள்கிறேன்'' என்று கூறினார்.

## (துன்பத்தில் கன்னத்தில்) அறைந்து கொள்பவன் நம்மைச் சார்ந்தவனல்லன்.

ஹதீஸ் 1297. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

("துன்பத்தின் காரணமாகக்) கன்னத்தில் அறைந்து கொள்பவனும் ஆடையைக் கிழித்துக கொள்பவனும் அறியாமைக் காலத்துச் சொற்களைப் பயன்படுத்துபவனும் நம்மைச் சார்ந்தவன் அல்லன்' என அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## துன்ப நேரத்தில்'என்னுடைய கைசேதமே! என்பதும் அறியாமைக் காலத்துச் சொற்களைக் கூறுவதும் தடுக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 1298. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்"

("துன்பத்தின் போது) கன்னங்களில் அறைந்து கொள்பவனும் ஆடைகளைக் கிழித்துக் கொள்பவனும் அறியாமைக் காலத்துச் சொற்களைப் பயன்படுத்துபவனும் நம்மைச் சேர்ந்தவனல்லன்."

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## துன்பத்தின்போது கவலையான முகத்தோடு அமர்வது.

ஹதீஸ் 1299. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

(மூத்தா போரில்) இப்னு ஹாரிஸா (ரலி) ஜஅஃபர் (ரலி) இப்னு ரவாஹா (ரலி) ஆகியோர் கொல்லப்பட்ட செய்தி வந்தபோது நபி (ஸல்) அவர்கள் கவலையான முகத்தோடு அமர்ந்திருந்தார்கள். நான் கதவின் இடைவெளி வழியாக நபி (ஸல்) அவர்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ஜஅஃபர் (ரலி) வீட்டுப் பெண்கள் (ஒப்பாரி வைத்து) அழுவதாகக் கூறினார். நபி (ஸல்) அவர்கள் (அவ்வாறு அழுவதைத்) தடுக்கும்படி கட்டளையிட்டார்கள். அவர் சென்று மீண்டும் வந்து, 'அவர்கள் (என்னுடைய சொல்லிற்குக்) கட்டுப்படவில்லை" என்றார். உடனே நபி (ஸல்) அவர்கள்'(நீ சென்று) அவர்களைத் தடுத்து நிறுத்து' எனக் கட்டளையிட்டார்கள். மீண்டும் அவர் சென்று மூன்றாம் முறையாக வந்து'நபி அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எங்களை (அப்பெண்கள்) மிகைத்துவிட்டனர்" என்றார்.

"அப்பெண்களின் வாயில் மண்ணை அள்ளிப்போடுங்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என நான் நினைக்கிறேன். பின்னர் நான் அவரை நோக்கி, 'அல்லாஹ் உம்மை இழிவாக்குவானாக! நபி (ஸல்) அவர்கள் உமக்குக் கட்டளையிட்டதையும் உம்மால் செய்ய முடியவில்லை இன்னும் அவர்களைத் தொந்தரவு செய்வதையும் நீர் நிறுத்தவில்லை" எனக் கூறினேன்.

ஹதீஸ் 1300. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

குர்ஆனை (மனனம் செய்து) அதை முறைப்படி ஓதத் தெரிந்ததிருந்த (எழுபது) நபர்கள் கொல்லப்பட்டபோது நபி (ஸல்) அவர்கள் ஒரு மாதம் (தொடர்ந்து) குனூத் ஓதினார்கள். இந்தத் தருணத்தை விட வேறு எப்போதும் இவ்வளவு அதிகக் கவலை கொண்டவர்களாக அவர்களை நான் பார்த்ததில்லை.

## சோதனையின்போது கவலையை வெளிப்படுத்தாமலிருப்பது.

யாகூப் (அலை) அவர்கள்'என்னுடைய சஞ்சலத்தையும் கவலையையும் அல்லாஹ்விடமே முறையிடுகிறேன்" (திருக்குர்ஆன்: 12:86) என்றார்கள்.

ஹதீஸ் 1301. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ தல்ஹா(ரலி)வின் மகன் நோயுற்றிருந்தார். ஒரு நாள் அபுதல்ஹா(ரலி) வெளியே சென்றிருந்தபோது குழந்தை இறந்துவிட்டது. இதைக் கண்ட அபூ தல்ஹா(ரலி)வின் மனைவி உடனே கொஞ்சம் உணவைத் தயார் செய்தார். பிறகு மய்யித்தை வீட்டின் ஒரு மூலையில் வைத்தார். வெளியே சென்றிருந்த அபூ தல்ஹா(ரலி) வீடு திரும்பிய உடன் மகன் எவ்வாறுள்ளான்? எனக் கேட்டார் அதற்கு அவரின் மனைவி'அமைதியாகிவிட்டான் நிம்மதி (ஓய்வு) பெற்று விட்டிருப்பான் என்பதே என்னுடைய எதிர்பார்ப்பு" என பதிலளித்தார். அபூ தல்ஹா(ரலி) தம் மனைவி கூறியது உண்மைதான் என்றெண்ணி (நிம்மதியுடன்) தம் மனைவியோடு இரவைக் கழித்தார். பொழுது விடிந்து குளித்துவிட்டுத் (தொழுகைக்காக) வெளியே செல்ல நாடியபோது மகன் இறந்துவிட்டதை மனைவி கூறினார். அபூ தல்ஹா நபி(ஸல்) அவர்களோடு தொழுதுவிட்டுத் தம் வீட்டில் நடந்த சம்பவத்தை அவர்களிடம் கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'இந்த இரவு நடந்தவற்றில் அல்லாஹ் உங்கள் இருவருக்கும் அபிவிருத்தி செய்யக்கூடும்" என்றார்கள்.

சுஃப்யான் கூறுகிறார்.

அந்த இருவருக்கும் ஒன்பது குழந்தைகள் இருப்பதை பார்த்தேன். அவர்கள் அனைவரும் குர்ஆனை ஓதுபவர்களாக இருந்தனர் என மதீனாவைச் சேர்ந்த அன்சாரிகளில் ஒருவர் கூறினார்.

## பொறுமை என்பது துன்பம் ஏற்பட்டவுடன் (கைக் கொள்வதே)

இரண்டு பக்கச் சுமையும் அதன் நடுப்பகுதியில் எவ்வளவு அழகாக அமைந்துள்ளன. அதாவது பகரா அத்தியாயத்தில்,'அவர்களுக்குத் துன்பம் ஏற்படும்போது, நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள் நிச்சயமாக நாம் அவனிடமே திரும்பிச் செல்வோம் என்று கூறுவார்கள்" (என்ற ஒரு பக்கமும்)'இத்தகையோரின் மீதே அவனுடைய நல்லாசியும் நற்கிருபையும் உண்டாகின்றன" (என்ற நடுப்பகுதியும்)'இன்னும் இவர்கள் தாம் நேர்வழியை அடைந்தவர்கள்" (என்ற மறுபக்கம் கொண்ட வசனமும்) (திருக்குர்ஆன் 02:156-158) (எவ்வளவு அழகாக அமைந்துள்ளன) என உமர்(ரலி) கூறினார்.

மேலும் அல்லாஹ் கூறினான்:

"பொறுமையுடனும் தொழுகையுடனும் இறைவனிடம் உதவி தேடுங்கள். இது இறைவனை அஞ்சுபவர்களைத் தவிர மற்றவர்களுக்கு மிகப் பெரிய விஷயமாகும்" (திருக்குர்ஆன் 02:45)

ஹதீஸ் 1302. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"பொறுமை என்பது துன்பம் ஏற்பட்ட உடன் (கைக் கொள்வதே)"

என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் (தம் மகன் இப்ராஹீம் இறந்தபோது),'உன்னுடைய (பிரிவின்) காரணமாக நாங்கள் கவலைப்படுகிறோம்' எனக் கூறியது.

“கண்கள் அழுகின்றன: உள்ளம் வாடுகிறது’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1302. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (அவர்களின் மகன் இப்ராஹீம் வளர்ந்து வந்த) அபூ ஸைஃப் என்ற கொல்லரின் வீட்டிற்குச் சென்றோம். அவர் இப்ராஹீமின் பால்குடித் தாயாருடைய கணவராவார். நபி(ஸல்) அவர்கள் இப்ராஹீமைத் தூக்கி முகர்ந்து முத்தமிட்டார்கள். மற்றொரு முறை நாங்கள் வீட்டினுள் நுழைந்தோம். அப்போது இப்ராஹீமின் உயிர் பிரிந்து கொண்டிருந்தது. நபி(ஸல்) அவர்களின் கண்கள் நீரைப் பொழியலாயின. இதைக்கண்ட அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி)’நபி அவர்களே! தாங்களா (அழுகிறீர்கள்)?’ எனக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘அவ்ஃபின் மகனே! நிச்சயமாக இது கருணையாகும்“ என்று கூறிவிட்டு மேலும் தொடர்ந்து அழுதார்கள். பிறகு,‘கண்கள் நீரைச் சொரிகின்றன் உள்ளம் வாடிக் கொண்டிருக்கிறது் எனினும், இறைவன் விரும்பாத எந்த வார்த்தையையும் நாங்கள் கூற மாட்டோம். இப்ராஹீமே! நிச்சயமாக நாங்கள் உன்னுடைய பிரிவால் அதிகக்கவலைப்படுகிறோம்“ என்றார்கள்.

## நோயாளியின் அருகில் அழுவது.

ஹதீஸ் 1304. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஸஅத் இப்னு உபாதா(ரலி) நோயுற்றபோது நபி(ஸல்) அவர்கள், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி), அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) ஆகியோரோடு நோய் விசாரிக்கச் சென்றார்கள். வீட்டில் நுழைந்தபோது (ஸஅத் இப்னு உபாதாவின்) குடும்பத்தினர் அவரைச் சூழ்ந்திருப்பதைக் கண்டதும்,‘என்ன? இறந்துவிட்டாரா?’ எனக் கேட்டார்கள்.’இல்லை நபி அவர்களே!’ என்றனர். நபி(ஸல்) அவர்கள் அழலானார்கள். அவர்களின் அழுகையைக் கண்ட மக்களும் அழத் தொடங்கினர். பின் நபி(ஸல்) அவர்கள்,‘(மக்களே!) நீங்கள் (செவி சாய்த்துக்) கேட்க மாட்டீர்களா? நிச்சயமாகக் கண்கள் அழுவதாலும் உள்ளம் கவலை கொள்வதாலும் அல்லாஹ் தண்டிப்பதில்லை - பின்பு, தம் நாவின் பால் சைகை செய்து எனினும் இதன் காரணமாகத்தான் தண்டனையோ அருளோ வழங்குகிறான். நிச்சயமாகக் குடும்பத்தினர் (ஒப்பாரி வைத்து) அழுவதால் மய்யித் வேதனை செய்யப்படுகிறது“ என்று கூறினார்கள்.

ஒப்பாரி வைப்பவர்களை உமர்(ரலி) கண்டால் கம்பினால் அடிப்பார் கல்லெறிவார். இன்னும் மண்வாரி வீசவும் செய்வார்.

## ஒப்பாரி வைப்பது, (சப்தமிட்டு) அழுவது ஆகியவற்றைத் தடுப்பதும் அதைக் கண்டிப்பதும்.

ஹதீஸ் 1305. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(மூத்தா போரில்) ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி), ஜஅஃபர் இப்னு அபூ தாலிப்(ரலி) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) ஆகியோர் கொல்லப்பட்ட செய்தி வந்தபோது நபி(ஸல்) அவர்கள் கவலை கொண்ட முகத்தோடு அமர்ந்திருந்தார்கள். நான் கதவின் இடைவெளி வழியாக நபி(ஸல்) அவர்களிடம் வந்து,‘நபி அவர்களே! ஜஅஃபர்(ரலி) வீட்டுப் பெண்கள் (ஒப்பாரிவைத்து)

அழுகிறார்கள்‘‘ என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள் (அவ்வாறு அழுவதைத்) தடுக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டார்கள். அவர் சென்று திரும்பி வந்து.’நான் தடுத்தேன். அவர்கள் என்னுடைய சொல்லிற்குக் கட்டுப்படவில்லை‘‘ என்றார். உடனே நபி(ஸல்) அவர்கள்’(நீ சென்று) அவர்களைத் தடுத்து நிறுத்து‘‘ என இரண்டாவது முறையாகக் கட்டளையிட்டார்கள். மீண்டும் அவர் சென்று வந்து’நபி அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னை (அப்பெண்கள்) மிஞ்சிவிட்டனர்‘‘ என்றார். ’அப்பெண்களின் வாயில் மண்ணை அள்ளிப் போடுங்கள்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என நான் நினைக்கிறேன். பின்னர் அவரை நோக்கி அல்லாஹ் உம்மை இழிவாக்குவானாக! நபி(ஸல்) அவர்கள் உமக்குக் கட்டளையிட்டதையும் உம்மால் செய்ய முடியவில்லை: இன்னும் அவர்களைத் தொந்தரவு செய்வதையும் நிறுத்தவில்லை எனக் கூறினேன்.

ஹதீஸ் 1306. உம்முஅதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒப்பாரி வைக்கக் கூடாது என்று நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் உறுதிமொழி வாங்கினார்கள். எனினும் இந்த ஒப்பந்ததை எங்களில் ஐந்து பெண்களைத் தவிர வேறு யாரும் நிறைவேற்றவில்லை. அப்பெண்கள் உம்மு ஸுலைம்(ரலி) உம்முல் அலா(ரலி), முஆத்(ரலி) அவர்களின் மனைவியான அபூ சப்ராவின் மகள் இன்னும் இரண்டு பெண்கள் அல்லது அபூ ஸப்ராவின் மகள் முஆத்(ரலி) உடைய மனைவி. இன்னும் ஒரு பெண், (இதை அறிவிப்பாளர்களில் ஒருவர் சந்தேகமாகக் கூறுகிறார்.)

## ஜனாஸாவிற்காக எழுந்து நிற்பது.

ஹதீஸ் 1307. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஜனாஸாவைக் கண்டால் அது உங்களைக் கடந்து செல்லும் வரை எழுந்து நில்லுங்கள்.

ஹுமைதின் அறிவிப்பில்’உங்களைக் கடக்கும்வரை‘‘ அல்லது (பூமியில்) வைக்கப்படும வரை (நில்லுங்கள்)‘‘ என்பது அதிகமாக உள்ளது.

## ஜனாஸாவுக்காக எழுந்தவர் அமர்வது எப்போது?

ஹதீஸ் 1308. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உங்களிலொருவர் ஜனாஸாவைக் கண்டும் அதனுடன் நடந்து செல்லப் போவதில்லை என்றால் அவர் அதைக் கடந்து செல்லும் வரை அல்லது அது அவரைக் கடந்து செல்லும் வரை அல்லது அது அவருக்கு முன்னால் (பூமியில்) வைக்கப்படும் வரை எழுந்து நிற்கட்டும்.“

என ஆமிர் இப்னு ரபீஆ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1309. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“நீங்கள் ஜனாஸாவைக் கண்டால் எழுந்து நில்லுங்கள் அதைப் பின்தொடர்ந்து செல்பவர் (அது பூமியில்) வைக்கப்படும் வரை உட்கார வேண்டாம்“

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்பவர் ஜனாஸா, சுமந்து செல்பவரின் தோளிலிருந்து (பூமியில்) வைக்கப்படும் வரை உட்காரக் கூடாது. அதற்குமுன் உட்கார்ந்துவிட்டால் நிற்கும்படி கட்டளையிட வேண்டும்.

ஹதீஸ் 1310. கைஸான் அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் ஒரு ஜனாஸாவில் பங்கேற்றோம். அப்போது அபூ ஹுரைரா(ரலி) மர்வானுடைய கையைப் பிடித்தார். ஜனாஸா (தரையில்) வைக்கப்படுவதற்கு முன் இருவரும் அமர்ந்துவிட்டார்கள். அங்கு வந்திருந்த அபூ ஸயீத்(ரலி) மர்வானின் கையைப் பிடித்து'எழுந்திரு! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி(ஸல்) அவர்கள் (உட்காருவதைத்) தடுத்துள்ளார்கள் என்பதை இம்மனிதர் (அபூ ஹுரைரா) நன்கு அறிந்திருந்தும் இவ்வாறு செய்தி)ருக்கிறார்' எனக் கூறினார். உடனே'அபூ ஸயீத்(ரலி) உண்மையுரைத்தார்'' என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

## ?தரின் ஜனாஸாவுக்காக எழுந்து நிற்பது.

ஹதீஸ் 1311. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு ஜனாஸா எங்களைக் கடந்து சென்றது. உடனே நபி(ஸல்) அவர்கள் எழுந்து நின்றார்கள். நாங்களும் எழுந்து நின்றோம். பின்பு நாங்கள்'நபி அவர்களே! இது ஒரு ?தனின் ஜனாஸா'' என்றோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'ஜனாஸாவைக் கண்டால் எழுந்து நில்லுங்கள்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1312. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா அவர்கள் கூறினார்கள்.

ஸஹ்ல் இப்னு ஹுனை.:பு(ரலி), கைஸ் இப்னு ஸஅத்(ரலி) ஆகியோர் காதிஸியாவில் ஓரிடத்தில் அமர்ந்திருந்தபோது ஒரு ஜனாஸா அவர்களைக் கடந்து சென்றது. உடனே அவர்கள் இருவரும் எழுந்தார்கள். அப்போது அவர்களிடம்'இது இந்நாட்டில் அபயம் பெற்ற (காபிரின்) ஜனாஸாவல்லவா?' எனக்கேட்கப்பட்டது. அதற்கு அவ்விருவரும்,'நபி(ஸல்) அவர்களைக் கடந்து ஒரு ஜனாஸா சென்றபோது எழுந்து நின்றார்கள் அப்போது அவர்களிடம் அது ?தரின் ஜனாஸா எனக் கூறப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'இவர் மனிதரில்லையா?' எனப் பதிலளித்தார்கள் என்றார்கள்.

ஹதீஸ் 1313. இப்னு அபீ லைலா அவர்கள் கூறினார்கள்.

நான் கைஸ்(ரலி) உடனும் ஸஹ்ல்(ரலி) உடனும் இருந்தேன். அவர்கள் கூறினார்கள்.'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். (அப்போது இது போன்ற சம்பவம் நிகழ்ந்தது என்று கூறும் மற்றோர் அறிவிப்பும் வந்துள்ளது.

அபூ மஸ்வூத்(ரலி)யும் கைஸ்(ரலி)யும் ஜனாஸாவிற்காக எழுந்து நின்றார்கள் என்றும் இப்னு அபீ லைலா அவர்கள் கூறினார்கள்.

## ஜனாஸாவைச் சுமந்து செல்வது பெண்களுக்கில்லை ஆண்களுக்கு மட்டுமே.

ஹதீஸ் 1314. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஜனாஸா (பெட்டியில்) வைக்கப்பட்டு அதை ஆண்கள் தங்கள் தோள்களில் தூக்கிச் செல்லும்போது, அந்த ஜனாஸா நல்லறங்கள் புரிந்தாக இருக்குமானால், என்னை விரைந்து செல்லுங்கள் என்று கூறும். அது நல்லறங்கள் புரியததாக இருக்குமானால், கைசேதமே! என்னை எங்கே கொண்டு செல்கிறீர்கள் என்று கூறும். இவ்வாறு கூறும் சப்தத்தை மனிதனைத் தவிர அனைத்தும் செவியுறும் மனிதன் அதைச் செவியுற்றால் மயங்கி விழுந்து விடுவான்.“

என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஜனாஸாவை(ச் சுமந்து செல்வதை) விரைவுபடுத்தல்.

'நீங்கள் ஜனாஸாவைக் கொண்டு செல்வதாயிருந்தால் அதன் முன்புறம், பின்புறம், வலப்புறம், இடப்புறம் என எல்லாப் பக்கமும் நடந்து செல்லுங்கள்' என அனஸ்(ரலி) கூறினார். அத்துடன் ஜனாஸாவுக்குச் சமீபமாகவும் நடக்க வேண்டும் என்று மற்றவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 1315. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஜனாஸாவைச் (சுமந்து செல்லும் போது) விரைந்து செல்லுங்கள். அது (மய்யித்) நல்லறங்கள் புரிந்ததாயிருந்தால் அந்த நன்மையின் பால் விரைந்து செல்கிறீர்கள் அவ்வாறில்லாவிட்டால் ஒரு தீங்கை (விரைவில்) உங்களின் தோள்களிலிருந்து இறக்கி வைக்கிறீர்கள்."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## சுமந்து செல்லப்படும்போதே என்னை விரைந்து செல்லுங்கள் என்று (நல்ல) மய்யித் கூறுவது.

ஹதீஸ் 1316. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஜனாஸா (பெட்டியில்) வைக்கப்பட்டு அதை ஆண்கள் தங்கள் தோள்களில் தூக்கிச் செல்லும்போது, அந்த ஜனாஸா நல்லறங்கள் புரிந்ததாக இருக்குமானால், என்னை விரைந்து செல்லுங்கள் என்று கூறும். அது நல்லறங்கள் புரியாததாக இருக்குமானால், கைசேதமே! என்னை எங்கே கொண்டு செல்கிறீர்கள் என்று கூறும். இவ்வாறே கூறப்படும் சப்தத்தை மனிதனைத் தவிர அனைத்தும் செவியுறும். மனிதன் அதைச் செவியுற்றால் மயங்கி விழுந்து விடுவான்."

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஜனாஸாத் தொழும்போது இமாமுக்குப் பின் மக்கள் இரண்டு மூன்று அணிகளாக நிற்பது.

ஹதீஸ் 1317. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நஜ்ஜாஷி (மன்னரு)க்கு ஜனாஸாத் தொழுகை நடத்தினார்கள். அப்போது நான் இரண்டாவது அல்லது மூன்றாவது அணியில் நின்றிருந்தேன்.

## ஜனாஸாத் தொழும்போது அணிவகுத்தல்.

ஹதீஸ் 1318. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நஜ்ஜாஷியின் மரணச் செய்தியைத் தம் தோழர்களுக்கு அறிவித்துவிட்டு, பிறகு சற்று முன்னால் நகர்ந்தார்கள். மக்கள் அவர்களுக்குப் பின்னால் அணிவகுத்து நின்றதும் (நபி(ஸல்) அவர்கள் நான்கு தக்பீர்கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தினார்கள்.)

ஹதீஸ் 1319. ஷைபானீ அவர்கள் கூறினார்கள்.

'நபி(ஸல்) அவர்கள் தனித்திருந்த ஒரு கப்rின் பக்கம் வந்து தோழர்களை அணிவகுக்கச் செய்து நான்கு தக்பீர்கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள் என்று நபி(ஸல்) அவர்களை நேரில் பார்த்த ஒருவர் என்னிடம் கூறினார்' என ஷஅபீ கூறினார். நான் அம்ரின்

தந்தை (ஷஅபி)யே! உமக்குக் கூறிய அவர் யார்? எனக் கேட்பதும்'இப்னு அப்பாஸ்(ரலி) தாம்' என்று பதில் கூறினார்.

ஹதீஸ் 1320. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"இன்றைய தினம் அபசீயாவைச் சேர்ந்த ஒரு நல்ல மனிதர் மரணித்துவீட்டார். எனவே வாருங்கள் அவருக்காக ஜனாஸாத் தொழுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நாங்கள் அணிவகுத்து நின்றதும் நபி(ஸல்) அவர்கள் (ஜனாஸாத்) தொழுகை நடத்தினார்கள். அப்போது நான் இரண்டாவது அணியில் நின்றிருந்தேன்.

## ஜனாஸாத் தொழும்போது பெரியவர்களுடன் சிறுவர்களும் அணிவகுத்தல்.

ஹதீஸ் 1321. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இரவில் அடக்கம் செய்யப்பட்டவரின் கப்ரைக் கடந்து சென்ற நபி(ஸல்) அவர்கள்,'இது அடக்கம் செய்யப்பட்டது எப்போது?' எனக் கேட்டார்கள். தோழர்கள்'நேற்றிரவு தான்' என்றதும்.'எனக்கும் சொல்லியனுப்பியிருக்கக் கூடாதா' எனக் கேட்டார்கள். அதற்கு அம்மக்கள்,'அதை நாங்கள் இருள் சூழ்ந்த இரவில் அடக்கினோம். எனவேதான், உங்களை விழிக்கச் செய்ய விரும்பவில்லை' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள் தொழத் தயாராக எழுந்து நின்றார்கள். நான் உட்பட அனைவரும் அவர்களுக்குப் பின்னால் அணிவகுத்ததும் அவர்கள் ஜனாஸாத் தொழுதார்கள்.

## ஜனாஸாத் தொழுகை மார்க்கமாக்கப்படுதல்.

"ஜனாஸாத் தொழுதவர்கள்... என்றும்"'உங்கள் தோழருக்கு நீங்கள் ஜனாஸாத் தொழுங்கள்" என்றும்'நஜ்ஜாஷிக்கு நீங்கள் தொழுகை நடத்துங்கள்" என்றும் (நபி(ஸல்) அவர்கள் கூறியதன் மூலம் அதைத் தொழுகை என்றே கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் இதனைத் தொழுகை என்று கூறினாலும்) இதில் ருகூவோ ஸுஜுதோ கிடையாது பேசுவதும் கூடாது. ஆனால், தக்பீர் கூறுவதும் ஸலாம் கொடுப்பதும் உண்டு.

இப்னு உமர்(ரலி) தூய்மையின்றி ஜனாஸாத் தொழுவதில்லை. மேலும் அவர் சூரியன் உதிக்கும் போதும் அஸ்தமிக்கும் போதும் (ஜனாஸாத்) தொழுவதில்லை (தக்பீரின் போது) கைகளை உயர்த்துபவராக இருந்தார்.

நான் மக்களை (பல ஸஹாபாக்கள் மற்றும் தாபியீன்களைப்) பார்த்திருக்கிறேன். அவர்கள், கடமையான தொழுகையில் இமாமத் செய்வதற்குத் தகுதியானவதையே ஜனாஸாத் தொழுகைக்கும் இமாமத் செய்யத் தகுதியானவராகக் கருதுகிறார்கள். மேலும் பெருநாள் மற்றும் ஜனாஸாத் தொழுகைகளில் யாருக்கேனும் உளூ முறிந்துவிட்டால் அவர் தண்ணீரைத் தேடி (உளூச் செய்து)க் கொள்ள வேண்டும்: தயம்மும் செய்யலாகாது. மக்கள் ஜனாஸாத் தொழுது கொண்டிருக்கும்போது (இடையில்) ஒருவர் அங்கு வந்தால் தக்பீர் கூறி அவரும் ஜமாஅத்தில் இணைந்துவிடவேண்டியதுதான் என்றும் அவர்கள் கருதுகிறார்கள் என ஹஸன் (பஸரீ) கூறுகிறார்.

இரவானாலும் பகலானாலும் பயணத்திலிருந்தாலும் ஊரிலிருந்தாலும் ஜனாஸத் தொழுகையில் நான்கு தக்பீர்கள் சொல்லப்பட வேண்டும் என இப்னுல் முஸய்யப் கூறுகிறார்.

முதல் தக்பீர் (ஜனாஸாத்) தொழுகையை ஆரம்பிப்பதற்குரியதாகும். ஜனாஸாத் தொழுகையில் அணிவகுப்பும் இமாமும் உண்டு. மேலும்'(நபியே!) அ(ந்நய)வ(ஞ்சக)ர்களில் யாரும் இறந்தால்

அவர்களுக்காக நீர் ஒருபோதும் (ஜனாஸாத்) தொழ வேண்டாம்'' என அல்லாஹ் கூறியுள்ளான் (இந்த வசனமே ஜனாஸாத் தொழுகை மார்க்கத்தில் உள்ளது என்பதற்கான ஆதாரமாகும்) என அனஸ் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 1322. ஷைபானி அவர்கள் கூறினார்கள்.

"தனித்திருந்த கப்ரைக் கடந்து சென்ற நபி (ஸல்) அவர்கள் அதில் எங்களுக்கு இமாமாக நின்று (ஜனாஸாத்) தொழுகை நடத்தினார்கள். நாங்களும் அவர்களுக்குப் பின்னால் அணிவகுத்துத் தொழுதோம் என்று நபி (ஸல்) அவர்களுடன் சென்ற ஒருவர் எனக்கு அறிவித்தார்'' என ஷஅபீ கூறினார். நாங்கள்'அம்ரின் தந்தை (யாகிய ஷஅபீ )யே! உங்களுக்கு அதை அறிவித்தவர் யார்?' எனக் கேட்டதும்'இப்னு அப்பாஸ் (ரலி) தாம்'' என்றார் அவர்.

## ஜனாஸாவைப் பின்தொடர்தலின் சிறப்பு.

நீ (ஜனாஸாத்) தொழுதுவிட்டால் உன் மீதுள்ள கடமையை நீ நிறைவேற்றியவனாவாய் என ஸைத் இப்னு ஸாபித் (ரலி) கூறினார்.

ஜனாஸாத் தொழுததும் (அடக்கும் முன் திரும்புவதற்காக மய்யித்தின் உறவினர்களிடம்) அனுமதி பெற வேண்டும். என்று நாம் அறிந்ததில்லை. ஆனாலும், ஜனாஸாத் தொழுதுவிட்டு (அடக்கப் பணியில் ஈடுபடாமல்) திரும்பி விடுகிறவருககு ஒரு கீராத் நன்மை மட்டுமே உண்டு என்று ஹுமைத் இப்னு ஹிலால் கூறுகிறார்.

ஹதீஸ் 1323 ~ ஹதீஸ் 1324 நா.:பிஉ அவர்கள் கூறினார்கள்.

ஜனாஸாவைப் பின்தொடர்கிறவருக்கு ஒரு கிராத் நன்மையுண்டு என அபூ ஹுரைரா (ரலி) கூறினார் என இப்னு உமர் (ரலி) அவர்களிடம் கூறப்பட்டதும்'அபூ ஹுரைரா (ரலி) மிகைப்படுத்துகிறார்' என்றார்.

ஆயிஷார (ரலி) அபூ ஹுரைரா (ரலி)வின் கூற்றை உண்மைப்படுத்தியதுடன்,'நானும் நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு கூறக் கேட்டிருக்கிறேன்' என்றும் கூறினார். இதை-க கேட்ட இப்னு உமர் (ரலி)'அப்படியாயின் நாம் அதிகமான கீராத்களைப் பாழ்படுத்தி விட்டோமே' என்றார்.

## அடக்கம் செய்யப்படும் வரை காத்திருத்தல்.

ஹதீஸ் 1325. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஜனாஸாத் தொழுகையில் பங்கேற்கிறவருக்கு ஒரு கீராத் நன்மையுண்டு: அடக்கம் செய்யப்படும் வரை கலந்து கொள்கிறவருக்கு இரண்டு கீராத்கள் நன்மை உண்டு' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது'இரண்டு கீராத்கள் என்றால் என்ன?' என வினவப்பட்டது. அதற்கவர்கள்,'இரண்டு பெரிய மலைகளைப் போன்ற அளவு (நன்மை)'' என்றார்கள்.

## ஜனாஸாத் தொழுகையில் பெரியவர்களுடன் சிறுவர்களும் பங்கேற்றல்.

ஹதீஸ் 1326. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு கப்ருக்கருகில் வந்தார்கள். அப்போது இ(ந்த)மய்யித்)து நேற்றிரவுதான் அடக்கம் செய்யப்பட்டது என்று தோழர்கள் கூறினார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் (ஜனாஸாத்) தொழுதார்கள். நாங்கள் அவர்களுக்குப் பின்னால் அணியாக நின்று (தொழுதோம். )

## ஜனாஸாத் தொழுகை மஸ்ஜிதிலும் (பெருநாள் தொழுகை தொழும்) முஸல்லா எனும் திடலிலும் தொழுதல்.

ஹதீஸ் 1327. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

(அபிசீனிய மன்னர்) நஜ்ஜாஷி இறந்த அன்று அவரின் மரணச் செய்தியை அறிவித்த நபி(ஸல்) அவர்கள், 'உங்கள் சகோதரருக்காக நீங்கள் பாவமன்னிப்பு தேடுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1328. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்களை முஸல்லா எனும் திடலில் அணிவகுக்கச் செய்து (நஜாஷி மன்னருக்காக) நான்கு தக்பீர்கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள்.

ஹதீஸ் 1329. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

தம் சமூகத்தில் விபச்சாரம் செய்த ஆண் பெண் இருவரை யூதர்கள் நபி(ஸல்) அவர்களிடம் அழைத்து வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டபடி அவ்விருவரும் பள்ளிவாசலில் ஜனாசாத் தொழுகை தொழுமிடத்திற்கருகில் கொண்டு செல்லப்பட்டுக் கல்லெறிந்து கொல்லப்பட்டார்கள்.

## கப்ருகளின் மீது பள்ளிவாயில் கட்டுவது விரும்பத்தக்கதன்று.

ஹஸன் இப்னு ஹஸன் மரணமானதும் அவரின் மனைவி அவரின் கப்ரின் மீது கூடாரமடித்து அதில் ஒரு வருட காலமாகத் தங்கியிருந்தார். பின்பு அது அகற்றப்பட்டது. அப்போது ஒருவர்'(இவ்வாறு செய்வதன் மூலமாக) இழந்துவிட்டதை அவர்கள் பெற்றனரோ?' எனச் சப்தமாகக் கேட்டதற்கு இன்னொருவர்'இல்லை! மாறக நம்பிக்கையிழந்துவிட்டதால் திரும்பிவிட்டனர்' எனப் பதில் கூறினார்.

ஹதீஸ் 1330. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தாம் மரணிப்பதற்கு முன்னால் நோயுற்றிருந்தபோது, '?தர்களையும் கிறித்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக! அவர்கள் தங்களின் நபிமார்களின் மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கிவிட்டனர்'' என்று கூறினார்கள்.

இந்தப் பயம் மட்டும் இல்லையாயின் நபி(ஸல்) அவர்களின் கப்ரைத் திறந்த வெளியில் நபித் தோழர்கள் வைத்திருப்பார்கள். எனினும் அதுவும் வணக்கஸ்தலமாக ஆக்கப்பட்டுவிடுமோ என நான் அஞ்சுகிறேன்.

## பிரசவத் தொடக்கின்போது இறந்துவிட்ட பெண்ணுக்கு ஜனாஸாத் தொழல்.

ஹதீஸ் 1331. ஸமுரா இப்னு ஜுன்துப் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

பிரசவத் தொடக்குடனேயே இறந்துவிட்ட பெண்ணிற்கு நபி(ஸல்) அவர்கள் ஜனாஸாத் தொழுதபோது மையித்தின் நடுப்பகுதிக்கு நேராக நின்றார்கள். அப்போது நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் தொழுதேன்.

## ஜனாஸாத் தொழும்போது இமாம் ஆண், பெண் மய்யித்தின் எந்தப் பகுதிக்கு நேராக நிற்க வேண்டும்?

ஹதீஸ் 1332. ஸமுரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் நின்று பிரசவத் தொடக்கில் இறந்த பெண்ணிற்கு ஜனாஸாத் தொழுகை தொழுதிருக்கிறேன். அப்போது அவர்கள் மய்யித்தின் நடுப்பகுதிக்கு நேராக நின்றிருந்தார்கள்.

## ஜனாஸாத் தொழுகையில் நான்கு தக்பீர்கள்.

அனஸ்(ரலி) ஜனாஸாத் தொழுகை நடத்தும்போது மூன்று தக்பீர்கள் கூறிவிட்டுப் பிறகு (மறதியாக) ஸலாம் கூறிவிட்டார். அவருக்கு இது உணர்த்தப்பட்டதும் உடனே கிப்லாவை முன்னோக்கி, நான்காவது தக்பீரும் கூறிவிட்டுப் பின்பு ஸலாம் கூறினார் என ஹுமைத் கூறுகிறார்.

ஹதீஸ் 1333. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நஜ்ஜாஷி மரணித்ததும் அன்றே அச்செய்தியை நபி(ஸல்) அவர்கள் மக்களுக்கு அறிவித்துவிட்டு முஸல்லா எனும் திடலில் அனைவரையும் ஒன்று கூட்டி அணிவகுக்கச் செய்து, நான்கு தக்பீர் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள்.

ஹதீஸ் 1334. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அஸ்ஹமா என்னும் நஜ்ஜாஷீ (மன்னரு)க்கு நான்கு தக்பீர்கள் கூறி (ஜனாஸாத் தொழுகை நடத்தி)னார்கள்.

## ஜனாஸாத் தொழுகையில் ஃபாத்திஹா சூரா ஓதுதல்.

குழந்தைக்கு ஜனாஸாத் தொழும்போது அதில் ஃபாத்திஹா சூரா ஓதுவதுடன்,'இறைவா இக்குழந்தையை (நன்மைக்கான) சேமிப்பாகவும் முன் வைப்பாகவும் கூலியாகவும் ஆக்குவாயாக!' என்றும் கூற வேண்டும் என்று ஹஸன் (பஸரீ) கூறுகிறார்.

ஹதீஸ் 1335. தல்ஹா அவர்கள் கூறினார்கள்.

நான் இப்னு அப்பாஸ்(ரலி) பின்னால் நின்று ஜனாஸாத் தொழுதேன். அப்போது அவர் ஃபாத்திஹா அத்தியாயத்தை (சப்தமாக) ஓதினார். பிறகு'நீங்கள் இதை நபிவழி என அறிந்து கொள்வதற்காகவே (சப்தமிட்டு ஓதினேன்)' என்றார்.

## மய்யித் அடக்கம் செய்யப்பட்ட பின் கப்ருக்கு அருகில் ஜனாஸாத் தொழுதல்.

ஹதீஸ் 1336. ஷைபானீ அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் தனித்திருந்த ஒரு கப்ரின் பக்கம் வந்து தோழர்களுக்கு இமாமாக நின்று ஜனாஸாத் தொழுகை நடத்தினார்கள்: (தோழர்கள்) அவர்களுக்குப் பின்னால் நின்று தொழுதார்கள் என்ற நபி(ஸல்) அவர்களுடனிருந்த ஒருவர் எனக்குக் கூறினார்" என ஷஅபீ குறிப்பிட்டார். அப்போது நான்'அம்ரின் தந்தை (யான ஷஅபீ )யே! உமக்கு இதை அறிவித்தவர் யார்?' எனக் கேட்டேன். அதற்கவர்'இப்னு அப்பாஸ்(ரலி) தாம்" என்றார்.

ஹதீஸ் 1337. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பள்ளிவாசலைப் பெருக்குபவராக இருந்த கரு நிறமுடைய ஓர் ஆணோ பெண்ணோ இறந்துவிட்டார். அவர் இறந்துவிட்ட செய்தி நபி(ஸல்) அவர்களுக்குத் தெரியாமலிருந்தது. ஒரு நாள் திடீரென்று அவர் பற்றி நினைவு வந்ததும் நபி(ஸல்) அவர்கள்,'அவர் என்ன ஆனார்?' எனக் கேட்டார்கள். அதற்கு (தோழர்கள்)'நபி அவர்களே! அவர்

மரணித்துவிட்டார்!”என்றதும்’எனக்குத் தெரிவித்திருக்கக் கூடாதா?’ எனக் கேட்டனர். தோழர்கள், அவரைப் பற்றி அந்தஸ்துக் குறைவாகக் கருதி,‘அவர் இன்னின்னவாறெல்லாம் இருந்தார்’ எனக் கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்’அவரின் கப்ரை எனக்குக் காட்டுங்கள்‘‘ என்று கூறி, கப்ருக்குக் வந்து (ஜனாஸாத்) தொழுதார்கள்.

## உயிருள்ளோரின் செருப்போசையை மய்யித் செவியுறல்.

ஹதீஸ் 1338. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஓர் அடியானது உடலைக் கப்ரில் அடக்கம் செய்துவிட்டு, அவனுடைய தோழர்கள் திரும்பும்போது அவர்களின் செருப்பின் ஓசையை மய்யித் செவியேற்கும். அதற்குள் இரண்டு வானவர்கள் அவனிடம் வந்து அவனை எழுப்பி உட்கார வைத்து முஹம்மத் எனும் இந்த மனிதரைப் - பற்றி நீ என்ன கருதிக் கொண்டிருந்தாய்?’ எனக் கேட்பர். அதற்கவன்’இவர் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார் என நான் சாட்சி கூறுகிறேன்’ என்பான். பிறகு’(நீ கெட்டவனாக இருந்திருந்தால் நரகத்தில் உனக்கு கிடைக்கவிருந்த) தங்குமிடத்தைப் பார்! (நீ நல்லவனாக இருப்பதால்) அல்லாஹ் இதற்குப் பதிலாக உனக்குச் சொர்க்கத்தில் தங்குமிடத்தை ஏற்படுத்தியுள்ளான்’ என்று அவனிடம் கூறப்பட்டதும் அவன் அவ்விரண்டையும் ஒரே நேரத்தில் காண்பான். நிராகரிப்பவனாகவோ நயவஞ்சகனாகவோ இருந்தால் கேள்வி கேட்கப்பட்டதும்,‘எனக்குத் தெரியாது மக்கள் சொல்வதையே நானும் சொல்லிக் கொண்டிருந்தேன்’ என்பான். அப்போது அவனிடம்’நீயாக எதையும் அறிந்ததுமில்லை (குர்ஆனை) ஓதி (விளங்கி)யதுமிலலை என்று கூறப்படும். பிறகு இரும்பாலான சுத்தியால் அவனுடைய இரண்டு காதுகளுக்குமிடையே (பிடரியில்) ஓர் அடி கொடுக்கப்படும். அப்போது மனிதர்கள், ஜின்களைத் தவிர மற்ற அனைத்தும் செவியேற்குமளவுக்கு அவன் கத்துவான்.“

என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## புனித பூமியிலோ அது போன்ற இடங்களிலோ அடக்கம் செய்யப்படுவதை விரும்புதல்.

ஹதீஸ் 1339. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உயிர் பறிக்கும் வானவர் ஒருவர் மூஸா(ரலி) அவர்களிடம் அனுப்பப்பட்டார். அவர் வந்தபோது மூஸா(அலை) அவர்கள் அவரின் கண் பிதுங்கும் அளவுக்கு அடித்துவிட்டார்கள். உடனே அவர் அல்லாஹ்விடம் போய்,‘இறைவா! மரணிக்க விரும்பாத ஓர் அடியானிடம் நீ என்னை அனுப்பிவிட்டாய்’ என்றார். பிறகு அல்லாஹ் அவரின் கண்ணைச் சரிப்படுத்திவிட்டு,‘நீர் மீண்டும் அவரிடம் சென்று, அவரை ஒரு மாட்டின் முதுகில் கையை வைக்கச் சொல்லி, அவரின் கை எத்தனை ரோமங்களை அடக்கிக் கொள்கிறதோ அத்தனை ஆண்டுகள் அவர் உயிர் வாழலாம் என்பதையும் கூறும்‘‘ என அனுப்பி வைத்தான். (அவ்வாறே அவர் மூஸா(அலை) அவர்களிடம் வந்து கூறியபோது,) மூஸா(அலை)’இறைவா! அதற்குப் பிறகு?’ எனக் கேட்டதும் அல்லாஹ்,‘பிறகு மரணம் தான்’ என்றான். உடனே மூஸா(அலை) அவர்கள்’அப்படியானால் இப்பொழுதே (தயார்)’ எனக் கூறிவிட்டு அல்லாஹ்விடம் (பைத்துல் முகத்தஸ் என்னும்) பூனிதத்தலத்திலிருந்து கல்லெறியும் தூரத்திலுள்ள (புனிதத் தலத்திற்கு மிக அருமிலுள்ள) இடத்தில் தம் உயிரைக் கைப்பற்றுமாறு வேண்டினார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள் கூறும்போது,‘நான் மட்டும் இப்போது அங்கு (பைத்துல் முகத்தஸில்) இருந்தால் உங்களுக்கு

அந்த செம்மணற் குன்றிற்கருகில் உள்ள பாதையிலிருக்கும் மூஸா(அலை) அவர்களின் கப்ரைக் காட்டியிருப்பேன்‘‘ எனக் குறிப்பிட்டார்கள்.

பகுதி 69

## இரவில் அடக்கம் செய்தல்.

அபூ பக்ர்(ரலி) இரவில்தான் அடக்கம் செய்யப்பட்டார்.

ஹதீஸ் 1340. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இரவில் அடக்கம் செய்யப்பட்ட ஒருவருக்காக நபி(ஸல்) அவர்கள் (ஜனாஸாத் தொழ நாடி) தோழர்களுடன் நின்றார்கள். முதலில்'இ(ந்தகப்ருக்குரிய)வர் யார்?' எனக் கேட்டார்கள்.'இவர் இன்னார் நேற்றிரவுதான் அடக்கம் செய்யப்பட்டார்‘‘ என (தோழர்கள்) கூறியதும் அவருக்காகத் தொழுதார்கள்.

## கப்ரின் மீது பள்ளிவாசல் நிறுவுதல்.

ஹதீஸ் 1341. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவர்களின் மனைவியரில் ஒருவர் அபிசீனியாவில் தாம் பார்த்த மாரியா எனப்படும் ஒரு கிறிஸ்தவ ஆலயத்தைப் பற்றிக் கூறினார். அப்போது (ஏற்கெனவே) அபிசீனியா சென்றிருந்த உம்மு ஸலமா(ரலி) உம்மு ஹபீபா(ரலி) ஆகிய இருவரும் அதன் அழகையும் அதிலுள்ள ஓவியங்களையும் பற்றி வர்ணிக்கலாயினர். உடனே தலையை உயர்த்திய நபி(ஸல்) அவர்கள்,'அவர்களில் நல்லவர் ஒருவர் இறந்துவிட்டால் அவரின் கப்ரின் மீது பள்ளிவாயில் எழுப்பி அதில் அவரின் உருவப்படங்களை வரைந்து வைப்பார்கள் அல்லாஹ்விடம் படைப்பினங்களில் மிக மோசமானவர்கள் இவர்களே!"என்று கூறினார்கள்.

## பெண் மய்யித்தை அடக்குவதற்கு ஓர்ஆண் கப்ரில் இறங்குதல்.

ஹதீஸ் 1342. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் மகளின் அடக்கத்தில் கலந்து கொண்டோம். அப்போது கப்ருக்கருகில் உட்கார்ந்திருந்த நபி(ஸல்) அவர்களின் கண்கள் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்ததை பார்த்தேன். (‘‘கடந்த) இரவு தம் மனைவியுடன் கூடாதவர் எவரேனும் உங்களில் உள்ளனரா?' என்று நபி(ஸல்) வினவினார்கள். அபூ தல்ஹா(ரலி),'நான் உள்ளேன்' என்றதும்'இந்தக் கப்ரில் இறங்குவீராக!"என்றார்கள். உடனே அவர் கப்ரில் இறங்கி அடக்கம் செய்தார்.

‘இதில்'லம் யுகாரிஃப்' என்பதன் பொருள் பாவம் செய்யாதவர் என்பதுதான் என கருதுகிறேன்' என ஃபுலைஹ் என்பவர் கூறுவதாக இப்னுல் முபாரக் குறிப்பிடுகிறார்.

லம் யுகாரிஃப் என்பதன் பொருள் குர்ஆனில் (திருக்குர்ஆன் 06:113) லியக்தரிஃபூ எனப் பயன்படுத்தப்பட்டிருப்பதன் அடிப்படையில் பாவத்தைச் சம்பாதிக்காதவன் என்பதேயாகும் என அபூ அப்தில்லாஹ்(புகாரி) குறிப்பிடுகிறேன்.

## ஷஹீத்களுக்கு ஜனாஸா தொழுகை.

ஹதீஸ் 1343. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், உஹதுப் போரில் கொல்லப்பட்டவர்களில் இரண்டிரண்டு நபர்களை ஒரே ஆடையில் கஃபனிட்டுவிட்டு,'இவர்களில் குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார்?' எனக் கேட்டார்கள். இருவரில் ஒருவர் சுட்டிக் காட்டப்பட்டதும் அந்த ஒருவரின் உடலைக் கப்ரின் உட்குழியில் முதலில் வைத்துவிட்டு,'இவர்களுக்கு மறுமை நாளில் நானே சாட்சியாகுவேன்' எனக் கூறினார்கள். பின்பு இரத்தத்தோடே அடக்குமாறு ஏவினார்கள். இவர்கள் குளிப்பாட்டப்படவோ இவர்களுக்கு தொழுகை நடத்தப்படவோ இல்லை.

ஹதீஸ் 1344. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் உஹதுக்குச் சென்று, (போரில் கொல்லப்பட்டவர்களுக்காக ஜனாஸாவை முன்னால் வைத்துத் தொழுவது போன்று) தொழுகை நடத்தினார்கள். பிறகு மிம்பருக்கு வந்து,'நிச்சயமாக நான் உங்களுக்காகக் காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சியும் கூறுவேன். மேலும் அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் இப்போது (கவ்ஸர் எனும்) என்னுடைய தடாகத்தைக் காண்கிறேன். எனக்கு பூமியின் கருவூலங்களின் திறவுகோல்கள் அல்லது பூமியின் திறவுகோல்கள்... கொடுக்கப்பட்டுள்ளன. நிச்சயமாக அல்லாஹ்வின் மீது ஆணையாக! என(து மரணத்து)க்குப் பின்னால் நீங்கள் இணைவைப்பார்களாக ஆம்விடுவீர்களோ என்று நான் பயப்படவில்லை. ஆனால், (உலகத்திற்காக) நீங்கள் ஒருவரோடொருவர் மோதிக் கொள்வீர்களோ என்றே பயப்படுகிறேன்!"என்று கூறினார்கள்.

## இருவரை அல்லது மூவரை ஒரே கப்ரில் அடக்கம் செய்தல்

ஹதீஸ் 1345. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உஹதுப் போரில் (ஷஹீதானவர்களில்) இரண்டிரண்டு நபர்களை சேர்த்து (ஒரே கப்ரில்) அடக்கம் செய்தார்கள்.

## ஷஹீத்களைக் குளிப்பாட்ட வேண்டியதில்லை.

ஹதீஸ் 1346. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"இவர்களை உஹதுப் போரில் மரணித்தவர்களை இரத்தத்துடனேயே அடக்குங்கள்" என்று' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்" மேலும் நபி(ஸல்) அவர்கள் அவர்களைக் குளிப்பாட்டவில்லை.

## கப்ரின் உட்குழியில் முதலில் வைக்கப்படுவர்.

ஹதீஸ் 1347. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உஹதுப் போரில் கொல்லப்பட்டவர்களை இரண்டிரண்டு பேராக ஒரே ஆடையில் கஃபனிட்டுவிட்டு,'இவர்களில் குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார்?' எனக் கேட்டார்கள். இருவரில் ஒருவர் சுட்டிக்காட்டப்பட்டதும் அந்த ஒருவரின் உடலைக் கப்ரின் உட்குழியில் முதலில் வைத்துவிட்டு.'இவர்களுக்கு மறுமை நாளில் நானே சாட்சியாக்குவேன்' எனக் கூறினார்கள். பின்பு இரத்தத்துடனேயே அடக்குமாறு கட்டளையிட்டார்கள். இவர்கள் குறிப்பாட்டப்படவில்லை இவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தவுமில்லை.

ஹதீஸ் 1348. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"உஹதுப் போரில் கொல்லப்பட்டவர்களைக் கண்டு இவர்களில் குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். ஒருவர் சுட்டிக் காட்டப்பட்டதும் அவரின்

உடலை அவருடனிருந்தவருக்கு முன்பாக கப்ரில் வைத்தார்கள். இவ்விதம் என் தந்தையும் சிறிய தந்தையும் ஒரே துணியில் கஃபனிடப்பட்டார்கள்.

## கப்ரில் இத்கிர் போன்ற புற்களைப் போடுதல்.

ஹதீஸ் 1349. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“அல்லாஹ் மக்காவைப் புனிதமாக்கியுள்ளான். எனக்கு முன்புள்ள யாருக்கும் (இங்கு போர் புரிதல்) அனுமதிக்கப்படவில்லை எனக்குப் பின்பும் யாருக்கும் அனுமதிக்கப்பட மாட்டாது. எனக்கு மட்டும் பகலில் சற்று நேரம் (மக்கா வெற்றிக்காக) அனுமதிக்கப்பட்டது. எனவே, இனி மக்காவிலுள்ள புற்கள் களையப்படக் கூடாது மரங்கள் வெட்டப்படக் கூடாது வேட்டைப் பிராணிகள் விரட்டியடிக்கப்படக் கூடாது அறிவிப்புச் செய்பவர்களைத் தவிர வேறு யாரும் இங்கு கீழே விழுந்து கிடக்கும் பொருட்களைப் பொறுக்கக் கூடாது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது (என் தந்தை) அப்பாஸ்(ரலி) இத்கிர் என்ற புல்லைத் தவிரவா? அது நம்முடைய கப்ருகளுக்கும் பொற் கொல்லர்களுக்கும் தேவைப்படுகிறதே' என்றதும் நபி(ஸல்) அவர்கள், 'இத்கிர் என்ற புல்லைத் தவிர“ என்றனர்.

அபூ ஹுரைரா(ரலி), 'நம்முடைய கப்ருகளுக்கும் வீடுகளுக்கும் (இத்கிர் புல்லைப்) பயன்படுத்தலாம்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என கூறினார். ஸஃபிய்யா(ரலி) அவர்களும் இதைப் போன்றே அவர்கள் கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), 'நம்முடைய உலோகத் தொழிலாளர்களுக்கும் வீடுகளுக்கும் பயன்படுத்தலாம்' என்று கூறினார்கள் என தாவூஸ் அவர்கள் கூறினார்கள்.

பகுதி 77

## ஏதேனும் காரணத்திற்காக மய்யித் கப்ரிலிருந்தோ உட்குழியிலிருந்தோ வெளியில் எடுக்கப்படலாமா?

ஹதீஸ் 1350. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(முனாஃபிக்குகளின் தலைவனான) அப்துல்லாஹ் இப்னு உபை கப்ருக்குள் வைக்கப்பட்ட பிறகு அங்கு வந்த நபி(ஸல்) அவர்கள் அ(ந்த மய்யித்)தை வெளியிலெடுக்குமாறு கூறினார்கள். வெளியிலெடுக்கப்பட்டதும் அதைத் தம் மடியில் வைத்து, அதன் மீது தம் உமிழ் நீரை உமிழ்ந்து, தம் மேலாடையையும் அதற்கு அணிவித்தார்கள். (இதற்குக் காரணம் என்னவோ?) அல்லாஹ்வே அறிந்தவன்! நபி(ஸல்) அவர்கள் தங்களின் ஆடை ஒன்றை அப்பாஸ்(ரலி) அவர்களுக்கு அணிவித்திருந்தார்கள். 'அப்போது நபி(ஸல்) அவர்களிடம் இரண்டு மேலாடைகள் இருந்தன“ என அபூ ஹாரூனும் சுஃப்யானும் கூறுகின்றனர்.

மேலும், அப்துல்லாஹ் இப்னு உபையின் மகன் நபி(ஸல்) அவர்களிடம், 'நபி அவர்களே! உங்கள் மேனியைத் தழுவியுள்ள இவ்வாடையை என்னுடைய தந்தைக்கு அணிவியுங்களேன்“ என்று கோரி இருந்தார்.

“அப்துல்லாஹ் இப்னு உபைக்கு நபி(ஸல்) அவர்கள் தங்களின் மேலாடையை அணிவித்தது. அவர் (பத்ருப்போரின்போது கைதான அப்பாஸ்(ரலி) அவர்களுக்கு) உதவியதற்கான பிரதி உபகாரமாகத்தான்“ எனப்பலரும் கருதுகிறார்கள் என சுஃப்யான் கூறுகிறார்.

ஹதீஸ் 1351. ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

உஹதுப் போர் நடக்கவிருந்தபோது என்னுடைய தந்தை அன்றிரவு என்னை அழைத்து, 'நபி (ஸல்) அவர்களின் சகாக்களில் (நாளை போரில்) முதலில் நானே கொல்லப்படுவேன் எனக் கருதுகிறேன். மேலும் எனக்குப் பின் நான்விட்டுச் செல்பவர்களில் நபி (ஸல்) அவர்களைத் தவிர மற்றவர்களில் உன்னைத் தவிர வேறு யாரையும் நான் மதிப்பிற்குரியவராகக் கருதவில்லை. என் மீது கடன் உள்ளது. அதை நீ அடைப்பதுடன் உன்னுடைய சகோதரிகளிடம் நல்ல முறையில் நடந்து கொள்" என்றார். மறுநாள் (போரில்) அவர்தான் முதலில் கொல்லப்பட்டார். அவருடன் இன்னொருவரும் அடக்கம் செய்யப்பட்டார். இன்னொருவருடன் அவரை கப்ரில்விட்டுவைப்பதை என்னுடைய மனம் விரும்பவில்லை. எனவே, (அடக்கப்பட்ட) ஆறு மாதங்களுக்குப் பின்பு அவரின் உடலை நான் கப்ரிலிருந்து வெளியிலெடுத்தேன். அப்போது அன்றுதான் சற்று முன்னர் அடக்கம் செய்யப்பட்டவர் போன்று அவரின் காதைத் தவிர உடம்பு அப்படியே இருந்தது.

ஹதீஸ் 1352. ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

என்னுடைய தந்தையுடன் இன்னொருவர் அடக்கம் செய்யப்பட்டார் ஆயினும் என்னுடைய மனம் அதை விரும்பவில்லை. எனவே அவரின் உடலை வெளியிலெடுத்து அதைத் தனி கப்ரில் அடக்கம் செய்தேன்.

## உட்குழியுடன் உள்ள கப்ரும் உட்குழியில்லாக் கப்ரும்.

ஹதீஸ் 1353. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் உஹதுப் போரில் கொல்லப்பட்டவர்களை இரண்டிரண்டு நபர்களாக ஒரே ஆடையில் கஃபனிட்டுவிட்டு, 'இவர்களில் குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார்?' எனக் கேட்டார்கள். இருவரில் ஒருவர் சுட்டிக் காட்டப்பட்டதும் அந்த ஒருவரின் உடலைக் கப்ரின் உட்குழியில் முதலில் வைத்துவிட்டு 'இவர்களுக்கு மறுமை நாளில் நானே சாட்சியாவேன்' எனக் கூறினார்கள். பின்பு இரத்தத்துடனேயே அவர்களை அடக்குமாறு கட்டளையிட்டார்கள்: அவர்களை நபி (ஸல்) அவர்கள் குளிப்பாட்டவில்லை.

பகுதி 79

## இஸ்லாத்தை ஏற்ற சிறுவன் இறந்துவிட்டால் அவனுக்கு ஜனாஸாத் தொழுகை உண்டா? பருவமடையாத சிறுவனிடம் இஸ்லாத்தை எடுத்துச் சொல்லலாமா?

ஹஸன் பஸரீ, ஷுரைஹ், இப்ராஹீம், கதாதா (ரஹ் ... அலைஹிம்) ஆகியோர் பெற்றோர்களில் ஒருவர் முஸ்லிமாம்விட்டால் அவர்களின் குழந்தைகள் அந்த முஸ்லிமுக்கே சொந்தம்' எனக் கூறுகின்றனர்.

இப்னு அப்பாஸ் (ரலி) பலவீனமானவர்களில் ஒருவரான தம் தாயாருடன் இணைந்தார். வேற்று மார்க்கத்தைச் சேர்ந்த தம் தந்தையுடனிருக்கவில்லை. மேலும், அவர் 'இஸ்லாமே உயர்ந்தது: அது ஒருபோதும் தாழ்ந்துவிடாது" என்று கூறினார்.

ஹதீஸ் 1354 , ஹதீஸ் 1355 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

இப்னு ஸய்யாதை நபி(ஸல்) அவர்கள் ஒரு குழுவுடன் பார்க்கச் சென்றபோது அவர்களுடன் உமர்(ரலி)யும் இருந்தார். பருவ வயதை நெருங்கிவிட்ட இப்னு ஸய்யாத் பனு மகாலாவின் மேட்டுப் பகுதியில் சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்தான். நபி(ஸல்) அவர்கள் (அவனைக்) கையால் தட்டுகிறவரை, (அவன் நபி(ஸல்) தன்னை நெருங்கியதை) உணரவில்லை. பிறகு நபி(ஸல்) அவர்கள் அவனிடம்'நானே நபி என நீ சாட்சி கூறுகிறாயா?' எனக் கேட்டார்கள். இப்னு ஸய்யாத் நபி(ஸல்) அவர்களை நோட்டமிட்டுவிட்டு,'நீங்கள் எழுதப் படிக்கத் தெரியாவதவர்களின் நபி என நான் சாட்சி கூறுகிறேன்'' என்று கூறினான். பிறகு இப்னு ஸய்யாத் நபி(ஸல்) அவர்களிடம்'நான் நபி என நீர் சாட்சி கூறுகிறீரா?' எனக் கேட்டான். நபி(ஸல்) அவாக்ள் அவனை அப்படியேவிட்டுவிட்டு,'நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதர்களையும் ஏற்றுள்ளேன்' எனக் கூறினார்கள். பிறகு'(உன் நிலை பற்றி) நீ என்ன நினைக்கிறாய்?' எனக் கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத்,'என்னிடம் மெய்யான செய்திகளும் (சில சமயம்) பொய்யான செய்திகளும் உதிக்கின்றன'' என்றான். நபி(ஸல்) அவர்கள்'உனக்கு இப்பிரச்சினையில் குழப்பம் ஏற்பட்டுள்ளது'' என்று கூறிவிட்டு.'நான் ஒன்றை மனதில் நினைக்கிறேன் (அது யாது)?' எனக் கேட்டார்கள். (அப்போது நபி(ஸல்) அவர்கள் துகான் (44) அத்தியாயத்தின் 10வது வசனத்தை மனத்திற்குள் நினைத்தார்கள்) அதற்கு இப்னு ஸய்யாத்,'அது துக் (புகை வெற்றிடம்)'' என்றான். (அதாவது துகான், என்பதை'துக்' என அரை குறையாகச் சொன்னான்) உடனே நபி(ஸல்) அவர்கள்'தூர விலம்ப் போ! நீ உன்னுடைய எல்லையைத் தாண்டிவிட முடியாது'' என்றார்கள். அப்போது உமர்(ரலி),'நபி அவர்களே! இவனை நான் கொலை செய்து விடட்டுமா?' எனக் கேட்டதும் நபி(ஸல்) அவர்கள்,'இவன் அவனாக (தஜ்ஜாலாக) இருந்தால் இவனைக் கொல்லும் பொறுப்பு உமக்குக் கொடுக்கப்படவில்லை இவன் அவனாக இல்லையெனில் இவனைக் கொல்வதில் உமக்கு எந்தப் பலனும் இல்லை' எனக் கூறினார்கள்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் நபி(ஸல்) அவர்களும் உபையுப்னு கஅபு(ரலி)யும் இப்னு ஸய்யாத் இருக்கும் தோட்டத்திற்குச் சென்றனர். நபி(ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாத் தம்மைப் பார்த்துவிடும் முன் ஒளிந்திருந்து அவனிடமிருந்து எதையேனும் செவியேற்க வேண்டும் என விரும்பினார்கள். அங்கு இப்னு ஸய்யாத் ஒரு பூம்பட்டு (வெல்வெட்டு)ப் போர்வையைப் போர்த்தி ஏதோ ஒரு விதமாக முணுமுணுப்பதை நபி(ஸல்) அவர்கள் கண்டார்கள்.

அப்போது இப்னு ஸய்யாதின் தாயார் நபி(ஸல்) அவர்கள் ஈச்சை மரங்களிடையே ஒளிந்து ஒளிந்து வருவதைப் பார்த்து வீட்டார். உடனே இப்னு ஸய்யாதிடம்'ஸாஃபியே! ...இது அவனுடைய பெயர் ... இதோ முஹம்மது(வந்துவிட்டார்)'' என்று கூறியதும் இப்னு ஸய்யாத் குதித்தெழுந்தான். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அந்தப் பெண் அவனை(ப் பேச) விட்டிருந்தால் அவன் (தன்னுடைய நிலையை) வெளிப்படுத்தியிருப்பான்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1356. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுக்குப் பணி விடை செய்து கொண்டிருந்த ஒரு ?தச் சிறுவன் திடீரென நோயுற்றான். எனவே, அவனை நோய் விசாரிக்க நபி(ஸல்) அவர்கள் அவனிடம் வந்து, அவனுடைய தலை மாட்டில் அமர்ந்து,'இஸ்லாதை ஏற்றுக் கொள்!' என்றார்கள். உடனே அவன் தன்னருகிலிருந்த தந்தையைப் பார்த்தான். அப்போது அவர்,'அபுல் காஸிம் (நபி(ஸல்) அவர்களின் கூற்றுக்குக் கட்டுப்படு'' என்றதும் அவன் இஸ்லாத்தை ஏற்றான். உடனே நபி(ஸல்) அவர்கள்,'இவனை நரகத்திலிருந்து பாதுகாத்த அல்லாஹ்வுக்கே சகல புகழும்'' எனக் கூறியவாறு அங்கிருந்து வெளியேறினார்கள்.

ஹதீஸ் 1357. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் சிறுவனாகவும், என் தாயார் பெண்ணாகவும் இருந்ததால் நானும் என் தாயாரும் சமுதாயத்தின் பலவீனமான பிரிவைச் சேர்ந்தவர்களாக இருந்தோம்.

ஹதீஸ் 1358. இப்னு ஷிஹாப் அவர்கள் கூறினார்கள்.

இறந்துவிட்ட எல்லாக் குழந்தைகளுக்கும் ஜனாஸாத் தொழுகை நடத்தப்படும். அது விபச்சாரிக்குப் பிறந்ததாக இருந்தாலும் சரியே! ஏனெனில் அது இயற்கையாகவே இஸ்லாத்திலேயே பிறக்கிறது.

குழந்தையின் பெற்றோர் முஸ்லிம்களாக இருந்து அல்லது குறிப்பாகத் தந்தை மட்டும் முஸ்லிமாகவும் தாய் வேற்று மதத்தவளாகவும் இருந்து அவர்களின் குழந்தை பிறக்கும்போது சப்தமிட்டு, பிறகு இறந்தால் அதற்கு ஜனாஸாத் தொழுகை நடத்தப்படும் சப்தமிடவில்லையாயின் அதற்குத் தொழுகையில்லை ஏனெனில் அது விழுகட்டியாகும்.

“ஒரு விலங்கு எப்படி முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப் பெற்றெடுக்கிறதோ அதைப்போல, எல்லாக் குழந்தைகளுமே இயற்கையான (மார்க்கத்)திலேயே பிறக்கின்றன. விலங்குகள் அங்கக் குறைவுடன் பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? (முழுமையான விலங்கை அங்கே சேதப்படுத்துவது போல்) பெற்றோர்கள் தாம் குழந்தைகளை (இயற்கையான மார்க்கத்தைவிட்டுத் திருப்பி) யூதர்களாகவோ கிறித்தவர்களாகவோ நெருப்பு வணங்கிகளாகவோ ஆக்கி விடுகின்றனர்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பிறகு அபூ ஹுரைரா(ரலி)’எ(ந்த மார்க்கத்)தில் அல்லாஹ் மனிதர்களைப் படைத்தானோ அதுவே அவனுடைய (நிலையான) இயற்கை மார்க்கமாகும் அல்லாஹ்வின் படைத்தலின் மாற்றம் இல்லை அதுவே நிலையான மார்க்கமாகும். ஆனால், மனிதரில் பெரும்பாலோர் (இதை) அறிய மாட்டார்கள்‘‘ என்ற (திருக்குர்ஆன் 30:30) வசனத்தையும் ஓதிக்காட்டினார்.

ஹதீஸ் 1359. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு வலங்கு எப்படி முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப் பெற்றெடுக்கிறதோ அதைப்போன்று, எல்லாக் குழந்தைகளுமே இயற்கையான (மார்க்கத்)திலேயே பிறக்கின்றன. விலங்குகள் அங்கக் குறைவுடன் பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? (முழுமையான விலங்கை அங்கசேதப்படுத்துவதுபோல்) பெற்றோர்கள் தாம் குழந்தைகளை (இயற்கையான மார்க்கத்தைவிட்டுத் திருப்பி) யூதர்களாகவோ கிறித்தவர்களாகவோ நெருப்பு வணங்கிகளாகவோ ஆக்கிவிடுகின்றனர். “

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பிறகு அபூ ஹுரைரா(ரலி), எ(ந்த மார்க்கத்)தில் அல்லாஹ் மனிதர்களைப் படைத்தானோ அதுவே அவனுடைய (நிலையான) இயற்கை மார்க்கமாகும் அல்லாஹ்வின் படைத்தலில் மாற்றம் இல்லை அதுவே நிலையான மார்க்கமாகும் என்ற (திருக்குர்ஆன் 30:30) வசனத்தை ஓதிக்காட்டினார்.

## இணைவைப்பவன் மரணத் தருவாயில் லாஇலாஹ இல்லல்லாஹ் கூறுதல்.

ஹதீஸ் 1360. முஸய்யப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ தாலிபுக்கு மரணம் நெருங்கியபோது நபி(ஸல்) அவர்கள் அவரிடம் வந்தார்கள். அங்கு அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம், அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யா ஆகிய இருவரும் இருப்பதைக்

கண்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அபூ தாலிபிடம், 'என்னுடைய பெரிய தந்தையே! லாயிலாஹ இல்லல்லாஹ் என்ற வாசகத்தைச் சொல்லிவிடுங்கள்! அதன் மூலம் நான் அல்லாஹ்விடம் உங்களுக்காகச் சாட்சி கூறுவேன்' எனக் கூறினார்கள். அப்போது அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யாவும், 'அபூ தாலிபே! அப்துல் முத்தலிபின் மார்க்கத்தைப் புறக்கணிக்கப் போகிறீரா?' எனக் கேட்டனர். இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் ஒருபுறமும் அவ்விருவரும் மறுபுறமாக அவரை வற்புறுத்திக் கொண்டிருக்கும்போது அபூ தாலிப் கடைசியாக, 'நான் அப்துல் முத்தலிப் மார்க்கத்திலேயே (மரணிக்கிறேன்)' என்று கூறியதோடு லாஇலாஹ இல்லல்லாஹ் எனக் கூறவும் மறுத்துவிட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் தடுக்கப்படும்வரை உங்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுவேன்'' என்று கூறியதும், 'இணைவைப்பவர்களுக்கு பாவமன்னிப்புக் கோருவது நபிக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் தகுதியானதன்று'' (திருக்குர்ஆன் 9:113) என்ற வசனத்தை அல்லாஹ் அருளினான்.

## மண்ணறையில் ஈரமான பேரீச்ச மட்டையை வைப்பது.

புரைதா அல் அஸ்லமீ(ரலி) தம் மண்ணறையில் இரண்டு பேரீச்சமட்டைகளை வைக்குமாறு வஸிய்யத் செய்துள்ளார்.

அப்துர் ரஹ்மானுடைய கப்ரின் மீது கூடாரம் அமைக்கப்பட்டிருந்தைப் பார்த்த இப்னு உமர்(ரலி) (ஒரு சிறுவனிடம்), 'சிறுவரே! இதை அகற்றிவிடும்! அவருக்கு அவரின் நற்காரியங்கள் தாம் நிழல் கொடுக்கும்'' எனக் கூறினார்.

''நாங்கள் உஸ்மான்(ரலி) அவர்களின் (ஆட்சிக்) காலத்தில் இளைஞர்களாக இருந்தோம். அப்போது, உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) உடைய கப்ரைக் குதித்துத் தாண்டுகிறவரே எங்களில் அதிக தூரம் குதித்துத் தாண்டுபவராயிருந்தார்'' என்று காரிஜா இப்னு ஸைத் கூறுகிறார்.

காரிஜா என்னுடைய கையைப் பிடித்து என்னை ஒரு கப்ரின் மீது உட்கார வைத்துவிட்டு'கப்ரின் மீது அசுத்தம் செய்பவராக அமர்வதுதான் வெறுக்கத்தக்கது'' என தம் சிறிய தந்தை யஜீத் இப்னு ஸாபித் கூறினார்கள் எனச் சொன்னார் என உஸ்மான் இப்னு ஹகீம் கூறுகிறார்.

இப்னு உமர்(ரலி) கப்ருகளின் மீது உட்காருபவராக இருந்தார் என நாஃபிஃவு கூறுகிறார்.

ஹதீஸ் 1361. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கும் இருவருடைய கப்ருகளைத் கடந்து நபி(ஸல்) அவர்கள் சென்றபோது, 'இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள் ஆனால் மிகப் பெரும் பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் சிறுநீர் கழிக்கும்போது மறைக்காதவர் இன்னொருவர் கோள் சொல்லித் திரிந்தவர்' எனக் கூறிவிட்டு, ஈரமான ஒரு பேரீச்ச மட்டையை இரண்டாகப் பிளந்து இரண்டு கப்ருகளிலும் ஒவ்வொன்றை நட்டார்கள். தோழர்கள், 'நபி அவர்களே! ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்?' என்று கேட்டதும், 'இவ்விரண்டின் ஈரம் காயாதவரை இவர்களின் வேதனை குறைக்கப்படக்கூடும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## கப்ருக்கருகில் ஒருவர் உபதேசம் செய்வதும் அவரைச் சுற்றி மக்கள் அமர்ந்திருப்பதும்.

ஹதீஸ் 1362. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் பகீவுல் கர்கத் (என்னும் பொது) மையவாடியில் ஒரு ஜனாஸாவில் கலந்து கொண்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து உட்கார்ந்ததும் நாங்களும் அவர்களைச் சுற்றி அமர்ந்து கொண்டோம். அவர்களிடம் ஒரு சிறிய கைத்தடி இருந்தது. நபி(ஸல்) அவர்கள் தலைகுனிந்தவர்களாகத் தம் கைத்தடியால் தரையைக் கீறிக் கொண்டு,'உங்களில் யாரும் அல்லது எந்த ஆத்மாவும் அதன் இருப்பிடம் சொர்க்கமாக அல்லது நரகமாக என்பது பற்றித் தீர்மானிக்கப்படாமலில்லை. அது தீய கதியுடையதா, நற்பேறுடையதா என்பதும் நிர்ணயிக்கப்படாமலில்லை' எனக் கூறினார்கள். உடனே ஒருவர்,'நபி அவர்களே! அப்படியாயின் ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டுவிட்டதை நம்பி (நற்) செயல்களில் ஈடுபடுவதை நாம்விட்டுவிடலாமா? ஏனெனில் நம்மில் யார் நல்லவர்களாக(த் தீர்மானிக்கப்பட்டு) உள்ளார்களோ அவர்கள் நிச்சயமாக நல்லவர்களின் செயல்களில் ஈடுபடுவார்கள் யார் தீயவர்களாக(த் தீர்மானிக்கப்பட்டு) உள்ளார்களோ அவர்கள் நிச்சயமாகத் தீயவர்களின் செயல்களில் ஈடுபடுபவர்கள் தாமே?' என்றதும், நபி(ஸல்) அவர்கள்,'நம்மில் நல்லவர்களாக(த் தீர்மானிக்கப்பட்டு) உள்ளவர்களுக்கு நற்செயல்கள் செய்வது எளிதாக்கப்படும் தீயவர்களாக(த் தீர்மானிக்கப்பட்டு) உள்ளவர்களுக்குத் தீய காரியங்கள் எளிதாக்கப்படும்'' என்று கூறிவிட்டு,'தர்மம் கொடுத்து, பயபக்தியுடன் நடந்து, நல்லவற்றை உண்மையாக்குகிறவர்..!"என்ற (திருக்குர்ஆன் 92:5,6) வசனங்களை ஓதிக் காட்டினார்கள்.

## தற்கொலை செய்தவர்..

ஹதீஸ் 1363. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"வேண்டுமென்றே பொய்யான விஷயத்தில் சத்தியம் செய்யும்போது (நான் சொல்வது பொய்யென்றால்) இஸ்லாம் அல்லாத வேறு மார்க்கத்தில் உள்ளவனாவேன் என்று கூறியவர், தான் கூறியது போல் (வேறு மார்க்கத்தில்) ஆவார். மேலும், இரும்பு ஆயுதத்தால் தற்கொலை செய்து கொள்கிறவர் ஆதே ஆயுதத்தால் நரகில் வேதனை செய்யப்படுவார்."

என ஸாபித் இப்னு ளஹ்ஹாக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1364. ஹஸன் அவர்கள் கூறினார்கள்.

ஜுன்துப்(ரலி) இந்த (பஸராவின்) பள்ளிவாசலில் வைத்து எங்களிடம் (ஒரு ஹதீஸைக்) கூறினார். அதை நாங்கள் மறக்கவில்லை. மேலும் ஜுன்துப்(ரலி), நபி(ஸல்) அவர்களின் விஷயத்தில் பொய்யைக் கூறியிருப்பார் என்று நாங்கள் அஞ்சவுமில்லை. அவர் கூறினார். 'ஒருவருக்கு ஒரு காயம் இருந்தது. (இதைத் தாங்க முடியாமல் அவர் தற்கொலை செய்தார். உடனே அல்லாஹ்? என்னுடைய அடியான் அவனுடைய மரணத்தில் அவசரப்பட்டு என்னை முந்திவிட்டான் எனவே, அவனுக்குச் சொர்க்கத்தை நான் ஹராமாக்கி விட்டேன் எனக் கூறினான்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1365. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"தன்னுடைய கழுத்தை நெரித்துத் தற்கொலை செய்து கொள்கிறவர் நரகிலும் தன்னுடைய கழுத்தை நெரித்துக் கொண்டிருப்பார். தம்மைத்தாமே (ஆயுதத்தால்) தாக்கித் தற்கொலை செய்து கொள்கிறவர் நரம்லும் தம்மை ஆயுதத்தால் தாக்கிக் கொண்டிருப்பார்."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நயவஞ்சகர்களுக்கு ஜனாஸாத் தொழுகை நடத்துவதும் இணைவைப்போருக்குப் பாவமன்னிப்புத் தேடுவதும் வெறுக்கப்பட்டவையே.

இக்கருத்தை நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1366. உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி ஸலூல் மரணித்ததும் அவனுக்கு (ஜனாஸாத்) தொழுகை நடத்துவதற்காக நபி(ஸல்) அவர்கள் அழைத்து வரப்பட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தத் தாயரானபோது நான் அவர்களிடம் சென்று, நபி அவர்களே! அப்துல்லாஹ் இப்னு உபைக்காக ஜனாஸாத் தொழப் போகிறீர்களா? அவன் இன்னின்ன நாள்களில் இன்னின்னவற்றைப் பேசியுள்ளான் என, அவன் பேசியவற்றை நபி(ஸல்) அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். நபி(ஸல்) அவர்கள் புன்கைத்தார்கள். நான் மேலும் அதிகமாக வலியுறுத்தியதும் அவர்கள்,'எனக்கு(த் தொழுகை நடத்துதல், தொழுகை நடத்தாமலிருத்தல் ஆகிய இரண்டில் எதையும் செயல்படுத்த) அனுமதியுள்ளது. எழுபது முறைகளுக்கும் அதிகமாக நான் பாவமன்னிப்புத் தேடினால் அவனுக்கு மன்னிப்பு கிடைக்கும் என்பதாக நான் அறிந்தால் அவ்வாறே நான் அதிகமாகப் பாவமன்னிப்புத் தேடுவேன்' என்று கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் அவனுக்காக ஜனாஸாத் தொழுகை நடத்திவிட்டுத் திரும்பிச் சென்று சற்று நேரமாகுவதற்குள் பராஅத் (9-வது) அத்தியாயத்தின் இரு வசனங்களான'அவர்களில் எவரேனும் இறந்தால் அவருக்காக நீர் ஒருக்காலும் (ஜனாஸாத்) தொழ வேண்டாம்'' என்ற இறை வசனங்கள் (திருக்குர்ஆன் 09:84, 85) இறங்கிவிட்டன.

பிறகுதான் அன்றையதினம் நபி(ஸல்) அவர்களின் விஷயத்தில் எனக்கு ஏற்பட்ட துணிச்சலைப் பற்றி நான் ஆச்சரியப்பட்டேன். ஏனெனில் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்தாமே இது பற்றியெல்லாம் அறிந்திருக்க முடியும்!

## இறந்தவரைப் பற்றி மக்கள் புகழ்ந்துரைத்தல்.

ஹதீஸ் 1367. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு முறை, மக்கள் ஒரு ஜனாஸாவைக் கடந்து சென்றபோது, இறந்தவரின் நற்பண்புகளைப் பற்றிப் புகழ்ந்து பேசினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உறுதியாகிவிட்டது'' என்றார்கள். மற்றொரு முறை வேறொரு (ஜனாஸாவைக்) கடந்து சென்றபோது மக்கள் அதன் தீய பண்புகளைப் பற்றி இகழ்ந்து பேசலாயினர். அப்போதும் நபி(ஸல்) அவர்கள்,'உறுதியாகிவிட்டது?' எனக் கூறினார்கள். உமர்(ரலி)'எது உறுதியாகிவிட்டது?' எனக் கேட்டதும் நபி(ஸல்) அவர்கள்,'இவர் விஷயத்தில் நல்லதைக் கூறிப் புகழ்ந்தீர்கள் எனவே அவருக்கு சொர்க்கம் உறுதியாகிவிட்டது. இவர் விஷயத்தில் தீயதைக் கூறினீர்கள். எனவே இவருக்கு நரகம் உறுதியாகிவிட்டது. ஆக நீங்களே பூமியில் அல்லாஹ்வின் சாட்சிகளாகவீர்கள்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1368. அபுல் அஸ்வத் அவர்கள் கூறினார்கள்.

நான் மதீனாவில் (கொள்ளை) நோய் பரவியிருந்தபோது மதீனாவுக்கு வந்து உமர்(ரலி) உடன் அமர்ந்திருந்தேன். அப்போது ஒரு ஜனாஸா அவர்களைக் கடந்து சென்றது. மக்கள் அவரின் நற்பண்புகளைக் கூறிப் புகழ்ந்ததும் உமர்(ரலி),'உறுதியாகிவிட்டது' என்றார். பிறகு இன்னொரு ஜனாஸ கடந்து சென்றது. அப்போதும் மக்கள் அவரின் நற்பண்புகளைக் கூறிப் புகழ்ந்து

பேசினர். உடனே உமர்(ரலி),'உறுதியாகிவிட்டது' என்றார். பிறகு மூன்றாவது ஜனாஸா கடந்து சென்றது. மக்கள் அவரின் தீய பண்புகளைக் கூறி இகழ்ந்து பேசலாயினர். அப்போதும் உமர்(ரலி),'உறுதியாகிவிட்டது' எனக் கூறினார். நான்'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! எது உறுதியாகிவிட்டது?' எனக் கேட்டதும்.'எந்த முஸ்லிமுக்காவது அவர் நல்லவர் என நான்கு பேர் சாட்சி கூறினால் அவரை அல்லாஹ் சுவர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்வான்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நாங்கள்'மூவர் சாட்சியாயிருந்தால்..?' என்று கேட்டோம். அதற்கவர்கள்'மூன்று பேர் சாட்சி கூறினாலும் தான்'' என்றனர். மீண்டும்'இருவர் சாட்சியாக இருந்தால்..!"என நாங்கள் கேட்டதற்கு இரண்டு பேர் சாட்சி கூறினாலும் தான்'' என்றார்கள். பிறகு நாங்கள் ஒரு நபர் பற்றிக் கேட்கவில்லை. எனவே, நபி(ஸல்) அவர்கள் கூறியதன் அடிப்படையிலேயே நான் இவ்வாறு கூறினேன்'' என்று உமர்(ரலி) கூறினார்.

## மண்ணறை வேதனை...

அல்லாஹ் கூறினான்:

அநியாயக்காரர்கள் மரண வேதனையில் இருக்கும்போது நீங்கள் அவர்களைப் பார்த்தால், வானவர்கள் தம் கைகளை நீட்டியவாறு (அவர்களிடம்)'உங்களுடைய உயிர்களை வெளியேற்றுங்கள்: இன்றைய தினம் நீங்கள் இழிவு தரும் வேதனையைக் கூலியாகக் கொடுக்கப்படுவீர்கள்'' என்று கூறுவார்கள். (திருக்குர்ஆன் 6:93)

அல்லாஹ் கூறினான்:

நாம் அவர்களை இருமுறை வேதனை செய்வோம். பின்னர் அவர்கள் கடுமையான வேதனையின் பால் தள்ளப்படுவார்கள்'' (திருக்குர்ஆன் 9:101)

அல்லாஹ் கூறினான்:

மேலும் வேதனையின் கேடு ஃபிர்அவ்னின் கூட்டத்தாரைச் சூழ்ந்தது. காலையிலும், மாலையிலும் அவர்கள் நரக நெருப்பின் முன் கொண்டு வரப்படுவார்கள்: மேலும் நியாயத் தீர்ப்பு காலம் நிலைபெற்றிருக்கும் நாளில் ஃபிர்அவ்னுடைய கூட்டத்தாரைக் கடினமான வேதனையில் புகுத்துங்கள் (என்று கூறப்படும்). (திருக்குர்ஆன் 40:45, 46)

ஹதீஸ் 1369. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கப்ரில் ஒரு இறைநம்பிக்கையாளர் எழுப்பி உட்கார வைக்கப்பட்டதும் அவரிடம் (இரண்டு வானவர்களைக்) கொண்டு வரப்படும் (கேள்வி கேட்கப்படும்) பிறகு (அவர்களிடம்) அந்த இறைநம்பிக்கையாளர்,'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை் முஹம்மத்(ஸல்) அவர்கள் அவனுடைய தூதராவார்கள்'' என சாட்சி கூறுவார். இதையே அல்லாஹ்'நம்பிக்கை கொள்கிறவர்களை இவ்வுலக சொல்லைக் கொண்டு அல்லாஹ் உறுதிப்படுத்துகிறான்'' (திருக்குர்ஆன் 14:27) எனக் குறிப்பிடுகிறான்.

என பராவு இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இந்த வசனம் மண்ணறை வேதனை சம்பந்தமாகவே அருளப்பட்டது என ஷுஅபாவின் அறிவிப்பில் காணப்படுகிறது.

ஹதீஸ் 1370. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(பத்ருப் போரில் கொல்லப்பட்ட எதிரிகளின் உடல்கள் ஒரு பாழுங் கிணற்றில் போடப்பட்டிருந்தன. அந்தக்) கிணற்றில் கிடந்தவர்களைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள், 'உங்களுடைய இறைவன் உண்மையாகவே வாக்களித்தவற்றை நீங்கள் அடைந்து கொண்டீர்களா?' எனக் கேட்டார்கள். 'இறந்துவிட்டவர்களை அழைக்கிறீர்களே?' என அவர்களிடம் கேட்கப்பட்டதும், 'அவர்களை விட நீங்கள் அதிகம் செவியேற்பவர்களல்லர் ஆயினும் அவர்கள் பதிலளிக்க மாட்டார்கள்" எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1371. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (இறந்தவர்களின் விஷயத்தில்), 'நான் சொல்லிக் கொண்டிருந்தது உண்மைதான் என்பதை இப்போது அவர்கள் அறிகிறார்கள்" என்றே கூறினார்கள். (செவியுறுகிறார்கள் என்று கூறவில்லை ஏனெனில்) 'நிச்சயமாக நீர் மரித்தோரைக் கேட்கும்படிச் செய்ய முடியாது" (திருக்குர்ஆன் 27:80) என அல்லாஹ் கூறினான்.

ஹதீஸ் 1372. மஸ்ரூக் அவர்கள் கூறினார்கள்.

ஒரு ?தப் பெண் ஆயிஷா(ரலி) அவர்களிடம் வந்து மண்ணறை வேதனை பற்றிக் கூறிவிட்டு, 'அல்லாஹ் உங்களை மண்ணறை வேதனையைவிட்டும் பாதுகாப்பாளனாக' என்றும் கூறினாள். பிறகு மண்ணறை வேதனை பற்றி ஆயிஷா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கேட்டபோது நபி(ஸல்) அவர்கள், 'ஆம் மண்ணறை வேதனை உள்ளது" எனக் கூறினார்கள்.

மேலும், ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள். 'அதற்குப் பிறகு நபி(ஸல்) அவர்கள் தாம் தொழுகிற தொழுகைகளில் மண்ணறை வேதனையிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புத் தேடாமல் இருந்தேயில்லை'.

ஹதீஸ் 1373. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு முறை நபி(ஸல்) அவர்கள் உரையாற்றும்போது, மண்ணறையில் மனிதன் அனுபவிக்கும் சோதனையைப் பற்றிக் கூறினார்கள். அவ்வாறு கூறிக்கொண்டிருக்கும்போது முஸ்லிம்கள் (அச்சத்தால்) கதறிவிட்டார்கள்.

ஹதீஸ் 1374. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஓர் அடியான் கப்ரில் அடக்கம் செய்யப்பட்டு அவனுடைய தோழர்கள் திரும்பிச் செல்லும்போது, அவன் அவர்களின் செருப்பின் ஓசையைச் செவியேற்பான். அப்போது இரண்டு வானவர்கள் அவனிடம் வந்து அவனை எழுப்பி உட்கார வைத்து, 'இந்த மனிதரைப் பற்றி என்ன கருதிக் கொண்டிருந்தாய்?' என்று முஹம்மத்(ஸல்) குறித்துக் கேட்பர். அவன் இறைநம்பிக்கையாளனாக இருந்தால் 'இவர் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமாவார் என நான் சாட்சி கூறுகிறேன்' எனக் கூறுவான். அவனிடம் (நீ கெட்டவனாய் இருந்திருந்தால் உனக்குக் கிடைக்கவிருந்த) நரகத்திலுள்ள உன்னுடைய இருப்பிடத்தைப் பார். (நீ நல்லவனாக இருப்பதால்) அல்லாஹ் இதை மாற்றி உனக்குச் சொர்க்கத்தில் இருப்பிடத்தை ஏற்படுத்தியுள்ளான் எனக் கூறப்படும். இரண்டையும் அவன் ஒரே நேரத்தில் பார்ப்பான்... "அவனுக்கு மண்ணறை விசாலமாக்கப்படும்" என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இதன் அறிவிப்பாளரான கதாதா குறிப்பிடுகிறார்...

அவன் நயவஞ்சகனாகவோ நிராகரிப்பவனாகவோ இருந்தால் 'இந்த மனிதர் விஷயத்தில் நீ என்ன கருதிக் கொண்டிருந்தாய்?' என அவனிடம் கேட்கப்படும்போது 'எனக்கொன்றும் தெரியாது மக்கள் சொல்லிக் கொண்டிருந்ததையே நானும் சொல்லிக் கொண்டிருந்தேன்' எனக் கூறுவான்.

உடனே'நீ அறிந்திருக்கவுமில்லை: (குர்ஆனை) ஓதி (விளங்கி)யதுமில்லை'' என்று கூறப்படும். மேலும் இரும்பு சுத்திகளால் அவன் கடுமையாக அடிக்கப்படுவான். அப்போது அவனை அடுத்திருக்கும் மனிதர்களையும் ஜின்களையும் தவிர மற்ற அனைத்துமே செவியுறும் அளவுக்கு அவன் அலறுவான். "

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மண்ணறை வேதனையிலிருந்து பாதுகாப்புத் தேடுதல்.

ஹதீஸ் 1375. அபூ அய்?ப் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் சூரியன் மறையும்போது வெளியே புறப்பட்டார்கள். அப்போது ஒரு சப்தத்தைக் கேட்டுவிட்டு, 'யூதர்கள் அவர்களின் கப்ருகளில் வேதனை செய்யப்படுகிறார்கள்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1376. மூஸா இப்னு உக்பா அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மண்ணறை வேதனையைவிட்டுப் பாதுகாப்புத் தேடியதைத் தாம் செவியுற்றதாக காலித் இப்னு ஸயீத் (ரலி) உடைய மகள் கூறுகிறார்.

ஹதீஸ் 1377. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வே! நிச்சயமாக நான் மண்ணறை வேதனை, நரக வேதனை, வாழ்வின் சோதனை, மரணத்தின் சோதனை, ம?ஹுத் தஜ்ஜாலின் சோதனை ஆகியவற்றிலிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்'' எனப் பிரார்த்திப்பவர்களாக இருந்தார்கள்.

## புறம் பேசுவதாலும் சிறு நீரின் காரணத்தாலும் ஏற்படும் மண்ணறை வேதனை.

ஹதீஸ் 1378. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

இரண்டு கப்ருகளைக் கடந்து நபி (ஸல்) அவர்கள் சென்றபோது, 'இவ்விரு வரும் வேதனை செய்யப்படுகிறார்கள்: ஆனால் மிகப் பெரும் பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் கோள் சொல்லித் திரிந்தவர் மற்றொருவர் சிறுநீர் கழிக்கும்போது மறைத்துக் கொள்ளாதவர்' எனக் கூறிவிட்டு, ஈரமான ஒரு மட்டையை இரண்டாகப் பிளந்து இரண்டு கப்ருகளிலும் ஒவ்வொன்றாக நட்டார்கள்'இவ்விரண்டின் ஈரம் காய்ந்த வரை இவர்களின் வேதனை குறைக்கப்படக் கூடும்'' எனக் கூறினார்கள்.

## மய்யித்திற்கு அதன் தங்குமிடம் (சொர்க்கம், நரகம்) காலையிலும் மாலையிலும் எடுத்துக் காட்டப்படும்.

ஹதீஸ் 1379. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"உங்களில் ஒருவர் இறந்துவிட்டால் அவர் தங்குமிடம் அவருக்குக் காலையிலும் மாலையிலும் எடுத்துக் காட்டப்படும். அவர் சொர்க்கவாசியாக இருந்தால் சொர்க்கத்திலிருப்பதாகவும் நரகவாசியாக இருந்தால் நரகத்திலிருப்பதாகவும் (எடுத்துக் காட்டப்படும்.) மேலும், அல்லாஹ் மறுமை நாளில் உன்னை எழுப்புகிற வரை இதுவே (கப்ரே) உன்னுடைய தங்குமிடம் என்றும் கூறப்படும். "

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஜனாஸா சுமந்து செல்லப்படும்போது மய்யித் கூறுவது:

ஹதீஸ் 1380. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஜனாஸா (பெட்டியில்) வைக்கப்பட்டு அதை ஆண்கள் தங்கள் தோள்களில் தூக்கிச் செல்லும்போது அந்த ஜனாஸா நல்லறங்கள் புரிந்ததாக இருக்குமானால் என்னை விரைந்து செல்லுங்கள் என்னை விரைந்து செல்லுங்கள் என்று கூறும் அது நல்லறங்கள் புரியாததாக இருக்குமானால், கைசேதமே! என்னை எங்கே கொண்டு செல்கிறீர்கள் என்று கூறும். இவ்வாறு கூறும் சப்தத்தை மனிதனைத் தவிர அனைத்தும் செவியுறும். மனிதன் அதைச் செவியுற்றால் மயங்கி விழுந்து விடுவான்.

அதை அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## முஸ்லிம்களின் குழந்தைகள் இறந்துவிட்டால்...?

“ஒருவருக்கு பருவமெய்தாத மூன்று குழந்தைகள் இறந்துவிட்டால் அவை அவருக்கு நரகத்தைவிட்டுப் பாதுகாக்கும் திரையாகும் அல்லது அவர் சொர்க்கத்தில் நுழையக் காரணமாகும்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1381. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“முஸ்லிமான ஒருவருக்கு பருவமடையாத மூன்று குழந்தைகள் மரணித்துவிட்டால் அவர் அக்குழந்தைகளின் மீது காட்டிய இரக்கத்தின் காரணத்தால் அவரை அல்லாஹ் சொர்க்கத்தில் பிரவேசிக்கச் செய்வான்.“

என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1382. பராஉ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(நபி(ஸல்) அவர்களின் மகன்) இப்ராஹீம்(ரலி) மரணித்தபோது நபி(ஸல்) அவர்கள்,‘இவருக்குச் சொர்க்கத்தில் பாலூட்டும் அன்னை உண்டு‘‘ எனக் கூறினார்கள்.

## இணைவைப்போரின் குழந்தைகள் இறந்துவிட்டால்...

ஹதீஸ் 1383. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இணைவைப்போரின் குழந்தைகள் (இறந்துவிட்டால் அவர்களின் முடிவு யாது? என்பது) பற்றி நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கவர்கள்’அவர்களைப் படைத்த அல்லாஹ், அவர்கள் (உயிருடனிருந்திருந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை நன்கறிந்தவன்‘‘ எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1384. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இணைவைப்போரின் குழந்தைகள் (இறந்துவிட்டால் அவர்களின் முடிவு யாது என்பது) பற்றி நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கவர்கள்,‘இவர்கள் (உயிருடன் இருந்திருந்தால்) என்ன செய்திருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கறிந்தவன்‘‘ எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1385. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு விலங்கு எப்படி முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப் பெற்றெடுக்கிறதோ அதைப்போன்று, எல்லாக் குழந்தைகளுமே இயற்கையான (மார்க்கத்)திலேயே பிறக்கின்றன. விலங்குகள் அங்கக்

குறைவுடன் பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? (முழுமையான விலங்கை அங்க சேதப்படுத்துவது போல்) பெற்றோர்கள் தாம் குழந்தைகளை (இயற்கையான மார்க்கத்தைவிட்டுத் திருப்பி) யூதர்களாகவோ கிறித்தவர்களாகவோ நெருப்பு வணங்கிகளாகவே ஆக்கிவிடுகின்றனர்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1386. ஸமுரா இப்னு ஜுன்துப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் எங்களை நோக்கி,'இன்றிரவு உங்களில் யாரும் கனவு கண்டீர்களா?' என்று கேட்கும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். எவரேனும் கனவு கண்டு அதைக் கூறினால்,'அல்லாஹ் நாடியது நடக்கும்' எனக் கூறுவார்கள்.

இவ்வாறே ஒரு நாள்,'உங்களில் யாரும் இன்றிரவு கனவு கண்டீர்களா?' என்று கேட்டதும் நாங்கள் இல்லை என்றோம். அவர்கள்,'நான் இன்றிரவு ஒரு கனவு கண்டேன் அதில் இருவர் என்னிடம் வந்து என்னுடைய கைகளைப் பிடித்து என்னைப் புனித பூமியொன்றுக்கு அழைத்துச் சென்றனர். அங்கே ஒருவர் உட்கார்ந்திருந்தார். நின்றிருந்த இன்னொருவரின் கையில் இரும்பாலான கொக்கிகள் இருந்தன. அவர் அதைக் கொண்டு உட்கார்ந்திருப்பவரின் கீழ்த்தாடையின் ஒருபுறம் குத்த அது அவரின் பிடரி வழியாக வெளியேறியது. இப்படியே தாடையின் இன்னொரு புறமும் செய்தார். இதற்குள் தாடையின் முதற் பகுதி ஒழுங்காம்விட்டது. பின்பு இது குத்தப்பட்டதும் அது பழைய நிலையை அடைந்தது. உடனே நான் இது என்று கேட்டேன். அதற்கு அவ்விருவரும்'நடங்கள்' என்றனர். அப்படியே நடந்தபோது அங்கு ஒருவர் மல்லாந்து படுத்திருந்தார். அவரின் தலை மாட்டிலே பெரிய பாறையுடன் நிற்கும் இன்னொருவர், அதைக் கொண்டு அவரின் தலையை உடைத்தார். அவ்வாறு உடைக்கும்போது பாறை உருண்டு ஓடிவிட்டது. அந்தப் பாறையை அவர் எடுத்து வருவதற்குள் சிதைந்த தலை பழைய நிலைக்கு மாறிவிட்டது. மீண்டும் வந்து உடைத்தார். உடனே'இவர் யார்?' என கேட்டேன். அதற்கு அவ்விருவரும்'நடங்கள்'' என்றனர். எனவே நடந்தோம். அங்கு அடுப்பு போன்ற ஒரு பொந்து இருந்தது. அதன் மேற்பாகம் குறுகலாகவும் அடிப்பாகம் விசாலமானதாகவும் இருந்தன. அதற்குக் கீழ் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. நெருப்பின் உஷ்ணம் அதிகமாகும்போது அந்தப் பொந்தின் அடியிலுள்ளவர்கள் வெளியேற முயன்றார்கள். (ஆனால் மேற்பகுதி குறுகலாயிருப்பதால் வெளியேற முடியவில்லை.) நெருப்பு அணைந்ததும் பழைய (கீழ்ப்) பகுதிக்கு வந்துவிட்டார்கள். அதில் ஆண்களும், பெண்களும் நிர்வாணமாகக் கிடந்தார்கள். நான்'இவர்கள் யார்?' எனக் கேட்டேன் அதற்கும் அவர்கள்'நடங்கள்' எனக் கூறி விடவே மேலும் நடந்து ஓர் இரத்த ஆற்றின் பக்கம் வந்தோம். அந்த ஆற்றின் நடுப்பகுதியில் ஒருவர் நின்றிருந்தார். அவருக்கு முன்பாகக் கற்கள் கிடந்தன. ஆற்றின் ஓரத்தில் இன்னொருவர் நின்றிருந்தார். அந்த மனிதர் ஆற்றைவிட்டு வெளியேற முயலும்போது இவர் அவரின் வாயில் கல்லை எறிந்தார். அக்கல் பட்டதும் கரையேற முயன்றவர் முன்னிருந்த இடத்திற்குத் தள்ளப்பட்டார். இவ்வாறே அவர் வெளியேற முயலும் போதெல்லாம் இவர் அவரின் வாயில் கல்லால் அடிக்க, அவர் மீண்டும் பழைய இடத்திற்கே சென்றார். அப்போது நான்'என்ன இது?' எனக் கேட்டேன். அதற்கு அவ்விருவரும்'நடங்கள்' எனக் கூறிவிடவே நடந்து ஒரு பசுமையான பூங்காவுக்கு வந்தோம். அதில் ஒரு பெரிய மரம் இருந்தது. அதன் அடியில் ஒரு வயோதிகரும் சில சிறுவர்களும் இருந்தனர். அந்த மரத்திற்கு அருகில் ஒருவர் இருந்தார். அவருக்கு முன்னால் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. அதை அவர் மூட்டிக் கொண்டிருந்தார். பிறகு அவ்விருவரும் என்னை அம்மரத்தில் ஏற்றிக் கொண்டு போய் அங்கு ஒரு வீட்டில் பிரவேசிக்கச் செய்தார்கள். நான் இதுவரை அப்படி ஓர் அழகான வீட்டைப் பார்த்ததேயில்லை. அதில் சில ஆண்களும்

வயோதிகர்களும் இளைஞர்கள், பெண்கள், சிறுவர்கள் ஆகியோரும் இருந்தனர். பிறகு அவ்விருவரும் அங்கிருந்து என்னை அழைத்து மரத்தில் ஏற்றி இன்னொரு மாளிகையில் பிரவேசிக்கச் செய்தனர். அது மிகவும் அழகானதும் சிறப்பானதுமாக இருந்தது. அதில் வயோதிகர்களும் இளைஞர்களும் இருந்தனர். பிறகு நான் இருவரிடமும்'இரவு முழுவதும் என்னை நீங்கள் சுற்றிக் காண்பித்தீர்களே, அப்போது நான் கண்டவற்றைப் பற்றி விவரங்களைச் சொல்லுங்கள்!' எனக் கேட்டேன். அதற்கு இருவரும்'ஆம்! முதலில் தாடை சிதைக்கப்பட்ட வரைப் பார்த்தீரே! அவர் பெரும் பொய்யர். அவர் பொய் பேச அது பலர் வழியாக உலகம் முழுவதையும் அடையும். நீர் பார்த்த அத்தண்டனை அவருக்கு மறுமை நாள் வரை கொடுக்கப்படும். அடுத்து தலை உடைக்கப்பட்ட நிலையில் நீர் பார்த்தீரே! அவருக்கு அல்லாஹ் குர்ஆனைக் கற்றுக் கொடுத்தும் அதைப் பயன்படுத்தாமல் இரவில் தூங்கிவிட்டார். பகலில் அதைச் செயல்படுத்தவில்லை. எனவே அத்தண்டனை அவருக்கு மறுமை நாள் வரை கொடுக்கப்படும். அடுத்து ஒரு பொந்தில் சிலரைப் பார்த்தீரே! அவர்கள் விபச்சாரத்தில் ஈடுபட்டவர்கள். (இரத்த) ஆற்றில் சிலரைப் பார்த்தீரே! அவர்கள் வட்டி வாங்கித் தின்றவர்கள். மரத்தின் அடிப்பாகத்தில் இருந்த பெரியவர் இப்ராஹீம்(அலை) அவர்கள் அவரைச் சுற்றியிருந்த சிறுவர்கள் (முஸ்லிம்) மக்களின் குழந்தைகள். நெருப்பு மூட்டிக் கொண்டிருந்தவர் நரகக் காவலாளியான மாலிக்(அலை). நீர் நுழைந்த முதல் மாளிகை சராசரி இறைநம்பிக்கையாளர்களின் இருப்பிடம். அடுத்த மாளிகையோ உயிர்த்தியாகிகளின் இருப்பிடம். நான் ஜிப்ரீல். இவர் மீக்காயில்'' என்று கூறிவிட்டு.'இப்போது உம்முடைய தலையை உயர்த்தும்'' என்றனர். நான் என்னுடைய தலையை உயர்த்தியதும் எனக்கு மேற்புறம் மேகம் போல் இருந்தது. அப்போது இருவரும்'இதுவே (மறுமையில்) உம்முடைய இருப்பிடம்'' என்றதும் நான்'என்னுடைய இருப்பிடத்தில் என்னை நுழைய விடுங்களேன்'' என்றேன். அதற்கு இருவரும்'உம்முடைய வாழ்நாள் இன்னம் மிச்சமிருக்கிறது் அதை நீர் இன்னும் பூர்த்தி செய்யவில்லை. எனவே, அதனை நீர் பூர்த்தி செய்ததும் நீர் உம்முடைய இருப்பிடம் வருவீர்'' என்றனர்'' என்று கூறினார்கள்.

## திங்கட்கிழமை மரண மெய்தல்:

ஹதீஸ் 1387. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சென்றபோது'நபி(ஸல்) அவர்களை எத்தனைத் துணிகளில் கஃபன் செய்தீர்கள்?' என்று அவர் கேட்டார்.'வெண்மையான மூன்று பருத்தித் துணிகளில் கஃபன் செய்தோம். அவற்றில் சட்டையோ தலைப்பாகையோ இல்லை என்றேன்!"அபூ பக்ர்(ரலி) என்னிடம்,'நபி(ஸல்) அவர்கள் எந்தக் கிழமையில் மரண மடைந்தார்கள்?' எனக் கேட்டார். நான்'திங்கட்கிழமை'' என்றேன்.'இன்று என்ன கிழமை?' என்று கேட்டதும் நான்'திங்கட்கிழமை'' என்றேன். அதற்கவர்'இன்றிரவுக்குள் (என்னுடைய மரணம்) நிகழும் என எண்ணுகிறேன்'' என்று கூறிவிட்டுத் தாம் நோயுற்றிருந்தபோது அணிந்திருந்த ஆடையைப் பார்த்தார். அதில் குங்குமப்பூவின் கறை படிந்திருந்தது.'இதைக் கழுவி இத்துடன் இன்னும் இரண்டு துணிகளையும் சேர்த்து அவற்றில் என்னைக் கஃபனிடுங்கள்' எனக் கூறினார். நான்'இது பழையதாயிற்றே!"என்றேன். அதற்கவர்'மய்யித்தைவிட உயிருடனிருபபவரே புத்தாடை அணிய அதிகத் தகுதியுடையவர் மேலும், அது (இறந்த) உடலிலிருந்து வழியும் சீழுக்கே போகும்'' என்றார். பிறகு அன்று மாலை வரை மரணிக்க வில்லை. செவ்வாய் இரவில்தான் மரணித்தார். (அன்று) காலை விடிவதற்கு முன் அடக்கம் செய்யப்பட்டார்.

## திடீர் மரணம் அடைதல்.

ஹதீஸ் 1388. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'என்னுடைய தாய் திடீரென்று மரணித்துவிட்டார். அவர் அப்போது பேச முடிந்திருந்தால் நல்ல (தர்ம) காரியம் செய்திருப்பார். எனவே, அவருக்காக நான் தர்மம் செய்தால் அதற்கான நன்மை அவரைச் சேருமா?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்'ஆம்'' என்றனர்.

## நபி(ஸல்), அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) ஆகியோரின் கப்ருகள்.

ஹதீஸ் 1389. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மரண நோயுற்றிருந்தபோது, என்னிடம் தங்கும் நாள் தாமதப்படுவதாக எண்ணி,'இன்று நான் எங்கிருக்கிறேன்? நாளை நான் எங்கே இருப்பேன்'' என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். என் வீட்டில் தங்கும் நாளிலேயே அவர்களின் உயிரை என்னுடைய நெஞ்சுக்கும் தோளுக்குமிடையே அல்லாஹ் கைப்பற்றினான். என்னுடைய வீட்டிலேயே அவர்கள் அடக்கம் செய்யப்பட்டார்கள்.

ஹதீஸ் 1390. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மரண நோயுற்றிருந்தபோது,'?தர்களையும் கிறித்தவர்களையும் அல்லாஹ் சபிப்பானாக! அவர்கள் தங்களின் நபிமார்களது மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கிவிட்டார்கள்' எனக் கூறினார்கள். இந்த பயம் மட்டும் இல்லாதிருந்தால் நபி(ஸல்) அவர்களின் கப்ரும் திறந்த வெளியில் அமைக்கப்பட்டிருக்கும். எனினும் நபி(ஸல்) அவர்கள் இந்த விஷயத்தில் பயந்தே உள்ளார்கள் அல்லது அவர்களின் கப்ரும் வணக்கத்தலமாக ஆக்கப்பட்டு விடும் என்ற பயம் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது.

நபி(ஸல்) அவர்களின் கப்ரு ஒட்டகத்தின் திமில் போன்று உயரமாக இருந்ததைத் தாம் பார்த்ததாக சு∴ப்யான் அத் தம்மார் அவர்கள் கூறினார்கள்.

வலீத் இப்னு அப்தில் மலிக்கின் (ஆட்சிக்) காலத்தின்போது நபி(ஸல்) அடக்கம் செய்யப்பட்ட அறையின் ஒரு சுவர் இடிந்து விழுந்தது. அதைப் புனர் நிர்மாணம் செய்வதில் மக்கள் ஈடுபட்டபோது ஒரு பாதம் வெளியில் தெரிந்தது. உடனே மக்கள் பதறிப் போய் அது நபி(ஸல்) அவர்களின் பாதமாக இருக்குமோ என நினைத்தனர். இது பற்றித் தெரிந்தவர் யாருமில்லாதிருந்தபோது நான்'அல்லாஹ்வின் மீது ஆணையாக! இது நபி(ஸல்) அவர்களின் பாதமே இல்லை மாறாக, இது உமர்(ரலி) அவர்களின் பாதகமாகும் என்றேன்'' என உர்வா கூறுகிறார்.

ஹதீஸ் 1391. உர்வா அவர்கள் கூறினார்கள்.

ஆயிஷா(ரலி) தம் மரணத் தருவாயில் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களிடம்'என்னை நபி(ஸல்) அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோருடன் (அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில்) அடக்கம் செய்ய வேண்டாம் மாறாக, என்னை நபி(ஸல்) அவர்களின் மற்ற மனைவியருடன் அவர்களின் அடக்கத் தலங்கள் அமைந்துள்ள'பகீ∴' என்னும் இடத்திலேயே அடக்கிவிடுங்கள். ஏனெனில் (மற்ற மனைவியரை விடச்) சிறப்பாக நான் புகழப்பட விரும்பவில்லை'' எனக் கூறினார்.

ஹதீஸ் 1392. அம்ர்ப்ன மைமூன் அல்அவ்தீ அவர்கள் கூறினார்கள்.

நான் உமர் இப்னுல் கத்தாப்(ரலி) அவர்களை (மரணத் தருவாயில்) பார்த்தேன். தம் மகனை நோக்கி, அவர்,'அப்துல்லாஹ்வே! இறைநம்பிக்கையாளர்களின் தாயார் ஆயிஷா(ரலி) அவர்களிடம் போய் உமர் ஸலாம் கூயிதாகச் சொல்லிவிட்டு, என்னுடைய தோழர்களான (நபி(ஸல்) அபூ பக்ர்(ரலி) ஆகிய இருவருடன் நானும் அடக்கம் செய்யப்படவேண்டும் என்பதற்கு அவர்களிடம் அனுமதி கேள்' எனக் கூறினார். அவ்வாறே கேட்கப்பட்டதும். ஆயிஷா(ரலி) நான் அந்த இடத்தை எனக்கென நாடியிருந்தேன். இருந்தாலும் இன்று நான் அவருக்காக அதைவிட்டுக் கொடுக்கிறேன்'' என்றார். இப்னு உமர்(ரலி) திரும்பி வந்தபோது உமர்(ரலி)'என்ன பதில் கிடைத்தது?' எனக் கேட்டார். இப்னு உமர்(ரலி)'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! உங்களுக்கு அவர் அனுமதியளித்துவிட்டார்' எனக் கூறினார். உடனே உமர்(ரலி)'நான் உறங்கவிருக்கும் அந்த இடத்தைத் தவிர வேறெதுவும் எனக்கு மிக முக்கியமானதாக இல்லை. நான் (என்னுடைய உயிர்) கைப்பற்றப்பட்டவுடன் என்னைச் சுமந்து சென்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் (மீண்டும்) என்னுடைய ஸலாமைக் கூறி,'உமர் அனுமதி கேட்கிறார்' எனக் கூறுங்கள். எனக்கு அனுமதியளித்தால் என்னை அங்கு அடக்கம் செய்யுங்கள் இல்லையெனில் என்னை முஸ்லிம்களின் பொது மையவாடியில் அடக்கி விடுங்கள். நபி(ஸல்) தாம் அவர்கள் மரணிக்கும் வரை எவரெவர் விஷயத்தில் திருப்தி கொண்டிருந்தார்களோ அவர்களைத் தவிர வேறு யாரும் ஆட்சிப் பொறுப்பிற்குத் தகுதியுடையவர்களாக எனக்குத் தெரியவில்லை. எனவே, எனக்குப் பிறகு இவர்களில் யாரை கலீஃபாவாகத் தேர்ந்தெடுக்கிறீர்களோ அவர் தாம் கலீஃபா! அவர் சொல்வதைக் கேட்டு அவருக்குக் கட்டுப்படுங்கள்' எனக் கூறிவிட்டு, உஸ்மான்(ரலி), அலீ(ரலி), தல்ஹா(ரலி) ஸுபைர்(ரலி) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோரின் பெயர்களைக் குறிப்பிட்டார். அப்போது அன்ஸார்களில் ஓர் இளைஞர் வந்து'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அல்லாஹ்வின் நற்செய்தியை ஏற்றுக் கொள்ளுங்கள்! உங்களுக்கு இஸ்லாத்தில் இருந்த அந்தஸ்து என்ன என்பதைத் தாங்கள் அறிவீர்கள். பிறகு நீங்கள் தலைவராம் நீதி, நேர்மையை நிலைநாட்டினீர்கள். இதற்கெல்லாம் மேலாக ஷஹாதத்... வீரமரணமும் கிடைத்திருக்கிறது'' என்றார். உமர்(ரலி)'என்னுடைய சகோதரரின் மகனே! என்னுடைய விருப்பமெல்லாம் இந்த ஆட்சிப் பொறுப்பு எனக்கு நன்மையைத் தேடித் தராவிட்டாலும் எனக்குத் தீமையை தந்துவிடாமலிருந்தால் அதுவே போதும் என்பதே' எனக் கூறிவிட்டு,'எனக்குப் பின்னால் தலைவராக வருபவருக்கு நான் கூறிக்கொள்வது யாதெனில், அவர் துவக்கத்தில் ஹிஜ்ரத் செய்த முஹாஜிர்களின் விஷயத்தில் நல்லபடி நடந்து கொள்ளவேண்டும் அவர்களின் உரிமைகளை அறிந்து அவர்களின் கண்ணியத்தையும் கௌரவத்தையும் பேணிக் காக்க வேண்டும். அதுபோன்றே அன்ஸார்களிடமும் நல்லவிதமாக நடந்து கொள்ள வேண்டும். அவர்கள் (மதீனாவில்) இருப்பிடத்தையும் நம்பிக்கையையும் தக்க வைத்தவர்கள். அவர்களில் நல்லவர்களின் நற்செயலை ஏற்று மதிப்பளித்து தவறிழைக்கக் கூடியவர்களை மன்னித்துவிடவேண்டும். மேலும், அல்லாஹ்வினதும் அவனுடைய தூதர்(ஸல்) அவர்களின்கி பொறுப்பிலுள்ள (முஸ்லிம்களில்லாத)வர்களின் ஒப்பந்தத்தை முழுமையாக நிறைவேற்றவேண்டும். அவர்களைப் பாதுகாக்கப் போர் புரியவேண்டும். மேலும், அவர்களின் சக்திக்குமேல் அவர்களைச் சிரமப் படுத்தக் கூடாது'' என்று கூறினார்.

## இறந்தோரை ஏசக் கூடாது.

ஹதீஸ் 1393. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

**“இறந்தோரை ஏசாதீர்கள்! ஏனெனில் அவர்கள் தாம் முற்படுத்தியவைகளின் பால் சென்று சேர்ந்துவிட்டார்கள்!”என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.**

## இறந்தவர்களில் மோசமானவர்களைப் பற்றிக் கூறுதல்.

ஹதீஸ் 1394**. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.**

அபூ லஹப் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்! அவன் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ‘இனி எல்லா நாள்களிலும் உமக்கு நாசம் உண்டாகட்டும்’ எனக் கூறினான். எனவே, ‘அபூ லஹபின் இரண்டு கரங்களும் நாசமாகட்டும் அவனும் நாசமாகட்டும்‘‘ என்ற (111வது) அத்தியாயம் இறங்கியது.

# அத்தியாயம் 24 ஸகாத்தின் சட்டங்கள்

## ஸகாத் கடமையாக்கப்படுதல்.

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்..

அல்லாஹ் கூறினான்:

'தொழுகையை நிலை நிறுத்துங்கள் ஸகாத்தையும் கொடுங்கள்'' (திருக்குர்ஆன் 02:43, 02:83, 02:110)

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தொழுகை, ஸகாத், உறவினருடன் இணக்கமாக இருத்தல், சுயமரியாதை ஆகியவற்றைக் கட்டளையிட்டார்கள் என்று அபூ சுஃப்யான் (ஹிர்கல் மன்னரிடம்) கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். ஸகாத்தின் சட்டங்கள்

ஹதீஸ் 1395. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முஆத்தை யமனுக்கு (ஆளுநராக) அனுப்பினார்கள். அப்போது அவரிடம்,'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை நான் நபி என்ற உறுதீமொழியின் பால் அவர்களை அழைப்பீராக! இதற்கு அவர்கள் கட்டுப்பட்டால் தினமும் ஐவேளைத் தொழுகையை இறைவன் கடமையாக்கியிருக்கிறான் என்பதை அவர்களுக்கு அறிவிப்பீராக! இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால் அவர்களில் செல்வந்தர்களிடம் பெற்று, ஏழைகளுக்கு வழங்குவதாக அவர்களின் செல்வத்தில் இறைவன் ஸகாத்தைக் கடமையாக்கியிருக்கிறான் என்பதை அறிவிப்பீராக!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1396. அபூ அய்?ப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து.'என்னைச் சுவர்க்கத்தில் சேர்க்கும் ஒரு (நற்) செயலை எனக்குக் கூறுங்கள்' எனக் கேட்டார். அப்போது நபித் தோழர்கள் (வியப்புற்று)'இவருக்கென்ன (ஆயிற்று)? இவருக்கென்ன (ஆயிற்று)?' என்றனர். நபி(ஸல்) அவர்கள்'இவருக்கு ஏதோ தேவையிருக்கிறது (போலும்)!"(என்று கூறிவிட்டு அவரிடம்.)'நீர் அல்லாஹ்வை வணங்கவேண்டும்: அவனுக்கு எதனையும் இணையாக்கக் கூடாது: தொழுகையை நிலை நாட்ட வேண்டும்: ஸகாத் வழங்க வேண்டும்: உறவினர்களிடம் இணக்கமாக நடக்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1397. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கிராமவாசி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'நான் சுவர்க்கம் செல்வதற்கேற்ற ஒரு காரியத்தை எனக்குக் கூறுங்கள்' என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நீர் அல்லாஹ்வை வணங்க வேண்டும் அவனுக்கு எதனையும் இணையாக்கக் கூடாது கடமையான தொழுகையையும் கடமையான ஸகாத்தையும் நிறைவேற்ற வேண்டும் ரமலானில் நோன்பு நோற்கவேண்டும்'' என்றார்கள். அதற்கவர்,'என் உயிர் எவன் கைவசத்தில் உள்ளதோ அவன் மேல் ஆணையாக! இதைவிட அதிகமாக எதையும் செய்ய மாட்டேன்' என்றார். அவர் திரும்பிச் சென்றதும் நபி(ஸல்) அவர்கள்,'சுவர்க்கவாசிகளில் ஒருவரைப் பார்க்க விரும்புவோர் இவரைப் பார்க்கட்டும்'' என்றார்கள்.

ஹதீஸ் 1398. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்துல் கைஸ் கூட்டத்தினர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, 'நபி அவர்களே! நாங்கள் ரபீஆக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். எங்களுக்கும் உங்களுக்குமிடையே இஸ்லாத்தை ஏற்காத முளர் கூட்டத்தினர் வசிக்கிறார்கள். எனவே, யுத்தம் தடைசெய்யப்பட்ட மாதங்களிலன்றி (வேறு மாதங்களில்) நாங்கள் உங்களிடம் வர முடியாது. எனவே, எங்களுச்குச் சில கட்டளைகளைக் கூறுங்கள். நாங்களும் அதைப் பின்பற்றி எங்களுக்குப் பின்னால் தங்கிவிட்டவர்களுக்கும் அறிவிப்போம்' என்றார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'உங்களுக்கு நான் நான்கு காரியங்களை ஏவுகிறேன் நான்கு காரியங்களைத் தடை செய்கிறேன். அவை: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லையென்று உறுதியாக நம்புதல், தொழுகையை நிலை நாட்டுதல், ஸகாத் வழங்குதல், போரில் கிடைக்கும் பொருட்களிலிருந்து ஐந்தில் ஒரு பங்கை வழங்குதல்' என்று விரலால் எண்ணிச் சொன்னார்கள். மேலும், 'மது வைத்திருந்த மண் சாடிகள், சுரைக் குடுக்கைகள், பேரீச்சை மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரித்த மரப்பீப்பாய்கள், தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகிய நான்கை உங்களுக்கு நான் தடை செய்கிறேன்' என்று கூறினார்கள். (பின்னர் இத்தடை நீக்கப்பட்டது)

ஹதீஸ் 1399 - ஹதீஸ் 1400 அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மரணித்து அபூ பக்ர் (ரலி) (ஆட்சிக்கு) வந்ததும் அரபிகளில் சிலர் (ஸகாத்தை மறுத்தன் மூலம்) இறைமறுப்பாளர்களாம்விட்டனர். (அவர்களுடன் போர் தொடுக்க அபூ பக்ர் (ரலி) தயாரானார் (உமர் (ரலி), 'லா இலாஹ இல்லல்லாஹ்" கூறியவர் தம் உயிரையும் உடைமையையும் என்னிடமிருந்து காத்துக் கொண்டார் தண்டனைக்குரிய குற்றம் புரிந்தவரைத் தவிர அவரின் விசாரணை அல்லாஹ்விடமே உள்ளது" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கும்போது, நீங்கள் எவ்வாறு இந்த மக்களுடன் போரிட முடியும்?' என்று கேட்டார். அபூ பக்ர் (ரலி), உமரை நோக்கி, 'அல்லாஹ்வின் மீது ஆணையாக, தொழுகையையும் ஸகாத்தையும் பிரித்துப் பார்ப்போருடன் நிச்சயமாக நான் போரிடுவேன். ஸகாத் செல்வத்திற்குரிய கடமையாகும் அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி (ஸல்) அவர்களிடம் வழங்கி வந்த ஓர் ஒட்டகக் குட்டியை இவர்கள் வழங்க மறுத்தால் கூட அதை மறுத்தற்காக நான் இவர்களுடன் போரிடுவேன்" என்றார். இது பற்றி உமர் (ரலி), 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூ பக்ரின் இதயத்தை (தீர்க்கமான தெளிவைப் பெறும் விதத்தில்) அல்லாஹ் விசாலாமாக்கியிருந்தாலேயே இவ்வாறு கூறினார். அவர் கூறியதே சரியானது என நான் விளங்கிக் கொண்டேன்" என்றார்.

## ஸகாத் கொடுப்பதாக உறுதியளித்தல்.

அல்லாஹ் கூறினான்:

"ஆயினும் அவர்கள் தவ்பாச் செய்து தொழுகையை நிலைநாட்டி ஸகாத்தையும் (முறையாகக்) கொடுத்து வருவார்களானல், அவர்கள் உங்களுக்கு மார்க்கத்தில் சகோதரர்களே" (திருக்குர்ஆன் 9:11)

ஹதீஸ் 1401. ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் தொழுகையை நிலை நிறுத்துவதாகவும் ஸக்காத் வழங்குவதாகவும் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் நன்மையையே நாடுவதாகவும் உறுதி மொழி எடுத்துக் கொண்டேன்.

## ஸகாத்தை மறுப்பதன் குற்றம்.

அல்லாஹ் கூறினான்:

“மேலும், பொன்னையும் வெள்ளியையும் சேமித்து வைத்துக் கொண்டு அவற்றை இறைவழியில் செலவிடாதிருக்கிறவர்களுக்கு நோவினை செய்யும் வேதனையுண்டு என்று (நபியே!) நீர் நற்செய்தி கூறும்! (நபியே!) அந்த நாளில் (அவர்கள் சேமித்து வைத்திருந்த செல்வத்தை) நரக நெருப்பிலிட்டுக் காய்ச்சி அதைக் கொண்டு அவர்களின் நெற்றிகளிலும் விலாப்புறங்களிலும் முதுகுகளிலும் சூடு போடப்படும். (மேலும்) இதுதான் நீங்கள் உங்களுக்காகச் சேமித்து வைத்தது; எனவே, நீங்கள் சேமித்து வைத்ததைச் சுவைத்துப் பாருங்கள் என்று கூறப்படும்!”(திருக்குர்ஆன் 9:34, 35)

ஹதீஸ் 1402. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உலகில் ஒட்டகம் வளர்த்தவன் அதற்கான கடமையை நிறைவேற்றவில்லையாயின் அது கியாமத் நாளில் முன்பிருந்ததை விட நல்ல நலையில் வந்து தன்னுடைய கால்களால் அவனை மிதிக்கும். மேலும் அதுபோன்றே உலகில் ஆடு வளர்த்தவன் அதற்கான கடமையை நிறைவேற்றவில்லையாயின் அது கியாமத் நாளில் முன்பிருந்ததை விட நல்லநிலையில் வந்து தன்னுடைய குளம்புகளால் அவனை மிதித்துக் தன்னுடைய கொம்புகளால் அவனை முட்டும். மேலும், உங்களில் யாரும் கியாமத் நாளில் கத்திக் கொண்டிருக்கும் ஆட்டைத் தம் பிடரியில் சுமந்து வந்து (அபயம் தேடிய வண்ணம்)’முஹம்மதே’ எனக் கூற, நான்’அல்லாஹ்விடம் உனக்காக எதையும் செய்ய எனக்கு அதிகாரமில்லை‘‘ என்று கூறும்படியான நிலை ஏற்பட வேண்டாம். நிச்சயமாக (இது பற்றியெல்லாம் உங்களுக்கு (நான் அறிவித்துவிட்டேன். மேலும் யாரும் (கியாமத் நாளில்) குரலெழுப்பிப் கொண்டிருக்கும் ஒட்டகத்தைத் தம் பிடரியில் சுமந்து வந்து’முஹம்மதே’ எனக் கூற, அதற்கு நான்’அல்லாஹ்விடம் உனக்காக எதையும் செய்ய எனக்கு அதிகாரமில்லை‘‘ என்று சொல்லும் படியான நிலைமை ஏற்பட வேண்டாம். (இது பற்றியெல்லாம் உங்களுக்கு) நான் அறிவித்து விட்டேன்.“

“நீர் நிலைகளில் பால் கறப்பது ஆட்டின் உரிமைகளில் ஒன்றாகும்‘‘ என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1403. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“அல்லாஹ் யாருக்கேனும் செல்வதைக் கொடுத்து அவன் அதற்கான ஜகாத்தை நிறைவேற்றவில்லையாயின் கியாமத் நாளில் அச்செல்வம் கடுமையான நஞ்சுடைய பாம்பாக மாறும். அது அவனுடைய கழுத்தில் சுற்றிக் கொண்டு தன்னுடைய இரண்டு விஷப் பற்களால் அவனுடைய தாடையைக் கொத்திக் கொண்டே,‘நானே உன்னுடைய செல்வம்“‘நானே உன்னுடைய செல்வம்“‘நானே உன்னுடைய புதையல்‘‘ என்று கூறும்.“

நபி(ஸல்) இதைக் கூறிவிட்டு,‘அல்லாஹ் தன் அருளினால் தங்களுக்குக் கொடுத்திருக்கும் பொருட்களில் உலோபித்தனம் செய்கிறவர்கள் அது தமக்கு நல்லதென எண்ணவே வேண்டாம். அவ்வாறன்று! அது அவர்களுக்குத் தீங்குதான் அவர்கள் உலோபித்தனத்தால் சேர்த்துவைத்த (பொருள்கள்) எல்லாம் மறுமையில் அவர்கள் கழுத்தில் அரிகண்டமாக போடப்படும்!”என்ற (திருக்குர்ஆன் 03:180) வசனத்தை ஓதினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஸகாத் கொடுக்கப்பட்ட பொருள் பதுக்கல் பொருள் ஆகாது.

ஏனெனில்'ஐந்து ஊகியாக்களுக்குக் குறைந்த பொருட்களுக்கு ஜகாத் கொடுக்க வேண்டியதில்லை'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1404. காலித் இப்னு அஸ்லம் கூறிய தாவது:

நாங்கள் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) உடன் வெளியில் புறப்பட்டோம். அப்போது ஒரு கிராமவாசி,'யார் பொன்னையும் வெள்ளியையும் சேமித்து வைத்துக்கொண்டு அவற்றை இறைவழியில் செலவிடாதிருக்கிறவர்கள்... என்ற வசனத்தைப் பற்றி எனக்கு அறிவியுங்கள்' எனக் கூறினார். அதற்கு இப்னு உமர்(ரலி),'அவற்றைப் பதுக்கி வைத்து அதற்கான ஸகாத்தைக் கொடுக்காமலிருக்கிறவருக்குக் கேடுதான். இவ்வசனம் ஸகாத் கடமையாக்கப்படுவதற்கு முன்புள்ளதாகும். ஸகாத் பற்றிய வசனம் அருளப்பட்டதும் செல்வங்களைப் பரிசுத்தமாக்கக் கூடியதாக'ஸகாத்தை' அல்லாஹ் ஆக்கிவிட்டான்' என்றனர்.

ஹதீஸ் 1405. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஐந்து ஊக்கியாவுக்குக் குறைந்த அளவு (வெள்ளியில்) ஸகாத் இல்லை. ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவாக இருந்தால் அவற்றில் ஸகாத் இல்லை. ஐந்து வஸக்குக்குக் குறைவான (ஒரு வஸக் ழூ ழூ 60ஸாவு) தானியத்தில் ஸகாத் இல்லை.

என அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1406. ஸைத் இப்னு வஹ்ப் அவர்கள் கூறினார்கள்.

நான் ரப்தா என்னுமிடத்திற்குச் சென்றபோது அங்கு அபூ தர்(ரலி) இருந்தார். நான் அவரிடம்'நீர் இங்கு வந்து தங்கக் காரணமென்ன?' என்று கேட்டேன். அதற்கவர்'நான் சிரியாவில் இருந்தபோது, தங்கத்தையோ வெள்ளியையோ சேமித்து வைத்துக் கொண்டு அதை இறைவழியில் செலவிடாதவர்கள்... என்ற (திருக்குர்ஆன் 09:34) இறைவசன(ம் இறக்கப்பட்ட காரண)த்தில் நானும் முஆவியா(ரலி)வும் கருத்து வேறுபாடு கொண்டோம். முஆவியா(ரலி)'இது வேதக்காரர்கள் விஷயமாக இறங்கியது'' என்றார். நானோ'நம்மையும் அவர்களையும் குறித்தே இறங்கியுள்ளது'' என்றேன். எனவே, எனக்கும் அவருக்குமிடையே பிரச்சினை ஏற்பட்டது. உடனே அவர் என்னைப் பற்றி உஸ்மான்(ரலி) அவர்களிடம் கடிதம் மூலம் முறையிட்டதும் உஸ்மான்(ரலி) மதீனாவுக்கு வருமாறு எனக்குக் கடிதம் எழுதினார். எனவே, நான் அங்கு போனதும் மக்கள் இதற்கு முன் என்னைப் பார்க்காதவர்கள் போன்று என்னருகில் அதிகமாகவே கூடி (மதீனாவிற்கு அழைக்கப்பட்ட காரணத்தை விசாரிக்க ஆரம்பித்து)விட்டார்கள். நான் உஸ்மான்(ரலி) அவர்களிடம் இது பற்றிக் கூறியதும் உஸ்மான்(ரலி) அவர்களிடம்,'நீர் விரும்பினால் தனியாக மதீனாவுக்கு அருகில் எங்கேனும் இருந்து கொள்ளும்!' என்று கூறினார். இதுதான் இந்த இடத்தில் என்னைக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. மேலும், எனக்கு ஓர் அபிசீனியர் (கறுப்பர்) தலைவராக இருந்தாலும் அவருக்கு நான் செவி தாழ்த்திக் கட்டுப்படுவேன்'' என்று கூறினார்.

ஹதீஸ் 1407 ~ ஹதீஸ் 1408 அஹ்னஃப் இப்னு கைஸ் அவர்கள் கூறினார்கள்.

நான் குறைஷிகள் நிறைந்திருந்த இடத்திற்குச் சென்று அமர்ந்தேன். அப்போது பரட்டை முடியுள்ள சொரசொரப்பான ஆடையணிந்த முரட்டுத் தோற்றமுள்ள ஒருவர் அவர்களிடம் வந்து ஸலாம் கூறிவிட்டு,'(ஸகாத் கொடுக்காமல்) பொருளைப் பதுக்கி வைப்பவர்களுக்காக, நரக நெருப்பில் சூடாக்கப்பட்ட ஒரு கல் உண்டு. அக்கல் அவர்களின் மார்புக் காம்பில்

வைக்கப்படும். உடனே அக்கல் புஜத்தின் மேற்பகுதி எலும்பின் வழியாக வெளியாகும். பிறகு அது புஜத்தின் மேற்பகுதி எலும்பில் வைக்கப்படும். உடனே அது மார்புக் காம்பின் வழியாக வெளியாகி உருண்டோடும்‘‘ என்று கூறினார்.

பிறகு திரும்பிவிட்ட அவர் ஒரு தூணுக்கருகில் போய் உட்கார்ந்தார். நான் அவரைப் பின்தொடர்ந்து சென்று அவருக்கருகில் அமர்ந்தேன். அவர் யார் என்று எனக்கு (அப்போது) தெரியவில்லை. பிறகு நான் அவரிடம்’தாங்கள் கூறியதை மக்கள் வெறுக்கிறார்களோ!”என்று கேட்டேன். அதற்கவர்,‘அவர்கள் விவரமற்றவர்கள்’ எனக் கூறினார்.

“என் தோழர் என்னிடம் சொன்னார்..!”என அந்தப் பெரியவர் மேலும் தொடர்ந்து, கூறும் போதே நான் (குறுக்கிட்டு)’உம்முடைய தோழர் யார்?’ எனக் கேட்டேன்.’நபி(ஸல்) அவர்கள் தாம்’ எனக் கூறிவிட்டு, நபி(ஸல்) அவர்கள்’அபூ தர்ரே! உஹது மலையை நீர் பார்த்திருக்கிறீரா?’ எனக் கேட்டார்கள். தம் வேலை ஏதோ ஒன்றுக்காக நபி(ஸல்) அவர்கள் என்னை அங்கு அனுப்பப் போகிறார்கள் என எண்ணி பகல் முடிய இன்னம் எவ்வளவு நேரம் உள்ளது என அறிந்து கொள்வதற்காக சூரியனைப் பார்த்துவிட்டு.’ஆம்‘‘ என்றேன்.’உஹது மலையளவுக்குத் தங்கம் என்னிடம் இருந்து அதில் மூன்று தீனார்களைத் தவிர வேறு எதையும் செலவிடாமலிருப்பதை நான் விரும்பவிலலை‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். இவர்களோ இதை அறியாதவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் உலக ஆதாயங்களையே சேகரிக்கிறார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அல்லாஹ்வைச் சந்திக்கும் வரை இவ்வுலகப் பொருட்களை இவர்களிடம் கேட்க மாட்டேன். மார்க்க விஷயங்களைப் பற்றியும் இவர்களிடம் தீர்ப்பு கேட்க மாட்டேன்‘‘ எனக் கூறினார்.

## பொருளை அதற்குரிய வழியில் செலவிடல்.

ஹதீஸ் 1409. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“இரண்டு விஷயங்களைத் தவிர வேறு எதிலும் பொறாமை கொள்ளக் கூடாது. ஒரு மனிதருக்கு அல்லாஹ் வழங்கிய செல்வத்தை அவர் நல்ல வழியில் செலவு செய்தல் இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி, அதற்கேற்ப அவர் தீர்ப்பு வழங்குபவராகவும் கற்றுக் கொடுப்பவராகவும் இருப்பது (ஆகியவையே அந்த இரண்டு விஷயங்கள்).“

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தர்மம் செய்வதில் முகஸ்துதி

அல்லாஹ் கூறினான்:’நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வின் மீதும் இறுதி நாளின் மீதும் நம்பிக்கை கொள்ளாமல் மனிதர்களுக்குக் காட்டுவதற்காகவே தன் பொருளைச் செலவழிப்பவனைப் போல் கொடுத்ததைச் சொல்லிக் காண்பித்தும் நோவினை செய்தும் உங்கள் தான தர்மங்களைப் பாழாக்கிவிடாதீர்..!”(திருக்குர்ஆன் 02:264)

மோசடிப் பொருளிலிருந்து தர்மம் செய்வதை அல்லாஹ் ஏற்றுக் கொள்வதில்லை. முறையான சம்பாத்தியத்தில் கிடைத்த பொருளிலிருந்தே தவிர (ஸதக்காவை) ஏற்றுக் கொள்வதில்லை.

அல்லாஹ் கூறினான்:

“கனிவான இனிய சொற்களும் மன்னித்தலும் தர்மம் செய்த பின் நோவினையைத் தொடரும்படிச் செய்வதை விட மேலானவையாகும். மேலும் அல்லாஹ் தேவையற்றவன் மிக்க பொறுமையாளன்!”(திருக்குர்ஆன் 02:263)

## முறையாகச் சம்பாதித்தவற்றைத் தர்மமாக வழங்குதல்.

அல்லாஹ் கூறினான்: தான, தர்மங்களைப் (பாக்கியங்களால்) பெருகச் செய்வான் (தன் கட்டளையை) நிராகரித்துக் கொண்டிருக்கும் பாவிகள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை."

"நம்பிக்கை கொண்டு, நற்செயல்களைச் செய்து, தொழுகையை நிலைநிறுத்தி, ஸகாத்தும் கொடுத்து வருகிறவர்களுக்குத் தங்களின் இறைவனிடத்தில் நற்கூலி இருக்கிறது. அவர்களுக்கு அச்சமுமில்லை அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்!"(திருக்குர்ஆன் 02:276, 277)

ஹதீஸ் 1410. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"யார் முறையான சம்பாத்தியத்தில் ஒரு பேரீச்சம் பழத்தின் மதிப்புக்குத் தர்மம் செய்தாரோ.. அல்லாஹ் பரிசுத்தமானவற்றைத் தவிர வேறெதையும் ஏற்றுக் கொள்வதில்லை - அதை நிச்சயமாக அல்லாஹ் தன்னுடைய வலது கரத்தால் ஏற்று, பிறகு நீங்கள் உங்களின் குதிரைக் குட்டியை வளர்ப்பது போன்று அதன் நன்மையை மலைபோல் உயரும் அளவுக்கு வளர்த்து விடுவான்!"என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மறுக்கப்படுவதற்கு முன்பு தர்மம் செய்தல்

ஹதீஸ் 1411. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"தர்மம் செய்யுங்கள்! ஏனெனில் உங்களிடையே ஒரு காலம் வரும். அப்போது ஒருவன் தன்னுடைய தர்மப் பொருளை எடுத்துக் கொண்டு அலைவான் அதைப் பெறுவதற்கு யாரும் இருக்க மாட்டார். அப்போது ஒருவன், நேற்றே இதை நீ கொண்டு வந்திருந்தாலாவது நான் வாங்கியிருப்பேன் இன்றோ அது எனக்குத் தேவையில்லையே! என்றும் கூறுவான்."

என ஹாரிஸா இப்னு வஹ்ப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1412. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களிடையே செல்வம் பெரும்க் கொழிக்காதவரை மறுமை நாள் ஏற்படாது. எந்தளவுக்கெனில் அந்நாளில் பொருளுடையவன் தன்னுடைய தர்மத்தை யார்தான் வாங்கப் போகிறார் என்று கவலை கொள்வான். மேலும், யாரிடமாவது அதைக் கொடுக்க முனைந்தால் அவன் எனக்குத் தேவையில்லை என்று கூறுவான்."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1413. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அப்போது அங்கு இருவர் வந்தனர். அவர்களில் ஒருவர் தம் வறுமையைப் பற்றி முறையிட்டார். மற்றொருவர் வழிப்பறி பற்றி முறையிட்டார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'வழிப்பறி என்பது அரிதாக, வணிக ஒட்டகங்கள் (மதீனாவிலிருந்து) மக்காவரை காவலரின்றிச் செல்லும்போது மட்டுமே நடக்கும். ஆனால் வறுமையோ (ஒரு காலத்தில் முற்றாக விலகும்). நிச்சயமாக உங்களில் ஒருவர் தர்மத்தை எடுத்துக் கொண்டு அலைவான். அதை வாங்குவதற்கு எவனும் இருக்கமாட்டான். அந்நிலை ஏற்படாத வரை மறுமை ஏற்படாது. பிறகு உங்களிலொருவன் அல்லாஹ்வின் முன்னிலையில் நிற்பான். அவனுக்கும் அல்லாஹ்வுக்குமிடையே திரையுமிருக்காது மொழி பெயர்ப்பாளனும் இருக்கமாட்டான். அப்போது (அல்லாஹ்,)'நான் உனக்குப் பொருளைத் தரவில்லையா?' எனக் கேட்க அவன்'ஆம்' என்பான். பிறகு உன்னிடம் ஒரு தூதரை நான் அனுப்ப வில்லையா? எனக் கேட்டதும்

அவன்'ஆம்'' என்று கூறிவிட்டுத் தன்னுடைய வலப்பக்கம் பார்ப்பான். அங்கும் நரகமே காட்சியளிக்கும். எனவே, பேரீச்சம் பழத்தின் ஒரு சிறிய துண்டை தர்மம் செய்தாவது அதுவும் கிடைக்கவில்லையெனில் ஒரு நல்ல வார்த்தையின் மூலமாவது அந்த நரகத்திலிருந்து உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1414. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நிச்சயமாக மக்களிடையே ஒரு காலம் வரும். அப்போது ஒருவன் தர்மப் பொருளான தங்கத்தை எடுத்துக் கொண்டு அலைவான். அதைப் பெறுவதற்கு யாரும் இருக்கமாட்டார்கள். மேலும் ஆண்கள் குறைந்து பெண்கள் அதிகமாவதால் ஓர் ஆணிடம் அபயம் தேடியவர்களாக, நாற்பது பெண்கள் அவனை பின்தொடர்வார்கள்.

என அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## பேரீச்சம் பழத்தின் சிறிய துண்டையோ அல்லது சிறிதளவு பொருளையோ தர்மம் செய்தேனும் நரகத்திலிருந்து (உங்களைப்) பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

அல்லாஹ் கூறினான்:

யார் அல்லாஹ்வின் உவப்பை நாடி மனப்பூர்வமாக தங்கள் செல்வங்களைச் செலவு செய்கிறார்களோ அவர்களு(டைய தர்மத்து)க்கு உவமை, மேடான பூமியிலுள்ள ஒரு தோட்டம் போன்றதாகும். அதில் பெருமழை பெய்யும் பொழுது தன்னுடைய கனிகளை அது இரட்டிப்பாகத் தருகிறது. பெருமழை அதில் பெய்யவில்லை என்றாலும் சேலான தூறல் கூட அதற்குப் போதுமானதாகும். நீங்கள் செய்பவற்றையெல்லாம் அல்லாஹ் பாதுகாத்துக் கொண்டிருக்கிறான். உங்களில் ஒருவருக்கு பேரீச்சைகளும், திராட்சைகளும் கொண்ட ஒரு தோட்டம் இருந்து அதனடே ஆறுகள் ஓடிக் கொண்டிருக்க அனைத்துக் கனி வகைகளும் அதிலிருந்து அவருக்குக் கிடைத்து வருகிறது.. (திருக்குர்ஆன் 02:265, 266)

ஹதீஸ் 1415. அபூ மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

தர்மம் பற்றிய இறைவசனம் அருளப்பட்டதும் (தர்மம் செய்வதற்காகப் பொருள் தேடி) நாங்கள் கூலி வேலை செய்யலானோம். அப்போது ஒருவர் அதிகப் பொருளைத் தர்மம் செய்தார். மக்கள்,'அவர் பிறர் பாராட்ட வேண்டுமென்று செய்கிறார்' எனக் கூறினார்கள். பிறகு இன்னொருவர் ஒரு ஸாவு தானியங்களைத் தர்மம் செய்தார். அப்போது மக்கள்'இவரின் ஸாவு (குறைந்த அளவு தானியம்) அல்லாஹ்வுக்குத் தேவையில்லை' எனக் கூறலானார்கள். அப்போது'இ(ம் முனாஃபிக்கான)வர்கள் நம்பிக்கையாளர்களில் தாராளமாகத் தர்மம் செய்பவர்களையும் (வேறு பொருள் எதுவுமில்லாததால்) தங்கள் உழைப்பைத் தானமாகக் கொடுப்பவர்களையும் குறை கூறி, ஏளனமும் செய்கிறார்கள். இவர்களை அல்லாஹ் ஏளனம் செய்கிறான். இவர்களுக்கு நோவினை தரும் வேதனையும் உண்டு'' என்ற (திருக்குர்ஆன் 09:79) வசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 1416. அபூ மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் தர்மம் செய்ய வேண்டும் என ஏவினால் எங்களில் ஒருவர் கடைத் தெருவுக்குச் சென்று கூலி வேலை செய்து, இரண்டு கையளவு தானியம் சம்பாதித்து

(அதைத் தர்மம் செய்து) விடுவார். ஆனால் இன்றோ எங்களில் சிலரிடம் ஓர் இலட்சம் (திர்கம்ஃ தீனார்) வரை உள்ளன.

ஹதீஸ் 1417. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"பேரீச்சம் பழத்தின் சிறு துண்டையேனும் (தர்மம்) செய்து நரகத்திலிருந்து (உங்களைப்) பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

என அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1418. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு பெண்மணி தன்னுடைய இரண்டு பெண் குழந்தைகளுடன் யாசித்த வண்ணம் வந்தார். என்னிடம் அப்போது ஒரு பேரீச்சம் பழத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. எனவே, அதை அவரிடம் கொடுத்தேன். அவர் அதை இரண்டாகப் பங்கிட்டு இரண்டு குழந்தைகளுக்கும் கொடுத்துவிட்டார். அவர் அதிலிருந்து சாப்பிடவில்லை. பிறகு அவர் எழுந்து சென்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். நான் அவர்களிடம் இச்செய்தியைக் கூறியதும் அவர்கள், 'இவ்வாறு பல பெண் குழந்தைகளால் சோதிக்கப்படுகிறவருக்கு அக்குழந்தைகள் நரகத்திலிருந்து அவரைக் காக்கும் திரையாக ஆவார்கள்'' எனக் கூறினார்கள்.

பகுதி 11

## ஆரோக்கியத்துடனும் பொருளாசையுடன் கையிருக்கமாகவும் இருப்பவர்கள் தர்மம் செய்வதன் சிறப்பு.

அல்லாஹ் கூறினான்:

"உங்களில் ஒருவருக்கு மரணம் வருமுன்னரே, நாம் உங்களுக்கு அளித்த பொருளிலிருந்து, தான தர்மம் செய்து கொள்ளுங்கள் (அவ்வாறு செய்யாது மரணிக்கும் சமயம்): என் இறைவனே! என் தவணையை எனக்குச் சிறிது பிற்படுத்தக் கூடாதா? அப்படியாயின் நானும் தான தர்மம் செய்து ஸாலிஹான (நல்ல)வர்களில் ஒருவனாக ஆம்விடுவேனே என்று கூறுவான்!"(திருக்குர்ஆன் 63:10)

"நம்பிக்கை கொண்டோரே! பேரங்களும் நட்புறவுகளும் பரிந்துரைகளும் இல்லாத அந்த (இறுதித் தீர்ப்பு) நாள் வருவதற்கு முன்னர், நாம் உங்களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழிகளில்) செலவு .. செய்யுங்கள் இன்னும் இறைமறுப்பாளர்களாக இருப்போரே அநியாயக்காரர்கள்!"(திருக்குர்ஆன் 02:254)

ஹதீஸ் 1419. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'நபி அவர்களே! அதிக நன்மையுள்ள தர்மம் எது?' எனக் கேட்டார். 'நீர், ஆரோக்கியமுள்ளவராகவும் பொருள் தேவை உடையவராகவும், வறுமையைப் பயப்படுபவராகவும் செல்வத்தில் ஆசை உள்ளவராகவும் இருக்கும் நிலையில் தர்மம் செய்வதே அதிக நன்மையுள்ளதாகும். எனவே (தர்மம் செய்வதை) உயிர் தொண்டைக் குழியை நெருங்கும் வரை தாமதப்படுத்த வேண்டாம். அந்நிலையில் இன்னாருக்கு இவ்வளவு இன்னாருக்கு இவ்வளவு என்று கூறுவதிலும் அர்த்தமில்லை. ஏனெனில் அப்போது உம்முடைய பொருள்கள் மற்றவர்களுக்கென்று ஆம்விட்டிருக்குமே!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1420. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், 'உங்களின் மரணத்திற்குப் பின் எங்களில் யார் முதலில் வந்து உங்களைச் சேர்வார்?' எனக் கேட்டதற்கு, 'உங்களுள் கை நீளமானவரே!' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அவர்கள் ஒரு குச்சியை எடுத்துத் தங்களின் கைகளை அளந்து பார்த்தபோது ஸவ்தா (ரலி)வின் கைகளே மிகவும் நீளமானவையாக இருந்தன. (ஸைனப் (ரலி) இறந்த) பிறகுதான் கை நீளமானவர் என்பது, அதிகம் தர்மம் செய்பவரைக் குறிக்கிறது என்பதை அறிந்தோம். (ஸைனப்) அவ்வாறு அதிகம் தர்மம் செய்பவராக இருந்தால்தான் நபி (ஸல்) அவர்களை முதலில் அடைந்தார். மேலும் அவர் தர்மம் செய்வதை (மிகவும்) விரும்பக் கூடியவராகவும் இருந்தார்.

## பம்ரங்கமாகத் - தர்மம் செய்தல்.

அல்லாஹ் கூறினான்:

"யார் தங்கள் பொருள்களை, (தான தர்மங்களில்) இரவிலும் பகலிலும் இரகசியமாகவும் பம்ரங்கமாகவும் செலவு செய்கிறார்களோ அவர்களுக்கு அவர்களின் இறைவனிடத்தில் நற்கூலி இருக்கிறது் அவர்களுக்கு அச்சமும் இல்லை அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (திருக்குர்ஆன் 02: 274)

பகுதி 13

## இரகசியமாகத் தர்மம் செய்தல்.

"ஒருவர் தர்மம் செய்கிறார். அவர் தாம் வலக்கையால் செய்கிற தர்மத்தை இடக்கை அறியாதவண்ணம் மறைத்துக் கொள்கிறார்... (அவரும் அர்ஷின் நிழல் பெறும் எழுவரில் அடங்குவார்)", என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

"தான தர்மங்களை நீங்கள் வெளிப்படையாகச் செய்தால் அதுவும் நல்லதே! (ஏனெனில் அவ்வாறு செய்யப் பிறரையும் அது தூண்டும்) அவற்றை இரகசியமாக ஏழை எளியோர்க்குக் கொடுத்தால் அது உங்களுக்கு இன்னும் நல்லது. அது உங்களுடைய பாவங்களையும் நீக்கும் நீங்கள் செய்வதை (யெல்லாம்) அல்லாஹ் நன்கறிந்தவனாகவே இருக்கிறான்!" (திருக்குர்ஆன் 02:271)

## செல்வந்தன் என அறியாமல் அவனுக்குத் தர்மம் செய்தால்...?

ஹதீஸ் 1421. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"(முன்னொரு காலத்தில்) ஒருவர் நான் தர்மம் செய்யப் போகிறேன் எனக் கூறிக் கொண்டு (இரவில்) தர்மத்துடன் வெளியே வந்து (தெரியாமல்), ஒரு திருடனிடம் கொடுத்துவிட்டார். காலையில் மக்கள், இன்றிரவு திருடனுக்குத் தர்மம் வழங்கப்பட்டுள்ளது எனப் பேசிக் கொண்டனர். (இதைக் கேட்ட) அவர், அல்லாஹ்வே! உனக்கே சகல புகழும். (நாளை) நான் தர்மம் செய்வேன் என்று கூறினார். மறுநாள் அவர் தர்மத்துடன் (இரவில்) வெளி வந்து அதை

ஒரு விபச்சாரியிடம் கொடுத்துவிட்டார். மறுநாள் காலை மக்கள், இன்றிரவு விபச்சாரிக்குத் தர்மம் கொடுக்கப்பட்டுள்ளது எனப் பேசினர். (இதைக் கேட்ட) அவர் அல்லாஹ்வே! விபச்சாரிக்குத் தர்மம் செய்ததற்காக உனக்கே சகலப் புகழும்! (நாளையும்) நான் தர்மம் செய்வேன்! எனக் கூறினார். (மூன்றாம் நாள்) அவர் தர்மத்துடன் வெளிவந்து ஒரு பணக்காரனின் கையில் கொடுத்துவிட்டார். காலையில் மக்கள், பணக்காரருக்கு ஸதகா கொடுக்கப்பட்டள்ளது எனப் பேசினர். உடனே அவர், அல்லாஹ்வே! திருடனிடமும் விபச்சாரியிடமும் செல்வந்தனிடமும் தர்மம் கொடுத்ததற்காக உனக்கே எல்லாப் புகழும் எனக் கூறினார். அப்போது ஒரு(வான)வர் அவரிடம் வந்து, நீர் திருடனுக்குக் கொடுத்த தர்மம் அவன் திருடுவதைவிட்டுத் திருந்தக் காரணமாகலாம். விபச்சாரிக்கு நீ கொடுத்த தர்மம். அவள் விபச்சாரத்திலிருந்து விடுபடக் காரணமாகக் கூடும். செல்வந்தனுக்குக் கொடுக்கப்பட்ட தர்மத்தினால் அவன் படிப்பினை பெற்று அதனால் அவன் தனக்கு அல்லாஹ் வழங்கியதிலிருந்து தர்மம் செய்யக் கூடும்‘‘ எனக் கூறினார்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மகனென்று தெரியாமல் அவனுக்கு தர்மம் செய்தால்...?

ஹதீஸ் 1422. மஅன் இப்னு யஜீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நானும் என்னுடைய தந்தையும் என்னுடைய பாட்டனாரும் நபி(ஸல்) அவர்களிடம் (இஸ்லாத்தை ஏற்று) பைஅத் செய்திருந்தோம். நபி(ஸல்) அவர்கள் எனக்குப் பெண் பேசித் திருமணம் செய்து வைத்தார்கள். அவர்களிடம் நான் ஒரு முறை ஒரு பிரச்சினையைக் கொண்டு சென்றேன். அதாவது, என்னுடைய தந்தை யஜீத் தருமம் செய்வதற்காக சில தினார்களை எடுத்துச் சென்று அதைப் பள்ளிவாசலில் இருந்த ஒருவருக்கருகில் வைத்துவிட்டார். நான் சென்று அதை எடுத்து வந்துவிட்டேன். உடனே என்னுடைய தந்தை,‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! அந்த தர்மம் உனக்கல்லவே‘‘ என்றார். உடனே நான் அவரை அழைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்து தீர்வு கேட்டதற்கவர்கள்’யஜீதே! உம்முடைய (தர்ம) எண்ணத்திற்கான நற்கூலி உமக்கு உண்டு மஅனே! நீர் எடுத்த (பொருளான)து உமக்கே!”எனக் கூறினார்கள்.

## வலக்கரத்தால் தர்மம் செய்தல்

ஹதீஸ் 1423. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன்னுடைய நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத (மறுமை) நாளில் தன்னுடைய நிழலில் அல்லாஹ் ஏழு பேருக்கு மட்டும் நிழல் கொடுப்பான். அவர்கள்: நீதிமிக்க அரசன். அல்லாஹ்வின் வணக்கத்தில் திளைத்திருக்கும் இளைஞன். பள்ளிவாசல்களுடன் பிணைக்கப்பட்ட இதயத்தை உடையவன். அல்லாஹ்வுக்காகவே நேசித்து, அவனுக்காகவே ஒன்றிணைந்து, அவனுக்காகவே பிரிந்த இருவர், அழகும் அந்தஸ்தும் உள்ள ஒரு பெண் தன்னை (தவறுக்கு) அழைத்தபோது’நான் அல்லாஹ்வுக்கு பயப்படுகிறேன்’ எனக் கூறியவன். தன்னுடைய இடக்கரத்துக்குத் தெரியாமல் வலக் கரத்தால் இரகசியமாக தர்மம் செய்பவன், தனித்திருந்து அல்லாஹ்வை நினைத்து கூர்ந்து (அவனுடைய அச்சத்தால்) கண்?ர் வடித்தவன் ஆகியோராவர்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1424. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“தர்மம் செய்யுங்கள்! ஏனெனில் உங்களிடையே ஒரு காலம் வரும். அக்காலத்தில் ஒருவன் தன்னுடைய தர்மப் பொருளை எடுத்துக் கொண்டு அலைவான். அப்போது ஒருவன், நேற்றே இதை நீ கொண்டு வந்திருந்தாலாவது நான் வாங்கியிருப்பேன் இன்றோ அது எனக்குத் தேவையில்லையே என்று கூறுவான். “

என ஹாரிஸா இப்னு வஹ்ப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தாமே தர்மம் வழங்காமல் பணியாள் மூலம் வழங்குதல்

“அவரும் தர்மம் செய்தவர்களில் ஒருவரே’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1425. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு பெண் வீட்டிலுள்ள உணவை -- வீணாக்காமல் தர்மம் செய்தால் அவள் தர்மம் செய்த நன்மையைப் பெறுவாள். அதைச் சம்பாதித்த காரணத்தால் தர்மத்தின் நன்மை அவளுடைய கணவனுக்கும் கிடைக்கும் அதுபோன்றே கருவூலக் காப்பாளருக்கும் கிடைக்கும். இவர்களில் யாரும் யாருடைய நன்மையையும் குறைத்துவிட முடியாது!”என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தம் தேவைக்கு மிஞ்சிய செல்வம் உள்ளவரே தர்மம் செய்வார்.

ஒருவர் தமக்கோ தம் குடும்பத்துக்கோ தேவை இருக்கும் போதோ அல்லது கடனிருக்கும் போதோ தர்மம் செய்தால் அது திரும்பக் கொடுக்கப்படவேண்டும். தர்மம் செய்தல், அடிமையை விடுதலை செய்தல், அன்பளிப்புச் செய்தல் ஆகியவற்றை விட கடனைத் தீர்ப்பதே முக்கியமானதாகும். ஏனெனில் மற்றவர்களின் பொருளை அழிக்க ஒருவருக்கு உரிமையில்லை.

“யார் மக்களின் பொருளைப் பெற்று அதைச் சீரழிக்க நாடுகிறானோ அவனை அல்லாஹ் சீரழிப்பான்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

எனினும் பொறுமையாளன் என்று அறிமுகமானவனாக இருந்தால், தனக்கு வறுமை இருந்தாலும் பிறர்க்கு தர்மம் செய்யலாம். அபூ பக்ர்(ரலி), இவ்வாறே தம் சொத்(து முழுவ)தை(யும்) தர்மம் செய்திருக்கிறார்கள். அன்ஸாரிகள் தங்களை விட முஹாஜிர்(களின் தேவை)களுக்கு முக்கியத்துவமளித்தார்கள்.

மேலும், நபி(ஸல்) அவர்கள் (மக்களின்) பொருட்களை வீணாக்குவதைத் தடுத்துள்ளார்கள். தர்மம் கொடுப்பதாகக் காரணம் காட்டி மக்களின் பொருட்களை வீணடிக்க யாருக்கும் உரிமையில்லை.

“நான் நபி(ஸல்) அவர்களிடம்)’நபி அவர்களே! நான் செய்த தவறுக்குப் பரிகாரமாக நான் என்னுடைய செல்வம் முழுவதையும் அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் தர்மமாக ஒப்படைத்து விடுகிறேன்’ என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்)’உம்முடைய செல்வத்தில் கொஞ்சத்தை நீர் வைத்துக் கொள்ளும் அது உமக்குச் சிறந்தது’ என்றார்கள். ’கைபர் போரில் கிடைத்த என்னுடைய பங்கை மட்டும் நான் எனக்காக வைத்துக் கொள்கிறேன்’ என்று நான் பதிலளித்தேன்‘‘ என கஅப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1426. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“தேவை போக எஞ்சியதை தர்மம் செய்வதே சிறந்ததாகும். மேலும் முதலில் உம்முடைய வீட்டாரிடமிருந்து தர்மம் செய்ய ஆரம்பிப்பீராக!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1427 ` ஹதீஸ் 1428 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உயர்ந்த (கொடுக்கும்) கை தாழ்ந்த (வாங்கும்) கையை விடச் சிறந்தது. நீர் நெருங்கிய உறவினர்களிலிருந்து தர்மம் செய்ய ஆரம்பிப்பீராக! தேவைபோக எஞ்சியதைக் கொடுப்பதே சிறந்த தர்மமாகும். யார் (பிறரிடம் கையேந்தாமல்) சுயமரியாதையுடன் இருக்கிறானோ அவனை அல்லாஹ்வும் அவ்வாறே ஆக்குகிறான். யார் அல்லாஹ்விடம் தன்னைப் பிறரிடம் தேவையற்றவனாக ஆக்க வேண்டுமென வேண்டினானோ அவனை அல்லாஹ் பிறரிடம் தேவையற்றவனாக ஆக்கிவிடுவான். “

என ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1429 அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் இவ்வாறே கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மிம்பர் மீதேறி, தர்மம், சுயமரியாதை, யாசகம் ஆகியவற்றைப் பற்றி உபதேசம் செய்துவிட்டு,‘உயர்ந்த கை தாழ்ந்த கையை விடச் சிறந்ததாகும் உயர்ந்த கை என்பது தர்மம் செய்யக்கூடியதும் தாழ்ந்த கை என்பது யாசிக்கக் கூடியது‘‘ என்றும் கூறினார்கள்.

## செய்த தர்மத்தைச் சொல்லிக் காட்டுபவன்.

அல்லாஹ் கூறினான்:

“இறைவழியில் தங்கள் செல்வத்தைச் செலவிட்ட பின்னர், அதைத் தொடர்ந்து அதைச் சொல்லிக் காண்பிக்காமலும் அல்லது (வேறு விதமாக) நோவினை செய்யாமலும் இருப்பவர்களுக்கு அதற்குரிய நற்கூலி அவர்களின் இறைவனிடத்தில் உண்டு. இன்னும் அவர்களுக்கு எத்தகைய பயமுமில்லை அவர்கள் துக்கமும் அடைய மாட்டார்கள்!”(அல்குர்ஆன02:262)

## தர்மத்தை அன்றே செய்ய விரும்புதல்

ஹதீஸ் 1430. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு அஸர் தொழுகை நடத்திவிட்டு உடனே விரைந்து வீட்டினுள் சென்று, தாமதிக்காமல் வெளியே வந்தார்கள். அப்போது நான் காரணம் கேட்டேன் அல்லது கேட்கப்பட்டது அதற்கு நபி(ஸல்)’நான் என்னுடைய வீட்டில் தர்மப் பொருளான தங்கக் கட்டியை வைத்திருந்தேன் அப்பொருளுடன் இரவைக் கழிக்க விரும்பவில்லை. எனவே, அதைப் பங்கிட்டு விட்டேன்‘‘ எனக் கூறினார்கள்.

## தர்மம் செய்யத் தூண்டுவதும் அதற்காகப் பரிந்துரைப்பதும்.

ஹதீஸ் 1431. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பெருநாளில் இரண்டு ரக்அத்கள் தொழு(வித்)தார்கள். அதற்கு முன்பும் பின்பும் எதையும் தொழவில்லை. பிறகு பிலால்(ரலி) அவர்களுடன் பெண்கள் உபதேசித்துவிட்டு, தர்மம் செய்யுமாறும் கட்டளையிட்டார்கள். உடனே பெண்கள் தங்கள் காது வளையங்களையும் கை வளையல்களையும் (தர்மமாக) வழங்கலானார்கள்.

ஹதீஸ் 1432. அபூ மூஸா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களிடம் எவரேனும் யாசித்து வந்தால் அல்லது தேவையை முறையிட்டால் உடனே அவர்கள் (பிறரிடம்), '(உங்களால் இவர் போன்றவர்களுக்கு உதவ முடியாவிட்டாலும் அவர்களுக்கு உதவும்படி) பரிந்துரை (யாவது) செய்யுங்கள் (இவ்விதம் பரிந்துரைத்ததற்காக) நீங்கள் (நற்)கூலி கொடுக்கப்படுவீர்கள். அல்லாஹ், தான் (அவருக்குக் கொடுக்க) நாடியதை, தன் தூதருடைய (என்னுடைய) நாவினால் நிறைவேற்றித் தருவான்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1433. அஸ்மா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் என்னிடம் 'நீ (தர்மம் செய்யாமல்) முடிந்து வைத்துக் கொள்ளாதே! அவ்வாறு செய்தால் (இறைவனின் கொடை) உனக்கு (வழங்கப்படாமல்) முடிந்து வைத்துக் கொள்ளப்படும்!' எனக் கூறினார்கள். 'அப்தாவின் அறிவிப்பில், 'நீ (இவ்வளவுதான் என்று) வரையறுத்து (தர்மம்) செய்யாதே! அல்லாஹ் (உன் மீது பொழியும் அருளை) வரையறுத்து விடுவான்'' எனக் கூறினார்கள் என உள்ளது.

ஹதீஸ் 1434. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"நீ (தர்மம் செய்யாமல்) முடிந்து வைத்துக் கொள்ளாதே! அல்லாஹ் உன் மீது (தன் அருளைப் பொழியாமல்) முடிந்து வைத்துக் கொள்வான். (எனவே,) உன் சக்திக்கேற்ப சிறிதளவாவது தர்மம் செய்' எனக் கூறினார்கள்.

என அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தர்மம் பாவங்களை அழித்துவிடும்.

ஹதீஸ் 1435. ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஃபித்னாவைப் பற்றிக் கூறியதை உங்களில் நினைவில் வைத்திருப்பவர் யார்? என உமர் (ரலி) கேட்டார். (ஃபித்னா என்ற வார்த்தைக்கு, சோதனைகள், துன்பங்கள் என்ற பொருளும் உண்டு) நான் 'நபி (ஸல) அவர்கள் கூறியதை அப்படியே நினைவில் வைத்திருக்கிறேன்'' என்றேன். உமர் (ரலி), 'நீர் தாம் அதற்குத் துணிச்சல் பெற்றவராக இருந்தீர்! அவர்கள் எப்படிச் சொன்னார்கள்?' என்று கேட்டார். 'ஒரு மனிதன் தன்னுடைய குடும்பத்தினர் மற்றும் குழந்தைகளின் விஷயத்தில் (அவர்களின் மீது அளவு கடந்து நேசம் வைப்பதன் மூலமும்) தன் அண்டை வீட்டார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளில் குறைவைப்பதன் மூலமும்) ஃபித்னாவில் (சோதனையில்) ஆழ்த்தப்படும்போது, தொழுகை, தர்மம், நல்லறம் ஆகியவை அதற்கான பரிகாரமாகும்'' என்று நான் பதில் கூறினேன்.

உமர் (ரலி) 'நான் இதைக் கருதவில்லை கடல் அலையைப் போன்று அடுக்கடுக்காக ஏற்படக்கூடிய நபி (ஸல்) அவர்களால் முன்னறிவிக்கப்பட்ட குழப்பத்)தைப் பற்றியே கேட்கிறேன்'' என்றார்கள். நான், 'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அவற்றைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. உங்களுக்கும் அவற்றிற்குமிடையே மூடப்பட்ட கதவு உள்ளது' எனக் கூறியதும், 'அக்கதவு உடைக்கப்படுமா? திறக்கப்படுமா?' என உமர் (ரலி) கேட்டார்கள். நான் 'உடைக்கப்படும்'' என்றேன். 'அது உடைக்கப்பட்டால் மூடப்படவே மாட்டாது தானே?' என உமர் (ரலி) கேட்டார்கள். நான் 'ஆம்'' என்றேன்.

நல்லறம் என்பதற்கு பதிலாக அபூ வாயில் அவர்கள் நல்லதை ஏவுதல் தீயதை தடுத்தல் என்று கூறினார்களென சுலைமான் என்பவர் கூறுகிறார்.

அபூ வாயில் கூறினார்:

அந்தக் கதவு எதுவென? ஹுதைபா(ரலி) அவர்களிடம் கேட்க நாங்கள் அஞ்சினோம். எனவே மஸ்ரூக் என்பாரை அவரிடம் கேட்கச் சொன்னோம். அவர் கேட்டதற்கு ஹுதை∴பா(ரலி)'(அந்தக் கதவு) உமர்(ரலி) தாம்" என்றார். மேலும் அவரிடமே'நீங்கள் குறிப்பிடுவதை உமர்(ரலி) அறிவாரா?' எனக் கேட்டோம். அதற்கவர்'ஆம்!, நாளை (காலை) வருவதற்கு முன்பு இரவொன்று உள்ளது என்பதை அறிவது போல் அதை உமர்(ரலி) அறிவார். ஏனெனில், பொய்கள் கலவாத செய்தியையே நான் அவருக்கு அறிவித்தேன்" என்றும் ஹுதை∴பா(ரலி) கூறினார்.

## இணைவைப்பவராக இருக்கும்போது தர்மம் செய்துவிட்டுப் பின்பு இஸ்லாத்தில் இணைதல்.

ஹதீஸ் 1436. ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி அவர்களே! நான் அறியாமைக் காலத்தில், இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும் முன்பு'தர்மம் செய்தல், உறவினரைச் சேர்(ந்து வாழ்)தல்' போன்ற நல்ல காரியங்களைச் செய்துள்ளேன். அவற்றிக்கு (மறுமையில் எனக்கு) நன்மை ஏதும் உண்டா?' என கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'நீர் முன்னர் செய்த நற்செயல்(களுக்குரிய நற்கூலி)களுடனேயே இஸ்லாத்தைத் தழுவியுள்ளீர்!"என்று பதிலளித்தார்கள்.

## தன் எஜமானரின் கட்டளைப்படி அவரின் பொருளைப் பாழ்படுத்தாமல் தர்மம் செய்யும் பணியாளுக்கும் நற்கூலி உண்டு.

ஹதீஸ் 1437. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒரு பெண் தன்னுடைய வீட்டிலுள்ள உணவை வீணாக்காமல் தர்மம் செய்தால், அவள் தர்மம் செய்த நன்மையைப் பெறுவாள். அதைச் சம்பாதித்த காரணத்தால் தர்மத்தின் நன்மை அவளுடைய கணவனுக்கும் கிடைக்கும். அதுபோன்றே கருவூலக் காப்பாளருக்கும் கிடைக்கும்."

என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1438. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"முஸ்லிமான, நம்பிக்கைக்குரிய பாதுகாவலன், தான் ஏவப்பட்ட முறையில் முழுமையாக - நிறைவாக, நல்ல முறையில் மனப்பூர்வமாக, தான் ஏவப்பட்டபடி ஏவப்பட்டவருக்குத் தர்மம் செய்தால் அவனும் தர்மம் செய்தவர்களில் ஒருவனாவான்."

என அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஒரு பெண் தன்னுடைய கணவனின் வீட்டிலுள்ள (பொருளிலிருந்து) எதையும் வீணாக்காமல் தர்மம் செய்தாலோ, (பிறருக்கு) உணவு வழங்கினாலோ அவளுக்கும் கூலி உண்டு.

ஹதீஸ் 1439 , ஹதீஸ் 1440. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு பெண் தன் கணவனின் வீட்டிலிருந்து (அதிலுள்ளதை) தர்மம் செய்தால்...

மற்றோர் அறிவிப்பில் இடம் பெற்றுள்ளதாவது:

ஒரு பெண் தன் கணவனின் வீட்டிலுள்ள உணவை வீணாக்காமல் தர்மம் செய்தால் அதற்கான நற்கூலி அவளுக்குக் கிடைக்கும். அதைப் போன்ற நற்கூலி அவளுடைய கணவனுக்கும் கிடைக்கும் அதுபோன்றே கருவூலக் காப்பாளருக்கும் கிடைக்கும். அவள் செலவழித்தற்காகவும் அவன் சம்பாதித்தற்காகவும் அந்த தர்மத்தின் நன்மையைப் பெறுகின்றனர்."

என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1441. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒரு பெண் தன்னுடைய வீட்டிலுள்ள உணவை வீணாக்காமல் தர்மம் செய்தால் அவள் தர்மம் செய்த நன்மையைப் பெறுவாள். அதைச் சம்பாதித்த காரணத்தால் (தர்மத்தின் நன்மை) அவளுடைய கணவனுக்கும் கிடைக்கும் அதுபோன்றே கருவூலக் காப்பாளருக்கும் கிடைக்கும்."

என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்

எனவே (தான தருமம்) கொடுத்து, (தம் இறைவனை) அஞ்சி நல்லவற்றை உண்மை என (அவை நல்லவையென்று) ஏற்கிறவருக்கு, நாம் இலகுவான (நன்மையின்) பாதையை எளிதாக்குவோம். ஆனால், யார் உலோபித்தனம் செய்து, (அல்லாஹ்வின் தயவு) தேவையற்றவனாக தன்னைக் கருதிக் கொள்கிறானோ, அவனுக்கு சிரமத்திற்குரிய (தீமையின்) பாதையைத்தான் எளிதாக்குவோம். (திருக்குர்ஆன் 92: 5:10)

"அல்லாஹ்வே! பொருளை தர்மம் செய்பவனுக்கு (அதற்குரிய) பிரதிபலனைக் கொடுப்பாயாக!" (என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1442. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒவ்வொரு நாளும் இரண்டு வானவர்கள் இறங்குகின்றனர். அவ்விருவரில் ஒருவர், 'அல்லாஹ்வே! தர்மம் செய்பவருக்குக் பிரதிபலனை அளித்திடுவாயாக!' என்று கூறுவார். இன்னொருவர் அல்லாஹ்வே! (தர்மம் செய்யாமல் பொருளைத்) தடுத்து வைத்துக் கொள்பவர்களுக்கு அழிவை ஏற்படுத்துவாயாக!" என்று கூறுவார்.

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தர்மம் செய்பவனுக்கும் கஞ்சனுக்கும் உதாரணம்.

ஹதீஸ் 1443 , ஹதீஸ் 1444 நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"கஞ்சனுக்கும் தர்மம் செய்பவனுக்கும் உதாரணமாவது, மார்பிலிருந்து கழுத்துவரை இரும்பாலான அங்கிகளணிந்த இரண்டு மனிதர்களைப் போன்றதாகும். தர்மம் செய்பவர், தர்மம் செய்யும்பொழுதெல்லாம் அவரின் அங்கி விரிந்து, விரல்களை மறைத்துக் கால்களை மூடித் தரையில் இழுபடும் அளவுக்கு விரிவடையும். கஞ்சன் செலவு செய்யக்கூடாது என்று எண்ணும்போதெல்லாம் அவ்வங்கியின் ஒவ்வொரு வளையமும் அதற்குரிய இடத்தை நெருக்கும். அவன் அதை விரிக்க முயன்றாலும் அது விரியாது."

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள். அபூ ஹுரைரா (ரலி) யின் மற்றோர் அறிவிப்பில் இரண்டு அங்கிகள் என்பதற்குப் பதிலாக இரண்டு கவசங்கள் என்றுள்ளது.

## தொழில், வியாபாரம் ஆகியவற்றின் தர்மம்.

அல்லாஹ் கூறினான்:

“நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் சம்பாதித்தவற்றிலிருந்தும், பூமியிலிருந்து நாம் உங்களுக்கு வெளிப்படுத்தித் தந்த (தானியங்கள், கனி வகைகள் போன்ற)வற்றிலிருந்தும், நல்லவற்றையே (தான தர்மங்களில்) செலவு செய்யுங்கள். அன்றியும் கெட்டவற்றைத் தேடி அவற்றிலிருந்து சிலவற்றை (தான தர்மங்களில்) செலவழிக்க நாடாதீர்கள். ஏனெனில் (அத்தகைய பொருள்களை வேறெவரும் உங்களுக்குக் கொடுத்தால் வெறுப்புடன்), கண் மூடிக் கொண்டேயல்லாது அவற்றை நீங்கள் வாங்க மாட்டீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் (எவரிடத்தும், எந்தத்) தேவையுமற்றவனாகவும், புகழுக்கெல்லாம் உரியவனுமாகவும் இருக்கின்றான் என்பதை நீங்கள் நன்கறிந்து கொள்ளுங்கள்!”(திருக்குர்ஆன் 02:267)

## தர்மம் செய்வது முஸ்லிம்கள் அனைவர் மீதும் கடமையே! தர்மம் செய்ய இயலாவிடில் நல்ல காரியத்தையவாது செய்ய வேண்டும்.

ஹதீஸ் 1445. அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“தர்மம் செய்வது ஒவ்வொரு முஸ்லிமுக்கும் கடமையாகும்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதும். தோழர்கள்,‘நபி அவர்களே! (தர்மம் செய்வதற்கான பொருள்) ஏதும் கிடைக்காவிட்டால்...?’ எனக் கேட்டனர். அதற்கு நபி(ஸல்),‘ஏதேனும் கைத்தொழில் செய்து, தாமும் அதன் மூலம் பலனடைந்து, தர்மமும் செய்ய வேண்டும்‘‘ என்றனர். தோழர்கள்,‘அதுவும் முடியவில்லையாயின்’ எனக் கேட்டதற்கு,‘தேவையுடைய, உதவ வேண்டும்‘‘ என்று பதிலளித்தார்கள். தோழர்கள்,‘அதுவும் இயலாவில்லையாயின்‘‘ என்றதும்’நற்காரியத்தைச் செய்து தீமையிலிருந்து தம்மைத் தடுத்துக் கொள்ள வேண்டும். இதுவே அவர் செய்யும் தர்மமாகும்!”எனக் கூறினார்கள்.

## ஸகாத்திலும் ஸதகாவிலும் கொடுக்கப்படவேண்டிய அளவும் .. ஓர் ஆட்டை தர்மமாக்கலும்.

ஹதீஸ் 1446. ஹஃப்ஸா பின்த் ?ரின் அவர்கள் கூறினார்கள்.

நுஸைபா (உம்மு அதிய்யா(ரலி) அவர்களுக்கு ஓர் ஆடு (ஸதகாவாகக்) கொடுக்கப்பட்டது. அவர் அதில் கொஞ்சம் ஆயிஷா(ரலி) அவர்களுக்கு அனுப்பி வைத்திருந்தார். நபி(ஸல்) அவர்கள்,‘(ஆயிஷாவிடம்)’உங்களிடம் (உண்பதற்கு) ஏதும் உள்ளதா?’ எனக் கேட்டார்கள். ஆயிஷா(ரலி),‘நுஸைபா(ரலி).’நுஸைபா(ரலி) அனுப்பி வைத்த இந்த ஆட்டைத் தவிர வேறெதுவும் இல்லை‘‘ என்றதும் நபி(ஸல்) அவர்கள்,‘அதைக் கொண்டு வா! அது தன்னுடைய இடத்தை அடைந்துவிட்டது‘‘ என்று கூறினார்கள்.

## வெள்ளிக்குரிய ஸகாத்

ஹதீஸ் 1447. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவானவற்றில் ஸகாத் இல்லை ஐந்து ஊக்கியாவுக்குக் குறைவானவற்றில் (தானியங்களில்) ஸகாத் இல்லை.“

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஸகாத்தைப் (பணமாக அன்றிப்) பொருட்களாகப் பெறல்.

முஆத்(ரலி), யமன் வாசிகளிடம்,‘நீங்கள் உங்கள் ஸகாத் பொருட்களான தீட்டாத கோதுமை, தீட்டிய கோதுமைகளுக்குப் பகரமாகத் துணிகள் ஆடைகளைத் தாருங்கள். இது உங்களுக்கு இலகுவானதாகவும் மதீனாவில் வசிக்கும் நபித் தோழர்களுக்கு நன்மை பயப்பதாகவும் இருக்கும்‘‘ எனக் கூறினார் என தாவூஸ் கூறுகிறார்.

“காலித் இப்னு வலீத்(ரலி) தம் கவசங்களையும் போர்க் கருவிகளையும் இறைவழியில் தானம் செய்தார்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், ஸகாதைப் பிற தர்மங்களிலிருந்து வேறுபடுத்திக் கூறாமல்’(பெண்களே!) உங்கள் நகைகளிலிருந்தாவது தர்மம் செய்யுங்கள்‘‘ என்று கூறினார்கள். பெண்கள் தங்கள் கழுத்தணிகளையும் காது வளையங்களையும் தர்மமாக அளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்’தங்கம், வெள்ளியைத்தான் தர்மமாகக் கொடுக்க வேண்டும்’ என்று குறிப்பிட்டுச் சொல்லவில்லை.

ஹதீஸ் 1448. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ பக்ர்(ரலி) அல்லாஹ் அவனுடைய தூதருக்குக் கட்டளையிட்டுள்ள (பிராணிகளுக்கான) ஸகாத் சட்டங்களைப் பற்றி எனக்கு எழுதியனுப்பியபோது’ஒரு வயது பெண் ஒட்டகம் ஸகாத் கொடுக்க வேண்டிய ஒருவரிடம், அது இல்லாமல் இரண்டு வயது பெண் ஒட்டகம் மட்டுமே இருந்தால் அதையே ஸகாத்தாக ஏற்றுக் கொண்டு ஸகாத் வசூலிப்பவர் ஸகாத் கொடுத்தவருக்கு இருபது திர்ஹம்களோ, இரண்டு ஆடுகளோ கொடுக்க வேண்டும் அவரிடம் ஒரு வயதுடைய பெண் ஒட்டகம் இல்லாமல் இரண்டு வயதுடைய ஆண் ஒட்டகம் இருந்தால் அதை ஸகாத்தாக ஏற்றுக் கொள்ளவேண்டும் ஸகாத் வசூலிப்பவர் அவருக்கு எதையும் கொடுக்க வேண்டியதில்லை‘‘ என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 1449. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(பெருநாளில்) நான் நபி(ஸல்) அவர்களை கவனித்தேன். அவர்கள் உரை நிகழ்த்துவதற்கு முன்னால் தொழுகை நடத்தினார்கள். பிறகு தம் உரை பெண்களின் செவிகளைச் சென்றடையவில்லை என அவர்கள் கருதியதால் பிலால்(ரலி) அவர்களுடன் பெண்கள் பகுதிக்கு வந்து அவர்களுக்கு உபதேசம் செய்துவிட்டு, தர்மம் செய்யுமாறும் கட்டளையிட்டார்கள். பிலால்(ரலி), ஓர் ஆடையை ஏந்தியவராக நின்றிருந்தார்கள். அப்போது பெண்கள் அதில் (தம் அணிகலன்களைப்) போடலானார்கள்.

இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான அய்?ப் என்பவர் இதை அறிவிக்கும்போது தம் காதையும் கழுத்தையும் சைகையால் காட்டினார்.

## (ஸகாத்தைத் குறைக்கும் நோக்கில்) பிரிந்திருப்பவற்றைச் சேர்க்கவோ சேர்ந்திருப்பவற்றைப் பிரிக்கவோ கூடாது.

இவ்வாறே நபி(ஸல்) அவர்கள் கூறினார்களென இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1450. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கடமையாக்கிய ஸதகாவைப் பற்றி எழுதும்போது,'ஸகாத் கொடுப்பதற்கு அஞ்சி பிரிந்தவற்றை ஒன்று சேர்ப்பதும் ஒன்று சேர்ந்தவற்றைப் பிரிப்பதும் கூடாது'' என அபூ பக்ர்(ரலி) அவர்கள குறிப்பிட்டார்கள்.

இருவருக்குக் கூட்டாக உள்ள பொருட்களில் ஒருவர் (தன் பொருட்களின் ஸதாத்துடன்) மற்றவருடைய பொருட்களின் ஸகாத்தையும் சேர்த்து தானே செலுத்தி விடுவாராயின் அவர் தன் கூட்டாளியின் பங்குக்குச் சமமான ஸகாத் தொகையைக் கணக்கிட்டு அதை அவரிடமிருந்து பெற்றுக்கொள்வார்.

இரண்டு பங்குதாரர்கள் அவரவர் பங்குகளைப் பிரித்தறிந்திருந்தால் அவ்விருவரின் பொருள்கள் சேர்த்துக் கணக்கிடப்படமாட்டாது என தாவூஸ், அதா(ரஹ்) ஆகியோர் குறிப்பிடுகின்றனர்.

ஆடுகள் வளர்க்கக் கூடிய பங்காளிகளில் இவருக்கு நாற்பது ஆடுகளும் அவருக்கு நாற்பது ஆடுகளும் நிறைவாகிவிட்டாலே தவிர ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை என சு∴ப்யான்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 1451. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கடமையாக்கிய ஸதகாவைப் பற்றி எனக்கு அபூ பக்ர்(ரலி) எழுதும்போது,'இருவருக்குக் கூட்டாக உள்ள பொருட்களில் (கூட்டாளிகள் இருவரில்) ஒருவர் (தன் பொருட்களின் ஸகாத்துடன்) மற்றவருடைய பொருட்களின் ஸகாத்தையும் சேர்த்து தானே செலுத்திவிடுவாராயின் அவர் தன் கூட்டாளியின் பங்குக்குச் சமமான ஸகாத் தொகையைக் கணக்பிட்டு அதை அவரிடமிருந்து பெற வேண்டும்'' எனக் குறிப்பிட்டார்.

இது பற்றி அபூ பக்ர்(ரலி), அபூ ஹுரைரா(ரலி) அபூ தர்(ரலி) ஆகியோர் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவித்துள்ளனர்.

ஹதீஸ் 1452. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு கிராமவாசி நபி(ஸல்) அவர்களிடம் ஹிஜ்ரத் பற்றிக் கேட்டதற்குவர்கள்,'உமக்கு என்ன கேடு? (எனச் செல்லமாகக் கேட்டுவிட்டு) நிச்சயமாக அதன் நிலைமை மிகவும் கடுமையானது. உம்மிடம் ஒட்டகங்கள் இருக்கின்றனவா? அவற்றிக்கு ஸகாத் கொடுத்து வருகிறீரா?' எனக் கேட்டார்கள். அவர்,'ஆம் என்றதும் நபி(ஸல்) அவர்கள்,'கடல்களுக்குப்பால் சென்று வேலை செய்வீராக! நிச்சயமாக அல்லாஹ் உம்முடைய உழைப்பின் ஊதியத்தைக் குதைத்துவிடமாட்டான்'' எனக் கூறினார்கள்.

## ஒரு வயதுடைய பெண் ஒட்டகத்தை ஸகாத்தாகக் கொடுக்க வேண்டியவரிடம் அது இல்லையென்றால்...?

ஹதீஸ் 1453. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் அவனுடைய தூதருக்குக் கடமையாக்கிய ஸகாத் பற்றி அபூ பக்ர்(ரலி) எனக்குக் கடிதம் எழுதினார். அதில், நான்கு வயதான பெண் ஒட்டகத்தை ஸகாத்தாகக் கொடுக்க வேண்டிய ஒருவரிடம் அது இல்லாமல் மூன்று வயதுடைய பெண் ஒட்டகம் இருந்தால் அதை அவரிடமிருந்து ஏற்கலாம் அத்துடன் அவருக்கு சக்தி இருந்தால் அவரிடமிருந்து இரண்டு ஆடுகளை வசூலிக்க வேண்டும். அல்லது இருபது திர்கங்களை வசூலிக்க வேண்டும். மூன்று வயது பெண் ஒட்டகத்தை ஸகாத்தாகக் கொடுக்க வேண்டியவரிடம் அது இல்லாமல் இரண்டு வயது பெண் ஒட்டகம் இருந்தால் அதைப் பெறவேண்டும் அத்துடன் இரண்டு ஆடுகளையோ

இருபது திர்கங்களையோ (ஸகாத் அளிப்பவர்) கொடுக்க வேண்டும். இரண்டு வயதான பெண் ஒட்டகத்தை ஸகாத்தாகக் கொடுக்க வேண்டியவரிடம் மூன்று வயது பெண் ஒட்டகம் கொண்டு, அவருக்கு, வசூலிப்பவர் இருபது திர்கங்களையோ இரண்டு ஆடுகளையோ கொடுக்க வேண்டும். இரண்டு வயது பெண் ஒட்டகத்தை ஸகாத்தாகக் கொடுக்க வேண்டியவரிடம் அது இல்லாமல் ஒரு வயது பெண் ஒட்டகம் இருந்தால் அதைப் பெற வேண்டும். அத்துடன் இருபது திர்கங்களையோ இரண்டு ஆடுகளையோ (ஸகாத் கொடுப்பவர்) வழங்க வேண்டும் என்று குறிப்பிட்டார்.

## ஆடுகளின் ஸகாத்.

ஹதீஸ் 1454. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் பஹ்ரைனுக்கு (ஆளுநராக) அனுப்பப்பட்டதும் அபூ பக்ர்(ரலி) எனக்குக் கடிதம் எழுதினாா. அதில்,'பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர் ரஹீம் இது அல்லாஹ் தன்னுடைய தூதருக்கு ஏவி அவர்கள் முஸ்லிம்களின் மீது கடமையாக்கிய ஸகாத் (பற்றிய விவரம்) ஆகும். முஸ்லிம்களில் யாரும் கணக்குப்படி ஸகாத் கோரப்பட்டால் அதை வழங்கவேண்டும். கணக்குக்கு மேல் கொண்டுவரப்பட்டால் கொடுக்க வேண்டாம்.

இருபத்து நான்கு ஒட்டகங்கள் அல்து அதற்குக் குறைவாக இருந்தால் ஒவ்வொரு ஐந்து ஒட்டகத்திற்கும் ஓர் ஆடு ஸகாத் கொடுக்க வேண்டும். இருபத்தைந்து ஒட்டகம் முதல் முப்பத்தைந்து வரை ஒரு வயது பெண் ஒட்டகம், முப்பத்தாறு முதல் நாற்பத்தைந்துவரை, இரண்டு வயது பெண் ஒட்டகம், நாற்பத்தாறு முதல் அறுபது வரை மூன்று வயதுள்ள, பருவமான பெண் ஒட்டகம், அறுபத்தொன்றிலிருந்து எழுபத்தைந்துவரை நான்கு வயது பெண் ஒட்டகம், எழுபத்தாறிலிருந்து தொன்னூறு வரை இரண்டு வயதுள்ள இரண்டு பெண் ஒட்டகங்கள், தொன்னூற்றொன்றிலிருந்து நூற்றியிருபதுவரை மூன்று வயதுள்ள, பருவமடைந்த இரண்டு பெண் ஒட்டகங்கள் ஸகாத்தாகும். நூற்றியிருபதுக்கும் அதிகமாம்விட்டால் ஒவ்வொரு நாற்பது ஒட்டகங்களும் பெண் ஒட்டகம் ஒன்று ஒவ்வொரு ஐம்பதுக்கும் மூன்று வயது பெண் ஒட்டகம் ஒன்றும் ஸகாத்தாகும்.

யாரிடம் நான்கு ஒட்டகங்கள் மட்டுமே உள்ளதோ அவற்றிற்கு ஸகாத் - இல்லை - உரிமையாளர் நாடினாலே தவிர! அவை ஐந்து ஒட்டகங்களாம்விட்டால் அதற்குரிய ஸகாத் ஓர் ஆடாகும். காடுகளில் மேயும் ஆடுகள் நாற்பதிலிருந்து நூற்றியிருபது வரைஎ இருந்தால், அதற்கு ஸகாத் ஓர் ஆடாகும். நூற்றியிருபதுக்கு மேல் இரண்டு நூறு வரை இருந்தால் இரண்டு ஆடுகளும் இருநூறுக்குமேல் முன்னூறு வரை மூன்று ஆடுகளும் முன்னூறுக்கும் அதிகமாம்விட்டால் ஒவ்வொரு நூறுக்கும் ஓர் ஆடும் ஸகாத்தாகும். காடுகளில் மேயக் கூடிய ஆடுகளில் நாற்பதில் ஒன்று குறைந்துவிட்டாலும் உரிமையாளன் நாடினாலே தவிர அதில் ஸகாத் இல்லை. வெள்ளியில் நாற்பதில் ஒரு பங்கு ஸகாத் கொடுக்க வேண்டும். அதில் நூற்றுத் தொண்ணூறு திர்ஹம் மட்டுமேயிருந்தால் உரிமையாளன் நாடினாலே தவிர ஸகாத் இல்லை.

## ஸகாத் வசூலிப்பவர் விரும்பினாலே தவிர வயதான அல்லது குறையுள்ள அல்லது ஆண் பிராணிகள் ஸகாத் பொருளாகப் பெறப்படமாட்டாது.

ஹதீஸ் 1455. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ பக்ர்(ரலி), அல்லாஹ் தன்னுடைய தூதருக்குக் கட்டளையிட்ட (ஸகாத்) சட்டங்களைப் பற்றி எனக்கு எழுதியபோது,'ஸகாத் வசூலிப்பவர் விரும்பினாலே தவிர, வயதானவற்றையோ,

குறைகள் உள்ளவற்றையோ, குறைகள் உள்ளவற்றையோ, ஆண் பிராணிகளையோ ஸகாத்தாகப் பெறக் கூடாது" எனக் குறிப்பிட்டிருந்தார்.

## ஒட்டகக் குட்டியை ஸகாத்தாக வசூலித்தல்.

ஹதீஸ் 1456 , ஹதீஸ் 1457. அபூ பக்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி(ஸல்) அவர்களிடம் வழங்கி வந்த (ஸகாத்களில்) ஓர் ஒட்டகக் குட்டியை என்னிடம் தர மறுத்தாலும் அதற்காக அவர்களுடன் நான் போர் புரிவேன்."

"(ஸகாத் கொடுக்க மறுத்தவர்களின் மீது) போர் தொடுக்கம் (முடிவை எடுக்கும்)படி அபூ பக்ர்(ரலி) அவர்களின் இதயத்தை அல்லாஹ் விரிவாக்கிவிட்டான் என்பதைத் தவிர வேறெதுவும் நான் கருதவில்லை. ஆக, அதுதான் சரியானது என்பதை அறிந்து கொண்டேன்" என உமர்(ரலி) கூறினார்.

## மக்களின் பொருட்களில் உயர் தரமானவற்றை ஸகாத் தாகப் பெறக் கூடாது.

ஹதீஸ் 1458. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பி வைத்தபோது அவரிடம்'நீர் வேதம் கொடுக்கப்பட்ட மக்களிடம் செல்கிறீர். எனவே அவர்களை முதன் முதலில் இறைவணக்கத்தின் பால் அழைப்பீராக! அவர்கள் அல்லாஹ்வை (ஏகன் என்று) அறிந்தால் ஒவ்வொரு நாளும் இரவிலும் பகலிலுமாக ஐந்து வேளைத் தொழுகைகளை அல்லாஹ் அவர்களின் மீது கடமையாக்கியிருக்கிறான் என்பதை அவர்களுக்கு தெரிவிப்பீராக! தொழுகையை அவர்கள் நிறைவேற்றினால் அவர்களின் செல்வங்களிலிருந்து வசூலித்து அவர்களிடையேயுள்ள ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டிய ஸகாத்தை அல்லாஹ் அவர்களின் மீது கடமையாக்கியுள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவிப்பீராக!

இதற்கும் அவர்கள் கட்டுப்பட்டால் அவர்களிடமிருந்து ஸகாத் பெறுவீராக! மக்களின் பொருட்களில் உயர்தரமானவற்றை வசூலிக்காதீர்! என்று கூறி அனுப்பினார்கள்.

## ஐந்து ஒட்டகங்களுக்குக் குறைவாக இருந்தால் அதில் ஸகாத் இல்லை.

ஹதீஸ் 1459. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஐந்து வஸக்குகளை விடக் குறைவாக உள்ள பேரீச்சம் பழத்தில் ஸகாத் இல்லை ஐந்து ஊக்கியாக்களை விடக் குறைவாக உள்ள வெள்ளியில் ஸகாத் இல்லை ஐந்து ஒட்டகங்களை விடக் குறைவான வற்றிலும் ஸகாத் இல்லை."

என அபூ ஸயீத் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பகுதி 43

## மாட்டின் ஸகாத்.

"நிச்சயமாக (மறுமையில்) ஒரு மனிதன் அல்லாஹ்விடம் கத்திக் கொண்டிருக்கும் ஒரு பசு மாட்டுடன் வருவான் என்பதை அறிவேன்" என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுமைத் அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1460. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“என்னுடைய உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அல்லது எவனைத் தவிரவேறு இறைவன் இல்லையோ...அவன் மீது ஆணையாக! ஒருவனுக்கு ஒட்டகமோ, மாடோ, ஆடோ இருந்து அவற்றிற்கான ஸகாத்தை அவன் நிறைவேற்றவில்லையாயின் மறுமை நாளில் அவை ஏற்கெனவே இருந்ததைவிட பெரிதாகவும் கொழுத்ததாகவும் வந்து அவனை(க் கால்) குளம்புகளால் மிதித்துக் கொம்புகளால் முட்டும். அவற்றில் கடைசிப் பிராணி அவனைத் தாக்கிவிட்டுச் சென்றதும் மீண்டும் முதல் பிராணி அவனைத் தாக்கிவிட்டுச் சென்றதும் மீண்டும் முதல் பிராணி அவன் மீது தாக்குதல் நடத்துவதற்காக அனுப்பப்படும். இந்நிலை மக்களிடையே இறுதித் தீர்ப்பு வழங்கப்படும் வரை நீடிக்கும்‘‘ எனக் கூறினார்கள்.

என அபூ தர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நெருங்கிய உறவினருக்கு ஸகாத் வழங்குதல்.

“(நெருங்கிய உறவினருக்கு ஸதகா கொடுப்பவருக்கு) உறவிரைப் பராமரித்தல். தர்மம் செய்தல் என்ற இரண்டு (நன்மைகளுக்கான) கூலிகளுண்டு’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1461. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அன்ஸார்களில் அபூ தல்ஹா(ரலி) அதிக வசதி படைத்தவராக இருந்தார். அவருக்குப் பேரீச்ச மரங்கள் அதிகம் இருந்தன. அவரின் செல்வங்களில் பைருஹா என்ற தோட்டமே அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது. அது மஸ்ஜிது(ன்னபவி)க்கு எதிரில் இருந்தது. நபி(ஸல்) அவர்கள் அத்தோட்டத்திற்குள் சென்று அங்குள்ள நல்ல தண்ணீரைக் குடிப்பது வழக்கம். ’நீங்கள் நேசிக்கும் பொருட்களிலிருந்து தானம் செய்யாத வரை நீங்கள் நன்மையை அடையவே மாட்டீர்கள்‘‘ என்ற (திருக்குர்ஆன் 03:92) இறைவசனம் அருளப்பட்டதும். அபூ தல்ஹா(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் வந்து,‘நபி அவர்களே! அல்லாஹு தஆலா,‘நீங்கள் நேசிக்கும் பொருட்களிலிருந்து தர்மம் செய்யாதவரை நீங்கள் நன்மையைப் பெறவே மாட்டீர்கள்’ எனக் கூறுகிறான். என் செல்வங்களில் நான் மிகவும் நேசிக்கும் பொருள் பைருஹா என்னும் தோட்டமேயாகும். அது அல்லாஹ்விற்காக தர்மம் ஆகட்டும்! நான் அதன் மூலம் அல்லாஹ்விடம் நன்மையையும் அது (அவனிடம் என்னுடைய மறுமை வாழ்வின் நலனுக்கான) சேமிப்பாக இருக்க வேண்டுமென்றும் விரும்புகிறேன். எனவே’நபி அவர்களே! அதை அல்லாஹ் உங்களுக்குக் காட்டிய வழியில் பயன்படுததிக் கொள்ளுங்கள்’ எனக் கூறினார். நபி(ஸல்) அவர்கள்’ஆஹா! இது அதிக லாபம் தரக்கூடிய செல்வமாயிற்றே! இது அதிக லாபம் தரக்கூடிய செல்வமாயிற்றே! நீர் கூறியதை நான் நன்றாகவே செவியேற்று விட்டேன். நீர் அதை உம்முடைய நெருங்கிய உறவினர்களுக்குப் பங்கிட்டு விடுவதை நான் பொறுத்தமாகக் கருதுகிறேன்’ எனக் கூறினார்கள். அதற்கு அபூ தல்ஹா(ரலி)’நபி அவர்களே! நான் அவ்வாறே செய்கிறேன்!’ எனக் கூறிவிட்டு, அத் தோட்டத்தைத் தம் நெருங்கிய உறவினருக்கும் தம் தந்தையுடன் பிறந்தவரின் குழந்தைகளும் பங்கிட்டுவிட்டார்.

ஹதீஸ் 1462. அபூ ஸயீதுல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கன் நோன்புப் பெருநாளிலோ ஹஜ்ஜுப் பெருநாளிலோ முஸல்லா எனும் தொழும் திடலுக்குச் சென்று தொழுதுவிட்டு உரை நிகழ்த்தினார்கள். ’மக்களே! தர்மம் செய்யுங்கள்!”என்று மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். பிறகு பெண்கள் பகுதிக்குச் சென்று’பெண்களே! தர்மம் செய்யுங்கள் ஏனெனில் நரகவாசிகளில் நீங்களே அதிகமகா இருப்பதை பார்த்தேன்!”என்றார்கள். ’நபி அவர்களே! ஏன் இந்நிலை?’ எனப் பெண்கள் கேட்டதும்,‘நீங்கள்

அதிகமாகச் சபிக்கிறீர்கள்: கணவனுக்கு மாறு செய்கிறீர்கள்: கூரிய அறிவுடைய ஆண்மகனின் புத்தியை, அறிவிலும் மார்க்கத்தி(ன் கடமையிலும்) குறையுடையவர்களாக உள்ள நீங்கள் போக்கி விடுகிறீர்கள்‘‘ என்று நபி(ஸல்) கூறிவிட்டு, (வீட்டிற்குச்) சென்றார்கள். இப்னு மஸ்வூதின் மனைவி ஸைனப்(ரலி) வந்து வீட்டினுள் வர அனுமதி கோரினார். ’நபி அவர்களே! ஸைனப் வந்திருக்கிறார்‘‘ என்று கூறப்பட்டது. ’எந்த ஸைனப்?’ வந்து வீட்டினுள் வர அனுமதி கோரினார். ’நபி அவர்களே! ஸைனப் வந்திருக்கிறார்‘‘ என்று கூறப்பட்டது. ’எந்த ஸைனப்?’ என்று நபி(ஸல்) அவர்கள் வினவ, ‘இப்னு மஸ்வூதின் மனைவி ஸைனப்!”என்று கூறப்பட்டது. ’அவருக்கு அனுமதி வழங்குகங்கள்! என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதும் அனுமதி வழங்கப்பட்டது. அவர் (வந்ததும்)’நபி அவர்களே! தர்மம் செய்யுமாறு இன்று நீங்கள் கட்டளையிட்டீர்கள். என்னிடம் எனக்குச் சொந்தமான ஒரு நகை இருக்கிறது. அதை தர்மம் செய்ய நான் நாடினேன். (என் கணவர்) இப்னு மஸ்வூத், தாமும் தம் குழந்தைகளுமே அதைப் பெறுவதற்கு அதிக உரிமை படைத்தவர்கள் எனக் கூறுகிறார் (என்ன செய்ய?)‘‘ என்று கேட்டார். ’இப்னு மஸ்வூத் கூறுவது உண்மை தான்! உன் கணவரும் உன் குழந்தைகளுமே உன்னுடைய தர்மத்தைப் பெறுவதற்கு அதிக உரிமை படைத்தவர்கள்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## குதிரைக்காக முஸ்லிம் ஸகாத் கொடுக்கவேண்டியது இல்லை.

ஹதீஸ் 1463. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(குதிரைகளையும் அடிமைகளையும் பெற்றிருக்கும்) ஒரு முஸ்லிம் குதிரைகளுக்காகவும் அடிமைகளுக்காகவும் ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை..“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தன்னுடைய அடிமைக்காக முஸ்லிம் ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை.

ஹதீஸ் 1464. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(குதிரைகளையும் அடிமைகளையும் பெற்றிருக்கும்) ஒரு முஸ்லிம், அடிமைகளுக்காகவும் குதிரைகளுக்காகவும் ஸகாத் கொடுக்க வேண்டியதில்லை.“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## அனாதைகளுக்கு ஸகாத் கொடுத்தல்.

ஹதீஸ் 1465. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் மிம்பரில் அமர்ந்தார்கள். நாங்களும் அவர்களைச் சுற்றி அமர்ந்தோம். அப்போதவர்கள்’என் வாழ்விற்குப் பின், உங்களுக்கிடையே உலக வளங்களும் அதன் கவர்ச்சிப் பொருட்களும் தாராளமாகத் திறந்து விடப்படுவதைப் பற்றியே நான் அஞ்சுகிறேன்’ எனக் கூறினார்கள். ஒருவர்’நபி அவர்களே! (செல்வம் என்ற) நன்மை தீயதை உருவாக்குமா?’ எனக் கேட்டதும் நபி(ஸல்) அவர்கள் மௌனமானார்கள். உடனே அந்த நபரிடம், ‘என்ன ஆனது உம்முடைய நிலைமை? நீர், நபி(ஸல்) அவர்களிடம் பேசுகிறீர் ஆனால், நபி(ஸல்) அவர்களோ உம்மிடம் பேசாமலிருக்கிறார்களே!’ எனக் கேட்கப்பட்டது. நாங்கள் நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அருளப்படுகிறது எனக் கருதினோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் வியர்வையைத் துடைத்துவிட்டு, ‘கேள்வி கேட்டவர் எங்கே?’ என அவரைப் பாராட்டுவது போன்று கேட்டார்கள். பிறகு, ‘நன்மையானது தீயதை

உருவாக்காதுதான் நிச்சயமாக, நீர்நிலைகளின் கரைகளில் விளைகிற தாவரங்களில் சில, (தம் நச்சுத் தன்மையால் அவற்றை மேய்கின்ற) கால்நடைகளைக் கொன்று விடுகின்றன. அல்லது மரணத்தின் விளிம்புக்கே (அவற்றைக்) கொண்டு போகின்றன... பசுமையான (நல்ல வகைத்) தாவரங்களைத் தின்பவற்றைத் தவிர! அவற்றைக் கால்நடைகள் வயிறு புடைக்கத் தின்று சூரிய ஒளியை முன்னோக்குகின்றன. மேலும், சாணம் போட்டு, சிறுநீர் கழித்து மீண்டும் மேய்கின்றன. (இது போன்றே உலம்லுள்ள) இச்செல்வம் பசுமையானதும் இனிமையானதும் ஆகும். எனவே, ஒரு முஸ்லிம், தன்செல்வத்திலிருந்து ஏழைகளுக்கும் அனாதைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் கொடுத்துக் கொண்டிருக்கும்வரை அது அவனுக்குச் சிறந்த தோழனாகும். யார் முறையின்றி அதை எடுத்துக் கொள்கிறானோ... அவன் உண்டும் வயிறு நிரம்பாதவனைப் போன்ற வனாவான். மேலும், மறுமை நாளில் அச்செல்வம் அவனுக்கு எதிராக சாட்சி சொல்லும்'' எனக் கூறினார்கள்.

## (ஒரு பெண்) கணவனுக்கும் தன்னுடைய அரவணைப்பில் வளரும் அனாதைகளுக்கும் ஸகாத் கொடுப்பது.

இது குறித்து நபி(ஸல்) அவர்கள் கூறியதை அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1466. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) உடைய மனைவி ஸைனப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் பள்ளிவாயிலில் இருந்தபோது நபி(ஸல்) அவர்கள், 'பெண்களே! உங்களின் ஆபரணங்களிலிருந்தேனும் தர்மம் செய்யுங்கள்' எனக் கூறினார்கள். நான் என் (கணவர்) அப்துல்லாஹ்(ரலி)வுக்கும் மற்றும் என் அரவணைப்பிலுள்ள அனாதைகளுக்கும் செலவழிப்பவளாக இருந்தேன். எனவே என் கணவரிடம், நான் உங்களுக்காகவும் என்னுடைய அரவணைப்பில் வளரும் அனாதைகளுக்காகவும் என்னுடைய பொருளைச் செலவழிப்பது ஸதாகாவாகுமா என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்டு வாருங்கள் எனக் கூறினேன். அப்துல்லாஹ்(ரலி) அல்லாஹ்வின் தூதரிடம் நீயே கேள் எனக் கூறிவிட்டார். எனவே நான் நபி(ஸல்) அவர்கள் சென்றேன். அவர்கள் வீட்டுவாயிலில் ஓர் அன்ஸாரிப் பெண் இருந்தார். அவரின் நோக்கமும் என்னுடைய நோக்கமாகவே இருந்தது. அப்போது எங்களிடையே பிலால்(ரலி) வந்தார். அவரிடம் நான் என்னுடைய கணவருக்கும் என்னுடைய பராமரிப்பிலுள்ள அனாதைகளுக்கும் நான் செலவழிப்பது தர்மமாகுமா? என்று நபி(ஸல்) அவர்களிடம் கேளுங்கள் நாங்கள் யார் என்பதைத் தெரிவிக்கவேண்டாம் எனக் கூறினோம். உடனே அவர் நபி(ஸல்) அவர்களிடம் சென்று கேட்டபோது நபி(ஸல்) அவர்கள், 'அவ்விருவரும் யார்? எனக் கேட்டதற்கு அவர்'ஸைனப்' எனக் கூறினார். நபி(ஸல்) அவர்கள்'எந்த ஸைனப்?' எனக் கேட்டதும் பிலால்(ரலி), 'அப்துல்லாஹ்வின் மனைவி' எனக் கூறினார். உடனே நபி(ஸல்)'ஆம்! ஸைனபுக்கு இரண்டு நன்மைகளுண்டு. ஒன்று நெருங்கிய உறவினரை அரவணைத்திற்குரியது மற்றொன்று தர்மத்திற்குரியது'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1467. உம்மு ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் நான், நபி அவர்களே! (என் முதல் கணவரான) அபூ ஸலமாவின் குழந்தைகளுக்குச் செலவழிப்பதற்காக எனக்கு நன்மையுண்டா? அவர்களும் என்னுடைய குழந்தைகளே! எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'நீ அவர்களுக்காகச் செலவு செய்! அவர்களுக்காக நீ செலவு செய்ததற்கான நன்மை உனக்குண்டு'' எனக் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“(ஸகாத் - அடிமைகளை) விடுதலை செய்வதற்கும் கடன்பட்டிருப்பவர்களுக்கும் இறைவழியில் (போர் புரிவோருக்கும்)... (திருக்குர்ஆன் 9:60)

அடிமைகளை விடுதலை செய்வதற்கும் (வசதியற்றோர்) ஹஜ் செய்வதற்கும் இப்னு அப்பாஸ் தம் ஸகாத் பொருளிலிருந்தே செலவழித்ததாக கூறப்படுகிறது.

(அடிமையாயிருக்கும்) தந்தையை விடுதலை செய்ய தன்னுடைய ஸகாத் பொருளை மகன் வழங்கலாம். அறப் போர் வீரர்களுக்கும் ஹஜ் செய்யாதவர்களுக்கும் வழங்கலாம் என்று கூறிவிட்டு,'தான தர்மங்கள் ஏழைகளுக்கும்'' (திருக்குர்ஆன் 09:60) என்ற வசனத்தை ஓதிவிட்டு, இவைகளில் எதில் நீ செலவழித்தாலும் நீ முறையாக செலவழித்தவனாவாய் என ஹஸன் கூறினார்.

காலித்(ரலி) தம் போர்க் கவசங்களை இறைவழியில் தர்மம் செய்தார் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் ஹஜ்ஜுக்குச் செல்லும்போது நபி(ஸல்) அவர்கள் எங்களை ஸதகா ஒட்டகங்களின் மீது சவாரி செய்ய வைத்தார்கள் என அபூ லாஸ்(ரலி) மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 1468. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸகாத் வசூலிக்குமாறு கட்டளையிட்டார்கள். அப்போது இப்னு ஜமீல், காலித் இப்னு வலீத், அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி) ஆகியோர் (ஸகாத் தர) மறுத்துவிட்டதாகக் கூறப்பட்டது. உடனே, நபி(ஸல்) அவர்கள், இப்னு ஜமீல் ஏழையாக இருந்து அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் அவரைச் செல்வந்தராக்கிய பிறகு அவர் ஸகாத் தர மறுத்துள்ளார். காலிதை(ரலி)ப் பொருத்தவரை, நிச்சயமாக காலிதுக்கு நீங்கள் அநியாயம் இழைக்கிறீர்கள். அவரோ தம் கவசங்களையும் போர்க் கருவிகளையும் இறைவழியில் வழங்கிவிட்டாரே, அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி), அல்லாஹ்வின் தூதருடைய பெரிய தந்தையாக இருப்பதால் அவர் ஸகாத்தும் அதைப் போன்ற இன்னொரு மடங்கும் கொடுத்தாக வேண்டும் எனக் கூறினார்கள்.

## யாசிப்பதைத் தவிர்த்தல்.

ஹதீஸ் 1469. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அன்ஸார்களில் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் யாசித்தார்கள். நபி(ஸல்) அவர்களும் அவர்களுக்குக் கொடுத்தார்கள். பிறகும் நபியவர்களிடம் அவர்கள் அப்போதும் அவர்களுக்குக் கொடுத்தார்கள். பிறகும் அவர்கள் கேட்க, நபி(ஸல்) அவர்கள் மீண்டும் அவர்களுக்குக் கொடுத்தார்கள். இவ்வாறு நபி(ஸல்) அவர்களிடம் இருந்தது அனைத்தும் தீர்ந்து போன பின்'என்னிடமுள்ள செல்வதை நான் உங்களுக்குத் தராமல் பதுக்கி வைக்கவே மாட்டேன். ஆயினும் யார் சுயமரியாதையைப் பேணிக் கொள்கிறானோ அவனை அல்லாஹ் சுயமரியாதையோடு வாழச் செய்வான் யார் பிறரிடம் தேவையற்றவனாக இருக்கிறானோ அல்லாஹ் அவனைத் தேவையற்றவனாக ஆக்குகிறான். யார் பொறுமையை மேற்கொள்ள முயற்சி செய்கிறானோ அவனை அல்லாஹ் பொறுமையாளனாக ஆக்குவான் மேலும், பொறுமையை விடச் சிறந்த, விசாலமான அருட்கொடை எவருக்கும் கொடுக்கப்படுவதில்லை'' என்றார்கள்.

ஹதீஸ் 1470. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“என்னுடைய உயிர் யாருடைய கைவசமிருக்கிறதோ அவன் மீது ஆணையாக! உங்களில் ஒருவர் தம் கயிற்றை எடுத்துக் கொண்டு விறகு வெட்டி அதைத் தம் முதுகில் சுமந்து சம்பாதிப்பது, ஒருவனிடம் வந்து யாசிப்பதைவிடச் சிறந்ததாகும். அவன் யாசிப்பவருக்கு கொடுக்கவும் செய்யலாம் மறுக்கவும் செய்யலாம்.“

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1471. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உங்களில் ஒருவன் ஒரு கயிற்றை எடுத்துக் கொண்டு தன்னுடைய முதுகில் விறகுக் கட்டைச் சுமந்து விற்று வாழ்வது மக்களிடம் யாசகம் கேட்பதை விடச் சிறந்ததாகும். இதன் மூலம் அல்லாஹ் அவனுக்கு இழிவு ஏற்படாமல் தடுத்து விடுவான். மக்கள் அவனுக்குக் கொடுக்கவும் செய்யலாம் அல்லது மறுக்கவும் செய்யலாம்.“

என ஸுபைர் இப்னுல் அவ்வாம் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1472. ஹகீம் இப்னு ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் (உதவி) கேட்டேன். அவர்கள் எனக்கு வழங்கினார்கள் மீண்டும் (உதவி) கேட்டேன் வழங்கினார்கள். மீண்டும் கேட்டேன் வழங்கிவிட்டு, ‘ஹகீமே! நிச்சயமாக இச்செல்வம் பசுமையானதும் இனிமையானதுமாகும். இதைப் போதுமென்ற உள்ளத்துடன் எடுத்துக் கொள்கிறவருக்கு இதில் அபிவிருத்தி ஏற்படுத்தப்படும் இதைப் பேராசையுடன் எடுத்துக் கொள்கிறவருக்கு அதில் அபிவிருத்தி ஏற்படுத்தப்படாது. அவன் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவன் போலாவான். உயர்ந்த கை தாழ்ந்த கையைவிடச் சிறந்தது‘ எனக் கூறினார்கள்.

அப்போது நான், நபி அவர்களே! உங்களைச் சத்தியத்துடன் அனுப்பி வைத்தவன் மீது ஆணையாக! உங்களுக்குப் பின் உலகைப் பிரியும் வரை வேறு யாரிடமும் நான் எதையும் கேட்க மாட்டேன் எனக் கூறினேன்.

அபூ பக்ர் (ரலி) (ஆட்சிக் காலத்தில்) ஸகாத் பெறுமாறு ஹகீமை அழைத்தார். அவர் அதை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார். பிறகு உமர் (ரலி) (தம் ஆட்சியில்) ஸகாத் பெறுமாறு அவரை அழைத்தார். அவர் எதையும் ஏற்க மறுத்தார். அப்போது உமர் (ரலி), ‘முஸ்லிம் சமுதாயமே! தம் உரிமையைப் பெறுமாறு நான் ஹகீமை அழைக்கிறேன். அவரோ அதைப் பெற மறுக்கிறார். இதற்கு நீங்கள் சாட்சி!’ எனக் கூறினார். ஹகீம் நபி (ஸல்) அவர்களுக்குப் பின் வேறு யாரிடமும் தாம் மரணிக்கும் வரை எதையும் கேட்கவேயில்லை என ஸயீத் இப்னு அல் முஸய்யப் கூறுகிறார்.

## யாசிக்காமலும் பேராசையின்றியும் இறைவன் (பிறர் மூலம்) தந்தால்...?

“அவர்களின் செல்வத்தில் யாசிப்போர்க்கும் வசதியற்றோருக்கும் பாத்தியதை உண்டு‘ (திருக்குர்ஆன் 51:19)

ஹதீஸ் 1473. உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் எனக்கு அன்பளிப்புச் செய்யும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். நான் இதை என்னை விடஏழைக்கு கொடுங்களேன் என்பேன், அதற்கு நபி (ஸல்) அவர்கள், ‘இதை வாங்கிக் கொள்ளும் நீர் பிறரிடம் கேட்காமலும் பேராசை கொள்ளாமலும் இருக்கும்போது இவ்வாறு வரும் பொருட்களைப் பெற்றுக்கொள்ளும். ஏதும் கிடைக்கவில்லை என்றாலும்

அப்பொருட்களுக்குப் பின்னால் உம்முடைய மனதைத் தொடரச் செய்யாதீர்! (அது கிடைக்க வேண்டும் என்ற எண்ணம் கொள்ள வேண்டாம்)‘‘ என்றார்கள்.

## அதிகம் பொருள் சேர்ப்பதற்காக மக்களிடம் யாசிப்பது.

ஹதீஸ் 1474 ~ ஹதீஸ் 1475. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(தம் தேவைக்கு அதிகமாக) மக்களிடம் யாசிப்பவன் தன் முகத்தில் சிறிதளவுகூடச் சதை இல்லாதவனாக மறுமை நாளில் வருவான்...“

“வியர்வை வழிந்து மனிதனின் பாதிக் காதை அடையும் அளவுக்கு மறுமை நாளில் சூரியன் மனிதனுக்கு மிக அருகில் வந்துவிடும். இந்நிலையில் மக்கள் ஆதம்(அலை) அவர்களிடமும் பிறகு மூஸா(அலை) அவர்களிடமும் பிறகு முஹம்மத்(ஸல்) அவர்களிடமும் வந்து அடைக்கலம் தேடுவார்கள்.“

இதை இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு அறிவிப்பில்,‘நபி(ஸல்) அவர்கள் பரிந்துரை செய்வார்கள். இவ்வாறு படைப்பினங்களுக்கிடையே தீர்ப்பு கூறப்பட்டு முடிந்ததும், நடந்து சென்று சொர்க்கத்து வாசலின் கதவைப் பிடிப்பார்கள். அந்நாளிலே அல்லாஹ், நபி(ஸல்) அவர்களை’மகாமுல் மஹ்மூத்’ எனும் புகழுக்குரிய இடத்தில் எழுப்புவான். அப்போது அங்கு குழுமி இருக்கும் அனைவரும் நபி(ஸல்) அவர்களைப் பாராட்டு வார்கள்‘‘ என இப்னு உமர்(ரலி) கூறினார் எனக் காணப்படுகிறது.

## எவ்வளவு செல்வமிருந்தால் தேவையற்றவனாவான்?

அல்லாஹ் கூறினான்:

“அவர்கள் மக்களிடம் கெஞ்சி எதையும் கேட்க மாட்டார்கள்‘‘ (திருக்குர்ஆன் 02:273)

மேலும்’தம் தேவைகளைப் பூர்த்தி செய்ய எச்செல்வத்தையும் அவன் பெற்றிருக்க மாட்டான்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“பூமியில் நடமாடி (தம் வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்ற) எதுவும் செய்ய முடியாத அளவுக்கு இறைவழியில் தம்மை அர்ப்பணித்தவர்களுக்கே (உங்களுடைய தான தர்மங்கள்) உரியவையாகும். (பிறரிடம் யாசிக்காத) அவர்களின் பேணுதலைக் கண்டு, அறியாதவர் அவர்களைச் செல்வந்தர்கள் என்று எண்ணிக் கொள்கிறார் அவர்களின் (முகத்தில் தெரியும் பசி மற்றும் ஏழ்மையின்) அடையாளங்களால் அவர்களை நீர் அறிந்து கொள்ளலாம் அவர்கள் மக்களிடம் கெஞ்சி எதையும் கேட்க மாட்டார்கள் (இத்தகையோருக்காக) நல்லவற்றிலிருந்து நீங்கள் எதைச் செலவு செய்தாலும், அதை நிச்சயமாக அல்லாஹ் நன்கறிகிறான். (திருக்குர்ஆன் 02:273)

ஹதீஸ் 1476.’ஓரிரு கவளம் உணவுக்காக அலைபவன் ஏழையல்லன் மாறாக தன் வாழ்க்கைக்குப் பிறரிடம் கேட்க வெட்கப்படுகிறவனும், அல்லது (அப்படிக் கேட்டாலும்) கெஞ்சிக் குழைந்து கேட்காதவனுமே ஏழையாவான்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்‘‘ என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1477. முகீரா இப்னு ஷுஅபா(ரலி)யின் எழுத்தர் (வர்ராது) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்களிடம் கேட்ட ஒன்றை எனக்கு எழுதுங்கள்‘‘ என முஆவியா(ரலி) முகீரா(ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார். அதற்கு முகீரா(ரலி)'நிச்சயமாக அல்லாஹ் மூன்று செயல்களை வெறுக்கிறான் இவ்வாறு சொல்லப்பட்டது் அவர் சொன்னார் (என ஆதாரமின்றிப் பேசுவது). பொருள்களை வீணாக்குவதும் அதிகமாக (பிறரிடம்) யாசிப்பதும்!”என்று நபி(ஸல்) அவர்கள் கூற செவியுற்றுள்ளேன் என பதில் எழுதினார்.

ஹதீஸ் 1478. ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுடன் நான் அமர்ந்திருந்தபோது, நபி(ஸல்) அவர்கள் குழுவினருக்கு கொடுத்தார்கள். அவர்களில் ஒருவருக்குக் கொடுக்காமல்விட்டுவிட்டார்கள். அவர் எனக்கு மிகவும் வேண்டியவராவார். அப்போது நான்,‘நபி அவர்களே! ஏன் அவரைவிட்டு விட்டீர்கள்? அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவரை நான் இறைநம்பிக்கையாளர் என்றே கருதுகிறேன்‘‘ என்று ரகசியமாகக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'அவரை முஸ்லிம் (என்று சொல்)‘‘ என்றார்கள். சிறிது நேரம் மவுனமாக இருந்தேன். தொடர்ந்து, நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் என்னையும் அறியாமல் (என் நாவில்) வந்தபோது,‘நபி அவர்களே! அந்த மனிதர் மீது உங்களுக்கு என்ன அதிருப்தி? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நிச்சயமாக நான் அவரை ஒரு இறைநம்பிக்கையாளர் என்று கருதுகிறேன்‘‘ என்றேன்.'அவரை முஸ்லிம் (என்று சொல்)‘‘ என்றார்கள். சிறிது நேரம் மவுனமாக இருந்தேன். தொடர்ந்து, நான் அவரைப் பற்றி அறிந்திருந்த விஷயங்கள் என்னையும் அறியாமல் (என் நாவில்) வந்தபோது,‘நபி அவர்களே! அந்த மனிதர் மீது உங்களுக்கு என்ன அதிருப்தி? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நிச்சயமாக நான் அவரை ஒரு இறைநம்பிக்கையாளர் என்று கருதுகிறேன்‘‘ என்றேன்.'அவரை முஸ்லிம் (என்று சொல்)‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் மீண்டும் கூறினார்கள். சிறிது நேரம் நான் மௌனமாக இருந்தேன். அவரைப் பற்றி நான் அறிந்திருந்த விஷயத்தை என்னையும் மீறி மீண்டும் மீண்டும் கூறினேன். நபி அவர்களே! அந்த மனிதர் மீது உங்களுக்கு என்ன அதிருப்தி? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நிச்சயமாக நான் அவரை ஒரு இறைநம்பிக்கையாளர் என்று கருதுகிறேன் என்றேன்.'அவரை முஸ்லிம் (என்று சொல்“) என்றார்கள். பிறகு'(ஸஅதே!) நான் ஒரு மனிதருக்குக் கொடுக்கிறேன் ஆனால் நான் கொடுக்காதவர் என்னிடம் மிக நேசமானவராக இருக்கிறார். (அவருக்கு நான் கொடுத்ததற்கு) காரணம், (ஏதும் கொடுக்காதிருந்தால் குற்றம் இழைத்து அதனால்) அவரை இறைவன் நரகில் முகம் குப்புறத் தள்ளி விடுவானோ என்ற அச்சம் தான்‘‘ என்றார்கள்.

முஹம்மதுடைய மற்றோர் அறிவிப்பில்,

(மூன்று முறை கேட்டு பதிலுரைத்தபின்) நபி(ஸல்) அவர்கள் ஸஅதை புஜத்திற்கும் கழுத்திற்கும் மத்தியில் அடித்து,‘ஸஅதே இங்கே வா!”என அழைத்து'நிச்சயமாக நான் ஒருவருக்கு கொடுக்கிறேனெனில்..!”என்று மேலே கூறிய ஹதீஸைக் கூறினார்கள் என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 1479. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஓரிரு கவளம் உணவுக்காக, அல்லது ஓரிரு பேரீச்சம் பழங்களுக்காக மக்களிடம் அலைபவன் ஏழையல்லன் ஏழை யாரெனில் அவன் தன் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள எச்செல்வத்தையும் பெற்றிருக்க மாட்டான் பிறரும் அவனுடைய நிலையை அறிந்து தர்மம் செய்ய

மாட்டார்கள், தானும் வலியச் சென்று கேட்கமாட்டான்!"(இத்தகையவனே உண்மையான ஏழையாவான்.)

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1480. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"உங்களில் ஒருவர் கயிற்றை எடுத்துக்கொண்டு காலைப் பொழுதில் மலைக்குச் சென்று (மலையேறி) விறகு வெட்டி விற்று, தாமும் சாப்பிட்டுப் பிறருக்கும் தருமம் செய்வது மக்களிடத்தில் யாசிப்பதைவிடச் சிறந்ததாகும்."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## (மரத்திலிருக்கும்) பேரீச்சம் பழத்தை மதிப்பிடுவது.

ஹதீஸ் 1481 - ஹதீஸ் 1482 அபூ ஹுமைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் தபூக் யுத்தத்தின்போது நபி(ஸல்) அவர்களோடு சென்று கொண்டிருந்தோம். வாதில்குரா எனும் இடத்தை அடைந்தபோது ஒரு பெண் தன் தோட்டத்தில் இருந்ததைக் கண்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம் தோழாகளை நோக்கி (இத்தோட்டத்தில்) எவ்வளவு பழங்கள் தேறும்? கணித்துக் கூறுங்கள்' எனக் கேட்டுவிட்டு பத்து வஸக் அளவு (தேறும்) எனக் கணித்தார்கள். பின்பு அப்பெண்ணிடம்'இதில் கிடைப்பதைக் கணக்கிட்டுவை' எனக் கூறினார்கள். நாங்கள் தபூக்கை அடைந்தபோது'இன்றிரவு கடும் காற்று அடிக்கும் எனவே, யாரும் வெளியில் செல்ல வேண்டாம். ஒட்டகமுடையவர்கள் அதை நன்கு கட்டி வைக்கட்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். நாங்களும் ஒட்டகங்களைக் கட்டிப்போட்டு விட்டோம். கடும் காற்றும் வீசத் தொடங்கிற்று. நபி(ஸல்) அவர்களின் கட்டளையை மீறியவராக ஒருவர் வெளியே எழுந்து வந்தார். உடனே காற்று அவரை தய்யி என்ற மலையில் கொண்டு போய்ப் போட்டது. வழியில், அய்லா என்ற ஊரின் மன்னன் நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையை அன்பளிப்புச் செய்து ஒரு சால்வையும் போர்த்தினார். தம் நாட்டவருக்காக (ஜிஸ்யா வரி தருகிறோம்) என்றும் எழுதிக் கொடுத்தார்.

(போரிலிருந்து) திரும்பி,'வாதில் குராவை' அடைந்தபோது நபி(ஸல்) அவர்கள் அந்தப் பெண்ணிடம்'உன்னுடைய தோட்டத்தில் எவ்வளவு தேறியது?' எனக் கேட்டார்கள். அதற்கு அப்பெண்,'நபி(ஸல்) அவர்கள் கணித்த பத்து வஸக் தான்' என்று கூறினார். பின்பு நபி(ஸல்) அவர்கள்'நான் விரைவாக மதீனா செல்ல வேண்டும். எனவே, உங்களில் யாரேனும் என்னோடு விரைவாக மதீனா வர நாடினால் உடனே புறப்படுங்கள்' என்றார்கள். மதீனா நெருங்கியபோது,'இது நறுமணம் கமழும் நகரம்' என்றார்கள். பின்பு உஹது மலையைப் பார்த்தபோது'இது அழகிய சிறிய மலை இது நம்மை நேசிக்கிறது நாம் அதை நேசிக்கிறோம்' என்று கூறிவிட்டு,'அன்ஸாரிகளில் சிறந்த குடும்பத்தினரை நான் அறிவிக்கட்டுமா?' எனக் கேட்க தோழர்களும்,'ஆம்' என்றனர். நபி(ஸல்) அவர்கள்,'பனு நஜ்ஜார், குடும்பத்தினர், பின்பு பனு அப்துல் அஷ்ஹல், பிறகு பனு ஸாயிதா அல்லது பனு ஹாரிஸ் இன்னும் அன்ஸாரிகளின் அனைத்துக் குடும்பத்தினரும் சிறந்தவர்களே' என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில்'பனு ஹாரிஸா பின்பு பனு ஸாயிதா' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று காணப்படுகிறது.

மற்றோர் அறிவிப்பில்'உஹுத் மலை நம்மை நேசிக்கிறது அதை நாம் நேசிக்கிறோம்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஸஹ்ல் இப்னு ஸஃது(ரலி) வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

## மழையின் மூலமாகவோ வாய்க்காலின் மூலமாகவோ நீர் (பாயப்) பெற்று விளைபவற்றில் பத்தில் ஒரு பங்கு (அளவு ஸகாத் வசூலிக்கப்படும்).

தேனுக்கு (ஸகாத்) எதுவும் கொடுக்கத் தேவையில்லை என உமர் இப்னு அப்தில் அ?ஸ்(ரஹ்) அவர்கள் கருதுகிறார்கள்.

ஹதீஸ் 1483. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"மழை நீராலோ, ஊற்று நீராலோ, தானாகப் பாயும் தண்?ராலோ விளைபவற்றில் பத்தில் ஒரு பங்கு ஸகாத் உண்டு. ஏற்றம் கமலை கொண்டு தண்ணீா பாய்ச்சப்பட்டால் இருபதில் ஒரு பங்கு ஸகாத் கொடுக்க வேண்டும்.

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

விளை பொருட்களில் தரப்பட வேண்டிய ஸகாத்தின் அளவை மட்டும் கூறிவிட்டு எந்த அளவுள்ள விளை பொருட்களுக்கு ஸகாத் கொடுக்கப்பட வேண்டும் என்று இப்னு உமர்(ரலி) அவர்களின் இந்த அறிவிப்பு தெளிவுபடுத்தாமல் போய்விட்டது. எந்த அளவுள்ள விளை பொருட்களில் ஸகாத் கடமையாகும் என்று தெளிவுபடுத்திக் கூறுகிற அபூ ஸயீத் குத்ரீ(ரலி) அறிவிக்கிற (அடுத்து வரும் ஹதீஸ் 1484-ம் எண்) ஹதீஸானது. இந்த இப்னு உமர்(ரலி) அவர்களின் (ஹதீஸ் 1483ம் எண்) ஹதீஸிற்கு விளக்கமாக அமைந்துள்ளது" என்று அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்.

ஒருவர் கூறுவதை விட அதிகமான விபரத்தை நம்பகமான மற்றொருவர் கூறினால் அந்த ஹதீஸ் ஏற்றுக் கொள்ளப்படும். நம்பகமானவர்களால் அறிவிக்கப்படும் தெளிவான ஹதீஸ் தெளிவற்ற ஹதீஸுக்கு (விளக்கமளித்து) தீர்மானமான ஒரு கருத்தைத் தரும்.

இது (எதைப் போன்றதெனில்)'நபி(ஸல்) அவர்கள் கஅபாவினுள் தொழவில்லை' என்ற ஃபள்லு இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிக்கும் ஹதீஸைவிட்டுவிட்டு. 'நபி(ஸல்) அவர்கள் கஅபாவினுள் தொழுதார்கள்' என்று பிலால்(ரலி) அறிவிக்கும் ஹதீஸ் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதைப் போன்றதாகும்.

## (விளை பொருட்களில்) ஐந்து வஸக் அளவிற்கும் குறைவான பொருட்களில் ஸகாத் கடமையில்லை.

ஹதீஸ் 1484. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(விளை பொருட்களில்) ஐந்து வஸக்குகளை விடக் குறைவானதில் ஸகாத் கிடையாது. ஐந்து ஒட்டகங்களை விட குறைவாக உள்ளதில் ஸகாத் கிடையாது. ஐந்து ஊகியாக்களை விடக் குறைவாக உள்ள வெள்ளிக்கும் ஸகாத் கிடையாது. என அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஐந்து வஸக்குகளை விடக் குறைந்ததற்கு ஸகாத் இல்லை என்னும் இந்த ஹதீஸ் முன் சொன்ன ஹதீஸிற்கு விளக்கமாக அமைந்துள்ளது. ஒருவர் கூறியதை விட அதிகமான விவரத்தை நம்பகமானவர்கள் கூறினாலோ, அவர் கூறியதை அவர்கள் தெளிவு படுத்தினாலோ ஹதீஸ் கலையில் ஏற்றுக் கொள்ளப்படும் (இந்த அடிப்படையில்தான் இந்த ஹதீஸ் ஏற்றுக் கொள்ளப்படுகிறது) என்று புகாரி ஆகிய நான் கூறுகிறேன்.

## பேரீச்ச மரத்தின் அறுவடையின் போதே பேரீச்சம் பழத்தின் ஸகாத்தை வசூலித்தல். ஸகாத்தின் பேரீச்சம் பழத்தை எடுக்கும் சிறுவனை (தடுக்காமல்)விட்டு விடலாமா?

ஹதீஸ் 1485. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மரத்தின் அறுவடையின் போதே பேரீச்சம் பழத்தின் ஸகாத், நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்படும். இவ்வாறு ஒவ்வொருவரும் தத்தம் பேரீச்சம் பழங்களைக் கொண்டு வந்ததும் அது பெரும் குவியலாக மாறிவிடும். (சிறுவர்களான) ஹஸன்(ரலி) ஹுஸைன்(ரலி) இருவரும் அக்குவியலருகே விளையாடுவார்கள். ஒருநாள் அவ்விருவரில் ஒருவர் ஒரு பேரீச்சம் பழத்தை எடுத்து தம் வாயில் போட்டார். இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் உடனே அதை வெளியே எடுத்துவிட்டு'முஹம்மதின் குடும்பத்தினர் ஸகாத்தின் பொருளை உண்ணக் கூடாது என்பதை நீ அறியவில்லையா?' எனக் கேட்டார்கள்.

## (தானியத்திற்குரிய ஸகாத்தாகிய) பத்தில் ஒன்றோ மற்ற ஸகாத்தோ கடமையான ஒருவர், தம் பேரீச்சங்கனிகளை அல்லது பேரீச்ச மரத்தை அல்லது தோட்டத்தை அல்லது பயிர்களை விற்றுவிட்டு வேறு பொருட்களாகத் தம் ஸகாத்தை நிறைவேற்றுதலும் கடமையாகாதவர் தம் கனிகளை விற்றலும்.

"பலன் உறுதிப்படும் நிலையை அடையும் வரை கனிகளை விற்காதீர்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். எனினும் பலன் உறுதிப்படுத்தப்பட்ட பின் எவருக்கும் விற்பதைத் தடை செய்யவில்லை. இங்கே ஸகாத் கடமையானவர், ஸகாத் கடமையாகாதவர் என்று பிரித்துக் கூறவில்லை.

ஹதீஸ் 1486. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பலன் உறுதிப்படுவதற்கு முன்னால் பழங்களை விற்பதைத் தடுத்துள்ளார்கள். அவர்களில் பலன் உறுதிப்படுவது என்றால் என்ன என்று கேட்கப்பட்டது'(அப்பழங்கள்) பாழாகும் நிலையைக் கடந்து விடுவதே' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 1487. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பலன் உறுதிப்படுவதற்கு முன்னால் கனிகளை விற்பதை நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள்.

ஹதீஸ் 1488. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பழங்கள் (பழுத்து) சிகப்பு நிறம் அடைவதற்கு முன்னால் விற்பதை நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள்.

## தாம் தர்மம் செய்த பொருளைத் தாமே வாங்கலாமா?

ஒருவருக்குப் பிறர் கொடுத்த தர்மப் பொருளை மற்றவர் விலைக்கு வாங்குவது தவறில்லை. ஏனெனில், தர்மம் கொடுத்தவரே அப்பொருளை விலைக்கு வாங்குவதைத்தான் நபி(ஸல்) தடுத்தார்கள்: மற்றவர்களைத் தடுக்கவில்லை.

ஹதீஸ் 1489. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) இறைவழியில் ஒரு குதிரையை தர்மம் செய்தார். பின்பு அது விற்கப்படுவதைக் கண்டு அதைத் தாமே பணம் கொடுத்து வாங்கிட நினைத்தார். உடனே நபி(ஸல்) அவர்களிடம் வந்து அனுமதி கேட்டார். அப்போது'நீர் தர்மம் செய்ததைத் திரும்பப் பெற வேண்டாம்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“இதனால்தான் இப்னு உமர்(ரலி) தான தர்மம் செய்த பொருளை விலைக்கு வாங்கி விட்டிருந்தால் அதை மீண்டும் தர்மம் செய்யாமல் விட மாட்டார்கள்‘‘ என்று சாலிம்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 1490. உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறைவழியில் சவாரி செய்வதற்காக நான் ஒருவருக்கு குதிரையொன்றை (தர்மமாக)க் கொடுத்தேன். ஆனால், அவர் அதை (சரியாகப் பராமரிக்காமல்) வீணாக்கிவிட்டார். எனவே நான் அதை விலைக்கு வாங்க நாடினேன். இன்னும் அவர் மிகக் குறைந்த பணத்திற்கே விற்று விடுவார் என்றும் எண்ணினேன். எனவே, இதைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'அதை வாங்காதீர்! உம்முடைய தர்மத்தை நீர் திரும்பப் பெறாதீர்! அவன் அதை ஒரு திர்ஹத்திற்குத் தந்தாலும் சரியே. ஏனெனில் தர்மத்தைத் திரும்பப் பெறுபவன், தான் எடுத்த வாந்தியை உண்பவனைப் போன்றவனாவான்‘‘ என்றார்கள்.

## நபி(ஸல்) அவர்களுக்குத் தர்மப் பொருள் (தடுக்கப்பட்டுள்ளது.)

ஹதீஸ் 1491. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஸன்(ரலி) ஸதகாப் பொருளான ஒரு பேரீச்சம் பழத்தை எடுத்து வாயில் போட்டார். இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள்'சீ சீ' எனக் கூறித் துப்பச் செய்துவிட்டு, 'நாம் தர்மப் பொருளைச் சாப்பிடக் கூடாது என்பது உனக்குத் தெரியாதா?' என்றார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் மனைவியரின் அடிமைகளுக்கு தர்மம் செய்தல்.

ஹதீஸ் 1492. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மைமூனா(ரலி) அவர்களின் அடிமைப் பெண்ணுக்கு தர்மமாக வழங்கப்பட்ட ஓர் ஆடு செத்துக் கிடந்ததைக் கண்ட நபி(ஸல்) அவர்கள்'இதன் தோலை நீங்கள் பயன்படுத்தியிருக்கக் கூடாதா?' என்று கேட்டார்கள். 'இது செத்ததாயிற்றே!"எனத் தோழர்கள் கூறியதும்'இதை உண்பதுதான் தடுக்கப்பட்டுள்ளது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1493. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அடிமையான பரீரா எனும் பெண்ணை விடுதலை செய்வதற்காக, (அவரை) நான் விலக்கு வாங்க நாடினேன். ஆனால், அப்பெண்ணின் உரிமையாளர்கள் பரீராவை (நாங்கள் உங்களுக்கு விற்றுவிட்டாலும்) அவரின்'வாரிசுரிமை' எங்களுக்கு வேண்டும் என்று நிபந்தனையிட விரும்பினார்கள். நான் இதைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கூறினேன். நபி(ஸல்) அவர்கள், 'நீ பரீராவை வாங்கிவிடு! வாரிசுரிமை விடுதலை செய்பவருக்குத்தான்!"என்றார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்களுக்கு இறைச்சி கொண்டு வரப்பட்டது. அப்போது நான்'இது பரீராவுக்கு தர்மம் செய்யப்பட்ட பொருள்'' என்றேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'இது பரீராவுக்கு தர்மமாகும் நமக்கு அன்பளிப்பாகும்'' என்றார்கள்.

## தர்மம் (அன்பளிப்பாக) மாறுவது.

ஹதீஸ் 1494. உம்மு அதிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களின் (வீட்டிற்கு) சென்று'(உண்பதற்கு) ஏதேனும் உள்ளதா?' எனக் கேட்டார்கள். அதற்கு ஆயிஷா(ரலி),'நீங்கள் நுஸைபாவுக்கு தர்மமாக அனுப்பிய ஆட்டின் ஒரு பகுதியை அவர் நமக்கு அனுப்பி வைத்துள்ளார். அதைத் தவிர வேறொன்றும் நம்மிடம் இல்லை'' என்றார். நபி(ஸல்) அவர்கள்'அப்படியெனில் அது தன்னுடைய இடத்தை (அன்பளிப்பின் அந்தஸ்தை) அடைந்துவிட்டது'' என்றார்கள்.

ஹதீஸ் 1495. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பரீராவுக்குத் தர்மமாகக் கொடுக்கப்பட்ட இறைச்சி நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்கள் இது பரீராவுக்குத் தர்மமாகும் ஆனால் நமக்கு அன்பளிப்பாகும்'' என்றார்கள்.

## செல்வந்தர்களிடமிருந்து ஸகாத்தை வசூலித்து ஏழைகள் எங்கிருந்தாலும் அவர்களுக்குக் கொடுப்பது.

ஹதீஸ் 1496. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“நீர் வேதமுடையவர்களிடத்தில் செல்கிறீர். அவர்களிடம் சென்றடைந்துவிட்டால் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை முஹம்மது அல்லாஹ்வின் தூதராவார் என்று (ஏகத்துவத்திற்கு) சாட்சி சொல்லும் படி அவர்களை அழைப்பீராக! இதற்கு அவர்கள் (இசைந்து) உமக்குக் கட்டுப்பட்டால்,'அல்லாஹ் தினமும் ஐவேளை தொழுவதைக் கடமையாக்கியுள்ளான்' என்பதை அவர்களுக்கு அறிவிப்பீராக! அவர்கள் இதற்கும் (இசைந்து) உமக்கு கட்டுப்பட்டால்'நிச்சயமாக அல்லாஹ் அவர்களில் செல்வந்தர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டு அவர்களில் ஏழைகளுக்குக் கொடுக்கப்படுகிற ஸகாத்தைத் கடமையாக்கியுள்ளான்' என அவர்களக்க அறிவிப்பீராக! அவர்கள் இதற்கும் (இசைந்து) உமக்குக் கட்டுப்பட்டால் அவர்களின் பொருட்களில் சிறந்தவற்றை வசூலிப்பது குறித்து உம்மை எச்சரிக்கிறேன். அநீதி இழைக்கப்பட்டவனின் பிரார்த்தனைக்கு பயந்து கொள்ளும். ஏனெனில் அவனுக்கும் இறைவனுக்கும் மத்தியில் எந்தத் திரையுமில்லை.“

இதை முஆத் இப்னு ஜபல்(ரலி) யமனுக்கு ஆளுநராக அனுப்பும்போது நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஸகாத் கொடுப்பவர்களுக்காக தலைவர் பிரார்த்திப்பது.

அல்லாஹ் கூறினான்:

“(நபியே!) அவர்களின் செல்வத்திலிருந்து ஸகாத்தை வசூலிப்பீராக! அது அவர்களை உள்ளும் புறமும் தூய்மையாக்கும்! இன்னும் அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்வீராக! நிச்சயமாக உம்முடைய பிரர்த்தனை அவர்களுக்கு (சாந்தியும்) ஆறுதலும் அளிக்கும். (திருக்குர்ஆன் 9:103)

ஹதீஸ் 1497. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

யாரேனும் ஒரு கூட்டத்தினர் தம் ஸகாத் பொருள்களைக் கொண்டு வந்தால் நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! இன்னாரின் குடும்பத்திற்கு நி கிருபை செய்வாயாக!"என்று பிரார்த்திப்பவராக இருந்தார்கள். என்னுடைய தந்தை (அபூ அவ்ஃபா) தம் ஸகாத்தைக் கொண்டு வந்தார்.'இறைவா! அபூ அவ்ஃபாவின் குடும்பத்தினர்க்கு கிருபை செய்வாயாக'' என்று நபி(ஸல்) பிரார்த்தித்தார்கள்.

## கடலிலிருந்து கிடைப்பவை.

புதையலில் அம்பர் சேராது. ஏனெனில் அது கடலலைகள் ஒதுக்கும் ஒரு பொருளாகும் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

அம்பரிலும் முத்துக்களிலும் ஐந்தில் ஒரு பகுதி ஸகாத் உள்ளது என ஹஸன் கூறுகிறார். (இது தவறாகும் ஏனெனில்) நபி(ஸல்) அவர்கள் புதையலுக்குத்தான் ஐந்தில் ஒரு பகுதி ஸகாத் என்றார்கள். தண்ணீரில் கிடைப்பவற்றுக்கு அல்ல.

ஹதீஸ் 1498. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'இஸ்ரவேலர்களில் ஒருவர் தம் சமூகத்தைச் சேர்ந்த சிலரிடம் ஆயிரம் தீனார் கடன் கேட்டார். (அதற்கு ஒருவர் இசைந்து) அவருக்குப் பணத்தைக் கொடுத்தார். கடன் வாங்கியவர் கடல் வழியாகச் செல்ல வேண்டியிருந்தது. ஆனால், கடலில் செல்ல எந்த வாகனமும் கிடைக்கவில்லை. எனவே, ஒரு மரக்கட்டையை எடுத்து அதில் துளையிட்டு ஆயிரம் தீனாரையும் அதில் வைத்து அடைத்து கடலில் தூக்கி எறிந்துவிட்டுச் சென்றார். ஒரு நாள் அவருக்குக் கடன் கொடுத்த மனிதர் வெளிக் கிளம்பி (அவ்வழியே) வந்தபோது மரக்கட்டை ஒன்று கிடப்பதைக் கண்டு அதை (எரிப்பதற்கு) விறகாகத் தம் வீட்டிற்கு எடுத்து வந்தார். அதை(க் கோடாரியால்) பிளந்தபோது தம் பொருளைப் பெற்றார்."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## புதையலின் ஸகாத் ஐந்தில் ஒரு பங்காகும்.

புதையல் என்பது பழங்காலத்தில் புதைத்து வைக்கப்பட்ட பொருளாகும். அது குறைவாக இருந்தாலும் அதிகமாக இருந்தாலும் ஐந்தில் ஒரு பங்கு ஸகாத் கொடுக்க வேண்டும் சுரங்கம் புதையலில் சேராது. ஏனெனில்'நபி(ஸல்) அவர்கள்'சுரங்கத்தில் ஏற்படும் இழப்புகளுக்கு நஷ்ட ஈடு தரத் தேவையில்லை. புதையலில் (ரிகாஸில்) ஐந்தில் ஒரு பங்கு உள்ளது' எனக் கூறினார்கள்'' என இமாம் மாலிக், இப்னு இத்ரீஸ்(ரஹ்) ஆகியோர் கூறுகிறார்கள்.

சுரங்கத்திலிருந்து வரும் ஒவ்வொரு இருநூறு தீனாரிலும் ஐந்து தீனாரை ஸகாத்தாக உமர் இப்னு அப்தில் அ?ஸ்(ரஹ்) அவர்கள் வசூலித்தார்கள்.

அன்னியர் ஆட்சிக்கு உட்பட்ட பூமியில் கிடைக்கும் புதையலுக்கு ஐந்தில் ஒரு பங்கு ஸகாத் உண்டு. இஸ்லாமிய ஆட்சி நடக்கும் பூமியில் கிடைக்கும் புதையலில் (தங்கத்தைப் போன்றே) ஸகாத் உள்ளது. எதிரிகளின் பூமியில் பிறர் தவறவிட்ட பொருளைப் பெற்றால் அதைப் பிறருக்கு அறிவித்து விடுங்கள். அது எதிரிகளின் பூமியிலிருந்து எடுக்கப்பட்டாலும் அதிலும் ஐந்தில் ஒரு பங்கு ஸகாத் உண்டு என ஹஸன் பஸரீ(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

சுரங்கம் பழங்காலத்தில் புதைக்கப்பட்ட புதையலைப் போன்றதே எனச் சிலர் கூறுகின்றனர்.

புதையலைப் பிறருக்கு (சொல்லாமல்) மறைப்பதற்கு ஐந்தில் ஒரு பங்கு கொடுக்காமலும் இருப்பதும் தவறில்லை எனச் சிலர் கூறுகின்றனர்.

ஹதீஸ் 1499. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"விலங்குகளாலோ (கால்நடைகளாலோ) கிணற்றின் மூலமாகவோ அல்லது சுரங்கத்திலோ ஏதேனும் இழப்பு ஏற்பட்டால் (அதன் சொந்தரக்காரனிடம்) நஷ்டஈடு கேட்கப்பட மாட்டாது. புதையலில் (ரிகாஸில்) ஐந்தில் ஒரு பங்கு (ஸகாத்தாக) வசூலிக்கப்படும்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

ஸகாத்தை வசூல் செய்யும் ஊழியர்களுக்கும் (ஸகாத் பொருளை வினியோகிக்க வேண்டும்) (திருக்குர்ஆன் 9:60)

## ஸகாத் வசூலீப்பவர்களிடம் தலைவர் கணக்குக் கேட்க வேண்டும்.

ஹதீஸ் 1500. அபூ ஹுமைத் அஸ் ஸாயிதீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், இப்னு லுத்பிய்யா என்றழைக்கப்படும் அஸத் கிளையைச் சேர்ந்த ஒரு மனிதரை பனுஸுலைம் எனும் கோத்திரத்தாரிடையே ஸகாத் வசூலிப்பதற்காக நியமித்தார்கள். அவர் (ஸகாத் வசூலித்து) வந்ததும் அவரிடம் கணக்குக் கேட்டார்கள்.

## ஸகாத்துடைய ஒட்டகத்தையும் அதன் பாலையும் வழிப் போக்கர்களுக்காகப் பயன்படுத்துவது.

ஹதீஸ் 1501. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உரைனா எனும் கோத்திரத்தைச் சேர்ந்த சிலர் மதீனா வந்தபோது மதீனாவின் பருவநிலை ஒத்துக் கொள்ளாமல் நோயுற்றனர். எனவே ஸகாத்தாகப் பெறப்பட்ட ஒட்டகம் இருக்குமிடத்திற்குச் சென்று அதன் பாலையும் சிறுநீரையும் குடிப்பதற்கு அவர்களை நபி(ஸல) அவர்கள் அனுமதித்தார்கள். ஆனால், அவர்கள் அங்கு சென்று ஒட்டகம் மேய்ப்பவரைக் கொலை செய்துவிட்டு ஒட்டகங்களையும் ஓட்டிச் சென்றனர். செய்தியறிந்த நபி(ஸல்) அவர்கள், அவர்களைப் பிடித்துவர ஆள் அனுப்பினார்கள். அவர்கள் பிடித்து வரப்பட்டதும் அவர்களின் கைகளையும் காகளையும் வெட்டினார்கள் கண் (இமை)களின் ஓரங்களில் சூடிட்டார்கள் அவர்களைக் கருங்கற்கள் நிறைந்த ஹர்ரா எனுமிடத்தில் (பற்களால்) கற்களைப் (பற்றிப்) பிடித்துக் கொண்டிருக்கும்படிவிட்டுவிட்டார்கள்.

## தலைவர் தம் கைகளால் ஸகாத்துடைய ஒட்டகத்திற்கு அடையாளமிடுவது.

ஹதீஸ் 1502. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பேரீச்சம் பழத்தை மென்று ஊட்டுவதற்காக ஒரு நாள் காலை அப்துல்லாஹ் இப்னு அபீ தல்ஹா எனும் குழந்தையை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் அடையாளமிடும் கருவியைக் கொண்டு ஸதகா ஒட்டகத்திற்கு தம் கையால் அடையாளமிட்டுக் கொண்டிருந்ததைக் கண்டேன்.

## நோன்புப் பெருநாள் தர்மம் கடமை ஆகும்.

நோன்புப் பெருநாள் தர்மம் கடமையாகுமென அபுல் ஆலியா, அதாவு, இப்னுஸிரீன் (ரஹ் அலைஹிம்) கருதுகின்றனர்.

ஹதீஸ் 1503. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

முஸ்லிம்களிடையேயுள்ள ஆண், பெண், சிறியவர், பெரியவர், அடிமை, சுதந்திரமானவர் அனைவருக்காகவும் ஒரு ஸாவு அளவு பேரீச்சம் பழம் அல்லது ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமையைப் பெருநாள் தர்மமாக (ஏழைகளுக்கு வழங்க வேண்டுமென்று) நபி (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள். அதை (ப் பெருநாள்) தொழுகைக்காக மக்கள் வெளியே செல்வதற்கு முன்னால் கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள்.

## நோன்புப் பெருநாள் தர்மம் முஸ்லிம்களிடையேயுள்ள அடிமை, அடிமையல்லாதார் அனைவர் மீதும் கடமை.

ஹதீஸ் 1504. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

முஸ்லிம்களிடையேயுள்ள அடிமை, சுதந்திர மானவர் ஆண், பெண் அனைவருக்காகவும் ஒரு ஸாவு அளவு பேரீச்சம் பழம் அல்லது ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமையை நோன்புப் பெருநாள் தர்மமாக (ஏழைகளுக்கு வழங்க வேண்டும் என்று) நபி (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள்.

## (நோன்புப் பெருநாள் தர்மம்) ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமை.

ஹதீஸ் 1505. அபூ ஸயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் (நோன்புப் பெருநாள்) தர்மமாக ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமையை உணவுக்காகக் கொடுத்து வந்தோம்.

## நோன்புப் பெருநாள் தர்மம் ஒரு ஸாவு உணவுப் பொருள்.

ஹதீஸ் 1506. அபூ ஸயீதில் குத்ரீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நோன்புப் பெருநாள் தர்மமாக ஒரு ஸாவு அளவு ஏதேனும் உணவையோ, ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமையையோ அல்லது ஒரு ஸாவு அளவு பேரீச்சம் பழத்தையோ அல்லது ஒரு ஸாவு அளவு பாலாடைக் கட்டியையோ அல்லது ஒரு ஸாவு அளவு உலர்ந்த திரட்சையையோ கொடுப்போம்.

## நோன்புப் பெருநாள் தர்மம் ஒரு ஸாவு அளவு பேரீச்சம்

ஹதீஸ் 1507. நபி (ஸல்) அவர்கள் ஒரு ஸாவு அளவு பேரீச்சம் பழத்தையோ அல்லது ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமையையோ நோன்புப் பெருநாள் தர்மமாகக் கொடுக்கும்படி கட்டளையிட்டார்கள்.

மக்கள் ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமைக்குப் பகரமாக அரைஸாவு அளவு தீட்டிய கோதுமையைக் கொடுததார்கள்.

## (நோன்புப் பெருநாள் தர்மம்) ஒரு ஸாவ உலர்ந்த திராட்சை.

ஹதீஸ் 1508. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் ஒரு ஸாவு அளவு பேரீச்சம் பழத்தையோ அல்லது ஒரு ஸாவு அளவு தீட்டாத கோதுமையையோ அல்லது ஒரு ஸாவு உலர்ந்த திராட்சையையோ நோன்புப் பெருநாள் தர்மமாகக் கொடுத்து வந்தோம்.

முஆவியா(ரலி)வின் ஆட்சியில் ஷாம் நாட்டு உயர் ரகக் கோதுமை தாராளமாகக் கிடைத்தபோது, இதில் (தீட்டிய உயர் ரகக் கோதுமையில்) ஒரு முத்து (ஆருனுனு) அதில் (தீட்டாத கோதுமையில்) இரண்டு முத்துக்கு ஈடாகும் என்று முஆவியா(ரலி) கூறினார்.

## (நோன்புப் பெருநாள்) தர்மத்தைப் பெருநாளு(டைய தொழுகை)க்கு முன்பே கொடுத்தல்.

ஹதீஸ் 1509. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நோன்புப் பெருநாள் தர்மத்தை மக்கள் தொழுகைக்காகப் புறப்படுவதற்கு முன்னால் கொடுத்து விடும்படி நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்

ஹதீஸ் 1510. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் பெருநாள் அன்று ஒரு ஸாவு உணவை தர்மமாகக் கொடுத்து வந்தோம்.

அக்காலத்தில் தீட்டாத கோதுமையையும் உலர்ந்த திராட்சையும் பாலாடைக் கட்டியும் பேரீச்சம் பழமும்தான் எங்களின் உணவாக இருந்தன.

## அடிமையின் மீதும் சுதந்திரமானவன் மீதும் நோன்புப் பெருநாள் தர்மம் கடமையாகும்.

ஹதீஸ் 1511. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஆண், பெண், அடிமை, சுதந்திரமானவர் அனைவர் மீதும் ஒரு ஸாவு அளவு பேரீச்சம் பழத்தையோ அல்லது ஒரு ஸாவு தீட்டாத கோதுமையையோ பெருநாள் தர்மமாக நபி(ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள்.

அரை ஸாவு தீட்டிய கோதுமை ஒரு ஸாவு தீட்டாத கோதுமைக்கு சமம் என மக்கள் கருதினார்கள்.

நாஃபி கூறுகிறார்.

இப்னு உமர்(ரலி) நோன்புப் பெருநாள் தர்மமாகப் பேரீச்சம் பழத்தையோ கொடுத்து வந்தார்கள். மதீனாவின் மக்களுக்குப் பேரீச்சம் பழத் தட்டுப்பாடு வந்தபோது தீட்டாத கோதுமையைக் கொடுத்தார்கள். (தம் குடும்பத்திலுள்ள) சிறியவர்களுக்காகவும், பெரியவர்களுக்காகவும், (அவரின் பணியாளராக நானிருந்ததால்) என்னுடைய குழந்தைகளுக்காகவும் கொடுத்து வந்தார்கள். இந்த தர்மத்தைப் பெற்றுக் கொள்பவருக்கெல்லாம் கொடுத்து வந்தார்கள். மேலும், பெரு நாளுக்கு ஓரிரு தினங்களுக்கு முன்னரே நபித்தோழர்கள் (இந்த தர்மத்தைக்) கொடுத்து வந்தார்கள்.

## நோன்புப் பெருநாள் தர்மம் சிறியவர்களுக்காகவும் பெரியவர்களுக்காகவும் (ஏழைகளுக்குக்) கொடுக்கப்பட வேண்டும்.

ஹதீஸ் 1512. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

சிறியவர், பெரியவர், சுதந்திரமானவர், அடிமை அனைவர் மீதும் ஒரு ஸாவு பேரீச்சம் பழமோ அல்லது ஒரு ஸாவு தீட்டாத கோதுமையோ (ஏழைகளுக்கு) நோன்புப் பெருநாள் தர்மமாகக் (கொடுப்பதை) நபி(ஸல்) அவர்கள் கடமையாக்கினார்கள்.

# அத்தியாயம் 25 ஹஜ்

## ஹஜ்ஜுக் கடமையும் அதன் சிறப்பும்.

அல்லாஹ் கூறினான்:

"அங்கு சென்றுவர சக்தி பெற்றிருக்கும் மனிதர்கள், அல்லாஹ்வுக்காக அவ்வீடு சென்று ஹஜ் செய்வது கடமையாகும், ஆனால், எவரேனும் இதை நிராகரித்தால் (அதனால் அல்லாஹ்வுக்குக் குறையேற்படப் போவதில்லை ஏனெனில்)-- நிச்சயமாக அல்லாஹ் உலகத்தோர் எவருடைய தேவையும் அற்றவனாக இருக்கிறான். (திருக்குர்ஆன் 3:97)

ஹதீஸ் 1513. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஃபழ்ல்(ரலி) நபி(ஸல்) அவர்களுக்குப் பின் (ஒட்டகத்தில்) அமர்ந்து கொண்டிருந்தபோது'கஸ்அம்' எனும் கோத்திரத்தை சார்ந்த ஒரு பெண் வந்தார். உடனே ஃபழ்ல் அப்பெண்ணைப் பார்க்க அப்பெண்ணும் இவரைப் பார்த்தார். (இதைக் கவனித்த நபி(ஸல்) அவர்கள்) ஃபழ்லின் முகத்தை வேறு திசையில் திருப்பினார்கள். பிறகு அப்பெண் நபி(ஸல்) அவர்களை நோக்கி,'நபி அவர்களே! நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களின் மீது ஹஜ்ஜைக் கடமையாக்கியுள்ளான். ஆனால் என்னுடைய வயது முதிர்ந்த தந்தையால் பயணிக்க முடியாது. எனவே நான் அவருக்குப் பகரமாக ஹஜ் செய்யலாமா? எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'ஆம்!"என்றார்கள். இது இறுதி ஹஜ்ஜில் நிகழ்ந்தது.

அல்லாஹ் கூறினான்:

"தங்களுக்குரிய பலனை அடைவதற்காக அவர்கள் நடந்தும் வெகு தொலைவிலிருந்து மெலிந்த ஒட்டகங்களின் மீதும் உம்மிடம் வருவார்கள்!"(திருக்குர்ஆன் 22:27, 28)

ஹதீஸ் 1514. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹுலைஃபாவில் தம் வாகனத்தில் அமர்ந்தார்கள். அவர்களை ஏற்றிக் கொண்டு வாகனம் சரியாக நின்றபோது இஹ்ராம் அணிந்து தல்பியாக் கூறியதை பார்த்தேன்.

ஹதீஸ் 1515. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

துல்ஹுலைஃபாவில் வாகனம் சரியாக நிலைக்கு வந்த பிறகுதான் நபி(ஸல்) இஹ்ராம் அணிந்தார்கள்.

இதைப் போன்று அனஸ்(ரலி)யும் இப்னு அப்பாஸ்(ரலி)யும் அறிவித்தார்கள்.

## வாகனத்தின் மீதமர்ந்து ஹஜ்ஜுக்குச் செல்லுதல்

ஹதீஸ் 1516. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என் சகோதரர் அப்துர் ரஹ்மானை என்னுடன் அனுப்பி, தன்யீம் எனுமிடத்திலிருந்து இஹ்ராம் அணிந்து உம்ராச் செய்ய ஏவினார்கள். ஒட்டகத் தொட்டியில் என்னை ஏற்றினார்கள்.

ஹஜ்ஜுக்கு வாகனத்தைத் தயார்படுத்துங்கள். ஏனெனில் அது இரண்டு ஜிஹாதுகளில் ஒன்றாகும் என்று உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1517. ஸுமாமா இப்னு அப்தில்லாஹ் அவர்கள் கூறினார்கள்.

அனஸ் (ரலி) ஒட்டகச் சிவிகை அமைக்காமல் ஒட்டகத்தின் சேண (த்துடன் இணைந்த) இருக்கையின் மீதே அமர்ந்து ஹஜ்ஜுக்குச் சென்றார்கள். (அவர் ஒட்டகச் சிவிகை அமைக்காதற்குக் கஞ்சத்தனம் காரணமில்லை) ஏனெனில், அவர் கஞ்சராக இருந்த தில்லை.

நபி (ஸல்) அவர்கள் (ஒட்டகச் சிவிகை அமைக்காமல்) ஒட்டகத்தின் சேண (த்துடன் இணைந்த) இருக்கையின் மீதே அமர்ந்து ஹஜ்ஜுக்குச் சென்றதாகவும் அதுவே அவர்களின் பொதி சுமக்கும் ஒட்டகமாகவும் இருந்ததாகவும் அனஸ் (ரலி) (எங்களுக்கு) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 1518. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி அவர்களே! நீங்கள் அனைவரும் உம்ரா செய்து விட்டீர்கள் நான் மட்டும் உம்ரா செய்யவில்லை’ எனக் கூறினேன். உடனே நபி (ஸல்) அவர்கள், ‘அப்துர் ரஹ்மானே! உம்முடைய சகோதரியை அழைத்துச் சென்று அவருடன் தன்யீமிலிருந்து உம்ரா செய்துவிட்டு வாரும்‘‘ என்றார்கள். அப்துர் ரஹ்மான் என்னை ஒட்டகத்தின் சேண (த்துடன் இணைந்த) இருக்கையின் பின் பகுதியில் ஏற்றினாா் நான் உம்ரா செய்தேன்.

## பாவச் செயல் எதுவும் கலவாத ஹஜ்ஜின் சிறப்பு

ஹதீஸ் 1519. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“செயல்களில் சிறந்தது எது?’ என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. ’அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்புவது‘‘ என்றார்கள். ’அதற்குப் பிறகு எது (சிறந்தது)?’ எனக் கேட்கப்பட்டபோது, ‘இறைவழியில் போர்புரிதல்‘‘ என்றார்கள். ’அதற்குப் பிறகு எது (சிறந்தது?)’ எனக் கேட்கப்பட்டபோது’பாவச் செயல் எதுவும் கலவாத ஹஜ்‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 1520. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி அவர்களே! இறைவழியில் போர் புரிவதையே நாங்கள் சிறந்த செயலாகக் கருதுகிறோம் எனவே நாங்களும் ஜிஹாத் செய்யலாமா?’ என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்’ (அவ்வாறு) இல்லை. எனினும் (பெண்களுக்குச்) சிறந்த ஜிஹாத் பாவச் செயல் எதுவும் கலவாத ஹஜ் தான்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 1521. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உடலுறவு மற்றும் பாவமான செயல்களில் ஈடுபடாமல் ஒருவன் அல்லாஹ்வுக்காகவே ஹஜ் செய்தால் அவன் அவனுடைய தாய் அவனைப் பெற்றெடுத்த நாளில் இருந்ததைப் போன்று (பாவமறியாயப் பாலகனாகத்) திரும்புவான். “

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள். 5

## ஹஜ், உம்ராவினுடைய (இஹ்ராமின்) எல்லைகளை நிர்ணயித்தல்.

ஹதீஸ் 1522. ஸைத் இப்னு ஜுபைர் அவர்கள் கூறினார்கள்.

நான் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) வீட்டிற்கு வந்தேன். ஒரு கூடாரம்தான் அவரின் வீடாக இருந்தது. நான் அவரிடம் உம்ராவுக்காக எந்த இடத்திலிருந்து இஹ்ராம் அணிவது கூடும்? எனக் கேட்டேன். அதற்கு, ‘நஜ்த் வாசிகள் கர்ன் எனும் இடத்திலிருந்தும் மதீனா வாசிகள் துல் ஹுலை∴பாவிலிருந்தும் ஷாம் வாசிகள் ஜுஹ்∴பாவிலிருந்தும் இஹ்ராம் அணிய வேண்டுமென நபி (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள்‘‘ என இப்னு உமர் (ரலி) பதிலளித்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“மேலும் (ஹஜ்ஜுக்குத் தேவையான) பொருட்களைச் சித்தப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள் நிச்சயமாக இவ்வாறு சித்தப்படுத்தி வைப்பவற்றுள் மிகவும் நன்மையானது, தக்வா (என்னும் பயபக்தியே) ஆகும்!”(திருக்குர்ஆன் 02:197)

ஹதீஸ் 1523. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

யமன் வாசிகள் (ஹஜ்ஜுக்குத் தேவையான) பொருள்களைச் சேகரிக்காமல் ஹஜ்ஜுக்கு வருவார்கள் மேலும் நாங்கள் இறைவன் மீது நம்பிக்கை வைத்துள்ளோம் என்றும் கூறுவார்கள். மக்கா வந்தடைந்தால் மக்களிடம் யாசகம் கேட்பார்கள். இது குறித்தே அல்லாஹ் (ஹஜ்ஜுக்குத் தேவையான) பொருட்களைச் சித்தப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள், நிச்சயமாக இவ்வாறு சித்தப்படுத்தி வைப்பவற்றுள் மிகவும் நன்மையானது தக்வா (என்னும் பயபக்தியே) ஆகும்‘‘ என்ற வசனத்தை இறக்கினான்.

## மக்காவாசிகள் ஹஜ், உம்ராவுக்காக எங்கிருந்து இஹ்ராம் அணிய வேண்டும்?

ஹதீஸ் 1524. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவாசிகளுக்கு துல்ஹுலைஃபாவையும் ஷாம் வாசிகளுக்கு ஜுஹ்ஃபாவையும் நஜ்த்வாசிகளுக்கு கர்னுல் மனாஸிலையும் யமன்’வாசிகளுக்கு யலம்லமையும் இஹ்ராம் அணியும் எல்லைகளாக நிர்ணயித்தார்கள். இவ்வெல்லைகள் இவர்களுக்கும் ஹஜ் உம்ராவுக்காக இவ்வழியே வருபவர்களுக்கும் உரியனவாகும். இந்த வரையறுக்கப்பட்ட எல்லைக்கு உள்ளே இருப்பவர்கள். தாம் வசிக்கும் இடத்திலேயே இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் மக்காவாசிகள் மக்காவிலேயே இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் கூறினார்கள்.

## மதீனா வாசிகள் இஹ்ராம் அணியும் எல்லையும் அவர்கள் துல்ஹுலைஃபாவுக்கு முன்னால் இஹ்ராம் அணியக்கூடாது என்பதும்.

ஹதீஸ் 1525. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மதீனாவாசிகள் துல்ஹுலைஃபாவிலிருந்தும் ஷாம்வாசிகள் ஜுஹ்ஃபாவிலிருந்தும் நஜ்த்வாசிகள் கர்னிலிருந்தும் இஹ்ராம் அணிவார்கள். “

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“யமன்வாசிகள் யலம்லம் எனுமிடத்திலிருந்து இஹ்ராம் அணிவார்கள்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என எனக்குச் செய்தி கிடைத்தது‘‘ என்றும் இப்னு உமர்(ரலி) கூறினார்.

## ஷாம் வாசிகள் இஹ்ராம் அணியுமிடம்.

ஹதீஸ் 1526. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவாசிகளுக்கு துல்ஹுலைஃபாவையும் ஷாம் வாசிகளுக்கு ஜுஹ்பாவையும்யும் நஜ்த் வாசிகளுக்கு கர்னுல் மனாஸிலையும் யமன் வாசிகளுக்க யலம்லமையும் இஹ்ராம் அணியும் எல்லைகளாக நிர்ணயித்தார்கள். இவ்வெல்லைகள் இவர்களுக்கும் ஹஜ் உம்ராவுக்காக இவ்வழியே வருபவர்களுக்கும் உரியனவாகும். இந்த வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் இருப்பவர்கள், தாம் வசிக்குமிடத்திலேயே எங்கேனும் இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் மக்காவாசிகள் மக்காவிலேயே இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் கூறினார்கள்.

## நஜ்த் வாசிகள் இஹ்ராம் அணியுமிடம்

ஹதீஸ் 1527 , ஹதீஸ் 1528. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மதீனா வாசிகள் துல்ஹுலை ஃபாவிலிருந்தும் ஷாம் வாசிகள் மஹ்யஆ எனும் ஜுஹ்ஃபாவிலிருந்தும் நஜ்த் வாசிகள் கர்னிலிருந்தும் இஹ்ராம் அணிவார்கள்.

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“யமன் வாசிகள் யலம்லம் எனுமிடத்திலிருந்து இஹ்ராம் அணிவார்கள்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என நபித்தோழர்கள் கூறுகிறார்கள்: ஆனால், நான் (நேரடியாக) நபி(ஸல்) கூறக் கேட்கவில்லை என இப்னு உமர்(ரலி) கூறினார்.

## இஹ்ராமின் எல்லைகளுக்குட்பட்ட பகுதியில் வசிப்போர் இஹ்ராம் அணியுமிடம்.

ஹதீஸ் 1529. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவ வாசிகளுக்கு துல்ஹுலைஃபாவையும் ஷாம் வாசிகளுக்கு ஜுஹ்ஃபாவையும் யமன் வாசிகளுக்கு யலம்லமையும் நஜ்த் வாசிகளுக்கு கர்னையும் இஹ்ராம் அணியும் எல்லைகளாக நிர்ணயித்தார்கள். இவ்வெல்லைகள் இவர்களுக்கும் ஹஜ் உம்ராவுக்காக இவ்வழியே வருபவர்களுக்கும் உரியனவாகும். இந்த வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் இருப்பவர்கள், தாம் வசிக்குமிடத்திலேயே எங்கேனும் இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் மக்கவாசிகள் மக்காவிலேயே இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் கூறினார்கள்.

## யமன் வாசிகள் இஹ்ராம் அணியுமிடம்.

ஹதீஸ் 1530. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனா வாசிகளுக்கு துல்ஹுலைஃபாவையும் ஷாம் வாசிகளுக்கு ஜுஹ்ஃபாவையும் நஜ்த் வாசிகளுக்கு கர்னுல் மனாலையும் யமன் வாசிகளுக்கு யலம்லமையும் இஹ்ராம் அணியும் எல்லைகளாக நிர்ணயித்தார்கள். இவ்வெல்லைகள் இவர்களுக்கும் ஹஜ் உம்ராவுக்காக இவ்வழியே வருபவர்களுக்கும் உரியனவாகும் இந்த வரையறுக்கப்பட்ட எல்லைகளுக்குள் இருப்பவர்கள், தாம் வசிக்குமிடத்திலேயே எங்கேனும் இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் மக்காவாசிகள் மக்காவிலேயே இஹ்ராம் அணிந்து கொள்ளலாம் என்றும் கூறினார்கள்.

## இராக் வாசிகளின் எல்லை’தாத்து இர்க்‘‘ ஆகும்.

ஹதீஸ் 1531 (கூஃபா, பஸரா எனும்) இந்த இரண்டு நகரங்கள் வெற்றி கொள்ளப்பட்டபோது, அங்குள்ளோர் உமர்(ரலி) அவர்களிடம் வந்து,‘இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! நபி(ஸல்) அவர்கள் நஜ்த்வாசிகளுக்குக் கர்ன் எனும் இடத்தையும் (இஹ்ராம் அணியும் எல்லையாக) நிர்ணயித்துள்ளார்கள். நாங்கள் (மக்காவிற்கு) செல்லும் பாதை அதுவன்று. நாங்கள் கர்ன் வழியாகச் செல்வதானால் அது மிகவும் சிரமமாகும்‘‘ என்றனர். அதற்கு உமர்(ரலி)’அந்த அளவு தொலைவுள்ள ஓரிடத்தை உங்களின் பாதையிலே கூறுங்கள்’ என்றார். பின்பு தாதுல் இர்க் என எல்லை நிர்ணயித்தார்.

ஹதீஸ் 1532. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹுலைஃபாவில் கற்கள் நிறைந்த இடத்தில் தம் ஒட்டகத்தை அமர வைத்து, அங்கேயே (இரண்டு ரக்அத்கள்) தொழுதார்கள்.

இப்னு உமர்(ரலி), இது போன்றே செய்வார் என நா∴பிஉ கூறுகிறார்.

## ஷஜரா எனும் பாதை வழியாக (ஹஜ்ஜுக்கு) நபி(ஸல்) அவர்கள் செல்லல்.

ஹதீஸ் 1533. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஷஜரா எனும் இடத்தின் வழியாக (மதீனாவிலிருந்து) வெளியேறுவார்கள். திரும்பும்போது முஅர்ரஸ் எனும் இடத்தின் வழியாக (மதீனாவினுள்) நுழைவார்கள். நபி(ஸல்) அவர்கள் மக்காவுக்கு செல்லும்போது ஷஜராவிலுள்ள பள்ளிவாசலில் தொழுவார்கள். அங்கிருந்து திரும்பும்போது பத்னுல் வாதியிலுள்ள துல்ஹுலை∴பாவில் தொழுதுவிட்டு விடியும் வரை அங்கேயே தங்குவார்கள்.

## அகீக் (எனும் பள்ளத்தாக்கு) அபிவிருத்தி மிக்க பள்ளத்தாக்கு என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 1534. உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"என்னுடைய இறைவனிடத்திலிருந்து வரக்கூடிய(வான)வர் இன்றிரவு வந்தது'இந்த அபிவிருத்தி மிக்க பள்ளத்தாக்கில் தொழுவீராக! இன்னும் ஹஜ்ஜுடன் உம்ராவைச் சேர்த்துவிட்டதாக மொழிவீராக!' எனக் கட்டளையிட்டார்" என்று நபி(ஸல்) அவர்கள் அகீக் எனும் பள்ளத்தாக்கில் கூற, கேட்டேன்.

ஹதீஸ் 1535. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பத்னுல் வாதியிலுள்ள துல்ஹுலை∴பாவில் முஅர்ரஸ் எனுமிடத்தில் நபி(ஸல்) அவர்கள் இருந்தபோது கனவு கண்டார்கள் (அக்கனவில்)'நீங்கள் அபிவிருத்தி மிக்க அழகிய பள்ளத்தாக்கில் இருக்கிறீர்கள்' என்று (வானவரால்) கூறப்பட்டது.

நபி(ஸல்) அவர்கள் முஅர்ரஸ் எனுமிடத்தைத் தேர்வு செய்தது போல் இப்னு உமரும் அங்கேயே தம் ஒட்டகத்தை உட்கார வைப்பார். அவரின் மகன் ஸாலிமும் அவ்வாறே செய்வார். முஅர்ரஸ் எனுமிடம் பத்னுல் வாதியிலுள்ள பள்ளி வாசலின் கீழ்ப் புறத்தில் சாலைக்கும் மக்கள் தங்குமிடத்திற்கும் நடுவிலுள்ளது என்று மூஸா இப்னு உக்பா கூறுகிறார்.

## (இஹ்ராம் அணியும்) ஆடையில் (முன்னர் பூசப்பட்ட) நறுமணமிருந்தால் மூன்று முறை கழுவுதல்.

ஹதீஸ் 1536. ய∴லா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) வரும்பொழுது எனக்குக் காட்டுங்கள் என்று உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களில் சிலரும் ஜிஇர்ரானா எனுமிடத்தில் இருந்தபோது ஒருவர் வந்து'நபி அவர்களே! நறுமணம் பூசிய நிலையில் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தவர் பற்றி என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் சற்று நேரம் மௌனமாக இருந்தார்கள். அப்போது அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) வந்தது. உமர்(ரலி) என்னை சைகை செய்து அழைத்ததும் நான் சென்றேன். நபி(ஸல்) அவர்களுக்கு நிழல் தருவதற்காக ஒரு துணி கட்டப்பட்டிருந்தது. அத் துணிக்குள் நான் தலையை நுழைத்தேன். நபி(ஸல்) அவர்கள் முகம் சிவந்த நிலையில் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தார்கள். பிறகு (சிறிது சிறிதாக) அந்த நிலை மாறியது. அப்போது நபி(ஸல்) அவர்கள்'உம்ராவைப் பற்றிக் கேட்டவர் எங்கே?' என்றார்கள்.

கேட்ட மனிதர் அழைத்து வரப்பட்டார். அவரிடம்'உம் மீதுள்ள நறுமணத்தை மூன்று முறை கழுவுவீராக! தைக்கப்பட்ட உடைகளைக் களைவீராக! உம்முடைய ஹஜ்ஜில் செய்வது போன்றே உம்முடைய உம்ராவிலும் செய்வீராக!"என்று கூறினார்கள்.

"மும்முறை கழுவச் சொன்னது நன்கு சுத்தப்படுத்தவா?' என்று (அறிவிப்பாளரான) அதா(ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அவர்'ஆம்!"என்றார்" என இப்னு ஜுரைஜ் கூறுகிறார்.

## இஹ்ராம் அணியும்போது நறுமணம் பூசுவதும் இஹ்ராம் அணிய நாடும்போது அணிய வேண்டிய ஆடையும் தலைக்கு எண்ணெய் தடவுவதும் தலை வாருவதும்.

இஹ்ராம் அணிபவன் நறுமணத்தை முகரலாம் கண்ணாடி பார்க்கலாம் உட்கொள்ளும் எண்ணெய், நெய் போன்றவற்றை மருந்தாகப் பயன்படுத்தலாம் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

மோதிரம் அணியலாம், பையுள்ள இடுப்புவரை அணியலாம் என அதாவு கூறுகிறார்.

இப்னு உமர்(ரலி) இஹ்ராம் அணிந்த நிலையில் தம் வயிற்றில் துணியைக் கட்டிக் கொண்டு கஅபாவை வலம் வந்தார்.

ஒட்டகத் தொட்டியில் பயணிப்பவர் அரைக்கால் சட்டை அணிவதில் குற்றமில்லை என ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1537 ~ ஹதீஸ் 1538 ஸயீத் இப்னு ஜுபைர் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) (இஹ்ராம் அணிந்த நிலையில், நறுமண எண்ணெய் பூசாமல் நறுமணமற்ற) ஆலிவ் எண்ணெய்யைப் பூசியதாக இப்ராஹீமிடம் நான் கூறியபோது,'அவர் என்ன சொல்வது? (இது நபி(ஸல்) அவர்களின் நடைமுறைக்கு மாற்றமா இருக்கிறதே) என்றார். (மேலும் தொடர்ந்து) நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருக்கும் பொழுது அவர்களின் தலையின் வம்ட்டில் பார்த்த நறுமண எண்ணெய்யின் மினுமினுப்பு நான் இன்று பார்ப்பது போலுள்ளது என்று ஆயிஷா(ரலி) கூறியிருக்கிறாரே' என இப்ராஹீம் கூறினார்.

ஹதீஸ் 1539. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இஹ்ராம் அணியும் நேரத்தில், நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிவதற்காக நான் நறுமணம் பூசினேன். இதுபோல் இஹ்ராமிலிருந்து விடுபடும்போது கஅபாவை வலம் வருவதற்கு முன்னால் நறுமணம் பூசுவேன்.

## (தலை முடி காற்றில் பறக்காமலிருக்கக்) களிம்பைத் தடவி இஹ்ராம் அணிவது.

ஹதீஸ் 1540. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தம் முடியில் களிம்பு தடவியிருந்த நிலையில் தல்பியாக் கூறியதைக் கேட்டேன்.

## துல்ஹுலைஃபாவின் பள்ளியில் இஹ்ராம் அணிவது.

ஹதீஸ் 1541. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹுலைஃபாவின் பள்ளியைத் தவிர வேறெங்கும் இஹ்ராம் அணிந்ததில்லை.

## இஹ்ராம் அணிந்தவர் அணியக் கூடாத ஆடைகள்.

ஹதீஸ் 1542. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து'நபி அவர்களே! இஹ்ராம் அணிந்தவர் எதையெதை அணியலாம்?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்'சட்டை, தலைப்பாகை, முழுக்கால் சட்டை, தொப்பி, காலுறை ஆகியவற்றை அணியக்கூடாது. செருப்பு கிடைக்காதவர், தம் காலுறையின் (மேலிருந்து) கரண்டைக்குக் கீழ் வரையுள்ள பகுதியை வெட்டிவிட்டு அதை அணிந்து கொள்ளலாம் குங்குமப்பூச் சாயம் மற்றும் வர்ஸ் எனும் செடியின் சாயம் தோய்க்கப்பட்ட ஆடையை அணியாதீர்!"என்றார்கள்.

## ஹஜ்ஜின்போது சவாரி செய்வதும் தம் வாகனத்தில் பிறரை ஏற்றிச் செல்வதும்.

ஹதீஸ் 1543 , ஹதீஸ் 1544. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உஸாமா(ரலி) நபி(ஸல்) அவர்களோடு வாகனத்தின் பின் அமர்ந்து அரஃபாவிலிருந்து முஸ்தலிஃபா வரை சென்றார். பிறகு ஃபழ்ல்(ரலி) முஸ்தலிஃபாவிலிருந்து மினாவரை சென்றார். 'நபி(ஸல்) அவர்கள் ஜம்ரதுல் அகபாவில் கல்லெறியும் வரை தல்பியாவை நிறுத்தவில்லை' என இவ்விருவருமே கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்த நிலையில் வேட்டி, மேல் துண்டு போன்றவற்றை அணிதல்.

ஆயிஷா(ரலி) இஹ்ராமோடு இருந்தபோது மஞ்சள் நிற ஆடையணிந்தார்கள். 'பெண்கள் தங்கள் வாய்களை (துணியால்) மூடவோ, முகத்தை முழுவதும் மூடவோ கூடாது: குங்குமப்பூச்சாயம் மற்றும் வர்ஸ் எனும் செடியின் சாயம் பூசப்பட்ட ஆடைகளை அணியக் கூடாது'' என ஆயிஷா(ரலி) கூறினார். 'நகைகள், கருப்பு மற்றும் ரோஜா நிற ஆடை காலுறை ஆகியவற்றை பெண்கள் அணிவதில் தவறில்லை'' என்றும் சொன்னார்.

"குசும்பச் செடியின் சிவப்புச் சாயத்தை நான் வசானைப் பொருளாக கருதவில்லை'' என ஜாபிர் கூறுகிறார்.

(இஹ்ராமுடைய ஆடையை மாற்றி அணிவதில் தவறில்லை என இப்ராஹீம் கூறுகிறார்.

ஹதீஸ் 1545. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் எண்ணெய் தடவித் தலைசீவி வேட்டியும் துண்டும் அணிந்து தம் தோழர்களோடு மதீனாவிலிருந்து (இறுதி ஹஜ்ஜுக்குப்) புறப்பட்டார்கள். உடல் மீது ஒட்டிக் கொள்ளும் அளவு குங்குமப்பூ தோய்க்கப்பட்ட ஆடையைத் தடை செய்தார்களேயன்றி வேட்டி, துண்டு அணிவதைத் தடுக்கவில்லை - துல்ஹுதைஃபாவிற்குக் காலை நேரத்தில் வந்தடைந்தார்கள். பிறகு தம் வாகனத்தில் ஏறியமர்ந்து பய்தா எனும் (குன்றுப்) பகுதியின் சமதளத்தை அடைந்ததும் அவர்களும் அவர்களின் தோழர்களும் இஹ்ராம் அணிந்தார்கள். நபி(ஸல்) தம் ஒட்டகத்தில் அடையாளமாகச் சிலவற்றைத் தொங்கவிட்டார்கள். இந்நிகழ்ச்சி

துல்கஅதாவில் ஐந்து நாள்களின் மீதுமிருக்கும்போது நடந்தது. துல்ஹஜ் ஐந்தாம் நாள் மக்கா சென்றடைந்தபோது கஅவானை வலம் வந்து ஸஃபா மர்வாவிற்கு மத்தியில் ஓடினார்கள். (உம்ராவை முடித்தாலும்) அவர்கள் குர்பானியின் ஒட்டகத்தைத் தம்மோடு கொண்டு வந்ததனால், (தலை முடி களைந்து) இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை. பிறகு ஹஜ்ஜுக்கு இஹ்ராம் அணிந்த நிலையில் மக்காவின் மேற்பகுதி ஹஜூன் எனும் மலையில் இறங்கினார்கள். மக்கா வந்ததும் கஅபாவை வலம் வந்தவர்கள் அரஃபாவிலிருந்து திரும்பிய பின்னரே மீண்டும் கஅபாவிற்கு வந்தார்கள். இதற்கு இடையில் கஅபாவை நெருங்கவில்லை. தம் தோழர்களுக்குக் கஅபாவை வலம் வரவும் ஸஃபா, மர்வாவில் ஓடவும், பிறகு தலை முடியைக் குறைக்கவும் இஹ்ராமிலிருந்து விடுபடவும் கட்டளையிட்டார்கள். இது தம்மோடு குர்பானிக்கான ஒட்டகங்களைக் கொண்டு வராதவர்களுக்குச் சொல்லப்பட்டதாகும். இவர்களில் மனைவியோடு வந்தவர்கள் உடலுறவு கொள்வது, நறுமணங்கள், (வண்ண) ஆடைகள் அணிவது ஹலாலாகும்.

## விடியும்வரை துல்ஹுலை ஃபாவில் தங்குவது

இதுபற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1546. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (ஹஜ்ஜுக்கு செல்லும்போது) மதீனாவில் நான்கு ரக்அத்கள் தொழுதார்கள். பின்பு துல் ஹுலைஃபாவில் இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டு அங்கேயே விடியும் வரை தங்கினார்கள். பிறகு வாகனத்தில் அமர்ந்து வாகனம் நிலைக்கு வந்தபோது இஹ்ராம் அணிந்தார்கள்.

ஹதீஸ் 1547. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹர் தொழுதார்கள். பிறகு துல்ஹுலைஃபாவில் இரண்டு ரக்அத்கள் அஸர் தொழுதார்கள். அவர்கள் அங்கேயே விடியும் வரை தங்கினார்கள் என எண்ணுகிறேன்.

## தல்பியாவை சப்தமாகக் கூறுவது.

ஹதீஸ் 1548. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹர் தொழுதார்கள். துல்ஹுதைஃபாவில் இரண்டு ரக்அத்கள் அஸர் தொழுதார்கள். அனைவரும் ஹஜ், உம்ராவிற்கான தல்பியாவை சப்தமாகக் கூற கேட்டேன் .

## தல்பியா கூறுதல்

ஹதீஸ் 1549. அப்துல்லாஹ் வின் உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“இதோ, உன் அழைப்பை ஏற்று வந்து விட்டேன்! இறைவா! உனக்கே நான் கீழ்ப்படிகிறேன்! இணையில்லாதோனே! உனக்கே நான் கீழ்ப்படிகிறேன்! புகழும், அருட்கொடையும், ஆட்சியும் உனக்கே உரியன! உனக்கு இணையானவர் எவருமில்லை.“

இதுவே நபி(ஸல்) அவர்களின் தல்பியாவாகும்.

ஹதீஸ் 1550. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் தல்பியா எவ்வாறு இருந்தது என்பதை நான் நன்கறிவேன்.

**“இதோ, உன் அழைப்பை ஏற்று வந்து விட்டேன்! இறைவா! உனக்கே நான் கீழ்ப்படிகிறேன்! இணையில்லாதோனே! உனக்கே நான் கீழ்ப்படிகிறேன்! உன் அழைப்பை ஏற்று வந்து விட்டேன்! புகழும் அருட்கொடையும் உனக்கே உரியன!“**

**இதுவே நபி(ஸல்) அவர்களின் தல்பியாவாகும்.**

## இஹ்ராம் அணிவதற்கு முன்னால் வாகனத்தின் மீதமர்ந்த நிலையிலே அல்ஹம்துலில்லாஹ், ஸுப்ஹானல்லாஹ், அல்லாஹ் அக்பர், கூறுவது.

**ஹதீஸ் 1551. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.**

நாங்கள் நபி(ஸல்) அவர்களோடு இருந்தோம். அவர்கள் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹர் தொழுதார்கள். துல் ஹுலைஃபாவில் இரண்டு ரக்அத்கள் அஸர் தொழுதார்கள். பிறகு விடியும் வரை அங்கேயே தங்கிவிட்டு மீண்டும் வாகனத்தின் மீதமர்ந்து பைதா எனுமிடத்தில் வாகனம் நிலைக்கு வந்தபோது'அல்ஹம்துலில்லாஹ், ஸுப்ஹானல்லாஹ், அல்லாஹு அக்பர்' எனக் கூறினார்கள். பிறகு ஹஜ், உம்ரா இரண்டிற்காகவும் இஹ்ராம் அணிந்து, தல்பியா கூறினார். நாங்கள் மக்கா வந்து (உம்ராவை முடித்த போது) இஹ்ராமிலிருந்து விடுபடும்படி மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். மக்கள் துல்ஹஜ் பிறை எட்டு அன்று ஹஜ்ஜுக்காக மீண்டும் இஹ்ராம் அணிந்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒட்டகங்களை நிற்கவைத்துத் தம் கைகளாலேயே அறுத்தார்கள். இன்னும் நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் பெருநாளில் இரண்டு கருப்பு நிறம் கலந்த வெள்ளை நிற ஆடுகளை அறுத்தார்கள்.

## வாகனம் நிலைக்கு வரும்போது தல்பியா கூறுதல்.

**ஹதீஸ் 1552. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.**

வாகனம் நிலைக்கு வந்தபோது நபி(ஸல்) அவர்கள் தல்பியா கூறினார்கள்.

பகுதி 29

## கிப்லாவை முன்னோக்கித் தல்பியா கூறுவது:

**ஹதீஸ் 1553. நாபிவு அவர்கள் கூறினார்கள்.**

இப்னு உமர்(ரலி) துல்ஹுலைஃபாவில் ஸுப்ஹுத் தொழுதவுடன் புறப்படும்படி கட்டளையிடுவார். வாகனக் கூட்டம் புறப்பட்டதும் அவரும் புறப்படுவார். வாகனம் நிலைக்கு வரும்போது கிப்லாவை முன்னோக்கி நின்று கொள்வார். பின்னர் தல்பியா கூறிக் கொண்டேயிருப்பார். பிறகு ஃதூத்துவா எனுமிடத்தை அடையும்போது தல்பியாவை நிறுத்தி அங்கேயே விடியும் வரை தங்குவார். ஸுப்ஹுத் தொழுதுவிட்டு அங்கேயே குளிப்பார். இவ்வாறே நபி(ஸல்) அவர்கள் செய்ததாகவும் கூறுவார்.

**ஹதீஸ் 1554. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.**

இப்னு உமர்(ரலி) (ஹஜ், உம்ராவிற்காக) மக்கா செல்ல நாடினால் நறுமணமில்லாத எண்ணெய் தேய்ப்பார். பிறகு துல்ஹுலைஃபா பள்ளிவாசலுக்கு வந்து தொழுதுவிட்டு மீண்டும் (காலையில்) புறப்படுவார். தம் வாகனம் நிலைக்கு வந்துவிட்டால் இஹ்ராம் (ஆடையை) அணிவார். 'இவ்வாறே நபி(ஸல்) அவர்கள் செய்ய கண்டேன்' எனக் கூறுவார்.

## இஹ்ராம் அணிந்தவர் பள்ளத்தாக்கில் இறங்கும்போது தல்பியா கூறுதல்.

ஹதீஸ் 1555. முஜாஹித் அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அங்கிருந்தவர்கள் தஜ்ஜாலைப் பற்றிக் கூறும்போது'அவனுடைய இரண்டு கண்களுக்கு மத்தியில் காஃபிர் என எழுதப்பட்டிருக்கும்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னதாகக் கூறினார்கள். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி), 'நான் இதை நபி(ஸல்) அவாக்ள் கூறக் கேட்கவில்லை. எனினும்'மூஸா (அலை) தல்பியா கூறியவாறு பள்ளத்தாக்கில் இறங்குவதை நான் காண்பது போன்று உள்ளது' என்று நபி(ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்'' என்றார்.

## மாதவிடாயுள்ளவளும் பிரசவத் தீட்டுள்ளவளும் இஹ்ராம் எப்படி அணிவது?

ஹதீஸ் 1556. ஹஜ்ஜத்துல் வதாவில் நபி(ஸல்) அவர்களோடு சென்றிருந்தபோது உம்ராவிற்காக இஹ்ராம் (ஆடையை) அணிந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'யாருடன் குர்பானிப் பிராணி உள்ளதோ அவர் உம்ராவோடு ஹஜ்ஜுக்கும் இஹ்ராம் அணிந்து கொள்ளட்டும். இன்னும் அவர் இவ்விரண்டையும் நிறைவேற்றும் வரை இஹ்ராமிலிருந்து விடுபடக் கூடாது'' என்றார்கள். ஆனால் நான் மக்கா வந்தபோது மாதவிடாய்க் காரியானேன். இதனால் கஅபாவைத் தவாஃபும் செய்யவில்லை. இன்னும் ஸஃபா, மர்வாவுக்கிடையே ஓடவுமில்லை. இதை நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அதற்கு அவர்கள்'உன்னுடைய தலைமுடியை அவிழ்த்துவிட்டு தலைவாரிக் கொள். பிறகு ஹஜ்ஜிற்காக மட்டும் இஹ்ராம் (ஆடையை) அணிந்து உம்ராவைவிட்டு விடு!"என்றார்கள். நானும் அவ்வாறே செய்தேன். நாங்கள் ஹஜ்ஜை முடித்தபோது, (என் சகோதரர்) அப்துர் ரஹ்மானுடன் என்னை தன்யீம் எனும் இடத்திற்கு நபி(ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். நான் உம்ரா செய்தேன். 'இது உன்னுடைய விடுபட்ட உம்ராவுக்குப் பகரமாகும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தவர்கள் கஅபாவை வலம் வந்து ஸஃபா, வலம் வந்து ஸஃபா, மர்வாவுக்கிடையே ஓடி (சஃயுசெய்து)விட்டு இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்கள். மினாவிலிருந்து திரும்பியபோது மீண்டும் ஒரு முறை வலம் வந்தார்கள்.

ஹஜ், உம்ரா இரண்டுக்கும் சேர்த்து இஹ்ராம் அணிந்தவர்கள் ஒருமுறை மட்டுமே வலம்வந்தார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் இஹ்ராமைப் போன்றே நானும் இஹ்ராம் அணிகிறேன் என்று நபி(ஸல்) அவர்களின் காலத்தில் ஒருவர் இஹ்ராம் அணிவது.

இது தொடர்பாக இப்னு உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 1557. அதாவு அவர்கள் கூறினார்கள்.

அலீ(ரலி) அவர்களிடம் (ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து) அவர் அணிந்திருந்த இஹ்ராமிலேயே நீடிக்கும்படி நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் என ஜாபிர்(ரலி) கூறினார். மேலும் இது தொடர்பாக (''இது உங்களுக்கு மட்டுமா அல்லது அனைவருக்கும்

பொதுவானதா?' என சுராகா கேட்க. 'எப்போதைக்கும் உரியதே! (அனைவருக்கும் பொதுவானதே!)'' என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்த அந்த) செய்தியையும் கூறினார்கள்.

ஹதீஸ் 1558. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

யமனிலிருந்து திரும்பிய அலீ(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'எதற்காக இஹ்ராம் அணிந்தீர் (ஹஜ்ஜுடன் உம்ராவிற்கும் சேர்த்தா? உம்ராவிற்கு மட்டுமா)?' எனக் கேட்டார்கள். அதற்கு அலீ(ரலி)'நீங்கள் இஹ்ராம் அணிந்தது போன்றே நானும் இஹ்ராம் அணிந்துள்ளேன்..!"என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,'என்னுடன் குர்பானிப் பிராணி இல்லையெனில் (உம்ராவை முடித்து) நான் இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பேன்'' என்றார்கள்.

இப்னு ஜுரைஜின் அறிவிப்பில் நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம்'நீர் இஹ்ராமிலேயே நீடித்து (ஹஜ்ஜையும் உம்ராவையும் முடித்த பின்) குர்பானி கொடும்!"என்று கூறினார்கள் எனக் காணப்படுகிறது.

ஹதீஸ் 1559. அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் யமன் நாட்டின் ஒரு கூட்டத்தினரிடம் என்னை அனுப்பி வைத்தார்கள். நான் (திரும்பி) வந்தபோது அவர்கள் துல்ஹுலைஃபாவில் பத்ஹா எனும் பள்ளத்தாக்கில் இருந்தார்கள். அவர்கள் என்னிடம்'நீ எதற்கு இஹ்ராம் அணிந்தாய்? (ஹஜ், உம்ரா இரண்டிற்காகவுமா? உம்ராவிற்கு மட்டுமா?)' எனக் கேட்டார்கள். நான் நபி(ஸல்) அவர்களின் இஹ்ராமைப் போன்றே நான் இஹ்ராம் அணிந்தேன்'' என பதிலளித்தேன். 'உன்னிடத்தில் குர்பானிப் பிராணி ஏதேனும் உண்டா?' என்று நபி(ஸல்) கேட்க நான்'இல்லை'' என்றேன். அப்போது வலம் வரவும் ஸஃபா, மர்வாவுக்கிடையே தொங்கோட்டம் ஓடவும் அதன் பிறகு இஹ்ராமிலிருந்து விடுபடவும் எனக்குக் கட்டளையிட்டார்கள். அதன்படி செய்தேன். அதன்பின்னர் என் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணிடம் வந்தேன். அவள் என் தலையை வாரினாள் கழுவினாள்.

உமர்(ரலி) (பதவிக்கு) வந்தபோது கூறினார்:

"நாம் இறைவனுடைய வேதத்தின் படி நடப்பதெனில்,'ஹஜ்ஜையும், உம்ராவையும் பூர்த்தி செய்யுங்கள்' என்ற (திருக்குர்ஆன் 02:196) வசனத்தின் படி'இரண்டையும் சேர்த்து (ஒரே இஹ்ராமில்) செய்ய வேண்டும்' என்றே அது நமக்குக் கட்டளையிடுகிறது. நாம் நபிவழியின் படி நடப்பதென்றாலும், அவர்கள் குர்பானிப் பிராணியை அறுக்கும் வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை. (அது போன்றே செய்யவேண்டும்). "

அல்லாஹ் கூறினான்:

"ஹஜ்ஜுக்குரிய காலம் அறியப்பட்ட சில மாதங்களாகும். எனவே, அவற்றில் எவரேனும் ஹஜ்ஜைத் தம் மீது கடமையாக்கினால் ஹஜ்ஜின் காலத்தில் உடலுறவு, மற்றும் பாவங்களில் ஈடுபடல், சச்சரவு செய்தல் ஆகியவை கூடாது!"(திருக்குர்ஆன் 02:197)

அல்லாஹ் கூறினான்:'(நபியே! தேய்ந்து வளரும்) பிறையைப் பற்றி உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும்: அவை மக்களுக்குக் காலம் காட்டுபவையாகவும் ஹஜ்ஜுடைய நாள்கள் அறிவிப்பவையாகவும் உள்ளன!"(திருக்குர்ஆன் 02:189)

“ஷவ்வால், துல்கஅதா இன்னும் துல்ஹஜ்ஜில் முந்திய பத்து நாள்கள் ஆகியவை ஹஜ்ஜுடைய மாதங்களாகும்‘‘ என இப்னு உமர்(ரலி கூறுகிறார்.

“ஹஜ் செய்வதற்காக ஹஜ்ஜுடைய மாதங்களில் மட்டுமே இஹ்ராம் அணிவதே நபி வழியாகும்‘‘ என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

குராஸான் அல்லது கர்மான் ஆகீய இடங்களிலிருந்து இஹ்ராம் அணிவதை உஸ்மான்(ரலி) வெறுத்துள்ளார்கள்.

ஹதீஸ் 1560. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களோடு ஹஜ் மாதத்தில், ஹஜ் இரவுகளில், ஹஜ் காலத்தில் புறப்பட்டு ஸரி∴ப் எனுமிடத்தில் இறங்கினோம். நபி(ஸல்) அவர்கள் (தம் கூடாரத்திலிருந்து) புறப்பட்டு தம் தோழர்களிடம் வந்து,‘யாருடன் குர்பானிப் பிராணி இல்லையோ அவர் தம் இஹ்ராமை உம்ராவுக்காக ஆக்கிக் கொள்ள விரும்பினால் அவ்வாறே ஆக்கிக் கொள்ளட்டும் யாருடன் குர்பானிப் பிராணி உள்ளதோ அவர் இவ்வாறு செய்ய வேண்டாம்‘‘ என்றார்கள். தோழர்களில் சிலர் இதன்படி செய்தார்கள். சிலர் இதன்படி செய்யவில்லை. நபி(ஸல்) அவர்களுடனும் அவர்களோடிருந்த வசதிபடைத்த தோழர்களில் சிலருடனும் குர்பானிப் பிராணி இருந்ததால் அவர்களால் உம்ராவை மட்டும் செய்து இஹ்ராமிலிருந்து விடுபட முடியவில்லை. என்னிடம் வந்த நபி(ஸல்) அவர்கள் நான் அழுது கொண்டிருப்பதைப் பார்த்து,‘ஏன் அழுகிறாய்?’ எனக் கேட்டார்கள்.’நீங்கள் உங்கள் தோழர்களுக்குக் கூறியதைக் கேட்டேன் நான் உம்ரா செய்ய முடியாமலாம்விட்டது‘‘ என்றேன்.’உனக்கு என்னவாயிற்று?’ எனக் கேட்டார்கள்.’நான் தொழ முடியாத நிலையிலுள்ளேன்‘‘ என்றேன்.’அதனால் கவலை கொள்ள வேண்டாம் ஆதமின் பெண் மக்களில் நீயும் ஒருத்தி! எனவே, இறைவன் அவர்களுக்கு விதியாக்கியதை உனக்கும் விதியாக்கியுள்ளான். நீ ஹஜ் செய்! அல்லாஹ் உனக்கு உம்ரா செய்யும் வாய்ப்பையும் தரலாம்‘‘ என்றார்கள். ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டு மினாவை வந்தடைந்தபோது நான் தூய்மையானேன். பிறகு மினாவிலிருந்து சென்று வலம்வந்தேன். நபி(ஸல) அவர்களோடு வந்த கடைசிக் கூட்டத்தினரோடு புறப்பட்டு முஹஸ்ஸப் எனுமிடத்தில் நபி(ஸல்) அவர்களுடனேயே தங்கினேன். அப்போது (என்னுடைய சகோதரர்) அப்துர் ரஹ்மானை நபி(ஸல்) அழைத்து,‘உம்முடைய சகோதரியை ஹரமுக்கு வெளியே அழைத்துச் சென்று உம்ராவிற்கு இஹ்ராம் அணிந்து இருவரும் உம்ரா செய்யுங்கள். முடிந்ததும் இதே இடத்திற்குத் திரும்பி வாருங்கள். நான் உங்கள் இருவரையும் எதிர் பார்க்கிறேன்‘‘ என்றார்கள். உடனே நாங்கள் புறப்பட்டோம். தவா∴பை முடித்து ஸஹ்ருடைய நேரத்தில் வந்து சேர்ந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் (“உம்ராவை) முடித்து விட்டீர்களா?’ எனக் கேட்க’ஆம்’ என்றேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் புறப்பட அனுமதித்தார்கள். மக்கள் அனைவரும் புறப்பட்டதும் மதீனாவை நோக்கி நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள்.

## ஹஜ்ஜுக்கு மட்டும் இஹ்ராம் அணிவது (இ∴ப்ராத்) ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து இஹ்ராம் அணிவது (ம்ரான்) உம்ராவிற்கு இஹ்ராம் அணிந்து ஹஜ்ஜுக்கு இஹ்ராம் அணிவது. (தமத்துஉ) பலிப்பிராணியைக் கொண்டு வராதவர் ஹஜ்ஜை (உம்ராவாக) மாற்றுதல்.

ஹதீஸ் 1561. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களோடு சென்றோம். அவர்கள் ஹஜ்ஜைத் தவிர வேறெதையும் செய்ய நாங்கள் காணவில்லை. மக்காவை வந்தடைந்ததும் கஅபாவை வலம் வந்தோம். அதன் பிறகு

குர்பானிப் பிராணியைக் கொண்டு வராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடுமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். உடனே பிராணியைக் கொண்டு வராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டார்கள். நபி(ஸல்) அவர்களின் மனைவியரும் பிராணியைக் கொண்டுவராததால் அவர்களும் இஹ்ராமிலிருந்து விடுபட்டார்கள். ஆனால் நான் மாதவிடாய்க்காரியாக இருந்ததால் நான் வலம்வரவில்லை. (முஹஸ்ஸப் எனும் இடத்தில் தங்கும்) இரவு வந்தபோது நான் நபி(ஸல்) அவர்களிடம், நபி அவர்களே! மக்கள் ஹஜ், உம்ரா இரண்டையும் முடித்துத் திரும்புகின்றனர் ஆனால் நானோ ஹஜ்ஜூடன் மட்டும் திரும்புகிறேன் என்றேன். நபி(ஸல்) அவர்கள், 'நாம் மக்காவை வந்தடைந்தபோது நீ வலம்வரவில்லையா?' எனக் கேட்டார்கள். நான் இல்லை என்றேன். 'அப்படியானால் உன்னுடைய சகோதரனுடன் தன்யீம் எனும் இடத்திற்குச் சென்று உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்து அதனை முடித்து இன்ன இன்ன இடத்திற்கு வந்துவிடு'' எனக் கூறினார்கள்.

ஸஃபிய்யா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம், 'நானும் உங்கள் அனைவரின் பயணத்தையும் தடுத்துவிட்டதாக உணர்கிறேன்' என்று சொன்னபோது, நபி(ஸல்) 'காரியத்தைக் கெடுத்துவிட்டாயே! பத்தாம் நாளில் நீ வலம்வரவில்லையா?' என்று கேட்டார்கள். ஸஃபீய்யா 'ஆம், செய்து விட்டேன்!" என்றார். 'பரவாயில்லை! புறப்படு!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அதன் பிறகு என்னை நபி(ஸல்) அவர்கள் சந்தித்தபோது, அவர்கள் மக்காவிலிருந்து புறப்பட்டு ஒரு குன்றில் ஏறிக் கொண்டிருந்தார்கள். நான் இறங்கிக் கொண்டிருந்தேன் அல்லது அவர்கள் இறங்கிக் கொண்டிருந்தார்கள் நான் ஏறிக் கொண்டிருந்தேன்.

ஹதீஸ் 1562. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் இறுதி ஹஜ்ஜின்போது நாங்களும் அவர்களுடன் சென்றிருந்தோம். சிலர் உம்ராவிற்கும் ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்தும் சிலர் ஹஜ்ஜுக்காக மட்டும் இஹ்ராம் அணிந்திருந்தனர். நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்திருந்தார்கள். ஹஜ்ஜுக்காகவோ அல்லது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்காகவும் சேர்த்தோ இஹ்ராம் அணிந்தவர்கள் பிராணியைக் குர்பானி கொடுக்கும் (பத்தாம்) நாள் வரும் வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை.

ஹதீஸ் 1563. மர்வான் இப்னி ஹகம் அவர்கள் கூறினார்கள்.

நான் உஸ்மான்(ரலி) உடனும், அலீ(ரலி) உடனும் ஹஜ் செய்துள்ளேன். உஸ்மான்(ரலி) ஹஜ், உம்ரா இரண்டையும் சேர்த்து (ம்ரான்) செய்வதையும் உம்ரா முடித்து ஹஜ் (தமத்துஉ) செய்வதையும் தடுத்தார். இதைக்கண்ட அலீ(ரலி), ஹஜ் உம்ரா இரண்டிற்கும் இஹ்ராம் அணிந்து 'லப்பைக் பி உம்ரதின் வ ஹஜ்ஜதின்'' என்று கூறிவிட்டு 'நபி(ஸல்) அவர்களின் வழியை யாருடைய சொல்லிற்காகவும் நான்விட்டு விடமாட்டேன்'' எனக் கூறினார்.

ஹதீஸ் 1564. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜுடைய மாதங்களில் உம்ரா செய்வது பூமியில் நடக்கும் பாவங்களிலேயே மிகக் கொடிய பாவம் என (அறியாமைக்கால) மக்கள் கருதினர். (துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம் என மூன்று மாதங்கள், போரிடத் தடை செய்யப்பட்ட மாதங்களாகத் தொடர்ந்து வந்ததால்) முஹர்ரம் மாதத்திற்கான தடையை ஸஃப்ருக்கு மாற்றினார்கள். (ஹஜ் பயணத்தில்) ஒட்டகங்களின் முதும்லுள்ள சுமைகளின் வடு காய்ந்து மறைந்து ஸஃபர் மாதமும் கடந்துவிட்டால் உம்ரா செய்வது கூடும்'' என்று கூறிவந்தனர். நபி(ஸல்) அவர்களும், அவர்களின் தோழர்களும்

(துல்ஹஜ் மாதம்) நான்காம் நாள் காலை, ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தவர்களாக மக்கா நகருக்கு வந்தபோது நபி(ஸல்) அவர்கள், மக்களின் இஹ்ராமை உம்ராவிற்குரியதாக மாற்றும்படி கட்டளையிட்டார்கள். இது தோழர்களுக்கு மிகக் கடுமையாகத் தெரிந்தது. இதனால் நபி(ஸல்) அவர்களிடம்'நபி அவர்களே! (இவ்வாறு உம்ராவிற்குப் பிறகு) இஹ்ராமிலிருந்து விடுபடுவதால் எச்செயல்கள் அனுமதிக்கப்படும்?' எனக் கேட்டனர். அதற்கு'அனைத்து (விலக்கப்படாத) செயல்களும் அனுமதிக்கப்படும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1565. அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். (நான் குர்பானிப் பிராணி கொண்டு வராததால்.. உம்ராவை முடித்து) இஹராமிலிருந்து விடுபடுமாறு அவர்கள் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 1566. ஹஃப்ஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி அவர்களே! உம்ரா செய்துவிட்டு மக்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்கள். ஆனால், நீங்கள் உம்ரா செய்த பிறகும் இஹ்ராமிலிருந்து விடுபட வில்லையே! என்ன காரணம்?' என நான் நபி(ஸல்) அவர்களைக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'என்னுடைய முடியைக் களிம்பு தடவிப் படியச் செய்து விட்டேன் என்னுடைய குர்பானிப் பிராணியின் கழுத்தில் அடையாளம் தொங்கவிட்டு விட்டேன். எனவே, குர்பானி கொடுக்கும் வரை நான் இஹ்ராமைக் களைவது கூடாது‘' என்றார்கள்.

ஹதீஸ் 1567. நஸ்ரு இப்னு இம்ரான் அவர்கள் கூறினார்கள்.

நான் தமத்துஉ (ஹஜ்ஜும் உம்ராவும் தனித்தனி இஹ்ராமுடன்) செய்தேன். என்னைச் சிலர் தடுத்தார்கள். எனவே, இதை இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கூறினேன். அதற்கு அவர்கள் தமத்துஉ செய்யுமாறே கட்டளையிட்டார். பிறகு ஒரு நாள் ஒருவர் என் கனவில் தோன்றி,'ஹஜ் ஏற்றுக் கொள்ளப்பட்டது உம்ரா ஒப்புக் கொள்ளப்பட்டது' எனக் கூறினார். நான் இதையும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கூறியபோது (‘தமத்துஉவோ) நபி(ஸல்) அவர்களின் வழிமுறையாகும்' என்று கூறி,'நீ என்னுடன் தங்கிக் கொள். என்னுடைய செல்வத்திலிருந்து ஒரு பங்கை உனக்குத் தருகிறேன்' எனக் கூறினார்.

இப்னு அப்பாஸ்(ரலி) தம்முடன் தங்கச் சொன்னதன் காரணம் என்ன? என்று நஸ்ர் இப்னு இம்ரானிடம் கேட்டேன்.'நான் கண்ட கனவே காரணம்' என அவர் கூறினார் என்று ஷுஉபா கூறுகிறார்.

ஹதீஸ் 1568. அபூ ஷிஹாப் அவர்கள் கூறினார்கள்.

நான் ஹஜ்ஜுடன் உம்ராவையும் (தமத்துஉ)... செய்ய நாடி மக்காவிற்குச் சென்றேன். துல்ஹஜ் பிறை எட்டுக்கு மூன்று நாள்களுக்கு முன்னால் (அதாவது பிறை ஐந்தில்) மக்காவில் நுழைந்தோம். அப்போது மக்காவாசிகளில் சிலர் என்னிடம் வந்து'இப்படித் தமத்துஉ - செய்தால் உம்முடைய ஹஜ் மக்காவாசிகளின் ஹஜ்ஜாக ஆம்விடும் (குறைந்த நன்மைகளே கிடைக்கும்‘) என்றனர். நான் அதா இடம் சென்று இதைப் பற்றிக் கேட்டேன். அதா கூறினார்'நபி(ஸல்) அவர்கள் தம்மோடு குர்பானிப் பிராணியான ஒட்டகத்துடன் ஹஜ்ஜுக்கு வந்தபோது நான் நபி(ஸல்) அவர்களோடு இருந்தேன். அப்போது மக்கள் அனைவரும் ஹஜ்ஜுக்காகவே இஹ்ராம் அணிந்திருந்தனர். நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களை

நோக்கி'நீங்கள் தவா∴பையும், ஸ∴பா, மர்வாவிற்கு மத்தியில் ஓடுவதையும் நிறைவேற்றிவிட்டு, முடியைக் குறைத்து இஹ்ராமிலிருந்து விடுபட்டு (மக்காவில்) தங்கிக் கொள்ளுங்கள். பிறை எட்டு அன்று ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்து கொள்ளுங்கள். நீங்கள் இஹ்ராம் அணிந்து, இதற்கு முன்னால் செய்ததை தமத்துஉ (உம்ரா) ஆக ஆக்கிக் கொள்ளுங்கள்'' என்றார்கள். அதற்குத் தோழர்கள்'நாங்கள் ஹஜ்ஜின் பெயரில் இஹ்ராம் அணிந்து வந்தோம். அதை எவ்வாறு தமத்துஉ (உம்ரா) ஆக ஆக்கிக் கொள்வது?' என்று கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நான் கட்டளையிட்டதை நீங்கள் செய்யுங்கள். நான் என்னுடன் குர்பானிப் பிராணியைக் கொண்டு வரவில்லையெனில் உங்களுக்கு நான் கட்டளையிட்டதைப் போன்று நிச்சயமாக நானும் செய்திருப்பேன் குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்தால் அதை (பலிப்பிராணியை).. அந்த இடத்தில் சேர்க்கும் வரை (பலியிடும்வரை) இஹ்ராமைக் களைவது எனக்குக் கூடாது'' என்றார்கள். உடனே தோழர்கள் நபி(ஸல்) அவர்களின் கட்டளையின்படி செயலாற்றினார்கள்' என்று ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் என்னிடம் கூறினார்.

ஹதீஸ் 1569. ஸயீத் இப்னு முஸய்யப் அவர்கள் கூறினார்கள்.

அலீ(ரலி), உஸ்மான்(ரலி) இருவரும் உஸ்∴பான் எனுமிடத்தில் தமத்துஉவின் விஷயத்தில் கருத்து வேறுபட்டார்கள். அலீ(ரலி)'நபி(ஸல்) அவர்கள் செய்த செயலிலிருந்து எங்களை நீர் தடுக்க நாடுகிறீர்'' என்று உஸ்மான்(ரலி) அவர்களிடம் கூறி, ஹஜ், உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தார்.

## ஹஜ்ஜுக்காக தல்பியா கூறுவதும் அதில் ஹஜ் என்று வாயால் கூறுவதும்.

ஹதீஸ் 1570. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நாங்கள் நபி(ஸல்) அவர்களோடு ஹஜ்ஜுக்காகச் சென்றோம். அப்போது'லப்பைக்க, அல்லாஹும்ம லப்பைக்க பில்ஹஜ்' எனக் கூறினோம். பிறகு நபி(ஸல்) அவர்கள் (மக்கா நகருக்கு வந்தபோது) அதை உம்ராவாக ஆக்கும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்... நாங்கள் அவ்வாறே ஆக்கினோம்.“

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் தமத்துஉ செய்தல்

ஹதீஸ் 1571. இம்ரான்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் தமத்துஉ செய்தோம். குர்ஆனின் மூலமே இச்சட்டம் இறங்கியது் எனினும் சிலர்'தமத்துஉ கூடாது' எனத் தம் சுய அறிவால் தாம் நாடியதை எல்லாம் கூறுகின்றனர்.“

அல்லாஹ் கூறினான்:

(தமத்துஉ செய்ய அனுமதியளிக்கும்) இச்சலுகை எவருடைய குடும்பம் மஸ்ஜிதுல் ஹராமின் பக்கத்தில் இல்லையோ அவருக்கே (திருக்குர்ஆன் 02:196)

ஹதீஸ் 1572. இக்ரிமா அவர்கள் கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் தமத்துஉ பற்றிக் கேட்கப்பட்டது.'ஹஜ்ஜத்துல் வதாவில் முஹாஜிரீன்களும் அன்ஸாரிகளும் நபி(ஸல்) அவர்களின் மனைவியர்களும் (ஹஜ்ஜுக்காக) இஹ்ராம் அணிந்தார்கள். நாங்களும் (அதற்காகவே) இஹ்ராம் அணிந்தோம். ஆனால், நாங்கள் மக்கா நகருக்கு வந்தபோது, நபி(ஸல்)'குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்தவர்களைத் தவிர,

மற்ற அனைவரும் தங்கள் ஹஜ்ஜை உம்ராவாக மாற்றிக் கொள்ளுங்கள்!"என்றார்கள். நாங்கள் கஅபாவைத் வலம்வந்து ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடி, மனைவியருடன் கூடி (தைக்கப்பட்ட) ஆடைகளை அணிந்து கொண்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்'தம்மோடு பிராணி கொண்டு வந்தவர்கள் பிராணி தனக்குரிய இடத்தில் சேரும் வரை... குர்பானி கொடுக்கும் வரை.. இஹ்ராமிலிருந்து விடுபடக் கூடாது' எனக் கட்டளையிட்டார்கள். எட்டாம் நாள் மாலையில் நபி(ஸல்) அவர்கள் எங்களை ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணியக் கட்டளையிட்டார்கள். நாங்கள் ஹஜ்ஜுக்கான மற்ற வழிபாடுகளை முடித்துவிட்டு வலம்வந்தோம். ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடினோம். எங்களின் ஹஜ் நிறைவு பெற்றுவிட்டது. மேலும்,'எவரேனும் ஹஜ்ஜுடைய காலம் வரும் முன் உம்ரா செய்ய விரும்பினால் அவர் பலிப் பிராணிகளில் தம்மால் இயன்றதை குர்பானி கொடுக்கட்டும். பலிப் பிராணி கிடைக்கப் பெறாதவர்கள் ஹஜ்ஜுக் காலத்தில் மூன்று நாள்களும் (ஹஜ்ஜிலிருந்து தம் ஊர்களுக்கு) திரும்பியதும் ஏழு நாள்களும் நோன்பு நோற்க வேண்டும்!"(திருக்குர்ஆன் 02: 196) என்ற இறைவசனம் கூறுவது போல் எங்களின் மீது பலி கொடுப்பது கடமையாகிவிட்டது. குர்பானி (பலி) கொடுப்பதற்கு ஆடு போதுமானதாகும்.

எனவே, மக்கள் ஹஜ், உம்ரா என்ற இரண்டு கடமையையும் ஒரே ஆண்டில் நிறைவேற்றினர். (தமத்துஉ செய்ய அனுமதியளிக்கும்) இச்சட்டம் அல்லாஹ் தன் வேதத்தில் அருளியதும், நபி(ஸல்) அவர்களின் நடைமுறையும், மக்காவாசிகளல்லாத மற்ற மக்கள் அனைவருக்கும் நபி(ஸல்) அவர்கள் அனுமதித்ததாகும். ஏனெனில், அல்லாஹ்'இச்சலுகை எவருடைய குடும்பம் மஸ்ஜிதுல் ஹராமின் பக்கத்தில் இல்லையோ அவர்களுக்குத்தான்" (திருக்குர்ஆன்:02:196) என்று கூறுகிறான்.

மேலும், அல்லாஹ் ஹஜ்ஜுடைய மாதம் எனக் கூறுவது ஷவ்வால், துல்கஅதா, துல்ஹஜ் ஆகும். இம்மாதங்களில் யார் தமத்துஉ செய்கின்றனரோ அவர்களின் மீது குர்பானியோ அல்லது நோன்போ கடமையாகும் என்றார்கள்.

## மக்காவில் நுழையும்போது குளிப்பது.

ஹதீஸ் 1573. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) ஹரம் எல்லையை நெருங்கிவிட்டால் தல்பியாவை நிறுத்திவிடுவார். பிறகு ஃதூத்துவா எனுமிடத்தில் தங்கி ஸுப்ஹுத் தொழுதுவிட்டு குளிப்பார்.'நபி(ஸல்) அவர்கள் இவ்வாறே செய்தார்கள்' என்றும் கூறுவார்.

## இரவிலோ, பகலிலோ மக்காவில் நுழைவது.

நபி(ஸல்) அவர்கள் ஃதூத்துவாவில் இரவில் தங்கிக் காலையில் மக்காவில் நுழைந்தார்கள். இப்னு உம(ரலி)ரும் அவ்வாறே செய்தார்.

ஹதீஸ் 1574. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஃதூத்துவா எனுமிடத்தில் இரவு தங்கிக் காலையில் மக்காவில் நுழைந்தார்கள்.

இப்னு உமரும்(ரலி) அவ்வாறே செய்தார் என நாபிவு கூறுகிறார்.

## மக்காவினுள் எவ்வழியே நுழைவது?

ஹதீஸ் 1575. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (மதீனாவிலிருந்து) மேற்புறக் கணவாய் வழியாக நுழைந்து கீழ்ப்புறக் கணவாய் வழியாக வெளியேறுவார்கள்.

## மக்காவிலிருந்து எவ்வழியே வெளியேறுவது?

ஹதீஸ் 1576. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பத்ஹா எனும் இடத்திலுள்ள கதா எனும் மேற்புறக் கணவாய் வழியாக மக்காவில் நுழைந்து கீழ்ப்புறக் கணவாய் வழியாக வெளியேறுவார்கள்.

ஹதீஸ் 1577. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வந்தால் அதன் மேற்புறத்தின் வழியாக நுழைந்து அதன் கீழ்ப்புறத்தின் வழியாக வெளியேறுவார்கள்.

ஹதீஸ் 1578. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மக்கா வெற்றியின்போது நபி(ஸல்) அவர்கள்'கதாஉ' (எனும் கணவாய்) வழியாக மக்காவில் நுழைந்து மக்காவின் மேற்பகுதியிலுள்ள'குதா' (எனும் கணவாய்) வழியாக வெளியேறினார்கள்.

ஹதீஸ் 1579. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது மக்காவின் மேற்பகுதியிலுள்ள'கதாஉ' (எனும் கணவாய் வழியாக) நுழைந்தார்கள்.

'என் தந்தை உர்வா(ரலி)'கதாஉ''குதா' இரண்டின் வழியாகவும் நுழைபவராக இருந்தார். எனினும் அதிகமாக'கதாஉ' வழியாகவே நுழைவார். ஏனெனில் அவ்விரண்டில்'கதாஉ' தான் அவர் வீட்டிற்கு அருகிலிருந்தது'' என ஹிஷாம் கூறுகிறார்.

ஹதீஸ் 1580. உர்வா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது மக்காவின் மேற்பகுதியிலுள்ள'கதாஉ எனுமிடத்தின் வழியே நுழைந்தார்கள்.

''என் தந்தை உர்வா(ரலி) அதிகமாக'கதாஉ' (எனும் மேற்புறக் கணவாயின்) வழியாகவே நுழைபவராக இருந்தார். ஏனெனில், அவ்விரண்டில்'கதாஅ' தான் அவர் வீட்டிற்கு அருகிலிருந்தது'' என ஹிஷாம் கூறுகிறார்.

ஹதீஸ் 1581. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது'கதாஉ' (எனும் கணவாய்) வழியாக (மக்காவினுள்) நுழைந்தார்கள்.

''என் தந்தை உர்வா(ரலி)'கதாஉ','குதா' இரண்டின் வழியாகவும் (மக்காவினுள்) நுழைபவராக இருந்தார். எனினும் அதிகமாக'கதாஉ' வழியாகவே நுழைவார். ஏனெனில் அவ்விரண்டில்'கதாஉ' தான் அவர் வீட்டிற்கு அருகிலிருந்தது'' என ஹிஷாம் கூறுகிறார்.

'கதாஉ' ,'குதா' என்பன இரண்டு இடங்கள் என்று அபூ அப்தில்லாஹ் புகாரி ஆகிய நான் கூறுகிறேன்.

## மக்காவின் சிறப்பும் கஅபாவின் நிர்மாணமாகும்.

அல்லாஹ் கூறினான்:

"(கஅபா என்னும்) இந்த வீட்டை நாம் மக்கள் ஒதுங்கும் இடமாகவும் பாதுகாப்பான இடமாகவும் ஆக்கினோம்'இப்ராஹீம் நின்ற இடத்தை ... மகாமு இப்ராஹீமை'... தொழும் இடமாக நீங்கள் ஆக்கிக் கொள்ளுங்கள்!"(என்றும் நாம் சொன்னோம்). மேலும்'என் வீட்டைச் சுற்றி வருபவர்கள். தங்கியிருப்பவர்கள். ருகூஃ செய்பவர்கள். ஸுஜூது செய்பவர்கள் ஆகியோருக்காகத் தூய்மையாக அதனை வைத்திருக்க வேண்டும் என்று இப்ராஹீமிடமிருந்தும், இஸ்மாயீலிடமிருந்தும் நாம் உறுதிமொழி வாங்கினோம்.

"(இன்னும் நினைவு கூருங்கள்:) இப்ராஹீம்'அல்லாஹ்வே! இந்தப் பட்டணத்தைப் பாதுகாப்பான இடமாக ஆக்குவாயாக! இதில் வசிப்போரில் யார் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்புகிறார்களோ அவர்களுக்குப் பல வகைக் கனி வர்க்கங்களையும் கொண்டு உணவளிப்பாயாக!"என்று கூறினார். (ஆம்:) யார் நம்பிக்கை கொள்ளவில்லையோ அவனுக்கும் சிறிது காலம் சுகமனுபவிக்கச் செய்வேன் பின்னர் அவனை நரக நெருப்பின் வேதனையின் பால் இழுத்துச் செல்வேன். அவன் சேரும் இடம் மிகவும் கெட்டதே' என்று அல்லாஹ் கூறினான்.

இப்ராஹீமும் இஸ்மாயீலும் இவ்வீட்டின் அடித்தளத்தை உயர்த்தியபோது,'எங்கள் இறைவனே! எங்களிடமிருந்து (இப்பணியை) ஏற்றுக் கொள்வாயாக் நிச்சயமாக, நீயே (யாவற்றையும்) கேட்பவனாகவும் அறிபவனாகவும் இருக்கிறாய்.

எங்கள் இறைவனே! எங்கள் இருவரையும் உனக்கு முற்றிலும் கீழ்ப்படியும் முஸ்லிம்களாக்குவாயாக் எங்கள் சந்ததியினரிடமிருந்தும் உனக்கு முற்றிலும் கீழ்ப்படியும் ஒரு கூட்டத்தினரை உருவாக்குவாயாக! நாங்கள் உன்னை வழிபடும் முறைகளையும் அறிவித்தருள்வாயாக: எங்களை மன்னிப்பாயாக் நிச்சயமாக நீயே மிகவும் மன்னிப்போனும். அளவிலா அன்புடையோனுமாய் இருக்கிறாய்!"(என்று பிரார்த்தித்தனர்.) (திருக்குர்ஆன் 02:125, 128)

ஹதீஸ் 1582. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கஅபா புதுப்பித்துக் கட்டப்பட்டபோது (சிறுவராயிருந்த நபி(ஸல்) அவர்களும் அப்பாஸ்(ரலி) அவர்களும் கற்களைச் சுமந்து சென்றார்கள். அப்போது அப்பாஸ்(ரலி), நபி(ஸல்) அவர்களை நோக்கி (கல்சுமப்பதற்கு வசதியாக),'உன்னுடைய வேட்டியை அவிழ்த்துத் தோளில் வைத்துக்கொள்!' எனக் கூறினார்கள். நபி(ஸல்) அவர்களும் அவ்வாறே செய்தார்கள்) பிறகு (ஆடையின்றி உள்ளோம் என்றறிந்து) உடனே மயக்கமுற்றுக் கீழே விழுந்தார்கள். அவர்களின் கண்கள் வானத்தை நோக்கியிருந்தன. (அப்பாஸ்(ரலி) அவர்களை நோக்கி)'என்னுடைய ஆடையை எனக்குக் கொடுங்கள்!"என்றார்கள். (ஆடையை எடுத்துக் கொடுத்த உடனே) அதை இறுக்கமாகக் கட்டிக் கொண்டார்கள்.

ஹதீஸ் 1583. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,'ஆயிஷாவே! நிச்சயமாக உன்னுடைய கூட்டத்தினர் கஅபாவைக் கட்டும்போது இப்ராஹீம்(அலை) இட்ட அடித்தளத்தைக் குறைத்துவிட்டார்கள் என்பதை நீ அறியவில்லையா?' என்று கேட்டார்கள். அதற்கு நான்,'நபி அவர்களே! இப்ராஹீம்(அலை) இட்ட அடித்தளத்தின்படி நீங்கள் அதை மாற்றலாமல்லவா?' எனக் கேட்டேன்.'உன்னுடைய

கூட்டத்தினர் இப்போதே இஸ்லாத்தை ஏற்றுள்ளனர். இல்லையெனில் அவ்வாறே நான் செய்திருப்பேன்' என்றார்கள்.

"ஆயிஷா (ரலி) நபி (ஸல்) அவர்களிடமிருந்து மேற்சொன்னவற்றைக் கேட்டிருந்தால் அது சரியே! ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ர் (எனும் வளைந்த) பகுதிக்கு எதிரே உள்ள இரண்டு மூலைகளில் தொட்டு முத்தமிடாததற்குக் காரணம் இறை இல்லமான'கஅபா'வானது இப்ராஹீம் (அலை) அவர்கள் அமைத்த அடித்தளத்தில் முழுமையாக அமைக்கப்படாமல் (கொஞ்சம்விட்டு அமைக்கப்பட்டு) இருப்பதேயாகும் என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 1584. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் கஅபாவின் அரும்லுள்ள ஒரு (வளைந்த சிறு) சுவரைப் பற்றி, 'இது கஅபாவில் சேர்ந்ததா?' எனக் கேட்டேன். அதற்கு அவர்கள்'ஆம்!"என்றார்கள். பிறகு நான்'எதற்காக அவர்கள் இதனை கஅபாவோடு இணைக்கவில்லை?' எனக் கேட்டேன். அதற்கவர்கள்'உன்னுடைய சமூகத்தாருக்குப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டதால் தான்!"என்று பதிலளித்தார்கள். நான்'கஅபாவின் வாசலை உயரத்தில் வைத்திருப்பதின் காரணம் என்ன?' எனக் கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்'தங்களுக்கு வேண்டியவர்களை உள்ளே அனுமதிப்பதற்காகவும் தங்களுக்கு வேண்டாதவர்களைத் தடுத்து விடுவதற்காகவுமே உன்னுடைய கூட்டத்தார் அவ்வாறு செய்தார்கள்.'உன் கூட்டத்தினர் புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்களாயிருப்பதால், அவர்களின் உள்ளத்தில் வெறுப்பு தோன்றும்' என்ற அச்சம் எனக்கில்லாவிட்டால் நான் இச்சுவரை கஅபாவினுள் இணைத்து அதன் கதவைத் கீழிறக்கி பூமியோடு சேர்ந்தால் போலாக்கியிருப்பேன்" என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 1585. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

என்னிடம் நபி (ஸல்) அவர்கள், 'உன் கூட்டத்தினர் புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்களாயிருக்கவில்லை என்றால் கஅபாவை இடித்துவிட்டு, (முழுக்க முழுக்க) இப்ராஹீம் (அலை) அவர்கள் அமைத்த அடித் தளத்தின் மீதே நான் அதைக் கட்டியிருப்பேன். ஏனெனில், குறைஷிகள் அதை (அடித்தளத்தை விட)ச் சுருக்கி (சற்று உள்ளடக்கி)க் கட்டிவிட்டனர். மேலும், அதற்கு ஒரு பின்புற வாசலையும் அமைத்திருப்பேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1586. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

என்னிடம் நபி (ஸல்) அவர்கள், 'ஆயிஷாவே! உன்னுடைய கூட்டத்தினர் புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்களாக இல்லையென்றால் கஅபாவை இடிக்குமாறு நான் கட்டளையிட்டிருப்பேன். (இடிக்கப்பட்டதும்) வெளியே விடப்பட்ட பகுதியையும் அதனுள் சேர்த்து (க் கட்டி) இருப்பேன். உயர்ந்திருக்கும் தளத்தைத் தரையோடு தரையாக்கியிருப்பேன் மேலும், கிழக்கே ஒன்றும் மேற்கே ஒன்றுமாக இரண்டு வாசல்களை அமைத்திருப்பேன் இதன் மூலம் இப்ராஹீம் (அலை) அவர்கள் அமைத்த அடித்தளத்தில் (கஅபாவை) எழுப்பியவனாய் ஆகியிருப்பேன்!"என்றார்கள்.

இப்னு ஸுபைர் (ரலி) அவர்களை கஅபாவை இடிக்கத் தூண்டியது இச்செய்திதான்.'இப்னு ஸுபைர் (ரலி) அதை இடித்துக் கட்டியதையும் ஹிஜ்ர் (எனும் வளைந்த) பகுதியை அதில் சேர்த்ததையும் பார்த்தேன் மேலும் (இடிக்கும் போது) ஒட்டகத்தின் திமில்கள் போன்ற கற்கள் இப்ராஹீம் (அலை) அவர்கள் அமைத்த அடித்தளத்தில் இருப்பதைக் கண்டேன்" என யஜீத் இப்னு ரூமான் கூறுகிறார்.

“இந்த இடம் எங்கே இருக்கிறது?’ என (யஜீதிடம்) கேட்டேன். அதற்கவர்’இப்போதே அதை உனக்குக் காட்டுகிறேன்’ என்றார். அவருடன் ஹிஜ்ர் எனும் வளைந்த பகுதிக்கு நான் சென்றேன். ஓரிடத்தைச் சுட்டிக் காட்டி’இந்த இடம் தான்’ என்றார். நான் அதை அளந்து பார்த்தபோது ஹிஜ்ர் எனும் பகுதியிலிருந்து சுமார் ஆறு முழங்கள் தள்ளி அடித்தளத்தைக் கண்டேன்‘‘ என ஜரீர் கூறுகிறார்.

## ஹரமின் சிறப்பு.

அல்லாஹ் கூறினான்:

“இந்த ஊரை எவன் கண்ணியப்படுத்தியுள்ளானோ அந்த இறைவனை வணங்குமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். எல்லாப் பொருட்களும் அவனுக்கே உரியன் அன்றியும் அவனுக்கே முற்றிலும் கீழ்ப்படிந்தவனாக இருக்கும்படியும் நான் கட்டளையிடப்பட்டுள்ளேன் (என்று நபியே! நீர் கூறும்)‘‘ திருக்குர்ஆன் 27:91)

‘நாம் அவர்களை அபயமளிக்கும் புனித பூமியில் (பாதுகாப்பாக) வசிக்கும்படி செய்யவில்லையா? அவ்விடத்தில் ஒவ்வொரு வகைக் கனி வர்க்கமும் நம்மிடமிருந்து ஆகாரமாகக் கொண்டு வரப்படுகிறது் எனினும் அவர்களில் பெரும்பாலோர் இதை அறியமாட்டார்கள்!”(திருக்குர்ஆன் 28:57)

ஹதீஸ் 1587. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது,‘அல்லாஹ் இந்த ஊரைப் புனிதமானதாக்கியுள்ளான். இவ்வூரிலுள்ள முட்கள் பிடுங்கப்படக் கூடாது இங்கே வேட்டையாடப்படும் பிராணிகளை விரட்டக் கூடாது இங்கு கீழே விழுந்து கிடக்கும் பொருட்களை அதை (மக்களுக்கு) அறிவிப்பவரைத் தவிர வேறெவரும் எடுக்கக் கூடாது!”எனக் கூறினார்கள்.

## மக்காவின் வீடுகள் வாரிசுப் பொருளாவதும் அதை விற்பதும் வாங்குவதும் கூடும்.

(மற்ற இடங்களை விடக் குறிப்பாக) மஸ்ஜிதுல் ஹராமில் மக்கள் அனைவரும் சமமாகக் கருதப்படுவார்கள்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக, நிராகரித்து, உள்ளூர்வாசிகளும் வெளியூர் வாசிகளும் (ஹரமில் தங்குவதற்குச்) சம உரிமையுடையவர்களாயிருக்கும் நிலையில், நாம் மனித சமுதாயத்திற்காக (புனிதத் தலமாக) ஆக்கியிருக்கிற மஸ்ஜிதுல் ஹராமிலிருந்தும் அல்லாஹ்வின் பாதையிலிருந்தும் (இறை நம்பிக்கையாளர்களைத்) தடுப்பவர்களையும், அதில் (மஸ்ஜிதுல் ஹராமில்) அநியாயம் செய்வதன் மூலம் வரம்பு மீற விரும்புபவனையும் நோவினை தரும் வேதனையைச் சுவைக்கும்படி நாம் செய்வோம்!”(திருக்குர்ஆன் 22:25)

ஹதீஸ் 1588. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி அவர்களே! தாங்கள் மக்காவில் எங்கு தங்குவீர்கள்? அங்குள்ள உங்கள் வீட்டிலா?’ என நான் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்’(அபூ தாலிபின் மகன்) அகீல், தம் தங்கும் விடுதிகள் அல்லது வீடுகள் எவற்றையாவதுவிட்டுச் சென்றுள்ளாரா என்ன?’ எனக் கேட்டார்கள்.

அபூ தாலிபின் சொத்துக்களுக்கு அம்லும், தாலிபும் வாரிசானார்கள். ஜஅ∴பர்(ரலி), அலீ(ரலி) ஆகிய இருவரும் முஸ்லிம்களாக இருந்ததால் (தம் தந்தையின் சொத்துக்கு அவர்களால்) வாரிசாக முடியவில்லை. (அபூ தாலிப் இறந்த போது) அகீலும், தாலிபும் இறைமறுப்பாளர்களாக இருந்தனர். 'இறைநம்பிக்கையாளர், இறைமறுப்பாளரின் சொத்திற்கு வாரிசாக மாட்டான்" என உமர்(ரலி) கூறினார்.

"நிச்சயமாக, இறைநம்பிக்கை கொண்டு, மார்க்ககத்துக்காக நாடு துறந்து, தம் செல்வங்களையும், உயிர்களையும் இறைவழியில் தியாகம் செய்தவர்களும், இத்தகையோருக்குப் புகலிடம் கொடுத்து உதவியவர்களும் ஒருவருக்கொருவர் உரிமையுடையவர்களாவார்கள்' என்ற (திருக்குர்ஆன் 08:72) இறைவசனத்தை (மார்க்க அறிஞர்களான) முன்னோர்கள் (நம்பிக்கையாளர்களே நம்பிக்கையாளர்களுக்கு வாரிசாவார்கள் என்கிற) தம் கூற்றுக்கு ஆதாரமாகக் காட்டி வந்தார்கள்" என இப்னு ஷிஹாப் ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் மக்காவில் தங்கிய இடம்.

ஹதீஸ் 1589. நபி(ஸல்) அவர்கள் மக்காவை நெருங்கியபோது,'அல்லாஹ் நாடினால் நாளை பனு கினானாவின் பள்ளத்தாக்கை அடைவோம் அது குறைஷிகள்'கு∴ப்ரின் (இறை நிராகரிப்பின்) மீது நிலைத்திருப்போம்' என்று சத்தியம் செய்த இடமாகும்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1590. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹஜ் பத்தாம் நாள் காலை மினாவில் இருக்கும் பொழுது,'நாம் நாளை பனு கினானாவின் பள்ளத்தாக்கை அடைவோம். அது குறைஷிகள்'குப்ரின் (இறை நிராகரிப்பின்) மீது நிலைத்திருப்போம்' என்று சத்தியம் செய்த இடம்" என்றார்கள்.

"பனுஹாஷிமுக்கும் பனுல் முத்தலிபுக்கம் எதிராக நபி(ஸல்) அவர்களைத் தங்களிடம் ஒப்படைக்கும் வரை இவர்களோடு திருமண ஒப்பந்தமோ வியாபாரக் கொடுக்கல் வாங்கலோ செய்யமாட்டோம்' என குறைஷிக் குலத்தாரும் கினானா குலத்தாரும் சத்தியம் செய்ததை இது குறிக்கிறது" என ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

நபி(ஸல்) அவர்கள்'பள்ளத்தாக்கு' என்று குறிப்பிட்டது. முஹஸ்ஸப் பள்ளத்தாக்காகும்.

அல்லாஹ் கூறினான்:

இப்ராஹீம் இவ்வாறு பிரார்த்ததித்தை (நபியே!) நீர் நினைவுகூரும்'என் இறைவனே! இந்த ஊரை (மக்காவை) அபய பூமியாய் ஆக்குவாயாக! என்னையும் என் மக்களையும் சிலைகளை வணங்குவதிலிருந்து காப்பாற்றுவாயாக!

"(என்) இறைவனே! நிச்சயமாக இவை (சிலைகள்) மக்களில் அநேகரை வழி கெடுத்துவிட்டன் எனவே, என்னைப் பின்பற்றுகிறவர் என்னைச் சேர்ந்தவராவார். எனக்கு மாறு செய்கிறவர் என்னைச் சேர்ந்தவரல்லர். இருப்பினும், நிச்சயமாக நீ பெரிதும் மன்னிப்பவனாகவும், மிகக் கருணையுடையவனாகவும் இருக்கிறாய்!

"எங்கள் இறைவனே! நிச்சயமாக நான் என் சந்ததியினரை புனிதமான உன் வீட்டின் (கஅபாவின்) அருகே, விவசாயமில்லாத (இப்) பள்ளத்தாக்கில் குடியமர்த்தியிருக்கிறேன்: எங்கள் இறைவனே!.. தொழுகையை அவர்கள் நிலை நிறுத்துவதற்காகவே (இவ்விதம் குடியமர்த்தியிருக்கிறேன்!) எனவே மக்களில் ஒரு தொகையினரின் இதயங்களை அவர்கள் பால் சாய்ந்திடச் செய்வாயாக! இன்னும் அவர்கள் நன்றி செலுத்தும் பொருட்டு கனிவர்க்கங்களிலிருந்து அவர்களுக்கு நீ ஆகாரமும் அளிப்பாயாக!"(திருக்குர்ஆன் 04:35 - 37)

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ், புனிதமிக்க இல்லமாகிய கஅபாவை மனிதர்களுக்கு (மார்க்க உலக விவகாரங்களில்) நிலைபாட்டைத் தரும் தலமாக்கியிருக்கிறான் இன்னும் புனித மாதங்களையும், பலிப்பிராணிகளையும், (பலிக்காக) மாலையிடப்பட்ட பிராணிகளையும் (அபயம் பெற்றிட உதவக் கூடியவையாக) ஆக்கியிருக்கிறான் அல்லாஹ் இவ்வாறு செய்தது, அவன் வானங்களிலும் பூமியிலும் இருப்பவற்றையெல்லாம் நன்கறிவான் என்பதையும் அவன் அனைத்துப் பொருட்களையும் நன்கறிபவன் என்பதையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காகவேயாகி. (திருக்குர்ஆன் 5:97)

ஹதீஸ் 1591. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அபிசீனியாவைச் சேர்ந்த, மெலிந்த கால்களுள்ள மனிதர்கள் கஅபாவை இடித்துப் பாழ்படுத்துவார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1592. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ரமளான் நோன்பு கடமையாக்கப்படுவதற்கு முன்னால் மக்கள் ஆஸூரா (முஹர்ரம் 10ம் நாளில்) நோன்பு நோற்று வந்தார்கள். அதுதான் கஅபாவுக்குப் புதிய திரை போடப்படும் நாளாக இருந்தது. அல்லாஹ் ரமளானுடைய நோன்பைக் கடமையாக்கியபோது,'(ஆபீ ூராவுடைய) நோன்பு நோற்க விரும்புகிறவர் அதை நோற்றுக் கொள்ளட்டும்! அதைவிட்டுவிட விரும்புகிறவர் அதைவிட்டு விடட்டும்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1593. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தார் வந்த பிறகும் இவ்வாலயத்தில் ஹஜ்ஜும் செய்யப்படும். உம்ராவும் செய்யப்படும்!"என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"கஅபாவில் ஹஜ் செய்யப்படாத நாள் வந்த பிறகே கியாமத் நாள் வரும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஷுஅபாவின் அறிவிப்பு கூறுகிறது. மேலேயுள்ள முதல் அறிவிப்பே பெரும்பாலோரால் அறிவிக்கப்பட்டுள்ளது.

## கஅபாவுக்குத் திரையிடல்

ஹதீஸ் 1594. அபூ வாயில் அவர்கள் கூறினார்கள்.

நான் ஷைபாவுடன் கஅபாவினுள் நாற்காலியில் அமர்ந்திருந்தேன். அப்போது ஷைபா'இந்த இடத்தில் உமர்(ரலி) அமர்ந்து'இத்திரையில் பதிக்கப்பட்டுள்ள தங்கம், வெள்ளி ஆகியவற்றைப் பங்கு வைத்துவிடலாம் எனத் தீர்மானித்துவிட்டேன்' என்றார்கள். அப்போது நான் அவர்களிடம்'தங்களின் தோழர்கள் (நபி(ஸல்), அபூ பக்ர்(ரலி) இருவரும் இவ்வாறு செய்யவில்லையே' எனக் கூறினேன். அதற்கு'அந்த இருவரும்தான் நான் பின்பற்றுவதற்கு ஏற்ற மனிதர்கள்' என உமர்(ரலி) சொன்னார்கள்'' என்று கூறினார்கள்.

## கஅபாவை இடிப்பது.

"ஒரு படை கஅபாவின் மீது படையெடுக்கும் அப்படையை பூமி விழுங்கிவிடும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1595. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(வெளிப் பக்கமாக) வளைந்த கால்களையுடைய, கருப்பு நிறத்தவர்கள் ஒவ்வொரு கல்லாகப் பிடுங்கி கஅபாவை உடைப்பதை நான் பார்ப்பது போன்றிருக்கிறது.“

என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1596. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“அபிசீனியாவைச் சேர்ந்த, மெலிந்த கால்களுள்ள மனிதர்கள் கஅபாவை அடித்துப் பாழ்படுத்துவார்கள்.“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஹஜருல் அஸ்வத்.

ஹதீஸ் 1597. ஆபிஸ் இப்னு ரபீஆ அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) ஹஜருல் அஸ்வத் அருகில் வந்து அதை முத்தமிட்டுவிட்டு,'நீ தீங்கோ, நன்மையோ அளிக்கமுடியாத ஒரு சுல்தான் என்பதை நான் நன்கறிவேன். நபி(ஸல்) அவர்கள் உன்னை முத்தமிடுவதைக் காணவில்லையென்றால் உன்னை நான் முத்தமிட்டிருக்க மாட்டேன்' என்றார்.

## கஅபாவின் வாசலை மூடுவதும் எந்த இடத்தில் நின்றும் கஅபாவை நோக்கித் தொழுவதும்.

ஹதீஸ் 1598. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களும் உஸாமா இப்னு ஜைத்(ரலி), பிலால்(ரலி), உஸ்மான் இப்னு தல்ஹா(ரலி) ஆகியோரும் கஅபாவினுள் சென்று மூடிக் கொண்டார்கள். அவர்கள் தகவைத் திறந்தபோது நானே முதல் முதலில் உள்ளே நுழைந்தேன். பிலால்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் தொழுதார்களா? எனக் கேட்டேன். பிலால்(ரலி),'ஆம்! வலப்புறத்து இரண்டு தூண்களுக்கு மத்தியில்' எனப் பதிலளித்தார்.

## கஅபாவினுள் தொழுவது

ஹதீஸ் 1599. நா∴பிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) கஅபாவிற்குள் நுழையும்போது, நேராக நடந்து வாசலை முதுகுக்குப் பின்னலாக்கி, எதிர் சுவருக்கு சுமார் மூன்று முழம் தள்ளி நின்று தொழுவார்கள். நபி(ஸல்) அவர்கள் எந்த இடத்தில் தொழுததாக நபி(ஸல்) அவர்கள் எந்த இடத்தில் தொழுததாக பிலால்(ரலி) கூறினாரோ அந்த இடத்தில் தொழ விரும்பியே இவ்வாறு செய்வார். கஅபாவிற்குள் எத்திசையிலும் தொழுவதில் தவறில்லை.

## கஅபாவினுள் செல்லாமலிருப்பது.

இப்னு உமர்(ரலி) அதிகமாக ஹஜ் செய்துள்ளார்கள். ஆனால் (ஹஜ்ஜின்போது கஅபாவினுள்) நுழைய மாட்டார்கள்.

ஹதீஸ் 1600. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்∴பா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உம்ரா செய்தபோது வலம்வந்துவிட்டு மகாமு இப்ராஹீமுக்குப் பின்னால் நின்று இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அவர்களை மக்களிடமிருந்து மறைத்தவாறு ஒருவர்

நின்றிருந்தார். அவரிடம்'நபி(ஸல்) அவர்கள் கஅபாவினுள் சென்றார்களா?' என ஒருவர் கேட்டதற்கு அவர் இல்லை!"என பதிலளித்தார்.

## கஅபாவின் மூலைகளில் நின்று தக்பீர் கூறுதல்.

ஹதீஸ் 1601. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (மக்காவுக்கு) வந்தபோது, கஅபாவில் சிலைகள் இருந்ததால் உள்ளே நுழைய மறுத்து அப்புறப்படுத்துமாறு கட்டளையிட்டார்கள். உடனே அவை அப்புறப்படுத்தப்பட்டன. அச் சிலைகளில் (குறி பார்ப்பதற்குரிய) அம்புகளைக் கையில் தாங்கியவாறு இப்ராஹீம் (அலை), இஸ்மாயீல்(அலை) ஆகியோரின் உருவங்களும் இருந்தன. அவற்றையும் வெளியேற்றினார்கள். இதைக்கண்ட நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் இ(தைச் செய்த)வர்களை அழிப்பானாக! அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவ்விரு (நபிமார்களு)ம் அம்புகள் மூலமாகக் குறி பார்ப்பவர்களாக ஒருபோதும் இருந்ததில்லை என்பதை இதைச் செய்தவர்கள் அறிந்தே வைத்திருக்கிறார்கள்'' என்று கூறிவிட்டுக் கஅபாவில் நுழைந்தார்கள். அதன் ஓரங்களில் (நின்று) தக்பீர் கூறினார்கள் அதில் தொழவில்லை.

## (தவாஃபில்) தோள்களைக் குலுக்கியவாறு ஓடுவது எவ்வாறு துவங்கியது?

ஹதீஸ் 1602. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தோழர்களுடன் (மக்காவுக்கு) வந்தபோது,'யத்ரிபின் ஜுரத்தால் (மதீனாவில் தோன்றிய காய்ச்சலால்) பலவீனப்பட்ட நிலையில் இவர்கள் வந்துள்ளனர்' என்று இணைவைப்போர் பேசிக் கொண்டனர். அப்போது (பலவீனப்படவில்லை எனக் காட்டுவதற்காக) நபி(ஸல்) அவர்கள் மூன்று சுற்றுக்கள் தோள்களைக் குலுக்கியவாறு ஓட வேண்டும் என்றும் ஹஜருல் அஸ்வதுக்கும் ருக்னுல் யமானிக்கும் இடையே நடந்து செல்ல வேண்டும் என்றும் கட்டளையிட்டார்கள். தவாஃபின் மொத்தச் சுற்றுக்களிலும் தோள்களைக் குலுக்கியவாறு ஓட வேண்டும் என இரக்கத்தின் காரணமாகவே நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடவில்லை.

## மக்காவிற்கு வந்ததும் முதல் தவாஃபில் ஹஜருல் அஸ்வதை முத்தமிடுவதும் மூன்று சுற்றுக்கள் தோள்களைக் குலுக்கி ஓடுவதும்

ஹதீஸ் 1603. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்காவிற்கு வந்து, முதலாவது தவாஃபில் ஹஜருல் அஸ்வதை முத்தமிடுவார்கள். ஏழு சுற்றுக்களில் முதல் மூன்று சுற்றில் (தோள்களைக் குலுக்கி) வேகமாக ஓடுவார்கள்.

## ஹஜ்ஜிலும் உம்ராவிலும் தோள்களைக் குலுக்கியவாறு ஓடுவது.

ஹதீஸ் 1604. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜிலும் உம்ராவிலும் முதல் மூன்று சுற்றுக்களில் ஓடுவார்கள் (மீதமுள்ள) நான்கு சுற்றுக்களில் நடந்து செல்வார்கள்.

ஹதீஸ் 1605. அஸ்லம் அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) ஹஜருல் அஸ்வதை நோக்கி,'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீ கல்தான் உன்னால் எந்த நன்மையோ தீமையோ செய்ய முடியாது என்பதை நானறிவேன் நபி(ஸல்)

அவர்கள் உன்னை முத்தமிடுவதை நான் பார்க்கவில்லை என்றால் நிச்சயமாக நான் முத்தமிட்டிருக்க மாட்டேன்' எனக் கூறிவிட்டு அதை முத்தமிட்டார். பிறகு'நாம் ஏன் இப்போது தோள்களைக் குலுக்கியவாறு ஓட வேண்டும்? நாம் அன்று செய்தது நம்முடைய பலத்தை முஷ்ரிகீன்களுக்குக் காட்டுவதற்காகத்தானே. ஆனால் இன்று அல்லாஹ் அவர்களை அழித்துவிட்டான். பிறகு ஏன் செய்ய வேண்டும்?' எனக் கூறிவிட்டு,'எனினும், இதை நபி(ஸல்) அவர்கள் செய்தார்கள். அதனைவிட்டுவிட நாம் விரும்பவில்லை' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1606. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நெரிசலுள்ள நேரத்திலும் நெரிசலற்ற நேரத்திலும் நபி(ஸல்) அவர்கள் ஹஜருல் அஸ்வத் ருக்னுல் யமானீ ஆகிய இரண்டு மூலைகளையும் முத்தமிட்டதைப் பார்த்ததிலிருந்து நானும் இவ்விரண்டு மூலைகளையும் முத்தமிடுவதைவிட்டதில்லை."

"இப்னு உமர்(ரலி) அவ்விரு மூலைகளுக்கிடையே நடந்து செல்வாரா?' என நா∴பிஉ(ரஹ்) அவர்களிடம் கேட்டபோது,'முத்தமிடுவதற்கு எளிதாக இருக்கும் என்பதற்காக நடந்துதான் செல்வார்' எனக் கூறினார்" என்று உபைதுல்லாஹ் அவர்கள் கூறினார்கள்.

## தலை வளைந்த கம்பின் மூலம் ஹஜருல் அஸ்வதைத் தொடுதல்.

ஹதீஸ் 1607. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தம் இறுதி ஹஜ்ஜில் ஒட்டகத்தின் மீதமர்ந்து வலம்வந்தார்கள். அப்போது தலை வளைந்த கம்பால் ஹஜருல் அஸ்வதைத் தொட்டார்கள்.

## ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய இரண்டு மூலைகள் தவிர மற்ற இரண்டு மூலைகளை தொடாதிருத்தல்.

ஹதீஸ் 1608. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

"கஅபாவில் எந்தப் பகுதியையும் யார் (முத்தமிடாமல்) தவிர்க்க முடியும்? முஆவியா(ரலி) எல்லா மூலைகளையும் முத்தமிடுபவராக இருந்தார்கள்" என்று அபூ ஷஅஸா கூறினார். முஆவியா(ரலி) அவர்களிடம் இப்னு அப்பாஸ்(ரலி),'(ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீயைத் தவிரவுள்ள) இந்த இரண்டு மூலைகளை முத்தமிடக் கூடாது" என்றார்கள். அதற்கு அபூ ஷஅஸா'இந்த ஆலயத்தில் முத்தமிடத் தடுக்கப்பட்ட பகுதி ஏதுமில்லை" என்றார். இப்னுஸ் ஸுபைர்(ரலி) எல்லா மூலைகளையும் முத்தமிடுவார்கள்.

ஹதீஸ் 1609. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய இரண்டு மூலைகளைத் தவிர இந்த ஆலயத்தில் எந்த இடத்தையும் நபி(ஸல்) அவர்கள் முத்தமிட்டதை நான் பார்த்ததில்லை."

பகுதி 60

## ஹஜருல் அஸ்வதை முத்தமிடுவது.

ஹதீஸ் 1610. அஸ்லம் அவர்கள் கூறினார்கள்.

ஹஜருல் அஸ்வத் (எனும் கருப்பு நிறக்) கல்லை உமர்(ரலி) முத்தமிடுவதை பார்த்தேன். அப்பொழுது அவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் உன்னை முத்தமிடுவதை நான் கண்டிராவிட்டால், நான் உன்னை முத்தமிட்டிருக்க மாட்டேன்!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1611. ஸுபைர் இப்னு அரபி அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் வந்து ஹஜருல் அஸ்வத் (எனும் கருப்பு நிறக்) கல்லை முத்தமிடுவதைப் பற்றிக் கேட்டதற்கு இப்னு உமர்(ரலி), 'நான், நபி(ஸல்) அவர்கள் அதைத் தொட்டு முத்தமிடக் கண்டேன்!' எனக் கூறினார்கள். அப்போது நான், 'கூட்டம் அதிகமாக இருந்தாலும், நாம் அதனை நெருங்க முடியாது என்றாலும் முத்தமிட வேண்டும் என நீங்கள் கருதுகிறீர்களா?' எனக் கேட்டேன். அதற்கவர்கள், 'கருதுகிறீர்களா, நினைக்கிறீர்களா என்பதையெல்லாம் (உன்னுடைய ஊராகிய) யமனில் வைத்துக் கொள்! நான் நபி(ஸல்) அவர்கள் அதைத் தொட்டு முத்தமிடக் கண்டேன்!"என (மீண்டும்) கூறினார்கள்.

## ஹஜருல் அஸ்வதிற்கு நேராக வரும்போது சைகை செய்வது.

ஹதீஸ் 1612. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீதமர்ந்து கஅபாவை வலம்வந்தார்கள் ஹஜருல் அஸ்வதின் பக்கம் வரும் போதெல்லாம் சைகை செய்தார்கள். "

## ஹஜருல் அஸ்வதின் அருகில் தக்பீர் கூறுவது:

ஹதீஸ் 1613. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீதமர்ந்து கஅபாவை வலம்வந்தார்கள். ஹஜருல் அஸ்வதின் பக்கம் வரும்போதெல்லாம் தம்மிடம் இருந்த ஏதோ ஒரு பொருளைக் கொண்டு ஹஜருல் அஸ்வதை நோக்கிச் சைகை செய்துவிட்டு'அல்லாஹு அக்பர்"அல்லாஹ் மிகப் பெரியவன்' என்று கூறினார்கள். "

## மக்காவிற்கு வந்தவர் தம் இருப்பிடத்திற்குச் செல்வதற்கு முன்னால் வலம்வந்து, இரண்டு ரக்அத் தொழுது, பிறகு ஸஃபாவிற்குச் செல்வது.

ஹதீஸ் 1614 , ஹதீஸ் 1615. உர்வா இப்னு ஸுபைர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் மக்கா வந்தவுடன் முதல் வேலையாக உளூச் செய்து, 'தவாஃப் உளூ"ச் செய்து, வலம்வந்தார்கள். அது (வெறும்) உம்ராவாக இருக்கவில்லை. அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோரும் இது போன்றே ஹஜ் செய்தார்கள்" என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

"நான் என் தந்தை ஸுபைர்(ரலி) அவர்களுடன் ஹஜ் செய்தேன். அவரும் முதன்முதலாக வந்தார். முஹாஜிரீன்களும் அன்ஸாரிகளும் இவ்வாறு செய்ததையே பார்த்தேன். மேலும்'நானும், என் சகோதரியும், தந்தை ஸுபைரும், இன்னாரும், இன்னாரும் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தோம். நாங்கள் ஹஜருல் அஸ்வதைத் தொட்ட பின் இஹ்ராமிலிருந்து விடுபட்டோம்" என்று என் தாய் (அஸ்மா) கூறினார்.

ஹதீஸ் 1616. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காகவோ உம்ராவுக்காகவோ வந்தால் முதன்முதலாக வலம் வருவார்கள். அதில் முதல் மூன்று சுற்றுக்களில் விரைந்து ஓடுவார்கள் பிந்திய நான்கு சுற்றுக்களில் நடப்பார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டு, ஸஃபா, மர்வாவிற்கு மத்தியில் ஓடுவார்கள்.

ஹதீஸ் 1617. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முதல் வலம்வரும்போது முதல் மூன்று சுற்றுக்களில் ஓடுவார்கள். பிந்திய நான்கு சுற்றுக்களில் நடப்பார்கள். மேலும் ஸஃபா, மர்வாவுக்கிடையே உள்ள நீரோடைப் பகுதியில் மட்டும் விரைந்து ஓடுவார்கள்.

## பெண்கள் ஆண்களோடு வலம்வருவது

ஹதீஸ் 1618. இப்னு ஜுரைஜ் அவர்கள் கூறினார்கள்.

பெண்கள் ஆண்களோடு வலம்வருவதை இப்னு ஹிஷாம் தடுத்தது பற்றி நான் அதாவிடம் கூறியபோது,'அவர் எப்படித் தடுக்கலாம்? நபி(ஸல்) அவர்களின் மனைவியர்கள் ஆண்களோடு வலம்வந்துள்ளனரே!"என அதா கூறினார். அதற்கு நான்'இ(வ்வாறு செய்த)து ஹிஜாபின் சட்டம் அருளப்படுவதற்கு முன்னரா அல்லது பின்னரா?' எனக் கேட்க, அவர்'ஆம்! என் வாழ்நாளின் (அதிபதி) மீது சத்தியமாக! ஹிஜாபுடைய சட்டம் அருளப்பட்டதற்குப் பின்னரே இந்நிகழ்ச்சியை கண்டேன்!"என்றார். மீண்டும் நான்'அது எப்படி? பெண்கள் ஆண்களோடு (ஒருவரோடொருவர்) கலந்து விடுவார்களோ?' என்று கேட்டேன். அதற்கு,'கலந்து விட மாட்டார்கள் ஆயிஷா(ரலி) ஆண்களோடு கலக்காமல் ஓரமாக வலம்வருவார்கள் அப்போது ஒரு பெண்,'இறைநம்பிக்கையாளர்களின் தாயே! நடங்கள்! நாம் சென்று ஹஜருல் அஸ்வதை) முத்தமிடுவோம்!' என்றார். அதற்கு ஆயிஷா(ரலி),'நீ போ(ய் முத்தமிடு)!' என்றார்கள். அப்பெண் செல்ல மறுத்துவிட்டார். இரவிலும் பெண்கள் தம்மைத் திரையிட்டு மறைத்துக் கொண்டு சென்று ஆண்களோடு வலம்வருவார்கள், ஆனால், பெண்கள் கஅபாவினுள் நுழைய நாடினால், உள்ளே இருக்கும் ஆண்கள் வெளியேறும் வரை அதற்காகக் காத்திருப்பார்கள் நானும் உபைத் இப்னு உமைரும் ஆயிஷா(ரலி) அவர்களைச் சந்திப்போம் அப்போது அவர் ஸபீர் எனும் மலையின் நடுப்பகுதியில் தங்கியிருந்தார்" என்று அதா கூறினார். நான் அதாவிடம்'அவர்களின் ஹிஜாப் (தம்மைத் திரையிட்டு மறைத்துக் கொள்ளும் முறை) எப்படி இருந்தது?' எனக் கேட்டேன்.'ஆயிஷா(ரலி), துருக்கி நாட்டுத் துணியாலான ஒரு கூடாரத்தில் இருந்தார்கள். அதில் ஒரு திரை தொங்கவிடப்பட்டிருந்தது. எங்களுக்கும் அவர்களுக்கும் மத்தியில் அதைத் தவிர வேறொன்றும் இல்லை. மேலும், ஆயிஷா(ரலி) ரோஜாப்பூ நிறமுள்ள ஆடை அணிந்திருந்ததை பார்த்தேன்" எனக் கூறினார்.

ஹதீஸ் 1619. உம்மு ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ஒரு முறை)'நான் நோயுற்றுள்ளேன்" என்று நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அதற்கவர்கள்,'நீ மக்களுக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்து வலம்வா" என்றார்கள். நான் அது போன்றே வலம்வந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'அத்தூர்' எனும் அத்தியாயத்தை ஓதியவாறு கஅபாவின் ஒரு பக்கத்தில் தொழுது கொண்டிருந்தார்கள்.

## வலம்வரும்போது பேசுவது

ஹதீஸ் 1620. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கஅபாவை வலம்வந்து கொண்டிருந்தபோது, அவர்களுக்கு அருகே ஒருவர் தம் கையை ஒட்டக வாரினாலோ, கயிற்றினாலோ, வேறு ஏதோ ஒன்றினாலோ மற்றொருவரின் கையோடு இணைத்துக் கட்டிக் கொண்டு (வலம்வந்த வண்ணம்) சென்றார். உடனே நபி(ஸல்) அவர்கள் அதைத் தம் கையால் துண்டித்துவிட்டு'இவருடைய கையைப் பிடித்துக் கூட்டிச் செல்லும்!"என்று அந்த மற்றொருவரிடம் கூறினார்கள்.

## ஒருவர் (ஒட்டக) வாரையோ அல்லது வெறுக்கத் தக்க வேறு ஏதாவதொன்றையோ பார்த்தால் அதைத் துண்டித்து விடுவது.

ஹதீஸ் 1621. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் தம் கையில் (ஒட்டக) வாரையோ (சேணக் கச்சையோ) அல்லது வேறு ஏதோ ஒன்றையோ கட்டியவராக வலம்வருவதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் அதனைத் துண்டித்தார்கள்.

## கஅபாவை நிர்வாணமாக வலம்வரக் கூடாது் இணைவைப்பவர்கள் ஹஜ் செய்வது கூடாது.

ஹதீஸ் 1622. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜத்துல் வதாவுக்கு முந்தைய வருடம் நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ர்(ரலி) தலைமையில் மக்களை ஹஜ்ஜுக்கு அனுப்பி வைத்தார்கள். துல்ஹஜ் பிறை பத்தாம் நாள்,'எச்சரிக்கை! இந்த ஆண்டிற்குப் பின்னர் இணைவைப்பவர்கள் யாரும் ஹஜ் செய்யக்கூடாது. கஅபாவை நிர்வாணமாகத் வலம்வரக் கூடாது' என அறிவிக்கச் செய்தார்கள்.

## வலம்வந்தவாறே (தொழுகைக்கு) நின்று விடுதல்.

ஒருவர் வலம்வரும்போது தொழுகைக்காக இகாமத் சொல்லப்பட்டால் அல்லது அந்த இடத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டால் தொழுகை முடிந்து ஸலாம் கொடுத்தவுடன்விட்ட இடத்திலிருந்து தவா∴பைத் தொடர வேண்டும் என அதா கூறுகிறார்.

இப்னு உமர்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அபூ பக்ர்(ரலி) ஆகியோரும் இவ்வாறு கூறினார்கள் என அறிவிக்கப்பட்டுள்ளது.

## நபி(ஸல்) அவர்கள் ஏழுசுற்று சுற்றியதற்குப் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

இப்னு உமர்(ரலி) ஒவ்வொரு ஏழு சுற்றிற்கும் இரண்டு ரக்அத் தொழுவார்கள் என நா∴பிவு கூறுகிறார்.

'வலம்வந்தபின் கடமையான தொழுகை தொழுதால், அது தவா∴பின் இரண்டு ரக்அத்களுக்குப் போதுமாகும் என அதா கூறுவதாக நான் ஸுஹ்ரீயிடம் கூறினேன். அதற்கு அவர்'நபிவழியே சிறந்தது் நபி(ஸல்) அவர்கள், ஒவ்வொரு ஏழு சுற்றுக்குப் பிறகும் இரண்டு ரக்அத்கள் தொழாமலிருந்ததில்லை' என்றார்' என இஸ்மாயீல் இப்னு உமய்யா கூறுகிறார்.

ஹதீஸ் 1623 ் ஹதீஸ் 1624 அம்ர் அவர்கள் கூறினார்கள்.

உம்ராச் செய்யும் மனிதன் ஸஃபா, மர்வாவுக்கு மத்தியில் ஓடுவதற்கு முன்னால் தன் மனைவியோடு கூடலாமா? என இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டோம். 'நபி(ஸல்) அவர்கள் மக்கா வந்தபோது கஅபாவை ஏழு முறை சுற்றினார்கள் பிறகு மகாமு இப்ராஹீமுக்குப் பின்னால் இரண்டு ரக்அத் தொழுதுவிட்டு, ஸஃபா, மர்வாவிற்கு இடையில் ஓடினார்கள்' என்று கூறிவிட்டு, இப்னு உமர்(ரலி) 'உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி உள்ளது'' என்ற வசனத்தை ஓதினார்.

நான் இதே கேள்வியை ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு,'ஸஃபா, மர்வாவுக்கு இடையில் ஓடுவதற்கு முன்னால் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ளக்கூடாது'' என அவர்கள் பதிலளித்தார்கள்.

## ஒருவர் முதலாம் வலம்வந்துவிட்டு பிறகு அரஃபாவுக்குச் சென்று திரும்பும் வரை கஅபாவிற்குச் செல்லாமலும் வலம்வராமலும் இருப்பது.

ஹதீஸ் 1625. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் மக்கா வந்தபோது வலம்வந்தார்கள் ஸஃபா மர்வாவிற்கு இடையில் ஓடினார்கள். இந்தத் வலம் வருவதற்குப் பின்னால் அரஃபாவிலிருந்து திரும்பும் வரை கஅபாவிற்குச் செல்லவில்லை. "

## பள்ளிவாசலுக்கு வெளியே, தவாஃபிற்கான இரண்டு ரக்அத்கள் தொழுதல்.

ஹரமுக்கு வெளியே உமர்(ரலி) தொழுதிருக்கிறார்கள்.

ஹதீஸ் 1626 உம்மு ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (தம் ஹஜ்ஜை முடித்து) மக்காவிலிருந்து புறப்பட நாடினார்கள். வலம்வராத நிலையில் நானும் புறப்பட ஆயத்தமானேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'ஸுப்ஹுத் தொழுகைக்காக இகாமத் - சொல்லப்பட்டவுடன் மக்கள் தொழுது கொண்டிருக்கும்போது நீ ஒட்டகத்தின் மீதமர்ந்து வலம்வந்து கொள்' எனக் கூறினார்கள். அவ்வாறே செய்தேன். இதனால் (இரண்டு ரக் அத்களை) பள்ளிக்கு வெளியே வந்த பிறகே தொழுதேன். "

## மகாமு இப்ராஹீமுக்குப் பின்னால் நின்று தவாஃபுடைய இரண்டு ரக்அத்கள் தொழுதல்

ஹதீஸ் 1627. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வந்தபோது கஅபாவை ஏழு முறை வலம் வந்தார்கள். பிறகு மகாமு இப்ராஹீமுக்குப் பின்னால் இரண்டு ரக்அத் தொழுதார்கள். பிறகு ஸஃபாவி(ல் ஓடுவத)ற்காகப் புறப்பட்டார்கள். 'நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன்மாதிரியுள்ளது'' என இறைவன் கூறுகிறான்.

## ஸுப்ஹு அல்லது அஸர் தொழுகைக்குப் பின்னால் வலம்வருவது.

இப்னு உமர்(ரலி) சூரியன் உதிப்பதற்கு முன்னால் தவாஃபின் இரண்டு ரக்அத்களைத் தொழுதார்.

உமர்(ரலி) ஸுப்ஹுத் தொழுகைக்குப் பின்னால் (வலம்வந்துவிட்டு) ஃதூத்துவாவில் சென்று தவாஃபுடைய இரண்டு ரக்அத்கள் தொழுபவராக இருந்தார்.

ஹதீஸ் 1628. உர்வா அவர்கள் கூறினார்கள்

சிலர் ஸுப்ஹுத் தொழுகைக்குப் பின்னர் வலம்வந்துவிட்டு, மார்க்கப் பிரசங்கம் செய்பவரிடம் போய் அமர்ந்துவிட்டார்கள். பிறகு சூரியன் உதயமானபோது எழுந்து (தவா∴புடைய இரண்டு ரக்அத்) தொழுதார்கள்.

ஆயிஷா (ரலி), பிரசங்கத்தில் அமர்ந்தவர்களைக் குறித்து, 'இவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்துவிட்டு, தொழுவது வெறுக்கப்படும் நேரத்தில் எழுந்து தொழுகிறார்களா?' எனக் கண்டித்தார்கள்.

ஹதீஸ் 1629. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

சூரியன் உதிக்கும் போதும் மறையும் போதும் தொழுவதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்ததை நான் செவியுற்றிருக்கிறேன்.

ஹதீஸ் 1630. அப்துல் அ?ஸ் இப்னு ரு∴பை (ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

"அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி), ஸுப்ஹுக்குப் பின்னர் வலம்வந்துவிட்டு இரண்டு ரக்அத்கள் தொழுவதை கண்டேன். "

ஹதீஸ் 1631. அப்துல் அ?ஸ் அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அதாவது அஸருக்குப் பின்னும் இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டு, 'நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் நுழையும்போதெல்லாம் இந்த இரண்டு ரக்அத்கள் தொழாமல் இருந்ததில்லை'' என ஆயிஷா (ரலி) கூறினார் என்றும் அறிவித்தார்கள்.

## நோயாளி வாகனத்தில் அமர்ந்து தவா∴ப செய்யலாம்.

ஹதீஸ் 1632. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீதமர்ந்து கஅபாவை வலம்வந்தார்கள். ஹஜருல் அஸ்வதின் பக்கம் வரும்போதெல்லாம் தம் கையிலுள்ள ஏதேனும் ஒன்றைக் கொண்டு ஹஜ்ருல் அஸ்வதை நோக்கிச் சலுகை செய்துவிட்டுத் தக்பீரும் கூறுவார்கள்.

ஹதீஸ் 1633. உம்மு ஸலமா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நான் நோயுற்றுள்ளேன்!" என்று நபி (ஸல்) அவர்களிடம் நான் முறையிட்டேன். அதற்கவர்கள் 'நீ மக்களுக்குப் பின்னால் வாகனத்தில் அமர்ந்து வலம்வா!" என்றார்கள். நான் அது போன்றே வலம்வந்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் 'அத்தூர்'' எனும் அத்தியாயத்தை ஓதியவாறு கஅபாவின் ஒரு பகுதியில் தொழுது கொண்டிருந்தார்கள்.

## ஹாஜிகளுக்குத் தண்ணீர் வினியோகித்தல்.

ஹதீஸ் 1634. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப் (ரலி). (ஹாஜிகளுக்குத்) தண்ணீர் வினியோகிப்பதற்காக மினாவுடைய இரவுகளில் மக்காவில் தங்கிக் கொள்ள, நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.

ஹதீஸ் 1635. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் வழங்கும் இடத்திற்கு வந்து தண்ணீர் கேட்டார்கள். அப்போது அப்பாஸ்(ரலி) (தம் மகன்) ஃபள்ல்(ரலி) அவர்களிடம்'ஃபள்லே! நீ உன் தாயிடம் சென்று அவர்களிடமுள்ள தண்ணீரை எடுத்து வந்து நபி(ஸல்) அவர்களுக்குக் கொடு!"என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,'இந்தத் தண்ணீரையே எனக்குக் கொடுங்கள்!"எனக் கேட்க, அப்பாஸ்(ரலி),'நபி அவர்களே! மக்கள் தங்கள் கரங்களை இதனுள் போடுகிறார்கள்'' என்று கூறினார்கள். இறுதியாக அதிலிருந்தே தண்ணீர் குடித்துவிட்டு, ஸம்ஸம் கிணற்றிற்கு வந்தார்கள். அங்கு சிலர், தண்ணீர் வழங்கும் வேலையில் ஈடுபட்டிருந்தனர். அவர்களிடம்,'செய்யுங்கள்! நீங்கள் நல்ல வேலையில் ஈடுபட்டுள்ளீர்கள்!' எனக் கூறிவிட்டு'மக்கள் உங்களை மிகைத்துவிட மாட்டார்கள் என்றிருந்தால் ஒட்டகத்திலிருந்து இறங்கி நான் இதில் தண்ணீரைச் சுமப்பேன்'' என்று தம் தோளின் பக்கம் சைகை செய்து கூறினார்கள்.

## ஸம் ஸம்

ஹதீஸ் 1636 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"நான் மக்காவில் இருக்கும்போது என்னுடைய (வீட்டுக்) கூரை திறக்கப்பட்டது. (அதன் வழியாக) ஜிப்ரீல்(அலை) இறங்கி என்னுடைய நெஞ்சைப் பிளந்தார். பிறகு அதை ஸம் ஸம் நீரால் கழுவினார். பிறகு ஈமானும் ஞானமும் நிரம்பிய தங்கத் தட்டு ஒன்றைக் கொண்டு வந்து, அதிலுள்ளதை என் நெஞ்சில் நிரப்பி, நெஞ்சை மூடினார். பிறகு என்கையைப் பிடித்து முதல் வானத்திற்கு ஏற்றிச் சென்றார். முதல் வானத்தின் காவலரிடம்,'திறப்பீராக,!' என்றார்.'தட்டுவது யார்?' என அக்காவலர் கேட்க'ஜிப்ரீல்' என்று ஜிப்ரீல் கூறினார்.

ஹதீஸ் 1637. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுக்கு ஸம்ஸம் தண்ணீர் கொடுத்தேன். அதை அவர்கள் நின்று கொண்டு குடித்தார்கள்.

அன்றைய தினம் நபி(ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீதுதான் இருந்தார்கள் என இக்ரிமா சத்தியம் செய்து கூறுகிறார் என ஆஸிம் கூறுகிறார்.

## ஒரே இஹ்ராமில் ஹஜ், உம்ராவைச் செய்பவர் வலம்வரும் முறை.

ஹதீஸ் 1638. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் இறுதி ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்களுடன் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து, புறப்பட்டோம். நபி(ஸல்) அவர்கள்,'யாரிடம் குர்பானிப் பிராணி உள்ளதோ அவர் ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் சேர்த்து இஹ்ராம் அணிந்து கொள்ளட்டும்! இரண்டும் நிறைவேற்றப்பட்ட பின்பே அவர் இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டும்!' எனக் கூறினார்கள். எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்த நிலையில் நான் மக்காவுக்கு வந்தேன். நாங்கள் எங்கள் ஹஜ்ஜை முடித்ததும் நபி(ஸல்) அவர்கள் என்னை (என்னுடைய சகோதரர்) அப்துர் ரஹ்மான்(ரலி) அவர்களுடன் தன்யீம் என்ற இடத்துக்கு அனுப்பி வைத்தார்கள். நான் (அங்கு போய்) உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'இதுவே உன் (விடுபட்ட) உம்ராவுக்குப் பகரமாகும்' எனக் கூறினார்கள். உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தவர்கள் வலம்வந்தார்கள். ஆனால், ஹஜ்ஜையும், உம்ராவை சேர்த்துச் செய்தவர்கள் ஒரே வலம்தான்வந்தார்கள்.

ஹதீஸ் 1639. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) அவர்களிடம் அவர்களின் மகன் அப்துல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் வந்தார். இப்னு உமர்(ரலி) ஹஜ்ஜுக்குச் செல்ல வாகனம் வீட்டில் தயாராக இருந்த நிலையில்,

அப்துல்லாஹ்'நிச்சயமாக, இவ்வருடம் மக்களுக்கிடையே போர் ஏற்படும் என்று நான் அஞ்சுகிறேன் எனவே, உங்களை மக்கள் கஅபாவுக்குச் செல்லவிடாமல் தடுப்பார்கள். அதனால் நீங்கள் (ஹஜ்ஜுக்குப் போகாமல்) இங்கேயே தங்கிவிட்டால் நல்லது' எனக் கூறினார். அதற்கு இப்னு உமர்(ரலி),'நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டபோது கஅபாவுக்குச் செல்ல விடாமல் குறைஷிகளில் இறைமறுப்பாளர்கள் அவர்களைத் தடுத்தனர். எனவே, நான் கஅபாவிற்குச் செல்லவிடாமல் தடுக்கப்பட்டாலும் நபி(ஸல்) அவர்கள் (அன்று) செய்ததைப் போன்றே நானும் செய்வேன். உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் அழகிய முன்மாதிரி உள்ளது. நான் ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் சேர்த்தே இஹ்ராம் அணிகிறேன் என்பதற்கு உன்னையே சாட்சியாக்குகிறேன்" என்று கூறினார்கள். பிறகு இப்னு உமர்(ரலி) மக்காவுக்குச் சென்று (ஹஜ், உம்ரா) இரண்டிற்கும் சேர்த்து ஒரேயொரு தவா∴ப செய்தார்கள்.

ஹதீஸ் 1640. நா∴பிவு(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு ஸுபைர்(ரலி) அவர்களுடன் ஹஜ்ஜாஜ் போரிட்ட ஆண்டில், இப்னு உமர்(ரலி) ஹஜ் செய்ய நாடினார்கள். அப்போது அவர்களிடம்'மக்களிடையே போர் மூண்டுள்ளது. எனவே, உங்களை ஹஜ் செய்ய விடாமல் அவர்கள் தடுப்பார்கள் என நாங்கள் அஞ்சுகிறோம்' எனக் கூறப்பட்டது. உடனே அவர்கள்,'அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன் மாதிரி உள்ளது! எனவே, அந்த நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே நானும் செய்வேன். நான் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து விட்டேன் என்பதற்கு உங்களையே சாட்சியாக்குகிறேன்' எனக் கூறினார்கள். பின்னர் புறப்பட்டு பைதா என்னுமிடத்திற்கு வெளியே வந்ததும்'ஹஜ்ஜின் நிலையும் உம்ராவின் நிலையும் ஒன்றே தான் (எனவே) நான் என்னுடைய உம்ராவுடன் ஹஜ்ஜுக்கும் சேர்த்தே இஹ்ராம் அணிந்துள்ளேன் என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருங்கள்' எனக் கூறினார்கள். மேலும் குதைத் என்னுமிடத்தில் குர்பானிக்கென்று ஒரு பிராணியை வாங்கி அதைத் தம்முடன் கொண்டு சென்றார். அதற்கு மேல் வேறெதுவும் செய்யவில்லை. யவ்முன் நஹ்ர் (துல்ஹஜ் பத்தாம் நாள்) வரை பலியிடவில்லை இஹ்ராம் அணிந்திருக்கும்போது விலக்கப்பட்டவற்றில் எதையும் செய்யவுமில்லை தலையை மழிக்கவோ (முடியைக்) குறைக்கவோ இல்லை. துல்ஹஜ் பத்தாம் நாளில்தான் (பலிப் பிராணியை) பலியிட்டுவிட்டுத் தலை முடியை மழித்தார்கள். முதலில் தாம் நிறைவேற்றிவிட்ட தவா∴பே, ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்கும் போதும் என்றும் கருதினார்கள். மேலும்,'இப்படித்தான் நபி(ஸல்) அவர்கள் செய்தார்கள்" என்றும் கூறினார்கள்.

## உளூவுடன் வலம்வருதல்

ஹதீஸ் 1641. முஹம்மத் இப்னு அப்திர் ரஹ்மான் அவர்கள் கூறினார்கள்.

நான், உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்களிடம் (நபி(ஸல்) அவர்களின் ஹஜ் பற்றிக்) கேட்டேன். அதற்கு உர்வா(ரலி),'நபி(ஸல்) அவர்கள் ஹஜ் செய்துள்ளார்கள். ஆயிஷா(ரலி) அதுபற்றி என்னிடம், கூறினார்: நபி(ஸல்) அவர்கள் (மக்காவுக்கு) வந்ததும் முதன் முதலாக உளூச் செய்தார்கள் பிறகு கஅபாவைத் வலம்வந்தார்கள் பிறகு உம்ராவுக்காக தனித்து வலம் வரவில்லை'.

மேலும் உர்வா, அபூ பக்ர்(ரலி) ஹஜ் செய்தார். அவரும் முதன் முதலாகக் கஅபாவைத் வலம்தான் வந்தார். பிறகு உம்ராவுக்கென்று வலம் ஏதும் வரவில்லை. உமர்(ரலி) அவ்வாறேதான் செய்தார். பிறகு உஸ்மான்(ரலி) ஹஜ் செய்தார். அவரும் முதன் முதலாகக்

கஅபாவையே வலம்வந்ததைப் பார்த்தேன். அவர் உம்ராவுக்காக வலம் ஏதும் வரவில்லை. பிறகு முஆவியா(ரலி), அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) ஆகியோரும் ஹஜ் செய்துள்ளனர். என்னுடைய தந்தை ஸுபைர் இப்னு அல்அவ்வாம்(ரலி) உடன் நான் ஹஜ் செய்திருக்கிறேன். அவரும் முதன் முதலாக கஅபாவைத் வலம்வந்தார். பிறகு உம்ராவுக்காக அவர் தனியாக வலம் ஏதும் வரவில்லை. முஹாஜிர்களும் அன்ஸாரிகளும் இவ்வாறே செய்வதை பார்த்திருக்கிறேன். பிறகு உம்ராவுக்காக அவர்கள் (தவாஃபு) செய்யவில்லை. நான் கடைசியாக இப்னு உமர்(ரலி) இவ்வாறு செய்ததைப் பார்த்தேன். அவர் அந்த ஹஜ்ஜை முறித்து உம்ராவாக ஆக்கவில்லை. இதோ அவர்களிடம் இப்னு உமர்(ரலி) இருக்கத்தானே செய்கிறார். அவரிடம் அவர்கள் கேட்க மாட்டார்களா? முன் சென்வர்களில் யாரும் ஹஜ்ஜை முறித்துவிட்டு உம்ராவாக எதையும் ஆக்கவில்லை. மேலும் அவர்கள் (மக்காவில்) கால் வைத்ததும் வலம்தான் வந்தார்கள். பிறகு அவர்கள் இஹ்ராமைக் களைவதில்லை. என்னுடைய தாயாரும் என் சிறிய தாயாரும் மக்கா வந்ததும் வலம் வருவதற்கு முன்னர் எதையும் செய்வதில்லை. இஹ்ராமிலிருந்து விடுபடுவதுமில்லை' என்று கூறினார்.

ஹதீஸ் 1642. உர்வா இப்னு ஸுபைர் அவர்கள் கூறினார்கள்.

என்னுடைய தாயார் அவரின் சகோதரி, (தந்தை) ஸுபைர்(ரலி) மற்றும் இன்னார் இன்னாரெல்லாம் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தார்கள். ருக்னுல்யமானியைத் தொட்டதும் இஹ்ராமிலிருந்து விடுபட்டார்கள். இதை என்னுடைய தாயார் எனக்கு அவர்கள் கூறினார்கள்.

## ஸஃபா, மர்வாவுக்கிடையே ஓடுவது கடமை அது அல்லாஹ்வின் சின்னமாகும்

ஹதீஸ் 1643. உர்வா அவர்கள் கூறினார்கள்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம்'நிச்சயமாக ஸஃபா மர்வா (என்னும் மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவை. எனவே, (கஅபா என்னும்) அவ்வீட்டை ஹஜ் அல்லது உம்ராச் செய்பவர்கள் அவ்விரண்டையும் வலம் வருவது குற்றமில்லை" என்ற (திருக்குர்ஆன் 02:158) இறைவசனப்படி, அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஸஃபா வலம் வருவது குற்றமில்லை" என்ற (திருக்குர்ஆன் 02:158) இறைவசனப்படி, அல்லாஹ்வின் மீது ஆணையாக! ஸஃபா மர்வாவுக்கிடையே வலம் வராவிட்டாலும் குற்றமில்லை என்பது பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்? எனக் கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி), 'என்னுடைய சகோதரியின் மகனே! நீர் சொன்னது தவறு. அந்த வசனத்தில் அவ்விரண்டையும் வலம் வராமலிருப்பது குற்றமில்லை என்றிருந்தாலே நீர் கூறும் கருத்து வரும். ஆனால், இவ்வசனம் அன்ஸாரிகளின் விஷயத்தில் இறங்கியதாகும். அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும் முன் அவர்கள் வணங்கி வந்த முஷல்லல் என்னும் குன்றிலுள்ள மனாத் என்னும் சிலைக்காக இஹ்ராம் அணியும் வழக்கம் உள்ளவர்களாக இருந்தனர். எனவே, இப்போது (இஸ்லாத்தை ஏற்றபின்) அந்த ஸஃபா, மர்வாவை வலம் வருவது பாவமாகும் எனக் கருதினார்கள். எனவே, இஸ்லாத்தை அவர்கள் ஏற்றதும் நபி(ஸல்) அவர்களிடம் இது பற்றி, நபி அவர்களே! நாங்கள் ஸஃபா - மர்வாவை வலம் வருவதைப் பாவமாகக் கருதுகிறோம்? எனக் கேட்டார்கள். அப்போதுதான் அல்லாஹ், 'நிச்சயமாக ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளில் உள்ளவை" என்ற (திருக்குர்ஆன் 02:158) வசனத்தை அருளினான். மேலும் நபி(ஸல்) அவர்கள் அவ்விரண்டுக்குமிடையே வலம் வருவதைச் செயல்படுத்திக் காட்டியுள்ளனர். எனவே, அவ்விரண்டிற்குமிடையே வலம் வருவதை விடுவதற்கு யாருக்கும் அனுமதியில்லை' எனக் கூறினார்.

ஸுஹ்ரி கூறுகிறார்:

நான் அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மானிடம் இதுபற்றித் தெரிவித்தேன். அதற்கவர் கூறினார்: நான் கேள்விப்படாத விளக்கமாகும் இது! மனாத் எனும் சிலைக்காக இஹ்ராம் அணிவார்கள் என்று ஆயிஷா(ரலி) குறிப்பிட்டவர்களைத் தவிர மற்றவர்கள் ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடிக் கொண்டிருந்தார்கள். குர்ஆனில் கஅபாவைத் வலம்வரவேண்டும் என்று கூறி அல்லாஹ் ஸஃபா, மர்வாவைப் பற்றிக் குறிப்பிடாததால், 'நபி அவர்களே! நாங்கள் ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடுகிறோம். அல்லாஹ்வோ ஸஃபாவைப் பற்றிக் கூறாமல் கஅபாவைத் வலம்வருவது பற்றிக் கூறுகிறானோ? ஸஃபா மர்வாவுக்கிடையே நாங்கள் ஓடுவது எங்களின் மீது குற்றமாகுமா?' என்று நபித்தோழர்கள் கேட்டனர். அப்போது'ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளாகும்'' என்ற (திருக்குர்ஆன் 02:158) வசனத்தை அல்லாஹ் அருளினான் என்று பல அறிஞர்கள் கூறியதை கேட்டுள்ளேன். நான் இந்த வசனம் இரண்டு சாரார் விஷயத்தில் இறங்கியது எனக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரு சாரார் மடமைக் காலத்தில் ஸஃபா, மர்வாவை வலம் வருவதைப் பாவமாகக் கருதியவர்கள். இன்னொரு சாரார் ஏற்கெனவே அவ்வாறு வலம் வந்து கொண்டிருந்து இஸ்லாத்தில் நுழைந்த பின்பு அல்லாஹ் கஅபாவைப் பற்றிக் குறிப்பிட்ட பின்பும் ஸஃபாவைக் குறிப்பிடாமல் கஅபாவை மட்டும் வலம் வருமாறு கூறியதால் இப்போது அவ்விரண்டையும் வலம் வருவது பாவமாகுமோ எனக் கருதியவர்கள்.

## ஸஃபா மர்வாவிற்கிடையே ஓடுதல்.

இந்த ஓட்டம் பனு அப்பாதின் வீட்டிற்கும் பனு அபீ ஹுஸைனின் வீட்டிற்குமிடையேயாகும் என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1644. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், முதல் வலம்வரும்போது மூன்று சுற்றுக்களில் வேகமாக ஓடுவார்கள் நான்கு சுற்றுக்களில் நடப்பார்கள். மேலும், ஸஃபா - மர்வாவுக்கிடையே வலம்வரும்போது ஓடைப் பகுதியில் மட்டும் ஓடுவார்கள்.

உபைதில்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்:

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) (தவாஃபின் போது) ருக்னுல் யமானியை அடைந்ததும் நடந்து தானே செல்வார்கள்? என நாஃபிவு இடம் கேட்டேன். அதற்காகவா'ருக்னுல் யமானியில் ஜன நெருக்கடி ஏற்பட்டாலே தவிர அவர் நடந்து செல்லமாட்டார் ஏனெனில் அவர் ருக்னுல் யமானியைத் தொட்டு முத்தமிடாமல் விடுவதில்லை'' எனக் கூறினார்.

ஹதீஸ் 1645 , ஹதீஸ் 1646. அம்ர்ப்னு தீனார்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"ஒருவர் உம்ரா செய்யும்போது இறையில்லம் கஅபாவை வலம் வந்துவிட்டார் ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்யவில்லை. இந்நிலையில் அவர் தம் மனைவியுடன் உறவு கொள்ளலாமா?' என இப்னு உமர்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கு'நபி(ஸல்) அவர்கள் (மக்காவுக்கு) வந்தபோது இறையில்லம் கஅபாவை ஏழு முறை வலம் வந்தார்கள். பிறகு மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் பிறகு ஸஃபா மர்வாவுக்கிடையே ஏழு முறை சஃயு செய்தார்கள் அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உள்ளது!' என இப்னு உமர்(ரலி) கூறினார்.

இது பற்றி ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம் கேட்டோம். அதற்கவர்கள், 'ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்யாமல் மனைவியிடம் நெருங்கவே (தாம்பத்திய உறவு கொள்ளவே) கூடாது' என்றார்கள்.

ஹதீஸ் 1647. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்காவுக்கு வந்தபோது, இறையில்லம் கஅபாவை வலம் வந்த பின் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பின்பு ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடினார்கள்.

“இதை அறிவித்த பிறகு,‘நிச்சயமாக, அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன் மாதிரி இருக்கிறது’ என்னும் இறைவசனத்தை இப்னு உமர்(ரலி) ஓதினார்கள்‘‘ என அம்ர்ப்னு தீனார்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 1648. ஆஸிம்(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

“ஸஃபா, மர்வாவுக்கிடையே ஓடுவதை நீங்கள் வெறுக்கக் கூடியவர்களாக இருந்தீர்களா?’ என நான் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்,‘ஆம்! ஏனெனில் ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளாகும். எனவே, யார் ஹஜ்ஜோ உம்ராவோ செய்கிறார்களோ அவர்கள் அவ்விரண்டையும் வலம் வருவதில் எந்தக் குற்றமுமில்லை‘‘ என்னும் (திருக்குர்ஆன் 02:158) வசனம் அருளப்படும் வரை அவ்விரண்டும் (எங்கள் பழைய நம்பிக்கைப்படி) அறியாமைக் காலச் சின்னங்களாகவே இருந்தன‘‘ எனக் கூறினார்.

ஹதீஸ் 1649. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவையும் ஸஃபா மர்வாயையும் வலம் வரும்போது தொங்கோட்டம் ஓடியது இணைவைப்போருக்குத் தம் பலத்தைக் காட்டுவதற்காகத்தான்.

## ஸஃபா, மர்வாவுக்கிடையே உளூவின்றி தொங்கோட்டம் ஓடுதல்.

மாதவிடாயுள்ள பெண் ஹஜ்ஜில் இறையில்லம் கஅபாவை வலம் வருவதைத் தவிர மற்றெல்லா வழிபாடுகளையும் செய்யலாம்.

ஹதீஸ் 1650. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

எனக்கு மாதவிடாய் வந்தபோது நான் மக்காவுக்கு வந்தேன். அப்போது நான் இறையில்லம் கஅபாவை வலம்வரவுமில்லை. ஸஃபா, மர்வாவுக்கிடையே சஃயு செய்யவுமில்லை. இதுபற்றி நபி(ஸல்) அவர்களிடம் நான் முறையிட்டபோது, அவர்கள்’ஹஜ்ஜு செய்பவர் செய்வதைப் போன்றே நீயும் செய்! ஆயினும் நீ தூய்மையடையும் வரை இறையில்லம் கஅபாவை வலம் வராதே! எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1651. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் மற்றும் தல்ஹா(ரலி) ஆகிய இருவரைத் தவிர வேறு யாரிடமும் குர்பானிப் பிராணி இல்லை. யமனிலிருந்து அலீ(ரலி) குர்பானிப் பிராணியுடன் வந்தார்கள்.’நபி(ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்தார்களோ அதற்காகவே நானும் இஹ்ராம் அணிகிறேன்‘‘ என அவர்கள் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் பலிப்பிராணி கொண்டு வராதவர்களிடம், இதை உம்ராவாக ஆக்கிக் கொள்ளுமாறும் வலம்வந்து தலை முடியைக் குறைத்து இஹ்ராமிலிருந்து விடுபடுமாறும் கட்டளையிட்டார்கள். (மக்கள் சிலர்)’எங்கள் இன உறுப்பில் விந்து சொட்டிக் கொண்டிருக்கும் நிலையில் (மனைவியுடன் கூடிய பின் உடனடியாக) எப்படி மினாவுக்குச் செல்வது?’ என்று பேசிய செய்தி, நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியதும் அவர்கள்’(ஹஜ் மாதங்களில் உம்ரா செய்வது கூடும் என) நான் இப்போது அறிந்ததை முன்கூட்டியே அறிந்திருந்தால் பலிப்பிராணி கொண்டு வந்திருக்க மாட்டேன் நான் பலிப்பிராணியை மட்டும் என்னுடன் கொண்டு வந்திருக்கவில்லையாயின் இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பேன்’ எனக்

கூறினார்கள். மேலும் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு மாதவிடாய் வந்திருந்தது. எனவே, அவர் இறையில்லம் கஅபாவை வலம்வருவதைத் தவிர ஹஜ்ஜின் மற்றெல்லா வழிபாடுகளையும் நிறைவேற்றினார். மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்ததும் இறையில்லம் கஅபாவை வலம்வந்தார். மேலும், ஆயிஷா (ரலி), 'நபி அவர்களே! நீங்கள் எல்லோரும் ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றிச் செல்கிறீர்கள். நான் ஹஜ்ஜை மட்டும் நிறைவேற்றிவிட்டுச் செல்கிறேனே!' எனக் கூறியதும் நபி (ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ரை ஆயிஷா (ரலி) அவர்களுடன் தன்யீம் என்ற இடத்திற்குச் செல்லுமாறு கட்டளையிட்டார்கள். ஆயிஷா (ரலி) ஹஜ் செய்த பின் உம்ராவையும் நிறைவேற்றினர்கள்.

ஹதீஸ் 1652. ஹஃப்ஸா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் (இரண்டு பெருநாள்களிலும் தொழும் இடத்திற்கு) எங்கள் குமரிப் பெண்கள் செல்வதைத் தடுத்துக் கொண்டிருந்தோம். அந்தச் சமயத்தில் ஒரு பெண் வந்து பனீகலஃப் வம்சத்தினரின் இல்லத்தில் தங்கி இருந்தார். அந்தப் பெண்'என் சகோதரி (உம்மு அதிய்யா (ரலி), நபி (ஸல்) அவர்களின் தோழர் ஒருவரின் மனைவியாக இருந்தார் அவரின் கணவர், நபி (ஸல்) அவர்களுடன் பன்னிரண்டு போர்களில் பங்கெடுத்தார்: அவற்றில் ஆறு போர்களில் என் சகோதரியும் தன் கணவருடன் பங்கெடுத்தார். ஒரு முறை என் சகோதரி உம்மு அதிய்யா (ரலி), என்னிடம்'நாங்கள் போர்க்களத்தில் காயமுற்றவர்களுக்கு சிகிச்சையளித்து வந்தோம் நான், நபி (ஸல்) அவர்களிடம்'எங்களில் ஒருத்திக்கு மேலங்கி இல்லாவிட்டால் (பெருநாள் தொழுகைக்குச்) செல்லாமல் இருப்பது குற்றமா?' எனக் கேட்டேன். அதற்கு, 'அவளுடைய தோழி, தன்னுடைய (உபரியான) மேலங்கியை அவளுக்கு அணியக் கொடுக்கட்டும் அவள் நன்மையான காரியங்களிலும் இறைநம்பிக்கையாளர்களின் பிரச்சாரத்திலும் கலந்து கொள்ளட்டும்!' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்‘' என்று அவர்கள் கூறினார்கள்.

உம்மு அதிய்யா (ரலி) (என்னிடம்) வந்தபோது, 'நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூற நீங்கள் கேட்டீர்களா?' என நாங்கள் அவரிடம் கேட்டோம். 'என்னுடைய தந்தை அர்ப்பணமாகட்டும் ஆம்! கேட்டேன்!"என அவர் பதிலளித்தார். இவர் நபி (ஸல்) அவர்களின் பெயரைக் கூறும் போதெல்லாம்'என்னுடைய தந்தை அர்ப்பணமாகட்டும்!"என்பதையும் சேர்த்தே கூறுவார்.

“கன்னிப் பெண்களும், திரைக்குள் இருக்கும் (பருவமடைந்த) பெண்களும், மாதவிடாயுள்ள பெண்களும் (பெருநாள் அன்று) வெளியே சென்று நன்மையான காரியங்களிலும் முஸ்லிம்களுடைய பிரச்சாரத்திலும் பங்கு கொள்ளவார்கள். மாதவிடாயுள்ள பெண்கள் தொழும் இடத்தைவிட்டு ஒதுங்கி இருப்பார்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்‘' என்று உம்மு அதிய்யா (ரலி) கூறினார். இதைக் கேட்ட நான்'மாதவிடாய்ப் பெண்களுமா (பெருநாள் தொழுகை நடக்கும் இடத்திற்குச் செல்வார்கள்)?' என அவரிடம் வினவினேன். அதற்கு'மாதவிடாயுள்ள பெண் அரஃபாவுக்கு மற்ற (மினா, முஸ்தலிஃபா போன்ற) இடங்களுக்கும் செல்வதில்லையா?' என உம்மு அதிய்யா (ரலி) திருப்பிக் கேட்டார்.

## மக்காவில் வசிப்போரும், (உம்ரா செய்துவிட்டு) மினாவுக்குப் புறப்படுவோரும் பத்ஹா போன்ற இடங்களிலிருந்து இஹ்ராம் அணியவேண்டும்.

மக்காவில் இருப்போர் ஹஜ்ஜுக்காக தல்பியா கூறுவது பற்றி அதா(ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர், 'இப்னு உமர்(ரலி) துல்ஹஜ் 8ஆம் நாள் லுஹர் தொழுதுவிட்டு, தம் வாகனத்தில் ஏறியமர்ந்து தல்பியா கூறுவார்கள்'' என பதிலளித்தார்.

"நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் வந்து (உம்ராவை முடித்து) இஹ்ராமிலிருந்து விடுபட்டோம். துல்ஹஜ் 8-ஆம் நாளில் மக்காவிலிருந்து புறப்பட்டு ஹஜ்ஜுக்காக தல்பியா கூறினோம்'' என ஜாபிர்(ரலி) கூறினார்.

"நாங்கள் பத்ஹாவிலிருந்து இஹ்ராம் அணிந்தோம்'' என ஜாபிர்(ரலி) கூறினார் என அபுஸ் ஸுபைர் அவர்கள் கூறினார்கள்.

உபைத் இப்னு ஜுரைஜ், இப்னு உமர்(ரலி) அவர்களிடம், 'நீங்கள் மக்காவில் இருக்கும்போது, மக்கள் துல்ஹஜ் பிறையைப் பார்த்ததும் இஹ்ராம் அணிந்தார்கள். ஆனால் நீங்கள் மட்டும் துல்ஹஜ் 8-ஆம் நாள் வரை இஹ்ராம் அணியவில்லையே, ஏன்?' எனக் கேட்டதற்குவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் (மினா செல்வதற்காக, துல்ஹஜ் 8-ம் ஆம் நாள்) தம் வாகனத்தில் ஏறும் வரை அவர்கள் இஹ்ராம் அணிந்து நான் பார்த்ததில்லை'' எனக் கூறினார்கள்.

## (ஹஜ்ஜுக்கு செல்வோர்) துல்ஹஜ் 8ஆம் நாள் லுஹரை எங்கே தொழுவது

ஹதீஸ் 1653. அப்துல் அ?ஸ் இப்னு ரு∴பை(ரஹ்) கூறினார்:

நான் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம், நபி(ஸல்) அவர்கள் துல்ஹஜ் 8-ஆம் நாள் லுஹர், அஸ்ர் தொழுகைகளை எங்கு தொழுதார்கள் என்பதைப் பற்றித் தாங்கள் அறிந்ததை எனக்குத் தெரிவியுங்களேன் எனக் கேட்டேன். அதற்கவர்'மினாவில்' என்றார். பிறகு நான், (ஹஜ் முடித்து மினாவிலிருந்து) திரும்பும்போது எங்கு அஸர் தொழுதார்கள் எனக் கேட்டதும்'அப்தஹ்' எனுமிடத்தில் என்று கூறிவிட்டு, 'உம்முடைய தலைவர்கள் செய்வது போன்றே செய்வீராக!' என்றும் கூறினார்.

ஹதீஸ் 1654. அப்துல் அ?ஸ் அவர்கள் கூறினார்கள்.

நான் துல்ஹஜ் 8-ஆம் நாள் மினாவுக்குப் புறப்பட்டேன். அப்போது கழுதையில் அமர்ந்து சென்று கொண்டிருந்த அனஸை(ரலி)ச் சந்தித்தேன். நான் அவரிடம் இன்றைய (துல்ஹஜ் 8-ஆம் நாள்) தினம் நபி(ஸல்) அவர்கள் எங்கு லுஹா தொழுதார்கள்? என்று கேட்டேன். அதற்கவர், 'இதோ கவனிப்பீராக!' உம்முடைய தலைவர்கள் எவ்வாறு தொழுகிறார்களோ அவ்வாறு தொழுவீராக' என்றார்.

## மினாவில் தொழுதல்

ஹதீஸ் 1655. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோரும் உஸ்மான்(ரலி), தம் ஆட்சியின் ஆரம்பக் காலத்திலும் (கடமையான நான்கு ரக்அத்களை சுருக்கி) மினாவில் இரண்டு ரக்அத்களாகத் தொழுதார்கள்.

ஹதீஸ் 1656. ஹாரிஸா இப்னு வஹ்ப் அல்குஸாயீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மினாவில் எங்களுக்கு இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்தினார்கள். அந்நாளில் எப்போதுமில்லாத அளவுக்கு நாங்கள் அதிகமாகவும் இருந்தோம். எந்த அச்சமுமில்லாமலும் இருந்தோம்.

ஹதீஸ் 1657. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நான் நபி(ஸல்) அவர்களுடனும், அபூ பக்ர்(ரலி) அவர்களுடனும், உமர்(ரலி) அவர்களுடனும் (மினாவில்) (கடமையான நான்கு ரக்அத்களை சுருக்கி) இரண்டு ரக்அத்களாகத் தொழுதுள்ளேன். பின்னர் நீங்கள் அதில் குழம்பிப் போய் பல்வேறு கருத்துக்கள் கொண்டீர்கள். (நான் தொழுத) நான்கு ரக்அத்களிலிருந்து ஏற்றுக் கொள்ளப்படும் இரண்டு ரக்அத்கள் எனக்குப் போதுமே!“

## அர∴பா நாளில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1658. உம்முல் ∴பள்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அர∴பா நாளில் நபி(ஸல்) அவர்கள் நோன்பு வைத்திருக்கிறார்களோ என்ற சந்தேகம் மக்களுக்கு ஏற்பட்டது. எனவே, நான் நபி(ஸல்) அவர்களுக்கு பானம் அனுப்பி வைத்தேன் அதையவர்கள் குடித்தார்கள்.

## மினாவிலிருந்து அர∴பாவுக்குப் புறப்பட்டதும் தல்பியாவும் தக்பீரும் கூறல்.

ஹதீஸ் 1659. மாலிக் அவர்கள் கூறினார்கள்.

முஹம்மத் இப்னு அபீ பக்ர் அஸ்ஸக∴பீ, அனஸ் இப்னு மாலிக்(ரலி) இருவரும் மினாவிலிருந்து அர∴பாவுக்குப் போகும்போது முஹம்மத் இப்னு அபீ பக்ர், அனஸ்(ரலி) அவர்களிடம்'நீங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தபோது இன்றைய தினம் என்ன செய்தீர்கள்?' எனக் கேட்டார்.'அன்று எங்களில் சிலர் தல்பியாக் கூறிக் கொண்டிருந்தனர் நபி(ஸல்) அவர்கள் அதைத் தடுக்கவில்லை. இன்னும் சிலர் தக்பீர் கூறினார்கள் அதையும் நபி(ஸல்) அவர்கள் தடுக்கவில்லை' என அனஸ்(ரலி) கூறினார்.

## அர∴பா நாளில் பகல் பொழுதில் புறப்படுதல்.

ஹதீஸ் 1660. ஸாலிம் அவர்கள் கூறினார்கள்.

அப்துல் மலிக்(பின் மர்வான்), ஹஜ்ஜின்போது இப்னு உமருக்கு மாற்றமாக நடந்து கொள்ள வேண்டாம் என ஹஜ்ஜாஜுக்குக் கடிதம் எழுதினார். அர∴பா நாளில் சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்தபோது இப்னு உமர்(ரலி) (ஹஜ்ஜுக்கு) வந்தார். அப்போது நானும் அவருடன் இருந்தேன். அவர் ஹஜ்ஜாஜின் கூடாரத்திற்குச் சென்று (புறப்படுமாறு) சப்தமிட்டார். உடனே ஹஜ்ஜாஜ் சாயம் பூசப்பட்ட போர்வையுடன் வெளிவந்து,'அபூ அப்திர் ரஹ்மானே (இப்னு உமரே)! என்ன விஷயம்?' எனக் கேட்டதற்கு இப்னு உமர்(ரலி),'நீர் நபிவழியைப் பின்பற்ற நாடினால் இங்கிருந்து புறப்பட வேண்டியது தான்' என்றார். ஹஜ்ஜாஜ்'இப்போதேவா?' எனக் கேட்டதற்கு அவர்'ஆம்' என்றார். ஹஜ்ஜாஜ்'நான் இதோ குளித்துவிட்டுப் புறப்படுகிறேன் அவகாசம் கொடுங்கள்' எனக் கூறினார். இப்னு உமர்(ரலி) ஹஜ்ஜாஜ் புறப்படுவதுவரை (தம் வாகனத்தைவிட்டு) இறங்கி நின்றார். ஹஜ்ஜாஜ் எனக்கும் என்னுடைய தந்தை (இப்னு உமரு)க்குமிடையே நடந்து கொண்டிருந்தபோது நான் ஹஜ்ஜாஜிடம், நீர் நபிவழியைப் பின்பற்ற நாடினால் உரையைச் சுருக்கி, (அர∴பாவில்) தங்குவதைத் துரிதப்படுத்தும் என்றேன். உடனே

அவர் அப்துல்லாஹ் இப்னு உமரைப் பார்த்தார். இப்னு உமர்(ரலி), '(ஸாலிம்) உண்மையே கூறினார்' என்றார்.

## அரஃபாவில் வாகனத்திலேயே அமர்ந்திருத்தல்.

ஹதீஸ் 1661. உம்முல் ஃபழ்ல் பின்த் அல்ஹாரிஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அரஃபா நாளில் நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருப்பது சம்பந்தமாக மக்கள் என்னிடம் சர்ச்சை செய்து கொண்டிருந்தனர். சிலர், 'நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றுள்ளார்கள்' என்றும் இன்னும் சிலர், 'இல்லை' என்றும் கூறிக் கொண்டிருந்தனர். எனவே நான் நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு பாத்திரத்தில் பாலைக் கொடுத்தனுப்பினேன் அவர்கள் தங்களின் ஒட்டகத்தின் மீதமர்ந்து கொண்டே அதைக் குடித்தார்கள்.

## அரஃபாவில் இரண்டு வேளைத் தொழுகைகளைச் சேர்த்துத் தொழுதல்.

இப்னு உமர்(ரலி) தமக்கு இமாமுடன் சேர்ந்து தொழும் வாய்ப்புத் தவறிவிட்டாலும் இரண்டு வேளைத் தொழுகைகளைச் சேர்த்தே தொழுவார்.

ஹதீஸ் 1662. இப்னு ஷிஹாப் அவர்கள் கூறினார்கள்.

இப்னுஸ் ஸுபைர்(ரலி) உடன் தாம் போர் தொடுத்த ஆண்டு ஹஜ்ஜுக்கு வந்த ஹஜ்ஜாஜ், இப்னு உமர்(ரலி) அவர்களிடம், 'அரஃபாவில் தங்கும்போது நீங்கள் எவ்வாறு செயல்பட்டீர்கள்?' எனக் கேட்டதற்கு ஸாலிம், 'நீர் நபிவழியைப் பின்பற்றநாடினால் அரஃபா நாளில் நடுப்பகலில் தொழுதுவிடுவீராக! என்றார். அப்போது இப்னு உமர்(ரலி), 'ஸாலிம் கூறியது உண்மைதான். (நபித்தோழர்கள் அரஃபாவில்) லுஹரையும் அஸரையும் நபி வழிப்படி சேர்த்தே தொழுபவர்களாக இருந்தனர்'' என்றார்.

நான் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்துள்ளார்களா? என ஸாலிமிடம் கேட்டேன். அதற்கவர், 'இந்த விஷயத்தில் நபிவழியைத் தவிர வேறு யாருடைய வழிகாட்டுதலை நீங்கள் பின்பற்றுவீர்கள் எனக் கேட்டார்.

## அரஃபாவில் உரையைச் சுருக்கிக் கொள்ளல்.

ஹதீஸ் 1663. ஸாலிம் இப்னு அப்தில்லாஹ் அவர்கள் கூறினார்கள்.

அப்துல் மலிக் இப்னு மர்வான், ஹஜ்ஜின்போது இப்னு உமரைப் பின்பற்றுமாறு ஹஜ்ஜாஜுக்குக் கடிதம் எழுதினார். அரஃபா நாளில் சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்தபோது இப்னு உமர்(ரலி) வந்தார். அப்போது நானும் அவருடன் இருந்தேன். அவர் ஹஜ்ஜாஜின் கூடாரத்திற்குச் சென்று'எங்கே அவர்?' என்று சப்தமிட்டார். உடனே ஹஜ்ஜாஜ் வெளிவந்தார். இப்னு உமர்(ரலி), 'நீர் இங்கிருந்து புறப்படுவீராக!' என்றார். ஹஜ்ஜாஜ், 'இப்போதேவா? எனக் கேட்டதற்கு, 'ஆம்' என்றார். ஹஜ்ஜாஜ்'நான் இதோ குளித்துவிட்டுப் புறப்படுகிறேன் அவகாசம் கொடுங்கள்' எனக் கூறினார். இப்னு உமர்(ரலி) ஹஜ்ஜாஜ் வரும்வரை, (தம் வாகனத்திலிருந்து) இறங்கிக் காத்திருந்தார். ஹஜ்ஜாஜ் எனக்கும் என்னுடைய தந்தை (இப்னு உமரு)க்குமிடையே நடந்து கொண்டிருந்தபோது நான், ஹஜ்ஜாஜிடம், நீர் நபிவழியைப் பின்பற்ற நாடினால் உரையைச் சுருக்கி (அரஃபாவில்) தங்குவதைத் துரிதப்படுத்தும் என்றேன். இப்னு உமர்(ரலி)'(ஸாலிம்) உண்மையே கூறினார்' என்றார்.

## அரஃபாவில் தங்குதல்

ஹதீஸ் 1664. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(நான் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன் ஒரு முறை) அரஃபா தினத்தில் என்னுடைய ஒட்டகம் காணாமல் போனது. அதைத் தேடி வந்தபோது நபி(ஸல்) அவர்கள் அரஃபா மைதானத்தில் நின்றிருந்ததைப் பார்த்தேன். அப்போது நான், இவர் (நபி(ஸல்)) குரைஷிக் குலத்தவராயிற்றே!' இவருக்கு இங்கு என்ன வேலை? என என்னுள் கூறிக் கொண்டேன். (ஏனெனில் மக்காக் குறைஷிகள் ஹரம் எல்லைக்கு வெளியே ஹஜ்ஜின் எந்தக் கிரியைகளையும் செய்வதில்லை).

ஹதீஸ் 1665. உர்வா அவர்கள் கூறினார்கள்.

மடமைக் காலத்தில் மக்கள் நிர்வாணமாகவே (கஅபாவை) வலம் வந்துள்ளனர். ஹும்ஸ் கிளையார்களைத் தவிர! ஹும்ஸ் என்றால் குறைஷியர்களும் அவர்களின் சந்ததியர்களுமாவர். இந்த ஹும்ஸ் கிளையார்கள் மக்களுக்கு நற்பணி புரிபவர்களாவர். அவர்களில் ஓர் ஆண் இன்னொரு பெண்ணுக்கு, தவாஃபு செய்வதற்காக ஆடை கொடுப்பார். இந்த ஹும்ஸ் கிளையார் யாருக்கு ஆடை கொடுக்க வில்லையோ அவர் நிர்வாணமாகத் வலம்வருவார். மேலும், மக்கள் அரஃபாவிலிருந்து திரும்பி விடுவார்கள். ஆனால், குறைஷிகளோ எல்லாம் முடிந்த பின்பு முஸ்தலிஃபாவிலிருந்துதான் திரும்புவார்கள்.

'மேலும் மற்றவர்கள் திரும்புகிற (அரஃபா என்னும்) இடத்திலிருந்து நீங்களும் திரும்பிச் செல்லுங்கள்'' என்ற (திருக்குர்ஆன் 02:199) வசனம் குரைஷிகள் பற்றி இறங்கியதுதான். அவர்கள் முஸ்தலிஃபா என்னும் இடத்திலிருந்து திரும்பிச் செல்பவர்களாயிருந்தனர். எனவே, அரஃபாவிலிருந்து திரும்பிச் செல்லுமாறு திருப்பி விடப்பட்டனர். என ஆயிஷா(ரலி) கூறினார் என என்னுடைய தந்தை (ஸுபைர்) எனக்கு அவர்கள் கூறினார்கள்.

## அரஃபாவிலிருந்து திரும்பும்போது நடுத்தர(வேக)த்தில் நடத்தல்.

ஹதீஸ் 1666. உர்வா அவர்கள் கூறினார்கள்.

நான் உஸாமா(ரலி)வுடன் அமர்ந்திருக்கும்போது, உஸாமாவிடம், 'கடைசி ஹஜ்ஜில் அரஃபாவிலிருந்து திரும்பிய நபி(ஸல்) அவர்களின் நடை எவ்வாறிருந்தது?' எனக் கேட்கப்பட்டது. அதற்கவர், 'நபி(ஸல்) அவர்கள் சாதாரணமாக நடப்பார்கள். (மக்கள் நெருக்கடியில்லாத) விசாலமான இடம் வந்ததும் விரைந்து நடப்பார்கள்' எனக் கூறினார்.

## அரஃபாவுக்கும் முஸ்தலிஃபாவுக்குமிடையே (சற்று) ஓய்வெடுத்தல்.

ஹதீஸ் 1667. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அரஃபாவிலிருந்து திரும்பும்போது ஒரு பள்ளத்தாக்கிற்குப் போய் தம் (மலஜலத்) தேவைகளை நிறைவேற்றிவிட்டு, உளூச் செய்தார்கள். அப்போது நான், நபி அவர்களே! நீங்கள் தொழவா போகிறீர்கள்?' எனக் கேட்டேன். அதற்கவர்கள், 'தொழுகை உனக்கு முன்னால் (உள்ள முஸ்தலிஃபாவில்) தான்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1668. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) மஃரிபையும் இஷாவையும் சேர்த்து முஸ்தலிஃபாவில் தொழுபவராக இருந்தார். ஆயினும் அவர், வழியில் நபி(ஸல்) அவர்கள் தேவையை நிறைவேற்ற ஒதுங்கிய பள்ளத்தாக்குக்குச் சென்று தம் தேவையை நிறைவேற்றி, உளூவும் செய்து முஸ்தலிஃபாவுக்கு வந்த பிறகுதான் தொழுவார்.

ஹதீஸ் 1669. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அர∴பாவிலிருந்து திரும்பும்போது நான் வாகனத்தில் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் இருந்தேன். நபி(ஸல்) அவர்கள் முஸ்தலி∴பாவுக்கு அரும்லுள்ள இடது புறப் பள்ளத்தாக்கை அடைந்ததும் ஒட்டகத்தை அமரச் செய்துவிட்டுச் சிறுநீர் கழித்துவிட்டுப் பிறகு வந்தார்கள். நான் அவர்களுக்கு உளூச் செய்யத் தண்ணீா ஊற்றினேன். சுருக்கமாக உளூச் செய்தார்கள். அப்போது நான், நபி அவர்களே! தொழப் போகிறீர்களா? எனக் கேட்டேன். அதற்கவர்கள்'தொழுகை உனக்கு முன்னால் (உள்ள முஸ்தலி∴பாவில்) தான்' எனக் கூறிவிட்டு, வாகனத்தில் ஏறி முஸ்தலி∴பா வந்ததும் தொழுதார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் முஸ்தலி∴பாவிலிருந்து புறப்படும் நாளில் ∴பழ்ல் இப்னு அப்பாஸைத் தம் வாகனத்தில் தமக்குப் பின்னால் ஏற்றினார்கள்.

ஹதீஸ் 1670. ∴பள்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஜம்ர(த்துல் அகப)ாவை அடையும் வரை தல்பியா கூறிக் கொண்டேயிருந்தார்கள்.

## (அர∴பாவிலிருந்து) திரும்பும்போது அமைதியாகச் செல்வது பற்றிய நபி(ஸல்) அவர்களின் கட்டளையும் சாட்டையால் அவர்கள் சைகை செய்ததும்.

ஹதீஸ் 1671. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அர∴பா தினத்தில் நபி(ஸல்) அவர்களுடன் நான் திரும்பும்போது, நபி(ஸல்) அவர்கள் தமக்குப் பின்னால் ஒட்டகத்தை அடித்து விரட்டக் கூடிய கடும் (அதட்டல்) சப்தத்தையும் ஒட்டகம் அலறுவதையும் செவியுற்றார்கள். உடனே தம் சாட்டையால் சைகை செய்து,'மக்களே! அமைதியைக் கடைப்பிடியுங்கள்! நன்மையென்பது விரைவதிலோ விரட்டுவதிலோ இல்லை'' எனக் கூறினார்கள்.

## முஸ்தலி∴பாவில் இரண்டு வேளைத் தொழுகைகளை சேர்த்துத் தொழுவது.

ஹதீஸ் 1672. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அர∴பாவிலிருந்து திரும்பினார்கள். வழியிலுள்ள பள்ளத்தாக்கில் இறங்கிச் சிறுநீர் கழித்தார்கள். பிறகு சுருக்கமாக உளூச் செய்தார்கள். நான் அவர்களிடம்,'தொழப் போகிறீர்களா?' என்றேன். அதற்கு அவர்கள்'தொழுகை உனக்கு முன்னால் (முஸ்தலி∴பாவில் தொழ வேண்டியதாகவே) இருக்கிறது!"என்றார்கள். பிறகு முஸ்தலி∴பாவிற்கு வந்து முழுமையாக உளூச் செய்தார்கள். இகாமத் சொல்லப்பட்டதும் மக்ரிபு தொழுதார்கள். அவ்விரண்டுக்குமிடையே (வேறு எதுவும்) தொழவில்லை.

## இரண்டு வேளைத் தொழுகையைச் சேர்த்துத் தொழுபவர் கடமையல்லாத தொழுகைகளைத் தொழ வேண்டியதில்லை.

ஹதீஸ் 1673. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முஸ்தலி∴பாவில், மக்ரிபையும் இஷாவையும் அவை ஒவ்வொன்றுக்கும் (தனித்தனி) இகாமத்துடன் சேர்த்துத் தொழுதார்கள். இரண்டிற்குமிடையிலோ ஒவ்வொன்றுக்கும் பின்போ கடமையல்லாத தொழுகை எதையும் தொழவில்லை.

ஹதீஸ் 1674. அபூ அய்?ப் அல் அன்ஸாரி(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறுதி ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்கள் முஸ்தலி∴பாவில் ம∴ரிபையும் இஷாவையும் இணைத்துத் தொழுதார்கள்.

## (இரண்டு வேளைத் தொழுகைகளைச் சேர்த்துத் தொழும் போது) ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக பாங்கும் இகாமத்தும் கூறுவது.

ஹதீஸ் 1675. அப்துர்ரஹ்மான் இப்னு யஜீத் அவர்கள் கூறினார்கள்.

“அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) ஹஜ் செய்தார்கள். நாங்கள் இஷாவின் பாங்கு கூறப்படும் நேரத்திலோ, அதற்குச் சற்று முன்னரோ முஸ்தலி∴பாவிற்கு வந்தோம். இப்னு மஸ்வூத்(ரலி), ஒருவரை பாங்கும் இகாமத்தும் கூறுமாறு கட்டளையிட, அவர் பாங்கும் இகாமத்தும் கூறினார். பின்னர் இப்னு மஸ்வூத்(ரலி) மக்ரிப் தொழுதுவிட்டு அதன்பின் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரவு உணவைக் கொண்டு வரச் செய்து உண்டார்கள். பிறகு ஒருவரை பாங்கும் இகாமத்தும் கூறுமாறு கட்டளையிட்டார்கள். பின், இஷாவை இரண்டு ரக்அத்களாகத் தொழுதார்கள். விடிந்ததும், 'நபி(ஸல்) அவர்கள் இந்த தினத்தில் இந்த இடத்தில் இந்தத் தொழுகையைத் தவிர வேறெதையும் இந்த நேரத்தில் தொழுததில்லை' என்று கூறினார்கள். மேலும், 'இவ்விரு தொழுகைகளும் (இங்கு, இந்த தினத்தில் மட்டும்) அவற்றிற்குரிய நேரங்களைவிட்டும் மாற்றப்பட்டுள்ளன. மக்ரிபுத் தொழுகை, மக்கள் முஸ்தலி∴பாவுக்கு வந்த பின்பு என்றும், ∴பஜ்ருத் தொழுகை, ∴பஜ்ரு உதயமாகும் வேளையில் என்றும் (ஹஜ்ஜின்போது முஸ்தலி∴பாவில் மட்டும்) மாற்றப்பட்டுள்ளன. இவ்வாறுதான் நபி(ஸல்) அவர்கள் செய்ய பார்த்திருக்கிறேன்' என்று கூறினார்கள்.

## (முஸ்தலி∴பாவில் தங்கவேண்டிய) இரவில் (முதியோர், பெண்கள், குழந்தைகள், நோயாளிகள் போன்ற) பலவீனர்களை மினாவுக்க அனுப்பிவிட்டு மற்றவர்கள் முஸ்தலி∴பாவில் தங்கி பிரார்த்தித்துவிட்டு, சந்திரன் மறைந்ததும் (மினாவுக்குப்) புறப்பட வேண்டும்.

ஹதீஸ் 1676. ஸாலிம் அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) தம் குடும்பத்திலுள்ள பலவீனர்களை முன் கூட்டியே (மினாவிற்கு) அனுப்பி விடுவார். மற்றவர்கள் முஸ்தலி∴பாவில் மஷ்அருல் ஹராம் என்னுமிடத்தில் இரவு தங்குவார்கள். அங்கு விரும்பியவாறு அல்லாஹ்வை நினைவு கூர்வர். பிறகு இமாம் முஸ்தலி∴பாவில் தங்கித் திரும்புவதற்கு முன்னமேயே இவர்கள் (மினாவுக்குத்) திரும்பி விடுவார்கள். அவர்களில் சிலர் ∴பஜ்ருத் தொழுகைக்கு மினாவை அடைவர். இன்னும் சிலர் அதற்குப் பின்னால் வந்தடைவர். அவர்கள் அங்கு வந்ததும் ஜம்ராவில் கல்லெறிவர். பலவீனர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் சலுகை வழங்கியுள்ளார்கள் என இப்னு உமர்(ரலி) கூறுவார்.

ஹதீஸ் 1677. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என்னை முஸ்தலி∴பாவிலிருந்து இரவில் (மினாவுக்கு) அனுப்பி வைத்தார்கள்.

ஹதீஸ் 1678. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் குடும்பத்திலுள்ள பலவீனர்களை முஸ்தலி∴பாவில் தங்கும் இரவில் (மினாவுக்கு) முன் கூட்டியே அனுப்பி வைத்தார்கள். அப்படி அவர்கள் அனுப்பிவைத்தவர்களில் நானும் ஒருவன்.

ஹதீஸ் 1679. அஸ்மா (ரலி) அவர்களின் ஊழியர் அப்துல்லாஹ் அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

அஸ்மா (ரலி) முஸ்தலிஃபாவில் தங்க வேண்டிய இரவில் அங்கு தங்கினார்கள். பிறகு எழுந்து சிறிது நேரம் தொழுதுவிட்டு, 'மகனே! சந்திரன் மறைந்துவிட்டதா?' எனக் கேட்டார்கள். நான் 'இல்லை!" என்றதும், சிறிது நேரம் தொழுதார்கள். பிறகு 'சந்திரன் மறைந்துவிட்டதா?' எனக் கேட்டார்கள். நான் 'ஆம்!" என்றதும் 'புறப்படுங்கள்!' எனக் கூறினார்கள். நாங்கள் புறப்பட்டு வந்ததும் ஜம்ராவில் அவர்கள் கல்றெிந்தார்கள். பிறகு அங்கிருந்து திரும்பி வந்து தம் கூடாரத்தில் ஸுப்ஹு தொழுதார்கள். அப்போது நான், 'அம்மா! நாம் விஷயம் முன்பே வந்துவிட்டதாகத் தெரிகிறதே!" என்றேன். அதற்கவர்கள், 'மகனே! நபி (ஸல்) அவர்கள் பெண்களுக்கு இவ்வாறு வர அனுமதி வழங்கியுள்ளார்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 1680. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஸவ்தா (ரலி), கனத்த சரீரமுள்ளவராகவும் மெதுவாக நடக்கக் கூடியவராகவும் இருந்ததால், முஸ்தலிஃபாவில் தங்கும் இரவில் (மக்களுக்கு முன்பாகவே மினாவுக்குப் புறப்பட்டுச் செல்ல) நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்தார்கள். "

ஹதீஸ் 1681. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் முஸ்தலிஃபாவில் தங்கினோம். அப்போது ஸவ்தா (ரலி) நபி (ஸல்) அவர்களிடம், மக்கள் புறப்படுவதற்கு முன்பாக, தாம் அங்கிருந்து (மினாவுக்குப்) புறப்பட அனுமதி கேட்டார். ஏனெனில், அவர் மெதுவாக நடக்கக் கூடியவராக இருந்தார். எனவே, நபி (ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதி கொடுத்தார்கள். அவ்வாறே, மக்கள் அங்கிருந்து புறப்படும் முன் அவர் புறப்பட்டுவிட்டார். நாங்கள் மட்டும் ஸுப்ஹு வரை அங்கேயே தங்கிவிட்டு, பிறகு நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்து புறப்பட்டபோது நாங்களும் புறப்பட்டோம். ஸவ்தா (ரலி), நபி (ஸல்) அவர்களிடம் அனுமதி பெற்றுச் சென்றது போன்று நானும் அனுமதி பெற்றிருந்தால் வேறெந்த மகிழ்ச்சியையும் விட அது எனக்கு அதிகப் பிரியமானதாக இருந்திருக்கும்.

## முஸ்தலிஃபாவில் ஃபஜ்ர் தொழுவது எப்போது?

ஹதீஸ் 1682. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி (ஸல்) அவர்கள் எந்தத் தொழுகையையும் (அதற்குரிய நேரத்தில் தொழாமல்) வேறு நேரத்தில் தொழுததை நான் பார்த்ததில்லை... இரண்டு தொழுகைகளைத் தவிர! ஒன்று : (முஸ்தலிஃபாவில்) மக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதது இன்னொன்று ஃபஜ்ரை அதற்கான (வழக்கமான) நேரத்திற்கு முன் (முஸ்தலிஃபாவிலேயே) தொழுதது, "

ஹதீஸ் 1683. அப்துர் ரஹ்மான் இப்னு யஜீத் அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களுடன் மக்காவுக்குப் புறப்பட்டோம். பிறகு முஸ்தலிஃபாவுக்கு நாங்கள் வந்தபோது, அவர் தனித்தனியாக இரண்டு தொழுகைகளை தனித்தனி பாங்கு, இகாமத்துடன் தொழுதார்கள். இரண்டு தொழுகைகளுக்கிடையே இரவு உணவு அருந்தினார்கள். பிறகு ஃபஜ்ர் உதயமான வேளையில் ஃபஜ்ர் தொழுதார்கள். அப்போது சிலர் 'ஃபஜ்ர் உதயமாம்விட்டது' என்றும் சிலர் 'ஃபஜ்ரு உதயமாகவில்லை'' என்று கூறிக் கொண்டிருந்தனர். பிறகு அவர் 'இந்த இடத்தில் இவ்விரு தொழுகைகளுக்கான நேரங்கள் நமக்கு மாற்றப்பட்டுள்ளன. ஒன்று மக்ரிப், இஷாவாகும். ஏனெனில், மக்கள் இருள் சூழ்ந்த

பின்புதான் (இஷாவின் நேரத்தில் தான்) முஸ்தலி∴பாவை அடைவார்கள். இன்னொன்று இந்த நேரத்தின் ∴பஜ்ருத் தொழுகை' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' எனக் கூறினார். பிறகு அவர் விடியும்வரை தங்கியிருந்துவிட்டு,'இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் இப்போது இங்கிருந்து திரும்பினால் நபி வழியைச் செயல்படுத்தியவராவார்!' எனக் கூறினார்.

'இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் இக்கூற்று விரைவானதா அல்லது உஸ்மான்(ரலி) புறப்பட்டது விரைவானதா?' என்று எனக்குத் தெரியவில்லை. (அந்த அளவுக்கு விரைவாக உஸ்மான்(ரலி) திரும்பிவிட்டார்கள்.) பிறகு இப்னு மஸ்வூத்(ரலி) துல்ஹஜ் 10-ஆம் நாள் ஜம்ரத்துல் அகபாவுக்கு வந்து கல்லெறியும் வரை தல்பியா சொல்லிக் கொண்டேயிருந்தார்.

## முஸ்தலி∴பாவிலிருந்து எப்போது திரும்புவது?

ஹதீஸ் 1684. அம்ர்ப்னு மைமூன்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) முஸ்தலி∴பாவில் ∴பஜ்ரு தொழுததை கண்டேன். அங்கு தங்கிய அவர்,'இணைவைப்போர் சூரியன் உதயமாகும் வரை இங்கிருந்து திரும்பிச் செய்வதில்லை மேலும் அவர்கள்'ஸபீரு மலை (சூரிய உதயத்தால்) ஒளிரட்டும்!' என்றும் கூறுவார்கள்: ஆனால் நபி(ஸல்) அவர்களோ, இணை வைப்போருக்கு மாற்றமாக நடந்துள்ளனர்!"என்று கூறிவிட்டு சூரியன் உதிக்கும் முன்பே அங்கிருந்து திரும்பிவிட்டார்கள்.

## துல்ஹஜ் 10ஆம் நாள் காலையிலிருந்து ஜம்ராவில் கல்லெறியும் வரை தல்பியாவும் தக்பீரும் கூறுவதும், வழியில் யாரையேனும் தம் வாகனத்தில் ஏற்றிக் கொள்வதும்.

ஹதீஸ் 1685. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ∴பள்ல் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களை (தம் வாகனத்தில்) தமக்குப் பின்னால் ஏற்றினார்கள். "

"நபி(ஸல்) அவர்கள் ஜம்ராவில் கல்லெறிகிற வரை தல்பியா கூறிக் கொண்டேயிருந்தார்கள்'' என ∴பள்ல்(ரலி) தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 1686 ~ ஹதீஸ் 1687. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அர∴பாவிலிருந்து முஸ்தலி∴பா வரை நபி(ஸல்) அவர்களின் பின்னால் (வாகனத்தில்) உஸாமா இப்னு ஸைத்(ரலி) அமர்ந்திருந்தார்கள். பிறகு முஸ்தலி∴பாவிலிருந்து மினா வரை ∴பள்ல்(ரலி) அவர்களை நபி(ஸல்) (தம் வாகனத்தில்) தமக்குப் பின்னால் ஏற்றினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறியும் வரை தல்பியா கூறிக் கொண்டேயிருந்தார்கள்'' என அவ்விருவரும் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்.

"ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்துச் செய்பவர் (மீது) அவரால் இயன்ற பலிப் பிராணி(யை பலியிடுவது) கடமையாகும். (பலிப்பிராணி) கிடைக்காதவர் ஹஜ்ஜுக் காலத்தில் மூன்று நாள்களும், ஊர் சென்றதும் ஏழு நாள்களும் நோன்பு நோற்க வேண்டும். இது முழுமையான பத்து (நோன்புகள்) ஆகும். இச்சட்டம் யாருடைய குடும்பம் மஸ்ஜிதுல் ஹராமின் எல்லைக்குள் இல்லையோ அவர்களுக்குரியதாகும்!"(திருக்குர்ஆன் 02:196)

ஹதீஸ் 1688. அபூ ஜம்ரா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் ஹஜ்ஜுத் தமத்துஉ பற்றிக் கேட்டேன். அவர் அதையே நிறைவேற்றுமாறு எனக்குக் கூறினார். பிறகு நான் அவர்களிடம், குர்பானி கொடுப்பது பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள்,'ஒட்டகத்தை அல்லது மாட்டை அல்லது ஆட்டை பலியிடலாம் அல்லது ஒரு (ஒட்டகத்தின் அல்லது மாட்டின்) பலியில் ஒரு பங்காளியாகச் சேரலாம்'' என்று கூறினார்கள். மக்களோ, ஹஜ்ஜுத் தமத்துஉவை வெறுத்தது போலிருந்தது. நான் உறங்கியபோது கனவில் ஒருவர்'(உம்முடைய) ஹஜ்(ஜில் குற்றம் ஏதுமில்லை: அது) ஏற்கப்படக் கூடியதே! தமத்துஉவும் ஏற்கப்பட்டது!"என உரத்துக் கூவினார். உடனே நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் வந்து என் கனவைக் கூறினேன். அதற்கு அவர்கள்'அல்லாஹ் மிகப்பெரியவன் அபுல்காஸிம் நபி(ஸல்) அவர்களின் வழிமுறையே இது!"எனக் கூறினார்கள்.

## (குர்பானி) ஒட்டகங்களில் சவாரி செய்தல்.

அல்லாஹ் கூறினான்:

"இன்னும் (குர்பானிக்கான) ஒட்டகங்களை உங்களுக்காக அல்லாஹ்வின் அடையாளங்களில் ஒன்றாக நாம் ஆக்கியிருக்கிறோம். உங்களுக்கு அவற்றில் மிகுந்த நன்மை உள்ளது.'எனவே (அவை உரிய முறையில்) நிற்கும்போது அவற்றின் மீது அல்லாஹ்வின் பெயரைச் சொல்லி (குர்பானி கொடுத்து விடு)வீர்களாக! பிறகு, அவை பக்கவாட்டில் சாய்ந்த கீழே விழுந்(து உயிர் நீத்)த பின் அவற்றிலிருந்து நீங்களும் உண்ணுங்கள்! (வறுமையிலும் கையேந்தாமல்) கிடைப்பதைக் கொண்டு திருப்தியாய் இருப்போருக்கும் இரப்போருக்கும் உண்ணக் கொடுங்கள்! இவ்விதம் நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு அவற்றை உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்திருக்கிறோம். நிச்சயமாக, பலிப்பிராணிகளின் மாமிசங்களோ, அவற்றின் உதிரங்களோ அல்லாஹ்வை ஒருபோதும் அடைவதில்லை ஆனால், உங்களுடைய தக்வா (பயபக்தி)தான் அவனை அடையும்! இவ்வாறே, உங்களுக்கு நேர்வழி காண்பித்தற்காக அவனை நீங்கள் பெருமைப்படுத்தும் பொருட்டு, அவற்றை உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்திருக்கிறான். எனவே, நன்மை செய்வோருக்கு நீர் நற்செய்தி கூறும்!"(திருக்குர்ஆன் 22:36, 37)

ஹதீஸ் 1689. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் தம் குர்பானி ஒட்டகத்தை இழுத்துச் செல்வதைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள்'அதில் ஏறிக் கொள்வீராக!"என்று கூறினார்கள். அதற்கவர்'இது குர்பானி ஒட்டகமாயிற்றே!"என்றார். நபி(ஸல்) அவர்கள்'(பரவாயில்லை) நீர் அதில் ஏறிக் கொள்ளும்!"என்றார்கள். (அவர் அதில் ஏறாததால்) இரண்டாவது முறையிலோ, மூன்றாவது முறையிலோ நபி(ஸல்) அவர்கள்'உமக்குக் கேடு உண்டாகட்டும்! ஏறுவீராக!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1690. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் தம் குர்பானி ஒட்டகத்தை இழுத்துச் செல்வதைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள்'அதில் ஏறிக் கொள்ளும்!"என்றார்கள். அதற்கவர்,'இது குர்பானி ஒட்டகமாயிற்றே?' என்றதும்.'(பரவாயில்லை) அதில் ஏறிக் கொள்ளும்!"என்றார்கள். மீண்டும் அவர்'இது குர்பானி ஒட்டகமாயிற்றே!"என்றதும்'(பரவாயில்லை) அதில் ஏறிக் கொள்ளும்!"என மூன்றாம் முறையும் கூறினார்கள்.

## குர்பானி ஒட்டகங்களை ஒட்டிச் செல்லல்.

ஹதீஸ் 1691. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறுதி ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்கள் உம்ராவுடன் ஹஜ்ஜையும் செய்தார்கள். (மதீனாவாசிகளின் எல்லையான துல்ஹுலைஃபாவிலிருந்தே தம்முடன் குர்பானிப் பிராணியை ஓட்டிச் சென்று குர்பானியையும் கொடுத்தார்கள். முதலில் உம்ராவுக்காக தல்பியா கூறி, பிறகு ஹஜ்ஜுக்காக தல்பியா கூறினார்கள். மக்களும் நபி(ஸல்) அவர்களுடன் உம்ராவுக்கும் ஹஜ்ஜுக்குமாகச் சேர்த்து இஹ்ராம் அணிந்தார்கள். மக்களில் சிலர் குர்பானி கொடுப்பவர்களாக இருந்தனர். எனவே, குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்திருந்தனர். இன்னும் சிலரோ, குர்பானி கொடுப்பவர்களாக இல்லை. (எனவே, அவர்கள் குர்பானிப் பிராணியைத் தம்முடன் கொண்டு வரவில்லை) நபி(ஸல்) அவர்கள் மக்காவுக்கு வந்ததும் மக்களிடம்,'உங்களில் யார் குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்துள்ளார்களோ அவர் தம் ஹஜ்ஜை நிறைவேற்றாத வரை இஹ்ராமிருந்து விடுபடக் கூடாது யார் குர்பானிப் பிராணி கிடைக்கவில்லையோ அவர் ஹஜ்ஜு நாள்களில் மூன்று நோன்புகளும் (ஹஜ்ஜை நிறைவு செய்துவிட்டு) தம் வீடு திரும்பியதும் ஏழு நோன்புகளும் நோற்கட்டும்!"என்று கூறினார்கள். பிறகு மக்காவுக்கு நபி(ஸல்) அவர்கள் வந்ததும், இறையில்லம் கஅபாவை வலம்வந்துவிட்டு முதலாவதாக ருக்னை (ஹஜருல் அஸ்வதை) முத்தமிட்டார்கள். பிறகு மூன்று சுற்றுக்கள் (தோள்களைக் குலுக்கி) ஓடியும் நான்கு சுற்றுக்கள் நடந்தும் வலம்வந்தார்கள். வலம்வந்து முடித்ததும், மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். ஸலாம் கொடுத்தும் ஸஃபாவுக்கு வந்து, ஸஃபா, மர்வாவுக்கிடையே ஏழு முறை சஃயு செய்தார்கள். பிறகு, தம் ஹஜ்ஜை நிறைவேற்றும் வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை. மேலும் அவர்கள் துல்ஹஜ் 10-ஆம் நாள் தம் குர்பானிப் பிராணியை பலியிட்டார்கள். பிறகு அங்கிருந்து திரும்பி இறையில்லம் கஅபாவை வலம்வந்துவிட்டு இஹ்ராமிலிருந்து விடுபட்டார்கள்.

மக்களில், குர்பானி கொடுப்பதற்காகப் பிராணியைக் கொண்டு வந்தவர்களும் நபி(ஸல்) அவர்கள் செய்தது போன்றே செய்தார்கள்.

ஹதீஸ் 1692. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இறுதி ஹஜ்ஜினபோது நபி(ஸல்) அவர்கள் உம்ராவுடன் ஹஜ்ஜையும் செய்தார்கள். மக்களும் அவர்களுடன் ஹஜ், உம்ராச் செய்தார்கள்.

இப்னு உமர்(ரலி) கூறிய (முன் ஹதீஸிலுள்ள) செய்தியையே ஆயிஷா(ரலி) எனக்குக் கூறினார் என உர்வா அவர்கள் கூறினார்கள்.

## வழியில் குர்பானிப் பிராணியை விலைக்கு வாங்குதல்.

ஹதீஸ் 1693. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ், தம் தந்தை இப்னு உமர்(ரலி) அவர்களிடம்,'நீங்கள் (ஹஜ்ஜுக்குப் போகாமல்) இங்கே இருங்கள். ஏனெனில் பைத்துல்லாஹ்வை நெருங்க விடாமல் நீங்கள் தடுக்கப்படுவீர்கள் என்ற அச்சம் எனக்கு ஏற்படுகிறது' எனக் கூறினார். அதற்கு இப்னு உமர்(ரலி),'அப்படியாயின் நான் நபி(ஸல்) அவர்கள் செய்ததைப் போன்றே செய்வேன். மேலும் நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உள்ளது என அல்லாஹ் கூறியுள்ளான். எனவே, நான் என் மீது உம்ராவைக் கடமையாக்கிக் கொண்டேன் என்பதற்கு உங்களையே நான் சாட்சியாக்குகிறேன்' எனக் கூறிவிட்டு, உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட்டு பைதா என்னுமிடத்தை அடைந்ததும் ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் சேர்த்து தல்பியா கூறினார்கள். பிறகு அவர்கள்'ஹஜ்ஜும் உம்ராவும் ஒரே மாதிரியானவையே!"எனக் கூறிவிட்டு, குதைத் என்னுமிடத்தில் குர்பானிப் பிராணியை விலைக்கு வாங்கிக் கொண்டு இறையில்லம் கஅபாவுக்கு வந்து, அவ்விரண்டிற்காகவும் (ஹஜ்ஜுக்காகவும் உம்ராவிற்காகவும்)

ஒரேயொரு வலம்வந்தார்கள். ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றும் வரை அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை.

## துல்ஹுலை∴பாவில் குர்பானிப் பிராணிக்கு அடையாளமிட்டு அதன் கழுத்தில் எதையேனும் தொங்கவிட்டு, பிறகு இஹ்ராம் அணிதல்.

நா∴பிவு(ரஹ்) கூறினார்: மதீனாவிலிருந்து இப்னு உமர்(ரலி) குர்பானிப் பிராணியைக் கொண்டு செல்லும்போது, துல்ஹுலை∴பாவுக்குப் போனதும் குர்பானிப் பிராணியின் கழுத்தில் மாலை போன்றவற்றைத் தொங்க விடுவதுடன் அடையாளமும் இடுவார். அதாவது பிராணியைக் கிப்லாவை நோக்கி உட்காரவைத்து அதன் வலப்புறத் திமிலில் கத்தியால் கீறிவிடுவார்

ஹதீஸ் 1694 ~ ஹதீஸ் 1695. மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி), மர்வான்(ரலி) ஆகியோர் அவர்கள் கூறினார்கள்.

ஹுதைபிய்யா உடன்படிக்கை நடந்த ஆண்டு நபி(ஸல்) அவர்கள் ஆயிரத்துக்கும் மேற்பட்ட தோழர்களுடன் மதீனாவிலிருந்து புறப்பட்டு துல்ஹுலை∴பாவுக்கு வந்ததும் குர்பானிப் பிராணியின் கழுத்தில் மாலை போன்றவற்றைத் தொங்கவிட்டு அடையாளமும் இட்டுவிட்டு, பின்னர் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தார்கள்.

ஹதீஸ் 1696. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் குர்பானி ஒட்டகங்களின் கழுத்து மாலைகளை நான் என்னுடைய கைகளாலேயே கோர்த்தேன். அதை நபி(ஸல்) அவர்கள் தங்களின் பிராணியின் கழுத்தில் போட்டு அதற்கு அடையாளமுமிட்டு அதை பலியிட்டார்கள். அதன் பிறகு அவர்களுக்கு முன்பு அனுமதிக்கப்பட்டிருந்த எந்தப் பொருளும் அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருக்கவில்லை. (அதாவது இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்கள்.)

## குர்பானி ஒட்டகங்களுக்காகவும் மாடுகளுக்காகவும் கழுத்து மாலைகள் கோர்த்தல்.

ஹதீஸ் 1697. ஹ∴ப்ஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம், 'நபி அவர்களே! மக்களுக்கென்ன நேர்ந்தது? அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்களே! ஆனால் நீங்கள் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லையே!' எனக் கேட்டேன். அதற்கவர்கள்'நான் தலை முடியில் களிம்பு தடவிப் படிய வைத்துவிட்டேன். என்னுடைய பலிப்பிராணியின் கழுத்தில் அடையாளம் தொங்கவிட்டுள்ளேன் எனவே நான் ஹஜ்ஜை நிறைவேற்றாதவரை இஹ்ராமிலிருந்து விடுபட மாட்டேன்!"எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1698. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்தே பலிப்பிராணியைக் கொண்டு செல்பவர்களாக இருந்தார்கள். எனவே, நான் அவர்களின் பலிப்பிராணியின் கழுத்தில் தொங்கவிடப்படும் மாலையைக் கோர்த்துக் கொடுப்பேன். (பலிப்பிராணியை அனுப்பிவிட்டு) அவர்கள் இஹ்ராம் அணிந்தவர் தவிர்த்துக் கொள்ளும் எதையும் தவிர்த்துக் கொள்ள மாட்டார்கள்.

## பலிப்பிராணிக்குக் காயம் ஏற்படுத்தி அடையாளமிடல்.

“நபி(ஸல்) அவர்கள் பலிப்பிராணியின் கழுத்தில் மாலைகளைத் தொங்கவிட்டு அதைக் (கீறி) காயப்படுத்தி அடையாளமிட்டுவிட்டு உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தார்கள்‘‘ என மிஸ்வர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1699. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் பலிப்பிராணிகளுக்கு, (அவற்றின்) கழுத்தில் தொங்கவிடும் அடையாள மாலையை நான் என் கையால் கோர்த்தேன். அவற்றை அவர்கள் பலிப்பிராணிகளின் கழுத்தில் தொங்கவிட்டார்கள்... அல்லது நான் அவற்றைப் பிராணிகளின் கழுத்தில் தொங்கவிட்டேன்.. பிறகு அதை கீறிக் காயப்படுத்தி அடையாளமிட்டார்கள். பிறகு அதை இறையில்லம் கஅபாவின் பக்கமாக அனுப்பி வைத்துவிட்டு, மதீனாவில் தங்கியிருந்தார்கள். அப்போது அவர்களுக்கு அனுமதிக்கப்பட்ட எதுவும் விலக்கப்படவில்லை.

## ஒருவர் தம் கையாலேயே பலிப் பிராணியின் கழுத்தில் மாலைகளைத் தொங்கவிடுதல்.

ஹதீஸ் 1700. அம்ரா பின்த் அப்திர் ரஹ்மான் அவர்கள் கூறினார்கள்.

“பலிப்பிராணியைக் கொண்டு வருகிறவர் அதை பலியிடும்வரை ஹஜ் செய்பவரின் மீது விலக்கப்பட்டதெல்லாம்’ என இப்னு அப்பாஸ்(ரலி) கூறுகிறாரே!”என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் ஸியாத் இப்னு அபீ சுஃப்யான் எழுதிக் கேட்டதற்கு ஆயிஷா(ரலி) சொல்வது போலில்லை நான் நபி(ஸல்) அவர்களின் பலிப்பிராணிக்கு, கழுத்தில் தொங்கவிடப்படும் அடையாள மாலையை என்னுடைய கையாலேயே கோர்த்திருக்கிறேன் நபி(ஸல்) அவர்கள் அதைத் தம் கையால் அதன் கழுத்தில் தொங்கவிட்டார்கள். பிறகு, பிராணியை என்னுடைய தந்தையுடன் (மக்காவுக்கு) அனுப்பி வைத்தார்கள் ஆனால் அந்த பலிப்பிராணி பலியிடப்படும் வரை அவர்கள், தமக்கு அல்லாஹ் அனுமதித்த எவரையும் தடுத்துக் கொள்ளவில்லை!”எனக் கூறினார்.

## ஆட்டின் கழுத்தில் மாலைகளைத் தொங்கவிடல்.

ஹதீஸ் 1701. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒருமுறை ஆட்டைப் பலியிட்டார்கள்.

ஹதீஸ் 1702. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களின் பலிப்பிராணிகளுக்காகக் கழுத்தில் தொங்கவிடப்படும் மாலைகளைக் கோர்த்திருக்கிறேன். நபி(ஸல்) அவர்கள் அதை ஆட்டின் கழுத்தில் தொங்கவிட்டார்கள். (பிராணியை மக்காவுக்கு அனுப்பிவிட்டுத்) தம் வீட்டில் இஹ்ராம் அணியாத நிலையில் தங்கினார்கள்.

ஹதீஸ் 1703. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களின் பலிப் பிராணியின் ஆட்டிற்குக் கழுத்தில் தொங்கவிடப்படும் மாலையொன்றைத் தொடுத்தேன். அந்த (கழுத்தில் அடையாளம் தொங்கவிடப்பட்ட) ஆட்டை நபி(ஸல்) அவர்கள் (மக்காவுக்கு) அனுப்பிவிட்டு அவர்கள் (வீட்டில்) இஹ்ராமில்லாத நிலையில் தங்கினார்கள்.

ஹதீஸ் 1704. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிவதற்கு முன்பாக, அவர்களின் பலிப்பிராணிக்கு கழுத்தில் தொங்கவிடப்படும் மாலையைத் தொடுத்தேன்.

## கம்பளியாலான கழுத்து மாலைகள்

ஹதீஸ் 1705. உம்முல் மூமினீன் (ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் பலிப்பிராணிகளின் கழுத்தில் தொங்கவிடப்படும் மாலைகளை என்னிடத்திலிருந்த கம்பளியால் செய்தேன்.

## செருப்பைக் கழுத்தில் தொங்கவிடல்.

ஹதீஸ் 1706. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பலிப்பிராணியை இழுத்துச் சென்ற ஒருவரைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள்'அதில் ஏறிக் கொள்ளும்'' என்றார்கள். அதற்கு அவர், 'இது பலிப்பிராணி' என்றதும்'அதில் ஏறுவீராக!"என்றனர். பிறகு அவர் அதில் ஏறிச் சென்றதை பார்த்தேன். அவர் நபி(ஸல்) அவர்களுடன் சென்று கொண்டிருந்தார். அப்போது அப்பிராணியின் கழுத்தில் செருப்பு கிடந்தது.

## பலிப்பிராணிக்குச் சேணம் பூட்டல்.

இப்னு உமர்(ரலி) திமில் தெரிகிற அளவுக்கு மட்டும் சேணத்தைக் கிழிப்பார்கள். பலிப்பிராணியை பலியிட்டதும் சேணத்தில் இரத்தம் பட்டுவிடும் என்று அஞ்சி அதை உடனேயே கழற்றி விடுவார்கள். பிறகு சேணத்தை தர்மம் செய்வார்கள்.

ஹதீஸ் 1707. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பலியிடும் பிராணியின் சேணத்தையும் அதன் தோலையும் தர்மம் செய்து விடவேண்டுமென நபி(ஸல்) அவர்கள் எனக்குக் கட்டளையிட்டார்கள்.

## செல்லும் வழியில் பலிப்பிராணியியை விலைக்கு வாங்கி அதன் கழுத்தில் மாலையைத் தொங்கவிடல்.

ஹதீஸ் 1708. நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னுஸ் ஸுபைர்(ரலி) உடன் ஹஜ்ஜாஜ் போரிட்ட ஆண்டு, இப்னு உமர்(ரலி) ஹஜ் செய்ய நாடினார். அப்போது அவரிடம், 'மக்களிடையே போர் மூண்டுள்ளது் எனவே உங்களை ஹஜ் செய்யவிடாமல் அவர்கள் தடுப்பார்கள் என நாங்கள் அஞ்சுகிறோம்' எனக் கூறப்பட்டது. உடனே அவர், 'அல்லாஹ்வின் தூதரிடம் அழகிய முன்மாதிரி உள்ளது! எனவே அந்த நேரத்தில் (நபி(ஸல்) அவர்கள் செய்ததையே நானும் செய்வேன். நான் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து விட்டேன் என்பதற்கு உங்களையே சாட்சியாக்குகிறேன்' எனக் கூறிப் புறப்பட்டு'பைதா' என்னுமிடத்திற்கு வந்ததும்'ஹஜ்ஜின் நிலையும் உம்ராவின் நிலையும் ஒன்றேதான் (எனவே) நான் உம்ராவுடன் ஹஜ்ஜுக்கும் சேர்த்தே இஹ்ராம் அணிந்துள்ளேன் என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள்!' எனக் கூறினார். மேலும் அடையாள மாலையிடப்பட்ட பலிப்பிராணியை வாங்கினார். மக்கா வந்து கஅபாவைத் வலம்வந்துவிட்டு, ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடி சஃயு செய்தார். இதை விட வேறெதுவும் அதிகமாகச் செய்யவில்லை.

துல்ஹஜ் 10ஆம் நாளில்தான் குர்பானிப் பிராணியை பலியிட்டுவிட்டுத் தலைமுடியை மழித்தார். அதுவரை, இஹ்ராம் அணிந்த நிலையில் விலக்கப்பட்ட எதையும் செய்யவில்லை.'முதலில் தாம்

நிறைவேற்றிவிட்ட தவா∴பே ஹஜ் - உம்ரா இரண்டிற்கும் போதும்' என்றும் கருதினார். மேலும், 'இப்படித்தான் நபி(ஸல்) அவர்கள் செய்தார்கள்" என்றும் கூறினார்.

## ஒருவர் தம் மனைவியரின் சார்பாக அவர்களின் அனுமதியின்றி மாட்டைப் பலியிடுவது.

ஹதீஸ் 1709. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றும் எண்ணத்தில் துல்கஅதா மாதத்தின் இருபத்தைந்தாம் நாள், நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். நாங்கள் மக்காவை நெருங்கியதும்'பலிப்பிராணியைக் கொண்டு வராதவர்கள் வலம்வந்துவிட்டு, ஸ∴பா மர்வாவுக்கிடையே ஓடி முடித்தவுடன், இஹ்ராமைக் களைந்து விடவேண்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். பிறகு துல்ஹஜ் 10-ஆம் நாள் மாட்டின் இறைச்சி எங்களுக்கு வந்தது. 'இது என்ன?' என கேட்டேன். மக்கள்'நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவியரின் சார்பாக பலியிட்டார்கள்" என்றனர்.

## மினாவில் நபி(ஸல்) அவர்கள் பலியிட்ட இடத்தில் பலியிடுவது.

ஹதீஸ் 1710. நா∴பிவு அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) வழக்கமாக நபி(ஸல்) அவர்கள் பலியிட்ட இடத்தில் பலியிடுவார்.

ஹதீஸ் 1711. நா∴பிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) முஸ்தலி∴பாவிலிருந்து இரவின் கடைசிப் பகுதியில் தம் பலிப் பிராணியை நபி(ஸல்) அவர்கள் பலியிட்ட இடத்தில் சேர்ப்பதற்காக ஹஜ் செய்வோருடன் அனுப்புவார். அவர்களுள் அடிமைகளும் சுதந்திரமானவர்களும் இருந்தனர்.

## தம் கையாலேயே பலியிடுதல்.

ஹதீஸ் 1712. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஏழு ஒட்டகங்களை நிற்க வைத்துத் தம் கையாலேயே அறுத்தார்கள். மேலும் அவர்கள் மதீனாவில், பெரிய கொம்புகளையுடைய, கருப்பு நிறம் கலந்த வெள்ளை நிற ஆடுகள் இரண்டையும் குர்பானி கொடுத்தார்கள்.

## ஒட்டகத்தைக் கட்டிப் போட்டு அறுத்தல்.

ஹதீஸ் 1713. ஸியாத் இப்னு ஜுபைர் அவர்கள் கூறினார்கள்.

"இப்னு உமர்(ரலி), அறுப்பதற்காகத் தம் ஒட்டகத்தைப் படுக்க வைத்திருந்த ஒருவரிடம் வந்து, 'அதைக் கட்டி நிற்க வைத்து அறுப்பீராக! அதுவே முஹம்மத்(ஸல்) அவர்களின் வழிமுறை!' என்று கூறியதை பார்த்தேன்."

## ஒட்டகத்தை நிற்க வைத்து அறுத்தல்.

இப்னு உமர்(ரலி)'அதுவே (ஒட்டகத்தை நிற்கவைத்து அறுப்பதே) முஹம்மத்(ஸல்) அவர்களின் வழிமுறை!"என்று கூறுகிறார்கள்.

‘‘குர்ஆனின் 22:36 வசனத்திலுள்ள'ஸவா∴ப்ப' என்னும் வார்த்தைக்கு'நிற்கும் நிலையில்' என்றே பொருள்‘‘ என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

ஹதீஸ் 1714. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹர் தொழு(வித்)தார்கள். துல்ஹுலை∴பாவில் இரண்டு ரக்அத்கள் அஸர் தொழுதுவிட்டு அங்கேயே இரவு தங்கினார்கள். காலை விடிந்ததும் தம் வாகனத்தில் ஏறிக் கொண்டு'லா இலாஹ இல்லல்லாஹ்‘வும்'ஸுப்ஹானல்லாஹ்‘வும் கூறிக் கொண்டே சென்றார்கள். பைதா என்னுமிடத்தைச் சென்றடைந்ததும் ஹஜ் - உம்ராவுக்காக தல்பியா கூறலானார்கள். மக்காவை அடைந்ததும் இஹ்ராமிலிருந்து விடுபடுமாறு மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். மேலும், நபி(ஸல்) அவர்கள் தங்களின் கையாலேயே ஏழு ஒட்டகங்களை நிற்க வைத்து அறுத்து பலியிட்டார்கள். (பெருநாளில்) பெரிய கொம்புகளையுடைய, கருப்புநிறம் கலந்த வெள்ளைநிற ஆடுகள் இரண்டை மதீனாவில் குர்பானி கொடுத்தார்கள்.

ஹதீஸ் 1715. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் நான்கு ரக்அத்கள் லுஹர் தொழுதார்கள். துல்ஹுலை∴பாவில் இரண்டு ரக்அத்கள் அஸர் தொழுதார்கள். இரவில் அங்கேயே தங்கிவிட்டு, விடிந்ததும் ஸுப்ஹு தொழுதார்கள். பிறகு தம் வாகனத்தில் ஏறி பைதா எனுமிடத்தை அடைந்தபோது ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும் தல்பியா கூறினார்கள்.

## அறுப்பவருக்குக் கூலியாக பலிப்பிராணியில் எதையும் கொடுக்கக் கூடாது.

ஹதீஸ் 1716. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (குர்பானி ஒட்டகங்களை பலியிடுவதற்கு) என்னை நியமித்தார்கள். பிறகு அவற்றின் இறைச்சிகளைப் பங்கிடுமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே செய்தேன். அவற்றின் சேணங்களையும் தோல்களையும் பங்கிட்டுவிடுமாறும் எனக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே செய்தேன்.

இன்னொரு அறிவிப்பில்'பலிப் பிராணிகளை கவனித்துக் கொள்ளுமாறும் அவற்றை அறுப்பதற்குக் கூலியாக அவற்றில் எதையும் கொடுக்கக்கூடாது என்றும் எனக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்‘‘ என அலீ(ரலி) கூறினார் என உள்ளது.

## பலிப்பிராணிகளின் தோல்களை தர்மம் செய்ய வேண்டும்.

ஹதீஸ் 1717. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் குர்பானி ஒட்டகங்களை பலியிடுமாறும் அவற்றின் இறைச்சி, தோல், சேணம் ஆகிய அனைத்தையும் பங்கிடுமாறும் உரிப்பதற்குக் கூலியாக, அவற்றில் எதையும் கொடுக்கக் கூடாது என்றும் எனக்குக் கட்டளையிட்டார்கள்.

## பலிப்பிராணியின் சேணங்கள் தர்மம் செய்யப்பட வேண்டும்.

ஹதீஸ் 1718. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நூறு ஒட்டகங்களை குர்பானி கொடுத்தார்கள். அப்போது அவற்றின் இறைச்சிகளைப் பங்கிடுமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே நான் அவற்றைப் பங்கிட்டேன். பின்பு அவற்றின் சேணங்களைப் பங்கிடுமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள்.

அவ்வாறே நான் அவற்றைப் பங்கிட்டேன். பிறகு அவற்றின் தோல்களைப் பங்கிடுமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள் அவ்வாறே நான் அவற்றைப் பங்கிட்டேன்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) நீர் நினைவு கூரும்:

“நாம் இப்ராஹீமுக்குப் புனித ஆலயத்தின் இடத்தை நிர்ணயித்துப் பின்வருமாறு கட்டளையிட்டோம்’நீர் எனக்கு எதனையும் இணைவைக்காதீர் என்னுடைய (இந்த) ஆலயத்தைச் சுற்றி வருவோருக்கும் அதில் ருகூஉ, ஸுஜூது செய்(து தொழு)வோருக்கும் அதைத் தூய்மை செய்து வைப்பீராக! மேலும், ஹஜ் செய்ய வரும்படி மக்களிடையே அறிவிப்புச் செய்வீராக! அவர்கள் நடந்தும் வெகு தொலைவான இடங்களில் இருந்தெல்லாம் வரும் மெலிந்த ஒட்டகங்களில் சவாரி செய்தும் உம்மிடம் வரட்டும்! தங்களுக்குரிய பலன்களைக் காணட்டும்! குறிப்பிட்ட நாள்களில், அல்லாஹ் அவர்களுக்கு அளித்துள்ள (ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற) நாற்கால் பிராணிகளின் மீது அவன் பெயரைச் சொல்லி குர்பானி கொடுக்கட்டும்! எனவே, அவற்றிலிருந்து நீங்களும் உண்ணுங்கள் கஷ்டப்படும் ஏழைகளுக்கும் உண்ணக் கொடுங்கள்! பின்னர் அவர்கள் (தலைமுடி மழித்து, நகம் வெட்டி, குளித்துத்) தம் அழுக்குகளை நீக்கி, தங்கள் நேர்ச்சைகளை நிறைவேற்றி (அந்தப் புனிதமான) புராதன ஆலயத்தை தவாஃபும் செய்யட்டும்!‘

“இதுவே (ஹஜ்ஜின் வழிபாட்டு முறையாகும்)! மேலும் அல்லாஹ்வினால் புனிதப்படுத்தப் பட்டவற்றுக்கு கண்ணிய மளிக்கிறவருக்கு அவரின் இறைவனிடத்தில் அது சிறந்ததாகும்!”(திருக்குர்ஆன் 22:26-30)

## பலிப் பிராணியில் உண்ணப் பட வேண்டியவையும் தர்மம் செய்யப்பட வேண்டியவையும்.

இஹ்ராம் அணிந்த நிலையில் வேட்டையாடிய குற்றத்திற்குப் பரிகாரமாகவோ நேர்ச்சையாகவோ பலி கொடுப்பவர்கள் அவற்றின் இறைச்சியைச் சாப்பிடலாகாது மற்ற பிராணிகளைச் சாப்பிடலாம் என இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹஜ்ஜுத் தமத்துஉவில் (கொடுக்கப்படும் குர்பானியை) உண்ணலாம் பிறருக்கு உண்ணக் கொடுக்கலாம் என அதா கூறுகிறார்.

ஹதீஸ் 1719. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் மினாவில் தங்கும் நாளிலிருந்து மூன்று நாள்களுக்கு மேல் குர்பானிப் பிராணிகளின் இறைச்சியைப் சாப்பிட மாட்டோம். பிறகு நபி(ஸல்) அவர்கள்,‘சாப்பிடுங்கள் சேமித்தும் வைத்துக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறி எங்களுக்குச் சலுகை வழங்கியதும் நாங்கள் சாப்பிட்டு, சேமித்து வைக்கலானோம்.

‘மதீனா வரும்வரை (சாப்பிட்டோம்)’ என்று ஜாபிர்(ரலி) கூறினாரா என அதாவிடம் கேட்டேன். அதற்கவர்’இல்லை’ என்றார் என இப்னு ஜுரைஜ் கூறுகிறார்.

ஹதீஸ் 1720. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜை மட்டும் எண்ணத்தில் கொண்டு துல்கஅதா மாதத்தின் இருபத்தைந்தாம் நாள் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். நாங்கள் மக்காவை நெருங்கியதும், பலிப்பிராணியைக் கொண்டு வராதவர் வலம்வந்துவிட்டு இஹ்ராமிலிருந்து விடுபட நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். பிறகு துல்ஹஜ் 10-ஆம் நாள் மாட்டின் இறைச்சி எங்களுக்கு

வந்தது. இது என்ன? என கேட்டேன். மக்கள்,'நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவிகளின் சார்பாகப் பலியிட்டார்கள்' என்றனர்.

## தலைமுடியை மழிப்பதற்கு முன் பலியிடுதல்.

ஹதீஸ் 1721. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பலியிடுவதற்கு முன் தலைமுடியை மழித்துவிடுதல் மற்றும் அது போன்றவற்றைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை! குற்றமில்லை! என்றனர்.

ஹதீஸ் 1722. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,'நான் கல்லெறிவதற்கு முன்பே தவா∴புஸ் ஸியாரத் செய்து விட்டேன்' என்றார். அதற்கவர்கள்'குற்றமில்லை!"என்றார்கள். பிறகு அவர்,'நான் பலியிடுவதறகு முன்பாகத் தலையை மழித்து விட்டேன்' என்றதும் அவர்கள்'குற்றமில்லை!"என்றார்கள். மேலும் அவர்'நான் கல்லெறிவதற்கு முன்பாகப் பலியிட்டு விட்டேன்' என்ற போதும் அவர்கள்'குற்றமில்லை'' என்றார்கள்.

ஹதீஸ் 1723. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நான் மாலை நேரம் வந்த பின் கல்லெறிந்தேன்!"என்று நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் கேட்டதும். அவர்கள்'குற்றமில்லை!"என்று கூறினார்கள். பிறகு அவர்,'நான் பலியிடும் முன்பாகத் தலையை மழித்து விட்டேன்!"என்ற போதும் அவர்கள்'குற்றமில்லை!"என்றே கூறினார்கள்.

ஹதீஸ் 1724. அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பத்ஹாவில் இருக்கும்போது நான் அங்கு வந்தேன். அப்போது அவர்கள்,'ஹஜ் செய்ய நாடி விட்டீரா?' எனக் கேட்க, நான்'ஆம்!"என்றேன். 'எதற்காக இஹ்ராம் அணிந்தீர்?' என அவர்கள் கேட்டதும்'நபி(ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்தார்களோ அதற்காக!"என்றேன். உடனே அவர்கள்,'நல்லகாரியம் செய்தீர்! போய் இறையில்லம் கஅபாவையும் ஸ∴பாமர்வாவையும் வலம்வாரும்!"என்றார்கள். பிறகு நான் கைஸ் கோத்திரத்தாரின் பெண்களில் (மஹ்ரமான) ஒருவரிடம் வந்தேன். அவர் என்னுடைய தலையில் பேன் பார்த்தார். பிறகு நான் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தேன். இந்த அடிப்படையிலேயே உமர்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலம் வரை நான் மக்களுக்குத் தீர்ப்புக் கூறி வந்தேன்! உமர்(ரலி) அவர்களிடம் இதுபற்றி நான் கூறியதும் அவர்கள்,'நாம் இறைவேதத்தை எடுத்துக் கொண்டால், அதுவோ (ஹஜ் உம்ராவை) முழுமையாக நிறைவேற்றுமாறு நமக்குக் கட்டளையிடுகிறது; நபி(ஸல்) அவர்களின் வழிமுறையை எடுத்துக் கொண்டால், நபி(ஸல்) அவர்கள் பலிப் பிராணி பலியிடப்படும் இடத்தை அடையாத வரை இஹ்ராமிலிருந்து விடுபட்டதில்லை என்று தெரிகிறது!"எனக் கூறினார்கள்.

## இஹ்ராமின்போது தலை முடியில் களிம்பு தடவிப் படிய வைப்பதும் தலையை மழித்துக் கொள்வதும்.

ஹதீஸ் 1725. ஹ∴ப்ஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம்'நபி அவர்களே! உம்ரா செய்துவிட்டு மக்கள் தங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்கள் ஆனால், நீங்கள் உம்ரா செய்த பிறகும் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லையே. என்ன காரணம்?' எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்)

அவர்கள், 'என்னுடைய முடியைக் களிம்பு தடவிப் படிய வைத்து விட்டேன் என்னுடைய குர்பானிப் பிராணியின் கழுத்தில் மாலையும் தொங்கவிட்டு விட்டேன் எனவே, குர்பானி கொடுக்கும்வரை நான் இஹ்ராமிலிருந்து விடுபடக் கூடாது!" என்றார்கள்.

## இஹ்ராமிலிருந்து விடுபடும்போது முடியைக் குறைத்துக் கொள்வதும் மழித்துக் கொள்வதும்.

ஹதீஸ் 1726 ~ ஹதீஸ் 1727 இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தங்களின் ஹஜ்ஜின்போது தலையை மழித்தார்கள். அவர்கள், 'இறைவா! தலையை மழித்துக் கொள்பவர்களுக்கு நீ கருணை புரி!' எனக் கூறியதும் தோழர்கள் 'நபி அவர்களே! முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும்' என்றனர். பிறகு நபி (ஸல்) அவர்கள் 'இறைவா! தலையை மழித்துக் கொள்பவர்களுக்கு நீ கிருபை செய்வாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள். உடனே தோழர்கள் 'நபி அவர்களே! முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும். !" என்றனர். நபி (ஸல்) அவர்கள் 'முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும் (கருணை புரிவாயாக!)' என்று கூறினார்கள்.

இன்னொரு அறிவிப்பின்படி 'அல்லாஹ் தலையை மழித்துக் கொள்பவர்களுக்குக் கருணை புரிவானாக!" என்று ஒரு முறையோ இரண்டு முறையோ கூறினார்கள் என உள்ளது.

இன்னுமொரு அறிவிப்பில் நான்காவது முறையில், 'முடியைக் குறைத்துக் கொள்பவர்களுக்கும். . !" எனக் கூறினார்கள் என உள்ளது.

ஹதீஸ் 1728. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள், 'இறைவா! தலையை மழித்துக் கொள்பவர்களை மன்னிப்பாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள் உடனே, தோழர்கள் 'முடியைக் குறைத்துக் கொள்பவர்களையும். . !" என்றனர். (மீண்டும்) நபி (ஸல்) அவர்கள் 'இறைவா! தலையை மழித்துக் கொள்பவர்களை மன்னிப்பாயாக!" என்று பிரார்த்தித்தபோது தோழர்கள் 'முடியைக் குறைத்துக் கொள்பவர்களையும். . !" என்றனர். நபி (ஸல்) அவர்கள் மூன்றாவது முறையாகவும் அதைக் கூறியபோது 'முடியைக் குறைத்துக் கொள்பவர்களையும் (மன்னிப்பாயாக!)' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1729. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களில் ஒரு கூட்டத்தாரும் தலையை மழித்தனர். இன்னும் சிலர் முடியைக் குறைத்தனர்.

ஹதீஸ் 1730. முஆவியா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களின் முடியைக் கத்தரிக் கோலால் (கத்தரித்துக்) குறைத்துள்ளேன்.

## ஹஜ்ஜுத் தமத்துஉ செய்பவர்கள் உம்ராவுக்குப் பின் முடியைக் குறைத்துக் கொள்ளல்.

ஹதீஸ் 1731. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மக்காவுக்கு வந்தபோது, இறையில்லம் கஅபாவை வலம்வந்து, ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்த பின், இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டுமென்றும் பிறகு தலையை மழித்துக் கொள்ளவோ, முடியைக் குறைத்துக் கொள்ளவோ வேண்டுமென்றும் தம் தோழர்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

## துல்ஹஜ் பத்தாம் நாள் தவா..புஸ் ஸியாரத் செய்தல்.

நபி(ஸல்) அவர்கள் தவா..புஸ் ஸியாரத்தை இரவு வரை தாமதமாக்கினார்கள் என ஆயிஷா(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோர் அறிவிக்கின்றனர்.

நபி(ஸல்) அவர்கள் மினாவில் தங்கும் நாள்களில் தவா..புஸ் ஸியாரத் செய்தார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1732. நா..பிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) ஒரேயொரு வலம் வந்துவிட்டுப் பகல் தூக்கமடைந்தார். பிறகு துல்ஹஜ் பத்தாம்நாள் மினாவுக்கு வந்தார்.

நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு செய்ததாக (இப்னு உமர்(ரலி) கூறினார் என) மற்றோர் அறிவிப்பில் காணப்படுகிறது.

ஹதீஸ் 1733. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஹஜ் செய்தோம். துல்ஹஜ் பத்தாம் நாள் நாங்கள் தவா..புஸ் ஸியாரத் செய்தபோது ஸ..பியா(ரலி)வுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நபி(ஸல்) அவர்கள் ஸ..பியாவிடம் உறவு கொள்ள நாடினார்கள். நான், நபி அவர்களே! அவருக்கு மாதவிடாய் வந்துள்ளதே! என்றேன் அதற்கவர்கள்,'அவர் (நம்முடைய பயணத்தைத்) தடுத்துவிட்டாரா?' எனக் கேட்டார்கள். உடனே தோழர்கள்,'அவல் துல்ஹஜ் பத்தாம் நாளே தவா..புஸ் ஸியாரத் செய்துவிட்டார்!' என்றதும்'அப்படியாயின் புறப்படுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## மறதியினாலோ அறியாமையினாலோ, மாலை நேரத்தில் கல்லெறிந்தும் பலியிடுவதற்கு முன்பு தலையை மழிப்பதும்.

ஹதீஸ் 1734. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் பலியிடுவது, தலையை மழிப்பது, கல்லெறிவது ஆகியவற்றை முற்படுத்தியோ பிற்படுத்தியோ நிறைவேற்றுவது சம்பந்தமாக வினவப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை!"எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1735. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மினாவில் இருந்தபோது துல்ஹஜ் 10ஆம் நாள் பல கேள்விகள் கேட்கப்பட்டதற்கு'குற்றமில்லை!"என்றே பதில் கூறினார்கள். ஒருவர்'நான் பலியிடுவதற்கு முன் தலையை மழித்து விட்டேன்!"என்று கூறியபோது, நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை! (இப்போது) பலியிடுவீராக!' எனக் கூறினார்கள். பிறகு அவர்'நான் மாலை நேரமான பின்பே கல்லெறிந்தேன்!"என்றதும் நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை!"என்றார்கள்.

## ஜம்ராவில், வாகனத்தின் மீது அமர்ந்து கொண்டிருக்கும்போது (மக்களுக்குத்) தீர்ப்பளித்தல்.

ஹதீஸ் 1736. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் விடைபெறும் ஹஜ்ஜின்போது (தம் வாகனத்தின் மீது) அமர்ந்திருந்தார்கள். அப்போது மக்கள் அவர்களிடம் (சில சந்தேகங்களை) கேட்கத் தொடங்கினர். ஒருவர்,'நான் பலியிடுவதற்கு முன்பாக, உணராமல் தலையை மழித்து விட்டேன்!"என்றார். அதற்கு நபி(ஸல்)

அவர்கள்'குற்றமில்லை! (இப்போது பலிப்பிராணியை) அறுப்பீராக!"என்று கூறினார்கள். பிறகு இன்னொருவர் வந்து'கல்லெறிவதற்கு முன்பு அறியாமையினால் அறுத்து பலியிட்டுவிட்டேன்' எனக் கூறியதும் அவர்கள்'குற்றமில்லை! இப்போது கல்லெறிவீராக!"என்று கூறினார்கள். அன்றைய தினம் (பிற்படுத்திச் செய்யப்பட வேண்டிய) சில வழிபாடுகள் முன்னதாகச் செய்யப்பட்டுவிட்டதாகவும் (முன்னதாகச் செய்யப்படவேண்டிய) சில வழிபாடுகள் பிற்படுத்திச் செய்யப்பட்டுவிட்டதாகவும் கேட்கப்பட்ட அனைத்திற்கும் நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை! (விடுபட்டத்தைச்) செய்வீராக!"என்றே கூறினார்கள்.

ஹதீஸ் 1737 ~ ஹதீஸ் 1738 அப்துல்லாஹ் இப்னு அம்ர்ப்னுல் ஆஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹஜ் பத்தாம் நாள் உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது வந்தேன். அப்போது ஒருவர் எழுந்து,'நான் இதற்கு முன் இது என நினைத்தேன்!"என்றார். இன்னொருவர் எழுந்து,'நான் இதற்கு முன் இது என நினைத்தேன்! பலியிட்டு விட்டேன்!"என இது போன்றவற்றைக் கூறலானார். அவ்வனைத்திற்குமே நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை! (விடுபட்டதைச்) செய்யுங்கள்!"என்றே கூறினார்கள். அன்றைய தினம் வினவப்பட்ட எல்லாவற்றிற்குமே அவர்கள்'குற்றமில்லை! (விடுபட்டதைச்) செய்யுங்கள்!"என்றே கூறினார்கள்.

## மினாவில் தங்கும் நாள்களில் உரை நிகழ்த்துதல்.

ஹதீஸ் 1739 ~ ஹதீஸ் 1740. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்ஹஜ் 10-ஆம் நாள் உரை நிகழ்த்தினார்கள். அப்போது,'மக்களே! இது எந்த நாள்?' எனக் கேட்டாக்ள். மக்கள்'புனிதமிக்க தினம்' என்றனர். பிறகு நபி(ஸல்) அவர்கள்'இது எந்த நகரம்?' எனக் கேட்டதும் மக்கள்'புனிதமிக்க நகரம்' என்றனர். பிறகு அவர்கள்'இது எந்த மாதம்?' எனக் கேட்டதும் மக்கள்'புனிதமிக்க மாதம்!"என்றனர். பிறகு நபி(ஸல்) அவர்கள்,'நிச்சயமாக உங்களுடைய இந்த மாதத்தில், உங்களுடைய இந்த நாள் எவ்வாறு புனிதம் பெற்று விளங்குகிறதோ அவ்வாறே உங்களின் உயிர்களும் உடைமைகளும் கண்ணியமும் உங்களுக்குப் புனிதமானவையாகும்!"எனப் பல முறை கூறினார்கள். பிறகு தலையை உயர்த்தி,'இறைவா! நான் (உன் மார்க்கத்தை) சேர்ப்பித்து விட்டேனா? இறைவா! நான் (உன் மார்க்கத்தை) சேர்ப்பித்து விட்டேனா?' என்றும் கூறினார்கள்.

என்னுடைய உயிர் யாருடைய கைவசம் உள்ளதோ அ(வ்விறை)வன் மீது ஆணையாக! இது அவர்கள் தங்களின் சமுதாயத்திற்கு வழங்கிய இறுதி உபதேசமாகும்.

பின்னர்'இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு அறிவித்து விடுங்கள்! என்னுடைய மரணத்திற்குப் பின் நீங்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டு நிராகரிப்பவர்களாம் விட வேண்டாம்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில்'நபி(ஸல்) அவர்கள் அரஃபாவில் உரை நிகழ்த்த கேட்டேன்'' என்ற வாக்கியம் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 1741. அபூ பக்ரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நஹ்ருடைய (துல்ஹஜ் 10-ஆம்) நாளில் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது,'இது எந்த நாள் என்பதை நீங்கள் அறிவீர்களா?' எனக் கேட்டார்கள். நாங்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்!"என்றோம். அந்நாளுக்கு

அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது (பலியிடுவதற்குரிய) நஹ்ருடைய நாளல்லவா?' என்றனர். நாங்கள்'ஆம்!"என்றோம். பிறகு'இது எந்த மாதம்?' என அவர்கள் கேட்டதும் நாங்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்!"என்றோம். அப்போதும் அம்மாதத்துக்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்தார்கள். பிறகு, 'இது துல்ஹஜ் மாதம் அல்லவா?' என அவர்கள் கேட்க, நாங்கள்'ஆம்!"என்றோம். பிறகு'இது எந்த நகரம்?' எனக் கேட்டார்கள். அதற்கு நாங்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்!"என்றோம். அப்போதும் அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்தார்கள். பிறகு'இது புனிதமிக்க நகரமல்லவா?' எனக் கேட்க, நாங்கள்'ஆம்!"என்றோம். பிறகு'உங்களுடைய (புனிதமான) இந்த நகரத்தில் உங்களுடைய (புனிதமான) இந்த மாதத்தில் இன்றைய தினம் எவ்வளவு புனிதமானதோ அந்த அளவுக்கு உங்கள் உயிர்களும் உங்கள் உடைமைகளும் உங்கள் இரட்சகனைச் சந்திக்கும் நாள்வரை புனிதமானவையாகும்!"என்று கூறிவிட்டு, 'நான் உங்களிடம் (இறைச் செய்திகள் அனைத்தையும்) சேர்ப்பித்து விட்டேனா?' எனக் கேட்டார்கள். மக்கள்'ஆம்!"என்றனர். பிறகு அவர்கள்'இறைவா! இதற்கு நீயே சாட்சியாயிரு! இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு அறிவித்து விடுங்கள்! ஏனெனில், செவியேற்பவரை விட அறிவிக்கப்படுபவர் (இந்த இறைச் செய்தியை) நன்கு புரிந்து கொள்பவராயிருக்கலாம் எனக்குப் பின்னால் நீங்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டு நிராகரிப்பவர்களாம் விடவேண்டாம்!"எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1742. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மினாவில் இருந்தபோது, 'இது எந்த நாள் என்பதை நீங்கள் அறிவீர்களா?' எனக் கேட்டார்கள். அதற்கு மக்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்!"என்றனர். உடனே அவர்கள்'இது புனிதமிக்க தினமாகும்! இது எந்த நகரம் என்பதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்க மக்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்!"என்றனர். உடனே அவர்கள்'(இது) புனித மிக்க நகரமாகும்! இது எந்த மாதம் என்பதை அறிவீர்களா?' என்றதும் மக்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்!"என்றனர். பிறகு நபி(ஸல்) அவர்கள்'(இது) புனிதமிக்க மாதமாகும்!' எனக் கூறிவிட்டு, 'உங்களுடைய இந்த (புனித) நகரத்தில் உங்களுடைய இந்த (புனித) மாதத்தில் உங்களுடைய இந்த நாள் எவ்வளவு புனிதமானதோ அது போன்றே, அல்லாஹ் உங்கள் உயிர்களையும் உடைமைகளையும் உங்கள் மானம் மரியாதைகளையும் புனிதமாக்கியுள்ளான்!"எனக் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்'நபி(ஸல்) அவர்கள், தாம் ஹஜ் செய்தபோது நஹ்ருடைய நாளில் ஜம்ராக்களுக்கிடையே நின்று கொண்டு, 'இது மாபெரும் ஹஜ்ஜின் தினமாகும்!' எனக் கூறினார்கள். மேலும், 'இறைவா! நீயே சாட்சி!"என்றும் கூறி மக்களிடம் இறுதி விடை பெற்றார்கள். எனவே, மக்களும்'இது நபி(ஸல்) அவர்கள் (நம்மிடம்) விடை பெற்று (உலகைவிட்டு)ச் செல்கிற ஹஜ்ஜாகும்!"எனப் பேசிக் கொண்டார்கள்."

## தண்ணீர் வழங்குபவர்களும் மற்றவர்களும் மினாவில் தங்கவேண்டிய இரவுகளில் மக்காவில் தங்கலாமா?

ஹதீஸ் 1743, ஹதீஸ் 1744 ~ ஹதீஸ் 1745. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மக்காவில் (ஹாஜிகளுக்கு) தண்ணீர் வழங்க வேண்டியிருப்பதால் மினாவில் தங்க வேண்டிய இரவுகளில் மக்காவில் தங்குவதற்கு அப்பாஸ்(ரலி), அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார்கள். அவருக்கு நபி(ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.

## கல்லெறிதல்

நபி(ஸல்) அவர்கள் நஹ்ருடைய நாளில் முற்பகல் நேரத்தில் கல்லெறிந்தார்கள். மறு நாள்களில் சூரியன் உச்சி சாய்ந்ததும் கல்லெறிந்தார்கள் என ஜாபிர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1746. வபரா(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

"நான் எப்போது கல்லெறிவது?' என இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்'உம்முடைய தலைவர் எறியும்போது நீரும் எறியும்!"என்றார்கள். நான் மீண்டும் அதே கேள்வி கேட்டபோது,'நாங்கள் சூரியன் உச்சி சாயும் வரை காத்திருப்போம் பிறகு கல்எறிவோம்!"எனக் கூறினார்கள்.

## பத்னுல் வாதி என்னுமிடத்திலிருந்து கல்லெறிதல்.

ஹதீஸ் 1747. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), பத்னுல்வாதி என்னுமிடத்திலிருந்து கல்லெறிந்தார்கள். அப்போது நான்,'அப்துர் ரஹ்மானின் தந்தையே! மக்கள் மேற்பரப்பில் இருந்தல்லவா கல்லெறிகின்றனர்?' எனக் கேட்டேன். அதற்கவர்கள்,'எவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவனும் இல்லையோ அந்த அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்பகரா அத்தியாயம் யாருக்கு அருளப்பட்டதோ அந்த நபி(ஸல்) அவர்கள் (கல் எறிந்த வண்ணம்) நின்றிருந்த இடம் இதுதான்!"எனக் கூறினார்கள்.

## (ஜம்ராக்களின் மீது கல்லெறியும் போது) ஏழு சிறு கற்களை எறிய வேண்டும்.

நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு எறிந்ததாக இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1748. அப்துர் ரஹ்மான் இப்னு யஜீத்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) ஜம்ரத்துல் அகபாவுக்கு வந்ததும், தம் இடப் பக்கத்தில் இறையில்லம் கஅபாவும் வலப் பக்கத்தில் மினாவும் இருக்கும் படி நின்று கொண்டு, ஏழு சிறு கற்களை எறிந்தார். பிறகு'இவ்வாறுதான், பகரா அத்தியாயம் யாருக்கு அருளப்பட்டதோ அந்த நபி(ஸல்) அவர்களும் எறிந்தார்கள்!"என்று கூறினார்கள்.

## ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறியும்போது இறையில்லம் கஅபா, தம் இடப்பக்கமிருக்கும்படி நிற்பது.

ஹதீஸ் 1749. அப்துர் ரஹ்மான் இப்னு யஜீத்(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

நான் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களுடன் ஹஜ் செய்தேன் அப்போது அவர்கள் ஜம்ரத்துல் அகபாவில் ஏழு சிறு கற்களை எறிந்தார்கள். அவர்கள் தங்களின் இடப்பக்கத்தில் கஅபாவும் வலப்பக்கத்தில் மினாவும் இருக்குமாறு நின்றார்கள். பிறகு அவர்கள்'இதுவே பகரா அத்தியாயம் யாருக்கு அருளப்பட்டதோ அவர்கள் எறிந்த இடமாகும்!"என்று கூறினார்கள்.

## ஒவ்வொரு கல்லையும் எறியும்போது தக்பீர் கூறவேண்டும்.

இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் செய்ததாக இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1750. அஃமஷ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜாஜ் மிம்பர் மீது ஏறி,'பசுமாடு பற்றிக் கூறப்படுகிற அத்தியாயம். இம்ரானின் சந்ததிகள் பற்றிக் கூறப்படுகிற அத்தியாயம். பெண்கள் பற்றிக் கூறப்படும் அத்தியாயம்'' என்று கூறியதை நான் செவியேற்றிருக்கிறேன். இதுபற்றி நான் இப்ராஹீமிடம் கூறியபோது அவர். இதுபற்றி அப்துர் ரஹ்மான் இப்னு யஜீத் பின்வருமாறு கூறினார்கள் என குறிப்பிட்டார்.

"நான் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களுடன் இருக்கும்போது, இப்னு மஸ்வூத்(ரலி) ஜம்ரத்துல் அகபாவில் ஏழு சிறு கற்களை எறிந்தார்கள். அவர்கள் தங்களின் இடப்பக்கத்தில் கஅபாவும் வலப்பக்கத்தில் மினாவும் இருக்குமாறு நின்றார்கள். பிறகு அவர்கள்'இதுவே பகரா அத்தியாயம் யாருக்கு அருளப்பட்டதோ அவர்கள் எறிந்த இடமாகும்!"என்று கூறினார்கள்.

## ஒவ்வொரு கல்லையும் எறியும்போது தக்பீர் கூறவேண்டும்.

இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் செய்ததாக இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1750. அஃமஷ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ்ஜாஜ் மிம்பர் மீது ஏறி,'பசுமாடு பற்றிக் கூறப்படுகிற அத்தியாயம். இம்ரானின் சந்ததிகள் பற்றிக் கூறப்படுகிற அத்தியாயம், பெண்கள் பற்றிக் கூறப்படும் அத்தியாயம்'' என்று கூறியதை நான் செவியேற்றிருக்கிறேன். இதுபற்றி நான் இப்ராஹீமிடம் கூறியபோது அவர், இதுபற்றி அப்துர் ரஹ்மான் இப்னு யஜீத் பின்வருமாறு கூறினார்கள் என குறிப்பிட்டார்.

"நான் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களுடன் இருக்கும்போது, இப்னு மஸ்வூத்(ரலி) ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறியும்போது பத்னுல்வாதி என்னும் இடத்தை அடைந்து, அதிலுள்ள மரத்திற்கு நேராக வந்ததும் அதன் குறுக்கே நின்று கொண்டு, ஏழுகற்களை (ஒவ்வொன்றாக) எறிந்தார்கள். ஒவ்வொரு கல்லை எறியும்போதும் தக்பீர் கூறினார்கள்.'பிறகு அல்லாஹ்வின் மீது ஆணையாக! யாருக்கு அல்பகரா அத்தியாயம் அருளப்பட்டதோ அந்த நபி(ஸல்) அவர்கள் இந்த இடத்தில்தான் (கல்லெறிந்தபடி) நின்றார்கள்!"என இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

## ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறிந்த பின்பு அங்கு நிற்காமல் வந்து விடுவது.

இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் செய்ததாக (அதாவது, நபி(ஸல்) அவர்கள் கடைசி ஜம்ராவில் கல்லெறிந்த பின்பு அங்கு நிற்காமல் திரும்பிவிட்டதாக) இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## இரண்டு ஜம்ராக்களில் கல்லெறிந்த பின்பு கிப்லாவை முன்னோக்கி, சமதளமான தரையில் நிற்பது.

ஹதீஸ் 1751. ஸாலிம்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) முதல் ஜம்ராவில் ஏழுகற்களை எறிவார்கள். ஒவ்வொன்றையும் எறிந்ததும் தக்பீர் கூறுவார்கள். பிறகு சமதளமான தரைப் பகுதிக்கு வந்து கிப்லாவை முன்னோக்கி நிற்பார்கள். தம் கைகளை உயர்த்தி, நீண்ட நேரம் நின்று பிரார்த்திப்பார்கள். பின்பு, இரண்டாவது ஜம்ராவில் கல்லெறிவார்கள். பிறகு இடப்பக்கமாக நகர்ந்து, சமதளமான இடத்திற்குப் போய், கிப்லாவை முன்னோக்கி, நீண்ட நேரம் நின்று, கைகளை உயர்த்தி பிரார்த்திப்பார்கள். பின்பு பத்னுல் வாதி என்னுமிடத்திலிருந்து கடைசி ஜம்ராவில்

கல்லெறிவார்கள் அங்கு நிற்கமாட்டார்கள். பிறகு திரும்பி வந்து,'இவ்வாறுதான் நபி(ஸல்) அவர்கள் செய்ய பார்த்திருக்கிறேன்!"எனக் கூறுவார்கள்.

## முதல் ஜம்ராவிலும் இரண்டாவது ஜம்ராவிலும் கைகளை உயர்த்துதல்.

ஹதீஸ் 1752. ஸாலிம்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) முதல் ஜம்ராவில் ஏழு கற்களை எறிவார்கள்.

ஒவ்வொன்றையும் எறிந்ததும் தக்பீர் கூறுவார்கள். பிறகு சமதளமான தரைப் பகுதிக்கு வந்து கிப்லாவை முன்னோக்கிக் கைகளை உயர்த்தி, நீண்ட நேரம் நின்று பிரார்த்திப்பார்கள். பின்பு இரண்டாவது ஜம்ராவில் அவ்வாறே கல்லெறிவார்கள். பிறகு இடப்பக்கமாக நகர்ந்து, சமதளமான இடத்திற்குப் போய் கிப்லாவை முன்னோக்கி மிக நீண்ட நேரம் நின்று கொண்டு கைகளை உயர்த்தி பிரார்த்திப்பார்கள். பின்பு பத்னுல் வாதி என்னுமிடத்திலிருந்து கடைசி ஜம்ராவில் கல்லெறிவார்கள். அங்கு நிற்க மாட்டார்கள். பிறகு திரும்பி வந்து,'இவ்வாறுதான் நபி(ஸல்) அவர்கள் செய்ய பார்த்திருக்கிறேன்!"எனக் கூறுவார்கள்.

## முதலிரண்டு ஜம்ராக்களிலும் பிரார்த்தித்தல்

ஹதீஸ் 1753. ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மினா பள்ளிவாசலை அடுத்திருக்கும் (முதல்) ஜம்ராவில் கல்லெறியும்போது ஏழு கற்களை எறிவார்கள். ஒவ்வொரு கல்லை எறியும் போதும் தக்பீர் கூறுவார்கள். பிறகு, சற்று முன்னால் சென்று, கிப்லாவை முன்னோக்கி, நீண்ட நேரம் நின்று கைகளை உயர்த்தி பிரார்த்திப்பார்கள். பிறகு இரண்டாவது ஜம்ராவுக்கு வந்து அங்கும் ஏழு கற்களை எறிவார்கள். ஒவ்வொரு கல்லை எறியும் போதும் தக்பீர் கூறுவார்கள். பிறகு இடப்பக்கமாக, பள்ளத்தாக்கிற்கு அடுத்துள்ள பகுதிக்கு வந்து, கிப்லாவை முன்னோக்கி நின்று கைகளை உயர்த்தி பிரார்த்திப்பார்கள். பிறகு ஜம்ரத்துல் அகபாவுக்கு வந்து ஏழு சிறுகற்களை எறிவார்கள். ஒவ்வொரு கல்லை எறியும்போது தக்பீர் கூறுவார்கள். பின்பு அங்கிருந்து திரும்பி விடுவார்கள். அங்கு நிற்க மாட்டார்கள்.

ஸாலிம்(ரஹ்) அவர்கள், நபி(ஸல்) அவர்களின் இச்செயலை, தம் தந்தை இப்னு உமர்(ரலி) வழியாக அறிவித்ததை செவியுற்றுள்ளேன். இப்னு உமர்(ரலி)யும் இவ்வாறே செய்பவராக இருந்தார்.

## கல்லெறிந்த பின் நறுமணம் பூசிக் கொள்வதும் தவா∴புஸ் ஸியாரத்திற்கு முன்பு தலை மழித்துக் கொள்வதும்.

ஹதீஸ் 1754. காஸிம்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஆயிஷா(ரலி)'நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிய நாடிய போதும், தவா∴புஸ் ஸியாரத் செய்யும் முன்னர், (ஜம்ராக்களில் கல்லெறிந்துவிட்டு, தலை மழித்துக் கொண்டு) இஹ்ராமிலிருந்து அவர்கள் விடுபட்டு விட்டிருந்த வேளையிலும், நான் அவர்களுக்கு என்னுடைய இவ்விரு கைகளால் நறுமணம் பூசியிருக்கிறேன்!' எனக் கூறித் தம் இரண்டு கைகளையும் விரித்துக் காட்டினார்கள்.

## தவா∴புல் வதா (விடை பெறும் வலம்)

ஹதீஸ் 1755. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“இறையில்லம் கஅபாவை வலம்வருவதை ஹஜ்ஜின் கடைசி வழிபாடாக ஆக்கிக் கொள்ள வேண்டும்’ என மக்கள் கட்டளையிடப்பட்டுள்ளனர். ஆயினும் மாதவிடாய்ப் பெண்களுக்கு மட்டும் அதில் சலுகை வழங்கப்பட்டுள்ளது. (கடைசி தவா∴பான தவா∴புல் வதாவை மட்டும்விட்டுவிட அனுமதி வழங்கப்பட்டுள்ளது.)

ஹதீஸ் 1756. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர், அஸர், மக்ரிப், இஷா ஆகிய தொழுகைகளைத் தொழுதுவிட்டு முஹஸ்ஸப் என்னும் (மக்காவுக்கும் மினாவுக்குமிடையேயுள்ள) ஓரிடத்தில் உறங்கினார்கள். பின்பு வாகனத்தில் ஏறி இறையில்லம் கஅபாவிற்குச் சென்று அங்கு வலம்வந்தார்கள்.

## தவா∴புஸ் ஸியாரத் செய்த பின்பு ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால்...?

ஹதீஸ் 1757. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் மனைவி ஸ∴பிய்யா பின்த் ஹுயை(ரலி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது பற்றி நான் நபி(ஸல்) அவர்களிடம் கூறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்’அவர் நம்மை (மக்காவிலிருந்து செல்லவிடாமல்) தடுத்துவிட்டாரா?’ எனக் கேட்டார்கள். அதற்கு தோழர்கள்’அவர் தவா∴புஸ் ஸியாரத் செய்துவிட்டார்கள்!”என்று கூற, நபி(ஸல்) அவர்கள்’அப்படியானால் பரவாயில்லை! (நாம் போகலாம்!)‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 1758 ˚ ஹதீஸ் 1759 இக்ரிமா(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

மதீனாவாசிகள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,‘ஒரு பெண் வலம்வந்த பிறகு அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் என்ன செய்வது?’ எனக் கேட்டனர். அதற்கவர்கள்,‘அவள் (தவா∴புல்வதா செய்யாமல்) போய் விட வேண்டியது தான்!”என்றார்கள். அப்போது அவர்கள்,‘உம்முடைய சொல்லை எடுத்துக் கொண்டு ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களின் கூற்றைவிட்டுவிட நாங்கள் தயாரில்லை!”என்றனர். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி)’அப்படியாயின் நீங்கள் மதீனா சென்றால் அங்கு(எ்ளோரிடம்) கேட்டுப் பாருங்கள்!”என்றார்.

அவர்கள் மதீனா சென்றதும் இது பற்றிக் கேட்டார்கள். அவர்களால் கேட்கப்பட்டவர்களில் உம்மு ஸுலைம்(ரலி) அவர்களும் ஒருவராவார்கள். அவர்கள் ஸ∴பிய்யா(ரலி) அவர்களின் நிகழ்ச்சியைக் கூறினார்கள்.

ஹதீஸ் 1760. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மாதவிடாய் ஏற்பட்ட பெண் தவா∴புஸ் ஸியாரத் செய்தால் (மக்காவைவிட்டுச்) சென்று விடுவதற்கு அவளுக்கு சலுகை வழங்கப்பட்டிருந்தது.

ஹதீஸ் 1761. தாவூஸ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி)’மாதவிடாய் ஏற்பட்ட பெண் மக்காவைவிட்டுச் செல்லக்கூடாது!”என்று ஆரம்பத்தில் கூறிக் கொண்டிருந்தார்கள். பிறகு அவர்களே,‘நபி(ஸல்) அவர்கள் மாதவிடாய் ஏற்பட்ட பெண்களுக்கு சலுகை வழங்கியுள்ளார்கள்!”எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1762. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்றும் எண்ணத்தில் புறப்பட்டோம். நபி(ஸல்) அவர்கள் (மக்காவுக்கு) வந்ததும் இறையில்லம் கஅபாவையும் ஸஃபா, மர்வாவையும் வலம்வந்தார்கள். ஆனால், இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை. அவர்கள் பலிப்பிராணியைக் கொண்டு வந்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்களுடன் இருந்த அவர்களின் மனைவிமார்கள், அவர்களின் தோழர்கள் அனைவரும் வலம்வந்தார்கள். பிறகு அவர்களில் பலிப்பிராணி கொண்டு வராதவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டனர். அப்போது எனக்க மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நாங்கள் ஹஜ்ஜின் எல்லா வழிபாடுகளையும் செய்தோம்.

நபி(ஸல்) அவர்கள் முஹஸ்ஸப் என்னுமிடத்தில் தங்கியிருந்த வீடு திரும்ப வேண்டிய இரவில் நான்,'நபி அவர்களே! என்னைத் தவிர, உங்களுடைய மற்ற எல்லாத் தோழர்களும் ஹஜ்ஜையும் உம்ராவையும் முடித்துவிட்டு (ஊர்) திரும்புகின்றனர்!"என்றேன். அதற்கவர்கள்,'நாம் மக்காவுக்கு வந்து சேர்ந்த இரவில் நீ வலம் வரவில்லைதானே!' எனக் கேட்டார்கள். நான்'இல்லை!"என்றேன். நபி(ஸல்) அவர்கள்'நீ உன்னுடைய சகோதரருடன் தன்யீம் என்ற இடத்திற்குப் போய், உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து கொள்! மேலும் இன்னின்ன இடங்களில் என்னைச் சந்தித்துக் கொள்!' எனக் கூறினார்கள். நான் (என் சகோதரர்) அப்துர் ரஹ்மானுடன் தன்யீம் சென்று உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தேன். அப்போது, ஸஃபிய்யா பின்த் ஹுயை(ரலி) அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. நபி(ஸல்) அவர்கள்,'காரியத்தைக் கெடுத்துவிட்டாயே! நீ எங்களை (மக்காவிலிருந்து செல்ல விடாமல்) தடுத்துவிட்டாய்! வலம்வந்துவிட்டாயல்லவா?' எனக் கேட்டார்கள். அதற்கவர்கள்'ஆம்!"என்றதும்,'அப்படியாயின் பரவாயில்லை புறப்படு!"என்றார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் மக்காவாசிகளுடன் மேலே ஏறும்போது அவர்களை சந்தித்தேன் அப்போது நான் கீழே இறங்கிக் கொண்டிருந்தேன். அல்லது, நான் மேலே ஏறிக் கொண்டிருந்தேன் அவர்கள் கீழே இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

## மக்காவிலிருந்து புறப்படும் நாளில்'அப்தஹ்' என்னுமிடத்தில் அஸர் தொழல்.

ஹதீஸ் 1763. அப்துல் அ?ஸ் இப்னு ருஃபை(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் துல்ஹஜ் 8ஆம் நாள் எங்கு லுஹர் தொழுதார்கள்?' என நான் அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்'மினாவில்!"என்று பதிலளித்தார்கள். அடுத்து நான்,'(மக்காவிலிருந்து) புறப்படும் (துல்ஹஜ் 12 அல்லது 13 வது) நாளில் நபி(ஸல்) அவர்கள் எங்கே அஸர் தொழுதார்கள்?' என்று கேட்டதற்கு.'அப்தஹில்!"என்று கூறிவிட்டு,'உன்னுடைய தலைவர்கள் செய்வது போல் நீயும் செய்து கொள்!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1764. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் லுஹர், அஸர், மஃரிபு, இஷா ஆகிய தொழுகைகளை நிறைவேற்றியதும் முஹஸ்ஸப் என்னுமிடத்தில் சற்று உறங்கிவிட்டு, பிறகு வாகனத்தில் ஏறி, இறையில்லம் கஅபாவை வலம்வந்தார்கள்.

## முஹஸ்ஸபில் தங்குதல்.

ஹதீஸ் 1765. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"(முஹஸ்ஸபில் தங்குவது ஹஜ்ஜின் வழிபாடுகளில் ஒன்றல்ல) பயணம் எளிதாவதற்காக நபி(ஸல்) அவர்கள் தங்கி ஓய்வெடுத்த ஓர் இடமே முஹஸ்ஸப் ஆகும்!"

ஹதீஸ் 1766. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“முஹஸ்ஸபில் தங்குவது ஹஜ்ஜின் வழிபாடுகளில் ஒன்றல்ல அது நபி(ஸல்) அவர்கள் தங்கிய ஓரிடம் அவ்வளவுதான்!“

## மக்காவிற்குள் நுழைவதற்கு முன் ∴தூத்துவாவில் தங்குவதும் மக்காவைவிட்டுத் திரும்பும்போது துல்ஹுலை∴பாவிலுள்ள பத்ஹாவில் தங்குவதும்

ஹதீஸ் 1767. நா∴பிவு(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) ∴தூத்துவாவிலுள்ள இரண்டு கணவாய்களுக்கிடையே இரவில் தங்குவார்கள். பிறகு மக்காவின் மேற்பகுதியிலுள்ள கணவாய் வழியாக மக்காவிற்குள் நுழைவார்கள். அவர்கள் ஹஜ்ஜுக்காகவோ உம்ராவுக்காகவோ மக்காவிற்கு வந்ததும் மஸ்ஜிதுல் ஹராமின் வாசலருகேதான் ஒட்டகத்தைப் படுக்க வைப்பார்கள். பிறகு, மஸ்ஜிதில் நுழைந்து, ஹஜருல் அஸ்வதுக்கு வந்து, அங்கிருந்து தவா∴பை ஆரம்பிப்பார்கள். அந்த ஏழு சுற்றுக்களில் மூன்றில் ஓடியும் நான்கில் நடந்தும் வலம்வருவார்கள். பிறகு அங்கிருந்து திரும்பி இரண்டு ரக்அத்கள் தொழுவார்கள். பிறகு, தம் கூடாரத்திற்குத் திரும்புவதற்கு முன்பாக ஸ∴பா மர்வாவுக்கிடையே ஓடுவார்கள்.

மேலும், அவர்கள் ஹஜ்ஜையோ உம்ராவையோ முடித்துவிட்டு (மதீனாவுக்குத்) திரும்பும்போது, நபி(ஸல்) அவர்கள் தம் ஒட்டகத்தை உட்கார வைத்துத் தங்கிய, துல்ஹு லை∴பாவிலுள்ள பத்ஹா என்னுமிடத்தில் வாகனத்தை உட்கார வைத்துத் தங்குவார்கள்.

ஹதீஸ் 1768. காலித் இப்னு ஹாரிஸ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்களிடம் முஹஸ்ஸப் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கவர், 'நபி(ஸல்) அவர்கள், உமர்(ரலி), இப்னு உமர்(ரலி) ஆகியோர் அந்த இடத்தில் தங்கியிருக்கிறார்கள்!”என நா∴பிவு(ரஹ்) அறிவித்தாக எங்களிடம் கூறினார்.

“இப்னு உமர்(ரலி) முஹஸ்ஸபில் லுஹர், அஸர் தொழுகைகளைத் தொழுவது வழக்கம்!”என நா∴பிவு(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

“மக்ரிபு தொழுகையையும் இப்னு உமர்(ரலி) அங்கு தொழுவார்கள்' என்றும் நா∴பிஉ(ரஹ்) அவர்கள் கூறினார்கள் என்று நான் நினைக்கிறேன்‘' என்றும் உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இஷாவையும் இப்னு உமர்(ரலி) அங்கு தொழுதார்கள் (என நா∴பிஉ(ரஹ்), உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்களிடம் கூறினார்கள்) என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

“(இஷாவைத் தொழுத) பிறகு, இப்னு உமர்(ரலி) சிறிது நேரம் (அங்கேயே) உறங்கி விடுவார்கள் பிறகு, 'நபி(ஸல்) அவர்கள் இப்படிச் செய்தார்கள்' என்றும் கூறுவார்கள்‘' என்றும் நா∴பிவு(ரஹ்) கூறினார்கள் என, உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்கள் சொன்னார்கள்.

## மக்காவிலிருந்து திரும்பும்போது ∴தூத்துவாவில் தங்குதல்.

ஹதீஸ் 1769. நா∴பிவு(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர்(ரலி) (மக்காவுக்கு) வரும்போது ∴தூத்துவாவில் இரவு தங்குவார், விடிந்ததும் (மக்காவுக்குள்) பிரவேசிப்பார். (மக்காவிலிருந்து) திரும்பும் போதும் ∴தூத்துவாவில்

விடியும்வரை தங்குவார். மேலும்,'இப்படித்தான் நபி(ஸல்) அவர்கள் செய்வார்கள்' என்றும் கூறுவார்.

## ஹஜ்ஜுக் காலத்தில் வியாபாரம் செய்தலும் அறியாமைக்கால கடைத் தெருக்களில் வாங்குதலும்.

ஹதீஸ் 1770. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

துல்மஜாஸ், உக்காழ் ஆகியவை அறியாமைக்கால வியாபாரத் தலங்களாகும். அவ்வியாபாரத்தலங்களை வெறுக்கலானார்கள். அப்போது'(ஹஜ்ஜின் போது) உங்களுடைய இறைவனுடைய அருளை நாடுதல் (அதாவது வியாபாரம் போன்றவற்றின் மூலமாக நேர்மையான பலன்களை அடைதல்) உங்களின் மீது குற்றமாகாது'' என்ற02:198வது வசனம் அருளப்பட்டது. இது ஹஜ்ஜுக் காலங்களில் வியாபாரம் செய்வதைக் குறிக்கிறது.

## முஹஸ்ஸபிலிருந்து இரவின் கடைசி நேரத்தில் புறப்படுதல்.

ஹதீஸ் 1771. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹஜ் முடித்துப் புறப்படும் நாளில் ஸஃபிய்யா(ரலி)வுக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது. அப்போது அவர்'நான் உங்களை (புறப்படுவதைவிட்டும்) தடுத்துவிட்டேன் எனக் கருதுகிறேன்' என்றார். உடனே நபி(ஸல்) அவர்கள்'காரியத்தைக் கெடுத்து விட்டீரே!"என்று கூறிவிட்டு'இவர் நஹ்ருடைய (10-ஆம்) நாளில் வலம்வந்துவிட்டாரா?' எனக் கேட்டார்கள். அதற்கு'ஆம்' எனச் சொல்லப்பட்டதும்'அப்படியாயின் புறப்படு!"என்றார்கள்.

ஹதீஸ் 1772. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்குப் புறப்பட்டோம். ஹஜ்ஜை மட்டுமே எண்ணத்தில் கொண்டு (மக்காவிற்கு) வந்ததும் நபி(ஸல்) அவர்கள் எங்களை இஹ்ராமிலிருந்து விடுபடுமாறு ஏவினார்கள். நாங்கள் ஊர் திரும்பும் (நஃபருடைய) நாளின் இரவில் ஸஃபிய்யா பின்த் ஹுயை(ரலி)வுக்கு மாதவிடாய் வந்துவிட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,'காரியத்தைக் கெடுத்து விட்டீரே!"என்று கூறிவிட்டு'இவர் நம்மைத் தடுத்தேவிட்டாரே'' என்றார்கள். பிறகு அவர்கள்,'நஹ்ருடைய (10-ஆம்) நாளில், நீ வலம்வந்தாயா?' எனக் கேட்டதும் அவர்'ஆம்' என்றார். '(அப்படியாயின்) நீ புறப்படு'' என்றார்கள்.

அப்போது நான் நபி அவர்களே! நான் இன்னும் இஹ்ராமிலிருந்து விடுபடவில்லையே என்றேன். அதற்கவர்கள்,'தன்யீம் என்ற இடத்திற்கு போய் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து கொள்'' என்றார்கள்.

--நான் என் சகோதரருடன் புறப்பட்டு (தன்யீமுக்கு)ச் சென்றேன்.

பிறகு நாங்கள் நபி(ஸல்) அவர்களை இரவின் கடைசி நேரத்தில் - போய்க் கொண்டிருக்கும் நிலையில் சந்தித்தோம். அப்போதவர்கள்'இன்னின்ன இடங்களில் நீ என்னைச் சந்திக்க வேண்டும்'' என்றனர்.

# அத்தியாயம் 26 உம்ரா

## உம்ராவின் அவசியமும் அதன் சிறப்பும்.

அனைவர் மீதும் ஹஜ்ஜும் உம்ராவும் கடமையாகும் என இப்னு உமர்(ரலி) கூறினார்.

அல்லாஹ் குர்ஆனில்,'அல்லாஹ்வுக்காக ஹஜ்ஜையும் உம்ராவையும் பூரணமாக நிறைவேற்றுங்கள்'' (திருக்குர்ஆன் 02:196) என்று ஹஜ்ஜையும் உம்ராவையும் இணைத்தே கூறுகிறான் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1773. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஓர் உம்ரா செய்வது மறு உம்ரா வரையிலுள்ள பாவங்களின் பரிகாரமாகும். ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹஜ்ஜுக்கு, சொர்க்கத்தைத் தவிர வேறு கூலியில்லை."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஹஜ்ஜுக்கு முன்னால் உம்ராச் செய்தல்.

ஹதீஸ் 1774. இப்னு ஜுரைஜ் அவர்கள் கூறினார்கள்.

இக்ரிமா இப்னு காலித் ஹஜ்ஜுக்கு முன் உம்ரா செய்வது பற்றி இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டதற்குவர்'குற்றமில்லை' என்றார்.

மேலும்,'நபி(ஸல்) அவர்கள் ஹஜ் செய்வதற்கு முன் உம்ராச் செய்தார்கள்' என்று இப்னு உமர்(ரலி) கூறினார் என்றும் இக்ரிமா கூறுகிறார்.

## நபி(ஸல்) அவர்கள் செய்த உம்ராக்கள் எத்தனை?

ஹதீஸ் 1775 , ஹதீஸ் 1776. முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்

நானும் உர்வா இப்னு ஸுபைரும் மஸ்ஜிது(ன் நபவீ)க்குச் சென்றோம். அங்கே ஆயிஷா(ரலி) அவர்களின் அறைக்கருகே அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அமர்ந்திருந்தார்கள். அப்போது மக்கள் மஸ்ஜிதில் லுஹர் தொழுகையை நிறைவேற்றிக் கொண்டிருந்தனர். நாங்கள் அவர்களிடம் மக்களின் இந்தத் தொழுகையைப் பற்றிக் கேட்டோம். அதற்கவர்கள்,'இது பித்அத்!"என்றார்கள்! (காரணம் இப்னு உமர்(ரலி) நபி(ஸல்) அவர்கள் லுஹர் தொழுததைப் பார்த்ததில்லை). பிறகு,'நபி(ஸல்) அவர்கள் எத்தனை உம்ராக்கள் செய்துள்ளார்கள்?' என உர்வா(ரஹ்) கேட்டார்கள். அதற்கவர்கள்'நான்கு, அவற்றில் ஒன்றை ரஜப் மாதத்தில் செய்தார்கள்!"என்றார்கள்.

நாங்கள் அவர்களின் இக்கூற்றை மறுக்க விரும்பவில்லை.

இதற்கிடையே அறையில் உம்முல் மூமினீன் ஆயிஷா(ரலி) பல்துலக்கும் சப்தத்தைக் கேட்டோம் அப்போது உர்வா(ரஹ்),'அன்னையே! இறைநம்பிக்கையாளர்களின் தாயே! அபூ அப்திர் ரஹ்மான் (இப்னு உமர்(ரலி)) அவர்கள் கூறுவதைச் செவியேற்றீர்களா?' எனக் கேட்டார். 'அவர் என்ன கூறுகிறார்?' என ஆயிஷா(ரலி) கேட்டதும். 'நபி(ஸல்) அவர்கள் நான்கு உம்ராக்கள் செய்துள்ளார்கள். அவற்றில் ஒன்று ரஜப் மாதத்தில் நடந்தது!"என்று கூறுகிறார்!"என்றார்.

ஆயிஷா (ரலி), ‘அபூ அப்திர் ரஹ்மானுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக! நபி (ஸல்) அவர்கள் உம்ரா செய்யும் போதெல்லாம் அவர்களுடன் அவரும் இருந்திருக்கிறார் (மறந்துவிட்டார் போலும்!) நபி (ஸல்) அவர்கள் ரஜப் மாதத்தில் உம்ரா செய்ததே இல்லை!”எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1777. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

“ஆயிஷா (ரலி) அவர்களிடம் நான் (நபி (ஸல்) அவர்களின் உம்ரா பற்றிக்) கேட்டேன். அதற்கு அவர்கள், ‘நபி (ஸல்) அவர்கள் ரஜப் மாதத்தில் உம்ரா செய்யவில்லை!”என்றார்கள்.

ஹதீஸ் 1778. கதாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

“நபி (ஸல்) அவர்கள் எத்தனை உம்ராக்கள் செய்துள்ளார்கள்?’ என நான் அனஸ் (ரலி) அவர்களிடம் கேட்டதற்க அவர், ‘நான்கு (உம்ராக்கள் செய்துள்ளார்கள்) அவை: ஹுதைபிய்யா எனுமிடத்தில் துல்கஅதா மாதத்தில், இணைவைப்போர் தடுத்தபோது செய்யச் சென்றது இணைவைப்போருடன் செய்த சமாதான ஒப்பந்தப்படி, அடுத்த ஆண்டு துல்கஅதா மாதத்தில் செய்தது அடுத்து ’ஜிர்இர்ரானா’ என்ற இடத்திலிருந்து ஒரு போரின்... அது ஹுனைன் போர் என்று கருதுகிறேன்.. கனீமத்தைப் பங்கிட்ட பொழுது செய்தது (நபி (ஸல்) அவர்களின் ஹஜ்ஜில் அடங்கியிருந்த உம்ராவையும் சேர்த்து நான்கு உம்ராக்கள்!)‘‘ பிறகு ’எத்தனை ஹஜ் செய்திருக்கிறார்கள்?’ என்று நான் கேட்டதற்கு, ‘ஒரு ஹஜ்தான்!”என்றார்கள்.

ஹதீஸ் 1779. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் முதலில், இணைவைப்போர் (ஹுதைபிய்யாவில் அவர்களைத்) தடுத்துவிட்டபோது உம்ராவுக்காக சென்றிருந்தார்கள். பிறகு, அடுத்த ஆண்டு (அதே) ஹுதைபிய்யாவிலிருந்து உம்ராவை நிறைவேற்றினார்கள் பிறகு துல்கஅதா மாதத்தில் உம்ரா செய்தார்கள் அடுத்து, ஹஜ்ஜுடன் ஓர் உம்ரா செய்தார்கள்.

ஹதீஸ் 1780. ஹம்மாம் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நான்கு உம்ராக்களையும் துல்கஅதா மாதத்திலேயே செய்தார்கள் ஹஜ்ஜுடன் செய்த உம்ராவைத் தவிர!

அவை, ஹுதைபிய்யா (என்னுமிடத்தில் அவர்கள் தடுக்கப்பட்ட போது) செய்யச் சென்ற உம்ராவும், அதற்கடுத்த ஆண்டின் உம்ராவும், ஹுனைன் போரில் கிடைத்த போர்ச் செல்வங்களைப் பங்கு வைத்த இடமான ’ஜிஇர்ரானா‘விலிருந்து செய்த உம்ராவும், ஹஜ்ஜுடன் செய்த உம்ராவும் ஆகும்.

ஹதீஸ் 1781. அபூ இஸ்ஹாக் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

மஸ்ரூக், அதா, முஜாஹித் (ரஹ் - அலைஹிம்) ஆகிய மூவரிடமும் (நபி (ஸல்) அவர்கள் செய்த உம்ராவைப் பற்றி) கேட்டேன். அதற்கு அவர்கள் அனைவரும், ‘நபி (ஸல்) அவர்கள் அனைவரும், ‘நபி (ஸல்) அவர்கள் ஹஜ் செய்வதற்கு முன்னர் துல்கஅதாவில் உம்ரா செய்துள்ளார்கள்!”என்று கூறினர்.

மேலும், ‘நபி (ஸல்) அவர்கள் ஹஜ் செய்வதற்கு முன்பு துல்கஅதாவில் (வெவ்வேறு ஆண்டுகளில்) இரண்டு முறை உம்ரா செய்துள்ளார்கள்!”என பராஉ இப்னு ஆஸிப் (ரலி) கூற கேட்டுள்ளேன்.

## ரமலானில் உம்ரா செய்தல்.

ஹதீஸ் 1782. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அன்ஸாரிப் பெண்களில் ஒருவரிடம்...'இப்னு அப்பாஸ்(ரலி) அப்பெண்ணின் பெயரைக் குறிப்பிட்டார்கள். நான் அதை மறந்துவிட்டேன்!"என அவரிடமிருந்து அறிவிக்கும் அதா(ரஹ்) கூறினார்..'நீ ஏன் எங்களுடன் ஹஜ் செய்யவில்லை?' எனக் கேட்டார்கள். அதற்கவர்,'எங்களிடம் இருந்த, தண்ணீர் கொண்டு வருவதற்கான ஓர் ஒட்டகத்தில் இன்னாரின் தந்தையும் அவரின் மகனும் (என்னுடைய கணவரும் மகனும்) ஏறிச் சென்றுவிட்டனர் இன்னொரு ஒட்டகத்தைவிட்டுச் சென்றுள்ளனர் அதன் மூலம் நாங்கள் தண்ணீர் எடுத்துக் கொண்டிருக்கிறோம்!"என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'ரமளான் வந்துவிட்டால் அதில் நீ உம்ரா செய்வாயாக! ஏனெனில், ரமளானில் உம்ரா செய்வது ஹஜ்ஜாகும்!' எனக் கூறினார்கள் அல்லது அது போன்ற கருத்தைக் கூறினார்கள்.

## முஹஸ்ஸபில் தங்கும் இரவிலும் மற்றநேரங்களிலும் உம்ரா செய்தல்.

ஹதீஸ் 1783. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் (துல்கஅதாவைப் பூர்த்தி செய்துவிட்டு) துல்ஹஜ்ஜின் பிறையை எதிர்நோக்கியவர்களாக, நபி(ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்குப் புறப்பட்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உங்களில் யார் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் அணிய விரும்புகிறார்களோ அவர்கள் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் அணிந்து கொள்ளட்டும் யார் உம்ராச் செய்ய விரும்புகிறார்களோ அவர்கள் உம்ராவுக்கு இஹ்ராம் அணிந்து கொள்ளட்டும். நான் மட்டும் பலிப்பிராணியைக் கொண்டு வரவில்லையானால் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்திருப்பேன்' எனக் கூறினார்கள். எனவே, எங்களில் சிலர் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தனர். இன்னும் சிலர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தனர் நான் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தவர்களுள் ஒருத்தியாவேன். அரஃபா நாள் நெருங்கியவதும் எனக்கு மாதவிடாய் வந்துவிட்டது. எனவே நான் நபி(ஸல்) அவர்கள்,'உன்னுடைய உம்ராவைவிட்டுவிட்டு உன்னுடைய தலைமுடியை அவிழ்த்துவிட்டு, வாரிக் கொண்டு ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்துகொள்‘‘ என்றார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முஹஸ்ஸபில் தங்குவதற்கான இரவு வந்தபோது என்னுடன் அப்துர்ரஹ்மானை அனுப்பித் தன்யீம் என்ற இடத்திற்குப் போகச் சொன்னார்கள். நான் என்னுடைய விடுபட்ட உம்ராவுக்குப் பகரமாக மற்றொரு உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து கொண்டேன்.

## உம்ராவுக்காக தன்யீமில் இஹ்ராம் அணிதல்.

ஹதீஸ் 1784. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா(ரலி)வை வாகனத்தில் ஏற்றிக் கொண்டு சென்று தன்யீம் என்னுமிடத்தில் உம்ராவுக்காக இஹ்ராம் அணியச் செய்ய வேண்டும் என எனக்குக் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 1785. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தார்கள். நபி(ஸல்) மற்றும் தல்ஹழ(ரலி) ஆகிய இருவரைத் தவிர வேறு யாரிடமும் குர்பானிப் பிராணி

இல்லை. யமனிலிருந்து அலீ (ரலி) குர்பானிப் பிராணியுடன் வந்தார்கள். 'நபி (ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்தார்களோ அதற்காகவே நானும் அணிந்தேன்!" என அவர்கள் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் குர்பானிப் பிராணி கொண்டு வராதவர்களிடம், இதை (ஹஜ்ஜை) உம்ராவாக ஆக்கிக் கொள்ளுமாறும் வலம்வந்து, தலைமுடியைக் குறைத்து, இஹ்ராமிலிருந்து விடுபடுமாறும் கட்டளையிட்டார்கள். (மக்கள் சிலர்) 'நம் இன உறுப்பில் விந்து சொட்டிக் கொண்டிருக்கும் நிலையில் (மனைவியுடன் கூடிய பின் உடனடியாக) நாம் மினாவுக்குச் செல்வதா?' என்று பேசிய செய்தி, நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியதும் அவர்கள் '(ஹஜ் மாதங்களில் உம்ரா செய்ய அனுமதியுண்டு என) நான் இப்போது அறிந்ததை முன் கூட்டியே அறிந்திருந்தால் நான் குர்பானிப் பிராணி கொண்டு வந்திருக்க மாட்டேன் நான் குர்பானிப் பிராணி மட்டும் கொண்டு வந்திருக்கவில்லையாயின் இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பேன்!" என கூறினார்கள். மேலும், ஆயிஷா (ரலி) அவர்களுக்கு மாதவிடாய் வந்திருந்தது. எனவே அவர்கள், இறையில்லம் கஅபாவை வலம்வருவதைத் தவிர, ஹஜ்ஜின் மற்றெல்லா வழிபாடுகளையும் நிறைவேற்றினார்கள். மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்ததும் கஅபாவை வலம்வந்தார்கள். மேலும் ஆயிஷா (ரலி) 'நபி அவர்களே! நான் ஹஜ்ஜை மட்டும் நிறைவேற்றிவிட்டுச் செல்ல. நீங்கள் (எல்லோரும்) ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றிவிட்டுச் செல்கிறீர்களா?' என (ஏக்கத்துடன்) கூறியதும், நபி (ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ரை, ஆயிஷா (ரலி) அவர்களுடன் (உம்ரா செய்திட இஹ்ராம் அணிவதற்காக) தன்யீம் என்ற இடத்திற்குச் செல்லுமாறு கட்டளையிட்டார்கள். ஆயிஷா (ரலி) ஹஜ் செய்த பின், துல்ஹஜ் மாதத்திலேயே உம்ராவையும் நிறைவேற்றினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஜம்ரத்துல் அகபாவில் கல்லெறிந்து கொண்டிருந்தபோது அவர்களைச் சந்தித்த சுராக்கா இப்னு மாலிக் இப்னு ஜுஃஷும் (ரலி) 'நபி அவர்களே! இது (ஹஜ் மாதத்தில் உம்ரா செய்வது) உங்களுக்கு மட்டுமுள்ள தனிச் சட்டமா?' எனக் கேட்டதற்குவர்கள், 'இல்லை! இது எப்போதைக்கும் உரியதே!" என்று பதிலளித்தார்கள்.

## ஹஜ்ஜுக்குப் பின், குர்பானி கொடுக்காமல் உம்ரா செய்தல்.

ஹதீஸ் 1786. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"(துல்கஅதாவை பூர்த்தி செய்துவிட்டு) துல்ஹஜ் பிறையை எதிர் நோக்கியவர்களாக, நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். நபி (ஸல்) அவர்கள் 'உம்ராவுக்கு (மட்டும்) இஹ்ராம் அணிய விரும்புகிறவர் உம்ராவுக்காக (மட்டும்) இஹ்ராம் அணியட்டும் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிய விரும்புகிறவர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணியட்டும்! நான் குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்திராவிட்டால் உம்ராவுக்காக (மட்டும்) இஹ்ராம் அணிந்திருப்பேன்!" என்றார்கள். சிலர் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தனர் மற்றும் சிலர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தனர். நான் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தவர்களுள் ஒருத்தியாக இருந்தேன். மக்காவில் நுழைவதற்கு முன் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. மாதவிடாயுள்ள நிலையிலேயே அரஃபா நாளையும் அடைந்தேன். நபி (ஸல்) அவர்களிடம் (இதுபற்றி) நான் முறையிட்டபோது, 'உன்னுடைய உம்ராவைவிட்டுவிட்டு, தலையை அவிழ்த்து வாரிக் கொள்! மேலும் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்து கொள்!" என்றார்கள். நான் அவ்வாறே செய்தேன். முஹஸ்ஸபில் தங்கும் இரவு வந்தபோது, என்னுடன் அப்துர் ரஹ்மானை தன்யீம்வரை நபி (ஸல்) அவர்கள் அனுப்பினார்கள். அப்துர்ரஹ்மான் தம் ஒட்டகத்தின் பின்னால் என்னை ஏற்றினார். விடுபட்ட உம்ராவுக்குப் பகரமாக மற்றொரு உம்ராவுக்காக நான் இஹ்ராம் அணிந்தேன்.

“அல்லாஹ் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றித் தந்தான்“ என்று அறிவிப்பாளர் உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

“இதற்காக, ஆயிஷா (ரலி) குர்பானியோ, தர்மமோ, நோன்போ பரிகாரமாகச் செய்யவில்லை!”என்று மற்றோர் அறிவிப்பாளர் ஹிஷாம் இப்னு உர்வா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## உம்ரா செய்யும்போது ஏற்படும் சிரமத்திற்குத் தக்கவாறு நற்கூலியுண்டு.

ஹதீஸ் 1787. அஸ்வத் (ரஹ்), காஸிம் இப்னு முஹம்மத் (ரஹ்) ஆகியோர் அவர்கள் கூறினார்கள்.

ஆயிஷா (ரலி) நபி (ஸல்) அவர்களிடம், ‘மக்கள் எல்லோரும் (ஹஜ், உம்ரா ஆகிய) இரண்டு வழிபாடுகளுடன் திரும்புகின்றனர் நான் மட்டும் (ஹஜ் என்கிற) ஒரேயொரு வழிபாட்டுடன் திரும்புகிறேனே?’ எனக் கேட்டார்கள். அவர்களிடம், ‘நீ சற்றுக் காத்திருந்து. (மாதவிடாயிலிருந்து) தூய்மையடைந்ததும் தன்யீமுக்குச் சென்று (உம்ராவுக்காக) இஹ்ராம் அணிந்து கொள்! பிறகு எங்களை இன்ன இடத்தில் வந்து சந்தித்துக் கொள்! ஆனால், உம்ராவுக்கான நற்கூலி உன்னுடைய சிரமத்திற்கோ, பொருட் செலவுக்கோ தக்கவாறே கிடைக்கும்!’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## (ஹஜ்ஜுக்குப் பிறகு) உம்ரா செய்பவர், உம்ராவுக்கான தவாஃபை செய்துவிட்டு (மக்காவிலிருந்து) வெளியேறிவிட்டால் அவர் கடைசி வலம்வர வேண்டியதில்லையா? (உம்ராவுக்கான தவாஃபே அதற்குப் பகரமாம் விடுமா)?

ஹதீஸ் 1788 ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் ஹஜ்ஜின் மாதங்களில், ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்து, ஹஜ்ஜுக்குரிய கட்டுப்பாடுகளுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டு, ‘ஸரிஃப்’ என்னும் இடத்திற்கு வந்து தங்கினோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களிடம், ‘பலிப்பிராணி கொண்டு வராமல் ஹஜ்ஜை உம்ராவாகச் செய்ய விரும்புகிறவர் அவ்வாறே செய்து கொள்ளட்டும்! பலிப்பிராணி வைத்திருப்பவர் அவ்வாறு செய்ய வேண்டாம்!’ எனக் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களிடமும் அவர்களின் தோழர்களில் ஓரளவு வசனதி படைத்தவர்களிடமும் பலிப்பிராணிகள் இருந்தன. எனவே, அவர்கள் உம்ராவுக்கெனத் தனியாக வலம் வரவில்லை. பிறகு நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தபோது நான் அழுது கொண்டிருந்தேன். அவர்கள்’ஏன் அழுகிறாய்?’ எனக் கேட்டார்கள். ’நீங்கள் உங்கள் தோழர்களிடம் கூறியதை செவியுற்றேன் ஆனால், நான் உம்ரா செய்வதிலிருந்து தடுக்கப்பட்டு விட்டேன்!”என்றேன். அதற்கவர்கள்’என்ன காரணம்?’ எனக் கேட்டதும், ‘நான் தொழக்கூடாது நிலைமைக்கு ஆளாம்விட்டேன்! (எனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டது!) என்றேன். அவர்கள், ‘உனக்கொன்றுமில்லை! நீ ஆதமின் பெண்மக்களில் ஒருத்தியே! அப்பெண்மக்களுக்கு விதிக்கப்பட்டதே உனக்கும் விதிக்கப்பட்டுள்ளது! எனவே, ஹஜ் செய்பவளாகவே இரு! அல்லாஹ் உனக்கு (உம்ரா செய்யவும்) வாய்ப்பளிக்கக் கூடும்!”என்றார்கள்.

நாங்கள் ஹஜ்ஜை முடித்துவிட்டு மினாவிலிருந்து புறப்படும்வரை நான் அப்படியே (மாதவிடாயுடன்) இருந்தேன். பிறகு முஹஸ்ஸப் வந்து தங்கியபோது நபி (ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மானை அழைத்து, ‘உன்னுடைய சகோதரியை ஹரமுக்கு வெளியே அழைத்துப் போ! அவள் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்து கொள்ளட்டும்! பிறகு நீங்களிருவரும் தவாஃபை

முடித்துக் நடுநிசியில் வந்தபோது'(தவா∴பை) முடித்து விட்டீர்களா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான்'ஆம்!"என்றேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களிடம் புறப்படுமாறு அறிவித்தார்கள். மக்களும், ஸுப்ஹுக்கு முன்பே தவா∴புஸ் ஸியாரத் செய்தவர்களும் புறப்படத் தயாரானதும் நபி(ஸல்) அவர்கள் மதீனாவை நோக்கிப் பயணமானார்கள்.

## ஹஜ்ஜுக்கான கிரியைகளே உம்ராவிலும் நிறைவேற்றப்படும்.

ஹதீஸ் 1789. ய∴லா இப்னு உமய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஜிஇர்ரானா என்னுமிடத்தில் இருக்கும்போது நறுமணத்தின் அடையாளமோ அல்லது மஞ்சள் நிறமோ இருந்த சட்டை அணிந்திருந்த ஒருவர் அவர்களிடம் வந்து,'உம்ராவில் நான் என்ன செய்ய வேண்டும் எனக் கட்டளையிடுகிறீர்கள்?' எனக் கேட்டார்.

அப்போது அல்லாஹ் நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அறிவித்தான். எனவே, நபி(ஸல்) அவர்கள் போர்வையால் மூடப்பட்டார்கள். நான் நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) வருவதைப் பார்க்க வேண்டும் என ஆவல் கொண்டிருந்தேன். உமர்(ரலி),'நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அருளும்போது அவர்களைப் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறாயா?' எனக் கேட்டார். நான்'ஆம்' என்றேன். உடனே அவர் (நபி(ஸல்) அவர்கள்) மூடப்பட்டிருந்த ஆடையின் ஒரு புறத்தை நீக்கியதும் நான் நபி(ஸல்) அவர்களை உற்று நோக்கினேன். அப்போது ஒட்டகத்தின் குறட்டை போன்ற சப்தம் அவர்களிடமிருந்து வந்ததாக எண்ணுகிறேன். பிறகு (வஹீயின்) அந்நிலை அவர்களைவிட்டு நீங்கிவிட்ட பொழுது, அவர்கள்,'உம்ராவைப் பற்றிக் கேள்வி கேட்டவர் எங்கே?' எனக் கேட்டுவிட்டு (அவரிடம்),'உம்முடைய இச்சட்டையைக் கழற்றி நறுமணத்தின் அடையாளத்தைக் கழுவிவிட்டு, மஞ்சள் நிறத்தையும் அகற்றிவிடும்! மேலும் நீர் ஹஜ்ஜில் செய்வதைப் போன்று உம்ராவிலும் செய்வீராக!"எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1790. உர்வா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

நான் சிறு வயதுள்ளவனாக இருந்தபோது நபி(ஸல்) அவர்களின் மனைவி ஆயிஷா(ரலி) அவர்களிடம்'நிச்சயமாக ஸ∴பாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளாகும்! எனவே, ஹஜ் அல்லது உம்ரா செய்கிறவர் அவ்விரண்டையும் வலம்வருவதில் எந்தக் குற்றமுமில்லை!' (திருக்குர்ஆன் 02:158) என்று அல்லாஹ் கூறினான். எனவே'அவ்விரண்டிற்குமிடையே ச∴யு செய்யாமலிருப்பதிலும் குற்றமில்லை என்றே கருதுகிறேன்!"என்று கூறினேன். அதற்கு ஆயிஷா(ரலி)'அவ்வாறில்லை, நீ கருதுவது போலிருந்தால்'அவ்விரண்டையும் வலம்வராமலிருப்பதில் குற்றமில்லை!' என்று அவ்வசனம் அமைந்திருக்க வேண்டும் மேலும், இந்த வசனம் அன்ஸாரிகளின் விஷயத்தில் அருளப்பட்டதாகும். (அறியாமைக் காலத்தில்) அவர்கள்'குதைத்' என்ற இடத்தில்,'மனாத்' என்ற விக்கிரகத்திற்காக இஹ்ராம் அணிந்து வந்தார்கள். அதனால் (இஸ்லாத்தை ஏற்றபின்) ஸ∴பா மர்வாவுக்கிடையே ச∴யு செய்வதைக் குற்றமாகவும் கருதி இருந்தனர். எனவே, அவர்கள் இஸ்லாத்திற்கு வந்ததும் நபி(ஸல்) அவர்களிடம் இது பற்றிக் கேட்டனர் அப்போது அல்லாஹ்,'நிச்சயமாக ஸ∴பாவும் மர்வாவும் இறைவனின் அத்தாட்சிகளாகும் எனவே, ஹஜ்ஜோ உம்ராவோ செய்பவர் அவ்விரண்டிற்குமிடையே ச∴யு செய்வதால் அவரின் மீது எந்தக் குற்றமும் இல்லை!' (திருக்குர்ஆன் 02:158) என்ற வசனத்தை அருளினான்' எனக் கூறினார்கள்.

இன்னொரு அறிவிப்பில்'ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்யாதவனின் ஹஜ்ஜையோ உம்ராவையோ அல்லாஹ் முழுமைப்படுத்தவில்லை!"என்ற (ஆயிஷா(ரலி) அவர்களின்) சொல் இடம் பெற்றுள்ளது.

## உம்ரா செய்பவர் இஹ்ராமிலிருந்து விடுபடுவது எப்போது?

"(ஹஜ்ஜை) உம்ராவாக ஆக்கிக் கொண்டு வலம் வந்து (தொங்கோட்டம் ஓடி) விட்டு முடியைக் குறைத்துக் கொண்டு இஹ்ராமிலிருந்து விடுபடுமாறு நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களுக்குக் கட்டளையிட்டார்கள்!"என ஜாபிர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1791 ~ ஹதீஸ் 1792 அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தார்கள். நாங்களும் அவர்களுடன் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தோம். அவர்கள் மக்காவில் நுழைந்ததும் வலம்வந்தார்கள். நாங்களும் அவர்களுடன் வலம்வந்தோம். அவர்கள் ஸஃபா, மர்வாவுக்கு வந்ததும் நாங்களும் அவர்களுடன் அங்கு வந்தோம். மேலும், மக்காவாசிகள் நபி(ஸல்) அவர்களைத் தாக்கிவிடக் கூடாது என்பதற்காக நாங்கள் அவர்களை மறைத்துக் கொண்டு (அவர்களுக்குத் தடுப்பாக) நின்றோம்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இஸ்மாயீல் கூறுகிறார்:

என்னுடைய நண்பர் ஒருவர் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களிடம்'நபி(ஸல்) அவர்கள் கஅபாவின் உள்ளே சென்றார்களா?' எனக் கேட்டதற்கு அவர்கள்'இல்லை!"என்றார்கள். பிறகு, அவர்,'நபி(ஸல்) அவர்கள் கதீஜா(ரலி) அவர்களைப் பற்றி என்ன கூறினார்கள் என்பதை எங்களுக்கு அறிவியுங்களேன்!' எனக் கேட்டதற்கு, அவர்கள்'கதீஜாவுக்கு நற்செய்தி கூறுங்கள் அவருக்கு சொர்க்கத்தில் முத்தாலான ஒரு மாளிகை உள்ளது! அதில் வீண் கூச்சலோ எந்தச் சிரமமோ இருக்காது!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனச் சொன்னார்கள்.

ஹதீஸ் 1793 ~ ஹதீஸ் 1794 அம்ர்பின் தீனார்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"உம்ராவில் ஒருவர் இறையில்லம் கஅபாவை வலம்வந்துவிட்டு ஸஃபா மர்வாவுக்கிடையே வலம்வராமலேயே தம் மனைவியிடம் (உறவு கொள்ள) வரலாமா?' என இப்னு உமர்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கு அவர்கள்,'நபி(ஸல்) அவர்கள் (மக்கா) வந்ததும் இறையில்லம் கஅபாவை ஏழு முறை வலம்வந்துவிட்டு, மகாமு இறையில்லம் கஅபாவை ஏழு முறை வலம்வந்துவிட்டு, மகாமு இப்ராஹீமில் இரண்டு ரக்அத்கள் தொழுதபின் ஸஃபா மர்வாவுக்கிடையே ஏழு முறை சஃயு செய்தார்கள். எனவே, நிச்சயமாக அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன்மாதிரி உள்ளது!' எனக் கூறினார்கள்.

நாங்கள் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம் இது பற்றிக் கேட்டோம். அதற்கு அவர்கள்'ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்யாமல் ஒருவர் தம் மனைவியை நெருங்கக் கூடாது!"எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 1795. அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பத்ஹா என்னுமிடத்தில் ஒட்டகத்தை இளைப்பாற வைத்துத் தங்கியிருந்தபோது நான் அவர்களைச் சந்தித்தேன். அப்போது அவர்கள்,'ஹஜ் செய்யநாடியுள்ளீரா?' எனக் கேட்டார்கள். நான்'ஆம்!"என்றதும்'எதற்காக இஹ்ராம் அணிந்தீர்?' எனக் கேட்டார்கள். நான்'நபி(ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்தார்களோ

அதற்காகவே இஹ்ராம் அணிந்துள்ளேன்!"என்று கூறினேன். அதற்கவர்கள்,'நல்ல காரியம் செய்தீர்! இறையில்லம் கஅபாவை வலம்வந்துவிட்டு, ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்துவிட்டு இஹ்ராமிலிருந்து விடுபட்டு விடும்!' எனக் கூறினார்கள். நான் அவ்வாறே கஅபாவை வலம்வந்துவிட்டு, ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்துவிட்டு, கைஸ் கோத்திரத்தைச் சேர்ந்த (மஹ்ரமான) ஒரு பெண்ணிடம் வந்தேன். அவர் என்னுடைய தலையில் பேன் பார்த்தார். பிறகு நான் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தேன். இந்த அடிப்படையிலேயே நான் உமரின் ஆட்சிக்காலம் வரை மக்களுக்குத் தீர்ப்பளித்துக் கொண்டிருந்தேன். உமர்(ரலி),'அல்லாஹ்வின் வேதத்தைப் பார்த்தால் அது நம்மை (ஹஜ்ஜையும் உம்ராவையும்) பூரணமாகச் செய்யுமாறு கட்டளையிடுகிறது; நபி(ஸல்) அவர்களின் நடைமுறையைப் பார்த்தாலும், பலிப்பிராணி அதற்குரிய இடத்தை அடையும் வரை இஹ்ராமிலிருந்து அவர்கள் விடுபடவில்லை எனத் தெரிகிறது!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1796. (அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அவர்களின் ஊழியரான) அப்துல்லாஹ் அவர்கள் கூறினார்கள்.

அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) (மக்காவிலுள்ள) ஹஜூன் என்ற இடத்தைக் கடந்து செல்லும் போதெல்லாம்!"(தன் தூதர்) முஹம்மத்(ஸல்) அவர்களின் மீது அல்லாஹ் கருணை புரிவானாக! (ஒரு முறை) நாங்கள் அவர்களுடன் இங்கு வந்திறங்கினோம் அப்போது எங்களிடம் (பயண) மூட்டை முடிச்சுகள் அதிகம் இருக்கவில்லை மேலும், எங்களிடம் (பயண) உணவுகளும் வாகனப் பிராணிகளும் குறைவாகவே இருந்தன் அப்போது நானும், என்னுடைய சகோதரி ஆயிஷா(ரலி), ஸுபைர்(ரலி) ஆகியோரும், மற்றும் இன்னாரும் இன்னாரும் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தோம் கஅபாவை வலம்வந்ததும் இஹ்ராமிலிருந்து விடுபட்டு விட்டோம். பிறகு மாலை நேரத்தில் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்தோம்'' என அஸ்மா(ரலி) கூறினார்.

## ஹஜ், உம்ரா, புனிதப் போர் ஆகியவற்றை முடித்துவிட்டுத் திரும்பும்போது கூற வேண்டியது.

ஹதீஸ் 1797. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் போரிலிருந்தோ, ஹஜ் அல்லது உம்ராவிலிருந்தோ திரும்பும்போது மேடான இடங்களில் ஏறும்போதும் மூன்று தக்பீர்கள் கூறுவார்கள். மேலும்,'அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குத் தகுதியானவர் வேறுயாரும் இல்லை! அவன் தனித்தவன் அவனுக்கு இணை யாருமில்லை! அவனுக்கே ஆட்சியும் புகழும்! அவன் அனைத்தின் மீதும் போராற்றலுடையோன் நாங்கள் தவ்பா செய்தவர்களாகவும், எங்கள் இரட்சகனை வணங்கியவர்களாகவும், ஸஜ்தா செய்தவர்களாகவும், அவனைப் புகழ்ந்தவர்களாகவும் திரும்புகிறோம்ூ ூ அல்லாஹ் தன்னுடைய வாக்குறுதியை உண்மைப் படுத்திவிட்டான்! தன் அடியாருக்கு (முஹம்மத்(ஸல்) அவர்களுக்கு) உதவினான்! அவன் தன்னந் தனியாகவே (எதிரிகளின்) படைகளைத் தோற்கடித்துவிட்டான்'' என்று கூறுவார்கள்.

## ஹஜ்ஜுக்காக (மக்காவிற்கு) வருபவர்களை வரவேற்பதும் ஒரு பிராணியின் மீது மூவர் சவாரி செய்வதும்.

ஹதீஸ் 1798. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்காவுக்கு வந்தபோது அப்துல் முத்தலிப் கோத்திரத்திலுள்ள சிறுவர்கள் அவர்களை வரவேற்றனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் தமக்கு முன்னால் ஒருவரையும் பின்னால் ஒருவரையும் வாகனத்தில் ஏற்றினார்கள்.

## (பயணம் முடிந்து) காலை வேளையில் வீட்டிற்கு வருதல்.

ஹதீஸ் 1799. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் மக்காவை நோக்கிப் புறப்பட்டால் ஷஜரா எனுமிடத்திலுள்ள மஸ்ஜிதிற்கு வந்து தொழுவார்கள். மக்காவிலிருந்து திரும்பும்போது பத்னுல் வாதியிலுள்ள துல்ஹுலைஃபாவில் வந்து தொழுவார்கள் மேலும் அங்கேயே காலை வரை தங்குவார்கள்.“

## (பயணம் முடிந்து) மாலை வேளையில் வீட்டிற்கு வருதல்.

ஹதீஸ் 1800. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் தங்களின் வீட்டிற்கு இரவு நேரத்தில் வரமாட்டார்கள். காலையிலோ, மாலையிலோ நான் வருவார்கள்.“

## மதீனாவை அடைந்ததும் இரவு நேரத்தில் வீட்டிற்குச் செல்லக்கூடாது.

ஹதீஸ் 1801. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(பயணத்திலிருந்து திரும்பும் போது) இரவு நேரத்தில் வீட்டிற்குச் செல்வதை நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள்.

## மதீனாவை அடைந்ததும் ஒட்டகத்தை விரைவாகச் செலுத்துதல்.

ஹதீஸ் 1802. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பி மதீனாவின் உயரமான பாதைகளைப் பார்க்கும்போது தம் ஒட்டகத்தை விரைந்து செலுத்துவார்கள் வாகனத்தை அன்புடன் தட்டிக் கொடுப்பார்கள்.

மற்றோர் அறிவிப்பில் உயரமான பாதைகள் என்பதற்குப் பதிலாக சுவர்கள் என்று கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறினான்:

“(முன்) வாசல்கள் வழியாக வீடுகளுக்குச் செல்லுங்கள்!”(திருக்குர்ஆன் 02:189)

ஹதீஸ் 1803. பராஉ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அன்ஸாரிகள் ஹஜ் செய்துவிட்டு வரும்போது தங்கள் வீடுகளின் (முன்) வாசல்கள் வழியாக உள்ளே செல்ல மாட்டார்கள். மாறாக, புழக்கடைகள் வழியாகச் செல்வார்கள். அப்போது அன்ஸாரிகளைச் சேர்ந்த ஒருவர் (முன்) வாசல் வழியாக வீட்டிற்குச் சென்றார். இது (மற்றவர்களால்) குறை கூறப்பட்டது. அப்போது'உங்கள் வீடுகளுக்குள் புழக்கடைகள் (பின் வாசல்கள்) வழியாகச் செல்வது நன்மையான காரியமன்று மாறாக (அல்லாஹ்வை) அஞ்சி நடப்பதே நன்மையான காரியமாகும். எனவே, வீடுகளுக்கு அதன் வாசல்கள் வழியாகச் செல்லுங்கள்!”(திருக்குர்ஆன் 02:189) என்ற இறைவசனம் அன்ஸாரிகளாகிய எங்களின் விஷயத்தில் இறங்கியது.

## பயணம் வேதனையில் ஒரு பகுதியாகும்.

ஹதீஸ் 1804. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“பயணம் வேதனையில் ஒரு பகுதியாகும். அது ஒருவரின் உணவையும் பானத்தையும் உறக்கத்தையும் தடுத்து விடுகிறது. எனவே, ஒருவர் தம் தேவையை முடித்ததும் விரைந்து தம் குடும்பத்தாரிடம் செல்லட்டும்!”என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## பயணி, வீட்டுக்கு விரைந்து செல்ல வேண்டியிருந்தால் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

ஹதீஸ் 1805. உமர் (ரலி) அவர்களின் ஊழியாரான அஸ்லம் (ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) மக்கா செல்லும் வழியில் நான் அவர்களுடன் (பயணம் செய்து) இருந்தேன். (அவரின் மனைவி) ஸஃபிய்யா பின்த் அபீ உபைத் என்பவர் கடும் வேதனையில் இருக்கும் செய்தி அவர்களுக்குக் கிடைத்தது. உடனே, பயணத்தை விரைவுபடுத்தினார்கள். அடிவானத்தின் செம்மை மறைந்த பின் (வாகனத்திலிருந்து) இறங்கி மக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதார்கள். 'நபி (ஸல்) அவர்கள் விரைந்து பயணம் செய்வதாக இருந்தால் மக்ரிபைத் தாமதப்படுத்தி இரண்டு தொழுகைகளையும் சேர்த்துத் தொழுவதை பார்த்திருக்கிறேன்!” என்றும் குறிப்பிட்டார்கள்

## அத்தியாயம் 27 (ஹஜ் செய்வதிலிருந்து) தடுக்கப்படுதல்

அல்லாஹ் கூறினான்:

“நீங்கள் (ஹஜ், உம்ராவை நிறைவேற்ற விடாமல்) தடுக்கப்பட்டால் உங்களால் இயன்ற பலிப்பிராணியை பலியிடுங்கள்! பலிப்பிராணி அதற்குரிய இடத்தை அடையும் வரை உங்கள் தலைகளை மழித்துக் கொள்ளாதீர்கள்!” (திருக்குர்ஆன் 02:196)

“கஅபாவிற்குச் செல்லவிடாமல் தடுக்கக்கூடிய அனைத்துமே தடைகளாகக் கருதப்படும்‘ என்று அதாவு (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

### உம்ராவிற்குச் செல்பவர் தடுக்கப்பட்டால்...?

ஹதீஸ் 1806. நாஃபிவு (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) குழப்பம் நிறைந்த காலத்தில் உம்ராவிற்காக மக்கவிற்குப் புறப்பட்டார்கள். 'நான் கஅபாவிற்குச் செல்லவிடாமல் தடுக்கப்பட்டால் நபி (ஸல்) அவர்களுடன் நாங்கள் (சென்று தடுக்கப்பட்ட போது) செய்தது போல் செய்வேன்!” என்று கூறிவிட்டு உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஹுதைபிய்யா ஆண்டில் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்ததே இதற்குக் காரணமாகும்.

ஹதீஸ் 1807 ~ ஹதீஸ் 1808 நாஃபிவு அவர்கள் கூறினார்கள்.

இப்னு ஸுபைர் (ரலி) அவர்களை (ஹஜ்ஜாஜின்) ராணுவம் முற்றுமைம்ட்டிருந்த நாள்களில் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் (அவரின் மக்களான) உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ், ஸாலிம் இப்னு அப்தில்லாஹ் ஆகிய இருவரும், 'நிங்கள் இவ்வாண்டு ஹஜ்ஜு செய்யாதிருப்பது உங்களுக்கு எந்தத் தீங்கும் இழைக்காது நீங்கள் கஅபாவிற்குச் செல்வதிலிருந்து தடுக்கப்படுவீர்கள் என்று நாங்கள் அஞ்சுகிறோம்!” என்றனர். அதற்கு இப்னு உமர் (ரலி) 'நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம் குறைஷிகளில் இறைமறுப்பாளர்கள் கஅபாவுக்குச் செல்லவிடாமல் (நபி (ஸல்) அவர்களைத்) தடுத்தனர் நபி (ஸல்) தம் பலிப்பிராணியை அறுத்து (பலியிட்டுவிட்டு)த் தலையை மழித்தார்கள்: நான் உம்ரா செய்ய முடிவு செய்துவிட்டேன் என்பதற்கு உங்களை சாட்சியாக்குகிறேன். அல்லாஹ் நாடினால் நான் புறப்பட்டுச் செல்வேன். கஅபாவிற்குச் செல்ல வழி விடப்பட்டால் வலம்வந்தேன்! அங்கு செல்ல முடியாதவாறு நான் தடுக்கப்பட்டால் நபி (ஸல்) அவர்களுடன் நான் இருந்தபோது அவர்கள் செய்தது போல் நானும் செய்வேன்!” என்றார்கள். பிறகு, துல்ஹுலைஃபா எனும் இடத்தில் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்தார்கள். பிறகு, சிறிது நேரம் நடந்துவிட்டு, 'ஹஜ் உம்ரா இரண்டும் ஒரே மாதிரியானவையே! நான் என் உம்ராவுடன் ஹஜ்ஜையும் (என் மீது) கடமையாக்கிக் கொண்டேன் என்பதற்கு உங்களை சாட்சியாக்குகிறேன்!” என்றார்கள். துல்ஹஜ் மாதத்தின் பத்தாம் நாள் வந்து, பலியிடும்வரை இஹ்ராமிலிருந்து அவர்கள் விடுபடவில்லை. 'மக்காவில் நுழையும் தினத்தில் (ஹஜ், உம்ராவிற்காக) ஒரேயொரு முறை வலம்வரும்வரை இஹ்ராமிலிருந்து (முழுமையாக) விடுபட முடியாது‘ என்றும் கூறி வந்தார்கள்.

“நீங்கள் இங்கேயே தங்கிவிடலாமே!” என்று இப்னு உமர் (ரலி) அவர்களிடம் அவரின் மகன்களில் ஒருவர் (மேற்கண்ட சம்பவத்தின் போது) கூறினார்!” என்று மற்றோர் அறிவிப்பில் காணப்படுகிறது.

ஹதீஸ் 1809. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் (கஅபாவிற்குச் செல்ல விடாமல்) தடுக்கப்பட்டபோது தம் தலையை மழித்துக் கொண்டு, தம் மனைவியருடன் கூடி, தம் பலிப்பிராணியையும் அறுத்து பலியிட்டார்கள் மறுவருடம் உம்ரா செய்தார்கள்.

## ஹஜ்ஜிலிருந்து தடுக்கப்படுதல்.

ஹதீஸ் 1810. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்களின் வழிமுறை உங்களுக்குப் போதாதா? உங்களில் ஒருவர் ஹஜ்ஜிலிருந்து தடுக்கப்பட்டால், அவர் (சாத்தியப்பட்டால்) கஅபாவை வலம்வந்து, ஸஃபா மர்வாவுக்கிடையே சஃயு செய்து, இஹ்ராமிலிருந்து விடுபடட்டும்! மறுவருடம் ஹஜ் செய்து பலியிடட்டும்! பலிப் பிராணி கிடைக்காவிட்டால் நோன்பு நோற்கட்டும்!“

## (ஹஜ் அல்லது உம்ராவிலிருந்து) தடுக்கப்படும்போது, தலையை மழித்துக் கொள்வதற்கு முன் (பலிப் பிராணியை) அறுத்து பலியிடுதல்.

ஹதீஸ் 1811. மிஸ்வர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (உம்ராவிலிருந்து தடுக்கப்பட்டபோது) தலையை மழித்துக் கொள்வதற்கு முன் (பலிப்பிராணியை) அறுத்து பலியிட்டார்கள் அவ்வாறே செய்யும் படி தம் தோழர்களுக்கும் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 1812. நாஃபிவு(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் ஸாலிம், அப்துல்லாஹ் ஆகியோர் (குழப்பமான சூழ்நிலையில் ஹஜ்ஜுக்குச் செல்வது குறித்து) ஆட்சேபனை செய்தபோது இப்னு உமர்(ரலி)'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் உம்ரா செய்வதற்காகப் புறப்பட்டோம். குறைஷிகளில் இறைமறுப்பாளர்கள் கஅபாவிற்குச் செல்லவிடாமல் தடுத்துவிட்டார்கள் எனவே, நபி(ஸல்) அவர்கள் தங்களின் ஒட்டகங்களை அறுத்து (குர்பானி கொடுத்து)விட்டுத் தம் தலையை மழித்தார்கள்! (இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்கள்!)‘ என்று கூறினார்கள்.

## (கஅபாவிற்குச் செல்ல முடியாதபடி) ஹஜ்ஜிலிருந்து தடுக்கப்பட்டவர் மீண்டும் (ஹஜ்) செய்ய வேண்டியதில்லை.

“(மனைவியுடன் கூடும்) இன்பத்தை நாடித் தம் ஹஜ்ஜை முறித்துக் கொள்கிறவரின் மீதே மீண்டும் (அதை) நிறைவேற்றும் கடமை(யும்) உள்ளது! தக்க காரணமோ (நோய், எதிரிகளின் முற்றுகை போன்ற) வேறு ஏதுமோ ஒருவரைத் தடுத்திருந்தால் அவர் இஹ்ராமிலிருந்து விடுபடுவார். அவர் திரும்ப (ஹஜ்) செய்ய வேண்டியதில்லை. தடுக்கப்படும்போது அவரிடம் பலிப்பிராணி இருந்தால் அதை பலியிடும் இடத்திற்கு (மினாவுக்கு) அனுப்ப இயலாவிட்டால் தடுக்கப்பட்ட இடத்திலேயே அதை அறுத்து பலியிடுவார். அனுப்ப இயலுமானால் பலிப்பிராணி அதற்குரிய இடத்தை (மினாவை) அடையும்வரை அவர் இஹ்ராமிலிருந்து விடுபடக் கூடாது!”என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

தடுக்கப்படுபவர் தம் பலிப்பிராணியை அறுத்து பலியிட்டு விடுவார். எந்த இடத்திலிருந்தாலும் தலையை மழித்துக் கொள்வார் (தடுக்கப்பட்ட ஹஜ்ஜை அல்லது உம்ராவை) அவர் திரும்ப நிறைவேற்ற வேண்டியதில்லை. ஏனெனில், நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் ஹுதைபிய்யாவில் உம்ராவிலிருந்து தடுக்கப்பட்டபோது அவர்கள் அறுத்து பலியிட்டார்கள் தலை மழித்தார்கள் வலம்வருவதற்கு முன்பும் பலிப்பிராணி கஅபாவை அடைவதற்கு முன்பும்

இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்கள். மேலும், நபி(ஸல்) அவர்கள் எதையும் (களாவாக) திரும்பச் செய்யுமாறு எவருக்கும் கட்டளையிட்டதாகக் கூறப்படவில்லை. மேலும்'ஹுதைபிய்யா எனும் இடம் ஹரம் எல்லைக்கு வெளியே உள்ளதாகும்' என மாலிக்(ரஹ்) அவர்களும் மற்றும் சிலரும் குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 1813. நாஃபிவு(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

குழப்பமான காலத்தில் உம்ரா செய்வதற்காக இப்னு உமர்(ரலி) மக்காவிற்குப் புறப்பட்டபோது,'கஅபாவுக்குச் செல்ல விடாமல் நான் தடுக்கப்பட்டால் நபி(ஸல்) அவர்களுடன் சென்றபோது நாங்கள் செய்தது போல் செய்து கொள்வோம்!"என்றார்கள். ஹுதைபிய்யா ஆண்டின்போது (ஹிஜ்ரி6-ல்), நபி(ஸல்) அவர்கள் உம்ராவிற்கு இஹ்ராம் அணிந்த காரணத்தினால் இப்னு உமர்(ரலி) அவர்களும் உம்ராவிற்கு இஹ்ராம் அணிந்தார்கள். பின்னர் சிந்தித்துப் பார்த்து,'ஹஜ், உம்ரா இரண்டும் ஒரே மாதிரியானது தான்!"என்று கூறினார்கள். பின்னர் தம் தோழர்களை நோக்கி,'இவ்விரண்டும் ஒரே மாதிரியானவையே! எனவே, உம்ராவுடன் ஹஜ்ஜையும் (நிறைவேற்றுவதை என்மீது) கடமையாக்கிக் கொண்டேன் என்பதற்கு உங்களை நான் சாட்சியாக்குகிறேன்!"என்றார்கள். பிறகு, இரண்டிற்கும் (ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்கும்) சேர்த்து ஒரே வலம்வந்தார்கள். அதுவே (இரண்டிற்கும்) போதுமானது எனக் கருதினார்கள் (பலிப் பிராணியை) பலியிடவும் செய்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

"உங்களில் யாரேனும் நோயாளியாக இருந்தால் அல்லது அவரின் தலையில் துன்பம் தரும் (பேன், பொடுகு, அல்லது நோய்) ஏதும் இருந்தால் (அதன் காரணத்தால், இஹ்ராம் அணிந்த நிலையிலேயே அவர் தன் தலையை மழித்துக் கொள்ள நேரிட்டால் அதற்குப்) பரிகாரமாக அவர் நோன்பு நோற்க வேண்டும் அல்லது தர்மம் செய்ய வேண்டும் அல்லது குர்பானி கொடுக்க வேண்டும்!"(திருக்குர்ஆன் 02:196)

(இம்மூன்றில் எதைச் செய்வதற்கும்) அவர்களுக்கு சலுகை உண்டு. நோன்பு நோற்பது என்றால் மூன்று நாள்கள் நோற்க வேண்டும்.

ஹதீஸ் 1814. கஅபு இப்னு உஜ்ரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"உம்முடைய (தலையிலுள்ள) பேன்கள் உமக்குத் துன்பம் தருகின்றனவா?' என்று என்னிடம் நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான்'ஆம்! நபி அவர்களே!"என்றேன். நபி(ஸல்) அவர்கள்'உம்முடைய தலையை மழித்து மூன்று நாள்கள் நோன்பு நோற்பீராக! அல்லது மூன்று நாள்கள் நோன்பு நோற்பீராக! அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவு அளிப்பீராக! அல்லது ஓர் ஆட்டை பலியிடுவீராக!"என்றார்கள்.

அல்லாஹ் கூறினான்:

"உங்களில் யாரேனும் நோயாளியாக இருந்தால் அல்லது அவரின் தலையில் துன்பம் தரும் (பேன், பொடுகு, அல்லது நோய்) ஏதும் இருந்தால் (அதன் காரணத்தால், இஹ்ராம் அணிந்த நிலையிலேயே அவர் தன் தலையை மழித்துக் கொள்ள நேரிட்டால், அதற்குப்) பரிகாரமாக நோன்பு நோற்க வேண்டும் அல்லது தர்மம் செய்ய வேண்டும்: அல்லது குர்பானி கொடுக்கவேண்டும்!"(திருக்குர்ஆன் 02:196)

'தர்மம்' என்று இவ்வசனத்தில் அல்லாஹ் குறிப்பிடுவது ஆறு ஏழைகளுக்கு உணவளிப்பதைத் தான்.

ஹதீஸ் 1815. கஅபு இப்னு உஜ்ரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹுதைபிய்யாவில் என்னருகில் நபி(ஸல்) அவர்கள் நின்றார்கள். என் தலையிலிருந்து பேன்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உம் (தலையிலுள்ள) பேன்கள் உமக்குத் துன்பம் தருகின்றனவா!"என்று கேட்டார்கள். நான்'ஆம்!"என்றேன். அதற்கு'உம் தலையை மழித்துக் கொள்ளும்!"என்றார்கள். என் விஷயமாகவே (திருக்குர்ஆன் 02:196) இறைவசனம் அருளப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள்,'மூன்று நாள்கள் நோன்பு நோற்பீராக! அல்லது மூன்று ஸாவு தானியத்தை ஆறு ஏழைகளுக்கு தர்மம் செய்வீராக! அல்லது உம்மால் முடிந்ததை பலியிடுவீராக!"என்று கூறினார்கள்.

## (இஹ்ராம் அணிந்த நிலையில் ஏற்படும் குற்றங் குறைகளுக்குரிய) பரிகாரமாக ஓர் ஏழைக்கு வழங்கும் உணவின் அளவு ஸாவு ஆகும்.

ஹதீஸ் 1816. அப்துல்லாஹ் இப்னு மஃகல்(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

நான் கஅபு இப்னு உஜ்ரா(ரலி) அவர்களிடம் அமர்ந்திருந்தேன். (ஹஜ்ஜில் ஏற்படும் குறைகளுக்குப்) பரிகாரம் பற்றி அவர்களிடம் கேட்டேன் அதற்கு அவர்கள்,'என் விஷயமாகவே (திருக்குர்ஆன் 02: 196) இறைவசனம் அருளப்பட்டது் என்றாலும், அது உங்கள் அனைவருக்கும் பொதுவானதே! பேன்கள் என் முகத்தில் உதிர்ந்து கொண்டிருக்க, நான் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப்பட்டேன் நபி(ஸல்) அவர்கள்,'உமக்கு இவ்வளவு அதிகமாக வேதனை ஏற்பட்டிருக்கும் என்று நான் நினைக்கவில்லை! உம்மிடம் ஓர் ஆடு இருக்கிறதா?' என்று கேட்டார்கள் நான்'இல்லை!' என்றேன். நபி(ஸல்) அவர்கள்,'(தலையை மழித்து) மூன்று நோள்கள் நோன்பு நோற்பீராக! அல்லது ஒவ்வொரு ஏழைக்கும் அரை ஸாவு வீதம் ஆறு ஏழைகளுக்கு உணவளிப்பீராக!' என்று கூறினார்கள்'' என்றார்கள்.

## (திருக்குர்ஆன் 02:196 வசனத்தில்) நுஸுக் என்று கூறப்படுவது ஆட்டை பலியிடுவதுதான்.

ஹதீஸ் 1817 , ஹதீஸ் 1818 கஅபு இப்னு உஜ்ரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

என் முகத்தில் பேன்கள் விழுந்து கொண்டிருந்தபோது என்னை நபி(ஸல்) அவர்கள் கண்டார்கள்.'உம் (தலையிலுள்ள) பேன்கள் உமக்குத் துன்பம் தருகின்றனவா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்!"என்றேன். அப்போது ஹுதைபிய்யாவிலிருந்த நபி(ஸல்) அவர்கள் என் தலையை மழிக்குமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள். மக்காவிற்குள் நுழைய வேண்டுமென்ற எதிர்பார்ப்பில் மக்கள் இருந்ததால் அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டுமென்று நபி(ஸல்) அவர்கள் கூறவில்லை. அப்போது இறைவன் (குற்றப்) பரிகாரம் சம்பந்தப்பட்ட வசனத்தை அருளினான். உடனே, நபி(ஸல்) அவர்கள்'மூன்று ஸாவு தானியத்தை ஆறு பேருக்கு வழங்க வேண்டும்: அல்லது ஓர் ஆட்டை பலியிட வேண்டும் அல்லது மூன்று நாள்கள் நோன்பு நோற்க வேண்டும்!"என்று எனக்குக் கட்டளையிட்டார்கள்.

அல்லாஹ் கூறினான்:

**“ஹஜ்ஜின்போது உடலுறவு, கெட்ட வார்த்தைகள் பேசுதல், சச்சரவு - ஆகியவை செய்தால் கூடாது‘‘ (திருக்குர்ஆன் 02:197)**

**ஹதீஸ் 1819. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்**

**“மனைவியுடன் உடலுறவு கொள்ளாமல், எந்தப் பாவமும் செய்யாமல், இந்த ஆலயத்தை ஹஜ் செய்கிறவர் அன்று பிறந்த பாலகனைப் போல் திரும்புகிறார். “**

**என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.**

**அல்லாஹ் கூறினான்:**

**“ஹஜ்ஜின்போது, கெட்ட வார்த்தைகள் பேசுதல், சச்சரவு - ஆகியவை செய்தல் கூடாது‘‘ (திருக்குர்ஆன் 02:97)**

**ஹதீஸ் 1820. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்**

**“மனைவியுடன் உடலுறவு கொள்ளாமல், எந்தப் பாவமும் செய்யாமல் இந்த ஆலயத்தை ஹஜ் செய்கிறவர் அன்று பிறந்த பாலகனைப் போல் திரும்புகிறார்.**

**என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்**

## அத்தியாயம் 28 (இஹ்ராம் அணிந்த நிலையில் தவறுதலாக) வேட்டையாடியதற்குரிய பரிகாரம்

அல்லாஹ் கூறினான்:

“இறை நம்பிக்கையாளர்களே! நீங்கள் இஹ்ராமுடைய நிலையில் வேட்டை (யாடி)ப் பிராணிகளைக் கொல்லாதீர்கள்! மேலும், உங்களில் யாரேனும் வேண்டுமென்றே வேட்டை(யாடி)ப் பிராணியைக் கொன்றுவிட்டால், அதற்குப் பரிகாரமாக அவர்தான் கொன்ற பிராணிக்குச் சமமான ஒரு பிராணியை கால்நடைகளிலிருந்து பலி கொடுக்க வேண்டும் உங்களில் நீதிமான்கள் இருவர் அதனைத் தீர்மானிக்க வேண்டும் அந்த பலிப்பிராணி கஅபாவில் கொண்டு சேர்க்கப்பட வேண்டும் அல்லது (அச்செயலுக்கு) குற்றப் பரிகாரமாக ஏழை எளியவர்களுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது அதற்குச் சமமாக அவர் நோன்பு நோற்க வேண்டும்! (இவ்வாறு விதிக்கப்பட்டிருப்பது) தான் செய்த (தவறான) செயலின் விளைவை அவர் சுவைப்பதற்காகவே! முன்பு செய்தவற்றையெல்லாம் அல்லாஹ் மன்னித்துவிட்டான் எனவே, யாரேனும் மீண்டும் அச்செயலைப் புரிந்தால் அல்லாஹ் அவரைப் பழி வாங்குவான். மேலும், அல்லாஹ் யாவரையும் மிகைத்தவனாகவும் பழிவாங்கும் ஆற்றல் உடையவனாகவும் இருக்கிறான்!

“உங்களுக்கும் (இதர) பயணிகளுக்கும் பலன் கிடைக்கும் பொருட்டு (நீங்கள் இஹ்ராம் அணிந்திருந்தாலும்) கடலில் வேட்டையாடுவதும், அதைப் புசிப்பதும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது ஆனால், நீங்கள் எதுவரை இஹ்ராம் அணிந்திருக்கிறீர்களோ அது வரையிலும் தரையில் வேட்டையாடுவது உங்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளது. எனவே, நீங்கள் யாரிடம் (மறுமையில்) ஒன்று சேர்க்கப்படுவீர்களோ அந்த அல்லாஹ்வுக்கே அஞ்சி நடந்து கொள்ளுங்கள்!”(திருக்குர்ஆன் 5:95,96)

### இஹ்ராம் அணியாதவர் வேட்டையாடி, இஹ்ராம் அணிந்தவருக்கு வேட்டைப் பிராணிக்கு அன்பளிப்பாக வழங்கினால் அவர் அதை உண்ணலாம்.

“இஹ்ராம் அணிந்தவர் ஒட்டகம், ஆடு, மாடு, கோழி, குதிரை ஆகியவற்றை அறுப்பதில் தவறு இல்லை! அது வேட்டையில் அடங்காது!”என்று இப்னு அப்பாஸ்(ரலி), அனஸ்(ரலி) ஆகியோர் கருதுகிறார்கள்.

ஹதீஸ் 1821. அபூ கதாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் ஹுதைபிய்யா ஆண்டில் (மக்காவுக்குப்) புறப்பட்டேன். என்னுடைய தோழர்கள் இஹ்ராம் அணிந்தனர் நான் இஹ்ராம் அணியவில்லை. எதிரிகள் நபி(ஸல்) அவர்களின் மீது படையெடுத்து வரவிருக்கிறார்கள் என்ற செய்தி நபி(ஸல்) அவர்களுக்குக் கிடைத்தது. நபி(ஸல்) அவர்கள் அந்தப் படையை எதிர்கொள்ள முன்னே புறப்பட்டார்கள். நான் மற்ற நபித்தோழர்களுடன் சென்று கொண்டிருந்தபோது, அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துச் சிரிக்கலாயினர்.

“அப்போது நான் என் முன்னே ஒரு காட்டுக் கழுதையைக் கண்டு, அதைத் தாக்கி ஈட்டியால் குத்திப் பிடித்தேன். என் தோழர்களிடம் உதவி வேண்டினேன். (இஹ்ராம் அணிந்திருந்ததால்) அவர்கள் எனக்கு உதவ மறுத்துவிட்டனர். பிறகு அதன் மாமிசத்தை நாங்கள் சாப்பிட்டோம். நாங்கள் நபி(ஸல்) அவர்களைப் பிரிந்து விடுவோமோ என்று அஞ்சினோம். நபி(ஸல்) அவர்களைத் தேடி என் குதிரையைச் சிறிது நேரம் விரைவாகவும் சிறிது நேரம் மெதுவாகவும்

ஓட்டிச் சென்றேன். நள்ளிரவில் நான் பனும்ஃபார் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரைச் சந்தித்து, 'நபி(ஸல்) அவர்களை எங்கேவிட்டு வந்தீர்?' என்று கேட்டேன். அதற்கவர்'அவர்கள்'சுக்யா' எனும் இடத்திற்குச் சென்று மதிய ஓய்வு கொள்ள எண்ணிருந்த வேளையில், 'தஃஹின்' எனும் இடத்தில் அவர்களைவிட்டு வந்தேன்!"என்றார். (நான் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்து), 'நபி அவர்களே! உங்கள் தோழர்கள் உங்களின் மீது ஸலாம் (இறை சாந்தி) மற்றும் இறைகருணை பொழிந்திடப் பிரார்த்திக்கிறார்கள்! உங்களைப் பிரிந்து விடுவோமோ என்று அவர்கள் அஞ்சுகிறார்கள்! எனவே (அவர்கள் வரும்வரை) அவர்களுக்காக நீங்கள் காத்திருங்கள்! நபி அவர்களே! நான் காட்டுக் கழுதையை வேட்டையாடினேன். அதில் சிறிதளவு என்னிடம் மீதம் உள்ளது!"என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள் மக்களிடம்'உண்ணுங்கள்!"என்றார்கள். (அப்போது) மக்கள் அனைவரும் இஹ்ராம் அணிந்திருந்தார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர்கள் வேட்டைப் பிராணியைக் கண்டு சிரிக்கும்போது இஹ்ராம் அணியாதவர் அதைப் புரிந்து கொண்டு வேட்டையாடுதல்.

ஹதீஸ் 1822. அபூ கதாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹுதைபிய்யா (ஒப்பந்தம் நடந்த) ஆண்டில் நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் சென்றோம். அவர்களின் தோழர்கள் இஹ்ராம் அணிந்திருந்தனர் நான் இஹ்ராம் அணியவில்லை. 'கைகா' எனும் இடத்தில் எதிரிகள் இருப்பதாக எங்களுக்கு அறிவிக்கப்பட்டது் நாங்கள் அவர்களை எதிர்கொள்ளச் சென்றோம். (வழியில்) ஒரு காட்டுக் கழுதையைக் கண்டு என் தோழர்கள் ஒருவரையொருவர் பார்த்து சிரிக்கலாயினர். நான் அதைப் பார்த்து, அதன் மீது குதிரையை ஏவி, ஈட்டியால் அதைக் குத்திப் பிடித்தேன். நான் என் தோழர்களிடம் உதவி தேடியபோது, அவர்கள் (இஹ்ராம் அணிந்திருந்ததால்) எனக்கு உதவ மறுத்துவிட்டார்கள். பிறகு, அதை நாங்கள் அனைவரும் சாப்பிட்டோம். பிறகு நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று சேர்ந்து விட்டேன். நபி(ஸல்) அவர்களைப் பிரிந்து விடுவோம் என்று அஞ்சி, என் குதிரையை விரைவாகவும் மெதுவாகவும் ஓட்டிச் சென்றேன். நள்ளிரவில் பனும்ஃபார் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு மனிதரைச் சந்தித்தேன். 'நபி(ஸல்) அவர்களை எங்கேவிட்டு வந்திருக்கிறீர்?' என்று கேட்டேன். 'அவர்கள்'சுக்யா' எனும் இடத்திற்குச் சென்று மதிய ஓய்வு கொள்ள எண்ணியிருந்த வேளையில்'தஃஹின்' எனும் இடத்தில் அவர்களைவிட்டு வந்தேன்!"என்று அவர் கூறினார். நான் நபி(ஸல்) அவர்களை அடைந்து, 'நபி அவர்களே! உங்கள் தோழர்கள் உங்களுக்கு ஸலாம் கூறி அனுப்பினார்கள்: உங்களிடமிருந்து அவர்களை எதிரிகள் பிரித்து விடுவார்களோ என்று அவர்கள் அஞ்சுகிறார்கள்: எனவே, அவர்களுக்காக எதிர்பார்த்திருங்கள்!"என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள் அவ்வாறே செய்தார்கள். மேலும், 'நபி அவர்களே! நாங்கள் காட்டுக் கழுதையை வேட்டையாடினோம் எங்களிடம் (அதில்) மீதமும் உள்ளது!"என்று கூறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருந்த தம் தோழர்களிடம்'உண்ணுங்கள்!"என்று கூறினார்கள்.

## இஹ்ராம் அணியாதவர் வேட்டையாடும்போது இஹ்ராம் அணிந்தவர் உதவக் கூடாது.

ஹதீஸ் 1823. அபூ கதாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் மதீனாவுக்கு மூன்று (கல்) தொலைவிலுள்ள காஹா எனும் இடத்தில் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். எங்களில் இஹ்ராம் அணிந்தவர்களும் இஹ்ராம் அணியாதவர்களும் இருந்தனர். என் தோழர்கள் எதையோ பார்க்கலானார்கள். நான் கூர்ந்து பார்த்தபோது ஒரு காட்டுக் கழுதை தென்பட்டது. (என் குதிரையில் ஏறியதும்) என்னுடைய சாட்டை கீழே விழுந்தது. (அதை எடுத்துத் தருமாறு என் தோழர்களிடம் நான் கேட்டபோது) என் தோழர்கள்'நாங்கள் இஹ்ராம் அணிந்திருப்பதால் இந்த விஷயத்தில் உமக்கு எந்த உதவியும் செய்ய மாட்டோம்!"என்று கூறிவிட்டனர். எனவே, நானே (இறங்கி) அதை எடுத்தேன். பின்னர், ஒரு பாறாங் கல்லின் பின்னாலிருந்து (மறைந்து) கழுதையின் அருகே சென்று அதன் கால்களை வெட்டி (அதை வேட்டையாடி)னேன். என் தோழர்களிடம் அதைக் கொண்டு வந்தேன். சிலர்'உண்ணுங்கள்!"என்றனர். மற்றும் சிலர்'உண்ணாதீர்கள்!"என்றனர். எங்களுக்கு முன்னே சென்று கொண்டிருந்த நபி(ஸல்) அவர்களிடம் நான் சென்று இது பற்றிக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அதை உண்ணுங்கள்! அது அனுமதிக்கப்பட்டதுதான்!' என்று பதிலளித்தார்கள்.

## இஹ்ராம் அணியாதவர் வேட்டையாடுவதற்காக இஹ்ராம் அணிந்தவர் வேட்டைப் பிராணியை(க் காட்டிக் கொடுக்க) சைகை செய்யக் கூடாது.

ஹதீஸ் 1824. அபூ கதாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஜ் செய்வதற்காகப் புறப்பட்டார்கள். அவர்களுடன் (மக்களும்) புறப்பட்டனர். அவர்களில் என்னையும் சேர்த்து ஒரு சிறு கூட்டத்தை நபி(ஸல்) அவர்கள் வேறு வழியாக அனுப்பிவைத்தார்கள். 'கடலோரமாக நீங்கள் செல்லுங்கள் நாம் சந்திப்போம்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். கடலோரமாகச் சென்று திரும்பியபோது என்னைத் தவிர அனைவரும் இஹ்ராம் அணிந்தனர் நான் மட்டும் இஹ்ராம் அணியவில்லை. இவ்வாறு நாங்கள் சென்று கொண்டிருக்கும்போது என் தோழர்கள் காட்டுக் கழுதைகளைக் கண்டனர். நான் அவற்றின் மீது தாக்குதல் நடத்தி, ஒரு பெட்டைக் கழுதையின் கால்களை வெட்டி (வேட்டையாடி)னேன். அனைவரும் ஓரிடத்தில் தங்கி அதன் இறைச்சியை சாப்பிட்டோம். 'நாம் இஹ்ராம் அணிந்திருக்கும் நிலையில் வேட்டையாடப்பட்ட இறைச்சியை உண்ணலாமா?' என்றும் தோழர்கள் (ஒருவரையொருவர்) கேட்டனர். எஞ்சிய இறைச்சியை எடுத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்றோம். என் தோழர்கள் நபி(ஸல்) அவர்களிடம்'நபி அவர்களே! நாங்கள் இஹ்ராம் அணிந்திருந்தோம் அபூ கதாதா இஹ்ராம் அணியவில்லை அப்போது காட்டுக் கழுதைகளை நாங்கள் கண்டோம். அபூ கதாதா அவற்றைத் தாக்கி அதில் ஒரு பெட்டைக் கழுதையின் கால்களை வெட்டி (வேட்டையாடி)னார். ஓரிடத்தில் தங்கி அதன் இறைச்சியை நாங்கள் சாப்பிட்டோம்'நாம் இஹ்ராம் அணிந்திருக்கும்போது வேட்டையாடப்பட்ட மாமிசத்தை உண்ணலாமா?' என்று நாங்கள் (எங்களுக்குள்) பேசிக் கொண்டோம் பிறகு, எஞ்சிய மாமிசத்தை எடுத்து வந்திருக்கிறோம்!"என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'உங்களில் எவராவது அதைத் தாக்குமாறு அவருக்குக் கூறினாரா? அல்லது அதை சுட்டிக் காட்டி சைகை செய்தாரா?' என்று கேட்டார்கள். நபித் தோழர்கள்'இல்லை!"என்றனர். 'அப்படியானால் எஞ்சிய மாமிசத்தை உண்ணுங்கள்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்தவருக்கு காட்டுக் கழுதை உயிருடன் அன்பளிப்புச் செய்யப்பட்டால் அதை அவர் ஏற்கக் கூடாது.

ஹதீஸ் 1825. ஸஅபு இப்னு ஜஸ்ஸாமா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அப்வா அல்லது வத்தான் எனும் இடத்தில் இருந்தபோது, நான் அவர்களுக்கு ஒரு காட்டுக் கழுதையை அன்பளிப்பாக வழங்கினேன். அவர்கள் அதை ஏற்க மறுத்தார்கள். என் முகத்தில் ஏற்பட்ட கவலையைக் கண்டதும். 'நாம் இஹ்ராம் அணிந்திருப்பதால்தான் இதை ஏற்க மறுத்தோம்!" என்று கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர் கொல்வதற்கு அனுமதிக்கப்பட்ட உயிரினங்கள்.

ஹதீஸ் 1826 , ஹதீஸ் 1827 , ஹதீஸ் 1828 , ஹதீஸ் 1829. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஐந்து உயிரினங்கள் தீங்கு இழைக்கக் கூடியவையாகும்! அவற்றை இஹ்ராம் அணிந்தவர் கொன்றால் அவரின் மீது குற்றமில்லை! அவை காகம், பருந்து, தேள், எலி, வெறிநாய் ஆகியனவாகும்!"

இதை இப்னு உமர் (ரலி) ஹஃப்ஸா (ரலி), ஆயிஷா (ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 1830. அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் மினாவிலுள்ள ஒரு குகையிலிருந்தோம். அப்போது 'வல்முர்ஸலாத்" எனும் அத்தியாயம் அவர்களுக்கு இறங்கியது. அவர்கள் அதை ஓதிக் காட்டினார்கள். நான் அவர்களின் திருவாயிலிருந்து (கேட்டு) அதை மனனம் செய்து கொண்டிருந்தேன். அதை ஓதியதால் அவர்களின் வாய் ஈரமாக இருந்தது. அப்போது ஒரு பாம்பு எங்களை நோக்கிச் சீறியது. உடனே நபி (ஸல்) அவர்கள், 'அதைக் கொல்லுங்கள்!" என்றார்கள். நாங்கள் அதைக் கொல்ல விரைந்தபோது அது சென்றுவிட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள் 'அதன் தீங்கிலிருந்து நீங்கள் தப்பித்ததுபோல் உங்கள் தீங்கிலிருந்து அது தப்பித்தது!" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1831. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"பல்லி தீங்கிழைக்கக் கூடியது!" என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஆனால், 'அதைக் கொல்லுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டதை நான் செவியுறவில்லை!" என்றும் ஆயிஷா (ரலி) கூறினார்.

## 'ஹரம்' உடைய எல்லைக்குள் இருக்கும் மரங்களை வெட்டக் கூடாது.

"அதன் முட்களையும் வெட்டக் கூடாது!' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 1832. ஸயீத் இப்னு அபீ ஸயீத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

(மதீனாவின் ஆளுநராயிருந்த) அம்ர் இப்னு ஸயீத். (அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அவர்களுக்கு எதிராக), மக்காவை நோக்கிப் படைகளை அனுப்பியபோது அவரிடம் அபூ ஷுரைஹ் அல் அதவீ (ரலி) பின்வருமாறு கூறினார்கள்.

“தலைவரே! மக்கா வெற்றிக்கு மறுநாள் நபி(ஸல்) அவர்கள் கூறிய ஒரு செய்தியை உமக்கு நான் கூறுகிறேன். என் காதுகள் அதைச் செவியுற்றன் என் உள்ளம் அதை மனனம் செய்திருக்கிறது் அவர்கள் அதைக் கூறும்போது என் கண்கள் அவர்களைப் பார்த்திருக்கின்றன. அப்போது நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றிவிட்டு,'மக்காவை அல்லாஹ் புனிதப்படுத்தியிருக்கிறான்: மனிதர்கள் அதற்குப் புனிதத்தை வழங்கவில்லை. அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பக்கூடிய எவருக்கும் இங்கே இரத்தத்தைச் சிந்துவதோ இங்குள்ள மரத்தை வெட்டுவதோ அனுமதிக்கப்படவில்லை் நபி போரிட்டதால் இதைப் பொது அனுமதி என்று யாரேனும் கருதினால்.'அல்லாஹ், தன் தூதருக்குத்தான் அனுமதி வழங்கினான் உங்களுக்கு அனுமதி வழங்கவில்லை!”என்று கூறிவிடுங்கள். எனக்குக் கூட பகலில் சிறிது நேரம் மட்டுமே அனுமதி அளிக்கப்பட்டது. இன்று அதன் புனிதத் தன்மை நேற்றைய அதன் புனிதத் தன்மையைப் போல் மீண்டு வந்துவிட்டது! (இங்கு) வந்திருப்போர் வராதவருக்குச் சொல்லி விடுங்கள்!”என்று கூறினார்கள்.

அபூ ஷுரைஹ்(ரலி) அவர்களிடம்'இதற்கு அம்ர் உங்களுக்கு என்ன பதில் கூறினார்?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்'அபூ ஷுரைஹே! உம்மைவிட இதைப் பற்றி நான் நன்கு அறிந்தவன்! குற்றவாளிக்கும். கொலை செய்துவிட்டு ஓடுபவனுக்கும், திருடிவிட்டு ஓடுபவனுக்கும்'ஹரம்' நிச்சயம் பாதுகாப்புத் தராது!' என்று அம்ர் கூறினார்“ என பதிலளித்தார்கள்.

## ‘ஹரம்’ எல்லைக்குள் வேட்டைப் பிராணிகளை விரட்டக் கூடாது.

ஹதீஸ் 1833. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“அல்லாஹ் மக்காவைப் புனிதப்படுத்தியிருக்கிறான்! எனக்கு முன்னர் எவருக்கும் (அதில் போரிடுதல்) அனுமதிக்கப்படவில்லை் எனக்குப் பின் எவருக்கும் அனுமதிக்கப்படாது் எனக்குக் கூட பகலில் சிறிது நேரமே அனுமதிக்கப்பட்டது! எனவே, இங்குள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக் கூடாது் இங்குள்ள மரங்களை வெட்டக் கூடாது் இங்குள்ள வேட்டைப் பிராணிகளை விரட்டக் கூடாது் யாரேனும் தவறவிட்ட பொருட்களை, அது பற்றி அறிவிப்புச் செய்பவரைத் தவிர மற்றவர்கள் எடுக்கக் கூடாது!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அப்பாஸ்(ரலி)'நபி அவர்களே! எங்கள் மண்ணறைகளுக்கும் உலோகத் தொழிலாளர்களுக்கும் பயன்படுகிற'இத்கிர்' புல்லைத் தவிரவா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், ‘இத்கிர் எனும் புல்லைத் தவிர!”என்று கூறினார்கள்.

## மக்காவில் போர் புரியக் கூடாது.

“மக்காவில் இரத்ததைச் சிந்தக் கூடாது!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஷுரைஹ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1834. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“இனி (மக்காவிலிருந்து) ஹிஜ்ரத் செய்தல் கிடையாது என்றாலும் அறப்போரிடுதல் அதற்காக (வும் மற்ற நற்செயல்கள் புரியவும்) நாட்டம் கொள்வதும்தான் இருக்கிறது! நீங்கள் போருக்காக அழைக்கப்பட்டால் புறப்படுங்கள்! வானங்களையும் பூமியையும் படைத்த நாள் முதல் அல்லாஹ் இந்த ஊரைப் புனிதப்படுத்தியிருக்கிறான் அவன் புனிதப்படுத்திய காரணத்தால் மறுமை நாள்

வரை இவ்வூர் புனிமானதாகும்! எனக்கு முன்னர் எவருக்கும் இவ்வூரில் போரிட அனுமதிக்கப்படவில்லை எனக்குக் கூட பகலில் சிறிது நேரம் (மட்டுமே) அனுமதிக்கப்பட்டது. அல்லாஹ் புனிதப்படுத்தியிருப்பதால், மறுமை நாள் வரை இவ்வூர் புனிதமானதாகும்! இங்குள்ள முட்களை வெட்டக் கூடாது வேட்டைப் பிராணியை விரட்டக் கூடாது பிறர் தவறவிட்ட பொருட்களை அதை அறிவிப்பவர் தவிர மற்றவர் எடுக்கக் கூடாது இங்குள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக் கூடாது!"என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது,'நபி அவர்களே! இத்கிர் எனும் புல்லைத் தவிரவா? ஏனெனில், அது வீடுகளுக்கும் உலோகத் தொழிலாளர்களுக்கும் பயன்படுகிறது!"என்று அப்பாஸ்(ரலி) கேட்க, நபி(ஸல்) அவர்கள்,'இத்கிரைத் தவிர!"என்று பதிலளித்தார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர் இரத்தம் குத்தி எடுத்துக் கொள்வது.

இப்னு உமர்(ரலி), தம் மகன் (வாகித் அவர்கள்) இஹ்ராம் அணிந்திருந்தபோது சிகிச்சைக்காகச் சூடு போட்டிருக்கிறார்கள்.

நறுமணம் இல்லாதவற்றை இஹ்ராம் அணிந்தவர் மருந்தாகப் பயன்படுத்தலாம்.

ஹதீஸ் 1835. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருந்தபோது இரத்தம் குத்தி எடுத்தார்கள்."

ஹதீஸ் 1836. இப்னு புஹைனா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருந்த நிலையில்,'லஹ்யு ஜமல்' எனுமிடத்தில் தம் தலையின் நடுப்பகுதியில் இரத்தம் குத்தி எடுத்தார்கள்!"

## இஹ்ராம் அணிந்தவர் திருமணம் செய்தல்.

ஹதீஸ் 1837. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருக்கும்போது அன்னை மைமூனா(ரலி) அவர்களை மணந்தார்கள்!"

## இஹ்ராம் அணிந்த ஆண்களும் பெண்களும் நறுமணப் பொருளைப் பயன்படுத்துவது தடை செய்யப்பட்டதாகும்.

"இஹ்ராம் அணிந்த பெண் குங்குமப்பூச் சாயம் மற்றும் வர்ஸ் எனும் செடியின் சாயம் தோய்க்கப்பட்ட ஆடையை அணியக் கூடாது!"என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1838. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி அவர்களே! இஹ்ராம் அணிந்திருக்கும்போது எந்த ஆடைகளை நாங்கள் அணிய வேண்டுமென்று நீங்கள் கட்டளையிடுகிறீர்கள்?' என்று ஒருவர் எழுந்துகேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்'நீங்கள் சட்டைகளையும், கால் சட்டைகளையும், தலைப் பாகைகளையும், தொப்பிகளையும் அணியாதீர்கள்! ஒருவரிடம் செருப்புகள் இல்லையென்றால், அவர் காலுறைகளை (அவற்றின் மேலிருந்து) கரண்டைக்குக் கீழுள்ள பகுதிவரை கத்தரித்துக் கொள்ளட்டும்! குங்குமப் பூச்சாயம், வர்ஸ் எனும் செடியின் சாயம் தோய்ந்த எதனையும் அணியாதீர்கள்!

இஹ்ராம் அணிந்த பெண் முகத்திரை அணியக் கூடாது அவள் கையுறைகளையும் அணியக் கூடாது!"என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 1839. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இஹ்ராம் அணிந்த ஒரு மனிதரை, அவரின் ஒட்டகம் அவரின் கழுத்தை முறித்துக் கொன்றுவிட்டது. அவரின் உடல் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டபோது,'அவரைக் குளிப்பாட்டி கபனிடுங்கள்! அவரின் தலையை மூடாதீர்கள் அவருக்கு நறுமணம் பூசாதீர்கள்! ஏனெனில், அவர் (மறுமையில்) தல்பியா கூறிக் கொண்டிருப்பவராக எழுப்பப்படுவார்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர் குளிப்பது.

"இஹ்ராம் அணிந்தவர் குளியலறைக்குச் செல்லலாம்!"என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

'இஹ்ராம் அணிந்தவர் (தலையைச்) சொறிந்து கொள்வதில் குற்றமில்லை!' என்று இப்னு உமர்(ரலி) அவர்களுக்கும் ('மேனியைச் சொறிந்து கொள்வதில் தவறில்லை!') என்று ஆயிஷா(ரலி) அவர்களும் கருதுகிறார்கள்.

ஹதீஸ் 1840. அப்துல்லாஹ் இப்னு ஹுனைன்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

'அப்வா என்ற இடத்தில் மிஸ்வர் மின் மக்ரமா(ரலி) அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) ஆகிய இருவரும் கருத்து வேறுபட்டனர்.'இஹ்ராம் அணிந்தவர் தலையைக் கழுவலாம்!"என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.'இஹ்ராம் அணிந்தவர் தலையக் கழுவக் கூடாது!"என்ற மிஸ்வர்(ரலி) கூறினார். அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி), என்னை அபூ அய்?ப் அல் அன்ஸாரி(ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். நான் சென்றபோது, அவர்கள் ஊன்றப்பட்ட இரண்டு மரக்கழிகளுக்கிடையே திரையால் மறைக்கப்பட்டுக் குளித்துக் கொண்டிருந்தார்கள்.'நான் அவர்களுக்கு ஸலாம் கூறினேன்.'யார் அது?' என்று கேட்டார்கள்.'நானே அப்துல்லாஹ் இப்னு ஹுனைன்!'நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருக்கும்போது எவ்வாறு தலையைக் கழுவுவார்கள்?' என்று உங்களிடம் கேட்பதற்காக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) என்னை அனுப்பினார்கள்!"என்று கூறினேன். அபூ அய்?ப்(ரலி), தம் கையைத் திரையின் மீது வைத்து, அவர்களின் தலை தெரியுமளவிற்குத் திரையை (அசைத்து) இறக்கினார்கள். பிறகு தண்ணீர ஊற்றுகிற மனிதரிடம்'தண்ணீர ஊற்றுவீராக!' என்றார்கள். அவர் தண்ணீர ஊற்றினார். அபூ அய்?ப்(ரலி), தம் தலையை இரண்டு கைகளாலும் அசைத்துவிட்டு, முன்னும் பின்னுமாகக் கைகளைக் கொண்டு சென்றார்கள்'இப்படித்தான் நபி(ஸல்) அவர்கள் செய்யப் பார்த்திருக்கிறேன்!"என்றும் கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்தவருக்கு செருப்பு கிடைக்காவிட்டால் காலுறைகளை அணியலாம்.

ஹதீஸ் 1841 நபி(ஸல்) அவர்கள் அரஃபாவில் உரை நிகழ்த்தும்போது,'யாருக்கு செருப்பு கிடைக்கவில்லையோ அவர் காலுறைகளை அணியட்டும் யாருக்கு வேட்டி கிடைக்கவில்லையோ அவர் கால்சட்டைகளை அணியட்டும்!"என்று இஹ்ராம் அணிந்தவர்களுக்குக் கூறியதை செவியுற்றுள்ளேன்.

ஹதீஸ் 1842. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இஹ்ராம் அணிந்தவர் எத்தகைய ஆடைகளை அணியலாம் என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள்,'சட்டை, தலைப்பாகை, கால்சட்டை, தொப்பி, குங்குமச் சாயம் தோய்ந்த ஆடை, வர்ஸ் எனும் செடியின் சாயம் தோய்ந்த ஆடை ஆகியவற்றை அணியக் கூடாது! செருப்பு கிடைக்காதவர்கள் காலுறைகளை அணியலாம். ஆயினும் கரண்டைக்குக் கீழே இருக்கும்படி (மேலிருந்து கரண்டைக்குக் கீழ் வரை) அவற்றை வெட்டி விட வேண்டும்!"என்று விடையளித்தார்கள்.

## வேட்டி கிடைக்காவிட்டால் கால் சட்டைகளை அணியலாம்.

ஹதீஸ் 1843. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அர∴பாவில் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது அவர்கள்'யாருக்கு வேட்டி கிடைக்கவில்லையோ அவர் கால் சட்டைகளை அணியட்டும்! யாருக்கு செருப்பு கிடைக்கவில்லையோ அவர் காலுறைகளை அணியட்டும்!"என்றார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர் ஆயுதம் தரிப்பது.

"எதிரிகளைப் பற்றி அஞ்சினால் ஆயுதம் தரித்துக் கொள்ளலாம். ஆனால் குற்றப் பரிகாரம் செய்ய வேண்டும்!"என்று இக்ரிமா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

'குற்றப் பரிகாரம் செய்ய வேண்டும்' என்று இக்ரிமா(ரஹ்) அவர்களைத் தவிர வேறு யாரும் கூறவில்லை.

ஹதீஸ் 1844. பராவு(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் துல்கஅதா மாதத்தில் உம்ரா செய்யப் புறப்பட்டார்கள். மக்காவிற்குள் நுழைய அவர்களை மக்காவாசிகள் அனுமதிக்கவில்லை. (அடுத்த ஆண்டில்) ஆயுதங்களை உறையில் போட்டுக் கொண்டு மக்காவினுள் நுழைவதாக அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடவில்லை.

ஹதீஸ் 1845. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் மதீனா வாசிகளுக்கு'துல்ஹுலை∴பா' எனும் இடத்தையும் நஜ்து வாசிகளுக்கு'கர்ன் அல் மனாஸில்' எனும் இடத்தையும் யமன்வாசிகளுக்கும்'யலம்லம்' எனும் இடத்தையும் இஹ்ராம் அணிவதற்குரிய எல்லையாக நிர்ணயித்தார்கள். இவ்வெல்லைகள் அந்தப் பகுதியினருக்கும் அதன் வழியாக வேறு பகுதியிலிருந்து ஹஜ், உம்ராவை நாடி வருபவருக்கும், உரியனவாகும்! இந்த எல்லைகளுக்கு உட்பட்ட பகுதிகளில் இருப்பவர்கள் எந்த இடத்திலிருந்து புறப்படுகிறார்களோ அங்கிருந்தே இஹ்ராம் அணிய வேண்டும் மக்காவாசிகள் மக்காவிலிருந்தே இஹ்ராம் அணிய வேண்டும்!"

ஹதீஸ் 1846. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது தலையில் இரும்புத் தொப்பியுடன் (மக்காவினுள்) நுழைந்தார்கள். அதை அவர்கள் கழற்றியபோது ஒருவர் வந்து,'இப்னு கத்தல் என்பவன் கஅபாவின் திரைகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான்!' எனக் கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள்,'அவனைக் கொன்று விடுங்கள்!"என்று உத்தரவிட்டார்கள்.

## ஒருவர் (இஹ்ராமுடைய சட்டங்களை) அறியாமல், சட்டை அணிந்திருக்கும் நிலையில் இஹ்ராம் அணிதல்.

“ஒருவர் அறியாமலோ மறதியாகவோ நறுமணம் பூசினால் அல்லது தைக்கப்பட்ட ஆடையை அணிந்தால் அதற்காக எந்தப் பரிகாரமும் செய்ய வேண்டியதில்லை!’என அதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 1847 ～ ஹதீஸ் 1848 ய∴லா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அப்போது ஒருவர் அவர்களிடம் வந்தார். மஞ்சள் அல்லது அதைப் போன்ற கறை படிந்த (கம்பளியால் ஆன) மேலங்கியை அவர் அணிந்திருந்தார். ’நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) இறங்கும்போது அவர்களைப் பார்க்க விரும்புகிறாயா?’ என்று உமர்(ரலி) என்னிடம் வினவினார்கள். நபி(ஸல்) அவர்களின் மீது வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) இறங்கி, பின்னர் அது அவர்களைவிட்டு நீங்கியது் (அதை பார்த்தேன்). அப்போது அவரிடம் நபி(ஸல்) அவர்கள், ‘உம்முடைய ஹஜ்ஜில் செய்யக் கூடியதையே உம்ராவிலும் செய்வீராக!”என்று கூறினார்கள்.

ஒருவர் இன்னொரு மனிதரின் கையைக் கடித்துவிட்டார். உடனே கடிபட்டவர் கடித்தவரின் முன் பற்களை உடைத்தார். பல்லுடைக்கப்பட்டதற்கு எந்த நஷ்ட ஈடும் தர வேண்டியதில்லை என்று நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

## இஹ்ராம் அணிந்து அர∴பாவில் மரணித்தவரின் நிலை.

ஹஜ்ஜின் எஞ்சிய கிரியைகளை அவர் சார்பாக மற்றவர்கள் நிறை வேற்ற வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடவில்லை.

ஹதீஸ் 1849. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களுடன் அர∴பாவில் தங்கினார். அப்போது அவர் தன் வாகனத்திலிருந்து கீழே விழுந்துவிட்டார். வாகனம் (ஒட்டகம்) அவரின் கழுத்தை முறித்து அவரைக் கொன்றது. நபி(ஸல்) அவர்கள்’இலந்தை இலை கலந்த தண்?ரால் இவரைக் குளிப்பாட்டுங்கள் இரண்டு ஆடைகளில் இவருக்குக் கபனிடுங்கள்! இவருக்கு நறுமணம் பயன்படுத்தாதீர்கள் இவரின் தலையை மூடாதீர்கள்! ஏனெனில், இவர் தல்பியா கூறிக் கொண்டிருக்கும் நிலையில் மறுமை நாளில் இவரை அல்லாஹ் எழுப்புவான்!”என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1850. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களுடன் அர∴பாவில் தங்கினார். அப்போது, அவர் தம் வாகனத்திலிருந்து கீழே விழுந்துவிட்டார். வாகனம் அவரின் கழுத்தை முறித்து அவரைக் கொன்றுவிட்டது. நபி(ஸல்) அவர்கள், ‘இலந்தை இலை கலந்த தண்?ரால் இவரைக் குளிப்பாட்டுங்கள் இரண்டு ஆடைகளில் இவருக்குக் க∴பனிடுங்கள்! இவருக்கு நறுமணம் பயன்படுத்தாதீர்கள் தலையை மூடாதீர்கள்! ஏனெனில், மறுமை நாளில் அல்லாஹ், இவரை தல்பியா கூறிக் கொண்டிருப்பவராக எழுப்புவான்!”என்று கூறினார்கள்.

## இஹ்ராம் அணிந்தவர் இறந்துவிட்டால் நபி வழியின் படி அவருக்காகச் செய்ய வேண்டியவை.

ஹதீஸ் 1851. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களுடன் இஹ்ராம் அணிந்த நிலையில் தங்கியிருந்தபோது அவரின் ஒட்டகம் அவரின் கழுத்தை முறித்து விட, அவர் மரணித்துவிட்டார். நபி(ஸல்) அவர்கள், 'இலந்தை இலை கலந்த தண்?ரால் இவரைக் குளிப்பாட்டுங்கள் இரண்டு ஆடைகளில் இவருக்கு கபனிடுங்கள்! இவருக்கு நறுமணம் பயன்படுத்தாதீர்கள் இவரின் தலையை மூடாதீர்கள்! ஏனெனில், கியாமத் நாளில் இவர் தல்பியா கூறிக் கொண்டிருக்கும் நிலையில் எழுப்பப்படுவார்!"எனக் கூறினார்கள்.

## இறந்தவருக்காக ஹஜ் செய்தலும், அவரின் நேர்ச்சையை நிறைவேற்றலும், பெண்களுக்காக ஆண்கள் ஹஜ் செய்தலும்.

ஹதீஸ் 1852. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஜுஹைனா கூட்டத்தைச் சார்ந்த ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'என் தாய் ஹஜ் செய்வதாக நேர்ச்சை செய்து அதை நிறைவேற்றாமல் இறந்துவிட்டார். அவர் சார்பாக நான் ஹஜ் செய்யலாமா?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், 'ஆம்! அவர் சார்பாக நீ ஹஜ் செய், உன் தாய்க்குக் கடன் இருந்தால் நீ தானே அதை நிறைவேற்றுவாய். எனவே, அல்லாஹ்வின் கடன்களை நிறைவேற்றுங்கள், கடன்கள் நிறைவேற்றப்படுவதற்கு அல்லாஹ் அதிகம் உரிமை படைத்தவன்'' என்றார்கள்.

## வாகனத்தில் அமர முடியாதவருக்காக மற்றவர் ஹஜ் செய்தல்.

ஹதீஸ் 1853 ¸ ஹதீஸ் 1854. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கஸ்அம் கோத்திரத்தைச் சார்ந்த ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் கடைசி ஹஜ்ஜின்போது வந்து, 'நபி அவர்களே! அல்லாஹ்வின் ஹஜ் எனும் கடமை என் தந்தைக்கு விதியாகிவிட்டது. அவர் முதிர்ந்த வயதுடையவராகவும் வாகனத்தில் அமர முடியாதவராகவும் இருக்கிறார். நான் அவர் சார்பாக ஹஜ் செய்தால் அது நிறைவேறுமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'ஆம்'' என்றனர்.

## ஆணுக்காகப் பெண் ஹஜ் செய்தல்.

ஹதீஸ் 1855. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் ஒட்டகத்திற்குப் பின்னால் ஃபள்லு(ரலி) அமர்ந்திருந்தார்கள். அப்போது கஸ்அம் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண் வந்தார். ஃபள்லு(ரலி) அப்பெண்ணைப் பார்க்கலானார்கள். அப்பெண்ணும் அவர்களைப் பார்த்தார். நபி(ஸல்) அவர்கள் ஃபள்லு(ரலி) அவர்களின் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பினார்கள். அப்போது அப்பெண்மணி, 'அல்லாஹ் விதித்த கடமை என் தந்தைக்கு ஏற்பட்டுவிட்டது அவர் வாகனத்தில் அமர முடியாத முதிர்ந்த வயதுடையவராக இருக்கிறார் அவருக்காக நான் ஹஜ் செய்யலாமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'ஆம்!"என்றார்கள். இது கடைசி ஹஜ்ஜின்போது நடந்ததாகும்.

## சிறுவர்கள் ஹஜ் செய்தல்.

ஹதீஸ் 1856. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முஸ்தலி∴பாவிலிருந்து (பயணச்) சுமைகளுடன் என்னை இரவிலேயே அனுப்பினார்கள்.

ஹதீஸ் 1857. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் பருவ வயதை நெருங்கிய நேரத்தில் பெட்டைக் கழுதையின் மேல் ஏறி (ஹஜ்ஜுக்குப்) புறப்பட்டேன். நபி(ஸல்) அவர்கள் மினாவில் நின்று தொழுது கொண்டிருந்தார்கள். முதல் வரிசைக்கு முன்னால் வாகனத்தை ஓட்டிச் சென்று இறங்கினேன். அது மேயத் துவங்கியது. நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் மக்களுடன் வரிசையில் சேர்ந்து கொண்டேன்.

இது கடைசி ஹஜ்ஜின்போது மினாவில் நடந்ததாகும் என மற்றோர் அறிவிப்பில் காணப்படுகிறது.

ஹதீஸ் 1858. ஸாயிப் இப்னு யஜீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நான் ஏழு வயதுச் சிறுவனாக இருந்தபோது நபி(ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்கு அழைத்துச் செல்லப்பட்டேன்!“

ஹதீஸ் 1859. ஜுஅய்த் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

“ஸாயிப் இப்னு யஜீத்(ரலி), நபி(ஸல்) அவர்களின் (ஹஜ்ஜின்போது, அவர்களின்) பயணச் சுமைகளுடன் ஹஜ்ஜுக்காக அழைத்துச் செல்லப்பட்டார்கள்!”என்று உமர்பின் அப்துல் அஜீல்(ரஹ்) அவர்கள் கூற கேட்டேன்.

## பெண்கள் ஹஜ் செய்தல்.

ஹதீஸ் 1860. அப்துர் ரஹ்மானை இப்னு அவ்∴ப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி), தாம் செய்த கடைசி ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்களின் மனைவியருக்கு (ஹஜ் செய்ய) அனுமதி வழங்கினார்கள். அவர்களுடன் என்னையும் உஸ்மான் இப்னு அ∴ப்பான்(ரலி) அவர்களையும் அனுப்பி வைத்தார்கள்.

ஹதீஸ் 1861. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி அவர்களே! (பெண்களாகிய) நாங்கள் யுத்தத்திலும் அறப்போரிலும் உங்களுடன் சேர்ந்து கொள்ளக் கூடாதா?’ என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், ‘(பெண்களுக்கு) சிறந்த, அழகிய ஜிஹாத் பாவச் செயல் எதுவும் கலவாத (இறைவன் ஏற்றுக் கொள்ளக் கூடிய விதத்தில் நிறைவேற்றப்படுகின்ற) ஹஜ்ஜாகும்!”என்றார்கள். நபி(ஸல்) அவர்களிடமிருந்து இதை நான் செவியுற்ற பிறகு ஹஜ் செய்வதை நான்விட்டதில்லை!“

ஹதீஸ் 1862. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“மணமுடிக்கத்தகாத ஆண் துணையில்லாமல் ஒரு பெண் பயணம் செய்யக் கூடாது. மண முடிக்கத் தகாத ஆண் துணையுடன் பெண் இருக்கும்போதே ஆண்கள் அவளைச் சந்திக்க வேண்டும்’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது ஒருவர், ‘நபி அவர்களே! நான் இன்னின்ன ராணுவப் பிரிவுடன் புறப்பட இருக்கிறேன் என் மனைவி ஹஜ் செய்ய எண்ணுகிறார்

(நான் என்ன செய்வது)?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நீரும் மனைவியுடன் (ஹஜ்ஜுக்குப்) புறப்படுவீராக! என்றனர்.

ஹதீஸ் 1863. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தம் ஹஜ்ஜை முடித்துத் திரும்பியபோது உம்முஸினான் அல் அன்ஸாரியா என்ற பெண்மணியிடம், 'நீ ஹஜ்ஜுக்கு வர என்ன தடை?' என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்மணி, 'என் கணவரே காரணம் அவருக்கு தண்ணீர் இறைக்கும் இரண்டு ஒட்டகங்கள் இருந்தன. ஒன்றில் ஏறி அவர் ஹஜ்ஜுக்குச் சென்றார் மற்றொன்று எங்களுக்குரிய நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருக்கிறது (இதுவே காரணம்)' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'ரமலானில் செய்யப்படும் ஓர் உம்ரா என்னோடு ஹஜ்ஜுச் செய்வதற்கு நிகராகும்'' என்றார்கள்.

ஹதீஸ் 1864. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் நான்கு விஷயங்களைச் செவியுற்றேன். அவை எனக்கு மிகவும் விருப்பமானவை. (அவை:)'கணவனோ மணமுடிக்கத் தகாதவரோ இல்லாமல் இரண்டு நாள்கள் தொலைவுக்கு ஒரு பெண் பயணம் செய்யக் கூடாது! நோன்புப் பெருநாள், ஹஜ்ஜுப் பெருநாள் ஆகிய இரண்டு நாள்களில் நோன்பு நோற்கக் கூடாது! அஸருக்குப் பிறகிலிருந்து சூரியன் மறையும் வரையிலும், ஸுப்ஹுக்குப் பிறகிலிருந்து சூரியன் உதிக்கும் வரையிலும் எந்தத் தொழுகையும் தொழக் கூடாது! மஸ்ஜிதுல் ஹராம், என்னுடைய பள்ளிவாசல் மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்று பள்ளி வாசல்களைத் தவிர வேறு பள்ளி வாசல்களுக்கு (அதிக நன்மையை நாடி)ப் பயணம் செய்யக் கூடாது!"

"அபூ ஸயீத்(ரலி), நபி(ஸல்) அவர்களுடன் பன்னிரண்டு போர்களில் பங்கெடுத்திருக்கிறார்கள்!"என்று (அறிவிப்பாளர்களில் ஒருவரான) கஸ்ஆ கூறுகிறார்.

## கஅபா வரை நடந்து செல்வதாக நேர்ச்சை செய்தல்.

ஹதீஸ் 1865. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு முதியவர் தம் இரண்டு புதல்வர்(கள் தம்மைத் தோள்களில் தாங்கிக் கொண்டிருக்க, அவர்)களிடையே தொங்கியபடி கால்கள் பூமியில் இழுபட வந்து கொண்டிருந்ததைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், 'இவருக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். '(கஅபா வரை) நடந்து செல்வதாக இவர் நேர்ச்சை செய்திருக்கிறார்!"என்று மக்கள் கூறினார்கள், நபி(ஸல்) அவர்கள்'இவர் தம்மை இவ்விதம் வேதனைப்படுத்திக் கொள்வது அல்லாஹ்வுக்குத் தேவையற்றது!"என்று கூறிவிட்டு, அவரை வாகனத்தில் ஏறிச் செல்லுமாறும் உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 1866. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

என் சகோதரி கஅபா வரை நடந்து செல்வதாக நேர்ச்சை செய்தார். அவர், இதுபற்றி நபி(ஸல்) அவர்களிடம் தீர்ப்புப் பெறும்படி எனக்கு உத்தரவிட்டார். நான் நபி(ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர் (சிறிது தூரம்) நடந்துவிட்டு வாகனத்தில் ஏறிக் கொள்ளட்டும்'' என்றார்கள்.

## அத்தியாயம் 29 மதீனாவின் சிறப்புகள்

ஹதீஸ் 1867. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மதீனா நகர் இங்கிருந்து இதுவரை புனிதமானதாகும்! இங்குள்ள மரங்கள் வெட்டப்படக் கூடாது் இங்கே (மார்க்கத்தின் பெயரால்) புதியது எதுவும் உருவாக்கப்படக் கூடாது! (மார்க்கத்தின் பெயரால்) புதிய (செயல் அல்லது கொள்கை) ஒன்றை ஏற்படுத்துகிறவர் மீது அல்லாஹ்வின்.. வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும்!“

என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1868. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது பள்ளிவாசல் கட்டுமாறு கட்டளையிட்டார்கள்“‘பனு நஜ்ஜார் குலத்தினரே! (உங்கள் இடத்தை) எனக்கு விலைக்குத் தாருங்கள்!”என்று கேட்டார்கள். பனு நஜ்ஜார் குலத்தினர்’இதற்குரிய விலையை அல்லாஹ்விடமே நாங்கள் எதிர்பார்க்கிறோம்!”என்றனர். (அவ்விடத்திலிருந்த) இணை வைப்பவர்களின் கப்ருகளைத் தோண்டுமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் அவ்வாறே அவை தோண்டப்பட்டன. அவர்களின் கட்டளைப்படியே பாழடைந்த இடங்கள் சீர் செய்யப்பட்டன் பேரீச்ச மரங்கள் வெட்டப்பட்டன் பள்ளிவாசலின் கிப்லா திசையில் (வெட்டப்பட்ட) பேரீச்ச மரங்களை வரிசையாக (நபித்தோழர்கள்) நட்டனர்.

ஹதீஸ் 1869. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“மதீனாவின் இரண்டு மலைகளுக்கு இடைப்பட்ட பகுதி என் நாவினால் (என் வாயிலாக) புனிதமானதாக ஆக்கப்பட்டுவிட்டது!’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். பனு ஹாரிஸா குலத்தினரிடம் நபி(ஸல்) அவர்கள் சென்று,‘பனு ஹாரிஸா குலத்தினரிடம்! நீங்கள் ஹரம் எல்லைக்கு வெளியே இருக்கிறீர்கள்!”என்றார்கள். பின்னர் திரும்பிப் பார்த்துவிட்டு.’இல்லை! நீங்கள் ஹரம் எல்லைக்குள்தான் இருக்கிறீர்கள்!”என்றார்கள்.

ஹதீஸ் 1870. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“அல்லாஹ்வின் வேதத்தையும் நபியவர்களிடமிருந்து கிடைத்த இந்த ஏட்டையும் தவிர (எழுத்து வடிவிலான மார்க்கச் சட்டம்) வேறு எதுவும் (நபியின் குடும்பத்தாரான) எங்களிடம் இல்லை! (இந்த ஏட்டில் உள்ளதாவது)’ஆயிர் என்ற மலையிலிருந்து இன்ன இடம் வரை மதீனா புனிதமானதாகும். இதில் யாரேனும் (மார்க்கத்தின் பெயரால்) புதிதாக ஒன்றை ஏற்படுத்தினால் அல்லது அவ்வாறு ஏற்படுத்துபவருக்கு அடைக்கலம் தந்தால், அல்லாஹ்வின் - வானவர்களின் மற்றும் மக்கள் அனைவரின் சாபம் அவன் மீது ஏற்படும்! அவன் செய்த கடமையான வணக்கம். உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது! முஸ்லிம்களில் எவர் அடைக்கலம் தந்தாலும் அது ஒன்றே! (அது, மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகக் கருதப்படவேண்டியதே)யாகும்! ஒரு முஸ்லிம் கொடுத்த அடைக்கலத்தை யாரேனும் முறித்தால் அவன் மீது அல்லாஹ், வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபம் ஏற்படும்! அவனிடமிருந்து

அவன் செய்த கடமையான வணக்கம், உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது! விடுதலை செய்யப்பட்ட அடிமை ஒருவன், தன்(னை விடுதலை செய்த எஜமானர்களான) காப்பாளர்களின் அனுமதியின்றி, பிறரைத் தன் காப்பாளராக ஆக்கினால் அவன் மீதும் அல்லாஹ்வின்... வானவர்களின் மற்றும் மக்கள் அனைவரின் சாபம் ஏற்படும்! அவன் செய்த கடமையான வணக்கம், உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது!“

## மதீனாவின் சிறப்பும் தீயவர்களை அது வெளியேற்றிவிடும் என்பதும்.

ஹதீஸ் 1871. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“யஸ்ரிபு என்று மக்கள் கூறக்கூடிய, எல்லா ஊர்களையும் மிகைக்கக் கூடிய ஓர் ஊருக்கு (ஹிஜ்ரத் செய்து செல்லுமாறு) நான் கட்டளையிடப்பட்டேன்! அதுதான் மதீனா! இரும்பின் துருவை உலை நீக்கிவிடுவதைப் போல் மதீனா நகர் தீயவர்களை வெளியேற்றிவிடும்!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மதீனாவுக்கு'தாபா' என்ற பெயரும் உண்டு.

ஹதீஸ் 1872. அபூ ஹுமைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தபூக்கிலிருந்து (யுத்தம் முடிந்து) திரும்பினோம். மதீனாவை நெருங்கியதும். 'இது'தாபா!' (நலம் மிக்கது!)' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## மதீனாவின் இரண்டு மலைகள்.

ஹதீஸ் 1873. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மதீனாவில் மான்கள் மேய்ந்து கொண்டிருக்க நான் கண்டால், அவற்றை (விரட்டவோ, பிடிக்கவோ முயன்று) பீதிக்குள்ளாக்க மாட்டேன். (ஏனெனில்)'மதீனாவின் (கருங்கற்கள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்டவை புனிதமானவை!"என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## மதீனாவைப் புறக்கணித்தல்.

ஹதீஸ் 1874. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மதீனா வளமிக்க நகராக இருக்கும் நிலையில், இரைதேடக் கூடிய பறவைகளும் விலங்குகளும் மட்டுமே நாடி வரக்கூடியதாக அதை மக்கள்விட்டு(ச் சென்று) விடுவார்கள்! மறுமை நாளில், இறுதியாக எழுப்பப்பட விருப்பவர்களை முஸைனா குலத்தைச் சேர்ந்த இரண்டு இடையர்களே ஆவர்!

(அவர்களின் மரணம் எப்படி நிகழுமெனில்) அவர்கள் இருவரும் தம் ஆடுகளை (இடையர்களின் பாணியில்) அதட்டி அழைத்த வண்ணம் மதீனாவை நாடிச் செல்வார்கள். (மதீனாவைச் சென்றடைந்ததும்) அதை (மனித சஞ்சாரமற்ற) மிருகங்களின் வசிப்பிடமாகக் காண்பார்கள்: இறுதியில்'வதா' (எனும்) மலைக்குன்றை அடைந்தவுடன் முகம் குப்புற மூர்ச்சையுற்று விழுந்து (இறந்து) விடுவார்கள்!“

ஹதீஸ் 1875. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“யமன் வெற்றி கொள்ளப்படும். உடனே, ஒரு கூட்டத்தினர் ஒட்டகங்களை ஓட்டிக் கொண்டு, தம் குடும்பத்தினரையும் தம் கட்டுப்பாட்டிற்குள் உள்ளவர்களையும் அழைத்துக் கொண்டு (யமன் நாட்டிற்குச்) செல்வார்கள்! ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்தது! இதை அவர்கள்

அறிந்திருக்கக் கூடாதா? பின்னர்'ஷாம்' வெற்றி கொள்ளப்படும். உடனே, ஒரு கூட்டத்தினர் ஒட்டகங்களை ஓட்டிக் கொண்டு,'தம் குடும்பத்தினரையும் தம் கட்டுப்பாட்டிற்குள் உள்ளவர்களையும் அழைத்துக் கொண்டு அங்கே செல்வார்கள் ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்தது! இதை அவர்கள் அறிந்திருக்கக் கூடாதா? பின்னர் இராக் வெற்றி கொள்ளப்படும் உடனே, ஒரு கூட்டத்தினர் ஒட்டகங்களை ஓட்டிக்கொண்டு, தம் குடும்பத்தினரையும் தம் கட்டுப்பாட்டிற்குள் உள்ளவர்களையும் அழைத்துக் கொண்டு அங்கே செல்வார்கள்! ஆயினும், மதீனாவே அவர்களுக்குச் சிறந்தது! இதை அவர்கள் அறிந்திருக்கக் கூடாதா?' என சுப்யான்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஈமான் மதீனாவில் அபயம் பெறும்.

ஹதீஸ் 1876. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“பாம்பு தன் புற்றில் (சென்று) அபயம் பெறுவது போல் ஈமான் எனும் இறை நம்பிக்கை மதீனாவில் அபயம் பெறும்!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மதீனா வாசிகளுக்கு எதிராக சூழ்ச்சி செய்வது குற்றம்.

ஹதீஸ் 1877. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மதீனாவாசிகளுக்கு எதிராக சூழ்ச்சி செய்யும் எவரும் தண்ணீரில் உப்பு கரைவது போல் கரைந்து போவார்கள்!“

என ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மதீனாவின் கோட்டைகள்.

ஹதீஸ் 1878. உஸாமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவின் கோட்டைகளில் ஒரு கோட்டையின் மீதிருந்து நோட்டமிட்டார்கள். பிறகு,'நான் பார்ப்பதை நீங்கள் பார்க்கிறீர்களா? நான் உங்கள் வீடுகள் நெடும்லும் (வருங்காலத்தில்) குழப்பங்கள் விளையக் கூடிய இடங்களை மழைத்துளிகள் விழும் இடங்களைப் (பார்ப்பதைப்) போன்று பார்க்கிறேன்!"என்று கூறினார்கள்.

## தஜ்ஜால் மதீனாவில் நுழைய முடியாது.

ஹதீஸ் 1879. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“தஜ்ஜாலைப் பற்றிய அச்சம் மதீனாவுக்குள் நுழையாது! அன்றைய தினம் மதீனாவுக்கு ஏழு வாசல்கள் இருக்கும்! ஒவ்வொரு வாசலிலும் இரண்டு வானவர்கள் இருப்பார்கள்!“

என அபூ பக்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1880. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மதீனாவின் வாசல்களில் வானவர்கள் இருப்பர்! மதீனாவிற்குள் (பிளேக் போன்ற) கொள்கை நோயும் தஜ்ஜாலும் நுழைய முடியாது!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1881. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மக்கா, மதீனா தவிர தஜ்ஜால் கால் வைக்காத எந்த ஊரும் இராது! மதீனாவின் எந்தவொரு வாசலானாலும் அங்கே வானவர்கள் அணிவகுத்து அதைக் காப்பார்கள். பின்னர் மதீனா, தன் குடிமக்களுடன் மூன்று முறை நிலநடுக்கத்திற்குள்ளாகும் அப்போது ஒவ்வொரு கா∴பிரையும் முனா∴பிக்கையும் (இறைமறுப்பாளனையும் நயவஞ்சகனையும்) அல்லாஹ் (மதீனாவிலிருந்து) வெளியேற்றி விடுவான்!“

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1882. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தஜ்ஜால் (மதீனாவை நோக்கி) வருவான் மதீனாவின் வாசல்களில் நுழைவது அவனுக்குத் தடுக்கப்பட்டிருக்கிறது எனவே, (மதீனாவுக்கு வெளியே), மதீனாவின் உவர் நிலத்தில் அவன் தங்குவான் அவனை நோக்கி மக்களில் சிறந்த ஒருவர் அன்று புறப்படுவார் அவர் அவனிடம்,‘நபி(ஸல்) அவர்கள் (அடையாளம்) சொல்லிய தஜ்ஜால் நீதான் என்று உறுதியாகக் கூறுகிறேன்!”என்பார். அப்போது தஜ்ஜால் (மக்களை நோக்கி),‘நான் இவனைக் கொன்று, பிறகு உயிர்ப்பித்தால் (என்) விஷயத்தில் நீங்கள் சந்தேகம் கொள்வீர்களா?’ என்று கேட்பான். மக்கள்’கொள்ள மாட்டோம்!”என்பார்கள். உடனே, அவன் அவரைக் கொன்று, பின்னர் உயிர்ப்பிப்பான். அப்போது, அந்த நல்ல மனிதர் உயிர்ப்பிக்கப்பட்டதும்,‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! இன்றைய தினத்தை விடத் தெளிவாக உன்னைப் பற்றி நான் (இதற்கு முன்) ஒருபோதும் அறிந்திருக்கவில்லை!”என்று கூறுவார். தஜ்ஜால்’நான் இவரைக் கொல்வேன்!”என்பான். ஆனால், அவனால் அவரைக் கொல்ல முடியாது!“

என அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள். தஜ்ஜால் பற்றி நபி(ஸல்) அவர்கள் நீண்ட விளக்கம் தரும்போது இதைக் கூறினார்கள் என்றும் அவர்கள் கூறினார்கள்.

## மதீனா தீயவர்களை வெளியேற்றும்.

ஹதீஸ் 1883. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு கிராமவாசி நபி(ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாத்தை ஏற்பதாக உறுதி மொழி கொடுத்தார். மறுநாள் முதல் அவர் காய்ச்சலால் பீடிக்கப்பட்டார்.’(இஸ்லாத்தை ஏற்கும் ஒப்பந்தத்திலிருந்து) என்னை நீக்கி விடுங்கள்!”என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் மூன்று முறை அதை மறுத்தார்கள்.’மதீனா (துருவை நீக்கித் தூய்மைபடுத்தும்) உலையைப் போன்றதாகும்! அது தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றி விடும். அதிலுள்ள நல்லவர்கள் தூய்மை பெற்றுத் திகழ்வார்கள்!”என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1884. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் உஹதுப் போருக்குப் புறப்பட்டபோது அவர்களின் தோழர்களிடையே கலந்துவிட்டிருந்த (நயவஞ்சகர்கள்) சிலர் (போரில் பங்கெடுக்காமல்) திரும்பலானார்கள். அப்போது (போரில் பங்கெடுத்தவர்களில்) ஒரு பிரிவினர்’இவர்களைக் கொல்வோம்!”என்றனர். அப்போது’நயவஞ்சகர்களைப் பற்றி நீங்கள் இரண்டு வகையான (அபிப்பிராயங் கொண்ட) பிரிவினராக இருப்பதற்கு உங்களுக்கு என்ன நேர்ந்தது?’ (திருக்குர்ஆன் 04:88) என்னும் இறைகியது.’நெருப்பு இரும்பின் துருவை அகற்றுவது போல் இந்நகரம் தீயவர்களை வெளியேற்றிவிடும்!’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1885. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“இறைவா! மக்காவில் நீ ஏற்படுத்திய பரக்கத்தைப் போல் இரண்டு மடங்கை மதீனாவில் ஏற்படுத்துவாயாக!“

என அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1886. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து ஊர் திரும்பும்போது மதீனாவி(ல் உள்ள வீடுகளி)ன் சுவர்களைக் கண்டதும் தம் வாகனத்தை விரைந்து செலுத்துவார்கள். வாகனத்தில் மேல் அவர்கள் அமர்ந்திருந்தால் அன்புடன் அதைத் தட்டிக் கொடுப்பார்கள்.

## மதீனாவின் குடியிருப்புப் பகுதிகளிலிருந்து குடிபெயர்வதை நபி(ஸல்) அவர்கள் வெறுத்தார்கள்.

ஹதீஸ் 1887. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பனு ஸலிமா குலத்தினர் பள்ளிவாசலின் அருகே குடிபெயரவிரும்பினார்கள். மதீனா(வின் மற்ற பகுதிகள்) காலியாவதை நபி(ஸல்) அவர்கள் வெறுத்தார்கள். எனவே,‘பனு கூட்டத்தினரே! நீங்கள் நடந்து வருவதற்கான) காலடிச் சுவடுகளின் நன்மைகளை (நற்கூலியை) எதிர் பார்க்க மாட்டீர்களா?’ என்று கேட்டார்கள். எனவே, பனு ஸலிமா குலத்தினர் (தாம் முன்பு வசித்துக் கொண்டிருந்த இடத்திலேயே) தங்கிவிட்டனர்.

ஹதீஸ் 1888. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“என்னுடைய இல்லத்திற்கும் என்னுடைய மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சொர்க்கத்துப் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும்! என்னுடைய மிம்பர் என்னுடைய ஹவ்ள் (அல்கவ்ஸர் தடாகத்தின்) மீது அமைந்துள்ளது!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1889. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்தபோது அபூ பக்ர்(ரலி), பிலால்(ரலி) ஆகியோருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது. அபூ பக்ர்(ரலி) தமக்குக் காய்ச்சல் ஏற்படும்போது,‘மரணம் தன்னுடைய செருப்பு வாரை விடச் சமீபத்தில் இருக்கும் நிலையில் ஒவ்வொரு மனிதனும் தன் குடும்பத்தாருடன் காலைப் பொழுதை அடைகிறான்!”என்ற கவிதையைக் கூறுவார்கள். பிலால்(ரலி) காய்ச்சல் நீங்கியதும் வேதனைக் குரலை உயர்த்தி,‘இத்கிர், ஜலீல் எனும் புற்கள் என்னைச் சூழ்ந்திருக்க, ஒரு பள்ளத்தாக்கில் ஓர் இராப் பொழுதையேனும் நான் கழிப்பேனா?’மஜின்னா’ எனும் (சுனையின்) நீரை நான் அருந்துவேனா? ஷாமா, தஃபீல் எனும் இரண்டு மலைகள் (அல்லது இரண்டு ஊற்றுகள்) எனக்குத் தென்படுமா?’ என்ற கவிதையைக் கூறுவார்கள். மேலும், பிலால்(ரலி)’இறைவா! ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, உமய்யா இப்னு கலஃப் ஆகியோர் எங்கள் நாட்டிலிருந்து எங்களை (அப்புறப்படுத்தி) இந்த நோய்ப் பிரதேசத்திற்கு விரட்டியது போல், அவர்களை நீ உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்தி (சபித்து) விடுவாயாக!”என்று கூறுவார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘இறைவா! நாங்கள் மக்காவை நேசித்தது போல் அல்லது அதைவிட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்கு! இறைவா! எங்களுடைய (அளவைகளான) ஸாவு, முத்து ஆகியவற்றில் (எங்கள் உணவில்) எங்களுக்கு நீ பரக்கத் செய்! இவ்வூரை எங்களுக்கு ஆரோக்கியமானதாக ஆக்கு! இங்குள்ள காய்ச்சலை’ஜுஹ்ஃபா’ எனும் பகுதிக்கு இடம் பெயரச் செய்!”என்று பிரார்த்தித்தார்கள். நாங்கள்

மதீனாவிற்கு வந்தபோது, அது அல்லாஹ்வின் பூமியிலேயே நோய் நொடிகள் அதிகமான (பிரதேசமாக இருந்தது் (ஏனெனில்)'புத்ஹான்' எனும் ஓடையில் மோசமான (கெட்டுப்போன) தண்ணீா ஓடிக் கொண்டிருந்தது!

ஹதீஸ் 1890. உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“இறைவா! உன் பாதையில் வீரமரணம் அடையும் பாக்கியத்தை எனக்கு வழங்கு! என்னுடைய மரணத்தை உன் தூதருடைய ஊரில் ஏற்படுகிறது.

# அத்தியாயம் 30 நோன்பு

## ரமலான் நோன்பு கடமையாகுதல்.

அல்லாஹ் கூறினான்:

“இறை நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னிருந்தோர் மீது நோன்பு கடமையாக்கப்பட்டது போல் உங்களின் மீது நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது இதன் மூலம் நீங்கள் இறையச்சம் உடையவர்களாக ஆகக் கூடும்!”(திருக்குர்ஆன் 02:183)

ஹதீஸ் 1891. தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒரு கிராமவாசி பரட்டைத் தலையுடன் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்'நபி அவர்களே! அல்லாஹ் என் மீது கடமையாக்கிய தொழுகை எது என்று சொல்லுங்கள்! என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,'ஐந்து நேரத் தொழுகைகள்! அவற்றைத் தவிர! (கடமையான தொழுகை வேறெதுவுமில்லை உபரியாக) நீயாக விரும்பித் தொழுதால் மட்டுமே உண்டு!”என்று பதிலளித்தார்கள். அவர்'அல்லாஹ் என் மீது கடமையாக்கிய ஸகாத் எது என்று எனக்குக் கூறுங்கள்!”என்றார். நபி(ஸல்) அவர்கள், இஸ்லாத்தின் சட்டதிட்டங்களை அவருக்குக் கூறினார்கள். அப்போது அவர்,'சத்தியத்தின் வாயிலாக உங்களை கண்ணியப்படுத்திய இறைவன் மேல் ஆணையாக! நான் உபரியாக எதையும் செய்ய மாட்டேன் அல்லாஹ் என் மீது கடமையாக்கியதில் எதையும் குறைக்கவும் மாட்டேன்!”என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள்.'இவர் கூறுவது உண்மையானால் வெற்றி பெற்றுவிட்டார்!”என்றோ'இவர் கூறுவது உண்மையானால் இவர் சொர்க்கத்தில் நுழைவார்!”என்றோ கூறினார்கள்.

ஹதீஸ் 1892. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஆஸூரா (முஹர்ரம் மாதத்தின் பத்தாம் நாள்) நோன்பு நோற்றார்கள். அதை நோற்குமாறு (மக்களுக்குக்) கட்டளையிட்டார்கள். ரமளான் நோன்பு கடமையாகப்பட்டதும் ஆஸூரா நோன்பை (கடமையாகக் கருதி) நோற்பது விடப்பட்டது.

“தம் வேறு நோன்பு (ஏதாவது) அந்நாளில் தற்செயலாக அமைந்தாலே தவிர, இப்னு உமர்(ரலி) ஆஸூரா தினத்தில் நோன்பு நோற்க மாட்டார்கள்!”என்று நாஃபிவு(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 1893. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

குறைஷிக் குலத்தினர் அறியாமைக் காலத்தில் ஆஸூரா தினத்தில் நோன்பு நோற்று வந்தனர். ரமளான் நோன்பு கடமையாக்கப்படும் வரை நபி(ஸல்) அவர்களும் ஆஸூரா நோன்பு நோற்குமாறு கட்டளையிட்டார்கள். (ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்ட) பின்னர்'(ஆஸூரா நாளின் நோன்பை) நோற்க விரும்புபவர் அதை நோற்கட்டும்!விட்டுவிட விரும்புபவர் அதைவிட்டுவிடட்டும்!”எனக் கூறினார்கள்.

## நோன்பின் சிறப்பு.

ஹதீஸ் 1894. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“நோன்பு (பாவங்களிலிருந்து காக்கின்ற) கேடயமாகும் எனவே, நோன்பாளி கெட்ட பேச்சுகளைப் பேசவேண்டாம்! முட்டாள் தனமான செயல்களில் ஈடுபட வேண்டாம்! யாரேனும் அவருடன் சண்டைக்கு வந்தால் அல்லது ஏசினால்'நான் நோன்பாளி!' என்று இருமுறை கூறட்டும்! என் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அ(ந்த இறை)வன் மேல் ஆணையாக! நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை, அல்லாஹ்விடம் கஸ்தூரியின் வாடையை விடச் சிறந்ததாகும்! (மேலும்)'எனக்காக நோன்பாளி தம் உணவையும், பானத்தையும், இச்சையையும்விட்டு விடுகிறார்! நோன்பு எனக்கு (மட்டுமே) உரியது் அதற்கு நானே கூலி கொடுப்பேன்! ஒரு நன்மை என்பது அது போன்ற பத்து மடங்குகளாகும்!”(என்று அல்லாஹ் கூறினான்)“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நோன்பு குற்றங்களுக்குப் பரிகாரமாகும்.

ஹதீஸ் 1895. ஹுதைஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“ஃபித்னா (சோதனை) பற்றி நபி(ஸல்) அவர்கள் கூறிய செய்தியை யார் மனனம் செய்திருக்கிறீர்கள்?' என்று உமர்(ரலி) கேட்டார். 'நான் அதைச் செவியுற்றிருக்கிறேன்!'ஒருவர் தம் குடும்பத்தினர். தம் செல்வம், மற்றும் அண்டை வீட்டார் விஷயத்தில் சோதனைக்கு ஆளாகும்போது தொழுகை, நோன்பு, தர்மம் ஆகியவை அதற்குப் பரிகாரமாக அமையும்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்!”என்றேன். அதற்கு உமர்(ரலி),‘நான் (சோதனை என்னும் பொருளில் அமைந்த) இந்த ஃபித்னாவைப் பற்றிக் கேட்கவில்லை. கடலலை போல் தொடர்ந்து வரக்கூடிய (குழப்பம் என்னும் பொருளிலமைந்த) ஃபித்னாவைப் பற்றியே கேட்கிறேன்!”என்றார்கள். அதற்கு நான்'உமக்கும் அதற்கும் இடையே மூடப்பட்ட வாசல் இருக்கிறது!”என்று கூறினேன். 'அது திறக்கப்படுமா? உடைக்கப்படுமா?' என்று உமர்(ரலி) கேட்டார்கள். நான்'உடைக்கப்படும்!”என்று பதிலளித்தேன். 'அப்படியானால் மறுமை நாள் வரை அது மூடப்படாது!”என்று உமர்(ரலி) கூறினார்.

“அந்த வாசல் யார் என்று உமர்(ரலி) அறிந்திருந்தாரா என்று ஹுதைஃபா(ரலி) அவர்களிடம் கேளுங்கள்!”என்று மஸ்ரூக்(ரஹ்) அவர்களிடம் நாங்கள் கூறினோம்! அவ்வாறே அவர் கேட்டார்! அதற்கு ஹுதைஃபா(ரலி)'ஆம்! நாளை (காலை) வருவதற்கு முன்பு இரவொன்று உள்ளது என்பதை அறிவதைப் போல் அதை அவர் அறிந்திருந்தார்!' என்று பதிலளித்தார்!”என அறிவிப்பாளர் அபூ வாயில்(ரஹ்) கூறினார்.

## (சொர்க்கத்திலுள்ள)'ரய்யான்' எனும் வாசல் நோன்பாளிகளுக்குரியது.

ஹதீஸ் 1896. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“சொர்க்கத்தில்'ரய்யான்' என்று கூறப்படும் ஒரு வாசல் இருக்கிறது! மறுமை நாளில் அதன் வழியாக நோன்பாளிகள் நுழைவார்கள். அவர்களைத் தவிர வேறு எவரும் அதன் வழியாக நுழைய மாட்டார்கள்!'நோன்பாளிகள் எங்கே?' என்று கேட்கப்படும். உடனே, அவர்கள் எழுவார்கள் அவர்களைத் தவிர வேறு எவரும் அதன் வழியாக நுழைய மாட்டார்கள்! அவர்கள் நுழைந்ததும் அவ்வாசல் அடைக்கப்பட்டுவிடும். அதன் வழியாக வேறு எவரும் நுழையமாட்டார்கள்!“

என ஸஹ்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1897. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“ஒருவர் இறைவழியில் ஒரு ஜோடிப் பொருட்களைச் செலவு செய்தால் அவர் சொர்க்கத்தின் வாசல்களிருந்து,‘அல்லாஹ்வின் அடியாரே! இது (பெரும்) நன்மையாகும்! (இதன் வழியாகப் பிரவேசியுங்கள்!)’ என்று அழைக்கப்படுவார். (தம் உலக வாழ்வின் போது) தொழுகையாளிகளாய் இருந்தவர்கள் தொழுகையின் வாசல் வழியாக அழைக்கப்படுவர் அறப்போர் புரிந்தவர்கள்’ஜிஹாத்’ எனும் வாசல் வழியாக அழைக்கப்படுவர் நோன்பாளிகளாய் இருந்தவர்கள்’ரய்யான்’ எனும் வாசல் வழியாக அழைக்கப்படுவர் தர்மம் செய்தவர்கள்’சதகா’ எனும் வாசல் வழியாக அழைக்கப்படுவர்!’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி)’நபி அவர்களே! என் தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! இந்த வாசல்கள் அனைத்திலிருந்தும் அழைக்கப்படும் ஒருவருக்கு எந்தத் துயரும் இல்லையே! எனவே, எவரேனும் அனைத்து வாசல்கள் வழியாகவும் அழைக்கப்படுவாரா?’ என்று கேட்டார். நபி(ஸல்) அவர்க’ஆம்! நீரும் அவர்களில் ஒருவராவீர் என்று நம்புகிறேன்!”என்றார்கள்.

## ‘ரமளான் என்று கூற வேண்டுமா? ரமளான் மாதம் என்று கூற வேண்டுமா?’ என்பதும்’எப்படியும் கூறலாம்!’ என்ற அறிஞர்களின் கருத்தும்.

நபி(ஸல்) அவர்கள் யாரேனும் ரமலானில் நோன்பு நோற்றால் என்றும் ரமலானுக்கு முந்தி என்றும் (ரமலான் மாதம் என்று கூறாமல்) குறிப்பிட்டுள்ளனர்.

ஹதீஸ் 1898. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ரமலான் வந்துவிட்டால் சொர்க்கத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன.“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1899. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ரமலான் மாதம் வந்துவிட்டால் வானத்தின் வாசல்கள் திறக்கப்படுகின்றன் நரகத்தின் வாயில்கள் அடைக்கப்படுகின்றன் ஷைத்தான்கள் விலங்கிடப்படுகின்றனர்.“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1900. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“நீங்கள் பிறை கண்டதும் நோன்பு வையுங்கள் (மறு) பிறை கண்டதும் நோன்பை விடுங்கள் உங்களுக்கு (வானில்) மேகம் தென்பட்டால் நாள்களை எண்ணிக் கொள்ளுங்கள்.“

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்’ரமலான் பிறை‘‘ என்று உள்ளது.

## ரமலானில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் நல்ல எண்ணத்துடனும் நோன்பு நோற்றல்.

“அவர்களின் எண்ணங்களுக்கேற்பவே எழுப்பப்படுவார்கள்‘‘ என்று நபி(ஸல்) கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1901. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“லைலத்துல் கத்ரில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் வணங்குகிறவரின் முன் பாவம் மன்னிக்கப்படுகிறது. ரமலானில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் நோன்பு நோற்கிறவர்களின் முந்தைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. “

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நபி (ஸல்) அவர்கள் ரமலானில் மாபெரும் வள்ளலாய்த் திகழ்வார்கள்.

ஹதீஸ் 1902. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மக்களுக்கு நல்லதை வாரி வழங்குபவர்களாக இருந்தனர். ஜிப்ரீல் (அலை) ரமலான் மாதத்தில் நபி (ஸல்) அவர்களைச் சந்திக்கும் வேளையில் நபி (ஸல்) அதிகமதிகம் வாரி வாரி வழங்குவார்கள். ஜிப்ரீல் (அலை) ரமலானின் ஒவ்வொரு இரவும் - ரமலான் முடியும்வரை - நபி (ஸல்) அவர்களைச் சந்திப்பார். நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரீலிடம் குர்ஆனை ஓதிக் காட்டுவார்கள். ஜிப்ரீல் (அலை) தம்மைச் சந்திக்கும்போது மழைக்காற்றை விட அதிகமாக நபி (ஸல்) அவர்கள் வாரி வழங்குவார்கள்.

## நோன்பு நோற்றும் பொய் மற்றும் தீச்செயல்களை விடாது இருத்தல்.

ஹதீஸ் 1903. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“பொய்யான பேச்சையும் பொய்யான நடவடிக்கைகளையும்விட்டு விடாதவர் தம் உணவையும் பானத்தையும்விட்டு விடுவதில் அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையுமில்லை!“

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ஏசப்படுபவர்’நான் நோன்பாளி!”என்று கூறலாமா?

ஹதீஸ் 1904. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“நோன்பைத் தவிர ஆதமுடைய மகனின் ஒவ்வொரு செயலும் அவனுக்குரியதாகும்! நிச்சயமாக, நோன்பு எனக்கு (மட்டுமே) உரியது் அதற்கு நானே கூலி கொடுப்பேன்!”என்று அல்லாஹ் கூறினான். நோன்பு (பாவங்களிலிருந்து காக்கும்) கேடயமாகும்! எனவே, உங்களில் ஒருவர் நோன்பு நோற்றால் அவர் கெட்ட பேச்சுகள் பேச வேண்டாம்! கூச்சலிட்டு சச்சரவு செய்ய வேண்டாம்! யாரேனும் அவரை ஏசினால் அல்லது அவருடன் சண்டையிட்டால்’நான் நோன்பாளி!”என்று அவர் சொல்லட்டும்! முஹம்மதின் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மேல் ஆணையாக! நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை அல்லாஹ்விடம் கஸ்தூரியின் வாடையை விட விருப்பமானதாகும். நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன. நோன்பு துறக்கும்பொழுது அவன் மகிழ்ச்சியடைகிறான் தன் இறைவனைச் சந்திக்கும் பொழுது நோன்பின் காரணமாக அவன் மகிழ்ச்சியடைகிறான். “

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## விபச்சாரத்தை அஞ்சுபவர் நோன்பு நோற்கவேண்டும்.

ஹதீஸ் 1905. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உங்களில், திருமணத்திற்கான செலவினங்களுக்குச் சக்தியற்றவர் திருமணம் செய்யட்டும் ஏனெனில் திருமணம் (அன்னியப் பெண்களைப் பார்ப்பதைவிட்டும்) பார்வையைக் கட்டுப்படுத்தும் கற்பைக் காக்கும். யார் அதற்குச் சக்தி பெறவில்லையோ அவர் நோன்பு நோற்கட்டும். அது அவரின் இச்சையைக் கட்டுப்படுத்தும்!”என அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## “நீங்கள் பிறையைப் பார்க்கும்போது நோன்பு வையுங்கள் (மறு) பிறையைப் பார்த்து நோன்பை விடுங்கள்“ என்று நபி(ஸல்) அவர்களின் கூற்று.

சந்தேகத்திற்குரிய நாளில் நோன்பு நோற்கிறவர் நபி(ஸல்) அவர்களுக்கு மாறு செய்துவிட்டார் என்று அம்மார்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 1906. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ரமலான் பிறையை நீங்கள் காணும் வரை நோன்பு நோற்காதீர்கள் (மறு) பிறையைக் காணும்வரை நோன்பை விடாதீர்கள் உங்களுக்கு மேக மூட்டம் தென்படுமானால் (முப்பது நாள்களாக) அதைக் கணித்துக் கொள்ளுங்கள்.“

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1907. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது இரவுகளாகும். எனவே பிறையைக் காணாமல் நீங்கள் நோன்பு நோற்காதீர்கள் உங்களுக்கு மேக மூட்டம் தென்படுமானால் முப்பது நாள்களாக எண்ணிக்கையை முழுமைப் படுத்துங்கள்!”என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1908. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(நபி(ஸல்) அவர்கள் இரண்டு கைவிரல்களையும் மூன்று முறை விரித்து) மாதம் என்பது இவ்வளவுதான் என்று கூறினார்கள். மூன்றாம் முறை கட்டை விரலை மடக்கினார்கள்.

ஹதீஸ் 1909. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“பிறையைப் பாத்து நோன்பு வையுங்கள் பிறையைப் பார்த்து நோன்பு விடுங்கள்! உங்களுக்கு மேக மூட்டம் தென்பட்டால் ஷஅபான் மாதத்தை முப்பது நாள்களாக முழுமைப் படுத்துங்கள்.“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1910. உம்மு ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள்’ஒரு மாதம் தம் மனைவியருடன் சேர்வதில்லை’ என்று சத்தியம் செய்திருந்தார்கள். இருபத்தி ஒன்பது நாள்கள் முடிந்தும் (இல்லம்) திரும்பினார்கள். அவர்களிடம்’நீங்கள் ஒருமாதம் (வீட்டிற்கு) வரமாட்டீர்கள் என்று சத்தியம் செய்திருந்தீர்களே! என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,‘ஒரு மாதம் என்பது இருபத்தொன்பது நாள்களாகவும் அமையும்!”என்றார்கள்.

ஹதீஸ் 1911. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தம் மனைவியருடன் சேர்வதில்லை என்று சத்தியம் செய்திருந்தார்கள். அப்போது அவர்களின் கால்(நரம்பு) பிசகியிருந்தது. அவர்கள் ஒரு பரணில் இருபத்தொன்பது நாள்கள் தங்கினார்கள். அப்போது அவர்களிடம்’நபி அவர்களே! நீங்கள் ஒரு மாதம் என்று சத்தியம் செய்யவில்லையா!’ என்று நபித்தோழர்கள் கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள்’மாதம் என்பது இருபத்தொன்பது நாள்களாகவும் அமையும்!”என்றார்கள்.

## இரண்டு பெருநாள்களின் மாதங்கள் (சேர்ந்தால்போல்) குறையாது.

“(எண்ணிக்கையில் இருபத்தொன்பது நாள்களாகக்) குறைந்தாலும் (நன்மையில்) அது நிறைவானதாகும்!”என்று இஸ்ஹாக் (ரஹ்) விளக்கம் தருகிறார்.

“பெருநாள்களின் இரண்டு மாதங்களும் சேர்ந்தாற் போல் இருபத்தொன்பது நாள்களாகக் குறையாது என்று முஹம்மது கூறுகிறார்.

ஹதீஸ் 1912. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“துல்ஹஜ், ரமலான் ஆகிய பெருநாள்களுக்குரிய இரண்டு மாதங்கள் சேர்ந்தால் போல் குறையாது. “

என அபூ பக்ரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நாம் விண் கலையை அறியாதவர்களாகவும் எழுதத் தெரியாதவர்களாகவும் உள்ளோம் என்ற நபி (ஸல்) அவர்கள் கூற்று.

ஹதீஸ் 1913. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாம் உம்மி சமுதாயமாவோம். எழுதுவதை அறிய மாட்டோம் விண் கலையையும் அறிய மாட்டோம். மாதம் என்பது இப்படியும் அப்படியும் இருக்கும் அதாவது சில வேளை இருபத்தொன்பது நாள்களாகவும் சில வேளை முப்பது நாள்களாகவும் இருக்கும்!“

என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## ரமளானுக்கு முந்திய நாளும் அதற்கு முந்திய நாளும் நோன்பு நோற்கக் கூடாது.

ஹதீஸ் 1914. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ரமளானுக்கு முதல் நாளும் அதற்கு முதல் நாளும் உங்களில் எவரும் நோன்பு நோற்கக் கூடாது் அந்நாள்களில் வழக்கமாகத் நோற்கும் நோன்பு அமைந்தாலே தவிர! அவ்வாறு அமைந்தால்அந்நாளில் நோன்பு நோற்கலாம்!“

என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“நோன்புக் கால இரவில் நீங்கள் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது! அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும் நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கிறீர்கள்! நீங்கள் இரகசியமாகத் தம்மைத் தாமே வஞ்சித்துக் கொண்டிருந்ததை அல்லாஹ் நன்கறிவான்! அவன் உங்கள் பிழைகளைப் பொறுத்து. உங்களை மன்னித்தான். எனவே, இனி (நோன்புக் கால இரவுகளில்) உங்கள் மனைவியருடன் கூடி, அல்லாஹ் உங்களுக்கு விதித்ததைத் தேடிக் கொள்ளுங்கள்!”(திருக்குர்ஆன் 02:187)

ஹதீஸ் 1915. பராஉ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ஆரம்ப காலத்தில்) நபித்தோழர்கள் நோன்பு நோற்று, நோன்பை நிறைவு செய்யும் நேரம் வந்து, அதற்கு முன்பே உறங்கி விட்டிருந்தால் அன்றைய இரவிலும் (தொடர்ந்து) பகலிலும் மாலை வரை எதையும் உண்ண மாட்டார்கள். (ஒரு முறை) கைஸ் இப்னு ஸிர்மா (ரலி) நோன்பு நோற்றிருந்தார் நோன்பு நிறைவு செய்யும் நேரம் வந்ததும் தம் மனைவியிடம் வந்து, ‘உன்னிடம் உணவு ஏதும் உள்ளதா?’ என்று கேட்டார் அவரின் மனைவி, ‘இல்லை! எனினும் நான் சென்று உமக்காக (உணவைத்) தேடி வருகிறேன்!”என்றார். கைஸ் இப்னு ஸிர்மா (ரலி) அன்றைய

தினம் கூலி வேலை செய்துவிட்டு வந்ததால் அவருக்கு உறக்கம் மேலிட்டுவிட்டது. அவரின் மனைவி வந்து அவரைக் கண்டபோது,'உமக்கு நஷ்டம் ஏற்பட்டுவிட்டது' என்றார் நண்பகலானதும் கைஸ்(ரலி) மூர்ச்சையுற்றார். இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கூறப்பட்டபோது,'நோன்புக் கால இரவில் நீங்கள் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்ற வசனமும்'இன்னும் ஃபஜ்ரு (அதிகாலை) நேரம் என்ற வெள்ளை நூல் (இரவு என்ற) கருப்பு நூலிலிருந்து தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள், பருகுங்கள் என்ற வசனமும் இறங்கின. இதனால் நபித்தோழர்கள் அதிக மகிழ்ச்சியடைந்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“இன்னும் பஜ்ரு (அதிகாலை) நேரம் என்ற வெள்ளை நூல் (இரவு என்ற) கருப்பு நூலிலிருந்து தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள் பருகுங்கள் பின்னர், இரவு வரும் வரை நோன்பைப் பூர்த்தி செய்யுங்கள்!”(திருக்குர்ஆன் 02:187)

இது பற்றி நபி(ஸல்) வழியாக பராவு(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1916. அதீ இப்னு ஹாதிம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

'கருப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிறு தெளிவாகும் வரை' என்ற (திருக்குர்ஆன் 02:187) இறைவசனம் அருளப்பட்டபோது, நான் ஒரு கருப்புக் கயிற்றையும் வெள்ளைக் கயிற்றையும் எடுத்து தன் தலையணையில் வைத்துக் கொண்டேன் இரவில் அதைப் பார்க்கலானேன் எனக்கு எதுவும் தெளிவாகவில்லை! விடிந்ததும் நபி(ஸல்) அவர்களிடம் சென்று இதுபற்றிக் கூறினேன் அதற்கு நபி(ஸல்) அவர்கள்'(கருப்புக் கயிறு என்பதின் கருத்து) இரவின் கருமையும் (வெள்ளைக் கயிறு என்பதின் கருத்து) விடியலின் வெண்மையும் தான்!”என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 1917. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“கருப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிறு உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள் பருகுங்கள்!”என்ற (திருக்குர்ஆன் 02:187) இறைவசனம் அருளப்பட்டது! அப்போது அவ்வசனத்தில்'மினல் ஃபஜ்ரி (அதிகாலை எனும்)' என்னும் வாசகம் இருக்கவில்லை! அப்போதெல்லாம் மக்கள் நோன்பு நோற்க நினைத்தால் ஒரு காலில் வெள்ளைக் கயிற்றையும் கட்டிக் கொள்வார்கள். அவ்விரண்டும் கண்ணுக்குத் தெரியும்வரை உண்டு கொண்டே இருப்பார்கள்! பிறகுதான்'மினல் ஃபஜ்ரி (அதிகாலை எனும்)' என்னும் வாசகம் (அவ்வசனத்துடன்) இறங்கியது.'இரவையும் பகலையுமே அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகிறான்‘‘ என்று அப்போதுதான் மக்கள் விளங்கினர்!“

(பார்க்க: 590ல் உள்ள02:187ம் எண் இறைவசனத்தின் மொழியாக்கம்)

## “பிலால் பாங்கு சொல்வது நீங்கள் ஸஹ்ர் செய்வதிலிருந்து உங்களைத் தடுக்க வேண்டாம்!ன்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று.

ஹதீஸ் 1918-ஹதீஸ் 1919. ஆயிஷா(ரலி) இப்னு உமர்(ரலி) ஆகியோர் அவர்கள் கூறினார்கள்.

பிலால்(ரலி), (ஃபஜ்ரு நேரத்திற்கு முன்) இரவிலேயே பாங்கு சொல்வார்கள் அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இப்னு உம்மி மக்தூம் பாங்கு சொல்லும்வரை உண்ணுங்கள் பருகுங்கள்! ஏனெனில், அவர்தாம் ஃபஜ்ரு (கைவறை) நேரம் வந்ததும் பாங்கு சொல்கிறார்!"என்று குறிப்பிட்டார்கள்.

"அவர் பாங்கு சொல்லிவிட்டு இறங்குவார் இவர் பாங்கு சொல்வதற்கு ஏறுவார் என்பதைத் தவிர இரண்டு பாங்குக்குமிடையே பெரிய இடைவெளி இருக்காது!"என்று காஸிம்(ரஹ்) கூறினார்.

## ஸஹ்ரை விரைவுபடுத்துதல்.

ஹதீஸ் 1920. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நான் என் குடும்பத்தாருடன் ஸஹ்ர் செய்துவிட்டு நபி(ஸல்) அவர்களுடன் (ஸுப்ஹுத்) தொழுகையை அடைவதற்காக விரைவாகச் செல்வேன்!"

## ஸஹ்ருக்கும் ஃபஜ்ருத் தொழுகைக்கும் இடையே எவ்வளவு இடைவெளி இருக்க வேண்டும்?

ஹதீஸ் 1921. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஸஹ்ர் செய்தோம் பின்னர், தொழுகைக்கு அவர்கள் தயாராம்விட்டார்கள்!"என்று ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார் நான்'பாங்குக்கும் ஸஹ்ருக்குமிடையே எவ்வளவு நேரம் இருந்தது?' என்று கேட்டேன். அதற்கவர்'ஐம்பது வசனங்கள் (ஓதும்) நேரம் இருந்தது!"என்று பதிலளித்தார்.

## ஸஹ்ர் செய்வதில் பரக்கத் இருக்கிறது ஆனால், அது கட்டாயமில்லை.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் தொடர்ந்து நோன்பு வைத்திருக்கிறார்கள் (அப்படித் தொடர்ந்து நோன்பு நோற்ற காலங்களில்)'ஸஹ்ர் செய்தார்கள்' என்று கூறப்படவில்லை.

ஹதீஸ் 1922. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (நோன்பு திறக்காமல்) தொடர் நோன்பு வைத்தார்கள் மக்களும் அவ்வாறு தொடர் நோன்பு வைத்தார்கள். இது மக்களுக்குச் சிரமமாக இருந்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள், மக்கள் தொடர் நோன்பு நோற்கத் தடை விதித்தார்கள். நபித்தோழர்கள்,'நீங்கள் (மட்டும்) தொடர் நோன்பு நோற்கிறீர்களே!"என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'நான் உங்களைப் போன்றவன் அல்லன் (இறைவன் தரப்பிலிருந்து) உண்ணவும் பருகவும் எனக்கு வழங்கப்படுகிறது!"என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 1923. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"நீங்கள் ஸஹ்ர் செய்யுங்கள் நிச்சயமாக ஸஹ்ர் செய்வதில் பரக்கத் இருக்கிறது!" இதை அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நோன்பு நோற்பதாக பகலில் தீர்மானிப்பது.

"அபூ தர்தா(ரலி) என்னிடம்'உங்களிடம் உணவு ஏதும் இருக்கிறதா?' என்று கேட்பார்கள்'இல்லை'யென்று நாங்கள் சொன்னால்,'நான் இன்றைய தினம் நோன்பாளியாக இருந்து கொள்கிறேன்!' என்று கூறுவார்கள்!"என (அவர்களின் மனைவி) உம்மு தர்தா(ரலி) கூறினார்.

அபூ தல்ஹா (ரலி), அபூ ஹுரைரா (ரலி), இப்னு அப்பாஸ் (ரலி), ஹுதைஃபா (ரலி) ஆகியோரும் இவ்வாறு செய்துள்ளனர்.

ஹதீஸ் 1924. ஸலமா இப்னு அக்வஃ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஆஸூரா தினத்தில்'யார் சாப்பிட்டுவிட்டாரோ அவர் (நோன்பாக) இருக்கட்டும்!' என்று ஒருவரை அனுப்பி மக்களுக்கு அறிவிக்கச் செய்தார்கள்.

## நோன்பு நோற்றவர் குளிப்பு கடமையானவராகக் காலை நேரத்தை அடைதல்.

ஹதீஸ் 1925 , ஹதீஸ் 1926 அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"நபி (ஸல்) அவர்கள் குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டு, குளிப்பு கடமையானவர்களாக ஃபஜ்ரு (அதிகாலை) நேரத்தை அடைவார்கள் பின்னர் குளித்துவிட்டு நோன்பைத் தொடர்வார்கள்!' என்று ஆயிஷா (ரலி), உம்மு ஸலமா (ரலி) ஆகியோர் அறிவித்ததாக அன்றைய தினம் மதீனாவின் ஆளுநராக இருந்த மர்வானிடம் என் தந்தை அப்துர் ரஹ்மான் கூறினார். மர்வான், என் தந்தையிடம்,'இதன் வாயிலாக (இதை எடுத்துரைத்து), அபூ ஹுரைராவை நீர் எச்சரிக்க வேண்டும் என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன்!' என்று கூறினார். பின்னர் நாங்கள்'துல்ஹுலைஃபா' என்னும் இடத்தில் ஒன்று சேர்வதாக முடிவு செய்யப்பட்டது. அங்கு அபூ ஹுரைரா (ரலி) அவர்களுக்கு ஒரு நிலம் இருந்தது; (நாங்கள் அங்கு சென்றபோது இருந்தார்) என் தந்தை அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம்,'நான் உம்மிடம் ஒரு செய்தியைக் கூறவிருக்கிறேன்: மர்வான், இது தொடர்பாக (உம்மிடம் கூறும்படி) சத்தியம் செய்து என்னை வற்புறுத்தியிருக்காவிட்டால் இதை நான் உம்மிடம் கூறப்போவதில்லை!' என்று கூறிவிட்டு, ஆயிஷா (ரலி), உம்மு ஸலமா (ரலி) ஆகியோர் கூறியதை அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் கூறினார். அதற்கு அபூ ஹுரைரா (ரலி)'அது (ஃபஜ்ருக்கு முன்பே குளித்ததாக வேண்டும் என்பது) போல்தான் ஃபள்ல் இப்னு அப்பாஸ் (ரலி) எனக்குக் கூறினார்கள்: (நபியின் மனைவியரான) அவர்கள்தாம் இது பற்றி நன்கு அறிந்தவர்கள்!' என்று பதிலளித்தார்."

'ஃபஜ்ரு நேரத்தில் குளிப்பு கடமையாக இருப்பவர் நோன்பைவிட்டுவிடுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்' என்று அபூ ஹுரைரா (ரலி) வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது. ஆயினும் முந்திய (இந்த நபிமொழியின் தொடக்கத்தில் உள்ள) செய்தியே பலமான அறிவிப்பாளர் வரிசையுடன் உள்ளதாகும்.

## நோன்பாளி மனைவியை அணைத்துக் கொள்ளுதல்.

"(நோன்பாளிக்கு) உடலுறவு மட்டுமே ஹராமாகும்!"என்று ஆயிஷா (ரலி) கூறினார்.

ஹதீஸ் 1927. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்ற நிலையில் (தம் மனைவியரைக்) கட்டியணைப்பார்கள் முத்தமிடுவார்கள்! உங்களில் தம் (உடல்) உணர்ச்சியை அதிகம் கட்டுப்படுத்திக் கொள்பவர்களாக அவர்கள் இருந்தார்கள்!"

"ஒருவர் தம் மனைவியை இச்சையுடன் பார்த்து, அதனால் விந்து வெளிப்பட்டால் அவர் நோன்பைத் தொடரலாம்!"என்று ஜாபிர் இப்னு ஸைத் கூறுகிறார்.

## நோன்பாளி முத்தமிடல்

ஹதீஸ் 1928. உர்வா(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்ற நிலையில் தம் மனைவியரில் ஒருவரை முத்தமிடுவார்கள்!”என்று சொல்லிவிட்டு ஆயிஷா(ரலி) சிரித்தார்கள்.

ஹதீஸ் 1929. உம்மு ஸலமா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போர்வைக்குள் இருக்கும்பொழுது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. நான் (போர்வையிலிருந்து) நழுவி, மாதவிடாய்க்குரிய ஆடைகளை அணிந்து கொண்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா?' என்று கேட்டார்கள்: நான்'ஆம்!' என்று கூறிவிட்டு, அவர்களுடன் போர்வைக்குள் நுழைந்து கொண்டேன்! நானும் நபி(ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்தில் (இருக்கும் தண்ணீரையள்ளிக் குளிப்போம்! நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும்போது என்னை முத்தமிடுவார்கள்!“

## நோன்பாளி குளிப்பது.

இப்னு உமர்(ரலி) நோன்பு நோற்றிருந்தபோது ஓர் ஆடையை நனைத்துத் தம் மேல் போட்டார்கள்.

ஷஅபி(ரஹ்) அவர்கள் நோன்பு நோற்றிருந்தபோது குளியலறைக்குச் சென்றிருக்கிறார்கள்.

“சமையல் பாத்திரத்தில் உள்ளதையோ, வேறெதையுமோ ருசி பார்ப்பதில் தவறில்லை!”என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

“நோன்பாளி வாய் கொப்பளிப்பதும் (வெப்பத்தைத் தணித்துக் கொள்வதற்காக) தலையில் தண்ணீர் ஊற்றிக் கொள்வதும் தவறில்லை!”என்று ஹஸன் பஸரீ(ரஹ்) கூறினார்.

“உங்களில் ஒருவர் நோன்பு நோற்றால் காலையில் எண்ணெய் தடவித் தலைவாரிக் கொள்ளட்டும்!”என்று இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

“என்னிடம் கல்தொட்டி ஒன்று இருந்தது நான் நோன்பு நோற்றிருக்கும் நிலையில் அதனுள் அமிழ்வேன்!”என்று அனஸ்(ரலி) கூறினார்.

'நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்தபொழுது பல் துலக்கினார்கள்!' என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

“பகலின் ஆரம்ப நேரத்திலும் கடைசி நேரத்திலும் நோன்பாளி பல் துலக்கலாம் எச்சிலை விழுங்கக் கூடாது!”என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

“ஒருவர் தம் எச்சிலை விழுங்கினால் அவரின் நோன்பு முறியும் என்று நான் கூற மாட்டேன்!' என்ற அதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

“ஈரமான குச்சியால் பல் துலக்குவதில் தவறில்லை!”என்று இப்னு ஸிரீன்(ரஹ்) அவர்கள் கூறியபோது'அதற்கு ருசி இருக்கிறதே!”என்று கேட்கப்பட்டது. இப்னு ஸரீன்(ரஹ்) அவர்கள்'தண்ணீருக்குக் கூடத்தான் ருசி இருக்கிறது. அதன் மூலம் நீர் வாய்க் கொப்பளிக்கிறீரே?' என்று கேட்டார்கள்.

“நோன்பாளி ஸுர்மா இடுவது தவறில்லை!”என்று அனஸ்(ரலி) ஹஸன்(ரஹ்), இப்ராஹீம்(ரஹ்) ஆகியோர் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 1930. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் தாம்பத்திய உறவில் ஈடுபட்டு, குளிப்பு கடமையானவர்களாக ஃபஜ்ரு நேரத்தை அடைவார்கள். குளித்துவிட்டு நோன்பைத் தொடர்வார்கள்!"

ஹதீஸ் 1931 , ஹதீஸ் 1932 அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"நானும் என் தந்தையும் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றோம். ஆயிஷா(ரலி), 'நபி(ஸல்) அவர்கள் தாம்பத்திய உறவில் ஈடுபட்டு, குளிப்பு கடமையானவர்களாகக் காலை நேரத்தை அடைவார்கள் பின்னர் நோன்பைத் தொடர்வார்கள!' என்று கூறினார்கள். பிறகு, உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் நாங்கள் சென்றபோது அவர்களும் அவ்வாறே கூறினார்கள்!'

## நோன்பாளி மறதியாக உண்டால், பருகினால்...?

ஒருவர் மூக்கிற்கு தண்ணீர் செலுத்தும்போது அவரையும் மீறி தொண்டைக்குள் தண்ணீர் சென்றால் அதில் தவறில்லை என்று அதா கூறுகிறார்.

ஒருவரின் தொண்டைக்குள் ஈ நுழைந்துவிட்டால் அதனால் எந்தத் தவறுமில்லை என்று ஹஸன் கூறுகிறார்.

மறதியாக மனைவியுடன் கூடினால் அதில் எந்தத் தவறுமில்லை என்று ஹஸன், முஜாஹித் ஆகியோர் கூறுகின்றனர்.

ஹதீஸ் 1933. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒருவர் மறதியாக உண்ணவோ பருகவோ செய்தால் அவர் தம் நோன்பை முழுமைப்படுத்தட்டும் ஏனெனில் அவரை அல்லாஹ்வே உண்ணவும் பருகவும் வைத்தான்."

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நோன்பாளி ஈரமான மற்றும் காய்ந்த பொருட்களால் பல் துலக்குதல்.

"நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும்போது பல் துலக்குவதை எண்ணிலடங்காத முறை பார்த்திருக்கிறேன்!' என்று ஆமிர் இப்னு ரபீஆ(ரலி) கூறினார் என அறிவிக்கப்பட்டுள்ளது.

"என்னுடைய சமுதாயத்திற்கு நான் சிரமம் தந்தவனாக ஆம்விடுவேன் என்ற அச்சம் (எனக்கு) இல்லாவிட்டால் ஒவ்வொரு உளூவின் போதும் பல் துலக்குமாறு நான் அவர்களுக்கு உத்தரவிட்டிருப்பேன்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

ஜாபிர்(ரலி), ஸைத் இப்னு காலித்(ரலி) ஆகியோர் வழியாகவும் இது போல் அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்த விஷயத்தில் நோன்பாளிக்கு என்று தனிச்சட்டம் எதுவும் கூறப்படவில்லை.

"பல்துலக்குதல் வாயைத் தூய்மைப்படுத்துவதும் இறைவனின் திருப்தியைப் பெற்றுத் தருவதுமாகும்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஆயிஷா(ரலி) கூறினார்.

"பல் துலக்கும்போது எச்சிலை விழுங்கலாம்!"என்று கத்தாதா(ரஹ்) அதா(ரஹ்) ஆகியோர் கூறுகின்றனர்.

ஹதீஸ் 1934. ஹும்ரான் அவர்கள் கூறினார்கள்.

உஸ்மான்(ரலி) உளூச் செய்யும்போது தம் கைகளில் மூன்று முறை தண்ணீர ஊற்றிப் பின்னர் வாய்க் கொப்பளித்து, மூக்கிற்கும் தண்ணீர செலுத்தித் தம் முகத்தை மூன்று முறை கழுவினார். பின்னர் தம் வலக்கையை மூட்டு வரை மூன்று முறை கழுவினார். பின்னர் தலைக்கு மஸஹ் செய்தார். பிறகு வலது காலை மூன்று முறையும் கழுவினார். 'நான் உளூச் செய்தது போல் நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்ததை பார்த்திருக்கிறேன்' என்றும் குறிப்பிட்டார்.

"என்னுடைய உளூவைப் போல் உளூச் செய்து வேறு எந்த எண்ணத்திற்கும் இடம் தராமல் இரண்டு ரக்அத்கள் தொழுகிறவரின் முன் பாவங்கள் மன்னிக்கப்படும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும் குறிப்பிட்டார்.

"ஒருவர் உளூச் செய்யும்போது மூக்கிற்குள் தண்ணீர செலுத்தட்டும்!"என்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று.

இந்தக் கூற்றில் நோன்பாளி, நோன்பு நோற்காதவர் என்றெல்லாம் நபி(ஸல்) அவர்கள் வித்தியாசப்படுத்திக் கூறவில்லை.

'நோன்பாளி, தொண்டைக்குள் செல்லாத வகையில் மூக்கிற்குள் மருந்துச் சொட்டுகளைவிட்டுக் கொள்வதில் தவறில்லை' என்றும்'அவர் ஸுர்மாவும் இட்டுக் கொள்ளலாம்' என்றும் ஹஸன் பஸரீ(ரஹ்) கூறினார்.

"ஒருவர் வாய் கொப்பளித்து, வாயிலுள்ள தண்ணீரைத் துப்பிவிட்டால் அதனால் (நோன்பிற்கு) எந்த பாதிப்பும் இல்லை. அவர் எச்சிலையும் வாயில் எஞ்சிய தண்ணீரையும் விழுங்காமல் இருக்க வேண்டும். பிசின் (போன்ற பண்டங்)களை மெல்லக் கூடாது! அதனுடைய எச்சில் கலந்த சாற்றை விழுங்கிவிட்டால் நோன்பு முறியும் என்று நான் கூறமாட்டேன் எனினும், அ(வ்வாறு விழுங்குவ)து தடுக்கப்படவேண்டும்! மூக்கிற்குள் தண்ணீர செலுத்தி மூக்கைச் சிந்தும்போது தன்னையும் மீறி தண்ணீர தொண்டைக்குள் நுழைந்துவிட்டால் அதில் தவறில்லை!"என்று அதா(ரஹ்) கூறினார்.

## ரமளானில் (பகலில்) உடலுறவு கொள்ளுதல்.

"ஒருவர் ரமளானில் ஒரு நோன்பை, நோயோ தக்க காரணமோ இன்றிவிட்டுவிட்டால் அவர் காலமெல்லாம் நோன்பு நோற்றாலும் அதற்கு ஈடாகாது!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) வாயிலாக அறிவிக்கப்படுகிறது. இவ்வாறே இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்.

"அதற்கு பதிலாக, அவர் வேறு ஒரு நாளில் நோன்பு நோற்க வேண்டும்!"என்று ஹம்மாத், கத்தாதா, இப்ராஹீம், இப்னு ஜுபைர், ஷஅபி, ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ் - அலைஹிம்) ஆகியோர் கூறுகின்றனர்.

ஹதீஸ் 1935. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'நான் எரிந்து போய்விட்டேன்!"என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்'உமக்கு என்ன நேர்ந்தது?' என்றார்கள். அவர்,'ரமளானில் என் மனைவியுடன் கூடிவிட்டேன்!"என்று பதிலளித்தார். அப்போது நபி(ஸல்) அவர்களிடம்'அரக்' என்று கூறப்படும் ஓர் அளவை (நிறைய பேரீச்சம் பழம்) கொண்டு வரப்பட்டது.'எரிந்து போனவர் எங்கே?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.'நானே" என்று அவர் கூறினார். (அந்தப் பேரீச்சம் பழத்தை

அந்த மனிதரிடம் கொடுத்து.)'இதை தர்மம் செய்வீராக!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ரமளானில் (பகலில் உடலுறவு கொண்டுவிட்டு, அதற்குக் குற்றப் பரிகாரம் செய்வதற்கு ஏதுமில்லாத நிலையில் ஒருவருக்கு தர்மம் செய்யப்பட்டால் அதையே அவர் பரிகாரமாக வழங்கலாம்.

ஹதீஸ் 1936. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தபோது அவர்களிடம் ஒருவர் வந்து,'நபி அவர்களே! நான் அழிந்து விட்டேன்!"என்றார். நபி(ஸல்) அவர்கள்'உமக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள்.'நான் நோன்பு வைத்துக்கொண்டு என் மனைவியுடன் கூடிவிட்டேன்!"என்று அவர் சொன்னார். நபி(ஸல்) அவர்கள்,'விடுதலை செய்வதற்கு ஓர் அடிமை உம்மிடம் இருக்கிறாரா?' என்று கேட்டார்கள். அவர்'இல்லை!"என்றார்.'தொடர்ந்து இரண்டு மாதம் நோன்பு நோற்க உமக்கு சக்தி இருக்கிறதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர்,'இல்லை!"என்றார்.'அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உமக்கு சக்தியிருக்கிறதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர்,'இல்லை!"என்றார். நபி(ஸல்) அவர்களிடம் பேரீச்சம் பழம் நிறைந்த'அரக்' எனும் அளவை கொண்டு வரப்பட்டது. அப்போது, நபி(ஸல்) அவர்கள்'கேள்வி கேட்டவர் எங்கே" என்றார்கள்.'நானே!"என்று அவர் கூறினார்.'இதைப் பெற்று தர்மம் செய்வீராக!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அம்மனிதர்,'நபி அவர்களே! என்னை விட ஏழையாக இருப்போருக்கான (நான் தர்மம் செய்ய வேண்டும்)? மதீனாவின் (கருங்கற்கள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் என் குடும்பத்தினரை விடப் பரம ஏழைகள் யாருமில்லை!"என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் கடைவாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள்: பிறகு'இதை உம்முடைய குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுத்து விடுவீராக!"என்றார்கள்.

## ரம்ளானில் (நோன்பு நேரத்தில்) உடலுறவு கொண்டவர் அதற்குரி பரிகாரத்தை ஏழைகளாக உள்ள தம் குடும்பத்தினருக்கே வழங்கி விடலாமா?

ஹதீஸ் 1937. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து'(என்னைப் போன்ற) பாமரர் ஒருவர் ரமளானில் தம் மனைவியுடன் கூடிவிட்டால் (பரிகாரம் என்ன?)" என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்'ஓர் அடிமையை உம்மால் விடுதலை செய்ய இயலுமா?' என்று கேட்டார்கள். அவர்'இயலாது!"என்றார்.'அறுபது ஏழைகளுக்கு உணவு அளிப்பதற்குரிய பொருள் உம்மிடம் இருக்கிறதா?' என்று கேட்டார்கள். அவர்'இல்லை" என்றார். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் பேரீச்சம் பழம் நிறைந்த'அரக்' எனும் அளவை கொண்டு வரப்பட்டது.'இதை உம் சார்பாக வழங்குவீராக!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கவர்'எங்களை விட ஏழைக்கா? மதீனாவின் இரண்டு மலைகளுக்கிடையே எங்களை விட அதிகத் தேவையுடையோர் வேறு யாரும் இல்லை!"என்று கூறினார்.'அப்படியானால் உம் குடும்பத்தாருக்கே இதை உண்ணக் கொடுத்து விடுவீராக!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## நோன்பாளி இரத்தம் குத்தி எடுத்துக் கொள்வதும் வாந்தி எடுப்பதும்.

“ஒருவர் வாந்தி எடுத்தால் அவரின் நோன்பு முறியாது ஏனெனில் அவர் (உணவை) வெளியேற்றியிருக்கிறாரே தவிர உள்ளே செலுத்தவில்லை!”என்று அபூ ஹுரைரா (ரலி) கூறினார்.

‘அவரின் நோன்பு முறிந்து விடும்!”என்று அபூ ஹுரைரா (ரலி) கூறினார் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. முதல் கூற்றே சரியானதாகும்.

“(உணவுப் பொருள், பானம் அல்லது நீர் போன்று ஏதும்) உள்ளே நுழைவதால்தான் நோன்பு முறியும் வெளியேறுவதால் முறியாது!”என இப்னு அப்பாஸ் (ரலி), இக்ரிமா (ரஹ்) ஆகியோர் கூறுகின்றனர்.

இப்னு உமர் (ரலி) நோன்பு வைத்துக் கொண்டு இரத்தம் குத்தி எடுத்துக் கொள்பவராக இருந்தார்கள். பின்னர் அதைவிட்டுவிட்டு இரவில் அழுத்தம் குத்தி எடுக்கலானார்கள்.

அபூ மூஸா (ரலி) இரவில் இரத்தம் குத்தி எடுத்துக் கொள்வார்கள்.

உம்மு ஸலமா (ரலி), ஸைத் இப்னு அர்கம் (ரலி), ஸஅத் (ரலி) ஆகியோர் நோன்பு நோற்றிருக்கும்போது இரத்தம் குத்தி எடுத்திருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

நாங்கள் ஆயிஷா (ரலி)வின் முன்னிலையில் இரத்தம் குத்தி எடுப்போம். (அவர்களால்) நாங்கள் தடுக்கப்படவில்லை என்று உம்மு அல்கமா கூறுகிறார்.

“இரத்தம் குத்தி எடுத்தவரும் எடுக்கப்பட்டவரும் நோன்பை முறித்துவிட்டனர்’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனேகர் வழியாக, ஹஸன் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. ஹஸனிடம், ‘நபி (ஸல்) அவர்கள் வழியாகவா நீங்கள் கூறுகிறீர்கள்?’ என்று கேட்டபோது, ‘ஆம்’ என்று கூறிவிட்டு, ‘அல்லாஹ்வே மிக அறிந்தவன்’ என்று பின்னர் கூறினார்.

ஹதீஸ் 1938. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்த நிலையில் இரத்தம் குத்தி எடுத்துள்ளனர். நோன்பு நோற்று இருக்கும்போது இரத்தம் குத்தி எடுத்துள்ளனர்.

ஹதீஸ் 1939. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருக்கும்போது இரத்தம் குத்தி எடுத்தார்கள்.

ஹதீஸ் 1940. ஸாபித் அல் புனானீ அவர்கள் கூறினார்கள்.

“நோன்பாளி இரத்தம் குத்தி எடுத்துக் கொள்வதை நீங்கள் வெறுத்து வந்தீர்களா?’ என்று அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு, ‘இல்லை! ஆயினும், (நாங்கள் அதை வெறுத்தது) பலவீனம் ஏற்படும் என்பதற்காகவே!”என்று அவர்கள் பதிலளித்தார்கள். மற்றோர் அறிவிப்பில்’நபி (ஸல்) அவர்கள் காலத்தில்’ என்னும் வாக்கியம் சேர்த்துக் கூறப்பட்டுள்ளது.

## பயணத்தில் நோன்பு நோற்பதும் நோன்பை விடுவதும்.

ஹதீஸ் 1941. இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், ‘(வாகனத்திலிருந்து) இறங்கி, (உண்பதற்கேற்ப) மாவை எனக்காகக் கரைப்பீராக!”என்று கூறினார்கள். அதற்கவர், ‘நபி அவர்களே! (இன்னும் முழுமையாக மறையவில்லையே,) சூரியன்!”என்றார். மீண்டும் நபி (ஸல்) அவர்கள், ‘இறங்கி எனக்காக மாவைக்

கரைப்பீராக!"என்றார்கள். அப்போதும் அம்மனிதர், 'நபி அவர்களே! (இன்னும் முழுமையாக மறையவில்லையே,) சூரியன்!"என்றார். நபி(ஸல்) அவர்கள், 'இறங்கி எனக்காக மாவைக் கரைப்பீராக!"என்று மீண்டும் கூறினார்கள். அவர் இறங்கி மாவைக் கரைத்தார். அதை நபி(ஸல்) அவர்கள் அருந்திவிட்டுத் தம் கையால் (மழக்கே) சுட்டிக் காட்டினார்கள் பிறகு, 'இங்கிருந்து (மழக்கிலிருந்து) இரவு முன்னோக்கி வருவதை நீங்கள் கண்டால் நோன்பாளி நோன்பை நிறைவு செய்யலாம்! என்றார்கள்.

ஹதீஸ் 1942. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹம்ஸா இப்னு அம்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம், 'நபி அவர்களே! நான் காலமெல்லாம் நோன்பு நோற்கிறேன்' என்று கூறினார்.

ஹதீஸ் 1943. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹம்ஸா இப்னு அம்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம், 'பயணத்தில் நான் நோன்பு நோற்கலாமா?' என்று கேட்டார். அவர் அதிகம் நோன்பு நோற்பவராக இருந்தார். அவரிடம் நபி(ஸல்) அவர்கள், 'நீ விரும்பினால் நோன்பு நோற்றுக் கொள் நீ விரும்பினால்விட்டுவிடு" என்றார்கள்.

## ரமலானில் சில நாள்கள் நோன்பு நோற்றுவிட்டுப் பின்னர் பயணம் செய்தால்...?

ஹதீஸ் 1944. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ரமளானில் மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள் அப்போது அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள். 'கதீத்' எனும் இடத்தை அடைந்ததும் நோன்பைவிட்டார்கள் மக்களும் நோன்பைவிட்டனர்!"

"கதீத் என்பது உஸ்ஃபான், குதைத் ஆகிய இடங்களுக்கிடையே உள்ள நீர்ப் பகுதியாகும்!"என்று அபூ அப்தில்லாஹ் புகாரீயாகிய நான் கூறுகிறேன்.

ஹதீஸ் 1945. அபூ தர்தா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நாங்கள் நபி(ஸல்) அவர்களின் பயணமொன்றில் வெயில் மிகுந்த ஒரு நாளில் அவர்களுடன் சென்றோம். கடும் வெப்பத்தின் காரணமாக சிலர் தம் கையைத் தம் தலையில் வைத்தனர். அப்பயணத்தில் நபி(ஸல்) அவர்களையும் தவிர எங்களில் வேறு எவரும் நோன்பு நோற்றிருக்கவில்லை!"

## வெப்பம் கடுமையாகி, நிழல்லில் தங்கி வைக்கப்பட்ட ஒருவரிடம்,பயணத்தில் நோன்பு நோற்பது நற்செயலில் சேராது!என்ற நபி(ஸல்) அவர்களின் கூற்று.

ஹதீஸ் 1946. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தபோது, ஒருவர் நிழலில் தங்க வைக்கப்பட்டு மக்கள் (அவரைச் சுற்றிலும்) குழுமியிருந்ததைக் கண்டார்கள். 'இவருக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். 'இவர் நோன்பு நோற்றிருக்கிறார்!"என்று மக்கள் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'(பலவீனமான நிலையில் உள்ளவர்கள்) பயணத்தில் நோன்பு நோற்பது நற்செயலில் சேராது!"என்று கூறினார்கள்.

## பயணத்தில் நோன்பு நோற்பதையும் நோன்பை விடுவதையும் நபித்தோழர்கள் குறை கூறியதில்லை.

ஹதீஸ் 1947. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் பயணத்தில் செல்வோம். நோன்பு நோற்றவரை நோற்காதவரும் நேற்காதவரை நோற்றவரும் குறை கூறமாட்டார்கள்.

## மக்கள் காணும் வகையில் பயணத்தில் நோன்பை முறித்தல்.

ஹதீஸ் 1948. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து மக்காவிற்குப் புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள். உஸ்பான் எனும் இடத்தை அடைந்ததும் தண்ணீா கொண்டுவரச் செய்து, மக்கள் காண்பதற்காகக் கைகளின் நீளத்திற்கு அதை உயர்த்திக் காட்டி நோன்பை முறித்தார்கள். மக்காவை அடையும் வரை நோன்பு நோற்க வில்லை. இது ஒரு ரமளானில் நடந்தது!

“நபி(ஸல்) அவர்கள் (பயணத்தில்) நோன்பு நோற்றும் இருக்கிறார்கள் நோன்பைவிட்டும் இருக்கிறார்கள். (நோன்பு நோற்க) விரும்புபவர் நோன்பு நோற்கலாம் நோன்பைவிட்டுவிட விரும்புபவர்விட்டு விடவும் செய்யலாம்!“

“நோன்பு நோற்கச் சக்தியுள்ளவர்கள் (ஒரு நோன்பிற்கு பதிலாக) ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும்!”என்ற (திருக்குர்ஆன் 02:184) இறை வசனத்தை,‘ரமளான் மாதம் எத்தகையதென்றால், அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழியின் தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும் (நன்மை தீமைகளைப்) பிரித்தறிவிப்பதுமான திருக்குர்ஆன் இறக்கியருளப் பெற்றது! எனவே, உங்களில் அம்மாதத்தை அறிகிறவர் அதில் நோன்பு நோற்க வேண்டும! எனினும், நோயாளியாகவோ, பயணியாகவோ இருக்கிறவர் மற்ற நாள்களில் நோற்றுக் கொள்ளட்டும். நோன்பை குறிப்பிட்ட அந்நாள்களில் நோற்க வேண்டும்! அல்லாஹ் உங்களுக்கு இலகுவை விரும்புகிறானே தவிர, உங்களுக்குச் சிரமத்தை(த்தர) அவன் விரும்பவில்லை! (விடுபட்ட நோன்பு நாள்களின்) எண்ணிக்கையைப் பூர்த்தி செய்யவும் உங்களுக்கு நேர்வழி காட்டியதற்காக அல்லாஹ்வின் மகத்துவத்தை நீங்கள் போற்றி, நன்றி செலுத்துவதற்காகவுமே (அல்லாஹ் இப்படிக் கட்டளையிடுகிறான்!)’ என்ற (திருக்குர்ஆன் 02:185) இறைவசனம் மாற்றிவிட்டது!”என இப்னு உமர்(ரலி) ஸலமா வின் அக்வஃ(ரலி) ஆகியோர் கூறுகின்றனர்.

“ரமளான் நோன்பு பற்றிய வசனம் அருளப்பட்டதும் அது நபித்தோழர்களுக்குச் சிரமமாக இருந்தது. ஒவ்வொரு நாளும் ஓர் ஏழைக்கு உணவளிப்பவர் நோன்பிருக்க சக்தியிருந்தும் நோன்பைவிட்டு விடுபவராக இருந்தார். தொடக்கத்தில் இவ்வாறு அவர்களுக்குச் சலுகை வழங்கப்பட்டது.’நீங்கள் நோன்பு நோற்பதே உங்களுக்குச் சிறந்ததாகும்!”(திருக்குர்ஆன் 02:184) என்ற வசனம் இச்சலுகையை மாற்றிவிட்டது. நோன்பு நோற்குமாறு இவ்வசனத்தின் மூலம் அவர்கள் கட்டளையிடப்பட்டனர்!”என்று பல நபித்தோழர்கள் கூறினார்கள் என இப்னு அபீ லைலா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 1949. நாஃபிவு(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

“ரமளான் (நோன்பைவிட்டதற்குப்) பரிகாரமாக ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும்!”என்ற வசனத்தை இப்னு உமர்(ரலி) ஓதிவிட்டு, இந்த வசனம் கூறும் சட்டம் மாற்றப்பட்டுவிட்டது!”என்று கூறினார்.

## ரமளானில் விடுபட்ட நோன்பை எப்போது நிறைவேற்றவேண்டும்?

**"**வேறு நாள்களில் நோற்கலாம் என்று அல்லாஹ் கூறுவதால் விடுபட்ட நோன்புகளைப் பிரித்துப் பிரித்து வைப்பதில் தவறில்லை!"என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

**"**விடுபட்ட ரமளான் நோன்புகளை நிறைவேற்றாமல் (துல்ஹஜ்மாதம்) பத்து நாள்கள் நோன்பு நோற்பது பொருந்தாது!"என்று ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) கூறினார்.

**"**ஒருவர் அடுத்த ரமளான் வரும்வரை விடுபட்ட நோன்பை நோற்காதிருந்தால் இரண்டு நோன்புகளையும் அவர் நோற்பார் அவர் உணவளிக்கத் தேவையில்லை!"என்று இப்ராஹீம்(ரஹ்) கூறினார்.

**"**நோன்பைவிட்டவர் (அதற்குப் பரிகாரமாக) ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும்!"என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் என்றும் அபூ ஹுரைரா(ரலி) கூறினார் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

விடுபட்ட நோன்புகளை வேறு நாள்களில் நோற்க வேண்டும் என்றே அல்லாஹ் கூறினான் உணவளிக்குமாறு கூறவில்லை.

ஹதீஸ் 1950. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

எனக்கு ரமளானில் சில நோன்புகள் விடுபட்டு விடும். அதை ஷஅபான் மாதத்தில் தவிர என்னால் நிறைவேற்ற முடியாது.

நபி(ஸல்) அவர்களுக்கு ஆயிஷா(ரலி) பணிவிடை செய்ததே இதன் காரணம் என்று யஹ்யா கூறுகிறார்.

## மாதவிடாய் ஏற்பட்டவள் தொழுகையையும் நோன்பையும் விட வேண்டும்.

ஏராளமான நபிவழிகளும் சரியான முடிவுகளும் மனித யூகங்களுக்க மாற்றமாகவே அமைந்துள்ளன. முஸ்லிம்கள் நபிவழியைப் பின்பற்றுவதைத் தவிர வேறு வழியில்லை. மாதவிடாய் ஏற்பட்டவள் நோன்பைக் களாச் செய்ய வேண்டும் தொழுகையைக் களாச் செய்ய வேண்டியதில்லை என்பதும் அவற்றுள் ஒன்றாகும் என்று அபூ ஸினாத் கூறுகிறார்.

ஹதீஸ் 1951. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

**"**ஒரு பெண்ணுக்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுவதில்லை நோன்பு நோற்பதில்லை அல்லவா? அதுதான் மார்க்கத்தில் அவளுக்குள்ள குறைபாடாகும். **"**

இதை அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## களாவான நோன்புள்ள நிலையில் ஒருவர் இறந்துவிட்டால்...?

களாவான நோன்பை நிறைவேற்றாமல் இறந்தவருக்காக முப்பது நபர்கள் தலா ஒரு நோன்பு நோற்றால் (அவர் சார்பாக) அது நிறைவேறி விடும் என்று ஹஸன் கூறுகிறார்.

ஹதீஸ் 1952. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

**"**களாவான நோன்புள்ள நிலையில் ஒருவர் இறந்துவிட்டால் அவர் சார்பாக அவரின் பொறுப்பாளர் நோன்பு நோற்பார். **"**

என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1953. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'நபி அவர்களே! என் தாயாருக்கு ஒரு மாத நோன்பு கடமையாகியிருந்த நிலையில் மரணித்துவிட்டார். அவர் சார்பாக அதை நான் நிறைவேற்றலாமா?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,'ஆம்! அல்லாஹ்வின் கடன் நிறைவேற்றப்படுவதற்கு அதிகத் தகுதி படைத்தது" என்றார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பில், ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'என் சகோதரி மரணித்துவிட்டார்...' என்று கூறினார்கள் என இந்த ஹதீஸ் துவங்குகிறது.

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிக்கும் இன்னொரு அறிவிப்பில் ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'என் தாய் இறந்துவிட்டார்...' என்று கூறினார்கள் என இந்த ஹதீஸ் துவங்குகிறது.

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பில்,'நேர்ச்சை நோன்பு என் தாயாருக்குக் கடமையாக இருந்த நிலையில் என் தாய் இறந்துவிட்டார்...' என்று ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள் என இந்த ஹதீஸ் துவங்குகிறது.

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிக்கும் இன்னொரு அறிவிப்பில்,'என் தாய் மீது பதினைந்து நோன்புகள் கடமையாக இருந்த நிலையில் இறந்துவிட்டார்' என்று ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள் என இந்த ஹதீஸ் துவங்குகிறது.

## நோன்பாளி எப்போது நோன்பை நிறைவு செய்வார்?

சூரியனின் வட்டம் மறைந்த உடன் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) நோன்பை நிறைவு செய்தார்கள்.

ஹதீஸ் 1954. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"சூரியன் மறைந்து, இந்த(ம்ழக்கு) திசையிலிருந்து இரவு முன்னோக்கி வந்து, அந்த (மேற்கு) திசையிலிருந்து பகல் பின்னோக்கி(ப்போ)னால் நோன்பாளி நோன்பை நிறைவு செய்யவேண்டும்!"

ஹதீஸ் 1955. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்திலிருந்தோம். அப்போது அவர்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். சூரியன் மறைந்ததும் கூட்டத்தில் ஒருவரிடம்,'இன்னாரே! எழுந்து நமக்காக மாவு கரைப்பீராக!"என்றார்கள். அதற்கவர்'நபி அவர்களே! மாலை நேரம் (முழுமையாக) முடிவடையட்டுமே!"என்றார். நபி(ஸல்) அவர்கள்,'இறங்கி, நமக்காக மாவு கரைப்பீராக! எனறார்கள். அதற்கவர்'நபி அவர்களே! மாலை நேரம் (முழுமையாக) முடிவடையட்டும்!"என்றார். நபி(ஸல்) அவர்கள்.'இறங்கி, நமக்காக மாவு கரைப்பீராக!"என்றார்கள். அதற்கவர்,'நபி அவர்களே! மாலை நேரம் (முழுமையாக) முடிவடையட்டுமே!"என்றார். மீண்டும் நபி(ஸல்) அவர்கள்,'இறங்கி, நமக்காக மாவு கரைப்பீராக!"என்று கூறினார்கள். அதற்கவர்'பகல் (வெளிச்சம்) இன்னும் (எஞ்சி) இடருக்கிறதே?' என்று கேட்டதற்கும் நபி(ஸல்) அவர்கள்'இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக!"என்று கூறினார்கள். உடனே அவர் இறங்கி, அவர்களுக்காக மாவு கரைத்தார். அதை நபி(ஸல்) அவர்கள் அருந்திவிட்டு,'இரவு இங்கிருந்து (ம்ழக்கிலிருந்து) முன்னோக்கி வந்துவிட்டால் நோன்பாளி நோன்பை நிறைவு செய்ய வேண்டும்!"என்றார்கள்.

## ஒருவர் தம்மால் இயன்ற தண்ணீர மற்றும் அது போன்றவற்றால் நோன்பை நிறைவு செய்தல்.

ஹதீஸ் 1956. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் பயணம் செய்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். சூரியன் மறைந்ததும் ஒருவரிடம்.'இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக!"என்றார்கள். அதற்கவர், 'நபி அவர்களே! மாலைநேரம் (முழுமையாக) முடிவடையட்டுமே!"என்றார். நபி(ஸல்) அவர்கள், 'இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக!"என்றார்கள். அதற்கவர், 'பகல் (வெளிச்சம்) இன்னும் எஞ்சியிருக்கிறதே!"என்றார். நபி(ஸல்) அவர்கள், 'இறங்கி நமக்காக மாவு கரைப்பீராக!"என்றார்கள். அவர் இறங்கி மாவு கரைத்தார். பின்னர், 'நீங்கள் இங்கிருந்து (ம்ழக்கிலிருந்து) இரவு முன்னோக்கி வருவதைக் கண்டால் நோன்பாளி நோன்பை நிறைவு செய்ய வேண்டும்!"என்று தம் விரலால் கிழக்கே சுட்டிக் காட்டிக் கூறினார்கள்.

## விரைவாக நோன்பை நிறைவு செய்தல்.

ஹதீஸ் 1957. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள

"நோன்பை நிறைவு செய்வதை விரைவுபடுத்தும்வரை மக்கள் நன்மையில் ஈடுபட்டவர்களாயிருப்பார்கள்!"

இதை ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1958. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தேன். அவர்கள் நோன்பு நோற்றார்கள். மாலை (முடியத் தொடங்கும்) நேரம் வந்ததும் ஒரு மனிதரிடம், 'இறங்கி எனக்காக மாவு கரைப்பீராக!"என்று கூறினார்கள். அதற்கவர், 'மாலை நேரம் (முழுமையாக) முடிவடையும் வரை காத்திருக்கலாமே!"என்றார். நபி(ஸல்) அவர்கள், 'இறங்கி எனக்காக மாவு கரைப்பீராக! இரவு இங்கிருந்து முன்னோக்கி வருவதைக் கண்டால், நோன்பாளி நோன்பை நிறைவு செய்யவேண்டும்!"என்றார்கள்.

## நோன்பை நிறைவு செய்த பின் சூரியன் உதித்தால்...?

ஹதீஸ் 1959. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் மேகம் சூழ்ந்த ஒரு நாளில் நாங்கள் நோன்பை நிறைவு செய்த பின்னர் சூரியன் தென்பட்டது.

"அவர்கள் களா செய்யுமாறு கட்டளையிடப்பட்டார்களா?' என்று ஹிஷாம்(ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்'களா செய்வது அவசியமில்லாமல் போகுமாகு?' என்று கேட்டார். ('களா செய்வது அவசியமாகும்!' என்பது இதன் பொருள்.)

"அவர்கள் களா செய்தார்களா? இல்லையா என்பது எனக்குத் தெரியாது!"என்று ஹிஷாம்(ரஹ்) கூறினார்கள் என மஃமர் கூறுகிறார்.

## சிறுவர்கள் நோன்பு நோற்றல்.

ரமளானில் போதையுடன் இருந்த ஒருவரிடம், 'உனக்குக் கேடு உண்டாகட்டும்! நம்முடைய சிறுவர்களெல்லாம் நோன்பு நோற்றிருக்கிறார்களே!"என்று உமர்(ரலி) கூறிவிட்டு அவரை அடித்தார்கள்.

ஹதீஸ் 1960. ருபைய்யிவு பின்த் முஅவ்வித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஆஸூரா தினத்தில் காலையில் அன்ஸாரிகளின் கிராமங்களுக்க ஆளனுப்பி,'யார் நோன்பு நோற்காதவராகக் காலைப் பொழுதை அடைந்துவிட்டாரோ அவர் இன்றைய தினத்தின் எஞ்சிய நேரத்தை (நோன்பாக) நிறைவு செய்யட்டும்! யார் நோன்பாளியாகக் காலைப் பொழுதை அடைந்தாரோ அவர் நோன்பைத் தொடரட்டும்!"என்று அறிவிக்கச் செய்தார்கள். நாங்கள் அதன் பின்னர் அந்நாளில் நோன்பு நோற்கலானோம் எங்கள் சிறுவர்களையும் நோன்பு நோற்க வைப்போம். கம்பளியாலான விளையாட்டுப் பொருட்களை அவர்களுக்காக நாங்கள் செய்வோம் அவர்கள் (பசியால்) உணவு கேட்டும் அழும்போது நோன்பு முடியும் நேரம் வரும் வரை (அவர்கள் பசியை மறந்திருப்பதற்காக) அவர்களிடம் அந்த விளையாட்டுப் பொருட்களைக் கொடுப்போம்.

## தொடர் நோன்பு நோற்பதும். நோன்பை இரவு வரை முழுமைப்படுத்துங்கள்!என்று அல்லாஹ் கூறுவதால் இரவில் நோன்பு கிடையாது என்னும் கூற்றும்.

நபி(ஸல்) அவர்கள் (தாம் தொடர் நோன்பு நோற்றாலும்) மக்களின் மீது இரக்கம் கொண்டும் (அவர்களின் உடல் வலிமை அழிந்து விடாமல்) அவர்களைக் காப்பதற்காகவும் அதைத் தடுத்திருக்கிறார்கள்.

(கடமையாக்கப்படாததைத் தம் மீது கடமைபோலாக்கிக் கொண்டு) வணக்க வழிபாடுகளில் மிதமிஞ்சி மூழ்குவது வெறுக்கப்படுகிறது.

ஹதீஸ் 1961. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நீங்கள் தொடர் நோன்பு நோற்காதீர்கள்!"என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது,'நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று நபித்தோழர்கள் கேட்டனர். அதற்கு நபி(ஸல்), அவர்கள்'நான் (எல்லா விஷயங்களிலும்) உங்களைப் போன்றவன் அல்லன் நிச்சயமாக நான் உண்ணவும் பருகவும் வழங்கப்படுகிறேன்'' என்றோ'உண்ணவும் பருகவும் வழங்கப்பட்டு இரவுப் பொழுதைக் கழிக்கிறேன்'' என்றோ கூறினார்கள்.

ஹதீஸ் 1962. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொடர் நோன்பைத் தடுத்தார்கள். நபித்தோழர்கள்,'நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நான் உங்களைப் போன்றவன் அல்லன் நிச்சயமாக நான் உண்ணவும் பருகவும் வழங்கப்படுகிறேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 1963. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் தொடர் நோன்பு நோற்காதீர்கள் உங்களில் யாரேனும் தொடர் நோன்பு நோற்க நாடினால் தொடர் நோன்பு நோற்க நாடினால் ஸஹ்ர் வரை அவ்வாறு செய்யட்டும்'' என்று கூறினார்கள். நபித்தோழர்கள்,'நபி அவர்களே! நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே!' என்று கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நான் உங்களைப் போன்றவன் அல்லன் எனக்கு (ஆன்மீக ரீதியாக) உணவளிக்கவும் பருகத்தரவும் ஒருவன் இருக்கிறான். இந்நிலையில் நான் இரவுப் பொழுதைக் கழிக்கிறேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 1964. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மக்களின் மீது இரக்கப்பட்டுத் தொடர் நோன்பைத் தடுத்தார்கள். நபித்தோழர்கள், 'நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நான் உங்களைப் போன்றவன் அல்லன். என் இறைவன் எனக்கு உண்ணவும் பருகவும் வழங்குகிறான்'' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் மக்களின் மீது இரக்கப்பட்டு என்ற வாசகம் இடம் பெறவில்லை.

## அதிகமாகத் தொடர் நோன்பிருப்பதற்குக் கண்டனம்.

நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு (தொடர் நோன்பு வைப்பதைக்) கண்டித்திருப்பதாக அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1965. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தொடர் நோன்பைத் தடுத்தார்கள். 'நபி அவர்களே! நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று முஸ்லிம்களில் ஒருவர் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், 'உங்களில் என்னைப் போன்றவர் யார் இருக்கிறார்? என் இறைவன் எனக்கு உண்ணவும் பருகவும் தரும் நிலையில் நான் இரவைக் கழிக்கிறேன்?' என்றார்கள். தொடர் நோன்பிலிருந்து மக்கள் விலம்க் கொள்ள மறுத்தபோது ஒருந்ாள் அவர்களைத் தொடர் நோன்பு நோற்கச் செய்தார்கள். பிறகு (அடுத்த மாதத்தின்) பிறையை மக்கள் கண்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'இம்மாதம் இன்னும் தாமதமாக முடிந்திருந்தால் (தொடர் நோன்பை) இன்னும் உங்களுக்கு நான் அதிகப்படுத்தியிருப்பேன்'' என்று மக்கள் தொடர் நோன்பிலிருந்து விலம்க் கொள்ள மறுத்ததைக் கண்டிப்பதைப் போல் கூறினார்கள்.

ஹதீஸ் 1966. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"தொடர் நோன்பு வைப்பது குறித்து உங்களை எச்சரிக்கிறேன்'' என்று நபி(ஸல்) அவர்கள் இரண்டு முறை கூறினார்கள். 'நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், 'என் இறைவன் எனக்கு உண்ணருவும் பருகவும் தரக்கூடிய நிலையில் நான் இரவைக் கழிக்கிறேன் எனவே நீங்கள் அமல்களில் உங்கள் சக்திக்கு உட்பட்டுச் சிரமம் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று விடையளித்தார்கள்.

## ஸஹ்ர் வரை தொடர் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1967. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நீங்கள் தொடர் நோன்பு நோற்காதீர்கள். அப்படி உங்களில் யாரேனும் தொடர் நோன்பு நோற்பதாக இருந்தால் ஸஹ்ர் வரை நோற்கட்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நபித்தோழர்கள் 'நபி அவர்களே! நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே!?' என்று கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நான் உங்களைப் போன்றவன் அல்லன் எனக்க உணவளிப்பவனும் புகட்டுபவனும் உள்ள நிலையில் நான் இரவைக் கழிக்கிறேன்'' என்றனர்.

## உபரியான நோன்பை விடுமாறு ஒருவர் மற்றவரை வற்புறுத்துதல். இவ்வாறுவிட்டவர் அதைக் களாச் செய்ய வேண்டியதில்லை.

ஹதீஸ் 1968. அபூ ஜுஹைஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஸல்மான்(ரலி), அபூ தர்தா(ரலி) இருவரையும் சகோதரர்களாக ஆக்கினார்கள். ஸல்மான் அபூ தர்தாவைச் சந்திக்கச் சென்றபோது (அபூ தர்தாவின் மனைவி)

உம்மு தர்தாவை அழுக்கடைந்த ஆடை அணிந்திருக்கக் கண்டார். 'உமக்கு என்ன நேர்ந்தது?' என்று அவரிடம் ஸல்மான் கேட்டதற்கு உம்மு தர்தா (ரலி), 'உம் சகோதரர் அபூ தர்தாவுக்கு இவ்வுலகில் எந்தத் தேவையுமில்லை" என்று விடையளித்தார். (சற்று நேரத்தில்) அபூ தர்தா வந்து ஸல்மானுக்காக உணவு தயாரித்தார். ஸல்மான் அபூ தர்தாவிடம், 'உண்பீராக!' என்று கூறினார். அதற்கு அபூ தர்தா, 'நான் நோன்பு வைத்திருக்கிறேன்' என்றார். ஸல்மான், 'நீர் உண்ணாமல் உண்ணமாட்டேன். என்று கூறியதும்அபூ தர்தாவும் உண்டார். இரவானதும் அபூ தர்தா (ரலி) நின்று வணங்கத் தாயரானார். அப்போது ஸல்மான் (ரலி), 'உறங்குவீராக' என்று கூறியதும் உறங்கினார். பின்னர் நின்று வணங்கத் தயாரானார். மீண்டும் ஸல்மான், 'உறங்குவீராக' என்றார். இரவின் கடைசி நேரம் வந்ததும் ஸல்மான் (ரலி), 'இப்போது எழுவீராக!' என்று கூறினார். இருவரும் தொழுதனர். பிறகு அபூ தர்தாவிடம் ஸல்மான் (ரலி), 'நிச்சயமாக உம் இறைவனுக்கு நீர் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன் உமக்கு நீர் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன் உம் குடும்பத்தினருக்கு நீர் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன் அவரவருக்குரிய கடமைகளை நிறைவேற்றுவீராக" என்று கூறினார்கள். பறிகு அபூ தர்தா (ரலி), நபி (ஸல) அவர்களிடம் வந்து இந்த விஷயத்தைத் கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'ஸல்மான் உண்மையையே கூறினார்!"என்றார்கள்.

## ஷஅபான் மாதத்தில் நோன்பு நோற்பது.

ஹதீஸ் 1969. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"(இனி) நோன்பை விடவே மாட்டார்கள்' என்று நாங்கள் கூறுமளவுக்கு நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்பார்கள்:'(இனி) நோன்பு நோற்கவே மாட்டார்கள்' என்று நாங்கள் கூறுமளவுக்கு நோன்பைவிட்டுவிடுவார்கள்! ரமளானைத் தவிர வேறெந்த மாதத்திலும் முழு மாதமும் நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றதை நான் பார்த்ததில்லை ஷஅபான் மாதத்தில் தவிர (வேறெந்த மாதத்திலும்) அதிகமாக அவர்கள் நோன்பு நோற்றதை நான் பார்த்ததில்லை!"

ஹதீஸ் 1970. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஷஅபான் மாதத்தை வட அதிகமாக வேறெந்த மாதத்திலும் நோன்பு நோற்றதில்லை. ஷஅபானில் (சில ஆண்டுகளில்) முழு மாதமும் நோன்பு நோற்பார்கள். 'உங்களால் இயன்ற அளவுக்கு நீங்கள் அமல்கள் (வணக்கங்களைச்) செய்யுங்கள்! நீங்கள் சலிப்படையாதவரை அல்லாஹ் சலிப்படைய மாட்டான்!"என்றும் கூறுவார்கள். குறைவாக இருந்தாலும் தொடர்ந்து தொழும் தொழுகையை அவர்கள் தொழுதால் அதைத் தொடர்ந்து தொழுவார்கள்.

## நபி (ஸல்) அவர்கள் நோன்பு நோற்றதும் நோன்பைவிட்டதும்.

ஹதீஸ் 1971. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ரமளானைத் தவிர வேறு எந்த மாதமும் முழுமையாக நோன்பு நோற்க மாட்டார்கள். (ரமளான் அல்லாத மாதங்களில்)'அல்லாஹ்வின் மேல் ஆணையாக! இனிமேல் நோன்பை விட மாட்டார்கள்!"என்று மக்கள் கூறுமளவுக்கு நோன்பு நோற்பார்கள். 'அல்லாஹ்வின் மேல் ஆணையாக! இனிமேல் நோன்பு நோற்க மாட்டார்கள்!' என்று மக்கள் கூறுமளவுக்கு நோன்பைவிட்டு விடுவார்கள்.

ஹதீஸ் 1972. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் இந்த மாதம் நோன்பு நோற்க மாட்டாக்ள்" என்று நாங்கள் கருதுமளவுக்குச் சில மாதங்களில் அவர்கள் நோன்பைவிட்டுவிடுவார்கள்'இந்தமாதம் நோன்பை அவர்கள் விடமாட்டார்கள்" என்று நாங்கள் கருதுமளவுக்கு அவர்கள் (சில மாதங்களில்) நோன்பு நோற்பார்கள்! அவர்களை இரவில் தொழும் நிலையில் நீ காணவிரும்பினால் அவ்வாறே அவர்களைக் காண்பாய் அவர்களை (இரவில் தூங்கும் நிலையில் நீ காணவிரும்பினால் அவ்வாறே அவர்களைக் காண்பாய்"!

ஹதீஸ் 1973. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்களை ஒரு மாதத்தில் நோன்பாளியாக நான் பார்க்க விரும்பினால் அவ்வாறே அவர்களை நான் பார்ப்பேன். அவர்கள் நோன்பை வட்ட நிலையில் பார்க்க விருமபனில் அவ்வாறே நான் அவர்களைப் பார்ப்பேன் இரவில் தொழுக கூடியவர்களாக அவர்களைப் பார்க்க விரும்பினால் அவ்வாறே நான்அவர்களைப் பார்ப்பேன் அவர்களைத் தூங்குபவர்களாகப் பார்க்க விரும்பினால் அவ்வாறே நான் அவர்களைப் பார்ப்பேன்! நபி(ஸல்) அவர்களின் கையை விட மிருதுவான எந்தப் பட்டையும் நான் தீண்டியதில்லை நபி(ஸல்) அவர்களின் நறுமணத்தை விட நல்ல நறுமணத்தை நான் முகர்ந்ததுமில்லை!"

## நோன்பு நோற்றிருக்கும்போது விருந்தினருக்குச் செய்ய வேண்டிய கடமை.

ஹதீஸ் 1974. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்து,'உம்முடைய விருந்தினருக்குச் செய்ய வேண்டிய கடமைகள் உமக்கு இருக்கின்றன் உம் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகள் உமக்கு இருக்கின்றன!"என்றார்கள்.'தாவூத் நபி(ஸல்) அவர்களின் நோன்பு எவ்வாறு இருந்தது?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'வருடத்தில் பாதி நாள்கள்!"என்றார்கள்.

## நோன்பு நோற்றிருக்கும்போது உடலுக்குச் செய்ய வேண்டிய கடமை:

ஹதீஸ் 1975. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,'அப்துல்லாஹ்வே! நீர் பகலெல்லாம் நோன்பு நோற்று, இரவெல்லாம் நின்று வணங்குவதாக எனக்குக் கூறப்படுகிறதே!"என்று கேட்டார்கள். நான்'ஆம்! நபி அவர்களே!"என்றேன். நபி(ஸல்) அவர்கள்'இனி அவ்வாறு செய்யாதீர்! (சில நாள்கள்) நோன்பு வையும் (சில நாள்கள்)விட்டுவிடும்! (சிறிது நேரம்) தொழும் (சிறிது நேரம்) உறங்கும்! ஏனெனில், உம் உடலுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் உமக்கிருக்கின்றன் உம் கண்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உமக்கிருக்கின்றன் உம் மனைவிக்குச் செய் வேண்டிய கடமைகளும் உமக்கிருக்கின்றன் உம் விருந்தினருக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உமக்கு இருக்கின்றன! ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நீர் நோன்பு நோற்பது உமக்குப் போதுமானதாகும்! ஏனெனில், (நீர் செய்யும்) ஒவ்வொரு நற்செயலுக்கும் பகரமாக உமக்கு அது போன்ற பத்து மடங்கு (நன்மை)கள் உண்டு! (இந்தக் கணக்குப்படி) இது காலமெல்லாம் நோன்பு நோற்றதாக அமையும்!"என்று கூறினார்கள். நான் சிரமத்தை வலிந்து ஏற்றுக் கொண்டேன் அதனால், என்மீது சிரமம் சுமத்தப்பட்டுவிட்டது!'நபி அவர்களே! நான் வலுவுள்ளவனாக இருக்கிறேன்!"என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'தாவூத் நபி(அலை) அவர்கள் நோன்பு நோற்றவாறு நீர் நோன்பு நோற்பீராக! அதை விட அதிகமாக்க வேண்டாம்!"என்றார்கள். தாவூத் நபி(அலை)யின் நோன்பு எது? என்று கேட்டேன்.'வருடத்தில் பாதி நாள்கள்!"என்றார்கள்.

**“அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) வயோதிகம் அடைந்த பின்'நபி(ஸல்) அவர்களின் சலுகைகை நான் ஏற்காமல் போய் விட்டேனே' என்று (வருத்தத்துடன்) கூறுவார்!”என அபூ ஸலமா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.**

## ஆண்டு முழுவதும் நோன்பு நோற்பது.

**ஹதீஸ் 1976 அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.**

**‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் உயிருடனிருக்கும் வரை பகலெல்லாம் நோன்பு நோற்று இரவெல்லாம் நின்று வணங்குவேன்' என்று நான் கூறிய செய்தி நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிந்தது. (இது பற்றி) அவர்கள் என்னிடம் கேட்டபோது)'என் தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்!”நான் அவ்வாறு கூறியது உண்மையே!”என்றேன். நபி(ஸல்) அவர்கள்,‘இது உம்மால் முடியாது! (சில நாள்கள்) நோன்பைவிட்டுவிடும்! (சிறிது நேரம்) தொழும் (சிறிது நேரம்) தொழும் (சிறிது நேரம்) உறங்கும்! ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நோன்பு வையும்! ஏனெனில், ஒரு நற்செயலுக்கு அது போன்று பத்து மடங்கு நற்கூலி கொடுக்கப்படும்! எனவே, இது காலமெல்லாம் நோன்பு நோற்றதற்குச் சமமாகும்!”என்றார்கள். நான்'என்னால் இதைவிட சிறப்பானதைச் செய்யமுடியும்!”என்று கூறினேன்.'அப்படியானால் ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள்விட்டுவீடுவீராக! இதுதான் தாவூத் நபியின் நோன்பாகும்! நோன்புகளில் இதுவே சிறந்ததாகும்!”என்றார்கள். நான்'என்னால் இதைவிட சிறப்பாகச் செய்ய முடியும்?' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்'இதைவிடச் சிறந்தது எதுவும் இல்லை!”என்றார்கள்.**

## நோன்பு வைத்திருக்கும்போது குடும்பத்தினருக்குச் செய்ய வேண்டிய கடமை.

**இது பற்றிய நபிவழியை அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்திருக்கிறார்கள்.**

**ஹதீஸ் 1977. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.**

நான் தொடர்ந்து நோன்பு வைப்பதாகவும் இரவெல்லாம் தொழுவதாகவும் நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிய வந்தது அவர்கள் என்னை அழைத்து வரச் சொல்லியிருக்க வேண்டும் அல்லது நானாக அவர்களைச் சந்தித்திருக்க வேண்டும்! (அவர்கள் என்னை அழைத்து வரச் சொன்னார்களா? நானாகச் சென்று அவர்களைச் சந்தித்தேனா என்பது எனக்கு நினைவில்லை!) நபி(ஸல்) அவர்கள்'நீர் விடாமல் நோன்பு நோற்பதாகவும் தூங்காமல் தொழுவதாகவும் என்னிடம் கூறப்படுகிறதே! எனவே, நோன்பு வைப்பீராக! அதைவிட்டுவிடவும் செய்வீராக! (இரவில் எழுந்து நின்று வணங்குவீராக! தூங்கவும் செய்வீராக! ஏனெனில், உம்முடைய கண்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் உமக்கிருக்கின்றன் உமக்கும் உம்முடைய குடும்பத்தினருக்கும் நீர் செய்ய வேண்டிய கடமைகள் உமக்கிருக்கின்றன!”என்று கூறினார்கள். நான்,‘இதற்கு எனக்கு சக்தி உள்ளது!”என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்'நீர் தாவூத் நபியின் நோன்பை நோற்பீராக!”என்றார்கள்.'அது எவ்வாறு?' என்று கேட்டேன்.'தாவூத் நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்பார் ஒரு நாள்விட்டுவிடுவார்! மேலும், (போர்க்களத்தில் எதிரிகளைச்) சந்திக்கும்போது பின்வாங்க மாட்டார்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். நான்,‘நபி அவர்களே! இந்த (வீரம் நிறைந்த) பண்புக்கு எனக்கு யார் பொறுப்பேற்றுக் கொள்வார்கள்!”என்றேன்.

“காலமெல்லாம் நோன்பு நோற்பது பற்றி நபி(ஸல்) அவர்கள் (இந்த சம்பவத்துக்கிடையே) எப்படிக் கூறினார்கள் என்பதை நான் அறியமாட்டேன். என்றாலும்'காலமெல்லாம் நோன்பு

நோற்றவர் நோன்பு நோற்றவரல்லர்!"என்று நபி(ஸல்) அவர்கள் இருமுறை கூறினார்கள் (என்பது மட்டும் எனக்கு நினைவிருக்கிறது!)" என்று அதா(ரஹ்) கூறினார்.

## ஒரு நாள்விட்டு ஒரு நாள் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1978. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நோன்பு நோற்பீராக!"என்று என்னிடம் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.'இதை வட அதிகமாக எனக்குச் சக்தி உள்ளது!"என்று கூறினேன். முடிவில், ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள்விட்டு விடுவீராக!"என்று கூறினார்கள். மேலும்'ஒவ்வொரு மாதமும் (ஒரு முறை) குர்ஆனை (முழுமையாக) ஓதும்!"என்று கூறினார்கள்.

## தாவூத் நபியின் நோன்பு

ஹதீஸ் 1979. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல் ஆஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நீர் காலமெல்லாம் நோன்பு நோற்று. இரவெல்லாம் வணங்குகிறீரோ?' என்று நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கேட்டார்கள். நான்'ஆம்!"என்றேன். நபி(ஸல்) அவர்கள்,'அவ்வாறு நீர் செய்தால், அதன் காரணமாக கண்கள் உள்ளே போய்விடும். (மேலும்) அதனால் உள்ளம் களைந்து (பலவீனமடைந்து) விடும்! காலமெல்லாம் நோன்பு நோற்பவர் நோன்பு நோற்றவராக மாட்டார்! (மாதந்தோறும்) மூன்று நாள்கள் நோன்பு நோற்பது காமெல்லாம் நோன்பு நோற்பதாகும்!"என்றார்கள். அதற்கு'நான் இதைவிட அதிகமாக (நோற்பதற்கு) சக்தி உள்ளவன்" என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'அப்படியானால் தாவூத் நபியின் நோன்பை நோற்பீராக! அவர்கள் ஒரு நாள்விட்டு ஒருநாள் நோன்பு நோற்பார்கள். (எதிரிகளைச்) சந்திக்கும்போது பின்வாங்கவும் மாட்டார்கள்!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1980. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் என்னுடைய நோன்பு பற்றிக் கூறப்பட்டது. உடனே அவர்கள் என்னிடம் வந்தார்கள். அவர்களுக்காக ஈச்ச நார் அடைக்கப்பட்ட தோல்தலையணையை எடுத்துப் போட்டேன். அவர்கள் தரையில் அமர்ந்தார்கள். எனக்கும் அவர்களுக்கும் இடையே அந்தத் தலையணை கிடந்தது.'ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் (நோன்பு நோற்பது) உமக்குப் போதாதா?' என்று கேட்டார்கள். அதற்கு நான்,'நபி அவர்களே! (இதை விட அதிகமாக நோற்க அனுமதியுங்கள்!)" என்றேன். அவர்கள்'ஐந்து நாள்கள்!"என்றார்கள்.'நபி அவர்களே!"என்றேன்.'ஒன்பது நாள்கள்!"என்றேன். ஒன்பது நாள்கள்!"என்றார்கள். பிறகு,'தாவூத் நபி(அலை) அவர்களின் நோன்பும் இல்லை அது ஆண்டின் பாதி நாள்களாகும்! எனவே, ஒரு நாள்விட்டு ஒரு நாள் நோன்பு நோற்பீராக!"என்றார்கள்.

## மாதந்தோறும் பதின் மூன்று பதினான்கு, பதினைந்து ஆகிய நிலவு பிரகாசிக்கும் நாள்களில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1981. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஒவ்வொரு மாதமும் மூன்று நாள்கள் நோன்பு நோற்குமாறும்.'ளுஹா' நேரத்தில் இரண்டு ரக்அத்கள் தொழுமாறும். உறங்குவதற்கு முன் வித்ருத் தொழுகையை தொழுது விடுமாறும் இந்த மூன்று விஷயங்களை என் தோழர்(ஸல்) அவர்கள் எனக்கு அறிவுறுத்தினார்கள்!"

## ஒரு கூட்டத்தினரிடம் சென்று, அங்கு நோன்பை முறிக்காமல் இருத்தல்.

ஹதீஸ் 1982. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (என் தாயார்) உம்மு ஸுலைம் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அவர்கள் பேரீச்சம் பழங்களையும் நெய்யையும் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள்'உங்கள் நெய்யை அதற்குரிய (தோல்) பாத்திரத்திலேயே ஊற்றுங்கள் உங்கள் பேரீச்சம் பழங்களை அதற்குரிய பையில் போடுங்கள் ஏனெனில், நான் நோன்பு நோற்றிருக்கிறேன்!"என்றார்கள். பிறகு வீட்டின் ஒரு மூலையில் நின்று கடமையல்லாத தொழுகையைத் தொழுதார்கள். உம்மு ஸுலைம் (ரலி) அவர்களுக்காகவும் அவர்களின் குடும்பத்தினருக்காகவும் பிரார்த்தித்தார்கள். அப்போது உம்மு ஸுலைம் (ரலி)'நபி அவர்களே! எனக்கு விருப்பமான ஒன்று உள்ளது“! என்றார். நபி (ஸல்) அவர்கள், 'அது என்ன?' என்று கேட்டார்கள்'உங்கள் ஊழியர் அனஸ்தான்!"என்று உம்மு ஸுலைம் (ரலி) கூறினார். இம்மை மறுமையின் எந்த நன்மையையும்விட்டு விடாமல் (எல்லா நன்மைகளையும்) கேட்டு. எனக்காக நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். 'இறைவா! இவருக்குப் பொருட் செல்வத்தையும் குழந்தைச் செல்வத்தையும் வழங்கு! இவருக்கு பரக்கத் செய்!"என்று பிரார்த்தித்தார்கள். இன்று நான் அன்ஸார்களிலேயே அதிகச் செல்வந்தனாக இருக்கிறேன்! எனக்குப் பிறந்த நூற்றியிருபதுக்கும் அதிகமான பிள்ளைகள் இறந்து, ஹஜ்ஜாஜ் இப்னு ?ஸுஃப) பஸராவுக்கு வந்த காலத்தில் அடக்கம் செய்யப்பட்டுவிட்டனர் என்று என் மகள் உமைனா எனக்குக் கூறினார்.

## மாதத்தின் கடைசியில் நோன்பு நோற்றல்

ஹதீஸ் 1983. முதர்ரிஃப் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) அவர்களிடமோ, அவர்கள் செவிமடுத்துக் கொண்டிருக்க வேறொருவரிடமோ நபி (ஸல்) அவர்கள்'இம்மாதத்தின் இறுதியில் நீர் நோன்பு நோற்கவில்லையா?' என்று கேட்டார்கள். அம்மனிதர்'இல்லை! நபி அவர்களே!"என்றார். நபி (ஸல்) அவர்கள்'நீர் நோன்பைவிட்டுவிட்டால் இரண்டு நாள்கள் நோன்பு நோற்பீராக!"என்று கூறினார்கள்.

“நபி (ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தைக் கருத்தில் கொண்டே. 'இம்மாதம்' என்று சொன்னதாக எனக்கு இதை அறிவித்தவர் (மஹ்தீ இப்னு மைமூன்) கூறினார்கள் என நான் நினைக்கிறேன்!"என்று அபுந் நுஃமான் கூறுகிறார்.

'நபியவர்கள் ரமளானையே கருத்தில் கொண்டு'இம்மாதம்' என்று சொன்னதாக நான் நினைக்கிறேன்!"என்று அறிவிப்பாளர்களில் ஒருவரான'ஸல்த்' என்பவர் கூறவில்லை.

'ஷஅபானின் கடைசி' என்று மற்றோர் அறிவிப்பில் இடம் பெற்றுள்ளது.

## வெள்ளிக்கிழமை நோன்பு நோற்றல்.

வெள்ளிக்கிழமை (மட்டும்) நோன்பு நோற்றால் அதை முறிப்பது அவசியமாகும்.

ஹதீஸ் 1984. முஹம்மத் இப்னு அப்பாத் அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக் கிழமை நோன்பு வைப்பதைத் தடை செய்தார்களா என்று ஜாபிர் (ரலி) அவர்களிடம் கேட்டேன். 'ஆம்' என்றார்.

மற்றோர் அறிவிப்பில் வெள்ளிக் கிழமை மட்டும் தனித்து நோன்பு வைக்க நபி(ஸல்) அவர்கள் தடை செய்ததாகக் கூறப்படுகிறது.

ஹதீஸ் 1985. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"உங்களில் எவரும் வெள்ளிக்கிழமைக்கு முன் ஒரு நாளைச் சேர்க்காமல் அல்லது அதற்குப் பின் ஒரு நாளைச் சேர்க்காமல் நோன்பு நோற்கவேண்டாம்!"

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 1986. ஜுவைரிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், நான் வெள்ளிக்கிழமை நோன்பு வைத்திருந்தபோது என்னிடம் வந்தார்கள். 'நேற்று நோன்பு வைத்தாயா?' என்று கேட்டார்கள். நான் 'இல்லை!"என்றேன். 'நாளை நோன்பு நோற்க விரும்புகிறாயா?' என்று கேட்டார்கள். அதற்கும் 'இல்லை!"என்றேன். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் 'அப்படியானால் நோன்பை முறித்து விடு!"என்றார்கள்.

"நபி(ஸல்) அவர்களின் கட்டளைப்படி நான் நோன்பை முறித்து விட்டேன்'' என்று ஜுவைரிய்யா(ரலி) கூறினார் என அபூ அய்யூப்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

## சில நாள்களை மட்டும் குறிப்பாக தேர்ந்தெடுத்து, அவற்றில் நோன்பு நோற்கலாமா?

ஹதீஸ் 1987. அல்கமா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்ட சில நாள்களை வணக்கத்திற்காகத் தேர்ந்தெடுத்துக் கொள்வார்களா?' என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள் 'இல்லை! அவர்களின் அமல் (வணக்கம்) நிரந்தரமானதாக இருக்கும்! நபி(ஸல்) அவர்களால் செய்ய முடிந்த (வணக்கத்)தை உங்களில் யார்தான் செய்ய முடியும்?' என்று கூறினார்கள்.

## அர∴பா நாளில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1988. உம்முல் ∴பழ்லு பின்த் ஹாரிஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

'நபி(ஸல்) அவர்கள் அர∴பா தினத்தில் நோன்பு வைத்திருக்கிறார்களா?' என்று என்னிடம் சிலர் சர்ச்சை செய்தனர். சிலர் 'அவர்கள் நோன்பு வைத்திருக்கிறார்கள்''அவர்கள் நோன்பு வைத்திருக்கிறார்கள்' என்று கூறினார்கள். மற்றும் சிலர் 'நோன்பு வைத்திருக்கவில்லை' என்றார்கள். அப்போது ஒட்டகத்தில் அமர்ந்திருந்த நபி(ஸல்) அவர்களிடம் பால் பாத்திரத்தைக் கொடுத்து அனுப்பினேன் அதை அவர்கள் குடித்தார்கள்.

ஹதீஸ் 1989. மைமூனா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அர∴பா நாளில் நபி(ஸல்) அவர்கள் நோன்பு வைத்திருக்கிறார்களா என்பதில் மக்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. நான் அர∴பாவில் தங்கியிருந்த நபி(ஸல்) அவர்களிடம் பால் பாத்திரத்தைக் கொடுத்தனுப்பினேன். மக்களெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க அதை நபி(ஸல்) அவர்கள் குடித்தார்கள்.

## நோன்புப் பெருநாள் தினத்தில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1990. உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

இவ்விரு நாள்களிலும் நோன்பு நோற்க நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தனர். அவை நோன்பை முடித்துப் பெருநாள் கொண்டாடும் தினமும் குர்பானி இறைச்சியை நீங்கள் சாப்பிடும் நாளுமாகும்.

ஹதீஸ் 1991 ~ ஹதீஸ் 1992. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நோன்புப் பெருநாள் ஹஜ்ஜுப் பெருநாள் ஆகிய இரண்டு நாள்களில் நோன்பு நோற்பதையும், இரண்டு புஜங்களில் ஒன்றை மட்டும் மறைத்து, மற்றொன்று வெளியே தெரியும் வண்ணம் ஒரு துணியைப் போர்த்திக் கொள்வதையும், ஓர் ஆடையை சுற்றிக் கொண்டு முழங்கால்களைக் கட்டி அமர்வதையும், ஸுப்ஹுக்குப் பிறகும், அஸர் தொழுகைக்குப் பிறகும் தொழுவதையும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள்!“

## ‘ஈதுல் அள்ஹா தினத்தில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1993. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“ஈதுல் ஃபித்ரிலும் (நோன்புப் பெருநாளிலும்) ஈதுல் அள்ஹாவிலும் (ஹஜ்ஜுப் பெருநாளிலும்) நோன்பு நோற்பதும் முலாமஸா, முனாபதா என்ற இரண்டு வியாபார முறைகளும் தடை செய்யப்பட்டுள்ளன!“

ஹதீஸ் 1994. ஸியாத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் வந்து,‘ஒருவர் ஒரு நாள் நோன்பு நோற்க நேர்ச்சை செய்திருக்கிறார்!”என்று கூறினார்கள். அந்த மனிதர்’(அவர்) திங்கட்கிழமையன்று... (நோன்பு நோற்க நேர்ச்சை செய்திருக்கிறார்!)‘‘ என்று கூறினார்கள் என நான் நினைக்கிறேன். அவர் குறிப்பிட்ட அந்த நாள் பெருநாளாக அமைந்துவிட்டது! எனவே, இப்னு உமர்(ரலி)’நேர்ச்சையை நிறைவேற்றுமாறு அல்லாஹ் கட்டளையிடுகிறான் நபி(ஸல்) அவர்கள் இந்த தினத்தில் நோன்பு நோற்பதைத் தடை செய்திருக்கிறார்கள்!”என்று கூறினார்கள்.

ஹதீஸ் 1995. நபி(ஸல்) அவர்களுடன் பன்னிரண்டு யுத்தங்களில் பங்கெடுத்த அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடமிருந்து நான்கு செய்திகளைச் செவியுற்றேன். அவை என்னைக் கவர்ந்தன. அவை:’ஒரு பெண் தன்னுடைய கணவன் அல்லது மணமுடிக்கத் தகாத உறவினர் ஒருவர் தம்முடன் இருக்கும் நிலையில் தவிர, (மற்ற நிலைகளில்) இரண்டு நாள்கள் தொலைவுள்ள பயணத்தை மேற்கொள்ளக் கூடாது! ஈதுல் ஃபித்ர், ஈதுல் அள்ஹா (நோன்புப் பெருநாள் ஹஜ்ஜுப் பெருநாள்) ஆகிய இரண்டு நாள்களில் நோன்பு நோற்கக் கூடாது! ஸுப்ஹுக்குப் பிறகு சூரியன் உதிக்கும் வரையும் அஸருக்குப் பிறகு சூரியன் மறையும் வரையும் தொழக் கூடாது! (அதிக நன்மையைப் பெற நாடி) மஸ்ஜிதுல் ஹராம், பைத்துல் முகத்தஸ், என்னுடைய இந்தப் பள்ளி வாசல் (மஸ்ஜிதுந் நபவீ) ஆகிய மூன்று பள்ளி வாசல்களைத் தவிர வேறெதை நோக்கியும் பயணத் மேற்கொள்ளக் கூடாது!“

## (துல்ஹஜ் மாதம் 11, 12, 13 ஆகிய) தஷ்ரீக் நாள்களில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 1996. யஹ்யா இப்னு ஸயீத் அல் கத்தான்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

“ஆயிஷா(ரலி) மினாவில் தங்கக் கூடிய (தஷ்ரீக் உடைய) நாள்களில் நோன்பு நோற்பார்கள்‘‘ என்று தம் தந்தை உர்வா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்‘‘ என ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹிஷாமின் தந்தை உர்வா (ரஹ்) அவர்களும் அந்த நாள்களில் நோன்பு நோற்பார்கள்.

ஹதீஸ் 1997 ் ஹதீஸ் 1998 ஆயிஷா (ரலி) இப்னு உமர் (ரலி) ஆகியோர் கூறினார்கள்:

“பலியிடும் பிராணி கிடைக்காதவர் தவிர மற்றவர்கள் தஷ்ரீக்குடைய நாள்களில் நோன்பு நோற்க அனுமதிக்கப்படவில்லை!“

ஹதீஸ் 1999. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“தமத்துஉ’ எனும் முறையில் இஹ்ராம் அணிந்தவரே அர∴பா நாள் வரை நோன்பு நோற்கலாம்! பலியிடும் பிராணியும் கிடைக்கவில்லை. நோன்பும் நோற்கவில்லையென்றால் மினாவில் தங்கும் நாள்களில் நோன்பு நோற்கலாம்!“

ஆயிஷா (ரலி) அவர்களும் இவ்வாறு கூறினார்கள் என உர்வா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

## ஆஷூரா நாளில் நோன்பு நோற்றல்.

ஹதீஸ் 2000. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஆஷூரா நாளில் விரும்பினால் நோன்பு நோற்கலாம்!“

இதை இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2001. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி (ஸல்) அவர்கள் ஆஷூரா நாளில் நோன்பு நோற்குமாறு கட்டளையிட்டார்கள். ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டதும் விரும்பியவர் நோன்பு நோற்றனர். விரும்பாதவர்விட்டுவிட்டனர்!“

ஹதீஸ் 2002. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அறியாமைக் காலக் குறைஷியர் ஆஷூரா நாளில் நோன்பு நோற்றனர் நபி (ஸல்) அவர்களும் நோற்றனர். நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது, தாமும் அந்நாளில் நோன்பு நோற்று மக்களையும் நோன்பு நோற்குமாறு ஏவினார்கள். ரமலான் நோன்பு கடமையாக்கப்பட்டதும் ஆஷூரா நோன்பைவிட்டுவிட்டனர். விரும்பியவர் நோன்பு நோற்றனர். விரும்பாதவர்விட்டுவிட்டனர்.

ஹதீஸ் 2003. ஹுமைத் இப்னு அப்திர் ரஹ்மான் அவர்கள் கூறினார்கள்.

முஆவியா (ரலி) ஹஜ்ஜுக்குச் சென்ற ஆண்டு ஆஷூரா நாளில் மிம்பரில் நின்றுகொண்டு, ‘மதீனா வாசிகளே! உங்கள் அறிஞர்கள் எங்கே? நபி (ஸல்) அவர்கள், இது ஆஷூரா நாளாகும். இதில் நோன்பு நோற்பதை அல்லாஹ் உங்களுக்குக் கடமையாக்கவில்லை என்று கூறியதை நான் செவியுற்றிருக்கிறேன். நோன்பு நோற்றிருக்கிறேன். விரும்பியவர் நோன்பு நோற்கட்டும் விரும்பாதவர்விட்டு விடட்டும்’ என்று கூறினார்.

ஹதீஸ் 2004. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மதீனா வந்தபோது யூதர்கள் ஆஷூரா நாளில் நோன்பு நோற்றதைக் கண்டார்கள். ’இது என்ன நாள்?’ என்று கேட்டார்கள். யூதர்கள்’இது நல்ல நாள், இஸ்ரவேலர்களை அவர்களின் எதிரிகளிடமிருந்து அல்லாஹ் காப்பாற்றிய நாள் இதற்காக மூஸா (அலை) அவர்கள் நோன்பு நோற்றார்கள்’ என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், ‘உங்களைவிட மூஸாவுக்கு அதிக உரிமை படைத்தவன் நான்‘‘ என்று கூறிவிட்டுத் தாமும் நோன்பு நோற்று, நோன்பு நோற்குமாறு (மக்களுக்குக்) கட்டளையும் இட்டார்கள்.

ஹதீஸ் 2005. அபூ மூஸா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஆஸூரா நாளை யூதர்கள் பெருநாளாகக் கொண்டாடி வந்தனர். நபி(ஸல்) அவர்கள், 'அந்நாளில் நீங்களும் நோன்பு வையுங்கள்!"என்றார்கள்.

ஹதீஸ் 2006. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"ஆஸூரா எனும் இந்த நாளையும் (ரமளான் எனும்) இந்த மாதத்தையும் தவிர, வேறெதையும் ஏனையவற்றைவிடச் சிறப்பித்துத் தேர்ந்தெடுத்து நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்பதை நான் பார்த்ததில்லை!"

ஹதீஸ் 2007. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அஸ்லம் கிளையைச் சேர்ந்த ஒரு மனிதரை அனுப்பி, 'இன்று ஆஸூரா நாளாகும் எனவே, இந்நாளில் யாரேனும் சாப்பிட்டிருந்தால் அவர் இந்நாளின் எஞ்சிய பகுதியில் நோன்பாக இருக்கட்டும்! யாரேனும் சாப்பிடாமல் இருந்தால் அவர் நோன்பாக இருக்கட்டும்!"என்று அறிவிக்கச் செய்தார்கள்!

# அத்தியாயம் 31 தராவீஹ் தொழுகை

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

ரமளானில் (தொழுது) வணங்குவதின் சிறப்பு.

ஹதீஸ் 2008 ~ ஹதீஸ் 2009 நபி(ஸல்) அவர்கள் ரமளான் (மாதத்தின் சிறப்பு) பற்றி கூறினார்கள்.

“ரமளானில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் (தொழுது) வணங்குகிறவரின், முன்னர் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும்!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“(ரமளானின் இரவுத் தொழுகையை அவரவர் தனியாகத் தொழுது கொள்ளும்) இந்நிலையில் மக்கள் இருக்கும்பொழுது நபி(ஸல்) அவர்கள் மரணித்தார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் உமர்(ரலி) அவர்களின் ஆட்சியின் ஆரம்பக் காலத்திலும் நிலைமை இவ்வாறே இருந்தது!”என்று இமாம் இப்னு ஷிஹாப் ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2010. அப்துர்ரஹ்மான் இப்னு அப்தில் காரீ(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

நான் உமர்(ரலி) அவர்களுடன் ரமளான் மாதத்தின் ஓர் இரவில் பள்ளிவாசலுக்குச் சென்றேன். அங்கே மக்கள் பிரிந்து, பல குழுக்களாக இருந்தனர். சிலர் தனித்துத் தொழுது கொண்டிருந்தனர். அப்போது உமர்(ரலி)’இவர்கள் அனைவரையும் ஓர் இமாமின் கீழ் திரட்டினால் அது சிறப்பாக அமையுமே!”என்று கூறிவிட்டு, அந்த முடிவுக்கு உறுதியாக வந்து, மக்களை உபை இப்னு கஅபு(ரலி) அவர்களுக்குப் பின்னால் திரட்டினார்கள். பின்னர், மற்றொரு இரவில் அவர்களுடன் நான் சென்றேன். மக்களெல்லாம் தங்கள் இமாமைப் பின்பற்றித் தொழுது கொண்டிருந்தார்கள். அப்போது உமர்(ரலி)’இந்தப் புதிய ஏற்பாடு நன்றாக இருக்கிறது் இப்போது (இரவின் முற்பகுதியில்) நின்று வணங்குவதை விட உறங்கிவிட்டுப் பின்னர் (இரவின் பிற்பகுதியில்) வணங்குவது சிறந்ததாகும்!”என்று கூறினார்கள். மக்கள் இரவின் முற்பகுதியில் தொழுது வந்தனர்.

இரவின் கடைசி நேரத்தில் தொழுவதைக் குறித்தே இவ்வாறு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2011. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் ரமளானில் (இரவுத்) தொழுகை தொழுதார்கள்!“

ஹதீஸ் 2012. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் நள்ளிரவில் பள்ளிக்குச் சென்று தொழுதார்கள். அவர்களைப் பின்பற்றி மக்களும் தொழுதார்கள். விடிந்ததும் மக்கள் இதுபற்றிப் பேசிக் கொண்டார்கள். (மறுநாள்) முதல்நாளை விட அதிகமான மக்கள் திரண்டு நபி(ஸல்) அவர்கள் பின்னால் நின்று தொழுதார்கள். விடிந்ததும் மக்கள் இது பற்றிப் பேசிக் கொண்டார்கள். இந்த மூன்றாம் இரவில் பள்ளிவாசலுக்கு நிறையப் பேர் வந்தனர். நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலுக்கு வந்து தொழுதார்கள் அவர்களைப் பின்பற்றி மக்களும் தொழுதனர். நான்காம் இரவில், பள்ளிவாசல் கொள்ளாத அளவுக்கு மக்கள் திரண்டனர் ஆனால், நபி(ஸல்) அவர்கள் ஸுப்ஹுத் தொழுகைக்குத்தான் வந்தார்கள். ஸுப்ஹுத் தொழுகையை முடித்தும் மக்களை நோக்கி,

தஷஹ்ஹுத் மக்களை நோக்கி, தஷஹ்ஹுத் மொழிந்து,'நான் இறைவனைப் போற்றிப் புகழ்ந்து கூறுகிறேன் நீங்கள் வந்திருந்தது எனக்குத் தெரியாமலில்லை எனினும், இது உங்களின் மீது கடமையாக்கப்பட்டு, அதை உங்களால் நிறைவேற்ற இயலாமல் போய்விடும் என்று நான் அஞ்சினேன்!' எனக் கூறினார்கள்

"நிலைமை இப்படியே இருக்க, (ரமளானின் இரவுத் தொழுகையை மக்கள் தனித் தனியாகவே தொழுது கொண்டிருக்க) நபி(ஸல்) அவர்கள் மரணித்தார்கள்!"என்று அறிவிப்பாளர் இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2013. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) கூறினார்:

"நபி(ஸல்) அவர்களின் தொழுகை ரமளானில் எவ்வாறு இருந்தது?' என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்,'ரமளானிலும் ரமளான் அல்லாத மாதங்களிலும் பதினொரு ரக்அத்களை விட அதிகமாக நபி(ஸல்) அவர்கள் தொழமாட்டார்கள் நான்கு ரக்அத்கள் தொழுதார்கள் அதன் அழகையும் நீளத்தையும் பற்றிக் கேட்காதே! பின்னர் நான்கு ரக்அத்கள் தொழுவார்கள் அதன் அழகையும் நீளத்தையும் பற்றிக் கேட்காதே! பின்னர் மூன்று ரக்அத்கள் தொழுவார்கள்' என்று கூறினார்.

மேலும் ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி அவர்களே! வித்ருத் தொழுவதற்கு முன் நீங்கள் உறங்குகிறீர்களே? (உளூ நீங்கி விடுமே) என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'ஆயிஷாவே! என் கண்கள் தாம் உறங்குகின்றன் என் உள்ளம் உறங்குவதில்லை'' எனக் கூறினார்கள்.

# அத்தியாயம் 32 லைத்துல் கத்ரின் சிறப்பு

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன். _லைத்துல் கத்ரின் சிறப்பு

## லைலத்துல் கத்ரின் சிறப்பு.

அல்லாஹ் கூறினான்:

“நிச்சயமாக, நாம் அதை (குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல் கத்ர்) இரவில் இறக்கினோம். கண்ணியமிக்க இரவு எதுவென உமக்கு அறிவித்தது எது? மேலும் கண்ணியமிக்க (அந்த) இரவு ஆயிரம் மாதங்களை விட மிக மேலானதாகும். அதில் வானவர்களும் ரூஹும் (ஜிப்ரீலும்) தம் இறைவனின் அனுமதியுடன் (அவனுடைய) கட்டளை ஒவ்வொன்றையும் செயல்படுத்துவதற்காக இறங்குகின்றனர். (அந்த இரவு முழுக்க) சாந்தி (பொழிந்த வண்ணமிருக்கும்) அது விடியற்காலை உதயமாகும் வரை நீடிக்கும்!”(திருக்குர்ஆன் 97: 1-5)

“குர்ஆனில் ஒன்றைப் பற்றி'மா அத்ராக்க (உமக்கு எது அறிவித்தது?)' என்று கூறப்பட்டால் அதை அல்லாஹ் அறிவித்துக் கொடுத்துவிட்டான் என்று பொருள்'வமா யுத்ரீக்க (எது உமக்கு அறிவிக்கும்?)' என்று ஏற்பட்டால் அதை அல்லாஹ் அறிவித்துக் கொடுக்க வில்லை என்று பொருள்!”என இப்னு உயைனா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2014. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

“ரமளானில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்ததும் நோன்பு நோற்கிறவர் (அதற்கு) முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும்! லைலத்துல் கத்ரில் நம்பிக்கையுடனும் நன்மையை எதிர்பார்த்தும் நின்று வணங்குகிறவரின், முன்னர் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும்!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## லைலத்துல் கத்ர் இரவை (ரமளானின்) கடைசி ஏழு நாள்களில் தேடுதல்.

ஹதீஸ் 2015. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபித்தோழர்களில் சிலருக்கு, (ரமளானின்) கடைசி ஏழு நாள்களில் (வந்த) கனவில் லைலத்துல் கத்ர்(இரவு) காட்டப்பட்டது் அப்போது, நபி(ஸல்) அவர்கள்'உங்கள் கனவுகள் கடைசி ஏழு நாள்களில் (லைலத்துல் கத்ரைக் கண்ட விஷயத்தில்) ஒத்து அமைந்திருப்பதை காண்கிறேன்! எனவே, அதைத் தேடுபவர். (ரமளானின்) கடைசி ஏழு நாள்களில் அதைத் தேடட்டும்!”என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2016. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ரமளானின் நடுப்பக்கத்தில் இஃதிகாஃப் இருந்தோம். அவர்கள் இருபதாம் நாள் காலையில் வெளியே வந்து எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். (அவ்வுரையில்)'எனக்கு லைலத்துல் கத்ர் இரவு காண்பிக்கப்பட்டது் பின்னர், அது எனக்கு மறக்கடிக்கப்பட்டுவிட்டது. எனவே, நீங்கள் கடைசிப்பத்து நாள்களின் ஒற்றைப் படை இரவுகளில் அதைத் தேடுங்கள்! நான் (லைலத்துல் கத்ரில்) ஈரமான களி மண்ணில் ஸஜ்தா

செய்வது போல் (கனவு) கண்டேன்! எனவே, யார் என்னோடு இஃதிகாஃப் இருந்தாரோ அவர் திரும்பவும் வரட்டும்!"என்றார்கள். நாங்கள் திரும்பச் சென்றோம். வானத்தில் ஒரு மெல்லிய மேகப் பொதியைக் கூட அப்போது நாங்கள் காணவில்லை. திடீர் என ஒரு மேகம் தோன்றி மழை பொழிந்தது. அதனால், பள்ளிவாசலின் கூரையில் தண்ணீர் ஒழுகியது. அந்தக் கூரை பேரீச்சை மட்டையிலினால் அமைந்திருந்தது. தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டதும் நபி(ஸல்) அவர்களை ஈரமான களிமண்ணில் ஸஜ்தா செய்யும் நிலையில் கண்டேன். அவர்களின் நெற்றியில் களிமண்ணின் அடையாளத்தை பார்த்தேன்.

## கடைசிப் பத்து நாள்களின் ஒற்றைப்படை இரவுகளில் லைலத்துல் கத்ரை தேடுதல்.

இது பற்றிய ஹதீஸை உபாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2017. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ரமளானின் கடைசிப் பத்து நாள்களில் உள்ள ஒற்றைப்படை இரவுகளில் லைலத்துல் கத்ரைத் தேடுங்கள்!" ன ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2018. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், ரமளான் மாதத்தின் நடுப்பகுதியில் உள்ள பத்து நாள்களில் இஃதிகாஃப் இருப்பார்கள் இருபதாம் இரவு கழிந்து மாலையாகி, இருபத்தொன்றாம் இரவு துவங்கியதும் தம் இல்லம் திரும்புவார்கள் அவர்களுடன் இஃதிகாஃப இருந்தவர்களும் திரும்புவார்கள். இவ்வழக்கப்படி நபி(ஸல்) அவர்கள் இரண்டு மாதம், எந்த இரவில் இல்லம் திரும்புவார்களோ அந்த இரவில் தங்கி மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அல்லாஹ் நாடிய விஷயங்களை அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். பின்னர்,'நான் இந்தப் பத்து நாள்கள் இஃதிகாஃப் இருந்தேன் பிறகு கடைசிப் பத்து நாள்களில் இஃதிகாஃப் இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது் எனவே, என்னுடன் இஃதிகாஃப் இருந்த இடத்திலேயே தங்கியிருக்கட்டும்! இந்த (லைலத்துல் கத்ர்) இரவு எனக்குக் காட்டப்பட்டது் பின்னர் அது எனக்கு மறக்கடிக்கப்பட்டுவிட்டது் எனவே, கடைசிப்பத்து நாள்களில் அதைத் தேடுங்கள்! (அந்த நாள்களிலுள்ள) ஒவ்வொரு ஒற்றைப்படை இரவிலும் அதைத் தேடுங்கள்! நான் ஈரமான களிமண்ணில் (அந்த இரவில்) ஸஜ்தா செய்வதுபோல் (கனவு) கண்டேன்!' எனக் குறிப்பிட்டார்கள். அந்த இரவில் வானம் இரைச்சலுடன் மழை பொழிய, பள்ளிவாசல் (கூரையிலிருந்து) நபி(ஸல்) அவர்கள் தொழும் இடத்தில் (மழை நீர்) சொட்டியது. இருபத்தொன்றாம் இரவில் நடந்த இதை. நான் என் கண்களால் பார்த்தேன்! மேலும், நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தில் ஈரமான களிமண் நிறைந்திருக்க, ஸுப்ஹு தொழுதுவிட்டுத் திரும்புவதையும் கண்டேன்.

ஹதீஸ் 2019. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"(லைலத்துல் கத்ரை) தேடுங்கள்!"

என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2020. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ரமளானின் கடைசிப்பத்து நாள்களில் இஃதிகாஃப் இருப்பார்கள்'ரமளானின் கடைசிப் பத்து நாள்களில் லைலத்துல் கத்ரைத் தேடுங்கள்!"எனக் கூறுவார்கள்.

ஹதீஸ் 2021. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ரமளானின் கடைசிப் பத்து நாள்களில் லைலத்துல் கத்ரை தேடுங்கள்!’லைலத்துல் கத்ரை இருபத்தொன்றாவது இரவில், இருபத்து மூன்றாவது இரவில், இருபத்து ஐந்தாவது இரவில் தேடுங்கள்!‘

என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2022. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“லைலத்துல் கத்ர் இரவு கடைசிப் பத்து நாள்களில் உள்ளது் அது இருபத்தொன்பதாவது இரவிலோ இருபத்து மூன்றாவது இரவிலோ உள்ளது!“

என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“இருபத்து நான்காவது இரவில் அதைத் தேடுங்கள்!”என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## மக்கள் சச்சரவிட்டுக் கொண்டிருந்ததால் லைலத்துல் கத்ர் பற்றிய விளக்கம் நீக்கப்படுதல்.

ஹதீஸ் 2023. உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

லைலத்துல் கத்ர் பற்றி எங்களுக்கு அறிவிப்பதற்காக நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டார்கள். அப்போது இரண்டு முஸ்லிம்கள் சச்சரவு செய்து கொண்டிருந்தனர். நபி(ஸல்) அவர்கள்,‘லைலத்துல் கத்ரை உங்களுக்கு அறிவிப்பதற்காக நான் புறப்பட்டேன் அப்போது இன்னாரும் இன்னாரும் சச்சரவு செய்து கொண்டிருந்தனர். எனவே, அது (பற்றிய விளக்கம்) நீக்கப்பட்டுவிட்டது! அது உங்களுக்கு நன்மையாக இருக்கலாம்! எனவே, அதை இருபத்தொன்பதாம் இரவிலும், இருபத்தேழாம் இரவிலும், இருபத்தைந்தாம் இரவிலும் தேடுங்கள்!”எனக் கூறினார்கள்.

## ரமளானின் கடைசிப்பத்தில் புரிய வேண்டிய வணக்கம்.

ஹதீஸ் 2024. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ரமளானின் கடைசிப்) பத்து நாள்கள் வந்துவிட்டால் நபி(ஸல்) அவர்கள் இல்லறத் தொடர்பை நிறுத்திக் கொள்வார்கள் இரவை (அல்லாஹ்வைத் தொழுது) உயிர்ப்பிப்பார்கள் (இறைவனை வணங்குவதற்காகத்) தம் குடும்பத்தினரை எழுப்பிவிடுவார்கள்!“

# அத்தியாயம் 33 இ∴திகா∴ப்

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

## (ரமளானின்) கடைசிப் பத்து நாள்களில் இ∴திகா∴ப் இருப்பதும் எல்லாப் பள்ளிகளிலும் இ∴திகா∴ப் இருக்கலாம் என்பதும்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

“நீங்கள் பள்ளிவாசலில் (இ∴திகா∴ப்) இருக்கும்போது, உங்கள் மனைவியருடன் கூடாதீர்கள்! இவை அல்லாஹ் விதித்த வரம்புகளாகும் அந்த வரம்புகளை மீற முற்படாதீர்கள்! இவ்வாறே, மக்கள் (நேர்வழியையும் கீழ்ப்படியும் முறையையும் அறிந்து) விழிப்புடனிருப்பதற்காக, அல்லாஹ் தன்னுடைய சான்றுகளை அவர்களுக்குத் தெளிவாக்குகிறான்!”(திருக்குர்ஆன் 02:187)

ஹதீஸ் 2025. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் ரமளானின் கடைசிப் பத்து நாள்களில் இ∴திகா∴ப் இருப்பார்கள்!“

ஹதீஸ் 2026. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் மரணிக்கும் வரை ரமளானின் கடைசிப் பத்து நாள்களில் இ∴திகா∴ப் இருந்தார்கள் அவர்களுக்குப் பின், அவர்களின் மனைவியர் இ∴திகா∴ப் இருந்தனர்!“

ஹதீஸ் 2027. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ரமளானில் நடுப் பத்து நாள்களில் இ∴திகா∴ப் இருப்பார்கள். ஓர் ஆண்டு அவர்கள் இ∴திகா∴ப் இருந்து இருபத்தொன்றாவது இரவை அடைந்ததும். அந்த இரவின் காலையில்தான் இ∴திகாபிலிருந்து வெளியேறுவார்கள். 'யார் என்னுடன் இ∴திகா∴ப் இருந்தார்களோ அவர்கள் கடைசிப் பத்து நாள்களிலும் இ∴திகா∴ப் இருக்கட்டும்! இந்த (லைலத்துல் கத்ர்) இரவு எனக்கு (கனவில்) காட்டப்பட்டது் பின்னர் அது எனக்கு மறக்கடிக்கப்பட்டுவிட்டது! (அந்தக் கனவில்) காலை நேரத்தில் ஈரமான மண்ணில் நான் ஸஜ்தா செய்யக் கண்டேன். எனவே, அதைக் கடைசிப் பத்து நாள்களில் தேடுங்கள். (அந்த நாள்களின்) ஒவ்வொரு ஒற்றைப் படை இரவிலும் அதைத் தேடுங்கள்!' எனக் கூறினார்கள். அன்றிரவு மழை பொழிந்தது. அன்றைய பள்ளிவாயில் (ஈச்சை ஓலைக்) கூரை வேயப்பட்டதாக இருந்தது. எனவே, பள்ளிவாயில் ஒழுகியது. இருபத்தொன்றாம் நாள் ஸுப்ஹுத் தொழுகையில் நபி(ஸல்) அவர்களின் நெற்றியிலே ஈரமான களிமண் படிந்திருந்ததை என்னுடைய இரண்டு கண்களும் பார்த்தன.

## இ∴திகா∴ப் இருப்பரின் தலையை மாதவிடாயுள்ள பெண் வாரலாம்.

ஹதீஸ் 2028. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளியில் இ∴திகா∴ப் இருக்கும்போது தம் தலையை (வீட்டிலிருக்கும்) என் பக்கம் நீட்டுவார்கள் மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் நிலையில் அதை நான் வாருவேன்.

## இ∴திகா∴ப் இருப்பவர் தேவை இருந்தால் தவிர வீட்டிற்குச் செல்லக்கூடாது.

ஹதீஸ் 2029. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளியிலிருந்து தம் தலையை நீட்டுவார்கள் நான் அதை வாருவேன், இஃதிகாஃப் இருக்கும்போது தேவையிருந்தால் தவிர வீட்டிற்குள் வரமாட்டார்கள்.

## இஃதிகாஃப் இருப்பவர் (தலையைக்) கழுவுதல்.

ஹதீஸ் 2030 ˆ ஹதீஸ் 2031 ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் என்னை அணைப்பார்கள். அவர்கள் இஃதிகாஃப் இருக்கும்போது பள்ளியிலிருந்து தம் தலையை நீட்டுவார்கள் மாதவிடாய் ஏற்பட்டிருந்த நிலையில் அவர்களின் தலையைக் கழுவுவேன்.

## ஓர் இரவு மட்டும் இஃதிகாஃப் இருப்பது.

ஹதீஸ் 2032. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

'மஸ்ஜிதுல் ஹராமில் ஓர் இரவு இஃதிகாஃப் இருப்பதாக அறியாமைக் காலத்தில் நான் நேர்ச்சை செய்திருந்தேன்' என்று உமர்(ரலி) அவர்களிடம் கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'உம்முடைய நேர்ச்சையை நிறைவேற்றும்'' என்றார்கள்

## பெண்கள் இஃதிகாஃப் இருப்பது.

ஹதீஸ் 2033. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ரமலானின் கடைசிப் பத்து நாள்களில் இஃதிகாஃப் இருப்பார்கள். நான் அவர்களுக்காக (பள்ளியில்) ஒரு கூடாரத்தை அமைப்பேன். ஸுப்ஹுத் தொழுதுவிட்டு அதற்குள் நுழைந்து விடுவார்கள். ஹஃப்ஸா(ரலி) என்னிடம் தமக்கொரு கூடாரம் அமைக்க அனுமதி கேட்டார். அவருக்கு நான் அனுமதி கொடுத்தேன். அவர் ஒரு கூடாரத்தை அமைத்தார். இதை ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) பார்த்தபோது அவர் மற்றொரு கூடாரத்தை அமைத்தார். நபி(ஸல்) அவர்கள் காலையில் எழுந்தபோது பள்ளியினுள் பல கூடாரங்களைக் கண்டு,'இவை என்ன?' என்று கேட்டார்கள். அவர்களுக்கு விவரம் கூறப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,'இதன் மூலம் நீங்கள் நன்மையைத்தான் நாடுகிறீர்களா?' என்று கேட்டுவிட்டு, அந்த மாதம் இஃதிகாஃப் இருப்பதைவிட்டுவிட்டார்கள். பிறகு ஷவ்வால் மாதம் பத்து நாள்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.

## பள்ளியில் கூடாரங்கள்

ஹதீஸ் 2034. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஃதிகாஃப இருக்க நாடினார்கள். அவர்கள் இஃதிகாஃப் இருக்கும் நடத்திற்குச் சென்றபோது ஆயிஷா(ரலி)வின் கூடாரம், ஹஃப்ஸாவின் கூடாரம், னஸனபின் கூடாரம் எனப் பல கூடாரங்களைக் கண்டார்கள்.'இதன் மூலம் நீங்கள் நன்மையைத்தான் நாடுகிறீர்களா?' என்று கேட்டுவிட்டு இஃதிகாஃப் இருக்காமல் திரும்பிவிட்டாக்ள். ஷவ்வால் மாதம் பத்து நாள்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.

## இஃதிகாப் இருப்பவர் தம் தேவைக்களுக்காகப் பள்ளியின் வாசல் வரை செல்லலாமா?

ஹதீஸ் 2035. ஸஃபிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ரமலானில் கடைசிப் பத்து நாள்களில் இஃதிகாஃப் இருக்கும்போது அவர்களைச் சந்திக்க நான் செல்வேன். சற்று நேரம் அவர்களுடன் பேசிவிட்டு எழுவேன். அப்போது நபி(ஸல்) அவர்களும் என்னுடன் எழுந்து பள்ளியின் வாசல் வரை வருவார்கள்.

உம்மு ஸலமா(ரலி)வின் வாசலை அடைந்தபோது அன்ஸாரிகளைச் சார்ந்த இருவர் நடந்து சென்றனர். நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறினார். அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள்,'நில்லுங்கள் இவர் (என் மனைவி) ஸஃபிய்யா பின்த் ஹுயை ஆவார்'' எனக் கூறினார்கள். அவ்விருவரும் (ஆச்சரியத்துடன்)'ஸுப்ஹானல்லாஹ்' என்றனர். இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் கூறியது அவ்விருவருக்கும் உறுத்தியது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,'நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஊடுருவியிருக்கிறான் உங்கள் உள்ளங்களில் தவறான எண்ணத்தை அவன் போட்டு விடுவான் என நான் அஞ்சுகிறேன்'' எனக் கூறினார்கள்.

## இஃதிகாஃப் இருந்துவிட்டு இருபதாம் நாள் காலையில் நபி(ஸல்) அவர்கள் வெளியேறியது.

ஹதீஸ் 2036. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான் கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் லைலத்துல் கத்ர் இரவு பற்றி ஏதேனும் கூறியதை நீங்கள் கேட்டீர்களா? என்று அபூ ஸயீத்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்,'ஆம்' நாங்கள் ரமலானின் நடுப்பத்து நாள்களில் நபி(ஸல்) அவர்களுடன் இஃதிகாஃப இருந்தோம். இருபதாம் நாள் காலையில் வெளியேறினோம். இருபதாம் நாள் காலையில் நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அவ்வுரையில்,'எனக்கு லைலத்துல் கத்ர் காட்டப்பட்டது. அதை நான் மறந்து விட்டேன். எனவே, அதைக் கடைசிப் பத்து நாள்களின் ஒற்றை இரவுகளில் தேடுங்கள். அன்று ஈரமான களிமண்ணில் நான் ஸஜ்தாச் செய்வது போல் கனவு கண்டேன். யார் அல்லாஹ்வின் தூதருடன் இஃதிகாஃப் இருந்தாரோ அவர் பள்ளிக்குத் திரும்பட்டும்' எனக் கூறினார்கள். மக்கள் பள்ளிக்குத் திரும்பினார்கள். அப்போது வானத்தில் சிறு மேகத்தைக்கூட நாங்கள் காணவில்லை. திடீரென மேகம் வந்து மழை பொழிந்தது. தொழுகைக்க இகாமத் சொல்லப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் ஈரமான களிமண்ணில் ஸஜ்தாச் செய்தார்கள். அவர்களின் நெற்றியிலும் மூக்கிலும் களிமண்ணை கண்டேன்' என்று விடையளித்தார்.

## தொடர் உதிரப் போக்குடையவள் இஃதிகாஃப் இருப்பது.

ஹதீஸ் 2037. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களுடன் தொடர் உதிரப் போக்குடைய அவர்களின் மனைவியர்களில் ஒருவர் இஃதிகாஃப் இருந்தார். சிவப்பு நிறத்தையும் மஞ்சள் நிறத்தையும் அவர் காண்பார். சிலவேளை அவருக்கு அடியில் நாங்கள் ஒரு தட்டை வைப்போம். அவர் தொழுவார்.

## இஃதிகாஃப் இருக்கும் கணவரை மனைவி சந்தித்தல்.

ஹதீஸ் 2038. ஸஃபிய்யா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (இஃதிகாஃப்) இருந்தார்கள். அவர்களுடன் அவர்களின் மனைவியரும் இருந்துவிட்டுத் திரும்பினர். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,'அவசரப்படாதே!"நானும் உன்னோடு வருகிறேன்'' என்றார்கள். என் அறை உஸாமாவின் வீட்டிற்குள் இருந்தது. நபி(ஸல்) அவர்கள் என்னுடன் வெளியே வந்தார்கள். அப்போது, அன்ஸாரிகளைச் சேர்ந்த இருவர் நபி(ஸல) அவர்களைச் சந்தித்து, அவர்களைக் கூர்ந்து பார்த்துவிட்டுக் கடந்து சென்றனர். நபி(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் நோகம்,'இங்கே வாருங்கள், இவர் (என் மனைவி) ஸஃபிய்யாவே ஆவார்!' எனக் கூறினார்கள். அவ்விருவரும்'ஸுப்ஹானல்லாஹ் - நபி அவர்களே!"என்று (வியப்புடன்) கூறினார்கள். அப்போது

நபி(ஸல்) அவர்கள்,'நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஓடுகிறான் உங்கள் உள்ளங்களில் அவன் தவறான எண்ணங்களைப் போட்டு விடுவான் என நான் அஞ்சினேன்" என்று தெளிவுபடுத்தினார்கள்.

## இஃதிகாஃப் இருப்பவர் தமக்கு ஏற்படும் தீங்குகளைத் தடுக்கலாமா?

ஹதீஸ் 2039. அலீ இப்னு ஹுஸைன் அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஃதிகாஃப் இருக்கும்போது ஸஃபிய்யா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். அவர் திரும்பிச் செல்லும்போது அவருடன் நபி(ஸல்) அவர்களும் நடந்தனர். அப்போது அன்ஸாரிகளைச் சேர்ந்த ஒருவர் அவர்களைக் கூர்ந்து பார்த்தார். அவர் கூர்ந்து பார்த்ததும் அவரை நபி(ஸல்) அவர்கள் அழைத்து,'இங்கே வா! இவர் ஸஃபிய்யா! நிச்சயமாக ஷைத்தான் ஆதமுடைய மக்களின் ரத்த நாளங்களில் ஓடுகிறான்' எனக் கூறினார்கள்.

ஸஃபிய்யா(ரலி) இரவு நேரத்திலோ நபி(ஸல்) அவர்களைச் சந்திக்கச் சென்றார்கள்? என்று நான் சுஃப்யானிடம் கேட்டேன். அதற்கவர்'இரவெல்லாம் வேறென்ன?' என்று விடையளித்தார் என்று அலீ இப்னுஅப்தில்லாஹ் கூறுகிறார்.

## இஃதிகாஃபிலிருந்து ஸுப்ஹு நேரத்தில் வெளியேறுதல்.

ஹதீஸ் 2040. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் நடுப்பத்தில் இஃதிகாஃப் இருந்தோம். இருபதாம் நாள் காலையில் எங்கள் பொருட்களைச் சேகரித்துக் கொண்டோம். அப்போது எங்களுடன் வந்த நபி(ஸல்) அவர்கள்,'யார் இஃதிகாஃப் இருந்தாரோ அவர் தாம் இஃதிகாஃப் இருந்த இடத்திற்குச் செல்லட்டும். நிச்சயமாக நான் இந்த (லைலத்துல் கத்ர்) இரவைக் கனவில் கண்டேன். ஈரமான களிமண்ணில் ஸஜ்தாச் செய்வதாகக் கண்டேன்' எனக் கூறினார்கள். அவர்கள், தாம் இஃதிகாஃப் இருக்கும் இடத்திற்குச் சென்றதும் வானத்தில் மேகம் தோன்றி மழை பொழிந்தது. நபி(ஸல்) அவர்களைச் சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மேல் ஆணையாக! அன்றைய தினம் கடைசி நேரத்தில் வானத்தில் மேகம் திரண்டது. (அன்றைய பள்ளிவாயில் பேரீச்சை ஓலையால்) கூரை வேயப்பட்டதாக இருந்தது. நபி(ஸல்) அவர்களின் மூக்கிலும் மூக்கின் ஓரங்களிலும் ஈரமான களிமண்ணின் அடையாளத்தை கண்டேன்.

## ஷவ்வாலில் இஃதிகாஃப் இருப்பது.

ஹதீஸ் 2041. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒவ்வொரு ரமலானிலும் இஃதிகாஃப் இருப்பார்கள். ஸுப்ஹுத் தொழுததும் இஃதிகாஃப் இருக்கும் இடத்திற்குச் செல்வார்கள். அவர்களிடம் இஃதிகாஃப் இருப்பதற்கு நான் அனுமதி கேட்டேன். எனக்கு அவர்கள் அனுமதி தந்தார்கள். அங்கே நான் ஒரு கூடாரத்தை அமைத்துக் கொண்டேன். இதைக் கேள்விப்பட்ட ஹஃப்ஸா(ரலி) ஒரு கூடாரத்தை அமைத்தார். இதனைக் கேள்விப்பட்ட ஸைனப்(ரலி) மற்றொரு கூடாரத்தை அமைத்தார். நபி(ஸல்) அவர்கள் காலைத் தொழுகையை முடித்துவிட்டுத் திரும்பியபொழுது நான்கு கூடாரங்களைக் கண்டு,'இவை என்ன?' என்று கேட்டார்கள். அவர்களுக்கு விவரம் கூறப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இவ்வாறு செய்வதற்கு நற்செயல்புரியும் எண்ணம்தான் இவர்களைத் தூண்டியதா? இவர்கள் நன்மையைத்தான் நாடுகிறார்களா? இவற்றை நான் காண முடியாதவாறு அகற்றுங்கள்!"என்று சொன்னவுடன் அவை அகற்றப்பட்டன. நபி(ஸல்) அவர்கள் (அந்த வருடம்)

ரமளானில் இஃதிகாஃப் இருக்காமல் ஷவ்வால் மாதத்தின் கடைசிப் பத்து நாள்களில் இஃதிகாப் இருந்தார்கள்.

## இஃதிகாஃப் இருப்பவர் நோன்பு நோற்றிருக்க வேண்டும் என்பது அவசியம் இல்லை.

ஹதீஸ் 2042. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி அவர்களே! மஸ்ஜிதுல் ஹராமில் ஓர் இரவு இஃதிகாப் இருப்பதாக அறியாமைக் காலத்தில் நான் நேர்ச்சை செய்திருந்தேன்!”என்று உமர்(ரலி) கூறினார். அவரிடம் நபி(ஸல்) அவர்கள்’உம் நேர்ச்சையை நிறைவேற்றும்‘‘ என்றார்கள். உமர்(ரலி) ஓர் இரவு இஃதிகாஃப் இருந்தார்.

## அறியாமைக் காலத்தில் இஃதிகாஃப் இருப்பதாக நேர்ச்சை செய்துவிட்டுப் பிறகு இஸ்லாத்தை ஏற்றால்...

ஹதீஸ் 2043. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மஸ்ஜிதுல் ஹராமில் ஓர் இரவு இஃதிகாஃப் இருப்பதாக அறியாமைக் காலத்தில் உமர்(ரலி) நேர்ச்சை செய்திருந்தார். அவரிடம் நபி(ஸல்) அவர்கள்’உம்முடைய நேர்ச்சையை நிறைவேற்றும்‘‘ என்றார்கள்.

## ரமலானின் நடுப்பத்தில் இஃதிகாஃப் இருப்பது.

ஹதீஸ் 2044. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒவ்வொரு ரமலானிலும் பத்து நாட்களே இஃதிகாஃப் இருப்பார்கள். அவர்கள் மரணித்த ஆண்டில் இருபது நாள்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.

## இஃதிகாஃப் இருப்பதாக முடிவு செய்துவிட்டுப் பின்னர் அம்முடிவை மாற்றிக் கொள்ளுதல்.

ஹதீஸ் 2045. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ரமலானின் கடைசிப்பத்து நாள்களில் இஃதிகாஃப் இருப்பது பற்றி நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவர்களிடம் நான் அனுமதி கேட்டேன். எனக்கு அனுமதி கேட்குமாறு கேட்டார். அவ்வாறு செய்தேன். இதைக்கண்ட ஸைனப்(ரலி) ஒரு கூடாரம் கட்ட உத்தரவிட்டார். அவ்வாறு கட்டப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் தம் கூடாரத்திற்குச் சென்றார்கள். அப்போது பல கூடாரங்களைக் கண்டு’இவை என்ன?’ என்று கேட்டார்கள். அதற்கு நபித்தோழர்கள்,‘ஆயிஷா(ரலி), ஹப்ஸா(ரலி), ஸைனப்(ரலி) ஆகியோரின் கூடாரங்கள்’ என்றனர். நபி(ஸல்) அவர்கள்,‘இதன் மூலம் நன்மையைத்தான் இவர்கள் நாடுகிறார்களா? நான் இஃதிகாஃப் இருக்கப் போவதில்லை‘‘ என்று கூறிவிட்டுத் திரும்பிவிட்டார்கள். நோன்பு முடிந்ததும் ஷவ்வால் மாதத்தில் பத்து நாள்கள் இஃதிகாஃப் இருந்தார்கள்.

## இஃதிகாப் இருப்பவர் தம் தலையைக் கழுவுவதற்கு வீட்டிற்குள் தலையை நீட்டலாமா?

ஹதீஸ் 2046. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் இஃதிகாஃப் இருக்கும்போது தம் தலையை அறையிலிருக்கும் என்னிடம் நீட்டுவார்கள். மாதவிடாய் ஏற்பட்டிருந்த நிலையில் அதை வாருவேன்.

# அத்தியாயம் 34 வியாபாரம்

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

அல்லாஹ் கூறினான்:

“அல்லாஹ் வியாபாரத்தை ஹலாலாக்கியிருக்கிறான். வட்டியை ஹராமாக்கி இருக்கிறான்‘ (திருக்குர்ஆன் 02:275)

மேலும் அல்லாஹ் கூறினான்:

உங்களிடையே சுற்றிவரும் ரொக்க வியாபாரத்தைத் தவிர (மற்றவற்றை எழுதிக் கொள்ளுங்கள்) (திருக்குர்ஆன் 02:282)

அல்லாஹ் கூறினான்:

(ஜும்ஆ) தொழுகை நிறைவேற்றப்பட்டுவிட்டதும் (பள்ளியிலிருந்து வெளிப்பட்டு) பூமியில் பரவிச் சென்று அல்லாஹ்வின் அருளைத் தேடிக் கொள்ளுங்கள் அன்றியும், நீங்கள் வெற்றியடையும் பொருட்டு, அல்லாஹ்வை அதிகமதிகம் தியானம் செய்யுங்கள்.

இன்னும், (நபியே!) அவர்களில் (சிலர்) ஒரு வியாபாரத்தையோ அல்லது ஒரு வேடிக்கையோ கண்டால், அதன்பால் அவர்கள் சென்று விடுகின்றனர். மேலும், நின்றவண்ணமே உம்மைவிட்டு விடுகின்றனர். ’அல்லாஹ்விடம் இருப்பது, வேடிக்கையை விடவும் வியாபாரத்தை விடவும் மிகவும் மேலானதாகும் மேலும் அல்லாஹ் உணவளிப்பவர்களில் மிகவும் மேலானவன்!”என்று (நபியே) நீர் கூறும்! (அல்குர்ஆன 62:10, 11)

மேலும் அல்லாஹ் கூறினான்:

“உங்களில் ஒருவருக்கொருவர் இசைந்து ஏற்படுத்திக்கொள்கிற வர்த்தகம் அல்லாமல், ஒருவர் மற்றவரின் பொருட்களை தவறான முறையில் உண்ணாதீர்கள்!”(திருக்குர்ஆன் 4:29)

ஹதீஸ் 2047. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“அபூ ஹுரைராவின் ஹதீஸ் அளவிற்கு முஜாஹிர்களும் அன்ஸாரிகளும் ஏன் அறிவிப்பதில்லை? அபூ ஹுரைரா மட்டும் அதிகமாக நபி(ஸல்) அவர்களின் ஹதீஸ்களை அறிவிக்கிறாரே!”என்று நீங்கள் கூறுகிறீர்கள். முஹாஜிர்களைச் சேர்ந்த என்னுடைய சகோதரர்கள் கடைவீதிகளில் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தனர். நான்’என் வயிறு நிரம்பினால் போதும்’ என்று நபி(ஸல்) அவர்களுடனேயே இருந்து வந்தேன். அவர்கள் (நபி(ஸல்) அவர்களிடம்) செல்லாதபோதும் நான் செல்வேன். (நபிமொழிகளை) அவர்கள் மறந்து விடும்போது நான் மனனம் செய்து கொள்வேன்! என்னுடைய அன்ஸாரிச் சகோதரர்கள் தங்கள் செல்வங்களின் (பராமரிப்புப்) பணியில் ஈடுபட்டிருந்தனர் நான் பள்ளிவாசலின் திண்ணையில் இருந்த ஏழைகளில் ஓர் ஏழையாக இருந்தேன். அவர்கள் மறந்துவிடும் வேளையில் நபி(ஸல்) அவர்களின் போதனைகளை) நான் மனனம் செய்து கொள்வேன்! மேலும், நபி(ஸல்) அவர்கள், ‘நான், என்னுடைய இந்த வாக்கைச் சொல்லி முடிக்கும்வரை தன்னுடைய ஆடையை விரித்து வைத்திருந்து. பிறகு அதைத்

தன்பக்கம் (நெஞ்சோடு) சேர்த்து (அணைத்து)க் கொள்கிறவர் நான் சொல்பவற்றை மனனம் செய்யாதிருக்கமாட்டார்!' எனக் கூறினார்கள். நான் என் மீது கிடந்த ஒரு போர்வையை விரித்து, நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாக்கை முடித்ததும் அதை என் நெஞ்சோடு சேர்த்து (அணைத்துக்) கொண்டேன் (அதன்பின்னர் நபி(ஸல்) அவர்களின் அந்த வாக்கில் எதனையும் நான் மறக்கவில்லை!"

ஹதீஸ் 2048. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

முஹாஜிர்களான நாங்கள் மதீனாவுக்கு வந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னையும் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி) அவர்களையும் சகோதரர்களாக ஆக்கினார்கள். ஸஅத்(ரலி)'நான் அன்ஸாரிகளில் அதிகச் செல்வமுடையவன் எனவே, என் செல்வத்தில் பாதியை உமக்குப் பிரித்துத் தருகிறேன். என்னுடைய இரண்டு மனைவியரில் நீர் யாரை விரும்புகிறீர் என்று பாரும்! அவரை உமக்காக விவாகரத்துச் செய்கிறேன். அவரின் இத்தா முடிந்ததும் அவரை உமக்கு மணம் முடித்துத் தருகிறேன்!"என்று கூறினார். அப்போது நான்,'இது எனக்குத் தேவையில்லை! வியாபாரம் நடைபெறுகிற கடைவீதி ஏதும் (இங்கு) இருக்கிறதா?' எனக் கேட்டேன். அவர்,'கைனுகா என்னும் கடை வீதி இருக்கிறது!' எனக் கேட்டேன். நான் அங்கே சென்று பாலாடைக் கட்டியையும் நெய்யையும் (லாபமாகக்) கொண்டு வந்தேன். மறுநாளும் தொடர்ந்து சென்றேன். சிறிது காலத்திற்குள் நறுமணப் பொருளின் (மஞ்சள்) கறையுடன் நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். நபி(ஸல்) அவர்கள்,'நீ மண முடித்துவிட்டாயா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்!"என்றேன்.'யாரை?' என்றார்கள்.'ஓர் அன்ஸாரிப் பெண்ணை!"என்றேன்.'எவ்வளவு மஹர் கொடுத்தாய்?' என்று கேட்டார்கள்.'ஒரு பேரீச்சங் கொட்டை எடைக்குத் தங்கம்!"என்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'ஓர் ஆட்டையேனும் மணவிருந்தாக அளிப்பாயாக!"என்றார்கள்.

ஹதீஸ் 2049. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) மதீனாவுக்கு வந்தபோது, அவர்களையும் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி) அவர்களையும் நபி(ஸல்) அவர்கள் சகோதரர்களாக ஆக்கினார்கள். ஸஅத்(ரலி) வசதி படைத்தவராக இருந்தார். அவர் அப்துர் ரஹ்மானிடம்,'என்னுடைய செல்வத்தைச் சரி பாதியாக உமக்குப் பிரித்துத் தருகிறேன். (என் மனைவியரில் ஒருத்தியை விவாகரத்து செய்து) உமக்கு மண முடித்துத் தருகிறேன்!' எனக் கூறினார். அதற்கு அப்துர் ரஹ்மான்(ரலி),'உம்முடைய குடும்பத்திலும் செல்வத்திலும் அல்லாஹ் பரக்கத் செய்வானாக!' எனக்குக் கடை வீதியைக் காட்டுங்கள்! எனக் கூறினார். அவர் பாலாடைக் கட்டியையும் நெய்யையும் இலாபமாகப் பெற்று, அவர் தங்கியிருந்த வீட்டாரிடம் கொண்டு வந்தார். சிறிது காலத்திற்குள் நறுமணப் பொருளின் (மஞ்சள்) கறையுடன் வந்தார். அவரிடம் நபி(ஸல்) அவர்கள்'என்ன விசேஷம்?' எனக் கேட்டார்கள். அதற்கவர்,'நபி அவர்களே! நான் ஓர் அன்ஸாரிப் பெண்ணை மணமுடித்துக் கொண்டேன்!"என்றார். நபி(ஸல்)'அவருக்கு என்ன மஹர் கொடுத்தீர்?' எனக் கேட்டார்கள்.'ஒரு பேரீச்சங் கொட்டை எடைக்குத் தங்கம்!"என அவர் பதில் கூறினார். அதற்கு'ஓர் ஆட்டையேனும் மணவிருந்ததாக அளிப்பீராக!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2050. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உக்காழ், மஜன்னா, துல்மஜாஸ் ஆகியவை அறியாமைக் காலத்தில் கடைவீதிகளாக இருந்தன. இஸ்லாம் வந்ததும் அங்கே வியாபாரம் செய்வதை மக்கள் குற்றம் எனக் கருதினார்கள்.

அப்போது'உங்களுடைய இறைவனின் அருளைத் தேடுவது உங்களின் மீது குற்றமில்லை'' என்ற (திருக்குர்ஆன் 02:198) வசனம் அருளப்பட்டது.

இவ்வசனத்துடன் ஹஜ்ஜுக்காலங்களில் என்பதையும் சேர்த்து இப்னு அப்பாஸ்(ரலி) ஓதியிருக்கிறார்.

## அனுமதிக்கப்பட்டது தெளிவானது விலக்கப்பட்டதும் தெளிவானது அவ்விரண்டிற்குமிடையே சந்தேகத்திற்கிடமானதும் உள்ளது.

ஹதீஸ் 2051. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

''ஹலால் எனும் அனுமதிக்கப்பட்டது தெளிவானது ஹராம் எனும் விலக்கப்பட்டதும் தெளிவானது அவ்விரண்டிற்குமிடையே சந்தேகத்திற்கிடமான காரியங்கள் உள்ளன. பாவம் எனச் சந்தேகப்படுபவற்றைவிட்டு விடுகிறவர் பாவம் என்று தெளிவாகத் தெரிவதை நிச்சயம்விட்டு விடுவார் பாவம் எனச் சந்தேம்ப்படுபவற்றைச் செய்யத் துணிகிறவர் தெளிவான பாவங்களிலும் வீழ்ந்து விடக் கூடும். பாவங்கள் அல்லாஹ் போட்ட வேலிகளாகும். வேலியைச் சுற்றி மேய்கிறவர் அதற்குள்ளும் சென்று விடக்கூடும்''

என நுஃமான் இப்னு பஷீர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## சந்தேகத்திற்கிடமானவை பற்றிய விளக்கம்.

''(பாவங்களில் சிக்கிக் கொள்ளாமல்) பேணுதலாக இருப்பதைவிட மிகவும் எளிதான ஒன்றை நான் காணவில்லை!'சந்தேகத்திற்கிடமானவற்றை நீர்விட்டுவிட்டு, சந்தேகத்திற்கிடமில்லாதவற்றின் பக்கம் சென்று விடுவீராக!"(என்னும் நபி போதனையைப் பின்பற்றியதால்தான் இறையச்சமுடைய பேணுதலான வாழ்க்கை வாழ்வது எனக்கு எளிதாயிற்று!)'' என்று ஹஸ்ஸான் இப்னு அபீ ஸினான்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2052. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கருப்பு நிறப் பெண் ஒருவர் (என்னிடம்) வந்து, எனக்கும் என் மனைவிக்கும் தாம் பாலூட்டியிருப்பதாகக் கூறினார். இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் நான் கூறியபோது, (முதலில்) அவர்கள் அதைக் கண்டு கொள்ளவில்லை பிறகு (மீண்டும் மீண்டும் நான் கூறவே) புன்னகைத்துவிட்டு'இவ்வாறு கூறப்பட்ட பின் எப்படி (அவளுடன் நீ வாழ முடியும்?' என்று வினவினார்கள். அப்பொழுது எனக்கு மனைவியாக இருந்தவர் அபூ இஹாப் தமீமியின் மகளாவார்!

ஹதீஸ் 2053. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

''ஸம்ஆ'' என்பவரின் அடிமைப் பெண்ணுடைய மகன் எனக்குப் பிறந்தவன். எனவே, அவனை நீ கைப்பற்றிக் கொள்!"என்று உத்பா இப்னு அபீ வக்காஸ்(ரலி) (தம் மரண வேளையில்) தம் சகோதரர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம் உறுதிமொழி வாங்கினார். மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டு ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அந்தச் சிறுவனைப் பிடித்துக் கொண்டு,'இவன் என் சகோதரரின் மகன்! என்னிடம் அவர் உறுதிமொழி வாங்கியிருக்கிறார்!' எனக் கூறினார். அப்போது ஸம்ஆவின் மகன் அப்து(ரலி),'இவன் என் சகோதரன் என் தந்தையின் அடிமைக்குப்பிறந்தவன் என் தந்தையின் ஆதிக்கத்தில் இவனுடைய தாயார்

இருக்கும்போது பிறந்தவன்!' எனக் கூறினார். இருவரும் நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்போது ஸஅத்(ரலி)'நபி அவர்களே! இவன் என் சகோதரரின் மகன். இவனைப் பற்றி என் சகோதரர் உறுதிமொழி வாங்கியிருக்கிறார்' எனக் கூறினார். அதற்கு ஸம்ஆவின் மகன் அப்து(ரலி)'இவன் என் சகோதரன்! என் தந்தையின் ஆதிக்கத்தில் இவனுடைய தாய் இருக்கும்போது என் தந்தைக்குப் பிறந்தவன்! எனக் கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள், "ஸம்ஆவின் மகன் அப்தே! இவன் உமக்குரியவனே! எனக் கூறினார்கள். பின்னர்'(தாய்) யாருடைய ஆதிக்கத்தில் இருக்கும்போது குழந்தை பிறக்கிறதோ அவருக்கே அக்குழந்தை உரியது! விபச்சாரம் செய்தவருக்கு இழப்புதான் உரியது! எனக் கூறினார்கள். பின்னர், தம் மனைவியும் ஸம்ஆவின் மகளுமான ஸவ்தா(ரலி) அவர்களிடம்'ஸவ்தாவே! நீ இவரிடம் ஹிஜாபைப் பேணிக் கொள்!"என்றார்கள். ('அவர் ஸம்ஆவின் மகன்தான்! என்று நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தாலும்) உத்பாவின் தோற்றத்தில் அவர் இருந்ததால்தான் இவ்வாறு நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள். அதன் பிறகு அவர் அன்னை ஸவ்தா(ரலி) அவர்களை மரணிக்கும்வரை சந்திக்கவில்லை.

ஹதீஸ் 2054. அதீ இப்னு ஹாதிம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் ஈட்டி (மூலம் வேட்டையாடுவதைப்) பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், 'பிராணியை ஈட்டி அதன் முனையால் தாக்கிக் கொன்றால் அதை நீ உண் பக்கவாட்டாகத் தாக்கிக் கொன்றால் அதை நீ உண்ணாதே. ஏனெனில் அது அடித்துக் கொல்லப்பட்டதாகும்'' என்றார்கள். நான் நபி அவர்களே! (வேட்டைக்காக) நான் என்னுடைய நாயை அல்லாஹ்வின் பெயர் கூறி அனுப்புகிறேன் வேட்டையாடப் பட்ட பிராணிக்கு அருகில் என்னுடைய நாயுடன் மற்றொரு நாயையும் காண்கிறேன் அந்தமற்றொரு நாய்க்காக நான் அல்லாஹ்வின் பெயர் கூறவில்லை இவ்விரு நாய்களில் எது வேட்டையாடியது என்பதும் எனக்குத் தெரியவில்லை (அதை நான் சாப்பிடலாமா?) எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'சாப்பிடாதே! நீ அல்லாஹ்வின் பெயர் கூறியது உன்னுடைய நாயை அனுப்பும்போது தான். மற்றொரு நாய்க்கு நீ அல்லாஹ்வின் பெயர் கூறவில்லை'' என விடையளித்தார்கள்.

## சந்தேகத்திற்குரியவற்றை எந்த அளவுக்குத் தவிர்த்துக் கொள்ள வேண்டும்?

ஹதீஸ் 2055. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கீழே கிடந்த பேரீச்சம் பழத்தைக் கடந்து சென்றார்கள். அப்போது, 'இது ஸதக்காப் பொருளாக இருக்காது என்றிருந்தால் இதை நான் சாப்பிட்டிருப்பேன்'' என்றார்கள்.

"என்னுடைய படுக்கையில் விழுந்து கிடக்கும் பேரீச்சம் பழத்தை நான் பார்க்கிறேன்...' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

## அடிப்படை இல்லாத மனக் குழப்பங்கள் சந்தேகத்திற்குரியவைகளில் சேராது.

ஹதீஸ் 2056. அப்துல்லாஹ் இப்னு ஸைத் இப்னி ஆஸிம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

'ஒருவர் தொழும்போது காற்றுப் பிரிந்தது போன்று உணர்கிறார் இதனால் தொழுகை முறியுமா?' என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், 'சப்தத்தைக் கேட்கும்வரை அல்லது நாற்றத்தை உணரும்வரை முறியாது'' என்றார்கள்.

சப்தத்தைக் கேட்காமல், நாற்றத்தை உணராமல் உளூ தேவையில்லை என்று ஸுஹ்ரி கூறுகிறார்.

ஹதீஸ் 2057. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

'நபி அவர்களே! ஒரு கூட்டத்தினர் எங்களிடம் இறைச்சியைக் கொண்டு வருகின்றனர். அதன் மீது (அறுக்கும் போது) அல்லாஹ்வின் பெயர் கூறினார்களா இல்லையா என்பது எங்களுக்குத் தெரியவில்லை' என்று ஒரு கூட்டத்தினர் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'நீங்கள் அதன்மீது அல்லாஹ்வின் பெயர் கூறி உண்ணுங்கள்'' என்றார்கள்.

அல்லாஹ் கூறினான்:

"அவர்கள் வியாபாரத்தை அல்லது வீணானவற்றைக் கண்டால் அதன்பால் சென்று விடுகிறார்கள்'' (திருக்குர்ஆன் 62:11)

ஹதீஸ் 2058. ஜாபிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுது கொண்டிருந்தோம். அப்போது உணவுப் பொருட்களை ஏற்றிக் கொண்டு ஷாம் நாட்டிலிருந்து ஒரு வணிகக் கூட்டம் வந்தது. மக்கள் அதை நோக்கிச் சென்றார்கள். நபி(ஸல்) அவர்களுடன் பன்னிரண்டு நபர்களைத் தவிர யாரும் எஞ்சியிருக்கவில்லை. அப்போது,'அவர்கள் வியாபாரத்தையோ வீணானவற்றையோ கண்டால் அதன் பால் செல்வார்கள்'' என்ற வசனம் அருளப்பட்டது.

## 'எவ்வாறு பொருள் ஈட்டினோம் என்பது பற்றிப் பொருட்படுத்தாதவர்.

ஹதீஸ் 2059. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"தாம் சம்பாதித்தது ஹலாலா ஹராமா என்று மக்கள் பொருட்படுத்தாத ஒரு காலம் (இனி) வரும்!" என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## தரை வழி வாணிபமும் மற்றவையும்.

"அந்த இறையில்லங்களில் காலையிலும் மாலையிலும் அவனைத் துதித்துக் கொண்டிருப்பவர்கள் எத்தகையோரெனில், இறைவனை நினைவு கூருவதிலிருந்தும், தொழுகையை நிலைநாட்டுவதிலிருந்தும், ஸகாத் கொடுப்பத்திலிருந்தும் வியாபாரமும் கொடுக்கல் வாங்கலும் திசைதிருப்பி விடுவதில்லை!"(திருக்குர்ஆன் 24:37)

"அன்றைய மக்கள் கொடுக்கல், வாங்கலும் வியாபாரமும் செய்து வந்தார்கள். ஆயினும், இறைவனுக்குச் செய்ய வேண்டிய ஒரு கடமை அவர்கள் முன்னே வரும்போது அதை நிறைவேற்றி முடிக்கும் வரை அவர்களின் வியாபாரமோ, கொடுக்கல் வாங்கலோ அவர்களை திசை திருப்பவில்லை!"என்று கதாதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2060 ~ ஹதீஸ் 2061. அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

"நான் நாணய மாற்று வியாபாரம் செய்து வந்தேன் அது பற்றி(ய மார்க்கச் சட்டத்தை) ஸைத் இப்னு அர்கம் (ரலி), பராஉ இப்னு ஆஸிப் (ரலி) ஆகியோரிடம் கேட்டேன். அதற்கவர்கள்,'நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் வியாபாரிகளாக இருந்தோம் அவர்களிடம் நாணயமாற்று வியாபாரம் பற்றிக் கேட்டோம். அதற்கு'உடனுக்குடன் மாற்றினால் அதில் தவறில்லை தவணையுடன் இருந்தால் அது கூடாது!"என அவர்கள் பதிலளித்தார்கள்!' என்றார்கள்!"

## வியாபாரத்திற்காக வெளியே செல்லுதல்.

அல்லாஹ் கூறினான்.

“நீங்கள் பூமியில் பரவி அல்லாஹ்வின் அருளைத் தேடுங்கள்!”(திருக்குர்ஆன் 62:10)

ஹதீஸ் 2062. உபைத் இப்னு உமைர்(ரஹ்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

உமர்(ரலி) (கலீஃபாவாக இருந்த காலத்தில்) அபூ மூஸா(ரலி) வந்து, உள்ளே வர அனுமதி கோரினார்கள். உமர்(ரலி) அலுவலில் ஈடுபட்டிருந்ததால் அவர்களுக்கு அனுமதி அளிக்கப்படவில்லை உடனே அபூ மூஸா(ரலி) திரும்பிவிட்டார்கள். அலுவலை முடித்த உமர்(ரலி), 'அபூ மூஸாவின் குரலை நான் கேட்டேனே! அவருக்கு அனுமதி அளியுங்கள்!”என்றார்கள். 'அவர் திரும்பிச் சென்றார்!”என்று கூறப்பட்டது. உடனே உமர்(ரலி) அபூ மூஸா(ரலி) அவர்களை அழைத்து வரச் செய்தாக்ள். (“ஏன் திரும்பிச் சென்றுவிட்டீர்?' என்று உமர்(ரலி) கேட்டபோது) அபூ மூஸா(ரலி), 'இவ்வாறே நாங்கள் கட்டளையிட்டிருந்தோம்!' எனக் கூறினார்கள். உமர்(ரலி)'இதற்குரிய சான்றை நீர் என்னிடம் கொண்டுவாரும்!' எனக் கேட்டார்கள். உடனே, அபூ மூஸா(ரலி) அன்ஸாரிகளின் அவைக்குச் சென்று அவர்களிடம் கேட்டார்கள். அதற்கவர்கள், 'நம்மில் இளையவரான அபூ ஸயீத் அல்குத்ரீயைத் தவிர வேறு யாரும் இந்த விஷயத்தில் உமக்கு சாட்சி சொல்ல மாட்டார்கள்!”என்றனர். அபூ மூஸா(ரலி) அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறியதை உறுதிப்படுத்தியதும்) உமர்(ரலி), 'நபி(ஸல்) அவர்களின் இந்தக் கட்டளை எனக்குத் தெரியாமல் போய்விட்டதா? நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (வெளியே சென்று) கடைவீதிகளில் நான் வியாபாரம் செய்து கொண்டிருந்தது என் கவனத்தை திசைதிருப்பிவிட்டது போலும்!”என்று கூறினார்கள்.

## கடல்வழிப் பயணம் மேற்கொண்டு வியாபாரம் செய்தல்.

“இதில் எந்தத் தவறுமில்லை! குர்ஆனில் கடல் பயணம் குறித்து அல்லாஹ், தகுந்த காரணத்தோடுதான் (தன் அருட்கொடையாக அதை வர்ணித்துக்) கூறியுள்ளான்!”என்று ம(த்)தர்(ரஹ்) அவர்கள் கூறிவிட்டு, 'நீங்கள் கடலிலிருந்து மிருதுவான (புத்தம் புதிய) மாமிசத்தைப் புசிப்பதற்காகவும், அணிந்து கொள்ளக் கூடிய ஆபரணத்தை அதிலிருந்து நீங்கள் வெளிக் கொணர்வதற்காகவும் அவன்தான் கடலை உங்களுக்க வசப்படுத்தித் தந்தான்! இன்னும் அதில் நீரைப் பிளந்து கொண்டு செல்லும் கப்பலை நீர் காண்கிறீர்! (பல்வேறு நாடுகளுக்கும் சென்று) அவனுடைய அருட்கொடையை நீங்கள் தேடுவதற்காகவும் அவனுக்கு நன்றி செலுத்தத் கூடியவர்களாய் நீங்கள் திகழ்வதற்காகவுமே இவையெல்லாம் (உங்களுக்கு வசப்படுத்தித் தரப்பட்டு) உள்ளன!”என்ற (திருக்குர்ஆன் 16:14) இறைவசனத்தை ஓதினார்!

ஹதீஸ் 2063. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் இஸ்ரவேலர்களில் ஒரு மனிதரைப் பற்றிக் கூறும்போது'அவர் கடல் மார்க்கமாகப் பயணம் சென்று. தம் தேவையை நிறைவேற்றினார்!”என்று குறிப்பிட்டார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“அவர்கள் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால்... அதன் பால் சென்று விடுகிறார்கள்!”(திருக்குர்ஆன் 62:11)

மேலும் அல்லாஹ் கூறினான்:

“வியாபாரமோ கொடுக்கல் வாங்கலோ அவர்களை இறை நினைவிலிருந்து திருப்பாது!”(திருக்குர்ஆன் 24:27)

“அன்றைய தினம் வியாபாரம் செய்து வந்தனர். அல்லாஹ்விற்குச் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்று அவர்கள் முன்னே வந்தால் அதை நிறைவேற்றும்வரை அவர்களின் வியாபாரமோ கொடுக்கல் வாங்கலோ இறைநினைவிலிருந்து அவர்களைத் திருப்பாது!”என்று கதாதா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2064. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஜும்ஆ தொழுகை தொழுது கொண்டிருந்தபோது வணிகக் கூட்டம் ஒன்று வந்தது. உடனே, பன்னிரண்டு நபர்களைத் தவிர மற்றவர்கள் (வணிகக் கூட்டத்தை நோக்கி கலைந்து) ஓடிவிட்டனர். அப்போது,‘அவர்கள் வியாபாரத்தையோ வேடிக்கையையோ கண்டால், நின்ற நிலையில் உம்மைவிட்டுவிட்டு அங்கே ஓடி விடுகிறார்கள்!’ என்னும் (திருக்குர்ஆன் 62:11) இறைவசனம் அருளப்பட்டது!“

அல்லாஹ் கூறினான்:

“(அனுமதிக்கப்பட்ட வழிகளில்) நீங்கள் சம்பாதித்தவற்றிலிருந்து சிறந்தவற்றைச் செலவு செய்யுங்கள்!”(திருக்குர்ஆன் 02:267)

ஹதீஸ் 2065. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு பெண் தம் வீட்டிலுள்ள உணவைப் பாழ்படுத்தாமல், (பசித்தவர்களுக்குக் கொடுத்து) செலவு செய்தால் (அப்படி) செலவு செய்ததற்காக (அவளுக்குரிய) நற்கூலி அவளுக்கு கிடைக்கும்! (அந்த உணவைச்) சம்பாதித்தற்கான நற்கூலி அவளுடைய கணவனுக்கு உண்டு! கருவூலப் பொறுப்பாளருக்கும் அதுபோல் (நற்கூலி) கிடைக்கும்! ஒருவர் மற்றவரின் கூலியில் எதனையும் குறைத்து விடமாட்டார்!“

என ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2066. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒரு பெண், தன் கணவனின் கட்டளையின்றி அவனுடைய சம்பாத்தியத்திலிருந்து செலவு செய்தாலும் அவனுடைய நற்கூலியில் பாதி அவளுக்கு உண்டு!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்

## செல்வ வளத்தை ஒருவர் விரும்பினால்...?

ஹதீஸ் 2067. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒருவர் செல்வ வளம் தமக்கு வழங்கப்பட வேண்டும் அல்லது தம் வாழ்நாள் அதிகரிக்கப்படவேண்டும்‘‘ என்று விரும்பினால் அவர் தம் உறவினர்களுடன் சேர்ந்து வாழட்டும்!“

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் பொருட்களைக் கடனாக வாங்கியது.

ஹதீஸ் 2068. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் ஒரு ?தரிடம் குறிப்பிட்ட தவணையில் திருப்பித் தருவதாக உணவுப் பொருளை வாங்கினார்கள். (அதற்காக) அவரிடம் தம் இரும்புக் கவசத்தை அடைமானமாக வைத்தார்கள்!‘

ஹதீஸ் 2069. அனஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் தீட்டப்படாத கோதுமையில் தயாரிக்கப்பட்ட ரொட்டியையும் வாசனை நீங்கிய உருக்கப்பட்ட கொழுப்பையும் கொண்டு சென்றேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் கவசத்தை மதீனாவில் உள்ள ஒரு ?தரிடம் அடைமானமாக வைத்து அவரிடமிருந்து தம் குடும்பத்தினருக்காகத் தீட்டப்படாத கோதுமையை வாங்கியிருந்தார்கள். 'முஹம்மதின் குடும்பத்தினரிடம் தீட்டிய கோதுமையில் ஒரு ஸாவு, பிற தானியத்தில் ஒரு ஸாவு இருந்ததில்லை!"அந்த நேரத்தில் அவர்களுக்கு ஒன்பது மனைவியர் இருந்தனர்.

## ஒருவர் கைத் தொழில் செய்தும் உழைத்தும் உண்பது.

ஹதீஸ் 2070. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அபூ பக்ர்(ரலி) கலீஃபாவாக ஆனபோது'என்னுடைய தொழில் என் குடும்பத்தினரின் செலவுக்குப் போதுமானதாக இருந்தது என்பதை என் சமுதாயத்தினர் அறிவர் இப்போது நான் முஸ்லிம்களின் தலைமைப் பொறுப்பில் ஈடுபடுத்தப்பட்டுள்ளேன் இனி அபூ பக்ரின் குடும்பத்தினர் இந்தப் பொது நிதியிலிருந்து உண்பார்கள். இதில் முஸ்லிம்களுக்காக நான் உழைப்பேன்' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 2071. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபித்தோழர்கள் பலர் உழைத்து உண்பவர்களாக இருந்தனர். இதனால் அவர்களிடம் (வியர்வை) வாடை வீசும். இதன் காரணமாகவே'நீங்கள் குளிக்கக் கூடாதா?' என்று அவர்களிடம் கூறப்பட்டது.

ஹதீஸ் 2072. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒருவர் தம் கையால் உழைத்து உண்பதை விடச் சிறந்த உணவை ஒருபோதும் உண்ண முடியாது. தாவூத் நபி அவர்கள் தங்களின் கையால் உழைத்து உண்பவர்களாகவே இருந்தனர். "

என மிக்தாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2073. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"தாவூத் நபி(ஸல்) தம் கையால் உழைத்தே தவிர உண்ண மாட்டார்கள். "

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2074 , ஹதீஸ் 2075 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"பிறரிடம் யாசகம் கேட்பதை விட ஒருவர் தம் முதுகில் விறகுக் கட்டைச் சுமந்து (விறகச்) செல்வது சிறந்ததாகும். அவர் யாசிக்கும்போது யாரும் கொடுக்கவும் செய்யலாம் மறுக்கவும் செய்யலாம். "

இதை அபூ ஹுரைரா(ரலி) ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) இருவரும் அறிவித்தார்கள்.

## விற்கும்போதும் வாங்கும் போதும் தாராளமாக நடந்து கொள்ளுதல்.

ஒருவர் தமக்குரிய உரிமைகளைத் தேடும்போது அதை முறையாகத் தேடட்டும்.

ஹதீஸ் 2076. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வாங்கும் பொழுதும் விற்கும் பொழுதும் வழக்குரைக்கும் பொழுதும் பெருந்தன்மையாக நடந்து கொள்ளும் மனிதருக்கு அல்லாஹ் அருள் புரிவானாக!"

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## (கடனைத் தீர்க்க) வசதி படைத்தவர்களுக்கும் அவகாசம் அளித்தல்.

ஹதீஸ் 2077. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"உங்களுக்கு முன்னர் வாழ்ந்த ஒரு மனிதரின் உயிரை வானவர்கள் கைப்பற்றி, அவரிடம்'நீர் ஏதேனும் நல்லது செய்திருக்கிறீரா?' எனக் கேட்டனர். அதற்கு அம்மனிதர்,'வசதியானவருக்கு அவகாசம் அளிக்கும்படியும் (அவர் கடனைத் திருப்பிச் செலுத்த தாமதம் செய்வதை) கண்டு கொள்ளாமல்விட்டுவிடும்படியும் நான் என்னுடைய ஊழியர்களுக்குக் கட்டளையிட்டிருந்தேன்!"என்று கூறினார். உடனே,'அவரின் தவறுகளைக் கண்டு கொள்ளாமல்விட்டு விடுங்கள்!' என்று அல்லாஹ் வானவர்களுக்குக் கட்டளையிட்டான்!"

என ஹுதைஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்,'சிரமப்படுபவருக்கு நான் அவகாசம் அளிப்பவனாகவும் வசதியானவரிடம் மிருதுவாக நடப்பவனாகவும் இருந்தேன்!' என்று அவர் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

மற்றோர் அறிவிப்பில்,'வசதியானவருக்கு அவகாசம் வழங்கியும், சிரமப்படுபவரின் கடனைத் தள்ளுபடி செய்தும் வந்தேன்!"என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

இன்னொரு அறிவிப்பில்,'வசதியானவரிடமிருந்து கடனைத் திரும்பப் பெற்றுக் கொண்டு, சிரமப்படுபவரின் கடனைத் தள்ளுபடி செய்து வந்தேன்!"என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

## கடனை அடைக்கச் சிரமப்படுபவருக்கு அவகாசம் அளித்தல்.

ஹதீஸ் 2078. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"(முன் காலத்தில்) மக்களுக்குக் கடன் கொடுக்கக் கூடிய ஒரு வியாபாரி இருந்தார். கடனைத் திருப்பிச் செலுத்தச் சிரமப்படுபவரை அவர் கண்டால், தம் பணியாளர்களிடம் இவரின் கடனைத்தள்ளுபடி செய்யுங்கள் அல்லாஹ் நம்முடைய தவறுகளைத் தள்ளுபடிச் செய்யக்கூடும் என்று கூறுவார். அல்லாஹ்வும் அவரின் தவறுகளைத் தள்ளுபடி செய்தான். "

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## விற்பவரும் வாங்குபவரும் பொருட்களில் உள்ள குறைகளை மறைக்காமல் தெளிவுபடுத்தி நலம் நாடுதல்.

(என்னிடமிருந்து ஓர் அடிமையை நபி(ஸல்) அவர்கள் வாங்கியபோது நபி(ஸல்) அவர்கள்,'அதா இப்னு காலித் என்பாரிடமிருந்து நபி முஹம்மத் இவரை விலைக்கு வாங்கினார் இது ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமிடம் செய்த வியாபாரமாகும் இதில் எந்தக் குறையுமில்லை இவரிடம் கெட்ட குணமில்லை. குற்றம் புரியும் தன்மையுமில்லை'' என்று எனக்கு எழுதித் தந்தனர்.

குற்றம் புரிதல் என்று இங்குக் கூறப்படுவது விபச்சாரம் செய்தல், திருடுதல், எஜமானரைவிட்டு ஓடுதல் ஆகியவையே!"என்று கதாதா(ரஹ்) கூறினார்.

சில தரகர்கள் தொழுவங்களுக்கு'குராஸான் தொழுவம்''ஸஜஸ்தான் தொழுவம்' என்று பெயரிட்டு,'இது நேற்று குராஸானிலிருந்து வந்தது!"என்று கூறுவார்கள். இது பற்றி இப்ராஹீம் நகயீ(ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்டபோது அவர்கள் இதைக் கடுமையாக வெறுத்தார்கள்.

“விற்பனை செய்யும் பொருளில் குறை இருப்பதை அறிந்திருக்கிற எவரும் அதைத் தெளிவுபடுத்தாமல் விற்பது அனுமதிக்கப்பட்டதல்ல!”என்று உக்பா இப்னு ஆமிர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2079. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்பவரும் வாங்குபவரும் பிரியாமலிருக்கும் வரை வியாபாரத்தை முறித்துக் கொள்ளும் உரிமை இருவருக்கும் உண்டு! அவ்விருவரும் உண்மை பேசிக்குறைகளைத் தெளிவுபடுத்தியிருந்தால் அவர்களின் வியாபாரத்தில் பரக்கத் (அருள் வளம்) அளிக்கப்படும்! குறைகளை மறைத்துப் பொய் சொல்லியிருந்தால் அவர்களின் வியாபாரத்தில் உள்ள பரக்கத் நீக்கப்படும்!“

என ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## (பலரகப் பேரீச்சங்கனிகளும் கலந்திருக்கும்) பேரீச்சம் பழக் கலவையை விற்கலாமா?

ஹதீஸ் 2080. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பலதரப்பட்ட பேரீச்சம் பழங்களின் கலவை எங்களுக்கு வழங்கப்படும் அதை ஒரு ஸாவுக்கு இரண்டு ஸாவு என்ற அடிப்படையில் நாங்கள் விற்பனை செய்வோம். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘ஒரு ஸாவுக்கு இரண்டு ஸாவும் கூடாது இரண்டு திர்ஹங்களுக்கு ஒரு திர்ஹமும் கூடாது!”என்று கூறினார்கள்.

## இறைச்சி வியாபாரம் செய்பவரும் (பிராணியை) அறுப்பவரும்.

ஹதீஸ் 2081. அபூ ஷுஐப் என்ற அன்ஸாரி, (பிராணியை) அறுத்துத் துண்டு பேகுதி தம் ஊழியரிடம், ‘ஐவருக்குப் போதுமான உணவை எனக்குத் தயார் செய்! ஐவரில் ஒருவராக நபி(ஸல்) அவர்களையும் நான் அழைக்கப் போகிறேன் ஏனெனில், அவர்களின் முகத்தில் பசியை நான் உணர்ந்தேன்!”என்று கூறிவிட்டு. ஐவரையும் அழைத்தார். அவர்களுடன் வேறு ஒரு மனிதரும் சேர்ந்து வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘இந்த மனிதர் எங்களைப் பின்தொடர்ந்து வந்துவிட்டார். இவருக்கு அனுமதியளிக்க நீர் விரும்பினால் (அவ்வாறே) அனுமதி அளிப்பீராக! இவர் திரும்பி விட வேண்டும் என நீர் விரும்பினால் திரும்பி விடுவார்!”என்று கூறினார்கள். அதற்கு அபூ ஷுஐப்(ரலி)’இல்லை! அவருக்கு நான் அனுமதியளித்து விட்டேன்!”என்றார்கள்.

## குறைகளை மறைப்பதும் பொய் சொல்வதும் வியாபாரத்தை அழிக்கும்.

ஹதீஸ் 2082. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்பவரும், வாங்குபவரும் பிரியாமலிருக்கும்வரை வியாபாரத்தை முறித்துக் கொள்ளும் உரிமை இருவருக்கும் உண்டு! அவ்விருவரும் உண்மை பேசி(க் குறைகளைத்) தெளிவுபடுத்தியிருந்தால் அவர்களின் வியாபாரத்தில் பரக்கத் அளிக்கப்படும்! குறைகளை மறைத்துப் பொய் சொல்லியிருந்தால் அவர்களின் வியாபாரத்தில் உள்ள பரக்கத் நீக்கப்படும்!“

என ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“நம்பிக்கையாளர்களே! நீங்கள் பன்மடங்குகாக இரட்டித்துக் கொண்டேயிருக்கும் வட்டியை உண்ணாதீர்கள்“‘ (திருக்குர்ஆன் 3:130)

ஹதீஸ் 2083. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“தாம் சம்பாதித்தது ஹலாலா ஹராமா என்று மனிதர்கள் பொருட்படுத்தாத ஒரு காலம் வரும். “

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## வட்டி உண்பவர், வட்டிக்கு சாட்சியாக இருப்பவர், வட்டிக்கு எழுத்தராக இருப்பவர்.

அல்லாஹ் கூறினான்.

“யார் வட்டி (வாங்கித்) தின்கிறார்களோ, அவர்கள் (மறுமையில்) ஷைத்தானால் தீண்டப்பட்ட ஒருவன் பைத்தியம் பிடித்தவனாக எழுவது போன்றல்லாமல் (வேறு விதமாய்) எழ மாட்டார்கள். (திருக்குர்ஆன் 02:175)

ஹதீஸ் 2084. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

பகரா அத்தியாயத்தின் கடைசி வசனம் அருளப்பட்டபோது அதை நபி(ஸல்) அவர்கள் பள்ளியில் வைத்து மக்களுக்கு ஓதிக் காட்டினார்கள். பின்னர் மதுபான வியாபாரத்தை ஹராமாக்கினார்கள்.

ஹதீஸ் 2085. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“இன்றிரவு (கனவில்) இரண்டு மனிதர்களைக் கண்டேன். அவர்கள் என்னிடம் வந்த தூய்மையான ஒரு நிலப்பகுதிக்கு என்னை அழைத்துச் சென்றனர். நாங்கள் நடந்து வந்தபோது இரத்த ஆறு ஒன்றை அடைந்தோம். ஆற்றில் ஒருவர் நின்றிருந்தார். ஆற்றின் நடுவில் இன்னொருவர் தமக்கு முன்னே கற்களை வைத்து நின்றிருந்தார். ஆற்றிலே உள்ளவர் வெளியேற முனையும்போது. அவர் வாயில் (ஆற்றின் நடுவில்) நின்றிருந்தவர் கல்லை எறிந்து அவர் முன்பு நின்ற இடத்திலேயே அவரைக் கொண்டுபோய் நிறுத்தினார். அவர் வெளியேற வரும் போதெல்லாம் இவர் அவரின் வாயில் கல்லை எறிய. அதனால் அவர் முன்பிருந்த இடத்திற்கே திரும்பிச் சென்று கொண்டிருந்தார்!

“அவர் யார்?’ என்று (என்னை அழைத்துச் சென்றவர்களிடம்) கேட்டேன். அதற்கவர்கள்’ஆற்றில் நீர் பார்த்தவர் வட்டி உண்பவராவார்!”எனக் கூறினார்கள். “

என ஸமுரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## வட்டி கொடுப்பவர்

அல்லாஹ் கூறினான்:

“நம்பிக்கையாளர்களே! நீங்கள் (உண்மையாகவே) நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்வுக்கு அஞ்சி, எஞ்சியுள்ள வட்டியை வாங்காமல்விட்டு விடுங்கள்! இவ்வாறு நீங்கள் செய்யவில்லையென்றால் அல்லாஹ்விடமிருந்தும் அவனுடைய தூதரிடமிருந்தும் (உங்களுக்கெதிரான) போர் அறிவிப்பைப் பெறுங்கள்! நீங்கள் பாவமன்னிப்பு கேட்டு, (இப்பாவத்திலிருந்து) மீண்டுவிட்டால், உங்கள் மூலதனம் உங்களுக்கு உண்டு! (உங்களிடம் கடன் பட்டோருக்கு) உங்கள் அநீதியிழைக்கக் கூடாது உங்களின் மீதும் அநீதி இழைக்கப்பட மாட்டாது!”(திருக்குர்ஆன் 02:278, 279)

“நபி(ஸல்) அவர்களுக்கு கடைசியாக அருளப்பட்ட (இறை)வசனம் இதுதான்!”என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2086. அவ்ன் இப்னு அபீ ஜுஹைஃபா(ரஹ்) அவர்கள் கூறினார்:

இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பதைத் தொழிலாகக் கொண்ட ஓர் அடிமையை என் தந்தை (அபூ ஜுஹைஃபா(ரலி)) விலைக்கு வாங்கினார்கள். (பிறகு, அவரின் தொழில் கருவிகளை உடைத்துவிட்டார்கள்.) இது தொடர்பாக அவர்களிடம் நான் (விளக்கம்) கேட்க, அவர்கள்’நபி(ஸல்) அவர்கள் நாய் விற்ற கிரயத்தையும் இரத்தத்தின் கிரயத்தை (இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பதற்குப் பெறுகிற கூலியை)யும் தடை செய்தார்கள் பச்சை குத்துவதையும், பச்சை குத்திக் கொள்வதையும் தடை செய்தார்கள் வட்டி உண்பதையும் வட்டி கொடுப்பதையும் தடை செய்தார்கள்! மேலும், உருவம் வரைபவனைச் சபித்தார்கள்!”என்று பதிலளித்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

“அல்லாஹ் வட்டியை (அதில் எந்த பரக்கத்தும் இல்லாமல்) அழித்து விடுவான் இன்னும், தான தர்மங்களை (அருள் வளங்களைக் கொண்டு) பெருகச் செய்வான்! (தன் கட்டளையை) நிராகரித்துக் கொண்டிருக்கும் பாவிகள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை!”(திருக்குர்ஆன் 02:276)

ஹதீஸ் 2087. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(பொய்) சத்தியம் செய்வது சரக்கை (சுலபமாக) விற்பனை செய்ய உதவும் ஆனால், பரக்கத் (எனும் அருள் வளத்)தை அழித்துவிடும்!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## வியாபாரத்தில் செய்யக்கூடாத சத்தியம்.

ஹதீஸ் 2088. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“ஒருவர் கடைவீதியில் விற்பனைப் பொருட்களைப் பரப்பினார் அப்போது அவர் (கொள் முதல் செய்யும்போது) கொடுக்காத (பணத்)தைக் கொடுத்ததாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்தார் முஸ்லிம்களைக் கவர(ந்து அவர்களிடம் தம் பொருளை விற்பனை செய்)வதற்காக இப்படிச் செய்தார்! அப்போது’தங்களின் உடன்படிக்கை மூலமும் சத்தியங்களின் மூலமும் அற்பக் கிரயத்தைப் பெற்றுக் கொள்கிறவர்...’ என்னும் (திருக்குர்ஆன் 03:77) இறைவசனம் அருளப்பட்டது!‘

## பொற்கொல்லர்

‘‘ ஹரம் எல்லையிலுள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக்கூடாது!’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது, அப்பாஸ்(ரலி)’இத்கிர் எனும் புல்லைத் தவிரவா? அது உலோகத் தொழிலாளர்களுக்குப் பயன்படுகிறதே!’ என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘இத்கிரைத் தவிர!’ என்று கூறினார்கள்!’ என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2089. அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“கனீமத் மூலம் கிடைத்த வயதான ஓர் ஒட்டகம் என்னிடம் இருந்தது நபி(ஸல்) அவர்கள் குமுஸிலிருந்து இன்னொரு ஒட்டகத்தையும் எனக்குக் கொடுத்திருந்தார்கள்! நபி(ஸல்) அவர்களின் மகள் ஃபாத்திமாகவுடன் (வீடு கூடி) இல்லறம் தொடங்க நான் நாடினேன் (எனவே)

என்னுடன் சேர்ந்து இத்கிர் (என்னும்) புல்லைக் கொண்டு வருவதற்காக பனுகைனுக்கா குலத்தைச் சேர்ந்த பொற்கொல்லர் ஒருவரை ஏற்பாடு செய்திருந்தேன். அந்தப் புல்லை பொற்கொல்லர்களுக்கு விற்றுவிட்டு அதன் (வருவாய்) மூலம் என் திருமண விருந்ததை நடத்த நாடினேன்!“

ஹதீஸ் 2090. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நிச்சயமாக, அல்லாஹ் மக்காவைப் புனிதப்படுத்தியிருக்கிறான்! (இங்கு போரிடுதல்) எனக்கு முன் எவருக்கும் அனுமதிக்கப்படவில்லை! எனக்குக் கூட பகலில் சற்றுநேரம் தான் அனுமதிக்கப்பட்டது! இங்குள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக்கூடாது! இங்குள்ள மரங்களை முறிக்கக் கூடாது! இங்குள்ள வேட்டைப் பிராணிகளை விரட்டக்கூடாது! பிறர் தவறவிடும் பொருட்களை அறிவிப்புச் செய்பவர் தவிர, வேறெவரும் எடுக்கக்கூடாது!’ என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அப்பாஸ்(ரலி)’எங்கள் வீடுகளின் கூரைகளுக்கும் பொற்கொல்லர்களுக்கும் பயன்படும் இத்கிரைத் தவிரவா?’ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்’இத்கிரைத் தவிர!”என்றார்கள்.

“வேட்டைப் பிராணிகளை விரட்டுவது என்றால் என்னவென்று உமக்குத் தெரியுமா? நிழலில் படுத்திருக்கும் அதை விரட்டிவிட்டு அந்த இடத்தில் நீர் தங்குவதாகும்!”என்று இக்ரிமா(ரஹ்) கூறினார்.

மற்றோர் அறிவிப்பில்’எங்கள் கப்ருகளுக்கும் பொற்கொல்லர்களுக்கும்’ என்ற வாசகம் இடம் பெற்றுள்ளது.

## பொற்கொல்லரும் கருமானும்.

ஹதீஸ் 2091. கப்பாப்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் அறியாமைக் காலத்தில் கருமானாக இருந்தேன். ஆஸ் இப்னு வாயில் என்பவன் எனக்குக் கடன் தர வேண்டியிருந்தது. அதை வாங்குவதற்காக அவனிடம் நான் சென்றேன். அப்போது அவன்,‘நீ முஹம்மதை நிராகரிக்காமல் (ஏற்றுக் கொண்டு) இருக்கும்வரை (உன்னிடம் வாங்கிய கடனை) உனக்குத் (திருப்பித்) தர மாட்டேன்!”என்றான். நான்’அல்லாஹ் உன்னை மரணிக்கச் செய்து, திரும்ப நீ எழுப்பப்படும் வரை நான் முஹம்மதை நிராகரிக்க மாட்டேன்!’ எனக் கூறினேன். அதற்கவன்’நான் மரணித்து எழுப்பப்படும் வரை என்னைவிட்டுவிடு! அப்போது பொருட் செல்வமும் குழந்தைச் செல்வமும் எனக்கு வழங்கப்படும் அப்போது உன் கடனை நான் தீர்த்து விடுகிறேன்!”என்றான். அப்போதுதான்’நம்முடைய வசனங்களை நிராகரித்து,‘(மறுமையிலும்) எனக்கு நிச்சயமாக பொருட் செல்வமும் குழந்தைச் செல்வமும் வழங்கப்படும்!’ என்று கூறியவனை (நபியே!) நீர் பார்த்தீரா? (பின்னர் நடக்கவிருக்கும்) மறைவான விஷயத்தை அவன் முன்கூட்டியே தெரிந்து கொண்டானா? அல்லது (இப்படியெல்லாம் தனக்கு வழங்கப்படவேண்டுமென்று) கருணையாளான இறைவனிடத்திலிருந்து உறுதிமொழி (ஏதேனும்) பெற்றிருக்கிறானா?’ என்ற (திருக்குர்ஆன் 19:77, 78) இறைவசனம் அருளப்பட்டது!“

## தையல்காரன்.

ஹதீஸ் 2092. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“ஒரு தையல்காரர் தாம் தயாரித்த விருந்துக்காக நபி(ஸல்) அவர்களை அழைத்தார். நானும் நபி(ஸல்) அவர்களுடன் அந்த விருந்துக்குச் சென்றேன். அவர் ரொட்டியையும் உலர்ந்த

போடப்பட்ட குழம்பையும் நபி(ஸல்) அவர்களின் முன்னே வைத்தார் நபி(ஸல்) அவர்கள் தட்டின் ஓரங்களில் சுரைக்காயைத் தேடுவதை பார்த்தேன். அன்றிலிருந்து நான் சுரைக்காயை விரும்பக் கூடியவனாம் விட்டேன்!“

## நெசவுத் தொழிலாளி

ஹதீஸ் 2093. அபூ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி)'ஒரு பெண்மணி (நபி(ஸல்) அவர்களிடம்) புர்தாவைக் கொண்டு வந்தார்!' எனக் கூறிவிட்டு,'புர்தா என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். 'ஆம்! அது ஓரப்பகுதி நெய்யப்பட்ட ஒரு சால்வை!"என்று கூறப்பட்டது. தொடர்ந்து ஸஹ்ல்(ரலி) அவர்கள் கூறினார்கள். அப்பெண்மணி,'நபி அவர்களே! உங்களுக்கு அணிவிப்பதற்காக இதை நான் என் கையால் நெய்தேன்!"என்றார். நபி(ஸல்) அவர்கள் தமக்கு அது தேவைப்பட்டதால் அதைப் பெற்றார்கள். (அவர்கள் உள்ளே சென்றுவிட்டு) எங்களிடம் திரும்பி வந்தபோது அதை வேட்டியாக அணிந்திருந்தார்கள். அப்போது கூட்டத்தில் இருந்த ஒருமனிதர். 'நபி அவர்களே! இதை நான் அணிவதற்காக எனக்குத் தாருங்கள்!"என்றார். நபி(ஸல்) அவர்கள்'சரி தருகிறேன்!"என்று சொல்லிவிட்டு, சபையில் அமர்ந்திருந்தார்கள். பிறகு (உள்ளே சென்றுவிட்டுத்) திரும்பி வந்து அதைச் சுருட்டி, (அதைத் தமக்குத் தரும்படி) கேட்ட மனிதருக்கு அதை அனுப்பி வைத்துவிட்டார்கள். அப்போது அவரிடம் மக்கள்,'நீர் செய்தது நன்றன்று கேட்பவரை வெறுங்கையாக திருப்பியனுப்ப மாட்டார்கள் என்று தெரிந்து கொண்டே அவர்களிடம் அதைக் கேட்டு விட்டீரே!' எனக் கூறினார். அதற்கு அம் மனிதர்,'நான் மரணிக்கும் நாளில் அது எனக்குக் கஃபனாக ஆக வேண்டும் என்பதற்காகவே அதைக் கேட்டேன்!"என்றார். அது அவ்வாறே, அவரின் கஃபனாக ஆனது!

## தச்சர்.

ஹதீஸ் 2094. அபூ ஹாஸிம அவர்கள் கூறினார்கள்.

சில மனிதர்கள் ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களிடம் வந்து நபி(ஸல) அவர்களிம் மிம்பர் பற்றிக் கேட்டனர். அதற்கு ஸஹ்ல்(ரலி),'நபி(ஸல்) அவர்கள் ஒரு பெண்மணியிடம் அப்பெண்மணியின் பெயரை ஸஹ்ல் கூறினார். 'தச்சு வேலை செய்யும் உன்னுடைய பணியாளரிடம் நான் மக்களுக்கு உரையாற்றும்போது அமர்ந்து கொள்வதற்கேற்ற மேடையைச் செய்து தரச் சொல்‘‘ என்று சொல்லி அனுப்பினார்கள். அப்பெண் தம் பணியாளரிடம் இதைக் கூறினார். அப்பணியாளர் ஃகாபா எனும் பகுதியில் உள்ள மரத்தில் அதைச் செய்து வந்தார். அப்பெண் அதை நபி(ஸல்) அவர்களிடம் கொடுத்தனுப்பினார். அதை உரிய இடத்தில் வைக்குமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டு, அதன் மேல் அமர்ந்தார்கள்' என விடையளித்தார்.

ஹதீஸ் 2095. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அன்ஸாரிகளைச் சேர்ந்த ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம்,'நபி அவர்களே! என்னிடம் தச்சுவேலை தெரிந்த ஒரு பணியாளர் இருக்கிறார் நீங்கள் அமர்ந்து கொள்வதற்கேற்ப ஒன்றை நான் உங்களுக்குச் செய்து தரட்டுமா?' என்று கேட்டார். 'உன் விருப்பம்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூற, அப்பெண்மணி நபி(ஸல்) அவர்களுக்காக மிம்பரைத் தயார் செய்தார். வெள்ளிக்கிழமை வந்ததும், அந்த மிம்பரில் நபி(ஸல்) அவர்கள் அமர்ந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் முன்னர் நின்று உரை நிகழ்த்திய பேரீச்ச மரக்கட்டை இரண்டாகப் பிளந்து

விடுமளவிற்குச் சப்தமிட்டது. நபி(ஸல்) அவர்கள் மேடையிலிருந்து இறங்கி அதைத் தொட்டுத் தம்முடன் அணைத்தார்கள். அமைதிப்படுத்தப்படும் குழந்தை அழுவது போல் அது அழுது, அழுகையை நிறுத்தியது. அப்போது நபி(ஸல்) அவர்கள்'போதனையைக் கேட்டதால்தான் அது அழுதது'' என்றார்கள்.

## தலைவர் தமக்குத் தேவையானவற்றைத் தாமே நேரடியாக வாங்குவது.

நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம் ஓர் ஒட்டகத்தை வாங்கினார்கள் என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

இப்னு உமர்(ரலி) தமக்குத் தேவையானதை நேரடியாக வாங்கியிருக்கிறார்.

இணைவைப்பவர் ஒருவர் ஆட்டு மந்தையைக் கொண்டு வந்தபோது அவரிடமிருந்து நபி(ஸல்) அவர்கள் ஓர் ஆட்டை வாங்கினார்கள் என்று அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் ஜாபிர்(ரலி) அவர்களிடம் ஓர் ஒட்டகத்தை விலைக்கு வாங்கியிருக்கிறார்கள்.

ஹதீஸ் 2096. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ஒரு ?தரிடம் கடனாக உணவுப் பொருளை வாங்கினார்கள் தம் கவசத்தை அவரிடம் அடைமானமாக வைத்தார்கள்!"

## கழுதை மற்றும் கால்நடைகளை வாங்குதல்.

உரிமையாளர் ஒட்டகத்தின் மீதோ வேறொரு கால்நடையின் மீதோ அமர்ந்திருக்கும் விலையில் ஒருவர் அதை வாங்கினால், உரிமையாளர் அதிலிருந்து இறங்குவதற்கு முன் அது வாங்கியவரின் கைக்குச் சென்றுவிட்டதாக ஆகுமா?

நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம்'இந்த முரட்டு ஒட்டகத்தை எனக்கு விலைக்குத் தாரும்!"என்றார்கள்.

ஹதீஸ் 2097. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போரில் (பங்கெடுத்துவிட்டுத் திரும்பிக் கொண்டு) இருந்தேன் அப்போது என்னுடைய ஒட்டகம் களைத்து பலமிழந்து போனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது. நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்து.'ஜாபிரா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்!' என்றேன்.'என்ன விஷயம் (ஏன் பின்தங்கிவிட்டீர்)?' என்று கேட்டார்கள்.'என் ஒட்டகம் களைந்து பலமிழந்து போனதால் என்னைப் பின்தங்க வைத்துவிட்டது் அதனால் நான் பின்தங்கி விட்டேன்!' என்றேன். நபி(ஸல்) அவர்கள் கீழே இறங்கி தலைப்பகுதி வளைந்த ஒரு கைத்தடியால் என்னுடைய ஒட்டகத்தைத் தட்டி (எழுப்பி)னார்கள். பிறகு'ஏறுவீராக!' என்றார்கள். நான் (வாகனத்தில்) ஏறினேன். நபி(ஸல்) அவர்களை விட என்னுடைய ஒட்டகம் முந்தாதவாறு அதைக் கட்டுப்படுத்தினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்.'நீர் மணமுடித்து விட்டீரா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்!' என்றேன்.'கன்னியையா? வாழ்ந்த அனுபவமுள்ள பெண்ணைத்தான்!' என்றேன். நபி(ஸல்) அவர்கள்,'கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா? அவள் உம்முடனும் நீர் அவளுடனும் விளையாடலாமே!' என்று கூறினார்கள். நான்,'எனக்குச் (சிறிய வயதுடைய) சகோதரிகள் உள்ளனர்! அவர்களை அரவணைத்து, அவர்களுக்குத் தலைவாரி, அவர்களைப் பராமரிக்கக் கூடிய ஒரு பெண்ணை மணக்க வேண்டும் என்று விரும்பினேன்!' என்றேன். நபி(ஸல்) அவர்கள்'இப்போது ஊருக்கு செல்லப் போகிறீர்! ஊர் சென்றதும் நிதானத்துடன் நடந்து கொள்வீராக!' நிதானத்துடன் நடந்து கொள்வீராக!' என்று கூறிவிட்டு

பின்னர்.'உம்முடைய ஒட்டகத்தை எனக்கு விற்று விடுகிறீரா?' என்றார்கள். நான்'சரி (விற்று விடுகிறேன்!)' என்றேன். அவர்கள் என்னிடமிருந்து, ஓர் ஊக்கியா எடை (தங்கத்து)க்குப் பகரமாக அதை வாங்கினார்கள். பிறகு, எனக்கு முன்பே நபி(ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) சென்றார்கள். நான் மறுநாள் சென்றடைந்தேன். நாங்கள் பள்ளிவாசலுக்கு வந்தபோது அதன் நுழைவாயிலில் நபி(ஸல்) அவர்கள் நின்றிருந்தார்கள்.'இப்போதுதான் வருகிறீரா? என்று அவர்கள் (என்னைப் பார்த்துக்) கேட்டார்கள். நான்'ஆம்!' என்றேன்.'உம்முடைய ஒட்டகத்தைவிட்டுவிட்டு உள்ளே சென்று இரண்டு ரக்அத்துகள் தொழுவீராக!' என்றார்கள். அவ்வாறே, நான் உள்ளே சென்று தொழுதேன். நபி(ஸல்) அவர்கள் எனக்காக ஓர் ஊக்கியா (தங்கத்தை) எடை போடுமாறு பிலால்ல(ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். எனக்காக பிலால்(ரலி) எடை போட்டுச் சற்று தாராளமாகவே நிறுத்தார்கள். பிறகு நான் திரும்பிச் சென்று விட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'ஜாபிரை என்னிடம் அழைத்து வாரும்!' என்றார்கள். நான் (மனத்திற்குள்)'இப்போது என் ஒட்டகம் திருப்பித் தரப்பட்டு விடும் அதைவிட எனக்கு வெறுப்பானது வேறொன்றுமில்லை' என்று கூறிக் கொண்டேன். நபி(ஸல்) அவர்கள்'உம்முடைய ஒட்டகத்தை எடுத்துக் கொள்வீராக! அதனுடைய விலையையும் நீரே வைத்துக் கொள்வீராக!' எனக் கூறினார்கள்.

## அறியாமைக் காலத்தில் இருந்த கடைவீதிகளில் இஸ்லாம் வந்த பிறகும் மக்கள் வியாபாரம் செய்தனர்.

ஹதீஸ் 2098. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

உக்காழ், மஜன்னா, துல்மஜாஸ் ஆகியவை அறியாமைக் காலத்தில் கடைவீதிகளாக இருந்தன. இஸ்லாம் வந்ததும்'அந்த இடங்களில் வியாபாரம் செய்வது பாவம்' என்று மக்கள் கருதினார்கள். அப்போது அல்லாஹ்,'உங்களுடைய இறைவனின் அருளைத் தேடிக் கொள்வது உங்களின் மீது குற்றமாகாது!"என்னும் (திருக்குர்ஆன் 02:198) இறைவசனத்தை அருளினான்.

"இவ்வசனத்துடன்'ஹஜ்ஜுக் காலங்களில்' என்ற வார்த்தையையும் இப்னு அப்பாஸ்(ரலி) சேர்த்து ஓதியிருக்கிறார்கள்!"என்று அம்ர் இப்னு தீனார்(ரஹ்) கூறினார்.

## அடங்காத் தாகமுள்ள ஒட்டகத்தையும் சிரங்கு பிடித்த ஒட்டகத்தையும் வாங்குதல்.

'அடங்காத தாகமுள்ளது' என்பதில் எல்லாப் பொருட்களிலும் நடுத்தரத்துக்கு மாற்றமானவையும் அடங்கும்.

ஹதீஸ் 2099. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இங்கே (மக்காவில்) நவ்வாஸ் என்ற பெயருடைய ஒருவர் இருந்தார். அவரிடம் அடங்காத்தாகமுடைய ஓர் ஒட்டகம் இருந்தது. இப்னு உமர்(ரலி) அந்த ஒட்டகத்தை நவ்வாஸுடைய கூட்டாளி ஒருவரிடமிருந்து வாங்கினார்கள். அந்தக் கூட்டாளி நவ்வாஸிடம் சென்று'அந்த ஒட்டகத்தை நாம் விற்றுவிட்டோம்!"என்றார். நவ்வாஸ்'யாரிடம் விற்றீர்?' என்று கேட்டதற்கு அவர்,'இன்ன பெரியாரிடம் விற்றேன்!"என்றார். அதற்கு நவ்வாஸ்'உமக்குக் கேடு உண்டாகட்டும்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! அந்தப் பெரியவர் இப்னு உமர்(ரலி) தாம்!"என்று கூறிவிட்டு இப்னு உமர்(ரலி) அவர்களிடம் சென்றார்.'என்னுடைய பங்காளி அடங்காத் தாகமுள்ள ஒட்டகத்தை உங்களிடம் விற்றுவிட்டார் அவர் உங்களை யாரென்று அறியவில்லை!"என்று கூறினார். அதற்கு இப்னு உமர்(ரலி)'அப்படியானால், அதை ஓட்டிச்

செல்வீராக!"என்றார்கள். அவர் அதை ஓட்டிச் செல்லமுயன்றதும். இப்னு உமர்(ரலி)'அதைவிட்டுவிடுவீராக!'தொற்று நோய் கிடையாது!' என்ற நபி(ஸல்) அவர்களின் தீர்ப்பை நான் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்கிறேன்! (இந்த நோயுள்ள ஒட்டகத்தினால் என்னுடைய ஏனைய ஒட்டகங்களுக்கு பாதிப்பு ஏற்படாது!)" என்றார்கள்.

## கலவரச் சூழ்நிலையிலும் இதர சூழ்நிலையிலும் ஆயுதங்களை விற்பது.

கலவரச் சூழ்நிலையில் ஆயுதங்கள் விற்பதை இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) வெறுத்திருக்கிறார்கள்.

ஹதீஸ் 2100. அபூ கதாதா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நாங்கள் ஹுனைன் போரின்போது நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டோம். நான் (என்னுடைய) கவசத்தை விற்று. அதைக் கொண்டு பனு ஸலமா குலத்தினர் வசிக்கும் பகுதியில் ஒரு தோட்டத்தை வாங்கினேன். நான் இஸ்லாத்திற்கு வந்த பின் வாங்கிய முதல் சொத்தாகும் அது!"

## கஸ்தூரி மற்றும் நறுமணப் பொருள் வியாபாரம்.

ஹதீஸ் 2101. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"நல்ல நண்பனுக்கும் தீய நண்பனுக்கும் உதாரணம் கஸ்தூரி வைத்திருப்பவரும் கொல்லனின் உலையுமாகும்! கஸ்தூரி வைத்திருப்பவரிடமிருந்து போகாது! நீர் அதை விலைக்கு வாங்கலாம்: அல்லது அதன் நறுமணத்தையாவது பெறலாம்! கொல்லனின் உலை உம்முடைய வீட்டையோ உம்முடைய ஆடையையோ எரித்து விடும் அல்லது அவனிடமிருந்து கெட்ட வாடையை நீர் பெற்றுக் கொள்வீர்!"

என அபூ மூஸா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பவர்.

ஹதீஸ் 2102. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"அபூ தைபா என்பவர் நபி(ஸல்) அவர்களுக்கு இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தார் அவருக்கு நபி(ஸல்) அவர்கள் ஒரு ஸாவு பேரீச்சம் பழம் கொடுக்குமாறு உத்தரவிட்டார்கள். (இரத்தம் குத்தி (உறிஞ்சி) எடுத்த அபூ தைபா (அடிமையாக இருந்தால்) அவரின் எஜமானர்களிடம் அவரின் நிலவரியைக் குறைக்குமாறு உத்தரவிட்டார்கள்!"

ஹதீஸ் 2103. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் (ஒருவரிடம்) இரத்தம் குத்தி எடுத்தார்கள். இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தவருக்குக் (கூலி) கொடுத்தார்கள். அது ஹராமாக (தடை செய்யப்பட்டதாக) இருந்திருந்தால் (அவ்வாறு கூலி) கொடுத்திருக்க மாட்டார்கள்!"

## ஆண்களும் பெண்களும் அணியத் தகாத ஆடைகளை விற்பது.

ஹதீஸ் 2104. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

கோடு போடப்பட்ட (மேலங்கியும் கீழங்கியும் அடங்கிய) ஒரு ஜோடிப் பட்டாடையை உமர்(ரலி) அணிந்திருப்பதைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள்,'இதை நீர் அணிவதற்காக நான் உம்மிடம் அனுப்பவில்லை! (மறுமையின்) பாக்கியமற்றவர்கள் தாம் இதை அணிவார்கள்! நீர் இதைப்

பயன்படுத்திக் கொள்ள வேண்டும் அதாவது விற்க வேண்டும் என்பதற்காகவே உமக்குக் கொடுத்தனுப்பினேன்!”என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2105. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் உருவங்கள் வரையப்பட்ட ஒரு தலையணையை விலைக்கு வாங்கினேன். அதை நபி (ஸல்) அவர்கள் பார்த்துவிட்டு வீட்டிற்குள் வராமல் வாசலில் நின்றுவிட்டார்கள். அவர்களின் முகத்தில் அதிருப்தியை நான் உணர்ந்தேன். அப்போது நான்'நபி அவர்களே! அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் மன்னிப்புக் கேட்கிறேன்! நான் என்ன குற்றம் செய்தேன்?' என்று வினவினேன். நபி (ஸல்) அவர்கள்'இது என்ன தலையணை?' என்று கேட்டார்கள்.'நீங்கள் இதன் மேல் அமர்வதற்காகவும் தலைக்கு வைத்துக் கொள்வதற்காகவும் உங்களுக்காக நான் இதை வாங்கினேன்!”என்றேன். நபி (ஸல்) அவர்கள்,'இந்த உருவங்களை வரைந்தவர்கள் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்கள்'நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள்!”என்று அவர்களிடம் கூறப்படும். எந்த வீட்டில் உருவங்கள் இருக்கின்றனவோ அங்கே வானவர்கள் வர மாட்டார்கள்!”எனக் கூறினார்கள்.

## பொருள் வைத்திருப்பவரே விலை கூறுவதற்கு அதிக உரிமை படைத்தவர்.

ஹதீஸ் 2106. அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“பனு நஜ்ஜார் குலத்தினரே! உங்கள் தோட்டத்தை எனக்கு விலை கூறுங்கள்!”என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதிலே பேரீச்ச மரங்களும் பாழடைந்த கட்டிடங்களும் இருந்தன!“

## வியாபாரத்தை எவ்வளவு நாள்களில் முறித்துக் கொள்ளலாம்?

ஹதீஸ் 2107. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்பவரும் வாங்குபவரும் (வியாபாரம் பேசிய தலத்திலிருந்து) பிரியாமலிருக்கும் வரை வியாபாரத்தை முறித்துக் கொள்ள உரிமை படைத்தவர்களாவர்!'வியாபாரத்தை உத்தரவாத காலத்திற்குள் முறிக்கலாம்' என முன்பே பேசிக் கொண்டால் முறித்துக் கொள்ளலாம்!“

என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

இப்னு உமர் (ரலி) தமக்கு விருப்பமான ஒரு பொருளை வாங்கினால் உடனே விற்றவரைப் பிரிந்து விடுவார் என்று நா∴பிவு கூறுகிறார்.

ஹதீஸ் 2108. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்பவரும் வாங்குபவரும் பிரிவதுவரை (வியாபாரத்தை முறித்துக் கொள்ள) உரிமை உண்டு. “

என ஹகீம் இப்னு ஹிஸாம் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## வியாபாரத்தை முறித்துக் கொள்ள ஒரு காலக்கெடு கூறப்படாவிட்டால் அந்த வியாபாரம் செல்லுமா?

ஹதீஸ் 2109. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்பவரும் வாங்குபவரும் பிரியாமலிருந்தாலும் அல்லது ஒருவர் மற்றவரிடம் (உறுதிப்படுத்துவதோ முறிப்பதோ) உம்முடைய விருப்பம் என்று கூறினாலும் முறித்துக் கொள்ளும் உரிமை படைத்திருக்கிறார்கள். “

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## விற்பவரும் வாங்குபவரும் பிரிவது வரை முறித்துக் கொள்ளும் உரிமை படைத்திருக்கிறார்கள்.

இப்னு உமர்(ரலி), ஷுரைஹ், ஷஅபீ , தாவூஸ், அதா, இப்னு அபீ முலைக்கா ஆகியோர் இவ்வாறே கூறுகின்றனர்.

ஹதீஸ் 2110. '“விற்பவரும் வாங்குபவரும் பிரியும்வரை (முறித்துக் கொள்ளும்) உரிமை படைத்திருக்கிறார்கள். அவ்விருவரும் உண்மை கூறி (பொருளின் குறையை)த் தெளிவுபடுத்தினால் அவர்களின் வியாபாரத்தில் அவர்களுக்கு பரக்கத் செய்யப்படும். அவ்விருவரும் பொய் கூறி(எதையேனும்) மறைத்தால் அவர்களுக்கு வியாபாரத்தின் பரக்கத் நீக்கப்படும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2111. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(எப்போது வேண்டுமானாலும் முறித்துக் கொள்ளலாம் என்று) உரிமை வழங்கப்பட்ட வியாபாரத்தைத் தவிர மற்ற வியாபாரங்களில் விற்பவரும் வாங்குபவரும் பிரியும் வரை ஒவ்வொருவரும் முறித்துக் கொள்ளும் வரை படைத்திருக்கிறார்கள்.“

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## வியாபாரம் முடிந்தபின் ஒருவர் மற்றவருக்கு முறித்துக் கொள்ளும் உரிமை வழங்கினால் (அவர் முறித்துக் கொள்ளாவிட்டால்) வியாபாரம் ஏற்பட்டுவிட்டது.

ஹதீஸ் 2112. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“இரண்டு நபர்கள் ஒருவருக்கொருவர் வியாபாரம் செய்தால் அவ்விருவரும் பிரியாமல் சேர்ந்து இருக்கும் வரை முறித்துக் கொள்ளும் உரிமை படைத்துள்ளார்கள். ஒருவர் மற்றவருக்கு முறித்துக் கொள்ளும் உரிமையை வழங்கி அதை அவர் பயன்படுத்தாமல் இருவரும் ஒப்பந்தம் செய்தால் வியாபாரம் ஏற்பட்டுவிட்டத் இருவரும் ஒப்பந்ததைத் முடித்தபின் வியாபாரத்தை முறிக்காமல் பிரிந்துவிட்டால் அப்போதும் வியாபாரம் ஏற்பட்டுவிட்டது.“

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## விற்பவருக்கு மட்டும் முறித்துக் கொள்ளும் உரிமை வழங்கப்பட்டால் அந்த வியாபாரம் செல்லுமா?

ஹதீஸ் 2113. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்கக் கூடியவரும் வாங்கக் கூடியவரும் பிரியும்வரை அவர்களுக்கிடையே வியாபாரம் ஏற்படவில்லை முறித்துக் கொள்ள உரிமை வழங்கப்பட்டு அதைப் பயன்படுத்தாவிட்டால் தவிர“

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2114. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விற்பவரும் வாங்குபவரும் பிரியும்வரை முறித்துக் கொள்ளும் உரிமை உண்டு' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"விற்பவரும் வாங்குபவரும் உண்மை கூறி (குறைகளைத்) தெளிவுபடுத்தினால் அவர்களின் வியாபாரத்தில் பரக்கத் செய்யப்படும்' அவர்கள் பொய் சொல்லி மறைத்தால் அவர்களுக்கு லாபம் கிடைக்கலாம். ஆனாலும் வியாபாரத்தின் பரக்கத் அழிக்கப்பட்டுவிடும்'' என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

என ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் பதிவு செய்த ஏட்டில் இவ்வாறு இதன்மூன்று முறை உரிமையைப் பயன்படுத்தலாம் என்று உள்ளது என்று ஹம்மாம் கூறுகிறார்.

## ஒருவர் ஒரு பொருளை விலைக்கு வாங்கி, விற்றவர் ஆட்சேபிக்காத நிலையில் இருவரும் பிரிவதற்கு முன்னால் உடனே அன்பளிப்பாக வழங்குதல் ஓர் அடிமையை வாங்கி உடனேயே விடுதலை செய்தல்.

ஒருவர் விற்பவரின் திருப்தியுடன் ஒரு பொருளை வாங்கி, பிறகு அவர் அதை விற்றால் அந்த வியாபாரம் செல்லும் இலாபம் இரண்டாவதாக விற்றவருக்கு உரியது என்று தாவூஸ் கூறுகிறார்.

ஹதீஸ் 2115. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம் நான் (என் தந்தை) உமர்(ரலி) அவர்களுக்குச் சொந்தமான முரட்டு ஒட்டகத்தின் மீது இருந்தேன். அது என்னை மீறிக் கூட்டத்தினருக்கு முன்னால் சென்றது. உமர்(ரலி) அதை அதட்டிப் பழைய இடத்திற்குத் திருப்பியனுப்பினார்கள். மீண்டும் அது முன்னே சென்றது. அப்போதும் உமர்(ரலி) அதை அதட்டிப் பழைய இடத்திற்குத் திருப்பியனுப்பினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம்,'இதை எனக்கு விற்று விடுவீராக!' என்றார்கள். உமர்(ரலி)'நபி அவர்களே! இது தங்களுக்கு உரியது!' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்,'எனக்கு இதை விலைக்குத் தாரும்!"என்றார்கள். உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களுக்கு அதை விற்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்)'உமர் மகன் அப்துல்லாஹ்வே! இது உமக்குரியது! நீர் விரும்பியவாறு இதைப் பயன்படுத்திக் கொள்!"என்றார்கள்.

ஹதீஸ் 2116. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் அமீருல் மூமினீன் உஸ்மான்(ரலி) அவர்களிடம்'வாதில் குரா எனும் இடத்தில் உள்ள என்னுடைய சொத்தை கைபரில் அவருக்கு இருந்த ஒரு சொத்திற்குப் பகரமாக விற்றேன். நாங்கள் வியாபாரம் பேசி முடித்ததும் உடனடியாக அவரின் வீட்டிலிருந்து வெளியேறி, வந்தவழியே திரும்பி விட்டேன்.'அவர்கள் வியாபாரத்தை முறித்து விடுவார்கள்' என்ற அச்சமே இதற்குக் காரணமாகும் (ஏனெனில்)'(வியாபாரம் பேசிய தலத்தைவிட்டுப்) பிரியும் வரை விற்பவருக்கும் வாங்குபவருக்கும் (வியாபாரத்தை) முறித்துக் கொள்ளும் உரிமை உள்ளது' என்பது நபிவழியாக இருந்தது! வியாபாரம் முடிவானதும் அவருக்கு நான் துரோகம் செய்துவிட்டதாகக் கருதினேன் ஏனெனில், மதீனாவிலிருந்து மூன்று இரவுகள் பயணத் தொலைவுள்ள ஸமூது குலத்தார் வசித்த பகுதிக்கு அவரை நான் தள்ளினேன் அவர் (அங்கிருந்து) மூன்று இரவுகள் தொலைவுள்ள மதீனாவுக்கு என்னைத் தள்ளினார்!

## வியாபாரத்தில் மோசடி கூடாது.

ஹதீஸ் 2117. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் தாம் வியாபாரத்தின்போது ஏமாற்றப்படுவதாகக் கூறினார் அதற்கு நபி(ஸல்) அவர்கள்.'நீர் எதையேனும் விற்றால் அல்லது வாங்கினால்'ஏமாற்றுதல் இருக்கக் கூடாது!"என்று கூறிவிடுவீராக! (ஏமாற்றியது தெரியவந்தால் உமக்கு வியாபாரத்தை முறித்துக் கொள்ளும் உரிமையுண்டு!)‘‘ என்றார்கள்.

## கடைவீதிகள்

“நாங்கள் மதீனாவுக்கு வந்தபோது'வியாபாரம் நடைபெறுகிற கடைவீதி ஏதேனும் (இங்கு) உண்டா?' என்று கேட்டேன்.'கைனுக்கா எனும் கடைவீதி இருக்கிறது!"என்று ஸஅத்(ரலி) கூறினார்‘‘ என அப்துர் ரஹ்மான் இப்னு அவ்.:ப்(ரலி) கூறினார்.

“எனக்குக் கடைவீதியைக் காட்டுங்கள்!"என்று அப்துர் ரஹ்மான்(ரலி) கூறினார் என அனஸ்(ரலி) கூறினார்.

“கடை வீதியின் வியாபாரக் கொடுக்கல் வாங்கல்கள் இதை நான் அறிந்திட முடியாமல் என் கவனத்தை திசைதிருப்பிவிட்டன!"என்று உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2118. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“ஒரு படையினர் கஅபாவின் மீது படையெடுப்பார்கள் வெட்ட வெளியான ஒரு பூமியில் அவர்கள் இருக்கும்போது அவர்களில் முதலாமவர் முதல் கடைசி நபர்வரை உயிருடன் பூமிக்குள் புதையுண்டு போவார்கள்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.'நபி அவர்களே! அவர்களில் முதலாமவர் முதல் கடைசி நபர் வரை எவ்வாறு புதையுண்டு போவார்கள்? அங்கே அவர்களைச் சேராதவர்களும் இருப்பார்கள். கடைவீதிகளும் இருக்குமே!"என கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'அவர்களில் முதலாமவர் முதல் கடைசி நபர் வரை புதையுண்டு போகத்தான் செய்வார்கள் எனினும் (அதற்குப்) பின்னர் அவரவரின் எண்ணத்திற்கேற்ப எழுப்பப்படுவார்கள்!"என்றார்கள்.

ஹதீஸ் 2119. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“உங்களில் ஒருவர் ஜமாஅத்துடன் தொழுவது அவரின் வீட்டிலோ கடைவீதியிலோ தனியாகத் தொழுவதை விட இருபதுக்கும் அதிகமான மடங்கு சிறந்ததாகும்! ஏனெனில், அவர் உளூச் செய்து, அதை அழகுறச் செய்து, பிறகு பள்ளிவாசலுக்கு வருகிறார். தொழுகையைத் தவிர வேறு எதையும் அவர் நாடவில்லை தொழுகையைத் தவிர வேறு எதுவும் அவரை (பள்ளி வாசலுக்கு) எழுந்து செல்ல வைக்கவில்லை! அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடிக்கும் ஒரு படித்தரம் (அந்தஸ்து) அவருக்கு உயர்த்தப்படுகிறது் அல்லது ஒரு தவறு அவரைவிட்டு நீக்கப்படுகிறது! மேலும், உங்களில் ஒருவர் தொழக்கூடிய இடத்தில் அமர்ந்திருக்கும் வரை வானவர்கள் அவருக்காக பிரார்த்திக்கின்றனர்! அங்கே, அவரின் காற்றுப்பிரிந்து, உளூ நீங்கிவிடாமலிருக்கும் வரை (பிறருக்குத்) துன்பம் தரும் எதையும் அவர் செய்யாமலிருக்கும் வரை.'இறைவா! இவர் மீது கருணை செய்வாயாக! இவருக்கு இரக்கம் காட்டுவாயாக!' என்று வானவர்கள் பிரார்த்திக்கிறார்கள்! உங்களில் ஒருவர் தொழுகைக்காகக் காத்திருக்கும் வரை அவர் தொழுகையிலேயே இருக்கிறார்!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2120. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் கடைவீதியில் இருந்தார்கள். அப்போது ஒருவர்'அபுல் காஸிமே! (காஸிமின் தந்தையே!)‘‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் அவரை நோக்கித்

திரும்பினார்கள். அவர், (வேறொருவரைச் சுட்டிக் காட்டி)'இவரைத்தான் அழைத்தேன்! (உங்களை அழைக்கவில்லை!)'' என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள்.'என் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளுங்கள்! என்னுடைய சூன்யத்தை ('அபுல் காஸிம்' என்னும் என்னுடைய குறிப்புப் பெயரை) சூட்டிக் கொள்ளாதீர்கள்!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2121. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் பகீஃ எனுமிடத்தில்'அபுல் காஸிமே!' என்று அழைத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அவரை நோக்கித் திரும்பியபோது'உங்களை அழைக்கவில்லை' என்றார். நபி(ஸல்) அவர்கள்'என் பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள். என் சூன்யத்தை ('அபுல்காஸிம்' என்னும் என்னுடைய குறிப்புப் பெயரை) சூட்டிக் கொள்ளாதீர்கள்!"என்றார்கள்.

ஹதீஸ் 2122. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு பகல் நேரத்தில் புறப்பட்டார்கள். அவர்கள் என்னுடன் பேசவில்லை. நானும் அவர்களுடன் பேசவில்லை.'பனு கைனுகா' கடைவீதிக்கு அவர்கள் வந்ததும் ஃபாத்திமா(ரலி) அவர்களின்வீட்டுத் திண்ணையில் அமர்ந்தார்கள்.'இங்கே அந்தப் பொடிப்பையன் இருக்கிறானா?' என்று கேட்டார்கள். ஃபாத்திமா(ரலி) தம் மகனைச் சற்று நேரம் தாமதப்படுத்தினார்.'அவர் தம் மகனுக்கு நறுமண மாலையை அணிவித்துக் கொண்டிருக்கிறார்' என்றோ அல்லது'மகனைக் குளிப்பாட்டிக் கொண்டிருக்கிறார்' என்றோ நான் நினைத்தேன். அப்போது ஃபாத்திமா(ரலி) அவர்களின் மகன் (ஹஸன்(ரலி)) ஓடிவந்தார். உடனே, நபி(ஸல்) அவர்கள் அவரைக் கட்டியணைத்து முத்தமிட்டார்கள்.'இறைவா! இவனை நீ நேசி! இவனை நேசிப்பவர்களையும் நீ நேசி!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2123. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்களின் காலத்தில் மக்கள் உணவுப் பொருட்களைச் சந்தைக்குக் கொண்டுவரும் வியாபாரிகளிடம் வழிமறித்து வாங்கிக் கொண்டிருந்தனர்.'உணவுப் பொருட்களை, விற்பனை செய்யப்படும் இடத்திற்கு (சந்தைக்கு) கொண்டு சென்ற பின்புதான் விற்க வேண்டும். வாங்கிய இடத்திலேயே அவற்றை விற்கக் கூடாது!' என்று வியாபாரிகளைத் தடுப்பதற்காக நபி(ஸல்) அவர்கள் ஆட்களை அனுப்பி வைத்தார்கள்!"

ஹதீஸ் 2124. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"உணவுப் பொருளை வாங்கினால், அது (முழுமையாக) கைக்கு வந்து சேருவதற்கு முன்பு அதை விற்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்!"

## கடைத்தெருவில் கத்திப்பேசி சச்சரவு செய்வது வெறுப்புக்குரியதாகும்.

ஹதீஸ் 2125. அதா இப்னு யஸார்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

நான் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்களைச் சந்தித்து,'தவ்ராத்தில் நபி(ஸல்) அவர்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கும் வர்ணனையை எனக்குச் சொல்லுங்கள்!"என்றேன். அவர்கள்,'இதோ சொல்கிறேன்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! குர்ஆனில் கூறப்படும் அவர்களின் சில பண்புகள் தவ்ராத்திலும் கூறப்பட்டுள்ளன.'நபியே! நிச்சயமாக உம்மை சாட்சியாக அளிப்பவராகவும், நற்செய்தி கூறுபவராகவும், எச்சரிப்பவராகவும், எழுதப் படிக்கத் தெரியாத பாமரர்களின் பாதுகாவலராகவும் நாம் அனுப்பியிருக்கிறோம்! நீர் என்னுடைய அடிமையும் என்னுடைய தூதருமாவீர்! தம் எல்லாக் காரியங்களிலும் இறைவனையே

நம்பியிருப்பவரென்று உமக்கு நான் பெயரிட்டுள்ளேன்!"(இவ்வாறெல்லாம் கூறிவிட்டு, நபி(ஸல்) அவர்களின் அடையாளங்களைக் கூறும் விதத்தில்)'அவர் கடின சித்தம் கொண்டவராகவோ, முரட்டுத்தனமுடையவராகவோ, கடைவீதிகளில் கத்திப் பேசி சச்சரவு செய்பவராகவோ இருக்க மாட்டார்! தீமைக்கு பதிலாகத் தீமையைச் செய்யமாட்டார் மாறாக, மன்னித்து கண்டு கொள்ளாமல்விட்டு விடுவார்! அவர் மூலம் வளைந்த மார்க்கத்தை நிமிர்த்தும் வரை அல்லாஹ் அவ(ரின் உயி)ரைக் கைப்பற்ற மாட்டான்! மக்கள்'லாயிலாஹ இல்லல்லாஹு' என்று கூறுவார்கள் அதன் மூலம் குருட்டுக் கண்களும், செவிட்டுக் காதுகளும், மூடப்பட்ட உள்ளங்களும் திறக்கப்படும்!' என்று அதில் அவர்களைக் குறித்து வர்ணிக்கப்பட்டுள்ளது!"என பதிலளித்தார்கள்.

## அளந்து கொடுப்ப(தற்கான கூலியைத் தருவ)து விற்பவர் மற்றும் ஒப்படைப்பவர் (அல்லது கடனைச் செலுத்துபவர்) மீதும்தான் கடமையாகும்.

அல்லாஹ் கூறினான்.

"இவர்கள் மக்களுக்கு அளந்தோ, நிறுத்தோ கொடுத்தால் குறைத்து விடுகிறார்கள்!"(திருக்குர்ஆன் 83:04)

"(நீங்கள் அளந்து வாங்கும் பொழுது உங்கள் விலையை முழுமையாகப் பெறும் விதத்தில்) நிறைவாக அளந்து வாங்குங்கள்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"நீர் விற்பனை செய்தால் அளந்து கொடும்! நீர் வாங்கினால் அளந்து வாங்கும்!"என்று நபி(ஸல்) அவர்கள் உஸ்மான்(ரலி) அவர்களிடம் கூறினார்கள்.

ஹதீஸ் 2126. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒருவர் உணவுப் பொருளை வாங்கினால் அது (முழுமையாக) அவரின் கைக்கு வந்து சேராமல் அதை அவர் விற்கக் கூடாது!"

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2127. ஜாபிர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஹராம்(ரலி)தான் கடன்பட்ட நிலையில் மரணித்துவிட்டார்கள் அவருக்குக் கடன் கொடுத்தவர்கள் அவரின் கடனில் சிறிது தள்ளுபடி செய்ய வேண்டும் என்பதற்காக நபி(ஸல்) அவர்களின் உதவியை நாடினேன். நபி(ஸல்) அவர்கள் (கடனைத் தள்ளுபடி செய்யுமாறு) கோரியபோது அவர்கள் அதைச் செய்யவில்லை. அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,'நீர் சென்று உம்முடைய பேரீச்சம் பழத்தில் அஜ்வா எனும் ரகத்தைத் தனியாகவும் இப்னு ஸைத் எனும் ரகத்தைத் தனியாகவும் ஒவ்வொரு ரகத்தையும் தனித்தனியாகவும் வகைப்படுத்துவீராக! பிறகு என்னிடம் அனுப்புவீராக!"என்றனர். அவ்வாறு நான் செய்து நபி(ஸல்) அவர்களிடம் அனுப்பினேன். நபி(ஸல்) அவர்கள் வந்து அதன் மேற்புறத்திலோ நடுப்புறத்திலோ அமர்ந்தார்கள். பிறகு என்னிடம்'(கடன் கொடுத்த) இக்கூட்டத்தினருக்கு அளந்து கொடுப்பீராக!"என்றார்கள். அவர்களுக்குக் கொடுக்க வேண்டியதை முழுமையாக நான் அளந்து கொடுத்தேன். என்னுடைய பேரீச்சம் பழத்தில் எதுவும் குறையாமல் அப்படியே மீதமிருந்தது.

மற்றோர் அறிவிப்பில்'பேரீச்சம் குலையை வெட்டிக் கடனை நிறைவேற்று!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உள்ளது.

## அளப்பது விரும்பத்தக்கது.

ஹதீஸ் 2128. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"உங்கள் உணவுகளை அளந்து கொள்ளுங்கள் உங்களுக்கு பரக்கத் செய்யப்படும். "

என மிக்தாம் இப்னு மஃதீ கரிப் அவர்கள் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் காலத்தில் இருந்த ஸாவு, முத்து ஆகியவற்றில் பரக்கத் உள்ளது.

இது பற்றி நபி(ஸல்) அவர்கள் வழியாக ஆயிஷா(ரலி) அறிவிக்கும் ஹதீஸ் உள்ளது.

ஹதீஸ் 2129. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"இப்ராஹீம்(அலை) மக்காவைப் புனித நகராக்கினார்கள். அதற்காக பிரார்த்தித்தார்கள். இப்ராஹீம்(அலை) மக்காவைப் புனித நகராக்கியது போல் நான் மதீனாவைப் புனித நகராக்கினேன். இப்ராஹீம்(அலை) மக்காவிற்காக பிரார்த்தித்தது போல் நான் மதீனாவிற்காக அதன் ஸாவு, முத்து ஆகியவற்றில் (பரக்கத்துக்காக) பிரார்த்தித்தேன். "

என அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2130. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"இறைவா! மதீனாவாசிகளின் முகத்தலளவையில் நீ பரக்கத்தை (அருள் வளத்தை) அளிப்பாயாக! குறிப்பாக அவர்களின் ஸாவு, முத்து ஆகியவற்றில் நீ பரக்கத்தை அளிப்பாயாக!"

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

## உணவுப் பொருட்களை விற்பதும் பதுக்குவதும்.

ஹதீஸ் 2131. இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"குத்துமதிப்பாக உணவுப் பொருட்களை வாங்கிக் கொண்டிருந்த மக்கள், அவற்றைத் தம் இருப்பிடங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்கு முன்பு. வழியிலேயே விற்றதற்காக நபி(ஸல்) அவர்களின் காலத்தில் அடிக்கப்பட்டதை நான் பார்த்துள்ளேன்!"

ஹதீஸ் 2132. தாவூஸ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

'உணவுப் பொருள் கைக்கு வந்து சேர்வதற்கு முன்பு அதை விற்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள்!"என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். 'அது எவ்வாறு?' என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி)'உணவுப் பொருள் அதை வாங்கியவரின் கைக்குப் போய்ச் சேராத (நிலையில் விற்கப்படுவ)தால் இது (உண்மையில்) காசுக்குக் காசை விற்பதாகும்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2133. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒருவர் ஓர் உணவுப் பொருளை வாங்கினால், அது அவரின் கைக்கு (முழுமையாக) வந்து சேரும் வரை அதை அவர் விற்கக்கூடாது!"

என இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2134. ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்:

“யாரிடமாவது சில்லறை இருக்கிறதா?’ என்று மாலிக் இப்னு அவ்ஸ் (ரலி) கேட்டார்கள். அப்போது தல்ஹா (ரலி) ’என்னிடம் இருக்கிறது. என்றாலும் ஃகாபாவிலிருந்து கருவூலக் காப்பாளர் வரும்வரை தரமுடியாது!”என்றார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

“தங்கத்திற்கு வெள்ளியை மாற்றிக் கொள்வது, உடனுக்குடன் மாற்றினாலே தவிர, வட்டியாகும்! தீட்டிய கோதுமைக்குத் தீட்டிய கோதுமையை மாற்றிக் கொள்வதும் வட்டியாகும் உடனுக்குடன் மாற்றினாலே தவிர! பேரீச்சம் பழத்திற்குப் பேரீச்சம் பழத்தை மாற்றிக் கொள்வதும் வட்டியாகும். உடனுக்குடன் மாற்றினாலே தவிர! வாற்கோதுமைக்கு வாற்கோதுமையை மாற்றிக் கொள்வதும் வட்டியாகும் உடனுக்குடன் மாற்றினாலே தவிர!”என உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## உணவுப் பொருள் கைக்கு வந்து சேருவதற்கு முன் அதை விற்பதும் கைவசம் இல்லாததை விற்பதும்.

ஹதீஸ் 2135. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“கைக்கு வந்து சேருவதற்கு முன் விற்கக் கூடாது!”என்று நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தது, உணவுப் பொருட்களுக்குத் தான்! (ஆயினும்) எல்லாப் பொருட்களுக்கும் இவ்வாறுதான் என்று கருதுகிறேன்!“

ஹதீஸ் 2136. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒருவர் உணவுப் பொருட்களை வாங்கினால், அது முழுமையாக அவரின் கைக்கு வந்து சேரும் வரை அதை அவர் விற்கக் கூடாது!“என இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## குத்துமதிப்பாக உணவுப் பொருட்களை வாங்கியவர், அதைத் தம் இருப்பிடத்திற்கு கொண்டு சேர்ப்பதற்கு முன்பு விற்கக் கூடாது என்பதும் அதற்கு முன்பே விற்பவரை தண்டித்து ஒழுக்கம் கற்பிப்பதும்.

ஹதீஸ் 2137. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி (ஸல்) அவர்கள் காலத்தில், குத்துமதிப்பாக உணவுப் பொருட்களை வாங்கிக் கொண்டிருந்த மக்கள், அவற்றைத் தம் இருப்பிடங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்க்காமல் அதே இடத்தில் விற்றதற்காக அடிக்கப்பட்டதை பார்த்திருக்கிறேன்!“

## ஒரு பொருளையோ அல்லது கால் நடையையோ விலைக்கு வாங்குபவர் விற்றவரிடமே அதைவிட்டுவிட்டால் அல்லது கைக்கு வந்து சேருவதற்கு முன் அது இறந்துவிட்டால்..?

“வியாபார ஒப்பந்தம் ஏற்பட்டபோது உயிருடனும் முழுமையாகவும் இருந்தால் அதன் பிறகு ஏற்படும் சேதத்திற்கு வாங்கியவரே பொறுப்பாளி!”என்று இப்னு உமர் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 2138. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (மக்காவில் இருந்த காலத்தில்) காலையிலோ மாலையிலோ என் தந்தை அபூ பக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்கு வராமல் இருந்த நாள்கள் மிகக் குறைவாகவே இருக்கும்!

மதீனாவிற்கு (ஹிஜ்ரத் செய்து) புறப்பட நபி(ஸல்) அவர்களுக்கு அனுமதியளிக்கப்பட்டபோது, நண்பகலில் நபி(ஸல்) அவர்கள் எங்கள் வீட்டிற்கு வந்தது எங்களுக்கு அச்சத்தை ஏற்படுத்தியது. நபி(ஸல்) அவர்கள் வந்திருக்கும் விஷயம் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் கூறப்பட்டது. அபூ பக்ர்(ரலி)'புதிதாக ஏதோ பிரச்சினை ஏற்பட்டிருப்பதால் தான், இந்நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் நம்மிடம் வந்திருக்கிறார்கள்!"என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் வந்ததும்,'உங்களுடன் இருப்பவர்களை வெளியேற்றுங்கள்!"என்று கூறினார்கள்.'நபி அவர்களே! அஸ்மா, ஆயிஷா ஆகிய என்னுடைய இரண்டு புதல்வியர் மட்டுமே உள்ளனர்!"என்று அபூ பக்ர்(ரலி) கூறினார். நபி(ஸல்) அவர்கள்,'(மதீனாவிற்குப்) புறப்பட (ஹிஜ்ரத் செய்ய) எனக்கு அனுமதி அளிக்கப்பட்டுவிட்டது உமக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி)'நபி அவர்களே!'(தாங்கள் புறப்படும் (ஹிஜ்ரத்தின்)போது நானும் தங்களுடன் வர விரும்புகிறேன்!"என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்'நீங்கள் என்னுடன் வருதை நானும் விரும்புகிறேன்!"என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்'நீங்கள் என்னுடன் வருவதை நானும் விரும்புகிறேன்!"என்றார்கள்.'நபி அவர்களே! நான் பயணத்திற்காகத் தயார்படுத்தி வைத்திருக்கும் இரண்டு ஒட்டகங்கள் என்னிடம் உள்ளன் அவற்றில் ஒன்றை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்!' எனக் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்'அதை நான் விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்!"என்றார்கள்.

## ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது, தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிடக் கூடாது் ஒருவர் விலை பேசிக் கொண்டிருக்கும்போது மற்றொருவர் அதிக விலை பேசக் கூடாது் முன்பு விலை பேசியவர் அனுமதித்தால் அல்லது வியாபாரத்தை முறித்துவிட்டால் குறுக்கிடலாம்.

ஹதீஸ் 2139. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது, தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிடக் கூடாது!"

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2140. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"கிராமத்திலிருந்து (விற்பனைக்காகச் சரக்கு கொண்டு) வருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுக் கொடுக்க வேண்டாம்! வாங்கும் எண்ணமின்றி விலை எற்றி விடுவதற்காக அதிக விலைக்குக் கேட்க வேண்டாம்! (விலை உயர்த்தி விற்பதற்காக, அதிக விலைக்குக் கேட்க வேண்டாம்! (விலை உயர்த்தி விற்பதற்காக, ஆளை ஏற்பாடு செய்து, அதிக விலைக்குக் கேட்கச் செய்வதும் கூடாது!) ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது, தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிட வேண்டாம்! ஒருவர் தம் (முஸ்லிம்) சகோதரர் பெண் பேசிக் கொண்டிருக்கும்போது, இடையில் குறுக்கிட்டுப் பெண் பேச வேண்டாம்! ஒரு பெண், தன் சகோதரியை தலாக் (விவாகரத்து செய்து) விடுமாறு (கணவனிடம்) கேட்டுத் தன்னுடைய பாத்திரத்தை நிரப்பிக் கொள்ள வேண்டாம்!"என்று நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்!"

## ஏலத்தில் விற்பது.

"கனீமத் பொருட்களை (ஏலம்விட்டு) அதிக விலைக்குக் கேட்பவரிடம் விற்பதை மக்கள் தவறாகக் கருதவில்லை!"என்று அதா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2141. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் தமக்குச் சொந்தமான அடிமை தம் மரணத்திற்குப் பின் விடுதலையாவார் என்று கூறியிருந்தார். அம்மனிதருக்குப் பொருள் தேவை ஏற்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள் அந்த அடிமையைப் பெற்று, 'இவரை என்னிடமிருந்து வாங்கிக் கொள்பவர் யார்?' என்று கேட்டார்கள். அவரை நுஅய்கி இப்னு அப்தில்லாஹ் (ரலி) இன்ன விலைக்கு வாங்கினார்கள். நபி (ஸல்) அவர்கள், அவரிடம் அந்த அடிமையைக் கொடுத்தார்கள்.

## 'நஜ்ஷ்' வாங்கும் நோக்கமின்றி விலையை உயர்த்தி விடுவதற்காக (ஏலம் மற்றும் பிற பேரங்களின் போது) விலை அதிகமாகக் கேட்பது. (பின் குறிப்பை பார்க்க)

'(மேற்கூறியபடி) மோசடியாக விலையை ஏற்றிவிடுவது செல்லாது' என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

"மோசடியாக விலையை உயர்த்தி விடுபவன் வட்டி உண்பவன் ஆவான்! இது மோசடியாகும்! செல்லாததும் அனுமதிக்கப்படாததாகும்!" என்று இப்னு அபீ அவ்ஃபா (ரலி) கூறினார். (பின் குறிப்பைப் பார்க்க)

"மோசடி செய்பவர் நரகத்தில் இருப்பார்! நம்முடைய கட்டளையில்லாத ஒரு காரியத்தை யாரேனும் செய்தால் அது ஏற்றுக் கொள்ளப்படாது!" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2142. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி (ஸல்) அவர்கள் மோசடியாக ஏலம் விடுவதைத் தடை செய்தார்கள்.

## தன் கட்டுப்பாட்டில் இல்லாதவற்றையும், தன் உடைமையல்லாதவற்றையும் அளவோ, தரமோ, தன்மையோ தெரியாதவற்றையும் விற்பதும் பிறக்காத உயிரினத்தை விற்பதும்.

ஹதீஸ் 2143. இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி (ஸல்) அவர்கள் பிறக்காத உயிரினத்தை விற்பதற்குத் தடை விதித்தார்கள். அறியாமைக் கால மக்கள் இத்தகைய வியாபாரம் செய்து வந்தனர்! 'இந்த ஒட்டகம் குட்டி போட்டு, அந்தக் குட்டிக்குப் பிறக்கும் குட்டியை நான் வாங்கிக் கொள்கிறேன்! (அல்லது விற்கிறேன்!)' என்று செய்யப்படும் வியாபாரமே இது!"

## 'முலாமஸா' எனும் வியாபாரம்.

இதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்ததாக அனஸ் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 2144. அபூ ஸயீத் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி (ஸல்) அவர்கள் 'முனாபதா' வியாபாரத்தைத் தடை செய்தார்கள்! 'முனாபதா' என்பது. ஒருவர் தம் துணியை, வாங்குபவர் விரித்துப் பார்ப்பதற்கு முன் அதை வாங்குபவரை நோக்கி எறிந்து (விட்டால் அதை அவர் வாங்கியாக வேண்டும் என்ற நிபந்தனையுடன்) அவரிடம் விற்பதாகும்! மேலும், 'முலாமஸா' எனும் வியாபாரத்தையும் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்! 'முலாமஸா' என்பது துணியை (விரித்துப் பார்க்காமலேயே அதை) தொட்டவுடன் (வியாபாரம் உறுதியாகிவிடும் என்ற நிபந்தனையுடன்) விற்பனை செய்வதாகும

ஹதீஸ் 2145. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் ஆடை அணியும் முறைகள் இரண்டை தடைசெய்தார்கள். அவற்றுள் ஒன்று. ஒரே துணியைப் போர்த்தி கைகளால் முழங்கால்களைக் கட்டி அமர்வதும் அதையே தோள் புஜத்தில் போட்டுக் கொள்வதுமாகும்! மேலும்'முலாமஸா முனாபதா' என்ற வியாபார முறைகளையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!“

## 'முனாபதா' எனும் வியாபாரம்.

இதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்திருப்பதாக அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2146. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள்'முனாபதா, முலாமஸா' ஆகிய வியாபாரங்களைத் தடை செய்தார்கள்!“

ஹதீஸ் 2147. அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“நபி(ஸல்) அவர்கள் ஆடை அணியும் முறைஇரண்டையும்'முலாமஸா, முனாபதா' என்ற வியாபார முறைகளையும் தடை செய்தார்கள்!“

## ஒட்டகம் மாடு, ஆடு மற்றும் கால்நடைகளை விற்பவர், பாலைக் கறக்காமல் (வைத்திருந்து) கனத்த மடியுடன் காட்டி விற்பனை செய்வது கூடாது.

ஹதீஸ் 2148. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“ஒட்டகம், ஆடு ஆகியவற்றை (அவற்றின் பாலைக் கறக்காமல்விட்டுவைத்திருந்து) மடிகனக்கச் செய்யாதீர்கள்! மடி கனக்கச் செய்த இத்தகைய பிராணிகளை வாங்கியவர் விரும்பினால் பால் கறந்து பார்த்து அதை வைத்துக் கொள்ளலாம்! விரும்பாவிட்டால் ஒரு ஸாவு பேரீச்சம் பழத்துடன் அதை விற்றவரிடமே திருப்பிக் கொடுத்து விடலாம்! இந்த இரண்டில் எதைச் செய்வதற்கும் அவருக்கு அனுமதி உண்டு!“

என அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்'(விரும்பாவிட்டால்) ஒரு ஸாவு உணவுப் பொருளுடன் திருப்பிக் கொடுக்கும் இந்த உரிமை (பிராணியை வாங்கிய நாளிலிருந்து) மூன்று நாள்கள் வரையிலும் தான்!”என்றும் காணப்படுகிறது.

'பேரீச்சம் பழத்தின் ஒரு ஸாவு' என்பதே அதிகமான அறிவிப்புகளில் காணப்படுகிறது.

ஹதீஸ் 2149. இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

“மடி கனக்கச் செய்யப்பட்ட ஓர் ஆட்டை யாரேனும் வாங்கி, அதைக் திருப்பிக் கொடுப்பதாக இருந்தால் அத்துடன் ஒரு ஸாவு பேரீச்சம் பழம் சேர்த்துக் கொடுக்கட்டும்! மேலும், நபி(ஸல்) அவர்கள் (சந்தைக்கு வரும்) வியாபாரிகளை எதிர்கொண்டு (வழியிலேயே சந்தித்து) சரக்குகளை வாங்குவதைத் தடுத்தார்கள்!“

ஹதீஸ் 2150. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“(சரக்குகளை ஏற்றிக் கொண்டு) வாகனத்தில் வருபவர்களை எதிர்கொண்டு (வழியிலேயே சந்தித்து) சரக்குகளை வாங்காதீர்கள்! ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது, தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிடாதீர்கள்! வாங்கும் நோக்கமின்றி விலையை ஏற்றிவிடவேண்டும் என்பதற்காகவே விலைகேட்காதீர்கள்! (ஆளமர்த்தி அவ்விதம் விலைகேட்கச் செய்வதும் கூடாது!) கிராமத்திலிருந்து (சரக்கு கொண்டு) வருபவர்களுக்காக உள்ளூர்வாசிகள்

விற்றுக் கொடுக்க வேண்டாம்!"ஆடுகளின் (பாலைக் கறக்காமல் அவற்றின்) மடியை கனக்கச் செய்யாதீர்கள்! இத்தகைய ஆட்டை ஒருவர் வாங்கிப் பால் கறந்து, திருப்தியடைந்தால் வைத்துக் கொள்ளலாம் திருப்தியடையாவிட்டால் அந்த ஆட்டை ஒரு ஸாவு பேரீச்சம் பழத்துடன் திருப்பிக் கொடுத்து விடலாம்! இவ்விரண்டில் ஒன்றைத் தேர்வு செய்யும் உரிமை வாங்கியவருக்கு உண்டு!' என அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

## மடி கனக்கச் செய்யப்பட்ட பிராணியை வாங்கியவர் விரும்பினால் அதைத் திருப்பிக் கொடுத்து விடலாம் ஆனால், (திருப்பித் தரும்போது) கறந்த பாலுக்காக ஒரு ஸாவு பேரீச்சம் பழம் கொடுக்க வேண்டும்.

2151. 'என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"மடிக கனக்கச் செய்யப்பட்ட ஆட்டை யாரேனும் வாங்கினால் அதில் பால் கறந்து பார்த்துத் திருப்தியடைந்தால் வைத்துக் கொள்ளலாம் திருப்தியடையாவிட்டால் கறந்த பாலுக்காக ஒரு ஸாவு பேரீச்சம் பழம் கொடுக்க வேண்டும்!"

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

## விபச்சாரம் செய்யும் அடிமையை விற்பது.

"விபச்சாரம் செய்யும் அடிமையை வாங்கியவர். விரும்பினால் விற்றவரிடமே திருப்பிக் கொடுத்துவிடலாம்!" என்று ஷு ரைஹ் (ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2152. 'என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஓர் அடிமைப் பெண் விபச்சாரம் செய்து, அது நிரூபணமானால் அவளுக்கு. எஜமானன் கசையடி கொடுக்கட்டும்! (அவளை தண்டித்துவிட்டதால்) குற்றம் சொல்ல வேண்டாம்! பிறகு மறுபடியும் அவள் விபச்சாரம் செய்தால் அவளுக்குக் கசையடி கொடுக்கட்டும்! குற்றம் சொல்ல வேண்டாம்! மூன்றாம் முறையும் விபச்சாரம் செய்தால் அவளை (அவளுடைய எஜமானன்) முடியாலான ஒரு கயிற்றுக்காகவாவது விற்று விடட்டும்!"

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2153 , ஹதீஸ் 2154 அபூ ஹு ரைரா (ரலி) ஸைத்பின் காலித் (ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

"ஓர் அடிமைப் பெண் கற்புடனிருக்காமல் விபச்சாரம் செய்தால்... (என்ன செய்ய வேண்டும்?)" என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள், 'அவள் விபச்சாரம் செய்தால் கசையடி கொடுங்கள் (அதற்குப்) பிறகும் விபச்சாரம் செய்தால் கசையடி கொடுங்கள் மீண்டும் விபச்சாரம் செய்தால் அவளை ஒரு முடிக் கற்றைக்காவது விற்றுவிடுங்கள்!" என்றார்கள்.

"மூன்றாவது நான்காவது முறைக்கு மேல் என்னவென்று நான் அறிய மாட்டேன்!" என்று இப்னு ஷிஹாப் (ரஹ்) கூறினார்.

## ஆண்கள் பெண்களிடம் விற்பதும் வாங்குவதும்.

ஹதீஸ் 2155. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள்: (பரீரா என்ற அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கி விடுதலை செய்வது சம்பந்தமான) விஷயத்தை அவர்களிடம் சொன்னேன். நபி (ஸல்) அவர்கள் 'நீ விலைக்கு வாங்கி விடுதலை செய்! (அந்த அடிமை மரணித்த பின்) அவருக்கு வாரிசாகும் உரிமை, விடுதலை செய்தவருக்குத் தான்!" என்று கூறினார்கள். பிறகு, மாலை

நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் எழுந்து அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்பப் புகழ்ந்து, 'அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத நிபந்தனைகளைக் கூறுபவர்களுக்கு என்ன நேர்ந்தது? யார் அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத நிபந்தனையை விதிக்கிறார்களோ அவர்களின் அந்த நிபந்தனை வீணானது் (செல்லாதது்) அவர்கள் நூறு நிபந்தனைகளை விதித்தாலும் சரியே! அல்லாஹ்வின் நிபந்தனைதான் நிறைவேற்றத் தக்கதும் உறுதியானதும் (கட்டுப்படுத்தும் வலிமையுடையதும்) ஆகும்!" எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 2156. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) (அடிமையாயிருந்த) பரீராவை விலை பேசினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்குச் சென்றார்கள். அவர்கள் வந்ததும் ஆயிஷா(ரலி) 'பரீராவின் எஜமானார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்குச் சென்றார்கள். அவர்கள் வந்ததும் ஆயிஷா(ரலி) 'பரீராவின் எஜாமனார்கள். 'பரீராவுக்கு வாரிசாகும் உரிமையைத் தங்களுக்கு வழங்கினாலே தவிர. அவரை விற்க மாட்டோம்' எனக் கூறுகின்றனர்!" என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'அடிமையின் (மரணத்திற்குப் பின் அவரின்) வாரிசாகும். உரிமை (அவரை) விடுதலை செய்தவருக்குத் தான்!' எனக் கூறினார்கள்.

"அப்பெண்ணின் கணவர் அடிமையாக இருந்தாரா? அல்லது சுதந்திரமானவராக இருந்தாரா?' என்று நா∴பிவு(ரஹ்) அவர்களிடம் கேட்டேன் அதற்கவர் 'எனக்குத் தெரியாது!' என்று பதிலளித்தார்!" என ஹம்மாம்(ரஹ்) கூறினார்.

கிராமத்திலிருந்து (சரக்கு கொண்டு) வருபவருக்காக உள்ளூர் வாசி கூலியேதும் பெறாமல் விற்றுக் கொடுக்கலாமா? அவருக்குத் துணை செய்யலாமா? அவருக்கு அறிவுரை கூறலாமா?

"உங்களில் ஒருவர் தம் சகோதரரிடம் ஆலோசனை கேட்டால் அவருக்கு அச்சகோதரர் ஆலோசனை வழங்கட்டும்!" என்று நபி(ஸல்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்.

"இதற்கு அனுமதி உள்ளது!" என்று அதாவு(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2157. ஜரீர்(ரலி) அறிவித்தார்.

"வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதரவார்கள்' என்று உறுதியாக நம்புதல், தொழுகையை நிலை நாட்டுதல். ஸகாத் கொடுத்தல், தலைவரின் கட்டளைகளைச் செவியேற்றுக் கட்டுப்படுதல், எல்லா முஸ்லிம்களுக்கும் நல்லதை நாடுதல் ஆகிய விஷயங்களை ஏற்றுச் செயல்படுவதாக நபி(ஸல்) அவர்களிடம் நான் உறுதிமொழி கொடுத்தேன்!"

ஹதீஸ் 2158. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"(சந்தைக்கு வரும்) வணிகர்களை இடைமறித்து வாங்காதீர்கள்! கிராமத்திலிருந்து (சரக்கு கொண்டு) வருபவர்களுக்காக உள்ளூர்வாசி விற்றுக் கொடுக்க வேண்டாம்!"

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"கிராமத்திலிருந்து வருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுக் கொடுக்க வேண்டாம்!" என்பதன் பொருள் என்ன?' என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன் அதற்கு அவர்கள் 'இடைத் தரகராக ஆகக்கூடாது! (என்பதுதான் அதன் பொருள்!)' என பதிலளித்தார்கள்" என்று தாவூஸ்(ரஹ்) கூறினார்.

## கிராமத்திலிருந்து (சரக்குக் கொண்டு) வருபவருக்காக உள்ளூர்வாசி கூலி வாங்கிக் கொண்டு விற்றுக் கொடுக்கக் கூடாது.

ஹதீஸ் 2159. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

கிராமத்திலிருந்து (சரக்குக் கொண்டு) வருபவருக்காக உள்ளூர் வாசி விற்றுக் கொடுப்பதை நபி(ஸல்) அவர்கள் தடுத்தனர்.

இவ்வாறே இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## கிராமத்திலிருந்து வருபவருக்காக உள்ளூர்வாசி தரகராக நின்று வாங்கிக் கொடுக்கக் கூடாது.

விற்பவர் வாங்குபவர் இருவருக்குமே இடைத் தரகராக இருக்கக் கூடாது என்று இப்னு ஸீரின், இப்ராஹீம் ஆகியோர் கூறுகின்றனர்.

"அரபியா, 'எனக்கு இந்த ஆடையை வாங்கிக் கொடு!' என்று சொல்வதற்கு 'எனக்கு விற்றுக் கொடு!' என்று கூறுவதற்குப் பயன்படுத்தும் சொல்லை ('பிஃ லீ ஸவ்பன்' என்னும் வாக்கியத்தை) கையாள்வார்கள்!" என இப்ராஹீம்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2160. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிடக் கூடாது! (வாங்கும் நோக்கமின்றி) விலையை உயர்த்த வேண்டும் என்பதற்காகவே விலை கேட்காதீர்கள்! (விலையை உயர்த்துவதற்காக ஆளமர்த்தி அதிக விலை கேட்கச் செய்வதும் கூடாது!) கிராம வாசிகக்காக நகரவாசி விற்றுக் கொடுக்கக் கூடாது!"

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2161. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

"கிராமத்திலிருந்து (சரக்கு கொண்டு) வருபவருக்காக உள்ளூர் வாசி விற்றுக் கொடுக்கக் கூடாது!" என்று எங்களுக்குத் தடைவிதிக்கப்பட்டிருந்தது!"

## (சந்தைக்குச் சரக்கு கொண்டு வரும்) வியாபாரிகளை எதிர்கொண்டு வாங்கக் கூடாது! இத்தகைய வியாபாரம் ரத்து செய்யப்படும் ஏனெனில், இவ்வாறு செய்பவர் அறிந்து கொண்டே செய்தால் அவர் பாவியும் குற்றவாளியுமாவார். இது வியாபாரத்தில் செய்யும் மோசடியாகும். மோசடி கூடாத ஒன்றாகும்.

ஹதீஸ் 2162. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

வணிகர்களை எதிர் கொண்டு வாங்குவதையும் கிராமத்திலிருந்து சரக்குக் கொண்டு வருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுக் கொடுப்பதையும் நபி(ஸல்) அவர்கள் தடுத்தார்கள்.

ஹதீஸ் 2163. தாவூஸ் அறிவித்தார்.

"கிராமத்திலிருந்து வருபவருக்காக உள்ளூர்வாசி விற்றுத் தரக்கூடாது" என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதன் பொருள் என்ன? என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) 'இவர் அவருக்கு இடைத் தரகராகக் கூடாது' என்றார்.

ஹதீஸ் 2164. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

யாரேனும் மடி கனக்கச் செய்யப்பட்ட பிராணியை வாங்கினால் (திருப்பிக் கொடுப்பதாக இருந்தால்) அத்துடன் ஒரு ஸாவு (பேரீச்சம்பழம் அல்லது உணவுப் பொருள்) சேர்த்துக் கொடுக்கட்டும். வியாபாரிகளை எதிர்கொண்டு வாங்குவதை நபி(ஸல்) அவர்கள் தடுத்தனர்.

ஹதீஸ் 2165. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது தாம் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிடக் கூடாது மேலும் விற்பனைப் பொருள்கள் சந்தைக்கு வந்து இறங்கு முன் வாங்காதீர்கள். "

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## வியாபாரிகளை எதிர் கொள்வதற்குரிய எல்லை.

ஹதீஸ் 2166. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (சரக்கு கொண்டுவரும்) வணிகர்களை எதிர்கொண்டு அவர்களிடம் உணவுப் பொருட்களை வாங்குவோம். நபி(ஸல்) அவர்கள் அதைக் கடைவீதிக்குக் கொண்டு செல்லாமல் (அதே இடத்தில்) விற்பதைத் தடை செய்தார்கள்.

வணிகர்களை எதிர்கொண்டது கடைவீதி துவங்கும் இடத்தில்தான் இதைப் பின்வரும் என புகாரி கூறுகிறேன்.

ஹதீஸ் 2167. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"நபித்தோழர்கள் உணவுப் பொருட்களைக் கடை வீதி துவங்கும் இடத்தில் வாங்கி அதே இடத்தில் விற்று வந்தனர் எனவே, கடைத் தெருவுக்குள் கொண்டு செல்லாமல் வாங்கிய இடத்திலேயே விற்பதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!"

## வியாபாரத்தின்போது அனுமதிக்கப்படாத நிபந்தனைகளை விதித்தால்...?

ஹதீஸ் 2168. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(அடிமைப் பெண்ணாயிருந்த) பரீரா என்னிடம் வந்து, 'என்னுடைய எஜமானர்கள் ஆண்டிற்கு ஓர் ஊக்கியா வீதம் ஒன்பது ஊக்கியாக்கள் செலுத்திய பின் என்னை விடுதலை செய்து விடுவதாக எழுதித் தந்துள்ளனர் அதற்கு நீங்கள் உதவ வேண்டும்! என்றார். நான் 'உன் மரணத்திற்குப் பின் உனக்கு வாரிசு தாரராகும் உரிமை எனக்கு இருக்க வேண்டும் என்பதை உன் எஜமானர்கள் ஒப்புக்கொண்டால் அவர்களுக்காக அந்தத் தொகையை நான் ஏற்பாடு செய்து தருகிறேன்!' எனக் கூறினேன். உடனே, பரீரா தம் எஜமானர்களிடம் சென்றார். அவர்களிடம் அவர் இதைக் கூறியபோது, அவர்கள் ஏற்க மறுத்துவிட்டனர். நபி(ஸல்) அவர்கள் அமர்ந்திருக்கும்போது பழீரா, தம் எஜமானர்களிடமிருந்து திரும்பி வந்து, 'விஷயத்தை எஜமானர்களிடம் கூறினேன் அவர்கள் 'வாரிசுரிமை தமக்கே இருக்க வேண்டும்' எனக் கூறி, (நீங்கள் கேட்டதை) நிராகரித்துவிட்டனர்!" என்று கூறினார். இதை நபி(ஸல்) அவர்கள் செவியுற்றார்கள். நானும் நபி(ஸல்) அவர்களிடம் விபரத்தைக் கூறினேன். நபி(ஸல்) அவர்கள். 'பரீராவை நீ வாங்கிக் கொள்! 'வாரிசுரிமை உனக்கே உரியது' என்று அவர்களிடம் உறுதியாகத் தெரிவித்துவிடு! ஏனெனில் (அடிமை இறந்த பின் அவனுக்கு) விடுதலை செய்தவருக்கே உரியது!' எனக் கூறினார்கள். நானும் அவ்வாறே செய்தேன். பின்னர், நபி(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து, அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து, அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத நிபந்தனையும் வீணானதே அவை நூறு நிபந்தனைகளானாலும் சரியே! அல்லாஹ்வின் தீர்ப்பே நிறைவேற்றத்தக்கது! அல்லாஹ்வின் நிபந்தனையே உறுதியானது! (கட்டுப்படுத்தும் வலிமையுடையது!) நிச்சயமாக அடிமைகளுக்கு வாரிசாகும் உரிமை, விடுதலை செய்தவருக்குத் தான்!" எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 2169. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நம்பிக்கையாளர்களின் அன்னையான ஆயிஷா(ரலி) ஓர் அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கி விடுதலை செய்ய விரும்பினார்கள். அடிமைப் பெண்ணின் எஜமானர்கள். 'இவளுக்கு வாரிசாகும் உரிமை எங்களுக்கே இருக்க வேண்டும்' என்ற நிபந்தனையின் அடிப்படையில் உமக்கு விற்கிறோம்!' எனக் கூறினார்கள். இதை ஆயிஷா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கூறியபோது, 'அவர்களின் நிபந்தனை உனக்குத் தடையாக இராது! ஏனெனில் அடிமைகளுக்கு வாரிசாகும் உரிமை (அவர்களை) விடுதலை செய்தவருக்குத்தான்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## பேரீச்சம் பழத்திற்குப் பேரீச்சம் பழம் விற்பது.

ஹதீஸ் 2170. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"கோதுமைக்கு கோதுமையை மாற்றிக் கொள்வது வட்டியாகும் உடனுக்குடக் மாற்றினாலே தவிர! வாற்கோதுமைக்கு வாற்கோதுமையை மாற்றிக் கொள்வதும் வட்டியாகும். உடனுக்குடன் மாற்றினாலே தவிர! பேரீச்சம் பழத்திற்குப் பேரீச்சம் பழத்தை மாற்றிக் கொள்வதும் வட்டியாகும் உடனுக்குடன் மாற்றினாலே தவிர!" என உமர்(ரலி) அறிவித்தார்.

## உலர்ந்த திராட்சைக்கு உலர்ந்த திரட்சையை விற்பதும் உணவுப் பொருளுக்கு உணவுப் பொருளை விற்பதும்.

ஹதீஸ் 2171. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் 'முஸாபனா எனும் வியாபாரத்தைத் தடை செய்தார்கள். 'முஸாபனா' என்பது (மரத்திலுள்ள) பேரீச்சம் பழத்தை அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழத்திற்கு விற்பதும் (கொடியிலுள்ள) திராட்சைப் பழத்தை அளக்கப்பட்ட உலர்ந்த திராட்சைக்கு விற்பதுமாகும்!"

ஹதீஸ் 2172 ~ ஹதீஸ் 2173 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் 'முஸாபனா' எனும் வியாபாரத்தைத் தடை செய்தார்கள். 'முஸாபனா' என்பது, மரத்திலுள்ள பேரீச்சம் பழத்தை முகத்தலளவையில் (அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழத்திற்கு) விற்கும்போது 'அது அதிகமாக இருந்தால் அது என்னைச் சேர்ந்தது் அது குறைந்தாலும் என்னைச் சேர்ந்தது!" என்று கூறி விற்பதாகும்!"

"நபி(ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகளை (தோராயமாக) மதிப்பிட்டு விற்பதற்கு அராயாவில் (மட்டும்தான்) அனுமதி அளித்தார்கள்!" என்று ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார். (அராயாவின் விளக்கம் இல் காண்க)

## வாற்கோதுமைக்கு வாற்கோதுமைக்கு விற்பது.

ஹதீஸ் 2174. மாலிக் இப்னு அவ்ஸ்(ரலி) அறிவித்தார்.

நான் நூறு தீனார்களை (திர்ஹமாக) மாற்றித் தருமாறு கேட்டேன். தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) என்னை அழைத்தார்கள். அவர்களிடம் வியாபாரம் பேசியதும் என்னிடமிருந்து தங்க நாணயங்களைப் பெற்றுக் கொண்டு கையில் வைத்துக் குலுக்கினார்கள். பிறகு '∴காபாவிலிருந்து நம்முடைய கருவூலக் காப்பாளர் வரும் வரை சில்லறை தர முடியாது!" என்றார்கள். இதை உமர்(ரலி) கேட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவரிடமிருந்து சில்லறையைப் பெறாமல் நீர் பிரியக் கூடாது் ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் 'தங்கத்திற்குத் தங்கத்தை மாற்றிக் கொள்வது வட்டியாகும் உடனுக்குடன் மாற்றினாலே தவிர! கோதுமைக்கு கோதுமையை மாற்றிக் கொள்வது வட்டியாகும் உடனுக்குடன் மாற்றிக் கொள்வது வட்டியாகும் உடனுக்குடன் மாற்றினாலே தவிர! பேரீச்சம் பழத்திற்குப் பேரீச்சம் பழத்தை மாற்றிக் கொள்வது வட்டியாகும். உடனுக்குடன் மாற்றினாலே தவிர!" என்று கூறினார்கள்!" என்று உமர்(ரலி) சொன்னார்கள்.

## தங்கத்திற்குத் தங்கத்தை விற்பது.

ஹதீஸ் 2175. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர. வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! தங்கத்திற்கு வெள்ளியையும் வெள்ளிக்குத் தங்கத்தையும் விரும்பியவாறு விற்றுக் கொள்ளுங்கள்."

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வெள்ளிக்கு வெள்ளியை விற்பது.

ஹதீஸ் 2176. ஸாலிம் இப்னு அப்தில்லாஹ் அறிவித்தார்.

உமர்(ரலி) சம்பந்தப்பட்ட முந்தைய ஹதீஸ் போன்று அபூ ஸயீத்(ரலி) இப்னு உமரு(ரலி)க்கு ஒரு ஹதீஸை அறிவித்தார். மற்றொரு சந்தர்ப்பத்தில் அபூ ஸயீதை இப்னு உமர்(ரலி) சந்தித்து, 'நீங்கள் நபி(ஸல்) அவர்கள் வழியாக என்ன அறிவித்தீர்கள்?' என்று கேட்டதற்கு அபூ ஸயீத்(ரலி), 'நாணயம் மாற்றும்போது தங்கத்திற்குத் தங்கத்தையோ வெள்ளிக்கு வெள்ளியையோ மாற்றினால் சரிக்குச் சரியாக இருக்க வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை செவியுற்றுள்ளேன்' என்றார்.

ஹதீஸ் 2177. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! ஒன்றை விட மற்றொன்றை அதிகமாக்கி விடாதீர்கள்! சரிக்கச் சரியாகவே தவிர வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! ஒன்றை விட மற்றொன்றை அதிகமாக்காதீர்கள்! ஒன்று ரொக்கமாகவும் மற்றொன்று தவணையாகவும் இருக்கும் நிலையில் விற்காதீர்கள்!

என அபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.

## தங்க நாணயத்திற்குத் தங்க நாணயத்தைக் கடனுக்கு விற்றல்

ஹதீஸ் 2178 , ஹதீஸ் 2179 அபூ ஸாலிஹ் அஸ் ஸய்யாத்(ரலி) அறிவித்தார்.

"தங்க நாணயத்திற்கு (தீனாருக்கு)த் தங்க நாணயத்தையும் வெள்ளி நாணயத்திற்கு (திர்ஹத்திற்கு) வெள்ளி நாணயத்தையும் விற்கலாம்!' என அபூ ஸயீத்(ரலி) கூறினார். அவரிடம் நான் இப்னு அப்பாஸ்(ரலி) இவ்வாறு கூறுவதில்லையே எனக் கேட்டேன். அதற்கு அபூ ஸயீத்(ரலி) 'நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் நீங்கள் இதை நபி(ஸல்) அவர்கள் வழியாகச் செவியுற்றீர்களா? அல்லது அல்லாஹ்வின் வேதத்தில் பார்த்தீர்களா? என்று கேட்டேன். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) அவ்வாறு நான் கூறவில்லை. என்னைவிட நீங்கள் அல்லாஹ்வின் தூதரைப் பற்றி நன்கறிந்தவர் என்றாலும், கடனில் தவிர வட்டி ஏற்படாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உஸாமா எனக்கு கூறினார் என்று விடையளித்தார் எனப் பதிலளித்தார்.

## தங்கத்திற்கு வெள்ளியைக் கடனாக விற்றல்

ஹதீஸ் 2180, ஹதீஸ் 2181. அபுல் மின்ஹால் அறிவித்தார்.

பராஉ இப்னு ஆஸிப்(ரலி), ஸைத் இப்னு அர்கம்(ரலி) ஆகியோரிடம் நாணயமாற்று பற்றிக் கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் கடனாக வெள்ளிக்குத் தங்கத்தை விற்பதைத் தடை செய்தார்கள் என அவ்விருவரும் பதில் கூறினார். பிறகு இருவரும் மற்றவரைச் சுட்டிக் காட்டி, 'இவர் என்னைவிடச் சிறந்தவர்' என்றனர்.

## தங்கத்திற்கு வெள்ளியை ரொக்கத்திற்கு விற்றல்.

ஹதீஸ் 2182. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் வெள்ளிக்கு வெள்ளியை, தங்கத்திற்குத் தங்கத்தைச் சரிக்கு சரியாகத் தவிர விற்கக் கூடாது என்று தடைவிதித்தார்கள். தங்கத்திற்கு வெள்ளியை நாங்கள் விரும்பியவாறு விற்பதற்கும் வெள்ளிக்குத் தங்கத்தை நாங்கள் விரும்பியவாறு விற்பதற்கும் அனுமதித்தார்கள்.

## 'முஸாபனா' எனும் வியாபாரம்

மரத்திலுள்ள பேரீச்சம் பழத்தை உலர்ந்த பேரீச்சம் பழத்திற்கு விற்பதும் கொடியிலுள்ள

திராட்சையை உலர்ந்த திராட்சைக்கு விற்பதும் அராயா எனும் வியாபாரமும் முஸாபனா எனப்படும்.

நபி(ஸல்) அவர்கள் முஸாபனா முஹாகலா (பயிர் முற்றுவதற்கு முன்பே விற்பனை செய்தல்) ஆகிய வியாபாரங்களைத் தடை செய்ததாக அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2183, ஹதீஸ் 2184 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"மரத்திலுள்ள கனிகள் பலன் உறுதிப்படும் நிலையை அடையும் வரை விற்க வேண்டாம்! மேலும், உலர்ந்த (கொய்யப்பட்ட) கனிகளுக்காக மரத்திலுள்ள கனிகளையும் விற்க வேண்டாம்!.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்கள்.

"இதன் பிறகு நபி(ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகளுக்கு உலர்ந்த அல்லது செங்காயான பேரீச்சங்கனிகளை விற்பதற்கு 'அராயா'வில் அல்லாதவற்றில் அனுமதிக்கவில்லை!' என ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2185. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் முஸாபனாவைத் தடைசெய்தார்கள்! 'முஸாபனா' என்பது மரத்திலுள்ள பேரீச்சங்கனிகளை உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்கு முகத்தலளவையில் விற்பதும் கொடியிலுள்ள திராட்சையை உலர்ந்த திராட்சைக்கு முகத்தலளவையில் விற்பதுமாகும்!"

ஹதீஸ் 2186. அபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் 'முஸாபனா, முஹாகலா' எனும் வியாபாரங்களைத் தடை செய்தார்கள். 'முஸாபனா' என்பது மரங்களின் உச்சிகளிலுள்ள பேரீச்சம் பழங்களை உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்கு (பண்டமாற்று முறையில்) விற்பதாகும்!"

ஹதீஸ் 2187. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் 'முஹாகலா, முஸாபனா' ஆகிய வியாபாரங்களைத் தடை செய்தார்கள்!"

ஹதீஸ் 2188. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகளை குத்துமதிப்பாகக் கணக்கிட்டு விற்பதை அராயாவில் (மட்டும்) அனுமதித்தார்கள்!"

## மரத்திலுள்ள கனிகளைத் தங்கம் அல்லது வெள்ளிக்கு விற்பது.

ஹதீஸ் 2189. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

மரத்திலுள்ள கனிகள் பலன் உறுதிப்படும் நிலையை அடையும் வரை விற்பதற்கு நபி(ஸல்) தடை செய்தார்கள். மேலும், அவற்றில் எதையும் தீனார், திர்ஹம் ஆகியவற்றிற்கே தவிர விற்கக் கூடாது அராயாவைத் தவிர என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2190. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அராயாவில் ஐந்து வஸக் அல்லது அதைவிடக் குறைந்த அளவிற்கு அனுமதி அளித்தார்கள்.

ஹதீஸ் 2191. ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்காக மரத்திலுள்ள கனிகளை விற்பதைத் தடை செய்தார்கள். அராயாவில் (மட்டும்) அதற்கு அனுமதி வழங்கினார்கள். அராயாக்காரர்கள் (அராயா அடிப்படையில் மரங்களைப் பெற்றவர்கள்) மரத்திலுள்ள கனிகளை குத்துமதிப்பதாகக் கணக்கிட்டு விற்கலாம்! அதை வாங்கியவர்கள் செங்காயாக புசிக்கலாம்!

"நபி(ஸல்) அவர்கள் அராயாவில் (மட்டும்) குத்து மதிப்பாக விற்பதற்கு அனுமதி

வழங்கினார்கள். அராயாக்காரர்கள் மரத்திலுள்ள கனிகளை விற்கலாம்! வாங்கியவர்கள் அதைச் செங்காயாக உண்ணலாம்!“ என்று மற்றோர் அறிவிப்பில் சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அறிவித்தார்.

“இந்த அறிவிப்பு (சொற்கள் வேறுபட்டாலும் பொருளில் முதல் அறிவிப்புக்கு) நிகரானதேயாகும்!“ என்று அலீ இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

நான் சிறுவனாக இருக்கும்போது, யஹ்யா (ரஹ்) அவர்களிடம் ‘மக்காவாசிகள், அராயாவுக்கு நபி (ஸல்) அவர்கள் (எந்த நிபந்தனையுமின்றி) அனுமதி வழங்கியதாகக் கூறுகிறார்களே!“ என்று கேட்டேன். யஹ்யா (ரஹ்) அவர்கள் ‘மக்காவாசிகளுக்கு என்ன தெரியும்?‘ என்று கேட்டார்கள். ‘மக்காவாசிகள் ஜாபிர் (ரலி) வழியாக அறிவிக்கப்படும் ஹதீஸை ஆதாரமாகக் காண்பிக்கிறார்களே!“ என்று கூறினேன். இதைக் கேட்டு அவர் மௌனமானார். நான் ஜாபிர் (ரலி) அவர்களைக் குறிப்பிட்டதற்குக் காரணம். அவர் மதீனா வாசியாவார் என்பதேயாகும்!“ என்று சுஃப்யான் (ரஹ்) கூறினார்.

“பலன் உறுதிப்படும் நிலையை அடையும்வரை மரத்திலுள்ள கனிகளை விற்பதைத் தடை செய்தது இந்த அறிவிப்பில் இடம் பெறவில்லையா?‘ என்று சுஃப்யான் (ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்டது. ‘(அது உண்மைதான் என்றாலும் இந்த அறிவிப்பில்) இடம் பெறவில்லை!“ என்று அவர்கள் பதிலளித்தார்கள்.

## அராயாவின் விளக்கம்

ஒருவர் மற்றொருவருக்குப் பேரீச்ச மரத்தின் ஒருபோக விளைச்சலை (அன்பளிப்பாகக்) கொடுத்துவிட்டு, பெற்றவர்கள் பறிக்க வரும்போது சங்கடப்பட்டுக் கொண்டிருந்தார். எனவே, உலர்ந்த பேரீச்சம் பழத்தைக் கொடுத்துவிட்டு மரத்திலுள்ள கனிகளை வாங்குவதற்கு அனுமதிக்கப்பட்டது என்று மாலிக் கூறுகிறார்.

அராயா என்பது ரொக்கமாக உலர்ந்த பேரீச்சம் பழத்தை முகத்தலளவையில் கொடுப்பதில் மட்டுமே ஆகும். குத்துமதிப்பாகக் கொடுப்பதில் ஆகாது என்று இப்னு இத்ரீஸ் கூறுகிறார்.

ஐந்து வஸக் என்ற ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மாவின் அறிவிப்பு இப்னு இத்ரீஸ் (ரலி) உடைய கூற்றை உறுதிப்படுத்துகிறது.

அராயா என்பது ஒருவர் மற்றவருக்கு ஒன்று அல்லது இரண்டு மரங்களை அன்பளிப்பாக வழங்குவதாகும் என இப்னு உமர் (ரலி) கூறினார்.

அராயா என்பது ஏழைகளுக்கு அன்பளிப்பாக வழங்கப்படும் பேரீச்ச மரங்களாகும். ஏழைகள் (கனியும் வரை) காத்திருக்க சக்தி பெற மாட்டார்கள். எனவே, அவர்கள் உலர்ந்த கனிகளுக்காகத் தாம் விரும்பியவாறு விற்றுக் கொள்ளலாம் என்று அனுமதி அளிக்கப்பட்டது என்று சுஃப்யான் இப்னு ஹுஸைன் கூறுகிறார்.

2192. ஸைத் இப்னு ஸாபித் (ரலி) அறிவித்தார்.

அராயாவில் மரத்திலுள்ள கனிகளைக் குத்துமதிப்பாக மதிப்பீடு செய்து உலர்ந்த பழங்களை முகத்தலளவையில் பெற்று விற்பதற்கு அனுமதி அளித்தார்கள்.

அராயா என்பது அனைவருக்கும் தெரிந்த, குறிப்பிட்ட சில பேரீச்ச மரங்களாகும. யாரும் வந்து கனிகளை வாங்கிக் கொள்ளலாம் என்று மூஸா இப்னு உக்பா கூறுகிறார்.

## பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன் மரத்திலுள்ள கனிகளை விற்றல்.

ஹதீஸ் 2193. ஸைத் இப்னு ஸாபித் (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் மக்கள் மரத்திலுள்ள கனிகளை விற்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். பழங்களைப் பறித்து வாங்குபவரிடம் ஒப்படைக்கும் நேரம் வந்ததும் வாங்கியவர், 'இது அழும்விட்டது் இது நோயால் தாக்கப்பட்டிருக்கிறது் இது செங்காயாக இருக்கிறது் இன்னும் பல குறைகள் இருக்கின்றன' எனக் கூறி சச்சரவு செய்வார். நபி(ஸல்) அவர்களிடம் இத்தகைய புகார்கள் பெருத்தபோது 'மரத்திலுள்ள கனிகள் பலன் உறுதிப்படும் நிலையை அடையும் வரை விற்காதீர்கள்!'' என்று ஆலோசனை போல் கூறினார்கள்.

ஸைத் இப்னு ஸாபித்(ரலி), ஸு ரையா எனும் நட்சத்திரம் (தோன்றக் கூடிய, பேரீச்சம் பழம் கனியும் பருவமான இளவேனிற்காலம்) வரும்வரை தம் தோட்டத்திலுள்ள மரங்களின் கனிகளை விற்க மாட்டார்.

'அப்பருவத்தில் செங்காய் எது? பழுத்தது எது? என்று அடையாளம் தெரியும்' என அவரின் மகன் காரிஜா கூறுகிறார்.

ஹதீஸ் 2194. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகள் பலன் உறுதிப்படும் நிலையை அடையும்வரை விற்பதற்குத் தடை விதித்தார்கள். இத்தடை விற்பவருக்கும் வாங்குபவருக்கும் உள்ளதாகும்.

ஹதீஸ் 2195. அனஸ்(ரலி) அறிவித்தார்.

பேரீச்ச மரத்திலுள்ள கனிகள் உண்பதற்கு ஏற்றவாறு சிவக்கும்வரை விற்பதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

ஹதீஸ் 2196. ஸயீத் இப்னு மீனா அறிவித்தார்.

'மரத்திலுள்ள கனிகள் பக்குவம் அடையும் வரை விற்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்' என்று ஜாபிர்(ரலி) கூறினார். அவரிடம் 'பக்குவமாகுதல் என்றால் என்ன?' என்று கேட்கப்பட்டது. அதற்கவர், 'உண்பதற்கு ஏற்றவாறு சிவப்பாகவோ மஞ்சளாகவோ மாறுவது' என விடையளித்தார்:

## பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன் பேரீச்ச மரத்தை விற்பது.

ஹதீஸ் 2197. ஹு மைத் அறிவித்தார்.

'நபி(ஸல்) அவர்கள் பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன் மரத்திலுள்ள கனிகளை விற்பதைத் தடை செய்தார்கள். 'மரத்திலுள்ள கனிகள் பக்குவம் அடையும் வரை பேரீச்ச மரத்தை விற்பதற்குத் தடை செய்தார்கள்' என்று அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார். அவரிடம், 'பக்குவம் அடைவது என்றால் என்ன?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அனஸ்(ரலி), 'சிவப்பாகவோ மஞ்சளாகவோ மாறுவது' என்று விடையளித்தார்.

## பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன் பழங்களை விற்று, அதற்கேதும் ஆபத்து ஏற்பட்டால் விற்றவரே அதற்கு பொறுப்பாளி ஆவார்.

ஹதீஸ் 2198 ~ ஹதீஸ் 2199 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

மரத்திலுள்ள கனிகள் பக்குவம் அடைவது வரை விற்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். நபி(ஸல்) அவர்களிடம் 'பக்குவமடைவது என்றால் என்ன?' என்று கேட்கப்பட்டதற்கு 'சிவக்கும்வரை'' என்று விடையளித்துவிட்டு, 'அல்லாஹ் மரத்திலுள்ள கனிகளை அழித்துவிட்டால்...? எந்த அடிப்படையில் உங்களில் ஒருவர் தம் சகோதரரின் பொருளை எடுத்துக் கொள்ள முடியும்?' எனக் கேட்டார்கள்.

ஒருவர் மரத்திலுள்ள கனிகளைப் பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன் வாங்கி அதற்கேதேனும் தீங்கு ஏற்பட்டால் மரத்தின் உரிமையாளரே அதற்குப் பொறுப்பாளி ஆவார் என்று இப்னு ஷிஹாப் கூறுகிறார்.

“பலன் உறுதிப்படும் நிலை அடையும்வரை மரத்திலுள்ள கனிகளை விற்காதீர்கள் மரத்திலுள்ள கனிகளை உலர்ந்த கனிகளுக்கு விற்காதீர்கள்‘ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## கடனுக்கு உணவுப் பொருள் வாங்குவது.

ஹதீஸ் 2200. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு யூதரிடம் தம் கவசத்தை அடைமானம் வைத்து உணவுப் பொருளைக் கடனாக வாங்கினார்கள்.

## மட்டமான பேரீச்சம் பழத்தை அதைவிடச் சிறந்த பேரீச்சம் பழத்திற்கு விற்பது.

ஹதீஸ் 2201 ∴ 2202 அபூ ஸயீத்(ரலி), அபூ ஹு ரைரா(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதரைக் கைபரின் ஆளுநராக நியமித்தார்கள். அவர் நபி(ஸல்) அவர்களிடம் உயர்ரகப் பேரீச்சம் பழங்களைக் கொண்டு வந்தார். நபி(ஸல்) அவர்கள், ‘கைபரில் உள்ள பேரீச்சம் பழங்கள் அனைத்துமே இதே தரத்திலமைந்தவையா?‘ என்று கேட்டார்கள். அதற்கவர், அல்லாஹ்வின் மீது ஆணையாக! ‘இல்லை இறைத்தூதர் அவர்களே! மட்டமான பேரீச்சம் பழத்தில் இரண்டு ஸாவுக்கு இந்தத் தரமான பேரீச்சம் பழத்தில் ஒரு ஸாவையும், மட்டமான பேரீச்சம் பழத்தில் மூன்று ஸாவுக்கு இந்தப் பேரீச்சம் பழத்தில் இரண்டு ஸாவையும் நாங்கள் வாங்குவோம்‘ எனக் கூறினார். நபி(ஸல்) அவர்கள், ‘இவ்வாறு செய்யாதீர்! மட்டமான பேரீச்சம் பழத்தைக் காசுக்கு விற்று, அந்தக் காசின் மூலம் தரமான பேரீச்சம் பழத்தை வாங்குவீராக!“ எனக் கூறினார்கள்.

## மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பேரீச்ச மரத்தையும் பயிர் செய்யப்பட்ட நிலத்தையும் விற்பதும் வாடகைக்கு விடுவதும்.

ஹதீஸ் 2203. நாஃபிவு(ரஹ்) அறிவித்தார்.

“மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட எந்த மரமாவது அதன் கனிகள் (யாருக்குச் சேரும் என்பது) பற்றிப் பேசப்படாமல் விற்கப்படுமானால் அவை மகரந்தச் சேர்க்கை செய்த(விற்ற)வருக்கே உரியவையாகும்! அடிமையும் பயன்படுத்தப்பட்ட நிலமும் கூட இவ்வாறே ஆகும்!“

ஹதீஸ் 2204. ‘என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“

“மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பேரீச்ச மரத்தை யாரேனும் விற்றால் அதன் கனிகள் விற்றவருக்கே சேரும் வாங்கியவர் (தமக்குச் சேர வேண்டுமென்று) நிபந்தனையிட்டிருந்தால் தவிர!“

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## அறுவடை செய்யப்படாத கதிர்களை (முகத்தலளவையில்) அளக்கப்பட்ட உணவுப் பொருளுக்கு விற்பது.

ஹதீஸ் 2205. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

“நபி(ஸல்) அவர்கள் முஸாப்னாவைத் தடைசெய்தார்கள். ‘முஸாபான‘ என்பது ஒருவரின் தோட்டத்திலுள்ள பேரீச்ச மரத்திலுள்ள கனிகளை அளக்கப்பட்ட உலர்ந்த பேரீச்சம் பழத்திற்கு விற்பதும் கொடியிலுள்ள திராட்சைகளை அளக்கப்பட்ட உலர்ந்த திராட்சைக்கு விற்பதும் கதிர்களிலுள்ள தானியங்களை அளக்கப்பட்ட உணவுப் பொருளுக்கு (பண்டமாற்று முறையில்) விற்பதுமாகும்! இவை அனைத்தையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!“

## பேரீச்ச மரத்தை வேரோடு விற்பது.

ஹதீஸ் 2206. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"ஒருவர் பேரீச்ச மரத்திற்கு மகரந்தச் சேர்க்கை செய்து, அதை வேரோடு விற்றால் மகரந்தச் சேர்க்கை செய்வதருக்கே மரத்தின் கனி சேரும்.. வாங்கியவர் (அதன் கனி தமக்குச் சேர வேண்டும் என்று நிபந்தனையிட்டிருந்தால் தவிர!"

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## மு..காளரா வியாபாரம்.

(பலன் உறுதிப்படும் நிலையை அடைவதற்கு முன்பே கனிகளையும் காய்கறிகளையும் விற்பது.)

ஹதீஸ் 2207. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

முஹாகலா, மு..காளரா, முலாமஸா முனாபதா, முஸாபனா ஆகிய வியாபாரங்களை நபி(ஸல்) அவர்கள் தடுத்தனர்.

ஹதீஸ் 2208. ஹு மைத்(ரஹ்) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் மரத்திலுள்ள கனிகள் பக்குவமடைவதற்கு முன் அவற்றை விற்பதைத் தடை செய்தார்கள்!" என அனஸ்(ரலி) கூறினார். நாங்கள் அனஸ்(ரலி) அவர்களிடம், 'பக்குவமடைதல் என்றால் என்ன?' என்று கேட்டோம். அதற்கவர்கள், 'சிவப்பாக, மஞ்சளாக மாறுவதாகும்!" என்று பதிலளித்தார்கள். மேலும், 'அல்லாஹ் மரத்திலுள்ள கனிகளை அழித்துவிட்டால் 'உம் சகோதரரின் பொருளை எந்த அடிப்படையில் நீர் ஹலாலாக (உண்பதற்கு அனுமதிக்கப்பட்டதாக) கருதுவீர்?' என்றும் கேட்டார்கள்.

## பேரீச்சம் பாளைக் குருத்தை விற்பதும் உண்பதும்.

ஹதீஸ் 2209. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பேரீச்சங் குருத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது அவர்களின் அருகில் நான் இருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'மரங்களில் ஒரு மரமிருக்கிறது் அது மு..மினுக்கு (இறை நம்பிக்கையுடையவனுக்கு) உவமையாகும்!" என்றார்கள். நான் 'அது பேரீச்ச மரம் தான்!" என்று சொல்ல நினைத்தேன். அப்போது, நான் அங்கிருந்தவர்களிலேயே வயதில் சிறியவனாக இருந்தேன்! (அதனால் நான் எதுவும் கூறவில்லை.) நபி(ஸல்) அவர்கள் 'அது பேரீச்சமரம்!" என்று கூறினார்கள்.

## வியாபாரம், வாடகை, அளவை, நிறுவை ஆகியவற்றில் மக்களுடைய வட்டார வழக்கப்படியும் அவர்களின் எண்ணப்படியும் நடைமுறைப்படுத்துதல்.

"உங்கள் வழக்கப்படி உங்கள் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளுங்கள்!" என்று நெசவாளிகளிடம் ஷு ரைஹ்(ரஹ்) கூறினார்கள்.

"பத்துக்கு வாங்கியதை பதினொன்றுக்கு விற்பதில் தவறில்லை செலவிட்டதற்காக இலாபத்தை அடைந்து கொள்ளலாம்!" என்று முஹம்மத்(ரஹ்) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள அபூ சு..ப்யானின் மனைவி ஹிந்த்(ரலி) அவர்களிடம், 'உனக்கும் உன் குழந்தைகளுக்கும் போதுமானதை நியாயமான முறையில் உன் கணவரிடமிருந்து எடுத்துக் கொள்!" என்று கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

"அவர் ஏழையாக இருந்தால் நியாயமான அளவு சாப்பிட்டுக் கொள்ளட்டும்!" (திருக்குர்ஆன்

4:06)

ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு மிர்தாஸிடமிருந்து, ஒரு கழுதையை வாடகைக்கு வாங்கினார்கள். 'கழுதைக்குரிய வாடகை என்ன?' என்று ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் கேட்டபோது, அப்துல்லாஹ் இப்னு மிர்தாஸ் 'ஒரு திர்ஹத்தில் மூன்றில் ஒரு பங்கு!" என்றார். ஹஸன் (ரஹ்) அவர்கள் (ஒப்புக் கொண்டு) வாகனத்தில் ஏறிச் சென்றார்கள். பிறகு, மற்றொரு முறை ஹஸன் (ரஹ்) அவர்கள் வந்தார்கள். கழுதை வாடகைக்கு வேண்டுமென்று கேட்டு, வாடகை பேசாமல் அதில் ஏறிச் சென்றார்கள். எனவே, அரை திர்ஹத்தை அவருக்கு வாடகையாகக் கொடுத்து அனுப்பினார்கள்.

ஹதீஸ் 2210. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

(அடிமையாயிருந்த) அபூ தைபா (ரலி), நபி (ஸல்) அவர்களுக்கு இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தார். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் ஒரு ஸாவு பேரீச்சம் பழம் கொடுக்குமாறு கட்டளையிட்டார்கள். மேலும், அவரின் எஜமானார்களிடம் அவர் செலுத்த வேண்டியுள்ள அன்றாட வரியைக் குறைக்குமாறும் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 2211. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

முஆவியா (ரலி) அவர்களின் தயார் ஹிந்த் (ரலி), நபி (ஸல்) அவர்களிடம், '(என் கணவர்) அபூ சுஃப்யான் கஞ்சராக இருக்கிறார் அவரின் பொருளை அவருக்குத் தெரியாமல் நான் எடுத்தால் என் மீது அது குற்றமாகுமா?' எனக் கேட்டார்கள். அதற்கு, 'உனக்குப் போதுமானதை நியாயமான முறையில் நீயும் உன் மக்களும் எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2212. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

"(அவ்வநாதைகளின் சொத்துக்களுக்குக் காப்பாளராகப் பொறுப்பேற்றவர்) செல்வந்தராக இருந்தால் (அச்சொத்திலிருந்து ஊதியம் பெறுவதைத்) தவிர்த்துக் கொள்ளட்டும்! அவர் ஏழையாக இருந்தால் நியாயமான அளவு சாப்பிட்டுக் கொள்ளட்டும்!" என்ற (திருக்குர்ஆன் 04:06) இறை வசனம், அநாதைகளை (நிர்வகித்து, அவர்களின் செல்வத்தை)ப் பராமரிக்கும் காப்பாளர்களின் விஷயத்தில் அருளப்பட்டது. அவர் ஏழையாக இருந்தால் நியாயமான முறையில் (தம் உழைப்பிற்குக் கூலியாக) அனாதைகளின் பொருளை உண்ணலாம்.

## இருவருக்குச் சொந்தமான சொத்தை இருவரில் ஒருவர் மற்றவருக்கு விற்றல்.

ஹதீஸ் 2213. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

"பங்காளிக்குத்தான் விற்க வேண்டும் என்ற நிலை பிரிக்கப்படாத ஒவ்வொரு சொத்திலும் உள்ளது; எல்லைகள் வகுப்பட்டுப் பாதைகள் குறிக்கப்பட்டிருந்தால் பங்காளிக்குத்தான் விற்கவேண்டும் என்ற நிலை இல்லை' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் விதித்தார்கள்.

## பிரிக்கப்படாத நிலம், கட்டங்கள் மற்றும் உடைமைகளை விற்றல்.

ஹதீஸ் 2214. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

"பங்காளிக்குத்தான் விற்க வேண்டும் என்ற நிலை பிரிக்கப்படாத ஒவ்வொரு சொத்திலும் உள்ளது; எல்லைகள் வகுக்கப்பட்டுப் பாதைகள் குறிக்கப்பட்டிருந்தால் பங்காளிக்குத்தான் விற்க வேண்டும் என்ற நிலை இல்லை' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் விதித்தார்கள்.

## ஒருவர் மற்றவருக்காக அவரின் அனுமதியின்றி ஒரு பொருளை வாங்கும்போது மற்றவர் அதில் திருப்தியுறுவது.

ஹதீஸ் 2215. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்"

“(முன்காலத்தில்) மூன்று மனிதர்கள் நடந்து சென்றனர். அப்போது மழை பொழிந்தது. அவர்கள் மலையில் உள்ள குகையில் நுழைந்தனர். ஒரு பெரிய பாறை உருண்டு வந்து குகை வாசலை அடைத்தது. அப்போது அவர்கள் தமக்குள், ‘நீங்கள் செய்த நல்லறங்களில் மிகச் சிறந்ததைக் கூறி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘ என்றனர்.

அவர்களில் ஒருவர், ‘இறைவா எனக்கு வயது முதிர்ந்த பெற்றோர் இருந்தனர் நான் ஆடு மேய்க்க வெளியே சென்றுவிட்டுப் பிறகு வந்து, பால் கறந்து, பால் பாத்திரத்தைப் பெற்றோர்களிடம் கொண்டு வருவேன். அவர்கள் அருந்துவார்கள். பிறகு குழந்தைகளுக்கும் குடும்பத்தாருக்கும் என் மனைவிக்கும் கொடுப்பேன். ஓர் இரவு தாமதமாக வந்தேன். பெற்றோர் உறங்கிவிட்டனர். அவர்களை எழுப்புவதை நான் விரும்பவில்லை. குழந்தை பசியால் என் காலடியில் அழுதனர். விடியும்வரை இதே நிலை நீடித்தது. இறைவா! நான் இதை உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருப்பதாக நீ அறிந்தால் நாங்கள் வானதைப் பார்க்கும் வகையில் ஓரிடை வெளியை ஏற்படுத்து‘ எனக் கூறினார். அவ்வாறு (பாறை விலம்) இடைவெளி உண்டானது.

மற்றொருவர், ‘இறைவா! என்னுடைய தந்தையின் உடன் பிறந்தாரின் மகளை எந்த ஆணும் எந்தப் பெண்ணையும் விரும்புவதைவிட அதிகமாக விரும்பினேன் என்பதை நீ அறிவாய். அவள் தனக்கு நூறு தீனார் தரும்வரை தன்னை அடையமுடியாது என்றாள். நான் உழைத்து நூறு தீனாரைத் திரட்டினேன். அவளுடைய இரண்டு கால்களுக்கிடையே நான் அமர்ந்தபோது அல்லாஹ்வை அஞ்சிக்கொள்! உரிய முறையின்றி முத்திரையை உடைக்காதே! என்று அவள் கூறினாள். உடனே அவளைவிட்டு நான் எழுந்து விட்டேன். இதை உன்னுடைய திருப்தியை நாடி நான் செய்திருப்பதாக நீ அறிந்தால் இந்தச் சிரமத்தைவிட்டு நீக்கு‘ எனக் கூறினார். அல்லாஹ் அவர்களைவிட்டும் மூன்றில் இரண்டு மடங்கு (சிரமத்தை) நீக்கினான்.

மற்றொருவர், ‘இறைவா நான் மூன்று ஸாவு கேழ்வரகு கூலிக்கு ஒரு வேலையாளை அமர்த்தினேன். கூலியை நான் கொடுத்தபோது அதை அவர் மறுத்துவிட்டார். அந்தக் கேழ்வரகைப் பயிர் செய்தேன். அதன் வருமானத்தில் மாடுகளையும் அதை மேய்ப்பவரையும் விலைக்கு வாங்கினேன். பிறகு அவர் வந்து, அல்லாஹ்வின் அடிமையே! என்னுடைய கூலியைக் கொடு! என்றார். இந்த மாடுகள், அதை மேய்ப்பவர்கள் எல்லாம் உமக்குரியவை் எடுத்துச் செல்லும் என்று கூறினேன். அதற்கவர் என்னைக் கேலி செய்கிறீரா? என்று கேட்டார். நான் உம்மைக் கேலி செய்யவில்லை இவை உமக்குரியவைதான் எனக் கூறினேன். இறைவா! இதை நான் உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருப்பதாக நீ அறிந்தால் எங்களைவிட்டு இந்தச் சிரமத்தை நீக்கு‘ எனக் கூறினார். முழுமையாகச் சிரமம் விலகியது.“

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## இணைவைப்போர்களிடமும் எதிரிகளிடமும் விற்பதும் வாங்குவதும்.

ஹதீஸ் 2216. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது உயரமான, தலை பரட்டையான, இணை வைப்பவரான ஒருவர் தம் ஆடுகளை ஓட்டி வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘இது விற்பனைக்கா? அல்லது (யாருக்கேனும்) அன்பளிப்பாகக் கொடுப்பதற்காகவா?‘ என்று கேட்டார்கள். அவர், ‘விற்பதற்குத் தான்‘ எனக் கூறினார். அவரிடமிருந்து நபி(ஸல்) அவர்கள் ஓர் ஆட்டை வாங்கினார்கள்.

## எதிரிகளிடமிருந்து அடிமைகளை விலைக்கு வாங்குவதும் அன்பளிப்புச் செய்வதும் அந்த அடிமைகளை விடுதலை செய்வதும்.

நபி(ஸல்) அவர்கள் ஸல்மான் ஃபார்ஸி(ரலி) அவர்களிடம், ‘உம்முடைய எஜமானரிடம் (உமக்குரிய விலையை சம்பாதித்துத் தந்து விடுதலை ஆம்விடுவதாக எழுதிக் கொடுத்து) ‘முகாதபா‘ செய்து கொள்வீராக!“ எனக் கூறினார்கள்.

ஸல்மான்(ரலி) முன்னர் சுதந்திரமானவராக இருந்தார்கள். அவர்களை அநியாயமாகப் பிடித்து விற்றுவிட்டனர். அம்மார்(ரலி) ஸு ஹைப்(ரலி), பிலால்(ரலி) ஆகியோரும் சிறைப்பிடிக்கப்பட்டு அடிமையானவர்களே!

அல்லாஹ் கூறினான்:

“அல்லாஹ் உங்களில் சிலரை, வேறு சிலரை விடச் செல்வத்தில் மேம்படுத்தி இருக்கிறான் இவ்வாறு மேம்படுத்தப்பட்டவர்கள், தங்களின் செல்வத்தை, தம் ஆதிக்கத்தில் இருப்பவர்களிடம் கொடுத்து, ‘அவர்களும் இவர்களுடைய செல்வத்தில் சமமான உரிமை உள்ளவர்கள்‘ என்று ஆக்கி விடுவதில்லை (அவ்வாறிருக்க) அல்லாஹ்வின் அருட்கொடையையா இவர்கள் மறுக்கின்றனர்?‘ (திருக்குர்ஆன் 16:71)

ஹதீஸ் 2217. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“இப்ராஹீம்(அலை) அவர்கள் ஸாராவுடன் நாடு துறந்தார்கள். மன்னன் ஒருவன் அல்லது கொடுங்கோலன் ஒருவன் - ஆட்சி புரிந்த ஓர் ஊருக்குள் இருவரும் நுழைந்தனர். ‘அழகான ஒரு பெண்ணுடன் இப்ராஹீம் வந்திருக்கிறார்!“ என்று (மன்னனிடம்) கூறப்பட்டது. மன்னன், இப்ராஹீம்(அலை) அவர்களை அழைத்துவரச் செய்து, ‘இப்ராஹீமே! உம்முடன் இருக்கும் இந்தப் பெண் யார்?‘ எனக் கேட்டான். இப்ராஹீம்(அலை) ‘என் சகோதரி‘ என்றார்கள். பிறகு ஸாராவிடம் திரும்பிய இப்ராஹீம்(அலை), ‘நீ என் கூற்றைப் பொய்யாக்கி விடாதே! நீ என் சகோதரி என்று நான் அவர்களிடம் கூறியிருக்கிறேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! உன்னையும் என்னையும் தவிர இந்தப் பூமியில் இறைநம்பிக்கையாளர் யாரும் இல்லை‘ என்றார்கள். பிறகு ஸாராவை மன்னனிடத்தில் அனுப்பினார்கள். அவன், அவரை நோக்கி எழுந்தான். ஸாரா எழுந்து உளூச் செய்து தொழுதுவிட்டு, ‘இறைவா! நான் உன்னையும் உன் தூதரையும் நம்பிக்கை கொண்டிருந்தால், என்னுடைய பெண்மையைக் கணவனைத் தவிர மற்றவர்களிடமிருந்து காப்பாற்றியிருந்தால் இந்தக் காஃபிரை என்னை ஆட்கொள்ள விடாதே!‘ என்று பிரார்த்தித்தார். உடனே அவன் கீழே விழுந்து (வலிப்பினால்) கால்களால் உதைத்தான். மன்னனின் நிலையைக் கண்ட ஸாரா, ‘இறைவா! இவன் செத்துவிட்டால் நானே இவனைக் கொன்றேன் என்று மக்கள் கூறுவர்‘ என்று கூறியவுடன் மன்னன் பழைய நிலைக்கு மீண்டு மறுபடியும் ஸாராவை நெருங்கினான். சாரா எழுந்து உளூச் செய்து தொழுதுவிட்டு, ‘இறைவா! நான் உன்னையும் உன் தூதரையும் நம்பிக்கை கொண்டிருந்தால், என்னுடைய பெண்மையைக் கணவனைத் தவிர மற்றவர்களிடமிருந்து காப்பாற்றியிருந்தால் இந்தக் காஃபிரை என்னை ஆட்கொள்ள விடாதே!‘ என்று பிரார்த்தித்தார். உடனே அவன் கீழே விழுந்து கால்களால் உதைத்தான். மன்னனின் நிலையைக் கண்ட ஸாரா, ‘இறைவா! இவன் செத்துவிட்டால் நானே இவனைக் கொன்றேன் என்று மக்கள் கூறுவர் என்று பிரார்த்தித்தார். இப்படி மன்னன் இரண்டு அல்லது மூன்று முறை வீழ்ந்து எழுந்து, ‘அல்லாஹ்வின் மீது ஆணையாக! என்னிடம் ஒரு ஷைத்தானைத்தான் அனுப்பியிருக்கிறீர்கள். எனவே, இவரை இப்ராஹீமிடம் அழைத்துச் செல்லுங்கள். இவருக்கு (பணிப்பெண்ணான) ஆஜரைக் கொடுங்கள்‘ என்று (அவையோரிடம்) சொன்னான். ஸாரா இப்ராஹீம்(அலை) இடம் திரும்பி வந்து, அல்லாஹ் இந்தக் காஃபிரை வீழ்த்தி, நமக்குப் பணிபுரிய ஓர் அடிமைப் பெண்ணையும் தந்துவிட்டான் என்பது உங்களுக்குத் தெரியுமா?‘ என்று கேட்டார். “

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2218. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி), அப்து இப்னு ஸம்ஆ(ரலி) ஆகிய இருவரும் ஓர் இளைஞன் விஷயத்தில் வழக்கு கொண்டு வந்தனர். ‘இறைத்தூதர் அவர்களே! இந்த இளைஞன் என் சகோதரர் உத்பா இப்னு அபீ வக்காஸின் மகனாவார். என் சகோதரர் (அவரின் மரணத்தின் போது) என்னிடம் இதை வலியுறுத்திக் கூறினார். இந்த இளைஞன் அவரைப் போன்றே இருப்பதை நீங்கள் கவனியுங்கள்‘ என்று ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) கூறினார்.

அவ்விளைஞனிடம் தெளிவாக உத்பாவின் சாயலைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் அப்துபின் ஸம்ஆ(ரலி) அவர்களிடம், 'அப்தே! ஒரு பெண் யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே அவள் பெற்றெடுத்த குழந்தை உரியது! விபச்சாரம் செய்தவருக்கு இழப்புதான் உரியது!' எனக் கூறினார்கள். பிறகு தம் மனைவி ஸவ்தா(ரலி) அவர்களிடம், 'ஸவ்தாவே! இந்த இளைஞனிடத்தில் நீ ஹிஜாபைப் பேணிக்கொள்!" என்று கூறினார்கள். அதற்குப் பிறகு ஸவ்தா(ரலி) ஒருபோதும் அந்த இளைஞரைக் கண்டதில்லை.

ஹதீஸ் 2219. இப்ராஹீம் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் தந்தை) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) ஸுஹைப்(ரலி) அவர்களிடம், 'நீர் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்வீராக! உம் தந்தையல்லாதவரைத் தந்தை எனச் சொல்லாதீர்!' எனக் கூறினார்கள். அதற்கு ஸுஹைப்(ரலி), 'என் தந்தையைல்லா அவரைத் தந்தை என்று நான் சொல்வதற்காக எவ்வளவு பொருட்களைக் கொடுத்தாலும் ஒப்பமாட்டேன் என்றாலும், நான் சிறுவனாக இருக்கும்போது திருடப்பட்டு விட்டேன்! (அதனால் என் தந்தை யார் என்று தெரியவில்லை!)" எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 2220. உர்வா இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்.

ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! அறியாமைக் காலத்தில் என் சுற்றத்தாருடன் நல்லுறவு, அடிமைகளை விடுதலை செய்தல், தர்மம் செய்தல் ஆகிய நல்லறங்களைச் செய்து வந்தேன் இவற்றிற்கு எனக்குக் கூலி உண்டா?' எனக் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நீர் செய்த நற்செயல்(களுக்கான நற்கூலி)களுடனேயே நீர் இஸ்லாத்தை ஏற்றுள்ளீர்!" என்றார்கள்.

## இறந்த மிருகத்தின் பதப்படுத்தப்படாத தோல்கள்.

ஹதீஸ் 2221. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு செத்த ஆட்டைக் கடந்து சென்றபோது, 'இதன் தோலை நீங்கள் பயன்படுத்தக் கூடாதா?' என்று கேட்டார்கள். நபித்தோழர்கள் 'இது செத்த ஆடாயிற்றே!" என்றனர். அதற்கு 'அதை உண்பதுதான் தடை செய்யப்பட்டுள்ளது!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## பன்றிகளைக் கொல்வது.

நபி(ஸல்) அவர்கள் பன்றி வியாபாரத்தை (ஹராமாக்கித்) தடை செய்தார்கள்.

ஹதீஸ் 2222. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"என் உயிர் எவன் கைவசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! மர்யமுடைய மகன் (ஈஸா) உங்களிடம் நேர்மையான (தீர்ப்பு சொல்லும்) நீதிபதியாக இறங்கவிருக்கிறார்! அவர் சிலுவையை முறிப்பார்! பன்றியைக் கொல்வார்! ஜிஸ்யாவை (வரியை) நீக்குவார்! (அந்நாளில்) வாங்குவதற்கு ஆளில்லாத அளவிற்குச் செல்வம் பெருக்கெடுத்து ஓடும்!"

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## செத்தவற்றின் கொழுப்பை உருக்கக் கூடாது அவற்றின் (இறைச்சியிலிருந்து வடியும்) திரவக் கொழுப்பை விற்கக் கூடாது

இதுபற்றி நபி(ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸை ஜாபிர்(ரலி) அறிவித்திருக்கிறார்.

ஹதீஸ் 2223. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் மதுவை விற்பதாக அறிந்த உமர்(ரலி), 'அவரை அல்லாஹ் சபிப்பானாக! யூதர்களுக்குக் கொழுப்பு ஹராமாக ஆக்கப்பட்டபோது, அதை உருக்கி அவர்கள் விற்றதால் அல்லாஹ் அவர்களை அழிப்பானாக என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை அவர் அறியவில்லையா?' எனக்

கேட்டார்.

ஹதீஸ் 2224. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"யூதர்களை அல்லாஹ் சபிப்பானாக! அவர்களுக்குக் கொழுப்பு ஹராமாக்கப்பட்டபோது அதைவிற்று அதன் கிரயத்தை அவர்கள் சாப்பிட்டார்கள்."

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## உயிரில்லாதவற்றின் உருவங்களை விற்பதும் விற்கத்தகாத உருவங்களும்.

ஹதீஸ் 2225. ஸயீத் இப்னு அபில் ஹஸன் அறிவித்தார்.

நான் இப்னு அப்பாஸ்(ரலி) உடன் இருந்தபோது ஒருவர் வந்து, 'அப்பாஸின் தந்தையே! நான் கைத்தொழில் செய்து வாழ்க்கை நடத்தும் ஒரு மனிதன். நான் உருவங்களை வரைகிறேன்' எனக் கூறினார். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி), 'நபி(ஸல்) அவர்களிடம் நான் செவியுற்றதையே உமக்கு அறிவிக்கிறேன். 'யாரேனும் ஓர் உருவத்தை வரைந்தால் வரைந்தவர் அதற்கு உயிர் கொடுக்கும்வரை அல்லாஹ் அவரை வேதனை செய்வான் அவர் ஒருக்காலும் அதற்கு உயிர் கொடுக்க முடியாது" என்று நபி(ஸல்) அவர்கள் கூற செவியுற்றுள்ளேன்' என்றார். கேட்டவர் அதிர்ச்சியுடன் பெருமூச்சுவிட்டார். அவரின் முகம் (பயத்தால்) மஞ்சள் நிறமாக மாறியது. அப்போது இப்னு அப்பாஸ்(ரலி), 'உமக்குக் கேடு உண்டாகட்டும்! நீர் உருவம் வரைந்துதான் தீர வேண்டும் என்றால் மரம் மற்றும் உயிரற்றவற்றை வரைவீராக!' என்றார்.

## மதுபான வியாபாரம் (மதுபானத்தை விற்பதோ வாங்குவதோ) ஹராமாகும்.

மதுபான வியாபாரத்தை (மது விற்பதையும் வாங்குவதையும்) நபி(ஸல்) அவர்கள் ஹராமாக்கியதாக ஜாபிர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2226. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

பகரா அத்தியாயத்தின் (வட்டியைத் தடை செய்யும் வசனத்திலிருந்து இறுதி வசனம் வரை இறங்கியபோது நபி(ஸல்) அவர்கள் (மக்களிடம்) வந்து, 'மதுபான வியாபாரம் ஹராமாக்கப்பட்டுவிட்டது!" என்றார்கள்.

## சுதந்திரமானவரைப் பிடித்து விற்பது குற்றமாகும்.

ஹதீஸ் 2227. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"மறுமை நாளில் மூவருக்கெதிராக நான் வழக்காடுவேன்' என்று அல்லாஹ் கூறினான். ஒருவன் என் பெயரால் சத்தியம் செய்துவிட்டு, அதில் மோசடி செய்தவன் இன்னொருவன் சுதந்திரமான ஒருவரை விற்று அந்தக் கிரயத்தைச் சாப்பிட்டவன் மூன்றாமவன் ஒரு கூலியாளிடம் வேலை வாங்கிக் கொண்டு கூலி கொடுக்காமல் இருந்தவன்!"

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## யூதர்களை மதீனாவிலிருந்து வெளியேற்றியபோது அவர்களின் நிலத்தை விற்குமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டது.

இதுபற்றி அபூ ஹுரைரா(ரலி) வழியாக ஒரு (நபிமொழி) அறிவிப்பு உள்ளது.

## உயிரினத்திற்கு பதிலாக உயிரினத்தையும் அடிமைக்கு பதிலாக அடிமையையும் கடனாக (பிறகு தருவதாக) விற்பது.

'ஒட்டகத்தின் சொந்தக்காரர் தம் சொந்தப் பொறுப்பில் ரப்தா எனுமிடத்தில் அதைத் தம்மிடம் ஒப்படைக்க வேண்டும்' என்ற நிபந்தனையின் அடிப்படையில், இப்னு உமர்(ரலி) நான்கு ஒட்டகங்களைக் கொடுத்து பயணம் செய்தவற்கேற்ற ஓர் ஒட்டகத்தை விலைக்கு

வாங்கினார்கள்.

“சில நேரங்களில் ஓர் ஒட்டகம் இரண்டு ஒட்டகங்களை விடச் சிறந்ததாக இருக்கலாம்!“ என இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்.

ரா∴பிவு இப்னு கதீஜ் (ரலி) இரண்டு ஒட்டகங்களுக்குப் பகரமாக ஓர் ஒட்டகத்தை வாங்கினார்கள். அப்போது, ஓர் ஒட்டகத்தை மட்டும் கொடுத்துவிட்டு, ‘மற்றொன்றை அல்லாஹ் நாடினால் தாமதமின்றி நாளை உம்மிடம் தருகிறேன்!“ என்று கூறினார்கள்.

“இரண்டு ஒட்டகத்திற்கு ஓர் ஒட்டகம் இரண்டு ஆட்டிற்கு ஒர் ஆடு என்று கடனாக வாங்கினாலும் உயிரினத்தில் வட்டி என்பதில்லை!“ என்று இப்னுல் முஸய்யப் (ரஹ்) கூறினார்.

“இரண்டு ஒட்டகத்திற்கு ஓர் ஒட்டகத்தைக் கடனாக வாங்குவதும் ஒரு திர்ஹத்துக்கு ஒரு திர்ஹத்தைக் கடனாக வாங்குவதும் தவறில்லை!“ என்று இப்னு ஸீரீன் (ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2228. அனஸ் (ரலி) அறிவித்தார்.

“(கைபர் போரில் பிடிக்கப்பட்ட) கைதிகளில் ஸ∴பிய்யா (ரலி) அவர்களும் ஒருவராவார். அவர்கள் (முதலில்) திஹ்யா அல் கல்பி (ரலி) அவர்களுக்கு (போர்ச் செல்வத்தில் ஒரு பங்காகக்) கிடைத்தார்கள். பின்பு நபி (ஸல்) (அவர்கள் தங்களின் பங்காக அவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள) அவர்களுக்கு உரியவர்களாய் ஆம்விட்டார்கள்!“ (பார்க்க: பின்குறிப்பு)

## அடிமைகளை விற்பது.

ஹதீஸ் 2229 அபூ ஸயீத் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருக்கும்போது, ‘இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு (பெண்) போர்க் கைதிகள் கிடைக்கின்றனர். அவர்களை நல்ல விலைக்கு விற்க நாங்கள் விரும்புவதால் (அவர்களுடன் உடலுறவு கொள்ளும் போது) நாங்கள் அஸ்ல் (உடலுறவின் போது) பெண்குறிக்குள் விந்தைச் செலுத்தாமல் வெளியேவிட்டுவிடும் செயலைச்) செய்யலாமா?‘ என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ‘அப்படியா நீங்கள் செய்கிறீர்கள்? இதைச் செய்யாமலிருப்பது உங்களின் மீது கடமையல்ல! (அதாவது, நீங்கள் இப்படிச் செய்வதற்குத் தடை ஏதுமில்லை ஆயினும், அஸ்ல் செய்யாமலிருப்பதே மேலானதாகும்!) ஏனெனில், உருவாக வேண்டுமென்று அல்லாஹ் விதித்துள்ள எந்த உயிரும் உருவாகாமல் இருப்பதில்லை!“ என்று கூறினார்கள். (பார்க்க: பின்குறிப்பு)

## “என் மரணத்திற்குப் பின், நீ விடுதலையடைந்து விடுவாய்!“ என்று உரிமையாளரால் வாக்களிக்கப்பட்ட அடிமையை விற்பது.

ஹதீஸ் 2230. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

“என்னுடைய மரணத்திற்குப் பின் நீ விடுதலையடைந்து விடுவாய்!“ என்று உரிமையாளரால் வாக்களிக்கப்பட்ட அடிமையை நபி (ஸல்) அவர்கள் விற்றார்கள்!“

ஹதீஸ் 2231. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

“என்னுடைய மரணத்திற்குப் பின் நீ விடுதலையடைந்து விடுவாய்!“ என்று உரிமையாளரால் வாக்களிக்கப்பட்ட அடிமையை நபி (ஸல்) அவர்கள் விற்றார்கள்!“

ஹதீஸ் 2232 , ஹதீஸ் 2233 ஸைத் இப்னு காலித் (ரலி), அபூ ஹுரைரா (ரலி) ஆகிய இருவரும் கூறினார்கள்:

நபி (ஸல்) அவர்களிடம், விபச்சாரம் செய்கின்ற, திருமணமாகாத அடிமைப் பெண்ணைப் பற்றிக் கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் ‘அவளுக்குக் கசையடி கொடுங்கள்! மீண்டும் அவள் விபச்சாரம் செய்தால் மீண்டும் அவளுக்குக் கசையடி கொடுங்கள்! மூன்றாவது முறை அல்லது நான்காவது முறை விபச்சாரம் செய்தால் அதன் பிறகு அவளை விற்று விடுங்கள்!“ என்று

பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2234. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"உங்களில் ஒருவரின் அடிமைப் பெண் விபச்சாரம் செய்து, அது நிரூபணமானால் தண்டனையாக அவளுக்குக் கசையடி கொடுங்கள்! அவளைக் குறை கூற வேண்டாம்! மீண்டும் விபச்சாரம் செய்தால் தண்டனையாகக் கசையடி கொடுங்கள்! அவளைக் குறை சொல்ல வேண்டாம்! பிறகு மூன்றாம் முறை விபச்சாரம் செய்து, அது நிரூபணமானால் முடியாலான ஒரு கயிற்றுக்காவது அவளை விற்று விடுங்கள்!"

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

## ஒருவருக்கு அடிமைப் பெண் கிடைத்தால் அவளுடைய கருப்பையில் குழந்தை இல்லை என்பதை உறுதி செய்வதற்கு முன் அவளுடன் பயணம் செய்யலாமா?

"அவளைக் கட்டியணைப்பதும் முத்தமிடுவதும் தவறில்லை!" என ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

"பிறரால் உடலுறவு கொள்ளப்பட்ட அடிமைப் பெண் அன்பளிப்பாகக் கிடைத்தாலோ, விற்கப்பட்டாலோ, விடுதலை செய்யப்பட்டாலோ (புதிய எஜமானன்) அவளுடைய கருப்பையில் கரு இல்லையென்பதை ஒரு மாதவிடாய் மூலம் உறுதி செய்து கொள்ளட்டும்! கன்னிப் பெண்ணுக்கு இது அவசியம் இல்லை!" என்று இப்னு உமர் (ரலி) கூறினார்.

"ஒருவர் பிறரால் கர்ப்பமான தம் அடிமைப் பெண்ணை உடலுறவைத் தவிர மற்ற காரியங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்! 'மேலும் அவர்கள் (இறைநம்பிக்கையாளர்கள் எத்தகையவர்கள் எனில்) தங்கள் மனைவியரிடமோ, தங்களுக்குச் சொந்தமான அடிமைப் பெண்களிடமோ தவிர வெட்கத்தலங்களைப் பாதுகாத்துக் கொள்வார்கள்!" என இறைவன் கூறுகிறான்" (திருக்குர்ஆன் 23:06) என்று அதாவு (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2235. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் கைபருக்கு (ப் படையெடுத்து) வந்து, அல்லாஹ் (கமூஸ்) கோட்டையை அவர்களுக்குத் திறந்துவிட்டபோது, ஸஃபிய்யா பின்த் ஹு யை என்பவரின் அழகு பற்றிக் கூறப்பட்டது. புது மணப்பெண்ணாக இருந்த அவரின் கணவர் கொல்லப்பட்டுவிட்டார். அவரை நபி (ஸல்) அவர்கள் (போர்ச் செல்வத்தில்) தம் பங்காகப் பெற்றார்கள். அவரை (மணந்து) நபி (ஸல்) அவர்கள் தம்முடன் அழைத்துச் சென்றார்கள். 'சத்துர்ரவ்ஹா' எனுமிடத்தை நாங்கள் அடைந்தபோது அவர் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்தார். நபி (ஸல்) அவர்கள் அவருடன் உறவு கொண்டார்கள். பிறகு (பேரீச்சம் பழம், நெய், பாலாடைக் கட்டி ஆகியவற்றைக் கலந்து) 'ஹைஸ்' எனப்படும் ஓர் உணவைத் தயாரித்து சிறிய தோல்விரிப்பில் வைத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் (என்னிடம்) 'உம்மைச் சுற்றியுள்ளவர்களுக்கு அறிவியும்!" என்றார்கள். ஸஃபிய்யா (ரலி) அவர்களை மணந்ததற்காக நபி (ஸல்) அவர்கள் வழங்கிய மணவிருந்ததாக அது அமைந்தது! பிறகு நாங்கள் மதீனாவை நோக்கிப் புறப்பட்டோம். நபி (ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மேல் ஒரு போர்வை (போன்ற அங்கி)யால் ஸஃபிய்யா (ரலி) அவர்களைச் சுற்றி திரை அமைத்தார்கள். பிறகு ஒட்டகத்தின் அருகில் அவர்கள் அமர்ந்தார்கள். ஸஃபிய்யா (ரலி), நபி (ஸல்) அவர்களின் முழங்கால் மீது தம் காலை வைத்து ஒட்டகத்தில் ஏறினார்கள்.

## செத்தவற்றையும் உருவச் சிலைகளையும் விற்பது.

ஹதீஸ் 2236. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது, நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் மதுபானம், செத்தவை, பன்றி, உருவச் சிலைகள் ஆகியவற்றை விற்பனை செய்வதைத் தடை செய்துள்ளனர்!" என்று கூறினார்கள். அப்போது அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! செத்தவற்றின் கொழுப்புகள் கப்பல்களுக்குப் பூசப்படுகின்றன. தோல்களுக்கு அவற்றின் மூலம்

மெருகேற்றப்படுகிறது; மக்கள் விளக்கெரிக்க அவற்றைப் பயன்படுத்துகின்றனர் எனவே, அதைப் பற்றிக் கூறுங்கள்!' எனக் கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'கூடாது! அது விலக்கப்பட்டது!' எனக் கூறினார்கள். அப்போது தொடர்ந்து, 'அல்லாஹ் யூதர்களை சபிப்பானாக! அல்லாஹ் யூதர்களுக்குக் கொழுப்பை ஹராமாக்கியபோது, அவர்கள் அதை உருக்கி விற்று, அதன் கிரயத்தை சாப்பிட்டார்கள்!" என்று கூறினார்கள்.

## நாய் விற்ற காசு

ஹதீஸ் 2237. அபூ மஸ்வூத் அன்ஸாரி(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் நாய் விற்ற காசையும் விபச்சாரியின் கூலியையும் சோதிடரின் தட்சணையையும் தடை செய்தார்கள்!"

ஹதீஸ் 2238. அவ்ன் இப்னு அபீ ஜு ஹைஃபா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

"என் தந்தை (அபூ ஜு ஹைஃபா(ரலி)) இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பதைத் தொழிலாகக் கொண்ட ஓர் அடிமையை விலைக்கு வாங்கி, அவரின் தொழிற் கருவிகளை உடைக்கும்படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே, அவை உடைக்கப்பட்டன. அதுபற்றி நான் அவர்களிடம் கேட்டபோது, 'நபி(ஸல்) அவர்கள் இரத்தத்தின் கிரயம் (இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பதற்காகப் பெறுகிற கூலி), நாயின் கிரயம், அடிமைப் பெண்ணின் சம்பாத்தியம் ஆகியவற்றைத் தடுத்தார்கள். பச்சை குத்திக் கொள்பவளையும், பச்சை குத்தி விடுபவளையும், வட்டி உண்பவனையும் (உயிரினங்களின்) உருவம் வரைபவனையும் சபித்தார்கள்!' என்று பதிலளித்தார்கள்!

## அத்தியாயம் 35 ஸலம்

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

### (பொருளைப் பிறகு பெற்றுக் கொள்வதாகக் கூறி விலைபேசி, முன்னரே விலையைக் கொடுத்து விடுவது)

### ஸலமில் நிர்ணயிக்கப்பட்ட அளவைக் கூற வேண்டும்.

ஹதீஸ் 2239. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது, மக்கள் ஒரு வருடம், இரண்டு ஆண்டுகளில் (பொருளைப்) பெற்றுக் கொள்வதாக, பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுத்து வந்தனர். நபி (ஸல்) அவர்கள், 'ஒருவர், (குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பெற்றுக் கொள்வதாக) பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுத்தால் குறிப்பிட்ட எடைக்காகவும் குறிப்பிட்ட அளவுக்காகவும் கொடுக்கட்டும்!" என்று கூறினார்கள்.

"ஒரு வருடம், இரண்டு ஆண்டுகளில்" என்றோ, 'இரண்டு ஆண்டுகள் அல்லது மூன்று ஆண்டுகளில்" என்றோ தனக்கு அறிவிக்கப்பட்டதாக அறிவிப்பாளர் இஸ்மாயீல் இப்னு உலய்யா (ரஹ்) சந்தேகத்துடன் கூறுகிறார்கள்.

### ஸலமில் நிர்ணயிக்கப்பட்ட எடையைக் கூற வேண்டும்.

ஹதீஸ் 2240. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது மக்கள் இரண்டு, மூன்று ஆண்டுகளில் பேரீச்சம் பழத்தைப் பெற்றுக் கொள்வதாக (ஒப்புக் கொண்டு, அதற்காக) முன்பணம் கொடுத்து வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள், 'ஒருவர் ஒரு பொருளுக்கு முன்பணம் கொடுத்தால், அளவும் எடையும் தவணையும் குறிப்பிடப்பட்ட பொருளுக்காக (மட்டுமே) கொடுக்கட்டும்!" என்றார்கள்.

ஹதீஸ் 2241. இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) வந்தபோது, (ஸலம் பற்றி குறிப்பிடுகையில்) 'அளவும் எடையும் தவணையும் குறிப்பிடப்பட்ட பொருளில்தான் அது அனுமதிக்கப்படும்!" என்றார்கள்.

ஹதீஸ் 2242 ✓ ஹதீஸ் 2243 இப்னு அபில் முஜாலித் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

"அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத் (ரலி) அவர்களும் அபூ புர்தா (ரலி) அவர்களும் ஸலாம் விஷயத்தில் கருத்து வேறுபட்டார்கள். அப்போது, என்னை இப்னு அபீ அஃவ்பா (ரலி) அவர்களிடம் அனுப்பினார்கள். அவர்களிடம் சென்று நான் இது பற்றிக் கேட்டேன். அதற்கவர்கள், 'நாங்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்திலும் கோதுமை வாற்கோதுமை, உலர்ந்த

திராட்சை, உலர்ந்த பேரீச்சை ஆகியவற்றிற்காக முன்பணம் கொடுத்து வந்தோம்!"என்றார்கள். பிறகு இப்னு அப்ஸா(ரலி) அவர்களிடம் கேட்டேன் அவர்களும் இவ்வாறே கூறினார்கள்!"

## தோட்டம் துரவு மற்றும் விவசாய நிலம் இல்லாதவர்களிடம் விளைபொருட்களுக்காக முன்பணம் கொடுத்தல்.

ஹதீஸ் 2244 , ஹதீஸ் 2245 முஹம்மத் இப்னு அபில் முஜாலித்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத் (ரலி) அவர்களும், அபூ புர்தா(ரலி) அவர்களும் என்னை அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களிடம் அனுப்பி,'நபி(ஸல்) அவர்கள் காலத்தில் நபித்தோழர்கள் கோதுமைக்காக முன்பணம் கொடுத்திருக்கிறார்களா?' என்று கேள்!"என்றனர். (அவ்வாறே நான் கேட்ட போது) அப்துல்லாஹ் இப்னு அபீ அஃவ்பா(ரலி),'கோதுமை, வாறகோதுமை, ஸைத்தூன் (ஆலிவ்) எண்ணெய் ஆகியவற்றிற்காக அளவும் தவணையும் குறிப்பிட்டு, ஷாம் வாசிகளான'நபீத்' எனும் குலத்தாரிடம் நாங்கள் முன்பணம் கொடுத்து வந்தோம்! என்றார்.'தோட்டம் துரவும் விவசாய நிலமும் யாரிடம் இருக்கிறதோ அவரிடமா?' என்று கேட்டேன். அதற்கவர்கள்,'நாங்கள் அதுபற்றி விசாரிக்கமாட்டோம்!"என்றார்கள். பிறகு, அவ்விருவரும் என்னை அப்துர் ரஹ்மான் இப்னு அப்ஸா(ரலி) அவர்களிடம் அனுப்ப, அவர்களிடம் சென்று நான் கேட்டபோது,'நபி(ஸல்) அவர்களின் காலத்தில் நபித்தோழர்கள் பொருட்களுக்கு முன்பணம் கொடுத்து வந்தனர் (முன்பணம் பெறுபவர்களிடம்)'அவர்களுக்குத் தோட்டம் துரவு அல்லது விவசாய நிலம் இருக்கிறதா' என்று நாங்கள் கேட்க மாட்டோம்!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2246. அபுல் பக்தரி(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

பேரீச்சம் பழத்திற்காக முன்பணம் கொடுப்பது பற்றி இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள்,'பேரீச்ச மரத்திலுள்ள கனிகள் உண்ணும் பக்குவத்தை அடையும் முன்பும் அதை எடை போடுவதற்கு முன்பும் அவற்றை விற்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்!"என்று கூறினார்கள். அப்போது ஒருவர்.'(மரத்திலுள்ளதை) எவ்வாறு எடை போடுவது?' என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டார். அவர்களுக்க அருகிலிருந்த மற்றொரு மனிதர்'எடை போடுவதன் கருத்து (அதன் எடை இவ்வளவு இருக்கும் என்று) மதிப்பிடுவதாகும்!"என்றார்.

## பேரீச்சம் பழத்தில் ஸலம்

ஹதீஸ் 2247 , ஹதீஸ் 2248 அபுல் பக்தரி(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

பேரீச்சம் பழத்தில்'ஸலம்' வியாபாரம் செய்வது குறித்து இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள்,'மரத்திலுள்ள கனிகளைப் பக்குவடையும் வரை விற்பது தடை செய்யப்பட்டுள்ளது மேலும், (தங்கத்திற்கு) வெள்ளியைக் கடனாக (பிறகு தருவதாக) விற்பதும் தடை செய்யப்பட்டுள்ளது!"என்றார்கள். பேரீச்சம் பழத்தில்'ஸலம்' வியாபாரம் செய்வது குறித்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன்.'மரத்திலுள்ள கனிகள் உண்ணும் பக்குவத்தை அடையும் வரையிலும், எடைபோடப்படும் வரையிலும் அவற்றை விற்பதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!"என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2249 , ஹதீஸ் 2250 அபுல் பக்தரி(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

பேரீச்சம் பழத்தில்'ஸலம்' வியாபாரம் செய்வது குறித்து இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள்'மரத்திலுள்ள கனிகள் பக்குவமடையும் வரை விற்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்! மேலும், (தங்கத்திற்கு) வெள்ளியைக் கடனாக விற்பதையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!"என்றார்கள்.

பேரீச்சம் பழத்தில்'ஸலம்' வியாபாரம் செய்வது குறித்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன்.'மரத்தின் கனிகள் உண்ணும் பக்குவத்தை அடையும் முன்பும் எடை போடப்படும் முன்பும் விற்பதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!"என்றார்கள். அப்போது ஒருவர்'மரத்திலுள்ளதை எவ்வாறு எடைபோடுவது?' என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டார். அருகிலிருந்த மற்றொரு மனிதர்'எடை போடுவதன் கருத்து (இவ்வளவு எடை இருக்கும் என்று) மதிப்பிடுவதாகும்!"என்றார்கள்.

## ஸலமிற்குப் பிணைப் பொருளைத் தருதல்.

ஹதீஸ் 2251. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்

"நபி(ஸல்) அவர்கள் ஒரு ?தரிடம் உணவுப் பொருளை (குறிப்பிட்ட காலத்திற்குப்) பிறகு பெற்றுக் கொள்வதாக வாங்கினார்கள் (அதற்கான பிணைப்பொருளாக) தம் இரும்புக் கவசத்தை அந்த ?தரிடம் அடைமானம் வைத்தார்கள்!"

## ஸலமில் அடைமானம் வைத்தல்.

ஹதீஸ் 2252. ஆயிஷா(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"நபி(ஸல்) அவர்கள் ?தர் ஒருவரிடம் குறிப்பிட்ட தவணையில் (குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பெற்றுக் கொள்வதாக) உணவுப் பொருளை வாங்கினார்கள் (அதற்காக) அந்த ?தர், நபி(ஸல்) அவர்களிடமிருந்து இரும்புக் கவசத்தை அடைமானமாகப் பெற்றார்!"

## ஸலமில் தவணை குறிப்பிடுதல்.

இப்னு அப்பாஸ்(ரலி), அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி), அஸ்வத்(ரஹ்), ஹஸன் பஸரீ(ரஹ்) ஆகியோர் இவ்வாறு ('முதலில் பணத்தைப் பெற்று, குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பொருளைத் தருவதாகக் கூறி விற்பதற்கே'ஸலம்' என்று சொல்லப்படும்' என்று)தான் கூறுகின்றனர்.

"விலையும் தவணையும் குறிப்பிட்ட உணவுப் பொருட்களுக்கு முன்பணம் கொடுப்பது தவறில்லை! பலன் உறுதிப்படுத்தப்பட்ட பயிர்களில் மட்டுமே இவ்வாறு செய்யலாம்!"என இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2253. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்தபோது, மக்கள் இரண்டு மூன்று ஆண்டுகளில் கனிகளைப் பெற்றுக் கொள்வதாக முன்பணம் கொடுத்து வந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அளவும் தவணையும் குறிப்பிட்ட கனிகளுக்காக முன்பணம் கொடுங்கள்!"என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில்'அளவும் எடையும் குறிப்பிடப்பட்ட கனிகளுக்காக'' என்றுள்ளது.

ஹதீஸ் 2254 ; ஹதீஸ் 2255 முஹம்மத் இப்னு அபில் முஜாஹித் அவர்கள் கூறினார்கள்.

என்னை அபூ புர்தா(ரலி) அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத் (ரலி) ஆகிய இருவரும் அப்துர்ரஹ்மான் இப்னு அப்ஸா(ரலி) அவர்களிடமும் அப்துல்லாஹ் இப்னு அபீ அஃவ்பா(ரலி)

அவர்களிடமும் அனுப்பினார்கள். அவ்விருவரிடமும் ஸலம் பற்றி கேட்டேன். அவ்விருவரும், 'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் போரிட்டு (அதில் கிடைக்கும்'கனீமத்' பொருட்களைப் பெறுவோம். அப்போது எங்களிடம்'ஷாம்' நாட்டைச் சேர்ந்த'நபீத் எனும் குலத்தார் வருவார்கள். குறிப்பிட்ட தவணையில் (தந்துவிடவேண்டும் என்ற நிபந்தனையுடன்) உலர்ந்த திராட்சை, கோதுமை, வாற்கோதுமை ஆகியவற்றிற்காக அவர்களிடம் முன்பணம் கொடுப்போம்!"என்று கூறினார்கள். அப்போது நான்'அவர்களிடம் தோட்டம் துரவு (அல்லது விவசாய நிலம்) எதுவும் இருந்ததா? இல்லையா?' என்று கேட்டேன். அதற்கு அவ்விருவரும், 'நாங்கள் இது பற்றி அவர்களிடம் கேட்டதில்லை!"என்றனர்.

## ஒட்டகத்தின் (வயிற்றிலுள்ள) குட்டி ஈன்றெடுக்கும் குட்டியை வாங்க முன்பணம் கொடுத்தல்.

ஹதீஸ் 2256. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறினார்கள்.

"இந்த ஒட்டகம் குட்டிபோட்டு, அந்தக் குட்டிக்குப் பிறக்கும் குட்டியை நான் வாங்கிக் கொள்கிறேன் அல்லது விற்று விடுகிறேன்!' என்ற அடிப்படையில், அன்றைய மக்கள் வியாபாரம் செய்து வந்தனர் அதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!"

## அத்தியாயம் 36 ஷுஃப்ஆ

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

(இருவருக்குச் சொந்தமான சொத்தில், தம் பங்கை ஒருவர் விற்க நாடினால் அவர் தம் பங்காளிக்கு முன்னுரிமை கொடுத்தல்)

### பங்கிடப்படாத வரைதான் ஷுஃப்ஆவின் உரிமை உள்ளது் எல்லைகள் வகுக்கப்பட்டால் ஷுஃப்ஆவின் உரிமை கிடையாது.

ஹதீஸ் 2257. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

“பங்காளிக்கே விற்க வேண்டும் என்பது, பிரிக்கப்படாத ஒவ்வொரு சொத்திலும் உள்ளது! எல்லைகள் வகுக்கப்பட்டுப் பாதைகள் (பிரித்துக்) குறிக்கப்பட்டால் பங்காளிக்குத்தான் விற்கவேண்டும் என்ற நிலையில்லை!' என்று இறைத்தூதர் (ஸல்) விதித்தார்கள்.

### பிறருக்கு விற்பதற்கு முன், பங்காளிக்கு அறிவிக்கவேண்டும்.

“விற்பதற்கு முன் பங்காளி அனுமதி கொடுத்துவிட்டால் (அவருக்கு) ஷுஃப்ஆவின் உரிமை இல்லை!”என்று ஹகம் (ரஹ்) கூறினார்.

“தம் பங்காளியின் சொத்து பிறருக்கு விற்கப்படுவதை ஒருவர் அறிந்திருந்த அதை ஆட்சேபிக்காதிருந்தால் அவருக்கு ஷுஃப்ஆவின் உரிமை இல்லை!”என்று ஷஅபி (ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2258. அம்ர் இப்னு ஷரீத் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான், ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களிடம் தங்கியிருந்தேன். அப்போது மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) வந்து, தம் கையை என்னுடைய தோள் புஜங்களில் ஒன்றில் வைத்தார்கள். அப்போது (அடிமையாயிருந்து) நபி (ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அபூ ராஃபிஉ (ரலி) வந்து, 'ஸஅதே! உம்முடைய வீட்டிலுள்ள எனக்குச் சொந்தமான இரண்டு அறைகளை என்னிடமிருந்து வாங்கிக் கொள்வீராக!' எனக் கூறினார்கள். அதற்கு ஸஅத் (ரலி) 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவற்றை நான் வாங்க மாட்டேன்!”என்றார்கள். அருகிலிருந்த மிஸ்வர் (ரலி) அவர்கள், ஸஅத் (ரலி) அவர்களிடம்'அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீர் வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்!”என்றார்கள். அப்போது ஸஅத் (ரலி), 'அல்லாஹ்வீன் மீது ஆணையாக! தவணை அடிப்படையில் நாலாயிரம் வெள்ளிக் காசைத் தவிர உமக்கு அதிகமாகத் தரமாட்டேன்!”என்று கூறினார்கள். அதற்கு அபூ ராஃபிவு (ரலி), 'ஐநூறு தங்கக் காசுகளுக்கு அது கேட்கப்பட்டுள்ளது் அண்டை வீட்டில் இருப்பவர் அண்மையில் இருப்பதால் அவரே அதிகம் உரிமை படைத்தவர் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றிராவிட்டால் ஐநூறு தங்கக் காசுக்கு கேட்கப்பட்டதை நாலாயிரம் வெள்ளிக்காசுக்கு உமக்கு விற்க மாட்டேன்' என்று கூறிவிட்டு ஸஅதுக்கே விற்றார்.

### அண்டை வீட்டாரில் நெருக்கமானவர் யார்?

ஹதீஸ் 2259. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

**இறைத்தூதர் அவர்களே! எனக்கு இரண்டு அண்டை வீட்டார் உள்ளனர் அவர்களில் யாருக்கு நான் அன்பளிப்புச் செய்வது? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'இருவரில் யார் வீட்டு வாசல் உனக்கு நெருக்கமாக இருக்கிறதோ அவருக்கு'' என்றார்கள்.**

# அத்தியாயம் 37 வாடகை மற்றும் கூலிக்கு ஆள் அமர்த்துதல்

## நல்ல மனிதரைக் கூலிக்கு அமர்த்துதல்.

அல்லாஹ் கூறினான்:

அவ்விரு பெண்களில் ஒருவர் கூறினார்:'என் அருமைத் தந்தையே! நீங்கள் இவரைக் கூலிக்கு அமர்த்திக் கொள்ளுங்கள்! (இவரைப் போன்ற) வலிமையுள்ளவரும் நம்பிக்கைக்குரியவரும்தான் நீங்கள் கூலிக்கு அமர்த்துவதற்குச் சிறந்தவராவார்!"(திருக்குர்ஆன் 28:26)

நம்பகமான கருவூலக் காப்பாளர் பற்றி'அவரும் தர்மம் செய்பவர்களில் ஒருவராவார்!"என நபிமொழியொன்று கூறுகிறது.

பதவியை விரும்புபவருக்கு நபி(ஸல்) அவர்கள் பதவி வழங்கவில்லை!

ஹதீஸ் 2260. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"தமக்குக் கட்டளையிடப்பட்ட (தர்ம) காரியத்தை மனப்பூர்வமாக நிறைவேற்றக் கூடிய, நம்பகமான கருவூலக் காப்பாளர் தர்மம் செய்பவர்களில் ஒருவராவார்!"

என அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2261. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நானும் அஷ்அரீ குலத்தைச் சேர்ந்த மற்றும் இருவரும் நபி(ஸல்) அவர்கள் அவர்களிடம் சென்றோம் (அவர்கள் இருவரும் நபி(ஸல) அவர்களிடம் பதவி கேட்டார்கள்) நான் நபி(ஸல்) அவர்களிடம்),'இவ்விருவரும் பதவி கேட்பார்கள் என்று நான் அறிந்திருக்கவில்லை! (முன்பே நான் இதை அறிந்திருந்தால் இவர்களைத் தங்களிடம் அழைத்து வந்திருககவே மாட்டேன்!)' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்'பதவியை விரும்புகிறவருக்கு நாம் பதவி கொடுக்கமாட்டோம்!"என்று பதிலளித்தார்கள்.

## சில கீராத் கூலிக்காக ஆடு மேய்த்தல்.

ஹதீஸ் 2262. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

"அல்லாஹ் அனுப்பிய எந்த நபியும் ஆடு மேய்க்காமல் இருந்ததில்லை!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் அப்போது நபித்தோழர்கள்,'நீங்களுமா?' என்று கேட்டார்கள். 'ஆம்! மக்காவாசிகளின் சில கீராத் கூலிக்காக ஆடு மேய்ப்பவனாக நான் இருந்தேன்!"என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

## தேவை ஏற்படும் பொழுதும் முஸ்லிம்கள் கிடைக்காத போதும் இணைவைப்பவர்களை வேலைக்கு அமர்த்துதல்.

நபி(ஸல்) அவர்கள் கைபரிலுள்ள யூதர்களிடம் வேலை வாங்கியிருக்கிறார்கள்.

ஹதீஸ் 2263. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(மக்காவைத் துறந்து, ஹிஜ்ரத் செய்து மதீனாவுக்குச் சென்ற போது) நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் பனு அப்து இப்னு அதீ குலத்தைச் சேர்ந்த ஒருவரை (வழிகாட்டியாகக்) கூலிக்கு அமர்த்தினார்கள். அவர் தேர்ந்த வழிகாட்டியாக இருந்தார். அம்மனிதர் ஆஸ்பின் வாயிலின் குடும்பத்தாரிடம் உடன்படிக்கை செய்திருந்தார். மேலும், அவர்

குறைஷிகளில் இறைமறுப்பாளர்களின் மார்க்கத்தில் இருந்தார். நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் அவரை நம்பித் தம் ஒட்டகங்களை அவரிடம் ஒப்படைத்து, மூன்று நாள்கள் கழித்து ஸவ்ர் குகையில் வந்து சேரும்படி கூறினார்கள். அம்மனிதர் மூன்றாம் நாள் காலையில் ஒட்டகங்களுடன் அவர்களிடம் வந்தார். உடனே, நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் (மதீனாவை நோக்கிப்) புறப்பட்டார்கள். அவர்களுடன் ஆமிர் இப்னு ஃபுஹைரா என்பாரும் சேர்ந்து கொண்டார். பனுதீல் கூட்டத்தைச் சேர்ந்த அந்த வழிகாட்டி அம்மூவரையும் மக்காவிற்குக் கீழே கடற்கரை வழியாக அழைத்துச் சென்றார்.

## மூன்று நாள்களுக்குப் பின்போ, ஒரு மாதத்திற்குப் பின்போ, ஒரு ஆண்டிற்குப் பின்போ வேலை செய்வதற்காக, இப்போதே கூலியாளைப் பேசி வைத்துக் கொள்ளலாம் முன்னர் அவர்கள் பேசிய நிபந்தனைகள் உரிய நேரம் வந்ததும் செல்லுபடியாகும்.

ஹதீஸ் 2264. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் பனு தீல் குலத்தைச் சேர்ந்த ஒருவரை (வழிகாட்டுவதற்காகக்) கூலிக்கு அமர்த்தினார்கள். அவர் குறைஷிகளில் இறைமறுப்பாளர்களின் மார்க்கத்தில் இருந்தார். நபி(ஸல்) அவர்களும், அபூ பக்ர்(ரலி) அவர்களும் தம் ஒட்டகங்களை அவரிடம் கொடுத்து'மூன்று இரவுகள் கழித்து எங்கள் ஒட்டகங்களுடன் ஸவ்ர் குகையில் எங்களைச் சந்திக்க வேண்டும்' என்று அவரிடம் கூறினார்கள். அவர், (அவ்வாறே) மூன்றாம் நாள் காலையில் அவர்களின் ஒட்டகங்களுடன் அவர்களைச் சந்தித்தார்.

## புனிதப் போரின்போது கூலியாளை ஏற்படுத்திக் கொள்வது.

ஹதீஸ் 2265. யஃலா இப்னு உமய்யா(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் சிரமமான (தபூக்) போரில் பங்கெடுத்துக் கொண்டேன். அந்தப் போர் என்னுடைய அமல்களிலேயே உறுதிமிக்கதாக எனக்குத் தோன்றியது. என்னிடம் கூலியாள் ஒருவர் இருந்தார். அவர் ஒரு மனிதரிடம் சண்டையிட்டார். அப்போது (அவர்களில்) ஒருவர், மற்றவரின் விரலைக் கடித்துவிட்டார். கடிபட்டவர் விரலை உருவிக் கொண்டு, கடித்தவரின் முன் பல்லை உடைத்தார். பல் கீழே விழுந்தது. பல்லுடைக்கப்பட்டவர் நபி(ஸல்) அவர்களிடம் சென்றபோது, நபி(ஸல்) அவர்கள்'அதற்கு எந்த நஷ்ட ஈடும் இல்லை!"என்று தீர்ப்பளித்துவிட்டு, அவரிடம்,'ஒட்டகம் மெல்லுவது போல் நீர் மெல்லுவதற்காக அவர் உம்வாயில் தன் விரலைக் கொடுத்துக் கொண்டிருப்பாரா?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 2266. ஸுஹைர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

"ஒருவர் இன்னொருவரின் கையைக் கடித்துவிட்டார் கடிபட்டவர் கடித்தவரின் முன் பல்லை உடைத்துவிட்டார்!'அதற்கு எந்த நஷ்டஈடும் தரத் தேவையில்லை' என்று அபூ பக்ர்(ரலி) தீர்ப்பளித்தார்கள்!"

## ஒருவரைக் கூலிக்கு அமர்த்தும்போது வேலை செய்யும் காலத்தைக் குறிப்பிட்டு, வேலையைக் குறிப்பிடாமல் இருத்தல்.

அல்லாஹ் கூறினான்:

(அப்போது ஷுஐப்(அலை) அவர்கள் மூஸா(அலை) அவர்களிடம்) கூறினார்:'நீர் எனக்கு எட்டு ஆண்டுகள் வேலை செய்ய வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில், என்னுடைய இவ்விரு

பெண்களில் ஒருவரை உமக்கு மணமுடித்துக் கொடுக்க நான் நாடுகிறேன்! ஆயினும், நீர் பத்து ஆண்டுகளைப் பூர்த்தி செய்தால், அது உம் விருப்பம்! நான் உமக்குச் சிரமத்தைக் கொடுக்க விரும்பவில்லை. இறைவன் நாடினால் என்னை நல்லவராகக் காண்பீர்!“

அதற்கு மூஸா(அலை) அவர்கள் கூறினார்கள். 'இதுவே எனக்கும் உங்களுக்குமிடையே (ஒப்பந்தமாகும்)! இவ்விரு தவணைகளில் நான் எதை நிறைவேற்றினாலும் (அதன் பிறகு) எவ்விதத்திலும் எனக்கு சிரமம் தரக்கூடாது! நாம் பேசிக் கொள்வதற்கு அல்லாஹ்வே சாட்சியாக இருக்கிறான்!"(திருக்குர்ஆன் 28: 27, 28)

## விழும் நிலையில் இருக்கம் சுவரைச் செப்பனிட்டு நிலை நிறுத்துவதற்காக வேலையாளை அமர்த்திட அனுமதியுண்டு.

ஹதீஸ் 2267. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“

“(மூஸா(அலை), கிள்ரு(அலை) ஆகிய) இருவரும் (ஒன்றாக) நடந்து சென்றபோது, விழும் நிலையிலிருந்த ஒரு சுவரைக் கண்டார்கள். உடனே, கிள்ரு(அலை) அவர்கள் தங்களின் கையை உயர்த்த, அது நேராக நின்றுவிட்டது! அப்போது மூஸா(அலை) அவர்கள், கிள்ரு(அலை) அவர்களிடம்'நீர் விரும்பியிருந்தால் இதற்குக் கூலி வாங்கியிருக்கலாமே!"என்று கூறினார்கள்“

என உபை இப்னு கஅபு(ரலி) அறிவித்தார்.

“கிள்ரு(அலை) அவர்கள் தம் கையை உயர்த்தினார்கள்' என்று சொன்னபோது, அறிவிப்பாளர் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்கள் (கிள்ரு) (அலை) அவர்களைப் போன்று) கையை உயர்த்திக் காட்டி'இப்படி!"என்று கூறினார்கள்.

“ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்கள்'கிள்ரு(அலை) அவர்கள் சுவரைத் தம் கரத்தால் தடவ, அதுநேராக நின்றுவிட்டது!' என்று கூறினார்கள் என நான் நினைக்கிறேன்‘ என்று அறிவிப்பாளர் யஃலா(ரஹ்) அவர்கள் (சந்தேகத்துடன்) கூறுகிறார்கள்.

## நடுப்பகல் நேரம்வரை கூலிக்கு அமர்த்துதல்.

ஹதீஸ் 2268. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“

உங்களுக்கும் வேதம் கொடுக்கப்பட்ட இரண்டு சமுதாயத்தாருக்கும் உவமை, ஒரு மனிதரால் வேலைக்கு அமர்த்தப்பட்ட கூலியாட்களாவர்!'ஒரு கீராத் கூலிக்குக் காலையிலிருந்து பகலின் நடுப்பகல் நேரம்வரை எனக்கு வேலை செய்பவர் யார்?' என்று அம்மனிதர் கேட்டார். யூதர்கள் அவ்வாறு வேலை செய்தார்கள். பிறகு,'நடுப்பகலிலிருந்து அஸர் தொழுகை வரை ஒரு கீராத் கூலிக்கு எனக்காக வேலை செய்பவர் யார்?' என்று அவர் கேட்டார். கிறிஸ்தவர்கள் அவ்வாறு வேலை செய்தார்கள். பிறகு,'அஸரிலிருந்து சூரியன் மறையும் வரை இரண்டு கீராத் கூலிக்கு எனக்காக வேலை செய்பவர் யார்?' என்று அவர் கேட்டார். (முஸ்லிம்களான) நீங்கள் தாம் அ(ப்படி வேலை செய்த)வர்கள்! யூதர்களும் கிறிஸ்தவர்களும் கோபமுற்று. 'அதிக வேலை நாங்கள் செய்திருக்கும்போது எங்களுக்கு ஏன் குறைந்த கூலி?' என்று கேட்டனர். அதற்கு அவர்'உங்களுக்கு உரியதை நான் குறைத்திருக்கிறேனா?' என்று கேட்டார். அவர்கள்'இல்லை!"என்றனர். 'சிலருக்கு நான் அதிகமாகக் கொடுப்பது என்னுடைய அருட்கொடையாகும்! நான் விரும்பியவருக்கு நான் அதைக் கொடுப்பேன்!"என்று அவர் கூறினார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## அஸர் தொழுகை வரை ஒருவரைக் கூலிக்கு அமர்த்துதல்.

ஹதீஸ் 2269. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"உங்களுக்கும், யூதர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் உவமை, ஒருவரால் கூலிக்கு நியமிக்கப்பட்ட மனிதர்களாவர்!'ஒவ்வொரு கீராத் கூலிக்கு (காலையிலிருந்து) நடுப்பகல் நேரம்வரை எனக்காக வேலை செய்பவர் யார்?' என்று அம்மனிதர் கேட்டார். யூதர்கள் ஒவ்வொரு கீராத் கூலிக்காக வேலை செய்தார்கள் பிறகு, கிறிஸ்தவர்கள் ஒவ்வொரு கீராத் கூலிக்காக வேலை செய்தார்கள். பிறகு, அஸரிலிருந்து சூரியன் மறையும் வரை, இரண்டிரண்டு கீராத் கூலிக்கு (முஸ்லிம்களாகிய) நீங்கள்தான் வேலை செய்கிறீர்கள் யூதர்களும் கிறிஸ்தவர்களும் கோபமுற்று,'அதிக வேலை நாங்கள் செய்திருக்கும்போது எங்களுக்கு ஏன் குறைந்த கூலி?' என்று கேட்டனர். அதற்கு அவர்'உங்களுக்கு உரியதை நான் குறைத்திருக்கிறேனா?' என்று கேட்டார். அவர்கள்'இல்லை!"என்றனர். 'சிலருக்கு நான் அதிகமாகக் கொடுப்பது என்னுடைய அருட் கொடையாகும்! நான் விரும்பியவருக்கு நான் அதைக் கொடுப்பேன்!"என்று அம்மனிதர் கூறினார்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## கூலிக்காரனின் கூலியைத் தரமறுப்பது குற்றமாகும்.

ஹதீஸ் 2270. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"மூவருக்கெதிராக கியாமத் நாளில் நான் வழக்குரைப்பேன்! என் பெயரால் சத்தியம் செய்து மோசடி செய்தவன் சுதந்திரமானவனை (அடிமையாக) விற்று அந்தக் கிரயத்தைச் சாப்பிட்டவன் கூலிக்கு ஒருவரை அமர்த்தி, அவரிடம் வேலை வாங்கிக் கொண்டு கூலி கொடுக்காமல் இருந்தவன் (ஆகிய இவர்கள்தான் அந்த மூவர்)!' என்று அல்லாஹ் கூறினான்."

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அஸரிலிருந்து இரவுவரை ஒருவரைக் கூலிக்கு அமர்த்துவது.

ஹதீஸ் 2271. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், யூதர்கள் ஆகியோரின் உவமை, குறிப்பிட்ட கூலிக்கு, ஒரு நாள் முழுக்க இரவுவரை, தனக்காக வேலை செய்யும்படி ஒரு மனிதரால் அமர்த்தப்பட்டவர்கள் ஆவர்! அவர் (முதலில்) ஒரு கூட்டத்தாரை கூலிக்கு அமர்த்தினார் அவர்கள் நடுப்பகல் வரை வேலை செய்துவிட்டு,'நீர் எங்களுக்குத் தருவதாகக் கூறிய கூலி எங்களுக்குத் தேவையில்லை எங்கள் வேலை வீணாகட்டும்!' எனக் கூறினார்கள். அப்போது கூலிக்கு அமர்த்தியவர் அவர்களிடம்,'இவ்வாறு செய்யாதீர்கள்! உங்கள் எஞ்சிய வேலைகளையும் பூர்த்தி செய்யுங்கள்! கூலியையும் முழுமையாகப் பெறுங்கள்!' எனக் கூறினார். அவர்கள் (ஏற்க) மறுத்து வேலையைவிட்டுவிட்டனர். அவர்களுக்குப் பின், மற்றும் சில கூலியாட்களை அவர் வேலைக்கு அமர்த்தினார். அவர்களிடம் அவர்,'இன்று எஞ்சியுள்ள நேரத்தைப் பூர்த்தியாக்குங்கள்! அவர்களுக்குத் தருவதாகக் கூறிய கூலியை உங்களுக்குத் தருகிறேன்!"என்றார். அவர்கள் அஸர் தொழுகை வரை வேலை செய்துவிட்டு'உமக்காக நாங்கள் வேலை செய்தது வீணாகட்டும்! எங்களுக்காக நீர் நிர்ணயித்த கூலியையும் நீரே வைத்துக் கொள்ளும்!"என்றனர். அவர்'உங்கள் எஞ்சிய வேலையைப் பூர்த்தி செய்யுங்கள்! பகலில் இன்னும் சிறிது நேரமே மிச்சமுள்ளது!"என அவர்களிடம் கூறினார். அவர்கள் (வேலை செய்ய) மறுத்துவிட்டனர். பிறகு, அன்றைய பொழுதில்

எஞ்சிய நேரத்தில் வேலை செய்வதற்காக மற்றொரு கூட்டத்தாரை அவர் வேலைக்கு அமர்த்தினார். அவர்கள் சூரியன் மறையும் வரை உள்ள எஞ்சிய நேரத்தில் வேலை செய்தனர். இதனால், அவர்கள் முதலிரண்டு கூட்டத்தினரின் கூலியையும் சேர்த்து முழுமையாகப் பெற்றனர். இதுதான் (முஸ்லிம்களாகிய) இவர்களுக்கும் இவர்கள் ஏற்றுள்ள பிரகாசத்திற்கும் உரிய உவமையாகும்!“

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

## கூலிக்கு அமர்த்தப்பட்டவர் கூலியை வாங்காமல் சென்ற பிறகு, கூலிக்கு அமர்த்தியவர் அதைக் கொண்டு உழைத்து அதைப் பெருகச் செய்திருந்தால் அல்லது ஒருவர் பிறரின் செல்வத்தைக் கொண்டு உழைத்து அதில் லாபம் பெற்றிருந்தால்...

ஹதீஸ் 2272. 'என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்“

உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில் மூன்று பேர் (ஒன்றாக) நடந்து சென்றனர். இறுதியில் (மலையில் இருந்த) குகையொன்றில் இரவைக் கழிப்பதற்காக தஞ்சம் புகுந்தனர். அதில் அவர்கள் நுழைந்தவுடன் மலையிலிருந்து பெரும் பாறையொன்று உருண்டு வந்து குகைவாசலை அடைத்துவிட்டது. அப்போது அவர்கள் 'நீங்கள் செய்த நற்செயலைக் கூறி அல்லாஹ்விடம் பிரார்த்தித்தால் தவிர நீங்கள் தப்ப முடியாது!”என்று தமக்குள் கூறினர்.

அவர்களில் ஒருவர் 'இறைவா! எனக்கு வயது முதிர்ந்த பெற்றோர் இருந்தனர். நான் அவர்களுக்குப் பால் (கறந்து) கொடுப்பதற்கு முன் என் குடும்பத்தினருக்கோ குழந்தைகளுக்கோ பால் கொடுப்பதில்லை! ஒரு நாள் எதையோ தேடிச் சென்றதால் தாமதமாக வந்தேன். என்னுடைய தாயும் தந்தையும் (முன்பே) உறங்கிவிட்டிருக்க கண்டேன். அவர்களுக்குப் பால் கொடுப்பதற்கு முன், என் குடும்பத்தினருக்கோ என் அடிமைகளுக்கோ பால் கொடுப்பதை நான் விரும்பாததால் அவர்கள் விழிப்பதை எதிர்பார்த்து என் கைகளில் பாத்திரத்தை வைத்துக் கொண்டு காத்திருந்தேன். ஃபஜ்ர் நேரம் வந்ததும் அவ்விருவரும் விழித்துத் தமக்குரிய பாலைக் குடித்தனர். எனவே இறைவா! நான் இதை உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருந்தால் நாங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் இந்தப் பாறையை எங்களைவிட்டு அகற்று!' எனக் கூறினார். உடனே, அவர்கள் வெளியேற முடியாத அளவிற்குப் பாறை சற்று விலகியது!

மற்றொருவர், 'இறைவா! என் தந்தையின் சகோதரரின் மகள் ஒருத்தி இருந்தாள் அவள் எனக்கு மிகவும் விருப்பமானவளாக இருந்தாள். நான் அவளை அடைய விரும்பினேன் அவள் என்னிடமிருந்து விலகிச் சென்றாள். அவளுக்குப் பஞ்சம் நிறைந்த ஆண்டு ஒன்று வந்தபோது (பொருளாதார நெருக்கடி ஏற்பட்டு) என்னிடம் வந்தாள் நான் அவளை அடைந்திட அவள் எனக்கு வழிவிட வேண்டும் என்ற நிபந்தனையில் பேரில் நூற்றி இருபது தங்கக்காசுகளை அவளுக்குக் கொடுத்தேன். அவளை என் வசப்படுத்தி (உறவு கொள்ள முனைந்து) விட்டபோது, 'முத்திரையை அதற்கான (மணபந்தத்தின்) உரிமையின்றி உடைப்பதற்கு உனக்கு நான் அனுமதி தரமாட்டேன்!”என்று அவள் கூறினாள். உடனே, அவளுடன் உறவு கொள்ளும் பாவத்(தைச் செய்வ)திலிருந்து விலம்க் கொண்டேன் அவள் எனக்கு மிகவும் விருப்பமானவளாக இருந்தும் அவளைவிட்டுத் திரும்பி விட்டேன் நான் அவளுக்குக் கொடுத்த தங்க நாணயத்தை அவளிடமேவிட்டு விட்டேன். இதை உன்னுடைய திருப்தியை நாடி நான்

செய்திருந்தால் நாங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் இந்தப் பாறையை எங்களைவிட்டு அகற்று!' எனக் கூறினார். பாறை விலகியது: ஆயினும் அவர்களால் வெளியேற முடியவில்லை.

மூன்றாமவர், 'இறைவா! நான் சில ஆட்களைக் கூலிக்கு அமர்த்தி அவர்களின் கூலியையும் கொடுத்தேன். ஒரே ஒருவர் மட்டும் தம் கூலியைவிட்டுவிட்டுச் சென்றார். அவரின் கூலியை நான் முதலீடு செய்து அதனால் செல்வம் பெருகியிருந்த நிலையில் சிறிது காலத்திற்குப் பின் அவர் என்னிடம் வந்தார். 'அல்லாஹ்வின் அடியாரே! என்னுடைய கூலியை எனக்குக் கொடுத்துவிடும்!"என்று கூறினார். 'நீர் பார்க்கிற இந்த ஒட்டகங்கள், மாடுகள், ஆடுகள், அடிமைகள் எல்லாம் உம் கூலியிலிருந்து கிடைத்தவைதாம்!"என்று கூறினேன். அதற்கவர்'அல்லாஹ்வின் அடியாரே! என்னை கேலி செய்யாதீர்!"என்றார். 'நான் உம்மை கேலி செய்யவில்லை!"என்று கூறினேன். அவர் அனைத்தையும் ஒன்றுவிடாமல் ஓட்டிச் சென்றார். 'இறைவா! இதை நான் உன்னுடைய திருப்தியை நாடிச் செய்திருந்தால் நாங்கள் சிக்கிக் கொண்டிருக்கும் இந்தப் பாறையை எங்களைவிட்டு அகற்று!' எனக் கூறினார். பாறை முழுமையாக விலகியது. உடனே, அவர்கள் வெளியேறிச் சென்றுவிட்டனர்!"

என அப்துல்லாஹ்வின் உமர்(ரலி) அறிவித்தார்.

## ஒருவர் தன் முதுகில் மூட்டை சுமந்து பெற்ற கூலியில் தர்மம் செய்வதும் சுமை சுமப்பவர் பெறுகிற கூலியும்.

ஹதீஸ் 2273. அபூ மஸ்வூத் அல் அன்ஸாரி(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் தர்மம் செய்யும்படி கட்டளையிட்டால், எங்களில் ஒருவர் கடைவீதிக்குச் சென்று, சுமைதூக்கி ஒரு'முத்து' கூலியைப் பெற்று அதை தர்மம் செய்வார்! ஆனால், இன்று அவர்களில் சிலருக்கு ஓர் இலட்சம் தங்கக் காசுகள் உள்ளன!"

"அபூ மஸ்வூத்(ரலி) தம்மையே இவ்வாறு ('அவர்களில் சிலருக்கு' என்று) குறிப்பிட்டதாக நாம் கருதுகிறோம்!"என்று அறிவிப்பாளர் ஷகீக்(ரஹ்) கூறினார்.

## தரகுக் கூலி

'தரகருக்குக் கூலி கொடுப்பதில் தவறில்லை' என்று இப்னு ஸீரீன், அதாவு, இப்ராஹீம், ஹஸன் பஸரீ (ரஹ் - அலைஹிம்) ஆகியோர் கருதுகின்றனர்.

"இந்த ஆடையை இன்ன விலைக்கு விற்றுவிடு! இதைவிட அதிகமாக விற்றால் அது உனக்குரியது!' என்று கூறுவது தவறில்லை' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

இதை'இன்ன விலைக்கு விற்று விடு இதைவிட அதிக விலைக்கு விற்றால் இது உனக்குரியது அல்லது உனக்கம் எனக்கும் பொதுவானது' என்று கூறினால் அதில் தவறில்லை என்று இப்னு ஸீரீன் கூறுகிறார்.

முஸ்லிம்கள் தமக்கிடையே விதிக்கக் கூடிய நிபந்தனைகள் (மார்க்கதிற்கு முரணில்லாவிட்டால்) செல்லும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.

ஹதீஸ் 2274. தாவூஸ் அறிவித்தார்.

சந்தைக்கு வரும் வணிகர்களை எதிர்கொண்டு வாங்குவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். 'கிராம வாசிக்காக உள்ளூர் வாசிவிற்றுத் தரக்கூடாது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். கிராமவாசிக்காக உள்ளூர் வாசி

விற்கக் கூடாது என்பதன் பொருள் என்ன? என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்'இடைத் தரகராக இருக்கக் கூடாது' என்றார்.

## எதிரி நாட்டிலுள்ள இணைவைப்பவரிடம் ஒருவர் கூலியாளாகப் பணி செய்யலாமா?

ஹதீஸ் 2275. கப்பாப்(ரலி) அறிவித்தார்.

நான் கருமானாக இருந்தேன் ஆஸ் இப்னு வாயில் என்பவனிடம் கூலிக்கு வேலை செய்தேன். எனக்கரிய கூலி அவனிடம் தங்கிவிட்டது் அதைக் கேட்பதற்காக அவனிடம் நான் சென்றபோது அவன்,'நீர் முஹமமதை நராகரிக்காமல் (ஏற்றுக் கொண்டு) இருக்கும் வரை உமக்குரியதை நான் தர மாட்டேன்!"என்றான். நான்,'நீ செய்து, பிறகு (உயிர் தந்து) எழுப்பப்படும் வரை அது நடக்காது!"என்றேன்.'நான் செத்து, திரும்ப எழுப்பப்படுவேனா?' என்று அவன் கேட்டான். நான்'ஆம்!"என்றேன். அதற்கவன்,'அப்படியானால் அங்கே எனக்குச் செல்வமும் குழந்தைகளும் கிடைப்பர்! அப்போது உமக்குரியதைத் தந்து விடுகிறேன்!"என்றான். அப்போது,'நம்முடைய வசனங்களை நிராகரித்துவிட்டு,'(மறுமையிலும்) நான் நிச்சயமாக பொருட்செல்வமும், மக்கள் செல்வமும் கொடுக்கப்படுவேன்!' என்று கூறியவனை (நபியே!) நீர் பார்த்தீரா!"என்ற (திருக்குர்ஆன் 19: 77) இறைவசனம் அருளப்பட்டது.

## அல் ஃபாத்திஹா (அல்ஹம்து) ஸூராவால் ஓதிப்பார்ப்பதற்காக வழங்கப்படும் கூலி.

"நீங்கள் கூலி பெறுவதற்கு அதிகத் தகுதியானது அல்லாஹ்வின் வேதம் தான்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

"கற்றுக் கொடுப்பவர் நிபந்தனையிடாமல் அவருக்கு ஏதாவது கொடுக்கப்பட்டால் அதைப் பெறலாம்!"என்று ஷஅபி(ரஹ்) கூறினார்.

"கற்றுக் கொடுப்பவருக்குக் கூலி கொடுப்பதை எவரும் வெறுத்ததாக நான் கேள்விப்படவில்லை!"என்று ஹகம்(ரஹ்) கூறினார்!"

ஹஸன் பஸரீ(ரஹ்) அவர்கள் தங்களின் ஆசிரியருக்குப் பத்து திர்ஹம் கொடுத்திருக்கிறார்கள்.

"பொருட்களைப் பங்கு வைப்பவர்களுக்குக் கூலி கொடுப்பதில் தவறில்லை!"என்று இப்னு ஸீரீன்(ரஹ்) கூறினார்.

"சாதகமான தீர்ப்புப் பெறுவதற்காகக் கொடுப்படுவதே'இலஞ்சம்' என்று கூறப்பட்டு வந்தது!"என்றும் அவர்கள் கூறினார்கள்.

## மரத்திலுள்ள கனிகளை மதிப்பீடு செய்வதற்காக மதிப்பீடு செய்தவருக்கு நபித்தோழர்கள் கூலி கொடுத்துள்ளனர்.

ஹதீஸ் 2276. அபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.

நபித்தோழர்களில் சிலர் ஒரு பயணத்தில் சென்றிருந்தபோது, ஓர் அரபிக் குலத்தினரிடம் தங்கினார்கள். அவர்களிடம் விருந்து கேட்டபோது அவர்களுக்கு விரந்தளிக்க அவர்கள் மறுத்துவிட்டனர். அப்போது அக்குலத்தாரின் தலைவனை தேள் கொட்டிவிட்டது. அவனுக்காக அவர்கள் எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்தனர் எந்த முயற்சியும் பலன் அளிக்கவில்லை. அப்போது அவர்களில் சிலர்,'இதோ! இங்கே வந்திருக்கக் கூடிய கூட்டத்தினரிடம் நீங்கள்

சென்றால் அவர்களிடம் (இதற்கு) ஏதேனும் மருத்துவம் இருக்கலா!"என்று கூறினர். அவ்வாறே அவர்களும் நபித் தோழர்களிடம் வந்து'கூட்டத்தினரே! எங்கள் தலைவரைத் தேள் கொட்டிவிட்டது! அவருக்காக அனைத்து முயற்சிகளையும் செய்தோம் (எதுவுமே) அவருக்குப் பயன் அளிக்கவில்லை. உங்களில் எவரிடமாவது ஏதேனும் (மருந்து) இருக்கிறதா?' என்று கேட்டனர். அப்போது நபித்தோழர்களில் ஒருவர்,'ஆம்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் ஓதிப் பார்க்கிறேன் என்றாலும், அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் ஓதிப் பார்க்கிறேன் என்றாலும் அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் உங்களிடம் விருந்து கேட்டு நீங்கள் விருந்து தராததால் எங்களுக்கென்று ஒரு கூலியை நீங்கள் தராமல் ஓதிப் பார்க்க முடியாது!"என்றார். அவர்கள் சில ஆடுகள் தருவதாகப் பேசி ஒப்பந்தம் செய்தனர். நபித்தோழர் ஒருவர், தேள் கொட்டப்பட்டவர் மீது (இலேசாகத் துப்பி) ஊதி,'அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்.!"என்று ஓதலானார். உடனே பாதிக்கப்பட்டவர், கட்டுகளிலிருந்து அவிழ்த்து விடப்பட்டவர் போல் நடக்க ஆரம்பித்தார். வேதனையின் அறிகுறியே அவரிடம் தென்படவில்லை! பிறகு, அவர்கள் பேசிய கூலியை முழுமையாகக் கொடுத்தார்கள்.'இதைப் பங்கு வையுங்கள்!"என்று ஒருவர் கேட்டபோது,'நபி(ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைக் கூறி, அவர்கள் என்ன கட்டளையிடுகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் அவ்வாறு செய்யக்கூடாது!"என்று ஓதிப் பார்த்தவர் கூறினார். நபி(ஸல்) அவர்களிடம் நபித்தோழர்கள் வந்து நடந்ததைக் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'அது (அல்ஹம்து சூரா) ஓதிப் பார்க்கத் தக்கது என்று உமக்கு எப்படித் தெரியும்?' என்று கேட்டுவிட்டு,'நீங்கள் சரியானதையே செய்திருக்கிறீர்கள். அந்த ஆடுகளை உங்களுக்கிடையே பங்கு வைத்து கொள்ளுங்கள்! உங்களுடன் எனக்கும் ஒரு பங்கை ஒதுக்குங்கள்! என்று கூறிவிட்டுச் சிரித்தார்கள்.

## ண் அடிமைகள் (தம் எஜமானர்களுக்குச் செலுத்தும் அன்றாடவரி (யைக் குறைக்க உதவுவது) மற்றும் அடிமைப் பெண்கள் (குறைவான விம்தத்தில்) வரி செலுத்த ஒப்பந்தம் செய்து கொள்(ள உதவு)வது.

ஹதீஸ் 2277. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

"(அடிமையாயிருந்த) அபூ தைபா(ரலி), நபி(ஸல்) அவர்களுக்கு இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தார் நபி(ஸல்) அவர்கள் அவருக்கு ஒரு ஸாவு அல்லது இரண்டு ஸாவு உணவு கொடுக்குமாறு கட்டளையிட்டு, அவரின் எஜமானர்களிடம் பேசி, அவர் செலுத்த வேண்டிய வரியைக் குறைத்தார்கள்!"

## இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பவரின் கூலி.

ஹதீஸ் 2278. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் இரத்தம் குத்தி, எடுத்தார்கள் இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தவருக்கு அதற்கான கூலியைக் கொடுத்தார்கள்!"

ஹதீஸ் 2279. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் இரத்தம் குத்தி எடுத்தார்கள். அதற்கான கூலியை இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தவருக்குக் கொடுத்தார்கள். அதை (இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுப்பதற்காகக் கூலி பெறுவதை) வெறுக்கத் தக்கதாகக் கருதியிருந்தால் நபி(ஸல்) அவர்கள் அவருக்குக் (கூலி) கொடுத்திருக்க மாட்டார்கள்!"

ஹதீஸ் 2280. அனஸ்(ரலி) அறிவித்தார்.

“நபி(ஸல்) அவர்கள் இரத்தம் குத்தி எடுத்துக் கொள்வார்கள் எவருடைய கூலியிலும் நபி(ஸல்), அவர்கள் அநீதி இழைக்க மாட்டார்கள்!“

## அடிமைகளின் எஜமானர்களிடம் பேசி, அடிமைகள் செலுத்தவேண்டிய வரியைக் குறைத்தல்.

ஹதீஸ் 2281. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுக்கும் ஓர் இளைஞரை அழைத்துவரச் செய்து இரத்தம் குத்தி, உறிஞ்சி எடுத்தார்கள். அவருக்காக ஒரு ஸாவு அல்லது இரண்டு ஸாவு, ஒரு'முத்து' அல்லது இரண்டு'முத்து' (அளவிற்கு உணவு) கொடுக்குமாறு கட்டளையிட்டார்கள். அவர் சம்பந்தமாகப் பேசி அவர் செலுத்த வேண்டிய வரியைக் குறைத்தார்கள்!“

## விபசாரிகள் மற்றும் (விபசாரம் செய்யும்) அடிமைப் பெண்களின் வருமானம்.

ஒப்பாரி வைப்பவளுக்கும் பாடம்களுக்கும் கூலி கொடுப்பதை இப்ராஹீம் நகயீ(ரஹ்) வெறுத்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

தங்கள் கற்பைப் பேணிக் கொள்ள விரும்பும் உங்கள் அடிமைப் பெண்களை அற்பமான உலக வாழ்க்கை வசதிகளைத் தேடியவர்களாக விபசாரத்திற்கு நிர்ப்பந்திக்காதீர்கள்! அப்படி எவரேனும் அந்தப் பெண்களை நிர்ப்பந்தித்தால் அவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்ட பின்னரும், (அவர்களை) அல்லாஹ் மன்னிப்பவனாகவும் கிருபையுடையவனாகவும் இருக்கிறான்! (திருக்குர்ஆன் 24:33)

ஹதீஸ் 2282. அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

“நாய் விற்றகாசு, விபசாரியின் வருமானம், சோதிடனுக்குரிய தட்சணை ஆகியவற்றை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்!“

ஹதீஸ் 2283. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அடிமைப் பெண்கள் (விபச்சாரத்தின் மூலம்) பொருளீட்டுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

## ஆண் விலங்குகளைப் பெண் விலங்குகளுடன் இணையச் செய்வதற்கு கட்டணம் பெறுதல்.

ஹதீஸ் 2284. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஆண் விலங்குகளைப் பெண் விலங்குகளுடன் இணையச் செய்வதற்கு (பொலிப் பிராணியைக் கொண்டு பெண் விலங்குகளுக்கு சினையூட்டுவதற்கு) கட்டணம் பெறுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

## ஒருவர் ஒரு நிலத்தை வாடகைக்கு வாங்கிய பின், வாடகைக்குவிட்டவரோ பெற்றவரோ இறந்துவிட்டால்...?

“தவணை முடியும்வரை வாடகைக்கு பெற்றவரை வெளியேற்றும். உரிமை வாடகைக்கு விட்(டுவிட்டு. இறந்து விட்)டவரின் குடும்பத்தினருக்கு இல்லை!' என்று இப்னு ஸீரீன்(ரஹ்) கூறினார்.

“வாடகை ஒப்பந்தம் அதற்குரிய தவணை முடியும்வரை செல்லும்!”என்று ஹகம்(ரஹ்), ஹஸன் பஸரீ(ரஹ்), இயாஸ் இப்னு முஆவியா(ரஹ்) ஆகியோர் கூறுகின்றனர்.

‘கைபரில் உற்பத்தியாகும் பயிர்களில் பாதி உழைப்பவருக்கும் பாதி இஸ்லாமிய அரசுக்கும் சேர வேண்டும்’ என்ற அடிப்படையில் நபி(ஸல்) அவர்கள் கைபர் நிலங்களை (யூதர்களுக்குக்) கொடுத்தார்கள். இந்த ஒப்பந்தம் நபி(ஸல்) அவர்கள் காலத்திலும் அபூ பக்ர்(ரலி) காலத்திலும் உமா(ரலி) அவர்களின் ஆட்சி காலத்தின் தொடக்கத்திலும் அமுலில் இருந்தது. நபி(ஸல்) அவர்கள் மரணித்த பின் அபூ பக்ர்(ரலி) அவர்களோ, உமர்(ரலி) அவர்களோ வாடகை ஒப்பந்தத்தைப் புதுப்பித்ததாகக் கூறப்படவில்லை’ என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2285. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

“விளைச்சலில் பாதி கூறப்படும் என்ற அடிப்படையில் கைபருடைய நிலங்களை உழைத்துப் பயிரிட்டுக் கொள்வதற்காக, யூதர்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வழங்கினார்கள்!‘

“(நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) விளைநிலங்களை அவற்றின் விளைச்சலில் ஏதேனும் (ஒரு பகுதியைப்) பெற்றுக் கொண்டு வாடகைக்கு (குத்தகைக்கு) கொடுக்கப்பட்டு வந்தன!’ என்று இப்னு உமர்(ரலி) கூறினார் என நா∴பிஉ (ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2286. ரா∴பிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

“விளை நிலங்களைக் குத்தகைக்கு விடுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்‘.

‘முடிவில் கைபரிலிருந்து யூதர்களை உமர்(ரலி) வெளியேற்றினார்கள். என்று இப்னு உமர்(ரலி) கூறினார்.

# அத்தியாயம் 38 ஹவாலா

## (ஒருவரின் கடனை மற்றொருவருக்கு மாற்றுதல்'ஹவாலா' எனப்படும்.)

## ஹவாலாவை ஏற்றவர் பிறகு மாறலாமா?

“கடன் யார் பெயருக்கு மாற்றப்பட்டதோ அவர் அவ்விதம் மாற்றப்பட்ட நாளில் செல்வந்தராக இருந்திருந்தால் (பின்னர் அவர் திவாலம்விட்டாலும்) அந்த (ஹவாலா) ஒப்பந்தம் செல்லும்!' என்று ஹஸன், பஸரீ (ரஹ்) கதாதா (ரஹ்) ஆகிய இருவரும் கூறுகின்றனர்.

“இரண்டு பங்காளிகளுக்கிடையிலோ வாரிசுகளுக்கிடையிலோ சச்சரவு வந்து, ஒருவர் இருப்பையும் மற்றொருவர் வர வேண்டிய கடனையும் எடுத்த பின்னர், இவரின் இருப்புக்கோ அவரின் கடனுக்கோ இழப்பு ஏற்பட்டால் அதற்கு அவரவரே பொறுப்பு!' என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 2287. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“செல்வந்தன் (வாங்கிய கடனைத் திரும்பச் செலுத்தாமல் தவணை கேட்டு) இழுத்தடிப்பது அநியாயமாகும்! உங்களில் ஒருவரின் கடன் ஒரு செல்வந்தன் மீது மாற்றப்பட்டால் அவர் (அதற்கு) ஒத்துக் கொள்ளட்டும்!‘

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## ஒருவருக்கு வரவேண்டிய கடன் ஒரு பணக்காரர் மீது மாற்றப்பட்டால் அதை அவர் மறுக்கக் கூடாது.

ஹதீஸ் 2288. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்“

“செல்வந்தன் (வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்தாமல் தவணை கேட்டு) இழத்தடிப்பது அநியாயமாகும்! உங்களில் ஒருவரின் கடன் ஒரு செல்வந்தர் மீது மாற்றப்பட்டால் அவர் ஒத்துக் கொள்ளட்டும்!

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## இறந்தவர் கொடுக்க வேண்டிய கடனுக்கு இன்னொருவர் பொறுப்பேற்றால் அது செல்லும்.

ஹதீஸ் 2289. லைமா இப்னு அக்வஃ (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் அமர்ந்திருந்தபோது ஒரு ஜனாஸாகள். 'நீங்கள் இவருக்குத் தொழுகை நடத்துங்கள்“' என்று நபி (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், ‘இவர் கடனாளியா?' என்று கேட்டபோது நபித்தோழர்கள்'இல்லை' என்றனர். 'ஏதேனும் (சொத்தை) இவர்விட்டுச் சென்றிருக்கிறாரா?' என்று நபி (ஸல்) கேட்டபோது'இல்லை' என்றனர். நபி (ஸல்) அவருக்குத் தொழுகை நடத்தினார்கள். பிறகு மற்றொரு ஜனாஸா கொண்டு வரப்பட்டபோது'இறைத்தூதர் அவர்களே! இவருக்குத் தொழுகை நடத்துங்கள்' என்று நபித்தோழர்கள் கேட்டனர். அதற்கு'நபி (ஸல்) அவர்கள்'இவர் கடனாளியா?' என்று கேட்டபோது'ஆம்' எனக் கூறப்பட்டது. 'இவர் ஏதேனும்விட்டுச் சென்றிருக்கிறாரோ?' என்று

நபி(ஸல்) அவர்கள் கேட்டபோது'இல்லை' என்றனர். 'இவர் எதையேனும்விட்டுச் சென்றிருக்கிறாரோ? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'இவர் கடனாளியா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டபோது'மூன்று தங்கக் காசுகள் கடன் வைத்திருக்கிறார்' என்று நபித்தேழர்கள் கூறினார். நபித்தோழர்கள் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்'உங்கள் தோழருக்கு நீங்களே தொழுகை நடத்துங்கள்' என்றனர். அப்போது நடத்துங்கள்' என்றனர். அப்போது அபூ கதாதா(ரலி)'இவரின் கடனுக்கு நான் பொறுப்பு் தொழுகை நடத்துங்கள்' என்று கூறியதும் நபி(ஸல்) அவர்கள் அவருக்குத் தொழுகை நடத்தினார்கள்.

# அத்தியாயம் 39 கஃபாலா

## (பிணையாக்கல்)

(கடனுக்காகவும் மற்ற பிரச்சினைக்காகவும் ஆட்களையோ பொருட்களையோ பிணையாக்குதல்.)

### கடனுக்காகவும் மற்ற பிரச்சினைக்காகவும் ஆட்களையோ பொருட்களையோ பிணையாக்குதல்

ஹதீஸ் 2290. ஹம்ஸா அல் அஸ்லமி(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) என்னை ஸகாத் வசூலிப்பவராக அனுப்பினார். (நான் சென்ற ஊரில்) ஒருவர் தம் மனைவியின் அடிமைப் பெண்ணுடன் விபச்சாரம் செய்தார். உடனே நான் அந்த மனிதருக்காக ஒரு பிணையாளைப் பிடித்து வைத்துக் கொண்டு உமர்(ரலி) அவர்களிடம் சென்றேன். உமர்(ரலி) அதற்கு முன்பே அவருக்கு, அவர் (மனைவியின் அடிமைப் பெண் தமக்கும் அடிமைப்பெண்தான் என்று கருதி) அறியாமையால் செய்த காரணத்தினால் (கல்லெறிந்து கொல்லாமல்) நூறு கசையடி கொடுத்திருந்தார்கள்.

இஸ்லாத்தைவிட்டு வெளியேறியவர்களைக் குறித்து ஜரீர், அஷ்அஸ் இருவரும் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம்'இஸ்லாத்தைவிட்டுச் சென்றவர்களை பாவமன்னிப்புக் கேட்கச் செய்யுங்கள். அவர்களுக்காகப் பிணையாட்களை ஏற்படுத்துங்கள் என்று கூறினர். அவ்வாறே அவர்கள் பாவமன்னிப்புக் கோரினர். உறவினர்கள் அவர்களுக்குப் பிணை நின்றனர்.

பிணையாளி இறந்துவிட்டால் அவர்மீது பொறுப்பில்லை (அவரின் வாரிசிடம் எதுவும் கேட்க முடியாது) என்று ஹம்மாது கூறுகிறார்.

### பிணையாளி இறந்துவிட்டாலும் அவரின் பொறுப்பு நீங்கவில்லை என்று ஹகம் கூறுகிறார்.

ஹதீஸ் 2291. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"இஸ்ரவேலர்களில் ஒருவர் மற்றொருவரிடம் தமக்கு ஆயிரம் தங்கக்காசுகள் கடனாகக் கேட்டார். கடன் கேட்கப்பட்டவர்'சாட்சிகளை எனக்குக் கொண்டு வா! அவர்களைச் சாட்சியாக வைத்துத் தருகிறேன்' என்றார். கடன் கேட்டவர்'சாட்சிக்கு அல்லாஹ்வே போதுமானவன்!' என்றார். 'அப்படியானால் ஒரு பிணையாளியை என்னிடம் கொண்டுவா!' என்று கடன் கேட்கப்பட்டவர் கூறினார். அதற்குக் கடன் கேட்டவர்'பிணை நிற்க அல்லாஹ்வே போதுமானவன்' என்று கூறினார். கடன் கேட்கப்பட்டவர்'நீர் கூறுவது உண்மையே!' என்று கூறி, குறிப்பிட்ட தவணைக்குள் திருப்பித் தர வேண்டும் என்று ஆயிரம் தங்கக் காசுகளை அவருக்குக் கொடுத்தார். கடன் வாங்கியவர் கடல் மார்க்கமாகப் புறப்பட்டு, தம் வேலைகளை முடித்துவிட்டு, குறிப்பிட்ட தவணையில் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டும் என்பதற்காக வாகனத்தைத் தேடினார். எந்த வாகனமும அவருக்குக் கிடைக்கவில்லை. உடனே, ஒரு மரக்கட்டையை எடுத்து, அதைக் குடைந்து அதற்குள் ஆயிரம் தங்கக் காசுகளையும் கடன் கொடுத்தவருக்கு ஒரு கடிதத்தையும் உள்ளே வைத்து அடைத்தார். பிறகு கடலுக்கு வந்து, 'இறைவா!

இன்னாரிடம் நான் ஆயிரம் தங்கக் காசுகளைக் கடனாகக் கேட்டேன் அவர் பிணையாளி வேண்டுமென்றார் நான்'அல்லாஹ்வே பிணைநிற்கப் போதுமானவன்!"என்றேன் அவர் உன்னைப் பிணையாளியாக ஏற்றார். என்னிடம் சாட்சியைக் கொண்டுவரும்படி கேட்டார்'சாட்சிக்கு அல்லாஹ்வே போதுமானவன்!"என்று கூறினேன். அவர் உன்னை சாட்சியாக ஏற்றார் அவருக்குரிய (பணத்)தை அவரிடம் கொடுத்து அனுப்பி விடுவதற்காக ஒரு வாகனத்திற்கு நான் முயற்சி செய்தும் கிடைக்கவில்லை என்பதையெல்லாம் நீ அறிவாய்! எனவே, இதை உரியவரிடம் சேர்க்கும் பொறுப்பை உன்னிடத்தில் ஒப்படைக்கிறேன்!"என்று கூறி அதைக் கடலில் வீசினார். அது கடலுக்குள் சென்றதும் திரும்பிவிட்டார். அத்துடன் தம் ஊருக்குச் செல்வதற்காக வாகனத்தையும் அவர் தேடிக் கொண்டிருந்தார். அவருக்குக் கடன் கொடுத்த மனிதர், தம் செல்வத்துடன் ஏதேனும் வாகனம் வரக்கூடும் என்று நோட்டமிட்ட வண்ணம் புறப்பட்டார். அப்போது, பணம் அடங்கிய அந்த மரக்கட்டையைக் கண்டார். தம் குடும்பத்திற்கு விறகாகப் பயன்படட்டும் என்பதற்காக அதை எடுத்தார். அதைப் பிளந்து பார்த்தபோது பணத்தையும் கடிதத்தையும் கண்டார். பிறகு, கடன் வாங்கியவர் ஆயிரம் தங்கக் காசுகளை எடுத்துக்கொண்டு இவரிடம் வந்து சேர்ந்தார். 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! உம்முடைய பணத்தை உமக்குத் தருவதற்காக வாகனம் தேடும் முயற்சியில் நான் ஈடுபட்டிருந்தேன். இப்போதுதான் வாகனம் கிடைத்து வந்திருக்கிறேன்!"என்று கூறினார். அதற்கு கடன் கொடுத்தவர், 'எனக்கு எதையாவது அனுப்பி வைத்தீரா?' என்று கேட்டார். கடன் வாங்கியவர், 'வாகனம் கிடைக்காமல் இப்போதுதான் வந்திருக்கிறேன் என்று உமக்கு நான் தெரிவித்தேனே!"என்று கூறினார். கடன் கொடுத்தவர், 'நீர் மரத்தில் வைத்து அனுப்பியதை உம் சார்பாக அல்லாஹ் என்னிடம் சேர்ப்பித்துவிட்டான் எனவே, ஆயிரம் தங்கக் காசுகளை எடுத்துக் கொண்டு (சரியான) வழியறிந்து செல்லும்!"என்று கூறினார்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் கூறினான்:

“அவ்வாறே, நீங்கள் உடன்படிக்கை செய்து கொண்டோருக்கும் அவர்களின் பாகத்தை அவர்களுக்கு கொடுத்து விடுங்கள்!" (திருக்குர்ஆன் 4:33)

ஹதீஸ் 2292. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

முஹாஜிர்கள் மதீனாவிற்கு வந்தபோது, அன்ஸாரி ஒருவர் இறந்துவிட்டால் அவரின் உறவினர்கள் அன்றி முஹாஜிர் அவருக்கு வாரிசாவார். நபி (ஸல்) அவர்கள் இருவருக்கிடையே ஏற்படுத்திய சகோதரத்துவமே இதற்குக் காரணம். 'மேலும், தாய் தந்தையரும் நெருங்கிய பந்துக்களும்விட்டுச் செல்கிற செல்வத்திலிருந்து (விம்தப்படி பங்கு பெறுகின்ற) வாரிசுகளை நாம் ஒவ்வொருவருக்கும் நிர்ணயித்துள்ளோம்! அவ்வாறே, நீங்கள் உடன்படிக்கை செய்து கொண்டோருக்கும் அவர்களின் பங்கைக் கொடுத்து விடுங்கள்! நிச்சயமாக, அல்லாஹ் ஒவ்வொரு பொருளின் மீதும் சாட்சியாளானக இருக்கிறான்!" (திருக்குர்ஆன் 04:33) என்ற இறைவசனம் அருளப்பட்டபோது இது மாற்றப்பட்டது. உடன்படிக்கை செய்தவர்களுக்கிடையே வாரிசுரிமை, போய், உதவி புரிதல், ஒத்தாசை செய்தல், அறிவுரை கூறுதல் ஆகியவை தாம் எஞ்சியுள்ளன! உடன்படிக்கை வெசய்தவருக்காக வஸிய்யத் (மரண சாசனத்தின் வாயிலாக சிறிது சொத்தை எழுதி வைப்பது) மட்டும் செய்யலாம்!

ஹதீஸ் 2293. அனஸ் (ரலி) அறிவித்தார்.

“அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), (ஹிஜ்ரத் செய்து) எங்களிடம் வந்தபோது, அவர்களையும் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி) அவர்களையும் நபி(ஸல்) அவர்கள் சகோதரர்களாக ஆக்கினார்கள்!“

ஹதீஸ் 2294. ஆஸிம்(ரஹ்) அறிவித்தார்.

“இஸ்லாத்தில் (மனிதர்களாக) ஏற்படுத்திக் கொள்கிற உறவுமுறை இல்லை!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உங்களுக்குச் செய்தி கிடைத்ததா?' என்று அனஸ்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கவர்கள், 'என்னுடைய வீட்டில் வைத்து முஹாஜிர்களுக்கும் அன்ஸாரிகளுக்குமிடையே நபி(ஸல்) அவர்கள் உறவுமுறைகளை ஏற்படுத்தினார்களே!”என்று பதிலளித்தார்கள்.

## இறந்தவரின் கடனை ஏற்றவர் அந்தப் பொறுப்பிலிருந்து பிறழக் கூடாது.

ஹஸன் பஸரீ(ரஹ்) அவர்கள் இவ்வாறு கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2295. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

தொழுகை நடத்துவதற்காக ஒரு ஜனாஸா கொண்டுவரப்பட்டது. 'இவர் கடனாளியா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டபோது. நபித்தோழர்கள்'இல்லை!”என்றனர். அவருக்கு நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள். பிறகு மற்றொரு ஜனாஸா கொண்டு வரப்பட்டபோது'இவர் கடனாளியா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நபித்தோழர்கள்'ஆம்!”என்றனர். நபி(ஸல்) அவர்கள்'அப்படியென்றால் உங்கள் தோழருக்கு நீங்களே தொழுகை நடத்துங்கள்!”என்றார்கள். அப்போது அபூ கதாதா(ரலி)'இறைத்தூதர் அவர்களே! இவரின் கடனுக்கு நான் பொறுப்பு!”என்று கூறியதும் அவருக்கு நபி(ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள்.

ஹதீஸ் 2296. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

“பஹ்ரைன் நாட்டிலிருந்து (ஸகாத்) பொருள்கள் வந்தால் உனக்கு இன்னின்ன பொருட்களைத் தருவேன்!”என்று நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கூறியிருந்தார்கள். அவர்கள் மரணிக்கும்வரை பஹ்ரைனிலிருந்து பொருள்கள் வரவில்லை. அபூ பக்ர்(ரலி) அவர்களின் ஆட்சியில் பஹ்ரைனியிலிருந்து பொருள்கள் வந்தபோது, 'நபி(ஸல்) அவர்கள் யாருக்காவது வாக்களித்திருந்தால் அல்லது யாரிடமாவது கடன்பட்டிருந்தால் அவர் நம்மிடம் வரட்டும்!”என்று அபூ பக்ர்(ரலி) பிரகடனப்படுத்தினார்கள். நான் அவர்களிடம் சென்று'நபி(ஸல்) அவர்கள் எனக்கு இன்னின்ன பொருட்களைத் தருவதாகக் கூறியிருந்தார்கள்!”என்றேன். அபூ பக்ர்(ரலி) எனக்குக் கை நிறைய நாணயங்களை அள்ளித் தந்தார்கள். அதை நான் எண்ணிப் பார்த்தபோது ஐநூறு நாணயங்கள் தந்தார்கள். அதை நான் எண்ணிப் பார்த்தபோது ஐநூறு நாணயங்கள் இருந்தன. 'இதுபோல் இன்னும் இரண்டு மடங்குகளை எடுத்துக் கொள்வீராக!”என்று அபூ பக்ர்(ரலி) கூறினார்.

## நபி(ஸல்) அவர்களின் காலத்தில் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு கொடுக்கப்பட்ட அடைக்கலமும் உறுதிமொழியும்.

ஹதீஸ் 2297. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

எனக்கு விவரம் தெரிந்த நாள் முதலாகவே என் பெற்றோர் முஸ்லிம்களாக இருந்தனர். நபி(ஸல்) அவர்கள் பகலின் இரண்டு ஓரங்களான காலையிலும் மாலையிலும் எங்களிடம்

வராமல் ஒரு நாளும் கழிந்தது இல்லை. முஸ்லிம்கள் (எதிரிகளின் கொடுமைகளால்) சோதனைக் குள்ளாக்கப்பட்டபோது, அபூ பக்ர்(ரலி) தாயகம் துறந்து அபிஸீனியாவை நோக்கி சென்றார்கள். 'பர்குல் ஃம்மாத்' எனும் இடத்தை அவர்கள் அடைந்தபோது அப்பகுதியின் தலைவர் இப்னு தம்னா என்பவர் அவர்களைச் சந்தித்தார். அவர் அவர்களிடம், 'எங்கே செல்கிறீர்?' என்று கேட்டார். அபூ பக்ர்(ரலி) 'என் சமுதாயத்தவர் என்னை வெளியேற்றிவிட்டனர் எனவே பூமியில் பயணம் (செய்து வேறுபகுதிக்குச்) சென்று என் இறைவனை வணங்கப் போகிறேன்! என்று கூறினார்கள். அதற்கு இப்னு தம்னா, 'உம்மைப் போன்றவர் வெளியேறவும் கூடாது' வெளியேற்றப்படவும் கூடாது வெளியேற்றப்படவும்கூடாது! ஏனெனில் நீர் ஏழைகளுக்காக உழைக்கிறீர் உறவினர்களுடன் இணங்கி வாழ்கிறீர் பிறருக்காகச் சிரமங்களைத் தாங்கிக் கொள்கிறீர் விருத்தினர்களை உபசரிக்கிறீர். எனவே, நான் உமக்கு அடைக்கலம் தருகிறேன்! எனவே, திரும்பி உம்முடைய ஊருக்குச் சென்று இறைவனை வணங்குவீராக!' எனக் கூறினார். இப்னு தம்னா, தம்முடன் அபூ பக்ர்(ரலி)அவர்களை அழைத்துக் கொண்டு குறைஷிகளில் இறைமறுப்பாளர்களின் பிரமுகர்களைச் சந்தித்தார். அவர்களிடம், 'அபூ பக்ரைப் போன்றவர்கள் வெளியேறவும் கூடாது! ஏழைகளுக்காக உழைக்கின்ற, உறவினர்களுடன் இணங்கி வாழ்கின்ற, விருந்தினரை உபசரிக்கின்ற, பிறருக்காகச் சிரமங்களைத் தாங்கிக் கொள்கின்ற, துன்பப்படுபவர்களுக்கு உதவுகிற ஒரு மனிதரை நீங்கள் வெளியேற்றலாமா?' என்று கேட்டார். எனவே, குறைஷியர் இப்னு தம்னாவின் அடைக்கலத்தை ஏற்று அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்தனர். மேலும் இப்னு தம்னாவிடம், 'தம் வீட்டில் தம் இறைவனைத் தொழுது வருமாறும், விரும்பியதை ஓதுமாறும், அதனால் எங்களுக்குத் தொந்தரவு இல்லாமல் பார்த்துக் கொள்ளுமாறும், அதை பம்ரங்கமாகச் செய்யாதிருக்கும் படியும் அபூ பக்ருக்கு நீர் கூறும்! ஏனெனில், எங்களுடைய மனைவி மக்களை அவர் குழப்பி (சோதனைக்குள்ளாக்கி) விடுவார் என நாங்கள் அஞ்சுகிறோம்!"என்றனர். இதை இப்னு தம்னா, அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் தெரிவித்தார். பிறகு, அபூ பக்ர்(ரலி) வீட்டிற்கு வெளியே தொழுது, ஓதீ பம்ரங்கப்படுத்தாமல் தம் வீட்டிற்குள்ளேயே தம் இறைவனை வணங்கலானார்கள். பிறகு, அவர்களுக்கு ஏதோ தோன்ற தம் வீட்டிற்கு முன்புறத்திலுள்ள காலியிடத்தில் பள்ளிவாசல் ஒன்றைக் கட்டி வெளியே வந்(து தொழு)தார்கள். அந்தப் பள்ளி வாசலில் தொழவும் குர்ஆன் ஓதவும் தொடங்கினார்கள். இணைவைப்பவர்களின் மனைவிமக்கள் திரண்டு வந்து, ஆச்சரியத்துடன்அவரை கவனிக்கலாயினர். அபூ பக்ர்(ரலி) குர்ஆன் ஓதும்போது (மனம் உரும் வெளிப்படும்) தம் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியாமல் அதிகம் அழுபவராக இருந்தார்கள். இணைவைப்போரான குறைஷிப் பிரமுகர்களுக்கு இது கலக்கத்தை ஏற்படுத்தியது. இப்னு தம்னாவை உடனே அழைத்து வரச் செய்து'அபூ பக்ர் அவர்கள், தம் வீட்டில்தான் வணங்க வேண்டும் என்ற அடிப்படையிலேயே நாங்கள் அவருக்குப் பாதுகாப்பளித் திருந்தோம். அவர், அதை மீறித் தம் வீட்டில் முன்னால் உள்ள காலியிடத்தில் பள்ளிவாசலைக் கட்டிவிட்டார். பம்ரங்கமாக தொழவும் ஓதவும் தொடங்கிவிட்டார். அவர் எங்கள் மனைவி மக்களைக் குழப்பி (சோதனைக்குள்ளாக்கி) விடுவார் என நாங்கள் அஞ்சுகிறோம். எனவே, அவர் தம் இறைவனைத் தம் வீட்டில் மட்டும் வணங்குவதாக இருந்தால் செய்யட்டும் பம்ரங்கமாகத்தான் செய்வேன் என்று அவர் கூறிவிட்டால் நீர் கொடுத்த அடைக்கலத்தை மறுத்து விடும்படி அவரிடம் கேளும்! ஏனெனில், உம்மிடம் செய்த ஒப்பந்தை முறிக்கவும் நாங்கள் விரும்பவில்லை அதே சமயம் அபூ பக்ர் அவர்கள் பம்ரங்கமாகச் செயல்படுவதை நாங்கள் ஏற்றுக் கொள்ளவும் (தயாராக) இல்லை!"என்று அவர்கள் கூறினார்கள். உடனே இப்னு தம்னா, அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் வந்து'எந்த அடிப்படையில் நான் உமக்கு அடைக்கலம் தந்தேன் என்பதை நீர் அறிவீர்! நீர் அதன்படி நடக்க வேண்டும்! இல்லையென்றால் என்னுடைய அடைக்கலத்தை என்னிடமே திருப்பித் தந்துவிட்டார்'

என்று பிற்காலத்தில் அரபியர் (என்னைப் பற்றிப்) பேசக் கூடாது என்று விரும்புகிறேன்!' எனக் கூறினார். அதற்கு அபூ பக்ர்(ரலி),'உம்முடைய அடைக்கல ஒப்பந்தத்தை நான் உம்மிடமே திரும்பத் தந்து விடுகிறேன்! அல்லாஹ்வின் அடைக்கலத்தில் நான் திருப்தியுறுகிறேன்!"என்று கூறினார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்காவில் இருந்தார்கள்.'நீங்கள் (மக்காவைத்) துறந்து (அபயம் பெறச்) செல்லும் நாடு எனக்குக் காட்டப்பட்டது. அது மலைகளுக்கிடையேயுள்ளதும் பேரீச்ச மரங்கள் நிறைந்துமான உவர் நிலமாகும்! அந்த இரண்டு மலைகள்தான் (மதீனாவின்) இரண்டு கருங்கல் பூமிகளாகும்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இதை நபி(ஸல்) அவர்கள் கூறியபோது மதீனாவை நோக்கிச் சிலர் மதீனாவுக்குத் திரும்பி வந்தனர். அபூ பக்ர்(ரலி) ஹிஜ்ரத் செய்யத் தயாரானபோது, அவர்களிடம்'சற்றுப் பொறுப்பீராக! எனக்கு அனுமதி அளிக்கப்படவேண்டும் என்று நான் எதிர்பார்க்கிறேன்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூ பக்ர்(ரலி)'என் தந்தை உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! நீங்கள் அதைத்தான் எதிர்பார்க்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'ஆம்!"என்றார்கள். நபி(ஸல) அவர்களுடன் சேர்ந்து செல்வதற்காக அபூ பக்ர்(ரலி) தம் பயணத்தை நிறுத்தினார்கள். தம்மிடத்திலிருந்து இரண்டு ஒட்டகங்களுக்கும்'சமுர்' எனும் மரத்திலிருந்த இலைகளை நான்கு மாதங்கள் தீனியாகப் போட்டார்கள்.

## கடன்

ஹதீஸ் 2298. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

கடன்பட்டு இறந்தவர் நபி(ஸல்) அவர்களிடம் (ஜனாஸாத் தொழுகைக்காகக்) கொண்டு வரப்படுபவார் அப்போது'இவர் கடனை அடைக்க ஏதேனும்விட்டுச் சென்றிருக்கிறாரா?' என்று கேட்பார்கள்.'கடனை அடைப்பதற்குப் போதுமானதைவிட்டுச் சென்றிருக்கிறார்' என்று கூறப்பட்டால் (அவருக்காகத்) தொழுகை நடத்துவார்கள். இல்லையென்றால்'நீங்கள் உங்கள் தோழருக்காகத் தொழுகை நடத்துங்கள்!"என்று முஸ்லிம்களிடம் கூறிவிடுவார்கள். அல்லாஹ் அவர்களுக்கு ஏராளமான வெற்றிகளைக் கொடுத்தபோது (அதன் மூலம் செல்வம் குவிந்ததால்),'இறைநம்பிக்கையாளர்களைப் பொறுத்தவரை அவர்களின் விஷயத்தில் நானே அதிக உரிமையுடையவன்! இறைநம்பிக்கையாளர்களில் யாரேனும் கடன்பட்ட நிலையில் இறந்துவிட்டால் அதை நிறைவேற்றுவது என் பொறுப்பாகும்! யாரேனும் செல்வத்தைவிட்டுச் சென்றால் அது அவர்களின் வாரிசுகளுக்குரியதாகும்!"என்று கூறினார்கள்.

## அத்தியாயம் 40 வகாலத்

அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பம் செய்கிறேன்.

### (ஒருவர் தன்னுடைய கொடுக்கல் வாங்கல்களுக்காக பிறருக்கு அதிகாரம் வழங்குவது)

விநியோகம் செய்வதற்கும் மற்ற காரியங்களுக்கும் இரண்டு பங்காளிகளில் ஒருவர் மற்றவருக்கு அதிகாரம் வழங்குதல்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் குர்பானிப் பிராணிகளில் அலீ(ரலி)யையும் பங்கு சேர்த்துக் கொண்டு அதனை விநியோகிக்கும் பொறுப்பை அலீ(ரலி)யிடம் ஒப்படைத்தார்கள்.

ஹதீஸ் 2299. அலீ(ரலி) அறிவித்தார்.

அறுக்கப்பட்ட ஒட்டகங்களுக்கு அணிவிக்கப்பட்டிருந்த சேணங்களையும் தோல்களையும் தர்மம் செய்யுமாறு நபி(ஸல்) அவர்கள் எனக்குக் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 2300. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் சில ஆடுகளைத் தம் தோழர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்குமாறு என்னிடம் கொடுத்தார்கள். (அவ்வாறே நான் பங்கிட்டு முடித்தபின்) ஓர் ஆட்டுக்குட்டி எஞ்சியது. அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் நான் கூறியபோது,'அதை நீர் (அறுத்து) குர்பானி கொடுப்பீராக!"எனக் கூறினார்கள்.

### இஸ்லாமிய நாட்டிலோ இஸ்லாத்திற்கு எதிரான நாட்டிலோ முஸ்லிமல்லாத எதிரிக்கு ஒரு முஸ்லிம் வக்காலத் (தன் சார்பாக செயல்படும் அதிகாரம்) கொடுத்தால் அது செல்லும்.

ஹதீஸ் 2301. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அறிவித்தார்.

'மக்காவிலுள்ள என் உறவினர்களையும் சொத்துக்களையும் உமய்யா இப்னு கலஃப் (என்ற இறைமறுப்பாளன்) பாதுகாக்க வேண்டும்' என்றும்'மதீனாவிலுள்ள அவனுடைய உறவினர்களையும் சொத்துக்களையும் நான் பாதுகாப்பேன்' என்றும் அவனுடன் எழுத்து வடிவில் ஒப்பந்தம் செய்து கொண்டேன். (ஒப்பந்தப் படிவத்தில்)'அப்துர் ரஹ்மான்' (ரஹ்மானின் அடிமை) என்று என் பெயரை எழுதியபோது,'ரஹ்மானை நான் அறியமாட்டேன். அறியாமைக் காலத்து உம்முடைய பெயரை எழுதும் என்று அவன் கூறினான். நான் அப்து அம்ர் என்று (என் பழைய பெயரை) எழுதினேன். பத்ருப் போர் நடந்த தினத்தில் மக்களெல்லாம் உறங்கிய உடன் அவனைப் பாதுகாப்பதற்காக மலையை நோக்கி சென்றேன். அவனை பிலாலும் பார்த்துவிட்டார். பிலால் உடனே வந்து அன்ஸாரிகள் குழுமியிருந்த இடத்தை அடைந்து,'இதோ உமய்யா இப்னு கலப்! இவன் தப்பித்துவிட்டால் நான் தப்பிக்க முடியாது எனக்

கூறினார். (இவன் பிலாலுக்கு எஜமானனாக இருந்து அவரைச் சித்திரவதை செய்தவன்) பிலாலுடன் அன்ஸாரிகளில் ஒரு கூட்டத்தினர் எங்களைத் தொடர்ந்து வந்தனர். அவர்கள் எங்களைப் பிடித்து விடுவார்கள் என்று நான் அஞ்சியபோது, உமய்யாவின் மகனை முன்நிறுத்தி அவர்களின் கவனத்தைத் திருப்ப முயன்றேன். அவனை அன்ஸாரிகள் கொன்றனர். பிறகும் என்னைத் தொடர்ந்து வந்தனர். உமய்யா உடல் கனத்தவனாக இருந்தவன். (அதனால் ஓட இயலாவில்லை) அவர்கள் எங்களை அடைந்ததும் உமய்யாவிடம்,'குப்புறப்படுப்பீராக!' என்று கூறினேன். அவன் குப்புற விழுந்ததும் அவனைக் காப்பாற்றுவதற்காக அவன் மேல் நான் விழுந்தேன். அன்ஸாரிகள் எனக்குக் கீழ்ப்புறம் வாளைச் செலுத்தி அவனைக் கொன்றுவிட்டனர். அவர்களில் ஒருவர் என் காலையும் தம் வாளால் வெட்டினார்.

"அப்துர் ரஹ்மான்(ரலி) தம் பாதத்தின் மேல் பகுதியில் அந்த வெட்டுக் காயத்(தின் வடு இருப்ப)தை எங்களுக்குக் காட்டினார்!"என்று அவரின் மகன் கூறுகிறார்.

## நாணய மற்று வியாபாரத்திலும் எடை போடுவதற்கும் பிறருக்கு அதிகாரம் வழங்குதல்.

நாணயம் மாற்றித் தருவதற்கு உமர்(ரலி) அவர்களும், இப்னு உமர்(ரலி) அவர்களும் (பிறருக்கு) அதிகாரம் வழங்கியுள்ளனர்.

ஹதீஸ் 2302 ` ஹதீஸ் 2303 அபூ ஹுரைரா(ரலி) அபூ ஸயீத்(ரலி) இருவரும் அறிவித்தார்கள்:

நபி(ஸல்) அவர்கள் கைபர் பகுதியில் ஒரு மனிதரை அதிகாரியாக நியமித்தார்கள். அவர்'ஜனீப்' என்னும் தரமான பேரீச்சம் பழங்களைக் கொண்டு வந்தார். நபி(ஸல்), அவர்கள்'கைபரில் உள்ள எல்லாப் பேரீச்சம் பழங்களும் இதே தரத்தில்தான் இருக்குமா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்,'இரண்டு ஸாவு சாதாரண வகைப் பேரீச்சம் பழங்களைக் கொடுத்து இதில் ஒரு ஸாவையும், மூன்று ஸாவு சாதரண வகைப் பேரீச்சம் பழங்களைக் கொடுத்து இதில் இரண்டு ஸாவுகளையும் நாங்கள் வாங்குவோம்!' எனக் கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'அவ்வாறு செய்யாதீர்! சாதாரண வகைப் பேரீச்சம் பழங்களை வெள்ளிக் காசுகளுக்கு விற்றுவிட்டு அந்தக் காசுகளின் மூலம் உயர்ந்த பேரீச்சம் பழங்களை வாங்குவீராக!"என்றார்கள்.

நிறுத்தலளவையிலும் இது போன்றே நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பகுதி 4

## ஆடு மேய்ப்பவர் அல்லது ஆட்டை பராமரிக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டவர், சாகும் தருவாயிலுள்ள ஓர் ஆட்டைக் கண்டால் அதை அறுக்கலாம். அழிந்துவிடும் நிலையில் உள்ள ஒரு பொருளைக் கண்டால் அப்பொருளை அழிவிலிருந்து காக்கலாம்.

ஹதீஸ் 2304. கஅபு இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

'ஸல்வு' எனுமிடத்தில் மேயக்கூடிய சில ஆடுகள் எங்களுக்குச் சொந்தமாக இருந்தன. அந்த ஆடுகளில் ஒன்று சாகும் தருவாயில் இருப்பதை எங்களின் அடிமைப்பெண் பார்த்துவிட்டு, ஒரு கல்லை (கூர்மையாக) உடைத்து, அதன் மூலம்

அந்த ஆட்டை அறுத்தார். 'நபி(ஸல்) அவர்களிடமம் இதுபற்றி நான் கேட்கும் வரை சாப்பிடாதீர்கள்!"என்று கூறினேன். நபி(ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு அதை சாப்பிடுமாறு கூறினார்கள்.

'நபி(ஸல்) அவர்களிடம் இது பற்றி நான் கேட்கும் வரை என்பதற்கு பதிலாக நபி(ஸல்) அவர்களிடம் இது பற்றி நான் ஆளனுப்பிக் கேட்கும் வரை' என்று கூட கஅபு(ரலி) சொல்லியிருக்கலாம்!' என்று அறிவிப்பாளர் (சந்தேகத்துடன்) கூறுகிறார்.

"ஓர் அடிமைப் பெண் இவ்வாறு ஆட்டை அறுத்திருப்பது எனக்கு வியப்பை அளிக்கிறது!' என்று உபைதுல்லாஹ்(ரஹ்) கூறினார்.

## கண்களுக்கு முன்னால் (ஊரில்) இருப்பவருக்கும், (ஊரில்) இருப்பவருக்கும், (ஊரில்) இல்லாமல் தொலைவில் இருப்பவருக்கும் அதிகாரம் வழங்குவது செல்லும்.

அப்துல்லாஹ் இப்னு அமர்(ரலி) வெளியூரிலிருந்து தம் கருவூலக் காப்பாளருக்கு தம் குடும்பத்திலுள்ள சிறுவர்கள் முதியவர்கள் சார்பாக ஸகாத் (ஃபித்ரா) கொடுக்குமாறு எழுதினார்கள்.

ஹதீஸ் 2305. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதருக்கு, குறிப்பிட்ட வயதுடைய ஒட்டகம் ஒன்றை (கடனாகப் பெற்றதைத் திரும்பிச் செலுத்தும் வகையில்) கொடுக்க வேண்டிய வகையில்) கொடுக்க வேண்டியிருந்தது. அதை அவர் (திரும்பிச் செலுத்தும்படி) கேட்டு வந்தார். நபி(ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்)'அவருக்கு அதைக் கொடுத்து விடுங்கள்' என்றார்கள். அந்த வயதுடைய ஒட்டகத்தைத் தேடிய போது. அதை விட அதிக வயதுடைய ஒட்டகத்தைத் தேடியபோது, அதை விட அதிக வயதுடைய ஒட்டகத்தைத் தேடியபோது, அதை விட அதிக வயதுடைய ஒட்டகத்தைத்தான் தோழர்கள் கண்டார்கள்' அதையே கொடுத்து விடுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கு அம்மனிதர், 'எனக்கு நீங்கள் நிறைவாகத் தந்து விட்டீர்கள். அல்லாஹ்வும் உங்களுக்கு நிறைவாகத்தருவான் என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அழகிய முறையில் திரும்பிச் செலுத்துபவரே உங்களில் சிறந்தவர்' என்றார்கள்.

## கடனை திருப்பிக் கொடுபதற்குப் பிறருக்கு அதிகாரம் வழங்குதல்.

ஹதீஸ் 2306. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு கொடுத்த கடனை வாங்குவதற்காக வந்து கடினமான வார்த்தையைப் பயன்படுத்தினார். நபித்தோழர்கள் அவரைத் தாக்க முயன்றனர். அவரைவிட்டு விடுங்கள். கடன் கொடுத்தவருக்கு இவ்வாறு கூற உரிமையுள்ளது' என்று கூறிவிட்டு அவருக்குக் கொடுக்க வேண்டிய ஒட்டகத்தின் வயதுடைய ஓர் ஒட்டகத்தைக் கொடுங்கள் என்றார்கள். நபித்தோழர்கள், 'அதைவிட அதிக வயதுடைய ஒட்டகத்தைத் தவிர வேறு இல்லை' என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அதையே கொடுங்கள். அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே உங்களில் சிறந்தவர் என்றார்கள்.

## ஒரு சமுதாயத்தின் பிரதி நிதியாக அல்லது அதற்காகப் பரிந்துரை செய்பவராக வந்திருப்பவருக்கு அன்பளிப்புச் செய்தால் அது செல்லும்.

ஹவாஸின் குலத்தாரின் தூதுக் குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் கனீமத் பொருட்களைக் கேட்டபோது,'எனக்குக் கிடைத்த பங்கு உங்களுக்குரியது!' என அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2307 ‍‍‍ ஹதீஸ் 2308. மர்வான் இப்னி ஹகம்(ரலி) மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்கள்:

ஹவாஸின் தூதுக் குழுவினர் முஸ்லிம்களாம் நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். (போரில் தங்களிடமிருந்து கைப்பற்றப்பட்ட) தங்கள் செல்வத்தையும் கைதிகளையும் திரும்பத் தருமாறு நபி(ஸல்) அவர்களிடம் கேட்டனர். அப்போதுநபி(ஸல்) அவர்கள்,'உண்மை பேசுவது எனக்கு மிகவும் விருப்பமானது! கைதிகள் அல்லது செல்வங்கள் இவ்விரண்டில் ஏதேனம் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்! நான் உங்களை எதிர்பார்த்துக் கொண்டுதானிருந்தேன்! எனக்கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் தாயிஃபிலிருந்து திரும்பிய முதல் பத்து நாள்களாக அவர்களை எதிர்பார்(த்துக் காத்)திருந்தார்கள். இரண்டில் ஒன்றைத்தான் நபி(ஸல்) அவர்கள் தமக்கத் திருப்பித் தருவார்கள் என்பது அவர்களுக்குத் தெளிவானபோது,'நாங்கள் கைதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறோம்!' எனக் கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்ப புகழ்ந்து,'உங்களுடைய இந்தச் சகோதரர்கள் திருந்தி, நம்மிடம் வந்துள்ளனர். அவர்களின் கைதிகளை அவர்களிடமே ஒப்படைத்து விடுவதை நான் உதிசமாகக் கருதுகிறேன். உங்களில் (கைதிகளைப் பெற்றவர்களில்) மனப்பூர்வமாக இதைச் செய்ய விரும்புகிறவர் இதைச் செய்யட்டும்! தம் பங்கு(க்குரிய கைதிகள்) தம்மிடமே இருக்க வேண்டுமென விரும்புபவர். அல்லாஹ் நமக்குக் கொடுக்க விருக்கும் முதலாவது (வெற்றி கொள்ளப்படும் நாட்டின்) செல்வத்திலிருந்து நாம் அவருக்குக் கொடுக்கும் வரை. அவ்வாறே செய்யட்டும்! (கைதிகளைத் தம்மிடமே வைத்திருக்கட்டும்!) என்றார்கள். இதற்கு மக்கள்,'அல்லாஹ்வின் தூதருக்காக மனப்பூர்வமாக நாங்கள் (கைதிகளையே) அவர்களுக்குக் கொடுத்து விடுகிறோம்! என்றனர். நபி(ஸல்) அவர்கள்,'உங்களில் இதற்குச் சம்மதிக்காதவர் யார் என்று நாம்அறிய மாட்டோம்! எனவே, நீங்கள் திரும்பிச் செல்லுங்கள்! உங்களில் பொறுப்புள்ளவர்கள் இது பற்றி உங்களிடம் (தனியாகக்) கலந்து பேசிவிட்டு, நம்மிடத்தில் உங்கள் முடிவைக் கூறட்டும்! என்றார்கள். மக்கள் திரும்பிச் சென்றனர். அவர்களில் பொறுப்புள்ளவர்கள் அவர்களுடன் பேசினார்கள். பிறகு அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம் திரும்பிவந்து, (கைதிகளைத் திருப்பிக் கொடுப்பதற்கு) தாங்கள் மனப்பூர்வமாக சம்மதிப்பதாகத் தெரிவித்தார்கள்.

## ஒருவர் இவ்வளவு கொடுக்க வேண்டும் என்று தெளிவு படுத்தாமல், ஏதேனும் கொடுக்குமாறு இன்னொருவருக்கு அதிகாரம் வழங்கினால் மக்களின் வழக்கத்திற்கேற்ப அவர் கொடுக்கலாம்.

ஹதீஸ் 2309. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தேன். நான் மந்தமாக நடக்கும் ஓர் ஒட்டகத்தின் மேல் அமர்ந்திருந்தேன். அந்த ஒட்டகம் அனைவருக்கும் கடைசியாக வந்தது. நபி(ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றபோது,'யாரவர்?'' என்று கேட்டார்கள்.'ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்!"என்று கேட்டார்கள்.'நான் மந்தமான ஒட்டகத்தில் பயணம் செய்கிறேன்!' என்று கூறினேன்.'உம்மிடம் கம்பு ஏதும் இருக்கிறதா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்!"என்றேன்.'அதை என்னிடம் கொடும்!' என்று கேட்டார்கள். அதை அவர்களிடம் கொடுத்தேன். (அந்தக் கம்பால்) ஒட்டகத்தை (அடித்து) விரட்டினார்கள். அப்போதிருந்து என்னுடைய ஒட்டகம் அனைவரையும் முந்திச் செல்ல ஆரம்பித்தது.'இதை எனக்கு விலைக்குத் தாரும்! என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான்'இறைத்தூதர் அவர்களே! இது உங்களுகுரியது' என்றேன். நபி(ஸல்) அவர்கள்,'இதை எனக்கு விலைக்குத் தாரும்! நான்கு தங்கக் காசுகளுக்கு இதை நான் விலைக்கு வாங்கிவிட்டேன்! மதீனாவரை நீர் இதில் சவாரி செய்து வரலாம்! என்று கூறினார்கள். மதீனாவை நாங்கள் நெருங்கியதும் (நான் வீட்டை நோக்கிப் புறப்படலானேன்)'எங்கே போகிறீர்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான்'(கணவனை இழந்த) ஒரு கைம்பெண்ணை நான் மணந்திருக்கிறேன்!' என்று சொன்னேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'நீர் ஒரு கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா? நீர் அவளுடன் விளையாடிக் களித்திட, அவள் உம்முடன் விளையாடி(க் களித்தி)டலாமே! என்று கேட்டார்கள். அதற்கு நான்,'என் தந்தை, பெண் மக்களைவிட்டுவிடு இறந்துவிட்டார் எனவே, குடும்ப அனுபவமுள்ள, (கண்வனை இழந்த) கைம்பெண்ணை மணக்க நாடினேன்!' என்றேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'அது சரிதான்! என்றார்கள் . நாங்கள் மதீனாவுக்குச் சென்றதும் பிலால்(ரலி) அவர்களிடம்,'இவருக்குக் கொடுப்பீராக! கொஞ்சம் அதிகமாகவும் கொடுப்பீராக!' என்று கூறினார்கள். பிலால்(ரலி) என்று கூறினார்கள். பிலால்(ரலி) எனக்கு நான்கு தங்க நாணயங்களையும் அதிகமாக ஒரு கிராத்தையும் கொடுத்தார்கள்.

'நபி(ஸல்) அவர்கள் அதிகமாகத் தந்த (கீராத்தான)து என்னைவிட்டு ஒருபோதும் பிரியாது!' என்று ஜாபிர்(ரலி) கூறினார். அந்த ஒரு கீராத். ஜாபிர்(ரலி) அவர்களின் பணப்பையைவிட்டுப் பிரிந்தேயில்லை'' என அதாவு(ரஹ்) கூறினார்.

## ஒரு பெண் தனக்குத் திருமணம் செய்து வைக்கும் அதிகாரத்தை தலைவருக்கு வழங்குதல்.

ஹதீஸ் 2310. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர் அவர்களே! என்னை உங்களுக்கு அன்பளிப்பாகத் தந்து விட்டேன்!' என்றார். அங்கிருந்த ஒருவர்'இவரை எனக்கு மணம் முடித்துத் தாருங்கள்!' என்று கேட்டார்.'உம்மிடமிருக்கும் குர்ஆன் பற்றிய ஞானத்தின் காரணமாக உமக்கு இவரை மணமுடித்துத் தந்தோம்! என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ஒருவர் (ஒரு பொருளில்) மற்றவருக்கு அதிகாரம் அளிக்கும்போது, அதிகாரம் அளிக்கப்பட்டவர் (அந்தப் பொருளில் யாருக்காவது) சிறிதுவிட்டுக் கொடுத்துவிட்டால், அதிகாரம் அளித்தவர் அதற்கு அனுமதி கொடுத்தால் (அங்கீகரித்தால்) அது செல்லும். மேலும் அதிகாரம் அளிக்கப்பட்டவ- குறிப்பிட்ட தவணைக்கு யாருக்காவது (அப்பொருளிலிருந்து) கடன் கொடுத்தால் அதுவும் செல்லும்.

ஹதீஸ் 2311. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ரமளானுடைய (ஃபித்ரா) ஜகாத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் கொடுத்தார்கள். அப்போது ஒருவர் வந்து உணவுப் பொருட்களை அள்ளலானார். அவரை நான் பிடித்து,'உன்னை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்!' என்று கூறினேன். அதற்கவர்,'நான் ஓர் ஏழை!' எனக்குக் குடும்பம் இருக்கிறது. கடும் தேவையும் இருக்கிறது! என்று கூறினார். அவரை நான்விட்டு விட்டேன். விடிந்ததும் நபி(ஸல்) அவர்கள்,'அபூ ஹுரைராவே! நேற்றிரவு உம்மால் பிடிக்கப்பட்டவர் நான்,'இறைத்தூதர் அவர்களே! தாம் கடுமையான வறுமையில் இருப்பதாகவும் தமக்குக் குடும்பம் இருப்பதாகவும் அவர் முறையிட்டார். எனவே, இரக்கப்பட்டு அவரைவிட்டு விட்டேன்! என்றேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நிச்சயமாக அவன் பொண் சொல்லியிருக்கிறான்! மீண்டும் அவன் வருவான்! என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதால் அவன் மீண்டும் வருவான் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதால் அவன் மீண்டும் வருவான் என்று நம்பி அவனுக்காக(அவனைப் பிடிப்பதற்காக) காத்திருந்தேன். அவன் வந்து உணவுப் பொருட்களை அள்ளத் தொடங்கியபோது அவனைப் பிடித்தேன்.'உன்னை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்! என்று கூறினேன். அதற்கவன்,'என்னைவிட்டுவிடு! நான் ஓர் ஏழை! எனக்குக் குடும்பமிருக்கிறது! இனிநான் வரமாட்டேன்! என்றான். அவன் மேல் இரக்கப்பட்டு அவனைவிட்டு விட்டேன். விடிந்ததும் நபி(ஸல்) அவர்கள் அபூ ஹுரைராவே! உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்தான்! என்று கேட்டார்கள். நான்'இறைத்தூதர் அவர்களே! அவன் (தனக்குக்) கடும் தேவையும் குடும்பமும் இருப்பதாக முறையிட்டான் எனவே, அவன் மேல் இரக்கப்பட்டு அவனைவிட்டுவிட்டேன்! என்றேன்.'நிச்சயமாக அவன் உம்மிடம் பொய் சொல்லியிருக்கிறான். திரும்பவும் உம்மிடம் வருவான்! என்றார்கள். மூன்றாம் முறை அவனுக்காகக் காத்திருந்தபோது,அவன் வந்து உணவு பொருட்களை அள்ளத் தொடங்கினான். அவனைப் பிடித்து,'உன்னை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப்போகிறேன்! (ஒவ்வொரு முறையும்)'இனிமேல் வரமாட்டேன்! என்று செல்லிவிட்டு, மூன்றாம் முறையாக நீ மீண்டும் வந்திருக்கிறாய்! என்று கூறினேன். அதற்கவன்'என்னைவிட்டுவிடும்! அல்லாஹ் உமக்குப் பயனளிக்கக் கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருகிறேன்!' என்றான். அதற்கு நான்'அந்த வார்த்தைகள் என்ன? என்று கேட்டேன்.'நீர் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்ஸியை ஆரம்பத்திலிருந்து கடைசிவரை ஓதும்! அவ்வாறு செய்தால், விடியும் வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மைப் பாதுகாக்கிற (வானவர்) ஒருவர் இருந்து கொண்டேயிருப்பார். ஷைத்தானும் உம்மை நெருங்கமாட்டான்!' என்றான்.

விடிந்ததும் நபி(ஸல்) அவர்கள்'நேற்றிரவு உம்மால் பிடிக்கப்பட்டவன் என்ன செய்வான்? என்று கேட்டார்கள். 'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் எனக்குப் பயனளிக்கக் கூடிய சில வார்த்தைகளைக் கற்றுத் தருவதாக அவன் கூறினான் அதனால் அவனைவிட்டு விட்டேன்!' என்றேன். 'அந்த வார்த்தைகள் என்ன? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'நீர் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்சியை ஆரம்பம் முதல் கடைசிவரை ஓதும்! அவ்வாறு ஓதினால், விஷயும் வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து உம்மைப் பாதுகாக்கிற (வானவர்) ஒருவர் இருந்துகொண்டேயிருப்பார். ஷைத்தானும் உம்மை நெருங்கமாட்டான்! என்று என்னிடம் அவன் கூறினான்' எனத் தெரிவித்தேன். நபித்தோழர்கள் நன்மையான(தைக் கற்றுக் கொண்டு செயல் படுத்துவதில் அதிக ஆர்வமுடையவர்களாக இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'அவன் பெரும் பொய்யனாக இருந்தாலும் அவன் உம்மிடம் உண்மையைத்தான் சொல்லியிருக்கிறான்! மூன்று இரவுகளாக நீர் யாரிடம் பேசி வருகிறீர் என்று உமக்குத் தெரியுமா? என்று கேட்டனர். 'தெரியாது'' என்றேன். 'அவன்தான் ஷைத்தான்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## விற்பதற்கு அதிகாரம் வழங்கப்பட்டவர், விற்கக் கூடாத முறையில் விற்றால் அந்த விற்பனை ரத்து செய்யப்படும்.

ஹதீஸ் 2312. அபூ ஸயீத் குல் குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் பிலால்(ரலி)'பர்னீ' எனும் (மஞ்சளான, வட்ட வடிவமான) உயர் ரக பேரீச்சம் பழத்தைக் கொண்டு வந்தார்கள். அவர்களிடம்'இது எங்கிருந்து கிடைத்தது?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு பிலால்(ரலி)'என்னிடம் மட்டரக பேரீச்சம் பழம் இருந்தது. நபி(ஸல்) அவர்களுக்கு உண்ணக் கொடுப்பதற்காக அதில் இரண்டு ஸாவைக் கொடுத்து இதில் ஒரு ஸாவு வாங்கினேன்! என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'அடடா! இது வட்டியேதான்! இது வட்டியேதான்! நீர் (உயர்ரக பேரீச்சம் பழத்தை) வாங்க விரும்பினால் உம்மிடம் இருக்கும் பேரீச்சம் வாயிலாக விற்றுவிட்டு, பிறகு அதை வாங்குவீராக! என்றார்கள்.

## வக்ஃபை நிர்வம்க்க அதிகாரம் வழங்குவதும், அதிகாரம் வழங்கப்பட்டவர், அதைச் செலவு செய்வதும், தம் நண்பருக்கும் உண்ணக் கொடுத்து தாமும் நியாயமான அளவில் உண்ணுவதும்.

ஹதீஸ் 2313. சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உமர்(ரலி) (வக்ஃபு) செய்துவிட்டுச் சென்ற தர்மத்தைப் பற்றி அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் கூறும்போது,'இதன் பொறுப்பாளன் தமக்காகச் சுருட்டிக் கொள்ளும் எண்ணமின்றி, தாம் சாப்பிடுவதும் தம் தோழருக்குச் சாப்பிடக் கொடுப்பதும் தவறில்லை' என்றார்கள்.

உமர்(ரலி) (வக்ஃப்) செய்த தர்மத்திற்கு இப்னு உமர்(ரலி) பொறுப்பாளராக இருந்தார்கள். மக்காவில் அவர்கள் வழக்கமாக யாரிடம் தங்குவார்களோ அவர்களுக்கு அதிலிருந்து அன்பளிப்பு வழங்குவார்கள்.

## அல்லாஹ்வின் தண்டனைகளை நிறைவேற்றும் அதிகாரத்தை ஒருவரிடம் வழங்குதல்.

ஹதீஸ் 2314. ஹதீஸ் 2315 அபூ ஹுரைரா(ரலி) ஸைத் இப்னு காலித்(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்கள்:

நபி(ஸல்) அவர்கள் உனைஸ்(ரலி) அவர்களிடம்'இன்னாரின் மனைவியிடம் நீ சென்று, அவர் விபசாரக் குற்றத்தை ஒப்புக் கொண்டால் கல்லெறிந்து கொல்லும் தண்டனையை நிறைவேற்று!' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2316 உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

"நுஐமான் அல்லது அவரின் மகன் மது அருந்திய நிலையில் நபி(ஸல்) அவர்கள் முன்னிலையில் கொண்டு வரப்பட்டபோது, வீட்டில் இருப்பவர்கள் (வெளியே வந்து) அவரை அடிக்கும்படி நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். அவரை அடித்தவர்களில் நானும் ஒருவன்! நாங்கள் செருப்புகளாலும் பேரீச்ச மட்டையாலும் அவரை அடித்தோம்."

## பலியிடுவதற்கு உரிய ஒட்டகங்களைப் பராமரிக்கும் அதிகாரத்தை ஒருவருக்கு வழங்குதல்

ஹதீஸ் 2317. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்கள் பலியிடுவதற்காக அனுப்பி வைத்த ஒட்டகங்களுக்கு அடையாளமாகக் கழுத்தில் கட்டப்படும் மாலைகளை என் கைகளால் நான் பின்னினேன். நபி(ஸல்) அவர்கள், தம் கைகளால் அவற்றை (ஒட்டகங்களின் கழுத்தில்) தொங்கவிட்டார்கள். பிறகு அவற்றை என் தந்தையுடன் (பலியிடுவதற்காக) அனுப்பினார்கள். (நபி(ஸல்) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு ஹலாலாக்கிய எதுவும் அந்தப் பிராணிகள் அறுக்கப்படும் வரை (இஹ்ராம் அணிந்தவர் மீது ஹராமாம்விடுவது போன்று) அவர்களின் மீது ஹராமாக்கவில்லை."

(ஒருவர் இஹ்ராம் அணியாமல் சொந்த ஊரிலிருந்து பலிப்பிராணியை அனுப்பினால் இஹ்ராம் அணிந்தவருக்குரிய சட்டங்கள் அவருக்குக் கிடையாது என்பது இதன் கருத்து.

## பொறுப்புக் கொடுக்கப்பட்டவரிடம் பொறுப்புக் கொடுத்தவர்அல்லாஹ் உனக்குக் காட்டியபடி நடந்து கொள் என்று சொல்லும்போது பொறுப்பேற்றவர்,நீர் கூறியதை நான் செவியேற்றேன்! என்று கூறுவது.

ஹதீஸ் 2318 அனஸ்(ரலி) அறிவித்தார். அபூ தல்ஹா(ரலி) மதீனாவில் முஸ்லிம்களில் மிகப் பெரிய செல்வந்தராக இருந்தார்கள். நபி(ஸல்) அவர்களின் பள்ளிவாசலுக்கு எதிரில் இருந்த'பீருஹா' எனும் தோட்டம் அபூ தல்ஹா(ரலி) அவர்களுக்குச் சொத்துக்களில் இருந்தது. நபி(ஸல்) அவர்கள் அந்தத் தோட்டத்திற்குச் சென்று அதிலுள்ள சுவையான தண்ணீரை அருந்தும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். 'உங்களுக்குப் பிரியமானவற்றிலிருந்து (இறைவழியில்) செலவிடாதவரை நீங்கள் நன்மையை அடையமுடியாது! என்ற (திருக்குர்ஆன் 03:92) திருக்குர்ஆன் வசனம் அருளப்பட்டவுடன் அபூ தல்ஹா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் சென்றார்கள். 'இறைத்தூதர் அவர்களே!'உங்களுக்குப் பிரியமானவற்றிலிருந்து

செலவிடாதவரை நீங்கள் நன்மையை அடைய முடியாது!' என்று அல்லாஹ் கூறினான். என் சொத்துக்களில்'பீருஹா' எனும் இந்தத் தோட்டமேயாகும்! இனிமேல், இது அல்லாஹ்வுக்காக (நான் வழங்கும்) தர்மமாகும்! இதன் நன்மையை அல்லாஹ்விடம் நான் எதிர்பார்க்கிறேன்! இறைத்தூதர் அவர்களே! நீங்கள் விரும்பும் விதத்தில் இதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்!' எனக் கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'(அழிந்து) போய்விடும் செல்வம்தானே! (அழிந்து) போய்விடும் செல்வம் தானே! (நற்கூலி பெற்றுத் தரும் தரும காரியத்தில்தான் அது போகட்டுமே!) நீர் கூறியதை நான் கேட்டுக் கொண்டிருந்தேன் அதை உம்முடைய நெருங்கிய உறவினர்களுக்கு நீர் (தர்மமாக) வழங்குவதையே விரும்புகிறேன்!' எனக் கூறினார்கள். அபூ தல்ஹா(ரலி)'இறைத்தூதர் அவர்களே! அவ்வாறே செய்கிறேன்!' எனக் கூறிவிட்டுத் தம் உறவினர்களுக்கும் தம் தந்தையின் சகோதரருடைய மக்களுக்கும் அந்தத் தோட்டத்தைப் பங்கு போட்டுக் கொடுத்தார்கள்.

## நம்பிக்கைக்குரியவரிடம் கருவூலத்தின் மற்றும் அது போன்றவற்றின் பொறுப்புகளை வழங்குதல்.

ஹதீஸ் 2319. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

"தமக்குக் கட்டளையிடப்பட்ட (தர்ம) காரியத்திற்காக, முழுமையாகவும் குறைவின்றியும் மனப்பூர்வமான முறையில் செலவிடக் கூடிய, நம்பகமான கருவூலக் காப்பாளர் தர்மம் செய்பவர்களில் ஒருவராவார்!'

என அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

"செலவிடக்கூடிய' என்பதற்கு பதிலாக கொடுக்ககூடிய' என்றும் நபி(ஸல்) அவர்கள் கூறியிருக்கலாம்!' என்று (இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில ஒருவர் கூறுகிறார்.

## இரண்டாம் பாகம் புகாரீ முடிந்தது

# பாகம் 3

## அத்தியாயம் 41 வேளாண்மையும் நிலக் குத்தகையும்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

### (பயரிடப்பட்ட) நிலத்திலிருந்தும் (நடப்பட்ட) மரத்திலிருந்தும் மக்களோ, பிராணிகளோ பறவைகளோ உண்ணும் பட்சத்தில் அந்த விவசாயமும் மரம் நடுவது சிறப்புப் பெறுகின்றன.

அல்லாஹ் கூறினான்:

விதைக்கிற இந்த விதையைப் பற்றி எப்போதாவது நீங்கள் சிந்தித்ததுண்டா? இதன் மூலம் பயிர்களை நீங்கள் விளைவிக்கிறீர்களா? அல்லது நாம் விளைவிக்கிறோமா? நாம் நாடினால் இவற்றைப்பதர்களாய் ஆக்கிவிட்டிருப்போம். (திருக்குர்ஆன் 56:63-65)

ஹதீஸ் 2320. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

முஸ்லிம் ஒருவர் ஒரு மரத்தை நட்டு அல்லது விதைவிதைத்து விவசாயம் செய்து, அதிலிருந்து (அதன் விளைச்சலை அல்லது காய்கனிகளை) ஒரு பறவையோ, ஒரு மனிதனோ அல்லது ஒரு பிராணியோ உண்டால் அதன் காரணத்தால் ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்கும். என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

### வேளாண்மைக் கருவிகளைத் துஷ்பிரயோகம் செய்வதால் விளையும் தீமைகளுக்கு அஞ்சுவதும், (வணிகம், வேளாண்மை இவற்றில் ஈடுபடுவதில்) விதிக்கப்பட்டுள்ள வரம்மை மீறுவதால் விளையும் (கேடுகளான இறைவனை மறத்தல், மார்க்கக் கடமைகளைப் புறக்கணித்தல் ஆகிய) தீமைகளுக்கு அஞ்சுவதும் (அவசியம்).

ஹதீஸ் 2321. முஹம்மத் இப்னு ஸியாத் அல் அல்ஹானீ(ரஹ்) அறிவித்தார்.

அபூ உமாமா அல் பாஹிலீ(ரலி), ஒரு வீட்டில் ஏர் கலப்பையையும் மற்றும் சில விவசாயக் கருவிகளையும் கண்டார்கள். உடனே அவர்கள்,இந்தக் கருவி ஒரு சமுதாயத்தினரின் வீட்டில் புகும்போது அந்த வீட்டில் அல்லாஹ் இழிவைப் புகச் செய்யாமல் இருப்பதில்லை என்று நபி(ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்' என்று கூறினார்கள். 1

### விவசாயப் பண்ணையைப் பாதுகாத்திட நாய் வைத்திருப்பது (அனுமதிக்கப்பட்டதாகும்.)

ஹதீஸ் 2322. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாய் வைத்திருப்பவரின் நற்செயல்களிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு கீராத் அளவிற்கு (அவற்றின் ஊதியம்) குறைந்து போய்விடும் விவசாயப் பண்ணையையோ கால்நடைகளையோ (திருடு போய் விடாமல்) பாதுகாப்பதற்காக வைத்திருக்கும் நாய்களைத் தவிர. 2

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இன்னோர் அறிவிப்பில் அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

“கால்நடைகளைப் பாதுகாப்பதற்காகவோ, விவசாயப் பண்ணைகளைப் பாதுகாப்பதற்காகவோ, வேட்டையாடுவதற்காகவோ வைத்திருக்கும் நாய்களைத் தவிர என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

“கால்நடைகளைப் பாதுகாப்பதற்காக அல்லது வேட்டையாடுவதற்காக வைத்திருக்கும் நாய்களைத் தவிர என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2323. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

‘அஸ்த் ஷனூஆ குலத்தைச் சேர்ந்த சுஃப்யான் இப்னு அபீ ஸுஹைர்(ரலி) என்னிடம்,விவசாயப் பண்ணையையோ, கால்நடைகளையோ பாதுகாக்கும் எவ்விதத்தேவையுமின்றி நாய் வைத்திருப்பவரின் நற்செயல்களிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு கீராத் அளவிற்கு (ஊதியம்) குறைந்து விடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூற கேட்டேன்‘ என்றார்கள். நான்,இதை நீங்கள் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து (நேரடியாகக்) கேட்டீர்களா? என்று வினவினேன். சுஃப்யான் இப்னு அபீ ஸுஹைர்(ரலி),ஆம் இந்தப் பள்ளிவாசலின் அதிபதி (அல்லாஹ்வின்) மீது ஆணையாக! நபி(ஸல்) அவர்களிடமிருந்து நானே நேரடியாகச் செவியுற்றேன்‘ என்று பதிலளித்தார்கள்.

## மாடுகளை உழுவதற்காகப் பயன்படுத்துதல்.

ஹதீஸ் 2324. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“ஒருவர் ஒரு மாட்டின் மீது சவாரி செய்து கொண்டிருந்தபோது அந்த மாடு அவரைத் திரும்பிப் பார்த்து,நான் இதற்காக (சுமை சுமந்து செல்வதற்காக) படைக்கப்படவில்லை நிலத்தை உழுவதற்காகவே படைக்கப்பட்டுள்ளேன் என்று கூறியது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதைக் கூறிவிட்டு அண்ணலார்,நானும், அபூ பக்ரும், உமரும் இதை நம்புகிறோம். மேலும், (ஒரு முறை) ஓர் ஓநாய், ஆடு ஒன்றைக் கவ்விக் கொண்டு ஓடலாயிற்று. அந்த ஆட்டை மேய்த்துக் கொண்டிருந்தவர் அந்த ஓநாயைத் துரத்திச் சென்றார். அப்போது ஓநாய் அவரைப் பார்த்து,மன் லஹா யவ்மஸ் ஸபுஇ - கொடிய விலங்குகள் ஆதிக்கம் செலுத்தும் (உலக முடிவு) நாளில் இதைப் பாதுகாக்கக் கூடியவர் யார்? அப்போது என்னைத் தவிர இதற்கு மேய்ப்பாளன் (பொறுப்பாளன்) எவனும் இருக்க மாட்டானே என்று கூறியது. நானும், அபூ பக்ரும் உமரும் இந்த நிகழ்ச்சியை நம்புகிறோம்‘ என்று கூறினார்கள். பிறகு, (இதை அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து அறிவித்த) அபூ ஸலமா(ரஹ்),நபி(ஸல்) அவர்கள் இதைக் கூறிய அந்நாளில் அபூ பக்ரும் உமரும் அங்கு இருக்கவில்லை‘ என்று கூறினார்கள்.

## “என் பேரீச்ச மரங்களை அல்லது மற்ற மரங்களை கவனித்துக் கொள். அதன் விளைச்சலில் (லாபத்தில்) என்னுடன் பங்கு பெற்றுக் கொள்‘ என்று ஒருவர் கூறினால் அது செல்லும்.

ஹதீஸ் 2325. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(மதீனாவாசிகளான) அன்சாரித் தோழர்கள், நபி(ஸல்) அவர்களிடம்,எங்களுக்கும் (மக்கா நகரிலிருந்து வந்த) எங்கள் (முஹாஜிர்) சகோதரர்களுக்குமிடையே எங்கள் பேரீச்ச மரங்களைப் பங்கிட்டு விடுங்கள்‘ என்றனர். அதற்கு அண்ணலார்,வேண்டாம்‘ என்று கூறிவிட்டார்கள். இதனைக் கேட்ட அன்சாரித் தோழர்கள், முஹாஜிர் சகோதரர்களை

நோக்கி,அப்படியென்றால், எங்கள் தோட்டத்தை எங்களுக்கு பதிலாக நீங்கள் பராமரித்து வாருங்கள். நாங்கள் உங்களுடன் அதன் வருமானத்தில் பங்கு பெற்றுக் கொள்கிறோம்‘ என்று கூறினர். அதற்கு முஹாஜிர்கள்,செவியேற்றோம் கீழ்ப்படிந்தோம் (அவ்வாறே செய்கிறோம்)‘ என்று கூறினார்கள்.

## மரத்தையும் பேரீச்ச மரங்களையும் வெட்டுதல்.

அனஸ்(ரலி),நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களை வெட்டும் படி கட்டளையிட்டார்கள். அதன் படி அவை வெட்டப்பட்டன‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2326. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பனு நளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களைத் தீயிலிட்டுக் கொளுத்தியும் (இன்னும் பல மரங்களை) வெட்டியும்விட்டார்கள். இந்தப் பேரீச்சந் தோப்புகளுக்குத்தான்அல் புவைரா என்று கூறுவர். இதைக் குறிப்பிட்டுத்தான் ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி),புவைராவின் நெருப்பு பரவிக் கொண்டிருக்க, அதை (அணைத்திட) எதுவும் செய்ய முடியாமல் (இயலாமையுடன்) பார்த்துக் கொண்டிருப்பதுபனு லுஅய் குலத்து (குறைஷித்) தலைவர்களுக்கு எளிதாம்விட்டது‘ என்று (பரிகாசம் செய்து) கவிதை பாடுகிறார்கள்.

ஹதீஸ் 2327. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

மதீனாவாசிகளிலேயே அதிகமாக விவசாய வேலை பார்ப்பவர்களாக நாங்கள் இருந்தோம். (மொத்த விளைச்சலில் இவ்வளவு பங்கு என்றில்லாமல்)நிலத்தின் ஒரு பகுதி விளைச்சல் மட்டும் அதன் நிபந்தனையுடன் அதைக் குத்தகைக்கு எடுத்து வந்தோம். சில வேளைகளில் அந்தப் பகுதி விளைச்சல் மட்டும் (பயிர் நோய்களாலும், பயிர்ப் பூச்சிகளின் தாக்குதலாலும்) பாதிக்கப்பட்டு விடும். மீதமுள்ள (எங்கள் வருவாய்க்கான) நிலப்பகுதி (அவற்றின் தாக்குதல்களிலிருந்து) தப்பித்துக் கொள்ளும். இன்னும் சில வேளைகளில் மீதமுள்ள நிலப்பகுதி பாதிக்கப்பட்டு, குறிப்பிட்ட பகுதி தப்பித்துக் கொள்ளும். எனவே, நாங்கள் (நபி(ஸல்) அவர்களால்) இவ்விதம் குத்தகைக்கு எடுக்க வேண்டாமென்று தடை செய்யப்பட்டோம். அந்நாள்களில் தங்கமும், வெள்ளியும் (குத்தகைத் தொகையாகப் பயன்படுத்தப்படும் வழக்கம்) இருக்கவில்லை.

## விளைச்சலில் ஒரு பாதியைக் கொண்டு, அல்லது அதை விடக் கூடுதல் குறைவான பாகத்தைக் கொண்டு குத்தகை ஒப்பந்தம் செய்வது செல்லும்.

அபூ ஜஅஃபர்(ரலி) கூறினார்:

தாயகம் துறந்து வந்த முஹாஜிர்கள் (மக்கா வாசிகள்) அனைவருமே விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கையோ நான்கில் ஒரு பங்கையோ நில உரிமையாளரிடமிருந்து (தம் உழைப்புக்கான ஊதியமாகப்) பெற்றுக் கொள்வது என்னும் நிபந்தனையின் பேரில் விவசாயம் செய்து வந்தார்கள். அலீ, ஸஅத் இப்னு மாலிக், அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ஆகியோரும் உமர்பின் அப்தில் அஸீஸ், காஸிம், உர்வா இப்னு ஸுபைர், அபூ பக்ரின் குடும்பத்தார், உமரின் குடும்பத்தார், அலீயின் குடும்பத்தார் மற்றும் இப்னு சீரின் ஆகியோரும் கூட (இப்படிவிளைச்சலின் ஒரு பங்கு ஊதியமாக வழங்கப்படும் என்னும் நிபந்தனையின் பேரில் தான்) குத்தகை முறையிலான விவசாயம் செய்து வந்தார்கள்.

அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்வத்(ரஹ்) கூறினார்கள்:

நான் (என் தந்தையின் சகோதரரான) அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத் அவர்களுடன் விவசாயத்தில் கூட்டாளியாக இருந்தேன்.

‘தம் தரப்பிலிருந்து விதைகளைக் கொடுத்தால் விளைச்சலின் பாதியைத் தமக்குக் கொடுத்து விடவேண்டும் விவசாயியே விதைகளைக் கொண்டு வந்து விதைத்தால் அந்த விவசாயிக்கு விளைச்சலின் இன்ன பங்கு (பாதிக்கு மேல்) கிடைக்கும் என்னும் நிபந்தனையின் பேரில், உமர்(ரலி) நிலத்தைக் குத்தகைக்குவிட்டு வந்தார்கள்.

“நிலம் ஒருவருக்குச் சொந்தமாய் இருந்து நில உரிமையாளர், குத்தகைக்கு எடுத்தவர் இருவருமே அதற்காகச் செலவழித்து, கிடைக்கிற விளைச்சலில் இருவரும் பங்கு போட்டுக் கொள்வதில் தவறில்லை‘ என்று ஹஸன் பஸரீ(ரஹ்) கூறினார். இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களும் இதே கருத்தையே கொண்டுள்ளார்கள். ஹஸன் பஸரீ(ரஹ்),பருத்தி விளைச்சலின்போது, ஆளுக்குப் பாதியாகப் பிரித்துக் கொள்வது என்னும் நிபந்தனையின் பேரில் பருத்தி விவசாயத்திற்காக, குத்தகை ஒப்பந்தம் செய்து கொள்வதில் தவறேதுமில்லை என்று கூறினார்கள்.

“நெய்த துணியின் மூன்றில் ஒரு பங்கையோ, நான்கில் ஒரு பங்கையோ அல்லது அது போன்று வேறெந்தப் பங்கையுமோ நெசவுக் கூலியாக நெசவாளிக்குக் கொடுப்பது என்ற அடிப்படையில் துணி நெய்வதற்கான பாவு இழைகளை நெசவாளிக்குக் கொடுப்பதில் தவறில்லை‘ என்று இப்ராஹீம், இப்னு சீரின், அதாஉ, ஹகம், ஸுஹ்ரீ மற்றும் கதாதா (ரஹ் - அலைஹிம்) ஆகியோர் கூறுகின்றனர்.

“(சுமை சுமக்கும்) கால்நடைகளை, அவை சுமக்கிற (உற்பத்திப்) பொருட்களில் மூன்றில் ஒரு பங்கை அல்லது நான்கில் ஒரு பங்கை அதன் உரிமையாளரிடம் கொடுத்து விடுவது என்னும் நிபந்தனையின் பேரில், ஒரு குறிப்பிட்ட காலத் தவணைக்குக் குத்தகைக்கு எடுத்துக் கொள்வதில் தவறில்லை‘ என்று மஅமர்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2328. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கைபரில் இருந்த மக்களுடன், அங்குள்ள மரங்களில் விளையும் கனிகள், நிலத்தில் விளையும் தானியங்கள் ஆகியவற்றில் பாதியைக் கொடுத்து விட வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் (கைபரின் நிலங்களையும் மரங்களையும் அம்மக்கள் விவசாயத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ள அனுமதியளித்து) ஒப்பந்தம் செய்தார்கள்.

இந்த நிலங்கள் மற்றும் மரங்களின் விளைச்சலிருந்து, நபி(ஸல்) அவர்கள், தம் மனைவிமார்களுக்கு எண்பது வஸக்குகள் பேரீச்சம் பழமும் இருபது வஸக்குகள் வாற்கோதுமையும் ஆக, நூறு வஸக்குகள் கொடுத்து வந்தனர். உமர்(ரலி) (கலீஃபாவாக வந்த போது) கைபர் நிலங்களைப் பங்கிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் மனைவிமார்களுக்கு, அவர்கள் தங்கள் பங்காக நிலத்தையும் நீரையும் மட்டும் எடுத்துக் கொள்வது அல்லது முன்பு நடை பெற்று வந்த வழக்கத்தின் படியே, நூறு வஸக்குகளைத் தங்கள் பங்காகப் பெற்றுக் கொள்வது என்ற இரண்டில் எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமையளித்தார்கள். அவர்களில் சிலர் நிலத்தைத் தமக்காகப் பெற்றனர். சிலர் (முன்பு கிடைத்து வந்தபடி) வஸக்குகளையே தொடர்ந்து பெற்றனர். அன்னை ஆயிஷா(ரலி) நிலத்தைப் பெற்றார்கள்.

## நிலக் குத்தகை ஒப்பந்தத்தில் (இவ்வளவு காலத்திற்கு என வரையறுத்து) ஆண்டுகளைக் குறிப்பிடவில்லையென்றாலும் ஒப்பந்தம் செல்லும்.

ஹதீஸ் 2329. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கைபரில் உள்ள மரங்களையும் நிலங்களையும்அவற்றில் விளையும் (பழங்கள், தானியங்கள், காய்கறிகள் ஆகியவற்றின்) விளைச்சலில் பாதியை (இஸ்லாமிய

அரசுக்குக்) கொடுத்து விட வேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் கைபர் வாழ் மக்களுடன் ஒப்பந்தம் செய்தார்கள்.

ஹதீஸ் 2330. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்.

நான் தாவூஸ்(ரஹ்) அவர்களிடம், (விளைச்சலில் ஒரு பகுதியைப் பெற்றுக் கொண்டு) நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை நீங்கள்விட்டுவிட்டால் நன்றாயிருக்கும். ஏனென்றால், நபி(ஸல்) அவர்கள் நிலத்தைக் குத்தகைக்கு விட வேண்டாமென்று மக்களைத் தடுத்தார்கள் என்று சிலர் எண்ணுகிறார்கள்' என்றேன். இதைக்கேட்ட தாவூஸ்(ரஹ்) (என்னிடம்) சொன்னார்கள்: அம்ரே! (என்னுடைய நிலத்தை அவர்களுக்குக் குத்தகைக்கு விடுவதால்) அவர்களுக்கு நிலத்தைக் கொடுத்து நான் உதவுகிறேன். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் அதைத் தடை செய்யவில்லை. மாறாக, உங்களில் ஒருவர் தன் நிலத்தைக் குத்தகைக்குவிட்டு, அதிலிருந்து குறிப்பிட்ட குத்தகைத் தொகையை வாங்கிக் கொள்வதை விட, தன் சகோதரனுக்கு (இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளும் படி அதைக்) கொடுத்து விடுவது சிறந்ததாகும் என்றே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்று மக்களில் பேரறிஞரான இப்னு அப்பாஸ்(ரலி) என்னிடம் தெரிவித்தார்கள்.

## யூதர்களுடன் நிலக் குத்தகை ஒப்பந்தம் செய்து கொள்ளலாமா?

ஹதீஸ் 2331. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் கைபர் பகுதியில் உள்ள நிலங்களை யூதர்களுக்கு, அவர்கள் அவற்றில் உழைத்து விவசாயம் செய்து கொள்ளலாம். அதிலிருந்து கிடைக்கும் விளைச்சலில் பாதி அவர்களுக்குரியது (மீதிப்பாதியை மதீனாவின் இஸ்லாமிய அரசுக்குக் கொடுத்துவிடவேண்டும்) என்னும் நிபந்தனையின் பேரில் கொடுத்தார்கள்.

## நிலக் குத்தகை ஒப்பந்தத்தின்போது இடுகிற நிபந்தனைகளில் விரும்பத்தகாதவை எவை?

ஹதீஸ் 2332. ரா∴பிஉ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் மதீனாவாசிகளிலேயே அதிகமாகப் பண்ணை வயல்களில் விவசாயம் செய்பவர்களாயிருந்தோம். நாங்கள் நிலத்தைக் குத்தகைக்கு எடுக்கும்போது நிலத்தின் உரிமையாளரிடம், (நிலத்தின்) இந்தத் துண்டு(டைய விளைச்சல்) எங்களுக்குரியது' என்று சொல்வது வழக்கம். சில வேளைகளில், நிலத்தின் ஒரு பகுதி விளைச்சல் தரும் இன்னொரு பகுதி விளைச்சல் தராது. எனவே, நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு நிபந்தனையிட வேண்டாமென்று எங்களைத் தடுத்துவிட்டார்கள்.

## ஒருவர் வேறொருவரின் செல்வத்திலிருந்து அவரின் அனுமதியின்றி செலவிட்டு, விவசாயம் செய்து, அதில் அவருக்கு லாபம் கிட்டினால்... (அந்த லாபம் யாருக்குரியது?)

ஹதீஸ் 2333. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூன்று பேர் நடந்து சென்று கொண்டிருந்தனர். அப்போது திடீர் என மழை பிடித்தது. எனவே, அம்மூவரும் மலைப் பகுதியில் அமைந்திருந்த குகை ஒன்றில் தஞ்சம் புகுந்தனர். (எதிர் பாராதவிதமாக) பெரும்பாறை ஒன்று மலையிலிருந்து உருண்டு வந்து அந்தக் குகையின் வாயிலை மூடிக் கொண்டது. (இதனைக் கண்ட) அவர்கள் தமக்குள், நாம் (வேறெவரின் திருப்திக்காகவுமின்றி) அல்லாஹ்வுக்காக என்று தூய்மையான முறையில் செய்த நற்செயல்களை

நினைத்துப் பார்த்து, அவற்றை (வசீலாவாக - துணைச் சாதனமாக)க் கொண்டு அல்லாஹ்விடம் பிரார்த்திப்போம். அவன் இந்தப் பாறையை நம்மைவிட்டு அகற்றி விடக் கூடும்' என்று பேசிக் கொண்டனர்.

அவர்களில் ஒருவர் இவ்விதம் இறைவனிடம் மன்றாடலானார்

இறைவா! எனக்கு முதிர்ந்த வயதுடைய தாய் தந்தையர் இருந்தனர். சிறு குழந்தைகளும் இருந்தனர். அவர்களைப் பராமரிப்பதற்காக நான் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தேன். மாலையில் நான் திரும்பி வந்தபின் ஆட்டின் பாலைக் கறந்து கொண்டுவந்து என் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்கு முன்பாக என் தாய் தந்தையர்க்கு அதைப் புகட்டுவேன். ஒரு நாள் நான் தாமதமாகத் திரும்பி வந்தேன். (நான் வீட்டை அடைந்தபோது) நெடு நேரம் கழிந்து இரவாகி விட்டிருந்தது. (என் தாய் தந்தை) இருவரும் உறங்கி விட்டிருக்கக் கண்டேன். வழக்கமாக நான் கறந்து வந்ததைப் போன்றே அன்றைக்கும் (ஆட்டுப்) பாலைக் கறந்து எடுத்துக் கொண்டு வந்தேன். அவர்களை (தூக்கத்திலிருந்து) எழுப்பிட மனமில்லாமல் அவர்களின் தலைமாட்டில் நின்று கொண்டேன். என் (தாய் தந்தையர்க்கு முதலில் புகட்டாமல் என்) குழந்தைகளுக்கு முதலில் புகட்டிட எனக்கு விருப்பமில்லை. என் குழந்தைகளோ (என்) காலுக்கு அடியில் பாலுக்காக அழுது பரிதவித்துக் கொண்டிருந்தனர். இதே நிலையில் வைகறை நேரம் உதயமாம்விட்டது. நான் இச்செயலை உன் திருப்தியை நாடியே செய்திருக்கிறேன் என்று நீ கருதினால் எங்களுக்கு இந்தப் பாறையை சற்றே நகர்த்திக் கொடுப்பாயாக! அதன் வழியாக நாங்கள் வானத்தைப் பார்த்துக் கொள்வோம்.

அவ்வாறே அல்லாஹ் (அவர்களுக்கு) சிறிதளவு நகர்த்தித் தந்தான். அதன் வழியாக அவர்கள் வானத்தைப் பார்த்தார்கள்.

மற்றொருவர் பின்வருமாறு மன்றாடிப் பிரார்த்தனை புரிந்தார்:

இறைவா! எனக்கு என் தந்தையின் சகோதரருடைய மகள் (ஒன்றுவிட்ட சகோதரி - முறைப்பெண்) ஒருத்தி இருந்தாள். ஆண்கள் பெண்களை எப்படி ஆழமாக நேசிப்பார்களோ அப்படி நான் அவளை நேசித்தேன். நான் அவளிடம் என்னுடன் உடலுறவு கொள்ள வருமாறு அழைத்தேன். நான் அவளுக்கு நூறு தீனார்கள் (பொற்காசுகள்) கொடுத்தாலே தவிர என்னுடன் உறவு கொள்ள முடியாது என்று அவள் மறுத்தாள். நான் அ(ந்தப் பணத்)தை மிகவும் சிரமப்பட்டுச் சேகரித்தேன். நான் (அந்தப் பணத்துடன் சென்று) அவளுடைய இரண்டு கால்களுக்கும் இடையே அமர்ந்தபோது அவள்,அல்லாஹ்வின் அடியானே! அல்லாஹ்வுக்கு அஞ்சு. முத்திரையை (கற்பு உறுப்பை) அதற்குரிய (மண பந்த) உரிமையின்றி திறக்காதே' என்று கூறினாள். உடனே நான் (உடலுறவு கொள்ளாமல்) எழுந்து விட்டேன். (இறைவா! உன் அச்சத்தால் நான் புரிந்த) இந்த நற்செயலை நான் உன் திருப்தியைப் பெற விரும்பியே செய்ததாக நீ கருதினால் இந்தப் பாறையை எங்களைவிட்டு (இன்னும்) சற்று நீக்கி விடுவாயாக!

உடனே, பாறை இன்னும் சற்று விலகியது.

மூன்றாமவர் பின்வருமாறு மன்றாடிப் பிரார்த்தனை புரிந்தார்:

இறைவா! நான் ஒரு ஃபரக் அளவு நெல்லைக் கூலியாக நிர்ணயித்துக் கூலியாள் ஒருவரை வேலை செய்ய அழைத்துச் சென்றேன். அவர் தம் வேலை முடிந்தவுடன்,என்னுடைய உரிமையை (கூலியைக்) கொடு' என்று கேட்டார். நான் (நிர்ணயம் செய்திருந்த) அவரின் கூலியை அவர் முன் வைத்தேன். அவர் அதை ஏற்க மறுத்துவிட்டார். (அவர் சென்றபின்) அதை நான் தொடர்ந்து நிலத்தில் விதைத்து விவசாயம் செய்து வந்தேன். எதுவரையென்றால் அதன்

வருவாயிலிருந்து பல மாடுகளையும் இடையர்களையும் நான் சேகரித்து விட்டேன். சில காலங்களுக்குப் பிறகு அந்த மனிதர் (கூலியாள்) என்னிடம் வந்து,அல்லாஹ்வுக்கு அஞ்சு' என்று கூறினார். நான் அவரிடம்,அந்த மாடுகளிடமும் இடையர்களிடமும் சென்று அவற்றை எடுத்துக்கொள்' என்றேன். அதற்கு அம்மனிதர்,அல்லாஹ்வுக்கு அஞ்சு என்னைப் பரிகாசம் செய்யாதே' என்று கூறினார். நான்,உன்னை நான் பரிகாசம் செய்யவில்லை. நீ இவற்றை எடுத்துக் கொள்ளு என்று பதிலளித்தேன். அவர் அவற்றை எடுத்துச் சென்றார். நான் இந்த நற்செயலை உன் திருப்தியைப் பெற விரும்பியே செய்திருந்ததாக நீ கருதினால் மீதமுள்ள அடைப்பையும் நீக்குவாயாக!

(இந்தப் பிரார்த்தனையைச் செவியற்றவுடன்) அல்லாஹ் (அப்பாறையை முழுவதுமாக அகற்றி) மீதியிருந்த அடைப்பையும் நீக்கிவிட்டான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## நபித்தோழர்களின் வக்ஃபு - அறக்கொடைகளும்,கராஜ் நிலத்தை அவர்கள் குத்தகைக்குவிட்டதும், மற்றும் அவர்களின் பிற ஒப்பந்தங்களும்.

நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம் கூறினார்கள்.

அதன் ('ஃதமஃக் என்ற இடத்திலுள்ள பேரீச்ச மரங்களின்) அசலை (அறக் கொடையாக வழங்கி) தர்மம் செய்யுங்கள். அப்போது அவற்றை விற்க முடியாது. ஆனால், அதன் பழங்களை (தர்மத்திற்குச்) செலவழிக்கலாம்.

உமர்(ரலி) அவர்களும் அவ்வாறே அந்த மரங்களை (அறக் கொடையாக வழங்கி) தர்மம் செய்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2334. அஸ்லம்(ரலி) அறிவித்தார்.

"முஸ்லிம்களின் வருங்காலத் தலைமுறைகள் இல்லாதிருந்தால் நபி(ஸல்) அவர்கள் கைபர் நிலங்களைப் பங்கிட்டதைப் போன்று நானும், நான் வெற்றி கொண்ட ஊர்களின் நிலங்களையெல்லாம் (இஸ்லாமியப் படையின் வீரர்களிடையே) பங்கிட்டு விட்டிருப்பேன்' என்று உமர்(ரலி) கூறினார்.

## (எவருக்கும் சொந்தமில்லாத புறம் போக்கான) தரிசு நிலத்தை ஒருவர் (பயிரிட்டு) உயிராக்கினால் அது அவருக்கே சொந்தம்.

மேலும், அலீ(ரலி) கூஃபாவில் இருந்த இத்தகைய (புறம் போக்கான) தரிசு நிலங்கள் குறித்து இதே கருத்தைத்தான் கொண்டிருந்தார்கள்.

உமர்(ரலி),ஒரு தரிசு நிலத்தை (பயிரிட்டு) உயிராக்குகிறவருக்கே அது சொந்தமாகும்' என்று கூறினார்கள்.

அம்ர் இப்னு அவ்ஃப்(ரலி) கூறினார்.

அண்ணல் நபி(ஸல்) அவர்கள், ("தரிசு நிலத்தை உயிராக்குகிறவருக்கே அது சொந்தமாகும்' என்று சொன்னதோடு,)அந்த நிலம் ஒரு முஸ்லிமுக்கு (அல்லது இஸ்லாமிய அரசின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு வாழும் முஸ்லிமல்லாதவருக்குச்) சொந்தமானதாக இருக்கக்கூடாது. (அப்போதுதான் அதைப் பயிரிட்டவருக்கு அது சொந்தமாகும்.) மேலும், அநியாயமாக (அடாவடித்தனமாக) அதில் பயிரிட்டுவிட்டு, பிறகு அது எனக்கே சொந்தம் என்று உரிமை கொண்டாடவும் எவருக்கும் உரிமையில்லை' என்று கூறினார்கள்.

இதே விஷயம் குறித்து ஜாபிர்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து செய்தி அறிவித்தார்கள்.

ஹதீஸ் 2335. அன்னை ஆயிஷா(ரலி) கூறினார்.

“யாருக்கும் சொந்தமில்லாத ஒரு நிலத்தைப் பயிரிடுகிறவரே அதைச் சொந்தமாக்கிக் கொள்ள அதிக உரிமையுள்ளவராவார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“உமர்(ரலி) தம் ஆட்சிக் காலத்தின்போது இதை ஆதாரமாகக் கொண்டே தீர்ப்பளித்தார்கள்‘ என்று உர்வா(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 2336. உமர்(ரலி) அறிவித்தார்.

‘அல் அகீக் பள்ளத்தாக்கின் கீழே (பத்னுல் வாதியில்)துல் ஹுலைஃபா என்னுமிடத்தில், தம் ஓய்விடத்தில் நபி(ஸல்) அவர்கள் இரவைக் கழித்துக் கொண்டிருந்தபோது கனவொன்று கண்டார்கள். அதில் அவர்களுக்கு,நீங்கள் அருள் வளம் நிரம்பிய (ஆசீர்வதிக்கப்பட்ட) ஒரு பள்ளத்தாக்கில் தங்கியுள்ளீர்கள்‘ என்று கூறப்பட்டது.

(அறிவிப்பாளர்) மூஸா இப்னு உக்பா(ரலி) கூறினார்:

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) தம் ஒட்டகத்தை எங்கே மண்டியிட்டு அமரச் செய்வது வழக்கமோ அதே இடத்தில், இறைத்தூதர் ஓய்வெடுக்கும் இடத்தைத் தேடியவராக, எங்கள் ஒட்டகத்தையும் சாலிம்(ரஹ்) மண்டியிட்டு அமரச் செய்தார்கள். நபி(ஸல்) அவர்களின் அந்த ஓய்விடம்அகீக் பள்ளத்தாக்கின் அடி வாரத்தில் அமைந்திருந்த பள்ளி வாசலுக்குக் கீழ்ப்பகுதியில் இருந்தது. பள்ளிவாசலிலிருந்து (வரும்) நடுவழியொன்று அந்த ஓய்விடத்திற்கும் நெடுஞ்சாலைக்கும் இடையே அமைந்திருந்தது.

ஹதீஸ் 2337. உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்அல் அகீக் பள்ளத்தாக்கில் தங்கியிருந்தபோது,இன்றிரவு (என் கனவில்) என் அதிபதியான இறைவனிடமிருந்து ஒருவர் (ஜிப்ரீல்) வருகை தந்து,இந்த அருள் வளம் நிரம்பிய பள்ளத்தாக்கில் தொழுவீராக! மேலும், ஹஜ்ஜுடன் உம்ரா செய்ய நாடுகிறேன் என்று சொல்வீராக‘ என்றார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். 8

## நிலத்தின் உரிமையாளர் (குத்தகைக்கு எடுப்பவரிடம்),அல்லாஹ் அனுமதியளிக்கும் காலம் வரை இந்த நிலத்தில் பயிரிட உனக்கு நான் அனுமதியளிக்கிறேன்‘ என்று கூறி (நிலக்குத்தகைக்கான) குறிப்பிட்ட காலம் எதையும் கூறாவிட்டால் அவ்விருவரும் பரஸ்பரம் இசைந்து போகும் காலம் வரை குத்தகையை நீட்டித்துக் கொள்ளலாம்.

ஹதீஸ் 2338. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் ஹிஜாஸ் மாநிலத்திலிருந்து நாடு கடத்திவிட்டார்கள். இறைத்தூதர் கைபர் பிரதேசத்தை வெற்றி கொண்டபோது (அங்கிருந்த) யூதர்களை நாடு கடத்திட விரும்பினார்கள். (ஏனெனில்,) அந்தப் பிரதேசத்தை வெற்றி கொண்டபோது அந்தப் பகுதியிலிருந்த நிலம் முழுவதும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் முஸ்லிம்களுக்கும் உரியதாம் விட்டிருந்தது. (அந்த நிலையில்) யூதர்கள் அல்லாஹ்வின் தூதரிடம்,நாங்கள் இந்த நிலங்களில் பயிரிட்டு உழைக்கிறோம். இவற்றின் விளைச்சலில்பாதியைப் பெற்றுக் கொள்கிறோம். (மீதியை இஸ்லாமிய அரசுக்கு நிலவரியாகச் செலுத்தி விடுகிறோம்)‘ என்று கேட்டுக் கொண்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,நீங்கள்

ஒப்புக் கொண்ட இந்த நிபந்தனையின் (நிலக் குத்தகை ஒப்பந்தத்தின்) அடிப்படையில் நாம் விரும்பும் வரை நீங்கள் அதில் பயிரிட்டுக் கொள்ள நாம் அனுமதிக்கிறோம்' என்று கூறினார்கள். எனவே, உமர்(ரலி), தம் ஆட்சிக் காலத்தில் அந்த யூதர்களை தைமா, அரீஹா, (ஜெரிக்கோ) ஆகிய பகுதிகளுக்கு நாடு கடத்தி அனுப்பும் வரை அவர்கள் அங்கேயே (நிலங்களைப் பயிரிட்டு வரி செலுத்தி) வசித்து வந்தார்கள்.

## நபித்தோழர்கள் தங்கள் பண்ணைகளின் விளைச்சலையும் தோட்டங்களில் விளையும் பழங்களையும் விலையில்லாமல் (கைம்மாறு இல்லாமல்) தமக்குள் பங்கிட்டுக் கொள்ளும் வழக்கம் உடையவர்களாயிருந்தனர்.

ஹதீஸ் 2339. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

"எங்களுக்கு உதவியாக இருந்த ஒன்றைக் கூடாது என்று இறைத்தூதர் எங்களைத் தடுத்தார்கள்' என்று (என் தந்தையின் சகோதரர்) ளுஹைர்(ரலி) கூறினார். (உடனே),இறைத்தூதர் சொன்னதே சரியானது' என்று கூறினேன்.

(அதற்கு) அவர் சொன்னார் ஒரு முறை என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழைத்து,நீங்கள் உங்கள் வயல்களை என்ன செய்கிறீர்கள்? என்று கேட்டார்கள். நீரோடைகளின் கரைகளின் ஓரமாக விளைபவற்றை எங்களுக்குக் கொடுத்து விட வேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் அல்லது சில வஸக்குகள் பேரீச்சம் பழங்களை அல்லது வாற்கோதுமையை எங்களுக்குக் கொடுத்து விட வேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் அவற்றைக் குத்தகைக்குவிட்டு விடுகிறோம்' என்று நான் பதிலளித்தேன். அதற்கு அண்ணலார்,அவ்வாறு செய்யாதீர்கள். நீங்களே அவற்றில் வேளாண்மை செய்யுங்கள் அல்லது பிறருக்கு இலவசமாக (கைம்மாறு பெறாமல்) பயிரிடக் கொடுத்து விடுங்கள் அல்லது பயிரிடாமல் அப்படியேவிட்டுவிடுங்கள்' என்றார்கள். (இதைக் கேட்ட) நான்,நாங்கள் செவியேற்றோம் கீழ்ப்படிந்தோம்' என்று கூறினேன்.

ஹதீஸ் 2340. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

மக்கள் (நபி(ஸல்) அவர்கள் காலத்தில்), விளைச்சலில் மூன்றில் ஒரு பாகம் அல்லது நான்கில் ஒரு பாகம் அல்லது பாதியைத் தமக்குக் கொடுத்து விடவேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் தம் நிலத்தைக் குத்தகைக்குவிட்டு வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,எவரிடம் நிலம் இருக்கிறதோ அவர், தானே அதனைப் பயிரிடட்டும். அல்லது அதனை (தன் முஸ்லிம் சகோதரர் எவருக்காவது பிரதிபலன் எதிர் பார்க்காமல்) இலவசமாகப் பயிர் செய்யக் கொடுத்து விடட்டும். அப்படிச் செய்யவில்லையென்றால், தன் நிலத்தை அவர் அப்படியே (பயிரிடாமல்) வைத்திருக்கட்டும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2341. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவரிடம் நிலம் இருக்கிறதோ அவர் அதனைத் தானே பயிரிடட்டும் அல்லது அதனை தன் முஸ்லிம் சகோதரர் எவருக்காவது (பிரதிபலன் எதிர் பார்க்காமல் இலவசமாகப் பயிர் செய்யக் கொடுத்து விடட்டும். இவ்வாறு செய்ய அவர் மறுத்தால் தன் நிலத்தை அப்படியே (பயிரிடாமல்) வைத்திருக்கட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2342. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்.

(ஹதீஸ் எண் ஹதீஸ் 2339ல்) ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்த நபிமொழியை, நான் தாஊஸ்(ரஹ்) அவர்களிடம் கூறிய பொழுது அவர்கள் என்னிடம் (பின்வருமாறு) கூறினார்கள்:

ஒருவர் தன் நிலத்தைக் குத்தகைக்குவிட்டுப் பயிரிடச் செய்வது அனுமதிக்கப்பட்டதேயாகும். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் அதனை (நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைத்) தடை செய்யவில்லை. மாறாக,ஒருவர் தம் சகோதரருக்குத் தன் நிலத்தை இலவசமாகப் பயிரிட்டு (அதன் விளைச்சல் முழுவதையும் எடுத்து)க் கொள்ளக் கொடுத்து விடுவது அதற்காக ஒரு குறிப்பிட்ட பங்கை (குத்தகைத் தொகையாகப்) பெற்றுக் கொள்வதை விடச் சிறந்தது' என்றே கூறினார்கள்' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2343. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்திலும், அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி), உஸ்மான்(ரலி) ஆகியோரின் ஆட்சிக் காலத்திலும், முஆவியா(ரலி) அவர்களின் ஆட்சியின் ஆரம்பக் காலத்திலும் தம் நிலங்களை இப்னு உமர்(ரலி) குத்தகைக்குவிட்டு வந்தார்கள்.

ஹதீஸ் 2344. பின்னர் இப்னு உமர்(ரலி) அவர்களுக்கு (ஹதீஸ் எண் ஹதீஸ் 2339ல்) ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்த,நபி(ஸல்) அவர்கள் நிலங்களைக் குத்தகைக்கு விடுவதைத் தடுத்தார்கள்' என்னும் நபிமொழி எடுத்துரைக்கப்பட்டது. இப்னு உமர்(ரலி) இதைச் செவியுற்றவுடனே ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அவர்களிடம் சென்றார்கள். அப்போது அவர்களுடன் நானும் சென்றேன். இப்னு உமர்(ரலி) ராஃபிஉ(ரலி) அவர்களிடம் இது குறித்து விசாரித்தார்கள். ராஃபிஉ(ரலி),நபி(ஸல்) அவர்கள் விளைநிலங்களைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்தார்கள்' என்று கூறினார்கள். இதனைச் செவியுற்ற இப்னு உமர்(ரலி) ராஃபிஉ(ரலி) அவர்களிடம்,நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் நீரோடைகளின் கரையோரமாக உள்ள நிலங்களின் விளைச்சலையும் சிறிது வைக்கோலையும் எங்களுக்குக் கொடுத்துவிடவேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் நிலங்களைக் குத்தகைக்கு கொடுத்து வந்ததைத் தாங்கள் அறிந்திருக்கிறீர்களே' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2345. சாலிம்(ரஹ்) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்களின் காலத்தில் நிலம் குத்தகைக்கு விடப்பட்டு வந்ததை நான் அறிந்திருந்தேன்' என்று அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார். பிறகு, அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) (மேற்கண்ட ஹதீஸ் எண் ஹதீஸ் 2344ல் ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) கூறியதைக் கேட்ட பின்) நிலக்குத்தகை தொடர்பாக நபி(ஸல்) அவர்கள் (அது கூடாது என்று) புதிய சட்டம் எதனையாவது பிறப்பித்து (பழைய விதிகளை மாற்றியமைத்து) விட்டிருக்க, அதனை நாம் அறியாதிருந்து விட்டோமோ என்று அஞ்சி நிலத்தைக் குத்தகைக்கு விடுவதை நிறுத்திவிட்டார்கள்.

நிலத்தைத் தங்க மற்றும் வெள்ளி (நாணயங்களு)க்காகக் குத்தகைக்கு விடுவது செல்லும்.

இப்னு அப்பாஸ்(ரலி),நீங்கள் செய்யக்கூடியவற்றில் மிகவும் மேலானது தரிசு நிலத்தை (பயிர் செய்வதற்காக) வருட வாடகைக்கு எடுப்பதேயாகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2346 , ஹதீஸ் 2347 ராஃபிவு இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

என் தந்தையின் சகோதரர்கள் இருவர்,நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் நீரோடைகளின் ஓரமாக விளைபவற்றை எங்களுக்குக் கொடுத்து விட வேண்டும் அல்லது நில உரிமையாளர்(களான நாங்கள்) வரையறுக்கிற (ஒரு பகுதி) விளைச்சலை எங்களுக்குக் கொடுத்து விடவேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் நிலங்களைக் குத்தகைக்குவிட்டு

வந்தோம். இதையறிந்த நபி(ஸல்) அவர்கள் அவ்வாறு குத்தகைக்கு விடுவதைத் தடை செய்துவிட்டார்கள்' என்று என்னிடம் கூறினார்கள்.

அறிவிப்பாளர் ஹன்ழலா இப்னு கைஸ்(ரஹ்) கூறினார்:

ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அவர்களிடம்,தங்க மற்றும் வெள்ளி நாணயங்களைப் பெற்றுக் கொண்டு குத்தகைக்கு விடலாமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அதில் (தங்க, வெள்ளி நாணயங்களைப் பெற்றுக் கொண்டு குத்தகைக்கு விடுவதில்) தவறில்லை' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் லைஸ்(ரஹ்),ஹலாலையும் (அனுமதிக்கப்பட்டதையும்) ஹராமையும் (விலக்கப்பட்டதையும்) வேறுபடுத்தி விளங்கிக் கொள்ளும் ஆற்றல் உடையவர்கள் தடை செய்யப்பட்ட குத்தகை முறைகளை ஆய்வுக் கண்கொண்டு பார்ப்பார்களாயின் அவற்றிலுள்ள ஆபத்துகளைக் கருத்தில் கொண்டு அவற்றை அனுமதிக்கமாட்டார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2348. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒரு முறை நபி(ஸல்) அவர்கள், கிராமவாசி ஒருவர் தன்னிடம் அமர்ந்திருக்க (பின்வரும் நிகழ்ச்சியை) எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்கள்:

சொர்க்கவாசிகளில் ஒருவர், தன் இறைவனிடம் விவசாயம் செய்ய அனுமதி கேட்பார். அதற்கு இறைவன் அவரிடம்,நீ விரும்பிய (இன்பகரமான) நிலையில் (இப்போது) நீ வாழ்ந்து கொண்டிருக்கவில்லையா? என்று கேட்பான். அதற்கு அவர்,ஆம், (நான் விரும்பியபடியே இன்பகரமான நிலையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்) ஆனால், நான் நிலத்தை உழுது பயிரிட விரும்புகிறேன்' என்று கூறுவார். (இறைவனும் அவருக்கு அனுமதியளிப்பான்.) அந்த மனிதர் விதை தூவி விடுவார். கண் இமைக்கும் நேரத்திற்குள் அந்தப் பயிர் வளர்ந்து முதிர்ந்து அறுவடைக்குத் தயாராம் விடும் மலைகளைப் போல் விளைந்து குவிந்து போய் விடும். அப்போது இறைவன்,எடுத்துக் கொள். ஆதமின் மகனே! உன்னை எதுவுமே திருப்திப்படுத்தாது' என்று கூறுவான்.

(நபி(ஸல்) அவர்களிடமிருந்து இதைச் செவியுற்ற) அந்த கிராமவாசி,அல்லாஹ்வின் மீதாணையாக! அந்த மனிதர் குறைஷியாகவோ (மக்கா வாசியாகவோ) அன்சாரியாகவோ (மதீனாவாசியாகவோ)தான் இருக்கமுடியும். அவர்கள் தாம் விவசாயிகள், நாங்களோ விவசாயிகள் அல்லர்' என்று கூறினார். இதனைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள் சிரித்துவிட்டார்கள்.

## மரம் நடுதல்.

ஹதீஸ் 2349. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்.

நாங்கள் வெள்ளிக்கிழமையன்று மிகுந்த மகிழ்ச்சியுடன் இருந்து வந்தோம். ஏனெனில், எங்களுடன் கிழவியொருத்தி நட்பாக இருந்தாள். அவள், நாங்கள் எங்கள் நீரோடைகளின் ஓரமாக நட்டு வந்தசில்க் என்னும் கீரைத் தண்டுகளைப் பிடுங்கி, அவற்றைத் தன்னுடைய பாத்திரமொன்றில் போட்டு, அவற்றுடன் வாற்கோதுமை விதைகள் சிலவற்றையும் கலந்து (ஒரு வகை உணவைத் தயார் செய்து) தருவாள். நாங்கள் ஜும்ஆ தொழுகை தொழுதுவிட்டோமென்றால் அந்தக் கிழவியைச் சந்திப்போம். அவள் அந்த உணவை எங்களுக்குப் பிரியமாகத் தருவாள். இதன் காரணமாக நாங்கள் வெள்ளிக் கிழமையன்று மகிழ்ச்சியுடன் இருப்போம். ஜும்ஆ தொழுகைக்குப் பிறகுதான் நாங்கள் உண்போம் மதிய ஓய்வு கொள்வோம்.

மூன்றாவது அறிவிப்பாளரான யஃகூப்(ரஹ்) கூறினார்:

இரண்டாம் அறிவிப்பாளர் அபூ ஹாஸிம்(ரஹ்),அந்த உணவு கெட்டியான கொழுப்போ திரவக் கொழுப்போ எதுவும் அற்றதாக இருந்தது' என்று கூறினார்கள் எனவே கருதுகிறேன்.

ஹதீஸ் 2350. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுரைரா ஏராளமான நபி மொழிகளை அறிவிக்கிறாரே என்று மக்கள் (என்னைக் குறை கூறும் தொனியில்) பேசிக் கொள்கிறார்கள். அல்லாஹ்விடம் இதற்கெனக் குறித்த வேளை ஒன்று உண்டு. மேலும், அவர்கள்,முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் என்ன நேர்ந்துவிட்டது? அபூ ஹுரைரா நபிமொழிகளை அறிவிப்பதைப் போல் அவர்கள் அறிவிப்பதில்லையே ஏன்? என்று கேட்கிறார்கள். என் முஹாஜிர் சகோதரர்கள் கடைவீதிகளில் வியாபாரங்களில் ஈடுபட்டிருந்தனர் என் அன்சாரித் சகோதரர்களோ தங்கள் சொத்துகளைப் பராமரிக்கும் வேலையில் (விவசாயம் போன்ற பணிகளில்) ஈடுபட்டிருந்தனர். (அதே நேரத்தில்) நானோ என் வயிற்றை நிரப்பும் (வருவாய் போதுமென்ற) திருப்தியுடன் (மேற்கொண்டு வருவாய் எதுவும் தேடாமல்) அல்லாஹ்வின் தூதருடனேயே எப்போது இருப்பதை வழக்கமாகக் கொண்ட ஏழை மனிதனாயிருந்தேன். நபி(ஸல்) அவர்களுடன் மற்றவர்கள் இல்லாத போதும் (சம்பாத்தியத்தைத் தேடி அவர்கள் வெளியே சென்று விடும் போதும்) நான் (நபியவர்களுடன் இருப்பேன். அவர்கள் (நபி மொழிகளை) மறந்து விடும்போது நான் (அவற்றை) நினைவில் (பாதுகாப்பாக) வைத்திருப்பேன். மேலும், ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள்,நான் என்னுடைய இச்சொல்லைச் சொல்லி முடிக்கிற வரை, தன்னுடைய ஆடையை விரித்து வைத்திருந்து, பிறகு தன் நெஞ்சோடு அதைச் சேர்ந்து வைத்துக் கொள்கிறவர் என் வாக்கு எதனையும் மறக்கமாட்டார்' என்று கூற, நான் என் அங்கியை விரித்தேன். அதனைத் தவிர என் மீது வேறு ஆடை எதுவும் இருக்கவில்லை. நபி(ஸல்) அவர்கள் தம் சொல்லைச் சொல்லி முடிக்கும்வரை அதை அப்படியே விரித்து வைத்திருந்துவிட்டு, பிறகு அதனை என் நெஞ்சோடு சேர்த்து (அணைத்து)க் கொண்டேன். நபி(ஸல்) அவர்களைச் சத்திய மார்க்கத்துடன் அனுப்பி வைத்தவன் மீதாணையாக! அப்போதிருந்து அவர்களின் சொற்களில் எதனையுமே இன்று வரை நான் மறக்கவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் வேதத்தின் இரண்டு வசனங்கள் மட்டும் இல்லையென்றால் நான் (நபிமொழிகளில்) எதனையுமே உங்களுக்கு ஒருபோதும் அறிவித்திருக்க மாட்டேன்.

இவைதாம் அந்தத் திருக்குர்ஆன் வசனங்கள்.

நாம் இறங்கியருளிய தெளிவான அறிவுரைகளையும் வழிகாட்டுதலையும் அவற்றை மக்கள் அனைவர்க்காகவும் நம் வேதத்தில் எடுத்துரைத்த பின்னரும் மறைப்பவர்களை நிச்சயமாக அல்லாஹ் சபிக்கிறான். மேலும், சபிப்போர் அனைவரும் அவர்களைச் சபிக்கிறார்கள். ஆனால், (இத்தவற்றிலிருந்து) திருந்தி, தம் செயல் முறையை ஒழுங்குபடுத்திக் கொண்டு, (தாம் மறைத்து வைத்தவற்றை) எடுத்துரைக்கிறவர்களை நான் மன்னிப்பேன். நான் பெரிதும் மன்னிப்பவனாகவும் கருணை புரிபவனாகவும் இருக்கிறேன். (திருக்குர்ஆன் 02:159, 160)

# அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## தண்ணீர் விநியோகம்.

அல்லாஹ் கூறினான்:

ஒவ்வோர் உயிரினத்தையும் தண்ணீரிலிருந்து நாம் படைத்தோம். அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்களா? (திருக்குர்ஆன் 21:30)

மேலும், அல்லாஹ் கூறினான்:

நீங்கள் பருகும் இந்த நீரை நீங்கள் எப்போதாவது கண் திறந்து பார்த்திருக்கிறீர்களா? மேகத்தில் இருந்து, நீங்கள் இதனைப் பொழியச் செய்தீர்களா? அல்லது இதனைப் பொழியச் செய்தது நாமா? நாம் நாடியிருந்தால் இதனை உவர்ப்பு நீராக்கி விட்டிருப்போம். அப்படியிருக்க, நீங்கள் ஏன் நன்றி செலுத்துவதில்லை? (திருக்குர்ஆன் 56: 68-70)

## தண்ணீரை தர்மம் செய்வதும் நன்கொடையாக வழங்குவதும் அதை மரண சாசனத்தின் வாயிலாக பிறர்க்கு (உடைமையாக்கித்) தருவதும் செல்லும் அது பங்கிடப்பட்டுவிட்டதாயினும் சரி (பிறருடைய பங்கையும் உள்ளடக்கி) பங்கிடப்படாததாக இருப்பினும் சரி.

உஸ்மான்(ரலி) கூறினார்.

“ரூமா கிணற்றை வாங்குபவர் யார்? அதில் அ(தை வாங்குப)வருடைய வாளி, மற்ற முஸ்லிம்களின் வாளியைப் போல் (சம உரிமை பெற்றதாக) இருக்கும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே, நான் அதை வாங்கி (முஸ்லிம்களின் நலனுக்காக வக்ஃபு செய்து) விட்டேன். 2

ஹதீஸ் 2351. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பாத்திரம் கொண்டு வரப்பட்டது. அதிலிருந்து அவர்கள் (பால்) குடித்தார்கள். அப்போது அவர்களின் வலப்பக்கம் மக்களில் மிகக் குறைந்த வயதுடைய சிறுவர் ஒருவருடம் இடப்பக்கம் வயது முதிர்ந்தவர்களும் இருந்தனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் (அச்சிறுவரை நோக்கி),சிறுவனே! நான் இதை முதியவர்களுக்குக் கொடுத்துவிட எனக்கு நீ அனுமதியளிக்கிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு அச்சிறுவர்,இறைத்தூதர் அவர்களே! தங்களிடமிருந்து எனக்குக் கிடைக்கக் கூடிய மீதத்தை எவருக்கும் நான்விட்டுக் கொடுக்க மாட்டேன்‘ என்று கூறினார். எனவே, நபி(ஸல்) அவர்கள், (அந்தப் பாலில்) தாம் (குடித்து) மீதம் வைத்ததை அந்தச் சிறுவருக்கே கொடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2352. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் இருந்த சமயத்தில் பழகிய (நாட்டு) ஆடு ஒன்றின் பாலை அவர்களுக்காகத் கறந்து, என் வீட்டில் இருந்த கிணற்றின் தண்ணீரை அதில் கலந்து, அந்தப் பால் பாத்திரத்தை நபி(ஸல்) அவர்களுக்கு நான் கொடுத்தேன். நபி(ஸல்) அவர்கள் அதிலிருந்து (பாலை) அருந்திவிட்டு, தம் (திரு)வாயிலிருந்து அந்தப் பாத்திரத்தை எடுத்தார்கள்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

(அப்போது) அவர்களின் இடப்பக்கத்தில் அபூ பக்கர்(ரலி) அவர்களும் வலப் பக்கத்தில் ஒரு கிராமவாசியும் இருந்தனர். எனவே, உமர்(ரலி), நபி(ஸல்) அவர்கள் எங்கே மீதிப் பாலை அந்த கிராமவாசிக்குக் கொடுத்து விடுவார்களோ என்று அஞ்சி,உங்களிடம் இருப்பதை அபூ பக்ருக்கு கொடுத்து விடுங்கள், இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் அதைத் தம் வலப்பக்கம் இருந்த கிராமவாசிக்கே கொடுத்துவிட்டு,(முதலில்) வலப்பக்கம் இருப்பவரிடமே கொடுக்க வேண்டும். வலப்பக்கமிருப்பவரே (இடப் பக்கமிருப்பவரை விட) அதிக உரிமையுடையவர்' என்றார்கள்.

## நீர்நிலையின் உரிமையாளர், தன் தண்ணீர் தேவைகள் அனைத்தையும் நிறைவு செய்து கொள்ளும் வரை அதன் நீரைப் பயன்படுத்த முன்னுரிமை பெற்றவராவார். ஏனெனில்,தேவைக்கு மேல் எஞ்சியுள்ள தண்ணீரை (பிறர் உபயோகிப்பதைத்) தடுப்பது கூடாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2353. (தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள தண்ணீரைத் தடுக்கலாகாது. (அவ்வாறு) தடுத்தால், அதைச் சுற்றியுள்ள) புல் பூண்டுகளை (மேய விடாமல் கால்நடைகளைத்) தடுத்தாம் விடும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்3.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2354. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள தண்ணீரைத் தடுக்காதீர்கள். (அவ்வாறு தடுத்தால், அப்பகுதியில்) தேவைக்கு மேல் உள்ள புல் பூண்டுகளைத் தடுத்தவராக நீங்கள் ஆம்விடுவீர்கள்.

இதையும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களே அறிவித்தார்கள்.

## தனக்குச் சொந்தமான நிலத்தில் கிணறு வெட்டியவர் (அதில் யாரேனும் மனிதனோ மற்ற பிராணிகளோ விழுந்து இறந்தால்) அதற்கு நஷ்ட ஈடு தரமாட்டார்.

ஹதீஸ் 2355. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சுரங்கத்தினாலோ, கிணற்றினாலோ, மிருகங்களாலோ ஏற்படும் இழப்பு மன்னிக்கப்பட்டதாகும். புதையலில் ஐந்தில் ஒரு பங்கு (அரசுக்கு ஸகாத்தாகக்) கொடுத்துவிடவேண்டும். 4

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கிணறு தொடர்பான வழக்கும் அதற்கான தீர்ப்பும்.

ஹதீஸ் 2356 , ஹதீஸ் 2357 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

"ஒரு முஸ்லிமின் செல்வத்தை அபகரித்துக் கொள்வதற்காகப் பொய் சத்தியம் செய்பவன் (மறுமையில்) தன் மீது இறைவன் கோபம் கொண்டிருக்கும் நிலையில் அவனைச் சந்திப்பான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே,அல்லாஹ்வுடன் செய்த உடன்படிக்கையையும் தம் சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்றுவிடுகிறவர்களுக்கு மறுமையில் எந்த நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும் மாட்டான் அவர்களைப் பார்க்கவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனைதான் இருக்கிறது (திருக்குர்ஆன் 03:77) என்னும் குர்ஆன் வசனத்தை அல்லாஹ் அருளினான்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

(இதை நான் மக்களிடம் சொல்லிக் கொண்டிருந்த போது) அஷ்அஸ்(ரலி) வந்து (மக்களை நோக்கி,அபூ அப்திர் ரஹ்மான் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்) உங்களிடம் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்? இந்த வசனம் என் விவகாரத்தில்தான் இறங்கியது. என் தந்தையின் சகோதரர் மகனுடைய நிலத்தில் எனக்குக் கிணறு ஒன்று இருந்தது. (அந்தக் கிணறு தொடர்பாக) எனக்கும் என் ஒன்றுவிட்ட சகோதரருக்கும் இடையே சச்சரவு ஏற்பட்டது. (அதற்காகத் தீர்ப்புக் கேட்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன்.) அப்போது நபி(ஸல்) அவர்கள்,(உன் வாதத்தை நிரூபிக்க) உன்னுடைய சாட்சிகள் (எங்கே)? என்று கேட்டார்கள். நான்,என்னிடம் சாட்சிகள் இல்லை என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால், பிரதிவாதி ('அந்த நிலம் என்னுடையது தான் என்று) சத்தியம் செய்யவேண்டும் என்றார்கள். நான்,அப்படியென்றால் அவர் (தயங்காமல் பொய்) சத்தியம் செய்வாரே என்று கூறினேன். (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் உங்களுக்கு அறிவித்த) இந்த ஹதீஸைக் கூறினார்கள். உடனே, அல்லாஹ் நபியவர்களின் கூற்றை உண்மைப்படுத்தி (மேற்சொன்ன 3:77 ஆம்) குர்ஆன் வசனத்தை அருளினான்' என்று கூறினார்கள்.

## தண்ணீரைப் பயன்படுத்திவிடாமல் வழிப்போக்கரைத் தடுத்தவரின் பாவம்.

ஹதீஸ் 2358. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மூன்று பேரை மறுமை நாளில் அல்லாஹ் ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மேலும், அவர்களுக்குத் துன்பமிக்க வேதனையும் உண்டு.

ஒருவன், (மக்களின் பயணப்) பாதையில், தேவைக்கு மிஞ்சிய தண்ணீரைப் பெற்றிருந்தும் வழிப்போக்கர்கள் அதைப் பயன்படுத்த விடாமல் தடுத்துவிட்டவன்.

இன்னொருவன், தன் (ஆட்சித்) தலைவரிடம் உலக ஆதாயத்திற்காகவே விசுவாசப் பிரமாணம் செய்தவன் அவர் கொடுத்தால் (மட்டுமே) திருப்தியடைந்து, கொடுக்காமல்விட்டால் கோபம் கொள்பவன்.

மற்றொருவன், அஸர் தொழுகைக்குப் பிறகு (மக்கள் கடைவீதியில் திரளும் போது) தன் வியாபாரப் பொருளைக் காட்டி,எவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவனும் இல்லையோ அவன் மீது சத்தியமாக! இந்தப் பொருளுக்காக (இதைக் கொள்முதல் செய்யும்போது) நான் இன்ன (அதிக) விலையைத் தந்தேன். 5 என்று கூறி, அதை ஒருவர் உண்மையென நம்பும்படி செய்வதன் (இப்படி வாடிக்கையாளரிடம் பொய் கூறி அவரை ஏமாற்றி, சொன்ன விலைக்கு அதை விற்றவன்) ஆவான்.

இதைக் கூறிவிட்டு,அல்லாஹ்வுடன் செய்த உடன்படிக்கையையும் தம் சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்று விடுகிறவர்கள்..!என்னும் இந்த (திருக்குர்ஆன் 03:77 ஆம்) இறைவசனத்தை ஓதினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## நதிகளையும் கால்வாய்களையும் மூடிவிடுவது.

ஹதீஸ் 2359 , ஹதீஸ் 2360. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்.

மதீனாவாசிகளின் பேரீச்சந் தோப்புகளுக்கு நீர் பாய்ச்சி வந்தஹர்ரா (என்னுமிடத்திலிருந்த) கால்வாய் விஷயத்தில் அன்சாரிகளில் ஒருவர் (என் தந்தை) ஸுபைர்(ரலி) அவர்களுடன் சச்சரவு செய்தார். அந்த அன்சாரித் தோழர்,தண்ணீரைத் திறந்து ஓட விடு' என்று கூறினார். ஸுபைர்(ரலி) (தண்ணீரைத் திறந்து விட) மறுத்துவிட்டார்கள். (இந்தத் தகராறையையொட்டி) நபி(ஸல்) அவர்களிடம் தீர்ப்புக்காக இருவரும் சென்றபொழுது நபி(ஸல்) அவர்கள்,ஸுபைரே!

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

உங்கள் தோப்புக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு, பிறகு உங்கள் பக்கத்துத் தோப்புக்காரருக்கு தண்ணீரை அனுப்பி விடுங்கள்' என்று கூறினார்கள். இதனைக் கேட்ட அந்த அன்சாரித் தோழர் கோபம் கொண்டு, உங்கள் அத்தை மகன் என்பதாலா (அவருக்கு முதலில் நீர் பாய்ச்சிக் கொண்டு பிறகு எனக்குத் திறந்து விடும்படி அவருக்குச் சாதகமாக தீர்ப்புக் கூறுகிறீர்கள்)? என்று கேட்டார். இதைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்களின் முகம் நிறம் மாறி (கோபத்தால் சிவந்து)விட்டது. அவர்கள் ஸுபைர்(ரலி) அவர்களை நோக்கி, உங்கள் மரங்களுக்கு நீர் பாய்ச்சிக் கொள்ளுங்கள். பிறகு, வரப்புகளைச் சென்றடையும் வரை தண்ணீரைத் தடுத்து நிறுத்திக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள். (என்னிடம்) இந்நிகழ்ச்சியைக் கூறிவிட்டு ஸுபைர்(ரலி), இறைவன் மீதாணையாக!(முஹம்மதே!) உங்களுடைய இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்குகளில் உங்களை நீதிபதியாக ஏற்ற பின்னர், நீங்கள் அளிக்கிற தீர்ப்புக் குறித்து தம் உள்ளங்களில் எத்தனைய அதிருப்தியும் கொள்ளாமல், முற்றிலும் அதற்கு அடிபணியாதவரை அவர்கள் நம்பிக்கை கொண்டவர்களாக மாட்டார்கள் என்னும் (திருக்குர்ஆன் 04: 65) திருக்குர்ஆன் வசனம் இந்த விவகாரத்தில்தான் இறங்கியது என்று எண்ணுகிறேன்' என்று கூறினார்கள்.

## மேட்டிலிருக்கும் நிலத்திற்கே முதலில் நீர் பாய்ச்ச வேண்டும்.

ஹதீஸ் 2361. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்.

ஸுபைர்(ரலி) அவர்களுக்கு ஓர் அன்சாரித் தோழருடன் (பேரீச்சந் தோப்புக்கு நீர் பாய்ச்சும் விஷயத்தில் சச்சரவு ஏற்பட்டது. அப்போது (நபி(ஸல்) அவர்களிடம் இந்த விஷயம் தீர்ப்புக்காகச் சென்றபோது) நபி(ஸல்) அவர்கள், ஸுபைரே! (உங்கள் தோப்புக்குத்) தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு, பிறகு (அதை அன்சாரியின் தோப்புக்கு) அனுப்பி விடுங்கள்' என்றார்கள். உடனே, அன்சாரித் தோழர், அவர் உங்கள் அத்தை மகன் ஆயிற்றே! (எனவேதான் அவருக்குச் சாதகமாக தீர்ப்பளிக்கிறீர்கள்") என்று கூறினார். இதைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்கள், ஸுபைரே! வரப்பை அடையும் வரை நீங்கள் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு (பின்னர் அன்சாரியின் தோப்புக்கு) அதைத் திறந்து அனுப்பி விடுங்கள்' என்று கூறினார்கள்.

இந்த நிகழ்ச்சியைக் கூறிவிட்டு ஸுபைர்(ரலி), திருக்குர்ஆனின் இந்த (திருக்குர்ஆன் 04:65) வசனம் இந்த விவகாரத்தைக் குறித்துத்தான் இறங்கியது என்று எண்ணுகிறேன்' என்று கூறினார்.

## மேட்டிலுள்ள நிலத்திற்கு நீர் பாய்ச்சிக் கொள்ள அனுமதிக்கப்படும் அளவு, கணுக்கால்கள் வரையாகும்.

ஹதீஸ் 2362. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்.

மதீனாவாசிகளின் பேரீச்சந் தோப்புகளுக்கு நீர் பாய்ச்சி வந்தஹர்ரா (என்னுமிடத்திலிருந்த) கால்வாய் விஷயத்தில் அன்சாரிகளில் ஒருவர் ஸுபைர்(ரலி) அவர்களுடன் சச்சரவு செய்தார். இறைத்தூதர் (தம்மிடம் இந்த வழக்கு வந்தபொழுது), ஸுபைரே! நீங்கள் (உங்கள் பேரீச்ச மரங்களுக்குப்) பொது வழக்கப்படி (அளவோடு) தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு உங்கள் பக்கத்திலுள்ளவரு(டைய தோப்பு)க்கு அதை அனுப்பி விடுங்கள்' என்று கூறினார்கள். அதற்கு அந்த அன்சாரி, இவர் உங்கள் அத்தை மகன் என்பதாலா (இவருக்கு சாதகமாகத் தீர்ப்பளித்தீர்கள்)? என்று கேட்டார். உடனே, நபி(ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால் சிவந்து) நிறம் மாறியது. பிறகு, ஸுபைரே! உங்கள் பேரீச்ச மரங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொள்ளுங்கள். தண்ணீர், வரப்பை நன்கு சென்றடையும் வரை தடுத்து நிறுத்திக்

கொள்ளுங்கள். (பிறகுவிட்டு விடுங்கள்)' என்று கூறி, ஸுபைர்(ரலி) அவர்களின் உரிமையை நிறைவாக வழங்கினார்கள்.

இந்த நிகழ்ச்சியைக் கூறிவிட்டு, ஸுபைர்(ரலி),குர்ஆனின் இந்த (திருக்குர்ஆன் 04:65) வசனம் இந்த விவகாரம் குறித்தே இறங்கியது' என்றார்கள்.

அறிவிப்பாளர் இப்னு ஜுரைஜ்(ரஹ்) கூறினார்.

(இந்த நபிமொழியை உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்களிடமிருந்து கேட்டு அறிவித்த) இப்னு ஷிஹாப்(ரஹ்) என்னிடம்,(உங்கள் மரங்களுக்கு) நீர் பாய்ச்சிக் கொள்ளுங்கள். பிறகு வரப்பகுளைச் சென்றடையும் வரை தண்ணீரைத் தடுத்து நிறுத்திக் கொள்ளுங்கள் என்னும் (இந்த) நபிமொழியை அடிப்படையாகக் கொண்டே,தண்ணீர் கணுக்கால்கள் வரை உயர்ந்து நிரம்பிவிட்டால் போதுமான அளவுக்கு நீர் பாய்ச்சிவிட்டதாகப் பொருள் என்று அன்சாரிகளும் பிற மக்களும் மதிப்பிட்டார்கள் என்றார்கள்.

## நீர் புகட்டுவதின் சிறப்பு (மற்றும் அதற்கான பிரதிபலன்).

ஹதீஸ் 2363. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் (ஒரு பாதையில்) நடந்து சென்று கொண்டிருந்தபோது அவருக்குக் கடுமையான தாகம் ஏற்பட்டது. உடனே, அவர் (அங்கிருந்த) ஒரு கிணற்றில் இறங்கி, அதிலிருந்து (தண்ணீரை அள்ளிக்) குடித்தார். பிறகு, (ம்ணற்றிலிருந்து) அவர் வெளியே வந்தபோது, நாய் ஒன்று தாகத்தால் தவித்து, நாக்கைத் தொங்கவிட்டபடி ஈர மண்ணை நக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். அவர் (தம் மனத்திற்குள்)எனக்கு ஏற்பட்டதைப் போன்ற(அ)தே (கடுமையான தாகம்) இந்த நாய்க்கும் ஏற்பட்டிருக்கிறது போலும் என்று எண்ணிக் கொண்டார். உடனே, (மீண்டும் கிணற்றில் இறங்கித் தண்ணீரைத்) தன்னுடைய காலுறையில் நிரப்பிக் கொண்டு, அதை வாயால் கவ்விக் கொண்டு, மேலே ஏறி வந்து அந்த நாய்க்குப் புகட்டினார். அல்லாஹ் அவரின் இந்த நற்செயலை ஏற்று அவரை (அவரின் பாவங்களை) மன்னித்தான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதைச் செவியுற்ற நபித்தோழர்கள்,இறைத்தூதர் அவர்களே! கால்நடைகள் (மற்ற பிராணிகளுக்கு உதவும்) விஷயத்திலும் எங்களுக்குப் பலன் கிடைக்குமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,(ஆம்) உயிருடைய பிராணி ஒவ்வொன்றின் விஷயத்திலும் (அதற்கு உதவும் பட்சத்தில் மறுமையில்) அதற்கான பிரதிபலன் கிடைக்கும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2364. அஸ்மா பின்த்து அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத் தொழுகை தொழுதார்கள் பிறகு சொன்னார்கள்: என்னை நரகம் நெருங்கி வந்தது. (எந்த அளவுக்கென்றால்) நான்,இறைவா! நானும் அவர்களுடன் (நரகவாசிகளுடன்) இருக்கப் போகிறேனோ? என்று (மருண்டு போய்க்) கேட்டேன். அப்போது (நரகத்தில்) ஒரு பெண் இருந்தாள். அந்தப் பெண்ணைப் பூனை ஒன்று (தன் நகங்களால்) பிறாண்டிக் கொண்டிருந்தது.இவளுக்கு என்ன ஆயிற்று? (இவள் ஏன் இப்படி வேதனைப்படுத்தப்படுகிறாள்?)' என்று கேட்டேன். அதற்கு (அங்கிருந்த வானவர்கள்),இந்தப் பூனையை, அது பசியால் வாடிச் செத்துவிடும் வரை இந்தப் பெண் கட்டி வைத்திருந்தாள்' என்று பதிலளித்தனர்.

இந்த அறிவிப்பின் இடையே,அந்தப் பெண்ணைப் பூனை ஒன்று பிறாண்டிக் கொண்டிருந்தது என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் என்று நான் நினைக்கிறேன்' என அஸ்மா பின்த்து அபீ பக்ர்(ரலி) கூறினார்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

ஹதீஸ் 2365. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முன்னொரு சமுதாயத்தைச் சேர்ந்த) பெண்ணொருத்தி ஒரு பூனை(க்குத் துன்பம் தந்த) விஷயத்தில் வேதனைப்படுத்தப்பட்டாள். அந்தப் பூனையை அது பசியால் துடித்துச் சாகும் வரை அவள் அடைத்து வைத்திருந்தாள். அதன் காரணத்தால் அவள் நரகத்தில் புகுந்தாள். அப்போது அல்லாஹ்வே மிக அறிந்தவன் -நீ அதைக் கட்டிவைத்து அதற்குத் தீனி போடவுமில்லை தண்ணீர் தரவுமில்லை அது பூமியிலுள்ள புழு பூச்சிகளைத் தின்று (பிழைத்துக்) கொள்ளட்டும் என்று அதை அவிழ்த்து விடவுமில்லை' என்று அல்லாஹ் கூறினான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## தடாகத்தின் (குளம் அல்லது நீர்த்தொட்டியின்) உரிமையாளரும் தோல்பையின் உரிமையாளரும் தம் தண்ணீரைப் பயன்படுத்த (பிறரை விட) அதிக உரிமை பெற்றுள்ளனர்.

ஹதீஸ் 2366. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (பால் நிரம்பிய) பாத்திரம் ஒன்று கொண்டு வரப்பட்டது. அப்போது, அவர்களின் வலப்பக்கம், மக்களில் குறைந்த வயதுடைய சிறுவர் ஒருவர் அமர்ந்திருந்தார். இடப் பக்கம் முதியவர்கள் அமர்ந்திருந்தனர். நபி(ஸல்) அவர்கள், சிறுவரே! முதியவர்களுக்கு நான் (இதைத்) தருவதற்கு நீர் அனுமதியளிக்கிறீரா? என்று கேட்டார்கள். அதற்கு அந்தச் சிறுவர், இறைத்தூதர் அவர்களே! உங்களிடமிருந்து எனக்கு (நற்பேறாகக்) கிடைக்கக் கூடிய என்னுடைய பங்கை நான் யாருக்கும்விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை' என்ற கூறினார். நபி(ஸல்) அவர்கள் அந்தச் சிறுவருக்கே அதைக் கொடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2367. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது ஆணையாக! (தன்னுடைய குளத்தில் நீரருந்த விடாமல்) அந்நிய ஒட்டகத்தை (குளத்தின் உரிமையாளர்) குளத்திலிருந்து விரட்டுவதைப் போன்று நானும் (மறுமையில் சிறப்புப் பரிசாக) எனக்குக் கிடைக்கவிருக்கும் தடாகத்திலிருந்து சில மனிதர்களை (நீரருந்த விடாமல்) விரட்டுவேன். 8

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2368. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(நபி) இஸ்மாயீலின் தாயாருக்கு (ஹாஜராவுக்கு) அல்லாஹ் கருணை புரிவானாக!ஸம்ஸம் நீரை அவர், (பள்ளம் தோண்டி அணை கட்டாமல்)விட்டு விட்டிருந்தால் - (அல்லது நபியவர்கள் இப்படிச் சொன்னார்கள்:) - தண்ணீரைக் கையால் அள்ளிக் குடிக்காமல் இருந்திருந்தால் - அது (நிற்காமல்) ஓடுகிற நீரோடையாக இருந்திருக்கும். (பிறகு) பனு ஜுர்ஹும் குலத்தார் அங்கு வந்து, உங்கள் இடத்தில் நாங்கள் தங்கி வசித்துக் கொள்ள நீங்கள் அனுமதிப்பீர்களா? என்று (ஹாஜராவிடம்) கேட்டார்கள். அதற்கு அவர்கள், சரி, (தங்கி வசித்துக் கொள்ளுங்கள்.) ஆனால், (இந்தத் தண்ணீரில் உங்களுக்கு எந்த பாக்கியதையும் இருக்காது' என்று கூறினார்கள். அதற்கு ஜுர்ஹும் குலத்தார். சரி (அவ்வாறே ஒப்புக் கொள்கிறோம்)' என்று கூறினார்கள்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2369. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

மூன்று பேர்களுடன் மறுமையில் அல்லாஹ் பேசவும் மாட்டான் அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான் (அவர்கள் வருமாறு:) (ஒருவன், தன் பொருளை (அதிக விலைக்கு) விற்பதற்காக (அதைக் கொள்முதல் செய்த போது) வாடிக்கையாளர் கொடுக்கும் விலையை விட அதிக விலை கொடுத்து வாங்கியதாக (பொய்) சத்தியம் செய்தவன் ஆவான். மற்றொருவன், அஸர் தொழுகைக்குப் பின் (மக்கள் கூடும் நேரத்தில்) முஸ்லிம் ஒருவரின் செல்வத்தை அபகரித்துக் கொள்வதற்காகப் பொய்சத்தியம் செய்வதன் ஆவான். இன்னொருவன், தன் தேவைக்கு மேல் எஞ்சியிருந்த தண்ணீரை (மக்கள் உபயோகிப்பதைத்) தடுத்தவன் ஆவான். (மறுமையில்) அவனை நோக்கி, உன் கரங்கள் உருவாக்காத தண்ணீரின் மீதத்தை மக்கள் உபயோகிக்க விடாமல் தடுத்ததைப் போன்றே இன்று நான் என்னுடைய அருளிலிருந்து உன்னைத் தடுக்கிறேன்' என்று அல்லாஹ் கூறுவான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தவிர பிரத்தியேகமான மேய்ச்சல் நிலம் வைத்துக் கொள்ள வேறெவருக்கும் அனுமதி இல்லை.

ஹதீஸ் 2370. நபி (ஸல்) அவர்கள், பிரத்தியேகமான மேய்ச்சல் நிலம் வைத்துக் கொள்ள அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தவிர வேறெவருக்கும் அனுமதி இல்லை' என்று கூறினார்கள்.

இதை ஸஅப் இப்னு ஜஸ்ஸாமா (ரலி) கூறினார் என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

"நபி (ஸல்) அவர்கள் (மதீனாவிலிருந்து) சிறிது தொலைவிலுள்ள) நகீஉ என்னுமிடத்தைப் பிரத்தியேக மேய்ச்சல் நிலமாக வைத்திருந்தார்கள். உமர் (ரலி), ஷரஃப் மற்றும்ரபதா என்னுமிடங்களைப் பிரத்தியேக மேய்ச்சல் நிலமாக வைத்திருந்தார்கள் என்று நமக்குச் செய்தி கிட்டியுள்ளது' என்று இப்னு ஷிஹாப் (ரஹ்) கூறினார்.

## நீர்நிலைகளிலிருந்து மக்கள் தண்ணீர் குடிப்பதும், அவற்றிலிருந்து (கால்நடைகள் மற்றும்) பிராணிகளுக்கு நீர் புகட்டுவதும்.

ஹதீஸ் 2371. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரை, ஒரு மனிதருக்கு (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத் தருவதாகும் மற்றொரு மனிதருக்குப் (பொருளாதாரப்) பாதுகாப்பளிக்கக் கூடியதாகும். இன்னொரு மனிதருக்குப் பாவச் சுமையாகும். அதை இறைவழியில் பயன்படுத்துவதற்காக, பசுமையான ஒரு வெட்ட வெளியில் அல்லது ஒரு தோட்டத்தில் ஒரு நீண்ட கயிற்றால் கட்டி வைத்துப் பராமரிக்கிற மனிதருக்கு அது (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத் தரும். அந்த குதிரை, தன் (னைக் கட்டியிருக்கும்) கயிற்றின் நீளத்திற்கு ஏற்ப எந்த அளவு தொலைவிற்குப் பசும்புல் வெளியில் அல்லது தோட்டத்தில் மேயுமோ அந்த அளவிற்கு அவருக்கு நன்மைகள் கிடைக்கும்.

அதன் கயிறு அறுந்து, அது ஓரிரு முறை குதித்து (அல்லது ஓரிரு மேடுகளைக் கடந்து) சென்றாலும் அதனுடைய (குளம்பின்) சுவடுகளின் அளவிற்கும் அதன் விட்டைகளின் அளவிற்கும் அவருக்கு நன்மைகள் எழுதப்படும். அந்த குதிரை ஓர் ஆற்றைக் கடந்து செல்லும்போது அதிலிருந்து அது தண்ணீர் குடித்தால் அதற்குத் தண்ணீர் புகட்டும் எண்ணம் அதன் உரிமையாளருக்கு இல்லாமல் இருந்தாலும் அது அவர் செய்த நன்மைகளின் கணக்கில் எழுதப்படும். (இவ்விதம் நல்ல நோக்கங்களுக்காக வளர்க்கப்படும்.) இந்த குதிரை அவருக்கு (மறுமையில்) நற்பலன் கிடைப்பதற்குக் காரணமாக இருக்கும், இன்னொருவர், தன் தேவைகளை நிறைவு செய்து கொள்ளளவும் பிறரிடம் கையேந்துவதிலிருந்து தன்னைக் காத்துக்

கொள்ளவும் அதைக்கட்டி, வை(த்துப் பராமரி)க்கிறவராவார். மேலும், அதனுடைய பிடரியின் (ஸகாத்தைச் செலுத்தும்) விஷயத்திலும் (அதனால் தாங்க முடிந்த பளுவை மட்டுமே) அதன் முதுகின் (மீது சுமத்தும்) விஷயத்திலும் அல்லாஹ்வின் கட்டளையை (நிறைவேற்றிட) மறக்காதவராவார். இப்படிப்பட்டவருக்கு அந்த (அவருடைய) குதிரை (வறுமையிலிருந்து அவரைக் காக்கும்) திரையாகும். மற்றொருவன் பெருமைக்காகவும் பகட்டுக்காகவும் முஸ்லிம்களுடன் பகைமை பாராட்டுவதற்காகவும் அதனைக் கட்டி வை(த்துப் பராமரி)க்கிறவன் ஆவான். அதன் (தவறான நோக்கத்தின்) காரணத்தால், அது அவனுக்குப் பாவச் சுமையாக ஆம் விடுகிறது.

நபி(ஸல்) அவர்களிடம் கழுதைகளைக் குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,அவற்றைக் குறித்து எந்த இறைகட்டளையும் எனக்கு அருளப்படவில்லைஎவன் அணுவளவும் நன்மை செய்திருந்தானோ அவன் அத(ன் நற்பல)னைக் கண்டு கொள்வான். மேலும், எவன் அணுவளவு தீமை புரிந்திருந்தானோ அவனும் அதனை (அதற்கான தண்டனையைக்) கண்டு கொள்வான் (திருக்குர்ஆன் 96: 7-8) என்னும் இந்த ஒருங்கிணைந்த, தனித்தன்மை வாய்ந்த திருக்குர்ஆன் வசனத்தைத் தவிர' என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2372. ஸைத் இப்னு காலித்(ரலி) கூறினார்.

ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து பாதையில் கண்டெடுக்கப்பட்ட (பிறர் தவறவிட்ட) பொருளைப் பற்றி கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,அதனுடைய பையையும் (அதன் சுருக்குக்) கயிற்றையும் அறிந்து (பாதுகாத்து) வைத்துக் கொள். பிறகு ஓராண்டுக் காலம் அதைப் பற்றி விளம்பரப்படுத்து. அதன் உரிமையாளர் வந்து (அதை அடையாளம் சொல்லக் கேட்டு)விட்டால் (அவரிடம் கொடுத்து விடு.) இல்லையென்றால் நீ விரும்பியவாறு அதைப் பயன்படுத்திக் கொள்' என்று கூறினார்கள். அதற்கு அவர், (பிறரின்) தொலைந்து போன ஆடு (நம்மிடம் வந்து சேர்ந்தால்...)? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,அது உனக்குச் சொந்தமானது அல்லது உன் சகோதரனுக்குச் சொந்தமானது அல்லது ஓநாய்க்குச் சொந்தமானது' என்று பதிலளித்தார்கள். அதற்கு அவர்,தொலைந்து போன ஒட்டகம் (நம்மிடம் வந்து சேர்ந்தால்)? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,உனக்கும் அதற்கும் என்ன தொடர்பு? அதனுடன் அதன் தண்ணீர் பையும் (குடலும்) அதன் கால் குளம்புகளும் உள்ளன. அது நீர் நிலைக்குச் சென்று நீர் அருந்திக் கொள்ளும் மரத்தை மேய்ந்து கொள்ளும் அதன் உரிமையாளர் அதைப் பிடித்துக் கொள்ளும் வரை. (எனவே, அதன் போக்கில் அதைவிட்டுவிடு)' என்று கூறினார்கள்.

## விறகையும் புல் பூண்டையும் விற்பது செல்லும்.

ஹதீஸ் 2373. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் கயிற்றை எடுத்துச் சென்று விறகுக் கட்டு ஒன்றை (கட்டி) எடுத்து வந்த விற்(று சம்பாதிக்)க, அதன் காரணத்தால் அல்லாஹ், அவரின் முகத்தை (இழிவிலிருந்து) காப்பாற்று வதானது, அவர் மக்களிடம் சென்று யாசகம் கேட்பதை விடச் சிறந்ததாகும். (ஏனெனில், அவ்விதம் அவர்களிடம் கேட்கும்போது) அவருக்குக் கிடைக்கவும் செய்யலாம் கிடைக்காமலும் போகலாம்.

என ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2374. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

உங்களில் ஒருவர் விறகு (சேகரித்து அதன்) கட்டு ஒன்றை முதுகில் சுமந்து (விற்கச்) செல்வது அவர் ஒருவரிடம் யாசகம் கேட்பதை விடச் சிறந்ததாகும். ஏனெனில், (அப்படிக் கேட்கும் போது) அவர் இவருக்குக் கொடுக்கவும் செய்யலாம் கொடுக்காமலும் போகலாம்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2375. அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்.

பத்ருப் போரில் கிடைத்த பொருட்களில் (என்னுடைய பங்காக) அல்லாஹ்வின் தூதருடன் சேர்ந்து கூட்டாக ஒரு முதிர்ந்த வயதுடைய ஒட்டகம் எனக்குக் கிடைத்தது. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு மற்றொரு (ம்ழட்டு) ஒட்டகத்தையும் கொடுத்திருக்கிறார்கள். ஒரு நாள், அவ்விரண்டையும் நான் அன்சாரி ஒருவரின் வீட்டு வாசலுக்கருகே அமரச் செய்தேன். இத்கிர் புல்லை, விற்பதற்காக அதன் மீது ஏற்றிக் கொண்டு வர நான் விரும்பியிருந்தேன். அப்போது பனு கைனுகா குலத்தைச் சேர்ந்த பொற்கொல்லன் ஒருவன் (புல் வாங்கி ஏற்றிக் கொண்டு வர உதவியாக) என்னுடன் இருந்தான். ஃபாத்திமாவை மணம் புரிந்த வலீமா விருந்திற்காக அந்தப் புல் விற்ற பணத்தைப் பயன்படுத்த நான் நாடியிருந்தேன். (நான் என் ஒட்டகத்தை வாசலில் அமரச் செய்திருந்த) அந்த வீட்டில் (என் சிறிய தந்தை) ஹம்ஸா இப்னு அப்தில் முத்தலிப் மது குடித்துக் கொண்டிருந்தார். அவருடன் ஓர் அடிமைப் பாடகியும் இருந்தாள். அவள், ஹம்ஸாவே! இந்த முதிர்ந்த, பருத்த ஒட்டகங்களைக் கொன்று (உங்கள் விருந்தாளிகளுக்குப் பரிமாறி) விடுங்கள்‘ என்று பாடினாள். உடனே ஹம்ஸா அவர்கள் அந்த இரண்டு ஒட்டகங்களின் மீதும் பாய்ந்து அவற்றின் திமில்களை வெட்டி இடுப்பைக் கிழித்தார்கள். பிறகு அவற்றின் ஈரல் குலைகளை வெளியே எடுத்தார்கள். அருவருப்பூட்டிய அந்த பயங்கரக் காட்சியை கண்டேன். உடனே, நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அங்கு நபி (ஸல்) அவர்களிடம் நடந்த (நிகழ்ச்சியின்) செய்தியைக் கூறினேன். உடனே அவர்கள், ஸைத் இப்னு ஹாரிஸா அவர்களுடன் புறப்பட்டார்கள். அவர்களுடன் நானும் சென்றேன். ஹம்ஸா அவர்களிடம் சென்று தம் கோபத்தை நபி (ஸல்) அவர்கள் வெளிப்படுத்தினார்கள். ஹம்ஸா அவர்கள் தங்களின் பார்வையை உயர்த்தி, நீங்கள் என் முன்னோர்களின் அடிமைகள் தாமே? என்று கூறினார்கள். இதைக் கேட்ட நபி (ஸல) அவர்கள், அவர்களைவிட்டு அப்படியே (திரும்பாமல்) பின்னோக்கி நடந்து வந்து வெளியேறி வந்துவிட்டார்கள். இந்த நிகழ்ச்சி மதுபானம் தடை செய்யப்படுவதற்கு முன்பு நடந்தது.

அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஜுரைஜ் (ரஹ்) கூறினார்.

நான் அறிவிப்பாளர் இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்களிடம், திமில்களின் இறைச்சியையுமா (ஹம்ஸா (ரலி)) எடுத்தார்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம், அவ்விரண்டின் திமில்களையும் அவர் வெட்டி எடுத்துச் சென்றார்‘ என்று கூறினார்.

## தகுதியுடைய தனிநபர்கள் சிலருக்கு தலைவர் தரிசு நிலத் துண்டுகளை வருவாய் மானியமாகத் தரலாம்.

ஹதீஸ் 2376. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பஹ்ரைனுடைய தரிசு நிலங்களை (அன்சாரிகளுக்கு) வருவாய் மானியமாகத் தர விரும்பினார்கள். அதற்கு அன்சாரிகள், (இறைத்தூதர் அவர்களே!) நீங்கள் எங்களுக்கு வருவாய் மானியம் வழங்குவதைப் போன்றே எங்கள் முஹாஜிர் சகோதரர்களுக்கும் வருவாய் மானியம் வழங்காத வரை (நாங்கள் அவற்றை ஏற்றுக் கொள்ள மாட்டோம்)‘ என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், (அன்சாரிகளே!) எனக்குப் பின் (சிறிது காலத்திற்குள்ளாகவே ஆட்சியதிகாரத்தில்) உங்களை விடப் பிறருக்கு முன்னுரிமை தரப்படுவதை

நீங்கள் பார்ப்பீர்கள். எனவே, என்னை (மறுமையில்) நீங்கள் சந்திக்கும் (காலம்) வரை பொறுமையைக் கடைப் பிடியுங்கள்' என்றார்கள்.

## வருவாய் மானியமாக வழங்கப்படும் நிலங்களை (பட்டயமாக) எழுதிப் பதிவு செய்து கொள்வது செல்லும்.

ஹதீஸ் 2377. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளுக்கு, பஹ்ரைனுடைய நிலங்களை வருவாய் மானியமாக வழங்கிட அவர்களை அழைத்தார்கள். அதற்கு அவர்கள், இறைத்தூதர் அவர்களே! அப்படி நீங்கள் (எங்களுக்கு) வருவாய் மானியம் வழங்குவதாயிருந்தால் எங்களுடைய குறைஷிச் சகோதரர்களுக்கும் அதே போன்று எழுதிக் கொடுங்கள்' என்று கேட்டார்கள். ஆனால், (அனைவருக்கும் வருவாய் மானியம் தருகிற அளவுக்கு) மானிய நிலங்கள் (அல்லது நிலவரி மூலமாகக் கிடைக்கும் நிதிகள்) நபி(ஸல்) அவர்களிடம் இருக்கவில்லை. எனவே, நபி(ஸல்) அவர்கள், எனக்குப் பின்னால் (சிறிது காலத்திற்குள்ளாகவே, ஆட்சியதிகாரத்தில்) உங்களை விட மற்றவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படுவதை நீங்கள் பார்ப்பீர்கள். எனவே, என்னை (மறுமையில்) நீங்கள் சந்திக்கும் வரை பொறுமையைக் கைக்கொள்ளுங்கள்' என்று கூறினார்கள்.

## நீர் நிலையருகே ஒட்டகத்தின் பாலைக் கறத்தல்.

ஹதீஸ் 2378. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பெண் ஒட்டகத்தின் உரிமைகளில் நீர் நிலையருகே அதன் பாலைக் கறப்பதும் ஒன்றாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தோப்பை விற்றவருக்கு (அதிலுள்ள தனக்குரிய கனிகளைப் பறிப்பதற்காக) தோப்புக்குள் நடக்கும் உரிமையும், மரங்களுக்கு நீர் பாய்ச்சும் உரிமையும் உண்டு.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பின் பேரீச்ச மரங்களை ஒருவர் விற்றால் அவற்றின் விளைச்சல் கனிகள் அவருக்கே (விற்றவருக்கே) உரியன. (பேரீச்சந் தோப்பை) விற்றவருக்கு, போக்குவரத்துப் பாதை(யாக அதைப் பயன்படுத்தும் உரிமை)யும் உண்டு (தான் விவசாயம் செய்த மரங்களுக்கு) நீர் பாய்ச்சும் உரிமையும் உண்டு விளைச்சலை அறுவடை செய்யும் வரை (அதாவது கனிகளைப் பறித்துக் கொள்ளும் வரை). இவ்வாறேஅராயா வியாபாரம் செய்பவருக்கும் உரிமையுண்டு!

ஹதீஸ் 2379. மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பின்னர் பேரீச்ச மரங்களை வாங்கியவர் (அந்த விளைச்சல் எனக்கே சேர வேண்டும் என்ற) நிபந்தனையிட்டிருந்தாலே தவிர அவற்றின் விளைச்சல் விற்றவருக்கே உரியதாகும். செல்வம் வைத்திருக்கும் ஓர் அடிமையை வாங்கியவர், (அந்த அடிமையின் செல்வம் எனக்கே சேர வேண்டும் என்ற) நிபந்தனையிட்டிருந்தாலே தவிர அவ்வடிமையின் செல்வம் விற்றவருக்கே உரியதாகும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2380. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 42 முஸாக்காத் - நீர்ப்பாசன அடிப்படையில் தோப்புகளைக் குத்தகைக்கு விடுதல்.

நபி(ஸல்) அவர்கள், உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்குப் பதிலாக,அராயா மரத்திலுள்ள கனிகளை (ஐந்து) வஸக்குகளுக்கும் குறைவான அளவில்) குத்து மதிப்பாக விற்பதற்கு அனுமதியளித்தார்கள்.

ஹதீஸ் 2381. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் முகாபராவையும் பலன் உறுதிப்படாத நிலையிலுள்ள, மரத்திலுள்ள கனிகளை விற்பதையும் தடை செய்தார்கள் மேலும், பொன் நாணயத்திற்கும் வெள்ளி நாணயத்திற்கும் (பகரமாக) மட்டுமே (அவற்றை) விற்க வேண்டும் என்று கட்டளையிட்டார்கள். (மரத்திலுள்ள கனிகளுக்குப் பகரமாக சேமிக்கப்பட்ட, உலர்ந்த கனிகளை விற்பதைத் தடை செய்தார்கள். எனினும்)அராயா'வில் மட்டும் அப்படி விற்பதற்கு அனுமதியளித்தார்கள்.

ஹதீஸ் 2382. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

'அராயா வகை மரத்திலுள்ள பேரீச்சம் பழங்களை உலர்ந்த பேரீச்சம் பழங்களுக்கு பதிலாக ஐந்து வஸக்குகளுக்கும் குறைவாகவோ அல்லது ஐந்து வஸக்குகளுக்கோ விற்பனை செய்து கொள்ள நபி(ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான தாவூத் இப்னு ஹுஸைன்(ரஹ்),ஐந்து வஸக்குகளுக்கும் குறைவாகவா? ஐந்து வஸக்குகளுக்கா என்று சந்தேகப்படுகிறார்கள்.

ஹதீஸ் 2383 , ஹதீஸ் 2384 ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) மற்றும் ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) இருவரும் அறிவித்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் முஸாபனாவைத் தடை செய்தார்கள். (மரத்திலுள்ள கனிகளை உலர்ந்த, பறிக்கப்பட்ட கனிகளுக்காக விற்பதைத் தடை செய்தார்கள்) அராயாக்காரர்களைத் தவிர. நபி(ஸல்) அவர்கள், அராயாக்காரர்களுக்கு மட்டும் இப்படிப்பட்ட (முஸாபனா) வியாபாரம் செய்து கொள்ள அனுமதியளித்தார்கள்.

அபூ அப்தில்லாஹ் புகாரீயாகிய நான் கூறுகிறேன்:

"புஷைர்(ரஹ்) இதைப் போன்றதை (ஹதீஸை) எனக்கு அறிவித்தார்கள்' என்று இப்னு இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்.

# அத்தியாயம் 43 கடன்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

கடன் வாங்குதல், கடனைத் திருப்பிச் செலுத்துதல், ஒருவர் தன்னுடைய செல்வத்தைத் தன் விருப்பப்படி கையாளும் உரிமையை முடக்குதல் மற்றும் (வாங்கிய கடனை அடைக்க முடியாதபடி) திவாலாம்ப் போனவராக ஒருவரை அறிவித்தல்.

## ஒரு பொருளுக்குரிய விலை தன்னிடம் இல்லாமல் அல்லது (அப்போதைக்கு) கைவசம் இல்லாமல் ஒருவர் அதைக் கடனுக்கு வாங்குவது.

ஹதீஸ் 2385. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போரில் கலந்து கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,உன் ஒட்டகத்தைப் பற்றி என்ன கருதுகிறாய்? அதை நீ விற்பாயா? என்று கேட்டார்கள். அதற்கு நான்,ஆம் (விற்று விடுகிறேன்)' என்று சொன்னேன். அவ்வாறே நபி(ஸல்) அவர்களுக்கே அதை விற்று விட்டேன். நபி(ஸல்) அவர்கள் மதீனா வந்து சேர்ந்தவுடன் மறுநாள் நான் அவர்களிடம் ஒட்டகத்துடன் சென்றேன். அவர்கள் அதன் விலையை எனக்குக் கொடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2386. அஃமஷ்(ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் இப்ராஹீம் நகயீ(ரஹ்) அவர்களிடம்ஸலம் முறையில் (பிறகு பணம் தருவதாகக் கூறி) பொருளை வாங்கும்போது அடைமானம் வைப்பது குறித்துப் பேசினோம். அதற்கு அவர்கள் சொன்னார்கள்.

ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து எனக்கு அஸ்வத்(ரஹ்) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு யூதனிடம் குறிப்பிட்ட தவணை(யில் பணம் தருவதாகக்) கூறி உணவு தானியத்தை வாங்கினார்கள். அவனிடம் (அதற்காக) இரும்புக் கவசம் ஒன்றை அடைமானம் வைத்தார்கள்.

## திருப்பிச் செலுத்தும் எண்ணத்துடன் மக்களின் பணத்தை (அல்லது பொருட்களைக்) கடன் வாங்கியவன் நிலையும்... திருப்பிச் செலுத்தாமல் ஏமாற்றி விடலாம் என்ற எண்ணத்துடன் கடன் வாங்கியவன் நிலையும்...

ஹதீஸ் 2387. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவன் மக்களின் பணத்தை (அல்லது பொருட்களைத்) திருப்பிச் செலுத்தும் எண்ணத்துடன் கடன் வாங்குகிறானோ அவன் சார்பாக அல்லாஹ்வே அதனைத் திருப்பிச் செலுத்துவான். எவன் திருப்பிச் செலுத்தும் எண்ணமின்றி அதை (ஏமாற்றி) அழித்து விடும் எண்ணத்துடன் கடன் வாங்குகிறானோ அல்லாஹ்வும் அவனை அழித்து விடுவான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கடனைத் திருப்பிச் செலுத்துதல்.

அல்லாஹ் கூறினான்:

(முஸ்லிம்களே!) அடைக்கலப் பொருட்களை அவற்றுக்கு உரியவரிடம் நீங்கள் ஒப்படைத்து விடுங்கள். (உங்களிடம் ஒப்படைக்கப்படும் பொறுப்புகளையும் உரியமுறையில் நிறைவேற்றுங்கள்.) மேலும், நீங்கள் மக்களிடையே தீர்ப்பு வழங்கினால்,நீதியுடன் தீர்ப்பு வழங்குங்கள் என்று அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான். திண்ணமாக, அல்லாஹ் உங்களுக்கு வழங்குகிற அறிவுரை மிகவும் உன்னதமானதாகும். திண்ணமாக, அல்லாஹ் அனைத்தையும் செவியுறுபவனாகவும் உற்று நோக்குபவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:58)

ஹதீஸ் 2388. அபூ தர்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அவர்கள் உஹுது மலையைப் பார்த்தபோது,இந்த மலை எனக்காகத் தங்கமாக மாற்றப்பட்டு, அதிலிருந்து ஒரேயொரு தீனாரும் கூட என்னிடம் மூன்று நாள்களுக்கு மேல் தங்கியிருப்பதை நான் விரும்ப மாட்டேன் கடனை அடைப்பதற்காக நான் எடுத்து வைக்கிற தீனாரைத் தவிர என்று கூறினார்கள். பிறகு,(உலகில் செல்வம்) அதிகமானவர்கள்தாம் (மறுமையில் நற்பலன்) குறைந்தவர்கள்(என்) செல்வத்தை இப்படியெல்லாம் செலவு செய்யுங்கள் என்று கூறிய(துடன் அவ்வாறே செலவும் செய்த)வனைத் தவிர .. (இந்த இடத்தில் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஷிஹாப்(ரஹ்),இப்படியெல்லாம் என்பதற்கு விளக்கமாக முன் பக்கமாகவும், வலப் பக்கமாகவும், இடப் பக்கமாகவும் சைகை செய்தார்கள்... ஆனால்,அப்படிப்பட்டவர்கள் (எண்ணிக்கையில்) குறைவானவர்களே' என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு,நீ இங்கேயே இரு' என்று சொல்லி, சிறிது தூரம் முன்னால் சென்றிருப்பார்கள். அதற்குள் நபி(ஸல்) அவர்களுடன் யாரோ உரையாடுவதைப் போன்று) ஏதோ ஒரு குரலைக் கேட்டேன். ஆனால், நபி(ஸல்) அவர்கள்,நான் திரும்பி வரும் வரை நீ இங்கேயே இரு' என்று கூறியதும் என் நினைவுக்கு வந்தது. நபி(ஸல்) அவர்கள் திரும்பிவந்தபோது நான்,இறைத்தூதர் அவர்களே! நான் கேட்ட குரல் என்ன? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(நீங்கள் அந்தக் குரலைச்) செவியுற்றீர்களா? என்று கேட்டார்கள். நான்ஆம்' என்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என்னிடம் ஜிப்ரீல்(அலை) அவர்கள் வந்து,உன் சமுதாயத்தில் அல்லாஹ்வுக்கு எதனையும் இணைவைக்காமல் (வாழ்ந்து) மரணமடைந்து விடுகிறவர் சொர்க்கம் புகுவார்' என்று கூறினார்கள். நான்,இப்படி இப்படியெல்லாம் செய்த வருமா (விபச்சாரக் குற்றமும், திருட்டுக் குற்றமும் புரிந்தவருமா) சொர்க்கம் புகுவார்? என்று கேட்டேன்.

ஜிப்ரீல்(அலை) அவர்கள்,ஆம், (அவரும் சொர்க்கம் புகுவார்)' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2389. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உஹுது மலை அளவிற்கு என்னிடம் தங்கம் இருந்தாலும் அதிலிருந்து சிறிது என்னிடம் (எஞ்சி) இருக்கும் நிலையில் என் மீது மூன்று நாள்கள் கழிவது கூட எனக்கு மகிழ்ச்சி அளிக்காது் கடனை அடைப்பதற்காக நான் (அதிலிருந்து) எடுத்து வைக்கும் சிறிதளவு (தங்கத்தைத்) தவிர.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஒட்டகத்தைக் கடன் வாங்குதல்.

ஹதீஸ் 2390. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம், அவர்களுக்குத் தான் கொடுத்த (ஒட்டகத்)தைக் திருப்பித் தரும்படி கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் கடுமையாகப் பேசினார். எனவே, நபித் தோழர்கள் அவரை தண்டிக்க விரும்பினார்கள், அப்போது நபி(ஸல்) அவர்கள்

தம் தோழர்களை நோக்கி, (அவரை தண்டிக்க வேண்டாம்) விட்டு விடுங்கள் ஏனெனில், ஒருவர் தனக்குக் கடன் தர வேண்டியவரிடம் கடுமையாகச் பேச உரிமையுண்டு. அவருக்காக ஓர் ஒட்டகத்தை வாங்கி அவரிடமே கொடுத்து விடுங்கள்' என்று கூறினார்கள்.

நபித்தோழர்கள், அவருக்குத் தர வேண்டிய ஒட்டகத்தின் வயதை விட அதிக வயதை உடைய ஒட்டகம்தான் எங்களிடம் இருக்கிறது' என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அதையே வாங்கி அவருக்குக் கொடுத்து விடுங்கள். ஏனெனில், நல்ல முறையில் கடனைத் திருப்பிச் செலுத்துகிறவரே உங்களில் சிறந்தவர்' என்று கூறினார்கள்.

## கடனைத் திருப்பிக் கேட்கும்போது நல்ல முறையில் நடந்து கொள்ளுதல்.

ஹதீஸ் 2391. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் மரணித்துவிட்டார். அவரிடம் (கப்ரில் வைத்து), நீ (உலகில் என்ன (நன்மையைச்) சொல்லி (செய்து) வந்தாய்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், நான் மக்களிடம் கொடுக்கல் வாங்கல் செய்து வந்தேன். கடன் தொகையை வசூல் செய்யும்போது வசதி உள்ளவருக்கு அவகாசம் கொடுத்து வந்தேன். வசதியற்றவரை மன்னித்து (அவரின் கடனைத் தள்ளுபடி செய்து) வந்தேன்' என்று கூறினார். (அவரின் இந்த நற்செயல் அங்கீகரிக்கப்பட்டு) அவருக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டது.

என ஹுதைஃபா (ரலி) அறிவித்தார்.

## கடனை அடைப்பதற்காகத் தர வேண்டிய (சிறு வயது) ஒட்டகத்திற்கு பதிலாக அதை விட அதிக வயதுடைய ஒட்டகத்தைத் தரலாமா?

ஹதீஸ் 2392. ஒருவர் தன்னிடம் நபி (ஸல்) அவர்கள் கடனாகப் பெற்றிருந்த ஒட்டகத்தைத் திருப்பிச் செலுத்தும்படி கேட்க வந்தார். நபி (ஸல்) அவர்கள் (தம் தோழர்களை) நோக்கி, அவருக்குக் கொடுத்து விடுங்கள்' என்று கூறினார்கள். அதற்குத் தோழர்கள், அவருக்கு நீங்கள் தர வேண்டிய ஒட்டகத்தின் வயதை விட அதிக வயதுடைய ஒட்டகம்தான் எங்களிடம் உள்ளது' என்று கூறினர். இதைக் கேட்ட அம்மனிதர், (என் உரிமையை) நிறைவாக எனக்கு அளித்தீர்கள். அல்லாஹ் உங்களுக்கும் நிறைவாக அளிக்கட்டும்' என்று கூறினார். உடனே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அவருக்கு (வயது அதிகமான) அந்த ஒட்டகத்தையே கொடுத்து விடுங்கள். ஏனெனில், (தான் வாங்கிய கடனை) அழகிய முறையில் திருப்பிச் செலுத்துகிறவரே மக்களில் சிறந்தவராவார்' என்று கூறினார்கள்.

## கடனை அழகிய முறையில் திருப்பிச் செலுத்துதல்.

ஹதீஸ் 2393. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (தாம் கடனாக வாங்கிய) ஒரு குறிப்பிட்ட வயதுடைய ஒட்டகத்தை ஒரு மனிதருக்குத் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்தது. (ஒரு முறை) அம்மனிதர் தன் ஒட்டகத்தைத் திருப்பித் தருமாறு கேட்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். நபி (ஸல்) அவர்கள், அவருக்குக் கொடுங்கள்' என்று (தம் தோழர்களிடம்) கூறினார்கள். தோழர்கள் அந்த மனிதருக்குச் சேர வேண்டிய சிறு வயதுடைய ஒட்டகத்தைத் தேடினார்கள். ஆனால், அதிக வயதுடைய ஒட்டகம்தான் அவர்களுக்குக் கிடைத்தது. நபி (ஸல்) அவர்கள், (அதையே) அவருக்குக் கொடுத்து விடுங்கள்' என்று கூறினார்கள். அந்த மனிதர், நீங்கள் எனக்கு நிறைவாக அளித்தீர்கள். அல்லாஹ் உங்களுக்கும் நிறைவாக அளிப்பானாக! என்றார். நபி (ஸல்) அவர்கள், உங்களில் சிறந்தவர், தான் வாங்கிய கடனை அழகிய முறையில் திருப்பிச் செலுத்துபவரே' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2394. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்தபோது நான் அவர்களிடம் சென்றேன். ...“முற்பகல் நேரத்தில் சென்றேன்‘ என்று ஜாபிர்(ரலி) கூறினார் என நினைக்கிறேன்‘ என்று அறிவிப்பாளர்களில் ஒருவரான மிஸ்அர்(ரஹ்) கூறினார். நபி(ஸல்) அவர்கள்,இரண்டு ரக்அத்துகள் தொழுவீராக!என்று கூறினார்கள். என்னிடம் வாங்கிய ஒரு கடனை அவர்கள் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்தது. (நான் தொழுது முடித்த பின்) எனக்குத் தர வேண்டிய கடனைத் திருப்பிச் செலுத்தியதுடன் எனக்கு அதிகமாகவும் கொடுத்தார்கள்.

## (கடன் கொடுத்தவர் சம்மதிக்கும் பட்சத்தில்) கடனாளி தன் கடனை சற்றுக் குறைத்துச் செலுத்தினால் அல்லது கடன் கொடுத்தவர் முழுவதுமாக மன்னித்து (கடனைத் தள்ளுபடி செய்து)விட்டால் அது செல்லும்.

ஹதீஸ் 2395. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

என் தந்தையார் உஹுதுப் போரின்போது, அவரின் மீது கடன் இருந்த நிலையில் (ஷஹீதாகக்) கொல்லப்பட்டுவிட்டார்கள். கடன் கொடுத்தவர்கள் தம் உரிமைகளைக் கேட்டுக் கடுமை காட்டினார்கள். உடனே, நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். (விஷயத்தைக் கூறினேன்.) நபி(ஸல்) அவர்கள் கடன் கொடுத்தவர்களிடம் என் தோட்டத்தின் பேரீச்சம் பழங்களை (கடனுக்குப் பகரமாக) ஏற்றுக் கொண்டு என் தந்தையை மன்னித்து (மீதிக் கடனைத்) தள்ளுபடி செய்து விடும்படி கேட்டுக் கொண்டார்கள். (அவ்வாறு செய்ய) அவர்கள் மறுத்துவிட்டனர். எனவே, அவர்களுக்கு அந்தப் பேரீச்சம் பழங்களை நபி(ஸல்) அவர்கள் கொடுக்கவில்லை. மாறாக,நாம் உன்னிடம் காலையில் வருவோம்‘ என்று கூறினார்கள். பிறகு காலையில் என்னிடம் வந்தார்கள். பேரீச்ச மரங்களிடையே சுற்றி வந்து, அவற்றின் கனிகளில் பரக்கத்துக்காக (அருள் வளத்திற்காக) பிரார்த்தித்தார்கள். பிறகு, நான் அவற்றைப் பறித்துக் கடன் கொடுத்தவர்களின் கடன்களையெல்லாம் திருப்பிச் செலுத்தினேன். (முழுக் கடனையும் தீர்த்த பின்பும்) அதன் கனிகள் எங்களுக்கு மீதமாம்விட்டன.

## கடனை அடைக்கும்போது (கடனாகப் பெற்ற) பேரீச்சம் பழத்திற்கோ வேறொரு தானியத்திற்கோ அதே அளவு பேரீச்சம் பழத்தை அளந்து (அல்லது எடை போட்டுக்) கொடுத்தால் அல்லது (கடன் கொடுத்தவர் சம்மதிக்கும் பட்சத்தில்) குத்து மதிப்பாகக் கணக்கிட்டுக் கொடுத்தால் அது செல்லும்.

ஹதீஸ் 2396. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

என் தந்தையார் (உஹுதுப் போரில் ஷஹீதாக) மரணித்துவிட்டார்கள் ஒரு யூதருக்கு அவர் (திருப்பிச் செலுத்த வேண்டிய (கடனாக) முப்பது வஸக்கு (கனி)களை2 என் பொறுப்பில்விட்டுவிட்டுச் சென்றார்கள். அதைத் திருப்பிச் செலுத்த எனக்கு அவகாசம் தர மறுத்துவிட்டார். எனக்காக (கால அவகாசம் கேட்டு) அந்த யூதரிடம் பரிந்துரை செய்யும்படி அல்லாஹ்வின் தூதரிடம் நான் கேட்டுக் கொண்டேன். இறைத்தூதர்(ஸல்), அந்த யூதரிடம் வந்து அவருக்குச் சேரவேண்டிய கடனுக்குப் பகரமாக என் பேரீச்சந் தோப்பின் கனிகளை எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார்கள். அந்த யூதர் (அவ்வாறு எடுத்துக் கொள்ள) மறுத்துவிட்டார்.

எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பேரீச்சந் தோட்டத்தில் புகுந்து அதன் மரங்களுக்கிடையே நடந்தார்கள். பிறகு என்னிடம்,அவருக்குப் பறித்துக் கொடு. அவருக்குச் சேர வேண்டியதை நிறைவாகக் கொடு‘ என்று கூறினார்கள். நான் இறைத்தூதர்(ஸல்) திரும்பிச்

சென்ற பிறகு, பேரீச்சங் கனிகளைப் பறித்து அந்த யூதருக்கு முப்பது வஸக்குகளையும் (நிறைவாகக்) கொடுத்து விட்டேன். அதற்குப் பிறகும் எனக்குப் பதினேழு வஸக்குகள் (அளவுக்குப் பேரீச்சங் கனிகள்) மீதமாயின. பின்னர், நான் நடந்ததைத் தெரிவிப்பதற்காக அல்லாஹ்வின் தூதரிடம் வந்தபோது, அவர்கள் அஸர் தொழுகை தொழுது கொண்டிருப்பதைக் கண்டேன். அவர்கள் (ஸலாம் கொடுத்துத்) திரும்பியதும் பேரீச்சங் கனிகளின் மீதுப்பட்டுவிட்டதை அவர்களிடம் நான் தெரிவித்தேன். நபி(ஸல்) அவர்கள்,இச்செய்தியை கத்தாபின் குமாரரிடம் (உமரிடம்) தெரிவி' என்று கூறினார்கள். எனவே, நான் உமர்(ரலி) அவர்களிடம் சென்று அதைத் தெரிவித்ததும் உமர்(ரலி),இறைத்தூதர் அந்தப் பேரீச்ச மரங்களுக்கிடையே நடந்து சென்றபோதே, அவற்றில் பரக்கத்து (அருள் வளம்) வழங்கப்படும் என்று அறிந்து கொண்டேன்' என்று கூறினார்கள்.

## கடனிலிருந்து பாதுகாப்புத் தேடுதல்.

ஹதீஸ் 2397. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தொழுகையில் பிரார்த்திக்கும்போது,இறைவா! பாவத்திலிருந்தும், கடனிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்' என்று கூறுவார்கள். (இதைச் செவியுற்ற) ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! தாங்கள் கடன்படுவதிலிருந்து இவ்வளவு அதிகமாகப் பாதுகாப்பத் தேடுவதற்குக் காரணம் என்ன? என்று கேட்டதற்கு நபி(ஸல) அவர்கள்,மனிதன் கடன்படும்போது பொய் பேசுகிறான் வாக்குறுதி தந்து (அதற்கு) மாறு செய்கிறான்' என்று பதிலளித்தார்கள்.

## கடனை அடைக்காமல்விட்டுச் சென்றவர் இறந்துவிட்டால் அவருக்காக ஜனாஸாத் தொழுகை தொழுதல்.

ஹதீஸ் 2398. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஒருவர் (மரணமடைந்து) ஒரு செல்வத்தைவிட்டுச் சென்றால் அது அவரின் வாரிசுகளுக்குரியதாகும். ஒருவர் (தன்னைத் தவிர வேறு திக்கற்ற) தன் மனைவி மக்களைவிட்டுச் சென்றால் அவர்களைப் பராமரிப்பது நம்முடைய பொறுப்பாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வசதியிருந்தும் கடனை (உடனடியாக) அடைக்காமல் (தவணை சொல்லி) இழுத்தடிப்பது அநியாயமாகும்.

ஹதீஸ் 2400. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வசதியுள்ளவர் (தன் கடனை அடைக்காமல் கடன் கொடுத்தவரிடம் தவணை சொல்லி) தள்ளிப் போடுவது அநியாயமாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கடன் கொடுத்தவருக்குக் கடுமையாகப் பேச உரிமையுண்டு.

மேலும்,வசதியுள்ளவர் (கடனைத் தீர்க்காமல்) இழுத்தடித்துக் கொண்டே சென்றால் அதற்காக அவருக்கு தண்டனை அளிப்பதும் அவரின் மானத்தை வாங்குவதும் செல்லும்' என்று நபி(ஸல) அவர்கள் கூறினார்கள் என அறிவிக்கப்படுகிறது.

(பலர் முன்னிலையில், )நீ எனக்குத் தரவேண்டிய கடனை அடைக்காமல் இழுத்தடிக்கிறாய் என்று கூறுவதே கடனாளியின் மானத்தை வாங்குவதாகும் அவனைச் சிறையில் தள்ளுவதே அவனுக்குத் தரும் தண்டனையாகும்' என்று சுஃப்யான் சவ்ரீ (ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2401.

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, தான் கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்டார். அப்போது, அவர் சற்று கடுமையான வார்த்தைகளைப் பேசினார். இதைக் கண்ட நபித்தோழர்கள் வருத்தப்பட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அவரை விட்டுவிடுங்கள் பொருளுக்குரியவர் பேசுவதற்கு உரிமையுண்டு' என்று கூறினார்கள்' என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## திவாலாம்விட்டவரிடம் - ஏற்கனவே ஒரு பொருளைக் கடனுக்கு விற்றவர் அப்பொருளைக் கண்டாலோ, அவ்வாறே கடன் கொடுத்தவர் அந்தக் கடன் தொகையைக் கண்டாலோ, அடைக்கலப் பொருளைக் கொடுத்தவர் அப்பொருளைக் கண்டாலோ அதை எடுத்துக் கொள்ள மற்ற கடன்காரர்களை விட அவருக்கே அதிக உரிமையுண்டு.

ஒருவர் திவாலாம் அது (நீதி மன்றத்தில்) நிரூபணமாம்யும்விட்டால் அவர் ஓர் அடிமையை விடுதலை செய்தாலும் அது செல்லுபடியாகாது. அவர் எதையும் விற்றாலும் வாங்கினாலும் செல்லுபடியாகும்.

"ஒருவர் திவாலாவதற்கு முன்பே அவரிடமிருந்து தனக்குரிய பொருளை திருப்பிக் வாங்கிக் கொண்டவருக்கே அப்பொருள் சொந்தமாகும். மேலும், திவாலாம்ப் போனவரிடம் தன்னுடைய பொருளை அப்படியே ஒருவர் காண்பாராயின் அதை எடுத்துக் கொள்ள (மற்ற கடன்காரர்களை விட) அவரே அதிக உரிமையுடையவர்' என்று உஸ்மான் (ரலி) தீர்ப்பளித்தார்கள்.

என ஸயீத் இப்னு முஸய்யப் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2402. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் திவாலான ஒரு மனிதரிடம் தன் பொருளை அப்படியே (கொடுத்தபோது இருந்தபடியே) காண்பாராயின், அதை எடுத்துக் கொள்ள மற்ற கடன்காரர்களை விட அவருக்கே அதிக உரிமை இருக்கிறது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## கடன் கொடுத்தவரிடம்,நாளை வாருங்கள், நாளை வாருங்கள்' என்று தவணை சொல்லித்த தாமதப்படுத்துவதும், அதை இழுத்தடிப்பதாகக் கருதாமல் இருப்பதும்.

ஜாபிர் (ரலி) கூறினார்.

கடன்காரர்கள், தங்களிடம் என் தந்தை வாங்கிய கடன் தொடர்பான தங்கள் உரிமைகளைப் பெறுவதற்காக (என்னிடம் கெடுபிடியாக நடந்து) கடுமை காட்டினார்கள். நபி (ஸல்) அவர்கள் என் தோட்டத்தின் பேரீச்சங்கனிகளை (தங்கள் கடனுக்குப் பகரமாக)ப பெற்றுக் கொள்ள சம்மதிக்கும்படி அவர்களிடம் (எனக்காகக்) கேட்டார்கள். அதற்கு அவர்கள் மறுத்துவிட்டனர். எனவே, நபி (ஸல்) அவர்கள், அவர்களிடம் என் தோட்டத்தை (அவர்களே கனிகள் பறித்துக கொள்ளும்படி) கொடுக்கவுமில்லை தாமே கனிகளைப் பறித்து அவர்களுக்குத் தரவுமில்லை. மாறாக,நாளை உங்களிடம் வருகிறேன்' என்று (எங்களிடம்) கூறிவிட்டு மறுநாள் காலை

எங்களிடம் வந்தார்கள். அப்போது என் தோட்டத்துக் கனிகளில் பரக்கத் (எனும் அருள் வளத்)திற்காக பிரார்த்தித்தார்கள். எனவே, (பிறகு) நான் அவற்றைப் பறித்துக் கடன் காரர்களுக்குத் தரவேண்டிய கடனைத் தீர்த்தேன்.

## திவாலாம்விட்டவனுடைய பொருளை விற்றுக் கடன்காரர்களிடையே அதைப் பங்கிட்டு விடுவது அல்லது ஓர் ஏழையின் பொருளை விற்று (அந்த ஏழை) தனக்காகச் செலவு செய்து கொள்வதற்காக அவரிடமே அதைத் தந்து விடுவது (அனுமதிக்கப்பட்டதே).

ஹதீஸ் 2403. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

ஒருவர், தான் இறந்த பிறகு தன்னுடைய ஓர் அடிமை விடுதலையாகிக் கொள்ளட்டும் என்று கூறியிருந்தார். நபி (ஸல்) அவர்கள் (அந்த அடிமையைக் காட்டி), இவரை யார் என்னிடத்திலிருந்து வாங்கிக் கொள்வது? என்று கேட்டார்கள். நுஐம் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவ்வடிமையை வாங்கினார்கள். நபி (ஸல்) அவர்கள் அந்த அடிமைக்கான விலையை வாங்கி அந்த அடிமையின் எஜமானிடம் கொடுத்துவிட்டார்கள்.

## தவணை குறிப்பிட்டு (இந்த கால கட்டத்திற்குள் திருப்பிச் செலுத்திவிட வேண்டும் என்று) கடன் கொடுப்பது அல்லது ஒரு குறிப்பிட்ட தவணையில் விலையைப் பெற்றுக் கொள்வதாகக் கூறி ஒரு பொருளை விற்பது.

ஒரு குறிப்பிட்ட தவணையில் திருப்பிச் செலுத்தும்படி கூறி கடன் கொடுப்பதில் தவறில்லை கடனாளி கடன் கொடுத்தவருக்கு அவர் கொடுதத திர்ஹம்களை விட உயர்தரமானதைக் கொடுத்தாலும் சரியே! ஆனால் கடன்காரர், அவ்விதம் திருப்பிச் செலுத்தும்போது உயர் தரமானதைத் தரவேண்டுமென்று (கடனாளிக்கு) நிபந்தனையிட்டுக் கூடாது' என்று இப்னு உமர் (ரலி) கூறினார்.

"கடன் வாங்கியவர், தனக்குக் குறிப்பிடப்பட்ட தவணையைப் பேணி நடக்க வேண்டும்' என்று அதா (ரஹ்) அவர்களும் அம்ர் இப்னு தீனார் (ரஹ்) அவர்களும் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2404. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பனு இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவரை நினைவு கூர்ந்தார்கள். அவர், தம் சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு மனிதரிடம் கடன் கேட்டார். அந்த மனிதரும் ஒரு குறிப்பிட்ட தவணையில் திருப்பிச் செலுத்தி விடவேண்டும் என்னும் நிபந்தனையுடன் அவருக்குக் கடன் கொடுத்தார்...

(இது முன்பே கிதாபுல் கஅபாலாவில் சென்றுவிட்டது.)

## கடனைச் சிறிது தள்ளுபடி செய்ய (குறைத்துக் கொள்ள) பரிந்துரை செய்தல்.

ஹதீஸ் 2405. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) அப்துல்லாஹ் அவர்கள் (உஹுதுப் போரில் ஷஹீதாகக்) கொல்லப்பட்டார்கள். அவர்கள் (மரணிக்கும் போது) பல குழந்தை குட்டிகளையும் கடனையும்விட்டுச் சென்றார்கள். எனவே, (அந்தக் கடனுக்கு நான் பொறுப்பாளியான காரணத்தால்) என் தந்தையின் கடனிலிருந்து சிறிதளவு தள்ளுபடி செய்து (குறைத்து) விடும்படி கடன்காரர்களிடம் நான் கேட்டுக் கொண்டேன். அவர்கள் (சிறிதளவும் தள்ளுபடி செய்ய) மறுத்துவிட்டார்கள். எனவே,

நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று கடன் காரர்களிடம் எனக்காகப் பரிந்துரை செய்யும்படி கேட்டேன். (நபியவர்கள் அவ்வாறே பரிந்துரை செய்தும்) அவர்கள் (சிறிதளவும் தள்ளுபடி செய்ய) மறுத்துவிட்டனர். எனவே, நபி(ஸல்) அவர்கள், உங்கள் பேரீச்சங் கனிகளின் ஒவ்வொரு வகையையும் தனித் தனியாகப் பிரித்து வையுங்கள். இத்க் இப்னு ஸைத் என்னும் உயர் ரகப் பேரீச்சம் பழத்தை ஒரு பக்கமும்லீன் என்னும் தாழ்ந்த ரகப் பேரீச்சம் பழத்தை ஒரு பக்கமும்அஜ்வா என்னும் சிறப்பு ரகப் பேரீச்சம் பழத்தை இன்னொரு பக்கமும் தனித்தனியாக எடுத்து வையுங்கள். பின்னர் கடன் காரர்களை வரவழையுங்கள். பிறகு, நான் உங்களிடம் வருகிறேன்' என்றார்கள். நான் அவர்கள் கூறியபடியே செய்தேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் வந்து பேரீச்ச குவியல்களின் அருகே அமர்ந்து கொண்டு (கடன்காரர்) ஒவ்வொருவருக்கும் அளந்து கொடுக்கலானார்கள். இறுதியில், நிறைவாக (அனைவருக்கும்) கொடுத்து முடித்தார்கள். பேரீச்சம் பழக்குவியல் யாருடைய கரமும் படாததைப் போன்று முன் பிருந்ததைப் போன்றே (சற்றும் குறையாமல்) அப்படியே இருந்தது.

ஹதீஸ் 2406. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

(பேரீச்ச மரங்களுக்குத் தண்ணீர் இறைக்கும்) எங்கள் ஒட்டகம் ஒன்றின் மீது வாகனித்தவனாக நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போரில் நான் கலந்து கொண்டேன். (திரும்பி வருகையில்) திடீரென ஒட்டகம் களைப்படைந்து என்னுடன் பின்தங்கிவிட்டது. நபி(ஸல்) அவர்கள் அதன் பின்பகுதியில் அறைந்து, இதை எனக்கு நீ விற்றுவிடு. மதீனா சென்று சேரும்வரை இதன் மீது சவாரி செய்து நீ வரலாம்' என்று கூறினார்கள். நாங்கள் மதீனாவை நெருங்கியபோது, இறைத்தூதர் அவர்களே! சமீபத்தில்தான் திருமணம் நடந்தது' என்று கூறி, நான் என் வீட்டிற்குச் செல்ல அனுமதி கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், யாரை மணம் முடித்தாய்? கன்னிப் பெண்ணையா? வாழ்ந்த அனுபவமுள்ள (விதவையான அல்லது விவாகரத்து பெற்ற) பெண்ணையா? என்று கேட்டார்கள். நான், வாழ்ந்த அனுபவமுள்ள பெண்ணையே மணமுடித்தேன். (ஏனெனில்,) என் தந்தை அப்துல்லாஹ் அவர்கள் (உஹுதுப் போரில் ஷஹீதாகக்) கொல்லப்பட்டுவிட்டார்கள் (என் சகோதரிகளான) சிறு பெண் குழந்தைகளைவிட்டு சிட்டுச் சென்றார்கள். அவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுப்பதற்காகவும் ஒழுக்கம் கற்பிப்பதற்காகவும் வாழ்ந்த அனுபவமுள்ள ஒரு பெண்ணையே நான் மணமுடித்துக் கொண்டேன்' என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்கள், உன் வீட்டாரிடம் போ! என்று கூறினார்கள். நான் வீட்டிற்குச் சென்று என் தாய்மாமனிடம் ஒட்டகத்தை விற்றுவிட்டதைக் கூறினேன். அதற்கு அவர்கள் என்னைக் குறை கூறினார்கள். எனவே, நான் ஒட்டகம் களைத்து விட, நபி(ஸல்) அவர்கள் அதைப் (பின்பக்கத்தில்) அறைந்ததையும் கூறினேன். நபி(ஸல்) அவர்கள் மதீனா வந்து சேர்ந்தபோது நான் காலை நேரத்தில் ஒட்டகத்துடன் அவர்களிடம் சென்றேன். அவர்கள் ஒட்டகத்தின் விலையையும் எனக்குக் கொடுத்து, ஒட்டகத்தையும் (எனக்கே) கொடுத்துவிட்டார்கள். மேலும், மக்களுக்குப் போர்ச் செல்வங்களை வழங்கும்போது அதில் என்னுடைய பங்கையும் (எனக்குக்) கொடுத்தார்கள்.

## செல்வத்தை வீணடிப்பது தடை செய்யப்பட்டதாகும்.

அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக அல்லாஹ் சீர்கேட்டை விரும்புவதில்லை. (திருக்குர்ஆன் 02:205)

சீர்கெடுப்பவர்களின் செயலை அல்லாஹ் சீராக்குவதில்லை. (திருக்குர்ஆன் 10:81)

(மத்யன் நகரவாசிகள்)ஷுஐபே! எங்கள் மூதாதையர் வணங்கி வந்தவற்றை நாங்கள்விட்டு விடவேண்டும் என்றா, அல்லது எங்களுடைய செல்வத்தை எங்கள் விருப்பப்படி பயன்படுத்த

எங்களுக்கு அதிகாரம் இருக்கக் கூடாது என்றா உம்முடைய தொழுகை உமக்குக் கற்றுத் தருகிறது? என்று (ஏளனமாகக்) கூறினார்கள். (திருக்குர்ஆன் 11:87)

அல்லாஹ் உங்களுக்கு வழங்கியுள்ள பொருள்களை விபரமறியாதவர்(களாய் உள்ள அனாதை)களிடம் ஒப்படைக்காதீர்கள். (திருக்குர்ஆன் 04:05)

விபரமறியாதவர்களின் பொருளாதார நடவடிக்கை நிறுத்தி வைக்கப்படும். மேலும், மோசடியும் தடை செய்யப்பட்டதாகும்.

ஹதீஸ் 2407. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,நான் வியாபாரத்தில் (அடிக்கடி) ஏமாற்றப்பட்டு விடுகிறேன்' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீ வியாபாரம் செய்யும்போது (ஒரு பொருளை வாங்கும்போது அல்லது விற்கும் போது)மோசடி கூடாது என்று சொல்' என்றார்கள். அதற்குப் பிறகு, அந்த மனிதர் அவ்வாறே கூறிக் கொண்டிருந்தார்.

ஹதீஸ் 2408. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பெற்றெடுத்த) தாய்மார்களுக்குத் துன்பம் தருவதையும், பெண் குழந்தைகளை உயிருடன் புதைப்பதையும் (நிறைவேற்றக் கடமைப்பட்டுள்ள பிற மனிதர்களின் உரிமைகளை) நிறைவேற்றாமலிருப் பதையும் பிறரின் செல்வத்தை (அநியாயமாக) அபகரித்துக் கொள்வதையும் தேவையற்ற வீண் பேச்சுகள் பேசுவதையும் அதிகமாக கேள்விகள் கேட்பதையும், செல்வத்தை வீணாக்குவதையும் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு ஹராமாக (விலக்கப்பட்டதாக) ஆக்கியுள்ளான்.

என முகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

## அடிமை (அல்லது பணியாள்) தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். எஜமானின் அனுமதியின்றி அவன் அதைக் கையாளக் கூடாது.

ஹதீஸ் 2409. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளாராவார். தன் பொறுப்புக்கு உட்பட்டவை பற்றி அவர் விசாரிக்கப்படுவார். ஆட்சித் தலைவரும் பொறுப்பாளரே. தன் குடிமக்கள் பற்றி அவர் விசாரிக்கப்படுவார். ஆண்மகன் (குடும்பத் தலைவன்) தன் மனைவி மக்களின் பொறுப்பாளன் ஆவான். தன் பொறுப்புக்கு உட்பட்டவர்கள் பற்றி அவன் விசாரிப்படுவான். பெண் (மனைவி), தன் கணவனின் வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள். தன் பொறுப்புக்கு உட்பட்டவை குறித்து அவள் விசாரிக்கப்படுவாள். பணியாள், தன் எஜமானின் உடைமைகளுக்குப் பொறுப்பாளியாவான். அவனும் தன் பொறுப்புக்கு உட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவான்.

"இவையனைத்தையும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டேன்' என்று கூறிவிட்டு இப்னு உமர்(ரலி) மேலும் கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள்,மனிதன் தன் தந்தையின் செல்வத்திற்கும் பொறுப்பாளன் ஆவான். அது குறித்தும் அவன் விசாரிக்கப்படுவான். எனவே, நீங்கள் ஒவ்வொருவரும் (ஏதேனும் ஒரு விஷயத்திற்குப்) பொறுப்பானவர்களே. நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் பொறுப்புக்கு உட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவீர்கள்' என்றும் கூறினார்கள் என நான் நினைக்கிறேன்.

# அத்தியாயம் 44 வழக்குகள் (முறையீடுகள்), தகராறுகள்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

வழக்குகள் (முறையீடுகள்), தகராறுகள்

## (வழக்கில் சம்பந்தப்பட்டவரை) விசாரணைக்காகக் கொண்டு போய் நிறுத்துவது மற்றும் யூதர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையிலான தகராறு.

ஹதீஸ் 2410. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

“ஒருவர் (திருக்குர்ஆனின்) ஒரு வசனத்தை ஓதுவதைக் கேட்டேன். அவர் ஓதியதற்கு மாற்றமாக அந்த வசனத்தை நபி (ஸல்) அவர்கள், ஓத நான் கேட்டிருந்தேன். எனவே, அந்த மனிதரின் கையைப் பிடித்து அல்லாஹ்வின் தூதரிடம் இழுத்துச் சென்றேன். (விபரத்தைக் கேட்ட) நபி (ஸல்) அவர்கள்,நீங்கள் இருவருமே சரியாகத்தான் ஓதியிருக்கிறீர்கள்‘ என்று கூறினார்கள்.

“நபி (ஸல்) அவர்கள்,வேற்றுமை கொள்ளாதீர்கள்! ஏனெனில், உங்களுக்கு முன்னிருந்தவர்கள் வேற்றுமை கொண்டு (அதனால்) அழிந்தனர் என்று கூறினார்கள் என எண்ணுகிறேன்‘ என்று அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 2411. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஒரு முஸ்லிமும் ஒரு யூதரும் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டனர். அந்த முஸ்லிம்,உலகத்தார் அனைவரை விடவும் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு மேன்மையை அளித்தவன் மீது சத்தியமாக!என்று கூறினார். அந்த யூதர்,உலகத்தார் அனைவரை விடவும் மூஸாவுக்கு மேன்மையை அளித்தவன் மீது சத்தியமாக!என்று கூறினார். அதைக் கேட்டு (கோபம் கொண்டு) அந்த முஸ்லிம் தன் கையை ஓங்கி யூதரின் முகத்தில் அறைந்துவிட்டார். அந்த யூதர், நபி (ஸல்) அவர்களிடம் சென்று தனக்கும் அந்த முஸ்லிமுக்கும் இடையே நடந்த (சச்சர)வையெல்லாம் தெரிவித்தார். நபி (ஸல்) அவர்கள் அந்த முஸ்லிமை அழைத்து வரச்சொல்லி அது பற்றி அவரிடம் கேட்டார்கள். அவர் விபரத்தைக் கூறினார். (நடந்தவை அனைத்தையும் விசாரித்துத் தெரிந்து கொண்ட பின்) நபி (ஸல்) அவர்கள்,மூஸாவை விட என்னைச் சிறப்பாக்கி (முதலிடம் தந்து உயர்த்தி) விடாதீர்கள். ஏனெனில், மக்கள் அனைவரும் மறுமை நாளில் மூர்ச்சையாகி விடுவார்கள். நானும் அவர்களுடன் மூர்ச்சையாகி விடுவேன். நானே முதலாவதாக மயக்கம் தெளிந்து எழுவேன். அப்போது, மூஸா (அலை), (அல்லாஹ்வின்) அர்ஷின் ஓரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பார். மக்களோடு சேர்ந்து அவரும் மூர்ச்சையாகி, பிறகு எனக்கு முன்பாகவே மயக்கம் தெளிந்து விட்டிருப்பாரா, அல்லது அல்லாஹ் அவருக்கு மட்டும் (மூர்ச்சையடையத் தேவையில்லையென்று) விதி விலக்கு அளித்திருப்பானா என்று எனக்குத் தெரியாது‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2412. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்து கொண்டிருந்தபோது யூதர் ஒருவர் வந்து,அபுல் காசிமே! உங்கள் தோழர்களில் ஒருவர் என் முகத்தில் அறைந்துவிட்டார்‘ என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள்,(அந்தத் தோழர்) யார்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்,அன்சாரிகளில் ஒருவர்‘ என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள்,அவரைக் கூப்பிடுங்கள்‘ என்று உத்திரவிட்டார்கள். அவர் வந்து சேர்ந்தவுடன்,இவரை நீர் அடித்தீரா? என்று கேட்டார்கள். அந்த அன்சாரி,இவர்

கடைவீதியில், மனிதர்கள் அனைவரையும் விட மூஸாவுக்கு மேன்மையை அளித்தவன் மீது சத்தியமாக! என்று ஆணையிட்டுக் கூறிக் கொண்டிருந்ததை செவியுற்றேன். உடனே நான், தீயவனே! முஹம்மதை விடவா (மூஸா மேன்மை வாய்ந்தவர்)? என்று கேட்டேன். என்னைக் கோபம் ஆட்கொண்டு விட, இவரின் முகத்தில் அறைந்து விட்டேன்' என்று கூறினார். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், நபிமார்களுக்கிடையே ஒருவரை மற்றொருவரை விட உயர்த்திப் பேசாதீர்கள். ஏனெனில், மறுமை நாளில் மக்கள் அனைவரும் மூர்ச்சையாகி விடுவார்கள். அப்போது, பூமி பிளந்து வெளிப்படுத்துபவர்களில் முதலாவது நபராக நான் இருப்பேன். அப்போது, நான் மூஸாவை அர்ஷின் (இறை சிம்மாசனத்தின்) கால்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டிருப்பவராகக் காண்பேன். மூர்ச்சையடைந்தவர்களில் அவரும் ஒருவராக இருந்தாரா அல்லது (தூர்சீனா மலையில் இறைவனின் ஒளியை அவர் கண்டபோது அவர் அடைந்த) முதல் மூர்ச்சை கணக்கிலெடுக்கப்பட்டு (அதுவே போதுமென்று, இப்போது மூர்ச்சையடையத் தேவையில்லையென்று அவருக்கு விலக்கு அளிக்கப்பட்டு) விட்டதா என்று எனக்குத் தெரியாது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2413. அனஸ்(ரலி) அறிவித்தார்.

யூதன் ஒருவன் சிறுமி ஒருத்தியின் தலையை இரண்டு கற்களுக்கிடையே வைத்து நசுக்கிவிட்டான். அந்தச் சிறுமியிடம் மக்கள், உன்னை இப்படிச் செய்தவன் யார்? இன்னாரா? இன்னாரா? எனறு கேட்டனர். யூதனின் பெயர் கூறப்பட்டவுடன் அச்சிறுமி ("ஆம், அவன்தான்' என்பதற்கு அடையாளமாகத்) தலையசைத்தாள். யூதன் பிடிக்கப்பட்டு தன் குற்றத்தை ஒப்புக் கொண்டான். நபி(ஸல்) அவர்கள் அவனுடைய தலையை இரண்டு கற்களுக்கிடையே வைத்து நசுக்கும்படி உத்தரவிட, அவ்வாறே அவனுடைய தலை நசுக்கப்பட்டது.

## பேதை மற்றும் மூளை வளர்ச்சி குன்றியவனின் பொருளாதார நடவடிக்கைகளை ரத்து செய்வது செல்லும் ஆட்சித் தலைவர் அவனுடைய பொருளாதார நடவடிக்கைகளைத் தடை செய்து (இன்னும்) ஆணை பிறப்பிக்காமலிருந்தாலும் சரியே!

ஜாபிர்(ரலி) வழியாக அறிவிக்கப்படுகிறது:

நபி(ஸல்) அவர்கள் (ஏழை) ஒருவர் தர்மம் செய்தபோது அந்த தர்மத்தை ரத்து செய்தார்கள். பிறகு தான், அந்த (ஏழை) மனிதர் தர்மம் செய்வதைத் தடை செய்து ஆணை பிறப்பித்தார்கள்.

"ஒருவர் கடனாளியாக இருந்து, அவரிடம் ஓர் அடிமையைத் தவிர வேறு செல்வம் ஏதும் இல்லாமலிருந்து அந்த அடிமையை அவர் விடுதலை செய்தால் அது செல்லுபடியாகாது' என்று இமாம் மாலிக்(ரஹ்) கூறினார்.

## ஒருவர் மூளை வளர்ச்சி குன்றிய ஒருவருக்காக அவரின் பொருளை விற்று, அதை அவரிடமே கொடுத்து இதை சரியான முறையில் பயன்படுத்தி நன்கு பராமரித்து வைத்துக் கொள்ளும்படி கூற, அவர் அதைக் கெடுத்து(ப் பழுதாக்கி) விட முயன்றால் (விற்றுக் கொடுத்தவரோ, நீதிபதியோ) அவரை அதைக் கையாள விடாமல் தடுத்து விடலாம். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் பொருளை வீணாக்குவதைத் தடை செய்துள்ளார்கள்.

மேலும், வியாபாரத்தின்போது அடிக்கடி ஏமாற்றப்பட்டு வந்த ஒரு மனிதரிடம்,நீ வியாபாரம் செய்யும்போது (எதையும் வாங்கும்போது அல்லது விற்கும் போது)ஏமாற்று, மோசடி எதுவும் கூடாது என்று சொல்‘ என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

மேலும், நபி(ஸல்) அவர்கள் (கடனாளி ஒருவர் ஆர்வத்தின் பேரில் தன் அடிமையை விடுதலை செய்ய முனைந்தபோது, அந்த அடிமையை விற்று, விலையை அவரிடமே கொடுத்தார்கள். ஆனால்) அவரின் (வேறு) செல்வத்தை அதற்குப் பிரதியாகக் கைப்பற்றவில்லை.

ஹதீஸ் 2414. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் வியாபாரத்தில் ஏமாற்றப்பட்டு வந்தார். எனவே, நபி(ஸல்) அவர்கள் அந்த மனிதரிடம்,நீ வியாபாரம் செய்தால் (எதையும் விற்றால் அல்லது வாங்கினால்)ஏமாற்றுதல் கூடாது என்று சொல்‘ என்றார்கள். அதன்படி அந்த மனிதர் (வியாபாரம் செய்யும் போதெல்லாம்) அவ்வாறே கூறி வந்தார்.

ஹதீஸ் 2415. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் ஓர் அடிமையை விடுதலை செய்தார். அவரிடம் அந்த அடிமையைத் தவிர வேறு செல்வம் எதுவும் இருக்கவில்லை. நபி(ஸல்) அவர்கள் அம்மனிதர் அந்த அடிமையை விடுதலை செய்ததை ரத்துச் செய்தார்கள். (அவருக்காக அவ்வடிமையை ஏலம்விட்டபோது) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அந்த அடிமையை நுஐம் இப்னு நஹ்ஹாம்(ரலி) வாங்கினார்கள். (பிறகு நபி(ஸல்) அவர்கள் அதன் விலையை அடிமையின் உரிமையாளரிடம் கொடுத்துவிட்டார்கள்.)

## வாதியும் பிரதிவாதியும் ஒருவரைப் பற்றி ஒருவர் ஏதேனும் (குறை) பேசுதல்.

ஹதீஸ் 2416 , ஹதீஸ் 2417ஒருவன் ஒரு முஸ்லிமுடைய செல்வத்தை அபகரித்துக் கொள்வதற்காகப் பொய் சத்தியம் செய்வானாயின், மறுமையில், தன் மீது கோபம் கொண்ட நிலையில் அல்லாஹ்வை, அவன் சந்திப்பான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவிக்கும்போது கேட்டுக் கொண்டிருந்த அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) கூறலானார்கள்:

அல்லாஹ்வின் மீதாணையாக! என் விவகாரத்தில்தான் இதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். எனக்கும் ஒரு யூதருக்கும் இடையே ஒரு நிலம் தொடர்பான தகராறு இருந்து வந்தது. அந்த யூதர் என் உரிமையை மறுத்து விடவே நான் நபி(ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டு சென்றேன். இறைத்தூதர்(ஸல்),உன்னிடம் (உன் வாதத்திற்கான) ஆதாரம் ஏதும் இருக்கிறதா? என்று கேட்டார்கள். நான்,இல்லை‘ என்றேன். நபி(ஸல்) அவர்கள் யூதரைப் பார்த்து,(அப்படியென்றால் நிலம் என்னுடையது தான். அதில் இந்த முஸ்லிமுக்கு எந்த உரிமையும் இல்லை என்று) சத்தியம் செய்‘ என்று கூறினார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! அவ்வாறென்றால் அந்த யூதன் (பொய்) சத்தியம் செய்து என் சொத்தை அபகரித்துச் சென்று விடுவானே!என்று கூறினேன். (அப்போதுதான் நபி(ஸல்) அவர்கள் இதைக் கூறினார்கள்.) உடனே,அல்லாஹ்வுடன் செய்த உடன்படிக்கையையும் தம் சத்தியங்களையும் அற்பவிலைக்கு விற்றுவிடுகிறவர்களுக்கு மறுமையில் எந்த நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களுடன் பேசவும் மாட்டான் அவர்களைப் பார்க்கவும் மாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனைதான் இருக்கிறது (திருக்குர்ஆன் 03:77) என்னும் திருக்குர்ஆன் வசனத்தை அல்லாஹ் அருளினான்.

ஹதீஸ் 2418. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான் இப்னு அபீ ஹத்ரத்(ரலி) அவர்களிடம் பள்ளிவாசலில் வைத்து, நான் கொடுத்த கடனைத் திருப்பிச் செலுத்தும்படி கேட்டேன். எங்கள் (இருவரிடையே இது தொடர்பாக வாக்குவாதம் தொடங்கி) இருவரின் குரலும் உயர்ந்துவிட்டது. எந்த அளவுக்கென்றால் இறைத்தூதர்(ஸல்) தம் வீட்டிலிருக்க, அவர்களும் எங்கள் குரலைச் செவியுற்று, தம் அறையின் திரையை நீக்கி எங்கள் இருவரையும் நோக்கிப் புறப்பட்டு வந்து, கஅபே!என்று அழைத்தார்கள். நான், இதோ வந்து விட்டேன், இறைத்தூதர் அவர்களே!என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், இதை (இந்த அளவை) உன் கடனிலிருந்து குறைத்துக் கொள்‘ என்று கூறி பாதியளவு கடனைக் குறைத்துக் கொள்ளும்படி (விரலால்) சைகை காட்டினார்கள். அவ்வாறே செய்து விட்டேன், இறைத்தூதர் அவர்களே!என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் (இப்னு அபீ ஹத்ரத்(ரலி) அவர்களை நோக்கி, )எழுந்து சென்று கடனை அடைப்பீராக!என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2419. உமர்(ரலி) அறிவித்தார்.

ஹிஷாம் இப்னு ஹகீம் இப்னி ஹிஸாம்(ரலி) (திருக்குர்ஆனின்) அத்தியாயம் அல்ஃபுர்கானை நான் ஓதுகிற முறைக்கு மாற்றமாக ஓதுவதைச் செவியுற்றேன். நபி(ஸல்) அவர்கள் ஏற்கெனவே அந்த அத்தியாயத்தை எனக்கு ஓதிக் காட்டியிருந்தார்கள். நான், உடனேயே ஹிஷாம்(ரலி), அவர்களைக் கண்டிக்க முற்பட்டேன். பிறகு (சற்று யோசித்து) அவர்கள் தொழுகையை முடிக்கும்வரை அவர்களுக்கு அவகாசம் அளித்(துக் காத்திருந்)தேன். (அவர்கள் தொழுது முடித்த) பிறகு, அவர்களின் போர்வை (போன்ற அங்கி)யை அவர்களின் கழுத்தில் போட்டு இழுத்து, அல்லாஹ்வின் தூதரிடம் கொண்டு சென்று, (நபி(ஸல்) அவர்களே!) நீங்கள் எனக்கு ஓதிக் கொடுத்ததற்கு மாற்றமாக இவர் ஓதுவதை கேட்டேன்‘ என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள், அவரைவிட்டு விடு‘ என்று கூறினார்கள். பிறகு என்னை நோக்கி, நீங்கள் ஓதுங்கள்‘ என்று கூறினார்கள். நான் ஓதினேன். (அதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள், இப்படித்தான் (இந்த அத்தியாயம்) இறங்கிற்று. நிச்சயமாக, குர்ஆன், (ஓதுவதற்கான) ஏழு முறைகளின் படி இறக்கியருளப்பட்டிருக்கிறது. எனவே, உங்களுக்கு இலேசானதை அதிலிருந்து ஓதிக் கொள்ளுங்கள்‘ என்று கூறினார்கள்.

## விபரம் தெரிந்த பிறகு, பாவம் புரிவோரையும், வழக்காடுவோரையும் அவர்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றலாம்.

உமர்(ரலி), அபூ பக்ர்(ரலி) அவர்களின் சகோதரி (அபூ பக்ரின் மரணத்திற்காக) ஒப்பாரி வைத்தபோது அவரை வீட்டைவிட்டு வெளியேற்றினார்கள்.

ஹதீஸ் 2420. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகையை (நிலைநிறுத்தும்படி) கட்டளையிட்டுவிட்டு தொழுகை நடந்து கொண்டிருக்கும்போது (கூட்டுத்) தொழுகைக்கு வருகை தராத மக்களின் வீடுகளுக்குச் சென்று அவற்றை எரித்து விடலாம் என்று நான் நினைத்ததுண்டு.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## மரண சாசனம் யாருக்குச் செய்யப்பட்டதோ அவர் மரண சாசனம் செய்த (இறந்த)வருக்காக வாதிடுவது செல்லும்.

ஹதீஸ் 2421. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

அப்து இப்னு ஸம்ஆ(ரலி) அவர்களும் ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களும் ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகனின் விஷயத்தில் (தமக்குள் ஏற்பட்ட தகராறைத் தீர்த்துக் கொள்ள) நபி(ஸல்) அவர்களிடம் வழக்கொன்றைக் கொண்டு வந்தனர்.

ஸஅத் (ரலி), இறைத்தூதர் அவர்களே! என் சகோதரர், நீ (மக்காவுக்குத் திரும்பிச்) சென்றால், ஸம்ஆவுடைய அடிமைப் பெண்ணின் மகனைக் கண்டு (அழைத்து வந்து) பராமரி. ஏனென்றால், அவன் என்னுடைய மகன் என்று என்னிடம் (மரணப் படுக்கையில் தன் இறுதி விருப்பமாகக்) கூறியிருந்தார்' என்றார்கள். அப்து இப்னு ஸம்ஆ (ரலி), அவர் என் சகோதரர் என் தந்தையின் அடிமைப் பெண்ணின் மகன் என் தந்தையின் ஆதிக்கத்தில் அவன் இருந்தபோது பிறந்தவர்' என்று கூறினார். அந்த அடிமைப் பெண்ணின் மகனிடம் (ஸஅதுடைய சகோதரர்) உத்பாவின் சாயலைத் தெளிவாகக் கண்ட நபி (ஸல்) அவர்கள், அப்து இப்னு ஸம்ஆவே! அவன் (சட்டப்படி) உனக்கு உரியவனே. (ஏனெனில், ஒரு பெண், யாருடைய ஆதிக்கத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே அவள் பெற்றெடுத்த குழந்தை சொந்தமாகும். விபச்சாரம் செய்வதவருக்கு இழப்புதான் உரியது' என்று (தீர்ப்புக்) கூறினார்கள். பிறகு ,தம் மனைவி சவ்தா (ரலி) அவர்களை நோக்கி, சவ்தாவே! இந்த இளைஞனிடம் நீ ஹிஜாபைப் பேணிக் கொள். (உன்னை நீ திரையிட்டு மறைத்துக் கொள்.)' என்று கூறினார்கள்.

## எவர் தீங்கிழைப்பவர் (அல்லது துஷ்டத்தனம் செய்பவர்) என்று அச்சம் உள்ளதோ அவரைக் கட்டி வைக்கலாம்.

இப்னு அப்பாஸ் (ரலி) குர்ஆனைக் கற்றுக் கொடுப்பதற்காகவும் சுன்னத்து (நபிவழி) களையும் பாகப் பிரிவினைச் சட்டத்தையும் கற்றுக் கொடுப்பதற்காகவும் இக்ரிமா (ரஹ்) அவர்களை (சங்கிலியால்) பிணைத்து வைத்தார்கள்.

ஹதீஸ் 2422. நபி (ஸல்) அவர்கள்நஜ்து மாநிலத்தை நோக்கி குதிரை வீரர்களின் படை ஒன்றை அனுப்பி வைத்தார்கள். அவர்கள் பனு ஹனீஃபா குலத்தைச் சேர்ந்த யமாமாவாசிகளின் தலைவரானசுமாமா இப்னு உஸால் எனப்படும் ஒரு மனிதரைக் கொண்டு வந்தார்கள். அவரைப் பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் சுட்டி வைத்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அவரை நோக்கி வந்து, சுமாமாவே, உங்களிடம் என்ன (செய்தி) உள்ளது? என்று கேட்டார்கள். அவர், முஹம்மதே! என்னிடம் நல்ல செய்திதான் உள்ளது' என்று கூறினார்.

இறுதியில் நபி (ஸல்) அவர்கள், சுமாமாவை அவிழ்த்துவிட்டு விடுங்கள்' என்று உத்தரவிட்டார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## ஹரமில் (குற்றவாளிகளைக்) கட்டி வைப்பதும் சிறைப்படுத்துவதும்.

நாஃபிஃ இப்னு அப்தில் ஹாரிஸ் (ரலி), மக்கா நகரில் குற்றவாளிகளைச் சிறைப்படுத்துவதற்காக ஸஃப்வான் இப்னு உமய்யா (ரலி) அவர்களிடமிருந்து ஒரு வீட்டை விலைக்கு வாங்கினார்கள். அப்போது, உமர் (ரலி) ஒப்புதல் கொடுத்துவிட்டால் தாம் வாங்கியது உறுதிப்பட்டு விடும் என்றும் உமர் (ரலி) ஒப்புதல் கொடுக்காவிட்டால் அவருக்கு நானூறு திர்ஹம்கள் தரப்படும் என்றும் நிபந்தனையிட்டிருந்தார்கள். மேலும், அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அவர்களும் மக்காவில் (குற்றவாளிகளைக்) கைது செய்து சிறையில் அடைத்துள்ளார்கள்.

ஹதீஸ் 2423. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் நஜ்து மாநிலத்தை நோக்கி குதிரை வீரர்களின் படை ஒன்றை அனுப்பினார்கள். அந்தப் படையினர் பனு ஹனீஃபா குலத்தைச் சேர்ந்த சுமாமா இப்னு உஸால் என்று அழைக்கப்படுபவரைக் கொண்டு வந்தார்கள். (மக்கள்) அவரைப் பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் கட்டி வைத்தார்கள்.

## கடனாளியிடமிருந்து கடனை வசூல் செய்வதற்காக கடன்காரர் அவரை விடாமல் பிடித்துக் கொள்வதும் பின்தொடர்ந்து சென்று நச்சரிப்பதும்.

ஹதீஸ் 2424. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

எனக்கு அப்துல்லாஹ் இப்னு அபீ ஹத்ரத்(ரலி) கொடுக்க வேண்டிய கடன் ஒன்று இருந்தது. நான் அவரை (பாதையில்) சந்தித்தேன். உடனே அவரைப் பிடித்துக் கொண்டேன். (கடனைத் திருப்பிச் செலுத்தும்படி நச்சரிக்கலானேன்). நாங்கள் இருவரும் வாக்குவாதம் செய்யவே எங்கள் குரல்கள் உயர்ந்துவிட்டன. நபி(ஸல்) அவர்கள் எங்களைக் கடந்து சென்றார்கள். அப்போது என்னை,கஅபே!என்றழைத்து,பாதியை (வாங்கிக் கொள்)' என்று கூறுவது போல் தம் கையால் சைகை செய்தார்கள்.

எனவே, நான் இப்னு அபீ ஹத்ரத்(ரலி) திருப்பிக் கொடுக்க வேண்டியிருந்த கடனில் பாதியை வாங்கிக் கொண்டு மீதியை (மன்னித்து)விட்டுவிட்டேன்.

## கடன்காரார் கடனாளியிடம் கடனைத் திருப்பிச் செலுத்தும்படி கேட்பது...

ஹதீஸ் 2425. கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்.

நான் அறியாமைக் காலத்தில் கருமானாக இருந்தேன். எனக்கு ஆஸ் இப்னு வாயில் என்பவன் சில திர்ஹம்கள் கொடுக்க வேண்டியிருந்தது. அதைக் கொடுத்து விடும்படி கேட்டு அவனிடம் சென்றேன். அவன்,நீ முஹம்மதை நிராகரிக்காதவரை நான் உனக்குக் கடன் தீர்க்க மாட்டேன்' என்று கூறினான். நான்,முடியாது. அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் உன்னை மரணிக்கச் செய்து, பிறகு உயிராக்கி எழுப்பும் வரை நான் முஹம்மதை நிராகரிக்க மாட்டேன்' என்று கூறினேன். அதற்கு அவன்,அப்படியென்றால் நான் இறந்து மீண்டும் உயிராக்கி எழுப்பப்படும் வரை என்னைவிட்டுவிடு. அப்போது எனக்குச் செல்வமும் குழந்தைகளும் கொடுக்கப்படும். பிறகு நான் உன் கடனைத் தீர்ப்பேன்' என்று கூறினான். அப்போதுதான்,எவன் நம்முடைய சான்றுகளை மறுக்கிறானோ, மேலும்பொருள் செல்வமும் மக்கள் செல்வமும் எனக்கு வழங்கப்பட்டுக் கொண்டேயிருக்கும் என்றும் கூறுகிறானோ அவனை (நபியே!) நீங்கள் பார்த்தீர்களா? அவன் மறைவான உண்மைகளை அறிந்து கொண்டானா? அல்லது கருணை மிக்க இறைவனிடம் ஏதேனும் உடன்படிக்கை செய்தானா? அப்படியொன்றுமில்லை. அவன் பிதற்றுவதை நாம் எழுதி வைத்துக் கொள்வோம். அவனுக்குத் தண்டனையை மேலும் மேலும் அதிகமாக்குவோம்..!(திருக்குர்ஆன் 19:77-80) என்னும் திருக்குர்ஆன் வசனம் அருளப்பட்டது

# அத்தியாயம் 45 கண்டெடுக்கப்பட்ட பொருள்.

## கண்டெடுக்கப்பட்ட பொருளின் உரிமையாளர் அடையாளம் (சரியாகக்) கூறினால் கண்டெடுத்தவர் அதை அவரிடம் தந்து விடவேண்டும்.

ஹதீஸ் 2426. உபை இப்னு கஅப்(ரலி) அறிவித்தார்.

நான் ஒரு பணப்பையைக் கண்டெடுத்தேன். அதில் நூறு தீனார்கள் இருந்தன. (அதை எடுத்துக் கொண்டு) நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்கள்,ஓராண்டுக் காலம் அதைப் பற்றி நீ (பொது) அறிவிப்புக் கொடு' என்று கூறினார்கள். நானும் அதைப் பற்றி அறிவிப்புக் கொடுத்தேன். அதை அடையாளம் புரிந்து கொள்பவர் எவரையும் நான் காணவில்லை. பிறகு, மீண்டும் நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போதும்,ஓராண்டுக் காலம் அதைப் பற்றி அறிவிப்புக் கொடு' என்று கூறினார்கள். நானும் அதைப் பற்றி அறிவிப்புக் கொடுத்தேன். அதை அடையாளம் புரிந்து (பெற்றுக்) கொள்பவர் எவரையும் நான் காணவில்லை. பிறகு, மூன்றாவது முறையாக நபி(ஸல்) அவர்கள்,அதன் பையையும் அதன் எண்ணிக்கையையும் அதன் முடிச்சையும் பாதுகாத்து வைத்திரு. அதன் உரிமையாளர் வந்தால் அவரிடம் ஒப்படைத்து விடு. இல்லையென்றால் நீயே அதைப் பயன்படுத்திக் கொள்' என்று கூறினார்கள். எனவே, நானே அதைப் பயன்படுத்திக் கொண்டேன்.

அறிவிப்பாளர் ஷுஅபா(ரஹ்) கூறினார்:

அதன் பிறகு, நான் மக்காவில் வைத்து (இதை எனக்கு அறிவித்த) ஸலமா(ரஹ்) அவர்களைச் சந்தித்தேன். அப்போது அவர்கள்,(நான் அறிவித்த ஹதீஸில்) நபி(ஸல்), அவர்கள்,மூன்று ஆண்டுகள் அறிவிப்புச் செய்ய வேண்டும் என்று கூறினார்களா, அல்லதுஓராண்டுக்காலம் வரை மட்டும் அறிவிப்புச் செய்ய வேண்டும் என்று கூறினார்களா என்று நான் அறியமாட்டேன்' (அதாவதுஎனக்கு நினைவில்லை“) என்று கூறினார்கள்.

## தொலைந்த ஒட்டகம்.

ஹதீஸ் 2427. ஸைத் இப்னு காலித் அல் ஜுஹைனீ(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு கிராமவாசி வந்து, (பாதையில்) கண்டெடுக்கும் பொருளைப் பற்றிக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,ஒரு வருட காலத்திற்கு அதைப் பற்றி அறிவிப்புச் செய். பிறகு, அதன் பை(உறை)யையும் அதன் முடிச்சையும் பாதுகாத்து வைத்திரு. அதைப் பற்றி (அடையாளம்) தெரிவிப்பவர் எவராவது உன்னிடம் வந்தால் (அவரிடம் ஒப்படைத்து விடு.) இல்லையென்றால் அதை உன் செலவுக்கு எடுத்துக்கொள்' என்று கூறினார்கள். அந்த கிராமவாசி,இறைத்தூதர் அவர்களே! வழிதவறி (நம்மிடம் வந்து சேர்ந்து)விட்ட ஆட்டை என்ன செய்வது? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,அது உனக்குரியது அல்லது உன் சகோதரருக்குரியது அல்லது ஓநாய்க்குரியது“ என்று கூறினார்கள். அந்தக் கிராமவாசி,வழி தவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது? என்று கேட்டார். இதைக் கேட்டவுடன் நபி(ஸல்) அவர்களின் திருமுகம் (வெறுப்பால் மங்கலாம்) நிறம் மாறிவிட்டது. பிறகு,உனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதனுடனே அதன் குளம்பும் அதன் தண்ணீர்ப்பையும் உள்ளதே! நீர் நிலைகளுக்கு அது செல்கிறது் மரத்திலிருந்து தின்கிறது' என்று கூறினார்கள்.

## வழி தவறிய ஆடு.

ஹதீஸ் 2428. ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் கண்டெடுக்கப்பட்ட பொருள் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள், அதன் பை(உறை)யையும் அதன் முடிச்சையும் அடையாளம் அறிந்து கொள். பிறகு, ஓராண்டுக் காலத்திற்கு (அதை) அறிவிப்புச் செய்' என்று கூறினார்கள்.

பின்னர் அறிவிப்பாளர் யஸீத்(ரஹ்) கூறினார்.

அதை அடையாளம் கூறிப் பெற்றுக் கொள்ள எவரும் முன்வராவிட்டால் அதைக் கண்டெடுத்தவர் அதைச் செலவு செய்து கொள்வார். மேலும், அது அவரிடம் அடைக்கலப் பொருளாக இருக்கும்.

இந்தப் பிந்திய வாக்கியம் மட்டும் அல்லாஹ்வின் தூதருடைய சொல்ல, அல்லது அறிவிப்பாளர் யஸீத் அவர்களின் சொல்லா என்று எனக்குத் தெரியவில்லை' என்று அறிவிப்பாளர் யஹ்யா இப்னு ஸயீத்(ரஹ்) கூறினார். பிறகு, நபி(ஸல்) அவர்களிடம் (கண்டெடுத்த பொருளைப் பற்றிக் கேட்டவர்), வழி தவறி வந்த ஆட்டைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், அதை நீ எடுத்துக் கொள். ஏனெனில், அது உனக்குரியது அல்லது உன் சகோதரருக்குரியது அல்லது ஓநாய்க்குரியது' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் யஸீத்(ரஹ்), அதையும் கூட அறிவிப்புச் செய்ய வேண்டும்' என்று கூறினார்கள்.

பிறகு அந்த நபர், வழி தவறி வந்த ஒட்டகத்தைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், அதை (அப்படியே)விட்டுவிடுங்கள். ஏனெனில், அதனுடன் அதன் குளம்பு இருக்கிறது அதன் தண்ணீர்ப்பை (வயிறு) இருக்கிறது அதை அதன் எஜமான் அடைந்து கொள்ளும் வரை அது நீர் நிலைகளுக்குச் செல்கிறது (அங்கே நீரருந்தித் தாகம் தணித்துக் கொள்கிறது) மரங்களிலிருந்து (இலை தழைகளைத்) தின்கிறது' என்று பதில் கூறினார்கள்.

## கண்டெடுக்கப்பட்ட பொருளின் உரிமையாளர் ஒரு வருட காலத்திற்குப் பின்பும் கிடைக்காவிட்டால், அது அதைக் கண்டெடுத்தவருக்கே உரியதாகும்.

ஹதீஸ் 2429. ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் கண்டெடுக்கப்பட்ட பொருளைப் பற்றிக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள், அதன் பையையும் (உறையையும்) முடிச்சையும் (மூடியையும்) அடையாளம் பார்த்து வைத்துக் கொள். பிறகு, ஒரு வருட காலத்திற்கு அதைப் பற்றி அறிவிப்புச் செய்து கொண்டேயிரு. அதன் உரிமையாளர் வந்தால் கொடுத்து விடு. இல்லையென்றால் உன் விருப்பப்படி அதைப் பயன்படுத்திக் கொள்' என்றார்கள். அந்த மனிதர், வழி தவறி வந்த ஆட்டை என்ன செய்வது? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், அது உனக்குரியது அல்லது உன் சகோதரருக்குரியது அல்லது ஓநாய்க்கு உரியது!என்று கூறினார்கள். அந்த மனிதர், வழி தவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், உனக்கும் அதற்கும் என்ன தொடர்பு? அதனுடன் அதன் தண்ணீர்ப்பையும் (வயிறும்) அன் குளம்பும் உள்ளது. அதை அதன் எஜமான் சந்திக்கும் வரை அது நீர் நிலைக்குச் செல்கிறது (அங்கு தண்ணீர் குடித்துத் தாகம் தணித்துக் கொள்கிறது) மரத்திலிருந்து (அதன் இலைகளைத்) தின்கிறது' என்று கூறினார்கள்.

## ஒருவருக்கு உடலில் மரக்கட்டையோ ஒரு சாட்டையோ அல்லது அது போன்ற ஏதேனும் ஒரு பொருளோ கிடைத்தால்...

ஹதீஸ் 2430. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பனு இஸ்ராயீல்களில் ஒரு மனிதரை நினைவு கூர்ந்தார்கள். அந்த மனிதர் கடலில் தன்னுடைய செல்வத்துடன் வாகனம் ஏதும் வருகிறதா என்று கவனிப்பதற்காகப்

புறப்பட்டார். அப்போது ஒரு மரத்துண்டை (கரையில் ஒதுங்கக்) கண்டார். அதைத் தன் குடும்பத்தினருக்கு விறகாகப் பயன்படட்டும் என்று எடுத்தார். அதை அவர் பிளந்துபோது தன் செல்வத்தையும் (அதை வைத்து அனுப்பியவரின்) கடிதத்தையும் (அதனுள்) கண்டார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) ஹதீஸ் முழுவதையும் கூறினார்கள்.

## பாதையில் ஒரு பேரீச்சம் பழத்தைக் கண்டால்...

ஹதீஸ் 2431. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பாதையில் கிடந்த ஒரு பேரீச்சம் பழத்தைக் கடந்து சென்றார்கள். இது சதகா(தர்ம)ப் பொருளாக இருக்குமோ என்ற அச்சம் எனக்கில்லாவிட்டால் இதை நான் தினறிருப்பேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2432. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் என் வீட்டாரிடம் திரும்பி விடுகிறேன். என் படுக்கையின் மீது பேரீச்சம் பழம் விழுந்திருப்பதைப் பார்த்து அதைத் தின்பதற்காக எடுக்கிறேன். அதற்குள் அது சதகாப் பொருளாக இருக்குமோ என்னும் அச்சம் எனக்கு ஏற்படுகிறது உடனே அதைப் போட்டு விடுகிறேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## மக்காவாசிகளின் (தொலைந்து போன) பொருள் கண்டெடுக்கப்பட்டால் அதை எப்படி அறிவிப்புச் செய்வது?

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

“மக்காவில் கீழே கேட்பாரின்றி விழுந்து கிடக்கும் பொருளை அதைப் பற்றி அறிவிப்புச் செய்பவரைத் தவிர வேறெவரும் கண்டெடுக்கக் கூடாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2433. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அதன் (மக்காவின்) மரங்களை வெட்டக்கூடாது. அதன் வேட்டைப் பிராணிகளை விரட்டியடிக்கக் கூடாது. அதில் கண்டெடுக்கப்படும் (கேட்பாரற்ற) பொருள் அதைப் பற்றி அறிவிப்புச் செய்பவருக்கே தவிர வேறெவருக்கும் அனுமதிக்கப்பட்டதல்ல. அதன் புல்பூண்டுகளைக் கிள்ளவும் கூடாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே அப்பாஸ்(ரலி), இறைத்தூதர் அவர்களே! இத்கிரைத் தவிரவா? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இத்கிரைத் தவிரத் தான்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2434. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அல்லாஹு தஆலா தன் தூதருக்கு மக்கா நகர வெற்றியை அளித்தபோது அவர்கள் மக்கா மத்தியில் நின்று அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டு, அல்லாஹு தஆலா மக்காவை (துவம்சம் செய்வதை)விட்டு யானை(ப் படை)யைத் தடுத்தான். அதன் மீது (தற்போது) தன் தூதருக்கும் (எனக்கும்) இறைநம்பிக்கையாளர்களுக்கும் அதிகாரம் வழங்கியுள்ளான். இந்த மக்கா நகரில் எனக்கு முன்பும் எவருக்கும் போரிடுவதற்கு அனுமதியளிக்கப்பட்டதில்லை. எனக்கும் கூட (இதில் போரிடுவதற்கு) பகலின் ஒரு சிறிது நேரத்தில் மட்டுமே அனுமதி வழங்கப்பட்டது. எனக்குப் பின்பும் அது எவருக்கும் அனுமதிக்கப்படவில்லை.

இதன் வேட்டைப் பிராணிகள் விரட்டப்படக் கூடாது. இதன் முட்கள் பிடுங்கப்படக் கூடாது. இதில் கீழே விழுந்து கிடக்கும் பொருளை (எடுத்து வைத்துக் கொள்வது) அதை அறிவிப்புச் செய்பவருக்கே தவிர வேறெவருக்கும் அனுமதிக்கப்படாது. எவருக்குக் கொல்லப்பட்ட தன் உறவினர் தொடர்பான உரிமை இருக்கிறதோ அவர் இரண்டு விஷயங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஒன்று, அவர் நஷ்ட ஈட்டுத் தொகை பெறலாம் அல்லது அதற்காகப் பழிவாங்கிக் கொள்ளலாம்' என்று கூறினார்கள். அப்பாஸ்(ரலி), இத்கிர் புல்லைத் தவிரவா? ஏனெனில், அதை நாங்கள் எங்கள் கப்ருகளுக்கும் வீடுகளுக்கும் பயன்படுத்துகிறோம்' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், இத்கிர் புல்லைத் தவிரத்தான்' என்று கூறினார்கள். அப்போது யமன்வாசிகளில் ஒருவரான அபூ ஷாஹ்(ரலி) என்பவர் எழுந்து, இறைத்தூதர் அவர்களே! (இதை) எனக்கு எழுதிக் கொடுங்கள்' என்று கேட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அபூ ஷாஹுக்கு எழுதிக் கொடுங்கள்' என்று உத்தரவிட்டார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான வலீத் இப்னு முஸ்லிம்(ரஹ்) கூறினார்:) நான் அவ்ஸாயீ(ரஹ்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! எனக்கு எழுதிக் கொடுங்கள் என்னும் அபூ ஷாஹ்(ரலி) அவர்களின் சொல் எதைக் குறிக்கிறது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அல்லாஹ்வின் தூதரிடமிருந்து அவர் கேட்ட இந்த உரையைத்தான் (எழுதிக் கொடுக்கச் சொன்னார்)' என்று பதிலளித்தார்கள்.

## ஒருவரின் கால்நடையில் அவரின் அனுமதியின்றி பால் கறப்பது கூடாது.

ஹதீஸ் 2435. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவரின் கால்நடையிடம் அவரின் அனுமதியின்றி எவரும் பால் கறக்க வேண்டாம். உங்களில் எவரும் அவரின் சரக்கு அறைக்கு ஒருவர் வந்து, அவரின் உணவுக் கருவூலத்தை உடைத்து, அவரின் உணவை எடுத்துச் சென்று விடுவதை விரும்புவாரா? இவ்வாறே, அவர்களின் (கால்நடை உரிமையாளர்களின்) கால் நடைகளுடைய மடிகள் அவர்களின் உணவையே சேகரித்துப் பாதுகாத்து வைத்திருக்கின்றன. எனவே, எவரும் ஒருவரின் கால்நடையிடம் அவரின் அனுமதியின்றிப் பால் கறக்க வேண்டாம்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## கண்டெடுக்கப்பட்ட பொருளின் உரிமையாளர் ஓராண்டு கழித்து வந்தால் அதை அவரிடம் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். ஏனெனில், அந்தப் பொருள் கண்டெடுத்தவரின் பொறுப்பிலிருந்து அடைக்கலப் பொருளாகும்.

ஹதீஸ் 2436. ஸைத் இப்னு காலித் அல்ஜுஹைனி(ரலி) அறிவித்தார்.

ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கண்டெடுக்கப்பட்ட பொருளைப் பற்றிக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள், அதைப் பற்றி ஓராண்டுக் காலத்திற்கு அறிவிப்புச் செய்து கொண்டேயிரு. பிறகு, அதன் முடிச்சையும் பை(உறை)யையும் அடையாளம் தெரிந்து வைத்துக் கொள். அதன் உரிமையாளர் வந்து அடையாளம் (சரியாகக்) கூறிவிட்டால் அதை அவரிடம் திருப்பிச் செலுத்திவிடு' என்று கூறினார்கள். அந்த மனிதர், இறைத்தூதர் அவர்களே! வழி தவறி வந்த ஆட்டை என்ன செய்வது? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், அதை எடுத்துக்கொள். ஏனெனில், அது உனக்குரியது அல்லது உன் சகோதரருக்குரியது அல்லது ஓநாய்க் குரியது' என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர், இறைத்தூதர் அவர்களே! வழி தவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது? என்று கேட்டார். இதைச் செவியுற்றவுடன் நபி(ஸல்) அவர்கள் கோபமடைந்தார்கள். எந்த அளவுக்கென்றால் அவர்களின் கன்னங்கள் இரண்டும்

சிவந்துவிட்டன் அல்லது அவர்களின் முகம் சிவந்துவிட்டது. பிறகு, உனக்கும் அதற்கும் என்ன தொடர்பு? அதன் எஜமான் அதைச் சந்திக்கும் வரை (தன்னைப் பசியிலிருந்தும் தாகத்திலிருந்தும் பாதுகாத்துக் கொள்ள (அதனுடன் அதன் குளம்பும் தண்ணீர்ப் பையும் இருக்கிறதே' என்று கூறினார்கள்.

## உரிமையில்லாதவர் கையில் சிக்கி வீணாம் விடாமல் இருப்பதற்காக, ஒருவர் தாம் கண்டெடுத்த பொருளைத் தம்மிடமே வைத்துக் கொள்ளலாமா?

ஹதீஸ் 2437. சுவைத் இப்னு க.ஃபலா(ரஹ்) கூறினார்.

நான் சல்மான் இப்னு ரபீஆ அல்பாஹிலீ(ரலி) அவர்களுடனும் ஸைத் இப்னு ஸூஹான்(ரலி) அவர்களுடனும் ஒரு போரில் பங்கெடுத்தபோது சாட்டை ஒன்றைக் கண்டேன். (என் தோழர்கள்) இருவரும், அதைப் போட்டு விடு' என்று கூறினார்கள். நான், இல்லை. இதன் உரிமையாளரைக் கண்டால் (இதைக் கொடுத்து விடுவேன்.) இல்லையென்றால் இதைப் பயன்படுத்திக் கொள்வேன்' என்று கூறினேன். நான் போரிலிருந்து திரும்பியபோது ஹஜ் செய்தேன். அப்போது மதீனா வழியாக நான் சென்றேன். அப்போது உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம் இது பற்றிக் கேட்டேன். அவர்கள் கூறினார்கள். நான், நபி(ஸல்) அவர்கள், ஒரு வருட காலத்திற்கு அதைப் பற்றி அறிவிப்புச் செய்' என்று கூறினார்கள். ஒரு வருடகாலம் அதைப் பற்றி அறிவிப்புச் செய்தேன். பிறகு மீண்டும் அவர்களிடம் சென்றேன். அப்போதும் அவர்கள், ஒரு வருட காலத்திற்கு அறிவிப்புச் செய்' என்று கூறினார்கள். அவ்வாறே நான் ஒரு வருட காலத்திற்கு அறிவிப்புச் செய்தேன். பிறகு திரும்பவும் அவர்களிடம் வந்தேன். அப்போதும் அவர்கள், ஒரு வருட காலத்திற்கு அறிவிப்புச் செய்' என்று கூறினார்கள். அவ்வாறே, நானும் ஒரு வருட காலத்திற்க அதைப் பற்றி அறிவிப்புச் செய்தேன். நான்காவது முறையாக, நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள், அதன் (பையிலுள்ள பணத்தின்) எண்ணிக்கையையும், முடிச்சையும், பையையும் அடையாளம் அறிந்து கொள். அதன் உரிமையாளர் வந்தால் அதை அவரிடம் கொடுத்துவிடு. இல்லையென்றால் அதை நீ பயன்படுத்திக்கொள்' என்று கூறினார்கள்.

## கண்டெடுக்கப்பட்ட பொருள் பற்றி அறிவிப்புச் செய்துவிட்டு ஆட்சியாளரிடம் அதை ஒப்படைக்காமல் இருத்தல்.

ஹதீஸ் 2438. ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்.

கிராமவாசி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கண்டெடுக்கப்பட்ட பொருளைப் பற்றிக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள், ஒரு வருட காலத்திற்கு அறிவிப்புச் செய். அதன் பை (உறை)யையும் முடிச்சையும் (அடையாளம்) தெரிவிக்கக் கூடியவர் எவரேனும் வந்தால் (அதை அவரிடம் ஒப்படைத்து விடு.) இல்லையென்றால் அதைச் செலவழித்துக் கொள்' என்று கூறினார்கள். பிறகு, அவர் நபி(ஸல்) அவர்களிடம் வழி தவறி வந்த ஒட்டகத்தைப் பற்றிக் கேட்டார். இதைக் கேட்டு நபியவர்களின் முகம் நிறம் மாறிவிட்டது. உனக்கும் அதற்கும் என்ன தொடர்பு? அதனுடன் அதன் தண்ணீர்ப் பையும் அதன் குளம்பும் உள்ளது. அது நீர் நிலைக்குச் செல்கிறது (அங்கே தாகம் தணித்துக் கொள்கிறது.) மரத்திலிருந்து (இலை தழைகளைத்) தின்கிறது. அதை அதன் எஜமான் அடைந்து கொள்ளும் வரை அதைவிட்டு விடு' என்று கூறினார்கள். அவர் நபி(ஸல்) அவர்களிடம் வழி தவறி வந்த ஆட்டைப் பற்றிக் கேட்டதற்கு, அது உனக்குரியது் அல்லது உன் சகோதரருக்குரியது் அல்லது ஓநாய்க்குரியது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2439. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 45 கண்டெடுக்கப்பட்ட பொருள்.

நான் நடந்து சென்று கொண்டிருந்தேன். என் முன்னே ஆடு மேய்ப்பவன் ஒருவனைக் கண்டேன். அவன் தன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு வந்து கொண்டிருந்தான். அவனிடம் நான்,நீ யாருடைய பணியாள்' என்று சொல்லி அவரின் பெயரைக் கூறினான். நான் அந்த மனிதரை அடையாளம் புரிந்து கொண்டேன். அவனிடம் நான்,உன் ஆடுகளிடம் பால் இருக்கிறதா? என்று கேட்டேன். அவன்,ஆம், இருக்கிறது' என்று பதிலளித்தான். நான் (பால் கறந்து கொடுக்கும்படி) அவனுக்கு உத்தரவிட்டேன். அவன் ஆடுகளில் ஒன்றைப் பிடித்துத் தொடைகளுக்கிடையே அழுத்தினான். (பால் கறக்கத் தயாரானான்.) பிறகு நான், ஆட்டின் மடியை (அதில் படிந்திருக்கும்) புழுதி போக உதறும்படி கட்டளையிட்டேன். பிறகு, அவனுடைய இருகைகளையும் (தூய்மைப்படுத்திக் கொள்வதற்காக) உதறும்படிக் கட்டளையிட்டேன். இப்படி உதறும்படி' என்று அபூ பக்ர்(ரலி) ஒரு கையை மற்றொரு கை மீது அடித்துக் காட்டினார்கள். (அவ்வாறே, அவனும் கைகளைத் தூய்மைப்படுத்தினான்.) பிறகு சிறிதளவும் (ஒரு சொம்பு) பால் கறந்தான். நான் நபி(ஸல்) அவர்களுக்காக ஒரு பாத்திரத்தை எடுத்து, அதில் பாலை ஊற்றி அதன் வாயை ஒரு துண்டுத் துணியால் மூடினேன். பிறகு அதன் (பால் பாத்திரத்தின்) அடிப்பகுதி குளிர்ந்து போகும் வரை அதன் மீது தண்ணீர் ஊற்றினேன். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! அருந்துங்கள்' என்று கூறினேன். நான் திருப்தியடையும் வரை (அதை) அவர்கள் அருந்தினார்கள்.

## அத்தியாயம் 46 அநீதிகளும் அபகரித்தலும்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

அல்லாஹ் கூறினான்.

இந்த அக்கிரமக்காரர்களின் செயல்களை அல்லாஹ் கவனிக்காமல் இருக்கிறான் என்று (நபியே!) நீங்கள் கருதவேண்டாம். அவர்களை அவன்விட்டு வைத்திருப்பது ஒரு குறிப்பிட்ட நாள் வரைக்கும் தான். அந்நாளில் அவர்களின் விழிகள் மருளும். அவர்கள் தம் தலைகளை மேலே உயர்த்திக் கொண்டு ஓடுவார்கள். அவர்களின் பார்வை நிலை குத்தியிருக்கும். மேலும், அவர்களின் இதயங்கள் சூனியமாம் விட்டிருக்கும் (திருக்குர்ஆன் 14:42, 43)

### அநீதிகளுக்காகப் பழிவாங்கல்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) வேதனை வரக்கூடிய அந்நாளைப் பற்றி மக்களுக்கு எச்சரிக்கை செய்வீராக! அன்று இந்த அக்கிரமக்காரர்கள் கூறுவார்கள்:

எங்கள் இறைவனே! இன்னும் சிறிது காலம் வரை எங்களுக்கு அவகாசம் அளிப்பாயாக! அவ்வாறு அளித்தல், உன்னுடைய அழைப்பினை நாங்கள் (விரைந்து) ஏற்றுக் கொள்வோம் மேலும், (உன்) தூதர்களையும் பின்பற்றுவோம்.

(அப்போது அவர்களுக்கு இவ்வாறு தெளிவாக பதில் கூறப்படும்:)எங்களுக்கு அழிவே இல்லை என்று இதற்கு முன்னர் (பலமுறை) சத்தியம் செய்து கூறிக் கொண்டிருந்தவர்கள் தாமே நீங்கள்! உண்மையில் தமக்குத் தாமே அநீதியிழைத்தவர்கள் வாழ்ந்த ஊர்களிலேயே நீங்கள் வசித்து வந்தீர்கள். அவர்களிடம் நாம் எவ்வாறு நடந்து கொண்டோம் என்பது உங்களுக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டிருந்தது. மேலும், அவர்களை உதாரணமாகக் கூறியும் உங்களுக்கு உண்மையைப் புரிய வைத்திருந்தோம். அவர்கள் வித விதமான சூழ்ச்சிகளைச் செய்து பார்த்தனர். அவர்களின் சூழ்ச்சிகள் மலைகளையே பெயர்த்து விடக் கூடியவையாக இருப்பினும் அவர்களின் ஒவ்வொரு சூழ்ச்சியையும் முறியடிக்கும் சூட்சுமம் அல்லாஹ்விடம் இருந்தது. (நபியே!) அல்லாஹ், தன் தூதர்களிடம் அளித்துள்ள வாக்குறுதிக்கு மாறு செய்வான் என்று ஒருபோதும் நீங்கள் கருத வேண்டாம். திண்ணமாக, அல்லாஹ் வல்லமையுடையவனும் பழி வாங்குபவனும் ஆவான். (திருக்குர்ஆன் 14:44-47)

ஹதீஸ் 2440. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர்கள் நரகத்திலிருந்து தப்பி வரும்போது சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையிலுள்ள ஒரு பாலத்தில் தடுத்து நிறுத்தப்படுவார்கள். அப்போது உலகில் (வாழ்ந்த போது) அவர்களுக்கிடையே நடந்த அநீதிகளுக்கு அந்தப் பாலத்திலேயே ஒருவருக்கொருவர் கணக்குத் தீர்த்துக் கொள்வார்கள். இறுதியில், அவர்கள் பாவங்களிலிருந்து நீங்கித் தூய்மையாகி விடும்போது சொர்க்கத்தில் நுழைய அவர்களுக்கு அனுமதி வழங்கப்படும். முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அவர்கள் சொர்க்கத்தில் உள்ள தம் வசிப்பிடத்தை, உலகில் அவர்களுக்கிருந்த இல்லத்தை விட எளிதாக அடையாளம் கண்டு கொள்வார்கள்.

என அபூ ஸயீத் அல்குத்ரி(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் கூறினான்:

எச்சரிக்கை! அக்கிரமக்காரர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும். (திருக்குர்ஆன் 11:18)

ஹதீஸ் 2441. ஸஃப்வான் இப்னு முஹ்ரிஸ் அல்மாஸினீ (ரஹ்) அறிவித்தார்.

நான் இப்னு உமர் (ரலி) அவர்களுடன், அவர்களின் கையைப் பிடித்தபடி சென்று கொண்டிருந்தபோது ஒருவர் குறுக்கிட்டு, (மறுமை நாளில் அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடியார்களுக்குமிடையே நடைபெறும்) இரகசியப் பேச்சு பற்றி அல்லாஹ்வின் தூதரிடமிருந்து என்ன செவியுற்றீர்கள்? என்று கேட்டதற்கு இப்னு உமர் (ரலி), அல்லாஹுதஆலா முஃமினைத் தன் பக்கம் நெருங்கச் செய்து, அவன் மீது தன் திரையைப் போட்டு அவனை மறைத்து விடுவான். பிறகு அவனை நோக்கி, நீ செய்த இன்ன பாவம் உனக்கு நினைவிருக்கிறதா? என்று கேட்பான். அதற்கு, அவன்ஆம், என் இறைவா! என்று கூறுவான். (இப்படி ஒவ்வொரு பாவமாக எடுத்துக் கூறி) அவன் (தான் செய்த) எல்லாப் பாவங்களையும் ஒப்புக் கொள்ளச் செய்வான். அந்த இறைநம்பிக்கையாளர், நாம் இத்தோடு ஒழிந்தோம் என்று தன்னைப் பற்றிக் கருதிக் கொண்டிருக்கும்போது இறைவன், இவற்றையெல்லாம் உலகில் நான் பிறருக்குத் தெரியாமல் மறைத்து வைத்திருந்தேன். இன்று உனக்கு அவற்றை மன்னித்து விடுகிறேன் என்று கூறுவான். அப்போது அவனுடைய நற்செயல்களின் பதிவேடு அவனிடம் கொடுக்கப்படும். நிராகரிப்பாளர்களையும், நயவஞ்சகர்களையும் நோக்கி சாட்சியாளர்கள், இவர்கள் தாம், தம் இறைவன் மீது பொய்யைப் புனைந்துரைத்தவர்கள். எச்சரிக்கை! இத்தகைய அக்கிரமக்காரர்களின் மீது இறைவனின் சாபம் உண்டாகும் என்று கூறுவார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்' என்று கூறினார்கள்.

## ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமுக்கு அநீதியிழைக்கவும் மாட்டான் அவனைக் கைவிடவும் மட்டான்.

ஹதீஸ் 2442. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு அநீதியிழைக்கவும் மாட்டான் அவனை (பிறரின் அநீதிக்கு ஆளாகும்படி) கைவிட்டு விடவும் மாட்டான். தன் சகோதரனின் தேவையை நிறைவு செய்வதில் ஈடுபட்டிருக்கிறரின் தேவையை நிறைவு செய்வதில் அல்லாஹ்வும் ஈடுபட்டிருக்கிறான். ஒரு முஸ்லிமின் ஒரு துன்பத்தை நீக்குகிறவரைவிட்டு அல்லாஹ்வும் மறுமை நாளின் துன்பங்களில் ஒரு துன்பத்தை நீக்குகிறான். ஒரு முஸ்லிமின் குறைகளை மறைக்கிறரின் குறைகளை மறுமை நாளில் அல்லாஹ்வும் மறைக்கின்றன.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## "உன் சகோதரன் அக்கிரமக்காரனாக இருந்தாலும் அக்கிரமத்துக்குள்ளானவனாக இருந்தாலும் அவனுக்கு உதவி செய்."

ஹதீஸ் 2443. உன் சகோதரன் அக்கிரமக்காரனாக இருக்கும் நிலையிலும் அக்கிரமத்துக்குள்ளான நிலையிலும் அவனுக்கு நீ உதவி செய் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2444. அனஸ் (ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி (ஸல்) அவர்கள், உன் சகோதரன் அக்கிரமக்காரனாக இருக்கும் நிலையிலும் அக்கிரமத்துக்குள்ளானவனாக இருக்கும் நிலையிலும் அவனுக்கு உதவி செய்' என்று கூறினார்கள். மக்கள், இறைத்தூதர் அவர்களே! அக்கிரமத்துக்குள்ளானவனுக்கு நாங்கள் உதவுவோம். அக்கிரமக்காரனுக்கு நாங்கள் எப்படி உதவுவோம்? என்று கேட்டனர். நபி (ஸல்)

அவர்கள்,அவனுடைய கைகளைப் பிடித்து (அக்கிரமம் செய்யவிடாமல் தடுத்து)க் கொள்வாய் (இதுவே, நீ அவனுக்குச் செய்யும் உதவி)' என்று கூறினார்கள்.

## அக்கிரமத்திற்குள்ளானவருக்கு உதவுதல்.

ஹதீஸ் 2445. பராஉ பின் ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஏழு செயல்களைச் செய்யும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்கள் ஏழு செயல்களிலிருந்து எங்களைத் தடுத்தார்கள். அவை (செய்யும்படிக் கட்டளையிட்ட ஏழு செயல்கள்) இவை தாம்

1. நோயாளிகளை நலம் விசாரிப்பது.

2. ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வது.

3. தும்மியவருக்கு அவர்,அல்ஹம்துலில்லாஹ் ('அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று) சொன்னால்,யர்ஹமுக்கல்லாஹ் (அல்லாஹ் உமக்குக் கருணை புரிவானாக!) என்று பிரார்த்திப்பது.

4. சலாமுக்கு (முகமனுக்கு) பதிலுரைப்பது.

5. அக்கிரமத்திற்குள்ளானவருக்கு உதவுவது.

6. விருந்துக்காக அழைப்பவரின் அழைப்பை ஏற்றுக் கொள்வது.

7. சத்தியம் செய்தவரின் சத்தியத்தை நிறைவேற்ற உதவுவது. 1

ஹதீஸ் 2446. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர்கள் ஒருவருக்கொருவர் (துணை நிற்கும் விஷயத்தில்) ஒரு கட்டடத்தைப் போன்றவர்கள் ஆவர். அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு வலுவூட்டுகிறது.

(இப்படிக் கூறும்போது) நபி(ஸல்) அவர்கள் தங்களின் கைவிரல்களை ஒன்றோடொன்று கோர்த்துக் காண்பித்தார்கள்.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## அக்கிரமக்காரனைப் பழிவாங்குதல்.

அல்லாஹ் கூறினான்:

அநீதி இழைக்கப்பட்டவனைத் தவிர வேறு யாரும் தீங்கான சொற்களை வெளிப்படையாகப் பேசுவதை அல்லாஹ் விரும்புவதில்லை. மேலும், அல்லாஹ் அனைத்தையும் செவியுறுவோனாகவும், நன்கறிவோனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:148)

மேலும், அவர்கள் (நம்பிக்கையாளர்கள்) தங்களின் மீது அநீதியிழைக்கப்படும்போது அதை எதிர்த்துப் போராடுகிறார்கள். (திருக்குர்ஆன் 42:39)

"அவர்கள் இழிவுப்படுத்தப்படுவதை வெறுப்பவர்களாக இருந்தனர். அவர்கள் பழிவாங்கும் சக்தியுடையவர்களாக மாறும்போது மன்னித்து விடுவார்கள்' என்று இப்ராஹீம் நகயீ(ரஹ்) (இந்த வசனத்திற்கு விளக்கம்) கூறினார்கள்.

## அக்கிரமக்காரனை மன்னித்தல்.

அல்லாஹ் கூறினான்:

ஆனால், நீங்கள் வெளிப்படையாகவும் மறைவாகவும் நற்செயலைச் செய்த வண்ணம் இருந்தால், அல்லது குறைந்த பட்சம் அக்கிரமக்காரர்களின் தீங்கை மன்னித்துவிட்டால் (தண்டனை வழங்க) அவன் முழு ஆற்றல் பெற்றிருக்கிறான். (என்றாலும்) அவன் பெரிதும் மன்னிப்பவனாக இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:149)

தீமையின் பலன் அதே போன்ற தீமையே ஆகும். இனி, மன்னிக்கிறவர் மேலும், சீர்திருத்தம் செய்கிறவருக்குரிய நற்பலன் அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது. திண்ணமாக, அல்லாஹ் கொடுமைக்காரர்களை நேசிப்பதில்லை. தம் மீது கொடுமை இழைக்கப்பட்ட பின் வாங்குகிறவர்களின் மீது ஆட்சேபனை கூற முடியாது. ஆட்சேபணைக்குரியவர்கள் யாரெனில், இதர மக்களின் மீது கொடுமை இழைப்பவர்களும் இன்னும், நியாயமின்றி பூமியில் வரம்பு மீறிய செயல் புரிபவர்களும் தாம். அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை இருக்கிறது. ஆயினும், பொறுமையை மேற்கொண்டு, மன்னித்தும் விடுகிறவர்களின் இச்செயல் நிச்சயமாக உறுதிமிக்க (வீரச்) செயலைச் சேர்ந்ததாகும்...

ஒருவரை அல்லாஹ் வழிகேட்டில் ஆழ்த்திவிட்டால் அவரைப் பாதுகாப்பவன் அல்லாஹ்வுக்குப் பிறகு வேறு யாரும் இல்லை. இந்த அக்கிரமக்காரர்கள் வேதனையைப் பார்க்கும்போது, இனி, உலக வாழ்விற்குத் திரும்பச் செல்வதற்கு ஏதேனும் வழி இருக்கிறதா? என்று கேட்பதை நீர் காண்பீர். (திருக்குர்ஆன் 42: 40-44)

## அநீதி, மறுமை நாளில் பல இருள்களாகக் காட்சி தரும்.

ஹதீஸ் 2447. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அநீதி, மறுமை நாளில் பல இருள்களாகக் காட்சி தரும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## அநீதியிழைக்கப்பட்டவரின் முறையீட்டு(சாப)ப் பிரார்த்தனைக்கு அஞ்சுவதும் அதைத் தவிர்ப்பதும்.

ஹதீஸ் 2448. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அநீதியிழைக்கப்பட்டவரின் சாபத்திற்கு (உங்களால் அநீதிக்கு ஆளானவர் இறைவனிடம் உங்கள் அநீதியைக் குறித்து முறையிட்டு உங்களுக்குக் கேடாகப் பிரார்த்தனை புரிபவதைப் பற்றி) அஞ்சுங்கள். ஏனெனில், அதற்கும் அல்லாஹ்வுக்கும் இடையே எந்தத் திரையும் இல்லை' என்று நபி(ஸல்) அவர்கள் முஆத்(ரலி) யமன் நாட்டுக்கு (ஆளுநராக) அனுப்பி வைத்தபோது கூறினார்கள்.

## ஒருவர் ஒரு மனிதருக்கு அநீதியிழைத்திருந்து அதை அவர் மன்னிக்க முன்வந்தால் (அப்படி மன்னிக்கும்போது அநீதியிழைத்தவர்)தான் செய்த அநீதியை இன்னதென்று தெளிவாகக் கூற வேண்டுமா?

ஹதீஸ் 2449. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர், தன் சகோதரனுக்கு அவனுடைய மானத்திலோ, வேறு (பணம், சொத்து போன்ற) விஷயத்திலோ, இழைத்த அநீதி (ஏதும் பரிகாரம் காணப்படாமல்) இருக்குமாயின், அவர் அவனிடமிருந்து அதற்கு இன்றே மன்னிப்புப் பெறட்டும். தீனாரோ, திர்ஹமோ (பொற்காசுகளோ வெள்ளிக் காசுகளோ) பயன் தரும் வாய்ப்பில்லாத நிலை (ஏற்படும் மறுமை நாள்) வருவதற்கு முன்னால் (மன்னிப்புப் பெறட்டும்.)2 (ஏனெனில், மறுமை நாளில்) அவரிடம் நற்செயல் ஏதும் இருக்குமாயின் அவனுடைய அநீதியின் அளவுக்கு அவரிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டு

(அநீதிக்குள்ளானவரின் கணக்கில் வரவு வைக்கப்பட்டு) விடும். அநீதியிழைத்தவரிடம் நற்செயல்கள் எதுவும் இல்லையென்றால் அவரின் தோழரின் (அநீதிக்குள்ளானவரின்) தீய செயல்கள் (அவர் கணக்கிலிருந்து) எடுக்கப்பட்டு அநீதியிழைத்தவரின் மீது சுமத்தப்பட்டு விடும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## ஒருவர் தனக்கு இழைக்கப்பட்ட அநீதியை அல்லது தன்னுடைய உரிமையை மன்னித்துவிட்ட பிறகு மன்னிப்பைத் திரும்பப் பெறக் கூடாது.

ஹதீஸ் 2450. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்.

ஒரு பெண் தன் கணவன் தன்னிடம் நல்லமுறையில் நடந்து கொள்ள மாட்டான் என்றோ, (தன்னைப்) புறக்கணித்து விடுவான் என்றோ அஞ்சினால் கணவன் மனைவி இருவரும் (தம் உரிமைகளில் சிலவற்றைப் பரஸ்பரம்விட்டுக் கொடுத்து) தமக்கிடையே சமாதானம் செய்து கொள்வதில் தவறேதும் இல்லை' என்கிற திருக்குர்ஆனின் (திருக்குர்ஆன் 04:128 ஆம்) வசனத்தைப் பற்றி ஆயிஷா (ரலி) கூறும்போது, ஒருவர் தன் மனைவியிடம் (தாம்பத்திய) உறவை நாடி அதிகமாக வந்து செல்லாமல் தன் மனைவியைப் பிரிந்து (எவனுடைய நாளில் வேறொரு மனைவியிடம் சென்று) விட வேண்டும் என்று விரும்புகிற நிலையில் அவரின் மனைவிஎன் (தாம்பத்திய உரிமைகள்) விஷயத்தில் (நான்விட்டுக் கொடுத்து) உம்மை மன்னித்து விடுகிறேன் என்று கூறினார். அப்போதுதான் இந்த இறைவசனம் அருளப்பட்டது' என்று குறிப்பிட்டார்கள்.

## ஒருவர் தனக்குக் கிடைக்க வேண்டிய உரிமையை மன்னித்தார். ஆனால், மன்னிக்கும்போது, தன்னுடைய அந்த உரிமை எவ்வளவு என்று குறிப்பிடவில்லை என்றால்... (செல்லுமா?)

ஹதீஸ் 2451. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு பானம் (பால்) கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்களின் வலப்பக்கம் ஒரு சிறுவரும் இடப் பக்கம் வயது முதிர்ந்தவர்களும் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் அந்தச் சிறுவரிடம், (இந்த பானத்தை) இவர்களிடம் (வயது முதிர்ந்தவர்களிடம்) கொடுக்க நீ எனக்கு அனுமதி தருவாயா? என்று கேட்டார்கள். அந்தச் சிறுவர், மாட்டேன், இறைவன் மீதாணையாக! இறைத்தூதர் அவர்களே! தங்களிடமிருந்து (எனக்குக் கிடைக்கக் கூடிய) என் பங்கை எவருக்கும் நான்விட்டுக் கொடுக்க மாட்டேன்' என்று கூறினார். எனவே, இறைத்தூதர் அச்சிறுவரின் கரத்தில் அந்த பானத்தை வைத்தார்கள்.

## (பிறரின்) நிலத்தில் ஒரு பகுதியை அபகரித்தவனின் பாவம்.

ஹதீஸ் 2452. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிறரின் நிலத்தில் ஒரு பகுதியை அபகரித்தவர் ஏழு நிலங்களை (மறுமையில்) கழுத்தில் மாலையாகக் கட்டித் தொங்க விடப்படுவார்.

என ஸயீத் இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2453. அபூ ஸலமா (ரலி) அறிவித்தார்.

எனக்கும் வேறு சிலருக்கும் இடையே ஒரு நிலம் சம்பந்தமான தகராறு இருந்து வந்தது. அதை நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் கூறினேன். அவர்கள் சொன்னார்கள் அபூ ஸலமாவே! (பிறரின்) நிலத்தை (எடுத்துக் கொள்வதைத்) தவிர்த்துக் கொள்ளுங்கள். ஏனெனில், நபி (ஸல்)

அவர்கள்,ஓர் அங்குலம் அளவு நிலத்தை அநியாயமாக அபகரித்துக் கொள்கிறவரின் கழுத்தில் ஏழு நிலங்கள் மாலையாக (மறுமையில்) கட்டித் தொங்க விடப்படும்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2454. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஒரு நிலத்திலிருந்து ஒரு பகுதியைத் தனக்கு உரிமையின்றி எடுத்துக் கொண்டவன் மறுமை நாளில் ஏழு பூமிகளுக்குக் கீழே அழுந்திப் போய் விடுவான்.

இதைஇப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## இருவருக்கு (கூட்டு) உரிமையுள்ள ஒரு விசயத்தில் ஒருவர் மற்றவருக்க சற்று அதிகமாகப் பயன் பெற அனுமதியளித்தால் அது செல்லும்.

ஹதீஸ் 2455. ஜபலா இப்னு ஸுஹைம்(ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் இராக்வாசிகள் சிலருடன் மதீனாவில் இருந்தோம். எங்களைப் பஞ்சம் தீண்டியது. எனவே, இப்னு ஸுபைர்(ரலி) எங்களுக்குப் பேரீச்சம் பழங்களைக் கொடுத்து வந்தார்கள். (அதை நாங்கள் கூடி அமர்ந்து உண்ணும்போது இப்னு உமர்(ரலி) எங்களைக் கடந்து செல்வார்கள். அப்போது,இறைத்தூதர் இரண்டு பேரீச்சம் பழங்களை ஒன்றாகச் சேர்த்து உண்பதைத் தடை செய்தார்கள் உங்களில் (அப்படிச் சேர்த்து உண்ண விரும்பும்) அந்த மனிதர் தன் சகோதரிடம் அனுமதி பெற்றாலே தவிர‘ என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 2456. அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

‘அபூ ஷுஐப் என்றழைக்கப்பட்ட அன்சாரித் தோழர் ஒருவருக்கு இறைச்சிக் கடை வைத்திருந்த ஊழியர் ஒருவர் இருந்தார். அவரிடம் அபூ ஷுஐப்(ரலி),எனக்கு ஐந்து பேருக்கான உணவைத் தயார் செய். நான் ஐந்தாவதாக நபி(ஸல்) அவர்களை அழைக்கக்கூடும்‘ என்று கூறினார். அவர்கள் நபி(ஸல்) அவர்களின் திருமுகத்தில் பசியின் அடையாள(மாக வாட்ட)த்தைப் பார்த்திருந்தார்கள். எனவே, அவர்களை விருந்துக்கு அழைத்தார்கள். நபி(ஸல்) அவர்களுடனும் அவர்களுடன் வந்திருந்தவர்களுடனும் விருந்துக்கு அழைக்கப்படாத ஒருவர் சேர்ந்தார். எனவே, நபி(ஸல்) அவர்கள் (அபூ ஷுஐப்(ரலி) அவர்களிடம்),இவர் எங்களைப் பின்தொடர்ந்து வந்துவிட்டார். இவருக்கு (இந்த விருந்தில் கலந்து கொள்ள) நீங்கள் அனுமதியளிக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்ஆம் (அனுமதியளிக்கிறேன்)‘ என்று பதில் கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்

அவன் மிகவும் சச்சரவு செய்யும் (சண்டை பிடிக்கும்) வழக்கமுடையவனாக இருக்கிறான். (திருக்குர்ஆன் 02:204)

ஹதீஸ் 2457. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்விடம் மனிதர்களிலேயே மிகவும் வெறுப்புக்குரியவன் கடுமையாக (எப்போது பார்த்தாலும்) சச்சரவு செய்து கொண்டிருப்பவனேயாவான்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## அறிந்து கொண்டே தவறுக்காக வழக்காடுபவனின் பாவம்.

ஹதீஸ் 2458. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் அறையின் வாசலுக்கருகே (சிலர்) சச்சரவிட்டுக் கொண்டிருந்ததைச் செவியுற்றார்கள். அவர்களிடம் சென்று,நான் ஒரு மனிதனே. என்னிடம் வழக்காடுபவர்கள் வருகிறார்கள். உங்களில் ஒருவர் மற்றவரை விட வாக்கு சாதுர்யம்.

மிக்கவராக இருக்கலாம். அவர்தான் உண்மையைப் பேசியுள்ளார் என்று கருதி, நான் அவருக்கு சாதகமாகத் தீர்ப்பளித்து விடுவேனாயின், எவருக்கு ஒரு முஸ்லிமின் உரிமையை எடுத்துக் கொள்ளும்படி (யதார்த்த நிலை அறியாமல்) நான் தீர்ப்பளிக்கிறேனோ (அவருக்கு) அது நரக நெருப்பின் ஒரு துண்டேயாகும். அவன் (விரும்பினால்) அதை எடுத்துக் கொள்ளட்டும் அல்லது அதை (எடுத்துக் கொள்ளாமல்)விட்டு விடட்டும்' என்று கூறினார்கள்.

## "வழக்காடினால் அவமதிப்பான்"

ஹதீஸ் 2459. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான்கு குணங்கள் எவனிடத்தில் உள்ளனவோ அவன் நயவஞ்சகனாவான். அல்லது அந்த நான்கு குணங்களில் ஒரு குணம் அவனிடம் குடி கொண்டிருந்தாலும் அவன் அதைவிட்டுவிடும்வரை நயவஞ்சகத்தின் ஒரு குணம் அவனிடம் இருப்பதாகப் பொருள். (அந்த நான்கு குணங்கள் இவைதாம்:) அவன் பேசும்போது பொய் பேசுவான் வாக்களித்தால் மாறு செய்வான் ஒப்பந்தம் செய்தால் மோசடி செய்வான் வழக்காடினால் அவமதிப்பான்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## அபகரித்தவனின் பொருள் ஏதேனும் கிடைத்தால், பொருளை இழந்தவன், தான் இழந்த பொருளுக்குப் பதிலாக அதை எடுத்துக் கொள்ளல்.

"மேலும், நீங்கள் பழிவாங்கக் கருதினால் உங்களின் மீது எந்த அளவுக்கு அக்கிரமம் புரியப்பட்டதோ அதே அளவுக்குப் பழிவாங்குங்கள்!(திருக்குர்ஆன் 16:126) என்னும் திருக்குர்ஆன் வசனத்தை ஓதிவிட்டு இப்னு சீரின்(ரஹ்),இந்த வசனத்தில்ஆம்பூ என்னும் சொல் பதிலாக எடுத்துக் கொள்வதைக் குறிக்கிறது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2460. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹிந்த் பின்த்து உத்பா(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) அபூ சுஃப்யான் மிகவும் கருமியாக இருக்கிறார். அவரின் பணத்திலிருந்து (அவருக்குத் தெரியாமல் எடுத்து) எங்கள் குழந்தை குட்டிகளுக்கு உணவளிப்பதால் என் மீது குற்றம் ஏதும் உண்டா? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,நியாயமான அளவிற்கு (உன் கணவனின் பணத்தை எடுத்து) அவர்களுக்கு உணவளிப்பதால் உன் மீது குற்றம் எதுவும் இல்லை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2461. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம்,தாங்கள் எங்களை ஒரு சமூகத்திடம் அனுப்புகிறீர்கள் நாங்களும் (தங்கள் கட்டளையை ஏற்று) அங்கு செல்கிறோம் (ஆனால்,) அவர்கள் எங்களுக்கு விருந்துபசாரம் செய்ய மறுக்கிறார்கள் எனில், அது குறித்து தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? என்று கேட்டோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் ஒரு சமூகத்திடம் சென்று விருந்தினர்களுக்குத் தேவையான வசதிகளை உங்களுக்குச் செய்து தர ஏற்பாடு செய்யப்பட்டால் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். அவர்கள் அப்படிச் செய்யவில்லையென்றால் அவர்களிடமிருந்து விருந்தனரின் உரிமையை (நீங்களாகவே) எடுத்துக்கொள்ளுங்கள்' என்று எங்களுக்கு பதில் தந்தார்கள்.

## சாவடிகள்.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் பனு சாயிதா குலத்தாரின் சாவடியில் அமர்ந்தார்கள்.

ஹதீஸ் 2462. உமர்(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ், நபி(ஸல்) அவர்களை மரணிக்கச் செய்தபோது, அன்சாரிகள் பனுசாயிதா சாவடியில் ஒன்றுகூடிவிட்டார்கள். நான் அபூ பக்ரு(ரலி) அவர்களை,எங்களுடன் வாருங்கள்' என்று அழைத்தேன். நாங்கள் அன்சாரிகளிடம் பனு சாயிதா (குலத்தாரின் பஞ்சாயத்துச்) சாவடிக்குச் சென்றோம். 5

## "ஒருவர், தன் (வீட்டுச்) சுவரில் தன்னுடைய அண்டை வீட்டுக்காரர் மரக்கட்டையைப் பதிப்பதைத் தடுக்கலாகாது."

ஹதீஸ் 2463. அப்துர் ரஹ்மான் இப்னு ஹுர் முஸ்அல் அஃரஜ்(ரஹ்) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,ஒருவர், தன் (வீட்டுச்) சுவரில், தன் அண்டை வீட்டுக்காரர் மரக்கட்டை (அல்லது உத்திரம், கர்டர், பரண் போன்ற எதையும்) பதிப்பதைத் தடுக்க வேண்டாம்' என்று கூறினார்கள் என்று சொல்லிவிட்டு, அபூ ஹுரைரா(ரலி),என்ன இது? உங்களை இதை (நபியவர்களின் இந்தக் கட்டளையைப்) புறக்கணிப்பவர்களாக நான் பார்க்கிறேனே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இந்த நபிவாக்கைத் தொடர்ந்து எடுத்துச் சொல்லிக் கொண்டேயிருப்பேன்' என்று கூறுவார்கள். 6

## சாலையில் மதுவை ஊற்றுவது.

ஹதீஸ் 2464. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நான் அபூ தல்ஹா(ரலி) வீட்டில் மக்களுக்கு மது பரிமாறுபவனாக இருந்தேன். 7 அந்த நாள்களில் பேரீச்சம் பழ மதுவை (பேரீச்ச மரக்கள்ளை)யே அவர்கள் குடித்து வந்தனர். (மதுவைத் தடை செய்யும் இறைவசனம் அருளப்பட்டவுடன்), இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பொது அறிவிப்புச் செய்பவரை அழைத்து,(மக்களே!) மது தடை செய்யப்பட்டுவிட்டது' என்று அறிவிக்கும்படி கட்டளையிட்டார்கள். அபூ தல்ஹா(ரலி) என்னிடம்,வெளியே சென்று இதை ஊற்றிவிடு' என்று கூறினார்கள். நான் வெளியே சென்று அதை (சாலையில்) ஊற்றி விட்டேன். மதீனா நகரின் தெருக்களில் அது ஓடியது. மக்களில் சிலர்,மது தங்கள் வயிறுகளில் இருக்கும் நிலையில் பல பேர் கொல்லப்பட்டிருக்கிறார்களே! (அவர்களின் நிலை என்ன?)' என்று கேட்டார்கள். அப்போதுதான்,இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிகிறவர்கள் (முன்னர்) எதையும் உண்டவை பற்றி அவர்களின் மீது குற்றமில்லை' (திருக்குர்ஆன் 05:93) என்னும் திருக்குர்ஆன் வசனம் அருளப்பட்டது. 8

## வீட்டு முற்றத்தில் அமர்வதும் பாதைகளில் அமர்வதும்.

ஆயிஷா(ரலி) கூறினார்.

அபூ பக்ர்(ரலி) தம் வீட்டின் முற்றத்தில் தொழும் இடத்தை அமைத்துக் கொண்டு, அதில் தொழுது கொண்டும் குர்ஆன் ஓதிக் கொண்டும் இருந்தார்கள். அவர்களின் குழந்தைகளும் அபூ பக்ர்(ரலி) அவர்களைச் சுற்றிலும் நெரிசலாகத் திரண்டு, அவர்களைக் கண்டு ஆச்சரியப்பட்டபடி நின்று கொண்டிருப்பார்கள். நபி(ஸல்) அவர்கள் அப்போது மக்கா நகரில் வசித்துக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 2465. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

"நீங்கள் சாலையில் அமர்வதைத் தவிருங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,எங்களுக்கு அங்கு அமர்வதைத் தவிர வேறு வழியில்லை அவைதாம், நாங்கள் பேசிக் கொள்கிற எங்கள் சபைகள்' என்று கூறினார்கள். நபி(ஸல்)

அவர்கள்,அப்படியென்றால் நீங்கள் அந்தச் சபைகளுக்கு வ(ந்து அம)ரும்போது, பாதைக்கு அதன் உரிமையைக் கொடுத்து விடுங்கள்' என்று கூறினார்கள். மக்கள்,பாதையின் உரிமை என்ன? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,(அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக் கொள்வதும் (பாதையில் செல்வோருக்குச் சொல்லாலோ செயலாலோ) துன்பம் தராமலிருப்பதும், சலாமுக்கு பதிலுரைப்பதும், நன்மை புரியும்படி கட்டளையிடுவதும், தீமையிலிருந்து தடுப்பதும் (அதன் உரிமைகள்) ஆகும்' என்று பதிலளித்தார்கள்.

## தொல்லை நேராத பட்சத்தில் பாதையில் கிணறுகள் இருக்கலாம்.

ஹதீஸ் 2466. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

"ஒருவர் ஒரு பாதையில் சென்று கொண்டிருந்தபோது அவருக்குக் கடும் தாகம் ஏற்பட்டது. (வழியில்) அவர் ஒரு கிணற்றைக் கண்டு அதில் இறங்கினார். (அதிலிருந்து) தண்ணீர் குடித்தார். பிறகு வெளியே வந்தார். அப்போது, தன் எதிரே நாய் ஒன்று தாகத்தால் (தவித்து) ஈரமண்ணை (நக்கி) உண்டு கொண்டிருப்பதைப் பார்த்தார். எனக்கு ஏற்பட்டது போன்ற (கடும்) தாகம் இந்த நாய்க்கும் ஏற்பட்டுள்ளது போலும் என்று (தன் மனத்திற்குள்) கூறினார். பிறகு கிணற்றில் இறங்கி, தன் காலுறையைத் தண்ணீரால் நிரப்பி (மேலே கொண்டு வந்து) அந்த நாய்க்குப் புகட்டினார். அல்லாஹ், அவரின் இந்த நற்செயலை அங்கீகரித்து அவருக்கு மன்னிப்பளித்தான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இதைச் செவியுற்ற மக்கள்,இறைத்தூதர் அவர்களே! கால்நடைகள் (மற்றுமுள்ள பிராணிகள்) விஷயத்திலுமா எங்களுக்குப் பிரதிபலன் உண்டு? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,உயிருள்ள பிராணி ஒவ்வொன்றின் விஷயத்திலும் (அதற்குக் கருணை காட்டினால்) உங்களுக்குப் பிரதிபலன் உண்டு' என்று பதிலளித்தார்கள்.

## தொல்லை தரும் பொருளை அகற்றுதல்.

"தொல்லை தரும் பொருளைப் பாதையிலிருந்து அகற்றுவது தர்மமாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## மேல்மாடங்கள் (உப்பரிகைகள்), மாடியறைகள், உயரமற்ற (தாழ்வான) மாடியறைகள் மற்றும் மேல்தளங்கள் முதலியவற்றில் வசிப்பது.

ஹதீஸ் 2467. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவின் கோட்டைகளில் ஒரு கோட்டையின் மீதிருந்து நோட்டமிட்டார்கள். பிறகு,நான் பார்ப்பதை நீங்கள் பார்க்கிறீர்களா? நான் உங்கள் வீடுகள் நெடும்லும் குழப்பங்கள் விளையவிருக்கும் இடங்களை மழைத்துளி விழும் இடங்களைப் (பார்ப்பதை) போன்று பார்க்கிறேன்' என்று கூறினார்கள். 8

ஹதீஸ் 2468. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களின் மனைவிமார்களில் இருவரைப் பற்றி உமர்(ரலி) அவர்களிடம் கேட்க வேண்டும் என்று ஆவல் கொண்டிருந்தேன். ஏனெனில், அவ்விருவரைப் பற்றித்தான் அல்லாஹ் (திருக்குர்ஆனில்),நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டால் (அது உங்களுக்குச் சிறந்ததாகும்.) ஏனெனில், உங்கள் உள்ளங்கள் நேரிய வழியிலிருந்து (சற்றே) பிறழ்ந்து விட்டிருக்கின்றன' (திருக்குர்ஆன் 66:04) என்று கூறியிருந்தான்.

(ஒரு முறை) உமர்(ரலி) அவர்களுடன் நான் ஹஜ் செய்தேன். அவர்கள் (மலஜலம் கழிப்பதற்காக) விலகிச் சென்றார்கள். நானும் அவர்களுடன் தண்ணீர்க் குவளையை எடுத்துக் கொண்டு விலகிச் சென்றேன். அவர்கள் மலஜலம் கழித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். நான் அவர்களின் கைகளில் குவளையிலிருந்த தண்ணீரை ஊற்றினேன். (அதில்) அவர்கள் உளூச் செய்தார்கள். அப்போது நான், விசுவாசிகளின் தலைவரே! நபி(ஸல்) அவர்களின் மனைவிமார்களில் இருவரைக் குறித்து, நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டால் (அது உங்களக்குச் சிறந்ததாகும்) என்று இறைவன் கூறியுள்ளானே, அந்த இருவர் யார்? என்று கேட்டேன். அதற்கு உமர்(ரலி), இப்னு அப்பாஸே! உங்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். (குர்ஆனின் விளக்கத்தில் பெரும் அறிஞரான உங்களுக்கு இது கூடவா தெரியாது?) ஆயிஷா(ரலி) அவர்களும் ஹஃப்ஸா(ரலி) அவர்களும் தான் அந்த இருவர்' என்று கூறினார்கள். பிறகு உமர்(ரலி) நடந்த நிகழ்ச்சி முழுவதையும் கூறலானார்கள். அப்போது அவர்கள் கூறினார்கள் நான் அன்சாரியான என் பக்கத்து வீட்டுக்காரர் ஒருவருடன் பனு உமய்யா இப்னு ஸைத் குலத்தாரின் குடியிருப்பில் வசித்து வந்தேன். அது மனீதாவை ஒட்டிய ஒரு குடிறியிருப்புப் பகுதியாகும். நாங்கள் இருவரும் முறை வைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் தங்குவோம். அவர் ஒரு நாள் நபி(ஸல்) அவர்களுடன் இருப்பார். நான் ஒரு நாள் நபி(ஸல்) அவர்களடன் இருப்பார். நான் ஒரு நாள் நபி(ஸல) அவர்களுடன் இருப்பேன். நான் நபி(ஸல்) அவர்களுடன் இருக்கும்போது நபி(ஸல்) அவர்களின் அன்றைய நாளின் கட்டளைகள், போதனைகளையும் பிறவற்றையும் அவரிடம் தெரிவிப்பேன். அவர் நபி(ஸல்) அவர்களுடன் இருக்கும்போது இதே போன்று அவரும் எனக்குத் தெரிவிப்பார். குறைஷிக் குலத்தினராகிய நாங்கள் பெண்களை மிஞ்சி விடுபவர்களாக இருந்து வந்தோம். (பெண்களை எங்கள் சொல்லுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக, எங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தோம்.) நாங்கள் அன்சாரிகளிடம் (மதீனா நகருக்கு) வந்தபோது பெண்கள் அவர்களை (ஆண்களை) மிஞ்சி விடக் கூடியவர்களாக இருக்கக் கண்டோம். (பெண்கள் ஆண்களைக் கட்டுப்படுத்துபவர்களாக, தம் மனத்திற்குப் பிடிக்காதவற்றைக் கூறும்போது ஆண்களை எதிர்த்துப் பேசக் கூடியவர்களாக இருக்கக் கண்டோம்.) (இதைக் கண்ட) எங்களுடைய பெண்களும் அன்சாரிப் பெண்களின் வழக்கத்தைப் பின்பற்றத் தொடங்கினார்கள். (ஒரு நாள்) நான் என் மனைவியிடம் (கோபத்துடன்) இரைந்து பேசினேன். அவள் என்னை எதிர்த்துப் பேசினாள், அவள் என்னை எதிர்த்துப் பேசுகிறார்கள். அவர்களில் சிலர் நபியவர்களிடம் ஒருநாள் முழுக்கவும் இரவு வரை பேசுவதில்லை' என்று கூறினாள். இதைக் கேட்டு நான் அச்சமுற்று, அவர்களில் இப்படிச் செய்தவர் பெரும் இழப்புக்கு ஆளாம்விட்டார்' என்று கூறினேன். பிறகு உடையணிந்து (என் மகள்) ஹஃப்ஸாவிடம் சென்றேன். ஹஃப்ஸாவே! உங்களில் சிலர் அல்லாஹ்வின் தூதரிடம் நாள் முழுக்க, இரவு வரை கோபமாக இருக்கிறார்களாமே! (உண்மையா?)' என்று கேட்டேன். அதற்கு அவர், ஆம்' என்று பதிலளித்தார். நான், அப்படி இருப்பவர் நஷ்டப்பட்டுவிட்டார் இழப்புக்குள்ளாம்விட்டார். இறைத் தூதருக்குக் கோபம் ஏற்பட்டால் அதனால் அல்லாஹ்வும் நம் மீது கோபமடைந்து நாம் அழிந்து போய்விடுவோம் என்னும் அச்சம் அவருக்கில்லையா? அல்லாஹ்வின் தூதரிடம் அதிகமாக (தேவைகளை) நீ கேட்காதே. எந்த விஷயத்திலும் அவர்களை எதிர்த்துப் பேசாதே. அவர்களிடம் பேசாமல் இருக்காதே. உனக்கு (அவசியத் தேவையென்று) தோன்றியதை என்னிடம் கேள். உன் அண்டை வீட்டுக்காரர் (ஆயிஷா(ரலி) உன்னை விட அழகு மிக்கவராகவும் அல்லாஹ்வின் தூதருக்குப் பிரியமானவராகவும் இருப்பதை வைத்து (அவர் நபியவர்களிடம் அதிக உரிமை எடுத்துக் கொண்டு ஊடலும் கோபமும் கொள்வதைப் பார்த்து) நீ ஏமாந்துவிடாதே' என்று (அறிவுரை) கூறினேன். அந்தக் காலகட்டத்தில் நாங்கள், கஸ்ஸானியர்கள் (ஷாம் நாட்டில் வாழும் ஒரு குலத்தினர்) எங்களின் மீது படையெடுப்பதற்காக, தங்கள் குதிரைகளுக்கு லாடம் அடித்துத் தயாராம்க்

கொண்டிருக்கின்றனர் என்று ஒரு (வதந்தியான) செய்தியைப் பேசிக் கொண்டிருந்தோம். என் அன்சாரித் தோழர் தம் முறை வந்தபோது, நபி(ஸல்) அவர்களிடம் சென்று தங்கி, இஷா நேரத்தில் திரும்பி வந்தார். என் வீட்டுக் கதவை பலமாகத் தட்டி,அவர் (உமர்) அங்கே இருக்கிறாரா? என்று கேட்டார். நான் அச்சமுற்று அவரைப் பாாக்க வெளியே வந்தேன். அவர்,மிகப் பெரிய ஒரு சம்பவம் நிகழ்ந்துவிட்டது' என்று கூறினார். நான்,என்ன அது? கஸ்ஸானியர்கள் (படையெடுத்து) வந்துவிட்டனரா? என்று கேட்டேன்.இல்லை. அதை விடப் பெரிய, அதை விட (அதிகக்) கவலைக்குரிய சம்பவம் நடந்துவிட்டது. இறைத்தூதர்(ஸல்) தம் மனைவிமார்களை விவாகரத்து (தலாக்) செய்துவிட்டார்கள்' என்று கூறினார். நான்,ஹஃப்ஸா நஷ்டமடைந்து பெரும் இழப்புக்குள்ளாம்விட்டாள். நான்இது (விரைவில் என்றாவது ஒரு நாள்) நடக்கத்தான் போகிறது என்று எண்ணியிருந்தேன்' என்று கூறிவிட்டு உடையணிந்து கொண்டு புறப்பட்டேன். நபி(ஸல்) அவர்களுடன் ஃபஜ்ருத் தொழுகை தொழுதேன். நபி(ஸல்) அவர்கள் தொழுகை முடிந்தவுடன் தம் மாடியறைக்குள் (சென்று) அங்கே தனியே இருந்தார்கள். நான் ஹஃப்ஸாவிடம் சென்றேன். அப்போது அவர் அழுது கொண்டிருந்தார். நான்,ஏன் அழுகிறாய்? நான் உன்னை எச்சரித்திருக்கவில்லையா? இறைத்தூதர்(ஸல்) உங்களை விவாகரத்து (தலாக்) செய்துவிட்டாரா? என்று கேட்டேன். அதற்கு அவர்,எனக்கொன்றும் தெரியாது. அவர் அந்த அறையில்தான் இருக்கிறார்' என்று கூறினார். நான் மிம்பருக்கருகில் சென்றேன். அதைச் சுற்றி ஒரு கூட்டத்தினர் அமர்ந்திருந்தனர். அவர்களில் சிலர் (கேள்விப்பட்ட செய்தியை எண்ணி) அழுது கொண்டிருந்தனர். அவர்களுடன் நான் சிறிது நேரம் அமர்ந்திருந்தேன். பிறகு நான் அந்த (துக்ககரமான) சூழ்நிலையத் தாங்க முடியாமல் நபியவர்கள் இருந்த அறைக்கு அருகே சென்றேன். அங்கிருந்த, நபி(ஸல்) அவர்களின் கறுப்பு அடிமையிடம்,உமருக்காக (எனக்காக) நபியவர்களிடம் (அறைக்குள் வர) அனுமதி கேள்' என்று சொன்னேன். அந்த அடிமை அறைக்கு உள்ளே சென்று நபி(ஸல்) அவர்களிடம் பேசிவிட்டுப் பிறகு வெளியே வந்து,உங்களைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கூறினேன். அவர்கள் மௌனமாக இருந்துவிட்டார்கள்' என்று கூறினார். எனவே, நான் திரும்பி வந்து மிம்பருக்கருகில் இருந்த கூட்டத்தினருடன் அமர்ந்து கொண்டேன். பின்னர், அங்கு நிலவிய (துக்ககரமான) சூழ்நிலையைத் தாங்க முடியாமல் மீண்டும் அந்த அடிமையிடம் சென்று,உமருக்காக நீ (நபி(ஸல்) அவர்களிடம் அவர்களின் அறைக்குள் வர) அனுமதி கேள்' என்று கூறினேன். அவர் (உள்ளே சென்று வந்து) முன்பு சொன்னதைப் போன்றே இப்போதும் கூறினார். நான் (மறுபடியும்) மிம்பருக்கருகில் இருந்த கூட்டத்தாருடன் அமர்ந்து கொண்டேன். மறுபடி அங்கு நான் கண்ட (கவலையான) சூழ்நிலையைத் தாங்க முடியாமல் அந்த அடிமையிடம் சென்று,உமருக்காக அனுமதி கேள்' என்று கூறினேன். அப்போதும் அந்த அடிமை முன் போன்றே கூறினார். நான் திரும்பிச் செல்ல இருந்தபோது அந்த அடிமை என்னை அழைத்து,உங்களுக்க இறைத்தூதர் அனுமதியளித்துவிட்டார்கள்' என்று கூறினார். உடனே, நான் நபி(ஸல்) அவர்களின் அறைக்குள் நுழைந்தேன். அப்போது அவர்கள் ஓர் ஈச்சம் பாயில் படுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கும் அந்தப் பாய்க்குமிடையே மெத்தை எதுவும் இருக்கவில்லை. எனவே, அவர்களின் விலாவில் அந்த ஈச்சம் பாய் அடையாளம் பதித்திருந்தது. அவர்கள் ஈச்ச நார்கள் அடைத்த தோல் தலையணை ஒன்றின் மீது சாய்ந்து அமர்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நான் சலாம் கூறினேன். பிறகு நான் நின்று கொண்டே,தங்கள் மனைவிமார்களை தாங்கள் தலாக் (விவாகரத்து) செய்து விட்டீர்களா? என்று கேட்டேன். அவர்கள் தங்களின் பார்வையை என் பக்கம் உயர்த்தி,இல்லை' என்று கூறினார்கள். பிறகு, நான் நின்று கொண்டே (அவர்களின் கோபத்தைக் குறைத்து) அவர்களை சகஜ நிலைக்குக் கொண்டுவர விரும்பி, பின்வருமாறு சொல்லத் தொடங்கினேன்: இறைத்தூதர் அவர்களே! நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். குறைஷிகளான நாங்கள் பெண்களை எங்கள் அதிகாரத்திற்குள் வைத்திருந்தோம். பெண்கள் ஆதிக்கம் செலுத்தும் ஒரு

கூட்டத்தாரிடம் (மதீனா வாசிகளிடம்) நாங்கள் வந்தபோது... (எங்கள் பெண்களும் அவர்களைப் பார்த்துக் கற்றுக் கொண்டு எங்களிடம் எதிர்த்துப் பேசத் தொடங்கினர்)... என்று தொடங்கி, (முன்பு இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் என் மனைவி பற்றிச் சொன்னவை) எல்லாவற்றையும் கூறினேன். (அதைக் கேட்டு) நபி(ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள். பிறகு நான் நபி(ஸல்) அவர்களிடம்,நான் ஹஃப்ஸாவிடம் சென்று,உன் அண்டை வீட்டுக்காரர் (ஆயிஷா(ரலி) உன்னை விட அழகானவராகவும் அல்லாஹ்வின் தூதருக்குப் பிரியமானவராகவும் இருப்பதை வைத்து (அவர் நபியவர்களிடம் அதிக உரிமை எடுத்துக் கொண்டு ஊடலும் கோபமும் கொள்வதைக் கண்டு) நீ ஏமாந்துவிடாதே என்று கூறியதைச் சொன்னேன். (இதை நான் சொல்லக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் இன்னொரு முறை புன்னகைத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் புன்னகைத்ததைக் கண்ட நான் அமர்ந்து கொண்டேன். பிறகு, நான் அவர்களின் அறையை என் பார்வையை உயர்த்தி நோட்டமிட்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! கண்ணைக் கவருகிற பொருள் எதையும் நான் அதில் காணவில்லை மூன்றே மூன்று (பதனிடப்படாத) தோல்களைத் தவிர அப்போது நான்,தங்கள் சமுதாயத்தினருக்கு உலகச் செல்வங்களை தாராளமாக வழங்கும்படி தாங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். ஏனெனில், பாரசீகர்களுக்கும் உலோமர்களுக்கும் - அவர்கள் அல்லாஹ்வை வணங்காதவர்களாக இருந்தும் (உலகச் செல்வங்கள்) தாரளமாக வழங்கப்பட்டிருக்கின்றனவே' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள் (தலையணை மீது) சாய்ந்து உட்கார்ந்து,கத்தாபின் மகனே! நீங்கள் சந்தேகத்தில் இருக்கிறீர்களா? அவர்கள், தம் (நற் செயல்களுக்கான) பிரதிபலன்கள் எல்லாம் இந்த உலக வாழ்விலேயே (மறுமை வாழ்வுக்கு) முன்னதாகக் கொடுக்கப்பட்டுவிட்டார்கள்' என்று கூறினார்கள். உடனே நான்,இறைத்தூதர் அவர்களே! (அவரசப்பட்டு இப்படிக் கேட்டதற்காக) எனக்காகப் பாவமன்னிப்புக் கோரிப் பிராந்தியுங்கள்' என்று கூறினேன்.

நபி(ஸல்) அவர்களின் அந்த இரகசியத்தை ஹஃப்ஸா(ரலி) ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறி பகிரங்கப்படுத்திவிட்டபோது, அதன் காரணத்தால்தான் நபி(ஸல்) அவர்கள் தம் மனைவிமார்களிடமிருந்து விலகித் தனிமையில் இருக்கத் தொடங்கினார்கள். மேலும்,அவர்களிடம் ஒரு மாத காலத்திற்கு செல்ல மாட்டேன்' என்றும் கூறியிருந்தார்கள். அல்லாஹ் அவர்களைக் கண்டித்தபோது தம் மனைவிமார்களின் மீது அவர்களுக்கு ஏற்பட்ட கடும் வருத்தமே இவ்வாறு அவர்கள் சொல்லக் காரணமாகும். இருபத்தொன்பது நாள்கள் கழிந்துவிட்ட பொழுது, நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று, அவர்களிலிருந்து (மற்ற மனைவிமார்களிடம் செல்லத்) தொடங்கினார்கள். ஆயிஷா(ரலி), அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம்,எங்களிடம் ஒரு மாத காலத்திற்கு வரப் போவதில்லை என்று நீங்கள் சத்தியம் செய்திருந்தீர்களே, நாங்கள் இருபத்தொன்பது இரவுகளல்லவா கழித்திருக்கிறோம்? (ஒரு நாள் முன்னதாக வந்து விட்டீர்களே!) அதை நான் ஒவ்வொரு நாளாக எண்ணிக் கொண்டே வருகிறேனே' என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,மாதம் என்பது (குறைந்த பட்சம்) இருபத்தொன்பது நாள்களும் தான்' என்று பதில் கூறினார்கள். அந்த மாதமும் இருபத்தொன்பது நாள்களாகவே இருந்தது.

ஆயிஷா(ரலி) கூறினார்:

அப்போதுதான், ('நபி(ஸல்) அவர்களுடன் வாழ்ந்து, அல்லது அவர்களின் மணபந்தத்திலிருந்து விலகி விடுவது ஆகிய இரண்டு விஷயங்களில்) நாங்கள் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி கட்டளையிடும் இறைவசனம் அருளப்பட்டது. எனவே, நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவிமார்களில் முதலாவதாக என்னிடம் தொடங்கி,உனக்கு ஒரு விஷயத்தைச் சொல்கிறேன் நீ உன் தாய் தந்தையரிடம் (அதற்காக) அனுமதி வாங்கும் வரை அவசரப்படத் தேவையில்லை' என்று கூறினார்கள். அதற்கு நான்,என் தாய் தந்தையர் தங்களைவிட்டுப்

பிரிந்து வாழும்படி ஒருபோதும் சொல்ல மாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும்' என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்கள்,நபியே! நீங்கள் உங்கள் மனைவிமார்களிடம் கூறிவிடுங்கள்:நீங்கள் உலக வாழ்வையும் அதன் அழகையும் விரும்புகிறீர்களென்றால் வாருங்கள். நான் ஏதேனும் சிலவற்றைக் கொடுத்து அழகிய முறையில் உங்களை அனுப்பி விடுகிறேன். ஆனால், நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுவுலகத்தையும் விரும்புகிறீர்கள் என்றால் (அறிந்து கொள்ளுங்கள்:) உங்களில் நற்செயல் புரிபவர்களுக்கு அல்லாஹ் மகத்தான பிரதிபலனைத் தயார் செய்து வைத்துள்ளான் என்று அல்லாஹ் கூறினான். (எனவே, உங்கள் முடிவு என்ன?)' என்று கேட்டார்கள். நான்,இந்த விஷயத்திலா என் தாய் தந்தையரிடம் நான் அனுமதி கேட்பேன். நானோ அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுமையையும்தான் விரும்புகிறேன்' என்றேன். பிறகு, தம் மனைவியர் அனைவருக்கும் ('தம்முடன் வாழ்வது, தம்மைவிட்டுப் பிரிவது ஆகிய இரண்டில்) விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை வழங்கினார்கள். அவர்கள் அனைவருமே நான் சொன்னது போன்றே சொன்னார்கள்.

ஹதீஸ் 2469. அனஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் மனைவிமார்களை ஒரு மாத காலத்திற்கு விலக்கி வைப்பதாக சத்தியம் செய்திருந்தார்கள். அவர்களின் கால் (நரம்பு) பிசகி விட்டிருந்தது எனவே, அவர்கள் தங்களின் மாடியறை ஒன்றில் அமர்ந்திருந்தார்கள். அப்போது உமர்(ரலி) வந்து,தாங்கள் தங்கள் மனைவிமார்களை விவாகரத்து (தலாக்) செய்து விட்டீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,இல்லை ஆனால், நான் அவர்களிடமிருந்து ஒரு மாதகாலம் விலகியிருப்பதாக சத்தியம் செய்துள்ளேன்' என்று கூறினார்கள் அவ்வாறே இருபத்தொன்பது நாள்கள் (அதில்) தங்கியிருந்தார்கள். பிறகு இறங்கி வந்து தம் மனைவிமார்களிடம் சென்றார்கள்.

## ஒருவர் தம் ஒட்டகத்தைப் பள்ளி வாசலின் முற்றத்தில் அல்லது பள்ளிவாசலின் வாயில் அருகே கட்டிவைப்பது.

ஹதீஸ் 2470. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் நுழைந்தார்கள். நானும் அவர்களைச் சந்திக்கப் பள்ளிவாசலில் நுழைந்தேன். ஒட்டகத்தை (மஸ்ஜிதுந் நபவி) பள்ளிவாசலின் முன்பு, கற்கள் பதிக்கப்பட்டிருந்த நடைபாதையில் கட்டி வைத்தேன். (நபியவர்களிடம் சென்று),இதோ, தங்கள் ஒட்டகம்' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள் வெளியே வந்து ஒட்டகத்தைச் சுற்றி உலாபத் தொடங்கினார்கள். ஒட்டகமும் (அதன்) விலையும் உனக்கே' என்று கூறினார்கள்.

## ஒரு சமுதாயத்தாரின் குப்பை மேட்டிற்கு அருகே நிற்பதும் (அங்கு) சிறுநீர் கழிப்பதும்.

ஹதீஸ் 2471. ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு குலத்தாரின் குப்பை மேட்டிற்கு வந்து, (அங்கு) நின்று சிறுநீர் கழித்தார்கள்.

"அல்லதுநபி(ஸல்) அவர்கள்... சிறுநீர் கழித்ததை பார்த்தேன் என்று ஹுதைஃபா(ரலி) கூறினார்' என்று அறிவிப்பாளர் அபூ வாயில்(ரஹ்) கூறினார்.

## பாதையில் மக்களுக்குத் தொல்லை தருகிற மரக்கிளை போன்ற பொருள்களை எடுத்து எறிந்து விடுதல்.

ஹதீஸ் 2472. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் ஒரு சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தபோது பாதையில் முட்கிளையொன்றைக் கண்டு அதை எடுத்து (எறிந்து)விட்டார். அவரின் இந்த நற்செயலை அல்லாஹ் அங்கீகரித்து அவருக்கு (அவர் செய்த பாவங்களிலிருந்து) மன்னிப்பு வழங்கினான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## விசாலமான பொதுப் பாதையில் எவ்வளவு வழிவிடுவது என்ற சச்சரவு எழுமானால், நிலத்தின் உரிமையாளர் அதில் கட்டடம் எதுவும் எழுப்ப விருமபினால் ஏழு முழங்கள் அளவிற்கு மக்களின் போக்குவரத்துப் பாதைக்காக இடம் விடவேண்டும்.

ஹதீஸ் 2473. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நடைபாதை விஷயத்தில் மக்கள் சச்சரவு செய்தபோது, ஏழு முழங்கள் நிலத்தைப் பொதுவழியாக (போக்குவரத்துச் சாலையாக)விட்டுவிட வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

## ஒருவரின் உடைமையை அவரின் அனுமதியின்றி அபகரித்துக் கொள்வது.

“நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம்,நாங்கள் (பணத்தைக்) கொள்ளையடிக்கவோ (பிறர் சொத்தை) அபகரிக்கவோ மாட்டோம்‘ என்று உறுதி மொழியளித்தோம்‘ என்று உபாதா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2474. அப்துல்லாஹ் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

கொள்ளையடிப்பதை (பிறர் பொருளை அவரின் அனுமதியின்றி பலவந்தமாக, பம்ரங்கமாக அபகரித்துக் கொள்வதை)யும் (போரின்போது அல்லது பகைமையின் காரணத்தால்) ஒருவரின் அங்கங்களைச் சிதைப்பதையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

ஹதீஸ் 2475. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“விபசாரி, விபசாரம் புரியும்போது இறைநம்பிக்கையாளனாக இருக்கும் நிலையில் விபசாரம் புரிவதில்லை. மேலும், ஒருவன் மது அருந்தும்போது இறைநம்பிக்கையாளனாக இருக்கும் நிலையில் மது அருந்துவதில்லை. ஒருவன் திருடுகிற பொழுது இறைநம்பிக்கையாளனாக இருக்கும் நிலையில் திருடுவதில்லை. ஒருவன் மக்கள் பார்த்துக் கொண்டிருக்க, (பிறரின் பொருளை அபகரித்துக்) கொள்ளையடிக்கும்போது இறைநம்பிக்கையாளனாக இருக்கும் நிலையில் கொள்ளையடிப்பதில்லை‘ என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து இதே போன்று மற்றோர் அறிவிப்பும் உள்ளது. அதில் கொள்ளையடிப்பது பற்றிய வாசகங்கள் மட்டும இடம் பெறவில்லை.

அபூ அப்தில்லாஹ்(புகாரீ) கூறுகிறேன்:

“இறைநம்பிக்கையாளனாக இருக்கும் நிலையில் இச்செயல்களை ஒருவன் செய்வதில்லை என்பதன் கருத்து,இவற்றைச் செய்யும் நேரத்தில் இவற்றைச் செய்பவனிடமிருந்து ஈமான் எனும் இறைநம்பிக்கையின் ஒளி நீக்கப்பட்டுவிடுகிறது என்பதாகும்“

## சிலுவையை உடைப்பதும், பன்றியைக் கொல்வதும்.

ஹதீஸ் 2476. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மர்யமின் குமாரர்(ஈஸா) அவர்கள் நீதி செலுத்தும் நடுவராக உங்களிடையே இறங்குவார்கள். அவர்கள் வந்தவுடன் சிலுவையை உடைப்பார்கள் பன்றியைக் கொல்வார்கள்ஜிஸ்யா வரியை (ஏற்க) மறுப்பார்கள். எவரும் பெற முன் வராத அளவுக்கு செல்வம் பெரும் வழியும். இவையெல்லாம் நடக்காதவரை உலக முடிவு (மறுமை) நாள் வராது.

## மது வைக்கப்பட்டுள்ள பானைகளை உடைப்பது, அல்லது மது வைக்கப்பட்டுள்ள தோல் குடுவைகளைக் கிழிப்பது அனுமதிக்கப்பட்டதா?

## ஒருவன் ஒரு சிலையையோ, ஒரு சிலுவையையோ, கிதார் (மற்றும் யாழ், முரசு போன்ற) இசைக் கருவியையே எந்தப் பொருளின் மரக்கட்டையால் பலன் எதுவுமில்லையோ அத்தகைய பொருளையோ உடைத்துவிட்டால்... (நஷ்டஈடு தரவேண்டுமா?)

(நீதிபதி) ஷுரைஹ்(ரஹ்) அவர்களிடம் உடைக்கப்பட்ட ஒரு கிதார் (குறித்த வழக்கு) கொண்டு வரப்பட்டது. அதில்உடைத்தவர் நஷ்டஈடு ஏதும் வழங்க வேண்டும் என்று அவர் தீர்ப்பளிக்கவில்லை.

ஹதீஸ் 2477. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது நெருப்பு ஒன்று மூட்டப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே,எதற்காக இந்த நெருப்பு மூட்டப்படுகிறது? என்று கேட்டார்கள்.நாட்டுக் கழுதை இறைச்சியைச் சமைப்பதற்காக' என்று மக்கள் பதிலளித்தார்கள். அதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்,பானைகளை உடைத்து அவற்றிலுள்ள (இறைச்சி, உணவு ஆகிய)வற்றை எறிந்துவிடுங்கள்' என்று உத்திரவிட்டார்கள். மக்கள்,அதிலுள்ளவற்றை எறிந்துவிட்டு அவற்றைக் கழுவி விடலாமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,(அவ்வாறே) கழுவிக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2478. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கஅபாவைச் சுற்றிலும் முந்நூற்று அறுபது சிலைகள் இருக்க, மக்கா நகருக்குள் நுழைந்தார்கள். அப்போது அவர்கள், தம் கையிலிருந்த குச்சியால் அவற்றை (குத்தி) அடிக்கத் தொடங்கினார்கள்.சத்தியம் வந்துவிட்டது அசத்தியம் அழிந்துவிட்டது' (திருக்குர்ஆன்- 17-81) என்னும் வசனத்தை கூறத் தொடங்கினார்கள். 15

ஹதீஸ் 2479. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் என்னுடைய அலமாரி (நிலைப் பேழை) ஒன்றின் மீது (மிருகங்களின் உருவங்கள் (வரையப்பட்டு) இருந்த ஒரு தீரைச் சிலையைத் தொங்க விட்டிருந்தேன். அதை நபி(ஸல்) அவர்கள் கிழித்துவிட்டார்கள். எனவே, அதிலிருந்து நான் இரண்டு மெத்தை இருக்கைகளைச் செய்து கொண்டேன். அவை வீட்டில் இருந்தன. அவற்றின் மீது நபி(ஸல்) அவர்கள் அமர்வார்கள்.

## தன் செல்வத்தைக் காப்பதற்காகப் போராடுதல்.

ஹதீஸ் 2480. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன் செல்வத்தைப் பாதுகாப்பதற்காகப் போராடும்போது கொல்லப்பட்டவர் இறைவழியில் உயிர்த்தியாகம் செய்தவர் (ஷஹீத்) ஆவார்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## அடுத்தவரின் உணவுத் தட்டு முதலிய பொருள்களை உடைத்துவிட்டால் (நஷ்ட ஈடு தர வேண்டுமா?)

ஹதீஸ் 2481. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் மனைவிமார்களில் ஒருவரிடம் இருந்தார்கள். விசுவாசிகளின் தாய்மார்களின் ஒருவர் (நபியவர்களின் மனைவிமார்களில் ஒருவர்) பணிப்பெண் ஒருவரிடம் உணவுள்ள ஒரு தட்டு ஒன்றைக் கொடுத்தனுப்பினார்கள். (அவர்கள் உணவு) கொடுத்தனுப்பிய வீட்டிலிருந்த நபி(ஸல்) அவர்களின் (மற்றொரு) மனைவி அந்தப் பணிப் பெண்ணின் கையைத் தட்டி அதை உடைத்துவிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அந்த உடைந்த தட்டை ஒன்று சேர்த்து, உணவை அதில் எடுத்து வைத்து (தம் தோழர்களிடம்),உண்ணுங்கள்' என்று கூறினார்கள். அவர்கள் உண்டு முடிக்கும் வரை தட்டையும் அதைக் கொண்டு வந்த பணிப் பெண்ணையும் அங்கேயே நிறுத்தினார்கள். (அனைவரும் உண்டு முடித்த பின்பு) உடைந்த தட்டைத் தம்மிடமே வைத்துக் கொண்டு (உடையாத) நல்ல தட்டைக் கொடுத்தார்கள். 16

## அடுத்தவரின் சுவரை இடித்துவிட்டால் அதே போன்று கட்டித் தரவேண்டும்.

ஹதீஸ் 2482. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல் சமுதாயத்தைச் சேர்ந்தஜுரைஜ் என்று அழைக்கப்பட்டு வந்த ஒருவர் தொழுது கொண்டிருந்தார். அப்போது அவரின் தாயார் வந்து அவரை அழைத்தார். அவருக்கு பதில் கூற ஜுரைஜ் மறுத்துவிட்டார்.நான் அவருக்கு பதிலளிப்பதா, அல்லது தொழுவதா? என்று (மனத்திற்குள்) கூறினார். பிறகு (மீண்டும்), அவரின் தாயார் அவரிடம் வந்து, (தான் அழைத்தும் தன் மகன் பதிலளிக்க வில்லையே என்ற கோபத்தில்),இறைவா! விபசாரிகளின் முகத்தில் விழிக்கச் செய்யாத வரை அவனுக்கு (ஜுரைஜுக்கு) மரணத்தைத் தராதே' என்று கூறினார். (ஒரு நாள்) ஜுரைஜ் தன் ஆசிரமத்தில் இருந்தார். அப்போது ஒரு பெண்,நான் ஜுரைஜை நிச்சயம் சோதனைக்குள்ளாக்குவேன்' என்று கூறினாள். அதற்காக, ஜுரைஜின் முன்பு வந்து அவருடன் (தகாத உறவு கொள்ள அழைத்துப்) பேச முனைந்தாள். அவர் (இணங்க) மறுத்துவிட்டார். எனவே, அவள் ஓர் இடையனிடம் சென்று, தன்னை அவனுடைய ஆளுகைக்குள் ஒப்படைத்துவிட்டாள். அதன் காரணமாக ஒரு (ஆண்) குழந்தையைப் பெற்றெடுத்தாள். பிறகு,இவன் ஜுரைஜுக்குப் பிறந்தவன்' என்று கூறினாள். (இதைக் கேட்ட) மக்கள் (வெகுண்டெழுந்து) ஜுரைஜிடம் வந்தனர் (கோபாவேசத்தில்) அவரின் ஆசிரமத்தைத் தகர்த்து உடைத்துவிட்டனர் அவரை (அவரின் அறையிலிருந்து) இறக்கி அவரை ஏசினர். ஜுரைஜ் உளூச் செய்து தொழுதார். பிறகு அக்குழந்தையிடம் வந்து,குழந்தையே! உன் தந்தை யார்? என்று கேட்டார். அந்தக் குழந்தை (வாய் திறந்து),(இன்ன) இடையன்' என்று கூறியது. இதைச் செவியுற்ற மக்கள்,உங்கள் ஆசிரமத்தைத் தங்கத்தால் நாங்கள் கட்டித் தருகிறோம்' என்று (ஜுரைஜிடம் அனுமதி) கேட்டார்கள். அதற்கு ஜுரைஜ்,இல்லை் களிமண்ணால் கட்டித் தந்தாலே போதும்' என்று கூறிவிட்டார்.

# அத்தியாயம் 47 கூட்டுச் சேருதல்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## உணவிலும் பயணச் செலவிலும் பிற பண்டங்களிலும் கூட்டுச் சேருதல்.

மற்றும் அளக்கப்படும் பொருள்களையும் நிறுக்கப்படும் பொருள்களையும் பங்கிடுவது எப்படி, (அளக்காமல் நிறுக்காமல்) குத்து மதிப்பாகப் பங்கிடவேண்டுமா? அல்லது சமமான ஒவ்வொரு பிடியாகப் பங்கிட்டுக் கொள்ளவேண்டுமா? ஏனெனில், பயணக் கட்டுச் சாதகங்களைப் பயணிகள் தமக்குள் பொதுவாக வைத்திருக்கும்போது, ஒருவர் அவற்றில் ஒன்றை எடுத்துச் சாப்பிட, மற்றொருவர் இன்னொன்றை (சற்று கூடுதலாகவோ சற்றுக் குறைவாகவோ) எடுத்துச் சாப்பிடுவதில் முஸ்லிம்கள் குற்றம் ஏதும் காணவில்லை. இவ்வாறே, தங்கம் வெள்ளியை நிறுக்காமல் (தங்கத்திற்குப் பகரமாக வெள்ளியை அல்லது வெள்கிக்குப் பகரமாக தங்கத்தைக்) குத்துமதிப்பாகப் பங்கிடுவதும், கூட்டாக அமர்ந்து உண்ணும் பொழுது இரண்டு பேரீச்சம் பழங்களை ஒரு சேர (எடுத்து) உண்பதும் (கூட்டான பயண உணவாக இருக்கும்போது) அனுமதிக்கப்படும்.

ஹதீஸ் 2483. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கடற்கரையை நோக்கி ஒரு படையை அனுப்பினார்கள். அந்தப் படையினருக்கு அபூ உபைதா இப்னு ஜர்ராஹ்(ரலி) அவர்களைத் தளபதியாக ஆக்கினார்கள். அவர்கள் (படையினர்) முந்நூறு பேர் இருந்தனர். அவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். நாங்கள் புறப்பட்டோம். பாதி வழியிலேயே எங்கள் கையிருப்பில் இருந்த (பயண) உணவு தீர்ந்து போய்விட்டது. அபூ உபைதா(ரலி) அந்தப் படையின் (கைவசமிருந்த) கட்டுச் சாதங்கள் அனைத்தையும் ஒன்று திரட்டும் படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவை அனைத்தும் ஒன்று திரட்டப்பட்டன. இரண்டு பைகள் (நிறைய) பேரீச்சம் பழங்கள் சேர்ந்தன. அபூ உபைதா(ரலி) அவற்றை எங்களுக்கு ஒவ்வொரு நாளும் சிறிது சிறிதாகக் கொடுத்து வந்தார்கள். இறுதியில், அவையும் தீர்ந்து போய்விட்டன. எங்களுக்கு (ஆளுக்கு) ஒவ்வொரு பேரீச்சம் பழம்தான் கிடைத்து வந்தது.

...இதை ஜாபிர்(ரலி) சொன்னபோது, இதைக் கேட்டுக் கொண்டிருந்த அறிவிப்பாளர் வஹ்ப் இப்னு கைஸான்(ரஹ்),ஒரு பேரீச்சம் பழம் எப்படி போதும்? என்று கேட்டதற்கு ஜாபிர்(ரலி),அதுவும் தீர்ந்து போன பின்புதான் அதன் மதிப்பை நாங்கள் உணர்ந்தோம்' என்று பதிலளித்தார்கள்..

பிறகு நாங்கள் கடல் வரை வந்து சேர்ந்து விட்டோம். அங்கு தற்செயலாக சிறிய மலை போன்ற (திமிங்கல வகை) மீன் ஒன்று கிடைத்தது. அதிலிருந்து (எங்களுடைய) அந்தப் படை பதினெட்டு நாள்கள் உண்டது. பிறகு அபூ உபைதா(ரலி) அதன் விலா எலும்புகளிலிருந்து இரண்டு விலா எலும்புகளை பூமியில் நட்டு வைக்கும்படி உத்திரவிட்டார்கள். அவ்வாறே, அவை இரண்டும் நட்டப்பட்டன. பிறகு, ஒட்டகத்தை அதன் கீழே ஓட்டிச் செல்லும்போது உத்திரவிட்டார்கள். அவ்வாறே ஓட்டிக் செல்லப்பட்டது. அது (அந்தத் திமிங்கலத்தின்) விலா எலும்புகளின் கீழே சென்றது. ஆனால், அவற்றை அது தொடவில்லை.

ஹதீஸ் 2484. ஸலமா(ரலி) அறிவித்தார்.

(ஹவாஸின் போரில்) மக்களின் பயண உணவு தீர்ந்து போய்ப் பஞ்சத்திற்குள்ளானார்கள். எனவே, நபி(ஸல்) அவர்களிடம் வந்து, (புசிப்பதற்காகத்) தங்கள் ஒட்டகங்களை அறுக்க அனுமதி கேட்டார்கள். நபி(ஸல்) அவர்களும் அவர்களுக்கு அனுமதியளித்தார்கள். (வழியில்) அவர்களை உமர்(ரலி) சந்திக்க, மக்கள் அவர்களுக்கு (நடந்த விஷயத்தை)த் தெரிவித்தார்கள். அதற்கு உமர்(ரலி),உங்கள் ஒட்டகங்களை அறுத்து (உண்டு)விட்ட பிறகு நீங்கள் எப்படி உயிர் வாழ்வீர்கள்? என்று கேட்டார்கள்.2 பிறகு நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! மக்கள் தங்களின் ஒட்டகத்தை அறுத்து (உண்டு)விட்ட பிறகு அவர்கள் எப்படி உயிர் வாழ்வார்கள்? என்று கேட்டார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,மக்கள் தங்கள் பயண உணவில் எஞ்சியதைக் கொண்டு வரும்படி அவர்களிடையே அறிவிப்புச் செய்யுங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே அறிவிப்புச் செய்யப்பட்டு, மக்கள் தங்கள் எஞ்சிய உணவைக் கொண்டு வந்து போடுவதற்காக ஒரு தோல் விரிப்பு விரித்து வைக்கப்பட்டது. மக்கள் அதில் தங்கள் எஞ்சிய உணவுகளை (குவியலாக) வைத்துவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பிரார்த்தித்து அதில் பரக்கத்தை அளிக்கும்படி அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.

பிறகு, தங்கள் பாத்திரங்களைக் கொண்டு வரும்படி மக்களை அழைத்தார்கள். மக்கள், தங்கள் இரண்டு கைகளையும் குவித்து (உணவில் தங்களின் பங்கைப்) பெற்றார்கள்.

அனைவரும் உணவைப் பெற்ற பிறகு நபி(ஸல்) அவர்கள்,வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை என்றும் நான் இறைத்தூதர் என்றும் சாட்சி கூறுகிறேன்' என்றார்கள்.

ஹதீஸ் 2485. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அஸர் தொழுகை தொழுதுவிட்டு, ஒட்டகத்தை அறுப்போம். அது பத்துப் பங்குகளாகப் பங்கு போடப்படும். சூரியன் மறைவதற்கு முன் நாங்கள் (அதன்) சமைக்கப்பட்ட இறைச்சியை உண்போம்.

ஹதீஸ் 2486. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அஷ்அரீ குலத்தினர் போரின்போது கையிருப்பிலுள்ள பயண உணவு (இருப்பு) குறைந்துவிட்டால் அல்லது மதீனாவில் தங்கள் மனைவி மக்களின் உணவு (இருப்பு) குறைந்து போய்விட்டால் தங்களிடம் (எஞ்சி) இருப்பதை ஒரு துணியில் சேகரித்து, பிறகு, ஒரு பாத்திரத்தைக் கொண்டு சமமாக தங்களுக்கிடையே அதைப் பங்கிட்டுக் கொள்வார்கள். அவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள் நான் அவர்களைச் சேர்ந்தவன்.

என அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

## இருவருக்குக் கூட்டாக உள்ள பொருட்களில் ஒருவர், தன் பொருட்களின் ஸகாத்துடன் மற்றவருடைய பொருட்களின் ஸகாத்தையும் சேர்த்து தானே செலுத்திவிடுவாராயின், அவர் தன் கூட்டாளியின் பங்குக்குச் சமமான ஸகாத் தொகையைக் கணக்கிட்டு அதை அவரிடம் பெற்றுக் கொள்வார்.

ஹதீஸ் 2487. அனஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கடமையாக்கிய (ஸகாத் என்னும்) ஸதகாவைப் பற்றி எனக்கு அபூ பக்ர்(ரலி) எழுதும்போது,இருவருக்குக் கூட்டாக உள்ள பொருட்களில் ஒருவர், தன் பொருட்களின் ஸகாத்துடன் மற்றவருடைய பொருட்களின் ஸகாத்தையும் சேர்த்து, தானே

செலுத்திவிடுவாராயின், அவர் தன் கூட்டாளியின் பங்குக்குச் சமமான ஸகாத் தொகையைக் கணக்கிட்டு அதை அவரிடமிருந்து பெற்றுக் கொள்வார்“ என்று குறிப்பிட்டார்கள்.

## ஆடுகளைப் பங்கிடுதல்.

ஹதீஸ் 2488. ரா∴பிஉ இப்னு கதீஜ் (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் துல் ஹுலை∴பாவில் தங்கியிருந்தோம். மக்களுக்குப் பசி எடுத்தது. அவர்கள் போரில் கிடைத்த செல்வங்களிலிருந்து சில ஒட்டகங்களையும் ஆடுகளையும் பெற்றார்கள். நபி (ஸல்) அவர்கள் மக்களின் பின்வரிசையில் இருந்தார்கள். மக்கள் அவசரப்பட்டு (அவற்றைப் பங்கிடுவதற்கு முன்பாகவே) அறுத்துப், பாத்திரங்களை (அடுப்பில்) ஏற்றி (சமைக்கத் தொடங்கி) விட்டனர். நபி (ஸல்) அவர்கள் (இந்த விஷயம் தெரிய வந்தவுடன்) பாத்திரங்களைக் கவிழ்க்கும் படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவை கவிழ்க்கப்பட்டு (அவற்றிலிருந்துவை வெளியே கொட்டப்பட்டு) விட்டன. பிறகு, அவற்றை அவர்கள் பங்கிட்டார்கள். பத்து ஆடுகளை ஓர் ஒட்டகத்திற்குச் சமமாக வைத்தார்கள். அப்போது ஓர் ஒட்டகம்மிரண்டு ஓடிவிட்டது. மக்கள் அதைத் தேடிச் சென்றார்கள். அது (அவர்களிடம் அகப்படாமல்) அவர்களைக் களைப்படையச் செய்துவிட்டது. மக்களிடம் குதிரைகள் குறைந்த எண்ணிக்கையில்தான் இருந்தன. ஒருவர் (நபித் தோழர்) அந்த ஒட்டகத்தைக் குறிவைத்து ஓர் அம்பை எறிந்தார். அல்லாஹ் அதை (ஓட விடாமல்) தடுத்து நிறுத்திவிட்டான். பிறகு நபி (ஸல்) அவர்கள், காட்டு மிருகங்களில் கட்டுக்கடங்காதவை இருப்பது போல் இந்தப் பிராணிகளிலும் கட்டுக் கடங்காதவை சில உள்ளன. இவற்றில் உங்களை மீறிச் செல்பவற்றை இவ்வாறே செய்யுங்கள் (அம்பெறிந்து தடுத்து நிறுத்துங்கள்)‘ என்று கூறினார்கள். நான், (ஒட்டகத்தை அறுக்க வாட்களை இன்று நாங்கள் பயன்படுத்திவிட்டால், அதன் கூர்முனை சேதமடைந்து) நாளை எங்களிடம் வாட்கள் இல்லாத நிலையில் பகைவர்களை (சந்திக்க நேரிடுமோ என்று) நாங்கள் அஞ்சுகிறோம். எனவே, நாங்கள் (கூரான) மூங்கில்களால் (இந்த ஒட்டகத்தை) அறுக்கலாமா? என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்), அவர்கள், இரத்தத்தை ஓடச் செய்கிற எந்த ஆயுதத்தால் அறுக்கப்பட்டிருந்தாலும் (பிராணி அறுக்கப்படும் போது) அதன் மீது அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டிருக்கும் பட்சத்தில் அதை உண்ணுங்கள் பற்களாலும் நகங்களாலும் அறுக்கப்பட்டதைத் தவிர, அதைப் பற்றி (‘அது ஏன் கூடாது என்று) நான் உங்களுக்குச் சொல்கிறேன் பல்லோ எலும்பாகும் நகங்களோ அபிசீனியர்களின் (எத்தியோப்பியர்களின்) கத்திகளாகும்“ என்று கூறினார்கள்.

## மற்றவர்களிடம் அனுமதி கேட்காத வரை ஒருவர் மட்டும் பேரீச்சங்கனி (போன்ற உணவுப் பண்டங்) களில் இரண்டைச் சேர்த்து உண்ணுதல் (கூடாது).

ஹதீஸ் 2489. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் (தோழர்களுடன் உண்ணும் போதும்) தன் தோழர்கள் அனுமதிக்காத வரை, இரண்டு பேரீச்சம் பழங்களை ஒரு சேர எடுத்து உண்பதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

ஹதீஸ் 2490. ஜபலா (ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் மதீனாவில் இருந்தபோது எங்களைப் பஞ்சம் பீடித்தது. இப்னு ஸுபைர் (ரலி) எங்களுக்குப் பேரீச்சம் பழங்களை (உண்ணக்) கொடுத்து வந்தார்கள். இப்னு உமர் (ரலி) எங்களைக் கடந்து செல்வார்கள். அப்போது, (இரண்டிரண்டாகச்) சேர்த்து உண்ணாதீர்கள்.

ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் ஒருவர் தன் சகோதரருக்கு அனுமதி தந்தாலே தவிர சேர்த்து உண்பதைத் தடை செய்தார்கள்' என்று கூறினார்கள்.

## கூட்டாளிகளிடையே பொருள்களுக்கு ஒத்த விலையை நிர்ணயித்தல்.

ஹதீஸ் 2491. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் தனக்குரிய பங்கை விடுதலை செய்பவர், தன்னிடம் அவ்வடிமையின் (சந்தை விலைக்கு) ஒத்த விலை (அளவிற்குப் பணம்) இருந்தால் (அதைக் கொடுத்து) அந்த அடிமையை முழுமையாக விடுதலை செய்யட்டும். இல்லையெனில், அவர் விடுதலை செய்த அளவுக்கு மட்டுமே அவ்வடிமை சுதந்திரவானாவான். என்று இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இப்னு உமர்(ரலி) அவர்களின் மாணவர் நா∴பிஉ(ரலி) அவர்களிடமிருந்து இதை அறிவித்த அய்~ப்(ரஹ்),இல்லையெனில் எந்த அளவுக்கு அவர் விடுதலை செய்தாரோ அந்த அளவுக்கு மட்டுமே அவ்வடிமை சுதந்திரவான் ஆவான் என்னும் வாசகம் நா∴பிஉ(ரஹ்) அவர்களின் சொல்லா அல்லது நபி(ஸல்) அவர்களின் ஹதீஸின் ஒரு பகுதியா என்று எனக்குத் தெரியாது' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2492. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன் அடிமையில் தனக்குள்ள பங்கை விடுதலை செய்து விடுகிறவர் (வசதியுடையவராயின்) தன் செல்வத்தைக் கொண்டு அவ்வடிமையை முழுமையாக விடுதலை செய்வது அவரின் மீது கடமையாகும். அவரிடம் செல்வம் இல்லையெனில் அந்த அடிமையின் விலை, (அவனை) ஒத்த (அடிமையின்) விலையைக் கொண்டு மதிப்பிடப்பட்டு அவன் உழைத்துச் சம்பாதிக்க அனுமதியளிக்கப்பட வேண்டும். அவன் மீது தாங்க முடியாத (உழைப்பைச் சுமத்திச்) சிரமத்தை ஏற்படுத்தக் கூடாது.

## ஒரு பொருளைப் பங்கிடுவதற்காக சீட்டுக் குலுக்கிப் போடலாமா?

ஹதீஸ் 2493. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் (சட்ட) வரம்புகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பவனுக்கும் அவற்றை மீறி நடப்பவனுக்கும் உவமை - ஒரு சமுதாயத்தைப் போன்றதாகும். அவர்கள் கப்பலில் (தங்களுக்கு இடம் பிடிப்பதற்காகச்) சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். (அதன்படி) அவர்களில் சிலருக்குக் கப்பலின் மேல் தளத்திலும் சிலருக்குக் கீழ்த் தளத்தில் இருந்தவர்களுக்குத் தண்ணீர் தேவைப்பட்டபோது (அதைக் கொண்டு வர) அவர்கள் மேல் தளத்தில் இருப்பவர்களைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. (அதனால் மேலே இருந்தவர்களுக்குச் சிரமம் ஏற்பட்டது). அப்போது, கீழ்த் தளத்தில் இருந்தவர்கள் (தமக்குள்)நாம் (தண்ணீருக்காக) நம்முடைய பங்கில் (கீழ்த் தளத்தில்) ஓட்டையிட்டுக் கொள்வோம் நமக்கு மேலே இருப்பவர்களைத் தொந்தரவு செய்யாமலிருப்போம் என்று பேசிக் கொண்டார்கள். அவர்கள் விரும்பியபடி செய்து கொள்ள அவர்களை மேல் தளத்தில் உள்ளவர்கள்விட்டுவிட்டால் (கப்பலில் இருப்பவர்கள்) அனைவரும் அழிந்து போவார்கள். (ஓட்டையிட விடாமல்) அவர்களின் கரத்தைப் பிடித்துக் கொள்வார்களாயின் அவர்களும் தப்பிப் பிழைத்துக் கொள்வார்கள். (அவர்களுடன் மற்ற) அனைவரும் தப்பிப் பிழைத்துக் கொள்வார்கள்.

என நுஃமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்.

## அனாதைகள் மற்றும் வாரிசுதாரர்களின் பங்கு.

ஹதீஸ் 2494. உர்வா இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம், அநாதை(ப் பெண்)களுடன் நீதமாக நடக்க இயலாது என்று நீங்கள் அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக மணந்துகொள்ளுங்கள்' (திருக்குர்ஆன் 04:03) என்னும் இறைவசனத்தைக் குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள் பின்வருமாறு விளக்கமளித்தார்கள்.

என் சகோதரி மகனே! இந்த (வசனத்தில் கூறப்பட்டுள்ள) பெண், தன் காப்பாளரின் (வலீயின்) மடியில் (பொறுப்பில்) வளர்கிற - அவரின் செல்வத்தில் கூட்டாக இருக்கிற அநாதைப் பெண் ஆவாள். அவளுடைய செல்வத்தாலும் அழகாலும் கவரப்பட்டு, அவளுடைய காப்பாளர் அவளுடைய மஹ்ர் விஷயத்தில் நீதியுடன் நடக்காமல் மற்றவர்கள் அவளுக்குக் கொடுப்பது போன்ற மஹ்ரை அவளுக்குக் கொடுக்காமல் - அவளை மணந்துகொள்ள விரும்புகிறார் என்னும் நிலையிலிருப்பவள் ஆவாள். இவ்விதம் காப்பாளர்கள் தம் பொறுப்பிலிருக்கும் அநாதைப் பொண்களை அவர்களுக்கு நீதி செய்யாமல், அவர்களைப் போன்ற பெண்களுக்குக் கொடுக்கப்படும். மஹ்ரில் மிக உயர்ந்த மஹ்ர் எதுவோ அதை அவர்களுக்குக் கொடுக்காமல் அவர்களை மணந்துகொள்ள அவர்களுக்கு (இந்த இறைவசனத்தின் வாயிலாக) தடை விதிக்கப்பட்டது. அந்தப் பெண்களைத் தவிரவுள்ள மற்ற பெண்களில் அவர்களுக்கு விருப்பமான பெண்களை மணந்துகொள்ளும்படி அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டது. பிறகு, (இந்த இறைவசனம் அருளப்பட்ட பின்பும்) மக்கள் அல்லாஹ்வின் தூதரிடம் தீர்ப்புக் கேட்டு வரலாயினர். எனவே அல்லாஹ், பெண்கள் விவகாரத்தில் தீர்ப்பு வழங்கும்படி உங்களிடம் கோருகின்றனர். (நபியே!) நீங்கள் கூறுங்கள்: அவர்களின் விவகாரத்தில் அல்லாஹ் உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகிறான். மேலும், இவ்வேதத்தில் (முன்பிருந்தே) உங்களுக்கு எடுத்துரைக்கப்பட்டு வருகிற சட்டங்களையும் நினைவுபடுத்துகிறான். (அதாவது,) எந்த அநாதைப் பெண்களுக்கு, அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட உரிமையை நீங்கள் கொடுப்பதில்லையோ, மேலும், எவரை நீங்கள் திருமணம் செய்து கொள்ள விரும்புவதில்லையோ அந்த அநாதைப் பெண்கள் பற்றிய சட்டங்களையும் (உங்களுக்கு நினைவுபடுத்துகிறான்)' என்னும் (திருக்குர்ஆன் 04:127) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

மேலும், இவ்வேதத்தில் (முன்பிருந்தே) உங்களுக்கு எடுத்துரைக்கப்பட்டு வருகிற சட்டங்களையும்..!என்று அல்லாஹ் கூறியிருப்பது, அநாதை(ப் பெண்)களுடன் நீதியுடன் நடக்க இயலாது என்று நீங்கள் அஞ்சினால்..!என்னும் (திருக்குர்ஆன் 04:03) இறைவசனத்தைக் குறிப்பதாகும். மேலும், 4:127ம் இறைவசனத்தில், மேலும் எவரை நீங்கள் திருமணம் செய்துகொள்ள விரும்புவதில்லையோ' என்று கூறியிருப்பது, உங்களில் ஒரு காப்பாளர் தன் பராமரிப்பில் இருக்கும் அநாதைப் பெண் ஒருத்தியை அவள் செல்வமும் அழகும் குறைந்தவளாக இருக்கும்போது அவளை விரும்பாமலிருப்பதைக் குறிப்பதாகும். (செல்வத்தில் குறைந்தவர்களாக இருக்கும் போது) அந்த (அநாதை)ப் பெண்களை மணந்துகொள்ள அவர்கள் விரும்பாமலிருந்த காரணத்தால், அவர்கள் எந்த அநாதைப் பெண்களின் செல்வத்திற்கும் அழகுக்கும் ஆசைப்பட்டார்களோ அந்தப் பெண்களையும்நீதியான முறையிலே தவிர மணந்துகொள்ளலாகாது என்று அவர்களுக்குத் தடை விதிக்கப்பட்டது.

## நிலம் முதலியவற்றில் கூட்டு.

ஹதீஸ் 2495. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(இருவருக்குச் சொந்தமான சொத்தில் தம் பங்கை ஒருவர் விற்கும்போது, தம் பங்காளிக்கே அவர் முன்னுரிமை, அளிக்க வேண்டும் என்னும்)ஷுஃப்ஆ சட்டத்தைப் பங்கிடப்படாமலிருக்கும் கூட்டுச் சொத்து ஒவ்வொன்றிலுமே நபி(ஸல்) அவர்கள் விதித்திருந்தார்கள். எல்லைகள் வகுக்கப்பட்டு, பாதைகள் பிரிக்கப்பட்டால் ஷுஃப்ஆ(வின் உரிமை பங்காளிக்குக்) கிடையாது.

பங்காளிகள், வீடுகள் முதலியவற்றைப் பங்கிட்டுவிட்டால் அவர்கள் அவற்றைத் திரும்பப் பெறவும் முடியாது ஷுஃப்ஆவின் உரிமையும் அவர்களுக்கில்லை.

ஹதீஸ் 2496. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

'பங்கிடப்படாத ஒவ்வொரு சொத்திலும் (அதிலுள்ள தம் பங்கை ஒருவர் விற்க முனைந்தால் அவரைத் தவிர உள்ள) பிற பங்காளிகளுக்கு ஷுஃப்ஆவின் உரிமையுண்டு என்று நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள். எல்லைகள் வகுக்கப்பட்டு, பாதைகள் பிரிக்கப்பட்டால் ஷுஃப்ஆ(வின் உரிமை பங்காளிகளுக்குக்) கிடையாது.

## தங்கம், வெள்ளி மற்றும் நாணயமாற்றில் பயன்படுத்தப்படும் பொருள்களில் கூட்டு.

ஹதீஸ் 2497 , ஹதீஸ் 2498 சுலைமான் இப்னு அபீ முஸ்லிம்(ரஹ்) அறிவித்தார்.

நான் அபுல் மின்ஹால்(ரஹ்) அவர்களுடன் உடனுக்குடன் செய்யும் நாணயமாற்று வியாபாரம் குறித்துக் கேட்டேன். அப்போது அவர்கள் பின்வருமாறு பதிலளித்தார்கள். நானும் என் வியாபாரக் கூட்டாளி ஒருவரும் ஒரு பொருளை (சிறிது) உடனுக்குடனும் (சிறிது) தவணை முறையிலும் வாங்கினோம். அப்போது பராஉ இப்னு ஆஸிப்(ரலி) எங்களிடம் வந்தார்கள். நாங்கள் அவர்களிடம் (இது குறித்துக்) கேட்டோம். அதற்கு அவர்கள்,நானும் என்னுடைய கூட்டாளியான ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களும் இந்த வியாபாரத்தைச் செய்து வந்தோம். நபி(ஸல்) அவர்களிடம் இது குறித்துக் கேட்டோம். அதற்கு அவர்கள்,உடனுக்குடன் மாற்றியதை எடுத்துக் கொள்ளுங்கள் ஆனால், தவணை முறையில் மாற்றிக் கொண்டிருப்பீர்களாயின் அதை ரத்துச் செய்யுங்கள் என்று பதிலளித்தார்கள்' எனக் கூறினார்கள்.

## (இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் பிற மதத்தவரான) திம்மீயுடனும் (அபயம் அளிக்கப்பட்ட) இணைவைப்பவர்களுடனும் (ஒரு முஸ்லிம் நிலக் குத்தகையில் கூட்டாளியாக்குதல்.

ஹதீஸ் 2499. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் நிலங்களை யூதர்களுக்கு, அவற்றில் அவர்கள் உழைத்து விவசாயம் செய்ய வேண்டும் என்றும், அவற்றிலிருந்து கிடைக்கும் விளைச்சலில்பாதி அவர்களுக்குரியது (பாதி இஸ்லாமிய அரசுக்குரியது) என்றும் நிபந்தனையிட்டு (குத்தகைக்குக்) கொடுத்துவிட்டார்கள்.

## ஆடுகளைப் பங்கிடுவதும் அதில் நீதியுடன் நடந்து கொள்வதும்.

ஹதீஸ் 2500. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் சில ஆடுகளைத் தம் தோழர்களிடையே பங்கிடும்படி கொடுத்தார்கள். (அவ்வாறே நான் பங்கிட்டு விட்டேன்.) ஓர் ஆட்டுக்குட்டி எஞ்சியது. அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் நான் கூறியபோது,அதை நீ குர்பானி கொடுத்து விடு' என்று கூறினார்கள்.

## (வியாபாரத்திற்காக வாங்கும்) உணவு முதலிய பொருள்களில் கூட்டு.

ஒருவர் ஒரு பொருளை பேரம் பேசினார். அவருக்கு மற்றொருவர் (அதை வாங்கிக் கொள்ளும்படி) கண்ணால் சாடை காட்டினார். இதைக் கண்ட உமர்(ரலி),கண்ட சாடை காட்டிய அந்த மனிதர் (பேரம் பேசியவரின்) வியாபாரக் கூட்டாளி என்று கருதினார்கள்.

ஹதீஸ் 2501 , ஹதீஸ் 2502. அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்.

என் தாயார் ஸைனப் பின்த்து ஹுமைத்(ரலி) (நான் சிறுவனாயிருக்கும் போது) என்னை அல்லாஹ்வின் தூதரிடம் அழைத்துச் சென்று, இறைத்தூதர் அவர்களே! இவனிடம் (இஸ்லாத்தின் படி நடப்பதற்கான) உறுதிப் பிரமாணம் வாங்குங்கள்' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், சிறுவனாயிற்றே!என்று கூறிவிட்டு, என் தலையைத் தடவிக் கொடுத்து எனக்காக (அருள்வளம் வேண்டி) பிரார்த்தித்தார்கள்.

ஸுஹ்ரா இப்னு மஅபத்(ரஹ்) அறிவித்தார்.

என்னை என் பாட்டனார் அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) கடைவீதிக்குக் கொண்டு சென்று உணவுப் பொருளை வாங்குவார்கள். (அப்போது அவர்களை இப்னு உமர்(ரலி) அவர்களும் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களும் சந்திப்பார்கள். அப்போது அவ்விருவரும், எங்களுடன் உணவு வியாபாரத்தில் கூட்டாளியாகி விடுங்கள். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் உங்களுக்காக அருள்வளம் வேண்டி பிரார்த்தித்துள்ளார்கள்' என்று கூறுவார்கள். அவ்வாறே, என் பாட்டனாரும் அவர்களின் கூட்டாளியாகி விடுவார்கள். சில வேளைகளில், ஓர் ஒட்டகம் முழுக்க அப்படியே (லாபமாக) அவருக்குக் கிடைக்கும். அதை (தம்) வீட்டிற்கு அனுப்பி வைப்பார்கள்.

## அடிமையில் பங்குதாரர் ஆகுதல்.

ஹதீஸ் 2503. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் தனக்குள்ள பங்கை விடுதலை செய்கிறவரிடம் அவ்வடிமைக்கு ஈடான வேறோர் அடிமையின் விலை அளவுக்கான செல்வம் இருக்குமாயின், அவ்வடிமையை முழுமையாக விடுதலை செய்வது அவரின் மீது கடமையாகும். அந்த அடிமையில் அவருடன் பங்குள்ளவர்களுக்கு அவர்களின் பங்குக்கான தொகை கொடுக்கப்பட்டு விடவேண்டும் விடுதலை செய்யப்பட்ட அடிமை சுதந்திரமாகச் செல்ல அனுமதிக்கப்பட வேண்டும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2504. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் தனக்குள்ள பங்கை விடுதலை செய்துவிடுகிறவரிடம் போதிய செல்வம் இருக்குமாயின் அவ்வடிமை முழுவதுமாக விடுதலை செய்யப்பட வேண்டும். இல்லையெனிறல், (விடுதலையாகாத மீதிப் பங்கையும் விடுவித்துக் கொள்வதற்காக அவ்வடிமை உழைத்துச் சம்பாதிக்க அனுமதிக்கப்பட வேண்டும். அவ்வடிமையின் மீது (தாங்க முடியாத) சிரமத்தை சுமத்தக் கூடாது. 10

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தியாகப் பிராணியிலும் தியாக ஒட்டகத்திலும் கூட்டாகுதல். ஒருவர் தியாகப் பிராணியை பலி கொடுத்த பின்னர் அதில் மற்றொருவரைக் கூட்டாக்கிக் கொள்ளலாமா?

ஹதீஸ் 2505 , ஹதீஸ் 2506. ஜாபிர்(ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் துல்ஹஜ்ஜின் நான்காவது (நாளின்) காலையில் ஹஜ்ஜுக்காக மட்டும் அவர்களு(டைய ஹஜ்ஜுடைய நிய்யத்து)டன் (உம்ரா) எதுவும் கலந்து விடாமல் இஹ்ராம் அணிந்தவர்களாக வந்தார்கள். நாங்கள் வந்து சேர்ந்தபோது நாங்கள் இஹ்ராம் அணிந்ததை உம்ராவாக ஆக்கிக் கொள்ளும்படியும் எங்கள் மனைவிமார்களிடம்

நாங்கள் உறவு கொள்ளலாம் என்றும் உத்தரவிட்டார்கள். அவ்வாறே நாங்கள் செய்தோம். மக்களிடையே இந்த விஷயம் பரவிவிட்டது. அதைப் பற்றி அவர்கள் வியப்புடன் பேசிக் கொள்ளலாயினர்.

அறிவிப்பாளர் அதா இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்: பிறகு ஜாபிர்(ரலி),எங்கள் இன உறுப்பில் விந்து சொட்டிக் கொண்டிருக்க, (மனைவியுடன் கூடிய பின் உடனடியாக) நாங்கள் மினாவுக்குச் செல்வதா? என்று (வியப்புடன்) கேட்டார்கள். அப்போது ஜாபிர்(ரலி) தம் கையால் சைகை செய்து இவ்வாறு கேட்டார்கள். “..

இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே, நபி(ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். அதில், மக்கள் சிலர் இப்படிஇப்படியெல்லாம் பேசுகிறார்கள் என்று எனக்குச் செய்தி எட்டியது. இறைவன் மீதாணையாக! நான் அவர்களை விட அதிக நற்செயல் புரிபவனும் அதிகமாக அல்லாஹ்வுக்கு அஞ்சுபவனும் ஆவேன். என் விவகாரத்தில் (ஹஜ்ஜுக்கு நிய்யத் செய்ததில்) நான் பிற்பாடு (இறையறிவிப்பின் வாயிலாக) அறிந்த (‘ஹஜ் மாதத்தில் உம்ரா செய்ய அனுமதியுண்டு என்கிற சட்டத்)தை முன்கூட்டியே நான் அறிந்திருப்பேனாயின் என்னுடன் பலிப்பிராணியைக் கொண்டு வந்திருக்க மாட்டேன். என்னுடன் பலிப்பிராணி இல்லாமல் இருந்திருந்தால் நானும் (உம்ரா மட்டும் செய்து) இஹ்ராமிலிருந்து விடுபட்டு (ஹலாலாம்) விட்டிருப்பேன்!என்று கூறினார்கள். இதைக் கேட்ட சுரக்காக இப்னு மாலிக் இப்னு ஜுஃஷும்(ரலி) எழுந்து,இறைத்தூதர் அவர்களே! இந்தச் சலுகை எங்களுக்கு மட்டும் தானா? இல்லை, என்றைக்குமாகவா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,(உங்களுக்கு மட்டும் என்று) இல்லை மாறாக, என்றைக்குமாகத் தான்‘ என்று கூறினார்கள். அப்போது அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) (யமன் நாட்டிலிருந்து திரும்பி) வந்தார்கள்.

அறிவிப்பாளர் அதாஉ(ரஹ்) கூறினார்கள்:

ஜாபிர்(ரலி) மற்றும் இப்னு அப்பாஸ்(ரலி) ஆகிய இருவரில் ஒருவர் (அதாவது ஜாபிர்(ரலி)),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்துள்ளார்களோ அதே ஹஜ்ஜுக்காகத்தான் நானும் இஹ்ராம் அணிகிறேன்‘ என்று அலீ(ரலி) சொன்னதாகக் கூறுகிறார். மற்றொருவர், (இப்னு அப்பாஸ்(ரலி)),அல்லாஹ்வின் தூதருடைய ஹஜ்ஜைப் போன்றதற்கே (ஹஜ்ஜும்ரானுக்கே) நானும் இஹ்ராம் அணிகிறேன்‘ என்று அலீ(ரலி) சொன்னதாகக் கூறுகிறார். நபி(ஸல்) அவர்கள், அலீ(ரலி) அவர்களை அவர்களின் இஹ்ராமிலேயே நீடித்திருக்கும்படி கட்டளையிட்டார்கள். தம் தியாக பிராணியில் அவர்களையும் கூட்டாளியாக்கினார்கள்.

## பங்கிடும்போது ஒரே ஒட்டகத்திற்குப் பத்து ஆடுகளைச் சமமாக்குதல்.

ஹதீஸ் 2507. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் திஹாமாவிலுள்ள துல் ஹுலைஃபாவில் இருந்தோம். அப்போது நாங்கள் (கனீமத்தாக) ஆடுகளை அல்லது ஒட்டகங்களைப் பெற்றோம். மக்கள் அவசரப்பட்டு (உணவு சமைப்பதற்காகப்) பாத்திரங்களைக் கொதிக்க வைத்தனர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்தார்கள். அந்தப் பாத்திங்களைத் தலைகீழாகக் கவிழ்க்கும்படி உத்தரவிட்டார்கள். அவை அவ்வாறே தலைகீழாகக் கவிழ்க்கப்பட்டன. பிறகு, ஓர் ஒட்டகத்திற்குப் பத்து ஆடுகளைச் சமமாக்கினார்கள். பிறகு, அவற்றிலிருந்து ஓர் ஒட்டகம் மிரண்டோடியது. மக்களிடம் சில குதிரைகளே இருந்தன. (அதை விரட்டிச் சென்று பிடிக்கப் போதுமான குதிரைகள் இல்லை. எனவே,) ஒருவர் அம்பெய்து அதை ஓடவிடாமல் தடுத்து நிறுத்தினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,கட்டுங்கடங்காத காட்டு மிருகங்களைப்

போன்று இந்தக் கால்நடைகளிலும் கட்டுக் கடங்காதவை சில உண்டு. எனவே, இவற்றில் எது உங்களை மீறிச் செல்லுகிறதோ அதை இவ்வாறே (அம்பெய்து தடுத்து நிறுத்தச்) செய்யுங்கள்' என்று கூறினார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! (இப்போது பிராணிகளை அறுக்க எங்கள் வாட்களைப் பயன்படுத்திவிட்டால்), எங்களிடம் வாட்கள் இல்லாத நிலையில் நாளை (போர்க்களத்தில்) பகைவர்களைச் சந்திக்க வேண்டியிருக்குமே என்று நாங்கள் அஞ்சுகிறோம். (கூரான) மூங்கில்களால் நாங்கள் (அவற்றை) அறுக்கலாமா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், சீக்கிரம்! இரத்தத்தை ஓடச்செய்கிற எந்த ஆயுதத்தால் அறுக்கப்பட்டிருந்தாலும் (பிராணி அறுக்கப்படும் போது) அதன் மீது அல்லாஹ்வின் பெயர் கூறப்படும் பட்சத்தில் அதை உண்ணுங்கள் பற்களாலும் நகங்களாலும் அறுக்கப்பட்டதைத் தவிர அதைப் பற்றி ('அது ஏன் கூடாது என்று) உங்களுக்கு நான் சொல்கிறேன்: பல்லோ எலும்பாகும். நகங்களோ அபிசீனியர்களின் (எத்தியோப்பியர்களின்) கத்திகளாகும்' என்று பதிலளித்தார்கள்.

# அத்தியாயம் 48 அடைமானம்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## ஊரிலிருக்கும்போது அடைமானம் வைத்தல்.

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் பயணத்திலிருந்தால், மேலும் (ஒப்பந்தப் பத்திரம் எழுதுவதற்கு) எந்த ஓர் எழுத்தரும் உங்களுக்குக் கிடைக்க வில்லையென்றால் அடகுப் பொருளைப் பெற்றுக் கொண்டு நீங்கள் கொடுக்கல் வாங்கல் செய்யலாம். (திருக்குர்ஆன் 02: 283)

ஹதீஸ் 2508. அனஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தங்களின் போர்க் கவசத்தை வாற் கோதுமைக்குப் பகரமாக அடகு வைத்திருந்தார்கள். நான் நபி (ஸல்) அவர்களிடம் வாற்கோதுமை ரொட்டியையும் வாசனை நீங்கிய உருகிய கொழுப்பையும் கொண்டு சென்றேன். முஹம்மதின் வீட்டாரிடம், அவர்கள் ஒன்பது வீட்டினராக இருந்தும் கூட ஒரேயொரு ஸாஉ (தானியம் அல்லது பேரீச்சம் பழம்) தவிர, காலையிலோ மாலையிலோ வேறெதுவும் இருந்ததில்லை' என்று நபி (ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்.

## கவசத்தை அடகு வைத்தல்.

ஹதீஸ் 2509. அஃமஷ் (ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் இப்ராஹீம் நகயீ (ரஹ்) அவர்களிடம் அடைமானம் பற்றியும் கடனில் பிணை (ளுநஉரசவைல) பற்றியும் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டோம். அப்போது இப்ராஹீம் நகயீ (ரஹ்), நபி (ஸல்) அவர்கள் யூதர் ஒருவரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தவணைக்கு (பிறகு பெற்றுக் கொள்வதாக) உணவுப் பொருளை வாங்கினார்கள் (அதற்காக) தம் கவசத்தை அடைமானம் வைத்தார்கள் என்று ஆயிஷா (ரலி) கூறினார் என எமக்கு அஸ்வத் (ரலி) அறிவித்தார் என்று கூறினார்கள்.

## ஆயுதத்தை அடகு வைத்தல்.

ஹதீஸ் 2510. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

ஒரு முறை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், கஅபாவின் அஷ்ரஃபைக் கொல்வதற்கு யார் (தயாராக) இருக்கிறார்கள்? ஏனெனில், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் அவன் பொல்லாங்கு விளைவித்து (தொல்லை தந்து) விட்டான்' என்று கூறினார்கள். உடனே, முஹம்மத் இப்னு மஸ்லமா (ரலி), நான் தயாராக இருக்கிறேன்' என்று கூறினார்கள். (பிறகு) அவர்கள் கஅப் இப்னு அஷ்ரஃபிடம் சென்று, ஒரு வஸக்கு அல்லது இரண்டு வஸக்குகள் (உணவுப் பொருளைக்) கடனாக எங்களுக் நீ தரவேண்டும் என்று விரும்புகிறோம் எனக் கூறினார். அதற்கு அவன், உங்கள் பெண்களை என்னிடம் அடகு வையுங்கள்' என்று கூறினான். அதற்கு முஹம்மத் இப்னு மஸ்லமா (ரலி), நீயோ அரபிகளிலேயே அழகு மிக்கவன். உன்னிடம் எப்படி எங்கள் பெண்களை நாங்கள் அடகு வைக்க முடியும்? என்று பதிலளித்தார்கள். அதற்கு அவன், உங்கள் குழந்தைகளை என்னிடம் அடகு வையுங்கள்' என்று கேட்டான். அதற்கு அவர், நாங்கள் எப்படி எங்கள் குழந்தைகளை அடகு வைக்க முடியும்? (அப்படி அடகு வைத்தல்) ஓரிரண்டு வஸக்குகளுக்காக அடகு வைக்கப்பட்டவன் தானே இவன் என்று அவர்களை மற்றவர்கள் (இழிவாகப் பேசிப் பரிகாசமாக) ஏசுவார்களே! இது எங்களுக்கு

அவமானமல்லவா? ஆயினும், நாங்கள் உன்னிடம் எங்கள் ஆயுதங்களை அடகு வைக்கிறோம்' என்று கூறினார்கள். (அவனும் அதற்குச் சம்மதிக்க) பின்னர் வருவதாக வாக்களித்துச் சென்றார்கள். (பிறகு ஆயுதத்துடன் வந்து அதை அடகு வைக்கிற சாக்கில்) அவனைக் கொன்றுவிட்டார்கள் பிறகு, அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் (கஅப் இப்னு அஷ்ர∴பைக் கொலை செய்துவிட்ட) செய்தியைத் தெரிவித்தார்கள்.

## அடைமானம் வைக்கப்பட்ட கால்நடையை வாகனமாகப் பயன்படுத்தலாம் அதன் பாலைக் கறக்கலாம்.

இப்ராஹீம் நகயீ(ரஹ்) கூறினார்:

வழி தவறி வந்த பிராணியின் மீது (அதற்குப் போடுகிற தீனியின் அளவுக்கேற்ப) சவாரி செய்யலாம். அதற்குப் பேகுதி தீனியின் அளவுக்கேற்ப அதன் பாலைக் கறந்து (பயன்படுத்திக்) கொள்ளலாம். அடகுப் பிராணியும் அதைப் போன்றதே.

ஹதீஸ் 2511. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடகு வைக்கப்பட்ட பிராணியை, அதற்காகும் (பராமரிப்புச்) செலவுக்குப் பிரதியாக (அடகு வாங்கியவன்) வாகனமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். பால் தரும் பிராணி அடகு வைக்கப்பட்டிருப்பின், அதன் பாலை (அடகு வாங்கியவர்) அருந்தலாம்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2512. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடகு வைக்கப்பட்ட பிராணிக்காகும் (பராமரிப்புச்) செலவுக்குப் பிரதியாக அதன் முதுகில் (அடகு வாங்கியவன்) சவாரி செய்யலாம். பால் கொடுக்கும் பிராணி அடகு வைக்கப்பட்டிருப்பின் அதற்காகும் (பராமரிப்புச்) செலவுக்குப் பிரதியாக அதன் பாலை (அடகு வாங்கியவன்) அருந்தலாம். சவாரி செய்பவனும், பாலை அருந்துபவனும்தான் அதன் (பராமரிப்புச்) செலவை ஏற்க வேண்டும்.

இதையும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களே அறிவித்தார்கள்.

## யூதர்கள் முதலானவர்களிடம் அடகு வைத்தல்.

ஹதீஸ் 2513. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு யூதரிடமிருந்து உணவுப் பொருளை வாங்கினார்கள். (அதற்காக) தம் கவசத்தை அந்த யூதரிடம் அடகு வைத்தார்கள்.

## அடகு வைப்பவர், அடகு வாங்குபவர் முதலானோர் கருத்து வேறுபட்டால் வாதி ஆதாரத்தைச் சமர்ப்பிப்பதும், பிரதிவாதி சத்தியம் செய்வதும் கடமையாகும்.

ஹதீஸ் 2514. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்.

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுக்கு (ஒரு வழக்கில் விளக்கம் கேட்டு) கடிதம் எழுதினேன். அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் பிரதிவாதி (தன் மீதுள்ள வழக்கை மறுப்பதற்கு) சத்தியம் செய்ய வேண்டுமென்று தீர்ப்பளித்தார்கள்' என்று குறிப்பிட்டு பதில் (கடிதம்) எழுதினார்கள்.

ஹதீஸ் 2515 , ஹதீஸ் 2516. அபூ வாயில்(ரஹ்) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி),எவன் ஒரு சொத்தை அடைவதற்காகப் பொய் சத்தியம் செய்கிறானோ அவன், தன் மீது அல்லாஹ் கோபமுற்ற நிலையில் அவனைச் சந்திப்பான்‘ என்னும் நபிமொழியைக் கூறிவிட்டு, இந்த நபிமொழியை உறுதிப்படுத்தி அல்லாஹ்,அல்லாஹ்வுடன் செய்த உடன்படிக்கையையும், சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்பவர்களுக்கு மறுமையில் எவ்வித நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும் மாட்டான் அவர்களை (ஏறெடுத்துப்) பார்க்கவும் மாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனைதான் இருக்கிறது என்னும் (திருக்குர்ஆன் 03:77) வசனத்தை அருளினான்‘ என்று கூறினார்கள்.

பிறகு, அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) எங்களிடம் வந்து,அபூ அப்திர் ரஹ்மான் (இப்னு மஸ்வூத்) உங்களிடம் என்ன பேசினார்? என்று கேட்டார். நாங்கள் அவர் (இப்னு மஸ்வூத்(ரலி) சொன்னதை எடுத்துரைத்தோம். அதற்கு அவர்,அவர் உண்மையே சொன்னார். என் விவகாரத்தில்தான் அது அருளப்பட்டது. எனக்கும் இன்னொரு மனிதருக்குமிடையே ஒரு கிணற்றின் விஷயத்தில் தகராறு இருந்து வந்தது எனவே, நாங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் (எங்கள்) வழக்கைத் தாக்கல் செய்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,நீ இரண்டு சாட்சிகளைக் கொண்டு வர வேண்டும் அல்லது (பிரதிவாதியான) அவர் (குற்றத்தை மறுத்து) சத்தியம் செய்ய வேண்டும் என்று கூறினார்கள். அதற்கு நான்,அப்படியென்றால் அவர் (பொய்) சத்தியம் செய்வாரே, (பொய் சத்தியம் செய்கிறோமே என்று) கவலைப்பட மாட்டாரே என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்ஒரு செல்வத்தை அடைந்து கொள்வதற்காகப் பொய்சத்தியம் செய்கிறவர் (மறுமையில்) தன் மீது அல்லாஹ் கோபம் கொண்டிருக்கும் நிலையில் அவனைச் சந்திப்பார்‘ என்று கூறினார்கள். பிறகு, இந்த நபிவாக்கை உறுதிப்படுத்தி அல்லாஹ் (தன் வேதத்தில்) வசனம் ஒன்றை அருளினான்‘ என்று கூறிவிட்டு, 3:77ம் வசனத்தை (இறுதி வரை) ஓதிக் காட்டினார்கள்.

# அத்தியாயம் 49 அடிமையை விடுதலை செய்தல்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## அடிமையை விடுதலை செய்வதும் அதன் சிறப்பும்.

அல்லாஹ் கூறினான்:

(நன்மை, தீமையின்) தெளிவான இரண்டு வழிகளை அவனுக்கு நாம் காட்டி விட்டோம். ஆயினும், அவன் கடினமான மலைப் பாதையை (நன்மையின் பாதையைக்) கடந்து செல்லத் துணியவில்லை. கடினமான அந்த மலைப்பாதை எதுவென்று உமக்குத் தெரியுமா? (அதுதான்) ஒருவனை அடிமைத் தளையிலிருந்து விடுவிப்பதாகும் அல்லது பட்டினியான நாளில் உறவினரான அநாதைக்கோ அல்லது வறுமையில் வாடும் ஏழைக்கோ உணவளிப்பதும் ஆகும். (திருக்குர்ஆன் 90: 10-17)

ஹதீஸ் 2517. அலீ இப்னு ஹுஸைன்(ரஹ்) அவர்களின் தோழரான ஸயீத் இப்னு மர்ஜானா(ரஹ்) அறிவித்தார்.

“ஒரு முஸ்லிமான (அடிமை) மனிதரை விடுதலை செய்கிறவரை (விடுதலை செய்யப்பட்ட) அந்த முஸ்லிமின் ஒவ்வோர் உறுப்புக்கும் பகரமாக (விடுதலை செய்தவருடைய) ஓர் உறுப்பை அல்லாஹ் நரகத்திலிருந்து (விடுவித்துக்) காப்பாற்றுவான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என என்னிடம் அபூ ஹுரைரா(ரலி) கூறினார். உடனே நான், இந்த நபிமொழியை அலீ இப்னு ஹுஸைன்(ரஹ்) அவர்களிடம் கொண்டு சென்றேன். இதைக்கேட்ட அன்னார் தம் அடிமை ஒருவரை விடுதலை செய்ய விரும்பினார்கள். அந்த அடிமைக்கு (விலையாக) அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர் இப்னு அபீ தாலிப்(ரலி) பத்தாயிரம் திர்ஹம்களையோ ஆயிரம் தீனாரையோ அன்னாரிடம் கொடுத்திருந்தார்கள். அவ்வாறிருந்தும. (அந்தப் பணத்திற்குப் பொறுப்பேற்றுக் கொண்டு) அந்த அடிமையே அன்னார் விடுதலை செய்துவிட்டார்கள்.

## எந்த அடிமையை விடுதலை செய்வது மிகவும் சிறந்தது.

ஹதீஸ் 2518. அபூ தர்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களிடம்,எந்த நற்செயல் சிறந்தது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அல்லாஹ்வின் மீது ஈமான் எனும் நம்பிக்கை கொள்வதும் அவனுடைய பாதையில் ஜிஹாத் எனும் போராடுவதுமாகும்‘ என்று பதிலளித்தார்கள். நான்,எந்த அடிமை(யை விடுதலை செய்வது) சிறந்தது‘ என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அவர்களில் அதிக விலை கொண்ட அடிமையும் தன் எஜமானர்களிடம் பெறுமதி மிக்க அடிமையும் (தான் சிறந்தவர்கள்)‘ என்று பதிலளித்தார்கள். நான்,என்னால் அது (அடிமையை விடுதலை செய்வது) இயலவில்லையென்றால்? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,பலவீனருக்கு உதவ் அல்லது உழைத்துச் சம்பாதிக்க இயலாதவனுக்கு நன்மை செய்‘ என்று கூறினார்கள். நான்,இதுவும் என்னால் இயலாவில்லையென்றால்...? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,மக்களுக்குத் தீங்கு செய்யாமல் இரு. ஏனெனில், அதுவும் நீ உனக்க செய்து கொள்ளும் ஒரு தர்மம் ஆகும்‘ என்று கூறினார்கள்.

## சூரிய கிரகணம் உள்ளிட்ட இறைச் சான்றுகள் வெளிப்படும்போது அடிமைகளை விடுதலை செய்வது விரும்பத்தக்கது.

ஹதீஸ் 2519. அஸ்மா பின்த்து அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத்தின்போது அடிமைகளை விடுதலை செய்யும்படி உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 2520. அஸ்மா பின்த்து அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் சந்திர கிரகணத்தின்போது அடிமைகளை விடுதலை செய்யும்படி கட்டளையிட்டிருந்தோம்.

## இருவருக்குரிய ஓர் அடிமையை, அல்லது பலருக்குரிய ஓர் அடிமைப் பெண்ணை விடுதலை செய்தல்.

ஹதீஸ் 2521. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இருவருக்குப் பங்குள்ள ஓர் அடிமையை (அவ்விருவரில்) ஒருவர் விடுதலை செய்தால் அவர் வசதியுடையவராக இருப்பாராயின் அவ்வடிமையின் (சந்தை) விலை மதிப்பிடப்பட்டு (மீதி விலையும் செலுத்தப்பட வேண்டும்) பின்னர் அவன் விடுதலை செய்யப்பட வேண்டும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2522. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் தனக்குள்ள பங்கை விடுதலை செய்கிறவரிடம் அந்த அடிமையின் (முழு) விலையையும் எட்டுகிற அளவிற்குச் செல்வம் இருந்தால் அந்த அடிமையை ஒத்த மற்றோர் அடிமையின் விலையை மதிப்பிட்டு தன்னுடைய கூட்டாளிகளுக்கு அவர்களின் பங்குக்கான விலையைக் கொடுத்து அந்த அடிமையை (முழுமையாக) விடுதலை செய்து விட வேண்டும். இல்லையென்றால், அவர் எந்த அளவிற்கு விடுதலை செய்தாரோ, அந்த (தன்னுடைய பங்கின்) அளவிற்கே விடுதலை செய்தவராவார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2523. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையின் தனக்குள்ள பங்கை விடுதலை செய்கிறவர் தன்னிடம் அவ்வடிமையின் (முழு) விலையை எட்டுகிற் அளவிற்குச் செல்வம் இருந்தால், அந்த அடிமையை முழுமையாக விடுதலை செய்து விடவே வண்டும். அந்த அடிமைக்கு ஒத்த (மற்றோர் அடிமையின்) விலையை மதிப்பிட்ட பின் (அவனுடைய மற்றப் பங்குகளையும்) விடுதலை செய்யும் அளவிற்கு அவரிடம் செல்வம் இல்லையென்றால் அவர் விடுதலை செய்த அந்த (அவரின் பங்கின்) அளவிற்கு மட்டுமே அவ்வடிமை விடுதலை செய்யப்படுவார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2524. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் தனக்குள்ள பங்கை விடுதலை செய்தவரிடம் அவ்வடிமையையொத்த மற்றோர் அடிமையின் விலையை எட்டுகிற அளவுக்குச் செல்வம் இருந்தால் அவன் (முழுவதுமாக) விடுதலை செய்யப்பட வேண்டும்.

மேலும்,அவ்வாறு (முழுவதுமாக விடுதலை) செய்ய இயலாவிட்டால் அவர் விடுதலை செய்த (அந்தப் பங்கின்) அளவிற்கே அந்த அடிமையை விடுதலை செய்தவராவார் என்று நாஃபிஉ(ரஹ்) கூறினார்' என்று சொல்லிவிட்டு,இந்தக் கடைசி வாசகத்தை நாஃபிஉ(ரஹ்) கூறினார்களா

அல்லது அது ஹதீஸின ஒரு பகுதியா என்று எனக்குத் தெரியாது' என்று அறிவிப்பாளர் அய்~ப் (ரஹ்) சொன்னார்கள்.

ஹதீஸ் 2525. நா:பிஉ (ரஹ்) அறிவித்தார்.

பங்குதாரர்கள் பலருக்கும் கூட்டான (சொத்தாக இருக்கும்) ஓர் அடிமையில் அல்லது அடிமைப் பெண்ணில் தன்னுடைய பங்கை (பங்குதாரர்களில்) ஒருவர் விடுதலை செய்யும் விஷயத்தில் இப்னு உமர் (ரலி) மார்க்கத் தீர்ப்பு வழங்கி வந்தார்கள். அத்தீர்ப்பில், (தன்னுடைய பங்கை) விடுதலை செய்தவர் மீது அவ்வடிமையை ஒத்த (மற்றோர் அடிமையின்) விலை மதிப்பிடப்பட்டு அந்த அளவிற்குச் செல்வம் அவரிடம் இருக்குமாயின் அவ்வடிமையை முழுவதுமாக விடுதலை செய்வது அவரின் மீது கடமையாகும். (அவரின் மற்ற) கூட்டாளிகளுக்கு அவர்களின் பங்கு (களுக்கான விலை) கள் கொடுக்கப்பட்டு விடவேண்டும். விடுதலை செய்யப்பட்ட அடிமை சுதந்திரமாகச் செல்ல அனுமதிக்கப்பட வேண்டும்' என்று சொல்லி வந்தார்கள்.

இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்தே இப்னு உமர் (ரலி) அறிவித்து வந்தார்கள்.

(பலருக்கும்) கூட்டான ஓர் அடிமையில் தன்னுடைய பங்கை மட்டும் விடுதலை செய்த ஒருவரிடம் (அந்த அடிமையை முழுமையாக விடுதலை செய்யப் போதுமான) செல்வம் இல்லையென்றால் விடுதலைப் பத்திரத்தில் எழுதியுள்ளபடி அந்த அடிமை (தன்னை முழுமையாக விடுதலை செய்து கொள்ளத் தேவையான செல்வத்தைச் சம்பாதித்துக் கொள்வதற்காக) உழைக்க அனுமதிக்கப்பட வேண்டும் அவனுக்கு அதிகச் சிரமத்தைத் தரக் கூடாது.

ஹதீஸ் 2526. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையிலிருந்து (தன்னுடைய) பங்கை விடுதலை செய்தவர்.. (தன்னிடம் போதிய) செல்வம் இருக்குமாயின் அந்த அடிமை (யின் மற்ற பங்குகள்) முழுவதையும் விடுதலை செய்யட்டும். இல்லையெனில் அவ்வடிமை, (மீதிப் பங்குகளுக்கான விலையைத் தந்து முழு விடுதலை பெற்றுக் கொள்வதற்காக) உழைத்து (ச் சம்பாதித்து) க் கொள்ள அனுமதிகக்ப்பட வேண்டும். அவன் மீது அதிகச் சிரமத்தை சுமத்தக் கூடாது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2527. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் (தனக்குள்ள) ஒரு பங்கை விடுதலை செய்கிறவரிடம் (போதிய) செல்வம் இருக்குமாயின் அவரின் செல்வத்திலிருந்து அவ்வடிமையை (முழுவதுமாக) விடுதலை செய்வது அவரின் மீது கடமையாகும். (அவரிடம் போதிய செல்வம்) இல்லையெனில், அவ்வடிமையின் (நியாயமான விலை மதிப்பிடப்பட்டு மீதிப் பங்குகளின் விலையைத் தருவதற்காக) உழைத்து (சம்பாதித்து) க் கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும். அவனுக்கு அதிகச் சிரமத்தைத் தரக்கூடாது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

அடிமையை விடுதலை செய்தல், விவாகரத்து செய்தல் போன்றவற்றில் நேரும் தவறும் மறதியும் மேலும், அல்லாஹ்வின் திருப்திக்காவே தவிர அடிமையை விடுதலை செய்வது கூடாது என்பதும்.

“ஒவ்வொரு மனிதனுக்கும், அவன் எண்ணியதே கிடைக்கும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஆனால், (ஒன்றை) மறந்துவிட்டவனுக்கும், தவறுதலாகச் செய்துவிட்டவனுக்கும்நிய்யத் (எண்ணம்) என்பதே கிடையாது.

ஹதீஸ் 2528. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உம்மத்தினரின் உள்ளங்களில் ஊசலாடும் தீய எண்ணங்களை, அவர்கள் அதன்படி செயல்படாதவரை அல்லது அதை (வெளிப்படுத்தி)ப் பேசாதவரை எனக்காக அல்லாஹ் மன்னித்துவிட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2529. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

செயல்கள் (அனைத்துமே) எண்ணங்களைப் பொருத்தே அமைகின்றன. ஒரு மனிதனுக்கு அவன் எதை எண்ணியிருந்தானோ அதுதான் கிடைக்கும். ஒருவர் அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் ஹிஜ்ரத் செய்வாராயின் அவரின் ஹிஜ்ரத் அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவுமே அமைந்திருக்கும். அவரின் ஹிஜ்ரத் அவர் அடைந்து கொள்ளும் உலக ஆதாயம் ஒன்றுக்காகவோ, அவர் மணந்து கொள்ளும் ஒரு பெண்ணுக்காகவோ இருக்குமானால் அவர் எதற்காக ஹிஜ்ரத் செய்தாரோ அதுதான் அவருக்குக் கிடைக்கும்.

என உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்.

## விடுதலை செய்யும் எண்ணத்தில் ஒருவர் தன் அடிமையை இவன் அல்லாஹ்வுக்குரியவன் என்று கூறினால் (அது செல்லும்.) மேலும், அடிமையை விடுதலை செய்ய சாட்சிகளை ஏற்படுத்துதல்.

ஹதீஸ் 2530. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நான் இஸ்லாத்தை ஏற்க விரும்பி (நபி(ஸல) அவர்களிடம்) சென்று கொண்டிருந்த பொழுது என்னுடன் ஓர் அடிமையும் இருந்தார். (வழியில்) அவர் என்னைப் பிரிந்தும் நான் அவரைப் பிரிந்தும் வழிதவறிச் சென்றுவிட்டோம். அதன் பிறகு, நான் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்த பொழுது அவ்வடிமை வந்தார். உடனே நபி(ஸல்) அவர்கள்,அபூ ஹுரைராவே! இதோ, உங்கள் அடிமை உங்களிடம் வந்திருக்கிறான் (பாரும்)‘ என்று கூறினார்கள். நான்,(நபி(ஸல்) அவர்களே!) இந்த அடிமை சுதந்திரமானார் என்பதற்கு நான் தங்களை சாட்சியாக ஆக்குகிறேன்‘ என்று கூறினேன்.

அறிவிப்பாளர் கைஸ்(ரஹ்) கூறினார்.

அபூ ஹுரைரா(ரலி) மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து மதீனா வந்தபோது அவர் பின்வரும் கவிதையைப் பாடிக் கொண்டே வந்த நேரத்தில் இந்தச் சம்பவம் நடைபெற்றது:

எவ்வளவு நீண்ட களைப்பூட்டுகிற இரவு! ஆயினும் அது இறைமறுப்பு (ஏக இறைவனை ஏற்க மறுக்கும் கொள்கை) ஆட்சி செய்யும் நாட்டிலிருந்து எங்களை விடுதலை செய்துவிட்டது.

ஹதீஸ் 2531. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நான் (மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து மதீனாவிற்கு) நபி(ஸல்) அவர்களைக் காணவந்தபோது பாதையில்,எவ்வளவு நீண்ட களைப்பூட்டுகிற இரவு! ஆயினும், அது இறைமறுப்பு ஆட்சி செய்யும் நாட்டிலிருந்து எங்களை விடுதலை செய்துவிட்டது‘ என்று பாடினேன். வழியில் என்னுடைய

அடிமை ஒருவன் தப்பியோடிவிட்டான். நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றபோது அவர்களிடம் நான் (இஸ்லாத்திற்கான) உறுதிமொழியளித்தேன். நான் நபி(ஸல்) அவர்களிடமே இருந்து கொண்டிருந்தபோது அந்த (என்) அடிமை தென்பட்டான். உடனே நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,அபுஹுரைராவே! இதோ உங்கள் அடிமை உங்களிடம் வந்துவிட்டான் (பாருங்கள்)' என்று கூறினார்கள். நான்,அவன் (இன்று முதல்) சுதந்திரமானவன் (என்று) அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காக (அறிவிக்கிறேன்)' என்று கூறினேன் அவ்விதம் (கூறி) அவனை விடுதலை செய்துவிட்டேன்.

அபூ அப்தில்லாஹ் புகாரி(யாகிய நான்) கூறுகிறேன்:

இந்த அறிவிப்பாளர் தொடரிலுள்ள அபூ உஸாமாவிடமிருந்து இதே ஹதீஸை அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பாளரான அபூ குரைப் அவர்களின் அறிவிப்பில்(அவன்) சுதந்திரமானவன் என்னும் சொல் மட்டும் இல்லை.

ஹதீஸ் 2532. கைஸ் இப்னு அவ்ஃப்(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுரைரா(ரலி) (நபி(யவர்களிடம்) இஸ்லாத்தை (ஏற்க) நாடி வந்த பொழுது அவர்களுடன் ஓர் அடிமையும் இருந்தான். அவர்கள் பாதையறியாமல் ஒருவரையொருவர் பிரிந்து போய்விட்டார்கள். பிறகு, அபூ ஹுரைரா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் சென்று....நபி(ஸல்) அவர்களே! இவ்வடிமை அல்லாஹ்விற்குரியவன் என்பதற்கு நான் தங்களையே சாட்சியாக்குகிறேன்' என்று கூறினார்கள்.

"அடிமைப்பெண்உம்முல் வலத்' தன்னுடைய எஜமானைப் பெற்றெடுப்பதும்... மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2533. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உத்பா இப்னு அபீ வக்காஸ் தன் சகோதரர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம் ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகனை,அவன் என்னுடைய மகன்' என்று கூறி, அவனைப் பிடித்து வரும்படி உறுதிமொழி வாங்கியிருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது (மக்கா நகருக்கு) வந்திருந்த சமயம், ஸஅத்(ரலி) ஸம்ஆவுடைய அடிமைப் பெண்ணின் மகனைப் பிடித்துக் கொண்டு அல்லாஹ்வின் தூதரிடம் வந்தார். ஸம்ஆவின் மகன் அப்து(ரலி) அவர்களையும் தம்முடன் கொண்டு வந்தார். பிறகு ஸஅத்(ரலி),இறைத்தூதர் அவர்களே! இவன் என் சகோதரரின் மகன். என் சகோதரர் என்னிடம் இவன் தன் மகன் என்று (கூறி இவனை அழைத்து வர) உறுதிமொழி வாங்கியுள்ளார்' என்று கூறினார்கள். அப்து இப்னு ஸம்ஆ(ரலி),இறைத்தூதர் அவர்களே! இவன் என்னுடைய சகோதரன் என் தந்தை ஸம்ஆவின் அடிமைப் பெண் பெற்றெடுத்த மகன் தன் தந்தையின் படுக்கையில் (என் தந்தையின் ஆதிக்கத்தில் இவனுடைய தாய் இருந்த போது) பிறந்தவன்' என்று கூறினார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகனைப் பார்த்தார்கள். அவன் மக்களில் உத்பாவிற்கு மிகவும் ஒப்பானவனாக இருந்ததைக் கண்டார்கள். (ஸம்ஆவின் மகன் அப்து(ரலி) அவர்களை நோக்கி)அப்து இப்னு ஸம்ஆவே! அவன் உனக்கே உரியவன்' என்று கூறினார்கள். அவன் அப்துவின் தந்தை ஸம்ஆவின் படுக்கையில் பிறந்தவன் என்னும் காரணத்தால் இப்படிக் கூறினார்கள். (பிறகு) இறைத்தூதர் (தம் மனைவி சவ்தா(ரலி) அவர்களை நோக்கி,)ஸம்ஆவின் மகள் சவ்தாவே! இவன் பார்வையில் படாத வண்ணம் நீ திரையிட்டுக் கொள்' என்று கூறினார்கள். தோற்றத்தில் உத்பாவுக்கு ஒப்பாக அவன் இருந்ததைக் கண்டதாலேயே நபி(ஸல்) அவர்கள் இப்படிக்கட்டளையிட்டார்கள். சவ்தா(ரலி) நபி(ஸல்) அவர்களின் மனைவியாக இருந்தார்கள்.

## முதப்பரை - பின் விடுதலை அளிக்கப்பட்ட அடிமையை விற்பது.

ஹதீஸ் 2534. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

எங்களில் ஒருவர் தன் அடிமை ஒருவனை தன் ஆயுட்காலத்திற்குப் பிறகு விடுதலை செய்து விடுவதாக அறிவித்திருந்தார். நபி (ஸல்) அவர்கள் அந்த அடிமையை ("இவனை வாங்குபவர் யார்? என்று) கூவி அழைத்து (ஏலத்தில்) விற்றுவிட்டார்கள். அந்த அடிமை (விற்கப்பட்ட) முதல் ஆண்டிலேயே மரணித்துவிட்டான்.

## 'வலா'வை (முன்னாள் அடிமைக்கு வாரிசாகும் உரிமையை) விற்பதும் நன்கொடையாக வழங்குவதும்.

ஹதீஸ் 2535. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (முன்னாள்) அடிமைக்கு வாரிசாகும் உரிமையை (அவனுடைய எஜமானர்கள்) விற்பதையும் (அன்பளிப்பாக) வழங்குவதையும் தடை செய்தார்கள். 11

ஹதீஸ் 2536. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நான் பரீராவை வாங்கினேன். அப்போது அவரின் எஜமானர்கள்அவருக்கு வாரிசாகும் உரிமை தமக்கே உரியதாக இருக்கவேண்டும் என்று நிபந்தனையிட்டார்கள். நான் இதை நபி (ஸல்) அவர்களிடம் சொன்னேன். அவர்கள், அவளை விடுதலை செய்து விடு! ஏனெனில், வலா - விலையைக் கொடுப்பவருக்கே (விடுதலை செய்பவருக்கே) உரியதாகும்' என்று கூறினார்கள். நான் அவரை விடுதலை செய்துவிட்டேன். நபி (ஸல்) அவர்கள் பரீராவை அழைத்து, அவரின் கணவர் விஷயத்தில் (அவருடன் வாழ்வது, அல்லது பிரிந்து விடுவது இரண்டில்) எதையும் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை வழங்கினார்கள். அதற்கு பரீரா, அவர் எனக்கு எவ்வளவுதான் கொடுத்தாலும் அவரிடம் நான் இருக்க மாட்டேன்' என்று கூறி (கணவனைப் பிரிந்து) தனித்து வாழ்வதையே தேர்ந்தெடுத்தார்.

## ஒருவரின் சகோதரர், அல்லது தந்தையின் சகோதரர் இணைவைப்பவராக இருக்கும் நிலையில் போர்க் கைதிகளாகப் பிடிக்கப்பட்டால் (அவர்களை விடுதலை செய்வதற்கு) பிணைத் தொகை பெறத்தான் வேண்டுமா?

அனஸ் (ரலி) கூறினார்.

அப்பாஸ் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம், நான் எனக்கும் அகீலுக்கும் பிணைத் தொகை கொடுத்து விட்டேன்' என்று கூறினார்கள்.

தம் சகோதரர்கள் அகீல் அவர்களிடமிருந்தும் தம் தந்தையின் சகோதரரான அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தும் பெற்ற போர்ச் செல்வத்தில் அலீ (ரலி) அவர்களுக்குப் பங்கிருந்தது.

ஹதீஸ் 2537. அனஸ் (ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் சிலர் அல்லாஹ்வின் தூதரிடம், எங்கள் சகோதரி மகன் அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து பிணைத் தொகை பெறாமல் நாங்கள் (அவரை) விட்டு விடுகிறோம் நீங்கள் எங்களுக்கு அனுமதி கொடுங்கள்' என்று அனுமதி கோரினார்கள்.

நபி (ஸல்) அவர்கள், அவரிடமிருந்து ஒரு திர்ஹமைக் கூட (வாங்காமல்) விட்டு விடாதீர்கள்' என்று கூறினார்கள்.

## இணைவைப்பவர் (தன் அடிமையை) விடுதலை செய்தல்.

ஹதீஸ் 2538. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்.

ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அறியாமைக் காலத்தில் நூறு அடிமைகளை விடுதலை செய்தார்கள் நூறு ஒட்டகங்களையும் அறுத்து தருமம் செய்தார்கள். இவ்வாறே, அவர்கள் இஸ்லாத்தைத் தழுவியபோது (ஹஜ் செய்த நேரத்தில்) நூறு ஒட்டகங்களை அறுத்து தருமம் (செய்து) நூற அடிமைகளையும் விடுதலை செய்தார்கள். நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! நான் அறியாமைக் காலத்தில் நன்மையை நாடியவனாக செய்து வந்த (தரும) காரியங்களைக் குறித்து தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்னர் செய்த நற்செயல்க(ளுக்கான பிரதிபலன்)களுடனேயே நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுள்ளீர்கள்' என்று கூறினார்கள்.

## அரபி அடிமையை உடைமையாக்கிக் கொள்வதும், அந்த அடிமையை அன்பளிப்பாக வழங்குவதும், விலைக்கு விற்பதும், உடலுறவு கொள்வதும், அவனிடம் பிணைத் தொகை பெறுவதும், அவனுடைய மக்களை அடிமைகளாக்கிக் கொள்வதும் (அனுமதிக்கப்பட்டது).

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் இவ்வாறு ஓர் உதாரணம் சொல்கிறான்:

பிறருக்கு உடைமையாக்கப்பட்ட ஓர் அடிமை இருக்கிறார் அவர் சுயமாக எதையும் செய்ய அதிகாரம் இல்லாதவர். மற்றொருவர் இருக்கிறார். அவருக்கு நாம் நம்மிடத்திலிருந்து நல்ல வாழ்க்கை வசதிகளை வழங்கியிருக்கிறோம். அவர் அதிலிருந்து மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் செலவு செய்கிறார். (கூறுங்கள்:) இவ்விருவரும சமமாவார்களா? அல்ஹம்துலில்லாஹ்... எல்லாப் புகழும் இறைவனுக்கே! ஆனால், (இந்தநேரிய விஷயத்தை) அவர்களில் பெரும்பாலோர் அறிந்து கொள்வதில்லை. (திருக்குர்ஆன் 16:75) 15

ஹதீஸ் 2539 , ஹதீஸ் 2540 மர்வான் இப்னி ஹகம் மற்றும் மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்.

ஹவாஸின் குலத்தைச் சேர்ந்த ஒரு குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து தங்கள் செல்வங்களையும் முஸ்லிம்களால் (சிறைபிடிக்கப்பட்ட) போர்க்கைதிகளையும் திருப்பித் தந்து விடும்படி கேட்டபோது நபி(ஸல்) அவர்கள் (அக்குழுவினரை) எழுந்து நின்று (வரவேற்று),என்னுடன் நீங்கள் பார்க்கிற (மற்ற)வர்களும் இருக்கின்றனர். உண்மையான பேச்சே எனக்கு மிகவும் பிடிக்கும். எனவே, செல்வங்கள் அல்லது கைதிகள் இரண்டில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். நான் உங்களை எதிர்பார்த்தே இருந்தேன்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் தாயிஃபிலிருந்து திரும்பியது முதல், பத்து நாள்களாக அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் இரண்டில் ஒன்றையே திருப்பித் தருவார்கள் என்று அவர்களுக்குத் தெளிவாகிவிட்டபோது,நாங்கள் கைதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறோம் என்று கூறினார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வைப் புகழ்ந்து (உரையாற்றலானார்கள். அப்போது)உங்களுடைய (இந்தச்) சகோதரர்கள் மனம் திருந்தி நம்மிடம் வந்துள்ளனர். அவர்களிடம் அவர்களின் (குலத்தினரின்) கைதிகளைத் திருப்பித் தந்து விட விரும்புகிறேன். உங்களில் மனப்பூர்வமாக இதைச் செய்ய (திருப்பித் தந்துவிட) விரும்புகிறவர் செய்யட்டும் (திருப்பித் தந்து விடட்டும்). தம் பங்கு(க்குரிய கைதிகள்) தம்மிடமே இருக்க வேண்டுமென விரும்புபவர் அல்லாஹ் நமக்கு (அடுத்தடுத்த வெற்றிகளின் வாயிலாகக்) கொடுக்கவிருக்கும் முதலாவது செல்வத்திலிருந்து நாம் அவருக்குக் கொடுக்கும் வரை அவ்வாறே செய்யட்டும்.

(தம்மிடமே கைதிகளை வைத்துக் கொள்ளட்டும்.) (இதைச் செவியுற்றதும்) மக்கள்,நாங்கள் உங்களுக்காக மனப்பூர்வமாக (கைதிகளைத்) திருப்பித் தந்து விடுகிறோம்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,உங்களில் சம்மதிப்பவர் யார், சம்மதிக்காதவர் யார் என்று நாம் அறிய மாட்டோம். எனவே, நீங்கள் திரும்பிச் செல்லுங்கள். உங்களிடையேயுள்ள தலைவர்கள் உங்கள் முடிவை நம்மிடம் தெரிவிக்கட்டும் (பிறகு பார்த்துக் கொள்வோம்)' என்று கூறினார்கள். எனவே, மக்கள் திரும்பிச் சென்றனர். அவர்களிடையேயுள் தலைவர்கள் அவர்களுடன் (கலந்து) பேசினர். பிறகு, நபி(ஸல்) அவர்களிடம் திரும்பி வந்து, அவர்கள் மனமொப்பி சம்மதித்துவிட்டதாகத் தெரிவித்தனர். இதுதான் ஹவாஸின் போர்க் கைதிகள் குறித்து நமக்கு எட்டிய செய்தியாகும்.

அனஸ்(ரலி) கூறினார்.

அப்பாஸ்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம்,நான் எனக்கும் அகீலுக்கும் பிணைத் தொகை கொடுத்து விட்டேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2541. இப்னு அவ்ன்(ரஹ்) அறிவித்தார்.

நான் நாஃபிஉ(ரஹ்) அவர்களுக்குக் கடிதம் எழுதினேன் அவர்கள் எனக்கு (பதில்) கடிதம் எழுதினார்கள். அதில் அவர்கள்நபி(ஸல்) அவர்கள் பனு முஸ்தலிக் குலத்தார் அசட்டையாக (எச்சரிக்கையின்றி) இருந்தபோது அவர்களின் மீது (திடீர்) தாக்குதல் நடத்தினார்கள் அப்போது அவர்களின் கால்நடைகள் நீர்நிலை ஒன்றில் தண்ணீர் புகட்டப்பட்டுக் கொண்டிருந்தன. அவர்களில் போரிடும் திறன் பெற்றவர்களைக் கொன்றார்கள் அவர்களின் மக்களை (பெண்கள், பிள்ளை குட்டிகளை) போர்க் கைதிகளாக சிறை பிடித்தார்கள் அன்றுதான் ஜுவைரிய்யா(ரலி) அவர்களைக் கண்டார்கள். இதை அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) எனக்கு அறிவித்தார்கள். அவர்களும் அந்த (முஸ்லிம்) படையில் இருந்தார்கள் என்று குறிப்பிட்டிருந்தார்கள்.

ஹதீஸ் 2542. இப்னு முஹைரீஸ்(ரஹ்) அறிவித்தார்.

நான் அபூ ஸயீத் குத்ரீ(ரலி) அவர்களைப் பார்த்தபோது அவர்களிடம் (அஸல் செய்வது பற்றி) கேட்டேன். அவர்கள் சொன்னார்கள் நாங்கள் அல்லாஹ்வின் தூதருடன் பனு முஸ்தலிக் (குலத்திற்கெதிரான) போருக்குச் சென்றோம். அப்போது, அரபுகளிலிருந்து போர்க் கைதிகள் (சிலர்) எங்களுக்குத் கிடைத்தனர். நாங்கள் (அந்தக் கைதிகளிடையேயிருந்த) பெண்களை (உடலுறவு கொள்ள) விரும்பினோம். ஏனெனில், (எங்கள் மனைவியரைப் பிரிந்து) தனிமையில் இருந்தது எங்களை வாட்டியது. மேலும், (இந்தப் பெண்களுடன் உடலுறவு கொள்ளும்போது)அஸ்ல் செய்ய நாங்கள் விரும்பினோம். எனவே, அல்லாஹ்வின் தூதரிடம் அதுபற்றிக் கேட்டோம். அதற்கு,நீங்கள் அதைச் செய்யாமலிருந்தால் தவறேதுமில்லையே! மறுமைநாள் வரை தவறேது மில்லையே! மறுமை நாள் வரை (இறைவிதிப்படி) உருவாக வேண்டிய எந்த உயிரும் கட்டாயம் உருவாகியே தீரும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2543. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பனு தமீம் குலத்தார் பற்றிக் கூறிய மூன்று விஷயங்களைக் கேட்டதிலிருந்து நான் அவர்களை எப்போதும் நேசிக்கலானேன். (ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள்,அவர்கள் (பனு தமீம் குலத்தார்) என் உம்மத்தினரிலேயே அதிகக் கடுமையுடன் தஜ்ஜாலை எதிர்த்துப் போராடுவார்கள்' என்று கூறினார்கள். (ஒரு முறை) பனு தமீம் குலத்தாரின் தருமப் பொருள்கள் வந்தபோது இறைத்தூதர்,இவை எங்கள் இனத்தாரின் தருமப் பொருள்கள்' என்று கூறினார்கள். (ஒரு முறை) ஆயிஷா(ரலி) அவர்களிடம் பனுதமீம் குலத்தாரின் பெண் போர்க் கைதி ஒருவர் இருந்தார். நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா(ரலி)

அவர்களிடம்,நீ இந்தப் பெண்ணை விடுதலை செய்துவிடு. ஏனெனில், இவள் இஸ்மாயீல்(அலை) அவர்களின் சந்ததிகளில் ஒருத்தி‘ என்று கூறினார்கள்.

## தம் அடிமைப் பெண்ணுக்கு ஒழுக்கமும் கல்வியும் கற்பிப்பவரின் சிறப்பு.

ஹதீஸ் 2544. தன்னிடம் ஓர் அடிமைப் பெண் இருந்து, அவளுக்கு அவர் கல்வி கற்றுக் கொடுத்து, அவளை நல்ல முறையில் நடத்தி, பிறகு அவளை விடுதலை செய்து திருமணமும் முடித்து வைக்கிறவருக்கு இரண்டு நன்மைகள் உண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

## இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அடிமைகள் உங்கள் சகோதரர்கள். நீங்கள் உண்ணுவதிலிருந்தே அவர்களுக்கு உண்ணக் கொடுங்கள்.

அல்லாஹ் கூறினான்.

மேலும், நீங்கள் அனைவரும் அல்லாஹ்வுக்கே அடிபணிந்து வாழுங்கள். அவனோடு எதனையும் இணையாக்காதீர்கள். தாய் தந்தையரிடமும், உறவினர்களிடமும், அநாதைகள் மற்றும் வறியவர்களிடமும் நல்ல விதமாக நடந்து கொள்ளுங்கள். மேலும், உறவினரான அண்டை வீட்டார், அந்நியரான அண்டை வீட்டார், பக்கத்திலிருக்கும் நண்பர், வழிப்போக்கர் மற்றும் உங்கள் ஆதிக்கத்திலுள்ள அடிமைகள் ஆகியோருடனும் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக, அல்லாஹ் தற்பெருமை கொண்டு கர்வமாக நடப்பவர்களை நேசிப்பதில்லை. (திருக்குர்ஆன் 4:36)

ஹதீஸ் 2545. மஃரூர் இப்னு சுவைத்(ரஹ்) அறிவித்தார்.

நான், அபூ தர் கிஃபாரீ(ரலி) ஒரு மேலங்கியை (தம் மீது) அணிந்தவர்களாக இருக்கும் நிலையில் அவர்களைக் கண்டேன். அப்போது அவர்களின் அடிமையும் ஒரு மேலங்கியை அணிந்திருந்தார். அதைப்பற்றி (இருவரும் ஒரே விதமான ஆடை அணிந்திருப்பது பற்றி) அபூ தர்(ரலி) அவர்களிடம் நாங்கள் கேட்டோம். அதற்கு அவர்கள் சொன்னார்கள் நான் ஒருவரை (அவரின் தாயைக் குறிப்பிட்டு) ஏசிவிட்டேன் அவர் நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டார். நபி(ஸல்) அவர்கள் (என்னை நோக்கி)இவரின் தாயாரைக் குறிப்பிட்டு நீர் குறை கூறினீரா? என்று கேட்டார்கள். பிறகு,உங்கள் அடிமைகள் உங்கள் சகோதரர்கள் ஆவர். அவர்களை அல்லாஹ் உங்கள் ஆதிக்கத்தின் கீழ் ஒப்படைத்துள்ளான். எனவே, எவரின் ஆதிக்கத்தின் கீழ் அவரின் சகோதரர் இருக்கிறாரோ அவர், தன் சகோதரருக்கு, தான் உண்பதிலிருந்து உண்ணத் தரட்டும். தான் உடுத்துவதிலிருந்தே உடுத்தத் தரட்டும். அவர்களின் சக்திக்கு மீறிய வேலை பளுவை அவர்களின் மீது சுமத்தாதீர்கள். அப்படி அவர்களின் சக்திக்கு மீறிய வேலை பளுவை அவர்களின் மீது நீங்கள் சுமத்தினால் (அதை நிறைவேற்றிட) அவர்களுக்கு உதவுங்கள்‘ என்று கூறினார்கள்.

## இறைவனையும் முறையாக வழிபட்டு, எஜமானுக்கும் விசுவாசமாக நடந்து கொள்கிற அடிமையின் சிறப்பு.

ஹதீஸ் 2546. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடிமை, தன் எஜமானுக்கு விசுவாசமாக நடந்து, தன் இறைவனைச் செம்மையான முறையில் வணங்குவானாயின் அவனுக்கு இருமுறை நன்மை கிடைக்கும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2547. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு மனிதரிடம் அடிமைப் பெண் ஒருத்தி இருந்து, அவளுக்கு அவர் ஒழுக்கம் கற்பித்து, கல்வியையும் அழகிய முறையில் கற்றுக் கொடுத்து, அவளை விடுதலையும் செய்து, திருமணமும் முடித்து வைத்தால் அவருக்கு இரண்டு நன்மைகள் கிடைக்கும். மேலும், ஓர் அடிமை அல்லாஹ்வின் உரிமையையும் தன் எஜமானர்களின் உரிமையையும் (ஒழுங்காக) நிறைவேற்றுவானாயின் அவனுக்கும் இரண்டு நன்மைகள் கிடைக்கும்.

என அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2548. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவருக்கு உடைமையான நல்ல அடிமைக்கு இரண்டு நன்மைகள் உண்டு.

இதை அறிவித்துவிட்டு, அபூ ஹுரைரா(ரலி),எவனுடைய கரத்தில் என் உயிர் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக! இறைவழியில் போராடுவதும், ஹஜ்ஜும், என் தாய்க்குச் செய்ய வேண்டிய கடமையும் இல்லாமலிருந்திருந்தால் நான் (ஒருவரின்) அடிமையாக இருக்கும் நிலையில் மரணிப்பதையே விரும்பியிருப்பேன்!என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

ஹதீஸ் 2549. தன் இறைவனைச் செம்மையான முறையில் வணங்கி, தன் எஜமானுக்கு விசுவாசமாக நடப்பவரே உங்களில் நல்லவராவார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிக்கிறார்.

## அடிமையைக் கேவலமாகக் கருதுவதும்என் அடிமை, என் அடிமைப் பெண் என்று கூறுவதும் வெறுப்புக் குரியதாகும்.

மேலும் அல்லாஹ் கூறினான்:

உங்கள் ஆண், பெண் அடிமைகளில் நல்லவர்களுக்கும்... (திருக்குர்ஆன் 24:32)

பிறருக்கு உடைமையாக்கப்பட்ட ஓர் அடிமை... (திருக்குர்ஆன் 16:75)

அவ்வேளை வாயிலில் அவளுடைய எஜமான் (கணவன்) நிற்பதை இருவரும் கண்டார்கள். (திருக்குர்ஆன் 12:25)

உங்கள் ஆதிக்கத்தில் இருக்கிற இறைநம்பிக்கை கொண்ட அடிமைப் பெண்களில்... (திருக்குர்ஆன் 04: 25)

மேலும், நபி(ஸல்) அவர்கள்,உங்கள் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள்‘ என்று கூறியுள்ளனர்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

“உன் எஜமானிடம் (ரப்பிடம்) என்னைப் பற்றி எடுத்துக் கூற வேண்டும்‘ என்று (~சு.ப்) கூறினார். (திருக்குர்ஆன் 12:42)

மேலும், நபி(ஸல்) அவர்கள்,உங்கள் தலைவர் யார்? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 2550. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடிமை, தன் எஜமானுக்கு விசுவாசமாக நடந்து, தன் இறைவனை நல்ல முறையில் வணங்கி வருவானாயின் அவனுக்கு இருமுறை நன்மை கிடைக்கும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2551. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன் இறைவனை நல்லமுறையில் வணங்கி, தன் எஜமானுக்குத் தான் செய்ய வேண்டிய கடமைகளை (ஒழுங்காக) நிறைவேற்றி, அவனுக்கு நலம் நாடி (நேர்மையாகவும் விசுவாசமாகவும் நடந்து) அவனுக்கு கீழ்ப்படிகிற அடிமைக்கு என்றால் அவனுக்கு இரண்டு நன்மைகள் கிடைக்கும்.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2552. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் எவரும்உன் ரப்புக்கு (அதிபதிக்கு) உணவு கொண்டு, உன் ரப்புக்கு உளூச் செய்ய உதவு, உன் ரப்புக்கு நீர் புகட்டு என்று கூற வேண்டாம். என் எஜமான் என் உரிமையாளர் என்று கூறட்டும்.

"என் அடிமை என் அடிமைப் பெண்' என்று உங்களில் எவரும் கூற வேண்டாம். என் பணியாள் என் பணிப்பெண் என் பையன்' என்று கூறட்டும்.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2553. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமையில் தனக்கிருக்கும் பங்கை விடுதலை செய்கிறவருக்கு அவ்வடிமையின் விலையை எட்டுகிற அளவுக்குச் செல்வமிருந்தால் அவனையொத்த அடிமையின் விலை மதிப்பிடப்பட்டு, தன் செல்வத்திலிருந்து அதைச் செலுத்தி அவனை முழுமையாக விடுவித்து விடவேண்டும். இல்லையெனில், அவர் எந்த அளவுக்கு அவ்வடிமைய விடுதலை செய்தாரோ அந்த அளவுக்கே அவன் சுதந்திரவான் ஆவான்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2554. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளிகளே. உங்கள் பொறுப்புக்குட்பட்டவை பற்றி நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள். மக்களின் மீது ஆட்சி புரியும் தலைவர் அவர்களுக்குப் பொறுப்பாளியாவான். அவர்களை (பராமரித்த விதம்) குறித்து அவன் விசாரிக்கப்படுவான். பெண், தன் கணவனின் வீட்டிற்கும் அவனுடைய குழந்தைக்கும் பொறுப்பாளியாவாள். அவர்களை (பராமரித்த விதம்) குறித்து அவள் விசாரிக்கப்படுவாள். அடிமை, தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவன் அதை (பாதுகாத்த விதம்) குறித்து விசாரிக்கப்படுவான். ஆக, நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளிகளே. உங்கள் பொறுப்புக்குட்பட்டவை குறித்து நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2555 , ஹதீஸ் 2556 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடிமைப் பெண் விபசாரம் செய்தால் அவளுக்குக் கசையடி கொடுங்கள். அதன் பிறகும் அவள் விபசாரம் செய்தால் (அப்போதும்) அவளுக்குக் கசையடி (யே) கொடுங்கள். பிறகு மூன்றாவதாகவோ, நான்காவதாகவோ விபசாரம் செய்தால் அவளை ஒரு முடிக் கற்றைக்காகவாவது விற்று விடுங்கள்.

இதை அபூ ஹுரைரா (ரலி) அவர்களும் ஸைத் இப்னு காலித் (ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

## உங்கள் பணியாள் உங்களுக்கு உணவு கொண்டு வந்தால்...

ஹதீஸ் 2557. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவரிடம் அவரின் பணியாள் அவரின் உணவைக் கொண்டு வந்தால், அவர் அப்பணியாளைத் தம்முடன் (உட்கார வைத்துக் கொள்ளட்டும். அவ்வாறு) உட்கார வைக்கவில்லையென்றாலும் அவருக்கு ஒரு கவளம் அல்லது இரண்டு கவளங்கள் அல்லது ஒரு வாய் அல்லது இரண்டு வாய்கள் (அந்த உணவிலிருந்து) கொடுக்கட்டும். ஏனெனில், அதைத் தயாரிக்க அந்தப் பணியாள் பாடுபட்டார்.

## “அடிமை தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவார்“

(இதில்) நபி(ஸல்) அவர்கள் செல்வத்தை எஜமானுடன் இணைத்துக் கூறினார்கள்.

ஹதீஸ் 2558. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. மேலும் உங்கள் பொறுப்புக்குட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவீர்கள். ஆட்சித் தலைவரும் பொறுப்பாளியாவார். தன் பிரஜைகள் குறித்து அவர் விசாரிக்கப்படுவார். ஆண் தன் குடும்பத்தாருக்குப் பொறுப்பாளியாவார். அவன் தன் பொறுப்புக்குட்பட்டவர்கள் குறித்து விசாரிக்கப்படுவார். பெண் தன் கணவனின் வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள். அவளது பொறுப்புக்குட்பட்டவை குறித்து அவள் விசாரிக்கப்படுவாள். பணியாள் (அடிமை) தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவன் தன் பொறுப்புக்குட்பட்டவை பற்றி விசாரிக்கப்படுவான். இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்த இப்னு உமர் (ரலி) அவர்கள் நான் இவற்றையெல்லாம் நபி (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன். மெலும் நபி (ஸல்) அவர்கள் மனிதன் (மகன்) தன் தந்தையின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவனது பொறுப்புக்குட்பட்டவை குறித்து அவன் விசாரிக்கப்படுவான். ஆக நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளிகளே. நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் பொறுப்புக்குட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவீர்கள் என்று சொன்னதாக எண்ணுகிறேன் என்று கூறினார்கள்.

## ஒருவர் (தன்) அடிமையை அடித்தால் முகத்தில் அடிப்பதைத் தவிர்த்துக் கொள்ளட்டும்.

ஹதீஸ் 2559 உங்களில் ஒருவர் (எவரையாவது) தாக்கினால் முகத்(தில் அடிப்ப)தைத் தவிர்க்கட்டும். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

# அத்தியாயம் 50 முகாதப் விடுதலைப்பத்திரம் எழுதித் தரப்பட்ட அடிமை

## முகாதபும் அவனது விலையை ஆண்டுதோறும் தவணை முறையில் செலுத்துவதும்.

ஹதீஸ் 2560 பரீரா (ரலி) அவர்கள் (தம் எஜமானிடமிருந்து) எழுதி வாங்கிய விடுதலைப் பத்திரத்தின் தொகையைச் செலுத்துவதற்குத் தமக்கு உதவி செய்யும்படி கேட்டு என்னிடம் வந்தார். அவர் (தம் எஜமானுக்கு விடுதலைத் தொகையாக) ஐந்து ஊக்கியாக்களை ஐந்து ஆண்டுகளில் ஆண்டுக்கு ஒரு ஊக்கியாவாக தவணை முறையில் செலுத்த வேண்டியிருந்தது. ஆகவே நான் (அவரை விடுதலை செய்ய ஆசைப்பட்டு) நான் அவர்களுக்கு (உன் எஜமானர்களுக்கு) ஒரே முறையில் முழுத்தொகையையும் செலுத்திவிட்டால் உன் எஜமானர்கள் உன்னை எனக்கு விற்றுவிட நான் உன்னை விடுதலை செய்து உனது வலாவை (வாரிசுரிமையை) நான் அடைந்துக் கொள்ள முடியுமா, (அதற்கு உன் எஜமானர்கள் சம்மதிப்பார்களா,) நீ என்ன கருதுகிறாய், என்று கேட்டேன். உடனே பரீரா (ரலி) தன் எஜமானர்களிடம் சென்று எனது நிபந்தனையை அவர்கள் முன் வைத்தார். அதற்கு அவர்கள் இதற்கு நாங்கள் ஒப்புக்கொள்ள முடியாது. (உனது) வாரிசுரிமை (உன்னை விற்ற பின்பும்) எங்களுக்கே உரியதாக இருக்கும் என்று கூறினார்கள். (இதை அறிந்த) நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று விசயத்தைக் கூறினேன். அவர்கள் என்னிடம் (அவரை) விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு. ஏனெனில் விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள். பிறகு எழுந்து நின்று சில மனிதர்களுக்கு என்ன நேர்ந்தது, அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகள் எல்லாம் விதிக்கின்றார்களே ஒருவர் அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளை விதித்தால் அது செல்லாததாகும். அல்லாஹ்வின் நிபந்தனையே (ஏற்று) பின்பற்றத்தக்கதும் உறுதிமிக்கதும் (கட்டுப்படுத்தக் கூடியதும்) ஆகும் என்று கூறினார்கள்.

## முகாத்தபுக்கு இடும் நிபந்தனைகளில் அனுமதிக்கப்பட்டவை பற்றியும் அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனையை விதிப்பவன் பற்றியும்

ஹதீஸ் 2561 பரீரா (ரலி) தனக்கு (தன் எஜமானர்களிடமிருந்து) எழுதி வாங்கிய விடுதலைப் பத்திரத்தின் தொகையைச் செலுத்துவதற்கு உதவி செய்யும்படி கேட்டு என்னிடம் வந்தார். (அப்போது) அவர் தன் விடுதலைத் தொகையில் சிறிதளவும் செலுத்தியிருக்கவில்லை. நான் அவரிடம் நீ உன் எஜமானர்களிடம் திரும்பிச் சென்று (அவர்களுடைய சம்மதத்தைக் கெள். நான் உன் சார்பாக) உன் விடுதலைப் பத்திரத்தின் தொகையைச் செலுத்தி (உன்னை விடுதலை செய்து) உன் வாரிசுரிமையை நான் பெற்றுக் கொள்வதை அவர்கள் விரும்பி (ஒப்பி)னால் நானே அதைச் செலுத்தி விடுகிறேன் என்று கூறினென். அவ்வாறே பரீரா (ரலி) தன் எஜமானர்களிடம் கேட்க அவர்கள் சம்மதம் தர மறுத்து உன்(னை வாங்கி விடுதலை செய்வதன்) வாயிலாக அவர் (ஆயிசா (ரலி) அவர்கள்) இறைவனிடம் நன்மையைப் பெற விரும்புவாராயின் அவ்வாறே செய்யட்டும். ஆனால் உனது வாரிசுரிமை எங்களுக்கே உரியதாக இருக்கும் என்று கூறிவிட்டார்கள். இதை நான் அல்லாஹ்வின் தூதரிடம் கூறினேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நீ அவரை வாங்கி விடுதலை செய்து விடு ஏனெனில் விடுதலை செய்பவருக்கே வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் மக்களுக்கு என்னவாயிற்று, அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளை விதிக்கின்றார்களே அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத ஒரு நிபந்தனையை ஒருவர் விதித்தால்

அது செல்லாததாகும். அவர் நூறுமுறை நிபந்தனை விதித்தாலும் சரியெ அல்லாஹ்வின் நிபந்தனையே (ஏற்று) பின்பற்றத் தக்கதும் உறுதியும் கட்டுப்படுத்தும் சக்தியும் வாய்ந்ததும் ஆகும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2562 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிசா (ரலி) அவர்கள் விடுதலை செய்வதற்காக ஓர் அடிமைப் பெண்ணை வாங்க விரும்பினார்கள். அப்பொது அப்பெண்ணின் எஜமானர்கள் அவரது வாரிசுரிமை எங்களுக்கே உரியது என்னும் நிபந்தனையின் பேரில் தான் நாங்கள் அவரை விற்போம் என்று கூறினார்கள். (இதை அறிந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அவர்களுடைய இந்த நிபந்தனை (அப்பெண்ணை வாங்கி விடுதலை செய்து அவரது வாரிசுரிமையை நீயெ அடைந்து கொள்வதிலிருந்து) உன்னைத் தடுக்காது. ஏனெனில் விடுதலை செய்தவருக்கே (விடுதலை செய்யப்பட்ட அடிமையின்) வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள்.

## முகாத்தப் உதவி தேடுவதும் மக்களிடம் (தனது விடுதலைக்காகப் பணம்) கேட்பதும்.

ஹதீஸ் 2563 பரீரா (ரலி) அவர்கள் (என்னிடம்) வந்து நான் என் எஜமானர்களிடம் ஒன்பது ஊக்கியாக்களை (விடுதலைத் தொகையாக) ஒவ்வோர் ஆண்டும் ஓர் ஊக்கியா வீதம் செலுத்திவிட வேண்டும் என்னும் நிபந்தனையை ஒப்புக் கொண்டு விடுதலைப் பத்திரம் எழுதி வாங்கியுள்ளேன். ஆகவே நீங்கள் எனக்கு உதவுங்கள் என்று கேட்டார். நான் உன் எஜமானர்களுக்கு அந்த ஊக்கியாக்களை நான் ஒரே தடவையில் கொடுத்து உன்னை விடுதலை செய்து விடுவதை அவர்கள் ஏற்று உன் வாரிசுரிமை எனக்குச் சேர சம்மதிக்கவும் செய்வார்களாயின் நான் அவ்வாறே செய்கிறேன் என்று கூறினேன். எனவே பரீரா (ரலி) தன் எஜமானர்களிடம் சென்றார். (அவர்களிடம் நான் சொன்னதைக் கூற) அவர்கள் அவரிடம் அதற்கு மறுப்புத் தெரிவித்து விட்டார்கள். (பிறகு) பரீரா (ரலி) என்னிடம் வந்து) அவர்களிடம் உங்கள் விருப்பத்தை முன் வைத்தேன். (என்) வாரிசுரிமை தங்களுக்குக் கிடைத்தாலே தவிர அதற்கு ஒப்புக் கொள்ள முடியாது என்று அவர்கள் மறுத்து விட்டனர் என்று கூறினார். இதைக் கேள்விப்பட்ட அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அது பற்றி) என்னைக் கேட்க நான் அவர்களுக்கு விபரத்தைச் சொன்னேன். அவளை எடுத்துக் கொண்டு விடுதலை செய்துவிடு. அவர்களிடம் வாரிசுரிமை (உனக்கேயுரியது என்று) நிபந்தனை விதித்து விடு. ஏனெனில் விடுதலை செய்பவருக்கே வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள். பிறகு அல்லாஹ்வின் தூதர் மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பிறகு சில மனிதர்களுக்கு என்ன நேர்ந்தது, அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளை விதிக்கின்றார்களே அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத எந்த ஒரு நிபந்தனையும் செல்லாததாகும். நூறு முறை நிபந்தனை விதித்தாலும் சரியே அல்லாஹ்வின் தீர்ப்பே (ஏற்று) பின்பற்றத் தக்கதாகும். அல்லாஹ்வின் நிபந்தனையே உறுதியும் கட்டுப்படுத்தும் சக்தியும் வாய்ந்ததாகும். உங்களில் சில மனிதர்களுக்கு என்ன நேர்ந்தது, அவர்களில் ஒருவர் இன்னானே (என் அடிமையை வாங்கி) விடுதலை செய்து விடு. ஆனால் வாரிசுரிமை எனக்கே உரியது என்று கூறுகிறாரே (எனினும்) விடுதலை செய்பவருக்கே வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள்.

## முகாத்தப் சம்மதித்தால் அவனை விற்று விடுதல்.

ஹதீஸ் 2564 பரீரா (ரலி) அவர்கள் இறை நம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிசா (ரலி) அவர்களிடம் (தன் விடுதலைப் பத்திரத் தொகையைச் செலுத்தும் விசயத்தில்) உதவி கேட்டு வந்தார். அவரிடம் ஆயிசா (ரலி) அவர்கள் உன் எஜமானர்கள் நான் அவர்களுக்கு ஒரே

தடவையில் உன் விலையைக் கொடுத்து உன்னை விடுதலை செய்து விடுவதை (ஏற்றுக் கொண்டு) சம்மதித்தால் நான் அவ்வாறே (முழுத் தொகையையும்) ஒரே தடவையில் செலுத்தி விடுகின்றேன் என்று கூறினார்கள். அன்னை ஆயிசா (ரலி) அவர்களின் இந்த விருப்பத்தை பரீரா (ரலி) தன் எஜமானர்களிடம் கூறினார்கள். அதற்கு அவர்கள் (உனது) வாரிசுரிமை எங்களுக்கே உரியதாக இருந்தாலே தவிர நாங்கள் இதற்குச் சம்மதிக்க மாட்டோம் என்று கூறிவிட்டனர். ஆயிசா (ரலி) அவர்கள் இந்தச் செய்தியை அல்லாஹ்வின் தூதரிடம் கூறினார்கள். அதற்கு அவர்கள் நீ அவளை வாங்கி விடுதலை செய்துவிடு. ஏனெனில் விடுதலை செய்பவருக்கே வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள்.

## முகாத்தப் என்னை வாங்கி விடுதலை செய்து விடு என்று கூற அவ்வாறே அவனை ஒருவர் வாங்கினால் (செல்லும்).

ஹதீஸ் 2565 நான் ஆயிசா (ரலி) அவர்களிடம் சென்று நான் உத்பா பின் அபுலஹபுக்கு அடிமையாக இருந்தேன். அவர் இறந்து விட்டார். பிறகு அவரது மக்கள் எனக்கு எஜமானர்கள் ஆனார்கள். மேலும் அபூ அம்ருடைய மகனுக்கு என்னை அவர்கள் விற்றார்கள். அப்போது உத்பாவின் மக்கள் எனது வாரிசுரிமை தமக்கே கிடைக்க வேண்டும் என்று நிபந்தனை விதித்தார்கள் என்று கூறினேன். அதற்கு ஆயிசா (ரலி) அவர்கள் கூறினார்கள். பரீரா என்னிடம் (தனக்கு) விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுக்கப்பட்ட நிலையில் வந்திருந்தார். என்னை வாங்கி விடுதலை செய்து விடுங்கள் என்று என்னைக் கேட்டுக் கொண்டார். நான் சரி என்று சொன்னேன். அதற்கு அவர் எஜமானர்கள் தங்களுக்கே (எனது) வாரிசுரிமை வேண்டும் என்று நிபந்தனை விதிக்காமல் என்னை விற்க மாட்டார்கள் என்று கூறினர். அதற்கு நான் அப்படியென்றால் எனக்கு அது (உன்னை வாங்கி விடுதலை செய்வது) தேவையற்றது என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள் இதைக் கேள்விப்பட்டார்கள். அல்லது இந்தச் செய்தி அவர்களுக்கு எட்டியது. உடனே நபி (ஸல்) அவர்கள் என்னிடம் இது பற்றிக் கேட்க நான் பரீரா என்னிடம் கூறியதைச் சொன்னேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அவளை வாங்கி விடுதலை செய்து விடு. அவளது எஜமானர்கள் தாங்கள் விரும்பியவற்றையெல்லாம் நிபந்தனையிட்டுக் கொள்ளட்டும் (அது செல்லப் போவதில்லை) என்று கூறினார்கள். ஆகவே நான் பரீராவை வாங்கி விடுதலை செய்து விட்டேன். (அப்போதும்) அவரது எஜமானர்கள் (அவரது) வாரிசுரிமை தங்களுக்கே உரியது என்று நிபந்தனை விதித்தார்கள். (இதை அறிந்த) நபி (ஸல்) அவர்கள் விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியதாகும். அவர்கள் (அடிமையின் எஜமானர்கள்) நூறு முறை நிபந்தனை விதித்தாலும் சரியே என்று கூறினார்கள்.

## அத்தியாயம் 51 அன்பளிப்பும் அதன் சிறப்பும்

ஹதீஸ் 2566 முஸ்லிம் பெண்களே ஓர் அண்டை வீட்டுக்காரி மற்றொர் அண்டை வீட்டுக்காரிக்கு ஓர் ஆட்டின் குளம்பை (அன்பளிப்பாகக்) கொடுத்தாலும் அதை(க் கொடுப்பதையும் பெறுவதையும் அவர்கள்) இழிவாகக் கருத வேண்டாம். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

ஹதீஸ் 2567 என்னிடம் ஆயிசா (ரலி) அவர்கள் என் சகோதரி மகனே! நாங்கள் பிறை பார்ப்போம். மீண்டும் பிறை பார்ப்போம். பிறகும் பிறை பார்ப்போம். இப்படி இரண்டு மாதங்களில் மூன்று முறை பிறை பார்ப்போம். அப்படியிருந்தும் அல்லாஹ்வின் தூதருடைய வீட்டில் (அடுப்பில்) நெருப்பு மூட்டப்படாது என்று கூறினார்கள். நான் என் சிற்றன்னையே நீங்கள் எதைக் கொண்டு தான் வாழ்க்கை நடத்தினீர்கள், என்று கேட்டேன். அதற்கு அவர் இரு கருப்பான பொருட்கள் (ஒன்று) பேரீச்சம் பழம் (மற்றொன்று) தண்ணீர் தவிர அல்லாஹ்வின் தூதருக்கு அன்சாரிகளான சில அண்டை வீட்டார் இருந்தார்கள். அவர்களிடம் சில அன்பளிப்பு ஒட்டகங்கள் (மனீஹாக்கள்) இருந்தன. (அவற்றைக் குறிப்பிட்ட காலத்திற்கு இலவசமாக பயன்படுத்திக் கொள்வதற்காக அவர்கள் இரவல் வாங்கியிருந்தனர்.) அவர்கள் (அவற்றிலிருந்து கிடைக்கின்ற) தமக்குரிய பாலை நபி (ஸல்) அவர்களுக்குக் கொடுப்பார்கள். நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு அருந்தக் கொடுப்பார்கள் என்று கூறினார்கள்.

### சிறிய அன்பளிப்பு

ஹதீஸ் 2568 ஓர் ஆட்டின் விலாவை அல்லது காலை அன்பளிப்பாகப் பெற்றுக் கொள்ளும்படி நான் அழைக்கப்பட்டாலும் நான் ஏற்றுக் கொள்வேன். எனக்கு ஓர் ஆட்டின் விலா அல்லது கால் அன்பளிப்பாக தரப்பட்டாலும் சரி நான் அதைப் பெற்றுக் கொள்வேன். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

### நண்பர்களிடம் அன்பளிப்பு கேட்பது.

ஹதீஸ் 2569 தச்சு வேலை தெரிந்த அடிமை ஒருவனை வைத்திருந்த முஹாஜிர் பெண் ஒருவரிடம் நபி (ஸல்) அவர்கள் ஆளனுப்பி மிம்பருக்கு (மேடைக்கு)த் தேவையான மரச்சட்டங்களைச் செய்து தரும்படி உன் அடிமைக்குக் கட்டளையிடு என்று கூறினார்கள். அவ்வாறே அப்பெண்மணி தன் அடிமைக்குக் கட்டளையிட அவ்வடிமை (காட்டிற்குச்) சென்று (இறகு போன்ற இலைகளை உடைய) தர்ஹபா எனும் ஒரு வகை மரத்தை வெட்டியெடுத்து வந்து நபி (ஸல்) அவர்களுக்கு மிம்பர் ஒன்றைச் செய்தார். அதைச் செய்து முடித்தபின் அப்பெண்மணி நபி (ஸல்) அவர்களுக்கு மிம்பரை அவர் செய்து முடித்துவிட்டதாகத் தகவல் சொல்லி அனுப்பினார். நபி (ஸல்) அவர்கள் அதைக் கொடுத்தனுப்புமாறு சொன்னார்கள். பின்னர் அதைக் கொண்டு வந்தனர். நபி (ஸல்) அவர்கள் அதைச் சுமந்து சென்று இப்போது நீங்கள் பார்க்கும் இடத்தில் வைத்தார்கள்.

ஹதீஸ் 2570 நான் (ஹுதைபிய்யா ஆண்டில்) ஒரு நாள் மக்கா (செல்லும்) சாலையில் இருந்த ஒரு வீட்டில் நபித்தோழர்கள் சிலருடன் அமர்ந்திருந்தேன். அல்லாஹ்வின் தூதர் எங்கள் முன்னால் தங்கியிருந்தார்கள். அனைவரும் இஹ்ராம் அணிந்திருந்தார்கள். நான் (மட்டும்) இஹ்ராம் அணியாமல் இருந்தேன். அப்போது அவர்கள் ஒரு காட்டுக் கழுதையைப் பார்த்தார்கள். நானோ என் செருப்பைத் தைப்பதில் ஈடுபட்டிருந்தேன். ஆகவே அ(வர்கள் பார்த்த)தை எனக்கு அறிவிக்கவில்லை. எனினும் நான் அதைப் பார்த்தால் நன்றாயிருக்கும் என்று அவர்கள் விரும்பினார்கள். (தற்செயலாக) நான் அதைத் திரும்பிப் பார்த்தேன். உடனே நான் எழுந்து குதிரையின் பக்கம் சென்று அதற்குச் சேணம் பூட்டி பிறகு அதில் ஏறினேன்.

சாட்டையையும் ஈட்டியையும் (எடுத்துக் கொள்ள) நான் மறந்து விட்டேன். ஆகவே அவர்களிடம் எனக்கு சாட்டையையும் ஈட்டியையும் எடுத்துக் கொடுங்கள் என்று கேட்டேன். அதற்கு அவர்கள் (இஹ்ராம் அணிந்திருந்ததால்) இல்லை அல்லாஹ்வின் மீதாணையாக நாங்கள் உங்களுக்கு இந்த விசயத்தில் சிறிதும் உதவ மாட்டோம் என்று கூறினர். எனவே நான் கோபமுற்றேன். உடனே (குதிரையிலிருந்து) இறங்கி அவ்விரண்டையும் எடுத்துக் கொண்டேன். (குதிரையில்) மீண்டும் ஏறி கழுதையைத் தாக்கி காயப்படுத்தினேன் பிறகு அது இறந்துவிட்ட நிலையில் அதைக் கொண்டு வந்தேன். அவர்கள் (என் தோழர்கள்) அதன் மீது பாய்ந்து உண்ணலானார்கள். பிறகு தாங்கள் இஹ்ராம் அணிந்திருந்த நிலையில் அதை உண்ட(து கூடுமா கூடாதா என்னும் விசயத்)தில் சந்தேகம் கொண்டார்கள். ஆகவே நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். நான் (கழுதையின்) ஒரு புஜத்தை என்னுடன் மறைத்து (எடுத்து)க் கொண்டேன். நாங்கள் அல்லாஹ்வின் தூதரை அடைந்ததும் அவர்களிடம் அது (காட்டுக் கழுதையை நான் வேட்டையாட இஹ்ராம் அணிந்திருந்தவர்கள் அதை உண்டது) பற்றிக் கேட்டோம். அவர்கள் அதிலிருந்து (இறைச்சி) ஏதும் உங்களுடன் இருக்கின்றதா, என்று கேட்டார்கள். நான் ஆம் என்று அவர்களுக்கு (அதன்) புஜத்தை (முன்னங் காலை)க் கொடுத்தேன். நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்தவர்களாக இருக்கும் நிலையில் அது உண்டு முடித்தார்கள்.

## நீர் புகட்டும்படி கேட்பது.

ஹதீஸ் 2571 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுடைய இதே வீட்டில் எங்களிடம் வந்து தண்ணீர் புகட்டும்படி கேட்டார்கள். ஆகவே நாங்கள் எங்களுடைய ஓர் ஆட்டின் பாலை அவர்களுக்காக கறந்தோம். பிறகு நான் எங்களுடைய இந்தக் கிணற்றின் தண்ணீரை அதில் கலந்து அதை அவர்களுக்குக் கொடுத்தேன். அப்போது நபி (ஸல்) அவர்களின் இடப்பக்கத்தில் அபூபக்ர் (ரலி) அவர்களும் எதிரில் உமர் (ரலி) அவர்களும் வலப்பக்கத்தில் ஒரு கிராம வாசியும் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் பாலை குடித்து முடித்தவுடன் உமர் (ரலி) அவர்கள் இதோ அபூபக்ர் என்று கூறினார்கள். எனினும் நபி (ஸல்) அவர்கள் தமது (பாலின்) மீதத்தை கிராம வாசிக்குக் கொடுத்தார்கள். பிறகு வலப்பக்கத்தில் இருப்பவர்களே முன்னுரிமை உடையவர்கள். ஆகவே வலப்பக்கத்தில் இருப்பவர்களுக்கு முதலிடம் கொடுங்கள் என்று கூறினார்கள். இறுதியில் அனஸ் (ரலி) அவர்கள் அது நபிவழியாகும். அது நபிவழியாகும். என்று மும்முறை கூறினார்கள் என்று இதை அவர்களிடம் இருந்து கேட்டு அறிவிக்கும் அப்துல்லாஹ் பின் அப்திர் ரஹ்மான் கூறுகிறார்கள்.

## வேட்டைப் பிராணியைப் அன்பளிப்புச் செய்தால் ஏற்றுக் கொள்ளுதல்.

ஹதீஸ் 2572 மர்ருழ் ழஹ்ரான் என்னுமிடத்தில் நாங்கள் ஒரு முயலை (அதன் பொந்திலிருந்து) கிளப்பி விரட்டினோம். மக்கள் அதைப் பிடிக்க முயற்சி செய்து களைத்துவிட்டார்கள். நான் அதைப் பிடித்துவிட்டேன். அதை எடுத்துக் கொண்டு அபூதல்ஹா (ரலி) அவர்களிடத்தில் வந்தேன். அவர்கள் அதை அறுத்து அதன் பிட்டத்தை அல்லது - தொடைகளை அல்லாஹ்வின் தூதரிடம் அனுப்பினார்கள். அதை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அதிலிருந்து நபி (ஸல்) அவர்கள் உண்டார்களா, என்று ஓர் அறிவிப்பாளர் கேட்க மற்றோர் அறிவிப்பாளர் (ஆம்) நபி (ஸல்) அவர்கள் அதிலிருந்து உண்டார்கள் என்று கூறிவிட்டு அதன் பிறகு அதை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்று கூறினார்.

## அன்பளிப்பை ஏற்றுக் கொள்ளுதல்.

ஹதீஸ் 2573 நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு ஒரு காட்டுக் கழுதையை

பரிசாக அளித்தேன். அப்போது அவர்கள் அப்வா என்னுமிடத்தில் - அல்லது வத்தான்-என்னும் இடத்தில் - இருந்தார்கள். அதை நபி (ஸல்) அவர்கள் என்னிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். என முகத்தில் (தோன்றிய) கவலைக் குறியைக் கண்டபோது நாம் இஹ்ராம் அணிந்திருப்பதனால் தான் உன்னிடம் அதைத் திருப்பித் தந்தோம் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2574 மக்கள் நபி (ஸல்) அவர்கள் என் வீட்டில் தங்கும் நாளையே தமது அன்பளிப்புகளை அவர்களுக்கு வழங்குவதற்காகத் தேர்ந்தெடுத்து (வழங்கி) வந்தார்கள். அதைக் கொண்டு நபி (ஸல்) அவர்களின் திருப்தியைப் பெற விரும்பியே அவர்கள் இப்படிச் செய்து வந்தார்கள்.

ஹதீஸ் 2575 என் தாயாரின் சகோதரியான உம்மு ஹுஃபைத் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்கு (உலர்ந்த) பாலாடைக் கட்டியையும் வெண்ணையையும் உடும்புகளையும் அன்பளிப்பாகத் தந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் பாலாடைக் கட்டியிலிருந்தும் வெண்ணையிலிருந்தும் (சிறிது எடுத்து) உண்டார்கள். ஆனால் அவர்களுக்கு அருவருப்பாகத் தோன்றியதால் உடும்புகளை உண்ணாமல் விட்டு விட்டார்கள். (எனினும்) அது (உடும்பு) அல்லாஹ்வின் தூதருடைய உணவு விரிப்பில் வைத்து உண்ணப்பட்டது. அது ஹராமாக (தடை செய்யப்பட்டதாக) இருந்திருந்தால் அல்லாஹ்வின் தூதருடைய உணவு விரிப்பில் வைத்து உண்ணப்பட்டிருக்காது.

ஹதீஸ் 2576 அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் உணவுப் பொருள் கொண்டு வரும் போது இது அன்பளிப்பா, தருமமா, என்று அவர்கள் கேட்பார்கள். தருமம் தான் என்று பதிலளிக்கப்பட்டால் தம் தோர்ர்களிடம்ஃ நீங்கள் உண்ணுங்கள் என்று கூறிவிடுவார். தாம் உண்ண மாட்டார்கள். அன்பளிப்பு என்று வுறப்பட்டால்ஃ தம் கையை தட்ழக் கொண்டு (விரைந்து) தோர்ர்களுடன் சேர்ந்து உண்பார்கள்.

ஹதீஸ் 2577 நபி (ஸல்) அவர்களிடம் ஓர் இறைச்சி கொண்டு வரப்பட்டது. இது பரீரா (ரலி) அவர்களுக்கு தர்மமாகக் கிடைத்தது என்று வுறப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் இது அவருக்கு தருமமாகும். நமக்கு அன்பளிப்பாகும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2578 நான் பரீராவை (விலைக்கு) வாங்கிட விரும்பினேன். அவர்கள் (அவருடைய எஜமானர்கள்) அவருடைய வாரிசுரிமை தமக்கே சேர வேண்டும். (என்று ஒப்புக் கொண்டால் மட்டுமே அவரை விற்போம்) என்று நிபந்தனையிட்டார்கள். நபி (ஸல்) அவர்களிடம் இது குறித்துச் சொல்லப்பட்டது. அப்போது அவர்கள் அவரை நீ விலைக்கு வாங்கி விடுதலை செய்துவிடு. ஏனெனில் (ஓர் அடிமையை) விடுதலை செய்தவருக்கே (அவ்வடிமையின்) வாரிசுரிமை உரியதாகும் என்று கூறினார்கள். பரீரா (ரலி) அவர்களுக்கு இறைச்சி அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அப்போது நபி (ஸல்) அவர்களிடம் இது பரீரா அவர்களுக்கு தருமமாக கிடைத்தது என்று கூறப்பட்டது. அதற்கு அவர்கள் இது அவருக்கு தருமமாகும். நமக்கு அன்பளிப்பாகும் என்று கூறினார்கள். மேலும் பரீரா (ரலி) அவர்கள் (தம் கணவரை பிரிந்து விடுவது அல்லது தொடர்ந்து அவருடன் வாழ்வது என்னும் இரு விசயங்களில்) தாம் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை வழங்கப்பட்டார்கள். அறிவிப்பாளர் அப்துர் ரஹ்மான் பின் காசிம் (ரஹ்) அவர்கள் பரீரா (ரலி) அவர்களின் கணவர் சுதந்திரமானவரா, அடிமையா, என்று கேட்டார்கள். நான் அப்துர் ரஹ்மானிடம் பரீரா (ரலி) அவர்களின் கணவரைப் பற்றிக் கேட்டேன். அவர் சுதந்திரமானவரா அடிமையா என்று எனக்குத் தெரியாது என்று கூறினார் என்பதாக மற்றோர் அறிவிப்பாளர் ஷுஅபா (ரஹ்) கூறுகின்றார்கள்.

## ஒருவர் தன் தோழருக்கு அனபளிப்பு வழங்குவதும் அத் தோழர் தன் மனைவிமார்களில் குறிப்பிட்ட ஒருவருடைய வீட்டில் இருக்கும் நேரத்தைத்

## தேர்ந்தெடுத்து அன்பளிப்பு வழங்குவதும் வேறு மனைவிமார்களின் வீட்டில் இருக்கும்போது அன்பளிப்பு வழங்காமலிருப்பதும்

ஹதீஸ் 2580 நபி (ஸல்) அவர்கள் என் (வீட்டில் தங்குகின்ற) நாளையே அவர்களுக்குத் தங்கள் அன்பளிப்புகளை வழங்குவதற்காக மக்கள் தேர்ந்தெடுத்து வந்தார்கள். உம்மு ஸலாமா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்,, என் தோழிகள் (நபி (ஸல்) அவர்களின் பிற மனைவிமார்கள் எனது வீட்டில்) ஒன்று கூடி(ப் பேசி)னர். (அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க) நான் நபி (ஸல்) அவர்களிடம் (அவர்களின் கோரிக்கையைச்) சொன்னேன். அவர்கள் அதை (கண்டு கொள்ளாமல்) புறக்கனித்து விட்டார்கள்.

ஹதீஸ் 2581 அல்லாஹ்வின் தூதருடைய மனைவிமார்களான நாங்கள் இரு குழுக்களாக இருந்தோம். ஒரு குழுவில் நானும் ஹஃப்ஸா, ஸஃபிய்யா மற்றும் சவ்தா ஆகியோரும் இருந்தோம். மற்றொரு குழவில் உம்மு சலாமா அவர்களும் அல்லாஹ்வின் தூதருடைய மற்ற மனைவிமார்களும் இருந்தனர். அல்லாஹ்வின் தூதர் என்னை எவ்வளவு (ஆர்வமாக) நேசித்து வந்தார்கள் என்பதை முஸ்லிம்கள் அறிந்திருந்தார்கள். ஆகவே அன்பளிப்பு செய்பவர் தம்மிடம் பரிசுப் பொருள் ஏதும் இருந்தால் அதை அல்லாஹ்வின் தூதருக்கு அன்பளிப்புச் செய்ய அவர் விரும்பினால் அதை தள்ளிப் போட்டு என் வீட்டில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தங்கும் நாள்) வரும்போது என் வீட்டிற்கு அன்பளிப்பு கொடுத்தனுப்புவார். ஆகவே (இது தொடர்பாக) உம்மு சலாமா குழுவினர் (தங்களிடையே கலந்து) பேசினர். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடம் பேசி எவர் எனக்கு ஓர் அன்பளிப்பைத் தர விரும்புகிறாரோ அவர் நான் என் மனைவிமார்களின் வீடுகளில் எங்கிருந்தாலும் அங்கு அந்த அன்பளிப்பை அனுப்பி வைக்கட்டும் என்று கூறும்படி (அல்லாஹ்வின் தூதரை) கேட்டுக் கொள் என்று உம்மு ஸலாமா அவர்களிடம் அவர்களின் குழுவினர் கூறினர். அவ்வாறே உம்மு சலாமா அவர்களும் நபி (ஸல்) அவர்களிடம் தம் குழுவினர் கூறியதை எடுத்துச் சொன்னார்கள். நபி (ஸல்) அவர்கள் அவருக்கு பதில் ஏதும் கூறவில்லை. பிறகு உம்மு சலமா அவர்களின் குழுவிலிருந்த மற்ற மனைவிமார்கள் உம்மு சலமா அவர்களிடம் (நமது கோரிக்கையை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்களா, என்று) கேட்டனர். உம்மு சலமா அவர்கள் எனக்கு நபி (ஸல்) அவர்கள் பதில் எதுவும் கூறவில்லை என்று சொன்னார்கள். அவர்கள் மீண்டும் நபி (ஸல்) அவர்களிடம் (இது பற்றிப்) பேசு என்று கூறினர். உம்மு சலமா அவர்களும் அடுத்து தமது முறை வந்தபோது நபி (ஸல்) அவர்களிடம் அது குறித்துப் பேசினார்கள். அப்போதும் அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் பதில் எதுவும் கூறவில்லை. மீண்டும் உம்மு சலமா (ரலி) அவர்களின் குழுவினர் அவர்களிடம் (நபி (ஸல்) அவர்கள் என்ன பதில் சொன்னர்கள் என்று) கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் எனக்கு பதில் எதுவும் கூறவில்லை என்று உம்மு சலமா அவர்கள் கூறினார்கள். அதற்கு அவர்கள் அவர்கள் உனக்கு பதில் தரும்வரை நீ அவர்களிடம் (இது குறித்துப்) பேசிக் கொண்டேயிரு என்று கூறினார்கள். மீண்டும் உம்மு சலமா (அவர்களின் முறை வந்தபோது) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் வந்தார்கள். உம்மு சலமா அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் மீண்டும் (இது குறித்துப்) பேசினார்கள். அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் ஆயிசாவின் விசயத்தில் எனக்குத் துன்பம் (மன வேதனை) தராதே. ஏனெனில் ஆயிசாவின் படுக்கையில் (நான் இருக்கும் போதே தவிர) வேறெந்த மனைவியின் படுக்கையிலும் வஹீ (வேத வெளிப்பாடு) எனக்கு வருவதில்லை என்று கூறினார்கள். உம்மு சலமா அவர்கள் அல்லாஹ்வின் தூதரே உங்களுக்குத் துன்பம் தந்ததற்காக அல்லாஹ்விடம் நான் பாவ மன்னிப்புக் கோருகிறேன் என்று கூறினார்கள். பிறகு அந்த மனைவியர் அல்லாஹ்வின் தூதருடைய மகள் பாத்திமா (ரலி) அவர்களை அனுகி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் உங்கள் மனைவிமார்கள் அபூபக்ர் (ரலி) அவர்களுடைய மக(ளான ஆயிசா (ரலி)

அவர்க)ளின் விசயத்தில் (தாங்கள் நடந்து கொள்வது போன்றே பிற மனைவியரிடமும்) நீதியுடன் நடந்து கொள்ளும்படி அல்லாஹ்வின் பெயரால் கேட்கிறார்கள் எள்று கூறுமாறு (சொல்லி) அனுப்பினார்கள். (அவ்வாறே) பாத்திமாவும் நபி (ஸல்) அவர்களிடம் பேசினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் என் அன்பு மகளே நான் நேசிப்பதை நீயும் நேசிக்கவில்லையா, என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் ஆம் (தாங்கள் நேசிப்பதை நானும் நேசிக்கிறேன்) என்று கூறிவிட்டு திரும்பிச் சென்று அவர்களிடம் (தன் சின்னம்மாக்களிடம்) செய்தியைத் தெரிவித்து விட்டார்கள். அதற்கு அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் மறுபடியும் போ(ய்ச் சொல்) என்று கூறினார்கள். மீண்டும் (இது தொடர்பாக நபி (ஸல்) அவர்களிடம்) செல்ல பாத்திமா அவர்கள் மறுத்து விட்டார்கள். ஆகவே அவர்கள் (தம் சார்பாக) ஜைனப் பின்த்து ஜஹ்ஷ் அவர்களை அனுப்பி வைத்தார்கள். அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து (சற்று) கடுமையாகப் பேசி உங்கள் மனைவிமார்கள் அபூ கஹா..பாவின் மகனுடைய (அபூபக்ருடைய) மகளின் (ஆயிசாவின்) விசயத்தில் (நடந்து கொள்வது போன்றே பிற மனைவிமார்களிடமும்) நீதியுடன் நடந்து கொள்ளும்படி அல்லாஹ்வின் பெயரால் உங்களிடம் கேட்கின்றார்கள் என்று கூறினார்கள். நான் (ஆயிசா) அமர்ந்து கொண்டிருக்க அவரது குரல் உயர்ந்தது. அவர் என்னைக குறைகூறித் திட்டினார். எந்த அளவுக்கென்றால் அல்லாஹ்வின் தூதர் நான் பதில் பேசுவேனா என்று எதிர்பார்ப்பது போல் என்னையே பார்த்துக் கொண்ழருந்தார்கள். உடனே நான் ஜைனபுக்கு பதில் சொல்லி இறுதியில் அவரை வாயடைக்கச் செய்து விட்டேன். நபி (ஸல்) அவர்கள் என்னைப் பார்த்து இவள் (உண்மையிலேயே) அபூபக் ருடைய மகள் தான் என்று கூறினார்கள். மற்றோர் அறிவிப்பில் நான் நபி (ஸல்) அவர்களிடம் இருந்தபோது பாத்திமா அனுமதி கேட்டு உள்ளே வந்தார் என்று ஆயிசா (ரலி) கூறியுள்ளார்கள்.

## நிராகரிக்கக் கூடாத அன்பளிப்பு

ஹதீஸ் 2582 நான் சுமாமா பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்களிடம் சென்றேன். அவர்கள் எனக்கு வாசனைத் திரவியத்தைக் கொடுத்து அனஸ் (ரலி) அவர்கள் வாசனைத் திரவியத்தை (எவராவது அன்பளிப்பாகக் கொடுத்தால்) நிராகரிப்பதில்லை என்றும் கூறினார். மேலும் சுமாமா (ரஹ்) அவர்கள் கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் வாசனைத் திரவியத்தை நிராகரிப்பதில்லை என்று அனஸ் (ரலி) அவர்கள் தெரிவித்தார்கள்.

## தற்போது கைவசம் இல்லாத அன்பளிப்பை (வழங்குவதாக வாக்களிப்பது) செல்லும் என்று கருதுவது.

ஹதீஸ் 2583 நபி (ஸல்) அவர்கள் தம்மிடம் ஹவாஸின் குலத்தாரின் தூதுக் குழு ஒன்று வந்தபோது மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுக்குத் தகுதியான பண்புகளை எடுத்துரைத்துப் புகழ்ந்து விட்டு பிறகு (மக்களே) உங்கள் சகோதரர்கள் (மனம் திருந்தி) பாவ மன்னிப்புக் கோரி நம்மிடம் வந்துள்ளனர். அவர்களுடைய போர்க் கைதிகளை அவர்களிடமே திருப்பித் தந்து விடுவதையே நான் உசிதமாகக் கருதுகிறேன். ஆகவே உங்களில் எவர் மனப்பூர்வமாகத் திருப்பித் தந்துவிட விரும்புகிறாரோ அவர் அவ்வாறே திருப்பித் தந்துவிடட்டும். எவர் அல்லாஹ் நமக்கு முதலாவதாக (கிடைக்கும் வெற்றியில்) அளிக்கின்ற பொருள்களிலிருந்து அவருக்கு நாம் கொடுக்கின்றவரை தனது பங்கைத் தானே வைத்துக் கொள்ள விரும்புகிறாரோ அவர் அவ்வாறே செய்யட்டும் என்று கூறினார்கள். மக்கள் நாங்கள் உங்களுக்காக மனப்பூர்வமாக (போர்க் கைதிகளைத் திருப்பித் தந்து விட) சம்மதிக்கின்றோம் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2584 நபி (ஸல்) அவர்கள் தம்மிடம் ஹவாஸின் குலத்தாரின் தூதுக் குழு ஒன்று வந்தபோது மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுக்குத் தகுதியான பண்புகளை

எடுத்துரைத்துப் புகழ்ந்து விட்டு பிறகு (மக்களே) உங்கள் சகோதரர்கள் (மனம் திருந்தி) பாவ மன்னிப்புக் கோரி நம்மிடம் வந்துள்ளனர். அவர்களுடைய போர்க் கைதிகளை அவர்களிடமே திருப்பித் தந்து விடுவதையே நான் உசிதமாகக் கருதுகிறேன். ஆகவே உங்களில் எவர் மனப்பூர்வமாகத் திருப்பித் தந்துவிட விரும்புகிறாரோ அவர் அவ்வாறே திருப்பித் தந்துவிடட்டும். எவர் அல்லாஹ் நமக்கு முதலாவதாக (கிடைக்கும் வெற்றியில்) அளிக்கின்ற பொருள்களிலிருந்து அவருக்கு நாம் கொடுக்கின்றவரை தனது பங்கைத் தானே வைத்துக் கொள்ள விரும்புகிறாரோ அவர் அவ்வாறே செய்யட்டும் என்று கூறினார்கள். மக்கள் நாங்கள் உங்களுக்காக மனப்பூர்வமாக (போர்க் கைதிகளைத் திருப்பித் தந்து விட) சம்மதிக்கின்றோம் என்று கூறினார்கள்.

## அன்பளிப்புக்கு ஈடு செய்வது

ஹதீஸ் 2585 நபி (ஸல்) அவர்கள் அன்பளிப்பை ஏற்று அதற்கு (பதிலாக எதையாவது கொடுத்து) ஈடு செய்து வந்தார்கள்.

## பிள்ளைக்கு அன்பளிப்பு செய்வது

ஹதீஸ் 2586 என்னை என் தந்தையார் (பஷீர் பின் சஅத் (ரலி) அவர்கள்) அல்லாஹ்வின் தூதரிடம் கொண்டு சென்று நான் எனது இந்த மகனுக்கு ஓர் அடிமையை அன்பளிப்புச் செய்திருக்கின்றேன் என்று சொன்னார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் உங்கள் பிள்ளைகள் அத்தனை பேருக்கும் இதைப் போன்றே அன்பளிப்புச் செய்துள்ளீரா, என்று கேட்டார்கள். என் தந்தை இல்லை என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அப்படியென்றால் அதை (உங்கள் அன்பளிப்பைத்) திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.

## அன்பளிப்புச் செய்ய சாட்சிகள் வைத்தல்

ஹதீஸ் 2587 நுஃமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் மிம்பரின் மீது நின்று கொண்டு என் தந்தை அன்பளிப்பு ஒன்றை எனக்குக் கொடுத்தார். என் தாயார் அம்ரா பின்த்து ரவாஹா (ரலி) அவர்கள் என் தந்தையிடம் நீங்கள் இதற்கு அல்லாஹ்வின் தூதரை சாட்சியாக ஆக்காதவரை நான் இதை ஒப்புக் கொள்ள மாட்டேன் என்று கூறினார்கள். என் தந்தை அல்லாஹ்வின் தூதரிடம் சென்று அல்லாஹ்வின் தூதரே நான் அம்ரா பின்த்து ரவாஹாவின் வாயிலாக எனக்குப் பிறந்த என் மகனுக்கு அன்பளிப்பு ஒன்றைக் கொடுத்தேன். அவள் (என் மனைவி) தங்களை சாட்சியாக ஆக்கும் படி எனக்குக் கட்டளையிட்டாள் என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் உங்கள் மற்ற பிள்ளைகளுக்கும் இதே போன்று கொடுத்துள்ளீர்களா, என்று கேட்டார்கள். அதற்கு என் தந்தை இல்லை என்று பதிலளித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவ்வாறெனில் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். உங்கள் பிள்ளைகளிடையே நீதி செலுத்துங்கள் என்று கூறினார்கள். இதைக் கேட்ட என் தந்தை உடனே திரும்பி வந்து தனது அன்பளிப்பை ரத்து செய்தார்.

## கணவன் தன் மனைவிக்கும் மனைவி தன் கணவனுக்கும் அன்பளிப்புச் செய்தல்

ஹதீஸ் 2588 நபி (ஸல்) அவர்கள் கடுமையாக நோய்வாய்ப்பட்டு அவர்களின் வேதனை அதிகரித்தபோது என் வீட்டில் (தங்கி) நோய்க்கான கவனிப்பையும் சிகிச்சையையும் பெற்றுக் கொள்ள அனுமதியளிக்கும்படி தம்முடைய மற்ற மனைவிமார்களிடம் கேட்டார்கள். அவர்களும் அனுமதி அளித்துவிட்டனர். பின்னர் (ஒருநாள்) நபி (ஸல்) அவர்கள் தம் இரு கால்களும் பூமியில் இழுபட இரு மனிதர்களுக்கிடையே தொங்கிய வண்ணம் புறப்பட்டார்கள். அப்போது

அவர்கள் அப்பாஸ் (ரலி) அவர்களுக்கும் மற்றொரு மனிதருக்குமிடையே இருந்தார்கள். அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள்,, நான் ஆயிசா (ரலி) அவர்கள் கூறியதை இப்னு உமர் (ரலி) அவர்களிடம் சொன்னேன். அதற்கு அவர்கள் ஆயிசா (ரலி) அவர்கள் பெயர் குறிப்பிடாமல் விட்ட மனிதர் யாரென்று உனக்குத் தெரியுமா, என்று கேட்டார்கள். நான் தெரியாது என்று பதிலளித்தேன். அவர்கள அந்த மனிதர் அலீ பின் அபீதாலிப் அவர்கள் தாம் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2589 தன் அன்பளிப்பைத் திரும்பப் பெறுபவன் வாந்தியெடுத்த பிறகு அதை மீண்டும் தின்கின்ற நாயைப் போன்றவன் ஆவான். இதை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

## ஒருத்திக்குக் கணவன் இருக்கும் போதே அவனல்லாத மற்றவர்களுக்கு அவள் அன்பளிப்புச் செய்வதும் தனது அடிமையை விடுதலை செய்வதும் தனது அவள் விவரமற்ற பேதையாக இருந்தால் செல்லும் அவள் விவரமற்ற பேதையாக இருந்தால் செல்லாது

ஹதீஸ் 2590 நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே எனக்கு (என் கணவர்) ஸுபைர் (ரலி) அவர்கள் அளித்ததைத் தவிர வேறு செல்வம் எதுவும் என்னிடம் இல்லை. அதை நான் தர்மம் செய்யலாமா, என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் தர்மம் செய். கஞ்சத்தனமாக பையில் (சேரித்து) வைத்துக் கொள்ளாதே. அவ்வாறு செய்தால் உன்னிடமும் கஞ்சத்தனம் காட்டப்படும் என்று கூறினார்கள்

ஹதீஸ் 2591 செலவழி கணக்கிட்டு (செலவழித்து)க் கொண்டிருக்காதே (அப்படிக் கணக்கிட்டு நீ செலவழித்தால்) அல்லாஹ்வும் உனக்கு (தரும் போது) கணக்கிட்டு (தந்து) விடுவான். கஞ்சத்தனமாகப் பையில் (சேர்த்து) வைத்துக் கொள்ளாதே. அவ்வாறு செய்தால் அல்லாஹ்வும் உன்னிடம் கஞ்சத்தனமாக நடந்து கொள்வான். இதை அஸ்மா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 2592 மைமூனா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

நான் ஓர் அடிமைப் பெண்ணை விடுதலை செய்தேன். ஆனால் நபி (ஸல்) அவர்களிடம் அதற்காக அனுமதி கேட்கவில்லை. என்னிடம் நபி (ஸல்) அவர்கள் தங்குகின்ற முறை வந்தபோது அல்லாஹ்வின் தூதரே அடிமைப் பெண்ணை விடுதலை செய்துவிட்டேனே அறிவீர்களா, என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீ (விடுதலை) செய்து விட்டாயா, என்று கேட்க நான் ஆம் (விடுதலை செய்து விட்டேன்) என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள் நீ உன் தாயின் சகோதரர்களுக்கு (தாய் மாமன்களுக்கு அன்பளிப்பாக) அவளைக் கொடுத்து விட்டிருந்தால் உனக்குப் பெரும் நற்பலன் கிடைத்திருக்கும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2593 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரயாணம் செய்ய நாடினால் தம் மனைவிமார்களுக்கிடையே (எவரைத் தம்முடன் அழைத்துச் செல்வது என்று) சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். எவரது பெயர் (குலுக்கலில்) வருகின்றதோ அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு புறப்படுவார்கள். தம் மனைவி மார்களில் ஒவ்வொருவருக்கும் தம் பகலையும் இரவையும் பங்கு வைத்து வந்தார்கள். ஆனால் சவ்தா பின்த்து ஸம்ஆ (ரலி) அவர்கள் மட்டும் தம் பங்குக்குரிய நாளை நபி (ஸல்) அவர்களின் (பிரியத்திற்குரிய) மனைவியான ஆயிசா (ரலி) அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கி விட்டிருந்தார்கள். அதன் வாயிலாக அல்லாஹ்வின் தூதருடைய திருப்தியை அடைவதற்காகவே அவர்கள் அவ்வாறு செய்தார்கள்.

## யாருக்கு முதலில் அன்பளிப்புச் செய்வது

ஹதீஸ் 2594 நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான மைமூனா (ரலி) அவர்கள் தமது அடிமைப் பெண் ஒருத்தியை விடுதலை செய்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் மைமூனா (ரலி) அவர்களிடம் (இந்த அடிமைப் பெண்ணை அன்பளிப்பாகக் கொடுத்து) உன் தாய்மாமன்கள் சிலரின் உறவைப் பேணியிருந்தால் உனக்குப் பெரும் நற்பலன் கிடைத்திருக்கும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2595 நான் நபி (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே எனக்கு அண்டை வீட்டுக்காரர்கள் இருவர் உள்ளனர். அவர்களில் எவருக்கு நான் அன்பளிப்புச் செய்வது, என்று கேட்டேன். அவ்விருவரில் எவரது வாசல் உன் வீட்டு வாசலுக்கு அருகிலுள்ளதோ அவருக்கு அன்பளிப்புச் செய் என்று கூறினார்கள்.

## தகுந்த காரணத்தினால் அன்பளிப்பை ஏற்க மறுப்பது.

ஹதீஸ் 2596 அல்லாஹ்வின் தூதர் அப்வா என்னும் இடத்தில் அல்லது வத்தான் என்னும் இடத்தில் இருந்தபோது (வேட்டையாடிய) காட்டுக் கழுதையை அவர்களுக்கு நான் அன்பளிப்பாகத் தந்தேன். அப்போது அவர்கள் இஹ்ராம் அணிந்திருந்தார்கள். ஆகவே அதைத் திருப்பித் தந்து விட்டார்கள். அவர்கள் என் அன்பளிப்பை ஏற்க மறுத்து விட்டதால் என் முகத்தில் தோன்றிய கவலைக் குறியைக் கண்டபோது நாம் இஹ்ராம் அணிந்திருப்பதால் தான் உன் அன்பளிப்பைத் திருப்பித் தந்தோம் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2597 நபி (ஸல்) அவர்கள் அஸ்த் என்னும் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரை (ஸகாத்) வசூலிப்பவராக நியமித்தார்கள். அவர் இப்னுல் லுத்பிய்யா என்று அழைக்கப்பட்டு வந்தார். அவர் ஸக்காத் வசூலித்துக் கொண்டு வந்தபோது இது உங்களுக்குரியது இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் இவர் தன் தகப்பனின் வீட்டில் அல்லது தாயின் வீட்டில் உட்கார்ந்து கொண்டு தமக்கு அன்பளிப்புக் கிடைக்கிறதா இல்லையா என்று பார்க்கட்டுமே என் உயிரைத் தனது கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக உங்களில் யாரேனும் அந்த ஸகாத் பொருளில் இருந்து (முறைகேடாக) எதைப் பெற்றாலும் அதை அவர் மறுமை நாளில் தன் பிடரியில் சுமந்து கொண்டு வருவார். அது ஒட்டகமாக இருந்தால் கனைத்துக் கொண்டிருக்கும். பசுவாகவோ ஆடாகவோ இருந்தால் கத்திக் கொண்டிருக்கும் என்று கூறினார்கள். பிறகு அவர்களுடைய அக்குள்களின் வெண்மையை நாங்கள் பார்க்கும் அளவுக்குத் தம் கைகளை உயர்த்தி இறைவா (உன் செய்தியை மக்களுக்கு) நான் எடுத்துரைத்து விட்டேன் அல்லவா, நான் எடுத்துரைத்துவிட்டேன் அல்லவா, என்று மும்முறை கூறினார்கள்.

## ஒருவர் மற்றொருவருக்கு அன்பளிப்புச் செய்து அல்லது அன்பளிப்புச் செய்வதாக வாக்களித்து அன்பளிப்பு தன்னிடம் வந்து சேருவதற்கு முன்பே (அதில் ஒருவர்) இறந்துவிட்டால்

ஹதீஸ் 2598 நபி (ஸல்) அவர்கள் என்னிடம் பஹ்ரைனின் நிதி வந்துவிட்டால் நான் உனக்கு இவ்வளவு தருவேன் என்று மூன்று முறை கூறினார்கள். ஆனால் அந்த நிதி வருவதற்குள் நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்துவிட்டார்கள். அப்போது (ஆட்சித் தலைவராகத் தேர்வு பெற்ற) அபூபக்ர் (ரலி) அவர்கள் எவருக்காவது நபி (ஸல்) அவர்கள் எதனையும் வாக்களித்திருந்தால் அல்லது எவருக்காவது அவர்கள் பாக்கி வைத்திருந்தால் அவர் நம்மிடம் வரட்டும் என்று (பொது) அறிவிப்புச் செய்யும்படி பறையறிவிப்பவருக்குக் கட்டளையிட அவர் அவ்வாறே அறிவித்தார். ஆகவே நான் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்று எனக்கு (பஹ்ரைனின் நிதியிலிருந்து) தருவதாக நபி (ஸல்) அவர்கள் வாக்களித்திருந்தார்கள் என்று கூறினேன். இதைக் கெட்ட அவர்கள் எனக்கு (நிதியை) மூன்று முறை கைகளால் அள்ளிக்

கொடுத்தார்கள்.

## (அன்பளிப்பாக வழங்கப்படும்) அடிமைகளையும் பொருட்களையும் எப்படிப் பெற்றுக் கொள்வது,

ஹதீஸ் 2599 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சில அங்கிகளைப் பங்கிட்டார்கள். ஆனால் என் தந்தை (மக்ரமாவு)க்கு ஒன்றையும் கொடுக்கவில்லை. என் தந்தை மக்ரமா (ரலி) அவர்கள் என் அன்பு மகனே என்னுடன் அல்லாஹ்வின் தூதரிடம் வா என்று கூறினார்கள். நான் அவர்களுடன் சென்றேன். என் தந்தை எனக்காக நபி (ஸல்) அவர்களைக் கூப்பிடு என்று கூற நான் நபி (ஸல்) அவர்களை கூப்பிட்டேன். அவர்கள் வெளியே வந்தார்கள். அவர்கள் மீது அந்த அங்கிகளில் ஒன்று இருந்தது. அவர்கள் நான் உங்களுக்காக இதை (யாருக்கும் தராமல்) எடுத்து வைத்திருந்தேன் என்று கூறினார்கள். என் தந்தை மக்ரமா (ரலி) அவர்கள் அதைப் பார்த்துவிட்டு மக்ரமா திருப்தியடைந்தான் என்று கூறினார்கள்.

## அன்பளிப்பு பெற்றவர் அன்பளிப்பைக் கைவசம் பெற்றுக் கொண்டார் ஆனால் நான் ஏற்றுக் கொண்டேன் என்று கூறவில்லையென்றால்........

ஹதீஸ் 2600 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து நான் அழிந்து விட்டேன் என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் அப்படியென்ன (நடந்தது), என்று கேட்டார்கள். அவர் நான் ரமளான் மாதத்தில் (பகலில்) என் மனைவியுடன் உடலுறவு கொண்டு விட்டேன் என்றார். நபி (ஸல்) அவர்கள் உன்னிடம் அடிமை எவரும் உண்டா, என்று கேட்டார்கள். அம்மனிதர் இல்லை என்று கூறினார். தொடர்ந்து இரு மாதங்கள் நோன்பு நோற்க உன்னால் முடியுமா என்று கேட்டார்கள். அதற்கும் அவர் முடியாது என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள் அப்படியென்றால் அறுபது ஏழைகளுக்கு உன்னால் உணவளிக்க முடியுமா என்று கேட்டார்கள்.. அதற்கும் அவர் முடியாது என்று பதிலளித்தார். அப்போது அன்சாரி ஒருவர் அரக் ஒன்றைக் கொண்டு வந்தார். அரக் என்பது பேரீச்சம் பழக்கூடையாகும். நபி (ஸல்) அவர்கள் (கேள்வி கேட்ட) அம்மனிதரிடம் இதை எடுத்துச் சென்று தர்மம் செய்து விடு என்று கூறினார்கள். அதற்கு அம்மனிதர் அல்லாஹ்வின் தூதரே எங்களை விட அதிகத் தேவையுடைய(வறிய)வர்களுக்கா நான் இதை தர்மம் செய்வது, உங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பி வைத்த (இறை)வனின் மீதாணையாக மதீனாவின் இருமலைகளுக்கிடையே எங்களை விட அதிகத் தேவையுடைய வீட்டார் எவருமில்லை என்று கூறினார் அப்போது நபி (ஸல்) அவர்கள் போ (போய்) உன் வீட்டாருக்கு இதை உண்ணக் கொடு என்று கூறினார்கள்.

## வரவேண்டிய கடனை அன்பளிப்பாக்கி விடுவது.

ஹதீஸ் 2601 என் தந்தை உஹதுப் போரின் போது ஷஹீதாகக் கொல்லப்பட்டார்கள். கடன்காரர்கள் தங்கள் உரிமைகள் விசயத்தில் (கடனைத் திரும்பப் பெறுவதில்) கடுமை காட்டினார்கள். நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று (இது பற்றிக்) கூறினேன். அவர்கள் என் தந்தைக்குக் கடன் கொடுத்தவர்களிடம் என் தோட்டத்தின் கனிகளைப் பெற்றுக் கொள்ளும்படியும் (மீதியுள்ள கடனை) மன்னித்து விடும்படியும் கேட்டுக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் (நபி (ஸல்) அவர்களின் பரிந்துரையை) ஏற்க மறுத்துவிட்டார்கள். ஆகவே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் தோட்டத்தை அவர்களிடம் கொடுக்கவுமில்லை. கனிகளைப் பறித்து அவர்களுக்குத் தரவுமில்லை. மாறாக நான் உன்னிடம் நாளை வருவேன் என்று கூறினார்கள். (அடுத்த நாள்) காலையில் எங்களிடம் வந்தார்கள். பேரீச்ச மரங்களுக்கிடையே சுற்றி வந்து அதன் கனிகளில் பரக்கத் (எனும் அருள் வளத்திற்காக

பிரார்த்தித்தார்கள். நான் அவற்றைப் பறித்துக் கடன்காரர்களின் உரிமைகளை நிறைவேற்றினேன். எங்களுக்கு அவற்றின் பழங்களில் சிறிதளவு எஞ்சியது. பிறகு நான் அல்லாஹ்வின் தூதரிடம் அவர்கள் (தமது அவையில்) அமர்ந்திருந்த பொழுது வந்து நடந்ததைத் தெரிவித்தேன்: அங்கு அமர்ந்திருந்த உமர் (ரலி) அவர்கள் தாங்கள் அல்லாஹ்வின் தூதர் தாம் என்று நாங்கள் அறிந்திருக்கவில்லையா, அல்லாஹ்வின் மீதாணையாக தாங்கள் அல்லாஹ்வின் தூதர் தாம் என்று கூறினார்கள்.

## ஒருவர் பலருக்கு அன்பளிப்புச் செய்வது.

ஹதீஸ் 2602 நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பானம் (பால்) கொண்டு வரப்பட்டது. (அதை) அவர்கள் குடித்தார்கள். அப்போது அவர்களுடைய வலது பக்கத்தில் ஒரு சிறுவரும் இடது பக்கத்தில் முதியவர்கள் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் அந்த சிறுவரிடம் நீ அனுமதியளித்தால் நான் இவர்களுக்கு (என் பக்கத்திலுள்ள முதியவர்களுக்கு) கொடுத்து விடுகின்றேன் என்று கூறினார்கள். அந்தச் சிறுவர் அல்லாஹ்வின் தூதரே தங்களிடமிருந்து (எனக்குக் கிடைக்கக் கூடிய) என் பங்கை வெறெவருக்காகவும் விட்டுக் கொடுக்க நான் தயாராக இல்லை என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் அச்சிறுவரின் கையில் அந்த (மீதி) பானத்தை வைத்தார்கள்.

## கைவசம் பெற்றுக் கொண்ட அன்பளிப்பும் பெற்றுக் கொள்ளப்படாத அன்பளிப்பும் பங்கிடப்பட்ட அன்பளிப்பும் பங்கிடப்படாத அன்பளிப்பும்

ஹதீஸ் 2603 நான் நபி (ஸல்) அவர்களிடம் பள்ளி வாசலில் சென்றேன் எனக்கு (என்னிடம் வாங்கிய ஒட்டகத்தின் விலையைச்) செலுத்தி எனக்கு அதிகமாகவும் தந்தார்கள்.

ஹதீஸ் 2604 நபி (ஸல்) அவர்களுக்கு ஒரு பிரயாணத்தில் ஒட்டகம் ஒன்றை நான் விற்றேன். மதீனாவிற்கு நான் வந்தபோது நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசலுக்கு வந்து இரண்டு ரக்அத்துக்களைத் தொழு என்று கூறினார்கள். பிறகு நிறுத்(துத் தந்)தார்கள். ஷாம் வாசிகள் ஹாராவுடைய நாளில் அதை எடுத்துக் கொள்ளும்வரை அதிலிருந்து சிறிதளவு எப்போதும் என்னிடம் இருந்து வந்தது.

ஹதீஸ் 2605 அல்லாஹ்வின் தூதரிடம் ஒரு பானம் (பால்) கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்களின் வலப் பக்கத்தில் ஒரு சிறுவரும் அவர்களின் இடப் பக்கத்தில் முதியவர்கள் சிலரும் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் சிறுவரை நோக்கி இவர்களுக்கு இந்தப் பாலைக் கொடுப்பதற்கு எனக்கு அனுமதி தருகிறாயா, என்று கேட்டார்கள். அச்சிறுவர் மாட்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக தங்களிடமிருந்து எனக்குக் கிடைக்கக் கூடிய (நற்)பேற்றை வெறெவருக்காகவும் நான் விட்டுத் தரமாட்டேன் என்று கூறினர். ஆகவே நபி (ஸல்) அவர்கள் அந்த பானத்தை சிறுவரின் கையில் வைத்தார்கள்.

ஹதீஸ் 2606 ஒரு மனிதருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்தது. (அவர் நபி (ஸல்) அவர்களிடம் கடுமையாகப் பேசியதால்) நபி (ஸல்) அவர்களின் தோழர்கள் அந்த மனிதரை தண்டிக்க முனைந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அவரை விட்டுவிடுங்கள். ஏனெனில் உரிமையுடையவர் (கடன் கொடுத்தவர்) தன் உரிமையை கேட்க்கும் போது கடுமையாகப் பேச(வும் கடுமையாக நடந்து கொள்ள)வும் அவருக்கு உரிமையுண்டு என்று கூறிவிட்டு அவருக்கு (நான் தரவேண்டிய ஒட்டகத்தின் சம வயதுடைய ஒட்டகத்தை வாங்கி அதை அவரிடம் கொடுத்துவிடுங்கள் என்று கூறினார்கள். நபித்தோழர்கள் தாங்கள் தரவேண்டிய ஒட்டகத்தின் வயதை விட அதிக வயதுடைய ஒட்டகம் தான் எங்களுக்குக் கிடைக்கிறது என்று கூற நபி (ஸல்) அவர்கள் அதை வாங்கி அவருக்குக் கொடுத்து விடுங்கள். ஏனெனில் உங்களில் எவர் அழகிய முறையில் கடனைத் திருப்பிச்

செலுத்துகிறாரோ அவரே உங்களில் சிறந்தவர் ஆவார் என்று கூறினார்கள்.

## பலர் பலருக்கு அன்பளிப்புச் செய்தல்

ஹதீஸ் 2607 நபி (ஸல்) அவர்களின் ஹவாஸின் குலத்தார் முஸ்லிம்களாக வந்தபோது அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் தங்கள் செல்வங்களையும் போர்க்கைதிகளையும் தங்களிடம் திருப்பித் தந்துவிடும்படி கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னுடன் நீங்கள் பார்க்கின்ற (இந்தப்) படைவீரர்களும் இருக்கின்றனர். உண்மை பேசுவது எனக்கு மிகவும் விருப்பமானதாகும். (உங்கள்) போர்க் கைதிகள் அல்லது (உங்கள்) செல்வம் இரண்டில் ஏதேனும் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். நான் (உங்களை) எதிர்பார்த்துக் காத்திருந்தேன் என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் தாயிஃப் நகரத்திலிருந்து புறப்பட்ட நேரத்திலிருந்து பத்துக்கு மேற்பட்ட இரவுகள் அவர்களை எதிர்பார்த்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் போர்ச் செல்வங்கள் அல்லது போர்க் கைதிகள் இரண்டிலொன்றைத் தான் திருப்பித் தருவார்கள் என்று அவர்களுக்குத் தெளிவாகி விட்டபோது நாங்கள் எங்கள் போர்க்கைதிகளையே திரும்பப் பெற்றுக் கொள்கிறோம் என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடயே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுக்குத் தகுதியுள்ள பண்புகளைக் கொண்டு புகழ்ந்தார்கள். பிறகு (முஸ்லிம்களே) உங்களுடைய இந்தச் சகோதரர்கள் தவ்பா செய்தவர்களாக (மனம் திருந்தியவர்களாக) நம்மிடம் வந்துள்ளனர். அவர்களிடம் அவர்களுடைய போர்க் கைதிகளை திரும்பக் கொடுத்து விடுவதை நான் உசிதமானதாகக் கருதுகிறேன். உங்களில் எவர் இதற்கு மனப்பூர்வமாகச் சம்மதிக்கின்றாரோ அவர் அவ்வாறே செய்யட்டும். (போர்க் கைதிகளை விடுதலை செய்யட்டும்) எவர் நமக்கு அல்லாஹ் (இனி கிடைக்கவிருக்கும் வெற்றிகளில்) முதன் முதலாகக் கொடுக்கவிருக்கும் செல்வத்திலிருந்து அவருக்கு நாம் கொடுக்கின்றவரை தனது பங்கைத் தானே வைத்துக் கொள்ள விரும்புகின்றாரோ அவர் அவ்வாறே செய்யட்டும் (அதுவரை தன்னிடமே வைத்துக் கொள்ளட்டும்) என்று கூறினார்கள். மக்கள் அல்லாஹ்வின் தூதரே நாங்கள் மனப்பூர்வமாக அவர்களிடம் (அவர்களுடைய உறவினர்களான போர்க் கைதிகளை திருப்பித்) தந்து விடுகிறோம் என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அவர்களிடம் உங்களில் எவர் சம்மதிக்கிறார் எவர் சம்மதிக்கவில்லை என்று எமக்குத் தெரியாதாகையால் நீங்கள் திரும்பிச் செல்லுங்கள். உங்கள் தலைவர்கள் வந்து (உங்கள் முடிவை) எங்களிடம் தெரிவிக்கட்டும் என்று கூறினார்கள். பிறகு அவர்கள் (தலைவர்கள்) திரும்பி வந்து நபி (ஸல்) அவர்களிடம் தங்கள் போர்க் கைதிகளைத் திருப்பித் தர மனப்பூர்வமாகச் சம்மதிப்பதாகத் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 2608 நபி (ஸல்) அவர்களிடம் ஹவாஸின் குலத்தார் முஸ்லிம்களாக வந்தபோது அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் தங்கள் செல்வங்களையும் போர்க்கைதிகளையும் தங்களிடம் திருப்பித் தந்துவிடும்படி கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னுடன் நீங்கள் பார்க்கின்ற (இந்தப்) படைவீரர்களும் இருக்கின்றனர். உண்மை பேசுவது எனக்கு மிகவும் விருப்பமானதாகும். (உங்கள்) போர்க் கைதிகள் அல்லது (உங்கள்) செல்வம் இரண்டில் ஏதேனும் ஒன்றை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். நான் (உங்களை) எதிர்பார்த்துக் காத்திருந் தேன் என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் தாயிஃப் நகரத்திலிருந்து புறப்பட்ட நேரத்திலிருந்து பத்துக்கு மேற்பட்ட இரவுகள் அவர்களை எதிர்பார்த்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் போர்ச் செல்வங்கள் அல்லது போர்க் கைதிகள் இரண்டிலொன்றைத் தான் திருப்பித் தருவார்கள் என்று அவர்களுக்குத் தெளிவாகி விட்டபோது நாங்கள் எங்கள் போர்க்கைதிகளையே திரும்பப் பெற்றுக் கொள்கிறோம் என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுக்குத் தகுதியுள்ள பண்புகளைக் கொண்டு புகழ்ந்தார்கள். பிறகு (முஸ்லிம்களே) உங்களுடைய இந்தச்

சகோதரர்கள் தவ்பா செய்தவர் களாக (மனம் திருந்தியவர்களாக) நம்மிடம் வந்துள்ளனர். அவர்களிடம் அவர்களுடைய போர்க் கைதிகளை திரும்பக் கொடுத்து விடுவதை நான் உசிதமானதாகக் கருதுகிறேன். உங்களில் எவர் இதற்கு மனப்பூர்வமாகச் சம்மதிக்கின்றாரோ அவர் அவ்வாறே செய்யட்டும். (போர்க் கைதிகளை விடுதலை செய்யட்டும்) எவர் நமக்கு அல்லாஹ் (இனி கிடைக்கவிருக்கும் வெற்றிகளில்) முதன் முதலாகக் கொடுக்கவிருக்கும் செல்வத்திலிருந்து அவருக்கு நாம் கொடுக்கின்றவரை தனது பங்கைத் தானே வைத்துக் கொள்ள விரும்புகின்றாரோ அவர் அவ்வாறே செய்யட்டும் (அதுவரை தன்னிடமே வைத்துக் கொள்ளட்டும்) என்று கூறினார்கள். மக்கள் அல்லாஹ் வின் தூதரே நாங்கள் மனப்பூர்வமாக அவர்களிடம் (அவர்களுடைய உறவினர்களான போர்க் கைதிகளை திருப்பித்) தந்து விடுகிறோம் என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அவர்களிடம் உங்களில் எவர் சம்மதிக்கிறார் எவர் சம்மதிக்கவில்லை என்று எமக்குத் தெரியாதாகையால் நீங்கள் திரும்பிச் செல்லுங்கள். உங்கள் தலைவர்கள் வந்து (உங்கள் முடிவை) எங்களிடம் தெரிவிக்கட்டும் என்று கூறினார்கள். பிறகு அவர்கள் (தலைவர்கள்) திரும்பி வந்து நபி (ஸல்) அவர்களிடம் தங்கள் போர்க் கைதிகளைத் திருப்பித் தர மனப்பூர்வமாகச் சம்மதிப்பதாகத் தெரிவித்தார்கள்.

## சகாக்களுடன் அமர்ந்திருக்கும் ஒருவருக்கு அன்பளிப்பு வழங்கப்பட்டால் அவரே அதைப் பெறுவதற்கு அதிக உரிமையுடையவராவார்.

ஹதீஸ் 2609 நபி (ஸல்) அவர்கள் ஒரு குறிப்பிட்ட வயதையுடைய ஒட்டகத்தை ஒருவரிடமிருந்து கடனாகப் பெற்றார்கள். அதைக் கடன் கொடுத்தவர் நபி (ஸல்) அவர்களிடம் தனது கடனைத் திருப்பிச் செலுத்தும்படி கேட்டு வந்தார். (அப்போது அவர் நபியவர்களிடம் சற்று கடுமையாகப் பேசினார். ஆகவே தோழர்கள் அவரை தண்டிக்க விரும்பினார்கள்.) நபி (ஸல்) அவர்கள் (தம் தோழர்களைத் தடுத்து) உரிமையுடையவர் கடுமையாகப் பேச அனுமதியுண்டு என்று கூறினார்கள். பிறகு அவரது சிறு வயது ஒட்டத்தை விடச் சிறந்ததைக் கொடுத்து அவரது கடனை அடைத்தார்கள். மேலும் உங்களில் எவர் அழகிய முறையில் கடனை அடைக்கிறாரோ அவரே உங்களில் சிறந்தவர் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2610 நான் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பிரயாணத்தில் இருந்தேன். உமர் (ரலி) அவர்களுக்குச் சொந்தமான முரட்டு ஒட்டகம் ஒன்றின் மீது நான் சவாரி செய்து கொண்டிருந்தேன். அது நபி (ஸல்) அவர்களை முந்திக் கொண்டு சென்றது. அப்போது என் தந்தை உமர் (ரலி) அவர்கள் அப்துல்லாஹ்வே நபி (ஸல்) அவர்களை யாரும் முந்தக் கூடாது என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் என் தந்தையிடம் அதை எனக்கு விற்று விடுங்கள் என்று கேட்டார்கள். என் தந்தை அதை உங்களுக்கு நான் விற்றுவிட்டேன் என்று கூறினார்கள். அதை நபி (ஸல்) அவர்கள் வாங்கினார்கள். பிறகு என்னைப் பார்த்து அப்துல்லாஹ்வே இது உனக்குரியது. நீ விரும்பியபடி இதைப் பயன்படுத்திக் கொள் என்று சொன்னார்கள்.

## ஒருவர் தன் ஒட்டகத்தில் சவாரி செய்து கொண்டிருப்பவருக்கே அதை அன்பளிப்புச் செய்தால் அது செல்லும்.

ஹதீஸ் 2611 நாங்கள் ஒரு பிராயணத்தில் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். நான் (என் தந்தைக்குச் சொந்தமான) ஒரு முரட்டு ஒட்டகத்தின் மீது சவாரி செய்து கொண்டிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் (என் தந்தை) உமர் (ரலி) அவர்களிடம் இதை எனக்கு விற்று விடுங்கள் என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அதை விலைக்கு வாங்கி (கையகப்படுத்தாமலேயே) அப்துல்லாஹ்வே இது உனக்குரியது என்று என்னிடம் கூறினார்கள்.

## எதை அணிவது வெறுக்கத் தக்கதோ அதை அன்பளிப்பாக வாங்குதல்

ஹதீஸ் 2612 உமர் பின் கத்தாப் (ரலி) அவர்கள் பள்ளிவாசலின் நுழைவாயிலருகே பட்டு அங்கி விற்கப்படுவதைக் கண்டு அல்லாஹ்வின் தூதரே இதை நீங்கள் வாங்கி ஜும்ஆ நாளிலும் தூதுக் குழுக்கள் உங்களைச் சந்திக்க வரும் போதும் அணிந்து கொண்டால் நன்றாயிருக்குமே என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் எவருக்கு மறுமையில் எந்த நற்பேறும் இல்லையோ அவர்தான் இதை அணிவார் என்று கூறினார்கள். பிறகு சில பட்டு அங்கிகள் நபி (ஸல்) அவர்களுக்கு வந்தன. அவற்றிலிருந்து ஓர் அங்கியை நபி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்குக் கொடுத்தார்கள். உமர் (ரலி) அவர்கள் எனக்கு இதை அணிந்து கொள்ளக் கொடுக்கிறீர்களா, உதாரிதுடைய அங்கியின் விசயத்தில் நீங்கள் முன்பு ஒரு விதமாகச் சொன்னீர்களே என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் இதை நீங்கள் அணிந்து கொள்ள நான் உங்களுக்குத் தரவில்லை என்று பதிலளித்தார்கள். ஆகவே
உமர் (ரலி) அவர்கள் அதை மக்காவிலிருந்து இணைவைப்பவரான தன் சகோதரர் ஒருவருக்குக் கொடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2613 நபி (ஸல்) அவர்கள் (தமது மகள்) பாத்திமா (ரலி) அவர்களின் வீட்டுக்கு வந்தார்கள். ஆனால் அவர்களிடம் செல்லவில்லை. (திரும்பிப் போய்விட்டார்கள்.) (இதற்கிடையில் அங்கே) அலீ (ரலி) அவர்கள் வந்தார்கள். பாத்திமா (ரலி) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் விசயத்தைச் சொன்னார்கள். அலீ (ரலி) அவர்கள் அதை நபி (ஸல்) அவர்களிடம் சொல்ல நான் பாத்திமாவின் வீட்டு வாசலில் பல வண்ணச் சித்திரங்கள் வரையப்பட்ட திரைச் சீலை ஒன்றைக் கண்டேன். எனக்கும் இந்த (ஆடம்பரமான) உலகத்திற்கும் என்ன தொடர்பு, (அதனால்தான் திரும்பி வந்துவிட்டேன்) என்று கூறினார்கள். அலீ (ரலி) அவர்கள் பாத்திமா (ரலி) அவர்களிடம் சென்று நபி (ஸல்) அவர்கள் கூறியதைச் சொன்னார்கள். அதற்கு பாத்திமா (ரலி) அவர்கள் அந்தத் திரைச் சீலையின் விசயத்தில் நபி (ஸல்) அவர்கள் தாம் விரும்புவதை எனக்குக் கட்டளையிடட்டும். (அதன்படியே நான் நடந்து கொள்கிறேன்) என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் அதை இன்னாரின் வீட்டாரிடம் அனுப்பி விடு அவர்களுக்குத் தேவையுள்ளது என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2614. அலீ (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எனக்குப் பட்டு அங்கி ஒன்றை அன்பளிப்புச் செய்தார்கள். அதை நான் அணிந்து கொண்டேன். (அதைக்கண்ட) நபி(ஸல்) அவர்களின் முகத்தில் கோபக் குறியை கண்டேன். எனவே, அதைப் பல துண்டுகளாக்கி எங்கள் (குடும்பப்) பெண்களிடையே பங்கிட்டு விட்டேன்.

## இணைவைப்போரின் அன்பளிப்பை ஏற்றுக் கொள்வது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இப்ராஹீம்(அலை) அவர்கள் (தம் மனைவி) சாராவுடன் ஹிஜ்ரத் செய்தார்கள். அப்போது அரசன் ஒருவன்... அல்லது அடக்கியாளும் கொடுங்கோலன் ஒருவன்... இருந்த ஓர் ஊருக்குச் சென்றார்கள். அவன்சாராவுக்கு ஹாஜரை (அன்பளிப்பாக)க் கொடுங்கள்' என்று கட்டளையிட்டான்.

நபி(ஸல்) அவர்களுக்கு விஷம் கலந்த ஆடு ஒன்று அன்பளிப்பாகத் தரப்பட்டது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுமைத்(ரஹ்) கூறினார்.

'அய்லா'வின் அரசர் நபி(ஸல்) அவர்களுக்கு (தகவல் எனும்) வெள்ளை நிறக் கோவேறுக் கழுதை ஒன்றை அன்பளிப்புச் செய்தார். நபி(ஸல்) அவர்கள் அவருக்கு சால்வையொன்றை (அன்பளிப்பாக அனுப்பி) அணிவித்தார்கள். மேலும், இஸ்லாமிய அரசின் கீழ் கட்டுப்பட்டு இருக்கும்படியும் அவருக்கு நபி(ஸல்) அவர்கள் எழுதினார்கள்.

ஹதீஸ் 2615. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கு மெல்லிய பட்டாலான அங்கி ஒன்று அன்பளிப்பாகத் தரப்பட்டது. அவர்கள் பட்டுத் துணியை (அணிவதைத்) தடை செய்து வந்தார்கள். மக்களோ அந்த அங்கி(யின் தரம் மற்றும் மென்மை)யைக் கண்டு வியந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! சொர்க்கத்தில் ஸஅத் இப்னு முஆத்துக்கு கிடைக்கவிருக்கும் கைக்குட்டைகள் (தரத்திலும் மென்மையிலும்) இதைவிடத் தரமானவையாயிருக்கும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2616. அனஸ்(ரலி) அறிவித்தார்.

தூமத்துல் ஜந்தலின் அரசர் உகைதிர், நபி(ஸல்) அவர்களுக்கு அன்பளிப்புகளை அனுப்பினார்.

ஹதீஸ் 2617. அனஸ்(ரலி) அறிவித்தார்.

யூதப் பெண் ஒருத்தி நபி(ஸல்) அவர்களிடம் விஷம் தோய்க்கப்பட்ட ஓர் ஆட்டை அன்பளிப்பாகக் கொண்டு வந்தாள். நபி(ஸல்) அவர்கள் அதிலிருந்து (சிறிது) உண்டார்கள். அவளைக் கொன்று விடுவோமா? என்று நபி(ஸல்) அவர்களிடம்) கேட்கப்பட்டது. அவர்கள், வேண்டாம்' என்று கூறிவிட்டார்கள். நபி(ஸல்) அவர்களின் தொண்டைச் சதையில் அந்த விஷத்தின் பாதிப்பை நான் தொடர்ந்து பார்த்து வந்தேன்.

ஹதீஸ் 2618. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நூற்றி முப்பது பேர் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அவர்கள், உங்களில் எவரிடமாவது உணவு இருக்கிறதா? என்று கேட்டார்கள். அப்போது ஒரு மனிதரிடம் சுமார் ஒரு ஸாவு அளவு உணவு தான் இருந்தது. அது தண்ணீர் கலந்து குழைக்கப்பட்டது. பிறகு, மிக உயரமான (முரட்டு சுபாவம் கொண்ட) தலைவிரிகோலமான இணைவைக்கும் மனிதர் ஒருவர் ஆடுகளை ஓட்டி வந்தார். நபி(ஸல்) அவர்கள் அவரிடம், (இவை) விற்பதற்காகவா? அன்பளிப்பாகவா? என்று கேட்டார்கள். அவர், இல்லை. விற்பதற்காகத் தான் (கொண்டு வந்துள்ளேன்)' என்று பதிலளித்தார். அவரிடமிருந்து ஓர் ஆட்டை நபி(ஸல்) அவர்கள் வாங்கினார்கள் அது அறு(த்து சமை)க்கப்பட்டது. அதன் ஈரலைப் பொறிக்கும்படி நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் நூற்றி முப்பது பேரில் ஒருவர் விடாமல் அனைவருக்குமே அதன் ஈரலில் இருந்து ஒரு துண்டை நபி(ஸல்) அவர்கள் துண்டித்துத் தந்திருந்தார்கள். அங்கிருந்தவருக்கு அதைக் கொடுத்தார்கள். அங்கில்லாதவருக்கு எடுத்து (பாதுகாத்து) வைத்தார்கள். இரண்டு (அகன்ற) தட்டுகளில் அவற்றை வைத்தார்கள். அனைவரும் உண்டார்கள். நாங்களும் வயிறு நிரம்ப உண்டோம். அப்படியிருந்தும் இரண்டு தட்டுகளும் அப்படியே மீதமாம்விட்டன. அவற்றை நாங்கள் ஒட்டகத்தின் ஏற்றிச் சென்றோம்.

## இணைவைப்பவர்களுக்கு அன்பளிப்புச் செய்வது.

அல்லாஹ் கூறினான்:

தீன் (இறைமார்க்கம்) தொடர்பான விஷயத்தில் உங்களுடன் போர் புரியாத, உங்களை உங்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றாத அவர்களிடம் நீங்கள் நல்லவிதமாகவும் நீதியுடனும் நடக்க வேண்டாமென அல்லாஹ் உங்களைத் தடுப்பதில்லை. (திருக்குர்ஆன் 60:08)

ஹதீஸ் 2619. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

உமர் (ரலி) ஒரு மனிதரின் (தோள்) மீது, விற்கப்படுகிற பட்டு அங்கியைக் கண்டார்கள். உடனே நபி (ஸல்) அவர்களிடம், இந்த அங்கியை வாங்கிக் கொள்ளுங்கள். ஜும்ஆ நாளிலும் (குலங்கள் மற்றும் நாடுகளின்) தூதுக் குழுக்கள் தங்களிடம் வரும் போதும் அணிந்து கொள்வீர்கள்' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், எவருக்கு மறுமையில் எந்த நற்பேறும் இல்லையோ அவர்தான் இதை அணிவார்' என்று கூறினார்கள். பிறகு, ஒரு முறை நபி (ஸல்) அவர்களிடம் (அதே போன்ற பட்டு) அங்கிகள் கொண்டு வரப்பட்டன. நபி (ஸல்) அவர்கள் அவற்றிலிருந்து ஓர் அங்கியை உமர் (ரலி) அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். உமர் (ரலி), இது குறித்துக் கடுமையான சொற்களைத் தாங்கள் கூறியிருக்க, நான் எப்படி இதை அணிவேன்? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், நான் இதை நீங்கள் அணிந்து கொள்வதற்காகத் தரவில்லை. இதை நீங்கள் விற்றுவிடுங்கள் அல்லது வேறு எவருக்காவது அணிவித்து விடுங்கள்' என்று கூறினார்கள். உமர் (ரலி) அதை மக்காவாசிகளில் ஒருவராயிருந்த தம் சகோதரருக்கு அவர் இஸ்லாத்தைத் தழுவுவதற்கு முன்பு அனுப்பி வைத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2620. அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) கூறினார்.

என்னிடம், என் தாயார் அல்லாஹ்வின் தூதருடைய காலத்தில் வந்திருந்தார்கள். அப்போது அவர்கள் இணைவைப்பவராக இருந்தார்கள். நான் அல்லாஹ்வின் தூதரிடம், என் தாயார் என்னிடம் ஆசையுடன் வந்துள்ளார். என் தாயிடம் அவரின் உறவைப் பேணி நல்லமுறையில் நடந்து கொள்ளட்டுமா? என்று கூறி மார்க்கத் தீர்ப்பு கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், ஆம். நீ உன் தாயின் உறவைப் பேணி அவருடன் நல்ல முறையில் நடந்து கொள்' என்று கூறினார்கள்.

## தன் அன்பளிப்பையும் தருமத்தையும் திரும்பப் பெற்றுக் கொள்வது எவருக்கும் அனுமதிக்கப்பட்டதல்ல.

ஹதீஸ் 2621. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன் அன்பளிப்புப் பொருளைத் திரும்பப் பெற்றுக் கொள்பவன் தன் வாந்தியைத் தானே திரும்ப உண்பவனைப் போன்றவன் ஆவான்.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2622. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன் அன்பளிப்பைத் திரும்பப் பெற்றுக் கொள்பவன் தன் வாந்தியைத் தானே திரும்பத் தின்கிற நாயைப் போன்றவன் ஆவான். (இது போன்ற) இழிகுணம் நமக்கு முறையல்ல.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2623. உமர் இப்னு கத்தாப் (ரலி) அறிவித்தார்.

ஒரு குதிரையின் மீது ஒருவரை நான் இறைவழியில் (போரிடுவதற்காக) ஏற்றியனுப்பினேன். (அவருக்கே அதை தர்மமாகக் கொடுத்து விட்டேன்.) அதை வைத்திருந்தவர் அதை (சரியாகப் பராமரிக்காமல்) பாழாக்கிவிட்டார். எனவே, அந்த குதிரையை அவரிடமிருந்து வாங்க விரும்பினேன். அவர் அதை விலை மலிவாக விற்று விடுவார் என்று எண்ணினேன். எனவே, நபி (ஸல்) அவர்களிடம் அது குறித்துக் கேட்டேன். அவர்கள், நீங்கள் அதை வாங்காதீர்கள்

அவர் உங்களுக்க அதை ஒரேயொரு திர்ஹமுக்குக் கொடுத்தாலும் சரியே! ஏனெனில், தன் தருமத்தைத் திரும்பப் பெறுபவன், தன் வாந்தியைத் தானே திரும்பத் தின்கிற நாயைப் போன்றவன் ஆவான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2624. அப்துல்லாஹ் இப்னு உபைதில்லாஹ் இப்னி அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்.

இப்னு ஜுத்ஆனால் விடுதலை செய்யப்பட்ட அடிமையான சுஹைப்(ரலி) அவர்களின் மக்கள், தங்கள் தந்தையான சுஹைப்(ரலி) அவர்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் ஆயுட்காலத்தில்) இரண்டு வீடுகளையும் ஓர் அறையையும் (அன்பளிப்பாகக்) கொடுத்ததாகக் கூறினர். (உங்கள் கூற்று உண்மையானது என்பதற்கு) உங்கள் இருவருக்கும் யார் சாட்சி சொல்வார்? என்று (ஆளுநர்) மர்வான் கேட்டார். அவர்கள், இப்னு உமர் அவர்கள் (எங்களுக்காக சாட்சி சொல்வார்கள்)' என்று கூறினர். உடனே மர்வான், இப்னு உமர்(ரலி) அவர்களைக் கூப்பிட்டனுப்பினார். இப்னு உமர்(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சுஹைப் அவர்களுக்கு இரண்டு வீடுகளையும் ஓர் அறையையும் கொடுத்தது உண்மை தான்' என்று சாட்சியம் அளித்தார்கள். இப்னு உமர்(ரலி) அவர்களின் சாட்சியத்தை வைத்து சுஹைப்(ரலி) அவர்களின் மக்களுக்குச் சாதகமாக மர்வான் தீர்ப்பளித்தார்.

## உம்ராவும் ருக்பாவும்.

ஹதீஸ் 2625. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

உம்ராவாக (ஆயுட்கால அன்பளிப்பாக) வழங்கப்பட்ட பொருளைக் குறித்து நபி(ஸல்) அவர்கள், அது எவருக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டதோ அவருக்கே உரியது' என்று தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 2626. நபி(ஸல்) அவர்கள்உம்ரா செல்லும்' என்று கூறினார்கள். 22

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

"ஜாபிர்(ரலி) அவர்களும் இதே போன்றதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து எனக்கு அறிவித்தார்கள்' என்று அதாவு(ரஹ்) கூறினார்.

## மக்களிடமிருந்து குதிரையை இரவல் வாங்குதல்.

ஹதீஸ் 2627. அனஸ்(ரலி) அறிவித்தார்.

மதீனாவில் (பகைவர்கள் படையெடுத்து வருவதாக வதந்தி பரவி மக்களிடையே) பீதி ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடமிருந்துமன்தூப் என்று அழைக்கப்பட்ட குதிரை ஒன்றை இரவல் வாங்கினார்கள். அதில் ஏறி சவாரி செய்தார்கள். திரும்பி வந்தபோது, (எதிரிகளின் படை எதனையும் அல்லது பீதி~ட்டும்) எதனையும் நாம் காணவில்லை. தங்குதடையின்றி வேகமாக ஓடக் கூடியதாகவே நாம் இதனைக் கண்டோம்' என்று கூறினார்கள்.

## மணமக்களுக்காக திருமணத்தின்போது இரவல் வாங்குதல்.

ஹதீஸ் 2628. அய்மன்(ரஹ்) அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் சென்றேன். அவர்கள் ஐந்து திர்ஹம்கள் விலையுடைய கெட்டியான சட்டை ஒன்றை அணிந்திருந்தார்கள். அவர்கள், உன் பார்வையை உயர்த்தி என் அடிமைப் பெண்ணைப் பார். அவள், வீட்டில் கூட இதை அணிய (மறுத்துப்) பெருமை பாராட்டுகிறாள். ஆனால், அல்லாஹ்வின் தூதருடைய காலத்தில் மற்ற பெண்களிடையே

என்னிடம் (மட்டும் தான்) இதுபோன்றதொரு சட்டை இருந்தது. (அப்போது) மதீனாவில் (தங்கள் கணவன்மார்கள் முனபு அழகாகத் தோற்றமளிப்பதற்காக) அலங்கரிக்கப்படுகிற (புதுமணப்) பெண்கள் என்னிடம் அதை இரவல் வாங்குவதற்காக ஆளனுப்பாமல் இருந்ததில்லை' என்றார்கள்.

## பாலுக்காக இரவல் வழங்கப்படும் ஆடு, அல்லது ஒட்டகத்தின் சிறப்பு.

ஹதீஸ் 2629. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பாலுக்காக இரவல் வழங்கப்பட்ட, அதிகப் பால் தருகிற ஒட்டகம் தான் (அன்பளிப்பில்) சிறந்ததாகும். அதிகப் பால்தரும் ஆடும் (அன்பளிப்பில்) சிறந்ததாகும். அது காலையில் ஒரு பாத்திரம் (நிறையப்) பால் தருகிறது் மாலையில் ஒரு பாத்திரம் (நிறையப்) பால் தருகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2630. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

முஹாஜிர்கள் (மக்காவிலிருந்து) மதீனாவுக்கு வந்தபோது அவர்களின் கையில் (செல்வம்) எதுவும் இருக்கவில்லை. அன்சாரிகள் நிலங்களையும் (பிற) அசையாச் சொத்துக்களையும் வைத்திருந்தார்கள். ஒவ்வோர் ஆண்டும் தங்கள் சொத்துக்களின் விளைச்சல்களை அவர்களுக்கு (குறிப்பிட்ட விம்தத்தில்) கொடுப்பதாகவும்எங்களுக்கு பதிலாக நீங்கள் அதில் சிரமப்பட்டு உழைக்க வேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலும் அவற்றை முஹாஜிர்களுக்கு (குத்தகை நிலங்களாகப்) பங்கிட்டுக் கொடுத்தார்கள். என்னுடைய தாயார் உம்மு சுலைம் அவர்கள் (என் தாய்வழிச் சகோதரர்) அப்துல்லாஹ் இப்னு அபீ தல்ஹாவின் தாயாராகவும் இருந்தார்கள். அவர்கள் அல்லாஹ்வின் தூதருக்குச் சில பேரீச்ச மரங்களை (அவற்றின் கனிகளை மட்டும் பயன்படுத்திக் கொள்ளும்படி அன்பளிப்பாகக்) கொடுத்திருந்தார்கள். அவற்றை நபி(ஸல்) அவர்கள் தங்களின் அடிமைப் பெண்ணான, உஸாமா இப்னு ஜைத்டைய தாயார் உம்மு அய்மனுக்கு (அன்பளிப்பாகக்) கொடுத்தார்கள். கைபர்வாசிகளின் மீது போர் தொடுத்து முடித்து, மதீனாவுக்குத் திரும்பியபோது முஹாஜிர்கள், அன்சாரிகளின் மனீஹாக்களை (இரவலாகப் பயன்படுத்திக் கொள்ளும்படி அன்பளிப்புச் செய்த பேரீச்சந் தோட்டங்களை) அவர்களிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களும் என் தாயாரிடம் அவரின் பேரீச்ச மரங்களைத் திருப்பித் தந்துவிட்டார்கள். அவற்றுக்கு பதிலாக, உம்மு அய்மன் அவர்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் தோட்டத்திலிருந்து (சில மரங்களை அன்பளிப்பாகக்) கொடுத்தார்கள்.

ஹதீஸ் 2631. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாற்பது நல்ல காரியங்கள் உண்டு. அவற்றில் ஒன்றை, அதன் நன்மையை நாடியும், அதற்கென வாக்களிக்கப்பட்டுள்ள (சொர்க்கத்)தை உண்மையென நம்பியும் ஒருவர் கடைப்பிடித்து நடப்பாராயின், அதன் காரணத்தால் அவரை அல்லாஹ் சொர்க்கத்தில் புகுத்தியே தீருவான். அவற்றில் மிக உயர்ந்தது பெட்டை வெள்ளாட்டைப் பாலுக்காக இரவல் தருவதாகும்.

இதை அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் ஹஸ்ஸான் இப்னு அதிய்யா(ரஹ்) கூறினார்:

பெட்டை வெள்ளாட்டைப் பாலுக்காக இரவல் தருவதையடுத்து, அதற்குக் கீழேயுள்ள நல்ல காரியங்களான சலாமுக்கு பதில் சொல்வது, தும்மியவருக்காகப் பிரார்த்திப்பது, பாதையில் கிடக்கும் தொல்லை தரும் பொருளை அகற்றுவது முதலியவற்றை நாம் எண்ணிப் பார்த்தோம். ஆனால், பதினைந்து நற்செயல்களைக் கூட நம்மால் எட்ட முடியவில்லை.

ஹதீஸ் 2632. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

எங்களில் சிலருக்கு உபரி நிலங்கள் சில இருந்தன. அவர்கள், நாங்கள் அவற்றை அவற்றின் விளைச்சலில் மூன்றிலொரு பங்குக்கோ, கால் பங்குக்கோ, அரைப் பங்குக்கோ குத்தகைக்க விடுவோம்' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், விளைச்சல் நிலம் வைத்திருப்பவர் அதில் தானே பயிரிடட்டும் அல்லது தன் சகோதரருக்கு (மனீஹாவாகக்) கொடுத்து விடட்டும் அப்படிக் கொடுக்க மறுத்தால் அவர் தம் நிலத்தைத் தம்மிடமே வைத்துக் கொள்ளட்டும்' என்றார்கள்.

ஹதீஸ் 2633. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

அல்லாஹ்வின் தூதரிடம் கிராமவாசி ஒருவர் வந்து ஹிஜ்ரத்தைப் பற்றிக் கேட்டதற்கு நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் உனக்குக் கருணை புரியட்டும். ஹிஜ்ரத் செய்வது ஒரு கடினமான காரியம். உன்னிடம் ஒட்டகம் இருக்கிறதா? என்று கேட்டார்கள். அதற்கு அவர், ஆம்' என்று கூறினார். அதற்கு நீ ஸகாத் கொடுக்கிறாயா? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், ஆம், (கொடுக்கிறேன்)' என்று பதிலளித்தார். (அதன் பாலைப் பிறர் உபயோகித்துக் கொள்ள) அதை இரவலாக (மனீஹாவாக) கொடுக்கிறாயா? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், ஆம், (கொடுக்கிறேன்)' என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், அது நீர் அருந்தும் முறைவரும் நாளில் அதனிடம் பால் கறக்கிறாயா? என்று கேட்க அவர், ஆம்' என்று பதிலளித்தார். அப்படியாயின், கடல்களுக்கு அப்பால் சென்று (கூட) நீ வேலை செய். ஏனெனில், அல்லாஹ் உன் நற்செயல் (களின் பிரதிபலன்) களிலிருந்து எதையும் குறைக்க மாட்டான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2634. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பயிர் (களின் கதிர்) கள் அசைந்தாடிக் கொண்டிருந்த ஒரு நிலத்திற்குச் சென்றார்கள். இது யாருடைய நிலம்? என்று கேட்டார்கள். அங்கிருந்த மக்கள், இன்னார் இதைக் குத்தகைக்குக் கொடுத்திருக்கிறார்' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், இந்த நிலத்திற்காகக் குறிப்பிட்ட ஒரு வாடகை அவர் பெற்றுக் கொள்வதை விட குத்தகைக்கு எடுத்தவருக்கு (அவர் அதை இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளும் படி) மனீஹாவாக (இரவலாக) கொடுத்து விட்டிருந்தால் அவருக்கு (நில உரிமையாளருக்கு) அது நன்மையானதாக இருந்திருக்கும்' என்று கூறினார்கள்.

## மக்களின் வழக்கிலுள்ளபடி னக்கு இந்த அடிமைப் பெண்ணைப் பணிப்பெண்ணாகக் கொடுத்து விடுகிறேன் என்று ஒருவர் கூறினால் அது செல்லும்.

"இப்படிச் சொல்வது இரவலாகக் கொடுப்பதையே குறிக்கும் (அன்பளிப்பு ஆகாது)' என்று சிலர் கூறுகின்றனர். மேலும், ஒருவர், நான் இந்த ஆடையை உனக்கு அணிவிக்கிறேன்' என்று கூறினால் அது (வும்) அன்பளிப்பாகும்.

ஹதீஸ் 2635. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இப்ராஹீம் (அலை) அவர்கள் (தம் மனைவி) ஸாரா அவர்களுடன் ஹிஜ்ரத் செய்தார்கள். எம்ப்து நாட்டு மன்னரின் ஆட்கள், ஸாராவுக்கு ஹாஜரை (பணிப் பெண்ணாகக்) கொடுத்தார்கள். ஸாரா திரும்பி வந்து, அல்லாஹ், நிராகரிப்பாளனை இழிவுபடுத்தி (எனக்கு) ஓர் அடிமைப் பெண்ணைப் பணிப் பெண்ணாகத் தந்தை நீங்கள் அறிவீர்களா? என்று இப்ராஹீம் (அலை) அவர்களிடம் கேட்டார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

“எகிப்து நாட்டு மன்னன், ஸாராவுக்கு ஹாஜரைப் பணிப் பெண்ணாக அன்பளிப்புச் செய்தான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில் உள்ளது.

ஒருவர் (மற்றொரு மனிதரை) குதிரையின் மீது ஏற்றி (அனுப்பி)விட்டால் அது உம்ராவையும் சதகாவையும் போன்றதாகும்.

“அதைத் திரும்பப் பெற அவனுக்கு உரிமையுண்டு‘ என்று சிலர் கூறினர்.

ஹதீஸ் 2636. உமர்(ரலி) அறிவித்தார்.

நான் இறைவழியில் (போரிடுவதற்காக எனக்குச் சொந்தமான) ஒரு குதிரையின் மீது ஒருவரை ஏற்றி அனுப்பினேன். அந்த குதிரை (சந்தையில்) விற்கப்படுவதைக் கண்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (“அதை வாங்கலாமா? என்று) கேட்டேன். அவர்கள்,அதை வாங்காதீர்கள். உங்கள் தர்மத்தைத் திரும்பப் பெறாதீர்கள்‘ என்று கூறினார்கள்.

# அத்தியாயம் 52 சாட்சியங்கள்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## வாதி தான் ஆதாரத்தை சமர்ப்பிக்க வேண்டும்.

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! ஒரு குறிப்பிட்ட காலத் தவணைக்கு நீங்கள் உங்களுக்குள் கடன் கொடுத்து வாங்கிக் கொள்வீர்களாயின் அதை எழுதி வைத்துக் கொள்ளுங்கள். உங்களிடையே எழுத்தர் ஒருவர் அதை நீதியுடன் எழுதட்டும். எழுதத் தெரிந்தவர், அல்லாஹ் அவருக்குக் கற்றுத் தந்ததைப் போன்று (பிறருக்காக அவரும்) எழுதித் தரட்டும். அவர் எழுதித் தர மறுக்க வேண்டாம். எவரின் மீது (கடன் சுமையைத் தீர்க்கும்) பொறுப்புள்ளதோ அவர் (எழுதுவதற்காக) வாசகம் சொல்லித் தரட்டும். (அந்த நேரத்தில்) தன் அதிபதிக்கு அவர் அஞ்சட்டும். மேலும், கடன் விஷயமாகத் தீர்மானிக்கப்பட்டதிலிருந்து எதையும் அவர் மறைக்க வேண்டாம். (உள்ளதை உள்ளபடி சொல்லட்டும்.) கடனைத் திருப்பிச் செலுத்தும் பொறுப்புடையவர் பேதையாகவோ (மூளை வளர்ச்சி குன்றியவராகவோ) பலவீனராகவோ, வாசகம் சொல்ல இயலாதவராகவோ இருந்தால் அவரின் காப்பாளர் நீதியுடன் (வாசகம்) சொல்லட்டும். மேலும், உங்களில் இரண்டு ஆண்களை சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள். இரண்டு ஆண்கள் இல்லையென்றால் ஓர் ஆணையும் இரண்டு பெண்களையும் சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள் அவ்விருவரில் ஒருத்தி மறந்துவிட்டால் மற்றொருத்தி அவளுக்கு நினைவூட்டுவதற்காக, இவர்கள் நீங்கள் ஏற்றுக் கொள்ளக் கூடிய சாட்சிகளாய் இருக்க வேண்டும். சாட்சிகள் (சாட்சியமளிப்பதற்காக) அழைக்கப்படும்போது (வர) மறுக்கக் கூடாது. (கடன் தொகை) சிறிதாயினும் பெரிதாயினும் அதை எழுதி வைத்துக் கொள்வதில் கவனக் குறைவாக இருந்து விடாதீர்கள். இதுவே, அல்லாஹ்விடம் நீதிமிக்க வழிமுறையாகும். மேலும், சாட்சியத்தை நிலைநாட்டக் கூடியதும் நீங்கள் சந்தேகம் கொள்ளாமலிருக்கப் பொருத்தமானதும் ஆகும். ஆனால், அது உங்களுக்கிடையே நீங்கள் (வழக்கமாக) செய்து கொள்கிற உடனடி கொடுக்கல் வாங்கலாக இருக்குமாயின், அதை எழுதி வைத்துக் கொள்ளாமல் இருப்பதில் உங்களின் மீது குற்றமேதும் இல்லை. எனினும், வியாபார ஒப்பந்தங்கள் செய்தால் அவற்றிற்கு சாட்சியம் வைத்துக் கொள்ளுங்கள். எழுத்தரும் சாட்சிகளும் துன்புறுத்தப்படக்கூடாது. அவ்வாறு நீங்கள் துன்புறுத்தினால் அது நீங்கள் செய்யும் பாவமானும். அல்லாஹ்வுக்கு அஞ்சு‘கள். அவன் உங்களுக்குச் சரியான வழிமுறைகளைக் கற்றுத் தருகிறான். மேலும், அல்லாஹ் அனைத்து விஷயங்களையும் நன்கறிந்தவன் ஆவான். (திருக்குர்ஆன் 02:282)

மேலும், அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் நீதியைக் கடைப்பிடிப்பவர்களாகவும் அல்லாஹ்வுக்காக சாட்சி சொல்பவர்களாகவும் திகழுங்கள். (நீங்கள் செலுத்துகிற நீதியும் சொல்லும் சாட்சியமும்) உங்களுக்கோ உங்கள் பெற்றோர் மற்றும் நெருங்கிய உறவினர்களுக்கோ எதிராக இருப்பினும் சரியே. (நீங்கள் யாருக்காக சாட்சி சொல்கிறீர்களோ) அவர் வசதியுடையவராகவோ ஏழையாகவோ இருப்பினும் சரியே அல்லாஹ் அவர்களை (உங்களை விட) அதிகமாகப் பாதுகாப்பவனாக இருக்கிறான். எனவே, நீதி செலுத்தத் தவறி இச்சையைப் பின்பற்றி விடாதீர்கள். நீங்கள் நீதிக்குப் புறம்பாக சாட்சி சொன்னாலோ (நீதியைக் காப்பாற்ற மனமின்றி)

சாட்சியளிக்காமல் விலம்னாலோ நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்துள்ளான். (திருக்குர்ஆன் 04:135)

## ஒருவரை நல்லவர் என்று அறிவிப்பதற்காக (அவரைப் பற்றி) நான் நல்லதையே அறிந்துள்ளேன் என்று ஒருவர் சொன்னால்...

...அது (சாட்சியாக) ஏற்கப்படும் என்று கூறியவர்கள், ஆயிஷா(ரலி) அவர்களின் மீதான அவதூறு குறித்த ஹதீஸை ஆதாரமாகக் கொண்டு வருகிறார்கள். அதில், நபி(ஸல்) அவர்கள் உஸாமா(ரலி) அவர்களிடம்,ஆயிஷா மீது கூறப்படும் இந்தக் குற்றச் சாட்டின் காரணத்தால்,அவரை (விவாகரத்து செய்து) பிரிந்து விடலாமா என்று ஆலோசனை கேட்டபோது,அவர்கள் தங்கள் மனைவி அவர்களைப் பற்றி நாங்கள் நல்லதைத் தவிர வேறெதையும் அறிய மாட்டோம்‘ என்று உஸாமா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2637. இப்னு ஷிஹாப்(ரஹ்) அறிவித்தார்.

உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்), இப்னுல் முஸய்யப்(ரஹ்), அல்கமா இப்னு வக்காஸ்(ரஹ்) மற்றும் உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) ஆகியோர் எனக்கு (மக்கள் சிலர்) ஆயிஷா(ரலி) அவர்களை (அவதூறு பேசியது) பற்றிய ஹதீஸை அறிவித்தார்கள். ஒருவர் அறிவித்த ஹதீஸ் மற்றவர் அறிவித்த ஹதீஸை உறுதிப்படுத்துவதாக இருந்தது.அபாண்டப் பழி சுமத்தியவர்கள் தாங்கள் பேசிய அவதூறுகளையெல்லாம் சொன்னபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் மனைவியை (ஆயிஷாவை)ப் பிரிந்து விடுவது குறித்து ஆலோசனை கலப்பதற்காக அலீ(ரலி) அவர்களையும், உஸாமா(ரலி) அவர்களையும் அழைத்தார்கள். அப்போதுவஹீ (தற்காலிகமாக நின்று போய், வரத்) தாமதமாம்க் கொண்டிருந்தது. உஸாமா(ரலி),அவர்கள் (ஆயிஷா), தங்கள் மனைவி. (அவர்களைப் பற்றி) நல்லதைத் தவிர வேறெதையும் நாங்கள் அறிய மாட்டோம்‘ என்று கூறினார்கள். மேலும், (ஆயிஷா(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட) பரீரா(ரலி),அவர்கள் (ஆயிஷா), தம் வீட்டாரின் குழைத்தமாவை (அப்படியே)விட்டுவிட்டு உறங்கி விடுகிற இளவயதுச் சிறுமி என்பதையும் (அப்படி அவர்கள் தூங்கும் போது) வீட்டு ஆடு வந்து அதைத் தின்றுவிடும் என்பதையும் தவிர அவர்களின் மீது குறைசொல்லக் தக்க விஷயம் எதையும் நான் பார்க்கவில்லை‘ என்று கூறினார்கள். (அதன்பின்னர்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,என் வீட்டாரின் விஷயத்தில் எனக்கு (மன) வேதனை தந்துவிட்ட ஒரு மனிதனை தன் சார்பாக தண்டிக்கக் கூடியவர் யார்? அல்லாஹ்வின் மீதாணையாக! என் மனைவியிடமிருந்து நன்மையைத் தவிர வேறெதையும் நான் அறியவில்லை. மேலும், எந்த மனிதரைக் குறித்து நன்மையைத் தவிர வேறெதையும் நான் அறிய மாட்டேனோ அவரைப் போய் (ஆயிஷாவுடன் இணைத்து) அவர்கள் (அவதூறு) கூறியுள்ளனர்‘ என்றார்கள்.

## மறைந்திருந்து கேட்டவரின் சாட்சியம்.

இதை அம்ர் இப்னு ஹுரைஸ்(ரலி) அனுமதித்துள்ளார்கள்.

மேலும், அவர்கள்,தீயவனான பொய்யனிடம் இப்படித்தான் செய்ய வேண்டும்‘ என்று கூறினார்கள்.ஷஅபீ (ரஹ்), இப்னு ஸீரீன்(ரஹ்), அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்), கத்தாதா(ரஹ்) ஆகியோர்,(கண்ணால் பார்க்காமல் காதால்) கேட்டதை (மட்டும்) வைத்து சாட்சி சொல்லாம். (அதுவும் ஏற்கப்படக் கூடியதே. சாட்சி சொல்பவர் வாக்குமூலம் தந்தவரை அவர் வாக்கு மூலம் தரும்போது கண்ணால் பார்த்திருக்கவேண்டிய அவசியமிலலை)‘ என்று கூறினர்.

“ஒருவரைப் பார்க்காமலேயே அவரின் வாக்குமூலத்தை மட்டும் கேட்டுவிட்டு, நீதிபதியிடம் அதைப் பற்றி சாட்சியமளிக்க வருபவர்,என்னை (சாட்சியாக அழைத்து வந்தவர்கள்) எதையும் பார்க்கச்

செய்யவில்லை. நான் இன்னின்ன விதமாகச் செவியுற்றேன் என்று கூற வேண்டும். (அப்படிக் கூறினால் அது செல்லும்)' என்று ஹஸன் பஸரீ(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 2638. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களும் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களும் இப்னு ஸய்யாத் இருந்த பேரீச்சந் தோட்டத்தை நாடிச் சென்றார்கள். (தோட்டத்தில்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நுழைந்தவுடன் இப்னு ஸய்யாத் தம்மைப் பார்ப்பதற்கு முன்பு, அவனிடமிருந்து (அவனுடைய சொற்களைக்) கேட்க உபாயம் செய்தவர்களாய், பேரீச்ச மரங்களுக்கிடையே தம்மை மறைத்து நடக்கலானார்கள். இப்னு ஸய்யாத் தன் படுக்கையில் ஒரு பூம்பட்டுப் போர்வைக்குள் (குறிகாரர்கள் முனு முனுப்பதைப் போல்) எதையோ முனு முனுத்தபடி படுத்துக் கொண்டிருந்தான். நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களுக்கிடையே தம்மை மறைத்துக் கொண்டு வருவதை இப்னு ஸய்யாதின் தாய் பார்த்துவிட்டாள். அவள் தன் மகனை நோக்கி, ஸாஃபியே! இதோ முஹம்மத் (வந்து கொண்டிருக்கிறார்)' என்று கூறிவிட்டாள். உடனே, இப்னு ஸய்யாத் விழிப்படைந்து முனுமுனுப்பதை நிறுத்திவிட்டான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அவள் (இப்னு ஸய்யாதின் தாய்) அவனை (உஷார்படுத்தாமல்)விட்டுவிட்டிருந்தால் (தன் உண்மை நிலையை அவனே) அம்பலப்படுத்தி விட்டிருப்பான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2639. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ரிஃபாஆ அல் குரழீ(ரலி) அவர்களின் மனைவி நபி(ஸல்) அவர்களிடம் வந்து, நான் ரிஃபாஆவிடம் (அவரின் மண பந்தத்தில்) இருந்தேன். பிறகு, அவர் என்னை மணவிலக்கு செய்து மணவிலக்கை முடிவானதாக்கிவிட்டார். எனவே, நான் அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர்(ரலி) அவர்களை மணந்தேன். அவரிடம் இருப்பதெல்லாம் (உறுதியின்றித் தொங்கும்) முந்தானைத் தலைப்பைத் போன்றது தான் (அவர் ஆண்மை குறைந்தவர்)' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், நீ ரிஃபாஆவிடம் திரும்பிச் செல்ல விரும்புகிறாயா? (தற்போதையை உன் கணவரான) அவரின் இனிமையை நீ சுவைக்காத வரையிலும் உன்னுடைய இனிமையை அவர் சுவைக்காத வரையிலும் உன் முன்னாள் கணவரை நீ மணந்து கொள்வதென்பது முடியாது' என்று கூறினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் அமர்ந்து கொண்டிருந்தார்கள். காலித் இப்னு ஸயீத் இப்னு ஆஸ்(ரலி), தமக்கு உள்ளே நுழைய அனுமதியளிக்கப்படும் என்று எதிர்பார்த்த வண்ணம் வாசலில் நின்றிருந்தார்கள். அவர்கள், அபூ பக்ரே! இந்தப் பெண் நபி(ஸல்) அவர்களிடம் எதை பம்ரங்கமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறாள் என்பதைக் கேட்க மாட்டீர்களா? என்று (வாசலில் நின்றபடியே) சொன்னார்கள்.

## ஒருவரோ, பலரோ ஒரு விஷயத்திற்கு சாட்சியம் அளித்திருக்க, மற்ற சிலர் வந்து, இதை நாங்கள் அறிய மாட்டோம்' என்று கூறினால் (முதலில்) சொன்னவர்களின் சாட்சியத்தை வைத்தே தீர்ப்பளிக்கப்படும்.

“இது (எப்படியென்றால்) பிலால்(ரலி), நபி(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியின் போது) கஅபாவினுள் தொழுதார்கள் என்று செய்தியறிவிக்க, ஃபிள்லு இப்னு அப்பாஸ்(ரலி), நபி(ஸல்) அவர்கள் கஅபாவினுள் தொழவில்லை என்று கூறியபோது, பிலால்(ரலி) அவர்களின் சாட்சியத்தையே மக்கள் ஏற்றதைப் போன்றதாகும்' என்று ஹுமைதீ(ரஹ்) கூறினார்.

இவ்வாறே, இன்னாருக்கு இன்னாரிடமிருந்து ஆயிரம் திர்ஹம்கள் (கடன் தொகை) வரவேண்டியுள்ளது' என்று இருவர் சாட்சியமளித்து, வேறு ஒருவர், இரண்டாயிரம் திர்ஹம்கள் வர

வேண்டியுள்ளது' என்று சாட்சியம் அளித்தால் (இரண்டு தொகைகளில்) அதிகமான தொகை எதுவோ அதைச் செலுத்தும்படியே தீர்ப்பு வழங்கப்படும்.

ஹதீஸ் 2640. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

நான் அபூ இஹாப் இப்னு அஸீஸ் அவர்களின் மகளை மணந்துகொண்டேன். ஒரு பெண் என்னிடம் வந்து,உனக்கும் நீ மணந்த பெண்ணுக்கும் நான் பாலூட்டியிருக்கிறேன்' என்று கூறினாள். நான்,நீ எனக்குப் பாலூட்டியதை நான் அறியமாட்டேன் (நான் மணந்தபோது) நீ எனக்கு (இதை) அறிவிக்கவில்லையே' என்று கூறிவிட்டு, அபூ இஹாபின் குடும்பத்தாரிடம் (இது உண்மை தானா என்று) கேட்டனுப்பினேன். அவர்கள்,எங்கள் பெண்ணுக்கு அவள் பாலூட்டியதாக நாங்கள் அறியவில்லை' என்று கூறினர். உடனே (மக்காவில் இருந்த) நான், மதீனாவிலிருந்த நபி(ஸல்) அவர்களிடம் (மார்க்கத் தீர்ப்புப் பெறுவதற்காக) பயணித்துச் சென்று அவர்களிடம் (இது குறித்துக்) கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,(நீயும் உன் மனைவியும் ஒரே செவிலித் தாயிடம் பால்குடித்தாகச்) சொல்லப்பட்டுவிட்ட பின்னால், (நீங்கள் இருவரும் இணைந்து வாழ்வது) எப்படி (செல்லும்)? என்று கூறினார்கள். எனவே நான் அவளைப் பிரிந்துவிட்டேன். அவள் வேறொரு கணவனை மணந்தாள்.

## நேர்மையான சாட்சிகள்

அல்லாஹ் கூறினான்:

மேலும், உங்களில் நேர்மையுள்ள இருவரை சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 65:02)

இந்த சாட்சிகள் நீங்கள் ஏற்றுக் கொள்ளக் கூடியவர்களாய் இருக்க வேண்டும். (திருக்குர்ஆன் 02: 282)

ஹதீஸ் 2641. உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் மக்கள் வஹீயின் (வேத வெளிப்பாடு அல்லது இறையறிவிப்பின்) வாயிலாக (ரகசியமாகச் செய்த குற்றங்கள் அம்பலமாம்) தண்டிக்கப்பட்டு வந்தார்கள். இப்போது நபி(ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின்) வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) வருவது நின்று போய்விட்டது. இப்போது நாம் உங்களைப் பிடி(த்து தண்டி)ப்பதெல்லாம் உங்கள் செயல்களில் எமக்கு வெளிப்படையாகத் தெரிபவற்றைத் கொண்டே. எனவே, தம்மிடம் நன்மையை வெளிப்படுத்துகிறவரை நம்பிக்கைக்குரியவராக்கி கௌரவித்துக் கொள்வோம். அவரின் இரகசியம் எதையும் கணக்கிலெடுக்க மாட்டோம். அவரின் அந்தரங்கம் குறித்து இறைவனே கணக்குக் கேட்பான். நம்மிடம் தீமையை வெளிப்படுத்துகிறவரைக் குறித்து நாம் திருப்தியுடனிருக்க மாட்டோம் தம் அந்தரங்கம் அழகானது என்று அவர் வாதிட்டாலும் சரியே.

## ஒருவர் நேர்மையானவர் என்று சாட்சி சொல்ல எத்தனை பேர் வேண்டும்?

ஹதீஸ் 2642. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இருந்த இடத்தின் வழியாக ஜனாஸா (பிரேதம்) ஒன்று கொண்டு செல்லப்பட்டது. மக்கள் அதைக் குறித்து நல்லவிதமாகப் (புகழ்ந்து) பேசினார்கள். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்,உறுதியாகிவிட்டது' என்று கூறினார்கள். பிறகு, மற்றொரு ஜனாஸா கொண்டு செல்லப்பட்டது. மக்கள் அது குறித்து (இகழ்ந்து) கெட்டவிதமாகப் பேசினார்கள். நபி(ஸல்) அவர்கள்,உறுதியாகிவிட்டது' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! அதற்கும்உறுதியாகிவிட்டது என்று கூறினீர்கள்

இதற்கும்உறுதியாகிவிட்டது என்று கூறினீர்களே. (இரண்டிற்குமே இவ்வாறு கூறக் காரணமென்ன)? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,இது சமுதாயத்தின் சாட்சியமாகும். இறைநம்பிக்கையுடையவர்கள் பூமியில் அல்லாஹ்வின் சாட்சிகள் ஆவர்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2643. அபுல் அஸ்வத் (ரஹ்) அறிவித்தார்.

மதீனா நகரை (கொள்ளை) நோய் பீடித்திருக்கும் நிலையில் நான் அங்கு சென்றேன். மக்கள் பரவலாகவும் விரைவாகவும் இறந்து கொண்டிருந்தார்கள். நான் உமர் (ரலி) அவர்களிடம் சென்று அமர்ந்தேன். அப்போது ஒரு ஜனாஸா சென்றது. அதைக் குறித்து நல்லவிதமாகப் (புகழ்ந்து) பேசப்பட்டது. உடனே, உமர் (ரலி),உறுதியாகிவிட்டது' என்று கூறினார்கள். பிறகு மற்றொரு ஜனாஸா அவர்களைக் கடந்து சென்றது. அதைக் குறித்தும் நல்ல விதமாகப் பேசப்பட்டது. அதற்கும் உமர் (ரலி),உறுதியாகிவிட்டது' என்று கூறினார்கள். பிறகு, மூன்றாவது ஜனாஸா அவர்களைக் கடந்து சென்றது. அதைக் குறித்து (இகழ்ந்து) கெட்ட விதமாகப் பேசப்பட்டது. உமர் (ரலி),உறுதியாகிவிட்டது' என்று கூறினார்கள். நான்,விசுவாசிகளின் தலைவரே! என்று உறுதியாகிவிட்டது? என்று கேட்டேன். அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்றே நானும் சொன்னேன். நபி (ஸல்) அவர்கள்,எந்த முஸ்லிமுக்கு நான்கு பேர்,அவர் நல்லவர் என்று சாட்சி சொல்கிறார்களோ அவரை அல்லாஹ் சொர்க்கத்தில் புகுத்துவான்' என்று கூறினார்கள். நாங்கள்,மூன்று பேர் சாட்சி சொன்னாலுமா? என்று கேட்டோம். நபி (ஸல்) அவர்கள்,ஆம் மூன்று பேர் சாட்சி சொன்னாலும் சரி (அவரை அல்லாஹ் சொர்க்கத்தில் புகுத்துவான்)' என்று கூறினார்கள். நாங்கள்,இரண்டு பேர் சாட்சி சொன்னாலுமா? என்று கேட்டோம். அவர்கள்,ஆம் இரண்டு பேர் சாட்சி சொன்னாலும் சரியே' என்று கூறினார்கள். பிறகு, நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் ஒருவரைப் பற்றி ("ஒருவர் சாட்சி சொன்னாலுமா? என்று) கேட்கவில்லை.

## இரத்த உறவு, பால்குடி உறவு, வெகு நாள்களுக்கு முன் நடந்த மரணம் ஆகியவற்றை நிரூபிக்க சாட்சியம் அளித்தல்.

நபி (ஸல்) அவர்கள்,எனக்கும் அபூ ஸலமாவுக்கும் ஸுவைபா (ரலி) பாலூட்டினார்கள்' என்று கூறியதும் (செவிலித் தாயிடம்) பால் குடித்ததை சாட்சிகள் வாயிலாக உறுதிப்படுத்திக் கொள்வதும்.

ஹதீஸ் 2644. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

என் வீட்டில் நுழைவதற்குஅஃப்லஹ்' (ரலி) அனுமதி கேட்டார்கள். நான் அவர்களுக்க அனுமதி தரவில்லை. அவர்கள்,நன் உன் தந்தையின் சகோதரராயிருக்க, நீ என்னிடமே திரையிட்டு (மறைத்து)க் கொள்கிறாயா? என்று கேட்டார்கள். நான்,அதெப்படி (நீங்கள் என் தந்தையின் சகோதரராக முடியும்)? என்று கேட்டேன். அதற்கவர்,என் சகோதரரின் மனைவி என் சகோதரரின் (வாயிலாக அவரிடம் ஊறிய) பாலை உனக்குப் புகட்டியுள்ளார்' என்று கூறினார். நான் அல்லாஹ்வின் தூதரிடம் அதைப் பற்றிக் கேட்டேன். அவர்கள்,அஃப்லஹ் உண்மையே சொன்னார். (நீ திரையின்றி இருக்கும் நிலையில் உன் முன்னால் வர) அவருக்கு அனுமதி கொடு' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2645. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள், ஹம்ஸா (ரலி) அவர்களின் மகளின் விஷயத்தில்,அவள் எனக்கு ஹலாலாக (மணந்து கொள்ள அனுமதிக்கப்பட்டவளாக) ஆக மாட்டாள். (ஏனெனில்) இரத்த பந்தத்தின் காரணத்தால் எவையெல்லாம் விலக்கப்பட்டதாகுமோ அவையெல்லாம் (செவிலித் தாயிடம்)

பால்குடிப்பதாலும் விலக்கப்பட்டதாகும். அவள் என் பால்குடிச் சகோதரரின் மகள் ஆவாள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2646. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

(ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் என்னிடம் இருந்தார்கள். நான் ஹஃப்ஸா (ரலி) அவர்களின் வீட்டில் (யாரோ) ஒருவர் உள்ளே செல்ல அனுமதி கேட்கும் குரலைச் செவியுற்றேன். நான் நபி (ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! அவர் (ஹஃப்ஸாவின் வீட்டுக்குள் செல்ல அனுமதி கேட்பவர்) ஹஃப்ஸாவின் பால்குடித் தந்தையின் சகோதரர் என்று நான் நினைக்கிறேன்‘ என்று கூறினேன். நபி (ஸல்) அவர்களும், அவர் ஹஃப்ஸாவின் பால்குடித் தந்தையின் சகோதரர் என்றே நானும் நினைக்கிறேன்‘ என்று கூறினார்கள். நான், இன்னார் - என் பால்குடித் தந்தையின் சகோதரர் உயிருடன் இருந்தால் நான் திரையின்றி இருக்கும்போது என்னிடம் அவர் வரலாமா? என்று கேட்டேன். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ஆம். (வரலாம்.) இரத்த உறவின் காரணத்தால் ஹராமாகிற அனைத்துமே பால்குடி உறவின் காரணத்தாலும் ஹராமாம் விடும்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2647. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

என்னிடம் ஒருவர் அமர்ந்திருக்க, நபி (ஸல்) அவர்கள் என் வீட்டிற்கு வந்தார்கள். ஆயிஷாவே! இவர் யார்? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான், என் பால் குடிச் சகோதரர்‘ என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், ஆயிஷாவே! உங்கள் சகோதரர்கள் யார் என்று ஆராய்ந்து பாருங்கள். ஏனெனில், பால்குடிப்பதென்பதே பசியினால் தான்‘ என்று கூறினார்கள்.

## (விபசாரம் புரிந்ததாக ஒருவரின் மீது) அவதூறு கூறியவன், திருடன் மற்றும் விபசாரியின் சாட்சியம்.

அல்லாஹ் கூறினான்:

கற்புள்ள பெண்களின் மீது அவதூறு சொல்லிவிட்டுப் பின்னர் நான்கு சாட்சிகளைக் கொண்டு வராதவர்களுக்கு எண்பது சாட்டையடிகளைக் கொடுங்கள். இனி அவர்கள் கூறும் சாட்சியத்தை என்றைக்கும் ஏற்றுக் கொள்ளாதீர்கள். மேலும், அவர்களே தீயவர்கள். இந்தக் குற்றத்திற்குப் பிறகு பாவ மன்னிப்புக் கோரி தங்களைச் சீர்திருத்தியவர்களைத் தவிர. ஏனெனில், அல்லாஹ் அதிகம் மன்னிப்பவனாகவும் கருணை புரிபவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 24: 45)

முகீரா இப்னு ஷுஅபா (ரலி) விபசாரம் புரிந்ததாக, அவரின் மீது அவதூறு கூறியதற்காக அபூ பக்ரா (ரலி), ஷிப்ல் இப்னு மஅபத் (ரலி), நாஃபிஉ பின் ஹாரிஸ் (ரலி) ஆகியோருக்கு உமர் (ரலி) கசையடி கொடுத்தார்கள். பிறகு, அவர்களிடம் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோரும்படி கேட்டார்கள். மேலும், பாவமன்னிப்புக் கோரி திருந்திவிடுகிறவரின் சாட்சியத்தை நான் ஏற்றுக் கொள்வேன்‘ என்று கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உத்பா (ரஹ்), உமர் இப்னு அப்தில் அஸீஸ் (ரஹ்), ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்), தாவூஸ் இப்னு கைஸான் அல் யமானீ (ரஹ்), முஜாஹித் (ரஹ்), ஷஅபீ (ரஹ்), இக்ரிமா (ரஹ்), ஸுஹ்ரீ (ரஹ்), முஹாரிப் இப்னு திஸார் (ரஹ்), ஷுரைஹ் (ரஹ்), முஆவியா இப்னு குர்ரா (ரஹ்) ஆகியோர், ஒருவர் விபசாரம் செய்ததாக அவதூறு கற்பித்து, அதற்காகக் கசையடி தண்டனை பெற்றவர் பாவமன்னிப்புக் கோரி திருந்திவிட்டால் அவரின் சாட்சியத்தை ஏற்றுக் கொள்வது செல்லும்‘ என்று கூறியுள்ளனர்.

அபுஸ் ஸினாத்(ரஹ்),மதீனா நகரில் எங்கள் நடைமுறை எப்படி இருந்ததென்றால், அவதூறு கற்பித்தவர் தன் சொல்லைத் திரும்பப் பெற்று, பாவ மன்னிப்புக் கோரிவிட்டால் அவரின் சாட்சியம் ஏற்றுக் கொள்ளப்படும்‘ என்று கூறினார்கள்.

ஷஅபீ (ரஹ்), கதாதா(ரஹ்) ஆகிய இருவரும்,அவதூறு கற்பித்தவன், தான் பொய் சொல்லிவிட்டதாகக் கூறிவிட்டால் கசையடி கொடுக்கப்படுவான் அவனுடைய சாட்சியம் ஏற்றுக் கொள்ளப்படும்‘ என்று கூறுகின்றனர்.

“ஓர் அடிமை (அவதூறு கற்பித்த குற்றத்திற்காக (கசையடி கொடுக்கப்பட்டு, பின்னர் விடுதலை செய்யப்பட்டால் அவனுடைய சாட்சியம் ஏற்றுக்கொள்ளப்படும். அவனிடம் தீர்ப்புக் கேட்கப்பட்டு அவன் தீர்ப்பு வழங்கினால் அவனுடைய தீர்ப்புகள் செல்லும்‘ என்று சுஃப்யான் அஸ் ஸவ்ரீ(ரஹ்) கூறினார்.

சிலர்அவதூறு கூறியவனின் சாட்சியம் அவன் பாவமன்னிப்புக் கோரிவிட்டாலும் கூட ஒப்புக் கொள்ளப்படமாட்டாது‘ என்று கூறிவிட்டு, பிறகு,திருமணம் இரண்டு சாட்சிகள் இல்லாமல் செல்லுபடியாகாது. (அவதூறு பேசி) கசையடி கொடுக்கப்பட்டவர்கள் இருவரின் சாட்சியைக் கொண்டு ஒருவன் மணந்தால் அந்தத் திருமணம் செல்லுபடியாகும். அடிமைகள் இருவரின் சாட்சியத்தில் மணந்தால் அந்தத் திருமணம் செல்லாது‘ என்று கூறினார்கள்.

“கசையடி கொடுக்கப்பட்டவன், அடிமை மற்றும் அடிமைப் பெண்கள் ஆகியோர் ரமளான் மாதப் பிறையைப் பார்த்ததாக சாட்சியம் அறிவித்தால் அது செல்லும்‘ என்றும் அவர்கள் கூறியுள்ளனர்.

அவதூறு கற்பித்தவன் பாவ மன்னிப்புக் கோரிவிட்டதை எப்படி அறிந்து கொள்வது? 6 நபி(ஸல்) அவர்களோ விபசாரியை ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தினார்கள். நபி(ஸல்) அவர்கள்,கஅப் இப்னு மாலிக்(ரலி) மற்றும் அவர்களின் இரண்டு தோழர்களுடன் பேசக் கூடாது என்று (மக்களைத்) தடை செய்தார்கள் ஐம்பது நாள்கள் கழியும் வரை இவ்வாறு தடை செய்து வைத்திருந்தார்கள்.

ஹதீஸ் 2648. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

மக்காவை வெற்றி கொண்ட போரின்போது (மக்ஸூமி குலத்தவரான ஃபாத்திமா பின்த்து அஸ்வத் என்னும் பெயருடைய) திருட்டுக் குற்றம் புரிந்த ஒருவர் இறைத்தூதர் அவர்களிடம் கொண்டு வரப்பட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரின் கையைத் துண்டிக்கும்படி உத்தரவிட்டார்கள். அதன்படி அவரின் கை துண்டிக்கப்பட்டது.

(அவரைப் பற்றி)அவள் அழகிய முறையில் தவ்பா செய்திருந்தாள் திருமணமும் செய்தாள். அதன் பிறகு அவள் (எங்களிடம்) வந்து கொண்டிருந்தாள். நான் அவளுடைய தேவையை (அறிந்து) நபி(ஸல்) அவர்களிடம் சொல்வேன்‘ என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2649. ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்.

திருமணமாகாத நிலையில் விபசாரம் செய்தவன் விஷயத்தில், அவனுக்கு நூறு கசையடிகள் கொடுக்கவேண்டும் என்றும் ஓராண்டுக் காலத்திற்கு அவனை நாடு கடத்த வேண்டும் என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

## அநியாயத்திற்கு (ஆதரவாக) சாட்சி சொல்லக்கூடாது.

ஹதீஸ் 2650. நுஃமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்.

என் தாயார் என் தந்தையிடம் அவரின் செல்வத்திலிருந்து எனக்கு சிறிது அன்பளிப்பு வழங்கும்படி கேட்டார்கள். பிறகு, அவருக்கு (இதுவரை கொடுக்காமலிருந்து விட்டோமே என்ற

வருத்தம் மனதில்) தோன்றி எனக்கு அதை அன்பளிப்புச் செய்தார். என் தாயார்,நீ நபி(ஸல்) அவர்களை சாட்சியாக்காத நரை நான் திருப்தி கொள்ள மாட்டேன்' என்று கூறினார்கள். எனவே, என் தந்தை நான் சிறுவனாயிருந்ததால் என் கையைப் பிடித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னை அழைத்துச் சென்று,இவனுடைய தாயாரான (அம்ரா) பின்த்து ரவாஹா இவனுக்கு சிறிது அன்பளிப்புத் தரும்படி என்னிடம் கேட்டாள்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,இவனைத் தவிர வேறு குழந்தை ஏதும் உங்களுக்கு உண்டா? என்று கேட்டார்கள். என் தந்தை,ஆம் (உண்டு)' என்று பதிலளித்தார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,என்னை அக்கிரமத்துக்கு சாட்சியாக்காதீர்கள்' என்று கூறினார்கள் எனக் கருதுகிறேன்.

இன்னோர் அறிவிப்பில்,நான் அக்கிரமத்துக்கு சாட்சியாக இருக்கமாட்டேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என வந்துள்ளது.

ஹதீஸ் 2651. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் (மக்களில்) சிறந்தவர்கள் என் தலைமுறையைச் சேர்ந்தவர்கள் பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள் பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்.

-இந்த ஹதீஸை அறிவிக்கும் அறிவிப்பாளர் இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி),இரண்டு தலைமுறைக்குப் பிறகு மூன்றாவதாக ஒரு தலைமுறையை நபி(ஸல்) அவர்கள் சொன்னார்களா என்று எனக்குத் தெரியாது' என்று கூறுகிறார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நிச்சயமாக, உங்களுக்குப் பின் ஒரு சமுதாயத்தார்(வர) இருக்கிறார்கள். அவர்கள் நம்பிக்கை மோசடி செய்வார்கள். அவர்களிடம் எதையும நம்பி ஒப்படைக்கப்படாது. அவர்கள் சாட்சியாக இருக்கத் தாமாகவே முன் வருவார்கள். ஆனால், சாட்சியம் அளிக்கும்படி அவர்களை யாரும் கேட்கமாட்டார்கள். அவர்கள் நேர்ச்சை செய்வார்கள் ஆனால் அதை நிறைவேற்ற மாட்டார்கள். அவர்களிடையே பருமனாயிருக்கும் (தொந்தி விழும்) நிலை தோன்றும்.

என இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2652. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களில் சிறந்தவர்கள் என் தலைமுறையினர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு சில சமுதாயங்கள் வரும். அவர்களின் சாட்சியம் அவர்களின் சத்தியத்தையும், அவர்களின் சத்தியம் அவர்களின் சாட்சியத்தையும் முந்திக் கொள்ளம்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

இப்ராஹீம் நகயீ(ரஹ்),(சிறுவர்களான) எங்களை அவர்கள் (நபித் தோழர்கள்),அஷ்ஹது பில்லாஹ் அல்லாஹ்வைக் கொண்டு சாட்சியம் அளிக்கிறேன் என்றோ,அல்லாஹ்வுடன் செய்த ஒப்பந்தப்படி என்றோ கூறினால் கடிந்து (கண்டித்து) வந்தார்கள்' என்று கூறினார்.

## பொய்சாட்சியம் அளிப்பது தடை செய்யப்பட்டதாகும்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

மேலும், (ரஹ்மானின்) உண்மையான அடியார்கள் யாரெனில்) அவர்கள் பொய் சாட்சியம் அளிக்க மாட்டார்கள். (திருக்குர்ஆன் 25:72)

சாட்சியத்தை மறைப்பதும் தடை செய்யப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறினான்:

மேலும், சாட்சியத்தை நீங்கள் மறைத்து விடாதீர்கள். சாட்சியத்தை மறைப்பவரின் இதயம் நிச்சயமாக பாவத்திற்குள்ளாம் விடுகிறது. மேலும், அல்லாஹ் நீங்கள் செய்கிற அனைத்தையும் நன்கறிபவனாயிருக்கிறான். (திருக்குர்ஆன் 02:283)

ஹதீஸ் 2653. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் பெரும் பாவங்கள் பற்றிக் கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வுக்கு இணை வைப்பது, பெற்றோருக்குத் துன்பம் கொடுப்பது, தற்கொலை செய்து கொள்வது, பொய்சாட்சி சொல்வது ஆகியன (பெரும் பாவங்களாகும்)' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2654. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை)பெரும் பாவங்களிலேயே மிகப் பெரும் பாவங்களை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று நபி(ஸல்) அவர்கள் (மூன்று முறை) கேட்டார்கள். மக்கள், ஆம், இறைத்தூதர் அவர்களே! (அறிவியுங்கள்)' என்றார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வுக்கு இணைவைப்பதும், பெற்றோருக்குத் துன்பம் தருவதும் (தான் அவை)' என்று கூறிவிட்டு, சாய்ந்து கொண்டிருந்தவர்கள் எழுந்து அமர்ந்து, அறிந்து கொள்ளுங்கள் பொய் சாட்சியமும் (மிகப் பெரும்பாவம்) தான்' என்று கூறினார்கள். நிறுத்திக் கொள்ளக் கூடாதா என்று நாங்கள் சொல்கிற அளவுக்கு அதை (இறுதியாகச் சொன்னதை) திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டேயிருந்தார்கள்.

## கண் பார்வையற்றவரின் சாட்சியம், அவரின் நடவடிக்கை, அவரின் திருமணம், பிறருக்கு அவர் திருமணம் செய்து வைத்தல், விற்றல் - வாங்கல், பாங்கு சொல்வது முதலானவற்றில் அவரை ஏற்றல் ஆகியன பற்றியும், குரல்களைக் கொண்டு மட்டுமே அறியப்பட்டதை சாட்சியாக ஏற்பது பற்றியும்.

காசிம்(ரஹ்), ஹஸன் பஸரீ(ரஹ்), இப்னு சீரீன்(ரஹ்), ஸுஹ்ரீ(ரஹ்), அதாஉ(ரஹ்) ஆகியோர், குருடரின் சாட்சியம் செல்லும்' என்று கூறுகிறார்கள். குருடர் புத்திக் கூர்மையுடையவராக இருந்தால் அவரின் சாட்சியம் செல்லும்' என்று ஷஅபீ (ரஹ்) கூறினார்.

"எத்தனையோ விஷயங்களில் (குருடருக்கு) சலுகை அளிக்கப்படும்' என்று ஹகம்(ரஹ்) கூறினார்.

"இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்? அவர்கள் (கண்பார்வையற்ற முதியவராக இருக்கும் போது) ஒரு சாட்சியம் அளித்தால் அதை நீங்கள் ஏற்க மறுப்பீர்களா? என்று ஸுஹ்ரீ(ரஹ்) கேட்டார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) ஓர் ஆளை அனுப்பி (செய்தியறிந்து) சூரியன் மறைந்து விட்டிருந்தால் நோன்பை நிறைவு செய்து கொள்வார்கள் அதிகாலை நேரம் பற்றிக் கேட்பார்கள்அது உதயமாம்விட்டது என்று கூறப்பட்டால் இரண்டு ரக்அத்துகள் தொழுது கொள்வார்கள்.

"நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் (மைமூனா(ரலி) அவர்களின் வீட்டுக்குள் செல்ல) அனுமதி கேட்டேன். அவர்கள் என் குரலைப் புரிந்து கொண்டு, சுலைமானே! உள்ளே செல். ஏனெனில், நீ கடன் ஏதும் பாக்கி வைக்காத (முகாத்தபான) அடிமையாவாய் என்று கூறினார்கள்' என சுலைமான் இப்னு யஸார்(ரஹ்) கூறினார்.

“முகத்திரை அணிந்த பெண்ணின் சாட்சியம் சொல்லும்‘ என்று சமுரா இப்னு ஜுன்தப்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2655. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒருவர் பள்ளிவாசலில் குர்ஆன் ஓதுவதைக் கேட்டு,அல்லாஹ் அவருக்குக் கருணை புரியட்டும். நான் இன்னின்ன அத்தியாயத்திலிருந்து (சற்று) மறந்து விட்டிருந்த இன்னின்ன வசனத்தை எனக்கு அவர் நினைவூட்டிவிட்டார்‘ என்று கூறினார்கள்.

ஆயிஷா(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில் பின்வரும் வரிகள் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளன:

நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் தஹஜ்ஜுத் தொழுகை தொழுதார்கள். அப்பாத் இப்னு பிஷ்ர்(ரலி) பள்ளிவாசலில் தொழுது கொண்டிருக்க, அவரின் (குர்ஆன் ஓதுகின்ற) குரலைச் செவிமடுத்து (என்னிடம்),ஆயிஷாவே, இது அப்பாதின் குரலா? என்று கேட்டார்கள்.ஆம் (இது அப்பாதின் குரல் தான்)‘ என்று நான் பதிலளித்ததும் நபி(ஸல்) அவர்கள்,இறைவா! அப்பாதிற்குக் கருணை செய்‘ என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 2656. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

பிலால்(ரலி) இரவில் பாங்கு சொல்வார்கள். எனவே, அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம்(ரலி) (ஃபஜ்ருக்கு) பாங்கு சொல்லும் வரை (ஸஹருக்காக) உண்ணுங்கள் பருகுங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், இப்னு உம்மி மக்தூம்(ரலி) கண்பார்வையற்றவராக இருந்தார்கள். மக்கள்காலை நேரம் வந்துவிட்டது என்று அவரிடம் கூறும் வரை அவர் பாங்கு சொல்லமாட்டார்.

ஹதீஸ் 2657. மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்களிடம் சில அங்கிகள் வந்தன. என் தந்தை மக்ரமா(ரலி) என்னிடம்,நாம் நபி(ஸல்) அவர்களிடம் செல்வோம். அவர்கள் நமக்கு அவற்றிலிருந்து எதையேனும் தருவார்கள்‘ என்று கூறினார்கள். என் தந்தை (நபி(ஸல்) அவர்களின் வீட்டு) வாசலருகே நின்று பேசினார்கள். நபி(ஸல்) அவர்கள் அவரின் குரலைப் புரிந்து கொண்டு, தம்முடன் ஓர் அங்கியை எடுத்துக்கொண்டு, அதன் நிறைகளைக் காட்டியபடி வெளியே வந்தார்கள். அப்போது அவர்கள்,உனக்காக இதை நான் எடுத்து வைத்தேன் உனக்காக இதை நான் எடுத்து வைத்தேன்‘ என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

## பெண்களின் சாட்சியம் (செல்லும்)

அல்லாஹ் கூறினான்:

(சாட்சி சொல்வதற்கு) இரண்டு ஆண்கள் இல்லையென்றால் ஓர் ஆணையும் இரண்டு பெண்களையும் சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 02:282)

ஹதீஸ் 2658. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

“பெண்களின் சாட்சியம் ஆண்களின் சாட்சியத்தில் பாதியளவு அல்லவா? என்று நபி(ஸல்) அவர்கள் (பெண்களை நோக்கிக்) கேட்டார்கள். அவர்கள்,ஆம் (பாதியளவு தான்)‘ என்று பதிலளித்தார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அதுதான் அவளுடைய அறிவின் குறை பாடாகும்‘ என்று கூறினார்கள்.

## ஆண் அடிமைகள் மற்றும் பெண் அடிமைகளின் சாட்சியம்.

அனஸ்(ரலி) கூறினார்.

அடிமையின் சாட்சியம், அவன் நேர்மையானவனாக இருந்தால் செல்லுபடியாகும்.

நீதிபதி ஷுரைஹ் (ரஹ்) அவர்களும், ஸுராராபின் அவ்ஃபா (ரஹ்) அவர்களும், அடிமையின் சாட்சியம் செல்லும்' என்று கூறினார்கள். அடிமையின் சாட்சியம் (எல்லா விஷயங்களிலும்) செல்லுபடியாகும் அடிமை, தன் எஜமானுக்கு சாதகமாக அளிக்கும் சாட்சியத்தைத் தவிர' என்று இப்னு சீரின் (ரஹ்) கூறினார்.

"அற்பமான, சாதாரண விஷயங்களில் மட்டும் அடிமையின் சாட்சியம் செல்லுபடியாகும்' என்று ஹஸன் (ரஹ்) அவர்களும், இப்ராஹீம் நகயீ (ரஹ்) அவர்களும் கூறுகிறார்கள்.

(தம் கருத்தை நியாயப்படுத்தும் விதத்தில்) நீதிபதி ஷுரைஹ் (ரஹ்), நீங்கள் ஒவ்வொருவரும் ஆண் அடிமைகள் மற்றும் பெண் அடிமைகளின் மக்களே' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2659. உக்பா இப்னு ஹாரிஸ் (ரலி) அறிவித்தார்.

நான் உம்மு யஹ்யா பின்த்து அபீ இஹாபை மணந்தேன். ஒரு கருப்பு நிற அடிமைப் பெண் வந்து, நான் உங்கள் இருவருக்கும் (உனக்கும் உன் மனைவிக்கும்) பாலூட்டியிருக்கிறேன்! என்று கூறினாள். இச்செய்தியை நான் நபி (ஸல்) அவர்களிடம் கூறினேன். அவர்கள் (முகம் திருப்பி) என்னை அலட்சியம் செய்தார்கள். நான் (என் இருப்பிடத்திலிருந்து விலம் (அவர்களின் முகம் இருக்கும் பக்கம்) சென்று அவர்களிடம் அதை (திரும்பக்) கூறினேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அவள் உங்கள் இருவருக்கும் பாலூட்டியிருப்பதாக வாதிட்டுக் கொண்டிருக்கும் நிலையில் எப்படி (நீங்கள் இருவரும் கணவன் மனைவியாக வாழ முடியும்)? என்று கேட்டார்கள் என்னை அவளுடன் சேர்ந்து வாழக் கூடாதென்று விலக்கினார்கள்.

## செவிலித் தாயின் சாட்சியம்.

ஹதீஸ் 2660. உக்பா இப்னு ஹாரிஸ் (ரலி) அறிவித்தார்.

நான் ஒரு பெண்ணை மணமுடித்தேன். வேறொரு பெண் வந்து, நான் உங்கள் இருவருக்கும் (உனக்கும், உன் மனைவிக்கும்) பாலூட்டியிருக்கிறேன்' என்று கூறினார். நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன் (அவர்களிடம் இது பற்றிக் கேட்டதற்கு), (நீயும் உன் மனைவியும் ஒரே செவிலித்தாயிடம் பால் குடித்ததாகக்) கூறப்பட்டுவிட்டு பிறகு, எப்படி (நீங்கள் இருவரும் சேர்ந்து வாழ முடியும்)? அவளை உன்னிடமிருந்து பிரித்து விடு' என்றோ அது போன்றதையோ கூறினார்கள்.

## பெண்களில் ஒருவர் மற்றவரை நேர்மையானவர் என்று உறுதி செய்வது.

ஹதீஸ் 2661. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணம் புறப்பட விரும்பினால் தம் மனைவிமார்களிடையே (எவரைப் பயணத்தில் தம்முடன் அழைத்துச் செல்வது எனத் தீர்மானித்திட) சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். அவர்களில் எவருடைய (பெயருள்ள) சீட்டு வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு பயணம் புறப்படுவார்கள். இவ்வாறே, அவர்கள் செய்த ஒரு புனிதப் போரின்போது 14 (பயணத்தில் உடன் அழைத்துச் செல்ல) எங்களுக்கிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். என்னுடைய (பெயருள்ள) சீட்டு வந்தது. எனவே, நான் அவர்களுடன் (பயணம்) புறப்பட்டுச் சென்றேன். இது (பெண்கள் பர்தா முறையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்னும்) ஹிஜாபின் சட்டம் அருளப்பட்ட பிறகு நடந்ததாகும். நான் ஓர் ஒட்டகச் சிவிகையில் வைத்துச் சுமந்து செல்லப்படுவேன். நான் அதில் இருக்கும் நிலையிலேயே கீழே இறக்கி வைக்கப்படுவேன். நபி (ஸல்) அவர்கள் அந்தப் போர் முடிந்து புறப்பட்டபோது நாங்கள் மதீனாவை நெருங்கிய வேளையில் இரவு நேரத்தில் (ஓரிடத்தில்) தங்கும்படி அறிவித்தார்கள்.

நான் (சிவிகையிலிருந்து) எழுந்து (மலஜலம் கழிப்பதற்காக மறைவிடம் தேடி) படையைக் கடந்து சென்றேன். என் (மலஜலத்) தேவையை நான் முடித்தபோது முகாமிட்டிருந்த இடத்தை நோக்கிச் சென்றேன். அப்போது என் நெஞ்சை நான் தொட்டுப் பார்த்தபோது, (என் கழுத்திலிருந்த) யமன் நாட்டு முத்துமாலையொன்று அறுந்து (விழுந்து) விட்டிருந்தது. எனவே, நான் திரும்பிச் சென்று என் மாலையைத் தேடலானேன் அதைத் தேடிக் கொண்டிருந்தது (நான் சீக்கிரம் திரும்பிச் சென்று படையினருடன் சேரவிடாமல்) என்னைத் தாமதப்படுத்திவிட்டது. எனவே, என்னை எடுத்துச் சென்று ஒட்டகத்தில் வைப்பவர்கள், என் சிவிகைக்குள் நான் இருப்பதாக எண்ணிக் கொண்டு அதைச் சுமந்து சென்று, நான் வழக்கமாக சவாரி செய்கிற என் ஒட்டகத்தின் மீது வைத்துக் கட்டிவிட்டனர். அந்தக் கால கட்டத்தில் பெண்கள் பருமனாக இன்றி மெலிந்தவர்களாக இருந்தனர். அவர்களுக்கு சதை போட்டிருக்கவில்லை. சிறிதளவு உணவே அவர்கள் உண்பார்கள். எனவே, சிவிகையைத் தூக்கியபோது அதன் (இலேசான) கனத்தை மக்கள் வித்தியாசமாகக் கருதவில்லை. மேலும், நான் வயது குறைந்த சிறுமியாக இருந்தேன். அவர்கள் ஒட்டகத்தை (முன்னே) அனுப்பிவிட்டு நடக்கலானார்கள். படையினர் சென்ற பிறகு நான் (தொலைந்து போன) என் மாலையைப் பெற்றுக் கொண்டேன். பிறகு, நான் அவர்கள் தங்கியிருந்த இடத்திற்கு வந்தேன். அப்போது, அங்கு ஒருவரும் இல்லை. நான் ஏற்கனவே தங்கியிருந்த இடத்தைத் தேடிச் சென்று அங்கு அமர்ந்து கொண்டேன். படையினர், நான் காணாமல் போயிருப்பதைக் கண்டு என்னிடம் திரும்பி வருவார்கள் என்று நான் கருதினேன். நான் அப்படியே உட்கார்ந்தபடி இருந்த பொழுது என் கண்கள் (உறக்கம்) மிகைத்து நான் தூங்கி விட்டேன். ஸஃப்வான் இப்னு முஅத்தல் அல் ஸுலமீ என்பவர் படையினர் பின் அணியில் இருந்தார். அவர், நான் தங்கியிருந்த இடத்தில் காலை வரை தங்கி விட்டிருந்தார். அவர் (காலையில் விழித்தெழுந்தவுடன்) தூங்கிக் கொண்டிருந்த ஓர் உருவத்தை (என்னை)ப் பார்த்துவிட்டு என்னிடம் வந்தார். பர்தாவுடைய சட்டம் அருளப்படுவதற்கு முன்னால் அவர் என்னைப் பார்த்திருந்தார். (எனவே, என்னை அடையாளம் புரிந்து கொண்டு) அவர்,இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன் நாம் அல்லாஹ்விற்கே உரியவர்கள் மேலும், நாம் அவனிடமே திரும்பிச் செல்லவிருக்கிறோம்' என்று கூறும் சப்தத்தைக் கேட்டு நான் கண் விழித்தேன். பிறகு, அவர் தம் ஒட்டகத்தை மண்டியிடச் செய்து, அதன் முன்னங்காலை (தன் காலால்) மிதித்துக் கொள்ள நான் அதன் மீது ஏறிக் கொண்டேன். அவர் என்னுடன் ஒட்டகத்தை ஓட்டிக் கொண்டு நடக்கலானார். இறுதியில் நாங்கள் படையினரை வந்தடைந்தோம். அதற்குள் அவர்கள் (மதிய ஓய்வுக்காக) நடுப்பகல் நேரத்தில் (ஓரிடத்தில்) தங்கி விட்டிருந்தார்கள். (இப்போது எங்களைக் கண்டு அவதூறு பேசி) அழிந்தவர்கள் அழிந்தார்கள். என் மீது அவதூறு (பிரசாரம்) செய்ய (தலைமைப்) பொறுப் பேற்றிருந்தவன் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி ஸலூல் (எனும் நயவஞ்சகர்களின் தலைவன்) ஆவான். நாங்கள் மதீனாவை வந்தடைந்தோம். அங்கு ஒரு மாத காலம் நான் நோயுற்று விட்டேன். மக்களோ அவதூறு கற்பித்தவர்களின் சொல்லைப் பரப்பிக் கொண்டிருந்தார்கள். நான் நோயுற்று விடும்போது நபி(ஸல்) அவர்கள் வழக்கமாக என்னிடம் காட்டுகிற பரிவை (இந்த முறை) நான் நோயுற்றிருக்கும்போது அவர்களிடம் காணமுடியாமல் போனது எனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தியது. அவர்கள் வருவார்கள் சலாம் சொல்வார்கள் பிறகு,அவள் எப்படி இருக்கிறாள்? என்று கேட்பார்கள் (பிறகு போய் விடுவார்கள்.) அவ்வளவு தான். (என்னைக் குறித்து வெளியே பேசப்பட்டு வந்த அவதூறில்) ஒரு சிறிதும் எனக்குத் தெரியாது. இறுதியில், நான் (நோயிலிருந்து குணமடைந்து விட, நானும் உம்மு மிஸ்தஹ்(ரலி) நானும் உம்மு மிஸ்தஹ்(ரலி) அவர்களும் நாங்கள் கழிப்பிடமாகப் பயன்படுத்தி வந்தமனாஸிஉ என்னுமிடத்தை நோக்கிச் சென்றோம். நாங்கள் இரவு நேரங்களில் மட்டும் இவ்வாறு செல்வோம். எங்கள் வீடுகளுக்கு அருமேலேயே கழிப்பிடங்களை அமைத்துக் கொள்வதற்கு முன்னால் நாங்கள்

இவ்வாறு அங்கு சென்று கொண்டிருந்தோம். எங்களுடைய இந்த வழக்கம் வனாந்திரங்களில் வசித்து வந்த முற்கால அரபுகளின் வழக்கத்தை ஒத்ததாயிருந்தது. நானும் அபூ ருஹ்மின் மகளாகிய உம்மு மிஸ்தஹும் நடந்து முன்னால் சென்று கொண்டிருந்தோம். உம்மு மிஸ்தஹை அவர் அணிந்திருந்த கம்பளி அங்கி இடறியது. அப்போது அவர்,மிஸ்தஹ் நாசமாகட்டும்' என்று கூறினார். நான்,மிக மோசமான சொல்லைச் சொல்லிவிட்டாய். பத்ருப் போரில் பங்கெடுத்த ஒரு மனிதரையா நீ ஏசுகிறாய்' என்று கூறினேன். அதற்கு அவர்,அம்மா! அவர்கள் என்ன சொன்னார்கள் என்று நீங்கள் கேள்விப்படவில்லையா? என்று கூறிவிட்டு, அவதூறு கற்பித்தவர்கள் சொன்ன (அபாண்டத்)தை எனக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு என் நோய் இன்னும் அதிகரித்துவிட்டது. நான் என் வீட்டிற்குத் திரும்பி வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் வந்து,அவள் எப்படி இருக்கிறாள்? என்று கேட்டார்கள். நான்என் தந்தையரிடம் செல்ல எனக்கு அனுமதி கொடுங்கள்' என்று கேட்டார்கள். நான்என்று கேட்டேன். அப்போது நான் அவ்விருவரிடமிருந்தும் (உண்மையிலேயே அப்படியொரு வதந்தி உலவுகிறதா என்று விசாரித்து என் மீதான அவதூறுச்) செய்தியை உறுதிப்படுத்திக் கொள்ள விரும்பினேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளிக்கவே நான் என் தாய்யதந்தையரிடம் சென்றேன். என் தாயாரிடம்,மக்கள் (என்னைப் பற்றி) என்ன பேசிக் கொள்கிறார்கள்? என்று கேட்டேன். என் தாயார்,என் அன்பு மகளே! உன் மீது இந்த விஷயத்தைப் பெரிதுபடுத்திக் கொள்ளாதே. அல்லாஹ்வின் மீதாணையாக! சக்களத்திகள் பலரும் இருக்க, (தன்) கணவரிடம் பிரியத்துக்குரியவளாக இருக்கும் அழகுமிக்க பெண்ணொருத்தியைக் குறித்து அவளுடைய சக்களத்திகள் அதிகமாக (வதந்திகள்) பேசத் தான் செய்வார்கள். அவ்வாறு பேசாமலிருப்பது (பெரும்பாலும்) குறைவேயாகும்' என்று கூறினார்கள். நான்,சுப்ஹானல்லாஹ் (இறைவன் தூய்மையானவன்!) இப்படியா மக்கள் பேசிக் கொள்கிறார்கள்? என்று கேட்டேன். அன்றிரவை இடைவிடாமல் அழுது கொண்டும் தூக்கம் சிறிது மின்றியும் காலை வரை கழித்தேன். காலை நேரம் வந்தது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் மனைவியை (என்னை)ப் பிரிந்து விடுவது குறித்து ஆலோசனை கேட்பதற்காக அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களையும், உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களையும் அழைத்தார்கள். அப்போதுவஹீ (தற்காலிகமாக) நின்று போயிருந்தது. உஸாமா(ரலி) அவர்களோ தம் உள்ளத்தில் நபி(ஸல்) அவர்களின் மனைவிமார்கள் மீதிருந்த பாசத்தை அடிப்படையாகக் கொண்டு ஆலோசனை கூறினார்கள். இறைத்தூதர் அவர்களே! தங்கள் துணைவியாரிடம் நல்ல (குணத்)தைத் தவிர வேறெதையும் நான் அறிய மாட்டேன்' என்று அவர்கள் கூறினார்கள். அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களோ (நபி(ஸல்) அவர்களின் மனக் கவலையைக் குறைத்து ஆறுதல் கூறும் நோக்குடன்),இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்தவில்லை. அவர் (ஆயிஷா) அன்றிப் பெண்கள் நிறையப் பேர் இருக்கின்றனர். பணிப் பெண்ணைக் கேளுங்கள். அவள் உங்களிடம் உண்மையைச் சொல்வாள்' என்று கூறினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பணிப் பெண்ணான) பரீராவை அழைத்து,பரீராவே! நீ ஆயிஷாவிடம் உனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தும் (செயல்) எதையாவது பார்த்திருக்கிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு பரீரா(ரலி),தங்களை சத்திய(மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! அவர் (குழைத்து வைத்த) மாவை அப்படியே போட்டுவிட்டு உறங்கிப் போய்விடுவார் வீட்டிலுள்ள ஆடு வந்து அதைத் தின்றுவிடும் அத்தகைய (விபரமறியாத) இளவயதுச் சிறுமி என்பதைத் தவிர அவரைக் குறை சொல்லக்கூடிய விஷயம் எதையும் அவரிடம் நான் பார்க்கவில்லை' என்று பதில் கூறினார். உடனே, அன்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மிம்பரில் ஏறி) நின்று, அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூலை தண்டிப்பதற்கு (தமக்கு) உதவும்படி (தம் தோழர்களிடம்) கோரினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,என் வீட்டார் விஷயத்தில் (வதந்தி கிளப்பி) எனக்கு மன வேதனையளித்த ஒரு மனிதனை தண்டித்திட எனக்கு

உதவிபுரிபவர் யார்? அவர்கள் (அவதூறு) கூறியுள்ளனர். ஆனால், அவரைப் பற்றி நல்லதையே அறிவேன். அவர் என் வீட்டாரிடம் என்னுடனேயல்லாமல் (நான் வீட்டிலிருக்கும் போதே தவிர) வந்ததில்லை‘ என்று கூறினார்கள். உடனே, ஸஅத் இப்னு முஆத்(ரலி) எழுந்து நின்று,இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! அவனை தண்டிக்க நான் தங்களுக்கு உதவுகிறேன். அவன் (எங்கள்) அவ்ஸ் குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் நாங்கள் அவனுடைய கழுத்தைத் துண்டித்து விடுகிறோம். எங்கள் சகோதரர்களான கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்தவனாக இருந்தால் (என்ன செய்ய வேண்டுமென்று) தாங்கள் உத்தரவை நாங்கள் நிறைவேற்றுகிறோம்‘ என்று கூறினார்கள். உடனே, கஸ்ரஜ் குலத் தலைவராயிருந்த ஸஅத் இப்னு உபாதா(ரலி) எழுந்து நின்று,அல்லாஹ்வின் மீதாணையாக! நீர் பொய்யுரைத்தீர் அவனை நீர் கொல்லமாட்டீர். அது உம்மால் முடியாது‘ என்று கூறினார். அதற்கு முன் அவர் நல்ல மனிதராகத் தான் இருந்தார் ஆயினும், குலமாச்சரியம் அவரை அவ்வாறு பேசத் தூண்டிவிட்டது. உடனே, உசைத் இப்னு ஹுளைர்(ரலி) எழுந்து நின்று, உபாதா(ரலி) அவர்களை நோக்கி,நீர் தாம் பொய்யுரைத்தீர். அல்லாஹ்வின் மீதாணையாக! அவனை நாங்கள் கொன்றே தீருவோம். நீர் ஒரு நயவஞ்சகர். (அதனால்தான்) நயவஞ்சகர்களின் சார்பாக வாதிடுகிறீர்‘ என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மிம்பரின் மீது நின்று கொண்டிருக்க, அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரண்டு குலத்தாரும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து சண்டையிட முற்பட்டனர். நபி(ஸல்) அவர்கள் மிம்பரிலிருந்து இறங்கி அவர்கள் மௌனமாகும் வரை அவர்களை அமைதிப்படுத்தினார்கள். பிறகு அவர்களும் மௌனமானார்கள். அன்று நான் இடைவிடாமல் அழுது கொண்டிருந்தேன் சிறிதும் உறங்கவில்லை. காலையானதும் என் தாய் தந்தையர் என் அருகேயிருந்தனர். நானோ இரண்டு இரவுகள் ஒரு பகல் (முழுக்க) என் ஈரல் பிளந்து விடுமோ என்றெண்ணும் அளவிற்கு அழுதிருந்தேன். நான் அழுதவண்ணமிருக்கும்போது என் தாய்தந்தையார் என்னிடம் அமர்ந்திருக்க, அன்சாரிப் பெண்ணொருத்தி வந்து உள்ளே வர அனுமதி கேட்டாள். நான் அவளுக்கு அனுமதியளித்தவுடன் என்னோடு சேர்ந்து அவளும் அழுதபடி அமர்ந்தாள். நாங்கள் இவ்வாறு இருந்து கொண்டிருக்கும்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்து அமர்ந்தார்கள். என்னைப் பற்றி அவதூறு சொல்லப்பட்ட நாளிலிருந்து அவர்கள் என்னருகே அமர்ந்ததில்லை. மேலும், ஒரு மாத காலம் வரை என் விஷயத்தில் (அல்லாஹ்விடமிருந்து தீர்ப்பு) எதுவும் அவர்களுக்கு வஹீயாக அருளப்படவில்லை. பிறகு நபி(ஸல்) அவர்கள்,லாஇலாஹ இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை)‘ என்று கூறிவிட்டு,ஆயிஷாவே! உன்னைக் குறித்து இன்னின்னவாறு எனக்குச் செய்தி கிடைத்துள்ளது. நீ நிரபராதியாக இருந்தால் அல்லாஹ் விரைவில் உன்னைக் குற்றமற்றவள் என்று அறிவித்து விடுவான். நீ குற்றமேதும் செய்திருந்தால் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி, அவன் பக்கம் திரும்பி விடு. ஏனெனில், அடியான் தன் பாவத்தை ஒப்புக் கொண்டு (மனம் திருந்தி) பாவ மன்னிப்புக் கோரினால் அவனுடைய கோரிக்கையை ஏற்று அல்லாஹ் அவனை மன்னிக்கிறான்‘ என்றார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் பேச்சை முடித்தபோது என் கண்ணீர் (முழுவதுமாக) நின்று போய் விட்டிருந்தது. அதில் ஒரு துளியும் எஞ்சியிருக்கவில்லை. நான் என் தந்தையிடம்,அல்லாஹ்வின் தூதருக்கு என் சார்பாக பதில் கூறுங்கள்‘ என்று சொன்னேன். அதற்கு என் தந்தை,அல்லாஹ்வின் தூதரிடம் என்ன (பதில்) சொல்வது என்று கூறினார்கள். நான் என் தாயாரிடம்,இறைத்தூதர் சொன்னதற்கு என் சார்பாக பதில் கூறுங்கள்‘ என்று சொன்னேன். அதற்கு என் தாயார்,அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு என்ன (பதில்) சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை‘ என்று கூறினார்கள். நானோ இளவயதுடைய சிறுமியாக இருந்தேன். குர்ஆனிலிருந்து அதிகமாக (ஓதத்) தெரியாதவளாகவும் இருந்தேன். எனவே,அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள், மக்கள் என்னைப் பற்றிப் பேசியவற்றைக்

கேட்டிருக்கிறீர்கள் என்பதையும் அது உங்கள் மனதில் பதிந்து போய், அதை உண்மையொன்று நம்பி விட்டீர்கள் என்பதையும் அறிவேன். நான் குற்றமற்றவள் என்று நானே தங்களிடம் சொன்னால்... நான் குற்றமற்றவள் என்பதை அல்லாஹ் அறிவான்... நீங்கள் அதை நம்பப் போவதில்லை நான் குற்றமேதும் புரிந்திருப்பதாக ஒப்புக் கொண்டால் (நான் சொல்வதை அப்படியே உண்மையொன்று ஏற்று) என்னை நம்பி விடுவீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்கும் உங்களுக்கும் (நபி) ~சு.ப்(அலை) அவர்களின் தந்தையை (ய..கூப்(அலை) அவர்களை)யே நான் உவமையாகக் கருதுகிறேன். (அதாவது): (இதை) சகித்துக் கொள்வதே நல்லது நீங்கள் புனைந்து சொல்லும் விஷயத்தில் அல்லாஹ்விடம் தான் நான் பாதுகாப்புத் கோர வேண்டும். (குர்ஆன் 12:83) 15 பிறகு, அல்லாஹ் நான் குற்றமற்றவள் என அறிவிப்பான் என்ற நம்பிக்கையுடன் நான் என் படுக்கையில் (வேறு பக்கமாகத்) திரும்பிப் படுத்துக் கொண்டேன். ஆயினும், திருக்குர்ஆனில் என் விஷயத்தைப் பற்றிப் பேசுகிற அளவிற்கு நான் ஒன்றும் முக்கியத்துவமுடையவளல்ல் மிகச் சாதாரணமானவள் தான் என்று என்னைக் குறித்து நான் கருதிக் கொண்டிருக்க, அல்லாஹ்வின் மீதாணையாக! இறைவன் என் விஷயத்தில் வஹீயையே -வேத வெளிப்பாட்டையே (திருக்குர்ஆனில்) அருளுவான் என்று நான் நினைத்தும் பார்க்கவில்லை. மாறாக, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னை அல்லாஹ் குற்றமற்றவள் என்று உணர்த்தும் கனவு எதையாவது தூக்கத்தில் காண்பார்கள்' என்றே எதிர்பார்த்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் தாம் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்திருக்கவுமில்லை வீட்டிலிருந்து எவரும் வெளியே செல்லவுமில்லை அதற்குள் அல்லாஹ், நபி(ஸல்) அவர்களின் மீது (திருக்குர்ஆன் வசனங்களை) அருள ஆரம்பித்துவிட்டான். உடனே, (வேத வெளிப்பாடு வருகிற நேரங்களில்) ஏற்படும் கடும் சிரமமான நிலை அவர்களுக்கு ஏற்பட்டது அது கடும் குளிர் காலமாயிருந்தும் அவர்களின் மேனியிலிருந்து முத்துக்களைப் போல் வியர்வைத் துளிகள் வழியத் தொடங்கின. அந்த நிலை அல்லாஹ்வின் தூதரைவிட்டு நீங்கியவுடன் அவர்கள் சிரித்துக் கொண்டே முதல் வார்த்தையாக, ஆயிஷாவே! அல்லாஹ்வைப் புகழ்ந்து நன்றி செலுத்து. உன்னை அல்லாஹ் குற்றமற்றவள் என அறிவித்துவிட்டான்' என்று கூறினார்கள். என் தாயார், அல்லாஹ்வின் தூதரிடம் எழுந்து செல்' என்று கூறினார்கள். நான், மாட்டேன் அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் செல்ல மாட்டேன். அல்லாஹ்வை மட்டுமே புகழ்ந்து, அவனுக்கே நன்றி செலுத்துவேன்' என்றேன். அப்போது அல்லாஹ், (ஆயிஷாவின் மீது) அவதூறு பரப்பியவர்கள் உங்களில் ஒரு குழுவினர் தான்' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 24:11) வசனங்களை அருளியிருந்தான். என் குற்றமற்ற நிலையைத் தெளிவுபடுத்தி அல்லாஹ் இதை அருளியபோது (என் தந்தை) அபூ பக்ர்(ரலி), அல்லாஹ்வின் மீதாணையாக! (என் மகள்) ஆயிஷாவைப் பற்றி (அவதூறு) கூறிய பின்பு ஒருபோதும் மிஸ்தஹுக்காக செலவிட மாட்டேன்' என்று கூறினார்கள். மிஸ்தஹ் இப்னு உஸாஸா தம் உறவினர் என்பதால் அவருக்காக அபூ பக்ர்(ரலி) செலவிட்டு வந்தார்கள்... உடனே அல்லாஹ், உங்களிடையேயுள்ள (பொருள்) அருளப் பெற்றோரும் (பிறருக்கு உதவும்) இயல்புடையோரும், (தங்கள்) உறவினர்களுக்கோ, ஏழைகளுக்கோ, இறைவழியில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ (எதுவும்) கொடுக்க மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம். (அவர்களால் தங்களுக்கு ஏதும் வருத்தம் ஏற்பட்டிருந்தால்) அதனை மன்னித்துப் (பிழைகளைப்) பொருட்படுத்தாமல்விட்டு விடட்டும். அல்லாஹ் உங்களுக்கு மன்னிபளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? அல்லாஹ் மிகவும் மன்னிப்போனும் கிருபையுடையோனுமாய் இருக்கிறான்' என்னும் (திருக்குர்ஆன் 24:22) இறைவசனத்தை அருளினான். அதன் பிறகு அபூ பக்ர்(ரலி), ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு மன்னிப்பளிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்' என்று கூறிவிட்டு, மிஸ்தஹ்(ரலி) அவர்களுக்கு ஏற்கனவே தாம் செய்து வந்த (பொருள்) உதவியைத் தொடரலானார்கள்.

(திருக்குர்ஆனில் என்னைப் பற்றிய வசனங்கள் அருளப்படுவதற்கு முன்னால்) இறைத்தூதர் என் விஷயத்தில் (தம் இன்னொரு மனைவியான) ஸைனப் பின்த்து ஜஹ்ஷ்(ரலி) அவர்களிடம் விசாரித்தார்கள்ஸைனபே! நீ (ஆயிஷாவைப் பற்றி) என்ன அறிந்திருக்கிறாய்? (அவர் விஷயத்தில்) என்ன பார்த்திருக்கிறாய்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்,இறைத்தூதர் அவர்களே! என் காதுகளையும் என் கண்களையும் (அவற்றின் மீது பழி சுமத்தாமல்) பாதுகாத்துக் கொள்வேன். அல்லாஹ்வின் மீதாணையாக! ஆயிஷாவைக் குறித்து நல்லதையே அறிவேன்' என்று பதிலளித்தார்கள். ஸைனப்(ரலி) தாம் எனக்கு (அழகிலும் நபி(ஸல்) அவர்களின் அன்பிலும்) போட்டியாக இருந்தார்கள். ஆயினும், அல்லாஹ் அவர்களை இறையச்சமுடைய, பேணுதலான பண்பையளித்துப் பாதுகாத்திருந்தான்.

இந்த அறிவிப்பு இன்னும் பலர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் மற்றொரு மனிதரை நல்லவர் என்று கூறினால் (அவரின் சாட்சியத்தை ஏற்க) அதுவே போதுமானதாகும்.

அபூ ஜமீலா(ரலி) கூறினார்:

நான் கேட்பாரற்ற குழந்தை ஒன்றைக் கண்டெடுத்தேன். என்னை உமர்(ரலி) பார்த்தபோது, (அது கண்டெடுக்கப்பட்ட குழந்தை என்பதை நம்பாமல், நான் என் குழந்தையைத் தான் அதன் தகப்பன் என்கிற பொறுப்பை ஏற்க மறுத்துப் பொதுநிதியிலிருந்து பணம் பெறுவதற்காக இப்படிக் கூறுகிறேன் என்று கருதி),இது உனக்கு ஆபத்தாகவே முடியும்' என்று குற்றம் சாட்டுவதைப் போல் கூறினார்கள்.

எங்கள் (வட்டார அரசு) அதிகாரி ஒருவர்,அவர் நல்ல மனிதர்' என்று கூறியதும்,அப்படித்தான் (என்று ஒப்புக் கொள்கிறேன்), போ! அக்குழந்தையின் பராமரிப்புச் செலவு எம் (அரசின்) மீது சாரும்' என்று உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2662. அபூ பக்ர்(ரலி) கூறினார்.

ஒருவர் இன்னொரு மனிதரைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் புகழ்ந்து பேசினார். நபி(ஸல்) அவர்கள்,அழிந்து போவீர். உம் தோழரின் கழுத்தை நீர் துண்டித்து விட்டீர். உம் தோழரின் கழுத்தை நீர் துண்டித்து விட்டீர்' என்று (பலமுறை) கூறினார்கள். பிறகு,தன் சகோதரனைப் புகழ்ந்தே ஆகவேண்டும் என்ற நிலையில் உங்களில் இருப்பவர்,இன்னாரை நான் இப்படிப்பட்டவர் என்று எண்ணுகிறேன். அல்லாஹ்வே அவருக்குப் போதுமானவன். அல்லாஹ் (உண்மை நிலையை அறிந்தவனாக) இருக்க, அவனை முந்திக் கொண்டு நான் யாரையும் தூய்மையானவர் என்று கூற மாட்டேன். அவரை இன்னின்ன விதமாக எண்ணுகிறேன்' என்று கூறட்டும். அந்தப் பண்பை அவர் அந்த மனிதரிடமிருந்து அறிந்திருந்தால் மட்டுமே இப்படிக் கூறட்டும்' என்றார்கள்.

## மிகையாகப் புகழ்வது வெறுக்கத் தக்கதாகும் மேலும், (ஒருவர் தாம்) அறிந்தவற்றை மட்டுமே (மற்றவரைப் பற்றிக்) கூறட்டும்.

ஹதீஸ் 2663. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒருவர் மற்றொரு மனிதரைப் புகழ்ந்து கொண்டிருப்பதையும் அவரை மிகைப்படுத்தி (ஒரேயடியாக உயர்த்திப்) புகழ்ந்து கொண்டிருப்பதையும் செவியுற்றார்கள். உடனே,நீங்கள் அந்த மனிதரின் முதுகை நாசமாக்கி விட்டீர்கள் - அல்லது - துண்டித்து விட்டீர்கள்' என்று கூறினார்கள்.

## குழந்தைகள் பருவமடைவதும் அவர்களின் சாட்சியமும்.

அல்லாஹ் கூறினான்:

உங்கள் சிறுவர்கள் பருவம் அடைந்தால் அவர்களின் பெரியவர்கள் எவ்வாறு அனுமதி கேட்கிறார்களோ அவ்வாறு அவர்களும் அனுமதி பெற்று வரட்டும். (திருக்குர்ஆன் 24:59)

“நான் பன்னிரண்டு வயதுடையவனாக இருந்தபோது பருவமடைந்தேன்‘ என்று சட்ட நிபுணர் முகீரா (ரஹ்) கூறினார்.

பெண்கள் பருவ வயதை அடைவது, மாதவிலக்கு (வரத்) தொடங்கும் போதாகும்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

உங்களுடைய பெண்களில் எவர் மீதேனும் இனி மாதவிலக்கு வரப் போவதில்லை என்று நம்பிக்கையிழந்தவர்களைக் குறித்து சந்தேகம் ஏற்பட்டால், (தெரிந்து கொள்ளுங்கள்:) அவர்களின் இத்தா காலம் மூன்று மாதங்களாகும். மேலும், எந்தப் பெண்களுக்கு இதுவரையிலும் மாத விலக்கு வரவில்லையோ (அவர்களுக்குரிய சட்டமும் இதுதான்.) மேலும், கர்ப்பிணிகளுக்கான இத்தா காலம் அவர்கள் குழந்தையைப் பெற்றெடுப்பதுடன் முடிவடைகிறது. (திருக்குர்ஆன் 65:04)

ஹஸன் இப்னு சாலிஹ் (ரஹ்) கூறினார்கள்:

எங்கள் அண்டை வீட்டுக்காரப் பெண்ணொருத்தி 21 வயதிலெல்லாம் பாட்டியாகிவிட்டதை கண்டேன்.

ஹதீஸ் 2664. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நான் பதினான்கு வயதுடையவனாக இருக்கும்போது, உஹுதுப் போர் நடந்த காலகட்டத்தில் நபி (ஸல்) அவர்கள் என்னைத் தமக்கு முன்பாக வரவழைத்தார்கள் ஆனால், (போரில் கலந்து கொள்ள) எனக்கு அனுமதியளிக்கவில்லை. அகழ்ப் போரின் போதும் என்னைத் தமக்கு முன்பாக வரவழைத்தார்கள். அப்போது நான் பதினைந்து வயதுடையவனாயிருந்தேன். அப்போது, போரில் கலந்துகொள்ள எனக்கு அனுமதியளித்தார்கள்.

அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) கூறினார்:

உமர் இப்னு அப்தில் அஸீஸ் (ரஹ்) கலீஃபாவாக இருந்தபோது அவர்களிடம் நான் சென்றேன். (இப்னு உமர் (ரலி) அவர்களின்) இந்த ஹதீஸை அவர்களுக்கு அறிவித்தேன். அவர்கள், (அப்படியென்றால்) இதுதான் சிறியவருக்கும் பெரியவருக்குமிடையில் (வேறுபடுத்திக் காட்டும்) எல்லைக் கோடாகும்‘ என்று கூறிவிட்டு, பதினைந்து வயதை அடைந்தவர்களுக்கு (ராணுவப் பணிக்கான ஊதியத் தொகையை) நிர்ணயிக்கும்படி தம் ஆளுநர்களுக்கு எழுதினார்கள்.

ஹதீஸ் 2665. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

‘ஜும்ஆ நாளில் குளிப்பது பருவ வயதை அடைந்துவிட்ட ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

## நீதிபதி (பிரதிவாதியிடம்) சத்தியப் பிரமாணம் செய்யும்படி கேட்பதற்கு முன்பாக வாதியிடம், உனக்கு ஆதாரம் இருக்கிறதா? என்று கேட்பது.

ஹதீஸ் 2666 , ஹதீஸ் 2667 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்:

ஒரு முஸ்லிமின் செல்வத்தைப் பறித்துக் கொள்வதற்காக, ஒரு பிரமாணத்தின்போது பொய் சொல்லி சத்தியம் செய்கிறவர், அல்லாஹ் அவரின் மீது கோபம் கொண்டிருக்கும் நிலையில் அவனை மறுமையில் சந்திப்பார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்:

அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) (வந்து),அல்லாஹ்வின் மீதாணையாக! என் விவகாரத்தில் தான் இப்படி (நபி(ஸல்) அவர்கள் சொன்னது) நடந்தது. எனக்கும் ஒரு யூதருக்குமிடையே ஒரு நிலம் (பற்றிய தகராறு) இருந்து வந்தது. அந்த யூதர் என் உரிமையை மறுத்தார். நான் நபி(ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டு சென்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உனக்கு ஆதாரம் ஏதும் உண்டா? என்று என்னைக் கேட்டார்கள். நான்,இல்லை' என்று பதிலளித்தேன். எனவே, அந்த யூதரிடம் நபி(ஸல்) அவர்கள்,(நிலம் உன்னுடையது என்று) சத்தியம் செய்' என்று கூறினார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! அப்படியென்றால், அவன் (தயங்காமல் பொய்) சத்தியம் செய்து என் செல்வத்தை எடுத்தச் சென்று விடுவானே' என்று கூறினேன். அப்போதுதான்,அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தத்தையும் தம் சத்தியங்களையும் சொற்ப விலைக்கு விற்பவர்களுக்கு மறுமையில் எவ்வித நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும் மாட்டான் அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான். அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனை தான் இருக்கிறது' என்னும் திருக்குர்ஆனின் (திருக்குர்ஆன் 03:77) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

## பொருளாதார மற்றும் குற்றவியல் (சிவில் - கிரிமினல்) விவகாரங்களில் (தான் நிரபராதி என்று) சத்தியம் செய்வது பிரதிவாதியின் மீதே கடமையாகும்.

நபி(ஸல்) அவர்கள்,(வாதியான) உன்னுடைய இரண்டு சாட்சிகள் அல்லது (பிரதிவாதியான) அவரின் சத்தியம் (ஆகியன இவ்வழக்கில் தீர்ப்பளிக்கத் தேவையப்படுகின்றன)' என்றார்கள்.

மேலும், இப்னு ஷுப்ருமா(ரஹ்) கூறினார்:

ஒரேயொருவரின் சாட்சியம் மற்றும் வாதியின் சத்தியம் குறித்து, அபுஸ் ஸினாத்(ரஹ்) என்னிடம் கருத்துக் கேட்டபோது நான் இந்த இறை வசனத்தை எடுத்துரைத்தேன்.

அல்லாஹ் கூறினான்:

மேலும், உங்களில் இரண்டு ஆண்களை சாட்சிகளாக ஆக்கிக் கொள்ளுங்கள். இரண்டு ஆண்கள் இல்லையென்றால் ஓர் ஆணையும் இரண்டு பெண்களையும் சாட்சிகளாக ஆக்கிக் கொள்ளுங்கள். அவ்விருவரில் ஒருத்தி மறந்துவிட்டால் மற்றொருத்தி அவளுக்கு அதை நினைவூட்டுவதற்காக. (திருக்குர்ஆன் 02:282)

"ஒரு சாட்சியுடன் வாதியின் சத்தியமும் இருந்தால் போதும் என்றிருக்குமாயின் ஒருத்தி மற்றொருத்திக்கு நினைவூட்டத் (துணையாக மற்றொரு சாட்சி) தேவையில்லையே. மற்றொருத்தி நினைவூட்டுவதால் என்ன பயன்? என்று (புகாரியாகிய) கேட்கிறேன்.

ஹதீஸ் 2668. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்.

பிரதிவாதி தான் சத்தியம் செய்ய வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்ததாக இப்னு அப்பாஸ்(ரலி) எனக்கு (கடிதம்) எழுதினார்கள்.

ஹதீஸ் 2669 ` ஹதீஸ் 2670 அபூ வாயில்(ரஹ்) கூறினார்.

“ஒரு செல்வத்தை அநியாயமாக அடைவதற்காக, ஒரு பிரமாணத்தின்போது பொய் சத்தியம் செய்பவர், அல்லாஹ் அவரின் மீது கோபம் கொண்டிருக்கும் நிலையில் அவளை (மறுமையில் அவர் சந்திப்பார்)‘ (என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.) பிறகு, அதை உறுதிப்படுத்தும் விதத்தில் அல்லாஹ்,அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தத்தையும் தம் சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்பவர்களுக்கு மறுமையில் எவ்வித நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும்மாட்டான் அவர்களைப் பார்க்கவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனை தான் இருக்கிறது என்னும் (திருக்குர்ஆன் 03:77) வசனத்தை அருளினான்‘ என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்: பிறகு அஷ்அஸ்பின் கைஸ்(ரலி) எங்களிடம் வந்து,அபூ அப்திர் ரஹ்மான் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) உங்களிடம் என்ன சொல்கிறார்? என்று கேட்க, நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) சொன்னதைத் தெரிவித்தோம். அவர் உண்மையே சொன்னார். என் விவகாரத்தில் தான் அந்த வசனம் அருளப்பட்டது. எனக்கும் ஒரு மனிதருக்குமிடையே ஒரு விஷயத்தில் தகராறு இருந்து வந்தது. நாங்கள் அல்லாஹ்வின் தூதரிடம் வழக்கைக் கொண்டு சென்றோம். அவர்கள்,உன்னுடைய இரண்டு சாட்சிகள் அல்லது அவரின் சத்தியம் (தீர்ப்பளிக்கத் தேவைப்படுகின்றன“) என்று கூறினார்கள். நான்,அப்படியென்றால், அவர் (அந்த யூதர், தயங்காமல்) பொய் சத்தியம் செய்வாரே. (பொய் சத்தியம் செய்வதைப் பற்றி) கவலைப்பட மாட்டாரே‘ என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஒரு பிரமாணத்தின்போது அதன் மூலம் ஒரு சொத்தை அடைந்து கொள்வதற்காகப் பொய் சத்தியம் செய்கிறவன், தன் மீது கோபமுற்ற நிலையில் (மறுமையில்) அல்லாஹ்வைச் சந்திப்பான்‘ என்று கூறினார்கள்.

“அல்லாஹ், நபி(ஸல்) அவர்களின் இச்சொற்களை உறுதிப்படுத்தி (திருக்குர்ஆனில் ஒரு வசனத்தை) அருளினான்‘ என்று கூறிவிட்டு அந்த (திருக்குர்ஆன் 03:77) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## ஒன்றை வாதிடக் கூடியவர், அல்லது குற்றம் சுமத்துகிறவர் தன் கூற்றுக்கு ஆதாரத்தைத் தேடிச் செல்லாம்.

ஹதீஸ் 2671. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹிலால் இப்னு உமய்யா(ரலி) தம் மனைவியை ஷரீக் இப்னு சஹ்மாவுடன் இணைத்து விபசாரக் குற்றம் சாட்டினார். நபி(ஸல்) அவர்கள்,ஆதாரம் கொண்டுவா! இல்லையென்றால் (அவதூறு செய்ததற்கு தண்டனையாக) உன் முதுகில் கசையடி தரப்படும்‘ என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவர், தன் மனைவியின் மேல் ஒரு மனிதரைப் பார்த்தாலும் ஆதாரம் தேடிச் செல்ல வேண்டுமா? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,ஆதாரம் கொண்டு வா! இல்லையென்றால் உன் முதுகில் கசையடி தரப்படும்‘ என்று மீண்டும் கூறினார்கள்.

அறிவிப்பாளர் கூறுகிறார்:

இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு இப்னு அப்பாஸ்(ரலி)லிஆன் தொடர்பான ஹதீஸைக் கூறினார்கள்.

## அஸ்ருத் தொழுகைக்குப் பிறகு சத்தியம் செய்வது.

ஹதீஸ் 2672. மூன்று பேரிடம் (மறுமை நாளில்) அல்லாஹ் பேசவும் மாட்டாள் அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனை உள்ளது. ஒருவர், (மக்களின் போக்குவரத்துப்) பாதையில் உள்ள (தன் உபயோகத்திற்குப் போக, தேவைக்கு மேலுள்ள) மீதமான தண்ணீரை வழிப்

போக்கர்களுக்குத் (தராமல்) தடுத்துக் கொள்ளும் மனிதராவார். மற்றொருவர், உலக லாபங்களுக்காக மட்டும் ஓர் ஆட்சியாளரிடம் விசுவாசப் பிரமாணம் செய்தவராவார். அவர் தனக்கு, தான் விரும்புவதைக் கொடுத்தால் (பிரமாணத்தின் அடிப்படையில்) அவரிடம் விசுவாசமாக நடந்து கொள்வார். இல்லையெனில் விசுவாசமாக நடந்து கொள்ளமாட்டார். இன்னொருவர் ஒரு மனிதரிடம் அஸர் தொழுகைக்குப் பிறகு ஒரு பொருளுக்கு விலை கூறி, அந்தப் பொருளுக்கு இன்ன விலையைக் கொடுத்ததாக அல்லாஹ்வின் மீது (பொய்) சத்தியம் செய்ய, (அதை நம்பி) அந்த மனிதர் (அவர் சொன்ன விலைக்கு) அதை எடுத்துக் கொள்ளும்படி செய்தவராவார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பிரதிவாதியின் மீது சத்தியம் செய்வது கட்டாயமாம் விடும் இடத்தில் அவன் சத்தியம் செய்வான். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திலிருந்து அவனைக் கொண்டு செல்ல வேண்டிய அவசியமில்லை.

(ஒரு வழக்கில்) பிரதிவாதியாக இருந்த ஸைத் இப்னு ஸாபித்(ரலி) மிம்பரின் மீதிருந்தவாறு சத்தியம் செய்ய வேண்டும் என்று (மதீனாவின் ஆளுநர்) மர்வான் இப்னி ஹகம் தீர்ப்பளித்தார். ஸைத் இப்னு ஸாபித்(ரலி),நான் என்னிடம் இருந்தபடியே சத்தியம் செய்வேன்' என்று கூறி, மிம்பரின் மீதிருந்து சத்தியம் செய்ய மறுத்துவிட்டார்கள். மர்வான் அவரைக் கண்டு வியப்படைந்தார். (ஆனால்) நபி(ஸல்) அவர்கள்,உன்னுடைய இரண்டு சாட்சிகளும் அவரின் சத்தியமும்' என்றே கூறினார்கள். எந்த இடத்தையும் குறிப்பிட்டு ('இன்ன இடத்தில் செய்யும் சத்தியம் என்று) கூறவில்லை.

ஹதீஸ் 2673. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பிரமாண வாக்குமூலத்தின் போது) ஒரு செல்வத்தை அபகரித்துக் கொள்ளும் நோக்கத்துடன் சத்தியம் செய்பவர், அல்லாஹ் அவரின் மீது கோபமுற்ற நிலையில் (மறுமையில்) அவனை அவர் சந்திப்பார்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## பிரமாண வாக்குமூலம் தர வேண்டிய ஒரு சமுதாயத்தார் அதற்காக ஒருவரையொருவர் முந்திக் கொண்டால்... (குலுக்கல் முறை கையாளப்படும்.)

ஹதீஸ் 2674. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு கூட்டத்தாரை சத்தியப் பிரமாணம் அளிக்கும் படி அழைத்தார்கள். அவர்கள் (ஒருவரையொருவர்) முந்திக் கொண்டு வந்தார்கள். அவர்களில் யார் சத்தியம் செய்வதென்று அவர்களிடையே (முடிவு செய்வதற்காகச்) சீட்டுக் குலுக்கிப் பேகுதிபடி நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வுடன் செய்த ஒப்பந்தத்தையும், தம் சத்தியங்களையும் அற்ப விலைக்கு விற்று விடுகிறவர்களுக்கு மறுமையில் எவ்வித நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும் மாட்டன் அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவும் மாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனை தான் இருக்கிறது. (திருக்குர்ஆன் 03:77)

ஹதீஸ் 2675. அபூ அவ்ஃபா (ரலி) அறிவித்தார்.

ஒருவர் (கடைத் தெருவில்) தம் சரக்கை (மக்கள் முன்) வைத்து, அல்லாஹ்வின் பெயரால் சத்தியமிட்டு, அதற்கு அவர் தராத விலையைத் தந்திருப்பதாக (பொய்) கூறினார். அப்போது மேற்கண்ட (திருக்குர்ஆன் 03:77) இறைவசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 2676 , ஹதீஸ் 2677 அபூ வாயில் (ரஹ்) அறிவித்தார்.

"ஒரு மனிதரின் செல்வத்தை அபகரித்துக் கொள்வதற்காக, ஒரு பிரமாண (வாக்குமூலத்)தின்போது பொய்யாக சத்தியம் செய்பவர் அல்லாஹ் அவரின் மீது கோபமுற்ற நிலையில் (மறுமையில்) அவனைச் சந்திப்பார் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அல்லாஹ் இந்த வாக்கை உறுதிப்படுத்தி, திருக்குர்ஆனின் மேற்கண்ட (திருக்குர்ஆன் 03:77) வசனத்தை இறக்கினான். அப்போது அஷ்அஸ் (ரலி) என்னைச் சந்தித்து, அப்துல்லாஹ் இன்று உங்களிடம் என்ன பேசினார்? என்று கேட்க, நான். இன்னின்ன விஷயங்களைப் பேசினார்' என்று கூறினேன். அதற்கு அவர்கள், அந்த வசனம் என் விவகாரத்தில் தான் இறங்கியது' என்று கூறினார்கள்.

## சத்தியம் செய்வது எப்படி?

அல்லாஹ் கூறினான்:

அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியமிடுகிறார்கள். (திருக்குர்ஆன் 09:62, 74)

பிறகு அவர்கள், அல்லாஹ்வின் மீது ஆணையாக! நன்மை செய்வதையும் இரண்டு பிரிவினரிடையே உடன்பாடு ஏற்படுத்துவதையும் தவிர நாங்கள் வேறெதையும் நாடவில்லை' என்று சத்தியம் செய்து (நபியே!) உங்களிடம் வருவார்கள். (திருக்குர்ஆன் 04:62)

சத்தியம் செய்யும்போது, பில்லாஹி, தல்லாஹி, வல்லாஹி இவற்றில் ஏதாவதொன்றைச் சொல்ல வேண்டும். (இவையனைத்துமேஅல்லாஹ்வின் மீது சத்தியமாக என்ற பொருளையே கொண்டுள்ளன. )

நபி (ஸல்) அவர்கள், அஸர் தொழுகைக்குப் பிறகு பொய் கூறியவனாக அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்த ஒரு மனிதன்' என்று (ஒரு ஹதீஸில்) கூறினார்கள்.

## அல்லாஹ் அல்லாதவர்களின் மீது சத்தியம் செய்யக் கூடாது.

ஹதீஸ் 2678. தல்ஹா இப்னு உபைதில்லாஹ் (ரலி) கூறினார்.

ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து, இஸ்லாத்தைப் பற்றிக் கேட்கலானார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், பகலிலும் இரவிலும் ஐந்து தொழுகைகள் (தான் இஸ்லாத்தில் கட்டாயக் கடமையான வணக்கம்)' என்று பதில் கூறினார்கள். அவர், இதைத் தவிர (வணக்கம்) ஏதும் என் மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளதா? என்று கேட்க, இல்லை நீ தானாக விரும்பிச் செய்யும் (உபரியான) வணக்கத்தைத் தவிர என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், ரமளான் மாதம் நோன்பு நோற்க வேண்டும் என்றும் அவருக்குக் கூறினார்கள். அவர், இதைத் தவிர வேறேதும் என் மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளதா? என்று கேட்க, இல்லை நீ தானாக விரும்பிச் செய்யும் (உபரியான) வணக்கத்தைத் தவிர என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், ரமளான் மாதம் நோன்பு நோற்க வேண்டும் என்றும் அவருக்குக் கூறினார்கள். அவர், இதைத் தவிர வேறெதும் என் மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளதா? என்று கேட்க, இல்லை நீ தானாக விரும்பி நோற்கும் (உபரியான) நோன்பைத் தவிர என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மேலும், இறைத்தூதர் ஸகாத்தையும் அவருக்கு (எடுத்துக்) கூறினார்கள். அவர்இதைத் தவிர வேறெதும்

என் மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளதா? என்று கேட்டார். இல்லை நீ தானாக விரும்பிச் செலுத்தும் (உபரியான) ஸகாத்தைத் தவிர என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்த மனிதர், அல்லாஹ்வின் மீதாணையாக! இதற்கு மேல் நான் அதிகமாகச் செய்யவும் மாட்டேன் இதைக் குறைத்துச் செய்யவும் மாட்டேன்' என்று கூறியபடி திரும்பிச் சென்றார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அவர் உண்மையாகவே (இதைக்) கூறியிருந்தால், அவர் வெற்றியடைந்துவிட்டார்' என்றார்கள்.

ஹதீஸ் 2679. சத்தியம் செய்கிறவர் அல்லாஹ்வின் மீதே சத்தியம் செய்யட்டும் அல்லது வாய்மூடி இருக்கட்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## பிரதிவாதி சத்தியம் செய்த பிறகு வாதி ஆதாரம் கொண்டு வந்தால் (ஏற்கப்படுமா?)

நபி(ஸல்) அவர்கள், உங்களில் சிலர் மற்ற சிலரை விட தன் ஆதாரங்களைச் சமர்ப்பிப்பதில் வாக்கு சாதுர்யம் அதிகமுள்ளவராக இருக்கலாம்' என்று கூறினார்கள்.

"நீதியான ஆதாரம், பொய்யான சத்தியத்தைக் காட்டிலும் (ஏற்றுக் கொள்ள) முன்னுரிமை பெற்றதாகும்' என்று தாவூஸ்(ரஹ்), இப்ராஹீம்(ரஹ்), ஷுரைஹ்(ரஹ்) ஆகியோர் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2680. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் என்னிடம் வழக்குகளைக் கொண்டு வருகிறீர்கள். உங்களில் ஒருவர் மற்றொருவரை விட வாக்கு சாதுர்யம் மிக்கவராக இருக்கக் கூடும். எனவே, எவருடைய (சாதுர்யமான) சொல்லை வைத்து அவரின் சகோதரனின் உரிமையில் சிறிதை (அவருக்குரியது) என்று தீர்ப்பளித்து விடுகிறேனோ அவருக்கு நான் நரக நெருப்பின் ஒரு துண்டைத் தான் துண்டித்துக் கொடுக்கிறேன். எனவே, அவர் அதை எடுத்துக் கொள்ள வேண்டாம்.

## வாக்குறுதியை நிறைவேற்றும்படி கட்டளையிடுவது.

ஹஸன் பஸரீ(ரஹ்) வாக்குறுதியை நிறைவேற்றும்படி கட்டளையிட்டிருக்கிறார்கள்:

(அல்லாஹ் கூறினான்:)

(நபியே!) இஸ்மாயீலைப் பற்றியும் இவ்வேதத்தில் (உள்ளதைக்) குறிப்பிடுவீராக! திண்ணமாக, அவர் வாக்குறுதியை முழுமையாக நிறைவேற்றுபவராக இருந்தார். (திருக்குர்ஆன் 19:54)

(கூஃபா நகர நீதிபதியான) இப்னு அஷ்வஃ(ரஹ்), வாக்குறுதியை நிறைவேற்றுவது அவசியம் என்று தீர்ப்பளித்துள்ளார். இந்தத் தீர்ப்பை அவர், சமுரா இப்னு ஜுன்தப்(ரலி) அவர்களிடமிருந்து (கேட்டுக்) கூறினார்.

மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் தம் மருமகனை (மகள் ஸைனபின் கணவரான அபுல் ஆஸ் இப்னு ரபீஉ (ரலி) என்பாரை) நினைவு கூர்ந்து, அவர் எனக்கு வாக்குறுதியளித்து, அதை எனக்கு நிறைவேற்றித் தந்தார்' என்று கூறினார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரீ) கூறுகிறேன்:

நான் இஸ்ஹாக் இப்னு இப்ராஹீம் ராஹவைஹீ(ரஹ்), இப்னுல் அஷ்வஃ(ரஹ்) அவர்களின் இந்த ஹதீஸை ஆதாரம் காட்டுவதைப் பார்த்திருக்கிறேன்.

ஹதீஸ் 2681. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அபூ சு.:ப்யான் (ரலி) என்னிடம் கூறினார்:

(ரோம மன்னர்) ஹிராக்ளியஸ் என்னைப் பார்த்து, உம்மிடம், அவர் (முஹம்மது - ஸல்) எதையெல்லாம் கட்டளையிடுகிறார்? என்று கேட்டேன். நீர், அவர் தொழுகை தொழும்படியும், வாய்மையையும் நல்லொழுக்கத்தையும் கைக் கொள்ளும் படியும், ஒப்பந்தத்தையும், வாக்குறுதியையும் நிறைவேற்றும்படியும், நம்பி ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொருளைச் சரிவரப் பாதுகாத்துத் திரும்பத் தரும்படியும் கட்டளையிடுகிறார் என்று சொன்னீர். இதுதான் ஓர் இறைத்தூதரின் பண்பாகும்' என்று கூறினார்.

ஹதீஸ் 2682. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நயவஞ்சகனின் அடையாளம் மூன்றாகும்: அவன் பேசும்போது பொய் பேசுவான். அவனிடம் ஒரு பொருள் (அல்லது பணி) நம்பி ஒப்படைக்கப்பட்டால் (அதில்) மோசடி செய்வான். அவன் வாக்களித்தால் மாறு செய்வான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2683. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் இறந்தபோது அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் அலா இப்னு ஹள்ரமீ (ரலி) அவர்களிடமிருந்து (சிறிது) செல்வம் வந்தது. அபூ பக்ர் (ரலி), யாருக்காவது நபியவர்கள் கடன் பாக்கி தர வேண்டியதிருந்தால் அல்லது நபியவர்களின் தரப்பிலிருந்து யாருக்காவது வாக்குறுதி ஏதும் தரப்பட்டிருந்தால் அவர் நம்மிடம் வரட்டும் (அவரின் உரிமையை நாம் நிறைவேற்றுவோம்)' என்று கூறினார்கள். (இந்த அறிவிப்பைக் கேட்டு) நான், எனக்கு இவ்வளவும், இவ்வளவும், இவ்வளவும் தருவதாக நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வாக்களித்திருந்தார்கள்' என்று கூறினேன். -இப்படிக் கூறும்போது, தம் இரண்டு கைகளையும் ஜாபிர் (ரலி) மூன்றுமுறை விரித்துக் காட்டினார்கள்' என்று அறிவிப்பாளர் முஹம்மத் இப்னு அலீ (ரஹ்) கூறினார் - அபூ பக்ர் (ரலி) என் கையில் (முதலில் பொற்காசுகள்) ஐநூறையும், பிறகு ஐநூறையும் பிறகு ஐநூறையும் எண்ணி வைத்தார்கள். 23

ஹதீஸ் 2684. ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) அறிவித்தார்.

என்னிடம்ஹீரா'வாசியான யூதர் ஒருவர், மூஸா (அலை) அவர்கள் இரண்டு தவணைகளில் எதை நிறைவேற்றினார்கள்' என்று கேட்டார். நான், எனக்குத் தெரியாது. நான் அரபுகளில் பேரறிஞரிடம் சென்று அவரிடம் கேட்கும் வரை (காத்திரு)' என்று கூறினேன். அவ்வாறே, நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று கேட்டேன். அவர்கள், அவ்விரண்டில் அதிகமானதை, அவ்விரண்டில் மிக நல்லதை நிறைவேற்றினார்கள். இறைத்தூதர் (எவராயிருப்பினும் அவர்) சொன்னால் செய் (து முடித்துவிடு) வார்' என்று கூறினார்கள்.

## இணைவைப்போர் சாட்சியம் முதலான காரியங்களுக்கு அழைக்கப்படமாட்டார்கள்.

"பிற சமுதாயங்களிடையே ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர் மற்றொரு சமுதாயத்தைச் சேர்ந்தவருக்கு எதிராக சாட்சியம் கூறினால், அது செல்லுபடியாகாது ஏனெனில், அல்லாஹு தஆலா, நாம் அவர்களுக்கிடையே மறுமை நாள் வரை விரோதத்தையும், பொறாமையையும் விதைத்து விட்டோம் (திருக்குர்ஆன் 05:14) என்று கூறுகிறான்' என ஷஅபீ (ரஹ்) கூறினார்.

"வேதக்காரர்களை மெய்ப்பிக்கவும் வேண்டாம் பொய்ப்பிக்கவும் வேண்டாம். நாங்கள் அல்லாஹ்வையும், அவனால் அருளப் பெற்ற வேதங்களையும் நம்புகிறோம் என்று மட்டும் கூறுங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2685. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

முஸ்லிம்களே! இறைவனின் தூதர்(ஸல்) அவர்களின் மீது இறக்கியருளப்பட்ட உங்கள் வேதம் (குர்ஆன்) இறைவனின் செய்திகளில் மிகவும் புதியதாக இருக்க, அதை நீங்கள் (மனிதக் கருத்துகள்) கலக்கப்படாத நிலையில் ஓதிக் கொண்டிருக்க, நீங்கள் வேதக்காரர்களிடம் எப்படி (வேதங்களின் விபரங்களைக்) கேட்கிறீர்கள்? வேதக்காரர்கள் அல்லாஹ் எழுதியதை மாற்றிவிட்டார்கள். தங்கள் கைகளால் இறைவேதத்தை மாற்றிவிட்டு - (திருக்குர்ஆன் விவரிப்பது போல்)அதன் மூலம் சொற்ப விலையை வாங்கிக் கொள்வதற்காக, இது அல்லாஹ்விடமிருந்து வந்தது - என்று கூறினார்கள். (அல்லாஹ்விடமிருந்து) உங்களுக்கு வந்துள்ள அறிவு ஞானம் (இறைவேதமான திருக்குர்ஆன்) உங்களை அவர்களிடம் கேட்பதிலிருந்து தடுக்கவில்லையா? அல்லாஹ்வின் மீதாணையாக! வேதக்காரர்களில் ஒருவரையும் உங்களின் மீது அருளப்பட்டதை (திருக்குர்ஆனைப்) பற்றிக் கேட்பவராக நான் கண்டதேயில்லையே.

என உபைதுல்லாஹ் இப்னு உத்பா(ரஹ்) அறிவித்தார்.

## சிக்கலான விஷயங்களில் குலுக்கல் முறையைக் கையாள்வது.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) இவையனைத்தும் மறைவான செய்திகள். இவற்றை உங்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) (எனும் வேத வெளிப்பாட்டின்) மூலம் நாம் அறிவிக்கிறோம். (இறையில்லத்தின் சேவகர்களான அவர்கள்) தங்களில் யார் மர்யமுக்குப் பொறுப்பாளராவது என்று முடிவு செய்திடத் தங்கள் எழுதுகோல்களை எறிந்து கொண்டிருந்தபோதும், தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டிருந்த போதும் (நீங்கள் அவர்களிடையே இருக்கவில்லை.) (திருக்குர்ஆன் 03:44)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

அவர்கள் தங்கள் எழுதுகோல்களைக் குலுக்கிப் போட்டார்கள் அவர்களின் எழுதுகோல்கள் நீரோட்டத்துடன் சென்றுவிட்டன. ஸகரிய்யா (அலை) அவர்களின் எழுதுகோல் மட்டும் நீரோட்டத்தை மிகைத்து (அதில் அடித்துச் செல்லப்படாமல் நின்று)விட்டது. எனவே, ஸகரிய்யா(அலை) அவர்கள மர்யம் (அலை) அவர்களைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றார்கள். 25

மேலும், அல்லாஹ் கூறினான்:

சீட்டுக் குலுக்கலில் (~னுஸ்) பங்கு பெற்றார் அதில் தோற்றுப் போய்விட்டார். (திருக்குர்ஆன் 37:141)

அபூ ஹுரைரா(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் ஒரு சமுதாயத்தை சத்தியப் பிரமாணம் செய்யும்படி அழைத்தார்கள். அவர்கள் விரைந்து ஒருவரோடொருவர் போட்டியிட்டுக் கொண்டு வந்தார்கள் எனவே, அவர்களில்எவர் (முதலில்) சத்தியம் செய்வது என்று (முடிவு செய்ய) அவர்களிடையே சீட்டுக் குலுக்கிப் பேகுதிபடி நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 2686. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் சட்டங்களில்விட்டுக் கொடுப்பவரும், அதை மீறுபவருக்கும் உதாரணம் ஒரு கூட்டத்தாரின் நிலையாகும். அவர்கள் ஒரு கப்பலில் இடம் பிடிப்பதற்காக சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அவர்களில் சிலருக்குக் கப்பலின் கீழ்த் தளத்திலும் சிலருக்குக் கப்பலின் மேல் தளத்திலும் இடம் கிடைத்தது. கப்பலின் கீழ்த் தளத்தில் இருந்தவர்கள் தண்ணீரை எடுத்துக்

கொண்டு மேல் தளத்தில் இருந்தவர்கள் தண்ணீரை எடுத்துக் கொண்டு மேல் தளத்தில் இருந்தவர்களைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். அதனால் மேல் தளத்திலிருந்தவர்கள் துன்பமடைந்தார்கள். எனவே, கீழ்த் தளத்தில் இருந்த ஒருவன் ஒரு கோடரியை எடுத்து, கப்பலின் கீழ்த் தளத்தைத் துளையிடத் தொடங்கினான். மேல் தளத்திலிருந்தவர்கள் அவனிடம் வந்து,உனக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். அவன்,நீங்கள் என்னால் துன்பத்திற்குள்ளானீர்கள். எனக்குத் தண்ணீர் அவசியம் தேவைப்படுகிறது. (அதனால், கப்பலின் கீழ்த்தளத்தில் துளையிட்டு அதில் வரும் தண்ணீரைப் பயன்படுத்திக் கொள்வேன்)' என்று கூறினான். (துளையிடவிடாமல்) அவனுடைய இரண்டு கைகளையும் அவர்கள் பிடித்தால் அவர்கள் அவனையும் காப்பாற்றுவார்கள் தங்களையும் காப்பறிக் கொள்வார்கள். அவனை அவர்கள் (கப்பலில் துளையிட)விட்டுவிட்டால் அவனையும் அழித்து விடுவார்கள் தங்களையும் அழித்துக் கொள்வார்கள்.

என நுஃமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2687. காரிஜா இப்னு ஸைத் அல் அன்சாரீ(ரஹ்) அறிவித்தார்.

உம்முல் அலா(ரலி) எங்கள் (அன்சாரிப்) பெண்களில் ஒருவராக இருந்தார்கள் நபி(ஸல்) அவர்களிடம் பைஅத் (விசுவாசப் பிரமாணம்) செய்திருந்தார்கள்.

அவர்கள் எனக்குத் தெரிவித்தாவது:முஹாஜிர்களை யாருடைய வீட்டில் தங்க வைப்பது என்று அன்சாரிகள் சீட்டுக் குலுக்கிப் போட்டபோது (எங்கள் வீடு) உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) அவர்களின் பங்காக வந்தது. எனவே, அவர்கள் எங்களிடம் தங்கினார்கள், அவருக்கு நோய் ஏற்பட்டபோது நாங்கள் அவரை கவனித்துக் கொண்டோம். இறுதியில், அவர் மரணித்துவிட்டபோது அவரை அவரின் துணிகளில் வைத்து (கஃபனிட்டு) விட்டோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். (நான் உஸ்மான் இப்னு மழ்வூனை நோக்கி),அபூ சாயிபே! அல்லாஹ் உங்களை கண்ணியப்படுத்தியுள்ளான் என்பதற்கு நான் சாட்சி சொல்கிறேன்' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,அவரை அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ளான் என்பது உனக்கு எப்படித் தெரியும்? என்று கேட்டார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! எனக்குத் தெரியாது? என் தந்தையும், என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்' என்று கூறினேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! உஸ்மானுக்கோ மரணம் வந்துவிட்டது. நான் அவருக்கே நன்மையையே விரும்புகிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதராக இருந்தும்அவரிடம் எப்படி நடந்து கொள்ளப்படும் (மறுமையில் அவரின் நிலை என்னவாகும்?) என்று எனக்குத் தெரியாது' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அதன் பிறகு நான் யாரையும் பாராட்டிக் கூறுவதேயில்லை. நபியவர்கள் இப்படிச் சொன்னது எனக்குக் கவலையளித்தது. பிறகு, நான் உறங்கினேன். அப்போது கனவில் உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) அவர்களுக்கு (சொர்க்கத்தில்) ஓடிக் கொண்டிருக்கும் ஒரு நீரூற்று (கொடுக்கப்பட்டு) இருப்பதாகக் கண்டேன். அல்லாஹ்வின் தூதரிடம் வந்து அந்தக் கனவைத் தெரிவித்தேன். அதற்கு அவர்கள்அது அவரின் (நற்)செயல்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2688. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பயணம் செய்ய விரும்பினால் தம் மனைவிமார்களிடையே சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். அவர்களில் எவருடைய பெயர் வருகிறதோ அவர் நபி(ஸல்) அவர்களுடன் புறப்படுவார். நபி(ஸல்) அவர்கள் (தம்) மனைவிமார்களில் ஒவ்வொருவருக்கும் தம் இரவையும் பகலையும் பங்கிட்டு விட்டிருந்தார்கள். (ஆனால், நபியவர்களின் துணைவியரில் ஒருவரான) சவ்தா பின்த்து ஸம்ஆ(ரலி) மட்டும் தம் பகலையும், இரவையும் எனக்குப்

பரிசளித்துவிட்டார். அல்லாஹ்வின் தூதருடைய திருப்தியை (பெற) விரும்பியே அவர்கள் இப்படிச் செய்தார்கள்.

என உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 2689. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தொழுகை அழைப்பான) பாங்கு சொல்வதிலும் (கூட்டுத் தொழுகையில்) முதல் வரிசையிலும் இருக்கும் நன்மையை மக்கள் அறிவார்களாயின் (அதை அடைந்து கொள்ள) சீட்டுக் குலுக்கிப் போடுவதைத் தவிர வேறு வழியில்லாமல் போகுமானால் நிச்சயம் சீட்டுக் குலுக்கிப் போடுவதைத் தவிர வேறு வழியில்லாமல் போகுமானால் நிச்சயம் சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். தொழுகைக்கு அதன் ஆரம்ப வேளையில் விரைந்து செல்வதில் உள்ள நன்மையை மக்கள் அறிவார்களாயின் அதற்கு முந்திக் கொள்வார்கள். இஷா தொழுகையிலும். ஃபஜ்ருத் தொழுகையிலும் உள்ள நன்மையை அவர்கள் அறிவார்களாயின் அதற்குத் (தரையில்) தவழ்ந்தாவது அவர்கள் வந்து விடுவார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

# அத்தியாயம் 53 சமாதானம்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## மக்களிடையே சமாதானம் செய்து வைத்தல்.

அல்லாஹ் கூறினான்:

மனிதர்களின் பெரும்பாலான இரகசியப் பேச்சுகளில் எவ்வித நன்மையும் இருப்பதில்லை. தான தர்மம் செய்யும்படியோ, நற்செயல் புரியும் படியோ, மக்களிடையே சீர்திருத்தம் செய்யும்படியோ அறிவுரை கூறுபவர்களின் பேச்சுக்களைத் தவிர. (அவற்றில் நன்மை உண்டு.) மேலும், அல்லாஹ்வின் திருப்தியை நாடி இவ்வாறு செய்கிறவருக்கு நாம் விரைவில் மகத்தான பிரதிபலனை வழங்குவோம். (திருக்குர்ஆன் 04: 114)

## மேலும், மக்களுக்கிடையே சமாதானம் செய்து வைப்பதற்காகத் தலைவர் தன் தோழர்களுடன் (சண்டை சச்சரவுள்ள) இடங்களுக்குச் செல்வது.

ஹதீஸ் 2690. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

அம்ர் இப்னு அவ்ஃப் குடும்பத்தைச் சேர்ந்த சிலருக்குள் ஏதோ தகராறு இருந்து வந்தது. எனவே, நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலர் புடைசூழ அவர்களிடையே சமாதானம் செய்து வைப்பதற்காக அவர்களை நோக்கிப் புறப்பட்டார்கள். (நபி(ஸல்) அவர்கள் அங்கு சென்றிருந்த போது) தொழுகை நேரம் வந்துவிட்டது. நபி(ஸல்) அவர்கள் இன்னும் (திரும்பி) வரவில்லை. அப்போது பிலால்(ரலி) பாங்கு சொன்னார்கள். (அதன் பிறகும்) நபி(ஸல்) அவர்கள் வரவில்லை. எனவே, பிலால்(ரலி) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சென்று,நபி(ஸல்) அவர்கள் (வேலையின் காரணத்தால் உடனே வர முடியாமல்) தாமதத்திற்குள்ளாகியிருக்கிறார்கள். தொழுகை நேரம் வந்துவிட்டது. எனவே, தாங்கள் மக்களுக்குத் (தலைமை தாங்கித் தொழுகை நடத்தினர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,சரி, நீங்கள் விரும்பினால் தொழுகை நடத்துகிறேன்' என்று கூறினார்கள். உடனே, பிலால்(ரலி) தொழுகைக்கு இகாமத் சொல்ல, அபூ பக்ர்(ரலி) (தொழுகை நடத்துவதற்காக) முன்னால் சென்றார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் வரிசைகளுக்கிடையே நடந்தவர்களாக வந்து, இறுதியில் முதல் வரிசையில் நின்றார்கள். உடனே, மக்கள் கைதட்டத் தொடங்கி இறுதியில் கைத்தட்டலை அதிகரித்தார்கள். அபூ பக்ர்(ரலி) தொழுகையின்போது திரும்பிப் பார்க்காதவராக இருந்தாக்ள். இருந்தாலும் (மக்கள் கைதட்டும் ஓசையைக் கேட்டு) திரும்பிப் பார்த்தார்கள். தமக்குப் பின்னே, அங்கே நபி(ஸல்) அவர்கள் இருப்பதைக் கண்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களை நோக்கிச் சைகை செய்து, அப்படியே தொழுகை நடத்தும்படி கட்டளையிட்டார்கள். உடனே, அபூ பக்ர்(ரலி) அவர்களை நோக்கிச் சைகை செய்து, அப்படியே தொழுகை நடத்தும்படி கட்டளையிட்டார்கள். உடனே, அபூ பக்ர்(ரலி) தம் கையை உயர்த்தி அல்லாஹ்வைப் புகழ்ந்து, திரும்பாமல் அப்படியே பின்பக்கமாக நகர்ந்து, இறுதியில் வரிசைக்குள் புகுந்து கொண்டார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் முன்னால் சென்று மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். தொழுது முடித்த பின் மக்களை நோக்கி,மக்களே! நீங்கள் தொழுகையில் ஏதேனும் (ஆட்சேபகரமான விஷயத்தைக் காண) நேர்ந்தால் கைதட்டத் தொடங்கி விடுகிறீர்கள். பெண்கள் தான் கைதட்ட வேண்டும். (ஆண்களில்) ஒருவர் தொழுகையில் ஏதேனும் (ஆட்சேபணைக்குரிய விஷயத்தைக்) காண நேர்ந்தால்,

அவர்சுப்ஹானல்லாஹ் - அல்லாஹ்வே தூய்மையானவன் என்று கூறட்டும். ஏனெனில், அதைக் கேட்பவர் எவரும் திரும்பிப் பார்க்காமல் இருக்க மாட்டார்' என்று கூறிவிட்டு,அபூ பக்ரே! நான் உங்களுக்குச் சைகை செய்தபோது நீங்கள் ஏன் மக்களுக்குத் தொழுகை நடத்தவில்லை? என்று கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி),நபி(ஸல்) அவர்களுக்கு முன்னால் தொழுகை நடத்துவதற்கு அபூ குஹாஃபாவின் மகனுக்குத் தகுதியில்லை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2691. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம்,தாங்கள் அப்துல்லாஹ் இப்னு உபையிடம் வந்தால் நன்றாயிருக்கும்' என்று கூறப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அவனிடம் செல்ல ஒரு கழுதையில் ஏறினார்கள். முஸ்லிம்களும் நபி(ஸல்) அவர்களுடன் நடந்து சென்றார்கள். அவர்கள் சென்ற பாதை உவர் நிலமாக இருந்தது. அவனை நபி(ஸல்) அவர்கள் சென்றடைந்தபோது அவன்,தூர விலம்ப் போ! அல்லாஹ்வின் மீதாணையாக! உன் கழுதையின் துர்நாற்றம் என்னைத் துன்புறுத்திவிட்டது' என்று கூறினான். அப்போது அவர்களிடையே இருந்த அன்சாரி (தோழர்) ஒருவர்,அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதருடைய கழுதை உன்னை விட நல்ல வாசனையுடையதாகும்' என்று கூறினார். அப்துல்லாஹ்வுக்காக அவனுடைய சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவர் ஆத்திரமடைந்து அந்த அன்சாரியை ஏசினார். அந்த இருவருக்காகவும் அவரவருடைய நண்பர்கள் கோபமடைந்தார்கள். தங்களுக்கிடையே ஈச்சங் (மிளையின்) குச்சியாலும், கைகளாலும் செருப்புகளாலும் அடித்துக் கொண்டார்கள். அப்போது,மேலும், இறைநம்பிக்கையாளர்களில் இரண்டு குழுவினர் தங்களுக்குள் சண்டையிட நேர்ந்தால் அவர்களிடையே சமாதானம் செய்து வையுங்கள்' (திருக்குர்ஆன் 49:09) என்னும் வசனம் அருளப்பட்டிருக்கிறது என்னும் செய்தி எங்களுக்கு எட்டியது.

## மக்களிடையே சமாதானம் செய்து வைப்பவன் (அதற்காகப் பொய்யே கூறினாலும்) அவன் பொய்யன் அல்லன்.

ஹதீஸ் 2692. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பரஸ்பரம் பிணங்கிய இரண்டு தரப்பாரிடமும்) நல்லதை (புனைந்து) சொல்லி மக்களிடையே சமாதானத்தை ஏற்படுத்துபவன் பொய்யன் அல்லன்.

என உம்மு குல்தூம் பின்த்து உக்பா(ரலி) அறிவித்தார்.

## தலைவர் தம் தோழர்களிடம், நம்மை அழைத்துச் செல்லுங்கள் நாம் (அவர்களிடையே) சமாதானம் செய்து வைப்போம்' என்று சொல்லுதல்.

ஹதீஸ் 2693. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் மீதொருவர் கற்கள் வீசிக் கொள்ளுமளவிற்குகுபா வாசிகள் (தமக்கிடையே) சண்டையிட்டனர். அல்லாஹ்வின் தூதரிடம் இச்செய்தி தெரிவிக்கப்பட்டது. அவர்கள்,நம்மை அழைத்துச் செல்லுங்கள். நாம் அவர்களுக்கிடையே சமாதானம் செய்து வைப்போம்' என்று கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

கணவன் - மனைவி இருவரும் ஒருவருக்கொருவர்விட்டுக் கொடுத்து தங்களுக்கிடையே சமாதானம் செய்து கொள்வதில் தவறேதும் இல்லை. மேலும் சமாதானம் செய்து கொள்வதே நன்மையானதாகும். (திருக்குர்ஆன் 04:128)

ஹதீஸ் 2694. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

“ஒரு பெண், தன் கணவன் (தன்னை வெறுத்து) முகம் சுளிப்பான் என்றோ (தன்னைப்) புறக்கணிப்பான் என்றோ அஞ்சினால் கணவன் மனைவி இருவரும் (ஒருவருக்கொருவர்விட்டுக் கொடுத்து) தங்களுக்கிடையே சமாதானம் செய்து கொள்வதில் தவறில்லை‘ என்னும் (திருக்குர்ஆன் 04:128) திருக்குர்ஆன் வசனத்திற்கு விளக்கம் தரும்போது ஆயிஷா(ரலி),ஒரு மனிதன் தன் மனைவியிடம் தனக்கு மகிழ்வைத் தராத வயோதிகம் முதலியவற்றைக் கண்டு அவளைப் பிரிந்து விட விரும்பும் நிலையில், அவள்என்னை (உன் மணபந்தத்திலேயே) வைத்துக் கொள். (என் உரிமைகளில்) நீ விரும்பியதை எனக்குப் பங்கிட்டுத் தந்து விடு என்று சொல்வதை இது குறிக்கும்‘ என்று கூறிவிட்டு,இருவரும் பரஸ்பரம் ஒத்துப் போய்விட்டார்கள் என்றால் தவறேதுமில்லை‘ என்று கூறினார்கள்.

## (மக்கள் தமக்கிடையே) அநியாயமான முறையில் சமாதான ஒப்பந்தம் செய்தால் அந்த சமாதான ஒப்பந்தம் ரத்து செய்யப்பட வேண்டும்.

ஹதீஸ் 2695 ~ ஹதீஸ் 2696 அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் ஸைத் இப்னு காலித்(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்.

(ஒருமுறை) கிராமவாசி ஒருவர் (மற்றொருவருடன்) வந்து,இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டத்தின்படி தீர்ப்பளியுங்கள்‘ என்று கேட்டார். அவரின் எதிரி எழுந்து நின்று,உண்மை தான் சொன்னார். எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டத்தின்படி தீர்ப்பளியுங்கள்‘ என்று கூறினார். அந்த கிராமவாசி (எதிரியைச் சுட்டிக்காட்டி),என் மகன் இவரிடம் கூலியாளாக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். (அப்போது) இவரின் மனைவியுடன் விபச்சாரம் செய்துவிட்டான். மக்கள் என்னிடம்,உன் மகனுக்குக் கல்லெறி தண்டனை கொடுக்கப்படவேண்டும் என்று தண்டனை கொடுக்கப்பட வேண்டும் என்று கூறினர். நான் என் மகனை அதிலிருந்து காப்பாற்ற ஈட்டுத் தொகையாக நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் தந்தேன். பின்னர் (சட்ட) அறிஞர்களிடம் கேட்டேன். அவர்கள்,உன் மகனுக்கு நூறு கசையடிகளும், ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தும் தண்டனையும் தான் கொடுக்கப்பட வேண்டும் என்று தீர்ப்புக் கூறினார்கள்‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்,உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டத்தின்படியே தீர்ப்பளிக்கிறேன்: அடிமைப் பெண்ணும், ஆடுகளும் உன்னிடம் திருப்பித் தரப்பட வேண்டும் உன் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தும் தண்டனையும் தரப்படவேண்டும்‘ என்று கூறிவிட்டு (அருகிலிருந்த) ஒரு மனிதரைப் பார்த்து,உனைஸே! இவருடைய (கிராமவாசியின் எதிரியுடைய) மனைவியிடம் சென்று (அவள் குற்றத்தை ஒப்புக் கொண்டால்) அவளுக்குக் கல்லெறி தண்டனை கொடுப்பீராக‘ என்று கூறினார்கள். அவ்வாறே, உனைஸ் (என்னும் அந்தத் தோழர்) அப்பெண்ணிடம் சென்று (அவள் குற்றத்தை ஒப்புக் கொண்டதும்) அவளுக்குக் கல்லெறி தண்டனை கொடுத்தார்.

ஹதீஸ் 2697. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நம்முடைய இந்த (மார்க்க) விவகாரத்தில் அதில் இல்லாததைப் புதிதாக எவன் உண்டாக்குகிறானோ அவனுடைய அந்தப் புதுமை நிராகரிக்கப்பட்டதாகும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## சமாதான ஒப்பந்தம் எப்படி எழுதப்பட வேண்டும்? இது இன்னாருடைய மகன் இன்னாரும், இன்னாருடைய மகன் இன்னாரும் செய்த சமாதான ஒப்பந்தம்‘ என்று எழுதப்பட வேண்டும். அந்த இன்னாரின் பெயரை அவரின்

## குலத்தாருடன் அல்லது அவரின் வமிசாவளியுடன் இணைத்து எழுதினாலும் சரி, இணைக்காமல் எழுதினாலும் சரி (செல்லும்.)

ஹதீஸ் 2698. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹுதைபிய்யாக்காரர்களிடம் (மக்காவாசிகளான குறைஷிகளிடம் ஹுதைபிய்யா எனுமிடத்தில்) சமாதான ஒப்பந்தம் செய்தபோது அலீ இப்னு அபீ தாலிப்(ரலி), அவர்களிடையிலான ஒப்பந்தப் பத்திரத்தை எழுதினார்கள். அப்போது,அல்லாஹ்வின் தூதரான முஹம்மத் என்று அவர்கள் எழுத, இணைவைப்பவர்கள்,அல்லாஹ்வின் தூதரான முஹம்மத் என்று எழுதாதீர்கள்' (என்று சொல்லிவிட்டு) முஹம்மத்(ஸல்) அவர்களை நோக்கி),நீர் அல்லாஹ்வின் தூதரக இருந்திருந்தால் நாங்கள் உம்முடன் போரிட்டிருக்க மாட்டோம்' என்று கூறினர். எனவே, நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம்,அதை அழித்து விடுங்கள்' என்று கூறினார்கள். அலீ(ரலி),நான் அதை (ஒருபோதும்) அழிக்கப் போவதில்லை' என்று கூறிவிட்டார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் திருக்கரத்தால் அதை அழித்தார்கள். நானும் என் தோழர்களுடம் (மக்கா நகரில்) மூன்று நாள்கள் தங்குவோம். அதில் நாங்கள்,ஜுலுப்பானுஸ் ஸிலாஹ் உடன் தான் நுழைவோம் என்றும் அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள். மக்கள்,ஜுலுப்பானுஸ் ஸிலாஹ் என்றால் என்ன? என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்டனர். அவர்கள்,உள்ளிருக்கும் ஆயுதங்களுடன் கூடிய உறை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2699. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் துல்கஅதா மாதத்தில் உம்ரா செய்தார்கள். மக்காவாசிகள் அவர்களை மக்காவிற்குள் நுழைய விட மறுத்தார்கள். இறுதியில், நபி(ஸல்) அவர்கள்,மக்காவில் (வரும் ஆண்டில்), தாம் (தம் தோழர்களுடன்) மூன்று நாள்கள் தங்க (அனுமதிக்க) வேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் மக்காவாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள். ஒப்பந்தத்தை அவர்கள் எழுதியபோது,இது அல்லாஹ்வின் தூதரான முஹம்மத் அவர்கள் செய்த சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்துகள்' என்று எழுதினார்கள். உடனே மக்காவாசிகள்,நாங்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டோம் நீங்கள் இறைத்தூதர் தாம் என்று நாங்கள் அறிந்திருப்போமாயின் உங்களை (மக்காவில் நுழையவிடாமல்) தடுத்திருக்க மாட்டோம். ஆயினும், நீங்கள் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது தான்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,நான் அல்லாஹ்வின் தூதராவேன் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது ஆவேன்' என்று பதிலளித்துவிட்டு, அலீ(ரலி) அவர்களை நோக்கி,இறைத்தூதர் என்பதை அழித்து விடுங்கள்' என்று கூறினார்கள். அலீ(ரலி),முடியாது. அல்லாஹ்வின் மீதாணையாக! நான் தங்கள் (அந்தஸ்தைக் குறிக்கும்) பெயரை ஒருபோதும் அழிக்க மாட்டேன்' என்று கூறிவிட்டார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்திரத்தை எடுத்து,இது அப்துல்லாஹ்வின் குமாரர் முஹம்மத் செய்த சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்து(கள் கொண்ட பத்திரம்) ஆகும். (அந்த ஷரத்துகளாவன:) (முஸ்லிம்களின்) ஆயுதம் எதுவும் உறையிலிருந்தபடியே தவிர, மக்காவினுள் நுழையக்கூடாது. மக்காவாசிகளில் எவரும் முஹம்மதைப் பின்தொடர்ந்து வர விரும்பினாலும் கூட, அவரை முஹம்மது தம்முடன் அழைத்துச் செல்லக் கூடாது. மேலும், தம் தோழர்களில் எவரும் மக்காவில் தங்கிவிட விரும்பினால் அவரை முஹம்மது தடுக்கக் கூடாது' என்று எழுதினார்கள். (அடுத்த ஆண்டு) நபி(ஸல்) அவர்கள் மக்காவினுள் நுழைந்தபோது (அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட) தவணையான மூன்று நாள்கள் கழிந்தவுடன் மக்காவாசிகள் அலீ(ரலி) அவர்களிடம் வந்து,உங்கள் தோழரிடம் எங்களை (எங்கள் நகரை)விட்டு வெளியேறும்படி கூறுங்கள். ஏனெனில், தவணைக் காலம் கழிந்துவிட்டது' என்றார்கள்.

நபி(ஸல்) அவர்களும் (மக்காவைவிட்டுப்) புறப்பட்டார்கள். அப்போது (உஹுதுப் போரில் கொல்லப்பட்டிருந்த) ஹம்ஸா(ரலி) அவர்களின் (அனாதை) மகள்,என் சிறிய தந்தையே! என் சிறிய தந்தையே!என்று (கூறிக் கொண்டே) அவர்களைப் பின்தொடர்ந்து வந்தாள். அலீ(ரலி) அச்சிறுமியை (பரிவோடு) எடுத்து அவளுடைய கையைப் பிடித்தார்கள். ஃபாத்திமா(ரலி) அவர்களிடம்,இவளை எடுத்துக் கொள். (இவள்) உன் தந்தையின் சகோதரருடைய மகள். இவளை (இடுப்பில்) சுமந்து கொள்' என்று கூறினார்கள். அச்சிறுமியின் விஷயத்தில் அலீ(ரலி) அவர்களும், ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களும், ஜஅஃபர்(ரலி) அவர்களும் (ஒவ்வொரு வரும்,அவளை நானே வளர்ப்பேன் என்று) ஒருவரோடொருவர் போட்டியிட்(டு சச்சரவிட்டுக் கொண்)டனர். அலீ(ரலி),நானே இவளுக்கு மிகவும் உரிமையுடையவன். ஏனெனில், இவள் என் சிறிய தந்தையின் மகள்' என்று கூறினார்கள். ஜஅஃபர்(ரலி),இவள் என் சிறிய தந்தையின் மகள். மேலும், இவளுடைய சிற்றன்னை என் (மணபந்தத்தின்) கீழ் இருக்கிறாள்' என்று கூறினார்கள். ஸைத்(ரலி),(இவள்) என் சகோதரரின் மகள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் அச்சிறுமியின் சிற்றன்னைக்கு சாதகமாக (சிற்றன்னையின் கணவரான ஜஅஃபர்(ரலி) அவளை வளர்க்கட்டும் என்று) தீர்ப்பளித்தார்கள். மேலும்,சிற்றன்னை தாயின் அந்தஸ்தில் இருக்கிறாள்' என்று கூறினார்கள். அலீ(ரலி) அவர்களை நோக்கி,நீங்கள் என்னைச் சேர்ந்தவர் நான் உங்களைச் சேர்ந்தவன்' என்று (ஆறுதலாகக்) கூறினார்கள். ஜஅஃபர்(ரலி) அவர்களை நோக்கி,நீங்கள் தோற்றத்திலும் குணத்திலும் என்னை ஒத்திருக்கிறீர்கள்' என்றார்கள். மேலும், ஸைத்(ரலி) அவர்களை நோக்கி,நீங்கள் எம் சகோதரர் எம்(மால் விடுதலை செய்யப்பட்ட, எம்முடைய பொறுப்பிலுள்ள) அடிமை (ஊழியர்)' என்று கூறினார்கள்.

## இணைவைப்பவர்களுடன் சமாதானம் செய்து கொள்வது.

இது குறித்து அபூ சுஃப்யான்(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அவ்ஃப் மாலிக் இப்னு(ரலி) கூறினார்.

பிறகு உங்களுக்கும் மஞ்சள் நிறத்தாருக்கும் (ஐரோப்பியர்களான பைஸாந்தியர்களுக்கும்) இடையே சமாதான ஒப்பந்தம் ஏற்படும்.

இது குறித்து ஸஹ்ல் இப்னு ஹுனைஃப்(ரலி) வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது. அந்த அறிவிப்பில் அவர்அபூ ஜந்தலுடைய (நிகழ்ச்சி நடைபெற்ற) நாளில் எங்களை நான்... கண்டேன்' என்று கூறினார். அஸ்மா(ரலி) வழியாகவும், மிஸ்வர்(ரலி) வழியாகவும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (இது பற்றி) அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 2700. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்.

ஹுதைபிய்யா நிகழ்ச்சியின்போது நபி(ஸல்) அவர்கள் இணைவைப்பவர்களுடன் மூன்று நிபந்தனைகளின் பேரில் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள். அவையாவன:

1. நபி(ஸல்) அவர்கள் இணைவைப்பவர்களிடையேயிருந்து தம்மிடம் (மதீனாவுக்கு) வருபவரை (அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டிருந்தாலும் கூட) அவர்களிடமே திருப்பியனுப்பி விட வேண்டும். தங்களிடம் (மக்காவிற்கு) வரும் முஸ்லிம்களை இணைவைப்பவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் திருப்பியனுப்ப மாட்டார்கள்.

2. நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் அடுத்த ஆண்டு (உம்ரா செய்ய) மக்காவினுள் நுழைந்து மூன்று நாள்கள் தங்கலாம்.

3. (ஆனால்,) வாள், வில் போன்ற ஆயுதங்களை உறையிலிட்டுக் கொண்டே உள்ளே நுழைய வேண்டும்.

இந்த சமாதான ஒப்பந்தம் பேசப்பட்டுக் கொண்டிருந்தபோது அபூ ஜந்தல்(ரலி), தம் (கால்) சங்கிலிகளுடன் தத்தித் தத்தி (நடந்து) வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் இணைவைப்பவர்களிடமே அவர்களைத் திருப்பியனுப்பிவிட்டார்கள்.

அபூ அப்தில்லாஹ் புகாரீயாகிய நான் கூறுகிறேன்:

முஅம்மல்(ரஹ்) சுஃப்யான்(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவித்த அறிவிப்பில் அபூ ஜந்தல்(ரலி) அவர்களைக் குறித்த நிகழ்ச்சியைக் கூறவில்லை.

ஹதீஸ் 2701. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உம்ரா செய்ய நாடியவர்களாக (மக்காவை நோக்கிப்) புறப்பட்டார்கள். குறைஷிகளில் இறைமறுப்பாளர்கள் அவர்களை இறையில்லம் கஅபாவிற்குச் செல்லவிடாமல் தடுத்தனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் ஹுதைபிய்யாவில் தம் தியாகப் பிராணியை அறுத்து (பலியிட்டு)விட்டுத் தம் தலையை மழித்தார்கள். மேலும், அவர்களுடன்,வரும் ஆண்டில், நான் (என் தோழர்களுடன்) உம்ரா செய்ய அனுமதிக்கப்பட வேண்டும் வாள்களைத் தவிர வேறு ஆயுதங்களை நாங்கள் எடுத்து வர மாட்டோம் குறைஷிகள் விரும்புகிற வரை மட்டுமே மக்காவில் தங்கியிருப்போம் என்னும் நிபந்தனையின் பேரில் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள். அவர்களிடம் செய்த சமாதான ஒப்பந்தத்தின்படியே (அடுத்த ஆண்டு மக்கா நகரினுள்) நுழைந்தார்கள். அங்கு மூன்று நாள்கள் தங்கி (முடித்து)விட்டபோது, குறைஷிகள் நபி(ஸல்) அவர்களை (மக்காவைவிட்டு) வெளியேறும்படி உத்தரவிட, நபி(ஸல்) அவர்களும் வெளியேறிவிட்டார்கள்.

ஹதீஸ் 2702. ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களும் முஹய்யிஸா இப்னு மஸ்வூத் இப்னி ஸைத்(ரலி) அவர்களும் கைபரை நோக்கிச் சென்றார்கள். கைபர் அப்போது முஸ்லிம்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தது.

## இழப்பீட்டுத் தொகையில் சமாதானம் செய்து கொள்வது.

ஹதீஸ் 2703. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

என் தந்தையின் சகோதரி - ருபய்யிஉ பின்த்து நள்ர், - ஓர் இளம் பெண்ணின் முன்பல்லை உடைத்துவிட்டார். அப்பெண்ணின் குலத்தாரிடம் என் குலத்தார்,இழப்பீட்டுத் தொகையைப் பெறுங்கள் அல்லது (ருபய்யிஉவை) மன்னித்து விடும்படி சொல்லுங்கள்' என்று கோரினார்கள். அவர்கள் (இரண்டில் எதற்குமே ஒப்புக் கொள்ள) மறுத்துவிட்டார்கள். எனவே, எங்கள் குலத்தார் நபி(ஸல்) அவர்களிடம் (விபரம் கூறி, தீர்ப்புப் பெற) வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் (ருபய்யிஉவைப்) பழி வாங்கும்படி அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். அப்போது (என் தந்தையின் சகோதரர்) அனஸ் இப்னு நள்ரு(ரலி),இறைத்தூதர் அவர்களே! (என் சகோதரி) ருபய்யிஉவின் முன்பல் உடைக்கப்படுமா? அப்படி நடக்காது. தங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பி வைத்தவனின் மீது சத்தியமாக! அவளுடைய முன்பல் உடைக்கப்படாது' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,அனஸே! அல்லாஹ்வின் சட்டம் பழிவாங்குவதாகும். (எனவே, அதை வெறுக்கவோ மறுக்கவோ வேண்டாம்)' என்று கூறினார்கள். பிறகு, அந்த (இளம் பெண்ணின்) குலத்தார் (ஈட்டுத் தொகை பெற) ஒப்புக் கொண்டு (ருபய்யிஉவை) மன்னித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு (எதையேனும் கூறி) விடுவார்களாயின் அதை அல்லாஹ் நிறைவேற்றி விடுகிறான்' என்றார்கள்.

அனஸ்(ரலி) வழியாக அறிவிக்கப்படும் மற்றோர் அறிவிப்பில், (அந்த வாலிபப் பெண்ணின்) குலத்தார் (பழிவாங்காமல்விட்டுவிட) ஒப்புக் கொண்டு பரிகாரத் தொகையை ஏற்றார்கள் என்று வந்துள்ளது.

## நபி(ஸல்) அவர்கள் (தம் பேரர்) ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்களைக் குறித்து, இவர் என் புதல்வர் (கண்ணிய மிக்க) தலைவர். இவரைக் கொண்டு இரண்டு பெரும் குழுவினருக்கிடையே அல்லாஹ் சமாதானம் செய்து வைக்க விரும்புகிறான்' என்று கூறிய தகவலும், விசுவாசிகளில் இரண்டு கூட்டத்தார் போரிட்டால் அவர்களிடையே சமாதானம் செய்து வையுங்கள் என்னும் (திருக்குர்ஆன் 49:09) இறைவசனமும்.

ஹதீஸ் 2704. ஹஸன் பஸரீ(ரஹ்) அறிவித்தார்.

8அலீ(ரலி) அவர்களின் மகனான ஹஸன்(ரலி), முஆவியா(ரலி) அவர்களை மலைகளைப் போன்ற (பிரம்மாண்டமான) படையணிகளுடன் எதிர்கொண்டார்கள். (அவற்றைக் கண்ட முஆவியா(ரலி) அவர்களின் ஆலோசகர்) அம்ர் இப்னு ஆஸ்(ரலி), இவற்றில் உள்ள (போரிடுவதிலும், வீரத்திலும்) சமபலம் வாய்ந்தவர்களை நீங்கள் கொன்று விடாதவரை இந்தப் படைகள் பின்வாங்கிச் செல்லாது என்று கருதுகிறேன்' என்று கூறினார்கள். அவருக்கு முஆவியா(ரலி) அல்லாஹ்வின் மீதாணையாக! அவ்விருவரில் முஆவியாவே, சிறந்தவராக இருந்தார்..!அம்ரே! இவர்கள் அவர்களையும் அவர்கள் இவர்களையும் கொன்று விடுவார்களாயின் மக்களின் நிர்வாகத்திற்குப் பொறுப்பேற்க என்னிடம் வேறு யார் இருப்பார்கள்? (என் குடி) மக்களின் பெண்களைப் பாதுகாக்க என்னிடம் (வேறு) யார் இருப்பார்கள்? அவர்களின் சொத்துகளைப் பாதுகாக்க என்னிடம் (வேறு) யார் தான் இருப்பார்கள்? என்று பதிலளித்தார்கள். எனவே, ஹஸன்(ரலி) அவர்களிடம் குறைஷிகளில் பனு அப்தி ஷம்ஸ் கிளையாரைச் சேர்ந்த அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா(ரலி) அவர்களையும், அப்துல்லாஹ் இப்னு ஆமிர் இப்னி குரைஸ்(ரலி) அவர்களையும் அனுப்பி, நீங்கள் இருவரும் இந்த மனிதரிடம் சென்று விபரத்தை எடுத்துரைத்துப் பேசி, அவரிடம் (சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளும்படி) கோருங்கள்' என்று கூற, அவ்விருவரும் (அவ்வாறே) ஹஸன்(ரலி) அவர்களிடம் சென்று, அவர்களின் அறைக்குள் நுழைந்து பேசினார்கள் ஹஸன்(ரலி) அவர்களிடம் (முஅவியா(ரலி) அவர்களின் தூதை எடுத்துச்) சொல்லி (அமைதி ஒப்பந்தம் செய்து கொள்ள முன்வரும்படி) கோரினார்கள். அதற்கு அவ்விருவரிடமும் ஹஸன்(ரலி), நாங்கள் அப்துல் முத்தலிபின் மக்கள் இந்த செல்வத்தை (எங்கள் தலைமைத்துவத்தின் காரணத்தால்) பெற்றிருக்கிறோம். (அதை எங்கள் குடிமக்கள், படைவீரர்கள் மற்றும் ஆதரவாளர்களிடையே செலவு செய்து வருகிறோம்.) இந்தச் சமுதாயமோ தன் இரத்தத்தை சிந்திப் பழம்விட்டது' என்று கூறினார்கள். இதற்கு அவ்விருவரும், முஆவியா(ரலி) உங்களுக்கு இவ்வளவு (மானியம்) தருவதாகக் கூறுகிறார்கள் மேலும் (சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளும்படி) உங்களிடம் கோருகிறார்கள்' என்று கூறினர். அதற்கு ஹஸன்(ரலி), இந்த விஷயத்தில் எனக்குப் பொறுப்பு யார்? என்று கேட்க, அவ்விருவரும்இதில் உங்களுக்கு நாங்கள் பொறுப்பு' என்று கூறினர்.

ஹஸன்(ரலி) கேட்ட ஒவ்வொரு கேள்விக்கும் அவர்கள், நாங்கள் உங்களிடம் இதற்குப் பொறுப்பேற்கிறோம்' என்றே கூறினார்கள். இறுதியாக, ஹஸன்(ரலி), முஆவியா(ரலி) அவர்களுடன் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள். மேலும், (ஒரு முறை) இறைத்தூதர் மிம்பர் மீதிருக்க, அவர்களின் ஒரு பக்கத்தில் ஹஸன் இப்னு அலீ(ரலி) அமர்ந்திருக்க, நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை மக்களை நோக்கியும், மற்றொரு முறை ஹஸன்(ரலி) அவர்களை

நோக்கியும் (உரை நிகழ்த்திய வண்ணம்),இந்த என்னுடைய புதல்வர் (கண்ணியத்திற்குரிய) தலைவராவார். முஸ்லிம்களின் இரண்டு பெரும் கூட்டத்தாரிடையே இவரின் மூலமாக அல்லாஹ் சமாதானம் செய்து வைக்க விரும்புகிறான்‘ என்று கூறிக் கொண்டிருந்ததை பார்த்தேன்‘ என்று அபூ பக்ரா(ரலி) கூறியதை கேட்டேன்.

## (தகராறு செய்து கொள்ளும் இருவரை) சமாதானம் செய்து கொள்ளும்படி ஆட்சித் தலைவர் குறிப்பால் உணர்த்தலாமா?

ஹதீஸ் 2705. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் வீட்டின்) வாசலருகே (இருவர்) சச்சரவிட்டுக் கொள்ளும் சத்தத்தைக் கேட்டார்கள். சச்சரவிட்டுக் கொண்டிருந்தவர்களின் குரல்கள் உயர்ந்தன. ஒருவர் மற்றவரிடம் ஏதோ ஒரு (கடன்) விஷயத்தில் சற்றுக் குறைத்து வாங்கிச் செல்லும்படியும், மென்மையாக நடந்து கொள்ளும்படியும் கேட்டுக் கொண்டிருந்தார். அதற்கு மற்றவர்,அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவ்வாறு செய்ய மாட்டேன்‘ என்று கூறிக் கொண்டிருந்தார். அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) புறப்பட்டு வந்து,நன்மை(யான செயலைச்) செய்ய மாட்டேன் என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறியவர் எங்கே? என்று கேட்டார்கள். அந்த மனிதர்,நானே இறைத்தூதர் அவர்களே! (நான் என் சத்தியத்தைத் திரும்பப் பெற்றக் கொள்கிறேன்) அவர் விரும்பியது எதுவானாலும் (அது) அவருக்குக் கிடைக்கும்‘ என்று கூறினார்.

ஹதீஸ் 2706. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

எனக்கு அப்துல்லாஹ் இப்னு அபீ ஹத்ரத் அல் அஸ்லமீ(ரலி) சிறிது பணம் தர வேண்டியிருந்தது. எனவே, அவரை நான் சந்தித்து (கடனை அடைக்கச் சொல்லி) நச்சரித்தேன். (எங்களிடையே வாக்குவாதம் ஏற்பட்டு) எங்கள் குரல்கள் உயர்ந்தன. நபி(ஸல்) அவர்கள் எங்களைக் கடந்து சென்றார்கள். அப்போது,கஅபே!என்று கூறிபாதி (‘பாதி கடனைத் தள்ளுபடி செய்து விடு‘) என்பது போல் தம் கரத்தால் சைகை செய்தார்கள். அவ்வாறே பாதியைப் பெற்றுக் கொண்டு, பாதியைத் தள்ளுபடி செய்து விட்டேன்.

## மக்களுக்கிடையே சமாதானம் செய்து வைத்து அவர்களிடையே நீதி செலுத்துவதின் சிறப்பு.

ஹதீஸ் 2707. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்கள், தம் ஒவ்வொரு மூட்டு எலும்புக்காகவும் தர்மம் செய்வது கடமையாகும். சூரியன் உதிக்கிற ஒவ்வொரு நாளிலும் மக்களிடையே நீதி செலுத்துவதும் ஒரு தர்மமே.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சமாதானமாகப் போகுமாறு ஆட்சித் தலைவர் குறிப்பால் உணர்த்தியும் கூட அதை (ஒரு பிரஜை) ஏற்க மறுத்தால், தெளிவான ஆணையை அவர் பிறப்பிப்பார்.

ஹதீஸ் 2708. ஸுபைர்(ரலி) அறிவித்தார்.

எனக்கு பத்ருப் போரில் பங்கெடுத்த அன்சாரி ஒருவருடன் (மதீனாவின்)ஹர்ரா எனும் (கருங்கல் பூமியிலுள்ள) ஒரு கால்வாயின் விஷயத்தில் தகராறு ஏற்பட்டது. நாங்கள் இருவரும் அந்தக் கால்வாய் மூலமாகத் தான் எங்கள் தோட்டங்களுக்கு நீர்பாய்ச்சி வந்தோம். நபியவர்களிடம்

வழக்கில் தீர்ப்புக் கேட்டு சென்றபோது நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,ஸுபைரே! (முதலில்) நீங்கள் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டு, பிறகு உங்கள் அண்டையிலிருப்பவருக்கு அதை அனுப்பி விடுங்கள்‘ என்று கூறினார்கள். இதைக் கேட்ட அந்த அன்சாரி கோபமடைந்து,இறைத்தூதர் அவர்களே! உங்கள் அத்தையின் மகன் என்பதாலா (இப்படித் தீர்ப்புக் கூறினீர்கள்? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால் சிவந்து) நிறம் மாறியது. பிறகு வரப்புகளைச் சென்றடையும் வரை தடுத்து நிறுத்திக் கொள்ளுங்கள்‘ என்று கூறினார்கள். இவ்வாறு ஸுபைர்(ரலி) அவர்களுக்கு, அன்னாருடைய முழு உரிமையையும் இறைத்தூதர் வழங்கினார்கள்.

“இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதற்கு முன் ஸுபைர்(ரலி) அவர்களுக்கும் அந்த அன்சாரிக்கும் தாராளமாகப் பயன் தரும் விதத்தில் ஸுபைர்(ரலி) அவர்களிடம் யோசனை தெரிவித்தார்கள். ஆனால், அந்த அன்சாரி அல்லாஹ்வின் தூதருக்குக் கோபமூட்டியபோது ஸுபைர்(ரலி) அவர்களுக்கு அவர்களின் உரிமையை தெளிவான ஆணையின் வாயிலாக முழுமையாக வழங்கிவிட்டார்கள்‘ என்று அறிவிப்பாளர் இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்.

“(நபியே!) உங்களுடைய இறைவன் மீது ஆணையாக! அவர்கள் தமக்குள் ஏற்படும் சச்சரவுகளில் உங்களை நீதிபதியாக ஏற்று, நீங்கள் வழங்கும் தீர்ப்பை மனத்தில் எந்த அதிருப்தியும் கொள்ளாமல் அங்கிகரித்து, முற்றிலும் கட்டுப்பட்டு நடக்காத வரையில், அவர்கள் உண்மையான விசுவாசிகளாய் ஆக மாட்டார்கள் என்னும் (திருக்குர்ஆன் 04:65) வசனம் இது தொடர்பாகவே இறங்கியதாக நான் நினைக்கிறேன்‘ என்று ஸுபைர்(ரலி) கூறினார்.

## கடன்காரர்களுக்கும் (கடனாளியின்) வாரிசுகளுக்கும் இடையே சமாதானம் செய்து வைப்பதும், தோராயமாகக் கொடுத்து கடனைச் சரி செய்வதும்.

“இரண்டு பங்காளிகளுக்கிடையே சச்சரவு வந்து, ஒருவர் இருப்பையும் மற்றொருவர் வர வேண்டிய கடனையும் எடுத்துக் கொண்டால் தவறில்லை பிறகு இவரின் இருப்புக்கோ, அவரின் கடனுக்கோ ஆபத்து ஏற்படுமாயின் அடுத்தவரை அணுகக் கூடாது‘ என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2709. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

என் தந்தை தன் மீது கடன் (சுமை) இருந்த நிலையில் இறந்துவிட்டார். எனவே, நான் அவருக்குக் கடன் தந்தவர்களிடம் என் தந்தை மீதிருந்த கடனுக்கு பதிலாக பேரீச்சங் கனிகளை எடுத்துக் கொள்ளும்படி சொன்னேன். அதற்கு (உடன்பட) அவர்கள் மறுத்துவிட்டார்கள். அப்படி எடுத்துக் கொள்வதால் (தம் உரிமை முழுமையாக நிறைவேறாது என்று அவர்கள் கருதினார்கள். எனவே, நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்து அதைக் கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,நீ அதைப் பறித்துக் களத்தில் (காய) வைக்கும்போது அல்லாஹ்வின் தூதரிடம் (என்னிடம்) தெரிவி‘ என்று கூறினார்கள். (பிறகு நான் அவ்வாறே தெரிவிக்க) நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களுடனும் உமர்(ரலி) அவர்களுடனும் வருகை தந்தார்கள். அந்தப் பழத்தின் அருகே அமர்ந்து (இறைவனின் அருளால் அதில்) பெருக்கம் ஏற்படுவதற்காகப் பிரார்த்தனை செய்தார்கள். பிறகு,உன் (தந்தையின்) கடன்காரர்களை அழைத்து அவர்களுக்கு நிறைவாகக் கொடு‘ என்று கூறினார்கள். என் தந்தை எவருக்கெல்லாம் கடனைத் திருப்பித் தரவேண்டியிருந்தோ அவர்களில் ஒருவரையும் விடாமல் கடனை அடைத்து விட்டேன். மேலும், பதின்மூன்று வஸக்கு பேரீச்சங் கனிகள் எஞ்சிவிட்டன. ஏழு வஸக்குகள்அஜ்வா (என்னும் மதீனாவின் உயர் ரகப்) பேரீச்சம் பழமும், (அஜ்வா மற்றும் அது போன்றவையல்லாத) மற்றவகைப் பேரீச்சம் பழங்களும், அல்லது ஏழு வஸக்குகள் லவ்னும் ஆறு வஸக்குகள் அஜ்வாவும் மீதமாம்விட்டன. (அன்று) நான் அல்லாஹ்வின் தூதருடன் மக்ரிப்

தொழுகையைத் தொழுதேன் இந்த விஷயத்தை அவர்களிடம் கூறினேன். அதற்கு அவர்கள் சிரித்துவிட்டு,அபூ பக்ரிடமும் உமரிடமும் சென்று தெரிவி' என்று கூறினார்கள். (நானும் அவ்வாறே தெரிவித்தேன்.) அதற்கு அவர்கள் இருவரும்,இறைத்தூதர், பெருக்கத்திற்காகப் பிரார்த்தனை செய்த நேரத்திலேயே இதுதான் நடக்கும் என்று நாங்கள் அறிந்து கொண்டோம்' என்று கூறினார்கள். ஜுபிர்(ரலி) அவர்களிடமிருந்து வஹ்ப்(ரஹ்) வழியாக ஹிஷாம்(ரஹ்) அறிவிக்கும் அறிவிப்பில்,அல்லாஹ்வின் தூதருடன் மக்ரிபு தொழுகையைத் தொழுதேன்' என்பதற்கு பதில்,அஸர் தொழுகையைத் தொழுதேன்' என்று வந்துள்ளது. மேலும், அதில் அபூ பக்ர்(ரலி) அவர்களைக் குறிப்பிடவில்லை.நபி(ஸல்) அவர்கள் சிரித்தார்கள் என்பதும் அதில் இல்லை. மேலும்,என் தந்தை, தன் மீது முப்பது வஸக்குகள் கடனை வைத்துவிட்டுச் சென்றிருந்தார் என்றும் வந்துள்ளது. ஜாபிர்(ரலி) அவர்களிடமிருந்து வஹ்ப்(ரஹ்) வழியாக இப்னு இஸ்ஹாக்(ரஹ்) அறிவிக்கும் ஓர் அறிவிப்பில்,நான் அல்லாஹ்வின் தூதருடன் லுஹர் தொகையைத் தொழுதேன்' என்று வந்துள்ளது.

## வரவேண்டிய கடனைக் கொண்டும் இருப்பைக் கொண்டும் சமாதானம் செய்து கொள்வது.

ஹதீஸ் 2710. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ்வின் தூதருடைய காலத்தில் எனக்கு இப்னு அபீ ஹத்ரத்(ரலி) தர வேண்டியிருந்த ஒரு கடனை (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் வைத்துத் திருப்பிச் செலுத்தும்படி கேட்டேன். (எங்கள்) இருவரின் குரல்களும் நபி(ஸல்) அவர்கள் தம் வீட்டிலிருந்தபடியே அதைக் கேட்கும் அளவிற்கு உயர்ந்தன. எனவே, நபி(ஸல்) அவர்கள் எங்களிருவரையும் காணப் புறப்பட்டு வந்தார்கள். தம் அறையின் திரையை விலக்கி,கஅபே!என்றழைத்தார்கள். நான்,இதோ வந்துவிட்டேன், இறைத்தூதர் அவர்களே!என்று பதிலளித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்பாதிக் கடனைத் தள்ளுபடி செய்துவிடு என்று தம் கரத்தால் சைகை காட்டினார்கள்.அவ்வாறே செய்து விட்டேன், இறைத்தூதர் அவர்களே!என்று நான் கூற, இப்னு அபீ ஹத்ரத்(ரலி) அவர்களைப் பார்த்து,நீங்கள் எழுந்து சென்று அவரின் கடனை அடையுங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

# அத்தியாயம் 54 (ஒப்பந்தங்களில் இடப்படும்) நிபந்தனைகள்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## இஸ்லாத்தை ஏற்பதிலும் ஒப்பந்தங்கள் முதலான சட்டங்களிலும் விதிக்கப்படுகிற நிபந்தனைகள்.

ஹதீஸ் 2711 , ஹதீஸ் 2712. மர்வான் இப்னி ஹகம் அவர்களும் மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அவர்களும் நபித்தோழர்களிடமிருந்து அறிவித்ததாவது:

சுஹைல் இப்னு அம்ர்(ரலி) 1 அந்த (ஹுதைபிய்யா உடன்படிக்கையின்) நாளில் ஒப்பந்தப் பத்திரம் எழுதியபோது அவர் நபி(ஸல்) அவர்களுக்கு விதித்த நிபந்தனைகளில், எங்களிலிருந்து (மக்காவாசிகளிலிருந்து) ஒருவர் உம்மிடம் வந்தால் - அவர் உம்முடைய மார்க்கத்திலிருப்பவராயினும் சரி - அவரைத் திருப்பியனுப்பி, எங்களுக்கும் அவருக்குமிடையே நீர் ஒரு தடையாக இராமல் எங்களிடம் (முழுமையாக) அவரை ஒப்படைத்து விட வேண்டும் என்பதும் ஒன்றா இருந்தது. இதை முஸ்லிம்கள் வெறுத்தார்கள் இதைக் கண்டு எரிச்சலடைந்தார்கள். ஆனால், இந்த நிபந்தனையை ஏற்றாலன்றி (சமாதான ஒப்பந்தத்தை எழுத) முடியாது என்று சுஹைல் (தீர்மானமாக) மறுத்துவிட்டார். நபி(ஸல்) அவர்கள் அதன் படியே ஒப்பந்தத்தை அவரிடம் எழுதி வாங்கினார்கள். எனவே, அன்றே அபூ ஜந்தல்(ரலி) அவர்களை அவரின் தந்தை சுஹைல் இப்னு அம்ரிடம் திருப்பியனுப்பிவிட்டார்கள். அந்த (ஒப்பந்தத்தின்) கால கட்டத்தில் தம்மிடம் (அபயம் தேடி) ஆண்களில் எவர் வந்தாலும் அவரைத் திருப்பியனுப்பாமல் நபி(ஸல்) அவர்கள் இருந்ததில்லை அவர் முஸ்லிமாக இருந்தாலும் சரி. (அவரையும் மக்காவிற்குத் திருப்பியனுப்பி விடுவார்கள்.) முஸ்லிம் பெண்கள் சிலர் ஹிஜ்ரத் செய்து (மதீனா) வந்தார்கள். அன்று (நிராகரிப்பாளர்களின் தலைவன்) உக்பா இப்னு அபீ முஐத்தின் மகள் உம்மு குல்தூம்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடம் (அபயம் தேடி) வந்த பெண்களில் ஒருவராவார். அப்போது அவர்கள் வாலிபப் பெண்ணாக இருந்தார்கள். எனவே, அவரின் வீட்டார் நபி(ஸல்) அவர்களிடம் அவரைத் தங்களிடம் திருப்பியனுப்பக் கோரினார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணை அவர்களிடம் திருப்பியனுப்பவில்லை. அவர்களின் விஷயத்தில் அல்லாஹ், விசுவாசிகளான பெண்கள் ஹிஜ்ரத் செய்து உங்களிடம் வந்தால் (அவர்கள் விசுவாசிகள் தாம் என்று) யோசித்துப் பாருங்கள். அவர்களின் இறை நம்பிக்கையை(க் குறித்து) அல்லாஹ்வே நன்கறிந்தவன் ஆவார். அவர்கள் இறை நம்பிக்கையுடையவர்கள் தாம் என்று நீங்கள் கருதினால் அவர்களை நிராகரிப்பவர்களிடம் திருப்பியனுப்பாதீர்கள். அப்பெண்கள் அவர்களுக்கு (நிராகரிப்பாளர்களான அந்த ஆண்களுக்கு) அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர் அந்த (நிராகரிப்பாளர்களான) ஆண்களும் அப்பெண்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்களல்லர்' (திருக்குர்ஆன் 60:10) என்னும் வசனத்தை அருளியிருந்ததே (அவர்களைத் திருப்பியனுப்பாததற்குக்) காரணமாகும்.

ஹதீஸ் 2713. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்த (மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து வந்த) பெண்களை (திருக்குர்ஆன் 60:10-12) இறை வசனத்தின் கட்டளைப்படி சோதித்து வந்தார்கள்.

இந்த (இறைவசனத்திலுள்ள) நிபந்தனையை அப்பெண்களில் ஏற்றுக் கொள்கிறவரிடம், நான் உன் விசுவாசப் பிரமாணத்தை ஏற்றுக் கொண்டேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள்

கூறுவார்கள். இப்படி, அப்பெண்ணிடம் பேசத் தான் செய்வார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்களின் கரம் விசுவாசப் பிரமாணம் வாங்கும்போது எந்தப் பெண்ணின் கையையும் தொட்டதில்லை. பெண்களிடம் அவர்கள் வாய்ச் சொல் வழியாகவே தவிர விசுவாசப் பிரமாணம் வாங்கியதில்லை.

ஹதீஸ் 2714. ஜரீர்(ரலி) அறிவித்தார்.

நான் அல்லாஹ்வின் தூதரிடம் விசுவாசப் பிரமாணம் செய்தேன். அப்போது அவர்கள், இறைவனுக்குக் கீழ்ப்படிந்து வாழும் (முஸ்லிமான) ஒவ்வொருவருக்கும் நான் நலம் நாட வேண்டும் என்று எனக்கு நிபந்தனை விதித்தார்கள்.

ஹதீஸ் 2715. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்.

'தொழுகையை நிலை நாட்ட வேண்டும்ஸகாத் கொடுக்க வேண்டும் எல்லா முஸ்லிம்களுக்கும் நலம் நாட வேண்டும் என்ற நிபந்தனைகளை ஏற்று அல்லாஹ்வின் தூதரிடம் நான் விசுவாசப் பிரமாணம் செய்தேன்.

## மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட பேரீச்சந் தோப்பை ஒருவர் விற்றால்...

ஹதீஸ் 2716. மகரந்தச் சேர்க்கை செய்யப்பட்ட ஒரு பேரீச்சந் தோப்பை வாங்கியவர் (விளைச்சல் எனக்கே உரியது என்ற) நிபந்தனையிடாதிருந்தால், விற்கிறவருக்கே அதனுடைய விளைச்சல் உரியதாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்' என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## வியாபாரங்களில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

ஹதீஸ் 2717 (அடிமைப் பெண்ணான) பரீரா, தன்னுடைய விடுதலைப் பத்திரத்தின் விஷயத்தில் (அதில் குறிப்பிட்டுள்ள தொகையைக் கொடுப்பதற்காக) உதவி கேட்டு என்னிடம் வந்தார். அதுவரை தன் விடுதலைப் பத்திரத்தில் எழுதப்பட்டிருந்த தொகையில் சிறிதையும் அவர் செலுத்தியிருக்கவில்லை. எனவே, நான் அவரிடம்,நீ உன் எஜமானார்களிடம் திரும்பிச் சென்றுஉன்னுடைய விடுதலைப் பத்திரத்தில் குறிப்பிட்டுள்ள தொகையை உன் சார்பாக நான் செலுத்தி விடுவதையும் உன் வாரிசுரிமை எனக்கே உரியதாய் ஆம் விடுவதையும் அவர்கள் விரும்பினால் நான் அவ்வாறே செய்கிறேன் என்று சொல் எனக் கூறினேன். பரீராவும் இதை அவர்களிடம் சொல்ல அவர்கள் அதை (ஏற்க) மறுத்துவிட்டனர். மேலும்,ஆயிஷா, மறுத்துவிட்டனர். மேலும்,ஆயிஷா உன்னை விடுதலை செய்வதின் வாயிலாக (அல்லாஹ்விடம்) நன்மையை நாடியிருந்தால் அவ்வாறே செய்யட்டும். ஆனால், உன்னுடைய வாரிசுரிமை எங்களுக்கே உரியதாக இருக்கும்' என்று கூறிவிட்டனர். அதை ஆயிஷா(ரலி) அல்லாஹ்வின் தூதரிடம் சொல்ல அவர்கள், ஆயிஷா(ரலி) அவர்களிடம்,நீ (பரீராவை) வாங்கி விடுதலை செய்து விடு. ஏனெனில், விடுதலை செய்பவருக்கே வாரிசுரிமை உரியதாகும்' என்று கூறினார்கள்.

## வாகனத்தை விற்பவர் அதில் குறிப்பிட்ட தூரம் வரை சவாரி செய்து கொள்ள அனுமதி கேட்டு நிபந்தனையிட்டால் அது செல்லும்.

ஹதீஸ் 2718. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

(ஒரு போரிலிருந்து திரும்புகையில்) நான் களைப்படைந்துவிட்ட என்னுடைய ஒட்டகம் ஒன்றில் சென்று கொண்டிருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் சென்று அதை அடித்தார்கள். மேலும், அதற்காக பிரார்த்தித்தார்கள். உடனே, அது இதற்கு முன் இதுபோல் எப்போதும்

நடந்ததில்லை என்னும் அளவிற்கு வேகமாக நடக்கத் தொடங்கியது. பிறகு நபி(ஸல்) அவர்கள்,இதை எனக்கு ஓர் ஊக்கியாவுக்கு நீங்கள் விற்று விடுங்கள்' என்று கேட்டார்கள். அவ்வாறே, என் வீட்டாரிடம் போய்ச் சேரும் வரை அதில் நான் சவாரி செய்வதற்கு அனுமதிக்க வேண்டும் என்ற நிபந்தனையை மட்டும் இட்டுவிட்டு அதை அவர்களுக்கு நான் விற்றுவிட்டேன். (அவர்களும் என் நிபந்தனையை ஒப்புக் கொண்டார்கள்.) நாங்கள் (மதீனாவுக்கு) வந்து சேர்ந்தபோது அந்த ஒட்டகத்தை நபி(ஸல்) அவர்களிடம் (ஒப்படைக்கக்) கொண்டு சென்றேன். அவர்கள் அதன் விலையை எனக்குக் கொடுத்தார்கள். பிறகு நான் திரும்பிச் செல்ல, எனக்குப் பின்னாலேயே நபி(ஸல்) அவர்கள் ஆளனுப்பி (என்னை மீண்டும் வரவழைத்து),உன் உட்டகத்தை நான் எடுத்துக் கொள்ளப் போவதில்லை. உன்னுடைய அந்த ஒட்டகத்தை நீயே எடுத்துக் கொள். அது உன்னுடைய செல்வம்' என்று கூறினார்கள்.

ஜாபிர்(ரலி)தாம் அதன் முதுகில் மதீனா வரை சவாரி செய்துவர அனுமதிக்க வேண்டும் என்று நிபந்தனையிட்டதையும், நபி(ஸல்) அவர்கள் அதை அனுமதித்ததையும், எவ்வளவு தொகைக்கு நபி(ஸல்) அதை வாங்கினார்கள் என்பதையும் குறிப்பிட்டு சிற்சில வார்த்தை வேறுபாடுகளுடன் பல அறிவிப்புகள் வந்திருப்பதை இமாம் புகாரி(ரஹ்) இங்கு பதிவு செய்துள்ளார்கள்.

## கொடுக்கல் வாங்கலில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

ஹதீஸ் 2719. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகள் நபி(ஸல்) அவர்களிடம்,(எங்கள்) பேரீச்ச மரங்களை எங்களுக்கும் எங்கள் (முஹாஜிர்) சகோதரர்களுக்குமிடையே பங்கிட்டு விடுங்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்வேண்டாம்' என்று கூறவே, அன்சாரிகள்,நீங்கள் எங்களுக்கு பதிலாக (எங்கள் நிலத்தில்) உழையுங்கள் நாங்கள் விளைச்சலை உங்களுடன் பங்கிட்டுக் கொள்கிறோம்' என்று (முஹாஜிர்களிடம்) கூறினார்கள். முஹாஜிர்களைசெவியேற்றோம் கட்டுப்பட்டோம் (உங்கள் நிபந்தனையை ஏற்றுக் கொண்டோம்)' என்றார்கள்.

ஹதீஸ் 2720. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் பிரதேசத்து நிலங்களை (அங்கிருந்த) யூதர்களுக்க,அதில் அவர்கள் உழைத்து விவசாயம் செய்ய வேண்டும் என்றும்,அதிலிருந்து வரும் விளைச்சலில் பாதி அவர்களுக்குரியது என்றும் நிபந்தனையிட்டுக் கொடுத்துவிட்டார்கள்.

## திருமண ஒப்பந்தத்தின்போது மஹ்ரை நிர்ணயிப்பதில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

"நிபந்தனைகள் விதிக்கப்படும்போது உரிமைகள் துண்டிக்கப்படுகின்றன. நீ எதை நிபந்தனையிட்டாயோ அது உனக்குண்டு' என்று உமர்(ரலி) கூறினார்.

மிஸ்வர்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் மருமகன் ஒருவரை (அபுல் ஆஸ்(ரலி) அவர்களை) நினைவு கூர்ந்து, (அவரின் மாமனாரான) தன்(னுடன் அவர் வைத்திருந்த) உறவு முறையில் நல்லவிதமாக நடந்ததாக மிகவும் புகழ்ந்துரைத்தார்கள்.அவர் என்னிடம் பேசியபோது உண்மையே பேசினார். எனக்கு வாக்களித்தபோது, அதை எனக்க நிறைவேற்றித் தந்தார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2721. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகளில் முதன்மையானது யாதெனில், உங்கள் மனைவியரை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்களாக ஆக்கிக் கொள்வதற்காக நீங்கள் தரும்மஹர் தான்.

என உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

## நிலக் குத்தகையில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

ஹதீஸ் 2722. ரா..பிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளிலேயே வயல்கள் அதிகம் உடையவர்களாக நாங்கள் இருந்தோம். எனவே, விளைநிலங்களை நாங்கள் குத்தகைக்குவிட்டு வந்தோம். சில வேளைகளில் இந்தப் பகுதி விளைச்சலைத் தரும் அந்தப் பகுதி விளைச்சலைத் தராது. எனவே, அவ்விதம் நிபந்தனையிட்டு குத்தகைக்கு விட வேண்டாம் என்று நாங்கள் தடுக்கப்பட்டோம். (வெள்ளிக் காசுகளான) திர்ஹம்களுக்குப் பகரமாக குத்தகைக்கு விடவேண்டாம் என்று நாங்கள் தடுக்கப்படவில்லை.

## திருமணத்தில் விதிக்கப்படக் கூடாத நிபந்தனைகள்.

ஹதீஸ் 2723. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கிராமத்திலிருந்து (விற்பனைக்காகச் சரக்கு கொண்டு) வருபவருக்காக உள்ளூர் வாசி விற்றுக் கொடுக்க வேண்டாம், வாங்கும் எண்ணமின்றி விலையை ஏற்றி விடுவதற்காக அதிக விலைக்கு கேட்க வேண்டாம். (விலை உயர்த்தி விற்பதற்காக, ஆளை ஏற்பாடு செய்து அதிக விலைக்குக் கேட்கச் செய்வதும் கூடாது.) தன் சகோதரர் (ஒருவர்) வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது, தான் வியாபாரம் செய்வதற்காக எவரும் குறுக்கிட வேண்டாம். தன் (முஸ்லிம்) சகோதரர் பெண் பேசிக் கொண்டிருக்கும்போது இடையில் குறுக்கிட்டுப் பெண் பேச வேண்டாம். ஒரு பெண், தன்னுடைய பாத்திரத்தை நிரப்பிக் கொள்வதற்காக தன் சகோதரியை (சக்களத்தியை) தலாக் செய்து விடுமாறு (தன் கணவனிடம்) கேட்க வேண்டாம்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## குற்றவியல் தண்டனைகளில் விதிக்கப்படக் கூடாத நிபந்தனைகள்.

ஹதீஸ் 2724 , ஹதீஸ் 2725. அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித் அல் ஜுஹைனீ(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்.

கிராமவாசிகளில் ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டத்தின் படியே நீங்கள் எனக்குத் தீர்ப்பளிக்கும் படி நான் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்' என்று கூறினார் அவரை விட விளக்கமுடையவராக இருந்த அவரின் எதிரி, -ஆம், எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டத்தின்படி தீர்ப்பளியுங்கள்' என்று கூறினார். என்னை(ப் பேச) அனுமதியுங்கள்' என்று கிராமவாசி கூற நபி(ஸல்) அவர்கள்,சொல்' என்று கூறினார்கள். அவர்,என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தான். அப்போது இவரின் மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்று விடவேண்டும் என்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது. எனவே, நான் (இந்த தண்டனையிலிருந்து அவனைக் காப்பாற்றுவதற்காக) அவனுக்காக நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையாகத் தந்தேன். பிறகு, அறிஞர்களிடம் நான் விசாரித்தபோது, என் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனையாகத் தரப்பட வேண்டும் என்றும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி(ந்து கொல்லும்) தண்டனை கொடுக்கப்படவேண்டும் என்றும் என்னிடம் தெரிவித்தனர்' என்று கூறினார். இதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக!

உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டத்தின் படியே தீர்ப்பளிக்கிறேன். அடிமைப் பெண்ணும் ஆடுகளும் (உன்னிடமே) திருப்பித் தரப்பட வேண்டும். உன் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலம் நாடு கடத்தும் தண்டனையும் தரப்பட வேண்டும்' (என்று கூறிவிட்டு, அருகிலிருந்த உனைஸ் இப்னு ளஹ்ஹாக்(ரலி) அவர்களை நோக்கி)உனைஸே! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று, அவள் (தன் விபசாரக் குற்றத்தை) ஒப்புக் கொண்டால் அவளுக்குக் கல்லெறி தண்டனை கொடுங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே, உனைஸ் அவர்கள் அவளிடம் சென்று விசாரிக்க, அவளும் அவளிடம் சென்று விசாரிக்க, அவளும் (தன் குற்றத்தை) ஒப்புக் கொண்டாள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவளைக் கல்லெறிந்து கொன்று விடும்படி உத்தரவிட, அவ்வாறே அவள் கல்லெறிந்து கொல்லப்பட்டாள்.

## தன்னை விடுதலை செய்வதற்காகத் தன்னை விற்பதற்குச் சம்மதிக்கிற முகாத்தப் (விடுதலைப் பத்திரம் எழுதித் தரப்பட்ட அடிமை) தொடர்பான நிபந்தனைகளில் செல்லத் தக்கவை.

ஹதீஸ் 2726. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுக்கப்பட்டிருந்த அடிமைப் பெண்ணான பரீரா என்னிடம் வந்து, இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! என் எஜமானார்கள் என்னை விற்கப் போகிறார்கள். எனவே, என்னை நீங்கள் விலைக்கு வாங்கி விடுதலை செய்யுங்கள்' என்று கூறினார். நான், சரி (அப்படியே செய்வோம்)' என்று கூறினேன். அவர், என் எஜமானர்கள், என் வாரிசுரிமை தங்களுக்கே உரியது என்று நிபந்தனையிடாமல் என்னை விற்க மாட்டார்கள்' என்றார். அதற்கு நான், அப்படியென்றால் உன்(னை வாங்க வேண்டிய) தேவை எனக்கில்லை' என்று கூறினேன். இதை நபி(ஸல்) அவர்கள் செவியுற்ற போது... அல்லது இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டிய போது... அவர்கள், பரீராவின் விஷயம் என்ன? என்று கேட்டுவிட்டு, அவர்கள் விரும்பியதையெல்லாம் நிபந்தனையிட்டுக் கொள்ளட்டும். நீ அவரை வாங்கி விடுதலை செய்து விடு' என்று கூறினார்கள். எனவே, நான் அவரை வாங்கி விடுதலை செய்து விட்டேன். அவரின் எஜமானார்கள், அவரின் வாரிசுரிமை எங்களுக்கே உரியது' என்று நிபந்தனை விதித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், (அடிமையை) விடுதலை செய்பவருக்கே (அவ்வடிமையின்) வாரிசுரிமை உரியதாகும் அவர்கள் நூறுமுறை நிபந்தனை விதித்தாலும் சரியே' என்று கூறினார்கள்.

## விவாகரத்தில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்), ஹஸன் பஸரீ(ரஹ்), அதா இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) ஆகியோர், (ஒருவன் தன் மனைவியிடம்நீ தலாக் இப்படிச் செய்வாயானால் என்று)தலாக் என்னும் சொல்லை முந்திச் சொன்னாலும், அல்லது ('இப்படிச் செய்வாயானால் நீ தலாக் என்று) அதைப் பிந்திச் சொன்னாலும், அவன் விதித்த நிபந்தனைக்கு அவன் உரியவனாவான்' என்று கூறுகின்றனர்.

ஹதீஸ் 2727. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(சந்தைக்கு வருவதற்கு முன்பு மொத்த) வியாபாரிகளை வழியில் எதிர் கொண்டு சரக்குகளை வாங்குவதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். உள்ளூர்வாசி கிராமவாசிக்காக வாங்கித் தருவதையும், ஒரு பெண் தன் சகோதரியை (சக்களத்தியை) தலாக் செய்துவிடும்படி நிபந்தனையிடுவதையும், தன் சகோதரன் விலை பேசும் அதே பொருளை, தானும் விலை பேசுவதையும், வாங்கும் நோக்கமின்றி (ஒரு பொருளுக்கு) அதிக விலை கேட்டு,

(வேண்டுமென்றே) விலை ஏற்றி விடுவதையும், (ஆடு மாடுகளின்) மடியை கனக்கச் செய்வதையும் நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

முஆத்(ரஹ்) அவர்களும் அப்துஸ்ஸமத்(ரஹ்) அவர்களும் ஷுஅபா(ரஹ்) அவர்களிடமிருந்து இவ்வாறே அறிவித்தார்கள்.

## மக்களிடம் விதிக்கப்படும் வாய்மொழி நிபந்தனைகள்.

ஹதீஸ் 2728. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் கூறினார்கள்:

உபை இப்னு கஅப்(ரலி),மூஸா, அல்லாஹ்வின் தூதரவார். ".. என்று தொடங்கி, நபி(ஸல்) அவர்கள் (மூஸா (அலை) தொடர்பாகக்) கூறிய முழு ஹதீஸையும் கூறத் தொடங்கினார்கள்: களிரு(அலை) அவர்கள்,உங்களால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று நான் கூறவில்லையா? என்று (மூஸா (அலை) அவர்களை நோக்கிக்) கேட்டார்கள். மூஸா (அலை) அவர்கள் களிரு (அலை) அவர்களின் நடவடிக்கைகளை ஆட்சேபித்து) முதல் முறையாகக் கேட்டபது மறதியால் கேட்டதாகவும், நடுவில் சொன்னது அவர் விதித்த நிபந்தனையாகவும், மூன்றாவது முறை கேட்டது, வேண்டுமென்றே செய்ததாகவும் இருந்தது.

(இது தொடர்பான இறைவசனங்கள் வருமாறு:)

"நான் மறந்து போனதற்காக என்னைத் (திரும்பிப் போகச் சொல்லித் தண்டித்து விடாதீர்கள்.) என் விஷயத்தில் கடுமையாக நடந்து கொள்ளாதீர்கள்.

"பிறகு இருவரும் ஒரு சிறுவனைச் சந்தித்தார்கள் அப்போது, அவர் (களிறு) அவனைக் கொன்றுவிட்டார்.

"மேலும், அவர்கள் தொடர்ந்து நடந்தார்கள். அங்கே அவர்கள் இருவரும் கீழே விழ இருந்த ஒரு சுவரைக் கண்டார்கள். உடனே அவர் (களிரு), அதைச் செப்பனிட்டு நிறுத்திவைத்தார்கள். "..

(பார்க்க: திருக்கர்ஆன் 18ஆம் அத்தியாயம் 66-82 வசனங்கள்.)

'வகனா வராஅஹும் மலிக்குன் என்னும் வசனத்தைவகான அமாமஹும் மலிக்குன் என்று (இன்னோர் ஓதல் முறைப்படி) இப்னு அப்பாஸ்(ரலி) ஓதியுள்ளார்கள்.

## (அடிமையின்) வாரிசுரிமையில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

ஹதீஸ் 2729. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

பரீரா என்னிடம் வந்து,நான் என் எஜமானர்களிடம் ஒவ்வோர் ஆண்டும் ஓர் ஊகியா வீதம் ஒன்பது ஊகியாக்கள் தருவதாகக் கூறி விடுதலைப் பத்திரம் எழுதி வாங்கியுள்ளேன். எனவே, எனக்கு உதவுங்கள்' என்று கூறினார். அதற்கு நான்,அவர்கள் விரும்பினால் நான் ஒன்பது ஊக்கியாக்களையும் (எண்ணிக்) கொடுத்து விடுகிறேன். ஆனால், உன் வாரிசுரிமை எனக்கே சேர வேண்டும்' என்று கூறினேன். பரீரா, அவரின் எஜமானர்களிடம் சென்று அவர்களிடம் இதைக் கூறினார். அவர்கள் அதை ஏற்க மறுத்துவிட்டார்கள். அவர்களிடமிருந்து (திரும்பி) வந்து,நான் நீங்கள் கூறியதை அவர்களிடம் எடுத்துரைத்தேன் அவர்கள்,வாரிசுரிமை தங்களுக்கே உரியது என்று கூறி உங்கள் நிபந்தனையை ஏற்க மறுத்துவிட்டார்கள்' என்று கூறினார். அப்போது அங்கே அமர்ந்திருந்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இதை செவிமடுத்துக் கொண்டிருந்தால், நான் நபி(ஸல்) அவர்களுக்கு விபரத்தைக் கூறினேன். அதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்,பரீராவை நீ வாங்கிக் கொண்டு, அவரின் வாரிசுரிமை உனக்கே சேர

வேண்டும் என்று நிபந்தனையிடு. ஏனெனில், வாரிசுரிமை விடுதலை செய்தவருக்கே உரியதாகும்' என்று கூறினார்கள். நானும் அவ்வாறே செய்தேன். பின்னர் இறைத்தூதர் மக்களிடையே (உரையாற்ற) எழுந்து நின்று, அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தி, அவனைப் புகழ்ந்துரைத்துவிட்டு, சில மனிதர்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளையெல்லாம் விதிக்கிறார்களே! அல்லாஹ்வின் சட்டத்தில் இல்லாத நிபந்தனை எதுவாயினும் அது செல்லாததாகும் அவர்கள் நூறுமுறை நிபந்தனையிட்டாலும் சரியே. அல்லாஹ்வின் தீர்ப்பே பின்பற்றத் தக்கதாகும். அல்லாஹ்வின் நிபந்தனையே உறுதியானதும் (கட்டுப்படுத்தக் கூடியதும்) ஆகும். வாரிசுரிமை விடுதலை செய்தவருக்கே உரியதாகும்' என்று கூறினார்கள்.

## நிலக் குத்தகையின்போது நில உரிமையாளர், நான் விரும்பும்போது உன் ஒப்பந்தத்தை ரத்து செய்து விடுவேன் என்று நிபந்தனையிட்டால்... (செல்லும்.)

ஹதீஸ் 2730. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

கைபர் வாசிகள் என் கைமூட்டுகளைப் பிசகச் செய்துவிட்டபோது என் தந்தை உமர்(ரலி) எழுந்து நின்று உரையாற்றினார்கள். அவ்வுரையில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் பிரசேத்து யூதர்களிடம் அவர்களின் சொத்துகள் தொடர்பாக ஒப்பந்தம் செய்தார்கள். அப்போது, அல்லாஹ் உங்களை இங்கு வசிக்கச் செய்யும் வரை நாம் உங்களை வசிக்க விடுவோம் என்று கூறினார்கள். (என்னுடைய மகன்) அப்துல்லாஹ் இப்னு உமர் அங்கேயிருந்த தன்னுடைய சொத்தைப் பார்ப்பதற்காகச் சென்றார். அவர் அன்றிரவு தாக்கப்பட்டார். அதனால் அவரின் இருகைகளின் மூட்டுகளும் இருகால்களின் மூட்டுகளும் பிசம்விட்டன. அங்கு அவர்களைத் தவிர வேறு பகைவர்கள் எவரும் இல்லை. அவர்கள் நம்முடைய பகைவர்களும் நம் சந்தேகத்திற்குரியவர்களும் ஆவர். அவர்களை நாடு கடத்தி விடுவதே பொறுத்தமென்று கருதுகிறேன்' என்று கூறினார்கள். உமர்(ரலி) (யூதர்களை) நாடு கடத்துவதென்று இறுதி முடிவெடுத்துவிட்டபோது, (யூதர்களின் தலைவனான) அபுல் ஹுகைக் உடைய மகன்களில் ஒருவன் வந்து, இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! எங்களை முஹம்மத்(ஸல்) அவர்கள் (கைபரிலேயே) வசிக்கச் செய்து, எங்கள் சொத்துகள் தொடர்பாக ஒப்பந்தமும் செய்த, அதை (நாங்கள் பேணி வந்தால் அங்கேயே தொடர்ந்து வசிக்கலாம் என்று) நிபந்தனையிட்டிருக்க, நீங்கள் எங்களை (அங்கிருந்து) வெளியேற்றுகிறீர்களா? என்று கேட்டான். அதற்கு உமர்(ரலி), கைபரிலிருந்து நீ வெளியேற்றப்பட்டு, (நீண்ட கால்களும்) சம்ப்புத் தன்மை(யும்) கொண்ட உன்னுடைய ஒட்டகம் உன்னைச் சுமந்துகொண்டு இரவுக்குப் பின் இரவாக நடந்துசென்று கொண்டிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டால் உனக்கு எப்படி இருக்கும்? என்று இறைத்தூதர்(ஸல்) கூறியதை நான் மறந்து விட்டேன் என்று நினைக்கிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு அவன், அது அபுல் காசிம் (முஹம்மத் - ஸல்) விளையாட்டாகக் கூறினார்கள் எனம்' என்று சொன்னான். அதற்கு உமர்(ரலி), பொய் சொன்னாய், அல்லாஹ்வின் பகைவனே!என்று கூறினார்கள். பிறகு, அந்த யூதர்களை உமர்(ரலி) நாடு கடத்திவிட்டார்கள். அவர்களுக்குக் கிடைத்திருந்த விளைச்சலின் விலையைப் பணமாகவும், ஒட்டகமாகவும், பொருட்களாகவும், ஒட்டகச் சேணங்களாகவும், கயிறுகளாகவும் அவர்களுக்குக் கொடுத்துவிட்டார்கள்.

இன்னோர் அறிவிப்பில் ஹம்மாது இப்னு ஸலமா(ரஹ்) நபி(ஸல்) அவர்கள் குறித்த அறிவிப்பில் மட்டும் சுருக்கமாக கூறுகிறார்கள். (உமர்(ரலி) குறித்த அறிவிப்பை சுருக்கமாக்கவில்லை.)

## அறப்போரின்போது இடப்படும் நிபந்தனைகளும் பகைநாட்டினருடன் சமாதானம் செய்து கொள்வதும் (சமாதான ஒப்பந்தத்தின்) நிபந்தனைகளை எழுதுவதும்.

**ஹதீஸ் 2731 ,ஹதீஸ் 2732 மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி), மர்வான் இப்னி ஹகம் ஆகிய இருவரும் - ஒருவர் சொன்னதை மற்றவர் உண்மைப்படுத்தியவாறு - கூறினார்.**

ஹுதைபிய்யா உடன்படிக்கை நடைபெற்ற காலகட்டத்தில் (மக்காவை நோக்கி) நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டார்கள். 14 பாதையில் சென்று கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள்,காலித் இப்னு வலீத், குறைஷிகளின் குதிரைப் படையுடன்கமீம் என்னுமிடத்தில் (போர் வி~கத்துடன்) முதல் அணியாக (நம்மை எதிர் கொள்ளக் காத்திருக்கின்றனர். எனவே, வலப்பக்கப் பாதையில் செல்லுங்கள் (காலித் இப்னு வலீதுக்குத் தெரியாமல் மக்காவின் அருகே சென்று விடலாம்)' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர்கள் வருவதை காலித் அறியவில்லை. குறைஷி குதிரைப் படையினர் (முஸ்லிம்களுடைய) உம்ரா பயணக்குழுப் படை எழுப்பிய புழுதியைக் கண்டவுடன் (அதன் தளபதியான) காலித் பன் வலீத், குறைஷிகளை எச்சரிப்பதற்காக, குதிரையைக் காலால் உதைத்து விரட்டியவராக (விரைந்து) சென்றார். நபி(ஸல்) அவர்கள் பயணித்துச் சென்று கொண்டிருந்தார்கள். இறுதியில், மக்காவினுள் இறங்கும் வழியாக அமைந்துள்ள சிறிய மலை ஒன்றை அடைந்ததும் ('மிரார் என்னும் இடத்தில்) அவர்களின் வாகனம் (ஒட்டகம்) மண்டியிட்டு அமர்ந்தது. மக்கள் (அதை எழுப்பி நடக்க வைப்பதற்காக)ஹல்ஹல் என்று அதட்டினார்கள். அது எழும்ப மறுத்து முரண்டு பிடித்தது. உடனே, மக்கள்,கஸ்வா 15 பிடிவாதம் பிடிக்கிறது,கஸ்பா பிடிவாதம் பிடிக்கிறது' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,கஸ்வா பிடிவாதம் பிடிக்கவுமில்லை பிடிவாதம் பிடிப்பது அதன் குணமுமில்லை. ஆனால், (யமன் நாட்டு மன்னன் அப்ரஹா தலைமையில் யானைப் படை கஅபாவை இடிக்க வந்தபோது) யானையைத் தடுத்த(இறை)வனே அதையும் தடுத்து வைத்திருக்கிறான்' என்று கூறினார்கள். பிறகு,என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக (போரைக் கைவிட்டு) அல்லாஹ்வின் புனித(த் தல)ங்களை கண்ணியப்படுத்தும் ஒரு திட்டத்தை அவர்கள் என்னிடம் கேட்டால் அதை நிச்சயம் அவர்களுக்கு நான் (வகுத்துக்) கொடுப்பேன்' என்று கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் தம் ஒட்டகத்தைத் தட்டி எழுப்பினார்கள். உடனே அது குதித்தெழுந்தது. பிறகு, நபியவர்கள் மக்களைவிட்டுத் திரும்பி ஹுதைபிய்யாவின் எல்லையில் சிறிதளவே தண்ணீர் இருந்த ஒரு பள்ளத்தின்அருகே முகாமிட்டார்கள். மக்கள் அதிலிருந்து சிறிது சிறிதாகத் தண்ணீர் எடுக்கலானார்கள். இறுதியில், அவர்கள் மிச்சம் வைக்காமல் தண்ணீர் முழுவதையும் இறைத்து (அதை காலி செய்து)விட்டார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தாகம் எடுப்பதாக முறையிடப்பட்டது. உடனே, நபி(ஸல்) அவர்கள் தங்களின் அம்புக் கூட்டிலிருந்து ஓர் அம்பை உருவியெடுத்து அதைப் பள்ளத்தில் பேகுதிபடி மக்களுக்கு உத்தரவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (பள்ளத்தில் அம்பைப் போட்டதும்) அதிலிருந்து அவர்களுக்காகத் தண்ணீர் பீறிட்டு வெளிப்பட்டது. அவர்கள் அங்கிருந்து புறப்படும் வரை (தண்ணீர் தாராளமாகக் கிடைத்துக் கொண்டிருந்தது). இந்த நிலையில் புதைல் இப்னு வரகா அல்குஸாயீ அவர்கள், தம் குஸாஆ குலத்தார் சிலருடன் வருகை தந்தார்கள். அவர்கள் திஹாமாவாசிகளிடையே (மக்கா மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதியில் வசிக்கும் மக்களிடையே) நபி(ஸல்) அவர்களின் நலம் நாடும் நம்பிக்கைக்குரியவர்களாக இருந்தனர். புதைல் அவர்கள்,(முஹம்மத் அவர்களே!) கஅப் இப்னு லுஅய், மற்றும் ஆமிர் இப்னு லுஅய் ஆகியோர் ஹுதைபிய்யாவின் வற்றாத ஜீவசுனைகளின் அருகே முகாமிட்டிருக்க, அங்கே அவர்களைவிட்டுவிட்டு (தங்களிடம் செய்தி சொல்ல) வந்துள்ளேன். அவர்களுடன் தாய் ஒட்டகங்களும் தம் குட்டிகளுடன் வந்துள்ளன.

அவர்கள் உங்களுடன் போரிட்டு உங்களை இறையில்லம் கஅபாவை (சந்திக்க விடாமல்) தடுக்கப் போகிறார்கள்' என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்,நாங்கள் எவருடனும் போரிடுவதற்காக வரவில்லை. மாறாக, நாங்கள் உம்ரா செய்வதற்காகத் தான் வந்திருக்கிறோம். குறைஷிகள் அடிக்கடி போரிட்டுக் களைத்துப் போயிருக்கிறார்கள். போரின் காரணத்தால் அவர்களுக்கு நிறையவே இழப்பும் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் விரும்பினால் அவர்களுக்கு ஒரு காலகட்டம் குறிப்பிட்டு சமாதான ஒப்பந்தம் செய்து கொள்கிறேன். அவர்கள் எனக்கும் மக்களுக்குமிடையே (இஸ்லாமியப் பிரச்சாரத்திற்குத்) தடையாக இருக்க வேண்டாம். நான் வெற்றி பெற்றுவிட்டால், அவர்கள் விரும்பினால் மக்களெல்லாம் விரும்பி ஏற்றுக் கொள்ளும் இந்த மார்க்கத்திலேயே இணைந்து கொள்ளட்டும். இல்லையென்றால் (சில நாள்கள்) அவர்களுக்கு ஓய்வாவது கிடைக்கும். அவர்கள் இதற்கு மறுத்துவிட்டால், என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீதாணையாக! நான் என்னுடைய இந்த விவகாரத்திற்காக என் தலை துண்டாம் விடும் வரை அவர்களடன் போரிடுவேன். அல்லாஹ், தன் திட்டத்தை நடத்தியே தீருவான்' என்று கூறினார்கள். நீங்கள் சொல்வதை அவர்களுக்கு நான் எடுத்துரைப்பேன்' என்று கூறிவிட்டு புதைல் இப்னு வரகா குறைஷிகளிடம் சென்று,நாங்கள் இந்த மனிதரிடமிருந்து உங்களிடம் வந்திருக்கிறோம். அவர் ஒரு விஷயத்தைக் கூறியதை நாங்கள் கேட்டோம். அதை உங்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமென்று நீங்கள் விரும்பினால் நாங்கள் அவ்வாறே செய்கிறோம்' என்றார். அப்போது அவர்களிலிருந்த அறிவிலிகள்,அவரைக் குறித்து எங்களுக்கு எதனையும் நீர் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை' என்று கூறினர். அவர்களில் கருத்துத் தெளிவுடையவர்கள்,அவரிடமிருந்து நீங்கள் கேட்டதை எடுத்துச் சொல்லுங்கள்' என்று கூறினர். புதைல்,அவர் இப்படியெல்லாம் சொல்லக் கேட்டேன்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னதை அவர்களுக்கு எடுத்துரைத்தார். உடனே, (அப்போது இறைமறுப்பாளராயிருந்த) உர்வா இப்னு மஸ்வூத் அஸ்ஸகஃபீ எழுந்து நின்று,என் சமுதாயத்தாரே! நீங்கள் என் தந்தையைப் போல் (என் மீது இரக்கமுடையவர்கள்) அல்லவா? என்று கேட்டதற்கு அவர்கள்,ஆம்' என்று பதிலளித்தனர். உர்வா,நான் உங்கள் மகனைப் போல் (உங்கள் நலம் நாடுபவன்) இல்லையா? என்று கேட்டதற்கு அவர்கள்,இல்லை' என்று பதிலளித்தனர். அப்போது உர்வா,உக்காழ் (சந்தை) வாசிகளிடம் உங்களுக்கு உதவும்படி கேட்டதும் அவர்களால் உதவ முடியாத (நிலை ஏற்பட்ட)போது நான் என் வீட்டாரையும் என் குழந்தையையும் எனக்குக் கட்டுப்பட்டவர்களையும் உங்களிடம் கொண்டு வந்து விட்டேன் என்பதும் உங்களுக்குத் தெரியாதா? என்று கேட்டதற்கு அவர்கள்,ஆம் (தெரியும்)' என்று பதிலளித்தார்கள். அப்போது அவர்,முஹம்மது, உங்கள் முன் நல்லதொரு திட்டத்தைச் சமர்ப்பித்துள்ளார். நீங்கள் (அதற்கு) ஒப்புக் கொள்ளுங்கள். அவரிடம்ட என்னைச் செல்ல விடுங்கள்' என்று கூறினார். அதற்கு அவர்கள்,அவரிடம் (எங்கள் சார்பாகப் பேசச்) செல்லுங்கள்' என்று கூறினர். அவரும் நபி(ஸல்) அவர்களிடம் சென்று பேசத் தொடங்கினார். நபி(ஸல்) அவர்கள் புதைலிடம் சொன்னதைப் போன்றே சொன்னார்கள். அப்போது உர்வா,முஹம்மதே! உங்கள் சமுதாயத்தினரை முற்றிலுமாக அழித்து விடுவதை நீங்கள் பொறுத்தமாகக் கருதுகிறீர்களா? உங்களுக்கு முன்னால் அரபுகள் எவரேனும் தம் சமுதாயத்தாரை வேரோடு அழித்தார் என்று நீங்கள் கேள்விப்பட்ட துண்டா? வேறுவிதமான முடிவு ஏற்பட்டாலும்... குறைஷிகள் வென்றாலும்... (அதனால் உங்கள் தோழர்கள் அனைவரும் கொல்லப்பட்டு விடுவார்கள் அல்லவா?) நானோ, அல்லாஹ்வின் மீதாணையாக! 16 பலமுகங்களை (உங்கள் தோழர்களிடம்) பார்க்கிறேன் மக்களில் பலதரப்பட்டவர்களைப் பார்க்கிறேன் உங்களைவிட்டுவிட்டு விரண்டோடக் கூடிய (கோழைத்தனமுடையவ)வர்களாகவே (இவர்களை) நான் பார்க்கிறேன்' என்று கூறினார். 17 (இதைக் கேட்ட) அபூ பக்ர்(ரலி) அவரை அக்கால வழக்கப்படி ஏசிவிட்டு,நாங்கள் இறைத்தூதரைவிட்டுவிட்டு ஓடி விடுவோமா? என்று (கோபத்துடன்) கேட்டார்கள். அதற்கு உர்வா,இவர் யார்? என்று கேட்டார். மக்கள்அபூ பக்ர்'

என்று பதிலளித்தார்கள். அதற்கு உர்வா,நீங்கள் முன்பு எனக்கு உதவியிருக்கிறீர்கள். அதற்கான நன்றிக் கடனை நான் உங்களுக்கு இன்னும் தீர்க்கவில்லை. அந்த நன்றிக் கடன் மட்டுமில்லாவிட்டால் நான் உங்களுக்கு (தகுந்த) பதில் கொடுத்திருப்பேன்‘ என்று கூறிவிட்டு, நபி(ஸல்) அவர்களிடம் பேசத் தொடங்கினார் நபி(ஸல்) அவர்களுடன் பேசும் போதெல்லாம் அவர்களின் தாடியைப் பிடித்தபடி இருந்தார். அப்போது முகீரா இப்னு ஷுஅபா(ரலி) (கையில்) வாளுடனும் தலையில் இரும்புத் தொப்பியுடனும் நபி(ஸல்) அவர்களின் தலைப்பக்கமாக நின்றிருந்தார்கள். எனவே உர்வா, நபி(ஸல்) அவர்களின் தாடியைப் பிடிக்க முனைந்த போதெல்லாம் முகீரா(ரலி), அவரின் கையை வாளுறையின் (இரும்பாலான) அடிமுனையால் அடித்து,உன் கையை அல்லாஹ்வின் தூதருடைய தாடியிலிருந்து அப்புறப்படுத்து‘ என்று கூறிய வண்ணமிருந்தார்கள். அப்போது உர்வா தன்னுடைய தலையை உயர்த்தி,இவர் யார்? என்று கேட்க மக்கள்,இவர் முகீரா இப்னு ஷுஅபா‘ என்று கூறினார்கள். உடனே உர்வா,மோசடிக்காரரே! நீர் மோசடி செய்தபோது (உம்மை தண்டனையிலிருந்து பாதுகாத்திட) நான் உழைக்கவில்லையா? என்று கேட்டார். முகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறியாமைக் காலத்தில் (இஸ்லாத்தைத் தழுவும் முன்பு) ஒரு குலத்தாருடன் (எம்பது மன்னனைக் காண) பயணம் சென்றார்கள். அப்போது (அக்குலத்தார் வழியில் குடித்துவிட்டு மயங்கிக் கிடக்க,) அவர்களைக் கொன்றுவிட்டு அவர்களின் பொருட்களை எடுத்தார்கள். (அதற்காக பனு மாலிக் குலத்தார் முகீரா(ரலி) அவர்களைப் பழிவாங்க முனைந்தபோது அவரின் தந்தையின் சகோதரரான உர்வா தான், அவர்களை உயிரீட்டுத் தொகை கொடுத்து தண்டனையிலிருந்து காப்பாற்றினார்.) பிறகு முகீரா (அங்கிருந்து) வந்து இஸ்லாத்தை ஏற்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,நீ இஸ்லாத்தைத் தழுவியதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், (நீ அபகரித்துக் கொண்டு வந்த) பொருள்கள் எனக்கு அனுமதிக்கப்படவில்லை‘ என்று கூறியிருந்தார்கள். - பிறகு உர்வா, நபி(ஸல்) அவர்களின் தோழர்களைத் தம் இரண்டு கண்களால் கூர்ந்து பார்க்கத் தொடங்கினார். அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் எப்போது (தொண்டையைச் செருமி) சளி துப்பினாலும், உடனே அதை அவர்களின் தோழர்களில் ஒருவர், தன் கையில் பிடித்துத் தன் முகத்திலும், மேனியிலும் தேய்த்துக் கொள்வார். நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்குக் கட்டளையிட்டால் அவர்கள் உடனே அதை நிறைவேற்றிட போட்டி போட்டுக் கொண்டு ஒருவரையொருவர் முந்திக் கொள்வார்கள். நபியவர்கள் உளூச் செய்யும்போது, அவர்கள் உளூச் செய்து எஞ்சிய தண்ணீரைப் பிடித்து (தங்கள் மேனியில் தேய்த்து)க் கொள்வதற்காக ஒருவரோடொருவர் சண்டை போடுமளவிற்குச் செல்வார்கள். நபியவர்களுடன் அவர்கள் பேசும்போது தம் குரல்களைத் தாழ்த்திக் கொள்வார்கள். மேலும், நபியவர்களுக்கு கண்ணியமளிக்கும் விதத்தில் அவர்களைக் கூர்ந்து (நேருக்கு நேர்) பார்க்க மாட்டார்கள். (இவற்றையெல்லாம் உற்றுக் கவனித்து நேரடியாக அறிந்தபின்) உர்வா தன் தோழர்களிடம் சென்று,என் சமுதாயத்தாரே! நான் பல அரசர்களிடம் தூதுக் குழுவில் ஒருவனாகச் சென்றுள்ளேன். (உரோம மன்னன்) சீசரிடமும், (பாரசீக மன்னன்) கிஸ்ராவிடமும், (அபிசீனிய மன்னன்) நஜாஷியிடமும் தூதுக் குழுவில் சென்றுள்ளேன். அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மதின் தோழர்கள் முஹம்மத்து அளிக்கிற கண்ணியத்தைப் போல் எந்த அரசருக்கும் அவரின் தோழர்கள் கண்ணியம் அளிப்பதை நான் பார்த்ததேயில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் சளியைத் துப்பினால் அதை அவரின் தோழர்களில் ஒருவர் தம் கையில் ஏந்திக் கொள்கிறார். அதை அவர் தம் முகத்திலும், மேனியிலும் தேய்த்துக் கொள்கிறார். அவர் அவர்களுக்குக் கட்டளையிட்டால் அவரின் கட்டளையை நிறைவேற்ற அவர்கள் ஒருவரோடொருவர் போட்டி போட்டுக் கொண்டு முன்வருகிறார்கள். அவர் உளூச் செய்தால் அவர் உளூச் செய்து எஞ்சிய தண்ணீரைப் பெறுவதற்காக, ஒருவரோடொருவர் சண்டையிடும் அளவிற்குச் செல்வார்கள். அவர் பேசினால், அவரிடம் அவர்கள் தங்களின் குரல்களைத் தாழ்த்திக் கொள்கிறார்கள்.

அவரை கண்ணியப்படுத்தும் விதத்தில் அவரைக் கூர்ந்து (நேருக்கு நேர்) பார்ப்பதில்லை. மேலும், அவர் உங்கள் முன் நேரிய திட்டம் ஒன்றைச் சமர்ப்பித்துள்ளார். எனவே, அதை ஏற்றுக் கொள்ளுங்கள்‘ என்று கூறினார். உடனே பனும்னானா குலத்தைச் சேர்ந்த ஒருவர்,என்னை அவரிடம் செல்ல விடுங்கள்‘ என்றார். அதற்கு அவர்கள்,சரி, செல்லுங்கள்‘ என்று கூறினர். அவர் நபி(ஸல்) அவர்களிடமும் அவர்களின் தோழர்களிடமும் வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,இது இன்னார். இவர் இறைவனுக்காக ஹஜ்ஜில் அறுக்கப்படும் தியாக ஒட்டகங்களை கண்ணியப்படுத்துகிற ஒரு குலத்தைச் சேர்ந்தவர். எனவே, இவரிடம் தியாக பலி ஒட்டகத்தை அனுப்பி வையுங்கள்‘ என்றார்கள். உடனே, அவரிடம் ஒரு தியாக ஒட்டகம் அனுப்பி ஒன்று வைக்கப்பட்டது. மக்கள்தல்பியா கூறியபடி அவரை வரவேற்றார்கள். இதை அவர் கண்டவுடன்,சுப்ஹானல்லாஹ்! இவர்களை இறையில்லத்திற்கு வரவிடாமல் தடுப்பது சரியில்லையே‘ என்று (தமக்குள்) கூறினார். தம் தோழர்களிடம் திரும்பிச் சென்றபோது,தியாக ஒட்டகங்கங்களுக்கு (அடையாள) மாலை கட்டித் தொங்கவிடப்பட்டு, அவற்றைக் கீறி காயப்படுத்தி அடையாளமிடப்பட்டிருப்பதை கண்டேன். எனவே, இறையில்லத்திற்கு வரவிடாமல் அவர்களைத் தடுப்பதை நான் சரியானதாகக் கருதவில்லை‘ என்று கூறினார். உடனே, அவர்களில் மிக்ரஸ் இப்னு ஹஃப்ஸ் என்றழைக்கப்பட்ட ஒருவர் எழுந்து,என்னை அவரிடம் போக விடுங்கள்‘ என்று கூறினார். மக்காவாசிகள்,சரி, நீங்கள் அவரிடம் போங்கள்‘ என்று கூறினர். முஸ்லிம்களிடம் அவர் சென்றபோது நபி(ஸல்) அவர்கள்,இவன் மிக்ரஸ் என்பவன். இவன் ஒரு கெட்ட மனிதன்‘ என்று கூறினார்கள். அவன் (வந்தவுடன்) நபி(ஸல்) அவர்களிடம் பேச ஆரம்பித்தான். அவன் பேசிக் கொண்டிருக்கையில், சுஹைல் இப்னு அம்ர் என்பவர் குறைஷிகளின் தரப்பிலிருந்து வந்தார் அறிவிப்பாளர் இக்ரிமா(ரஹ்) கூறினார்: சுஹைல் இப்னு அம்ர் வந்தபோது நபி(ஸல்) அவர்கள்,உங்கள் விவகாரம் சுலபமாம்விட்டது‘ என்று (‘ஸஹ்ல்-- சுலபம் என்னும் பொருள் கொண்ட பெயருடைய ஒருவர் வந்ததை நற்குறியாகக் கருதும் வகையில்) கூறினார்கள். சுஹைல் மின் அம்ர் வந்து,(ஏட்டைக்) கொண்டு வாருங்கள். உங்களுக்கும் எங்களுக்குமிடையிலான (சமாதான ஒப்பந்தத்திற்கான) பத்திரம் ஒன்றை எழுதுவோம்‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் எழுத்தரை அழைத்தார்கள். பின்னர்,பேரருளாளனும் கருணையன்புடையோனுமான அல்லாஹ்வின் திருப்பெயரல்..!என்று (சமாதான ஒப்பந்தத்திற்கான வாசகத்தை) நபியவர்கள் சொன்னார்கள். சுஹைல்,ரஹ்மான் - கருணையன்புடையோன் என்பது என்ன என்று எனக்குத் தெரியாது. ஆயினும்,இறைவா! என் திருப்பெயரால்.. என்று நீங்கள் முன்பு எழுதிக் கொண்டிருந்ததைப் போல் தான் நான் எழுதுவேன்‘ என்றார். முஸ்லிம்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக!பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் - அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமான அல்லாஹ்வின் திருப்பெயரால் என்றே இதை எழுதுவோம்‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,பிஸ்மிக்க அல்லாஹும்ம - இறைவா! உன் திருப்பெயரால் என்றே எழுதுங்கள்‘ என்றார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள்,இது இறைத்தூதர் முஹம்மது அவர்கள் செய்த சமாதான ஒப்பந்தம் என்று (எழுதும்படி வாசகம்) சொன்னார்கள். உடனே சுஹைல்,இறைத்தூதர் தாம் என்று நாங்கள் நம்பியிருந்தால் இறையில்லத்திற்கு வரவிடாமல் உங்களைத் தடுத்திருக்கவும் மாட்டோம் உங்களுடன் போரிட்டிருக்கவும் மாட்டோம். மாறாக,முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் - அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது என்று எழுதுங்கள் என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் இறைத்தூதர் தாம் என்று நாங்கள் நம்பியிருந்தால் இறையில்லத்திற்கு வரவிடாமல் உங்களைத் தடுத்திருக்கவும் மாட்டோம் உங்களுடன் போரிட்டிருக்கவும் மாட்டோம். மாறாக,முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் - அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது என்று எழுதுங்கள்‘ என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் நான் பொய் சொல்வதாகக் கருதினாலும் நிச்சயம் நான் இறைத்தூதர் தான்.

(இருந்தாலும் உங்கள் விருப்பப்படி) முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் - அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது என்றே எழுதுங்கள்' என்று கூறினார்கள்.

-அறிவிப்பாளர் இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள், அவர்களுடன் தகராறு செய்யாமல்விட்டுக் கொடுத்து ஒத்துப் போகவிட்டதற்குக் காரணம் அவர்கள்,அல்லாஹ்வினால் புனிதமானவையாக அறிவிக்கப்பட்ட (மக்கா நகரத்)தை கண்ணியப்படுத்துகிற எந்த ஒரு திட்டத்தை அவர்கள் என்னிடம் கேட்டாலும் அதை அவர்களுக்கு நான் (வகுத்துக்) கொடுப்பேன்' என்று முன்பே சொல்லியிருந்ததை நிறைவேற்றுவதற்காகத்தான். -

பிறகு சுஹைலுக்கு நபி(ஸல்) அவர்கள்,எங்களை (இந்த ஆண்டு) இறையில்லத்திற்குச் செல்ல விடாமலும் அதை நாங்கள் வலம்வர விடாமலும் தடுக்கக் கூடாது என்று (வாசகம்) சொன்னார்கள். உடனே சுஹைல்,அல்லாஹ்வின் மீதாணையாக! (இதை ஏற்க) முடியாது. (இந்த ஆண்டே உம்ரா செய்ய நாங்கள் உங்களுக்கு அனுமதியளித்தால்)நாங்கள் உங்கள் நிர்பந்தத்திற்கு அடிபணிந்து விட்டோம் என்று அரபுகள் பேசிக் கொள்வார்கள். ஆயினும், வருகிற ஆண்டில் நீங்கள் உம்ரா செய்து கொள்ளலாம்' என்று கூறினார் அவ்வாறே எழுதினார். மேலும் சுஹைல்,எங்களிடமிருந்து ஒருவர் உங்களிடம் வந்தால், அவர் உங்கள் மார்க்கத்தில் இருந்தாலும் சரி, அவரை எங்களிடம் நீங்கள் திருப்பியனுப்பி விட வேண்டும் என்று நிபந்தனையிட்டார். முஸ்லிம்கள்,சுப்ஹானல்லாஹ்! அவர் முஸ்லிமாக (எங்களிடம்) வந்திருக்க, அவரை எப்படி இணைவைப்பவர்களிடம் திருப்பியனுப்புவது? என்று வியப்புடன் கேட்டார்கள். அவர்கள் இவ்வாறு ஒப்பந்தம் பேசிக் கொண்டிருக்கும்போது (குறைஷிகளின் தரப்பிலிருந்து ஒப்பந்தம் பேச வந்த) சுஹைல் இப்னு அம்ர்டைய மகன் அபூ ஜந்தல் (தம் கால்கள் பிணைக்கப்பட்டிருக்க) விலங்குகளுடன் தத்தித் தத்தி நடந்து வந்தார்கள். அவர்கள் மக்காவின் கீழ்ப் பகுதியிலிருந்து தப்பி வந்து முஸ்லிம்களிடையே வந்து தஞ்சம் புகுந்தார்கள். உடனே (அவரின் தந்தையான) சுஹைல்,முஹம்மதே! (ஒப்பந்தப்படி) முதலாவதாக, இவரை எங்களிடம் ஒப்படைக்கும்படி உங்களிடம் கோருகிறேன்' என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நாம் இன்னும் இந்த நிபந்தனையை எழுதி முடிக்கவில்லையே' என்று பதிலளித்தார்கள். அதற்கு சுஹைல்,அப்படியென்றால், அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களிடம் நான் எந்த அடிப்படையிலும் ஒருபோதும் சமாதானம் செய்து கொள்ள மாட்டேன்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால் இவரை மட்டுமாவது நான் திருப்பியனுப்பாமலிருக்க எனக்கு அனுமதி தாருங்கள்' என்று கூறினார்கள். அதற்கு சுஹைல்,நான் உங்களுக்கு அனுமதி தர மாட்டேன்' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இல்லை, இவரை மட்டுமாவது திருப்பியனுப்பாமல் நிறுத்திக் கொள்ள எனக்கு அனுமதியளியுங்கள்' என்று கூறினார்கள். அதற்கு சுஹைல்,நான் அனுமதியளிக்கப் போவதில்லை' என்று கூறினார். மிக்ரஸ் என்பவர்,நாம் அதற்கு உங்களுக்கு அனுமதியளித்து விட்டோம்' என்று கூறினார். அபூ ஜந்தல்(ரலி),முஸ்லிம்களே! நான் முஸ்லிமாக (உங்களிடம்) வந்திருக்க, என்னை இணைவைப்பவர்களிடம் திருப்பியனுப்புகிறீர்களா? நான் சந்தித்த துன்பங்களை நீங்கள் (சிந்தித்துப்) பார்க்க மாட்டீர்களா? என்று கேட்டார். அவர் இறைவழியில் கடுமையாக வேதனை செய்யப்பட்டிருந்தார்.

அப்போது (நடந்ததை) உமர்(ரலி) கூறினார்.

உடனே நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று,நீங்கள் சத்தியமாக இறைத்தூதர் இல்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆம், இறைத்தூதர் தான்' என்று பதிலளித்தார்கள். நான்,நாம் சத்திய மார்க்கத்திலும் நம் பகைவர்கள் அசத்திய மார்க்கத்திலும் இல்லையா? என்று கேட்டேன். அதற்கும் நபி(ஸல்) அவர்கள்,ஆம் (சத்திய மார்க்கத்தில் தான் நாம் இருக்கிறோம்.

அவர்கள் அசத்திய மார்க்கத்தில் தான் இருக்கிறார்கள்.)‘ என்று பதிலளித்தார்கள். நான்,அப்படியானால் (இந்த நிபந்தனைகளை ஏற்று) நம் மார்க்கத்திற்கு நாம் ஏன் இழிவைச் சேர்க்க வேண்டும்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,நான் அல்லாஹ்வின் தூதராவேன். நான் அவனுக்கு மாறு செய்வதில்லை. அவனே எனக்கு உவதக் கூடியவன்‘ என்று பதிலளித்தார்கள். நான்,விரைவில் நாம் இறையில்லம் கஅபாவைத் வலம் வருவோம் என்று தாங்கள் எங்களுக்கு சொல்லி வந்திருக்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆம். ஆனால், நாம் இந்த ஆண்டே கஅபாவுக்குச் செல்வோம் என்று நான் உங்களுக்குச் சொன்னேனா? எனக் கேட்டார்கள். நான்,இல்லை‘ என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் நிச்சயம் கஅபாவுக்குச் சென்று அதை வலம்வருவீர்கள்‘ என்று கூறினார்கள். பிறகு நான் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சென்று, அபூ பக்ரே, இவர்கள் உண்மையிலேயே அல்லாஹ்வின் துதரல்லவா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆம் இறைத்தூதர் தான்‘ என்று சத்திய மார்க்கத்திலும் நம் பகைவர்கள் அசத்திய மார்க்கத்திலும் இல்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆம்‘ என்றார்கள். நான்,அப்படியென்றால் இதை ஒப்புக் கொண்டு நம் மார்க்கத்திற்கு நாம் ஏன் இழிவைச் சேர்க்க வேண்டும்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,நண்பரே! இறைத்தூதர், தம் இறைவனுக்கு மாறு செய்ய முடியாது. அவனே அவர்களுக்கு உதவக் கூடியவன். அவர்களின் சுவட்டையே நீங்கள் பின்பற்றுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் சத்திய வழியில் தான் இருக்கிறார்கள்‘ என்று கூறினார்கள். நான்,அவர்கள் நம்மிடம்,நாம் இறையில்லத்திற்குச் சென்று அதை வலம்வந்தோம்‘ என்று சொல்லவில்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆம் (சொன்னார்கள்.) ஆனால்,நீங்கள் இந்த ஆண்டே அங்கு செல்வீர்கள் என்று உங்களிடம் சொன்னார்களா? என்று கேட்டார்கள். நான்,இல்லை (அவர்கள் அவ்வாறு சொல்லவில்லை)‘ என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,நீங்கள் நிச்சயம் அங்கு சென்று இறையில்லத்தை வலம்வரத்தான் போகிறீர்கள்‘ என்று கூறினார்கள்.

(ஸுஹ்ரீ(ரஹ்) உமர்(ரலி) தொடர்ந்து சொன்னதாகக் கூறுகிறார்கள்:)

..நான் இப்படி (அதிருப்தியுடன் நபி(ஸல்) அவர்களிடம்) பேசியதற்குப் பரிகாரமாக பல வணக்கங்களைப் புரிந்தேன். பிறகு, நபி(ஸல்) அவர்கள் ஒப்பந்தப் பத்திரத்தை எழுதி முடித்த பின்பு தம் தோழர்களை நோக்கி,எழுந்து சென்று குர்பானி கொடுத்துவிட்டு தலைமுடி களைந்து கொள்ளுங்கள்‘ என்று உத்தரவிட்டார்கள். ஆனால், அவர்களில் ஒருவர் கூட எழுந்திருக்கவில்லை. எனவே, நபி(ஸல்) அவர்கள் மூன்று முறை இவ்வாறு கூறினார்கள். இருந்தும், அவர்களில் எவரும் எழுந்திருக்காத காரணத்தால் (தம் துணைவியார்) உம்து ஸலமா(ரலி) அவர்களிடம் சென்று மக்களிடமிருந்து தாம் சந்தித்த அதிருப்தியை(யும், அதனால் அவர்கள் தமக்குக் கீழ்ப்படியாமலிருப்பதையும்) சொன்னார்கள். உடனே உம்மு ஸலமா(ரலி),இறைத்தூதர் அவர்களே! தியாகப் பிராணியை அறுத்துவிட்டுத் தலைமுடி களைந்து கொள்ள வேண்டும் என்பதை விரும்புகிறீர்களா? (நீங்கள் தியாகப் பிராணிகளை அறுத்து முடி களையப் புறப்படுங்கள். நீங்கள் (தியாகப் பிராணிகளான) குர்பானி ஒட்டகங்களை அறுத்துவிட்டு உங்கள் நாவிதரை அழைத்து, அவர் உங்கள் முடியைக் களையும் வரை அவர்களில் எவருடனும் ஒரு வார்த்தையும் பேசாதீர்கள்‘ என்று (ஆலோசனை) கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு ஒட்டகங்களை குர்பானி கொடுத்துவிட்டு, தம் நாவிதரை அழைத்துத் தலைமுடியைக் களைந்தார்கள். அதுவரை அவர்களில் எவரிடமும் நபியவர்கள் பேசவில்லை. இவற்றைக் கண்டவுடன் மற்ற நபித்தோழர்களும் எழுந்து சென்று தியாகப் பிராணிகளை அறுத்து, ஒருவர் மற்றவரின் தலைமுடியைக் களையத் தொடங்கினார்கள். ஒருவர் மற்றவரை நெரிசலால் சாகடித்து விடுவார்களோ எனும் அளவிற்குப் போட்டி போட்டுக் கொண்டு

(தியாகப் பிராணிகளை அறுக்கவும் முடிகளையவும்) சென்றனர். பிறகு (சமாதான ஒப்பந்தம் அமலில் இருந்த கால கூட்டத்தில்) இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். உடனே,இறை நம்பிக்கையாளர்களே! இறை நம்பிக்கை கொண்ட பெண்கள் ஹிஜ்ரத் செய்து உங்களிடம் வந்தார்களாயின் (அவர்கள் நம்பிக்கையாளர்களா என்பதைச்) சோதித்துப் பாருங்கள். அவர்களின் நம்பிக்கையின் உண்மை நிலையை அல்லாஹ் தான் நன்கறிவான். மேலும், அவர்கள் நம்பிக்கையாளர்கள் தான் எனறு உங்களுக்குத் தெரிந்துவிட்டால் நிராகரிப்பாளர்களிடம் அவர்களைத் திருப்பி அனுப்பாதீர்கள். அவர்கள் நிராகரிப்பாளர்களுக்கு (மனைவியராக இருக்க) அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர். நிராகரிப்பாளர்களும் அவர்களுக்கு (கணவர்களாக இருக்க) அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர். அவர்களின் (நிராகரிப்பாளர்களான) கணவன்மார்கள் அவர்களுக்கு அளிந்திருந்த மஹ்ரை அவர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். மேலும், அவர்களைத் தருமணம் செய்து கொள்வதில் உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை நீங்கள் அவர்களுக்குரிய மஹ்ரை அவர்களுக்குக் கொடுத்துவிட்டால். மேலும், இறைவனை நிராகரித்துவிட்ட பெண்களை நீங்களும் திருமண உறவில் வைத்துக் கொள்ளாதீர்கள் என்னும் (திருக்குர்ஆன் 60:10) இந்த வசனத்தை அல்லாஹ் அருளினான். உடனே, உமர்(ரலி), இணைவைக்கும் மார்க்கத்திலிருந்த காலத்தில் தமக்கிருந்த இருமனைவிமார்களை அன்று தலாக் (விவாகரத்து) செய்துவிட்டார்கள். அவ்விருவரில் ஒருவரை முஆவியா இப்னு அபீ சுஃப்யான் அவர்களும் மற்றொரு வரை ஸஃப்வான் இப்னு உமய்யா அவர்களும் மணந்தார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்குத் திரும்பி வந்தார்கள். அப்போது குறைஷிகளில் ஒருவரான அபூ பஸீர் என்பவர் முஸ்லிமாக இருக்கும் நிலையில் (மதீனாவுக்கு வருகை தந்தார். உடனே, அவரைத் தேடி(ப் பிடிக்க) குறைஷிகள் இரண்டு பேரை அனுப்பி வைத்தனர். அவர்கள் (நபி(ஸல்) அவர்களிடம் வந்து),நீங்கள் எங்களுக்குக் கொடுத்த உறுதி மொழியை நிறைவேற்றுங்கள்' என்று கேட்டனர். உடனே, அவரை அந்த இருவரிடமும் நபி(ஸல்) அவர்கள் ஒப்படைத்தார்கள். அவர்கள் இருவரும் அபூ பஸீர் அவர்களை அழைத்துக் கொண்டு துல்ஹுலைஃபாவை அடைந்தனர். அவர்கள், தம் பேரீச்சம் பழங்களைத் தின்றுகொண்டே (ஒரு மரத்தடியில்) தங்கினார்கள். அபூ பஸீர்(ரலி) அவ்விரு நபர்களில் ஒருவரிடம்,அல்லாஹ்வின் மீதாணையாக! இன்னானே! உன்னுடைய இந்த வாளை நான் மிக நல்லதாகக் காண்கிறேன்' என்றார். உடனே மற்றொருவர் வாளை உருவி,ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! இது மிக நல்ல வாள்தான். நான் இதைப் பயன்படுத்திப் பார்த்திருக்கிறேன், மீண்டும் பயன்படுத்திப் பார்த்திருக்கிறேன்' என்றார். அபூ பஸீர் அவர்கள்,எனக்கு(அதை)க் காட்டு. அதை நான் பார்க்கிறேன்' என்று கேட்டு அவரைத் தன் வசத்தில் கொண்டு வந்து (அந்த வாளால்) குத்திக் கொன்றுவிட்டார். மற்றொருவர் விரண்டோடி மதீனா வரை சென்றார் ஓடிக் கொண்டே பள்ளிவாசலுக்குள் புகுந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரைக் கண்டபோது,இவர் ஏதோ பீதியேற்படுத்தும் விஷயத்தைக் கண்டு விட்டிருக்கிறார்' என்று கூறினார்கள். அவர் நபி(ஸல்) அவர்களிடம் சென்று நின்றபோது,அல்லாஹ்வின் மீதாணையாக! என் சகோதரர் கொல்லப்பட்டுவிட்டார். (நீங்கள் அபூ பஸீரைத் தடுக்காவிட்டால்) நானும் கொல்லப்பட்டு விடுவேன்' என்று கூறினார். உடனே அபூ பஸீர் அவர்கள் வந்து,இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் தங்கள் பொறுப்பை நிறைவேற்றிவிட்டான். தாங்கள் என்னை அவர்களிடம் திருப்பியனுப்பி விட்டீர்கள். பிறகு அல்லாஹ், என்னை அவர்களிடமிருந்து காப்பாற்றிவிட்டான்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,இவரின் தாய்க்குக் கேடுண்டாகட்டும். உதவுபவர் எவராவது இவருக்குக் கிடைத்தால் இவர் போர்த் தீயை மறுபடியும் மூட்டி விடுவார்' என்று கூறினார்கள். இதைச் செவியுற்றவுடன் அபூ பஸீர் அவர்கள், நபி(ஸல்) அவர்கள் தம்மை (மீண்டும்) குறைஷிகளிடம் திருப்பியனுப்பி விடுவார்கள் என்பதைப் புரிந்து கொண்டு அங்கிருந்து தப்பியோடி கடலோரத்திற்குச் சென்றார்கள்.

சுஹைலின் மகன் அபூ ஜந்தல்(ரலி) அவர்களும் குறைஷிகளிடமிருந்து தப்பியோடி அபூ பஸீர் அவர்களுடன் சேர்ந்தார்கள். பிறகு, குறைஷிகளில் இஸ்லாத்தைத் தழுவியவர் (தப்பிச் சென்று) அபூ பஸீர் அவர்களுடன் சேர்ந்து கொள்ளத் தொடங்கினார். இறுதியில், (சிறிது சிறிதாக இப்படி இஸ்லாத்தை ஏற்றவர்கள் மக்காவிலிருந்து தப்பியோடி வந்து) ஒரு குழுவினராக ஒன்று திரண்டுவிட்டனர். அல்லாஹ்வின் மீதாணையாக! ஷாம் நாட்டை நோக்கி குறைஷிகளின் ஒரு (வியாபாரப்) பயணக் குழு புறப்பட்டிருப்பதாகக் கேள்விப்படும் போதெல்லாம் அதை அவர்கள் இடைமறித்து அவர்களைக் கொன்ற அவர்களின் செல்வங்களை (வியாபாரப் பொருட்களை)ப பறித்துக் கொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். எனவே, குறைஷிகள் (அபூ பஸீரும் அவரின் சகாக்களும் தங்களுக்குத் தொல்லை தராமல் இருக்க வேண்டுமென்று) இருவருக்கும் ஆளனுப்பி உத்தரவிடும்படி அல்லாஹ்வின் பெயராலும் உறவு முறையின் பெயராலும் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டுத் தூதனுப்பினார்கள். மேலும்,குறைஷிகளில், முஸ்லிமாக நபி(ஸல்) அவர்களிடம் வருகிறவர் அச்சமின்றி இருக்கலாம் (அவரை எங்களிடம் திருப்பியனுப்பி வேண்டாம்)' என்று கூறிவிட்டனர். அப்போதுதான் அல்லாஹ்,அவனே மக்காவின் பள்ளத்தாக்கில் அவர்களின் கைகள் உங்களுக்கெதிராக உயர்வதையும் தடுத்துவிட்டான் அப்போது அவர்களின் மீது உங்களுக்கு வெற்றியையும் கொடுத்தான். மேலும், நீங்கள் செய்து கொண்டிருந்த யாவற்றையும் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருந்தான்... இறை மறுப்பாளர்கள், தங்கள் உள்ளங்களில் வைராக்கியத்தை (அஞ்ஞான கால மூடச் சிந்தனையை) ஏற்படுத்தியபோது அல்லாஹ், தன் தூதர் மீதும் நம்பிக்கையாளர்களின் மீதும் நிம்மதியை இறக்கியருளினான். மேலும், நம்பிக்கையாளர்களை இறைவாக்கைப் பேணி நடப்போராய் ஆக்கினான். அவர்கள் தாம் அதற்கு மிகவும் அருகதையுடையோராயும் உரிமையுடையோராயும் இருந்தனர். அல்லாஹ் ஒவ்வொன்றையும் நன்கறிந்தவனாக இருக்கிறான் என்னும் (திருக்குர்ஆன் 48:24-26) வசனத்தை அருளினான்.

இறைமறுப்பாளர்கள், முஹம்மத்(ஸல்) (அவர்கள் இறைத்தூதரே என்று அறிந்திருந்தும் வீண்பிடிவாதத்தின் காரணத்தால்) அவர்களை இறைத்தூதர் என ஏற்காமலிருந்தும், (அல்லாஹ்வை ஏற்றுக் கொண்டிருந்தும் திருக்குர்ஆனில் இடம் பெற்ற காரணத்தால்) பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் - அளவற்ற அருளாளனும் கருணையன்புடையோனுமான அல்லாஹ்வின் திருப்பெயரால் என்று (ஒப்பந்தப் பத்திரத்தில்) எழுத மறுத்துவிட்டதும், முஸ்லிம்களை இறையில்லம் கஅபாவைச் சந்திக்க விடாமல் தடுத்தும் தான் அந்த மூட வைராக்கியமாகும்.

ஹதீஸ் 2733. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து வரும் பெண்களை (அவர்கள் இறை நம்பிக்கையுடையவர்கள் தாமா) என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சோதித்து வந்தார்கள். இணைவைப்பவர்களின் மனைவிமார்களில் யாரெல்லாம் ஹிஜ்ரத் செய்து வந்தார்களோ அவர்களுக்காக, அவர்களின் கணவன்மார்கள் செலவிட்ட (மஹ்ர்) தொகைகளை அவர்களிடமே திருப்பிக் கொடுத்து விடும்படியும், நிராகரிக்கும் பெண்களுடன் திருமணம் பந்தம் வைத்திருக்கக் கூடாது என்றும் அல்லாஹ் (குர்ஆனில் சட்டம் அருளி) முஸ்லிம்களுக்குக் கட்டளையிட்டபோது, உமர்(ரலி), அபூ உமய்யாவின் மகள் கரீபாவையும், ஜர்வல் அல் குஸாயீயின் மகளையும் (அவர்கள் நிராகரிப்பவர்களாக இருந்த காரணத்தால்) தலாக் செய்துவிட்டார்கள். எனவே, கரீபாவை முஆவியா இப்னு அபீ சுஃப்யானும் மற்றொருத்தியை (ஜர்வலின் மகளை) அபூ ஜஹ்மும் மணந்தார்கள். முஸ்லிம்கள் தங்கள் மனைவிமார்களுக்குச் செலவிட்டவற்றை (மஹ்ர் தொகையை) திருப்பிச் செலுத்துவதற்கு ஒப்புக் கொள்ள நிராகரிப்பவர்கள் மறுத்தபோது,இறைநிராகரிப்பாளர்களான உங்கள் மனைவிமார்(கள் நிராகரிப்பாளர்களிடம் சென்று அவர்களின் மனைவிகளாம் விட்டிருக்கும் பட்சத்தில் அவர்)களுக்கு நீங்கள் கொடுத்திருந்த

மஹ்ரில் சிறிதளவு அந்த நிராகரிப்பாளர்களிடமிருந்து உங்களுக்குக் கிடைக்க வில்லையாயின், பின்னர் உங்களுக்குப் போர்ச் செல்வங்கள் கிடைக்கும்போது உங்களில் யாருடைய மனைவிமார்கள் அங்கே சென்றார்களோ (அவர்களின்) அந்தக் கணவன்மார்களுக்கு அவர்கள் வழங்கிய மஹ்ருக்குச் சமமான தொகையைக் கொடுத்து விடுங்கள்' (திருக்குர்ஆன் 60:11) என்னும் வசனத்தை அல்லாஹ் அருளினான். ஹிஜ்ரத் செய்து வந்த (இறைநம்பிக்கை கொண்ட) பெண்களில் எவருமே அதன் பின்னர் இஸ்லாத்தை நிராகரித்து (மதம் மாறிச்) சென்றதாக நாங்கள் அறியவில்லை. சமாதான உடன்படிக்கைக் காலத்தில் அபூ பஸீர் இப்னு உசைத் அஸ் ஸக.ஃபீ அவர்கள் இறைநம்பிக்கை கொண்டு, ஹிஜ்ரத் செய்தவராக நபி(ஸல்) அவர்களிடம் வந்ததாகவும் (குறைஷித் தலைவர்) அக்னஸ் இப்னு ஷுரைக் என்பவர் அபூ பஸீரை (மக்காவுக்குத்) திருப்பியனுப்பும் படி கேட்டு, நபி(ஸல்) அவர்களுக்கு (கடிதம்) எழுதியதாகவும் எங்களுக்குச் செய்தி எட்டிற்று."'.. என்று ஹதீஸ் முழுவதையும் சொன்னார்கள்.

## கடன் விஷயத்தில் விதிக்கப்படும் நிபந்தனைகள்.

ஹதீஸ் 2734. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் இஸ்ரவேலர்களில் ஒருவரிடம் தனக்கு ஆயிரம் தீனார்கள் கடன் தரும்படி கேட்டதாகவிம் அந்த இஸ்ரவேலரும் காலக் கெடுவைக் குறிப்பிட்டு (அதற்குள் திருப்பிச் செலுத்தி விட வேண்டுமென்று நிபந்தனையிட்டு) அதை அவருக்குக் கொடுத்ததாகவும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள், கூறினார்கள். 19

இப்னு உமர்(ரலி) மற்றும் அதாஉ(ரஹ்) ஆகிய இருவரும்,கடன் கொடுப்பவர் கடனைத் திருப்பிச் செலுத்த காலக் கெடுவைக் குறிப்பிட்டால் அது செல்லும்' என்று கூறுகிறார்கள். 20

## முகாத்தப் (விடுதலைப் பத்திரம் எழுதித் தரப்பட்ட அடிமை) மற்றும் அல்லாஹ்வின் வேதத்திற்கு முரணான, அனுமதிக்கப்படாத நிபந்தனைகள்.

ஜாபிர்(ரலி),முகாத்தபின் விஷயத்தில் அவர்களின் (முகாத்தப்) மற்றும் அவனுடைய எஜமானர்களின்) நிபந்தனைகள் அவர்களுக்கிடையே ஒப்புக் கொள்ளப்பட்டபடியே இருக்கும்' என்று கூறினார்கள்.

"இறைச் சட்டத்திற்கு மாற்றமான நிபந்தனைகள் அனைத்தும் செல்லாதவையாகும் நூறு முறை நிபந்தனைகள் விதித்தாலும் சரியே' என்று இப்னு உமர்(ரலி) அல்லது உமர்(ரலி) (இருவரில் எவரோ ஒருவர்) கூறினார்கள்.

ஹதீஸ் 2735. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

பரீரா, தன்னுடைய விடுதலைப் பத்திரத்தின் தொகையைச் செலுத்த (உதவி தேடி) என்னிடம் வந்தார். நான்,நீ விரும்பினால் உன் எஜமானர்களுக்கு (முழுத் தொகையையும்) நான் செலுத்தி விடுகிறேன். ஆனால், உன் வாரிசுரிமை எனக்கே உரியதாம் விட வேண்டும்' என்று கூறினேன். இறைத்தூதர் வந்தபோது நான் இதை அவர்களிடம் கூறினேன். அவர்கள்,அவரை வாங்கி விடுதலை செய்து விடு. ஏனெனில், வாரிசுரிமை விடுதலை செய்தவருக்கே உரியது' என்று கூறினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உரைமேடையின் மீது நின்று (உரை நிகழ்த்தலானார்கள்)மக்கள் சிலருக்கு என்ன நேர்ந்துவிட்டது? இறைச் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளை விதிக்கிறார்களே! இறைச் சட்டத்தில் இல்லாத நிபந்தனைகளை விதிக்கிறவருக்கு அதற்கான (அதை நிறைவேற்றக் கோரும்) உரிமை இல்லை அவர் நூறு முறை நிபந்தனை விதித்தாலும் சரியே' என்று கூறினார்கள்.

## செல்லுகிற நிபந்தனை, ஒப்புதல் வாக்குமூலம் தரும்போது விதிவிலக்குத் தருவது, மக்களுக்கிடையே வழக்கிலுள்ள நிபந்தனைகள் மற்றும் ஒருவர் நூறில் ஒன்று அல்லது இரண்டு போக என்று கூறினால்...?

இப்னு சீரின் (ரஹ்) கூறினார்.

ஒருவர் வாகனத்தை வாடகைக்கு விடுபவரிடம்,உன் வாகனத்தை (தொழுவத்தில்) கட்டி வை. நான் உன்னுடன் இன்ன நாளில் பயண செய்யவில்லையென்றால் உனக்கு நூறு திர்ஹம்கள் தந்து விடுகிறேன்' என்று கூறிவிட்டு, பிறகு குறித்த நாளில் வரவில்லையென்றால் (அவர் நூறு திர்ஹம்களை வாடகைக்கு விடுபவருக்குத் தந்து விடவேண்டும்).. இது குறித்து நீதிபதி ஷுரைஹ் (ரஹ்),தானாக முன்வந்து எவருடைய நிர்பந்தமுமின்றி ஒன்றைத் தன் மீது நிபந்தனையிட்டவன் அதை நிறைவேற்றியாக வேண்டும்' என்று கூறினார்கள்.

மேலும், இப்னு சீரின் (ரஹ்) கூறினார்.

ஒருவர் ஓர் உணவுப் பொருளை விற்றார். அப்போது அதை வாங்குபவர்,நான் புதன்கிழமையன்று உன்னிடம் வரவில்லையென்றால் உனக்கும் எனக்குமிடையே (நடக்கும் இந்த) வியாபாரம் ரத்தாம் விடும்' என்று கூறிவிட்டுச் சென்றார். பிறகு புதன்கிழமையன்று வரவில்லை. (இதனால் தகராறு ஏற்பட்டு, வழக்கு) நீதிபதி ஷுரைஹ் (ரஹ்) (அவர்களிடம் வந்தபோது அவர்) அதை வாங்குபவரிடடம்,நீ (குறித்த நாளில் வராமல்) உன் வாக்குறுதிக்கு மாறு செய்துவிட்டாய்' என்று சொல்லி அவருக்கு எதிராகத் தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 2736. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வுக்கு நூறில் ஒன்று போக தொண்ணூற்றொன்பது திருப்பெயர்கள் உள்ளன. அவற்றை அறிந்து (அதன் மீது நம்பிக்கை வைத்து அதை நினைவில்) கொள்பவர் சொர்க்கத்தில் நுழைவார்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## வக்ஃபு செய்யும்போது விதிக்கம் நிபந்தனைகள்

ஹதீஸ் 2737. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) உமர் இப்னு கத்தாப் (ரலி) கையில் கைபரில் ('ஃதம்ஃக் என்னும்) ஒரு நிலத்தைப் பெற்றிருந்தார்கள். அதன் விஷயத்தில் ஆலோசனை பெறுவதற்காக நபி (ஸல்) அவர்களிடம் சென்றார்கள். இறைத்தூதர் அவர்களே! நான் கைபரில் ஒரு நிலத்தைப் பெற்றுள்ளேன். அதைவிடச் சிறந்த ஒரு செல்வத்தை (இதுவரை) நான் அடைந்ததேயில்லை. எனவே, அதை நான் என்ன செய்யவேண்டும் என்று தாங்கள் கட்டளையிடுகிறீர்கள்? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள்,நீங்கள் விரும்பினால் அந்த நிலத்தை நீங்களே வைத்துக் கொண்டு அதன் விளைச்சலை தர்மம் செய்யுங்கள் என்று கூறினார்கள். அவ்வாறே உமர் (ரலி) அவர்களும்அதை (எவருக்கும்) விற்கக் கூடாது; அன்பளிப்பாக வழங்கக் கூடாது வாரிசுச் சொத்தாகவும் எவருக்கும் அதை வழங்கக் கூடாது என்ற நிபந்தனைகளை விதித்து அறக்கொடையாக (வக்ஃபாக) வழங்கினார்கள். அ(தன் வருமானத்)தை ஏழைகளுக்கும், உறவினர்களுக்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், அல்லாஹ்வின் பாதையிலும், வழிப் போக்கர்களுக்கும், விருந்தினர்களுக்கும் தர்மம் செய்தார்கள். அதைப் பராமரிக்கப் பொறுப்பேற்றிருப்பவர், அதிலிருந்து நியாயமான அளவில் உண்பதிலும் (அதிலிருந்து எடுத்துத் தனக்கென்று) சேகரித்து வைக்காமல், படாடோபமாகச் செலவிடாமல் பிறருக்கு உணவளிப்பதிலும் குற்றமில்லை (என்றும் எழுதி வைத்தார்கள்.)

# அத்தியாயம் 55 மரண சாசனங்கள்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## மரண சாசனங்களும், மனிதனின் மரண சாசனம் எழுதப்பட்டு அவனிடம் (ஆவண வடிவில் இருக்கவேண்டும்' என்னும் நபி(ஸல்) அவர்களின் கூற்றும்.

அல்லாஹ் கூறினான்:

உங்களில் ஒருவருக்கு மரணம் வரும்போது அவர் செல்வம் எதையேனும்விட்டுச் சென்றால் அவர் தம் தாய் தந்தைக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் (வழக்கிலுள்ள) நியாயமான முறைப்படி மரண சாசனம் (வஸிய்யத்) செய்யவேண்டும் என்று உங்களின் மீது விதிக்கப்பட்டுள்ளது. இறையச்சமுடையவர்களின் மீது இது கடமையாகும். யாரேனும் அதைக் கேட்டு, பின்னர் அதை மாற்றிவிட்டால் அதன் பாவமெல்லாம் அதை மாற்றுகிறவர்களின் மீது தான் சாரும். நிச்சயமாக, அல்லாஹ்யாவற்றையும் செவியுறுபவனாகவும், அறிபவனாகவும் இருக்கிறான். மரண சாசனம் செய்தவர் தெரிந்தோ தெரியாமலோ அநீதி செய்துவிட்டார் என்று எவராவது அஞ்சி சம்பந்தப்பட்டவர்களிடையே (நடுவராகச் செயல்பட்டு) சமாதானம் செய்து வைத்து விடுவாராயின் (அவ்விதம் செய்ததில்) அவரின் மீது குற்றமேதுமில்லை. நிச்சயமாக, அல்லாஹ் மன்னிப்பவனும் அருள் புரிபவனும் ஆவான். (திருக்குர்ஆன் 02:180)

ஹதீஸ் 2738. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மரண சாசனம் செய்ய) ஏதேனும் ஒரு பொருளைப் பெற்றிருக்கும் எந்த ஒரு முஸ்லிமுக்கும் அவர் தன்னுடைய மரண சாசனத்தை எழுதித் தன்னிடம் வைத்திருக்காமல் இரண்டு இரவுகள் கூட கழிப்பதற்கு அனுமதியில்லை.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இப்னு உமர்(ரலி) அவர்களிடமிருந்து அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களும் இவ்வாறே அறிவித்தார்கள்.

ஹதீஸ் 2739. அல்லாஹ்வின் தூதருடைய துணைவியார் ஜுவைரிய்யா பின்த்து ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் மரணத்தின்போது திர்ஹமையோ, தீனாரையோ (வெள்ளி நாணயத்தையோ, பொற்காசையோ), அடிமையையோ, அடிமைப் பெண்ணையோ, வேறு எதையுமோவிட்டுச் செல்லவில்லை. தம் வெள்ளைக் கோவேறுக் கழுதையையும், தம் ஆயுதங்களையும், தர்மமாக ஆக்கி விட்டிருந்த ஒரு நிலத்தையும் தவிர.

ஹதீஸ் 2740. தல்ஹா இப்னு முஸர்ரிஃப்(ரஹ்) அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்கள் வஸிய்யத் - மரண சாசனம் செய்தார்களா? என்று கேட்டேன். அவர்கள்,இல்லை' என்று பதிலளித்தார்கள். நான்,அப்படியென்றால் மக்களின் மீது வஸிய்யத் - மரண சாசனம் செய்வது எப்படிக் கடமையாக்கப்பட்டது? அல்லது மரண சாசனம் செய்யவேண்டுமென்று மக்களுக்கு எப்படிக் கட்டளையிடப்பட்டது? என்று கேட்டேன். அதற்கு அவர்,அல்லாஹ்வின் வேதத்தின்படி செயல்படுமாறு நபி(ஸல்) அவர்கள் உபதேசம் செய்தார்கள்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2741. அஸ்வத்(ரஹ்) அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்களிடம் மக்கள்,நபி(ஸல்) அவர்கள் (தமக்குப் பின் ஆட்சித் தலைமை ஏற்கும்படி) அலீ(ரலி) அவர்களிடம் இறுதி விருப்பம் (வஸிய்யத்) தெரிவித்துவிட்டுச் சென்றார்கள். (என்று கேள்விப்படுகிறோமே)' என்றார்கள். அதற்கு ஆயிஷா(ரலி),நபி(ஸல்) அவர்கள் எப்போது அவருக்கு வஸிய்யத் செய்தார்கள்? (நபி(ஸல்) அவர்கள் மரணப் படுக்கையில் இருந்த போது) நான் தானே அவர்களை என் நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொண்டிருந்தேன். அவர்கள் கையலம்பும் கிண்ணம் கொண்டு வரும்படிக் கேட்டார்கள். பிறகு என் மடியில் மூர்ச்சையுற்று சரிந்தார்கள். நான் அவர்கள் இறந்துவிட்டார்கள் என்பதைக் கூட உணரவில்லை. அவ்வாறிருக்க, அவர்கள் எப்போது அவரிடம் (ஆட்சிப் பொறுப்பேற்கும்படி) வஸிய்யத் செய்திருக்க முடியும்? என்று கேட்டார்கள்.

## ஒருவர் தன் வாரிசுகளைத் தன்னிறைவு பெற்றவர்களாகவிட்டுச் செல்வது, மக்களிடம் கையேந்தும் நிலையில்விட்டுச் செல்வதை விட நல்லதாகும்.

ஹதீஸ் 2742. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

மக்காவில் (நோயுற்று) இருந்த என்னை நபி(ஸல்) அவர்கள் (தம் ஹஜ்ஜின் போது) நலம் விசாரித்து வந்தார்கள். நான் துறந்து வந்த பூமியில் (மக்காவில்) மரணிப்பதை நான் விரும்பவில்லை. (மக்காவிலேயே மரணித்துவிட்ட மற்றொருவரான)அஃப்ராவின் புதல்(வர் ஸஅத்பின் கவ்லா என்ப)வருக்கு அல்லாஹ் கருணை புரிவானாக! என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இறைத்தூதர் அவர்களே! என் செல்வம் முழுவதையும் நான் மரணசாசனம் செய்து விடட்டுமா? என்று கேட்டேன். அவர்கள்,வேண்டாம்' என்று கூறினார்கள். நான்,அப்படியென்றால் (என் செல்வத்தில்) பாதியை மரண சாசனம் செய்து விடட்டுமா? என்று கேட்டேன். அதற்கும்,வேண்டாம்' என்றே பதிலளித்தார்கள். நான்,மூன்றிலொரு பங்கை(யாவது மரண சாசனம் செய்து விடட்டுமா?)' என்று கேட்டேன். அவர்கள்,மூன்றிலொரு பங்கா? மூன்றிலொரு பங்கே அதிகம் தான். நீங்கள் உங்கள் வாரிசுகளைத் தன்னிறைவுடையவர்களாகவிட்டுச் செல்வது, அவர்களை மக்களிடம் கையேந்தும்படி ஏழைகளாகவிட்டுச் செல்வதை விட நல்லதாகும். நீங்கள் செய்த (நல்ல) செலவு எதுவாயினும் தருமமேயாகும். நீங்கள் உங்கள் மனைவியின் வாயில் இடுகிற ஒரு கவளம் (உணவு) கூட (தருமமேயாகும்.) மேலும், உங்களுக்கு அல்லாஹ் நீண்ட ஆயுளைத் தருவான். 4 உங்கள் வாயிலாக மக்கள் சிலர் பயனடைவார்கள். மற்ற (தீயவர்) சிலர் உங்களால் இழப்புக்குள்ளாவார்கள்' என்று கூறினார்கள். 5 அன்று அவருக்கு ஒரு மகளைத் தவிர வேறு (நேரடி வாரிசுகள்) யாரும் இருக்கவில்லை.

## மூன்றிலொரு பங்கு மரண சாசனம் செய்தல்.

ஹஸன் பஸரீ(ரஹ்),இஸ்லாமிய அரசின் கீழுள்ள முஸ்லிமல்லாதாரும் மூன்றிலொரு பங்குக்கு மேல் மரண சாசனம் செய்யக் கூடாது' என்று கூறினார். ஏனெனில்,(நபியே!) அவர்களிடையே நீங்கள் அல்லாஹ் அருளிய (சட்டத்)தைக் கொண்டே தீர்ப்பளியுங்கள்' என்று அல்லாஹ் கூறினான்.

ஹதீஸ் 2743. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

மக்கள் (தம் மரண சாசனங்களை) நான்கிலொரு பாகமாகக் குறைத்துக் கொண்டால் நன்றாயிருக்கும். ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,மூன்றிலொரு பங்கா? மூன்றிலொரு பங்கும் அதிகம் தான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2744. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

(இறுதி ஹஜ்ஜின்போது மக்காவில்) நான் நோயுற்று விட்டேன். நபி(ஸல்) அவர்கள் என்னை நலம் விசாரிக்க வருகை தந்தார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! என் கால்சுவடுகளின் வழியே என்னைத் திருப்பியனுப்பி விடாமல் (பழைய மார்க்கத்திற்கே திரும்பிச் செல்லும்படி செய்து விடாமல்) இருக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ் உங்களுக்கு நீண்ட ஆயுளைத் தந்து, உங்களால் மக்கள் சிலருக்குப் பயன் தருவான்' என்று கூறினார்கள். நான் மரண சாசனம் செய்ய விரும்புகிறேன். எனக்கிருப்பதெல்லாம் ஒரு மகள் தான். (என் சொத்தில்) பாதி பாகத்தை (நற்காரியங்களுக்காக) மரண சாசனம் செய்து விடட்டுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,பாதி அதிகம் தான்' என்று கூறினார்கள். நான்அப்படியென்றால் மூன்றிலொரு பங்கு? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,மூன்றிலொரு பங்கா? மூன்றிலொரு பங்கும் அதிகம் தான்-- அல்லது பெரியது தான்' என்று கூறினார்கள்.

எனவே, மக்கள் மூன்றிலொரு பங்கை மரண சாசனம் செய்தார்கள். அது செல்லும் என்று நபி(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

## மரண சாசனம் செய்பவர் தன் பொறுப்பாளரிடம், என் மகனை கவனித்துக் கொள்' என்று சொல்வதும், பொறுப்பாளர் உரிமை கோர அனுமதிக்கப்பட்டவையும்.

ஹதீஸ் 2745. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உத்பா இப்னு அபீ வக்காஸ் தம் சகோதரர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம்,ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகன் எனக்குப் பிறந்தவன். அவனை நீ பிடித்து வைத்துக் கொள்' என்று உறுதிமொழி வாங்கியிருந்தார். மக்காவை வெற்றி கொண்ட ஆண்டில் ஸஅத்(ரலி) அவனைப் பிடித்தார்கள். அப்போது அவர்கள், (இவன் என்) சகோதரரின் மகன். என் சகோதரர் இவனை அழைத்து வரும்படி என்னிடம் உறுதி மொழி வாங்கியுள்ளார்' என்று கூறினார். ஸம்ஆவின் மகன் அப்து(ரலி) எழுந்து,இவன் என் சகோதரன். என் தந்தையின் அடிமைப் பெண்ணுடைய மகன். அவரின் படுக்கையில் (அவரின் ஆதிக்கத்தில் இவனுடைய தாய் இருந்த போது) பிறந்தவன்' என்று கூறினார். இருவரும் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (தீர்ப்புக் கேட்டு) சென்றனர். ஸஅத்(ரலி),இறைத்தூதர் அவர்களே! இவன் என் சகோதரன் மகன். அவர் இவனை அழைத்து வரும்படி என்னிடம் உறுதிமொழி வாங்கியிருந்தார்' என்று கூற அப்து இப்னு ஸம்ஆ(ரலி),இவன் என் சகோதரன். என் தந்தையின் அடிமைப் பெண்ணுக்குப் பிறந்தவன்' என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அப்து இப்னு ஸம்ஆவே! அவன் உனக்கேயுரியவன். ஏனெனில், (சட்டப்படி) தாய் யாருடைய ஆதிக்கத்தில் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியதாகும். விபசாரம் செய்தவனுக்கு இழப்பு தான் உரியது' என்று கூறினார்கள். பிறகு (தம் மனைவியும்) ஸம்ஆவின் மகளுமான சவ்தா(ரலி) அவர்களிடம்,இவனிடமிருந்து நீ உன்னைத் திரையிட்டு (மறைத்து)க் கொள்' என்று கூறினார்கள். அவன் தோற்றத்தில் உத்பாவைப் போன்றே இருந்ததைக் கண்டதால் தான் நபி(ஸல்) அவர்கள் இப்படிக் கூறினார்கள். (அதன் பிறகு) அந்த மனிதர் மரணிக்கும் வரை) அன்னை சவ்தா(ரலி) அவர்களைப் பார்க்கவில்லை.

## நோயாளி தன்னுடைய தலையால் தெளிவான சைகை செய்தால் அது செல்லும்.

ஹதீஸ் 2746. அனஸ்(ரலி) அறிவித்தார்.

யூதன் ஒருவன் சிறுமி ஒருத்தியின் தலையை இரண்டு கற்களுக்கிடையே வைத்து நசுக்கிவிட்டான். அச்சிறுமியிடம், உன்னை இப்படிச் செய்தது யார்? இன்னாரா? இன்னாரா? என்று ஒவ்வொரு பெயராகச் சொல்லிக் கேட்கப்பட்டது. இறுதியில், அந்த யூதனுடைய பெயர் சொல்லப்பட்டவுடன் ('அவன்தான் இப்படிச் செய்தான் என்று) அச்சிறுமி தன் தலையால் சைகை செய்தாள். உடனே அந்த யூதன் கொண்டு வரப்பட்டான். அவன் தன் குற்றத்தை ஒப்புக் கொள்ளும்வரை தொடர்ந்து விசாரிக்கப்பட்டான். அவன் ஒப்புக் கொண்டவுடன் நபி(ஸல்) அவர்கள் அவனுடைய தலையைக் கல்லால் நசுக்கும்படி உத்தரவிட, அவ்வாறே அவனுடைய தலை நசுக்கப்பட்டது.

## வாரிசுக்கு மரண சாசனம் செய்யக் கூடாது.

ஹதீஸ் 2747. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(தொடக்கக் காலத்தில்) சொத்து பிள்ளைக்குரியதாகவும் மரண சாசனம் தாய்தந்தைக்குரியதாகவும் இருந்தது. தான் விரும்பியதை அதிலிருந்து அல்லாஹ் மாற்றிவிட்டான். இரண்டு பெண்களின் பங்குக்குச் சமமானதை ஆணுக்கு (அவனுடைய பங்காக) நிர்ணயித்தான். தாய் தந்தையரில் ஒவ்வொருவருக்கும் ஆறில் ஒரு பங்கை நிர்ணயித்தான். மனைவிக்கு எட்டில் ஒரு பங்கையும், நான்கில் ஒரு பங்கையும் கணவனுக்குப் பாதியையும் நான்கில் ஒரு பங்கையும் நிர்ணயித்தான்.

## மரணத் தருவாயில் தர்மம் செய்வது.

ஹதீஸ் 2748. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! தருமத்தில் சிறந்தது எது? என்று கேட்டார். நீங்கள் ஆரோக்கியமுள்ளவராகவும், பொருளாசை கொண்டவராகவும் செல்வந்தராக விரும்பிய வண்ணம் வறுமையை அஞ்சியவராகவும் இருக்கும்போது தர்மம் செய்வதே சிறந்த தர்மம் ஆகும். உன் உயிர் தொண்டைக் குழியை அடைந்து விட்டிருக்க, இன்னாருக்கு இவ்வளவு கொடுங்கள் இன்னாருக்கு இவ்வளவு கொடுங்கள்' என்று சொல்லும் (நேரம் வரும்) வரை தருமம் செய்வதைத் தள்ளிப் போடாதே. (உன் மரணம் நெருங்கி விடும்) அந்த நேரத்திலோ அது இன்னாருக்கு (உன் வாரிசுகளுக்கு) உரியதாய் ஆம் விட்டிருக்கும்' என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

மரணமடைந்தவர் செய்திருந்த மரண சாசனம் நிறைவேற்றப்பட்ட பின்னரும் அவரின் கடன் அடைக்கப்பட்ட பின்னரும் தான் (அவரின் சொத்து வாரிசுகளிடையே மேலே விவரித்தபடி பங்கிடப்பட வேண்டும்). (திருக்குர்ஆன் 04:12)

நீதிபதி ஷுரைஹ்(ரஹ்), உமர் இப்னு அப்தில் அஸீஸ், தாவூஸ், அதாஉ, இப்னு உதைனா(ரஹ் - அலைஹிம்) ஆகியோர், நோயாளி, தான் பட்ட கடனை ஒப்புக் கொண்டு வாக்கு மூலம் தருவது செல்லும்' என்று அனுமதித்திருக்கிறார்கள் எனக் கூறப்படுகிறது.

ஹஸன் பஸரீ(ரஹ்), ஒரு மனிதன் செய்யும் தருமங்களில் தகுதி மிக்கது அவன் உலக வாழ்வின் கடைசி நாளிலும் மறுமை வாழ்வின் முதல் நாளிலும் செய்யும் (மரண சாசன) தருமமேயாகும்' என்று கூறினார்கள்.

இப்ராஹீம் நகஈ(ரஹ்), ஹகம் இப்னு உயைனா(ரஹ்) ஆகியோர் கூறினார்கள்கள்.

மரணப் படுக்கையில் உள்ள நோயாளி ஒருவர், தன் வாரிசைக் கடனிலிருந்து விடுவித்துவிட்டால் அவர் கடன் சுமையிலிருந்து விடுபட்டு விடுவார். ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) ஃபஸாரிய்யா

குலத்தைச் சேர்ந்த தம் மனைவியிடம், அவரின் வீட்டில் இருப்பவற்றை (அவரே வைத்துக் கொள்ளும்படியும்) மற்றவர்களுக்குக் கொடுக்க வேண்டாம் என்று(ம்) இறுதி விருப்பம் (வஸிய்யத்) தெரிவித்தார்கள்.

“ஒருவன் தன் மரண வேளையில் தன் அடிமையைப் பார்த்துஉன்னை நான் விடுதலை செய்து விட்டேன் என்று கூறினால் அது செல்லும்‘ என்று ஹஸன் பஸரீ(ரஹ்) கூறினார்.

“ஒரு பெண் தன் மரண வேளையில்என் கணவன் எனக்குத் தர வேண்டியதைத் தந்து (கடனை) அடைத்துவிட்டார். நான் அதை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டேன் என்று கூறினால் அது செல்லும்‘ என்று ஷஅபீ (ரஹ்) கூறினார்.

“மரணப் படுக்கையில் இருப்பவன்,என் வாரிசுகளில் சிலருக்கு, நான் அவர்களிடமிருந்து வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டியுள்ளது என்று வாக்குமூலம் தந்தால், (அவன் மற்ற வாரிசுகளுக்குக் குறைவாகவும் அந்தக் குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் அதிகமாகவும் தருவதற்காக அப்படிச் சொல்லியிருக்கலாம் என்னும்) சந்தேகம் இருப்பதால் அவனுடைய வாக்குமூலம் செல்லாது‘ என்று சிலர் கூறினார். பிறகு, அத்தகைய வாக்குமூலத்தில் சிலவற்றை மட்டும் (விதிவிலக்காக) அனுமதிக்கலாம் என்று கருதீ,(வாரிசுகளில்) ஒருவரின் அடைக்கலப் பொருள் தன்னிடம் இருப்பதாகவும் அவரின் பொருள்கள் சில தன்னிடம் இருப்பதாகவும் (கூட்டு வியாபாரத்தில்) அவரின் முதலீடு தன்னிடம் இருப்பதாகவும் வாக்குமூலம் தந்தால் அது செல்லும்‘ என்று கூறினர். ஆனால், நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் (ஆதாரமின்றி) சந்தேகம் கொள்வது குறித்து உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், சந்தேகம் கொண்ட பேச்சு தான் மிகப் பொய்யான பேச்சாகும்‘ என்று கூறினார்கள்.

அவர்கள்,முஸ்லிம்களின் செல்வத்தை (அநியாயமாக) உண்பது கூடாது. ஏனெனில், நபி(ஸல்) அவர்கள்,நயவஞ்சகனின் அடையாளம் யாதெனில், அவனிடம் அடைக்கலப் பொருள் (அல்லது வெறுப்பு) ஏதும் நம்பி ஒப்படைக்கப்பட்டால் அதில் அவன் மோசடி செய்வான்‘ என்று கூறினார்கள்.

“உங்களை நம்பி ஒப்படைக்கப்பட்டவற்றை அதற்குரியவர்களிடம் திருப்பிக் கொடுத்து விடுங்கள்‘ என்று இறைவனே கூறுகிறான். (திருக்குர்ஆன் 04:58)

இவ்வசனத்திலுள்ளஉரியவர்கள் என்னும் சொல் வாரிசுகளைத் தான் குறிக்கும் என்றோ அல்லது மற்றவர்களைக் குறிக்கும் என்றோ இறைவன் குறிப்பிட்டுக் கூறவில்லை.

நயவஞ்சகனின் அடையாளம் குறித்த இந்த ஹதீஸை நபி(ஸல்) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2749. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்றாகும். (அவையாவன:) அவன் பேசும்போது பொய் பேசுவான் அவனிடம் நம்பி எதையும் ஒப்படைத்தால் (அதில்) மோசடி செய்வான் வாக்களித்தால் அதற்கு மாறு செய்வான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“மரணமடைந்தவர் செய்திருந்த மரண சாசனம் நிறைவேற்றப்பட்ட பின்னரும் அவரின் கடன் அடைக்கப்பட்ட பின்னரும் தான் (அவரின் சொத்து வாரிசுகளிடையே மேலே விவரித்தபடி பங்கிடப்பட வேண்டும்)‘ என்னும் (திருக்குர்ஆன் 04:12) இறை வசனத்திற்குரிய விளக்கம்.

நபி(ஸல்) அவர்கள், மரண சாசனத்தை நிறைவேற்றுவதற்கு முன்பே கடனை அடைக்க வேண்டும் என்று தீர்ப்பளித்தாகக் கூறப்படுகிறது.

மேலும், (உங்களில் நம்பி ஒப்படைக்கப்பட்ட) அடைக்கலப் பொருட்களை அவற்றிற்கு உரியவர்களிடம் திருப்பிச் செலுத்தி விடுங்கள்' (திருக்குர்ஆன் 04:58) என்று அல்லாஹ் கூறினான். எனவே, அடைக்கலப் பொருளைத் திருப்பிச் செலுத்துவது கட்டாயக் கடமையாக இருப்பதால் அது) உபரி நற்செயலான வஸிய்யத்தை நிறைவேற்றுவதை விட முன்னுரிமை வாய்ந்தது என்பது இதிலிருந்து தெரிகிறது.

மேலும், நபி(ஸல்) அவர்கள், தேவைக்கு மிஞ்சியதைக் கொடுப்பதே தர்மமாகும்' என்று கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), அடிமை, தன் காப்பாளரின் அனுமதியின்றி மரண சாசனம் செய்யக்கூடாது' என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், அடிமை தன் எஜமானின் செல்வத்தைப் பாதுகாப்பவன் ஆவான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2750. ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (தருமம்) கேட்டேன். அவர்கள் கொடுத்தார்கள். பிறகும் நபி அவர்களிடம் கேட்டேன். அவர்கள் கொடுத்தார்கள். பிறகு என்னிடம், ஹகீமே! இச்செல்வம் பசுமையானதும் இனிமையானதும் ஆகும். இதை தாராள மனத்துடன் (பேராசையின்றி) எடுத்துக் கொள்கிறவருக்கு இதில் அருள் வளம் (பரக்கத்) வழங்கப்படுகிறது. இதைப் பேராசையுடன் எடுத்துக் கொள்கிறவருக்கு இதில் பாக்கியம் வழங்கப்படுகிறது. இதைப் பேராசையுடன் எடுத்துக் கொள்கிறவருக்கு இதில் பாக்கியம் வழங்கப்படுவதில்லை. அவர் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவராவார். மேல் கை, கீழ்க் கையை விடச் சிறந்ததாகும்''என்று கூறினார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! சத்திய மார்க்கத்துடன் தங்களை அனுப்பியவன் மீது ஆணையாக! தங்களுக்குப் பின் எவரிடமும் எதையும் நான் (இந்த) உலகைவிட்டுப் பிரியும் வரை கேட்க மாட்டேன்' என்று கூறினேன்.

அறிவிப்பாளர் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்:

ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்களை அபூ பக்ர்(ரலி) அன்பளிப்புத் தருவதற்காக அழைத்தார்கள். அவர்களிடமிருந்து எதையும் ஏற்றுக் கொள்ள அவர் மறுத்துவிட்டார். பிறகு, உமர்(ரலி) அவருக்கு (அன்பளிப்புகள் சிலவற்றைக்) கொடுப்பதற்காக அழைத்தார்கள். அதையும் ஏற்க அவர் மறுத்துவிட்டார். எனவே, உமர்(ரலி) (மக்களிடையே), முஸ்லிம்களே! இந்த (ஃபய்உ எனும்) வெற்றிச் செல்வங்களிலிருந்து அல்லாஹ் ஒதுக்கிய அவரின் உரிமையை அவருக்குப் பங்கிட்டுக் கொடுத்தேன். ஆனால், அதை எடுத்துக் கொள்ள அவர் மறுத்துவிட்டார் என்று அறிவித்துவிட்டார்கள். நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு எந்த மனிதரிடமும், ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி), தாம் மரணிக்கும் வரை (எதுவும்) கேட்கவில்லை. அல்லாஹ் அவரின் மீது கருணை புரிவானாக!

ஹதீஸ் 2751. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. அவரவர் தத்தம் பொறுப்பிலுள்ளவை பற்றி விசாரிக்கப்படுவார். ஆட்சித் தலைவரும் பொறுப்பாளியாவார். தம் குடிமக்கள் குறித்து அவர் விசாரிக்கப்படுவார். ஆண், தன் வீட்டார் விஷயத்தில் பொறுப்பாளியாவான். தன் பொறுப்பிலுள்ள வீட்டாரைக் குறித்து அவன் விசாரிக்கப்படுவான். ஒரு பெண், தன் கணவனின் வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள். தன் பொறுப்பிலுள்ள (வீட்டு) விவகாரங்கள் குறித்து அவள் விசாரிக்கப்படுவாள். பணியாள் தன் எஜமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளனாவான். தன் பொறுப்பிலுள்ள (எஜமானின்) செல்வத்தைக் குறித்து அவன் விசாரிக்கப்படுவான்.

மேலும்,ஓர் ஆண் மகன் தன் தந்யையின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான்' என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என எண்ணுகிறேன்.

என உமர்(ரலி) அறிவித்தார்.

## ஒருவர் தன் உறவினர்களுக்கு வக்ஃபு அல்லது மரண சாசனம் செய்வதும், உறவினர் என்போர் யார், யார்? என்பதும்.

நபி(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம்,அதை (உன் தோட்டத்தை) உன் ஏழை உறவினர்களுக்குக் கொடுத்து விடு' என்று கூறினார்கள். எனவே, அபூ தல்ஹா(ரலி) அதை ஹஸ்ஸான்(ரலி) அவர்களுக்கும் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களுக்கும் கொடுத்துவிட்டார்கள் என்று அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து ஸாபித்(ரஹ்) அறிவித்தார்.

இதே போன்ற மற்றோர் அறிவிப்பை அனஸ்(ரலி) அவர்களிடமிருந்தே சுமாமா(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள். அதில் இடம் பெற்றுள்ளதாவது:உன் ஏழை உறவினர்களுக்கு அதைக் கொடுத்துவிடு' என்று நபி(ஸல்) அவர்கள் (அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம்) கூறினார்கள். எனவே, அவர் அதை ஹஸ்ஸான்(ரலி) அவர்களுக்கும், உபை இப்னு கஅப்(ரலி) அவர்களுக்கும் கொடுத்துவிட்டார். அவர்களிருவரும் அபூ தல்ஹாவுக்கு என்னை விட நெருக்கமான உறவினர்களாக இருந்தனர். அபூ தல்ஹா(ரலி) அவர்களுக்கும் ஹஸ்ஸான்(ரலி) மற்றும் உபை இப்னு கஅப்(ரலி) ஆகியோருக்குமிடையிலான உறவு முறை வருமாறு: அபூ தல்ஹா(ரலி) அவர்களின் இயற்பெயர் ஸைத் என்பதாகும். ஸைத், ஸஹ்லின் மகனாவார். ஸஹ்ல், அஸ்வத் என்பவரின் மகனும் அஸ்வத், ஹராம் என்பவரின் மகனும் அம்ர், ஜைத் மனாத் என்பவரின் மகனும் ஜைத் மனாத் அதீ என்பவரின் மகனும் அதீ, அம்ர் என்பவரின் மகனும் அம்ர், மாலிக் என்பவரின் மகனும் மாலிக், நஜ்ஜார் என்பவரின் மகனும் ஆவார்கள்.

ஹஸ்ஸான்(ரலி) ஸாபித் என்பவரின் மகனும் ஸாபித், முன்திர் என்பவரின் மகனும் முன்திர், ஹராம் என்பவரின் மகனும் ஆவார்கள். ஆக, (முப்பாட்டனான) மூன்றாவது தந்தை ஹராம் அவர்களிடம் இருவரின் குடும்ப உறவும் ஒன்று சேர்கிறது. அந்த (முப்பாட்டனான) ஹராம், அம்ர்டைய மகனும் அம்ர், ஜைத் மனாத்துடைய மகனும், ஜைத் மனாத், அதீயின் மகனும் அதீ, அம்ர்டைய மகனும் அம்ர், மாலிக் உடைய மகனும் மாலிக், நஜ்ஜாருடைய மகனும் ஆவார்கள்.

இந்த அம்ர் தான் - நஜ்ஜாரின் மகனான மாலிக்கின் மகன் அம்ர் தான் ஹஸ்ஸான்(ரலி), அபூ தல்ஹா(ரலி), உபை இப்னு கஅப்(ரலி) ஆகிய மூவரையும் ஒன்று சேர்க்கும் தந்தையாவார். இவர் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களின் (தந்தை, பாட்டன் ஆகிய மேல் நோக்கி உறவு முறை வரிசையில்) ஆறாவது தந்தையாக (முப்பாட்டனுக்கு முப்பாட்டனாக) வருகிறார்.

உபை(ரலி), கஅபு அவர்களின் மகனும் கஅபு, கைஸ் உடைய மகனும் கைஸ், உபைத் உடைய மகனும் உபைத், ஸைத் முஆவியாவின் மகனும் முஆவியா, அம்ர்டைய மகனும் அம்ர், மாலிக்கின் மகனும் மாலிக், நஜ்ஜார் உடைய மகனும் ஆவார்கள்.

ஆக, அம்ர் இப்னு மாலிக் அவர்கள் தாம் ஹஸ்ஸான்(ரலி), அபூ தல்ஹா(ரலி), உபை இப்னு கஅப்(ரலி) ஆகிய மூவரையும் (உறவு முறையில்) ஒன்றிணைப்பவராவார். ஒருவன், தன் உறவினர்களுக்கு மரண சாசனம் செய்ய வேண்டுமென்றால் அவனையும் அவர்களையும் இணைக்கிற முஸ்லிமான பாட்டனார் அல்லது முப்பாட்டனார் ஒருவர் இருக்க வேண்டும் (இல்லையென்றால், மரண சாசனம் செய்யக் கூடாது)' என்று சிலர் கூறினார்.

ஹதீஸ் 2752. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம்,நீ அதை (உன் தோட்டத்தை) உன் உறவினர்களிடையே பங்கிட்டுக் கொடுத்து விடுவதை நான் பொறுத்தமானதாகக் கருதுகிறேன்‘ என்று கூறினார்கள். அதற்கு அபூ தல்ஹா(ரலி),அவ்வாறே செய்கிறேன், இறைத்தூதர் அவர்களே!என்று கூறிவிட்டு, தன்னுடைய (நெருங்கிய) உறவினர்களிடையேயும் தன் தந்தையின் உடன் பிறந்தார் மக்களிடையேயும் பங்கிட்டுவிட்டார்.

“(நபியே!) நீங்கள் உங்கள் நெருங்கிய உறவினர்களை அச்சுறுத்தி எச்சரியுங்கள் என்னும் (திருக்குர்ஆன் 26:214) இறைவசனம் அருளப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள்,பனு ஃபிஹ்ரு குடும்பத்தாரே! பனு அதீயே!என்று குறைஷிக் குலத்தாரின் பெரும் பெரும் (ம்ளையினர்) குடும்பத்தினரை நோக்கி அழைக்கலானார்கள்‘ என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

“இந்த (திருக்குர்ஆன் 26:214) இறைவசனம் அருளப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள்,குறைஷிக் குலத்தாரே! என்று அழைத்து, (இஸ்லாமியச் செய்தியை எடுத்துரைத்து) எச்சரித்தார்கள் என்று அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

## உறவினர்களுக்காக மரண சாசனம் செய்யப்பட்டால் அதில் பெண்களும் குழந்தைகளும் அடங்குவார்களா?

ஹதீஸ் 2753. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“உங்கள் நெருங்கிய உறவினர்களை அச்சுறுத்தி எச்சரியுங்கள்‘ என்னும் (திருக்குர்ஆன் 26:214) இறைவசனத்தை அல்லாஹ் அருளிய பொழுது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து நின்று,குறைஷிக் குலத்தாரே!என்றோ அது போன்ற ஒரு சொல்லையோ கூறி (அழைத்து),ஓரிறை வணக்கத்தையும், நற்செயல்களையும் விலையாகத் தந்து உங்களுக்கு (நரக நெருப்பிலிருந்து) விடுதலை வாங்கிக் கொள்ளுங்கள். அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து சிறிதளவும் உங்களைக் காப்பாற்ற என்னால் முடியாது. அப்து மனாஃபின் மக்களே! உங்களை அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து என்னால் சிறிதளவும் காப்பாற்ற முடியாது. அப்துல் முத்தலிபின் மகன் அப்பாஸே! உங்களை அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து என்னால் சிறிதளவும் காப்பாற்ற முடியாது. அல்லாஹ்வின் தூதருடைய அத்தை(மாமி) ஸஃபிய்யாவே! உங்களை அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து என்னால் சிறிதளவும் காப்பாற்ற முடியாது. முஹம்மதின் மகள் ஃபாத்திமாவே! என் செல்வத்திலிருந்து நீ விரும்பியதைக் கேள் (தருகிறேன்). (ஆனால்,) அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து என்னால் சிறிதளவும் உன்னை காப்பாற்ற முடியாது‘ என்று கூறினார்கள்.

இதே போன்ற ஓர் அறிவிப்பை இப்னு ஷிஹாப்(ரஹ்) வழியாக அஸ்பஃக்(ரஹ்) அறிவித்தார்.

## வக்ஃபு செய்தவர் தம் வக்ஃபுச் சொத்தினால் (அறக்கொடையினால்) பயனடையலாமா?

உமர்(ரலி) (கைபரில் தமக்குக் கிடைத்த நிலத்தை வக்ஃபு செய்தபோது),அதை நிர்வம்ப்பவர் அதிலிருந்து உண்பதில் தவறில்லை‘ என்ற நிபந்தனையைச் சேர்த்தார்கள். மேலும், வக்ஃபு செய்தவரே கூட அதன் நிர்வாகப் பொறுப்பை ஏற்கலாம். அவரல்லாத பிறரும் நிர்வாகப் பொறுப்பை ஏற்கலாம்.

இவ்வாறே ஓர் ஒட்டகத்தையோ, வேறெந்தப் பொருளையோ அல்லாஹ்வுக்காகக் கொடுப்போர் அனைவரும், அதிலிருந்து மற்றவர்கள் பயனடைவதைப் போன்றே பயனடையவார். அவ்விதம் (தான் பயடைய அனுமதிக்க வேண்டும் என்று) அவர் நிபந்தனையிடாவிட்டாலும் சரியே.

ஹதீஸ் 2754. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தியாக ஒட்டகத்தை ஓட்டிக் கொண்டு வந்த ஒரு மனிதரைக் கண்டு,அதில் நீ ஏறிக் கொள்‘ என்று கூறினார்கள். அதற்கு அவர்,இறைத்தூதர் அவர்களே! இது குர்பானி கொடுப்பதற்கான ஒட்டகம்‘ என்று கூறினார். (இவ்விதம் மூன்று முறை திரும்பத் திரும்பக் கூறியும் அவர் அதில் ஏறவில்லை.) (எனவே) நான்காவது முறையில்,உனக்குக் கேடுண்டாகட்டும். அல்லது அல்லாஹ் உனக்குக் கருணை புரியட்டும். அதில் நீ ஏறிக் கொள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2755. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், ஒருவர் குர்பானி ஒட்டகம் ஒன்றை ஓட்டிக் கொண்டு வருவதைக் கண்டார்கள். உடனே அவரிடம்,அதில் நீ ஏறிக் கொள்‘ என்று கூறினார்கள். அவர்,இறைத்தூதர் அவர்களே! இது குர்பானி (கொடுக்கப்பட்டவுள்ள) ஒட்டகம்‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் இரண்டாவது முறையிலோ மூன்றாவது முறையிலோ (கூறும் போது),அழிந்து போவாய்! அதில் ஏறிக் கொள்‘ என்று கூறினார்கள்.

## ஒருவர் ஒரு பொருளை வக்ஃபு செய்தால் அதை மற்றவர்களிடம் ஒப்படைக்கும் முன்பே கூட அது செல்லும்.

ஏனெனில், உமர்(ரலி) வக்ஃபு செய்தபோது,அதற்கு (நிர்வாகப்) பொறுப்பேற்பவர் அதிலிருந்து சிறிது உண்பதால் அவரின் மீது குற்றமில்லை‘ என்று கூறினார்கள்.அதற்கு நான் பொறுப்பேற்றால் என்றோபிறர் பொறுப்பேற்றால் என்றோ அப்போது குறிப்பிட்டுக் கூறவில்லை.

நபி(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம்,நீ அதை (உன் தோட்டத்தை) உன் நெருங்கிய உறவினர்களிடையே பங்கிட்டு விடுவதை நான் பொறுத்தமாகக் கருதுகிறேன்‘ என்று கூறினார்கள். உடனே, அபூ தல்ஹா(ரலி),அவ்வாறே செய்கிறேன், இறைத்தூதர் அவர்களே!என்று கூறிவிட்டு, அதைத் தம் உறவினர்களிடையேயும் தம் தந்தையின் உடன் பிறந்தாருடைய மக்களிடையேயும் பங்கிட்டுவிட்டார்கள்.

## ஒருவர் என் வீடு அல்லாஹ்வுக்காக தர்மமாகும்‘ என்று கூறி அது ஏழைகளுக்குச் சேர வேண்டிய தர்மமா? அல்லது மற்றவர்களுக்குச் சேர வேண்டிய தர்மமா? என்று விளக்காமல்விட்டுவிட்டாலும் அது செல்லும். அதை அவர் தம் உறவினர்களுக்கோ அல்லது அவர் விரும்பியவர்களுக்கோ தரலாம்.

அபூ தல்ஹா(ரலி),என் செல்வங்களிலேயே எனக்கு மிகவும் விருப்பமானதுபைருஹா (என்னும் தோட்டம்) தான் அதை நான் அல்லாஹ்வுக்காக தர்மம் செய்துவிடுகிறேன்‘ என்று கூறியபோது (‘இன்னாருக்கு தர்மம் செய்கிறேன் என்று அவர் விளக்கிக் கூறாத நிலையிலும்) நபி(ஸல்) அவர்கள் அதை அனுமதித்தார்கள்.

“அந்த தர்மம் யாருக்குச் சேர வேண்டும் என்று விளக்காதவரை அது செல்லாது‘ என்று சிலர் கூறினர். ஆனால், முந்திய கருத்தே மிகச் சரியானதாகும்.

## “என்னுடைய நிலம் அல்லது தோட்டம் என் தாயார் சார்பாக அல்லாஹ்வுக்காக தர்மமாகும் என்று ஒருவர் சொன்னால் அது செல்லும் அந்த தர்மம் யாருக்குச் சேர வேண்டும் என்று தெளிவுபடுத்தாவிட்டாலும் சரி.

ஹதீஸ் 2756. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு உபாதா அவர்கள் வெளியே சென்றிருந்தபோது அவரின் தாயார் இறந்துவிட்டார். அப்போது அவர் நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! என் தாயார் நான் வெளியே சென்றிருந்தபோது மரணமடைந்துவிட்டார். நான் அவர் சார்பாக தருமம் ஏதும் செய்தால் அது அவருக்குப் பயனளிக்குமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,ஆம் (பயனளிக்கும்)' என்று பதிலளித்தார்கள். இதைக் கேட்ட ஸஅத்(ரலி),நான் என்னுடைய மிக்ராஃப் எனும் தோட்டத்தை என் தாயார் சார்பாக தருமம் செய்து விட்டேன். அதற்கு தங்களை சாட்சியாக்குகிறேன்' என்று கூறினார்கள்.

## ஒருவர் தன் செல்வத்தில் ஒரு பகுதியையோ, தன் அடிமைகள் சிலரையோ, கால்நடைகள் சிலவற்றையோ தருமம் செய்தால் அல்லது வக்ஃபு செய்தால் அது செல்லும்.

ஹதீஸ் 2757. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான்இறைத்தூதர் அவர்களே! என் செல்வத்தி(ன் உரிமையி)லிருந்து நான் விலம்க் கொண்டு அதை அல்லாஹ்வுக்காகவும் அல்லாஹ்வுன் தூதருக்காகவும் தர்மமாகக் கொடுத்து வடுவதை என் தவ்பாவில் (தபூக் போரில் கலந்து கொள்ளாமல் பின்தங்கிவிட்டதற்காக மன்னிப்புக் கோரிப் பிராயச் சித்தம் தேடும் முயற்சிகளில்) ஓர் அம்சமாக ஆக்கிக் கொள்ள விரும்புகிறேன்' என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,உன் செல்வத்தில் ஒரு பகுதியை உனக்காக வைத்துக் கொள். அது உனக்கு நல்லது' என்று கூறினார்கள். நான்,கைபரில் உள்ள என்னுடைய பங்கை (எனக்காக) வைத்துக் கொள்கிறேன்' என்று கூறினேன்.

## ஒருவர் தன் முகவரிடம் தருமப் பொருளை (தருமம் செய்து விடும்படி) கொடுக்க, முகவர் அதை அவரிடமே திருப்பிக் கொடுத்து விடுவது.

ஹதீஸ் 2758. அனஸ்(ரலி) கூறினார்.

"நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து (இறைவழியில்) செலவு செய்யாதவரை நீங்கள் நன்மையை அடைந்து கொள்ள முடியாது' (திருக்குர்ஆன் 03:92) என்னும் இறைவசனம் அருளப்பட்டபோது அபூ தல்ஹா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் தன் வேதத்தில்,நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து (இறைவழியில்) செலவு செய்யாத வரை நீங்கள் நன்மையை அடைந்து விட முடியாது என்று கூறுகிறான். என் செல்வங்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானதுபைருஹா (எனும் தோட்டம்) தான். அந்தத் தோட்டத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சென்று நிழலில் ஓய்வெடுத்து அதன் தண்ணீரை அருந்துவது வழக்கம் - எனவே, அதை நான் அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் (அறக் கொடையாகத்) தந்து விடுகிறேன். (மறுமையில்) அதன் நன்மையையும் (மறுமை வாழ்வுக்கான) என் சேமிப்பாக அது இருப்பதையும் விரும்புகிறேன். எனவே, இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு அல்லாஹ் காட்டித் தருகிற அறச் செயலில் அதைத் தாங்கள் பயன்படுத்திக் கொள்ளுங்கள்' என்று கூறினார். இதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,மிகவும் நல்லது, அபூ தல்ஹாவே! (அப்படியாயின்) அது (மறுமையில் உங்களுக்கு) லாபம் தரும் செல்வமாயிற்றே. அதை உங்களிடமிருந்து ஏற்று உங்களிடமே திருப்பித் தருகிறோம். உங்கள் நெருங்கிய உறவினர்களிடையே அதைப் பங்கிட்டு விடுங்கள்' என்று கூறினார்கள். அபூ தல்ஹா(ரலி) அதைத் தம் இரத்த பந்தமுள்ள உறவினர்களுக்கு தர்மம் செய்துவிட்டார்கள். அவர்களிடையே உபையின் கஅப்(ரலி) அவர்களும், ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களும் கூட இருந்தனர். அதில் தனக்குக் கிடைத்த பங்கை ஹஸ்ஸான்(ரலி) முஆவியா(ரலி) அவர்களுக்கு விற்றுவிட்டார்கள். அப்போது அவர்களிடம்,அபூ தல்ஹாவின் தருமத்தையா விற்கிறீர்?

என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், ஒரு ஸாவு பேரீச்சம் பழத்தை ஒரு ஸாவு திர்ஹம்களுக்காக நான் விற்க மாட்டேனா? (அது போன்றுதான் இதுவும்)“ என்று பதில் சொன்னார்கள். அந்த (பைருஹா) தோட்டம் முஆவியா (ரலி) கட்டிய பனு ஹுதைலா கோட்டை இருந்த இடத்தில் அமைந்திருந்தது.

அல்லாஹ் கூறினான்:

(உங்கள்) சொத்துகளைப் பங்கிடும்போது (தூரத்து) உறவினர்களும், அனாதைகளும், ஏழை உறவினர்களும் வருவார்களாயின் அவர்களுக்கும் அதிலிருந்து (ஏதேனும்) கொடுங்கள். (திருக்குர்ஆன் 04:08)

ஹதீஸ் 2759. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

மக்கள் சிலர், இந்த (திருக்குர்ஆன் 04:08) இறைவசனம் (கூறும் சட்டம்) மாற்றப்பட்டுவிட்டது‘ என்று கருதுகிறார்கள். இல்லை அல்லாஹ்வின் மீதாணையாக! இது மாற்றப்படவில்லை. ஆனால், மக்கள் இதை இலேசாகக் கருதி (செயல்படுத்தாமல்விட்டு) விட்டார்கள். காப்பாளர்கள் இரண்டு வகைப்படுவர். ஒரு வகையினர் (இறப்பவரின்) காப்பாளராவார். இவர் வாரிசாவார். இந்த (இரத்த பந்தமுள்ள) காப்பாளர் தான் (தூரத்து உறவினர்களுக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும்) கொடுப்பார். மற்றொரு காப்பாளர், இவர் வாரிசாக மாட்டார். (உதாரணமாக, அனாதைகளின் காப்பாளர்.) இவர்தான், (சொத்தைப் பங்கிடும்போது தமக்கும் ஏதாவது கிடைக்கும் என்று எதிர்பார்த்து நிற்கும் ஏழை எளியவர்களுக்கும், அனாதைகளுக்கும்) நல்ல முறையில் (இன்சொல் பேசி அன்புடன்), நான் உனக்கு எதுவும் தர இயலவில்லை‘ என்று கூறி விடுவார்.

பகுதி 19

திடீரென்று இறந்தவர் சார்பாக தர்மம் செய்வதும், இறந்தவர் சார்பாக (அவர் அல்லாஹ்வின் பெயரால் செய்து, நிறைவேற்றத் தவறிய) நேர்ச்சைகள் நிறைவேற்றுவதும் விரும்பத்தக்கதாகும்.

ஹதீஸ் 2760. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், என் தாயார் திடீரென இறந்துவிட்டார். அவர் (மரணமடையும் முன்பு) பேச முடிந்திருந்தால் தர்மம் செய் (யச் சொல்லியிருந்) திருப்பார் என்று கருதுகிறேன். அவர் சார்பாக நான் தர்மம் செய்யலாமா? என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ஆம், அவர் சார்பாக தர்மம் செய்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2761. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு உபாதா (ரலி) இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் மார்க்கத் தீர்ப்பு கோரியவராக, என் தாயார் மீது ஒரு நேர்ச்சை கடமையாகியிருக்க, (அதை நிறைவேற்றும் முன்பே) அவர் இறந்து போய்விட்டார். (என்ன செய்வது?)‘ என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், அவர் சார்பாக நீ அதை நிறைவேற்று‘ என்று கூறினார்கள்.

## வக்ஃபு செய்வதற்கும் தருமம் செய்வதற்கும் சாட்சி வைப்பது.

ஹதீஸ் 2762. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

பனு சாஇதா குலத்தைச் சேர்ந்த ஸஅத் இப்னு உபாதா (ரலி) வெளியே சென்றிருந்தபோது என் தாயார் இறந்துவிட்டார். நான் அவர் சார்பாக ஏதேனும் தர்மம் செய்தால் அவருக்கு அது பலனளிக்குமா? என்று கேட்டாா. அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஆம் (பலனளிக்கும்)‘ என்று கூறினார்கள். ஸஅத் இப்னு உபாதா (ரலி), என்னுடைய மிக்ராஃப் (எனும்) தோட்டத்தை

அவர்களுக்காக தருமம் செய்து விடுகிறேன் என்பதற்குத் தங்களை நான் சாட்சியாக்குகிறேன்' என்று கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

அநாதைகளுக்கு அவர்களின் பொருட்களை (சொத்துகளை) கொடுத்து விடுங்கள். நல்ல பொருளைக் கொடுத்துவிட்டுத் தீய பொருளை (அதற்கு) மாற்றாக வாங்கிக் கொள்ளாதீர்கள். மேலும், அவர்களின் பொருட்களை உங்கள் பொருட்களோடு சேர்த்து உண்ணாதீர்கள். நிச்சயமாக இது பெரும்பாவமாகும். அநாதை(ப் பெண்)களிடம் நீதியுடன் நடந்து கொள்ள முடியாது என்று நீங்கள் அஞ்சினால், உங்கள் மனத்திற்குப் பிடித்த பெண்களை... மணமுடித்துக கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 04:2,3)

ஹதீஸ் 2763. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் மேற்கண்ட 4:2,3 வசனத்தைக் குறித்து கேட்டபோது, பின்வருமாறு பதிலளித்தார்கள்.

இந்த வசனத்தில் கூறப்படும் பெண், தன் காப்பாளரின் மடியில் வளரும் அநாதைப் பெண் ஆவாள். அந்தக் காப்பாளர் அவரின் அழகுக்கும் சொத்துக்கும் ஆசைப்பட்டு, அவளை அவளுக்கு ஈடான பெண்களின் மஹ்ருத் தொகையை விடக் குறைவாகக் கொடுத்து மணந்துகொள்ள விரும்புகிறார். இத்தகைய காப்பாளர்கள் அப்பெண்களுக்கு அவர்களின் மஹ்ரை முழுமையாகக் கொடுத்து நீதியுடன் நடந்தாலே தவிர அவர்களை மணம் புரிந்து கொள்ளக் கூடாது என்று தடை செய்யப்பட்டு, அவர்களைத் தவிரவுள்ள பிற பெண்களை மணம் புரிந்து கொள்ளும்படி கட்டளையிடப்பட்டார்கள். பிறகும் மக்கள் அல்லாஹ்வின் தூதரிடம் இந்த விவகாரத்தில் மார்க்கத் தீர்ப்பு கேட்டு வரவே, அல்லாஹ்,பெண்களின் விவகாரத்தில் தீர்ப்பு வழங்குமாறு அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். (நபியே!) அவர்கள் விவகாரத்தில் அல்லாஹ் உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகிறான் என்று நீங்கள் கூறுங்கள்' என்னும் (திருக்குர்ஆன் 04:127) வசனத்தை அருளினான். அநாதைப் பெண் அழகும் செல்வமும் உடையவளாக இருந்தால் அவளுடைய காப்பாளர்கள் அவளை மணம் புரிந்து கொள்ள ஆசைப்படுகிறார்கள். ஆனால், அவளையொத்த ஒரு பெண்ணுக்குத் தரப்படுவது போன்ற மஹ்ரை முழுமையாக அவர்களுக்குத் தருவதில்லை. அவள் செல்வமும் அழகும் குறைந்தவளாக இருந்து, அதனால் அவளை மணமுடிக்க விருப்பமில்லாவிட்டால் அவளைவிட்டுவிட்டு வேறு பெண்களை (மணமுடிக்க) நாடிச் செல்கிறார்கள். எனவேஅவளை விரும்பாதபோது அவளை அவர்கள்விட்டு விடுவதைப் போன்றே, அவளை விரும்பும்போது அவளை மணமுடிக்கவும் அவர்களுக்கும் உரிமை இல்லை. அவளுக்கு உரிய மஹ்ரை நிறைவாக அவளுக்குத் தந்து, நீதியுடன் நடந்து, அவளுடைய உரிமையை அவளுக்குக் கொடுத்தாலே தவிர அவளை அவர்கள் மணமுடிக்கக் கூடாது என்று இந்த (திருக்குர்ஆன் 04:127) வசனத்தில் அல்லாஹ் விளக்கிக் கூறினான்.

அல்லாஹ் கூறினான்:

மேலும், அநாதைகளை அவர்கள் திருமணப் பருவத்தை அடையும் வரை (விபரம் புரியத் தொடங்கிவிட்டதா என்று) சோதித்து வாருங்கள். அவர்களிடம் (விபரம் புரிந்து கொள்ளும் அளவிற்கு மனப்) பக்குவத்தை நீங்கள் கண்டால் அவர்களின் செல்வங்களை அவர்களிடமே ஒப்படைத்து விடுங்கள். அவர்கள் பெரியவர்களாம் தங்கள் உரிமையைக் கேட்பார்கள் என்று அஞ்சி, அச்செல்வங்களை நியாயத்திற்குக் புறம்பாக விரயம் செய்தும் அவசரமாகவும் விழுங்கி விடாதீர்கள். அநாதைகளின் காப்பாளர் வசதியுள்ளவராக இருந்தால் அவர்களின் செல்வத்திலிருந்து உண்பதை அவர் தவிர்த்துக் கொள்ளட்டும். ஏழையாக இருப்பவர் நியாயமான அளவிற்கு (அதிலிருந்து) உண்ணட்டும். அவர்களின் சொத்துக்களை அவர்களிடம்

ஒப்படைக்கும்போது அவர்களின் மீது சாட்சிகளை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். மேலும், கணக்குக் கேட்க அல்லாஹ்வே போதுமானவன். (இறந்துவிட்ட) தாய் தந்தையரும் நெருங்கிய உறவினர்களும்விட்டுச் சென்ற சொத்தில் ஆண்களுக்குப் பங்கிருக்கிறது. (அது போன்றே) தாய்தந்தையரும் நெருங்கிய உறவினர்களும்விட்டுச் சென்ற சொத்தில் பெண்களுக்கும் பங்கிருக்கிறது் அச்சொத்து குறைவானதாயினும் சரி, அதிகமானதாயினும் சரி! இது அல்லாஹ்வினால் நிர்ணயிக்கப்பட்டதாகும். (திருக்குர்ஆன் 04:6,7)

## (அநாதையின்) பொறுப்பாளர் (தன் பொறுப்பிலுள்ள) அநாதையின் செல்வத்தைக் கையாள உரிமையுண்டு என்பதும், அதிலிருந்து அவரின் உழைப்பிற்கே உண்ணலாம் என்பதும்.

ஹதீஸ் 2764. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி)தம்ஃக் என்றழைக்கப்பட்ட தம் சொத்து ஒன்றை அல்லாஹ்வின் தூதருடைய காலத்தில் தருமம் செய்தார்கள். அது ஒரு பேரீச்சந் தோட்டமாக இருந்தது. அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! நான் ஒரு செல்வத்தைப் பெற்றுள்ளேன். அது என்னிடம் (இருப்பவற்றிலேயே) உயர் தரமானதாகும். எனவே, அதை தருமம் செய்து விட விரும்புகிறேன்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,அதன் நிலத்தை (எவருக்கும்) விற்கக் கூடாது அன்பளிப்பாகவும் தரக்கூடாது அதற்கு எவரும் வாரிசாகவும் ஆக முடியாது அதன் வருவாய் மட்டுமே செலவிடப்பட வேண்டும் என்ற நிபந்தனைகளுடன் அதை தருமம் செய்து விடு' என்று கூறினார்கள். எனவே, உமர்(ரலி) அதை தருமம் (வக்ஃபு) செய்துவிட்டார்கள். அவர்களின் அந்த தருமம் (வக்ஃபு) அல்லாஹ்வின் பாதையிலும், அடிமைகளை விடுதலை செய்யவும், ஏழைகளுக்காகவும், விருந்தினர்களுக்காகவும், வழிப்போக்கர்களுக்காகவும், உறவினர்களுக்காகவும் வழங்கப்பட்டது. நிர்வாகம் செய்பவர் அதிலிருந்து பொது வழக்கப்படி (நியாயமான முறையில்) உண்பதில் அல்லது விரயம் செய்யாமல் தம் நண்பருக்கு உண்ணக் கொடுப்பதில் குற்றமில்லை என்றும் (அது தொடர்பான ஆவணத்தில்) அவர்கள் குறிப்பிட்டிருந்தார்கள்.

ஹதீஸ் 2765. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

"வசதியுள்ளவர் (அதிலிருந்து எடுத்து உண்ணாமல் தம்மைத்) தற்காத்துக் கொள்ளட்டும் ஏழையாக இருப்பவர் (அதிலிருந்து) நியாயமான அளவு உண்ணட்டும்' என்னும் (திருக்குர்ஆன் 04:06) இறைவசனம் அனாதையின் பராமரிப்பாளரின் விஷயத்தில், அவர் தேவையுள்ளவராக இருந்தால் அனாதையின் செல்வத்திலிருந்து, அந்த (அனாதையுடைய) செல்வத்தின் அளவிற்கேற்ப பொது வழக்கப்படி (நியாயமான முறையில்) எடுத்துக் கொள்ளும்படி (அனுமதியளித்து) அருளப்பட்டது.

## திருக்குர்ஆன் 04:10

அல்லாஹ் கூறினான்:

அநாதைகளின் சொத்துக்களை யார் அநியாயமாக உண்கிறார்களோ அவர்கள் தங்கள் வயிறுகளில் நெருப்பைத் தான் நிரப்பிக் கொள்கிறார்கள். மேலும், விரைவில் அவர்கள் கொழுந்து விட்டெரியும் நரக நெருப்பில் வீசியெறியப்படுவார்கள். (திருக்குர்ஆன் 04:10)

ஹதீஸ் 2766. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

"அழித்தொழிக்கும் ஏழு பெரும் பாவங்களைத் தவிருங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,இறைத்தூதர் அவர்களே! அவை எவை? என்று கேட்டார்கள். நபி(ஸல்)

அவர்கள்,அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பதும், சூனியம் செய்வதும், நியாயமின்றி கொல்லக் கூடாது என்று அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிரைக் கொல்வதும், வட்டி உண்பதும், அனாதைகளின் செல்வத்தை உண்பதும், போரின்போது புறமுதுகிட்டு ஓடுவதும் அப்பாவிகளான, இறைநம்பிக்கை கொண்ட, கற்புள்ள பெண்களின் மீது அவதூறு கூறுவதும் தான் (அந்தப் பெரும் பாவங்கள்)' என்று (பதில்) கூறினார்கள்.

## (திருக்குர்ஆன் 02:220)

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) அநாதைகளைப் பற்றி உங்களிடம் கேட்கிறார்கள். கூறுங்கள்: அவர்களுக்கு நலம் பயக்கும் விதத்தில் நடந்து கொள்வதே சிறந்ததாகும். நீங்கள் அவர்களுடன் சேர்ந்து வாழ்ந்தால் (அதில் குற்றமேதுமில்லை. ஏனெனில்,) அவர்கள் உங்கள் சகோதரர்களே! தீமை செய்பவரையும் நன்மை செய்பவரையும் அல்லாஹ் (பிரித்து) அறிகிறான். அல்லாஹ் நாடியிருந்தால் (இவ்விஷயத்தை) உங்களுக்குக் கடினமாக்கியிருப்பான். அவன் பேராற்றல் கொண்டவனும் நுண்ணறிவாளனும் ஆவான். (திருக்குர்ஆன் 02:220)

ஹதீஸ் 2767. இப்னு உமர்(ரலி) எவராவது தம்மைப் பொறுப்பாளராக நியமித்(து மரண சாசனம் செய்)தால் அதை ஒருபோதும் மறுத்ததில்லை' என்று நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்.

ஓர் அநாதையின் செல்வத்தின் விஷயத்தில் இப்னு சீரின்(ரஹ்) அவர்களுக்கு மிகவும் விருப்பமானது எதுவெனில், அவனுடைய ஆலோசகர்களும் (நலம் நாடுபவர்களும்) காப்பாளர்களும் ஒன்று கூடி அவனுக்கு நன்மை எது என்று முடிவெடுப்பதேயாகும்.

தாவூஸ்(ரஹ்) அவர்களிடம் அநாதைகளைக் குறித்து எதுவும் கேட்கப்பட்டால்,அல்லாஹ் நன்மை செய்பவரையும் தீமை செய்பவரையும் (பிரித்து) அறிகிறான்' என்னும் (திருக்குர்ஆன் 02:220) இறைவசனத்தை ஓதுவார்கள். சிறுவயதுடைய அநாதைகள் குறித்தும் அதாஉ(ரஹ்),ஒவ்வொருவருக்கும் அவரவர் தேவைக்கேற்ப அவர்களின் பாகத்திலிருந்து காப்பாளர் செலவு செய்வார்' என்று கூறினார்கள்.

## பயணத்திலிருக்கும் போதும் ஊரிலிருக்கும்போது அநாதையைப் பணியாளாக வைத்துக் கொள்வதால் அந்த அநாதைக்குப் பயனும் நன்மையும் உண்டு என்றால் அது அனுமதிக்கப்பட்டதாகும். மேலும், அநாதையின் தாய் அல்லது அவளுடைய கணவன் (இருவரும் அவனுடைய காப்பாளர்களாக நியமிக்கப்படாவிட்டாலும்) அவனை கவனித்துக் கொள்வதும் அனுமதிக்கப்பட்டதே.

ஹதீஸ் 2768. அனஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தமக்குப் பணியாள் எவரும் இல்லாத நிலையில் மதீனாவுக்கு வந்தார்கள். எனவே, அபூ தல்ஹா(ரலி)22 என் கையைப் பிடித்துக் கொண்டு அல்லாஹ்வின் தூதரிடம் அழைத்துச் சென்று,இறைத்தூதர் அவர்களே! அனஸ் புத்திசாலியான சிறுவன். அவன் தங்களுக்கு ஊழியம் செய்யட்டும்' என்று கூறினார்கள். எனவே, நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பயணத்திலும் ஊரிலிருந்தும் போதும் பணிவிடைகள் செய்து வந்தேன். நான் செய்த எச்செய்கைக்காகவும்,இதை ஏன் இப்படிச் செய்தாய்? என்றோ, நான் செய்யாத எந்த விஷயத்திற்காகவும்,ஏன் இதை நீ இப்படிச் செய்யவில்லை? என்றோ என்னிடம் நபி(ஸல்) அவர்கள் கேட்டதேயில்லை.

## ஒருவர் ஒரு நிலத்தை வக்ஃபு செய்யும்போது அதன் எல்லைகளை விளக்கிக் கூறாவிட்டாலும் அவரின் வக்ஃபு செல்லும். தருமமும் அவ்வாறே (செல்லும்).

ஹதீஸ் 2769. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

அபூ தல்ஹா (ரலி) மதீனா நகர அன்சாரிகளிலேயே நிறையப் பேரீச்சந் தோட்டங்களை சொத்துகளாகப் பெற்றிருந்தார். மஸ்ஜிதுந் நபவிக்கு எதிரே அமைந்திருந்தபைருஹா தோட்டம் தான் அவரின் சொத்துக்களிலேயே அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது. நபி (ஸல்) அவர்கள் அ(ந்தத் தோட்டத்)தில் நுழைந்து அதிலிருந்த நல்ல (சுவையான) தண்ணீரைப் பருகுவார்கள். நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து (இறைவழியில்) செலவு செய்யாத வரை நீங்கள் நன்மையை அடைந்து விட முடியாது என்னும் (திருக்குர்ஆன் 03:92) இறைவசனம் அருளப்பட்டபோது அபூ தல்ஹா (ரலி) எழுந்து நின்று, இறைத்தூதர் அவர்களே!நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து (இறைவழியில்) செலவு செய்யாதவரை நீங்கள் நன்மையை அடைந்து விட முடியாது‘ என்று அல்லாஹ் கூறினான். என் சொத்துக்களிலேயே எனக்கு மிகவும் விருப்பமானதுபைருஹா தான். அதை அல்லாஹ்வுக்காக நான் தருமம் செய்து விடுகிறேன். அல்லாஹ்விடம் அதன் நன்மையையும் (மறுமையில் எனக்குரிய) சேமிப்பாக அது இருப்பதையும் விரும்புகிறேன். எனவே, அல்லாஹ் தங்களுக்குக் கட்டளையிடுகிற விஷயத்தில் அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்‘ என்று கூறினார்கள். இதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள், ஆகா! அது (மறுமையில்) லாபம் தரும் செல்வமாம்விட்டதே! அல்லது அது (அழிந்து) போய்விடும் செல்வம் தானே! (நல்ல காரியத்தில் தான் போகட்டுமே!) ...இப்படி அறிவிப்பாளர் இப்னு மஸ்லமா (ரஹ்) சந்தேகத்துடன் கூறினார்... நீ கூறியதை கேட்டேன். அதை (உன்) நெருங்கிய உறவினர்களுக்கிடையே நீ பங்கிட்டு விடுவதையே நான் பொறுத்தமானதாகக் கருதுகிறேன்‘ என்று கூறினார்கள். அதற்கு அபூ தல்ஹா (ரலி), அவ்வாறே நான் செய்கிறேன், இறைத்தூதர் அவர்களே!என்று கூறிவிட்டு, தம் நெருங்கிய உறவினர்களுக்கும் தம் தந்தையின் உடன்பிறந்தார் மக்களுக்குமிடையே அதைப் பங்கிட்டுவிட்டார்கள்.

மற்றோர் அறிவிப்பிலும், (அழிந்து) போய் விடும் செல்வம் தானே‘ என்று வந்துள்ளது.

ஹதீஸ் 2770. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் அல்லாஹ்வின் தூதரிடம் தம் தாயார் இறந்துவிட்டதாகக் கூறிவிட்டு, அவர் சார்பாக நான் தருமம் (ஏதும்) செய்தால் அவருக்கு அது பலனளிக்குமா? என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ஆம் (பலனளிக்கும்)‘ என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர், என்னிடம் மிக்ராஃப் எனும் தோட்டம் ஒன்று உள்ளது. அதை நான் அவர் சார்பாக தருமம் செய்து விட்டேன் என்பதற்கு, தங்களை சாட்சியாக ஆக்குகிறேன்‘ என்று கூறினார்.

## பலருக்கும் பொதுவான ஒரு நிலத்தை அவர்கள் வக்ஃப் செய்தால் செல்லும்.

ஹதீஸ் 2771. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (பனு நஜ்ஜார் குலத்தினர் அளித்த இடத்தில்) பள்ளிவாசல் கட்டும்படி உத்திரவிட்டபோது, பனு நஜ்ஜார் குலத்தாரே! உங்களுடைய இந்தத் தோட்டத்திற்கு என்னிடம் விலை சொல்லுங்கள்‘ என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், மாட்டோம். அல்லாஹ்வின் மீதாணையாக! இதன் விலையை நாங்கள் அல்லாஹ்விடமே எதிர்பார்க்கிறோம்‘ என்று கூறினார்கள். 24

## வக்ஃபு (அறக் கட்டளை ஆவணம்) எப்படி எழுதப்பட வேண்டும்?

ஹதீஸ் 2772. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி) கைபரில் ஒரு நிலத்தைப் பெற்றிருந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்களிடம் வந்து,நான் ஒரு சொத்தைப் பெற்றுள்ளேன். அதை விட உயர்தரமான ஒரு சொத்தை இதுவரை நான் பெற்றதில்லை. நான் அதை என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் எனக்குக் கட்டளையிடுகிறீர்கள்? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் விரும்பினால் அதன் அடிமனையை நீங்களே வைத்துக் கொண்டு அதன் வருவாயை தர்மம் செய்து விடலாம்' என்று கூறினார்கள். எனவே, உமர்(ரலி),அதன் அடிமனை விற்கப்படக் கூடாது அன்பளிப்பாகவும் எவருக்கும் தரப்படக் கூடாது அதற்கு எவரும் வாரிசாகவும் முடியாது என்று நிபந்தனைகளிட்டு, ஏழைகளுக்காகவும் உறவினர்களுக்காகவும், அடிமைகளை விடுதலை செய்வதற்காவும், இறைவழியில் (அறப்போருக்குச்) செலவிடுவதற்காகவும், விருந்தினர்களுக்காகவும், வழிப்போக்கர்களுக்காகவும் தருமம் (வக்ஃபு) செய்துவிட்டார்கள். அதற்கு நிர்வாகப் பொறுப்பேற்கும் காப்பாளர் அதிலிருந்து நியாயமான முறையில் உண்பதிலும் விரயம் செய்யாமல் நண்பருக்கு உண்ணக் கொடுப்பதிலும் தவறில்லை என்றும் (அது தொடர்பான ஆவணத்தில்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

## செல்வந்தனுக்கும், ஏழைக்கும் விருந்தினருக்கும் வக்ஃபு செய்வது.

ஹதீஸ் 2773. உமர்(ரலி) கைபரில் ஒரு செல்வத்தைப் பெற்றார்கள். நபி(ஸல்) அவர்களிடம் வந்து அதைத் தெரிவித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்நீங்கள் விரும்பினால் அதை (அதன் வருவாயை) தருமம் செய்துவிடுங்கள்' என்று ஆலோசனை கூறினார்கள். எனவே, அதை ஏழை எளியவர்களுக்காகவும், வறியவர்களுக்காகவும், உறவினர்களுக்காகவும், விருந்தினர்களுக்காகவும் (அதன் வருவாயைச்) செலவிடும்படி தருமம் (வக்ஃபு) செய்துவிட்டார்கள்.

## பள்ளிவாசலுக்காக நிலத்தை வக்ஃபு செய்வது (செல்லும்)

ஹதீஸ் 2774. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனா நகரத்திற்கு வந்தபோது பள்ளிவாசல் கட்டும்படி கட்டளையிட்டுவிட்டு,பனு நஜ்ஜார் குலத்தாரே! உங்களுடைய இந்தத் தோட்டத்திற்கு என்னிடம் விலை சொல்லுங்கள் என்று கேட்டார்கள். அதற்கு அக்குலத்தார்,நாங்கள் விலைகூற மாட்டோம். அல்லாஹ்வின் மீதானையாக! இதன் விலையை நாங்கள் அல்லாஹ்விடமே எதிர்பார்க்கிறோம் என்று கூறினார்கள்.

## பிராணிகள், கால்நடைகள், சாமான்கள் மற்றும் பணம் ஆகியவற்றை வக்ஃப் செய்வது (செல்லும்)

"ஒருவர் ஆயிரம் தீனார்களை (தங்க நாணயங்களை) இறைவழியில் வக்ஃபு செய்து, அதை வியாபாரியான தன்னுடைய பணியாள் ஒருவனிடம் தந்து (அதை முதலீடு செய்து) வியாபாரம் செய்யும்படி கூறி, அதன் இலாபத்தை ஏழை எளியவர்களுக்கும், உறவினர்களுக்கும் தருமம் செய்கிறார். இந்த மனிதர் அந்த ஆயிரம் தீனார்களின் வாயிலாகக் கிடைக்கும் இலாபத்திலிருந்து கொஞ்சம் தானும் உண்ணலாமா? அவர் (தருமத்துக்குரியவர்களைக் குறிப்பிடும் போது) ஏழை எளியவர்களுக்கு தருமம் செய்யும் படி குறிப்பிடவில்லையென்றாலும் கூட அதிலிருந்து உண்ண அவருக்கு அனுமதியுண்டா? என்று ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அவர்கள்,அதிலிருந்து உண்பதற்கு அவருக்கு அனுமதியில்லை' என்று தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 2775. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி) தமக்குச் சொந்தமான குதிரை ஒன்றின் மீது ஒரு மனிதரை ஏற்றி இறைவழியில் (போரிடுவதற்காக தருமம் செய்து) அனுப்பி வைத்தார்கள். அந்த குதிரையை நபி(ஸல்)

அவர்கள் உமர்(ரலி) அவர்களுக்குக் கொடுத்திருந்தார்கள். அந்த மனிதர் அதை விற்பதற்காக (சந்தையில்) நிறுத்தி வைத்திருப்பதாக உமர்(ரலி) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே அவர்கள் அல்லாஹ்வின் தூதரிடம் அந்த குதிரையைத் தாமே வாங்கிக் கொள்ள (அனுமதி) கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அதை நீங்கள் வாங்க வேண்டாம் உங்கள் தருமத்தை ஒருபோதும் திரும்பப் பெற வேண்டாம்' என்று கூறினார்கள்.

## வக்ஃபுச் சொத்தை நிர்வகிப்பவருக்குரிய ஊதியம்.

ஹதீஸ் 2776. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் வாரிசுகள் பொற்காசையோ, வெள்ளி நாணயத்தையோ பங்கிட்டுக் கொள்ள (வாரிசுரிமையாகப் பெற) மாட்டார்கள். என் மனைவிமார்களின் ஜீவனாம்சத்தையும் என் ஊழியரின் கூலியையும் தவிர, நான்விட்டுச் செல்வதெல்லாம் தருமமேயாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2777. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி) வக்ஃபு செய்தபோது, அதை நிர்வாகம் செய்பவர் அதிலிருந்து உண்ணலாம் என்றும் அவர் தன் நண்பருக்கு (அதிலிருந்து) பணத்தை விரயம் செய்யாமல் உண்ணக் கொடுக்கலாம் என்றும் விதிமுறைகள் நிர்ணயித்தார்கள். 28

## ஒருவர் ஒரு நிலத்தையோ கிணற்றையோ வக்ஃபு செய்தால், அல்லது மற்ற முஸ்லிம்கள் அந்தக் கிணற்றின் நீரைப் பயன்படுத்துவது போல் தனக்கும் அதைப் பயன்படுத்தும் உரிமையுண்டு என்று நிபந்தனையிட்டால் (அவை செல்லும்.)

அனஸ்(ரலி) ஒரு வீட்டை வக்ஃபு செய்தார்கள். (மதீனாவுக்கு) வரும் போதெல்லாம் அதில் அவர்கள் தங்குவார்கள்.

ஸுபைர்(ரலி) தம் வீடுகளை தர்மம் செய்தார்கள். தம் பெண்மக்களில் விவாகரத்து செய்யப்பட்ட ஒருவருக்கு,நீ இதில் தீங்கிழைக்காமலும் தீங்குக்கு ஆளாகாமலும் தங்கிக் கொள்ளலாம்' என்று கூறி அனுமதியளித்தார்கள். ஆனால்,மறுமணம் செய்து, தன்னிறைவு பெற்றால் நீ அதில் தங்க அனுமதியில்லை என்று நிபந்தனையும் விதித்தார்கள்.

இப்னு உமர்(ரலி), தம் தந்தை உமர்(ரலி) அவர்களின் வீட்டிலிருந்து தமக்குக் கிடைத்த பங்கில் தம் குடும்பத்தாரில் தேவையுள்ளவர்கள் வசித்துக் கொள்ள வகை செய்தார்கள்.

ஹதீஸ் 2778. அபூ அப்திர் ரஹ்மான்(ரலி) அறிவித்தார்.

(கலீஃபா) உஸ்மான்(ரலி) (கலகக்காரர்களால்) முற்றுகையிடப்பட்டபோது அவர்களுக்கு மேலிருந்து (வீட்டுக் கூரை மீதிருந்து),அல்லாஹ்வின் பெயரால் உங்களைக் கேட்கிறேன். நான் நபி(ஸல்) அவர்களின் தோழர்களைத் தான் கேட்கிறேன்.ரூமா என்னும் கிணற்றை (விலைக்கு வாங்கி) தூர்வாரி (பொது மக்கள் நலனுக்காக வக்ஃப் செய்து) விடுகிறவருக்கு சொர்க்கம் கிடைக்கும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூற, நான் அதை (விலைக்கு வாங்கித்) தூர் வாரி (வக்ஃபாக ஆக்கி)யது உங்களுக்குத் தெரியாதா? நபி(ஸல்) அவர்கள்பொருளாதார நெருக்கடியிலிருக்கும் (தபூக் போருக்கான) படையை (பொருளுதவியால்) தயார்படுத்துகிறவருக்கு சொர்க்கம் கிடைக்கும் என்று கூற, நான் அதைத் தயார்படுத்தியது உங்களுக்குத் தெரியாதா? என்று கூறினார்கள். நபித்தோழர்கள் அவர்கள் கூறியதை உண்மையென ஏற்றனர்.

உமர்(ரலி) வக்ஃபு செய்தபோது,இதை நிர்வாகம் செய்பவர் இதிலிருந்து (எடுத்து) உண்பதில் தவறில்லை' என்று குறிப்பிட்டார்கள். வக்ஃபு செய்தவரே கூட அதை நிர்வாகம் செய்யலாம். மற்றவர்களும் அதற்கு நிர்வாகியாக இருக்கலாம். ஆக, (அதை) நிர்வமக்கும் எவருக்கும் அதிலிருந்து உண்ண அனுமதியுண்டு.

## வக்ஃபு செய்பவர், இதற்கான விலையை நாம் அல்லாஹ்விடமே கேட்கிறோம்' என்று கூறினால் அது செல்லும்.

ஹதீஸ் 2779. அனஸ்(ரலி) அறிவித்தார்.

அனஸ்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள்,பனு நஜ்ஜார் குலத்தாரே! உங்கள் தோட்டத்திற்கு என்னிடம் விலை சொல்லுங்கள்' என்று கேட்டார்கள். அதற்கு அந்தக் குலத்தார்,அதன் விலையை நாங்கள் அல்லாஹ்விடமே எதிர்பார்க்கிறோம்' என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் 05:106, 107)

அல்லாஹ் கூறினான்:

இறை நம்பிக்கையாளர்களே! உங்களில் ஒருவருக்கு மரணம் நெருங்கி, அவர் மரண சாசனம் செய்யும் நேரத்தில் அதைப் பற்றி இருவர் சாட்சியம் அளிக்க வேண்டும் (அதற்கான விதிமுறைகளாவன:) உங்களிடையே நேர்மையான இருவர் சாட்சிகளாக்கப்பட வேண்டும். அல்லது நீங்கள் பயணத்தில் இருக்கும் பொழுது மரணத் துன்பம் (முஸ்லிம்களாகிய) உங்களை அனும்விட்டால் உங்களைத் தவிர வேறு இருவரை சாட்சிகளாய் ஆக்கிக் கொள்ள வேண்டும். (சாட்சிகள் குறித்து) நீங்கள் சந்தேகப்பட்டால் தொழுகைக்குப பிறகு (பள்ளிவாசலில்) அவர்களை நீங்கள் நிறுத்தி வைக்க, அவ்விருவரும் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு,நாங்கள் எங்கள் சாட்சியத்தை விலைக்கு விற்க மாட்டோம் அப்படி மறைத்தால் நாங்கள் பாவிகளாவோம்' என்று கூறட்டும். ஆனால், (இதற்குப் பிறகும்) அவர்கள் பொய் சாட்சியம் கூறி பாவத்திற்காளாம்விட்டார்கள் என்று கண்டுபிடிக்கப்பட்டால், தம் உரிமை பாதிக்கப்பட்ட (இறந்த)வர்(களின் உறவினர்)களிலிருந்து தகுதி வாய்ந்த இருவர் எழுந்து அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு,எங்கள் சாட்சியமே அவர்கள் இருவரின் சாட்சியத்தை விட வாய்மையானது. நாங்கள் (சாட்சியம் அளிப்பதில்) வரம்பு மீறவில்லை. அப்படி வரம்பு மீறினால் நாங்கள் அக்கிரமக்காரர்களாவோம்' என்று கூற வேண்டும். அவர்கள் சரியான முறையில் சாட்சியம் அளிப்பதற்கு, அல்லது தம் சத்தியப் பிரமாணங்களுக்குப் பிறகு (பிறருடைய பிரமாணங்கள் வாங்கப்படுமோ அல்லது தம் சத்தியப் பிரமாணங்கள் சரியில்லை என்று) மறுக்கப்பட்டு விடுமோ என்று அஞ்சி (உண்மையாக) சாட்சியமளிப்பதற்கு இதுவே பொருத்தமான வழிமுறையாகும். மேலும், அல்லாஹ்வுக்கு அஞ்சி அவனுக்குச் செவிசாயுங்கள் அல்லாஹ் (தன் கட்டளைக்கு) மாறுசெய்பவர்களுக்கு நேர்வழியளிப்பதில்லை. (திருக்குர்ஆன் 05:106, 107)

ஹதீஸ் 2780. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

பனு சஹ்கி குலத்தைச் சேர்ந்த ஒருவர் தமீமுத் தாரீ, அதீ இப்னு பத்தா ஆகியோருடன் பயணம் புறப்பட்டார், 29 அந்த சஹ்கி குலத்தவர் ஒரு முஸ்லிம் கூட இல்லாத ஒரு பூமியில் இறந்துவிட்டார். தமீமுத் தாரீயும், அதீயும் அவர்விட்டுச் சென்ற (அவருடைய) சொத்துக்களை எடுத்துக் கொண்டு வந்தபோது (அவற்றில்) தங்கத்தால் செதுக்கிய வேலைப்பாடுகள் கொண்ட வெளிப்பாத்திரம் ஒன்றைக் காணவில்லை. இறைத்தூதர்(ஸல்) அவ்விருவரிடமும் சத்தியப் பிரமாணம் வாங்கினார்கள். பிறகு அந்தப் பாத்திரம் மக்காவில் சிலரிடம் காணப்பட்டது.

அவர்கள்,நாங்கள் இதை தமீமிடமிருந்தும் அதீயிடமிருந்தும் வாங்கினோம்‘ என்று கூறினர். அப்போது (இறந்த) சஹ்கி குலத்தவரின் (நெருங்கிய) உறவினர்களில் இருவர் எழுந்து சத்தியம் செய்து,எங்கள் சாட்சியம் அவர்கள் இருவருடைய சாட்சியத்தை விட அதிகத் தகுதி வாய்ந்ததாகும் (ஏற்கத் தக்கதாகும்)‘ என்றும்,அந்தப் பாத்திரம் எங்கள் தோழருடையதே‘ என்றும் கூறினர். அவர்களின் விவகாரத்தில் தான் இந்த (திருக்குர்ஆன் 05:106, 107) இறைவசனம் அருளப்பட்டது.

## இறந்தவரின் கடன்களை, வாரிசுகள் வருகை தராமலேயே அவரால் நியமிக்கப்பட்ட பொறுப்பாளர் அடைக்கலாம்.

ஹதீஸ் 2781. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

என் தந்தை உஹுதுப் போரின்போது கொல்லப்பட்டுவிட்டார்கள். அவர்கள் ஆறு பெண் மக்களைவிட்டுச் சென்றார்கள். தம் மீது கடனையும்விட்டுச் சென்றார்கள். பேரீச்சம் பழங்களைப் பறிக்கும் காலம் வந்தபோது நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! என் தந்தை உஹுதுப் போரின்போது கொல்லப்பட்டுவிட்டதையும் தம் மீது நிறையக் கடன்விட்டுச் சென்றிருப்பதையும் தாங்கள் அறிவீர்கள். கடன்காரர்கள் தங்களைப் பார்க்க வேண்டுமென்று விரும்புகிறேன்‘ என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,நீ போய், ஒவ்வொரு (வகைப்) பேரீச்சம் பழத்தையும் களத்தில் அதன்னுடையன் இடத்தில் குவித்து வை‘ என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்தேன் பிறகு நபியவர்களை அழைத்தேன். கடன்காரர்கள் நபி(ஸல்) அவர்களைக் கண்டவுடன் என்னிடம் இன்னும் அதிகமாக வற்புறுத்தலாயினர். அவர்கள் (இப்படிச்) செய்ததைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் அவற்றில் மிகவும் பெரிய குவியலை மூன்று முறை சுற்றி வந்து அதன் அருகே உட்கார்ந்தார்கள். பிறகு, உன் கடன்காரர்களைக் கூப்பிடு‘ என்றார்கள். (அவர்கள் வந்ததும்) அவர்களுக்கு நிறைவேற்றித் தரும் வரை அளந்து கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! குவியல்கள் அனைத்தும் அப்படியே எஞ்சிவிட்டன் குறையாமல் இருந்தன. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த குவியலை நான் பார்த்துக் கொண்டேயிருந்தேன். அதிலிருந்து ஒரேயொரு பேரீச்சம் பழம் கூட குறையாத தைப் போல் அது அப்படியே இருந்தது

# அத்தியாயம் 56 அறப்போரும் அதன் வழிமுறைகளும்.

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

(திருக்குர்ஆன் 09:111, 112)

அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக, அல்லாஹ் இறை நம்பிக்கையாளர்களிடமிருந்து அவர்களின் உயிர்களையும், உடைமைகளையும் சொர்க்கத்திற்குப் பகரமாக வாங்கிக் கொண்டான். அவர்கள் இறைவழியில் போர் புரிகிறார்கள் கொல்கிறார்கள் கொல்லப்படுகிறார்கள். அவர்களுக்கு சொர்க்கம் கிடைக்கும் என்னும் இந்த வாக்குறுதி அல்லாஹ்வின் பொறுப்பிலுள்ள சத்தியமான அல்லாஹ்வின் பொறுப்பிலுள்ள சத்தியமான வாக்குறுதியாகும். இதுதான் தவ்ராத், இன்ஜீல், குர்ஆன் ஆகிய(வேத நூல்கள் எல்லா)வற்றிலும் உள்ளது. அல்லாஹ்வை விட தன் வாக்குறுதியை நன்கு நிறைவேற்றுபவர் வேறெவர் உள்ளார்? எனவே, நீங்கள் அல்லாஹ்வுடன் செய்த உங்கள் வியாபாரத்தைக் குறித்து மகிழ்ச்சியடையுங்கள். இதுவே மாபெரும் வெற்றி. (இந்த ஒப்பந்தம் செய்த நம்பிக்கையாளர்கள்) அல்லாஹ்விடம் திரும்பி பாவமன்னிப்புக் கோரிய வண்ணமிருப்பவர்களும், (அவனை) வணங்கி வாழ்பவர்களும், அவனுக்காக (அவனுடைய மார்க்கத்தைப் பிரசாரம் செய்திட) சுற்றித் திரிபவர்களும் அவன் முன்னால் குனிந்தும் சிரம் பணிந்தும் வணக்கம் புரிபவர்களும், நன்மை புரியும்படி கட்டளையிட்டுத் தீமையிலிருந்து தடுப்பவர்களும் அல்லாஹ்வின் வணக்க வழிபாடுகளைப் பேணி நடப்பவர்களும் ஆவர். (இத்தகைய) நம்பிக்கையாளர்களுக்கு (நபியே!) நீங்கள் நற்செய்தி கூறுங்கள். (திருக்குர்ஆன் 09:111, 112)

இப்னு அப்பாஸ்(ரலி) இந்த இறைவசனத்திலுள்ளஹுதூத் என்னும் சொல்லுக்குவணக்க வழிபாடுகள் என்று பொருள் கூறினார்கள்.

ஹதீஸ் 2782. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! நற்செயல்களில் சிறந்தது எது? என்று கேட்டேன். அவர்கள்,தொழுகையை அதற்குரிய வேளையில் தொழுவது' என்று கூறினார்கள்.பிறகு எது (சிறந்தது?)' என்று கேட்டேன் அவர்கள்,பிறகு தாய்தந்தையருக்கு நன்மை செய்வது' என்று பதிலளித்தார்கள். நான்,பிறகு எது (சிறந்தது?)' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,இறைவழியில் அறப்போரிடுவதாகும்' என்று பதில் சொன்னார்கள். நான் அல்லாஹ்வின் தூதரிடம் வேறெதுவும் கேட்காமல் மௌனமாம் விட்டேன். நான் இன்னும் கேட்டிருந்தால் அவர்கள் இன்னும் பதிலளித்திருப்பார்கள்.

ஹதீஸ் 2783. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,(மக்காவின்) வெற்றிக்குப் பின்னால் (மக்காவிலிருந்து) ஜிஹாத் (இறைவழியில் தாயகம் துறந்து செல்வது) என்பது கிடையாது. ஆனால், அறப்போரிடுவதும் (அதற்காகவும் பிற நற்செயல்கள் புரியவும்) நாட்டம் கொள்வதும் உண்டு. போருக்குப் புறப்படும்படி நீங்கள் அழைக்கப்பட்டால் உடனே போருக்குச் செல்லுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2784. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் (நபி(ஸல்) அவர்களிடம்),இறைத்தூதர் அவர்களே! அறப்போர் புரிவதை சிறந்த நற்செயலாக நாங்கள் கருதுகிறோம். எனவே, (பெண்களாகிய) நாங்களும் அறப்போர் புரியலாமா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(பெண்களான) உங்களுக்குச் சிறந்த அறப்போர், பாவச் செயல் கலவாத ஹஜ் தான்' என்று பதிலளித்தார்கள். 3

ஹதீஸ் 2785. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து,ஜிஹாத் என்னும் (இறைவழியில் புரியும்) அறப்போருக்குச் சமமான ஒரு நற்செயலை எனக்கு அறிவியுங்கள்' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்அப்படி எதையும் நான் காணவில்லை' என்று கூறிவிட்டு,அறப்போர் வீரன் (போருக்காகப்) புறப்பட்டுச் சென்றுவிட்டால் (அவனுக்கு) இணையான நற்செயல் புரிந்திட வேண்டி) நீ உன் வணக்கத் தலத்திற்குச் சென்று இடைவிடாமல் தொழுது கொண்டும் தொடர்ந்து நோன்பு நோற்றுக் கொண்டும் இருக்க உன்னால் முடியுமா? என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர்,அது யாரால் முடியும்? என்று பதிலளித்தார்.4

"அறப்போர் வீரனின் குதிரை, அதைக்கட்டி வைத்துள்ள மேய்ச்சல் கயிற்றுக்கிடையே (கால்களை உதைத்துக் கொண்டு) சில குதிகள் குதித்துச் சென்றால் அதுவும் அவனுக்கு நற்பலனாக எழுதப்படும்' என்று அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

## "இறைவழியில் உயிரையும், உடைமையும் அர்ப்பணித்துப் போராடும் இறைநம்பிக்கையாளரே மனிதர்களில் சிறந்தவராவார்."

அல்லாஹ் கூறினான்:

"இறைநம்பிக்கையாளர்களே! உங்களைத் துன்புறுத்தும் வேதனையிலிருந்து காப்பாற்றக் கூடிய ஒரு வியாபாரத்தை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? (அதுதான்) நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நம்பிக்கை கொள்வதும் இறைவழியில் உங்கள் உடைமைகளாலும் உயிர்களாலும் போராடுவதும் ஆகும். (இதனால் கிடைக்கும் பெரும் நன்மையை) நீங்கள் அறிவீர்களாயின் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். உங்கள் பாவங்களை மன்னித்து, கீழே நீரருவிகள் ஓடிக் கொண்டிருக்கும் சொர்க்க(த் தோட்ட)ங்களில் உங்களை அவன் புகுத்துவான் நிலையான சொர்க்கங்களில் சிறந்த வீடுகளையும் உங்களுக்குத் தருவான். அதுவே மகத்தான வெற்றியாகும். (திருக்குர்ஆன் 61:10-12)

ஹதீஸ் 2786. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

"இறைத்தூதர் அவர்களே! மக்களில் சிறந்தவர் யார்? என்று கேட்கப்பட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,இறைவழியில் தன் உயிராலும் தன் பொருளாலும் போராடுபவரே (மக்களில் சிறந்தவர்)' என்று பதிலளித்தார்கள். மக்கள்,பிறகு யார்? என்று கேட்டார்கள்.மலைக் கணவாய்களில் ஒன்றில் வசித்துக் கொண்டு, அல்லாஹ்வை அஞ்சிய வண்ணம் தன்னால் மக்களுக்குத் தீங்கு நேராமல் தவிர்த்து வருபவரே சிறந்தவர்' என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2787. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் போராடுபவரின் நிலையானது, உண்மையாகப் போராடுபவர் யார் என்பது (அவரின் எண்ணத்தைப் பொருத்து) அல்லாஹ்வுக்கே தெரியும் - (அல்லாஹ்வைத்) தொழுதும், (அவனுக்காக) நோன்பு நோற்றும் வருபவரின் நிலையைப் போன்றதாகும். அல்லாஹ், தன் பாதையில் போராடுபவரின் உயிர்த் தியாகத்தை ஏற்று, அவரை சொர்க்கத்தில் நுழைய வைக்க

உத்தரவாதம் அளித்துள்ளான் அல்லது நன்மையுடனோ, போர்ச் செல்வத்துடனோ அவரைத் திரும்ப வைக்க உத்தரவாதம் அளித்துள்ளான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## அறப்போர் புரியவும், அதில் உயிர்த் தியாகம் செய்யவும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் நல்வாய்ப்பு வேண்டிப் பிரார்த்தித்தல்.

உமர் (ரலி), இறைவா! உன் தூதருடைய ஊரில் உயிர்த் தியாகம் செய்யும் வாய்ப்பை எனக்கு அளிப்பாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 2788 ، ஹதீஸ் 2789 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உம்மு ஹராம் பின்த்து மில்ஹான் (ரலி) அவர்களின் வீட்டிற்குச் செல்பவராக இருந்தார்கள். அப்போதெல்லாம் அவர் நபி (ஸல்) அவர்களுக்கு உணவு தருவது வழக்கம். உம்மு ஹராம் (ரலி), உபாதா இப்னு ஸாமித் (ரலி) அவர்களின் மனைவியாக இருந்தார்கள். (இவ்வாறே ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் உம்மு ஹராம் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அவர் நபி (ஸல்) அவர்களுக்கு உணவு கொடுத்துவிட்டு அவர்களின் தலையில் பேன் பார்க்கத் தொடங்கினார்கள். அப்படியே நபி (ஸல்) அவர்கள் தூங்கிவிட்டார்கள். பிறகு, சிரித்துக் கொண்டே கண் விழித்தார்கள். உம்மு ஹராம் (ரலி), இறைத்தூதர் அவர்களே! ஏன் (இப்படிச்) சிரிக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், என் சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் சிலர், இறைவழியில் அறப்போர் வீரர்களாக எனக்கு (கனவில்) எடுத்துக் காட்டப்பட்டார்கள். அவர்கள் இந்தக் கடலின் முதுகில் கட்டில்களில் (சாய்ந்து) அமர்ந்திருக்கும் மன்னர்களாக அல்லது கட்டில்களில் அமர்ந்திருக்கும் மன்னர்களைப் போல்... ஏறிச் செல்கிறார்கள்' என்று பதிலளித்தார்கள். அதற்கு உம்மு ஹராம் (ரலி), இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருத்தியாக என்னை ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார்கள். எனவே, இறைத்தூதர் (ரலி) அவர்களுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள். பிறகு, தம் தலையை (த் தலையணையில்) வைத் (து உறங்க ஆரம்பித்) தார்கள் பிறகு, சிரித்தபடியே விழித்தெழுந்தார்கள். அப்போது உம்மு ஹராம் (ரலி), இறைத்தூதர் அவர்களே! ஏன் சிரிக்கிறீர்கள்' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், என் சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் சிலர், இறைவழியில் அறப்போர் புரிபவர்களாக எனக்கு எடுத்துக் காட்டப்பட்டனர். !என்று முன்பு போன்றே கூறினார்கள். உம்மு ஹராம் (ரலி), இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருத்தியாக என்னை ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், நீங்கள் (அறப்போருக்காகக் கடலில்) முதன்முதலாகப் பயணிப்பவர்களில் ஒருவராக இருப்பீர்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே, முஆவியா இப்னு அபீ சு∴ப்யான் (ரலி) அவர்களின் (ஆட்சிக்) காலத்தில் (சைப்ரஸ் தீவின் மீது அறப்போர் புரியச் சென்றவர்களுடன் உம்மு ஹராம் (ரலி) அவர்களும் கடல் பயணம் செய்து கடலிலிருந்து (தீவின் ஒரு பகுதிக்குப்) புறப்பட்டபோது தம் வாகனத்திலிருந்து விழுந்து மரணமடைந்தார்கள்.

## இறைவழியில் அறப்போர் புரிபவர்களின் படித்தரங்கள்

ஹதீஸ் 2790. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

"அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் நம்பிக்கை கொண்டு, தொழுகையை நிலை நிறுத்தி, ரமளானில் நோன்பும் நோற்ற மனிதரை சொர்க்கத்தில் புகச் செய்வது அல்லாஹ்வின் மீது கடமையாகிவிட்டது அவர் இறைவழியில் அறப்போர் புரிந்தாலும் சரி அல்லது அவர் பறந்த பூமியில் உட்கார்ந்து கொண்டாலும் சரி' என்று கூறினார்கள். இறைத்தூதர் அவர்களே! நாங்கள் மக்களுக்க இந்த நற்செய்தியை அறிவிக்கலாமா? என்று (நபித் தோழர்கள்) கேட்டதற்கு

அவர்கள்,சொர்க்கத்தில் நூறு படித்தரங்கள் உள்ளன. அவற்றை அல்லாஹ்? தன் பாதையில் அறப்போர் புரிபவர்களுக்காகத் தயார்படுத்தி வைத்துள்ளான். இரண்டு படித்தரங்களுக்கிடையே வானத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ளது போன்ற தொலைவு உள்ளது. நீங்கள் அல்லாஹ்விடம் கேட்டால், ஃபிர்தவ்ஸ் என்னும் (சொர்க்கத்தின்) படித்தரத்தையே கேளுங்கள் ஏனெனில், அதுவே சொர்க்கத்தின் மிகச் சிறந்த படித்தரமும் மிக உயர்ந்த படித்தரமும் ஆகும்' என்று கூறினார்கள். (அறிவிப்பாளரான யஹ்யா இப்னு சாலிஹ் (ரஹ்) கூறினார்:

மேலும்,அதற்கு மேலே கருணையாள(னான இறைவ)னின் அர்ஷு - சிம்மாசனம் இருக்கிறது. இன்னும், அதிலிருந்தே சொர்க்கத்தின் ஆறுகள் பாய்கின்றன' என்றும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் கருதுகிறேன்.

மற்றோர் அறிவிப்பாளரான முஹம்மத் இப்னு ஃபுலைஹ் (ரஹ்), தம் தந்தையிடமிருந்து,அதற்கு மேலே ரஹ்மானின் அர்ஷு இருக்கிறது' என்று (இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என சந்தேகத்தொனியின்றி) அறிவித்தார்.

ஹதீஸ் 2791. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இன்றிரவு இரண்டு பேரைக் (கனவில்) கண்டேன் அவர்கள் இருவரும் என்னிடம் வந்து, என்னை ஒரு மரத்தின் மீதேற்றி அழகான, சிறந்த ஒரு வீட்டினுள் புகச் செய்தார்கள். அதை விட அழகான ஒரு வீட்டை நான் பார்த்ததேயில்லை (அவர்களில் ஒருவர்),இந்த வீடு இறைவழியில் உயிர்த் தியாகம் புரிந்தவர்களின் வீடாகும்' என்றார். 7

## காலையும் மாலையும் சிறிது நேரம் இறைவழியில் (போரிடப்) புறப்படுவதின் சிறப்பும் சொர்க்கத்தில் ஒரு முழம் அளவு இடத்தின் சிறப்பும்.

ஹதீஸ் 2792. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் காலை நேரத்தில் சிறிது நேரம் அல்லது ஒரு மாலை நேரத்தில் சிறிது நேரம் போர் புரியச் செல்வது உலகத்தையும் அதிலுள்ள பொருட்களையும் விடச் சிறந்ததாகும்.

இதை அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2793. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் ஒரு வில்லுக்குச் சமமான (ஒரு முழம்) அளவு (இடம் கிடைப்பது) சூரியன் எதன் மீது உதித்து மறைகிறதோ அந்த உலகத்தை விடச் சிறந்ததாகும். மேலும், இறைவழியில் ஒரு காலை நேரத்தில் சிறிது நேரம் போர் புரியச் செல்வது அல்லது ஒரு மாலை நேரத்தில் சிறிது நேரம் (போர் புரியச்) செல்வது சூரியன் எதன் மீது உதித்து மறைகிறதோ அந்த உலகத்தை விடச் சிறந்ததாகும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2794. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் காலையிலும் மாலையிலும் சிறிதுநேரம் போர் புரியச் செல்வது உலகத்தை விடவும் அதிலுள்ள பொருட்களை விடவும் சிறந்ததாகும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

## ஹூருல் ஈன் என்னும் அகன்ற விழிகளையுடைய சொர்க்க மங்கையரும் அவர்களைக் குறித்த வர்ணனையும்.

ஹதீஸ் 2795. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்விடம் நற்பலன் பெறுபவராக இறந்து போகிற எந்த (நல்ல) அடியாரும் இந்த உலகமும் அதிலுள்ளவை அனைத்தும் அவருக்குக் கிடைக்கும் என்றிருந்தாலும் கூட உலகிற்குத் திரும்பி வர விரும்ப மாட்டார் இறைவழியில் உயிர்த்தியாகம் புரிந்தவரைத் தவிர ஏனெனில், உயிர்த்தியாகத்தின் சிறப்பை (மறுமையில்) அவர் காண்கிறார். எனவே, இந்த உலகிற்கு மீண்டும் வந்து மறுபடியும் ஒருமுறை (இறைவழியில் போரிட்டுக்) கொல்லப்படுவதை அவர் விரும்புவார்.

இதை அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2796. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் காலையில் சிறிது நேரம் அல்லது, மாலையில் சிறிது நேரம் (போர் புரியச்) செல்வது உலகத்தையும் அதிலுள்ள பொருட்களையும் விடச் சிறந்தது. உங்களில் ஒருவரின் வில்லின் அளவுக்குச் சமமான, அல்லது ஒரு சாட்டையளவுக்குச் சமமான (ஒரு முழம்) இடம் கிடைப்பது உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்தது. சொர்க்கவாசிகளில் (ஹூருல் ஈன்களில்) ஒரு பெண், உலகத்தாரை எட்டிப் பார்த்தால் வானத்திற்கும் பூமிக்குமிடையே உள்ள அனைத்தையும் பிரகாசமாக்கி விடுவாள் பூமியை நறுமணத்தால் நிரப்பி விடுவாள். அவளுடைய தலையிலுள்ள முக்காடோ உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாகும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## உயிர்த்தியாகம் விரும்புவது

ஹதீஸ் 2797. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! என்னைவிட்டுப் பின்தங்கி விடுவதால் இறை நம்பிக்கையாளர் சிலரின் உள்ளங்களில் வருத்தம் உண்டாகாது என்றிருக்குமாயின் மேலும், அவர்களை ஏற்றிச் செல்ல வாகனங்களும் என்னிடம் இருந்திருக்குமாயின் இறைவழியில் போரிடச் செல்லும் எந்தச் சிறுபடையையும்விட்டு நான் பின்தங்கியிருந்திருக்க மாட்டேன். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நான் இறைவழியில் கொல்லப்பட்டு, பிறகு உயிராக்கப்பட்டு, மீண்டும் கொல்லப்பட்டு, பிறகு உயிராக்கப்பட்டு, மீண்டும் கொல்லப்பட்டு, பிறகு உயிராக்கப்பட்டு, மீண்டும் கொல்லப்படவேண்டும் என்றே விரும்புகிறேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2798. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள். அப்போது (மூத்தா போர்க் களத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை இங்கிருந்து கொண்டே நேரில் காண்பது போல் கூறலானார்கள்:)ஸைத் இப்னு ஹாரிஸா கொடியைக் கையிலெடுத்து (இஸ்லாமியச் சேனைக்குத் தலைமை தாங்கி)க கொண்டுள்ளார். இப்போது அவர் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு, ஜஅஃபர் அதை(த் தம் கையில்) எடுத்து (தலைமை தாங்கியபடி போரிட்டு)க் கொண்டுள்ளார். அவரும் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு, அதை அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (தம் கையில்) எடுத்து (தலைமை தாங்கியபடி போரிட்டுக் கொண்டு)ள்ளார் இப்போது அவரும் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு, காலித் இப்னு வலீத் (தளபதியாக) நியமிக்கப்படாமலேயே அதைக் கையிலெடுத்துள்ளார். அவருக்கு வெற்றியளிக்கப்பட்டுவிட்டது. (வீர மரணத்தினால் அவர்கள் பெற்ற பெரும் பேற்றினை நாம் அறிந்த பிறகும்) அவர்கள் நம்முடன் இருப்பது நமக்கு மகிழ்ச்சியளிக்காது...“

...அறிவிப்பாளர் அய்~ப்(ரஹ்),அல்லது,அவர்கள் நம்முடன் இருப்பது அவர்களுக்கே மகிழ்ச்சியளிக்காது என்றும் அறிவிக்கப்பட்டிருக்கலாம்‘ என்று கூறுகிறார்.

இதைக் கூறியபோது நபி(ஸல்) அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

## அறப்போரில் கலந்து கொள்ளச் சென்று, வாகனத்திலிருந்து விழுந்து, இறந்தவரும் உயிர்த் தியாகிகளில் ஒருவரே.

அல்லாஹ் கூறினான்:

மேலும், ஒருவர் அல்லாஹ்வை நோக்கியும் அவனுடைய தூதரை நோக்கியும் ஹிஜ்ரத் செய்வதற்காகத் தன்னுடைய வீட்டைவிட்டுப் புறப்பட்டு, பிறகு (வழியிலேயே) அவருக்கு மரணம் நேரிட்டுவிட்டால் அவருக்கு நன்மை வழங்குவது அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது. (திருக்குர்ஆன் 04:100)

ஹதீஸ் 2799 ` ஹதீஸ் 2800 உம்மு ஹராம் பின்த்து மில்ஹான்(ரலி) அறிவித்தார்.

ஒருநாள் நபி(ஸல்) அவர்கள் எனக்கு அருகில் உறங்கினார்கள். பிறகு புன்னகைத்துக் கொண்டே கண்விழித்தார்கள். நான்,ஏன் சிரிக்கிறீர்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,என் சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் சிலர் இந்தப் பசுங்கடலில் கட்டில்களில் (சாய்ந்து) அமர்ந்திருக்கும் அரசர்களைப் போல் (கப்பல்களில் ஏறிப்) பயணம் செய்து கொண்டிருப்பதாக எனக்கு (கனவில்) எடுத்துக் காட்டப்பட்டது' என்று கூறினார்கள். நான்,அவர்களில் ஒருத்தியாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று சொன்னேன். (அவ்வாறே) அவர்கள் எனக்காகப் பிரார்த்தித்தார்கள். பிறகு, இரண்டாம் முறையாக உறங்கினார்கள். முன்பு செய்தது போன்றே செய்தார்கள். முன்பு கேட்டது போன்றே நானும் கேட்டேன். முன்பு பதில் சொன்னது போன்றே அவர்களும் பதில் சொன்னார்கள். நான்,அவர்களில் ஒருத்தியாக என்னை ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூறினேன். அவர்கள்,முதன் முதலாகச் செல்பவர்களில் நீங்களும் ஒருவர் தாம்' என்று கூறினார்கள்.

(உம்மு ஹராம்(ரலி) அவர்களின் சகோதரி மகன் அனஸ் இப்னு மாலிக்(ரலி) தெரிவிக்கிறார்கள்:)

அவ்வாறே, தளபதி முஆவியா(ரலி) அவர்களுடன் முஸ்லிம்கள் (சைப்ரஸ் தீவில் அறப்போர் புரிய) கடலில் பயணம் செய்த முதல் படையினரில் ஓர் அறப்போர் வீரராக, தம் கணவர் உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்களுடன் உம்மு ஹராம்(ரலி) புறப்பட்டுப் போனார்கள். தம் படையெடுப்பிலிருந்து அவர்கள் திரும்பி வந்தபோது ஷாம் நாட்டு திசைநோக்கிச் சென்றார்கள். உம்மு ஹராம்(ரலி) ஏறிக் கொள்வதற்காக அவர்களுக்கருகே வாகனம் ஒன்று கொண்டு வரப்பட்டது. (அவர்கள் அதில் ஏறிக் கொள்ள) அது அவர்களைக் கீழே தள்ளிவிட்டது அதனால் அவர்கள் இறந்துவிட்டார்கள்.

## இறைவழியில் துன்புறுத்தப்படுபவர்.

ஹதீஸ் 2801. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பனு சுலைம் குலத்தவர் சிலருடன் எழுபது பேர் (கொண்ட வேத அறிஞர்களான அன்சாரி)களை பனு ஆமிர் குலத்தாரிடம் (இஸ்லாத்தை எடுத்துரைப்பதற்காக) அனுப்பினார்கள். அவர்கள் (அங்கு) சென்றபோது என் தாய்மாமன் (தம்முடன் வந்த தோழர்களிடம்),உங்களுக்கு முன்னால் நான் போகிறேன். அவர்களுக்கு அல்லாஹ்வின் தூதரைக் குறித்து நான் எடுத்துரைத்திட (அவர்கள் என்னை அனுமதித்து) எனக்குப் பாதுகாப்பளித்தால் நான் எடுத்துரைக்கிறேன் இல்லையென்றால் நீங்கள் என் (பின்னால் என்) அருகிலேயே இருங்கள்' என்று கூறிவிட்டு சற்று முன்னால் சென்றார். அவர்கள் அவருக்குப்

பாதுகாப்பளித்தார்கள் அவரை எதுவும் செய்யவில்லை. நபி(ஸல்) அவர்களைப் பற்றி அவர் அவர்களுக்கு எடுத்துரைத்துக் கொண்டிருந்தபோது தங்களில் ஒருவரைப் பார்த்து அவர்கள் சைகை செய்தார்கள். அவன் என் தாய் மாமனை (ஈட்டியால்) குத்தி அவரைக் கொன்றுவிட்டான். (உயிர் பிரியும் வேளையில்) அவர்,அல்லாஹ் மிகப் பெரியவன். கஅபாவின் அதிபதி மீது சத்தியமாக! நான் வெற்றி பெற்றுவிட்டேன்' என்று கூறினார். பிறகு, அவரின் எஞ்சிய தோழர்களின் மீதும் பாய்ந்து அவர்களையும் கொன்றுவிட்டார்கள் மலையின் மீதேறிக் கொண்ட கால் ஊனமுற்ற ஒரு மனிதரைத் தவிர.

அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹம்மாம்(ரஹ்),கால் ஊனமுற்ற அந்த மனிதருடன் மற்றொருவரும் (தப்பித்துக் கொண்டார்) என்று (அறிவிக்கப்பட்டதாக) கருதுகிறேன்' என்று கூறுகிறார்.

ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு,நீங்கள் அனுப்பிய போதகர்கள் தங்கள் இறைவனிடம் சென்று சேர்ந்துவிட்டனர். அவர்களைக் குறித்து அவன் திருப்தியடைந்தான். அவர்களும் (தான் பெற்ற நற்பலனைக் குறித்து திருப்தி) கொள்ளும்படிச் செய்தான் என்று அறிவித்தார்கள். நாங்கள் (அப்போது அருளப்பட்ட),நாங்கள் எங்கள் இறைவனைச் சென்றடைந்து விட்டோம். எங்களைக் குறித்து அவன் திருப்தியடைந்துவிட்டான். அவனைக் குறித்து நாங்கள் திருப்தியடைந்தோம். தன்(வெகு மதியி)னைக் குறித்து எங்களைத் திருப்தியடையும்படி அவன் செய்தான் என்று எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்' என்னும் இறை வசனத்தை ஓதிக் கொண்டிருந்தோம். அது பின்னாளில் (இறைவனால்) நீக்கப்பட்டுவிட்டது. நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்த (பனு சுலைம் குலத்தாரைச் சேர்ந்த) ரிஅல், தக்வான், பனு லிஹ்யான், பனு உஸைய்யா ஆகிய கிளையினருக்குக் கேடு நேர, நாற்பது நாள்கள் காலை (தொழுகை) நேரங்களில் பிரார்த்தனை செய்தார்கள். 12

ஹதீஸ் 2802. ஜுன்தப் இப்னு சுஃப்யான்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் போர் ஒன்றில் பங்கு கொண்டபோது அவர்களின் விரலில் (காயம் ஏற்பட்டு) ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. அப்போது அவர்கள்,நீ இரத்தம் சொட்டுகிற ஒரு விரல் தானே? நீ அடைந்த (பழு)தெல்லாம் இறைவழியில் தானே!என்று (ஈரடிச் சீர் பாடல் போன்ற வடிவில்) கூறினார்கள்.

## இறைவழியில் காயப்படுத்தப்படுபவர் (பெறும் சிறப்பு)

ஹதீஸ் 2803. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! இறைவழியில் காயப்படுத்தப்படுபவர் - உண்மையில் தன் பாதையில் காயப்படுத்தப்படுபவர் யார் என்பதை(அவரின் எண்ணத்தைப் பொருத்து) அல்லாஹ்வே அறிந்தவன் - மறுமை நாளில் இரத்த நிறம் கொண்டவராகவும் கஸ்தூரி மணம் கமழ்கிறவராகவுமே வருவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (திருக்குர்ஆன் 09:52)

அல்லாஹ் கூறினான்:

“(நபியே!) கூறுங்கள்: (இமைறுப்பாளர்களான) நீங்கள், எங்களின் விஷயத்தில் (வெற்றி, அல்லது வீரமரணம் ஆகிய) இரண்டு நன்மைகளில் ஒன்றைத் தவிர வேறெதையும் எதிர்பார்க்கிறீர்களா? (திருக்குர்ஆன் 09:52)

(இதைத் தான்)வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வரும் (என்று அபூ சுஃப்யான் அவர்கள் ரோம சக்கரவர்த்தி ஹிராக்ளியஸிடம் கூறினார்.

ஹதீஸ் 2804. அபூ சுஃப்யான் (ரலி) அறிவித்தார்.

என்னிடம் (ரோம சக்கரவர்த்தி) ஹிராக்ளியஸ், முஹம்மதை எதிர்த்து நீங்கள் புரிகிற போர் (முடிவு) எப்படியுள்ளது? என்று கேட்டேன். அதற்கு நீங்கள், போர் (முடிவு எங்களிடையே) மாறி மாறி வரும் என்று பதிலளித்தீர்கள். இறைத்தூதர்கள் இப்படித் தான் சோதிக்கப்படுவார்கள். பிறகு, அவர்களுக்குச் சாதமாகவே இறுதி முடிவு இருக்கும்' என்று கூறினார்.

## (திருக்குர்ஆன் 33:23)

அல்லாஹ் கூறினான்:

"தாங்கள் அல்லாஹ்விடம் கொடுத்த வாக்குறுதியை மெய்ப்படுத்திவிட்டவர்களும் இறைநம்பிக்கையாளர்களிடையே உள்ளனர். அவர்களில் சிலர், தம் இலட்சிய(மான வீரமரண)த்தை அடைந்துவிட்டனர். அவர்களில் இன்னும் சிலர் (அதனை) எதிர்பார்த்த வண்ணம் உள்ளனர். (தங்கள் வாக்குறுதியில்) அவர்கள் ஒருபோதும் மாறி விடவில்லை. (திருக்குர்ஆன் 33:23)

ஹதீஸ் 2805. அனஸ் (ரலி) அறிவித்தார்.

என் தந்தையின் சகோதரர் அனஸ் இப்னு நள்ர் (ரலி) பத்ருப் போரில் கலந்து கொள்ளாமல் எங்கோ சென்றார். அவர் (திரும்பி வந்தவுடன்) இறைத்தூதர் அவர்களே! தாங்கள் இணைவைப்பவர்களுடன் நடத்திய முதல் போரில் நான் கலந்து கொள்ளவில்லை இணைவைப்பவர்களுக்கெதிரான போரில் அல்லாஹ் என்னைப் பங்குபெற வைத்திருந்தால் நான் செய்வதை (வீரமாகப் போரிடுவதை) அவன் நிச்சயம் பார்த்திருப்பான். பின்பு உஹுதுப் போரின்போது முஸ்லிம்கள் தோல்வியுற்ற நேரத்தில் அவர், இறைவா! என் தோழர்கள் செய்த (பின்வாங்கிச் சென்ற) செயலுக்காக உன்னிடம் நான் மன்னிப்புக் கோருகிறேன். இணைவைப்பவர்கள் செய்த (நபியவர்களுக்கெதிரான) இந்தப் போருக்கும் எனக்கும் தொடர்பில்லை என்று அறிவிக்கிறேன்' என்று கூறிவிட்டு, பிறகு (போர்க் களத்தில்) முன்னேறிச் சென்றார். ஸஅத் இப்னு முஆத் (ரலி) அவருக்கெதிரில் வரக் (கண்டு), ஸஅத் இப்னு முஆத் அவர்களே! நான் சொர்க்கத்தையே விரும்புகிறேன். என் தந்தை நள்ருடைய இறைவன் மீது சத்தியமாக! நான் சொர்க்கத்தின் வாடையை உஹுது மலையிலிருந்து பெறுகிறேன்' என்று கூறினார். ஸஅத் (ரலி) இதை நபி (ஸல்) அவர்களிடம் கூறிவிட்டு, அவர் செய்த (வீராவேசமான) போரை வர்ணிக்க என்னால் முடியவில்லை, இறைத்தூதர் அவர்களே! என்று கூறினார். நாங்கள் அவர் உடலில் வாளால் வெட்டப்பட்டும், ஈட்டியால் குத்தப்பட்டும், அம்பால் துளைக்கப்பட்டும் இருந்த எண்பதுக்கும் மேற்பட்ட காயங்களைக் கண்டோம். மேலும், இணைவைப்பவர்கள் அவரின் உடல் உறுப்புகளைச் சிதைத்து விட்டிருந்த நிலையில் அவர் கொல்லப்பட்டிருக்கக் கண்டோம். அவரின் சகோதரியைத் தவிர வேறெவரும் அவரை (இன்னாரென்று) அறிந்து கொள்ள முடியவில்லை அவரின் சகோதரி கூட அவரின் விரல் (நுனி) களை வைத்துத் தான் அவரை அடையாளம் காண முடிந்தது.

"அல்லாஹ்விடம் தாம் கொடுத்த உறுதிமொழியை மெய்ப்படுத்திவிட்டவர்களும் இறைநம்பிக்கையாளர்களிடையே உள்ளனர்! என்கிற (திருக்குர்ஆன் 33:23) இறைவசனம் இவர் விஷயத்திலும் இவரைப் போன்ற மற்ற உயிர்த் தியாகிகள் விஷயத்திலும் தான் அருளப்பட்டது என்றே நாங்கள் கருதி வந்தோம்.

ஹதீஸ் 2806. அனஸ் (ரலி) அறிவித்தார்.

என் தந்தையின் சகோதரர் அனஸ் இப்னு நள்ரு(ரலி) அவர்களின் சகோதரிருபய்யிஉ எனப்படுபவர் ஒரு பெண்ணின் முன்பல்லை உடைத்துவிட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பழிக்குப்பழி வாங்கும்படி உத்தரவிட்டார்கள். அனஸ் இப்னு நள்ரு(ரலி),இறைத்தூதர் அவர்களே! தங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! அவளுடைய முன்பல் (பழிக்குப் பழியாக) உடைக்கப்படாது' என்று கூறினார். அவ்வாறே, அந்தப் பெண்ணின் குலத்தார் இழப்பீட்டுத் தொகையை ஏற்றுக் கொள்ள சம்மதித்துப் பழிவாங்காமல்விட்டுவிட்டனர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு (இப்படி நடக்க வேண்டும் என்று சபதம் செய்து)விட்டால் அதை அல்லாஹ் நிறைவேற்றி விடுகிறான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2807. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

நான் திருக்குர்ஆனைப் பல ஏடுகளில் பிரதியெடுத்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஓத நான் கேட்டிருந்த,அல்அஹ்ஸாப் அத்தியாயத்தைச் சேர்ந்த இறைவசனம் ஒன்று (அதில்) இல்லாதிருப்பதைக் கண்டேன். நான் அதை குஸைமா இப்னு ஸாபித் அல் அன்சாரீ(ரலி) அவர்களிடம் தான் பெற்றேன். (ஒரு வழக்கின் போது) அவரின் சாட்சியத்தை இரண்டு மனிதர்களின் சாட்சியத்திற்குச் சமமாக நபி(ஸல்) அவர்கள் கருதியிருந்தார்கள். அந்த இறைவசனம் இதுதான்:

அல்லாஹ்விடம் தாங்கள் கொடுத்த வாக்குறுதியை மெய்ப்படுத்திவிட்டவர்களும் இறைநம்பிக்கையாளர்களில் உள்ளனர். அவர்களில் சிலர் (இறை வழியில் மரணமடைய வேண்டும் என்ற) தம் இலட்சியத்தை நிறைவேற்றிவிட்டார்கள். அவர்களில் சிலர் (அதை நிறைவேற்றத் தருணம்) எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கின்றனர். (திருக்குர்ஆன் 33:23)

## அறப்போரில் ஈடுபடுவதற்கு முந்தைய நற்செயல்கள்.

“நீங்கள் போர்புரிவதெல்லாம் (உங்கள் போரின் முடிவுகளெல்லாம்) உங்கள் செயல்களை வைத்துத் தான்' என்று அபுத் தர்தா(ரலி) கூறினார்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் செய்யாதவற்றை ஏன் சொல்கிறீர்கள்? நீங்கள் சொய்யாதவற்றைச் சொல்வது அல்லாஹ்விடம் மிகவும் வெறுப்புக்குரிய செயலாகும். இறைவழியில் ஈயம் பூசப்பட்ட சுவரைப் போன்று உறுதியாக (ஒன்றுபட்டு) நின்று போழிடுபவர்களையே அல்லாஹ் விரும்புகிறான். (திருக்குர்ஆன் 61:2-4)

ஹதீஸ் 2808. பராஉ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் இரும்பு முகமூடி அணிந்த ஒருவர் வந்து,இறைத்தூதர் அவர்களே! நான் முதலில் (இறைவழியில்) போர் புரிந்துவிட்டு இஸ்லாத்தை ஏற்கட்டுமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,(முதலில்) நீ இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு, பிறகு போரிடு' என்று கூறினார்கள். எனவே, அந்த மனிதர் முதலில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு (இறை வழியில்) போரிட்டார் (அதில்) கொல்லப்பட்டார். நபி(ஸல்) அவர்கள் (அவரைப் பற்றி),இவர் சிறிதளவே செயல்பட்டு அதிக நற்பலனைப் பெற்றார்' என்று கூறினார்கள்.

## எங்கிருந்தோ வந்த அம்பு பாய்ந்து ஒருவர் கொல்லப்படுதல்.

ஹதீஸ் 2809. அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹாரிஸா இப்னு சுராகா(ரலி) அவர்களின் தாயாரான உம்மு ருபைய்யிஉ பின்த்து பராஉ(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! ஹாரிஸாவைப் பற்றி தாங்கள் எனக்குச்

செய்தியறிவிக்க மாட்டீர்களா? அவர் பத்ருப் போரன்று கொல்லப்பட்டிருந்தார் அவரின் மீது எங்கிருந்தோ வந்த அம்பு ஒன்று பாய்ந்து விட்டிருந்தது. அவர் சொர்க்கத்தில் இருந்தால் நான் பொறுமையைக் கைக்கொள்வோன் அவர் வேறெந்த (துன்ப) நிலையிலாவது இருந்தால் அவருக்காக நான் கடுமையாக அழுவேன்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்ஹாரிஸாவின் தாயே! சொர்க்கத்தில் பல (படித்தரங்கள் கொண்ட) தோட்டங்கள் உள்ளன. உன் மகன் (அவற்றில்) மிக உயர்ந்த ஃபிர்தவ்ஸ் என்னும் சொர்க்கத் (தோட்டத்)தை (தன் உயிர்த் தியாகத்திற்கான பிரதிபலனாகப்) பெற்றார்' என்று பதிலளித்தார்கள்.

## அல்லாஹ்வின் வாக்கு மேலோங்கியிருக்க வேண்டும் என்பதற்காகப் போரிட்டவர்.

ஹதீஸ் 2810. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,ஒருவர் போரில் கிடைக்கும் செல்வங்களுக்காகப் போரிடுகிறார் மற்றொரு மனிதர் புகழுக்காகப் போரிடுகிறார் இன்னொரு மனிதர் தன் வீரத்தைப் பிறர் பார்க்கட்டும் என்பதற்காகப் போரிடுகிறார். (இவர்களில்) இறைவழியில் போரிடுபவர் எவர்? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,(இவர்களில் எவருமே இறைவழியில் போரிடுபவராக இல்லை.) அல்லாஹ்வின் (ஏகத்துவ) வாக்கு மேலோங்க வேண்டும் என்பதற்காகப் போரிடுகிறவரே இறைவழியில் போரிடுபவராவார்' என்று பதிலளித்தார்கள்.

## இறைவழியில் புழுதியடைந்த பாதங்கள்

அல்லாஹ் கூறினான்:

(போருக்குச் செல்லாமல்) அல்லாஹ்வின் தூதரைவிட்டுப் பின்தங்கி விடுவதும் அவரைப் பற்றி அக்கறை காட்டாமல் தங்களைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருப்பதும் மதீனாவாசிகளுக்கும் அவர்களைச் சுற்றியுள்ள கிராமவாசிகளுக்கும் அழகல்ல. ஏனெனில், இறைவழியில் பசி, தாகம் மற்றும் களைப்பு இவற்றில் எந்தத் துன்பம் அவர்களைத் தீண்டினாலும், நிராகரிப்பவர்களுக்குக் கோபமூட்டும் பாதையில் எந்த அடியை அவர்கள் எடுத்து வைத்தாலும், எந்தப் பகைவனுக்கெதிராகவும் அவர்கள் ஒரு வெற்றியைப் பெற்றாலும் அவர்களுக்கு ஒரு (நற்செயல் புரிந்த) நன்மை எழுதப்படாமல் இருப்பதில்லை. நிச்சயமாக, அல்லாஹ் நற்செயல் புரிவோரின் பிரதிபலனை வீணாக்குவதில்லை. (திருக்குர்ஆன் 09:120)

ஹதீஸ் 2811. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடியானின் பாதங்கள் இரண்டிலும் இறைவழியில் புழுதி படிந்திருக்க, அதை நரக நெருப்புத் தீண்டுவதில்லை.

என அபூ அப்ஸ் அப்துர் ரஹ்மான் இப்னு ஜப்ர்(ரலி) அறிவித்தார்.

## இறைவழியில் (போராடும் போது) தலையில் படிந்த புழுதியைத் துடைப்பது.

ஹதீஸ் 2812. இக்ரிமா(ரஹ்) அறிவித்தார்.

இப்னு அப்பாஸ்(ரலி) என்னிடமும் அவரின் மகன் அலீயிடமும்,அபூ ஸயீத்(ரலி) அவர்களிடம் சென்று அவரின் ஹதீஸைச் செவிமடுங்கள்' என்று கூறினார்கள். எனவே, அபூ ஸயீத்(ரலி) அவர்களும் அவர்களின் (பால்குடிச்) சகோதரரும் தங்கள் தோட்டம் ஒன்றுக்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தபோது நாங்களிருவரும் சென்றோம். அபூ ஸயீத்(ரலி) எங்களைப் பார்த்தவுடன் முழங்கால்களைக் கைகளால் கட்டிப்பிடித்தபடி அமர்ந்தார்கள். பிறகு கூறலானார்கள் நாங்கள் (மஸ்ஜிதுந் நபவி) பள்ளிவாசலின் செங்கற்களை ஒவ்வொன்றாக (சுமந்து) கொண்டு

சென்றோம். அம்மார் இரண்டிரண்டு செங்கற்களாக (சுமந்து) கொண்டு சென்றார். அப்போது அவரை நபி(ஸல்) அவர்கள் கடந்து சென்றார்கள். அவரின் தலையிலிருந்து புழுதியைத் துடைத்துவிட்டு,பாவம் அம்மார்! அம்மாரை ஒரு கலகக் கூட்டத்தினர் கொன்று விடுவார்கள். அம்மார், அவர்களை அல்லாஹ்வின் பக்கம் அழைத்துக் கொண்டிருக்க, அந்தக் கூட்டத்தினர் அவரை நரக நெருப்பின் பக்கம் அழைத்துக் கொண்டிருப்பார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## போர் புரிந்த பின்பு குளிப்பதும் (வானவர் ஜிப்ரீல்) புழுதி படிந்தவராக வருவதும்.

ஹதீஸ் 2813. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹிஜ்ரீ 4, அல்லது 5-ம் ஆண்டில் நடந்த) அகழ்ப் போரின்போது (போர் முடிந்து) திரும்பி வந்து ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டுக் குளித்தார்கள். அப்போது ஜிப்ரீல்(அலை) தம் தலையைப் புழுதி மூடியிருக்க வந்தார்கள். நபி(ஸல்) அவர்களை நோக்கி,நீங்கள் ஆயுதங்களைக் கீழே வைத்து விட்டீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அதைக் கீழே வைக்கவில்லை' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால் எங்கே (போர் புரியப்) போகிறீர்கள்? என்று கேட்க, ஜிப்ரீல்(அலை) அவர்கள்,இதோ இங்கே! என்று பனு குறைழா (என்னும் யூதக்) குலத்தினரை (அவர்கள் வசிக்குமிடம்) நோக்கி சைகை காட்டினார்கள். எனவே, அல்லாஹ்வின் தூதரும் அவர்களை நோக்கிப் புறப்பட்டார்கள்.

## "இறைவழியில் கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் என்று நினைத்துவிடாதீர்கள்' என்று தொடங்கும் இறைவசன(ம் குறிப்பிடும் தியாகக் கூட்ட)த்தின் சிறப்பு.

அந்த இறைவசனம் (முழுவதும்) வருமாறு:

இறைவழியில் கொல்லப்பட்டவர்களை இறந்தவர்கள் என்று கருதாதீர்கள். எனினும், அவர்கள் உயிரானவர்களே. தங்கள் இறைவனிடம் அவர்கள் உணவு பெற்று வருகிறார்கள். தங்களுக்கு அல்லாஹ், தன் அருளிலிருந்து வழங்கியதை வைத்து மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். தங்களுக்குப் பின்னால் (உலகில் வாழ்ந்து கொண்டு) இருக்கின்ற, தம்முடன் இன்னும் வந்து சேராமலிருப்பவர்களைக் குறித்து... அவர்களுக்கு எந்த அச்சமுமில்லை அவர்கள் கவலைப்படவும் போவதில்லை என்று .. மன நிம்மதி கொள்கிறார்கள். அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் கொடையினாலும், அருளினாலும் மனமம்ழ்ச்சியுடன் இருக்கிறார்கள். அல்லாஹ் இறைநம்பிக்கையாளர்களின் நன்மையை வீணாக்கி விடுவதில்லை (என்றும் நிம்மதி கொள்கிறார்கள்.) (திருக்குர்ஆன் 03:169-171)

ஹதீஸ் 2814. அனஸ்(ரலி) அறிவித்தார்.

'பிஃரு மஊனா (என்னுமிடத்தில் பிரசாரத்திற்காகச் சென்ற தம்) தோழர்களைக் கொன்றவர்களுக்குத் தீங்கு நேர அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்த (பனு சுலைம் கோத்திரத்தைச் சேர்ந்த) ரிஅல், தக்வான் மற்றும் உஸய்யா ஆகிய குலத்தினருக்குக் கேடு நேர - இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முப்பது காலை (தொழுகை) நேரங்களில் பிரார்த்தித்தார்கள். பிஃரு மஊனாவில் கொல்லப்பட்டவர்களின் விஷயத்தில் குர்ஆன் வசனம் ஒன்று அருளப்பட்டது. அதை நாங்கள் ஓதி வந்தோம் பின்னாளில் அது (இறைவனால்) நீக்கப்பட்டுவிட்டது.நாங்கள் எங்கள் இறைவனிடம் சென்று நேர்ந்து விட்டோம். அவன்

எங்களைக் குறித்து திருப்தியடைந்துவிட்டான் நாங்கள் அவனைக் குறித்து திருப்தியடைந்தோம் என்று எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்' என்பதே அந்த வசனம்.

ஹதீஸ் 2815. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

உஹுதுப்போர் அன்று காலையில் சிலர் மது அருந்தினார்கள். பிறகு உயிர்த் தியாகிகளாகக் கொல்லப்பட்டார்கள். அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அவர்களிடம், அந்த நாளின் இறுதியில் (அவர்கள் உயிர்த் தியாகிகளாகக் கொல்லப்பட்டார்கள்) என்றா (அறிவிக்கப்பட்டுள்ளது)? என்று கேட்கப்பட்டது. அவர், ('அந்த நாளின் இறுதியில் என்ற) இந்த வாசகம் அறிவிப்பில் இல்லை' என்று பதிலளித்தார்.

## உயிர்த் தியாகிக்கு வானவர்கள் நிழல் தருவது.

ஹதீஸ் 2816. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

(உஹுதுப் போரின் போது) என் தந்தை, உடல் சிதைக்கப்பட்ட நிலையில் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டு அவர்கள் முன்னே வைக்கப்பட்டார். நான் என் தந்தையின் முகத்திலிருந்து (துணியை) விலக்கச் சென்றேன். என் குலத்தார் என்னைத் தடுத்தார்கள். அப்போது ஒப்பாரி வைத்து அழும் பெண் ஒருத்தியின் குரலை நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், அம்ர் (ரலி) அவர்களின் மகள் என்றோ - அவர்களின் சகோதரி என்றோ கூறப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஏன் அழுகிறாய்? நீ அழுதாலும் அழாவிட்டாலும் வானவர்கள் தங்கள் இறக்கைகளை விரித்து அப்துல்லாஹ்வுக்கு நிழல் கொடுத்துக் கொண்டேயிருப்பார்கள்' என்று கூறினார்கள்.

(புகாரீயாகி) நான் அறிவிப்பாளர் ஸதகா இப்னு ஃபள்ல் (ரஹ்) அவர்களிடம், அவர் உயர்த்தப்படும் வரை (நிழல் கொடுத்துக் கொண்டேயிருப்பார்கள்) என்று அறிவிப்பில் உள்ளதா? என்று கேட்க, அவர்கள், ஜாபிர் (ரலி) அ(ந்த வாசகத்)தைக் கூறியிருக்கலாம் (என்று எனக்கு இதை அறிவித்த சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) உறுதியின்றிக் கூறினார்கள்)' என்று பதிலளித்தார்கள்.

## அறப்போர் புரிந்து உயிர்த்தியாகம் செய்தவர் உலகத்திற்குத் திரும்பிச் செல்ல ஆசைப்படுவது.

ஹதீஸ் 2817. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் நுழையும் எவரும் உலம்லுள்ள பொருட்களெல்லாம் அவருக்குக் கிடைப்பதாக இருந்தாலும் உலகிற்குத் திரும்பி வர விரும்ப மாட்டார் உயிர்த் தியாகியைத் தவிர. அவர் தனக்கு (இறைவனிடத்தில்) கிடைக்கும் கண்ணியத்தைக் கண்டுவிட்ட காரணத்தால் உலகத்திற்குத் திரும்பி வந்து (இறைவழியில்) பத்துமுறை கொல்லப்பட வேண்டும் என்று ஆசைப்படுவார்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

## மின்னும் வாட்களுக்குக் கீழ் சொர்க்கம் உள்ளது.

முகீரா இப்னு ஷுஅபா (ரலி) கூறினார்.

நம்முடைய நபி (ஸல்) அவர்கள், நம் இறைவனின் செய்தியைக் குறித்து அறிவிக்கும்போது, நம்மில், இறைவழியில் கொல்லப்படுகிறவர் சொர்க்கத்திற்குச் செல்வார்' என்று குறிப்பிட்டார்கள்.

உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம்,(இறைவழியில்) கொல்லப்பட்ட நம்மவர்கள் சொர்க்கத்திற்கும், (இஸ்லாத்திற்கெதிராகப் போரிட்டுக்) கொல்லப்பட்ட (இறைமறுப்பாளர்களான) அவர்கள் நரகத்திற்கும் தானே செல்வார்கள்? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஆம்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2818. உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களின் அடிமையான சாலிம்(ரஹ்) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்..பா(ரலி) உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களுக்கு,சொர்க்கம் வாட்களின் நிழல்களில் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என (கடிதம்) எழுதினார்கள். மூஸா இப்னு உக்பா(ரலி) அவர்களிடமிருந்து இப்னு அபிஸ் ஸினாத்(ரஹ்) வாயிலாக உவைஸீ(ரஹ்) அவர்களும் இதே போன்று அறிவித்தார்கள்.

## இறைவழியில் போரிடுவதற்காக குழந்தை வேண்டுமென்று கோருதல்.

ஹதீஸ் 2819. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தாவூத்(அலை) அவர்களின் புதல்வர் சுலைமான்(அலை) அவர்கள் (ஒரு முறை),நான் இன்றிரவு (என்னுடைய) நூறு அல்லது தொண்ணூற்றொன்பது - மனைவிகளிடமும் சென்று (உடலுறவு கொண்டு) வருவேன். அவர்களில் ஒவ்வொருத்தியும் இறைவழியில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பாள்' என்று கூறினார்கள். அவர்களின் தோழா ஒருவர், (அவர்கள் மறந்திருக்கலாம் என்று கருதி)இன்ஷா அல்லாஹ் - அல்லாஹ் நாடினால்.. என்று சொல்லுங்கள்' என்று கூறினார். சுலைமான்(அலை) அவர்கள்இன்ஷா அல்லாஹ் என்று (தம் வாயால்) கூறாமலிருந்துவிட்டார்கள். எனவே, (அவர்களின் மனைவிமார்களில் ஒரே ஒருவரைத் தவிர வேறெவரும் கர்ப்படையவில்லை. அவரும் ஒரு புஜமுடைய பாதி மனிதரைத் தான் பெற்றெடுத்தார். முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது ஆணையாக! அவர்,இன்ஷா அல்லாஹ் - அல்லாஹ் நாடினால் என்று (தம் வாயாலும்) கூறியிருந்தால் (அந்த நூறு மனைவியரும் கர்ப்பமுற்றுப் பிள்ளைகள் பெற, அப்பிள்ளைகள்) அனைவருமே இறைவழியில் அறப்போர் புரிகிற வீரர்களாய் ஆகியிருப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## போரில் வீரமும் கோழைத் தனமும்.

ஹதீஸ் 2820. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மக்களிலேயே அழகானவர்களாகவும் மக்களிலேயே வீரமிக்கவர்களாகவும் மக்களிலேயே தாராள மனமுடையவர்களாகவும் இருந்தார்கள்.(ஒரு முறை, மதீனாவின் மீது பகைவர்கள் படையெடுத்து வருகிறார்கள் என்று வதந்தி பரவவே) மதீனாவாசிகள் பீதிக்குள்ளானார்கள். அப்போது அவர்களை நபி(ஸல்) அவர்கள் முந்திச் சென்று, குதிரையில் ஏறி (மக்களின் அச்சத்தைப் போக்கும் வகையில் எதிரியை எதிர்கொள்ளப்) புறப்பட்டார்கள் மேலும்,இந்தக் குதிரையைத் தங்கு தடையின்றி வேகமாக ஓடக் கூடியதாகக் கண்டேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2821. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,ஹுனைன் போரிலிருந்து திரும்பி வந்தபோது நான் அவர்களுடன் சென்று கொண்டிருந்தேன். மக்களும் உடன் இருந்தனர். அப்போது (கிராம) மக்கள் நபியவர்களைச் சூழ்ந்து (தர்மம்) கேட்கலானார்கள்சமுரா என்னும் (கருவேல) முள் மரம் வரை

நபி(ஸல்) அவர்களை நெருக்கித் தள்ளிவிட்டார்கள். நபியவர்களின் சால்வை முள்மரத்தில் சிக்கிக் கொண்டது. எனவே, நபி(ஸல்) அவர்கள் சற்ற நின்று,என் சால்வையை என்னிடம் கொடுங்கள். என்னிடம் இந்த முள்மரங்களின் எண்ணிக்கையில் ஒட்டகங்கள் இருந்திருந்தாலும் கூட அவற்றை உங்களிடையே பங்கிட்டு விட்டிருப்பேன். பிறகு என்னை நீங்கள் கருமியாகவும் காண மாட்டீர்கள் பொய்யனாகவும் காண மாட்டீர்கள் கோழையாகவும் காணமாட்டீர்கள்' என்று கூறினார்கள்.

## கோழைத்தனத்திலிருந்து பாதுகாப்புத் தேடுதல்.

ஹதீஸ் 2822. அம்ர் இப்னு மைமூன் அல் அவ்தீ(ரஹ்) கூறினார்.

ஆசிரியர் சிறுவர்களுக்குப் பகுதி போதிப்பதைப் போன்று, ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) தம் மக்களுக்குப் பின்வரும் (பிரார்த்தனை) வாசகங்களைக் கற்றுக் கொடுத்தார்கள் அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் ஜுப்னி, வஅஊது பிக்க அன் உரத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க மின் ஃபித்னத்தித் துன்யா, வஅஊது பிக்க மின் அதாபில் கப்ரி -இறைவா! நான் கோழைத்தனத்திலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன் மூப்பின் மோசமான நிலையை அடைவதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன் உலகின் சோதனைகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன் புதைகுழியின் வேதனையிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று கூறிவிட்டு,இந்த விஷயங்களிலிருந்தெல்லாம் நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்குப் பின்பு பாதுகாப்புக் கோரி வந்தார்கள்' என்றும் அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல் மலிக் இப்னு உமைர்(ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸை நான் முஸ்அப்(ரஹ்) அவர்களிடம் அறிவித்தேன். இது உண்மையானது தான் என அவர்கள் உறுதிப்படுத்தினார்கள்.

ஹதீஸ் 2823. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள்,இறைவா! நான் இயலாமையிலிருந்தும், சோம்பலிலிருந்தும், கோழைத்தனத்திலிருந்தும், மூப்பிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், வாழ்வின் சோதனையிலிருந்தும் இறப்பின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், புதைகுழியின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று பிரார்த்திப்பது வழக்கம்.

## அறப்போரில் தான் பட்ட துன்பங்களை ஒருவர் எடுத்துரைக்கலாம்.

இதை ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடமிருந்து அபூ உஸ்மான் நஹ்தீ(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 2824. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

நான் தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி), மிக்தாத் இப்னு அஸ்வத்(ரலி) மற்றும் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) ஆகியோருடன் தோழமை கொண்டிருந்தேன். அவர்களில் ஒருவரும் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து (நபிமொழி எதையும்) அறிவித்ததை நான் கேட்டதில்லை. ஆனால், தல்ஹா(ரலி) உஹுதுப் போரின் நாள் குறித்து அறிவித்ததை கேட்டிருக்கிறேன்.

## போருக்குச் செல்வது கடமையாகும் என்பதும், அறப்போரில் கடமையான அளவு எது என்பதும், அதற்காக நாட்டம் கொள்வதும்.

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் கனமானவர்களாயிருந்தாலும் சரி இலோசானவர்களாயிருந்தாலும் சரி 21 (அறப்போருக்குப்) புறப்படுங்கள் உங்கள் செல்வங்களாலும் உயிர்களாலும் இறைவழியில் போராடுங்கள். நீங்கள் அறிந்திருப்பீர்களாயின் இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும். உடனடி லாபம் (போர்ச் செல்வம்) கிடைப்பதாக இருந்து, இலேசான பயணமாகவும் இருந்திருப்பின் (நபியே!) உங்களை அவர்கள் பின்பற்றி வந்திருப்பார்கள். ஆனால், அவர்கள் பயணம் தூரமாம் (சிரமமாம்)விட்டது. (திருக்குர்ஆன் 09:41, 42)

மேலும், அல்லாஹ் கூறினான்:

“இறைநம்பிக்கையாளர்களே! உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது?இறைவழியில் புறப்படுங்கள்‘ என்று உங்களிடம் கூறப்பட்டால் பூமியிலேயே ஒட்டிக் கொண்டு கிடக்கிறீர்களே! மறுமையை விட இவ்வுலக வாழ்வில் திருப்தியடைந்தீர்களா? (அப்படியாயின்) உலக வாழ்வின் இன்பங்கள் யாவும் மறுமை வாழ்க்கைக்கு முன்பாக அற்பமானவையே (என்பதை அறிநது கொள்ளுங்கள்). (திருக்குர்ஆன் 09:38)

இப்னு அப்பாஸ்(ரலி),பல குழுவினர்களாகப் புறப்படுங்கள்‘ (திருக்குர்ஆன் 04:71) என்பதற்கு,(தனித் தனியாகிப் பிரிந்து செல்லும்) பல படையணிகளாகப் புறப்படுங்கள்‘ என்று பொருள்‘ எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 2825. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி கொள்ளப்பட்ட நாளில்,(மக்காவின்) வெற்றிக்குப் பின்பு (மக்காவிலிருந்து) ஹிஜ்ரத் என்பது கிடையாது ஆனால், அறப்போரிடுவதும் (அதற்காகவும் பிற நற்செயல்களுக்காகவும்) நாட்டம் கொள்வதும் உண்டு. நீங்கள் அறப்போருக்காகப் புறப்படும்படி (உங்கள் தலைவரின் தரப்பிலிருந்து) கோரப்பட்டால் புறப்பட்டுச் செல்லுங்கள்‘ என்று கூறினார்கள்.

## இறைமறுப்பாளர் ஒரு முஸ்லிமைக் கொன்ற பின் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு, மார்க்கத்தில் உறுதியுடன் இருந்து, பிறகு கொல்லப்பட்டு விடுதல்.

ஹதீஸ் 2826. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் இரண்டு மனிதர்களைப் பார்த்துச் சிரிக்கிறான். அவ்விருவரில் ஒருவர் மற்றொருவரைக் கொன்றுவிடுகிறார். இருவருமே சொர்க்கத்தில் நுழைகிறார்கள். இவர் இறைவழியில் போரிட்டுக் கொல்லப்படுகிறார். பிறகு (அவரைக்) கொன்றவர் பாவமன்னிப்புக் கோர, அதை ஏற்று அவரை அல்லாஹ் மன்னித்து விடுகிறான். பிறகு அவரும் அறப்போரில் (கொல்லப்பட்டு) உயிர்த் தியாகியாகி விடுகிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2827. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

கைபர் வெற்றிக்குப் பிறகு அங்கிருந்த இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் சென்றேன்.இறைத்தூதர் அவர்களே! எனக்கு (போரில் கிடைத்த செல்வத்தில்) ஒரு பங்கு கொடுங்கள்‘ என்று கேட்டேன். அப்போது ஸயீத் இப்னு ஆஸ் உடைய மகன்களில் ஒருவர் (அபான் என்பவர்),இவருக்குப் பங்கு கொடுக்காதீர்கள், இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார். உடனே நான்,இவர் (நுஃமான்) இப்னு கவ்கல் அவர்களை (உஹுதுப் போரில்) கொன்றவர்‘ என்று கூறினேன். அதற்கு ஸயீத் இப்னு ஆஸ் அவர்களின் மகன் (என்னைப் பற்றி),என்ன ஆச்சரியம்! (தன்னுடையதவ்ஸ் குலத்தார் வசிக்கின்ற)ளஃன் என்னும் மலை உச்சியிலிருந்து வந்திருக்கும் இந்தக் குழிமுயல் ஒரு முஸ்லிமைக் கொன்றுவிட்டதற்காக

என்னைக் குறை சொல்கிறதே! அவரை அல்லாஹ் என் கைகளால் கண்ணியப்படுத்தியுள்ளான். அவர் கைகளால் என்னை அவன் கேவலப்படுத்தி விடவில்லை' என்று கூறினார். 23

அறிவிப்பாளர்களில் ஒருவர்,நபி(ஸல்) அவர்கள் அபானுக்குப் பங்கு கொடுத்தார்களா, பங்கு கொடுக்கவில்லையா என்று எனக்குத் தெரியாது' என்று கூறுகிறார்.

## நோன்பை விட புனிதப் போருக்கு முதலிடம் கொடுப்பது.

ஹதீஸ் 2828. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

அபூ தல்ஹா(ரலி), நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (புனிதப்) போர்களில் பங்கெடுத்த காரணத்தால் நோன்பு நோற்காதவராக இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் இறந்த பின் (இஸ்லாம் பலம் பெற்றுவிட்ட நிலையில்), நான் அபூ தல்ஹா(ரலி) அவர்களை ஈதுல் ஃபித்ருடைய நாளிலும் மற்றும் ஈதுல் அள்ஹாவுடைய நாளிலும் தவிர (வேறெந்த நாளிலும்) நோன்பு நோற்காதவராகக் கண்டதில்லை.

## இறைவழியில் கொல்லப்படுவது மட்டுமின்றி ஏழு வகை உயிர்த்தியாகங்கள் உண்டு.

ஹதீஸ் 2829. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உயிர்த் தியாகிகள் ஐந்து பேர்கள் ஆவர்:

1. பிளேக் நோயால் இறந்தவர் 2. வயிற்று(ப் போக்கு போன்ற) வியாதிகளால் இறந்தவர் 3. தண்ணீரில் மூழ்கி இறந்தவர். 4. வீடு, கட்டிடம் ஆகியவை இடிந்து விழும் போது) இடிபாட்டில் சிக்கி இறந்தவர் 5. இறைவழியில் (அறப்போரில் ஈடுபட்டு) இறந்தவர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2830. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிளேக் (போன்ற கொள்ளை) நோயால் இறக்கிற ஒவ்வொரு முஸ்லிமுக்கும் உயிர்த்தியாகியின் அந்தஸ்து கிடைக்கும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## (திருக்குர்ஆன் 04:95,96)

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கை கொண்டோரில் தகுந்த காரணமின்றி (அறப்போரில் கலந்து கொள்ளாமல்) தங்கி விடுவோரும் இறைவழியில் தம் உடைமைகளாலும், தம் உயிர்களாலும் அறப்போர் புரிபவர்களும் சம அந்தஸ்து கொண்டவர்களாக ஆக முடியாது. அறப்போரில் கலந்து கொள்ளாமல் தங்கிவிட்டவர்களை விட அதில் பங்கெடுத்து தம் உடைமைகளாலும் உயிர்களாலும் அறப்போர் புரிந்தவர்களை கண்ணியமான ஓர் அந்தஸ்தைக் கொண்டு அல்லாஹ் மேன்மைப்படுத்தியுள்ளான். (இவ்விரு பிரிவினரில்) ஒவ்வொருவருக்கும் நன்மையையே அல்லாஹ் வாக்களித்திருக்கிறான். ஆயினும், அறப்போர்ரில் கலந்து கொள்ளாமல் தங்கிவிட்டவர்களை விட அறப்போரில் பங்கெடுத்தவர்களுக்கு மகத்தான நற்பலனை அதிகமாகத் தருகிறான். அவர்களுக்கு அல்லாஹ்விடம் (சொர்க்கத்தின்) பல படித்தரங்கள் உண்டு மன்னிப்பும், கருணையும் உண்டு. மேலும், அல்லாஹ் அதிகம் மன்னிப்பவனாகவும், இரக்கமுடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:95,96)

ஹதீஸ் 2831. பராஉ(ரலி) அறிவித்தார்.

“இறை நம்பிக்கை கொண்டோரில் (அறப்போரில் கலந்து கொள்ளாமல்) தங்கி விடுவோரும், இறைவழியில் தம் உடைமைகளாலும் உயிர்களாலும் அறப்போர் புரிபவர்களும் சம அந்தஸ்து கொண்டவர்களாக முடியாது..!என்னும் வசனம் அருளப்பட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களை அழைத்தார்கள். அவர் அகலமான எலும்பு ஒன்றைக் கொண்டு வந்து, அந்த வசனத்தை எழுதினார். (அருகில் இருந்த கண்பார்வையற்ற) அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம்(ரலி) தம் கண்பார்வையில்லாத நிலை குறித்து முறையிட்டார்கள். அப்போது,.... தகுந்த காரணமின்றி .!என்ற (வாசகம் சேர்ந்த) முழு வசனம் (திருக்குர்ஆன் 04:95) அருளப்பட்டது.

ஹதீஸ் 2832. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

நான் மர்வான் இப்னு ஹகமைப் பள்ளிவாசலில் பார்த்தேன். நான் அவரை நோக்கிச் சென்று அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டேன். அப்போது அவர் எங்களுக்கு அறிவித்தார். ஸைத் இப்னு ஸாபித்(ரலி) என்னிடம் தெரிவித்தார்கள்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு,இறைநம்பிக்கை கொண்டவர்களில் (அறப்போர் புரியச் செல்லாமல் தங்கள் இருப்பிடத்திலேயே) தங்கிவிட்டவர்களும் இறைவழியில் போரிடச் சென்றவர்களும் சமஅந்தஸ்துடையவர்களாக மாட்டார்கள்‘ என்னும் (திருக்குர்ஆன் 04:95) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள். அதை நபி(ஸல்) அவர்கள் எனக்கு ஓதிக் காட்டிக் கொண்டிருந்தபோது அவர்களிடம் அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம்(ரலி) வந்து,இறைத்தூதர் அவர்களே! என்னால் அறப்போரில் கலந்து கொள்ள முடியுமென்றால் நான் அறப்போரில் பங்கெடுத்திருப்பேன்‘ என்று கூறினார்கள். அவர் கண்பார்வையற்ற மனிதராக இருந்தார். எனவே, அப்போது அல்லாஹ் தன் தூதருக்கு (வேத வெளிப்பாட்டை) அருளினான். நபி(ஸல்) அவர்களின் தொடை அப்போது என் தொடையின் மீதிருந்தது. (வேத வெளிப்பாடு வரத் தொடங்கிய காரணத்தால்) அது என் மீது (கனத்துப் போய்) கடுமையாக (அழுத்த) ஆரம்பித்தது. எந்த அளவிற்கென்றால் நான் என் தொடையின் மீதிருந்தது. (வேத வெளிப்பாடு வரத் தொடங்கிய காரணத்தால்) அது என் மீது (கனத்துப் போய்) கடுமையாக (அழுத்த) ஆரம்பித்தது. எந்த அளவிற்கென்றால் நான் என் தொடை நசுங்கி விடும் என்று அஞ்சினேன். பிறகு அவர்களுக்கு (இந்நிலை நீக்கப்பட்டு) லேசாக்கப்பட்டது. அப்போது அல்லாஹ்,தகுந்த காரணமின்றி (தங்கிவிட்டவர்கள்)‘ என்னும் வாசகத்தை (மேற்கண்ட வசனத்துடன் சேர்த்து) அருளியிருந்தான்.

## போரில் பொறுமையைக் கடைபிடித்தல்

ஹதீஸ் 2833. சாலிம் அபுந் நள்ர்(ரஹ்) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) (உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களுக்குக்) கடிதம் எழுதினார்கள். நான் அதைப் படித்தேன். அதில் அவர்,பகைவர்களை நீங்கள் சந்தித்தால் பொறுமையுடன் (நிலை குலையாமல்) இருங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என எழுதியிருந்தார்கள்.

## போர் புரியும்படி ஆர்வமூட்டுதல்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே அறப்) போர் புரியும்படி இறை நம்பிக்கையாளர்களுக்கு ஆர்வமூட்டுவீராக! (திருக்குர்ஆன் 08:65)

ஹதீஸ் 2834. அனஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அகழ்ப்போரின் போது) அகழ் (வெட்டும் பணி நடக்கும் இடத்தை) நோக்கிப் புறப்பட்டார்கள். 25 அப்போது முஹாஜிர்களும் அன்சாரிகளும் (கடும்) குளிரான காலை நேரத்தில் (அகழ்) தோண்டிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பணியை அவர்களுக்காகச் செய்திட அவர்களிடம் அடிமை (ஊழியர்)கள் இல்லை. அவர்களுக்கு ஏற்பட்டிருந்த களைப்பையும் பசியையும் கண்டபோது நபி(ஸல்) அவர்கள்,இறைவா! (நிலையான) வாழ்க்கை என்பது மறுமை வாழ்க்கை தான். எனவே, அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் நீ மன்னிப்பளி‘ என்று (பாடிய வண்ணம்) கூறினார்கள். இதைக் கேட்ட நபித் தோழர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு பதிலளித்தவண்ணம்,நாங்கள் வாழும் காலமெல்லாம் இறைவழியில் அறப்போர் புரிந்து கொண்டிருப்போம்‘ என்று முஹம்மத்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி தந்துள்ளோம்‘ என்று (பாடியபடி) கூறினார்கள்.

## அகழ் தோண்டுதல்.

ஹதீஸ் 2835. அனஸ்(ரலி) அறிவித்தார்.

முஹாஜிர்களும் அன்சாரிகளும் மதீனாவைச் சுற்றிலும் அகழ் தோண்டி மண்ணைத் தம் முதுகுகளின் மீது சுமந்து, (வேறிடத்திற்குக்) கொண்டு செல்லத் தொடங்கினார்கள். அப்போது அவர்கள்,நாங்கள் உயிர் வாழும் காலமெல்லாம் அறப்போர் புரிந்து கொண்டிருப்போம் என்று முஹம்மத்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்திருக்கிறோம்‘ என்று பாடலானார்கள்.

அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள்,இறைவா! மறுமையின் நன்மையைத் தவிர வேறு நன்மை எதுவும் இல்லை. அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் உன் அருள் வளத்தைக் கொடு‘ என்று (பாடலிலேயே) பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2836. பராஉ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (அகழ்ப் போருக்காக அகழ் தோண்டிய போது) மண்ணைச் சுமந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்போது,(இறைவா!) நீ இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம்‘ என்று (பாடிய படி) கூறிக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 2837. பராஉ(ரலி) அறிவித்தார்.

அகழ்ப் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மண்ணைச் சுமந்து கொண்டு செல்வதை பார்த்தேன். மண் அவர்களின் வயிற்றின் வெண்மையை மறைத்(துப் படிந்)திருந்தது. அப்போது அவர்கள் இவ்வாறு (பாடிய வண்ணம்) கூறிக்கொண்டிருந்தார்கள்.

(இறைவா!) நீ இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்க மாட்டோம்‘ தருமம் செய்திருக்கவும் மாட்டோம் தொழுதிருக்கவும் மாட்டோம். நாங்கள் பகைவர்களைச் சந்திக்கும்போது எங்களின் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! இவர்கள் (குறைஷிகள்) எங்களின் மீது அக்கிரமம் புரிந்துவிட்டார்கள். இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தர மாட்டோம்.

## ஒருவருக்குத் தகுந்த காரணம் எதுவும் இருந்து, அதனால் அவர் அறப் போரில் பங்குபெற முடியாமல் போவது.

ஹதீஸ் 2838. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் தபூக் போரிலிருந்து நபி(ஸல்) அவர்களுடன் திரும்பி வந்தோம்...

ஹதீஸ் 2839. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு புனிதப் போரில் (தபூக் போரில்) ஈடுபட்டிருந்தார்கள். அப்போது அவர்கள்,மதீனாவில் (நம்முடன் வராமல் தங்கிவிட்ட) சிலர் இருக்கின்றனர். நாம் எந்த மலைக் கணவாயையும் பள்ளத்தாக்கையும், அவர்களும் நம்முடன் அதில் (வந்து கொண்டு) இருக்கும் நிலையிலேயே தவிர கடந்து காரணங்களே (புனிதப் போரில் கலந்து கொள்ளவிடாமல்) அவர்களைத் தடுத்தவிட்டன' என்று கூறினார்கள்.

“இந்த நபிமொழியின் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெற்றுள்ள அறிவிப்பாளர் ஹுமைத்(ரஹ்) அவர்களிடம் மூஸா இப்னு அனஸ்(ரஹ்) வழியாக அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பும் உள்ளது. ஆனால், முந்தியதே மிகவும் ஆதாரப் பூர்வமானது' என்று அபூ அப்தில்லாஹ் (புகாரீயாகிய நான்) கூறுகிறேன்.

## இறைவழியில் நோன்பு நோற்பதின் சிறப்பு.

ஹதீஸ் 2840. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் (அறப் போருக்குச் செல்லும்போது) ஒரு நாள் நோன்பு நோற்றவரின் முகத்தை அல்லாஹ் நரக நெருப்பைவிட்டு எழுபது ஆண்டுகள் (பயணத்) தொலைவிற்கு அப்புறப்படுத்தி விடுவான்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## இறைவழியில் செலவிடுவதின் சிறப்பு.

ஹதீஸ் 2841. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“இறைவழியில் (ஏதேனும் ஒரு பொருளின்) இரண்டு ஜோடிகளைச் செலவிட்டவரை சொர்க்க வாசல்களின் காவலர்கள் ஒவ்வொருவரும்,இன்னாரே! இங்கே வாரும் என்று அழைப்பார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இதைக் கேட்ட அபூ பக்ர்(ரலி)இறைத்தூதர் அவர்களே! இப்படிப்பட்டவருக்குக் கவலையே கிடையாது (எந்த வாசல் வழியாகவும் அவர் சொர்க்கத்தினுள் நுழையலாம்)' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,அவர்களில் நீங்களும் ஒருவர் தாம் என்று நம்புகிறேன்' என்றார்கள்.

ஹதீஸ் 2842. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மிம்பரின் மீது நின்று,எனக்குப் பின், உங்களின் விஷயத்தில் நான் அஞ்சுவதெல்லாம் பூமியின் அருள்வளங்கள் உங்களுக்குத் திறந்துவிடப்பட விருப்பதைத்தான்' என்று கூறிவிட்டு, உலகின் அழகையும் செழிப்பையும் கூறினார்கள். (அவற்றில்) முதலில் ஒன்றைக் கூறி, பிறகு மற்றொன்றை இரண்டாவதாகக் கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து,இறைத்தூதர் அவர்களே! (செல்வம் என்ற) நன்மை, தீமையைக் கொண்டு வருமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் அவருக்கு பதிலளிக்காமல் மௌனமாக இருந்தார்கள். இதைக் கண்ட நாங்கள்,நபி(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) (வேத வெளிப்பாடு) அருளப்படுகிறது' என்று கூறிக் கொண்டோம். மக்கள் அனைவரும் தம் தலைகளில் பறவைகள் அமர்ந்திருப்பது போல் (ஆடாமல் அசையாமல்) மௌனமாக இருந்தனர். பிறகு நபி(ஸல்) அவர்கள் தம் முகத்திலிருந்து (வழிந்த) வியர்வையைத் துடைத்துவிட்டு,சற்று முன்பு கேள்வி கேட்டவர் எங்கே? (செல்வம்) ஒரு நன்மையா? என்று மூன்று முறை கூறினார்கள். பிறகு, (உண்மையிலேயே) நன்மை(யாக இருக்கும் ஒரு பொருள்) நன்மையைத் தவிர வேறெதையும் கொண்டு வராது தான். மேலும், நீர்நிலைகளின் கரைகளில் தாவரங்கள் விளையும் போதெல்லாம் அவற்றைக் கால்நடைகள் மேய (அவை நச்சுத் தன்மையுடைய புற்பூண்டுகளையும் சேர்த்துத் தின்பதாலும் அதிகமாகத் தின்று விடுவதாலும்) அவை அவற்றை

வயிற்று நோயால் கொன்று விடுகின்றன் அல்லது மரணத்தின் விளிம்புக்கே கொண்டு போகின்றன் பசுமையான (நல்லவகைத்) தாவரங்களை (தாங்கும் அளவுக்கு) உண்பவற்றைத் தவிர அவை அவற்றை வயிறு நிரம்ப உண்டு, சூரியனை (வெப்பத்திற்காக) முன்னோக்கி நிற்கின்றன. பிறகு சாணம் போட்டு சிறுநீர் கழித்துவிட்டு (செரித்தவுடன்) மீண்டும் மேய்கின்றன. (இவ்வாறே) இச்செல்வமும் பசுமையானதும் இனிமையானதும் ஆகும். அதை முறைப்படி அடைந்து, அதை அல்லாஹ்வின் பாதையிலும் அனாதைகளுக்காகவும் ஏழை எளியவர்களுக்காகவும் செலவிட்ட முஸ்லிமுக்கு அச்செல்வம் சிறந்த தோழனாகும். அதை முறைப்படி அடையாதவன் உண்டும் வயிறு நிரம்பாதவனைப் போன்றவன் ஆவான். அச்செல்வம் மறுமை நாளில் அவனுக்கெதிராக சாட்சி சொல்லும்' என்று கூறினார்கள். 26

## அறப்போர் வீரருக்குப் பயண வசதி செய்து கொடுப்பவர் மற்றும் அவர் சென்ற பின் அவரின் குடும்பத்தை நல்லவிதமாகக் கவனித்துக் கொள்பவரின் சிறப்பு.

ஹதீஸ் 2843. இறைவழியில் போரிடும் ஒருவருக்குப் பயண வசதி செய்து கொக்கிறவரும் புனிதப்போரில் பங்கு கொண்டவராவார். அறப்போர் வீரர் புறப்பட்டுச் சென்ற பின் அவரின் வீட்டாரின் நலத்தைப் பாதுகாக்கிறவரும் புனிதப் போரில் பங்கு கொண்டவராவார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2844. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களின் வீட்டைத் தவிர தம் மனைவிமார்களின் வீடுகளல்லாமல் வேறெவருடைய வீட்டிற்கும் (அதிகமாகச்) செல்வதில்லை. அவர்களிடம் அது குறித்துக் கேட்கப்பட்டபோது,நான் அவரிடம் இரக்கம் காட்டுகிறேன். அவரின் சகோதரர் (ஹராம் இப்னு மில்ஹான்(ரலி)) என்னோடு (என் பிரசாரப் படையினரோடு) இருந்தபோது (பி..ரு மவூனா என்னுமிடத்தில்) கொல்லப்பட்டார்' என்றார்கள்.

## புனிதப் போரின்போது நறுமணம் பூசிக் கொள்வது.

ஹதீஸ் 2845. மூஸா இப்னு அனஸ்(ரஹ்) யமாமா போரை நினைவு கூர்ந்த வண்ணம் கூறினார்.

(என் தந்தை) அனஸ் இப்னு மாலிக்(ரலி) ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களிடம் வந்தார்கள். ஸாபித் இப்னு கைஸ்(ரலி) தம் தொடைகளைத் திறந்து நறுமணம் பூசிக் கொண்டிருந்தார்கள். அனஸ்(ரலி),என் சிற்றப்பாவே! நீங்கள் (அறப் போருக்கு) ஏன் வரவில்லை? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,இதோ! இப்போது வருகிறேன்' என்று கூறிவிட்டு நறுமணம் பூசத் தொடங்கிவிட்டார்கள். பிறகு வந்து (அறப்போர் வீரர்களுடன்) உட்கார்ந்துவிட்டார்கள். அப்போது மக்கள் தோற்றுப் பின்வாங்கியதாக (என் தந்தை) கூறினார்கள் - (மக்கள் தோற்றுப் பின்வாங்குவதைக் கண்ட) ஸாபித்(ரலி),எனக்கு விலம் வழிவிடுங்கள். நான் எதிரிகளுடன் போரிடுவேன். நாங்கள் அல்லாஹ்வின் தூதருடன் இருந்த பொழுது இப்படிப் பின்வாங்கி (ஓடி)யதில்லை. நீங்கள் உங்கள் எதிரிகளுக்குப் பழக்கப்படுத்தும் இந்த விஷயம் (நீங்கள் பின்வாங்கியோட, அவர்கள் உங்களை விரட்டி வரும் இந்த குணம்) மிக மோசமானது' என்று கூறினார்கள்.

இதை ஹம்மாத்(ரஹ்) அவர்களும் ஸாபித் அல் புனானி(ரஹ்) என்பவர் வாயிலாக அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்.

## ஒற்றர் படையின் சிறப்பு.

ஹதீஸ் 2846. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

அனைத்துக் குலங்களும் நம்மை எதிர்த்துப் போரிடும் (இந்த அகழ்ப் போர்) நாளில் அந்தக் குலத்தாரின் செய்தியை என்னிடம் (உளவறிந்து) கொண்டு வருபவர் யார்? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். ஸுபைர்(ரலி),நான் (உளவறிந்து கொண்டு வருகிறேன்)‘ என்று கூறினார்கள். பிறகு (மீண்டும்) நபி(ஸல்) அவர்கள்,அந்தக் குலத்தாரின் செய்தியை என்னிடம் (உளவறிந்து) கொண்டு வருபவர் யார்? என்று கேட்க, ஸுபைர்(ரலி),நான்‘ என்று கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள்,ஒவ்வோர் இறைத்தூதருக்கும் பிரத்யேகமான தூய தோழர் ஒருவர் உண்டு. என் பிரத்யேகமான தூய தோழர் ஸுபைராவார்‘ என்று கூறினார்கள்.

## ஒற்றர் படையைத் தனியாக அனுப்பலாமா?

ஹதீஸ் 2847. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்.

(உளவுப் பணிக்காக) நபி(ஸல்) மக்களை அழைத்தார்கள். அது அகழ்ப் போரின்போது என்று நினைக்கிறேன்‘ என அறிவிப்பாளர் ஸதகா இப்னு ஃபள்ல்(ரஹ்) கூறினார். - ஸுபைர்(ரலி) (அதற்குத் தாம் தயாராக இருப்பதாக) பதிலளித்தார்கள். மீண்டும் நபி(ஸல்) அவர்கள் மக்களை (எதிரிகளை வேவு பார்த்து வரும்படி) அழைத்தார்கள். (மீண்டும்) ஸுபைர்(ரலி) (அதற்குத் தாம் தயாராக இருப்பதாக) பதிலளித்தார்கள். மீண்டும் நபி(ஸல்) அவர்கள் மக்களை அழைத்தார்கள் அப்போதும் ஸுபைர்(ரலி) (தாம் அதற்குத் தயாராக இருப்பதாக) பதிலளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,ஒவ்வோர் இறைத்தூதருக்கும் பிரத்யேகமான தூய தோழர் ஒருவர் நிச்சயம் உண்டு. என் பிரத்யேகமான தூய தோழர் அவ்வாமின் மகன் ஸுபைராவார்‘ என்று கூறினார்கள்.

## இருவர் பயணம் செய்வது.

ஹதீஸ் 2848. மாலிக் இப்னு ஹுவைரிஸ்(ரலி) கூறினார்.

நான் நபி(ஸல்) அவர்களிடமிருந்து திரும்பினேன். அப்போது எனக்கும் என் நண்பர் ஒருவருக்கும் நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் இருவரும் பயணத்தில் தொழுகை நேரம் வந்தால் பாங்கும் இகாமத்தும் சொல்லுங்கள். உங்களில் (வயதில்) பெரியவர் உங்களுக்கு இமாமாக நின்று தொழுகை நடத்தட்டும்‘ என்று கூறினார்கள்.

## குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள் வரைக்கும் நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது.

ஹதீஸ் 2849. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள் வரைக்கும் நன்மை உள்ளது.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2850. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள் வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது.

என உர்வா இப்னு அபில் ஜஃத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2851. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் பரக்கத் (அருள்வளம்) உள்ளது.

## நல்லவர் மற்றும் கெட்டவரின் தலைமையின் கீழ் (மறுமை நாள் வரை) அறப்போர் நடந்து கொண்டிருக்கும்.

ஏனெனில் நபி(ஸல்) அவர்கள், (இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் மறுமை நாள் வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2852. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைவழியில் செலுத்தப்படும்) குதிரைகளின் நெற்றிகளில் மறுமைநாள் வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது. அந்த நன்மை யாதெனில் அந்தக் குதிரையில் ஏறி அறப்போரிடுதல் கிடைக்கும் நன்மையும், போரில் கிடைக்கும் செல்வமும் ஆகும்.

என உர்வா அல் பாரிகீ(ரலி) அறிவித்தார்.

## இறைவழியில் (போரிடுவதற்காக) குதிரையைத் தயாராக வைத்திருப்பதின் சிறப்பு.

ஏனெனில் அல்லாஹ், மேலும் அவர்களை எதிர்த்துப் போரிடுவதற்கு உங்களால் முடிந்த அளவிற்கு பலத்தையும் (போருக்குத்) தயாராக உள்ள குதிரைகளையும் திரட்டி வைத்துக் கொள்ளுங்கள்' (திருக்குர்ஆன் 08:60) என்று கூறுகிறான்.

ஹதீஸ் 2853. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொண்டும் அவனுடைய வாக்குறுதியை நம்பியும் இறைவழியில் (போரிடுவதற்காக) ஒரு குதிரையைக் கட்டி வைக்கிறவர், அதற்குப் போடுகிற தீனி, புகட்டுகிற தண்ணீர் மற்றும் அதன் சாணம், சிறுநீர் ஆகியவையும் (நன்மைகளாக) அவரின் தட்டில் (வைத்து எடை) போடப்படும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## குதிரைகளுக்கும் கழுதைகளுக்கும் பிரத்யேகப் பெயர் சூட்டுவது.

ஹதீஸ் 2854. அபூ கதாதா(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் (ஹுதைபிய்யா ஆண்டில் மக்காவுக்குப்) புறப்பட்டேன். (வழியில்) என்னுடைய தோழர்கள் சிலருடன் நான் பின்தங்கி விட்டேன். அவர்கள் இஹ்ராம் அணிந்திருந்தார்கள் நான் இஹ்ராம் அணிந்திருக்கவில்லை. என் தோழர்கள் நான் பார்ப்பதற்கு முன்னால் ஒரு காட்டுக் கழுதையைப் பார்த்தார்கள். அதைப் பார்த்த பொழுது அதை நானாகப் பார்க்கட்டும் என்றுவிட்டுவிட்டார்கள். (நான் அதைப் பார்த்தவுடன்)ஜராதா என்றழைக்கப்பட்ட என்னுடைய குதிரையின் மீது ஏறிக் கொண்டு என் தோழர்களிடம் என்னுடைய சாட்டையை எடுத்துத் தரும்படி கேட்டேன். அவர்கள் (இஹ்ராம் அணிந்திருந்ததால்) அதை (எடுத்துத் தர) மறுத்துவிட்டார்கள். எனவே, நான் அதை எடுத்து (அந்தக் காட்டுக் கழுதையைத்) தாக்கி, அதை (அதன் கால் நரம்புகளில்) வெட்டினேன். பிறகு (அதை அறுத்து) நான் உண்டேன் அவர்களும் உண்டார்கள். பிறகு (அதை உண்டதற்காக) வருந்தினார்கள். அவர்கள் நபி(ஸல்) அவர்களை அடைந்தபோது நபி(ஸல்) அவர்கள், அதிலிருந்து ஏதேனும் (ஒரு பகுதி இறைச்சி) உங்களிடம் இருக்கிறதா? என்று கேட்டார்கள். அதனுடைய கால் எங்களிடம் இருக்கிறது' என்று அவர்கள் பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அதை எடுத்து உண்டார்கள்.

ஹதீஸ் 2855. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

எங்கள் தோட்டத்தில் நபி(ஸல்) அவர்களுக்கு (சொந்தமான)லுஹைஃப் என்றழைக்கப்பட்ட குதிரையொன்று இருந்தது.

அபூ அப்தில்லாஹ் (புகாரீயாகிய நான்) கூறுகிறேன் அவர்களில் சிலர் அதன் பெயர்லுஃகைஃப் என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 2856. முஆத் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால்உஃபைர் என்றழைக்கப்பட்ட கழுதையின் மீது அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள், முஆதே! அல்லாஹ்வுக்கு மக்களின் மீதுள்ள உரிமை என்ன, மக்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா? என்று (என்னிடம்) கேட்டார்கள். நான், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்' என்று பதில் கூறினேன். நபி (ஸல்) அவர்கள், மக்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்னவென்றால், அவர்கள் அவனை (யே) வணங்கிட வேண்டும், அவனுக்கு எதனையும் (எவரையும்) இணை கற்பிக்கக் கூடாது என்பதாகும். அல்லாஹ்வின் மீது மக்களுக்குள்ள உரிமை, அவனுக்கு இணை கற்பிக்காமலிருப்பவரை அவன் வேதனைப்படுத்தாமல் இருப்பதாகும்' என்று பதில் கூறினார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! நான் மக்களுக்கு இந்த நற்செய்தியை அறிவிக்கட்டுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அவர்களுக்கு (இந்த நற்செய்தியை) அறிவிக்காதீர்கள். அவர்கள் இதையே நம்பி (நற்செயல்களில் ஈடுபடாமல்) இருந்து விடுவார்கள்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2857. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

மதீனாவில் (போர் பற்றி) பீதி ஏற்பட்டது. உடனே, நபி (ஸல்) அவர்கள்மன்தூப் என்றழைக்கப்பட்ட எங்கள் குதிரை ஒன்றை இரவல் வாங்கினார்கள். (அதில் ஏறிச் சவாரி செய்த பிறகு) பீதி (க்கான காரணம்) எதையும் நாம் பார்க்கவில்லை. மேலும், இந்த குதிரையை தங்கு தடையின்றி வேகமாக ஓடக் கூடியதாக நாம் கண்டோம்' என்று கூறினார்கள்.

## குதிரையில் அபசகுனம் உண்டு என்னும் கூற்று.

ஹதீஸ் 2858. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்.

"அபசகுணம் என்பது (எதிலாவது இருக்க முடியும் என்றால்) குதிரை, பெண், வீடு ஆகிய மூன்று விஷயங்களில் மட்டுமே (இருக்க முடியும்)' என்று நபி (ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்.

ஹதீஸ் 2859. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அபசகுணம் எதிலாவது இருக்குமானால் பெண்ணிலும் குதிரையிலும், வீட்டிலும் தான் இருக்கும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாஇதீ (ரலி) அறிவித்தார்.

## மூன்று பேருக்குரிய (மூன்று வகைப் பலன்களைத் தரும்) குதிரைகள்.

அல்லாஹ் கூறினான்:

மேலும் குதிரைகளையும், கோவேறுக் கழுதைகளையும், கழுதைகளையும் நீங்கள் அவற்றின் மீது பயணம் செய்வதற்காகவும் (உங்கள் வாழ்வின்) அலங்காரமாக இருக்கும் என்பதற்காகவும் அவன் படைத்தான். (திருக்குர்ஆன் 16:08)

ஹதீஸ் 2860. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரை வைத்திருப்பது மூன்று பேருக்கு மூன்றுவகையான விளைவுகளைத் தருவதாகும். ஒருவருக்கு நற்கூலி பெற்றுத் தருவதாகும். மற்றொரு மனிதருக்குப் (பொருளாதாரப்) பாதுகாப்பளிக்கக் கூடியதாகும். இன்னொரு மனிதருக்குப் பாவச் சுமையாகும். அதை இறைவழியில் பயன்படுத்துவதற்காக பசுமையான ஒரு வெட்டவெளியில் அல்லது ஒரு

தோட்டத்தில் ஒரு நீண்ட கயிற்றால் கட்டிவைத்துப் பராமரிக்கும் மனிதருக்கு அது (மறுமையில்) நற்பலனைப் பெற்றுத்தரும். அந்த குதிரை, தன்னைக் கட்டி வைத்திருக்கும் கயிற்றின் நீளத்திற்கேற்ப எந்த அளவிற்குப் பசும்புல் வெளிகளில் அல்லது தோட்டங்களில் மேயுமோ அந்த அளவிற்கு அவருக்கு நற்பலன் கிடைக்கும். அதன் கயிறு துண்டிக்கப்பட்டு, அது ஓரிரு முறை குதித்து (அல்லது ஒன்றிரண்டு மேடுகளைக் கடந்து) சென்றால் அதனுடைய (குளம்பின்) சுவடுகள் அளவிற்கும் அதனுடைய விட்டைகளின் அளவிற்கும் அவருக்கு நற்பலன்கள் எழுதப்படும். அந்த குதிரை ஓர் ஆற்றைக் கடந்து செல்லும்போது, அதிலிருந்து தண்ணீர் குடித்தால், அதற்குத் தண்ணீர் புகட்டும் எண்ணம் அதன் உரிமையாளருக்கு இல்லாமலிருந்தாலும் அதுவும் (அவர் புகட்டியதாகவே கருதப்பட்டு) அவர் செய்த நன்மைகளின் கணக்கில் எழுதப்படும். குதிரை பாவச் சுமையாக மாறும் மனிதன் யாரெனில், அதைப் பெருமைக்காகவும் பகட்டுக்காகவும் முஸ்லிம்களுடன் பகைமை பாராட்டுவதற்காகவும் கட்டி வைத்துப் பராமரிக்கும் மனிதனாவான். அது அவன் மீதுள்ள பாவச் சுமையாகும்.

நபி(ஸல்) அவர்களிடம் கழுதைகளின் ஸகாத் குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,அவற்றைக் குறித்து எந்த இறைகட்டளையும் எனக்கு அருளப்படவில்லை.எவன் அணுவளவு நன்மை செய்திருந்தானோ அவன் அதனை (அதன் நற்பலனைக்) கண்டு கொள்வான். மேலும், எவன் அணுவளவு தீமை புரிந்திருந்தானோ அவனும் அதனை (அதற்கான தண்டனையைக்) கண்டு கொள்வான்' என்னும் இந்த ஒருங்கிணைந்த, தனித் தன்மை வாய்ந்த திருக்குர்ஆன் வசனத்தைத் தவிர' என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## புனிதப் போரில் (பங்கெடுத்த) அடுத்தவரின் வாகனப் பிராணியை அடி(த்து இயங்க வை)ப்பது.

ஹதீஸ் 2861. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல்அன்சாரீ(ரலி) அறிவித்தார்.

நான் ஒரு பயணத்தில் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தேன்.. அறிவிப்பாளர் அபூ அகீல்(ரஹ்),அது போருக்கான பயணமா, உம்ராவுக்கான பயணமாக என்று எனக்குத் தெரியாது' என்று கூறுகிறார்... (திரும்பி வரும் நேரத்தில்) நாங்கள் முன்னேறிச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள்,தன் வீட்டாரிடம் சீக்கிரமாகச் செல்ல விரும்புபவர் சீக்கிரம் செல்லட்டும்' என்று கூறினார்கள். நான் எனக்குச் சொந்தமான - குறை ஏதுமற்ற, கருஞ்சிவப்பு நிறமுள்ள ஒட்டகம் ஒன்றின் மீது அமர்ந்து (சவாரி செய்து) கொண்டிருக்க, நாங்கள் முன்னேறிச் சென்றோம். (மற்ற) மக்கள் என் பின்னால் வந்து கொண்டிருந்தார்கள். நான் அவ்வாறு சென்று கொண்டிருக்கையில், திடீரென என் ஒட்டகம் (களைப்பினால்) நின்றுவிட்டது. நபி(ஸல்) அவர்கள் என்னைப் பார்த்து,ஜாபிரே! காத்திரு' என்று கூறிவிட்டு, தம் சாட்டையால் அதை அடித்தார்கள். உடனே, ஒட்டகம் தன் இடத்திலிருந்து வேகமாக ஓடியது. நபி(ஸல்) அவர்கள்,ஒட்டகத்தை நீ விற்பாயா? என்று கேட்க, நான்,ஆம் (விற்பேன்)' என்று கேட்க, நான்,ஆம் (விற்பேன்)' என்று பதிலளித்தேன். நாங்கள் மதீனாவுக்கு வந்தபோது நபி(ஸல்) அவர்கள், தம் தோழர்கள் புடைய சூழ பள்ளிவாசலுக்குள் நுழைந்தார்கள். நான் அவர்களிடம் சென்றேன். ஒட்டகத்தை (கற்கள் பரப்பப்பட்ட) பள்ளிவாசலின் நடைபாதையில் கட்டிவிட்டு,இது தங்களின் ஒட்டகம்' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள் வெளியே வந்து ஒட்டகத்தை (ஆராயும் வகையில்) சுற்றிவரத் தொடங்கினார்கள். (பிறகு)இந்த ஒட்டகம் நம்முடைய ஒட்டகம்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் (ஐந்து) ஊக்கியாக்கள் தங்கத்தைக் கொடுத்து அனுப்பி வைத்து,இதை ஜாபிரிடம் கொடுங்கள்' என்று கூறினார்கள். பிறகு,(ஒட்டகத்தின்) விலை முழுவதையும் பெற்றுக் கொண்டாயா? என்று (என்னிடம்) கேட்டார்கள். நான்,ஆம்

(பெற்றுக் கொண்டேன்)' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள்,விலையும், ஒட்டகமும் உனக்கே உரியவை (இரண்டையும் நீயே வைத்துக் கொள்)' என்று கூறினார்கள். 33

## முரட்டு வாகனம் பிராணியின் மீதும் ஆண் குதிரையின் மீது சவாரி செய்யலாம்.

ராஷித் இப்னு ஸஅத்(ரஹ்),முன்னோர்கள், (சவாரி செய்வதற்கு) ஆண் குதிரையையே விரும்பினார்கள். ஏனெனில், அதுதான் மிக வேகமாக ஓடக் கூடியதும், துணிச்சல் மிக்கதுமாகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2862. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

மதீனாவில் (பகைவர்கள் படையெடுத்து வருவதாகப்) பீதி ஏற்பட்டிருந்தது. எனவே, நபி(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா(ரலி) அவர்களுக்குச் சொந்தமானமன்தூப் என்றழைக்கப்பட்டு வந்த குதிரை ஒன்றை இரவல் வாங்கி அதில் ஏறிச் சவாரி செய்தார்கள். பிறகு (எல்லைகளைப் பார்த்துவிட்டு வந்து),பீதி எதையும் நாம் பார்க்கவில்லை. இந்த குதிரையை(க் காண காரணம்) தங்கு தடையின்றி வேகமாக ஓடக் கூடியதாக நாம் கண்டோம்' என்று கூறினார்கள்.

## (போர்ச் செல்வத்திலிருந்து) குதிரைக்கு கிடைக்கும் பங்கு.

ஹதீஸ் 2863. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் போரில் கிடைத்த செல்வத்திலிருந்து குதிரைக்கு இரண்டு பங்குகளையும் (அதல்லாமல்) அதன் உரிமையாளருக்கு ஒரு பங்கையும் கொடுத்தார்கள்.

மாலிக்(ரஹ்),அரபு குதிரைகளுக்கும் பிற நாட்டு (ஐரோப்பிய குதிரைகளான) துருக்கிய குதிரைகளுக்கும் போரில் கிடைக்கும் செல்வங்களிலிருந்து பங்கு கொடுக்கப்பட வேண்டும். ஏனெனில், அல்லாஹ்,குதிரைகளையும், கோவேறுக் கழுதைகளையும், கழுதைகளையும் நீங்கள் பயணம் செய்வதற்காக(வும் அலங்காரமாகவும்) படைத்தான் (திருக்குர்ஆன் 16:08) என்று கூறுகிறான். மேலும், ஒரு குதிரையை விட அதிகமானவற்றுக்குப் பங்கு தரக் கூடாது' என்று கூறினார்கள்.

## பிறருடைய வாகனத்தைப் போரில் ஓட்டிச் செல்வது.

ஹதீஸ் 2864. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்.

ஒருவர் பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்களிடம்,நீங்கள் அல்லாஹ்வின் தூதரைவிட்டுவிட்டு ஹுனைன் (போர்) அன்று பின்வாங்கி விட்டீர்களா(மே, உண்மை தானா)? என்று கேட்டதற்கு அவர்கள்,(ஆம், உண்மைதான்.) ஆனால், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பின்வாங்கிச் செல்லவில்லை. ஹவாஸின் குலத்தார் அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தார்கள். நாங்கள் அவர்களை (போரில்) சந்தித்தபோது அவர்களின் மீது (கடும்) தாக்குதல் நடத்தினோம். அதனால் அவர்கள் தோற்றுப் போய்விட்டார்கள். எனவே, முஸ்லிம்கள் (போர்க் களத்திலிருந்த) எதிரிகளின் செல்வங்களை எடுத்துச் செல்ல முனைந்தார்கள். எதிரிகள் அம்புகளை எய்து எங்களை எதிர் கொண்டார்கள். இறைத்தூதர் அவர்களோ பின்வாங்கிச் செல்லவில்லை. (நாங்கள் தான் பின் வாங்கி ஓடிவந்து விட்டோம்.) நான் நபி(ஸல்) அவர்களை தம்பைளா என்னும் வெண்ணிறக் கோவேறுக் கழுதையில் அமர்ந்திருந்த நிலையில் பார்த்தேன். அபூ சுப்யான்(ரலி) அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்நான் இறைத்தூதராவேன். இது பொய்யல்ல. நான் அப்துல் முத்தலிபின் (மகனின்) மகனாவேன்' என்று (பாடியபடி) கூறிக் கொண்டிருந்தார்கள்.

## வாகனப் பிராணியின் அங்கவடி

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 56 அறப்போரும் அதன் வழிமுறைகளும்.

ஹதீஸ் 2865. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் தங்களின் காலை அங்கவடியில் நுழைத்து, தம் ஒட்டகம் நிலைக்கு வந்துவிடும்போது துல்ஹுலை∴பா பள்ளிவாசலிலிருந்து (ஹஜ்ஜுக்காக இஹ்ராம் அணிந்து) தல்பியா கூறுவார்கள்.

## சேணம் பூட்டப்படாத குதிரையில் சவாரி செய்தல்.

ஹதீஸ் 2866. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் சேணம் பூட்டப்படாத, திறந்த மேனி கொண்ட ஒரு குதிரையின் மீது ஏறி சவாரி செய்தபடி, அவர்களின் கழுத்தில் வாளொன்று தொங்கிக் கொண்டிருக்க, மதீனா வாசிகளை நோக்கி வந்தார்கள்.

## மந்தமாக நடக்கிற குதிரை.

ஹதீஸ் 2867. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

மதீனாவாசிகள் ஒரு முறை (எதிரிகள் படையெடுத்து வருவதாகக் கேள்விப்பட்ட) பீதிக்குள்ளானார்கள். எனவே, நபி (ஸல்) அவர்கள் அபூ தல்ஹா (ரலி) அவர்களுக்குச் சொந்தமான, மந்தமாக நடக்கும் குணமுடைய ஒரு குதிரையின் மீது ஏறி சவாரி செய்தார்கள். திரும்பி வந்தபோது, உங்களுடைய இந்த குதிரையை தங்குதடையின்றி வேகமாக ஓடக் கூடியதாகக் நாம் கண்டோம்' என்று கூறினார்கள். அதற்குப் பிறகு அந்த குதிரை வேறெந்த குதிரையும் அதை (வெல்ல முடியாத அளவிற்கு பந்தயத்தில்) முந்த முடியாததாக மாறிவிட்டது.

## குதிரைப் பந்தயம்.

ஹதீஸ் 2868. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மெலிய வைக்கப்பட்ட (பயிற்சியளிக்கப்பட்ட) குதிரைகளைஹ∴ப்யா எனுமிடத்திலிருந்துசனிய்யத்துல் வதா எனும் மலைக் குன்று வரை (வேகப் பந்தயத்தில்) ஓடச் செய்தார்கள். மெலிய வைக்கப்படாத (பயிற்சியளிக்கப்படாத) குதிரைகளைசனிய்யத்துல் வதா'விலிருந்துபனு ஸுரைக் பள்ளிவாசல் வரை (வேகப் பந்தயத்தில்) ஓடச் செய்தார்கள். மெலிய வைக்கப்படாத (பயிற்சியளிக்கப்படாத) குதிரைகளைசனிய்யத்துல் வதா'விலிருந்துபனு ஸுரைக் பள்ளிவாசல் வரை (வேகப் பந்தயத்தில்) ஓடச் செய்தார்கள். நானும் பந்தயத்தில் (என் குதிரையுடன்) கலந்து கொண்டேன்.

அறிவிப்பாளர் சு∴ப்யான் சவ்ரீ (ரஹ்), ஹ∴ப்யாவுக்கும் சனிய்யத்துல் வதாவுக்கும் இடையே ஐந்து அல்லது ஆறு மைல்கள் தூரம் இருக்கும். சனிய்யத்துல் வதாவுக்கும் பனு ஸுரைக் பள்ளிவாசலுக்கும் இடையே பனு ஸுரைக் பள்ளிவாசலுக்கும் இடையே ஒரு மைல் தூரம் இருக்கும்' என்று கூறுகிறார்கள்.

## பந்தயத்திற்காகக் குதிரையை மெலிய வைப்பது.

ஹதீஸ் 2869. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மெலிய வைக்கப்படாத (பயிற்சி பெறாத) குதிரைகளுக்கிடையே பந்தயம் வைத்தார்கள். அவற்றின் (பந்தய) தூரம்சனிய்யத்துல் வதா'விலிருந்து பனு ஸுரைக் குலத்தாரின் பள்ளிவாசல் வரை (யுள்ள தொலைவாக) இருந்தது.

நானும் இத்தகைய குதிரைகளுக்கிடையேயான பந்தயங்களில் கலந்து கொள்வேன்.

## மெலிய வைக்கப்பட்ட குதிரைகளுக்கான பந்தய தூரம்.

ஹதீஸ் 2870. நா∴பிஉ (ரஹ்) அறிவித்தார்.

“இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மெலிய வைக்கப்பட்ட (பயிற்சி அளிக்கப்பட்ட) குதிரைகளுக்கிடையே பந்தயம் வைத்தார்கள். அவற்றைஹ∴ப்யா‘விலிருந்து அனுப்பினார்கள். அவற்றின் (பந்தய) எல்லைசனிய்யத்துல் வதா‘வாக இருந்தது‘ என்று இப்னு உமர் (ரலி) கூறினார்.

நான் (அறிவிப்பாளர்) மூஸா இப்னு உக்பா (ரஹ்) அவர்களிடம், அவ்விரண்டுக்குமிடையே எவ்வளவு தொலைவிலிருந்தது? என்று கேட்டேன். அவர், ஆறு அல்லது ஏழு மைல்கள் தொலைவிலிருந்து‘ என்று பதிலளித்தார்‘ என (மற்றோர் அறிவிப்பாளரான) அபூ இஸ்ஹாக் (ரஹ்) கூறினார்.

தொடர்ந்து நா∴பிஉ (ரஹ்) கூறினார்.

“நபி (ஸல்) அவர்கள் மெலிய வைக்கப்படாத (பயிற்சி பெறாத) குதிரைகளுக்கிடையேயும் பந்தயம் வைத்தார்கள். அவற்றை சனிய்யத்துல் வதாவிலிருந்து அனுப்பினார்கள். அவற்றின் (பந்தய) எல்லை பனு ஸுரைக் குலத்தாரின் பள்ளிவாசலாக இருந்தது‘ என்று இப்னு உமர் (ரலி) கூறினார். மேலும், இப்னு உமர் (ரலி) அவர்களும் (தம் குதிரையுடன்) பந்தயத்தில் பங்கெடுத்தார்கள்.

“நான் மூஸா இப்னு உக்பா (ரஹ்) அவர்களிடம், அவ்விரண்டுக்குமிடையே எவ்வளவு தொலைவிருந்தது? என்று கேட்க, சுமார் ஒரு மைல் என்று அவர்கள் பதிலளித்தார்கள்‘ என அபூ இஸ்ஹாக் (ரஹ்) கூறினார்.

## நபி (ஸல்) அவர்களின் ஒட்டகம்.

“நபி (ஸல்) அவர்கள் உஸாமா (ரலி) அவர்களை (தம் ஒட்டகமான) கஸ்வா‘வின் மீது தமக்குப் பின்னால் அமர வைத்தார்கள்‘ என்று இப்னு உமர் (ரலி) கூறினார்.

“நபி (ஸல்) அவர்கள், கஸ்வா முரண்டு பிடிக்கவில்லை என்றார்கள்‘ என மிஸ்வர் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 2871. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் ஒட்டகம்அள்பா என்று அழைக்கப்பட்டு வந்தது.

ஹதீஸ் 2872. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம்அள்பா என்று அழைக்கப்பட்ட ஒட்டகம் ஒன்று இருந்தது. அது பந்தயத்தில் எவரும் அதை முந்த முடியாத (அளவுக்கு விரைவாக ஓடக் கூடிய)தாக இருந்தது. அப்போது கிராமவாசி ஒருவர் ஆறு வயதுக்குட்பட்ட ஒட்டகம் ஒன்றின் மீது வந்தார். அது நபி (ஸல்) அவர்களின் ஒட்டகத்தை முந்தியது. இது முஸ்லிம்களுக்கு மனவேதனையை அளித்த. இதையறிந்தபோது நபி (ஸல்) அவர்கள், உலகில் உயர்ந்து விடுகிற பொருள் எதுவாயினும் (ஒருநாள்) அதைக் கீழே கொண்டு வருவதே அல்லாஹ்வின் நியதியாகும்‘ என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸை அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து ஸாபித் (ரஹ்) அவர்களும், அவர்களிடமிருந்து ஹம்மாத் (ரஹ்) அவர்களும், அவர்களிடமிருந்து மூஸா (ரஹ்) அவர்களும் நீண்டதாக அறிவித்தார்கள்.

## கழுதைகளின் மீது (சவாரி செய்து) போருக்குச் செல்வது.

நபி (ஸல்) அவர்களின் வெள்ளை நிறக் கோவேறுக் கழுதை

இதை அனஸ் (ரலி) தம் அறிவிப்பில் குறிப்பிட்டுள்ளார்கள்.

“நபி(ஸல்) அவர்களுக்குஅய்லா‘வின் அரசர் வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையொன்றை அன்பளிப்பாகத் தந்தார்‘ என்று அபூ ஹுமைத்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 2873. அம்ர் இப்னு ஹாரிஸ்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் (தம் மரணத்தின் போது) தம் வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையையும், தம் ஆயுதத்தையும், தருமமாகவிட்டுச் சென்ற ஒரு நிலத்தையும் தவிர வேறெதையும்விட்டுச் செல்லவில்லை.

ஹதீஸ் 2874. பராஉ(ரலி) அறிவித்தார்.

என்னிடம் ஒருவர்,அபூ உமாராவே! ஹுனைன் போரின்போது நீங்கள் பின்வாங்கிச் சென்று விட்டீர்களே? என்று கேட்டார். நான்,இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் பின்வாங்கிச் செல்லவில்லை. ஆனால், அவசர புத்தியுள்ள மக்கள் தான் பின்வாங்கிச் சென்றார்கள். எனவே, ஹவாஸின் குலத்தார் அவர்களை அம்புகளால் தாக்கினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையின் மீது சவாரி செய்து கொண்டிருந்தார்கள். அபூ சுஃப்யான் இப்னு ஹாரிஸ்(ரலி) அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,நான் உண்மையான இறைதூதரே. இதில் பொய் எதுவும் இல்லை. நான் அப்துல் முத்தலிபின் (மகனின்) மகனாவேன்‘ என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

## பெண்களின் அறப் போர்.

ஹதீஸ் 2875. இறைநம்பிக்கையாளர்களின் தாயார் ஆயிஷா(ரலி) கூறினார்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் அறப்போரில் ஈடுபட அனுமதி கேட்டேன். அதற்கு அவர்கள்,(பெண்களாகிய) உங்கள் ஜிஹாத் ஹஜ் செய்வது தான்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2876. இறைநம்பிக்கையாளர்களின் தாயார், ஆயிஷா(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்களிடம் அவர்களின் மனைவிமார்கள் அறப்போர் குறித்து (ஜிஹாதில் ஈடுபட அனுமதியளிக்கும்படி) கேட்டார்கள். அதற்கவர்கள்,ஹஜ் செய்வது (உங்களுக்கு) சிறந்த ஜிஹாத் ஆகும்‘ என்று கூறினார்கள்.

## கடலில் (பயணம் செய்து) பெண் அறப்போரில் ஈடுபடுவது.

ஹதீஸ் 2877 , ஹதீஸ் 2878 அனஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மில்ஹானின் மகளான உம்மு ஹராம்(ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்றார்கள். அங்கு சாய்ந்து அமர்ந்து (உறங்கிக்) கொண்டிருந்து, பிறகு (விழித்தெழுந்து) சிரித்தார்கள். உம்முஹராம்(ரலி),இறைத்தூதர் அவர்களே! ஏன் சிரிக்கிறீர்கள்? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,என் சமுதாயத்தில் சிலர் இறைவழியில் (போரிடுவதற்காகக்) கடலில் பயணம் செய்வார்கள். அவர்களின் நிலை, கட்டில்களில் (சாய்ந்து) வீற்றிருக்கும் அரசர்களைப் போன்றதாகும்‘ என்று கூறினார்கள். அதற்கு உம்மு ஹராம்(ரலி),என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,இறைவா! இவரையும் அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக!என்று பிரார்த்தித்தார்கள். பிறகு மீண்டும் அவ்வாறே (சாய்ந்து அமர்ந்தவாறு உறங்கிக் கொண்டிருந்துவிட்டு பிறகு விழித்தெழுந்து) சிரித்தார்கள். முன்பு கேட்டதைப் போன்றே,ஏன் சிரிக்கிறீர்கள்? என்று நபி(ஸல்) அவர்களிடம் உம்மு ஹராம்(ரலி) கேட்டார்கள். நபி(ஸல்) அவர்களும் முன்பு (பதிலளித்ததைப்) போன்றே பதிலளித்தார்கள். அதைக் கேட்டு உம்மு ஹராம்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம்,என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி

அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் (கடல் பயணம் செய்து அறப்போருக்கு) முதலாவதாகச் செல்பவர்களில் ஒருவராக இருப்பீர்கள். பிற்பாடு செல்பவர்களில் ஒருவராக இருக்க மாட்டீர்கள்' என்று கூறினார்கள். பிறகு, உம்மு ஹராம்(ரலி) உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்களை மணந்தார்கள். பிறகு கரழா இப்னு அப்தி அம்ர் என்பவரின் மகளுடன் (அறப் போருக்காகக்) கடல் பயணம் செய்தார்கள். அவர்கள் (போர் முடிந்து) புறப்பட்டபோது தம் வாகனப் பிராணியின் மீது ஏற, அது அவர்களைக் கீழே தள்ளிவிட்டது. அவர்கள் அதிலிருந்து விழுந்து இறந்துவிட்டார்கள்.

## அறப்போருக்குச் செல்லும் பொழுது ஒருவர் தம் மனைவியரில் ஒருவரை மட்டும் (குலுக்கல் முறையில் தேர்வு செய்து) அழைத்துக் கொண்டு மற்றவர்களைவிட்டுவிட்டுச் செல்வது.

ஹதீஸ் 2879. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் வெளியே (பயணம்) செல்ல நாடினால் தம் மனைவியரிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டு எவருடைய பெயர் வருகிறதோ அவரை (மட்டும்) அழைத்துக் கொண்டு செல்வார்கள். இவ்வாறே, அவர்கள் (புரிந்த) ஒரு புனிதப் போருக்குச் சென்றபோது (அவர்களின் மனைவிமார்களாகிய) எங்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அதில் என்னுடைய பெயர் வரவே, நான் நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டேன். இது (பெண்கள் அந்நிய ஆண்களிடமிருந்து தம்மைத் திரையிட்டு மறைத்துக் கொள்ள வேண்டும் என்கிற)ஹிஜாப் சட்டம் அருளப்பட்ட பின்னால் நடந்தது.

## பெண்கள், ஆண்களுடன் புனிதப் போரில் கலந்து கொள்வது.

ஹதீஸ் 2880. அனஸ்(ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போரின்போது மக்கள் நபி(ஸல்) அவர்களைவிட்டுவிட்டுத் தோல்வியுற்று (பின்வாங்கிச்) சென்றபோது நான் ஆயிஷா பின்த்து அபீ பக்ர்(ரலி) அவர்களையும் உம்மு சுலைம்(ரலி) அவர்களையும் கண்டேன். அப்போது அவர்கள் இருவரும் (தண்ணீர் நிரம்பிய) தோல் பைகளைத் தம் முதுகுகளில் சுமந்து கொண்டு வேக வேகமாக நடந்து (சென்று காயமுற்று வீழ்ந்து கிடக்கும்) மக்களின் வாய்களில் தண்ணீரை ஊற்றுவதும் பிறகு (தண்ணீர் காலியானதும்) திரும்பிச் சென்று அவற்றை நிரப்பிக் கொண்டு, மீண்டும் வந்து மக்களின் வாய்களில் தண்ணீரை ஊற்றுவதுமாக இருந்தார்கள். நான் அவர்களின் கால்களில் அணிந்திருந்த தண்டைகளைப் பார்க்கும் அளவிற்கு வரிந்து கட்டிக் கொண்டு (மும்முரமாகப்) பணிபுரிந்து கொண்டிருந்தார்கள்.

"தோல் பைகளைத் தம் முதுகுகளில் சுமந்து வேகமாக நடந்து சென்று' என்பதற்கு பதிலாக,தோல் பைகளைத் தம் முதுகுகளில் சுமந்து எடுத்துச் சென்று' என்று மற்றோர் அறிவிப்பாளர் கூறினார்.

## புனிதப் போரில் பெண்கள் (தண்ணீர் நிரம்பிய) தோல் பைகளை மக்களிடம் சுமந்து செல்வது.

ஹதீஸ் 2881. சஅலபா இப்னு அபீ மாலிக்(ரலி) கூறினார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) (பட்டால் அல்லது கம்பளியால் ஆன) கீழங்கிகளை மதீனா நகரப் பெண்களிடையே பங்கிட்டார்கள். அப்போது அதில் தரமானதொரு கீழங்கி மீதமாயிற்று. அதைக் கண்டு, அவர்களிடமிருந்த சிலர்,இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! இதை உங்களிடமிருக்கும் அல்லாஹ்வின் தூதருடைய மகளுக்குக் கொடுங்கள்' என்று கூறினார்கள் -

அவர்கள் அலீ(ரலி) அவர்களின் மகளார் உம்மு குல்தூம் அவர்களைக் கருத்தில் கொண்டே இப்படிக் கூறினார்கள். (உமர்(ரலி),உம்மு சுலைத்(ரலி) தாம் இதற்கு மிகவும் அருகதையுடையவர்கள். உம்மு சுலைத்(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்த அன்சாரிப் பெண்களில் ஒருவராவார்' என்று கூறிவிட்டு,அவர் உஹுதுப் போரின்போது எங்களுக்காக (இஸ்லாமிய வீரர்களுக்காக) தோல் பைகளைச் சுமந்து நீர் புகட்டுபவராய் இருந்தார்' என்று கூறினார்கள்.

## புனிதப் போரில் காயமுற்றிருந்தவர்களுக்குப் பெண்கள் மருந்திடுவது.

ஹதீஸ் 2882. ருபய்யிஉ பின்த்து முஅவ்வித்(ரலி) கூறினார்.

(பெண்களாகிய) நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (புனிதப் போரில்) இருந்தோம். (புனிதப் போரில்) காயமுற்றவர்களுக்கு நீர் புகட்டியும் மருந்திட்டும் வந்தோம். கொல்லப்பட்டவர்களை (போர்க் களத்திலிருந்து) மதீனாவிற்கு எடுத்துச் சென்று கொண்டும் இருந்தோம்.

## காயமடைந்தவர்களையும் கொல்லப்பட்டவர்களையும் பெண்கள் எடுத்து வருதல்.

ஹதீஸ் 2883. ருபய்யிஉ பின்த்து முஅவ்வித்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் புனிதப் போரில் கலந்து கொள்வோம் அப்போது (போரில் காயமுற்ற) மக்களுக்கு நீர் புகட்டுவோம் அவர்களுக்குப் பணிவிடைகள் செய்வோம் கொல்லப்பட்டவர்களையும் காயமுற்றவர்களையும் மதீனாவுக்குத் திரும்பக் கொண்டு வருவோம்.

## உடலில் இருந்து அம்மைப் பிடுங்கி எடுப்பது.

ஹதீஸ் 2884. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

என் தந்தையின் சகோதரர் அபூ ஆமிர்(ரலி) அவர்களின் முழங்காலருகில் அம்பு துளைத்து (அதிலேயே தங்கி) விட்டிருந்தது. நான் அவர்களிடம் சென்றேன். அவர்கள் (என்னிடம்),இந்த அம்பைப் பிடுங்கி விடு' என்று கூறினார்கள். நான் அதைப் பிடுங்கி விட்டேன். அதிலிருந்து தண்ணீர் கொட்டியது. பிறகு நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன் அவர்களுக்கு நடந்ததைத் தெரிவித்தேன். (அதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,இறைவா! உபைத் அபூ அமீருக்கு மன்னிப்பளி' என்று பிரார்த்தித்தார்கள். 48

## இறைவழியில் புனிதப் போர் புரியும் வேளையில் காவல் காப்பாது.

ஹதீஸ் 2885. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்த பின், முதலில் இரவில் கண் விழித்திருந்தார்கள். மதீனாவுக்கு வந்து சிறிது காலம் கழித்து,என் தோழர்களிடையே எனக்கு இரவில் காவல் காப்பதற்கு ஏற்ற மனிதர் ஒருவர் இருந்தால் நன்றாயிருக்குமே' என்று கூறினார்கள். அப்போது நாங்கள் ஆயுதத்தின் ஓசையைக் கேட்டோம். நபி(ஸல்) அவர்கள்,யாரது? என்று கேட்டார்கள். வந்தவர்,நானே ஸஅத் இப்னு அபீ வக்காஸ். தங்களுக்குக் காவல் இருப்பதற்காக வந்துள்ளேன்' என்று கூறினார். பிறகு நபி(ஸல்) அவர்கள் (நிம்மதியாக) உறங்கினார்கள்.

ஹதீஸ் 2886. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பொற்காசு, வெள்ளிக்காசு, பூம்பட்டுத் துணி, சதுர கருப்புத் துணி ஆகியவற்றுக்கு அடிமையாகிவிட்ட மனிதன் துர்பாக்கியவானாவான். அவனுக்கு (செல்வம்) கிடைத்தால் திருப்தியடைவான் செல்வம் வழங்கப்படாவிட்டால் அதிருப்தியடைவான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2887. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

பொற்காசின் அடிமையும், வெள்ளிக் காசின் அடிமையும், கருப்புத் துணியின் அடிமையும் துர்பாக்கியவான் ஆவான். அவனுக்கு (செல்வம்) கிடைத்தால் திருப்தியடைவான் செல்வம் வழங்கப்படாவிட்டால் கோபமடைவான். அவன் துர்பாக்கியவானாகட்டும். அவன் மீண்டும் மீண்டும் சறுக்கி விழட்டும். அவனுக்கு முள் தைத்துவிட்டால் அதை எடுக்க ஆளில்லாமல் தவிக்கட்டும். இறைவழியில் (போர் புரிந்திட) தன் குதிரையின் கடிவாளத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, பரட்டைத் தலையுடன் இரண்டு கால்களும் புழுதியடைந்தவனாகச் செல்கிற அடியானுக்கு சொர்க்கம் கிடைக்கட்டும். (அவன் எத்தகையவன் என்றால்) அவன் (படையின் முன்னணிக்) காவல் அணியில் நியமிக்கப்பட்டிருப்பானாயின் அதிலேயே (ஆட்சேபணை ஏதுமின்றி) இருப்பான் பின்னணிப் படையில் நியமிக்கப்பட்டிருப்பானாயின் அதிலும் (எந்த முணுமுணுப்புமின்றி திருப்தியுடன்) இருப்பான். அவன் (யாரையும் சந்திக்க) அனுமதி கேட்டால் அவனுக்கு அனுமதி தரப்படாது அவன் பரிந்துரை செய்தால் அது (மக்களால்) ஏற்கப்படாது. (அந்த அளவிற்கு சாமானியனாக, எளியவனாகக் கருதப்படுவான்.)

## புனிதப் போரில் பணிவிடை செய்வதின் சிறப்பு.

ஹதீஸ் 2888 நான் ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்களுடன் (ஒரு பயணத்தில்) இருந்தேன். அவர்கள் என்னை விட வயதில் பெரியவராக இருந்தும் எனக்குப் பணிவிடை செய்து வந்தார்கள். ('வேண்டாம் என நான் மறுத்த போது) அன்சாரிகள் ஓர் உயர்ந்த காரியத்தைச் செய்வதை பார்த்திருக்கிறேன் எனவே, அவர்களில் எவரை நான் கண்டாலும் (அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து) அவர்களை கண்ணியப்படுத்தாமல் இருப்பதில்லை' என்று ஜரீர் (ரலி) கூறினார்.

ஹதீஸ் 2889. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

கைபர் போரின்போது நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்குப் பணிவிடை செய்து கொண்டே சென்றேன். நபி (ஸல்) அவர்கள் திரும்பி வந்தபோது அவர்களுக்கு உஹுது மலை தென்பட்டதும், இது எத்தகைய மலையென்றால் இது நம்மை நேசிக்கிறது் நாம் இதை நேசிக்கிறோம் நாம் இதை நேசிக்கிறோம்' என்று கூறினார்கள். பின்னர், மதீனாவை நோக்கித் தம் கரத்தால் சைகை செய்து, இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவைப் புனிதமானதாக அறிவித்ததைப் போன்று, நான் (இந்த) இருமலைகளுக்கிடையேயுள்ள நிலப் பகுதியை (மதீனாவை) புனிதமானதாக அறிவிக்கிறேன். இறைவா! எங்கள் (அளவைகளான) ஸாவுகளிலும், முத்துகளிலும் எங்களுக்கு பரக்கத்தைக் கொடு' என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 2890. அனஸ் (ரலி) அறிவித்தார்.

(ஒரு பயணத்தில்) நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். (அன்று) தம் ஆடையால் தமக்குத் தாமே நிழலிட்டுக் கொண்டிருந்தவரே எங்களில் அதிக நிழல் பெற்றவராய் இருந்தார். (அந்த அளவுக்கு வெயில் கடுமையாக இருந்தது் ஒதுங்க இடமில்லை.) நோன்பு நோற்றவர்கள் எந்த வேலையும் செய்யவில்லை. நோன்பு நோற்காமல்விட்டுவிட்டவர்கள் வாகனங்களை (ஒட்டகங்களை) எழுப்பி, (தண்ணீர் புகட்டியும் தீனி போட்டும்) வேலை செய்தார்கள் நோன்பாளிகளுக்கு (ஓய்வெடுக்க கூடாரம் அடித்தும்) பணி புரிந்தார்கள். நபி (ஸல்) அவர்கள், இன்று நோன்பை (நோற்காமல்) விட்டவர்கள் மறுமையில் (அதிக) நன்மையைக் கொண்டு சென்றார்கள்' என்று கூறினார்கள்.

## பயணத்தில் அடுத்தவரின் பொருள்களைச் சுமப்பவரின் சிறப்பு.

ஹதீஸ் 2891. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதனின் (உடலிலுள்ள) ஒவ்வொரு மூட்டிற்காகவும் ஒவ்வொரு நாளும் தர்மம் செய்வது கடமையாகும். ஒருவருக்கு அவரின் வாகனத்தில் ஏறிட உதவுவது, அல்லது அவரின் வாகனத்தின் மீது அவரின் மூட்டை முடிச்சுகளை ஏற்றி வைப்பது கூட தர்மமாகும். நல்ல சொல்லும் தொழுகைக்கு நடந்து செல்ல எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும், (வழியறியாமல் தடுமாறும் ஒருவருக்குச் சரியான) பாதையை அறிவித்துத் தருவதும் தர்மமாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## இறைவழியில் ஒருநாள் (நாட்டின்) எல்லையைக் காவல் புரிவதின் சிறப்பு.

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் பொறுமையைக் கடைப்பிடியுங்கள். பரஸ்பரம் சம்ப்புத் தன்மையோடு நடந்து கொள்ளுங்கள். (எதிரியை எதிர்க்க) எந்நேரமும் தயாராக இருங்கள். அல்லாஹ்வுக்குப் பயந்து நடந்து கொள்ளுங்கள். நீங்கள் வெற்றி பெறுவீர்கள். (திருக்குர்ஆன் 03:200)

ஹதீஸ் 2892. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் ஒருந்ாள் (நாட்டின்) எல்லையைக் காவல் புரிவது உலகத்தை விடவும் அதன் மீதிருப்பவற்றை விடவும் சிறந்ததாகும். உங்களில் ஒருவருக்கு சொர்க்கத்தில், ஒரு சாட்டையை வைக்குமளவிற்குள்ள இடம் கிடைப்பது உலகத்தை விடவும் அதன் மீதிருப்பவற்றை விடவும் சிறந்ததாகும். ஓர் அடியான் இறைவழியில் செல்கிற மாலை நேரம் அல்லது காலை நேரமானது உலகத்தை விடவும் அதன் மீதிருப்பவற்றை விடவும் சிறந்ததாகும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

## பணிவிடை புரிவதற்காக சிறுவனை அழைத்துக் கொண்டு புனிதப் போருக்குச் செல்வது.

ஹதீஸ் 2893. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம்,உங்கள் சிறுவர்களில் ஒரு சிறுவனை எனக்குப் பணிவிடை புரிவதற்காகத் தேடுங்கள் நான் கைபருக்குப் புறப்பட வேண்டும்' என்று கட்டளையிட்டார்கள். எனவே, அபூ தல்ஹா(ரலி) என்னை (தம் வாகனத்தில்) பின்னால் அமர வைத்துக் கொண்டு புறப்பட்டார்கள். அப்போது நான் பருவ வயதை நெருங்கி விட்டிருந்த சிறுவனாக இருந்தேன். இறைத்தூதர்(ஸல்) எங்கேனும் தங்கினால் அவர்களுக்கு நான் பணிவிடைகள் புரிந்து வந்தேன். அப்போது அவர்கள்,இறைவா! துக்கத்திலிருந்தும், கவலையிலிருந்தும், இயலாமையிலிருந்தும், சோம்பலிலிருந்தும், கஞ்சத் தனத்திலிருந்தும், கோழைத்தனத்திலிருந்தும், கடன் சுமையிலிருந்தும், பிற மனிதர்களின் அடக்கு முறையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்' என்று பிரார்த்திப்பதை அதிகமாகச் செவியுற்று வந்தேன். பிறகு நாங்கள் கைபருக்குச் சென்று சேர்ந்தோம். நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் (கமூஸ்) கோட்டையின் வெற்றியை அளித்தபோது, ஸஃபிய்யா பின்த்து ஹுயை இப்னி அக்தப் அவர்களின் அழகு பற்றி அவர்களுக்குக் கூறப்பட்டது. அப்போது (நடந்த போரில்) ஸஃபிய்யாவின் கணவர் கொல்லப்பட்டிருந்தார். அவர் புதுமணப் பெண்ணாகவும் இருந்தார். நபி(ஸல்) அவர்கள் ஸஃபிய்யாவைத் தமக்காக (விரும்பித்) தேர்ந்தெடுத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்கள். நாங்கள்,சத்துஸ் ஸஹ்பா எனுமிடத்தை அடைந்தவுடன் ஸஃபிய்யா(ரலி) மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்தார்கள். உடனே, நபி(ஸல்)

அவர்கள் அவருடன் (உறவு கொண்டு) வீடு கூடினார்கள். பிறகு, சிறிய பாத்திரம் ஒன்றில் (பேரீச்சம் பழம், நெய், பாலாடை ஆகியவற்றைக் கலந்து)ஹைஸ் என்ற உணவைத் தயாரித்தார்கள். பிறகு,உன்னைச் சுற்றிலுமிருப்பவர்களுக்கு (மண் விருந்துக்கு வரும்படி) அறிவி' என்று உத்தரவிட்டார்கள். அது ஸஃபிய்யா(ரலி) அவர்களை மணந்ததற்காக நபி(ஸல்) அவர்கள் அறித்த மணவிருந்தாக அமைந்தது. பின்னர் நாங்கள் மதீனாவுக்குப் புறப்பட்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் (வாகனத்தில்) தமக்குப் பின்னால் போர்வை (போன்ற ஓர் அங்கி)யால் ஸஃபிய்யா(ரலி) அவர்களைச் சுற்றிலும் திரையமைத்தார்கள். பிறகு, தம் ஒட்டகத்தின் அருகே அமர்ந்து தம் முழங்காலை வைத்தார்கள். நபி(ஸல்) அவர்களின் முழங்காலின் மீது தம் காலை வைத்து ஸஃபிய்யா(ரலி) (ஒட்டகத்தில்) ஏறினார்கள். நாங்கள் மதீனாவை நெருங்கியபோது நபி(ஸல்) அவர்கள் உஹுது மலையைப் பார்த்து,இது நம்மை நேசிக்கிற மலை நாமும் இதை நேசிக்கிறோம்' என்று கூறினார்கள். பிறகு மதீனாவின் பக்கம் பார்த்து,இறைவா! இப்ராஹீம்(அலை) அவர்கள் மக்காவைப் புனிதமாக அறிவித்ததைப் போன்று இந்த இரண்டு மலைகளுக்கிடையிலுள்ள நிலப்பகுதியை (மதீனாவை) புனிதமானதாக அறிவிக்கிறேன். இறைவா! மதீனா வாசிகளின் முத்து, அவர்களின் ஸாவு ஆகியவற்றில் பரக்கத்தை அளிப்பாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

## (புனிதப் போருக்காக) கடல் பயணம் செய்தல்.

ஹதீஸ் 2894 , ஹதீஸ் 2895 அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஒருநாள் நபி(ஸல்) அவர்கள் உம்மு ஹராம்(ரலி) அவர்களின் வீட்டில் மதிய ஓய்வு எடுத்தார்கள். (உறக்கத்திலிருந்து) சிரித்தபடியே விழித்தார்கள். உம்மு ஹராம்(ரலி),அல்லாய்வின் தூதரே! ஏன் சிரிக்கிறீர்கள்? என்று கேட்டார்கள்.என் சமுதாயத்தில் ஒரு கூட்டத்தினர் அரசர்கள் கட்டில்களில் அமர்ந்திருப்பதைப் போல் கடல் பயணம் செய்வதை (கனவில்) கண்டு நான் வியந்தேன். (எனவேதான் சிரிக்கிறேன்)' என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். அதற்கு உம்மு ஹராம்(ரலி),இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருத்தியாக என்னை ஆக்கும்படி அல்லாஹ்விடம் நீங்கள் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் அவர்களில் ஒருவர் தாம்' என்று கூறினார்கள். மீண்டும் உறங்கி, சிரித்தபடியே விழித்தெழுந்தார்கள். (முன்பு உறங்கியதைப் போன்றே உறங்கி விழித்தெழுந்து) முன்பு கூறியதைப் போன்றே இரண்டு அல்லது மூன்று முறை கூறினார்கள். உம்மு ஹராம்(ரலி),இறைத்தூதர் அவர்களே! என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூற, நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் (புனிதப் போருக்காகப் பயணம் செய்யும்) முதல் (படைக்) குழுவினரில் ஒருவராவீர்கள்' என்று கூறினார்கள். பிறகு உம்மு ஹராம்(ரலி) மணந்தார்கள். பின்னர், அவர்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு (கடல் பயணம் செய்து) புனிதப் போருக்குச் சென்றார்கள். திரும்பி வரும்போது உம்மு ஹராம்(ரலி) ஏறி அமர்வதற்காக வாகனம் (கோவேறுக் கழுதை) ஒன்று அருகில் கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்கள் (அதிலிருந்து தவறிக்) கீழே விழுந்து அவர்களின் கழுத்து முறிந்துவிட்டது. (அதனால் அவர்கள் இறந்துவிட்டார்கள்.

## போரின்போது பலவீனர்கள் மற்றும் நல்லவர்களின் காரணத்தால் உதவி பெறுவது.

அபூ சுஃப்யான் இப்னு ஹர்ப்(ரலி) கூறினார்:

(ரோமப் பேரரசர்) சீசர்,நான் உங்களிடம்,அந்த நபியை மக்களில் உயர்வகுப்பினர் (வசதி வாய்ப்பும் அதிகாரமும் பெற்றுள்ள மேல்தட்டு மக்கள்) பின்பற்றுகிறார்களா? பலவீனர்களான

(ஒடுக்கப்பட்ட) மக்கள் பின்பற்றுகிறார்களா? என்று கேட்டதற்கு,பலவீனர்களான (ஒடுக்கப்பட்ட) மக்கள் தான் (அவர்களைப் பின்பற்றுகிறார்கள்) என்று பதிலளித்தீர். (எப்போதும்) அவர்கள் தாம் இறைத் தூதர்களைப் பின்பற்றக் கூடியவர்கள்' என்று என்னிடம் கூறினார். என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2896. முஸ்அப் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி), (தம் வீரச் செயல்களின் காரணத்தினால்) தமக்குப் பிறரை விட ஒரு சிறப்பு இருக்க வேண்டும் (போரில் கிடைக்கும் செல்வத்தில் அதிகப் பங்கு கிடைக்க வேண்டும்) எனக் கருதினார்கள். எனவே நபி(ஸல்) அவர்கள்,உங்களிடையேயுள்ள பலவீனர்களின் (சாமானிய மக்களின்) பொருட்டால் தான் உங்களுக்கு (இறைவனின் தரப்பிலிருந்து) உதவி கிட்டுகிறது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2897. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களில் ஒரு குழுவினர் புனிதப் போர் புரியச் செல்கிற ஒரு காலம் வரும் அப்போது,நபி(ஸல்) அவர்களிடம் தோழமை கொண்டிருந்தவர்கள் எவரும் உங்களிடையே இருக்கிறார்களா? என்று கேட்கப்படும். அதற்கு,ஆம் (இருக்கிறார்கள்)' என்று பதிலளிக்கப்படும். உடனே அவர்களக்கு வெற்றியளிக்கப்படும். பிறகு, இன்னொரு காலம் வரும். (அப்போதும் புனிதப் போர் புரிய ஒரு குழுவினர் செல்வார்கள்.) அப்போது,நபி(ஸல்) அவர்களின் தோழர்களுடன் நட்பு கொண்டவர்கள் உங்களிடையே இருக்கிறார்களா? என்று கேட்கப்படும். அதற்கு,ஆம் (இருக்கிறார்கள்)' என்று பதிலளிக்கப்படும். உடனே (அவர்களுக்கு) வெற்றியளிக்கப்படும். பிறகு இன்னுமொரு காலம் வரும். (அப்போதும் ஒரு குழுவினர் புனிதப் போருக்காகச் செல்வார்கள்.) அப்போது,நபித் தோழர்களின் தோழருடன் நட்பு கொண்டவர்கள் உங்களிடையே இருக்கிறார்களா? என்று கேட்கப்படும். அதற்கு,ஆம் (இருக்கிறார்கள்)' என்று பதிலளிக்கப்படும். உடனே அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## ஒருவரைக் குறித்து இன்னார் ஷஹீத் (இறைவழியில் உயிர்த் தியாகம் செய்தவர்)' என்று சொல்லக் கூடாது.

"தன் பாதையில் அறப்போர் புரிபவர் யார் என்பதை அல்லாஹ்வே நன்கறிந்தவன். தன் பாதையில் காயமடைபவர் யார் என்பதையும் அல்லாஹ்வே நன்கறிந்தவன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2898. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களும் இணைவைப்போரும் (கைபர் போர்க்களத்தில்) சந்தித்துப் போரிட்டனர். நபியவர்கள் தம் படையினர் பக்கம் சென்று விட மற்றவர்களும் தம் படையின் பக்கம் சென்றுவிட்டனர். அப்போது நபி(ஸல்) அவர்களின் தோழர்களுக்கிடையே ஒருவர் இருந்தார். அவர் (எதிரிகளில்) போரில் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நிற்பவர், படையிலிருந்து விலம்ப் போய் தனியே சென்றவர் (அதாவது எதிர்த்து நிற்பவர், பணிந்து செல்பவர் என்று) எவரையும் நபித் தோழர்களுக்குவிட்டு வைக்காமல் அனைவரையும் தம் வாளால் வெட்டியபடி துரத்திச் சென்று (மூர்க்கமாகப் போரிட்டுக்) கொண்டிருந்தார். (அவரின் துணிச்சலான போரைக் கண்ட) நபித்தோழர்கள்,இந்த மனிதர் போரிட்டதைப் போல் இன்று நம்மில் வேறெவரும் தேவை தீரப் போரிடவில்லை' என்று (வியந்து) கூறினார்கள். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்,அவரோ

நரகவாசியாவார்' என்று கூறினார்கள். அப்போது கூட்டத்திலிருந்து ஒருவர்,நான் அவருடன் இருக்கிறேன் (அவர் என்ன சொல்லிவிட்டு அந்த மனிதருடன் புறப்பட்டார். அவர் நின்ற போதெல்லாம் இவரும் நின்றார். அவர் விரைந்தால் இவரும் விரைந்தார். (ஒரு கட்டத்தில்) அவர் கடுமையாக காயப்படுத்தப்பட்டார். அதனால் சீக்கிரமாக மரணித்து விட விரும்பி, தன் வாளின் (கைப்பிடியுள்ள) முனையை பூமியில் ஊன்றி, அதன் கூரான முனையைத் தன் இரண்டு மார்புகளுக்கு இடையே வைத்து, அந்த வாளின் மீது தன் உடலை அழுத்திக் கொண்டு தற்கொலை செய்தார். (இதை உடனிருந்து கண்காணித்துவிட்டு) அந்த மனிதர் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று,தாங்கள் இறைத்தூதர் தாம் என்பதற்கு நான் சாட்சியம் அளிக்கிறேன்' என்றார். நபி(ஸல்) அவர்கள்,என்ன விஷயம்? என்று கேட்டார்கள். அவர்,சற்று முன்பு தாங்கள் ஒருவரைப் பற்றிஅவர் நரகவாசி என்று கூறிநீர்கள் அல்லவா? அதைக் கண்டு மக்கள் வியப்படைந்தனர். நான் (மக்களிடம்),உங்களுக்காக (அவரின் நிலைகளை அறிந்து வர) நான் அவருடன் போய் வருகிறேன்' என்று கூறிவிட்டு, அவரைத் தேடிப் புறப்பட்டேன். அவர் கடுமையாக காயப்படுத்தப்பட்டார். உடனே, அவர் சீக்கிரமாக மரணமடைய விரும்பி, வாளின் பிடிமுனையை பூமியில் நட்டு, அதன் கூர்முனையைத் தன் இரண்டு மார்புகளுக்கிடையே வைத்து, அதன் மீது தன்னை அழுத்திக் கொண்டு தற்கொலை செய்தார்' என்று கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,மக்களின் வெளிப் பார்வைக்கு ஒருவர் சொர்க்கத்திற்குரிய (நற்) செயலைச் செய்து வருவார். ஆனால், அவர் (உண்மையில்) நரகவாசியாக இருப்பார். மக்களின் வெளிப்பார்வைக்கு ஒருவர் நரகத்திற்குரிய செயலைச் செய்து வருவார். ஆனால், (உண்மையில்) அவர் சொர்க்கவாசியாக இருப்பார்' என்றார்கள்.

## அம்பெய்யும் கலையைக் கற்றுக் கொள்ளும்படி தூண்டுதல்.

அல்லாஹ் கூறினான்:

மேலும், அவர்களை எதிர்ப்பதற்காக உங்களால் முடிந்த அளவு வலிமையையும் தயார் நிலையிலுள்ள குதிரைப் படையையும் திரட்டி வையுங்கள். அவற்றின் வாயிலாக, நீங்கள் அல்லாஹ்வின் பகைவர்களையும் உங்கள் பகைவர்களையும் பீதிக்குள்ளாக்கலாம். (திருக்குர்ஆன் 08:60)

ஹதீஸ் 2899. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

பனு அஸ்லம் குலத்தார் சிலர் அம்பெய்யும் போட்டியில் ஈடுபட்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் அவர்களைக் கடந்து சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,இஸ்மாயீலின் சந்ததிகளே! அம்பெய்யுங்கள். ஏனெனில், உங்கள் தந்தை (இஸ்மாயீல் (அலை) அவர்கள்) அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவராக இருந்தார்கள். நீங்கள் அம்பெய்யுங்கள். (போட்டியில்) நான் இன்ன குலத்தாருடன் இருக்கிறேன்' என்று கூறினார்கள். உடனே, இரண்டு பிரிவினரில் ஒரு சாரார் அம்பெய்வதை நிறுத்தினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உங்களுக்கென்ன ஆயிற்று? ஏன் அம்பெய்யாமலிருக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,தாங்கள் அவர்களுடன் (எதிர் தரப்பினருடன்) இருக்க, நாங்கள் எப்படி அம்பெய்வோம்? என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்,அப்படியானால் நான் உங்கள் அனைவருடனும் இருக்கிறேன். நீங்கள் அம்பெய்யுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2900. அபூ உஸைத்(ரலி) அறிவித்தார்.

பத்ருப் போரின்போது நாங்கள் குறைஷிகளுக்கெதிராகவும் குறைஷிகள் எங்களுக்கெதிராகவும் (போர் வி~கம் அமைத்து) அணிவகுத்து நின்றபோது நபி(ஸல்) அவர்கள், (குறைஷிகள்) உங்களை நெருங்கினால் நீங்கள் அம்புகளைப் பயன்படுத்துங்கள்' என்று கூறினார்கள்.

## ஈட்டி, வேல் போன்றவற்றால் (வீர விளையாட்டுக்கள்) விளையாடுவது.

ஹதீஸ் 2901. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) அபிசீனியர்கள் (எத்தியோப்பியர்கள்) நபி (ஸல்) அவர்கள் முன்னே தங்கள் ஈட்டிகளால் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது உமர் (ரலி) வந்து, (இதைப் பார்த்துக் கோபமடைந்து) குனிந்து சிறு கற்களை எடுத்து, அவற்றால் அவர்களை அடித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், உமரே! அவர்களைவிட்டு விடுங்கள்' என்று கூறினார்கள். மற்றோர் அறிவிப்பில், இந்த விளையாட்டு பள்ளிவாசல் வளாகத்தில் நடைபெற்றது என்று வந்துள்ளது.

## கேடயமும் மற்றவரின் கேடயத்தால் தன்னைத் தற்காத்துக் கொள்வதும்.

ஹதீஸ் 2902. அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்.

அபூ தல்ஹா (ரலி), நபி (ஸல்) அவர்களுடன் தம்மை ஒரே கேடயத்தைக் கொண்டே தற்காத்துக் கொள்வார்கள். அபூ தல்ஹா (ரலி) நன்கு அம்பெய்யக் கூடியவர்களாக இருந்தார்கள். அவர்கள் அம்பெய்தால் நபி (ஸல்) அவர்கள் தலையை உயர்த்தி, அவர்களின் அம்பின் இலக்கைப் பார்ப்பார்கள்.

ஹதீஸ் 2903. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போரின்போது நபி (ஸல்) அவர்களின் தலைக் கவசம் அவர்களின் தலையில் வைத்தே நொறுக்கப்பட்டு, முகம் முழுவதும் இரத்த மயமாம், அவர்களின் நடுப் பல் உடைக்கப்பட்டுவிட்டபோது, அலீ (ரலி) (காயத்தைக் கழுவுவதற்காக) கேடயத்தில் அவ்வப்போது தண்ணீர் கொண்டு வர, ஃபாத்திமா (ரலி) காயத்தைக் கழுவி வந்தார்கள். இரத்தம் தண்ணீரை மிஞ்சி அதிகமாக வழிவதைக் கண்ட ஃபாத்திமா (ரலி), ஒரு பாயை எடுத்து அதை எரித்து, (அதன் சாம்பலை) நபி (ஸல்) அவர்களின் காயத்தின் மேல் வைத்து அழுத்தி விட, இரத்தம் (வழிவது) நின்றுவிட்டது.

ஹதீஸ் 2904. உமர் (ரலி) அறிவித்தார்.

பனு நளீர் குலத்தாரின் செல்வங்கள் அல்லாஹ் தன் தூதருக்கு அளித்தவையாகும். அதைப் பெறுவதற்காக முஸ்லிம்கள் (தங்கள்) குதிரைகளையோ, ஒட்டகங்களையோ செலுத்திப் போரிட்டிதிருக்கவில்லை. எனவே, அவை அல்லாஹ்வின் தூதருக்கு மட்டுமே உரியவையாக இருந்தன. அவற்றிலிருந்து அவர்கள் தங்களின் ஆண்டுச் செலவுக்காகத் தம் வீட்டாருக்குக் கொடுத்து வந்தார்கள். பிறகு, மீதமானவற்றை இறைவழியில் (போரிடுவதற்கான) ஆயத்தப் பொருள்கள் வாங்க, ஆயுதங்களுக்காகவும் குதிரைகளுக்காகவும் செலவிட்டு வந்தார்கள்.

ஹதீஸ் 2905. அலீ (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களுக்குப் பிறகு வேறெவருக்கும் தம் தாய் தந்தையை அர்ப்பணிப்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் கேட்டதில்லை. ஸஅத் (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள், அம்பெய்யுங்கள். உங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும்' என்று கூறியதை கேட்டேன்.

## தோல் கேடயம்

ஹதீஸ் 2906. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

என் முன்னால் (அன்சாரிச்) சிறுமிகள் இருவர் புஆஸ் போரைப் பற்றிய பாடலைப் பாடிக் காட்டிக் கொண்டிருந்தபோது நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். படுக்கையில் சாய்ந்து தம் முகத்தை (வேறு திசையில்) திருப்பினார்கள். (பாட வேண்டாம் என்று அவர்களைத்

தடுக்கவில்லை.) அப்போது, (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) வந்து என்னை அதட்டி,அல்லாஹ்வின் தூதருக்கு முன்பாக ஷைத்தானின் இசைச் கருவியா? என்று கடிந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களை நோக்கி,அவர்களை (பாட) விடுங்கள்' என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்களின் கவனம் திசை திரும்பிவிட்டபோது, நான் அவ்விரு சிறுமிகளுக்கும் கண்ணால் சாடை செய்தேன். உடனே, அவர்கள் வெளியேறிவிட்டார்கள்.

ஹதீஸ் 2907. மேலும், ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

அன்று ஈத் (பெருநாள்) தினமாக இருந்தது. (ஆப்பிரிக்கக்) கருப்பர்கள் தோல் கேடயத்தாலும் ஈட்டிகளாலும் (வீர விளையாட்டு) விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் தூதரிடம் நான் (விளையாட்டைப் பார்க்க அனுமதி) கேட்டிருக்க வேண்டும் அல்லது அவர்களே என்னிடம்,நீ இவர்களுடைய (வீர விளைாயட்டைப்) பார்க்க விரும்புகிறாயா? என்று கேட்டிருக்க வேண்டும். நான்,ஆம்' என்று பதிலளித்தேன். உடனே, அவர்கள் என் கன்னம் அவர்களின் கன்னத்தின் மீது ஒட்டியபடி இருக்க, என்னைத் தமக்குப் பின்னால் நிற்க வைத்தார்கள். அர்ஃபிதாவின் மக்களே! (எத்தியோப்பியர்களே!) விளையாட்டைத் தொடருங்கள்' என்று கூறினார்கள். இறுதியில் நான் (விளையாட்டை நன்கு ரசித்து) சலிப்புற்றுவிட்டபோது,போதுமா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்க நான்,ஆம், போதும்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,அப்படியானால் நீ போ!என்று கூறினார்கள்.

## வாட்களைத் தொங்க விடும் தோல்வார்களும் கழுத்தில் வாளைத் தொங்க விடுவதும்.

ஹதீஸ் 2908. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், மக்களிலேயே அழகானவர்களாக, வீரமிக்கவர்களாக இருந்தார்கள். மதீனா நகர மக்கள் ஓரிரவு (எதிரிகள் படையெடுத்து வருவதாக வதந்தி பரவி) பீதிக்குள்ளானார்கள். எனவே, அவர்கள் சத்தம் வரும் திசையை நோக்கிப் புறப்பட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், அதற்குள் செய்தியைத் தீர விசாரித்துவிட்டு அபூ தல்ஹா(ரலி) அவர்களின் சேணம் பூட்டப்படாத குதிரை மீது சவாரி செய்தவர்களாக வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின் கழுத்தில் வாள் (மாட்டப்பட்டுத்) தொங்கிக் கொண்டிருந்தது. அவர்கள்,பயப்படாதீர்கள். பயப்படாதீர்கள்' என்று கூறிக் கொண்டிருந்தார்கள். பிறகு,நாம் இந்தக் குதிரையைத் தங்குதடையின்றி வேகமாக ஓடக் கூடியதாகக் கண்டோம்' என்று கூறினார்கள். அல்லது,இந்தக் குதிரை தங்குதடையின்றி வேகமாக ஓடக் கூடியது' என்று கூறினார்கள்.

## வாட்களை அலங்கரிப்பது.

ஹதீஸ் 2909. அபூ உமாமா(ரலி) அறிவித்தார்.

ஒரு சமுதாயத்தினர் வெற்றிகள் பலவற்றை ஈட்டியுள்ளனர். அவர்களின் வாட்கள் தங்கத்தாலோ வெள்ளியாலோ அலங்கரிக்கப்பட்டிருக்கவில்லை. அவர்களின் (வாட்களின்) ஆபரணங்களெல்லாம் (வாளுறையின் அடிமுனை அல்லது மேல் முனையில் சுற்றி வைக்கப்படும்) பச்சைத் தோல், ஈயம் மற்றும் இரும்பு ஆகியன தாம்.

## பயணத்தில் மதிய ஓய்வின்போது வாளை மரத்தில் தொங்க விடுவது.

ஹதீஸ் 2910. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நஜ்து நாட்டை நோக்கி ஒரு புனிதப் போருக்காகச் சென்றேன். 61 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (போரிலிருந்து) திரும்பியபோது அவர்களுடன் நானும் திரும்பினேன். அப்போது முள்மரங்கள் நிறைந்த பள்ளத்தாக்கில் நாங்கள் வந்து கொண்டிருந்தபோது மதிய ஓய்வு கொள்ளும் நேரம் வந்துவிட்டது. உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அங்கு தயங்கினார்கள். மக்கள் (ஓய்வெடுப்பதற்காக) மரங்களின் நிழல் தேடி (பல திசைகளிலும்) பிரிந்து போய்விட்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு (கருவேல) மரத்தின் கீழே தங்கினார்கள். தம் வாளை மரத்தில் மாட்டித் தொங்கவிட்டார்கள். நாங்கள் சற்று நேரம் உறங்கினோம். அதற்குள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். (நாங்கள் கண்விழித்துப் பார்த்தால்) அப்போது அவர்களுக்கு அருகே ஒரு கிராமவாசி நின்றிருந்தார். நபி(ஸல்) அவர்கள்,இவர் நான் தூங்கிக் கொண்டிருக்கும்போது (நான் மரத்தில் தொங்க விட்டிருந்த என்னுடைய) வாளை எனக்கெதிராக உருவினார். நான் கண்விழித்துப் பார்த்தபோது இவரின் கையில் உறையிலிருந்து உருவிய (என்னுடைய) வாள் இருந்தது. இவர்,என்னிடமிருந்து உன்னை யார் காப்பாற்றுவார்? என்று கேட்டார். நான்அல்லாஹ் என்று (மூன்று முறை) கூறினேன்' என்றார்கள். அந்த கிராமவாசி (அங்கே) அமர்ந்திருந்தும் கூட, அவரை நபியவர்கள் தண்டிக்கவில்லை.

## தலைக் கவசம் அணிவது.

ஹதீஸ் 2911. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட காயத்தைப் பற்றி உஹுதுப் போரின்போது என்னிடம் கேட்கப்பட்டது. நான்,நபி(ஸல்) அவர்களின் முகம் காயப்படுத்தப்பட்டது. அவர்களின் நடுப்பல் உடைக்கப்பட்டது. (அவர்களின்) தலைக்கவசம் அவர்களின் தலை மீதே (வைத்து) நொறுக்கப்பட்டது. ஃபாத்திமா (அலைஹிஸ்ஸலாம்) அவர்கள் (நபியவர்களின் மேனியிலிருந்து வழிந்த) இரத்தத்தைக் கழுவிக் கொண்டிருந்தார்கள். அலீ - ரலியல்லாஹு அன்ஹு - அவர்கள் அதைத் தடுத்து நிறுத்த முயற்சி செய்து வந்தார்கள். ஃபாத்திமா(ரலி), இரத்தம் இன்னும் அதிகமாம்க் கொண்டே போகிறது (நிற்கக் காணோம்) என்பதைப் பார்த்தபோது ஒரு பாயை எடுத்துச் சாம்பலாகும் வரை அதை, எரித்தார்கள். பிறகு, அதை காயத்தில் வைத்து அழுத்தினார்கள். உடனே, இரத்தம் (வெளியேறுவது) நின்றுவிட்டது' என்று கூறினேன்.

## (தலைவர்களின்) மரணத்தின்போது ஆயுதங்களை உடைப்பது (மற்றும் வாகனப் பிராணியை அறுப்பது) சரியல்ல.

ஹதீஸ் 2912. அம்ர் இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இறக்கும்போது தம் ஆயுதத்தையும், வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையையும், கைபரில் அவர்களுக்கிருந்த ஒருநிலத்தையும் தவிர வேறெதையும் அவர்கள்விட்டுச் செல்லவில்லை அந்த நிலத்தையும் அவர்கள் தருமமாக ஆக்கி விட்டிருந்தார்கள்.

## மதிய ஓய்வின்போது தலைவரைப் பிரிந்து மரத்தின் நிழலில் மக்கள் தங்குவது.

ஹதீஸ் 2913. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு புனிதப் போருக்குச் சென்றேன். (திரும்பி வரும் வேளையில்) முள்மரங்கள் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கில் நாங்கள் வந்து கொண்டிருந்தபோது மதிய ஓய்வு கொள்ளும் நேரம் வந்தது. மக்கள் அந்த மரங்களிடையே பிரிந்து சென்று அவற்றின் நிழல்களில்

(ஓய்வுக்காக) ஒதுங்கலானார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒரு மரத்திற்குக் கீழே தங்கினார்கள். அதில் தம் வாளைத் தொங்கவிட்டார்கள். பிறகு தூங்கிவிட்டார்கள். பிறகு கண்விழித்தபோது நபியவர்களுக்கே தெரியாமல் அங்கே ஒருவர் நின்றிருந்தார். (அவரைப் பற்றி) நபி(ஸல்) அவர்கள்,இந்த மனிதர் என் வாளை உருவிக் கொண்டு,உன்னை (என்னிடமிருந்து) பாதுகாப்பவர் யார்? என்று கேட்டார். நான்,அல்லாஹ் என்று பதிலளித்தேன். உடனே, வாளை உறையில் போட்டார். அவர் இதோ அமர்ந்திருக்கிறார்' என்றார்கள். அதற்கு பிறகு நபி(ஸல்) அவர்கள் அவரை தண்டிக்கவில்லை.

## ஈட்டியின் சிறப்பு பற்றி...

"(போரில் கிடைக்கும் பொருள்களிலிருந்து எனக்குக் கிடைக்க வேண்டிய) என்னுடைய செல்வம் என் ஈட்டியின் நிழலுக்குக் கீழே உள்ளது. என் கட்டளைக்கு மாறு செய்கிறவரின் மீது பணிந்திருப்பதும் ஜிஸ்யா - காப்புவரி செலுத்துவதும் கடமையாகும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2914. அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அவர்கள் மக்காவை நோக்கிச் செல்லும் சாலை ஒன்றில் இருந்தபோது இஹ்ராம் அணிந்திருந்த தம் தோழர்களைவிட்டுப் பின்தங்கிவிட்டார்கள். நான் மட்டும் இஹ்ராம் அணிந்திருக்கவில்லை. அப்போது காட்டுக் கழுதை ஒன்றை கண்டேன். குதிரை மீதேறி அமர்ந்து கொண்டு என் சகாக்களிடம் என்னுடைய சாட்டையை எடுத்துத் தரும்படி கேட்டேன். அவர்கள் எடுத்துத் தரமறுத்தார்கள். பிறகு நானே அதை எடுத்துக் கொண்டு கழுதையின் மீது பாய்ச்சி அதைக் கொன்று விட்டேன். நபித் தோழர்களில் சிலர் அந்தக் கழுதையின் இறைச்சியை உண்டார்கள். மற்றும் சிலர் உண்ண மறுத்துவிட்டார்கள். அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை அடைந்த பொழுது அதைப் பற்றி அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு அவர்கள்,அது அல்லாஹ் உங்களுக்கு அளித்த உணவாகும்' என்று பதிலளித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில்,அதன் இறைச்சியில் மீதம் ஏதும் உங்களிடம் உண்டா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். என்று காணப்படுகிறது.

## நபி(ஸல்) அவர்களின் கவச உடை மற்றும் போரின்போது அவர்கள் அணிந்த சட்டை.

'காலித், தம் கவச உடைகளை இறைவழியில் அர்ப்பணித்துவிட்டார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 2915. நபி(ஸல்) அவர்கள் (பத்ருப் போரின் போது) ஒரு கூடாரத்தில் இருந்தபடி,இறைவா! நான் உன் உறுதிமொழியையும் வாக்குறுதியையும் உன்னிடமிருந்து கோருகிறேன். இறைவா! உன்னுடைய நாட்டம் (முஸ்லிம்களாகிய) நாங்கள் தோற்றுப் போக வேண்டும் என்று) இருக்குமானால் இன்றைக்குப் பிறகு உன்னை வணங்குவது நின்று போய் விடும். (மக்கள் கற்பனையான பொய்க் கடவுள்களையே வணங்கிக் கொண்டிருப்பார்கள்)' என்று (முஸ்லிம்களுக்கு வெற்றியைத் தரும்படி) மன்றாடிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் கையைப் பிடித்துக் கொண்டு,போதும், இறைத்தூதர் அவர்களே! தங்கள் இறைவனிடம் தாங்கள் நிறையவே மன்றாடி விட்டீர்கள் என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் கவச உடை அணிந்திருந்தார்கள். பிறகுஇந்த (இறைமறுப்பாளர்) படை விரைவில் தோற்கடிக்கப்படும் மேலும், இவர்கள் புறமுதுகிட்டு ஓடுவார்கள். ஆயினும், இவர்களின் (கணக்கைத் தீர்த்திட) வாக்களிக்கப்பட்ட நேரம் மறுமை நாளாகும். மறுமை

நாளோ மிகக் கடுமையானதும், மிகக் கசப்பானதும் ஆகும்‘ என்னும் திருக்குர்ஆன் வசனத்தை (திருக்குர்ஆன் 54:45, 46) ஓதியபடி அங்கிருந்து நபியவர்கள் வெளியேறினார்கள்.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில், பத்ருப் போரின் போது‘ என்னும் வாசகம் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 2916. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

தம் போர்க் கவசம் முப்பது ஸாவுகள் வாற்கோதுமைக்குப் பகரமாக ஒரு யூதரிடம் அடகு வைக்கப்பட்டிருந்த நிலையில் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில், இரும்புக் கவசம்‘ என்றும் இன்னோர் அறிவிப்பில், இரும்புக் கவசம் ஒன்றை யூதரிடம் அடகு வைத்தார்கள்‘ என்றும் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 2917. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தருமம் செய்யாத) கஞ்சனுக்கும் தருமம் செய்பவனுக்கும் உவமை, இரும்பு அங்கிகள் அணிந்த இரண்டு மனிதர்கள் ஆவர். அவர்களின் கைகள் அவர்களின் கழுத்தெலும்புகளோடு ஒட்டியிருக்கும். (அந்த அளவிற்கு அவை இறுக்கமானவை.) தருமம் செய்பவர் தருமம் செய்ய நாடும்போது (அவர் அணிந்திருக்கும் அந்த) அங்கி அவருக்கு விசாலமாம் விடுகிறது. எந்த அளவிற்கென்றால் அவர் (நடந்து செல்லும்போது அது நீண்டு) அவரின் பாதச் சுவட்டை அது அழித்து விடுகிறது. (அதாவது, தருமம் அவரின் குற்றங்குறைகளை மறைத்து விடுகிறது.) கஞ்சன் தருமம் செய்ய நாடும் போதெல்லாம் (அவனுடைய இரும்பு அங்கியின்) ஒவ்வொரு வளையமும் அடுத்த வளையத்தை நெருக்குகிறது அவனை (தன் பாரத்தால்) அழுத்துகிறது. அவனுடைய இரண்டு கைகளும் கழுத்தெலும்புகளுடன் ஒட்டிக் கொள்கின்றன.

(இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கும்) அபூ ஹுரைரா (ரலி) கூறினார்.

(இதை அறிவித்த போது) நபி (ஸல்) அவர்கள், கஞ்சன் அந்த அங்கியை விசாலமாக்க முயற்சி செய்வான். ஆனால், அது விசாலமாகாது‘ என்று (பலமுறை) சொன்னார்கள்.

## பயணத்திலும் போரிலும் அங்கி அணிதல்.

ஹதீஸ் 2918. முகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (மல ஜலம் கழிக்கும்) தேவையை நிறைவேற்றிக் கொள்ளச் சென்றார்கள். பிறகு, திரும்பி வந்தபோது, நான் தண்ணீர் எடுத்துக் கொண்டு சென்று, (வரும் வழியில்) அவர்களைச் சந்தித்தேன். அப்போது அவர்கள் ஷாம் நாட்டு அங்கியொன்றை அணிந்திருந்தார்கள். அவர்கள் (நான் கொண்டு சென்ற தண்ணீரில்) வாய் கொப்பளித்து, மூக்கில் நீர் செலுத்தினார்கள். தம் முகத்தைக் கழுவினார்கள். அங்கியின் கைப்பகுதிகள் வழியாக தம் கைகளை வெளியே எடுக்கலானார்கள். அப்பகுதிகள் மிகவும் இறுக்கமாக இருந்தன. எனவே, கீழ்ப் பகுதி வழியாக இரண்டு கைகளையும் வெளியே எடுத்தார்கள். பிறகு அவற்றைக் கழுவினார்கள். தம் தலையைத் துடைத்தார்கள் தம் காலுறைகளின் மீதும் துடைத்தார்கள்.

## போரின்போது பட்டாடை அணிவது.

ஹதீஸ் 2919. அனஸ் (ரலி) அறிவித்தார்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), ஸுபைர்(ரலி) ஆகியோருக்கிருந்த சிரங்கு நோயின் காரணத்தால் அவர்களுக்கு (மட்டும்) பட்டாடை அணிந்து கொள்ள நபி(ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்தார்கள்.

ஹதீஸ் 2920. அனஸ்(ரலி) அறிவித்தார்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களும் ஸுபைர்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடம் (தம் உடலில் சிரங்குண்டாக்கிய) ஒட்டுண்ணிகளைக் குறித்து முறையிட்டார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் அவ்விருவருக்கும் பட்டாடை அணியச் சலுகை கொடுத்தார்கள். எனவே, ஒரு புனிதப் போரில் அவ்விருவரும் பட்டாடை அணிந்திருப்பதை கண்டேன்.

ஹதீஸ் 2921. அனஸ்(ரலி) அறிவித்தார்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களுக்கும் ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களுக்கும் பட்டாடை அணிய நபி(ஸல்) அவர்கள் சலுகை கொடுத்தார்கள்.

ஹதீஸ் 2922. அனஸ்(ரலி) அறிவித்தார்.

அவ்விருவருக்கும் இருந்த சிரங்கின் காரணமாக, அவர்களுக்கு (பட்டாடை அணிய) நபி(ஸல்) அவர்கள் சலுகை கொடுத்தார்கள். அல்லது சலுகை கொடுக்கப்பட்டது.

## கத்தியைப் பயன்படுத்துதல்.

ஹதீஸ் 2923. அம்ர் இப்னு உமய்யா(ரலி) அறிவித்தார்.

(ஆட்டின்) ஒரு தொடை இறைச்சியை (கத்தியால்) துண்டு போட்டு உண்பவர்களாக நபி(ஸல்) அவர்களை பார்த்தேன். பிறகு, தொழுகைக்கு அழைக்கப்பட்டவுன் அவர்கள் தொழுதார்கள். (ஆனால், புதிதாக) உளூச் செய்யவில்லை.

மற்றோர் அறிவிப்பில்,தொழுகைக்கு அழைக்கப்பட்டவுடன் நபி(ஸல்) அவர்கள் கத்தியைக் கீழே போட்டுவிட்டார்கள்' என்று அதிகப்படியாக வந்துள்ளது.

## ரோமர்களுடன் போரிடுதல் பற்றி...

ஹதீஸ் 2924. உமைர் இப்னு அஸ்வத் அல் அன்ஸீ(ரஹ்) அறிவித்தார்.

உபாதா இப்னு ஸாமித்(ரலி)ஹிம்ஸ் கடற்கரையில் தம் கட்டிடம் ஒன்றில் (தம் மனைவி) உம்மு ஹராம்(ரலி) அவர்களுடன் தங்கியிருந்தபோது அவர்களிடம் நான் சென்றேன். அப்போது உம்மு ஹராம்(ரலி) எம்மிடம் அறிவித்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள்,என் சமுதாயத்தினரில் முதலில் கடலில் (சென்று) புனிதப் போர் புரியும் படையினர் (சொர்க்கம் புகுவதற்கான தகுதியை) ஏற்படுத்தினார்கள்' என்று கூறினார்கள். இதைச் செவியுற்ற நான்,இறைத்தூதர் அவர்களே! நான் அவர்களில் ஒருத்தியா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் அவர்களில் ஒருவர் தாம்' என்று பதிலளித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள்,என் சமுதாயத்தினரில் சீசருடைய நகரத்தின் (பழைய கான்ஸ்டான்டி நோபிள் அல்லது தற்போதைய இஸ்தான்பூலின்) மீது படையெடுக்கும் முதலாவது படையினர் மன்னிக்கப்பட்டவர்கள் ஆவர்' என்று கூறினார்கள். அவர்களில் நானும் ஒருத்தியா? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,இல்லை' என்று பதிலளித்தார்கள்.

## யூதர்களுடன் போரிடுதல்.

ஹதீஸ் 2925. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முஸ்லிம்களாகிய) நீங்கள் யூதர்களுடன் போரிடுவீர்கள். எந்த அளவுக்கென்றால் அவர்களில் ஒருவர் கல்லின் பின்னால் ஒளிந்து கொள்ள, அந்தக் கல்,அல்லாஹ்வின் அடியானே! இதோ, என் பின்னால் ஒரு யூதன் இருக்கிறான். அவனைக் கொன்று விடு' என்று கூறும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2926. நபி(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

நீங்கள் யூதர்களுடன் போரிடாத வரை இறுதி நாள் வராது. எந்த அளவிற்கென்றால் கல்லின் பின்னால் யூதன் ஒருவன் (ஒளிந்து கொண்டு) இருப்பான். அந்தக் கல்,முஸ்லிமே! இதோ, என் பின்னே ஒரு யூதன் (ஒளிந்து கொண்டு) இருக்கிறான். அவனை நீ கொன்று விடு' என்று கூறும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## துருக்கியர்களுடன் போர் புரிதல்.

ஹதீஸ் 2927. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

முடியாலான செருப்புகளை அணிகிற ஒரு சமுதாயத்தினருடன் நீங்கள் போரிடுவது, இறுதி நாளின் அடையாளங்களில் ஒன்றாகும். தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்று அகலமான முகங்களையுடைய ஒரு சமுதாயத்தினருடன் நீங்கள் போரிடுதல் இறுதி நாளின் அடையாளங்களில் ஒன்றாகும்.

என அம்ர் இப்னு தக்லிப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2928. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சிறிய கண்களும் சிவந்த முகங்களும் குட்டையான (சப்பை) மூக்குகளும் கொண்ட துருக்கியர்களுடன் நீங்கள் போர் புரியாத வரை இறுதிநாள் ஏற்படாது. அவர்களின் முகங்கள் தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்று இருக்கும். முடியாலான செருப்புகளை அணிந்திருக்கும் ஒரு சமுதாயத்தினருடன் நீங்கள் போர் புரியாதவரை இறுதி நாள் ஏற்படாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## முடியாலான செருப்பை அணிபவர்களுடன் போரிடுதல்.

ஹதீஸ் 2929. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

முடியாலான செருப்புகளை அணியும் ஒரு கூட்டத்தாருடன் நீங்கள் போர் புரியாத வரை இறுதி நாள் ஏற்படாது. தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்ற முகங்களைக் கொண்ட ஒரு சமுதாயத்தினருடன் நீங்கள் போரிடாத வரை இறுதி நாள் ஏற்படாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்தே மற்றொரு வழியாக அறிவிக்கப்படுகிற ஓர் அறிவிப்பில், ('தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்ற முகங்களைக் கொண்ட ஒரு சமுதாயத்தினருடன் என்னும் வாசகத்திற்கு முன்னால்)..சிறிய கண்களும் சப்பை மூக்குகளும் கொண்ட' என்னும் சொற்கள் அதிகப்படியாக இடம் பெற்றுள்ளன.

## தோல்வியின்போது தன் தோழர்களை அணிவகுத்து நிற்கச் செய்து, தன் வாகனத்திலிருந்து இறங்கி அல்லாஹ்விடம் உதவி கோருவது.

ஹதீஸ் 2930. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்.

பராஉ(ரலி) அவர்களிடம் ஒருவர்,அபூ உமாராவே! நீங்கள் ஹுனைன் போரின்போது பின்வாங்கி ஓடினீர்களா? என்று கேட்க, அதற்கு அவர்கள்,இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புறமுதுகிட்டுச் செல்லவில்லை. ஆயினும், அவர்கள்,இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புறமுதுகிட்டுச் செல்லவில்லை. ஆயினும், அவர்களின் தோழர்களில் வாலிபர்களும் ஆயுதபலமில்லாதவர்களும் களைத்துப் போய் நிராயுதபாணிகளாக வெளியேறினர். அவர்கள் ஹவாஸின் மற்றும் பனு நஸ்ர் சமுதாயத்தாரின் வில் வீரர்களைக் கடந்து சென்றனர். அவர்களின் எந்த அம்பும் இலக்கு தவறி விழுவதில்லை. அவர்கள் குறி தவறாமல் அம்புகளை எய்தார்கள். எனவே, முஸ்லிம்கள் மீண்டும் நபி(ஸல்) அவர்களை நோக்கிச் சென்றார்கள். அப்போது ஒரு வெள்ளை நிறக் கோவேறுக் கழுதையை நபி(ஸல்) அவர்களின் பெரிய தந்தையின் மகன் அபூ சுஃப்யான் இப்னு ஹாரிஸ் இப்னி அப்தில் முத்தலிப்(ரலி) ஓட்டிக் கொண்டு வர, அதன் மீது நபி(ஸல்) அவர்கள் அமர்ந்து கொண்டிருந்தார்கள். (செய்தியறிந்ததும் அதைவிட்டு) இறங்கி அல்லாஹ்விடம் உதவி கோரிப் பிரார்த்தித்தார்கள். பிறகு,நான் இறைத்தூதர் தான். இது பொய் அல்ல. நான் அப்துல் முத்தலிபின் (மகனின்) மகன் ஆவேன்' என்று கூறினார்கள். பிறகு தம் தோழர்களை அணிவகுக்கச் செய்தார்கள்.

## இணைவைப்போருக்குத் தோல்வியும் நிலநடுக்கமும் ஏற்படும்படி அவர்களுக்கெதிராகப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 2931. அலீ(ரலி) அறிவித்தார்.

அஹ்ஸாப் (அரபுக் குலங்கள் அனைத்தும் ஒன்றுதிரண்டு தாக்க வந்த அகழ்ப்) போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அல்லாஹ் (எதிரிகளுடைய) வீடுகளையும் புதை குழிகளையும் நெருப்பால் நிரப்புவனாக! அவர்கள் சூரியன் மறையும் நேரம் வரை நடுத் தொழுகை(யான அஸர் தொழுகை)யிலிருந்து நம்முடைய கவனத்தைத் திருப்பிவிட்டார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2932. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஸுப்ஹுத் தொழுகையில்) குனூத் ஓதும்போது,இறைவா! ஸலமா இப்னு ஹாஷிமைக் காப்பாற்றுவாயாக! வலீத் இப்னு வலீதைக் காப்பாற்றுவாயாக! இறைவா! அய்யாஷ் இப்னு அபீ ரபீஆவைக் காப்பாற்றுவாயாக! இறைவா! இறை நம்பிக்கையாளர்களில் ஒடுக்கப்பட்டவர்களைக் காப்பாற்றுவாயாக! இறைவா! உன் (தண்டனைப்) பிடிளை முளர் குலத்தாரின் மீது (இறுக்கிக்) கடுமைப்படுத்துவாயாக!" ~சுஃப்(அலை) அவர்களின் காலத்து (எம்ப்திய மக்களுக்கு அளித்த) கொடிய பஞ்சம் நிறைந்த (ஏழு) ஆண்டுகளைப் போல் அவர்களுக்கும் சில ஆண்டுகளை (தண்டனையாக) அளிப்பாயாக! என்று அவர்களுக்குக் கேடு நேரப் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 2933. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அகழ்ப்போரின்போது இணை வைப்பவர்களுக்கு எதிராகப் பிரார்த்தனை புரிந்தார்கள். அப்போது,இறைவா! திருக்குர்ஆனை அருள்பவனே! விரைவாகக் கணக்கு வாங்குபவனே! இறைவா! (சத்திய மார்க்கத்தை வேரறுக்கப் பல குலங்களிலிருந்தும் ஒன்று திரண்டு படையெடுத்து வந்துள்ள இந்தக்) கூட்டத்தார்களைத் தோற்கடிப்பாயாக! இறைவா! இவர்களைத் தோல்வியுறச் செய்து நடுக்கத்திற்குள்ளாக்குவாயாக! என்று அவர்களுக்குக் கேடு நேரப் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 2934. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் கஅபாவின் நிழலில் தொழுது கொண்டிருந்தார்கள். அப்போது அபூ ஜஹ்லும் குறைஷிகளில் சிலரும் (ஒட்டகத்தின் கருப்பைச் சவ்வுகளைக் கொண்டு வரும்படி) உத்தரவிட்டார்கள். அப்போது மக்காவின் ஒரு பகுதியில் ஒட்டகம் ஒன்று அறுக்கப்பட்டிருந்தது. (அதை எடுத்து வர அவர்கள்) ஆளனுப்பினார்கள். பின்னர், அதன் கருப்பைச் சவ்வை எடுத்து நபி(ஸல்) அவர்களின் (தோள்) மீது போட்டார்கள். அப்போது ஃபாத்திமா(ரலி) வந்து, அதை நபி(ஸல்) அவர்களின் மீதிருந்து அப்புறப்படுத்தினார்கள். அப்போது, நபி(ஸல்) அவர்கள், இறைவா! குறைஷிகளை நீ கவனித்துக் கொள். இறைவா! குறைஷிகளை நீ கவனித்துக் கொள். ஹாஷிமின் மகன் அபூ ஜஹ்லையும் உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா, உபை இப்னு கலஃப் மற்றும் உக்பா இப்னு அபீ முஐத் ஆகியோரையும் (நீ தண்டித்து விடு)' என்று அவர்களுக்குக் கேடு நேரப் பிரார்த்தித்தார்கள். இவர்களை நான் (பின்னாளில்) பத்ரின் ஒரு பாழுங் கிணற்றில் கொல்லப்பட்டவர்களாக (எறியப்பட்டிருக்க)க் கண்டேன்.

அறிவிப்பாளர் அபூ இஸ்ஹாக்(ரஹ்), நபி(ஸல்) அவர்கள் கேடு நேரப் பிரார்த்தித்த ஏழாமவனின் பெயரை நான் மறந்து விட்டேன்' என்று கூறுகிறார்கள்.

அபூ இஸ்ஹாக்(ரஹ்) அவர்களின் மற்றோர் அறிவிப்பில், அறிவிப்பாளர்களில் ஒருவரான ஷுஅபா(ரஹ்), உமய்யா அல்லது உபை என்று (ஐந்தாமவனின் பெயரை) சந்தேகத்துடன் குறிப்பிடுகிறார். ஆயினும், (அந்த ஐந்தாமவனின் பெயர்) உமய்யா என்பதே சரியானதாகும்.

ஹதீஸ் 2935. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

யூதர்கள் (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் வந்து, (முகமன் கூறும் சாக்கில்) அஸ்ஸாமு அலைக்க' ("உங்களின் மீது மரணம் உண்டாகட்டும்") என்று கூறினார்கள். நான் அந்த யூதர்களைச் சபித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், உனக்கென்ன நேர்ந்தது? (ஏன் அவர்களைச் சபிக்கிறாய்?)' என்று கேட்டார்கள். நான், அவர்கள் கூறியதைத் தாங்கள் செவியுறவில்லையா? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், நான் (அவர்களுக்கு பதிலளித்த போது) அவர்களிடம், வ அலைக்கும் - (உங்களின் மீதும் அவ்வாறே உண்டாகட்டும்) என்று கூறியதை நீ கேட்கவில்லையா? என்றார்கள்.

## ஒரு முஸ்லிம், வேதக்காரர்களை இஸ்லாத்திற்கு அழைப்பதோ, திருக்குர்ஆனை அவர்களுக்குக் கற்றுத் தருவதோ செல்லுமா?

ஹதீஸ் 2936. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ரோமாபுரியின் சக்கரவர்த்தி) சீசருக்குக் கடிதம் எழுதினார்கள். (அதில்) நீர் (இஸ்லாமிய அழைப்பைப்) புறக்கணிப்பீராயின், உம் (பாமரக்) குடிமக்கள் (இஸ்லாத்தை ஏற்காமல் போவதின்) பாவம் உம்மைச் சேரும்' என்று கூறியிருந்தார்கள்.

## இணைவைப்பவர்களின் உள்ளம் ஈர்க்கப்படுவதற்காக அவர்களுக்கு நேர்வழி கிடைக்கப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 2937. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

துஃபைல் இப்னு அம்ர் அத்தவ்ஸீ(ரலி) அவர்களும் அவர்களின் தோழர்களும் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! (எங்கள்) தவ்ஸ் குலத்தார் மாறுசெய்து (இஸ்லாத்தை ஏற்க மறுத்து) விட்டார்கள். அவர்களுக்குக் தீங்கு நேரப் பிரார்த்தியுங்கள்' என்று கேட்டுக் கொண்டனர். அப்போது, தவ்ஸ் குலத்தார் அழியட்டும்' என்று கூறப்பட்டது. நபி(ஸல்)

அவர்கள், இறைவா! தவ்ஸ் குலத்தாரை நேர்வழியில் செலுத்துவாயாக! அவர்களை (இஸ்லாத்திற்குக்) கொண்டு வருவாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

## யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களுக்கு அழைப்புக் கொடுப்பதும், அவர்களுக்கெதிராக எந்த அடிப்படையில் போர் புரியப்படும்? என்பதும்.

நபி(ஸல்) அவர்கள், பாரசீக மன்னன் குஸ்ரூ (என்ற கிஸ்ரா)வுக்கும் ரோமச் சக்கரவர்த்தி சீசருக்கும் கடிதம் எழுதியதும், போருக்கு முன் இஸ்லாமிய அழைப்புக் கொடுப்பதும்.

ஹதீஸ் 2938. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பைஸாந்திய) ரோமர்களுக்கு (அழைப்புக்) கடிதம் எழுத விரும்பிய பொழுது, அவர்கள் (அரசின்) முத்திரையிடப்பட்ட கடிதத்தைத் தவிர வேறெதையும் படிக்கமாட்டார்கள் என்று கூறப்பட்டது. எனவே, நபி(ஸல்) அவர்கள் வெள்ளியாலான மோதிரம் (இலச்சினை) ஒன்றைத் தயாரித்தார்கள். (இப்போதும்) நான் அவர்களின் கரத்தில் அதன் வெண்மையைப் பார்ப்பது போன்றுள்ளது... அதில், முஹம்மதுர் ரசூலுல்லாஹ்'இறைத்தூதர் முஹம்மது என்று நபி(ஸல்) அவர்கள் பொறித்திருந்தார்கள்.

ஹதீஸ் 2939. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் கடிதத்தை பாரசீக மன்னர் குஸ்ரூவுக்கு (அப்துல்லாஹ் இப்னு ஹுதஃபா அஸ் ஸஹ்மீ(ரலி) வாயிலாக) அனுப்பி வைத்தார்கள். அதை பஹ்ரைனுடைய ஆட்சியாளரிடம் கொடுத்து, அதை அவர் குஸ்ரூவிடம் கொடுக்க வேண்டும் என்று சொல்லும் படி (அப்துல்லாஹ் இப்னு ஹுதாஃபா(ரலி) அவர்களுக்கு) உத்தரவிட்டார்கள். (அவ்வாறே அவர் அதைக் கொண்டு சென்று ஒப்படைக்க,) அதைப் பாரசீக மன்னன் குஸ்ரூ படித்தபோது, (கோபப்பட்டு) அதைக் கிழித்துவிட்டான்.

(எனவே,)அவர்கள் துண்டு துண்டாக்கப்பட வேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் அவர்களுக்குக் கேடு நேரப் பிரார்த்தித்தார்கள் என்று ஸயீத் இப்னு முஹய்யப்(ரஹ்) கூறினார்கள் என எண்ணுகிறேன்' என்று அறிவிப்பாளர் ஒருவர் கூறுகிறார்.

## இஸ்லாத்தையும் நபித்துவத்தையும் ஏற்கும்படியும், அல்லாஹ்வை விடுத்து சிலர், சிலரை தெய்வங்களாக எடுத்துக் கொள்ளாமல் இருக்கும்படியும் மக்களை நபி(ஸல்) அவர்கள் அழைத்தது.

அல்லாஹ் கூறினான்:

ஒருவருக்கு அல்லாஹ் வேதத்தையும் தூதுத்துவத்தையும் ஞானத்தையும் அளித்திருக்க, அவற்றைப் பெற்ற பின்பு,நீங்கள் அல்லாஹ்வை விடுத்து என்னையே வணங்குவோராம் விடுங்கள்' என்று மக்களிடம் கூற அவருக்கு அனுமதியில்லை. மாறாக,நீங்கள் வேதத்தை ஓதிக் கொண்டும் அதைக் கற்றுக் கொடுத்துக் கொண்டும் இருந்த காரணத்தால் இறைவனையே சார்ந்து வாழ்வோராக ஆம்விடுங்கள்' என்றே அவர் கூறுவார். (திருக்குர்ஆன் 03:79)

ஹதீஸ் 2940. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ரோம சக்கரவர்த்தி சீசருக்கு இஸ்லாத்திற்கு வரும்படி அழைப்புக் கொடுத்து கடிதம் எழுதினார்கள். திஹ்யா அல் கல்பீ என்னும் நபித் தோழரிடம் தம் கடிதத்தைக் கொடுத்தனுப்பினார்கள். ரோம சக்கரவர்த்தி சீசரிடம் கொடுப்பதற்காக புஸ்ராவின் அரசனிடம் அதைக் கொடுத்து விடும்படி அத் தோழருக்கு நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். பாரசீகப் படைகளின் மீது அல்லாஹ் சீசருக்கு வெற்றியை அளித்தபோது,

அவர்ஹிம்ஸ் பகுதியிலிருந்து ஈலியாவை (புனித நகரமான ஜெரூசலத்தை) நோக்கி, அல்லாஹ் அளித்த வெற்றிப் பரிசுக்கான நன்றியைச் செலுத்தும் வகையில் சென்றார். சீசரிடம் அல்லாஹ்வின் தூதருடைய கடிதம் வந்த நேரத்தில் அவர் அதைப் படித்தபோது, எனக்காக இங்கு இந்த மனிதரின் சமுதாயத்தைச் சேர்ந்த எவரையேனும் தேடிக் (கண்டு பிடித்துக்) கொண்டு வாருங்கள். அல்லாஹ்வின் தூதரைப் பற்றி அவர்களிடம் நான் கேட்பேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2941. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அபூ சுஃப்யான் இப்னு ஹர்ப்(ரலி) எனக்குப் பின்வருமாறு அறிவித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் குறைஷிக் குல இறைமறுப்பாளர்களுக்குமிடையிலான (சமாதான ஒப்பந்தம் அமலில் இருந்த) கால கட்டத்தில் வியாபாரிகளாக வந்த குறைஷிகளில் சிலரிடையே நானும் ஷாம் நாட்டில் இருந்தேன். சீசருடைய தூதர் எங்களை ஷாமின் ஒரு பகுதியில் கண்டார். என்னையும் என் தோழர்களையும் அழைத்துச் சென்றார். நாங்கள் (அனைவரும்) ஈலியாவை அடைந்தோம். நாங்கள் சீசரிடம் கொண்டு செல்லப்பட்டோம். அவர் தன் அரசவையில் கிரீடம் அணிந்தவராய் அமர்ந்திருந்தார். அப்போது அவரைச் சுற்றிலும் ரோம நாட்டு ஆட்சியாளர்கள் பலரும் அமர்ந்திருந்தனர். தன் மொழி பெயர்ப்பாளரிடம் சீசர், தன்னை இறைத்தூதர் என்று வலியுறுத்திக் கொண்டிருக்கும் இந்த மனிதருக்கு இவர்களில் நெருங்கிய உறவினர் யார் என்று நீ அவர்களிடம் கேள்' என்று கூறினார். (அவ்வாறே அவர் கேட்டபோது,) நான், இவர்களில் அவருக்கு நானே நெருங்கிய உறவினன்' என்று சொன்னேன். உடனே அவர், உமக்கும் அவருக்குமிடையில் என்ன உறவு? என்று கேட்டார். நான், அவர் என் தந்தையின் சகோதரர் மகன்' என்று கூறினேன். அந்த நேரத்தில் (எங்கள்) பயணக் குழுவில் (நபியவர்களின் முப்பாட்டனார்) அப்து மனாஃபின் மக்களில் என்னைத் தவிர வேறெவரும் இருக்கவில்லை. உடனே சீசர், அவரை என்னருகில் கொண்டு வாருங்கள்' என்று கூறிவிட்டு, என் தோழர்களை என் முதுகுக்குப் பின்னே நிற்க வைக்கும்படி உத்தரவிட்டார். அவர்கள் அவ்வாறே என் முதுகுக்குப் பின்னே நிற்க வைக்கப்பட்டார்கள். பிறகு சீசர், தன் மொழிபெயர்ப்பாளரிடம், தன்னை நபி (இறைத் தூதர்) என்று வலியுறுத்திக் கூறும் இந்த மனிதரைக் குறித்து இவரிடம் நான் (விபரங்கள்) கேட்கப் போகிறேன்' என்றும், இவர் பொய் சொன்னால் அதைப் பொய் என்று (நமக்குத்) தெரிவிக்கும்படி இவருடைய சகாக்களிடம் சொல்' என்றும் சொன்னார்... அல்லாஹ்வின் மீதாணையாக! என் தோழர்கள் என்னைக் குறித்து நான் பொய் சொன்னதாகத் தெரிவித்து விடுவார்களே என்னும் வெட்கம் மட்டும் எனக்கில்லாதிருந்திருந்தால் நான் (முஹம்மத்(ஸல்) அவர்களைப் பற்றி சீசர் என்னிடம் கேட்டபோது, அவரிடம் (அவர்களைக் குறித்து உண்மைக்கு மாறான தகவல்கள் தந்து) பொய் சொல்லியிருப்பேன். ஆனால், என்னைப் பற்றி நான் பொய் கூறினார்கள் என அவர்கள் தெரிவித்து விடுவார்களே என்று நான் வெட்கப்பட்டேன். எனவே, தான் (முஹம்மத்(ஸல்) அவர்களைப் பற்றி) உண்மையைச் சொன்னேன்... பிறகு சீசர், தன் மொழிபெயர்ப்பாளரிடம், அந்த மனிதரின் குலம் எப்படிப்பட்டது என்று இவரிடம் கேள்' என்றார். நான், அவர் எங்களிடையே உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவராவார்' என்று கூறினேன். அதற்கு அவர், உங்களில் எவரேனும் இதற்கு முன் (நான் நபி- இறைத்தூதர் என்னும்) இந்த வாதத்தை முன்வைத்திருக்கிறாரா? என்று கேட்டார். நான், இல்லை' என்று பதிலளித்தேன். சீசர், அவரின் முன்னோர்களில் அரசர் எவராவது (வாழ்ந்து) சென்றிருக்கிறாரா? என்று கேட்டார். நான், இல்லை' என்றேன். அவரை மக்களில் மேட்டுக் குடியினர் பின்பற்றுகின்றனரா? அல்லது அவர்களில் பலவீனர்கள் (ஒடுக்கப்பட்டவர்கள்) பின்பற்றுகின்றனரா? என்று கேட்டார். நான், அவர்களில் பலவீனர்கள் தான் அவரைப் பின்பற்றுகின்றனர்' என்று கூறினேன்.

அவர், அவரைப் பின்பற்றுவோர் அதிகரித்துக் கொண்டே செல்கிறார்களா? அல்லது குறைந்து கொண்டே போகிறார்களா? என்று கேட்டார். நான், அவர்கள் அதிகரித்துக் கொண்டே செல்கின்றனர்' என்று கூறினேன். பிறகு (அவரின் மார்க்கத்தை ஏற்ற பிறகு) தன் புதிய மார்க்கத்தின் மீது அதிருப்தியடைந்து எவரேனும் மதம் மாறிச் செல்வதுண்டா? என்று கேட்டார். நான், இல்லை' என்றேன். அவர், அந்த மனிதர் வாக்கு மீறுகிறாரா? என்று கேட்க, நான், இல்லை. ஆனால், நாங்கள் இப்போது அவருடன் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு சமாதான ஒப்பந்தம் செய்துள்ளோம். அவர் வாக்கு மீறி விடுவாரென்று நாங்கள் அஞ்சுகிறோம்' என்று பதிலளித்தேன்... இதைத் தவிர என்னை என் தோழர்கள் காட்டிக் கொடுத்து விடுவார்களே என்று அஞ்சாமல் அவரைக் குறைசொல்லக் கூடிய வார்த்தை வேறு எதுவும் எனக்குக் கிடைக்கவில்லை... பிறகு அவர், நீங்கள் அவருடனும் அவர் உங்களுடனும் போர் புரிந்ததுண்டா? என்று கேட்டார். நான், உண்டு' என்றேன். அதற்கு அவர், உங்களுக்கிடையிலான போர் (களின் முடிவு) கள் எவ்வாறிருந்தன? என்று கேட்டார். நான், அவை (அவற்றின் வெற்றியும் தோல்வியும்) எங்களிடையே சுழல்முறையில் மாறிமாறி வருகின்றன. ஒருமுறை அவர் எங்களை வெற்றி கொள்வார் மறுமுறை அவரை நாங்கள் வெற்றி கொள்வோம்' என்று பதிலளித்தேன். சீசர், என்ன செய்யும்படி அவர் உங்களுக்குக் கட்டளையிடுகிறார்? என்று கேட்டார். நான், அல்லாஹ்வை மட்டுமே நாங்கள் வணங்கி வர வேண்டுமென்றும் அவனுக்கு எதையும் இணை கற்பிக்கக் கூடாது என்றும் அவர் எங்களுக்குக் கட்டளையிடுகிறார். எங்கள் முன்னோர்கள் வணங்கி வந்த தெய்வங்களை நாங்கள் வணங்கக் கூடாது என்று எங்களைத் தடுக்கிறார். தொழுகையை நிறைவேற்றும்படியும் தான தருமம் செய்யும்படியும் கற்பைப் பேணி வரும்படியும் ஒப்பந்தத்தை நிறைவேற்றும் படியும் நம்பி ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொருளைப் பாதுகாப்பாகத் திருப்பித் தரும்படியும்83. எங்களுக்குக் கட்டளையிடுகிறார்' என்று கூறினேன். நான் இதை சீசரிடம் சொன்னபோது அவர் தன் மொழி பெயர்ப்பாளரிடம் கூறினார் அவரிடம் கூறுங்கள்: நான் உம்மிடம், உங்களிடையே அவரின் குலம் எப்படிப்பட்டது? என்று கேட்டேன். அவர் உயர்குலத்தைச் சேர்ந்தவர்' என்று நீர் பதிலளித்தீர். இவ்வாறே, இறைத்தூதர்கள் தம் சமுதாயத்தின் நற்குடியில் தான் அனுப்பப்படுவர். நான், இவருக்கு முன்னர் உங்களில் எவராவது இந்த வாதத்தை முன் வைத்ததுண்டா? என்று கேட்டேன். இல்லை' என்று நீர் பதிலளித்தீர். இவருக்கு முன்னரும் எவரேனும் இந்த வாதத்தை முன் வைத்திருந்ததாக நீர் சொல்லியிருந்தால், தமக்கு முன்னர் (சிலரால்) முன் வைக்கப்பட்ட ஒரு வாதத்தையே பின்பற்றிச் சொல்கிற ஒருவர் இவர்' என்று நான் சொல்லியிருப்பேன். அவர் இந்த வாதத்தை முன் வைப்பதற்கு முன்பு, அவர் பொய் சொன்னதாக நீங்கள் குற்றம் சாட்டியதுண்டா? என்று நான் உம்மிடம் கேட்டேன். அதற்கு நீர், இல்லை' என்று பதிலளித்தீர். (அதிலிருந்து) மக்களிடம் பொய் சொல்ல (த் துணிய) ாத அவர், அல்லாஹ்வின் மீது பொய் சொல்ல (த் துணிய) மாட்டார் என்று புரிந்து கொண்டேன். அவரின் முன்னோர்களிடையே அரசர் எவரேனும் இருந்திருக்கிறாரா? என்று நான் உம்மிடம் கேட்டேன். அதற்கு நீர், இல்லை' என்றீர். அவரின் முன்னோர்களிடையே அரசர் எவரும் இருந்திருப்பாராயின், தம் முன்னோர்களின் ஆட்சியதிகாரத்தை (தாமும்) அடைய விரும்பும் ஒருவர் இவர்' என்று கூறியிருப்பேன். மக்களில் மேட்டுக் குடியினர் அவரைப் பின்பற்றுகிறார்களா? மக்களிடையேயுள்ள பலவீனர்கள் பின்பற்றுகிறார்களா? என்று நான் உம்மிடம் கேட்டேன். அதற்கு நீர், ஒடுக்கப்பட்ட மக்களே அவரைப் பின்பற்றுகின்றனர்' என்று பதிலளித்தீர். அவர்கள் தாம் (எப்போதும்) இறைத்தூதர்களைப் பின்பற்றுவோர் (நாளுக்கு நாள்) அதிகரித்து வருகின்றனரா? குறைந்து கொண்டே வருகின்றனரா? என்று கேட்டேன். அதற்கு நீர், அதிகரித்துக் கொண்டே வருகின்றனர்' என்று பதிலளித்தீர் இறைநம்பிக்கை இத்தகையது தான். அது முழுமையடையும் வரை (அதிகரித்து கொண்டே செல்லும்.) அவரின் மார்க்கத்தை ஏற்றுக் கொண்டோரில் எவராவது தம் (புதிய) மார்க்கத்தின் மீது அதிருப்தியடைந்து அதிலிருந்து

வெளியேறிச் செல்வதுண்டா? என்று நான் உம்மிடம் கேட்டேன். அதற்கு நீர்,இல்லை‘ என்று பதிலளித்தீர். இறைநம்பிக்கை இத்தகையதே. அதன் எழில், இதயங்களில் கலக்கும்போது அதைக் குறித்து எவருமே அதிருப்தியடைய மாட்டார்.அவர் வாக்கு மீறுவாரா? என்று நான் உம்மைக் கேட்டதற்கு நீர்,இல்லை‘ என்று பதிலளித்தீர். இறைத் தூதர்கள் இத்தகையவர்களே. அவர்கள் வாக்கு மீறுவதில்லை. மேலும், நான்,நீங்கள் அவருடனும் அவர் உங்களுடனும் போர் புரிந்துண்டா? என்று கேட்டேன். அதற்கு நீர்,போர் புரிந்ததுண்டு என்றும்,உங்களுக்கும் அவருக்குமிடையே போர் (முடிவுகளான வெற்றியும் தோல்வியும்) மாறி மாறி (சுழன்று) வந்து கொண்டிருக்கும் என்றும் ஒரு முறை உங்களுக்கு வெற்றி கிடைத்தால் மறுமுறை அவருக்கு வெற்றி கிடைக்கும் என்றும் பதிலளித்தீர். இப்படித் தான் இறைத்தூதர்கள் சோதிக்கப்படுவார்கள். ஆனால், இறுதி வெற்றி அவர்களுக்கே கிடைக்கும்.உங்களுக்கு அவர் என்ன கட்டறையிடுகிறார்? என்று நான் உம்மிடம் கேட்டேன். அதற்கு நீர், அல்லாஹ்வை வணங்கும்படியும் அவனுக்கு எதனையும் இணையாக்காமல் இருக்கும்படியும் கட்டளையிடுகிறார் என்றும் உங்கள் முன்னோர்கள் வணங்கிவந்தவற்றை நீங்கள் வணங்க வேண்டாமென்று உங்களைத் தடுக்கிறார் என்றும், தொழுகையை(நிலை நிறுத்தும்படி)யும் வாய்மையையும் நல்லொழுக்கத்தையும் கைக்கொள்ளும்படியும் ஒப்பந்தங்களைச் சரிவர நிறைவேற்றும்படியும் அடைக்கலப் பொருளைப் பாதுகாப்பாகச் திருப்பித் தரும்படியும் அவர் உங்களுக்குக் கட்டளையிடுக்கிறார் என்றும் பதிலளித்தீர். எந்த இறைத்தூதர் வரவிருப்பதாக நான் அறிந்திருந்தேனோ அவரின் பண்புகள் இவை தாம். ஆனால், அவர் உங்களிலிருந்து வருவார் என்று நான் அறிந்திருக்கவில்லை. நீர் சொல்வது உண்மையாயிருப்பின், என்னுடைய இவ்விரு பாதங்கள் பதிந்துள்ள இந்த இடத்திற்கு விரைவில் அவர் அதிபதியாவார். நான் அவரைச் சந்திப்பேன். அவரிடம் நான் இருந்திருப்பேனாயின் அவரின் கால்களைக் கழுவியிருப்பேன்‘ என்று கூறினார். பிறகு, சீசர் அல்லாஹ்வின் தூதருடைய கடிதத்தைக் கொண்டு வரும்படி உத்தரவிட்டார். (அது கொண்டு வரப்பட்டதும்) அது அவருக்குப் படித்துக் காட்டப்பட்டது.

அதில் பின்வருமாறு கூறப்பட்டிருந்தது:

அளவற்ற அருளாளன், கருணையன்புடையோன் அல்லாஹ்தவின் திருப்பெயரால்...இது அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாகிய முஹம்மதிடமிருந்து ரோமாபுரியின் அதிபர் ஹெராக்ளியஸுக்கு (எழுதப்படும் கடிதம்).

நேர்வழியைப் பின்பற்றியவர் மீது (இறைவனின்) சாந்தி பொழியட்டும். நிற்க, நான் உங்களை இஸ்லாத்தை ஏற்கும்படி அழைக்கிறேன். இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.(நீங்கள் நம்பிக்கை கொண்டதற்காக) உங்களுக்குச் சேர வேண்டிய நன்மையை இருமடங்காகத் தருவான். நீங்கள் புறக் கணித்தால், உங்கள் குடிமக்களின் பாவமும்(அவர்கள் இஸ்லாத்தை ஏற்காமல் போவதின் குற்றமும்) உங்களையே சேரும்.

வேதம் வழங்கப்பட்டவர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் இடையிள்ள பொதுவான ஒரு கொள்கையின் பக்கம் வாருங்கள்: அல்லாஹ்வைத் தவிர வேறெவரையும் நாம் வணங்கமாட்டோம். எதனையும் (எவரையும்) அவனுக்கு இணையாக்க மாட்டோம். அல்லாஹ்வைவிட்டுவிட்டு நம்மில் ஒருவர், மற்றவரைக் கடவுள்களாக ஆக்கிக் கொள்ள மாட்டோம் (என்பதே அந்தக் கொள்கை).

அவர்கள் (இந்த அழைப்பைப்) புறக்கணிப்பார்களாயின்,நாங்கள் முஸ்லிம்கள் (அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிபவர்கள்) என்பதற்கு நீங்களே சாட்சியாயிருங்கள்‘ என்று (அவர்களிடம்) கூறிவிடுங்கள்.

சீசர் தன் கூற்றைச் சொல்லிமுடித்தவுடன் அவரைச் சுற்றிலுமிருந்த ரோம நாட்டு(பைஸாந்திய) ஆட்சியாளர்களின் குரல்கள் உயர்ந்து அவர்களின் கூச்சல் அதிகரித்தது. அதனால், அவர்கள்

என்ன சொன்னனார்கள் என்று நான் அறிய முடியாமல் போய்விட்டது. எங்களை வெளியே கொண்டு செல்லும்படி உத்தவிடப்பபட்டது. நாங்கள் (சீசரின் அவையிலிருந்து) வெளியேற்றப்பட்டடோம். என் தோழர்களுடன் வெளியே வந்து அவர்களுடன் தனிமையில் (பேசியபடி) இருந்தபோது நான், இப்னு அபீ கப்ஷா (முஹம்மது) வின் விவகாரம் வலிமை பெற்றுவிட்டது. மஞ்சள் நிற இனத்தாரின் மன்னனான இவனே அவருக்கு அஞ்சுகின்றானே' என்று கூறினேன். (அன்றிலிருந்து) இறைவன் மீதாணையாக! நான் அடங்கிப் போனேன். இவரின் மார்க்கம் விரைவில் வெற்றி பெறும் என்று உறுதியாக எண்ணியவனாகவே இருந்து வந்தேன். அதற்குள், இஸ்லாத்தை நான் வெறுத்த போதிலும் அல்லாஹ் என் உள்ளத்தில் அதைப் புகுத்திவிட்டான்.

ஹதீஸ் 2942. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் கைபர் போரின்போது, அல்லாஹ் எவருடைய கரத்தில் வெற்றியைத் தரவிருக்கிறானே அத்தகைய ஒரு மனிதரிடம் (நாளைக்கு) நான் (இஸ்லாமியச் சேனையின்) கொடியைத் தருவேன்' என்று கூறக் கேட்டேன். உடனே, நபித்தோழர்கள், அதை யாரிடம் நபி (ஸல்) அவர்கள் கொடுக்கப் போகிறார்கள் என்று எதிர்பார்த்து நின்றனர். அவர்களில் ஒவ்வொருவரும் அது தம்மிடமே தரப்பட வேண்டுமென்று விரும்பியவர்களாக மறுநாள் வந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், அலீ எங்கே? என்று கேட்டார்கள். அவருக்குக் கண்வலி' என்று கூறப்பட்டது. உடனே, நபி (ஸல்) அவர்கள், அலீ (ரலி) அவர்களை அழைத்து வரும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவர்கள் அழைத்து வரப்பட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களின் கண்களில் (தம்) எச்சிலை உமிழ்ந்தார்கள். உடனே அவர்களின் கண், அதற்கு முன்பு வலி எதுவுமே இல்லாதிருந்ததைப் போல் குணமாம்விட்டது. உடனே, அலீ (ரலி), நம்மைப் போல் (முஸ்லிம்களாய்) ஆகும் வரை நாம் அவர்களுடன் போர் புரிவோம்' என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், நிதானமாகச் சென்று அவர்களின் களத்தில் இறங்குவீராக! பிறகு, அவர்களை இஸ்லாத்திற்கு அழைத்து (அதை ஏற்கும் பட்சத்தில்) அவர்களின் மீது கடமையாகுபவற்றை அவர்களுக்குத் தெரிவிப்பீராக! அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் வாயிலாக ஒரேயொரு மனிதருக்கு நேர்வழியளிக்கப்படுவது (அரபுகளின் உயரிய செல்வமான) சிகப்பு ஒட்டகங்களை (தர்மம் செய்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்' என்றார்கள்.

ஹதீஸ் 2943. அனஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு சமுதாயத்தார் மீது படையெடுத்துச் சென்றால் காலை நேரம் வரும் வரை தாக்குதல் நடத்த மாட்டார்கள். (அந்த மக்களிடையே தொழுகை அழைப்பான) பாங்கின் ஓசையைக் கேட்டால் தாக்குதல் நடத்த மாட்டார்கள். பாங்கின் ஓசையைக் கேட்காவிட்டால் காலை நேரம் வந்த பின் தாக்குதல் நடத்துவார்கள். கைபரில் நாங்கள் இரவு நேரத்தில் சென்று தங்கினோம்.

ஹதீஸ் 2944. அனஸ் (ரலி) அறிவித்தார்.

## நபி (ஸல்) அவர்கள் எங்களுடன் புனிதப் போர் புரியச் சென்றால்... (என்று தொடங்கும் ஹதீஸ்)

ஹதீஸ் 2945. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (போருக்காக) கைபரை நோக்கிப் புறப்பட்டு இரவு நேரத்தில் அங்கு போய்ச் சேர்ந்தார்கள். அவர்கள் ஒரு சமுதாயத்தாரின் மீது இரவு நேரத்தில் படையெடுத்துச் செல்வார்களாயின் காலை நேரம் வரும் வரை அவர்களின் மீது தாக்குதல் நடத்த மாட்டார்கள்.

.. அவ்வாறே காலையானதும் யூதர்கள் தம் மண்வெட்டிகளையும் (பேரீச்ச ஓலைகளாலான) கூடைகளையும் எடுத்துக் கொண்டு வெளியே வந்தனர். நபி(ஸல்) அவர்களை அவர்கள் பார்த்தபோது,முஹம்மதும் (அவரின்) படையும் (வந்துள்ளனர்)' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ் மிகப் பெரியவன். கைபர் பாழாம்விட்டது! நாம் ஒரு சமுதாயத்தின் களத்தில் (அவர்களுடன் போரிட) இறங்குவோமாயின் எச்சரிக்கப்பட்ட(வர்களான அந்தச் சமுதாயத்த)வர்களுக்கு அது மிகக் கெட்ட காலையாகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2946. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று கூறுகிற (நிலை ஏற்படும்) வரை மக்களுடன் போரிடும்படி நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். வணக்கத்திற்குரியவன் (இறைவன்) அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்று கூறுகிறவர் தன் உயிரையும், உடைமையையும் என்னிடமிருந்து காப்பாற்றிக் கொள்வார். நியாயமான காரணம் இருந்தாலே தவிர. அவரிடம் (அவரின் மற்ற செயல்களுக்குக்) கணக்கு வாங்குவது அல்லாஹ்வின் பொறுப்பாகும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதே நபிமொழியை உமர்(ரலி) அவர்களும் இப்னு உமர்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

## புனிதப் போருக்குச் செல்ல நாடி வேறெதற்கோ செல்வது போன்று பாசாங்கு செய்து அதை மறைப்பதும் வியாழக்கிழமையன்று போருக்குச் செல்ல விரும்புவதும்.

ஹதீஸ் 2947. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு புனிதப் போருக்கு (தலைமை தாங்கிச்) செல்ல விரும்பினால் வேறெதற்கோ செல்வது போன்று பாசாங்கு செய்து அதை மறைப்பார்கள்.

"தபூக் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் செல்லாமல், தான் பின்தங்கிவிட்ட கால கட்டத்தைக் குறித்து என் தந்தை கஅப் இப்னு மாலிக்(ரலி) விவரித்தபோது இதை அவர்கள் கூற கேட்டேன்' என்று கஅப்(ரலி) முதிய வயதடைந்து கண்பார்வையிழந்துவிட்டபோது அவர்களைக் கைப்பிடித்து அழைத்துச் செல்பவராயிருந்த- அவர்களின் மகன் அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 2948. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு புனிதப் போருக்கு(த் தலைமையேற்று)ச செல்ல நாடினால் பெரும்பாலும் வேறெதற்கோ செல்வது போன்று பாசாங்கு செய்து அதை மறைப்பார்கள். தபூக் போர் (நேரம்) வந்தபோது அதற்காகக் கடும் வெயிலில் நபி(ஸல்) அவர்கள் படையெடுத்துச் சென்றார்கள். தொலைதூரப் பயணத்தையும் வெற்றியையும் அவர்கள் எதிர்பார்த்தார்கள். அதிக (எண்ணிக்கையிலான) எதிரிகளைச் சந்திப்பதையும் எதிர்பார்த்தார்கள். தம் எதிர்பார்ப்பை முஸ்லிம்களுக்கு வெளிப்படையாக உணர்த்திவிட்டார்கள். முஸ்லிம்கள் தம் பகைவர்களின் நடவடிக்கைகளை எதிர்கொள்ளத் தங்களைத் தயார்படுத்திக் கொள்வதற்காக இப்படிச் செய்தார்கள். தாம் விரும்பியவாறு அவர்களுக்கு (விஷயத்தை) அறிவித்துவிட்டார்கள்.

ஹதீஸ் 2949. அப்துர் ரஹ்மான் இப்னு கஅப்(ரஹ்) அறிவித்தார்.

என் தந்தை கஅப் இப்னு மாலிக்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பயணத்திற்குப் புறப்பட்டால் பெரும்பாலும் வியாழக்கிழமையன்று தான் புறப்படுவார்கள்' என்று கூறி வந்தார்கள்.

ஹதீஸ் 2950. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தபூக் போருக்கு வியாழக்கிழமையன்று தான் புறப்பட்டார்கள். வியாழக்கிழமையன்று (பயணம்) புறப்படுவதை அவர்கள் விரும்பி வந்தார்கள்.

## லுஹர் தொழுகைக்குப் பிறகு பயணம் புறப்படுவது.

ஹதீஸ் 2951. அனஸ்(ரலி) அறிவித்தார்.

(தம் ஹஜ்ஜின் போது) நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் லுஹர் தொழுகையை நான்கு ரக்அத்களாகவும் அஸர் தொழுகையை துல் ஹுலை∴பா என்னுமிடத்தில் இரண்டு ரக்அத்துகளாகவும் தொழுதார்கள். நபி(ஸல்) அவர்களும் நபித்தோழர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து (ஹஜ், உம்ரா) இரண்டிற்கும் (தல்பியாவை) உரக்கக் கூறுவதை செவியுற்றேன்.

## மாதக் கடைசியில் பயணம் புறப்படுவது.

நபி(ஸல்) அவர்கள் (தம் ஹஜ்ஜுக்காக) மதீனாவிலிருந்து துல்கஅதா மாதம் முடிவடைய ஐந்து நாள்கள் எஞ்சியிருந்தபோது புறப்பட்டு, துல்ஹஜ்ஜின் நான்கு நாள்கள் கழிந்தபோது மக்கா நகருக்கு வந்தார்கள்.

ஹதீஸ் 2952. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் துல்கஅதா மாதத்தில் ஐந்து நாள்கள் எஞ்சியிருந்தபோது (துல்கஅதா பிறை 25ல்) புறப்பட்டோம். அப்போது நாங்கள் ஹஜ்ஜை மட்டுமே நிறைவேற்ற எண்ணியிருந்தோம். மக்காவை நாங்கள் நெருங்கியபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், குர்பானிப் பிராணியைத் தம்முடன் கொண்டு வராதவர்கள் கஅபாவை வலம்வந்து ஸ∴பா, மர்வாவுக்கிடையே ஓடி முடித்ததும் இஹ்ராமிலிருந்து விடுபட்டு விடும்படி உத்தரவிட்டார்கள். பிறகு, நஹ்ருடைய (துல்ஹஜ் 10ம்) நாளில் எங்களிடம் மாட்டிறைச்சி கொண்டு வரப்பட்டது. நான்,இது என்ன? என்று கேட்டேன். மக்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் மனைவியின் சார்பாக (தியாகப் பிராணியை) அறுத்து பலியிட்டார்கள்' என்று பதிலளித்தார்கள்.

## ரமளான் மாதத்தில் பயணம் புறப்படுவது.

ஹதீஸ் 2953. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியின்போது) ரமளான் மாதத்தில் பயணம் புறப்பட்டார்கள். அப்போது நோன்பு நோற்றிருந்தார்கள். கதீத் என்னுமிடம் வந்த பின் நோன்பைவிட்டுவிட்டார்கள்.

## விடை பெறுவதும் வழியனுப்புவதும்

ஹதீஸ் 2954. அபூ ஹுரைரா(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களை ஒரு படையில் அனுப்பி வைத்தார்கள். அப்போது எங்களிடம்,நீங்கள் இன்னாரையும் இன்னாரையும் சந்தித்தால் - என்று குறைஷிகளில் இருவரைப் பெயர் குறிப்பிட்டு அவ்விருவரையும் நெருப்பால் எரித்து விடுங்கள்' என்று கூறினார்கள். பிறகு, நாங்கள் பயணம் புறப்பட முனைந்தபோது நபி(ஸல்) அவர்களிடம் விடைபெறப் போனோம். அப்போது அவர்கள்,நான் இன்னாரையும் இன்னாரையும் நெருப்பால் எரித்து விடும்படி உங்களுக்குக் கட்டளையிட்டிருந்தேன். ஆனால், நெருப்பால் வேதனை செய்யும் உரிமை அல்லாஹ்வுக்கு மட்டுமே உண்டு என்பதால், நீங்கள் அவ்விருவரையும் கண்டால் (நெருப்பால் எரிக்க வேண்டாம்) கொன்று விடுங்கள்' என்று கூறினார்கள்.

## தலைவருக்குக் கட்டுப்பட்டு நடப்பது.

ஹதீஸ் 2955. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வுக்கு மாறு செய்யும்படி கட்டளையிடப்படாத வரை, தலைவரின் கட்டளையைச் செவியேற்பதும் அதற்குக் கீழ்ப்படிவதும் கடமையாகும். அல்லாஹ்வுக்கு மாறு செய்யும்படி கட்டளையிடப்பட்டால் அதைச் செவியேற்பதும் அதற்குக் கீழ்ப்படிவதும் கூடாது.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## தலைவருக்குக் கீழிருந்து போரிடுவதும், அவர் மூலம் பாதுகாப்புப் பெறுவதும்.

ஹதீஸ் 2956. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (உலகில்) கடைசியானவர்களான நாமே (மறுமையில்) முந்தியவர்கள்‘ என்று கூற கேட்டேன்.

ஹதீஸ் 2957. எனக்குக் கட்டுப்பட்டவர் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டவராவார். எனக்கு மாறு செய்கிறவர் அல்லாஹ்வுக்கு மாறு செய்தவராவார். தலைவருக்குக் கட்டுப்பட்டவர் எனக்குக் கட்டுப்பட்டவராவார். தலைவருக்கு மாறு செய்கிறவர் எனக்கு மாறு செய்தவராவார். தலைவர் ஒரு கேடயம். அவருக்குக் கீழிருந்து போரிடப்படும் அவர் மூலம் பாதுகாப்பு பெறப்படும். அவர் (தன் தலைமையின் கீழுள்ள குடிமக்களுக்கு) இறை(யச்ச) உணர்வைக் கைக்கொள்ளும்படி கட்டளையிட்டு நீதியுடன் நடந்தால் அவருக்கு அதன் காரணமாக (பெரும்) நற்பலன் உண்டு. அதுவல்லாத(தீய)வற்றை அவர் கட்டளையிட்டால், அதனால் ஏற்படும் பாவம் அவரின் மீது(ம்) சாரும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

## ‘போரில் பின்வாங்கி ஓடக்கூடாது என்று உறுதிமொழி வாங்குவது.

சிலர், போரில் மரணத்தைச் சந்திக்கத் தயாராயிருப்பதாக உறுதி மொழி வாங்குவது என்றும் அறிவித்துள்ளனர்.

ஏனெனில், (நபியே!) நம்பிக்கையாளர்கள் உங்களிடம் (குறிப்பிட்ட) மரத்திற்குக் கீழே உறுதிமொழியளித்தபோது அவர்களைக் குறித்து அல்லாஹ் திருப்தியுற்றான்‘ (திருக்குர்ஆன் 48:18) என்று இறைவன் (பொதுவாகவே) கூறுகிறான்.

ஹதீஸ் 2958. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஹுதைபிய்யா உடன்படிக்கை கையொப்பமான ஆண்டிற்கு) அடுத்த ஆண்டு (ஒப்பந்தப்படி உம்ரா செய்யத்) திரும்பி வந்தோம். நாங்கள் (ஹுதைபிய்யா ஆண்டில்) எந்த மரத்திற்குக் கீழே (நபி(ஸல்) அவர்களின் கரத்தில்) உறுதிமொழி எடுத்துக் கொண்டோமோ அந்த மரம் இதுதான் என்று எங்களில் எந்த இருவரும் ஒருமித்த கருத்துக் கொள்ளவில்லை. அது அல்லாஹ்விடமிருந்து (அவனுடைய) கருணை பொழிந்த இடமாக இருந்தது.

அறிவிப்பாளர் ஜுவைரிய்யா(ரஹ்) கூறினார்:

(இப்னு உமர்(ரலி) அவர்களிடமிருந்து கேட்டு இதை எங்களுக்கு அறிவித்த) நாஃபிஉ(ரஹ்) அவர்களிடம் நாங்கள், எதற்காக நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களிடமிருந்து உறுதிமொழி பெற்றார்கள்? மரணத்தைச் சந்திக்கத் தயாராயிருப்பதற்காகவா? என்று கேட்டோம். அதற்கு அவர்கள், இல்லை. ஆனால், (நிலைகுலைந்து போகாமல்) பொறுமையாக இருக்கும்படி தான் அவர்களிடமிருந்து நபி(ஸல்) அவர்கள் உறுதிமொழி வாங்கினார்கள்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2959. அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

‘ஹர்ரா போரின் போது என்னிடம் ஒருவர் வந்து, அப்துல்லாஹ் இப்னு ஹன்ழலா(ரலி), மக்களிடம் மரணத்தைச் சந்திக்கத் தாயாராயிருக்கும் படி உறுதிமொழி வாங்குகிறார்கள்‘ என்று

கூறினார். அதற்கு நான், இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு (ஹுதைபிய்யாவில் அளித்த உறுதிமொழிக்கு)ப் பின்னர் வேறெவரிடமும் இதற்காக நான் உறுதிமொழியளிக்க மாட்டேன்' என்று கூறினேன்.

ஹதீஸ் 2960. ஸலமா இப்னு அக்வஃ (ரலி) கூறினார்.

நான் ('இறைமறுப்பாளர்களுடன் அறப்போர் புரிவேன் இறைவழியில் துன்பங்களைச் சம்பிப்பேன் என்று) நபி (ஸல்) அவர்களிடம் ஹுதைபிய்யாவில் உறுதிமொழியளித்தேன் பிறகு மரத்தின் நிழலில் (சற்று) ஒதுங்கினேன். (நபி (ஸல்) அவர்களைச் சுற்றிலுமிருந்த) மக்கள் (கூட்டம்) சற்று குறைந்தபோது நபி (ஸல்) அவர்கள், அக்வஃ உடைய மகனே! (ஸலமாவே!) நீ உறுதிமொழியளிக்கவில்லையா? என்று கேட்டார்கள். நான் ஏற்கனவே உறுதிமொழியளித்து விட்டேன், இறைத்தூதர் அவர்களே! என்று பதிலளித்தேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், மீண்டும் (அளிப்பீராக!)' என்று கூறினார்கள். எனவே, நான் இரண்டாவது முறையாக உறுதிமொழியளித்தேன்.

அறிவிப்பாளர் யஸீத் இப்னு அபீ உபைத் (ரஹ்) கூறினார்.

(இதை எனக்கு அறிவித்த ஸலமா இப்னு அக்வஃ (ரலி) அவர்களிடம்) நான், அபூ முஸ்லிமே! அன்று (நபித் தோழர்களான) நீங்கள் எந்த விஷயத்திற்காக (நபி (ஸல்) அவர்களிடம்) உறுதிமொழியளித்தீர்கள்' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், மரணத்தைச் சந்திக்கத் தயாராயிருப்பதாக நாங்கள் உறுதிமொழியளித்தோம்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2961. அனஸ் (ரலி) அறிவித்தார்.

அகழ்ப் போரின்போது (மதீனா வாசிகளான) அன்சாரிகள், நாங்கள் (எத்தகையவர்கள் எனில்) நாங்கள் உயிராயிருக்கும் வரை (தொடர்ந்து) அறப்போர் புரிந்து கொண்டிருப்போம் என்று முஹம்மத் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழியளித்திருக்கிறோம்' என்று பாடிய வண்ணம் (அகழ்தோண்டிக் கொண்டு) இருந்தார்கள். அப்போது அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள், இறைவா! மறுமை வாழ்க்கையைத் தவிர (நிரந்தரமான பெரு) வாழ்க்கை வேறெதுவுமில்லை. எனவே, (அதை மகிழ்ச்சிகரமானதாக ஆக்கிக் கொள்ள உழைக்கிற மதீனாவாசிகளான) அன்சாரிகளையும் (மக்காவாசிகளான) முஹாஜிர்களையும் கண்ணியப்படுத்துவாயாக! என்று (பாடலிலேயே) பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 2962 , ஹதீஸ் 2963. முஜாஷிஉ (ரலி) அறிவித்தார்.

நானும் என் சகோதரரும் நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். நான் நபி (ஸல்) அவர்களிடம், ஹிஜ்ரத் செய்ய (மார்க்கத்திற்காகத் தாயகம் துறக்க) எங்களிடம் உறுதிமொழி வாங்குங்கள்' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஹிஜ்ரத் (அதற்குரிய வேளையில்) அதற்குரியவர்களுக்கு (கடமையாகி) நடந்து முடிந்துவிட்டது. (இஸ்லாம் மேலோங்கிவிட்டதால் இனி அது தேவையில்லை)' என்று பதிலளித்தார்கள். நான், (இனி) வேறெதற்காகத் தாங்கள் எங்களிடம் உறுதிமொழி வாங்குவீர்கள்? என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், இஸ்லாத்தைச் செயல்படுவதற்காகவும் (இறைவழியில்) அறப்போரிடுவதற்காகவும் (உறுதிமொழி வாங்குவேன்)' என்று பதிலளித்தார்கள்.

## மக்களால் செய்ய முடிந்ததையே தலைவர் கட்டளையிட வேண்டும்.

ஹதீஸ் 2964. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

இன்று என்னிடம் ஒருவர் வந்து, ஒரு விஷயத்தைக் குறித்து கேட்டார். அவருக்கு என்ன பதில் கூறுவது என்று எனக்குத் தெரியவில்லை. அவர், ஆயுத பாணியான, செயல் வேகமுள்ள ஒருவர்

தம் தலைவர்களுடன் புனிதப் போரில் கலந்து கொள்கிறார். அப்போது தலைவர் அவரால் செய்ய முடியாத சில விஷயங்களைச் செய்யும்படி (வற்புறுத்தி) அவருக்கு உத்தரவிடுகிறார் எனில் அவர் என்ன செய்வது? என்று கேட்டார். நான், அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு என்ன (பதில்) சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. ஆயினும், நாங்கள் (இத்தகைய புனிதப் போர்களில்) நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போதெல்லாம் அவர்கள் ஒரு விஷயத்தை ஒருமுறை தான் உத்தரவிடுவார்கள். நாங்கள் அதைச் செய்து விடுவோம். நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்கும் வரை நன்மையில் இருப்பீர்கள். (நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சித் தலைவருக்குக் கீழ்ப்படிவதால் தீங்கேதும் நேராது.) உங்கள் உள்ளத்தில் சந்தேகம் ஏதும் ஏற்பட்டால் (விஷயமறிந்த) யாரிடமாவது கேளுங்கள். அவர், உங்கள் (நெருடலை நீக்கி) சந்தேகத்தை நிவர்த்தி செய்யக்கூடும். (இனிவரும் காலங்களில்) அத்தகைய (தகுதி வாய்ந்த ஒரு) வரை நீங்கள் அடைய முடியாமலும் போகக் கூடும். எவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவரும் இல்லையோ அவன் மீதாணையாக! இந்த உலகத்தில் போனது போக எஞ்சியிருப்பவற்றை, தூய நீர் குடிக்கப்பட்டு கசடுகள் மட்டும் எஞ்சி (தேங்கி நின்று) விட்ட ஒரு குட்டையாகவே கருதுகிறேன்‘ என்று கூறினேன்.

## நபி (ஸல்) அவர்கள் முற்பகலில் போரிடவில்லையென்றால் சூரியன் உச்சியிலிருந்து சாயும் வரை போரைத் தள்ளிப் போட்டு விடுவார்கள்.

ஹதீஸ் 2965. உமர் இப்னு உபைதில்லாஹ் (ரஹ்) அவர்களின் அடிமையாகவும் அவர்களின் எழுத்தராகவும் இருந்த சாலிம் அபுள் நள்ர் (ரஹ்) அறிவித்தார்.

உமர் இப்னு உபைதில்லாஹ் (ரஹ்) அவர்களுக்கு அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) கடிதம் எழுதினார்கள். அதில் எழுதியிருந்ததை நான் படித்துக் காட்டினேன். (அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எதிரிகளைப் போர்க் களத்தில் சந்தித்த நாள்களில் ஒருமுறை சூரியன் உச்சி சாயும் வரை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

ஹதீஸ் 2966. பிறகு மக்களிடையே எழுந்து நின்று உரை நிகழ்த்தலானார்கள்: மக்களே! (போர்க்களம் சென்று) எதிரிகளைச் சந்திக்க வேண்டுமென்று ஆசைப்படாதீர்கள். அல்லாஹ்விடம் (போரைத் தவிர்க்க வாய்ப்பளித்து) அமைதி நிலை தரும்படி கேளுங்கள். (அதையும் மீறி) எதிரிகளை (போர்க்களத்தில்) சந்திக்க நேரிட்டால் நிலைகுலைந்து விடாமல் போரின் துன்பங்களைச் சகித்துக் கொண்டு பொறுமையாயிருங்கள். மேலும், சொர்க்கம் வாட்களின் நிழல்களில் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுங்கள்‘ என்று கூறிவிட்டு, இறைவா! வேதத்தை அருள்பவனே! மேகத்தை நகர்த்திச் செல்பவனே! படைகளைத் தோற்கடிப்பவனே! இ(ப்பகை)வர்களைத் தோற்கடித்து இவர்களுக்கெதிராக எங்களுக்கு உதவுவாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

## (போரிலிருந்து திரும்பிச் செல்லவோ, போரில் கலந்து கொள்ளாமலிருக்கவோ) ஒருவர் தலைவரிடம் அனுமதி கேட்பது.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வையும் அவனுடைய திருத்தூதரையும் (மனப்பூர்வமாக) நம்பி, ஒரு பொதுப்பணிக்காக இறைத்தூதருடன் இருக்கும்போது அவரிடம் அனுமதி பெறாதவரை (அவரைப் பிரிந்து) செல்லாமலிருப்பவர்களே உண்மையான இறைநம்பிக்கையாளர்களே உண்மையான இறை நம்பிக்கையாளர்கள். நபியே! உங்களிடம் அனுமதி கேட்பவர்கள் தாம், அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் உண்மையாக ஏற்றவர்கள். எனவே, அவர்கள் தங்களின் தேவை எதற்காவது உங்களிடம் அனுமதி கேட்டால் அவர்களில் நீங்கள் விரும்பியவருக்கு

அனுமதியளியுங்கள்! மேலும், அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் கோருங்கள்! நிச்சயமாக, அல்லாஹ் மிகவும் மன்னிக்கக் கூடியவனாகவும் கிருபை நிறைந்தவனாகவும் இருக்கிறான்.

ஹதீஸ் 2967. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் புனிதப் போருக்குச் சென்றேன். நான், களைப்படைந்து நடக்க முடியாமல் போய்க்கொண்டிருந்த நீர் சுமக்கும் ஒட்டகம் ஒன்றின் மீது அமர்ந்து சென்று கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னை (வழியில்) வந்தடைந்தார்கள். அப்போது என்னிடம், உன் ஒட்டகத்திற்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். நான், அது களைப்படைந்துவிட்டது' என்று பதிலளித்தேன். அதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சற்றுப் பின்தங்கி அதை அதட்டி அதற்காக பிரார்த்தித்தார்கள். உடனே அது தனக்கு முன் சென்று கொண்டிருந்த ஒட்டகங்களை முந்திக் கொண்டு செல்லத் தொடங்கியது. நபி(ஸல்) அவர்கள் என்னிடம், உன் ஒட்டகத்தை இப்போது எப்படிக் காண்கிறாய்? என்று கேட்டார்கள். நான், நல்ல முறையில் காண்கிறேன். அது தங்களின் பரக்கத்தைப் பெற்றது' என்று சொன்னேன். உடனே அவர்கள், நீ அதை எனக்கு விற்று விடுகிறாயா? என்று கேட்டார்கள். நான் (பதில் சொல்ல) வெட்கப்பட்டேன். (ஏனெனில்,) எங்களிடம் அதைத் தவிர நீர் சுமக்கும் ஒட்டகம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆயினும் நான், சரி (விற்று விடுகிறேன்)' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள், அப்படியாயின் அதை எனக்கு விற்று விடு' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள், அப்படியாயின் அதை எனக்கு விற்று விடு' என்று கூற, நான் அதன் மீது சவாரி செய்து மதீனாவைச் சென்றடைய என்னை அனுமதிக்க வேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் அவர்களுக்கு அந்த ஒட்டகத்தை விற்று விட்டேன். நான் அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! நான் புது மாப்பிள்ளை' என்று சொல்லி ஊருக்கு விரைவாகச் செல்ல அனுமதி கேட்டேன். அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். எனவே, நான் மற்ற மக்களை விட முன்னதாகச் சென்று மதீனாவை விட முன்னதாகச் சென்று மதீனாவை அடைந்து விட்டேன். அப்போது என்னை என் தாய்மாமன் (ஜத்து இப்னு கைஸ்) சந்தித்து ஒட்டகத்தைப் பற்றிக் கேட்டார். நான் அதை விற்றுவிட்டதை அவருக்குத் தெரிவித்தேன். அதற்காக அவர் என்னைக் குறை கூறினார். நான் நபி(ஸல்) அவர்களிடம் மதீனாவுக்கு சீக்கிரமாகச் செல்ல அனுமதி கேட்டபோது அவர்கள் என்னிடம், நீ கன்னிப் பெண்ணை மணந்துகொண்டாயா? வாழ்ந்த அனுபவமுள்ள பெண்ணை மணந்து கொண்டாயா? என்று கேட்டிருந்தார்கள். அதற்கு நான், வாழ்ந்த அனுபவமுள்ள ஒரு பெண்ணைத் தான் மணமுடித்துக் கொண்டேன்' என்று பதில் கூறினேன். அதற்கு அவர்கள், கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா? நீ அவளுடனும் அவள் உன்னுடனும் விளையாடலாமே' என்று கூறினார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! எனக்குச் சிறு வயது சகோதரிகள் பலர் இருக்கும் நிலையில் என் தந்தை (உஹுதுப் போரில்) மரணித்துவிட்டார்கள். அல்லது கொல்லப்பட்டுவிட்டார்கள். 95 எனவே, அவர்களுக்கு ஒழுக்கம் கற்பிக்கவோ, அவர்களைப் பராமரிக்கவோ இயலாத அவர்களைப் போன்றே (அனுபவமற்ற சிறுவயதுப் பெண்) ஒருத்தியை நான் மணந்து கொள்ள விரும்பவில்லை. எனவே, அவர்களைப் பராமரிப்பதற்காகவும் அவர்களுக்கு ஒழுக்கம் கற்பிப்பதற்காகவும் வாழ்ந்த அனுபவமுள்ள ஒரு பெண்ணையே மணந்தேன்' என்று பதிலளித்தேன்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்து சேர்ந்தபோது காலையில் ஒட்டகத்துடன் அவர்கள் அவர்களிடம் சென்றேன். எனக்கு அதன் விலையைக் கொடுத்தார்கள். பிறகு அந்த ஒட்டகத்தையும் என்னிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

“(‘மதீனா வரை சவாரி செய்ய அனுமதிக்க வேண்டும்‘ என்பது போன்ற) இத்தகைய நிபந்தனையுடன் விற்பது நம்முடைய சட்டத்தில் அனுமதிக்கப்பட்டது் இதில் தவறேதும் இருப்பதாக நான் கருதவில்லை‘ என்று அறிவிப்பாளர்களில் ஒருவரான அறிஞர் முஃகீரா(ரஹ்) கூறினார்.

## திருமணமான புதிதில் புனிதப் போருக்குச் செல்வது.

இது குறித்து ஜாபிர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

## (மனைவியுடன்) வீடு கூடிய பின்பு புனிதப் போருக்குச் செல்ல முனைதல்.

இது குறித்து அபூ ஹுரைரா(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

## (எதிரிகளின் படையெடுப்புப் பற்றி மக்கள்) பீதிக்குள்ளாகும்போது (அவர்களை அமைதிப்படுத்தவும் அவர்களுக்குப் பாதுகாப்புத் தரவும்) தலைவர் விரைந்து செல்லுதல்.

ஹதீஸ் 2968. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(எதிரிகள் படையெடுத்து வருவதாக) மதீனா நகரில் பீதி நிலவியது. உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அபூ தல்ஹா(ரலி) அவர்களின் குதிரை ஒன்றில் ஏறி (விபரமறிந்து வரப்) புறப்பட்டார்கள். அப்போது அவர்கள், (பீதி ஏற்படுத்தும்) எதனையும் நாம் காணவில்லை. தங்கு தடையின்றி வேகமாக ஓடக் கூடியதாகவே நாம் இந்த குதிரையைக் கண்டோம்‘ என்று கூறினார்கள்.

## பீதி நிறைந்த நேரத்தில் (வாகனத்தில்) விரைந்து செல்வதும், அதை உதைத்துப் பாய்ந்தோடச் செய்வதும்.

ஹதீஸ் 2969. அனஸ்(ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை, எதிரிகள் படையெடுத்து வருவதாக மதீனா நகர) மக்கள் பீதிக்குள்ளானார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அபூ தல்ஹா(ரலி) அவர்களுக்குச் சொந்தமான மெதுவாக நடக்கக்கூடிய குதிரை ஒன்றில் ஏறிக் கொண்டு, (அதை) உதைத்துப் பாய்ந்தோடச் செய்தபடி தனியாகப் புறப்பட்டார்கள். அவர்களுக்குப் பின்னால் மக்கள் பாய்ந்து (வாகனங்களில்) ஏறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், பீதியடையாதீர்கள். (பீதியடையும் யாரும் படையெடுத்து வரவில்லை.) இந்தக் குதிரை தங்கு தடையின்றி வேகமாக ஓடக் கூடியதாக உள்ளது‘ என்று கூறினார்கள். அந்த நாளுக்குப் பிறகு, அந்தக் குதிரையை யாராலும் முந்த முடிந்ததில்லை.

## பீதி நிறைந்த நேரத்தில் தனியாகப் புறப்படுதல்.

## இறைவழியில் (தன் சார்பாகப்) போரிடுவதற்காக ஒருவருக்குக் கூலி கொடுப்பதும் பயண மூட்டைகளைச் சுமக்கும் வாகனங்களைக் கொடுத்தனுப்புவதும்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்.

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம், நான் புனிதப் போருக்குச் செல்ல விரும்புகிறேன்‘ என்று கூறினேன். அவர்கள், நான் என் செல்வத்திலிருந்து ஒரு பகுதியைக் கொடுத்து உனக்கு உதவ விரும்புகிறேன்‘ என்று கூறினார்கள். நான், அல்லாஹ் எனக்கு நிறையக் கொடுத்திருக்கிறான்

(அதுவே, எனக்குப் போதும்)' என்று கூறினேன். அதற்கு இப்னு உமர்(ரலி),உன்னுடைய செல்வம் உனக்குரியது. நான் இந்த வகையில் என் செல்வத்(தில் ஒரு பாகத்)தைச் செலவிட வேண்டுமென்று விரும்புகிறேன்' என்று பதிலளித்தார்கள்.

உமர்(ரலி),மக்கள் சிலர் இந்த (பைத்துல் மால்- அரசுக் கருவூலத்தின்) செல்வத்திலிருந்து அறப்போரிடுவதற்காக (உதவித் தொகையை) எடுத்துக் கொண்டு பிறகு அறப்போர் புரிவதில்லை. இத்தகையவர் பெற்ற பணத்தை, அவரின் செல்வத்திலிருந்து நாம் எடுத்துக் கொள்ள நமக்கு (முழு) உரிமையுண்டு' என்று கூறினார்கள்.

தாவூஸ்(ரஹ்) அவர்களும் முஜாஹித்(ரஹ்) அவர்களும்,உன்னிடம் இறைவழியில் (போருககுப்) புறப்பட உதவும் செல்வம் ஏதும் கொடுக்கப்பட்டால் அதை நீ விரும்பியபடி (போருக்குப்) பயன்படுத்திக் கொள். அதை உன் வீட்டாரிடமும் நீ கொடுக்கலாம்' என்று (மார்க்கத் தீர்ப்பு) கூறினர்.

ஹதீஸ் 2970. உமர்(ரலி) அறிவித்தார்.

நான் ஒருவரை இறைவழியில் அறப்போர் புரிய ஒரு குதிரையின் மீதேற்றி அனுப்பி வைத்தேன். (அவர் பயணம் செய்ய ஒரு குதிரையை இலவசமாகத் தந்துதவினேன்.) பிறகு அது (சந்தையில்) விற்கப்படுவதைக் கண்டேன். நபி(ஸல்) அவர்களிடம்,நான் அதை வாங்கட்டுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,அதை வாங்காதீர்கள். உங்கள் தருமத்தைத் திரும்பப் பெறாதீர்கள்' என்று கூறினார்கள்.

என அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 2971. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) ஒருவரை இறைவழியில் (போர் புரிய) ஒரு குதிரையின் மீதேற்றி அனுப்பி வைத்தார்கள். பிறகு, அந்தக் குதிரை சந்தையில் விற்கப்படுவதைக் கண்டு அதை வாங்க விரும்பி (அது பற்றி) அல்லாஹ்வின் தூதரிடம் கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அதை வாங்காதீர்கள். உங்கள் தருமத்தைத் திரும்பப் பெறாதீர்கள்' என்று கூறிவிட்டார்கள்.

ஹதீஸ் 2972. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்பட்டு விடும் என்னும் அச்சம் மட்டும் எனக்கில்லாவிட்டால் நான் எந்தச் சிறுபடைக் குழுவிலிருந்தும் (அதில் கலந்து கொள்ளாமல்) பின்தங்கியிருக்க மாட்டேன். ஆயினும், என்னைச் சுமந்து செல்லும் வாகனமும் என்னிடம் இல்லை. என் தோழர்களை ஏற்றிச் செல்ல (போதிய) வாகன வசதியும் என்னிடம் இல்லை. ஆனால், அவர்கள் என்னுடன் (போருக்கு) வர முடியாமல் பின்தங்க வேண்டியிருப்பது எனக்கு மனவேதனையளிக்கிறது. மேலும், நான் இறைவழியில் போரிட்டு அதனால் கொல்லப்பட்டு, மீண்டும் உயிராக்கப்பட்டு மீண்டும் (இறைவழியில் போரிட்டுக்) கொல்லப்பட்டு, மீண்டும் உயிராக்கப்பட (இவ்வாறே மீண்டும் மீண்டும் இறைவழியில் உயிர்த் தியாகம் செய்ய) வேண்டும் என்று விரும்புகிறேன்.

## (அறப்போரில் உதவி புரிய அமர்த்தப்பட்ட) கூலியாள்.

ஹஸன் பஸரீ(ரஹ்) அவர்களும் இப்னு சீரீன்(ரஹ்) அவர்களும்(அறப்போரில் உதவும்) கூலியாளுக்குப் போரில் கிடைத்த செல்வத்திலிருந்து பங்கு தரப்பட வேண்டும்' என்று கூறுகிறார்கள். அதிய்யா இப்னு கைஸ்(ரஹ்) ஒரு குதிரையை அதற்கு (போரில் கிடைக்கும் செல்வத்திலிருந்து) தரப்படும் பங்கில் பாதியைத் தந்து விடுவதாகக் கூறி (வாடகைக்கு) எடுத்தார்கள். அந்தக் குதிரைக்கு நானாறு தீனார் பங்கு கிடைத்தது. இரண்டு நூறு

தீனார்களைத் தாம் எடுத்துக் கொண்டு குதிரையின் உரிமையாளருக்கு இருநூறு தீனார்களைக் கொடுத்தார்கள்.

ஹதீஸ் 2973. யஃலா இப்னு உமய்யா (ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் தபூக் போரில் கலந்து கொண்டேன். நான் இளவயது ஒட்டகம் ஒன்றில் (ஒருவரை அறப்போருக்கு) எற்றி அனுப்பினேன். அதை என் நற்செயல்களிலேயே உறுதியானதாக என் மனத்தில் கருதுகிறேன். அப்போது (அறப்போரில் உதவி புரிய) பணியாள் ஒருவரை அமர்த்தினேன். அந்தப் பணியாள் ஒரு மனிதரோடு போரிட்டார். அப்போது அவர்களில் ஒருவர் மற்றவரைக் கடித்துவிட்டார். கடிபட்டவர் தன்னுடைய கையை, கடித்தவரின் வாயிலிருந்து உருவினார் அப்போது கடித்தவரின் முன்பல்லை அவர் பிடுங்கப்பட்டவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். (பல்லைப் பிடுங்கியவர் மீது வழக்கு தொடுத்தார்.) அதற்கு நஷ்ட ஈடு தரத் தேவையில்லை என்று நபி (ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள். அப்போது, நீ ஒட்டகம் மெல்வது போல் மென்று கொண்டிருக்க, அவர் தன் கையை உனக்குக் கொடுத்துக் கொண்டிருப்பாரா? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் கொடி.

ஹதீஸ் 2974. சஅலபா இப்னு அபீ மாலிக் அல்குரழீ (ரஹ்) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் கொடியை எடுத்துச் செல்பவராயிருந்த கைஸ் இப்னு ஸஅத் அல் அன்சாரீ (ரலி) ஹஜ் செய்ய விரும்பியபோது தலைவாரினார்கள்.

ஹதீஸ் 2975. ஸலமா இப்னு அக்வஃ (ரலி) கூறினார்.

அலீ (ரலி) கைபர் போரின்போது நபி (ஸல்) அவர்களுடன் (போருக்குச்) செல்லாமல் பின்தங்கி விட்டிருந்தார்கள். அவர்களுக்குக் கண்வலி ஏற்பட்டிருந்தது. நான் அல்லாஹ்வின் தூதருடன் (போருக்குச்) செல்லாமல் பின்தங்கி விட்டேனே' என்று (வருத்தத்துடன்) கூறினார்கள். எந்த நாளின் காலை வேளையில் கைபரை நபி (ஸல்) அவர்கள் வெற்றி கொண்டார்களோ அந்த நாளின் மாலை நேரம் வந்தபோது, இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிற ஒரு மனிதரிடம் நாளை இந்தக் கொடியைத் தரப் போகிறேன்' என்றோ, அத்தகைய ஒருவர் இந்தக் கொடியைப் பிடித்திருப்பார்' என்றோ அல்லது, அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிற ஒரு மனிதரிடம் நாளை இந்தக் கொடியைத் தரப் போகிறேன்' என்றோ சொல்லிவிட்டு, அவருக்கு அல்லாஹ் வெற்றியளிப்பான்' என்று கூறினார்கள். நாங்கள் எதிர்பார்க்காத நிலையில் அலீ (ரலி) வந்து எங்களுடன் இருக்கக் கண்டோம். உடனே மக்கள், இதோ, அலீ அவர்கள்! என்று கூறினர். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம் கொடியைக் கொடுக்க, அவர்களுக்கு அல்லாஹ் வெற்றியளித்தான்.

ஹதீஸ் 2976. நாஃபிஃ இப்னு ஜுபைர் (ரஹ்) அறிவித்தார்.

ஸுபைர் (ரலி) அவர்களிடம் அப்பாஸ் (ரலி) (ஹஜூன் என்னுமிடத்தைச் சுட்டிக் காட்டி), நபி (ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியின் போது) உங்களை இங்கு தான் கொடியை நடச் சொன்னார்கள்' என்று கூறினார்கள்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஒரு மாத காலப் பயணத் தொலைவுக்கு (ள் இருக்கும் நிராகரிப்பாளர்களின் உள்ளங்களில் என்னைக் குறித்த) அச்ச உணர்வை விதைத்து அல்லாஹ் எனக்கு உதவி புரிந்துள்ளான்.

அல்லாஹ் கூறினான்.

(சத்தியத்தை) நிராகரித்தவர்களின் உள்ளங்களில் விரைவில் நாம் பெரும் அச்சத்தை ஏற்படுத்துவோம். ஏனெனில், (இறைவனுக்கு இணையானவை என்று நிரூபிக்கும்) எந்த ஆதாரத்தையும் எவற்றுக்கு அல்லாஹ் தரவில்லையோ அவற்றை அவனுடன் அவர்கள் இணையாக்கிவிட்டார்கள். (திருக்குர்ஆன் 03: 151)

ஜாபிர் (ரலி) (இதுபற்றி) நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 2977. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ஒருங்கிணைந்த (பொருள்களைத் தரும்) சொற்களுடன் அனுப்பப்பட்டுள்ளேன். 103. (எதிரிகளின் உள்ளத்தில் என்னைப் பற்றிய மதிப்பு கலந்த) அச்சம் விதைக்கப்பட்டு எனக்கு உதவப்பட்டுள்ளது. (ஒருமுறை) நான் உறங்கிக் கொண்டிருக்கையில் பூமியின் கருவூலங்களுடைய சாவிகள் கொண்டு வரப்பட்டு என் கையில் வைக்கப்பட்டன.

இதை அபூ ஹுரைரா (ரலி) அறிவித்துவிட்டு, நபி (ஸல்) அவர்கள் சென்றார்கள். நீங்கள் அந்தக் கருவூலங்களை (தோண்டி) வெளியே எடுத்து (அனுபவித்துக்) கொண்டிருக்கிறீர்கள்' என்றார்கள்.

ஹதீஸ் 2978. அபூ சுஃப்யான் (ரலி) அறிவித்தார்.

நாங்கள் ஈலியா (ஜெரூசலம்) நகரில் இருந்தபோது ரோம (பைஸாந்தியப்) பேரரசர் ஹெராக்ளியஸ் எங்களைக் கூப்பிட்டனுப்பினார். பிறகு, இறைத்தூதர் (ஸல்) அவர்களின் கடிதத்தை வரவழைத்தார். கடிதத்தைப் படித்து (க் காட்டி) முடித்தவுடன் அவரிடம் (இருந்த பிரமுகர்களிடையே) கூச்சல் குழப்பம் ஏற்பட்டு அதிகரித்துவிட்டது. குரல்கள் உயர்ந்தன. நாங்கள் (அரசவையிலிருந்து) வெளியேற்றப்பட்டோம். அப்போது நான் என் தோழர்களிடம், அபூ சுப்ஷாவின் மகனுடைய (முஹம்மதுடைய) அந்தஸ்து உயர்ந்து விட்டிருக்கிறது. மஞ்சள் நிறத்தவரின் (ம்ழக்கு ஐரோப்பியர்களின் அதிபர் (கூட) அவருக்கு அஞ்சுகிறார்' என்று கூறினேன்.

## புனிதப் போர் புரியச் செல்பவருக்குப் பயண உணவை எடுத்துச் செல்லுதல்.

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் ஹஜ்ஜுக்காக (உணவு போன்ற) பயணச் சாதனங்களைச் கொண்டு செல்லுங்கள். எனினும், (அத்தகைய) பயணச் சாதனங்களில் மிக மேலானது இறை(யச்ச) உணர்வுதான். (திருக்குர்ஆன் 02:197)

ஹதீஸ் 2979. அஸ்மா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்ய முனைந்தபோது, அவர்களின் பயண உணவை நான் (என் தந்தை) அபூ பக்ர் (ரலி) அவர்களின் வீட்டில் தயாரித்தேன். அவர்களின் பயண உணவையும் (தண்ணீருக்கான) தோல் பையையும் (ஒட்டகத்தில் வைத்துக்) கட்டுவதற்குத் தேவையான (சேணக் கச்சு) எதுவும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. எனவே, நான் அபூ பக்ர் (ரலி) அவர்களிடம், அல்லாஹ்வின் மீதாணையாக! என்னுடைய இந்த இடுப்புக் கச்சைத் தவிர இதைக் கட்டுவதற்குத் தேவையான (சேணக் கச்சு) எதுவும் எங்களுக்குக் கிடைக்கவில்லை' என்று கூறினேன். அதற்கு அபூ பக்ர் (ரலி), அதை இரண்டாகக் கிழித்து, ஒன்றினால் (தண்ணீருக்கான) தோல்பையையும் மற்றொன்றினால் பயண உணர்வையும் கட்டு' என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்தேன். இதனால் தான் எனக்குஇரட்டைக் கச்சுக்காரர் என்று பட்டப் பெயர் சூட்டப்பட்டது.

ஹதீஸ் 2980. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில், நாங்கள் மதீனா நகருக்குச் செல்லும்போது குர்பானி (தியாகப் பிராணியின்) இறைச்சிகளைப் பயண உணவாக எடுத்துச் செல்வோம்.

ஹதீஸ் 2981. சுவைத் இப்னு நுஃமான்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் கைபர் போர் நடந்த ஆண்டில் (கைபர் போருக்காகப்) புறப்பட்டேன். அவர்கள்ஸஹ்பா எனுமிடத்தில் - இதுவும் கைபர் பகுதிக்கு உட்பட்டதே - இருந்தபோது அஸர் தொழுகையைத் தொழுதார்கள். நபி(ஸல்) அவர்கள் உணவுகளைக் கொண்டு வரச் சொல்லி உத்தரவிட்டார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு மாவு மட்டுமே) கொடுக்கப்பட்டது. அதை நாங்கள் மென்று உண்டோம் (தண்ணீரும்) அருந்தினோம். பிறகு நபி(ஸல்) அவர்கள் எழுந்து, வாய் கொப்பளித்தார்கள். நாங்களும் வாய் கொப்பளித்தோம். பிறகு (அனைவரும் சேர்ந்து) தொழுதோம். 105

ஹதீஸ் 2982. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

மக்களுடைய பயண உணவுகள் தீர்ந்து போய் வறுமை வாய்ப்பட்டார்கள் எனவே, நபி(ஸல்) அவர்களிடம் தங்கள் ஒட்டகங்களை (உண்பதற்காக) அறுக்க அனுமதி கேட்டு வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் மக்களுக்கு அனுமதி கொடுத்தார்கள். மக்களை (அவர்கள் திரும்பிச் செல்லும்போது வழியில்) உமர்(ரலி) கண்டார்கள். மக்கள் உமர்(ரலி) அவர்களுக்கு விபரத்தைத் தெரிவிக்கவே உமர்(ரலி),உங்கள் ஒட்டகங்கள் (அறுத்து உண்ணப்பட்டுப்) போன பிறகு (நீண்ட தூரம் நடந்தே சென்றால்) நீங்கள் உயிர் பிழைப்பது எப்படி? என்று கேட்டார்கள். பிறகு உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! மக்கள் தங்கள் ஒட்டகங்களை அறுத்து உண்ட பின்பு அவர்கள் (நடந்தே பயணம் சென்றால்) உயிர் பிழைப்பது எப்படி? என்று கேட்டார்கள். (இதைக் கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,தங்கள் பயணச் சாதக் கட்டுகளில் எஞ்சியிருப்பவற்றைக் கொண்டு வரும்படி மக்களிடையே கூவி அழையுங்கள்' என்று கூறிவிட்டு (அவையெல்லாம் கொண்டு வரப்பட்டவுடன்) அவற்றில் இறைவனின் பரக்கத் (எனும் அருள்வளத்)திற்காக பிரார்த்தித்தார்கள். பிறகு, மக்களைத் தம் பாத்திரங்களைக் கொண்டு வரும்படி அழைத்தார்கள். மக்கள் தங்கள் (கைகளால்) திருப்தியடையும் வரை அள்ளினார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் வைத்தவிர வேறெவருமில்லை என்றும் நான் இறைத்தூதர் என்றும் சாட்சி கூறுகிறேன்' என்றார்கள். 106

## பயண உணவை (வாகனத்தின் மீது வைத்து எடுத்துச் செல்ல முடியாத போது) தோள்களின் மீது வைத்து எடுத்துச் செல்வது.

ஹதீஸ் 2983. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் முந்நூறு பேர் எங்கள் பயண உணவை எங்கள் பிடரியில் சுமந்து கொண்டு (புனிதப் போருக்காகப்) புறப்பட்டோம். எங்கள் பயண உணவு (நாளாக, ஆகக்) குறையலாயிற்று. எந்த அளவிற்கென்றால் நாங்கள் ஒவ்வொரு நாளும் ஒரு பேரீச்சம் பழம் மட்டுமே உண்ண வேண்டிய நிலைக்கு ஆளாம் விட்டோம்... இதை ஜாபிர்(ரலி) அறிவித்துக் கொண்டிருந்தபோது ஒருவர்,அபூ அப்தில்லாஹ்வே! (ஒரு நாள் முழுவதற்கும்) ஒரு பேரீச்சம் பழம் ஒருவருக்கு எப்படிப் போதுமாகும்? என்று கேட்டார். நாங்கள் பயண உணவை இழந்தபோது மிகவும் கவலையடைந்தோம். இறுதியில், நாங்கள் கடலை வந்தடைந்தபோது (திமிங்கல வகை) மீன் ஒன்றைக் கண்டோம். கடல் அதை (கரையில்) எறிந்து விட்டிருந்தது. நாங்கள் அதிலிருந்து பதினெட்டு நாள்கள் நாங்கள் விரும்பியவாறு உண்டோம்.

## ஒரு பெண், (வாகனத்தில்) தன் சகோதரனுக்குப் பின்னால் அமர்ந்து செல்வது.

ஹதீஸ் 2984. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களுடன் ஹஜ் செய்யச் சென்றபோது நான், இறைத்தூதர் அவர்களே! தங்கள் தோழர்கள் ஹஜ் மற்றும் உம்ராவின் நற்பலனைப் பெற்றுத் திரும்புகிறார்கள். ஆனால், நானோ ஹஜ்ஜை விட அதிகமாக (உம்ரா எதையும்) செய்யவில்லையே!என்று (ஏக்கத்துடன்) கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் என்னிடம், நீ (உம்ரா செய்யப்) போ! என்னிடம், நீ உம்ரா செய்யப்) போ! உன்னை (உன் சகோதரர்) அப்துர் ரஹ்மான் (வாகனத்தில் தனக்குப்) பின்னால் உட்கார வைத்துக் கொள்ளட்டும்' என்று கூறிவிட்டு, அப்துர் ரஹ்மான் அவர்களைதன்யீம் என்னுமிடத்திலிருந்து என்னை உம்ராவுக்கு அழைத்துச் செல்லும்படி கட்டளையிட்டார்கள். நான் (உம்ராவை நிறைவேற்றிவிட்டுத் திரும்பி) வரும்வரை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னை எதிர்பார்த்து மக்காவின் மேற்பகுதியில் காத்திருந்தார்கள்.

ஹதீஸ் 2985. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்.

ஆயிஷா (ரலி) அவர்களை வாகனத்தில் எனக்குப் பின்னால் உட்கார வைத்துக் கொண்டு, தன்யீம் என்னுமிடத்திலிருந்து அவர்களை உம்ரா செய்ய அழைத்துச் செல்லும்படி நபி (ஸல்) அவர்கள் எனக்குக் கட்டளையிட்டார்கள்.

## புனிதப் போரின் போதும் ஹஜ்ஜின் போதும் ஒருவருக்குப் பின்னால் (அவரின் வாகனத்தில்) அமர்ந்து செல்வது.

ஹதீஸ் 2986. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நான் அபூ தல்ஹா (ரலி) அவர்களின் (வாகனத்தில் அவர்களுக்குப்) பின்னால் அமர்ந்திருந்தேன். அப்போது மக்கள் (நபித் தோழர்கள்) ஹஜ், உம்ரா இரண்டுக்குமே உரக்கதல்பியா கூறிக் கொண்டிருந்தார்கள்.

## கழுதையின் மீது ஒருவரைத் தமக்குப் பின்னே உட்கார வைத்துக் கொள்வது.

ஹதீஸ் 2987. உஸாமா இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கழுதையின் மீது அமர்ந்து சவாரி செய்தார்கள். கழுதையின் சேண இருக்கையின் மீதிருந்த பூம்பட்டு விரிப்பொன்றின் மேல் அவர்கள் அமர்ந்திருந்தார்கள். தமக்குப் பின்னே என்னைக் கழுதையின் மீது அமர்த்தினார்கள்.

ஹதீஸ் 2988. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது, தம் வாகனத்தின் மீது உஸாமா இப்னு ஸைத் (ரலி) அவர்களை அமர வைத்துக் கொண்டு மக்காவின் மேற்பகுதியிலிருந்து முன்னேறிச் சென்றார்கள். அப்போது அவர்களுடன் பிலால் (ரலி) அவர்களும் கஅபாவின் காவல் பொறுப்பில் இருந்த உஸ்மான் இப்னு தல்ஹா (ரலி) அவர்களும் இருந்தனர். நபி (ஸல்) அவர்களின் வாகனம் இறுதியில் பள்ளிவாசலில் சென்று மண்டியிட்டு அமர்ந்தது. நபி (ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவின் சாவியைக் கொண்டு வரும்படி உஸ்மான் இப்னு தல்ஹா (ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். (சாவி கொண்டு வரப்பட்டதும்) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கஅபாவைத் திறந்து கொண்டு உஸாமா (ரலி), பிலால் (ரலி), உஸ்மான் (ரலி) ஆகியோருடன் உள்ளே

நுழைந்தார்கள். அங்கே நீண்ட ஒரு பகல் நேரத்திற்குத் தங்கியிருந்தார்கள். பிறகு வெளியே வந்தார்கள். மக்கள் கஅபாவினுள் நுழைய ஒருவரோடொருவர் போட்டியிட்டனர். நானே (அதனுள்) முதலில் நுழைந்தவன். அப்போது பிலால்(ரலி) அவர்களை வாசலின் பின்னே நின்று கொண்டிருக்கக் கண்டேன். உடனே, பிலால்(ரலி) அவர்களிடம், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கே தொழுதார்கள்? என்று கேட்டேன். பிலால்(ரலி), நபி(ஸல்) அவர்கள் தொழுத இடத்தைச் சைகையால் சுட்டிக் காட்டினார்கள். நான் அவர்களிடம், எத்தனை ரக்அத்துகள் நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள்' என்று கேட்க மறந்து விட்டேன்.

## ஒருவர் ஏறி அமர உதவியாக வாகனத்தைப் பிடித்துக் கொள்வது முதலான நற்செயல்கள்.

ஹதீஸ் 2989. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் தம் மூட்டுகள் ஒவ்வொன்றுக்காகவும் சூரியன் உதிக்கிற ஒவ்வொரு நாளிலும் தருமம் செய்வது அவர்களின் மீது கடமையாகும். இருவருக்கிடையே நீதி செலுத்துவதும் தருமமாகும் அல்லது அவரின் பயணச் சுமைகளை அதில் ஏற்றி விடுவதும் தருமமாகும். நல்ல (இனிய) சொல்லும் ஒரு தருமமாகும். ஒருவர் தொழுகைக்குச் செல்ல எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும் தருமமாகும். தீங்கு தரும் பொருளைப் பாதையிலிந்து அகற்றுவதும் ஒரு தருமமேயாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## எதிரியின் நாட்டிற்கு திருக்குர்ஆன் பிரதிகளுடன் பயணம் செய்வது விரும்பத் தக்கதல்ல.

இப்னு உமர்(ரலி) வாயிலாக நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்படித்தான் அறிவிக்கப்பட்டுள்ளது. இதே போன்று இப்னு உமர்(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பு வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாக வந்துள்ளது.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் திருக்குர்ஆனை அறிந்திருக்கும் நிலையில் எதிரியின் நாட்டில் பயணம் செய்துள்ளனர்.

ஹதீஸ் 2990. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் திருக்குர்ஆனுடன் (திருக்குர்ஆனின் பிரதியுடன்) எதிரியின் நாட்டிற்குப் பயணம் செய்வதைத் தடை செய்தார்கள்.

## போரின்போது தக்பீர் சொல்வது.

ஹதீஸ் 2991. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கைபருக்குக் காலை நேரத்தில் வந்து சேர்ந்தார்கள். அப்போது அங்குள்ள மக்கள், தங்கள் கழுத்துகளில் மண்வெட்டிகளை மாட்டிக் கொண்டு (வயல்வெளிகளுக்குப்) புறப்பட்டு விட்டிருந்தார்கள். நபி(ஸல்) அவர்களைப் பார்த்ததும், முஹம்மதும் (அவரின்) ஐந்து வி~கங்கள் கொண்ட படையினரும் வந்துள்ளனர்' என்று கூறினர். உடனே, கோட்டைக்குச் சென்று அடைக்கலம் புகுந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம் இரண்டு கைகளையும் உயர்த்தி, அல்லாஹு அக்பர்! கைபர் பாழ்படட்டும்! நாம் ஒரு சமுதாயத்தினரின் (போர்க்) களத்தில் இறங்கி விடடோமென்றால் எச்சரிக்கப்படுகிற அவர்களின் காலை நேரம் மிகக் கெட்டதாம் விடும்' என்று கூறினார்கள். எங்களுக்குக் கழுதைகள் சில கிடைக்கவே அவற்றை நாங்கள் சமைத்தோம். நபி(ஸல்) அவர்களின் அறிவிப்பாளர், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் கழுதைகளின் இறைச்சிகளை உண்ணத் தடை விதிக்கிறார்கள்' என்று (உரக்கக்) கூவி

அறிவித்தார். உடனே, பாத்திரங்கள் அவற்றிலிருந்த இறைச்சிகளுடனேயே கவிழ்க்கப்பட்டுவிட்டன.

## தக்பீர் சொல்லும்போது குரலை உயர்த்திச் சொல்வது விரும்பத் தக்கதல்ல.

ஹதீஸ் 2992. அபூ மூஸா அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தோம். நாங்கள் ஒரு பள்ளத்தாக்கில் (உள்ள மேடான பகுதியில்) ஏறும்போது,லா இலாஹ இல்லல்லாஹ் - வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை' என்றும்அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன்' என்றும் கூறி வந்தோம். (ஒரு கட்டத்தில்) எங்கள் குரல்கள் உயர்ந்துவிட்டன. அப்போது நபி (ஸல்) அவர்கள்,மக்களே! உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள். (அவசரப்படாதீர்கள். மென்மையாக, மெல்லக் கூறுங்கள்.) ஏனெனில், நீங்கள் காது கேட்காதவனையோ, இங்கில்லாதவனையோ அழைக்கவில்லை. அவன் உங்களுடனேயே இருக்கிறான். அவன் செவியேற்பவன் அருகிலிருப்பவன் (இறைவனான) அவனுடைய திருப்பெயர் நிறைவானது. அவனுடைய மதிப்பு உயர்ந்தது' என்று கூறினார்கள்.

## பள்ளத்தாக்கில் இறங்கும்போதுசுப்ஹானல்லாஹ் என்று சொல்வது.

ஹதீஸ் 2993. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்.

நாங்கள் (மேட்டில்) ஏறும்போதுஅல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன் என்று தக்பீர் கூறி வந்தோம் (பள்ளத்தாக்குகளில்) இறங்கும்போதுசுப்ஹானல்லாஹ் - அல்லாஹ் குறைகளிலிருந்தும் பலவீனங்களிலிருந்தும் தூய்மையானவன் என்று தஸ்பீஹ் செய்து வந்தோம்.

## மேட்டில் ஏறும்போது அல்லாஹு அக்பர் என்று கூறுவது.

ஹதீஸ் 2994. ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

நாங்கள் (மேட்டில்) ஏறும்போதுஅல்லாஹு அக்பர்' என்று (தக்பீர்) கூறுவோம். பள்ளத்தில் இறங்கும்போதுசுப்ஹானல்லாஹ்' என்று கூறுவோம்.

ஹதீஸ் 2995. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜிலிருந்தோ உம்ராவிலிருந்தோ... அல்லது புனிதப் போரிலிருந்தோ திரும்பும்போது, ஒரு மலைப்பாதையில் அல்லது ஒரு கெட்டியான நிலத்தில் மேடான பகுதியில் ஏறிச் செல்லும் போதெல்லாம் மூன்று முறை,அல்லாஹு அக்பர்' என்று கூறுவார்கள். பிறகு பின்வருமாறு கூறுவார்கள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவர் எவருமில்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றிற்கும் ஆற்றல் பெற்றவன். பாவமன்னிப்புக் கோரியவர்களாகவும், வணக்கம் புரிந்தவர்களாகவும், எங்கள் இறைவனுக்குச் சிரம் பணிந்தவர்களாகவும், நாங்கள் திரும்புகிறோம். அல்லாஹ் தன் வாக்குறுதியை மெய்ப்படுத்திவிட்டான் தன் அடியாருக்கு உதவினான் தன்னந்தனியாக நின்று குலங்கள் அனைத்தையும் தோற்கடித்துவிட்டான்' என்று கூறினார்கள்.

## ஊரிலிருக்கும்போது ஒருவர் செய்து வந்த நற்செயல்களுக்குக் கிடைத்தது போன்ற (அதே) நற்பலன் அவர் பயணத்தில் இருக்கும் போதும் (பாவம் எதுவும் செய்யவில்லையென்றால்) அவருக்கு எழுதப்படும்.

ஹதீஸ் 2996. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடியான் ஆரோக்கியமானவனாய், ஊரிலிருக்கும்போது செய்யும் நற்செயல்களுக்குக் கிடைப்பது போன்ற (அதே) நற்பலன் அவன் நோயுற்று விடும்போது அல்லது பயணத்தில் இருக்கும்போது (அவன் பாவம் எதுவும் செய்யாமலிருக்கும் வரை) அவனுக்கு எழுதப்படும்.

இதை அறிவித்த அபூ புர்தா(ரஹ்),இதைப் பலமுறை (என் தந்தை) அபூ மூஸா அஷ்அரீ(ரலி) சொல்ல நான் செவியுற்றிருக்கிறேன்' என்று தம்முடன் பயணத்தில் நோன்பு நோற்றுக் கொண்டு வந்த யஸீத் இப்னு அபீ கப்ஷா(ரஹ்) அவர்களிடம் கூறினார்கள்.

## (இரவில்) தனியாகப் பயணம் செல்லலாமா?

ஹதீஸ் 2997 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அகழ்ப்போரின்போது ('இரவில் தனியாகச் சென்று எதிரிகளை வேவு பார்ப்பதற்கு முன்வருவது யார்? என்று மக்களை) அழைத்தார்கள். ஸுபைர் இப்னு அவ்வாம்) அவர்கள் முன்வந்தார்கள். மீண்டும் மக்களை அழைத்தார்கள். (மீண்டும்) ஸுபைர் அவர்களே முன்வந்தார்கள். மீண்டும் மக்களை அழைத்தார்கள். (மீண்டும்) ஸுபைர் அவர்களே முன்வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (பிரத்தியேகமான) உதவியாளர் ஒருவர் உண்டு என்னுடைய (பிரத்தியேக) உதவியாளர் ஸுபைராவார்' என்று கூறினார்கள்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்),மூலத்தில் இடம் பெற்றுள்ளஹவாரீ என்பது உதவி புரிபவரைக் குறிக்கும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 2998. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தனிமையில் (பயணம் செய்வதில்) உள்ள, நான் அறிந்திருக்கிற சிரமங்களை மக்கள் அறிந்திருந்தால் எந்தப் பணியும் இரவில் தனியாகப் பயணம் செய்ய மாட்டார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## பயணத்தில் (இருந்து) விரைவாக (வீடு திரும்பிச்) செல்வது.

"நபி(ஸல்) அவர்கள்,நான் மதீனாவுக்கு (அவசரமாக) விரைந்து சென்று கொண்டிருக்கிறேன். என்னுடன் விரைவாக வர விரும்புகிறவர் விரைந்து வரட்டும்' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுமைத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 2999. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களிடம்ஹஜ்ஜத்துல் வதா'வின்போது (அரஃபாவிலிருந்து திரும்பி வருகையில்) நபி(ஸல்) அவர்களின் பயண வேகம் குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் சாதாரண வேகத்தில் செல்பவர்களாக இருந்தார்கள். (மக்கள் நெரிசல் இல்லாத) விசாலமான இடைவெளியைக் கண்டால் வேக வேகமாகச் செல்வார்கள்' என்று பதிலளித்து விட்டு,வேகமாக' என்பது சாதாரண வேகத்தை விட அதிகமாக உள்ள வேகத்தைக் குறிக்கும்' என்று உஸாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்.

அறிவிப்பாளர் யஹ்யா அல் கத்தான்(ரஹ்),எனக்கு இதை அறிவித்த உர்வா(ரஹ்),நான் உஸாமா(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்ட இந்தக் கேள்வியை நேரடியாகச் செவியுற்றுக் கொண்டிருந்தேன் என்று கூறினார்கள்: ஆனால், அதை நான் (ஆரம்பத்தில்) சொல்ல மறந்து விட்டேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3000. அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் மக்கா (செல்லும்) சாலையில் இருந்தேன். அப்போது அவர்களுக்கு (அன்னாரின் துணைவியார்) ஸ∴பிய்யா பின்த்து அபீ உபைத்(ரலி) கடுமையான (நோயின்) வேதனையில் இருப்பதாகச் செய்தி எட்டியது. உடனே, அவர்கள் விரைந்து பயணம் செய்யலானார்கள். கீழ் வானில் தெரியும் செம்மை மறைந்துவிட்ட பின் (வாகனத்திலிருந்து) இறங்கி மக்ரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுதார்கள். மேலும்,நபி(ஸல்) அவர்கள் விரைந்து பயணம் செல்ல நேரிடும்போது மக்ரிபைப் பிற்படுத்தி, மக்ரிபையும் இஷாவையும் (இஷா நேரத்தில்) சேர்த்துத் தொழுவதை பார்த்திருக்கிறேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3001. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பயணம் வேதனையின் ஒரு பங்காகும். அது உங்களை உறங்க விடாமலும், உண்ண விடாமலும், பருக விடாமலும் தடுத்து விடும். எனவே, உங்களில் ஒருவர் (ஒரு வேலையாகப் பயணம் புறப்பட்டுச் சென்று) தன் தேவையை முடித்துக் கொண்டால் அவர் தன் வீட்டாரிடம் விரைவாக (திரும்பிச்) சென்று விடட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஒருவரைப் புனிதப் போருக்காக குதிரையில் ஏற்றியனுப்பிய பிறகு குதிரை விற்கப்படுவதைக் கண்டால்...

ஹதீஸ் 3002. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) (ஒருவரை) இறைவழியில் (போரிட) குதிரையொன்றில் ஏற்றி அனுப்பினார்கள். பிறகு, அது (சந்தையில்) விற்கப்படுவதைக் கண்டார்கள். அதை வாங்க விரும்பி, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ('அதை வாங்கலாமா? என்று) கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அதை வாங்காதீர்கள். உங்கள் தருமத்தைத் திரும்பப் பெறாதீர்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3003. உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்.

நான் ஒருவரை இறைவழியில் (போரிடுவதற்காக) குதிரையின் மீது ஏற்றி அனுப்பினேன். தன்னிடம் இருந்த அந்த குதிரையை அவர் விற்றார்... அல்லது வீணாக்க இருந்தார். அதை நான் வாங்கிக் கொள்ள விரும்பினேன். அதை அவர் மலிவான ஒரு விலைக்கு விற்று விடுவார் என்று நான் எண்ணினேன். எனவே, நபி(ஸல்) அவர்களிடம் (அதை வாங்கலாமா என்று ஆலோசனை) கேட்டேன். அவர்கள்,அதை வாங்காதீர்கள் அது ஒரு திர்ஹமுக்குக் கிடைப்பதாயிருந்தாலும் சரி! ஏனெனில், தன் அன்பளிப்பைத் திரும்பப் பெறுபவன், தன் வாந்தியைத் தானே திரும்பத் தின்கிற நாயைப் போன்றவன்' என்று கூறினார்கள்.

## தாய் தந்தையரின் அனுமதியுடன் அறப்போரிடுதல்.

ஹதீஸ் 3004 ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து அறப் போரில் கலந்து கொள்ள அனுமதி கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,உன் தாயும் தந்தையும் உயிருடனிருக்கிறார்களா? என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர்,ஆம் (உயிருடனிருக்கின்றனர்)' என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால், அவ்விருவருக்கும் பணிவிடை செய்து உதவி புரிவதற்காக ஜிஹாத் செய் (உழை)' என்று கூறினார்கள்.

## ஒட்டகத்தின் கழுத்தில் மணி போன்றவற்றைத் தொங்க விடுவது.

ஹதீஸ் 3005. அபூ பஷீர் அல் அன்சாரி(ரலி) கூறினார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பயணம் ஒன்றில் அவர்களுடன் இருந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தூதுவர் ஒருவரை அனுப்பி,எந்த ஒட்டகத்தின் கழுத்திலும் (ஒட்டக வாரினால் ஆன, கண் திருஷ்டி கழிவதற்காகக் கட்டப்படுகிற) கயிற்று மாலையோ அல்லது (காற்று, கருப்பு விரட்டுவதற்காகக் கட்டப்படுகிற) வேறெந்த மாலையோ இருக்கக் கூடாது. அப்படியிருந்தால் கட்டாயம் அதைத் துண்டித்து விட வேண்டும்' என்று (பொது மக்களிடையே) அறிவிக்கச் செய்தார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு அபீ பக்ர்(ரஹ்),அப்போது மக்கள் தங்கள் உறங்கும் இடத்தில் இருந்தார்கள் என்று அபூ பஷீர்(ரலி) கூறினார் என எண்ணுகிறேன்' என்று கூறுகிறார்கள்.

## ஒருவர் (அறப் போருக்குச் செல்ல) தன் பெயரைப் பதிவு செய்த பின்னர் அவரின் மனைவி ஹஜ்ஜுக்குப் புறப்பட்டால் அல்லது (போரில் கலந்து கொள்ள முடியாதபடி அவருக்கு) வேறு ஏதவாது (நியாயமான) காரணம் இருந்தால் அவர் போரில் கலந்து கொள்ளாமலிருக்க அனுமதியளிக்கப்படுமா?

ஹதீஸ் 3006. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"ஓர் ஆண் ஒரு பெண்ணுடன் தனித்திருக்க வேண்டாம். எந்த ஒரு பெண்ணும் தன்னுடன் மணமுடிக்கத் தகாத உறவினர் (மஹ்ரம்) ஒருவர் இருக்கும் போதேயன்றி பயணம் செய்ய வேண்டாம் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து,இறைத்தூதர் அவர்களே! இன்ன புனிதப் போரில் கலந்து கொள்ள நான் என் பெயரைப் பதிவு செய்துள்ளேன். என் மனைவியோ ஹஜ்ஜுக்குப் புறப்பட்டுவிட்டாள். (இந்நிலையில் நான் என்ன செய்வது?)' என்று கேட்டதற்கு நபி(ஸல) அவர்கள்,நீ போய் உன் மனைவியுடன் ஹஜ் செய்' என்று கூறினார்கள்.

## ஒற்றர் (வேவு பார்த்துத் தகவல் தருபவர்)

அல்லாஹ் கூறினான்:

இறை நம்பிக்கையாளர்களே! எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாய் இருப்பவர்களை உற்ற நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள். (திருக்குர்ஆன் 60:01)

ஹதீஸ் 3007. அலீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னையும் ஸுபைர் அவர்களையும் மிக்தாத் அவர்களையும்நீங்கள்ரவ்ளத்து காக் என்னுமிடம் வரை செல்லுங்கள். ஏனெனில், அங்கு ஒட்டகச் சிவிகையில்122 ஒரு பெண் இருக்கிறாள். அவளிடம் ஒரு கடிதம் இருக்கும். அதை அவளிடமிருந்து எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கூறி அனுப்பினார்கள். (அவ்வாறே) நாங்கள் சென்றோம். எங்களைச் சுமந்து கொண்டு எங்கள் குதிரைகள் விரைந்தோடின. இறுதியில், நாங்கள்ரவ்ளா எனும் அந்த இடத்தை அடைந்தோம். அங்கு ஒரு (சிவிகைப்) பெண்ணைக் கண்டோம். நாங்கள் (அவளிடம்),கடிதத்தை வெளியே எடு' என்று கூறினோம். அவள்,என்னிடம் கடிதம் எதுவுமில்லை' என்று கூறினாள். நாங்கள்,ஒன்று நீயாகக் கடிதத்தை எடுத்து (கொடுத்து) விடு இல்லையேல் (உன்) ஆடையை நாங்கள் கழற்றி (சோதனையிட்டு) விடுவோம்' என்று சொன்னோம். உடனே, அவள் (இடுப்பு வரை நீண்டிருந்த) தன்னுடைய சடையின் பின்னல்களுக்கிடையேயிருந்து கடிதத்தை வெளியே எடுத்தாள். நாங்கள் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றோம். அதில், ஹாத்திப் இப்னு அபீ பல்தஆ அவர்கள் மக்காவாசிகளான இணைவைப்போரிடையுள்ள பிரமுகர்கள் சிலருக்கு

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (ரகசியத்) திட்டங்கள் சிலவற்றை (முன்கூட்டியே) தெரிவித்திருந்ததைக் கண்டோம். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ஹாத்திபே! என்ன இது? என்று கேட்டார்கள். ஹாத்திப்(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்கள், இறைத்தூதர் அவர்களே! என் விஷயத்தில் அவரசப்பட்டு (நடவடிக்கை எடுத்து) விடாதீர்கள். நான் குறைஷிகளில் ஒருவனாக இருக்கவில்லை. அவர்களைச் சார்ந்து வாழ்ந்தவனாக இருந்து வந்தேன். தங்களுடன் இருக்கும் முஹாஜிர்களுக்கு அவர்களின் வீட்டாரையும் சொத்துகளையும் பாதுகாப்பதற்கு மக்கா நகரில் உறவினர்கள் பலர் இருக்கிறார்கள். எனக்கு அவர்களிடையே அத்தகைய உறவினர்கள் (எவரும்) இல்லாததால் மக்காவாசிகளுக்கு உபகாரம் எதையாவது செய்து, அதன் காரணத்தால் அவர்கள் என் உறவினர்களைக் காப்பாற்ற வேண்டுமென்று விரும்பினேன். (அதனால் அவர்கள் கேட்டுக் கொண்ட படி இந்தத் தகவலைத் தெரிவித்தேன்.) நான் சத்திய மார்க்கத்தை நிராகரித்தோ, (இஸ்லாத்தைத் துறந்து) வேறு மதத்தைத் தழுவுவதற்காகவோ, இஸ்லாத்தைத் தழுவிய பின் இறைமறுப்பை விரும்பியோ இவ்விதம் செய்யவில்லை' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்இவர் உங்களிடம் உண்மை பேசினார்' என்று கூறினார்கள். உமர்(ரலி), இறைத்தூதர் அவர்களே! இந்த நயவஞ்சகனின் கழுத்தை வெட்டி விட என்னை அனுமதியுங்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், இவர் பத்ருப் போரில் கலந்து கொண்டிருக்கிறார். மேலும், உமக்கென்ன தெரியும்? ஒருவேளை அல்லாஹ் பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களைப் பார்த்து, நீங்கள் விரும்பியதைச் செய்து கொள்ளுங்கள். உங்களை நான் மன்னித்து விட்டேன் என்று கூறி விட்டிருக்கலாம்' என்றார்கள்.

"என்ன (பலமான) அறிவிப்பாளர் தொடர் இது! என்று இந்த நபிமொழியின் அறிவிப்பாளர் தொடரைக் கண்டு இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) (வியந்து) கூறினார்கள்.

## (போர்க்) கைதிகளுக்கு ஆடை அணிவிப்பது.

ஹதீஸ் 3008. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

பத்ருப் போரின்போது போர்க் கைதிகள் (கைது செய்யப்பட்டுக்) கொண்டு வரப்பட்டனர். (அப்போது எதிரணியில் இருந்த நபி(ஸல்) அவர்களின் பெரியதந்தை) அப்பாஸ்(ரலி) அவர்களும் (கைதியாகக்) கொண்டு வரப்பட்டார்கள். அவரிடம் அணிவதற்கு ஆடை எதுவும் இல்லாதிருந்தது. நபி(ஸல்) அவர்கள் ஒரு சட்டையைத் தேடினார்கள். (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபையின் சட்டை அவர்களுக்கு அளவில் பொருத்தமாக அமைந்திருப்பதைக் கண்டார்கள். அதையே அப்பாஸ்(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் அணிவித்தார்கள். இதன் காரணத்தால் தான் அப்துல்லாஹ் இப்னு உபை (இறந்த பின்பு அவனு)க்கு நபி(ஸல்) அவர்கள் தங்களின் சட்டையைக் கழற்றி அணிவித்தார்கள்.

"அப்துல்லாஹ் இப்னு உபை, நபி(ஸல்) அவர்களுக்கு இந்த வகையில் ஓர் உபகாரம் செய்திருந்தான். நபி(ஸல்) அவர்கள் அதற்குப் பிரதியுபகாரம் செய்ய விரும்பினார்கள்' என்று அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்.

## எவருடைய கரங்களில் ஒருவர் இஸ்லாத்தை ஏற்கிறாரோ அவரின் சிறப்பு.

ஹதீஸ் 3009. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது, நாளை நான் ஒரு மனிதரிடம் இஸ்லாமியச் சேனையின் கொடியைக் கொடுப்பேன். அல்லாஹ் அவரின் கரங்களில் வெற்றியைக் கொடுப்பான். அவர் (எத்தகையவர் எனில்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார் அவரை

அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிறார்கள்' என்றார்கள். மக்கள், நபி(ஸல்) அவர்கள் யாரிடம் கொடியைக் கொடுப்பார்கள்? என்று தமக்குள் ('இன்னாரிடம் கொடுப்பார்கள்' என்று சிலரைக் குறிப்பிட்டுப்) பேசியபடி தங்கள் இரவைக் கழித்தார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் (இஸ்லாமியச் சேனையின்) கொடி தம் கரத்தில் கொடுக்கப்பட வேண்டும் என்று ஆசைப்பட்டபடி காலை நேரத்தை அடைந்தனர். (காலை நேரம் வந்தவுடன்)அலீ எங்கே? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அலீ அவர்களுக்குக் கண் வலி' என்று சொல்லப்பட்டது. எனவே, (அலீ அவர்களை அழைத்து வரச் செய்து) நபி(ஸல்) அவர்கள், அலீ அவர்களின் இரண்டு கண்களிலும் தம் எச்சிலை உமிழ்ந்து அவர்களுக்காக (வலி நீங்கிட) பிரார்த்தித்தார்கள். உடனே, அலீ அவர்கள் (அதற்கு முன்) தமக்கு வலியே இருந்ததில்லை என்பது போன்று குணமடைந்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் அலீ அவர்களிடம் கொடியைக் கொடுத்தார்கள். அவர்கள் நம்மைப் போன்று (இறைச் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்த முஸ்லிம்களாக) ஆகும் வரை நான் அவர்களுடன் போர் புரிவேன்' என்று அலீ அவர்கள் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், (அலீயே!) நிதானத்துடன் சென்று அவர்களின் களத்தில் இறங்குங்கள். பிறகு, அவர்களை இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும்படி அழையுங்கள். (இஸ்லாத்தை ஏற்பதால்) அவர்களின் மீது கடமையாகுபவற்றை அவர்களுக்குத் தெரிவியுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் வாயிலாக அல்லாஹ் ஒருவரை நேர்வழியில் செலுத்துவது (அரபுகளின் மிக உயர்ந்த சொத்தான) சிகப்பு ஒட்டகங்களை (தருமம் செய்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்' என்று கூறினார்கள்.

## சங்கிலிகளால் பிணைக்கப்பட்ட (போர்க்) கைதிகள்.

ஹதீஸ் 3010. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சங்கிலிகளால் பிணைக்கப்பட்டவர்களாக சொர்க்கத்தில் நுழையும் ஒரு கூட்டத்தாரைக் 124 கண்டு அல்லாஹ் வியப்படைவான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வேதம் வழங்கப்பட்ட இரண்டு சமுதாயத்தவர்(களான யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்)களிடையேயிருந்து இஸ்லாத்தை ஏற்றவர்களின் சிறப்பு.

ஹதீஸ் 3011. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூன்று பேருடைய நற்செயலுக்குரிய பிரதிபலன் இரண்டு முறை அவர்களுக்கு வழங்கப்படும். அவர்கள்:

1. ஓர் அடிமைப் பெண்ணைப் பெற்றிருந்து அவளுக்குக் கல்வி கற்றுத் தந்து, அதை அழகுறக் கற்றுத் தந்து, அவளுக்கு ஒழுக்கம் கற்பித்து, அதை அழகுறச் கற்பித்து, அவளை (தானே) மணம் புரிந்தும் கொண்ட மனிதர், இவருக்கு (அதற்காக) இரண்டு நற்பலன்கள் கிடைக்கும்.

2. வேதம் வழங்கப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு நம்பிக்கையாளர். (முந்தைய இறைத்தூதர் மீதும், முந்தைய வேதத்தின் மீதும்) நம்பிக்கை கொண்டிருந்த அவர், பிறகு நபி(ஸல்) அவர்களின் மீதும் நம்பிக்கை கொண்டாரெனில், இவருக்கும் இரண்டு நற்பலன்கள் கிடைக்கும்.

3. அல்லாஹ்வின் உரிமையையும் நிறைவேற்றி, தன் எஜமானுக்கும் நலம் நாடுகிற அடிமை.

அறிவிப்பாளர் ஸாலிஹ் இப்னு ஹய்(ரஹ்) கூறினார்:

(இந்த நபிமொழியை எனக்கு அறிவித்த) ஷஅபீ (ரஹ்),எதையும் பகரமாகப் பெறாமலேயே இதை நான் உங்களுக்கு அறிவித்திருக்கிறேன். இதை விட எளிய விஷயங்களை அறிந்து கொள்ள சிலர் மதீனா வரை கூட சென்று கொண்டிருந்தார்கள்' என்று கூறினார்கள்.

## எதிரி நாட்டினரின் குழந்தைகளும் பிற மக்களும் (போரில் சிக்கிச்) சேதமடையும் (வாய்ப்பிருக்கும்) பட்சத்தில் அவர்களின் மீது இரவு நேரத்தில் தாக்குதல் நடத்தலாமா?

ஹதீஸ் 3012. ஸஅப் இப்னு ஜஸ்ஸாமா(ரலி) அறிவித்தார்.

'அப்வா என்னுமிடத்தில் அல்லதுவத்தான் என்னுமிடத்தில் நபி(ஸல்) அவர்கள் என்னுடன் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். அப்போது,இணைவைப்போரான எதிரி நாட்டினரின் பெண்களும் குழந்தைகளும் (போரில் சிக்கிச்) சேதமடையும் (வாய்ப்பு உண்டு என்னும்) பட்சத்தில் அவர்களின் மீது இரவு நேரத்தில் தாக்குதல் நடத்தலாமா? என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,அவர்களும் (எதிரிகளான) அவர்களைச் சேர்ந்தவர்களே' என்று பதிலளித்தார்கள். மேலும், நபி(ஸல்) அவர்கள்,(பிரத்தியேகமான) மேய்ச்சல் நிலம் (வைத்துக் கொள்ளும் உரிமை) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தவிர வேறெவருக்கும் இல்லை' என்று கூற கேட்டிருக்கிறேன்.

ஹதீஸ் 3013. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(எதிரிகளுடைய) குழந்தைகள் தொடர்பாக ஸஅப் இப்னு ஜஸ்ஸமா(ரலி), அவர்கள்,அக்குழந்தைகளும் எதிரிகளைச் சேர்ந்தவர்கள் தாம்' என்று எமக்கு ஹதீஸ் அறிவித்தார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் இப்னு தீனார்(ரஹ்) ஸுஹ்ரீ(ரஹ்) வாயிலாக,அக்குழந்தைகள் அவர்களின் பெற்றோர்களைச் சேர்ந்தவர்களே என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனத் தெரிவித்து வந்தார்கள். ஆனால், ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம் நேரடியாகக் கேட்டபோது,அந்தக் குழந்தைகளும் அவர்களைச் சேர்ந்தவர்களே' என்றே கூறினார்கள்.

இதை சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) தெரிவிக்கிறார்கள்.

## போரில் குழந்தைகளைக் கொல்வது.

ஹதீஸ் 3014. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பங்கெடுத்த புனிதப் போர்களில் ஒன்றில் பெண்ணொருத்தி கொல்லப்பட்ட நிலையில் கண்டெடுக்கப்பட்டாள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பெண்களையும் குழந்தைகளையும் கொல்வதைக் கண்டித்தார்கள்.

## போரில் பெண்களைக் கொல்வது.

ஹதீஸ் 3015. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பங்கெடுத்த புனிதப் போர்களில் ஒன்றில் பெண்ணொருத்தி கொல்லப்பட்ட நிலையில் கண்டெடுக்கப்பட்டாள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பெண்களையும் குழந்தைகளையும் கொல்வதைத் தடை செய்தார்கள்.

## அல்லாஹ் கொடுக்கும் (நெருப்பு) வேதனையினால் எவரையும் வேதன செய்யக் கூடாது.

ஹதீஸ் 3016. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

எங்களை ஒரு குழுவில் நபி (ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். அப்போது, இன்னாரையும் இன்னாரையும் நீங்கள் கண்டால் அவ்விருவரையும் நெருப்பால் எரித்து விடுங்கள்' என்று உத்தரவிட்டார்கள். பிறகு, நாங்கள் புறப்பட முனைந்தபோது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், இன்னாரையும் இன்னாரையும் எரித்து விடுங்கள் என்று நான் உங்களுக்குக் கட்டளையிட்டிருந்தேன். ஆனால், அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் நெருப்பினால் (உயிர்களை) வேதனை செய்யக் கூடாது. எனவே, அவ்விருவரையும் நீங்கள் கண்டால் அவர்களைக் கொன்று விடுங்கள்' என்று கூறினார்கள். 127

ஹதீஸ் 3017. அலீ (ரலி) ஒரு கூட்டத்தாரை எரித்துவிட்டார்கள். 128 இச்செய்தி இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், நானாக இருந்திருந்தால் அவர்களை எரித்திருக்கமாட்டேன். ஏனெனில், நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் அளிக்கிற வேதனையை அளித்து (எவரையும்) தண்டிக்காதீர்கள்' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், தன் மார்க்கத்தை மாற்றிக் கொள்கிறவரைக் கொன்று விடுங்கள் என்று சொன்னதுபோல் நான் அவர்களைக் கொன்று விட்டிருப்பேன் என்றார்கள்' என இக்ரிமா (ரஹ்) கூறினார்.

## (திருக்குர்ஆன் 47:04)

அல்லாஹ் கூறினான்:

“அவர்களை நீங்கள் முற்றிலுமாக ஒடுக்கிவிட்ட பின்னால் கைதிகளை இறுக்கமாகக் கட்டி விடுங்கள். அதன் பிறகு, (அவர்களின் மீது நீங்கள்) கருணை காட்டலாம் அல்லது ஈட்டுத் தொகை பெறலாம் (திருக்குர்ஆன் 47:04)

இது பற்றி சுமாமா (ரலி) குறித்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது. மேலும், அல்லாஹ் கூறினான்.

பூமியில் எதிரிகளை முற்றிலுமாகத் தோற்கடிக்காத வரை அவர்களைச் சிறைப்பிடித்துப் போர்க் கைதிகளாக வைத்துக் கொள்வது எந்த இறைத் துதருக்கும் உகந்ததல்ல. நீங்கள் உலகப் பொருட்களை விரும்புகிறீர்கள். ஆனால், அல்லாஹ் (உங்களுக்கு) மறுமை நலன்களையே விரும்புகிறான். (திருக்குர்ஆன் 08:67)

## இறைமறுப்பாளர்களிடம் சிக்கிக் கொண்ட (முஸ்லிம்) போர்க் கைதி தன்னைச் சிறைபிடித்தவர்களிடமிருந்து தப்பிக்க அவர்களை ஏமாற்றவோ, கொன்று விடவோ அனுமதியுண்டா?

இது பற்றி நபி (ஸல்) அவர்களிடமிருந்து மிஸ்வர் (ரலி) அறிவித்தார்.

## இணைவைப்பவன் ஒரு முஸ்லிமை எரித்துவிட்டால் (அதற்கு பதிலாக) அவனை எரிக்கலாமா?

ஹதீஸ் 3018. அனஸ் (ரலி) அறிவித்தார்.

‘உக்ல் குலத்தைச் சேர்ந்த எட்டுப் பேர் கொண்ட குழு ஒன்று நபி (ஸல்) அவர்களிடம் (மதீனாவிற்கு) வந்தது. அவர்களுக்கு மதீனாவின் (தட்ப வெப்பச்) சூழல் (உடல் நலத்திற்கு) உகந்ததாக இல்லை. எனவே, அவர்கள், இறைத்தூதர் அவர்களே! எங்களக்குச் சிறிது (ஒட்டகப்) பால் கொடுத்து உதவுங்கள்' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், நீங்கள் ஒட்டக மந்தையை அனுகுவதைத் தவிர வேறு வழியை நான் காணவில்லை' என்று பதிலளித்தார்கள். உடனே, (ஸகாத்தாகப் பெறப்பட்டிருந்த ஓர் ஒட்டக மந்தையை நோக்கி) அவர்கள் சென்றார்கள். அதன் சிறுநீரையும் பாலையும் குடித்தார்கள். (அதனால்)

உடல் நலம் பெற்றுப் பருமனாக ஆனார்கள். மேலும், ஒட்டகம் மேய்ப்பவனைக் கொன்றுவிட்டு, ஒட்டகங்களை ஓட்டிச் சென்றார்கள் இஸ்லாத்தை ஏற்ற பின நிராகரித்துவிட்டார்கள். ஒருவர் இரைந்து சத்தமிட்டபடி நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். நபி(ஸல்) அவர்கள்உக்ல் குலத்தாரைத் தேடிப் பிடித்து வர ஒரு குழுவினரை அனுப்பி வைத்தார்கள். பகல், உச்சிக்கு உயர்வதற்குள் அவர்கள் (பிடித்துக்) கொண்டு வரப்பட்டனர். நபி(ஸல்) அவர்கள் அவர்களின் கைகளையும் கால்களையும் துண்டித்தார்கள். பிறகு, ஆணிகளைக் கொண்டு வரச் சொல்லி உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவை (கொண்டு வரப்பட்டு) பழுக்கக் காய்ச்சப்பட்டன. அவற்றால் அவர்களின் கண் இமைகளின் ஓரங்களில் சூடிட்டார்கள். அவர்களை (கருங்கற்கள் நிறைந்த)ஹர்ரா எனுமிடத்தில் எறிந்துவிட்டார்கள். அவர்கள் (தாகத்தால்) தண்ணீர் கேட்டும் இறக்கும் வரை அவர்களுக்குத் தண்ணீர் புகட்டப்படவில்லை.

அறிவிப்பாளர் அபூ கிலாபா(ரஹ்) கூறினார்கள்:

அவர்கள் (உக்ல் அல்லது உரைனா குலத்தார்) கொலை செய்தார்கள் திருடினார்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் எதிர்த்துப் போரிட்டார்கள் பூமியில் குழப்பதை விளைவிக்க முயன்றார்கள். (அதனால்தான், அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் இவ்வளவு கொடிய தண்டனையை அளிக்க நேர்ந்தது.)

ஹதீஸ் 3019. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைத்தூதர்களில் ஒருவரை எறும்பு ஒன்று கடித்துவிட்டது. உடனே, அந்த எறும்புப் புற்றையே எரித்து விடும்படி அவர் கட்டளையிட்டார். அவ்வாறே அது எரிக்கப்பட்டுவிட்டது. (இதைக் கண்ட) அல்லாஹ், ஓர் எறும்பு உங்களைக் கடித்துவிட்ட காரணத்தால் அல்லாஹ்வின் தூய்மையை எடுத்துரைத்துக் கொண்டிருந்த சமுதாயங்களில் ஒன்றையே நீங்கள் எரித்து விட்டீர்களே' என்று (அவரைக் கண்டிக்கும் விதத்தில்) அவருக்கு அறிவித்தான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வீடுகளையும் பேரீச்ச மரங்களையும் எரித்தல்.

ஹதீஸ் 3020. ஜரீர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம், (தவ்ஸ் மற்றும் கஸ்அம் குலத்தாரின் தெய்வச் சிலைகள் உள்ள ஆலயமான) துல்கலஸாவின் கவலையிலிருந்து என்னை நீங்கள் விடுவிக்க மாட்டீர்களா? என்று கேட்டார்கள். அது கஸ்அம் குலத்தாரிடையேயமன் நாட்டு கஅபா என்றழைக்கப்பட்டு வந்த ஆலயமாக இருந்தது. 133 நான் அஹ்மஸ் குலத்தைச் சேர்ந்த நூற்றைம்பது குதிரை வீரர்களுடன் புறப்பட்டேன் அவர்கள் சிறந்த குதிரைப் படையினராக இருந்தனர். நான் குதிரையின் மீது (சரியாக) உட்கார முடியாதவனாயிருந்தேன். எனவே, நபி(ஸல்) அவர்கள் என் நெஞ்சில் அடித்து, இறைவா! இவரை உறுதிப்படுத்து இவரை நேர்வழி காட்டுபவராகவும் நேர்வழியில் செலுத்தப்பட்டவராகவும் ஆக்கு' என்று பிரார்த்தனை செய்தார்கள். எனவே, நான் அந்த ஆலயத்தை நோக்கிச் சென்று அதை உடைத்து எரித்து விட்டேன். பிறகு அல்லாஹ்வின் தூதருக்கு (காரியம் முடிந்துவிட்டதைத்) தெரிவிப்பதற்காக ஆளனுப்பினேன். நான் அனுப்பிய தூதுவர் நபி(ஸல்) அவர்களிடம், உங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! அந்த ஆலயத்தை மெலிந்து இளைத்துப் போன அல்லது சிரங்கு பிடித்த ஒட்டகத்தைப் போன்றுவிட்டுவிட்டுத் தான் உங்களிடம் வந்திருக்கிறேன்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் அஹ்மஸ் குலத்தாருக்கும் அவர்களின் குதிரைப் படை வீரர்களுக்கும் பரக்கத் (எனும் அருள்வளத்)தை அளிக்கும்படி ஐந்து முறை இறைவனிடம் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 3021. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பனு நளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களைத் தீயிட்டுக் கொளுத்தினார்கள்.

## இணைவைப்பவர் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவரைக் கொல்வது.

ஹதீஸ் 3022. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு குழுவினரை (யூதர்களின் தலைவனான) அபூ ரா∴பிஉவிடம் அவனைக் கொல்வதற்காக அனுப்பினார்கள். 135 அவர்களில் ஒருவர் சென்று அவர்களின் கோட்டைக்குள் நுழைந்தார். அவர் கூறுகிறார்: நான் அவர்களின் வாகனப் பிராணிகளைக் கட்டி வைக்கும் (தொழுவம் போன்ற) இடத்தில் நுழைந்தேன். பிறகு அவர்கள், தங்கள் கழுதையைக் காணாமல் அதைத் தேடிக் கொண்டு புறப்பட்டார்கள். நான் அதைத் தேடுபவனைப் போல் (பாசாங்கு) காட்டிக் கொண்டு புறப்பட்டேன். அவர்கள் கழுதையைக் கண்டுபிடித்துவிட்டார்கள். (பிறகு திரும்பி) கோட்டைக்குள் நுழைந்தார்கள். நானும் நுழைந்தேன். கோட்டைத் கதவை இரவில் மூடிவிட்டார்கள். (அதன்) சாவிகளை (கோட்டைச் சுவரிலிருந்த) ஒரு மாடத்தில் வைத்தார்கள். அவர்கள் தூங்கியவுடன் நான் அந்தச் சாவிகளை எடுத்துக் கோட்டைக் கதவைத் திறந்து விட்டேன். பிறகு அபூ ரா∴பிஉவிடம் சென்று,அபூ ரா∴பிஉவே!என்று அழைத்தேன். அவன் எனக்கு பதிலளித்தான். குரல் வந்த திசையை நோக்கிச் சென்று அவனைத் தாக்கினேன். அவன் கூச்சலிட்டான். உடனே, நான் அங்கிருந்து வெளியேறி விட்டேன். பிறகு, (அவனைக்) காப்பாற்ற வந்தவனைப் போல் மீண்டும் அவனிடம் திரும்பிச் சென்று,அபூ ரா∴பிஉவே!என்று என் குரலை மாற்றிக் கொண்டு அவனை அழைத்தேன். அவன்,உனக்கென்ன நேர்ந்தது? உன் தாய்க்குக் கேடுண்டாகட்டும்' என்று சொன்னான். நான்,உனக்கு என்ன ஆயிற்று? என்று கேட்டேன். அவன்,என்னிடம் யார் வந்தது என்று எனக்குத் தெரியவில்லை. எவனோ என்னைத் தாக்கிவிட்டான்' என்று கூறினான். உடனே, நான் அவனுடைய வயிற்றில் என் வாளை வைத்து அழுத்தினேன். அது (அவனுடைய வயிற்றுக்குள் சென்று) அவனுடைய எலும்பில் இடித்தது. பிறகு, நான் (எப்படி வெளியேறுவது என்ற) திகைப்புடன் வெளியே வந்தேன். அவர்களின் ஏணி ஒன்றின் வழியாக இறங்குவதற்காக வந்தேன். அப்போது கீழே விழுந்து என் கால் சுளுக்கிக் கொண்டது. நான் என் தோழர்களிடம் சென்று,(அவனுடைய மரணத்தையறிந்து அவனுடைய வீட்டார்) ஒப்பாரி வைத்து ஓலமிடும் சத்தத்தைக் கேட்காதவரை நான் இங்கிருந்து போக மாட்டேன்' என்று கூறினேன். ஹிஜாஸ் மாநிலத்தவரின் (பெரும்) வியாபாரியான அபூ ரா∴பிஉ (உடைய மரணத்து)க்காக அவனுடைய வீட்டார் எழுப்பிய ஒப்பாரி ஓலங்களைச் கேட்கும் வரை அந்த இடத்தைவிட்டு நான் செல்லவில்லை. பிறகு, நான் என் உள்ளத்தில் உறுத்தும் வேதனை எதுவுமின்றி எழுந்தேன். இறுதியில், நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததை அவர்களுக்குத் தெரிவித்தோம்.

ஹதீஸ் 3023. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு குழுவினரை அபூ ரா∴பிஉ என்பவனிடம் அனுப்பினார்கள். அப்துல்லாஹ் இப்னு அத்தீக்(ரலி) அவனுடைய வீட்டிற்குள் இரவு நேரத்தில் நுழைந்து அவன் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவனைக் கொன்றுவிட்டார்கள்.

## "எதிரியை (போர்க் களத்தில்) சந்திக்க ஆசைப்படாதீர்கள்' என்னும் நபிமொழி.

ஹதீஸ் 3024. உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களின் அடிமையாயிருந்த சாலிம் அபுந் நள்ர்(ரஹ்) அறிவித்தார்.

நான் உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களின் எழுத்தராக இருந்தேன். அவர்களுக்கு அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) ஹரூரிய்யாவுக்குப் புறப்பட்டபோது கடிதம் எழுதியிருந்தார்கள். அதை நான் படித்துக் காட்டினேன்.

அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், எதிரிகளைப் போர்க்களத்தில் சந்தித்த நாள்கள் சிலவற்றில் சூரியன் உச்சி சாயும் வரை போர்க் களத்தில் இறங்காமல் எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

ஹதீஸ் 3025. பிறகு, நபி(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று,எதிரிகளைப் (போர்க்களத்தில்) சந்திக்க ஆசைப்படாதீர்கள். அல்லாஹ்விடம் (போரின் அழிவுகளிலிருந்து) பாதுகாக்கும்படி கேளுங்கள். (வேறு வழியின்றி போர்க்களத்தில்) எதிரிகளைச் சந்திக்க நேரிட்டால் (போரின் துன்பங்களைச் சகித்துப்) பொறுமையாக இருங்கள். மேலும்,சொர்க்கம் வாட்களின் நிழல்களுக்குக் கீழே இருக்கிறது என்பதை அறிந்து கொள்ளுங்கள்' என்று கூறினார்கள். பிறகு,இறைவா! வேதத்தை அருள்பவனே! மேகத்தை நகர்த்திச் செல்பவனே! (குலங்கள் அனைத்தும் சேர்ந்து திரட்டி வந்துள்ள) படைகளைத் தோற்கடிக்க இருப்பவனே! இவர்களைத் தோற்கடித்து இவர்களுக்கெதிராக எங்களுக்கு உதவுவாயாக!என்று பிரார்த்தனை புரிந்தார்கள்.

மூஸா(ரஹ்) கூறினார்:

"நான் உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களிடம் எழுத்தராக இருந்தேன். அப்போது அவரிடம் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களின் கடிதம் வந்தது. அதில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,எதிரியை (போர்க்களத்தில்) சந்திக்க விரும்பாதீர்கள் என்றார்கள் என்றிருந்தது' என சாலிம் அபுந் நள்ர்(ரஹ்) எனக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3026. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

எதிரிகளை (போர்க்களத்தில்) சந்திக்க ஆசைப்படாதீர்கள். அவர்களை நீங்கள் (போர்க்களத்தில்) சந்திக்க நேர்ந்தால் (போரின் துன்பங்களைக் கண்டு) நிலைகுலைந்து விடாமல் பொறுமையாக இருங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## போர் என்பது சூழ்ச்சியாகும்.

ஹதீஸ் 3027. (தற்போதைய பாரசீகப் பேரரசன்) குஸ்ரு அழிந்து விடுவான். அவனுக்குப் பிறகு குஸ்ரு (வமிச அரசன்) எவனும் இருக்க மாட்டான். (தற்போதைய ரோமப் பேரரசன்) சீசர் நிச்சயம் அழிந்து விடுவான். அவனுக்குப் பிறகு சீசர் (வமிச அரசன்) எவனும் இருக்க மாட்டான். அவ்விருவரின் கருவூலங்களும் இறைவழியில் (போரிடுவோரிடையே பங்கிடப்பட்டு விடும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3028. (தொடர்ந்து அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.)

மேலும், நபி(ஸல்) அவர்கள் போரைசூழ்ச்சி என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3029. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் போரைசூழ்ச்சி என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3030. நபி(ஸல்) கூறினார்கள்:

போர் என்பது சூழ்ச்சியாகும்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

## போரில் பொய் சொல்வது.

ஹதீஸ் 3031. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,கஅப் இப்னு அஷ்ர∴பைக் கொல்வதற்கு (தாயராயிருப்பவர்) யார்? (என்று கேட்டுவிட்டு) ஏனெனில், அவன் அல்லாஹ்வுக்கும் அல்லாஹ்வின் தூதருக்கும் துன்பம் கொடுத்துவிட்டான்' என்றார்களை. முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி),நான் அவனைக் கொல்ல வேண்டுமென்று தாங்கள் விரும்புகிறீர்களா? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,ஆம்' என்று பதிலளித்தார்கள். உடனே, முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) கஅப் இப்னு அஷ்ர∴பிடம் சென்று,இவர் (முஹம்மத்) எங்களுக்குக் கடும் சிரமத்தைத் தந்துவிட்டார். எங்களிடம் (மக்களுக்கு) தருமம் (செய்யும்படி) கேட்டார்' என்று (நபி(ஸல்) அவர்களைக் குறை கூறும் விதத்தில்) பேசினார்கள். கஅப் இப்னு அஷ்ர∴ப்,அல்லாய்வின் மீதாணையாக! இன்னும் அதிகமாக அவரிடம் நீங்கள் சலிப்படைவீர்கள்' என்று கூறினான். அதற்கு முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி),நாங்கள் (தெரிந்தோ தெரியாமலோ) அவரைப் பின்பற்றி விட்டோம். அவரின் விவகாரம் எதில் முடிகிறது என்று பார்க்காமல் அவரைவிட்டு விட நாங்கள் விரும்பவில்லை. (எனவேதான் அவருடன் இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம்)' என்று (சலிப்பாகக் கூறுவது போல்) சொன்னார்கள். இவ்வாறு, முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) அவனிடம் பேச்சுக் கொடுத்துக் கொண்டேயிருந்து அவனைக் கொல்வதற்கு வசதியான தருணம் கிடைத்தவுடன் அவனைக் கொன்றுவிட்டார்கள்.

## அலட்சியமாக இருக்கும் நிலையில் எதிரிகளை திடீரெனத் தாக்கிக் கொல்வது.

ஹதீஸ் 3032. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,கஅப் இப்னு அஷ்ர∴பைக் கொல்வது யார்? என்று கேட்டார்கள். முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி),நான் அவனைக் கொல்ல வேண்டுமென்று தாங்கள் விரும்புகிறீர்களா? என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்க, அவர்கள்,ஆம்' என்று பதிலளித்தார்கள். உடனே அவர்கள்,அப்படியென்றால் தங்களைக் குறைகூற எனக்கு அனுமதியளியுங்கள்' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்அனுமதியளித்து விட்டேன்' என்று பதிலளித்தார்கள்.

## இவனால் தீங்கு நேரம் என்று அஞ்சப்படும் மனிதனிடம் எச்சரிக்கை உணர்வுடனும், தந்திரத்துடனும் நடந்து கொள்வது.

ஹதீஸ் 3033. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடன் உபை இப்னு கஅப்(ரலி) வந்து கொண்டிருக்க, இப்னு ஸய்யாதை நோக்கி நடந்தார்கள். இப்னு ஸய்யாத் ஒரு பேரீச்சந் தோட்டத்தில் இருப்பதாக நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டிருந்தது. உடனே, அவர்கள் பேரீச்சந் தோட்டத்தில் அவனைப் பார்க்க நுழைந்தபோது (தாம் வருவதை அவன் அறியக் கூடாது என்பதற்காக) பேரீச்ச மரங்களின் அடிப்பகுதிகளால் தம்மை மறைத்துக் கொண்டு அவனை நோக்கி நடக்கலானார்கள். இப்னு ஸய்யாத் ஏதோ முனுமுனுத்தவனாக ஒரு பூம்பட்டுப் போர்வையைப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தான். இப்னு ஸய்யாதின் தாய் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பார்த்துவிட்டாள். உடனே,ஸா∴பியே! இதோ முஹம்மத்!என்று கூற, இப்னு ஸய்யாத் குதித்தெழுந்துவிட்டான். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (நான் வருவதைத் தெரிவிக்காமல்)

அவனை அவள் அப்படியே விட்டிருந்தால் அவன் (உண்மையை) வெளிப்படையாகப் பேசியிருப்பான்' என்றார்கள்.

## போரில்ரஜ்ஸ் எனும் (ஒரு யாப்பு வகைப்) பாடலைப் பாடுதல் மற்றும் அகழ் தோண்டும்போது (பாடிக் கொண்டே) குரலை உயர்த்துதல்.

இது பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஸஹ்ல்(ரலி) அவர்களும் அனஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

இது பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஸஹ்ல்(ரலி) அவர்களும் அனஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

இது பற்றியோ ஸலமா இப்னு அக்வ:(ரலி) அவர்களிடமிருந்து அவர்களின் முன்னாள் அடிமையான யஸீத் இப்னு அபீ உபைத்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3034. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களை அகழ்ப் போரின்போது, (அகழ் வெட்டுவதற்காகத் தோண்டிய) மண்ணை (கொட்டுமிடத்திற்கு) எடுத்துச் செல்பவர்களாகக் கண்டேன். எந்த அளவுக்கென்றால் அந்த மண், அவர்களின் மார்பின் முடியை மறைத்து விட்டிருந்தது... மேலும், நபி(ஸல்) அவர்கள் அதிகமான முடியுடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் (கவிஞரான தம் தோழர்) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்களின் பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்கள்:

இறைவா! நீ (கொடுத்த நேர்வழி) இல்லையென்றால் நாங்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம் தருமமும் செய்திருக்க மாட்டோம் தொழுதிருக்கவும் மாட்டோம். எனவே, எங்களின் மீது அமைதியை இறக்கியருள். நாங்கள் போர்க்களத்தில் எதிரியைச் சந்திக்கும்போது எங்கள் பாதங்களை உறுதிப்படுத்து. பகைவர்கள் எங்களின் மீது வரம்பு மீறி அநீதியிழைத்துவிட்டார்கள். அவர்கள் எங்களைச் சோதிக்க விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தர மாட்டோம். 143

இதை நபி(ஸல்) அவர்கள் உரத்த குரலுடன் பாடிக் கொண்டிருந்தார்கள்.

## குதிரையின் மீது சரியாக அமர முடியாதவர்.

ஹதீஸ் 3035. ஜரீர்(ரலி) அறிவித்தார்.

நான் இஸ்லாத்தைத் தழுவியதிலிருந்து (தம் வீட்டுக்குள் வரக் கூடாதென்று) நபி(ஸல்) அவர்கள் என்னைத் தடுத்ததில்லை புன்முறுவலுடன் சிரித்தவர்களாகவே தவிர அவர்கள் என் முகத்தைப் பார்த்ததில்லை.

ஹதீஸ் 3036. என்னால் குதிரையில் சரியாக அமர முடியவில்லை' என்று நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். நபி(ஸல்) அவர்கள் என் நெஞ்சில் தம் கரத்தால் அடித்து, இறைவா! இவரை உறுதிப்படுத்து. இவரை நேர்வழி காட்டுபவராகவும் நேர்வழியில் செலுத்தப்பட்ட பெற்றவராகவும் ஆக்கு' என்று பிரார்த்தனை செய்தார்கள்.

## (ஈச்சம்) பாயை எரித்து அதனால் காயத்திற்கு சிகிச்சையளிப்பதும், ஒரு பெண் தன் தந்தையின் முகத்திலிருந்து (வழியும்) இரத்தத்தைக் கழுவுவதும், (அதற்காகத்) தண்ணீரைக் கேடயத்தில் அள்ளிச் சுமந்து வருவதும்.

ஹதீஸ் 3037. அபூ ஹாஸிம்(ரலி) அறிவித்தார்.

"இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காயத்திற்கு எதனால் சிகிச்சையளிக்கப்பட்டது? என்று ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களிடம் மக்கள் கேட்டனர். அதற்கு அவர்கள், அதைப் பற்றி என்னை

விட அதிகமாக அறிந்தவர்கள் எவரும் (தற்போது) மக்களில் எஞ்சியிருக்கவில்லை. அலீ(ரலி) தம் கேடயத்தில் தண்ணீரை அள்ளிக் கொண்டு வந்தார்கள். மேலும், ஃபாத்திமா(ரலி), நபி(ஸல்) அவர்களின் முகத்திலிருந்து இரத்தத்தைக் கழுவிவிட்டார்கள். (ஈச்சம்) பாய் ஒன்று எடுத்து வரப்பட்டு, எரிக்கப்பட்டு அதைக் கொண்டு அல்லாஹ்வின் தூதருடைய காயத்திற்கு (மருந்திட்டு)க் கட்டு போடப்பட்டது' என்றார்கள்.

## போரின்போது சச்சரவு செய்து கொள்வதும் கருத்து வேறுபட்டு தகராறு செய்வதும் வெறுக்கத் தக்கது என்பதும், என் தலைவருக்கு மாறு செய்பவரின் தண்டனையும்.

அல்லாஹ் கூறினான்:

ஒருவரோடொருவர் (பூசல் கொண்டு) சண்டை சச்சரவுகளில் ஈடுபடாதீர்கள். (அதனால்) நீங்கள் அச்சமும் பலவீனமும் அடைவீர்கள். உங்கள் வலிமை (பறி) போய் விடும். (திருக்குர்ஆன் 08:46)

இங்கேவலிமை என்பது போர் வலிமையைக் குறிக்கிறது என்று கதாதா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 3038. அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், முஆத் அவர்களையும் என்னையும் யமன் நாட்டிற்கு (ஆட்சி நடத்தவும் பிரசாரம் செய்யவும்) அனுப்பினார்கள். அப்போது (எங்கள்) இருவரிடமும்,நீங்கள் இலேசானதையே மக்களுக்கு நற்செய்தி கூறுங்கள்: வெறுப்பூட்டி விடாதீர்கள். ஒருவரோடொருவர் இசைந்து பழம் (அன்பு செலுத்தி)க் கொள்ளுங்கள். ஒருவரோடொருவர் (கருத்து வேறுபட்டு) பிணங்காதீர்கள்' என்று (அறிவுரை) கூறினார்கள்.

ஹதீஸ் 3039. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போரின்போது அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களை நபி(ஸல்) அவர்கள் காலாட்படையினருக்குத் தலைவராக நியமித்தார்கள். அவர்கள் (மொத்தம்) ஐம்பது பேர் இருந்தனர். (நாங்கள் போரில் கொல்லப்பட்டு) எங்க(ள் சடலங்க)ளைப் பறவைகள் கொத்திச் செல்வதை நீங்கள் பார்த்தால் கூட நான் உங்களுக்குச் சொல்லியனுப்பும் வரை உங்களுடைய இடத்தைவிட்டு நகராதீர்கள். நாங்கள் எதிரிகளைத் தோற்கடித்து (போர்க் களத்தில் செத்து வீழ்ந்து கிடக்கும் அவர்களை) மிதித்துச் செல்வதை நீங்கள் பார்த்தாலும் கூட நான் உங்களுக்குச் சொல்லியனுப்பும் வரை உங்களுடைய இடத்தைவிட்டு நகராதீர்கள்' என்று அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். முஸ்லிம்கள் இணைவைப்பவர்களைத் தோற்கடித்துவிட்டனர். பெண்கள் தங்கள் ஆடையை உயர்த்தியவர்களாக, அவர்களின் கால் தண்டைகளும் கால்களும் வெளியில் தெரிய ஓடிக் கொண்டிருப்பதை பார்த்தேன். அப்போது அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களின் சகாக்கள்,போர்ச் செல்வங்கள்! மக்களே! போர்ச் செல்வங்கள்! உங்கள் தோழர்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள். இன்னும் எதைத் தான் நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்? என்று (உரக்கக்) கூறலாயினர். (இதைக் கேட்ட) அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களிடம் என்ன சொன்னார்கள் என்பதை நீங்கள் மறந்து விட்டீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் மக்களிடம் சென்று போர்க்களத்திலுள்ள பொருட்களை எடுத்துக் கொள்வோம்' என்று கூறினார்கள். அவர்கள் மக்களிடம் சென்றபோது அவர்களின் முகங்கள் திருப்பப்பட்டு (எங்கிருந்து வந்தார்களோ அந்த இடத்திற்கே திருப்பியனுப்பப்பட்டு) தோற்றுப் போய் சென்றுவிட்டனர். அவர்களுக்குப் பின்னால் இருந்த அணியிலியிருந்து அவர்களைப் போர்க்களத்திற்குத் திரும்பி வரும்படி இறைத்தூதர்

அழைத்துக் கொண்டிருந்தபோது இது நடந்தது. அப்போது, நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் பத்ருப் போரின்போது இணைவைப்பவர்களில் (மொத்தம்) நூற்றி நாற்பது பேரை பாதிப்புக்குள்ளாக்கி விட்டிருந்தார்கள். எழுபது பேரைக் கைதிகளாகப் பிடித்திருந்தார்கள் எழுபது பேரைக் கொன்று விட்டிருந்தார்கள். எனவே, (அப்போது எதிரிகளின் அணியிலிருந்த) அபூ சுஃப்யான் (களத்தில் இறங்கி),(உங்கள்) கூட்டத்தில் முஹம்மது இருக்கிறாரா? என்று மூன்று முறை கேட்டார். அவருக்கு பதிலளிக்க வேண்டாமென்று நபி(ஸல்) அவர்கள் மக்களைத் தடுத்துவிட்டார்கள். மீண்டும்(உங்கள்) கூட்டத்தில் அபூ குஹாஃபாவின் மகன் (அபூ பக்ர்) இருக்கிறாரா? என்று மூன்று முறை கேட்டார். பிறகு,கூட்டத்தில் கத்தாபின் மகன் (உமர்) இருக்கிறாரா? என்று மூன்று முறை கேட்டார். பிறகு தம் தோழர்களின் பக்கம் திரும்பி,இவர்களெல்லாம் கொல்லப்பட்டுவிட்டனர்' என்றார். (இதைக் கேட்டு) உமர்(ரலி), தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல்,பொய் சொன்னாய், அல்லாஹ்வின் பகைவனே! நீ எண்ணியவர்கள் எல்லாருமே உயிரோடு தான் இருக்கிறார்கள். உனக்கு மனத் துன்பமளிக்கும் ஒரு விஷயம் (மக்கா வெற்றி) தான் இப்போது எஞ்சியுள்ளது? என்றார்கள். (உடனே) அபூ சுஃப்யான்,இந்நாள், பத்ருப் போர் (நடந்த) நாளுக்குப் பதிலாகும். (நமக்கிடையிலான) போரில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வருகிறது. (உங்கள்) கூட்டத்தாரில் நீங்கள் அங்கங்கள் சிதைக்கப்பட்டவர்களைக் காண்பீர்கள். அப்படிச் செய்யும்படி நான் கட்டளையிடவுமில்லை. அது எனக்கு மனத் துன்பத்தையளிக்கவும் செய்யாது' என்று சொல்லிவிட்டு பிறகு,ஹுபலே! உன் கட்சி மேலோங்கிவிட்டது, என்று கவிதை பாடலானார். 145 நபி(ஸல்) அவர்கள் (தோழர்களை நோக்கி),இவருக்கு நீங்கள் பதிலளிக்க மாட்டீர்களா? என்று கேட்டார்கள். தோழர்கள்,இறைத்தூதர் அவர்களே! நாம் என்ன(பதில்) சொல்வது? என்று வினவ, நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வே மிக உயர்ந்தவன் மிக மேலானவன் என்று சொல்லுங்கள்' என்று கூறினார்கள். அபூ சுஃப்யான்,எங்களுக்குஉஸ்ஸா (எனும் தெய்வம்) இருக்கிறது உங்களிடம் உஸ்ஸா இல்லையே' என்று கவிதை பாடினார். உடனே நபி(ஸல்) அவர்கள்,இவருக்கு நீங்கள் பதிலளிக்க மாட்டீர்களா? என்று கேட்டார்கள். தோழர்கள்,நாங்கள் என்ன (பதில்) சொல்வது? இறைத்தூதர் அவர்களே!என்று வினவ, நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வே எங்கள் உதவியாளன் உங்களுக்கு உதவியாளனே இல்லையே! என்று சொல்லுங்கள்' என்று பதிலளித்தார்கள்.

## இரவு நேரத்தில் (படையினரும் மக்களும் எதிரிப் படை வருவதாகக் கேள்விப்பட்டு) பீதிக்குள்ளானால்...

அனஸ்(ரலி) கூறினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களிடையே சிறந்த (நற்) குணமுடையவர்களாகவும் மக்களிலேயே அதிக கொடைக் குணம் உடையவர்களாகவும் மக்களிலேயே அதிக வீரமுடையவர்களாகவும் இருந்தார்கள். (ஒரு முறை) மதீனாவாசிகள் இரவு நேரத்தில் (எதிரிகள் படையெடுத்து வருவதாகக் கேள்விப்பட்டுப்) பீதியடைந்தார்கள். (விஷயம் என்ன என்றறிய வெளியே வந்தார்கள்.) அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாளைத் தொங்கவிட்டவர்களாக, அபூ தல்ஹா(ரலி) அவர்களின் சேணம் பூட்டாத குதிரையின் மீது அமர்ந்த வண்ணம் மக்களை எதிர் கொண்டபோது,பயப்படாதீர்கள். பீதியடையாதீர்கள்' என்று (மக்களைப் பார்த்து) நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். பிறகு,தங்குதடையின்றி வேகமாக ஓடக் கூடியதாக இந்தக் குதிரையை நாம் கண்டோம்' என்றார்கள்.

## எதிரியைக் கண்டவர், யா ஸபாஹா! (உதவி! உதவி! இதோ, அதிகாலை ஆபத்து!) என்று மக்களின் காதில் விழச் செய்யும் விதத்தில் உரக்கக் குரலெழுப்பி அழைப்பது.

ஹதீஸ் 3041. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

நான் மதீனாவிலிருந்து ஃகாபாவை147 நோக்கிச் செல்வதற்காகப் புறப்பட்டேன். நான் ஃகாபாவின் மலைப் பகுதியை அடைந்தபோது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களின் அடிமையொருவன் என்னைச் சந்தித்தான். நான், அடப் பாவமே! உனக்கு என்ன ஆயிற்று? என்று கேட்டேன். அவன், நபி(ஸல்) அவர்களின் (பால் தரும்) ஒட்டகங்கள் பிடித்துச் செல்லப்பட்டுவிட்டன' என்று கூறினான். நான், அவற்றை யார் எடுத்துச் சென்றது? என்று கேட்டேன். அதற்கவன், கத்ஃபான் மற்றும் ஃபஸாரா குலத்தார்' என்று பதில் சொன்னான். உடனே நான் மதீனாவின் இரண்டு மலைகளுக்கிடையேயிருந்த அனைவருக்கும் கேட்கும்படி உரக்க சப்தமிட்டுயா ஸபாஹா! (ஆபத்து!) யா ஸபாஹா! (ஆபத்து!)' என்று மும்முறை கத்தினேன். பிறகு, விரைந்து சென்று அவர்களை அடைந்தேன். அவர்கள் (கொள்ளையடித்துச் சென்ற) ஒட்டகங்களைக் கையில் பிடித்து நின்டிருந்தனர். அவர்களின் மீது அம்பெய்யத் தொடங்கினேன். நான் அக்வஃ உடைய மகன். இன்று பால் அக்வஃ உடைய மகன். இன்று பால் திருடர்கள் (தண்டனை பெறப் போகும்) நாள்' என்று (பாடியபடி) கூறினேன். பிறகு அவர்கள் (தங்கள் கையிலிருந்த தண்ணீரை) அருந்துவதற்கு முன்னால் அவர்களிடமிருந்து அந்த ஒட்டகங்களை விடுவித்து விட்டேன். பிறகு, திரும்பிச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! அந்தக் குலத்தார் தாகமாக இருந்தார்கள். அவர்கள் தண்ணீர் கூட குடிக்க விடாமல் அவர்களை நான் (அம்பெய்து) அவசரமாக ஓட வைத்து விட்டேன். அவர்களைத் துரத்திச் சென்று பிடித்து வரப்படையனுப்புங்கள்' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள், அக்வஃ உடைய மகனே! நீ அவர்களைத் தோற்கடித்துவிட்டாய். எனவே, போனால் போகட்டும், விட்டு விடு. அந்தக் குழுவினர் (தம் சகாக்களைச் சென்றடைந்துவிட்டனர் அங்கு) தம் குலத்தாரிடம் உபசரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்' என்று கூறினார்கள்.

## (எதிரியின் மீது அம்பெய்தபடி) இதை வாங்கிக் கொள். நான் இன்னாரின் மகன்' என்று கூறுவது.

ஸலமா இப்னு அக்வஃ(ரலி) கூறினார்:

இதை வாங்கிக் கொள்க! நான் அக்வஃ உடைய மகன்.

ஹதீஸ் 3042. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்.

பராஉ(ரலி) அவர்களிடம் ஒருவர், அபூ உமாராவே! ஹுனைன் போரின்போது நீங்கள் பின்வாங்கிச் சென்றுவிட்டீர்களா? என்று கேட்டார். நான் கேட்டுக் கொண்டிருக்க, பராஉ(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களை அடைந்தேன். அவர்கள் (கொள்ளையடித்துச் சென்ற) ஒட்டகங்களைக் கையில் பிடித்து நின்டிருந்தனர். அவர்களின் மீது அம்பெய்யத் தொடங்கினேன். 'நான் அக்வஃ உடைய மகன். இன்று பால் திருடர்கள் (தண்டனை பெறப் போகும்) நாள்' என்று (பாடிய படி) கூறினேன். பிறகு அவர்கள் (தங்கள் கையிலிருந்த தண்ணீரை) அருந்துவதற்கு முன்னால் அவர்களிடமிருந்து அந்த ஒட்டகங்களை விடுவித்து விட்டேன். பிறகு திரும்பிச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! அந்தக் குலத்தார் தாகமாக இருந்தார்கள். அவர்கள் தண்ணீர் குடிக்க விடாமல் அவர்களை நான் (அம்பெய்து) அவசரமாக ஓட வைத்து விட்டேன். அவர்களைத் துரத்திச் சென்று பிடித்து வரப்படையனுப்புங்கள்' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள், அக்வஃ உடைய மகனே! நீ அவர்களைத் தோற்கடித்துவிட்டாய். எனவே, போனால் போகட்டும், விட்டு விடு. அந்தக் குழுவினர் (தம் சகாக்களைச் சென்றடைந்துவிட்டனர் அங்கு) தம் குலத்தாரிடம் உபசரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்' என்று கூறினார்கள்.

## (எதிரியின் மீது அம்பெய்த படி) இதை வாங்கிக் கொள். நான் இன்னாரின் மகன்' என்று கூறுவது.

ஸலமா இப்னு அக்வஃ(ரலி) கூறினார்:

இதை வாங்கிக் கொள்க! நான் அக்வஃ உடைய மகன்.

ஹதீஸ் 3042. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அவர்களை அறிவித்தார்.

பராஉ(ரலி) அவர்களிடம் ஒருவர், அபூ உமாராவே! ஹுனைன் போரின்போது நீங்கள் பின்வாங்கிச் சென்றுவிட்டீர்களா? என்று கேட்டார். நான் கேட்டுக் கொண்டிருக்க, பராஉ(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பொருத்தவரை அவர்கள் அன்று பின்வாங்கிச் செல்லவில்லை. அபூ சுஃப்யான் இப்னு ஹாரிஸ் அவர்கள், நபி(ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த கோவேறுக் கழுதையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். இணைவைப்பவர்கள் நபி(ஸல்) அவர்களைச் சூழ்ந்தபோது, அவர்கள் (தம் வாகனத்திலிருந்து) இறங்கி, நான் இறைத்தூதர் தான். இது பொய்யல்ல. நான் அப்துல் முத்தலிபின் மகன் என்று (பாடிய படி) கூறினார்கள். அன்று நபி(ஸல்) அவர்களை விடத் துணிச்சலுடையவர் எவரும் மக்களிடையே காணப்படவில்லை' என்று கூறினார்கள்.

## எதிரிகள் ஒருவரின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ள சம்மதித்தால். (தலைவர் அனுமதிக்கும் பட்சத்தில் அது செல்லும்.)

ஹதீஸ் 3043. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

(யூதர்களான) பனு குறைழா குலத்தார் (கோட்டையிலிருந்து இறங்கி வந்து) ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்களின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸஅத்(ரலி) அவர்களை அழைத்து வரும்படி ஆளனுப்பினார்கள். ஸஅத்(ரலி) அப்போது நபி(ஸல்) அவர்கள் ஒரு கழுதையின் மீதமர்ந்து வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், உங்கள் தலைவருக்காக எழுந்து நில்லுங்கள்' என்று (மக்களிடம்) கூறினார்கள். ஸஅத்(ரலி) வந்து அல்லாஹ்வின் தூதருக்கு அருகே அமர்ந்தார்கள். நபி(ஸல்) அவர்கள், இவர்கள் உங்கள் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளச் சம்மதித்து (இறங்கி) வந்திருக்கிறார்கள்' என்று கூறினார்கள். ஸஅத்(ரலி), அப்படியென்றால் நான் அவர்களிடையேயுள்ள போரிடும் வலிமையுள்ளவர்களைக் கொன்று விட வேண்டுமென்றும் பெண்களையும் குழந்தைகளையும் போர்க் கைதிகளாக ஆக்கிக் கொள்ள வேண்டுமென்றும் தீர்ப்பளிக்கிறேன்' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள், நீங்கள் அரசனின் (அல்லாஹ்வின்) தீர்ப்பையே இவர்களின் விஷயத்தில் அளித்திருக்கிறீர்கள்' என்று கூறினார்கள்

சிறைக் கைதியைக் கட்டிப் போட்டுக் கொலை செய்வது.

ஹதீஸ் 3044. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்கா நகரம்) வெற்றி கொள்ளப்பட்டபோது தலையில் இரும்புத் தொப்பி அணிந்த வண்ணம் மக்கா நகரினுள் நுழைந்தார்கள். அதை அவர்கள் கழற்றியபோது ஒருவர் வந்து, இப்னு கத்தல் என்பவன் (அபயம் தேடியவனாக) கஅபாவின் திரைகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், அவனைக் கொல்லுங்கள்' என்று உத்தரவிட்டார்கள்.

## ஒருவர் தன்னைக் கைது செய்யும்படி எதிரியிடம் சரணடையலாமா?

அவ்வாறு சரணடைய விரும்பாத வரும், எதிரிகளால் படுகொலை செய்யப்படுவதற்கு முன்பு இரண்டுரக்கஅத்துகள் தொழுதவரும்.

ஹதீஸ் 3045. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பத்துப் பேர்கள் கொண்ட ஒரு குழுவினரை உளவுப்படையாக அனுப்பி வைத்தார்கள். உமர் இப்னு கத்தாபுடைய மகன் ஆஸிமின் (தாய்வழிப்) பாட்டனார் ஆஸிம் இப்னு ஸாபித் அல் அன்சாரியை உளவுப் படைக்குத் தலைவராக்கினார்கள். 153 அவர்கள் புறப்பட்டு, உஸ்ஃபானுக்கும் மக்காவுக்கும் இடையிலுள்ளஹத்ஆ எனுமிடத்திற்கு வந்தபோதுஹத்ஆ என்னுமிடத்திற்கு வந்தபோது ஹுதைல் குலத்தைச் சேர்ந்த பனுலிஹ்யான் என்றழைக்கப்படும் ஒரு கிளையினருக்கு இந்த உளவுப் படையினர் வரும் விவரம் தெரிவிக்கப்பட்டது. உடனே அக்கிளையினர் (அவர்களைப் பிடிப்பதற்காக) அம்பெய்வதில் தேர்ச்சி பெற்ற கிட்டத் தட்ட இருநூறு வீரர்களை தங்களுக்காகத் திரட்டிக் கொண்டு இந்த உளவுப் படையினரின் சுவடுகளைப் பின்பற்றி (அவர்களைத் தேடியபடி) சென்றனர். (வழியில்) உளவுப்படையினர் மதீனாவிலிருந்து பயண உணவாகக் கொண்டு வந்திருந்த பேரீச்சம் பழங்களைத் தின்று (அவற்றின் கொட்டைகளைப் போட்டு) விட்டுச் சென்ற இடத்தைக் கண்டனர். உடனே, இது யத்ரிபுடைய (மதீனாவுடைய) பேரீச்சம் பழம்' என்று கூறினர். எனவே, அவர்களின் கால் சுவடுகளைப் பின்பற்றிச் சென்றனர். அவர்களை ஆஸிம் (ரலி) அவர்களும் அவர்களின் சகாக்களும் கண்டபோது, உயரமான (குன்று போன்ற) ஓரிடத்தில் (புகலிடம் தேடி) ஒதுங்கி நின்றனர். அவர்களை பனு லிஹ்யான் குலத்தினர் சூழ்ந்தனர். அவர்கள் அந்த உளவுப் படையினரிடம், நீங்கள் இறங்கி வந்து எங்களிடம் சரணடைந்து விடுங்கள். உங்களுக்கு நாங்கள் உறுதிமொழியும் வாக்கும் அளிக்கிறோம். உங்களில் எவரையும் நாங்கள் கொல்லமாட்டோம்' என்று கூறினார்கள். உளவுப் படையின் தலைவரான ஆஸிம் இப்னு ஸாபித் (ரலி), அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று நான் ஒரு நிராகரிப்பாளனின் பொறுப்பில் (என்னை ஒப்படைத்தவனாக இந்தக் குன்றிலிருந்து) கீழே இறைவா! எங்கள் நிலை குறித்து உன் தூதருக்குத் தெரிவித்து விடு' என்று பிரார்த்தித்தார்கள். எதிரிகள் அவர்களின் மீது அம்பெய்து ஆஸிம் உட்பட ஏழு பேரைக் கொன்றனர். உளவுப் படையினரில் (எஞ்சியிருந்த) மூன்று பேர் எதிரிகளிடம் உறுதிமொழியும் வாக்கும் பெற்று இறங்கினார்கள். அவர்கள் அன்சாரித் தோழர் குபைப் அவர்களும், இப்னு தசினா அவர்களுக்கு மற்றுமொருவரும் ஆவர். 154 இவர்கள் தங்கள் கையில் கிடைத்தவுடன் நிராகரிப்பாளர்கள் தம் விற்களின் நாண்களை அவிழ்த்து அவர்களைக் கட்டினார்கள். (உளவுப் படையில் எஞ்சிய மூவரில்) மூன்றாவது மனிதர், இது முதலாவது நம்பிக்கை துரோகம் அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களுடன் வர மாட்டேன். (கொல்லப்பட்ட) இவர்கள் எனக்கு ஒரு (நல்ல பாடமாக அமைந்துள்ளனர்' என்று கூறினார். உடனே, அவர்கள் அவரை இழுத்துச் சென்று தம்மோடு வரும்படி நிர்பந்தித்தார்கள். அதற்கு அவர் மறுத்து விடவே அவரைக் கொலை செய்துவிட்டார்கள். பிறகு குபைப் அவர்களையும் இப்னு தசினா அவர்களையும் பிடித்துச் சென்று மக்காவில் விற்றுவிட்டனர். இது பத்ருப் போருக்குப் பிறகு நடந்த சம்பவமாகும். குபைப் அவர்களை பனு ஹாரிஸ் என்னும் குலத்தார் வாங்கினர். அந்தக் குலத்தின் தலைவர் ஹாரிஸ் இப்னு ஆமிர் என்பவரை குபைப் அவர்கள் பத்ருப் போரில் கொன்று விட்டிருந்தார்கள். எனவே, (அதற்குப் பழிவாங்குவதற்காக குபைப் அவர்களை பனு ஹாரிஸ் குலத்தார் வாங்கிக் கைது செய்து வைத்திருந்தனர்.) அவர்களிடம் குபைப் அவர்கள் கைதியாக இருந்தார்கள்.

உபைதுல்லாஹ் இப்னு இயாள் (ரஹ்) கூறினார்கள் என அறிவிப்பாளர் ஸுஹ்ரீ (ரஹ்) கூறினார்.

ஹாரிஸின் மகள் என்னிடம் கூறினார்:

குபைப் அவர்களைக் கொல்வதற்காக (எங்கள் குடும்பத்தார்) ஒன்று கூடியபோது, குபைப் தேவையற்ற முடிகளைக் களைவதற்காக ஒரு சவரக் கத்தியை என்னிடமிருந்து இரவல் வாங்கினார். அப்போது என்னுடைய குழந்தை ஒருவனை அவர் கையிலிலெடுத்தார். அவன் அவரிடம் சென்றபோது நான் (பார்க்காமல்) கவனக் குறைவாக இருந்து விட்டேன். அவர் கையில் சவரக் கத்தி இருக்க, தம் மடியின் மீது அவனை உட்கார வைத்திருப்பதை கண்டேன். அதைக் கண்டு நான் கடும் பீதியடைந்தேன். என் முகத்தில் தெரிந்த பீதியை குபைப் புரிந்து கொண்டார். உடனே,நான் இவனைக் கொன்று விடுவேன் என்று நீ பயப்படுகிறாயா? நான் அப்படிச் செய்யமாட்டேன்' என்று கூறினார். அல்லாஹ்வின் மீதாணையாக! குபைப் அவர்களை விடச் சிறந்த ஒரு கைதியை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் ஒரு நாள் தம் கையிலிருந்த திராட்சைக் குலை ஒன்றிலிருந்து (பழங்களை எடுத்து) உண்டு கொண்டிருக்கக் கண்டேன். அப்போது அவரின் கை இரும்புக் சங்கிலிகளால் கட்டப்பட்டு இருந்தது. மேலும், அப்போது மக்கா நகரில் பழம் (விளையும் பருவம்) எதுவும் இருக்கவில்லை.

...மேலும், ஹாரிஸின் மகள்,அது அல்லாஹ்விடமிருந்து கிடைத்த இரணமாகும். அல்லாஹ் அதை குபைப் அவர்களுக்கு அளித்திருந்தான்' என்று கூறி வந்தார். (என அறிவிப்பாளர் இடையில் கூறுகிறார்.)

(தொடர்ந்து அறிவிப்பாளர் கூறுகிறார்:)

அவர்கள் குபைப் அவர்களைக் கொல்வதற்காக ஹரம் (எனும் இரத்தம் சிந்துவது அனுமதிக்கப்படாத புனிதப்) பகுதியிலிருந்துஹில் (எனும் புனித எல்லைக்கு வெளியே இருக்கும் பகுதிக்குப் புறப்பட்டுச் சென்றபோது அவர்களிடம் குபைப் அவர்கள்,என்னை இரண்டு ரக்அத்துகள் தொழ விடுங்கள்' என்று கூறினார்கள். (தொழுது முடித்து) பிறகு,நான் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறேன் என்று நீங்கள் எண்ணுவீர்கள் என்ற அச்சம் எனக்கில்லாமல் இருந்திருந்தால் நான் நீண்ட நேரம் தொழுதிருப்பேன்' என்று கூறிவிட்டு,இறைவா! இவர்களை எண்ணி வைத்துக் கொண்டு (ஒருவர் விடாமல்) பழி வாங்குவாயாக!என்று பிரார்த்தித்தார்கள். மேலும்,நான் முஸ்லிமாகக் கொல்லப்படுவதால் நான் எதைப் பற்றியும் பொருட்படுத்தப் போவதில்லை. எந்த இடத்தில் நான் இறந்தாலும் நான் இறைவனுக்காகவே கொல்லப்படுகிறேன் (என்பதில் எனக்கு மகிழ்ச்சியே). நான் கொலையுறுவது அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காகத் தான் எனும்போது, அவன் நாடினால் என்னுடைய துண்டிக்கப்பட்ட உறுப்புகளின் இணைப்புகளின் மீது கூட (தன்) அருள் வளத்தைப் பொழிவான்' என்று கவி பாடினார்கள். பின்னர், குபைப் அவர்களை ஹாரிஸின் மகன் (உக்பா) கொன்றுவிட்டார். அன்றிலிருந்து அடைத்து வைத்து அல்லது கட்டி வைத்துக் கொல்லப்பட்ட ஒவ்வொரு முஸ்லிமுக்கும் கொல்லப்படுவதற்கு முன் இரண்டு ரக்அத்துகள் தொழுவதை முன்மாதிரியாக்கியவர் குபைப் அவர்களே என்றாயிற்று. ஆஸிம் இப்னு ஸாபித் அவர்கள் கொல்லப்பட்டபோது, அவர்கள் செய்த பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக் கொண்டு (அவர்களின் நிலைகுறித்து தன் தூதருக்குத் தெரிவித்து)விட்டான். நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோழர்களுக்கு உளவுப் படையினரின் செய்தியையும், அவர்களுக்கு குறைஷிக்குல நிராகரிப்பாளர்களில் சிலருக்கு ஆஸிம் அவர்கள் கொல்லப்பட்டது குறித்துத் தெரிவிக்கப்பட்டவுடன் (கொல்லப்பட்டது அவர்தான் என்று) அவரை அடையாளம் தெரிந்து கொள்ள அவரின் அங்கம் எதையாவது தமக்குக் கொடுத்தனுப்பும் படி கேட்டு அவர்கள் ஆளனுப்பினார்கள். ஏனெனில், ஆஸிம் அவர்கள் பத்ருப் போரின்போது குறைஷிகளின் தலைவர்களில் ஒருவரைக் கொன்றிருந்தார்கள். அப்போது ஆஸிம் அவர்களுக்க (அவர்களின் உடலுக்குப் பாதுகாப்பாக) ஆண் தேனீக்களின் கூட்டம் ஒன்று நிழல் தரும் மேகத்தைப்

போன்று (அவரைச் சுற்றிலும் அரணாகப் படர்ந்திருக்கும் படி) அனுப்பப்பட்டது. அது அவர்களை குறைஷிகளின் தூதுவரிடமிருந்து காப்பாற்றியது. எனவே, அவர்களின் சதையிலிருந்து அவர்களால் எதையும் துண்டித்து எடுத்துச் செல்ல முடியவில்லை.

## (எதிரிகளிடமிருந்து) போர்க் கைதியை விடுவிப்பது.

இது பற்றி அபூ மூஸா அஷ்அரீ(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3046. அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (போர்க்) கைதியை (எதிரியிடமிருந்து) விடுவியுங்கள் பசித்தவனுக்கு உணவளியுங்கள் நோயாளியை நலம் விசாரியுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3047. அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

அலீ(ரலி) அவர்களிடம், உங்களிடம் அல்லாஹ்வின் வேதத்திலிருப்பதைத் தவிர இறையறிவிப்புகளிலிருந்து (வேறு) ஏதும் இருக்கிறதூ? என்று கேட்டேன். அவர்கள், இல்லை் விதையைப் பிளப்பவனும், உயிரைப் படைப்பவனுமான அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவ்வாறு எதையும் நான் அறிந்திருக்கவில்லை ஒரு மனிதருக்கு அல்லாஹ் திருக்குர்ஆனில் அளிக்கிற விளக்கத்தையும் தவிர' என்று பதிலளித்தார்கள். நான், இந்தத் தாளில் என்ன இருக்கிறது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், உயிரீட்டுத் தொகை (பற்றிய சட்டம்), போர்க் கைதியை (பணம் கொடுத்தோ, கைதிகள் பரிவர்த்தனை செய்தோ எதிரிகளிடமிருந்து) விடுவிப்பது, மற்றும் எந்த முஸ்லிமையும் நிராகரிப்பாளன் ஒருவனைக் கொன்றதற்காகக் கொல்லக் கூடாது (என்பது)' என்று பதிலளித்தார்கள்.

## இணைவைப்பவர்களிடம் பிணைத் தொகை பெறுவது.

ஹதீஸ் 3048. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் சிலர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! எங்கள் சகோதரி மகன் அப்பாஸ் அவர்களின் பிணைத் தொகையை (வாங்காமல்)விட்டுக் கொடுத்து (இலவசமாக அவர்களை விடுதலை செய்து) விட அனுமதி கொடுங்கள்' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், பிணைத் தொகையிலிருந்து ஒரேயொரு திர்ஹத்தைக் கூட (வாங்காமல்)விட்டு விடாதீர்கள்' என்று (தம் தோழர்களிடம்) சொன்னார்கள்.

ஹதீஸ் 3049. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் பஹ்ரைனிலிருந்து (அரசு நிதி) கொண்டு வரப்பட்டது. அப்போது அப்பாஸ்(ரலி) வந்து, இறைத்தூதர் அவர்களே! எனக்குக் கொடுங்கள். ஏனெனில், நான் (இஸ்லாத்தைத் தழுவும் முன்பு பத்ருப் போரில் கைதியாகப் பிடிபட்டபோது எனக்காகவும் பிணைத் தொகை செலுத்தியிருக்கிறேன் (என் சகோதரர்) அகீலுக்காகவும் பிணைத் தொகை செலுத்தியிருக்கிறேன்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், எடுத்துக் கொள்வீராக!என்று கூறி (நிதியை) அவரின் ஆடையில் (கொட்டி) அவருக்குக் கொடுத்தார்கள்.

ஹதீஸ் 3050. முஹம்மத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்.

என் தந்தை ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) பத்ருப் போர்க் கைதிகளின் (பிணைத் தொகை மற்றும் விடுதலை) விஷயமாக நபி(ஸல்) அவர்கள் மஃக்ரிப் தொழுகையில்தூர் அத்தியாயத்தை ஓதக் கேட்டேன்' என்று (என் தந்தை) கூறினார்கள்.

## எதிரி நாட்டைச் சேர்ந்த ஒருவன் இஸ்லாமிய நாட்டில் எவருடைய அடைக்கலமும் பெறாமல் நுழைந்துவிட்டால்...

ஹதீஸ் 3051. ஸலமா பின் அக்வஃ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஹுனைன் போருக்கான) பயணத்தில் இருந்தபோது அவர்களிடம் இணைவைப்பவர்களிடையேயிருந்து உளவாளி ஒருவன் வந்தான் நபி(ஸல்) அவர்களின் தோழர்களிடம் பேசியபடி அமர்ந்தான் பிறகு, திரும்பிச் சென்றுவிட்டான். நபி(ஸல்) அவர்கள் (விஷயம் தெரிந்தவுடன்),அவனைத் தேடிப் பிடித்துக் கொன்று விடுங்கள்' என்று உத்தரவிட்டார்கள். 161 நான் அவனை (தேடிப் பிடித்துக்) கொன்று விட்டேன். அவனிடமிருந்து கைப்பற்றப்பட்ட அவனுடைய உடைமைகளை (போர்ச் செல்வத்தில் என் பங்கிற்கு மேல்) உபரியாக நபி(ஸல்) அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள்.

## இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் பிற மதத்தவர்களின் பாதுகாப்பிற்காக போரிட வேண்டும் அவர்களை அடிமைகளை நடத்தக் கூடாது.

ஹதீஸ் 3052. உமர்(ரலி) அறிவித்தார்.

(எனக்குப் பின் வருகிற புதிய) கலீஃபாவுக்கு நான் உபதேசிக்கிறேன். அல்லாஹ்வின் பொறுப்பிலும், அவனுடைய தூதர்(ஸல்) அவர்களின் பொறுப்பிலும் உள்ள (முஸ்லிமல்லாத)வர்களின் ஒப்பந்தத்தை முழுமையாக நிறைவேற்றிட வேண்டும். (அதன்படி) அவர்களைப் பாதுகாப்பதற்காகப் போரிட வேண்டும் அவர்களின் சக்திக்கேற்பவே தவிர (ஜிஸ்யா எனும் பாதுகாப்பு வரியின்) பாரத்தை அவர்களின் மீது சுமத்தக் கூடாது.

## தூதுக் குழுவினருக்குப் பரிசுகள் வழங்குதல்.

## 'இஸ்லாமிய அரசின் கீழுள்ள பிற மதத்தவருக்காகப் பரிந்துரை செய்யலாமா? என்பதும், அவர்களுடன் கொடுக்கல் வாங்கல்கள் செய்வதும்.

ஹதீஸ் 3053. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்.

(ஒரு முறை) இப்னு அப்பாஸ்(ரலி), (அன்று) வியாழக்கிழமை எந்த வியாழக்கிழமை (தெரியுமா?)' என்று கேட்டுவிட்டு, அவர்களின் கண்ணீர் சரளைக் கல் பூமியை நனைத்து விடும் அளவிற்கு அழுதார்கள். பிறகு கூறினார்கள்.

வியாழக்கிழமையன்று இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (நோயின்) வேதனை கடுமையாயிற்று. அப்போது அவர்கள்,ஓர் ஏட்டை என்னிடம் கொண்டு வாருங்கள். உங்களுக்கு ஒரு மடலை நான் எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழி தவற மாட்டீர்கள்' என்று கூறினார்கள். அப்போது மக்கள் (உரத்த குரலில்) சச்சரவிட்டார்கள். ஆனால், ஓர் இறைத் தூதரின் முன்னால் சச்சரவு செய்வது முறையல்ல. மக்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கடுமையாக நோயுற்றுவிட்டார்கள்' என்று கூறினார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள்,என்னைவிட்டு விடுங்கள். நீங்கள் எதற்கு என்னை அழைக்கிறீர்களோ அந்த (மரண சாசனம் எழுதும்) பணியை விட நான் இப்போதுள்ள (இறை நினைவில் லயித்திருக்கும் இந்த) நிலையே சிறந்தது? என்று சொல்லிவிட்டார்கள். (எதையும் எழுதித் தரவில்லை) 164 மேலும், அவர்கள் தங்களின் மரணத் தருவாயில் மூன்று விஷயங்களைக் கட்டளையிட்டார்கள். அவை: அரபு தீபகற்பத்திலிருந்து இணை வைப்பவர்களை வெளியேற்றுங்கள். (அயல் நாடுகள் மற்றும் குலங்களின்) தூதுக் குழுவினருக்கு நான் கொடுத்து வந்ததைப் போல் நீங்களும் பரிசுப் பொருள்களை வழங்குங்கள்.

மூன்றாவது கட்டளையை நான் மறந்து விட்டேன்...

யஅகூப் இப்னு முஹம்மத்(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் முகீரா இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்களிடம் அரபு தீபகற்பம் பற்றிக் கேட்டேன். அவர்கள், மக்காவும், மதீனாவும், யமாமாவும், யமனும் (அரபு தீபகற்பத்தில் அடங்கும்)‘ என்று பதிலளித்தார்கள்.

மேலும் யஅகூப்(ரஹ்) கூறினார்: (மக்கா - மதீனா இடையே உள்ள)அல்-அர்ஜ் என்ற இடம் திஹாமாவின் முதற் கட்டமாகும்.

## தூதுக் குழுவினரை வரவேற்பதற்காக (ஆடையணிகளால்) அலங்கரித்துக் கொள்வது.

ஹதீஸ் 3054. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி) கெட்டியான பட்டு அங்கி ஒன்று சந்தையில் விற்கப்படுவதைக் கண்டார்கள், அதை (வாங்கி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்து, இறைத்தூதர் அவர்களே! இந்த அங்கியை வாங்கி, பெருநாளின் போதும் தூதுக் குழுக்கள் வருகை தரும் போதும் இதனால் (உங்களை) அலங்கரித்துக் கொள்ளுங்கள்‘ என்றார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்இது (மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவர்களின் ஆடையாகும். “.. அல்லது (மறுமையில்) எந்தப் பங்கும் இல்லாதவர்கள் தான் இதை அணிவார்கள். “. சொன்னார்கள். பிறகு, உமர்(ரலி) அல்லாஹ் நாடிய வரை (சிறிது நேரம்) தங்கியிருந்தார்கள். பின்பு, நபி(ஸல்) அவர்கள் பூவேலைப்பாடு செய்யப்பட்ட பட்டு அங்கி ஒன்றை உமர்(ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். உமர்(ரலி) அதை எடுத்துக் கொண்டு அல்லாஹ்வின் தூதரிடம் வந்தார்கள். இறைத்தூதர் அவர்களே!இது (மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவருடைய ஆடையாகும் அல்லது... அல்லது.. (மறுமையில்) எந்த நற்பேறும் இல்லாதவர் தான் இதை அணிவார்‘... கூறினீர்கள். பிறகு, இதையே எனக்கு அனுப்பி வைத்திருக்கிறீர்களே‘ என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இதை நீங்கள் விற்று விடுவீர்கள் அல்லது உங்கள் தேவை எதனையாவது இதைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்வீர்கள் (என்பதற்காக இதை நான் உங்களுக்கு அனுப்பி வைத்தேன்)‘ என்று கூறினார்கள்.

## சிறுவனுக்கு இஸ்லாத்தை எடுத்துரைப்பது எப்படி?

ஹதீஸ் 3055. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி) நபித்தோழர்களின் ஒரு குழுவினருடன் நபியவர்களோடு (தான் இறைத்தூதர் என்று வாதாடிய) இப்னு ஸய்யாதை நோக்கிச் சென்றார்கள். 166 பனீ மகாலா குலத்தாரின் மாளிகைகளுக்கருகே சிறுவர்களுடன் (சிறுவனாக) அவன் விளையாடிக் கொண்டிருக்கக் கண்டார்கள். அப்போது இப்னு ஸய்யாத் பருவ வயதை நெருங்கி விட்டிருந்தான். நபி(ஸல்) அவர்கள் தம் கரத்தால் அவனுடைய முதுகில் அடிக்கும் வரையில் அவன் எதையுமே உணரவில்லை. பிறகு, நபி(ஸல்) அவர்கள், நான் இறைத்தூதர்(ஸல்)தான் என்று நீ சாட்சி கூறுகிறாயா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்களை இப்னு ஸய்யாத் (கூர்ந்து) பார்த்து வீட்டு, நீங்கள் (எழுதப் படிக்கத் தெரியாத மக்களான) உம்மீகளின் தூதர் என்று நான் சாட்சி கூறுகிறேன்‘ என்று பதிலளித்தான். அப்போது இப்னு ஸய்யாத் நபி(ஸல்) அவர்களிடம், நீங்கள் நான் அல்லாஹ்வின் தூதன் என்று (என்னை ஏற்றுக் கொண்டு) சாட்சி கூறுகிறீர்களா? என்று கேட்டான். அதற்கு நபி(ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாதை நோக்கி, அல்லாஹ்வின் மீதும்

அவனுடைய தூதர்களின் மீதும் நான் நம்பிக்கை கொண்டேன்‘ என்று கூறினார்கள். (பின்னர்) நபி(ஸல்) அவர்கள், (உன் நிலை பற்றி) நீ என்ன நினைக்கிறாய்? என்று கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத்,என்னிடம் மெய்யான செய்திகளும் பொய்யான செய்திகளும் உதிக்கின்றன‘ என்றான். நபி(ஸல்) அவர்கள்,உனக்கு இப்பிரச்சினையில் (உண்மையும் பொய்யும் கலந்து) குழப்பம் ஏற்பட்டுள்ளது‘ என்று கூறிவிட்டு,நான் ஒன்றை மனத்தில் உனக்காக (உன்னை சோதிப்பதற்காக) மறைத்து வைத்துள்ளேன். (அது என்ன என்று சொல்)‘ என்றார்கள். இப்னு ஸய்யாத்,அதுதுக் என்று கூறினான். (அதாவதுதுகான் என்பதைதுக் என அரைகுரையாகச் சொன்னான்.) 167 உடனே நபி(ஸல்) அவர்கள்,தூர விலம்ப் போ! நீ உன் எல்லைய தாண்டி விட முடியாது‘ என்று கூறினார்கள். உமர்(ரலி),இறைத்தூதர் அவர்களே! இவனைக் கொல்ல எனக்கு அனுமதியுங்கள். இவனுடைய கழுத்தை நான் சீவி விடுகிறேன்‘ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,இவன் அவனாக (தஜ்ஜாலாக) இருந்தால் இவனைக் கொல்லும் பொறுப்பு உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை இவன் அவனில்லையென்றால் இவனைக் கொல்வதால் உங்களுக்கு நன்மையேதும் இல்லை‘ என்றார்கள்.

ஹதீஸ் 3056. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களும் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களும் இப்னு ஸய்யாத் தங்கியிருந்த பேரீச்ச தோட்டத்திற்குச் செல்வதற்காக நடக்கலாயினர். பேரீச்சந் தோட்டத்திற்குள் நுழைந்தவுடன் நபி(ஸல்) அவர்கள், இப்னு ஸய்யாத் தம்மைப் பார்த்து விடும் முன்பே அவனிடமிருந்து அவனுடைய பேச்சு திட்டமிட்டபடி பேரீச்ச மரங்களின் அடிப்பகுதிகளுக்கிடையே தம்மை மறைத்து நடந்தார்கள். அப்போது இப்னு ஸய்யாத் தன்னுடைய படுக்கையில் ஒரு பூம்பட்டுப் போர்வையில் எதையோ முனுமுனுத்தபடி படுத்திருந்தான். இப்னு ஸய்யாதின் தாய் நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களின் தண்டுகளுக்கிடையே தம்மை மறைத்துக் கொண்டு வருவதைக் கண்டு இப்னு ஸய்யாதை,ஸாஃபியே!இது இப்னு ஸய்யாதின் பெயராகும்... என்றழைத்தாள். உடனே இப்னு ஸய்யாத் குதித்தெழுந்து உட்கார்ந்தான். நபி(ஸல்) அவர்கள்,அவள் அவனை அப்படியேவிட்டு விட்டிருந்தால் அவன் (உண்மை நிலையைத்) தெளிவுபடுத்தியிருப்பான்‘ என்றார்கள்.

ஹதீஸ் 3057. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

...பிறகு நபி(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று, அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்பப் புகழ்ந்தார்கள். பிறகு தஜ்ஜாலை நினைவு கூர்ந்து சொன்னார்கள்.

நான் அவனைக் குறித்து உங்களை எச்சரிக்கிறேன். எந்த இறைத்தூதரும் அவனைக் குறித்து தன் சமுதாயத்தாரை எச்சரிக்காமல் இருந்ததில்லை. நூற் (அலை) அவர்கள் தம் சமுதாயத்தினரை அவனைக் குறித்து எச்சரித்தார்கள். ஆயினும், நான் அவனைப் பற்றி வேறெந்த இறைத்தூதரும் தன் சமுதாயத்தாருக்குச் சொல்லாத ஒரு விபரத்தை உங்களுக்குச் சொல்கிறேன். அவன் ஒற்றைக் கண்ணன் என்பதையும் அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன் என்பயையும் அறிந்து கொள்ளுங்கள்.

## நபி(ஸல்) அவர்கள் யூதரிடம், இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். (ஈருலம்லும்) பாதுகாப்புப் பெறுவீர்கள்‘ என்று கூறியது.

எதிரி நாட்டிலிருக்கும் சிலர், அங்கு தமக்குச் செல்வமும் நிலங்களும் இருக்கும் நிலையில் இஸ்லாத்தை ஏற்றால் அந்த நாட்டை இஸ்லாமிய அரசு கைப்பற்றிக் கொள்ளும் பட்சத்தில் அது அந்தச் சிலருக்கே உரியதாகும். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3058. உஸாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்.

நான் நபி(ஸல்) அவர்களின் ஹஜ்ஜின்போது,இறைத்தூதர் அவர்களே! தாங்கள் நாளை (மக்காவில்) எங்கு தங்குகிறீர்கள்? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(அபூ தாலிபின் மகன்) அகீல் நமக்கு வீடு எதையேனும்விட்டுச் சென்றுள்ளாரா? என்று கேட்டுவிட்டுப் பிறகு,குறைஷிகள் இறைநிராகரிப்பில் நிலைத்திருக்கப் போவதாக சத்தியம் செய்த இடமானமுஹஸ்ஸப் என்கிறபனு கினானா பள்ளத்தாக்கில் நாளை நாம் தங்கவிருக்கிறோம்' என்று கூறினார்கள். பனு கினானா குலத்தார் குறைஷிகளிடம் பனு ஹாஷிம் கிளையாருக்கு எதிராக,அவர்களுடன் கொடுக்கல் வாங்கல் வைத்துக் கொள்ள மாட்டோம் அவர்களுக்குப் புகலிடம் அளிக்கவும் மாட்டோம் என்று ஒப்பந்தம் செய்திருந்தையே நபி(ஸல்) அவர்கள் இப்படிக் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3059. உமர்(ரலி) அவர்களின் (முன்னாள்) அடிமை அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி), (ஸகாத் கால்நடைகளின்) பிரத்தியேக மேய்ச்சல் நிலம் ஒன்றுக்குஹுனைன் என்றழைக்கப்படும் தம் அடிமை ஒருவரை (காவலராக) நியமித்தார்கள். அப்போது,ஹுனையே! உன் கையை முஸ்லிம்களுக்கு அநீதியிழைப்பதிலிருந்து காத்துக் கொள். அநீதியிழைக்கப்பட்டவரின் சாபப் பிரார்த்தனைக்கு அஞ்சு. ஏனெனில், அநீதியிழைக்கப்பட்டவரின் பிரார்த்தனை (அல்லாஹ்வினால்) எற்றுக் கொள்ளப்படக் கூடியதாகும். சிறு ஒட்டக மந்தைகளையும் சிறு ஆட்டு மந்தைகளையும் ஓட்டி வருபவர்கள் (மேய்ச்சல் நிலத்திற்குள்) நுழைய அனுமதியளி. (செல்வந்தர்களான) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் மற்றும் உஸ்மான் இப்னு அஃப்பான் ஆகியோரின் கால்நடைகளைக் குறித்து எச்சரிக்கையாய் இரு. (அவற்றை உள்ளே நுழைய விடாதே) ஏனெனில், அவ்விருவரின் கால்நடைகளும் (தீனி கிடைக்காமல்) அழிந்து போய்விட்டால் அவர்களிருவரும் (தம் பிழைப்பிற்குத் தம்) பேரீச்சந் தோட்டங்களையும் விளைநிலங்களையும் பயன்படுத்திக் கொள்வார்கள். ஆனால், சிறிய ஒட்டக மந்தைகளையும் சிறிய ஆட்டு மந்தைகளையும் வைத்திருப்பவர்கள் தங்கள் கால்நடைகள் (தீனி கிடைக்காமல்) அழிந்து போய்விட்டால் (கலீஃபாவான) என்னிடம் தம் பிள்ளை குட்டிகளை அழைத்து வந்து,விசுவாசிகளின் தலைவரே! நான் இவர்களை (பட்டினி கிடந்து) சாகவிட்டு விடவா? என்ற கேட்பார்கள். எனவே, (முஸ்லிம்களின் பொதுநிதியிலிருந்து) தங்கத்தையும் வெள்ளியையும் (அவர்களுக்குத் தருவதை) விட (அரசின் பிரத்தியேக மேய்ச்சல் நிலங்களிலிருந்து) தண்ணீரையும் புற்பூண்டுகளையும் தருவது எனக்கு இலேசானதாகும் அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இவர்களுக்கு அநீதியிழைத்துவிட்டதாக இவர்கள் கருதுகிறார்கள். இது அவர்களின் நாடு. இதற்காக இவர்கள் அறியாமைக் காலத்திலும் போரிட்டிருக்கிறார்கள் இஸ்லாத்தின் காலத்திலும் இஸ்லாத்தைத் தழுவி இதற்காகப் போரிட்டிருக்கிறார்கள். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! இறைவழியில் (போரிடுவோரை) நான் ஏற்றியனுப்பவேண்டிய (கால்நடைச்) செல்வம் மட்டும் தேவையில்லையென்றால் இவர்களுடைய நாட்டிலிருந்து ஓர் அங்குலத்தைக் கூட (கையகப்படுத்தி) பிரத்தியேக மேய்ச்சல் நிலமாக நான் ஆக்கியிருக்க மாட்டேன்' என்று கூறினார்கள்.

## (அறப்போருக்குச் செல்ல முன்வரும்) மக்களை தலைவர் எழுதிப் பதிவு செய்வது.

ஹதீஸ் 3060. ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

"மக்களில் இஸ்லாத்தை ஏற்றிருப்பதாகக் கூறுபவர்களின் பெயர்களை எனக்காக எழுதுங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். நாங்கள் அவர்களுக்காக ஆயிரத்து ஐநூறு பெயர்களை எழுதினோம். அப்போது நாங்கள்,நாம் ஆயிரத்து ஐநூறு பேர் இருக்க

(எதிரிகளுக்கு) நாம் பயப்படுவதா? என்று கேட்டோம். (ஆனால், பிற்காலத்தில்) நாங்கள் அச்சப்பட்டு தனியாகத் தொழுமளவிற்கு சோதனைக்குள்ளாக்கப்பட்டிருந்ததை பார்த்திருக்கிறேன்.

அறிவிப்பாளர் அஃமஷ் (ரஹ்) கூறினார்:

"(மொத்தம்) ஐநூறு பேர்களை நாங்கள் கண்டோம்' என்று ஹுதைஃபா (ரலி) மற்றோர் அறிவிப்பில் கூறுகிறார்கள்.

"அறுநூறு பேரிலிருந்து எழுநூறு பேர் வரை' என்று ஹுதைஃபா (ரலி) சொன்னதாக அபூ முஆவியா (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 3061. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, இறைத்தூதர் அவர்களே! நான் இன்ன புனிதப் போரில் கலந்து கொள்வதாக (ராணுவ வீரர்கள் பட்டியலில்) என்னுடைய பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால், என் மனைவி ஹஜ் செய்யவிருக்கிறாள்' என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், நீ திரும்பிச் சென்று உன் மனைவியுடன் ஹஜ் செய்' என்று கூறினார்கள்.

## பாவியான மனிதனின் வாயிலாகவும் இந்த மார்க்கத்திற்கு அல்லாஹ் வலுவூட்டுகிறான்.

ஹதீஸ் 3062. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் (கைபர் போரில்) கலந்து கொண்டோம். தன்னை முஸ்லிம் என்று கூறிக் கொண்டே ஒரு மனிதரைக் குறித்து நபி (ஸல்) அவர்கள், இவர் நரகவாசிகளில் ஒருவர்' என்று கூறினார்கள். போரிடும் நேரம் வந்தபோது காயம் ஒன்று அவருக்கு ஏற்பட்டது. நபி (ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எவரைக் குறித்து, இவர் நரகவாசிகளில் ஒருவர் என்று குறிப்பிட்டீர்களோ அவர் இன்று கடுமையாகப் போரிட்டு மடிந்துவிட்டார்' என்று கூறப்பட்டது. அப்போதும் நபி (ஸல்) அவர்கள், அவர் நரகத்திற்கே செல்வார்' என்று (மீண்டும்) கூறினார்கள். மக்களில் சிலர் (நபி (ஸல்) அவர்களின் இச்சொல்லை) சந்தேகப்படலாயினர். அவர்கள் இவ்வாறு இருந்து கொண்டிருக்கும்போது, அவர் (போரில் கொல்லப்பட்டு) இறக்கவில்லை. ஆயினும், அவர் கடும் காயத்திற்கு ஆளானார். இரவு வந்தபோது, காயத்தின் வேதனையை அவரால் தாங்க முடியாமல் தற்கொலை செய்தார்' என்று கூறப்பட்டது. நபி (ஸல்) அவர்களுக்கு இச்செய்தி தெரிவிக்கப்பட்டது. அப்போது அவர்கள், அல்லாஹ் மிகப் பெரியவன். நான் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவேன் என்பதற்கு நானே சாட்சி கூறுகிறேன்' என்று கூறினார்கள். பிறகு, பிலால் (ரலி) அவர்களுக்குக் கட்டளையிட, அவர்கள் மக்களிடையே, முஸ்லிமான ஆன்மா தான் சொர்க்கத்திற்குச் செல்ல முடியும். மேலும், அல்லாஹ் இந்த மார்க்கத்திற்குப் பாவியான மனிதனின் வாயிலாகவும் வலுவூட்டுகிறான்' என்று பொது அறிவித்தார்கள்.

## ஒரு போரில் (தளபதி எவரும் இல்லாத போது) பகைவர்களைக் குறித்த அச்சம் ஒருவருக்கு ஏற்பட்டால் நியமிக்கப்படாமல் தானாகவே அவர் படைத் தளபதியாகலாம்.

ஹதீஸ் 3063. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

(மூத்தா போரின்போது போர்கள் நிகழ்ச்சிகளை மதீனாவில் இருந்தபடியே நேர்முக வர்ணணையாக விவரித்து,) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். உரையில், இப்போது (இஸ்லாமியச் சேனையின்) கொடியை ஸைத் இப்னு ஹாரிஸா எடுத்தார்.

அவர் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு, அதை ஜஅ:.பர் இப்னு அபீ தாலிப் எடுத்தார். அவரும் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு அப்துல்லாஹ் இப்னு ரவாஹா எடுத்தார். இப்போது அவரும் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு, காலித் இப்னு வலீத் (நம்முடைய) உத்தரவு இன்றியே (கொடியை) எடுத்தார். அல்லாஹ் அவருக்கே வெற்றி வாய்ப்பை அளித்துவிட்டான்' என்று கூறிவிட்டு, (இப்போது) அவர்கள் நம்மிடமிருப்பது எனக்கு மகிழ்ச்சியளிக்காது' என்றோ, (இப்போது) அவர்கள் நம்மிடமிருப்பது அவர்களுக்கு மகிழ்ச்சியளிக்காது' என்றோ சொன்னார்கள். மேலும், இதைச் சொல்லும்போது நபி(ஸல்) அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைப் பொழிந்து கொண்டிருந்தன.

## படையனுப்பி உதவுதல்.

ஹதீஸ் 3064. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ரிஅல், தக்வான், உஸய்யா, பனு லிஹ்யான் ஆகிய குலத்தார் (சிலர்) வந்து, தாங்கள் இஸ்லாத்தை ஏற்றதாகக் கூறினர். 180 மேலும், தம் சமுதாயத்தினரை நோக்கி ஒரு படையனுப்பு உத்தரவிடும்படியும் நபி(ஸல்) அவர்களிடம் அவர்கள் கேட்டுக் கொண்டனர். நபி(ஸல்) அவர்கள், அன்சாரிகளிலிருந்து எழுபது பேரை அனுப்பி அவர்களுக்கு உதவினார்கள். அவர்களை நாங்கள்காரீகள் (குர்ஆனை மனனம் செய்து முறைப்படி ஓதுவோர்) என்று அழைத்து வந்தோம். அவர்கள் பகல் நேரத்தில் விறகு சேகரிப்பார்கள் இரவு நேரத்தில் தொழுவார்கள். அவர்களை அழைத்துக் கொண்டு அந்தக் குலத்தார் சென்றனர். இறுதியில்,பீரு மஊனா'181 என்னுமிடத்தை அவர்கள் அடைந்தவுடன் முஸ்லிம்களை ஏமாற்றிக் கொன்றுவிட்டனர். உடனே, நபி(ஸல்) அவர்கள் ஒரு மாதம் (முழுவதும்) ரிஅல், தக்வான், பனு லிஹ்யான் ஆகிய குலங்களுக்குத் தீங்கு நேரப் பிரார்த்தனை செய்தார்கள். (கொல்லப்பட்ட) அந்த எழுபது பேரைக் குறித்து (அவர்கள் சொல்வதாக அருளப்பட்ட) ஓர் இறைவசனத்தை குர்ஆனில் நாங்கள் ஓதி வந்தோம்.

"நாங்கள் எங்கள் இறைவனைச் சந்திக்கச் சென்று விட்டோம் என்றும், அவன் எங்களைக் குறித்துத் திருப்தியடைந்தான் நாங்களும் அவனைக் குறித்துத் திருப்தியடைந்தோம் என்றும் எங்கள் சமுதாயத்திற்கு எங்களைப் பற்றித் தெரிவித்து விடுங்கள்' என்பதே அந்த வசனம்.

பின்னர், இந்த வசனத்தை ஓதுவது (இறைவனாலேயே) ரத்து செய்யப்பட்டுவிட்டது.

## பகைவர்களை வென்று அவர்களின் திறந்த வெளிப் பகுதியில் மூன்ற நாள்கள் தங்குவது.

ஹதீஸ் 3065. அபூ தல்ஹா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு சமுதாயத்தாரை வென்றால் அவர்களின் திறந்த வெளிப் பகுதியில் மூன்று நாள்கள் தங்குவார்கள்.

இதே போன்று முஆத்(ரஹ்) அவர்களும் அப்துல் அ:.லா(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

## கனீமத் - போர்ச் செல்வத்தைப் போரின் போதும், பயணத்திலும் பங்கிடுவது.

ரா:.பிஉ (ரலி) கூறினார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் துல்ஹுலை:.பாவில் இருந்தோம். அப்போது ஓர் ஆடும் ஓர் ஒட்டகமும் எங்களுக்குக் கிடைத்தன. நபி(ஸல்) அவர்கள் பத்து ஆடுகளை ஓர் ஒட்டகத்திற்குச் சமமாகக் கருதினார்கள்.

ஹதீஸ் 3066. அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹுனைன் போரில் கிடைத்த செல்வங்களைத் தாம் பங்கிட்ட இடமான ஜிஇர்ரானாவிலிருந்து (புறப்பட்டுப் போய்) நபி(ஸல்) அவர்கள் உம்ரா செய்தார்கள்.

## இணைவைப்பவர்கள் முஸ்லிமின் செல்வத்தைக் கொள்ளையடித்துச் செல்ல, அதையே அவர் பிறகு பெற்றால்...

ஹதீஸ் 3067. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

என்னுடைய குதிரை ஒன்று (என்னைக் கீழே வீழ்த்திவிட்டு ஓடிச்) சென்றது. அதை எதிரிகள் பிடித்தனர். பின்னர், முஸ்லிம்கள் எதிரிகளை வென்றபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் காலத்தில் அது என்னிடம் திருப்பித் தரப்பட்டுவிட்டது (இவ்வாறே) என்னுடைய அடிமை ஒருவன் தப்பியோடி ரோமர்(பைஸாந்தியர்)களுடன் சேர்ந்து கொண்டான். பைஸாந்தியர்களை முஸ்லிம்கள் வென்றபோது அந்த அடிமையை காலித் இப்னு வலீத்(ரலி) நபி(ஸல்) அவர்களின் காலத்திற்குப் பிறகு என்னிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 3068. நா..பிஉ (ரஹ்) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களின் அடிமையொருவன் தப்பியோடி பைஸாந்தியர்களுடன் சேர்ந்து கொண்டான். காலித் இப்னு வலீத்(ரலி) பைஸாந்தியர்களை வென்றபோது, அவனை அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். (இவ்வாறே) இப்னு உமர்(ரலி) அவர்களின் குதிரையொன்று விரண்டோடி பைஸாந்தியர்களிடம் சிக்கியது. பைஸாந்திய நாட்டை காலித் இப்னு வலீத்(ரலி) வென்றபோது அதை அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 3069. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

முஸ்லிம்கள் பைஸாந்தியர்களைப் போர்க்களத்தில் சந்தித்தபோது நான் ஒரு குதிரையின் மீது (பயணித்தபடி) இருந்தேன் அப்போது முஸ்லிம்களின் (படைத்) தலைவராக காலித் இப்னு வலீத் அவர்கள் இருந்தார்கள். அவரை அபூ பக்ர்(ரலி) (தளபதியாக) அனுப்பியிருந்தார்கள். 9என்னுடைய) அந்தக் குதிரையை எதிரிகள் எடுத்துக் கொண்டனர். எதிரிகள் தோற்கடிக்கப்பட்டபோது காலித் இப்னு வலீத்(ரலி) என்னுடைய குதிரையைத் திருப்பித் தந்துவிட்டார்கள்.

## பாரசீக மொழியிலும் (அரபியல்லாத பிற அஜமி) மொழியிலும் பேசுவது.

அல்லாஹ் கூறினான்:

வானங்கள் மற்றும் பூமியைப் படைத்திருப்பதும், உங்கள் மொழிகளும், உங்கள் நிறங்களும் மாறுபட்டிருப்பதும் அவனுடைய சான்றுகளில் உள்ளனவையே. திண்ணமாக, இவற்றிலெல்லாம் அறிவுடையோருக்கு நிறையச் சான்றுகள் உள்ளன. (திருக்குர்ஆன் 30:22)

மேலும் அல்லாஹ் கூறினான்:

தூதர்கள் அனைவரையும் அவரவரின் சமுதாய மொழியிலேயே தூதுச் செய்தி அறிவிப்பாளர்களாய் நாம் அனுப்பி வைத்தோம். (திருக்குர்ஆன் 14:04)

ஹதீஸ் 3070. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(அகழ்ப் போரின் போது) நான் நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் எங்கள் ஆட்டுக் குட்டி ஒன்றை அறுத்தோம் நான் ஒரு ஸாவு வாற்கோதுமையை அரைத்து மாவாக்கியுள்ளேன் எனவே, தாங்களும் இன்னொருவரும் (சேர்ந்து அதை உண்பதற்கு)

வாருங்கள்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,அகழ் தோண்டுபவர்களே! ஜாபிர் விருந்துச் சாப்பாடு தயாரித்திருக்கிறார். சீக்கிரம் வாருங்கள்' என்று உரத்த குரலில் அழைத்தார்கள்.

ஹதீஸ் 3071. உம்மு காலித்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் என் தந்தையுடன் மஞ்சள் நிறச் சட்டை ஒன்றை அணிந்து சென்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,(இவள்) நன்றாயிருக்கிறாள். (இவள்) நன்றாயிருக்கிறாள்' என்றார்கள். நான் (நபி(ஸல்) அவர்களின் இரண்டு புஜங்களுக்கிடையே இருந்த) நபித்துவ முத்திரையுடன் விளையாடத் தொடங்கினேன். உடனே, என் தந்தை என்னை அதட்டினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,(குழந்தை தானே!) அவனை (விளையாட விடுவீராக!என்று கூறினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இந்தச் சட்டையை) நீ (பழையதாக்கிக்) கிழித்து நைந்து போகச் செய்து விடு. மீண்டும் அதைக் கிழித்து நைந்து போகச் செய்து விடு' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் அப்துல்லாஹ் இப்னு முபாரக்(ரஹ்),அந்தச் சட்டை, நிறம் பழுத்துப் போய் மக்களால் பேசப்படும் அளவிற்கு உம்மு காலித்(ரலி) நெடுங்காலம் வாழ்ந்தார்கள்' என்று கூறுகிறார்கள். மேலும், நபி(ஸல்) அவர்கள் கூறியசனா (நன்றாயிருக்கிறாள்) என்னும் சொல் அபிசீனிய மொழிச் சொல்லாகும்' என்றும் கூறுகிறார்கள். 187

ஹதீஸ் 3072. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹஸன் இப்னு அலீ(ரலி) (சிறுவராயிருந்த போது) தருமப் பொருளாக வந்த பேரீச்சம் பழங்களிலிருந்து ஒரு பேரீச்சம் பழத்தை எடுத்துத் தம் வாயில் வைத்தார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் பாரசீக மொழியில்,ம்ஹ் கிஹ் - சீச்சி! (என்று சொல்லிவிட்டு)நாம் தருமப் பொருளைச் சாப்பிட மாட்டோம் என்று உனக்குத் தெரியாதா? என்று கேட்டார்கள்.

## (போர்ச் செல்வங்களை) மோசடி செய்வது (பெரும் பாவமாகும்).

அல்லாஹ் கூறினான்:

எவரேனும் மோசடி செய்தால் மோசடி செய்த பொருளுடன் மறுமை நாளில் அவர் வருவார். (திருக்குர்ஆன் 03:161)

ஹதீஸ் 3073. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எங்களிடையே எழுந்து நின்று போர்ச் செல்வங்களை மோசடி செய்வது குறித்துக் கூறினார்கள். அது கடுங்குற்றம் என்பதையும் அதன் பாவம் பெரியது என்பதையும் எடுத்துரைத்தார்கள். அப்போது,மறுமை நாளில் தன் கழுத்தில், கத்திக் கொண்டிருக்கும் ஆட்டையும், கனைத்துக் கொண்டிருக்கும் குதிரையையும் சுமந்து வந்து,இறைத்தூதர் அவர்களே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் எவரையும் நான் காணவேண்டாம். (ஏனெனில்) அப்போது நான்,உனக்கு எந்த உதவியும் என்னால் செய்ய முடியாது. உனக்கு நான் (இறைச் சட்டத்தை) எடுத்துரைத்து விட்டேன் என்று கூறி விடுவேன். இவ்வாறே, (மறுமை நாளில்) தன் கழுத்தில் கத்திக் கொண்டிருக்கும் ஒட்டகத்தைச் சுமந்து வந்து,இறைத்தூதர் அவர்களே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் எவரையும் நான் காண வேண்டாம். (ஏனெனில்,) அப்போது நான்,என்னால் உனக்கு எந்த உதவியும் செய்ய முடியாது. உனக்கு (இறைச் சட்டத்தை) நான் எடுத்துரைத்து விட்டேன் என்று கூறி விடுவேன். இவ்வாறே (அந்நாளில்) தன் கழுத்தில் வெள்ளியும் தங்கமும் சுமந்து வந்து,இறைத்தூதர் அவர்களே! என்னைக் காப்பாற்றுங்கள் என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் எவரையும் நான் காண

வேண்டாம். (ஏனெனில்), அப்போது நான்,என்னால் உனக்கு எந்த உதவியும் செய்ய முடியாது. உனக்கு (இறைச் சட்டத்தை) நான் எடுத்துரைத்து விட்டேன் என்று கூறி விடுவேன். இவ்வாறே (அந்நாளில்) தன் கழுத்தில் வெள்ளியும் தங்கமும் சுமந்து வந்து,இறைத்தூதர் அவர்களே! என்னைக் காப்பாற்றுங்கள் என்று (அபயம் தேடி) அலறும் நிலையில் உங்களில் எவரையும் நான் காணவேண்டாம். (ஏனெனில்,) அப்போது நான்,என்னால் உனக்கு எந்த உதவியும் செய்ய முடியாது. உனக்கு (இறைச் சட்டத்தை) நான் எடுத்துரைத்து விட்டேன் என்று கூறி விடுவேன். அல்லது அசைகிற எந்தப் பொருளையாவது தன் கழுத்தில் சுமந்து வந்துஇறைத்தூதர் அவர்களே! என்னைக் காப்பாற்றுங்கள் என்று (அபயம் தேடி) அலறிய நிலையில் உங்களில் எவரையும் நான் காணவேண்டாம். (ஏனெனில்,) அப்போது நன்,என்னால் உனக்கு எந்த உதவியும் செய்ய முடியாது. (இறைச் சட்டத்தை) உனக்கு நான் எடுத்துரைத்து விட்டேன் என்று கூறி விடுவேன் என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

## (போர்ச் செல்வத்தில் சிறிதளவு மோசடி செய்வது(ம் பாவமே).

“(மோசடியாக மேலங்கியொன்றை எடுத்து வைத்திருந்தம்ர்ம்ரா என்பவரைக் கையும் களவுமாகப் பிடித்த போது) நபி(ஸல்) அவர்கள் அவரின் பொருள்களை எரித்துவிட்டார்கள்‘ என்று அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) கூறவில்லை. இதுதான் (எரித்தார்கள் என்று கூறப்படாத இந்த அறிவிப்பு தான் எரித்துவிட்டார்கள் என்று கூறப்பட்டுள்ள அறிவிப்பை விட) சரியானதாகும்.

ஹதீஸ் 3074. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் பயணச் சுமைகளுக்குக் காவலாகம்ர்ம்ரா என்றழைக்கப்பட்ட மனிதர் ஒருவர் இருந்தார். அவர் (ஒரு நாள்) இறந்துவிட்டார். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அவர் நரகத்தில் நுழைவார்‘ என்று கூறினார்கள். (இதைக் கேட்டு) நபித்தோழர்கள் அவரைப் பார்ப்பதற்காகச் சென்றனர். அங்கு அவர் மோசடி செய்து (திருடி) எடுத்து வைத்திருந்த மேலங்கி ஒன்றைக் கண்டார்கள்.

“(என் ஆசிரியர்) இப்னு சலாம்(ரஹ்)கிர்ம்ரா‘வைகர்கரா என்று வாசிக்க வேண்டும் என்று கூறினார்கள்‘ என அபூ அப்தில்லாஹ் புகாரீயாகிய நான் கூறுகிறேன்.

## போரில் கிடைத்த ஒட்டகங்களையும் ஆடுகளையும் (பங்கிடுவதற்கு முன்னால்) அறுப்பது வெறுக்கத் தக்கது.

ஹதீஸ் 3075. ரா∴பிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் துல் ஹுலை∴பாவில் இருந்தோம். அப்போது மக்களுக்குப் பசி ஏற்பட்டது. எங்களுக்கு ஒட்டகம் ஒன்றும் ஆடு ஒன்றும் கிடைத்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்களின் பின்வரிசையில் இருந்தார்கள். எனவே, மக்கள் அவசரப்பட்டுப் பாத்திரங்களை அடுப்புகளில் வைத்து (சமைக்கத் தொடங்கி)விட்டார்கள். (இதையறிந்த) நபி(ஸல்) அவர்கள்,பாத்திரங்களைத் தலைகீழாகக் கவிழ்க்கும்படி உத்தரவிட அவ்வாறே அவை கவிழ்க்கப்பட்டன. பிறகு (அவற்றை) நபி(ஸல்) அவர்கள் பங்கிட்டார்கள். அவர்கள் பத்து ஆடுகளை ஓர் ஒட்டகத்திற்குச் சமமாகக் கருதினார்கள். அவற்றில் ஓர் ஒட்டகம் ஒடிவிட்டது மக்களிடம் சில குதிரைகளே இருந்தன. அந்த ஒட்டகத்தை அவர்கள் விரட்டிப் பிடிக்க முயன்றார்கள். அது அவர்களைக் களைப்படையச் செய்துவிட்டது. ஒருவர் அதை நோக்கி ஓர் அம்பை எய்தார். அல்லாஹ் அந்த ஒட்டகத்தை (ஓட முடியாமல்) தடுத்து நிறுத்திவிட்டான். அப்போது நபி(ஸல்) அவர்கள்,காட்டு மிருகங்களில் கட்டுக் கடங்காதவை இருப்பது போல் இந்த விலங்குகளும் கட்டுக்கடங்காதவையாகும். உங்களிடமிருந்து விரண்டோடி விடுபவற்றை

இவ்வாறே செய்யுங்கள். (அம்பெய்து தடுத்து நிறுத்துங்கள்)‘ என்று கூறினார்கள். நான்,எங்களிடம் வாட்கள் இல்லாத நிலையில் நாளை (போர்க் களத்தில்) எதிரிகளைச் சந்திக்க நேரிடுமோ என்று நாங்கள் அஞ்சுகிறோம். எனவே, நாங்கள் (அவற்றை வாட்களால் அறுக்காமல்) மூங்கில்களால் அறுக்கலாமா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இரத்தத்தை ஓடச் செய்கிற எந்த ஆயுதத்தால் அறுக்கப்பட்டிருந்தாலும் (பிராணி அறுக்கப்படும் போது) அதன் மீது அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டிருக்கும் பட்சத்தில் அதை நீங்கள் உண்ணலாம் பல்லையும் நகத்தையும் தவிர! இதைப் பற்றி (இந்த இரண்டினாலும் அறுக்கப்பட்டதை ஏன் உண்ணக் கூடாது என்பதற்கான காரணத்தை) நான் உங்களுக்குச் சொல்கிறேன் பற்களோ எலும்பாகும். நகங்களோ அபிசீனியர்களின் கத்திகளாகும்‘ என்று நபி(ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள்.

## வெற்றிகள் குறித்து நற்செய்தி சொல்வது.

ஹதீஸ் 3076. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம்,துல் கலஸாவின் கவலையிலிருந்து என்னை நீங்கள் விடுவிக்க மாட்டீர்களா? என்று கேட்டார்கள். அது கஸ்அம் குலத்தாரிடையேயமன் நாட்டு கஅபா என்றழைக்கப்படடு வந்த ஆலயமாக இருந்தது. நான்அஹ்மஸ் குலத்தைச் சேர்ந்த நூற்றைம்பது (குதிரை) வீரர்களுடன் புறப்பட்டோம். அவர்கள் சிறந்த குதிரைப் படை வீரர்களாக இருந்தனர். என்னால் குதிரையின் மீது சரியாக அமர முடியவில்லை‘ என்று நான் நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன். எனவே, அவர்கள் என் நெஞ்சில் அடித்தார்கள். எந்த அளவிற்கென்றால் அவர்களின் விரல்கள் பதிந்த அடையாளத்தை என் நெஞ்சில் பார்த்தேன். அப்போது அவர்கள்இறைவா! இவரை உறுதிப்படுத்து இவரை நேர்வழி காட்டுபவராகவும் ஆக்கு‘ என்று பிரார்த்தித்தார்கள். நான் அதை நோக்கிச் சென்று அதை உடைத்து எரித்து விட்டேன். நபி(ஸல்) அவர்களுக்கு அதை (உடைத்து எரித்துவிட்டது) பற்றிய நற்செய்தி தெரிவிக்கச் சொல்லி ஆளனுப்பினேன். என்னுடைய தூதுவர்,இறைத்தூதர் அவர்களே! உங்களைச் சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! அந்த ஆலயத்தைச் சிரங்கு பிடித்த ஒட்டகத்தைப் போன்றுவிட்டுவிட்டுத் தான் உங்களிடம் வந்திருக்கிறேன்‘ என்று கூறினார். உடனே, நபி(ஸல்) அவர்கள் (இந்த நடவடிக்கையில் ஈடுபட்ட)அஹ்மஸ் குலத்தாருக்கும் அவர்களின் குதிரைப் படையினருக்கும் பரக்கத் (எனும் அருள் வளத்)தை அளிக்கும்படி பலமுறை அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்கள்.

## நற்செய்தி அறிவிப்பவருக்குக் கொடுக்கப்படும் அன்பளிப்பு.

(தபூக் போரில் கலந்து கொள்ளாமல் அசிரத்தையாக இருந்த குற்றத்திற்காக, தாம் மன்னிப்புக் கோரியதை ஏற்று) தமக்கு இறைவன் மன்னிப்பு வழங்கிவிட்டான் என்னும் நற்செய்தி தமக்கு அறிவிக்கப்பட்டபோது (நற்செய்தியை அறிவித்தவருக்கு) கஅப் இப்னு மாலிக்(ரலி) இரண்டு துணிகளை (அன்பளிப்பாகக்) கொடுத்தார்கள்.

## (மக்கா) வெற்றிக்குப் பிறகு ஹிஜ்ரத் கிடையாது.

ஹதீஸ் 3077. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

மக்கா வெற்றி கொள்ளப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள்,ஹிஜ்ரத் இனி கிடையாது. ஆயினும், ஜிஹாதும் (அதற்காகவும் பிற நற்செயல்கள் புரியவும்) நாட்டம் (நிய்யத்) கொள்வதும் உண்டு. நீங்கள் அறப்போர் புரியப் புறப்படும் படி அழைக்கப்பட்டால் உடனே புறப்பட்டு விடுங்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3078 ◌ ஹதீஸ் 3079 முஜாஷிஉ இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

நான் என் சகோதரர் முஜாலித் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, இவர் (என் சகோதரர்) முஜாலித் தங்களிடம் ஹிஜ்ரத் செய்வதாக உறுதிமொழியளிக் (க வந்திருக்) கிறார்' என்று கூறினேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், மக்கா வெற்றிக்குப் பிறகு ஹிஜ்ரத் கிடையாது. ஆயினும், நான் இவரிடம் இஸ்லாத்திற்கு விசுவாசமாக இருப்பதாக உறுதிமொழி வாங்குவேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3080. அதா இப்னு அபீ ரபாஹ் (ரஹ்) அறிவித்தார்.

நான் உபைத் இப்னு உமைர் (ரஹ்) அவர்களுடன் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் (முஸ்தலி∴பாவில்) ஸபீர் மலையருகே தங்கியிருந்தார்கள். அவர்கள் எங்களிடம், நபி (ஸல்) அவர்களுக்கு அல்லஹ் மக்காவின் வெற்றியை அளித்த பின்னால் (மக்காவிலிருந்து) ஹிஜ்ரத் செய்யும் கடமை நீங்கிவிட்டது' என்றார்கள்.

இஸ்லாமிய அரசின் கீழுள்ள பிற சமுதாயப் பெண்கள் (அரச துரோகக் குற்றமிழைக்கும் போது) அல்லது முஸ்லிமான பெண்கள் அல்லாஹ்வுக்கு மாறு செய்யும்போது அவர்களின் முடியை, மற்றும் அவர்களின் ஆடையை அவிழ்த்துச் சோதிக்க வேண்டிய (பணி) நிர்பந்தம் (அரசு அதிகாரியான) ஒருவருக்கு ஏற்பட்டால், அவ்வாறு செய்ய அனுமதியுண்டு.

ஹதீஸ் 3081. ஸஅத் இப்னு உபைதா (ரஹ்) அறிவித்தார்.

உஸ்மான் (ரலி) அவர்களின் ஆதரவாளர்களில் ஒருவரான அபூ அப்திர் ரஹ்மான் (ரஹ்) அலீ (ரலி) அவர்களின் ஆதரவாளர்களில் ஒருவரான இப்னு அதிய்யா (ரஹ்) அவர்களிடம் இப்படிக் கூறினார்கள்.

உங்கள் தோழர் (அலீ) அவர்களுக்கு ரத்தம் சிந்துவதற்கான துணிவைக் கொடுத்தது எது என்று அறிவேன்.

(ஏனெனில்) அவர் (பின்வருமாறு) சொல்ல கேட்டிருக்கிறேன்:

என்னையும் ஸுபைர் (ரலி) அவர்களையும் நபி (ஸல்) அவர்கள் அனுப்பி, நீங்கள் இன்னரவ்ளா என்னும் இடத்திற்குச் செல்லுங்கள். அங்கு ஒரு பெண்ணை நீங்கள் காண்பீர்கள். அவளிடம் ஹாதிப் ஒரு கடிதத்தைக் கொடுத்திருக்கிறார்' என்று கூறினார்கள். நாங்கள் ரவ்ளாவுக்குச் சென்று, கடிதம் (எங்கே)? என்று (அப்பெண்ணிடம்) கேட்டோம். அந்தப் பெண், அவர் என்னிடம் கொடுக்கவில்லை' என்று கூறினாள். நாங்கள், நீயாக அதை வெளியே எடுக்கிறாயா அல்லது நான் உன்னை நிர்வாணப்படுத்தட்டுமா? என்று கேட்டோம். உடனே, அவள் தன் நீண்ட கூந்தல் தொட்டுக் கொண்டிருக்கும் இடுப்பிலிருந்து அதை வெளியே எடுத்தாள். மடியிலிருந்து (கடிதம் கிடைத்த) உடனே நபி (ஸல்) அவர்கள், ஹாதிப் அவர்களுக்கு ஆளனுப்பினார்கள். ஹாதிப் அவர்கள் (வந்து), (இறைத்தூதர் அவர்களே!) அவசரப்படாதீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் நிராகரிக்கவுமில்லை இஸ்லாத்தின் மீது எனக்கு நேசத்தைத் தவிர வேறெதுவும் அதிகரிக்கவுமில்லை. தங்கள் தோழர்கள் அனைவருக்குமே மக்காவில் அவர்களின் மனைவி மக்களையும் அவர்களின் செல்வத்தையும் எவரின் மூலமாக அல்லாஹ் பாதுகாப்பானோ அத்தகையோர் இருக்கின்றனர். ஆனால், எனக்கோ எவருமே இல்லை. எனவே, அவர்களிடம் நான் எனக்கு ஓர் ஆதரவை உருவாக்கிக் கொள்ள விரும்பினேன்' என்று கூறினார்கள். அவர்களின் இந்த வாக்குமூலத்தை நபி (ஸல்) அவர்கள் உண்மையானதென்று ஏற்றார்கள். ஆனால், உமர் அவர்கள், என்னை அவரின் கழுத்தைக் கொய்தெறிய அனுமதியுங்கள்.

ஏனென்றால், அவர் நயவஞ்சகராம்விட்டார்‘ என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், உங்களுக்கென்ன தெரியும்? அல்லாஹ் பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களின் தூய எண்ணத்தை அறிந்து (அவர்களை நோக்கி), நீங்கள் விரும்பியதைச் செய்து கொள்ளுங்கள் என்று கூறி விட்டிருக்கலாம்‘ என்றார்கள்.

நபி(ஸல்) அவர்களின் இச்சொல்லைக் கேட்டிருந்தது தான் அலீ(ரலி) அவர்களுக்கு இந்தத் துணிவைத் தந்திருக்கிறது.

(இவ்வாறு அபூ அப்திர் ரஹ்மான் கூறினார்.)

## அறப்போர் வீரர்களை வரவேற்பது.

ஹதீஸ் 3082. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி), அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர்(ரலி) அவர்களிடம், நானும் நீங்களும் இப்னுஅப்பாஸ் அவர்களும் நபி(ஸல்) அவர்களை எதிர்கொண்டு வரவேற்கச் சென்றதை நீங்கள் நினைவில் வைத்திருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், ஆம், நபி(ஸல்) அவர்கள் எங்களை (என்னையும் இப்னு அப்பாஸ் அவர்களையும் தம்முடன்) வாகனத்தில் ஏற்றினார்கள் உங்களைவிட்டுவிட்டார்கள்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3083. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (சிறுவர்களாயிருந்தபோது மற்ற) சிறுவர்களுடன் சேர்ந்து (தபூக் போரிலிருந்து திரும்பி வரும்) இறைத்தூதர்(ஸல்) அவர்களை வரவேற்பதற்காகவதா மலைக் குன்றை நோக்கிச் சென்றோம்.

## புனிதப் போரிலிருந்து திரும்பும்போது அறப்போர் வீரர் என்ன சொல்ல வேண்டும்?

ஹதீஸ் 3084. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (புனிதப் போரிலிருந்து) திரும்பிச் செல்லும்போது மூன்று முறைஅல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன் என்று கூறிவிட்டு, இறைவன் நாடினால் நாங்கள் பாவமன்னிப்புக் கோரியவர்களாகவும் வணக்கம் புரிபவர்களாகவும், (அவனைப்) புகழ்ந்தவர்களாகவும், எங்கள் இறைவனுக்கே (நெற்றியை நிலத்தில் வைத்துச்) சிரம் பணிந்தவர்களாகவும் திரும்பிச் செல்கிறோம். அல்லாஹ் தன் வாக்குறுதியை மெய்யாக்கிக் காட்டிவிட்டான் தன் அடியாருக்கு உதவி புரிந்துவிட்டான் தன்னந் தனியாக (அனைத்துக்) குலங்களையும் தோற்கடித்துவிட்டான்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3085. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் உஸ்ஃபானிலிருந்து (போர் முடிந்து) திரும்பியபோது நாங்கள் அவர்களுடன் இருந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தின் மீது அமர்ந்திருந்தார்கள். (தம் துணைவியார்) ஸஃபிய்யா பின்த்து ஹுயை(ரலி) அவர்களை (வாகனத்தில்) தமக்குப் பின்னே அமர்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்களின் ஒட்டகம் கால் சறுக்கி விட அவர்களிருவரும் ஒரு சேரக் கீழே விழுந்தார்கள். உடனே, அபூ தல்ஹா(ரலி) (தம் வாகனத்திலிருந்து) கீழே குதித்து, இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாக்குவானாக! என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், (முதலில்) அந்தப் பெண்ணை (ஸஃபிய்யாவை) கவனி‘ என்று கூறினார்கள். உடனே, அபூ தல்ஹா(ரலி) ஒரு துணியைத் தம் முகத்தின் மீது போட்டு மூடிக் கொண்டு ஸஃபிய்யா(ரலி) அவர்களிடம் சென்று அவர்களின் மீது

அந்தத் துணியைப் போட்டார்கள். பிறகு இருவருக்கும் அவர்களின் வாகனத்தைச் சரிசெய்து கொடுத்தார்கள். உடனே அவ்விருவரும் (வாகனத்தில்) ஏறினார்கள். நாங்கள் அல்லாஹ்வின் தூதரைச் சுற்றிலும் (வட்டமாக) நின்று அவர்களுக்குப் பாதுகாப்பாகச் சென்றோம். நாங்கள் மதீனாவை நெருங்கியவுடன் நபி(ஸல்) அவர்கள்,பாவ மன்னிப்புக் கோரியவர்களாக, எங்கள் இறைவனையே வணங்கியவர்களாக, (அவனைப் போற்றிப் புகழ்ந்தவர்களாக நாங்கள் திரும்பிக் கொண்டிருக்கிறோம்' என்று கூறினார்கள். மதீனாவிற்குள் நுழையும் வரை அவர்கள் இப்படியே சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 3086. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நானும் அபூ தல்ஹா(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களுடன் (போரிலிருந்து) மதீனா நோக்கிச் சென்று கொண்டிருந்தோம். நபி(ஸல்) அவர்களுடன் ஸஃபிய்யா(ரலி) அவர்களும் இருந்தார்கள். அவர்களை நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் தமக்குப் பின்னால் அமர்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சிறிதளவு தூரத்தைக் கடந்து வந்து கொண்டிருந்தபோது வழியில் வாகனம் சறுக்கி விழுந்தது. நபி(ஸல்) அவர்களும் அவர்களின் துணைவியாரும் கீழே விழுந்தார்கள்.

அறிவிப்பாளர் அபூ இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்:

மேலும், அனஸ்(ரலி) இப்படிச் சொன்னார்கள் என்று எண்ணுகிறேன்:

அபூ தல்ஹா அவர்கள் தங்களின் ஒட்டகத்திலிருந்து குதித்து இறங்கி அல்லாஹ்வின் தூதரிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! என்னை அல்லாஹ் தங்களுக்கு அர்ப்பணமாக்குவானாக! தங்களுக்கு காயம் எதுவும் ஏற்பட்டதா? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இல்லை ஆயினும், நீ அந்தப் பெண்ணை கவனி' என்று கூறினார்கள். உடனே, அபூ தல்ஹா அவர்கள் தம் துணியைத் தம் முகத்தின் மீது போட்டு மூடிக் கொண்டு ஸஃபிய்யா(ரலி) இருந்த திசையை நோக்கி நடந்து சென்று அவர்களின் மீது அத்துணியை போட்டார்கள். உடனே, அப்பெண்மணி (ஸஃபிய்யா(ரலி)) எழுந்தார்கள். பிறகு அபூ தல்ஹா அவர்கள், அவர்கள் (நபியவர்கள் மற்றும் அன்னை ஸஃபிய்யா) இருவருக்காகவும் அவர்களின் வாகனத்தைச் சரிசெய்து தந்தவுடன் இருவரும் ஏறினர். பிறகு, அனைவரும் பயணத்தைத் தொடர்ந்தனர். மதீனாவின் அருகே வந்தபோது நபி(ஸல்) அவர்கள்,பாவ மன்னிப்புக் கோரியவர்களாக, எங்கள் இறைவனை வணங்கியவர்களாக, (அவனைப் போற்றிப்) புகழ்ந்தவர்களாக நாங்கள் திரும்பிக் கொண்டிருக்கிறோம்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்குள் நுழையும் வரை இவ்வாறு கூறிக் கொண்டேயிருந்தார்கள்.

## ஒருவர் பயணத்திலிருந்து திரும்பியவுடன் தொழுது.

ஹதீஸ் 3087. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தேன். நாங்கள் (பயணம் முடிந்து) மதீனாவிற்குத் திரும்பி வந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,பள்ளிவாசலில் நுழைந்து இரண்டு ரக்அத்துகள் தொழுவீராக!என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3088. கஅப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பயணத்திலிருந்துளுஹா (முற்பகல்) நேரத்தில் திரும்பி வந்தால் பள்ளிவாசலில் நுழைந்து உட்காருவதற்கு முன்பாக இரண்டு ரக்அத்துகள் தொழுவார்கள்.

## பயணத்திலிருந்து திரும்பிய பின் உணவு அருந்துவது.

இப்னு உமர்(ரலி) (பயணத்திலிருந்து திரும்பி வந்தவுடன்) தமக்கு வரவேற்புத் தந்து, முதலில் தங்க இடம் கொடுத்து விருந்துபசாரம் செய்பவருக்காக (வழமையாக நோற்கும் உபரி) நோன்பை (நோற்காமல்)விட்டு விடுவார்கள்.

ஹதீஸ் 3089. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனா நகருக்கு வந்தபோது ஒட்டகத்தையோ மாட்டையோ அறுத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை இரண்டு ஊக்கியாக்களுடன் ஒரு திர்ஹம் அல்லது இரண்டு திர்ஹம்களைக் கொடுத்து என்னிடமிருந்து ஓர் ஒட்டகத்தை வாங்கினார்கள். (மதீனாவிற்கு அரும்லுள்ள)ஸிரார் என்னுமிடத்திற்கு அவர்கள் வந்தபோது ஒரு மாட்டை அறுக்கும்படி உத்தரவிட்டார்கள். அதன்படி அறுக்கப்பட்டது. அதை அனைவரும் உண்டார்கள். மதீனாவுக்கு வந்தபோது பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்துகள் தொழும்படி எனக்கு உத்தரவிட்டார்கள். (தொழுது முடித்த) பிறகு, ஒட்டகத்தின் விலையை எனக்கு நிறுத்துத் தந்தார்கள்.

ஹதீஸ் 3090. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நான் ஒரு பயணத்திலிருந்து திரும்பி வந்தேன். நபி(ஸல்) அவர்கள்,இரண்டு ரக்அத்துகள் தொழுவீராக!என்று (என்னிடம்) கூறினார்கள்.

‘ஸிரார் என்பது மதீனாவின் ஓரத்திலுள்ள ஓரிடமாகும்.

# அத்தியாயம் 57 குமுஸ் - ஐந்திலொரு பங்கு கடமையாகும்.

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறேன்.

## 'குமுஸ் கடமையாகும்.

ஹதீஸ் 3091. அலீ(ரலி) அறிவித்தார்.

பத்ருப் போரின்போது போரில் கிடைத்த செல்வத்திலிருந்து என்னுடைய பங்காக வயதான ஒட்டகம் ஒன்று எனக்குக் கிடைத்திருந்தது. நபி(ஸல்) அவர்களும் (தமக்குக் கிடைத்த ஐந்தில் ஒரு பாகமான) குமுஸில் இருந்து எனக்கு மற்றொரு கிழட்டு ஒட்டகத்தைத் தந்திருந்தார்கள். நான் அல்லஹ்வின் தூதர்(ஸல்) அவர்களின் மகள் ஃபாத்திமாவுடன் (முதன் முதலாக) வீடு கூட விரும்பியபோது பனு கைனுகா குலத்தைச் சேர்ந்த பொற்கொல்லர் ஒருவரை, என்னுடன் வந்துஇத்கிர் புல்லைக் கொண்டு வர ஏற்பாடு செய்திருந்தேன். அந்தப் புல்லைப் பொற்கொல்லர்களுக்கு விற்று அந்தப் பணத்தை என் மணவிருந்துக்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினேன். நான் என் ஒட்டகங்களுக்கான சேண இருக்கைகளையும் தீனிப் பைகள், மற்றும் கயிறுகளையும் சேகரிக்கலானேன். அப்போது என் இரண்டு ஒட்டகங்களும் அன்சாரி ஒருவரின் அறையின் அருகே மண்டியிட்டு அமரச் செய்யப்பட்டிருந்தன. நான் சேரிக்க விரும்பியவற்றைச் சேகரித்துவிட்டபோது திரும்பி வந்தேன். அப்போது என் இரண்டு ஒட்டகங்களின் திமில்களும் துண்டிக்கப்பட்டிருந்தன. அவற்றின் இந்த (அவலக்) காட்சியைக் கண்டபோது என்னால் என் கண்களைக் (கண்ணீர் சிந்த விடாமல்) கட்டுப்படுத்த முடியவில்லை. நான்,இதையெல்லாம் செய்தவர் யார்? என்று கேட்டேன். மக்கள்,ஹம்ஸா இப்னு அப்தில் முத்தலிப் தான் இப்படிச் செய்துவிட்டார். அவர் இந்த வீட்டில் அன்சாரிகளின் மது அருந்தும் குழு ஒன்றில் தான் இருக்கிறார்' என்று பதிலளித்தார்கள். நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்களிடம் ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள், ஹம்ஸா(ரலி) அவர்களின் செயலால் நான் அடைந்த வேதனை என் முகத்தில் செதன்பட, அதைப் புரிந்து கொண்டார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள்,உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! இன்றைய நாளைப் போன்ற (பயங்கரமான) ஒரு நாளை ஒருபோதும் நான் பார்த்ததில்லை. ஹம்ஸா என் இரண்டு ஒட்டகங்களையும் தாக்கி அவற்றின் திமில்களை அறுத்துவிட்டார். அவற்றின் (அடிவயிற்று) இடுப்புப் பகுதிகளை (வாளால்) கிழித்துவிட்டார். அவர் இப்போது ஒரு வீட்டில் மது அருந்தும் நண்பர்கள் குழுவுடன் இருக்கிறார்' என்று சொன்னேன். உடனே, நபி(ஸல்) அவர்கள் தங்களின் அங்கி ஒன்றைக் கொண்டு வரச் சொல்லி அதையணிந்து நடந்து செல்ல, அவர்களை நானும் ஸைத் இப்னு ஹாரிஸாவும் பின்தொடர்ந்து சென்றோம். ஹம்ஜா இருந்த வீட்டிற்கு வந்தவுடன் நபி(ஸல்) அவர்கள் உள்ளே செல்ல அனுமதி கேட்டார்கள். அவர்களும் நபிக்கு அனுமதி கொடுத்தார்கள். அங்கே அவர்கள் (அனைவரும்) மது அருந்திக் கொண்டிருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹம்ஸாவை அவர் செய்த காரியத்திற்காகக் கண்டிக்கத் தொடங்கினார்கள். ஹம்ஸாவின் இரண்டு கண்களும் சிவந்திருக்க, அவர் போதையுற்று விட்டிருந்தார். ஹம்ஸா, அல்லாஹ்வின் தூதரைப் பார்த்துப் பார்வையை உயர்த்தி அவர்களின் இரண்டு முழங்கால்களையும் பார்த்தார் பிறகு பார்வையை உயர்த்தி, அவர்களின் வயிற்றுப் பகுதியைப் பார்த்தார். பிறகு,நீங்கள் என் தந்தையின் அடிமைகள் தாமே? என்று

கேட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அவர் போதையில் இருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டு, தாம் வந்த வழியே (திரும்பாமல்) அப்படியே பின் வாங்கிச் சென்றார்கள். நாங்களும் அவர்களுடன் வெளியேறினோம்.

ஹதீஸ் 3092. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்துவிட்ட பிறகு, நபியவர்களின் மகள் ஃபாத்திமா அவர்கள் தமக்குச் சேர வேண்டிய வாரிசுச் சொத்தைப் பங்கிட்டுத் தரும்படி அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் கேட்டார்கள். அது இறைத்தூதர்(ஸல்), அவர்களுக்கு அல்லாஹ் ஒதுக்கித் தந்த, (எதிரி நாட்டிலிருந்து கிடைத்த) செல்வங்களில் நபியவர்கள்விட்டுச் சென்ற சொத்தாகும்.

ஹதீஸ் 3093. ஃபாத்திமாவுக்கு அபூ பக்ர்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (நபிமார்களான) எங்கள் சொத்துகளுக்கு வாரிசாக யாரும் வர முடியாது. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தருமம் செய்யப்பட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள்' என்று பதிலளித்தார்கள். ஆனால், இதனால் ஃபாத்திமா கோபமுற்று அபூ பக்ர்(ரலி) அவர்களுடன் பேசுவதைவிட்டுவிட்டார்கள். அவர்கள் மரணிக்கும் வரை அபூ பக்ர்(ரலி) அவர்களுடன் பேசாமலேயே இருந்துவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் தனி நிதியாக)விட்டுச் சென்ற கைபர், ஃபதக் ஆகிய பகுதிகளின் சொத்துக்களிலிருந்தும் மதீனாவில் இருந்த அவர்கள் தர்மமாகவிட்டுச் சென்ற சொத்திலிருந்தும் தமக்குப் பங்கு தரும்படியே அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் ஃபாத்திமா கேட்டுக் கொண்டிருந்தார். அபூ பக்ர்(ரலி) ஃபாத்திமாவின் கோரிக்கையை ஏற்க மறுத்து,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்து கொண்டிருந்த எதனையும் நான் செய்யாமல் விட மாட்டேன். ஏனெனில், அவர்களின் செயல்களில் எதனையாவது நான்விட்டுவிட்டால் நான் வழிதவறி விடுவேனோ என்று அஞ்சுகிறேன்' என்றார்கள். (அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பின்) நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் தருமமாகவிட்டுச் சென்ற சொத்தை உமர் அவர்கள், அலீ அவர்களுக்கும் அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் (அதன் வருமானத்திலிருந்து தம் பங்கின் அளவிற்கு எடுத்துக் கொள்ளும் படி) கொடுத்துவிட்டார்கள். கைபர் மற்றும் ஃபதக்கில் இருந்த சொத்துக்களை உமர் அவர்கள் (யாருக்கும் கொடுக்காமல்) நிறுத்தி வைத்துக் கொண்டு,அவ்விரண்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தருமமாகவிட்டுச் சென்றவை. அவை நபி(ஸல்) அவர்களின் உரிமைகளை நிறைவேற்றுவதற்காகவும் அவர்களுக்கு ஏற்படும் (திடீர் பொருளதாரப்) பிரச்சினை(கள் மற்றும் செலவினங்)களுக்காகவும் (ஒதுக்கப்பட்டு) இருந்தன. அவ்விரண்டின் அதிகாரமும் ஆட்சித் தலைவரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும்' என்றார்கள்.

இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) (இந்த ஹதீஸை அறிவித்த போது),அந்த (கைபர், ஃபதக் பகுதியிலிருந்த) இரண்டு சொத்துக்களும் இன்று வரை அவ்வாறே (ஆட்சியாளரின் பொறுப்பிலேயே) இருந்து வருகின்றன' என்றார்கள்.

ஹதீஸ் 3094. முஹம்மத் இப்னு ஜுபைர் இப்னி முத்யிம்(ரஹ்) அறிவித்தார்.

நான் மாலிக் இப்னு அவ்ஸ்(ரலி) அவர்களிடம் சென்று அந்த (ஃபதக் தொடர்பான) நிகழ்ச்சி பற்றிக் கேட்டேன் அவர்கள் கூறினார்கள்.

கடும் உச்சி வெயில் அடித்துக் கொண்டிருந்த நீண்ட ஒரு பகல் வேளையில் என் வீட்டாருடன் நான் அமர்ந்திருந்தபோது (கலீஃபா) உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களின் தூதர் ஒருவர் என்னிடம் வந்து,இறை நம்பிக்கையாளர்களின் தலைவர் அழைக்கிறார், வாருங்கள்' என்றார். நான் அவருடன் சென்று உமர்(ரலி) அவர்களின் அறைக்குள் நுழைந்தேன். அவர்கள் அங்கே ஒரு கட்டிலில் ஈச்ச ஓலையாளலான மேற்பரப்பில் அதற்கும் தமக்கும் இடையே பாய் எதுவுமிலலாமல் ஒரு தோல் தலையணையின் மீது சாய்ந்தபடி அமர்ந்திருந்தார்கள். நான் அவர்களுக்கு சலாம் சொல்லிவிட்டு அமர்ந்தேன். அப்போது அவர்கள்,மாலிக்கே! உங்கள்

குலத்தாரில் சில குடும்பத்தார் நம்மிடம் வந்தனர். அவர்களுக்கு (அளவு குறிப்பிடாமல்) சிறிய ஓர் அன்பளிப்புத் தரும்படி நான் உத்தரவிட்டுள்ளேன். அதை உங்கள் கைவசமாக்கிக் கொண்டு அவர்களிடையே நீங்கள் பங்கிடுங்கள்' என்றார்கள். நான், இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! வேறெவரிடமாவது இந்தப் பொறுப்பை நீங்கள் ஒப்படைத்தால் நன்றாயிருக்குமே' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், நீங்கள் அதைக் கைவசமாக்கிக் கொண்டு சென்று அவர்களிடையே பங்கிடுங்கள்' என்று (மீண்டும்) உமர் அவர்கள் சொன்னார்கள். நான் உமரிடம் அவர்கள் சொன்னார்கள். நான் உமரிடம் அமர்ந்து கொண்டிருந்தபோது, அவர்களிடம் அவர்களின் மெய்க் காவலர்யர்ஃபஉ என்பவர் வந்து, உஸ்மான் (ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி), ஸுபைர் (ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) ஆகியோர் தங்களைச் சந்திக்க அனுமதி கேட்கிறார்கள். தாங்கள் அவர்களுக்கு அனுமதியளிக்கிறீர்களா? என்று கேட்டார். உமர் (ரலி), ஆம்' என்று கேட்டார். உமர் (ரலி), அவர்கள், ஆம்' என்று அவர்களுக்கு (தம்மைச் சந்திக்க) அனுமதியளித்தார்கள். அவர்கள் (அனைவரும்) உள்ளே வந்து சலாம் சொல்லி அமர்ந்தார்கள். பிறகுயர்ஃபஉ சற்று நேரம் தாமதித்து வந்து, அலீ (ரலி) அவர்களையும் அப்பாஸ் (ரலி) அவர்களையும் தாங்ள் சந்திக்க விரும்புகிறீர்களா? என்று கேட்டதற்கு உமர் அவர்கள், ஆம்' என்று அவ்விருவருக்கும் (தம்மைச் சந்திப்பதற்கு) அனுமதியளிக்க, அவ்விருவரும் உள்ளே நுழைந்தனர். இருவரும் சலாம் சொல்லி அமர்ந்தனர். அப்பாஸ் (ரலி), இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! எனக்கும் இவருக்கும் (அலீக்கும்) இடையே தீர்ப்பளியுங்கள்' என்றார்கள். அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு பனு நளீர் குலத்தாரின் செல்வத்திலிருந்து ('ஃபய்உ நிதியாகக்) கொடுத்த சொத்துகள் தொடர்பாக இருவரும் சச்சரவிட்டு வந்தனர். அப்போது உஸ்மான் (ரலி) மற்றும் அவர்களின் தோழர்களின் குழு, இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அவர்களுக்கிடையே தீர்ப்பளித்து, ஒருவரை மற்றவரின் பிடியிலிருந்து விடுவித்து விடுங்கள்' என்று கூறியது. உமர் (ரலி), பொறுங்கள். எந்த அல்லாஹ்வின் கட்டளையால் வானமும் பூமியும் நிலைபெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் கேட்கிறேன். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், (நபிமார்களான எங்களுக்கு) எவரும் வாரிசாக மாட்டார். நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தருமமே' என்று தம்மைக் குறித்துக் கூறியதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அந்தக் குழுவினர், அவர்கள் அவ்வாறு சொல்லத் தான் செய்தார்கள்' என்று பதிலளித்தனர். உடனே, உமர் (ரலி), அலீ (ரலி) அவர்களையும் அப்பாஸ் (ரலி) அவர்களையும் நோக்கி, அல்லாஹ்வின் பொருட்டால் உங்கள் இருவரிடமும் கேட்கிறேன்: இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அவ்வாறு சொன்னதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள். அவ்விருவரும், ஆம், அவ்வாறு சொல்லியிருக்கிறார்கள்' என்று பதிலளித்தனர். உமர் (ரலி), அவ்வாறெனில், உங்களிடம் இந்த விஷயத்தைக் குறித்துப் பேசுகிறேன். (போரிடாமல் கிடைத்த) இச்செல்வத்திலிருந்து சிறிதைத் தன் தூதருக்கு உரியதாக அல்லாஹ் ஆக்கியுள்ளான். அவர்களைத் தவிர வேறெவருக்கும் அவன் அதைக் கொடுக்கவில்லை. "..  (என்று கூறிவிட்டு, ) அல்லாஹ் எச்செல்வத்தை அவர்களின் பிடியிலிருந்து விடுவித்துத் தன் துதரிடம் திருப்பிக் கொடுத்தானோ அச்செல்வம் உங்கள் குதிரைகளையும் ஒட்டகங்களையும் (அறப்போரிடுவதற்காக) நீங்கள் ஓட்டிச் சென்றதால் கிடைத்ததல்ல. மாறாக அல்லாஹ், தான் நாடுகிறவர்களின் மீது தன்னுடைய தூதர்களுக்கு அதிகாரம் வழங்குகிறான். மேலும், அல்லாஹ் அனைத்தின் மீதும் பேராற்றல் உள்ளவனாக இருக்கிறான்" என்னும் (இந்த 59:06) இறைவசனத்தை ஓதினார்கள். தொடர்ந்து, எனவே, இது இறைத்தூதருக்கென ஒதுக்கப்பட்ட செல்வமுமாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைவிட்டுவிட்டு அதை அவர்கள் தமக்காகச் சேகரித்துக் கொள்ளவில்லை் அதை உங்களை விடப் பெரிதாகக் கருதவுமில்லை. உங்களுக்கு அதைக் கொடுத்தார்கள் உங்களிடையே அதைப் பரவலாகப் பங்கிட்டார்கள். இறுதியில், அதிலிருந்து இச்செல்வம் மட்டுமே மீதமாயிற்று. இறைத்தூதர் (ஸல்)

அவர்கள் இச்செல்வத்திலிருந்து தம் வீட்டாரின் வருடச் செலவை அவர்களுக்குக் கொடுத்து வந்தார்கள். அப்படிக் கொடுத்த பிறகு மீதமுள்ளதை எடுத்து அல்லாஹ்வின் (பாதையில் செலவிடும்) செல்வத்தை எந்த இனங்களில் செலவிடுவார்களோ அவற்றில் செலவிடுவார்கள். இவ்வாறே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் வாழ்நாளில் செயல்பட்டு வந்தார்கள்' (இவ்வளவும் சொல்லிவிட்டு,)அல்லாஹ்வின் பொருட்டால் உங்களை கேட்கிறேன். இதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,ஆம் (அறிவோம்)' என்று பதிலளித்தார்கள். பிறகு, அலீ அவர்களிடமும் அப்பாஸ்(ரலி) அவர்களிடமும்,உங்கள் இருவரையும் அல்லாஹ்வின் பொருட்டால் கேட்கிறேன். நீங்கள் இதை அறிவீர்களா? என்று கேட்டுவிட்டு (தொடர்ந்து),பிறகு அல்லாஹ் தன் தூதரை அழைத்துக் கொண்டான். அப்போது அபூ பக்ர்(ரலி),நான் அல்லாஹ்வின் தூதருடைய (ஆட்சிக்குப்) பிரதிநியாவேன் என்று கூறி அ(ந்த செல்வத்)தைக் தம் கைவசம் எடுத்தார்கள். அது விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செயல்பட்டதைப் போல் செயல்பட்டார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர்கள் அது விஷயத்தில் வாய்மையாகச் செயல்பட்டார்கள் நல்ல விதமாக நடந்தார்கள் நேரான முறையில் நடந்து, உண்மையையே பின்பற்றினார்கள். பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்களையும் அல்லாஹ் அழைத்துக் கொண்டான். அப்போது நான் அபூ பக்ர்(ரலி) அவர்களின் பிரதிநிதியாக ஆனேன். அதை என் ஆட்சிக் காலத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு என் கைவசம் எடுத்துக் கொண்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதில் நடந்து கொண்ட முறைப்படியும் அபூ பக்ர்(ரலி) நடந்து கொண்ட முறைப்படியும் நானும் செயல்பட்டு வந்தேன். நான் அது விஷயத்தில் வாய்மையாகச் செயல்பட்டேன் நல்ல விதமாக நடந்து கொண்டேன் நேரான முறையில் நடந்து கொண்டேன் உண்மையையே பின்பற்றினேன் என்பதை அல்லாஹ் அறிவான். பிறகு, நீங்கள் இருவரும் என்னிடம் வந்து பேசினீர்கள் நான் உங்களிடம் ஒரு முறை பேசினேன். உங்கள் இருவரின் விஷயமும் (கோரிக்கையும்) ஒன்றாகவே இருந்தது. அப்பாஸே! நீங்கள் என்னிடம் உங்கள் சகோதரர் மகனிடமிருந்து உங்களுக்குச் சேரவேண்டிய (வாரிசுப்) பங்கைக் கேட்ட படி வந்தீர்கள். இவரும் என்னிடம் தன் மனைவிக்கு அவரின் தந்தையிடமிருந்து கிடைக்க வேண்டிய (வாரிசுப்) பங்கை (பெற) விரும்பிய படி வந்தார்... அலீ(ரலி) அவர்களைத் தான் அப்படிச் சொன்னார்கள். நான் உங்கள் இருவரிடமும்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,(நபிமார்களான நாங்கள்விட்டுச் செல்லும் சொத்துக்களில்) எங்களுக்கு எவரும் வாரிசாவதில்லை. நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தருமமே என்றார்கள் என்றேன். எனினும்,அதை உங்கள் இருவரிடமே கொடுத்து விடுவது தான் பொறுத்தமானது என்று எனக்குத் தோன்றியபோது நான்,நீங்கள் இருவரும் விரும்பினால் அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தமும் அவனுக்களித்த உறுதிமொழியும் உங்கள் பொறுப்பாக இருக்க,நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, அபூ பக்ர்(ரலி) எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, நான் ஆட்சிக்கு வந்ததிலிருந்து அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, அபூ பக்ர்(ரலி) எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, நான் ஆட்சிக்கு வந்ததிலிருந்து அதன் விஷயத்தில் எப்படிச் செயல்பட்டேனோ அதன் படியே நீங்கள் இருவரும் செயல்படுவீர்கள் என்னும் நிபந்தனையின் அடிப்படையில் உங்கள் இருவரிடமும் கொடுத்து விடுகிறேன் என்று சொன்னேன். அதற்கு நீங்கள் இருவரும்,எங்களிடம் அதைக் கொடுத்து விடுங்கள் என்று சொன்னீர்கள். அதன்படியே அதை உங்கள் இருவரிடமும் கொடுத்து விட்டேன்' என்றார்கள். பிறகு (குழுவினரை நோக்கி),எனவே, நான் உங்களிடம் அல்லாஹ்வின் பெயரால் கேட்கிறேன். நான் இவ்விருவரிடமும் அந்த நிபந்தனையின்படி அச்சொத்தைக் கொடுத்து விட்டேனா? என்று கேட்டார்கள். குழுவினர்,ஆம் (கொடுத்து விட்டீர்கள்)' என்று பதிலளித்தனர். பிறகு அலீ(ரலி) மற்றும் அப்பாஸ்(ரலி) ஆகியோரை நோக்கி,நான் உங்கள் இருவரையும் அல்லாஹ்வின் பெயரால் கேட்கிறேன். நான் அதை உங்கள் இருவரிடமும் அந்த நிபந்தனையின்படியே கொடுத்து

விட்டேனா? என்று கேட்க, அவ்விருவரும்,ஆமாம்' என்றார்கள். உமர்(ரலி),இதைத் தவிர வேறொரு தீர்ப்பை நீங்கள் என்னிடமிருந்து கோருகிறீர்களா? எவனுடைய அனுமதியுடன் வானமும் பூமியும் நிலை பெற்றுள்ளனவோ அவன் மீது சத்தியமாக! நான் அந்த விஷயத்தில் இதைத் தவிர வேறெந்தத் தீர்ப்பையும் தர மாட்டேன். உங்கள் இருவராலும் அதைப் பராமரிக்க முடியவில்லை என்றால் என்னிடம் அதைக் கொடுத்து விடுங்கள். அதை உங்களுக்கு பதிலாக நானே பராமரித்துக் கொள்வேன்' என்றார்கள். 9

## குமுஸ் கடமையை நிறைவேற்றுவது (போரில் கிடைத்த செல்வங்களிலிருந்து ஐந்திலொரு பங்கை இஸ்லாமிய அரசின் சிறப்பு நிதிக்குச் செலுத்துவது மார்க்கத்தின் பாற்பட்டதாகும்.

ஹதீஸ் 3095. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் (நபி(ஸல்) அவர்களிடம்) வந்தார்கள். அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! (எங்களின்) இந்தக் கிளைரபீஆ குலத்தைச் சேர்ந்ததாகும். எங்களுக்கும் உங்களுக்குமிடையேமுளர் குலத்து நிராகரிப்பாளர்கள் (நாம் ஒருவரையொருவர் சந்திக்கத்) தடையாக உள்ளனர். எனவே, (போரிடுவதும் கொள்ளையும் வழிப்பறியும் அனைவராலும் தடை செய்யப்பட்ட) புனித மாதங்களிலே தவிர (வேறு மாதங்களில்) நாங்கள் தங்களிடம் வந்து சேர முடியாதவர்களாயிருக்கிறோம். எனவே, நாங்கள் எடுத்து நடக்கவும் எங்களுக்குப் பின்னால் உள்ள (இங்கு வர முடியாமல் தங்கிவிட்ட)வர்களுக்கு எடுத்துச் சொல்லவும் ஏற்ற ஒரு விஷயத்தை எங்களுக்குக் கட்டளையிடுங்கள்' என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நான்கு விஷயங்களை உங்களுக்குக் கட்டளையிட்டு நான்கு பொருட்களை உங்களுக்குத் தடை செய்கிறேன். நான் கட்டளையிடுபவை: அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வதுவணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமிலர் என்று சாட்சியம் மொழிவது... (இதைச் சொல்லியபடி) நபி(ஸல்) அவர்கள் தம் கையால் (எண்ணிக்) கணக்கிட்டார்கள்... தொழுகையை (அதன்னுடையன் வேளையில் முறைப்படி ஜமாஅத்துடன்) நிலை நாட்டுவது, ஸக்காத் கொடுப்பது, ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது, உங்களுக்குக் கிடைக்கும் போர்ச் செல்வங்களிலிருந்து ஐந்திலொரு பங்கை அல்லாஹ்வுக்காகச் செலுத்தி விடுவது ஆகியன. மேலும், (மது வைத்திருக்கப் பயன்படுகின்ற) துப்பா - சுரைக்காய்க் குடுவைகள் மற்றும் நக்கீர் - பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரித்த மரப்பீப்பாய்கள், முஸஃப்பத் தார் பூசப்பட்ட பாத்திரங்கள், மற்றும் அல் - ஹன்த்தம் - மண்சாடிகள் ஆகியவற்றை (பயன்படுத்த வேண்டாமென்று) உங்களுக்குத் தடை செய்கிறேன்' என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின் அவர்களின் துணைவியின் வாழ்க்கைச் செலவு.

ஹதீஸ் 3096. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் வாரிசுகள் ஒரு தீனாரைக் கூட (வாரிசுப் பங்காகப் பெற மாட்டார்கள் என் மனைவிமார்களுக்குச் சேர வேண்டிய வாழ்க்கைச் செலவும் என் பிரதிநிதியின் ஊதியமும் போக நான்விட்டுச் செல்பவையெல்லாம் தருமமேயாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3097. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நிலைப் பேழையிலிருந்து சிறிது பார்லியைத் தவிர, உயிருள்ளவர் உண்ணக் கூடிய பொருள் எதுவும் என் வீட்டில் இல்லாத நிலையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மரணித்தார்கள். அதிலிருந்து எடுத்து நீண்ட காலம் நான் உண்டேன். பிறகு, அதை நான் அளந்தேன். (அதனால், சிறிது காலத்திற்குப் பின்) அது தீர்ந்து போய்விட்டது.

ஹதீஸ் 3098. அம்ர் இப்னு ஹாரிஸ்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் தம் ஆயுதத்தையும் தம் வெள்ளைக் கோவேறுக் கழுதையையும் தவிர வேறெதையும் (தாம் மரணித்தபோது)விட்டுச் செல்லவில்லை. மேலும், அவர்கள் ஒரேயொரு நிலத்தை (மட்டும்) தருமமாகவிட்டுச் சென்றார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் துணைவியரின் இல்லங்கள் பற்றி வந்துள்ள செய்திகளும் அவர்களின் பெயரால் அழைக்கப்பட்ட இல்லங்களும்.

அல்லாஹ் கூறுகிறேன்:

(நபியின் துணைவியரே!) உங்கள் வீடுகளில் நீங்கள் தங்கியிருங்கள். முந்தைய அஞ்ஞான காலத்தைப் போன்று (திரையின்றி) வெளியே நடமாடாதீர்கள். (திருக்குர்ஆன் 33:33)

இறை நம்பிக்கையாளர்களே! நபியின் இல்லங்களில் உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டாலே தவிர, நுழையாதீர்கள். (அங்கு) உணவு தயாராகும் நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டும் இருக்காதீர்கள். ஆனால், நீங்கள் உணவு உண்பதற்கு அழைக்கப்பட்டால் செல்லுங்கள் நீங்கள் சாப்பிட்டு முடிந்ததும் பிரிந்து சென்று விடுங்கள். பேச்சில் லயித்து விடாதீர்கள். நீங்கள் இவ்வாறு செய்வது நபிக்கு மனவேதனையளிக்கிறது. ஆயினும், வெட்கத்தின் காரணத்தினால் உங்களிடம் அவர் எதுவும் சொல்வதில்லை. ஆனால், அல்லாஹ் சத்தியத்தை எடுத்துச் சொல்ல வெட்கப்படுவதில்லை. நீங்கள் (நபியின் மனைவியாரான) அவர்களிடம் ஏதேனும் கேட்க வேண்டுமென்றால் திரைக்குப் பின்னாலிருந்து கேளுங்கள். அதுவே உங்களுடைய உள்ளங்களுக்கும் தூய்மையளிப்பதாகும். அல்லாஹ்வின் தூதருக்குத் தொல்லை தருவது உங்களுக்கு அனுமதிக்கப்படவில்லை. அவருக்குப் பின்னால் அவரின் மனைவியரை நீங்கள் மணமுடிப்பதும் ஒருபோதும் கூடாது. அவ்வாறு செய்வது அல்லாஹ்விடம் பெரும் பாவமாகும். (திருக்குர்ஆன் 33:53)

ஹதீஸ் 3099. நபி(ஸல்) அவர்களின் துணைவியரான ஆயிஷா(ரலி) கூறினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் நோயின் கடுமை அதிகரித்துவிட்டபோது என் வீட்டில் தங்கி சிகிச்சையையும் பராமரிப்பையும் பெற்றிட தம் மற்ற மனைவிமார்களிடம் அனுமதி கேட்டார்கள். அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு அனுமதி கொடுத்தார்கள்.

ஹதீஸ் 3100. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

என் வீட்டில் என்னுடைய முறைக்குரிய நாளில் (வந்திருந்த போது) என் தொண்டைக்கும் என் மார்புக்குமிடையே (சாய்ந்திருந்த நிலையில்) நபி(ஸல்) அவர்கள் மரணித்தார்கள். அல்லாஹ் என்னுடைய எச்சிலையும் அவர்களின் எச்சிலையும் ஒன்று சேர்த்திருந்தான். (எப்படியெனில்) நபி(ஸல்) அவர்கள் (கடுமையான நோய் வாய்ப்பட்டிருந்த நிலையில் என் சகோதரர்) அப்துர் ரஹ்மான், பல் துலக்கும் - மிஸ்வாக் - குச்சியைக் கொண்டு வந்தார். நபி(ஸல்) அவர்கள் அதைப் பயன்படுத்த முடியாத அளவிற்கு பலவீனமாக இருந்தார்கள். எனவே, நான் அந்தக் குச்சியை எடுத்துமென்று பிறகு அதனால் நபி(ஸல்) அவர்களுக்குப் பல் துலக்கி விட்டேன்.

ஹதீஸ் 3101. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஸஃபிய்யா(ரலி) கூறினார்.

ரமளான் மாதத்தில் கடைசிப் பத்து நாள்களில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இஃதிகாஃப் இருந்து கொண்டிருந்தபோது நான் அவர்களைச் சந்திக்கச் சென்றேன் (சந்தித்து முடித்த) பின்பு திரும்பிச் செல்ல எழுந்தேன். என்னுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் எழுந்தார்கள். தம் (மற்றொரு) மனைவி உம்மு ஸலமா(ரலி) அவர்களின் வீட்டு வாசலை ஒட்டியுள்ள பள்ளிவாசல் கதவுக்கு அருகே வந்து சேர்ந்தபோது எங்கள் இருவரையும் இரண்டு அன்சாரிகள் கடந்து சென்றனர். அவ்விருவரும் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி சலாம் கூறிவிட்டுச் சென்றுவிட்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் நோக்கி,அவசரப்படாதீர்கள். (இவர் என் மனைவி தான்.)‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் இப்படித் தங்களிடம் சொன்னது அவர்களுக்க மன வருத்தத்தை அளித்தது. அதற்கு அவ்விருவரும்,அல்லாஹ் தூயவன். இறைத்தூதர் அவர்களே! (தங்களை நாங்கள் சந்தேம்ப்போமா?)‘ என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,மனிதனின் இரத்தம் சென்றடையும் இடங்களில் எல்லாம் ஷைத்தானும் சென்றடைகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் சந்தேகம் எதையேனும் போட்டு விடுவானோ என்று நான் அஞ்சினேன்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3102. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹஃப்ஸா(ரலி) அவர்களின் வீட்டிற்கு மேலே (ஒரு வேலையாக) நான் ஏறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் கிப்லாவுக்கு முதுகைக் காட்டியபடியும்ஷாம் திசையை நோக்கியபடியும் (கழிப்பிடத்தில்) தம் தேவையை நிறைவேற்றிக் கொண்டிருப்பதை பார்த்தேன்.

ஹதீஸ் 3103. ஆயிஷா(ரலி) கூறினார்.

என் அறையிலிருந்து சூரிய வெளிச்சம் விலகாத நிலையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அஸர் தொழுகையைத் தொழுவார்கள்.

ஹதீஸ் 3104. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் உரையாற்றிட எழுந்து நின்று, ஆயிஷா(ரலி) அவர்களின் உறைவிடத்தை (இராக் நாடு அமைந்துள்ள கிழக்குத் திசையை) நோக்கிச் சைகை செய்து,இங்கிருந்து தான் குழப்பம் ஏற்படும்‘ என்று மூன்று முறை கூறிவிட்டு,ஷைத்தானின் கொம்பு (தலையின் ஓரப்பகுதி) எங்கிருந்து உதயமாகிறதோ அங்கிருந்து..!என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3105. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் இருந்தார்கள். அப்போது ஒருவர் ஹஃப்ஸா(ரலி) அவர்களின் வீட்டிற்குள் செல்ல அனுமதி கேட்டுக் கொண்டிருக்கும் குரலை செவியுற்றேன். உடனே நான்,இறைத்தூதர் அவர்களே! இதோ, ஒருவர் தங்கள் வீட்டினுள் நுழைய அனுமதி கேட்கிறார்‘ என்று கூறினேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அவரை இன்னார் - ஹஃப்ஸாவின் தந்தைக்குப் பால்குடிச் சகோதரர் - என்று கருதுகிறேன் (ஒருவரின் வயிற்றில்) பிறப்பது எந்த உறவுகளையெல்லாம் (மணமுடிக்கத் தகாத) புனித உறவுகளாக்குமோ அந்த உறவுகளையெல்லாம் (ஒருவரிடம்) பால்குடிப்பதும் புனிதமானவையாக்கி விடும்‘ என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் கவச உடை கைத்தடி, குவளை, மோதிரம் ஆகியனவும், இவற்றில் நபியவர்களுக்குப் பின் அவர்களின் பிரதிநிதிகள் (கலீஃபாக்கள்) பயன்படுத்திய பங்கிடப்பட வேண்டியவை என்று அறிவிக்கப்படாதவையும், நபியவர்கள் இறந்த பின் அவர்களின் தோழர்களும்

## மற்றவர்களும் பரக்கத் (அருள் வளம்) உள்ளவை என்று கருதிய நபியவர்களின் முடி, செருப்பு, பாத்திரம் ஆகியனவும்.

ஹதீஸ் 3106. அனஸ் (ரலி) அறிவித்தார்.

அபூ பக்ர் (ரலி) கலீஃபாவாக ஆக்கப்பட்ட பொழுது, என்னை பஹ்ரைனுக்கு (ஆளுநராக) அனுப்பி வைத்தார்கள். எனக்கு ஓர் ஆணையை எழுதி, அதில் நபி (ஸல்) அவர்களின் மோதிரத்தால் முத்திரையிட்டார்கள். அந்த மோதிரத்தில் மூன்று வரிகள் பொறிக்கப்பட்டிருந்தன. முஹம்மது (என்னும் சொல்) ஒரு வரியிலும்ரசூலு ('தூதர் என்னும் சொல்) ஒரு வரியிலும்அல்லாஹ் ('அல்லாஹ்வின் எனும் சொல்) ஒரு வரியிலும் ('முஹம்மதுர் ரசூலுல்லாஹ் -இறைத்தூதர் முஹம்மது என்று) பொறிக்கப்பட்டிருந்தது.

ஹதீஸ் 3107. ஈசா இப்னு தஹ்மான் (ரஹ்) அறிவித்தார்.

அனஸ் (ரலி) எங்களிடம் இரண்டு தோல்வார்கள் கொண்ட, (அணிந்து) நைந்து போன இரண்டு செருப்புகளைக் காட்டினார்கள். பின்னர், ஸாபித் அல் புனானீ (ரஹ்), அவ்விரண்டும் நபி (ஸல்) அவர்களின் காலணிகள்' என்று அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து எனக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3108. அபூ புர்தா (ரஹ்) அறிவித்தார்.

ஆயிஷா (ரலி) எங்களிடம் ஒட்டுப் போட்ட (கம்பளி) ஆடை ஒன்றை எடுத்துக் காட்டி, இதை உடுத்திக் கொண்டிருக்கும்போது தான் நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்தார்கள்' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் அபூ புர்தா (ரஹ்) கூறினார்.

ஆயிஷா (ரலி) யமன் நாட்டில் தயாரிக்கப்படுகிற கெட்டியான கீழங்கி ஒன்றையும் நீங்கள்அல் முலப்பதா (ஒட்டுப் போட்டது) என்றழைக்கிற வகையிலிருந்து ஒரு போர்வையையும் நபி (ஸல்) அவர்களின்வை என்று) எடுத்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 3109. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் (மரத்தாலான) குவளை உடைந்துவிட்டது. (உடைந்து போய்) ஓட்டை (ஏற்பட்ட) பகுதியை நபி (ஸல்) அவர்கள் ஒரு வெள்ளிச் சங்கிலியால் அடைத்துவிட்டார்கள்.

அறிவிப்பாளர் ஆஸிம் (ரஹ்), நான் அந்தக் குவளையக் கண்டேன். (பரக்கத்தை விரும்பி) அதில் தண்ணீர் குடித்தேன்' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3110. அலீ இப்னு ஹுசைன் (ஸைனுல் ஆபிதீன்) (ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் ஹுசைன் இப்னு அலீ (ரலி) - அல்லாஹ் அவர்களின் மீது கருணை புரிவானாக! - கொல்லப்பட்ட கால கட்டத்தில் யஸீத் இப்னு முஆவியாவைச் சந்தித்துவிட்டு மதீனாவுக்கு வந்தபோது, என்னை மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) சந்தித்தார்கள். அப்போது அவர்கள், என்னிடம் தங்களுக்குத் தேவை ஏதுமிருக்கிறதா? அதை நிறைவேற்றிட எனக்குக் கட்டளையிடுகிறீர்களா? (நான் நிறைவேற்றித் தரத் தயாராக இருக்கிறேன்)' என்று கேட்டார்கள். நான் அவர்களுக்குஅப்படி எதுவுமில்லை' என்று பதிலளித்தேன். மிஸ்வர் (ரலி), அல்லாஹ்வின் தூதருடைய வாளை எடுத்துக் கொடுக்கிறீர்களா? ஏனெனில், அந்த (பனு உமய்யா) குலத்தினர் உங்களிடமிருந்து தம் அதிகாரத்தின் மூலமாக அதைப் பிடுங்கிக் கொள்வார்கள் என்று நான் அஞ்சுகிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் அதை எனக்குக் கொடுத்தால் என் உயிர் போகும் வரை அது அவர்களிடம் சென்று சேராது' என்று கூறினார். (பிறகு பின் வரும் சம்பவத்தை விவரிக்கலானார்:) அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) ஃபாத்திமா (ரலி) (உயிரோடு தம்

மணபந்தத்தில்) இருக்கும் போதே அபூ ஜஹ்லுடைய மகளை (மணந்து கொள்ளப்) பெண் பேசினார்கள். (அந்த நேரத்தில்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அது குறித்து மக்களிடம் தம் இந்த மிம்பரில் (நின்றபடி) உரையாற்றியதை செவியுற்றேன். - அப்போது நான் பருவ வயதை அடைந்து விட்டிருந்தேன். நபி(ஸல்) அவர்கள், ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். அவர் தன்னுடைய மார்க்க விவகாரத்தில் சோதனைக்குள்ளாக்கப்படுவார் என்று நான் அஞ்சுகிறேன்' என்று கூறிவிட்டு, பனு அப்தி ஷம்ஸ் குலத்தைச் சேர்ந்த தம் மருமகனை - (அபுல் ஆஸ் இப்னு ரபீஉ வை) - அவர் தம்மிடம் நல்ல மருமகனாக நடந்து கொண்டதைக் குறித்து (நினைவு கூர்ந்து) புகழ்ந்தார்கள். அவர் என்னிடம் பேசியபோது உண்மையே சொன்னார். எனக்கு வாக்குறுதியளித்து அதை எனக்கு நிறைவேற்றித் தந்தார். மேலும், நான் அனுமதிக்கப்பட்ட ஒன்றைத் தடை செய்யக் கூடியவன் அல்லன் தடை செய்யப்பட்ட ஒன்றை அனுமதிக்கப்பட்டதென்று அறிவிக்கவும் மாட்டேன். ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மகளும் (அல்லாஹ்வின் பகைவனுடைய மகளும் (ஒரே நபருடைய மணபந்தத்தில்) ஒன்று சேர முடியாது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3111. இப்னு ஹனஃபிய்யா(ரஹ்) அறிவித்தார்.

அலீ(ரலி) உஸ்மான்(ரலி) அவர்களைக் குறை பேசுபவர்களாக இருந்திருப்பின் மக்கள் சிலர் அவர்களிடம் வந்து, உஸ்மான்(ரலி) அவர்களின் (அரசின்) ஸகாத் வசூலிக்கும் ஊழியர்கள் குறித்து முறையிட்ட போதே குறை பேசியிருக்க வேண்டும். அந்த நேரத்தில் அலீ(ரலி) என்னிடம்நீ உஸ்மான்(ரலி) அவர்களிடம் சென்று, இந்த ஏடு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நிர்ணயித்த ஸதகா (ஸகாத்தின் சட்டங்கள்) ஆகும். இந்த ஏட்டிலுள்ள படி ஸகாத் வசூலிக்குமாறு அவர்களுக்கு உத்தரவிடுங்கள் என்று தெரிவி' என்று கூறினார்கள். நான் அதை எடுத்துக் கொண்டு உஸ்மான்(ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள், அது நமக்குத் தேவையில்லை. (அது ஏற்கனவே நம்மிடம் உள்ளது)' என்று கூறிவிட்டார்கள். எனவே, நான் அதை அலீ(ரலி) அவர்களிடம் கொண்டு வந்து கொடுத்து விவரம் தெரிவித்தேன். அதற்கு அவர்கள், அதை எடுத்த இடத்திலேயே வைத்து விடு' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3112. முஹம்மத் இப்னு ஹனஃபிய்யா(ரஹ்) அறிவித்தார்.

என் தந்தை (அலீ இப்னு அபீ தாலிப்(ரலி)), இந்த ஏட்டை எடுத்துக் கொண்டு உஸ்மான்(ரலி) அவர்களிடம் போ! ஏனெனில், இதில் தான் ஸகாத் பற்றிய நபி(ஸல்) அவர்களின் கட்டளைகள் உள்ளன' என்று சொல்லி என்னை அனுப்பினார்கள்.

## குமுஸ் (ஐந்திலொரு பங்கு நிதி) அல்லாஹ்வின் தூதருடைய (அவசரத்) தேவைகளுக்காகவும் ஏழை எளியவர்களுக்காகவும் கடமையாக்கப்பட்டுள்ளது என்பதற்கான ஆதாரமும், (தம் மகள்) ஃபாத்திமா(ரலி) திருகையில் மாவரைத்து (கடும் சிரமத்திற்குள்ளாம்) அதைத் தம்மிடம் முறையிட்டு, போர்க் கைதியிலிருந்து ஒரு பணியாளைக் கொடுக்கும்படி கேட்டபோது திண்ணைத் தோழர்களுக்கும் விதவைகளுக்கும் நபி(ஸல்) அவர்கள் முன்னுரிமை வழங்கிவிட்டு, தம் மகள் ஃபாத்திமாவின் பிரச்சினையை அல்லாஹ்விடம் ஒப்படைத்துவிட்டதும்.

ஹதீஸ் 3113. அலீ(ரலி) அறிவித்தார்.

(என் துணைவியாரான)பாத்திமா அவர்கள் மாவரைக்கும் திருகையினால் தமக்கு ஏற்பட்ட வேதனையைக் குறித்து முறையிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சில போர்க்

கைதிகள் கொண்டு வரப்பட்டிருக்கிறார்கள் (அவர்களை நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடையே பங்கிடவிருக்கிறார்கள்) என்னும் செய்தி ஃபாத்திமா(ரலி) அவர்களுக்கு எட்டியது. உடனே, அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் (அந்தப் போர்க் கைதிகளிலிருந்து) ஒரு பணியாளை (தமக்குக் கொடுக்கும்படி) கேட்கச் சென்றார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் வீட்டில் இல்லாததால் அவர்களை ஃபாத்திமா(ரலி) அவர்களால் அந்த நேரத்தில் சந்திக்க முடியவில்லை. எனவே, ஆயிஷா(ரலி) அவர்களிடம் (தாம் வந்த காரணத்தைக்) கூறி(விட்டுத் திரும்பி)னார்கள். பின்னர், நபி(ஸல்) அவர்கள் வந்தவுடன் அவர்களுக்கு ஆயிஷா(ரலி) விஷயத்தைச் சொன்னார்கள். (விபரமறிந்த) நபி(ஸல்) அவர்கள் நாங்கள் படுக்கைக்குச் சென்றுவிட்ட பின்னால் எங்களிடம் வருகை தந்தார்கள். அவர்களைக் கண்டவுடன் நாங்கள் எழுந்து நிற்க முனைந்தோம். நபி(ஸல்) அவர்கள், (எழுந்திருக்க வேண்டாம்.) உங்கள் இடத்திலேயே இருவரும் இருங்கள்' என்று கூறினார்கள். (பிறகு) நான் அவர்களின் பாதத்தின் குளிர்ச்சியை என் நெஞ்சின் மீது உணர்ந்தேன். (அந்த அளவிற்கு எங்கள் அருகில் வந்து அமர்ந்தார்கள்.) பின்னர்,நீங்கள் இருவரும் என்னிடம் கேட்டதை விடச் சிறந்த ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? நீங்கள் படுக்கைக்குச் செல்லும்போதுஅல்லாஹு அக்பர் - அல்லாஹ் பெரியவன் என்று முப்பத்து நான்கு முறையும்,அல்ஹம்து லில்லாஹ் - புகழனைத்தும் அல்லாஹ்விற்கே என்று முப்பத்து மூன்று முறையும்,சுப்ஹானல்லாஹ் - அல்லாஹ் குறைகளிலிருந்து தூய்மையானவன் என்று முப்பத்து மூன்று முறையும் சொல்லுங்கள். ஏனெனில், அது நீங்கள் இருவரும் என்னிடம் கேட்டதை விடச் சிறந்ததாகும்' என்றார்கள்.

## (திருக்குர்ஆன் 08:41)

அல்லாஹ் கூறினான்:

மேலும், நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள் போரில் உங்களுக்குக் கிடைக்கும் பொருள்களில் ஐந்தில் ஒரு பாகம் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும், உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், வறியவர்களுக்கும் பயணிகளுக்கும் உரியதாகும். (திருக்குர்ஆன் 08:41)

அதாவது, இறைத்தூதருக்கு அதைப் பங்கிடும் கடமை உண்டு.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

நான் பங்கிடுபவனும் கருவூலக்காப்பாளனும் மட்டுமேயாவேன். அல்லாஹ் தான் கொடுக்கிறான்.

ஹதீஸ் 3114. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

எங்களில் - அன்சாரிகளில் - ஒரு மனிதருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்குமுஹம்மத் என்று பெயர் வைக்க அவர் விரும்பினார். அந்த அன்சாரித் தோழர் (அனஸ் இப்னு ஃபுளாலா(ரலி)) என்னிடம் கூறினார்: நான் அக்குழந்தையை என் கழுத்தில் சுமந்து கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன் நபி(ஸல்) அவர்கள்,என் பெயரைச் சூட்டி அழையுங்கள். ஆனால், (அபுல் காசிம் என்னும்) என் குறிப்புப் பெயரைச் சூட்டி அழைக்காதீர்கள். ஏனெனில், நான் உங்களிடையே பங்கீடு செய்பவனாகவே ஆக்கப்பட்டுள்ளேன்.

மற்றோர் அறிவிப்பில் ஜாபிர்(ரலி) கூறினார் என இடம் பெற்றுள்ளதாவது:

அந்த அன்சாரித் தோழர்காசிம் என்ற நபி(ஸல்) அவர்களின் பெயரைத் தன் குழந்தைக்குச் சூட்ட விரும்பினார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,என் பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள், என் குறிப்புப் பெயரைச் சூட்டிக் கொள்ளாதீர்கள்' என்றார்கள்.

ஹதீஸ் 3115. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

எங்களில் ஒருவருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அக்குழந்தைக்கு அவர்காசிம் என்று பெயர் சூட்டினார். அப்போது மற்ற அன்சாரித் தோழர்கள்,உம்மை நாங்கள் அபுல் காசிம் (காசிமின் தந்தை) என்று குறிப்புப் பெயரால் அழைக்கவும் மாட்டோம் (அவ்வாறு அழைத்து) உமக்கு மகிழ்ச்சி~ட்டவும் மாட்டோம்' என்று கூறினார்கள். அந்த மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! எனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு நான்காசிம் என்று பெயர் சூட்டினேன். அன்சாரித்தோழர்கள்,உம்மை நாங்கள்அபுல் காசிம் என்ற குறிப்புப் பெயரால் அழைக்கவும் மாட்டோம் (அவ்வாறு அழைத்து) உமக்கு மகிழ்ச்சி~ட்டவும் மாட்டோம் என்று கூறிவிட்டார்கள்' என்றார். அதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்,அன்சாரிகள் நல்ல வேலை செய்தார்கள். எனவே, என் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால், என்னுடைய (அபுல் காசிம் என்னும்) குறிப்புப் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளாதீர்கள். ஏனெனில், நான் பங்கிடுபவனே என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3116. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவருக்கு அல்லாஹ் நன்மை புரிய நாடுகிறானோ அவருக்கு மார்க்கத்தில் விளக்கத்தைத் தருகிறான். அல்லாஹ்வே கொடுப்பவனாவான் நான் பங்கிடுபவன் ஆவேன். இந்த (என்) சமுதாயத்தினர், அவர்களை எதிர்ப்பவர்களின் மீது ஆதிக்கம் பெற்றவர்களாகவே இருப்பார்கள். இறுதியில், அவர்கள் ஆதிக்கம் பெற்றவர்களாக இருக்கும் நிலையிலேயே இறைகட்டளை (மறுமை நாள்) வந்து விடும்.

என முஆவியா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3117. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (எதையும்) உங்களுக்குக் கொடுப்பதுமில்லை (எதையும்) உங்களுக்குக் கொடுக்காமல் தடுத்து நிறுத்திக் கொள்வதுமில்லை. நான் பங்கிடுபவனேயாவேன். எங்கு கொடுக்கும்படி (அல்லாஹ்வினால்) எனக்குக் கட்டளையிடப்படுகிறதோ அங்கு கொடுக்கிறேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3118. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்கள் சிலர் அல்லாஹ்வின் செல்வத்தை நியாயமாகப் பங்கிடாமல் (அநியாயமாகப் பங்கீடு செய்து) கையாள்கிறார்கள். அவர்களுக்கு மறுமை நாளில் நரகமே உரியதாகும்.

என கவ்லா அல் அன்சாரிய்யா(ரலி) அறிவித்தார்.

## "போர்ச் செல்வங்கள் (என் சமுதாயமான) உங்களுக்கு (மட்டுமே) அனுமதிக்கப்பட்டுள்ளன' என்னும் நபிமொழி.

அல்லாஹ் கூறினான்:

ஏராளமான போர்ச் செல்வங்கள் குறித்து அல்லாஹ் உங்களுக்கு வாக்களித்துள்ளான். அவற்றை நீங்கள் பெற்றுக் கொள்வீர்கள். மிக விரைவாக இந்த வெற்றியை அவன் உங்களுக்கு வழங்கியுள்ளான். மேலும், மக்களின் கரங்கள் உங்களுக்கெதிராக உயர்வதை அவன் தடுத்துவிட்டான். இது இறைநம்பிக்கையாளர்களுக்கு ஒரு சான்றாகத் திகழ்வதற்காகவும், அல்லாஹ், நேர்வழியின் பக்கம் செல்லும் பேற்றை உங்களுக்கு வழங்குவதற்காகவும் தான். (திருக்குர்ஆன் 48:20)

ஹதீஸ் 3119. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரைகளின் நெற்றிகளில் நன்மையும் நற்பலனும் போர்ச் செல்வமும் மறுமை நாள் வரை பிணைக்கப்பட்டிருக்கின்றன.

என உர்வா அல் பாரிக்கீ (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3120. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பாரசீகப் பேரரசர்) இப்போதைய கிஸ்ரா அழிந்துவிட்டால் அதற்குப் பின் கிஸ்ரா எவரும் இருக்க மாட்டார். (ரோம, பைஸாந்தியப் பேரரசரான இப்போதைய) சீசர் அழிந்துவிட்டால் அதற்குப் பின் சீசர் எவரும் இருக்க மாட்டார். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! அவ்விருவரின் (ம்ஸ்ரா மற்றும் சீசரின்) கருவூலங்களை நீங்கள் இறைவழியில் செலவழிப்பீர்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3121. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தற்போதைய பாரசீகப் பேரரசர்) கிஸ்ரா அழிந்துவிட்டால் அதன் பிறகு கிஸ்ரா எவரும் இருக்க மாட்டார். (தற்போதைய ரோமப் பேரரசர்) சீசர் அழிந்துவிட்டால் அதன் பிறகு சீசர் எவரும் இருக்க மாட்டார். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நீங்கள் அவ்விருவரின் கருவூலங்களையும் இறைவழியில் செலவழிப்பீர்கள்.

என ஜாபிர் இப்னு சமுரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3122. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

போர்ச் செல்வங்கள் எனக்கு (மட்டும்) அனுமதிக்கப்பட்டுள்ளன. (எனக்கு முந்திய இறைத்தூதர்களுக்கு அனுமதிக்கப்பட்டதில்லை).

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3123. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் போரிடுவதற்காகவும் அவனுடைய வாக்குகளை உண்மையென நிரூபிப்பதற்காகவும் மட்டுமே வெளியே புறப்பட்டு, அவன் பாதையில் போராடியவரை சொர்க்கத்தில் புகுத்துவதற்கு அல்லாஹ் பொறுப்பேற்றுள்ளான் அல்லது அவர் பெற்ற நன்மையுடன், அல்லது (அந்த நன்மையுடன் சேர்த்து) போரில் கிடைத்த செல்வத்துடன் அவரை அவரின் வீட்டிற்குத் திரும்பக் கொண்டு வர அல்லாஹ் பொறுப்பேற்றுள்ளான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3124. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைத்தூதர்களில் ஒருவர் புனிதப் போருக்குச் சென்றார். அப்போது அவர் தம் சமுதாயத்தாரிடம், ஒரு பெண்ணிடம் இல்லற உரிமையைப் பெற்றவன் அவளுடன் வீடு கூட விரும்பி இன்னும் கூடாமல் இருப்பானாயின் என்னைப் பின்பற்றி (போருக்கு) வர வேண்டாம். வீடு கட்டி முடித்து, அதன் முகட்டை (இன்னும்) உயர்த்தாமலிருப்பவனும் என்னைப் பின்பற்றி (போருக்கு) வர வேண்டாம். ஆட்டையோ, பெண் ஒட்டகங்களையோ வாங்கிவிட்டு, அவை குட்டிகள் போடுவதை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவனும் என்னைப் பின்பற்றி (போருக்கு) வரவேண்டாம்' என்று கூறிவிட்டுப் போருக்குச் சென்றார். ஓர் ஊரை (ஜெரிக்கோ நகரை வெள்ளிக்கிழமை) அஸர் தொழுகையின் நேரத்தில் அல்லது சற்றேறக் குறைய அந்த வேளையில் அவர் நெருங்கினார். (சற்று நேரத்தில் சூரியன் மறையத் தொடங்க, சனிக் கிழமை போரிடுவது அவர்களுக்கு தடை செய்யப்பட்டிருந்த காரணத்தால் தோற்றுப் போக நேரிடுமே என்றஞ்சி) சூரியனை நோக்கி, நீ இறைவனின் கட்டளைப்படி இயங்குகிறாய். நானும் இறை கட்டளைப்படி

நடக்க வேண்டியவன் ஆவேன்' என்று கூறிவிட்டு, இறைவா! சூரியனை (உடனே மறைய விடாமல்) தடுத்து விடு' என்று பிரார்த்தித்தார். எனவே, அல்லாஹ் அவர்களுக்கு வெற்றியை வழங்கும் வரை அது தடுத்து நிறுத்தப்பட்டது. (வெற்றி பெற்ற) பிறகு அந்த இறைத்தூதர் போரில் கிடைத்த பொருட்களை ஒன்றாகச் சேகரித்தார். அப்போது அதை (எரித்துக் கருக்கி) உண்பதற்கு (வானிலிருந்து) நெருப்பு வந்தது. ஆனால், அவற்றை அது உண்ணவில்லை. எனவே, அந்த இறைத்தூதர்உங்களிடையே (இந்தப் பொருட்களிலிருந்து) திருட்டுப் பொருள் ஏதோ ஒன்று உள்ளது. எனவே, ஒவ்வொரு குலத்திலிருந்தும் ஒருவர் என்னிடம் உறுதி மொழி கொடுக்கட்டும்' என்று கூறினார். (உறுதி மொழி கொடுத்துக் கொண்டிருந்த போது) ஒரு மனிதனின் கை இறைத் தூதரின் கையோடு ஒட்டிக்கொண்டது. அப்போது இறைத்தூதர், உங்களிடையே தான் திருடப்பட்ட பொருள் உள்ளது. எனவே, உன்னுடைய குலத்தார் என்னிடம் உறுதிமொழி கொடுக்கட்டும்' என்று கூறினார். (அவ்வாறே அவர்கள் கொடுக்க) இரண்டு மனிதர்களின் கை அல்லது மூவருடைய கை அவரின் கையுடன் ஒட்டிக் கொண்டது. அப்போது அவர், உங்களிடையே தான் திருடப்பட்ட பொருள் உள்ளது' என்றார். எனவே, அம்மக்கள் தங்கத்தாலான பசுமாட்டுத் தலை ஒன்றைக் கொண்டு வந்து அதை வைத்தனர். நெருப்பு வந்து அதைத் தின்றுவிட்டது. பிறகு அல்லாஹ், போரில் கிடைக்கும் பொருட்களை (எடுத்துக் கொண்டு பயன்படுத்த) நமக்கு அனுமதியளித்தான். நம்முடைய பலவீனத்தையும் இயலாமையையும் கண்டு அதை நமக்கு அனுமதிக்கப்பட்டதாக ஆக்கிவிட்டான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## போரில் பங்கெடுத்தவருக்கே போர்ச் செல்வங்கள் உரியவை.

ஹதீஸ் 3125. உமர் (ரலி) அறிவித்தார்.

முஸ்லிம்களின் வருங்காலத் தலை முறை இல்லாவிட்டால் நபி (ஸல்) அவர்கள் கைபர் பகுதியைப் பங்கிட்டதைப் போல் நான் வெல்கிற ஒவ்வோர் ஊரையும் (அவ்வூரிலுள்ள நிலங்களையும்) அதை வென்றவர்களிடையே பங்கிட்டு விட்டிருப்பேன்.

என அஸ்லாம் (ரஹ்) அறிவித்தார்.

## போரில் கிடைக்கும் பொருட்களுக்காக (மட்டும்) போரிட்டவரின் நன்மை குறைந்து போய் விடுமா?

ஹதீஸ் 3126. கிராமவாசி ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், ஒருவர் போரில் கிடைக்கும் பொருட்களுக்காகப் போரிடுகிறார். மற்றொரு மனிதர் தான் (புகழ்ந்து) பேசப்பட வேண்டும் என்பதற்காகப் போர் புரிகிறார். (இவர்களில்) யார் இறைவழியில் போரிடுபவராவார்? என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் வாக்கே மேலோங்கியதாய் இருக்கவேண்டும் என்பதற்காகப் போரிடுகிறவர்தான் இறைவழியில் போரிடுபவராவார் என்று பதிலளித்தார்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா அல் அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

## (பிற நாடுகளிலிருந்து) தமக்கு வருகிற அன்பளிப்புகளை (தம் தோழர்களிடையே) தலைவர் பங்கிட்டு விடுவதும் பங்கிடும் போது வருகை தராதவர் அல்லது வெளியே சென்றிருப்பவருக்காக (அவரின் பங்கைத் தலைவர்) தனியே எடுத்து வைப்பதும்.

ஹதீஸ் 3127. இப்னு அபீ முலைக்கா (ரஹ்) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்குத் தங்கப் பித்தான்கள் கொண்ட பட்டு அங்கிகள் சில அன்பளிப்பாக வழங்கப்பட்டன. அதை அவர்கள் தம் தோழர்கள் சிலரிடையே பங்கிட்டார்கள். அவற்றிலிருந்து (ஒன்றை) மக்ரமா இப்னு நவ்ஃபல்(ரலி) அவர்களுக்காகத் தனியே எடுத்து வைத்தார்கள். மக்ரமா(ரலி), தம் மகன் மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அவர்களுடன் வந்து வாசலருகே நின்று,நபி(ஸல்) அவர்களை எனக்காகக் கூப்பிடு' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள், மக்ரமா(ரலி) அவர்களின் குரலைக் கேட்டு, அங்கியை எடுத்துச் சென்று அவர்களைச் சந்தித்து, தங்கப் பித்தான்களுடன் அவர்களை வரவேற்று,மிஸ்வரின் தந்தையே! உங்களுக்காக நான் இதை எடுத்து வைத்தேன். மிஸ்வரின் தந்தையே! உங்களுக்காக நான் இதை எடுத்து வைத்தேன்' என்றார்கள். (ஏனெனில்,) மக்ரமா(ரலி) அவர்களின் சுபாவத்தில் சிறிது (கடுமை) இருந்தது.

## பனு குறைழா, பனு நளீர் குலத்தாரின் நிலங்களை நபி(ஸல்) அவர்கள் எப்படிப் பங்கிட்டார்கள். என்பதும் அவற்றிலிருந்து நபி(ஸல்) அவர்கள் தம் அவசரத் தேவைகளுக்காகக் கொடுத்ததும்.

ஹதீஸ் 3128. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பனு குறைழா, பனு நளீர் குலத்தாரை வெற்றி கொள்ளும் வரை (இலவசமாகப்) பயன்படுத்திக் கொள்ளும் படி தம்) பேரீச்ச மரங்களை நபி(ஸல்) அவர்களிடம் மக்கள் கொடுத்து வைத்திருந்தார்கள். அதன் (பனு குறைழாவையும் பனு நளீரையும் வெற்றி கொண்ட) பிறகு அவற்றை அவர்களிடமே நபி(ஸல்) அவர்கள் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

## நபி(ஸல்) அவர்களுடனோ, ஆட்சித் தலைவருடனோ சேர்ந்து அறப்போரிட்ட, உயிருள்ள அல்லது இறந்துவிட்ட அறப்போர் வீரரின் செல்வத்தில் பரக்கத் (அருள் வளம்) உண்டு.

ஹதீஸ் 3129. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) ஜமல் போரின்போது நின்றபடி என்னை அழைத்தார்கள். நான் அவர்களின் பக்கத்தில் சென்று நின்றேன். அவர்கள்,என் அன்பு மகனே! இன்று (தனக்கு எதிரானவரின் பார்வையில்) அக்கிரமக்காரராகவோ (தன் பார்வையில்) அநீதி இழைக்கப்பட்டவராகவோ இருப்பவரைத் தவிர வேறெவரும் கொல்லப்பட மாட்டார்கள். நான் இன்று அநீதியிழைக்கப்பட்ட நிலையில் (நிரபராதியாகக்) கொல்லப்பட்டு விடுவேன் என்றே கருதுகிறேன். (அதை விட) என்னுடைய கடன் தான் எனக்கு மிகவும் கவலையளிக்கிறது. நம்முடைய கடன் நம்முடைய செல்வத்தில் எதையவாது மீதம் வைக்கும் என்று நீ கருதுகிறாயா? மகனே! நம் சொத்தை விற்றுவிட்டு என் கடனை அடைத்து விடு' என்றார்கள். பிறகு, தம் சொத்தில் மூன்றிலொரு பங்கை (இன்ன நற்பணிகளுக்காகச் செலவிட வேண்டுமென்று இறுதி விருப்பம் தெரிவித்து) சாசனம் செய்தார்கள். அந்த மூன்றிலொரு பங்கில் மூன்றிலொரு பங்கைத் தம் மக்களுக்கு - அப்துல்லாஹ்வின் மக்களுக்கு - கொடுக்கப்பட வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தார்கள். அதாவது,ஒன்பதில் ஒரு பங்கை அதுவும் நம் சொத்திலிருந்து கடனை அடைத்த பின்பு மீதியிருந்தால் - உன் மக்களுக்குக் கொடுத்து விட வேண்டும்' என்று விருப்பம் தெரிவித்தார்கள்.

... ஏனெனில் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) கூறினார்:

அப்துல்லாஹ்(ரலி) அவர்களின் பிள்ளைகள் சிலர், ஸுபைர்(ரலி) அவர்களின் பிள்ளைகளான குபைப், அப்பாத் ஆகியோருக்கு ஈடான வயதுடையவர்களாய் இருந்தனர். அப்போது

ஸுபைர்(ரலி) அவர்களுக்கு ஒன்பது ஆண் பிள்ளைகளும் ஒன்பது பெண் பிள்ளைகளும் இருந்தனர்...

(தொடர்ந்து) அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்:

தம் கடனை அடைத்து விடும்படி என்னிடம் சொல்லத் தொடங்கினார்கள். பிறகு,என் அன்பு மகனே! அதில் சிறிது உன்னால் அடைக்க முடியவில்லையென்றால் என் எஜமானிடம் உதவி கேள்' என்றார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள்,என் எஜமான் என்று யாரைக் குறிப்பிட்டார்கள் என்று (முதலில்) எனக்குத் தெரியவில்லை அதனால் நான்,என் தந்தையே! தங்கள் எஜமான் யார்? என்று கேட்டேன். அவர்கள்,அல்லாஹ் தான்' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களின் கடனை அடைப்பதில் எனக்குச் சிரமம் ஏற்பட்ட போதெல்லாம், (என் தந்தை) ஸுபைர்(ரலி) அவர்களின் எஜமானனே! அவர் சார்பாக அவரின் கடனை நீ அடைப்பாயாக!என்று பிரார்த்தித்து வந்தேன். அந்த (எஜமான்) அல்லாஹ்வும் அதை அடைத்து வந்தான். ஸுபைர்(ரலி) போரில் கொல்லப்பட்டார்கள். ஆனால், அவர்கள் ஒரு தீனாரையும் ஒரு திர்ஹமையும் கூட (ரொக்கமாக)விட்டுச் செல்லவில்லை இரண்டு நிலங்களைத் தவிர. அவற்றில் ஒன்று ஃகாபாவில் ஒரு வீட்டையும் எம்ப்தில் ஒரு வீட்டையும் அவர்கள்விட்டுச் சென்றார்கள். அவர்கள் மீதிருந்த கடன் ஏற்பட்ட விதம் இதுதான்: ஒருவர் ஸுபைர்(ரலி) அவர்களிடம் சில பொருட்களைக் கொண்டு வந்து அடைக்கலமாகத் தந்துவிட்டுச் செல்வது வழக்கம். ஸுபைர்(ரலி),வேண்டாம். இதை நான் அடைக்கலப் பொருளாக ஏற்க மாட்டேன். மாறாக, இது என் பொறுப்பில் கடனாகும். அது அழிந்து போய் விடுமோ என்று நான் அஞ்சுகிறேன்' என்றார்கள். ஸுபைர்(ரலி) எந்த ஆட்சிப் பொறுப்பையும் ஒருபோதும் விரும்பியதில்லை. கராஜ் வரி வசூலிக்கும் பொறுப்பையோ வேறெந்தப் பணப் பொறுப்பையுமோ ஏற்றதில்லை நபி(ஸல்) அவர்களுடன், அல்லது அபூ பக்கர், உமர், உஸ்மான் (ரலி - அன்ஹும்) ஆகியோருடன் புனிதப் போரில் பங்கெடுத்(து அதனால் கிடைத்த போர்ச் செல்வங்களில் பங்கு பெற்ற)ததைத் தவிர (அதிகாரத்தால் பொருளீட்டியதில்லை). நான் அவர்கள் மீதிருந்த கடனை எண்ணிப் பார்த்தேன். மொத்தம் இருபத்திரண்டு லட்சம் கடன் இருக்கக் கண்டேன். அப்போது ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) என்னைச் சந்தித்து,என் சகோதரர் மகனே! என் சகோதரர் மீது எவ்வளவு கடன் இருக்கிறது? என்று கேட்டார்கள். நான் அதை மறைத்து,ஒரு லட்சம் தான்' என்று சொன்னேன். ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி),அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் சொத்துகள் அவ்வளவு கடனை அடைக்கப் போதாதே' என்றார்கள். நான்,என் தந்தையின் கடன் இருபத்திரண்டு லட்சமாக இருந்தால் என்ன சொல்வீர்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,இவ்வளவு (பெருந் தொகையை அடைக்க) உங்களால் முடியாது என்றே கருதுகிறேன். உங்களால் அதில் ஓரளவு அடைக்க முடியாமல் போனால் என்னிடம் உதவி கேளுங்கள்' என்றார்கள்.

ஸுபைர்(ரலி) ஃகாபாவில் ஒரு லட்சத்து எழுபதாயிரத்திற்கு ஒரு சொத்தை வாங்கியிருந்தார்கள். அதை நான் பதினாறு லட்சத்திற்கு விலை மதிப்பிட்டிருந்தேன். பிறகு (மக்களிடையே), எழுந்து நின்று,எவருக்கு ஸுபைர்(ரலி) கடன் தர வேண்டியுள்ளதோ அவர் நம்மிடம் ஃகாபாவுக்கு வரட்டும்' என்று அறிவித்தேன். உடனே அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர்(ரலி), என்னிடம் வந்தார்கள். ஏனெனில், அவர்களுக்கு ஸுபைர்(ரலி) நான்கு லட்சம் தர வேண்டியிருந்தது. எனவே, அவர்கள் என்னிடம்,நீங்கள் விரும்பினால் என் கடனை உங்களுக்கேவிட்டுக் கொடுத்து விடுகிறேன்' என்றார்கள். நான்,வேண்டாம்' என்று சொன்னேன். உடனே அவர்கள்,சரி, நீங்கள் (சில கடன்களை) சற்றுத் தாமதமாக அடைப்பதாயிருந்தால் என் கடனையும் அப்படிப்பட்ட கடன்களில் ஒன்றாக நீங்கள் விரும்பினால் ஆக்கிக் கொள்ளுங்கள்' என்றார்கள். நான்,அதுவும் வேண்டாம் (உடனே உங்கள் கடனை வாங்கிக் கொள்ளுங்கள்)' என்று சொல்லி விட்டேன்.

அவர்கள்,அப்படியென்றால் (உங்கள் நிலத்திலிருந்து என் கடனுக்குச் சமமான) ஒரு துண்டை எனக்குத் தந்து விடுங்கள்' என்றார்கள். நான்,இங்கிருந்து இது வரை உங்களுக்கு உரியது' என்று (அவருக்குச் சேரும் நிலத்தின் அளவை வரையறுத்துச்) சொன்னேன். அதிலிருந்து சிறிதை நான் விற்று என் தந்தை ஸுபைர்(ரலி) கடனை (முழுவதுமாக) அடைத்து விட்டேன். ஃகாபாவின் நிலத்தில் நாலரைப் பங்குகள் மட்டும் விற்கப்படாமல் மீதமாயிருந்தன. முஆவியா(ரலி) அவர்களிடம் அம்ர் இப்னு உஸ்மான், முன்திர் இப்னு ஸுபைர், அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) ஆகியோர் இருக்க, நான் அங்கு சென்றேன். முஆவியா(ரலி) என்னிடம்,ஃகாபாவிலிருக்கும் (உங்கள் தந்தை ஸுபைர்(ரலி) அவர்களின்) ஃகாபாவிலுள்ள சொத்திற்கு எவ்வளவு விலைமதிப்பு சொல்லப்பட்டது' என்று என்னிடம் கேட்க, நான்,ஒவ்வொரு பங்கும் ஒரு லட்சம்' என்று பதிலளித்தேன். அவர்கள்,அதில் எவ்வளவு (விற்காமல்) எஞ்சியுள்ளது? என்று கேட்டார்கள். நான்,நாலரைப் பங்குகள் எஞ்சியுள்ளன' என்று பதில் சொன்னேன். முன்திர் இப்னு ஸுபைர் அவர்கள்,நான் ஒரு பங்கை ஒரு லட்சம் கொடுத்து எடுத்துக் கொள்கிறேன்' என்றார். அம்ர் இப்னு உஸ்மான் அவர்கள்,நான் ஒரு பங்கை ஒரு லட்சம் கொடுத்து எடுத்து கொள்கிறேன்' என்றார்கள். இப்னு ஸம்ஆ(ரலி),இப்போது எவ்வளவு மீதியுள்ளது? என்று கேட்டார்கள். நான்,ஒன்றரைப் பங்கு (மட்டும் தான்) மீதியுள்ளது? என்று கேட்டார்கள். நான்,ஒன்றரைப் பங்கு (மட்டும் தான்) மீதியுள்ளது' என்று கேட்டார்கள். நான்,ஒன்றரைப் பங்கு (மட்டும் தான்) மீதியுள்ளது' என்று பதில் சொன்னேன். உடனே அவர்கள்,நான் அதை ஒன்றரை லட்சம் கொடுத்து எடுத்துக் கொள்கிறேன்' என்றார்கள். அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர்(ரலி) (தமக்கு வர வேண்டிய நான்கு லட்சத்திற்கு பதிலாக தமக்குத் தரப்பட்ட துண்டு நிலத்தை) முஆவியா(ரலி) அவர்களிடம் ஆறு லட்சத்திற்கு விற்று (இரண்டு லட்சம் லாபம் அடைந்து)விட்டார்கள். நான் என் தந்தையின் கடன்களையெல்லாம் அடைத்து முடித்த பிறகு (என் சகோதரர்களான) ஸுபைர்(ரலி) அவர்களின் மக்கள்,எங்களுக்கிடையே எங்கள் வாரிசுச் சொத்தைப் பங்கிட்டு விடுங்கள்' என்று என்னிடம் கோரினர். நான்,முடியாது, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (ஹஜ்) பருவத்தில் நான்காண்டுகளுக்கு,ஸுபைர்(ரலி) எவருக்குக் கடன் தர வேண்டியுள்ளதோ, அவர் நம்மிடம் வரட்டும். நாம் அவர் கடனை அடைப்போம்' என்று அறிவிக்காமல் உங்களிடையே அவரின் சொத்துகளைப் பங்கிடவே மாட்டேன்' என்று சொல்லிவிட்டேன். பிறகு, ஒவ்வோர் ஆண்டும் ஹஜ்ஜுப் பருவத்தில் அறிவிப்புக் கொடுக்கத் தொடங்கினேன். நான்காண்டுகள் கழிந்துவிட்ட பின் (யாரும் ஸுபைர்(ரலி) கடன் தர வேண்டியிருப்பதாகக் கேட்டு வராததால் (என் சகோதர சகோதரிகளான) ஸுபைர்(ரலி) அவர்களின் மக்களுக்கிடையே மீதிச் சொத்துகளைப் பங்கிட்டு விட்டேன்.

(என் தந்தை) ஸுபைர்(ரலி) அவர்களுக்கு நான்கு மனைவியர் இருந்தனர். ஸுபைர்(ரலி) தம் இறுதி விருப்பமாகத் தெரிவித்த (மரண சாசனப் பங்கான) மூன்றில் ஒரு பங்கைக் கொடுத்தது போக, மீதியை அவர்களின் துணைவியருக்குக் கொடுத்தேன். ஒவ்வொருவருக்கும் பன்னிரண்டு லட்சம் கிடைத்தது. ஆக, ஸுபைர்(ரலி) அவர்களின் சொத்துகளுடைய மொத்த மதிப்பு (கடனுக்காகக் கொடுத்தது, நல்லறங்களுக்காகச் செய்த மரண சாசனத் தொகை, வாரிசுகளுக்குக் கிடைத்தது ஆகிய அனைத்தும் சேர்ந்து) ஐம்பது கோடியே இரண்டு இலட்சமாகும் (என மற்றோர் அறிவிப்பில் இடம் பெற்றுள்ளது.)

## (போரில் கலந்து கொள்ளாமல் வேறொரு பணியை முடித்து வரும்படி) ஒரு தேவைக்காக ஒரு தூதுவரைத் தலைவர் அனப்பி வைத்திருந்தால் அல்லது (போருக்குச் செல்லாமல்) ஊரில் தங்கியிருக்கும் படி ஒருவருக்குக்

## கட்டளையிட்டால் அவர்களுக்கெல்லாம் (போரில் கிடைத்த பொருட்களில்) பங்கு தரப்படுமா?

ஹதீஸ் 3130. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உஸ்மான்(ரலி) பத்ருப் போரில் கலந்து கொள்ளாமல் போனதற்குக் காரணம், அவரின் மனைவியாக அல்லாஹ்வின் தூதருடைய மகள் (ருகைய்யா(ரலி)) இருந்தார்கள். மேலும், அவர்கள் நோய்வாய்ப்படடிருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் உஸ்மான்(ரலி) அவர்களிடம்,பத்ருப் போரில் பங்கெடுத்தவருக்குரிய நற்பலனும் (போர்ச் செல்வத்தில்) அவருக்குரிய பங்கும் உங்களுக்கு உண்டு' என்று கூறினார்கள்.

ஹவாஸின் குலத்தார் தம் குலத்துப் பெண்மணி ஒருவரிடம் நபி(ஸல்) அவர்கள் பால் குடித்து வளர்ந்திருக்கும் உறவை எடுத்துரைத்து, போரில் பறி கொடுத்த தம் பொருட்களைத் திருப்பித் தரும்படி கேட்டபோது போர்க் கைதிகளைவிட்டுத் தரும்படி நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடம் கேட்டுக் கொண்டதும், (போரிடாமல் வெற்றி கொள்ளும்போது கிடைக்கும்)ஃபய்உ என்னும் செல்வத்திலிருந்தும் (போரில் கிடைக்கிற பொருட்களிலிருந்து ஒதுக்கீடு செய்யப்படும்) குமுஸ் எனும் ஐந்திலொரு பங்கின் குவியல்களிலிருந்து (கூடுதலாகவு)ம் மக்களுக்குக் கொடுப்பதாக நபி(ஸல்) அவர்கள் வாக்களித்து வந்ததும், அவர்கள் அன்சாரிகளுக்குக் கொடுத்ததும், ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களுக்கு கைபருடைய பேரீச்சம் பழங்களிலிருந்து கொடுத்ததும் குமுஸிலிருந்து முஸ்லிம்களின் தேவைகளை நிறைவு செய்வதற்காக நிதி தரலாம் என்பதற்கான ஆதாரங்களாகும்.

ஹதீஸ் 3131 - ஹதீஸ் 3132 மர்வான் இப்னி ஹகம் மற்றும் மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) ஆகியோர் கூறினார்கள்.

"ஹவாஸின் குலத்தின் தூதுக் குழுவினர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முஸ்லிம்களாக வந்தபோது நபி(ஸல்) அவர்களிடம் தம் செல்வங்களையும் போர்க் கைதிகளையும் திருப்பித் தந்து விடும்படி கேட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,பேச்சில் எனக்கு மிகவும் பிரியமானது உண்மையான பேச்சேயாகும். போர்க் கைதிகள் அல்லது (உங்கள்) செல்வங்கள் இரண்டில் நீங்கள் விரும்பியதைத் திரும்பப் பெறுங்கள். நான் உங்களை எதிர்பார்த்(துக் காத்)திருந்தேன்' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாயிஃபிலிருந்து திரும்பியபோது பத்துக்கும் மேற்பட்ட நாள்கள் ஹவாஸின் குலத்தாரை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரண்டிலொன்றைத்தான் திருப்பித் தருவார்கள் என்று அவர்களுக்குத் தெளிவாகிவிட்டபோது,நாங்கள் எங்கள் கைதிகளையே திரும்பப் பெற்றுக் கொள்கிறோம்' என்று கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், முஸ்லிம்களிடையே எழுந்து நின்று, அல்லாஹ்வை அவனுக்குரிய முறையில் புகழ்ந்துவிட்டு,அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்த பின் கூறுகிறேன்: உங்களுடைய இந்தச் சகோதரர்கள் நம்மிடம் மனம் திருந்தியவர்களாக வந்துள்ளனர். இவர்களில் (நம்மிடம்) போர்க் கைதிகளாக இருப்பவர்களை இவர்களிடமே திருப்பிக் கொடுத்து விடுவதை நான் பொருத்தமானதாகக் கருதுகிறேன். மனப்பூர்வமாக இதற்குச் சம்மதிக்கிறவர் திருப்பித் தந்துவிடட்டும் அல்லாஹ் (இனி வரும் நாள்களில்) முதலாவதாக நமக்குத் தரவிருக்கும் (வெற்றி கொள்ளப்படும் நாட்டின்) செல்வங்களிலிருந்து அவருக்கு நாம் தருகிறவரை அவற்றைத் தம்மிடமே வைத்திருக்க விரும்புகிறவர் அவ்வாறே வைத்திருக்கட்டும்' என்று கூறினார்கள். மக்கள்,நாங்கள் மனப்பூர்வமாக (போர்க் கைதிகளைத்) திருப்பிக் கொடுக்கச் சம்மதிக்கிறோம், இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,உங்களில் இதற்கு சம்மதிக்கிறவர் யார், சம்மதிக்காதவர் யார் என எமக்குத் தெரியாது. எனவே, நீங்கள் திரும்பிச் சென்றுவிடுங்கள்.

உங்களிடையேயுள்ள தலைவர்கள் உங்களின் முடிவை எனக்குத் தெரிவிக்கட்டும்' என்று கூறினார்கள். மக்கள் திரும்பிச் செல்ல, அவர்களிடம் அவர்களின் தலைவர்கள் பேசினார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தலைவர்கள் திரும்பி வந்து மக்கள் மனப்பூர்வமாகச் சம்மதித்துவிட்டதாகத் தெரிவித்தார்கள்' என இப்னு ஷிஹாப்(ரஹ்)இதுதான் ஹவாஸின் குலத்தாரின் போர்க் கைதிகள் குறித்து எமக்கு எட்டிய செய்தியாகும்' என்று கூறினார்.

ஹதீஸ் 3133. ஸஹ்தம்(ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது கோழிக்கறிச் சாப்பாடு வந்தது. அவர்களிடம் தைமுல்லாஹ் குலத்தைச் சேர்ந்த சிவப்பான மனிதர் ஒருவர் இருந்தார். அவர் (ரோம நாட்டவரிடையேயிருந்து பிடித்துக் கொண்டு வரப்பட்ட) போர்க் கைதிகளில் ஒருவரைப் போல் காணப்பட்டார். அபூ மூஸா(ரலி) அந்த மனிதரை உணவு உண்ண அழைத்தார். அதற்கு அந்த மனிதர்,இந்தக் கோழி (அசுத்தம்) எதையோ தின்பதை பார்த்தேன். அது எனக்கு அருவருப்பையுண்டாக்கவே இதை இனி உண்பதில்லை என்று சத்தியம் செய்து விட்டேன்' என்றார். இதைக் கேட்ட அபூ மூஸா(ரலி),இங்கே வா! இதைப் பற்றி உனக்கு (நபி(ஸல்) அவர்களிடமிருந்து) அறிவிக்கிறேன்' என்று சொல்லிவிட்டுக் கூறலானார்கள்: நான் அல்லாஹ்வின் தூதரிடம் எங்களை(யும் எங்கள் பயணச் சுமைகளையும்) சுமந்து செல்ல ஒட்டகங்கள் ஏற்பாடு செய்யும்படி கேட்டுச் சென்றேன். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை (ஒட்டகத்தில்) ஏற்றியனுப்ப முடியாது. ஏனெனில், உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் இல்லை' என்றார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் போரில் கிடைத்த ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டன. உடனே எங்களைக் குறித்து,அஷ்அரீ குலத்தைச் சேர்ந்தவர்கள் எங்கே? என்று கேட்டுவிட்டு, எங்களுக்கு வெள்ளைத் திமில்கள் கொண்ட கொழுத்த (மூன்று வயதிலிருந்து பத்து வயதிற்குட்பட்ட) ஒட்டகங்களைத் தரும்படி உத்தரவிட்டார்கள். நாங்கள் (அதைப் பெற்று) சென்று கொண்டிருந்தபோது, நாங்கள் எங்களுக்குள்,நாம் என்ன காரியம் செய்து விட்டோம். (நமக்குக் கொடுக்க முடியாது என்று நபி(ஸல்) அவர்கள் கூறிய பின் மீண்டும் இவற்றை நாம் வாங்கிச் சென்றால்) இவற்றில் நமக்கு பரக்கத் (அருள் வளம்) வழங்கப்படாதே' என்று பேசிக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்றோம். நாங்கள் தங்களிடம்,நாங்கள் பயணம் செய்ய எங்களுக்கு ஒட்டகங்கள் கொடுங்கள்' என்று கேட்டோம். நாங்கள் ஏறிச் செல்ல ஒட்டகம் கொடுக்க முடியாது என்று நீங்கள் சத்தியம் செய்தீர்களே மறந்து விட்டீர்களா? என்று கேட்டோம். அதற்கு அவர்கள்,நான் உங்களை ஒட்டகத்தில் ஏற்றி அனுப்பவில்லை. மாறாக, அல்லாஹ் தான் உங்களை (ஒட்டகத்தில்) ஏற்றி அனுப்பினான். அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் நாடினால், நான் இனி எந்த ஒரு வாக்குக்காகவும் சத்தியம் செய்து, பிறகு அது அல்லாததை அதை விடச் சிறந்ததாகக் கருதும் பட்சத்தில், சிறந்ததையே செய்வேன் சத்தியத்தை முறித்து அதற்காகப் பரிகாரம் செய்து விடுவேன்' என்றார்கள்.

ஹதீஸ் 3134. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு படைக் குழுவைநஜ்து நாட்டை நோக்கி அனுப்பி வைத்தார்கள். அதில் நானும் (ஒருவனாக) இருந்தேன். நாங்கள் நிறைய ஒட்டகங்களைப் போர்ச் செல்வமாகப் பெற்றோம். எங்கள் பங்குங்கள் (ஒவ்வொருவருக்கும்) பன்னிரண்டு ஒட்டகங்கள் அல்லது பதினொரு ஒட்டகங்களாக இருந்தன. எங்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஒட்டகம் அதிகப்படியாகத் தரப்பட்டது.

ஹதீஸ் 3135. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அறப் போருக்காகப்) படைக் குழுக்களில் தாம் அனுப்பி வைக்கும் சிலருக்கும் மட்டும் குறிப்பாகக் கொடுத்து வந்தார்கள். அவர்கள் பொதுவாகப் படையினருடன் சேர்ந்து பெறுகிற பங்குக்கு மேல் (சற்று) அதிகப்படியாகக் கொடுத்து வந்தார்கள்.

ஹதீஸ் 3136. அபூ மூஸா அல்-அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து மதீனாவை நோக்கி ஹிஜ்ரத்) புறப்பட்டுவிட்ட செய்தி நாங்கள் யமன் நாட்டில் இருந்தபோது எங்களுக்குத் தெரிய வந்தது. உடனே, நானும் என் இரண்டு சகோதரர்களும் நபி(ஸல்) அவர்களை நோக்கி ஹிஜ்ரத் செய்யப் புறப்பட்டோம். அந்த என் இரண்டு சகோதரர்களில் ஒருவர் அபூ புர்தா அவர்களும் மற்றொருவர் அபூ ருஹ்கி அவர்களுமாவர். நானே அவர்களில் வயதில் சிறியவன் ஆவேன். என் குலத்தாரில் ஐம்பதிற்கு மேற்பட்டவர்களுடன் சேர்ந்து நாங்கள் சென்றோம் என்றோ, ஐம்பத்திரண்டு பேர்களுடன் அல்லது ஐம்பத்து மூன்று பேர்களுடன் சேர்ந்து சென்றோம் என்றோ என் தந்தை அபூ மூஸா(ரலி) சொன்னார்கள் என்று நான் நினைக்கிறேன்' என அறிவிப்பாளர் அபூ புர்தா(ரஹ்) கூறினார் - நாங்கள் ஒரு கப்பலில் ஏறிப் பயணித்தோம். எங்கள் கப்பல் (திசைமாறி) அபிசீனியாவில் மன்னர் நஜாஷீயிடம் எங்களை இறக்கிவிட்டது. அவரிடம் (அபிசீனியாவில்) ஜஅஃபர் இப்னு அபீ தாலிப் அவர்களையும் அவர்களின் சகாக்களையும் தற்செயலாகச் சந்தித்தோம். ஜஅஃபர்(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களை இங்கு அனுப்பி (இங்கேயே) தங்கும்படி உத்தரவிட்டுள்ளார்கள். எனவே, நீங்களும் எங்களுடன் (இங்கேயே) தங்குங்கள்' என்று கூறினார்கள். எனவே, நாங்கள் அவருடன் தங்கினோம். இறுதியில் நாங்கள் அனைவரும் சேர்ந்து (மதீனா) சென்றோம். நபி(ஸல்) அவர்கள் கைபரை வென்றபோது அவர்களைச் சென்றடைந்தோம். உடனே அவர்கள் (கைபர் போரில் கிடைத்த பொருட்களில்) எங்களுக்கும் பங்கு கொடுத்தார்கள். அல்லது எங்களுக்கும் அதிலிருந்து கொடுத்தார்கள். கைபர் வெற்றியில் கலந்து கொள்ளாத எவருக்கும் அதிலிருந்து எதையும் நபி(ஸல்) அவர்கள் பங்கிட்டுத் தரவில்லை. தம்முடன் (அதில்) பங்கெடுத்தவர்களுக்கு மட்டும் தான். பங்கிட்டுத் தந்தார்கள். ஆனால், எங்கள் கப்பலில் வந்தவர்களுக்கு மட்டும் ஜஅஃபர்(ரலி) அவர்களுடனும் அவர்களின் சகாக்களுக்கடனும் (சேர்த்துப்) பங்கிட்டுத் தந்தார்கள்.

ஹதீஸ் 3137. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், பஹ்ரைனுடைய நிதி எம்மிடம் (அள்ளிக்) கொடுப்பேன்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் இறக்கும் வரை பஹ்ரைனுடைய நிதி வரவில்லை. (அபூ பக்ர்(ரலி) அவர்களின் காலத்தில்) பஹ்ரைனுடைய நிதி வந்தபோது அபூ பக்ர்(ரலி) பொது அறிவிப்புச் செய்பவர் ஒருவரை அனுப்பினார்கள். அவர், அல்லாஹ்வின் தூதரிடம் (இருந்து வரவேண்டிய) கடனோ, (நிறைவேற்றப்பட வேண்டிய) வாக்குறுதியோ (நிறைவேறாமல்) இருக்குமாயின் அவர் நம்மிடம் வரட்டும்' என்று கூறினார். நான், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் இன்னின்னவாறு சொன்னார்கள்' என்று கூறினேன். உடனே அபூ பக்ர்(ரலி) மூன்று முறை இரண்டு கைகளையும் குவித்து அள்ளித் தந்தார்கள்.

அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) தம் இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்து அள்ளிப் போடுவது போல் சைகை செய்யத் தொடங்கினார்கள். பிறகு எங்களிடம்இப்படித் தான் எங்களிடம் முஹம்மத் இப்னு முன்கதிர்(ரஹ்) சொன்னார்கள்' என்று கூறினார்கள். 55

ஒரு முறை சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) (இப்னுல் முன்கதிர்(ரஹ்) வழியாகக்) கூறினார்.

ஜாபிர்(ரலி) கூறினார்.

நான் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சென்று கேட்டேன். அவர்கள் எனக்குக் கொடுக்கவில்லை. மீண்டும் நான் அவர்களிடம் சென்றேன். அவர்கள் எனக்குக் கொடுக்கவில்லை. பிறகு மூன்றாம் முறையாக நான் அவர்களிடம் சென்று, உங்களிடம் நான் (முதல் முறையாகக்) கேட்டும் நீங்கள் எனக்குத் தரவில்லை. பிறகு மீண்டும் உங்களிடம் கேட்டேன். நீங்கள் எனக்குத் தரவில்லை. ஒன்று, நீங்கள் எனக்குத் தரவேண்டும் இல்லையெனில், என்னிடம் நீங்கள் கஞ்சத்தனம் காட்டுவதாகப் பொருள்' என்று கூறினேன். அதற்கு அவர்கள், நான் உங்களிடம் கஞ்சத்தனம் காட்டுகிறேன் என்றா சொன்னீர்கள்? நான் உங்களுக்குத் தராமலிருந்துவிட்ட ஒவ்வொரு முறையும் உங்களுக்குத் தர விரும்பிய நிலையில் தான் (இருந்தேன் இருப்பினும் தவிர்க்க முடியாத காரணத்தாலேயே) அப்படிச் செய்தேன்' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில், எனக்கு அபூ பக்ர்(ரலி) கைகள் நிறைய ஒரு முறை அள்ளித் தந்துவிட்டு, இதை எண்ணிக் கொள் என்று கூறினார்கள். நான் (எண்ணிப் பார்த்த போது) அது ஐந்நூறு இருக்கக் கண்டேன். அபூ பக்ர்(ரலி), இது போன்றதை இரண்டு முறை எடுத்துக் கொள் என்றார்கள்' என்று ஜாபிர்(ரலி) கூறினார்.

அறிவிப்பாளர் முஹம்மத் இப்னு முன்கதிர்(ரஹ்), கருமித் தனத்தை விட மோசமான நோய் உண்டா? என்றார்கள்.

ஹதீஸ் 3138. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ஜிஇர்ரானா'வில் வைத்து போரில் கிடைத்த செல்வங்களைப் பங்கிட்டுக் கொண்டிருந்தபோது ஒருவர் அவர்களிடம், நீதியுடன் நடந்து கொள்ளுங்கள்' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், (இறைத் தூதராகிய) நானே நீதியுடன் நடந்து கொள்ளாவிட்டால் (என்னைப் பின்பற்ற வேண்டிய) நீ வழிதவறிப் போய் விடுவாய்' என்று பதிலளித்தார்கள்.

## (போர்ச் செல்வத்தில்) போர்க் கைதிகளை(யும் சேர்த்) ஐந்து பாகங்களாக்காமலேயே அவர்களு(டைய விடுதலை)க்காக நபி(ஸல்) அவர்கள் உதவ முன் வந்தது.

ஹதீஸ் 3139. நபி(ஸல்) அவர்கள் பத்ருப் போரில் பிடிபட்ட கைதிகளைப் பற்றிப் பேசும்போது கூறினார்கள்:

முத்யிம் இப்னு அதீ அவர்கள் உயிரோடிருந்து, இந்த அசுத்தம் பிடித்தவர்களை (பிணைத் தொகை வாங்காமலே)விட்டு விடும்படி அவர் என்னிடம் (பரிந்து) பேசியிருந்தால் நான் அவருக்காக இவர்களை (பிணைத் தொகை வாங்காமலேயே)விட்டு விட்டிருப்பேன்.

என ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

## நபி(ஸல்) அவர்கள் பனு முத்தலிப் மற்றும் பனு ஹாஷிம் குலத்தினருக்கு கைபருடைய குமுஸிலிருந்து பங்கிட்டுத் தந்தது, குமுஸ் தலைவருக்குரியது அதை அவர் தம் உறவினர்களில் (தாம் விரும்பிய) சிலருக்கு மட்டும் தரலாம் என்பதற்கு ஆதாரமாகும்.

உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள், தம் உறவினர்கள் அனைவருக்குமே (குமுஸிலிருந்து) கொடுக்கவில்லை. மிகவும் ஏழ்மையாக இருப்பவர்களைவிட்டுவிட்டு தம் (நெருங்கிய) உறவினர்களுக்கு மட்டுமே கொடுக்கவுமில்லை. கொடுக்கப்பட்டவர் தூரத்து உறவினராக இருந்தாலும், அவர் தம்

தேவையை முறையிட்டதால் அவருக்கே நபி(ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். தம்முடன் ஒத்துழைத்தவர்களுக்கு அவர்களின் குலத்தினராலும் அவர்களின் ஒப்பந்தக் குலங்களாலும் துன்பம் ஏற்பட்ட காரணத்தால் அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் கொடுத்தார்கள்.

ஹதீஸ் 3140. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

நானும் உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று, இறைத்தூதர் அவர்களே! பனு முத்தலிப் கிளையாருக்கு (குமுஸிலிருந்து) கொடுத்தீர்கள் எங்களுக்குக் கொடுக்காமல்விட்டு விட்டீர்கள். நாங்களும் அவர்களும் உங்களுடன் ஒரே மாதிரியான உறவு முறை உடையவர்கள் தாமே? என்று கேட்டோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், பனு முத்தலிபும் பனு ஹாஷிமும் ஒருவர் தாம்' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில், பனு அப்தி ஷம்ஸ் கிளையாருக்கும் பனு நவ்ஃபல் கிளையாருக்கும் நபி(ஸல்) அவர்கள் (குமுஸில்) பங்கு தரவில்லை' என்று ஜுபைர்(ரலி) கூறினார்.

"பனு அப்தி ஷம்ஸ், பனு ஹாஷிம் மற்றும் பனு முத்தலிப் ஆகியோர் (ஒருவருக்கொருவர்) தாய் வழிச் சகோதரர்கள் ஆவர். அவர்களின் தாயார் ஆத்திகா பின்த்து முர்ரா என்பவராவார். நவ்ஃபல் என்பவர் இந்தக் குலங்களின் தந்தை வழிச் சகோதராவார்' என்று இப்னு இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்.

## (போரில்) கொல்லப்பட்டவரின் உடலில் கிடந்த (சட்டை, ஆயுதம் போன்ற)வை குமுஸில் சேர்ந்தவையாகக் கருதப்படாது (புனிதப் போரில்) ஒருவரைக் கொல்கிறவருக்கே கொல்லப்பட்டவரின் உடைமைகள் உரியதாகும். அவை குமுஸில் சேர்க்கப்படாது என்பதும் இது குறித்துத் தலைவரின் கட்டளையும்.

ஹதீஸ் 3141. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அறிவித்தார்.

பத்ருப் போரின்போது நான் (படை) அணியில் நின்றிருந்த நேரத்தில் என் வலப்பக்கமும் இடப் பக்கமும் பார்த்தேன். என்னருகே (இரண்டு பக்கங்களிலும்) இளவயதுடைய அன்சாரிச் சிறுவர்கள் இருவர் நின்றிருந்தார்கள். அப்போது, அவர்களை விடப் பெரிய வயதுடையவர்களுக்கிடையே நான் இருந்திருக்கக் கூடாதா என்று நான் ஆசைப்பட்டேன். அவர்களில் ஒருவர் என்னை நோக்கிச் கண் சாடையிட்டு, என் பெரிய தந்தையே! நீங்கள் அபூ ஜஹ்லை அறிவீர்களா? என்று கேட்டார். நான், ஆம் (அறிவேன்) உனக்கு அவனிடம் என்ன வேலை? என் சகோதரர் மகனே! என்று கேட்டேன். அதற்கு அச்சிறுவர், அவன் இறைத்தூதர்(ஸல்) அவர்களைத் திட்டுகிறான் என்று எனக்குத் தெரிவிக்கப்பட்டது. என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நான் அவனைப் பார்த்தால் எங்களில் எவர் விரைவில் மரணிக்க வேண்டியுள்ளதோ அவர் (அதாவது எங்கள் இருவரில் ஒருவர்) மரணிக்கும் வரை அவனுடைய உடலை என்னுடைய உடல் பிரியாது (அவனுடன் போரிட்டுக் கொண்டேயிருப்பேன்)' என்று கூறினார். இதைக் கேட்டு நான் வியந்து போனேன். அப்போது மற்றொரு சிறுவரும் கண்சாடை காட்டி முதல் சிறுவர் கூறியதைப் போன்றே கூறினார். சிறிது நேரம் தான் கழிந்திருக்கும். அதற்குள் அபூ ஜஹ்ல் மக்களிடையே சுற்றி வருவதைக் கண்டு, இதோ நீங்கள் விசாரித்த உங்கள் ஆசாமி!என்று கூறினேன். உடனே, இருவரும் தங்கள் வாட்களை எடுத்து போட்டி போட்டபடி (அவனை நோக்கிச்) சென்று அவனை வெட்டிக் கொன்றுவிட்டார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று அபூ ஜஹ்லைக் கொன்றுவிட்ட செய்தியைத் தெரிவித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், உங்களில் யார் அவனைக் கொன்றது? என்று கேட்டார்கள். அவர்களில் ஒவ்வொரு வரும், நானே (அவனைக் கொன்றேன்)'

என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,உங்கள் வாட்களை நீங்கள் (இரத்தக் கறை போகத்) துடைத்து விட்டீர்களா? என்று கேட்டார்கள். இருவரும்,இல்லை' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள் வாட்கள் இரண்டையும் நன்கு பார்த்துவிட்டு,நீங்கள் இருவருமே அவனைக் கொன்றிருக்கிறீர்கள். (முஆத் இப்னு அம்ர்டைய வாளில் ஆழமான இரத்தக் கறை தென்படுவதால்)அபூ ஜஹ்லுடைய உடலில் இருந்து எடுத்த பொருள்கள் முஆத் இப்னு அம்ர் இப்னி ஜமூஹுக்கு உரியவை' அவர்களும் முஆத் இப்னு அம்ர் இப்னி ஜமூஹ்(ரலி) அவர்களும் ஆவர்.

ஹதீஸ் 3142. அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹுனைன் போர் நடந்த ஆண்டில் (போருக்காக) நாங்கள் புறப்பட்டோம். (எதிரிகளைப் போர்க்களத்தில்) நாங்கள் சந்தித்தபோது (ஆரம்பத்தில்) முஸ்லிம்களுக்குள் பதற்றம் நிலவியது. (அவர்கள் தோல்வியுற்றனர்.) நான் இணைவைப்பவன் ஒருவனைப் பார்த்தேன். அவன் ஒரு முஸ்லிமின் மீது ஏறி உட்கார்ந்து அவரைக் கொல்ல முயன்றான். நான் அவனைச் சென்று வாளால் அவனுடைய (கழுத்துக்குக் கீழே) தோள் நரம்பில் வெட்டினேன். உடனே அவன் (அந்த முஸ்லிமைவிட்டுவிட்டு) என்னை இறுக அணைத்தான். அதனால் நான் மரணக் காற்றை சுவாசிக்கலானேன். பிறகு மரணம் அவனைத் தழுவ அவன் என்னைவிட்டுவிட்டான். உடனே நான் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களைச் சென்றடைந்து,மக்களுக்கு என்ன நேர்ந்தது? (இப்படிக் களத்திலிருந்து பின்வாங்கி ஓடுகிறார்களே)' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,(இது) அல்லாஹ் விதித்த விதி' என்று பதிலளித்தார்கள். பிறகு, மக்கள் (அப்பாஸ்(ரலி) அழைத்தால் போர்க் களத்திற்குத்) திரும்பி வந்தார்கள். (தீரத்துடன் போராடி வென்றார்கள்.) பிறகு, நபி(ஸல்) அவர்கள் அமர்ந்து,போரில் (எதிரி) ஒருவரைக் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் உடலிலிருந்து எடுத்த பொருள்கள் உரியவை' என்று கூறினார்கள். அப்போது நான் எழுந்து நின்று,எனக்கு சாட்சி சொல்வார் யார்? என்று கேட்டேன். பிறகு உட்கார்ந்து கொண்டேன். மீண்டும் நபி(ஸல்) அவர்கள்,போரில் (எதிரி) ஒருவரைக் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் உடலிலிருந்து எடுத்த பொருள்கள் உரியவை' என்று கூறினார்கள். உடனே, நான் எழுந்து நின்று,எனக்கு சாட்சி சொல்வார் யார்? என்று கேட்டேன். பிறகு உட்கார்ந்து விட்டேன். பிறகு, மூன்றவாது முறையாக அதே போன்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். உடனே, நான் எழுந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அபூ கத்தாதாவே! உங்களுக்கென்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். நடந்த நிகழ்ச்சியை நான் அவர்களிடம் எடுத்துரைத்தேன். ஒருவர்,இவர் உண்மையே சொன்னார், இறைத்தூதர் அவர்களே! இவரால் கொல்லப்பட்டவரின் உடலிலிருந்து எடுக்கப்பட்ட பொருள்கள் என்னிடம் உள்ளன. எனக்காக அவரை (ஏதாவது கொடுத்துத்) திருப்திப்படுத்தி விடுங்கள்' என்றார். அப்போது அபூ பக்ர் சித்திக்(ரலி),இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் சிங்கங்களில் ஒரு சிங்கம் அல்லாஹ்வின் சார்பாகவும் போரிட்டு (தன்னால்) கொல்லப்பட்டவரின் உடலிலிருந்து எடுத்த பொருளை உனக்குக் கொடுக்க இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒருபோதும் விரும்ப மாட்டார்கள்' என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்,(அபூ பக்ர்) உண்மை சொன்னார்' என்று கூறிவிட்டு அதை எனக்கே கொடுத்துவிட்டார்கள். நான் அந்தப் போர்க் கவசத்தை விற்றுவிட்டு பனு ஸலமா குலத்தார் வாழும் பகுதியில் ஒரு பேரீச்சந் தோட்டததை வாங்கினேன். அதுதான் இஸ்லாத்தைத் தழுவிய பின் நான் சேகரித்த முதல் சொத்தாகும்.

## (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய,) உள்ளங்கள் இணக்கமாக்கப்பட வேண்டியவர்களுக்கும், மற்றவர்களுக்கு குமுஸ் முதலான நிதிகளிலிருந்து நபி(ஸல்) அவர்கள் கொடுத்து வந்தது...

இது பற்றி அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3143. ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் (நிதயுதவி) கேட்டேன். அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். மீண்டும் அவர்களிடம் (நிதியுதவி) கேட்டேன். அப்போதும் அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். பிறகு என்னிடம்,ஹகீமே! இச்செல்வம் (பார்க்கப்) பசுமையானதும் (சுவைக்க) இனிப்பானதும் ஆகும். கொடையுள்ளத்துடன் இதை(க்கொடுப்பவர் கொடுக்க, தானும்) பேராசையின்றி எடுத்துக் கொள்கிறவருக்கு இதில் பாக்கியம் வழங்கப்படும். பேராசையுடன் இதை எடுத்துக் கொள்கிறவருக்கு இதில் பாக்கியம் வழங்கப்படுவதில்லை. அவர் (நிறையத்) தின்றும் வயிறு நிரம்பாதவனைப் போன்றவராவார். மேலும், (கொடுக்கும்) உயர்ந்த கை தான் (வாங்கும்) தாழ்ந்த கையை விட மேலானதாகும்' என்று கூறினார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! தங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பி வைத்தவன் மீது சத்தியமாக! தங்களுக்குப் பின், நான் (இந்த) உலகைவிட்டுப் பிரியும் வரை வேறெவரிடமிருந்தும் எதையும் பெற மாட்டேன்' என்று கூறினேன்.

அறிவிப்பாளர் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்:

அபூ பக்ர்(ரலி) (தம் ஆட்சிக் காலத்தில்) ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அவர்களுக்கு அன்பளிப்பு (நிதியை) வழங்க அழைப்புக் கொடுத்து வந்தார்கள். ஆனால், ஹகீம்(ரலி), அபூ பக்ர்(ரலி) அவர்களிடமிருந்து எதையும் ஏற்க மறுத்துவிட்டார்கள். பிறகு உமர்(ரலி) ஹகீம்(ரலி) அவர்களுக்கு நிதி வழங்க அழைப்புக் கொடுத்தார்கள். அவர்களிடமிருந்தும் (உதவி நிதியை) ஏற்க அவர்கள் மறுத்துவிட்டார்கள். எனவே, உமர்(ரலி),முஸ்லிம்களே! (வெற்றி கொள்ளப்பட்ட நாடுகளிலிருந்து கிடைக்கும்) இச்செல்வத்திலிருந்து அல்லாஹ், ஹகீம் அவர்களின் பங்காகக் கொடுத்த அவரின் உரிமையை அவர் முன் நான் சமர்ப்பித்து விட்டேன். அவர் அதை ஏற்க மறுத்துவிட்டார்' என்று கூறினார்கள். இவ்விதம் ஹகீம்(ரலி) நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு மக்களில் எவரிடமிருந்தும் எதையும், தாம் மரணமடையும் வரை பெறவில்லை.

ஹதீஸ் 3144. உமர் இப்னு கத்தாப்(ரலி),இறைத்தூதர் அவர்களே! அறியாமைக் காலத்தில் (இஸ்லாத்தை தழுவும் முன்பு), ஒரு நாள் இஃதிகாஃப் இருப்பதாக நான் நேர்ச்சை செய்திருந்தேன். (அந்த நேர்ச்சையை இன்னும் நான் நிறைவேற்றவில்லை. இப்போது அதை நான் நிறைவேற்றலாமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அதை நிறைவேற்றும்படி உமர்(ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். மேலும், உமர்(ரலி) ஹுனைன் போரில் பிடிபட்ட போர்க் கைதிகளிலிருந்து இரண்டு அடிமைப் பெண்களைப் பெற்றிருந்தார்கள். அவ்விருவரையும் மக்காவிலுள்ள ஒரு வீட்டில் தங்க வைத்திருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹுனைன் போரில் பிடிபட்ட கைதிகளுக்கு கருணை காட்டி அவர்களை சுதந்திரமாகவிட்டு விட்டிருந்தார்கள். எனவே, அவர்கள் சாலைகளில் (சுதந்திரமாக) நடமாடத் தொடங்கினார்கள். உடனே உமர்(ரலி) தம் மகன் அப்துல்லாஹ்(ரலி) அவர்களிடம்,அப்துல்லாஹ்வே! இங்கே பார். என்ன இது? என்று கேட்டார்கள். அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள், போர்க் கைதிகளின் மீது கருணை புரிந்து அவர்களை சுதந்திரமாகவிட்டுவிட்டார்கள்' என்றார்கள். (உடனே) உமர்(ரலி), அப்படியென்றால் நீ சென்று அந்த இரண்டு அடிமைப் பெண்களையும் சுதந்திரமாகச் செல்லவிட்டு விடு' என்று கூறினார்கள். மேலும்,

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஜிஇர்ரானாவிலிருந்து உம்ரா செய்யவில்லை. அப்படி அவர்கள் உம்ரா செய்திருந்தால் அது அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுக்குத் தெரியாமலிருந்திருக்காது.

மற்றோர் அறிவிப்பில்,குமுஸ் (ஐந்திலொரு பங்கு) நிதியிலிருந்து இந்த இரண்டு அடிமைப் பெண்களையும் நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களுக்கு கொடுத்தார்கள்' என்று வந்துள்ளது.

உமர்(ரலி) அறியாமைக் காலத்தில் செய்த நேர்ச்சை குறித்த மற்றோர் அறிவிப்பில்,இஃதிகாஃப் செய்வதாக நேர்ச்சை செய்திருந்தேன்' என்று மட்டுமே வந்துள்ளது.ஒரு நாள் இஃதிகாஃப் செய்வதாக நேர்ச்சை செய்திருந்தேன்' என்று ('ஒரு நாள் எனும் சொல்) இடம் பெறவில்லை.

ஹதீஸ் 3145. அம்ர் இப்னு தக்லிப்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிலருக்குக் கொடுத்துச் சிலருக்குக் கொடுக்காமல்விட்டுவிட்டார்கள். அவர்கள் (அதைப் பொறுத்துக் கொள்ள முடியாமல்) நபி(ஸல்) அவர்களைக் குறை சொல்வதைப் போன்ற சூழ்நிலை நிலவியது. எனவே, நபி(ஸல்), அவர்கள்,நம்பிக்கை பலவீனப்பட்டுவிடுவார் என்றும், பொறுமையிழந்து நிலை குலைந்துவிடுவார் என்றும் எவரைக் குறித்து நான் அஞ்சுகிறேனோ அவருக்குக் கொடுக்கிறேன். இன்னும் சிலருக்கு, அவர்களின் உள்ளத்தில் அல்லாஹ் விதைத்துள்ள நன்மையையும் தன்னிறைவான (போது மென்ற) பண்பையும் நம்பிக் கொடுக்காமல்விட்டு விடுகிறேன். அத்தகைய (உயர் பண்புடைய)வர்களில் ஒருவர் தான் அம்ர் இப்னு தக்லிப் அவர்களும்' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை (நன்மையும் போதுமென்ற குணமும் உடையவர்களில் ஒருவனாகக் குறிப்பிட்டுப்) புகழ்ந்து பேசிய இச்சொல்லுக்குப் பகரமாக (விலையுயர்ந்த செல்வமான) சிகப்பு ஒட்டகங்களை எனக்குத் தருவதாக இருந்தாலும் நான் அவற்றை விரும்ப மாட்டேன்.

மற்றோர் அறிவிப்பில்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு செல்வத்தை... அல்லது போர்க் கைதிகளைக் கொண்டு வந்து இவ்வாறு பங்கிட்டார்கள்' என்று வந்துள்ளது.

ஹதீஸ் 3146. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் குறைஷிகளுடன் நேசத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காக அவர்களுக்குக் கொடுக்கிறேன். ஏனெனில், அவர்கள் அறியாமைக் காலக் கொள்கையைவிட்டுவிட்டு (இப்போது தான்) புதிதாக இஸ்லாத்தில் இணைந்துள்ளனர்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3147. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹவாஸின் குலத்தாரின் செல்வத்தை அல்லாஹ், தன்னுடைய தூதருக்கு (ஹுனைன் போரில்) அளித்தபோது அவர்கள் குறைஷிகளில் சிலருக்கு நூறு ஒட்டகங்களைக் கொடுக்கலானார்கள். 64 உடனே அன்சாரிகளில் சிலர்,தன் தூதரை அல்லாஹ் மன்னிப்பானாக! நம்முடைய வாட்களில் எதிரிகளுடைய இரத்தம் சொட்டிக் கொண்டிருக்க குறைஷிகளுக்குக் கொடுக்கிறார் நம்மைவிட்டு விடுகிறாரே' என்று பேசிக் கொண்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அவர்களின் இந்தப் பேச்சு தெரிவிக்கப்பட்டது. உடனே நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளிடம் ஆளனுப்பி அவர்களை வரச் சொல்லி அவர்களை முழுதாகப் பதனிடப்பட்ட தோலால் ஆன கூடாரம் ஒன்றில் ஒன்று திரட்டினார்கள். அவர்களுடன் வேறெவரையும் அவர்கள் அழைக்கவில்லை. அவர்கள் ஒன்று திரண்டுவிட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்து,உங்களைப் பற்றி எனக்கு எட்டியுள்ளதே, அச்செய்தி என்ன? என்று கேட்டார்கள். அன்சாரிகளிடையே இருந்த

அறிஞர்கள்,எங்களில் யோசனையுடையவர்கள் எதுவும் சொல்லவில்லை, இறைத்தூதர் அவர்களே! ஆயினும், எங்களிடையேயுள்ள இளம் வயது வாலிபர்கள்,தன் தூதரை அல்லாஹ் மன்னிப்பானாக! நம்முடைய வாட்களில் ஹவாஸின் குலத்தாருடைய இரத்தம் சொட்டிக் கொண்டிருக்க குறைஷிகளுக்குக் கொடுக்கிறார். ஆனால், நம்மைவிட்டு விடுகிறாரே என்று பேசிக் கொண்டார்கள்' என்று பதில் கூறினர். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,நிராகரிப்பைக் கைவிட்டு இப்போது தான் புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர்களுக்கு கொடுக்கிறேன். மக்கள், செல்வங்களை எடுத்துச் செல்ல, உங்கள் வசிப்பிடத்திற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களை (உங்களுடன் அழைத்துக்) கொண்டு செல்வதை நீங்கள் விரும்பவில்லையா? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் எடுத்துக் கொண்டு திரும்பிச் செல்பவற்றை விட நீங்கள் எடுத்துக் கொண்டு திரும்பிச் செல்வதே சிறந்ததாகும்' என்றார்கள். உடனே அன்சாரிகள்,இறைத்தூதர் அவர்களே! ஆம் நாங்கள் (தாங்களே எங்களுக்குப் போதுமென்று) திருப்தியடைந்தோம்' என்று பதிலளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,எனக்குப் பின், (ஆட்சிப் பொறுப்பிலும் போரில் கிடைக்கும் செல்வங்களைப் பங்கிடுவதிலும்) உங்களை விட மற்றவர்களுக்கு மிக அதிகமாக முன்னுரிமை வழங்கப்படுவதை நீங்கள் காண்பீர்கள். அந்நிலையில் அல்லாஹ்வையும்ஹவ்ளுல் கவ்ஸர் தடாகத்தின் அருகே அவனுடைய தூதரை (என்னை)யும் சந்திக்கும் வரை பொறுமையைக் கைக் கொள்ளுங்கள்' என்றார்கள்.

இதை அறிவித்துவிட்டு அனஸ்(ரலி),ஆனால், நாங்கள் பொறுமையைக் கைக் கொள்ளவில்லை' என்றார்கள்.

ஹதீஸ் 3148. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அவர்களுடன் மக்கள் ஹுனைன் போரிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். அப்போது கிராமவாசிகள் அல்லாஹ்வின் தூதரைப் பிடித்து (போரில் கிடைத்த பொருட்களிலிருந்து தங்களுக்குக் கொடுக்கும்படி) கேட்கலானார்கள். இறுதியில், அவர்களை (சூழ்ந்து நெருக்கியபடி) ஒரு கருவேல மரத்தின் அருகே தள்ளிக் கொண்டு சென்று அவர்களின் போர்வையைப் பறித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,எனக்கு என் போர்வையைக் கொடுத்து விடுங்கள். இந்த (கருவேல மரத்தின்) முட்கள் அளவிற்கு ஒட்டகங்கள் (என்னிடம்) இருந்தாலும் அவற்றை நான் உங்களிடையே பங்கிட்டு விடுவேன். பிறகு என்னை நீங்கள் கருமியாகவோ, பொய் சொல்பவனாகவோ, கோழையாகவோ பார்க்க மாட்டீர்கள்' என்றார்கள். 65

ஹதீஸ் 3149. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் நடந்து சென்று கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் ஓரம் தடித்த நஜ்ரான் (யமன்) தேசத்து சால்வை ஒன்றைப் போர்த்தியிருந்தார்கள். அப்போது கிராமவாசி ஒருவர் அவர்களைக் கண்டு அந்த சால்வையை வேகமாக இழுத்தார். எந்த அளவிற்கென்றால் அந்த கிராமவாசி வேகமாக இழுத்ததால் சால்வையின் ஓரப் பகுதி நபி(ஸல்) அவர்களின் தோளின் ஒரு மூலையில் (காயப்படுத்தி) அடையாளம் பதித்திருந்ததை கண்டேன். பிறகு அவர் (நபி(ஸல்) அவர்களிடம்),தங்களிடமுள்ள அல்லாஹ்வின் செல்வத்திலிருந்து எனக்குக் கொடுக்கும்படி கட்டளையிடுங்கள்' என்று கூறினார். உடனே, நபி(ஸல்) அவர்கள் அவரைத் திரும்பிப் பார்த்துச் சிரித்துவிட்டு, பிறகு அவருக்குக் கொடுக்கும்படி உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 3150. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹுனைன் போரின்போது நபி(ஸல்) அவர்கள் மக்கள் சிலருக்கு முன்னுரிமை வழங்கி அதிகமாகக் கொடுத்தார்கள். அக்ரஉ இப்னு ஹாபிஸ்(ரலி) அவர்களுக்கு நூறு ஒட்டகங்களைக்

கொடுத்தார்கள். உயைனா(ரலி) அவர்களுக்கும் அது போன்றே கொடுத்தார்கள். (போரில் கிடைத்த பொருட்களைப்) பங்கிடும்போது பிரமுகர்களில் சிலருக்கு முன்னுரிமை வழங்கி அதிகமாகக் கொடுத்தார்கள். அப்போது ஒருவர்,அல்லாஹ்வின் மீதாணையாக! இது நீதியுடன் நடந்து கொள்ளாத ஒரு பங்கீடாகும். இது அல்லாஹ்வின் திருப்தி நாடப்படாத ஒரு பங்கீடாகும்' என்று கூறினார். நான்,அல்லாஹ்வின் திருப்தி நாடப்படாத ஒரு பங்கீடாகும்' என்று கூறினார். நான்,அல்லாஹ்வின் மீதாணையாக! நான் நபி(ஸல்) அவர்களுக்கு (இதைத்) தெரிவிப்பேன்' என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் சென்று அதைத் தெரிவித்தேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நீதியுடன் நடந்து கொள்ளாவிட்டால் வேறு யார் தான் நீதியுடன் நடந்து கொள்வார்கள்? அல்லாஹ், (இறைத் தூதர்) மூஸா அவர்களுக்குக் கருணை புரிவானாக! அவர்கள் இதை விட அதிகமாக மனவேதனைக்கு ஆளாக்கப்பட்டார்கள். ஆயினும் (அதைச்) சகித்தார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3151. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸுபைர்(ரலி) அவர்களுக்குக் கொடுத்த நிலத்திலிருந்து (பேரீச்சங்) கொட்டைகளை நான் என் தலையில் சுமந்து எடுத்துச் சென்று கொண்டிருந்தேன். அந்த நிலம் என் நாட்டிலிருந்து ஒரு ஃபர்ஸகில் மூன்றில் ஒரு பங்கு தூரம் இருந்தது. (அதாவது இரண்டு மைல் தொலைவு இருந்தது.)

"நபி(ஸல்) அவர்கள் பனு நளீர் குலத்தாரின் சொத்துக்களிலிருந்து ஒரு நிலத்தை ஸுபைர்(ரலி) அவர்களுக்குக் கொடுத்தார்கள்' என்று உர்வா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 3152. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் ஹிஜாஸ் மாநிலத்திலிருந்து நாடு கடத்திவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர்வாசிகளை வென்றபோது அவர்களை கைபரிலிருந்து வெளியேற்ற விரும்பினார்கள். அவர்கள் அதை வென்றபோது அந்த நிலப்பரப்பு யூதர்களுக்கும் அல்லாஹ்வின் தூதருக்கும் முஸ்லிம்களுக்கும் உரியதாக இருந்தது. யூதர்கள் அல்லாஹ்வின் தூதரிடம்,அவர்கள் அதில் உழைத்துப் பயிரிடுவார்கள் அவர்களுக்கு விளைச்சலில் பாதி தரப்பட வேண்டும் என்னும் நிபந்தனையின் பேரில் அவர்களை (அங்கேயே தங்கி வகித்துக் கொள்ள)விட்டு விடும்படி கேட்டுக் கொண்டார்கள். அப்போது,இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,நாங்கள் விரும்பும் வரை அதே நிபந்தனையின் படி நாங்கள் உங்களைவிட்டு வைப்போம் என்று கூறினார்கள். உமர்(ரலி) அவர்கள தம் ஆட்சிக் காலத்தில் அவர்களை தைமா, ஜெரிக்கோ ஆகிய பகுதிகளுக்கு நாடு கடத்தும் வரை அவ்வாறே அவர்கள் அங்கே வசித்து வர அனுமதிக்கப்பட்டார்கள்.

## பகை நாட்டில் கிடைக்கும் உணவு

ஹதீஸ் 3153. அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் கைபர் கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தோம். அப்போது ஒருவர், கொழுப்பு அடங்கிய தோல்பை ஒன்றை எறிந்தார். நான் அதை எடுக்க விரைந்து சென்றேன். பிறகு திரும்பிப் பார்த்தேன். அங்கே நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள். அவர்களைக் கண்டு நான் வெட்க மடைந்தேன்.

ஹதீஸ் 3154. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

எங்கள் புனிதப் போர்களின்போது எங்களுக்குத் தேனும் திராட்சைப் பழமும் கிடைத்து வந்தன. அதை நாங்கள் உண்போம். ஆனால் அதை நாங்கள் (நபியவர்களிடமோ, சேகரித்து வைப்பதற்காகவோ) கொண்டு செல்வதில்லை.

ஹதீஸ் 3155. இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அறிவித்தார்.

கைபர் கோட்டையின் முற்றுகையில் ஈடுபட்டிருந்த நாள்களில் நாங்கள் பசி பட்டினியால் பீடிக்கப்பட்டிருந்தோம். கைபர் போர் தொடங்கிய நாளில் நாங்கள் காட்டுக் கழுதைகளை வேட்டையாடிப் பிடித்து அவற்றை அறுத்தோம். (அவற்றைச் சமைக்கின்ற) பாத்திரங்கள் கொதிக்கத் தொடங்கியபோது அல்லாஹ்வின் தூதருடைய அறிவிப்பாளர், பாத்திரங்களைக் கவிழ்த்து விடுங்கள். கழுதைகளின் இறைச்சிகளில் சிறிதும் உண்ணாதீர்கள்' என்று (உரக்கக் கூவி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) (தொடர்ந்து) கூறுகிறார்கள்:

இந்த அறிவிப்பைச் செவியுற்ற நாங்கள், அதிலிருந்து குமுஸ் - அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரிய ஐந்திலொரு பங்கு நிதி செலுத்தப்படாமல் இருந்ததால் தான் இப்படி அறிவிக்கப்படுகிறது' என்று சொன்னோம். மற்றவர்கள், (அப்படியல்ல) அதை என்றைக்குமாக நபி (ஸல்) அவர்கள் தடைசெய்துவிட்டார்கள்' என்று கூறினார்கள்.

# அத்தியாயம் 58 ‘ஜிஸ்யா காப்புவரி ஒப்பந்தமும், போர் நிறுத்த ஒப்பந்தமும்.

## இஸ்லாமிய அரசின் பொறுப்பிலுள்ளவர்களுடன் ஜிஸ்யா எனும் காப்புவரி ஒப்பந்தம் செய்து கொள்வதும், பகை நாட்டினருடன் குறித்த காலத்திற்குப் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்வதும்.

அல்லாஹ் கூறினான்:

வேதம் வழங்கப்பட்டவர்களில் அல்லாஹ்வின் மீதும் இறுதி நாளின் மீதும் நம்பிக்கை கொள்ளாமலும், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் தடுத்தவற்றைதடுக்கப்பட்டவை என்று கருதாமலும் சத்திய மார்க்கத்தைப் பின்பற்றாமலும் இருக்கிறவர்களுக்கு எதிராகப் போடுங்கள் அவர்கள் பணிந்து போய் (தம்) கையால்ஜிஸ்யா வரியைச் செலுத்தும் வரை. (திருக்குர்ஆன் 09:29)

மேலும், யூதர்கள் கிறிஸ்தவர்கள், மஜூஸிகள் (நெருப்பு வணங்கிகள்) மற்றும் முஸ்லிமல்லாதோரிடம் ஜிஸ்யா - காப்பு வரி வாங்கியது பற்றிய தகவல்களும் அறிவிப்பாளர் அப்துல்லாஹ் இப்னு நஜீஹ் (ரஹ்) கூறினார்:

“ஷாம் நாட்டைச் சேர்ந்த (வேதம் கொடுக்கப்பட்ட)வர்களின் மீது நான்கு தீனார்களும் யமன் நாட்டவர் மீது ஒரு தீனாரும் (ஜிஸ்யா வரியாக) விதிக்கக் காரணமென்ன? என்று முஜாஹித் (ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், அது (அவரவரின்) வசதியைப் பொருத்து நிர்ணயிக்கப்பட்டது‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3156. அம்ர் இப்னு தீனார் (ரஹ்) அறிவித்தார்.

நான் ஜாபிர் இப்னு ஸைத் (ரஹ்) அவர்களுடனும் அம்ர் இப்னு அவ்ஸ் (ரஹ்) அவர்களுடனும் அமர்ந்திருந்தேன். அப்போது (அவர்கள் கூறினார்கள்:) முஸ்அப் இப்னு ஸுபைர் (ரஹ்) பஸராவாசிகளுடன் ஹஜ் செய்த ஆண்டான ஹிஜ்ரீ 70-ம் ஆண்டில் அவ்விருவரிடமும் ஸம் ஸம் கிணற்றின் படிக்கட்டின் அருகே பஜாலா (ரஹ்) அறிவித்தார்.

நான் அஹ்னஃப் இப்னு கைஸ் (ரஹ்) அவர்களின் தந்தையின் சகோதரரான ஜஸ்உ இப்னு முஆவியாவுக்கு எழுத்தராக இருந்தேன். அப்போது உமர் இப்னு கத்தாப் (ரலி) இறப்பதற்கு ஓராண்டுக்கு முன்புதிருமணம் புரிந்து கொள்ளக் கூடாத இரத்த உறவு தங்களிடையே இருந்தும் ஒருவரையொருவர் மணந்து கொண்டு மஜூஸிகளை (மண பந்தத்திலிருந்து) பிரித்து வையுங்கள் என்று உத்தரவிட்டு அவர்களின் கடிதம் ஒன்று எங்களுக்கு வந்தது. உமர் (ரலி) மஜூஸிகளிடமிருந்து ஜிஸ்யா வரி வசூலிக்கவில்லை.

ஹதீஸ் 3157. அதன் காரணத்தால் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி), இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஹஜர் (பஹ்ரைன்) பகுதியில் வசித்து வந்த மஜூஸிகளிடமிருந்து ஜிஸ்யா வரி வசூலித்துள்ளார்கள்‘ என்று சாட்சி சொன்னார்கள்.

ஹதீஸ் 3158. மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) அறிவித்தார்.

‘பனு ஆமிர் இப்னு லுஅய் குலத்தாரின் ஒப்பந்த நண்பரும் பத்ருப் போரில் பங்கெடுத்தவருமான அம்ர் இப்னு அவ்ஃப் அல் அன்சாரீ(ரலி) எனக்குக் கூறினார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ்(ரலி) அவர்களை பஹ்ரைனிலிருந்து ஜிஸ்யா வரியை வசூலித்து வரும்படி அனுப்பினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மஜூஸிகளான) பஹ்ரைன் வாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்து அவர்களுக்கு அலா இப்னு ஹள்ரமீ(ரலி) அவர்களைத் தலைவராக ஆக்கியிருந்தார்கள். அபூ உபைதா(ரலி) பஹ்ரைனிலிருந்து நிதியுடன் வந்தார்கள். அபூ உபைதா(ரலி) வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அன்சாரிகள் நபி(ஸல்) அவர்களிடம் செல்ல, அது ஃபஜ்ருத் தொழுகையின் நேரமாக அமைந்துவிட்டது. நபி(ஸல்) அவர்கள் மக்களுடன் தொழுது முடித்துத் திரும்ப, அன்சாரிகள் நபியவர்களிடம் சைகையால் கேட்டார்கள். (ஆர்வத்துடனிருந்த) அவர்களைக் கண்டவுடன் நபி(ஸல்) அவர்கள் புன்னகைத்துவிட்டு,அபூ உபைதா ஏதோ கொண்டு வந்திருக்கிறார் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் என நான் நினைக்கிறேன்‘ என்று கூற, அன்சாரிகள்,ஆமாம், இறைத்தூதர் அவர்களே!என்று பதிலளித்தார்கள்.எனவே, ஒரு மகிழ்ச்சியான செய்தி! உங்களுக்கும் அதிகமாகக் கொடுக்கப்பட்டு, அவர்கள் அதற்காகப் போட்டியிட்டதைப் போல் நீங்களும் போட்டியிட, அவர்களை அது அழித்துவிட்டதைப் போல் உங்களையும் அது அழித்து விடுமோ என்றே நான் அஞ்சுகிறேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3159. பக்ரு இப்னு அப்தில்லாஹ் அல் முஸனீ(ரஹ்) மற்றும் ஸியாத் இப்னு ஜுபைர் இப்னி ஹய்யா(ரஹ்) ஆகிய இருவரும் அறிவித்தார்கள்.

உமர்(ரலி) (தம் ஆட்சிக் காலத்தில்) இணைவைப்போருடன் போர் புரிய மக்களைப் பெரும்பெரும் நகரங்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அப்போது (‘ருஸ்தும் என்கிற பாரசீகத் தளபதியான)ஹுர்முஸான் இஸ்லாத்தை ஏற்றார். உமர்(ரலி) ஹுர்முஸான்(ரஹ்) அவர்களிடம்,நான் என்னுடைய இந்தப் (புனிதப்) போர்களில் உங்களிடம் தான் ஆலோசனை கேட்கப் போகிறேன்‘‘6 என்றார்கள். அதற்கு அவர்,சரி, நீங்கள் போரிட விரும்பும் நாடுகளின் நிலையும் அதிலுள்ள எதிரிகளின் நிலையும் ஒரு தலையும் இரண்டு சிறகுகளும் இரண்டு கால்களும் கொண்ட ஒரு பறவையின் நிலை போன்றதாகும். (அதன்) இரண்டு சிறகுகளில் ஒன்று ஒடிக்கப்பட்டு விடுமாயின், கால்கள் இரண்டும் தலையும் (மீதியுள்ள) ஒரு சிறகின் உதவியால் எழுந்து விடும். மற்றொரு சிறகும் ஒடிக்கப்பட்டு விடுமாயின், இரண்டு கால்களும் தலையும் (மீண்டும்) எழும். தலையே நொறுக்கப்பட்டால் இரண்டு கால்களும், இரண்டு சிறகுகளும், தலையும் போய்விடும். (சாசானியப் பேரரசனான) கிஸ்ரா (குஸ்ரு) தான் தலை. சீசர் ஒரு சிறகும் பாரசீகர்கள் மற்றொரு சிறகும் ஆவர். எனவே, கிஸ்ராவை நோக்கிப் புறப்படும்படி முஸ்லிம்களுக்குக் கட்டளையிடுங்கள்‘ என்று (ஆலோசனை) கூறினார்.

அறிவிப்பாளர்கள் பக்ரு இப்னு அப்தில்லாஹ்(ரஹ்), ஸியாத் இப்னு ஜுபைர்(ரஹ்) ஆகிய இருவரும் சேர்ந்து, ஜுபைர் இப்னு ஹய்யா(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிப்பதாவது.

உடனே, உமர்(ரலி) எங்களை (போருக்குப் புறப்படும்படி) அழைத்து, நுஃமான் இப்னு முகர்ரின்(ரலி) அவர்களை எங்களுக்குத் தலைவராக்கி (அனுப்பி)னார்கள். இறுதியில், நாங்கள் எதிரியின் பூமியில் (ஈரானிலுள்ள நஹாவந்தில்) இருந்தபோது எங்களைத் தாக்கிட கிஸ்ராவின் தளபதி நாற்பதாயிரம் பேர் கொண்ட படையுடன் வந்தான். (அவர்களின்) மொழி பெயர்ப்பாளர் எழுந்து,உங்களில் ஒருவர் பேசட்டும்‘ என்று சொல்ல, முகீரா இப்னு ஷுஅபா(ரலி),நீ விரும்பியதைப் பற்றி கேள்‘ என்றார்கள். அந்த மொழி பெயர்ப்பாளர்,நீங்கள் யார்? (எதற்காக வந்திருக்கிறீர்கள்?)‘ என்று கேட்டதற்கு முகீரா(ரலி),நாங்கள் அரபு மக்கள். நாங்கள் பசியின் காரணத்தால் (காய்கள், பழங்களின்) தோலையும் கொட்டையையும் சப்பித் தின்று

கொண்டிருந்தோம் முடியையும் கம்பளியையும் அணிந்து கொண்டிருந்தோம். இந்நிலையில் தான், வானங்கள் மற்றும் பூமியின் அதிபதி - அவன் புகழ் உயர்ந்தது அவன் மகத்துவம் தெளிவானது - (அல்லாஹ்) எங்களிலிந்தே ஒரு நபியை எங்களிடம் அனுப்பினான். அவரின் தாய், தந்தையை நாங்கள் (நன்கு) அறிவோம். எங்கள் நபியும், எங்கள் இறைவனின் தூதருமான அவர் உங்களுடன் நாங்கள் போரிட வேண்டுமென எங்களுக்குக் கட்டளையிட்டார். ஒன்று, நீங்கள் அல்லாஹ் ஒருவனை மட்டுமே வழிபட வேண்டும் அல்லது நீங்கள்ஜிஸ்யா வரி செலுத்த வேண்டும். (இதற்காக நாங்கள் போராடி) இந்தப் போராட்டத்தில் எங்களில் எவரேனும் கொல்லப்பட்டால், அவர் (இதற்கு முன்) ஒருபோதும் கண்டிராத இன்பமயமான சொர்க்கத்திற்குச் செல்வார் (கொல்லப்படாமல் வெற்றி வாகை சூடி) எங்களில் ஒருவர் உயிர் வாழ்ந்தால் உங்கள் பிடரிகளை அவர் உடைமையாக்கிக் கொள்வார் என்று எங்கள் இறைவன் தெரிவித்த தூதுச் செய்தியை எங்கள் நபி எங்களுக்கு அறிவித்தார்கள்‘ என்றார்கள்.

ஹதீஸ் 3160. (இந்தப் போரின்போது எதிரிகளின் மீது தாக்குதல் தொடுப்பதைத் தாமதிப்பதாக முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) நுஃமான் இப்னு முகர்ரின் (ரலி) மீது குற்றம் சாட்டிய வேளையில்) நுஃமான் (ரலி), இதைப் போன்ற (கடும் துன்பம் நிறைந்த) ஒரு போரில் நபி (ஸல்) அவர்களுடன் உங்களை அல்லாஹ் கலந்து கொள்ளச் செய்திருந்தால் (நபி (ஸல்) அவர்களும் தாக்குதலைத் தொடங்கிடத் தாமதப்படுத்தி அதனால் காத்திருக்க வேண்டிய சிரமம் உங்களுக்கு ஏற்பட்டிருந்தால், அதனால் கிடைக்கவிருக்கும் மறுமைப் பலன்களின் எதிர்பார்ப்பால்) உங்களுக்கு அது வருத்தம் தந்திருக்காது அதை இழிவாக எண்ணச் செய்திருக்காது. ஆயினும், நான் அல்லாஹ்வின் தூதருடன் பல போர்களில் கலந்து கொண்டிருக்கிறேன். பகல் காற்று வீசத் தொடங்கி (சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்து பிற்பகல்) தொழுகை நேரங்கள் வந்து விடும் வரை காத்திருப்பது அவர்களின் வழக்கமாகும்‘ என்று கூறினார்கள்.

## ஆட்சித் தலைவர் ஓர் ஊரின் அரசனுடன் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்து கொள்ளும் பட்சத்தில் அது அந்த ஊர்வாசிகள் அனைவருக்கும் பொருந்துமா?

ஹதீஸ் 3161. அபூ ஹுமைத் அஸ் ஸாஇதீ (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தபூக் போரில் கலந்து கொண்டோம். அய்லா‘வின் அரசன் நபி (ஸல்) அவர்களுக்கு (‘தல்தல் எனும்) வெள்ளை நிறக் கோவேறுக் கழுதை ஒன்றை அன்பளிப்புச் செய்தான். நபி (ஸல்) அவர்கள் அவனுக்குச் சால்வையொன்றை (அனுப்பி) அணிவித்தார்கள். மேலும், நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமிய அரசின் கீழ் கட்டுப்பட்டு இருக்கும்படியும் அவனுக்கு எழுதினார்கள்.

## இறைத்தூதர் (ஸல்) அவர்களின் பொறுப்பில் உள்ள (முஸ்லிமல்லாத) வர்களைப் பாதுகாக்கும்படி அறிவுரை கூறுதல்.

ஹதீஸ் 3162. ஜுவைரிய்யா இப்னு குதாமா அத் தமீமீ (ரஹ்) அறிவித்தார்.

(ஒருமுறை) நாங்கள், எங்களுக்கு அறிவுரை கூறுங்கள், இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! என்று உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்களிடம் கேட்டோம். அப்போது உமர் (ரலி), (இஸ்லாமிய அரசின் கீழுள்ள முஸ்லிமல்லாதவர்களைக் காக்கும்) அல்லாஹ்வின் பொறுப்பை நிறைவேற்றும்படி உங்களுக்கு நான் அறிவுரை கூறுகிறேன். ஏனெனில், அது உங்கள் நபியின் பொறுப்பும் உங்கள் குடும்பத்தினரின் வாழ்வாதாரமும் ஆகும்‘ என்று பதிலளித்தார்கள்.

## பஹ்ரைன் நிலங்களை (தோழர்கள் சிலருக்கு) நபி(ஸல்) அவர்கள் வருவாய் மானியமாக வழங்கியதும், பஹ்ரைனின் நிதியிலிருந்தும், ஜிஸ்யாவிலிருந்தும் வழங்குவதாக நபிகளார் வாக்களித்ததும், ஃபய்உ‘ மற்றும் ஜிஸ்யா நிதி யாருக்குப் பங்கிடப்படும் என்பதும்.

ஹதீஸ் 3163. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளை, அவர்களுக்கு பஹ்ரைனின் நிலங்களை வருவாய் மானியமாக எழுதித் தருவதற்காக அழைத்தார்கள். அன்சாரிகள்,அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் குறைஷிச் சகோதரர்களுக்கும் இதே போன்று எழுதித் தரும் வரை நாங்கள் (இவற்றை) ஏற்றுக் கொள்ள மாட்டோம்‘ என்று கூறிவிட்டார்கள். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்,அது குறைஷிகளுக்குக் கிடைக்கும் அல்லாஹ் அதை விரும்பும் பட்சத்தில்‘ என்று கூறினார்கள். குறைஷிகளுக்கும் எழுதித் தரும்படி அன்சாரிகள் (தொடர்ந்து) வற்புறுத்திக் கூறினார்கள். அப்போது, நபி(ஸல்) அவர்கள்,(அன்சாரிகளே!) எனக்குப் பின் (சிறிது காலத்திற்குள்ளாகவே) உங்களை விடப் பிறருக்கு (ஆட்சியதிகாரத்தில்) முன்னுரிமை தரப்படுவதை நீங்கள் பார்ப்பீர்கள். எனவே, (மறுமையில், எனக்குச் சொந்தமான) தடாகத்தின் அருகே என்னைச் சந்திக்கும் (காலம்) வரை பொறுமையைக் கைக் கொள்ளுங்கள்‘ என்றார்கள்.

ஹதீஸ் 3164. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு முறை),நம்மிடம் பஹ்ரைனின் நிதி வந்தால் உனக்கு நான் இப்படி, இப்படி, இப்படி (அள்ளிக்) கொடுப்பேன் என்று (மூன்று முறை) என்னிடம் சொல்லியிருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மரணமடைந்து விட்டிருந்தபோது பஹ்ரைனின் நிதி வர, அபூ பக்ர்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எவருக்காவது ஏதேனும் வாக்களித்திருந்(து அதை நிறைவேற்றும் முன்பாக அவர்கள் மரணமடைந்து விட்டிருந்)தால் அவர் என்னிடம் வரட்டும்‘ என்று கூறினார்கள். உடனே நான் அவர்களிடம் சென்று,இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,நம்மிடம் பஹ்ரைனின் செல்வம் வந்தால் உனக்கு இப்படி, இப்படி, இப்படி (அள்ளிக்) கொடுப்பேன் என்று என்னிடம் சொல்லியிருந்தார்கள்‘ என்று கூறினேன். உடனே அவர்கள் என்னிடம்,அதை அள்ளிப் போட்டுக் கொள்‘ என்றார்கள். நான் அதை நிறைவாக அள்ளிப் போட்டுக் கொண்டேன். அவர்கள் என்னிடம்,அதை எண்ணிக் கொள்‘ என்றார்கள். நான் அதை எண்ணிப் பார்த்தேன். அது ஐநூறு இருந்தது. எனவே, அவர்கள் எனக்கு (மொத்தம்) ஆயிரத்து ஐநூறு தந்தார்கள்.

ஹதீஸ் 3165. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் பஹ்ரைனிலிருந்து நிதி ஒன்று கொண்டு வரப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,அதைப் பள்ளி வாசலில் பரப்பி வையுங்கள்‘ என்று உத்தரவிட்டார்கள். அது நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்ட செல்வத்திலேயே அதிகமானதாக இருந்தது. அப்போது, அப்பாஸ்(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! எனக்குக் கொடுங்கள். நான் (பத்ருப் போரில் கைது செய்யப்பட்ட பின் விடுதலை பெறுவதற்காக) எனக்காகவும் (என் சகோதரர் மகன்) அகீலுக்காகவும் பிணைத் தொகை கொடுத்திருக்கிறேன்‘ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,எடுத்துக் கொள்ளுங்கள்‘ என்றார்கள். உடனே, அப்பாஸ்(ரலி), தம் துணியில் அதை அள்ளிப் போட்டார்கள். பிறகு அதைத் தூக்கிச் சுமக்கச் சென்றார்கள். அவர்களால் (அதைச் சுமக்க) முடியவில்லை. எனவே,(உங்கள் தோழர்களான) இவர்களில் ஒருவருக்கு இதை என் (தோளின்) மீது தூக்கி வைக்கும்படி உத்தரவிடுங்கள்‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,நான் உத்தரவிட மாட்டேன்‘ என்று சொல்லிவிட்டார்கள்.

அதற்கு அப்பாஸ்(ரலி),நீங்களாவது என் தோள் மீது இதைத் தூக்கி வையுங்கள்‘ என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்கும் நபி(ஸல்) அவர்கள்,வைக்க மாட்டேன்‘ என்று சொல்லிவிட்டார்கள். பிறகு, அதிலிருந்து கொஞ்சத்தை (எடுத்துக் கீழே) போட்டுவிட்டு அதைத் தூக்கிச் சுமக்க முயன்றார்கள். (அப்போதும்) அதை அவர்களால் தூக்க முடியவில்லை. எனவே, நபி(ஸல்) அவர்களிடம்,இதைத் தூக்கி என் மீது சுமத்தும்படி இவர்களில் ஒருவருக்கு உத்தரவிடுங்கள்‘ என்று (மீண்டும்) கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,மாட்டேன்‘ என்று சொல்லிவிட்டார்கள். பிறகு, அதிலிருந்து கொஞ்சத்தை (எடுத்துக் கீழே) போட்டுவிட்டு அதைத் தம் தோளில் சுமந்து கொண்டு நடக்கலானார்கள். நபி(ஸல்) அவர்கள், அப்பாஸ்(ரலி) அவர்களின் பேராசையைக் கண்டு வியப்படைந்துவிட்டு அவர்கள் மறையும் வரை அவர்களைத் தொடர்ந்து பார்த்துக் கொண்டேயிருந்தார்கள். அங்கே, அந்த நிதியிலிருந்து ஒரேயொரு திர்ஹம் கூட மிஞ்சாமல் (தர்மம் செய்து) தீர்ந்துவிட்ட பின்புதான் நபி(ஸல்) அவர்கள் தம் இடத்தைவிட்டு எழுந்தார்கள்.

## (இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் முஸ்லிமல்லாத) ஒப்பந்தப் பிரஜையைக் குற்றமின்றி கொல்வதிலுள்ள பாவம்.

ஹதீஸ் 3166. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இஸ்லாமிய அரசுடன் அமைதி ஒப்பந்தம் செய்து அதன் கீழ் வாழ்ந்து வரும்) ஓர் ஒப்பந்தப் பிரஜையைக் கொன்று விடுபவன் சொர்க்கத்தின் வாடையைக் கூட நுகர மாட்டான். அதந் நறுமணமோ நாற்பதாண்டுப் பயணத் தொலைவிலிருந்தே வீசிக் கொண்டிருக்கும்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## யூதர்களை அரபு தீபகற்பத்திலிருந்து வெளியேற்றுதல்.

“அல்லாஹ் உங்களை இங்கே வசிக்கச் செய்யும் வரை நானும் உங்களை இங்கேயே வசிக்க அனுமதிக்கிறேன்! என்று நபி(ஸல்) அவர்கள் (கைபரில் வசித்த யூதர்களிடம்) கூறினார்கள்.

என உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3167. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் பள்ளிவாசலில் இருந்து கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் (தம் அறையிலிருந்து) வெளியே வந்து,யூதர்களை நோக்கி நடங்கள்‘ என்று கூறினார்கள். உடனே, நாங்கள் புறப்பட்டுச் சென்றுபைத்துல் மித்ராஸ் எனுமிடத்தை15 அடைந்தோம். அப்போது நபியவர்கள்,இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள் ஈடேற்றம் பெறுவீர்கள். மேலும், பூமி அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது என்பதை அணிந்து கொள்ளுங்கள். நான் உங்களை அறிந்து கொள்ளுங்கள். நான் உங்களை இந்த பூமியிலிருந்து நாடு கடத்திட விரும்புகிறேன். உங்களில் ஒருவருக்கு (கையில் எடுத்துச் செல்ல முடியாத) அவரின் செல்வத்திற்குப் பகரமாக ஏதேனும் கிடைத்தால் அதை அவர் விற்று விடட்டும். இல்லையெனில், பூமியானது அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது என்பதை அறிந்து கொள்ளுங்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3168. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்.

இப்னு அப்பாஸ்(ரலி), (அந்த) வியாழக்கிழமை! எப்படிப்பட்ட வியாழக்கிழமை (தெரியுமா)? என்று சொல்லிவிட்டு சிறு சரளைக் கற்களை அவர்களின் கண்ணீர் நனைத்து விடும் அளவிற்கு அழுதார்கள். நான்,இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களே! வியாழக்கிழமை (அப்படி) என்ன (நடந்தது)? என்று கேட்டேன். அவர்கள், (அன்று தான்) அல்லாஹ்வின் தூதருக்கு அவர்களின்

(நோயின்) வேதனை கடுமையாகிவிட்டது. அப்போது அவர்கள்,என்னிடம் புஜ எலும்பு ஒன்றைக் கொண்டு வாருங்கள். உங்களுக்கு ஒரு மடலை (இறுதியுபதேசத்தை) நான் எழுதுகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழி தவற மாட்டீர்கள்‘ என்று கூறினார்கள். மக்கள் (கருத்து பேதம் கொண்டு) சச்சரவிட்டார்கள். (இதனைக் கண்ட நபி(ஸல்) அவர்கள்),இறைத்தூதரின் முன்பாக சச்சரவிட்டுக் கொள்வது அழகல்ல‘ (என்று கூறினார்கள்.) மக்கள்,அவர்களுக்கு என்ன நேர்ந்தது? (எழுதித் தர முடியாத அளவிற்கு) அவர்கள் பலவீனமடைந்துவிட்டார்களா? அவர்களிடமே (விளக்கம்) கேளுங்கள்‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,என்னைவிட்டு விடுங்கள். நீங்கள் எதற்கு என்னை அழைக்கிறீர்களோ அந்த (மரண சாசனம் எழுதும்) பணியைவிட நான் இப்போதுள்ள இந்த (இறை நினைவில் லயித்திருக்கும்) நிலையே சிறந்தது‘ என்று கூறிவிட்டு மூன்று விஷயங்களை அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள்: (அந்த மூன்று விஷயங்களாவன:) இணைவைப்பவர்களை அரபு தீபகற்பத்திலிருந்து வெளியேற்றி விடுங்கள். நான் (வெளிநாட்டிலிருந்து வரும்) தூதுக் குழுக்களுக்குப் பரிசுகள் வழங்கி வந்ததைப் போன்றே நீங்களும் பரிசுகளை வழங்கி வாருங்கள்.

(அறிவிப்பாளர் தொடர்ந்து கூறுகிறார்: மூன்றாவது கட்டளையை ஒன்று, நபி(ஸல்) அவர்கள் சொல்லாமல் மௌனமாக இருந்து விட்டிருக்க வேண்டும் அல்லது அதை அவர்கள் கூறி (இந்நிகழ்ச்சியை எனக்கு அறிவித்தவரும் கூறி) நான் அதை மறந்து விட்டிருக்க வேண்டும். (எப்படியாயினும், மூன்றாவது) ஒரு நல்ல விஷயம் தான்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்),இப்படிச் சொன்ன அறிவிப்பாளர், சுலைமான் இப்னு அபில் முஸ்லிம் அல் அஹ்வல்(ரஹ்) தாம்‘ என்று கூறுகிறார்கள்.

## இணைவைப்பவர்கள் முஸ்லிம்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தால் அவர்கள் மன்னிக்கப்படுவார்களா?

ஹதீஸ் 3169. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

கைபர் வெற்றி கொள்ளப்பட்டபோது நபி(ஸல்) அவர்களுக்கு விஷம் தடவப்பட்ட ஆடு ஒன்று அன்பளிப்பாகத் தரப்பட்டது. (விஷயம் தெரிந்தவுடன்) நபி(ஸல்) அவர்கள்,இங்கேயுள்ள யூதர்களை ஒன்று திரட்டி என்னிடம் கொண்டு வாருங்கள்‘ என்று கூறினார்கள். அவ்வாறே, அவர்கள் ஒன்று திரட்டி நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டார்கள். (அவர்களிடம்) நபி(ஸல்) அவர்கள்,நான் உங்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்கப் போகிறேன். நீங்கள் என்னிடம் அதைப் பற்றி உண்மையைச் சொல்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அந்த யூதர்கள்,சரி (உண்மையைச் சொல்கிறோம்)‘ என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,உங்கள் தந்தை யார்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,இன்னார்‘ என்று பதிலளித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்,பொய் சொன்னீர்கள். மாறாக, உங்கள் தந்தை இன்னார் தான்‘ என்று கூறினார்கள். அவர்கள்,நீங்கள் சொன்னது உண்மை தான்‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,நான் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்டால் அதைப் பற்றி நீங்கள் என்னிடம் உண்மையைச் சொல்வீர்களா? என்று கேட்டார்கள். அவர்கள்,சரி சொல்கிறோம், அபுல்காசிமே! இனி நாங்கள் பொய் சொன்னால் எங்கள் தந்தை விஷயத்தில் நாங்கள் பொய் சொன்னதை நீங்கள் அறிந்ததைப் போன்றே அதையும் அறிந்து கொள்வீர்கள்‘ என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்,நரகவாசிகள் யார்? என்று கேட்டார்கள். அவர்கள்,நாங்கள் அதில் சில காலம் மட்டுமே இருப்போம். பிறகு, எங்களுக்கு பதிலாக அதில் நீங்கள் புகுவீர்கள்‘ என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,அதில் நீங்கள் இழிவுபட்டுப் போவீட்டாகளாக! அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் அதில் உங்களுக்கு பதிலாக ஒருபோதும் புக மாட்டோம்‘ என்று கூறினார்கள். பிறகு,நான் ஒரு விஷயத்தைப் பற்றி உங்களிடம் கேட்டால்

நீங்கள் என்னிடம் உண்மையைச் சொல்வீர்களா? என்று கேட்டார்கள். அவர்கள், சரி, அபுல் காசிமே!என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், இந்த ஆட்டில் நீங்கள் விஷம் கலந்திருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அவர்கள், ஆம் (கலந்திருக்கிறோம்)' என்று பதில் சொன்னார்கள். நபி(ஸல்) அவர்கள், ஏன் இப்படிச் செய்தீர்கள்? என்று கேட்டார்கள். அவர்கள், நீங்கள் பொய்யராக இருந்(து விஷத்தின் மூலம் இறந்)தால் நாங்கள் மகிழ்ச்சியடைவோம். நீங்கள் இறைத் தூதராக இருந்தால் உங்களுக்கு அ(ந்த விஷமான)து தீங்கு செய்யாது' என்று பதிலளித்தார்கள்.

## ஒப்பந்தத்தை முறித்தவர்களுக்கு எதிராகத் தலைவர் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 3170. ஆஸிம்(ரஹ்) அறிவித்தார்.

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்குனூத் ஓதுவதைப் பற்றிக் கேட்டேன். அவர்கள், ருகூஉ செய்வதற்கு முன்னால் (ஓத வேண்டும்)' என்று கூறினார்கள். ருகூஉக்குப் பின்னால் (குனூத் ஓத வேண்டும்) என்று நீங்கள் கூறியதா இன்னார் நினைத்துக் கொண்டிருக்கிறார்' என்று நான் சொன்னேன். அதற்கு அவர்கள், அவர் பொய் சொன்னார்' என்று கூறினார்கள். பிறகு அவர்கள், நபி(ஸல்) அவர்களைக் குறித்து, அவர்கள் பனு சுலைம் குலத்தாரின் சில கிளையினருக்கு எதிராக ஒரு மாதம் குனூத் ஓதினார்கள்' என்று அறிவித்தார்கள். அப்போது அவர்கள், நபி(ஸல்) அவர்கள் குர்ஆனை மனனம் செய்து அதை ஓதும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தவர்கள் நாற்பது அல்லது எழுபது பேரை இணைவைக்கும் மக்கள் சிலரிடம் அனுப்பி வைத்தார்கள்... என்று (அவர்களால் அனுப்பி வைக்கப்பட்டவர்கள் நாற்பது பேரா, எழுபது பேரா என்னும்) சந்தேகத்துடன் கூறினார்கள்... அவர்களுக்கு இவர்கள் இஸ்லாத்தை எடுத்துரைக்க, அவர்கள் இவர்களைக் கொன்றுவிட்டார்கள். பனு சுலைம் குலத்தாருக்கு நபி(ஸல்) அவர்களுக்குமிடையே ஒரு சமாதான ஒப்பந்தம் இருந்து வந்தது. எனவே, அவர்களின் மீது கோபமடைந்ததைப் போல் வேறெவர் மீதும் நபி(ஸல்) அவர்கள் கோபமடைந்து நான் பார்த்ததில்லை.

## பெண்கள் அளிக்கும் அபயமும் அவர்களிடம் புகலிடம் பெறுவதும்.

ஹதீஸ் 3171. உம்மு ஹானீ(ரலி) அறிவித்தார்.

மக்கா வெற்றி கொள்ளப்பட்டபோது நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்றேன். நபி(ஸல்) அவர்களை, அவர்களின் மகள் ஃபாத்திமா(ரலி) மறைத்துக் கொண்டிருக்க, அவர்கள் குளித்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். அப்போது, அவர்களுக்கு நான் சலாம் உரைத்தேன். அவர்கள், யார் அது? என்று கேட்டார்கள். நான், அபூ தாலிபின் மகள் உம்மு ஹானீ' என்று பதிலளித்தேன். உடனே அவர்கள், உம்மு ஹானீயே! வருக! வருக! (உங்களுக்கு நல்வரவு கூறுகிறேன்)' என்றார்கள். அவர்கள் குளித்து முடித்ததும் ஒரே ஆடையை (மேனியில்) சுற்றியவர்களாக எழுந்து நின்று எட்டு ரக்அத்துகள் தொழுதார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! என் தாயின் மகன் (என் சகோதரர்) அலீ, நான் புகலிடம் அளித்திருக்கும் ஒரு மனிதரை ஹுபைராவின் மகனான இன்னாரை தான் கொல்லப் போவதாகக் கூறுகிறார்' என்று சொன்னேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், உம்மு ஹானியே! நீ அபயம் அளித்தவருக்கு நாமும் அபயம் அளித்து விட்டோம் (எனவே கவலை வேண்டாம்)' என்று கூறினார்கள். (நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்ற) அந்த நேரம் முற்பகல் நேரமாக இருந்தது.

## முஸ்லிம்களில் எவர் அடைக்கலம் தந்தாலும் அது ஒன்றே, அவர்களில் சாமானியரும் அடைக்கலம் தரலாம்.

ஹதீஸ் 3172. யஸீத் இப்னு ஷரீக் அத்தைமீ(ரஹ்) அறிவித்தார்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 58 'ஜிஸ்யா காப்புவரி ஒப்பந்தமும், போர் நிறுத்த ஒப்பந்தமும்.

அலீ(ரலி) எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போதுஅல்லாஹ்வின் வேதத்தையும் இந்த ஏட்டில் உள்ளதையும் தவிர, நாங்கள் ஓதுகிற புத்தகம் வேறெதுவும் எங்களிடம் இல்லை. இந்த ஏட்டில் காயங்களுக்கான பழி வாங்கல்கள் (ஸகாத்தாகவும் உயிரீட்டுத் தொகையாகவும் வழங்கப்படும்) ஒட்டகங்களின் வயது விபரங்கள் ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன.

"மேலும், (அதில் கூறப்பட்டுள்ளதாவது:) மதீனா நகரம்அய்ர் மலைக்கும் (உஹுது மலை அமைந்துள்ள) இன்ன இடத்திற்கும் இடையிலுள்ள பகுதி வரை புனிதமானதாகும். அதில் எவன் (மார்க்கத்தில் இல்லாத) புதிய ஒன்றை உருவாக்குகிறானோ அல்லது (அவ்விதம்) புதிதாக ஒன்றை உருவாக்குபவனுக்குப் புகலிடம் கொடுக்கிறானோ அவன் மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்களின் சாபமும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். அவனிடமிருந்து கடமையான வணக்கம் உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது.

"விடுதலை செய்யப்பட்ட அடிமை ஒருவன் தன்(னை விடுதலை செய்த எஜமானர்களான) காப்பாளர்களின் அனுமதியின்றி, பிறரைத் தன் காப்பாளர்களாக ஆக்கினால் அவன் மீதும் அவ்வாறே (அல்லாஹ்வின், வானவர்களின் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும்) ஏற்படும். முஸ்லிம்களில் எவர் அடைக்கலம் தந்தாலும் அது ஒன்றேயாகும். (அது மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகக் கருதப்பட வேண்டியதேயாகும்.) ஒரு முஸ்லிம் கொடுத்த அடைக்கலத்தை எவன் முறிக்கிறானோ அவன் மீதும் அவ்வாறே (அல்லாஹ்வின், வானவர்களின் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும்) ஏற்படும்.

## இணைவைப்பவர்கள் அஸ்லம்னா என்று சொல் வராமல் ஸபஃனா என்று சொன்னால்.. (அதை ஏற்று அவர்களின் மீதுான போர் கைவிடப்படுமா?)

காலித் இப்னு வலீத்(ரலி) (பனு ஜதீமா குலத்தாரைக்) கொல்லத் தொடங்கினார்கள். (இந்த விஷயம் தெரிய வந்த போது) நபி(ஸல்) அவர்கள்,(இறைவா!) காலித் செய்த தவறுக்கும் எனக்கும் தொடர்பில்லை என்று உன்னிடம் நான் தெரிவித்துக கொள்கிறேன்' என்றார்கள்.

இதை இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி),இஸ்லாமிய அறப்போர் வீரர் (பாரசீக மொழியில்)மத் தர்ஸ் - பயப்படாதே என்று (எதிரியைப் பார்த்துச்) சொன்னாலும் அவர் அவனுக்கு அபயம் அளித்திடவேண்டும் ஏனெனில், அல்லாஹ் எல்லா மொழிகளையும் அறிகிறான்' என்றார்கள்.

மேலும் உமர்(ரலி) (ஹுர்முஸானிடம்),நீங்கள் பேசுங்கள் பரவாயில்லை' என்று கூறினார்கள்.

## பணம் முதலானவற்றைக் கொடுத்து இணைவைப்பவர்களுடன் (போர் மறுப்பு) ஒப்பந்தம் செய்து கொள்வதும் ஒப்பந்தத்தை நிறைவேற்றாதவனுடைய பாவமும்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) அவர்கள் சமாதானத்தை நாடி வந்தால் நீங்களும் சமாதானத்தை நாடுங்கள். (திருக்குர்ஆன் 08:61)

ஹதீஸ் 3173. ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அறிவித்தார்.

(நபித் தோழர்களான) அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் அவர்களும் கைபர் பிரதேசத்தை நோக்கிச் சென்றார்கள். அன்று அங்கு (முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்குமிடையே) சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தது. (கைபருக்குச் சென்றதும்) அவர்களிருவரும் தனித்தனியாகப் பிரிந்துவிட்டனர். அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் அவர்கள் கொல்லப்பட்டு, இரத்த வெள்ளத்தில் மிதந்தபடி விழுந்து

கிடக்க, அவர்களிடம் முஹய்யிஸா அவர்கள் வந்தார்கள். பிறகு அவர்களை அடக்கம் செய்தார்கள். பிறகு (கொல்லப்பட்டவரின் சகோதரர்) அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல் அவர்களும் முஹய்யிஸா இப்னு மஸ்வூத் அவர்களும் (அவரின் சகோதரர்) ஹுவைய்யிஸா இப்னு மஸ்வூத் அவர்களும் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல் அவர்கள் (நபி(ஸல்) அவர்களிடம்) பேசிக் கொண்டே சென்றார்கள். நபி(ஸல்) அவர்கள், பெரியவர்களைப் பேச விடு. பெரியவர்களைப் பேச விடு‘ என்று கூறினார்கள். அந்த மூவரில் அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல் அவர்கள் வயதில் சிறியவராக இருந்தார்கள். உடனே அவர்கள் (வாய் மூடி) மௌனமானார்கள். பிறகு, முஹய்யிஸா அவர்களும் ஹுவைய்யிஸா அவர்களும் (நபி(ஸல்) அவர்களிடம்) பேசினார்கள். நபி(ஸல்) அவர்கள், (அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் அவர்களை இன்னார் தான் கொலை செய்தார் என்று) சத்தியம் செய்து நீங்கள் உங்கள் கொலையாளிக்கு (தண்டனையளித்துப் பழிவாங்கிக் கொள்ளும்) உரிமை பெற்றுக் கொள்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், நாங்கள் எப்படிச் சத்தியம் செய்வது? நாங்கள் அங்கே (கொலை நடந்த இடத்தில்) இருக்கவில்லை கொலை செய்தவனை (கொலை செய்யும் போது) பார்க்கவும் இல்லையே‘ என்று கூறினார்கள். அதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், அப்படியென்றால் யூதர்கள் (தாங்கள் அப்துல்லாஹ்வைக் கொல்லவில்லை என்பதற்கு) ஐம்பது சத்தியங்கள் செய்து உங்களிடம் தம் குற்றமற்ற தன்மையை நிரூபிக்கட்டும்‘ என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், நிராகரிக்கும் சமுதாயத்தாரின் சத்தியங்களை நாம் எப்படி (நம்பி) எடுத்துக் கொள்வது? என்று கேட்டார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் தாமே (அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் அவர்களின் கொலைக்கான) உயிரீட்டுத் தொகையை (அவரின் சகோதரர்) அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல் அவர்களுக்குக் கொடுத்துவிட்டார்கள்.

## ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதின் சிறப்பு.

ஹதீஸ் 3174. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அபூ சுஃப்யான் இப்னு ஹாப் அவர்கள் (தாம் இஸ்லாத்தைத் தழுவுவதற்கு முன்பு) ஷாம் நாட்டிற்கு குறைஷிகளின் வணிகக் குழு ஒன்றில் சென்றிருந்தபோது (பைஸாந்திய மன்னன் (ஹிராக்ளியஸ் தமக்கு ஆளனுப்பி தம் அவைக்கு வரச் சொன்னதாகவும், அது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடனும் குறைஷி நிராகரிப்பாளர்களுடனும் ஒப்பந்தம் செய்திருந்த கால கட்டத்தில் ஷாம் நாட்டில் நடந்ததாகவும் அறிவித்தார்கள்.

## திம்மீ - இஸ்லாமிய அரசின் பிரஜையான பிற மதத்தவர் - ஒருவர் சூனியம் செய்தால் மன்னிக்கப்படுவாரா?

~னுஸ் இப்னு யஸீத் அல்-அய்லீ(ரஹ்) கூறினார்.

இப்னு ஷிஹாப் ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம், இஸ்லாமிய அரசின் பிரஜைகளான பிற மதத்தார் சூனியம் செய்தால் அவர்களைக் கொல்ல வேண்டுமா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அவ்வாறு (சூனியம்) செய்யப்பட்டது என்றும், சூனியம் செய்வதன் வேதம் வழங்கப்பட்ட (யூத) சமுதாயத்தைச் சேர்ந்தவனாக இருந்தும் அவனை அதற்காக நபி(ஸல்) அவர்கள் கொல்லவில்லை என்றும் நமக்குச் செய்தி கிடைத்துள்ளது‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3175. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கு (ஒரு குறுகிய காலத்திற்கு) சூனியம் வைக்கப்பட்டது. அதன் வாயிலாக, தாம் செய்யாத ஒரு செயலைத் தாம் செய்திருப்பதாக அவர்கள் எண்ணிக் கொள்ளும்படி அவர்களுக்கு பிரமை~ட்டப்பட்டது.

## மோசடி செய்யக் கூடாது.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) அவர்கள் உங்களை ஏமாற்றி (மோசடி செய்தி)ட விரும்பினால் (அவர்களின் மோசடியிலிருந்து உங்களைப் பாதுகாக்க) அல்லாஹ்வே உங்களுக்குப் போதுமானவன். (திருக்குர்ஆன் 08:62)

ஹதீஸ் 3176. அவ்ஃப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

தபூக் போரின்போது நபி(ஸல்) அவர்களிடம் நான் சென்றேன். அவர்கள் ஒரு தோல் கூடாரத்தில் இருந்தார்கள். அப்போது அவர்கள்,இறுதி நாள் வருவதற்கு முன்பு (அதற்குரிய) ஆறு அடையாளங்கள் நிகழும். அவற்றை எண்ணிக் கொள்: 1. என்னுடைய மரணம் 2. பைத்துல் மக்திஸ் வெற்றி கொள்ளப்படுதல். 3. ஆடுகளுக்கு வருகிற (ஒரு வகை) நோயைப் போன்று கொள்ளை நோய் ஒன்று வந்து உங்களைப் பீடிக்கும் (அதனால் ஏராளமானவர்கள் இறந்து போய் விடுவார்கள்) 4. பிறகு செல்வம் பெருகி வழியும். எந்த அளவிற்கென்றால் ஒருவருக்கு நூறு தீனார்கள் கொடுக்கப்பட்ட பின்பும் (அதனை அற்பமாகக் கருதி) அவர் அதிருப்தியுடனிருப்பார். 5. பிறகு தீமையொன்று தோன்றும். அரபுகளின் வீடுகளில் அது நுழையாத வீடு எதுவும் இருக்காது. 6. பிறகு (ரோமர்களுக்கும்) உங்களுக்குமிடையே சமாதான ஒப்பந்தம் ஒன்று ஏற்படும் (அதை மதிக்காமல்) அவர்கள் (உங்களை) மோசடி செய்து விடுவார்கள். பிறகு உங்களை எதிர்த்துப் போரிடுவதற்காக எண்பது கொடிகளின் கீழே (அணி வகுத்து) அவர்கள் வருவார்கள். ஒவ்வொரு கொடிக்கும் கீழே பன்னிரண்டாயிரம் போர் வீரர்கள் இருப்பார்கள்.

## ஒப்பந்தத்தை முறித்துக் கொள்வது எப்படி?

அல்லாஹ் கூறினான்:

எவரேனும் ஒரு கூட்டத்தினர் உங்களிடம் (ஒப்பந்தம் செய்து கொள்ள, அதன் பிறகு அவர்கள்) நம்பிக்கைத் துரோகமாக நடந்து கொள்வார்களோ என்று நீங்கள் அஞ்சினால் (அவர்களின் ஒப்பந்தத்தை) வெளிப்படையாக அவர்களிடமே எறிந்து விடுங்கள். (திருக்குர்ஆன் 08:58)

ஹதீஸ் 3177. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

என்னை அபூ பக்ர்(ரலி)யவ்முன் னஹ்ர் (துல்ஹஜ் 10ம்நாள்) அன்று மதீனாவில் பொது அறிவிப்புகள் செய்பவர்களுடன் (அவர்களில் ஒருவனாக) அனுப்பினார்கள். (அவர்கள் செய்யச் சொன்ன பொது அறிவிப்பு இதுதான்:) இந்த ஆண்டிற்குப் பிறகு இணைவைப்பவர் எவரும் ஹஜ் செய்யக் கூடாது. இறையில்லத்தை (கஅபாவை) நிர்வாணமாக எவரும் வலம்வரக் கூடாது.

மேலும்,ஹஜ்ஜுல் அக்பர் (பெரிய ஹஜ்) உடைய நாள் என்பது இந்தயவ்முன் னஹ்ர் (துல்ஹஜ் 10ம் நாள்) தான். இது,பெரிய ஹஜ்' என்று அழைக்கப்பட்டதற்குக் காரணம் மக்கள் (உம்ராவைச்)சிறிய ஹஜ் என்று அழைத்ததேயாகும். அபூ பக்ர்(ரலி) அந்த ஆண்டில் (இணை வைக்கும்) மக்களிடம் (இஸ்லாமிய அரசு செய்த) ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டதாக அறிவித்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள்ஹஜ்ஜத்துல் வதா செய்த ஆண்டில் இணைவைப்பவர் எவரும் ஹஜ் செய்யவில்லை.

## ஒப்பந்தம் செய்த பின்பு துரோகம் செய்தவனின் பாவம்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) உங்களிடம் ஒப்பந்தம் செய்து பிறகு ஒவ்வொரு முறையும் தங்கள் ஒப்பந்தத்தைக் கொஞ்சமும் இறையச்சமின்றி முறிக்கிறவர்கள்தாம் (மிகக் கெட்டவர்கள்). (திருக்குர்ஆன் 08:56)

ஹதீஸ் 3178. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான்கு குணங்கள் எவனிடம் குடிகொண்டுள்ளனவோ அவன் வடிகட்டிய நயவஞ்சகன் ஆவான். பேசும்போது பொய் சொல்வதும், வாக்குறுதியளித்தால் (அதற்கு) மாறு செய்வதும், ஒப்பந்தம் செய்தால் (நம்பிக்கை) மோசடி செய்வதும், வழக்காடினால் அவமதிப்பதும் தான் அவை. எவனிடம் இவற்றில் ஒரு குணம் குடிகொண்டுள்ளதோ அவன் அதைவிட்டுவிடும் வரை அவனுள் நயவஞ்சகத்தின் ஒரு குணம் குடியிருக்கும்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3179. அலீ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து குர்ஆனையும் இந்த ஏட்டில் உள்ளதையும் தவிர வேறெதையும் எழுதி வைக்கவில்லை. நபி(ஸல்) அவர்கள் (இந்த ஏட்டில்),மதீனா நகரம் ஆயிர் மலையிலிருந்து இன்ன இடம் வரை புனிதமானதாகும். எவன் இங்கு (மார்க்கத்தில்) புதிய (கருத்து அல்லது செயல்பாடு) ஒன்றைத் தோற்றுவிக்கிறானோ அவன் மீது அல்லாஹ்வின் சாபமும், வானவர்களின் சாபமும் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். அவனிடமிருந்து கடமையான வணக்கம், உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது. முஸ்லிம்களில் எவர் அடைக்கலம் கொடுத்தாலும் அது ஒன்றேயாகும். (அது மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகக் கருதப்பட வேண்டியதேயாகும்.) அவர்களில் சாமானியர் கூட அடைக்கலம் தரலாம். ஒரு முஸ்லிம் கொடுத்த அடைக்கலத்தை எவன் முறிக்கிறானோ அவன் மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்களுடைய சாபமும் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். அவனிடமிருந்து அவன் செய்த கடமையான வணக்கம், உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது. விடுதலை செய்யப்பட்ட அடிமை ஒருவன் தன்(னை விடுதலை செய்த எஜமானர்களான தன்) காப்பாளர்களின் அனுமதியின்றிப் பிறரைத் தன் காப்பாளராக ஆக்கினால் அவன் மீதும் அல்லாஹ்வின் சாபமும், வானவர்களுடைய சாபமும், மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். அவன் செய்த கடமையான வணக்கம், உபரியான வணக்கம் எதுவுமே ஏற்றுக் கொள்ளப்படாது.

ஹதீஸ் 3180. ஸயீத் இப்னு அம்ர்(ரஹ்) அறிவித்தார்.

(ஒரு முறை) அபூ ஹுரைரா(ரலி),திம்மீகளிடமிருந்து (இஸ்லாமிய அரசின் பிரஜைகளான பிற மதத்தாரிடமிருந்து) ஒரேயொரு தங்க நாணயத்தையோ பொற்காசையோ கூடப் பெற முடியாத காலம் வரும்போது உங்கள் நிலை எப்படியிருக்கும்? என்று கேட்டார்கள். உடனே,அபூ ஹுரைராவே! அவ்வாறு (ஒரு காலம்) ஏற்படும் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அபூ ஹுரைரா(ரலி),ஆம், அபூ ஹுரைராவின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! இதை நான் உண்மையே அறிவிக்கப்பட்டு, உண்மையே பேசிய (நபிய)வர்களிடமிருந்து கேட்டுத்தான் சொல்கிறேன்‘ என்று பதிலளித்தார்கள். உடனே மக்கள்,எதனால் அத்தகைய காலம் ஏற்படும்? என்று கேட்டார்கள். அதற்கு அபூ ஹுரைரா(ரலி),அல்லாஹ்வின் (அடைக்கலப்) பொறுப்பும் அல்லாஹ்வின் தூதருடைய (அடைக்கலப்) பொறுப்பும் அவமதிக்கப்படும். (அதாவது முஸ்லிம்கள் ஒப்பந்தப் படி நடக்காமல் நம்பிக்கை மோசடி செய்வார்கள்.) அதனால் அல்லாஹ் (பிற மதங்களைச் சேர்ந்த) ஒப்பந்தப் பிரஜைகளின் உள்ளங்களுக்குத் துணி வைத்தந்து விடுவான். அவர்கள் தங்கள் கரங்களில் இருப்பவற்றைத் தடுத்துக் கொள்வார்கள். (ஜிஸ்யா வரி கட்ட மறுத்துப் போர் புரியவும் துணிந்து விடுவார்கள்.)

ஹதீஸ் 3181. அ..மஷ் (ரஹ்) அறிவித்தார்.

“ஸி..ப்பீன் போரில் நீங்கள் கலந்து கொண்டீர்களா? என்று நான் அபூ வாயில் அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம். (நான் அப்போரில் கலந்து கொண்டேன்.) மேலும், நான் சஹ்ல் இப்னு ஹுனை..ப் (ரலி) சொல்லக் கேட்டேன்: (நான் இந்தப் போரில் ஈடுபாடு கொள்ளாதது குறித்து என்னைக் குற்றம் சாட்டுங்கள். அபூ ஜந்தல் அபயம் தேடி வந்த (ஹுதைபிய்யா உடன்படிக்கையின்) நாளில் நபி (ஸல்) அவர்களின் கட்டளையை ஏற்க மறுப்பதற்கு என்னால் முடிந்திருந்தால் ஏற்க மறுத்திருப்பேன். (அத்தகைய மன நிலையில் அன்று நான் இருந்தேன்.) (அன்று) எங்கள் தோள்களில் நாங்கள் எங்கள் வாட்களை (முடக்கி) வைத்தது. எங்களக்குச் சிரமம் தரக்கூடிய விஷயமான போருக்கு அஞ்சியல்ல. நாங்கள் அறிந்த எளிய விஷயமான சமாதானத்தை நாங்கள் அடைய (முடக்கப்பட்ட) அந்த வாட்களே வழிவகுத்தன. ஆனால், இது வேறு விஷயம். (முஸ்லிம்களுக்கிடையே மூண்டுவிட்ட இந்தப் போரில் ஈடுபடுவது அழிவதைத் தான் தரும்)‘ என்றார்கள்.

ஹதீஸ் 3182. அபூ வாயில் (ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் ஸி..ப்பீன் (போரில்) இருந்தோம். அப்போது ஸஹ்ல் இப்னு ஹுனை..ப் (ரலி) எழுந்து நின்று சொன்னார்கள்: மக்களே! (யாரையும் போரில் கலந்து கொள்ளாததற்காகக் குற்றம் சாட்டாதீர்கள்.) உங்களை நீங்களே குற்றம் சாட்டிக் கொள்ளுங்கள். ஏனெனில், நாங்கள் ஹுதைபிய்யா உடன் படிக்கையின்போது நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். போரிடுதல் பொறுத்தமானதென்று நாங்கள் கருதியிருந்தால் போர் புரிந்திருப்போம். (ஆனால், போர் புரியாமல் அவர்கள் விதித்த நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டோம்.) அப்போது உமர் அவர்கள் வந்து, இறைத்தூதர் அவர்களே! நாம் சத்தியத்திலும் அவர்கள் அசத்தியத்திலும் இல்லையா? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், ஆம் (நாம் சத்தியத்தில் இருக்கிறோம் அவர்கள் அசத்தியத்தில் இருக்கின்றனர்)‘ என்று பதிலளித்தார்கள். உமர் அவர்கள், போரில் கொலையுண்டு விடும்போது நம்முடைய வீரர்கள் சொர்க்கத்திலும் அவர்களின் வீரர்கள் நரகத்திலும் இருப்பார்கள். இல்லையா? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், ஆம்‘ என்று பதிலளித்தார்கள். அதற்கு உமர் (ரலி), அப்படியிருக்க, நாம் ஏன் நம்முடைய மார்க்க விஷயத்தில் பணிந்து போக வேண்டும்? அல்லாஹ் நமக்கும் அவர்களுக்குமிடையே தீர்ப்பளிக்காமலிருக்கும் நிலையில் நாம் திரும்பி விடுவதா? என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், கத்தாபின் மகனே! நான் அல்லாஹ்வின் தூதராவேன். என்னை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்க மாட்டான்‘ என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் சென்று நபி (ஸல்) அவர்களிடம் தாம் சொன்னதைப் போன்றே சொன்னார்கள். அப்போது அபூ பக்ர் அவர்கள், அவர்கள் அல்லாஹ்வின் தூதர். அவர்களை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்க மாட்டான்‘ என்று கூறினார்கள். அப்போதுஅல் ..பத்ஹ் (‘உமக்கு நாம் பம்ரங்கமான வெற்றியை அளித்து விட்டோம் என்று தொடங்கும்) அத்தியாயம் அருளப்பட்டது. அதை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உமருக்கு இறுதிவரை ஓதிக் காட்டினார்கள். அப்போது உமர் அவர்கள், இறைத்தூதர் அவர்களே! வெற்றியா அது? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், ஆம் (வெற்றி தான்)‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3183. அஸ்மா பின்த்து அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்.

குறைஷிகள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் ஒப்பந்தம் செய்திருந்த (ஹுதைபிய்யா உடன் படிக்கையின்) காலகட்டத்தில் என் தாயார் இணைவைப்பவராக தன் தந்தையுடன் (என் பாட்டனாருடன்) என்னிடம் வந்திருந்தார்கள். எனவே, நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் மார்க்கத் தீர்ப்புக் கோரியவளாக, இறைத்தூதர் அவர்களே! என் தாயார் என்னிடம் ஆசையோடு

வந்திருக்கிறார். நான் அவரின் உறவைப் பேணி நடந்து கொள்ளலாமா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அவரின் உறவைப் பேணி நடந்து கொள்' என்று கூறினார்கள்.

## மூன்று நாள்களுக்காகவோ அல்லது குறிப்பிட்ட ஒரு காலத்திற்காகவோ (இணைவைப்போருடன்) சமாதான ஒப்பந்தம் செய்து கொள்வது.

ஹதீஸ் 3184. பராஉ (ரலி) அறிவித்தார்.

(ஹுதைபிய்யா ஆண்டில்) நபி(ஸல்) அவர்கள் உம்ரா செய்ய நாடியபோது மக்காவாசிகளிடம் ஆளனுப்பி மக்காவினுள் நுழைய அனுமதி கேட்டார்கள். அவர்கள் (அடுத்த ஆண்டு உம்ரா செய்ய வரலாம் என்றும்) மூன்று நாள்களுக்கு மேல் அங்கு தங்கக் கூடாது என்றும் அவர்களில் எவரையும் (தம் மார்க்கத்தை ஏற்கும்படி) அழைக்கக் கூடாது என்றும் நிபந்தனையிட்டனர். அவர்கள் இருவருக்குமிடையிலான (ஒப்பந்த) ஷரத்துகளை அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) எழுதலானார்கள். அப்போது அவர்கள்,இது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்த சமாதான ஒப்பந்தமாகும்' என்று எழுதினார்கள். மக்காவாசிகளில்,நீங்கள் இறைத்தூதர்(ஸல்) தாம் என்று நாங்கள் நம்பியிருந்தால் உங்களை (மக்காவினுள் நுழையவிடாமல்) தடை செய்திருக்கமாட்டோம். மேலும், உங்களை நாங்கள் (ஏற்று) பின்பற்றவும் செய்திருப்போம். மாறாக,இது அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது செய்த சமாதான ஒப்பந்தம் என்று எழுதுங்கள்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது தான். மேலும், அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதருமாவேன்' என்று கூறினார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் எழுதத் தெரியாதவர்களாக இருந்தார்கள். எனவே, அலீ(ரலி) அவர்களிடம்,இறைத்தூதர் என்னும் சொல்லை அழித்து விடுங்கள்' என்று உத்தரவிட்டார்கள். அலீ(ரலி),அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அதை ஒருபோதும் அழிக்க மாட்டேன்' என்று மறுத்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,அப்படியானால் அ(ந்தச் சொல் இருக்கும் இடத்)தை எனக்குக் காட்டுங்கள்' என்று கேட்டார்கள். அலீ(ரலி) நபி(ஸல்) அவர்களுக்கு அதைக் காட்டினார்கள். நபி(ஸல்) அவர்கள் அதைத் தம் கரத்தால் அழித்தார்கள். பின்பு (அடுத்த ஆண்டு), நபி(ஸல்) அவர்கள் (உம்ராவிற்காக) மக்காவிற்குள் நுழைந்து மூன்று நாள்கள் கழிந்தவுடன் மக்காவாசிகள் அலீ(ரலி) அவர்களிடம் வந்து,உங்கள் தோழரை (மக்காவைவிட்டுப்) புறப்படும் படி கூறுங்கள்' என்று கேட்டுக் கொண்டார்கள். உடனே, அலீ(ரலி) அவர்களிடம் அதைத் தெரிவித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,ஆமாம் (புறப்பட வேண்டியது தான்)' என்று கூறிவிட்டுப் புறப்பட்டார்கள்.

## காலம் குறிப்பிடாமல் சமாதான ஒப்பந்தம் செய்து கொள்வதும், அல்லாஹ் எதுவரை உங்களை இங்கு நீடித்திருக்கச் செய்கிறானோ அதுவரை உங்களை நான் இ(ந்த நிலக் குத்தகை ஒப்பந்தத்)தில் நீடித்திருக்கச் செய்கிறேன்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதும்.

## இணைவைப்பவர்களின் சடலங்களைக் கிணற்றில் வீசுவதும், (அவர்களின் குடும்பத்தார் அவர்களை எடுத்துச் செல்ல விரும்பினால்) அவர்களுக்காகக் கட்டணம் எதுவும் வசூலிக்கப்பட மாட்டாது என்பதும்.

ஹதீஸ் 3185. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஒரு முறை (கஅபா அருகே) நபி(ஸல்) அவர்கள் (தொழுது) சிர வணக்கம் (ஸஜ்தா) செய்து கொண்டிருக்க, அவர்களைச் சுற்றிலும் குறைஷி இணைவைப்பாளர்கள் இருந்தனர். அப்போது (குறைஷித் தலைவன்) உக்பா இப்னு அபீ முஐத், நபி(ஸல்) அவர்களை நோக்கி ஒட்டகத்தின்

(கர்ப்பத்திலுள்ள) குட்டியை மூடியிருக்கும் ஜவ்வைக் கொண்டு வந்து, அதை நபி(ஸல்) அவர்களின் முதுகின் மீது எறிந்துவிட்டான். நபி(ஸல்) அவர்கள், ஃபாத்திமா(ரலி) வரும் வரை (ஸஜ்தாவிலிருந்து) தம் தலையை உயர்த்தவில்லை. ஃபாத்திமா(ரலி) வந்தவுடன் (அந்த ஜவ்வை) நபி(ஸல்) அவர்களின் முதுகிலிருந்து அகற்றிவிட்டார்கள். மேலும், அதைச் செய்தவனுக்குத் தீங்கு நேரட்டுமெனப் பிரார்த்தனைசெய்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,இறைவா! குறைஷிகளில் முக்கியப் பிரமுகர்களை நீ கவனித்துக் கொள். இறைவா! அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம், உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, உக்பா இப்னு அபீ முஐத், உமய்யா இப்னு.. கலஃப் அல்லது உபை இப்னு கலஃப்... ஆகியோரை நீ கவனித்துக் கொள்‘ என்று அவர்களுக்குத் தீங்கு நேரப் பிரார்த்தித்தார்கள். நான் இவர்களையெல்லாம் பத்ருப் போரில் கொல்லப்பட்டுக் கிணற்றில் போடப்பட்டிருக்கக் கண்டேன் உமைய்யாவைத் தவிர... அல்லது உபையைத் தவிர. ஏனெனில், அவன் பருமனான மனிதனாக இருந்தான்.. அவனை அவர்கள் (முஸ்லிம் வீரர்கள்) இழுத்துச் சென்றபோது அவன் கிணற்றில் போடப்படுவதற்கு முன்பே அவனுடைய மூட்டுகள் துண்டாம் (தனித் தனியாகக் கழன்று)விட்டன.

## நல்லவன், கெட்டவன் யாருக்கும் மோசடி செய்பவன் பாவியாவான்.

ஹதீஸ் 3186 , ஹதீஸ் 3187 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மோசடி செய்பவன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் (அடையாளக்) கொடி ஒன்று உண்டு.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவர்,நடப்படுகிற கொடி ஒன்று உண்டு என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவித்தார். மற்றொருவர்,அது மறுமை நாளில் காட்டப்படும். அதைக் கொண்டு அந்த மோசடிக்காரன் அடையாளம் காணப்படுவான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அறிவித்தார்.

ஹதீஸ் 3188. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மோசடி செய்பவன். ஒவ்வொருவனுக்கும் ஒரு கொடி உண்டு. (உலகில்) அவன் செய்த மோசடி(யை வெளிச்சமிட்டு)க் (காட்டுவதற்)காக மறுமை நாளில் அது நடப்படும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3189. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போதுஇனி ஹிஜ்ரத் (மக்காவைத் துறப்பது) என்பது இல்லை. ஆயினும், ஜிஹாத் எனும் அறப்போரிடுவதும் (அதற்காகவும் பிற நற்செயல்கள் புரியவும்) நாட்டம் கொள்வதும் தான் உள்ளது. நீங்கள் போருக்குப் புறப்படும்படி அழைக்கப்பட்டால் போருக்குச் செல்லுங்கள் என்று கூறினார்கள்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

மேலும் மக்கா வெற்றியின்போது(மக்களே!) வானங்களையும் பூமியையும் படைத்த நாள் முதலாய் இந்த நகரத்தை அல்லாஹ் புனிதமாக்கியுள்ளான். அல்லாஹ் புனிதமாக்கிய காரணத்தால் இது மறுமை நாள் வரை புனிதமானதாகவே இருக்கும். மேலும், எனக்கு முன்னர் வாழ்ந்த யாருக்கும் இதில் போரிட அனுமதி தரப்படவில்லை. எனக்கும் கூட (மக்கா வெற்றியின் போது) பகலின் சிறிது நேரத்தில் மட்டும் (இதில் போர் புரிய) அனுமதி வழங்கப்பட்டது. அல்லாஹ் இந்த நகரத்தைப் புனிதப்படுத்தியுள்ள காரணத்தால் இது மறுமை நாள் வரை புனிதமானதாகவே திகழும். அதன் முட்கள் பிடுங்கப்படக் கூடாது. அதன் வேட்டைப் பிராணியை விரட்டக் கூடாது. அங்கு கீழே விழுந்து விடக்கும் பொருளை அதை அறிவிப்புச் செய்பவர் தவிர வேறெவரும் எடுக்கக் கூடாது. அங்குள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக் கூடாது என்று இறைத்தூதர்(ஸல்)

ஸஹீஹுல் புஹாரி பாகம் 3 அத்தியாயம் 58 'ஜிஸ்யா காப்புவரி ஒப்பந்தமும், போர் நிறுத்த ஒப்பந்தமும்.

அவர்கள் கூறினார்கள். உடனே அப்பாஸ்(ரலி), இறைத்தூதர் அவர்களே!இத்கிர் புல்லைத் தவிரவா? ஏனெனில், அது அவர்களின் உலோகத் தொழிலாளர்களுக்கும் பயன்படுகிறதே' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், (ஆம்) இத்கிரைத் தவிரத் தான்' என்று பதிலளித்தார்கள்.

# அத்தியாயம் 59 படைப்பின் ஆரம்பம்

## (திருக்குர்ஆன் 30:27)

அல்லாஹ் கூறினான்:

அவனே ஆரம்பத்தில் படைக்கிறான். பிறகு அவனே அதை மீண்டும் படைக்கிறான். இது அவனுக்கு மிகவும் எளிதானதாகும். (திருக்குர்ஆன் 30:27)

பார்க்க இறைவசனங்கள்

1. 50:15
2. 35:35
3. 71:14

ஹதீஸ் 3190. இம்ரான் இப்னு ஹுசைன்(ரலி) அறிவித்தார்.

பனு தமீம் குலத்தைச் சேர்ந்தவர்கள் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். நபி(ஸல்) அவர்கள்,பனு தமீம் குலத்தாரே! நற்செய்தி பெற்று மகிழுங்கள்' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்,எங்களுக்கு நற்செய்தி கூறினீர்கள். அவ்வாறே எங்களுக்கு (தருமமும்) கொடுங்கள்' என்று கேட்டார்கள். உடனே, நபி(ஸல்) அவர்களின் முகம் மாறிவிட்டது.

அப்போது யமன் நாட்டினர் நபி(ஸல்) அவர்களிடம் வருகை தந்தனர். நபி(ஸல்) அவர்கள்,யமன் வாசிகளே! (நான் வழங்கும்) நற்செய்தியை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில், பனு தமீம் குலத்தார் அதை ஏற்கவில்லை' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்,நாங்கள் அதை ஏற்றுக் கொண்டோம்' என்று பதிலளித்தார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் படைப்பின் ஆரம்பத்தைக் குறித்தும் அர்ஷ் (இறைசிம்மாசனம்) குறித்தும் பேசலானார்கள். அப்போது ஒருவர் வந்து (என்னிடம்),இம்ரானே! உன் வாகனம் (ஒட்டகம்) ஓடிவிட்டது' என்று கூறினார். (நான் ஒட்டகத்தைத் தேடச் சென்று விட்டேன்.) நான் எழுந்து செல்லாமல் இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

ஹதீஸ் 3191. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) கூறினார்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். என் ஒட்டகத்தை வாசற்கதவருகே கட்டிப் போட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் பனு தமீம் குலத்தைச் சேர்ந்த சிலர் வந்தனர். (அவர்களிடம்) நபி(ஸல்) அவர்கள்,(நான் அளிக்கும்) நற்செய்தியை ஏற்றுக் கொள்ளுங்கள், பனு தமீம் குலத்தாரே!என்று கூறினார்கள். அவர்கள்,எங்களுக்கு நற்செய்தி அளித்தீர்கள். அவ்வாறே எங்களுக்கும் (தருமம்) கொடுக்கவும் செய்யுங்கள்' என்று (இரண்டு முறை) கூறினார்கள். பிறகு, யமன் நாட்டவர் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வருகை தந்தார்கள். (அவர்களிடமும்) நபி(ஸல்) அவர்கள்,யமன் வாசிகளே! (என்னுடைய) நற்செய்தியை நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில், பனு தமீம் குலத்தார் அதை ஏற்றுக் கொள்ளவில்லை' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் ஏற்றுக் கொண்டோம்' என்று பதில் கூறினார். பிறகு,நாங்கள் தங்களிடம் இந்த (உலகம் எவ்வாறு படைக்கப்பட்டது என்னும்) விஷயம் குறித்துக் கேட்பதற்காக வந்தோம்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,(ஆதியில்) அல்லாஹ் (மட்டுமே) இருந்தான். அவனைத் தவிர வேறெந்தப் பொருளும் இருக்கவில்லை. (பிறகு படைக்கப்பட்ட) அவனுடைய அர்ஷ் (சிம்மாசனம்) தண்ணீரின் மீதிருந்தது. பிறகு (லவ்ஹுல் மஹ்ஃபூள் எனும்) பாதுகாக்கப்பட்ட பலகையில் அவன் எல்லா விஷயங்களையும் எழுதினான். பின்னர் வானங்கள், பூமியைப் படைத்தான்' என்று கூறினார்கள்.

அப்போது ஒருவர் (என்னை) அழைத்து, ஹுஸைனின் மகனே! உங்கள் ஒட்டகம் ஓடிப் போய்விட்டது' என்று கூற, நான் (அதைத் தேடிப்பார்க்க எழுந்து) சென்று விட்டேன். சென்று பார்த்தால் ஒட்டகத்தைக் காண முடியாதவாறு கானல் நீர் தடுத்துவிட்டது. அல்லாஹ்வின் மீதாணையாக!நான் அதை அப்படியேவிட்டு விட்டிருந்தால் நன்றாயிருக்குமே (படைப்பின் ஆரம்பம் குறித்து நபி(ஸல்) அவர்கள் இன்னும் என்னவெல்லாம் சொன்னார்கள் எனத் தெரிந்து கொண்டிருக்கலாமே) என்று நான் ஆசைப்பட்டேன்.

ஹதீஸ் 3192. உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) எங்களிடையே மிம்பரில் எழுந்து நின்று, படைப்பின் ஆரம்பத்தைக் குறித்து எங்களுக்குச் செய்தி அறிவித்தார்கள். (எதுவரை என்றால் படைப்பின் தொடக்கம் முதல் மறுமை வாழ்வு ஈறாக) சொர்க்கவாசிகள் (சொர்க்கத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் நரக வாசிகள் (நரகத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும்வரையும் நரக வாசிகள் (நரகத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும்வரையும் அறிவித்தார்கள். அதை நினைவில் வைத்தவர் நினைவில் வைத்தார் அதை மறந்தவர் மறந்துவிட்டார்.

ஹதீஸ் 3193. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உயர்ந்தவனான அல்லாஹ் கூறினான்:

ஆதமின் மகன் என்னை ஏசுகிறான். அது அவனுக்குத் தகாத செயலாகும். அவன் என்னை நம்ப மறுக்கிறான். அது அவனுக்குத் தகாத செயலாகும். எனக்குக் குழந்தை இருப்பதாக அவன் கூறுவதே அவன் என்னை ஏசுவதாகும். நான் அவனை ஆரம்பமாகப் படைத்ததைப் போன்றே மீண்டும் அவனை என்னால் (உயிராக்கிக்) கொண்டு வர முடியாது என்று அவன் கூறுவதே அவன் என்னை நம்ப மறுப்பதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3194. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்புகளைப் படைத்தபோது தன்னுடைய ('லவ்ஹுல் மஹ்ஃபூழ் என்னும்) பதிவேட்டில் - அது அர்ஷுக்கு மேலே அவனிடம் உள்ளது -என் கருணை என் கோபத்தை மிகைத்துவிட்டது' என்று எழுதினான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஏழு பூமிகள்.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் தான் ஏழு வானங்களைப் படைத்தான். பூமியின் இனத்திலிருந்து அவற்றைப் போன்றதையும் படைத்தான். அவற்றிற்கிடையே கட்டளை இறங்கிய வண்ணமிருக்கிறது, அல்லாஹ் ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றல் பெற்றிருக்கிறான் என்பதையும் அல்லாஹ்வின் அறிவு ஒவ்வொரு பொருளையும் சூழ்ந்திருக்கிறது என்பதையும் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தான் இந்த விஷயங்கள் உங்களுக்கு எடுத்துரைக்கப்படுகின்றன. (திருக்குர்ஆன் 65:12)

பார்க்க இறைவசனங்கள்:

1. 52:5
2. 79:28

3. 51:7

4. 84:2,4,5

5. 91:6

6. 79:14

ஹதீஸ் 3195. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்.

எனக்கும் சிலருக்குமிடையே ஒரு நிலம் தொடர்பாகத் தகராறு இருந்து வந்தது. நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கூறினேன். அதற்கு ஆயிஷா(ரலி),அபூ ஸலமாவே! நிலத்தை (எப்படியாவது அடைந்து கொள்ள வேண்டும் என்னும் ஆசையைத்) தவிர்த்துக் கொள். ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,எவன் அநியாயமாக ஒரு சாண் அளவு (நிலத்தை) அபகரித்துக் கொள்கிறானோ அவனுடைய கழுத்தில் ஏழு பூமிகள் அளவுள்ள நிலப்பகுதி (மறுமை நாளில்) வளையமாக மாட்டப்படும் எனக் கூறினார்கள்' என்றார்கள்.

ஹதீஸ் 3196. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவன் ஒரு நிலத்திலிருந்து அதற்கான உரிமையில்லாமல் சிறிதளவை (பலாத்காரமாக) எடுத்துக் கொள்கிறானோ அவன் மறுமை நாளில் ஏழு பூமிகள் வரை அழுந்திப் போகும்படிச் செய்யப்படுவான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3197. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வானங்களும் பூமியும் படைக்கப்பட்ட நாளில் இருந்த (பழைய) நிலைக்குக் காலம் திரும்பிவிட்டது. ஆண்டு என்பது பன்னிரண்டு மாதங்களாகும். அவற்றில் நான்கு மாதங்கள் புனிதமானவை. (அவற்றில்) மூன்று மாதங்கள் தொடர்ந்து வரக்கூடியவை. அவை - துல்கஅதா, துல்ஹஜ் மற்றும் முஹர்ரம் ஆகியனவாகும். (மற்றொன்று) ஜுமாதஸ் ஸானிக்கும் ஷஅபான் மாதத்திற்கும் இடையிலுள்ள ரஜப் மாதமாகும்.

என அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3198. ஸயீத் இப்னு ஸைத் இப்னி அம்ர் இப்னி நு:ஃபைல்(ரலி) அறிவித்தார்.

'அர்வா என்னும் பெண்மணி, நான் அவருக்கு ஒரு (நிலத்தின்) உரிமையில் குறை வைத்துவிட்டதாகக் கருதி (மதீனாவின் ஆளுநர்) மர்வான் அவர்களிடம் எனக்கெதிராக வழக்குத் தொடுத்தார். (விசாரணையின் போது) நான்,அவரின் உரிமையில் எதையும் நான் குறைவைப்பேனா?'ஒரு சாண் அளவு நிலத்தை அநியாயமாக அபகரித்துக் கொள்கிறவரின் கழுத்தில் ஏழு பூமிகளாக மறுமை நாளில் அது (வளையமாக) மாட்டப்படும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொல்ல நான் கேட்டிருப்பதாக சாட்சியமளிக்கிறேன்' என்று சொன்னேன்.

## நட்சத்திரங்கள்.

"நாம் (உங்களுக்கு) அருகிலிருக்கும் (முதல்) வானத்தை விளக்குகளால் அலங்கரித்திருக்கிறோம். மேலும், அவற்றை ஷைத்தான்களை எறிந்து விரட்டும் கருவிகளாக ஆக்கியுள்ளோம். இந்த ஷைத்தான்களுக்காகக் கொழுந்து விட்டெரியும் நெருப்பை நாம் தயார் செய்து வைத்திருக்கிறோம் என்னும் (திருக்குர்ஆன் 67:05) இறைவசனத்திலிருந்து அல்லாஹ் இந்த நட்சத்திரங்களை மூன்று விஷயங்களுக்காகப் படைத்திருக்கிறான் என்று தெரிய வருகிறது:

1. அவற்றை வானத்திற்கு அலங்காரமாக ஆக்கியுள்ளான்.

2. ஷைத்தான்களை எறிந்து விரட்டுவதற்கான கருவியாக ஆக்கியுள்ளான்.

3. அவற்றின் வாயிலாக வழியறிந்து கொள்வதற்கான அடையாளங்களாக அவற்றை ஆக்கியுள்ளான்.

இதுவல்லாத பிற பொருள்களை இந்த வசனத்திற்குக் கற்பிக்கிறவர் தவறிழைத்துவிட்டார் தன் முயற்சியை வீணாக்கிவிட்டார் தான் அறியாத விஷயத்தில் ஈடுபட்டுத் தன்னைத் தானே சிரமத்திற்கு ஆளாக்கினார்' என்று கதாதா (ரஹ்) கூறினார்.

## சூரியன் - சந்திரன் ஆகியவற்றின் நிலை.

பார்க்க இறைவசனங்கள்:

1. 55:5

2. 79: 29, 46

3. 36:40

4. 36:37

5. 69: 16, 17

6. 6:76

7. 81:1

8. 84: 17, 28

9. 15:16

10. 25:61

11. 22:61

ஹதீஸ் 3199. அபூ தர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் சூரியன் மறைந்த நேரத்தில் என்னிடம், அது (சூரியன்) எங்கு செல்கிறது என்று உனக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வும், என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், அது அர்ஷுக்கு (இறை சிம்மாசனத்திற்குக்) கீழே ஸஜ்தா (வணக்கம்) செய்வதற்காகச் செல்கிறது. அங்கு அது (ம்ழக்கிலிருந்து உதயமாகுவதற்கு இறைவனிடம்) அனுமதி கேட்கிறது. உடனே அதற்கு அனுமதியளிக்கப்படுகிறது. (இறுதியாக ஒரு நாள்) அது ஸஜ்தா செய்ய, அந்த ஸஜ்தா ஏற்கப்படாமல் போகவிருக்கிறது. அப்போது அது (வழக்கம் போன்று) கிழக்கிலிருந்து உதயமாகுவதற்கு அனுமதி கேட்கும் அதற்கு அனுமதியளிக்கப்படாது. மாறாக, வந்த வழியே திரும்பி விடு' என்று அதற்கு உத்தரவிடப்படும். அதன்படி அது மேற்கிலிருந்து உதயமாகும்' என்றார்கள். இதைத் தான், சூரியன், தான் நிலை கொள்ளும் ஓர் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. அது பேரறிவாளனான வல்லமை மிக்க (இறை)வனின் நிர்ணயமாகும்' என்னும் (திருக்குர்ஆன் 36:38) இறைவசனம் குறிக்கிறது' என்றார்கள்.

ஹதீஸ் 3200. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் சூரியனும் சந்திரனும் சுருட்டப்பட்டு (ஒளியிழந்து) விடும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3201. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவருடைய இறப்புக்காகவும், பிறப்புக்காகவும் சூரிய கிரகணமும் சந்திர கிரகணமும் ஏற்படுவதில்லை. ஆயினும், அவ்விரண்டும் அல்லாஹ்வின் சான்றுகளில் ஒரு சான்றாகும். அவ்விரண்டையும் நீங்கள் காண நேர்ந்தால் (இறைவனைத்) தொழுங்கள். 12

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3202. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சூரியனும், சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரண்டு சான்றுகளாகும். எவருடைய இறப்புக்காகவும் பிறப்புக்காகவும் அவற்றிற்கு கிரகணம் பிடிப்பதில்லை. கிரகணத்தை நீங்கள் காணும்போது அல்லாஹ்வை நினைவு கூருங்கள்.

என அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3203. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சூரிய கிரகணம் ஏற்பட்ட நாளில் தொழுகைக்காக நின்று தக்பீர் கூறி நீண்ட நேரம் (திருக்குர்ஆனை) ஓதினார்கள். பிறகு, நீண்ட நேரம் ருகூவு செய்தார்கள். பிறகு தலையை உயர்த்தி,சமி அல்லாஹு லிமன் ஹமிதஹு' (தன்னைப் புகழ்ந்தவனை அல்லாஹ் செவியுற்றான்) என்று கூறினார்கள். அப்படியே நின்று நீண்ட நேரம் (குர்ஆன்) ஓதினார்கள். அது முதல் ரக்அத்தில் ஓதியதை விடக் குறுகியதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ருகூவு செய்தார்கள். அது முதல் ரக்அத்(தில் செய்த)தை விடக் குறுகியதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் ஸஜ்தா செய்தார்கள். பிறகு, கடைசி ரக்அத்திலும் அவ்வாறே செய்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள். அதற்குள் (மிரகணம் முடிந்து) சூரியன் வெளிப்பட்டு விட்டிருந்தது. அப்போது அவர்கள் மக்களுக்கு உரையாற்றினார்கள். (அவ்வுரையில்) சூரிய, சந்திர கிரகணங்களைப் பற்றி,அவையிரண்டும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரண்டு சான்றுகளாகும். எவருடைய இறப்புக்காகவும், எவருடைய பிறப்புக்காகவும் கிரகணம் ஏற்படுவதில்லை. நீங்கள் அவற்றைக் காணும்போது தொழுகைக்கு விரையுங்கள்' என்றார்கள்.

ஹதீஸ் 3204. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவருடைய இறப்புக்காகவும் எவருடைய பிறப்புக்காகவும் சூரியனுக்கும் சந்திரனுக்கும் கிரகணம் பிடிப்பதில்லை ஆயினும், அவையிரண்டும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரண்டு சான்றுகளாகும். அவற்றை நீங்கள் காணும்போது (இறைவனைத்) தொழுங்கள்.

என அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## (திருக்குர்ஆன் 07:57)

'மேலும், அவனே தன் கருணை (மழை)யைப் பொழிவதற்கு முன்னர், காற்றுகளை பரவலாக அனுப்புகிறான் (திருக்குர்ஆன் 07:57) என்னும் இறைவசனம்.

பார்க்க இறை வசனங்கள்:

1. 17: 69
2. 15:22
3. 02:266
4. 3:117
5. 77:3

ஹதீஸ் 3205. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (‘ஸபா என்னும்) கீழைக் காற்றின் வாயிலாக வெற்றி அளிக்கப்பட்டுள்ளேன்ஆது சமூகத்தார் (‘தபூர் என்னும்) மேலைக் காற்றினால் அழிக்கப்பட்டனர்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3206. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மழை மேகத்தை வானத்தில் கண்டால் முன்னால் நடப்பார்கள் பிறகு திரும்பி நடப்பார்கள் (தம் அறைக்கு) உள்ளே போவார்கள் வெளியே வருவார்கள். (நிம்மதியற்று ஒருவிதத் தவிப்புடன் காணப்படுவார்கள்.) அவர்களின் முகம் மாறி விடும். வானம், மழை பொழிந்துவிட்டால் அந்த (தவிப்பான) நிலை அவர்களைவிட்டு நீங்கி விடும். எனவே, (ஒரு முறை) நான் அவர்களுக்கு அந்தத் தவிப்பான நிலை ஏற்படுவதை கவனத்திற்குக் கொண்டு வந்தேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளபடி) ஆது சமுதாயத்தார், அந்த வேதனை (கொணரும் மேகம்) தாங்கள் வசித்த பள்ளத்தாக்குகளை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டபோது (தவறாகப் புரிந்து கொண்டு),இது நமக்கு மழை பொழிவிக்கும் மேகமாகும்‘ (திருக்குர்ஆன் 46:24) என்று கூறினார்களே அத்தகைய (வேதனையைக் கொணரக் கூடிய) மேகமாகவும் இது இருக்கலாம் எனக்குத் தெரியாது‘ என்று பதிலளித்தார்கள்.

## வானவர்கள் - அவர்களின் மீது சாந்தி பொழியட்டும்.

அனஸ்(ரலி) கூறினார்.

அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம்,வானவர்களில் ஜிப்ரீல்(அலை) அவர்கள் யூதர்களின் பகைவராவார்கள்‘ என்றார்கள்.

ஹதீஸ் 3207. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் இறையில்லம் கஅபாவில் இருமனிதர்களுக்கிடையே16 (பாதி) தூக்கமாகவும் (பாதி) விழிப்பாகவும் இருந்தபோது நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரப்பப்பட்ட தங்கத் தட்டு ஒன்று என்னிடம் கொண்டு வரப்பட்டது. என்னுடைய நெஞ்சம் காறையெலும்பிலிருந்து அடி வயிறு வரை பிளக்கப்பட்டது. பிறகு ஸம்ஸம் நீரினால் என் வயிறு கழுவப்பட்டது. பிறகு, (என் இதயம்) நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரப்பப்பட்டது. மேலும், கோவேறுக் கழுதையை விடச் சிறியதும் கழுதையை விடப் பெரியதுமானபுராக் என்னும் (மின்னல் வேக) வாகனம் ஒன்றும் என்னிடம் கொண்டு வரப்பட்டது. நான் (அதில் ஏறி) ஜிப்ரீல்(அலை) அவர்களுடன் சென்றேன். நாங்கள் முதல் வானத்தை அடைந்தோம்.யார் அது? என்று கேட்கப்பட்டது. ஜிப்ரீல்(அலை),ஜிப்ரீல்‘ என்று பதிலளித்தார்.உங்களுடன் (வந்திருப்பவர்) யார்? என்று கேட்கப்பட்டது. அவர்,முஹம்மது‘ என்று பதிலளித்தார்.அவரை அழைத்து வரச் சொல்லி ஆள் அனுப்பப்பட்டிருந்ததா? என்று கேட்கப்பட்டது. அவர்,ஆம்‘ என்றார்.அவரின் வரவு நல்வரவாகட்டும்! அவரின் வருகை மிக நல்ல வருகை‘ என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது. பிறகு நான் ஆதம்(அலை) அவர்களிடம் சென்றேன். அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்கள்,(என்) மகனும் இறைத் தூதருமான உங்கள் வரவு நல்வரவாகுக! என்றார்கள். பிறகு இரண்டாவது வானத்திற்கு நாங்கள் சென்றோம்.யார் அது? என்று வினவப்பட்டது. அவர்,ஜிப்ரீல்‘ என்று பதிலளிக்க,உங்களுடன் இருப்பவர் யார்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்,முஹம்மது‘ என்று பதிலளித்தார். (அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்,ஆம்‘ என்று பதிலளித்தார்.அவரின் அவரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்லவருகை‘ என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது. பிறகு நான், ஈஸா(அலை) அவர்களிடமும் யஹ்யா(அலை) அவர்களிடமும்

சென்றேன். அவ்விருவரும், சகோதரரும் நபியுமாகிய உங்களின் வரவு நல்வரவாகட்டும்' என்றார்கள். பிறகு, நாங்கள் மூன்றாவது வானத்திற்குச் சென்றோம். யார் அது? என்று கேட்கப்பட்டது. ஜிப்ரீல்' என்று பதிலளிக்கப்பட்டது. உங்களுடன் இருப்பவர் யார்? என்று கேட்கப்பட்டது. முஹம்மத்' என்று பதிலளித்தார். (அவரை அழைத்து வரச் சொல்லி) அவருக்கு ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. ஆம்' பதிலளித்தார். (அவரை அழைத்து வரச் சொல்லி) அவருக்கு ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. ஆம்' என்று பதிலளித்தார். அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை' என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது. பிறகு, நான் ~சு..ப் (அலை) அவர்களிடம் அழைத்துச் செல்லப்பட்டேன். அவர்களுக்கு சலாம் உரைத்தேன். அவர்கள், சகோதரரும் நபியுமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்' என்று (வாழ்த்து) சொன்னார்கள். பிறகு, நாங்கள் நான்காவது வானத்திற்குச் சென்றோம். யார் அது? என்று கேட்கப்பட்டது. ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். உங்களுடன் இருப்பவர் யார்? என்று பதிலளிக்கப்பட்டது. (அவரை அழைத்து வரச் சொல்லி) அவருக்கு ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. ஆம்' என்று பதிலளித்தார். அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை' என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது. நான் இத்ரீஸ் (அலை) அவர்களிடம் சென்றேன். அவர்களுக்கு சலாம் உரைத்தேன். அவர்கள், சகோதரரும் நபியுமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்' என்று (வாழ்த்து) சொன்னார்கள். பிறகு, நாங்கள் ஐந்தாவது வானத்திற்குச் சென்றோம். யார் அது? என்று கேட்கப்பட்டது. ஜிப்ரீல்' என்று பதிலளிக்கப்பட்டது. உங்களுடன் இருப்பவர் யார்? என்று கேட்கப்பட்டது. முஹம்மத்' என்று பதிலளிக்கப்பட்டது. (அவரை அழைத்து வரச் சொல்லி) அவருக்கு ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. ஆம்' என்று (ஜிப்ரீல்) பதிலளித்தார். அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்லவருகை' என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது. பிறகு நாங்கள் ஹாரூன் (அலை) அவர்களிடம் சென்றோம். நான் அவர்களுக்கு சலாம் உரைத்தேன். அவர்கள், சகோதரரும் நபியுமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்' என்று (வாழ்த்து) சொன்னார். பிறகு நாங்கள் ஆறாவது வானத்திற்குச் சென்றோம். யார் அது? என்று கேட்கப்பட்டது. ஜிப்ரீல்' என்று பதிலளிக்கப்பட்டது. உங்களுடன் இருப்பவர் யார்? என்று கேட்கப்பட்டது. முஹம்மத்' என்று பதிலளிக்கப்பட்டது. (அவரை அழைத்து வரச் சொல்லி) அவருக்கு ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. ஆம்' என்று பதிலளிக்கப்பட்டது. அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை' என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது. நான் மூஸா (அலை) அவர்களிடம் சென்று (அவர்களுக்கு) சலாம் உரைத்தேன். அவர்கள், சகோதரரும் நபியுமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்' என்று வாழ்த்தினார்கள். நான் அவர்களைக் கடந்து சென்றபோது அவர்கள் அழுதார்கள். நீங்கள் ஏன் அழுகிறீர்கள்? என்று அவர்களிடம் கேட்கப்பட்டது. அவர், இறைவா! என் சமுதாயத்தினரில் சொர்க்கம் புகுபவர்களை விட அதிகமானவர்கள் எனக்குப் பிறகு அனுப்பப்பட்ட இந்த இளைஞரின் சமுதாயத்தினரிலிருந்து சொர்க்கம் புகுவார்கள்' என்று பதிலளித்தார்கள். பிறகு நாங்கள் ஏழாவது வானத்திற்குச் சென்றோம். யார் அது? என்று வினவப்பட்டது. ஜிப்ரீல்' என்று பதிலளிக்கப்பட்டது. உங்களுடன் இருப்பவர் யார்? என்று கேட்கப்பட்டது. முஹம்மத்' என்று பதிலளிக்கப்பட்டது. (அவரை அழைத்து வரச்சொல்லி) அவருக்கு ஆளனுப்பப்பட்டதா? என்று கேட்கப்பட்டது. அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை' என்று (வாழ்த்து) சொல்லப்பட்டது... நான் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் சென்று (அவர்களுக்கு) சலாம் உரைத்தேன். அவர்கள், மகனும் நபியுமான உங்கள் வரவு நல்வராவாகட்டும்' என்றார்கள். பிறகு, அல் பைத்துல் ம..மூர் எனும்வளமான இறையில்லம் எனக்கு (அருகே கொண்டு வந்து) காட்டப்பட்டது. நான் அதைக் குறித்து ஜிப்ரீலிடம் கேட்டேன். அவர், இதுதான்அல் பைத்துல் ம..மூர் ஆகும். இதில் ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம்

வானவர்கள் தொழுகிறார்கள். அவர்கள் இதிலிருந்து வெளியே சென்றால் திரும்ப இதனிடம் வர மாட்டார்கள். அதுவே அவர்கள் கடைசியாக நுழைந்ததாம் விடும்' என்றார். பிறகு, (வான எல்லையிலுள்ள இலந்தை மரமான)சித்ரத்துல் முன்தஹா எனக்கு (அருகே கொண்டு வந்து) காட்டப்பட்டது. அதன் பழங்கள் (யமனில் உள்ள)ஹஜ்ர் எனுமிடத்தின் (உற்பத்திப் பொருளான மண்) கூஜாக்கள் போல் இருந்தன. அதன் இலைகள் யானைகளின் காதுகளைப் போல் இருந்தன. அதன் வேர்ப்பகுதியில் நான்கு ஆறுகள் இருந்தன. (ஸல்ஸபீல், கவ்ஸர் ஆகிய) இரண்டு ஆறுகள் உள்ளே இருந்தன. மற்றும் (~ப்ரடீஸ், நைல் ஆகிய) இரண்டு ஆறுகள் வெளியே இருந்தன. நான் ஜிப்ரீல்(அலை) அவர்களிடம் அவற்றைக் குறித்துக் கேட்டேன். அவர்கள்,உள்ளேயிருப்பவை இரண்டும் சொர்க்கத்தில் உள்ளவையாகும். வெளியே இருப்பவை இரண்டும் நைல் நதியும் ~ப்ரடீஸ் நதியும் ஆகும்' என்று பதிலளித்தார்கள். பிறகு என் மீது ஐம்பது (நேரத்) தொழுகைகள் கடமையாக்கப்பட்டன. நான் முன்னேறிச் சென்று இறுதியில் மூஸா(அலை) அவர்களை அடைந்தேன். அவர்கள்,என்ன செய்தாய்? என்று கேட்டார்கள். நான்,என் மீது ஐம்பது தொழுகைகள் கடமையாக்கப்பட்டுள்ளன' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,எனக்கு மக்களைப் பற்றி உங்களை விட அதிகமாகத் தெரியும். நான் பனு இஸ்ராயீல்களுடன் பழம் நன்கு அனுபவப்பட்டுள்ளேன். உங்கள் சமுதாயத்தினர் (இதைத்) தாங்க மாட்டார்கள். எனவே, உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று அவனிடம் (தொழுகைகளின் எண்ணிக்கையைக்) குறைத்துத் தரும்படி கேளுங்கள்' என்றார்கள். நான் திரும்பச் சென்று இறைவனிடம் (அவ்வாறே) கேட்டேன். அதை அவன் நாற்பதாக ஆக்கினான். பிறகும் முதலில் சொன்னவாறே நடந்தது. மீண்டும் (சென்று நான் கேட்க, இறைவன் அதை) முப்பதாக ஆக்கினான். மீண்டும் அதைப் போன்றே நடக்க (அதை) இறைவன் இருபதாக ஆக்கினான். நான் மூஸா(அலை) அவர்களிடம் சென்றபோது அவர்கள் முன்பு போன்றே சொல்ல (நான் இறைவனிடம் மீண்டும் குறைத்துக் கேட்க) அவன் அதை ஐந்தாக ஆக்கினான். பிறகு நான் மூஸா(அலை) அவர்களிடம் சென்றேன். அவர்கள்,என்ன செய்தாய்? என்று கேட்க,அதை இறைவன் ஐந்தாக ஆக்கிவிட்டான்' என்றேன். அதற்கு அவர்கள்,முன்பு சொன்னதைப் போன்றே (இன்னும் குறைத்துக் கேட்கும்படி) சொன்னார்கள். அதற்கு,நான் (இந்த எண்ணிக்கைக்கு) ஒப்புக் கொண்டேன்' என்று பதிலளித்தேன். அப்போது (அல்லாஹ்வின் தரப்பிலிருந்து அசரீரியாக),நான் என் (ஐந்து வேளைத் தொழுகை எனும்) விதியை அமல்படுத்தி விட்டேன். என் அடியார்களுக்கு (ஐம்பது வேளைகளிலிருந்து ஐந்து வேளையாகக் குறைத்து கடமையை) லேசாக்கி விட்டேன். ஒரு நற்செயலுக்குப் பத்து நன்மைகளை நான் வழங்குவேன்' என்று அறிவிக்கப்பட்டது.

ஹதீஸ் 3208. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

உண்மையே பேசியவரும் உண்மையே அறிவிக்கப்பட்டவருமான இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்:

உங்கள் படைப்பு உங்கள் தாயின் வயிற்றில் நாற்பது நாள்களில் ஒருங்கிணைக்கப்படுகிறது. பிறகு அதே போன்ற காலத்தில் (40 நாள்களில் அட்டை - டுநுநுஊழ போன்று) ஒரு கருக்கட்டியாக மாறுகிறது. பிறகு, அதே போன்ற காலத்தில் (மெல்லப்பட்ட சக்கை போன்ற) சதைப் பிண்டமாக மாறுகிறது. பிறகு அல்லாஹ் ஒரு வானவரை (அதனிடம்) அனுப்புகிறான். அந்த வானவருக்கு நான்கு கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன. (அவை:) அதன் (கருவாக இருக்கும் அந்த மனிதனின்) செயலையும் (அவனுடைய செயல்கள் எப்படியிருக்கும் என்பதையும்), அதன் வாழ்வாதாரத்தையும் (அவனுக்க என்னென்ன எந்த அளவு கிடைக்கும் என்பதையும்), அதன் வாழ்நாளையும் (அவன் எவ்வளவு நாள் வாழ்வான் எப்போது இறப்பான் என்பதையும்), அது (இறுதிக் கட்டத்தில்) துர்பாக்கியசாலி யா, நற்பேறுடையதா என்பதையும்

(நான் விதித்தபடி) எழுது' என்று அந்த வானவருக்குக் கட்டளையிடப்படும். பிறகு அதனுள் உயிர் ஊதப்படும். இதனால் தான், உங்களில் ஒருவர் (நற்) செயல் புரிந்து கொண்டே செல்வார். எந்த அளவிற்கென்றால் அவருக்கும் சொர்க்கத்திற்குமிடையே ஒரு முழம் (தொலைவு) தான் இருக்கும். அதற்குள் அவரின் விதி அவரை முந்திக் கொள்ளும். அவர் நரகவாசிகளின் செயலைச் செய்து விடுவார். (அதன் விளைவாக, நரகம் புகுந்து விடுவார்,) ஒருவர் (தீய) செயல் புரிந்து கொண்டே செல்வார். எந்த அளவிற்கென்றால் அவருக்கும் நரகத்திற்குமிடையே ஒரேயொரு முழம் (தொலைவு) தான் இருக்கும். அதற்குள் விதி அவரை முந்திக் கொள்ளும். அதனால் அவர் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்வார். (அதன் காரணத்தால் சொர்க்கம் புகுவார்.)

ஹதீஸ் 3209. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடியானை அல்லாஹ் நேசிக்கும் பொழுது ஜிப்ரீல்(அலை) அவர்களை அழைத்து,அல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். எனவே, நீங்களும் அவரை நேசியுங்கள்!என்று கூறுவான். எனவே, ஜிப்ரீல்(அலை) அவர்கள் விண்ணகத்தில் வசிப்பவர்களிடம்,அல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான் நீங்களும் அவரை நேசியுங்கள்' என்று அறிவிப்பார்கள். உடனே, விண்ணக்கத்தாரும் அவரை நேசிப்பார்கள். பிறகு அவருக்கு பூமியிலும் அங்கீகாரம் அளிக்கப்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

வேறோர் அறிவிப்பாளர் அபூ ஆஸிம்(ரஹ்) வழியாகவும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்தே இந்த நபிமொழி அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 3210. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வானவர்கள் மேகத்தில் இறங்கி விண்ணில் தீர்மானிக்கப்பட்ட விஷயத்தைப் (பற்றிப்) பேசி கொள்கிறார்கள். ஷைத்தான்கள் அதைத் திருட்டுத் தனமாக (ஒளிந்திருந்து) ஓட்டுக் கேட்டு, சோதிடர்களுக்கு அதை (உள்ளுதிப்பாக) அறிவித்து விடுகின்றன. சோதிடர்கள் அதனுடன் (அந்த உண்மையுடன்) நூறு பொய்களைத் தம் தரப்பிலிருந்து புனைந்து (சேர்த்துக்) கூறுவார்கள்.

என்று நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3211. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஜும்ஆ நாள் (வெள்ளிக்கிழமை) வந்துவிட்டால் வானவர்கள் (ஜும்ஆ தொழுகை நடக்கும்) பள்ளிவாசலின் நுழைவாயில்களில் ஒவ்வொரு வசாலிலும் (இருந்த வண்ணம்) முதன் முதலாக உள்ளே நுழைபவரையும் அடுத்தடுத்து உள்ளே நுழைபவரையும் (அவர்களின் பெயர்களை) எழுதிப் பதிவு செய்து கொண்டிருப்பார்கள். இமாம், உரை மேடையில் (உரையாற்றுவதற்காக) அமர்ந்துவிட்டால் (பதிவு செய்யும்) ஏடுகளைச் சுருட்டி வைத்துவிட்டு (அவரின் உபதேச) உரையைச் செவிமடுத்து வண்ணம் (உள்ளே) வருவார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3212. ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அறிவித்தார்.

மஸ்ஜிதுந் நபவீயில் (நபித் தோழரும் கவிஞருமான) ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) கவிபாடிக் கொண்டிருக்க, உமர்(ரலி) அங்கு வந்தார்கள். (ஹஸ்ஸான்(ரலி) பள்ளிவாசலில் கவிபாடுவதை உமர்(ரலி) கண்டித்தார்கள்) ஹஸ்ஸான்(ரலி),நான் இந்தப் பள்ளிவாசலில் உங்களை விடச் சிறந்தவர் (நபி(ஸல்) அவர்கள்) இருக்கும் போதே கவிபாடிக் கொண்டிருந்தேன்' என்று கூறிவிட்டு, அபூ ஹுரைரா(ரலி) பக்கம் திரும்பி,அல்லாஹ்வின் பெயரால் உங்களிடம் கேட்கிறேன்.

(என்னிடம்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (ஹஸ்ஸானே!) என் சார்பாக (எதிரிகளின் வசைக் கவிகளுக்கு) நீங்கள் (கவிகளாலேயே) பதிலளியுங்கள். இறைவா! ஹஸ்ஸானுக்கு ரூஹுல் குதுஸ்(தூய ஆத்மா வானவர் ஜிப்ரீல் அவர்களின்) மூலம் துணை புரிவாயாக!என்று கூறியதை நீங்கள் செவியுற்றிருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அபூ ஹுரைரா(ரலி),ஆம் (செவியுற்றிருக்கிறேன்)' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3213. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஹஸ்ஸான்(ரலி) அவர்களிடம்,எதிரிகளுக்கு (பதிலடியாக) வசைக் கவிதை பாடுங்கள். ஜிப்ரீல் உங்களுடன் (துணையாக) இருப்பார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3214. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்த) பனு ஃகுன்கி கிளையாரின் குறுகலான வீதியில் .. கிளம்புகிற புழுதியின் பக்கம் நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.

அறிவிப்பாளர் மூஸா(ரஹ்),ஜிப்ரீல்(அலை) அவர்கள் தங்களின் படை பரிவாரங்களுடன் கம்பீரமாக பவனி வருவதால் (கிளம்புகின்ற)..!என்னும் வாசகத்தை அதிகப்படியாக அறிவித்தார்.

ஹதீஸ் 3215. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹாரிஸ் இப்னு ஹிஷாம்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம்,தங்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) (வேத வெளிப்பாடு) எப்படி வருகிறது? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அவையெல்லாம் (இப்படித்தான்:) சில வேளைகளில் வானவர் (ஜிப்ரீல்) என்னிடம் மணியோசையைப் போன்று (சத்தம் எழுப்பிய நிலையில்) வருவார். அவர் கூறியதை நான் நினைவில் (பாதுகாத்து) வைத்த நிலையில் அவர் என்னைவிட்டுப் பிரிந்து விடுவார். இவ்வாறு வருவது எனக்கு மிகக் கடுமையான சிரமம் தரக் கூடியதாக இருக்கும். சில வேளைகளில் அந்த வானவர் ஒரு மனிதரைப் போன்று காட்சியளித்து என்னுடன் பேசுவார். அப்போது அவர் கூறுவதை நினைவிலிருத்திக் கொள்வேன்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3216. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

"இரண்டு ஜோடி (பொருள்)களை இறைவழியில் செலவழித்தவர்களை சொர்க்கத்தின் காவலர்(களான வானவர்)கள்இன்னாரே! இங்கே வாருங்கள் என்று அழைப்பார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். இதைக் கேட்ட அபூ பக்ர்(ரலி),இப்படிப்பட்டவருக்குக் கவலையே கிடையாதே' என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் அவர்களில் ஒருவராயிருப்பீர்கள் என்று நம்புகிறேன்' என்றார்கள்.

ஹதீஸ் 3217. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,ஆயிஷாவே! இதோ ஜிப்ரீல் உன் மீது சலாமுரைக்கிறார்' என்று கூறினார்கள். நான்,வ அலைஹிஸ் ஸலாமு வ ரஹ்முத்துல்லாஹி வ பரக்காத்துஹு - அவரின் மீதும் (அல்லாஹ்வின்) சாந்தியும் அல்லாஹ்வின் கருணையும் அவனுடைய அருள் வளங்களும் பொழியட்டும். (இறைத்தூதர் அவர்களே!) நான் பார்க்க முடியாததையெல்லாம் நீங்கள் பார்க்கிறீர்கள்' என்று கூறினேன்.

ஆயிஷா(ரலி)நீங்கள் என்று நபி(ஸல்) அவர்களையே குறிப்பிட்டதாக அறிவிப்பாளர் கூறுகிறார்.

ஹதீஸ் 3218. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஜிப்ரீல்(அலை) அவர்களிடம்,தாங்கள் (இப்போது) எம்மைச் சந்தித்துக் கொண்டிருப்பதை விட அதிகமாக (அடிக்கடி) சந்திக்க மாட்டீர்களா? என்று (ஆர்வமுடன்) கேட்டார்கள். அப்போது,(நபியே!) நாம் உங்களுடைய இறைவனின் உத்தரவின்றி இறங்குவதில்லை. எமக்கு முன்னிருப்பவையும் எமக்குப் பின்னால் இருப்பவையும்

அவனுக்கே உரியவை. என்னும் (ஜிப்ரீல்(அலை) அவர்கள் சார்பாக பதில் கூறும் (திருக்குர்ஆன் 19:64) இறைவசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 3219. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரேயொரு (வட்டார) மொழி வழக்குப்படி ஜிப்ரீல் (திருக்குர்ஆனை) எனக்கு ஓதக் கற்றுத் தந்தார். ஆனால், நான் அதை இன்னும் பல (வட்டார) மொழி வழக்குகளின் படி எனக்கு ஓதக் கற்றுத் தருமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டேயிருந்தேன். (நான் கேட்க, கேட்க அதிகப்படுத்தப்பட்டுக் கொண்டே வந்து,) இறுதியில் ஏழு (வட்டார) மொழி வழக்குகள் அளவிற்கு வந்து நின்றது.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3220. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களிலேயே அதிகமாக வாரி வழங்கக் கூடியவர்களாக இருந்தார்கள் ரமளான் மாதத்தில் அவர்களை ஜிப்ரீல் (அலை) அவர்கள் சந்திக்கும் வேளையில் (வழக்கத்தை விட) அதிகமாக வாரி வழங்குவார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள் ரமளான் மாதத்தின் ஒவ்வோர் இரவிலும் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்து (அதுவரை அருளப்பட்டிருந்த) குர்ஆனை அவர்களுக்கு (ஓதிக் காடிக்) கற்றுத் தருவார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள், நபி(ஸல்) அவர்களைச் சந்திக்கும்போது அவர்கள் மழைக் காற்றை விட அதிகமாக (மக்களுக்கு) நன்மையை வாரி வழங்கும் கொடையாளராகத் திகழ்வார்கள்.

மேலும், நபி(ஸல்) அவர்கள்,குர்ஆன் முழுவதையும் ஜிப்ரீல் எனக்கு ஓதிக் காட்டி வந்தார்' என்று கூறினார்கள்.

இதை அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் ஃபாத்திமா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3221. இப்னு ஷிஹாப்(ரஹ்) அறிவித்தார்.

உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அஸர் தொழுகையைச் சிறிது பிற்படுத்தித் தொழுதார்கள். உடனே உர்வா(ரஹ்),உண்மையில் ஜிப்ரீல்(அலை) அவர்கள் (வானிலிருந்து) இறங்கி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்னால் (அஸரை) இதற்கு முந்திய நேரத்தில்) தொழுதார்கள்' என்றார்கள். அதற்கு உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்),நீங்கள் சொல்வதைச் சிந்தித்துச் சொல்லுங்கள், உர்வா!என்றார்கள். உடனே உர்வா(ரஹ்),ஜிப்ரீல்(அலை) (வானிலிருந்து) இறங்கி, எனக்குத் தொழுகை நடத்த, நான் அவருடன் தொழுதேன். பிறகு (இரண்டாம் முறையாக) அவருடன் தொழுதேன். பிறகு (மூன்றாம் முறையாக) அவருடன் தொழுதேன். பிறகு (நான்காம் முறையாக) அவருடன் தொழுதேன். பிறகு (ஐந்தாம் முறையாக) அவருடன் தொழுதேன் என்று தம் விரல்களால் ஐந்து தொழுகைகளை எண்ணியபடி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொல்ல கேட்டேன்' என்று தம் தந்தை அபூ மஸ்வூத்(ரலி) சொல்லக் கேட்டதாக பஷீர் இப்னு அபீ மஸ்வூத்(ரஹ்) சொல்ல செவியுற்றேன்' என்றார்கள்.

ஹதீஸ் 3222. அபூ தர்(ரலி) அறிவித்தார்.

"உங்கள் சமுதாயத்தாரில் அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாகக் கருதாமல் இறந்து விடுபவர், சொர்க்கத்தில் நுழைவார்.. அல்லது நரகம் புக மாட்டார்'... என்று ஜிப்ரீல்(அலை) அவர்கள் என்னிடம் கூறினார்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். நான்,அவன் விபசாரம் புரிந்தாலும், திருடினாலுமா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஆம் அவன் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரியே! என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3223. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவு நேரத்தில் சில வானவர்களும் பகல் நேரத்தில் சில வானவர்களும் தொடர்ந்து ஒருவர் பின் ஒருவராக வருகிறார்கள். ஃபஜ்ருடைய தொழுகையிலும் அஸருடைய தொழுகையிலும் ஒன்ற சேருகிறார்கள். பிறகு, அல்லாஹ் - அவனோ மிகவும் அறிந்தவன் - அவர்களிடம், (பூமியிலுள்ள) என் அடியார்களை எந்த நிலையில்விட்டு வந்தீர்கள்? என்று கேட்பான். அதற்கு அவ்வானவர்கள், அவர்களை உன்னைத் தொழுகிற நிலையில்விட்டு வந்தோம். அவர்கள் (உன்னைத்) தொழுது கொண்டிருந்த நிலையிலேயே அவர்களிடம் நாங்கள் சென்றோம்' என்று பதிலளிப்பார்கள்.

**ஒருவர் ஆமீன் சொல்ல, (அதே நேரத்தில்) விண்ணகத்திலுள்ள வானவர்களும் ஆமீன் சொல்ல, இருவரும் (ஆமீன் சொன்ன நேரம்) ஒன்றாக அமைந்துவிட்டால் அதற்கு முன அவர் செய்த பாவங்கள் மன்னிக்கப்படும்.**

ஹதீஸ் 3224. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களுக்கு நான் ஒரு தலையணையை (ஈச்ச நாரை அடைத்துத்) தயாரித்தேன். அதில் உருவப் படங்கள் வரையற்பட்டிருந்தன. அது சிறிய மெத்தை போன்றிருந்தது. நபி (ஸல்) அவர்கள் வந்ததும் (அதைப் பார்த்துவிட்டு) இரண்டு கதவுகளுக்கிடையே நின்றார்கள். அவர்களின் முகம் (கோபத்தால் நிறம்) மாறத் தொடங்கியது. நான், நாங்கள் என்ன (தவறு) செய்து விட்டோம்? இறைத்தூதர் அவர்களே! என்று கேட்டேன். அதற்கு அவர்கள், என்ன இந்தத் தலையணையில்? என்று (கோபமாகக்) கேட்டார்கள். நான், இது, நீங்கள் (தலைவைத்துப்) படுத்துக் கொள்வதற்காக தங்களுக்கென நான் தயாரித்த தலையணை' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், உருவப் படம் உள்ள வீட்டினுள் (இறைவனின் கருணையைக் கொண்டு வரும்) வானவர்கள் நுழைய மாட்டார்கள் என்பதும், உருவப் படத்தைச் செய்வதன் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவான் என்பதும் அப்போது அல்லாஹ் (உருவப் படத்தைச் செய்தவர்களை நோக்கி), நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் என்று சொல்வான் என்பதும் உனக்குத் தெரியாதா? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 3225. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாயும் (உயிரினங்களின் சிலைகள் அல்லது) உருவப் படங்களும் உள்ள வீட்டினுள் (இறைவனின் கருணையைக் கொண்டு வரும்) வானவர்கள் நுழைய மாட்டார்கள்.

என அபூ தல்ஹா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3226. ஸைத் இப்னு காலித் அல் ஜுஹைனீ (ரலி) அறிவித்தார்.

"(உயிரினங்களின்) உருவப் படமுள்ள வீட்டில் (இறைவனின் கருணையைக் கொண்டு வரும்) வானவர்கள் நுழைய மாட்டார்கள் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என என்னிடம் அபூ தல்ஹா (ரலி) தெரிவித்தார்கள்.

புஸ்ர் இப்னு ஸயீத் (ரஹ்) அறிவித்தார்.

(ஒரு முறை ஸைத் இப்னு காலித் (ரலி) நோய் வாய்ப்பட்டார்கள். அவர்களை உடல் நலம் விசாரிக்க நாங்கள் சென்றோம். அப்போது நாங்கள் அவர்களின் வீட்டில் ஒரு திரைக்கு அருகே அமர்ந்திருந்தோம். அந்தத் திரையில் உருவப் படங்கள் (வரையப்பட்டு) இருந்தன. எனவே, நான் (என்னுடன் இருந்த) உபைதுல்லாஹ் அல் கவ்லானீ அவர்களிடம், இவர்கள் (ஸைத் (ரலி)), இவர்கள் (ஸைத் (ரலி)) நமக்கு உருவங்களைப் பற்றிய நபிமொழியை அறிவிக்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம். ஆனால், ஸைத் (ரலி) (அதை அறிவிக்கும் போது) துணியில் பொறிக்கப்பட்ட (உயிரினமல்லாதவற்றின் படத்)தைத் தவிர என்று

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனச் சொன்னார்களே அதை நீங்கள் கேட்கவில்லையா? என்று கேட்டார்கள். நான்,கேட்கவில்லை' என்றேன். அதற்கு அவர்கள்,ஆம் அவர்கள் அவ்வாறு சொல்லத் தான் செய்தார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3227. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஜிப்ரீல், நபி(ஸல்) அவர்களிடம் (அவர்களின் வீட்டிற்கு தாம் வருகை தருவதாக) வாக்களித்திருந்தார். (ஆனால், வரவில்லை. நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீல்(அலை) அவர்களிடம் அது பற்றிக் கேட்ட போது)உருவப் படமுள்ள வீட்டிலும் நாய் உள்ள வீட்டிலும் (வானவர்களாகிய) நாங்கள் நுழைவதில்லை' என்றார்.

ஹதீஸ் 3228. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இமாம் (தொழுகையில்),சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹு - தன்னைப் புகழ்ந்தவனை அல்லாஹ் செவிமடுத்தான்' என்று கூறும்போது நீங்கள்அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹம்து - இறைவா! எங்கள் இரட்சகனே! உனக்கே புகழ் அனைத்தும் உரியது' என்று கூறுங்கள். ஏனெனில், (இறைவனைத் துதிக்கும்) வானவர்களின் (துதிச்) சொல்லுடன் எவருடைய சொல் (ஒரே நேரத்தில்) ஒத்து அமைகிறதோ அவர், அதற்கு முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3229. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தொழுகைக்காகக் காத்திருக்கும் நேரமெல்லாம் தொழுகையிலேயே அவர் இருக்கிறார். மேலும், அவர் தொழுகை முடிந்து எழாதிருக்கும் வரை அல்லது அவரின் உளூ முறியாமலிருக்கும் வரை, வானவர்கள்,இறைவா! இவரை மன்னித்து, இவருக்குக் கருணை புரிவாயாக!என்று பிரார்த்தனை செய்கிறார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3230. யஃலா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மிம்பரில் உரையாற்றியபடி,(நரகத்தின் பொறுப்பாளரான வானவர் மாலிக்கிடம்,)யா மாலிக் - மாலிக்கே!உங்களுடைய இறைவன் எங்களுக்கு (மரணத்தின் மூலமாவது) தீர்ப்பளிக்கட்டும் என்று (அந்தக் குற்றவாளிகள்) சப்தமிடுவார்கள் என்னும் (திருக்குர்ஆன் 43:77) இறைவசனத்தை ஓத கேட்டிருக்கிறேன்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்),அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் ஓதும் முறையில் ('யா மாலிக் என்பதற்கு பதிலாக)யா மாலி என்றுள்ளது' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 3231. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நான் நபி(ஸல்) அவர்களிடம்,(தாங்கள் காயமடைந்து) உஹுதுப் போரின் கால கட்டத்தை விடக் கொடுமையான கால கட்டம் எதையேனும் தாங்கள் சந்தித்துண்டா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நான் உன் சமுதாயத்தாரால் நிறையத் துன்பங்களைச் சந்தித்து விட்டேன். அவர்களால் நான் சந்தித்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானதுஅகபா (தாயிஃப்) உடைய நாளில் சந்தித்த துன்பமேயாகும். ஏனெனில், அன்று நான் என்னை ஏற்றுக் கொள்ளும்படி (தாயிஃப் நகரத் தலைவரான கினானா) இப்னு அப்தி யாலீல் இப்னி அப்தி குலால் என்பவருக்கு எடுத்துரைத்தேன். அவர் நான் விரும்பியபடி எனக்கு பதிலளிக்கவில்லை. எனவே, நான் கவலையுடன் எதிர்ப்பட்ட திசையில் நடந்தேன். கர்னுஸ் ஸஆலிப் என்னுமிடத்தை நான் அடையும் வரை நான் சுய உணர்வுக்கு வரவில்லை. அங்கு வந்து சேர்ந்தவுடன் என்

தலையை உயர்த்தினேன். அப்போது (அங்கே வானத்தில்) ஒரு மேகம் என் மீது நிழலிட்டுக் கொண்டிருந்தது. நான் கூர்ந்து கவனித்தபோது அதில் ஜிப்ரீல்(அலை) அவர்கள் இருந்தார்கள். அவர்கள் என்னை அழைத்து,உங்கள் சமுதாயத்தாரிடம் நீங்கள் சொன்னதையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் கேட்டான். அவர்களை நீங்கள் விரும்பியபடி தண்டிப்பதற்கு ஆணையிடுவதற்காக மலைகளுக்கான வானவரை அல்லாஹ் உங்களிடம் அனுப்பியுள்ளான்' என்று கூறினார்கள். உடனே, மலைகளை நிர்வம்க்கும் வானவர் என்னை அழைத்து,உங்கள் சமுதாயத்தாரிடம் நீங்கள் சொன்னதையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் கேட்டான். அவர்களை நீங்கள் விரும்பியபடி தண்டிப்பதற்கு ஆணையிடுவதற்காக மலைகளுக்கன வானவரை அல்லாஹ் உங்களிடம் அனுப்பியுள்ளான்' என்று கூறினார்கள். உடனே, மலைகளை நிர்வம்க்கும் வானவர் என்னை அழைத்து எனக்கு மீது கலாம் சொல்லி, பிறகு,முஹம்மதே! நீங்கள் விரும்பியபடி கட்டளையிடலாம். (இந்த நகரத்தின் இரண்டு மருங்கிலுமுள்ள) இந்த இரண்டு மலைகளையும் அவர்களின் மீது நான் புரட்டிப் போட்டு விட வேண்டுமென்று நீங்கள் விரும்பினாலும் (சரி, உங்கள் கட்டளைப்படி செயல்பட நான் தயாராக உள்ளேன்)' என்று கூறினார். உடனே,(வேண்டாம்) ஆயினும், இந்த (நகரத்து) மக்களின் சந்ததிகளில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் அவனை மட்டுமே வணங்குபவர்களை அல்லாஹ் உருவாக்குவான் என்று நம்புகிறேன் (எனவே, அவர்களை தண்டிக்க வேண்டாம்)' என்று சொன்னேன்.

ஹதீஸ் 3232. அபூ இஸ்ஹாக் அஷ் ஷைபானீ(ரஹ்) கூறினார்.

நான் ஸிர்ரு இப்னு ஹுபைஷ்(ரஹ்) அவர்களிடம்,(வஹீ - வேத வெளிப்பாடு நின்று போயிருந்த இடைப்பட்ட காலத்தில் வானவர் ஜிப்ரீல், நபி(ஸல்) அவர்களை நெருங்கி வர) அந்நெருககத்தின் அளவு (வளைந்த) வில்லின் இரண்டு முனைகளுக்கிடையிலுள்ள நெருக்கத்தை போல், அல்லது அதை விடச் சமீபமாக இருந்தது. பிறகு,அல்லாஹ் அவருக்கு (ஜிப்ரீலுக்கு) அறிவித்ததையெல்லாம் அவர் அவனுடைய அடியாருக்கு அறிவித்தார் என்னும் (திருக்குர்ஆன் 53:9,10) இறைவசனத்தைப் பற்றிக் கேட்டேன். அப்போது அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீலுக்கு அறுநூறு இறக்கைகள் இருக்க (அவரின் நிஜத் தோற்றத்தில்) அவரைக் கண்டார்கள்' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) எங்களிடம் தெரிவித்தார்கள் என்று விளக்கினார்கள்.

ஹதீஸ் 3233. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

'நிச்சயமாக, அவர் தம் இரட்சகனின் சான்றுகளில் பெரியதைக் கண்டார் என்னும் (திருக்குர்ஆன் 53:18) இறைவசனத்தின் பொருள்,நபி(ஸல்) அவர்கள் வானவர் ஜிப்ரீலை - அடிவானத்தை அடைத்துக் கொண்ட ஒரு பச்சை விரிப்பின் மீது (அல்லது அவர் தன்னுடைய இறக்கையை விரித்தபடி அதனால் அடிவானத்தை அடைத்து விரித்தபடி நிற்கக்) கண்டார்கள் என்பதாகும்.

ஹதீஸ் 3234. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

"முஹம்மத்(ஸல்) அவர்கள் தம் இறைவனை (நேரில்) பார்த்தார்கள்' என்று கூறுபவன் பெரிய தவறு புரிந்துவிட்டான்: எனினும், அவர்கள் ஜிப்ரீல்(அலை) அவர்களை, அவர்களின் (அசல்) உருவிலும் (அசல் படைப்பின்) அமைப்பிலும் வான விளிம்பு முழுவதையும் அடைத்தபடி (தோற்றமளிக்கக்) கண்டார்கள்.

ஹதீஸ் 3235. மஸ்ரூக்(ரலி) அறிவித்தார்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடமும்,அப்படியென்றால்,பிறகு அவர் (நம் தூதரின் பக்கம்) நெருங்கி, அருகே வந்தார். அந்நெருக்கத்தின் அளவு (வளைந்த) வில்லின் இரண்டு

முனைகளைப் போல் அல்லது அதைீ விடச் சமீபமாக இருந்தது என்னும் (திருக்குர்ஆன் 53:8,9) இறைவசனம் எங்கே?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அது (குர்ஆனில்அவர் நெருங்கி அருகே வந்தார்' என்பதில்அவர் என்பது) ஜிப்ரீல்(அலை) அவர்களைக் குறிக்கிறது. ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் ஒரு மனிதரின் உருவில் வருவார்கள் இந்த முறை அவர்கள் வந்தது அவர்களின் உண்மையான உருவம் எதுவோ அந்த உருவத்திலாகும். எனவேதான் அவர் அடிவானத்தையே அடைத்தார்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3236. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் இன்றிரவு இரண்டு பேர்களைக் (கனவில்) கண்டேன். அவர்கள் என்னிடம் வந்து கூறினார்கள்: (அந்த இருவர் சார்பாக அவர்களில் ஒருவரான ஜிப்ரீல் என்னிடம் சொன்னார்:)அதோ, அங்கே நெருப்பை மூட்டிக் கொண்டிருப்பவர் நரகத்தின் காவலரான (வானவர்) மாலிக் ஆவார். நான் ஜிப்ரீல் (என்னுடனிருக்கும்) இவர் மீக்காயீல் ஆவார்.

என சமுரா இப்னு ஜுன்தப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3237. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தன் மனைவியைப் படுக்கைக்கு அழைத்து, அவள் (அவருக்கு உடன்பட) மறுத்துவிட, அதன் விளைவாக அவர் இரவைக் கோபத்துடன் கழித்தாரென்றால் அவளை, காலை விடியும் வரை வானவர்கள் சபித்துக் கொண்டேயிருக்கின்றனர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3238. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"(வானவர் ஜிப்ரீல் அவர்கள் முதன் முதலாக ஹிரா குகையில் எனக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) கொண்டு வந்தார்.).. பிறகு சிறிது காலத்திற்கு (மூன்றாண்டுகளுக்கு) எனக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) வருவது நின்று போய்விட்டது. (அந்தக் கால கட்டத்தில் ஒரு முறை) நான் (பாதையில்) நடந்து சென்று கொண்டிருந்தபோது வானத்திலிருந்து ஒரு சப்தத்தைக் கேட்டேன். உடனே, என் பார்வையை வானத்தை நோக்கி உயர்த்தினேன். அங்கேஹிரா குகையில் என்னிடம் வந்த அதே வானவர் வானத்திற்கும் பூமிக்குமிடையே (இருந்த பிரமாண்டமான) ஒரு நாற்காலியில் அமர்ந்து கொண்டிருந்தார். அவரைக் கண்டு நான் பீதிக்குள்ளாம் விட்டேன். அதன் விளைவாக (மூர்ச்சையுற்றுத்) தரையில் விழுந்து விட்டேன். பிறகு, (மயக்கம் தெளிந்தவுடன்) என் வீட்டாரிடம் சென்று,எனக்குப் போர்த்துங்கள். எனக்குப் போர்த்துங்கள்' என்று (நடுக்கத்துடன்) கூறினேன். அவ்வாறே போர்வை போர்த்தப்பட்டது. அப்போது அல்லாஹு தஆலா,(போர்வை) போர்த்திக் கொண்டிருப்பவரே! எழுந்திருங்கள். பிறகு (அல்லாஹ்வின் தண்டனை குறித்து, மக்களை) அச்சுறுத்தி எச்சரியுங்கள். மேலும், உங்களுடைய இறைவனின் பெருமையை எடுத்துரையுங்கள். மேலும், உங்கள் ஆடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளுங்கள். மேலும், (சிலைகள் எனும்) அசுத்தத்தை வெறுத்து விடுங்கள் என்னும் (திருக்குர்ஆன் 74: 1-5) வசனங்களை அருளினான்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார். 41

ஹதீஸ் 3239. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (மிஅராஜ் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட இரவில் மூஸா அவாக்ளைஷனஆ குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று பழுப்பு (கோதுமை) நிறமுடைய உயரமான, சுருள் முடி கொண்ட மனிதராகக் கண்டேன். ஈசா அவர்களை நடுத்தர உயரமும் சிகப்பும் வெண்மையும்

சார்ந்த மிதமான சரும அமைப்பு கொண்டவர்களாகவும் (சுருள் சுருளாக இல்லாமல்) படிந்த, தொங்கலான தலைமுடியுடையவர்களாகவும் கண்டேன். நரகத்தின் காவலரான (வானவர்) மாலிக்கையும், (இறுதிக் காலத்தில் வரவிருக்கும் பெரும் பொய்யனான) தஜ்ஜாலையும் கண்டேன். இவையெல்லாம் அல்லாஹ் எனக்குக் காண்பித்த அவனுடைய சான்றுகளில் அடங்கியவை. நீங்கள் அவனை (தஜ்ஜாலை)ச சந்திக்கவிருப்பதில் சந்தேகம் ஏதும் கொள்ள வேண்டாம்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

“தஜ்ஜால் உள்ளே நுழைந்து விடாமல் மதீனா நகரத்தை வானவர்கள் காவல் காப்பார்கள்‘ என்று நபி(ஸல்) கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

## சொர்க்கம் குறித்த வர்ணனையும், அது படைக்கப்பட்டிருக்கிறது என்பதும்.

1. 02:25
2. 69:23
3. 76:14
4. 18:31
5. 76:18
6. 37:47
7. 56:19
8. 78:33
9. 78:34
10. 83:25
11. 83:26
12. 83:27
13. 55:66
14. 56:15
15. 56: 37
16. 56:89
17. 56:89
18. 56:31
19. 56:34
20. 56:25
21. 55:48
22. 55:54
23. 55:64

ஹதீஸ் 3240. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் இறந்துவிட்டால் (மறுமை வாழ்வில்) அவரின் இருப்பிடம் (எதுவென்று) காலையிலும், மாலையிலும் அவருக்கு எடுத்துக் காட்டப்படும். அதாவது, அவர் சொர்க்கவாசியாக இருந்தால், சொர்க்கவாசிகளின் இருப்பிடமும், அவர் நரகவாசியாக இருந்தால், நரகவாசியின் இருப்பிடமும் (எடுத்துக் காட்டப்படும்)

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3241. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (மிஅராஜ் - விண்ணுலகப் பயணத்தின் போது) சொர்க்கத்தை எட்டிப் பார்த்தேன். அங்கு குடியிருப்போரில் அதிகமானவர்களாக ஏழைகளையே கண்டேன். நரகத்தையும் எட்டிப் பார்த்தேன். அதில் குடியிருப்போரில் அதிகமானவர்களாக பெண்களைக் கண்டேன்.

என இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3242. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்து கொண்டிருந்தபோது அவர்கள்,நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என்னை சொர்க்கத்தில் கண்டேன். அப்போது (அங்கிருந்த) அரண்மனை ஒன்றின் பக்கத்தில் ஒரு பெண் (உலகில் இறைவணக்கம் புரிபவளாய் இருந்து வந்ததைக் குறிக்கும் வகையில் தன் அழகையும் பொலிவையும் இன்னும் அதிகரித்துக் கொள்ளவும்) உளூச் செய்து கொண்டிருந்தாள். நான்,இந்த அரண்மனை யாருடையது? என்று (ஜிப்ரீலிடம்) கேட்டேன்.உமர் இப்னு கத்தாப் அவர்களின்து' என்று (ஜிப்ரீல் அவர்களும் மற்றும் அங்கிருந்த வானவர்களும்) பதிலளித்தார்கள். அப்போது எனக்கு உமரின் ரோஷம் நினைவுக்கு வந்தது. உடனே, அங்கிருந்து திரும்பிச் சென்று விட்டேன்' என்று கூறினார்கள். இதைக் கேட்ட உமர்(ரலி) அழுதார்கள். பிறகு,இறைத்தூதர் அவர்களே! தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன்? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 3243. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(சொர்க்கத்திலுள்ள) கூடாரம் என்பது நடுவில் துளையுள்ள ஒரு முத்தாகும். அது வானத்தில் முப்பது மைல் தொலைவுக்கு உயர்ந்திருக்கும். அதன் ஒவ்வொரு மூலையிலும் இறைநம்பிக்கையாளனுக்குத் துணைவியர் இருப்பர். அவர்களை மற்றவர்கள் பார்க்க முடியாது.

என (அபூ மூஸா) அப்துல்லாஹ் இப்னு கைஸ் அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

(மற்றோர் அறிவிப்பின்படி) அறிவிப்பாளர் அபூ இம்ரான்(ரஹ்),அறுபது மைல்' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3244. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் (கற்பனையிலும்) உதித்திராத இன்பங்களை என் நல்லடியார்களுக்காக நான் (சொர்க்கத்தில்) தயார்படுத்தி வைத்துள்ளேன்' என்று அல்லாஹ் கூறினான். நீங்கள் விரும்பினால்,மனிதர்கள் எவரும் தமக்காக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண் குளிர்ச்சி (தரும் சொர்க்கத்து இன்பங்)களை அறிய மாட்டார்கள் என்னும் (திருக்குர்ஆன் 32:17) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3245. இறைத்தூதர்(ஸல்) அவர்கள கூறினார்கள்:

சொர்க்கத்தில் முதலாவதாக நுழைகிற அணியினரின் தோற்றம் பௌர்ணமி இரவில் சந்திரனின் தோற்றத்தைப் போல் (பிரகாசமாக) இருக்கும். சொர்க்கத்தில் அவர்கள் எச்சில் துப்பவும் மாட்டார்கள் மல(ஜல)ம் கழிக்கவும் மாட்டார்கள். அங்கு அவர்களின் பாத்திரங்கள் தங்கத்தாலானவையாக இருக்கும். அவர்களின் (தலை வாரும்) சீப்புகள் தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆனவையாய் இருக்கும். (அவர்கள் நறுமண ஆவி பிடிப்பதற்காக வைத்திருக்கும்) அவர்களின் தூப கலசங்கள் அகில் கட்டைகளால் எரிக்கப்படும். (அங்கே) அவர்களின் வியர்வை (நறுமணம் வீசுவதில்) கஸ்தூரியாக இருக்கும். அவர்களில் ஒவ்வொருவருக்கும் துணைவியர் இருவர் இருப்பர். அவ்விருவருடைய கால்களின் எலும்பு மஜ்ஜை (காலின் அபரிமிதமான) அழகின் காரணத்தால் வெளியே தெரியும். (சொர்க்கவாசிகளின் முதல் அணியினரான) அவர்களுக்கிடையே மனவேறுபாடோ, பரஸ்பர வெறுப்புணர்வோ இருக்காது. அவர்களின் உள்ளங்கள் அனைத்தும் ஒன்றாகவே இருக்கும். அவர்கள் அல்லாஹ்வின் தூய்மையைக் காலையும் மாலையும் எடுத்துரைத்துக் கொண்டேயிருப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3246. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் நுழைகிற முதல் அணியினர் பௌர்ணமி இரவின் (ஒளிரும்) சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். அவர்களுக்குப் பின்னே வருபவர்கள் பேரொளி வீசும் நட்சத்திரத்தைப் போன்றிருப்பார்கள். அவர்களின் எந்த மன வேறுபகுதி இருக்காது எந்த விதக் குரோதமும் இருக்காது. அவர்களில் ஒவ்வொருவருக்கும் இரண்டு மனைவிமார்கள் இருப்பார்கள். அவர்களில் ஒவ்வொருத்தியுடைய காலின் எலும்பு மஜ்ஜையும் அவளுடைய (கால்) சதைக்கு அப்பாலிருந்து (அவளுடைய பேரழகின் காரணத்தால்) வெளியே தெரியும். அவர்கள் காலையும் மாலையும் அல்லாஹ்வின் தூய்மையை எடுத்துரைத்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் நோயுற மாட்டார்கள். அவர்களுக்கு மூக்குச் சளியோ, எச்சிலோ வராது. அவர்களின் பாத்திரங்கள் தங்கத்தாலும், வெள்ளியாலும் ஆனவை. அவர்களின் சீப்புகள் தங்கத்தால் ஆனவை. அவர்களின் தூப கலசங்களின் எரிபொருள் அம்லாக இருக்கும். அவர்களின் வியர்வை (நறுமணத்தில்) கஸ்தூரியாக இருக்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3247. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாரிலிருந்து எழுபதாயிரம் பேர்... அல்லது எழு நூறாயிரம் பேர்.. (விசாரணையின்றி சொர்க்கத்தில்) நுழைவார்கள்: அவர்களில் கடைசி நபர் (சொர்க்கம்) புகாத வரை அவர்களில் முதல் நபர் (சொர்க்கம்) புக மாட்டார். அவர்களின் முகங்கள் பௌர்ணமி இரவில் (பிரகாசிக்கும்) முழு நிலவைப் போலிருக்கும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3248. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்குப் பட்டு அங்கி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அவர்கள் பட்டை (அணியக் கூடாது என்று) தடை செய்து வந்தார்கள். மக்களோ, அந்த அங்கி(யின் தரத்தை மற்றும் மென்மை)யைக் கண்டு வியந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (என் தோழர்) ஸஅத் இப்னு முஆதுக்கு சொர்க்கத்தில் கிடைக்கவிருக்கும் கைக் குட்டைகள் (தரத்திலும் மென்மையிலும்) இதைவிட உயர்ந்தவை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3249. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் பட்டுத் துணி ஒன்று கொண்டு வரப்பட்டது. மக்கள் அதன் தரத்தையும் மென்மையையும் பார்த்து வியப்படையலானார்கள். (இதைக் கண்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,ஸஅத் இப்னு முஆத் அவர்களுக்கு சொர்க்கத்தில் கிடைக்கவிருக்கும் கைக்குட்டைகள் இதைவிடச் சிறந்தவை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3250. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் ஒரு சாட்டை வைக்கும் அளவு இடம் (கிடைப்பது) உலகத்தையும் அதிலிருப்பவற்றையும் விடச் சிறந்ததாகும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3251. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் ஒரு மரம் இருக்கிறது. அதன் நிழலில் (மிக வேகமாகப்) பயணிப்பவர் (அதில்) நூறாண்டுகள் (பயணித்தபடி) சென்று கொண்டேயிருப்பார். ஆனால், அவரால் அதைக் கடக்க முடியாது.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3252. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் ஒரு மரம் இருக்கிறது. அதன் நிழலில் (மிக வேகமாகப்) பயணிப்பவர், (அதில்) நூறாண்டுகள் சென்று கொண்டேயிருப்பார். (ஆயினும், அது முடிவடையாமல் நீண்டு கொண்டே செல்லும்.) நீங்கள் விரும்பினால்,(சொர்க்கவாசிகள்) நீண்ட நிழலில் இருப்பார்கள்' என்னும் (திருக்குர்ஆன் 56:30) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3253. உங்களில் ஒருவருக்கு சொர்க்கத்தில் ஒரு வில்லின் அளவிற்கு இடம் கிடைப்பது சூரியன் எந்த அளவு நிலப் பரப்பின் மீது உதிக்கிறதோ, எந்த அளவு நிலப் பரப்பிலிருந்து மறைகிறதோ அந்த அளவு நிலப்பரப்பை விடச் சிறந்ததாகும்.

ஹதீஸ் 3254. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் முதலாவதாக நுழையும் அணியினர் பௌர்ணமி இரவின் சந்திரனைப் போன்று தோற்றமளிப்பார்கள். (அடுத்து) அவர்களின் சுவடுகளைப் பின்தொடர்ந்து சொர்க்கத்தினுள் நுழைபவர்கள், வானத்தில் நன்கு ஒளி வீசிப் பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று (பிரகாசமாகவும் அழகாகவும்) இருப்பார்கள். அவர்களின் உள்ளங்கள் ஒரே மனிதரின் உள்ளத்தைப் போன்றிருக்கும். அவர்களுக்கிடையே பரஸ்பர வெறுப்போ, பொறாமையோ இருக்காது. ஒவ்வொரு மனிதருக்கும்ஹூருல் ஈன் எனப்படும் அகன்ற (மான் போன்ற) விழிகளையுடைய மங்கையரிலிருந்து இரண்டு மனைவிமார்கள் இருப்பார்கள். அவர்களின் கால்களின் எலும்பு மஜ்ஜைகள் (காலின்) எலும்புக்கும் சதைக்கும் அப்பாலிருந்து வெளியே தெரியும்.

ஹதீஸ் 3255. பராஉ (ரலி) அறிவித்தார்.

(தம் மகன்) இப்ராஹீம்(அலை) அவர்கள் மரணமடைந்த பொழுது நபி(ஸல்) அவர்கள்,பாலூட்டும் செவிலி ஒருத்தி சொர்க்கத்தில் இவருக்குக் கிடைப்பாள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3256. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

“சொர்க்கவாசிகள் தங்களுக்கு மேலேயுள்ள சிறப்பு அறைகளில் வசிப்பவர்களை, அடிவானில் கிழக்கிலிருந்தோ மேற்கிலிருந்தோ பயணிக்கிற ஒளியுமிழும் நட்சத்திரத்தைப் பார்ப்பதைப் போன்று (ஆர்வத்துடன்) பார்ப்பார்கள். (அந்தஸ்தில்) தமக்கும் அவர்களுக்குமிடையேயுள்ள ஏற்றத் தாழ்வைக் கண்டு (ஏக்கம் கொண்டே) அப்படிப் பார்ப்பார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (இதைக் கேட்ட) நபித் தோழர்கள்,இறைத்தூதர் அவர்களே! அவை நபிமார்கள் தங்குமிடங்கள் தாமே? அவற்றை மற்றவர்கள் அடைய முடியாதல்லவா? என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள்,இல்லை. என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீதாணையாக! அ(ங்கே தங்குப)வர்கள் அல்லாஹ்வின் மீது (உறுதியான) நம்பிக்கை கொண்டு இறைத் தூதர்களை உண்மையாளர்கள் என ஏற்றவர்களேயாவர்‘ என பதிலளித்தார்கள்.

## சொர்க்கத்தின் வாசல்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“

இறைவழியில் இரண்டு ஜோடி (பொருள்)களைச் செலவழித்தவர் சொர்க்கத்தின் வாசலிலிருந்து அழைக்கப்படுவார்.

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து உபாதா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3257. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் எட்டு வாசல்கள் உள்ளன. அதில்ரய்யான் என்றழைக்கப்படும் வாசலொன்று உள்ளது. அதில் நோன்பாளிகளைத் தவிர வேறெவரும் நுழைய மாட்டார்கள்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

## நரகம் குறித்த வர்ணணையும் அது படைக்கப்பட்டிருக்கிறது என்பதும்.

பார்க்க இறைவசனங்கள்:

1. 78:25
2. 69:3
3. 17:68
4. 14:16
5. 14:17
6. 14: 97
7. 54:71
8. 54:73
9. 54:37
10. 54:23
11. 54:67
12. 11:106
13. 19:59
14. 19:86
15. 40:72

16. 40:55

17. 40:35

18. 3:181

19. 55:19

ஹதீஸ் 3258. அபூ தர்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் பயணத்தில் இருந்தார்கள். அப்போது (முஅத்தின் லுஹர் தொழுகைக்காக பாங்கு சொல்ல முறபட்ட போது),வெப்பம் தணியட்டும். பிறகு, தொழலாம்' என்று அவர்கள் கூறினார்கள். மீண்டும்,வெப்பம் தணியட்டும்' என்று - சிறு குன்றுகளின் நிழல் நீண்டு விழும் வரை - கூறினார்கள். பிறகு,தொழுகையை வெப்பம் தணிந்த பின் தொழுங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம் நரக நெருப்பின் பெருமூச்சின் காரணமாகவே உண்டாகிறது' என்றார்கள்.

ஹதீஸ் 3259. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகையை வெப்பம் தணிந்த பின் தொழுங்கள். ஏனெனில், கடுமையான வெப்பம், நரக நெருப்பின் பெருமூச்சின் காரணமாகவே உண்டாகிறது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3260. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நரகம் தன் இறைவனிடம்,என் இறைவா! என்னுடைய ஒரு பகுதி மறு பகுதியைத் தின்கிறதே' என்று முறையிட்டது. எனவே, அல்லாஹ் அதற்கு (ஓய்வு தரும் வகையில்) ஒரு மூச்சு குளிர்காலத்திலும் மற்றொரு மூச்சு கோடைக் காலத்திலுமாக இரண்டு மூச்சுகள்விட்டுக் கொள்ள அனுமதியளித்தான். அவை தாம் நீங்கள் கோடைக் காலத்தில் அனுபவிக்கும் கடுமையான வெப்பமும் குளிர்காலத்தில் அனுபவிக்கும் கடுங்குளிரும் ஆகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3261. அபூ ஜம்ரா அள்ளுபயீ(ரஹ்) அறிவித்தார்.

நான் (மார்க்க அறிவு பெறுவதற்காக) மக்காவில் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் அமர்வது வழக்கம். (ஒரு முறை) என்னைக் காய்ச்சல் பீடித்தது. அப்போது, இப்னு அப்பாஸ்(ரலி) சொன்னார்கள். ஸம்ஸம் தண்ணீரைப் பயன்படுத்தி உன் காய்ச்சலைத் தணித்துக் கொள் ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,இந்தக் காய்ச்சல் நரகத்தின் பெருமூச்சினால் தான் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரைக் கொண்டு தணித்துக் கொள்ளுங்கள்.. (அறிவிப்பாளர் ஹமமாம்(ரஹ்) சந்தேகத்துடன் கூறுகிறார்கள்:)... அல்லது ஸம்ஸம் தண்ணீரைக் கொண்டு தணித்துக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3262. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

காய்ச்சல், நரகத்தின் கடுமையான வெப்பத்தால் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரால் தணித்துக் கொள்ளுங்கள்.

என ரா∴பிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3263. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

காய்ச்சல் நரகத்தின் பெருமூச்சினால் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரால் தணித்துக் கொள்ளுங்கள்.

என ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3264. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

காய்ச்சல் நரகத்தின் பெருமூச்சினால் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரால் தணித்துக் கொள்ளுங்கள்.

என இப்னு உமர் (ரலி) அவர் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3265. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், உங்கள் (உலக) நெருப்பு, நரக நெருப்பின் எழுபது பாகங்களிலிருந்து ஒரு பாகமேயாகும்‘ என்று கூறினார்கள். உடனே, இறைத்தூதர் அவர்களே! இந்த (உலக) நெருப்பே (பாவம் செய்தவர்களை எரித்து வேதனைப்படுத்தப்) போதுமான தாயிற்றே‘ என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், (அப்படியல்ல.) உலக நெருப்பை விட நரக நெருப்பு அறுபத்தொன்பது பாகங்கள் அதிகப்படுத்தப்பட்டுள்ளது. இவற்றில் ஒவ்வொரு பாகமும் உலக நெருப்பின் வெப்பத்திற்குச் சமமானதாகும்‘ என்றார்கள்.

ஹதீஸ் 3266. யஃலா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மிம்பரின் மீது நின்ற வண்ணம், (குற்றவாளிகள் நரகத்தின் காவலரை நோக்கி) யா மாலிக் - (‘மாலிக்கே!‘) என்று அழைப்பார்கள்‘ என்னும் (திருக்குர்ஆன் 43:77ம்) இறைவசனத்தை ஓதுவதை கேட்டிருக்கிறேன்.

ஹதீஸ் 3267. அபூ வாயில் (ரஹ்) அறிவித்தார்.

உஸாமா இப்னு ஸைத் (ரலி) அவர்களிடம், நீங்கள் இன்னாரிடம் (உஸ்மான் (ரலி) அவர்களிடம்) வந்து பேசியிருக்கக் கூடாதா? (அவர்கள் உங்களுக்கு நெருக்கமானவர்கள் ஆயிற்றே!)‘ என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், நான் உங்கள் எதிரில் உங்களக்குக் கேட்கும்படி (பொதுவான விஷயங்களை)யே தவிர அவர்களிடம் பேசுவதில்லை என்பதை நீங்கள் பார்க்கவே செய்கிறீர்கள். நான் அவர்களிடம் (அரசியல் குழப்பம் குறித்துப் பேசுவதாயிருந்தால் கலகத்திற்குக்) கதவைத் திறந்து விடாமல் இருப்பதற்காக இரகசியமாகவே பேசுகிறேன். (ஏனெனில், குழப்பத்தின்) கதவைத் திறந்த முதல் ஆள் நானாக இருக்க விரும்பவில்லை. மேலும், ஒருவர் எனக்குத் தலைவராக (ஆணையிடும் அதிகாரத்தில்) இருப்பதானால் அவரை மக்களில் சிறந்தவர் என்று நான் சொல்ல மாட்டேன். (அதுவும்) அல்லாஹ்வின் தூதரிடமிருந்து ஒரு விஷயத்தை நான் செவியுற்ற பிறகு (அப்படி) ஒருபோதும் நான் சொல்ல மாட்டேன்‘ என்று கூறினார்கள். மக்கள், நபி (ஸல்) அவர்கள் என்ன சொல்லக் கேட்டீர்கள்? என்று வினவினார்கள். அதற்கு அவர்கள், நான் நபி (ஸல்) அவர்கள் இப்படிச் சொல்லக் கேட்டேன்‘ என்றார்கள்.

மறுமை நாளில் ஒருவர் கொண்டு வரப்பட்டு நரகத்தில் போடப்படுவார். அப்போது அவரின் குடல்கள் வேகமாக நரகத்தில் வந்து விழும். கழுதை செக்கைச் சுற்றி வருவதைப் போல் அவர் சுற்றி வருவார். அப்போது நரகவாசிகள் அவரைச் சுற்றி ஒன்று கூடி, இன்னாரே! உமக்கேன் இந்த நிலை? நீர் (உலக வாழ்வின் போது) நற்செயல் புரியும்படி எங்களுக்குக் கட்டளையிட்டு, தீமை புரிய வேண்டாமென்று எங்களைத் தடுக்க வில்லையா? என்று கேட்பார்கள். அதற்கு அவர், நற்செயல் புரியும்படி உங்களுக்கு நான் கட்டளையிட்டேன் ஆனால், அந்த நற்செயலை நான் செய்யவில்லை. தீமை புரிய வேண்டாமென்று உங்களை நான் தடுத்து வந்தேன் ஆனால், அந்தத் தீமையை நானே செய்து வந்தேன்‘ என்று கூறுவார்.

இந்த நபிமொழி மற்றொரு வழியாகவும் அறிவிக்கப்படுகிறது.

## இப்லீஸும் அவனுடைய சேனைகளும்.

பார்க்க இறைவசனங்கள்.

1. 02:34
2. 18:50
3. 34:53
4. 37:9
5. 4:117
6. 7:18
7. 17:62
8. 17:64
9. 37:51

ஹதீஸ் 3268. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் வைக்கப்பட்டது. எந்த அளவிற்கென்றால் அவர்கள் ஒரு செயலைச் செய்யாமலிருக்க, அதைச் செய்தது போன்று அவர்களுக்கு பிரமை~ட்டப்பட்டது. இறுதியில் ஒரு நாள், அவர்கள் பிரார்த்தனை செய்த வண்ணமிருந்தார்கள். பிறகு சொன்னார்கள்என் (மீது செய்யப்பட்டுள்ள சூனியத்திற்கான) நிவாரணம் எதில் உள்ளதோ அதை எனக்கு அல்லாஹ் அறிவித்துவிட்டதை நீ அறிவாயாக? என்னிடம் (கனவில்) இரண்டு பேர் (இரண்டு வானவர்களான ஜிப்ரீலும், மீக்காயிலும்) வந்தனர். அவர்களில் ஒருவர் (ஜிப்ரீல்) என் தலைமாட்டில் அமர்ந்தார். மற்றொருவர் (மீக்காயில்) என்னுடைய கால்மாட்டில் அமர்ந்தார். ஒருவர் மற்றொருவரிடம் (மீகாயில் ஜிப்ரீலிடம்), இந்த மனிதரைப் பீடித்துள்ள நோய் என்ன? என்று கேட்டார். மற்றொருவர் (ஜிப்ரீல்), இவருக்கு சூனியம் வைக்கப்பட்டுள்ளது' என்று பதிலளித்தார். அதற்கு அவர், இவருக்கு சூனியம் வைத்தது யார்? என்று கேட்க, (ஜிப்ரீல்) அவர்கள், லபீத் இப்னு அ.:ஸம் (என்னும் யூதன்)' என்று பதிலளித்தார். (அவன் சூனியம் வைத்தது) எதில்? என்று அவர் (மீக்காயில்) கேட்க அதற்கு, சீப்பிலும், (இவரின்) முடியிலும், ஆண் (பேரீச்சம்) பாளையின் உறையிலும்' என்று (ஜிப்ரீல்) பதிலளித்தார். அதற்கு அவர், அது எங்கே இருக்கிறது' என்று கேட்க, (பனு ஸுரைக் குலத்தாரின் தோட்டத்திலுள்ள) தர்வான் எனும் கிணற்றில்' என்று பதிலளித்தார்கள்.

(இதைச் சொல்லி முடித்த) பிறகு, நபி (ஸல்) அவர்கள் அந்தக் கிணற்றை நோக்கிப் புறப்பட்டார்கள் பிறகு திரும்பி வந்தார்கள். திரும்பி வந்தபோது என்னிடம், அந்தக் கிணற்றிலிருக்கும் பேரீச்ச மரங்கள் ஷைத்தான்களின் தலைகளைப் போல் உள்ளன' என்று கூறினார்கள். நான், அதைத் தாங்கள் வெளியே எடுத்தீர்களா' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், இல்லை. என்னை அல்லாஹ் குணப்படுத்திவிட்டான். (அதை வெளியே எடுத்தால்) அது மக்களிடையே (சூனியக் கலை பரவக் காரணமாம்) குழப்பத்தைக் கிளப்பி விடும் என்று நான் அஞ்சினேன்' என்று பதிலளித்தார்கள். பிறகு, அந்தக் கிணறு தூர்க்கப்பட்டுவிட்டது. 64

ஹதீஸ் 3269. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் உறங்கிக் கொண்டிருக்கும்போது உங்கள் தலையின் பின்பக்கத்தில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போட்டு விடுகிறான். ஒவ்வொரு முடிச்சிலும், இன்னும் உனக்கு நீண்ட இரவு (ஓய்வெடுப்பதற்காக எஞ்சி) இருக்கிறது. எனவே, நீ தூங்கிக் கொண்டேயிரு என்ற போதித்து (அவனை விழிக்க விடாமல் உறங்க வைத்து) விடுகிறான். அவர் (அவனுடைய போதனையைக்

கேட்காமல் அதிகாலையில்) கண் விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் ஒரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது. அவர் உளூச் செய்தால் மற்றொரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது. அவர் (தஹஜ்ஜுத் அல்லது ஃபஜ்ர்) தொழுதுவிட்டால் முடிச்சுகள் முழுவதுமாக அவிழ்ந்து விடுகிறது. அவர் சுறுசுறுப்புடனும் உற்சாகமான மனநிலையுடனும் காலைப் பொழுதை அடைவார். இல்லையென்றால் மந்தமான மனநிலையுடனும் சோம்பலுடனும் காலைப் பொழுதை அடைவார்.

ஹதீஸ் 3270. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் காலை விடியும் வரை (தொழுகைக்கும் எழுந்திருக்காமல்) இரவில் தூங்கிய ஒரு மனிதரைப் பற்றிக் கூறப்பட்டது. அதற்கு அவர்கள், அந்த மனிதரின் இரண்டு காதுகளிலும் - அல்லது அவரின் காதில் - ஷைத்தான் சிறுநீர் கழித்துவிட்டான்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3271. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தன் வீட்டாரிடம் (உடலுறவு கொள்ள) வந்து, பிஸ்மில்லாஹ் - அல்லாஹ்வின் திருப்பெயரால் - இறைவா! ஷைத்தானை எங்களிடமிருந்து விலகியிருக்கச் செய். எங்களுக்கு நீ அளிக்கும் சந்ததிகளிடமிருந்தும் ஷைத்தானை விலகியிருக்கச் செய்‘ என்று பிரார்த்தனை புரிந்து, பிறகு அவர்களுக்குச் சந்ததி அளிக்கப்பட்டால் அந்தச் சந்ததிக்கு ஷைத்தான் தீங்கு செய்யமாட்டான்.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3272. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

சூரியனின் தலைப்பகுதி உதயமாம்விட்டால் அது முழுமையாக வெளிப்படும் வரை தொழுகையைவிட்டு விடுங்கள். சூரியனின் தலைப் பகுதி மறைந்துவிட்டால் அது (முழுமையாக) மறைந்து விடும் வரை தொழுகையைவிட்டு விடுங்கள்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3273. நபி (ஸல்) அவர்கள் தொடர்ந்து கூறினார்கள்:

மேலும், சூரியன் உதிக்கிற நேரத்திலும் அது மறைகிற நேரத்திலும் தொழாதீர்கள். ஏனெனில் அது, ஷைத்தானின் இரண்டு கொம்புகளுக்கிடையே உதிக்கிறது.

ஹதீஸ் 3274. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் தொழுது கொண்டிருக்கும்போது உங்கள் முன்னால் எவராவது நடந்து செல்ல முனைந்தால் அவரைத் தடுங்கள். அவர் (விலம்க் கொள்ள) மறுத்தால் அப்போதும் அவரைத் தடுங்கள். அவர் (மீண்டும் விலக) மறுத்தால் அப்போது அவருடன் சண்டையி(ட்டுத் த)டுங்கள். ஏனெனில், அவன்தான் ஷைத்தான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3275. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ரமளானுடைய ஸகாத் பொருளைப் பாதுகாத்திடும் பொறுப்பை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் ஒப்படைத்தார்கள். அப்போது (இரவில்) ஒருவன் வந்து அந்த (ஸகாத்) உணவுப் பொருளை அள்ளலானான். உடனே, நான் அவனைப் பிடித்துக் கொண்டேன்உன்னை அல்லாஹ்வின் தூதரிடம் இழுத்துச் சென்று முறையிடுவேன்‘ என்று கூறினேன். (அறிவிப்பாளர் முழு நிகழ்ச்சியையும் விபரமாகச் சொல்கிறார்..) இறுதியில் அவன், நீங்கள் படுக்கைக்குச் செல்லும்போது ஆயத்துல் குர்ஸீயை ஓதுங்கள். (அவ்வாறு ஓதினால்) உங்களுடன்

பாதுகாவலர் (வானவர்) ஒருவர் இருந்து கொண்டேயிருப்பார். காலை நேரம் வரும் வரை ஷைத்தான் உங்களை நெருங்க மாட்டான்‘ என்று என்னிடம் சொன்னான். (இதை நபி(ஸல்) அவர்களிடம் சொன்னபோது,)அவன் பொய்யனாயிருந்தும், உங்களிடம் உண்மை பேசியுள்ளான். அவன் ஷைத்தான் தான்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3276. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவரிடம் (அவர் மனத்திற்குள்) ஷைத்தான் வந்து,இதைப் படைத்தவர் யார்? இதைப் படைத்தவர் யார்? என்று கேட்டுக் கொண்டே வந்து, இறுதியில்,உன் இறைவனைப் படைத்தவர் யார்? என்று கேட்கிறான். இந்தக் (கேள்வி கேட்கும்) கட்டத்தை அவன் அடையும்போது அவர் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடட்டும். (இத்தகைய சிந்தனையிலிருந்து) விலம்க் கொள்ளட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3277. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ரமளான் மாதம் வந்துவிட்டால் சொர்க்கத்தின் கதவுகள் திறக்கப்படுகின்றன. நகரத்தின் கதவுகள் மூடப்பட்டு விடுகின்றன. ஷைத்தான்களுக்கு விலங்கிடப்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3278. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூஸா(அலை) அவர்க்ள தம் பணியாளரிடம் (~ஷஉபின் நூன் (அலை) அவர்களிடம்)நம்முடைய சிற்றுண்டியைக் கொண்டு வா‘ என்று கூறினார்கள். அதற்கு அவர்,பார்த்தீர்களா? நாம் அந்தப் பாறையின் அருகில் தங்கியிருந்தபோது நான் மீனை மறந்தே போய் விட்டேன். அதை ஷைத்தான் தான் எனக்கு மறந்து போகச் செய்துவிட்டான்‘ (திருக்குர்ஆன் 18:62, 63) என்று கூறினார். அல்லாஹ் கட்டளையிட்ட (இரண்டு நதிகள் சங்கமிக்கும்) இடத்தைக் கடக்கிற வரை மூஸா(அலை) அவர்கள் களைப்பை உணரவில்லை.

என உபை இப்னு கஅப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3279. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கிழக்குத் திசையை நோக்கி சைகை காட்டியபடி,குழப்பம் இங்கு தான். குழப்பம் இங்கு தான். ஷைத்தானின் கொம்பு உதயமாகும். இடத்திலிருந்து... (அது தோன்றும்)‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3280. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“இரவின் இருள் படரத் தொடங்கிவிட்டால் உங்கள் குழந்தைகளை (வெளியே திரிய விடாமல்) தடுத்து விடுங்கள். ஏனெனில், ஷைத்தான்கள் அப்போதுதான் (பூமியெங்கும்) பரவி விடுகின்றன. இரவு வேளையில் சிறிது நேரம் கழிந்துவிட்டால் அவர்களை (வெளியே செல்ல)விட்டு விடுங்கள். மேலும், (இரவு நேரத்தில்) உன் கதவை மூடி விடு. (அப்போது) அல்லாஹ்வின் பெயரைச் சொல். (உறங்கச் செல்கையில்) உன்னுடைய விளக்கை அணைத்து விடு. (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல். உன் தண்ணீர்ப் பையைச் சுருக்கிட்டு மூடி விடு. (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல். உன்னுடைய பாத்திரத்தை மூடி வை. (அதை முழுவதும் மூட இயலாவிட்டாலும்) அதன் மீது எதையாவது குறுக்காக வைத்தேனும் மூடி விடு. (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல்.

என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3281. ஸஃபிய்யா பின்த்து ஹுயை(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தங்கி) இஃதிகாஃப் இருந்தார்கள். ஓர் இரவில் அவர்களைச் சந்திப்பதற்காக அவர்களிடம் நான் சென்றேன். நான் அவர்களிடம் (சிறிது நேரம்) பேசிவிட்டு திரும்பிச் செல்ல எழுந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்களும் என்னைத் திருப்பியனுப்புவதற்காக என்னுடன் வந்தார்கள். -உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களின் வீடே அவர்களின் இருப்பிடமாக இருந்தது. (என அறிவிப்பாளர் கூறுகிறார்.) அப்போது அன்சாரிகளில் இருவர்77 அந்த வழியாகச் சென்றார்கள். அவர்கள் நபி(ஸல்) அவர்களைக் கண்டவுடன் விரைந்து நடக்கலானார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள்,நிதானமாகச் செல்லுங்கள். இவர் (என் மனைவி) ஸஃபிய்யா பின்த்து ஹுயை தான்' என்றார்கள். இதைக் கேட்ட அவ்விருவரும்,அல்லாஹ் தூயவன் இறைத்தூதர் அவர்களே! (தங்களையா நாங்கள் சந்தேம்ப்போம்?)' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்,ஷைத்தான் மனிதனின் இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் தீய எண்ணம் எதையேனும் போட்டு விடுவான்.. அல்லது உங்கள் உள்ளங்களில் (சந்தேகம்) எதையாவது அவன் போட்டு விடுவான்... என்று நான் அஞ்சினேன்' என்றார்கள்.

ஹதீஸ் 3282. சுலைமான் இப்னு சுரத்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்து கொண்டிருந்தேன். அப்போது இரண்டு மனிதர்கள் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவரின் முகம் (கோபத்தால்) சிவந்துவிட்டது. அவரின் தொண்டை நரம்பு புடைத்தது. உடனே, நபி(ஸல்) அவர்கள்,எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை இவர் சொல்வாராயின் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய் விடும்,ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் நான் பாதுகாப்புக் போருகிறேன்' என்று இவர் பிரார்த்தித்தால் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய் விடும்' என்று கூறினார்கள். எனவே, மக்கள் அந்த மனிதரிடம்,நபி(ஸல்) அவர்கள்,ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரு' என்று கூறினார்கள்' எனத் தெரிவித்தார்கள் அதற்கு அவர்,எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா? என்று கேட்டார்.

ஹதீஸ் 3283. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தன் மனைவியிடம் (உடலுறவு கொள்ளச்) செல்லும்போதுஇறைவா! ஷைத்தானை என்னிடமிருந்து விலகியிருக்கச் செய். எனக்கு நீ அளிக்கிற குழந்தைகளிடமிருந்தும் ஷைத்தானை விலகியிருக்கச் செய் என்று பிரார்த்தித்தால் அவர்கள் இருவருக்கும் குழந்தை பிறக்குமாயின் அக்குழந்தைக்கு ஷைத்தான் தீங்கிழைக்க முடியாது. மேலும், அதன் மீது ஷைத்தானுக்கு ஆதிக்கம் வழங்கப்படாது.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

வேறொரு வழியாகவும் இதே போன்ற நபிமொழி அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3284. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு தொழுகையைத் தொழுதார்கள். பிறகு,ஷைத்தான் எனக்கு முன்னால் வந்து என் தொழுகையைத் துண்டிக்கக் கடுமையாக முயன்றான். ஆனால், அவனை நான் வெற்றி கொள்ளும்படி அல்லாஹ் செய்துவிட்டான்' என்று கூறினார்கள்.

தொடர்ந்து முழு ஹதீஸையும் அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3285. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொழுகைக்காக (பாங்கு சொல்லி) அழைக்கப்படும்போது ஷைத்தான் சத்தத்துடன் காற்றைவிட்டுக் கொண்டு திரும்பி ஓடி விடுகிறான். பாங்கு சொல்லி முடித்து விடும்போது திரும்பி வருகிறான். தொழுகைக்கு இகாமத் சொல்லப்பட்டால் திரும்பி ஓடி விடுகிறான். இகாமத் சொல்லி முடித்து விடும்போது திரும்பி வருகிறான். (தொழுகையில் ஈடுபட்டுள்ள) மனிதனின் உள்ளத்தில் ஊடுருவி ஊசலாட்டத்தை ஏற்படுத்தி, இப்படி இப்படியெல்லாம் நினைத்துப் பார்' என்று கூறுகிறான். (அதன் விளைவாக) தொழுகையாளிக்கு நாம் மூன்று ரக்அத்துகள் தொழுதோமா, நான்கு ரக்அத்துகள் தொழுதோமா என்று தெரியாமல் போய் விடுகிறது. மூன்று ரக்அத்துக்கள் தொழுதோமா, நான்கு ரக்அத்துக்கள் தொழுதோமா என்று தொழுகையாளிக்குத் தெரியாமல் போய்விட்டால் அவர் (மறதிக்குப் பரிகாரமாக) சஹ்வுடைய இரண்டு சஜ்தாக்கள் செய்ய வேண்டும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3286. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதமின் மகன் (மனிதன்) ஒவ்வொருவனும் பிறக்கும்போது, அவனுடைய இரண்டு (விலாப்) பக்கங்களிலும் ஷைத்தான் தன் இரண்டு விரல்களால் குத்துகிறான் மர்யமின் குமாரர் ஈஸாவைத் தவிர (அவர் பிறந்தபோது அவரை விலாப் பக்கம்) குத்துச் சென்றான். ஆனால், அவரைச் சுற்றியிருந்த மெல்லிய சவ்வைத் தான் குத்தினான். (அதுதான் அவனால் முடிந்தது.)

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3287. அல்கமா இப்னு கைஸ் (ரலி) அறிவித்தார்.

நான் ஷாம் நாட்டிற்குச் சென்றேன். அங்கிருந்த மக்கள், அபுத் தர்தா (ரலி), (இங்கு) வந்து, அல்லாஹ் தன் தூதரின் நாவினால் ஷைத்தானிடமிருந்து எவரைக் காப்பாற்றினானோ அவர் உங்களிடையே இருக்கிறாரா? என்று கேட்டார்' எனச் சொன்னார்கள்.

முகீரா இப்னு மிக்ஸம் (ரலி), அல்லாஹ் தன் தூதரின் நாவினால் ஷைத்தானிடமிருந்து எவரைக் காப்பாற்றினானோ அவர்' என்று அபுத் தர்தா (ரலி) குறிப்பிட்டது அம்மார் இப்னு யாஸிர் (ரலி) அவர்களைத் தான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3288. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

வானவர்கள் மேகங்களுக்கிடையே (சஞ்சரித்த வண்ணம்) பூமியில் நடைபெறவிருக்கும் நிகழ்ச்சிகளைக் குறித்துப் பேசிக் கொள்கிறார்கள். அப்போது ஷைத்தான்கள் (வானவர்களுடைய) வாக்கை (ஒட்டுக்) கேட்கின்றன. பின்னர், (பாட்டிலைக் கவிழ்த்து தோல் பையின் வாயில் வைத்து நீரை ஊற்றும் போது) பாட்டில் (அதில்) பொருத்தப்படுவதைப் போன்று சோதிடனின் காதில் தன் வாயை வைத்து (தாம் ஒட்டுக் கேட்டவற்றை இரகசியமாகக்) கூறி விடுகின்றனர். (இனி நடைபெறவிருக்கும் ஒரு விஷயத்தை சோதிடர்கள் தெரிந்து கொண்டு) அதனுடன் நூறு பொய்களை (புனைந்து) சேர்த்து விடுகிறார்கள்.

என ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3289. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

கொட்டாவி ஷைத்தானிடமிருந்து வருவதாகும். உங்களில் எவரேனும் கொட்டாவிவிட்டால் தம்மால் முடிந்த வரை அதை அடக்கிக் கொள்ளட்டும். ஏனெனில், எவரேனும் ஹா என்று (கொட்டாவியால்) சத்தம் போட்டால் ஷைத்தான் சிரிக்கிறான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3290. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போர் நடந்தபோது இணைவைப்பவர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். உடனே, இப்லீஸ், அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் பாருங்கள்' என்று கத்தினான். முஸ்லிம்களில் முன்னணிப் படையினர் திரும்பிச் சென்று தம் பின்னணிப் படையினருடன் போரிட்டார்கள். அப்போது அங்கு தமக்கருகேயிருந்த தம் தந்தை யமான் (ரலி) (முன்னணிப் படையினரிடம்) சிக்கியதை ஹுதைஃபா (ரலி) பார்த்துவிட்டு, அல்லாஹ்வின் அடியார்களே! இது என் தந்தை! இது என் தந்தை! என்று (உரக்கக்) கூறினார்கள். ஆனால், அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் அவரைவிட்டு வைக்கவில்லை. இறுதியில் அவரை (தாக்கிக்) கொன்றுவிட்டார்கள். ஹுதைஃபா (ரலி), அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக! என்று கூறினார்கள்.

“ஹுதைஃபா (ரலி) மன்னித்ததால் (அவர்களின் வாழ்க்கையில்) அவர்கள் இறக்கும் வரை நல்ல பலன் இருந்து கொண்டேயிருந்தது' என்று உர்வா (ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 3291 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் தொழுகையில் ஒருவர் திரும்பிப் பார்ப்பது குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், அது (திரும்பிப் பார்க்கும் அந்த நேரம்) உங்கள் தொகையிலிருந்து ஷைத்தான் திருட்டுத்தனமாகப் பறித்துக் கொள்வதாகும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3292. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும் கெட்ட (அச்சுறுத்தும்) கனவுகள் ஷைத்தானிடமிருந்து வருவனவாகும். உங்களில் எவரேனும் அச்சுறுத்தும் தீய கனவைக் கண்டால் அவர் தன் இடப் பக்கத்தில் எச்சில் துப்பட்டும் அல்லாஹ்விடம் அக்கனவின் தீங்கிலிருந்து பாதுகாப்புக் கோரட்டும். ஏனெனில், (இப்படிச் செய்தால்) அது அவருக்குத் தீங்கு செய்ய முடியாது.

என கதாதா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3293. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாரும் இல்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழ் அனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றிற்கும் வலிமையுடையவன் - லாஇலாஹ இல்லல்லாஹ், வஹ்தஹு லாஷரீக்க லஹு, லஹுல், முல்க்கு வ லஹுல், ஹம்து, வ ஹுவ அலா குல்லி ஷய்இன் கதீர் என்று ஒரு நாளில் நூறு முறை சொல்கிறவருக்கு, அது பத்து அடிமைகளை விடுதலை செய்வதற்குச் சமமா (க நற்பலன் பெற்றுக் கொடுப்பதா) கும். மேலும், அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படும். அவரின் கணக்கிலிருந்து (அவர் புரிந்த) நூறு தீமைகள் அழிக்கப்படும். மேலும், அவரின் அந்த நாளில் மாலை நேரம் வரும் வரை ஷைத்தானிடமிருந்து (பாதுகாக்கும்) அரணாக அது அவருக்கிருக்கும். மேலும், அவர் புரிந்த சிறந்த நற்செயலை எவரும் செய்ய முடியாது ஒருவர் இதை விட அதிகமாக (முறை இதை ஓதினால் அல்லது மிக முக்கியமான) ஒரு நற்செயல் புரிந்தாலே தவிர.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3294. ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதரிடம் (அவர்களின் மனைவிமார்களான) குறைஷிப் பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண்கள் நபி (ஸல்) அவர்களிடம் (ஜீவனாம்சத்

தொகையை) அதிகமாகத் தரும்படி தம் குரல்களை உயர்த்தி கேட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது உமர்(ரலி) வந்து (உள்ளே வர) அனுமதி கேட்டார்கள். உமர்(ரலி) அனுமதி கேட்டபோது அப்பெண்கள் அவரச அவசரமாகத் தங்கள் பர்தாக்களை அணிந்தபடி எழுந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிரித்தபடியே உமர்(ரலி) அவர்களுக்கு (உள்ளே வர) அனுமதி கொடுத்தார்கள். உமர்(ரலி), இறைத்தூதர் அவர்களே! தங்களை ஆயுள் முழுதும் அல்லாஹ் சிரித்தபடி (மகிழ்ச்சியாக) இருக்கச் செய்வானாக‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், என்னிடமிருந்த இந்தப் பெண்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். (என்னிடம் சகஜமாக அமர்ந்திருந்தவர்கள்) உங்கள் குரலைக் கேட்டவுடன் அவரச அவசரமாகப் பர்தா அணிந்தார்களே‘ என்றார்கள். உமர்(ரலி), எனக்கு அஞ்சுவதை விட அதிகமாக அஞ்சத் தாங்கள் தாம் தகுதியுடையவர்கள் இறைத்தூதர் அவர்களே! என்று கூறிவிட்டு, (அப்பெண்களை நோக்கி) தமக்குத் தாமே பகைவர்களாகி விட்ட பெண்களே! அல்லாஹ்வின் தூதருக்கு அஞ்சாமல் எனக்காக நீங்கள் அஞ்சுகிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பெண்கள், ஆம், அல்லாஹ்வின் தூதருடன் ஒப்பிடும்போது நீங்கள் கடின சித்தமுடையவராகவும் அதிகக் கடுமை காட்டக் கூடியவராகவும் இருக்கிறீர்கள்‘ என்று பதிலளித்தார்கள். (அப்போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (உமரே!) நீங்கள் ஒரு பாதையில் சென்று கொண்டிருக்கையில் உங்களை ஷைத்தான் கண்டால் உங்களுடைய பாதையல்லாத வேறொரு பாதையில் தான் அவன் செல்வான்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3295. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நீங்கள் தூக்கத்திலிருந்து எழுந்து உளூச் செய்தால் மூன்று முறை (நீர் செலுத்தி) நன்கு மூக்கைச் சிந்தி (தூய்மைப்படுத்தி)க் கொள்ளுங்கள். ஏனெனில், நீங்கள் (தூங்கும் போது) மூக்கின் உட்பகுதிக்குள் ஷைத்தான் தங்கியிருக்கிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ‘ஜின்‘கள் பற்றியும், அவர்களுக்கு கிடைக்கும் நன்மை மற்றும் தண்டனை பற்றியும்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

காண்க இறைவசனங்கள்:

1. 6:130
2. 7:27
3. 72:3
4. 37:158
5. 36:75

ஹதீஸ் 3296. அபூ ஸஃஸஆ அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) என்னிடம்,ஆட்டையும் பாலைவனத்தையும் விரும்புபவராக உங்களை காண்கிறேன். நீங்கள் ஆட்டை மேய்த்துக் கொண்டோ, பாலைவனத்திலோ இருக்க (தொழுகை நேரம் வந்து) நீங்கள் தொழுகைக்காக அழைப்புக் கொடுப்பீர்களாயின் உங்கள் குரலை உயர்த்தி அழையுங்கள். ஏனெனில், தொழுகைக்காக அழைப்பவரின் குரல் ஒலிக்கும் தொலைவு நெடுகவுள்ள ஜின்களும், மனிதர்களும், பிற பொருள்களும் அதைக் கேட்டு அவருக்காக மறுமை

நாளில் சாட்சி சொல்கின்றன' என்று கூறிவிட்டு, இதை நான் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து கேட்டேன்' என்றார்கள்.

## (திருக்குர்ஆன் 46:29-32)

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) நினைவு கூருங்கள். ஒரு முறை நாம் ஜின்களின் ஒரு குழுவினரை உங்கள் பக்கம் கொண்டு வந்தோம் அவை குர்ஆனைச் செவியுற வேண்டும் என்பதற்காக. (நீங்கள் குர்ஆனை ஓதிக் கொண்டிருந்த) அந்த இடத்திற்கு அவை வந்து சேர்ந்தபோது தங்களுக்குள் மௌனமாய் இருங்கள்' என்று அவை பேசிக் கொண்டன. பின்னர் அது ஓதி முடிக்கப்பட்டபோது அந்த ஜின்கள் தம் கூட்டத்தாரிடம் எச்சரிக்கை செய்யக் கூடியவர்களாய் திரும்பிச் சென்று, எங்கள் சமூகத்தாரே! நாங்கள் மூஸாவுக்குப் பிறகு அருளப்பட்டுள்ள ஒரு வேதத்தைச் செவியுற்றோம். அது தனக்கு முன்பு வந்திருந்த வேதங்களை மெய்ப்படுத்தக் கூடியதாக இருக்கிறது. சத்தியத்தின் பக்கமும் நேரிய மார்க்கத்தின் பக்கமும் அது வழி காட்டுகிறது. எங்கள் சமூகத்தாரே! அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவரின் அழைப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். மேலும், அவரின் மீது நம்பிக்கை கொள்ளுங்கள். அல்லாஹ் உங்கள் பாவங்களை மன்னிப்பான். மேலும், துன்புறுத்தும் வேதனையிலிருந்து உங்களைப் பாதுகாப்பான். யார் அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவரின் சொல்லை ஏற்றுக் கொள்ளவில்லையோ அவர் பூமியில் (அல்லாஹ்வைத்) தோற்கடிக்க எந்த வலிமையும் பெற்றிருக்க வில்லை. அல்லாஹ்விடமிருந்து அவரைப் பாதுகாக்கும் எந்த ஆதரவாளரும் அவருக்கு இல்லை. இப்படிப்பட்டவர்கள் பம்ரங்கமான வழிகேட்டில் கிடக்கிறார்கள். (திருக்குர்ஆன் 46:29-32)

## (திருக்குர்ஆன் 02:164, 11:56, 67:19)

அல்லாஹ் கூறினான்:

மேலும், அதில் எல்லாவிதமான உயிரினங்களையும் பரவச் செய்தியிருப்பதிலும் (இறைவன் ஒருவனே என்பதற்கான சான்று உள்ளது.) (திருக்குர்ஆன் 02:164)

எந்த உயிரினமாயினும் அதன் குடுமி அவனுடைய பிடியிலேயே உள்ளது. (திருக்குர்ஆன் 11:56)

தங்களுக்கு மேலே சிறகடித்துப் பறந்து செல்லும் பறவைகளை இவர்கள் பார்க்கவில்லையா? அவற்றை (விழாமல்) தடுத்து வைத்திருப்பவன் கருணை மிக்க இறைவனைத் தவிர வேறெவருமில்லை. (திருக்குர்ஆன் 67:19)

மேலும் காண்க: 31:10, 42:29

ஹதீஸ் 3297. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மிம்பரின் மீதிருந்து உரையாற்றியபடி, பாம்புகளைக் கொல்லுங்கள். முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் கொண்ட ('துத் துஃப்யத்தைன் என்னும்) பாம்பையும் குட்டையான - அல்லது - சிதைந்த வால் கொண்ட ('அப்தர் எனும்) பாம்பையும் கொல்லுங்கள். ஏனெனில், அவையிரண்டும் (கண்) பார்வையை அவித்து விடும் கருவைக் கலைத்து விடும்' என்று சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 3298. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான் (ஒரு முறை) ஒரு பாம்பைக் கொல்வதற்காக விரட்டிச் சென்று கொண்டிருந்தபோது அபூ லுபாபா(ரலி) என்னைக் கூப்பிட்டு அதைக் கொல்லாதீர்கள்' என்றார்கள். நான்,

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பாம்புகளைக் கொல்லும்படி உத்திரவிட்டுள்ளார்கள்' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், (ஆமாம், உண்மை தான்.) ஆனால், அதன் பிறகு வீடுகளில் வசிக்கும் பாம்புகளை (பார்த்த உடனே) கொல்லவேண்டாமென்று அவர்கள் தடுத்தார்கள். அவை வீட்டில் வசிக்கும் ஜின்களாகும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3299. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

...அப்போது (நான் பாம்பைக் கொல்ல அதை விரட்டிச் சென்ற போது) என்னை அபூ லுபாபா(ரலி) அவர்களும் ஸைத் இப்னு கத்தாப்(ரலி) அவர்களும் பார்த்தார்கள்.

## முஸ்லிமின் செல்வத்தில் சிறந்தது அவன் மலைகளின் உச்சிக்கு ஓட்டிச் செல்கிற ஆடு தான்.

ஹதீஸ் 3300. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(விரைவில்) மனிதன் தன் மார்க்கத்தை (குழப்பங்களின் வடிவில் வரும்) சோதனைகளிலிருந்து காப்பாற்றிக் கொள்வதற்காக மலைகளின் உச்சிக்கும், மழைத்துளிகள் விழும் (கணவாய்கள், பள்ளத்தாக்குகள் போன்ற) இடங்களுக்கும் தன் ஆடுகளை (தன்னுடன்) ஓட்டிக் கொண்டு விரண்டோடுவான். (அப்போது) அந்த ஆடுகள் தான் (அவனுடைய) செல்வங்களில் சிறந்ததாக இருக்கும்.

என அபூ சயித் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3301. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைமறுப்பின் தலைமைப் பீடம் கிழக்குத் திசையில் (நெருப்பை வணங்கும் மஜூஸிகள் வசிக்கும் பாரசீகத்தில்) உள்ளது. குதிரைகள் மற்றும் ஒட்டகங்களின் உரிமையாளர்களிடமும் (நாடோடிப்) பாலைவனவாசிகளான ஒட்டக மேய்ப்பர்(களிடமும் பண்ணை முதலாளி)களிடமும் தற்பெருமையும் அகம்பாவமும் காணப்படுகின்றன. ஆடுகளின் உரிமையாளர்களிடம் (அடக்கமும் கம்பீரமும் கலந்த) அமைதி காணப்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3302. உக்பா இப்னு அம்ர் அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் கரத்தால் யமன் நாட்டுத் திசையை நோக்கி சைகை காட்டி, இறை நம்பிக்கை, அதோ அங்கேயிருக்கும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். அறிந்து கொள்ளுங்கள். கல் மனமும் (இரக்கமற்ற) கடின சுபாவமும் ஒட்டகங்களின் வால்களைப் பிடித்தபடி அவற்றை அதட்டிக் கொண்டே (நாடோடிகளாகச்) சென்று கொண்டிருக்கும் (பாலைவன) ஒட்டக மேய்ப்பர்களிடையே காணப்படும். அங்கிருந்து தான் ஷைத்தானின் இரண்டு கொம்புகளும் உதயமாகும். குழப்பங்கள் தலை தூக்கும். (அதாவது) ரபீஆ மற்றும் முளர் குலத்தினரிடையே அவை தோன்றும்' என்றார்கள்.

ஹதீஸ் 3303. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் சேவல்கள் கூவுகிற சத்தத்தைக் கேட்டால் அல்லாஹ்விடம் அவனுடைய அருளைக் கேளுங்கள்: ஏனெனில், அவை வானவரைப் பார்த்திருக்கின்றன. (எனவேதான் கூவுகின்றன.) கழுதை கத்தும் சத்தத்தை நீங்கள் கேட்டால் ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். ஏனெனில், அது ஷைத்தானைப் பார்த்திருக்கிறது. (எனவேதான் கத்துகிறது.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3304. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவின் முற்பகுதி வந்துவிட்டால் அல்லது நீங்கள் மாலை நேரத்தை அடைந்தால் உங்கள் குழந்தைகளை (வெளியே அனுப்பாமல்) தடுத்து விடுங்கள். ஏனெனில், அப்போது ஷைத்தான்கள் (வெளியே) பரவுகின்றன. இரவில் சிறிது நேரம் கழிந்துவிட்டால் அவர்களை (சுதந்திரமாக வெளியே செல்ல)விட்டு விடுங்கள். மேலும், (இரவு நேரத்தில்) கதவுகளைப் பூட்டி விடுங்கள். அப்போது, அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள், ஏனெனில், ஷைத்தான் மூடப்பட்ட கதவைத் திறக்க மாட்டான்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் இப்னு ஜுரைஜ்(ரஹ்) கூறினார்:

அதாவு(ரஹ்) எனக்கு அறிவித்ததைப் போன்ற இதே நபிமொழியை ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடமிருந்து கேட்டதாக அம்ர் இப்னு தீனார்(ரஹ்) எனக்கு அறிவித்தார்கள். ஆனால், அவர்கள்அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள் என்னும் வாக்கியத்தை மட்டும் (தம் அறிவிப்பில்) சொல்லவில்லை.

ஹதீஸ் 3305. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

பனுஇஸ்ராயீல்களில் ஒரு குழுவினர் காணாமல் போய்விட்டார்கள். அவர்கள் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை. நான் அவர்களை எலிகளாக (உருமாற்றப்பட்டுவிட்டதாக)வே கருதுகிறேன். அவற்றுக்கு (முன்னால்) ஒட்டகத்தின் பால் வைக்கப்பட்டால் அவை (அதைக்) குடிப்பதில்லை. அவற்றுக்கு (முன்பாக) ஆடுகளின் பால் வைக்கப்பட்டால் அவை (அதைக் குடித்து விடும்' என்று நபி(ஸல்) அவர்கள் அவர்கள் சொன்னார்கள்.

இதை நான் கஅபுல் அஹ்பார்(ரலி) அவர்களுக்கு அறிவித்தேன். உடனே அவர்கள், நபி(ஸல்) அவர்கள் இதைச் சொல்ல நீங்கள் கேட்டீர்களா? என்று வினவினார்கள். நான், ஆம் (கேட்டேன்)' என்றேன். அவர்கள் (திரும்பத் திரும்பப்) பலமுறை அதே போன்று கேட்டார்கள். நான் தவ்ராத்தையா ஓதுகிறேன்? (அதிலிருந்து சொல்வதற்கு?)' என்று கேட்டேன்.

ஹதீஸ் 3306. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், பல்லி தீங்கிழைக்கக் கூடியது' என்றார்கள். அதைக் கொல்லும்படி அவர்கள் உத்தரவிட்டு நான் செவியுற்றதில்லை. நபி(ஸல்) அவர்கள் பல்லியைக் கொல்லும்படி உத்தரவிட்டதாக ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) கருதிக் கொண்டிருக்கிறார்கள்.

ஹதீஸ் 3307. ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பல்லிகளைக் கொல்லும் படி தமக்கு உத்தரவிட்டதாக உம்மு ஷரீக்(ரலி) என்னிடம் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 3308. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் கொண்ட (துத்துஃப்யத்தைன் என்னும்) பாம்பைக் கொல்லுங்கள். ஏனெனில், அது (கண்) பார்வையை அவித்துவிடும் கர்ப்பத்தைக் கலைத்துவிடும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹம்மாத் இப்னு ஸலமா(ரஹ்) இதையே உஸாமா(ரஹ்) வழியாக அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3309. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் குட்டையான (அல்லது சிதைந்த) வால் கொண்ட (அப்தர் எனும்) பாம்பைக் கொல்லும் படி உத்தரவிட்டார்கள். மேலும், அது கண் பார்வையைப் போக்கி விடும் கருவைச் சிதைந்து போகச் செய்து விடும்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3310. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) பாம்புகளைக் கொன்று வந்தார்கள். பிறகு (அவற்றைக் கொல்வதைத்) தடை செய்தார்கள். (அதற்கு விளக்கம் கூறும் வகையில்) அவர்கள் சொன்னார்கள்: நபி(ஸல்) அவர்கள் தங்களின் (வீட்டுச்) சுவர் ஒன்றை இடித்தார்கள். பாம்புச் சட்டையொன்றை அதில் கண்டார்கள். உடனே, அந்தப் பாம்பு எங்கேயிருக்கிறது என்று பாருங்கள்‘ என்று உத்தரவிட்டார்கள். மக்கள் (தேடிப் பார்த்து அதைக்) கண்டு பிடித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், அதைக் கொன்று விடுங்கள்‘ என்றார்கள். எனவேதான் நான் அவற்றைக் கொன்று வந்தேன்.

ஹதீஸ் 3311. (இந்த நிலையில்) அபூ லுபாபா(ரலி) அவர்களை சந்தித்தேன். அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் மெல்லிய வெண்ணிறப் பாம்புகளைக் கொல்லாதீர்கள். 103 குட்டையான (அல்லது சிதைந்த) வால் கொண்ட, முதுகில் இரண்டு வெள்ளை நிறக் கோடுகள் கொண்ட பாம்புகளைத் தவிர. ஏனெனில், அவை (கருவிலுள்ள) குழந்தையைச் சிதைத்துவிடும் பார்வையைப் போக்கிவிடும். எனவே, அவற்றைக் கொன்றுவிடுங்கள் எனக் கூறினார்கள் என எனக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3312. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்.

இப்னு உமர்(ரலி) பாம்புகளைக் கொன்று வந்தார்கள்.

ஹதீஸ் 3313. அப்போது அபூ லுபாபா(ரலி) இப்னு உமர்(ரலி) அவர்களிடம், நபி(ஸல்) அவர்கள் வீடுகளில் வசிக்கும் (மெல்லிய, வெண்ணிறப்) பாம்புகளைக் கொல்வதைத் தடை செய்தார்கள்‘ என்று தெரிவித்தார்கள். எனவே, இப்னு உமர்(ரலி) அவற்றைக் கொல்வதை நிறுத்திவிட்டார்கள்.

பகுதி 16

## “உங்களில் எவருடைய பானத்திலாவது ஈ விழுந்துவிட்டால் அதை அவர் (அதிலேயே) அமிழ்த்தட்டும். ஏனெனில், அதன் இரண்டு இறக்கைகளில் ஒன்றில் நோயும் மற்றொன்றில் நிவாரணமும் உள்ளது‘ என்னும் நபிமொழியும்,ஐந்து பிராணிகள் தீங்கிழைக்கக் கூடியவை. அவற்றை ஹரமிலும் கொல்லலாம்‘ என்னும் நபிமொழியும்.

ஹதீஸ் 3314. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தீங்கிழைக்கக் கூடிய ஐந்து (பிராணிகள்) எத்தகையவையெனில் அவற்றை ஹராம் எனும் புனித எல்லைக்குள் கொன்றாலும் குற்றம் ஏதுமில்லை. எலி, தேள், பருந்து, காக்கை, வெறி, நாய் ஆகியன தாம் அவை.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3315. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஐந்து பிராணிகள் எத்தகையவையெனில் அவற்றை இஹ்ராம் அணிந்த நிலையில் ஒருவர் கொன்றுவிட்டாலும் அவர்மீது குற்றமெதுவும் இல்லை. தேள், எலி, வெறி நாய், காக்கை, பருந்து ஆகியன தாம் அவை.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3316. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மாலை வேளையில் (இரவு தொடங்கும்போது) பாத்திரங்களை மூடி வையுங்கள். தண்ணீர்ப் பைகளை (சுருக்குப் போட்டு) முடிந்து வையுங்கள். கதவுகளைத் தாழிட்டு விடுங்கள். உங்கள் குழந்தைகளை (வெளியே செல்லவிடாமல் அணைத்துப்) பிடித்து வைத்துக் கொள்ளுங்கள். ஏனெனில், (அந்நேரத்தில்) ஜின்கள் பூமியில் பரவி (பொருள்களையும், குழந்தைகளையும்) பறித்துச் சென்று விடும். மேலும், தூங்கும்போது விளக்குகளை அணைத்து விடுங்கள். ஏனெனில், தீங்கிழைக்கக் கூடிய (எலியான)து (விளக்கின்) திரியை (வாயால் கவ்வி) இழுத்துச் சென்று வீட்டிலிருப்பவர்களை எரித்து விடக் கூடும்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

-ஜின்கள் பூமியில் பரவி... என்பதற்குபதில்... ஷைத்தான்கள் பூமியில் பரவி என்று மற்றோர் அறிவிப்பில் காணப்படுகிறது.

ஹதீஸ் 3317. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஒரு முறை) அல்லாஹ்வின் தூதருடன் (மினாவில்) ஒரு குகையில் (தங்கி) இருந்தோம். அப்போது,தொடர்ந்து அனுப்பப்படும் காற்றுகளின் மீது சத்தியமாக! என்னும் அத்தியாயம் (77) அருளப்பட்டது. அதை நாங்கள் நபி(ஸல்) அவர்களின் (திரு) வாயிலிருந்து (அவர்கள் ஓதக்) கேட்டுக் கொண்டிருந்தோம். அப்போது பாம்பு ஒன்று, தன் புற்றிலிருந்து வெளிப்பட்டது. நாங்கள் அதைக் கொல்ல விரைந்தோம. அது எங்களை முந்திக் கொண்டு தன் புற்றுக்குள் நுழைந்துவிட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,நீங்கள் அதன் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டதைக் போல் அதுவும் உங்கள் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டுவிட்டது‘ என்றார்கள்.

வேறொரு வழியாகவும் இதே போன்று அறிவிக்கப்பட்டுள்ளது. அதில், அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி),நாங்கள் அந்த அத்தியாயத்தை நபி(ஸல்) அவர்களின் (திரு) வாயிலிருந்து புத்தம் புதியதாகக் கேட்டுக் கொண்டிருந்தோம்‘ என்று கூறினார்கள்.

இதை அறிவிப்பாளர் இஸ்ராயீல்(ரஹ்) அவர்களைப் போன்றே அபூ அவானா(ரஹ்) அவர்களும் முகீரா இப்னு மிக்ஸம்(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவித்திருக்கிறார்கள்.

ஹதீஸ் 3318. நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஒருபெண், பூனையொன்றைக் கட்டி வைத்தாள். அதற்கு அவள் தீனி போடவுமில்லை பூமியிலுள்ள புழு பூச்சிகளைத் தின்று (பிழைத்துக் கொள்ளட்டும் என்று அதை அவிழ்த்து) விடவுமில்லை. அதன் காரணத்தால் அவள் நரகம் புகுந்தாள்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுரைரா(ரலி) வழியாகவும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இவ்வாறே அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3319. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைத் தூதர்களில் ஒருவர் ஒரு (பயணத்தில்) மரத்தின் கீழே தங்கினார். அவரை எறும்பு ஒன்று கடித்துவிட்டது. உடனே, அவர் தம் (பயண) மூட்டை முடிச்சுகளை அப்புறப்படுத்தும்படி உத்தரவிட்டார். அவ்வாறே அவை மரத்தின் கீழிருந்து அப்புறப்படுத்தப்பட்டன. பிறகு எறும்புப் புற்றை எரிக்கும்படி உத்தரவிட்டார். அவ்வாறே அது தீயிட்டு எரிக்கப்பட்டது. அப்போது

அல்லாஹ் அவருக்கு,உங்களைக் கடித்தது ஒரேயொர் எறும்பல்லவா? (அதற்காக ஓர் எறும்பு கூட்டத்தையே எரிக்கலாமா?)' என்று வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அறிவித்(து அவரைக் கண்டித்)தான்.

"உங்களில் எவருடைய பானத்திலாவது ஈ விழுந்துவிட்டால் அதை அவர் (அதிலேயே) அமிழ்த்தட்டும். ஏனெனில், அதன் இரண்டு இறக்கைகளில் ஒன்றில் நோயும் மற்றொன்றில் நிவாரணமும் உள்ளது' (என்னும் நபிமொழி.)

ஹதீஸ் 3320. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் எவருடைய பானத்திலாவது ஈ விழுந்துவிட்டால் (முதலில்) அதை அவர் (அதிலேயே) அமிழ்த்தட்டும் பிறகு அதை வெளியே எடுத்துப் போட்டு விடட்டும். ஏனெனில், அதன் இரண்டு இறக்கைகளில் ஒன்றில் நோயும் மற்றொன்றில் நிவாரணமும் இருக்கிறது. என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3321. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரியான ஒரு பெண், ஒரு கிணற்றின் விளிம்பில் தன்னுடைய நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்த ஒரு நாயைக் கடந்து சென்றாள். அந்த நாயைத் தாகம் சாகடிக்கவிருந்தது. அதைக் கண்ட அப்பெண் உடனே தன் காலுறையைக் கழற்றி அதைத் தன் முந்தானையில் கட்டி (கிணற்று) நீரை இறைத்து அதற்குக் கொடுத்தாள். எனவே, அது பிழைத்தது. அவள் ஓர் உயிருக்குக் காட்டிய இந்தக் கருணையினால் அவளுக்கு (பாவ) மன்னிப்பு வழங்கப்பட்டது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3322. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாயோ உருவப் படமோ உள்ள வீட்டில் (இறைவனின் கருணையைக் கொணரும்) வானவர்கள் நுழைய மாட்டார்கள். என அபூ தல்ஹா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3323. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்லும்படி உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 3324. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாய் வைத்திருப்பவரின் நற்செயலி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் ஒருகீராத் அளவு குறைந்து விடுகிறது் விவசாயப் பண்ணையைப் பாதுகாக்கும் நாயையும், கால்நடைகளைப் பாதுகாக்கும் நாயையும் தவிர. என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3325. சாயிப் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்.

"விவசாய நிலத்தைப் பாதுகாக்கவோ அல்லது கால்நடைகளைப் பாதுகாக்கவோ அல்லாமல் (தேவையின்றி) நாய் வைத்திருப்பவரின் நற்செயலி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு கீராத் அளவிற்கு குறைந்து விடுகிறது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என சுஃப்யான் இப்னு அபீ ஸுஹைர்(ரலி) சொல்ல கேட்டேன். உடனே, நான் அவர்களிடம்,இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் இதைக் கேட்டீர்களா? என்று வினவினேன். அதற்கு அவர்கள்,ஆம் இந்த கிப்லா(இறை)யில்லம் கஅபா)வின் அதிபதியின் மீது சத்தியமாக!என்று பதிலளித்தார்கள்.

## மூன்றாம் பாகம் முற்றியது

# பாகம் 4

## அத்தியாயம் 60 நபிமார்களின் செய்திகள்

### ஆதம் (அலை) அவர்களையும், அவர்களின் சந்ததிகளையும் படைத்தது.

அல்லாஹ் கூறினான்: அந்த நேரத்தை நினைவு கூரும். உங்களுடைய இறைவன் வானவர்களிடம், நான் ஒரு பிரதிநிதியை (கலீஃபாவை) பூமியில் ஏற்படுத்தப்போகிறேன்' என்று கூறினான். அப்போது அவர்கள், பூமியில் அதன் ஒழுங்கமைப்பைச் சீர்குலைத்து, இரத்தம் சிந்தக் கூடியவரையா அதில் (பிரதிநிதியாக) நீ ஏற்படுத்தப்போகிறாய்? நாங்கள் தாம் உன்னைப் புகழ்ந்து துதித்து உன் தூய்மையைப் போற்றிக் கொண்டிருக்கிறோமே' என்று கேட்டார்கள். அதற்கு இறைவன், நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நிச்சயம் அறிவேன்' என்று பதிலளித்தான். (அல் குர்ஆன் 02:30)

ஹதீஸ் 3326 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதம் (அலை) அவர்களை (களி மண்ணிலிருந்து) படைத்தான். அப்போது அவர்களின் உயரம் அறுபது முழங்களாக இருந்தது. பிறகு, நீங்கள் சென்று அந்த வானவர்களுக்கு ஸலாம் (முகமன்) கூறுங்கள். அவர்கள் உங்களுக்குக் கூறும் (பதில்) வாழ்த்தைக் கேட்டுக் கொள்ளுங்கள். அதுதான் உங்கள் முகமனும் உங்கள் சந்ததிகளின் முகமனும் ஆகும்' என்று சொன்னான். அவ்வாறே ஆதம் (அலை) அவர்கள் (வானவர்களிடம் சென்று), அஸ்ஸலாமு அலைக்கும் - உங்களின் மீது சாந்தி பொழியட்டும்' என்று கூறினார்கள். அதற்கு வானவர்கள், உங்களின் மீதும் சாந்தியும் கருணையும் பொழியட்டும்' என்று பதில் கூறினார்கள். இறைவனின் கருணையும் (உங்களின் மீது பொழியட்டும்) என்னும் சொற்களை வானவர்கள் (தங்கள் பதில் முகமனில்) அதிகப்படியாக கூறினார்கள்.

எனவே, (மறுமையில்) சொர்க்கத்தில் நுழைபவர்கள் ஒவ்வொருவரும் ஆதம் (அலை) அவர்களின் உருவத்தில் தான் நுழைவார்கள். ஆதம் (அலை) அவர்களின் காலத்திலிருந்து இன்று வரை (மனிதப் படைப்புகள்) (உருவத்திலும், அழகிலும்) குறைந்து கொண்டே வருகின்றன' என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3327 சொர்க்கத்தில் நுழையும் முதல் அணியினர் பௌர்ணமி இரவில் (ஒளிவீசும்) சந்திரனைப் போன்று (பிரகாசமாகவும் அழகாகவும்) தோற்றமளிப்பார்கள். பிறகு, அவர்களுக்கு அடுத்து வருபவர்கள் விண்ணில் நன்கு பிரகாசிக்கும் நட்சத்திரத்தைப் போன்று தோற்றமளிப்பார்கள். அவர்கள் மலஜலம் கழிக்கவும் மாட்டார்கள் எச்சில் துப்பவும் மாட்டார்கள் மூக்கு சிந்தவும் மாட்டார்கள். அவர்களின் சீப்புகள் தங்கத்தாலானவை. அவர்களின் மனைவிமார்கள் அகன்ற விழிகளையுடைய கன்னியராவர். (சொர்க்க வாசிகளான) அவர்கள் ஒரே மனிதனின் அமைப்பில் படைக்கப்பட்டிருப்பார்கள். அவர்கள் தங்களின் தந்தை ஆதம் (அலை) அவர்களின் தோற்றத்தில் வானத்தில் (முட்டும் விதத்தில்) அறுபது முழம் உயரமிருப்பார்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3328 உம்மு ஸலமா (ரலி) அறிவித்தார்

உம்மு சுலைம் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! நிச்சயமாக அல்லாஹ் உண்மையைச் சொல்வதற்கு வெட்கப்படுவதில்லை பெண்ணுக்குத் தூக்கத்தில் ஸ்கலிதம் ஏற்பட்டால் அவளின் மீது குளிப்பு கடமையாகுமா? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், ஆம் அவள் (மதன) நீரைப் பார்த்தால் (அவளின் மீது குளிப்பு கடமையாகும்)' என்று பதிலளித்தார்கள். இதைக் கேட்டு நான்

சிரித்தேன். பெண்ணுக்குக் கூடவா தூக்க ஸ்கலிதம் ஏற்படும்? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், பின் குழந்தை (தோற்றத்தில்) அவளை ஒத்திருப்பது எதனால்? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 3329 அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருகை தந்திருக்கும் செய்தி அப்துல்லாஹ் இப்னு ஸலாம்(ரலி) அவர்களுக்கு (அவர்கள் யூத மதத்திலிருந்தபோது) எட்டியது. உடனே அவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, தங்களிடம் நான் மூன்று விஷயங்களைப் பற்றிக் கேட்கப் போகிறேன். அவற்றை ஓர் இறைதூதர் மட்டுமே அறிவார்' என்று கூறினார்கள். பிறகு, 1 இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம் எது? 2. சொர்க்கவாசி முதலில் உண்ணும் உணவு எது? 3. குழந்தை தன் தந்தையை (சாயலில்) ஒத்திருப்பது எதனால்?) அது (சாயலில்) தன் தாயின் சகோதரர்களை ஒத்திருப்பது எதனால்? என்று கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், சற்று முன்பு தான் (வானவர்) ஜிப்ரீல் எனக்கு இவற்றைக் குறித்து (விளக்கம்) தெரிவித்தார்' என்று கூறினார்கள். உடனே, அப்துல்லாஹ் இப்னு ஸலாம்(ரலி), வானவர்களிலேயே ஜிப்ரீல் யூதர்களுக்குப் பகைவராயிற்றே! என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடைளாயம் ஒரு நெருப்பாகும். அது மக்களைக் கிழக்கிலிருந்து (துரத்திக் கொண்டு வந்து) மேற்குத் திரைசயில் ஒன்று திரட்டும். சொர்க்கவாசிகள் முதலில் உண்ணும் உணவு பெரிய மீனின் ஈரல் பகுதியில் உள்ள அதிகப்படியான சதையாகும். குழந்தையிடம் காணப்படும் (தாயின் அல்லது தந்தையின்) சாயலுக்கு காரணம், ஆண் மனைவியுடன் உடலுறவு கொள்ளும்போது அவனுடைய நீர் (விந்து உயிரணு) முந்தினால் குழந்தை அவனுடைய சாயலில் பிறக்கிறது. பெண்ணின் நீர் (கருமுட்டை உயிரணு) முந்தினால் குழந்தை அவளுடைய சாயலில் பிறக்கிறது' என்று பதிலளித்தார்கள். (உடனே) அப்துல்லாஹ் இப்னு ஸலாம்(ரலி), தாங்கள் இறைத்தூதர் தாம் என நான் சாட்சி கூறுகிறேன்' என்று கூறினார்கள். பிறகு, இறைத்தூதர் அவர்களே! யூதர்கள் பொய்யில் ஊறித் திளைத்த சமுதாயத்தினர் ஆவர். தாங்கள் என்னைப் பற்றி அவர்களிடம் கேட்கும் முன்பாக, அவர்கள் நான் இஸ்லாத்தை ஏற்றதை அறிந்தால் என்னைப் பற்றி (அவதூறு கற்பித்துத்) தங்களிடம் பொய்யுரைப்பார்கள்' என்று கூறினார்கள். அப்போது யூதர்கள் நபி(ஸல்) அவர்களிடம்) வந்தார்கள். உடனே, அப்துல்லாஹ் இப்னு ஸலாம்(ரலி) வீட்டினுள் புகுந்(து மறைந்)தார்கள். இறைத்தூதர்(ஸல்) (யூதர்களிடம்), உங்களில் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் எத்தைகைய மனிதர்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், அவர் எங்களில் (மார்க்க) அறிவு மிக்கவரின் மகனும் ஆவார் எங்களில் அனுபவமும் விவரமும் மிக்கவரும், அனுபவமும் விவரமும் மிக்கவரின் மகனும் ஆவார்' என்று பதிலளித்தார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அப்துல்லாஹ் இப்னு ஸலாம்) இஸ்லாத்தை ஏற்றார் என்றால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், அல்லாஹ் அவரை அதிலிருந்து காப்பாற்றுவானாக! என்று கூறினார்கள். உடனே (வீட்டினுள் மறைந்து கேட்டுக் கொண்டிருந்த) அப்துல்லாஹ் இப்னு ஸலாம்(ரலி) வெளியே வந்து, வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்று நான் சாட்சியம் கூறுகிறேன். மேலும், முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதரவார்கள் என்றும் நான் சாட்சியம் கூறுகிறேன்' என்று கூறினார்கள். உடனே யூதர்கள், இவர் எங்களில் கெட்ட வரும் எங்களில் கெட்டவரின் மகனும் ஆவார்' என்று சொல்லிவிட்டு அவரைக் குறித்து (இல்லாத குற்றங்களைப் புனைந்து) அவதூறு பேசலானார்கள்.

ஹதீஸ் 3330 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல் குலத்தார் (யூதர்கள்) இருந்திராவிட்டால் இறைச்சி துர்நாற்றமடித்திருக்காது. ஹவ்வா (ஆதி மனிதர் ஆதம்(அலை) அவர்களின் மனைவி ஏவாள்) இருந்திராவிட்டால்

எந்தப் பெண்ணும் தன் கணவனை ஏமாற்றியிருக்க மாட்டாள். என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3331 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

பெண்களின் விஷயத்தில் (நல்ல விதமாக நடந்து கொள்ளும்படி கூறும்) என் அறிவுரையை ஏற்றுக் கொள்ளுங்கள். அவர்களை நல்லவிதமாக நடத்துங்கள். ஏனெனில், பெண் விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறாள். மேலும், விலா எலும்பிலேயே அதன் மேற்பகுதி மிகக் கோணலானதாகும். நீ அதை (பலவந்தமாக) நேராக்க முயன்றால் உடைத்து விடுவாய். அதை அப்படியேவிட்டுவிட்டால் அது கோணலாகவே இருக்கும். எனவே, பெண்களின் விஷயத்தில் என் அறிவுரையை ஏற்றுக் கொள்ளுங்கள்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3332 உண்மையே பேசுபவரும், உண்மையே அறிவிக்கப்பட்டவருமான இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நீங்கள் உங்கள் தாயின் வயிற்றில் நாற்பது நாள்கள் (கருவாக) சேமிக்கப்படுகிறீர்கள். பிறகு அவ்வாறே (40 நாள்களில்) அந்தக் கரு (அட்டை போன்று கருப்பையின் சுவரைப் பிடித்துத் தொங்கும்) ஒரு கருக்கட்டியாக மாறி விடுகிறது. பிறகு, அவ்வாறே (இன்னொரு நாற்பது நாள்களில் மெல்லப்பட்ட சக்கை போன்ற) ஒரு சதைப்பிண்டமாக மாறி விடுகிறது. பிறகு, அல்லாஹ் அதனிடம் ஒரு வானவரை நான்கு கட்டளைகளைத் தந்து அனுப்புகிறான். (அதன்படி) அதன் செயல்பாடு (எப்படியிருக்கும் என்று)ம் அதன் ஆயுளும், அதன் உணவும் (பிற வாழ்வாதாரங்களும் எவ்வளவு என்றும்) எழுதப்படுகின்றன. அக்குழந்தை துர்பாக்கியசாலியா நற்பாக்கியசாலியா என்பதும் எழுதப்படுகிறது. பிறகு அதனுள் உயிர் ஊதப்படுகிறது. இதனால் தான், மனிதன் நரகவாசிகளின் செயலைச் செய்தவண்ணமிருப்பான். இறுதியில், அவனுக்கும் நரகத்திற்குமிடையே ஒரு முழம் மட்டும் தான் இடைவெளி இருக்கும். அப்போது (எதிர் பாராத விதமாக) விதி அவளை முந்திக் கொள்ள, அவன் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்து சொர்க்கத்தில் நுழைந்து விடுவான். ஒரு மனிதன் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்த வண்ணமிருப்பான். இறுதியில் அவனுக்கும் சொர்க்கத்திற்குமிடையே ஒரு முழம் தான் இருக்கும். அப்போது, (எதிர் பாராத விதமாக) விதி அவனை முந்திக் கொள்ள அவன் நரகவாசிகளின் செயலைச் செய்து நரகத்தில் புகுந்து விடுவான்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3333 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

திண்ணமாக, அல்லாஹ் (தாயின்) கருவறையில் வானவர் ஒருவரைப் பொறுப்பாளராக நியமிக்கிறான். அவர், இறைவா! (இது ஒரு துளி) விந்து இறைவா! இது, பற்றித் தொங்கும் கரு. இறைவா! இது (மெல்லப்பட்ட சக்கை போன்ற) சதைத் துண்டு' என்று கூறிக் கொண்டிருப்பார். அதைப் படைத் (து உயிர் தந்) திட அல்லாஹ் நாடும்போது, இறைவா! இது ஆணா அல்லது பெண்ணா? நற்பாக்கியம் பெற்றதா? துர்பாக்கியம் உடையதா? (இதன்) வாழ்வாதாரம் எவ்வளவு? (இதன்) ஆயுள் எவ்வளவு? என்று கேட்பார். (அல்லாஹ்வால் இவையனைத்தும் நிர்ணயிக்கப்பட்டு) அதன் தாயின் வயிற்றில் அது இருக்கும்போது எழுதப்படும்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3334 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமையில்) நரகவாசிகளிலேயே மிக லேசான வேதனை தரப்படுபவரிடம், பூமியிலிருக்கும் பொருள்களெல்லாம் உனக்கே சொந்தம் என்றிருந்தாலும் நீ அவற்றைப் பிணைத்

தொகையாகத் தர(வும் அதன் மூலம் இந்த வேதனையிலிருந்து விடுதலை பெறவும்) நீ முன் வருவாய் அல்லவா? என்று அல்லாஹ் கேட்பான். அதற்கு அவன், ஆம்' என்று பதிலளிப்பான். அப்போது அல்லாஹ், நீ ஆதமின் முதுகந்தண்டில் (கருவாகாமல்) இருந்தபோது இதை விட இலேசான ஒன்றை - எனக்கு (எதையும் எவரையும்) இணை கற்பிக்காமலிருப்பதை உன்னிடம் கேட்டிருந்தேன். ஆனால், (பூமிக்கு உன்னை அனுப்பியபோது) எனக்கு இணை கற்பிப்பதைத் தவிர வேறெதற்குமே நீ ஒப்புக் கொள்ளவில்லை' என்று கூறுவான்.

என அனஸ்(ரலி) அவர்கள அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3335 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உலகில்) ஒரு மனிதன் அநியாயமாகக் கொல்லப்படும்போது அந்தக் கொலையின் பாவத்தில் ஆதம்(அலை) அவர்களின் முதல் மகனுக்கும் ஒரு பங்கு இருக்கவே செய்யும். ஏனெனில், அவர்தான் முதன் முதலாக கொலை செய்து (ஒரு முன் மாதிரியை ஏற்படுத்தி) அதை வழக்கில் கொண்டு வந்தவர்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## உயிர்கள் பல்வேறு வகைப்பட்டவையாகும்.

ஹதீஸ் 3336. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உயிர்கள் பல்வேறு வகைப்பட்டவை ஆகும். அவற்றில் ஒன்றுக்கொன்று (குணத்தால்) ஒத்துப்போகின்றவை பரஸ்பரம் பழகுகின்றன. ஒன்றுக்கொன்று (குணத்தால்) வேறுபட்டிருப்பவை பரஸ்பரம் முரண்பட்டு (விலம்) நிற்கின்றன.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இது மற்றொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## "திண்ணமாக, நாம் நூஹை அவரின் சமுதாயத்தாரிடம் தூதராக அனுப்பினோம்' என்னும் (திருக்குர்ஆன் 11:25) இறைவசனம்.

"நாம் நூஹை, உங்களுடைய சமுதாயத்திற்கு வேதனை வருவதற்கு முன்பாகவே அவர்களை எச்சரிக்கை செய்வீராக!ணிஎன்ற செய்தியுடன் அவரின் சமூகத்தாரிடம் அனுப்பினோம்' என்னும் (திருக்குர்ஆன் 71:01) வசனம் முதல் அத்தியாயத்தின் இறுதி (திருக்குர்ஆன் 71:28) வரை.

மேலும், (நபியே!) இவர்களுக்கு நூஹுடைய செய்தியை எடுத்துரைப்பீராக! அவர் தன் சமுதாயத்தினரை நோக்கிக் கூறினார். என் சமுதாயத்தாரே, நான் உங்களிடையே வாழ்வதையும் அல்லாஹ்வின் வசனங்களை (அவ்வப்போது) எடுத்துரைத்து நினைவூட்டிக் கொண்டிருப்பதையும் உங்களால் சகித்துக் கொள்ள முடியவில்லையென்றால் (அறிந்து கொள்ளுங்கள்:) நான் அல்லாஹ்வையே சார்ந்திருக்கிறேன். (திருக்குர்ஆன் 10:71, 72) என்னும் இறைவசனம்.

ஹதீஸ் 3337 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுக்குத் தகுதியுள்ள பண்புகளைக் கொண்டு புகழ்ந்த பிறகு தஜ்ஜாலைப் பற்றிக் கூறினார்கள். 11 அப்போது, நான் உங்களை அவனைக் குறித்து எச்சரிக்கிறேன். எந்த இறைத்தூதரும் அவனைக் குறித்து தம் சமூகத்தாரை எச்சரிக்காமலிருந்ததில்லை. நூஹ் அவர்கள் தம் சமூகத்தாருக்கு (அவனைக் குறித்து) எச்சரித்திருக்கிறார்கள். ஆனால், நான் அவனைப் பற்றி (இதுவரை) எந்த இறைத்தூதரும் தன் சமூகத்தாருக்குக் கூறாத ஓர் அடையாளத்தை

உங்களுக்குச் சொல்கிறேன். அவன் ஒற்றைக் கண்ணன். ஆனால், அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்ல என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3338 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உங்களிடம் தஜ்ஜாலைப் பற்றிய செய்தி ஒன்றைச் சொல்லப் போகிறேன் வேறெந்த இறைத்தூதரும் அதைத் தன் சமூகத்தாருக்குச் சொன்னதில்லை. அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான். அவன் தன்னுடன் சொர்க்கம் நகரம் போன்றதைக் கொண்டு வருவான். அவன் எதை சொர்க்கம் என்று கூறுகிறானோ அதுதான் நரகமாக இருக்கும். நூஹ் அவர்கள் அவனைக் குறித்து தன் சமூகத்தாரை எச்சரித்ததைப் போன்று நானும் உங்களை (அவனைக் குறித்து) எச்சரிக்கிறேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3339. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமையில் நூஹ் அவர்களும் அவர்களின் சமுதாயத்தினரும் வருவார்கள். அப்போது அல்லாஹ் (நூஹ் - அலை - அவர்களை நோக்கி), (என்னுடைய செய்தியை நீங்கள் உங்கள் சமுதாயத்தாருக்கு) எடுத்துரைத்து விட்டீர்களா? என்று கேட்பான். அதற்கு நூஹ் அவர்கள், ஆம், என் இறைவா! (எடுத்துரைத்து விட்டேன்)' என்று பதிலளிப்பார்கள். பிறகு, அல்லாஹ் நூஹ் அவர்களின் சமுதாயத்தினரிடம், இவர் உங்களுக்கு (என் செய்தியை) எடுத்துரைத்துவிட்டாரா? என்று கேட்பான். அதற்கு அவர்கள், இல்லை. எங்களிடம் எந்த இறைத்தூதரும் வரவில்லை' என்று பதில் கூறுவார்கள். உடனே, அல்லாஹ் நூஹ் அவர்களிடம் உங்களுக்காக சாட்சியம் சொல்பவர் யார்? என்று கேட்பான். நூஹ் அவர்கள், முஹம்மத்(ஸல்) அவர்களும், அவர்களின் சமுதாயத்தினரும் (எனக்காக சாட்சியம் சொல்வார்கள்)' என்று பதிலளிப்பார்கள். அவ்வாறே நாம் நூஹ் அவர்கள் (இறைச் செய்தியைத் தம் சமுதாயத்தாருக்கு) எடுத்துரைத்துவிட்டார்கள் என்று சாட்சியம் சொல்வோம். அவ்வாறே உங்களை மக்களுக்கு சாட்சியம் சொல்வதற்காக நடுநிலையான சமுதாயமாக ஆக்கினோம்' என்னும் புகழுயர்ந்த இறைவனின் (திருக்குர்ஆன் 02:143) வசனம் இதைத் தான் குறிக்கிறது.

'நடுநிலையான என்னும் சொல்லின் கருத்து நீதியான என்பதாகும்.

என அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3340 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன், ஒரு விருந்தில் இருந்தோம். அப்போது (வைக்கப்பட்ட) புஜம் (முன்னங்கால்) ஒன்று நபி(ஸல்) அவர்களிடம் நீட்டப்பட்டது. அது அவர்களுக்கு மிகவும் விருப்பமானதாக இருந்து வந்தது. நபி(ஸல்) அவர்கள் (அதைத் தம்) வாயாலேயே (பற்களில்) பற்றிக்கொண்டு அதிலிருந்து சிறிது உண்டார்கள். பிறகு, நான் மறுமை நாளில் மக்களின் தலைவன் ஆவேன். (மறுமை நாளில்) அல்லாஹ் (மக்களில்) முந்தியவர்களையும் பிந்தியவர்களையும் ஒரே சமவெளியில் எவரைக் கொண்டு ஒன்று திரட்டுவான் என்பது உங்களுக்குத் தெரியுமா? பார்ப்பவர் அந்த மக்களை பார்க்க முடியும். (தம்மை) அழைப்பவர்களை அவர்களும் செவியேற்பார்கள். சூரியன் அவர்களுக்கு அருகில் வரும். அப்போது மக்கள் சிலர் (மற்ற மக்களை நோக்கி), நீங்கள் எத்தகைய (துன்பகரமான) நிலையில் இருக்கிறீர்கள் என்பதையும் உங்களுக்கு எத்தகைய (ஆபத்தான) நிலை நேர்ந்திருக்கிறது என்பதையும் உங்களுக்கு உங்களுடைய இறைவனிடம் பரிந்துரை செய்பவரைத் (தேடிப்) பார்க்கமாட்டீர்களா? என்று கேட்பார்கள். மக்கள் சிலர், உங்கள் தந்தை ஆதம்(அலை) அவர்கள் (உங்களுக்காகப் பரிந்துரை செய்வார்கள்)' என்று கூறுவார்கள். எனவே, மக்கள் ஆதம்(அலை) அவர்களிடம் சென்று, ஆதமே! நீங்கள் மனித இனத்தின் தந்தையாவீர்கள். உங்களை அல்லாஹ் தன் கரத்தால் படைத்தான்.

உங்களுக்குள் தன்(னால் உருவாக்கப்பட்ட) உயிரை ஊதினான். வானவர்களை உங்களுக்குச் சிரம்பணியும் படி உத்திரவிட்டான். அவ்வாறே அவர்களும் உங்களுக்குச் சிரம் பணிந்தார்கள். உங்களை சொர்க்கத்தில் குடியமர்த்தினான். நீங்கள் உங்களுடைய இறைவனிடம் எங்களுக்காகப் பரிந்துரை செய்ய மாட்டீர்களா? நாங்கள் (சிக்கி) இருக்கும் (அவல) நிலையையும் எங்களுக்கு நேர்ந்திருக்கும் (துன்ப) நிலையையும் நீங்கள் பார்க்க வில்லையா? என்று கேட்பார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள், (நான் செய்த தவற்றின் காரணத்தால்) என் இறைவன் என் மீது (கடும்) கோபமுற்றான். அதற்கு முன் அதைப் போன்று அவன் கோபித்ததில்லை. அதற்குப் பிறகும் அதைப் போல் அவன் கோபம் கொள்ளமாட்டான். (நான் நெருங்கக் கூடாத ஒரு) மரத்திலிருந்து (உண்ண வேண்டாமென்று) என்னைத் தடுத்தான். நான் (அவனுக்கு) மாறு செய்தேன். என்னையே நான் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய நிலையிலுள்ளேன். (எனவே!) நீங்கள் வேறெவரிடமாவது செல்லுங்கள். நீங்கள் நூஹ்(அலை) அவர்களிடம் செல்லுங்கள்' என்று கூறுவார்கள். உடனே, மக்கள் நூஹ்(அலை) அவர்களிடம் சென்று, நூஹே! நீங்கள் பூமியில் வசிப்பவர்களுக்கு (அனுப்பப்பட்ட) முதல் (புதிய சட்ட அமைப்புடன் வருகை தந்த) இறைத்தூதர் ஆவீர்கள். உங்களை அல்லாஹ், நன்றி செலுத்தும் அடியார் என்று குறிப்பிட்டுள்ளான். 12 நாங்கள் (சிக்கி) இருக்கும் அவல நிலையை நீங்கள் பார்க்கவில்லையா? எங்களுக்கு நேர்ந்துள்ள (இந்தத் துன்ப) நிலையை நீங்கள் காணவில்லையா? எங்களுக்கு நேர்ந்துள்ள (இந்தத் துன்ப) நிலையை நீங்கள் காணவில்லையா? எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்துரைக்க மாட்டீர்களா? என்று கேட்பார்கள். அதற்கு அவர்கள், என் இறைவன் இன்று என் மீது (கடும்) கோபமுற்றுள்ளான். இதற்கு முன் அவன் இதைப் போல் கோபித்ததில்லை. இதற்குப் பிறகும் இதைப்போல் கோபம் கொள்ள மாட்டான். என்னையே நான் காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது. நீங்கள் (இறுதி) நபி(ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்' என்று கூறுவார். மக்கள் என்னிடம் வருவார்கள். நான் இறை சிம்மாசனத்திற்குக் கீழே சஜ்தா செய்வேன். அப்போது முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துவீராக! பரிந்துரை செய்யுங்கள். (உங்கள்) பரிந்துரை ஏற்றுக் கொள்ளப்படும். கேளுங்கள். அது உங்களுக்குத் தரப்படும்' என்று (இறைவனின் தரப்பிலிருந்து) சொல்லப்படும். அறிவிப்பாளர் முஹம்மத் இப்னு உபைத்(ரஹ்), இந்த ஹதீஸ் முழுமையாக எனக்கு நினைவில்லை' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3341. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஃபஹல் மின்(ம்) முத்தகிர் - அறிவுரை பெறுபவர் எவராவது இருக்கிறாரா? என்னும் (திருக்குர்ஆனின் 54வது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ள) இறை வசனத்தைப் பொதுவாக மக்கள் ஓதும் பிரபலமான முறைப்படியே ஃபஹல் மின்(ம்) முத்தகிர் என்று ஓதினார்கள். (வெகு சிலர் ஓதுவதைப் போல் முஸ்தகிர் என்று பிரித்தோ, வேறொரு முறைப்படி முஸ்ஸக்கிர் என்றோ ஓதவில்லை)

## இல்யாஸ்(அலை) அவர்கள் பற்றிய குறிப்பு

அல்லாஹ் கூறினான்:

மேலும், நிச்சயமாக இல்யாஸும் இறைத் தூதர்களில் ஒருவராயிருந்தார். அவர் தம் சமூகத்தாரிடம் இவ்வாறு கூறிய சந்தர்ப்பத்தை நினைத்துப் பாருங்கள்: நீங்கள் அஞ்சுவதில்லையா? பஅல் என்னும் (கற்பனைத்) தெய்வத்தை நீங்கள் அழைக்கிறீர்கள். படைப்பாளர்களிலெல்லாம் மிகச் சிறந்தவனைவிட்டு விடுகிறீர்களே (அதாவது), உங்கள் அதிபதியும், உங்களுக்கு முன் சென்றவர்களின் அதிபதியுமான அல்லாஹ்வை (விட்டு விடுகிறீர்களே!) ஆயினும், அவர்கள் அவரைப் பொய்யர் எனத் தூற்றினார்கள். ஆகையால், நிச்சயமாக அவர்கள் (இப்போது தண்டனைக்காகக்) கொண்டு வரப்படுபவர்களாய்

உள்ளனர். ஆனால், வாய்மையாளர்களாய் ஆக்கப்பட்ட அல்லாஹ்வின் அடியார்களைத் தவிர. மேலும், இப்னு தோன்றிய தலை முறைகளில் இல்யாஸ் மீது (நற்புகழை) நிலைப்படுத்தினோம். (திருக்குர்ஆன் 37:123 - 129)

இப்னு அப்பாஸ்(ரலி) இந்த வசனத்திற்கு விளக்கமளிக்கும்போது (ஓர் அறிவிப்பில்), இல்யாஸ்(அலை) அவர்கள் (பிற்காலத் தலைமுறையினரால்) நல்ல விதமாகப் புகழ்ந்து பேசப்படுவார்கள் என்பது இதன் பொருளாகும்' எனக் கூறினார்கள்.

மேலும், அல்லாஹ் கூறினான்: சாந்தி உண்டாகட்டும், இல்யாஸ் மீது! நன்மை செய்வோருக்கு நாம் இத்தகைய பிரதி பலனையே வழங்குகிறோம். உண்மையில் நம்மீது நம்பிக்கை கொண்ட அடியார்களுள் ஒருவராய் அவர் திகழ்ந்தார். (திருக்குர்ஆன் 37:130 - 132)

"இல்யாஸ்(அலை) அவர்கள் தாம் இத்ரீஸ்(அலை) அவர்கள் ஆவார்' என்று இப்னு மஸ்வூத்(ரலி) மற்றும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகிறது.

## இத்ரீஸ்(அலை) அவர்கள் பற்றிய குறிப்பு

இத்ரீஸ்(அலை) அவர்கள் நூஹ்(அலை) அவர்களின் தந்தையின் (முப்)பாட்டனாராவார். இவர்கள் நூஹ்(அலை) அவர்களின் பாட்டனார் என்றும் சொல்லப்படுகிறது.

மேலும், அல்லாஹ் கூறினான்:

நாம் அவரை (இத்ரீஸை) உயர்ந்த இடத்திற்கு உயர்த்திக் கொண்டோம். (திருக்குர்ஆன் 19:57)

ஹதீஸ் 3342. அபூ தர்(ரலி) அறிவித்து வந்ததாக அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நான் மக்காவில் இருந்தபோது என் வீட்டின் கூரை (முகடு) பிளக்கப்பட்டது. (அங்கிருந்து வானவர்) ஜிப்ரீல் அவர்கள் இறங்கி (வந்து) என் நெஞ்சைப் பிளந்தார்கள். பிறகு அதை, ஸம்ஸம் தண்ணீரால் கழுவினார்கள். பிறகு, நுண்ணறிவாலும் இறைநம்பிக்கையாலும் நிரம்பிய தங்கத்தட்டு ஒன்றைக்கொண்டு வந்து என் நெஞ்சில் அதை ஊற்றி (நிரப்பி)னார்கள். பிறகு, என் கையைப் பிடித்து என்னை அழைத்துக் கொண்டு வானத்திற்கு ஏறினார்கள். (பூமிக்கு) அண்மையிலுள்ள வானத்திற்கு வந்தபோது வானத்தின் காவலரிடம், திறங்கள்' என்று கூறினார்கள். அதற்கு அவர், யார் அது? என்று கேட்டார். ஜிப்ரீல் அவர்கள், இதோ ஜிப்ரீல்' என்று பதிலளித்தார்கள். அதற்கு அவர், உங்களுடன் வேறெவராது இருக்கிறரா? என்று கேட்டார். அவர்கள், என்னுடன் முஹம்மத் அவர்கள் இருக்கிறார்கள்' என்று பதிலளித்தார்கள். அதற்கு அவர், (அவரை அழைத்துவரச் சொல்லி) அவரிடம் (உம்மை) அனுப்பப்பட்டதா? என்று கேட்க, ஜிப்ரீல் அவர்கள், ஆம், திறவுங்கள்' என்று கூறினார்கள். (முதல் வானத்தின் கதவு திறக்கப்பட்டு) நாங்கள் வானத்தில் (இன்னும்) மேலே சென்றபோது அங்கே ஒருவர் இருந்தார். அவரின் வலப்பக்கத்திலும் மக்கள் இருந்தனர். இடப்பக்கத்திலும் மக்கள் இருந்தனர். அவர் தன்னுடைய வலப்பக்கம் பார்க்கும்போது சிரித்தார் தன்னுடைய இடப்பக்கம் பார்க்கும்போது அழுதார். (பிறகு, என்னைப் பார்த்து,) நல்ல இறைத்தூதரே வருக! நல்ல மகனே வருக!ஞஎன்று கேட்டேன். அவர், இவர் ஆதம்(அலை) அவர்கள் அவர்களின் வலப்பக்கமும் இடப்பக்கமும் இருக்கும் மக்கள் அவர்களின் சந்ததிகள். அவர்களில் வலப்பக்கமிருப்பவர்கள் சொர்க்கவாசிகள். இடப்பக்கத்தில் இருப்பவர்கள் நரக வாசிகள். எனவே, தான் அவர்கள் வலப்பக்கம் (சொர்க்கவாசிகளான) தம் மக்களை பார்க்கும்போது (மம்ழ்ச்சியால்) சிரிக்கிறார்கள் இடப்பக்கம் (நரக வாசிகளான தம் மக்களைப்) பார்க்கும்போது (வேதனைப்பட்டு) அழுகிறார்கள்' என்று பதிலளித்தார்கள்.

பிறகு என்னை அழைத்துக் கொண்டு ஜிப்ரீல் (இன்னும் உரயத்திற்கு) ஏறிச் சென்றார்கள். பிறகு, இரண்டாம் வானத்திற்கு வந்து அதன் காவலரிடம், திறவுங்கள்' என்று கூறினார்கள். அதன் காவலரும் முதலாமவர் கேட்டதைப் போன்றே கேட்டார். பிறகு (முன்பு போன்றே ஜிப்ரீல் அவர்கள் பதில் கூறிய பின்னர் வாயிலைத்) திறந்தார்.

அனஸ்(ரலி) தொடர்ந்து கூறினார்கள்:

"நபி(ஸல்) அவர்கள், வானங்களில் இத்ரீஸ்(அலை), ஈசா(அலை) இப்ராஹீம்(அலை) ஆகியோரைக் கண்டதாகக் கூறினார்களே தவிர அவர்களின் இருப்பிடங்கள் எங்கிருந்தன என்று அவர்கள் எனக்குக் குறிப்பிட்டுக் கூறவில்லை. அவர்கள் ஆதம்(அலை) அவர்களை அண்மையிலுள்ள (முதல்) வானத்தில் கண்டதாகவும் இப்ராஹீம்(அலை) அவர்களை ஆறாவது வானத்தில் கண்டதாகவும் மட்டுமே கூறினார்கள்' என்று அபூ தர்(ரலி) கூறினார்.

அனஸ்(ரலி) மேலும் கூறினார்கள்:

"ஜிப்ரீல்(அலை) அவர்கள் இத்ரீஸ்(அலை) அவர்களைக் கடந்து சென்றபோது, நல்ல இறைத் தூதரே வருக! நல்ல சகோதரரே வருக!ணஎன்று கூறினார்கள். நான், இவர் யார்? என்று கேட்டேன். அதற்கு ஜிப்ரீல் அவர்கள், இவர் இத்ரீஸ் என்று கூறினார்கள். பிறகு மூஸா அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது அவர்கள், நல்ல நபியே வருக! நல்ல சகோதரரே, வருக' என்று கூறினார்கள். நான், இவர் யாா? என்று (ஜிப்ரீலிடம்) கேட்டேன். அவர்கள், இவர் மூஸா' என்று கூறினார்கள். பிறகு நான், ஈசா அவர்களைக் கடந்து சென்றேன். அவர்களும், நல்ல நபியே வருக! நல்ல சகோதரரே, வருக!ணஎன்று கூறினார்கள். பிறகு நான் ஈசா அவர்களைக் கடந்து சென்றேன். அவர்களும், நல்ல நபியே வருக! நல்ல சகோதரரே, வருக!ணஎன்று கூறினார்கள். நான், இவர் யார்? என்று (ஜிப்ரீலிடம்) கேட்டேன். அதற்கு ஜிப்ரீல் அவர்கள், (இவர்) ஈசா' என்று பதிலளித்தார்கள். பிறகு நான் இப்ராஹீம் அவர்களைக் கடந்து சென்றேன். அவர்கள், நல்ல நபியே, வருக! நல்ல மகனே, வருக!ணஎன்று கூறினார்கள். நான், இவர் யார்? என்று கேட்டேன். அதற்கு, இவர் இப்ராஹீம்' என்று ஜிப்ரீல் அவர்கள் பதிலளித்தார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), அபூ ஹய்யா(ரலி) ஆகிய இருவரும் அறிவித்ததாக இப்னு ஹஸ்கி(ரலி) கூறினார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

பிறகு ஜிப்ரீல் அவர்கள் என்னை அழைத்துக் கொண்டு மேலே சென்றார்கள். நான் ஓர் உயரமான இடத்திற்கு வந்தபோது அங்கு நான் (வானவர்கள் விதிகளை எழுதிக் கொண்டிருக்கும்) எழுதுகோல்களின் ஓசையைச் செவியுற்றேன்.

இப்னு ஹஸ்கி(ரஹ்) அவர்களும் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அப்போது அல்லாஹ் என்மீது (என் சமுதாய்யத்தாருக்காக) ஐம்பது தொழுகைகளைக் கடமையாக்கினான். அதைப்பெற்றுக் கொண்டு நான் திரும்பியபோது மூஸா அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது மூஸா அவர்கள், உங்கள் சமுதாயத்தவர் மீது என்ன கடமையாக்கப்பட்டது' என்று கேட்டார்கள். நான், அவர்களின் மீது ஐம்பது தொழுகைகள் கடமையாக்கப்பட்டுள்ளன' என்று பதிலளித்தேன். அவர்கள், அப்படியானால் உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று (சற்று குறைத்துக் கடமையாக்கும்படி) கேளுங்கள். ஏனெனில், உங்கள் சமுதாயத்தாரால் அதை நிறைவேற்ற முடியாது' என்று கூறினார்கள். உடனே நான் என் இறைவனிடம் திரும்பிச் சென்று (தொழுகைகளின் எண்ணிக்கையைக் குறைக்கும்படி) கேட்டேன். அவன் அதில் ஒரு பகுதியைக் குறைத்தான். மூஸா அவர்களிடம் திரும்பிச் செல்லுங்கள்' என்று கூறி முன்பு

போல் ("உங்கள் சமுதாயத்தாரால் அதை நிறைவேற்ற முடியாது") என்று கூறினார்கள். (நான் அவ்வாறே திரும்ப இறைவனிடம் சென்று இன்னும் குறைக்கும்படி கோர) அவன் அதில் ஒரு பகுதியைக் குறைத்தான். நான் மூஸா அவர்களிடம் மீண்டும் கூறியபோது, உங்களுடைய இறைவனிடம் திரும்பச் சென்று இன்னும் குறைத்துக் கேளுங்கள். ஏனெனில், உங்கள் சமுதாயத்தார் அதற்கு சக்தி பெறமாட்டார்கள்' என்று கூற, நான் திரும்பிச் சென்று, என் இறைவனிடம் (இன்னும் சற்று குறைக்கும்படி) கேட்டேன். அதற்கு அவன், அவை ஐந்து (வேளைத் தொழுகைகள்) ஆகும். அவையே (பிரதிபலனில்) ஐம்பது (வேளைத் தொழுகைக்கு ஈடு) ஆகும். (ஒரு முறை சொல்லப்பட்ட சொல் என்னிடம் மாற்றப்படுவதில்லை' என்று கூறினான். உடனே, நான் மூஸா(அலை) அவர்களிடம் திரும்பிச் சென்றேன். அவர்கள், உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் செல்லுங்கள்' என்று கூறினார்கள். நான், என் இறைவனிடம் (மேலும் சலுகை கோர) வெட்கப்படுகிறேன்' என்று பதிலளித்தேன். பிறகு ஜிப்ரீல் அவர்கள் என்னை அழைத்துக் கொண்டு (வானுலகின் எல்லையான) சித்ரத்துல முன்தஹா'வுக்குச் சென்றார்கள். அப்போது அவையென்னவென்று நான் அறிய முடியாத படி பல வண்ணங்கள் அதைச் சூழ்ந்து மூடியிருந்தன. பிறகு நான் உள்ளே அனுமதிக்கப்பட்டேன். அப்போது அங்கே முத்தாலான கூடாரங்களைக் கண்டேன். அதன் மண் (நறுமணம் வீசும்) கஸ்தூரியாக இருந்தது.

## ஹூத்(அலை) அவர்கள் பற்றிய குறிப்பு

அல்லாஹ் கூறினான்:

மேலும், ஆத் சமுதாயத்தவரிடம் அவர்களின் சகோதரர் ஹூதை நாம் அனுப்பினோம். அவர், என் சமுதாயத்தாரே! நீங்கள் அல்லாஹ்வை (மட்டுமே) வணங்குங்கள். அவனைத் தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை' என்று கூறனிார். (திருக்குர்ஆன் 11: 50)

மேலும், அல்லாஹ் கூறினான்: ஆத் சமூகத்தாரின் சகோதரர் (ஹூது நபியுடைய) செய்தியை இவர்களுக்கு எடுத்துக்கூறுங்கள்: அப்போது அவர் அஹ்கா.ப் எனும் பகுதியில் தன் சமூகத்தாருக்கு, நீங்கள் அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்கும் அடிபணியாதீர்கள். உங்களின் விஷயத்தில் மிக பயங்கரமான ஒரு நாளின் வேதனைக்கு நான் அஞ்சுகிறேன்' என்று எச்சரிக்கை செய்திருந்தார் - எச்சரிக்கை செய்பவர்கள் அவருக்கு முன்பும் வாழ்நதிருக்கிறார்கள். அவருக்குப் பிறகும் வந்து கொண்டிருந்தார்கள் - அப்போது அவர்கள், எங்களை எங்கள் கடவுளைவிட்டுதிசை திருப்பவா நீர் வந்திருக்கிறீர்? சரி - நீர் உண்மையாளர் எனில், எங்களை எந்த வேதனையைக் கூறி அச்சுறுத்திக் கொண்டிருக்கிறீரோ அந்த வேதனையைக் கொண்டு வாரும்' என்று கூறினார்கள். அவர், இது பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது. நான் எந்தத் தூதோடு அனுப்பப்பட்டிருக்கிறேனோ அதனை மட்டுமே உங்களுக்கு எடுத்துரைக்கிறேன். ஆனால், (அறியாமையில்) மூழ்கியிருக்கும் சமுதாயமாக நான் உங்களைக் காண்கிறேன்' என்று கூறினார். பின்னர் அந்த வேதனை தாங்கள் வசித்த பள்ளத்தாக்குகளை நோக்கி வந்து கொண்டிருப்பதை அவர்கள் கண்டபோது, இது, நமக்கு மழையைப் பொழிவிக்கக் கூடிய மேகமாகும்' என்று கூறலாயினர். இல்லை. மாறாக, நீங்கள் எதற்காக அவசரப்பட்டுக் கொண்டிருந்தீர்களோ அதுதான் இது, இது புயல் காற்று. இதில் துன்புறுத்தும் வேதனை வந்து கொண்டிருக்கிறது. தன் இறைவனின் கட்டளையால் ஒவ்வொன்றையும் இது அழித்துவிடும். இறுதியில் (அவ்ாகளின் நிலைமை என்னவாயிற்று எனில்,) அவர்கள் வசித்த இல்லங்களைத் தவிர வேறு எதுவும் அங்கு தென்படவில்லை. இவ்வாறே குற்றம் புரியும் மக்களுக்கு நாம் தண்டனை கொடுக்கிறோம். (திருக்குர்ஆன் 46: 21-25)

இதைக்குறித்து அதாஉ(ரஹ்) அவர்களும் சுலைமான்(ரஹ்) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஆயிஷா(ரலி) வழியாக அறிவித்தார்கள்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

'ஆத் சமுதாயத்தினர் மிகப் பெரிய கடும் சூறாவளிக் காற்றினால் அழிக்கப்பட்டனர். அல்லாஹ் அந்தக் காற்றினை அவர்களின் மீது ஏழு இரவுகளும், எட்டு பகல்களும் தொடர்ந்து ஏவினான். (நபியே! நீங்கள் அங்கு இருந்திருந்தால்) இற்றுப் போன ஈச்ச மரத்தண்டுகளைப் போன்று அவர்கள் அங்கு முகுங்குப்புற வீழ்ந்து கிடந்ததைப் பார்த்திருப்பீர்கள். இப்போது அவர்களில் எவரேனும் எஞ்சியிருப்பதாக உங்களுக்குத் தெரியவருகிறதா என்ன? (திருக்குர்ஆன் 69: 6-8)

ஹதீஸ் 3343 நபி(ஸல்) அவர்கள் கூறினார்

நான் (அகழ்ப்போரின்போது) கீழைக் காற்றினால் ('ஸபா') வெற்றியளிக்கப்பட்டேன். அத் சமுதாயத்தார் மேலைக் காற்றினால் ('தபூர்') அழிக்கப்பட்டனர்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3344 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

அலீ(ரலி) (யமனிலிருந்து) நபி(ஸல்) அவர்களிடம் சிறிய தங்கக் கட்டி ஒன்றை அனுப்பி வைத்தார்கள். அதை நபி(ஸல்) அவர்கள் அக்ரவு இப்னு ஹாபிஸ் அல்ஹன்ழலீ அல்முஜாஷியீ(ரலி), உயைனா இப்னு பத்ர் அல் ஃபஸாரீ(ரலி), பனு நப்ஹான் குலத்தவரில் ஒருவரான ஸைத் அத் தாயீ(ரலி) மற்றும் பனு கிலாப் குலத்தாரில் ஒருவரான அல்கமா இப்னு உலாஸா அல் ஆமிரி(ரலி) ஆகிய நால்வரிடையே பங்கிட்டுவிட்டார்கள். அதனால் குறைஷிகளும் அன்சாரிகளும கோபமடைந்து, நஜ்து வாசிகளின் தலைவர்களுக்குக் கொடுக்கிறார் நம்மைவிட்டுவிடுகிறாரே' என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இவர்கள் (இப்போது தான் இஸ்லாத்தை தழுவியிருப்பதால்) அவர்களின் உள்ளங்களை (முழுமையாக) இணக்கமாக்குவதற்காக (அவர்களுடன் நேசம் பாராட்டும் விதத்தில்) தான் கொடுத்தேன்' என்று கூறினார்கள். அப்போது கண்கள் பஞ்சடைந்த, கன்னங்கள் தடித்திருந்த, நெற்றியோரங்கள் உயர்ந்திருந்த, அடர்த்தியான தாடி கொண்ட, தலைமுடி மழிக்கப்பட்டிருந்த மனிதர் ஒருவர் முன் வந்து, முஹம்மதே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்' என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள் நானே (அல்லாஹ்விற்கு) மாறு செய்தால் வேறெவர்தான் அவனுக்குக் கீழ்ப்படிவார்? பூமியில் வசிப்பவர்களின் விஷயத்தில் அல்லாஹ் என் மீது நம்பிக்கை வைத்திருக்க, நீங்கள் என் மீது நம்பிக்கை வைக்க மாட்டீர்களா? என்று கேட்டார்கள். அப்போது வேறொருமனிதர் இப்படி (குறை சொன்னவரைக் கொல்வதற்கு அனுமதி கேட்டார். அனுமதி கேட்ட அவர் காலித் இப்னு வலீத்(ரலி) தாம் என்று நினைக்கிறேன் அவரை நபி(ஸல்) அவர்கள் (இதைச் சொன்னவரைக் கொல்ல வேண்டாமென்று) தடுத்துவிட்டார்கள். (குறை சொன்ன) அந்த ஆள் திரும்பிச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள், இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து .. அல்லது இவரின் பின்னே - ஒரு சமுதாயத்தினர் தோன்றுவர். அவர்கள் எத்தகையவர்களாயிருப்பார்கள் என்றால், அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் தொண்டைக் குழிகளை தாண்டிச் செல்லாது. அவர்கள் வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (அதன் மீது எய்தப்பட்ட) அம்பு வெளியேறி விடுவதைப் போல் மார்க்கத்திலிருந்து வெளியேறிவிடுவார்கள் இஸ்லாமியர்களைக் கொல்வார்கள் சிலைவணக்கம் புரிபவர்களைவிட்டுவிடுவார்கள். நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால் ஆத் கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நான் நிச்சயம் அழித்து விடுவேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3345 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஃப ஹல் மின்(ம்) முத்த(க்)மிர் அறிவுரை பெறுபவர் எவரேனும் உண்டா? என்னும் (திருக்குர்ஆனின் 54-வது அத்தியாயத்தில் இடம்பெற்றுள்ள) இறைவசனத்தை ஓதுவதை செவியுற்றேன்.

## யஃஜூ ஜ், மஃஜூ ஜ் கூட்டத்தார்

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) இவர்கள் (யூதர்கள்) உங்களிடம் துல்கர்னைன் பற்றி கேட்கிறார்கள். நீங்கள் கூறுங்கள்: நான் அவரைப் பற்றிய சில விபரங்களை உங்களுக்கு எடுத்துச் சொல்வேன்.

நிச்சயமாக நாம் அவருக்கு பூமியில் ஆட்சியதிகாரத்தை அளித்திருந்தோம். மேலும், அவருக்கு எல்லவிதமான சாதனங்களையும் வாய்ப்புகளையும் வழங்கியிருந்தோம். அவர் (ஒரு முக்கியமான காரியத்திற்காக முதலில் மேற்கு நோக்கிப்) புறப்பட்டார். சூரியன் அஸ்தமிக்கும் எல்லையை அவர் அடைந்தபோது சேற்றுக் கடலில் அது அஸ்தமிப்பதை(ப் போல்) கண்டார். அங்கு அவர், ஒரு சமுதாயத்தார் வாழ்வதைக் கண்டார். அப்போது நாம் கூறினோம். துல்கர்னைனே! அவர்களைத் தண்டிக்கவும் உமக்கு ஆற்றல் இருக்கிறது. அவர்களுடன் நல்ல முறையில் நடந்து கொள்ளவும் உம்மால் முடியும்!ணிஅதற்கு அவர் கூறினார்: யாரேனும் அக்கிரமம் புரிந்தால் அவரைத் தண்டிப்போம். பிறகு, அவர் தன்னுடைய இறைவனிடம் திரும்பக் கொண்டு வரப்படுவார். அவன் அவருக்கு இன்னும் கடுமையாகத் தண்டனை அளிப்பான்‘ ஆனால், அவர்களில் இறைநம்பிக்கை கொண்டு, நற்செயலும் புரிகிறவருக்கு நற்பலன் இருக்கிறது. நாம் அவருக்கு எளிதான கட்டளைகளையே வழங்குவோம்.

மீண்டும் அவர் (மற்றொரு முக்கியமான காரியத்திற்காகப்) புறப்பட்டார். சூரியன் உதயமாகும் எல்லையை அவர் அடைந்துவிட்டார். அப்போது ஒரு சமுதாயத்தார் மீது உதிப்பதைக் கண்டார். அதன் வெளியிலிலிந்து தப்பிப்பதற்கான எந்தத் தடுப்பையும் நாம் அவர்களுக்குக் கொடுத்திருக்கவில்லை. இதுதான் அச்சமுதாயத்தாரின் நிலை! துல்கர்னைனிடம் இருந்தவை அனைத்தையும் நாம் நன்கு அறிந்திருந்தோம்.

பிறகு அவர், (வேறொரு முக்கிய காரியத்தை முன்னிட்டு) புறப்பட்டார். அவர் இரண்டு மலைகளுக்கிடையே சென்றார். அப்போது அவற்றின் அருகில் எந்தப் பேச்சையும் விளங்கிக் கொள்ள முடியாத ஒரு சமுதாயத்தார் வாழ்வதைக் கண்டார். அம்மக்கள் கூறினார்கள். துர்கர்னைனே! யஃஜூ ஜ் மஃஜூ ஜ் கூட்டத்தார் இந்நாட்டில் (பரவலாக) அராஜகத்தை விளைவிக்கிறார்கள். எனவே, நீங்கள் எங்களுக்கும், அவர்களுக்கும் இடையே ஒரு தடுப்புச் சுவரை எழுப்பித் தருவதற்காக நாங்கள் உமக்கு ஏதேனும் கப்பம் செலுத்த வேண்டுமா? அதற்கு அவர் பதிலளித்தார்: என்னுடைய இறைவன் எனக்குக் கொடுத்திருப்பவை மேலானவை. எனவே, உங்கள் உழைப்பின் மூலம் எனக்கு உதவுங்கள். நான் உங்களுக்கும் அவர்களுக்கும் இடையில் ஒரு தடுப்புச்சுவரை எழுப்பித் தருகிறேன் இரும்புப் பாளங்களை என்னிடம் கொண்டு வாருங்கள்!ணிஇறுதியில் இரண்டு மலைகளுக்கிடையிலான பகுதியை நிரப்பிவிட்ட அவர் (மக்களை நோக்கி) கூறினார்: இப்பொழுது (நெருப்பை மூட்டுவதற்காக) ஊதுங்கள்! கடைசியில் அந்த இரும்புச் சுவர் முற்றிலும் நெருப்பாய்ப் பழுக்கக் காய்ந்தபோது அவர் கூறினார்: கொண்டு வாருங்கள், இப்போது நான் உருக்கிய செம்புத்திரவத்தை, அதனைச் சுவற்றின் மேல் ஊற்றுவேன் யஃஜூ ஜ் மஃஜூ ஜ் கூட்டத்தாரால் அதில் ஏறி வர முடியவில்லை. அவர்களால் அதில் துளையிடவும் இயலவில்லை. (அந்த அளவுக்கு அந்தச் சுவர் உயரமாகவும் வலுவாகவும் இருந்தது.) துல்கர்னைன் கூறினார். இது என்னுடைய இறைவனின் கருணையாகும். என் இறைவன் வாக்களித்த நேரம் வந்துவிட்டால், அவன் இதனைத் தூள்தூளாக்கி விடுவான். என்னுடைய இறைவனின் வாக்குறுதி உண்மையானதாகும். (திருக்குர்ஆன் 18: 83 - 98)

மேலும் அல்லாஹ் கூறினான்:

எதுவரையெனில், யஃஜூ ஜ் மஃஜூ ஜ் திறந்து விடப்படும் ஒவ்வொரு உயரமான இடங்களிலிருந்தும் அவர்கள் வெளியேறும் வரை. (திருக்குர்ஆன் 12: 96)

நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர், நான் அந்தத் தடுப்புச் சுவரை, பல வண்ணக் கோடுகள் போட்ட ஒரு துணியைப் போல் பார்த்தேன்‘ என்று கூறினார். அதற்கு நபியவர்கள், உண்மை தான் நீங்கள் பார்த்தது‘ என்று தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 3346. (நபி(ஸல்) அவர்களின் துணைவியார்) ஸைனப் பின்த்து ஜஹ்ஷ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஒருமுறை) என்னிடம் நடுக்கத்துடன் வந்து, வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணத்தால் அரபுகளுக்குக் கேடு நேரவிருக்கிறது. இன்று யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடைச் சுவர் இதைப் போல் திறக்கப்பட்டுவிட்டது‘ என்று தம் கட்டை விரலையும் அதற்கடுத்ததுள்ள விரலையும் இணைத்து வளையமிட்டுக் காட்டியபடி கூறினார்கள். உடனே, நான் இறைத்தூதர் அவர்களே! நம்மிடையே நல்லவர்கள் இருக்க, நாம் அழிந்துவிடுவோமா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஆம் தீமை பெரும்விட்டால். !ணிஎன்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3347. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடைச் சுவரிலிருந்து அல்லாஹ் இதைப்போல் (சிறிது) திறந்துவிட்டான்‘ என்று கூறி தம் கையால் (அரபி எண் வடிவில்) 90 என்று மடித்துக் காட்டினார்கள்.“

ஹதீஸ் 3348. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (மறுமை நாளில்) ஆதம்(அலை) அவர்களை நோக்கி, ஆதமே!ணிஎன்பான். அதற்கு அவர்கள், இதோ! வந்துவிட்டேன். கட்டளையிடு! காத்திருக்கிறேன். நலம் அனைத்தும் உன் கரங்களில் தான்‘ என்று கூறுவார்கள். அப்போது அல்லாஹ், நீங்கள் நரகத்திற்குச் செல்லவிருப்பவர்களை (மற்றவர்களிலிருந்து) தனியாகப் பிரித்திடுங்கள். என்று கூறுவான். ஆதம்(அலை) அவர்கள், எத்தனை நரகவாசிகளை? என்று கேட்பார்கள். அதற்கு அவன், ஒவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும் தொள்ளாயிரத்துத தொண்ணூற்றொன்பது பேரை (வெளியே கொண்டு வாருங்கள்)‘ என்று பதிலளிப்பான். இப்படி அவன் கூறும் வேளையில் (அங்கு நிலவும் பயங்கர சூழ்நிலையின் காரணத்தால்) சிறுவன் கூட நரைத்து (மூப்படைந்து) விடுவான் கர்ப்பமுற்ற பெண் ஒவ்வொருத்தியும் கர்ப்பத்தைப் (பீதியின் காரணத்தால் அரைகுறையாகப்) பிரசவித்து விடுவாள். மக்களை (அச்சத்தால்) போதையுற்றவர்களாக நீங்கள் காண்பீர்கள். ஆனால், அவர்கள் (உண்மையிலேயே மதுவால்) போதையுற்றிருக்க மாட்டார்கள். ஆனால், அல்லாஹ்வின் வேதனை கடுமையானதாகும்‘ (இவ்வாறு நபியவர்கள் கூறியதும்) உடனே மக்கள், இறைத்தூதர் அவர்களே! நரகத்திலிருந்து (வெளியே கொண்டு வரப்படாத) அந்த ஒரு நபர் எங்களில் யார்? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், நற்செய்தி பெற்று மகிழுங்கள்! உங்களில் ஒருவருக்கு யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தினரில் ஓராயிரம் பேர் (நரகத்திலிருந்து வெளியேறாமல் அதனுள்) இருப்பார்கள். பிறகு, என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! நீங்கள் சொர்க்கவாசிகளில் கால் பங்கினராக இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன் என்று கூறினார்கள். உடனே, நாங்கள் (இந்த மகிழ்ச்சியூட்டும் நற்செய்தியைக் கேட்டு) அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்)‘ என்று விரும்புகிறேன் என்று கூறினார்கள். உடனே, நாங்கள் (இந்த மகிழ்ச்சியூட்டும் நற்செய்தியைக் கேட்டு) அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்)‘ என்று கூறினோம். உடனே அவர்கள், சொர்க்கவாசிகளில் நீங்கள் மூன்றில் ஒரு பங்கினராக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்‘ என்று கூறினார்கள். நாங்கள் (மீண்டும் மகிழ்ச்சியால்) அல்லாஹ் அக்பர்‘ என்று கூறினோம். அவர்கள், சொர்க்கவாசிகளில் பாதித் தொகையினராக நீங்கள் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்‘ என்று கூறினார்கள். நாங்கள்

(இப்போதும்), அல்லாஹு அக்பர்‘ என்று கூறினோம். அப்போது அவர்கள், நீங்கள் (மஹ்ஷர் மைதானத்தில் கூடியிருக்கும்) மக்களில் வெண்ணிறக் காளையின் மேனியில் உள்ள கருப்பு முடியைப் போன்றே இருப்பீர்கள். அல்லது கருநிறக் காளையின் மேனியிலுள்ள வெள்ளை முடியைப் போன்றே (மொத்த மக்களில் குறைந்த எண்ணிக்கையில்) இருப்பீர்கள்‘ என்று கூறினார்கள்.

என அபூ ஸயீத் அல் குத்ரீ (ரலி) அறிவித்தார்.

## இப்ராஹீம் (அலை) அவர்கள் பற்றிய குறிப்பு

‘இப்ராஹீமை அல்லாஹ், தன் உற்ற நண்பராகத் தேர்ந்தெடுத்தான் என்னும் (திருக்குர்ஆன் 04:125-வது) இறைவசனம்.

அல்லாஹ் கூறினான்.

உண்மையில் இப்ராஹீம் ஒரு முழுச் சமுதாயமாகத் திகழ்ந்தார். அல்லாஹ்வுக்கு அடிபணிபவராக விளங்கினார். (திருக்குர்ஆன் 16:120)

மேலும், அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக இப்ராஹீம் உள்ளச்சத்துடன் மன்றாடி முறையிடக் கூடியவராகவும் இறையச்சமும் சம்ப்புத் தன்மையும் உடையவராகவும் இருந்தார். (திருக்குர்ஆன் 09:114)

அபூ மைஸரா (ரலி) மேற்கண்ட (திருக்குர்ஆன் 09:114-ம்) இறைவசனத்தி(ன் மூலத்தி)ல் இடம் பெற்றுள்ள அவ்வாஹ் என்னும் சொல்லுக்கு அபிசீனிய மொழியில் கருணையுள்ளமும் இரக்கமும் இளகிய மனமும் கொண்டவர் என்று பொருள் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3349. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் (மறுமை நாளில் காலில்) செருப்பணியாதவர்களாகவும் நிர்வாணமானவர்களாகவும், ஆண் குறிகளின் நுனித்தோல் நீக்கப்படாதவர்களாகவும் எழுப்பப்படுவீர்கள். பிறகு, நாம் முதன் முதலாகப் படைத்ததைப் போன்றே அதை மீண்டும் படைப்போம். இது நம் மீது (பொறுப்பாம்விட்ட நம்முடைய) வாக்குறுதியாகும். இதை நாம் நிச்சயம் செய்யவிருக்கிறோம்‘ (திருக்குர்ஆன் 21:104) என்னும் இறைவசனத்தை ஓதினார்கள். மறுமை நாளில் (நபிமார்களில்) முதன் முதலாக (சொர்க்கத்தின்) ஆடை அணிவிக்கப்படுபவர்கள் இப்ராஹீம அவர்கள் ஆவர். என் தோழர்களில் சிலர் இடப்பக்கம் (நரகத்தின் பால்) கொண்டு செல்லப்படுவார்கள். நான், இவர்கள் என் தோழர்கள். இவர்கள் என் தோழர்கள்‘ என்று (அவர்களைவிட்டுவிடும்படி) கூறுவேன். அப்போது, தாங்கள் இவர்களைப் பிரிந் (து மரணித்)தததிலிருந்து இவர்கள் தம் மார்க்கத்தைவிட்டு விலம், தாம் வந்த சுவடுகளின் வழியே திரும்பிச் சென்று கொண்டிருந்தார்கள்‘ என்று கூறுவார்கள். அப்போது, (அல்லாஹ்வின்) நல்லடியார் (ஈஸா-அலை அவர்கள்) கூறியதைப் போல், நான் அவர்களோடு இருந்த காலமெல்லாம் அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்தபோது நீயே அவர்களையும் கண்காணிப்பவனாக இருந்தாய். மேலும், நீ (இப்போது) அவர்களுக்கு தண்டனை அளித்தால் அவர்கள் நிச்சயமாக உன் அடிமைகளே, நீ அவர்களை மன்னித்தாலும் (அப்போதும்) நீயே யாவற்றையும் மிகைத்தவனும் நுண்ணறிவுடையவனுமாய் இருக்கிறாய்‘ என்னும் (திருக்குர்ஆன் 05: 117-118) இறைவசனத்தை (பதிலாகக்) கூறுவேன்.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3350. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இப்ராஹீம்(அலை) அவர்கள் (தம் தந்தை) ஆஸர் அவர்களை மறுமை நாளில் சந்திப்பார்கள். ஆஸருடைய முகத்தில் (புகையின்) கருமையும் புழுதியும் படிந்திருக்கும். அப்போது அவரிடம் இப்ராஹீம்(அலை) அவர்கள், நான் உங்களிடம், எனக்கு மாறு செய்ய வேண்டாம் என்று கூறவில்லையா? என்று கேட்பார்கள். அதற்கு அவர்களின் தந்தை, இன்று உனக்கு நான் மாறு செய்ய மாட்டேன்' என்று கூறுவார். அப்போது இப்ராஹீம்(அலை) அவர்கள், இறைவா! மக்களுக்கு உயிர் கொடுத்து எழுப்பப்படும் மறுமை நாளில் என்னை இழிவுபடுத்த மாட்டாய் என்று எனக்கு நீ வாக்களித்திருந்தாய். (உன் கருணையிலிருந்து) வெகு தொலைவில் இருக்கும் என் தந்தையை விட வேறெந்த இழிவு (எனக்கு) அதிகம் இழிவு தரக் கூடியது? என்று கேட்பார்கள். அப்போது உயர்வான அல்லாஹ் இப்ராஹீம் அவர்களிடம், நான் சொர்க்கத்தை இறை மறுப்பாளர்களுக்குத் தடை செய்து விட்டேன் (ஹராமாக்கி விட்டேன்)' என்று பதிலளிப்பான். பிறகு இப்ராஹீமே! உங்கள் கால்களுக்குக் கீழே என்ன இருக்கிறதென்று பாருங்கள்' என்று கூறப்படும். அவர்கள் கீழே பார்ப்பார்கள். அப்போது, அங்கே இரத்தத்தில் தோய்ந்த முடிகள் நிறைந்த கழுதைப் புலி ஒன்று கிடக்கும். பின்னர் அதன் கால்களைப் பிடித்துத் தூக்கப்பட்டு நரகத்தில் அது போடப்படும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3351 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவினுள் நுழைந்தார்கள். அங்கு இப்ராஹீம்(அலை) அவர்களின் உருவப் படத்தையும் கண்டார்கள். உடனே, இந்தக் குறைஷிகளோ உருவம் உள்ள வீட்டில் (இறை கருணையைக் கொணரும்) வானவர்கள் நுழைய மாட்டார்கள் என்று அவர்கள் கேள்விப்பட்டிருக்கிறார்களே! இது இப்ராஹீமின் உருவம். (இதில், அவர் தம் கையில் இருக்கும் அம்புகளால்) குறி சொல்பவராக நிற்கிறாரே அவருக்கென்ன? (அவருக்கும் குறி சொல்வதற்கும் என்ன சம்பந்தம்?)' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3352. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவில் உருவப்படங்களைப் பார்த்தபோது அவற்றை அழிக்கும்படி உத்திரவிட்டு அவ்வாறே அவை அழிக்கப்பட்ட பின்புதான் அதனுள் நுழைந்தார்கள். இப்ராஹீம்(அலை) அவர்களையும் அவர்கள் தம் கையில் குறி சொல்லும் அம்புகளைப் பிடித்தபடி இருக்கும் நிலையில் (உருவங்களாகப்) பார்த்தார்கள். உடனே, அல்லாஹ் தன் கருணையிலிருந்து அவர்களை (குறைஷிகளை) அப்புறப்படுத்தவானாக! அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் இருவரும் ஒருபோதும் அம்புகளின் மூலம் குறி பார்த்ததில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3353. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(நபி(ஸல்) அவர்களிடம்) இறைத்தூதர் அவர்களே! மக்களில் மிகவும் கண்ணியத்திற்குரியவர் யார்? என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள், மனிதர்களிலேயே (அல்லாஹ்வுக்கு) அதிகமாக அஞ்சுபவர் தான்' என்று பதிலளித்தார்கள். உடனே அவர்கள், நாங்கள் தங்களிடம் இதைப் பற்றிக் கேட்கவில்லை' என்று கூறினர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அப்படியென்றால் அல்லாஹ்வின் உற்ற நண்பர் (இப்ராஹீம்) உடைய மகனான இறைத்தூதர்(ஸல்) (இஸ்ஹாக்) உடைய மகனான இறைத்தூதர் (யஅகூப்) உடைய மகனான இறைத்தூதர் யூசுஃப் அவர்கள் தாம்! என்று பதிலளித்தார்கள் அதற்கு மக்கள், நாங்கள் தங்களிடம் அதைப் பற்றிக் கேட்கவில்லை' என்று கூறினர். உடனே நபி(ஸல்) அவர்கள், அரபுகளின் (பரம்பரையான) கரங்கங்ளைப் பற்றியா கேட்கிறீர்கள்? அவர்களில் அறியாமைக் காலத்தில் (இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பு)

சிறந்தவர்களாயிருந்தவர்கள் தாம் இஸ்லாத்திலும் சிறந்தவர்களாயிருப்பார்கள் அவர்கள் மார்க்க ஞானத்தைப் பெற்றால்' என்று பதிலளித்தார்கள்.

இது அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 3354. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னிடம் இன்றிரவு (கனவில்) இரண்டு வானவர்கள் (ஜீப்ரீலும் மீக்காயிலும்) வந்தார்கள். பிறகு நாங்கள் உயரமான ஒரு மனிதரிடம் சென்றோம். நீளத்தின் காரணத்தால் அவரின் தலையை நான் பார்க்க முடியவில்லை. அவர்கள் தாம் இப்ராஹீம் (அலை) அவர்கள் ஆவர்.

என சமுரா இப்னு ஜுன்தப் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3355 முஜாஹித் (ரலி) கூ அறிவித்தார்

இப்னு அப்பாஸ் (ரலி) இருக்கும்போது மக்கள், தஜ்ஜாலின் இரண்டு கண்களுக்கிடையே கா.:பிர் (நிராகரிப்பவன்) என்றோ கா.:ப், .:பே, ரே என்றோ எழுதப்பட்டிருக்கும். (என்பது உண்மையா?)' என்று பேசிக் கொண்டார்கள். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி), நான் இப்படிச் செவியுறவில்லை. ஆனால், நபி (ஸல்) அவர்கள், இப்ராஹீம் (அலை) அவர்கள் (எத்தகைய தோற்றமுடையவர்களாக இருந்திருப்பார்கள் என்று தெரிந்து கொள்ள வேண்டும்) என்றால் உங்கள் தோழரான என்னைப் பாருங்கள். மூஸா (அலை) அவர்களோ சுருள்முடி கொண்டவர்களாகவும், (கோதுமை போன்ற) பழுப்பு நிறம் கொண்டவர்களாகவும் இருந்தார்கள். ஈச்ச மர நாரினாலான கடிவாளம் இடப்பட்ட சிகப்பு நிற ஒட்டகத்தின் மீது சவாரி செய்வார்கள். அவர்கள் (ஹஜ்ஜின்போது அல் அஸ்ரக் எனும்) பள்ளத்தாக்கில் இறங்குவதை (இப்போதும்) நான் பார்ப்பதைப் போன்று உள்ளது என்று கூறினார்கள்' எனச் சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 3356. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இப்ராஹீம் (அலை) அவர்கள், தம் எண்பதாவது வயதில் கத்தூம் (எனும் வாய்ச்சி'யின்) மூலமாக விருத்த சேதனம் செய்தார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

அபூ ஸலமா (ரலி) அவர்களிடமிருந்து அப்துர் ரஹ்மான் (ரஹ்) அவர்களும் இவ்வாறே அறிவித்தார்கள்.

இன்னும் பலர் வழியாகவும் இது அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3357. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இப்ராஹீம் (அலை) அவர்கள் மூன்று பொய்களைத் தவிர வேறு பொய் எதுவும் பேசியதில்லை.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3358. இப்ராஹீம் (அலை) அவர்கள் மூன்று பொய்களைத் தவிர வேறு பொய் எதுவும் பேசியதில்லை. அவற்றில் இரண்டு அல்லாஹ்வின் (மார்க்கத்தின் நலன் காக்கும்) விஷயத்தில் சொன்னவையாகும். அவை: 1. (அவரை இணைவைக்கும் திருவிழாவிற்கு மக்கள் அழைத்தபோது,) நான் நோயுற்றிருக்கிறேன்' என்று (அதில் கலந்து கொள்ளாமல் தவிர்ப்பதற்காகக்) கூறியதும். 2. (சிலைகளை உடைத்துப் பெரிய சிலையின் தோளில் கோடரியை மாட்டிவிட்டு மக்கள், இப்படிச் செய்தது யார்? என்று கேட்டபோது, ஆயினும், இவர்களில் பெரியதான இந்தச் சிலை தான் இதைச் செய்தது' என்று கூறியதுமாகும். 3. (மூன்றாவது முறையாகப் பொய் சொன்ன சூழ்நிலை வருமாறு:)

ஒரு நாள் இப்ராஹீம்(அலை) அவர்களும் (அவர்களின் துணைவியார்) சாரா(அலை) அவர்களும் கொடுங்கோல் மன்னர்களில் ஒருவனுடைய வழியாகச் சென்றார்கள். அப்போது அந்த மன்னனிடம் (அவர்களைக் குறித்து) இங்கு ஒருவர் வந்திருக்கிறார்: அவருடன் அவரின் அழகான மனைவியும் இருக்கிறாள்‘ என்று கூறப்பட்டது. உடனே, இப்ராஹீம்(அலை) அவர்களை அழைத்து வரச் சொல்லி அந்த மன்னன் சாரா(அலை) அவர்களைக் கூப்பிட்டு அனுப்பினான். சாரா(அலை) அவர்கள் அவனிடம் சென்றபோது அவன் அவரைத் தன் கையால் அள்ள முயன்றான். உடனே, அவன் (வலிப்பு நோயால்) தண்டிக்கப்பட்டான். அவன் (சாரா(அலை) அவர்களிடம்), அல்லாஹ்விடம் எனக்காக (என் கைகளை குணப்படுத்தும்படி) பிரார்த்தனை செய். நான் உனக்குக் தீங்கு செய்ய மாட்டேன்‘ என்று சொன்னான். உடனே, சாரா(அலை) அவர்கள் அல்லாஹ் விடம் பிரார்த்திக்க, அவன் (வலிப்பிலிருந்து) விடுவிக்கப்பட்டான். பிறகு, இரண்டாவது முறையாக அவர்கள் அணைக்க முயன்றான். முன்பு போன்றே மீண்டும் தண்டிக்கப்பட்டான். அல்லது அதை விடக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டான். அப்போதும், எனக்காக (என் கைகளை குணப்படுத்தும்படி) அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய். நான் உனக்குத் தீங்கு செய்ய மாட்டேன்‘ என்று சொன்னான். அவ்வாறே அவர் பிரார்த்திக்க, அவன் (வலிப்பிலிருந்து) விடுவிக்கப்பட்டான். பிறகு, தன் காவலன் ஒருவனை அழைத்து, நீங்கள் என்னிடம் ஒரு மனிதரைக் கொண்டு வரவில்லை ஒரு ஷைத்தானைத் தான் கொண்டு வந்துள்ளீர்கள்‘ என்று சொன்னான். பிறகு, ஹாஜர் அவர்களை, சாரா(அலை) அவர்களுக்குப் பணியாளாகக் கொடுத்தான். சாரா(அலை) அவர்கள், இப்ராஹீம்(அலை) அவர்களிடம் அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போது வந்தார்கள். இப்ராஹீம்(அலை) அவர்கள் கைகளால் சைகை செய்து, என்ன நடந்தது? என்று கேட்டார்கள். அவர், அல்லாஹ் நிராகரிப்பாளனின்.. அல்லது தீயவனின்... சூழ்ச்சியை முறியடித்து, அவன் மீதே திருப்பிவிட்டான்.33 ஹாஜிராவைப் பணிப்பெண்ணாக அளித்தான் என்று கூறினார்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

(அபூ ஹு ரைரா(ரலி) கூறினார்:) வான் மழை (பிரதேச) மக்களே! அவர் (ஹாஜிரா)தான் உங்களின் தாயார்.

ஹதீஸ் 3359. உம்மு ஷு ரைக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பல்லியைக் கொல்லும்படி உத்திரவிட்டார்கள். மேலும், அவர்கள், அது இப்ராஹீம்(அலை) அவர்கள் தீக்குண்டத்தில் எறியப்பட்டபோது நெருப்பை) அவர்களுக்கெதிராக ஊதிவிட்டுக் கொண்டிருந்தது‘ என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 3360. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

“நம்பிக்கை கொண்டு, பிறகு தம் நம்பிக்கையில் அநீதியைக் கலந்து விடாதவர்களுக்கு மட்டுமே அபயமுண்டு. மேலும், அவர்களே நேர்வழி பெற்றவர்களாவர்‘ என்றும் (திருக்குர்ஆன் 06:82ம்) இறைவசனம் அருளப்பட்டபோது, நாங்கள், இறைத்தூதர் அவர்களே! எங்களில் தனக்கு அநீதியிழைத்துக் கொள்ளாதவர் எவர் தானிருக்கிறார்? என்று கேட்டோம். அதற்கு அவர்கள், (அதன் பொருள்) நீங்கள் சொல்வது போல் அல்ல. தங்கள் இறை நம்பிக்கையில் இணைவைப்பு என்பது மாபெரும் அநீதியாகும் என்று சொன்ன(தாக குர்ஆனில் 31:13-வது வசனத்தில் அல்லாஹ் கூறுவ)தை நீங்கள் கேட்கவில்லையா? என்று பதிலளித்தார்கள்.

## இறைவசனம் 39:94-ல் வரும் யஸிஃப்பூன் என்பதற்கு விரைந்து ஓடுதல் என்று பொருள்

ஹதீஸ் 3361. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

ஒரு நாள் (விருந்தின்போது) நபி(ஸல்) அவர்களிடம் இறைச்சி கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்கள், அல்லாஹ் மறுமை நாளில் முந்தியவர்களையும் பிந்தியவர்களையும் ஒரே சமவெளியில் ஒன்று திரட்டுவான். அழைப்பவனின் குரலை அவர்கள் கேட்பார்கள் அனைவரின் பார்வைக்கும் அவர்கள் தென்படுவார்கள் சூரியன் அவர்களுக்கு அருகில் வரும்!ணிஎன்று கூறிவிட்டு ஷ.ஃபாஅத் எனும் பரிந்துரை தொடர்பான ஹதீஸைக் கூறினார்கள்... பிறகு அவர்கள் இப்ராஹீம்(அலை) அவர்களிடம் வருவார்கள். நீங்கள் அல்லாஹ்வின் தூதரும் பூமியில் அவனுடைய நண்பருமாவீர்கள். எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்துரையுங்கள்' என்று கூறுவார்கள். அவர்கள், தாம் சொன்ன பொய்களை நினைவு கூர்ந்து, (இன்று) என்னைப் பற்றியே நான் கவலைப்படுகிறேன். நீங்கள் மூஸா(அலை) அவர்களிடம் செல்லுங்கள்' என்று பதிலளிப்பார்கள்.

ஹதீஸ் 3362 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் இஸ்மாயீலின் தாயா(ஹாஜ)ருக்குக் கருணைபுரியட்டும். அவர்கள் மட்டும் (இறையருளால் பொங்கி வந்த ஸம் ஸம் நீரை அள்ளி எடுத்துத் தம் தோல் பையில் வைக்க) அவசரப்பட்டிருக்காவிட்டால் ஸம்ஸம் (ம்ணறு, பூமியின் மேற்பரப்பில்) ஓடிக் கொண்டிருக்கும் ஓர் ஊற்றாக ஆம்விட்டிருக்கும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3363. உஸ்மான் இப்னு அபீ சுலைமான்(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் ஸயீத் இப்னு ஜு பைர்(ரஹ்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது (ஒருவர் அவர்களிடம் மகாமு இப்ராஹீம் பற்றி, தான் கேள்விப்பட்ட ஒரு விஷயத்தைச் சொன்னபோது) அவர்கள், எனக்கு இப்படி இப்னு அப்பாஸ்(ரலி) அறிவிக்க வில்லை. மாறாக அவர்கள், இப்ராஹீம்(அலை) அவர்கள் (குழந்தை) இஸ்மாயீல்(அலை) அவர்களையும் அவர்களின் தாயாரையும், அவர்கள் இஸ்மாயீல்(அலை) அவர்களுக்குப் பாலூட்டிக் கொண்டிருந்த நிலையில் அவர்களுடன் தோல் துருத்தி (தண்ணீர்ப் பை) ஒன்று இருக்க, அழைத்துக் கொண்டு முன்னால் சென்றார்கள். பிறகு அவரையும் அவரின் மகள் இஸ்மாயீலையும் இப்ராஹீம்(அலை) அவர்கள் அழைத்து வந்தார்கள்' என்று கூறினார்கள்.

..."இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டேன்' என்று இப்னு அப்பாஸ்(ரலி) சொல்லவில்லை.

ஹதீஸ் 3364. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

பெண்கள் முதன்முதலாக இடுப்புக் கச்சை அணிந்தது இஸ்மாயீல்(அலை) அவர்களின் தாயார் ஹாஜர்(அலை) அவர்களின் தரப்பிலிருந்து தான் ஸாரா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் மீது ஏற்பட்ட தன்னுடைய பாதிப்பை நீக்குவதற்காக அவர்கள் ஓர் இடுப்புக் கச்சையை அணிந்தார்கள்.

பிறகு இப்ராஹீம்(அலை) அவர்கள், ஹாஜர்(தன்மகன்) இஸ்மாயீலுக்குப் பாலூட்டிக் கொண்டிருக்கும் கால கட்டத்தில் இருவரையும் கொண்டு வந்து அவர்களை கஅபாவின் மேல்பகுதியில் (இப்போதுள்ள) ஸம்ஸம் கிணற்றுக்கு மேல் பெரிய மரம் ஒன்றின் அருகே வைத்துவிட்டார்கள். அந்த நாளில் மக்காவில் எவரும் இருக்கவில்லை. அங்கு தண்ணீர் கூடக் கிடையாது. இருந்ததும் அவ்விருவரையும் அங்கே இருக்கச் செய்தார்கள். அவர்களுக்கு அருகே பேரீச்சம் பழமுள்ள தோல்பை ஒன்றையும் தண்ணீருடன் கூடிய தண்ணீர்ப் பை ஒன்றையும் வைத்தார்கள். பிறகு இப்ராஹீம்(அலை) அவர்கள் (அவர்களை அங்கேயேவிட்டுவிட்டு தம் ஷாம் நாட்டிற்கு) திரும்பிச் சென்றார்கள். அப்போது அவர்களை இஸ்மாயீலின் அன்னை ஹாஜர்(அலை) அவர்கள் பின்தொடர்ந்து வந்து, இப்ராஹீமே! மனிதரோ வேறெந்தப் பொருளுமோ இல்லாத இந்தப் பள்ளத்தாக்கில் எங்களைவிட்டுவிட்டு நீங்கள் எங்கே போகிறீர்கள்? என்று கேட்டார்கள். இப்படிப் பலமுறை அவர்களிடம்

கேட்டார்கள். இப்ராஹிம்(அலை) அவர்கள் அவரைத் திரும்பிப் பார்க்காமல் நடக்கலானார்கள். அதற்கு ஹாஜர்(அலை) அவர்கள், அப்படியென்றால் அவன் எங்களைக் கைவிடமாட்டான்' என்று சொல்லிவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். இப்ராஹீம்(அலை) அவர்கள் (சிறிது தூரம்) நடந்த சென்று மலைக் குன்றின் அருகே, அவர்களை எவரும் பார்க்காத இடத்திற்கு வந்தபோது தம் முகத்தை இறையில்லம் கஅபாவை நோக்கி, இச்சொற்களால் பிரார்த்தித்தார்கள்: எங்கள் இறைவா! (உன் ஆணைப்படி) நான் என் மக்களில் சிலரை இந்த வேளாண்மையில்லாத பள்ளத்தாக்கில் கண்ணியத்திற்குரிய உன் இல்லத்திற்கு அருகில் குடியமர்த்திவிட்டேன். எங்கள் இறைவா! இவர்கள் (இங்கு) தொழுகையை நிலைநிறுத்த வேண்டும் என்பதற்காக (இவ்வாறு செய்தேன்.) எனவே, இவர்களின் மீது அன்பு கொள்ளும்படி மக்களின் உள்ளங்களை ஆக்குவாயாக! மேலும், இவர்களுக்கு உண்பதற்கான பொருள்களை வழங்குவாயாக! இவர்கள் நன்றியுடையவர்களாய் இருப்பார்கள்' என்று இறைஞ்சினார்கள். (திருக்குர்ஆன் 14:37) இஸ்மாயீலின் அன்னை, இஸ்மாயீலுக்குப் பாலூட்டவும் அந்தத் தண்ணீரிலிருந்து (தாகத்திற்கு நீர்) அருந்தவும் தொடங்கினார்கள். தண்ணீர்ப் பையில் இருந்த தண்ணீர் தீர்ந்துவிட்டபோது அவரும் தாகத்திற்குள்ளானார். அவரின் மகனும் தாகத்திற்குள்ளானார். தம் மகன் (தாகத்தால்) புரண்டு புரண்டு அழுவதை.. அல்லது தரையில் காலை அடித்துக் கொண்டு அழுவதை... அவர்கள் பார்க்க லானார்கள். அதைப் பார்க்கப் பிடிக்காமல் (சிறிது தூரம்) நடந்தார்கள். பூமியில் தமக்கு மிக அண்மையிலுள்ள மலையாக ஸஃபாவைக் கண்டார்கள். அதன் மீது (ஏறி) நின்று கொண்டு (மனிதர்கள்) எவரேனும் கண்ணுக்குத் தென்படுகிறார்களா என்று நோட்டமிட்ட படி பள்ளத்தாக்கை நோக்கிப் பார்வையைச் செலுத்தினார்கள். எவரையும் அவர்கள் காணவில்லை. எனவே, ஸஃபாவிலிருந்து இறங்கிவிட்டார்கள். இறுதியில் பள்ளத்தாக்கை அவர்கள் அடைந்தபோது தன் மேலங்கியின் ஓரத்தை உயர்த்தி சிரமப்பட்டு ஓடும் ஒரு மனிதரை போன்று ஓடிச்சென்று பள்ளத்தாக்கைக் கடந்தார்கள். பிறகு மர்வா மலைக் குன்றுக்கு னவந்து அதன் மீது (ஏறி) நின்று எவரேனும் தென்படுகிறார்களா என்று நோட்டமிட்டார்கள். எவரையும் காணவில்லை. இவ்வாறே ஏழு முறை செய்தார்கள்.

-இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: இதுதான் (இன்று ஹஜ்ஜில்) மக்கள் ஸஃபாவுக்கும் மர்வாவுக்குமிடையே செய்கிற சஃயு (தொங்கோட்டம்) ஆகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

பிறகு அவர்கள் மர்வாவின் மீது ஏறி நின்றபோது ஒரு குரலைக் கேட்டார்கள். உடனே, சும்மாயிரு' என்று தமக்கே கூறினார்கள். பிறகு, காதைத் தீட்டி கேட்டார்கள். அப்போதும் (அதே போன்ற குரலைச்) செவியுற்றார்கள். உடனே, (அல்லாஹ்வின் அடியாரே!) நீங்கள் சொன்னதை செவியுற்றேன். உங்களிடம் உதவியாளர் எவரேனும் இருந்தால் (என்னிடம் அனுப்பி என்னைக் காப்பாற்றுங்கள்)' என்று கூறினார்கள். அப்போது அங்கே தம் முன் வானவர் ஒருவரை (இப்போதுள்ள) ஸம்ஸம் (ம்ணற்றின்) அருகே கண்டார்கள். அந்த இப்ராஹீம்(அலை) அவர்கள், இறைவா! இவர்களுக்கு இறைச்சியிலும் தண்ணீரிலும் பரக்கத்தை அருள் வளத்தை அளிப்பாயாக!ணிஎன்று பிரார்த்தனை புரிந்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள், அந்த நேரத்தில் அவர்களிடம் உணவு தானியம் எதுவும் இருக்கவில்லை. அப்படி எதுவும் இருந்திருந்தால் அதிலும் அருள்வளம் தரும்படி இப்ராஹீம்(அலை) அவர்கள் பிரார்த்தித்திருப்பார்கள். எனவேதான், மக்காவைத் தவிர பிற இடங்களில் இவ்விரண்டையும் (இறைச்சியையும் தண்ணீரையும்) வழக்கமாகப் பயன்படுத்தி வருபவர்களுக்கு அவை ஒத்துக் கொள்வதேயில்லை' என்று கூறினார்கள்.

இப்ராஹீம்(அலை) அவர்கள், உன் கணவன் வந்தால் அவருக்கு (என் சார்பாக) ஸலாம் உரை அவரின் (வீட்டு) நிலைப்படியை உறுதிப்படுத்தி வைக்கும்படி சொல்' என்று கூறினார்கள். இஸ்மாயீல்(அலை) அவர்கள் (வீட்டிற்குத் திரும்பி) வந்தபோது, உங்களிடம்

எவரேனும் வந்தார்களா? என்று கேட்க, அவரின் மனைவி, ஆம், எங்களிடம் தோற்றமுடைய முதியவர் ஒருவர் வந்தார்‘ என்று (சொல்லிவிட்டு) அவரைப் புகழ்ந்தார். (பிறகு தொடர்ந்து) என்னிடம் நம்முடைய பொருளாதார நிலை எப்படியுள்ளது என்று கேட்டார். நான், நாங்கள் நலமுடன் இருக்கிறோம் என்ற தெரிவித்தேன்!ணிஎன்று பதில் கூறினார். அவர், உனக்கு அறிவுரை ஏதும் சொன்னாரா? என்று இஸ்மாயீல் (அலை) கேட்டார்கள். அதற்கு அவர், ஆம் உங்களுக்கு ஸலாம் உரைக்கிறார் உங்கள் நிலைப்படியை உறுதிப்படுத்திக் கொள்ளும் படி உங்களுக்குக் கட்டளையிடுகிறார்!ணிஎன்று கூறினார். இஸ்மாயீல் (அலை) அவர்கள், அவர் என் தந்தை நீ தான் அந்த நிலைப்படி உன்னை (மனைவியாக) வைத்துக் கொள்ளும் படி எனக்கு உத்திரவிட்டுள்ளார்!ணிஎன்று கூறினார்கள். பிறகு இப்ராஹீம் (அலை) அவர்கள் அல்லாஹ் நாடிய காலம் வரை அவர்களை (ப் பார்க்க வராமல்) விலம் வாழ்ந்தார்கள். அதன் பிறகு, (ஒரு நாள்) இஸ்மாயீல் (அலை) அவர்கள் ஸம்ஸம் கிணற்றின் அருகேயிருக்கும் பெரிய மரத்திற்குக் கீழே தன்னுடைய அம்பு ஒன்றைச் செதுக்கிக் கொண்டிருந்தபோது அவரிடம் இப்ராஹீம் (அலை) அவர்கள் வந்தார்கள். இப்ராஹீம் (அலை) அவர்கள், அவர்களை நோக்கி எழுந்து சென்றார்கள். (நெடுநாள்கள் பிரிந்து மீண்டும் சந்திக்கும்போது) தந்தை மகனுடனும் மகன் தந்தையுடனும் எப்படி நடந்து கொள்வார்களோ அப்படி நடந்து கொண்டார்கள். (பாசத்தோடும் நெம்ழ்வோடும் வரவேற்றார்கள்) பிறகு இப்ராஹீம் (அலை) அவர்கள், இஸ்மாயீலே! அல்லாஹ் எனக்கு ஒரு விஷயத்தை (நிறைவேற்றும்படி) உத்திரவிட்டுள்ளான்!ணிஎன்று கூறினார்கள். இஸ்மாயீல் (அலை) அவர்கள், உங்களுடைய இறைவன் உங்களுக்குக் கட்டளையிட்டதை நிறைவேற்றுங்கள்‘ என்று கூறினார்கள். இப்ராஹீம் (அலை) அவர்கள், நீ எனக்கு அந்த விஷயத்தை நிறைவேற்ற உதவுவாயா? என்று கேட்க இஸ்மாயீல் (அலை) அவர்கள், அப்படியென்றால், நான் இந்த இடத்தில் ஓர் இறையில்லத்தை (புதுப்பித்துக்) கட்டளையிட்டுள்ளான்!ணிஎன்று சொல்லிவிட்டு, சுற்றியிருந்த இடங்களை விட உயரமாக இருந்த ஒரு மேட்டைச் சைகையால் காட்டினார்கள். அப்போது இருவரும் இறையில்லம் கஅபாவின் அடித்தளங்களை உயர்த்திக் கட்டினார்கள். இஸ்மாயீல் (அலை) அவர்கள் கற்களைக் கொண்டு வந்து கொடுக்கலானார்கள். கட்டடம் உயர்ந்துவிட்டபோது இஸ்மாயீல் (அலை) அவர்கள், (மகாமு இப்ராஹீம் என்று அழைக்கப்படும்) இந்தக் கல்லைக் கொண்டு வந்து இப்ராஹீம் (அலை) அவர்கள் கற்களைக் கொண்டு வந்து கொடுக்கலானார்கள். இப்ராஹீம் (அலை) அவர்கள் கட்டலானார்கள். கட்டடம் உயர்ந்துவிட்டபோது இஸ்மாயீல் (அலை) அவர்கள், (மகாமு இப்ராஹீம் என்று அழைக்கப்படும்) இந்தக் கல்லைக் கொண்டு வந்து இப்ராஹீம் (அலை) அவர்களுக்காக வைத்தார்கள். இப்ராஹீம் (அலை) அவர்கள் அதன்மீது ஏறி நின்று கஅபாவைக் கட்டலானார்கள். இஸ்மாயீல் (அலை) அவர்கள் கற்களை எடுத்துத் தந்தார்கள். அப்போது இருவருமே, இறைவா! எங்களிடமிருந்து (இந்தப் புனிதப் பணியை) ஏற்றுக் கொள். நிச்சயம் நீயே நன்கு செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கிறாய்‘ (திருக்குர்ஆன் 02:127) என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

அறிவிப்பாளர் இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்: இருவரும் அந்த ஆலயத்தைச் சுற்றிலும் வட்டமிட்டு நடந்தபடி, இறைவா! எங்களிடமிருந்து (இந்த புனிதப் பணியை) ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயம் நீயே நன்கு செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கிறாய்‘ (திருக்குர்ஆன் 02:127) என்று பிரார்த்தித்தவாறு (கஅபாவைப் புதுப்பித்துக் கட்டத்) தொடங்கினார்கள்.

ஹதீஸ் 3365. இப்னு அப்பாஸ் (ரலி) கூறியதாவாது:

இப்ராஹீம் (அலை) அவர்களுக்கும் அவர்களின் மனைவி (ஸாரா அலைஹிஸ்ஸலாம்) அவர்களுக்குமிடையே மனத்தாங்கல் ஏற்பட்டபோது இப்ராஹீம் (அலை) அவர்கள் இஸ்மாயீல் (அலை) அவர்களையும் இஸ்மாயீல் (அலை) அவர்களின் தாயாரையும் அழைத்துக்

கொண்டு (மக்காவை நோக்கிச்) சென்றார்கள். அப்போது அவர்களுடன் தண்ணீருள்ள தோல் பை ஒன்று இருந்தது. இஸ்மாயீல்ன் தாயார் அதிலிருந்து தண்ணீர் குடிக்கத் தொடங்கினார். அவர்களின் பால்குடி குழந்தை இஸ்மாயீலுக்காக சரக்கலாயிற்று. பின்னர் இப்ராஹீம்(அலை) அவர்கள் மக்கா வந்து சேர்ந்தார்கள். அங்கே ஒரு பெரிய மரத்திற்குக் கீழே ஹாஜரைவிட்டுவிட்டு (ஷாமில் உள்ள) தம் குடும்பத்தாரிடம் (ஸாராவிடம்) இப்ராஹீம் திரும்பினார். அவரைப் பின்தொடர்ந்து வந்த இஸ்மாயீலின் அன்னை (ஹாஜர்), கதாஉ என்னும் இடத்தை அடைந்தவுடன் இப்ராஹீமே! எங்களை யாரிடம்விட்டுச் செல்கிறீர்கள்? என்று பின்னாலிருந்து இப்ராஹீமைக் கூப்பிட்டு கேட்டதற்கு அவர் அல்லாஹ்விடம்... என்றார். அப்படியானால், அல்லாய்வின் மீது எனக்கு முழு நம்பிக்கை உண்டு என்றார் ஹாஜர். பின்னர் திரும்பி வந்து தோல் பையிலிருந்து நீர் அருந்தினார். அவரின் குழந்தைக்காக பால் சுரந்தது. பின்னர் தண்ணீர் தீர்ந்தவுடன் அவர் (தமக்குள்), நான் போய் (மலை மீதேறி) நோட்டமிட்டால் எவராவது எனக்குத் தென்படலாம்' என்று கூறினார்கள் பிறகு, ஸஃபா மலைக் குன்றுக்கச் சென்று ஏறினார். அவர் (அங்கிருந்து) நோட்டமிட்டார் எவராவது தமக்குத் தென்படுகிறாரா என்று பார்த்தார். ஆனால் எவரும் அவருக்குத் தென்படவில்லை. எனவே, பள்ளத்தாக்கிற்குச் சென்றார். அங்கு சென்று சேர்ந்தததும் ஓடிச் சென்று மர்வாவை அடைந்தார். அப்படிப் பல சுற்றுகள் ஓடினார். பிறகு, நான் போய் குழந்தை என்ன செய்கிறது என்று பார்த்தால் (நன்றாயிருக்குமே)' என்று தமக்குள் கூறினார். எனவே, (மலைக்குச்) சென்று நோட்டமிட்டார். ஆனாலும், குழந்தை இஸ்மாயீல் அதே நிலையில் தான் (அழுதபடி) இறப்பற்கு முன் மூச்சுத் திணறுவதைப் போல் முனம்க் கொண்டிருந்தார். அவரின் (பெற்ற) மனம் அவரை நிம்மதியாக இருக்கவிடவில்லை. எனவே, அவர் (தமக்குள்) நான் போய் நோட்டமிட்டால் எவராவது தென்படக் கூடும்' என்று கூறிச் சென்று ஸஃபா மலைக் குன்றின் மீதேறிப் பார்த்தார் பார்த்தார் (பார்த்துக்கொண்டேயிருந்தார்.) எவரும் அவருக்குத் தென்படவில்லை. இவ்வாறே ஏழு சுற்றுகளை நிறைவுசெய்துவிட்டார். பிறகு, குழந்தை என்ன செய்கிறது என்று நான் போய் பார்த்து வந்தால் (நன்றாயிருக்குமே)' என்று (தமக்குள்) கூறினார்கள். அந்த நேரத்தில் குரல் ஒன்று வந்தது. (அதைக் கேட்டு) அவர், உங்களால் நன்மை செய்ய முடியுமாயின் நீங்கள் எங்களைக் காப்பாற்றுங்கள்' என்று கூறினார். அங்கே (வானவர்) ஜிப்ரீல் அவர்கள் நின்றிருந்தார்கள். தம் குதிகாலால் இப்படி சைகை செய்து பூமியில் தம் குதிகாலை (பள்ளம் விழும்படி) அழுத்தினார்கள். தண்ணீர் பீறிட்டு வந்தது. இஸ்மாயீலின் தாயார் பதறிப்போய் அதை அணைகட்டி வைக்கப் பள்ளம் தோண்டலானார்.

அபுல் காசிம்(ஸல்) அவர்கள், அவர் அப்படியேவிட்டு விட்டிருந்தால் தண்ணீர் வெளியே ஓடக் கூடியதாக இருந்திருக்கும்' என்று கூறினார்கள்.

உடனே அவர் அந்தத் தண்ணீரைக் குடிக்கலானார். அவரின் பால் அவரின் குழந்தைக்காகச் சுரந்த வண்ணமிருந்தது. அப்போது ஜு ர்ஹு ம் குலத்தைச் சேர்ந்த மக்கள் சிலர் பள்ளத்தாக்கின் மையப் பகுதிக்கு வந்தபோது பறவையொன்றைக் கண்டார்கள். அதை அவர்கள் (இதுவரை அப்பகுதியில் இல்லாத) புதுமையான ஒன்றாகக் கருதினார்கள். எனவே, பறவை நீர் நிலையின் அருகில் தானே இருக்கும்' என்று பேசிக் கொண்டார்கள். தங்கள் தூதரை அவர்கள் அனுப்பி வைக்க, அவர் சென்று பார்த்தபோது அவர்கள் (இஸ்மாயீல், அவரின் தாயார்) இருவரும் நீர் நிலை அருகே இருக்கக் கண்டார். உடனே, தம் குலத்தாரிடம் வந்து அவர்களுக்கு விஷயத்தைத் தெரிவித்தார். அவர்கள் (அன்னை) ஹாஜர்(அலை) அவர்களிடம் சென்று, இஸ்மாயீலின் அன்னையே! நாங்கள் உங்களுடன் இருக்க.. அல்லது உங்களுடன் வசிக்க... எங்களக்கு அனுமதியளிப்பீர்களா? என்று கேட்டார்கள். (அவர்கள் அனுமதியளிக்கவே அங்கேயே வசிக்கலானார்கள்.) ஹாஜருடைய மகன் (இஸ்மாயீல்(அலை) அவர்கள்) பருவ வயதையடைந்தார். ஜு ர்ஹு ம் குலத்தாரிலேயே ஒரு பெண்ணை மணந்தார். பிறகு இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு ஒரு நாள் தம் மனைவியையும் மகனையும் அவர்கள் என்ன ஆனார்கள் என்று பார்த்துவிட்டு

வரலாமென்று) தோன்றியது. எனவே, தம் வீட்டாரிடம் (முதல் மனைவி ஸாராவிடம்) நான் (மக்காவில்)விட்டுவந்த என் செல்வங்களைப் பற்றி அறிந்துவரப் போகிறேன்‘ என்று சொல்லிப் புறப்பட்டு (மக்கா)ச் சென்று (இஸ்மாயீல்(அலை) அவர்களின் மனைவியிடம்) ஸலாம் சொல்லி,‘இஸ்மாயீல் எங்கே? என்று கேட்டார்கள். அதற்கு இஸ்மாயீல்(அலை) அவர்களின் மனைவி, அவர் வேட்டையாடச் சென்றார்‘ என்று பதிலளித்தா. இப்ராஹீம்(அலை) அவர்கள்,‘அவர் வந்தால், உன் நிலைப்படியை மாற்றி விடு என்று (நான் கட்டளையிட்டதாக) சொல்லிவிடு‘ என்று கூறினார்கள். இஸ்மாயீல்(அலை) அவர்கள் வந்தபோது அவரின் மனைவி அதை அவருக்குத் தெரிவித்தார். இஸ்மாயீல்(அலை) அவர்கள்,‘நீதான் நிலைப்படி. எனவே, நீ உன் வீட்டாரிடம் சென்று விடு‘ என்று கூறினார்கள். மீண்டும் (சிறிது காலத்திற்குப் பிறகு) இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு (மக்காவில் உள்ள மனைவி, மகனைப் பார்த்துவிட்டு வரலாமென்று,) தோன்றவே தம் வீட்டாரிடம்,‘நான் (மக்காவில்)விட்டுவிட்டு வந்த என் செல்வங்களைப் பற்றி அறிந்து வரப்போகிறேன்‘ என்று கூறினார்கள். பிறகு மக்காவிற்குச் சென்று,‘இஸ்மாயீல் எங்கே? என்று அவரின் மனைவியிடம் கேட்டார்கள். அதற்கு அவர்,‘வேட்டையாடச் சென்றிருக்கிறா:ஏ என்று பதிலளித்தார். பிறகு,‘நீங்கள் (எங்களிடம்) தங்கி உண்ணவும் பருகவும் மாட்டீர்களா? என்று கேட்டதற்கு இப்ராஹீம்(அலை) அவர்கள்,‘உங்கள் உணவும் பானமும் எவை? என்று வினவ அவர்,‘எங்கள் உணவு இறைச்சியாகும். எங்கள் பானம் தண்ணீராகும்‘ என்று கூறினார். இப்ராஹீம்(அலை) அவர்கள்,‘இறைவா! இவர்களுக்கு இவர்களுடைய உணவிலும் பானத்திலும் வளத்தை அளிப்பாயாக! என்று கூறினார்கள்.

அபுல் காசிம்(ஸல்) அவர்கள்,‘(மக்காவின் உணவிலும் பானத்திலும்) இப்ராஹீம்(அலை) அவர்களின் பிரார்த்தனையின் காரணத்தால் தான் வளம் அளிக்கப்பட்டுள்ளது‘ என்று கூறினார்கள்.

பிறகு, இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு (மீண்டும் ஒரு முறை இஸ்மாயீல்(அலை) அவர்களைப் பார்த்து வரவேண்டும் போல்) தோன்றியது. உடனே அவர்கள் (மக்கா) செல்ல, அங்கு இஸ்மாயீல்(அலை) அவர்கள் ஸம்ஸம் கிணற்றுக்குப் பின் பக்கத்தில் தம் அம்பைச் சீர் செய்து கொண்டிருக்கக் கண்டார்கள். இஸ்மாயீலே! உன் இறைவன் தனக்கு ஓர் இல்லத்தை நான் (புதுப்பித்துக்) கட்டவேண்டுமென்று எனக்குக் கட்டளையிட்டுள்ளான்‘ என்று கூறினார்கள். அதற்கு இஸ்மாயீல்(அலை) அவர்கள்,‘அப்படியாயின் நான் (உதவி) செய்கிறேன்‘ என்று கூறினார்கள். உடனே இருவரும் தயாராம், இப்ராஹீம்(அலை) அவர்கள் கட்டத் தொடங்க, இஸ்மாயீல்(அலை) அவர்கள் கற்களைக் கொண்டுவந்து தந்தார்கள். இருவரும் (அப்போது),‘இறைவா! எங்களிடமிருந்து (இந்தப் புனிதப்பணியை) ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயம், நீயே செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கிறாய் (திருக்குர்ஆன் 02:127) என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். இறுதியில் கட்டடம் எழும்பியது. பெரியவ(ர் இப்ராஹீம் அன்னா)ருக்கு கற்களைத் தூக்கி வைக்க முடியவில்லை. எனவே, (மகாமு இப்ராஹீம் என்றழைக்கப்படும்) இந்தக் கல் மீது நின்றார்கள். அவர்களுக்கு இஸ்மாயீல்(அலை) கற்களை எடுத்துத் தந்தார்கள். இருவரும்‘இறைவா! எங்களிடமிருந்து (இந்தப் புனிதப்பணியை) ஏற்பாயாக! நிச்சயமாக, நீயே செவியேற்பவனாகவும் நன்கறிந்தவனாகவும் இருக்கிறாய்‘ (திருக்குர்ஆன் 02:127) என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 3366 அபூ தர்(ரலி) அறிவித்தார்

நான் (நபி(ஸல்) அவர்களிடம்),‘இறைத்தூதர் அவர்களே! பூமியில் முதன் முதலாக அமைக்கப்பட்ட பள்ளிவாசல் எது? என்று கேட்டேன். அவர்கள்,‘அல் மஸ்ஜிதுல் ஹராம் - மக்கா நகரிலுள்ள புனித (கஅபா அமைந்திருக்கும்) இறையில்லம்‘ என்று பதிலளித்தார்கள். நான்,‘பிறகு எது? என்று கேட்டேன். அவர்கள்,‘ஜெரூஸத்தில் உள்ள) அல் மஸ்ஜிதுல் அக்ஸா‘ என்று பதிலளித்தார்கள். நான்,‘அவ்விரண்டுக்கு மிடையே

எத்தனை ஆண்டுக் காலம் (இடைவெளி) இருந்தது' என்று கேட்டேன். அவர்கள்,'நாற்பதாண்டுகள்' (மஸ்ஜிதுல் ஹராம் அமைக்கப்பட்டு நாற்பதாண்டுகள் கழித்து மஸ்ஜிதுல அக்ஸா அமைக்கப்பட்டது) 40 பிறகு,'நீ தொழுகை நேரத்தை எங்கு அடைந்தாலும் உடனே, அதைத் தொழுதுவிடு. ஏனெனில், நேரப்படி தொழுகையை நிறைவேற்றுவதில் தான் சிறப்பு உள்ளது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3367 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (ஒரு போரிலிருந்து திரும்பி வரும்போது) உஹுது மலை தென்பட்டது. உடனே,'இந்த மலை நம்மை நேசிக்கிறது் நாம் இதை நேசிக்கிறோம். இறைவா! இப்ராஹீம் அவர்கள் மக்கா நகரைப் புனிதமானது என்று அறிவித்தார்கள். நான் மதீனாவின் இரண்டு மலைகளுக்கிடையே உள்ளவற்றைப் புனிதமானவை என்று அறிவிக்கிறேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3368. நபி(ஸல்) அவர்களின் துணைவியாராகிய ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம், உன்னுடைய சமுதாயத்தார் (குறைஷியர்) கஅபாவை (புதுப்பித்துக்) கட்டிய பொழுது இப்ராஹீம்(அலை) அவர்கள் அமைத்த அடித்தளங்களை விடச் சுருக்கி (சற்று உள்ளடக்கி) கட்டியிருப்பதை நீ பார்க்கவில்லையா? என்று கேட்டார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! இப்ராஹீம்(அலை) அவர்கள் அமைத்த அடித்தளங்களின் மீது அதை தாங்கள் மீண்டும் கட்டக் கூடாதா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், உன் சமுதாயத்தார் புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்களாயில்லாவிட்டால் (அவ்வாறே நான் செய்திருப்பேன்)' என்று பதிலளித்தார்கள்.

அறிவிப்பாளர் சாலிம்(ரஹ்) கூறினார்.

(இதை அன்னை ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் இப்னு முஹம்மத்இப்னி அபூ பக்ர்(ரலி) அறிவிக்கக் கேட்ட) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி), ஆயிஷா(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து இதைக் கேட்டிருந்தால் அது சரியே! ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் ஹிஜ்ர் (எனும்) வளைந்த பகுதியை அடுத்துள்ள (கஅபாவின்) இரண்டு மூலைகளையும் தொட்டு முத்தமிடாததற்குக் காரணம் இறையில்லமான கஅபா, இப்ராஹீம்(அலை) அவர்கள் அமைத்த அடித்தளத்தில் முழுமையாக அமைக்கப்படாமல் (கொஞ்சம்விட்டு அமைக்கப்பட்டு) இருப்பதே ஆகும் என்றே கருதுகிறேன்' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 3369. அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்

மக்கள் நபி(ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே!ணிஉங்களின் மீது நாங்கள் எப்படி ஸலவாத்து சொல்வது? என்று கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அல்லாஹும்ம ஸல்லி அலா முஹமமதின் வ அஸ்வாஜிஹி வ துர்ரியத்திஹி கமா ஸல்லய்த்த அலா ஆலி இப்ராஹீம இன்ன(க்)க ஹமீதுன் மஜீத் இறைவா! இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தாரின் மீது நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத் அவர்களின் மீதும், அவர்களின் மனைவிமார்கள் மற்றும் அவர்களின் சந்ததிகள் அவர்களின் மீதும் அவர்களின் மனைவிமார்கள் மற்றும் அவர்களின் சந்ததிகளின் மீதும் கருணை புரிவாயாக! இப்ராஹீம்(அலை) அவர்களின் குடும்பத்தார் மீது நீ உன் அருள் வளத்தைப் பொழிந்ததைப் போன்று முஹம்மதின் மீதும் அவர்களின் மனைவிமார்களின் மீதும் அவர்களின் சந்ததிகளின் மீதும் உன் அருள் வளத்தைப் பொழிவாயாக! நிச்சயம், நீயே புகழுக்குரியவனும் கண்ணியம் நிறைந்தவனும் ஆவாய் என்று சொல்லுங்கள் என பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3370. அப்துர் ரஹ்மான்இப்னுஅபீ லைலா(ரஹ்) அறிவித்தார்

என்னை கஅப் இப்னுஉஜ்ரா(ரலி) சந்தித்து, நபி(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற ஓர் அன்பளிப்பை உனக்கு நான் வழங்கட்டுமா? என்று கேட்டார்கள். நான், ஆம், அதை எனக்கு வழங்குங்கள்' என்று பதில் சொன்னேன். உடனே அவர்கள், நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், தங்களின் மீதும் தங்கள் குடும்பத்தார் மீதும் சலவாத்து சொல்வது எப்படி? (என்று எங்களுக்குக் கற்றுக் கொடுங்கள்) ஏனெனில், தங்களுக்கு நாங்கள் ஸலாம் சொல்வது எப்படி என்று அல்லாஹ் எங்களக்கு (தஷஹ்ஹு தில்) கற்றுக் கொடுத்திருக்கிறான்' என்று கேட்டோம். அதற்கு அவர்கள், இறைவா! இப்ராஹீம் அவர்களின் மீதும் நீ கருணை புரிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் கருணை புரிந்திடு. நீயே புகழுக்குரியவனும், கண்ணியம் மிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம அவர்களின் மீதும் இப்ராஹீம அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ உன் அருள் வளத்தைப் பொழிந்தைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் உன் அருள் வளத்தைப் பொழிந்திடு, நீயே புகழுக்குரியவனும், கண்ணியம் மிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ உன் அருள் வளத்தைப் பொழிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் உன் அருள் வளத்தைப் பொழிந்திடு, நீயே புகழுக்குரியவனும் கண்ணியம் மிக்கவனும் ஆவாய் என்று சொல்லுங்கள்' என பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3371. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், ஹஸன்(ரலி) மற்றும் ஹு ஸைன்(ரலி) ஆகியோருக்காக (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரி வந்தார்கள். அல்லாஹ்வின் முழுமையான (குணமளிக்கும்) சொற்களைக் கொண்டு ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் நச்சுப் பிராணியிடமிருந்தும் தீய எண்ணத்துடன் தீண்டும் (பொறாமைக்) கண்ணிலிருந்தும் அவனிடம் பாதுகாப்புக் கோருகிறேன்' எனும் இச்சொற்களின் மூலம் உங்கள் இருவரின் தந்தை(யான இப்ராஹீம்(அலை) அவர்கள் தம் மகன்களான) இஸ்மாயீல்(அலை) மற்றும் இஸ்ஹாக்(அலை) ஆகியோருக்காகப் பாதுகாப்புக் கோரி வந்தார்கள் - என்று கூறுவார்கள்.

## இப்ராஹீம் (அலை) விருந்தாளிகளைப் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், இப்ராஹீமின் விருந்தாளிகளைப் பற்றியும் இவர்களுக்கு எடுத்துரைப்பீராக! அவ்விருந்தாளிகள், உங்களின் மீது சாந்தி நிலவுவதாக!ணிஎன்று கூறி அவரிடம் வந்தபோது, உங்களைக் குறித்து எங்களுக்கு பயமாக இருக்கிறது' என்று அவர் கூறினார். அதற்கு அவர்கள், நீங்கள் அஞ்ச வேண்டாம். ஞானமுள்ள ஒரு குழந்தையைப் பற்றிய நற்செய்தியை உங்களுக்கு நாங்கள் அறிவிக்கிறோம்' என்று பதில் கூறினார்கள். (திருக்குர்ஆன் 15:51 - 53)

(நினைவு கூருங்கள்:) என் இரட்சகனே! இறந்தவர்களை நீ எப்படி உயிராக்குகிறாய் என்பதை எனக்குக் காட்டு' என்று இப்ராஹீம் கூறியபோது, நீங்கள் நம்பிக்கை கொள்ள வில்லையா? என்று (அல்லாஹ்) கேட்டான். (அதற்கு) அவர், ஆம் (நம்பிக்கை கொண்டுள்ளேன்) ஆயினும், என் உள்ளம் நிம்மதியடைவதற்காக (இப்படிக் கேட்டேன்)' என்று கூறினார். (திருக்குர்ஆன் 02:260)

ஹதீஸ் 3372. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறந்துவிட்டவற்றுக்கு அல்லாஹ் எப்படி உயிரூட்டுகிறான் என்ற சந்தேகம் இறைத்தூதர்களுக்கு வருவதாயிருந்தால் நாமே இப்ராஹீம(அலை) அவர்களை விடவும் சந்தேகம் கொள்ள அதிகத் தகுதி யுடையவர்கள் ஆவோம். (எனவே, சந்தேகப் பட்டு அவர்கள் அப்படிக் கேட்கவில்லை. திருக்குர்ஆனின் படி,) இப்ராஹீம(ஆலை) அவர்கள, என் இறைவா! நீ இறந்தவர்களை எப்படி உயிராக்குகிறாய் என்று எனக்குக்

காட்டு‘ என்று கேட்போது அல்லாஹ்? நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையா? என்று கேட்டான். அவர்கள், ஆம் (நம்பிக்கை கொண்டுள்ளேன்.) ஆனாலும், என் உள்ளம் நிம்மதியடைவதற்காக இப்படிக் கேட்டேன்‘ என்று பதிலளித்தார்கள். லூத் (அலை) அவர்களுக்கு அல்லாஹ் கருணை காட்டுவானாக! அவர்கள் வலுவான ஓர் ஆதரவாளனிடமே தஞ்சம் புகுபவர்களாக இருந்தார்கள். 43. யூசுஃப் (அலை) அவர்கள் சிறையில் கழித்த அளவிற்கு நீண்ட காலத்தை நான் கழிக்க நேர்ந்திருந்தால் (விடுதலையளிக்க அழைத்தவரிடம் (அவரின் அழைப்பை ஏற்று விடுதலையாகிச் செல்ல) ஒப்புக் கொண்டிருப்பேன். 44

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## இப்ராஹீம் (அலை) அவர்களின் மகன் இஸ்மாயீல் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

இந்த வேதத்தில் (நம் அடியாரும், தூதருமான) இஸ்மாயீல் அவர்களை நினைவு கூருங்கள். அவர் தன் வாக்குறுதியில் உண்மையாளராய் இருந்தார். (திருக்குர்ஆன் 19:54)

ஹதீஸ் 3373. ஸலமா இப்னுஅக்வஃ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் அம்பெறியும் விளையாட்டில் ஈடுபட்டிருந்த, பனு அஸ்லம் குலத்தைச் சேர்ந்த சிலரைக் கடந்து சென்றார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், இஸ்மாயீலின் மக்களே! அம்பெய்யுங்கள். ஏனெனில், உங்கள் தந்தை (இஸ்மாயீல் (அலை) அவர்களும்) அம் பெய்யும் கலையில் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தார்கள் நீங்கள் அம்பெறியுங்கள். நான் இன்ன குலத்தாருடன் இருக்கிறேன்‘ என்று கூறினார்கள். உடனே, அம்பெய்யும் போட்டியில் ஈடுபட்டிருந்த இரண்டு சாரரில் ஒரு சாரார் தம் கைகளை (அம்பெய்யாமல்) தடுத்து நிறுத்தினார்கள். உடனே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள், உங்களுக்கு என்ன நேர்ந்தது? ஏன் அம்பெய்யாமல் இருக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், இறைத்தூதர் அவர்களே! தாங்கள் அவர்களுடன் (எதிர் தரப்பினருடன்) இருக்க, நாங்கள் அம்பெய்வோமா? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், (மீண்டும்) நீங்கள் அம்பெய்யுங்கள். நான் உங்கள் அனைவருடனும் இருக்கிறேன்‘ என்று பதிலளித்தார்கள்.

## இப்ராஹீம் (அலை) அவர்களின் மகன் இஸ்ஹாக் (அலை) அவர்களின் நிகழ்ச்சி

இது குறித்து இப்னு உமர் (ரலி) அவர்களும், அபூ ஹுரைரா (ரலி) அவர்களும் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

(அல்லாஹ் கூறினான்)

“யஅகூபை இறப்பு அணுகியபோது நீங்கள் அங்கிருந்தீர்களா? அவர் இறக்கும் வேளையில் தம் மக்களிடம் கேட்டார்: மக்களே! எனக்குப் பின் நீங்கள் எதை வணங்குவீர்கள்? அதற்கு அவர்கள், உங்களுடைய இறைவனும் உங்கள் முன்னோர்களான இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக் ஆகியோர்ன இறைவனுமான ஒரே இறைவனையே வணங்குவோம். அத்துடன் நாங்கள் அவனுக்கே கீழ்ப்படிந்த முஸ்லிம்களாக இருப்போம்‘ என்று கூறினார்கள். (திருக்குர்ஆன் 02: 133)

ஹதீஸ் 3374. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

(நபி (ஸல்) அவர்களிடம்) இறைத்தூதர் அவர்களே! மக்களில் மிகவும் கண்ணியத்திற்குரியவர் யார்? என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், மனிதர்களிலேயே (அல்லாஹ்வுக்கு)

அதிகமாக அஞ்சுபவர் தாம்‘ என்று பதிலளித்தார்கள். அதற்கு அவர்கள், நாங்கள் தங்களிடம் இதைப் பற்றிக் கேட்கவில்லை‘ என்று கூறினர். உடனே நபி(ஸல்) அவர்கள், அப்படியென்றால் அல்லாஹ்வின் உற்ற நண்பர் (இப்ராஹீம்) உடைய மகனான இறைத்தூதர் (இஸ்ஹாக்) உடைய மகனான இறைத்தூதர் யூசுஃப் அவர்கள் தாம்!ணிஎன்று பதிலளித்தார்கள். அதற்கு மக்கள், நாங்கள் தங்களிடம் அதைப் பற்றிக் கேட்கவில்லை‘ என்று கூறினர். உடனே நபி(ஸல்) அவர்கள், அரபுகளின் (பரம்பரைகளான) சுரங்கங்களைப் பற்றியா கேட்கிறீர்கள்? அவர்களில் அறியாமைக் காலத்தில் (இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பு) சிறந்தவர்களாயிருந்தவர்கள் தாம் இஸ்லாத்தை ஏற்ற பின்பும் சிறந்தவர்களாயிருப்பார்கள் அவர்கள் மார்க்க ஞானத்தைப் பெற்றால்‘ என்று பதிலளித்தார்கள்.

## இறைத்தூதர் லூத் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

(அல்லாஹ் கூறினான்:)

மேலும், லூத்தை நாம் அனுப்பினோம். நினைவு கூருங்கள்: அவர் தம் சமூகத்தாரிடம், நீங்கள் உங்கள் கண்களால் பார்த்துக் கொண்டே ஒழுக்கக் கேடான செயல்களைச் செய்கிறீர்களா? பெண்களைவிட்டுவிட்டு, காம உணர்வைத் தீர்த்துக் கொள்ள ஆண்களையா தேடியலைகிறீர்கள்? உண்மையில் நீங்கள் மிக அறிவீனமான செயல் புரியும் மக்கள் ஆவீர்‘ என்று கூறினார். ஆயினும், அவரின் சமூகத்தாரின் பதில், லூத்துடைய குடும்பத்தாரை உங்கள் ஊரைவிட்டு வெளியேற்றுங்கள். இவர்கள் பெரிய பரிசுத்தவான்கள்‘ என்பதாகவே இருந்தது. இறுதியில் லூத்தையும் அவரின் குடும்பத்தாரையும் நாம் காப்பாற்றிக் கொண்டோம்: அவரின் மனைவியைத் தவிர! அவளை நாம் பின் தங்கியவர்களில் ஒருத்தியாக முடிவு செய்து விட்டிருந்தோம். மேலும் அந்த மக்களின் மீது ஒரு மழையைக் பொழியச் செய்தோம். அது எச்சரிக்கப்பட்ட மக்களுக்கு மிகவும் கெட்ட மழையாய் இருந்தது. (திருக்குர்ஆன் 27:54-58)

ஹதீஸ் 3375. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

லூத்(அலை) அவர்களை அல்லாஹ் மன்னிப்பானாக! அவர்கள் பலமான ஓர் ஆதரவாளினிடமே புகலிடம் தேடுபவர்களாயிருந்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(அல்லாஹ் கூறினான்:)

பிறகு, அந்தத் தூதர்கள் லூத்திடம் வந்தபோது, நீங்கள் அறிமுகமற்றவர்களாய் இருக்கிறீர்களே‘ என்று லூத் கூறினார். அதற்கு அவர்கள் கூறினார்கள்: இல்லை. எதனைக் குறித்து இவர்கள் சந்தேகம் கொண்டிருந்தார்களோ அதனையே நாங்கள் கொண்டு வந்திருக்கிறோம். நாங்கள் உண்மையைத் தான் சொல்கிறோம். எனவே, நீங்கள் இரவு சற்று இருக்கும் போதே உங்கள் குடும்பத்தாரை அழைத்துக் கொண்டு வெளியேறி விடுங்கள். மேலும், நீங்கள் அவர்களைப் பின்தொடர்ந்தே செல்லுங்கள்! உங்களில் எவரும் திரும்பிப் பார்க்க வேண்டாம்! எங்கு செல்லுமாறு உங்களுக்குக் கட்டளையிடப்படுகிறதோ அங்கு நேராகச் செல்லுங்கள். மேலும், விடிவதற்குள் இவர்கள் அனைவரும் வேரோடு அழிக்கப்பட்டு விடுவார்கள் என்ற நம்முடைய இந்த முடிவை நாம் திட்டவட்டமாக அவருக்கு அறிவித்து விட்டோம்.

(இதற்குள்ளாக) ஊர் மக்கள் மகிழ்ச்சி அடைந்தவர்களாக லூத்தின் இல்லம் வந்(து சூழ்ந்)தனர். லூத் கூறினார்: (சகோதரர்களே!) இ(ந்தச் சிறு)வர்கள் என்னுடைய விருந்தாளி (வானவர்)கள். என்னை அவமானப்படுத்தி விடாதீர்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் என்னை இழிவுபடுத்தி விடாதீர்கள்!ணிஅதற்கு அவர்கள், ஊர் உலகத்துக்கெல்லாம் நீர் வக்காலத்து வாங்க வேண்டாமென்று நாம் பலமுறை உம்மைத்

தடுக்கவில்லையா? என்றார்கள். அதற்கு லூத், நீங்கள் எதையும் செய்தே தீர வேண்டுமென்றால் இதோ என்னுடைய பெண் மக்கள் இருக்கின்றனர்! என்று கூறினார்.

(நபியே!) உம்முடைய உயிர் மீது ஆணையாக! சந்தேகமின்றி அவர்கள் ஒருவிதமான மயக்கத்தில் சிக்கி, அதில் தங்களை மறந்து தட்டழிந்து கொண்டிருந்தார்கள். இறுதியில் விடியும் வேளையில் பயங்கரமான பேரோசை ஒன்று அவர்களைத் தாக்கியது! மேலும், நாம் அவ்வூரைத் தலைகீழாகப் புரட்டினோம் அவர்களின் மீது சுடப்பட்ட கற்களைப் பொழியச் செய்தோம்.

திண்ணமாக, இந்நிகழ்ச்சியில் நுணுக்கமாய் சிந்திப்பவர்களுக்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. மேலும், இந்த (நிகழ்ச்சி நடைபெற்ற) இடம் முதன்மைச் சாலையிலிலேயே அமைந்துள்ளது. நிச்சயமாக நம்பிக்கையாளர்களுக்கு இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன. (திருக்குர்ஆன் 15:61-77)

ஹதீஸ் 3376. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள், அறிவுரை பெறுபவர் எவரேனும் உண்டா? என்னும் (54-வது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ள) இறைவசனத்தை ஓதினார்கள்.

## இறைத்தூதர் ஸாலிஹ் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

‘ஸமூத் குலத்தாரிடம் அவர்களின் சகோதரர் ஸாலிஹை நாம் (நம் தூதராக) அனுப்பி வைத்தோம். (திருக்குர்ஆன் 07:73)

மேலும், அல்லாஹ் கூறினான்:

‘ஹிஜ்ர் வாசிகள் இறைத்தூதர்களைப் பொய்யர்களெனக் கூறினார்கள். (திருக்குர்ஆன் 15:80)

‘ஹிஜ்ர் என்பதற்கு விலக்கப்பட்டது‘ கட்டடம்‘, பெண்குதிரை‘ அறிவு முதலான பொருள்கள் இருந்தாலும் இங்கே ஸமூத் கூட்டத்தார் வசித்த இடத்தையே அது குறிக்கும்.

ஹதீஸ் 3377. அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ (ரலி) கூறினார்

(ஸாலிஹ் - அலை- அவர்களின் தூதுத்துவத்திற்குச் சான்றாக வந்த) ஒட்டகத்தை (அதன் கால் நரம்புகளை) வெட்டிக் கொன்றவனை நினைவு கூர்ந்தபடி நபி (ஸல்) அவர்கள், ஸாலிஹ் உடைய சமுதாயத்தில் அபூ ஸமஆவைப் போல் மதிப்பும் வலிமையும் வாய்ந்த ஒரு மனிதன் அதைக் கொல்ல ஒப்புக் கொண்டு முன்வந்தான்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3378. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தபூக் கோரின்போது (ஸமூத் குலத்தார் வாழ்ந்த) ஹிஜ்ர் என்னும் இடத்தில் தங்கிய சமயம் அதன் கிணற்றிலிருந்து (தண்ணீர்) அருந்த வேண்டாம் என்றும் அதிலிருந்து தண்ணீர் எடுக்க வேண்டாம் என்றும், தம் தோழர்களுக்கு உத்திரவிட்டார்கள். தோழர்கள், நாங்கள் அதிலிருந்து (எடுத்த தண்ணீரால் ஏற்கனவே) மாவு பிசைந்து விட்டோமே! (என்ன செய்வது?)‘ என்று கேட்டனர். அதற்கு அவர்கள் அந்த மாவை (சாப்பிடாமல்) வீசியெறிந்து விடும்படியும் அந்தத் தண்ணீரைக் கொட்டிவிடும்படியும் உத்திரவிட்டார்கள்.

(ஸமூத் குலத்தாரின் கிணற்றிலிருந்து எடுத்த தண்ணீரால் தயாரித்த) உணவை எறிந்து விடும்படி நபி (ஸல்) அவர்கள் உத்திரவிட்டார்கள்‘ என்று சப்ரா இப்னு மஅபத் (ரஹ்)

அவர்களும் அபுஷ்ஷுமூஸ் (ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள். அதன் தண்ணீரால் மாவு தயாரித்தவர் அதனை எறிந்து விட்டும்' என்றும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ தர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3379. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

மக்கள் (தபூக் போரின்போது) இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் ஸமூத் கூட்டத்தார் வசித்த பூமியான ஹிஜ்ர் என்னும் பகுதியில் தங்கினார்கள். அதன் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்து அதனால் மாவு பிசைந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அப்பகுதியின் கிணற்றிலிருந்து அவர்கள் இறைத்த தண்ணீரைக் கொட்டிவிடும்படியும் (அதனால் பிசைந்த) அந்த மாவை ஒட்டகங்களுக்குத் தீனியாகப் போட்டு விடும்படியும் கட்டளையிட்டார்கள். மேலும், (ஸாலிஹ் - அலை- அவர்களின்) ஒட்டகம் (தண்ணீர் குடிப்பதற்காக) எந்தக் கிணற்றிற்கு வந்து கொண்டிருந்தோ அந்தக் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்ளும் படியும் உத்திரவிட்டார்கள்.

நா∴பிவு (ரஹ்) அவர்களிடமிருந்து உஸாமா (ரஹ்) அவர்களும் இதே போன்று அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3380. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ர் பிரதேசத்தைக் கடந்து சென்ற பொழுது, அக்கிரமம் புரிந்தவர்களின் வசிப்பிடங்களில் அவர்களுக்குக் கிடைத்த அதே தண்டனை உங்களுக்குக் கிடைத்து விடுமோ என்றஞ்சி அழுதபடியே தவிர நுழையதீர்கள்' என்று கூறினார்கள். பிறகு அவர்கள் சேண இருக்கையின் மீது இருந்தபடியே தம் போர்வையால் (தம்மை) மறைத்துக் கொண்டார்கள்.

ஹதீஸ் 3381. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தமக்குத்தாமே அநீதியிழைத்தவர்களின் வசிப்பிடங்களில் அவர்களுக்குக் கிடைத்ததைப் போன்ற தண்டனை உங்களுக்கும் கிடைத்துவிடுமோ என்றஞ்சி அழுதபடியே தவிர நுழையாதீர்கள்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## இறைத்தூதர் யஅகூப் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

(யூதர்களே!) யஅகூபை இறப்பு நெருங்கியபோது, நீங்கள் அங்கிருந்தீர்களா? அப்போது அவர் தம் மகன்களிடம், எனக்குப் பின்னர் நீங்கள் அதை வணங்குவீர்கள்' என வினவினார். (அதற்கு) அவர்கள் உங்களுடைய இறைவனும் உங்கள் மூதாதையர் இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக் ஆகியயோரின் இறைவனுமான ஒரே இறைவனையே நாங்கள் வணங்குவோம். மேலும் அவனுக்கே அடிபணிவோம்' என்று கூறினார்கள். (திருக்குர்ஆன் 02:133) 56

ஹதீஸ் 3382. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

கண்ணியத்திற்குரியவரின் மகனான கண்ணியத்திற்குரியவரின் மகன் தான் கண்ணியத்திற்குரியவர். அவர் இப்ராஹீம் (அலை) அவர்களின் புதல்வரான இஸ்ஹாக் (அலை) அவர்களின் புதல்வரான யஅகூப் (அலை) அவர்களின் புதல்வரான யூசு∴ப் (அலை) அவர்களேயாவார்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## இறைத்தூதர் யூஸு ∴ப் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

யூஸு ஃப் மற்றும் அவரின் சகோதரர்களின் வரலாறு பற்றிக் கேட்பவர்களுக்கு அதில் பெரும் சான்றுகள் இருக்கின்றன. (திருக்குர்ஆன் 12:07)

ஹதீஸ் 3383. அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம், மனிதர்களில் மிகவும் கண்ணியத்திற்குரியவர் யார்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், மனிதர்களில் அல்லாஹ்வுக்கு அதிகமாக அஞ்சுபவர் தாம்' என்று பதிலளித்தார்கள். மக்கள், இதைப் பற்றி உங்களிடம் நாங்கள் கேட்கவில்லை' என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அப்படியென்றால் மக்களிலேயே மிகவும் கண்ணியத்திற்குரியவர் அல்லாஹ்வின் உற்ற நண்பர் (இப்ராஹீம்) உடைய மகனான இறைத்தூதர் (இஸ்ஹாக்) உடைய மகனான இறைத்தூதர் (யஅகூப்) உடைய மகனான இறைத்தூதர் யூசுஃப் அவர்கள் தாம்' என்று கூறினார்கள். மக்கள், நாங்கள் இதைப் பற்றியும் உங்களிடம் கேட்கவில்லை''என்று கூறினர். உடனே, நபி (ஸல்) அவர்கள், அப்படியென்றால், அரபுகளின் (பரம்பரைகளான) சுரங்கங்களைப் பற்றி நீங்கள் என்னிடம் கேட்கிறீர்களா? மக்கள் சுரங்கங்கள் ஆவர். அறியாமைக் காலத்தில் அவர்களில் சிறந்தவர்களாயிருந்தவர்கள் இஸ்லாத்தைத் தழுவிவிடும் போதும் சிறந்தவர்களாயிருப்பார்கள் அவர்கள் மார்க்க ஞானத்தைப் பெற்றால்' என்று பதிலளித்தார்கள்.

அபூ ஹு ரைரா (ரலி) அவர்களிடமிருந்தே வேறொர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த நபிமொழி அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3384. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் (தம் மரணப் படுக்கையில் இருந்தபோது) என்னிடம், அபூ பக்ர், அவர்களை மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி சொல்' என்று கூறினார்கள். நான், அவர்கள் (அதிகமாக துக்கப்படுகின்ற) இளகிய மனம் உடையவர்கள். நீங்கள் தொழுகைக்காக நிற்குமிடத்தில் அவர்கள் நிற்க நேரும்போது மனம் நெம்ழ்ந்து போய் (அழுது) விடுவார்கள்' என்று சொன்னேன். அவர்கள் முன்பு சொன்னது போன்றே மீண்டும் கூறினார்கள். நானும் முன்பு சொன்ன பதிலையே மீண்டும் சொன்னேன்.

அறிவிப்பாளர் ஷு உபா (ரஹ்) கூறினார்:

நபி (ஸல்) அவர்கள் மூன்றாவது முறையில்... அல்லது நான்காவது முறையில்... (பெண்களாகிய) நீங்கள் யூசுஃபுடைய (அழகில் மயங்கிய) தோழிகள் போன் (று உள்நோக்கத்துடன் பேசுகிற) வர்கள், அபூ பக்கருக்கு சொல்லுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3385. அபூ மூஸா அல் அஷ்அரீ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் நோயுற்றார்கள். அப்போது, அபூ பக்ரிடம் மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி சொல்லுங்கள்' என்று கூறினார்கள். ஆயிஷா (ரலி), அபூ பக்ர் (ரலி) இத்தகைய (இளகிய மனமுடைய) வராயிற்றே!ணிஎன்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் முன்பு போன்றே (மீண்டும்) சொல்ல, ஆயிஷாவும் அதையே கூறினார்கள். பின்னர், நபி (ஸல்) அவர்கள் அபூ பக்ருக்குச் சொல்லுங்கள். அவர் மக்களுக்குத் தெரிவிக்கட்டும். (பெண்களாகிய) நீங்கள் யூசுஃபுடைய (அழகில் மயங்கிய) தோழிகள் போன் (று உள்நோக்கத்துடன் பேசுகின்) வர்கள் என்று கூறினார்கள். எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வாழ்நாளிலேயே அபூ பக்ர் (ரலி) (மக்களுக்குத்) தொழுகை நடத்தினார்கள்.

அறிவிப்பாளர் ஹு ஸைன் (ரஹ்) கூறினார்கள்:

ஸாயிதா (ரஹ்) அவர்களிடமிருந்து, ('அபூ பக்ர் (ரலி) இத்தகைய மனிராயிற்றே என்னும் ஆயிஷா (ரலி) அவர்களின் சொல்லுக்குப் பதிலாக,) இளகிய மனமுடைய மனிதராயிற்றே என்று சொன்னதாக அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3386. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவா! அய்யாஷ் இப்னு அபீ ரபீஆவைக் காப்பாற்று. இறைவா! ஸலமாபின் ஹிஷாமைக் காப்பாற்று. இறைவா! வலீத் இப்னு வலீதைப் காப்பாற்று. இறைவா! இறை நம்பிக்கையாளர்களில் ஒடுக்கப்பட்டவர்களைக் காப்பாற்று. இறைவா! முளர் குலத்தாரின் மீது உன் பிடியை (இறுக்கிக்) கடுமைப்படுத்துவாயாக! இறைவா! யூசுஃப் அவர்களின் சமுதாயத்தாருக்குக் கொடுத்த (கடும் பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போன்று முளருக்கும் (கடும் வறட்சி நிறைந்த) சில ஆண்டுகளைக் கொடு' என்று அக்குலத்தாருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3387. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ், லூத்(அலை) அவர்களுக்குக் கருணை புரிவானாக! அவர்கள் பலம் வாய்ந்த ஓர் உதவியாளனிடம் தஞ்சம் புகுந்தவர்களாக இருந்தார்கள். யூசுஃப்(அலை) அவர்கள் (அடைபட்டுக்) கிடந்த காலம் நான் சிறையில் (அடைபட்டுக்) கிடக்க நேர்ந்து, பிறகு (அவரிடம் வந்ததைப் போல்) என்னை (விடுதலை செய்ய) அழைப்பவர் என்னிடம் வந்திருந்தால் நான் அதை ஏற்றுக் கொண்டிருப்பேன். நான் அதை ஏற்றுக் கொண்டிருப்பேன். (ஆனால், அவர் அவ்வளவு நெடுங்காலம் சிறையில் அடைபட்டுக் கிடந்தும், தம் குற்றமற்ற தன்மையை ஏற்று அறிவிக்காதவரை சிறையிலிருந்து வெளியேற மாட்டேன்' என்று அவர் கூறுவிட்டார்.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3388. மஸ்ரூக்(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) அவர்களைப் பற்றி அவதூறு பேசப்பட்டபோது (நடந்தவை பற்றி அவர்களின் தாயாரான) உம்மு ரூமான்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அவர்கள் கூறினார்கள்.

நான் ஆயிஷாவுடன் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்போது அன்சாரிப் பெண் ஒருத்தி எங்களிடம், இன்னாரை (மிஸ்தஹ் இப்னு உஸாஸா - ரலி - அவர்களை) அல்லாஹ் நிந்திக்கட்டும்' என்று கூறியபடி வந்தாள். நான், ஏன் (இப்படிச் சொல்கிறாய்?') என்று கேட்டேன். அதற்கு அவள், (அவதூறுச்) செய்தியை அவர் (அறியாமையால் பரப்பிவருகிறார்' என்று பதிலளித்தாள். ஆயிஷா(ரலி), எந்த (அவதூறுச்) செய்தியை? என்று கேட்டார். அவள் அந்த அவதூறுச் செய்தியைத் தெரிவித்தாள். ஆயிஷா(ரலி), இதை (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்களும் (என் கணவர்) இறைத்தூதர்(ஸல்) அவர்களும் செவியுற்றார்களா? என்று கேட்டார். நான், ஆம் (செவியுற்றார்கள்)' என்று பதில் சொன்னேன். உடனே, ஆயிஷா(ரலி) மூர்ச்சையடைந்து விழுந்துவிட்டார்கள். பிறகு குளிர் காய்யச்சலுடன் தான் மூர்ச்சை தெளிந்து கண் விழித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் வந்து, இவளுக்கென்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். நான், தன்னைப் பற்றி பேசப்பட்ட அவதூறுச் செய்தியைக் கேள்விப்பட்ட காரணத்தால் காய்ச்சல் அவரைப் பீடித்துவிட்டது' என்று பதிலளித்தேன். உடனே ஆயிஷா(ரலி) (படுக்கையிலிருந்து எழுந்து) உட்கார்ந்து, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் சத்தியம் செய்தாலும் நீங்கள் என்னை நம்பமாட்டீர்கள். நான் (நடந்ததை எடுத்துச் சொல்லி) சமாதானப்படுத்தினாலும் நீங்கள் ஒப்புக் கொள்ள மாட்டீர்கள். எனக்கும் உங்களுக்கும் உவமை யஅகூப் - அலை - அவர்களின்வும் அவர்களின் பிள்ளைகளுடையவும் நிலையாகும். (யஅகூப்(அலை) அவர்களின்வும் அவர்கள் சொன்னது போன்றே) அல்லாஹ் தான் நீங்கள் (புனைந்து) கூறுபவற்றிறிகெதிராக உதவி கோரத் தகுதியானவன் ஆவான்' என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் திரும்பிச் சென்றார்கள். அதைத் தொடர்ந்து அல்லாஹ், தான் அருளிய (ஆயிஷா(ரலி) நிரபராதி என்று அறிவிக்கும்) வசனத்தை அருளிட நபி(ஸல்)

அவர்கள் அதை ஆயிஷாவுக்கு தெரிவித்தார்கள். அதைச் செவியுற்றவுடன் ஆயிஷா(ரலி) (இதற்காக) அல்லாஹ்வுக்கு (மட்டுமே) நான் நன்றி செலுத்துகிறேன். வேறெவருக்கும் நன்றி செலுத்த மாட்டேன்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3389. உர்வா(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அவர்களிடம், (நிராகரிக்கும்) மக்கள் இனி நம்பிக்கை கொள்ளமாட்டார்கள் என்று இறைத்தூதர்கள் நிராசையடைந்தார்கள் மேலும், தங்களிடம் (இறை உதவி வருமென்று) பொய்யுரைக்கப்பட்டது என (நம்பிக்கை கொண்ட மக்களும் கூட)க் கருதலானார்கள். இந்நிலையில் நம்முடைய உதவி அவர்களுக்கு வந்தது‘ என்று அல்லாஹ் கூறினான். (திருக்குர்ஆன் 12:110) இவ்வசனத்தில் மூலத்தில் (‘பொய்யுரைக்கப்பட்டது என்பதைக் குறிப்பதற்குரிய சொல்லை) குத்திபூ - தாம் பொய்ப்பிக்கப்பட்டு விட்டோம் (என இறைத் தூதர்கள் கருதலானார்கள்) என்று வாசிக்க வேண்டுமா? அல்லது குதிபூ - மக்கள் தங்களிடம் பொய்யுரைக்கப்பட்டது (எனக் கருதலானார்கள்) என்று வாசிக்க வேண்டுமா? என்று கேட்டேன்.

“ குத்திபூ (தாம் பொய்யிக்கப்பட்டு விட்டோமோ என்று இறைத்தூதர்கள் கருதலானார்கள் என்றே ஓத வேண்டும்)‘ என்று ஆயிஷா(ரலி) பதிலளித்தார்கள்.

உடனே, அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களின் சமுதாயத்தினர் தங்களைப் பொய்ப்பிக்கிறார்கள் என்று இறைத்தூதர்கள் சந்தேம்க்கவில்லையே! உறுதியாக நம்பித்தானே இருந்தார்கள்? (ஆனால் ழன்னூ - நபிமார்கள் சந்தேகித்தார்கள் என்று தானே குர்ஆனின் இந்த வசனத்தில் இடம் பெற்றுள்ளது. அவ்வாறிருக்க, நீங்கள் கூறுகிறவாறு எப்படிப் பொருள் கொள்ள முடியும்?)‘ என்று கேட்டேன்.

அதற்கு ஆயிஷா(ரலி),

“அன்பு (மகனே) உர்வா! அதை அவர்கள் உறுதியாக நம்பத்தான் செய்தார்கள். (எனவே, இந்த வசனத்தில், ழன்னூ என்பதற்கு நபிமார்கள் உறுதியாக நம்பினார்கள் என்றே பொருள் கொள்ளவேண்டும் சந்தேகித்தார்கள் என்று பொருள் கொள்ளக் கூடாது) என்று பதில் கூறினார்கள்.

உடனே, கத் குதிபூ (தங்களிடம் பொய் சொல்லப்பட்டுவிட்டது என்று நபிமார்கள் கருதலானார்கள்) என்று இருக்கலாமோ? என கேட்டேன்.

அதற்கு ஆயிஷா(ரலி) கூறினார்:

அல்லாஹ் காப்பாற்றட்டும், நபிமார்கள் தங்கள் இறைவனைப் பற்றி அப்படி (தங்களிடம் இறைவன் பொய் சொல்லிவிட்டதாக) நினைக்கவில்லை.

அதற்கு ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் காப்பாற்றட்டும். நபிமார்கள் தங்கள் இறைவனைப் பற்றி அப்படி (தங்களிடம் இறைவன் பொய் சொல்லிவிட்டதாக) நினைக்கவில்லை.

இந்த வசனத்தின் பொருளாவது: இறைத்தூதர்களைப் பின்பற்றிய சமுதாயத்தினர், தங்கள் இறைவனை நம்பி, இறைத்தூதர்களை உண்மையாளர்கள் என ஏற்று, அதன் பிறகு (தாம் ஏற்ற மார்க்கவழியில் நேரிட்ட) துன்பங்கள் தொடர்ந்து நீடித்த கொண்டே போய், இறை உதவியும் வரத் தாமதமாம்க் கொண்டிருந்த அந்த நிலையில் தான்... அந்த இறைத்தூதர்கள் தம் சமுதாயத்தினரில் தம் செய்தியைப் பொய்யென்று கருதி, தம்மை ஏற்காமலிருந்துவிட்டவர்களைக் குறித்து நிராசையடைந்துவிட்டனர். மேலும், தம்மை ஏற்றுப் பின்பற்றியவர்கள் கூட (இறை உதவி வரத் தாமதமானதாலும் கூட (இறை உதவி வரத் தாமதமானதாலும் துன்ப துயரங்கள் நீண்ட கொண்டே சென்ற காரணத்தாலும்) நம்முடைய செய்தியைப் பொய்யென்று கருதுகிறார்கள் என்றும் அவர்கள் எண்ணலானார்கள்‘

மேலும், அல்லாஹ் கூறினான்:

யூசுஃபிடம் அவர்கள் நம்பிக்கையிழந்து விடவே, அவர்கள் எல்லாரும் தனியாகச் சென்று ஆலோசனை செய்தார்கள். (திருக்குர்ஆன் 12:80) மேலும், காண்க: இறைவசனம் - 12:87

ஹதீஸ் 3390. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கண்ணியத்திற்குரியரின் மகனான கண்ணியத்திற்குரியவரின் மகனான கண்ணியத்திற்குரியவரின் மகன்தான் கண்ணியத்திற்குரியவர். அவர் இப்ராஹீம்(அலை) அவர்களின் புதல்வரான இஸ்ஹாக்(அலை) அவர்களின் புதல்வரான யஅகூஃப்(அலை) அவர்களின் புதல்வரான யூசுஃப்(அலை) அவர்களேயாவார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## இறைத்தூதர் அய்யூப் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

அய்யூப் தம் இறைவனிடம் பிரார்த்தித்ததை நினைவு கூருங்கள்: என்னை நோய் பீடித்துவிட்டது. நீயோ கிருபை செய்வோரில் எல்லாம் பெரும் கிருபையாளனாக இருக்கிறாய்' என்று அவர் பிரார்த்தித்தார். (திருக்குர்ஆன் 21:83) 69

மேலும், காண்க: 38: 42

ஹதீஸ் 3391. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அய்யூப்(அலை) அவர்கள் தங்களின் ஆடை முழுவதையும் களைந்துவிட்டு குளித்துக் கொண்டிருந்தபோது அவர்களின் மீது தங்கத்தாலான வெட்டுக்கிளி ஒன்றின் கால் வந்து விழுந்தது. உடனே, அவர்கள் அதைத் தம் துணியில் எடுக்கலானார்கள். அப்போது அவர்களின் இறைவன் (அவர்களை) அழைத்து, அய்யூபே! நீங்கள் பார்க்கிற இச்செல்வம் உங்களுக்குத் தேவையில்லை என்ற நிலையில் நான் உங்களை (போதிய செல்வமுடையவராக) வைத்திருக்கவில்லையா? என்று கேட்டான். அதற்கு அவர்கள், ஆம் (உண்மை தான்.) என் இறைவா! ஆயினும், உன் அருள்வளம் எனக்குத் தேவைப்படுகிறதே!ணிஎன்று பதிலளித்தார்கள்.

## இறைத்தூதர் மூஸா ,ஹாரூன் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், மூஸாவைப் பற்றி இவ்வேதத்தில் உள்ளதைக் கூறும்: நிச்சயமாக, அவர் தேர்ந்தெடுக்கப்பட்டவராகவும் (நம்மால் அனுப்பப்பட்ட) தூதராகவும் (நம்) செய்தியை எடுத்துரைக்கும் நபியாகவும் இருந்தார். மேலும், நாம் தூர் மலையின் வலப்பக்கத்திலிருந்து அவரை அழைத்தோம். தனியே உரையாடுவதன் மூலம் நம்மிடம் நெருங்குவதற்கான வாய்ப்பை அவருக்கு அளித்தோம். மேலும், நம் தயவினால் அவரின் சகோதரர் ஹாரூனை ஒரு நபியாக நியமித்து அவருக்கு உதவியாளராக ஆக்கினோம். (அல் குர்ஆன் 19: 51-53)

மேலும், அல்லாஹ் கூறினான்:

ஃபிர்அவ்னின் குடும்பத்தைச் சேர்ந்த - தம் இறைநம்பிக்கையை மறைத்து வைத்திருந்த - இறைநம்பிக்கையாளர் ஒருவர் கூறலானார்: ஒருவர் அல்லாஹ்தான் என் இறைவன் என்று கூறுகிறார் என்பதற்காகவா அவரை நீங்கள் கொன்றுவிடுவீர்கள்? அவரோ, உங்களுடைய இறைவனின் சார்பிலிருந்து உங்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டுவந்திருக்கிறார். அவர் பொய்யராயிருந்தால் அவரின் பொய் அவருக்கே கேடாக அமையும். ஆனால், அவர் உண்மையாளராய் இருந்தால், அவர் உங்களை எச்சரிக்கை செய்கிற பயங்கரமான

விளைவுகளிலிருந்து சில அவசியம் உங்களை பீடிக்கவே செய்யும். வரம்பு மீறுபவனாகவும், பெரும் பொய்யனாகவும் இருக்கிறவனுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை. (அல் குர்ஆன் 40:28)

ஹதீஸ் 3392. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

(முதன் முதலாக தமக்கு வேத வெளிப்பாடு அருளப்பட்ட பின்பு) நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியாரன) கதீஜா (ரலி) அவர்களிடம், தம் மனம் பதறியவராகத் திரும்பி வந்தார்கள். உடனே, கதீஜா (ரலி) நபி (ஸல்) அவர்களை (தம் ஒன்றுவிட்ட சகோதரரும், வேதம் கற்றவருமான) வரகா இப்னு நவ்ஃபல் அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள். வரகா கிறிஸ்துவராக மாறி விட்டிருந்த ஒரு மனிதராயிருந்தார். அவர், (நபி ஈசாவுக்கு அருளப்பெற்ற வேதமான) இன்ஜீலை அரபி மொழியில் ஓதி வந்தார். வரகா, நபி(ஸல்) அவர்களிடம், நீங்கள் என்ன பார்த்தீர்கள்‘ என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் விவரம் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட வரகா, இவர்தாம் (இறைத்தூதர்) மூஸாவின் மீது அல்லாஹ் இறங்கச் செய்த (வேத வெளிப்பாட்டைக் கொண்டு வரும்) நாமூஸ் எனும் வானவர். (மார்க்கப் பிரசாரத்தில் ஈடுபட்டுப் பல சோதனைகளைச் சந்திக்கப் போகிற) உங்களுடைய காலத்தை நான் அடைந்தால், உங்களுக்கு வலிமையுடன் கூடிய உதவுவேன்‘ என்று கூறினார்.

‘நாமூஸ் என்பவர் பிறருக்கு அறிவிக்காமல் மறைக்கிற விஷயங்களை (இறை கட்டளைப்படி) இறைத்தூதருக்கு அறிவித்துத் தரும் வானவராவார்.

அல்லாஹ் கூறினான்:

மேலும், (நபியே!) மூஸாவின் செய்தி உங்களுக்கு எட்டியதா? அவர் நெருப்பைக் கண்டபோது தம் குடும்பத்தாரிடம் கூறினார்: கொஞ்சம் இருங்கள் நெருப்பைக் காண்கிறேன். அதிலிருந்து ஒரு கொள்ளியை உங்களுக்கு நான் கொண்டு வரக் கூடும் அல்லது அந்த நெருப்பிற்கு அருகில் (பாதையை அறிந்து கொள்ள) ஏதாவது ஒரு வழிகாட்டுதல் எனக்குக் கிடைக்கக் கூடும்.

அங்கு சென்றதும் அவர் உரக்க அழைக்கப்பட்டார்: மூஸாவே! நானே உங்களுடைய இறைவன். உங்கள் காலணிகளைக் கழற்றி விடுங்கள். திண்ணமாக, நீங்கள் துவா எனும் புனிதமான பள்ளத்தாக்கில் இருக்கிறீர்கள். (அல் குர்ஆன் 20: 9-12)

ஹதீஸ் 3393. மாலிக் இப்னு ஸஃஸஆ (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், தாம் (விண் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட (மிஃராஜ்) இரவைப் பற்றிய (செய்திகளை) எங்களுக்கு அறிவித்தார்கள்: நான் ஐந்தாவது வானத்திற்குச் சென்றபோது, அங்கே ஹாரூன் அவர்கள் இருந்தார்கள். ஜிப்ரீல் அவர்கள், இவர்கள் தாம் ஹாரூன் அவர்கள். இவர்களுக்கு ஸலாம் சொல்லுங்கள்‘ என்று கூறினார்கள். நான் அவர்களுக்கு ஸலாம் சொன்னேன். அவர்கள் என் சலாமுக்கு பதிலுரைத்தார்கள். பிறகு, நல்ல சகோதரரே வருக! நல்ல நபியே வருக!ணிஎன்று கூறினார்கள்.

இதே நபிமொழி அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஃபிர்அவ்னுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

(இந்தச் சந்தர்ப்பத்தில்) ஃபிர்அவ்னுடைய குடும்பத்தைச் சேர்ந்த - தம் (இறை) நம்பிக்கையை மறைத்து வைத்திருந்த இறை நம்பிக்கையாளர் ஒருவர் கூறலானார்: ஒருவர், அல்லாஹ் தான் என் இறைவன் என்று கூறுகிறார் என்பதற்காகவா அவரை

நீங்கள் கொன்று விடுவீர்கள்? அவரோ உங்களுடைய இறைவனின் சார்பிலிருந்து உங்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்திருக்கிறார். அவர் பொய்யராயிருந்தால், அவரின் பொய் அவருக்கே கேடாக அமையும். ஆனால், அவர் உண்மையாளராயிருந்தால், அவர் உங்களை எச்சரிக்கை செய்கிறபயங்கரமான விளைவுகளிலிருந்து சில அவசியம் உங்களைப் பீடிக்கவே செய்யும். வரம்பு மீறுபவனாகவும் பெரும் பொய்யனாகவும் இருக்கிறவனுக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவதில்லை. (திருக்குர்ஆன் 40: 28)

அல்லாஹ் கூறினான்:

மேலும், (நபியே!) மூஸாவின் செய்தி உங்களக்கு எட்டியதா? அவர் நெருப்பைக் கண்டபோது தம் குடும்பத்தாரிடம் கூறினார்: கொஞ்சம் இருங்கள் நெருப்பைக் காண்கிறேன். அதிலிருந்து ஒரு கொள்ளியை உங்களுக்கு நான் கொண்டு வரக் கூடும் அல்லது அந்த நெருப்பிற்கு அருகில் (பாதையை அறிந்து கொள்ள) ஏதாவது ஒரு வழிகாட்டுதல் எனக்குக் கிடைகக்க கூடும்.

அங்கு சென்றதும் அவர் உரக்க அழைக்கப்பட்டார்: மூஸாவே! நானே உங்களுடைய இறைவன். உங்கள் காலணிகளைக் கழற்றி விடுங்கள். திண்ணமாக, நீங்கள் துவா எனும் புனிதமான பள்ளத்தாக்கில் இருக்கிறீர்கள். (திருக்குர்ஆன் 20: 9-12)

(மேலும், அல்லாஹ் கூறினான்:) மேலும், முன்னரே நாம் உங்களிடம் எந்த இறைத்தூதர்கள் பற்றி எடுத்துரைத்துள்ளோமோ அந்த இறைத்தூதர்களுக்கும் உங்களிடம் எடுத்துரைக்கப்படாத இறைத்தூதர்களுக்கும் நாம் வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அறிவித்திருக்கிறோம். அல்லாஹ் மூஸாவிடம் (நேரடியாகப்) பேசியும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04: 164)

ஹதீஸ் 3394 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னை (விண் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட இரவில் நான் மூஸா அவர்களைப் பார்த்தேன். அவர்கள், ஷனூஆ குலத்து மனிதர்களில் ஒருவரைப் போல் (எண்ணெய் தடவிப்) படிந்த தொங்கலான தலைமுடியுடையவர்களாக இருந்தார்கள். நான் ஈசா அவர்களைப் பார்த்தேன். அவர்கள் நடுத்தர வயதுடைய சிகப்பான மனிதராகவும் (அப்போதுதான்) குளியலறையிலிருந்து வெளியே வந்தவரைப் போன்றும் இருந்தார்கள். இப்ராஹீம் (அலை) அவர்களின் சந்ததிகளிலேயே அவர்களுக்கு (தோற்றத்தில்) மிகவும் ஒப்பாக இருப்பவன் நானே. பிறகு என்னிடம் இரண்டு பாத்திரங்கள் கொண்டு வரப்பட்டன. அவ்விரண்டில் ஒன்றில் பால் இருந்தது மற்றொன்றில் மது இருந்தது. (வானவர்) ஜிப்ரீல் அவர்கள், இரண்டில் எதை நீங்கள் விரும்புகிறீர்களோ அதைக் குடியுங்கள்‘ என்று கூறினார்கள். நான் பாலை எடுத்துக் குடித்தேன். நீங்கள் இயல்பான (பானத்)தை எடுத்துக் கொண்டீர்கள். மதுவை நீங்கள் எடுத்திருந்தால் உங்கள் சமுதாயம் வழி தவறிப் போயிருக்கும்‘ என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3395. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள், யூனுஸ் இப்னு மத்தா (அலை) அவர்களை விட நான் சிறந்தவன் என்று (என்னைப் பற்றிக்) கூறுவது எந்த அடியானுக்கும் அழகல்ல‘ என்று கூறினார்கள். இவ்விதம், யூனுஸ் (அலை) அவர்களை அவர்களின் தந்தையுடன் இணைத்து, மத்தாவின் மகன் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3396. மேலும், நபி (ஸல்) அவர்கள், தாம் (விண் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட இரவை நினைவு கூர்ந்தார்கள். அப்போது, மூஸா (அலை) அவர்கள் மாநிறமுடையவர்கள் ஷனூஆ குலத்து மனிதர்களைப் போல் உயரமானவர்கள்‘ என்று

கூறினார்கள். மேலும், ஈசா(அலை) அவர்கள் சுருள் முடியுடையவர்கள் நடுத்தர உயரமுடையவர்கள்' என்று கூறினார்கள். நரகத்தின் காவலர் (வானவர்) மாலிக் அவர்களையும் நினைவு கூர்ந்தார்கள் தஜ்ஜாலையும் நினைவு கூர்ந்தார்கள்.

ஹதீஸ் 3397. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனா நகருக்கு வந்தபோது யூதர்கள் ஒரு நாளில் நோன்பு நோற்பதைக் கண்டார்கள் அதாவது ஆபீ ஆ ராவுடைய (முஹர்ரம் 10வது) நாளில் (யூதர்கள்) நோன்பு நோற்று வந்ததை இப்னு அப்பாஸ்(ரலி) குறிப்பிடுகிறார்கள் - யூதர்கள், இது மாபெரும் நாள். மூஸா(அலை) அவர்களை இந்த நாளில் தான் அல்லாஹ் காப்பாற்றினான் ஃபிர்அவ்னின் கூட்டத்தாரை (கடலில்) மூழ்கடித்தான். எனவே, மூஸா(அலை) அவர்கள் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும் விதத்தில் நோன்பு நோற்றார்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், நான் அவர்களை விட மூஸா அவர்களுக்கு, மிக நெருக்கமானவன்' என்று கூறிவிட்டு, அந்த நாளில் தாமும் நோன்பு நோற்று, தம் தோழர்களுக்கும் (உபரியான) நோன்பு நோற்கும்படி ஆணையிட்டார்கள்.

அல்லாஹ் கூறினான்:

நாம் மூஸாவுக்கு முப்பது இரவுகளை (நாள்களை) வாக்களித்(து சினாய் மலைக்கு அழைத்)தோம். இவ்வாறு, நாற்பது இரவுகள் என்று அவரின் இறைவன் நிர்ணயித்த தவணை முழுமை அடைந்தது. மூஸா (சினாய் மலைக்குச் சென்றபோது) தம் சகோதரர் ஹாரூனிடம், நான் சென்ற பிறகு நீர் என்னுடைய கூட்டத்தாரிடையே என் பிரதிநிதியாக இருந்து, சீராகச் செயல் புரிந்து வருவீராக! மேலும், குழப்பம் விளைவிப்போரின் நடைமுறையினை மேற் கொள்ளாதீர்!ணிஎன்று கூறினார். நாம் குறிப்பிட்டிருந்த நேரத்தில் மூஸா வந்தார். பிறகு அவரின் இறைவன் அவரிடம் உரையாடியபோது அவர் வேண்டினார்: என் இறைவா! எனக்கு நீ காட்சி அளிப்பாயாக! நான் உன்னைப் பார்க்க வேண்டும்!ணிஅதற்கு இறைவன் கூறினான்: என்னை நீர் காண முடியாது. ஆயினும் (எதிரிலுள்ள) மலையைப் பாரும்! அது தன்னுடைய இருப்பிடத்தில் நிலைத்திருந்தால், என்னை நீர் காண முடியும்!ணிஅவரின் இறைவன் அம்மலையின் மீது வெளிப்பட்டபோது அது பொடிப் பொடியாகிவிட்டது. மூஸாவும் திடுக்கிட்டு மயங்கி விழுந்தார். பிறகு உணர்வு பெற்றபோது கூறினார்: நீ மிகவும் தூய்மையானவன். நான் உன்னிடம் மன்னிப்புக் கோரி மீள்கிறேன். மேலும்,ந ான் நம்பிக்கை கொள்வோரில் முதன்மையானவனாக இருக்கிறேன். (திருக்குர்ஆன் 07: 142 - 143)

ஹதீஸ் 3398. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் மறுமை நாளில் மூர்ச்சை அடைந்து விடுவார்கள். மூர்ச்சை தெளி(ந்து எழு)பவர்களில் நான்தான் முதல் நபராக இருப்பேன். அப்போது நான் மூஸா(அலை) அவர்களுக்கு அருகே இருப்பேன். அவர்கள் அர்ஷின் கால்களில் ஒரு காலைப் பிடித்தபடி (நின்று) இருப்பார்கள். அவர்கள் எனக்கு முன்பே மூர்ச்சை தெளிந்து (எழுந்து)விட்டார்களா, அல்லது தூர் சீனா மலையில் (இறைவனைச் சந்தித்தபோது) அடைந்த மூர்ச்சைக்குப் பகரமாக (இப்போது மூர்ச்சையாக்கப்படாமல்)விட்டு விடப்பட்டார்களா என்று எனக்குத் தெரியாது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3399. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல்களில் குலத்தார் மட்டும் இருந்திராவிட்டால் இறைச்சி துர்நாற்றமெடுக்காது. ஹவ்வா (ஏவாள்) அவர்கள் மட்டும் இருந்திராவிட்டால் பெண், தன் கணவனை எக்காலத்திலும் (ஆசையூட்டி) ஏமாற்ற மாட்டாள்)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

‘தூ..பான் என்பது பெரு வெள்ளமாகும்.

தொடர் இறப்புக்கும் தூ..பான் என்பர்.

## மூஸா(அலை) அவர்களுடன் கிளிர்‘(அலை) அவர்கள் சந்தித்த நிகழ்ச்சி.

ஹதீஸ் 3400. உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி) ஹுர்ரு இப்னு கைஸ் அல்..பஸாரீ(ரலி) அவர்களுடன் மூஸா(அலை) அவர்களின் தோழர் யார் என்னும் விஷயத்தில் தர்க்கித்தார்கள். இப்னு அப்பாஸ்(ரலி), அவர் கிள்ர்(அலை) அவர்கள் தாம்‘ என்று கூறினார்கள். அவர்கள் இருவரையும் உபை இப்னு கஅப்(ரலி) கடந்து சென்றார்கள். இப்னு அப்பாஸ்(ரலி), உபை இப்னு கஅப் அவர்களை அழைத்து, நானும் என்னுடைய இந்தத் தோழரும், தாம் சந்திக்க விருப்பவரிடம் செல்ல வேண்டிய பாதையை விசாரித்த மூஸா(அலை) அவர்களின் (சந்திப்புக்குரிய) தோழரைக் குறித்து தர்க்கித்தோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அவரைப் பற்றிக் கூற நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? என்று வினவினார்கள். அதற்கு உபை இப்னு கஅப்(ரலி), ஆம் அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் அவரைப் பற்றிக் கூற நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? என்று வினவினார்கள். அதற்கு உபை இப்னு கஅப்(ரலி), ஆம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இவ்வாறு கூறக் கேட்டேன்‘ என்றார்கள். பனு இஸ்ராயீல் குலத்தாரின் பிரமுகர்கள் நிறைந்த ஓர் அவையில் ஒருவர் வந்து, மூஸா(அலை) அவர்களிடம், உங்களை விட அதிகமாக அறிந்தவர் எவரையாவது உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார். மூஸா(அலை) அவர்கள், (அப்படி எவரும் இருப்பதாக) எனக்குத் தெரியவில்லை‘ என்று பதிலளித்தார்கள். எனவே, அல்லாஹ் மூஸா(அலை) அவர்களுக்கு, அப்படியல்ல் நம் அடியார் களிர் உங்களை விட அறிந்தவராயிருக்கிறார்‘ என்று கூறினான். எனவே, மூஸா(அலை) அவர்கள் அவரைச் சென்றடைவதற்கான பாதையை விசாரித்தார்கள். எனவே, (களிர் - அலை - அவர்களைச் சந்திக்கும் இடம் வந்துவிட்டது என்பதை) மூஸா(அலை) அவர்கள் புரிந்து கொள்ள மீன் அடையாளமாக ஆக்கப்பட்டது. மேலும், அவர்களிடம், மீனை நீங்கள் தவறவிட்டுவிட்டால் உடனே (வந்த வழியே) திரும்பி வாருங்கள். அப்போது அவரை நீங்கள் சந்திப்பீர்கள்‘ என்று சொல்லப்பட்டது. அதன்படி, அவர்கள் கடலில் மீனைப் பின்தொடர்ந்து (சென்று) கொண்டிருந்தார்கள். அப்போது மூஸா(அலை) அவர்களிடம் அவர்களின் (உதவியாளரான) இளைஞன், நான் அந்தப் பாறையின் பக்கம் ஒதுங்கி ஓய்வெடுத்தபோது மீனை மறந்து (தவறவிட்டு) விட்டேன். அதை நினைவில் வைத்திருக்க விடாமல் ஷைத்தான் தான் அதை எனக்கு மறக்கடித்துவிட்டான்‘ என்று கூறினார். உடனே, மூஸா(அலை) அவர்கள், (அது நம்மைவிட்டு நழுவிச் செல்லும்) அந்த சந்தர்ப்பத்தைத் தான் நாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம்‘ என்று கூறினார்கள். பிறகு இருவரும் தம் சுவடுகளின் வழியே நடந்து திரும்பிச் சென்றனர். (வழியில்) களிர்(அலை) அவர்களைச் சந்தித்தனர். பிறகு, அல்லாஹ் தன் வேதத்தில் எடுத்துரைத்துள்ள அவ்விருவர் தொடர்பான நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

ஹதீஸ் 3401. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம், நவ்..ப் அல் பிக்காலீ என்பவர், களிர்‘(அலை) அவர்களின் தோழரான மூஸா(அலை) அவர்கள் பனு இஸ்ராயீல்களின் (இறைத் தூதரான) மூஸா(அலை) அவர்கள் அல்லர் அவர் வேறொரு மூஸா தான் என்று கருதுகிறார்‘ என்று சொன்னேன். அதற்கு அவர்கள், அல்லாஹ்வின் பகைவன் பொய் சொல்லிவிட்டான். உபை இப்னு கஅப்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து நமக்கு அறிவித்து உள்ளார்கள்: (ஒரு முறை) மூஸா(அலை) அவர்கள் பனு இஸ்ராயீல்களிடையே எழுந்து நின்று

உரையாற்றினார்கள். அப்போது அவர்களிடம், மக்களிடையே மிகவும் அறிந்தவர் யார்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், நானே‘ என்று பதிலளித்துவிட்டார்கள். எனவே, அல்லாஹ் அவர்களைக் கண்டித்தான். ஏனெனில், மூஸா (அலை) அவர்கள் அல்லாஹ்வே அறிந்தவன்‘ என்று சொல்லாமல்விட்டுவிட்டார்கள். எனவே, அல்லாஹ், மூஸா (அலை) அவர்களிடம், இல்லை. இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்தில் என் அடியார் ஒருவர் இருக்கிறார். அவர் உங்களை விட அதிகமாக அறிந்தவர், என் இறைவா! அவரை நான் சந்திப்பதற்கு யார் (வழி காட்டுவார்?)‘ என்று கேட்டார்.

- அறிவிப்பாளர் அலீ இப்னு அப்தில்லாஹ் அல் மதீனி (ரஹ்) அறிவித்தார். சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்), இறைவா! அவரைச் சந்திப்பதற்கு எனக்கு வழி எப்படி? என்று மூஸா (அலை) அவர்கள் கேட்டதாகவும் சொல்லியிருக்கலாம்.

அதற்கு அல்லாஹ், நீங்கள் ஒரு மீனை எடுத்து அதை ஒரு (ஈச்சங்) கூடையில் போட்டுக் கொள்ளுங்கள். (அப்படியே கடற்கரையோரமாக நடந்து செல்லுங்கள்.) நீங்கள் எங்கே அந்த மீனைத் தவற விடுகிறீர்களோ அங்கே தான் அவர் இருப்பார்‘ என்று சொன்னான். அதன்படியே மூஸா (அலை) அவர்களும் அவர்களின் உதவியாளர் யூஷவு இப்னு நூன் அவர்களும் ஒரு மீனை எடுத்துக் கூடையில் போட்டுக் கொண்டு நடந்தார்கள். அவர்கள் ஒரு பாறையருகே சென்று சேர்ந்தபோது அங்கே படுத்து ஓய்வெடுத்தார்கள். உடனே, மூஸா (அலை) அவர்கள் தூங்கிவிட்டார்கள். மீன் குதித்து வெளியேறிக் கடலில் விழுந்தது. அது கடலில் (சுரங்கம் போல்) வழியமைத்துக் கொண்டது. மீனின் வழியில் குறுக்கிடாதவாறு நீரோட்டத்தை அல்லாஹ் தடுத்துவிட (மீனைச் சுற்றி) ஒரு வளையம் போல் தண்ணீர் ஆம்விட்டது. மீதிமிருந்த இரவும் பகலும் அவர்கள் நடந்து சென்று கொண்டேயிருந்தார்கள். இறுதியில், அடுத்த நாள் வந்தபோது தம் உதவியாளரை நோக்கி, நம்முடைய காலைச் சிற்றுண்டியைக் கொண்டு வா! நாம் காலைச் சிற்றுண்டியைக் கொண்டு வா! நாம் நம்முடைய இந்தப் பயணத்தால் மிகவும் களைப்படைந்து விடைந்தோம்‘ என்று மூஸா (அலை) கூறினார்கள். அல்லாஹ் கட்டளையிட்ட இடத்தை மூஸா (அலை) தாண்டிச் செல்லும்வரை அவர்களுக்குக் களைப்பு ஏற்படவில்லை. அவர்களின் உதவியாளர் அவர்களிடம், நாம் அந்தப் பாறையில் ஓய்வெடுக்க தங்கினோமே, பார்த்தீர்களா? அங்கே தான் நான் மீனை மறந்து (தவறவிட்டு) விட்டேன். (அதை நினைவில் வைத்திருக்காதபடி) ஷைத்தான் தான் எனக்கு அதை மறக்கடித்துவிட்டான். அது வியப்பான முறையில் கடலில் வழியமைத்துக் கொண்டது‘ என்று கூறினார். மீனுக்கு அது (தப்பிக்க) வழியாகவும், அவ்விருவருக்கும் அது வியப்பாகவும் அமைந்தது. மூஸா (அலை) அவர்கள் அந்த உதவியாளரிடம், அதுதான் நாம் தேடிக் கொண்டிருந்த இடம்‘ என்று கூறினார்கள்!ணிஉடனே, அவர்கள் இருவரும் வந்த வழியே திரும்பிச் சென்றார்கள். இறுதியில், அந்தப் பாறையை அடைந்தார்கள். அங்கே ஒருவர் தம்மை முழுவதுமாக ஆடையால் போர்த்தி மூடியிருந்தார். மூஸா (அலை) அவர்கள் அவருக்கு ஸலாம் கூற, அம்மனிதர் அவர்களுக்கு பதில் ஸலாம் கூறினார். பிறகு, உங்களுடைய (இந்தப்) பகுதியில் (அறியப்படாத) ஸலாம் (உங்களுக்கு மட்டும்) எப்படி (வந்தது? நீங்கள் யார்?)‘ என்று களிர் வினவினார். மூஸா (அலை) அவர்கள், நானே மூஸா‘ என்று பதிலளித்தார்கள். அதற்கு அம்மனிதர், பனு இஸ்ராயீல்களின் (இறைத்தூதரான) மூஸாவா‘ என்று கேட்டார். மூஸா (அலை) அவர்கள், ஆம், உங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத் தருவதற்காக நான் உங்களிடம் வந்திருக்கிறேன்‘ என்று கூறினார்கள். அதற்கு அவர், மூஸாவே! அல்லாஹ் எனக்குக் கற்றத் தந்த ஓர் அறிவு என்னிடம் உள்ளது. அதை நீங்கள் அறியமாட்டீர்கள் அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத் தந்த ஓர் அறிவு உங்களிடம் உள்ளது. அதை நான் அறிய மாட்டேன்‘ என்று கூறினார். மூஸா (அலை) அவர்கள், நான் உங்களைத் தொடர்ந்து வரட்டுமா? என்று கேட்டார்கள். அவர், உங்களால் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது. நீங்கள் அறியாத

விஷயத்தை எப்படிச் சகித்துக் கொண்டிருப்பீர்கள்‘ என்று கேட்டதற்கு மூஸா(அலை) அவர்கள், இன்ஷா அல்லாஹ்.. இறைவனால் நாடினால் நீங்கள் என்னைப் பொறுமையாளராகக் காண்பீர்கள். எந்த விவகாரத்திலும் உங்களுக்கு நான் மாறு செய்யமாட்டேன்‘ என்று கூறினார்கள். பிறகு, இருவரும் கடற்கரையோரத்தில் நடந்து சென்றார்கள். அப்போது மரக்கலம் ஒன்று அவர்களைக் கடந்து சென்றது. அதன் உரிமையாளர்(களான ஏழைத் தொழிலாளர்)களிடம் தங்களை ஏற்றிச் செல்லும்படி பேசினார்கள். அவர்கள் களிர்(அலை) அவர்களை அடையாளம் புரிந்து கொண்டு அவர்களை வாடகை கேட்காமல் ஏற்றிச் சென்றார்கள். அவர்கள் இருவரும் மரக்கலம் ஏறியபோது சிட்டுக்குருவி ஒன்று வந்து மரக்கலத்தின் விளிம்பின் மீது விழுந்தது. பிறகு, அது கடலில் (அலகால்) ஒரு முறை அல்லது இருமுறை கொத்தி (நீர் அருந்தி)யது. உடனே மூஸா(அலை) அவர்களிடம் களிர்(அலை), மூஸாவே! இந்தச் சிட்டுக்குருவி தன் அலகால் (கொத்தி நீரருந்தியதால்) இந்தக் கடலிலிருந்து எவ்வளவு (நீரை) எடுத்திருக்குமோ அந்த அளவு தான் என் அறிவும் உங்கள் அறிவும் அல்லாஹ்வின் அறிவிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது‘ என்று கூறினார்கள். அப்போது கிள்ர் ஒரு கோடரியை எடுத்து மரக்கலத்தின் (அடித்தளப்) பலகை ஒன்றைக் கழற்றிவிட்டார்கள். களிர்(அலை) அவர்கள் வாய்ச்சியின் உதவியால் (மரக்கலத்தின்) பலகையைக் கழற்றிய பின்புதான் மூஸா(அலை) அவர்களுக்குத் தெரியவந்தது. உடனே மூஸா(அலை) அவர்கள், என்ன காரியம் செய்து விட்டீர்கள்? வாடகை இல்லாமலே நம்மை ஏற்றி வந்தவர்களின் மரக்கலத்தை வேண்டுமென்றே ஓட்டையாக்கி விட்டீர்களே! அதில் சவாரி செய்பவர்களை மூழ்கடிக்கவா (இப்படிச் செய்தீர்கள்)? நீங்கள் மிகப்பெரும் (கொடுஞ்) செயலைச் செய்து விட்டீர்கள்‘ என்று கூறினார்கள். களிர்(அலை) அவர்கள், உங்களால் என்னுடன் பொறுமையோடு இருக்கமுடியாது என்று நான் உங்களுக்குச் சொல்லவில்லையா? என்றார்கள். மூஸா(அலை) அவர்கள், நான் மறந்துவிட்டதை வைத்து என்னை தண்டித்து (போகச் சொல்லி) விடாதீர்கள். என் விஷயத்தில் கடுமையாக நடந்து கொள்ளாதீர்கள்‘ என்று கூறினார்கள். ஆக, மூஸா(அலை) அவர்கள் முதல் முறையாகப் பொறுமையிழந்தது அவர்கள் மறந்து போனதால் தான். (பிறகு) கடலிலிருந்து அவர்கள் வெளியேறியபோது சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த ஒரு சிறுவனைக் கடந்து சென்றார்கள். களிர்(அலை) அவர்கள் அச்சிறுவனின் தலையைப் பிடித்து, தம் கையால் இப்படிப் பிடுங்கி (தனியே எடுத்து)விட்டார்கள்.

இந்த இடத்தில் அறிவிப்பாளர் கஃப்யான் இப்னு உயைனா(ரஹ்), தம் விரல் நுனிகளை எதையோ பறிப்பதைப் போல் காட்டி சைகை செய்தார்கள்.

அப்போது மூஸா(அலை) அவர்கள் களிர்(அலை) அவர்களிடம், ஒரு பாவமும் அறியாத ஒரு (பச்சிளம்) உயிரையா நீங்கள் கொன்றுவிட்டீர்கள்? அவன் வேறெந்த உயிரையும் பறிக்கவில்லையே? நீங்கள் மிகவும் தீய செயலைச் செய்துவிட்டீர்கள்‘ என்று கூறினார்கள். அதற்கு களிர்(அலை) அவர்கள், நீங்கள் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது‘ என்று நான் (முன்பே) சொல்லவில்லையா? என்று கூறினார்கள். மூஸா(அலை) அவர்கள், இதற்குப் பின்னால் நான் உங்களிடம் ஏதாவது (விளக்கம்) கேட்டால் என்னை உங்களுடன் வைத்திருக்காதீர்கள். என்னிடமிருந்து (பிரிந்து செல்ல) உங்களுக்குத் தக்க காரணம் கிடைத்துவிட்டது‘ என்றார்கள். மீண்டும் இருவரும் நடந்தார்கள். இறுதியில், ஓர் ஊருக்கு வந்தார்கள். அந்த ஊர் மக்களிடம் உணவு கேட்டார்கள். ஆனால், அவர்கள் அவ்விருவரையும் உபசரிக்க மறுத்துவிட்டார்கள். அந்த ஊரில் சாய்ந்தபடி கீழே விழ இருந்த சுவர் ஒன்றை இருவரும் கண்டார்கள். (இதைக் கண்ட) உடனே, களிர்(அலை) அவர்கள் (இந்தச் சுவரை நிலை நிறுத்துவோம் என்பதற்கு அடையாளமாக) தம் கையால் இப்படிச் சைகை செய்தார்கள்.

- அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) மேலே ஏதோ ஒரு பொருளைத் தடவுவது போல் சைகை காட்டினார்கள்.

மேலும், அறிவிப்பாளர் அலீ இப்னு அப்தில்லாஹ் அல் மதீனீ(ரஹ்), சுஃப்யான், இப்னு உயைனா(ரஹ்) சாய்ந்தபடி என்னும் வார்த்தையை ஒரேயொரு முறைதான் சொல்லக் கேட்டேன்' என்று கூறுகிறார்.

மூஸா(அலை) அவர்கள், இந்த சமுதாயத்தினரிடம் நாம் வந்து (உணவு கேட்டு)ம் அவர்கள் நமக்கு உணவளிக்கவும் இல்லை விருந்துபசாரம் செய்யவுமில்லை (அவ்வாறிருந்தும்) வேண்டுமென்றே நீங்கள் அவர்களின் சுவரைச் செப்பனிட்டுள்ளீர்கள். நீங்கள் விரும்பியிருந்தால் அதற்குக் கூலி வாங்கிக் கொண்டிருக்கலாம்' என்றார்கள். களிர்(அலை) அவர்கள், இதுதான் நானும் நீங்களும் பிரிய வேண்டிய நேரம். உங்களால் பொறுமையாக இருக்க முடியாத விஷயங்களின் விளக்கத்தை நான் உங்களுக்கு (இப்போது) அறிவித்து விடுகிறேன்' என்று கூறினார்கள்.

- நபி(ஸல்) அவர்கள், மூஸா(அலை) அவர்கள் பொறுமையாக இருந்திருக்க வேண்டும் என்று நாம் விரும்பினோம். அவ்வாறிருந்திருந்தால் அல்லாஹ் அவ்விருவரின் நிகழ்சசிகள் பற்றி (இன்னும் நிறை) எடுத்துரைத்திருப்பான்' என்று கூறினார்கள். அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்கள்: மூஸா பொறுமையாக இருந்திருப்பாரேயானால் அவ்விருவர் பற்றி(ய நிறைய செய்திகள்) நமக்கு அறிவிக்கப்பட்டிருக்கும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), அவர்களுக்கு முன்னே ஒரு மன்னன் ஆளும் பகுதி இருந்தது. அவன் ஒவ்வொரு பழுதில்லாத ஒழுங்கான மரக்கலத்தையும் நிர்பந்தமாக அபகரித்துக் கொண்டிருந்தான். மேலும், அந்தச் சிறுவனுடைய விஷயம் என்னவெனில் அவன் இறை மறுப்பாளனாக இருந்தான். அவனுடைய தாய் தந்தையார் இறைநம்பிக்கையாளர்களாக இருந்தனர்' என்று ஓதினார்கள். அறிவிப்பாளர் அலீ இப்னு அப்தில்லாஹ் அல் மதீனீ(ரஹ்) கூறினார்: பிறகு சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) என்னிடம், அம்ர் இப்னு தீனார்(ரஹ்) என்னிடம், அம்ர் இப்னு தீனார்(ரஹ்) இப்படி ஓதுவதை இரண்டு முறை கேட்டு நான் அதை அவர்களிடமிருந்து மனனம் செய்திருக்கிறேன்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்களிடம், இதை அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களிடமிருந்து நீங்கள் மனனம் செய்தீர்களா? அல்லது அம்ர் இப்னு தீனாரிடமிருந்து கேட்பதற்கு முன்பு வெறெந்த மனிதரிடமிருந்தாவது அதை மனனம் செய்தீர்களா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், வேறெவரிடமிருந்து இதை நான் மனனம் செய்வேன்? அம்ர் இப்னு தீனாரிடமிருந்து அதை என்னைத் தவிர வேறெவராவது அறிவித்திருக்கிறார்களா? அவரிடமிருந்து இரண்து அல்லது மூன்று முறை நான் செவியுற்று அதை மனனம் செய்திருக்கிறேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3402. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

களிர்(அலை) அவர்கள் ஒரு காய்ந்த பொட்டல் பூமியின் மீது அமர்ந்தார்கள். உடனே, அவர்களுக்குப் பின்னே அது பசுமையான (கதிர்களுடைய)தாக (உயிர்பெற்று) அசையலாயிற்று. எனவேதான் அவர்களுக்கு களிர் (பசுமையானவர்) என்று பெயரிடப்பட்டது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இந்த நபிமொழி முழுவதுமாக சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3403. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல்களுக்கு, (ஊருக்குள் நுழையும்போது) அதன் வாசலில், சிரம் தாழ்த்தியபடியும் ஹித்தத்துன் ('பாவ மன்னிப்புக்கோருகிறோம்') என்று சொல்லிய படியும்

நுழையுங்கள்‘ என்று கட்டளையிடப்பட்டது. ஆனால், அவர்கள் (ஹித்தத்துன் என்னும் சொல்லை ஹின்தத்துன் - கோதுமை என்று) மாற்றிவிட்டார்கள் தங்கள் புட்டங்களால் தவழ்ந்த படி (ஊருக்குள்) நுழைந்தார்கள் மேலும், ஒரு வாற்கோதுமைக்குள் ஒரு தானியவிதை என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3404. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூஸா (அலை) அவர்கள் மிகவும் வெட்கப்படுபவர்களாகவும் அதிகமாக (தம் உடலை) மறைத்துக் கொள்பவர்களாகவும் இருந்தார்கள். அவர்களின் மேனியிலிருந்து சிறிதளவு கூட வெளியே தெரியாது. அவர்கள் (அதிகமாக) வெட்கப்பட்ட காரணத்தால் தான் இப்படி தம் உடலை அவர்கள் மறைத்துக் கொண்டார்கள். அப்போது, பனு இஸ்ராயீல்களில் அவர்களுக்கு மனவேதனை தர விரும்பியவர்கள் அவர்களுக்குத் துன்பம் தந்தனர் இவருடைய சருமத்தில் ஏதோ குறைபாடு இருப்பதால் தான் இந்த அளவிற்கு இவர் (தன் மேனியை) மறைத்துக் கொள்கிறார். (இவருக்குக்) தொழு நோய் இருக்கவேண்டும் அல்லது குடலிறக்க நோய் இருக்க வேண்டும்‘ என்று கூறினார்கள். மூஸா (அலை) அவர்களைப் பற்றி அவர்கள் சொன்ன குறைகளிலிருந்து அவர் தூய்மையானவர் என்று நிரூபித்திட அல்லாஹ் விரும்பினான். எனவே, (இறைவனின் திட்டப்படி) ஒரு நாள் மூஸா (அலை) அவர்கள் மட்டும் (குளிக்குமிடத்திற்குத்) தனியாகச் சென்று, தம் ஆடைகளை (கழற்றிக்) கல்லின் மீது வைத்துவிட்டுப் பிறகு குளித்தார்கள். குளித்து முடித்தவுடன் தம் துணிகளை எடுத்துக் கொள்வதற்காக அவற்றை நோக்கிச் சென்றார்கள். அப்போது அந்தக் கல் அவர்களின் துணியுடன் ஓடலாயிற்று. மூஸா (அலை) அவர்கள், தம் தடியை எடுத்துக் கொண்டு கல்லை விரட்டிப்பிடிக்க முனைந்தார்கள். கல்லே என் துணி! கல்லே என் துணி! என்று குரல் எழுப்பலானார்கள். (அதை விரட்டிச் சென்றபடி) இறுதியில் பனு இஸ்ராயீல் சமுதாயத்தாரின் தலைவர்களிருக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது பனு இஸ்ராயீல் சமுதாயத்தினர், மூஸா (அலை) அவர்கள் அல்லாய்வின் படைப்புகளிலேயே அழகானவர்களாகவும் தாம் சொன்ன குறைபாடுகளிலிருந்து தூய்மையானவர்களாகவும் இருப்பதை, அவர்களை ஆடையில்லாத கோலத்தில் கண்டதன் மூலம் பார்த்துக் கொண்டார்கள். கல் (ஓடாமல்) நின்றது. உடனே, மூஸா (அலை) அவர்கள், தம் துணியை எடுத்துக் கொண்டு தம் கைத்தடியால் அந்தக் கல்லை அடிக்கலானார்கள்.

அறிவிப்பாளர் அபூ ஹுரைரா (ரலி) கூறினார்:

அல்லாஹ்வின் மீதாணையாக! அந்தக் கல்லின் மீது அவர்கள் (தடியால்) அடித்த காரணத்தால் மூன்று அல்லது நான்கு அல்லது ஐந்து தழும்புகள் (இன்னும்) உள்ளன. இந்த நிகழ்ச்சியைத் தான், இறை நம்பிக்கையாளர்களே! மூஸாவுக்குத் துன்பம் தந்தவர்களைப் போன்று நீங்கள் ஆம்விடாதீர்கள். அவர்கள் (இட்டுக் கட்டிக்) கூறியவற்றிலிருந்து மூஸா தூய்மையானவர் என்று அல்லாஹ் நிரூபித்துவிட்டான். மேலும், அவர் அல்லாஹ்விடம் கண்ணியத்திற்குரியவராக இருந்தார்‘ என்றும் (திருக்குர்ஆன் 33:69) இறைவசனம் குறிக்கிறது.

ஹதீஸ் 3405. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை (போரில் கிடைத்த பொருட்களைப்) பங்கிட்டார்கள். அப்போது ஒருவர், நிச்சயம் இது அல்லாஹ்வின் திருமுகம் (திருப்தி) நாடப்படாத பங்கீடாகும்‘ என்று (அதிருப்தியுடன் கூறினார். நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அதைத் தெரிவித்தேன். (அதைக் கேட்டு) அவர்கள் கோபமடைந்தார்கள். எந்த அளவிற்கென்றால் கோப (த்தின் அடையாள) த்தை நான் அவர்களின் முகத்தில் கண்டேன். பிறகு, மூஸா (அலை) அவர்களுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக! இதை விட மிக

அதிகமாக அவர் புண்படுத்தப்பட்டார் இருப்பினும் அவர் (பொறுமையுடன்) சகித்துக் கொண்டார்‘ என்று கூறினார்கள்.

## இறைத்தூதர் பயணித்ததும் ஆடு மேய்த்ததும்

(அல்லாஹ் கூறினான்:)

நாம் இஸ்ராயீலின் வழித்தோன்றல்களை கடலைக் கடக்கவைத்தோம். பின்னர் (அவர்கள் தங்களின் பயணத்தைத் தொடர்ந்த போது) தம் சிலைகளின் மீது பக்தி கொண்டிருந்த ஒரு சமுதாயத்தை அவர்கள் கடந்து செல்ல நேர்ந்தது. அவர்கள், மூஸாவே! இம்மக்களுக்கு கடவுள்கள் இருப்பதுபோல் எங்களுக்கும் ஒரு கடவுளை உருவாக்கிக் கொடுங்கள்‘ என்று கூறலானார்கள். அதற்கு மூஸா நீங்கள் அறியாத மக்களாய் இருக்கிறீர்கள். இவர்கள் பின்பற்றிக் கொண்டிருக்கும் வழிமுறை அழிந்து போகக் கூடியதாகும். இவர்கள் செய்து கொண்டிருப்பவை முற்றிலும் வீணானவை‘ என்று கூறினார். (திருக்குர்ஆன் 07:138)

மேலும் காண்க:

ஹதீஸ் 3406. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் (‘மர்ருழ் ழஹ்ரான் என்னுமிடத்தில்) அராக் (மிஸ்வாக்) மரத்தின் பழங்களைப் பறித்துக் கொண்டிருந்தோம். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அதில் கருப்பான பழத்தை நீங்கள் பறியுங்கள். ஏனெனில், அதுதான் அவற்றில் மிக நல்லது‘ என்று கூறினார்கள். மக்கள், நீங்கள் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தீர்களா? என்று கேட்டனர். அதற்கு அவர்கள், ஆடு மேய்க்காத இறைத்தூதர் எவரேனும் உண்டா? என்று பதிலளித்தார்கள்.

## பனூ இஸ்ராயீலின் பசுவின் கதை பற்றிய பாடம்

(அல்லாஹ் கூறினான்:)

மேலும், இந்தச் சந்தர்ப்பத்தை நினைவு கூருங்கள்:

மூஸா தம் சமூகத்தாரிடம், ஒரு பசுவை நீங்கள் அறுக்க வேண்டும் என்று அல்லாஹ் நிச்சயமாக உங்களுக்குக் கட்டளையிடுகிறான் எனக் கூறினார். (அப்போது அவர்கள், மூஸாவே!) நீர் எங்களை கேலி செய்கிறீரா? என்றார்கள். அதற்கு அவர், நான் (அவ்வாறு பேசி அறிவீனர்களில் ஒருவனாம் விடுவதிலிருந்து இறைவனிடம் பாதுகாவல் தேடுகிறேன்‘ என்றார். அவர்கள் கூறினார்கள். அது (பசு) எத்தன்மையுடையது என எங்களுக்கு விவரிக்கும்படி உம்முடைய இறைவனிடம் எங்களுக்காக வேண்டுவீராக!ணிஅதற்கு அவர், நிச்சயமாக அது கிழடாகவோ, கன்றாகவோ இல்லாமல் நடு வயதுள்ளதாய் இருக்கவேண்டும் என இறைவன் கூறுகிறான் எனவே, உங்களுக்கு இடப்படுகிற கட்டளையைச் செயல்படுத்துங்கள்! என்றனர். மீண்டும் அவர்கள் கூறினார்கள்: (மூஸாவே!) அதன் நிறம் என்ன என்று எங்களுக்கு விவரிக்குமாறு உம்முடைய இறைவனிடம் நீர் வேண்டுவீராக!ணிஅதற்கு அவர், நிச்சயமாக அது மஞ்சள் நிறமான பசுவாக இருக்க வேண்டும் அதன் நிறம் பார்ப்பவர்களை பரவசப்படுத்தும் வண்ணம் (அடர்த்தியாக) இருக்கவேண்டும்!ணிஎன்றார். அதற்கு அவர்கள் கூறினார்கள்: (மூஸாவே!) அது எத்தன்மையுடையது என (மிக மிகத்) தெளிவாக எங்களுக்கு விவரிக்கும் படி உம் இறைவனை வேண்டுவீராக! ஏனெனில், நிச்சயமாக அந்தப் பசு (எதுவென்பது) பற்றி எங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. மேலும், அல்லாஹ் நாடினால் (உரிய பசுவின் பக்கம்) நாங்கள் வழிகாட்டப் பெறுவோம்!ணிமூஸா பதிலளித்தார்: பூமியை உழுவதற்கோ, வேளாண்மைக்கு நீரிறைப்பதற்கோ பயன்படுத்தப்படாத, ஊனமேதுமற்ற, எவ்வித வடுவுமற்ற பசுவாக அது இருக்கவேண்டும் என அவன் கூறுகிறான்!ணிபிறகு அவர்கள் (ஆரவாரத்துடன்) கூறினார்கள்: இப்போது தான் நீர் சரியான (விளக்கத்)தைத் தந்துள்ளீர்! பின்னர் அவர்கள்

அந்தப் பசுவை அறுத்தார்கள். ஆயினும் அவர்கள் அதனை முழுமனதோடு செய்பவர்களாய் இருக்கவில்லை. (திருக்குர்ஆன் 02:67-71)

## மூஸா (அலை) அவர்களின் இறப்பும் அதன்பின்னர் அவர்களை நினைவு கூர்தலும்

ஹதீஸ் 3407 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

‘மலக்குல் மவ்த் (உயிரை எடுத்துச் செல்லவரும் வானவர்) மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் அனுப்பப்பட்டார். தம்மிடம் அவர் வந்தபோது மூஸா (அலை) அவர்கள் அவரை (முகத்தில்) அறைந்துவிட்டார்கள். உடனே அவர் தம் இறைவனிடம் திரும்பிச் சென்று, மரணத்தை விரும்பாத ஓர் அடியாரிடம் என்னை நீ அனுப்பிவிட்டாய்‘ என்று கூறினார். இறைவன், நீ அவரிடம் திரும்பிச் சென்று அவரின் கையை ஒரு காளை மாட்டின் முதுகின் மீது வைக்கச் சொல். (அதன் முதும்லுள்ள முடிகளில் எந்த அளவிற்கு) அவரின் கரம் மூடுகிறதோ (அதில்) ஒவ்வொரு முடிக்குப் பகரமாக ஓர் ஆண்டு (இந்த உலகில் வாழ) அவருக்கு அனுமதி உண்டு (என்று சொல்.) எனக் கூறினான். (அவ்வாறே அந்த வானவர் திரும்பிச் சென்று மூஸா (அலை) அவர்களிடம் கூறியபோது) அவர், இறைவா! (அத்தனை காலம் வாழ்ந்து முடிந்த) பிறகு என்ன நடக்கும்? என்று கேட்டார்கள். இறைவன், மரணம் தான்‘ என்று பதிலளித்தான். மூஸா (அலை) அவர்கள், அப்படியென்றால் இப்போதே என் உயிரை எடுத்துக் கொள்‘ என்று கூறிவிட்டு, (பைத்துல் மக்திஸ் என்னும்) புனித பூமிக்கு நெருக்கமாக அதிலிருந்து கல்லெறியும் தூரத்தில் தம் அடக்கத் தலம் அமைந்திடச் செய்யுமாறு அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.

(இதை எடுத்துரைத்த போது) இறைத்தூதர் (ஸல்) அவர்கள், நான் அங்கு (பைத்துல் மக்திஸில்) இருந்திருந்தால் சாலையோரமாக செம்மணல் குன்றின் கீழே அவரின் மண்ணறை இருப்பதை உங்களுக்கு காட்டியிருப்பேன்‘ என்று கூறினார்கள்.

ஹம்மாம் (ரஹ்), அபூ ஹுரைரா (ரலி) இதே போன்று நபி (ஸல்) அவர்களிடமிருந்து எமக்கு அறிவித்து உள்ளார்கள்‘ என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3408. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

முஸ்லிம்களில் ஒருவரும் யூதர்களில் ஒருவரும் (ஒருவரோடொருவர்) சச்சரவிட்டார்கள். அந்த முஸ்லிம், அம்லத்தார் அனைவரை விடவும் முஹம்மதை (சிறந்தவராக்கித்) தேர்ந்தெடுத்தவன் மீதாணையாக!ணிஎன்று அவர் செய்த ஒரு சத்தியத்தின்போது கூறினார். அந்த யூதர், அம்லத்தார் அனைவரை விடவும் மூஸா (அலை) அவர்களை (சிறந்தவராகத்) தேர்ந்தெடுத்தவன் மீது சத்தியமாக!ணிஎன்று கூறினார். (யூதரின்) இச்சொல்லைக் கேட்டபோது அந்த முஸ்லிம் தம் கையை உயர்த்தி யூதரை அறைந்துவிட்டார். உடனே, அந்த யூதர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று நடந்த, தன்னுடைய விவகாரத்தையும் அந்த முஸ்லிமின் விவகாரத்தையும் அந்த முஸ்லிமின் விவகாரத்தையும் தெரிவித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், மூஸாவைவிடச் சிறந்தவராக என்னை ஆக்காதீர்கள் . ஏனெனில், (மறுமை நாளில்) மக்கள் மூர்ச்சையுற்று (கீழே) விழுந்து விடுவார்கள். அப்போது, நானே மயக்கம் தெளி (ந்து எழு) பவர்களில் முதல் ஆளாக இருப்பேன். அந்த நேரத்தில் மூஸா இறை சிம்மாசனத்தின் ஓர் ஓரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள். மூர்ச்சையுற்று விழுந்தவர்களில் அவரும் ஒருவராயிருந்தாரா, அவர் எனக்கு முன்பே மயக்கம் தெளிந்து எழுந்துவிட்டாரா? அல்லது மூர்ச்சையடைந்து விழுவதிலிருந்து அல்லாஹ் விதிவிலக்களித்தவர்களில் ஒருவராய் அவர் இருந்தாரா என்று எனக்குத் தெரியாது‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3409. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தடை செய்யப்பட்ட மரத்திலிருந்து சாப்பிட்ட) ஆதமும் மூஸாவும் தர்க்கித்தார்கள். ஆதமிடம் மூஸா, உங்கள் தவறு உங்களை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றியதே அந்த ஆதம் நீங்கள் தானோ? என்று கேட்டார்கள். அதற்கு ஆதம் மூஸாவிடம், நீங்கள் அல்லாஹ், தன் தூதுத்துவச் செய்திகளை அனுப்பிடவும் தன்னுடன் உரையாடவும் தேர்ந்தெடுத்த மூஸா ஆவீர். இருந்தும், நான் படைக்கப்படுவதற்கு முன்பே என் மீது வதிக்கப்பட்ட ஒரு விஷயத்திற்காக என்னைப் நீங்கள் பழிககிறீர்களே!ணிஎன்று கேட்டார்கள். இதை கூறிய பின் இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ஆக, ஆதம் விவாதத்தில் மூஸாவை வென்றுவிட்டார்கள் என்று இருமுறை கூறினார்கள்' என இந்த நபிமொழியை அறிவிக்கும் அபூ ஹு ரைரா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3410. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் புறப்பட்டு வந்து, (மிஅராஜு டைய இரவில்) பல சமுதாயங்கள் எனக்கு எடுத்துக் காட்டப்பட்டன. அடி வானத்தை அடைத்த படி ஏராளமான மக்களை கண்டேன். அப்போது, தம் சமுதாயத்தினரிடையே மூஸா(அலை) அவர்கள் இருக்கும் காட்சி தான் இது' என்று (எனக்குக்) கூறப்பட்டது.

## ஃபிர்அவ்னுடைய மனைவி அன்னை ஆஸியா பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் ஃபிர்அவ்னுடைய மனைவியை இறைநம்பிக்கையாளர்களுக்கான உதாரணமாகக் கூறகிறான். ஒரு முறை அவர், என் அதிபதியே! எனக்காக உன்னிடம் சொர்க்கத்தில் ஓர் இல்லத்தை அமைத்துக் கொடுப்பாயாக! ஃபிர்அவ்னிடமிருந்தும் அவனுடைய (தீய) செயலிலிருந்து என்னைக் காப்பாற்றுவாயாக! அக்கிரமம் புரியும் சமுதாயத்தாரிடமிருந்தும் என்னைக் காப்பாற்றுவாயாக! என்று அவர் பிரார்த்தித்தார். மேலும், இம்ரானின் மகள் மர்யமை (மற்றோர்) உதாரணமாக எடுத்துக் காட்டுகிறான். அவர் தம் வெட்கத் தலத்தைப் பாதுகாத்தார். பிறகு, நாம் நம்மிடமிருந்து ஆவியை அவருக்குள் ஊதினோம். மேலும், அவர் தம் இறைவனின் அறிவுரைகளையும் அவனுடைய வேதங்களையும் உண்மையென ஏற்றார். மேலும், அவர் கீழ்ப்படிந்து வாழ்பவர்களில் ஒருவராயும் இருந்தார். (திருக்குர்ஆன் 66:11, 12)

ஹதீஸ் 3411. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆண்களில் நிறையப் பேர் முழுமையடைந்திருக்கிறார்கள். பெண்களில் ஃபிர்அவ்னின் துணைவியார் ஆஸியாவையும் இம்ரானின் மகள் மர்யமையும் தவிர வேறெவரும் முழுமையடையவில்லை. மற்ற பெண்களை விட ஆயிஷாவுக்குள்ள சிறப்பு எல்லாவகை உணவுகளை விடவும் ஸரீத்'89 உணவுக்குள்ள சிறப்பைப் போன்றதாகும்."

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## பெரும் செல்வந்தன் காரூன் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

(அல்லாஹ் கூறினான்:)

உண்மையில், காரூன் மூஸாவின் சமுதாயத்தைச் சேர்ந்தவனாயிருந்தான். அவன் தன் சமூகத்திற்கு எதிராக வரம்பு மீறி நடந்தான். மேலும், நாம் அவனுக்கு எந்த அளவுக்கு செல்வக் கருவூலங்களை வழங்கியிருந்தோமெனில், அவற்றின் சாவிகளை பலசாலிகளின் ஒரு குழுவால் கூட சிரமப்பட்டுத் தான் தூக்க முடியும். ஒரு முறை அவனுடைய சமூகத்தார் அவனிடம் நீ பூரித்துப் போய் விடாதே. ஏனெனில், பூரித்து விடுபவர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை. அல்லாஹ் உனக்கு வழங்கியுள்ள செல்வத்தின் மூலம் மறுமையின் வீட்டைப் பெற அக்கறை கொள். இம்மையிலும் உன்னுடைய பங்கை மறந்து விடாதே. மேலும், அல்லாஹ் உனக்கு உபகாரம் செய்திருப்பதைப் போல் நீயும் உபகாரம் செய். மேலும், பூமியில் அராஜகம் விளைவிக்க முயற்சி செய்யாதே! அராஜகம் விளைவிப்பவர்களைத்

நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை‘ என்று கூறினார்கள். அதற்கவன், இவையனைத்தும் என்னிடமுள்ள அறிவினால் தான் எனக்குக் கிடைத்திருக்கின்றன!ணிஎன்றான் - அவனுக்கு முன்னால் அவனை விட அதிக வலிமையையும் ஆள் பலத்தையும் பெற்றிருந்த சமூகங்களை அல்லாஹ் அழித்திருக்கிறான். என்பது இவனுக்குத் தெரியாதா? மேலும், குற்றவாளிகளிடம் (அவர்களைத் தண்டிக்கும் போது) அவர்களின் பாவங்களை பற்றி கேட்கப்படுவதில்லை. (திருக்குர்ஆன் 28: 76-78)

தொடர்ந்து காண்க:

28:79-82-ம் இறைவசனங்கள்

## இறைத்தூதர் ஷுஐப்(அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், மத்யன் வாசிகளிடம் அவர்களின் சகோதரர் ஷுஐபை அனுப்பினோம். அவர் கூறினார்: என் சமுதாயத்தினரே! அல்லாஹ்வுக்கு அடிபணியுங்கள். அவனைத் தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. (திருக்குர்ஆன் 07: 85 - 93)

மேலும், மத்யன் நகரவாசிகளிடம் அவர்களின் சகோதரர் ஷுஐபை (இறைத்தூதராக) அனுப்பினோம். அவர் கூறினார்: என் சமுதாயத்தினரே! அல்லாஹ்வுக்கு அடிபணியுங்கள். அவனைத் தவிர உங்களுக்கு வேறு இறைவன் இல்லை. மேலும், அளவையிலும், நிறுவையிலும் குறைவு செய்யாதீர்கள்! (இன்று) உங்களை நல்ல நிலையில் காண்கிறேன். ஆனால், (விரைவில்) துன்பம் சூழும் ஒரு நாளின் வேதனை உங்களை பிடிக்குமோ? என நான் அஞ்சுகிறேன்... (திருக்குர்ஆன் 11: 84-95)

மேலும், மத்யன் நகரவாசிகளிடம் அவர்களின் சகோதரர் ஷுஐபை அனுப்பினோம். அவர் கூறினார்: என் சமூகத்தினரே! அல்லாஹ்வுக்கு அடிபணியுங்கள்! இறுதிநாளை எதிர்ப்பாத்துக் கொண்டிருங்கள். மேலும், பூமியில் அநீதியிழைத்து குழப்பம் விளைவிப்பவர்களாய்த் திரியாதீர்கள். (திருக்குர்ஆன் 29: 36, 37)

## இறைத்தூதர் யூனுஸ் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

திண்ணமாக, யூனுஸ் இறைத் தூதர்களில் ஒருவராய் இருந்தார். 92 அவர் நிரம்பிய ஒரு கப்பலை நோக்கி ஓடிய நேரத்தை நினைவு கூருங்கள். பிறகு, சீட்டுக் குலுக்கலில் பங்கெடுத்தார். அதில் அவர் (கடலில்) எறியப்பட வேண்டியவரானார். இறுதியில் மீன் ஒன்று அவரை விழுங்கியது. அவரோ (தன்னைத் தானே) நொந்தவராய் இருந்தார். அவர் இறைவனைத் துதிப்பவர்களில் ஒருவராய் இல்லாதிருந்தால் மறுமை நாள் வரை அந்த மீனின் வயிற்றிலேயே இருந்திரப்பார். அவர் பெரிதும் நோயுற்றிருந்த நிலையில் ஒரு பாலை வெளியில் அவரை நாம் எறிந்தோம். பிறகு படர்கிற கொடியை அவரின் மீது நிழலிட முளைக்கச் செய்தோம். பிறகு, அவரை ஓர் இலட்சம் அல்லது அதற்கு அதிகமான மக்களிடம் அனுப்பினோம். அவர்கள் நம்பிக்கை கொண்டார்கள். பிறகு ஒரு குறிப்பிட்ட காலம் வரை அவர்களை வாழவிட்டோம். (திருக்குர்ஆன் 37: 139- 148)

மேலும், அல்லாஹ் கூறினான்:

உங்கள் அதிபதியின் தீர்ப்பு வரும் வரை பொறுமையாய் இருங்கள். மேலும், மீன் மனிதர் (யூனுஸ் நபியைப்) போன்று ஆம்விடாதீர்கள். அவர் துயரத்திற்குள்ளாம் இருந்த நிலையில் (தம் இறைவனை) அழைத்ததை நினைவு கூருங்கள். (திருக்குர்ஆன் 68: 48)

ஹதீஸ் 3412 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் யூனுஸ் (அலை) அவர்களை விடச் சிறந்தவன் என்று (என்னைப் பற்றி) உங்களில் எவரும் சொல்ல வேண்டாம்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் முஸத்தத்(ரஹ்) தம் அறிவிப்பில், யூனுஸ் இப்னு மத்தா அவர்களை விட' என்னும் வாசகத்தை அதிகமாகக் கூறினார்கள்.

ஹதீஸ் 3413 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் யூனுஸ் இப்னு மத்தாவை விடச் சிறந்தவன் என்று (என்னைப் பற்றி) கூறுவது எந்த மனிதருக்கும் தகாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். ('யூனுஸ் இப்னு மத்தா - மத்தாவின் மகன் யூனுஸ் என்று) யூனுஸ்(அலை) அவர்களை அவர்களின் தந்தையுடன் இணைத்து நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3414 அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

யூதர் ஒருவர் (சந்தையில்) தம் சரக்கை எடுத்துக் காட்டியபோது மிகக் குறைந்த விலை அவருக்குக் கொடுக்கப்பட்டது. அதை அவர் விரும்பவில்லை. உடனே அவர், (நான் இந்த விலையை வாங்கிக் கொள்ள) மாட்டேன் மனிதர்கள் அனைவரையும் விட (சிறந்தவராக) மூஸாவைக் தேர்ந்தெடுத்தவன் மீது சத்தியமாக! என்று கூறினார். இதை அன்சாரிகளில் ஒருவர் கேட்டுவிட்டார். உடனே எழுந்து அந்த யூதரின் முகத்தில் அறைந்து, நபி(ஸல்) அவர்கள் நமக்கிடையே வாழ்ந்து கொண்டிருக்க, மனிதர்கள் அனைவரையும் விட மூஸாவைத் தேர்ந்தெடுத்தவன் மீது சத்தியமாக! என்றா நீ கூறுகிறாய்? என்று கேட்டார். உடனே அந்த யூதர் நபி(ஸல்) அவர்களிடம் சென்று, அபுல் காசிம் அவர்களே! (என் உயிர்) உடைமை, மானத்தைப் பாதுகாப்பதாக) எனக்கு நீங்கள் பொறுப்பேற்று ஒப்பந்தம் செய்து தந்திருக்கிறீர்கள். என் முகத்தில் அறைந்தவரின் நிலை என்ன? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் அந்த முஸ்லிமை நோக்கி, நீ ஏன் இவரின் முகத்தில் அறைந்தாய்? என்று கேட்டார்கள். அவர் விஷயத்தை நபி(ஸல்) அவர்களிடம் கூறினார். உடனே, நபி(ஸல்) அவர்களின் முகத்தில் கோபக்குறி தென்படுகிற அளவிற்கு அவர்கள் கோபமடைந்தார்கள். பிறகு, அல்லாஹ்வின் நேசர்களுக்கிடையே ('ஒருவர் மற்றவரை விடச் சிறப்பானவர் என்று) ஏற்றத் தாழ்வு பாராட்டதீர்கள். ஏனெனில், (மறுமை நாளில்) எக்காளம் ஊதப்படும். உடனே, வானங்களில் இருப்பவர்களும் பூமியில் இருப்பவர்களும் மூர்ச்சையடைந்து விழுவார்கள் அல்லாஹ் நாடியவர்களைத் தவிர, பிறகு, அது இன்னொரு முறை ஊதப்படும். அப்போது (உயிராக்கி) எழுப்பப்படுபவர்களில் நானே முதல் ஆளாக இருப்பேன். அந்த வேளையில் மூஸா(அலை) அவர்கள் இறை சிம்மாசனத்தைப் பிடித்துக் கெண்டிருப்பார்கள். அவர்கள் தூர்சினாய் மலையில் இறைவனைச் சந்தித்த) நிகழ்ச்சியின்போது மூர்ச்சையாகி விழுந்தது கணக்கிலெடுக்கப்(பட்டு இங்கு அவருக்கு விதிவிலக்கு அளிக்கப்)பட்டதா? அல்லது எனக்கு முன்பே அவர் (மயக்கம் தெளிவிக்கப்பட்டு) எழுப்பப்பட்டுவிட்டாரா? என்று எனக்குத் தெரியாது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3415. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யூனுஸ் இப்னு மத்தா(அலை) அவர்களை விட ஒருவர் சிறந்தவர் என்று நான் கூற மாட்டேன். (அதே அறிவிப்புத் தொடர்)

ஹதீஸ் 3416. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர், (என்னைப் பற்றி) நான் யூனுஸ் இப்னு மத்தா அவர்களை விடச் சிறந்தவன் என்று கூறுவது அவருக்குத் தகாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சனிக்கிழமை மீனவர்கள் பற்றிய இறைவசனம்

(அல்லாஹ் கூறினான்:)

கடற்கரை ஓரத்தில் அமைந்திருந்த ஓர் ஊரைப் பற்றியும் இவர்களிடம் நீங்கள் கேளுங்கள். அங்கு வாழ்ந்த மக்கள் சனிக்கிழமையில் இறைக்கட்டளையை மீறியதை (இவர்களுக்கு) நினைவூட்டுங்கள். அந்தச் சனிக்கிழமைகளில் அவர்களின் மீன்கள் தண்ணீரின் மேல் மட்டத்தில் உயர்ந்து அவர்களிடம் வரும், சனிக்கிழமை அல்லாத நாள்களில் அம்மீன்கள் அவ்வாறு வரமாட்டா. அவர்கள் கீழ்ப்படியாதிருந்த காரணத்தால் அவர்களை இவ்வாறு சோதனைக்குள்ளாக்கினோம்..... பிறகு, அவர்கள் எச்செயல்களைச் செய்யக் கூடாதென்று தடுக்கப்பட்டார்களோ அவற்றையே அவர்கள் ஆணவத்துடன் செய்து கொண்டிருந்தபோது, நீங்கள் குரங்குகளாம் இழிவடைந்து விடுங்கள்' என்று நாம் கூறினோம். (திருக்குர்ஆன் 07: 163-166)

அல்லாஹ் கூறினான்:

"(நபியே!) நூஹு க்கும் அவருக்குப் பின்னால் வந்த நபிமார்களுக்கும் நாம் வஹி - வேதவாக்கு அறித்தது போன்று நிச்சயமாக உங்களுக்கும் நாம் வஹி அறிவித்துள்ளோம். மேலும், இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஅகூப் ஆகியோருக்கும் மற்றும் யஅகூபின் வழித்தோன்றல்களுக்கும் ஈசா, அய்யூப், யூனுஸ், ஹாரூன் மற்றும் சுலைமான் ஆகியோருக்கும் நாம் வஹி அறிவித்திருக்கிறோம். தாவூதுக்கு ஸபூரை வழங்கினோம்! (திருக்குர்ஆன் 04: 163)

## இறைத்தூதர் தாவூத் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

"உம் இறைவன் வானங்கள் மற்றும் பூமியில் உள்ள படைப்புகள் பற்றி அதிகம் அறிந்திருக்கிறான். நாம் தூதர்களில் சிலருக்கு சிலரை விட சிறப்பளித்திருக்கிறோம். மேலும், நாம் (நம் தூதர்) தாவூதுக்கு ஸபூர் வேதத்தை வழங்கியிருந்தோம்! (திருக்குர்ஆன் 17: 55)

"நாம் தாவூதுக்கு நம்மிடமிருந்து பெரும் அருட்பேற்றினை வழங்கியிருந்தோம். (நாம் ஆணையிட்டோம்:) மலைகளே! அவருடன் சேர்ந்து நீங்களும் துதி பாடுங்கள். இவ்வாறே பறவைகளுக்கும் (நாம் கட்டளையிட்டிருந்தோம்.) நாம் அவருக்காக இரும்பை மென்மையாக்கிக் கொடுத்தோம். போர்க்கவசங்கள் செய்வீராக! அவற்றின் வளையங்களைச் சரியான அளவில் அமைப்பீராக!ணிஎன்ற கட்டளையுடன்! (தாவூதுடைய வழித் தோன்றல்களே!) நற்செயல்கள் புரியுங்கள் நீங்கள் செய்வதனைத்தையும் நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்!ணி(திருக்குர்ஆன் 34:10-11)

ஹதீஸ் 3417. நபி(ஸல்) அவர்கள் கூறினார்

தாவூத்(அலை) அவர்களுக்கு (தவ்ராத், ஸபூர் ஆகிய இறைவேதங்களை ஓதுவது லேசாக்கப்பட்டிருந்தது. தம் (குதிரை) வாகனத்தை (சவாரிக்காகத்) தயார் செய்யும் படி உத்திரவிடுவார்கள். உடனே, அதற்குச் சேணம் பூட்டப்படும் வாகனத்திற்குச் சேணம் பூட்டப்படுவதற்கு முன்பே இறைவேதத்தை ஓதி விடுவார். தன் கையினால் உழைத்துப் பெறும் சம்பாத்தியத்திலிருந்து தான் உண்பார்.

அத்தாஉ இப்னு யஸார்(ரஹ்) வழியாகவும் அபூ ஹு ரைரா(ரலி) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3418. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

"அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஆயுள் முழுவதும் பகலில் நோன்பு நோற்று இரவில் நின்று வணங்குவேன்' என்று நான் கூறுகூதாக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம், நீங்கள் தான் அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஆயுள் முழுவதும் பகலில் நோன்பு நோற்று

இரவில் நின்று கேட்டார்கள். நான் அப்படிச் சொல்லத் தான் செய்தேன்' என்று நான் பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள், உங்களால் அது முடியாது. எனவே, (சில சமயம்) நோன்பு வையுங்கள். (சில சமயம்) நோன்பை விடுங்கள். (இரவில்) நின்று வணங்குங்கள். தூங்கவும் செய்யுங்கள். மாதத்தில் மூன்று நாள்கள் நோன்பு வையுங்கள். ஏனெனில், ஒரு நற்செயலுக்கு அதைப் போன்று பத்து மடங்கு பிரதிபலன் அளிக்கப்படும். அதுவே காலம் முழுவதும் நோன்பு வைத்ததாகும்' என்று கூறினார்கள். நான், இதை விட அதிக நாள் நோற்பதற்கு எனக்கு சக்தியுண்டு இறைத்தூதர் அவர்களே!' என்று கூறினேன். அதற்கு அவர்கள், அப்படியென்றால் ஒரு நாள் நோன்பு நோற்று இரண்டு நாள்கள் நோன்பைவிட்டு விடுங்கள்' என்று கூறினார்கள். நான், அதை விட அதிகத்திற்கு எனக்கு சக்தியுண்டு, இறைத்தூதர் அவர்களே! என்று சொன்னேன். அதற்கு அவர்கள், அப்படியென்றால், ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பைவிட்டு விடுங்கள். அதுதான் (நபி) தாவூதுதின் நோன்பாகும் அதுதான் நடுநிலையானதாகும்' என்று கூறினார்கள். நான், அதை விடச் சிறந்ததற்கு எனக்கு சக்தி உண்டு, இறைத்தூதர் அவர்களே!' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், அதை விடச் சிறந்ததேயில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3419. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம், நீங்கள் இரவில் நின்று வணங்குவதாகவும் பகலில் நோன்பு நோற்பதாகவும் எனக்குச் செய்தி கிடைத்ததே' என்று கேட்டார்கள். நான், ஆம் (உண்மைதான்!)' என்றேன். அவர்கள், நீங்கள் அப்படிச் செய்தால் உங்கள் கண்கள் பஞ்சடைந்து விடும் மனம் களைப்படைந்து விடும். எனவே, ஒவ்வொரு மாதத்திலிருந்தும் மூன்று நாள்கள் நோன்பு நோற்பீராக! அது காலமெல்லாம் நோன்பு நோற்றதாகும்... அல்லது காலமெல்லாம் நோன்பு நோற்றதைப் போன்றதாகும்' என்று கூறினார்கள். நான், எனக்கு (இதை வட அதிகமாக நோற்பதற்கு) சக்தியிருப்பதாக நான் உணர்கிறேன்' என்று சொன்னேன். உடனே, நபி(ஸல்) அவர்கள், அப்படியென்றால், தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் நோன்பை நீங்கள் நோற்பீராக! அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள்விட்டுவிடுவார்கள். (போர்க்காலத்தில் பகைவர்களைச்) சந்திக்கும்போது பின் வாங்கி ஓடமாட்டார்கள்' என்று கூறினார்கள்.

## இறைத்தூதர் தாவூத் (அலை) அவர்களின் வழிபாடுகள் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான தொழுகை (இறைத்தூதர்) தாவூத் அவர்களின் தொழுகையாகும். அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான நோன்பு தாவூத் அவர்களின் நோன்பாகும். தாவூத் அவர்கள் பாதி இரவு (வரை) உறங்குவார்கள். அதில் மூன்றில் ஒரு பகுதி நேரம் நின்று வணங்குவார்கள். (பிறகு, மீண்டும்) அதில் ஆறில் ஒரு பகுதி நேரம் உறங்குவார்கள். ஒரு நாள் நோன்பு நோற்று ஒரு நாள் நோன்பைவிட்டு விடுவார்கள்.

அலீ இப்னு அப்தில்லாஹ் அல் மதீனீ(ரஹ்) கூறினார்

'(இரவில்) ஆறில் ஒரு பகுதி நேரம் மீண்டும் உறங்குவார்கள் என்பதையே ஆயிஷா(ரலி), நபி(ஸல்) அவர்கள் என்னிடம் தூங்கிக் கொண்டிருக்கும் நிலையில் தான் ஸஹ்ர் நேரம் வரும்' என்று சொன்னது குறிக்கிறது.

ஹதீஸ் 3420. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம், அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான நோன்பு தாவூத்(அலை) அவர்களின் நோன்பாகும். அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்று, ஒரு நாள்விட்டுவிடுவார்கள். அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான தொழுகை தாவூத்(அலை) அவர்களின் தொழுகையாகும். அவர்கள் இரவில் பாதி நேரம் உறங்குவார்கள். அதில்

மூன்றில் ஒரு பகுதி நேரம் நின்று வணங்குவார்கள். அதில் ஆறில் ஒரு பகுதி நேரம் (மீண்டும்) உறங்குவார்கள்' என்று கூறினார்கள்.

## இறைத்தூதர் தாவூத் (அலை) அவர்களின் தீர்ப்பளிக்கும் ஆற்றல் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

(அல்லாஹ் கூறினான்:)

(நபியே!) இவர்கள் பேசும் பேச்சுகளைப் பொறுத்துக் கொள்ளுங்கள். மேலும், பெரும் ஆற்றல்களைக் கொண்டிருந்த நம்முடைய அடியார் தாவூதின் வரலாற்றை இவர்களுக்கு நீங்கள் எடுத்துக் கூறுங்கள். அவர் (ஒவ்வொரு விவகாரத்திலும் அல்லாஹ்விடமே) திரும்பக் கூடியவராக இருந்தார். நாம் மலைகளை அவருக்கு வசப்படுத்திக் கொடுத்திருந்தோம். அவை காலையிலும், மாலையிலும் அவருடன் சேர்ந்து (இறைவனைத்) துதி செய்த வண்ணம் இருந்தன. பறவைகளும் ஒன்று திரண்டு வந்தன. அவை அனைத்தும் அல்லாஹ்வைத் துதிப்பதில் கவனம் செலுத்தக் கூடியனவாய் இருந்தன. நாம் அவரின் அரசாட்சியை வலுப்படுத்தியிருந்தோம். நுண்ணறிவையும் அவருக்குக் கொடுத்திருந்தோம். மிக நுட்பமாகத் தீர்ப்பளிக்கும் ஆற்றலையும் நல்கியிருந்தோம். மேலும், சுவர் ஏறி மாடத்தில் நுழைந்த வழக்காளிகளின் செய்தி உங்களுக்கு வந்ததா?... நீங்கள் எங்களிடையே மிகச் சரியாகத் தீர்ப்பு வழங்குங்கள். நேர்மை தவறி விடாதீர்கள். எங்களுக்கு நேரான வழியைக் காட்டுங்கள். இதோ! இவர் என் சகோதரர். இவரிடம் தொண்ணூற்றொன்பது செம்மறி ஆடுகள் இருக்கின்றன. என்னிடமோ ஒரேயொரு செம்மறியாடுதான் இருக்கிறது... (திருக்குர்ஆன் 38: 17-24)

ஹதீஸ் 3421. முஜாஹித் (ரஹ்) அறிவித்தார்

நான், ஸாத் (என்னும் 38-வது) அத்தியாயத்தில் (ஓதலுக்குரிய) சஜ்தா செய்வீர்களா? என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டேன். அப்போது அவர்கள், மேலும், இப்ராஹீமுடைய வழித் தோன்றல்களான தாவூத், சுலைமான், அய்யூப், மூஸா, ஹாரூன் ஆகியோருக்கும் நேர்வழி காட்டினோம். இவ்வாறு... (நபியே!) அவர்கள் தாம் அல்லாஹ்வினால் நேர்வழி காட்டப்பட்டவர்கள். அவர்களின் வழியினையே (நீங்களும்) பின்பற்றுங்கள்' என்னும் (திருக்குர்ஆன் 06:84-90) திருக்குர்ஆன் வசனங்களை ஓதினார்கள். பிறகு, உங்கள் நபி (ஸல்) அவர்களும் கூட முந்தைய நபிமார்களைப் பின்பற்றும்படி கட்டளையிடப்பட்டுள்ளவர்களில் ஒருவர் தாம்' என்று கூறினார்கள். 101

ஹதீஸ் 3422 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

'ஸாத் (என்னும் 38-வது) அத்தியாயத்தில் உள்ள இறை வசனத்திற்கு சுஜூ து (சிர வணக்கம்) செய்வது, கட்டாயம் செய்யப்பட வேண்டிய(வை என்று கட்டளையிடப்பட்டுள்ள) சுஜூ துகளில் ஒன்றல்ல. ஆயினும், நபி (ஸல்) அவர்கள் (சூரத்து ஸாதின்) அந்த இடத்தில் (திருக்குர்ஆன் 38:24) சுஜூ து செய்வதை பார்த்திருக்கிறேன்.

## இறைத்தூதர் சுலைமான் (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

தாவூதுக்கு சுலைமானை (மகனாக) வழங்கினோம். அவர் மிகச் சிறந்த அடியாராகவும் தம் இறைவனின் பக்கம் அதிகம் திரும்பக் கூடியவராகவும் திகழ்ந்தார். (திருக்குர்ஆன் 38:30)

ஹதீஸ் 3423. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

பலம் பொருந்திய ஜின் ஒன்று நேற்றிரவு என் தொழுகையை (இடையில்) துண்டிப்பதற்காக திடீரென்று வந்து நின்றது. அல்லாஹ் எனக்கு அதை வசப்படுத்தித் தந்தான். நான் அதைப் பிடித்துக் கொண்டேன். நீங்கள் ஒவ்வொருவரும் அதைப் பார்ப்பதற்காக அதைப்

பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் கட்டி வைக்க விரும்பினேன். அப்போது, என் சகோதரர் சுலைமான்(அலை) அவர்கள் செய்த, என் இறைவா! எனக்குப் பின் வேறெவருக்கும் கிடைக்காத ஓர் அதிகாரத்தை எனக்கு வழங்குவாயாக!ணி(திருக்குர்ஆன் 38:35) என்னும் பிரார்த்தனையை நினைவு கூர்ந்தேன். உடனே, அதைச் சபித்து எறியப்பட்டதாகத் திருப்பியனுப்பி விட்டேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3424. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தாவூத்(அலை) அவர்களின் மகன் சுலைமான்(அலை) அவர்கள், இன்றிரவு நான் எழுபது மனைவிமார்களிடம் செல்வேன். (அவர்களில்) ஒவ்வொருவரும் இறைவழியில் போராடும் குதிரை வீரரைக் கருத்தரிப்பார்கள்' என்று கூறினார்கள். அதற்கு அவரின் தோழர் ஒருவர், அல்லாஹ் நாடினால்..! என்று சொல்லுங்கள்' என்று கூறினார். சுலைமான்(அலை) அவர்கள், அல்லாஹ் நாடினால்' என்று (மறந்து போய்) சொல்லாமலிருந்துவிட்டார்கள். (அவர்கள் அவ்வாறே சென்றும் கூட) தன் இரண்டு புஜங்களில் ஒன்று கீழே விழுந்த ஒரேயொரு குழந்தையைத் தவிர வேறெதையும் அவர்கள் கருத்தரிக்கவில்லை. இன்ஷா அல்லாஹ்... (இறைவன் நாடினால்) என்று சுலைமான்(அலை) அவர்கள் கூறியிருந்தால் அவர்கள் (எழுபது பேரும் பிறந்து) இறைவழியில் போராடியிருப்பார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள். ஷுஐப்(ரஹ்) அவர்களும் இப்னு அபிஸ் ஸினாத்(ரஹ்) அவர்களும் தங்கள் அறிவிப்பில் தொண்ணூறு மனைவிமார்களிடம் செல்வேன்' என்று சுலைமான்(அலை) அவர்கள் கூறினார்கள் எனக் குறிப்பிட்டுள்ளனர். இவர்களுடைய அறிவிப்பு தான் மேற் கண்ட அறிவிப்பை விடச் சரியானது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3425. அபூ தர்(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களிடம்), இறைத்தூதர் அவர்களே! முதலாவதாக அமைக்கப்பட்ட பள்ளிவாசல் எது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அல்மஸ்ஜிதுல் ஹராம் (மக்காவிலுள்ள புனித இறையில்லம்)' என்று பதிலளித்தார்கள். நான், பிறகு எது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், பிறகு அல் மஸ்ஜிதுல் அக்ஸா (ஜெரூசலம் நகரிலுள்ள அல் அக்ஸா பள்ளி வாசல்)' என்று பதிலளித்தார்கள். நான், அவ்விரண்டிற்குமிடையே எவ்வளவு காலம் (இடைவெளி) இருந்தது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நாற்பதாண்டு காலம் (இடைவெளி) இருந்தது' என்று கூறினார்கள். பிறகு, உன்னைத் தொழுகை (நேரம்) எங்கே வந்தடைந்தாலும் நீ தொழுது கொள். ஏனெனில், பூமி முழுவதுமே உனக்கு ஸஜ்தா செய்யுமிடம் (இறைவனை வழிபடும் தலம்) ஆகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3426. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய நிலையும் மக்களின் நிலையும் ஒருவர் தீயை மூட்டி விட, விட்டில் பூச்சிகளும் இதரப் பூச்சிகளும் அந்த நெருப்பில் விழுவதைப் போன்றதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3427. மேலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(தாவூத் - அலை - அவர்களின் காலத்தில்) இரண்டு பெண்கள் இருந்தனர். அவர்களுடன் அவர்களின் மகன்களும் இருந்தனர். ஓநாய் (ஒன்று) அவ்விருவரில் ஒருவனைக் கொண்டு சென்றது. உடனே அவர்களில் ஒருத்தி, தன் தோழியிடம், உன் மகனைத் தான் ஓநாய் கொண்டு சென்றது' என்று கூற, மற்றொருத்தி அவளிடம், உன் மகனைத் தான் ஓநாய் கொண்டு சென்றது' என்று கூறினாள். எனவே, இருவரும் (தங்கள் தகராறைத் தீர்த்துக்

கொள்ள) தாவூத்(அலை) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டு சென்றனர். அவர்கள் (அவ்விரு பெண்களில்) மூத்தவளுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்கள். (அவர்களின் தீர்ப்பில் கருத்து வேறுபட்டு) அப்பெண்கள் இருவரும் சுலைமான்(அலை) அவர்களிடம் (தீர்ப்புக் கேட்டுச்) சென்றனர். அவர்களிடம் விஷயத்தைத் தெரிவித்தனர். அதற்கு அவர்கள், என்னிடம் ஒரு கத்தியைக் கொண்டு வாருங்கள். நான் உங்களிருவருக்குமிடையே (மீதமுள்ள) ஒரு மகனை ஆளுக்குப் பாதியாகப்) பிளந்து (பங்கிட்டு) விடுகிறேன்‘ என்று கூறினார்கள். அப்போது இளையவள், அவ்வாறு செய்யாதீர்கள். அல்லாஹ் உங்களுக்கு கருணை புரியட்டும். இவன் என் மகன்‘ என்று (பதறிப்போய்) கூறினாள். உடனே, சுலைமான் (அலை) அவர்கள் அந்தக் குழந்தை அ(ந்த இளைய)வளுக்கே உரியது என்று தீர்ப்பளித்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பேரறிஞர் லுக்மான் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அபூ ஹுரைரா(ரலி), அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அன்று தான் (கத்திக்கு) சிக்கீன் என்னும் சொல்லைச் செவியுற்றேன். (கத்தியைக் குறிக்க) முத்யா என்னும் சொல்லைத் தான் நாங்கள் பயன்படுத்தி வந்தோம்‘ என்று கூறுகிறார்கள்.

அல்லாஹ் கூறினான்:

நாம் லுக்மானுக்கு ஞானத்தை வழங்கியிருந்தோம். நீர் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவீராக! யாரேனும் நன்றி செலுத்தினால் அவர் செலுத்தும் நன்றி அவருக்கே பயனளிக்கும். யாரேனும் நன்றி கொன்றால் உண்மையில் அல்லாஹ் தேவைகள் அற்றவனாகவும் தனக்கு தானே புகழுக்குரியவனாகவும் இருக்கிறான்‘ (என்று கூறினோம்.)

மேலும், லுக்மான் தம் மகனுக்கு அறிவுரை நல்கியபோது கூறியதை நினைவு கூருங்கள்: என் அன்பு மகனே! நீ அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்கிவிடாதே! உண்மையில் அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பது மாபெரும் அக்கிரமமாகும்!ஷிமேலும், பெற்றோர் நலன் பேண வேண்டுமென்று நாம் மனிதனுக்கு அறிவுறுத்தியுள்ளோம். அவனுடைய தாய் நலிவுக்கு மேல் நலிவை ஏற்று அவனைத் தன் வயிற்றில் சுமந்தாள். மேலும், அவன் பால்குடி மறக்க இரண்டு ஆண்டுகள் பிடித்தன. (இதனால் தான் நாம் அவனுக்கு அறிவுரை கூறினோம்:) எனக்கு நன்றி செலுத்து. மேலும், உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்து. என் பக்கமே நீ திரும்பி வர வேண்டியுள்ளது. ஆனால், எதனை நீ அறியமாட்டாயோ, அதனை எனக்கு நீ இணை கற்பிக்க வேண்டுமென்று அவர்கள் இருவரும் உன்னை நிர்ப்பந்தித்தால் அவர்களின் பேச்சை நீ ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாதே! இவ்வுலகில் அவர்களுடன் நல்லமுறையில் நீ நடந்துகொள்! மேலும், யார் என் பக்கம் மீண்டுள்ளாரோ அவரின் வழியை நீ பின்பற்று! பிறகு நீங்கள் அனைவரும் என் பக்கமே திரும்ப வேண்டியுள்ளது. அப்போது நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் என்பதை நான் உங்களுக்கு அறிவித்து விடுவேன்.

(மேலும், லுக்மான் கூறினார்:) என் அருமை மகனே! ஏதேனும் ஒரு பொருள் கடுகளவு இருந்தாலும் சரி, மேலும் அது ஏதேனும் ஒரு பாறையில் அல்லது வானங்களில் அல்லது பூமியில் எங்கு மறைந்திருப்பினும் சரி, அல்லாஹ் அதனை வெளிப்படுத்துவான். அவன் நுண்மையானவனும் எல்லாம் தெரிந்தவனுமாவான். என் அருமை மகனே! தொழுகையை நிலைநாட்டு. மேலும், நன்மை புரியும்படி ஏவு தீமையை தடு! மேலும், எந்தத் துன்பம் உனக்கு நேர்ந்தாலும் அதனைப் பொறுத்துக் கொள்! நிச்சயம் இவையெல்லாம் தீர்க்கமான விஷயங்களாகும். மேலும், மக்களைவிட்டு முகத்தைத் திருப்பியவாறு பேசாதே! பூமியில் செருக்காய் நடக்காதே! அகந்தையும் ஆணவமும் கொண்ட எவனையும் அல்லாஹ் நேசிப்பதில்லை. (திருக்குர்ஆன் 31: 12-18)

ஹதீஸ் 3428. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

‘இறை நம்பிக்கைகொண்டு, தம் இறைநம்பிக்கையில் அநீதியைக் கலந்திடாதவர் என்னும் (திருக்குர்ஆன் 06:82) இறைவசனம் அருளப்பட்டபோது நபித்தோழர்கள், தம் இறைநம்பிக்கையுடன் அநீதியைக் கலந்திடாதவர் நம்மில் யார் ? என்று கேட்டார்கள். அப்போது (என் அருமை மகனே!) அல்லாஹ்வுக்கு இணைவைக்காதே. இணை வைப்பது மாபெரும் அநீதியாகும் (என்று லுக்மான் கூறினார்) என்னும் வசனம் அருளப்பட்டது. (பார்க்க: திருக்குர்ஆன் வசனம் 31:13)

ஹதீஸ் 3429. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

‘இறைநம்பிக்கைகொண்டு (பின்னர்) தம் இறைநம்பிக்கையுடன் அநீதியைக் கலந்திடாதவர் என்னும் (திருக்குர்ஆன் 06:82) வசனம் அருளப்பட்டபோது அது முஸ்லிம்களுக்கு மிகவும் கடினமானதாகத் தென்பட்டது. எனவே, அவர்கள், இறைத்தூதர் அவர்களே! எங்களில் தனக்குத்தானே அநீதியிழைத்துக் கொள்ளாதவர் யார்? என்று கேட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், (இந்த வசனம் குறிப்பிடுவது) அதுவல்ல. அது இணைவைப்பையே குறிக்கிறது. என் அருமை மகனே! அல்லாஹ்வுக்கு இணைவைக்காதே. நிச்சயமாக, இணை வைப்பு மாபெரும் அநீதியாகும் என்று (அறிஞர்) லுக்மான், தம் மகனுக்கு அறிவுரை கூறுவதை (திருக்குர்ஆன் எடுத்துரைக்கிறதே, (திருக்குர்ஆன் 31:13) அதை) நீங்கள் கேட்க வில்லையா? என்று கூறினார்கள்.

## ஒரு கிராம வாசிகள் பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், ஒரு கிராம வாசிகளிடம் (நம்) தூதர்கள் வந்தபோது நடந்த சம்பவத்தை உதாரணமாக இவர்களுக்குக் கூறும். நாம் அவர்களிடம் இரண்டு தூதர்களை அனுப்பியபோது, அவர்கள் அவ்விருவரையும் பொய்யர்கள் என்று தூற்றினார்கள். பிறகு நாம் மூன்றாமவரை அனுப்பி (அவ்விரு தூதர்களுக்கு) உதவினோம். அத்தூதர்கள் அனைவரும் (அம் மக்களை நோக்கி) உண்மையில் நாங்கள் உங்களிடம் இறைத் தூதர்களாய் அனுப்பப்பட்டுள்ளோம் எனக் கூறினார்கள். நீங்கள் எங்களைப் போன்ற மனிதர்களேயன்றி வேறிலர். மேலும் கருணைமிக்க இறைவன் எதையும் இறக்கி வைக்கவில்லை. நீங்கள் வெறும் பொய்யே கூறுகிறீர்கள்!ணிஎன்று அந்தக் கிராமவாசிகள் கூவறினார்கள். தூதர்கள் கூறினார்கள்: திண்ணமாக, நாங்கள் உங்களிடம் தூதர்களாக அனுப்பப்பட்டுள்ளோம் என்பதை எங்கள் அதிபதி நன்கறிகிறான். மேலும், எங்களின் மீதுள்ள கடமை, தூதைத் தெளிவாய் (உங்களிடம்) சேர்ப்பித்து விடுவதைத் தவிர வேறில்லை!ணிஅதற்கு அக்கிராம வாசிகள், நாங்களோ, உங்களை எங்களுக்கு ஏற்பட்ட அபசகுனமாகக் கருதுகிறோம். நீங்கள் (இந்த அழைப்பிலிருந்து) விலம்க் கொள்ளாவிட்டால், நிச்சயமாக நாங்கள் உங்களைக் கல்லால் அடிப்போம். மேலும், நீங்கள் எங்களிடமிருந்து அவசியம் துன்பமிகு தண்டனை பெறுவீர்கள்! எனக் கூறலானார்கள். (அதற்கு) அத்தூதர்கள், உங்களுடைய அபசகுணம் உங்களோடு தான் இருக்கிறது. உங்களுக்கு நல்லுரை கூறப்பட்டதற்காகவா (நீங்கள் இவ்வாறெல்லாம் பேசுகிறீர்கள்!) உண்மையாதெனில், நீங்கள் வரம்பு மீறிய மக்களாவீர்!ணிஎனப் பதிலளித்தார்கள். (திருக்குர்ஆன் 36: 13-19)111

## இறைத்தூதர் ஸகரிய்யா (அலை) பற்றிய திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் கூறினான்:

உங்களுடைய இறைவன் தன் அடியார் ஸகரிய்யா மீது பொழிந்த அருளைப் பற்றிய செய்தியாகும் இது. அவர் தம் இறைவனை மெதுவாக அழைத்தபோது, அவர் பணிவுடன்

வேண்டினார்: என் அதிபதியே! என் எலும்புகள் நலிவடைந்துவிட்டன. மேலும், நரையினால் என் தலை மினுமினுப்பாம்விட்டது. மேலும், என் அதிபதியே! நான் உன்னிடம் பிரார்த்தனை புரிந்து ஒருபோதும் ஏமாற்றம் அடைந்ததில்லை. எனக்குப் பின் என் உறவினர்கள் (மேற்கொள்ளக் கூடிய தீயவழி) பற்றி நான் அஞ்சுகிறேன். மேலும், என்னுடைய மனைவி மலடியாக இருக்கிறாள். எனவே, உன்னுடைய தனிப்பட்ட அருளால் எனக்கு வாரிசை வழங்குவாயாக! அவர் எனக்கு யஅகூபுடைய குடும்பத்தினருக்கும் வாரிசாகத் திகழட்டும். மேலும், என் இறைவா! அவரை விரும்பத் தக்க மனிதராய் ஆக்குவாயாக!ணி(அவருக்கு பதிலளிக்கப்பட்டது:) ஸகரிய்யாவே! உங்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கும் என்று நாம் நற்செய்தி அறிவிக்கிறோம். அதன் பெயர் யஹ்யா ஆகும். இந்தப் பெயருடைய எவரையும் இதற்கு முன் நாம் படைக்கவில்லை. (திருக்குர்ஆன் 19: 3-7)

தொடர்ந்து காண்க: இறைவசனங்கள் (திருக்குர்ஆன் 19: 8-15)

ஹதீஸ் 3430. மாலிக் இப்னு ஸஅஸஆ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் அவர்கள் (விண் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட இரவைக் குறித்துப் பேசிக் கொண்டிருந்தபோது கூறினார்கள்:

...பிறகு (வானவர்) ஜிப்ரீல் அவர்கள் ஏறிச் சென்று இரண்டாம் வானத்தை அடைந்தார். அதன் வாயிலைத் திறக்கக் கூறினார். யார் அது? என்ற கேட்கப்பட்டது. ஜிப்ரீல்(அலை) அவர்கள், ஜிப்ரீல்' என்று பதிலளித்தார். உங்களுடன் இருப்பவர் யார்' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், முஹம்மத்' என்று பதிலளித்தார். அவரை அழைத்து வரச் சொல்லி ஆள் அனுப்பப்பட்டிருந்ததா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், ஆம்' என்று பதில் கூறினார். நான் அங்கு சென்று நேர்ந்தபொழுது அங்கு யஹ்யா(அலை) மற்றும் ஈசா(அலை) ஆகியோர் இருந்தனர். அவர்கள் இருவரும் ஒன்றுவிட்ட சகோதரர்கள். (ஒருவருக்கொருவர் சின்னம்மா பெரியம்மா மகன்கள்) ஜிப்ரீல்(அலை) அவர்கள், இது யஹ்யாவும் ஈசாவும் ஆவர். இருவருக்கும் சலாம் சொல்லுங்கள் என்று கூறினார். அவ்வாறே நான் சலாம் சொன்னேன். அவர்கள் இருவரும் சலாமுக்கு பதிலுரைத்தார்கள். பிறகு, நல்ல சகோதரரே! நல்ல நபியே! வருக!ணிஎன்று கூறி (வாழ்த்தி)னார்கள்.

## அன்னை மர்யம் பற்றிய இறைவசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், (நபியே!) மர்யத்தைப் பற்றி இந்த வேதத்தில் (உள்ளதை) நீர் விவரித்துக் கூறும்! அவர் தம் குடும்பத்தாரைவிட்டு விலம் கிழக்குப் பக்கமா ஒதுங்கியிருந்த நேரத்தில் அவர் ஒரு திரையிட்டு அவர்களிலிருந்து மறைந்திருந்தார். (திருக்குர்ஆன் 19: 16)

வானவர்கள் இவ்வாறு கூறியதை நினைவு கூருங்கள்: மர்யமே! திண்ணடாமக அல்லாஹ் உனக்கு தன்னுடைய வாக்கு பற்றி நற்செய்தி சொல்கிறான். அதன் பெயர் மர்யத்தின் குமாரர் ஈசா அல் மஸீஹ் என்பதாகும். அவர் இம்மையிலும், மறுமையிலும் கண்ணியமிக்கவராகவும், அல்லாஹ்விடம் நெருங்கிய நல்லடியார்களில் ஒருவராகவும் திகழ்வார். (திருக்குர்ஆன் 03:45)

நிச்சயமாக அல்லாஹ், அம்லத்தார்களைக் காட்டிலும் (முன்னுரிமை வழங்கி தன்னுடைய தூதுப் பணிக்காக) ஆதத்தையும், நூஹையும், இப்ராஹீமின் வழித் தோன்றல்களையும், இம்ரானின் வழித்தோன்றல்களையும் தேர்ந்தெடுத்தான். (திருக்குர்ஆன் 03:33)

இப்ராஹீமுடன் தமக்குத் தொடர்பு இருப்பதாக உரிமை கொண்டாடுவதற்கு மனிதர்களிலே மிகவும் அருகதையானவர்கள் (யாரெனில்) அவரைப் பின்பற்றி வாழ்ந்தவர்களும், (இப்போது) இந்த நபியும், இவரின் தூதுத்துவத்தின் மீது நம்பிக்கை கொண்டவர்களுமே ஆவர்.

அல்லாஹ், நம்பிக்கையாளர்களுக்கு மட்டுமே உதவியாளனாகவும், ஆதரவாளனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 03:68)

இப்னு அப்பாஸ்(ரலி), குர்ஆனிலுள்ள, அல்லாஹ் அம்லத்தார்களைக் காட்டிலும் (முன்னுரிமை வழங்கி தன்னுடைய தூதுப் பணிக்காக) ஆதமையும், நூஹையும், இப்ராஹீமின் வழித் தோன்றல்களையும் இம்ரானின் வழித் தோன்றல்களையும் தேர்ந்தெடுத்தான்' என்னும் (திருக்குர்ஆன் 03:33) இறை வசனத்திற்கு விளக்கம் அளிக்கும்போது, இது அவர்களிடையேயுள்ள இறை நம்பிக்கையாளர்களைக் குறிக்கம். ஏனெனில் அல்லாஹ், இப்ராஹீமுடன் தமக்குத் தொடர்பு இருப்பதாக உரிமை கொண்டாடுவதற்கு மனிதர்களிலேயே மிகவும் அருகதையானவர்கள் (யாரெனில்) அவரைப் பின்பற்றி வாழ்ந்தவர்களும் (இப்போது) இந்த நபியும், இவரின் தூதுத்துவத்தின் மீது நம்பிக்கை கொண்டவர்களுமே ஆவர் (திருக்குர்ஆன் 03:68) என்று கூறுகிறான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3431. ஸயீத் இப்னு முஸய்யப்(ரலி) அறிவித்தார்

" ஆதமின் மக்களில் (புதிதாகப்) பிறக்கும் குழந்தை எதுவாயினும் அது பிறக்கும் போதே ஷைத்தான் அதைத் தீண்டுகிறான். ஷைத்தானின் தீண்டலால் அக்குழந்தை கூக்குரலெழுப்பும். மர்யமையும் அவரின் மகனையும் தவிர இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்துவிட்டு பிறகு, நான் இக் குழந்தைக்காகவும் வருங்கால வழித்தோன்றலுக்காகவும் சபிக்கப்பட்ட ஷைத்தானைவிட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்' என்னும் (மர்யமுடைய தாய் செய்த பிரார்த்தனையை கூறும் - என்ற 3:36-வது) இறைவசனத்தை ஓதுவார்கள்.

## மர்யமை யார் வளர்ப்பது என்பது பற்றிய இறைவசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், அந்நேரம் வந்தபோது வானவர்கள் கூறினார்கள்: மர்யமே! நிச்சயமாக அல்லாஹ உன்னைத் தேர்ந்தெடுத்துக் தூய்மையாக்கினான். மேலும் அம்லத்துப் பெண்கள் அனைவரிலும் (உனக்கு முதலிடம் அளித்து, தன்னுடைய திருப்பணிக்காக) உன்னைத் தேர்ந்தெடுத்தான்.

"(எனவே,) மர்யமே! நீ உன்னுடைய இறைவனைக் குனிந்து (சிரம்பணிந்து வணங்குபவர்களுடன் நீயும் குனிந்து சிரம் பணி(ந்து வணங்கு)வாயாக!ணி(என்று கூறினார்கள்.)

(நபியே!) இவை (யாவும் நீர் அறியாத) மறைவான செய்திகளாகும். இவற்றை நாம் உமக்கு வஹீயின் மூலம் அறிவிக்கிறோம். அன்றி, மர்யமை (வளர்க்க) அவர்களில் எவர் பிணையேற்றுக் கொள்வதென்று (முடிவு செய்ய) அவர்கள் தங்கள் எழுது கோல்களை (ஆற்றில்) எறிந்தபோது நீர் அவர்களுடன் இருக்கவில்லை. (இதைப் பற்றி) அவர்கள் தர்க்கித்தபோதும் நீர் அவர்களுடன் இருக்கவில்லை. (திருக்குர்ஆன் 03: 42 - 44)

ஹதீஸ் 3432. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இம்ரானின் மகள் மர்யம் தான் (அப்போது) உலகின் பெண்களிலேயே சிறந்தவராவார். (தற்போது) உலகப் பெண்களிலேயே சிறந்தவர் கதீஜா ஆவார்.

என அலீ(ரலி) அறிவித்தார்.

## கன்னி மர்யமுக்கு ஆண் துணையின்றி குழந்தை பற்றிய இறைவசனம்

அல்லாஹ் கூறினான்:

வானவர்கள் இவ்வாறு கூறியதை நினைவு கூருங்கள்: மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் உனக்கு தன்னுடைய வாக்கு பற்றி நற்செய்தி சொல்கிறான். அதன் பெயர் மர்யத்தின் குமாரர் ஈசா அல் மஸீஹ் என்பதாகும். அவர் இம்மையிலும், மறுமையிலும் கண்ணியமிக்கவராகவும், (அல்லாஹ்விடம்) நெருங்கிய நல்லடியார்களில் ஒருவராகவும் திகழ்வார்.

அன்றி, அவர் தொட்டிலில் (குழந்தையாக) இருக்கும் பொழுது (தன் தாயின் பரிசுத்தத் தன்மையைப் பற்றியு)ம், (தன் நபித்துவத்தைப் பற்றி) வாலிபத்திலும், மனிதர்களுடன் பேசுவார். தவிர, நல்லொழுக்கமுடையோரில் உள்ளவராகவுமிருப்பார். “

(அதற்கு மர்யம் தன் இறைவனை நோக்கி,) என் இறைவனே! எந்த ஒரு மனிதருமே என்னைத் தீண்டாதிருக்கும்போது, எனக்கு எவ்வாறு சந்ததி ஏற்பட்டு விடும்? என்று கூறினார். (அதற்கு) இவ்வாறே, அல்லாஹ் தான் நாடியதைப் படைக்கிறான். அவன் ஒரு பொருளை(ப் படைக்க) நாடினால், அதனை ஆகுக என அவன் கூறுவதுதான் (தாமதம்!) உடனே அது ஆம்விடும்‘ என்று கூறினான்.

மேலும் அவருக்கு வேதத்தையும், ஞானத்தையும், தவ்ராத்தையும் இன்ஜீலையும் கற்பிப்பான். (திருக்குர்ஆன் 03:45-48)

ஹதீஸ் 3433. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மற்ற பெண்களை விட ஆயிஷாவுக்கான சிறப்பு, மற்ற எல்லா உணவுகளையும் விட ஸரீது‘க்குள்ள சிறப்பைப் போன்றதாகும். ஆண்களில் நிறையப் பேர் முழுமை பெற்றிருக்கின்றனர். ஆனால், பெண்களில் இம்ரானின் மகள் மர்யமையும் ஃபிர்அவ்னின் துணைவியார் ஆஸியாவையும் தவிர வேறெவரும் முழுமை பெறவில்லை.

என அபூ மூஸா அல் அஷ் அரீ(ரலி) அறிவித்தார். 116

ஹதீஸ் 3434. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குறைஷிப் பெண்கள் தாம் ஒட்டகத்தில் சவாரி செய்த பெண்களிலேயே சிறந்தவர்கள் (தம்) குழந்தைகளின் மீது அதிகப் பரிவுடையவர்கள். தம் கணவனின் செல்வத்தை அதிகமாகப் பேணிப் பாதுகாக்கக் கூடியவர்கள்.

இதை அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்துவிட்டு பின்பு, இம்ரானின் மகள் மர்யம் ஒட்டகம் எதிலும் சவாரி செய்ததேயில்லை‘ என்று கூறினார்கள்.

ஸு ஹ்ரீ(ரஹ்) வழியாக இதே போன்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## கன்னி மர்யமின் மைந்தர் ஈசா(அலை) பற்றிய இறைவசனம்

அல்லாஹ் கூறினான்:

வேதக்காரர்களே! உங்களுடைய மார்க்கத்தில் (எதையும்) மிகைப்படுத்தாதீர்கள். மேலும், நீங்கள் அல்லாஹ்வின் விஷயத்தில் சத்தியத்தைத் தவிர வேறு எதையும் கூறாதீர்கள். திண்ணமாக, மர்யமின் மகன் ஈசா அல் மஸீஹ், அல்லாஹ்வின் தூதரும் மர்யமுக்கு அவன் அனுப்பிய அவனுடைய கட்டளையுமாவார். 118 மேலும், அல்லாஹ்விடமிருந்து வந்த ஓர் உயிரும் ஆவார். (அது மர்யமின் கருவறையில் குழந்தையாக வடிவம் பெற்றது.) எனவே, நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர்களின் மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள்! மேலும், மூன்று (கடவுள்) எனச் சொல்லாதீர்கள். (அப்படிச் சொல்வதைத்) தவிர்த்துக் கொள்ளுங்கள். இதுவே உங்களுக்கு நன்மை பயக்கும். ஏனெனில், அல்லாஹ் ஒரே இறைவன்தான் தனக்கு மகனை ஏற்படுத்திக் கொள்வதைவிட்டு அவன் தூய்மையானவன். வானங்கள் மற்றும் பூமியிலுள்ளவை அனைத்தும் அவனுக்கே உரியனவாகும். மேலும், (அவை

அனைத்தையும் பராமரித்துப் பாதுகாக்கும்) பொறுப்பினை ஏற்பதற்கு அவனேபோது மானவனாவான். (திருக்குர்ஆன் 04:171)

ஹதீஸ் 3435. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும் முஹம்மது அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார் என்றும் ஈஸா(அலை) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும அவனுடைய தூதரும் ஆவார் என்றும், அல்லாஹ் மர்யமை நோக்கிச் சொன்ன ('ஆகுக! என்னும்) ஒரு வார்ததை(யால் பிறந்தவர்) என்றும், அவனிடமிருந்து (ஊதப்பட்ட) ஓர் உயிர் என்றும், சொர்க்கம் (இருப்பது) உண்மை தான் என்றும், (சொல்லால் உரைத்து, உள்ளத்தால் நம்பி) உறுதிமொழி கூறுகிறவரை அல்லாஹ் அவரின் செயல்களுக்கேற்ப சொர்க்கத்தில் புகுத்துவான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உபாதா(ரலி) அறிவித்தார்.

## மர்யமின் மைந்தர் ஈசா(அலை) தொட்டிலில் பேசியது பற்றிய இறைவசனம்

அல்லாஹ் கூறினான்:

மேலும், (நபியே!) மர்யத்தைப் பற்றி இந்த வேதத்தில் (உள்ளதை) நீர் விவரித்துக் கூறும்! அவர் தம் குடும்பத்தாரைவிட்டு விலம் கிழக்குப் பக்கமாக ஒதுங்கியிருந்த நேரத்தில் அவர் ஒரு திரையிட்டு அவர்களிலிருந்து மறைந்திருந்தார். (அப்போது) நாம் அவரிடம் நம்முடைய ரூஹை (வானவரை) அனுப்பினோம். அவர் மர்யத்தின் முன்னிலையில் முழு மனித உருவில் தோன்றினார். உடனே, மர்யம் கூறினார்: உம்மைவிட்டுக் கருணைமிக்க இறைவனிடம் நான் பாதுகாவல் கோருகிறேன், நீர் இறையச்சம் உள்ளவராயின்! அதற்கு அவர் கூறினார்: நான் உம் இறைவனின் தூதராவேன்: தூய்மையான ஓர் ஆண் குழந்தையை உமக்கு வழங்குவதற்காக நான் அனுப்பப்பட்டுள்ளேன்!ணிமர்யம் கூறினார்: எனக்கு எவ்வாறு ஆண் குழந்தை பிறக்கும்? என்னை எந்த மனிதனும் தீண்ட வில்லையே் நான் தீய நடத்தையுடையவளும் அல்லவே! நான் தீய நடத்தையுடையவளும் அல்லவே!ணிஅதற்கு வானவர் கூறினார்: அவ்வாறே நிகழும்!ணிஉம் இறைவன் கூறுகிறான்: அவ்வாறு செய்வது எனக்கு மிகவும் எளிதானது் மேலும், நாம் அக்குழந்தையை மக்களுக்கு ஒரு சான்றாகவும் நம்மிடமிருந்து ஒரு கருணையாகவும் ஆக்குவதற்காகவே இவ்வாறு செய்கிறோம். மேலும் அது நடந்தே தீரும்!“

பின்னர், மர்யம் அக்குழந்தையைக் கர்ப்பம் தரித்தார். கர்ப்பத்தோடு அவர் தொலைவான ஓர் இடத்திற்கு ஒதுங்கிச் சென்றார். பிரசவ வேதனை அவரை ஒரு பேரீச்சை மரத்தடியின் பக்கம் கொண்டு வந்து சேர்த்தது. அப்போது அவர், அந்தோ! நான் இதற்கு முன்னரே மரணமடைந்து முற்றிலும் மறக்கடிக்கப்பட்டு போயிருந்திருக்கக் கூடாதா? என்று கூறலானார். அப்பொழுது கீழே இருந்து ஓர் வானவர் அவரை அழைத்துக் கூறினார்: நீர் கவலைப்படாதீர்: உம் இறைவன் உமக்குக் கீழே ஒரு நீரூற்றை அமைத்துள்ளான். (திருக்குர்ஆன் 19: 16-24)

ஹதீஸ் 3436. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூன்று பேர்களைத் தவிர வேறெவரும் தொட்டிலில் (குழந்தையாக இருக்கும் போது) பேசியதில்லை. (ஒருவர்) ஈசா (அலை) அவர்கள். (மற்றொருவர்) பனு இஸ்ராயீல்களால் ஜு ரைஜ் என்றழைக்கப்பட்டு வந்த (இறைநேசரான) மனிதர் ஒருவர். (ஒரு முறை) அவர் தொழுது கொண்டிருந்தார். அப்போது அவரின் தாயார் வந்து அவரை அழைத்தார். ஜு ரைஜ் (தம் மனத்திற்குள்) அவருக்கு நான் பதிலளிப்பதா? தொழுவதா? என்று கூறினார்கள். (பதிலளிக்கவில்லை.) அதனால் கோபமடைந்த அவரின் தாய், இறைவா! இவனை விபசாரிகளின் முகங்களில் விழிக்கச் செய்யாமல், மரணிக்கச் செய்யாதே!ணிஎன்று கூறிவிட்டார். (ஒரு முறை) ஜு ரைஜ் தம் ஆசிரமத்தில் இருந்தபோது அவரிடம் ஒரு பெண் வந்து (தன்னுடன் தகாத உறவு கொள்ளும்படி அழைத்துப்)

பேசினாள். அதற்கு அவர் மறுத்துவிட்டார். எனவே, (அவள் அவரைப் பழி வாங்குவதற்காக) ஓர் ஆட்டு இடையனிடம் சென்று அவனைத் தன் வசப்படுத்தி (அவனுடன் விபசாரம் புரிந்து) ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தாள். பிறகு இது ஜு ரைஜு க்குப் பிறந்தது என்று (மக்களிடம்) சொன்னாள். உடனே மக்கள் ஜு ரைஜிடம் சென்று அவரின் ஆசிரமத்தை இடித்து அவரைக் கீழே இறங்கி வரச் செய்து அவரை ஏசினார்கள். உடனே, ஜு ரைஜ் அவர்கள் உளூச் செய்து தொழுதுவிட்டு, பின்னர் அந்தக் குழந்தையிடம் சென்று, குழந்தையே! உன் தந்தை யார்? என்று கேட்டார். அக்குழந்தை, (இன்ன) இடையன்' என்று பேசியது. அதைக் கண்டு (உண்மையை) உணர்ந்த அந்த மக்கள், தங்கள் ஆசிரமத்தை நாங்கள் தங்கத்தால் கட்டித் தருகிறோம்' என்று கூறினார்கள். அதற்கு அவர், இல்லை, களிமண்ணால் கட்டித் தந்தாலே தவிர நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்' என்று கூறிவிட்டார். (மூன்றாமவர்) இஸ்ரவேலர்களில் ஒரு பெண் தன் மகன் ஒருவனுக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தாள். அப்போது அழகும் பொலிவும் மிக்க ஒரு மனிதன் வாகனத்தில் சவாரி செய்த வண்ணம் சென்று கொண்டிருந்தான். உடனே, அவள், இறைவா! என் மகனை இவனைப் போல் ஆக்கு' என் மகனை இவனைப் போல் ஆக்கு' என்று பிரார்த்தித்தாள். உடனே, அந்தக் குழந்தை அவளுடைய மார்பைவிட்டுவிட்டு சவாரி செய்பவனை நோக்கி, இறைவா! இவனைப் போல் என்னை ஆக்கி விடாதே' என்று கூறியது பிறகு அவளுடைய மார்பை நோக்கிப் பால் குடிக்கச் சென்றது. இந்த இடத்தில் நபியவர்கள் தம் விரலை சூப்புவது போல் தெரிந்தது - பிறகு அக்குழந்தை ஓர் அடிமைப் பெண்ணைக் கடந்து கொண்டு செல்லப்பட்டது. அப்போது அந்தப் பெண், இறைவா! என் மகனை இவளைப் போல் ஆக்கி விடாதே' என்று கூறினாள். உடனே, அக்குழந்தை அவளுடைய மார்பைவிட்டுவிட்டு, இறைவா! என்னை இவளைப் போல் ஆக்கு' என்று கூறியது. அந்தப் பெண் (வியப்படைந்து), ஏன் இப்படிச் சொல்கிறாய்? என்று கேட்டதற்கு அக்குழந்தை, வாகனத்தில் சவாரி செய்து சென்றவன் கொடுங்கோலர்களில் ஒருவன் இந்த அடிமைப் பெண்ணைக் குறித்து மக்கள் (அவதூறாக) நீ திருடிவிட்டாய் விபசாரம் செய்துவிட்டாய் என்று கூறுகிறார்கள். ஆனால், இவள் அப்படி எதுவும் செய்யவில்லை' என்று பதிலளித்தது.

ஹதீஸ் 3437 அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், (விண்) பயணத்திற்காக அவர்கள் கொண்டு செல்லப்பட்ட இரவில் நடந்தவற்றை விவரித்துக் கூறியபடி, நான் மூஸா (அலை) அவர்களைச் சந்தித்தேன்' என்று கூறிவிட்டு அவர் (களின் அங்க அடையாளங்) களை வர்ணித்தார்கள். (அப்போது கூறினார்கள்:)

மூஸா (அலை) அவர்கள் (யமன் நாட்டைச் சேர்ந்த) ஷனூஆ குலத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவரைப் போன்று ஒல்லியான (சதை குறைந்த) வராக, தலைமுடி தொங்கலாக (வாரி) விட்டிருப்பவராக இருந்தார்கள்.

(தொடர்ந்து நபி (ஸல்) அவர்கள்) நான் ஈசா (அலை) அவர்களைச் சந்தித்தேன்' என்று கூறிவிட்டு, அவர் (களின் அங்க அடையாளங்) களை வர்ணித்தார்கள்: சிவப்பு நிறமுடையவர்களாக, நடுத்தர உயரம் உடையவர்களாக, (அப்போதுதான்) குளியலறையிலிருந்து வெளியே வந்தவர்களைப் போல் அவர்கள் இருந்தார்கள். மேலும், நான் இப்ராஹீம் (அலை) அவர்களையும் பார்த்தேன். நானே அவர்களின் சந்ததிகளிலேயே (தோற்றத்தில்) அவர்களுக்கு மிகவும் ஒப்பானவனாக இருக்கிறேன். என்னிடம் இரண்டு பாத்திரங்கள் கொண்டு வரப்பட்டன. அவற்றில் ஒன்றில் பாலும் மற்றொன்றில் மதுவும் இருந்தது. நீங்கள் விரும்பியதை எடுத்துக் கொள்ளுங்கள்' என்று என்னிடம் சொல்லப்பட்டது. நான் பாலை எடுத்து அதைப் பருமனேன். உடனே, நீங்கள் இயற்கையான வழியில் செலுத்தப்பட்டு விட்டீர்கள். அல்லது நீங்கள் இயற்கையைப் பெற்றுக் கொண்டீர்கள்' என்று என்னிடம் பெற்றுக் கொண்டீர்கள்' என்று என்னிடம்

சொல்லப்பட்டது. நீங்கள் மதுவை எடுத்துக் கொண்டிருந்தால் உங்கள் சமுதாயம் வழிதவறிப் போயிருக்கும்‘ என்றும் சொல்லப்பட்டது. 120

ஹதீஸ் 3438. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மிஅராஜ் இரவில்) நான் ஈசா(அலை), மூஸா(அலை), இப்ராஹீம்(அலை) ஆகியோரைப் பார்த்தேன். ஈசா(அலை) அவர்கள் சிவப்பு நிறமுடையவர்களாகவும் சுருள் முடியுடையவர்களாகவும் அகன்ற மார்புடையவர்களாகவும் இருந்தார்கள். மூஸா(அலை) அவர்களோ மாநிறமுடையவர்களாகவும், உயரமானவர்களாகவும், படிந்த, நெருங்லான முடியுடையவர்களாகவும் சூடானிய இனத்தவர்களில் ஒருவரைப் போன்று (நீண்டு மெலிந்தவர்களாகவு)ம் இருந்தார்கள்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3439. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒருமுறை மக்களின் நடுவே அமர்ந்தபடி தஜ்ஜால் என்னும் மஸீஹை நினைவு கூர்ந்தார்கள். அப்போது, அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன். ஆனால், தஜ்ஜால் என்னும் மஸீஹ், வலது கண் குருடானவன். அவனுடைய கண், (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருக்கும்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3440. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இன்றிரவு கஅபாவின் அருகே நான் கனவில் (ஒரு நிகழ்ச்சியைக்) கண்டேன். மனிதர்களின் மா நிறத்திலேயே மிக அழகான மாநிறமான மனிதர் ஒருவர் அங்கிருந்தார். அவரின் தலைமுடி அவரின் தோள்களுக்கிடையே தொங்கிக் கொண்டிருந்தது் படியவாரப்பட்ட தொங்கலான முடியுடையவராக அவர் இருந்தார். அவரின் தலையிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. இரண்டு மனிதர்களின் தோள்களின் மீது தம் இரண்டு கைகளையும் அவர் வைத்துக் கொண்டு கஅபாவைச் சுற்றிக் கொண்டிருந்தார். நான், இவர் யார்? என்று கேட்டேன். மர்யமின் மகன் ஈசா அவர்கள்‘ என்று பதிலளித்தார்கள். பிறகு, அவருக்குப் பின்னால் நிறைய சுருள் முடி கொண்ட, வலக் கண்ட குருடான ஒரு மனிதனைக் கண்டேன். அவன் நான் பார்த்தவர்களிலேயே இப்னு கத்தனுக்கு அதிக ஒப்பானவனாயிருந்தான். அவன் இறையில்லம் கஅபாவை வலம் வந்து கொண்டிருந்த ஒரு மனிதரின் தோள்களின் மீது தன் இரண்டு கைகளையும் வைத்திருந்தான். நான், யார் இது? என்று கேட்டேன். இவன் தஜ்ஜால் என்னும் மஸீஹ்‘ என்று பதிலளித்தார்கள்.

நா∴பிவு(ரஹ்) அவர்களிடமிருந்து உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்களும் இதை அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3441. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இல்லை அல்லாஹ்வின் மீதாணையாக! ஈசா(அலை) அவர்களைக் குறித்து அவர்கள் சிவப்பு நிறமுடையவர்கள்‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறவில்லை. மாறாக (இப்படித்தான்) கூறினார்கள்: நான் தூங்கிக் கொண்டிருக்கையில் (கனவில்) கஅபாவை வலம் வந்து கொண்டிருந்தேன். அப்போது மாநிறமுடைய தலைமுடி படிந்து தொங்கிய வண்ணமிருந்த ஒருவர் தம் தலையிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருக்க... அல்லது வழிந்து கொண்டிருக்க... அங்கே இருந்தார். நான், இவர் யார்? என்று கேட்டேன். மர்யமின் குமாரர்‘ என்று பதிலளித்தார்கள். நான் (தொடர்ந்து முன்னேறிச்) சென்றேன். அங்கு சிவப்பான, தடிமனமான, சுருட்டைத் தலை முடியுள்ள, வலக் கண் குருடான மனிதன் ஒருவன் இருந்தான். அவனுடைய கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருந்தது. நான், யார் இது? என்று கேட்டேன், தஜ்ஜால்‘

என்று பதிலளித்தார்கள் (தோற்றத்தில்) மக்களிலேயே அவனுக்கு அதிக ஒப்பானவர் இப்னு கத்தன் தான்.

இமாம் ஸு ஹ்ரீ (ரஹ்) கூறினார்:

இப்னு கத்தன் குஸாஆ குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதன் அறியாமைக் காலத்திலேயே அவன் அழிந்து விட்டிருந்தான்.

ஹதீஸ் 3442. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் மர்யமின் மைந்தருக்கு மிகவும் நெருக்கமானவன் ஆவேன் - இறைத் தூதர்கள். தந்தை வழிச் சகோதரர்கள் ஆவர் - எனக்கும் அவருக்கும் இடையே இறைத்தூதர் எவருமில்லை.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3443. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் மர்யமின் மகன் ஈசா (அலை) அவர்களுக்கு உலம்லும் மறுமையிலும் அவர்களுக்கு உலம்லும் மறுமையிலும் மக்களிலேயே மிகவும் நெருக்கமானவன் ஆவேன். இறைத் தூதர்கள் ஒரே தந்தையின் பிள்ளைகள் ஆவர். அவர்களின் தாய்மார்கள் பலராவர். அவர்களின் மார்க்கம் ஒன்றே.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

இதே நபிமொழி அபூ ஹு ரைரா (ரலி) அவர்களிடமிருந்து வேறொரு அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3444 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மர்யமின் மகன் ஈசா (அலை) அவர்கள், ஒருவர் திருடிக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அவனிடம், நீ திருடினாயா' என்று கேட்டார்கள். அதற்கு அவன், இல்லை் எவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லையோ அவன் மீதாணையாக! என்று பதிலளித்தான். உடனே ஈசா (அலை) அவர்கள், அல்லாஹ்வின் மீது நான் நம்பிக்கை கொண்டு, என் கண்ணை நம்ப மறுத்தன்' என்று கூறினார்கள்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3445 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

"நபி (ஸல்) அவர்கள், கிறிஸ்தவர்கள் மர்யமின் மகன் ஈசாவை (அளவுக்கு மீறிப் புகழ்ந்து கடவுள் நிலைக்கு) உயர்த்திவிட்டதைப் போல் நீங்கள் என்னை உயர்த்தி விடாதீர்கள். ஏனெனில், நான் அல்லாஹ்வின் அடியான் தான். (அப்படி ஏதாவது என்னைப் பற்றிச் சொல்வதாயிருந்தால்) அல்லாஹ்வின் அடியார் என்றும் இறைத்தூதர் என்றும் சொல்லுங்கள் என்று கூறினார்கள்' என மிம்பரின் (உரை மேடை) மீதிருந்தபடி உமர் (ரலி) சொல்ல கேட்டிருக்கிறேன்.

ஹதீஸ் 3446. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தன் அடிமைப் பெண்ணுக்கு ஒழுக்கம் கற்பித்து அவளுக்கு ஒழுக்கம் கற்பிக்கும் பணியைச் செம்மையான முறையில் செய்து, பிறகு அவளுக்கு விடுதலை அளித்து அவளை (தானே) மணமும் முடித்தார் எனில் அவருக்கு இரண்டு நற்பலன்கள் கிடைக்கும். ஒருவர் ஈசாவின் மீது நம்பிக்கை கொண்டு, பிறகு என்னை நம்பினால் அவருக்கு இரண்டு நற்பலன்கள் கிடைக்கும், ஓர் அடிமை தன் இறைவனுக்கு அஞ்சி, தன் எஜமானார்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பானாயின் அவனுக்கும் இரண்டு நற்பலன்கள் கிடைக்கும்.

என அபூ மூஸா அல் அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3447. இறைத்தூதர் (ஸல்) அவர்கள், நீங்கள் (மறுமை நாளில்) காலில் செருப்பணியாதவர்களாகவும் நிர்வாணமானவர்களாகவும் விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாகவும் எழுப்பப்படுவீர்கள்' என்று கூறிவிட்டு, பிறகு, எழுதப்பட்ட ஏடு சுருட்டப்படுவதைப் போல் நாம் வானத்தை சுருட்டும் அந்நாளில், நாம் முதலில் எவ்வாறு படைக்கத் தொடங்கினோமோ அவ்வாறே நாம் மீட்டுவோம். இது நம்முடைய பொறுப்பிலுள்ள ஒரு வாக்குறுதியாகும. அதனை நாம் நிறைவேற்றியே தீருவோம்' என்னும் (திருக்குர்ஆன் 21:104) இறைவசனத்தை ஓதினார்கள். முதலாவதாக ஆடை அணிவிக்கப்படுபவர்கள் இப்ராஹீம் (அலை) அவர்கள் ஆவார்கள். பிறகு, என் தோழர்களில் சிலர் (சொர்க்கத்திற்காக) வலப்பக்கமும், (சிலர் நரகத்திற்காக) வலப்பக்கமும, (சிலர் நரகத்திற்காக) இடப்பக்கமும் கொண்டு செல்லப்படுவார்கள். நான், இவர்கள் என் தோழர்கள்' என்று கூறுவேன். இவர்களைவிட்டு நீங்கள் பிரிந்ததிலிருந்து இவர்கள், தம் கால் சுவடுகளின் வழியே (எங்கிருந்து) வந்தார்களோ அந்த மதத்திற்குத்) திரும்பிச் சென்று கொண்டிருந்தார்கள்' என்று சொல்லப்படும். அதற்கு நான் நல்லடியாரான மர்யமின் மகன் ஈசா (அலை) அவர்கள் சொன்னதைப் போன்றே, (இறைவா!) நான் இவர்களிடையே (உயிருடன்) வாழ்ந்து வந்த வரை நான் இவர்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்தபோது நீயே இவர்களைக் கண்காணிப்பவனாம்விட்டாய். ஒவ்வொரு விஷயத்தையும் நீ பார்த்துக் கொண்டிருக்கிறாய். நீ அவர்களைத் தண்டித்தாலும் அவர்கள் உன் அடிமைகள் தாம். (அதற்கும் உனக்கும் முழு உரிமையுண்டு.) அவர்களை நீ மன்னித்துவிட்டால் (அது உன் கருணையாகும். ஏனெனில்,) நீ வல்லோனும் விவேகம் மிக்கோனும். ஆவாய்' (திருக்குர்ஆன் 05: 117, 118) என்று சொல்வேன்.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

கபீஸா இப்னு உக்பா (ரஹ்) கூறினார்:

தம் கால் சுவடுகளின் வழியே (பழைய மதத்திற்குத்) திரும்பிச் சென்றவர்கள் யாரெனில், அபூ பக்ர் (ரலி) அவர்களின் காலத்தில் மதமாறியவர்கள் தாம்! அபூ பக்ர் (ரலி) (போராடி) அவர்களை வீழ்த்திவிட்டார்கள்.

## மர்யமின் மகன் ஈசா (அலை) அவர்கள் (பூமிக்கு) இறங்கி வருவது.

ஹதீஸ் 3448. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! விரைவில் (உலக அழிவுக்கு முன்) மர்யமின் மகன் உங்களிடையே நேர்மையாகத் தீர்ப்பளிக்கும் நீதிபதியாக இறங்கவிருக்கிறார். அவர் சிலுவையை உடைப்பார் பன்றியைக் கொல்வார் ஜிஸ்யா (எனும் காப்பு) வரியை வாங்க மறுப்பார் (இஸ்லாம் ஒன்றையே மக்களிடமிருந்து ஏற்பார்.) செல்வம் (பெரும்) வழிந்தோடும். எந்த அளவுக்கென்றால் அதை வாங்கிக் கொள்பவர் எவரும் இருக்க மாட்டார். அந்த நேரத்தில், ஒரேயொரு சஜ்தா (நெற்றி நிலத்தில் பட அல்லாஹ்வை வணங்குவது) இந்த உலகத்தையும் அதிலுள்ளவற்றையும் விடச் சிறந்ததாக (மக்களின் பார்வையில்) ஆம்விடும்.

இந்த நபிமொழியை அறிவித்துவிட்டு அபூ ஹுரைரா (ரலி), வேதம் வழங்கப்பட்டவர்களில் எவரும், தாம் இறப்பதற்கு முன்பா அவர் (முஹம்மதின்) மீது நம்பிக்கை கொள்ளாமல் போக மாட்டார். மேலும், மறுமை நாளில் அவர்களுக்கெதிராக அவர் சாட்சியம் அளிப்பார் (திருக்குர்ஆன் 04:159) என்னும் வசனத்தை நீங்கள் விரும்பினால் ஓதிக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள். 125

ஹதீஸ் 3449. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களைச் சேர்ந்த ஒருவரே உங்களுக்கு(த் தொழுகை நடத்தும்) இமாமாக இருக்க மர்யமின் மகன் உங்களிடையே இறங்குவாரேயானால் அப்போது உங்களுக்கு எப்படியிருக்கும்?

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

உகைல் இப்னு காலித்(ரஹ்) அவர்களும் அப்துர்ரஹ்மான் இப்னு அம்ர் அல் அவ்ஸாயீ(ரஹ்) அவர்களும் இதே போன்று அறிவித்தார்கள்.

## பனு இஸ்ராயீல் - இஸ்ராயீலின் சந்ததிகள் பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3450. ரிப்யீ இப்னு ஹிராஷ்(ரஹ்) அறிவித்தார்

உக்பா இப்னு ஆமிர்(ரலி) ஹுதைஃபா(ரலி) அவர்களிடம், இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் கேட்டதை எங்களுக்கு அறிவிக்கமாட்டீர்களா? என்று கேட்டார். ஹுதைஃபா(ரலி), தஜ்ஜால் வெளியே வரும்போது அவனுடன் தண்ணீரும் நெருப்பும் இருக்கும். மக்கள் எதை இது நெருப்பு என்று கருதுகிறார்களோ அது (உண்மையில்) குளிர்ந்த நீராக இருக்கும். மக்கள் எதை இது குளிர்ந்த நீர் என்று கருதுகிறார்களோ, அது (உண்மையில்) எரித்துக் கரித்துவிடும் நெருப்பாக இருக்கும். அவனை உங்களில் சந்திக்கிறவர், தான் நெருப்பாகக் கருதுவதில் விழட்டும். ஏனெனில், அது குளிர்ந்த சுவையான நீராகும் என்று நபி(ஸல்) அவர்கள் கூற கேட்டிருக்கிறேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3451. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன்னிருந்தவர்களிடையே வாழ்ந்த ஒரு மனிதரிடம் (உயிரைக் கைப்பற்றும்) வானவர் அவரின் உயிரைக் கைப்பற்றிச் செல்ல வந்தார். அந்த மனிதரிடம், (உன் வாழ்நாளில்) நீ ஏதாவது நன்மை செய்திருப்பதாக அறிந்திருக்கிறாயா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், (அப்படி எதுவும்) எனக்குத் தெரியவில்லை' என்று பதிலளித்தார். (நன்மை ஏதாவது செய்திருக்கிறாயா என்று) சிந்தித்துப் பார்' என்று கூறப்பட்டது. அவர், அப்படி எதுவும் (நன்மை) செய்ததாக எனக்குத் தெரியவில்லை. ஆனால், நான் உலக மக்களிடம் கொடுக்கல் வாங்கல் செய்து வந்தேன். அப்போது, அவர்களிடம் நான் கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்பேன். அப்போது, வசதியுள்ளவருக்கு (கடனை அடைக்க) அவகாசம் தருவேன். வசதியில்லாதவரை மன்னித்து (கடனைத் தள்ளுபடி செய்து) விடுவேன்' என்று பதிலளித்தார். அதன் காரணத்தால் அல்லாஹ் அவரை சொர்க்கத்தில் புகுத்தினான்.

என ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3452. மேலும் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூற கேட்டிருக்கிறேன்:

ஒரு மனிதருக்கு மரணம் வந்தது. அவருக்கு வாழ்வைப் பற்றிய நிராசை ஏற்பட்டவுடன் தம் குடும்பத்தாருக்கு இறுதி உபதேசம் செய்தார். நான் இறந்துவிட்டால், எனக்காக நிறைய விறகுகளைச் சேகரித்து அதில் நெருப்பை மூட்டிவிடுங்கள். நெருப்பு என் இறைச்சியைத் தின்று என் எலும்பு வரை சென்று விடும்போது நான் கரும்பி போவேன். உடனே, என் கருகிய எலும்புகளை எடுத்துத் தூளாக்கி, பிறகு காற்று அதிகமாக வீசும் ஒரு நாளை எதிர்பார்த்திருந்து (அந்நாள் வந்தவுடன்) கடலில் அதை எறிந்து விடுங்கள்' என்று அவர் கூறினார். (அவர் இறந்தவுடன்) அவ்வாறே மக்கள் செய்தனர். அவரின் எலும்புத் துகள்களை அல்லாஹ் ஒன்று திரட்டி, நீ ஏன் அப்படிச் செய்தாய்? என்று அவரிடம் கேட்டான். அவர், உன் அச்சத்தின் காரணத்தினால் தான் (அப்படிச் செய்தேன்)' என்று பதிலளித்தார். எனவே, அல்லாஹ் அவரை மன்னித்துவிட்டான்.

இதை ஹு தைஃபா(ரலி) சொல்லி முடித்தவுடன் அவர்களிடம் உக்பா இப்னு உமர்(ரலி), நானும் நபி(ஸல்) அவர்கள் இதைக் கூறக் கேட்டிருக்கிறேன். அந்த மனிதர் மண்ணறை(களில் கஃபன் துணிகளைத் திருடும்) திருடனாக இருந்தார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3453 , ஹதீஸ் 3454 ஆயிஷா(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது, தம் முகத்தின் மீது சதுரமான கருப்புத் துணி ஒன்றைப் போட்டுக் கொள்ளலானார்கள். வெப்பத்தை உணரும்போது அதைத் தம் முகத்திலிருந்து அகற்றி விடுவார்கள். அதே நிலையில் அவர்கள் இருந்து கொண்டிருக்க, யூதர்களின் மீதும் கிறிஸ்தவர்களின் மீதும் அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும். தம் இறைத்தூதர்களின் அடக்கத்தலங்களை அவர்கள் வணக்கத்தலங்களாக ஆக்கினார்கள்' என்று கூறி, அவர்கள் செய்ததைப் போன்று செய்யக் கூடாது என்று (தம் சமுதாயத்தாரை) எச்சரித்தார்கள்.

ஹதீஸ் 3455. அபூ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

நான் அபூ ஹு ரைரா(ரலி) அவர்களிடம் (மார்க்க விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்காக) ஐந்தாண்டுகள் (தொடர்பை ஏற்படுத்தி) அமர்ந்திருந்தேன். (ஒரு முறை) அபூ ஹு ரைரா(ரலி) கூறினார். பனு இஸ்ராயீல்களை நிர்வம்பப்பவர்களாக இறைத்தூதர்கள் இருந்தனர். இறைத்தூதர் ஒருவர் இறக்கும் போதெல்லாம் மற்றோர் இறைத்தூதர் அவருக்குப் பதிலாக வருவார். மேலும், எனக்குப் பின் எந்த இறைத்தூதரும் (வரப்போவது) இல்லை. ஆயினும், இனி (எனக்குப் பின்) கலீபாக்கள் (பிரதிநிதிகள்) நிறையப் பேர் தோன்றுவார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவர்கள் வரும்போது நாங்கள் என்ன செய்யவேண்டுமென்று நீங்கள் உத்திரவிடுகிறீர்கள்? என்று நபித்தோழர்கள் கேட்டனர். அதற்கு, அவர்களில் முதலாவதாக வருபவரிடம் உறுதிப் பிரமாணம் (செய்ய வேண்டிய உங்கள் கடமையை) நிறைவேற்றுங்கள். பிறகு அடுத்து வருபவரிடம் (அந்தக் கடமையை நிறைவேற்றுங்கள்.) அவர்களுக்கு அவர்களின் உரிமையைக் கொடுத்து விடுங்கள். ஏனெனில், அல்லாஹ் அவர்கள் நிர்வகித்தவை பற்றி அவர்களிடம் கேட்க விருக்கிறான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3456. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

"உங்களுக்கு முன்னிருந்த (யூதர்கள் மற்று கிறிஸ்த)வர்களின் வழிமுறைகளை நீங்கள் அங்குலம் அங்குலமாக, முழம் முழமாகப் பின்பற்றுவீர்கள். எந்த அளவிற்கென்றால் அவர்கள் ஓர் உடும்பின் பொந்துக்கள் புகுந்திருந்தால் கூட நீங்கள் அதிலும் புகுவீர்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். நாங்கள், இறைத்தூதர் அவர்களே! (நாங்கள் பின்பற்றக் கூடியவர்கள் என்று) யூதர்களையும் கிறிஸ்தவர்களையுமா நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்? என்று நாங்கள் கேட்டோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள், வேறெவரை? என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3457. அனஸ்(ரலி) அறிவித்தார்

(தொழுகை நேரம் வந்துவிட்டதை அறிவிக்கும் முறை ஒன்று தேவை என்று மக்கள் கருதியபோது) அவர்கள் (நெருப்பு வணங்கிகளைப் போல்) தீ மூட்டலாம் என்றும், மணியடித்து கூப்பிடலாம் என்றும் கூறினார்கள். (இவையெல்லாம்) யூதர்கள், கிறிஸ்தவர்கள் (ஆகியோரின் போக்காகும்) என்று (சிலர் மறுத்துக்) கூறினார்கள். அப்போது பிலால்(ரலி) அவர்களுக்கு அதான்' எனும் தொழுகை அறிவிப்புக்குரிய வாசகங்களை (கற்றுத் தந்து) அவற்றை இருமுறை கூறும்படியும் இகாமத் (என்னும் தொழுகைக்காக நிற்கும்போது சொல்லும்) வாசகங்களை ஒரு முறை மட்டும் சொல்லும் படியும் உத்திரவிடப்பட்டது.

ஹதீஸ் 3458. மஸ்ரூக் (ரஹ்) அறிவித்தார்

தொழுபவர் தன் கையைத் தன்னுடைய பக்கவாட்டில் (இடுப்புக்கு மேல்) வைத்திருப்பதை ஆயிஷா (ரலி) வெறுத்து வந்தார்கள். யூதர்கள் தான் அப்படிச் செய்வார்கள்' என்று சொல்வார்கள்.

இதே போன்று அஃமஷ் (ரஹ்) வழியாக ஷு அபா (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 3459. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இதற்கு முன் சென்ற சமுதாயங்களின் (ஆயுட்) காலத் தவணைகளிடையே உங்கள் ஆயுள், தவணை, அஸருக்கும் சூரியன் மறைவதற்கும் இடையேயுள்ள (குறைந்த) கால அளவாகும். உங்கள் நிலையும் யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களின் நிலையும் தொழிலாளர்கள் சிலரை வேலைக்கு அமர்த்திய ஒரு மனிதரைப் போன்றதாகும். அவர் (தொழிலாளர்களிடம்), எனக்காக நடுப்பகல் நேரம் வரை ஒவ்வொரு கீராத் (ஊதியத்)திற்கு வேலை செய்பவர் யார்? என்று கேட்டார். யூதர்கள் ஒவ்வொரு கீராத்துக்காக நடுப்பகல் வரை வேலை செய்தார்கள். பிறகு அவர், நடுப்பகல் நேரத்திலிருந்து அஸர் தொழுகை வரை ஒவ்வொரு கீராத் (ஊதியத்)திற்கு எனக்காக வேலை செய்பவர் யார்? என்று கேட்டார். கிறிஸ்தவர்கள் நடுப்பகல் நேரத்திலிருந்து அஸர் தொழுகை வரை ஒவ்வொரு கீராத்துக்காக வேலை செய்தார்கள். பிறகு அவர், அஸர் தொழுகையிலிருந்து சூரியன் மறையும் வரை இரண்டிரண்டு கீராத்துகளுக்கு எனக்காக வேலை செய்பவர் யார்? என்று கேட்டார்.

தெரிந்து கொள்ளுங்கள்: அஸர் தொழுகையிலிருந்து சூரியன் மறையும் வரை இரண்டிரண்டு கீராத்துகளுக்காக வேலை செய்தவர்கள் (முஸ்லிம்களாகிய) நீங்கள் தாம். தெரிந்து கொள்ளுங்கள்: உங்களுக்குத் தான் இருமுறை ஊதியம் கிடைத்துள்ளது.

இதைக் கண்ட யூதர்களும் கிறிஸ்தவர்களும் கோபமடைந்து, நாங்கள் அதிகமாக வேலை செய்திருக்க, கூலி (எங்களுக்குக் குறைவாகக் கிடைப்பதா? என்று கேட்டனர். அதற்கு அல்லாஹ், நான் உங்கள் உரிமையிலிருந்து எதையாவது குறைத்(து அநீதியிழைத்திருக்கிறேனா? என்று கேட்டான். அவர்கள், இல்லை' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ், அ(ப்படி சிலருக்கு மட்டும் அதிகமாகக் கொடுப்ப)து என் அருளாகும். அதை நான் விரும்பியவர்களுக்குக் கொடுக்கிறேன்' என்று சொன்னான். 132

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3460. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

(ஒருவர் மதுவை விற்பதாக அறிந்த போது) அல்லாஹ் இன்னாரை அழிப்பானாக நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் சாபம் யூதர்களின் மீது உண்டாகட்டும்! அவர்களுக்குக் கொழுப்பு தடை செய்யப்பட்டிருந்தது. ஆனால், அவர்கள் அதை உருக்கி விற்றார்கள்' என்று கூறினார்கள் என்பதை அவர் அறியமாட்டாரா? என்று உமர் (ரலி) கூற கேட்டேன்.

இதையே நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஜாபிர் (ரலி) அவர்களும் அபூ ஹு ரைரா (ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3461. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னிடமிருந்து ஒரேயொரு (சிறு) செய்தி கிடைத்தாலும் சரி, அதை (ப் பிறருக்கு) எடுத்துரையுங்கள். பனு இஸ்ராயீல்களின் வாயிலாகக் கிடைத்த செய்திகளையும் அறிவியுங்கள். அதனால் குற்றமில்லை. எவன் என் மீது (நான் சொன்னதாக) வேண்டுமென்றே பொய்யுரைக்கிறானோ அவன் தன் இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3462. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யூதர்களும் கிறிஸ்தவர்களும் (தம் தாடிகளுக்கும் தலைமுடிக்கும்) சாயமிட்டுக் கொள்வதில்லை. எனவே, நீங்கள் (அவற்றிற்குக் கருப்பு அல்லாத சாயமிட்டு) அவர்களுக்கு மாறு செய்யுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3463. ஹஸன் பஸரீ(ரஹ்) அறிவித்தார்

ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ்(ரலி) (இந்த நபிமொழியை பஸராவிலுள்ள) இந்தப் பள்ளி வாசலில் எமக்கு அறிவித்தார்கள். அவர்கள் அறிவித்ததிலிருந்து நாம் மறக்கவில்லை. ஜுன்தப்(ரலி) இறைத்தூதர் மீது (அவர்கள் சொல்லாததைச் சொன்னதாக) பொய்யுரைத்திருப்பார்கள் என்று நாம் அஞ்சவில்லை.

(ஜுன்தப்(ரலி) அறிவித்தாவது: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உங்களுக்கு முன்னிருந்தவர்களிடையே ஒருவர் வாழ்ந்து வந்தார். (ஒரு முறை) அவர் காயமடைந்தார். அவரால் வலி பொறுக்கமுடியாமல் ஒரு கத்தியை எடுத்துத் தன் கையைத் துண்டித்தார். அவர் இறக்கும் வரை இரத்தம் நிற்காமல் கொட்டிக் கொண்டேயிருந்தது. அல்லாஹ், என் அடியான், தன் விஷயத்தில் (அவசரப்பட்டு) என்னை முந்தினான். அவன் மீது நான் சொர்க்கத்தை ஹராமாக்கி (அதை அவன் நுழையத் தடை செய்யப்பட்ட இடமாக ஆக்கி) விட்டேன்' என்று கூறினான்.

## பனு இஸ்ராயீல்களிடையே வாழ்ந்த தொழுநோயாளி, குருடர், வழுக்கைத் தலையர் ஆகியோர் தொடர்பான நிகழ்ச்சி.

ஹதீஸ் 3464. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல் குலத்தாரில் மூன்று பேர்: (ஒருவர்) தொழு நோய் பிடித்தவராகவும் (மற்றொருவர்) வழுக்கைத் தலையராகவும் (இன்னொருவர்) குருடராகவும் இருந்தனர். அல்லாஹ் அவர்களை சோதிக்க நாடி வானவர் ஒருவரை அவர்களிடம் அனுப்பினான். அவர் தொழு நோயாளியிடம் வந்து, உனக்கு மிகவும் விருப்பமானது எது? என்று கேட்க அவர், நல்ல நிறம், நல்ல தோல் (தான் எனக்கு மிகவும் விருப்பமானவை.) மக்கள் (என் வியாதியின் காரணத்தால்) என்னை அருவருக்கிறார்கள்' என்று கூறினார். உடனே அவ்வானவர் அவரை (தம் கரங்களால்) தடவ அந்த வியாதி அவரை (தம் கரங்களால்) தடவ அந்த வியாதி அவரைவிட்டுச் சென்றுவிட்டுது. அவருக்கு அழகிய நிறமும் அழகிய தோலும் தரப்பட்டன. பிறகு அவ்வானவர், எச்செல்வம் உங்களுக்கு மிகவும் விருப்பமானது? என்று கேட்க அவர், ஒட்டகம் தான்... (என்றோ) அல்லது மாடு தான்... (எனக்கு மிகவும் விருப்பமானதாகும்)' என்று பதிலளித்தார். கருத்தரித்த ஒட்டகம் அவருக்கு கொடுக்கப்பட்டது. அவ்வானவர், இதில் உனக்கு பரக்கத் (வளர்ச்சி) வழங்கப்படும்' என்று கூறினார். பிறகு அவ்வானவர் வழுக்கைத் தலையரிடம் சென்றார். உனக்கு மிகவும் விருப்பமானது எது? என்று கேட்டார். அவர், அழகான முடியும் இந்த வழுக்கை என்னைவிட்டுப் போய் விடுவதும் தான் (எனக்கு மிகவும் விருப்பமானது.) மக்கள் என்னை அருவருத்து (ஒதுக்கி வைத்து)விட்டார்கள்' என்று கூறினார். உடனே அவ்வானவர், அவரின் தலையைத் தடவிக் கொடுக்க, அவருக்கு அழகான முடி வழங்கப்பட்டது. அவ்வானவர், எச்செல்வம் உனக்கு விருப்பமானது? என்று கேட்டார். அவர், மாடு தான் எனக்கு மிக விருப்பமான செல்வம்' என்று கூறினார். உடனே வானவர் அந்த வழுக்கைத் தலையருக்கு கர்ப்பமான மாடு ஒன்றைக் கொடுத்து, இதில் உனக்கு வளர்ச்சி வழங்கப்படும்' என்று கூறினார். பிறகு,

அவ்வானவர் குருடரிடம் சென்று, உனக்கு மிகவும் விருப்பமானது எது? என்று கேட்டார். அவர், அல்லாஹ் என் பார்வையை எனக்குத் திரும்பச் செய்வதும் அதைக் கொண்டு மக்களை நான் பார்ப்பதும் தான் (எனக்கு மிகவும் விருப்பமானது)' என்று பதிலளித்தார். அவ்வானவர் அவரைத் தடவிட, அல்லாஹ் அவருக்கு அவரின் பார்வையைத் திருப்பித் தந்தான். அவ்வானவர், உனக்கு எச்செல்வம் விருப்பமானது? என்று கேட்க அவர், ஆடு தான் (எனக்கு மிகவும் விருப்பமானது)' என்று பதில் அளித்தார். உடனே, அவ்வானவர் அவருக்குக் கருவுற்ற ஆடு ஒன்றைக் கொடுத்தார். அந்த இருவரும் (-ஒட்டகம் வழங்கப்பட்டவரும் மாடு வழங்கப்பட்டவரும்-) நிறைய குட்டிகள் ஈந்திடப் பெற்றனர். இவர் (-ஆடு வழங்கப்பட்டவர்-) நிறையக் குட்டிகள் பெற்றார். தொழு நோயாளியாய் இருந்தவருக்கு ஒரு கணவாய் நிரம்ப ஒட்டகங்களும் வழுக்கைத் தலையராய் இருந்தவருக்கு ஒரு கணவாய் நிரம்ப மாடுகளும், குருடராக இருந்தவருக்கு ஒரு கணவாய் நிரம்ப ஆடுகளும் (பெருமளவில்) கிடைத்தன. பிறகு அவ்வானவர் தொழு நோயாளியாய் இருந்தவரிடம் தம் பழைய தோற்றத்திலும் அமைப்பிலும் சென்று, நான் ஓர் ஏழை மனிதன். என் பயணத்தில் என் வாழ்வாதாரம் அறுபட்டுவிட்டது. (செலவுக்குப் பணம் தீர்ந்து போய்விட்டது) இன்று உதவிக்கான வழி வகை (எனக்கு) அல்லாஹ்வையும் பிறகு உன்னையும் தவிர வேறெவருமில்லை. உனக்கு அழகிய நிறத்தையும் அழகிய தோலையும் செல்வத்தையும் கொடுத்த (இறை) வனின் பெயரால் உன்னிடம் ஓர் ஒட்டகத்தைக் கேட்கிறேன். அதன் வாயிலாகப் பயணத்தில் நான் போக வேண்டிய இடத்தைச் சென்றடைவேன்' என்று கூறினார். அதற்கு அந்த மனிதர், (எனக்குக்) கடமைகள் நிறைய இருக்கின்றன. (எனவே, என்னால் நீ கேட்டதைத் தர முடியாது)' என்றார். உடனே அவ்வானவர், உன்னை எனக்குத் தெரியும் போலுள்ளதே. மக்கள் அருவருக்கிற தொழு நோயாளியாக நீ இருக்கவில்லையா? நீ ஏழையாக இருக்கவில்லையா? பிறகு அல்லாஹ் உனக்கு (செல்வத்தைக்) கொடுத்தான் அல்லவா? என்று கேட்டதற்கு அவன், (இல்லையே் நான் இந்த அழகான நிறத்தையும் தோலையும் மற்றும் திரண்ட இச்செல்வத்தையும்) வாழையடி வாழையாக (என் முன்னோர்களிடமிருந்து) வாரிசாகப் பெற்றேன்' என்று பதிலளித்தான். உடனே அவ்வானவர், நீ (இக்கூற்றில்) பொய்யனாயிருந்தால் நீ முன்பு எப்படி இருந்தாயோ அப்படியே உன்னை அல்லாஹ் மாற்றி விடட்டும்' என்று கூறினார். பிறகு வழுக்கைத் தலையரிடம் தம் (பழைய) தோற்றத்திலும் அமைப்பிலும் வந்து முன்பு இவரிடம் (தொழு நோயாளியிடம்) சொன்னதைப் போன்றே கூறினார். அவனும் முதலாமவன் அவருக்கு பதிலளித்தைப் போன்றே பதிலளித்தான். வானவரும், நீ (உன் கூற்றில்) பொய்யனாயிருந்தால் நீ முன்பு எப்படியிருந்தாயோ அப்படியே உன்னை அல்லாஹ் மாற்றி விடட்டும்' என்று கூறினார். பிறகு (இறுதியாக), குருடரிடம் தம் தோற்றத்திலும் அமைப்பிலும் வந்து, நான் ஓர் ஏழை மனிதன் வழிப்போக்கன். என் வாழ்வாதாரம் (வழிச் செலவுக்கான என் வாழ்வதாதாரம் (வழிச் செலவுக்கான பணம்) தீர்ந்து போய்விட்டது. இன்று உதவிக்கான வழிவகை (எனக்கு) அல்லாஹ்வையும், பிறகு உன்னையும் தவிர வேறெவருமில்லை. என் பயணத்தில் என் தேவையைத் தீர்த்துக் கொள்ள உதவும் ஆடு ஒன்றைத் தரும்படி உனக்குப் பார்வையைத் திரும்பத் தந்தவன் பெயரால் கேட்கிறேன்' என்று சொன்னாா. (குருடராயிருந்து பார்வை பெற்ற) அந்த மனிதர் வானவரிடம், நான் குருடனாகத் தான் இருந்தேன். அல்லாஹ் என் பார்வையைத் திருப்பித் தந்தான். நான் ஏழையாக இருந்தேன் என்னைச் சொல்வந்தனாக்கினான். எனவே, நீ விரும்புவதை எடுத்துக்கொள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இன்று நீ எடுக்கிற எந்தப் பொருளையும் திருப்பித் தரும்படி அல்லாஹ்விற்காக சிரமப்படுத்த மாட்டேன்' என்று கூறினார். உடனே அவ்வானவர், உன் செல்வத்தை நீயே வைத்துக் கொள். இது உங்களைச் சோதிப்பதற்காகத் தான். அல்லாஹ் உன்னைக் குறித்து திருப்தியடைந்தான். உன் இரண்டு தோழர்கள் (தொழு நோயாளி) மற்றும் வழுக்கைத் தலையன்) மீது கோபமுற்றான்' என்று கூறினார்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## அஸ்ஹாபுல் கஹ்ஃப் - குகைவாசிகள் பள்ளிய பாடம்

(அல்லாஹ் கூறினான்:)

குகை மற்றும் கல்வெட்டுக்காரர்கள் நம்முடைய வியக்கத்தக்க சான்றாய்த் திகழ்ந்தனர் என்று நீங்கள் கருதுகிறீர்களா? இளைஞர்கள் சிலர் குகையில் தஞ்சம் புகுந்தபோது பிரார்த்தித்தார்கள்: எங்கள் இறைவனே! உன்னுடைய பிரத்யேக அருளை எங்களுக்கு வழங்குவாயாக! எங்கள் காரியங்களை ஒழுங்குபடுத்தித் தருவாயாக!

அப்போது நாம் அவர்களை அதே குகையில் பல்லாண்டுகள் ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்த்தினோம் பிறகு அவர்களை எழுச் செய்தோம்... (திருக்குர்ஆன் 18: 9-21)

## (மூவர் சிக்கிய) குகை பற்றிய செய்தி.

ஹதீஸ் 3465 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன் (சென்ற காலத்தில்) இருந்தவர்களில் மூன்று பேர் நடந்து சென்று கொண்டிருந்தபோது, (திடீரென) மழை பிடித்தது. எனவே, அவர்கள் ஒரு குகையில் தஞ்சம் புகுந்தார்கள். உடனே, அந்தக் குகை (வாசலை மலையிலிருந்து உருண்டு வந்த ஒரு பாறை மூடி) அவர்களை அடைத்தது. அவர்கள், அல்லாஹ்வின் மீது ஆணையாக! நம்மை (நம்முடைய) வாய்மையான செயல் தான் காப்பாற்ற முடியும். எனவே, நம்மில் ஒவ்வொருவரும், தான் வாய்மையுடன் நடந்ததாக நம்புகிற விஷயத்தைக் கொண்டு (அல்லாஹ்விடம்) பிரார்த்திக்கட்டும்' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள்.

எனவே, அவர்களில் ஒருவர் பின் வருமாறு பிரார்த்தித்தார்:

"இறைவா! என்னிடம் ஒரு கூலியாள் எனக்காக ஒரு ஃபரக் (அளவு) நெல்(லை) கூலிக்கு(ப் பேசி) வேலை செய்தார். பிறகு கூலியை (வாங்கிக் கொள்ளாமல்)விட்டுவிட்டுச் சென்றார். நான் அந்த ஃபரக் அளவு நெல்லை எடுத்து வேளாண்மை செய்தேன். அதன் வருவாயிலிருந்து பல மாடுகளை வாங்கினேன். பிறகு (ஒரு நாள்) அவர் என்னிடம் தன் கூலியைக் கேட்டு வந்தார். நான் அவரிடம் அங்கு சென்றது, அந்த மாடுகளை ஓட்டிச்செல்' என்றேன். அதற்கவர், உங்களிடம் எனக்குரியது ஒரு ஃபரக் அளவு நெல்தானே!ணிஎன்று கேட்டார். நான் அவரிடம், அந்த மாடுகளை எடுத்துக் கொள். ஏனெனில் அவை (நீவிட்டுச் சென்ற) அந்த ஒரு ஃபரக் நெல்லிலிருந்து கிடைத்தவை தாம்' என்று சொன்னேன். அவர் அவற்றை ஓட்டிச் சென்றார். (அதை நீ அறிவாய்) நான் அதை உன் அச்சத்தின் காரணமாகவே செய்ததாக நீ அறிந்திருந்தால் எங்களைவிட்டு (இந்தப் பாறையை) நீக்குவாயாக!ணிஅந்தப் பாறை அவர்களைவிட்டு சற்றே விலகியது.

மற்றொருவர் பின்வருமாறு பிரார்த்தித்தார்:

"இறைவா! எனக்கு வயது முதிர்ந்த தாய் தந்தையர் இருந்தனர். நான் ஒவ்வோர் இரவிலும் அவர்களுக்கு என் ஆடு ஒன்றின் பாலைக் கொண்டு செல்வேன். ஓர் இரவு அவர்களிடம் செல்லத் தாமதமாம்விட்டது. அவர்கள் தூங்கிவிட்ட பின்பு சென்றேன். என் மனைவியும் என் குழந்தைகளும் பசியால் கூக்குரலெழுப்பி அரற்றிக் கொண்டிருந்தனர். என் தாய்தந்தையர் பருகுகிற வரை அவர்களுக்குப் புகட்ட மனமில்லாதவனாக நான் இருந்தேன். அதே வேளையில், அவர்களை (தூக்கத்திலிருந்து) எழுப்பிடவும் நான் விரும்பவில்லை. நான் அவர்களை (பால் தராமல்)விட்டுவிட, அவர்கள் அதைக் குடிப்பதற்காக எதிர்பார்த்துக் காத்திருப்பதை நான் விரும்பவுமில்லை. எனவே, அதிகாலை நேரம் உதயமாகும் வரை நான் எதிர்பார்த்துக் காத்திருந்தேன். (இதை நீ அறிவாய்.) இதை நான் உன் அச்சத்தின் காரணத்தால் தான் செய்தேன் என்று நீ கருதினால் எங்களைவிட்டு (இந்த அடைப்பை இன்னும் சற்று) நீக்குவாயாக!ணிஅவ்வாறே, அந்தப் பாறை அவர்கள் வானத்தைப் பார்க்கும்

அளவிற்கு (இன்னும் சற்று) விலகியது. மற்றொருவர் இப்படிப் பிரார்த்தித்தார்: இறைவா! என் தந்தையின் சகோதரர் மகள் ஒருத்தி எனக்கு இருந்தாள். அவள் மக்களிலேயே எனக்கு அதிகப் பிரியமானவளாக இருந்தாள். நான் அவளை எனக்கு இணங்குமாறு அழைத்தேன். நான் அவளிடம் நூறு தீனார்களைக் கொண்டு வந்தாலே தவிர எனக்கு இணங்க முடியாதென்று மறுத்துவிட்டாள். நான் அதனைத் தேடி அடைந்தபின் அவளிடம் எடுத்துக்கொண்டு சென்று அதைக் கொடுத்தேன். அவள் தன்னை என் வசனம் ஒப்படைத்தாள். நான் அவளிடம் உடலுறவிற்காக அமர்ந்த பொழுது அவள், அல்லாஹ்வுக்கு அஞ்சு. முத்திரையை அதற்குரிய (சட்டப்பூர்வமான) உரிமையின்றி (திருமணம் முடிக்காமல்) திறக்காதே' என்று சொன்னாள். உடனே நான் (உடலுறவு கொள்ளாமல்) எழுந்து விட்டேன். நூறு தீனார்களை (அவளிடமே)விட்டுவிட்டேன். நான் இதை உன் அச்சத்தின் காரணத்தால் செய்ததாக நீ கருதினால் (மீதிமிருக்கும் அடைப்பையும்) எங்களைவிட்டு நீக்குவாயாக!ணஎனவே, அல்லாஹ் அவர்களைவிட்டு (முழுமையாக) நீக்கிவிட்டான். அவர்களும் அதிலிருந்து வெளியேறினார்கள்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3466. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முற்காலத்தில்) பெண்ணொருத்தி தன் மகனுக்குப் பாலூட்டிக் கொண்டிருந்தாள். அவள் அவனுக்குப் பாலூட்டிக் கொண்டிருந்தபோது வாகனத்தில் சென்ற ஒருவன் அவளைக் கடந்து சென்றான். அப்பெண், இறைவா! இவனைப் போல் என் மகன் ஆகும் வரை அவனுக்கு நீ மரணத்தைத் தராதே' என்று பிரார்த்தித்தாள். உடனே, அந்தக் குழந்தை, இறைவா! என்னை இவனைப் போல் ஆக்கி விடாதே' என்று பிரார்த்தித்தது. பிறகு திரும்பச் சென்று (அவளுடைய) மார்பில் பால் குடிக்கலானது. பிறகு (தரையில்) இழுபட்டுக் கொண்டே வந்த ஒரு பெண் அவளைக் கடந்து சென்றாள். அவளைப் பிறர் கேலி செய்து விளையாட்டுப் பொருளாக நடத்திக் கொண்டிருந்தனர். (தன் குழந்தைக்குப் பாலூட்டிக் கொண்டிருந்த அந்தப் பெண், இறைவா! என் மகனை இவளைப் போல் ஆக்கி விடாதே' என்று பிரார்த்தித்தாள். உடனே அக்குழந்தை, இறைவா! என்னை இவளைப் போல் ஆக்கு' என்று பிரார்த்தித்தது. பிறகு அது, வாகனத்தில் சென்றவன் இறைமறுப்பாளன் ஆவான். இந்தப் பெண்ணோ, இவளைப் பற்றி மக்கள் இவள் விபசாரம் செய்கிறாள் என்று (அபாண்டமாகக்) கூறுகிறார்கள். ஆனால், இவள், எனக்கு அல்லாஹ்வே போதுமானவன்' என்று கூறுகிறாள். அவர்கள், இவள் திருடுகிறாள் என்று (அவதூறாகக்) கூறுகிறார்கள். இவள், எனக்கு அல்லாஹ்வே போதுமானவன் என்று கூறுகிறாள்' என்று (அக்குழந்தை) கூறுகிறாள்' என்று (அக்குழந்தை) சொல்லிற்று.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3467. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முன்னொரு காலத்தில்) நாய் ஒன்று ஒரு கிணற்றைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. அது தாகத்தால் செத்து விடும் நிலையில் இருந்தது. அப்போது, பனு இஸ்ராயீல் சமுதாயத்தின் விபசாரிகளில் ஒருத்தி அதைப் பார்த்தாள். உடனே, அவள் தன் காலுறையைக் கழற்றி (அதில் தண்ணீரை எடுத்து) அந்த நாய்க்குப் புகட்டினாள். அதன் காரணமாக அவளுக்குப் பாவ மன்னிப்பு வழங்கப்பட்டது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3468. ஹுமைத் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

முஆவியா(ரலி) ஹஜ் செய்த ஆண்டில் (மேடை) மிம்பரின் மீதிருந்தபடி, காவலர் ஒருவரின் கையிலிருந்த முடிக் கற்றை (சவுரி முடி) ஒன்றை எடுத்து (கையில் வைத்துக்

கொண்டு), மதீனா வாசிகளே! உங்கள் (மார்க்க) அறிஞர்கள் எங்கே? என்று கேட்டுவிட்டு, நபி(ஸல்) அவர்கள் இது போன்றதிலிருந்து (மக்களைத்) தடுப்பதையும், பனு இஸ்ராயீல் சமுதாயத்தார் அழிந்து போனதெல்லாம் இதை அவர்களின் பெண்கள் பயன்படுத்தியபோது தான் என்று சொல்வதையும் நான் செவியுற்றிருக்கிறேன்' என்று சொல்லக் கேட்டேன்.

ஹதீஸ் 3469. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன் சென்ற சமுதாயங்களில், (பல்வேறு பிரச்சினைகளில் சரியான தீர்வு எது என்பது குறித்து இறையருளால்) முன் கூட்டியே அறிவிக்கப்பட்டவர்கள் இருந்திருக்கிறார்கள். அத்தகையவர்களில் எவராவது என்னுடைய இந்தச் சமுதாயத்தில் இருப்பாராயின் அது உமர் இப்னு கத்தாப் அவர்கள் தாம்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3470. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல்களின் சமுதாயத்தில் ஒருவர் இருந்தார். அவர் தொண்ணூற்றொன்பது மனிதர்களைக் கொன்று விட்டிருந்தார். பிறகு (தன் குற்றங்களுக்காக மனம் வருந்தி, தனக்கு மன்னிப்புக் கிடைக்குமா என்று) விசாரித்தபடி, (எனக்குப்) பாவ மன்னிப்புக் கிடைக்குமா? என்று ஒரு பாதிரியாரிடம் வந்து கேட்டார். அந்தப் பாதிரியார், ம்டைக்காது' என்று கூற, அவரையும் அம்மனிதர் கொன்றுவிட்டார். பிறகு, (மீண்டும் மனம் வருந்தி) விசாரிக்கலானார். அப்போது ஒருவர், (நல்லோர் வாழும்) இன்ன ஊருக்குப் போ! என்று அவருக்குக் கூறினார். (அந்த ஊரை நோக்கி அவர் சென்றபோது பாதி வழியில்) மரணம் அவரைத் தழுவியது. (மரணத் தருவாயில்) அவர் தன் நெஞ்சை அந்த ஊர் இருக்கும் திசையில் சாய்த்துக் கொண்(டே இறந்து விட்)டார்.

அப்போது இறை கருணையைப் பொழியும் வானவர்களும் இறை தண்டனைகளை நிறைவேற்றும் வானவர்களும் அவர் விஷயத்தில் (அவரை யார் அழைத்துச் செல்வது என்று) தர்கித்தனர். உடனே அல்லாஹ் அதை நோக்கி, நீ நெருங்கி வா! என்று (அவர் செல்லவிருந்த ஊருக்கு) உத்திரவிட்டான். இதை நோக்கி, நீ தூரப்போ! என்று (அவர் வசித்து வந்த ஊருக்கு) உத்திரவிட்டான். பிறகு, அவ்விரண்டுக்குமிடையே உள்ள தூரத்தைக் கணக்கெடுங்கள்' என்று (வானவர்களுக்குக்) கூறினான். (அவ்வாறே கணக்கெடுத்த போது) செல்லவிருந்த ஊருக்கு (அவர் வசித்து வந்த ஊரை விட ஒரே) ஒரு சாண் அளவிற்கு அவர் (உடைய உடல்) சமீபமாக இருந்த காரணத்தால் அவருக்குப் பாவ மன்னிப்பு வழங்கப்பட்டது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3471. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சுப்ஹுத் தொழுகை தொழுதார்கள். பிறகு மக்களை நோக்கி, (பனு இஸ்ராயீல் சமுதாயத்தில்) ஒருவர் ஒரு பசுமாட்டை ஓட்டிச் சென்று கொண்டிருக்கையில் அதில் ஏறிச் சவாரி செய்து அதை அடித்தார். அப்போது அந்தப் பசுமாடு, நாங்கள் இதற்காக (மனிதர்களாகிய உங்களைச் சுமந்து செல்வதற்காகப்) படைக்கப்படவில்லை. நாங்கள் படைக்கப்பட்டது (நிலத்தில்) உழுவதற்காகத் தான்' என்று கூறியது. எனக் கூறினார்கள். மக்கள் சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ் தூயவன்!) பசுமாடு பேசுமா? என்று (வியந்து போய்க்) கூறினார்கள். இதைக்கேட்ட நபி(ஸல்) அவர்கள், நானும் அபூ பக்ரும் உமரும் இதை நம்புகிறோம்' என்று கூறினார்கள். அப்போது அங்கே அபூ பக்ர்(ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் இருக்கவில்லை. தொடர்ந்து, நபி(ஸல்) அவர்கள், ஒருவர் தன் ஆடுகளுக்கிடையே (அவற்றை மேய்த்துக் கொண்டு) இருந்தபோது ஓநாய் (ஆட்டு மந்தைக்குள் புகுந்து) ஓடி, ஆட்டை(த் தாக்கிக்

கவ்விக் கொண்டு சென்றது. அந்த ஆட்டைத் தேடி, ஓநாயிடமிருந்து அவர் காப்பாற்றிவிட்டார். உடனே, அந்த ஓநாய் அவரைப் பார்த்து, இவனே! இதை என்னிடமிருந்து இன்று நி காப்பாற்றிவிட்டாய். ஆனால், கொடிய விலங்குகள் ஆதிக்கம் செலுத்தும் (உலக முடிவு) நாளில் இதற்கு (பாதுகாவலர்) யார் இருக்கிறார்கள்? அந்நாளில் இதற்கு என்னைத் தவிர பாதுகாவலர் யாரும் இல்லையே என்று கூறியது எனக் கூறினார்கள். இதைக் கேட்ட மக்கள், சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ் தூயவன்) ஓநாய் பேசுமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், நானும் அபூ பக்ரும், உமரும் இதை நம்புகிறோம்' என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் அங்கே அப்போது இருக்கவில்லை.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்புத் தொடரிலும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டிருக்கிறது.

ஹதீஸ் 3472. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பனு இஸ்ராயீலில்) ஒருவர் இன்னொரு மனிதரிடமிருந்து அவருக்கிருந்த அசையாச் சொத்து (நிலம்) ஒன்றை வாங்கினார். அந்த நிலத்தை வாங்கிய மனிதர் தன்னுடைய நிலத்தில் தங்கம் நிரம்பிய (களிமண்) ஜாடி ஒன்றைக் கண்டெடுத்தார். நிலத்தை வாங்கியவர் (நிலத்தை) விற்றவரிடம், என்னிடமிருந்து உன் தங்கத்தை எடுத்துக் கொள். (ஏனெனில்), உன்னிடமிருந்து நான் நிலத்தைத் தான் வாங்கினேன் இந்தத் தங்கத்தை வாங்கவில்லை' என்று கூறினார். நிலத்தின் (முந்தைய) உரிமையாளர், நிலததை அதிலிருப்பவற்றுடன் சேர்த்துத் தான் உனக்கு நான் விற்றேன். (எனவே, இந்தத் தங்கம் உனக்குத் தான் உரியது)' என்று கூறினார். (இருவருக்குமிடையே தகராறு முற்றி) மற்றொரு மனிதரிடம் தீர்ப்புக் கேட்டு சென்றனர். அவர்கள் இருவரும் தீர்ப்புக் கேட்டு சென்ற அந்த மனிதர், உங்கள் இருவருக்கும் குழந்தை இருக்கிறதா? என்று கேட்டார். அவ்விருவரில் ஒருவர், எனக்குப் பையன் ஒருவன் இருக்கிறான்' என்று கூறினார். மற்றொருவர், எனக்குப் பெண்பிள்ளை இருக்கிறது' என்று கூறினார். தீர்ப்புச் சொல்பவர், அந்தப் பையனுக்கு அந்தச் சிறுமியை மணமுடித்து வையுங்கள். அவர்கள் இருவருக்காவும் அதிலிருந்து செலவழியுங்கள் தான தர்மம் செய்யுங்கள்' என்று தீர்ப்பளித்தார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3473. ஆமிர் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

(என் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களிடம், இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து (பிளேக் போன்ற) கொள்ளை நோயைப் பற்றி நீங்கள் செவியுற்றிருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு உஸாமா(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்கள், கொள்ளை நோய் என்பது பனு இஸ்ராயீல்களின் ஒரு கூட்டத்தார் மீது. அல்லது உங்களுக்கு முன்னிருந்தவர்களின் மீது.... (அவர்களின் அட்டூழியங்கள் அதிகரித்துவிட்டபோது) அனுப்பப்பட்ட ஒரு(வகை) வேதனையாகும். அது ஒரு பிரதேசத்தில் இருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால் அங்கே நீங்கள் செல்லாதீர்கள். நீங்கள் இருக்கிற ஒரு பூமியில் அது பரவிவிட்டால், அதிலிருந்து தப்பியோட முனைந்தவர்களாக (அங்கிருந்து) வெளியேறாதீர்கள்' என்று கூறினார்கள்' என்று பதிலளித்தார்கள்.

அபுந் நஸ்ர்(ரஹ்) கூறினார்:

அதிலிருந்து தப்பியோடும் நோக்கம் மட்டுமே கொண்டு நீங்கள் அங்கிருந்து வெளியேறக் கூடாது.

(வேறு ஏதாவது காரணத்திற்காக அங்கிருந்து நீங்கள் வெளியேறினால் அதற்கு அனுமதியுண்டு.)

ஹதீஸ் 3474. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (பிளேக், காலரா போன்ற) கொள்ளை நோய் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், அது, தான் நாடியவர்களின் மீது அல்லாஹ் அனுப்புகிற வேதனையாகும். அல்லாஹ் அதை இறை நம்பிக்கையாளர்களுக்கு கருணையாக ஆக்கியுள்ளான்' என்று தெரிவித்தார்கள். மேலும், கொள்ளை நோய் பரவிய இடத்தில் இருப்பவர் எவராயினும் அவர் பொறுமையுடனும், இறைவெகுமதியை விரும்பியவராகவும் அல்லாஹ் நமக்கு எழுதியுள்ள (விதிப்படி நம்மைப் பீடிக்க விருப்ப)தைத் தவிர வேறெதுவும் நம்மைப் பீடிக்காது என்னும் நம்பிக்கை கொண்டவராகவும் தன் ஊரிலேயே தங்கியிருப்பாராயின் இறைவழியில் உயிர்த் தியாகம் செய்தவர் பெறுவதைப் போன்ற நற்பலன் அவருக்கும் நிச்சயம் கிடைக்கும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3475. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(மக்கா வெற்றியின் போது) மக்ஸூமீ குலத்துப் பெண் ஒருத்தி (ஃபாத்திமா பின்த் அல் அஸ்வத்) திருட்டுக் குற்றம் செய்திருந்தாள். அவள் விஷயமாக குறைஷிகள் மிகவும் கவலைக்குள்ளாயினர். அவள் விஷயமாக அல்லாஹ்வின் தூதரிடம் யார் பேசுவார்கள்? என்று தமக்குள் பேசிக் கொண்டனர். அவர்களில் சிலர், அல்லாஹ்வின் தூதருடைய செல்லப் பிள்ளையான உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தவிர இதற்கு யாருக்குத் துணிவு வரும்? என்று கூறினர். (உஸாமா(ரலி) அவர்களிடம் பரிந்துரை செய்யும்படி அவர்கள் கேட்டுக் கொள்ள, அவ்வாறே) உஸாமா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் (அவள் விஷயமாகப்) பேசினார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் தண்டனைகளில் ஒரு தண்டனையின் விஷயத்திலா (அதைத் தளர்த்தும்படி என்னிடம்) நீ பரிந்துரை செய்கிறாய்' என்று (கோபத்துடன்) கேட்டுவிட்டு, பிறகு எழுந்து நின்று உரை நிகழ்த்தினார்கள். பிறகு (அவ்வுரையில்), உங்களுக்கு முன்னிருந்தவர்கள், அழிக்கப்பட்டதெல்லாம் அவர்களில் உயர் குலத்தவன் திருடிவிட்டால் அவர்கள் அவனை (தண்டிக்காமல்)விட்டு வந்தார்கள் அவர்களில் பலவீனமான (பிரிவைச் சேர்ந்த)வன் திருடிவிட்டால் அவனுக்கு தண்டனையளித்து வந்தார்கள் என்பதால் தான். அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மதின் மகள் ஃபாத்திமா திருடி விட்டிருந்தாலும் அவரின் கையையும் நான் துண்டித்திருப்பேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3476. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஒருவர் திருக்குர்ஆனின் ஒரு வசனத்தை ஓத கேட்டேன். அவர் ஓதிய முறைக்கு மாற்றமாக நபி(ஸல்) அவர்கள் ஓத நான் கேட்டிருந்தேன். எனவே, அவரை அழைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்து விவரத்தைத் தெரிவித்தேன். அப்போது அவர்களின் முகத்தில் அதிப்தி(யின் சாயல்) படிந்திருப்பதை உணர்ந்தேன். அவர்கள், நீங்கள் இருவருமே சரியாகத்தான் ஓதியிருக்கிறீர்கள். (எல்லா விஷயங்களிலும்) கருத்து வேறுபாடு கொள்ளாதீர்கள். ஏனெனில், உங்களுக்கு முன்னிருந்தவர்கள் (ஒவ்வொரு விஷயத்திலும்) கருத்து வேறுபட்டு எனவேதான் அழிந்து போனார்கள்' என்று கூறினார்கள். 139

ஹதீஸ் 3477. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

(முற்கால) இறைத்தூதர்களில் ஒருவரின் நிலையை நபி(ஸல்) அவர்கள் எடுத்துரைத்துக் கொண்டிருப்பதை நான் இப்போது பார்ப்பது போன்றுள்ளது. அந்த இறைத்தூதரை அவரின் சமுதாயத்தார் அடித்து அவரை இரத்தத்தில் தோய்த்துவிட்டார்கள். அப்போது அவர் தம் முகத்திலிருந்து இரத்தத்தைத் துடைத்தபடி, இறைவா! என் சமுதாயத்தாரை மன்னித்து

விடு! ஏனெனில், அவர்கள் அறியாதவர்களாயிருக்கிறார்கள் என்று சொல்லிக் கொண்டிருந்தார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3478. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன் (ஒரு காலத்தில்) ஒருவர் இருந்தார். அல்லாஹ் அவருக்கு செல்வத்தை வழங்கியிருந்தான். அவருக்கு மரணம் நெருங்கிவிட்டபோது தன் மகன்களிடம், உங்களுக்கு நான் எப்படிப்பட்ட தந்தையாக இருந்தேன்' என்று கேட்டார். அவர்கள், சிறந்த தந்தையாக இருந்தீர்கள்' என்று பதில் கூறினர். அதற்கு அவர், நான் நற்செயல் எதையும் செய்யவேயில்லை. எனவே, நான் இறந்துவிட்டால் என்னை எரித்துவிடுங்கள். பிறகு என்னைப் பொடிப் பொடியாக்கி சூறாவளிக் காற்று வீசும் நாளில் (காற்றில்) என்னைத் தூவி விடுங்கள்' என்று கூறினார். அவர்களும் அவ்வாறே செய்தனர். அவரை (அவரின் உடல் அணுக்களை) அல்லாஹ் ஒன்று திரட்டி (முழு உருவை மீண்டும் அளித்து) இப்படிச் செய்ய உத்திரவிடும்படி உன்னைத் தூண்டியது எது? என்று கேட்டான். அவர், உன் (மீது எனக்குள்ள) அச்சம் தான் (இப்படி உத்ரவிட என்னைத் தூண்டியது)' என்று கூறினார். உடனே அவரைத் தன் கருணையால் அவன் அரவணைத்தான்.

இதை அபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.

இதே நபிமொழி அபூ ஸயீத்(ரலி) அவர்களிடமிருந்தே வேறொரு அறிவிப்பாளர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3479. ரிப்யீ இப்னு ஹிராஷ்(ரஹ்) கூறினார்

உக்பா(ரலி) ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அவர்களிடம், நபி(ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் செவியுற்றதை எங்களுக்கு அறிவிக்கக் கூடாதா? என்று கேட்டார்கள். ஹுதைஃபா(ரலி) பின் வருமாறு சொல்லக் கேட்டிருக்கிறேன். (மண்ணறையைத் தோண்டி கஃபன் துணியைத் திருடி விற்று வந்த) ஒரு மனிதருக்கு மரண (நேர)ம் வந்தது. அவர் இனி வாழ்வோம் என்ற நம்பிக்கையை இழந்துவிட்டபோது தம் குடும்பத்தினரிடம் தன் இறுதி விருப்பத்தைத் தெரிவித்தார். நான் இறந்துவிட்டால் எனக்கு நிறைய விறகுகளைச் சேகரித்து (சிதைக்குத்) தீமூட்டி விடுங்கள். அந்த நெருப்பு என் இறைச்சியைத் தின்று முடித்து என் எலும்பைச் சென்றடைந்துவிட்டால், எரிந்து கருகிய எலும்புகளை எடுத்து அவற்றைப் பொடியாக்கி ஒரு வெப்பமான நாளில்... அல்லது காற்று அதிகம் வீசும் ஒரு நாளில்... என்னைக் கடலில் தூவி விடுங்கள்' என்று கூறினார். (அவ்வாறே அவர்கள் செய்ய) அல்லாஹ் அவரை (அவரின் அணுக்களை) ஒன்று திரட்டி, (முழு உருவையளித்து), ஏன் (இவ்வாறு) செய்தாய்? என்று கேட்டான். அவர், உன் அச்சத்தால் தான்' என்று கூறினார். எனவே, அவருக்கு அல்லாஹ் மன்னிப்பளித்தான். 140

வேறொரு அறிவிப்பில், உக்பா(ரலி), ஹுதைஃபா(ரலி) கூற கேட்டேன்!ணிஎன்று கூறினார்கள். அதில் வெப்பமான ஒரு நாளில்' என்பதற்கு பதிலாக, காற்று அதிகமாக வீசும் ஒரு நாளில்' என்னும் வாசகம் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 3480. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முன் காலத்தில்) ஒருவர் மக்களுக்குக் கடன் கொடுத்து (உதவி) வந்தார். (அதை வசூலிக்கச் செல்கின்ற) தன்னுடைய (அலுவலரான) வாலிபரிடம், (வசதியின்றிச்) சிரமப்படுபவரிடம் நீ சென்றால் (அவரைக் கண்டு கொள்ளாமல்) மன்னித்து(க் கடனைத் தள்ளுபடி செய்து) விடு. அல்லாஹ்வும் (நம்மைக் கண்டு கொள்ளாமல்) மன்னித்து விடக் கூடும்' என்று சொல்லிவந்தார். அவர் (மரணமடைந்து) அல்லாஹ்வைச் சந்தித்தபோது அவரின் பிழைகளைப் பொறுத்து அவன் மன்னித்துவிட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3481. நபி(ஸல்) அவர்கள் கூறினார்

(முன் காலத்தில்) ஒருவர், வரம்பு மீறி (தீய செயல் புரிந்து) வந்தார். அவருக்கு மரணம் வந்தபோது தன் மகன்களை அழைத்து, நான் இறந்துவிட்டால் என்னை எரித்து விடுங்கள். பிறகு, என்னைப் பொடிப் பொடியாக்கி பின்னர் காற்றில் தூவி விடுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (இவ்வளவும் செய்த பிறகும்) அல்லாஹ் என்னை உயிராக்க முடிந்தால் எவரையும் வேதனைப்படுத்தாத அளவிற்கு ஒரு வேதனையை (தண்டனையாக) எனக்கு அவன் அளிப்பான்‘ என்று கூறினார். அவர் இறந்துவிட்டபோது அவ்வாறே அவரைச் செய்துவிட்டார்கள். உடனே அல்லாஹ், பூமியை நோக்கி, அவரி(ன் உடல் அணுக்களி)லிருந்து உன்னில் இருப்பவற்றை ஒன்று சேர்‘ என்று கட்டளையிட்டான். அவ்வாறே பூமி செய்தது. அவர் (அல்லாஹ்வின் முன்னிலையில் முழு உருப்பெற்று) நின்றபோது அல்லாஹ், நீ இப்படிச் செய்யும் படி உன்னைத் தூண்டியது எது? என்று கேட்டான். அவர், என் இறைவா! உன் அச்சம் தான் இப்படிச் செய்யும்படி என்னைத் தூண்டியது‘ என்று பதிலளித்தார். எனவே, அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளித்தான்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3482. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு பூனையை, அது சாகும் வரை (பட்டினி போட்டு) கட்டி வைத்த காரணத்தால் பெண் ஒருத்தி (நரகத்தில்) வேதனை செய்யப்பட்டாள். அதை அடைத்து வைத்தபோது அவள் அதற்குத் தீனியும் போடவில்லை அதற்கு (குடிக்கத்) தண்ணீரும் கொடுக்கவில்லை அவள் அதை பூமியின் புழு பூச்சிகளைத் தின்ன (அவிழ்த்து) விடவுமில்லை.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3483. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் இறைத் தூதர்களின் சொற்களிலிருந்து அடைந்து கொண்ட (அறிவுரைகளில்) ஒன்று தான், நீ வெட்கப்படவில்லையென்றால் விரும்பியதையெல்லாம் செய்துகொள்‘ என்பதும்.

என அபூ மஸ்வூத் உக்பா இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3484. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் இறைத் தூதர்களின் சொற்களிலிருந்து அடைந்த (அறிவுரைகளில்) ஒன்று தான், நீ வெட்கப்படவில்லை யென்றால் விரும்பியதையெல்லாம் செய்து கொள்‘ என்பதும்

என அபூ மஸ்வூத் உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3485. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முன் காலத்தில்) ஒரு மனிதன் தன் கீழங்கியை தற் பெருமையின் காரணத்தால் (கணுக்காலின் கீழ் தொங்கவிட்டு) இழுத்துக் கொண்டே நடந்த பொழுது, அவன் (பூமி பிளந்து, அதில்) புதைந்து போகும்படி செய்யப்பட்டான். அவன் மறுமை நாள் வரை பூமிக்குள் அழுந்திச் சென்று கொண்டேயிருப்பான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3486. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உலகில்) இறுதிச் சமுதாயமான நாம் தாம் மறுமையில் (தகுதியிலும், சிறப்பிலும்) முந்தியவர்கள் ஆவோம். ஆயினும், சமுதாயங்கள் அனைத்தும் நமக்கு முன்பே வேதம் வழங்கப்பட்டுவிட்டன. நாம் அவர்களுக்குப் பிறகு வேதம் வழங்கப்பட்டோம். இது (வெள்ளிக்கிழமை, அவர்கள்) கருத்து வேறுபட்ட நாளாகும். எனவே, நாளை

(சனிக்கிழமை) யூதர்களுக்குரியதும் நாளைக்கும் அடுத்த நாள் (ஞாயிற்றுக்கிழமை) கிறிஸ்தவர்களுக்குரியதும் ஆகும்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3487. ஒவ்வொரு ஏழு நாளிலும் தன் தலையையும் உடலையும் கழுவுகிற ஒருநாள் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இருக்க வேண்டும்.

ஹதீஸ் 3488. ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) அறிவித்தார்

முஆவியா இப்னு அபீ சுஃப்யான் (ரலி) மதீனாவுக்கு இறுதியாக வந்தார்கள். அப்போது எங்களுக்கு உரையாற்றிய படி முடிக்கற்றை ஒன்றை (கையில்) எடுத்து, இதை (போலி முடி வைத்துக் கொள்ளும் செயலை) யூதர்களைத் தவிர வேறெவரும் செய்வதை நான் பார்த்ததில்லை. மேலும், நபி (ஸல்) அவர்கள் இதைப் பொய்யானது என்று கூறினார்கள். தலைமுடியில் (சவுரி முடியை) ஒட்டவைப்பதைத் தான் நபி (ஸல்) அவர்கள் இப்படிக் குறிப்பிட்டார்கள்.

இந்த நபிமொழி வேறொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

# அத்தியாயம் 61 (குறைஷிக்குலம் மற்றும் நபி(ஸல்) அவர்களின்) சிறப்புகள்.

அளவற்ற அருளானும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்........

## சமூகங்களும் குலங்களும் எதற்காக என்பது பற்றிய திருக்குர்ஆன் வசனம் மேலும், அறியாமைக் காலத்து வாதங்களில் விலக்கப்பட்டவை (பற்றிய பாடமும்)

அல்லாஹ் கூறினான்:

"மனிதர்களே! நாம் உங்களை ஓர் ஆணிலிருந்தும், ஒரு பெண்ணிலிருந்தும் படைத்தோம். பிறகு, நீங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாகிக் கொள்ளும் பொருட்டு உங்களைப் பல சமூகங்களாகவும் குலங்களாகவும் ஆக்கினோம். உண்மையில் அதிக கண்ணியம் வாய்ந்தவர் அதிக இறையச்சம் கொண்டவர்கள் தாம்!"(திருக்குர்ஆன் 49: 13)

மேலும் அல்லாஹ் கூறினான்:

"எந்த அல்லாஹ்வின் பெயரைக் கூறி நீங்கள் ஒருவர் மற்றவரிடம் (உரிமைகளைக்) கோருகிறீர்களோ அந்த அல்லாஹ்வுக்கே நீங்கள் அஞ்சுங்கள். இன்னும் இரத்த பந்த உறவுகளை (சீர்குலைப்பதை) அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் உங்களைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறான்!"(திருக்குர்ஆன் 04:01)

ஹதீஸ் 3489. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

"மனிதர்களே! நாம் உங்களை ஓர் ஆணிலிருந்தும், ஓர் பெண்ணிலிருந்தும் படைத்தோம். பிறகு, நீங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாம்க் கொள்ளும் பொருட்டு உங்களைப் பல சமூகங்களாகவும் குலங்களாகவும் ஆக்கினோம்' (திருக்குர்ஆன் 49:13) என்னும் இறைவசனத்தில் இடம் பெற்றுள்ள'ஷுவூப் சமூகங்கள்' என்னும் சொல் பெரிய இனங்களையும்'கபாயில் - குலங்கள்' என்னும் சொல், அந்த இனங்களில் உள்ள உட் பிரிவுகளையும் குறிக்கும்' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3490 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

"இறைத்தூதர் அவர்களே! மக்களில் கண்ணியத்திற்குரியவர் யார்?' என்று (நபி(ஸல்) அவர்களிடம்) கேட்கப்பட்டது. அதற்கு நபியவர்கள்,'அவர்களில் இறையச்சமுடையவரே' என்று பதிலளித்தார்கள். மக்கள்,'நாங்கள் இதைப் பற்றி உங்களிடம் கேட்கவில்லை' என்றனர். உடனே, நபி(ஸல்) அவர்கள்,'அப்படியென்றால் அல்லாஹ்வின் தூதரான யூசுஃப் அவர்கள் தாம் (மக்களில் கண்ணியத்திற்குரியவர்கள்)' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3491. குலைப் இப்னு வாயில்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகள் ஸைனப் பின்த் அபீ ஸலமா(ரலி) அவர்களிடம் நான்,'நபி(ஸல்) அவர்கள்'முளர்' குலத்தைச் சேர்ந்தவர்களா என்று எனக்குத் தெரிவியுங்கள்' என்று கேட்டதற்கு,'முளர் கோத்திரத்தைத் தவிர வேறெந்தக்

கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்? அவர்கள் நள்ர் இப்னு கினானாவின் சந்ததிகளில் ஒருவராவார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3492. குலைப் இப்னு வாயில்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகள் - அவர்கள் ஸைனப்(ரலி) என்று எண்ணுகிறேன் - என்கு அறிவித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மது சேகரித்து வைக்கப்படும்) சுரைக்காய்க் குடுவையையும், மண்சாடியையும், (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரித்த) மரப் பீப்பாய்களையும், தார் பூசப்பட்ட பாத்திரங்களையும் (பயன்படுதத வேண்டாமென்று) தடைவிதித்தார்கள்.

நான் அவரிடம், 'நபி(ஸல்) அவர்கள் எந்தக் கோத்திரத்தவர்களாயிருந்தார்கள் என்று எனக்குத் தெரிவியுங்கள் அவர்கள் முளர் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தார்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'முளர் கோத்திரத்தைத் தவிர வேறெந்தக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள், அவர்கள் நள்ர் இப்னு கினானாவின் சந்ததிகளில் ஒருவராவார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3493. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களை நீங்கள் சுரங்கங்களாகக் காண்கிறீர்கள். அவர்களில் அறியாமைக் காலத்தில் சிறந்தவர்களாயிருந்தவர்கள் இஸ்லாத்திற்கு வந்த பின்பும் சிறந்தவர்களாயிருப்பார்கள் மார்க்க அறிவைப் பெற்றால். இந்த (ஆட்சி அதிகாரத்தின்) விஷயத்தில் மக்களிடையே சிறந்தவர்கள் அவர்களில் அதிகமாக இதை வெறுப்பவர்கள் தாம்.

ஹதீஸ் 3494. மேலும், மக்களிலேயே (மிகத்) தீயவனாக இரண்டு முகங்கள் கொண்டவனை நீங்கள் காண்பீர்கள். அவன் இவர்களிடம் ஒரு முகத்துடனும் அவர்களிடம் மற்றொரு முகத்துடனும் செல்வான்.

என அபூ ஹுரைரா(ரலி அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3495. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் அனைவரும் இந்த (அட்சியதிகாரம்) விஷயத்தில் குறைஷிகளைப் பின்பற்றுபவர்கள் ஆவர். அவர்களில் முஸ்மாயிருப்பவர் குறைஷிகளில் முஸ்மாயிருப்பவரைப் பின்பற்றுபவராவார். மக்களில் உள்ள இறைமறுப்பாளர் குறைஷிகளில் உள்ள இறை மறுப்பாளரைப் பின்பற்றுபவராவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3496. மக்கள் சுரங்கங்கள் ஆவர். அறியாமைக் காலத்தில் அவர்களில் சிறந்தவர்களாக இருந்தவர்கள் இஸ்லாத்தை ஏற்ற பின்பும் அவர்களில் சிறந்தவர்களாக இருப்பார்கள் அவர்கள் மார்க்க அறிவைப் பெற்றால், இந்த (ஆட்சியதிகாரம்) விஷயத்தில் (வேறுவழியின்றி) சிக்கிக் கொள்ளும் வரை அதைக் கடுமையாக வெறுப்பவரையே மக்களில் சிறந்தவராக நீங்கள் காண்பீர்கள்.

ஹதீஸ் 3497. தாவூஸ்(ரஹ்) அறிவித்தார்

''இந்தப் பணிக்காக உங்களிடமிருந்து எந்த ஊதியத்தையும் நான் கேட்கவில்லை. ஆயினும், உறவுமுறையை நீங்கள் பேணி நடக்கவேண்டும் என்று விரும்புகிறேன்'' என்னும்

(திருக்குர்ஆன் 42:23) இறை வசனத்தைக் குறித்து (இதன் கருத்து என்ன என்று) இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அப்போது (அங்கிருந்த) ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்), 'இதன் பொருள், 'ஆயினும் என் உறவினர்களிடம் நீங்கள் அன்பு பாராட்டவேண்டும் என்று விரும்புகிறேன்' என்பதாகும்'' என்று பதிலளித்தார். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி)'குறைஷிகளின் எந்தக் கிளைக் குலத்திற்கும் நபி(ஸல்) அவர்களுடன் உறவுமுறை இல்லாமல் இருந்ததில்லை. எனவே, '(குறைந்த பட்சம்) எனக்கும் உங்களுக்கும் இடையிலான அந்த உறவு முறையயாவது பேணி நடக்கும் படி உங்களைக் கேட்கிறேன்'' என்னும் பொருளில் தான் இந்த இறைவசனம் அருளப்பட்டது'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3498. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இங்கிருந்து தான் - கிழக்கு திசையிலிருந்து தான் - குழப்பங்கள் தோன்றும் ஒட்டகங்கள் மற்றும் மாடுகளின் வால்களைப் பிடித்து இழுத்துச் சென்று கொண்டிருக்கும் (தங்கள் உலக வேலைகளில் மூழ்கியுள்ள)'ரபீஆ' மற்றும்'முளர்' ஆகிய குலங்களைச் சேர்ந்த கிராமவாசிகளான நாடோடிகளிடையே தான் கல்மனமும கடின சித்தமும் காணப்படும்.

என அபூ மஸ்வூத் அல் அன்சாரி(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3499. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பெருமையும் கர்வமும் கிராமவாசிகளான நாடோடிகளிடையே காணப்படும். ஆடு மேய்ப்பவர்களிடையே அமைதியும் பணிவும் காணப்படும். இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். மதி நுட்பமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.

அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்:

'யமன்' நாடு கஅபாவுக்கு வலப் பக்கம் அமைந்திருப்பதால் தான் அதற்கு'யமன்' என்று பெயரிடப்பட்டது. 'ஷாம்' நாடு கஅபாவின் இடப்பக்கம் அமைந்துள்ளது. 'மஷ்அமா' என்பதற்கு'மய்ஸ்ரா' இடது என்று பொருள். இடக்கரத்திற்கு'ஷுஃமா' என்பர். இடப் பக்கத்திற்கு'அல் அஷ்அம்' என்பர்.

## குறைஷிகளின் சிறப்புகள்

ஹதீஸ் 3500. முஹம்மது இப்னு ஜுபைர் இப்னி முத்யிம்(ரஹ்) அறிவித்தார்

முஆவியா(ரலி) அவர்களிடம் குறைஷிகளின் ஒரு தூதுக் குழுவில் ஒருவனாக நான் வருகை தந்திருந்தபோது அவர்களிடம் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி), 'கஹ்தான் குலத்திலிருந்து மன்னர் ஒருவர் தோன்றுவார்'' என்று அறிவிப்பதாகச் செய்தி வந்தது. 12 முஆவியா(ரலி) கோபமடைந்து எழுந்து நின்று, அல்லாஹ்வை அவனுடைய தகுதிப் படியுள்ள வர்ணனைகளால் புகழ்ந்துவிட்டு பின்னர், 'இறைவனைப் போற்றிப் புகழ்ந்த பின்பு கூறுகிறேன். உங்களில் சிலர், அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத, அல்லாஹ்வின் தூதரிடமிருந்து அறிவிக்கப்படாத செய்திகளைப் பேசுவதாக எனக்குத் தகவல் கிடைத்துள்ளது. அவர்கள் உங்களிடையேயுள்ள அறியாதவர்கள் ஆவர். வழி கெடுத்து விடுகிற வெற்று நம்பிக்கைகளைக் குறித்து நான் உங்களை எச்சரிக்கிறேன் - ஏனெனில், நபி(ஸல்) அவர்கள், 'இந்த ஆட்சியதிகாரம் குறைஷிகளிடம் தான் இருக்கும். அவர்களுடன் (அது தொடர்பாகப் பகைமை பாராட்டுவோர் எவரையும் அல்லாஹ் முகம் குப்புறக்

கவிழ்த்தே தீருவான். மார்க்கத்தை அவர்கள் நிலைநாட்டி வரும் வரை இந்நிலை நீடிக்கும்'' என்று கூற கேட்டிருக்கிறேன் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3501. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இந்த ஆட்சியதிகாரம் குறைஷிகளிடம் தான் இருக்கும் அவர்களில் இருவர் எஞ்சியிருக்கும் வரை.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3502. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) கூறினார்

நானும் உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களும் நடந்து (நபி(ஸல்) அவர்களிடம் நீதி பெறச்) சென்றோம். உஸ்மான்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! முத்தலிபின் மக்களுக்கு நீங்கள் கொடுத்தீர்கள். எங்களைவிட்டு விடாதீர்களே! நாங்களும் அவர்களும் உங்களுக்கு ஒரே விதமான (உறவு) நிலையில் தானே இருக்கிறோம்'' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'பனு ஹாஷிமும் (ஹாஷிம் கிளையாரும்) பனு முத்தலிபும் (முத்தலிப் கிளையாரும்) ஒருவர் தாம் (வெவ்வேறல்லர்)'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3503. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) பனு ஸுஹ்ரா குலத்தைச் சேர்ந்த சிலருடன் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றார்கள். ஆயிஷா(ரலி), பனு ஸுஹ்ரா கிளையினருக்கு அல்லாஹ்வின் தூதருடன் இருந்த உறவு முறையின் காரணத்தால் அவர்களின் மீது மிகவும் இரக்கத்துடன் நடந்து கொள்வார்கள்.

ஹதீஸ் 3504. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குறைஷிகளும், அன்சாரிகளும் ஜுஹைனா, முஸைனா, அஸ்லம், அஷ்ஜஉ மற்றும் கிஃபார் குலத்தாரும் என் பிரத்யேக உதவியாளர்கள். அவர்களுக்கு அல்லாஹ்வையும் அல்லாஹ்வின் தூதரையும் தவிர வேறு பொறுப்பாளர் எவரும் இல்லை.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3505. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) அவர்களுக்கு, நபி(ஸல்) மற்றும் அபூ பக்ர்(ரலி) ஆகியோருக்கு அடுத்தபடியாக, (தம் சகோதரி அஸ்மாவின் மகன் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) மீது எல்லா மனிதர்களை விடவும் அதிகமான பிரியம் இருந்தது. மக்களிலேயே அதிகமாக ஆயிஷா(ரலி) அவர்களுக்கு நன்மை புரியக் கூடியவராக அப்துல்லாஹ் இருந்தார். ஆயிஷா(ரலி), தம்மிடம் வருகிற அல்லாஹ்வின் கொடை எதையும் தன்னிடமே வைத்துக் கொள்ளாமல் தர்மம் செய்து விடுவது வழக்கம். எனவே, அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி),'ஆயிஷா(ரலி) அவர்களின் கரத்தை (தர்மம் செய்ய விடாமல்) பிடித்துக் கொள்வது அவசியம்'' என்று கூறினார்கள். அதனால் அவர்கள் (கோபமுற்று),'(தர்மம் செய்ய விடாமல்) என் கையைப் பிடித்துக் கொள்வதா? (இனி அப்துல்லாஹ்வுடன் பேச மாட்டேன்.) அவருடன் (என் சபதத்தை மீறி) நான் பேசினால் (சத்தியத்தை முறித்த குற்றத்திற்காக) நான் பரிகாரம் செய்ய நேரிடும்'' என்று கூறினார்கள். அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி), (ஆயிஷா(ரலி) அவர்களின் கோபத்தைத் தணித்து அவர்களைத் தம்முடன் பேசச் செய்வதற்காக) (அன்னை) ஆயிஷாவிடம் தனக்காகப் பரிந்துரை செய்யும் படி குறைஷிகள் சிலரையும் குறிப்பாக, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தாய்

மாமன்மார்களையும் கேட்டுக் கொண்டார்கள். (அவர்கள் பரிந்துரை செய்தும்) ஆயிஷா(ரலி) பேச மறுத்துவிட்டார்கள். எனவே, அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்வத் இப்னி அப்து யகூஸ் மற்றும் மிஸ்வர் இப்னு மக்ரமா உள்ளிட்ட நபி(ஸல்) அவர்களின் தாய் மாமன்களான பனு ஸுஹ்ரா கிளையினர் அப்துல்லாஹ்விடம், 'நாங்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் உள்ளே வர அனுமதி கேட்டுக் கொண்டிருக்கும் போதே நீங்கள் திரையைக் கடந்து (அனுமதி பெறாமலே) சென்று விடுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களும் செய்தார்கள். பிறகு (அயிஷா (ரலி) அவர்களும் ஒப்புக் கொண்டு பேசிவிட்டார்கள். அவர்களின் சத்தியம் முறிந்து போனதற்குப் பரிகாரமாக) அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) ஆயிஷா(ரலி) அவர்களிடம் பத்து அடிமைகளை (விடுதலை செய்வதற்காக) அனுப்பி வைத்தார்கள். அவர்களை ஆயிஷா(ரலி) விடுதலை செய்துவிட்டார்கள். பிறகு (இது போதுமான பரிகாரம் ஆகாதோ என்ற எண்ணத்தில்) தொடர்ந்து நாற்பது எண்ணிக்கையை அடையும் வரை அடிமைகளை விடுதலை செய்து கொண்டேயிருந்தார்கள். இறுதியில், நான் (அப்துல்லாஹ்வுடன் பேசமாட்டேன் என்று) சத்தியம் செய்த போதே, 'என் சத்தியம் முறிந்து போனால் அதற்குக் குறிப்பிட்ட பரிகாரத்தைச் செய்வேன்' என்று முடிவு செய்துவிட்டிருந்தால் அதை மட்டும் செய்து பொறுப்பிலிருந்து விடுபட்டிருப்பேன்'' (''இன்ன பரிகாரம் என்று குறிப்பிட்டு மடிவு செய்யாததால் இவ்வளவு செய்தும் இந்த அளவு பரிகாரம் நிவர்த்தியானதோ இல்லையோ என்ற சந்தேகம் இன்னும் என்னை வாட்டுகிறது'') என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் குறைஷி குலத்தாரின் மொழி வழக்குப்படி அருளப்பட்டது.

ஹதீஸ் 3506. அனஸ்(ரலி) அறிவித்தார்

உஸ்மான்(ரலி) (அன்னை ஹஃப்ஸாவிடமிருந்து குர்ஆன் பதிவுகளை வாங்கிவரச் செய்து) ஸைத் இப்னு ஸாபித், அப்துல்லாஹ் இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு ஆஸ், அப்துர் ரஹ்மான் இப்னு ஹாரிஸ் இப்னி ஹிஷாம்(ரலி) ஆகியோரை அழைத்து, (அவற்றைப் பிரதியெடுக்கப் பணித்தார்கள்.) அவர்கள் ஏடுகளில் அவற்றைப் பிரதியெடுத்தார்கள். உஸ்மான்(ரலி) (அன்சாரியான ஸைத் இப்னு ஸாபித் தவிரஉள்ள) குறைஷிகளின் மூன்று பேர் கொண்ட அந்தக் குழுவிடம், 'நீங்கள் மூவரும் ஸைத் இப்னு ஸாபித்தும் குர்ஆனின் ஏதேனும் ஒரு (எழுத்து இலக்கண) விஷயத்தில் கருத்து வேறுபட்டால் குறைஷிகளின் மொழி வழக்கிலேயே அதை எழுதுங்கள். ஏனெனில், குர்ஆன் குறைஷிகளின் மொழி வழக்கில் தான் இறங்கியது'' என்று கூறினார்கள். அக்குழுவினரும் அவ்வாறே செய்தார்கள்.

## யமன் நாட்டினர் இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததிகள் என்று கூறுவது.

'குஸாஆ' குலத்தைச்சேர்ந்த அஸ்லம் இப்னு அஃப்ஸா இப்னி ஹாரிஸா இப்னி அம்ர் இபனி ஆமிர் அவர்களும் யமன் நாட்டைச் சேர்ந்தவர் தாம்.

ஹதீஸ் 3507. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

அஸ்லம் கூட்டத்தார் கடைவீதியில் அம்பெறிந்து (விளையாடிக்) கொண்டிருக்கையில் (அவ்வழியாக) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளியே புறப்பட்டு வந்தார்கள். அதைக் கண்டதும், 'இஸ்மாயீலின் சந்ததிகளே! அம்பெறியுங்கள். ஏனெனில், உங்கள் தந்தை(யான இஸ்மாயீல் - அலை - அவர்கள்) அம்பெறிபவராக (வில் வித்தையில் தேர்ச்சி பெற்றவராக) இருந்தார்கள். 'நான் இன்ன குலத்தாருடன் இருக்கிறேன்'' என்று இருதரப்பினரில் ஒரு

தரப்பாரைக் குறிப்பிட்டுக் கூறினார்கள். உடனே மற்றொரு தரப்பினர் (விளையாட்டைத் தொடராமல்) நிறுத்திவிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இவர்களுக்கென்ன நேர்ந்தது?' என்று கேட்க, அவர்கள்,'நீங்கள் இன்ன குலத்தாரோடு இருக்க, நாங்கள் எப்படி அம்பெறிவோம்?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'(தொடர்ந்து) அம்பெறியுங்கள். நான் உங்கள் ஒவ்வொருவருடனும் இருக்கிறேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3508 தன் தந்தை அல்லாத (ஒரு)வரை (அவர் தன் தந்தையல்ல என்று) விவரம் அறிந்து கொண்டே'அவர்தான் என் தந்தை'' என்று கூறும் ஒரு மனிதன் அல்லாஹ்வுக்கு நன்றி கெட்டவனாகிறான். தனக்கு வமிசாவளித் தொடர்பு இல்லாத ஒரு குலத்தைக் குறித்து, தான், அந்தக் குலத்தைச் சேர்ந்தவன் தானென தன்னைப் பற்றிக் கூறிக் கொள்பவன், தன் இருப்பிடத்தை நரகத்தில் அமைத்துக் கொள்ளட்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ தர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3509. 'பொய்களிலேயே மிகப் பெரும் பொய், ஒரு மனிதன் தன்னைத் தன் தந்தையல்லாதவருடன் இணைத்து (நான் அவரின் மகன் என்று) கூறுவதும், தன் கண்கள் பார்க்காத ஒன்றை (ஒரு கனவை) அவை பார்த்தாகக் கூறுவதும், இறைத்தூதர் சொல்லாத ஒன்றை அவர்கள் சொன்னதாகச் சொல்வதும் ஆகும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என வாஸிலா இப்னு அல் அஸ்கவு(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3510 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழு ஒன்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தது. அக்குழுவினர்,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் ரபீஆ குலத்தாரின் இந்தக் குடும்பத்தினர் ஆவோம். உங்களைச் சந்திக்கவிடாமல்'முளர்' குலத்து இறை மறுப்பாளர்கள் எங்களைத் தடை செய்கிறார்கள். எனவே, (போர் நிறுத்தம் செய்யப்படுகின்ற) ஒவ்வொரு புனித மாதத்திலும் தான் நாங்கள் உங்களிடம் வந்து சேர முடிகிறது. எனவே, (இப்போது) நீங்கள் எங்களுக்கு ஏதேனும் கட்டளையிட்டால் அதை உங்களிடமிருந்து நாங்கள் எடுத்துக் கொள்வோம். எங்களுக்கு அப்பாலிருப்பவர்களிடம் அதை எடுத்துரைப்போம்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,'உங்களுக்கு நான்கு விஷயங்களைச் செய்யும்படி கட்டளையிட்டு, நான்கு விஷயங்களைச் செய்ய வேண்டாமென்று தடுக்கிறேன். அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வது, - வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று உறுதி கூறுவது, - தொழுகையை நிலைநிறுத்துவது, ஸகாத் கொடுப்பது, உங்களுக்குப் போரில் கிடைத்த செல்வத்திலிருந்து ஐந்தில் ஒரு பங்கை அல்லாஹ்வுக்குச் செலுத்தி விடுவது ஆகியன தாம் நான் கட்டளையிடும் அந்த நான்கு விஷயங்கள். மேலும், (மது சேகரித்து வைக்கப்படும்) சுரைக்காய்க் குடுவை, மண் சாடி, (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரித்த) மரப் பீப்பாய்கள் மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரங்கள் ஆகியவற்றை (உபயோகிக்க வேண்டாமென்று) உங்களுக்குத் தடை செய்கிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3511. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மிம்பரின் (உரை மேடையின்) மீதிருந்தபடி,'தெரிந்து கொள்ளுங்கள்: குழப்பம், இங்கே ஷைத்தானின் கொம்பு உதயமாகும் இடத்திலிருந்து தான் தோன்றும்'' என்று கிழக்குத் திசையை நோக்கி சைகை செய்தபடிக் கூறினார்கள்.

## அஸ்லம், கி∴பார், முஸைனா, ஜு ஹைனா மற்றும் அஷ்ஜஉ ஆகிய குலத்தார்.

ஹதீஸ் 3512. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குறைஷிகளும், அன்சாரிகளும் ஜுஹைனா குலத்தாரும், முஸைனா குலத்தாரும், அஸ்லம் குலத்தாரும், கி∴பார் குலத்தாரும், அஷ்ஜஉ குலத்தாரும் (இஸ்லாத்தை முதலில் தழுவிய காரணத்தால்) என் பிரத்தியேகமான உதவியாளர்கள் ஆவர். அவர்களுக்கு அல்லாஹ்வையும் அல்லாஹ்வின் தூதரையும் அன்றி பொறுப்பாளர்கள் வேறெவரும் இலர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3513. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மிம்பரின் (உரை மேடையின்) மீதிருந்தபடி,'ம்∴பார்' குலத்தை அல்லாஹ் மன்னிப்பானாக!'அஸ்லம்' குலத்தை அல்லாஹ் (போரை விரும்பாத) அமைதி விரும்பியாக ஆக்குவானாக!'உஸைய்யா' குலம் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3514. 'என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்"

அஸ்லம் குலத்தை அல்லாஹ் அமைதி விரும்பியாக ஆக்குவானாக! கி∴பார் குலத்தை அல்லாஹ் மன்னிப்பானாக!

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3515. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்

ஜுஹைனா, முஸைனா, அஸ்லம், கி∴பார் ஆகிய குலத்தார் பனு தமீம், பனு அஸத், பனு அப்தில்லாஹ் இப்னி கத்∴பான் மற்றும் பனு ஆமிர் இப்னு ஸஅஸஆ ஆகிய குலங்களை விடச் சிறந்தனவாக உள்ளனவா என்று எனக்குத் தெரிவியுங்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போது ஒருவர் (அக்ரஉ இப்னு ஹாபிஸ்(ரலி)),'அவர்கள் நஷ்டமடைந்தார்கள் இழப்புக்குள்ளானார்கள்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,'(இல்லை) அவர்கள் (ஜுஹைனா, முஸைனா, அஸ்லம், கி∴பார் ஆகிய குலங்கள் இஸ்லாத்தை முதலில் தழுவிய காரணத்தால்), பனு தமீம், பனு அஸத், பனு அப்தில்லாஹ் இப்னி ∴கத்∴பான் மற்றும் பனு ஆமிர் இப்னு ஸஅஸஆ ஆகியவர்களை விடச் சிறந்தவர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3516. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்

அக்ராஉ இப்னு ஹாபிஸ்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம்,'தங்களிடம் (இஸ்லாத்தை ஏற்றதாக) உறுதிமொழி கொடுத்தவர்கள் எல்லாம் ஹஜ் செய்ய வருபவர்களிடம் திருடியவர்களான அஸ்லம், கி∴பார் மற்றும் முஸைனா குலங்களைச் சேர்ந்தவர்கள் தாம்'' என்று கூறினார்கள்.

...'மற்றும் ஜுஹைனா குலத்தைச் சேர்ந்தவர்களும்' என்றும் (நபியவர்கள் கூறினார்கள் என) அறிவிப்பாளர் அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ரா அறிவித்தார் என்று மற்றோர் அறிவிப்பாளரான முஹம்மத் இப்னு அபீ யஅகூப் சந்தேகத்துடன் கூறுகிறார்...

நபி(ஸல்) அவர்கள், 'பனு தமீம், பனு ஆமிர், பனு அஸத், மற்றும் பனு கத்ஃபான் ஆகிய குலங்களை விட அஸ்லம், கிஃபார் மற்றும் முஸைனா குலத்தார் சிறந்தவர்கள் அல்லவா? அவர்கள் நஷ்டமும் இழப்பும் அடைந்துவிட்டார்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அக்ரஉ இப்னு ஹாபிஸ்(ரலி), 'ஆம்'' என்று பதிலளித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள், 'என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (அஸ்லம், கிஃபார், முஸைனா மற்றும் ஜுஹைனா ஆகிய குலத்தினரான) இவர்கள் (பனு தமீம், பனு ஆமிர், பனு அஸத் மற்றும் பனு கத்ஃபான் ஆகிய) அவர்களை விடச் சிறந்தவர்களே'' என்று கூறினார்கள்.

...(அஸ்லம், கிஃபார், முஸைனா குலத்தாருடன்) ஜுஹைனா குலத்தாரையும் சேர்த்துக் குறிப்பிட்டதாக நினைக்கிறேன் என அறிவிப்பாளர் முஹம்மத் இப்னு அபீ யஅகூப்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 3516. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அஸ்லம், கிஃபார் ஆகிய குலங்களும் முஸைனா மற்றும் ஜுஹைனா ஆகிய குலங்களில் சிலரும் - அல்லது ஜுஹைனா அல்லது முஸைனா ஆகிய குலங்களில் சிலரும்28 அல்லாஹ்விடம்... அல்லது மறுமை நாளில் அஸத், தமீம், ஹவாஸின் மற்றும் கத்ஃபான் ஆகிய குலங்களை விடச் சிறந்தவர்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 'கஹ்தான் குலத்தினர்

ஹதீஸ் 3517. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கஹ்தான் குலத்திலிருந்து ஒருவர் மக்களைத் தம் கைத்தடியால் ஓட்டிச் செல்பவராகத் தோன்றாதவரை உலக முடிவு நாள் வராது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அறியாமைக் கால (மாச்சரியங்களுக்கு) அழைப்பு விடுப்பது தடை செய்யப்பட்டதாகும்.

ஹதீஸ் 3518. ஜாபிர்(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (பனு முஸ்தலிக்) புனிதப் போருக்குச் சென்றோம். நபியவர்களுடன் முஹாஜிர்களும் ஒருவர் இருவராகப் புறப்பட்டு நிறையப் பேராம்விட்டனர். முஹாஜிர்களிடையே விளையாட்டுக்காட்டும் ஒருவர் இருந்தார். அவர் அன்சாரி ஒருவரின் புட்டத்தில் (விளையாட்டாக) அடித்துவிட்டார். எனவே, அந்த அன்சாரி கடும் கோபம் அடைந்தார். (தகராறு முற்றி) இருவரும் தத்தம் குலத்தாரை உதவிக்கு அழைத்தார்கள். அன்சாரி, 'அன்சாரிகளே!"என்றழைத்தார். முஹாஜிர், 'முஹாஜிர்களே!"என்றழைத்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வெளியே வந்து, 'அறியாமைக் கால மக்களின் அழைப்பு இங்கே கேட்கிறதே, ஏன்?' என்று கேட்டுவிட்டு, 'அவ்விருவரின் விவகாரம் என்ன?' என்று கேட்டார்கள். முஹாஜிர், அன்சாரியைப் புட்டத்தில் அடித்தது. நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'இந்த அறியாமைக் கால அழைப்பைவிட்டு விடுங்கள். இது அருவருப்பானது'' என்று கூறினார்கள். (நயவஞ்சகர்களின் தலைவனான) அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல், 'நமக்கெதிராக (இந்த அகதிகளான முஹாஜிர்கள் தம் குலத்தாரிடம்) உதவி கேட்டு அழைத்தார்களா?' நாம் மதீனாவுக்குத் திரும்பிச் சென்றால் வலிமையுள்ளவர்கள்

நகரத்திலிருந்து இழிந்தவர்களை வெளியேற்றி விடுவார்கள்‘‘ என்று (விஷமமாகச்) சொன்னான். உடனே உமர்(ரலி),‘இந்தத் தீயவனை நாம் கொன்று விட வேண்டாமா? இறைத்தூதர் அவர்களே!”என்று அப்துல்லாஹ் இப்னு உபையைக் குறித்துக் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘(அவனைக்) கொல்ல வேண்டாம். மக்கள்,‘முஹம்மது தன் தோழர்களை கூட கொல்கிறார்‘‘ என்று பேசுவார்கள்‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3519. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(துக்கத்தில்) கன்னங்களில்) அறைந்து கொள்பவனும் சட்டைப் பைகளைக் கிழித்துக் கொள்பவனும் அறியாமைக் கால அழைப்பை விடுப்பவனும் நம்மைச் சேர்ந்தவனல்லன்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## குஸாஆ குலத்தின் சரிதை

ஹதீஸ் 3520. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அம்ர் இப்னு லுஹை இப்னி கம்ஆ இப்னி கிந்தி∴ப் என்பவர் தம் குஸாஆ குலத்தாரின் தந்தையாவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3521. ஸயீத் இப்னு அல்முஸய்யப்(ரஹ்) கூறினார்

‘அல் பஹீரா’ என்பது (ஒட்டகங்களில்) எதனுடைய பாலை(க் கறக்கலாகாது என்று) ஷைத்தான்களுக்காகத் தடை செய்யப்பட்டு விடுமோ அந்த ஒட்டக(த்தின் நாம)மாகும். அதன் பாலை மக்களில் எவருமே கறக்க மாட்டார்கள்.’சாயிபா’ என்பது அரபுகள் தங்கள் கடவுள்களுக்காக (நேர்ச்சை செய்து) மேயவிட்ட ஒட்டகமாகும். எனவே, அதன் மீது சுமை எதுவும் சுமத்தப்படாது.

மேலும், நபி(ஸல்) அவர்கள்,‘குஸாஆ குலத்தைச் சேர்ந்த அம்ர் இப்னு ஆமிர் இப்னி லுஹை என்பவரை, நரகத்தில் தன் குடலை இழுத்துச் சென்று கொண்டிருக்கக் கண்டேன். அவர்தான் முதன் முதலில்’சாயிபா’ ஒட்டகங்களை (சிலைகளுக்காக) நேர்ந்து (மேய்ந்து கொண்டிருக்கும்படி)விட்டவர்‘‘ என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அபூ தர் கி∴பாரீ(ரலி) இஸ்லாத்தை ஏற்ற நிகழ்ச்சி.

## ஸம் ஸம்(கிணற்றின்) சரிதை

ஹதீஸ் 3522. அபூ ஜம்ரா(ரஹ்) அறிவித்தார்

எங்களிடம் இப்னு அப்பாஸ்(ரலி),‘அபூ தர்(ரலி) இஸ்லாத்தைத் தழுவிய விதம் குறித்து உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா?’ என்று கேட்க, நாங்கள்,‘சரி (அறிவியுங்கள்)‘‘ என்றோம். அப்போது அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: அபூ தர்(ரலி) (என்னிடம்) கூறினார்கள்: நான் கி∴பார் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதனாக இருந்தேன். அப்போது’ஒருவர் தம்மை நபி என்று வாதிட்டபடி மக்கா நகரில் புறப்பட்டிருக்கிறார்’ என்று எங்களுக்குச் செய்தி எட்டியது. எனவே, நான் என் சகோதரர் (அனீஸ்) இடம்,‘நீ இந்த மனிதரிடம் போய்ப் பேசி அவரின் செய்தியை (அறிந்து) என்னிடம் கொண்டு வா‘‘ என்று சொன்னேன். அவ்வாறே அவர் சென்று அவரைச் சந்தித்துப் பிறகு திரும்பி வந்தார்.

நான்,'உன்னிடம் என்ன செய்தி உண்டு'' என்று கேட்டேன்.'நன்மை புரியும்படி கட்டளையிடவும் தீமையிலிருந்து (மக்களைத்) தடுக்கவும் செய்கிற ஒரு மனிதராக அவரைக் கண்டேன்'' என்றார். நான் அவரிடம்,'போதிய செய்தியை எனக்கு நீ கொண்டுவரவில்லை'' என்று கூறினேன். பிறகு தோலினால் ஆன (தண்ணீர்ப்)பையையும் கைத்தடியையும் எடுத்துக் கொண்டு மக்காவை நோக்கிச் சென்றேன்.

அவரை நான் (தேடி வந்திருப்பதாகக்) காட்டிக் கொள்ளாமலிருக்கத் தொடங்கினேன். அவரைப் பற்றி விசாரிக்கவும் நான் விரும்பவில்லை. (வேறு உணவு இல்லாததால்) ஸம் ஸம் தண்ணீரைக் குடித்துக் கொண்டு இறையில்லத்தில் (தங்கி) இருந்தேன். அப்போது அலீ(ரலி) (கஅபாவில்) என்னைக் கடந்து சென்றார். (என்னைக் கண்டதும்),'ஆள் (ஊருக்குப்) புதியவர் போன்று தெரிகிறதே'' என்று கேட்டார். நான்,'ஆம்' என்றேன். உடனே அவர்கள்,'அப்படியென்றால் (நம்) வீட்டிற்கு நடங்கள் (போகலாம்)' என்று கூறினார்கள். நான் அவர்களுடன் எதைப் பற்றியும் கேட்காமலும் (எதையும்) அவர்களுக்குத் தெரிவிக்காமலும் சென்றேன். காலையானதும நபி(ஸல்) அவர்களைப் பற்றி விசாரிக்க இறையில்லத்திற்குச் சென்றேன். ஆனால், (அங்கு) ஒருவரும் அவர்களைப் பற்றி விசாரிக்க இறையில்லத்திற்குச் சென்றேன். ஆனால், (அங்கு) ஒருவரும் அவர்களைப் பற்றி விசாரிக்க இறையில்லத்திற்குச் சென்றேன். ஆனால், (அங்கு) ஒருவரும் அவர்களைப் பற்றி எதையும் எனக்குத் தெரிவிக்கவில்லை. அப்போது அலீ(ரலி) என்னைக் கடந்து சென்றார்கள்.'மனிதர் (தான் தங்க வேண்டியுள்ள) தன் வீட்டை அடையாளம் தெரிந்து கொள்ளும் நேரம் இன்னும் வரவில்லையா?' என்று (சாடையாகக்) கேட்டார்கள். நான்,'இல்லை' என்றேன். உடனே, அலீ(ரலி),'என்னுடன் நடங்கள்' என்று சொல்லிவிட்டு,'உங்கள் விவகாரம் என்ன? இந்த ஊருக்கு எதற்காக வந்தீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு,'நான் சொல்வதைப் பிறருக்குத் தெரியாமல் நீங்கள் மறைப்பதாயிருந்தால் நான் உங்களுக்குத் தெரிவிக்கிறேன்'' என்று நான் சொன்னேன். அதற்கு அவர்கள்,'அவ்வாறே செய்கிறேன்'' என்று கூறினார்கள். நான் அப்போது'இங்கே தம்மை இறைத்தூதர் என்று வாதிட்டபடி ஒருவர் புறப்பட்டிருக்கிறார்' என்று எங்களுக்குச் செய்தி எட்டியது. எனவே, நான் என் சகோதரை அவரிடம் பேசும்படி அனுப்பினேன். போதிய பதிலை என்னிடம் அவர் கொண்டு வரவில்லை. எனவே, நான் அவரை (நேரடியாகச்) சந்திக்க விரும்பினேன்'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள்,'நீங்கள் நேரான வழியை அடைந்துள்ளீர்கள். இது நான் அவரிடம் செல்லும் நேரம். எனவே, என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். நான் நுழையும் வீட்டில் நீங்கள் நுழையுங்கள். ஏனெனில், (என்னுடன் வருவதால்) இவனால் உங்களுக்கு ஆபத்து ஏற்படும் என்று நான் அஞ்சுகிற ஒருவனைக் காண்பேனாயின், என் செருப்பைச் சரி செய்பவனைப் போல் சுவரோரமாக நான் நின்று கொள்வேன். நீங்கள் போய்க் கொண்டிருங்கள்'' என்று கூறினார்கள். இறுதியில், அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,'எனக்கு இஸ்லாத்தை எடுத்துரையுங்கள்'' என்று சொன்னேன். அவர்கள் அதை எடுத்துரைத்தார்கள். நான் இருந்த அதே இடத்தில் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,'அபூ தர்ரே! (நீ இ!லாத்தை ஏற்ற) இந்த விஷயத்தை மறைத்து வை. உன் ஊருக்குத் திரும்பிச் செல். நாங்கள் மேலோங்கிவிட்ட செய்தி உனக்கு எட்டும்போது எங்களை நோக்கி வா'' என்று கூறினார்கள். அதற்கு நான்,'உங்களை சத்திய மார்க்கத்துடன் அனுப்பியவன் மீதாணையாக! நான் இதை (ஏகத்துவக் கொள்கையை) அவர்களுக்கிடையே உரக்கச் சொல்வேன்'' என்று சொல்லிவிட்டு, இறையில்லத்திற்கு

வந்தேன். அப்போது குறைஷிகள் அங்கே இருந்தனர். நான், 'குறைஷிக் குலத்தாரே!"அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை' என்று நான் உறுதி கூறுகிறேன். 'முஹம்மத்(ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும அவனுடைய தூதரும் ஆவார்' என்றும் நான் உறுதி கூறுகிறேன்'' என்று சொன்னேன். உடனே, அவர்கள்'இந்த மதம் மாறி(ய துரோம்)யை எழுந்து சென்று கவனியுங்கள்'' என்று கூறினார்கள். அவர்கள் எழுந்து வந்தார்கள். என் உயிர் போவது போல் நான் அடிக்கப்பட்டேன். அப்போது அப்பாஸ்(ரலி) என்னை அடையாளம் புரிந்து கொண்டு என் மீது கவிழ்ந்து (அடிபடாமல் பார்த்துக்) கொண்டார்கள். பிறகு குறைஷிகளை நோக்கி, 'உங்களுக்குக் கேடு உண்டாகட்டும்! கி∴பார் குலத்தைச் சேர்ந்த மனிதரையா நீங்கள் கொல்கிறீர்கள்? நீங்கள் வியாபாரம் செய்யுமிடமும் நீங்கள் (வாணிபத்திற்காகக்) கடந்து செல்ல வேண்டிய பாதையும் கி∴பார் குலத்தவர் வசிக்குமிடத்தையொட்டித் தானே உள்ளது! (அவர்கள் பழிவாங்க வந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?)'' என்று கேட்டார்கள். உடனே, அவர்கள் என்னைவிட்டு விலம்விட்டார்கள். மறுநாள் காலை வந்தவுடன் நான் திரும்பிச் சென்று நேற்று சொன்னதைப் போன்றே சொன்னேன். அவர்கள், 'இந்த மதம் மாறி(ய துரோம்)யை எழுந்து சென்று கவனியுங்கள்'' என்று கூறினார்கள். நேற்று என்னிடம் நடந்து கொண்டதைப் போன்றே நடந்து கொண்டார்கள். அப்பாஸ்(ரலி) என்னைப் புரிந்து கொண்டு என் மீது கவிழ்ந்து (அடிபடாதவாறு பார்த்துக்) கொண்டார்கள். நேற்று அப்பாஸ் அவர்கள் சொன்னதைப் போன்றே (அன்றும்) கூறினார்கள்.

(இதை அறிவித்து பிறகு) இப்னு அப்பாஸ்(ரலி), 'இது அபூ தர்(ரலி) இஸ்லாத்தைத் தழுவிய ஆரம்பக் காலத்தில் நடந்த நிகழ்ச்சியாகும். அல்லாஹ் அபூ தருக்கு கருணை காட்டுவானாக!"என்று கூறினார்கள்.

## "ஸம்ஸம்" கிணறும் அரபுகளின் அறியாமையும்.

ஹதீஸ் 3523. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அஸ்லம் குலத்தாரும், கி∴பார் குலத்தாரும், முஸைனா குலத்தவரிலும் ஜுஹைனா குலத்தவரிலும் சிலரும் அஸத், தமீம், ஹவாஸின் மற்றும் கத்∴பான் ஆகிய குலத்தினரை விட அல்லாஹ்விடம்... அல்லது மறுமை நாளில்.... சிறந்தவர்கள்.

... இதை அறிவித்த அபூ ஹுரைரா(ரலி), 'முஸைனா குலத்தவரிலும் ஜுஹைனா குலத்தவரிலும் சிலரும்'' என்றும் கூறியிருக்கலாம் (அதற்கு பதிலாக)'ஜுஹைனா குலத்தவரில் சிலரும்'' என்று மட்டுமோ'முஸைனா குலத்தவரில் சிலரும்'' என்று மட்டுமோ கூறியிருக்கலாம் என்று அறிவிப்பாளர் முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 3524. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

அரபுகளின் அறியாமையை அறிந்து கொள்ள உங்களுக்கு விருப்பமென்றால்'அல் அன்ஆம்' (என்னும் 6-வது) அத்தியாயத்தில் நூற்றி முப்பதாவது வசனத்திற்கு மேல் ஓதுங்கள். அந்த வசனம் இதுதான்: அறியாமையினாலும், மூடத்தனத்தினாலும் தம் குழந்தைகளை கொன்றுவிட்டு, அல்லாஹ்வின் மீது பழி சுமத்தி தங்களுக்கு வழங்கியிருந்தவற்றைத் தாங்களாகவே தடை செய்தவர்கள் நிச்சயமாகப் பேரிழப்புக்கு ஆளாம்விட்டார்கள். நிச்சயமாக அவர்கள் வழிதவறிப் போய்விட்டார்கள். அவர்கள் நேர்வழி பெற்றவர்களாய் இல்லை. (திருக்குர்ஆன் 06:140)

## அறியாமைக் காலத்திலும் இஸ்லாத்தை ஏற்ற பின்னரும் தன் முன்னோர்களுடன் தன்னை இணைத்துப் பேசுவது செல்லும்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கண்ணியத்திற்குரியவன் புதல்வரான கண்ணியத்திற்குரியவன் புதல்வரான கண்ணியத்திற்குரியவரின் புதல்வர் தாம் கண்ணியத்திற்குரியவர். அவர் (எவரெனில்), அல்லாஹ்வின் நண்பர் இப்ராஹீம் அவர்களின் புதல்வரான இஸ்ஹாக் அவர்களின் புதல்வரான யஃகூப் அவர்களின் புதல்வரான யூசுஃப் அவர்கள் தாம்.

இதை அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் இப்னு உமர்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

“நான் அப்துல் முத்தலிபின் மகனாவேன் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3525. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

‘(நபியே!) உங்கள் நெருங்கிய உறவினர்களை எச்சரிப்பீராக!”என்னும் (திருக்குர்ஆன் 26:214) இறைவசனம் அருளப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள், ‘பனு ஃபிஹ்ர் குலத்தாரே! பனு அதீ குலத்தாரே!”என்று குறைஷிகளின் கிளைக் குலங்களை (பெயர் சொல்லி) அழைக்கலானார்கள்.

ஹதீஸ் 3526. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

“(நபியே!) உங்கள் நெருங்கிய உறவினர்களை எச்சரிப்பீராக!”என்னும் (திருக்குர்ஆன் 26:214) இறைவசனம் அருளப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள் குலங்கள் குலங்களாக (பெயர் சொல்லி) அழைக்கலானார்கள்.

ஹதீஸ் 3527. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அப்து மனாஃபின் மக்களே! உங்களை அல்லாஹ்விடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள். 45 அப்துல் முத்தலிபின் மக்களே! உங்களை அல்லாஹ்விடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள். அல்லாஹ்வின் தூதருடைய அத்தையான ஸுபைர் இப்னு அவ்வாமின் தாயாரே!46 முஹம்மதின் மகளான ஃபாத்திமாவே! நீங்கள் இருவரும் உங்களை அல்லாஹ்விடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள். நான் உங்கள் இருவருக்கும் அல்லாஹ்விடமிருந்து எதையும் வாங்கித் தர முடியாது. என் செல்வத்திலிருந்து இருவரும் நீங்கள் விரும்பியதைக் கேளுங்கள். (நான் உங்களுக்குத் தருகிறேன்.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஒரு சமுதாயத்தினரின் சகோதரி மகன் அவர்களைச் சேர்ந்தவரே. ஒரு சமுதாயத்தினர் விடுதலை செய்த அடிமையும் அவர்களைச் சேர்ந்தவரே.

ஹதீஸ் 3528. அனஸ்(ரலி) அறிவித்தார். (ஏதோ பேசுவதற்காக ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளைத் (தனியாக) அழைத்தார்கள். (அவர்கள் வந்த) பின்னர், ‘உங்களிடையே எவரேனும் உங்கள் (கூட்டாத்தார்) அல்லாதவர் (இங்கே வந்து) இருக்கிறாரா?’ என்று கேட்டார்கள். அதற்கு அன்சாரிகள், ‘எங்கள் சகோதரி ஒருத்தியின் மகனை (நுஃமான் இப்னு முக்ரினை)த் தவிர வேறெவருமில்லை‘ என்று பதிலளித்தார்கள்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'ஒரு சமுதாயத்தினரின் சகோதரி மகன் அவர்களைச் சேர்ந்தவரே'' என்று கூறினார்கள்.

## அபிசீனியர்களின் நிகழ்ச்சியும் நபி(ஸல்) அவர்கள், அர்ஃபிதாவின் மக்களே! என்று (அபிசீனியர்களை) அழைத்ததும்.

**ஹதீஸ் 3529.** ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அபூ பக்ர்(ரலி) (ஒரு முறை) என்னிடம் வந்தார்கள். அப்போது இரண்டு சிறுமிகள் என்னிடம் (தஃப் எனப்படும்) சலங்கைகள் இல்லாத கஞ்சிராவைத் தட்டி பாடிக் கொண்டிருந்தார்கள். அது, மினாவில் தங்கும் (காலமான துல்ஹஜ் 10, 11, 12, 13 ஆகிய) நாள்களில் (ஒன்றாக) இருந்தது. நபி(ஸல்) அவர்கள் (படுக்கையில் படுத்தபடி முகத்தைத் திருப்பிக் கொண்டு) தம் துணியால் போர்த்திக் கொண்டிருந்தார்கள். எனவே, அபூ பக்ர்(ரலி) இரண்டு சிறுமிகளையும் அதட்டினார்கள். நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்திலிருந்து (ஆடையை) நீக்கிவிட்டு, 'அவ்விருவரையும்விட்டு விடுங்கள், அபூ பக்ரே! ஏனெனில், இவை பண்டிகை நாள்கள்'' என்று கூறினார்கள். அந்த நாள்கள் மினாவில் தங்கும் நாள்களாயிருந்தன.

**ஹதீஸ் 3530.** ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அபிசீனியர்கள் பள்ளிவாசலில் (வீர விளையாட்டுகள்) விளையாடுவதை நான் பார்த்துக் கொண்டிருக்க, நபி(ஸல்) அவர்கள் (அவர்களின் பார்வையிலிருந்து) என்னை மறைப்பதை கண்டேன். அப்போது உமர்(ரலி) அபிசீனியர்களைக் கண்டித்து தடுத்தார்கள். இதைக்கேட்ட நபி(ஸல்) அவர்கள், 'அவர்களைவிட்டுவிடுங்கள். நீங்கள் அச்சமின்றி இருங்கள், அர்ஃபிதாவின் மக்களே!"என்று கூறினார்கள்.

## ஒருவர், தம் வமிசம் ஏசப்படக் கூடாது என்று விரும்புவது.

**ஹதீஸ் 3531.** ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(முஸ்லிம்களுக்கெதிராக இணைவைப்பவர்கள் வசை பாடிய போது) இணைவைப்பவர்களுக்கெதிராக வசைக் கவிதைபாடுவதற்கு நபி(ஸல்) அவர்களிடம் (கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அனுமதி கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் என் வமிசம் (அவர்களுடன் கலந்திருக்க, அவர்களை வசை பாடுவது எப்படி?' என்று கேட்டார்கள். அதற்கு எப்படி?' என்று கேட்டார்கள். அதற்கு ஹஸ்ஸான்(ரலி), 'மாவிலிருந்து முடியை உருவியெடுப்பது போல் தங்களை அவர்களிலிருந்து உருவியெடுத்து (வசையிலிருந்து நீக்கி) விடுவேன்!'' என்று கூறினார்கள்.

உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்

(ஒரு முறை) நான் ஹஸ்ஸான்(ரலி) அவர்களை ஏசிக் கொண்டே ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள், 'அவரைத் திட்டாதே! ஏனெனில், அவர் (எதிரிகளின் வசைப் பாடல்களுக்குத் தக்க பதிலடி கொடுத்து) நபி(ஸல்) அவர்களைப் பாதுகாப்பவராக இருந்தார்'' என்று கூறினார்கள்.

## இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பெயர்கள் தொடர்பான தகவல்கள் மற்றும் இறைவசனங்கள் (திருக்குர்ஆன் 48:29, 61:06)

அல்லாஹ் கூறினான்:

முஹம்மத், இறைத்தூதர்(ஸல்) ஆவார். அவருடன் இருப்பவர்கள் இறை மறுப்பாளர்களைப் பொறுத்துக் கடினமானவர்களும் தங்களுக்கிடையே கருணைமிக்கவர்களும் ஆவர். (திருக்குர்ஆன் 48:29)52

மர்யமின் மகன் ஈசா இவ்வாறு கூறியதையும் நினைவு கூருங்கள்: இஸ்ராயீலின் வழித்தோன்றல்களே! நான் அல்லாஹ்வினால் உங்களிடம் அனுப்பப்பட்டிருக்கும் தூதராவேன். நான், எனக்கு முன்பே வந்துள்ள'தவ்ராத்' வேதத்தை மெய்ப்படுத்தக் கூடியவனாய் இருக்கிறேன். மேலும், எனக்கு பிறகு அஹ்மத் எனும் பெயருடைய ஒரு தூதர் வருவார் என்று நற்செய்தி சொல்பவனாகவும் இருக்கிறேன் எனினும், அவர் அம்மக்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தபோது, இது வெளிப்படையான மோசடி என்று அவர்கள் கூறினார்கள். (திருக்குர்ஆன் 61:06)

ஹதீஸ் 3532 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்கு ஐந்து பெயர்கள் உள்ளன. நான் முஹம்மது - புகழப்பட்டவர் - ஆவேன். நான் அஹ்மத் - இறைவனை அதிகமாகப் புகழ்பவர் ஆவேன். நான் மாஹீ - அழிப்பவர் புகழ்பவர் ஆவேன். நான் மாஹீ - அழிப்பவர் ஆவேன். என் மூலமாக அல்லாஹ் இறைமறுப்பை அழிக்கிறான். நான் ஹாஷிர் - ஒன்று திரட்டுபவர் ஆவேன். மக்கள் எனக்குப் பின்னால் ஒன்று திரட்டப்படுவார்கள். நான் ஆம்ப் (இறைத்தூதர்களில்) இறுதியானவர் ஆவேன்.

என ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3533. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குறைஷி (மறுப்பாளர்)களின் திட்டு தலையும், அவர்களின் சபித்தலையும் என்னைவிட்டு அல்லாஹ் எப்படி திருப்பி விடுகிறான் என்பதைக் கண்டு நீங்கள் வியப்படைய வில்லையா? (என்னை)'முதம்மம்' (இகழப்படுவர்)' என்று (சொல்லி) ஏசுகிறார்கள் சபிக்கிறார்கள். ஆனால் நானோ'முஹம்மத்' (புகழப்படுபவர்) ஆவேன்.

## நபிமார்களில் இறுதியானவர்

ஹதீஸ் 3534 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்னுடைய நிலையும் (மற்ற) இறைத்தூதர்களது நிலையும் ஒரு வீட்டைக் கட்டிய மனிதரின் நிலையைப் போன்றதாகும். அவர் அதனை, ஒரு செங்கல் அளவிற்குள்ள இடத்தை மட்டும்விட்டுவிட்டு முழுமையாகவும் அழகாகவும் கட்டி முடித்திருந்தார். மக்கள் அதனுள் நுழைந்து (பார்வையிட்டுவிட்டு) வியப்படைந்து,'இச்செங்கல்லின் இடம் மட்டும் (காலியாக) இல்லாதிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!"என்று கூறலானார்கள்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3535. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய நிலையும் எனக்கு முன்பிருந்த இறைத்தூதர்களின் நிலையும் ஒரு வீட்டைக் கட்டி அதை அழகாக அலங்கரித்து, ஒரு மூலையில் ஒரு செங்கல் அளவிற்குள்ள இடத்தை மட்டும்விட்டுவிட்ட ஒரு மனிதரின் நிலை போன்றதாகும். மக்கள் அதைச் சுற்றிப் பார்த்துவிட்டு ஆச்சரியடைந்து,'இச்செங்கல் (இங்கே) வைக்கப்பட்டிருக்கக் கூடாதா?' என்று கேட்கலானார்கள். நானே அச்செங்கல். மேலும், நானே இறைத் தூதர்களில் இறுதியானவன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## நபி(ஸல்) அவர்களின் இறப்பு

ஹதீஸ் 3536. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம் அறுபத்து மூன்றாம் வயதில் இறப்பெய்தினார்கள்.

“ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) இதே போன்ற ஹதீஸை எனக்கு அறிவித்தார்கள்‘‘ என்று இப்னு ஷிஹாப் அஸ் ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்.

## நபி(ஸல்) அவர்களின் குறிப்புப் பெயர்.

ஹதீஸ் 3537. அனஸ்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் சந்தையில் இருந்தார்கள். அப்போது ஒருவர், ‘அபுல் காசிமே!”என்று அழைத்தார். நபி(ஸல்) அவர்கள் திரும்பிப் பார்த்து, ‘என் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால், என் குறிப்புப் பெயரைச் சூட்டிக் கொள்ளாதீர்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3538. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால், என் குறிப்புப் பெயரைச் சூட்டிக் கொள்ளாதீர்கள்.

என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3539. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

அபுல் காசிம்(ஸல்) அவர்கள், ‘என் பெயரை (உங்களுக்குச்) சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால், என் குறிப்புப் பெயரைச் சூட்டிக் கொள்ளாதீர்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3540. ஜுஅய்த் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

சாயிப் இப்னு யஸீத்(ரலி) அவர்களைத் தொண்ணூற்று நான்கு வயது உடையவர்களாக, (அந்த வயதிலும்) திடகாத்திரமானவர்களாக (கூன் விழாமல்) முதுகு நிமிர்ந்தவர்களாக கண்டேன். அவர்கள், ‘எனக்குக் கேள்விப்புலன் மற்றும் பார்வைப் புலனின் நலம் அல்லாஹ்வின் தூதரின் பிரார்த்தனையால் தான் வழங்கப்பட்டுள்ள என்பதை நான் அறிந்திருக்கிறேன். என் தாயின் சகோதரி என்னை நபி(ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, ‘இறைத்தூதர் அவர்களே! என் சகோதரியின் மகன் நோயுற்றிருக்கிறார். இவருக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தித்யுங்கள்’ என்று கூறினார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் எனக்கா பிரார்த்திதார்கள்‘‘ என்று கூறினார்கள் 61

## நபித்துவ முத்திரை

ஹதீஸ் 3541 சாயிப் இப்னு யஸீத்(ரலி) கூறினார்

என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என் தாயின் சகோதரி அழைத்துச் சென்று, ‘இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகன் (பாதங்களில்) நோய் கண்டுள்ளான்‘‘ என்று கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் (இரக்கத்துடன்) என் தலையை வருடிக் கொடுத்து, என் வளத்திற்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர்’உளூ’ செய்தார்கள். அவர்கள் உளூச் செய்த தண்ணீரை நான் சிறிது குடித்தேன். பிறகு, நான்

அவர்களின் முதுகுக்குப் பின்னே நின்று, அவர்களின் இரண்டு புஜங்களுக்கிடையே இருந்த நபித்துவ முத்திரையைப் பார்த்தேன்.

(நபித்துவ முத்திரை எப்படியிருந்தது என்று கேட்கப்பட்டபோது அறிவிப்பாளர்) முஹம்மத் இப்னு உபைதில்லாஹ் (ரஹ்), 'குதிரையின் இருகண்களுக்கு மத்தியிலுள்ள வெண்மை போன்றிருந்தது'' என்று பதிலளித்தார்கள்.

(அறிஞர்) இப்ராஹீம் இப்னு ஹம்ஸா (ரஹ்), 'மணவறைத் திரையில் பொருத்தப்படுகிற பித்தானைப் போன்றிருந்தது'' என்று கூறினார்கள்''

## நபி(ஸல்) அவர்களின் தன்மை

ஹதீஸ் 3542 உக்பா இப்னு ஹாரிஸ் (ரலி) கூறினார்

அபூ பக்ர் (ரலி) அஸர் தொழுகையைத் தொழுதார்கள். பிறகு (பள்ளிவாசலிலிருந்து) நடந்தபடி புறப்பட்டார்கள். அப்போது ஹஸன் (ரலி) அவர்களைக் குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருக்கக் கண்டார்கள். உடனே, அவர்களைத் தம் தோளின் மீது ஏற்றிக் கொண்டு, 'என் தந்தை உனக்கு அர்ப்பணமாகட்டும்! நீ (தோற்றத்தில் உன் பாட்டனார்) நபி(ஸல்) அவர்களை ஒத்திருக்கிறாய் (உன் தந்தை) அலீ அவர்களை ஒத்திருக்கிறாய் (உன் தந்தை) அலீ அவர்களை ஒத்தில்லை'' என்று கூறினார்கள். அப்போது அலீ (ரலி) (அபூ பக்ர் - ரலி - அவர்களின் இந்தக் கூற்றைக் கேட்டு) சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 3543. அபூ ஜுஹைஃபா (ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களைப் பார்த்திருக்கிறேன். ஹஸன் (ரலி) (தோற்றத்தில்) நபி(ஸல்) அவர்களை ஒத்திருக்கிறார்கள்.

ஹதீஸ் 3544 இஸ்மாயீல் இப்னு அபீ காலித் (ரஹ்) அறிவித்தார்

"நபி(ஸல்) அவர்களை பார்த்திருக்கிறேன். அலீயின் மகன் ஹஸன் அவர்கள் அவ்விருவர் மீதும் அல்லாஹ்வின் சாந்தி பொழிவதாக! நபி(ஸல்) அவர்களை (தோற்றத்தில்) ஒத்திருந்தார்கள்'' என்று அபூ ஜுஹைஃபா (ரலி) கூறினார். நான் அவர்களிடம், 'நபி(ஸல்) அவர்களின் தன்மையை எனக்கு கூறுங்கள்'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் பொன்னிறமுடையவர்களாக, வெண்மை கலந்த கருநிற தலை முடியுடையவர்களாக இருந்தார்கள். எங்களுக்கு பதின் மூன்று பெண் ஒட்டகங்கள் தரும்படி உத்திரவிட்டார்கள். அதை நாங்கள் கைவசம் பெற்றுக் கொள்வதற்கு முன்பே நபி(ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3545 அபூ ஜுஹைஃபா அஸ் ஸுவாயீ (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களை பார்த்திருக்கிறேன். அவர்களின் கீழுதட்டின் அடியிலுள்ள (தாடைக்கு மேலுள்ள) குறுந்தாடியில் நான் வெண்மையைக் கண்டேன்.

ஹதீஸ் 3546. ஹரீஸ் இப்னு உஸ்மான் (ரஹ்) கூறினார்

நான் நபித்தோழர் அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் (ரலி) அவர்களிடம், 'நபி(ஸல்) அவர்கள் வயது முதிர்ந்தவளாக இருக்கும் நிலையில் அவர்களை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், '(நான் அவர்களைப் பார்த்த போது) அவர்களின் கீழுதட்டின்

அடியில் (தாடைக்க மேலே) உள்ள குறுந்தாடியில் வெள்ளை முடிகள் இருந்தன'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3547. ரபீஆ இப்னு அபீ அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

அனஸ்(ரலி) நபி(ஸல்) அவர்களின் உருவ அமைப்பை விவரிக்கக் கேட்டேன். அவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் மக்களில் நடுத்தர உயரமுடையவர்களாக இருந்தார்கள் நெட்டையானவர்களாகவும் இல்லை குட்டையானவர்களாகவும் இல்லை. பொன்னிறமுடையவர்களாக அவர்கள் இருந்தார்கள். அவர்கள் சுத்த வெள்ளை நிறமுடையவர்களாகவும் இல்லை. கடும் சுருள் முடியுடையவர்களாகவும் இல்லை. முழுக்கவே படிந்த முடியுடையவர்களாகவும் இல்லை. இரண்டுக்கும் இடைப்பட்ட வகை முடியை உடையவர்களாக இருந்தார்கள். அவர்கள் நாற்பது வயதுடையவர்கள் இருந்தபோது அவர்களுக்கு குர்ஆன் அருளப்படலாயிற்று. குர்ஆன் அருளப்படும் நிலையிலேயே மக்கா நகரில் பத்து ஆண்டுகள் தங்கி வசித்து வந்தார்கள். மதீனா நகரிலும் பத்து ஆண்டுகள் வசித்து வந்தார்கள். அவர்களின் தலையிலும் தாடியிலும் இருபது வெள்ளை முடிகள் கூட இல்லாத நிலையிலேயே இறந்துவிட்டார்கள்'' என்று கூறினார்கள். அறிவிப்பாளர் ரபீஆ(ரஹ்) கூறினார்: நான் நபி(ஸல்) அவர்களின் முடிகளில் ஒன்றை (நபியவர்களின் மறைவுக்குப் பின்) பார்த்தேன். அது சிவப்பாக இருந்தது.) நான் (அது குறித்து, நபியவர்கள் மருதாணி பூசி இருந்தார்களா என்று) கேட்டேன். அதற்கு, '(நபியவர்கள் பூசிய) நறுமணப் பொருளின் காரணத்தால் அது சிவப்பாம்விட்டது'' என்று பதிலளிக்கப்பட்டது.

ஹதீஸ் 3548. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் வெளிப்படையாகத் தெரியும் அளவிற்கு அதிக உயரமானவர்களாகவும் இல்லை குட்டையானவர்களாகவும் இல்லை. சுத்த வெள்ளை நிறம் உடையவர்களாகவும் இல்லை மாநிறம் கொண்டவர்களாகவும் இல்லை கடும் சுருள் முடியுடையவர்களாகவும் இல்லை (தொங்கலான) படிந்த முடியுடையவர்களாகவும் இல்லை. நாற்பது வயதின் தொடக்கத்தில் அல்லாஹ் அவர்களைத் தம் தூதராக அனுப்பினான். அதன் பிறகு, அவர்கள் மக்கா நகரில் பத்து ஆண்டுகளும் தங்கியிருந்தார்கள். அவர்களின் தலையிலும் தாடியிலும் இருபது வெள்ளை முடிகள் கூட இல்லாத நிலையிலும் அல்லாஹ் அவர்களை இறக்கச் செய்தான்.

ஹதீஸ் 3549. பராஉ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களிலேயே அழகிய முகம் உடையவர்களாகவும் அழகிய உருவ அமைப்பு உடையவர்களாகவும் இருந்தார்கள். அவர்கள் வெளிப்படையாகத் தெரியும் அளவிற்கு உயரமானவர்களாகவும் இல்லை குட்டையானவர்களாகவும் இல்லை.

ஹதீஸ் 3550. கத்தாதா(ரஹ்) அறிவித்தார்

நான் அனஸ்(ரலி) அவர்களிடம், 'நபி(ஸல்) அவர்கள் மருதாணி பூசியிருந்தார்களா?' என்று கேட்டேன் அதற்கு அவர்கள், 'இல்லை. அவர்களின் நெற்றிப் பொட்டு முடியில் சிறிதளவு நரை இருந்தது. அவ்வளவுதான்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3551. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் நடுத்தர உயரமுடையவர்களாகவும் (மேல் முதுகும் மார்பும் விசாலமான நிலையில்) இரண்டு புஜங்களுக்கிடையே அதிக இடைவெளி உள்ளவர்களாகவும்

இருந்தார்கள். அவர்களின் தலைமுடி அவர்களின் காதுகளின் சோணையை எட்டும் அளவிற்கு இருந்தது. அவர்களை நான் சிவப்பு நிற அங்கி ஒன்றில் பார்த்திருக்கிறேன். அதை விட அழகான ஆடையை நான் கண்டதேயில்லை.

அறிவிப்பாளர் அபூ இஸ்ஹாக் ஸபீஈ(ரஹ்) கூறினார்.

இந்த அறிவிப்பில் அவ்ன்(ரஹ்) அதிகப்படியாக அறிவித்துள்ளதாவது:

(என் தந்தை) அபூ ஜுஹைஃபா(ரலி) கூறினார்:

அந்த ஈட்டிக்கு அப்பால் பெண்கள் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். மக்கள் அப்போது எழுந்து நபி(ஸல்) அவர்களின் இரண்டு கரங்களைப் பிடித்து அவற்றால் தங்கள் முகங்களை வருடிக் கொள்ளலாயினர். நான் நபி(ஸல்) அவர்களின் கரத்தை எடுத்து என் முகத்தின் மீது வைத்துக் கொண்டேன். அது பனிக் கட்டியை விடவும் குளிர்ச்சியானதாகவும் கஸ்தூரியை விடவும் நறுமணம் மிக்கதாகவும் இருந்தது.

ஹதீஸ் 3552 நபி (ஸல்) அவர்களுடைய முகம் வாளைப் போன்று (மின்னிக் கொண்டு நீண்டதாக) இருந்ததா, என்று பராஉ (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் இல்லை ஆயினும் அவர்களின் முகம் சந்திரனைப் போன்று (பிரகாசமாகவும் வட்டமானதாகவும்) இருந்தது என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3553 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஹஜ்ஜின் போது ஒரு நாள்) நண்பகல் நேரத்தில் கடும் வெயிலில் பத்ஹாவை நோக்கிப் புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் உழூ செய்துவிட்டு ளுஹர் இரண்டு ரக்அத்துகள் தொழுது அஸர் இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். அப்போது அவர்களுக்கு முன்னால் சிறு ஈட்டி ஒன்று (நடப்பட்டு) இருந்தது. அறிவிப்பாளர் ஷுஃபா (ரஹ்) அவர்கள் அதிகப்படியாக அறிவித்துள்ளதாவது. (என் தந்தை) அபு ஜுஹைபா (ரலி) அவர்கள் கூறினார்கள். அந்த ஈட்டிக்கு அப்பால் பெண்கள் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். மக்கள் அப்போது எழுந்து நபி (ஸல்) அவர்களின் இரு கரங்களையும் பிடித்து அவற்றால் தங்கள் முகங்களை வருடிக் கொள்ளலாயினர். நான் நபி (ஸல்) அவர்களுடைய கரத்தை எடுத்து என் முகத்தின் மீது வைத்துக் கொண்டேன். அது பனிக் கட்டியை விடவும் குளிர்ச்சியானதாகவும் கஸ்தூரியை விடவும் நறுமணம் மிக்கதாகவும் இருந்தது

ஹதீஸ் 3554. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மக்களிலேயே அதிகமாகக் கொண்ட வழங்குபவர்களாக இருந்தார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள் ரமளான் மாதத்தில் தம்மைச் சந்திக்கிற வேளையில் அவர்கள் இன்னும் அதிகமாக வாரி வழங்குபவர்களாக மாறிவிடுவார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள் ரமளானின் ஒவ்வொரு இரவிலும் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது (அது வரை அருளப்பட்ட) குர்ஆனை ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு நினைவுபடுத்துவார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தொடர்ந்து வீசும் (மழைக்) காற்றை விட அதிகமாக நல்லதை வாரி வழங்குபவர்களாக இருந்தார்கள்.

ஹதீஸ் 3555 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் (பரவசத்தால்) அவர்களின் முகத்தின் (நெற்றி) ரேகைகள் மின்ன வந்தார்கள். அப்போது அவர்கள், 'முத்லிஜீ (என்னும் இருவரின் சாயலை வைத்து உறவு முறையை கணிப்பவர்) ஸைதைப் பற்றியும் என்ன கூறினார் என்று நீ கேள்விப்படவில்லையா? (போர்வையின் கீழிருந்து வெளிப்பட்ட) அவ்விருவரின்

கால்களையும் அவர் பார்த்துவிட்டு. 'இந்தக் கால்கள் ஒன்று மற்றொன்றிலிருந்து தோன்றியவை' என்று கூறினார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3556. அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அறிவித்தார்

கஅப் இப்னு மாலிக்(ரலி), தபூக் போரில் கலந்து கொள்ளாமல் பின்தங்கிவிட்ட சமயத்தை (நினைவு கூர்ந்து) பேசிய படி, 'நான் அல்லாஹ்வின் தூதருக்கு சலாம் சொன்னேன். அவர்களின் (பொன்னிற) முகம் மகிழ்ச்சியால் மின்னிக் கொண்டிருந்தது. இறைத்தூதர்(ஸல்) மகிழ்ச்சியடைந்தால் அவர்களின் முகம் சந்திரனின் ஒரு துண்டைப் போல் பிரகாசமாம்விடும். நாங்கள் அதை வைத்து அவர்கள் மகிழ்ச்சியடைந்திருப்பதைத் தெரிந்து கொள்வோம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3557. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதமின் சந்ததிகளில் தலைமுறை தலைமுறையாக நான் சிறந்த தலைமுறை வழியே (மரபணுக்களில் பாதுகாக்கப்பட்டு வந்து இப்போது) நான் தோன்றியிருக்கும் (இந்தச்) சிறந்த தலைமுறையில் தோன்றி இறைத்தூதராக்கப்பட்டுள்ளேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3558. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் (முன் தலை) முடியை, (தம் நெற்றியின் மீது) தொங்கவிட்டு வந்தார்கள். இணை வைப்பாளர்கள் தங்கள் தலை(முடி)களைப் பிரித்து (நெற்றியில் விழ விடாமல் இரண்டு பக்கமும் தொங்கவிட்டு) வந்தார்கள். வேதக்காரர்கள் தங்கள் தலை(முடி)களை (நெற்றியின் மீது) தொங்கவிட்டு வந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எந்த விஷயங்களில் தமக்கு (இறைக்) கட்டளை எதுவும் இடப்படவில்லையோ அந்த விஷயங்களில் வேதக்காரர்களுடன் ஒத்துப் போக விரும்பி வந்தார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் தலை(முடி)யை, (இரண்டு பக்கங்களிலும்) பிரித்துக் கொண்டார்கள்.

ஹதீஸ் 3559 அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இயற்கையாகவோ, செயற்கையாகவோ கெட்ட வார்த்தை பேசுபவர்களாக இருந்ததில்லை. 'உங்களில் சிறந்தவர் உங்களில் நற்குணமுடையவரே'' என்று அவர்கள் கூறுவார்கள்.

ஹதீஸ் 3560. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இரண்டு விஷயங்களில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி அல்லாஹ்வின் தூதரிடம் கூறப்பட்டால் அவர்கள் அவ்விரண்டில் இலேசானதையே - அது பாவமான விஷயமாக இல்லாதிருக்கும் பட்சத்தில் -எப்போதும் தேர்ந்தெடுப்பார்கள். அது பாவமான விஷயமாக இருந்தால் மக்களிலேயே அதிகமாக அதிலிருந்து வெகு தொலைவில் (விலம்) நிற்பார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தமக்காக என்று எவரையும் பழிவாங்கியதில்லை அல்லாஹ்வின் புனித(ச் சட்ட)ம் எதுவும் சீர்குலைக்கப்பட்டு, அதற்கு பதிலாக அல்லாஹ்வின் சார்பாகப் பழிவாங்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினாலே தவிர. (அப்போது மட்டும் பழி வாங்குவார்கள்.)

ஹதீஸ் 3561. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் உள்ளங்கையை விட மென்மையான பட்டையோ, (பூ வேலைப்பாடு செய்யப்பட்ட) தூய்மையான பட்டையோ நான் தொட்டதில்லை. நபி(ஸல்) அவர்களின் (உடல்) மணத்தை விட சுகந்தமான ஒரு நறுமணத்தை நான் நுகர்ந்ததேயில்லை.

வேறுசில அறிவிப்புகளில்'உடல் மணம்' என்பதற்கு பதிலாக'வியர்வை' என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 3562. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் திரைக்குள் இருக்கும் கன்னிப் பெண்ணை விடவும் அதிக வெட்கமுடையவர்களாயிருந்தனர். ஷுஅபா(ரஹ்) இதே போன்றதை அறிவித்துவிட்டு,'நபி(ஸல்) அவர்கள் எதையாவது வெறுத்தால், அது அவர்களின் முகத்தில் தெரிந்துவிடும்'' என்று (அதிகப்படியாக) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3563. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் எந்த உணவையும் ஒருபோதும் குறை கூறியதில்லை. அவர்கள் ஓர் உணவை விரும்பினால் உண்பார்கள் இல்லையென்றால்விட்டு விடுவார்கள்.

ஹதீஸ் 3564. மாலிக் இப்னு புஹைனா அல் அஸதீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (தொழுகையில்) ஸஜ்தா செய்யும்போது தம் இரண்டு கைகளுக்குமிடையே (அதிக) இடைவெளி விடுவார்கள். எந்த அளவிற்கென்றால் நாங்கள் அவர்களின் இரண்டு அக்குள்களையும் பார்ப்போம்.

அறிவிப்பாளர் யஹ்யா இப்னு புகைர்(ரஹ்),'அவர்களின் இரண்டு அக்குள் வெண்மையை பார்ப்போம்'' என்று (அதிகப்படியாக) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3565. அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் பிரார்த்தனை எதிலும் தம் கைகளை (மிக உயரமாகத்) தூக்குவதில்லை மழை வேண்டிப் பிராத்திக்கையில் தவிர. ஏனெனில், அதில் அவர்கள் தம் இரண்டு கைகளையும் தம் அக்குள்களின் வெண்மை தெரியும் அளவிற்கு உயர்த்துவது வழக்கம்.

அபூ மூஸா(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள் மேலும், (அப்போது) தம் இரண்டு கைகளையும் உயர்த்தினார்கள்.

ஹதீஸ் 3566. அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்

(ஹஜ்ஜில்) நண்பகல் நேரத்தில் கடும் வெயிலின்போது நபி(ஸல்) அவர்கள்'அப்தஹ்' என்னுமிடத்தில் கூடாரத்தில் இருக்க, நான் அவர்களிடம் ஈர்க்கப்பட்டு சென்றேன். பிலால்(ரலி) வெளியே புறப்பட்டு வந்து தொழுகைக்காக அழைத்தார்கள் பிறகு, உள்ளே சென்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உளூச் செய்த தண்ணீரின் மிச்சத்தை வெளியே கொண்டு வந்தார்கள். உடனே, மக்கள் அதை அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து பிடுங்கிக் கொள்வதற்காக, அவர்களின் மீது விழுந்தார்கள். பிறகு, பிலால் உள்ளே சென்று ஈட்டியை வெளியே எடுத்து வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளியே வந்து, - (இப்போதும்) நான் நபி(ஸல்) அவர்களின் கால்களின் பிரகாசத்தைப் பார்ப்பது போன்றுள்ளது - ஈட்டியை நட்டு, பிறகு லுஹர் தொழுகையை இரண்டு ரக்அத்துகளாகவும்

அஸர் தொழுகையை இரண்டு ரக்அத்துகளாகவும் தொழுதார்கள். அப்போது அவர்களுக்கு முன்னால் கழுதையும் பெண்ணும் நடந்து சென்று கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 3567. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு விஷயத்தை பேசுகிறார்கள் என்றால், அதை (வார்த்தை வார்த்தையாக, எழுத்து எழுத்தாகக் கணக்கிட்டு) எண்ணக் கூடியவர் எண்ணியிருந்தால், ஒன்று விடாமல் எண்ணியிருக்கலாம். (அந்த அளவிற்கு நிறுத்தி நிதானமாக, தெளிவாகப் பேசி வந்தார்கள்.)

ஹதீஸ் 3568. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

"இன்னாரின் தந்தை (அபூ ஹுரைராவைத் தான் இப்படிக் குறிப்பிடுகிறார்கள் ஆயிஷா(ரலி).) உனக்கு வியப்பூட்டவில்லையா? அவர் வந்தார் என் அறையின் பக்கமாக அமர்ந்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து (தாம் கேட்டதை) என் காதில் விழுமாறு அறிவித்துக் கொண்டிருந்தார். நான் தஸ்பீஹ் செய்து கொண்டிருந்தேன். நான் என் தஸ்பீஹை முடிப்பதற்குள் அவர் எழுந்து (சென்று)விட்டார். நான் அவரைச் சந்தித்திருந்தால் அவரை (ஒன்றன் பின் ஒன்றாக விடுவிடுவென்று நபிமொழிகளை அறிவித்துக் கொண்டே சென்றதை)க் கண்டித்திருப்பேன். நீங்கள் ஹதீஸ்களை ஒன்றன் பின் ஒன்றாக, வேகவேகமாக அறிவிப்பதைப் போல் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவசர அவசரமாக அறிவித்ததில்லை" என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

## "நபி(ஸல்) அவர்களின் கண் மட்டுமே உறங்குகிறது அவர்களின் உள்ளம் உறங்குவதில்லை."

இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஜாபிர்(ரலி) அவர்களும் அவர்களிடமிருந்து ஸயீத் இப்னு மீனா(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3569. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம், 'ரமளான் மாதத்தி(ன் இரவுகளி)ல் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தொழுகை எப்படியிருந்தது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ரமளானிலும் மற்ற மாதங்களிலும் அவர்கள் பதினொரு ரக்அத்துகளுக்கு அதிகமாகத் தொழுததில்லை. (முதலில்) நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அதன் அழகையும் நீளத்தையும் பற்றிக் கேட்காதே. பிறகு நான்கு ரக்அத்துகள் தொழுவார்கள். அதன் அழகையும் நீளத்தையும் பற்றிக் கேட்காதே. பிறகு மூன்று ரக்அத்துகள் தொழுவார்கள். நான் 'இறைத்தூதர் அவர்களே! நீங்கள் வித்ரு (மூன்று ரக்அத்கள்) தொழுவதற்கு முன்னால் உறங்குவீர்களா?' என்று கேட்டேன். அவர்கள், 'என் கண் தான் உறங்குகிறது; என் உள்ளம் உறங்குவதில்லை' என்று பதிலளித்தார்கள்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3570. அப்துல்லாஹ் இப்னு அபீ நமிர்(ரஹ்) அறிவித்தார்

எங்களிடம் அனஸ் இப்னு மாலிக்(ரலி), நபி(ஸல்) அவர்கள் கஅபாவின் பள்ளிவாசலிலிருந்து (விண்ணுலகப் பயணத்திற்காக) அழைத்துச் செல்லப்பட்ட இரவைக் குறித்துப் பேசினார்கள்: நபி(ஸல்) அவர்களுக்கு (மீண்டும்) வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) வருவதற்கு முன்னால் அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமில் தூங்கிக் கொண்டிருந்தபோது (வானவர்களில்) மூன்று பேர் அவர்களிடம் வந்தார்கள். அவர்களில் முதலாமவர், 'இவர்களில் அவர் யார்?' என்று கேட்டார். அவர்களில்

நடுவிலிருந்தவர்,'இவர்களில் சிறந்தவர்'' என்று பதிலளித்தார். 82 அவர்களில் இறுதியானவர்,'இவர்களில் சிறந்தவரை (விண்ணுலகப் பயணத்திற்காக) எடுத்து வாருங்கள்'' என்று கூறினார். அன்றிரவு இது மட்டும் தான் நடந்தது. அடுத்த இரவில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் உள்ளம் பார்க்கிற நிலையில் -(உறக்கநிலையில்)- அம்மூவரும் வந்தபோது தான் அவர்களைக் கண்டார்கள். நபி(ஸல்) அவர்களின் கண்கள் இரண்டும் தான் உறங்கும் அவர்களின் உள்ளம் உறங்காது. இறைத் தூதர்கள் இப்படித்தான். அவர்களின் கண்கள் உறங்கும் அவர்களின் உள்ளங்கள் உறங்க மாட்டா. ஜிப்ரீல்(அலை) அவர்கள், நபி(ஸல்) அவர்களுக்குப் பொறுப்பேற்று அவர்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு வானத்தில் ஏறிச் சென்றார்கள்.

## இஸ்லா(த்தின் கால)த்தில் (வெளிப்பட்ட) நபித்துவத்தின் அடையாளங்கள்.

ஹதீஸ் 3571. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் (கைபரிலிருந்து திரும்பிக் கொண்டு) இருந்தோம். இரவின் ஆரம்பத்தில் நாங்கள் சென்று கொண்டிருந்தோம். அதிகாலை நேரத்தின் முகப்பை (இரவின் கடைசிப் பகுதியை) நாங்கள் அடைந்த பொழுது ஓய்வெடுப்பதற்காக (ஓரிடத்தில்) தங்கினோம். சூரியன் உச்சிக்கு வரும் வரை நாங்கள் எங்களையும் மீறிக் கண்ணயர்ந்து விட்டோம். உறக்கத்திலிருந்து கண்விழித்தவர்களில் அபூ பக்ரே முதலாமவராக இருந்தார். இறைத்தூதர் தாமாகக் கண்விழிக்காத வரை அவர்களை உறக்கத்திலிருந்து எவரும் எழுப்புவதில்லை. அடுத்து உமர்(ரலி) அவர்களும் கண் விழித்தார்கள். அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் தலைமாட்டில் அமர்ந்து கொண்டு குரலை உயர்த்தி'அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப்பெரியவன்' என்று கூறலானார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் கண்விழித்து (சிறிது தொலைவு சென்றதன்) பின் (தம் வாகனத்திலிருந்து) இறங்கி எங்களுக்கு அதிகாலைத் தொழுகையைத் தொழுகை நடத்தினார்கள். அப்போது ஒருவர் எங்களுடன் தொழாமல் கூட்டத்தாரைவிட்டுத் தனியே விலகியிருந்தார். நபி(ஸல்) அவர்கள் (தொழுகையை முடித்து) திரும்பியவுடன்,'இன்னாரே! எங்களுடன் நீ ஏன் தொழவில்லை?' என்று கேட்டார்கள். அவர்'எனக்குப்'பெருந் தொடக்கு' ஏற்பட்டுவிட்டது'' என்று கூறினார். உடனே, நபி(ஸல்) அவர்கள் மண்ணில்'தயம்மும்' செய்யும் படி அவருக்குக் கட்டளையிட்டார்கள். பிறகு அவர் தொழுதார். நபி(ஸல்) அவர்கள் என்னை ஒரு வாகனத்தில் தமக்கு முன்னால் அமர்த்தினார்கள். எங்களுக்குக் கடுமையானத்தாகம் ஏற்பட்டது. நாங்கள் பயணம் சென்று கொண்டிருக்கும்போது (ஒட்டகத்தின் மீது) தோலினாலான தண்ணீர்ப் பைகள் இரண்டிற்கிடையே தன் இரண்டு கால்களையும் தொங்கவிட்டிருந்த பெண்ணொருத்தியை நாங்கள் கண்டோம். அவளிடம் நாங்கள்,'தண்ணீர் எங்கே (உள்ளது)?' என்று கேட்டோம். அதற்கு அவள்,'தண்ணீர் (இங்கு) இல்லை'' என்று சொன்னாள். நாங்கள்,'உன் வீட்டாரு(ள்ள இந்தப் பகுதி)க்கும் தண்ணீ(ருள்ள இடத்து)க்கும் இடையே உள்ள தூரம் எவ்வளவு?' என்று கேட்டோம். அவள்,'ஒரு பகலும் ஓர் இரவும் (பயணம் செய்யும் தூரம்)'' என்று சொன்னாள். நாங்கள்,'இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நீ நட'' என்று சொன்னோம். அவள்,'இறைத்தூதர்(ஸல்) என்றால் யார்?' என்று கேட்டாள். அவளை (தண்ணீர் தரச்) சம்மதிக்க வைக்க எங்களால் முடியவில்லை. இறுதியில் அவளை அழைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் நாங்கள் சென்றோம். அவள் நபி(ஸல்)

அவர்களிடமும் எங்களிடம் பேசியதைப் போன்றே பேசினாள் தான் அனாதைக் குழந்தைகளின் தாய் என்று நபி(ஸல்) அவர்களிடம் சொன்னதைத் தவிர. உடனே, நபி(ஸல்) அவர்கள் அவளுடைய தண்ணீர்ப் பைகள் இரண்டையும் கொண்டு வரச் சொல்லிக் கட்டளையிட்டு அவற்றின் வாய்கள் இரண்டிலும் (தம் கரத்தால்) தடவினார்கள். தாகமுடனிருந்த நாங்கள் நாற்பது பேரும் தாகம் தீரும் வரை (அவற்றிலிருந்து) தண்ணீர் பரும்னோம். எங்களுடன் இருந்த ஒவ்வொரு தோல்ப் பையையும் ஒவ்வொரு தோல் பாத்திரத்தையும் நாங்கள் நிரப்பிக் கொண்டோம். (எங்கள்) ஒட்டகம் ஒன்றுக்கு மட்டும் (அதனால் தாக்குப் பிடிக்க முடியும் என்பதால்) தண்ணீர் குடிப்பாட்டவில்லை. அந்தத் தோல்ப் பை(தண்ணீர்) நிரம்பி வழிந்த காரணத்தால் (அதன்) வாய் பிளந்து போகவிருந்தது. பிறகு நபி(ஸல்) அவர்கள், 'உங்களிடம் இருக்கும் (உணவுப்) பொருள்களைக் கொண்டு வாருங்கள்'' என்று (தம் தோழர்களுக்கு) உத்திரவிட்டார்கள். (தோழர்களும் கொண்டு வந்து தர), நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணுக்காக ரொட்டித் துண்டுகளையும் பேரீச்சம் பழங்களையும் ஒன்று திரட்டி (அவளுக்கு வழங்கி)னார்கள். இறுதியில், 'அவள் தன் வீட்டாரிடம் சென்று, 'நான் மக்களிலேயே மிக வசீகரமான ஒருவரை, அல்லது அவர்கள் (முஸ்லிம்கள்) நம்புவதைப் போல் ஓர் இறைத்தூதரைச் சந்தித்தேன்'' என்று சொன்னாள். அல்லாஹ் (அவளுடைய) அந்தக் குலத்தாருக்கு அப்பெண்ணின் வாயிலாக நேர்வழியளித்தான். எனவே, அவளும் இஸ்லாத்தை ஏற்றாள் அவர்களும் இஸ்லாத்தை ஏற்றார்கள்.

ஹதீஸ் 3572. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், (மதீனாவிலுள்ள)'ஸவ்ரா' என்னுமிடத்தில் இருந்தபோது அவர்களிடம் (தண்ணீர் இருந்த) ஒரு பாத்திரம் கொண்டுவரப்பட்டது. அவர்கள் தம் கரத்தைப் பாத்திரத்தினுள் போட, அவர்களின் விரல்களுக்கிடையேயிருந்து தண்ணீர் (ஊற்று போல்) பொங்கி வரலாயிற்று. மக்கள் அனைவரும் (அந்தத் தண்ணீரில்) உளூச் செய்தார்கள்.

அறிவிப்பாளர் கதாதா(ரஹ்) கூறினார்:

நான் அனஸ்(ரலி) அவர்களிடம், 'நீங்கள் (மொத்தம்) எத்தனை பேர் இருந்தீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'முன்னூறு பேர்'' என்றோ, 'முன்னூறு பேர் அளவிற்கு'' என்றோ கூறினார்கள்.

ஹதீஸ் 3573. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(ஒரு நாள்) நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பார்த்தேன். அப்போது அஸர் தொழுகையின் நேரம் வந்து விட்டிருந்தது. உளூச் செய்யும் தண்ணீரைத் தேடியும் அவர்களுக்கு அது கிடைக்க வில்லை. இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், உளூச் செய்யும் தண்ணீர் (சிறிது) கொண்டு வரப்பட்டது. இறைத்தூதர்(ஸல்) அந்தப் பாத்திரத்தில் தம் கரத்தை வைத்தார்கள் பிறகு, அதிலிருந்து உளூச் செய்யும்படி மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் விரல்களுக்குக் கீழேயிருந்து தண்ணீர் ஊற்றெடுத்துப் பொங்கி வருவதை கண்டேன். மக்கள் (அதிலிருந்து) உளூச் செய்தார்கள். எந்த அளவிற்கென்றால் அவர்களில் கடைசி நபர் வரை (அதிலேயே) உளூச் செய்து முடித்தார்கள்.

ஹதீஸ் 3574. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், தம் பயணம் ஒன்றுக்காகப் புறப்பட்டார்கள். அப்போது அவர்களுடன் அவர்களின் தோழர்கள் சிலரும் இருந்தார்கள். அவர்கள் பயணம் செய்தபடி சென்று கொண்டிருந்தபோது தொழுகை நேரம் வந்துவிட்டது. அவர்கள் உளூச் செய்வதற்கான தண்ணீர் கிடைக்கவில்லை. பயணக் கூட்டத்திலிருந்து ஒருவர் சென்று சிறிதளவு தண்ணீருடன் கூடிய பாத்திரம் ஒன்றைக் கொண்டு வந்தார். நபி(ஸல்) அவர்கள் அதை எடுத்து உளூச் செய்தார்கள். பிறகு தம் நான்கு கை விரல்களைப் பாத்திரத்தின் மீது நீட்டி,'எழுந்து உளூச் செய்யுங்கள்'' என்று உத்திரவிட்டார்கள். மக்கள் அனைவரும் உளூச் செய்தனர். அவர்கள் விரும்பிய அளவிற்கு உளூச் செய்யும் தண்ணீரை அடைந்தனர். அவர்கள் எழுபது அல்லது (கிட்டத்தட்ட) அந்த அளவு எண்ணிக்கையினராக இருந்தனர்.

ஹதீஸ் 3575. அனஸ்(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) தொழுகை நேரம் வந்தது. (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு அருகில் வீடு அமைந்திருந்தவர்களெல்லாம் உளூச் செய்ய எழுந்தனர். (பள்ளிவாசல் அருகில் வீடில்லாத) ஒரு கூட்டத்தார் (உளூச் செய்ய வழியறியாமல்) எஞ்சியிருந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் தண்ணீருள்ள கல்லால் ஆன ஏனம் ஒன்று கொண்டு வரப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் (அதில்) தம் கையை வைத்(துப் பார்த்)தார்கள். அதில் நபி(ஸல்) தம் கரத்தை விரித்து வைக்கும் அளவுக்கு அந்தக்கல் ஏனம் பெரிதாக இருக்கவில்லை. எனவே, நபி(ஸல்) அவர்கள் தம் விரல்களை இணைத்து கல் ஏனத்தில் வைத்தார்கள். மக்கள் அனைவரும் (அதிலிருந்து) உளூச் செய்தனர்.

அறிவிப்பாளர் ஹுமைத்(ரஹ்) கூறினார்:

நான்,'அவர்கள் எத்தனை பேர் இருந்தார்கள்?' என்று கேட்டேன். அதற்கு அனஸ்(ரலி),'எண்பது பேர்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3576. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா உடன்படிக்கையின்போது மக்களுக்குத் தாகம் ஏற்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்களுக்கு முன்னால் தோல் குவளை ஒன்று இருந்தது. (அதிலிருந்து) நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். மக்கள் நபி(ஸல்) அவர்களை நோக்கி ஓடிவந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,'உங்களுக்கென்ன ஆயிற்று?' என்று கேட்டார்கள். மக்கள்,'தங்கள் முன்னாலுள்ள தண்ணீரைத் தவிர நாங்கள் உளூச் செய்வதற்கும் குடிப்பதற்கு வேறு தண்ணீர் எங்களிடம் இல்லை'' என்று பதிலளித்தனர். உடனே, நபி(ஸல்) அவர்கள் தம் கையைத் தோல் குவளையினுள் வைத்தார்கள். உடனே, அவர்களின் விரல்களுக்கிடையேயிருந்து ஊற்றுகளைப் போன்று தண்ணீர் பொங்கி வரத் தொடங்கியது. நாங்கள் அதிலிருந்து (தண்ணீர்) அருந்தினோம் மேலும் உளூச் செய்தோம்.

அறிவிப்பாளர் சாலிம் இப்னு அபில் ஜஅத்(ரஹ்) கூறினார்:

நான் ஜாபிர்(ரலி) அவர்களிடம்,'நீங்கள் எத்தனை பேர் இருந்தீர்கள்?' என்று கேட்டேன். அவர்கள்,'நாங்கள் ஒரு லட்சம் பேர் இருந்திருந்தாலும் கூட அது எங்களுக்குப் போதுமானதாக இருந்திருக்கும். நாங்கள் ஆயிரத்து ஐந்நூறு பேர் தாம் இருந்தோம்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3577. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா நிகழ்ச்சியின்போது நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். ஹுதைபிய்யா என்பது (மக்காவிலிருந்து மதீனா செல்லும் பாதையில் இருந்த) ஒரு கிணறாகும். நாங்கள் அதிலிருந்து (தண்ணீர்) இறைத்தோம். எந்த அளவுக்கென்றால் அதில் ஒரு சொட்டுத் தண்ணீரைக் கூட நாங்கள்விட்டு வைக்கவில்லை. நபி(ஸல்) அவர்கள் கிணற்றின் விளிம்பில் உட்கார்ந்தார்கள். பிறகு, சிறிது தண்ணீரை வரவழைத்து வாய் கொப்பளித்தார்கள். பிறகு (தம் வாயிலிருந்து நீரை) கிணற்றுக்குள் உமிழ்ந்தார்கள். நாங்கள் சிறிது நேரம் பொறுத்திருந்தோம். பிறகு, நாங்கள் தாகம் தீரும் வரையிலும், எங்கள் வாகனங்கள் தாகம் தீரும் வரையிலும்... அல்லது எங்கள் வாகனங்கள் (தாகம் தீர்ந்து) திரும்பும் வரையிலும்... நாங்கள் (அக்கிணற்றிலிருந்து தண்ணீர்) இறைத்தோம்.

ஹதீஸ் 3578. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அபூ தல்ஹா(ரலி) (தம் மனைவி) உம்மு சுலைம்(ரலி) அவர்களிடம்,'நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் குரலை பலவீனமானதாகக் கேட்டேன். அதில் நான் (அவர்களுக்கிருக்கும்) பசியைப் புரிந்து கொண்டேன். உன்னிடம் (உணவு) ஏதாவது இருக்கிறதா?' என்று கேட்டார்கள். அதற்கு உம்மு சுலைம்(ரலி),'ஆம், இருக்கிறது'' என்று கூறிவிட்டு வாற்கோதுமை ரொட்டித் துண்டுகள் சிலவற்றை எடுத்தார்கள். பிறகு, உம்மு சுலைம்(ரலி), தம் முகத்திரை ஒன்றை எடுத்து அதன் ஒரு பகுதியால் அதைச் சுருட்டி என் கை (அக்குளு)க்குக் கீழே அதை மறைத்து வைத்து அதன் ஒரு பகுதியில் என் கையைக் கட்டிவிட்டார்கள். பிறகு என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுப்பினார்கள். நான் அதைக் கொண்டு சென்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பள்ளிவாசலில் கண்டேன். அவர்களுடன் மக்கள் இருந்தனர். நான் அவர்களுக்கு முன் நின்றேன். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'உன்னை அபூ தல்ஹா அனுப்பினரா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம்'' என்றேன்.'உணவுடனா அனுப்பியுள்ளார்?' என்று கேட்டார்கள். நான்,'ஆம்'' என்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) தம்முடன் இருந்தவர்களிடம்,'எழுந்திருங்கள்'' என்று சொல்லிவிட்டு நடந்தார்கள். நான் அவர்களுக்கு முன்னால் நடந்தேன். இறுதியில், அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம் வந்து (நபி - ஸல் - அவர்கள் தம் தோழர்களுடன் வந்து கொண்டிருக்கும்) விபரத்தைத் தெரிவித்தேன். உடனே, அபூ தல்ஹா(ரலி) (என் தாயாரிடம்),'உம்மு சுலைமே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களுடன் வந்திருக்கிறார்கள். ஆனால், மக்களுடன் வந்திருக்கிறார்கள். ஆனால், நம்மிடம் அவர்களுக்கு உணவளிக்க எதுவுமில்லையே'' என்று கூறினார்கள். உம்மு சுலைம்(ரலி),'அல்லாஹ்வும், அவனுடைய தூதருமே அறிந்தவர்கள்'' என்று கூறினார்கள். உடனே, அபூ தல்ஹான (தாமே நபி-ஸல்- அவர்களை முன்சென்று வரவேற்பதற்காக) நடந்து சென்று இறைத்தூதர்(ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா தம்முடனிருக்க, உம்மு சுலைம் அவர்களை நோக்கிச் சென்று,'உம்மு சுலைமே! உன்னிடமிருப்பதைக் கொண்டு வா!"என்று கூறினார்கள். உடனே, அவர்கள் அந்த ரொட்டியைக் கொண்டு வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதைத் துண்டு துண்டாகப் பிய்க்கும்படி உத்திரவிட, அவ்வாறே அது பிய்க்கப்பட்டது. பிறகு, உம்மு சுலைம்(ரலி) தோல் பையிலிருந்து வெண்ணெய் எடுத்துப் பிழிந்து அதை உருக்கினார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறைவன் நாடியவற்றை (பிஸ்மில்லாஹ்வையும் மற்ற பிரார்த்தனைகளையும்) கூறினார்கள். பிறகு,'பத்து பேருக்கு (உள்ளே வர) அனுமதி கொடுங்கள்'' என்று (அபூ தல்ஹாவிடம்) கூறினார்கள். அவ்வாறே அவர்களுக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதி

கொடுத்தார்கள். பிறகு அவர்கள் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள், 'இன்னொரு பத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதி கொடுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அபூ தல்ஹா(ரலி) அனுமதி கொடுத்தார்கள். அவர்களும் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு, 'பத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதி கொடுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்களுக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதி கொடுத்தார்கள். பிறகு அவர்கள் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு, 'பத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதி கொடுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்களுக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதி கொடுத்தார்கள். பிறகு, அவர்கள் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். மக்கள் அனைவரும் (இவ்வாறே) வயிறு நிரம்பும் வரை உண்டார்கள். அப்படி உண்ட மக்கள் எழுபது அல்லது எண்பது பேர் இருந்தார்கள்.

ஹதீஸ் 3579. அல்கமா(ரஹ்) அவர்களிடம் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் வழமைக்கு மாறான நிகழ்வுகளை அருள்வளம் என்று எண்ணிக் கொண்டிருந்தோம். நீங்களோ அவற்றை அச்சுறுத்தல் என்று எண்ணுகிறீர்கள். நாங்கள் (ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். அப்போது தண்ணீர்ப் பற்றாக்குறை ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள், 'மீதமான தண்ணீர் ஏதும் இருக்கிறதா என்று தேடுங்கள்'' என உத்திரவிட்டார்கள். மக்கள் சிறிதளவே தண்ணீர் இருந்த ஒரு பாத்திரத்தைக் கொண்டு வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் தம் கரத்தைப் பாத்திரத்தில் நுழைத்து, 'அருள் வளமிக்க, தூய்மை செய்யும் தண்ணீரின் பக்கம் வாருங்கள். பரக்கத் - அருள்வளம் என்பது அல்லாஹ்விடமிருந்து கிடைப்பதாகும்'' என்று கூறினார்கள். அப்போது நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் விரல்களுக்கிடையேயிருந்து தண்ணீர் ஊற்றெடுத்துப் பொங்குவதைக் கண்டேன். (நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) உணவு உண்ணப்பட்டுக் கொண்டிருக்கும்போது அது இறைவனின் தூய்மையை எடுத்துரைப்பதாக - தஸ்பீஹ் செய்வதை நாங்கள் கேட்டிருக்கிறோம்.

ஹதீஸ் 3580. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

என் தந்தை, தம் மீது கடனிருக்கும் நிலையில் இறந்துவிட்டார். எனவே, நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'என் தந்தை, தம் மீதிருந்த கடனை (அடைக்காமல்) அப்படியேவிட்டுச் சென்றார். என்னிடம் அவரின் பேரீச்ச மரங்களின் விளைச்சலைத் தவிர வேறெதுவும் இல்லை. அந்தப் பேரீச்ச மரங்களின் பல ஆண்டுகளின் விளைச்சல் கூட அவரின் மீதுள்ள கடனை அடைக்கும் அளவிற்கு எட்டாது. எனவே, கடன்காரர்கள் என்னைக் கடும் சொற்களைப் பயன்படுத்தி ஏசாமலிருப்பதற்காக நீங்கள் என்னுடன் வாருங்கள்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள் (என்னுடன் வந்து) பேரீச்சம் பழங்களைச் சேமித்துக் காய வைக்கும் களங்களில் ஒன்றைச் சுற்றி நடந்து (பரக்கத் என்னும் அருள்வளம் வேண்டி) பிரார்த்திதார்கள். பிறகு மற்றொரு களத்தையும் சுற்றி நடந்தார்கள். (பிறகு அருள்வளம் வேண்டி பிரார்த்திதார்கள்) பிறகு அதன் அருகில் அமர்ந்து கொண்டு, 'அதை வெளியே எடுங்கள்'' என்று கூறினார்கள். கடன்காரர்களுக்குச் சேர வேண்டியதை நிறைவாகக் கொடுத்தார்கள். அவர்களுக்குக் கொடுத்த அதே அளவுக்கு அது மீதமாகி விட்டது.

ஹதீஸ் 3581. அப்துர் ரஹ்மான் இப்னு அபூ பக்ர்(ரலி) கூறினார்

திண்ணைத் தோழர்கள் ஏழைகளாக இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை,'எவரிடம் இரண்டு பேருக்கான உணவு உள்ளதோ, அவர் மூன்றாமவ(ராக திண்ணைத் தோழர் ஒருவ)ரைத் தம்முடன்) அழைத்துச் செல்லட்டும். எவரிடம் நான்கு பேருக்கான உணவு இருக்கிறதோ அவர் தம்முடன் ஐந்தாமவரையும் ஆறாமவரையும் அழைத்துச் செல்லட்டும்'' என்று கூறினார்கள்.

அல்லது நபி(ஸல்) அவர்கள் எப்படிக் கூறினார்களோ அதைப் போன்று.

அபூ பக்ர்(ரலி) மூன்று பேரை அழைத்து வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் பத்துபேருடன் நடந்தார்கள். (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) மூன்று பேரை அழைத்து வர, அப்போது வீட்டில் நானும் (அப்துர் ரஹ்மான்), என் தந்தையும் (அபூ பக்ர்) என் தாயும் (உம்மு ரூமான்), எங்கள் வீட்டிற்கும், (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்களின் வீட்டிற்கும் கூட்டாகப் பணி செய்து வந்த வந்த பணிப்பெண்ணும் தான் இருந்தோம்.

'என் மனைவியும்...' என்று அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) கூறினார்களா என்று எனக்குத் தெரியாது. (சந்தேகமாக இருக்கிறது) - என அறிவிப்பாளர் அபூ உஸ்மான்(ரஹ்) கூறினார்.

அபூ பக்ர்(ரலி) (விருந்தினருக்கு உணவளிக்குமாறு தம் வீட்டாரிடம் கூறிவிட்டு) நபி(ஸல்) அவர்களிடம் (சென்று) இரவு உணவு அருந்தினார்கள். பிறகு (நபியவர்களுடன்) இஷா தொழுகை தொழும் வரை அவர்களிடம் தங்கினார்கள். பிறகு (தொழுகையிலிருந்து) திரும்பி வந்து நபி(ஸல்) அவர்கள் இரவு உணவு அருந்தும் வரை (அங்கேயே) தங்கியிருந்தார்கள். (இவ்வாறு) இரவிலிருந்து அல்லாஹ் நாடிய ஒரு பகுதி கழிந்த பிறகு அபூ பக்ர்(ரலி) (தம் வீட்டிற்கு) வந்தார்கள். அவர்களின் மனைவி அவர்களிடம் உங்கள் விருந்தாளிகளை... அல்லது உங்கள் விருந்தாளியை உபசரிக்க வராமல் தாமதமானதற்கு என்ன காரணம்?' என்று கேட்டார்கள். அபூ பக்ர்(ரலி)'விருந்தினருக்கு நீ இரவு உணவை அளித்தாயா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,'நீங்கள் வரும்வரை உண்ண முடியாதென்று அவர்கள் மறுத்துவிட்டார்கள். (நம் வீட்டார்) அவர்களுக்கு முன் உணவை வைத்து உண்ணும்படி கூறியும் அவர்கள் (உண்ண மறுத்து) அவர்களை சும்மாயிருக்கச் செய்துவிட்டனர்'' என்று பதிலளித்தார்கள்.

(என் தந்தை அபூ பக்ர்(ரலி) நான் விருந்தாளிகளைச் சரியாக கவனிக்கவில்லை என்று என்னைக் கண்டிப்பார்கள் என்றஞ்சி) நான் சென்று ஒளிந்து கொண்டேன். அவர்கள்,'மடையா!"(என்று கோபத்துடன்) அழைத்து,'உன் மூக்கறுந்து போக!"என்று திட்டினார்கள். (தோழர்களை நோக்கி,)'நீங்கள் உண்ணுங்கள்'' என்று கூறிவிட்டு (தம் வீட்டாரை நோக்கி,'என்னை எதிர்பார்த்துத் தானே இவ்வளவு தாமத் செய்தீர்கள்!) நான் ஒருபோதும் இதை உண்ண மாட்டேன்'' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் ஒரு கவளத்தை எடுக்கும் போதெல்லாம் அதன் கீழ்ப்பகுதியிலிருந்து அதைவிட அதிகமாகிப் பெருகிக் கொண்டே வந்தது. இறுதியில் அவர்கள் வயிறு நிரம்பினர். அப்போது அந்த உணவு முன்பிருந்ததை விட அதிகமாம் விட்டிருந்தது. அபூ பக்ர்(ரலி) அதைப் பார்த்தார்கள். அப்போது அது முன்பிருந்த அளவு, அல்லது அதை விட அதிகமாக தென்பட்டது. உடனே அவர்கள் தம் துணைவியாரிடம்'பனு ஃபிராஸ் குலத்தாரின் சகோதரியே! (என்ன இது?)'' என்று கேட்க அவர்கள்,'என் கண் குளிர்ச்சியின் மீதாணையாக! இந்த உணவு மூன்று மடங்கு அதிகமாம் விட்டிருக்கிறது!"என்று கூறினார்கள். அதிலிருந்து அபூ பக்கர்(ரலி) அவர்களும் உண்டார்கள். மேலும்,'(நான்

ஒருபோதும் உண்ணமாட்டேன் என்று என்னை சத்தியம் செய்ய வைத்தது) ஷைத்தான் தான்'' என்று கூறினார்கள். பிறகு அதிலிருந்து (மேலும்) ஒரு கவளம் உண்டார்கள். பிறகு, அதை நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துச் சென்றார்கள். பிறகு, அது அவர்களிடம் இருக்கலாயிற்று. எங்களுக்கும் ஒரு சமுதாயத்திற்குமிடையே சமாதான ஒப்பந்தம் இருந்து வந்தது. ஒப்பந்தக் காலம் முடிவடைந்துவிட்டது. (இனி அவர்கள் போருக்கு வந்தால், அவர்களை எதிர் கொள்வதற்காக), நபி(ஸல்) அவர்கள் படையினருடன் (அந்த உணவிலிருந்து) அவர்களின் பங்கு (உணவு)தனையும் கொடுத்தனுப்பினார்கள். அவர்கள் அனைவரும் (அதிலிருந்து) உண்டார்கள்.

மற்றோர் அறிவிப்பில், (''எங்களைப் பன்னிரண்டு பேராகப் பிரித்து'' என்பதற்கு பதிலாக,)'எங்களில் பன்னிரண்டு பேரைத் தளபதிகளாக்கி'' என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 3582. அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் மதீனாவாசிகளைப் பஞ்சம் பீடித்தது. (அந்தக் கால கட்டத்தில்) நபி(ஸல்) அவர்கள் ஒரு ஜும்ஆ நாளில் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒரு (நாட்டுப்புற) மனிதர் எழுந்து,'இறைத்தூதர் அவர்களே! குதிரைகள் அழிந்துவிட்டன் ஆடுகளும் அழிந்துவிட்டன. எனவே, அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் அவன் மழை பொழியச் செய்வான்'' என்று கேட்டார். உடனே, நபி(ஸல்) அவர்கள், தம் கையை உயர்த்திப் பிரார்த்தனை செய்தார்கள். அப்போது, வானம் (மேகங்கள் இல்லாமல்) கண்ணாடியைப் போன்றிருந்தது. (நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தவுடன்) காற்று ஒன்று வேகமாக வீசி மேகக் கூட்டத்தைத் தோற்றுவித்தது. பிறகு, அந்த மேகக் கூட்டம் ஒன்று திரண்டது. பிறகு, வானம் மழையைப் பொழிந்தது. நாங்கள் தண்ணீரில் மூழ்கியபடி (பள்ளிவாசலிலிருந்து) வெளியே வந்து எங்கள் இல்லங்களை அடைந்தோம். அடுத்த ஜும்ஆ (நாள்) வரை எங்களுக்கு மழை பொழிந்து கொண்டேயிருந்தது. எனவே, (மழை பெய்விக்கும்படி) இறைவனிடம் பிரார்த்திக்கச் சொன்ன) அந்த மனிதர்... அல்லது வேறொரு மனிதர்... நபி(ஸல்) அவர்கள் முன் எழுந்து நின்று,'இறைத்தூதர் அவர்களே! (அடை மழையின் காரணத்தால்) வீடுகள் இடிந்துவிட்டன. எனவே, அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள் அவன் மழையை நிறுத்திவிடுவான்'' என்று கூறினார். அதைக்கேட்ட நபி(ஸல்) அவர்கள்,'புன்னகை புரிந்து,'(இறைவா!) எங்களைச் சுற்றிலும் (எங்களுக்கு நன்மை ஏற்படும் விதத்தில்) மழையைப் பொழி! எங்களின் மீது (எங்களுக்குக் கேடு நேரும் விதத்தில்) மழை பொழியச் செய்யாதே!"என்று பிரார்த்ததித்தார்கள். நான் மேகத்தை நோக்கினேன். அது பிளவு பட்டு மதீனாவைச் சுற்றிலும் ஒரு மாலை போல் வளையமிட்டிருந்தது.

இது அறிவிப்பாளர்களின் இரண்டு தொடர்கள் வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3583. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தூணாக இருந்த) ஒரு பேரீச்ச மரத்தின் அடிப்பகுதியின் மீது சாய்ந்தபடி உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் (மிம்பர்) உரைமேடையை அமைத்த பின்னால் அதற்கு மாறிவிட்டார்கள். எனவே, (நபி-ஸல்- அவர்கள் தன்னைப் பயன்படுத்தாததால் வருத்தப்பட்டு) அந்த மரம் ஏக்கத்துடன் முனகியது. உடனே, நபி(ஸல்) அவர்கள் அதனிடம் சென்று (அதை அமைதிப்படுத்துவதற்காக) அதன் மீது தன் கையை வைத்து (பரிவுடன்) வருடிக் கொடுத்தார்கள்.

மேலும், இரண்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் இது அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3584. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஜும்ஆ நாளின்போது (பள்ளிவாசலில் தூணாக இருந்த) ஒரு மரம்... அல்லது பேரீச்ச மரத்தின்.... (அடிப்பாகத்தின்) மீது சாய்ந்த படி (உரையாற்றிய வண்ணம்) நின்றிருந்தார்கள். அப்போது ஓர் அன்சாரிப் பெண்மணி... அல்லது ஓர் அன்சாரித் தோழர்..,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் உங்களுக்கு ஓர் உரை மேடை (மிம்பர்) செய்து தரலாமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் விரும்பினால் (செய்து கொடுங்கள்)'' என்று பதிலளித்தார்கள். அவ்வாறே அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு (மிம்பர்) உரை மேடை ஒன்றைச் செய்து கொடுத்தார்கள். ஜும்ஆ நாள் வந்தபோது நபி(ஸல்) அவர்கள் (உரை நிகழ்த்திட) உரைமேடைக்குச் சென்றார்கள். உடனே, அந்தப் பேரீச்ச மரக்கட்டை குழந்தையைப் போல் தேம்பிய (படி அமைதியாகிவிட்ட)து. நபி(ஸல்) அவர்கள்,'தன் மீது (இருந்தபடி உரை நிகழ்த்தும் போது) அது கேட்டுக் கொண்டிருந்த நல்லுபதேசத்தை நினைத்து ('இப்போது நம் மீது அப்படி உபதேச உரைகள் நிகழ்த்தப்படுவதில்லையே' என்று ஏங்கி) இது அழுது கொண்டிருந்தது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3585. ஜாபிர் பன் அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

(நபி - ஸல் - அவர்களின்) பள்ளிவாசலுக்கு பேரீச்ச மரத்தின் அடித்தண்டுகளை (தூண் கழிகளாகப்) பயன்படுத்திக் கூரை அமைக்கப்பட்டிருந்தது. நபி(ஸல்) அவர்கள் உரை நிகழ்த்தியபோது அவற்றில் ஒன்றின் மீது சாய்ந்து கொண்டு நிற்பது வழக்கம். அவர்களுக்காக ஓர் உரை மேடை (மிம்பர்) தயாரிக்கப்பட்டபோது அதன் மீது அவர்கள் (உரை நிகழ்த்திட) நின்றார்கள். அப்போது அது, (பத்து மாத) சினை ஒட்டகத்தைப் போன்று முனகுவதை நாங்கள் செவியுற்றோம். இறுதியில், நபி(ஸல்) அவர்கள் (இறங்கி) வந்து தம் கரத்தை அதன் மீது (அமைதிப்படுத்துவதற்காக) வைத்தார்கள். உடனே, அது அமைதியடைந்தது.

ஹதீஸ் 3586. ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்

உமர் இப்னு கத்தாப்(ரலி),'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இனி தலை தூக்கவிருக்கும் ஃபித்னா) குழப்பத்தைப் பற்றிச் சொன்னதை நினைவில் வைத்திருக்கிறார் உங்களில் யார்?' என்று கேட்டார்கள். நான்,'நபி(ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்றே நான் அதை நினைவில் வைத்திருக்கிறேன்'' என்று சொன்னேன். உமர்(ரலி),'அதைக் கூறுங்கள், நீங்கள் தான் (நபி - ஸல் - அவர்களிடம்) துணிச்சலுடன் (கேள்வி கேட்டு விளக்கம் பெறக் கூடியவர்களாய்) இருந்தீர்கள்'' என்று கூறினார்கள். நான்,'ஒரு மனிதன் தன் குடும்பத்தினர் விஷயத்தில் (அவர்களின் மீது அளவு கடந்து நேசம் வைப்பதன் மூலமும்), தன்னுடைய செல்வம் விஷயத்தில் (அது இறைவழிப்பட்டிலிருந்து கவனத்தைத் திருப்புவதன் மூலமும்,) தன் அண்டை வீட்டார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளில் குறை வைப்பதன் மூலமும்) ஃபித்னாவில் (சோதனையில்) ஆழ்த்தப்படும்போது, தொழுகை, தர்மம், நன்மை புரியும்படி கட்டளையிட்டு, தீமையிலிருந்து தடுத்தல் ஆகியவை அதற்கான பரிகாரமாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்'' என பதில் கூறினேன். உமர்(ரலி),'நான் ('சோதனை' என்னும் பொருள் கொண்ட ஃபித்னாவான) இதைக் கேட்கவில்லை. கடல் அலையைப் போன்று அடுக்கடுக்காக ஏற்படக்கூடிய (நபி - ஸல் -

அவர்களால் முன்னறிவிக்கப்பட்ட குழப்பம் என்னும் பொருள் கொண்ட ஃபித்னா)வைப் பற்றியே கேட்கிறேன்'' என்று கூறினார்கள். நான், 'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. (உங்கள் காலத்தில் அவற்றில் எதுவும் தலைதூக்கப் போவதில்லை.) உங்களுக்கும் அவற்றுக்குமிடையே மூடப்பட்ட கதவொன்று உள்ளது' எனக் கூறினேன். உடனே, உமர்(ரலி), 'அந்தக் கதவு திறக்கப்படுமா! அல்லது உடைக்கப்படுமா?' என்று கேட்டார்கள். நான், 'அது உடைக்கப்படும்'' என்று பதில் சொன்னேன். அதற்கு உமர்(ரலி), 'அது (உடைக்கப்பட்டால்) பின்னர் (மறுமை நாள் வரை) மூடப்படாமலிருக்கவே அதிகம் வாய்ப்புண்டு'' என்று கூறினார்கள்.

(அறிவிப்பாளர் அபூ வாயில்(ரஹ்) கூறினார்கள்:)

நாங்கள் (ஹுதைஃபா - ரலி - அவர்களிடம்), 'உமர்(ரலி) அந்தக் கதவு எதுவென்று அறிந்திருந்தார்களா?' என்று கேட்டோம். ஹுதைஃபா(ரலி), 'ஆம், நாளை (காலை) வருவதற்கு முன்பு இரவொன்று உள்ளது என்பதை அறிவது போல் உமர்(ரலி) அதை அறிந்திருந்தார்கள். ஏனெனில், பொய்கள் கலவாத செய்தியையே நான் அவருக்கு அறிவித்தேன்'' என்று பதிலளித்தார்கள். அந்தக் கதவு எதுவென ஹுதைஃபா(ரலி) அவர்களிடம் கேட்க நாங்கள் அஞ்சினோம். எனவே, மஸ்ரூக் என்பாரை அவரிடம் கேட்கச் சொன்னோம். அவர் கேட்டதற்கு ஹுதைஃபா(ரலி), '(அந்தக் கதவு) உமர்(ரலி) தாம்'' என்று பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3587. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

முடியாலான செருப்புகளை அணிந்திருக்கும் ஒரு சமுதாயத்தினரோடு நீங்கள் போரிடாத வரையிலும், சிறிய கண்களும் சிவந்த முகங்களும் சப்பை மூக்குகளும், தோலால் மூடப்பட்ட கேடயங்களைப் போன்ற (அகலமான) முகங்களும் கொண்ட துருக்கியருடன் நீங்கள் போரிடாத வரையிலும் உலக முடிவு நாள் வராது.

ஹதீஸ் 3588. இந்த ஆட்சியதிகாரத்தில் தாம் சிக்கிக் கொள்ளும் வரை அதை அதிகமாக வெறுப்பவர்களை மக்களில் சிறந்தவர்களாக நீங்கள் காண்பீர்கள். (குணங்கள் மற்றும் ஆற்றல்களைப் பொருத்த வரை) மக்கள் சுரங்கங்கள் (போன்றவர்கள்) ஆவர். அவர்களில் அறியாமைக் காலத்தில் சிறந்தவர்களாயிருந்தவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய பின்பும் சிறந்தவர்களாயிருப்பார்கள்.

ஹதீஸ் 3589. (எனக்குப் பின்) உங்களிடையே ஒரு காலம் வரும். அப்போது என்னைக் காண்பது உங்கள் மனைவி மக்கள், செல்வம் ஆகியன (உங்களுடன்) இருப்பதை விடவும் உங்களுக்கு மிகப் பிரியமானதாயிருக்கும்.

இந்த மூன்று ஹதீஸ்களையும் அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3590. நபி(ஸல்) அவர்கள் அறிவித்தார்

நீங்கள் (அரபியரல்லா) அந்நியர்களில்'கூஸ்' வாசிகளுடனும்'ம்ர்மான்' வாசிகளுடனும் போரிடாதவரை உலக முடிவு நாள் வராது. அவர்கள் சிவந்த முகங்களும் சப்பையான மூக்குகளும் சிறிய கண்களும் உடையவர்கள். அவர்களின் முகங்கள் தோலால் மூடப்பட்ட (அகன்ற) கேடயங்களைப் போன்றிருக்கும். அவர்கள் முடியாலான செருப்புகளை அணிந்திருப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் யஹ்யா(ரஹ்) அவர்களைப் போன்றே மற்றவர்களும் இதே நபிமொழியை அப்துர் ரஸ்ஸாக் இப்னு ஹம்மாம்(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3591. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம் சென்றோம். அவர்கள், 'நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் மூன்றாண்டுகள் (மிக நெருக்கமான) தோழமை கொண்டிருந்தேன். என் வாழ்நாளிலேயே அந்த மூன்றாண்டுகளில் ஆசைப்பட்டதை விட அதிகமாக நபி மொழிகளை நினைவில் வைக்க நான் வேறெப்போதும் ஆசைப்பட்டதில்லை" என்று சொல்லிவிட்டு, தம் கையால் இப்படிச் சைகை செய்து, 'நபி(ஸல்) அவர்கள், 'உலக இறுதி நாள் வருவதற்கு முன்னால் நீங்கள் முடியாலான செருப்பு அணிந்திருக்கும் ஒரு சமுதாயத்தினரோடு போரிடுவீர்கள். அவர்கள் வெட்ட வெளியில் தோன்றி உங்களுடன் போராடுவார்கள்' என்று கூற கேட்டேன்" என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்), 'அவர்கள் பாலை வெளியில் வசிப்பவர்கள்" என்று ஒரு முறை கூறினார்கள்.

ஹதீஸ் 3592. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறுதித் தீர்ப்பு நாளுக்கு முன்பாக நீங்கள் முடியாலான செருப்புகளை அணியும் ஒரு சமுதாயத்தாருடன் போர்புரிவீர்கள். மேலும், தோலால் மூடிய (அகன்ற) கேடயங்களைப் போன்ற முகங்களைக் கொண்ட ஒரு சமுதாயத்தாருடன் போரிடுவீர்கள்.

என அம்ர் இப்னு தக்லிப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3593. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

யூதர்கள் உங்களுடன் போர் புரிவார்கள். அவர்களின் மீது (போரில்) உங்களுக்கு வெற்றியளிக்கப்பட்டு ஆதிக்கம் வழங்கப்படும். எந்த அளவுக்கென்றால், கல் கூட, 'முஸ்லிமே! இதோ, என் பின்னால் யூதன் ஒருவன் (ஒளிந்து கொண்டு) இருக்கிறான். அவனைக் கொன்றுவிடு" என்று கூறும்.

ஹதீஸ் 3594. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் போருக்குச் செல்கிற காலம் ஒன்று வரும். அப்போது, 'இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டவர் எவரேனும் உங்களிடையே இருக்கிறார்களா?' என்று வினவப்படும். அவர்கள், 'ஆம்" என்று பதிலளிப்பார்கள். உடனே அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும். பிறகு அவர்கள் புனிதப் போர் புரிவார்கள். அப்போது அவர்களிடம், 'அல்லாஹ்வின் தூதருடன் தோழமை கொண்டவர்களுடன் தோழமை கொண்டவர்கள் எவரேனும் உங்களிடையே இருக்கிறார்களா?' என்று கேட்கப்படும். அவர்கள், 'ஆம், இருக்கிறார்கள்" என்று பதிலளிப்பார்கள். உடனே, அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3595. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களிடம் இருந்தபோது ஒருவர் அவர்களிடம் வந்து (தன்னுடைய) வறுமை நிலை பற்றி முறையிட்டார். பிறகு மற்றொருவர் அவர்களிடம் வந்து, வழிப்பறி பற்றி முறையிட்டார். உடனே, நபி(ஸல்) அவர்கள்,'அதீயே! நீ'ஹீரா' வைப்பார்த்ததுண்டா?' என்று கேட்டார்கள்.'நான் அதைப் பார்த்ததில்லை. ஆனால், அது பற்றி எனக்கு சொல்லப்பட்டிருக்கிறது‘' என்று பதிலளித்தேன். அவர்கள்,'நீ நீண்ட நாள் வாழ்ந்தால், நீ நிச்சயம் பார்ப்பாய். ஒட்டகச் சிவிகையில் அமர்ந்திருக்கும் ஒரு பெண் இறையில்லம் கஅபாவை வலம்வருவதற்காக (வலம் வருவதற்காக)ப் பயணித்து ஹீராவிலிருந்து வருவாள். அவள் (வழியில்) அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்கும் அஞ்ச மாட்டாள்‘' என்று கூறினார்கள். - நான் என் மனத்திற்குள்,'அப்படியென்றால் நாட்டையே தன் அராஜகத்தால் நிரப்பிவிட்ட'தய்யி' குலத்து வழிப்பறிக் கொள்ளையர்கள் (அப்போது) எங்கே சென்று விட்டிருப்பார்கள்?' 1 என்று கேட்டுக் கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் (தொடர்ந்து),'நீ நீண்ட நாள் வாழ்ந்தால் குஸ்ரூ (பாரசீகப் பேரரசன் கிஸ்ரா)வின் கருவூலங்கள் வெற்றி கொள்ளப்படுவதை நீ பார்ப்பாய்‘' என்று கூறினார்கள். நான்,'(மாபெரும் வல்லரசுக்குச் சொந்தரக்காரரான) கிஸ்ரா இப்னு ஹுர்முஸ் தான் (தோற்கடிக்கப்படுவார்)‘' என்று பதிலளித்தார்கள். (மேலும் கூறினார்கள்:) உனக்கு வாழ்நாள் நீண்டிருந்தால் ஒருவர் தன்னுடைய கை நிறைய தங்கத்தை, அல்லது வெள்ளியை எடுத்துக்கொண்டு அதைப் பெறுபவரைத் தேடியலைவார். ஆனால், அ(ந்தத் தர்மத்)தை ஏற்கும் எவரையும் அவர் காணமாட்டார். இதையும் நீ பார்ப்பாய். உங்களில் ஒருவர் அல்லாஹ்வைச் சந்திக்கும் (மறுமை) நாளில், அவருக்கும் அவனுக்குமிடையே மொழிபெயர்த்துச் சொல்லும் மொழிபெயர்ப்பாளர் எவரும் இல்லாத நிலையில் அவனைச் சந்திப்பார். அப்போது அல்லாஹ்,'நான் உனக்கு ஒரு தூதரை அனுப்பினேனே, அவர் உனக்கு (என் செய்தியை) எடுத்துரைக்கவில்லையா?' என்று கேட்பான். அவர்,'ஆம், (எடுத்துரைத்தார்)‘' என்று பதிலளிப்பார். பிறகு அல்லாஹ்,'உனக்கு நான் செல்வத்தைத் தந்து உன்னை நான் மேன்மைப்படுத்தவில்லையா?' என்று கேட்பான். அவர்,'ஆம் (உண்மை தான்)‘' என்பார். பிறகு அவர்,'ஆம் (உண்மைதான்)‘' என்பார். பிறகு அவர் தன் வலப்பக்கம் பார்ப்பார் அங்கு நரகத்தைத் தவிர வேறெதையும் காணமாட்டார். தன் இடப்பக்கம் பார்ப்பார் நரகத்தைத் தவிர வேறெதையும் காண மாட்டா. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) தொடர்ந்து கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்கள்,'பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தாவது நரகத்திலிருந்து (உங்களைக்) காத்துக் கொள்ளுங்கள். எவரிடம் பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டு கூட இல்லையோ அவர் நல்ல சொல் ஒன்றைக் கொண்டாவது (நரகத்திலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளட்டும்)‘' என்று சொல்லக் கேட்டேன்.

மேலும்,'ஒட்டகச் சிவிகையில் இருக்கும் பெண் ஒருத்தி ஹீராவிலிருந்து கஅபாவை வலம் வருவதற்காக அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் அஞ்சாதவளாகப் பயணம் செய்து வருவதை (என் கண்களால்) பார்த்தேன். (பாரசீக மன்னன்) கிஸ்ரா இப்னு ஹுர்முஸின் கருவூலங்களை வென்றவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன். நீங்கள் நீண்ட நேரம் வாழ்ந்தால்'ஒருவன் தங்கத்தையோ வெள்ளியையோ கைநிறைய அள்ளிக்கொண்டு அதை தர்மமாக ஏற்றுக் கொள்பவரைத் தேடியலைவதை நீ பார்ப்பாய்‘' என்று அபுல் காஸிம் நபி(ஸல்) அவர்கள் சொன்னதையும் நீங்கள் நிச்சயம் (நடை முறையில்) காண்பீர்கள்.

இதே நபிமொழி வேறோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் அதீ(ரலி) வாயிலாகவே அறிவிக்கப்படுகிறது. அது,'நான் நபி(ஸல்) அவர்களிடம் இருந்தேன்" என்று தொடங்குகிறது.

ஹதீஸ் 3596. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் புறப்பட்டு வந்து, இறந்தவர்களுக்காக (ஜனாஸாத் தொழுகை) தொழுகை நடத்தியதைப் போன்று உஹுதுப் போர் உயிர்த் தியாகிகளுக்காக (ஜனாஸாத் தொழுகை) தொழுகை நடத்தினார்கள். பிறகு, மிம்பருக்குத் திரும்பி வந்து,'(உங்களுக்கு முன்னேற்பாடுகளைச் செய்து வைப்பவனைப் போல்) நான் உங்களுக்கு முன்பே (ஹவ்ளுல் கவ்ஸர் எனும் சொர்க்கத் தடாகத்திற்குச்) செல்கிறேன். நான் (அப்போது) உங்களுக்கு சாட்சியம் கூறுவேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இப்போது (கவ்ஸர் எனும்) என்னுடைய தடாகத்தைக் காண்கிறேன். மேலும், எனக்கு பூமியின் கருவூலங்களின் திறவு கோல்கள் வழங்கப்பட்டுள்ளன. மேலும், அல்லாஹ்வின் மீதாணையாக! என(து இறப்பு)க்குப் பின்னால் நீங்கள் இணைவைப்பார்களாக ஆம் விடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை. எனினும் நீங்கள் உலகத்திற்காக ஒருவரோடொருவர் போட்டி போடுவீர்களோ என்றே நான் அஞ்சுகிறேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3597. உஸாமா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மதீனாவின்) கோட்டைகளில் ஒரு கோட்டையின் மீது ஏறிக் கொண்டு (நோட்டமிட்டபடி) கூறினார்கள்:'நான் பார்க்கிறவற்றை நீங்கள் பார்க்கிறீர்களா? உங்கள் வீடுகள் நெடும்லும் மழைத் துளிகள் விழுமிடங்களில் குழப்பங்கள் விளையப் போவதை நான் பார்க்கிறேன். என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3598. ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) என்னிடம் நடுங்கியபடி வந்து,'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணத்தால் அரபுகளுக்குப் பேரழிவு நேரவிருக்கிறது. இன்று யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இந்த அளவிற்குத் திறக்கப்பட்டுள்ளது" என்று கூறிவிட்டு, தம் பெருவிரலாலும் அதற்கு அடுத்துள்ள விரலாலும் வளையமிட்டுக் காட்டினார்கள். உடனே நான்,'இறைத்தூதர் அவர்களே! எங்களிடையே நல்லவர்கள் (வாழ்ந்து கொண்டு) இருக்க (இறைவனின் தண்டனை இறங்கி) நாங்கள் அழிந்து போவோமா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆம்! பாவங்கள் அதிகரித்துவிட்டால் (தீயவர்களுடன் நல்லவர்களும் சேர்ந்தே அழிக்கப்படுவார்கள்)" என்று பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3599. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

(ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் (தூக்கத்திலிருந்து) விழித்தெழுந்து,'சுப்ஹானல்லாஹ் - அல்லாஹ் தூயவன்! எவ்வளவு பெரும் கருவூலங்களெல்லாம் (வானிலிருந்து பூமிக்கு) இறக்கியருளப்பட்டிருக்கின்றன! எவ்வளவு பெரிய குழப்பங்கள் எல்லாம் (பூமிக்கு) அனுப்பப்பட்டிருக்கின்றன!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3600. அப்துல்லாஹ் இப்னு அபீ ஸஅஸஆ(ரஹ்) அறிவித்தார்

அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) என்னிடம்,'நான் உங்களை ஆடுகளை விரும்பக் கூடியவராகவும் அதை வைத்துக் கொண்டு பராமரிப்பவராகவும் பார்க்கிறேன். எனவே, அவற்றைச் சரிவரப் பராமரித்துச் சீராக வைத்துக் கொள்ளுங்கள். அவற்றை மேய்ப்பவர்களையும் சரிவரப் பராமரியுங்கள். ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மக்களின் மீது ஒரு காலம் வரும். அப்போது ஒரு முஸ்லிமின் செல்வத்திலேயே சிறந்ததாக ஆடுகள் தான் இருக்கும். குழப்பங்கள் விளையும் நேரங்களில் அவற்றிலிருந்து தம் மார்க்கத்தைப் பாதுகாத்துக் கொள்ள விரண்டோடியபடி அந்த ஆடுகளை ஓட்டிக்கொண்டு அவன் மழைபொழியும் இடங்களில் ஒன்றான மலையுச்சிக்குச் சென்றுவிடுவான்'' என்று சொன்னதை கேட்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3601. 'விரைவில் நிறையக் குழப்பங்கள் தோன்றும். (அந்த நேரத்தில்) அவற்றுக்கிடையே (மௌனமாம்) அமர்ந்திருப்பவன் (அவற்றுக்காக) எழுந்து நிற்பவனை விடச் சிறந்தவன் ஆவான். அவற்றுக்கிடையே எழுந்து நிற்பவன் (அவற்றை நோக்கி) நடந்து சென்று விடுபவனை விடச் சிறந்தவன் ஆவான். அப்போது நடந்து சென்று விடுபவன் (அவற்றை நோக்கி) ஓடுபவனை விடச் சிறந்தவன் ஆவான். அதை அடைகிறவரை அது வீழ்த்தி அழித்துவிடமுனையும். அப்போது, புகலிடத்தையோ, அபயம் தரும் இடத்தையோ பெறுகிறவர் அதைக் கொண்டு பாதுகாப்பு பெறட்டும். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3602. இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

அபூ ஹுரைரா(ரலி) அறிவித்த (மேற்கண்ட) இந்த நபிமொழியைப் போன்று நவ்ஃபல் இப்னு முஆவியா(ரலி) அவர்களிடமிருந்து அப்துர் ரஹ்மான் இப்னு முதீஉ இப்னி அஸ்வத்(ரஹ்) அவர்களும் அவர்களிடமிருந்து அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மான் இபனி ஹாரிஸ்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

எனினும், இந்த அறிவிப்பில் அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்),'தொழுகையில் ஒரு தொழுகை (அஸர்) உண்டு ஒருவருக்கு அது தவறிவிடுமாயின் அது அவரின் மனைவி மக்களும் அவரின் செல்வமும் பறிக்கப்பட்டுவிட்டதைப் போன்றதாகும்'' என்னும் நபிவாசகத்தை அதிகப்படியாகக் கூறினார்கள்.

ஹதீஸ் 3603. இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை)'விரைவில் (அன்சாரிகளான) உங்களை விடப் பிறருக்கு (ஆட்சியதிகாரத்தில் அல்லது வெற்றி கொள்ளப்படும் நாட்டின் நிதிகளைப் பங்கிடுவதில்) முன்னுரிமை வழங்கப்படும். இன்னும் நீங்கள் வெறுக்கிற சில காரியங்கள் நடக்கும்.' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,'இறைத்தூதர் அவர்களே! அப்போது நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று நீங்கள் கட்டளையிடுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'உங்களின் மீதுள்ள கடமைகளை நிறைவேற்றுங்கள். உங்களுக்குரிய உரிமைகளை அல்லாஹ்விடம் கேளுங்கள்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3604. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இந்தக் குறைஷிக் குலத்தவர்(களில் சிலர்) மக்களை அழித்து விடுவார்கள்'' என்று கூறினார்கள். மக்கள்,'(அப்படி ஒரு நிலை வந்தால்) நாங்கள் என்ன செய்யவேண்டுமென்று நீங்கள் கட்டளையிடுகிறீர்கள்?' என்று

கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'அவர்களிடமிருந்து மக்கள் விலம்வாழ்ந்தால் நன்றாயிருக்கும்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3605. ஸயீத் அல் உமவி(ரஹ்)அவர்கள் கூறினார்

நான் (முஆவியா - ரலி - அவர்களின் ஆட்சிக் காலத்தில், ஆளுநர்) மர்வான் இப்னி ஹகம் அவர்களுடனும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களுடனும் இருந்தேன். அப்போது அபூ ஹுரைரா(ரலி), உண்மையாளரும் உண்மைப்படுத்தப்பட்டவருமான நபி(ஸல்) அவர்கள்'குறைஷிகளில் சில இளைஞர்க(ளான ஆட்சியாளர்க)ளின் கைகளால் தான் என்னுடைய (இன்றைய) சமுதாயத்தின் அழிவு உண்டு' எனக் கூறக்கேட்டேன்'' என்றார்கள். உடனே மர்வான், அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம்,'இளைஞர்களா?' என்று கேட்க, அபூ ஹுரைரா(ரலி) அவர்களை,'இன்னாரின் சந்ததிகள், இன்னாரின் மக்கள்' என்று தனித்தனியே பெயர் குறிப்பிட்டுச் சொல்வேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3606. ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அறிவித்தார்

மக்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நன்மையைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நான் நபி அவர்களிடம் தீமையைப் பற்றிக் கேட்டேன். அது என்னைத் தீண்டிவிடுமோ என்று அஞ்சிய காரணத்தால் தான் (அதைப் பற்றிக் கேட்டேன்.) நான்,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் அறியாமைக் கால மாச்சரியத்திலும், தீமையிலும் மூழ்கிக் கிடந்தோம். அப்போது அல்லாஹ் (இஸ்லாம் எனும்) நன்மையை எங்களிடம் கொண்டு வந்தான். இந்த நன்மைக்குப் பிறகு ஒரு தீமை (குழப்பம்) இருக்கிறதா?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'ஆம் (இருக்கிறது)'' என்று பதிலளித்தார்கள். நான்,'இந்தத் தீமைக்குப் பிறகு நன்மை ஏதும் இருக்கிறதா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'ஆம். ஆனால், அதில் சற்று கலங்கலான நிலை (குழப்பம்) இருக்கும். என்று பதிலளிக்க நான்,'அந்தக் கலங்கலான நிலை என்ன?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஒரு சமுதாயத்தார் என்னுடைய நேர்வழியில்லாத ஒன்றைக் கொண்டு பிறருக்கு வழி காட்டுவார்கள். அவர்களில் நன்மையையும் நீ காண்பாய் தீமையையும் காண்பாய்'' என்று பதிலளித்தார்கள். நான்,'அந்த நன்மைக்குப் பிறகு ஒரு தீமை உண்டா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆம், நரகத்தின் வாசல்களுக்கு (வருமாறு) அழைப்பவர்கள் சிலர் தோன்றுவார்கள். அவர்களின் அழைப்பை ஏற்பவனை நரகத்தில் அவர்கள் எறிந்து விடுவார்கள்'' என்று பதிலளித்தார்கள். நான்,'இறைத்தூதர் அவர்களே! அவர்க(ளுடைய அடையாளங்க)ளை எங்களுக்குத் தெரிவியுங்கள்'' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,'அவர்கள் நம் இனத்தைச் சேர்ந்தவர்களாகவேயிருப்பார்கள் நம் மொழிகளாலேயே பேசுவார்கள்'' என்று பதிலளித்தார்கள். நான்,'நான் இந்த (மனிதர்களைச் சந்திக்கும்) நிலையை அடைந்தால் என்ன (செய்ய வேண்டுமென்று) எனக்குக் கட்டளையிடுகிறீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நீ முஸ்லிம்களின் ஜமாஅத்தை (கூட்டமைப்பை)யும் அவர்களின் தலைவரையும் (இறுகப்) பற்றிக் கொள்'' என்று பதில் கூறினார்கள். அதற்கு நான்,'அவர்களுக்கு ஒரு கூட்டமைப்போ ஒரு தலைவரோ இல்லை (பல பிரிவுகளாகப் பிரிந்து கிடக்கிறார்கள்) என்றால்... (என்ன செய்வது)?' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,'அந்தப் பிரிவுகள் அனைத்தையும்விட்டு (விலம்) ஒதுங்கி விடு ஒரு மரத்தின் வேர் பாகத்தை பற்களால் நீ கவ்விப் பிடித்திருக்க நேர்ந்து, அதே நிலையில்

மரணம் உன்னைத் தழுவினாலும் சரி (எந்தப் பிரிவினரோடும் சேராமல் தனித்தே இரு)" என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3607. ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அறிவித்தார்

என் தோழர்கள் (நன்மை தரும் செயல்களைப் பற்றி அதிகமாகக் கேள்விகள் கேட்டு நபி - ஸல் - அவர்களிடமிருந்து) நன்மையைக் கற்றுக் கொண்டார்கள். நான் (தவிர்ந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வத்தில் நபி - ஸல் - அவர்களிடம் திரும்பத் திரும்பக் கேட்டு இனி வரவிருக்கும்) தீமையைப் பற்றித் தெரிந்து கொண்டேன்.

ஹதீஸ் 3608. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரே வாதத்தை முன் வைக்கிற இரண்டு குழுவினர் ஒருவரோடொருவர் போரிட்டுக் கொள்ளாதவரை இறுதி நாள் வராது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3609. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு குழுவினர் ஒருவரோடொருவர் போரிட்டுக் கொள்ளாதவரை உலக முடிவு நாள் வராது. அவ்விரு குழுக்களுக்குமிடையே பெரும் போர் நிகழும். ஆனால், அவ்விரண்டும் முன்வைக்கும் வாதம் ஒன்றாகவே இருக்கும். பெரும் பொய்யர்களான'தஜ்ஜால்கள்' ஏறத்தாழ முப்பது பேர் (உலகில்) தோன்றாத வரை இறுதி நாள் வராது. அவர்களில் ஒவ்வொருவனும் தன்னை இறைத்தூதர் என்று வாதிடுவான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3610. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

நாங்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹவாஸின்) போரில் கிடைத்த செல்வங்களைப் பங்கிட்டுக் கொண்டிருந்தபோது அவர்களின் அருகே இருந்தோம். அப்போது'பனு தமீம்' குலத்தைச் சேர்ந்த'துல் குவைஸிரா' என்னும் மனிதர் வந்து,'இறைத்தூதர் அவர்களே! நீதியுடன் நடந்து கொள்ளுங்கள்" என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள்,'உனக்குக் கேடுண்டாகட்டும்! நான் நீதியுடன் நடந்து கொள்ளவில்லையென்றால் வேறு யார் தான் நீதியுடன் நடந்து கொள்வார்கள்? நான் நீதியுடன் நடந்து கொள்ளவில்லையென்றால் நீ இழப்புக்குள்ளாம் நஷ்டமடைந்து விடுவாய்" என்று பதிலளித்தார்கள். உடனே, உமர்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! நீதியுடன் நடந்து கொள்ளுங்கள்" என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள்,'உனக்குக் கேடுண்டாகட்டும்! நான் நீதியுடன் நடந்து கொள்ளவில்லையென்றால் நீ இழப்புக்குள்ளாம் நஷ்டமடைந்து விடுவாய்" என்று பதிலளித்தார்கள். உடனே உமர்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! எனக்கு இவர் விவகாரத்தில் அனுமதி கொடுங்கள். இவரின் கழுத்தைக் கொய்து விடுகிறேன்" என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'இவரைவிட்டுவிடுங்கள். நிச்சயமாக, இவருக்குத் தோழர்கள் சிலர் இருக்கிறார்கள். அவர்களின் தொழுகையுடன் உங்களுடைய தொழுகையையும், அவர்களின் நோன்புடன் உங்களுடைய நோன்பையும் ஒப்பிட்டுப் பார்த்து உங்களுடைய தொழுகையையும் உங்களுடைய நோன்பையும் அற்பமானவையாகக் கருதுவீர்கள். (அந்த அளவிற்கு அவர்களின் வழிபாடு அதிகமாக இருக்கும். ஆயினும்,) அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் கழுத்தெலும்பை (தொண்டையை) தாண்டிச்

செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்று விடுவதைப் போல் மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் செல்வார்கள். (அந்தப் பிராணியின் உடலைத் துளைத்து வெளி வந்ததற்கான அடையாளம் எதுவும் இருக்கிறதா என்று) அம்பின் முனை பார்க்கப்படும். அதில் (அடையாளம்) எதுவும் காணக் கிடைக்காது. பிறகு (அம்பில்) அதன் (முனையைப் பொருத்துவதற்குப் பயன்படும்) நாணைப் பார்க்கப்படும். அதிலும் (அடையாளம்) எதுவும் காணக்கிடைக்காது. பிறகு, அம்பின் (அடிப்பாகக்) குச்சியைப் பார்க்கப்படும். அதிலும் எதுவும் காணப்படாது. பிறகு, அம்பின் இறகைப் பார்க்கப்படும். அதிலும் (அடையாளம்) எதுவும் காணப்படாது. அம்பானது சாணத்தையும் இரத்தத்தையும் (அவை தன் மீது படாதவாறு) முந்தியிருக்கும். அவர்களின் அடையாளம் ஒரு கறுப்பு நிற மனிதராவார். அவரின் இரண்டு கொடுங்கைகளில் ஒன்று பெண்ணின் கொங்கை போன்றிருக்கும்... அல்லது துடிக்கும் இறைச்சித் துண்டு போன்றிருக்கும்... அவர்கள் மக்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் புறப்படுவார்கள்" என்று கூறினார்கள்.

நான் இந்த நபிமொழியை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டேன் என்று சாட்சியம் அளிக்கிறேன். மேலும், அந்தக் கூட்டத்தாருடன் அலீ(ரலி) போர் புரிந்தார்கள். அப்போது நானும் அலீயுடன் இருந்தேன். அலீ(ரலி) (நபி - ஸல் - அவர்கள் அடையாளமாகக் கூறிய) அந்த மனிதரைக் கொண்டு வரும் படி கட்டளையிட, அவ்வாறே அவர் தேடப்பட்டு கொண்டு வரப்பட்டார். நபி(ஸல்) அவர்களின் வர்ணணையின் படியே அவர் இருப்பதை பார்த்தேன்.

ஹதீஸ் 3611. அலீ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி நான் உங்களுக்கு அறிவிக்கிறேன் என்றால், (உண்மையில் அவர்கள் சொன்னதையே அறிவிக்கிறேன். ஏனெனில்,) நான் வானத்திலிருந்து கீழே விழுந்து விடுவது, நபி அவர்களின் மீது புனைந்து சொல்வதை விட எனக்கு விருப்பமானதாகும். எனக்கும் உங்களுக்கும் இடையே உள்ள ஒரு விவகாரத்தில் நான் உங்களிடம் பேசினால் போர் என்பது சூழ்ச்சிதான் (என்பதை நினைவில் கொள்ளவும்). 133 இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இறுதிக் காலத்தில் ஒரு கூட்டத்தினர் வருவார்கள். அவர்கள் சிறு வயது இளைஞர்களாயிருப்பார்கள். முதிர்ச்சியற்ற புத்தியுடையவர்களாயிருப்பார்கள். பூமியிலேயே மிகச் சிறந்த சொல்லை (திருக்குர்ஆன் வசனங்களை) எடுத்துச் சொல்வார்கள். அவர்கள் வேட்டைப் பிராணியி(ன் உடலி)லிருந்து (வேடன் எறிந்த) அம்பு (அதன் மறுபக்கமாக) வெளிப்பட்டுச் சென்று விடுவதைப் போல் இஸ்லாத்திலிருந்து வெளியேறிச் செல்வார்கள். அவர்களின் இறைநம்பிக்கை அவர்களின் தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது. அவர்களை எங்கு நீங்கள் சந்தித்தாலும் கொன்றுவிடுங்கள். ஏனெனில், அவர்களைக் கொன்றவர்களுக்கு அவர்களைக் கொன்றதற்காக மறுமை நாளில் நற்பலன் கிடைக்கும்!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3612. கப்பாப் இப்னு அல் அரத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், கஅபாவின் நிழலில் தம் சால்வை ஒன்றைத் தலையணையாக வைத்துச் சாய்ந்து கொண்டிருந்தபோது அவர்களிடம் (இஸ்லாத்தின் எதிரிகள் எங்களுக்கிழைக்கும் கொடுமைகளை) முறையிட்டபடி, 'எங்களுக்காக (அல்லாஹ்விடம்) நீங்கள் உதவி கோரமாட்டீர்களா? எங்களுக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யமாட்டீர்களா?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள், 'உங்களுக்கு முன்னிருந்தவர்களிடையே (ஏகத்துவக் கொள்கையை ஏற்று இறைத்தூதரின் மீது

நம்பிக்கை கொண்ட) ஒரு மனிதருக்காக மண்ணில் குழிதோண்டப்பட்டு, அவர் அதில் நிறுத்தப்பட, ரம்பம் கொண்டு வரப்பட்டு அவரின் தலை மீது வைக்கப்பட்டு அது ஒரு கூறுகளாகப் பிளக்கப்படும். ஆயினும், அ(ந்தக் கொடுமையான)து அவரை அவரின் மார்க்கத்திலிருந்து பிறழச் செய்யவில்லை. (பழுக்கச் காய்ச்சிய) இரும்புச் சீப்புகளால் அவர் (மேனி) கோதப்பட, அது அவரின் இறைச்சியையும் கடந்து சென்று அதன் கீழுள்ள எலும்பையும் நரம்பையும் சென்றடைந்து விடும். அ(ந்தக் கொடூரமான சித்திரவதையும் தீ)தும் கூட அவரை அவரின் மார்க்கத்திலிருந்து பிறழச் செய்யவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த (இஸ்லாத்தின்) விவகாரம் முழுமைப்படுத்தப்படும். எந்த அளவிற்கென்றால் வாகனத்தில் பயணம் செய்யும் ஒருவர் (யமனில் உள்ள)'ஸன்ஆ' விலிருந்து'ஹளர மவ்த்' வரை பயணம் செய்து சொல்வார். (வழியில்) அல்லாஹ்வைத் தவிர, அல்லது தன் ஆட்டின் விஷயத்தில் ஓநாயைத் தவிர வேறெவருக்கும் அவர் அஞ்சமாட்டார். ஆயினும், நீங்கள் தான் (கொடுமை தாளாமல் பொறுமை குன்றி) அவரசப்படுகிறீர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3613. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள், ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களைக் காணவில்லை என்று தேடினார்கள். அப்போது ஒருவர்,'இறைத்தூதர் அவர்களே! நான் அவரைப் பற்றிய செய்தியை அறிந்து கொண்டு தங்களிடம் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களிடம் சென்றார். ஸாபித் இப்னு கைஸ்(ரலி) தம் வீட்டில் தலையைக் (கவலையுடன்) கவிழ்த்தபடி அமர்ந்திருப்பதைக் கண்டார்.'உங்களுக்கு என்ன ஆயிற்று?' என்று அவரிடம் கேட்டதற்கு அவர்,'(பெரும்) தீங்கு ஒன்று நேர்ந்துவிட்டது. நான் நபி(ஸல்) அவர்களின் குரலை விட என்னுடைய குரலை உயர்த்தி(ப் பேசி) வந்தேன். எனவே, என் நற்செயல்கள் வீணாம்விட்டன. நான் நரகவாசிகளில் ஒருவனாம் விட்டேன்'' என்று பதிலளித்தார். உடனே, அந்த மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, ஸாபித் இப்படியெல்லாம் கூறினார் என்று தெரிவித்தார். அறிவிப்பாளர் மூஸா இப்னு அனஸ்(ரஹ்) (தம் தந்தை அனஸ் இப்னு மாலிக் - ரலி - அவர்களிடமிருந்து) அறிவித்தார்கள்.

அடுத்த முறை அந்த மனிதர் (பின்வரும்) மாபெரும் நற்செய்தியுடன் திரும்பிச் சென்றார். (அதாவது அம்மனிதரிடம்) நபி(ஸல்) அவர்கள்'நீ ஸாபித் இப்னு கைஸிடம் சென்று,'நீங்கள் நரகவாசிகளில் ஒருவரல்லர் மாறாக, சொர்க்க வாசிகளில் ஒருவரே' என்று சொல்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3614. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

ஒருவர் (உசைத் இப்னு ஹுளைர் - ரலி-) தம் வீட்டில் வாகனப் பிராணி (குதிரை)யிருக்க, (திருக்குர்ஆனின்)'அல் கஹ்ஃப்' (18-வது) அத்தியாயத்தை ஓதினார். உடனே, அந்தப் பிராணி மிரண்டோட ஆரம்பித்தது. அந்த மனிதர் (அல்லாஹ்விடம் பொறுப்பை) ஒப்படைத்து (பிரார்த்தனை புரிந்துவிட்டு சும்மாயிருந்து)விட்டார். உடனே, மேகத் திரள் ஒன்று வந்து அவரை மூடியது. இதை அந்த மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் (மறு நாள்) சொன்னபோது நபி(ஸல்) அவர்கள்,'இன்னாரே! ஓதிக் கொண்டேயிரு(ந்திருக்க வேண்டும் நீ)ங்கள். ஏனெனில், அந்த மேகமானது குர்ஆனின் வசனங்களை ஓதியதற்காக (இறைவனிடமிருந்து உங்களின் மீது) இறங்கிய அமைதி(ச் சின்னம்) ஆகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3615. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

அபூ பக்ர்(ரலி) என் தந்தை (ஆஸிப் இப்னு ஹாரிஸ்(ரலி)யிடம் அவர்களின் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களிடமிருந்து ஓர் ஒட்டகச் சேணத்தை அபூ பக்ர்(ரலி) விலைக்கு வாங்கினார்கள். அப்போது அவர்கள் என் தந்தை ஆஸிப்(ரலி) அவர்களிடம், 'இதை என்னுடன் சுமந்துவர உங்கள் மகனை அனுப்புங்கள்‘‘ என்று கேட்டுக் கொண்டார்கள். எனவே, நான் அவர்களுடன் அதைச் சுமந்து சொன்றேன். என் தந்தையார் அதன் விலையைப் பெற்றுக் கொள்வதற்காகப் புறப்பட்டார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் என் தந்தை, 'அபூ பக்ரே! நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (மக்காவைத் துறந்து ஹிஜ்ரத் செய்து) சென்றபோது இருவரும் எப்படி (எதிரிகளின் கண்களில் படாமல் சமாளித்துச்) செயல்பட்டீர்கள் என எனக்கு அறிவியுங்கள்‘‘ என்று கூறினார்கள். (அப்போது) அபூ பக்ர்(ரலி) கூறினார்: ஆம்! நாங்கள் (மூன்று நாள் குகையில் தங்கியிருந்துவிட்டு அங்கிருந்து வெளியேறி) எங்களுடைய (அந்த) இரவிலும் அடுத்த நாளின் சிறிது நேரத்திலும் பயணம் செய்து கொள்வோம். இறுதியில் நண்பகல் நேரம் வந்துவிட்டது. பாதையில் (வெப்பம் அதிகரித்து) எவரும் நடமாட முடியாதபடி அது காலியாகிவிட்டது. அப்போது இதுவரை சூரிய வெளிச்சம் படாத, நிழல் படர்ந்த நீண்ட பாறை ஒன்று எங்களுக்குத் தென்பட்டது. எனவே, நாங்கள் அதனிடத்தில் தங்கினோம். நான் நபி(ஸல்) அவர்களுக்கு என் கையால் ஓரிடத்தை, அதன் மீது அவர்கள் உறங்குவதற்காகச் சமன்படுத்தித் தந்தேன். மேலும், அதன் மீது ஒரு தோலை விரித்தேன். அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! நான் உங்களைச் சுற்றிலுமுள்ள சூழலை உங்களுக்காகக் கண்காணித்து வருகிறேன் நீங்கள் (கவலையில்லாமல்) உறங்குங்கள்‘‘ என்று சொன்னேன். அவ்வாறே அவர்கள் உறங்கினார்கள். அவர்களைச் சுற்றிலுமுள்ள சூழலைக் கண்காணித்தபடி நான் புறப்பட்டேன். அப்போது ஆட்டிடையன் ஒருவன் தன் ஆடுகளுடன் (நாங்கள் தங்கியுள்ள அந்தப்) பாறையை நோக்கி நாங்கள் (ஓய்வெடுக்க) விரும்பியது போன்றே அவனும் (ஓய்வெடுக்க) விரும்பியபடி வந்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். உடனே, 'நீ யாருடைய பணியாள்? இளைஞனே!"என்று கேட்டேன். அவன், 'மதீனாவாசிகளில் ஒரு மனிதரின் (பணியாள்)‘‘ என்று... அல்லது மக்காவாசிகளில் ஒருவரின் (பணியாள்) என்று... பதிலளித்தான். நான், 'உன் ஆடுகளிடம் பால் ஏதும் இருக்கிறதுா?' என்று கேட்டேன். அவன், 'ஆம் (இருக்கிறது)‘‘ என்று சொன்னான். நான், 'நீ (எங்களுக்காகப்) பால் கறப்பாயா?' என்று கேட்டேன். அவன், 'சரி (கறக்கிறேன்)‘‘ என்று சொல்லிவிட்டு, ஆடு ஒன்றைப் பிடித்தான். நான், '(ஆட்டின்) மடியை (அதில் படிந்துள்ள) மண்ணையும் முடியையும் தூசுகளையும் நீக்கி உதறிக் கொள்‘‘ என்று சொன்னேன்.

-அறிவிப்பாளர் அபூ இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்:

தம் இரண்டு கைகளில் ஒன்றை மற்றொன்றின் மீது அடித்து உதறிக் காட்டுபவர்களாக பராஉ(ரலி) அவர்களை கண்டேன்.

அவன், உட்பக்கம் கடையப்பட்ட ஒரு மரப் பாத்திரத்தில் சிறிதளவு பாலைக் கறந்தான். என்னுடன் தண்ணீருள்ள ஒரு தோல் பாத்திரம் இருந்தது. நபி(ஸல்) அவர்கள் அதிலிருந்து நீரருந்தி, தாகத்தை தணித்துக் கொண்டு, உளூச் செய்து கொள்வதற்காக நான் அதை அவர்களுடன் சுமந்து வந்திருந்தேன். நான் நபி(ஸல்) அவர்களிடம் (அவர்கள் உறங்கிக் கொண்டிருந்த போது) சென்றேன். அவர்களை (தூக்கத்திலிருந்து) எழுப்ப நான் விரும்பவில்லை. (எனினும்) அவர்களிடம் நான் சென்ற நேரமும், ஒன்றாக அமைந்துவிட்டது. நான் (தோல் பாத்திரத்தில் இருந்த) தண்ணீரை

(மரப்பாத்திரத்திலிருந்த) பாலில் ஊற்றினேன். அதன் அடிப்பகுதி குளிர்ந்து போகும் வரை இவ்வாறு ஊற்றினேன். பிறகு நான், 'பருகுங்கள், இறைத்தூதர் அவர்களே!" என்று சொன்னேன். அவர்கள் நான் திருபதியடையும் வரை பருமினார்கள் பிறகு, '(நாம்) புறப்படுவதற்கான நேரம் வரவில்லையா?' என்று கேட்டார்கள். நான், 'ஆம் (வந்துவிட்டது)'' என்று சொன்னேன். சூரியன் உச்சி சாய்ந்த பிறகு நாங்கள் பயணமானோம். எங்களை சுராக்கா இப்னு மாலிக் இப்னி தொடர்ந்து வந்தார். (அப்போது அவர் முஸ்லிமாகியிருக்கவில்லை.) நான், '(எதிரிகள்) நம்மிடம் வந்து சேர்ந்துவிட்டார்கள், இறைத்தூதர் அவர்களே!" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், 'கவலைப்படாதீர்கள். அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் சுராகாவுக்கு எதிராகப் பிரார்த்தித்தார்கள். உடனே, சுராகாவுடன் அவரின் குதிரை தன் வயிறு வரை பூமியில் புதைந்துவிட்டது. அறிவிப்பாளர் ஸுஹைர் இப்னு முஆவியா(ரஹ்) சந்தேகத்துடன் கூறுகிறார்கள்: 'பூமியின் ஓர் இறுகிய பகுதியில்'' என்று (அபூ இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்கள் என) கருதுகிறேன். உடனே சுராகா, 'நீங்கள் இருவரும் எனக்கு எதிராகப் பிரார்த்தித்திருப்பதாக கருதுகிறேன். எனவே, எனக்காக (இந்த வேதனையிலிருந்து என்னை விடுவிக்கும்படி) நீங்கள் இருவரும் பிரார்த்தியுங்கள் அல்லாஹ் உங்களுக்கு உதவி புரிவான். நான் உங்களைத் தேடி வருபவர்களை உங்களைவிட்டுத் திசைதிருப்பி விடுவேன்'' என்று கூறினார். எனவே, நபி(ஸல்) அவர்கள் சுராக்காவுக்காகப் பிரார்த்தனை புரிந்தார்கள். உடனே அவர் (அந்த வேதனையிலிருந்து) தப்பித்தார். அப்போதிருந்து அவர் தன்னைச் சந்திப்பவர் எவராயினும் அவரிடம், 'உங்களுக்கு நானே போதுமானவன். நீங்கள் தேடி வந்தவர் இங்கில்லை''என்று கூறலானார். மேலும், (எங்களைத் தேடி வந்ததாகச் சொல்லும்) எவரைச் சந்தித்தாலும் திருப்பியனுப்பிக் கொண்டேயிருந்தார். அவர் எங்களுக்குத் தந்த வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டார்.

ஹதீஸ் 3616. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (நோயுற்றிருந்த) ஒரு கிராமவாசியிடம், அவரை நலம் விசாரிக்கச் சென்றார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒரு நோயாளியிடம் நலம் விசாரிக்கச் சென்றால், 'கவலைப்பட வேண்டாம். இறைவன் நாடினால் (இது உங்கள் பாவத்தை நீக்கி) உங்களைத் தூய்மைப்படுத்திவிடும்'' என்று கூறுவார்கள். (தம் அந்த வழக்கப்படியே) நபி(ஸல்) அவர்கள் கிராமவாசியிடம், 'கவலை வேண்டாம். இறைவன் நாடினால் உங்களைத் தூய்மைப்படுத்தும்'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) அந்தக் கிராமவாசி, 'நான் தூய்மை பெற்று விடுவேனா? முடியாது. இதுவோ வயது முதிர்ந்த பெரியவரைப் பீடிக்கிற சூடாம்க் கொதிக்கிற காய்ச்சலாகும். அது அவரை மண்ணறைகளைச் சந்திக்க வைக்கும்'' என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள், 'அப்படியென்றால் ஆம். (அப்படித்தான் நடக்கும்.)'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3617. அனஸ்(ரலி) அறிவித்தார்

ஒருவர் கிறிஸ்தவராக இருந்தார். பிறகு, அவர் இஸ்லாத்தைத் தழுவினார். 'அல்பகரா' மற்றும் 'ஆலு இம்ரான்' அத்தியாயங்களை ஓதினார். அவர் நபி(ஸல்) அவர்களுக்காக (வேத வெளிப்பாட்டை) எழுதி வந்தார். அவர் (மீண்டும்) கிறிஸ்தவராகவே மாறிவிட்டார். அவர் (மக்களிடம்) 'முஹம்மதுக்கு, நான் அவருக்கு எழுதித் தந்தைத் தவிர வேறெதுவும் தெரியாது'' என்று சொல்லிவந்தார். பிறகு அல்லாஹ் அவருக்கு மரணத்தையளித்தான். அவரை மக்கள் புதைத்துவிட்டனர். ஆனால் (மறு நாள்) அவரை பூமி துப்பிவிட்டிருந்தது.

உடனே, (கிறிஸ்தவர்கள்),'இது முஹம்மது மற்றும் அவரின் தோழர்களின் வேலை. எங்கள் தோழர் அவர்களைவிட்டு ஓடி வந்துவிட்டதால் அவரின் மண்ணறையைத் தோண்டி எடுத்து அவரை வெளியே போட்டுவிட்டார்கள்'' என்று கூறினார். எனவே, அவருக்காக இன்னும் அழகாக ஒரு புதை குழியைத் தோண்டினர். (அதில் புதைத்த பின்பு) மீண்டும் பூமி அவரை (வெளியே) துப்பி விட்டிருந்தது. அப்போதும்,'இது முஹம்மது மற்றும் அவரின் தோழர்களுடைய வேலைதான். நம் தோழர் அவர்களைவிட்டு வந்துவிட்ட காரணத்தால் அவரைத் தோண்டி எடுத்து மண்ணறைக்கு வெளியே போட்டுவிட்டனர்'' என்று கூறினர். மீண்டும் அவர்களால் குழியை அவருக்காகத் தோண்டி அதில் அவரைப் பூமி அவரை முடிந்த அளவிற்கு மிக அழமான குழியை அவருக்காகத் தோண்டி எடுத்து மண்ணறைக்கு வெளியே போட்டுவிட்டனர்'' என்று கூறினர். மீண்டும் அவர்களால் குழியை அவருக்காகத் தோண்டி அதில் அவரைப் புதைத்தனர். ஆனால், அவரை பூமி மீண்டும் துப்பி விட்டிருந்தது. அப்போதுதான் அது மனிதர்களின் வேலையல்ல. (இறைவனின் தண்டனை தான்) என்று புரிந்து கொண்டனர். அவரை அப்படியே (வெளியிலேயே) போட்டுவிட்டனர்.

ஹதீஸ் 3618. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தற்போதுள்ள பாரசீகப் பேரரசன்) கிஸ்ரா (குஸ்ரூ) அழிந்துவிட்டால் அவனுக்குப் பின் வேறொரு கிஸ்ரா வரமாட்டான். (தற்போதுள்ள பைஸாந்தியப் பேரரசன்) சீசர் அழிந்துவிட்டால் அவனுக்குப் பின் வேறொரு சீசர் வர மாட்டான். முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (கிஸ்ரா, சீசர்) இருவருடைய கருவூலங்களையும் இறைவழியில் நீங்கள் செலவழிப்பீர்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3619 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தற்போதுள்ள) கிஸ்ரா அழிந்துவிட்டால் அவனுக்குப் பின் வேறொரு கிஸ்ரா வரமாட்டான் - அறிவிப்பாளர் (முந்தைய ஹதீஸைப் போன்றே) கூறிவிட்டு(த் தொடர்ந்து) கூறினார் - அவ்விருவரின் (கிஸ்ரா மற்றும் சீசரின்) கருவூலங்களையும் நீங்கள் இறைவழியில் செலவழிப்பீர்கள்.

என ஜாபிர் இப்னு சமுரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3620. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

பெரும் பொய்யனான முஸைலிமா, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் (யமாமாவிலிருந்து மதீனாவிற்கு) வந்தான்.'முஹம்மது தமக்குப் பின் (தூதுத்துவம் மற்றும் ஆட்சித் தலைமையின்) பொறுப்பை எனக்குக் கொடுத்தால் தான் நான் அவரைப் பின்பற்றுவேன் (இல்லையென்றால் அவரை ஏற்க மாட்டேன்)'' என்று கூறத் தொடங்கினான். அவன் தன் குலத்தார் நிறையப் பேருடன் மதீனாவிற்கு வந்திருந்தான். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் பேச்சாளர்) ஸாபித் இப்னு கைஸ் இப்னி ஷம்மாஸ்(ரலி) அவர்களுடன் அவனிடம் சென்றார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கையில் பேரீச்ச மட்டையின் துண்டு ஒன்று இருந்தது. அவர்கள் முஸைலிமா தன் சகாக்களுடன் இருக்க, அவனருகே சென்று நின்று கொண்டு,'இந்த (பேரீச்ச மட்டையின்) துண்டைக் கூட நீ என்னிடம் கேட்டாலும் உனக்கு நான் இதைத் தரமாட்டேன். அல்லாஹ் உன் விஷயத்தில் எடுத்துள்ள முடிவை (- உன் நோக்கத்தில் நீ வெல்ல முடியாது என்பதை -) நீ மீறிச் சென்றுவிட முடியாது. நீ (எனக்குக் கீழ்ப்படிய

மறுத்துப் புறங்காட்டிச் சென்றால் அல்லாஹ் உன்னை அழித்துவிடுவான். உன் விஷயம் தொடர்பாக எனக்கு எவன் (கனவில்) காட்டப்பட்டானோ அவன்தான் நீ என்று கருதுகிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3621. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என் இரண்டு கைகளிலும் இரண்டு தங்கக் காப்புகளைக் கண்டேன். அவை என்னைக் கவலையில் ஆழ்த்தின. உடனே,'அதை ஊதி விடுவீராக!"என்று கனவில் எனக்கு (இறைக் கட்டளை) அறிவிக்கப்பட்டது. அவ்வாறே, நான் அவற்றை ஊதி விட, அவையிரண்டும் பறந்து போய்விட்டன. நான் அவ்விரண்டும் எனக்குப் பின் தோன்றவிருக்கிற (தம்மை இறைத்தூதர்கள் என்று வாதிக்கப் போகும்) இரண்டு பொய்யர்கள் என்று (அவற்றுக்கு) விளக்கம் கண்டேன். அவ்வாறே அவ்விருவரில் ஒருவன் (அஸ்வத்) அல்அன்ஸிய்யாகவும் மற்றொருவன் யமாமா வாசியான பெரும் பொய்யன் முஸைலிமாவாகவும் அமைந்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3622. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் மக்கா நகரைத் துறந்து அங்கிருந்து பேரீச்சந் தோட்டங்கள் நிறைந்த ஒரு பூமிக்குச் செல்வதாகக் கனவு கண்டேன். அந்த பூமி'யமாமா'வாகவோ'ஹஜரா'கவோ தான் இருக்கும் என்று நான் எண்ணினேன். ஆனால், அது யஸ்ரிப் - மதீனாவாகிவிட்டது. மேலும், இந்த என்னுடைய கனவில் நான் (என்னுடைய) வாள் ஒன்றை அசைக்க, அதன் முனை உடைந்து விடுவதாகக் கண்டேன். அது உஹுதுப் போரின்போது முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட இழப்பைக் குறித்தது. பிறகு (அதே கனவில்) மற்றொரு முறை அந்த வாளை நான் அசைக்க, அது முன்பிருந்தபடியே மீண்டும் (ஒட்டி) அழகாகியது. அது அல்லாஹ் (அதே உஹுதுப் போரில்) கொணர்ந்த உறுதிப்பாட்டையும் (சிதறி ஓடிய) முஸ்லிம்கள் (மீண்டும்) ஒன்று திரண்டதையும் குறித்தது. அந்தக் கனவில் நான் சில காளை மாடுகளை பார்த்தேன். (உஹுதில் கொல்லப்பட்டவர்களுக்கு) அல்லாஹ் அளித்த அந்தஸ்து (அவர்கள் இந்த உலகில் இருந்த நிலையை விட அவர்களுக்குச்) சிறந்ததாகும். எனவே, (அந்த மாடுகள்) உஹுதுப் போரின்போது கொல்லப்பட்ட இறைநம்பிக்கையாளர்களைக் குறிப்பவையாகும். நன்மை என்பது அல்லாஹ் நமக்குக் கொணர்ந்த நன்மையும் (இரண்டாம்) பத்ருப் போருக்குப் பிறகு அல்லாஹ் நமக்களித்த நம்முடைய வாய்மைக் கான பரிசும் (கைபர், மக்கா வெற்றிகளும்) ஆகும்.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3623. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஃபாத்திமா(ரலி) (நோய் வாய்ப்பட்டிருந்த தம் தந்தை) நபி(ஸல்) அவர்களை நோக்கி வந்தார்கள். அவர்களின் நடை, நபி(ஸல்) அவர்களின் நடையைப் போன்றிருந்தது. அப்போது, நபி(ஸல்) அவர்கள்,'வருக! என் மகளே!"என்று அழைத்து தம் வலப்பக்கம்... அல்லது இடப்பக்கம்... அமர்த்தினார்கள். பிறகு, அவர்களிடம் இரகசியமாக ஏதோ ஒரு விஷயத்தைக் கூறினார்கள். அதைக் கேட்டதும் ஃபாத்திமா(ரலி) அழுதார்கள். நான் அவர்களிடம்,'ஏன் அழுகிறீர்கள்?' என்று கேட்டேன். மீண்டும் நபி(ஸல்) அவர்கள் என்ன கூறினார்கள்'' என்று ஃபாத்திமாவிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்,'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இரகசியத்தை நான் பரப்பமாட்டேன்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்

இறக்கும் வரை (ஃபாத்திமா ஒன்றும் கூறவில்லை. நபி - ஸல் அவர்கள் இறந்தபோது) ஃபாத்திமா(ரலி) அவர்களிடம் நான் (அந்த இரகசியம் பற்றிக் கேட்டேன்.

ஹதீஸ் 3624. அதற்கு அவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் என்னிடம், '(வானவர்) ஜிப்ரீல் என்னை ஒவ்வோர் ஆண்டும் ஒரு முறை குர்ஆனை ஓதச் செய்து வந்தார்கள். இந்த ஆண்டு மட்டும் அவர்கள் என்னை அதை இரண்டு முறை ஓதச் செய்தார்கள். என் வாழ்நாள் முடிவடையும் நேரம் வந்துவிட்ட(தைக் குறிப்ப)தாகவே அதை கருதுகிறேன். என் வீட்டாரில் என்னை முதலில் வந்தடையப் போவது நீ தான்" என்று கூறினார்கள். எனவே, நான் அழுதேன். உடனே, அவர்கள், 'சொர்க்கவாசிகளில் பெண்களின்... அல்லது இறைநம்பிக்கையாளர்களில்.... பெண்களின் தலைவியாக இருக்க நீ விரும்பவில்லையா?' என்று கேட்டார்கள். அதைக் கேட்டு (மகிழ்ச்சியால்) நான் சிரித்தேன்" என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3625. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயில் தம் மகள் ஃபாத்திமா(ரலி) அவர்களை அழைத்து, எதையோ இரகசியமாக அவர்களிடம் கூறினார்கள். ஃபாத்திமா(ரலி) அழுதார்கள். பிறகு அவர்களை அழைத்து மீண்டும் ஏதோ இரகசியமாகக் கூற அவர்கள் சிரித்தார்கள். நான் அதைப் பற்றி ஃபாத்திமா(ரலி) அவர்களிடம் கேட்டேன்.

ஹதீஸ் 3626. அதற்கு அவர்கள், 'என்னிடம் நபி(ஸல்) அவர்கள் இரகசியமாக, (அப்போது) தமக்கு ஏற்பட்டிருந்த அந்த (நோயின்) வலியிலேயே தாம் இறக்கவிருப்பதாகத் தெரிவித்தார்கள். அதனால், நான் (துக்கம் தாளாமல்) அழுதேன். பிறகு 'அவர்களின் வீட்டாரில் முதலாவதாக அவர்களைத் தொடர்ந்து (இறைவனிடம்) செல்லவிருப்பது நானே' என்று இரகசியமாக எனக்குத் தெரிவித்தார்கள். அதனால் நான் (மம்ழ்ச்சியடைந்து) சிரித்தேன்" என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3627. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உமர் இப்னு கத்தாப்(ரலி) எப்போதும் தன்னைத் தம் அருகிலேயே வைத்திருப்பார்கள். எனவே, அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம், 'எங்களுக்கு அவரைப் போன்ற மகன்கள் (பலர்) இருக்கிறார்களே (அவர்களையெல்லாம் நீங்கள் உங்கள் அருகில் வைத்துக் கொள்வதில்லையே ஏன்?)" என்று கேட்டார்கள். அதற்கு உமர்(ரலி) அவை, 'அது உங்களுக்குத் தெரிகிற (அவர் ஒரு கல்வியாளர் என்ற) காரணத்தால் தான்" என்று பதிலளித்தார்கள். பிறகு என்னிடம், 'அல்லாஹ்வின் உதவியும் (அவன் தரும்) வெற்றியும் வந்து விடும் போது' என்னும் (திருக்குர்ஆன் 110:1-வது) இறைவசனத்தைப் பற்றி (விளக்கம்) கேட்டார்கள். அதற்கு நான், 'அது 'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாழ்நாள் முடியப்போகிறது' என்று அவர்களுக்கு அல்லாஹ் அறிவித்த வசனமாகும்" என்று பதிலளித்தேன். உடனே உமர்(ரலி), 'நீங்கள் அறிகின்றதையே அதிலிருந்து நானும் அறிகிறேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3628. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அவர்கள் ஒரு போர்வையுடன் வெளியே வந்தார்கள். அப்போது தம் தலையில் கருப்புக்கட்டு ஒன்றைப் போட்டிருந்தார்கள். மிம்பரின் (மேடை) மீதமர்ந்து அல்லாஹ்வைப் புகழ்ந்து,

அவனுடைய குணங்களை எடுத்துரைத்துப் பிறகு,'அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து பின் கூறுகிறேன்: (இஸ்லாத்தில் இணையும்) மக்கள், (எண்ணிக்கையில்) அதிகமாவார்கள். (ஆனால், இறைமார்க்கத்திற்கு) உதவிபுரிபவர்கள் (அன்சார்) குறைந்து போய் விடுவார்கள். எந்த அளவிற்கென்றால் உணவில் உப்பிருக்கும் அளவில் தான் (உதவுபவர்கள்) மக்களிடையே இருப்பார்கள். உங்களில் ஒருவர் சிலருக்குத் தீங்கையும் மற்றவர்களுக்கு நன்மையும் விளைவிக்கக் கூடிய ஓர் அதிகாரம் எதையும் பெற்றால் நன்மை செய்பவரிடமிருந்து அதை ஏற்று தீமை செய்பவரை மன்னித்து விடட்டும்'' என்று கூறினார்கள். அது நபி(ஸல்) அவர்கள் அமர்ந்த கடைசி அவையாக இருந்தது.

ஹதீஸ் 3629 அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் (தம் பேரப்பிள்ளை) ஹஸன்(ரலி) அவர்களைத் தம்முடன் அழைத்து வந்து அவருடனேயே மிம்பரில் (மேடையில்) ஏறினார்கள். பிறகு,'இந்த என் மகன், தலைவராவார். அல்லாஹ் இவர் வாயிலாக முஸ்லிம்களின் இரண்டு குழுவினரிடையே சமாதானம் செய்து வைக்கக்கூடும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3630. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

ஜஅஃபர்(ரலி) அவர்களும் ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களும் (மூத்தா போர்க்களத்தில்) கொல்லப்பட்டுவிட்ட செய்தி (மதீனாவுக்கு) வருவதற்கு முன்பே அதை நபி(ஸல்) அவர்கள் (இறை அறிவிப்பின் வாயிலாக அறிந்து மக்களுக்கு) அறிவித்தார்கள். அப்போது அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைச் சொரிந்து கொண்டிருந்தன.

ஹதீஸ் 3631. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

"(எனக்குத் திருமணம் ஆன பொழுது) உங்களிடம் மிருதுவான மென்பட்டு விரிப்புகள் இருக்கின்றனவா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான்,'எங்களிடம் எப்படி அந்த விரிப்புகள் இருக்கும்?' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,'விரைவில் உங்களிடம் மிருதுவான மென்பட்டு விரிப்புகள் இருக்கும்'' என்று பதிலளித்தார்கள். ஐபின்னர் ஒரு நாளில்) நான் (என் மனைவியான) அவரிடம்'எங்களைவிட்டு உன் விரிப்புகளை அப்புறப்படுத்து'' என்று கூறுவேன். அவள்,'நபி(ஸல்) அவர்கள்,'விரைவில் உங்களிடம் மிருதுவான மென்பட்டு விரிப்புகள் இருக்கும்' என்று கூறவில்லையா?' என்று கேட்பாள். 'அப்படியானால் அவற்றை (அவ்வாறே)விட்டு விடுகிறேன்'' (என்று நான் கூறுவேன்.)

ஹதீஸ் 3632. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஸஅத் இப்னு முஆத்(ரலி) உம்ரா செய்யச் சென்றார்கள். (மக்காவில் இணை வைப்போரின் தலைவர்களில் ஒரவனான) உமய்யா இப்னு கலஃப் அபூ ஸஃப்வானிடம் தங்கினார்கள். உமய்யா (வியாபாரத்திற்காக) ஷாம் நாட்டிற்கு மதீனா வழியாகச் செல்லும்போது ஸஅத்(ரலி) அவர்களிடம் தங்கு(ம் பழக்கம் உடையவன் ஆ)வான். உமய்யா,'நண்பகல் நேரம் வரும் வரை சற்றுக் காத்திருந்து, மக்கள் ஓய்வெடுத்துக் கொள்ளும் (அந்த) நேரத்தில் நீங்கள் சென்று (கஅபாவை) வலம் வரலாமே'' என்று கேட்டான். அவ்வாறே, ஸஅத்(ரலி) வலம் வந்து கொண்டிருந்தபோது அபூ ஜஹ்ல் வந்து,'கஅபாவை வலம் வருவது யார்?' என்று கேட்டான். ஸஅத்(ரலி),'நானே ஸஅத்'' என்று கூறினார்கள். அதற்கு அபூ ஜஹ்ல்,'(மதீனாவாசிகளான) நீங்கள் முஹம்மதுக்கும் அவரின் தோழர்களுக்கும் (மதீனாவில்) புகலிடம் கொடுத்திருக்க, இங்கே கஅபாவை நீ

அச்சமின்றி வலம் வந்து கொண்டிருக்கிறாயா?' என்று கேட்டான். அதற்கு ஸஅத்(ரலி),'ஆம் (அதற்கென்ன?)‘‘ என்று கேட்டார்கள். அவ்விருவருக்குமிடையே (அதையொட்டி) சச்சரவும் வாக்குவாதமும் ஏற்பட்டது. உடனே, உமய்யா, ஸஅத்(ரலி) அவர்களிடம்,'அபுல் ஹகமை 151 விட குரலை உயர்த்தாதீர். ஏனெனில், அவர் இந்த (மக்கா) பள்ளத்தாக்கின் தலைவர்‘‘ என்று சொன்னான். பிறகு ஸஅத்(ரலி),'அல்லாஹ்வின் மீதாணையாக! இறையில்லத்தை வலம்வரவிடாமல் என்னை நீ தடுத்தால் நீ ஷாம் நாட்டிற்குச் செல்லும் வாணிபப் பாதையை நான் துண்டித்து விடுவேன்‘‘ என்று கூறினார்கள். அப்போது உமய்யா, ஸஅத்(ரலி) அவர்களிடம்,'உங்கள் குரலை உயர்த்தாதீர்கள்‘‘ என்று சொல்லத் தொடங்கினான்... அவர்களைப் பேசவிடாமல் தடுக்கலானான்... எனவே, ஸஅத்(ரலி) கோபமுற்று,'உம் வேலையைப் பாரும். (அபூ ஜஹ்லுக்கு வக்காலத்து வாங்காதீர்.) ஏனெனில், நான் முஹம்மத்(ஸல்) அவர்கள் உன்னைக் கொல்லவிருப்பதாகச் சொல்ல கேட்டிருக்கிறேன்‘‘ என்று உமய்யாவிடம் கூறினார்கள். அதற்கு அவன்,'என்னையா (கொல்ல விருப்பதாகக் கூறினார்?)‘‘ என்று கேட்டான். ஸஅத்(ரலி),'ஆம் (உன்னைத் தான்)‘‘ என்று பதிலளித்தார்கள். அவன்,'அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மது பேசினால் பொய் பேசுவதில்லை‘‘ என்று சொல்லிவிட்டு தம் மனைவியிடம் சென்று,'என்னிடம் என் யஸ்ரிப் (மதீனா) நகர தோழர் என்ன கூறினார்?' என்று வினவினாள்.'முஹம்மது என்னைக் கொல்லவிருப்பதாகச் சொன்னாதாக அவர் கூறினார். என்று அவன் பதிலளித்தான். அவள்,'அப்படியென்றால் (அது உண்மையாகத்தானிருக்கும்.) அல்லாஹ்வின் மீதாணையாக! முஹமமது பொய் சொல்வதில்லை‘‘ என்று சொன்னாள். மக்காவாசிகள் பத்ருப் போருக்குப் புறப்பட்டுச் செல்ல, போருக்கு அழைப்பவர் வந்(து மக்களை அழைத்)தபோது உமய்யாவிடம் அவனுடைய மனைவி,'உம் யஸ்ரிப் நகரத் தோழர் சொன்னது உமக்கு நினைவில்லையா?' என்று கேட்டாள். எனவே, (பயத்தின் காரணத்தால்) அவன் போருக்குப் புறப்பட விரும்பவில்லை. அபூ ஜஹ்ல் அவனிடம்,'நீ (மக்கா) பள்ளத்தாக்கின் தலைவர்களில் ஒருவன். எனவே, (நீயே போரில் கலந்து கொள்ளாமல் போய்விட்டால் நான்றாக இருக்காது.) ஒரு நாளைக்கு அல்லது இரண்டு நாட்களக்காவது போ(ய்க் கலந்து கொள்)‘‘ என்று சொன்னான். அவ்வாறே அவனும் (இரண்டு நாள்களுக்காகச்) சென்றான். (அப்படியே அவன் போர்க்களம் வரை சென்று விட, அங்கே) அல்லாஹ் அவனைக் கொன்றுவிட்டான்.

ஹதீஸ் 3633. அபூ உஸ்மான் அப்துர் ரஹ்மான் அந்நஹ்தீ(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம் உம்மு ஸலமா(ரலி) அமர்ந்திருந்தபோது ஜிப்ரீல் (அலை) அவர்கள் (ஒரு மனிதரின் தோற்றத்தில்) வந்தார்கள். மேலும், நபி(ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல் பேசத் தொடங்கிவிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம்,'இவர் யார்?' என்று கேட்க, அவர்கள்,'இது திஹ்யா (என்ற நபித்தோழர்)‘‘ என்று பதிலளித்தார்கள். (அப்போது அது ஜிப்ரீல்(அலை) அவர்கள் தாம்‘‘ என்று உம்மு ஸலமா - ரலி - அவர்களுக்கு தெரியாது.) (பின்னர்) உம்மு ஸலமா(ரலி),'அல்லாஹ்வின் மீதாணையாக! நான், நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீல்(அலை) அவர்கள் சொன்னதாகத் தம் உரையில் குறிப்பிட்டதைச் செவியுறும் வரை, வந்தவர் திஹ்யா கல்பீ அவர்கள் தாம் என்றே நான் நினைத்திருந்தேன் (அந்த உரையைக் கேட்ட பின்புதான் அவர் ஜிப்ரீல்(அலை) அவர்கள் என்று எனக்குத் தெரியவந்தது)‘‘ என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் சுலைமான் இப்னு தர்கான் அத் தைமீ(ரஹ்) கூறினார்:

நான் அறிவிப்பாளர் அபூ உஸ்மான்(ரஹ்) அவர்களிடம், 'யாரிடமிருந்து இதை நீங்கள் செவியுற்றீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அவர், 'உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3634. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (கனவில்) மக்களெல்லாரும் ஒரு பொட்டல் வெளியில் ஒன்று திரண்டிருக்கக் கண்டேன். அப்போது அபூ பக்ர் எழுந்து (ஒரு கிணற்றிலிருந்து) ஒரு வாளி... அல்லது இரண்டு வாளிகள்... இறைத்தார். சிறிது நேரம் அவர் இறைத்தவுடன் சோர்வு தெரிந்தது. அல்லாஹ் அவரை மன்னிப்பானாக! பிறகு அதை உமர் எடுத்துக்கொள்ள, அது அவரின் கையில் பெரிய வாளியாக மாறியது. (அவர் வலுவுடன் பல வாளிகள் தண்ணீர் இறைத்தார்.) அவரைப் போல் சீராகவும் உறுதியாகவும் செயல்படக் கூடிய புத்திசாலியான (அபூர்வத்) தலைவர் ஒருவரை நான் கண்டதில்லை.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் ஹம்மாம் இப்னு முனப்பிஹ்(ரஹ்) கூறினார்:

“அபூ பக்ர், இரண்டு வாளிகளை இறைத்தார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என (ஒன்றா இரண்டா என்ற சந்தேகமின்றி) அபூ ஹுரைரா(ரலி) சொல்ல கேட்டேன்.

## வேதக்காரர்கள் தொடர்பான இறைவசனம்

அல்லாஹ் கூறினான்.

நாம் வேதம் அருளியிருக்கிறவர்கள், தங்களின் பிள்ளைகளை அறிந்து கொள்வதைப் போல் (கிப்லாவாக்கப்பட்ட) இந்த இடத்தையும் நன்கு அறிவார்கள். எனினும், அவர்களில் ஒரு பிரிவினர் நன்கு அறிந்திருந்தும் உண்மையை மறைக்கிறார்கள். (திருக்குர்ஆன் 02:146)

ஹதீஸ் 3635. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

யூதர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று அவர்களிடம், தம் சமுதாயத்தாரிடையே ஓர் ஆணும் ஒரு பெண்ணும் விபசாரம் செய்துவிட்டதாகக் கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நீங்கள் கல்லெறி தண்டனை குறித்து தவ்ராத்தில் என்ன காண்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கவர்கள், 'அவர்களை நாம் கேவலப்படுத்திட வேண்டும் என்றும், அவர்கள் கசையடி கொடுக்கப்படுவார்கள் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது'' என்று பதிலளித்தார்கள். உடனே, (யூத மத அறிஞராயிருந்து இஸ்லாத்தை ஏற்ற) அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி)'நீங்கள் பொய் சொன்னீர்கள். (விபசாரம் செய்தவர்களை சாகும்வரை) கல்லால் அடிக்க வேண்டுமென்றுதான் அதில் கூறப்பட்டுள்ளது'' என்று கூறினார்கள். உடனே, அவர்கள் தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை விரித்தார்கள். அவர்களில் ஒருவர்'விபசாரிகளுக்கு கல்லெறிந்து கொல்லும் தண்டனை தரப்படவேண்டும்' என்று கூறும் வசனத்தின் மீது தன்னுடைய கையை வைத்து மறைத்து, அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனத்தை ஓதினார். அப்போது அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி), 'உன் கையை எடு'' என்று சொல்ல, அவர் தன்னுடைய கையை எடுத்தார். அப்போது அங்கே (விபசாரக் குற்றத்திற்கு) கல்லெறி தண்டனை தரும்படி கூறும் வசனம் இருந்தது. உடனே யூதர்கள், 'அப்துல்லாஹ் இப்னு சலாம் உண்மை கூறினார். முஹம்மதே! தவ்ராத்தில் கல்லெறி தண்டனையைக் கூறும் வசனம்

இருக்கத்தான் செய்கிறது" என்று கூறினார்கள். உடனே, அவ்விரண்டு பேரையும் சாகும் வரை கல்லால் அடிக்கும்படி நபி(ஸல்) அவர்கள் உத்திரவிட்டார்கள். அவ்வாறே அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது. அப்போது அந்த ஆண், அப்பெண்ணைக் கல்லடியிலிருந்து பாதுகாப்பதற்காக தன் உடலை (அவளுக்குக் கேடயம் போலாக்கி) அவளின் மீது கவிழ்ந்து (மறைத்துக்) கொள்வதை பார்த்தேன்.

## இணைவைப்பவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் (நபிகளார் இறைத்தூதரே என்பதற்கு) ஓர் அற்புதச் சான்றைக் காட்டும் படி கோரியதன் பேரில் நபி(ஸல்) அவர்கள், சந்திரன் பிளவுபடுவதை அவர்களுக்குக் காட்டியது.

ஹதீஸ் 3636. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளவுபட்டது. உடனே, நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் சாட்சியாக இருங்கள்" என்று (மக்களை நோக்கிக்) கூறினார்கள்.

ஹதீஸ் 3637. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

மக்காவாசிகள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஓர் அற்புதச் சான்றைக் காட்டும்படி கேட்டார்கள். எனவே, சந்திரன் (இரண்டாகப்) பிளவுண்ட நிகழ்ச்சியை (தம் உண்மைக்குச் சான்றாக) நபி(ஸல்) அவர்கள் காட்டினார்கள்.

ஹதீஸ் 3638. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் சந்திரன் (இரண்டாகப்) பிளவுபட்டது.

ஹதீஸ் 3639. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் தோழர்களில் இருவர் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (விடைபெற்று) இருள் நிறைந்த ஓர் இரவில் (தம் இல்லங்களுக்கு) நடந்து சென்றனர். அவ்விருவருடனும் இரண்டு விளக்குகளைப் போன்றவை அவர்களுக்கு முன்னால் ஒளிவீசிச் சென்றன. அவர்கள் (வழியில்) பிரிந்து சென்றபோது, அவர்கள் தம் வீட்டாரிடம் சென்று சேரும் வரை ஒவ்வொருவருடனும் ஓர் ஒளி (மற்றொன்றைவிட்டுப் பிரிந்து அவர்களுடன்) சென்றது.

ஹதீஸ் 3640. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தினரில் ஒரு குழுவினர் அல்லாஹ்வின் ஆணை (இறுதிநாள்) தம்மிடம் வரும் வரை (சத்தியப் பாதையில் சோதனைகளை) வென்று நிலைத்திருப்பார்கள். (இறுதி நாள் வரும்) அந்த நேரத்திலும் அவர்கள் மேலோங்கியவர்களாகவே இருப்பார்கள்.

என முகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3641. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தினரில் ஒரு குழுவினர் அல்லாஹ்வின் கட்டளையைச் செயல்படுத்திய வண்ணமே இருப்பார்கள். அவர்களுக்கு இடைஞ்சல் செய்பவர்கள். அவர்களுக்குத் தீங்கிழைக்க முடியாது. அவர்களை எதிர்ப்பவர்களும் அவர்களுக்குத் தீங்கு செய்யமுடியாது. இறுதியில், அவர்கள் அதே நிலையில் நீடித்திருக்க, அல்லாஹ்வின் ஆணை (இறுதி நாள்) அவர்களிடம் வரும்.

இதை முஆவியா(ரலி) அறிவிக்க, அவர்களிடம் மாலிக் இப்னு யுகாமிர்(ரஹ்), '(அல்லாஹ்வின் கட்டளைகளைச் செயல்படுத்தும்) அவர்கள் ஷாம் தேசத்திலிருப்பார்கள்' என்று

முஆத்(ரலி) கூறினார்'' என்று கூறினார்கள். அதற்கு முஆவியா(ரலி) இருப்பார்கள்' என்று முஆத்(ரலி) சொல்ல தாம் கேட்டதாகக் கருதுகிறார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3642. ஷபீப் இப்னு ஃகர்கதா(ரஹ்) அறிவித்தார்

என் குலத்தார் உர்வா இப்னு அபில் ஜஅத்துல் பாரிகீ(ரலி) அவர்களைப் பற்றிப்பேசிக் கொண்டிருந்ததை கேட்டேன். உர்வா(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் அவர் ஓர் ஆட்டை வாங்குவதற்காக ஒரு தீனாரை (பொற்காசைக்) கொடுத்தார்கள். அதைக் கொண்டு அவர் இரண்டு ஆடுகளை வாங்கினார். அவ்விரண்டில் ஒன்றை அவர் ஒரு தீனாருக்கு விற்றுவிட்டு ஒரு தீனாரையும் ஓர் ஆட்டையும் கொண்டு வந்தார். (அதைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள் அவரின் வியாபாரத்தில் அவருக்கு பரக்கத் (எனும் அருள்வளம்) கிடைத்திடப் பிரார்த்தித்தார்கள். (அதன் பயனாக) அவர் மண்ணை வாங்கினாலும் அதில் இலாபமடைந்து விடுவார் என்ற நிலையில் இருந்தார்.

அறிவிப்பாளர்: சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்)

ஹஸன் இப்னு உமாரா(ரஹ்) இந்த ஹதீஸை, உர்வா இப்னு அபில் ஜஅத்(ரலி) அவர்களிடமிருந்து ஷபீப் இப்னு ஃகர்கதா(ரஹ்) அறிவித்தார் என்று சொல்லி எம்மிடம் கொண்டு வந்தார். நான் அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக ஷபீப் இப்னு கர்கதா(ரஹ்) அவர்களிடம் சென்றேன். அவர்கள் என்னிடம், 'நான் இந்த ஹதீஸை உர்வா அல் பாரிகீ(ரலி) அவர்களிடமிருந்து (நேரடியாகச்) செவியுறவில்லை. என் குலத்தார் உர்வா அவர்களிடமிருந்து அறிவிப்பதை மட்டுமே செவியுற்றேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3643. '(மேற் சொன்ன ஹதீஸை நான் உர்வா அவர்களிடம் கேட்கவில்லை.) ஆனால், நபி(ஸல்) அவர்கள், 'குதிரைகளின் நெற்றிகளுடன் மறுமை நாள் வரையிலும் நன்மை பிணைக்கப்பட்டுள்ளது' என்று கூறினார்கள் என உர்வா அல் பாரிகீ(ரலி) சொல்ல கேட்டிருக்கிறேன். அவர்களின் வீட்டில் நான் எழுபது குதிரைகளைப் பார்த்திருக்கிறேன்'' என்று ஷபீப் இப்னு ஃகர்கதா(ரஹ்) கூறினார்கள்.

மேலும், அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்), 'உர்வா(ரலி) நபி(ஸல) அவர்களுக்காக (அவர்கள் சார்பாக) ஓர் ஆட்டை வாங்குவார்கள். அது குர்பானீ ஆடு போலும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3644. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரைகளின் நெற்றிகளுடன் மறுமை நாள் வரை நன்மை பிணைக்கப்பட்டிருக்கிறது.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3645. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரைகளின் நெற்றிகளுடன் நன்மை பிணைக்கப்பட்டுள்ளது.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3646. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரை, (வைத்திருப்பது) மூன்று பேருக்கு (மூன்று வகையான விளைவுகளைத் தருவதாகும்.) ஒரு மனிதருக்கு (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத் தருவதாகும் மற்றொரு மனிதருக்குப் (பொருளதாரப்) பாதுகாப்பளிக்கக் கூடியதாகும் இன்னொரு மனிதருக்குப் பாவச்சுமையாகும். அதை இறை வழியில் பயன்படுத்துவதற்காக, அதனைப்

பசுமையான ஒரு வெட்ட வெளியில்... அல்லது ஒரு தோட்டத்தில்... ஒரு நீண்ட கயிற்றால் கட்டிவைத்துப் பராமரிக்கிற மனிதருக்கு அது (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத் தரும். அந்த குதிரை, தன்(னைக் கட்டியிருக்கும்) கயிற்றின் நீளத்திற்கு ஏற்ப எந்த அளவு தொலைவிற்குப் பசும்புல் வெளியில் ... அல்லது தோட்டத்தில்... மேயுமோ அந்த அளவிற்கு அவருக்கு நன்மைகள் கிடைக்கும்.

அதன் கயிறு அறுந்து, அது ஓரிரண்டு குதிகுதித்து (அல்லது ஓரிரண்டு மேடுகளைக் கடந்து) சென்றாலும் அதனுடைய (குளம்பின்) சுவடுகளின் அளவிற்கும் அதன் கெட்டிச் சாணத்தின் அளவிற்கும் அவருக்கு நன்மைகள் எழுதப்படும். அந்த குதிரை ஓர் ஆற்றைக் கடந்து செல்லும்போது அதிலிருந்து அது தண்ணீர் குடித்தால் அதற்குத் தண்ணீர் புகட்டும் எண்ணம் அதன் உரிமையாளருக்கு இல்லாமல் இருந்தாலும் அது அவர் செய்த நன்மைகளின் கணக்கில் எழுதப்படும். இன்னொருவர் அதன் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும் பிறரிடம் கையேந்துவதிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளவும் அதைக் கட்டி வை(த்துப் பராமரி)க்கிறவராவார். மேலும், அதனுடைய பிடரியின் (ஸகாத்தைச் செலுத்தும்) விஷயத்திலும் (அதனால் தாங்க முடிந்த பளுவை மட்டுமே) அதன் முதுகின் (மீது தூக்கி வைக்கும்) விஷயத்திலும் அல்லாஹ்வின் கட்டளையை (நிறைவேற்றிட) மறக்காதவராவார். இப்படிப்பட்டவருக்கு இந்த (அவருடைய) குதிரை(வறுமையிலிருந்து அவரைக் காக்கும்) திரையாகும். மற்றொருவன் பெருமைக்காகவும் பகட்டுக்காகவும் முஸ்லிம்களுடன் பகைமை பாராட்டுவதற்காகவும் அதனைக் கட்டி வை(த்து பராமரி)க்கிறவன் ஆவான். அதன் (தவறான நோக்கத்தின்) காரணத்தால, அது அவனுக்குப் பாவச் சுமையாக ஆம் விடுகிறது.

நபி(ஸல்) அவர்களிடம் கழுதைகளைக் குறித்து கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 'அவற்றைக் குறித்து எந்த இறைகட்டளையும் எனக்கு அருளப்படவில்லை' எவன் அணுவளவு நன்மை செய்திருந்தானோ அவன் அத(ன் நற்பல)னைக் கண்டு கொள்வான். மேலும், எவன் அணுவளவு தீமை புரிந்திருந்தானோ அவனும் அத(ற்கான தண்ட)னை(யை)க் கண்டு கொள்வான்' (திருக்குர்ஆன் 99: 7-8) என்னும் இந்த ஒருங்கிணைந்த, தனித்தன்மை வாய்ந்த திருக்குர்ஆன் வசனத்தைத் தவிர'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3647. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (போருக்காக) அதிகாலை நேரத்தில் கைபருக்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது (யூதர்களான) கைபர்வாசிகள் (வயல் வெளிகளை நோக்கி) மண்வெட்டிகளை எடுத்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். நபி(ஸல்) அவர்களைப் பார்த்ததும் அவர்கள், 'முஹம்மதும் ஐந்து (பிரிவுகள் கொண்ட அவரின்) படையினரும் வருகின்றனர்'' என்று கூறினார்கள். உடனே கோட்டையை நோக்கி விரைந்தோடிச் சென்றார்கள். அப்போது, நபி(ஸல்) அவர்கள் தம் இரண்டு கைகளையும் உயர்த்தி, 'அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன். கைபர் (வாசிகளின் நிலை) நாசமாம்விடும்.'நாம் ஒரு சமுதாயத்தினரின் முற்றத்தில் இறந்து விடுவோமாயின் எச்சரிக்கை செய்யப்பட்டு வந்த அவர்களுக்கு அதுமிகக் கெட்ட காலை நேரமாகி விடும்' என்று (திருக்குர்ஆன் 37: 177-வது இறைவசனத்தின் கருத்தைச்) கூறினார்கள்.

ஹதீஸ் 3648. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நான், 'இறைத்தூதர் அவர்களே! நான் தங்களிடமிருந்து நிறைய செய்திகளைச் செவியுற்றிருக்கிறேன். ஆனால், அவற்றை நான் மறந்து விடுகிறேன்'' என்று (நபி(ஸல்)

அவர்களிடம்) சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், 'உன் மேலங்கியை விரி'' என்று சொல்ல, நானும் அதை விரித்தேன். பிறகு அவர்கள் தம் இரண்டு கைகளால் (எதையோ அள்ளுவது போல் சைகை செய்து) அதில் அள்ளி(க் கொட்டி)னார்கள். பிறகு 'இதைச் சேர்த்து (நெஞ்சோடு) அணைத்துக் கொள்'' என்று கூறினார்கள். நானும் அவ்வாறே அதை (என் நெஞ்சோடு) சேர்த்தணைத்துக் கொண்டேன். அதன் பிறகு எந்த ஹதீஸையும் நான் மறக்கவில்லை.

# அத்தியாயம் 62 நபித் தோழர்களின் சிறப்புகள்

அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்.....

## நபித்தோழர்களின் சிறப்புகளும், முஸ்லிம்களில் நபி(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டவர்களைப் பார்த்தவர் நபித்தோழர் என்பதும்.

ஹதீஸ் 3649. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களிடையே ஒரு காலம் வரும். அப்போது மக்களில் ஒரு குழுவினர் புனிதப் போருக்குச் செல்வார்கள். அப்போது, (அவர்கள் யார் மீது படையெடுத்துச் செல்கிறார்களோ) அவர்கள், 'உங்களிடையே இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டவர்கள் இருக்கின்றனரா?' என்று கேட்பார்கள். 'ஆம், இருக்கிறார்கள்'' என்று (போரிடச் சென்ற) அவர்கள் பதில் செல்வார்கள். உடனே, போருக்குச் சென்ற அவர்களுக்கு வெற்றி அளிக்கப்படும். பிறகு மக்களிடையே ஒரு காலம் வரும். மக்களில் ஒரு குழுவினர் புனிதப் போர் புரியச் செல்வார்கள். (அவர்களிடம்), 'உங்களிடையே இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களுடன் தோழமை கொண்டவர்கள் இருக்கிறார்களா?' என்று கேட்கப்படும். போருக்குச் சென்றவர்கள், 'ஆம், இருக்கிறார்கள்'' என்று சொல்வார்கள். உடனே, அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும். பிறகு மக்களிடையே ஒரு காலம் வரும். மக்களில் ஒரு குழுவினர் போருக்குச் செல்வார்கள். அப்போது அவர்களிடம், 'அல்லாஹ்வின் தூதருடைய தோழர்களுடன் தோழமை கொண்டிருந்தவர்களுடன், தோழமை கொண்டவர்கள் உங்களிடையே இருக்கின்றனரா?' என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், 'ஆம், இருக்கிறார்கள்'' என்று பதிலளிப்பார்கள். உடனே, அவர்களுக்கு வெற்றியளிக்கப்படும்.

என அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3650. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தினரில் சிறந்தவர்கள் என்னுடைய தலைமுறையினரே. பிறகு, (சிறந்தவர்கள்) அவர்களை அடுத்துவரும் தலைமுறையினர் ஆவர். அதற்கு அடுத்து (சிறந்தவர்கள்) அவர்களையடுத்து வரும் தலைமுறையினர் ஆவர். பிறகு, உங்களுக்குப் பின்னர் ஒரு சமுதாயத்தினர் (வர) இருக்கிறார்கள். அவர்கள், தங்களிடம் சாட்சியம் சொல்லும்படி கேட்கப்படாமலேயே சாட்சியம் சொல்வார்கள். அவர்கள் நம்பிக்கை மோசடி செய்வார்கள் (மக்களின்) நம்பிக்கைக்குரியவர்களாக இருக்க மாட்டார்கள். அவர்கள் நேர்ச்சை செய்வார்கள் ஆனால், அதை நிறைவேற்ற மாட்டார்கள். அவர்களிடையே பருமனாயிருக்கும் (தொந்தி விழும்) நிலை தோன்றும்.

(இதை அறிவிக்கும் நபித்தோழர்) இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் தங்களின் தலை முறைக்குப் பிறகு இரண்டு தலைமுறைகளைக் கூறினார்களா, அல்லது மூன்று தலைமுறைகளைக் கூறினார்களா என்று எனக்குத் தெரியாது.

ஹதீஸ் 3651. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களில் சிறந்தவர்கள் என் தலை முறையினர். அவர்களுக்குப் பிறகு (சிறந்தவர்கள்) அவர்களையடுத்து வருபவர்கள். அவர்களுக்கும் பிறகு (சிறந்தவர்கள்) அவர்களையடுத்து வருபவர்கள். பின்னர், ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்களின் சாட்சியம் அவர்களின் சத்தியத்தை முந்திக் கொள்ளும். அவர்களின் சத்தியம் அவர்களின் சாட்சியத்தை முந்திக் கொள்ளும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்ராஹீம் நகயீ(ரஹ்) கூறினார்:

நாங்கள் விவரமில்லாத சிறுவர்களாயிருந்தபோது,'அஷ்ஹது பில்லாஹ் - அல்லாஹ்வை முன்னிறுத்தி நான் சாட்சியம் கூறுகிறேன்'' என்றோ,'அலய்ய அஹ்துல்லாஹ் - அல்லாஹ்வுடன் நான் செய்த ஒப்பந்தப்படி'' என்றோ சொன்னால் பெரியவர்கள் முஹாஜிர்களில் ஒருவர் தாம்.

அல்லாஹ் கூறினான்:

மேலும், (ஃபய்உ எனும் அச்செல்வம்) தங்களின் இல்லங்களைவிட்டும் - சொத்துக்களைவிட்டும் வெளியேற்றப்பட்ட ஏழை முஹாஜிர்களுக்கு உரியதுமாகும். அவர்கள் அல்லாஹ்வின் அருளையும் அவனுடைய உவப்பையும் விரும்புகிறார்கள். மேலும், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உதவிபுரிந்திடத் தயாராயிருக்கிறார்கள். இவர்களே வாய்மையாளர்களாவர். (திருக்குர்ஆன் 59:08)

மேலும் அல்லாஹ் கூறினான்:

நீங்கள் இந்த நபிக்கு உதவாவிட்டால் (அதனால் என்ன?), இறை மறுப்பாளர்கள் அவரை வெளியேற்றியபோது, நிச்சயமாக அல்லாஹ் அவருக்கு உதவியுள்ளான். அவர்கள் இருவரும் குகையில் தங்கியிருந்தபோது இருவரில் இரண்டாமவராய் இருந்த அவர் - தன் தோழரை நோக்கி,'கவலை கொள்ளாதீர் அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்று கூறினர். (திருக்குர்ஆன் 09:40)

''அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் ('ஸவ்ர்') குகையில் இருந்தார்கள்'' என்று ஆயிஷா(ரலி) அவர்களும், இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் கூறுகின்றனர்.

ஹதீஸ் 3652. பராஉ(ரலி) அறிவித்தார்

அபூ பக்ர்(ரலி) (என் தந்தை) ஆஸிப்(ரலி) அவர்களிடமிருந்து பதின்மூன்று திர்ஹம்கள் கொடுத்து ஓர் ஒட்டகச் சேணத்தை வாங்கினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) (என் தந்தை) ஆஸிபிடம்,'(உங்கள் மகன்)'பராவு'க்குச் கட்டளையிடு'கள். என் சேணத்தை என்னிடம் அவர் சுமந்து வரட்டும்'' என்று கூறினார்கள். அதற்கு ஆஸிப்(ரலி),'இணைவைப்போர் உங்களைத் தேடிக் கொண்டிருக்க, நீங்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் மக்காவைவிட்டு வெளியேறியபோது எப்படி செயல்பட்டீர்கள் என்று எனக்கு நீங்கள் அறிவிக்காத வரை நான் ('பராஉ'க்கு சேணம் கொண்டு வரும்படி) கட்டளையிட மாட்டேன்'' என்று கூறினார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி), பின்வருமாறு பதிலளித்தார்கள்: நாங்கள் மக்காவிலிருந்து புறப்பட்டு இரவு பகலாகக் கண்விழித்துப் பயணித்தோம்... அல்லது எங்கள் இரவிலும் பகலிலும் நாங்கள் நடந்தோம். இறுதியில், நண்பகல் நேரத்தை அடைந்தோம். உச்சிப் பொழுதின் கடும் வெயில் அடிக்கலாயிற்று. ஒதுங்குவதற்கு நிழல் ஏதும் தென்படுகிறதா என்று நான் நோட்டமிட்டேன். அப்போது பாறையொன்று தென்பட்டது. அங்கு நான் சென்றேன்.

அப்போது அங்கிருந்த நிழலைக் கண்டு அந்த இடத்தைச் சமப்படுத்தினேன். பிறகு, நபி(ஸல்) அவர்கள் படுத்தார்கள். பிறகு நான் எவரேனும் எங்களைத் தேடி வந்திருக்கிறார்களா என்று என்னைச் சுற்றிலும் நோட்டமிட்டபடி நடந்தேன். அப்போது ஆடு மேய்ப்பவன் ஒருவன் தன் ஆட்டை (நாங்கள் தங்கியிருந்த) பாறையை நோக்கி ஓட்டிக் கொண்டு வருவதைக் கண்டேன். நாங்கள் (ஓய்வெடுக்க) விருமபியது போன்று அவனும் (ஓய்வெடுக்க) நாடி வந்து கொண்டிருந்தான். நான் அவனிடம், 'நீ யாருடைய பணியாள்? இளைஞனே!" என்று கேட்டேன். அவன், 'குறைஷிகளில் ஒருவரின் பணியாள்'' என்று கூறி அவரின் பெயரைக் குறிப்பிட்டான். நான் அவர் இன்னாரெனப் புரிந்து கொண்டேன். எனவே, 'உன் ஆடுகளில் சிறிது பால் இருக்குமா?' என்று கேட்டேன். அவன், 'ஆம், (இருக்கிறது)'' என்று பதிலளித்தான். நான், 'நீ எங்களுக்காகப் பால் கறந்து தருவாயா?' என்று கேட்டேன். அவன், 'ஆம் (கறந்து தருகிறேன்)'' என்று பதிலளித்தான். நான் அவனுடைய ஆட்டு மந்தையிலிருந்து ஓர் ஆட்டைப் பிடிக்கும் படி உத்தரவிட அவ்வாறே அவன் பிடித்தான். பிறகு நான் அதன் மடியைப் புழுதி போக உதறும்படி அவனுக்கு உத்தரவிட்டேன். பிறகு அவனுடைய இருகைகளையும் உதறும்படி அவனுக்கு உத்தரவிட்டேன். 'இப்படி'' என்று பராஉ(ரலி) தம் இருகைகளில் ஒன்றை மற்றொன்றின் மீது தட்டினார்கள். என அறிவிப்பாளர் அபூ இஸ்ஹாக்(ரலி) கூறினார்: அவன் எனக்குச் சிறிது பாலைக் கறந்து தந்தான். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காக தோல் குவளை ஒன்றை நான் வைத்திருந்தேன். அதன் வாய் ஒரு துண்டுத் துணியால் மூடப்பட்டிருந்தது. நான் (அதிலிருந்த) நீரை அந்தப் பால் (குவளை) மீது, அதன் அடிப்பகுதி குளிர்ந்து விடும் வரை ஊற்றினேன். பிறகு அதை எடுத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் செல்ல அப்போது அவர்களும் விழித்தெழுந்து விட்டிருந்தார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! என்று நான் சொல்ல அவர்கள், 'ஆம்'' என்று பதிலளித்தார்கள். மக்கள் எங்களை (வலை வீசித்) தேடிக் கொண்டிருக்க, நாங்கள் புறப்பட்டோம். (அது வரை இஸ்லாத்தை ஏற்றிராத) சுராக்கா இப்னு மாலிக் இப்னி ஜுஃஷும் என்பவர் தன் குதிரை மீதமர்ந்தபடி எங்களைக் கண்டுவிட்டதைத் தவிர எதிரிகளில் எவரும் எங்களைக் காணவில்லை. (எதிரிகள் எங்களைத் தேடி வந்தபோது) நான், 'இதோ நம்மைத் தேடி வந்தவர்கள் நம்மை வந்தடைந்துவிட்டார்கள், இறைத்தூதர் அவர்களே!" என்று சொன்னேன். அதற்கு அவர்கள், 'கவலைப்படாதீர்கள், அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3653. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களுடன் நான் (ஸவ்ர்) குகையில் இருந்தபோது அவர்களிடம், '(குகைக்கு மேலிருந்து நம்மைத் தேடிக் கொண்டிருக்கும்) இவர்களில் எவராவது தம் கால்களுக்குக் கீழே (குனிந்து) பார்த்தால் நம்மைக் கண்டு கொள்வார்'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், 'எந்த இரண்டு நபர்களுடன் அல்லாஹ் மூன்றாமவனாக இருக்கிறானோ அவர்களைப் பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள், அபூ பக்ரே!" என்று கேட்டார்கள்.

"அபூ பக்ருடைய வாசலைத் தவிர (மஸ்ஜிதுந் நபவிக்கு வரும்) அனைத்து வாசல்களையும் அடைத்து விடுங்கள்' என்னும் நபிமொழி.

இதை நபி(ஸல்) அவர்களிடமிரந்து இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3654. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இறப்பதற்கு முன் நோய்வாய்ப்பட்டிருந்த போது) மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள் அதில்,'அல்லாஹ் ஓர் அடியாருக்கு இந்த உலகம் அல்லது தன்னிடமிருப்பது - இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி கூறினான். அந்த அடியார் அல்லாஹ்விடம் இருப்பதையே தேர்ந்தெடுத்தார்'' என்று கூறினார்கள். உடனே, அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் இறப்பு நெருங்கிவிட்டதை உணர்ந்து) அழுதார்கள். 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள சுயாதிகாரம் அளிக்கப்பட்ட அடியாரைப் பற்றிக் குறிப்பிட்டதற்கு இவர் ஏன் அழுகிறார்?' என்று நாங்கள் வியப்படைந்தோம். இறைத்தூதர் தாம் அந்த சுயாதிகாரம் அளிக்கப்பட்ட அடியார். (நபி - ஸல் - அவர்களின் இறப்பையே இது குறிக்கிறது என்பதை அபூ பக்ர் - ரலி - அறிந்து கொண்டார். ஏனெனில்,) அபூ பக்ர்(ரலி) எங்களில் மிகவும் அறிந்தவராக இருந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'தன் நட்பிலும் தன் செல்வத்திலும் எனக்கு மக்களிலேயே தேபருதவியாளராக இருப்பவர் அபூ பக்ரேயாவார். என் இறைவனல்லாத வேறெவரையாவது நான் உற்ற நண்பராக ஆக்கிக் கொள்ள விரும்பியிருந்தால் அபூ பக்ர் அவர்களையே ஆக்கிக் கொண்டிருப்பேன். ஆயினும், இஸ்லாத்தின் சகோதரத்துவமும் அதனால் ஏற்படும் பாச உணர்வும் (எனக்கும் அவருக்குமிடையே ஏற்கெனவே) இருக்கத் தான் செய்கின்றன. (என்னுடைய இந்தப்) பள்ளி வாசலில் எந்த வாசலும் அடைக்கப்படாமல் இருக்க வேண்டாம் அபூ பக்ரின் வாசலைத் தவிர'' என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களுக்கு அடுத்து அபூ பக்ர்(ரலி) அவர்களே மேன்மையுடையவர்கள்.

ஹதீஸ் 3655. இப்னு உமர்(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் மக்களிடையே சிறந்தவர்கள் இன்னார், இன்னார் என்று மதிப்பிட்டு வந்தோம். (முதலில்) அபூ பக்ர்(ரலி) அவர்களைச் சிறந்தவராக மதிப்பிட்டோம். பிறகு உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களையும் பிறகு உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களையும் சிறந்தவர்களாக மதிப்பிட்டு வந்தோம்.

## நான் (அல்லாஹ் அல்லாத ஒருவரை) உற்ற நண்பராக ஆக்கிக் கொள்ள விரும்பியிருந்தால்... என்று தொடங்கும் நபிமொழி

ஹதீஸ் 3656. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைவனைத் தவிர வேறு) ஒருவரை நான் உற்ற நண்பராக ஆக்கிக் கொள்ள விரும்பியிருந்தால் அபூ பக்ர் அவர்களையே ஆக்கிக் கொண்டிருப்பேன். ஆயினும், அவர் (மார்க்கத்தில்) என் சகோதரரும், (இன்ப - துன்பம் யாவற்றிலும்) என் தோழரும் ஆவார்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3657. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உற்ற நண்பராக எவரையேனும் ஆக்கிக் கொள்ள விரும்பியிருந்தால் அவரையே (அபூ பக்ர் அவர்களையே) ஆக்கிக் கொண்டிருப்பேன். ஆயினும், இஸ்லாத்தின் சகோதரத்துவமே சிறந்ததாகும்.

இதை அய்யூப்(ரஹ்) (இக்ரிமா - ரஹ் - அவர்களிடமிருந்தும், அவர்கள் இப்னு அப்பாஸ் - ரலி - அவர்களிடமிருந்தும்) அறிவித்தார்கள்.

இதே ஹதீஸ் வேறொர் அறிவிப்பாளர் தொடர் வழியாக அய்யூப்(ரஹ்) அவர்களிடமிருந்தே அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 3658. அப்துல்லாஹ் இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்

கூஃபாவாசிகள்இப்னு ஸுபைர்(ரலி) அவர்களிடம் பாட்டனாரின் வாரிசுப் பங்கு குறித்து எழுதிக் கேட்டார்கள். அதற்கு இப்னு ஸுபைர்(ரலி), 'நபி(ஸல்) அவர்கள், 'நான் இந்த சமுதாயத்தினரிலிருந்து எவரையாவது உற்ற தோழராக ஆக்கிக் கொள்ள விருமபியிருந்தால் அவரையே ஆக்கிக் கொண்டிருப்பேன்' என்று எவரைக் குறித்துக் கூறினார்களோ அவர்கள், பாட்டனாரைத் தந்தையின் ஸ்தானத்திற்குச் சமமாக ஆக்கியுள்ளார்கள்'' என்று அபூ பக்ர்(ரலி) அவர்களைக் கருத்தில் கொண்டு பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3659. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி (தேவை ஒன்றை முறையிடுவதற்காக) வந்தார். நபி(ஸல்) அவர்கள் அந்தப் பெண்மணியைத் திரும்பவும் வரும்படிக் கட்டளையிட்டார்கள். அந்தப் பெண்மணி, 'நான் வந்து தங்களைக் காண (முடிய)வில்லையென்றால்...?' என்று, - நபி(ஸல்) அவர்கள் இறந்துவிட்டால் (என்ன செய்வது?) என்பது போல்- கேட்டாள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நீ என்னைக் காணவில்லையென்றால் அபூ பக்ரிடம் செல்'' என்று பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3660. ஹம்மாம் இப்னு அல்ஹர்ஸ்(ரஹ்) அறிவித்தார்

"(இஸ்லாத்தின் ஆரம்பக் காலத்தில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஐந்து அடிமைகளும் இரண்டு பெண்களும் (அடிமையல்லாத ஆண்களில்) அபூ பக்ர்(ரலி) அவர்களும் மட்டுமே இருக்கக் கண்டேன்'' என்ன அம்மார் இப்னு யாசிர்(ரலி) சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 3661. அபுத் தர்தா(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களிடம் அமர்ந்திருந்தேன். அப்போது அபூ பக்ர்(ரலி) தம் முழங்கால் வெளியே தெரியுமளவிற்கு ஆடையின் ஒரு பக்கத்தை (தூக்கிப்) பிடித்தபடி (எங்களை நோக்கி) வந்தார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள், 'உங்கள் தோழர் வழக்காட வந்துவிட்டார்'' என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) (நபி - ஸல் - அவர்களுக்கு) சலாம் கூறிவிட்டு, 'இறைத்தூதர் அவர்களே! எனக்கும் கத்தாபின் மகனா(ர் உம)ருககும் இடையே சிறிது வாக்குவாதம் ஏற்பட்டது. நான் (கோபமாக) அவரை நோக்கி விரைந்தேன். பிறகு (என் செய்கைக்காக) நான் வருந்தி அவரிடம் என்னை மன்னிக்கும்படி கேட்டேன். அவர் என்னை மன்னிக்க மறுத்துவிட்டார். எனவே, உங்களிடம் வந்தேன்'' என்று கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள், 'அபூ பக்ரே! அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!"என்று மும்முறை கூறினார்கள். பிறகு உமர்(ரலி) (அபூ பக்ர் - ரலி - அவர்களை மன்னிக்க மறுத்துவிட்டதற்காக) மனம் வருந்தி அபூ பக்ர்(ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்று, 'அங்கே அபூ பக்ர்(ரலி) இருக்கிறார்களா?' என்று கேட்க வீட்டார், 'இல்லை'' என்று பதிலளித்தார்கள். எனவே, அவர்கள் நபி(ஸல்)

அவர்களிடம் சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால்) நிறம் மாறலாயிற்று. எனவே, அபூ பக்ர்(ரலி) பயந்துபோய் தம் முழங்கால்களின் மீது மண்டியிட்டு அமர்ந்து,'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! நானே (வாக்கு வாதத்தை தொடங்கியதால் உமரை விட) அதிகம் அநீதியிழைத்தவனாம் விட்டேன்!"என்று இருமுறை கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'(மக்களே!) அல்லாஹ் என்னை உங்களிடம் அனுப்பினான்.'பொய் சொல்கிறீர்' என்று நீங்கள் கூறினீர்கள். அபூ பக்ர் அவர்களோ,'நீங்கள் உண்மையே சொன்னீர்கள்' என்று கூறினார் மேலும் (இறை மார்க்கத்தை நிலை நிறுத்தும் பணியில்) தன்னையும் தன் செல்வத்தையும் அர்ப்பணித்து என்னிடம் பரிவுடன் நடந்து கொண்டார். அத்தகைய என் தோழரை எனக்காக நீங்கள் (மன்னித்து)விட்டு விடுவீர்களா?' என்று இரண்டு முறை கூறினார்கள். அதன் பிறகு அபூ பக்ர்(ரலி) மன வேதனைக்குள்ளாக்கப்படவில்லை.

ஹதீஸ் 3662. அம்ர் இப்னு ஆஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்'தாத்துஸ் ஸலாஸில்'எனும் போருக்கான படைக்கு (தளபதியாக்கி) என்னை அனுப்பி வைத்தார்கள். அப்போது நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,'மக்களிலேயே உங்களுக்கு மிகப் பிரியமானவர்கள் யார்?' என்று கேட்டேன். அவர்கள்,'ஆயிஷா'' என்று பதிலளித்தார்கள். நான்,'ஆண்களில் மிகப் பிரியமானவர்கள் யார்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆயிஷாவின் தந்தை (அபூ பக்ர்)'' என்று பதிலளித்தார்கள்.'பிறகு யார் (பிரியமானவர்)?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'பிறகு உமர் இப்னு கத்தாப் தான் (எனக்கு மிகவும் பிரியமானவர்)'' என்று கூறிவிட்டு, மேலும் பல ஆண்க(ளின் பெயர்க)ளைக் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3663. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(பனு இஸ்ராயீல் சமுதாயத்தில்)'ஓர் ஆட்டிடையர் தன் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தபோது ஓநாய் ஒன்று அவற்றின் மீது பாய்ந்து ஓர் ஆட்டைக் கவ்விச் சென்றது. ஆடு மேய்ப்பவர் அதைத் துரத்திச் சென்றார். ஓநாய் அவரைத் திரும்பிப் பார்த்து,'கொடிய விலங்குகள் ஆதிக்கம் செலுத்தும் (உலக இறுதி) நாளில் இதற்கு (பாதுகாவலர்) யார்? அந்த நாளில் என்னைத் தவிர இதற்குப் பொறுப்பாளன் எவனுமில்லையே' என்று கூறியது. (இவ்வாறே) ஒருவர் ஒரு மாட்டின் மீது சுமைகளை ஏற்றிவிட்டு அதை ஓட்டிக் கொண்டு சென்று கொண்டிருந்தபோது, அது அவரைத் திரும்பிப் பார்த்துப் பேசியது.'நான் இதற்காக (சுமை சுமப்பதற்காக)ப் படைக்கப்படவில்லை. மாறாக, நான் (நிலத்தை) உழுவதற்காகத் தான் படைக்கப்பட்டுள்ளேன்' என்று அது கூறிற்று' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே மக்கள்,'அல்லாஹ் தூயவன்'' என்று (வியந்து) கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,'நானும் அபூ பக்ரும் உமர் இப்னு கத்தாபும் இதை (இந்த நிகழ்ச்சிகளை) நம்புகிறோம்'' என்று கூறினார்கள்.

"அபூ பக்ர், உமர் இருவரைக் குறித்தும் அல்லாஹ் திருப்தியடைவானாக!"(என்று அறிவிப்பாளர் பிரார்த்திக்கிறார்.)

ஹதீஸ் 3664. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என்னை, வாளி தொங்கிக் கொண்டிருந்த ஒரு கிணற்றின் அருகே கண்டேன். அதிலிருந்து அல்லாஹ் நாடிய அளவிற்கு(த் தண்ணீர்) இறைத்தேன். பிறகு அபூ குஹாஃபாவின் மகன் (அபூ பக்ர் அவர்கள்) அதை எடுத்துக் கொண்டு அதிலிருந்து ஒரு வாளி நீரை.... அல்லது இரண்டு வாளிகள் நீரை... இறைத்தார். அவர் (சிறிது நேரம்) இறைத்தபோது சோர்வு தெரிந்தது. அல்லாஹ் அவரின் சோர்வை மன்னிப்பானாக! பிறகு, அது மிகப் பெரிய வாளியாக மாறிவிட்டது. அப்போது அதை கத்தாபின் மகன் உமர் எடுத்தார். உமர் இறைத்தைப் போன்று இறைக்கிற (வலிமை மிக்க) ஒரு புத்திசாலியான (அபூ ர்வத்) தலைவர் ஒருவரை மக்களில் நான் பார்த்ததில்லை. மக்கள் (தங்கள் ஒட்டகங்களுக்கு நீர் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டி வைக்கும் அளவிற்கு (அவர் நீர் இறைத்தார்.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3665. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

“தன் ஆடையைத் தற்பெருமையின் காரணத்தால் (பூமியில் படும்படி கீழே தொங்கவிட்டு) இழுத்துக் கொண்டு செல்கிறவனை அல்லாஹ் மறுமையில் ஏறிட்டும் பார்க்க மாட்டான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே, அபூ பக்ர்(ரலி), 'நான் கவனமாக இல்லாவிட்டால் என்னுடைய ஆடையின் ஒரு பக்கம் கீழே தொங்கி விடுகிறது'' என்று கூறினார்கள். அதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நீங்கள் அதைத் தற்பெருமை பாராட்டுவதற்காகச் செய்வதில்லையே'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்: மூஸா(ரஹ்) கூறினார்:

நான் சாலிம்(ரஹ்) அவர்களிடம், 'அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி), 'தன் கீழங்கியை இழுத்துக் கொண்டு செல்கிறவன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனவோ கூறினார்கள்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)'(எவன்) தன் ஆடையை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3666. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இறைவழியில் ஏதேனும் ஒரு ஜோடிப் பொருள்களைச் செலவிட்டவர் சொர்க்கத்தின் வாசல்களில் (ஒவ்வொன்றில்) இருந்து'அல்லாஹ்வின் அடியாரே! இது சிறந்ததாகும். (இதன் வழியாகப் பிரவேசியுங்கள்)' என்று அழைக்கப்படுவார். அதாவது தொழுகையாளியாக இருந்தவர் தொழுகைக்குரிய வாசலிலிருந்து அழைக்கப்படுவார். ஜிஹாத் (அறப்போர்) புரிபவராக இருந்தவர் ஜிஹாதுக்குரிய வாசலிலிருந்து அழைக்கப்படுவார். தர்மம் (ஸஜ்தா) செய்பவராக இருந்தவர் தர்மத்திற்குரிய வாசலிலிருந்து அழைக்கப்படுவார். நோன்பாளியாக இருந்தவர் நோன்பின் வாசலிலிருந்தும், 'அர்ரய்யான்' என்னும் (நோன்பாளிகளுக்கே உரிய சிறப்பு) வாசலிலிருந்து அழைக்கப்படுவார்' உரிய சிறப்பு) வாசலிலிருந்தும் அழைக்கப்படுவார்' என்று கூறினார்கள். உடனே அபூ பக்ர்(ரலி), 'இந்த வாசல்களிலிருந்து அழைக்கப்படுபவருக்குத் துயரம் எதுவும் இருக்காது. (அவர் எந்த வழியிலாவது சொர்க்கம் சென்றுவிடுவார்.) என்று கூறிவிட்டு, 'அவை அனைத்திலிருந்தும் எவராவது அழைக்கப்படுவாரா? இறைத்தூதர் அவர்களே!”என்று கேட்டார்கள். அதற்கு நபி

அவர்கள், 'நீங்கள் அவர்களில் ஒருவராக இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன், அபூ பக்ரே'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3667. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(என் தந்தை) அபூ பக்ர்(ரலி) (பனு ஹர்ஸ் குலத்தாரின் இல்லங்கள் அமைந்துள்ள)'ஸுன்ஹ்' என்னுமிடத்தில் இருந்து கொண்டிருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறப்பெய்தினார்கள். - அறிவிப்பாளர் இஸ்மாயீல்(ரஹ்), 'அதாவது ஆலியாவில்'' என்று கூறினார்.

அப்போது உமர்(ரலி) எழுந்து, 'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறக்கவில்லை. என் உள்ளத்தில் அப்படித்தான் - நபி(ஸல்) அவர்கள் இறக்கவில்லை என்றே - தோன்றுகிறது. அவர்களை அல்லாஹ் (இப்போதே) நிச்சயம் எழுந்திருக்கச் செய்வான். அப்போது அவர்கள் (நபி - ஸல்- அவர்கள் இறந்துவிட்டார்கள் என்று கூறிய) பலரின் கைகளையும் கால்களையும் துண்டிப்பார்கள்'' என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) (அங்கே) வந்து அல்லாஹ்வின் தூதரைப் போர்த்தியிருந்த போர்வையை விலக்கி அவர்களை (நெற்றியில்) முத்தமிட்டு, 'தங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும்! நீங்கள் உயிராயிருந்த போதும் நறுமணம் கமழ்ந்தீர்கள். இறந்த நிலையிலும் மணம் கமழ்கிறீர்கள். என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீதும் ஆணையாக! அல்லாஹ் ஒருபோதும் இரண்டு மரணங்களை உங்களை சுவைக்கச் செய்யமாட்டார்கள்'' என்று சொல்லிவிட்டு வெளியேறினார்கள். (வெளியே வந்தபின் உமர் அவர்களை நோக்கி,)'(நபி - ஸல் - அவர்கள் இறக்கவில்லையென்று) சத்தியம் செய்பவரே! நிதானமாயிருங்கள்'' என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) பேசியபோது உமர்(ரலி) அமர்ந்தார்கள்.

ஹதீஸ் 3668. அப்போது, அபூ பக்ர்(ரலி) அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனைப் போன்றிவிட்டு, 'முஹம்மத்(ஸல்) அவர்களை வணங்கிக் கொண்டிருந்தவர், முஹம்மத்(ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள் என்பதை அறிந்து கொள்ளட்டும். அல்லாஹ்வை வணங்கிக் கொண்டிருந்தவர்' அல்லாஹ் (என்றும்) உயிர் வாழ்பவன் அவன் இறக்கமாட்டான் என்பதைப் புரிந்து கொள்ளட்டும்'' என்று கூறினார்கள். மேலும், 'நபியே! நீங்களும் இறப்பவர் தாம் அவர்களும் இறப்பவர்களே' என்னும் (திருக்குர்ஆன் 39:30-ம்) இறை வசனத்தையும், 'முஹம்மது ஓர் இறைத் தூதரேயன்றி வேறில்லை. அவருக்கு முன்னரும் கூட பல இறைத்தூதர்கள் (வந்து) சென்றிருக்கிறார்கள். எனவே, அவர் இறந்துவிட்டாலோ, (போரில்) கொல்லப்பட்டுவிட்டாலோ நீங்கள் உங்கள் கால் சுவடுகளின் வழியே (பழைய மதத்திற்கே) திரும்பிச் சென்று விடுவீர்களா? (நினைவிருக்கட்டும்:) எவன் அவ்வாறு திரும்பிச் செல்கிறானோ அவனால் அல்லாஹ்விற்கு எத்தகைய தீங்கும் செய்துவிட முடியாது. நன்றி செலுத்தி வாழ்பவர்களுக்கு அல்லாஹ் அதற்குரிய பிரதி பலனை மிக விரைவில் வழங்குவான்' என்னும் (திருக்குர்ஆன் 03:144-ம்) இறை வசனத்தையும் ஓதினார்கள். உடனே மக்கள் (துக்கத்தால் தொண்டையடைக்க) விம்மியழுதார்கள். அன்சாரிகள் (தம்)'பனு சாஇதா' சமுதாயக் கூடத்தில் ஒன்று கூடி (தம் தலைவர்) ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடம், 'எங்களில் ஒரு தலைவர் உங்களில் ஒரு தலைவர் (ஆக இருவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்வோம்' என்று முஹாஜிர்களிடம் சொல்வோம்)'' என்று பேசிக்கொண்டார்கள். அப்போது அபூ பக்ர், உமர் இப்னு கத்தாப், அபூ உபைதா இப்னு ஜர்ராஹ்(ரலி) ஆகியோர் (ஆட்சித் தலைவரை

முடிவு செய்ய) அன்சாரிகளிடம் வந்தனர். உமர்(ரலி) பேசப் போனார்கள். உடனே அவர்களை அபூ பக்ர்(ரலி) மௌனமாக இருக்கச் சொல்லிவிட்டார்கள். (இதைப் பிற்காலத்தில் நினைவு கூரும் போது) உமர் அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் பேச முயன்றது எதற்காக என்றால், நான் எனக்குப் பிடித்த பேச்சு ஒன்றைத் தயாரித்து வைத்திருந்தேன். அபூ பக்ர் அவர்கள் அந்த அளவிற்குப் பேச மாட்டார்கள் என்று நான் அஞ்சினேன். எனவேதான் நான் பேச முயன்றேன்' என்று கூறி வந்தார்கள்.

பிறகு, அபூ பக்ர்(ரலி) பேசினார்கள். மக்களிலேயே உரை நயம் மிக்கவர்களாக அவர்கள் பேசினார்கள். அவர்கள் தம் பேச்சில், '(குறைஷிகளாகிய) நாங்கள் ஆட்சித் தலைவர்களாயிருப்போம் (அன்சாரிகளான) நீங்கள் அமைச்சர்களாயிருங்கள்' என்று கூறினார்கள். உடனே, (அன்சாரியான) ஹுபாப் இப்னு முன்திர்(ரலி), 'இல்லை! அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டோம். எங்களிடையேயிருந்து ஒரு தலைவரும (தேர்ந்தெடுத்துக் கொள்வோம்) என்று கூறினார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி), 'இல்லை நாங்களே தலைவர்களாயிருப்போம். நீங்கள் அமைச்சர்களாயிருங்கள். ஏனெனில், குறைஷிகள் தாம் அரபுகளில் சிறந்த ஊரை (மக்காவை)ச் சேர்ந்தவர்களும், சிறந்த செயல்திறன் மிக்கவர்களும்ஆவர். எனவே, உமர் இப்னு கத்தாப், அல்லது அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்விற்கு (தலைமைக்கான) விசுவாசப் பிரமாணம் செய்யுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது உமர்(ரலி), 'இல்லை'' நாங்கள் உங்களிடமே விசுவாசப் பிரமாணம் செய்கிறோம். நீங்கள் எங்கள் தலைவர் எங்களில் சிறந்தவர் எங்களிடையே அல்லாஹ்வின் தூதருக்கு மிகவும் பிரியமாயிருந்தவர்கள்'' என்று சொல்லிவிட்டு, அவர்களின் கரத்தைப் பிடித்து அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்தார்கள். மக்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்தார்கள். அப்போது ஒருவர், 'ஸஅத் இப்னு உபாதா அவர்களை(ப் புறக்கணித்து அவரின் கருத்தை) நீங்கள் கொன்று விட்டீர்கள்'' என்று கூறினார். அதற்கு உமர்(ரலி), 'அல்லாஹ் தான் அவரைக் கொன்றுவிட்டான்'' என்று பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3669. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் பார்வை (அவர்களின் மரண வேளையில்) நிலை குத்தி நின்றது. பிறகு அவர்கள், 'மிக உயர்ந்த நண்பர்களிடம் (செல்கிறேன்)'' என்று (மூன்று முறை) கூறினார்கள்.

தொடர்ந்து அறிவிப்பாளர் காசிம்(ரஹ்) (நபி-ஸல் அவர்களின் இறப்பு சம்பவம் தொடர்பான) இந்த ஹதீஸை முழுமையாக எடுத்துரைத்தார்கள்.

ஆயிஷா(ரலி) கூறினார். (அபூ பக்ர், உமர் ஆகிய) அவ்விருவரின் உரைகளில் எந்தவோர் உரையைக் கொண்டும் அல்லாஹ் நன்மை புரியாமல் இல்லை. உமர் அவர்கள் (தவறாக நடந்தால் கட்டாயம் தண்டிக்கப்படுவீர்கள் என்று) மக்களை எச்சரித்தார்கள். ஏனெனில், மக்களிடையே நயவஞ்சககுணமுடையவர்களும் (அப்போது) இருந்தனர். (உமர் அவர்களின்) அந்த (அச்ச மூட்டும்) உரையின் வாயிலாக அல்லாஹ் அ(ந்த நயவஞ்சக குணமுடைய)வர்களை (சத்தியத்தின் பக்கம்) திருப்பினான்.

ஹதீஸ் 3670. அபூ பக்ர்(ரலி) மக்களுக்கு நேர்வழியைக் காண்பித்தார்கள். அவர்களின் உரையின் காரணத்தால், 'முஹம்மத்(ஸல்) அவர்கள் ஓர் இறைத்தூதரேயன்றி வேறில்லை. அவர்களுக்கு முன்னரும் கூட பல இறைத்தூதர்கள் (வந்து) சென்றிருக்கிறார்கள். அவர் இறந்துவிட்டாலோ, (போரில்) கொல்லப்பட்டுவிட்டாலோ நீங்கள் உங்கள் கால்

சுவடுகளின் வழியே (பழைய மதத்திற்கே) திரும்பிச் சென்று விடுவீர்களா? (நினைவிருக்கட்டும்:) எவன் அவ்வாறு திரும்பிச் செல்கிறானோ அவனால் அல்லாஹ்விற்கு எத்தகைய தீங்கும் செய்துவிட முடியாது. நன்றி செலுத்தி வாழ்பவர்களுக்கு அல்லாஹ் அதற்குரிய பிரதிபலனை மிக விரைவில் வழங்குவான்' என்றும் (திருக்குர்ஆன் 03: 144-ம்) வசனத்தை ஓதியபடி மக்கள் வெளியே சென்றார்கள்.

ஹதீஸ் 3671. முஹம்மத் இப்னு ஹன∴பிய்யா (ரஹ்) அறிவித்தார்

நான் என் தந்தை (அலீ - ரலி - அவர்கள்) இடம், 'இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்குப் பிறகு மக்களில் யார் சிறந்தவர்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அபூ பக்ர் அவர்கள்'' என பதிலளித்தார்கள். நான், '(அவர்களுக்குப்) பிறகு யார்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'பிறகு உமர் அவர்கள் (தாம் சிறந்தவர்)'' என்று பதிலளித்தார்கள். 'பிறகு (மக்களில் சிறந்தவர்) உஸ்மான் (ரலி) தாம்'' என்று (என் தந்தை) சொல்லிவிடுவார்களோ என நான் அஞ்சியவனாக, 'பிறகு (மக்களில் சிறந்தவர்) நீங்கள் தாமே!" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் 'நான் முஸ்லிம்களில் ஒருவன் அவ்வளவு தான்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3672. ஆயிஷா (ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் பயணங்களில் ஒன்றில் அவர்களுடன் புறப்பட்டோம். நாங்கள் (மதீனாவுக்கருகில் உள்ள) 'பைதா' என்னுமிடத்தை... அல்லது 'தாத்துல் ஜைஷ்' என்னுமிடத்தை... அடைந்தபோது, என்னுடைய கழுத்து மாலை ஒன்று (எங்கோ) அவிழ்ந்து விழுந்துவிட்டது. எனவே, அதைத் தேடுவதற்காக, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஓரிடத்தில் (முகாமிட்டுத்) தங்கினார்கள். மக்களும் அவர்களுடன் தங்கினர். அப்போது அவர்கள் எந்த நீர்நிலை அரும்லும் இருக்கவில்லை. அவர்களிடமும் தண்ணீர் எதுவும் இருக்கவில்லை. எனவே, மக்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் வந்து, '(உங்கள் மகள்) ஆயிஷா என்ன செய்தார் என்று நீங்கள் கவனிக்க மாட்டீர்களா? இறைத்தூதர் (ஸல்) அவர்களையும், அவர்களுடன் மக்களையும் எந்த நீர் நிலைக்கு அரும்லும் அவர்கள் இல்லாத நிலையிலும், அவர்களுடன் தண்ணீர் எதுவும் இல்லாத நிலையிலும் ஆயிஷா தங்க வைத்துவிட்டார்'' என்று கூறினார்கள். உடனே, அபூ பக்ர் (ரலி) என் மடியில் தலை வைத்துத் தூங்கி விட்டிருந்த நிலையில் வந்தார்கள். 'நீ இறைத்தூதர் (ஸல்) அவர்களையும் மக்களையும் எந்த நீர்நிலைக்கு அரும்லும் அவர்கள் இல்லாத நிலையிலும் அவர்களுடன் தண்ணீர் எதுவும் இல்லாத நிலையிலும் (தொடர்ந்து பயணிக்கவிடாமல்) தடுத்துவிட்டாயே!" என்று சொல்லி என்னைக் கண்டித்தார்கள். மேலும், அவர்கள் எதைச் சொல்ல அல்லாஹ் நாடினானோ அதையெல்லாம் சொல்லிவிட்டு, என்னைத் தம் கரத்தால் என் இடுப்பில் குத்தலானார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என் மடியில் படுத்துக் கொண்டிருந்தது தான் என்னை அசைய விடாமல் (அடி வாங்கிக் கொண்டிருக்கும்படி) செய்துவிட்டது. அல்லாஹ்வின் தூதா (ஸல்) அவர்கள் காலை வரை தூங்கினார்கள். அப்போதும் தண்ணீர் கிடைக்கவில்லை. அப்போது, அல்லாஹ் 'தயம்மும்' உடைய (திருக்குர்ஆன் 04:43-ம்) வசனத்தை அருளினான். (இது குறித்து) உசைத் இப்னு ஹுளைர் (ரலி) 'அபூ பக்ரின் குடும்பத்தாரே! ('தயம்மும்' என்ற சலுகையான) இது, உங்களால் (சமுதாயத்திற்குக் கிடைத்த) முதல் 'பரக்கத்' (அருள் வளம்) அல்ல. (இதற்கு முன்பும் பல நன்மைகள் உங்களின் மூலம் கிடைத்துள்ளன)'' என்று கூறினார்கள். பிறகு, நான்

சவாரி செய்து வந்த ஒட்டகத்தை (அது அமர்ந்திருந்த இடத்திலிருந்து) நாங்கள் எழுப்பியபோது, அதற்குக் கீழே (நான் தொலைத்துவிட்ட) கழுத்து மாலையை நாங்கள் கண்டோம்.

ஹதீஸ் 3673. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் தோழர்களைத் திட்டாதீர்கள். ஏனெனில், உங்களில் ஒருவர் உஹுது மலையளவு தங்கத்தைத் செலவு செய்தாலும் (என் தோழாகளான) அவர்கள் (இறை வழியில்) செலவு செய்த இரண்டு கைக் குவியல் அல்லது அதில் பாதியளவைக் கூட (அவரின்) அந்த தர்மம் எட்ட முடியாது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3674. அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

நான் என் வீட்டில் உளூச் செய்துவிட்டுப் புறப்பட்டேன். (அப்போது எனக்குள்),'நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களைவிட்டுப் பிரியாமல் அவர்களுடனேயே என்னுடைய இந்த நாள் (முழுவதும்) இருப்பேன்'' என்று சொல்லிக் கொண்டேன். நான் பள்ளி வாசலுக்கு வந்து நபி(ஸல்) அவர்களைக் குறித்துக் கேட்டேன். அப்போது மக்கள்,'நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு இந்தப் பக்கம் போனார்கள்'' என்று கூறினர். நான் (நபி - ஸல்) அவர்கள் புறப்பட்டு இந்தப் பக்கம் போனார்கள்'' என்று கூறினர். நான் (நபி - ஸல் - அவர்கள் சென்ற திசையில்) அவர்களின் அடிச்சுவட்டில் அவர்களைப் பற்றி (இந்த வழியாகச் சென்றார்களா என்று) விசாரித்தபடி சென்றேன். இறுதியில் (குபாவுக்கு அரும்லுள்ள ஒரு தோட்டமான) பிஃரு அரீஸுக்குள் சென்று அதன் வாசலில் அமர்ந்தேன். அதன் வாசல் பேரீச்ச மட்டையால் தயாரிக்கப்பட்டிருந்தது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் (இயற்கைக்) கடனை நிறைவேற்றிக் கொண்டு உளூச் செய்தார்கள். உடனே, நான் அவர்களிடம் எழுந்து சென்றேன். அவர்கள் (பிஃரு) அரீஸ் (என்னும் அத்தோட்டத்தில் உள்ள) கிணற்றின் மீது அதன் சுற்றுச் சுவருக்கு நடுவே தம் கால்கள் இரண்டையும் திறந்து கிணற்றுக்குள் தொங்க விடப்படி அமர்ந்திருந்தார்கள். நான் அவர்களுக்கு சலாம் சொல்லிவிட்டுத் திரும்பிச் சென்று வாசலருகே அமர்ந்து கொண்டேன். நான் (எனக்குள்),'இன்று நான் அல்லாஹ்வின் தூதருடைய வாயில் காவலனாக இருப்பேன்'' என்று சொல்லிக் கொண்டேன். அப்போது அபூ பக்ர்(ரலி) வந்து கதவைத் தள்ளினார்கள். நான்,'யார் அது?' என்று கேட்டேன். அவர்கள்,'(நானே) அபூ பக்ர் (வந்துள்ளேன்)'' என்று பதிலளித்தார்கள். உடனே நான்,'சற்றுப் பொறுங்கள்'' என்று சொல்லிவிட்டு (நபி - ஸல் - அவர்களிடம்) சென்று,'இறைத்தூதர் அவர்களே! இதோ அபூ பக்ர் அவர்கள் (வந்து) தங்களிடம் உள்ளே வர அனுமதி கேட்கிறார்கள்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'அவருக்கு அனுமதி கொடுங்கள். மேலும், அவர் சொர்க்கவாசி என்று நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். நான் அபூ பக்ர் அவர்களை நோக்கிச் சென்ற அவர்களிடம்,'உள்ளே வாருங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நீங்கள் சொர்க்கவாசி என்று நற்செய்தி அறிவித்தார்கள்'' என்று சொன்னேன். உடனே, அபூ பக்ர் அவர்கள் உள்ளே வந்து, இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வலப் பக்கத்தில் அவர்களுடன் (ம்ணற்றின்) சுற்றுச் சுவரில் அமர்ந்து கொண்டு நபி(ஸல்) அவர்கள் செய்தது போன்றே தம் கால்கள் இரண்டையும் கிணற்றில் தொங்கவிட்டுக் கொண்டு கால்களைத் திறந்து வைத்தார்கள். பிறகு, நான் திரும்பிச் சென்று (வாசலில்) அமர்ந்து கொண்டேன். நான் (முன்பே) என் சகோதர(ர் ஒருவ)ரை உளூச் செய்து

என்னுடன் சேர்ந்து கொள்ளும்படி சொல்லி, விட்டுவிட்டு வந்திருந்தேன். எனவே (எனக்குள்), 'அல்லாஹ் இன்னாருக்கு நன்மையை நாடியிருந்தால் அவரை (இங்கு), வரச் செய்வான்'' என்று சொல்லிக் கொண்டேன்.

.!"இன்னார்' என்று அபூ மூஸா அல் அஷ் அரீ (ரலி) கூறியது. தம் சகோதரைக் கருத்தில் கொண்டே'' என்று அறிவிப்பாளர் ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) கூறினார்:

அப்போது ஒருவர் கதவை அசைத்தார். நான், 'யார் அது?' என்று கேட்டேன். வந்தவர், '(நானே) உமர் இப்னு கத்தாப் (வந்துள்ளேன்)'' என்று சென்னார். நான், 'கொஞ்சம் பொறுங்கள்'' என்று கூறிவிட்டு, இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து அவர்களுக்கு சலாம் கூறி, 'இதோ, உமர் இப்னு கத்தாப் அவர்கள் வந்து தங்களிடம் (உள்ளே வர) அனுமதி கேட்கிறார்கள்'' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், 'அவருக்கு அனுமதி கொடுங்கள் அவர் சொர்க்கவாசி என்று அவருக்கு நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். நான் சென்று, 'உள்ளே வாருங்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நீங்கள் சொர்க்கவாசி என்று உங்களுக்கு நற்செய்தி கூறுகிறார்கள்'' என்று சொன்னேன். அவர்கள் உள்ளே வந்து கிணற்றின் சுற்றுச் சுவரில் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு இடப்பக்கம் அமர்ந்து தம் இரண்டு கால்களையும் கிணற்றுக்குள் தொங்கவிட்டார்கள். பிறகு நான் திரும்பிச் சென்று (வாசலருகே) அமர்ந்து கொண்டேன். 'அல்லாஹ் இன்னாருக்கு (என் சகோதரருக்கு) நன்மையை நாடியிருந்தால் அவரை (இங்கு) வரச் செய்வான்'' என்று (முன்போன்றே எனக்குள்) கூறிக் கொண்டேன். அப்போது ஒருவர் வந்து கதவை ஆட்டினார். நான், 'யார் அது?' என்று கேட்டேன். அவர், '(நானே) உஸ்மான் இப்னு அஃப்பான் (வந்திருக்கிறேன்)'' என்று பதிலளித்தார். உடனே, 'கொஞ்சம் பொறுங்கள்'' என்று சொல்லிவிட்டு, இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று அவர்களுக்கு உஸ்மான் அவர்கள் வந்திருக்கும் செய்தியை அறிவித்தேன். நபி (ஸல்) அவர்கள், 'அவருக்கு அனுமதி கொடுங்கள். அவருக்கு நேரவிருக்கும் ஒரு துன்பத்தையடுத்து அவருக்கு சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே நான் உஸ்மான் அவர்களிடம் சென்று அவரிடம், 'உள்ளே வாருங்கள். உங்களுக்கு நேரவிருக்கும் ஒரு துன்பத்தையடுத்து உங்களுக்கு சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நற்செய்தி கூறினார்கள்'' என்று சொன்னேன். அவர்கள் உள்ளே வந்து (பார்த்த போது) சுற்றுச் சுவர் (ஒரு பக்கம்) நிரம்பி விட்டிருப்பதைக் கண்டார்கள். எனவே, மற்றொரு பக்கம் நபி (ஸல்) அவர்களுக்கு எதிரே அமர்ந்தார்கள்.

அறிவிப்பாளர் ஷரீக் இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) கூறினார்:

ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்), 'நான் (நபி - ஸல் அவர்களும், அபூ பக்ர் - ரலி - அவர்களும், உமர் - ரலி - அவர்களும்) அடுத்தடுத்து அமர்ந்திருந்த இந்த நிலையும் (தற்போது) அவர்களின் கப்ருகள் (மண்ணறைகள்) அமைந்திருக்கும் நிலையைக் குறிப்பதாக விளக்கம் கண்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3675. அனஸ் (ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களும் அபூ பக்ர், உமர், உஸ்மான் (ரலி) ஆகியோரும் உஹுது மலை மீது ஏறினார்கள். அது அவர்களுடன் நடுங்கியது. அப்போது நபி (ஸல்) அவர்கள், 'உஹுதே! அசையாமல் இரு! ஏனெனில், உன் மீது ஓர் இறைத்தூதரும்,

(நானும்) ஒரு சித்தீக்கும், இரண்டு உயிர்த் தியாகிகளும் உள்ளனர்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3676. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (கனவில்) ஒரு கிணற்றிலிருந்து நீர் இறைத்துக் கெண்டிருக்கும்போது என்னிடம் அபூ பக்ரும் உமரும் வந்தார்கள். அபூ பக்ர் அவர்கள் (நான் நீர் இறைத்து முடித்த பின்) வாளியை எடுத்து ஒரு நாளி நீரை... அல்லது இரண்டு வாளிகள் நீரை... இறைத்தார்கள். அவர் இறைத்தபோது (சற்று) சோர்வு தென்பட்டது. அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளிப்பானாக! பிறகு, அபூ பக்ர் அவர்களின் கரத்திலிருந்து உமர் அவர்கள் அதை எடுத்துக் கொள்ள அது அவரின் கையில் பெரியதொரு வாளியாக மாறியது. (அவர் வலுவுடன் பல வாளிகள் தண்ணீர் இறைத்தார்.) மக்களில் அவரைப் போல் சீராகவும் உறுதியாகவும் செயல்படக் கூடிய புத்திசாலியான (அபூ ர்வத்) தலைவர் ஒருவரை நான் கண்டதில்லை. மக்கள் (தங்கள் ஒட்டகங்களுக்கு நீர் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கும் அளவிற்கு நீர் இறைத்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவான வஹ்ப் இப்னு ஜரீர்(ரஹ்),'இந்த ஹதீஸில் இடம் பெற்றுள்ள'அத்தன்' என்னும் சொல்,'ஒட்டகம் தாகம் தீர நீரருந்தி, மண்டியிட்டுப்படுத்து ஓய்வெடுக்கும் இடம்' எனப் பொருள்படும்' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3677. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் சில மக்களிடையே நின்று கொண்டிருக்க, அவர்கள் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களுக்காக பிரார்த்திதார்கள். அப்போது உமர் அவர்கள் (இறந்து) கட்டிலின் மீது கிடத்தப்பட்டிருந்தார்கள் - அப்போது என் பின்னாலிருந்து ஒருவர் தன் முழங்கையை என் தோளின் மீது வைத்து (உமர் - ரலி - அவர்களை நோக்கி,)'அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும். அல்லாஹ் (உங்கள் உடல், அடக்கம் செய்யப்படும் போது) உங்களை உங்களுடைய இரண்டு தோழர்க(ளான நபி - ஸல் - அவர்கள் மற்றும் அபூ பக்ர் - ரலி - அவர்க)ளுடன் (அவர்களின் மண்ணறைகளுக்கே அருகே) அடங்கச் செய்ய வேண்டும் என்று நான் விரும்பிக் கொண்டிருந்தேன். ஏனெனில், பெரும்பாலான நேரங்களில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'நானும் அபூ பக்ரும் உமரும் (இப்படி) இருந்தோம் நானும் அபூ பக்ரும் உமரும் (இப்படிச்) செய்தோம் நானும் அபூ பக்ரும் உமரும் (இங்கே) சென்றோம்' என்று சொல்ல கேட்டிருக்கிறேன். எனவே, உங்களை அல்லாஹ் அவ்விருவருடன் (அவர்களின் மண்ணறைகளுக்கு அருகே) அடங்கச் செய்திட வேண்டுமென்று விரும்புகிறேன்'' என்று கூறினார். நான் திரும்பிப் பார்த்தேன். இப்படிச் சொன்ன அந்த மனிதர் அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களாக இருந்தார்கள்.

ஹதீஸ் 3678. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

"இணை வைப்பவர்கள் அல்லாஹ்வின் தூதருக்கு இழைத்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானது எது?' என்று நான் அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்,'(ஒரு முறை மக்காவில்) உக்பா இப்னு அபீ முஐத் என்பவன், நபி(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் நிலையில் வந்து தன் போர்வையை அவர்களின் கழுத்தில் போட்டு அதை (அவர்களின் மூச்சு திணறும்படி) கடுமையாக நெறித்ததை பார்த்தேன். அப்போது அபூ பக்ர்(ரலி) வந்து, நபி(ஸல்) அவர்களைவிட்டு உக்பாவை (தம் கையால்) தள்ளினார்கள். அப்போது,'என் இறைவன்

அல்லாஹ் தான்' என்று சொல்லும் காரணத்திற்காகவா ஒரு மனிதரை நீங்கள் கொல்(ல முனை)கிறீர்கள்? அவரோ தம் இறைவனிடமிருந்து உங்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்திருக்கிறார்'' 38 என்று கூறினார்கள்.

## அதவீயும் குறைஷிக் குலத்தவருமான அபூ ஹஃப்ஸ் உமர் இப்னு கத்தாப்(ரலி) அல்லாஹு அன்ஹு அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3679. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், 'நான் (கனவில்) என்னை சொர்க்கத்தில் நுழைந்தவனாகக் கண்டேன். அங்கு நான் அபூ தல்ஹா அவர்களின் மனைவி ருமைஸாவுக்கு40 அருகே இருந்தேன். அப்போது நான் மெல்லிய காலடி யோசையைச் செவியுற்றேன். உடனே, 'யார் அது?' என்று கேட்டேன். அதற்கு (அங்கிருந்த வானவர்), 'இவர் பிலால்' என்று பதிலளித்தார். நான் (அங்கு) ஓர் அரண்மனையைக் கண்டேன். அதன் முற்றத்தில் பெண்ணொருத்தி இருந்தாள். நான், 'இது யாருக்குரியது?' என்று கேட்டேன். அவர், (வானவர்), 'இது உமருடையது' என்று கூறினார். எனவே, நான் அந்த அரண்மனையில் நுழைந்து அதைப் பார்க்க விரும்பினேன். அப்போது (உமரே!) உங்கள் ரோஷம் என் நினைவுக்கு வந்தது (எனவே, அதில் நுழையாமல் திரும்பிவிட்டேன்)'' என்று கூறினார்கள். அதற்கு உமர்(ரலி), 'இறைத்தூதர் அவர்களே! உங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும். உங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன்'' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 3680. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இருந்தபோது அவர்கள், 'நான் தூங்கிக் கொண்டிருந்த பொழுது (கனவில்) என்னை சொர்க்கத்தில் கண்டேன். அப்போது அரண்மனையொன்றின் பக்கத்தில் ஒரு பெண் (உலக வாழ்வில் இறைவணக்கம் புரிபவளாய் இருந்து வந்ததைக் குறிக்கும் வகையிலும் தன் அழகையும் பொலிவையும் இன்னும் அதிகரித்துக கொள்ளவும்) உளூச் செய்து கொண்டிருந்தாள். நான் (ஜீப்ரிலிடம்), 'இந்த அரண்மனை யாருக்குரியது?' என்று கேட்டேன். அவர், 'உமர் அவர்களுக்குரியது' என்று பதிலளித்தார். அப்போது (அதில் நுழைந்து பார்க்க எண்ணினேன். ஆனால்,) எனக்கு உமரின் ரோஷம் நினைவுக்கு வந்தது. எனவே, (அதில் நுழையாமல்) திரும்பி வந்து விட்டேன்'' என்று கூறினார்கள். இதைக் கேட்டதும் உமர்(ரலி) அழுதார்கள். பிறகு, 'தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3681. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

''நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில் என்னிடம் ஒரு பால் பாத்திரம் கொண்டு வரப்பட்டது. அந்தப்) பாலை நான் (தாகம் தீரும் அளவு) அருந்தினேன். இறுதியில், என் நகக்கண்... அல்லது, நகக் கண்கள் ... ஊடே (பால்) பொங்கி வருவதைக் கண்டேன். பிறகு (நான் அருந்தியது போக இருந்த மிச்சத்தை) உமர் அவர்களுக்குக் கொடுத்தேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள், 'இதற்கு (இந்தப் பாலுக்கு) நீங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்க, அதற்கு அவர்கள், 'அறிவு'' என்று பதிலளித்தார்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3682. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கனவில் இப்படி எனக்குக் காட்டப்பட்டது: நான் ஒரு சுற்றுச் சுவர் இல்லாத கிணற்றின் மீதிருந்த ஒரு வாளியால் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தேன். அப்போது அபூ பக்ர் அவர்கள் வந்து ஒரு வாளி... அல்லது இரண்டு வாளிகள்... தண்ணீரை(சற்று) சோர்வான நிலையில் இறைத்தார்கள். அல்லாஹ் அவர்களை மன்னிப்பானாக! பிறகு உமர் இப்னு கத்தாப் அவர்கள் வந்தார்கள். உடனே அந்த வாளி மிகப் பெரிய வாளியாக மாறியது. (அவர் வலுவுடன் பல வாளிகள் தண்ணீர் இறைத்தார்.) அவரைப் போல் சீராகவும் உறுதியாகவும் செயல்படக் கூடிய புத்திசாலியான ஒரு (அபூ ர்வத்) தலைவரை நான் கண்டதில்லை. மக்கள் தாகம் தீர்ந்து, (தங்கள் ஒட்டகங்களுக்கும் நீர் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கம் அளவிற்கு (அவர் நீர் இறைத்தார்.)

அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்)'இந்த ஹதீஸி(ன் மூலத்தி)ல் இடம் பெற்றுள்ள'அப்கரிய்யு' என்னும் சொல்,'உயர்தரமான விரிப்பு' என (அகராதியில்) பொருள்படும்'' என்று கூறுகிறார்கள். மற்றோர் அறிவிப்பாளரான யஹ்யா இப்னு ஸியாத்(ரஹ்)'மென்மையான குஞ்சம் வைத்த விரிப்பு' என்று (பொருள்) கூறுகிறார்.

ஹதீஸ் 3683. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) உமர் இப்னு கத்தாப் அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (உள்ளே வர) அனுமதி கேட்டார்கள். அப்போது (நபியவர்களின் துணைவியரான) குறைஷிப் பெண்கள் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் பேசிக் கொண்டும் ஜீவனாம்சத் தொகையை) அதிகமாகத் தரும்படி கேட்டுக் கொண்டும் இருந்தனர். அவர்களின் குரல்கள் நபி(ஸல்) அவர்களின் குரலை விட உயர்ந்திருந்தன. உமர் இப்னு கத்தாப்(ரலி) உள்ளே வர அனுமதி கேட்டவுடன் அவரச அவசரமாகப் பர்தா அணிந்தீர்களே'' என்று கூறினார்கள். அதற்கு உமர்(ரலி),'இந்தப் பெண்கள் அஞ்சுவதற்கு நீங்கள் தாம் மிகவும் தகுதியுடையவர்கள், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள். பிறகு உமர் அவர்கள் (அப்பெண்களை நோக்கி),'தமக்குத் தாமே பகைவர்களாயிருப்பவர்களே! இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அஞ்சாமல் எனக்கு நீங்கள் அஞ்சுகிறீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,'ஆம், நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை விட கடுமை காட்டக்கூடியவரும் கடின சித்தமுள்ளவரும் ஆவீர்கள்'' என்று பதிலளித்தார்கள். இதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'சும்மாயிருங்கள், கத்தாபின் புதல்வரே! என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! ஒரு தெருவில் நீங்கள் (நடந்து) செல்வதை ஷைத்தான் கண்டால், அவன் உங்கள் தெருவைவிட்டு வேறொரு தெருவில் தான் சொல்வான்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3684. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) இஸ்லாத்தை ஏற்ற நேரத்திலிருந்து நாங்கள் வலிமையும் கண்ணியமும் உடையவர்களாகத் திகழலானோம்.

என கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 3685. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) (இறந்தவுடன்) கட்டிலில் கிடத்தப்பட்டிருந்தார்கள். அப்போது மக்கள், அவரைச் சுற்றிலும் (எல்லாப் பக்கங்களிலும்) சூழ்ந்து பிரார்த்திக்கலாயினர். அவரின் ஜனாஸா (சடலம்) எடுக்கப்படுவதற்கு முன்பாக அவருக்காக ஜனாஸாத் தொழுகை தொழலாயினர். அப்போது நான் அவர்களிடையே இருந்தேன். என் தோளைப் பிடித்துக் கொண்டிருந்த ஒருவர் தான் என்னை திடுக்கிடச் செய்தார். (யாரென்று திரும்பிப் பார்த்த போது) அது அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) தாம். அவர்கள்,'உமர் அவர்களுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக!"என்று பிரார்த்தித்துவிட்டு,'(உமரே!) உயரிய நற்செயலுடன் நான் அல்லாஹ்வைச் சந்திப்பதற்கு முன்மாதிரியாக, நான் விரும்பி ஏற்கத் தக்கவர் எவரும் உங்களுக்குப் பின்னால் இல்லை. (நீங்கள் தாம் அத்தகைய மனிதர்.) அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் உங்களை உங்கள் தோழர்க(ளான நபி - ஸல் - அவர்கள் மற்றும் அபூ பக்ர் - ரலி - அவர்)கள் இருவருடனும் தான் (அவர்களின் மண்ணறைக்கு அருகில் தான்) அடங்கச் செய்வான் என்று எண்ணியிருந்தேன். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள்,'நானும் அபூ பக்ரும் உமரும் (இங்கே) சென்றோம்'' என்றும்'நானும் அபூ பக்ரும் உமரும் (இந்த இடத்திற்கு) உள்ளே புகுந்தோம்'' என்றும்'நானும் அபூ பக்ரும் உமரும் புறப்பட்டோம்'' என்று சொல்வதை நான் நிறையச் செவியுற்றிருக்கிறேன்.

ஹதீஸ் 3686. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை) அபூ பக்ர், உமர், உஸ்மான்(ரலி) ஆகியோர் தம்முடனிருக்க, நபி(ஸல்) அவர்கள் உஹுது மலைமீது ஏறினார்கள். அப்போது அது அவர்களுடன் நடுங்கியது. உடனே நபி(ஸல்) அவர்கள் அதைத் தம் காலால் உதைத்து,''உஹுதே! அசையாமல் இரு! உன் மீது ஓர் இறைத்தூதரும் (நானும்), ஒரு சித்தீக்கும், இரண்டு உயிர்த் தியாகிகளும் தான் உள்ளனர்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3687. அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி) என்னிடம் உமர்(ரலி) அவர்களின் பண்புகள் சிலவற்றைப் பற்றிக் கேட்டார்கள். நான் அவர்களுக்கு அவற்றைத் தெரிவித்தேன். அதற்கு இப்னு உமர்(ரலி), இறந்த நேரத்திலிருந்து உமர்(ரலி) அவர்களை விட அதிகம் உழைக்கக் கூடியவர்களாகவும் அதிகம் வாரி வழங்குபவர்களாகவும் வேறெவரையும் நான் காணவில்லை. அவர்கள் தம் வாழ்நாளின் இறுதிவரை அவ்வாறே இருந்தார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3688. அனஸ்(ரலி) அறிவித்தார்

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் மறுமை நாளைப் பற்றி,'மறுமை நாள் எப்போது வரும்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'அதற்காக நீ என்ன (நற்செயல்களைத்) தயார் செய்து வைத்திருக்கிறாய்?' என்று (திரும்பக்) கேட்டார்கள். அம்மனிதர்,'எதுவுமில்லை நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறேன் என்பதைத் தவிர'' என்று பதிலளித்தார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நீ நேசித்தவர்களுடன் தான் (மறுமையில்) நீ இருப்பாய்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,'நீ நேசித்தவர்களுடன் நீ இருப்பாய்'' என்று சொன்னதைக் கேட்டு நாங்கள் மகிழ்ச்சியடைந்ததைப் போன்ற வேறு எதனாலும் நாங்கள் மகிழ்ச்சியடைந்ததில்லை. நான் நபி(ஸல்) அவர்களையும் அபூ பக்ர்(ரலி) அவர்களையும் உமர்(ரலி) அவர்களையும் நேசிக்கிறேன். மேலும், அவர்களை

நேசித்த காரணத்தால் (மறுமையில்) அவர்களுடன் தான் இருப்பேன் என்று நம்புகிறேன் அவர்களின் நற்செயல்களைப் போன்று நான் நற்செயல் புரியாவிட்டாலும் சரியே!

ஹதீஸ் 3689. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன்பிருந்த சமுதாயங்களில், (பல்வேறு) பிரச்சினைகளில் சரியான தீர்ப்பு எது என்பது குறித்து இறையருளால்) முன் கூட்டியே அறிவிக்கப்பட்டவர்கள் இருந்திருக்கிறார்கள். என் சமுதாயத்தினரில் அப்படிப்பட்டவர் எவரேனும் இருந்தால் அது உமராகத்தான் இருக்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில் அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்: உங்களுக்கு முன்பிருந்த பனு இஸ்ராயீல்களில் இறைத்தூதர்களாக இல்லாமலேயே (வானவர்களால்) அறிவிப்புச் செய்யப்பட்டவர்கள் இருந்துள்ளனர். அத்தகையவர்களில் எவரேனும் என் சமுதாயத்தில் இருந்தால் அது உமராகத் தான் இருக்கும்.

இப்னு அப்பாஸ்(ரலி), (திருக்குர்ஆனின் 22:52-வது வசனத்தில்)'வலா முஹத்தஸின்' (முன் கூட்டியே அறிவிக்கப்பட்டவரானாலும்) என்று (சேர்த்து) வாசித்துள்ளார்கள்.

ஹதீஸ் 3690 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(பனு இஸ்ராயீல் சமுதாயத்தில், ஓர் ஆட்டிடையன் தன் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தபோது ஓர் ஓநாய், ஆடு ஒன்றைக் கவ்விக் கொண்டு ஓடலாயிற்று. ஆட்டை மேய்த்துக் கொண்டிருந்தவர் அந்த ஓநாயைத் தூரத்திச் சென்றார். அப்போது ஓநாய் அவரைப் பார்த்து,'மன் லஹா யவ்மஸ் ஸபுஇ - கொடி விலங்குகள் ஆதிக்கம் செலுத்தும் (உலக முடிவு) நாளில் இதைப் பாதுகாக்கக் கூடியவர் யார்? அப்போது என்னைத் தவிர இதற்கு மேய்ப்பாளன் (பொறுப்பாளன்) எவனும் இருக்க மாட்டானே' என்று கூறியது. (இதைக் கேட்டு வியந்தவர்களாக)'சுப்ஹானல்லாஹ் அல்லாஹ் தூயவன்' என மக்கள் கூறினர். அப்போது நானும், அபூ பக்ரும் உமரும் இந்த நிகழ்ச்சியை நம்புகிறோம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள். (நபியவர்கள் இதைக் கூறிய சமயம்) அபூ பக்ரும் உமரும் அங்கு இருக்கவில்லை.

ஹதீஸ் 3691. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்

(ஒரு முறை),'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது, (கனவில்) மக்கள் (பலவிதமான) சட்டைகளை அணிந்தவர்களாக எனக்கு எடுத்துக்காட்டப்பட்டார்கள். அவற்றில் (அவர்களின்) மார்பை எட்டக்கூடியவையும் இருந்தன. அவற்றில் (அவர்களின்) மார்பை எட்டாதவையும் இருந்தன. உமர் அவர்கள், (தரையில்) இழுத்துக் கொண்டே செல்லும் அளவிற்கு (நீளமான) சட்டையொன்றை அணிந்தவராக எனக்கு காட்டப்பட்டார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,'இதற்கு நீங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,'இதற்கு நீங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'(அந்தச் சட்டைகள்) அவர்களின் மார்க்கத்தை (மார்க்க உணர்வையும் செயல்பாடுகளையும்) குறிக்கும்" என்று (விளக்கம் காண்பதாக) பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3692. மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) அறிவித்தார்

உமர் (ரலி) (பிச்சுவாக்கத்தியினால்) குத்தப்பட்டபோது அவர்கள் வேதனையடைலானார்கள். இப்னு அப்பாஸ் (ரலி), உமர் (ரலி) அவர்களுக்கு ஆறுதல் கூறுவதைப் போன்று, 'நம்பிக்கையாளர்களின் தலைவரே! இதைப் பெரிதுப்படுத்திக் கொள்ளாதீர்கள் நீங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டு அத்தோழமையில் நல்லவிதமாக நடந்து கொண்டீர்கள். பிறகு, அவர்கள் உங்களைக் குறித்துத் திருப்தி கொண்டிருந்த நிலையிலேயே (அவர்கள் இறந்துவிட,) அவர்களைப் பிரிந்தீர்கள். பிறகு, அபூ பக்ர் (ரலி) அவர்களுடன் தோழமை கொண்டு அந்தத் தோழமையிலும் நல்ல விதமாக நடந்து கொண்டீர்கள். பிறகு உங்களின் மீது அவர்கள் திருப்தி கொண்டிருந்த நிலையிலேயே (அவர்கள் இறந்து விட,) அவர்களைப் பிரிந்தீர்கள். பிறகு அவர்களின் மற்ற தோழர்களுடன் தோழமை கொண்டு அந்தத் தோழமையிலும் நல்ல விதமாக நடந்து கொண்டீர்கள். அவர்களை நீங்கள் பிரிவதாயிருந்தால் நிச்சயம் அவர்கள் உங்களைக் குறித்துத் திருப்தி கொண்டிருக்கும் நிலையிலேயே பிரிவீர்கள்'' என்று கூறினார்கள். உமர் (ரலி), '(இப்னு அப்பாஸே!) அல்லாஹ்வின் தூதருடன் நான் கொண்டிருந்ததாக நீங்கள் சொன்ன தோழமை, அவர்கள் என் மீது கொண்டிருந்த திருப்தி ஆகியவையெல்லாம் அல்லாஹ் என் மீது பொழிந்த அருட்கொடையாகும். மேலும், அபூ பக்ர் (ரலி) அவர்களுடன் நான் கொண்டிருந்ததாக நீங்கள் சொன்ன தோழமை, அவர்கள் என் மீது கொண்டிருந்த திருப்தி ஆகியனவும் புகழுயர்ந்த அல்லாஹ் என் மீது பொழிந்த அருடகொடையாகும். என்னிடம் நீங்கள் காண்கிற பதற்றமோ (பிற்காலத்தில் குழப்பங்களில் சிக்கவிருக்கும்) உங்களுக்காகவும் உங்கள் தோழர்களுக்காகவும் தான். அல்லாஹ்வின் மீதாணையாக! என்னிடம் ஒரு பூமி நிரம்பத் தங்கம் இருந்தால் கூட, கண்ணியமும் உயர்வுமுடைய அல்லாஹ்வின் வேதனையை நான் காண்பதற்கு முன்பாகவே அதற்குப் பகரமாக அந்தத் தங்கத்தைப் பிணைத் தொகையாகத் தந்து விடுவேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3693. அபூ மூஸா (ரலி) அறிவித்தார்

நான் நபி (ஸல்) அவர்களுடன் மதீனாவின் தோட்டங்களில் ஒன்றில் இருந்தேன். அப்போது ஒருவர் வந்து (வாயில் கதவைத்) திறக்கும்படி கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'அவருக்காகத் திறவுங்கள் அவருக்கு சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். நான் அவருக்காக (வாயிற் கதவைத்) திறந்தேன். அவர் அபூ பக்ர் (ரலி) அவர்களாக இருந்தார். அவர்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சொன்ன நற்செய்தியைத் தெரிவித்தேன். உடனே அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். பிறகு ஒருவர் வந்து (கதவைத்) திறக்கும்படி கோரினார். (நான் நபியவர்களிடம் அனுமதி கேட்க) நபி (ஸல்) அவர்கள், 'அவருக்குத் திறந்து விடுங்கள் அவருக்கு சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று கூறினார்கள். அவருக்கு நான் கதவைத் திறந்து விட்டேன். அம்மனிதர் உமர் (ரலி) அவர்களாக இருந்தார். அவர்களிடம் நான் நபி (ஸல்) அவர்கள் சொன்ன செய்தியைத் தெரிவித்தேன். உடனே அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். பிறகு ஒருவர் கதவைத் திறக்கும்படி கோரினார். (நான் நபியவர்களிடம் சென்று அனுமதி கேட்க) நபி (ஸல்) அவர்கள், 'அவருக்கும் திறந்து விடுங்கள் அவருக்கு நேரவிருக்கும் ஒரு துன்பத்தையடுத்து சொர்க்கம் அவருக்குக் கிடைக்கவிருக்கிறது என்று அவருக்கு நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். (நானும் சென்று கதவைத் திறக்க) அம்மனிதர் உஸ்மான் (ரலி) அவர்களாக இருந்தார்.

அவர்களிடம் நான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னதைத் தெரிவித்தேன். அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டு,'(எனக்கு நேரவிருக்கும் அந்தத் துன்பத்தின் போது) அல்லாஹ்வே (சம்ப்பாற்றலைத் தந்து) உதவி புரிபவன் ஆவான்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3694. அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களின் கையைப் பிடித்துக் கொண்டிருக்க, நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம்...

## உஸ்மான் இப்னு அஃப்பான் அபூ அம்ர் அல் குறைஷி(ரலி) அவர்களின் சிறப்பு.

"ரூமா (என்னும் மதீனாவில் உள்ள சுவை நீர்) கிணற்றை (தூர் வாரி) எவர்கள் தோண்டினார்கள்.

"வசதியற்ற (தபூக் போருக்கான) படைக்கு வேண்டிய வசதிகளை ஏற்படுத்தித்தருகிறவருக்கு சொர்க்கம் கிடைக்கும்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொல்ல, உஸ்மான்(ரலி) அப்படைக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தார்கள்.

ஹதீஸ் 3695. அபூ மூஸா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்தினுள் நுழைந்தார்கள். தோட்டத்தின் வாயிற்கதவைக் காவல் புரியும்படி எனக்குக் கட்டளையிட்டார்கள். அப்போது ஒருவர் வந்து (உள்ளே வர) அனுமதி கேட்டார். (நான் நபி(ஸல்) அவர்களிடம் அவருக்காக அனுமதி கேட்க) அவர்கள்,'அவருக்கு அனுமதி கொடுங்கள் அவருக்கு சொர்க்கம் கிடைக்கும் என்று நற்செய்தியும் சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். (நான் அவரிடம் சொல்லச் சென்ற போது) அம்மனிதர் அபூ பக்ர் அவர்களாக இருந்தார்கள். பிறகு மற்றொருவர் வந்து (உள்ளே வர) அனுமதி கேட்டார். (நான் சென்று நபியவர்களிடம் அனுமதி கேட்க,)'அவருக்கு அனுமதி கொடுங்கள் அவருக்கு சொர்க்கம் கிடைக்கும் என்று நற்செய்தியும் சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். (நான் அவ்வாறே சொல்லச் சென்ற போது) அந்த மனிதர் உமர் அவர்களாக இருந்தார்கள். பிறகு, இன்னொரு மனிதர் வந்து உள்ளே வர அனுமதி கேட்டார். (நான் சென்று நபியவர்களிடம் கதவைத் திறக்க அனுமதி கேட்ட போது) அவர்கள் சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு பிறகு,'அவருக்கு அனுமதி கொடுங்கள் (வருங்காலத்தில்) அவருக்கு நேரவிருக்கும் துன்பத்தையடுத்து அவருக்கு சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். (நான் சென்று கதவைத் திறந்த போது) அவர் உஸ்மான் இப்னு அஃப்பான் அவர்களாக இருந்தார்கள்.

இதே போன்று இன்னோர் அறிவிப்பும் வந்துள்ளது. அதில் ஆஸிம்(ரஹ்),'நபி(ஸல்) அவர்கள் தம்மிரு முழங்கால்களும்... அல்லது தம் முழங்கால்....தெரிய தண்ணீர் உள்ள இடத்திற்கருகே அமர்ந்திருந்தார்கள். உஸ்மான்(ரலி) உள்ளே வந்தபோது தம் முழங்காலை மூடினார்கள்'' என்பதை அதிகப்படியாக அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3696. உபைதுல்லாஹ் இப்னு அதீ இப்னி கியார்(ரஹ்) அறிவித்தார்

மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அவர்களும் அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்வத் இப்னு அப்தி யகூஸ்(ரஹ்) அவர்களும் என்னிடம்,'உஸ்மான்(ரஹ்) அவகாளும் என்னிடம்,'உஸ்மான்(ரலி) அவர்களிடம் நீங்கள் அவர்களின் (தாய்வழிச்) சகோதரர்

வலீத் இப்னு உக்பா) பற்றிப் பேசாமலிருப்பது ஏன்? மக்கள் வலீத் விஷயத்திலும் மிக அதிகமாகக் குறை கூறுகிறார்களே!"என்று கேட்டார்கள். எனவே நான் உஸ்மான்(ரலி) தொழுகைக்காகப் புறப்பட்ட நேரத்தில் அவர்களைத் தேடிச் சென்றேன். அவர்களிடம், எனக்கு உங்களிடம் சற்று(ப் பேச வேண்டிய) தேவை உள்ளது. அது உங்களுக்கு (நான் கூற விரும்பும்) அறிவுரை" என்று சொன்னேன். அதற்கு அவர்கள்,'ஏ மனிதரே! உம்மிடமிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்" என்று கூறினார்கள். உடனே, நான் திரும்பி அவ்விருவரிடம் வந்தேன். அப்போது உஸ்மான்(ரலி) அவர்களுடை தூதுவர் (என்னைத் தேடி) வர, நான் அவர்களிடம் (மீண்டும்) சென்றேன். உஸ்மான்(ரலி),'உங்கள் அறிவுரை என்ன?' என்று கேட்டார்கள். அதற்கு நான்,'அல்லாஹ், முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய(மார்க்க)த்துடன் அனுப்பி அவர்களின் மீது (தன் வேதத்தையும் இறக்கியருளினான். அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் அழைப்புக்கு பதிலளித்தவர்களில் நீங்களும் ஒருவராயிருந்தீர்கள். எனவே, (மக்காவைத் துறந்து அபிசீனியாவுக்கும், அதன்பின்னர் மதீனாவுக்குமாக) இரண்டு ஹிஜ்ரத்துகள் மேற்கொண்டீர்கள். நீங்கள் அல்லாஹ்வின் தூதருடன் தோழமை கொண்டு அவர்களின் வழிமுறையைப் பார்த்திருக்கிறீர்கள். மக்களோ வலீத் இப்னு உக்பாவைப் பற்றி நிறையக் குறை பேசுகிறார்கள் (நீங்கள் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லையே ஏன்?)" என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பார்த்திருக்கிறீர்களா?' என்று கேட்க நான்,'இல்லை. ஆனால், திரைக்கப்பால் இருக்கும் கன்னிப் பெண்களிடம் (கூட) அல்லாஹ்வின் தூதருடைய கல்வி சென்றடைந்து கொண்டிருக்கும் (போது, அந்த) அளவு (கல்வி) என்னிடமும் வந்து சேர்ந்துள்ளது (குறித்து வியப்பில்லை.)" என்று பதில் சொன்னேன். அதற்கு உஸ்மான்(ரலி),'அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்த பின் கூறுகிறேன். அல்லாஹ், முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பி வைத்தான். அப்போது, அல்லாஹ்வின் அழைபபுக்கும் அல்லாஹ்வின் தூதருடைய அழைப்புக்கும் பதிலளித்தவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன். மேலும், அவர்கள் எ(ந்த வேதத்)தைக் கொடுத்தனுப்பப்பட்டார்களோ அதை நான் நம்பி ஏற்றுக் கொண்டேன். நான் இரண்டு ஹிஜ்ரத்துத்துகளை மேற்கொண்டேன். - நீங்கள் சொன்னதைப் போல் - நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தோழமை கொண்டேன் அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்தேன். எனவே, அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் நபி(ஸல்) அவர்களை மரணிக்கச் செய்யும் வரை நான் அவர்களுக்கு மாறு செய்யவுமில்லை அவர்களை ஏமாற்றவுமில்லை. பிறகு அபூ பக்ர் அவர்களிடமும் அதைப் போன்றே (நடந்து கொண்டேன்) பிறகு உமர் அவர்களிடமும் அதைப் போன்றே (நடந்து கொண்டேன்.) பிறகு நான் கலீ∴பாவாக (ஆட்சியாளராக) ஆக்கப்பட்டேன். எனவே, அவர்களுக்கிருந்தது போன்ற அதே உரிமை எனக்கில்லையா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம் (உங்களுக்கும் அதே போன்ற உரிமை இருக்கிறது)" என்று சொன்னேன். அவர்கள்,'அப்படியென்றால் உங்களைக் குறித்து எனக்கு எட்டுகிற (என்னைக் குறை கூறும்) இந்தப் பேச்சுகளெல்லாம் என்ன? நீங்கள் வலீத் இப்னு உக்பா விஷயமாக சொன்னவற்றில் விரைவில் இறைவன் நாடினால் சரியான நடவடிக்கையை நான் எடுப்பேன்" என்று கூறினார்கள். பிறகு அலீ(ரலி) அவர்களை அழைத்து வலீத் இப்னு உக்பாவுக்கு (எதிராக சாட்சிகள் கிடைத்தால் அவருக்கு) கசையடிகள் கொடுக்கும் படி உத்தரவிட்டார்கள். அலீ(ரலி) அவர்களும் வலீதுக்கு எண்பது கசையடிகள் கொடுத்தார்கள்.

ஹதீஸ் 3697. அனஸ்(ரலி) அறிவித்தார்

அபூ பக்ர், உமர், உஸ்மான்(ரலி) ஆகியோர் தம்முடனிருக்க, நபி(ஸல்) அவர்கள் உஹுது(மலை) மீது ஏறினார்கள். அது (அவர்களுடன்) நடுங்கியது. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'உஹுதே! அசையாமல் இரு! ஏனெனில், உன் மீது ஓர் இறைத்தூதரும் ஒரு 'சித்தீக்'கும் இரண்டு உயிர்த்தியாகிகளும் உள்ளனர்'' என்று கூறினார்கள். (இதைக் கூறியபோது) நபியவர்கள் தம் காலால் மலையை (ஓங்கி) அடித்தார்கள் என எண்ணுகிறேன்.

ஹதீஸ் 3698. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குச் சமமாக எவரையும் கருதுவதில்லை. பிறகு உமர்(ரலி) அவர்களையும் அவர்களுக்குப் பிறகு உஸ்மான்(ரலி) அவர்களையும் (சிறந்தவர்களாகக் கருதி வந்தோம்.) பிறகு (மீதமுள்ள) நபி(ஸல்) அவர்களின் தோழர்களிடையே ஏற்றத்தாழ்வு பாராட்டாமல்விட்டுவிட்டோம்.

இதே போன்று வேறோர் அறிவிப்பாளர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3699. உஸ்மான் இப்னு மவ்ஹப்(ரலி) அறிவித்தார்

எம்ப்து வாசியான ஒருவர் வந்து, (கஅபா எனும்) இறையில்லத்தை ஹஜ் செய்தார் அப்போது ஒரு கூட்டம் அமர்ந்திருப்பதைக் கண்டு, 'இந்தக் கூட்டத்தார் யார்?' என்று கேட்டதற்கு மக்கள், 'இவர்கள் குறைஷிகள் என்று பதில் கூறினார்கள். அப்போது, 'இவர்களின்ல முதிர்ந்த அறிஞர் யார்'' என்று அவர் கேட்டதற்கு மக்கள், ' அப்துல்லாஹ் இப்னு உமர்'' என்று பதில் அளித்தார்கள். உடனே அவர் அங்கிருந்த அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களை நோக்கி, 'இப்னு உமர் அவர்களே நான் உங்களிடம் ஒரு விஷயத்தைக் கேட்கிறேன். நீங்கள் எனக்கு அதைப்பற்றிச் சொல்லுங்கள். உஸ்மான்(ரலி) உஹுதுப் போர்க்களத்திலிருந்து வெருண்டோடியதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டதற்கு இப்னு உமர்(ரலி)'ஆம் அறிவேன்'' என்று பதில் அளித்தார்கள். அப்போது அவர்'உஸ்மான்(ரலி) பத்ர் போரில் கலந்து கொள்ளாமல் இருந்துவிட்டார்கள் என்பது தங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டடார். அற்கு இப்னு உமர்(ரலி)'ஆம் தெரியும்'' என்று பதில் அளித்தார்கள். அதற்கு அந்த மனிதர் அவர், 'ஹுதைபியாவில் நடந்த பைஅத்துர் ரிள்வான் சத்தியப் பிரமாணத்திலும் கலந்து கொள்ளவில்லை என்பது தங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க ஆம் தெரியும் என்று பதில் அளித்தார்கள். (இவற்றைக் கேட்டுவிட்டு உஸ்மான்(ரலி) தாம் நினைத்தது போன்றே இவ்வளவு குறைகளுள்ளவர்தாம் என்று தொனிக்கும் படி) அந்த மனிதர், அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப்பெரியவன் என்று என்று கூறினார். அப்போது இப்னு உமர்(ரலி), 'வாரும்! (இவற்றிலெல்லாம் உஸ்மான்(ரலி) ஏன் பங்கு பெறவில்லை என்பதை உனக்கு நான் விளக்குகிறேன். அவர்கள் உஹத் போரின்போது வெருண்டோடிய சம்பவமோ, அது சம்பந்தமாக அல்லாஹ் அவரின் பிழையைப் பொறுத்து மன்னித்துவிட்டான் என்று நானே சாட்சியாக இருக்கிறேன். பத்ர் போரில் அவர்கள் கலந்து கொள்ளாததற்குக் காரணம், நபி(ஸல்) அவர்களின் மகள் (ருகய்யா(ரலி)) உஸ்மான்(ரலி) அவர்களின் மனைவியாக இருந்தார்கள். (அவர்கள்) அப்போது நோய்வாய்ப்பட்டிருந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் பத்ர் போரில் பங்கெடுத்த ஒருவருக்குரிய (மறுமைப்) பலனும், (போர்ப் பொருளில்) உங்களுக்கான பங்கும்

கிடைக்கும் (நீங்கள் உங்களுடைய மனைவியைக் கவனியுங்கள்) என்றார்கள். (எனவேதான், அவர்கள் அதில் கலந்து கொள்ளமுடியவில்லை.) பைஅத்துர் ரிள்வான் சத்தியப்பிரமாண நிகழ்ச்சியில் அவர்கள் கலந்து கொள்ளாததற்குக் காரணம் உஸ்மான்(ரலி) அவர்களையும் விட கண்ணியம் வாய்ந்த ஒருவர் (மக்கா பள்ளத்தாக்கில் இல்லை. அப்படி) அப்படி இருந்திருந்தால் நபி(ஸல்) அவர்கள், குறைஷிகளிடம் பேசுவதற்கு தம் தூதராக அவரை) அனுப்பி இருப்பார்கள். (அப்படி ஒருவரும் இல்லை.) எனவேதான், நபி(ஸல்) அவர்கள் உஸ்மானை அனுப்பினார்கள். மேலும் இந்த சத்தியப் பிரமாண நிகழ்ச்சி உஸ்மான்(ரலி) மக்காவிற்குள் போனபின்னர்தான் நடந்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் வலகக்ரத்தைச் சுட்டிக் காண்பித்து இது உஸ்மானுடைய கை என்று கூறி அதை தம் இடக்கரத்தின் மீது தட்டினார்கள். பிறகு, இப்போது நான் செய்யும் சத்தியப்பிரமாணம் உஸ்மானுக்காகச் செய்யப்படுவதாகும்‘‘ என்றார்கள். என இப்னு உமர்(ரலி) கூறிவிட்டு, (உஸ்மான்(ரலி) அவர்களைப் பற்றித் தாழ்வாக எண்ணி வைத்திருந்த) அந்த மனிதரிடம், ‘நான் இப்போது சொன்ன பதில்களை நீ எடுத்துச் செல்லலாம்‘‘ என்று கூறினார்கள்.

## (கலீஃபா உஸ்மான்(ரலி) அவர்களுக்குச் செய்து கொடுக்கப்பட்ட) சத்தியப் பிரமாண நிகழ்ச்சி, உஸ்மான்(ரலி) அவர்களின் (தகுதி முன்னுரிமை) விஷயத்தில் ஒருமித்த கருத்து மற்றும் உமர்(ரலி) கொலையுண்ட நிகழ்ச்சி.

ஹதீஸ் 3700. அம்ர் இப்னு மைமூன்(ரஹ்) அறிவித்தார்

உமர் இப்னு கத்தாப்(ரலி) கொலை செய்யப்படுவதற்குச் சில நாள்களுக்கு முன் மதீனாவில் அவர்களை பார்த்தேன். அவர்கள் ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அவர்களுக்கும், உஸ்மான் இப்னு ஹுனைஃப்(ரலி) அவர்களுக்கும் அருகில் நின்று கொண்டு (அவர்கள் இருவரையும் நோக்கி, ‘சவாதுல் இராக் விஷயத்தில்) நீங்கள் எப்படிச் செயல்பட்டீர்கள்? அந்த நிலத்திற்கு (மக்களால்) சுமக்க முடியாத வரிச்சுமையை சுமத்திவிட்டதாக நீங்கள் அஞ்சுகிறீர்களா?’ என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் இருவரும், ‘அந்த நிலத்திற்கு அதன் (உரிமையாளர்களின்) சக்திக்கேற்பவே (வரி) விதித்தோம். அதில் மிக அதிகமாக ஒன்றுமில்லை‘‘ என்றனர். அதற்கு உமர்(ரலி), ‘அந்த நிலத்திற்கு (மக்களால்) சுமக்க முடியாத வரிச்சுமையை சுமத்தி விட்டீர்களா? என்று (நன்கு) யோசித்துப் பாருங்கள் என்றார்கள். அந்த இருவரும், ‘இல்லை. அதன் சக்திக்கேற்பவே வரி சுமத்தினோம்)‘‘ என்று பதிலளித்தனர். அப்போது உமர்(ரலி), ‘அல்லாஹ் என்னை உயிரோடு வைத்திருந்தால் இராக் வாசிகளின் விதவைப் பெண்களை எனக்குப் பிறகு வேறெவரிடமும் கையேந்தத் தேவையில்லாத நிலையில் தான்விட்டுச் செல்வேன்‘‘ என்று கூறினார்கள். இப்படி அவர்கள் சொல்லி நான்கு நாள்கள் கூட சென்றிருக்காது. அதற்குள் (பிச்சுவாக் கத்தியால்) உமர்(ரலி) குத்தப்பட்டு விட்டார்கள்.

உமர்(ரலி) குத்தப்பட்ட நாளில் அதிகாலை(த் தொழுகைக்காக) நான் (தொழுகை அணியில்) நின்று கொண்டிருக்கிறேன். எனக்கும் உமர்(ரலி) அவர்களுக்கும் இடையில் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களைத் தவிர வேறு எவரும் இருக்கவில்லை. உமர்(ரலி) (மக்களுக்குத் தொழுகை நடத்துவதற்கு முன்) இரண்டு தொழுகை அணிகளுக்கு இடையில் சென்றால் (மக்களை நோக்கி), ‘சீராக நில்லுங்கள்‘‘ என்று

கூறுபவர்களாக இருந்தார்கள். அணிகளுக்கிடையே சீர் குலைவு தென்படாத போதே முன் சென்று (தொழுகைக்காக) தக்பீர் (தஹ்ரீமா) கூறுவார்கள். சில சமயம்'யூசுஃப்' அத்தியாயம் அல்லது'நஹ்ல்' அத்தியாயம் அல்லது அது போன்ற (வேறோர் அத்தியாயத்)தை, மக்கள் தொழுகைக்காக வந்து சேரும் வரையில் முதல் ரக்அத்தில் ஓதுவார்கள். (சம்பவ தினத்தன்று) அப்போது நான் தக்பீர் கூறியிருப்பார்கள்.'என்னை நாய் கொன்றுவிட்டது... அல்லது தின்றுவிட்டது..!"என்று கூறினார்கள். (அப்போது'அபூ லுஸலுஆ ஃபைரோஸ்' என்பவன் பிச்சுவாக் கத்தியால் அவர்களைக் குத்தி விட்டிருந்தான்). உடனே, அந்த'இல்ஜ்' (அரபில்லாத அந்நிய மொழி பேசும் இறைமறுப்பாளன்) தன்னுடைய பிச்சுவாக் கத்தியை எடுத்துக் கொண்டு தன்னுடைய வலப்பக்கம், இடப்பக்கம் நிற்கும் எவரையும் விடாமல் குத்திக் கொண்டே விரைந்தோடலானான். முடிவாக, பதின்மூன்று ஆண்களை அவன் குத்தி வட்டிருந்தான். அதில் ஏழுபேர் இறந்துவிட்டனர். இதைக் கண்ட (அங்கிருந்த) முஸ்லிம்களில் ஒருவர் தம் நீண்ட தொப்பியை (கழற்றி) அவன் மீது வீசி எறிந்தார். அந்த அந்நிய மொழிக்காரனான இறைமறுப்பாளன், தாம் பிடிபட்டு விடுவோம் என்று எண்ணிய தன்னைத் தானே அறுத்து (த் தற்கொலை செய்து) கொண்டான். மேலும், (தொழுகை நடத்திக் கொண்டிருந்த) உமர்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களின் கரத்தைப் பிடித்து (மக்களுக்குத் தொழுகை நடத்துவதற்காகத் தம்மிடத்தில்) முன்னிறுத்தினார்கள். நான் பார்த்த (இந்தச் சம்பவத்)தை உமர்(ரலி) அவர்களுக்கருகே இருந்தவர்களும் பார்த்தனர். ஆனால், பள்ளி வசாலின் மூலைகளில் (தொழுது கொண்டு) இருந்தவர்களுக்கு இது தெரியவில்லை. ஆயினும், (தொழுகை நடத்திக் கொண்டிருந்த) உமர்(ரலி) அவர்களின் சப்தம் நின்றுவிட்டபோது அவர்கள்'சுப்ஹானல்லாஹ், சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன், அல்லாஹ் தூயவன்)'' என்று கூறிக் கொண்டிருந்தார்கள். அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (சிறிய அத்தியாயங்களை ஓதி) சுருக்கமாகத் தொழுகை நடத்தினார்கள். மக்கள் (தொழுது முடித்து) திரும்பியபோது உமர்(ரலி),'இப்னு அப்பாஸ் அவர்களே! என்னைக் கொன்றவன் யார் என்று பாருங்கள்'' என்று கூறினார்கள். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) சிறிது நேரம் சுற்றிப் பார்த்துவிட்டு வந்து,'முகீராவின் அடிமை தான் (உங்களைக் குத்தியது)'' என்று கூறினார்கள். உமர்(ரலி),'அந்தத் திறமையான தொழில் கலைஞனா?' என்று கேட்டார்கள்.'ஆம்'' என்று இப்னு அப்பாஸ்(ரலி) பதிலளித்தார்கள்.'அல்லாஹ் அவனைக் கொல்லட்டும்! அவன் விஷயத்தில் நல்லதைத் தானே நான் உத்தரவிட்டேன்! ஆனால், என்னையே அவன் கொன்றுவிட்டானே)! தன்னை முஸ்லிம் என்று சொல்லிக் கொள்ளும் ஒருவரின் கரத்தால் எனக்கு மரணம் நேரும்படிச் செய்து விடாத அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். (மதீனா நகரத்தின் சில பணிகளுக்கு அரபுகள் அல்லாத அந்நியர்கள் அவசியம் எனக் கூறி) அரபுகள் அல்லாத அந்நிய(த் தொழிற் கலைஞ)ர்கள் மதீனாவில் அதிகம் இருக்க வேண்டுமென (இப்னு அப்பாஸ் அவர்களே!) நீங்களும் உங்கள் தந்தையார் (அப்பாஸ்) அவர்களுமே விரும்பக் கூடியவர்களாக இருந்தீர்கள்'' என்று உமர்(ரலி) கூறினார். அவர்களிடையே அப்பாஸ்(ரலி) அவர்களே நிறைய அடிமைகள் உடையவராக இருந்தார்கள். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) (உமர் - ரலி அவர்களை நோக்கி),'நீங்கள் விரும்பினால் (மதீனாவிலுள்ள அரபுகளல்லாத தொழில் கலைஞர்கள் அனைவரையும்) கொன்று விடுகிறோம்'' என்று கூறினார்கள். உமர்(ரலி),'நீங்கள் (இந்த எண்ணத்தினால்)

தவறிழைத்து விட்டீர்கள். உங்களின் மொழியில் அவர்கள் பேசிய பின்பும், உங்களின் கிப்லாவை நோக்கித் தொழுத பின்பும், உங்களைப் போன்றே'ஹஜ்ஜு' செய்த பின்புமா? (முஸ்லிம்களான அவர்களைக் கொலை செய்யப்போகிறீர்கள்?)' என்று கேட்டார்கள். பிறகு, (குற்றுயிராயிருந்த) உமர்(ரலி) அவர்களை அவர்களின் வீட்டுக்கு சுமந்து செல்லப்பட்டது. அவர்களுடன் நாங்களும் சென்றோம். அன்றைய நாளுக்கு முன்னால் எந்தத் துன்பமும் நிகழ்ந்திராதது போன்று மக்கள் (கடுந் துயரத்துடன்) காணப்பட்டனர். ஒருவர்,'அவருக்கு ஒன்றும் ஆம் விடாது'' என்கிறார். மற்றொருவர்,'அவருக்கு (மரணம் சம்பவித்து விடும் என்று) நான் அஞ்சுகிறேன்' என்று கூறுகிறார். அப்போது, (காயத்தின் ஆழத்தைக் கண்டறிவதற்காக) பேரீச்சம் பழச்சாறு கொண்டு வரப்பட்டது. அதை உமர்(ரலி) அருந்தினார்கள். உடனே, அது அவர்களின் வயிற்றின் (காயத்தின்) வழியாக வெளியேறியது. (வெளியில் வந்தது பேரீச்சம் பழச் சாறா அல்லது உமரின் இரத்தமா என்று பாகுபடுத்த முடியாத விதத்தில் இரண்டும் ஒரே நிறத்தில் இருந்ததால்) பிறகு, பால் கொண்டு வரப்பட்டது. அதை அவர்கள் அருந்தினார்கள். அதுவும் காயத்தின் வழியாக (வெள்ளை நிறத்தில்) வெளியேறிவிட்டது. அப்போது அவர்கள் இறக்கும் நிலையை அடைந்துவிட்டார்கள் என்று மக்கள் அறிந்து கொண்டனர். அவர்களின் அருகே நாங்கள் சென்றோம். மக்கள் வந்து உமர்(ரலி) அவர்களைப் புகழ்ந்து பேசத் தொடங்கினார்கள். ஓர் (அன்சாரி) இளைஞரும் வந்தார். அவர், இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே!"அல்லாஹ்வின் தூதருடனான (உங்களுடைய) தோழமை, இஸ்லாத்தில் (உங்களுக்கிருக்கும்) நீங்களே அறிந்துள்ள சிறப்பு, பிறகு நீங்கள் (ஆட்சித் தலைவராகப் பதவியேற்று (குடி மக்களிடையே) நீதியாக நடந்து கொண்டது, பிறகு (இப்போது) உயிர்த் தியாகம் (செய்ய விருப்பது) ஆகியவற்றின் மூலம் அல்லாஹ் உங்களுக்கு வழங்கியுள்ள நற்செய்தி கொண்டு நீங்கள், மகிழ்ச்சி அடையுங்கள்'' என்று கூறினார். (இதைக் கேட்ட) உமர்(ரலி)'இவையெல்லாம் எனக்கு (சாதகமாக இல்லாவிட்டாலும் பாதகமாக இல்லாமலிருந்தாலே போதும். எனவே, இவை எனக்கு) சாதகமாகவும் வேண்டாம் பாதகமாகவும் வேண்டாம். சரிக்குச் சமமாக இருப்பதையே விரும்புகிறேன்'' என்று கூறினார்கள். அந்த இளைஞர் திரும்பிச் சென்றபோது அவரின் கீழங்கி பூமியைத் தொட்டுக் கொண்டிருந்தது. (இதைக் கண்ட) உமர்(ரலி),'அந்த இளைஞரை என்னிடம் திரும்ப அழைத்து வாருங்கள்'' என்று கூறினார்கள். (அவர் திரும்பி வந்த போது),'என்னுடைய சகோதரரின் மகனே! உன்னுடைய ஆடையை (பூமியில் படாமல்) உயர்த்திக் கட்டு! இது உன் ஆடையை நீண்ட நாள் நீடிக்கச் செய்யும் உன்னுடைய இறைவனுக்கு அஞ்சி நடப்பதுமாகும்'' என்று கூறினார்கள். (பிறகு தம் மகனை நோக்கி),'உமரின் மகன் அப்துல்லாஹ்வே!என் மீது எவ்வளவு கடன் (பாக்கி) உள்ளது என்று பார்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள், கணக்கிட்டுப் பார்த்தனர். எண்பத்தாறாயிரம் (திர்ஹம்ஃதீனார்) அல்லது அது போன்றது இருப்பதைக் கண்டார்கள். உமர்(ரலி),'இந்தக் கடன்களை அடைப்பதற்கு உமரின் செல்வம் போதுமென்றால் அதிலிருந்து கொடுத்து விடு. அவ்வாறு போதுமானதாக இல்லாவிட்டால் (நம் கூட்டத்தாரான) அதீ இப்னு கஅப் மக்களிடம் கேட்டு (வாங்கிக்) கொள். அவர்களின் செல்வமும் போதுமானதாக இல்லாவிட்டால் (நம்முடைய குலமான) குறைஷிக் குலத்தாரிடம் கேட்டு (வாங்கிக்) கொள். இவர்களையும் தாண்டி வேறு யாரிடமும் செல்லாதே. (இவர்களிடம் கேட்டு வாங்கிய) பின், என் சார்பாக இந்தக் கடன்களை நீயே அடைத்து விடு! (பிறகு) இறை நம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா அவர்களிடம் நீ சென்று,'உமர் உங்களுக்கு

சலாம் கூறுகிறார்' என்று கூறு. 'விசுவாசிகளின் தலைவர்' என்று (என்னைப் பற்றிக்) கூறாதே. ஏனெனில், நான் இன்று (முதல்) விசுவாசிகளுக்கு (ஆட்சித்) தலைவனல்லன். மேலும், (அன்னை ஆயிஷா - ரலி - அவர்களிடம்) 'உமர் தம் இரண்டு தோழர்கள் (நபி - ஸல் - மற்றும் அபூ பக்கர் - ரலி - அடக்கம் செய்யப்பட்டுள்ள உங்களின் அறையில் அவர்கள்) உடன் தம்மையும் அடக்கம் செய்வதற்கு (உங்களிடத்தில்) அனுமதி கோருகிறார்' என்று சொல்' எனக் கூறினார்கள். ஆயிஷா (ரலி) அவர்களிடம் உமர் (ரலி) அவர்களின் புதல்வர் சென்று சலாம் கூறி, (வீட்டுக்குள் நுழைய) அனுமதி கேட்ட பிறகு வீட்டுக்குள் நுழைந்தார். அப்போது ஆயிஷா (ரலி) (உமர் - ரலி அவர்கள் குத்தப்பட்ட செய்தியறிந்து) அழுது கொண்டு அமர்ந்திருப்பதைக் கண்டார். அப்போது, அவர்களைப் பார்த்து, '(என் தந்தை) உமர் இப்னு கத்தாப் தங்களுக்கு சலாம் கூறுகிறார். தம் இரண்டு தோழர்களுடன் தம்மையும் அடக்கம் செய்வதற்குத் தங்களிடம் அனுமதி கேட்கிறார்'' என்று கூறினார். அப்போது ஆயிஷா (ரலி), 'எனக்காக அ(ந்த இடத்)தை (ஒதுக்கிக் கொள்ள) நான் நினைத்திருந்தேன். (இப்போது அங்கு அடக்கம் செய்யப்படுவதற்கு) என்னை விட அவருக்கே முதலிடம் கொடுத்து விட்டேன். (அவரையே அந்த இடத்தில் அடக்கிக் கொள்ளுங்கள்)'' என்று கூறினார்கள். பிறகு அவர் (உமர் - ரலி - அவர்களிடம்) திரும்பி வந்தபோது, 'இதோ, உமர் அவர்களின் மகன் அப்துல்லாஹ் வந்துவிட்டார்'' என்று கூறப்பட்டது. (ஒருக்களித்துப் படுத்திருந்த) உமர் (ரலி), 'என்னைத் தூக்கி உட்கார வையுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது (அங்கிருந்த) ஒருவர் தன்னோடு அவர்களை அணைத்துக் கொண்டு சாய்த்து அமர்த்தினார். அப்போது உமர் (ரலி) (தம் மகனை நோக்கி), 'உன்னிடம் என்ன (பதில்) உள்ளது?' என்று கேட்டார்கள். 'நீங்கள் விரும்பியது தான், இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! (ஆயிஷா (ரலி) அனுமதித்துவிட்டார்கள்'' என்று அப்துல்லாஹ் கூறினார்கள். (அப்போது) 'எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! இதுதான் எனக்கு கவலையளித்துக் கொண்டிருந்தது. (இப்போது என் ஆசை நிறைவேறிவிட்டது.) நான் இறந்துவிட்டால் என்னைச் சுமந்து (என்னை அடக்கம் செய்யும் அந்த அறைக்குக்) கொண்டு செல்லுங்கள். பிறகு, ஆயிஷா அவர்களக்கு நீ சலாம் சொல்லி, (அவர்களிடம்) உமர் இப்னு கத்தாப் (தம் இருதோழர்களுக்கு அருகில் தம்மை அடக்கம் செய்வதற்குத் தங்களிடத்தில்) அனுமதி கேட்கிறார்' என்று (மீண்டும் ஒரு முறை) சொல். அவர்கள் அனுமதித்தால், என்னை (அந்த அறைக்கு) உள்ளே கொண்டு செல்லுங்கள். அவர்கள் (அனுமதி தர) மறுத்தால் என்னை (மற்ற) முஸ்லிம்களின் (மண்ணறைகள் அமைந்திருக்கும் பொது) அடக்கலத்திற்குத் திருப்பிக் கொண்டு சென்று விடுங்கள்' என்று கூறினார்கள். (உமர் - ரலி - அவர்கள் இருந்த அந்த இடத்திற்கு அவர்களின் மகள்) இறை நம்பிக்கையாளர்களின் அன்னை ஹஃப்ஸா (ரலி) வந்தார்கள். அவர்களுடன் பல பெண்களும் வந்தனர். அவர்களை நாங்கள் கண்டபோது நாங்கள் கண்டபோது நாங்கள் எழுந்து விட்டோம். உமர் (ரலி) அவர்களிடம் ஹஃப்ஸா (ரலி) வந்து, சிறிது நேரம் அவர்களுக்கு அருகில் அழுது கொண்டிருந்தார்கள். அப்போது ஆண்கள் (சிலர்) உமர் (ரலி) அவர்களிடம் வர அனுமதி கோரினர். ஹஃப்ஸா (ரலி) உடனே அவர்களுக்குள்ள நுழைவிடம் ஒன்றில் நுழைந்து கொண்டார்கள். உள்ளேயிருந்து அவர்கள் அழுகிற சப்தத்தை அப்போது நாங்கள் கேட்டோம். (அங்கிருந்த ஆண்கள் உமர் (ரலி) அவர்களை நோக்கி), 'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! தங்களுக்கு ஒரு பிரதிநிதியை அறிவித்து, இறுதி

உபதேசம் செய்யுங்கள்'' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், 'இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எவரைக் குறித்து திருப்தியடைந்த நிலையில் இறந்தார்களோ அந்தச் சிலர் அல்லது அந்தக் குழுவினர். தாம் இந்த (ஆட்சித் தலைமை) விஷயத்தில் (முடிவு செய்ய) வேறெவரை விடவும் மிகத் தகுதி படைத்தவர்களாக எனக்குத் தெரிகிறார்கள்!" என்று கூறிவிட்டு, அலீ (ரலி), உஸ்மான் (ரலி), ஸுபைர் (பின் அவ்வாம் (ரலி), தல்ஹா (ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) ஆகியோரின் பெயர்களையும் அப்போது குறிப்பிட்டார்கள். மேலும், உமர் (ரலி), 'உமரின் மகன் அப்துல்லாஹ்வும் உங்களுடன் இருப்பார். ஆனால், ஆட்சி அதிகாரத்தில் அவருக்கு எந்தப் பங்குமீல்லை இதை மகன் அப்துல்லாஹ்வுக்கு ஆறுதல் போன்று கூறினார்கள். தலைமைப் பதவி ஸஅத் அவர்களுக்கு கிடைத்தால் அதற்கு அவர் அருகதையானவர் தாம். அவ்வாறு அவருக்கு கிடைக்கவில்லையாயின், உங்களில் ஆட்சித் தலைவராக ஆக்கப்படுகிறவர் (ஸஅத் இப்னு அபீ வக்காஸ்) அவர்களிடம் (ஆலோசனை) உதவி பெறட்டும். ஏனெனில், நான் ஸஅத் அவர்களை, அவர் இயலாதவர் என்பதாலோ, மோசடி செய்துவிட்டார் என்பதாலோ (கூஃபா நகரின் ஆளுநர் பதவியிலிருந்து) பதவி நீக்கம் செய்யவில்லை. மேலும், '(இஸ்லாத்தில்) முன்னவர்களான முஹாஜிர்களின் உரிமைகளை அறிந்து, அவர்களின் கண்ணியத்தைக் காக்க வேண்டும் என்று எனக்குப் பின்னர் (வரவிருக்கும்) ஆட்சித் தலைவருக்கு நான் இறுதி உபதேசம் செய்கிறேன். மேலும், (நபி - ஸல் - மற்றும் நபித்தோழர்கள் ஆகிய) அவர்கள் ஹிஜ்ரத் செய்து வருவதற்கு முன்பே ஹிஜ்ரத் நாட்டை (மதீனாவை) தம் இருப்பிடமாகக் கொண்டு, இறை நம்பிக்கையை (உறுதியாக)ப் பற்றிக் கொண்ட அன்சாரிகளுக்கு நன்மையை (ப் புரியும்படி)யும் நான் அவருக்கு உபதேசம் செய்கிறேன். அவர்களில் நன்மை புரிபவரிடமிருந்து (அவரின் நன்மை) ஏற்கப்பட்டு, அவர்களில் தவறிழைப்பவர் மன்னிக்கப்படவேண்டும். (இதே போன்று) நகர்ப்புற மக்களுக்கும் நன்மையை (ச் செய்யும் படி)யும் அவருக்கு நான் உபதேசம் செய்கிறேன். ஏனெனில், அவர்கள் இஸ்லாத்திற்கு உறுதுணை ஆவர். நிதி திரட்டித் தருபவர்களாகவும், எதிரிகளை (தங்களின் வீரத்தாலும் பெரும் எண்ணிக்கையாலும்) ஆத்திரமடையச் செய்பவர்களாகவும் உள்ளனர். அவர்களிடமிருந்து அவர்களின் (தேவைகளுக்குப் போக) எஞ்சியதை மட்டுமே எடுத்துக் கொள்ளலாம். அதையும் அவர்களின் சம்மதத்துடன் தான் எடுக்க வேண்டும்.

மேலும், கிராமப்புற அரபுகளுக்கும் நன்மையே புரியும்படியும் அவருக்கு நான் உபசேதம் செய்கிறேன். ஏனெனில், அவர்களே பூர்விக அரபிகளும், இஸ்லாத்தின் அடிப்படையும் ஆவார்கள். அவர்களின் செல்வத்தில் மலிவானவை மட்டுமே எடுக்கப்பட்டு அவர்களிடையேயுள்ள ஏழைகளுக்கு வழங்கப்பட வேண்டும். மேலும், அல்லாஹ்வின் பொறுப்பிலும் அவனுடைய தூதரின் பொறுப்பிலும் இருப்பவர்க (ளான முஸ்லிமல்லாதவர்க) ளுக்கு அளிக்கப்படட் உறுதிமொழிகள் நிறைவேற்றப்பட வேண்டுமெனவும் (அவர்களின் எதிரிகள் அவர்களைத் தாக்க வரும் போது) அவர்களுக்குப் பின்னாலிருந்து அவர்களுக்காகப் போர் புரிய வேண்டுமெனவும், (காப்பு வரி விதிக்கும் போது) அவர்களின் சக்திக்கேற்பவே தவிர அவர்கள் சிரமத்திற்குள்ளாக்கப்படக் கூடாது என்றும் நான் அவருக்கு உபதேசம் செய்கிறேன்' என்று உமர் (ரலி) கூறினார்.

(கத்திக்குத்துக்கு உள்ளாம் மூன்று நாள்களுக்குப் பிறகு) உமர் (ரலி) இறந்துவிட்டார்கள். பிறகு அவர்களை (எடுத்துக்) கெண்டு (அவர்களின் இல்லத்திலிருந்து) நாங்கள் புறப்பட்டோம். (ஆயிஷா - ரலி - அவர்களின் அறைக்கு) வந்து சேர்ந்தோம். அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) (ஆயிஷா - ரலி - அவர்களுக்கு)

சலாம் கூறினார்கள். பிறகு,'(உங்களுக்குரிய அறையில் தம் இரண்டு தோழர்களுக்கு அருகில் தம்மை அடக்கம் செய்ய என் தந்தை) உமர் இப்னு கத்தாப் அவர்கள் (உங்களிடம்) அனுமதி கோருகிறார்கள்'' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்,'அவர்களை உள்ளே கொண்டு வாருங்கள்' என்று கூறினார்கள். உடனே அவர்களை உள்ளே கொண்டு செல்லப்பட்டு அந்த இடத்தில் அவர்களின் இரண்டு தோழர்களுக்கு அருகில் வைக்கப்பட்டது. அவர்களை அடக்கம் செய்து முடித்தபோது அந்த (ஆறு பேர் கொண்ட) ஆலோசனைக் குழுவினர் (அடுத்த ஆட்சித் தலைவர் யார் என்று தீர்மானிப்பதற்காக ஓரிடத்தில்) குழுமினர். அப்போது, அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள்,'(கருத்து வேறுபாட்டைக் குறைப்பதற்காக, ஆட்சித் தலைவரைத் தேர்ந்தெடுக்கும்) உங்களின் உரிமையை உங்களில் மூன்று பேர்களிடம் ஒப்படையுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது ஸுபைர்(ரலி),'என்னுடைய அதிகாரத்தை அலி அவர்களுக்கு (உரியதாக) நான் ஆக்கிவிட்டேன்'' என்று கூறினார்கள். பிறகு தல்ஹா(ரலி),'என்னுடைய அதிகாரத்தை நான் உஸ்மான் அவர்களுக்கு (உரியதாக) ஆக்கி விட்டேன்'' என்ற கூறினார்கள். பிறகு ஸஅத்(ரலி),'என்னுடைய அதிகாரத்தை நான் அப்தூா ரஹ்மான் பின்அ வ்ஃப் அவர்களுக்கு (உரியதாக) ஆக்கிவிட்டேன்'' என்று கூறினார்கள். அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (அலீ ரலி- அவர்களையும் உஸ்முான் - ரலி- அவர்களையும் நோக்கி),'உங்கள் இருவரில் இந்த அதிகாரத்திலிருந்து விலம்க் கொள்(ள முன்வரு)கிறவரிடம் இந்தப் பொறுப்பை நாம் ஒப்படைப்போம். அல்லாஹ்வும், இஸ்லாமும் அவரின் மீது (கண்காணிப்பாளர்களாக) உள்ளனர். உங்களில் சிறந்தவர் யாரென (அவரவர் மனத்திற்குள்) சிந்தித்துக் கொள்ள வேண்டும்'' என்று கூறினார்கள். அப்போது இருமூத்தவர்(களான உஸ்மான்(ரலி) அவர்களும், அலீ(ரலி) அவர்)களும் மௌனமாக இருந்தார்கள். அப்போது, அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி),'நீங்கள் (ஆட்சியாளரைத் தேர்ந்தெடுக்கும்) அதிகாரத்தை என்னிடம் ஒப்படைக்கிறீர்களா? உங்களில் சிறந்தவரை நான் (தரத்தில்) குறைத்து மதிப்பிடவில்லையென்பதை அல்லாஹ் கண்காணித்துக் கொண்டேயிருக்கிறான்'' என்று கூறினார்கள். அதற்கு, அவ்விருவரும்'ஆம்! (உங்களிடம் அப்பொறுப்பை ஒப்படைக்கிறோம்)'' என்றனர். அப்போது அவ்விருவரில் ஒருவரின் ( - அலீ - ரலி அவர்களின்) கையை அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) பிடித்துக் கொண்டு'உங்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (நெருங்கிய) உறவுமுறை இருக்கிறது. மேலும், இஸ்லாத்தில் உங்களுக்கு நீங்களே அறிந்துள்ள சிறப்பும் உண்டு. அல்லாஹ் உங்களைக் கண்காணித்துக் கொண்டேயிருக்கிறான். உங்களை நான் ஆட்சித் தலைவராக நியமனம் செய்தால் (குடிமக்களிடத்தில்) நீங்கள் நீதியுடன் நடந்து கொள்வீர்கள். உஸ்மான் அவர்களை நான் ஆட்சித் தலைவராக நியமனம் செய்தால் அவருக்கு செவிமடுத்து, கட்டுப்பட்டு நடப்பீர்கள்'' என்று கூறினார்கள். பிறகு இன்னொருவரிடம் ( உஸ்மான் - ரலி - அவர்களிடம்) தனியே வந்து அலீ(ரலி) அவர்களிடம் கூறியதைப் போன்றே (அவர்களிடமும்) வாக்குறுதி வாங்கிய பின்,'உஸ்மான் அவர்களே! தங்களின் கையைத் தாருங்கள்'' என்று கூறி (உஸ்மான் - ரலி - அவர்களின் கையைப் பிடித்து) அவர்களுக்கு பைஅத் (விசுவாசப் பிரமாணம்) செய்து கொடுத்தார்கள். அப்போது அலீ(ரலி) அவர்களும் உஸ்மான்(ரலி) அவர்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்தார்கள். மேலும், அந்நாட்டவரும் (மதீனா வாசிகளும்) வந்து அவர்களிடம் பைஅத் செய்து கொடுத்தார்கள்.

## அபுல் ஹஸன் அலீ இப்னு அபீ தாலிப் அல்குறஷீ அல்ஹாஷிமீ - ரலி அவர்களின் சிறப்புகள்

நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம், 'நீங்கள் என்னைச் சேர்ந்தவர் நான் உங்களைச் சேர்ந்தவன்'' என்று கூறினார்கள். 68' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களைக் குறித்து திருப்தியுடனிருந்த நிலையில் இறந்தார்கள்'' என்று உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3701. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

(கைபர் போரின் போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நாளை (இஸ்லாமியச் சேனையின்) கொடியை ஒரு மனிதரிடம் தரப் போகிறேன். அல்லாஹ் அவரின் கரங்களில் வெற்றியை அளிப்பான்'' என்று சொன்னார்கள். எனவே, மக்கள் தம்மில் எவரிடம் அது கொடுக்கப்படும் என்ற யோசனையில் இரவெல்லாம் மூழ்கியிருந்தனர். காலையானதும மக்களில் ஒவ்வொருவரும் தன்னிடம் அது கொடுக்கப்பட வேண்டும் என்று ஆசைப்பட்ட வண்ணம் அல்லாஹ்வின் தூதரிடம் சென்றனர். நபி(ஸல்) அவர்கள், 'அலீ இப்னு அபீ தாலிப் எங்கே?' என்று கேட்டார்கள். மக்கள், 'அவருக்குக் கண்வலி, இறைத்தூதர் அவர்களே!" என்று கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள், 'அவருக்கு ஆளனுப்பி என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்று உத்தரவிட்டார்கள். அலீ(ரலி) வந்தவுடன் அவர்களுடைய இரண்டு கண்களிலும் (தம் உமிழ்நீரை) உமிழ்ந்து அவர்களுக்காக (நலத்திற்கு) பிரார்த்தனை புரிந்தார்கள். அவர்களுக்கு (அதற்கு முன்) வலியே இருந்ததில்லை என்பதைப் போன்று அவர்கள் (வலி நீங்கி) குணமடைந்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம் கொடியைக் கொடுத்தார்கள். அப்போது அலீ(ரலி), 'இறைத்தூதர் அவர்களே! அவர்கள் நம்மைப் போன்று (ஒரே இறைவனுக்குக் குழ்ப்படிந்தவர்களாய்) ஆகும் வரை நான் அவர்களுடன் போரிடட்டுமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அவர்களின் களத்தில் இறங்கும் வரை நிதானமாகச் செல்லுங்கள். பிறகு அவர்களை இஸ்லாத்திற்கு (வரும்படி) அழையுங்கள். மேலும், இஸ்லாத்தில் அவர்களின் மீது கடமையாகிற அல்லாஹ்விற்குச் செய்யவேண்டிய கடமைகளை அவர்களுக்குத் தெரிவியுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் மூலமாக அல்லாஹ் ஒரேயொரு மனிதருக்கு நேர்வழியை அளிப்பது (அரபுகளின் அருஞ் செல்வமான) சிவப்பு ஒட்டகங்களை (தர்மம் செய்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3702. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்

அலீ(ரலி) கைபர் போரின்போது நபி(ஸல்) அவர்களுடன் (போருக்குச்) செல்லாமல் பின் தங்கிவிட்டிருந்தார்கள். அவர்களுக்குக் கண் வலி ஏற்பட்டிருந்தது. 'நான் அல்லாஹ்வின் தூதருடன் (போருக்குச்) செல்லாமல் பின் தங்கி விட்டேனே'' என்று (வருத்தத்துடன்) கூறினார்கள். பிறகு அலீ(ரலி) புறப்பட்டு (வந்து) நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்தார்கள். எந்த நாளின் காலை வேளையில் கைபரை நபி(ஸல) அவர்கள் வெற்றி கொண்டார்களோ அந்த நாளின் (இரவுக்கு முந்தைய) மாலை நேரம் வந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிற அல்லது அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கின்ற... ஒரு மனிதரிடம் நாளை இந்தக் கொடியைத் தரப்போகிறேன்... அல்லது அத்தகைய ஒருவர் இக்கொடியைப் பிடித்திருப்பார்... என்று

சொல்லிவிட்டு,'அவருக்கு அல்லாஹ் வெற்றியளிப்பான்'' என்று கூறினார்கள். நாங்கள் எதிர்பார்க்காத நிலையில் அலீ(ரலி) வந்து எங்களுடன் இருக்கக் கண்டோம். உடனே மக்கள்,'இதோ அலீ அவர்களே!"என்று கூறினர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம் கொடியைக் கொடுக்க, அவர்களுக்கு அல்லாஹ் வெற்றியளித்தான்.

ஹதீஸ் 3703. அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்

ஒருவர் ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களிடம் வந்து,'இன்னவர் - அதாவது மதீனாவின் ஆளுநர் (மர்வான் இப்னி ஹகம்) அலீ(ரலி) அவர்களை மிம்பருக்கருகில் (விரும்பத் தகாத பெயரால்) அழைககிறார்'' என்று கூறினார். ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி),'அவர் (அப்படி) என்ன கூறினார்?' என்று கேட்க அம்மனிதர்,'அபூ துராப் (மண்ணின் தந்தை) என்றுஅழைக்கிறார்கள் என்று பதிலளித்தார். இதைக் கேட்டு ஸஹ்ல்(ரலி) சிரித்துவிட்டு,'அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் தாம் அலீ அவர்களுக்கு அந்தப் பெயரைச் சூட்டினார்கள். அலீ அவர்களுக்கு அதை விடப் பிரியமான ஒரு பெயர் எதுவும் இருந்ததில்லை'' என்று சொன்னர்கள். இந்த ஹதீஸை முழுமையாகச் சொல்லுமபடி நான் ஸஹ்ல் இப்னு ஸஅத்) அவர்களே! அது எப்படி?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்: (ஒரு முறை) அலீ(ரலி) ஃபாத்திமா(ரலி) அவர்களிடம் சென்றார்கள். பிறகு (அலீ - ஃபாத்திமா இடையே மனஸ்தாபம் ஏற்படவே) வெளியே வந்து பள்ளிவாசலில் படுத்தார்கள். (அப்போது ஃபாத்திமா அவர்களின் வீட்டுக்கு வந்த) நபி(ஸல்) அவர்கள், உன் பெரிய தந்தையின் மகன் (அலீ) எங்கே'' என்று கேட்க அவர்கள்,'பள்ளிவாசலில் இருக்கிறார்'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், அலீ அவர்களிடம் சென்றபோது அவர்களின் மேல்துண்டு அவர்களின் முதுகிலிருந்து (தரையில்) விழுந்து விட்டிருப்பதையும் (தலையிலுள்ள) முண் அவர்களின் முதுகில் ஒட்டிக் கொண்டிருப்பதையும் கண்டு அவர்களின் முதுகிலிருந்து மண்ணைத் துடைக்கலானார்கள். அப்போது,'(எழுந்து) அமருங்கள், அபூ துராப் (மண்ணின் தந்தை) அவர்களே!"என்று நபி(ஸல்) அவர்கள் இரண்டு முறை கூறினார்கள்.

ஹதீஸ் 3704. ஸஅத் இப்னு உபைதா(ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி) அவர்களிடம் ஒருவர்வந்து உஸ்மான்(ரலி) அவர்களைப் பற்றிக் கேட்டார். இப்னு உமர்(ரலி) உஸ்மான்(ரலி) அவர்களின் நற்செயல்களை எடுத்துரைத்தார்கள். (பிறகு) அந்த மனிதரிடம்,'நான் சொன்னவை உனக்கு எரிச்சலூட்டியிருக்குமே!"என்று கூறினார்கள். (ஏனெனில் அந்த மனிதர் குறை காணும் நோக்கத்துடன் வந்திருந்தார்.) அதற்கு அந்த மனிதர்,'ஆம்'' என்று பதிலளித்தார். இப்னு உமர்(ரலி),'அப்படியென்றால் அல்லாஹ் உன் மூக்கில் மண் படியச் செய்யட்டும்'' என்று கூறினார்கள். பிறகு அந்த மனிதர் அலீ(ரலி) அவர்களைப் பற்றிக் கேட்க, இப்னு உமர்(ரலி) அலீ(ரலி) அவர்களின் நற்செயல்களைத் எடுத்துரைத்துவிட்டு,'அவர்கள் அவ்வாறே அவர்களின் இல்லம் நபி(ஸல்) அவர்களின் (குடும்பத்தாரின்) வீடுகளுக்கு நடுவில் இருந்தது'' என்று கூறினார்கள். பிறகு,'நான் சொன்னது உனக்கு எரிச்சலூட்டியிருக்குமே!"என்று கேட்டார்கள். அதற்கு அம்மனிதர்,'ஆம்'' என்று பதிலளித்தார். இப்னு உமர்(ரலி),'அப்படி யென்றால் அல்லாஹ் உன் மூக்கில் மண் படியச் செய்யட்டும். போ! போய் (நான் இப்படி உண்மையைச் சொன்னதற்காக என்னை நீ தண்டிக்க விரும்பினால்) எனக் கெதிராக உன்னால் ஆனதைச் செய்'' என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 3705.** அலீ (ரலி) அறிவித்தார்

திரிகை சுற்றுவதால் தாம் அடையும் வேதனை குறித்து (என் மனைவி) ஃபாத்திமா முறையிட்டார். (டந்நிலையில்) நபி(ஸல) அவர்களிடம் போர்க் கைதிகள் சிலர் கொண்டு வரப்பட்டனர். உடனே, ஃபாத்திமா அவக்ாள (நபி - ஸல் - அவர்களிடம் வீட்டு வேலைக்காகக் கைதி எவரையாவது கேட்டு வாங்கிவரச்) சென்றார். ஆனால், நபி(ஸல்) அவர்களைக் காணவில்லை ஆயிஷா(ரலி) அவர்களைத் தாம்அங்கே கண்டார். எனவே, (தாம் வந்த நோக்கத்தை) ஆயிஷா(ரலி) அவர்களிடம் ஃபாத்திமா தெரிவித்தா. நபி(ஸல்) அவர்கள் (வீட்டிற்கு) வந்தபோது ஆயிஷா(ரலி) ஃபாத்திமா வந்ததைத் தெரிவித்தார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அதற்குள் நாங்கள் எங்கள் படுக்கைக்குச் சென்று விட்டிருந்தோம். நபி(ஸல்) அவர்களைக் கண்டவுடன்) நான் எழுந்து நிற்கப் போனேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் (இருவரும்) உங்கள் இடத்திலேயே இருங்கள்'' என்று சொல்லிவிட்டு எங்களுக்கிடையே (வந்து) அமர்ந்தார்கள். எந்த அளவுக்கென்றால் அவர்களின் கால்களின் குளிர்ச்சியை நான் என் நெஞ்சின் மீது உணர்ந்தேன். பிறகு, 'நீங்கள் இருவரும் என்னிடம் கோரிய (உதவி) தனை விடச் சிறந்த ஒன்றை உங்கள் இருவருக்கும் நான் கற்றுத் தரட்டுமா? நீங்கள் இருவரும் நான் கற்றுத் தரட்டுமா? நீங்கள் இருவரும் உங்கள் படுக்கைக்குச் செல்கையில் முப்பத்து நான்கு முறை'அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன்' என்று சொல்லுங்கள் முப்பத்து மூன்று முறை'சுப்ஹானல்லாஹ் - அல்லாஹ் தூயவன்' என்று சொல்லுங்கள் முப்பத்து மூன்று முறை'அல்ஹம்து லில்லாஹ் - அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்' என்று சொல்லுங்கள். அது ஒரு பணியாளை விட உங்கள் இருவருக்கும் சிறந்ததாகும் என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 3706.** ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம், '(நபி) ஹாரூன் அவர்களுக்கு (அவர்களின் சகோதரர் - நபி) மூஸா அவர்களிடம் எந்த அந்தஸ்து இருந்தோ அதே அந்தஸ்தில் நீங்கள் என்னிடம் இருப்பதை விரும்பவில்லையா?' என்று கேட்டார்கள்.

**ஹதீஸ் 3707.** அபீ தா இப்னு அம்ர் அஸ் ஸல்மானீ(ரஹ்) அறிவித்தார்

அலீ(ரலி) (இராக் வந்திருந்தபோது இராக் அறிஞர்களிடம் உம்முல்லதை விற்கலாம் என்று கருத்துத் தெரிவிக்க, அதை நான் (விரும்பாத போது), 'நீங்கள் முன்பு (உமர் - ரலி - அவர்களின் கருத்துப்படி உம்முல் வலதை விற்கக் கூடாது என்று) தீர்ப்பளித்து வாருங்கள். ஏனெனில், (மக்களிடையே சச்சரவுகளுக்குக் காரணமாய் அமையும் வகையில் அறிஞர்களுக்கிடையிலான) கருத்து வேறுபாடுகளை (பம்ரங்கமாக்குவதை) நான் விரும்பவில்லை. மக்கள் அனைவரும் (ஒத்த கருத்துடைய) ஒரே குழுவினராய் ஆகும் வரை, அல்லது என் தோழர்கள் இறந்துவிட்டதைப் போல் நானும் இறந்துவிடும் வரை நான் இவ்வாறே (கருத்து வேறுபாடுகளை பம்ரங்கப்படுத்த விரும்பாதவனாக) இருப்பேன்'' என்று கூறினார்கள்.

''அலீ(ரலி) அவர்களிடமிருந்து (வந்ததாக ஷியாக்களின் மூலம் அறிவிக்கப்படுகிறவற்றில் பெரும்பாலான பொய்கள் தாம்'' என்று இப்னு சீரின்(ரஹ்) கருதுகிறார்கள்.

## ஜஅஃபர் இப்னு அபீ தாலிப் அல் ஹாஷிமீ(ரலி) அவர்களின் சிறப்புகள்.

இவர்களிடம் நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் என் குணத்திலும் என் தோற்றத்திலும் (என்னை) ஒத்திருக்கிறீர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3708. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

"(நபிமொழிகளை) அதிகமாக அபூ ஹுரைரா(ரலி) அறிவிக்கிறாரே'' என்று மக்கள் (என்னைப் பற்றிக் குறை) கூறிக் கொண்டிருந்தார்கள். நான் என் பசி அடங்கினால் போதும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களுடனேயே எப்போதும் இருந்து வந்தேன். புளித்து உப்பிய (உயர்தரமான) ரொட்டியை நான் உண்பதுமில்லை கோடுபோட்ட அழகிய (உயர்ந்த) துணியை அணிவதுமில்லை. இன்னவனோ, இன்னவளோ எனக்குப் பணிவிடை செய்வதுமில்லை. பசியின் காரணத்தால் நான் என் வயிற்றில் கூழாங்கற்களை வைத்துக் கட்டிக் கொண்டிருந்தேன். என்னை ஒருவர் (தன் இல்லத்திற்கு) அழைத்துச் சென்று, எனக்கு அவர் உணவளிக்க வேண்டும் என்ப(தை உணர்த்துவ)தற்காக (' எனக்கு விருந்தளியுங்கள்' என்ற பொருள் கொண்ட 'அக்ரினீ' என்னும் சொல்லை சற்று மாற்றி)' அக்ரி.:னீ' எனக்கு ஓர் இறை வசனத்தை ஓதிக்காட்டுங்கள் - என்பேன். அவ்வனம் என்னுடன் (முப்னே மனப்பாடமாக) இருக்கும் . ஜஅ.:பர் இப்னு அபீ தாலிப்(ரலி) ஏழைகளுக்கு மிகவும் உதவுபவராயிருந்தார். அவர் எங்களை அழைத்துச் சென்று தம் வீட்டில் இருக்கும் உணவை எங்களுக்கு அளிப்பார். எந்த அளவிற்கென்றால் அவர் எதுவுமில்லாத (காலியான) நெய்ப் பையை எங்களிடம் கொண்டு வந்து அதைப் பிளந்து விடுவார். நாங்கள் அதில் (ஒட்டிக் கொண்டு) இருப்பதை நக்கி உண்போம்.

ஹதீஸ் 3709. ஷஅபீ (ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி), ஜஅ.:பர்(ரலி) அவர்களின் மகனா(ர் அப்துல்லாஹ் இப்னு ஜஅ.:ப)ருக்கு சலாம் சொன்னால் 'இரண்டு சிறகுகள் உடையவரின் மகனே! உங்களின் மீது சாந்தி உண்டாகட்டும்' என்று சொல்வார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரி ஆகிய நான்) கூறுகிறேன்: 'இரண்டு சிறகுகள்' என்பது 'இரண்டு பக்க (பல)ங்களைக் குறிக்கும்.

## அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப் -(ரலி) பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3710. அனஸ்(ரலி) அறிவித்தார்

மக்கள் பஞ்சத்தால் பீடிக்கப்படும்போது உமர் இப்னு கத்தாப்(ரலி), அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி) அவர்களை (அல்லாஹ்விடம்) மழை கோரிப் பிரார்த்திக்கும்படி கேட்பார்கள். (அத்தகைய சந்தர்ப்பங்களில்) உமர்(ரலி), 'இறைவா! நாங்கள் எங்கள் நபி(ஸல்) உயிருடன் இருந்த போது) அவர்கள் (உன்னிடம் பிரார்த்தித்தன்) மூலம் உன்னிடம் நாங்கள் உதவி கோரி வந்தோம். அப்போது (அதை ஏற்று) நீயும் எங்களுக்கு மழை பொழிவித்து வந்தாய். இப்போது எங்கள் நபியின் பெரிய தந்தை (அப்பாஸ் - ரலி - அவர்கள் உன்னிடம் பிரார்த்திப்பதன்) வாயிலாக உன்னிடம் (மழை பொழியும்படி) கோருகிறோம். எங்களுக்கு மழை பொழிவிப்பாயாக!" என்று கேட்பார்கள். அதன்படியே மக்களுக்கு மழை பொழிவிக்கப்பட்டு வந்தது.

## இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உறவினர்களின் சிறப்புகளும்

## நபி(ஸல்) அவர்களின் மகள் .:பாத்திமா(ரலி) அவர்களின் சிறப்பும்.

நபி(ஸல்) அவர்கள், '‘ஃபாத்திமா, சொர்க்கவாசிகளில் பெண்களின் தலைவியாவார்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3711. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் ஒதுக்கித் தந்த'ப்ய்உ' செல்வத்திலிருந்து தமக்கு நபி(ஸல்) அவர்களிடமிருந்து வரவேண்டிய வாரிசுப் பங்கைக் கொடுக்கும்படி அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் கேட்டு ஃபாத்திமா ஆளனுப்பினார். நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் தர்மமாகவிட்டுச் சென்ற நிலத்தையும்'ஃபதக்' பிரதேசத்திலிருந்து நிலத்தையும் கைபரில் கிடைத்த'குமுஸ்' நிதியில் மீதமானதையும் அவர் கேட்டார்.

ஹதீஸ் 3712. அதற்கு அபூ பக்ர்(ரலி), 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '(நபிமார்களான) எங்கள் சொத்துகளுக்கு வாரிசாக யாரும் வரமுடியாது. நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தர்மம் தான்' என்று கூறினார்கள் மேலும், முஹம்மதின் குடும்பத்தார் உண்பதெல்லாம் இச்செல்வத்திலிருந்து தான் அதாவது அல்லாஹ்வின் செல்வத்திலிருந்து தான் அதில் தங்கள் உணவுச் செலவை விட அதிகமாக எடுத்துக்கொள்ள அவர்களுக்கு உரிமையில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்களின் தர்மப் பொருள்கள், நபியவர்களின் காலத்தில் எந்த வழி முறைப்படி கையாளப்பட்டு வந்தனவோ அதில் சிறிதையும் நான் மாற்றமாட்டேன். அவற்றின் விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படி நடந்து கொண்டார்களோ அவ்வாறே நான் நடந்து கொண்டார்களோ அவ்வாறே நான் நடந்து கொள்வேன்' என்று கூறினார்கள். உடனே, அலீ அவர்கள், ஏகத்துவ உறுதிமொழியைக் கூறி இறைவனைப் புகழ்ந்துவிட்டு, 'அபூ பக்ர் அவர்களே! உங்கள் சிறப்பை நாங்கள் அறிந்திருக்கிறோம்‘‘ என்று கூறினார்கள் - மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தமக்கிருக்கும் உறவையும் அவர்களின் உரிமையையும் எடுத்துரைத்தார்கள். உடனே அபூ பக்ர்(ரலி) (தாம் பங்கு தர மறுப்பதற்குக் காரணம் கூறும் விதத்தில்) பேசினார்கள்.'என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! என் உறவினர்களின் உறவைப் பேணி (அவர்களுடன் நல்ல முறையில்) நடந்து கொள்வதை விட இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உறவினர்களே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3713. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்.

முஹம்மத்(ஸல்) அவர்களின் குடும்பத்தார் விஷயத்தில் கவனமாக நடந்து கொள்ளுங்கள். (அவர்களைப் பாதுகாத்து வாருங்கள். அவர்களுக்குத் துன்பம் தராதீர்கள்.)

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3714. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். எனவே, அவருக்குக் கோபமூட்டியவர் எனக்குக் கோபமூட்டியவராவார்.

என மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3715. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, தம் மகள் ஃபாத்திமாவை அழைத்து அவரிடம் ஏதோ இரகசியமாகக் கூறினார்கள். (நபி - ஸல் -

அவர்கள் சொன்னதைக் கேட்டு) ஃபாத்திமா அழுதார். மீண்டும் ஃபாத்திமாவை நபி(ஸல்) அவர்கள் அழைத்து எதையோ இரகசியமாகக் கூறினார்கள். (அதைக் கேட்டவுடன்) ஃபாத்திமா சிரித்தார். நான் அதைப் பற்றி (நபி - ஸல் - அவர்கள் இரகசியமாகச் சொன்னது என்ன என்று) அவரிடம் கேட்டேன்.

ஹதீஸ் 3716. அதற்கு ஃபாத்திமா,'நபி(ஸல்) அவர்கள் (முதல் முறை) என்னிடம் இரகசியமாகப் பேசியபோது, தமக்கு ஏற்பட்டிருந்த அந்த (நோயின்) வலியிலேயே தாம் இறக்கவிருப்பதாகத் தெரிவித்தார்கள். அதனால் நான் அழுதேன். பிறகு (இரண்டாம் முறை) இரகசியமாகப் பேசியபோது அவர்களின் குடும்பத்தாரில் நானே அவர்களைத் தொடர்ந்து (இறைவனிடம்) செல்லப் போகும் முதல் ஆள் என்று கூறினார்கள். அதனால் நான் (மம்ழ்ச்சியோடு) சிரித்தேன்'' என்று பதிலளித்தார்கள்.

## ஸு பைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களின் சிறப்புகள்.

''(ஸுபைர் (ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் (ஹவாரீ) பிரத்தியேக உதவியாளராவார்'' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

(ஈசா - அலை - அவர்களின் உதவியாளர்களான) ஹவாரிய்யீன்களுக்கு இந்தப் பெயர் சூட்டப்பட்டதற்கு, அவர்களின் ஆடைகள் வெண்மையாக இருந்ததே காரணமாகும்.

ஹதீஸ் 3717 மர்வான் இப்னி ஹகம் அவர்கள் கூறினார்

'சில்லு மூக்கு' நோய் (பரவலாக ஏற்பட்ட) ஆண்டில் உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களுக்கும் கடுமையான சில்லு மூக்கு இரத்த நோய் ஏற்பட்டது. எந்த அளவிற்கென்றால் அது அவர்களை ஹஜ் செய்ய விடாமல் தடுத்துவிட்டது. அவர்கள் தம் இறுதி விருப்பத்தையும் தெரிவித்து (மரண சாசனம் செய்து)விட்டார்கள். அப்போது குறைஷிகளில் ஒருவர் உஸ்மான்(ரலி) அவர்களிடம் வந்து,'(உங்களுக்குப் பின்) பிரதிநிதி ஒருவரை நியமியுங்கள்' என்று கூறினார். உஸ்மான்(ரலி),'மக்கள் (இப்படி நியமிக்கச்) கூறினார்களா?' என்று கேட்க அம்மனிதர்,'ஆம்'' என்றார்.'எவரை நியமிப்பது?' என்று உஸ்மான்(ரலி) கேட்க, அவர் (பதில் சொல்லாமல்) மௌனமாயிருந்தார். அப்போது இன்னொரு மனிதர் வந்தார். அவர் (என் சகோதரர்) ஹாரிஸ் இப்னு ஹகம்) என்று நான் நினைக்கிறேன் - அவரும்,'(உஸ்மான்(ரலி) அவர்களே! உங்களுக்குப் பின் ஒரு கலீஃபாவை (பிரதிநிதியை) நியமியுங்கள்'' என்று கூறினார். உஸ்மான்(ரலி),'மக்கள் (இப்படிக் கூறினார்களா?' என்று கேட்க, அவர்,'ஆம்'' என்று பதிலளித்தார். உஸ்மான்(ரலி),'யாரை நியமிப்பது?' என்றுகேட்க, அந்த மனிதர் (பதில் சொல்லாமல்) மௌனமாயிருந்துவிட்டார். பிறகு உஸ்மான்(ரலி),'அவர்கள் ஸுபைர் அவர்களை (கலீஃபாவாக நியமிக்கச்) சொல்லியிருக்கலாம்'' என்று சொல்ல, அந்த மனிதர்,'ஆம்'' என்று பதிலளித்தார். உஸ்மான்(ரலி),'என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது ஆணையாக! நான் அறிந்தவரை ஸுபைர் அவர்களே மக்களில் சிறந்தவர். (எவரை கலீஃபாவாக நியமிக்கலாம் என்று மக்கள் ஆலோசனை கூறினார்களோ) அவர்களில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மிகவும் பிரியமானவர் ஸுபைர் தாம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3718. மர்வான் இப்னி ஹகம் அவர்கள் கூறினார்

நான் உஸ்மான்(ரலி) அவர்களிடம் இருந்தபோது ஒருவர் அவர்களிடம் வந்து,'(உங்களுக்குப் பின் ஆட்சி செய்ய) ஒரு பிரதிநிதியை நியமியுங்கள்'' என்று

கூறினார். உஸ்மான்(ரலி),'அவ்வாறு (மக்களால்) கூறப்பட்டதா?' என்று கேட்க அம்மனிதர்,'ஆம் ஸுபைர்(ரலி) அவர்களைத் தான் (கலீஃபாவாக ஆக்கும்படி மக்கள் சொல்கிறார்கள்)'' என்று பதில் கூறினார். அப்போது உஸ்மான்(ரலி),'அல்லாஹ்வின் மீதாணையாக! அவரே உங்களில் சிறந்தவர் என்பதை நீங்கள் அறிவீர்கள்'' என்று மூன்று முறை கூறினார்கள்.

ஹதீஸ் 3719. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வோர் இறைத்தூதருக்கும் ஒரு பிரத்யேக உதவியாளர் (ஹவாரிய்யு) உண்டு. என் பிரத்யேக உதவியாளர் ஸுபைர் இப்னு அவ்வாம் ஆவார்.

என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3720. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்

அகழ்ப் போரின்போது நானும் உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) அவர்களும் (நபி - ஸல் அவர்களின் வீட்டுப்) பெண்களிடையே (பாதுகாப்புப்) பணியில் அமர்த்தப்பட்டோம். நான் அப்போது (என் தந்தை) ஸுபைர்(ரலி) தன் குதிரையின் மீது (சவாரி செய்த படி யூதர்களான) பனு குறைழா குலத்தாரை நோக்கி இரண்டு... அல்லது மூன்று முறை... முறை போய் வந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். நான் (இருப்பிடத்திற்குத்) திரும்பி வந்தபோது,'என் தந்தையே! தாங்கள் போய்க் கொண்டும் வந்து கொண்டுமிருப்பதை பார்த்தேன்'' என்று சொன்னேன். அவர்கள்,'என்னை நீ பார்த்தாயா? என் அருமை மகனே!"என்று கேட்டார்கள். நான்,'ஆம் (பார்த்தேன்)'' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,'பனு குறைழாவிடம் சென்று (உளவறிந்து) என்னிடம் அவர்களின் செய்தியைக் கொண்டு வருபவர் யார்?' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கேட்டார்கள். நான் (அந்தப் பணியைச் செய்ய ஒப்புக் கொண்டு) சென்றேன். நான் (அவர்களின் செய்தியை உளவறிந்து கொண்டு) திரும்பி வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னை கௌரவிக்கும் வகையில்) தம் தாய் தந்தையார் இருவரையும் சேர்த்து,'என் தந்தையும் என் தாயும் உனக்கு அர்ப்பணமாகட்டும்' எனக் கூறினார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3721. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) ஸுபைர்(ரலி) அவர்களிடம் நபித்தோழர்கள் யர்மூக் போரின்போது, 97'நீங்கள் (பைஸாந்திய இணைவைப்போர் மீது) தாக்குதல் நடத்த மாட்டீர்களா? நாங்களும் உங்களுடன் சேர்ந்து தாக்குதல் நடத்துவோமே'' என்று கேட்டார்கள். எனவே, ஸுபைர்(ரலி), இணைவைப்போர் மீது தாக்குதல் தொடுத்தார்கள். இணைவைப்பவர்கள் ஸுபைர்(ரலி) அவர்களின் தோளின் மீது இரண்டு முறை வெட்டினார்கள். அவ்விரண்டுக்கும் இடையே பத்ருப் போரில் ஸுபைர்(ரலி) அவர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட இன்னொரு காயம் இருந்தது. நான் சிறுவனாயிருந்தபோது அந்த காயங்(களால் ஏற்பட்ட துளை போன்ற வடுக்)களுக்கிடையே என் விரல்களை நுழைத்து விளையாடி வந்தேன்.

## தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) பற்றிய குறிப்பு.

"நபி(ஸல்) அவர்கள்'தல்ஹா'' அவர்களைக் குறித்து திருப்தியடைந்த நிலையில் இறந்தார்கள்'' என்று உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3722 ு ஹதீஸ் 3723 . தல்ஹா (ரலி) அவர்களும் ஸஅத் (ரலி) அவர்களும் கூறினார்கள்

நபி (ஸல்) அவர்கள் (இணைவைப்பவர்களுடன்) போரிட்ட அந்த (உஹுதுப் போரின்) நாள்களில் அவர்களுடன் எங்கள் இருவரையும் தவிர வேறெவரும் இருக்கவில்லை.

இதை, அறிவிப்பாளர் அபூ உஸ்மான் அபதுர் ரஹ்மான் அந்நஹ்தீ (ரஹ்) தல்ஹா (ரலி) மற்றும் ஸஅத் (ரலி) ஆகிய இருவரிடமே நேரடியாகக் கேட்டு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3724. அபூ ஹாஸிம் (ரஹ்) அறிவித்தார்

(உஹுதுப் போரின் போது) நபி (ஸல்) அவர்களை (நோக்கி வந்த அம்புகள் மற்றும் ஈட்டிகளிலிருந்து அவர்களைக் கேடயம் போன்று நின்று) காத்த தல்ஹா (ரலி) அவர்களின் கையை (துளைகளும் வடுக்களும் நிறைந்து) ஊனமுற்றதாக பார்த்தேன்.

## ஸஅத் இப்னு அபீ வக்காஸ் அஸ் ஸு ஹ்ரீ (ரலி) அவர்களின் சிறப்புகள்.

(அவர்களின் குலமான) பனு ஸுஹ்ரா குலத்தார் நபி (ஸல்) அவர்களின் தாய் வழி உறவினர்கள் ஆவர். ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களே ஸஅத் இப்னு மாலிக் (ரலி) ஆவார்கள்.

ஹதீஸ் 3725. ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) கூறினார்

"(என்னுடைய வீரச் செயலைக் கண்டு என்னைப் பாராட்டும் விதத்தில்) நபி (ஸல்) அவர்கள் உஹுதுப் போரின்போது தம் தாய் தந்தை இருவரையும் சேர்த்து எனக்கு அர்ப்பணிப்பதாக (என் தந்தையும் என் தாயும் உனக்கு அர்ப்பணமாகட்டும்' எனச்) கூறினார்கள்"' என்று ஸஅத் (ரலி) சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 3726. ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்தார்

இஸ்லாத்தில் மூன்றிலொரு பாகமாக என்னை கண்டேன்.

ஹதீஸ் 3727. ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) கூறினார்

"நான் இஸ்லாத்தைத் தழுவிய நாளில் (தான் மற்றவர்களும் இஸ்லாத்தைத் தழுவினர். அந்நாளில்) தவிர (அதற்கு முன்பு) வேறெவரும் இஸ்லாத்தைத் தழுவிடவில்லை. நான் இஸ்லாத்தில் மூன்றிலொரு பாகமாக ஏழு நாள்கள் (வரை) இருந்தேன். என்று ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) சொல்ல கேட்டேன்.

இதே ஹதீஸ் வேறொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3728. ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்தார்

இறைவழியில் அம்பெய்த அரபுகளில் நானே முதலாமவன் ஆவேன். எங்களுக்கு மரத்தின் இலைகளைத் தவிர வேறு உணவு எதுவும் இல்லாதிருக்கும் நிலையில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் புனிதப் போர் புரிந்து வந்தோம். எனவே, நாங்கள் ஒட்டகங்களும் ஆடுகளும் கெட்டிச் சாணியிடுவதைப் போன்று ஒன்றோடொன்று ஒட்டாமல் மலம் கழித்து வந்தோம். பிறகு (கூ..பா வாசிகளான)'பனு அஸத்' குலத்தார் (நான் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்று என்னுடைய) இஸ்லாம் விஷயத்தில் என்னைக் குறை கூறலானார்கள். (அப்படியானால், இது வரை) நான் செய்து வந்த வழிபாடு வீணாம், நான் இழப்புக்குள்ளாம் விட்டேன். (போலும் என்று வருந்தினேன்.)

அதைக் குறித்து அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம் புகார் செய்திருந்தார்கள்" என்று (உமர் - ரலி - அவர்களிடம்) கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் மருமகன்கள் பற்றிய குறிப்பு.

அவர்களில் அபுல் ஆஸ் இப்னு ரபீஉ(ரலி) அவர்களும் ஒருவராவார்.

ஹதீஸ் 3729. மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்

அலீ(ரலி) (ஃபாத்திமா இருக்கவே,) அபூ ஜஹ்லுடைய மகளை (இரண்டாம் தாரமாக மணம் புரிந்து கொள்ளப்) பெண் பேசினார்கள். அதைப் பற்றி ஃபாத்திமா(ரலி) கேள்விப்பட்டார்கள். உடனே அவர்கள் (தம் தந்தையான) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'(தந்தையே!) உங்கள் சமுதாயம் உங்களுடைய மகள்களுக்காக (அவர்கள் மனத்துன்பத்திற்கு ஆளாக்கப்படும் போது) நீங்கள் கோபம் கொள்ளமாட்டீர்கள். என்று கருதுகிறது. (உங்கள் மருமகனும் என் கணவருமான) இந்த அலீ, அபூ ஜஹ்லுடைய மகளை மணக்கவிருக்கிறார்" என்று கூறினார்கள். உடனே,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (உரையாற்ற) எழுந்தார்கள். அவர்கள் இறைவனைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு,'நிற்க, அபுல் ஆஸ் இப்னு ரபீஉவை (என் மூத்த மகள் ஸைனபுக்கு) மணம் முடித்து வைத்தேன். அவர் என்னிடம் (தன் மனைவியைத் திருப்பி அனுப்பி விடுவதாக வாக்களித்துப்) பேசினார் (பேசியபடி) வாய்மையுடன் நடந்து கொண்டார். ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். எவரும் அவருக்குத் துன்பம் தருவதை நான் வெறுக்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதருடைய மகளும் அல்லாஹ்வின் பகைவனுடைய மகளும் ஒரே மனிதரிடம் ஒன்று சேர முடியாது. என்று கூறினார்கள்.

எனவே, அலீ(ரலி) (அபூ ஜஹ்லுடைய மகளைப்) பெண் பேசுவதைவிட்டுவிட்டார்கள்.

மற்றோர் அறிவிப்பில், மிஸ்வர்(ரலி) அதிகப்படியாகக் கூறியிருப்பதாவது:

நான் நபி(ஸல்) அவர்களின் உரையைச் செவியுற்றேன். அவர்கள் பனு அப்தி ஷம்ஸ் குலத்தைச் சேர்ந்த தம் மருமகன் ஒருவரை (அபுல் ஆஸை) நினைவு கூர்ந்து அவர் (அவரின் மாமனாரான) தன்னுடன் நல்ல மருமகனாக நடந்து கொண்டதைப் பாராட்டிப் புகழ்ந்து பேசினார்கள். அப்போது அவர்கள்,'அவர் என்னிடம் பேசினார். (பேசிய படி) வாய்மையுடன் நடந்து கொண்டார். எனக்கு வாக்குறுதியளித்தார், அதை எனக்கு நிறைவேற்றித் தந்தார்" என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களின் சிறப்புகள்.

பராஉ(ரலி) அறிவித்தார்

"நீங்கள் எம் சகோதரரும் எம்(மால் விடுதலை செய்யப்பட்ட) அடிமையுமாவீர்" என்று நபி(ஸல்) அவர்கள் (ஸைத் - ரலி - அவர்களிடம்) கூறினார்கள்.

ஹதீஸ் 3730. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தளபதியாக்கி ஒரு படையை அனுப்பினார்கள். மக்களில் சிலர் உஸாமா அவர்களின் தலைமையைக் குறை கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'(இப்போது) இவரின் தலைமையை நீங்கள் குறை கூறுகிறீர்கள் என்றால்... (இது ஒன்றும் புதிதல்ல). இதற்கு முன் (மூத்தா

போரின் போது) இவரின் தந்தையின் (ஸைத் அவர்களின்) தலைமையையும் நீங்கள் குறை கூறிக் கொண்டிருந்தீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் (ஸைத்) தலைமைப் பொறுப்புக்குத் தகுதியுடையவராகவே இருந்தார். மேலும், அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் விருப்பமானவராக இருந்தார். (அவரின் மகனான) இவர் (உஸாமா) தான் அவருக்குப் பின் எனக்கு மிகவும் பிரியமானவராவார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3731. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் பார்த்துக் கொண்டிருக்க, என்னிடம் (இருவரின் சாயலை வைத்து) உறவு முறையை கணிப்பவர் ஒருவர் வந்தார். உஸாமா இப்னு ஸைத் அவர்களும், ஸைத் இப்னு ஹாரிஸா அவர்களும் அப்போது ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். அந்த மனிதர் (இருவரின் கால்களையும் பார்த்து), 'இந்தக் கால்கள் (ஒன்றுக் கொன்று உறவுள்ளவை) ஒன்று மற்றொன்றிலிருந்து தோன்றியவை'' என்று கூறினார். (அதைக் கேட்ட) நபி (ஸல்) அவர்கள் அதனால் மகிழ்ச்சியடைந்து அவரை வியந்தார்கள் அதை எனக்குத் தெரிவித்தார்கள்.

## உஸாமா இப்னு ஸைத் (ரலி) பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3732 ஆயிஷா (ரலி) அறிவித்தார்

(திருட்டுக் குற்றத்தின் காரணமாக கைவெட்டும தண்டனைக்கு உள்ளாகவிருந்த) மக்ஸூமி குலத்துப் பெண்ணொருத்தியின் விஷயம் குறைஷிகளைக் கவலையில் ஆழ்த்தியது. அவர்கள், 'இறைத்தூதர் (ஸல்) அவர்களின் செல்லப் பிள்ளையான உஸாமா அவர்களைத் தவிர வேறெவர் அவர்களிடம் துணிச்சலுடன் (தண்டனையைத் தளர்த்துவது குறித்துப்) பேச முடியும்'' என்று (தமக்குள்) பேசிக் கொண்டார்கள்''

ஹதீஸ் 3733. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

பனு மக்ஸூம் குலத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தி திருடிவிட்டாள். மக்கள், 'அவள் விஷயத்தில் நபி (ஸல்) அவர்களிடம் (தண்டனையைத் தளர்த்தும்படிக் கூறி பரிந்து) பேசுவது யார்?' என்று (தமக்குள்) விசாரித்துக் கொண்டனர். எவரும் நபி (ஸல்) அவர்களிடம் பேசத் துணியவில்லை. உஸாமா இப்னு ஸைத் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் (அது குறித்துப் பரிந்து) பேசினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'பனு இஸ்ராயீல் குலத்தார் தம்மிடையேயுள்ள வலியவர் (உயர் குலத்தவர்) எவரேனும் திருடிவிட்டால் அவரை தண்டிக்காமல்விட்டுவிடுவார்கள் தம்மிடையேயுள்ள பலவீனர் துண்டித்து விடுவார்கள். திருடியவர் (என் மகள்) ஃபாத்திமாவாகவே இருந்தாலும் கூட அவரின் கையை நான் துண்டித்திருப்பேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3734. அப்துல்லாஹ் இப்னு தீனார் (ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர் (ரலி) ஒரு நாள் பள்ளிவசாலில் இருந்த பொழுது பள்ளி வாசலின் ஒரு மூலையில் தன் ஆடையை (மண்ணில் புரளும்படி) இழுத்துக் கொண்டே சென்று கொண்டிருந்த ஒரு மனிதரைப் பார்த்தார்கள். உடனே, 'இவர் யார் என்று பார். இவர் எனக்கு அருகில் இருந்திருந்தால் நன்றாயிருக்குமே (நான் இவருக்கு புத்திமதி சொல்லியிருப்பேனே)'' என்று கூறினார்கள். அவர்களிடம் ஒருவர், 'அபூ அப்திர் ரஹ்மான் (இப்னு உமர்) அவர்களே! இவரை உங்களுக்குத் தெரியாதா? இவர்தான் உஸாமா (ரலி) அவர்களின் மகன் முஹம்மது'' என்று கூறினார். இதைக் கேட்ட இப்னு உமர் (ரலி) தம்

தலையைத் தாழ்த்திக் கொண்டு தம் கையால் தரையில் (கொத்துவது போல்) தட்டிய பிறகு,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இவரைப் பார்த்தால் இவரை நேசிப்பார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3735. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (சிறார்களாயிருந்த) என்னையும் ஹஸன்(ரலி) அவர்களையும் கையிலெடுத்து'இறைவா! இவர்கள் இருவரையும் நான் நேசிக்கிறேன் நீயும் நேசிப்பாயாக!"என்று பிரார்த்திப்பார்கள்.

ஹதீஸ் 3736. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட ஹர்மலா(ரஹ்) கூறினார்

உம்மு அய்மனின் மகனான அய்மனின் மகன் ஹஜ்ஜாஜ் என்பவர் (பள்ளிவாசலில் தொழுது கொண்டிருந்த போது) தம் ருகூவையும் சுஜூதையும் முழுமையாகச் செய்யாமலிருப்பதைக் கண்டு இப்னு உமர்(ரலி),'மீண்டும் தொழுங்கள்'' என்று கூறினார்கள.

"உம்மு அய்மனின் மகனான அய்மன், உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களின் தாய் வழிச் சகோதரராய் இருந்தார் மேலும் அன்சாரிகளில் ஒருவராகவும் இருந்தார்"

ஹதீஸ் 3737. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட ஹர்மலா(ரஹ்) கூறினார்

நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் இருந்தபோது ஹஜ்ஜாஜ் இப்னு அய்மன் (பள்ளிவாசலுக்குள்) நுழைந்(து தொழு)தார். அப்போது அவர் தன் ருகூவையும் முழுமையாக நிறைவேற்றவில்லை தன் சுஜூதையும் முழுமையாக நிறைவேற்றவில்லை. எனவே, இப்னு உமர்(ரலி) (ஹஜ்ஜாஜை நோக்கி),'திரும்பத் தொழுங்கள்'' என்று கூறினார்கள். அவர் திரும்பிச் சென்றபோது என்னிடம் இப்னு உமர்(ரலி),'யார் இவர்?' என்று கேட்டார்கள். நான்,'உம்மு அய்மனின் மகள் அய்மனுடைய மகன் ஹஜ்ஜாஜ் தான் இவர்'' என்று சொன்னேன். அதற்கு இப்னு உமர்(ரலி),'இவரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பார்த்திருந்தால் இவரை நேசித்திருப்பார்கள்'' என்று கூறினார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள், (உஸாமா - ரலி - அவர்களின் மீது) கொண்டிருந்த நேசத்தையும் உம்மு அய்மன்(ரலி) பெற்றெடுத்த (மற்ற) பிள்ளைகளின் மீதும் கொண்டிருந்த நேசத்தையும் இப்னு உமர்(ரலி) நினைவு கூர்ந்தார்கள்.

அறிவிப்பாளர்: சுலைமான் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) கூறினார்:

உம்மு அய்மன்(ரலி) நபி(ஸல்) அவர்களின் வளர்ப்புத் தாயாக இருந்தார்கள்.

## அப்துல்லாஹ் இப்னு உமர் இப்னி கத்தாப்(ரலி) அன்ஹு மா அவர்கள் சிறப்புகள்.

ஹதீஸ் 3738. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் உயிரோடியிருந்த காலத்தில் ஒருவர் கனவொன்றைக் காண்பாராயின் நபி(ஸல்) அவர்களிடம் விவரித்துச் செல்வார். எனவே, நான் நபி(ஸல்) அவர்களிடம் விசாரித்துச் சொல்வதற்காகக் கனவொன்று காண வேண்டும் என்று ஆசைப்பட்டேன். நான் மணமாகாத ஓர் இளைஞனாக இருந்தேன். நபி(ஸல்) அவர்களின் காலத்தில் பள்ளி வாசலில் நான் உறங்குவது வழக்கம். (ஒரு நாள்) நான் கனவில் இவ்வாறு

கண்டேன் வானவர்கள் இருவர் என்னைப் பிடித்து நரகத்திற்குக் கொண்டு சுற்றுச் சுவரைப் போன்று அதற்கு சுற்றுச் சுவர் எழுப்பப்பட்டிருந்தது. மேலும் கிணற்றின் இரண்டு பக்கங்களிலுமுள்ள கல்தூண்களைப் போன்று இரண்டு தூண்கள் அதற்கும் இருந்தன. அப்போது அதில் எனக்குத் தெரிந்த மக்கள் சிலர் இருந்தனர். உடனே நான், 'நரகத்திலிருந்து பாதுகாக்கும்படி அல்லாஹ்விடம் கோருகிறேன். நரகத்திலிருந்து பாதுகாக்கும் படி அல்லாஹ்விடம் கோருகிறேன்'' என்று பிரார்த்திக்கலானேன். அப்போது (என்னை அழைத்து வந்த) அந்த வானவர்கள் இருவரையும் வேறொரு வானவர் சந்தித்தார். அவர் என்னிடம், 'இனி ஒருபோதும் நீங்கள் பீதியடையமாட்டீர்கள்'' என்று கூறினார். நான் இதை (என் சகோதரியும் நபி - ஸல் அவர்களின் துணைவியாருமான) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் விவரித்துச் சொன்னேன்.

ஹதீஸ் 3739. ஹஃப்ஸா (ரலி) அதை நபி (ஸல்) அவர்களிடம் விவரித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ் (இப்னு உமர்) ஒரு சிறந்த மனிதர். அவர் இரவின் ஒரு பகுதியில் தொழுதால் (நன்றாயிருக்கும்)'' என்று கூறினார்கள்.

(இதை அறிவித்த அப்துல்லாஹ் இப்னு உமர் - ரலி - அவர்களின் மகன்) சாலிம் (ரஹ்), 'நபி (ஸல்) அவர்கள் இப்படிச் சொன்னதிலிருந்து) அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) இரவில் சிறிது நேரம் மட்டுமே உறங்குபவராயிருந்தார்கள்'' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3740 ~ ஹதீஸ் 3741 ஹஃப்ஸா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் என்னிடம், 'அப்துல்லாஹ் (இப்னு உமர்) ஒரு நல்ல மனிதர்'' என்று கூறினார்கள்.

இதை தம் சகோதரி ஹஃப்ஸா (ரலி) அவர்களிடமிருந்து இப்னு உமர் (ரலி) அவர்களே அறிவித்தார்கள்.

## அம்மார் மற்றும் ஹு தைஃபா (ரலி) ஆகியோரின் சிறப்புகள்.

ஹதீஸ் 3742. அல்கமா இப்னு கைஸ் அந்நகஈ (ரஹ்) கூறினார்

நான் ஷாம் நாட்டிற்குச் சென்றேன். (அங்கு பள்ளி வாசலுக்குச் சென்று) இரண்டு ரக்அத்துக்கள் தொழுதேன். பிறகு, 'இறைவா! எனக்கு ஒரு நல்ல நண்பரைக் கொடு'' என்று பிரார்த்தித்தேன். பிறகு, ஒரு கூட்டத்தாரிடம் சென்று அவர்களிடம் அமர்ந்தேன். அப்போது முதியவர் ஒருவர் வந்து என் பக்கத்தில் அமர்ந்தார். நான், 'இவர் யார்?' என்று கேட்டேன். மக்கள், '(இவர்தான் நபித்தோழர்) அபுத்தர்தா'' என்று பதிலளித்தார்கள். நான், அபுத் தர்தா (ரலி) அவர்களை நோக்கி, 'எனக்கு ஒரு நல்ல நண்பரை அறிவிக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தித்தேன். எனவே, அவன் உங்களை எனக்குக் கொடுத்திருக்கிறான்'' என்று சொன்னேன். அதற்கு அபுத்தர்தா (ரலி), 'நீங்கள் எந்த ஊர்க்காரர்?' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், 'நபியவர்களின் செருப்புகளையும் தலையணைகளையும் தண்ணீர்க்குவளையையும் சுமந்து வந்த உம்மு அப்தின் மகன் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி)) உங்களிடையே இல்லையா? தன் நபியின் வாயால் எவரை அல்லாஹ் ஷைத்தானிடமிருந்து காப்பாற்றினானோ அவர் (அம்மார் (ரலி) உங்களிடையே இல்லையா? மேலும் நபி (ஸல்) அவர்கள் அறிவித்த, வேறெவருக்கும் தெரியாத (நயவஞ்சகர்கள் தொடர்பான) இரகசியங்களை அறிந்தவர் (ஹுதைஃபா (ரலி) உங்களிடையே இல்லையா?' என்று கேட்டுவிட்டு, பிறகு, 'அப்துல்லாஹ் இப்னு

மஸ்வூத், 'வல்லய்லி இதா யஃக்ஷா' என்று தொடங்கும் (திருக்குர்ஆனின் 92-ம் அத்தியாயம் அல்லைலின்) இறைவசனங்களை எப்படி ஓதுகிறார்'' என்று கேட்டார்கள். நான், 'அவர்களுக்கு, 'வல்லய்லி இதாயஃக்ஷா வன்னஹாாி இதா தஜல்லா வத்தகாி வல் உன்ஸர்' (- இப்படித் தான் ஓதுவார்கள்) என்று ஓதிக்காட்டினேன். அதற்கு அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! அதை எனக்கு நபி(ஸல்) அவர்கள் தம் வாயால் (இவ்வாறே) ஓதிக்காட்டினார்கள்.

ஹதீஸ் 3743. அல்கமா இப்னு கைஸ் அந் நகஈ(ரஹ்) அறிவித்தார்

நான் ஷாம் நாட்டிற்குச் சென்றேன். பள்ளிவாசலில் நுழைந்(து இரண்டு ரக்அத்கள் தொழு)ததும்'இறைவா! எனக்கு ஒரு நல்ல நண்பரை ஏற்படுத்துவாயாக'' என்று பிராத்தித்தேன். பிறகு அபுதர்தா(ரலி) அவர்களிடம் (சென்று) அமர்ந்தேன். அபுத்தர்தா(ரலி)'நீங்கள் எந்த ஊர்க்காரரா?' என்று கேட்டார்கள். அதற்கு நான்'கூஃபா வாசி' என்றேன். அபுத்தர்தா(ரலி)'(நபி - ஸல் - அவர்கள் அறிவித்த) வேறெவருக்கும் தொியாத (நயவஞ்சகர்கள் தொடர்பான) இரகசியங்களை அறிந்தவர் உங்களிடையே இல்லையா?' என்று ஹுதைஃபா(ரலி) அவர்களைத் கருத்தில் கொண்டு கேட்டார்கள். நான், 'ஆம் (இருக்கிறார்)'' என்று பதிலளித்தேன். அவர்கள், 'தன் நபியின் வாயால் எவரை ஷைத்தானிடமிருந்து அல்லாஹ் காப்பாற்றினானோ அவர் உங்களிடையே இல்லையா?' என்று கேட்டார்... அம்மார்(ரலி) அவர்களைக் கருத்தில் கொண்டே இப்படிக் கூறினார்கள். நான்'ஆம் (இருக்கிறார்)'' என்று பதிலளித்தேன். அவர்கள், 'நபி(ஸல்) அவர்களின் (பல்துலக்கும்) மிஸ்வாக் குச்சியையும், தலையணையையும் சுமந்து சென்றவர்... அல்லது அவர்களின் அந்தரங்க உதவியாளர்.. (இப்னு மஸ்வூத்) உங்களிடம் இல்லையா?' என்று கேட்டார்கள். அதற்கு நான், 'ஆம் (இருக்கிறார்)'' என்று பதிலளித்தேன். அபுத்தர்தா(ரலி)'வல்லய்லி இதா யஃக்ஷா வந் நஹாாி இதா தஜல்லா' என்னும் (அத்தியாயம் அல்லைலின்) வசனங்களை எப்படி ஓதினார்கள்?' என்று கேட்க, 'வத்தகாில் வல் உன்ஸர்'' என்று கேட்க, 'வத்தகாி வல் உன்ஸா'' என்று ('வ மா கலக்க' என்னும் சொல் இல்லாமல் தான் ஓதுவார்கள் என) நான் பதிலளித்தேன். அபுத்தர்தா(ரலி), '(ஷாம் நாட்டினரான) இவர்கள், நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட ஒரு விஷயத்தை (ஓதும் முறையை)விட்டுக் கொடுத்து விடும் படி என்னை எச்சாிக்கிறார்கள்'' என்று கூறினார்கள்.

என இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) அறிவித்தார்.

## அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் - ரலி அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3744. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வொரு சமுதாயத்திற்கும் (அதன்) நம்பிக்கைக்குாியவர் ஒருவர் உண்டு. சமுதாயமே! நம்முடைய நம்பிக்கைக்குாியவர் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் அவர்கள் தாம்.

என அனஸ்(ரலி) மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3745. ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் நஜ்ரான் வாசிகளிடம், 'நம்பத்தன்மையில் முறையோடு நடந்து கொள்ளும் நம்பிக்கையாளர் (அமீன்) ஒருவரை உங்களுக்கு நிச்சயம் நான் அனுப்புவேன்'' என்று கூறினார்கள். அப்போது நபித்தோழர்கள் (பலர் அந்த'அமீன்'

என்னும் சிறப்பு தமக்கு கிட்டாதா என) பேராவல் கொண்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அபூ உபைதா(ரலி) அவர்களை அனுப்பி வைத்தார்கள்.

## ஹஸன் மற்றும் ஹு ஸைன் - ரலி அவர்களின் சிறப்புகள்.

“நபி(ஸல்) அவர்கள் ஹஸன்(ரலி) அவர்களைக் கட்டித் தழுவிக் கொண்டார்கள்‘‘ என்று நா:.பி:. இப்னு ஜுபைர்(ரஹ்) அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3746 அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மிம்பரின் (மேடை) மீது (உரையாற்றியபடி) இருக்க ஹஸன்(ரலி), நபி(ஸல்) அவர்களின் பக்க வாட்டில் அமர்ந்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒரு முறை மக்களையும் மறு முறை ஹஸன்(ரலி) அவர்களையும் நோக்கியபடி,‘இந்த என்னுடைய (மகளின்) மகன் மக்களின் தலைவராவார். முஸ்லிம்களின் இரண்டு குழுவினரிடையே இவர் வாயிலாக அல்லாஹ் சமாதானத்தை ஏற்படுத்தவிருக்கிறான்‘‘ என்று சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 3747 உஸாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (சிறார்களாயிருந்த) என்னையும் ஹஸன்(ரலி) அவர்களையும் (கையில்) எடுத்து,‘இறைவா! நான் இவ்விருவரையும் நேசிக்கிறேன். நீயும் இவ்விருவரையும் நேசிப்பாயாக‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3748. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அலீ(ரலி) அவர்களின் மகன் ஹுஸைன் (ரலி - அவர்கள் கர்பலாவில் கொல்லப்பட்ட பின்) அவர்களின் தலை, உபைதுல்லாஹ் இப்னு ஸியாதிடம் கொண்டு வரப்பட்டு ஒரு தட்டில் வைக்கப்பட்டது. உபைதுல்லாஹ் இப்னு ஸியாத் (ஒரு கைக் குச்சியால் அதன் மூக்கிலும் கண்ணிலும்) குத்தத் தொடங்கினான். மேலும் ஹுஸைன்(ரலி) அவர்களின் அழகைக் குறித்து ஏதோ சொன்னான்.

அனஸ்(ரலி) கூறினார்:

அல்லாஹ்வின் தூதருடைய குடும்பத்தாரிலேயே ஹுஸைன்(ரலி) தாம் தோற்றத்தில் அல்லாஹ்வின் தூதரவர்களுக்கு அதிக ஒப்பானவர்களாய் இருந்தார்கள்.’வஸ்மா’ என்னும் ஒரு வகை மூலிகையால் தம் (தாடிக்கும் முடிக்கும்) சாயமிட்டிருந்தார்கள்.

ஹதீஸ் 3749. பராஉ(ரலி) அறிவித்தார்

அலீ(ரலி) அவர்களின் மகன் ஹஸன்(ரலி), நபி(ஸல்) அவர்களின் தோள் மீது அமர்ந்திருக்க, நபி(ஸல்) அவர்கள்,‘இறைவா! நான் இவரை நேசிக்கிறேன். நீயும் இவரை நேசிப்பாயாக!”என்று பிரார்த்திக்கக் கண்டேன்.

ஹதீஸ் 3750. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்

அபூ பக்ர்(ரலி) ஹஸன்(ரலி) அவர்களைச் சுமந்தபடி,‘என் தந்தை உங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நீங்கள் (உங்கள் பாட்டனார்) நபி(ஸல்) அவர்களைத் தான் (உருவ அமைப்பில்) ஒத்திருக்கிறீர்கள். (உங்கள் தந்தையான) அலீ அவர்களை ஒத்திருக்கவில்லை‘‘ என்று சொல்லக் கண்டேன். அப்போது அலீ(ரலி) (அதைக் கேட்டு) சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 3751. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

முஹம்மத்(ஸல்) அவர்களின் குடும்பத்தார் விஷயத்தில் கவனமாக நடந்து கொள்ளுங்கள். (அவர்களைப் பாதுகாத்து வாருங்கள் அவர்களுக்குத் துன்பம் தராதீர்கள்) என்று அபூ பக்ர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3752. அனஸ்(ரலி) அறிவித்தார்

ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்களை விட நபி(ஸல்) அவர்களை (உருவ அமைப்பில்) ஒத்தவர்களாக வேறெவரும் இருக்கவில்லை.

ஹதீஸ் 3753. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ நுஅம்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு உமர் அவர்களிடம் (இராக்வாசி) ஒருவர் இஹ்ராம் அணிந்தவரைக் குறித்து வினவினார். அறிவிப்பாளர் ஷுஅபா(ரஹ்),'இஹ்ராம் அணிந்தவர் ஈயைக் கொல்வது (அனுமதிக்கப்பட்டதா இல்லையா என்பது) குறித்து கேட்டார் என்று எண்ணுகிறேன்" என்று கூறுகிறார். அதற்கு அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி),'இராக்வாசிகள் ஈயைக் (கொல்ல அனுமதியுண்டா இல்லையா என்பது) குறித்து கேட்கிறார்கள். அவர்களோ ஏற்கனவே அல்லாஹ்வின் தூதருடைய மகளின் மகனை (ஹுஸைனைக்) கொன்றுவிட்டார்கள். (ஆனால்,) நபி(ஸல்) அவர்கள்,'அவர்கள் இருவரும் (ஹஸன் - ரலி - அவர்களும் ஹுசைன் -ரலி - அவர்களும்) உலகின் இரண்டு துளசி மலர்கள் ஆவர்" என்று (அவர்களைக் குறித்து) கூறினார்கள்' எனக் கூறினார்கள்.

## அபூ பக்ர்(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட பிலால் இப்னு ரபாஹ் - ரலி அவர்களின் சிறப்புகள்.

"(பிலாலே!) சொர்க்கத்தில் உம்முடைய காலணிகளின் ஓசையை எனக்கு முன்பாக கேட்டேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3754. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி),'அபூ பக்ர் எங்கள் தலைவராவார். அவர்கள், எங்கள் தலைவர் பிலாலை (விலைக்கு வாங்கி) விடுதலை செய்தார்கள்" என்று சொல்வார்கள்.

ஹதீஸ் 3755. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) கூறினார்

பிலால்(ரலி), அபூ பக்ர்(ரலி) அவர்களிடம்,'நீங்கள் உங்களுக்காக (அடிமையான) என்னை விலைக்கு வாங்கியிருந்தால் என்னை (மதீனாவிலேயே) வைத்துக் கொள்ளுங்கள். அல்லாஹ்வுக்காக என்னை நீங்கள் வாங்கியிருந்தால் என்னை அல்லாஹ்வுக்காக செயலாற்றவிட்டு விடுங்கள்" என்று கூறினார்கள்.

## (அப்துல்லாஹ்) இப்னு அப்பாஸ்(லி) அவர்கள் பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3756. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

என்னை நபி(ஸல்) அவர்கள் தம் நெஞ்சோடணைத்து,'இறைவா! இவருக்கு ஞானத்தைக் கற்றுத் தருவாயாக!"எனப் பிரார்த்தித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில்,'இறைவா! இவருக்கு (உன்) வேதத்தைக் கற்றுத் தருவாயாக!"என்று நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

மேலும், 'ஹிக்மத்' என்னும் ஞானம் என்பது, தூதுத்துவம் அல்லாத விஷயங்களில் சரியான கருத்தை அறிந்து கொள்வது என்று பொருள்.

## காலிப் இப்னு வலீத் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3757. அனஸ் (ரலி) அறிவித்தார்

ஸைத் இப்னு ஹாரிஸா) அவர்களும் ஜஅஃபர் இப்னு அபீ தாலிப்) அவர்களும் (அப்துல்லாஹ்) இப்னு ரவாஹா அவர்களும் (மூத்தா போர்க் களத்தில்) உயிர்நீத்துவிட்ட செய்தியை, அது (மதீனாவிற்கு) வந்து சேர்வதற்கு முன்பே (இறைவனால் அறிவிக்கப் பெற்று மக்களுக்கு) நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

"(முதலில்) இஸ்லாமியச் சேனையின் கொடியை ஸைத் (தம் கையில்) எடுத்தார் அவர் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு, ஜஅஃபர் (தம் கையில்) எடுத்தார். அவரும் கொல்லப்பட்டுவிட்டார். பிறகு இப்னு ரவாஹா (தம் கையில் கொடியை) எடுத்தார். அவரும் கொல்லப்பட்டுவிட்டார்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைச் சொரிந்து கொண்டிருந்தன. இறுதியில் அக்கொடியை அல்லாஹ்வின் வாட்களில் ஒரு வாள் (காலித் இப்னு வலீத்) எடுத்தது. அல்லாஹ் (அவரின் கரத்தில்) முஸ்லிம்களுக்கு வெற்றியை அளித்துவிட்டான்'' என்று (போர்க்கள நிகழ்ச்சிகளை விவரித்துச்) கூறினார்கள்.

## அபூ ஹு தைஃபா அவர்களால் விடுதலை செய்யப்பட்ட சாலிம் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3758. மஸ்ரூக் (ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அவர்களிடம் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களைப் பற்றிய பேச்சு வந்தது. அப்போது அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி), 'அவர் எத்தகைய மனிதரென்றால், இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், அபூ ஹுதைஃபாவின் (முன்னாள்) அடிமையான சாலிம், உபை இப்னு கஅப், முஆத் இப்னு ஜபல் ஆகிய நால்வரிடமிருந்தும் குர்ஆனை ஓதக் கற்றுக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் அவர்களை முதலாவதாகக் குறிப்பிட்டதைக் கேட்ட பிறகு அவரை நிரந்தரமாக நான் நேசிக்கலானேன்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் இப்னு முர்ரா (ரஹ்), 'அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி), உபை இப்னு கஅப் (ரலி) அவர்களை முதலாவதாகச் சொன்னாரா, முஆத் (ரலி) அவர்களை முதலாவதாகச் சொன்னாரா (இவர்களிருவரில் யாரை முதலில் குறிப்பிட்டார்) என்று எனக்குத் தெரியாது'' என்று கூறுகிறார்கள்.

## அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3759 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் 'இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இயற்கையாகவோ, செயற்கையாகவோ கெட்ட வார்த்தை பேசுபவர்களாக இருந்ததில்லை. மேலும் அவர்கள், உங்களில் நற் குணமுள்ளவரே உங்களில் எனக்கு மிகவும் விருப்பமானவர்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3760. மேலும், 'அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், அபூ ஹுதைஃபாவின் (முன்னாள்) அடிமையான சாலிம், உபை இப்னு கஅப், முஆத் இப்னு ஜபல் ஆகிய நால்வரிடமிருந்தும் குர்ஆனை ஓதக் கற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3761. அல்கமா இப்னு கைஸ் (ரஹ்) அறிவித்தார்

நான் ஷாம் நாட்டிற்குள் சென்று (பள்ளிவாசலில்) இரண்டு ரக்அத்துகள் தொழுதேன். அப்போது, 'இறைவா! எனக்கு ஒரு நண்பரை ஏற்படுத்துவாயாக!" என்று பிரார்த்தித்தேன். அப்போது முதியவர் ஒருவர் என்னை நோக்கி வருவதைக் கண்டேன். அவர் அருகே வந்ததும், 'அல்லாஹ் என் பிரார்த்தனைக்குப் பதிலளித்துவிட்டதாக நம்புகிறேன்'' என்று சொன்னேன். அந்த முதியவர், 'நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று கேட்டார். 'நான் கூஃபாவாசி'' என்று பதிலளித்தேன். அவர், 'நபி (ஸல்) அவர்களின் காலணிகளையும் தலையணையையும், தண்ணீர்க் குவளையையும் (சுமந்து பணிவிடை புரிந்து) கொண்டிருந்தவர் (இப்னு மஸ்வூத்) உங்களிடையே இல்லையா? ஷைத்தானிடமிருந்து காப்பாற்றப்பட்டவர் (அம்மார்) உங்களிடையே இல்லையா? நபி (ஸல்) அவர்கள் அறிவித்த, வேறெவருக்கும் தெரியாத (நயவஞ்சகர்கள் தொடர்பான) இரகசியங்களை அறிந்தவர் (ஹுதைஃபா) உங்களிடையே இல்லையா?' என்று கேட்டார். 'உம்மு அப்தின் மகன் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்) 'வல் லய்லி' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் அத்தியாயம் 92ன்) இறை வசனங்களை எப்படி ஓதினார்கள்?' என்று மேலும் கேட்டார். நான், 'வல் லய்லி இதா யஃக்ஷா வந் நஹாரி இதா தஜல்லா வத் தகரி வல் உன்ஸா' என்று (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) ஓதுவதைப் போன்று) ஓதிக் காட்டினேன். அம்முதியவர், 'நபி (ஸல்) அவர்கள் தம் வாயால் (இவ்வாறே) எனக்கு அதை ஓதிக்காட்டினார்கள். ஆனால், (ஷாம் வாசிகளான) இவர்கள் (அதைவிட்டுவிட்டு புதிய முறையில் ஓதும்படி) என்னைத் திருப்ப முனைந்து கொண்டேயிருந்தனர்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3762. அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத் (ரஹ்) அறிவித்தார்

உருவ அமைப்பிலும், நடைமுறையிலும், நபி (ஸல்) அவர்களை ஏறக்குறைய ஒத்திருக்கும் ஒரு மனிதரை நாங்கள் பின்பற்றி நடப்பதற்காக (எங்களுக்குக் காட்டும்படி) ஹுதைஃபா (ரலி) அவர்களிடம் கேட்டோம். அவர்கள், 'நபி (ஸல்) அவர்களுக்கு உருவ அமைப்பிலும், போக்கிலும், நடத்தையிலும் கிட்டத்தட்ட ஒத்தவராக உம்மு அப்தின் மகனை (இப்னு மஸ்வூதை) விட வேறெவரையும் நான் அறியமாட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3763. அபூ மூஸா அல் அஷ்அரீ (ரலி) அறிவித்தார்

நானும் என் சகோதரரும் யமன் நாட்டிலிருந்து வந்து சில காலம் (மதீனாவில்) தங்கினோம் . அப்போது அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களும் அவர்களின் தாயாரும் நபி (ஸல்) அவர்களிடம் (அடிக்கடி) செல்வதைக் கண்டு, அவர் நபி (ஸல்) அவர்களின் வீட்டாரில் ஒருவர் என்றே நாங்கள் கருதினோம்.

## முஆவியா (ரலி) பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3764. இப்னு அபீ முலைக்கா (ரஹ்) அறிவித்தார்

முஆவியா(ரலி), தம்மிடம் இப்னு அப்பாஸ்(ருலி) அவர்களின் அடிமையொருவர் (குரைப்) இருக்க, இஷா தொழுகைக்குப் பின் ஒரு ரக்அத் வித்ரு தொழுதார்கள். அந்த அடிமை இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்றார். (முஆவியா - ரலி - அவர்கள் ஒரு ரக்அத் வித்ரு தொழுத விஷயத்தைக் கூறினார்.) இப்னு அப்பாஸ்(ரலி),'அவரை (அப்படியே தொழ)விட்டு விடு. ஏனெனில், அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டிருந்தார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3765. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,'நீங்கள் நம்பிக்கையாளர்களின் தலைவர் முஆவியா(ரலி) விஷயமாக ஏதும் கூற விரும்புகிறீர்களா? ஏனெனில், அவர் வித்ரை ஒரேயொரு ரக்அத்தாகத் தான் தொழுகிறார்'' என்று கூறப்பட்டது. அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி),'முஆவியா (மார்க்கச்) சட்ட நிபுணராவார்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3766. ஹும்ரான் இப்னு அபான்(ரஹ்) அறிவித்தார்

முஆவியா(ரலி),'நபி(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டிருந்த நாங்கள், அவர்கள் தொழக் கண்டிராத ஒரு தொழுகையை நீங்கள் தொழுகிறீர்கள். நபி(ஸல்) அவர்கள் அந்த இரண்டு ரக்அத்துகளையும் - அஸர் தொழுகைக்குப் பின் (உங்களில் சிலர் தொழுகின்ற) இரண்டு ரக்அத்துகளையும் தொழ வேண்டாமென்று தடை விதித்துள்ளார்கள்'' என்று கூறினார்கள்.

ஃபாத்திமா(ரலி) அவர்களின் சிறப்புகள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' ஃபாத்திமா சொர்க்கவாசிகளில் பெண்களின் தலைவியாவார்.

ஹதீஸ் 3767. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

ஃபாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். எனவே, அவருக்குக் கோபமூட்டியவர் எனக்குக் கோபமூட்டியவராவார். என மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்.

## ஆயிஷா(ரலி) அவர்களின் சிறப்பு.

ஹதீஸ் 3768. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு நாள்,'ஆயிஷாவே! இதோ (வானவர்) ஜிப்ரீல் உனக்கு சலாம் உரைக்கிறார்'' என்று கூறினார்கள். நான், சலாமுக்கு பதில் கூறும் முகமாக'வ அலைஹிஸ்ஸலாம் வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹு' அவரின் மீதும் சலம் (இறை சாந்தி) பொழியட்டும். மேலும், அல்லாஹ்வின் கருணையும் அவனுடைய அருள் வளங்களும் பொழியட்டும்'' என்று பதில் முகமன் சொல்லிவிட்டு,'நான் பார்க்க முடியாதவற்றை நீங்கள் பார்க்கிறீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கூறினேன்.

ஹதீஸ் 3769. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆண்களில் நிறையப் பேர் முழுமை பெற்றிருக்கிறார்கள். ஆனால், பெண்களில் இம்ரானின் மகள் மர்யமையும், ஃபிர் அவ்னின் மனைவி ஆஸியாவையும் தவிர வேறெவரும் முழுமை பெறவில்லை. (உலகின் மற்ற) பெண்களை விட ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பு (மற்ற)

எல்லா உணவுகளைக் காட்டிலும்'ஸரீத்' என்னும் உணவுக்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும்.

என அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3770. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உலகின் மற்ற) பெண்களைக் காட்டிலும் ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பு (மற்ற) உணவுகளைக் காட்டிலும்'ஸரீத்' என்றும் உணவுக்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும். என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3771 காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) நோயுற்றார்கள். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) (நலம் விசாரிக்க) வந்து,'இறை நம்பிக்கையாளர்களின் அன்னையே! வாய்மையில் முந்தியவர்களான அல்லாஹ்வின் தூதரும் அபூ பக்ரும் காத்திருக்கும் இடத்திற்கு (சொர்க்கத்திற்கு) நீங்கள் செல்லவிருக்கிறீர்கள்'' என்று (ஆறுதல்) கூறினார்கள்.

ஹதீஸ் 3772. அபூ வாயில்(ரஹ்) அறிவித்தார்

(கலீஃபா) அலீ(ரலி) (தமக்கு ஆதரவாக'ஜமல்' போரில் கலந்து கொள்ளும்படி) மக்களை அழைப்பதற்கு அம்மார் இப்னு யாசிர்(ரலி) அவர்களையும், (தம் புதல்வர்) ஹஸன்(ரலி) அவர்களையும்'கூஃபா' நகருக்கு அனுப்பி வைத்தபோது (மக்களுக்கு) அம்மார் உரையாற்றினார்கள். அப்போது (தம் உரையில்)'நபி(ஸல்) அவர்களுக்கு ஆயிஷா இந்த உலகிலும் மறுமையிலும் மனைவிமார்கள் என்பதை நான் உறுதியாக அறிவேன். எனினும்,'நீங்கள் (கலீஃபாவின் உத்தரவுக்கு இணங்கி நடப்பதன் மூலம்) அல்லாஹ்வி(ன் கட்டளைத)னைப் பின்பற்றுவதா? அல்லது ஆயிஷாவி(ன் யோசனைத)னைப் பின்பற்றுவதா?' என (முடிவு செய்ய வேண்டிய நிலைக்கு) உங்களை (ஆளாக்கி) அல்லாஹ் சோதனையில் ஆழ்த்திவிட்டான்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3773. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) (தம் சகோதரி) அஸ்மா(ரலி) அவர்களிடமிருந்து (கழுத்து) மாலையொன்ற இரவல் வாங்கினார்கள். அது (பனு முஸ்தலிக் போரின் பயணத்தில் எப்படியோ) தொலைந்து போய்விட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம், தோழர்களில் சிலரை அதைத் தேடுவதற்காக அனுப்பினார்கள். அப்போது அவர்களுக்குத் தொழுகை நேரம் வந்துவிட்டது. (தண்ணீர் கிடைக்காததால்) அவர்கள் உளூவின்றித் தொழுதார்கள். நபி(ஸல்) அவர்களிடம், அவர்கள் (திரும்பிச்) சென்றபோது தண்ணீர் கிடைக்காததால் தமக்கேற்பட்ட நெருக்கடியான நிலையை முறையிட்டார்கள். அப்போதுதான்'தயம்மும்' உடைய சட்டத்தைக் கூறும் இறைவசனம் அருளப்பட்டது. எனவே, (இந்தச் சலுகை கிடைக்கக் காரணமாய் அமைந்த ஆயிஷா(ரலி) அவர்களை நோக்கி) உஸைத் இப்னு ஹுளைர்(ரலி),'அல்லாஹ் உங்களுக்கு நற்லென் அளிக்கட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு ஒரு துன்பம் நேரும் போதெல்லாம் அதிலிருந்து விடுபடுகிற வழியொன்றை அல்லாஹ் உங்களுக்குத் தராமலிருந்ததில்லை மேலும், அதில் முஸ்லிம்களுக்கு அருள் வளம் ஒன்றைத் தராமலும் இருந்ததில்லை'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3774. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மரணமடைவதற்கு முன்பு நோய்வாய்ப்பட்டிருந்தபோது தம் மனைவிமார்களிடையே (நிச்சயித்த முறைப்படி ஒரு நாளைக்க ஒருவரின் விடு என்று) செல்லத் தொடங்கினார்கள். 'என் (முறைக்குரிய) நாள் வந்தபோது தான் அமைதியடைந்தார்கள்'' என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3775. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

மக்கள் தங்களின் அன்பளிப்புகளை நபி(ஸல்) அவர்களுக்கு வழங்கிட, நபியவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் தங்கும் நாளையே தேர்ந்தெடுத்து வந்தனர். (அப்போது நடந்த ஒரு நிகழ்ச்சியை நினைவுகூர்ந்து) ஆயிஷா(ரலி) கூறினார்: (நபியவர்களின் துணைவியரான) என் தோழிகள் உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் ஒன்று கூடி, 'உம்மு ஸலமாவே! அல்லாஹ்வின் மீதாணையாக! மக்கள் தங்களின் அன்பளிப்புகளை நபி(ஸல்) அவர்களுக்கு வழங்கிட, நபிகளார் ஆயிஷாவிடம் தங்கும் நாளையே தேர்ந்தெடுக்கிறார்கள். ஆயிஷா நபி(ஸல்) அவர்களுக்கு நலம் நாடுவதைப் போன்றே நாமும் அவர்களுக்கு நலம் நாடுகிறோம். எனவே, தமக்கு (தரவிரும்பும்) அன்பளிப்புகளை தாம் இருக்குமிடத்தில்... அல்லது செல்லுமிடத்தில்... (அது எவருடைய வீடாக இருந்தாலும் அங்கு) அனுப்பி வைத்து விடவேண்டும் என்று மக்களுக்குக் கட்டளையிடுமபடி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நீங்கள் எடுத்துச் சொல்லுங்கள்'' என்று கேட்டுக் கொண்டனர்.

(உம்மு ஸலமா(ரலி) கூறினார்:)

நான் நபி(ஸல்) அவர்களிடம் இதைச் சொல்ல, நபி(ஸல்) அவர்கள் என்னைக் கண்டு கொள்ளவில்லை. மீண்டும் நபி(ஸல்) அவர்கள் என்னிடம் திரும்பி வந்தபோது நான் அவர்களிடம் அதைச் சொன்னேன். அப்போதும் அவர்கள் என்னைக் கண்டு கொள்ளவில்லை. மூன்றாம் முறை வந்த போதும் நான் அவாக்ளிடம் இதே கோரிக்கையைச் சொன்னேன். அப்போது அவர்கள், 'உம்மு ஸலமாவே! ஆயிஷாவின் விஷயத்தில் எனக்கு மனவேதனை தராதே. ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் அவரல்லாத வேறெந்தப் பெண்ணின் போர்வைக்குள் நான் இருக்கும் போதும் எனக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அருளப்பட்டதில்லை'' என்று பதிலளித்தார்கள்.

# அத்தியாயம் 63 அன்சாரிகளின் சிறப்புகள்

## அன்சாரிகளின் சிறப்புகள்

அல்லாஹ் கூறினான்:

மேலும் (அந்த'ஃபய்உ' என்னும் செல்வம்) இந்த முஹாஜிர்களின் வருகைக்கு முன்பே நம்பிக்கைக் கொண்டு தாருல் ஹிஜ்ரத்தில் (மதீனாவில்) வாழ்ந்து கொண்டிருந்தவர்களுக்கும் (உரியதாகும்). ஹிஜ்ரத் செய்து தங்களிடம் வந்திருப்பவர்களை இவர்கள் நேசிக்கிறார்கள் என்பது மட்டுமல்ல அவர்களுக்கு அளிக்கப்பட்டவை தங்களுக்கும் தேவையானவையே என்று மனத்தளவில் கூட அவர்கள் நினைப்பதில்லை. (திருக்குர்ஆன் 59:09)

ஹதீஸ் 3776. ஃகைலான இப்னு ஜரீர்(ரஹ்) அறிவித்தார்

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்,'(அவ்ஸ் மற்றும் கஸ்ரஜ் குலத்தாரான உங்களுக்கு)'அன்சார் - உதவியாளர்கள்' என்னும் பெயர் வந்ததைப் பற்றி எனக்குக் கூறுங்கள். உங்களுக்கு அந்தப் பெயர் (குர்ஆனுக்கு முன்பே) சூட்டப்பட்டிருந்ததா? அல்லது அல்லாஹ் உங்களுக்கு அந்தப் பெயரைச் சூட்டினானா?' என்று கேட்டேன். அவர்கள்,'அல்லாஹ் தான் எங்களுக்கு ('அன்சார்' என்று திருக்குர்ஆன் 9:100-ம் வசனத்தில்) பெயர் சூட்டினான். (பஸராவில்) நாங்கள் அனஸ்(ரலி) அவர்களிடம் (வந்து) சென்று கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் அன்சாரிகளின் சிறப்புகளையும் அவர்களின் (தியாக) நிகழ்ச்சிகளையும் எங்களுக்கு எடுத்துரைப்பார்கள். என்னை அல்லது'அஸ்த்' குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரை... நோக்கி,'உன் குலத்தார் இன்னின்ன நாளில் இன்னின்னவாறு செய்தார்கள்'' என்று சொல்வார்கள்.

ஹதீஸ் 3777 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

'புஆஸ்' போர் நாள், தன் தூதருக்காக அல்லாஹ் (சாதகமான சூழ்நிலையை உருவாக்கும் வகையில்) முன்கூட்டியே நிகழச் செய்த நாளாக அமைந்தது. (அந்தப் போரின் காரணத்தால்) மதீனாவாசிகளின் கூட்டமைப்பு (குலைந்து) பிளவுபட்டிருந்த நிலையிலும் அவர்களில் முக்கியப் பிரமுகர்கள் கொல்லப்பட்டும் காயமுற்றும் இருந்த நிலையிலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அங்கு) வந்தார்கள். எனவே, மக்கள் இஸ்லாத்தை ஏற்க (ஏதுவான சூழ்நிலையை உருவாக்குவதற்காக) அல்லாஹ்தான், தன் தூதர்(ஸல்) அவர்களுக்குச் சாதகமாக அந்த நாளை முன் கூட்டியே நிகழச செய்தான். 2

ஹதீஸ் 3778. அனஸ்(ரலி) அறிவித்தார்

மக்கள் வெற்றியடைந்த ஆண்டில் (ஹுனைன் போரில் கிடைத்த செல்வங்களை) நபி(ஸல்) அவர்கள் (அன்சாரிகளுக்கு வழங்காமல், புதிதாக இஸ்லாத்தைத் தழுவியிருந்த) மக்கா குறைஷிகளுக்கு கொடுத்தபோது அன்சாரிகள்'அல்லாஹ்வின் மீதாணையாக! உண்மையில், இது வியப்பாகத் தான் இருக்கிறது. எங்கள் வாட்களில் குறைஷிகளின் இரத்தம் கொட்டிக் கொண்டிருக்க, எங்கள் போர்ச் செல்வங்கள் அவகாளுக்கல்லவா கொடுக்கப்படுகின்றன?' என்று பேசிக் கொண்டார்கள். 3 அவர்கள் இப்படிப் பேசிக் கொண்டது. நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே அன்சாரிகளை அவர்கள் அழைத்து,'உங்களைப் பற்றி எனக்கெட்டிய செய்தி என்ன?' என்று கேட்டார்கள். அவர்கள் (நபித் தோழர்கள்) பொய் சொல்லாதவர்களாய் இருந்தனர். எனவே, அவர்கள்,'(உண்மையில் நாங்கள் பேசிக் கொண்டதும்) உங்களுக்கு எட்டியதே தான்'' என்று

பதிலளிதார்கள். நபி(ஸல்) அவர்கள்,'மக்கள் போர்ச் செல்வங்களைப் பெற்றுக் கொண்டு தம் வீடுகளுக்குத் திரும்பிச் செல்ல, நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடனேயே உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்வதை நீங்கள் விரும்பவில்லையா? அன்சாரிகள் ஒரு பள்ளத்தாக்கிலோ ஒரு கணவாயிலோ நடந்து சென்றால் அவர்கள் செல்கிற பள்ளத்தாக்கிலோ கணவாயிலோ தான் நானும் நடந்து செல்வேன்'' என்று கூறினார்கள்.

## "ஹிஜ்ரத் மட்டும் நடைபெறாதிருந்தால் நான் அன்சாரிகளில் ஒருவனாக இருந்திருப்பேன்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னது.

இதை அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி), நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 3779. அபுல் காசிம்... இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அன்சாரிகள் ஒரு பள்ளத்தாக்கிலோ ஒரு கணவாயிலோ நடந்து சென்றால் அன்சாரிகள் நடந்து செல்லும் பள்ளத்தாக்கில் தான் நானும் நடந்து செல்வேன். ஹிஜ்ரத் மட்டும் நடைபெறாமல் இருந்திருந்தால் நான் அன்சாரிகளில் ஒருவனாக இருந்திருப்பேன்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்.

இதை அறிவித்த அபூ ஹுரைரா(ரலி),'நபி(ஸல்) அவர்கள் மிகச் சரியாகவே, இப்படிக் கூறினார்கள் (என்று கூறிவிட்டு) - என் தந்தையும் என் தாயும் அவர்களுக்கு அர்ப்பணமாகட்டும் (நபியவர்கள் இப்படிச் சொன்னதற்குக் காரணம்) அன்சாரிகள் நபி(ஸல்) அவர்களுக்கும் புகலிடம் அளித்து அவர்களுக்கு உதவினார்கள்' என்றோ... (இவ்விரு வாக்கியங்களுடன் சேர்த்து) வேறொரு வாக்கியத்தையோ கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்குமிடையே சகோதரத்துவ உறவை ஏற்படுத்தியது.

ஹதீஸ் 3780. இப்ராஹீம் இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி அவ்ஃப்(ரஹ்) அறிவித்தார்

(முஹாஜிர்களான) நாங்கள் மதீனாவுக்கு வந்தபோது இறைத்தூதர்(ஸல) அவர்கள் (என் தந்தை) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களுக்கும் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி) என்னும் அன்சாரித் தோழர்) அவர்களுக்கும் இடையே சகோதரத்துவ உறவை ஏற்படுத்தினார்கள். (என் தந்தை) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி),'நான் அன்சாரிகளில் அதிக செல்வம் உடையவன். என் செல்வத்தை இரண்டு பாதிகளாக்கிப் பங்கிட்டு நான் (ஒரு பாதியை உங்களுக்குக் கொடுத்து) விடுகிறேன். எனக்கு இரண்டு மனைவிமார்கள் உள்ளனர். அவ்விருவரில் உங்களுக்கு அதிகமாகப் பிடித்திருப்பவளைப் பார்த்து என்னிடம் சொல்லுங்கள். நான் அவளைத் தலாக் (மண விலக்கு) செய்து விடுகிறேன். அவளுடைய'இத்தா' காலம் விடுகிறேன். அவளுடைய'இத்தா' காலம் முடிந்த பின் அவ்ஃப்(ரலி),'அல்லாஹ் உங்களுக்கு உங்கள் வீட்டாரிலும் உங்கள் செல்வத்திலும் அருள்வளத்தை வழங்கட்டும். உங்கள் கடைவீதி எங்கே?' என்று கேட்டார்கள். மக்கள் அவர்களுக்கு'பனுகைனுகா' கடை வீதியைக் காட்டினார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (அங்கு சென்று வியாபாரம் செய்து) தம்முடன் பாலாடைக் கட்டியையும் நெய்யையும் இலாபமாகப் பெற்றுத்தான் திரும்பினார்கள். பிறகு அடுத்த நாள் காலையும் தொடர்ந்து சென்றார்கள். (இப்படியே தொடர்ந்து சென்று வியாபாரம் செய்து சம்பாதித்தார்கள்.) ஒரு நாள் தம் மீது (நறுமணப் பொருள் தடவிக் கொண்டிருந்தால்) மஞ்சள் அடையாளத்துடன் (நபி - ஸல் - அவர்களிடம்) வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான்(ரலி) அவர்களை நோக்கி,'என்ன இது?' என்று கேட்டார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி),'நான் மணம்

புரிந்து கொண்டேன்‘‘ என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘அவளுக்கு எவ்வளவு (மஹ்ர்) கொடுத்தீர்கள்?’ என்று கேட்டார்கள். அவர்கள்,‘ஒரு பேரீச்சம் கொட்டையளவு தங்கம்... அல்லது ஒரு பேரீச்சம் கொட்டையின் எடையளவு தங்கம்.!”என்று பதிலளித்தார்கள்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்..ப்(ரலி),‘ஒரு பேரீச்சம் கொட்டையளவு தங்கம்‘‘ என்று கூறினார்களா,‘ஒரு பேரீச்சம் கொட்டை எடையளவு தங்கம்‘‘ என்று கூறினார்களா என அறிவிப்பாளர் இப்ராஹீம்(ரஹ்) சந்தேகப்படுகிறார்கள்.

ஹதீஸ் 3781. அனஸ்(ரலி) அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்..ப்(ரலி) (ஹிஜ்ரத் செய்து மதீனாவுக்கு) எங்களிடம் வந்தார்கள். அவர்களுக்கும் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி) அவர்களுக்கும் இடையே சகோதரத்துவ உறவை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏற்படுத்தினார்கள். ஸஅத் இப்னு ரபீஉ அவர்கள் அதிக செல்வமுடையவராக இருந்தார்கள். - ஸஅத்(ரலி),‘அன்சாரிகள், நான் அவர்களில் அதிக செல்வமுடையவன் என்று அறிந்திருக்கின்றனர். என் செல்வததை எனக்கும் உங்களுக்குமிடையே இரண்டு பாதிகளாகப் பங்கிட்டு (கொடுத்து) விடுவேன். எனக்கு இரண்டு மனைவியர் உள்ளனர். அவர்களில் உங்களுக்கு அதிகமாகப் பிடித்தவளைப் பாருங்கள். நான் அவளை விவாகரத்துச் செய்து விடுகிறேன். அவள் ஹலால் (இத்தா முடிந்து பிறரை மணந்து கொள்ளத் தகுதியுடையவள்) ஆனதும் அவளை நீங்கள் மணந்து கொள்ளுங்கள்‘‘ என்று (தம் முஹாஜிர் சகோதரரான அப்துர் ரஹ்மான் இப்னு அவ்..பிடம்) கூறினார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்..ப்(ரலி),‘அல்லாஹ் உங்களுக்கு உங்கள் வீட்டார் விஷயத்தில் அருள் வளம் வழங்கட்டும்‘‘ என்று கூறி (கடைவீதி சென்று)விட்டார்கள். சிறிது நெய்யையும் பாலாடைக் கட்யையும், இலாபமாகச் சம்பாதித்த புன்னரே அன்று திருமபி வந்தார்கள். சிறிது காலம் தான் சென்றிருக்கும். அதற்குள் அவர்கள் தம் மீது (நறுமணப் பொருளின்) மஞ்சள் அடையாளம் தோய்ந்திருக்க இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘என்ன இது?’ என்று கேட்க,‘நான் அன்சாரிப் பெண் ஒருத்தியை மணந்தேன்‘‘ என்று அவர்கள் பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘அவளுக்கு என்ன (மஹ்ர்) கொடுத்தீர்கள்?’ என்று கேட்டதற்கு அவர்கள்,‘ஒரு பேரீச்சங் கொட்டையின் எடையளவு தங்கம்... அல்லது ஒரு பேரீச்சங் கொடையளவு தங்கம்‘‘ என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘ஒரேயோர் ஆட்டையேனும் (அறுத்து) வலீமா (மண விருந்து) கொடு‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3782. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(நபி - ஸல் - அவர்களிடம்) அன்சாரிகள்,‘எங்களுக்கும் (முஹாஜிர்களான) அவர்களுக்குமிடையே (எங்கள்) பேரீச்ச மரங்களைப் பங்கிடுங்கள்‘‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘வேண்டாம்‘‘ என்று சொல்ல அவர்கள்,‘(அப்படியென்றால்) அவர்கள் (முஹாஜிர் சகோதரர்கள்) எங்களுக்காக உழைக்கட்டும் எங்களுடன் விளைச்சலில் (இலாபப்) பங்கு பெறட்டும்‘‘ என்று கூறினார்கள். முஹாஜிர்கள், (அதற்கு சம்மதித்து)’நாங்கள் செவியேற்றோம் கீழ்ப்படிந்தோம் என்று கூறினார்.

## அன்சாரிகளை நேசிப்பது இறை நம்பிக்கையின் ஓர் அம்சமாகும்.

ஹதீஸ் 3783. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறை நம்பிக்கையாளரைத் தவிர வேறெவரும் அன்சாரிகளை நேசிக்க மாட்டார்கள் அவர்களை நயவஞ்சகர்களைத் தவிர வேறெவரும் வெறுக்கவும் மாட்டார்கள். யார் அவர்களை நேசிக்கிறார்களோ

அவர்களை அல்லாஹ்வும் நேசிக்கிறான். யார் அவர்களை வெறுக்கறிர்களோ அவர்களை அல்லாஹ்வும் வெறுக்கிறான்.

என பராஉ (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3784. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறை நம்பிக்கையின் அடையாளம் அன்சாரிகளை நேசிப்பதாகும் நயவஞ்சகத்தின் அடையாளம் அன்சாரிகளை வெறுப்பதாகும்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

## நபி (ஸல்) அவர்கள் அன்சாரிகளிடம், நீங்கள் எனக்கு மக்களிலேயே மிகவும் பிரியமானவர்கள்' என்று சொன்னது.

ஹதீஸ் 3785. அனஸ் (ரலி) கூறினார்

(அன்சாரிப்) பெண்களும், குழந்தைகளும் திரும்பி வருவதை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள். அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார் இதை எனக்கு அறிவித்தவர்' ஒரு மணவிழாவிலிருந்து வருவதை' என்று சொன்னதாக நினைக்கிறேன் - உடனே நின்று கொண்டு, 'இறைவா! (நீயே சாட்சி! அன்சாரிகளே!) நீங்கள் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்' என்று கூறினார்கள். இந்த வாக்கியத்தை அவர்கள் மூன்று முறை கூறினார்கள்.

ஹதீஸ் 3786. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் தம் குழந்தையொன்றைத் தம்முடன் எடுத்துக் கொண்டு அன்சாரிப் பெண்மணி ஒருவர் வந்தார். அவரிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பேசினார்கள். அப்போது அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! (அன்சாரிகளான) நீங்கள் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்' என்று இரண்டு முறை கூறினார்கள்.

## அன்சாரிகளைப் பின்தொடர்ந்த (நட்புக் கூட்டங்கள் மற்றும் அவர்களால் விடுதலை செய்யப்பட்ட)வர்கள்.

ஹதீஸ் 3787. ஸைத் இப்னு அர்கம் (ரலி) கூறினார்

அன்சாரிகள் (நபி - ஸல் - அவர்களிடம்), 'இறைத்தூதர் அவர்களே! இறைத்தூதர்களை ஒவ்வொருவருக்கும் அவர்களைப் பின்தொடர்ந்த (சார்பு நிலை கொண்ட)வர்கள் இருந்தனர். நாங்கள் உங்களைப் பின் பற்றினோம். எனவே, எங்களுக்கும் எங்களைப் பின்தொடரும் சார்பு நிலையாளர்களை எங்களிலிருந்தே உருவாக்கித் தரும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கேட்டுக் கொண்டனர். அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 3788. அன்சாரிகளில் ஒரவரான அபூ ஹம்ஸா (ரலி) அறிவித்தார்

அன்சாரிகள் (நபி - ஸல் அவர்களிடம்), 'ஒவ்வொரு சமுதாயத்திற்கும் அவர்களைப் பின்தொடரும் சார்பு நிலையாளர்கள் உண்டு. எங்களைப் பின்பற்றும் சார்பு நிலையாளர்களை எங்களிலிருந்தே உருவாக்கித் தரும்படி நீங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், 'இறைவா! இவர்களுடைய சார்பாளர்களை இவர்களிலிருந்தே உருவாக்கித் தருவாயாக!" என்று பிரார்த்தித்தார்கள்.

## அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களின் சிறப்பு

ஹதீஸ் 3789. அபூ உஸைத்(ரலி)அவர்கள் அறிவித்தார்

"அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது பனு நஜ்ஜார் குடும்பமாகும். பிறகு பனு அப்தில் அஷ்ஹல் குடும்பமாகும். பிறகு பனு ஹாரிஸ் இப்னு கஸ்ரஜ் குடும்பமாகும். பிறகு பனு சாஇதா குடும்பமாகும். அன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உண்டு' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். ஸஅத் இப்னு உபாதா(ரலி),'நபி(ஸல்) அவர்கள் எங்களை விட (வேறு சில குலங்களைச்) சிறப்பித்துக் கூறினார்கள் எனவே காண்கிறேன்" என்று கூறினார்கள். அவர்களிடம்,'நபி(ஸல்) அவர்கள் (இங்கே குறிப்பிடப்படாத மற்ற) பலரையும் விட உங்களைச் சிறப்பித்துக் கூறினார்கள்" என்று சொல்லப்பட்டது.

மற்றோர் அறிவிப்பில்,'ஸஅத் இப்னு உபாதா' என்று (முழுமையாகப் பெயர்) குறிப்பிட்டு அறிவிப்பாளர் கூறினார்.

ஹதீஸ் 3790. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அன்சாரிகளில் சிறந்தோர்... அல்லது அன்சாரிகளின் கிளைக்குடும்பங்களில் சிறந்தது. பனு நஜ்ஜார் குடும்பமும், பனு அப்தில் அஷ்ஹல் குடும்பமும் மற்றும் பனு ஹாரிஸ், பனு சாஇதா குடும்பங்களும் ஆகும்.

என அபூ உஸைத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3791. அபூ ஹுமைத்(ரலி) அறிவித்தார்

"அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது. பனு நஜ்ஜார் குடும்பமாகும். பிறகு பனு அப்தில் அஷ்ஹல், பிறகு பனுல் ஹாரிஸ், பிறகு பனு சாஇதா குடும்பங்கள் ஆகும். அன்சாரிக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உள்ளது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள். ஸஅத் இப்னு உபாதா(ரலி) எங்களிடம் வந்து சேர்ந்தார். அப்போது (அவரிடம்) அபூ உஸைத்(ரலி),'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அன்சாரிகளைச் சிறந்தவர்கள் எனக் குறிப்பிட்டு (அப்படிக் குறிப்பிட்டவர்களில்) நம்மைக் கடைசியானவர்களாகக் குறிப்பிட்டுள்ளதை நீங்கள் கவனிக்கவில்லையா?' என்று கேட்டார்கள். (இதைக் கேட்ட) உடனே ஸஅத் இப்னு உபாதா(ரலி) நபி(ஸல்) அவர்களை அடைந்து,'இறைத்தூதர் அவர்களே! அன்சாரிகளின் கிளைக் குடும்பங்கள் (தங்களால்) சிறப்பித்துக் கூறப்பட்டபோது (அன்சாரிகளில் ஒரு குடும்பத்தினரான) நாங்கள் கடைசியாகக் குறிப்பிடப்பட்டுள்ளோமே (ஏன்?)" என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் மிகச் சிறந்(குடும்பத்)தவர்களில் இடம் பெற்றிருப்பதே உங்களுக்குப் போதுமானதல்லவா?' என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளிடம், என்னை (மறுமையில்) தடாகத்தின் அருகே சந்திக்கும் வரை பொறுமையாயிருங்கள்' என்று சொன்னது.

இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3792. உஸைத் இப்னு ஹுளைர்(ரலி) அறிவித்தார்

அன்சாரிகளில் ஒருவர்,'இறைத்தூதர் அவர்களே! இன்னாரை நீங்கள் அதிகாரியாக நியமித்தது போல் என்னையும் அதிகாரியாக நியமிக்கமாட்டீர்களா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'எனக்குப் பிறகு (உங்களை விட) மற்றவர்களுக்கு (ஆட்சியதிகாரத்தில்) முன்னுரிமை தரப்படுவதை நீங்கள் காண்பீர்கள். எனவே, (மறுமையில் எனக்குச் சிறப்புப் பரிசாகக் கிடைக்கும்'ஹவ்ளுல்கவ்ஸர்'

என்னும்) தடாகத்தின் அருகே என்னைச் சந்திக்கும் வரை நீங்கள் பொறுத்திருங்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3793. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் அன்சாரிகளிடம், ‘எனக்குப் பிறகு (உங்களை விட ஆட்சியதிகாரத்தில் மற்றவர்களுக்கு) முன்னுரிமை தரப்படுவதை நீங்கள் காண்பீர்கள். எனவே, (மறுமையில்) என்னைச் சந்திக்கும் வரை நீங்கள் பொறுமையாக இருங்கள். என்னைச் சந்திக்கும் வரை நீங்கள் பொறுமையாக இருங்கள். என்னைச் சந்திக்க உங்களுக்குக் குறித்துள்ள இடம் (மறுமையில் எனக்கு சிறப்புப் பரிசாக இறைவன் வழங்கிவருக்கும் ஹவ்ளுல் கவ்ஸர் எனும்) தடாகமேயாகும்.

ஹதீஸ் 3794. யஹ்யா இப்னு ஸயீத் (ரலி) அறிவித்தார்

அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவாக்ள் என்னுடன் பயணமாம் வலீத் இப்னு அப்தில் மலிக்கைச் சந்தித்தபோது (வலீத் இடம்) கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் பஹ்ரைனுடைய நிலங்களை வருவாய் மானியமாக எங்களுக்குத் தருவதற்காக அழைத்தார்கள். அன்சாரிகள், ‘எங்கள் முஹாஜிர் சகோதரர்களுக்கும் இதே போன்று மானியம் தந்தாலே தவிர நாங்கள் இதை ஏற்க மாட்டோம்‘‘ என்று கூறினர். ’நீங்கள் இதை ஏற்க மாட்டீர்கள் என்றால், என்னை (மறுமையில் ஹவ்ளுல் கவ்ஸர் தாடாகத்தின் அருகே) சந்திக்கம் வரை பொறுத்திருங்கள். ஏனெனில், எனக்குப் பின் (ஆட்சியதிகாரத்தில்) உங்களை விடப் பிறருக்கு முன்னுரிமை வழங்கப்படும் நிலை உங்களுக்கு நேரும்‘‘ என்று கூறினார்கள்.

## நபி (ஸல்) அவர்கள், அன்சாரிகளின் நிலையையும் முஹாஜிர்களின் நிலையையும் செம்மைப்படுத்து‘ என்று பிரார்த்தித்து.

ஹதீஸ் 3795. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

“மறுமை வாழ்க்கையைத் தவிர வேறு (நித்தியமான) வாழ்க்கை இல்லை அன்சாரிகளையும் முஹாஜிர்களையும் (அந்த நிரந்தர மறுமை வாழ்விற்காக) செம்மைப்படுத்துவாயாக‘‘ என்று (பாடியபடி) சொன்னாக்ள்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே போன்று அறிவிக்கப்பட்டுள்ளது. அந்த அறிவிப்பில், ‘அன்சாரிகளுக்கு (ம் முஹாஜிர்களுக்கும்) நீ மன்னிப்பு அளிப்பாயாக‘‘ என்று பாடியபடி கூறினார்கள் என உள்ளது.

ஹதீஸ் 3796. அனஸ் இப்னு மாலிக் அவர்கள் அறிவித்தார்

அகழ்ப்போர் நாளில் அன்சாரிகள், ‘நாங்கள் (எத்தகையவர்கள் எனில்), ‘நாங்கள் உயிரோடியிருக்கும் காலம் வரை அறப்போர் புரிவோம்’ என்று முஹம்மத் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்திருக்கிறோம்‘‘ என்று (பாடியபடிக்) கூறிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள், ‘இறைவா! மறுமை வாழ்க்கையைத் தவிர வேறு வாழ்க்கை எதுவுமில்லை எனவே, அன்சாரிகளையும் முஹாஜிர்களையும் கண்ணியப்படுத்துவாயாக!”என்று (பாடிய படியே) கூறினார்கள்.

ஹதீஸ் 3797. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்

நாங்கள் அகழ் தோண்டிக் கொண்டும் எங்கள் தோள்களின் மீது மண்ணைச் சுமந்து எடுத்துக் சென்று கொண்டும் இருந்தபோது எங்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது

அவர்கள், ‘இறைவா! மறுமை வாழ்க்கையத் தவிர வேறு வாழ்க்கை எதுவுமில்லை. எனவே, முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் மன்னிப்பருள்வாயாக!”என்று (பாடியபடி) கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

தமக்கே தேவை இருந்தும் கூட, தம்மை விடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குகிறார்கள். (திருக்குர்ஆன் 59:09)

ஹதீஸ் 3798. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் (விருந்தாளியாக) வந்தார். நபி (ஸல்) அவர்கள் (அவருக்கு உணவளிப்பதற்காகத்) தம் மனைவிமார்களிடம் சொல்லியனுப்பினார்கள். அப்போது அவர்கள், ‘எங்களிடம் தண்ணீரைத் தவிர வேறெதுவும் இல்லை‘‘ என்று பதிலளித்தார்கள். எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களை நோக்கி), ‘இவரை (தம்முடன் உணவில்) சேர்த்துக் கொள்பவர் யார்?. “.. அல்லது’இவருக்கு விருந்தளிப்பவர் யார்?. “.. என்று கேட்டார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், ‘நான் (விருந்தளிக்கிறேன்)‘‘ என்று சொல்லி அவரை அழைத்துக் கொண்டு தம் மனைவியிடம் சென்றார். (மனைவியிடம்)’இறைத்தூதர் (ஸல்) அவர்களின் விருந்தாளியைக் கண்ணியப்படுத்து‘‘ என்று கூறினார். அதற்கு அவரின் மனைவி, ‘நம்மிடம் நம் குழந்தைகளின் உணவைத் தவிர வேறெதுவுமில்லை‘‘ என்று கூறினார். அதற்கு அந்த அன்சாரித் தோழர், ‘உன் (குடும்பத்திற்கான) உணவைத் தயாராக எடுத்து வைத்துவிட்டு விளக்கை ஏற்றி (விடுவதைப் போல் பாவனை செய்து அணைத்து) விடு. உன் குழந்தைகள் உணவு உண்ண விரும்பினால் அவர்களைத் தூங்கச் செய்து விடு‘‘ என்று கூறினார். அவ்வாறே அவரின் மனைவியும் உணவைத் தயாராக எடுத்து வைத்து, விளக்கை ஏற்றிவிட்டுத் தம் குழந்தைகளைத் தூங்கச் செய்துவிட்டார். பிறகு விளக்கைச்சரி செய்வது போல் நின்று (பாவனை செய்து கொண்டே) விளக்கை அணைத்துவிட்டார். பிறகு அவரும் அவரின் மனைவியும் உண்பது போல் (விருந்தாளியான) அந்த மனிதருக்கு (பாவனை) காட்டலானார்கள். பிறகு இருவரும் (உணவு உண்ணாமல்) வயிறு ஒட்டியவர்களாக இரவைக் கழித்தனர். காலையானதும் அந்த அன்சாரி இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றார். நபி (ஸல்) அவர்கள், ‘நீங்கள் இருவரும் செய்ததைக் கண்டு அல்லாஹ் இன்றிரவு (மம்ழ்ச்சியால்) சிரித்துக் கொண்டான் அல்லது வியப்படைந்தான்‘‘ என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், ‘தமக்கே தேவை இருந்தும் கூடு, தம்மை விடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குகிறார்கள். உண்மையில், தம் உள்ளத்தின் கருமித்தனத்திலிருந்து பாதுகாக்கப்பட்டவர்களே வெற்றியாளர்கள்‘‘ என்றும் (திருக்குர்ஆன் 59:9ம்) வசனத்தை அருளினான்.

## நபி (ஸல்) அவர்கள், அன்சாரிகளில் நன்மை புரிவோரிடமிருந்து ஏற்றுக் கொள்ளுங்கள். அவர்களில் தவறிழைப்பவர்களை மன்னித்து விடுங்கள்‘ என்று சொன்னது.

ஹதீஸ் 3799. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

(நபி - ஸல் - அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்த சமயம்) அன்சாரிகள் தம் சபைகளில் ஒன்றில் (அமர்ந்தபடி) அழுது கொண்டிருந்தபோது அபூ பக்ர் (ரலி) அவர்களும் அப்பாஸ் (ரலி) அவர்களும் அந்த வழியாகச் சென்றார்கள். அப்போது, அப்பாஸ் (ரலி) (அல்லது அபூ பக்ர் (ரலி), ‘நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?’ என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், ‘நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் நபி (ஸல்)

அவர்களுடன் (கூடி) அமர்ந்திருந்த அவையை நினைத்துப் பார்த்தோம். (அதனால் அழுகிறோம்)'' என்று பதிலளித்தார்கள்.

அப்பாஸ்(ரலி) (அல்லது அபூ பக்ர்(ரலி)), நபி(ஸல்) அவர்களிடம் சென்று, இந்த விஷயத்தைத் தெரிவித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் தம் சால்வையின் ஓரத்தைத் தம் தலையில் கட்டியிருந்த நிலையில் வெளியே வந்து, (உரை நிகழ்த்துவதற்காக) மிம்பரில் (மேடையில்) ஏறினார்கள் - அந்த நாளுக்குப் பிறகு அவர்கள் மிம்பரில் ஏறவில்லை - அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனைப் போற்றிய பிறகு,'அன்சாரிகளின் விஷயத்தில் (நல்லவிதமாக நடந்துக் கொள்ளும்படி) உங்களுக்கு நான் அறிவுரை கூறுகிறேன். ஏனெனில், அவர்கள் என் இரைப்பை என் கருவூலம் ஆவர். தம் மீதிருந்த பொறுப்பை, அவர்கள் நிறைவேற்றிவிட்டார்கள். இனி அவர்களுக்குரிய உரிமை தான் எஞ்சியுள்ளது. எனவே, அவர்களில் நன்மை புரிவோரிடமிருந்து (அந்த நன்மையை) ஏற்றுக் கொண்டு, அவர்களில் தவறிழைப்பவரை மன்னித்து விடுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3800. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நோய்வாய்ப்பட்டிருந்தபோது) தம் தோள்களின் மீது ஒரு போர்வையைப் போர்த்திக் கொண்டு (வீட்டிலிருந்து பள்ளி வாசலுக்குப்) புறப்பட்டார்கள். அப்போது அவர்களின் மீது கருப்புக் கட்டு ஒன்று (போடப்பட்டு) இருந்தது. மிம்பரிம் (மேடை) மீது சென்று அமர்ந்து, அல்லாஹ்வைப் புகழ்ந்து, அவனைப் போற்றிப் பிறகு கூறினார்கள் பிறகு, மக்களே! (இஸ்லாத்தில் இணையும்) மக்கள் (எண்ணிக்கையில்) அதிகமாவார்கள். (ஆனால் இறைமார்க்கத்திற்கு) உதவி புரிவோர் (அன்சார்) உணவில் உப்பைப் போன்று ஆம்விடும். அளவிற்கு குறைந்து போய்விடுவார்கள். எனவே, ஒருவருக்கு நன்மையளிக்கக் கூடிய, அல்லது தீங்கு செய்யக் கூடிய (அளவிற்குள்ள) ஓர் அதிகாரப் பொறுப்பை உங்களில் ஒருவர் ஏற்றால் அன்சாரிகளில் நன்மை புரிந்தவரின் நன்மையை ஏற்றுக் கொண்டு அவர்களில் தவறிழைத்தவரை மன்னித்து விடட்டும்.

ஹதீஸ் 3801. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“அன்சாரிகள் என் இரைப்பை என் கருவூலம் ஆவர். இனி (அன்சாரிகள் அல்லாத) மக்கள் பெருகுவார்கள் (அன்சாரிகள்) குறைந்து போய் விடுவார்கள். எனவே, அவர்களில் நன்மை புரிபவர்களிடமிருந்து (அதை) ஏற்றுக் கொள்ளுங்கள் அவர்களில் தவறிழைப்பவர்களை (பெருந்தன்மையுடன்) மன்னித்து விடுங்கள். “

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

## ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3802. பராஉ(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்களுக்கு பட்டு அங்கி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. நபி(ஸல்) அவர்களின் தோழர்கள் அதைத் தொட்டுப் பார்த்து அதன் மென்மையைக் கண்டு வியப்படையலானார்கள். நபி(ஸல்) அவர்கள்,'இதன் மென்மையைக் கண்டு நீங்கள் வியக்கிறீர்களா? (சொர்க்கத்தில்) ஸஅத் இப்னு முஆத் அவர்களின் கைக்குட்டைகள் இதை விடச் சிறந்தவை அல்லது இதை விட மென்மையானவை ஆகும்'' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3803. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஸஅத் இப்னு முஆத் அவர்களின் இறப்பிற்காக அர்ஷு இறைசிம்மாசனம் அசைந்தது.

என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து இதே ஹதீஸ் வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது...

ஒருவர் ஜாபிர் (ரலி) அவர்களிடம், 'பராஉ (ரலி), 'ஸஅத் இப்னு முஆத் (ரலி) அவர்களைச் சுமந்து சென்ற (ஜனாஸாப்) பெட்டி தான் அசைந்தது' என்று இதற்கு விளக்கம் தருகிறார்கள்'' என்று சொன்னதற்கு ஜாபிர் (ரலி), 'இந்த (அவ்ஸ் மற்றும் கஸ்ரஜ்) இரண்டு குடும்பங்களுக்கிடையே குரோதங்கள் இருந்தன. நபி (ஸல்) அவர்கள், 'ஸஅத் இப்னு முஆத் அவர்களின் இறப்பிற்காகக் கருணையாள (னான இறைவ) னின் சிம்மாசனம் அசைந்தது' என்று சொல்ல கேட்டிருக்கிறேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3804. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்

ஸஅத் இப்னு முஆத் (ரலி) அவர்களின் தீர்ப்பை ஏற்பதாக ஒப்புக் கொண்டு (பனு குறைழா யூத) மக்கள் (கைபரிலுள்ள கோட்டையிலிருந்து) இறங்கி வந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் ஸஅத் இப்னு முஆத் அவர்களுக்கு ஆளனுப்பிட அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீயிலிருந்து) கழுதையின் மீது (சவாரி செய்தபடி) வந்தார்கள். (நபியவர்கள் தற்காலிமாக அமைத்திருந்த) தொழுமிடத்திறகு அருகே அவர்கள் வந்து சேர்ந்ததும், நபி (ஸல்) அவர்கள், 'உங்களில் சிறந்தவரை... அல்லது உங்கள் தலைவரை.. நோக்கி எழுந்திரு (த்துச் சென்று அவரை வாகனத்திலிருந்து இறக்கி விடு) ங்கள்'' என்று கூறினார்கள். பிறகு, 'சஅதே! இவர்கள் உங்கள் தீர்ப்பின் மீது (இசைவு தெரிவித்து) இறங்கி வந்திருக்கிறார்கள். (நீங்கள் என்ன தீர்ப்பு அளிக்கப் போகிறீர்கள்?)'' என்று கேட்டார்கள். ஸஅத் (ரலி), 'இவர்களில் போரிடும் வலிமையுடையவர்கள் கொல்லப்படவேண்டும் என்றும், இவர்களுடைய பெண்களும் குழந்தைகளும் கைது செய்யப்படவேண்டும் என்றும் நான் இவர்களிடையே தீர்ப்பளிக்கிறேன்'' என்று கூறினார்கள். உடனே, நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் தீர்ப்புப் படியே நீங்கள் தீர்ப்பளித்தீர்கள். ''. அல்லது 'அரசனின் (அல்லாஹ்வின்) தீர்ப்புப்படியே நீங்கள் தீர்ப்பளித்தீர்கள்'' என்று கூறினார்கள்.

## உசைத் இப்னு ஹு ளைர் (ரலி) மற்றும் அப்பாத் இப்னு பிஷ்ர் (ரலி) ஆகியோரின் சிறப்பு.

ஹதீஸ் 3805. அனஸ் (ரலி) அறிவித்தார்

(நபித் தோழர்களில்) இரண்டு மனிதர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து (விடை பெற்றுக் கொண்டு) இருண்ட ஓர் இரவில் (தம் இல்லங்களுக்குப்) புறப்பட்டார்கள். அப்போது அவ்விருவருக்கும் முன்னால் ஒளி ஒன்று பிரகாசித்தபடி அவர்கள் ஒருவரை ஒருவர் பிரியும் வரை சென்று கொண்டேயிருந்தது. (அவர்கள்) ஒருவரையொருவர் பிரிந்து சென்றவுடன்) அந்த ஒளியும் அவர்களுடன் பிரிந்து சென்றுவிட்டது.

அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே ஸாபித் (ரஹ்) வழியாக மஅமர் (ரஹ்) அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பில், 'இரண்டு மனிதர்கள்' என்பதற்கு பதிலாக, 'உசைத் இப்னு ஹுளைர் (ரலி) அவர்களும் அன்சாரிகளில் ஒரு மனிதரும்' என்று இடம் பெற்றுள்ளது.

அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே ஸாபித் (ரஹ்) வழியாக ஹம்மாத் (ரஹ்) அறிவிக்கும் இன்னோர் அறிவிப்பில், 'உசைத் இப்னு ஹுளைர் (ரலி) அவர்களும் அப்பாத் இப்னு பிஷ்ர் (ரலி) அவர்களும் நபி (ஸல் அவர்களிடம் இருந்தனர். (இருவரும் நபி (ஸல்) அவர்களிடமிருந்து புறப்பட்டு தம் இல்லங்களுக்குச் சென்ற போது)'' என்று இடம் பெற்றுள்ளது.

## முஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3806. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இப்னு மஸ்வூத்(ரலி), அபூ ஹுதைஃபாவின் (முன்னாள்) அடிமையான சாலிம், உபை இப்னு கஅப் மற்றும் முஆத் இப்னு ஜபல் ஆகிய நான்கு பேரிடமிருந்து குர்ஆனை ஓதக் கற்றுக் கொள்ளுங்கள்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## ஸஅத் இப்னு உபாதா - ரலி அவர்களின் சிறப்பு.

(ஸஅத்(ரலி) அவர்களைப் பற்றி)'அவர்கள் அதற்கு முன் நல்ல மனிதராக இருந்தார்கள்'' என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3807. அனஸ்(ரலி) அறிவித்தார்

“அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது. பனு நஜ்ஜார் குடும்பம் ஆகும். பிறகு பனு அப்தில் அஷ்ஹல் குடும்பம் ஆகும். பிறகு பனுல் ஹாரிஸ் இப்னு கஸ்ரஜ் குடும்பம் ஆகும். பிறகு பனு சாஇதா குடும்பம் ஆகும். அன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ உசைத்(ரலி) அறிவித்தார்.

அப்போது ஸஅத் இப்னு உபாதா(ரலி) இஸ்லாத்தில் செல்வாக்கு உடையவர்களாக அன்னார் இருந்தார்கள். 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நம்மை விட (மற்ற குடும்பங்களை) சிறப்புக்குரியவர்களாக ஆக்கிவிட்டதை நான் பார்க்கிறேன்'' என்று கூறினார்கள். அப்போது அவர்களிடம், 'உங்களை நபி(ஸல்) அவர்கள் நிறைய மக்களை விடச் சிறப்பித்துக் கூறினார்கள்'' என்று சொல்லப்பட்டது.

## உபை இப்னு கஅப்(ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3808. மஸ்ரூக்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களிடம் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) குறித்துக் கூறப்பட்டது. அப்போது அவர்கள் கூறினார்கள்: அவர் நான் நேசித்துக கொண்டேயிருக்கும் ஒருவர். (ஏனெனில்,) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், அபூ ஹுதைஃபாவின் (முன்னாள்) அடிமை சாலிம், முஆத் இப்னு ஜபல், உபை இப்னு கஅப் ஆகிய நான்கு பேரிடமிருந்து குர்ஆனை (ஓதும் முறையை) எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்ல கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் அவர்களையே முதலில் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3809. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம் அல்லாஹ் உங்களுக்கு, 'வேதம் அருளப்பட்டவர்களிலும் இணைவைப்பவர்களிலும் உள்ள இறை நிராகரிப்பாளர்கள் தெளிவான சான்று தங்களிடம் வரும் வரை தங்களின் நிராகரிப்பிலிருந்து விலகிக் கொள்வோராய் இருக்கவில்லை.!”என்றும் (திருக்குர்ஆனின் 98-ம்) அத்தியாயத்தை ஓதிக் காட்டும்படி எனக்குக் கட்டளையிட்டான்'' என்று கூறினார்கள். அதற்கு உபை இப்னு கஅப்(ரலி), 'என் பெயரைக் குறிப்பிட்டா. (அப்படிச்) சொன்னான்?' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், 'ஆம்'' என்று பதிலளித்தார்கள். அதைக் கேட்டு உபை இப்னு கஅப் அவர்கள் (ஆனந்தம் மேலிட்டு) அழுதார்கள்.

## ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3810. கதாதா(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் நான்கு பேர் (கொண்ட குழுவினர்) குர்ஆனை (மனனம் செய்து) திரட்டினார்கள். அவர்கள் அனைவருமே அன்சாரிகள் ஆவர். 1. உபை இப்னு கஅப். 2. முஆத் இப்னு ஜபல். 3. அபூ ஸைத். 4. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) ஆகியோர் தாம் அவர்கள்'' என்று அனஸ்(ரலி) கூறினார். நான் அனஸ்(ரலி) அவர்களிடம், 'அபூ ஸைத் என்பவர் யார்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'என் தந்தையின் சகோதரர்களில் ஒருவர்'' என்று பதிலளித்தார்கள்.

## அபூ தல்ஹா(ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3811. அனஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்களை(த் தனியே)விட்டுவிட்டு மக்கள் தோற்று (ஓடி)விட்டனர். அபூ தல்ஹா(ரலி) (ஓடி)விட்டனர். அபூ தல்ஹா(ரலி) நபி(ஸல்) அவர்களைத் தம் தோல் கேடயத்தால் மறைத்துக் கொண்டு பாதுகாத்தபடி நின்றார்கள்.

மேலும், அபூதல்ஹா(ரலி) வில்லின் நாணை நன்கு இழுத்து வேகமாக அம்பெய்யக் கூடியவர்களாக இருந்தார்கள். (அப்படி வேகமாக இழுத்து அம்பெய்கையில்) இரண்டு அல்லது மூன்று விற்களை அவர்கள் அன்று உடைத்து விடுவார்கள். எவரேனும் ஒருவர் அம்புக் கூட்டுடன் செல்வதைக் கண்டால் நபி(ஸல்) அவர்கள், 'அதை அபூ தல்ஹாவிடம் போடு'' என்று சொல்வார்கள். அந்த நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் மேலேயிருந்து (தலையை உயர்த்தி) மக்களை எட்டிப் பார்க்க, அபூ தல்ஹா அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! உங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும். எட்டிப் பார்க்காதீர்கள். எதிரிகளின் அம்புகளில் ஏதேனும் ஒன்று தங்களைத் தாக்கி விடலாம். (தாங்கள் எட்டிப் பார்க்காமலிருந்தால் என் மார்பு தங்கள் மார்புக்கு முன்னால் (கேடயம் போன்று உங்களுக்குப் பாதுகாப்பாக) இருக்கும்'' என்று கூறினார்கள்.

அபூ பக்ர்(ரலி) அவர்களின் மகள் ஆயிஷா(ரலி) அவர்களும் (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களும் வரிந்து கட்டிக் கொண்டு (காயமுற்றவர்களுக்குப் பணிவிடைகள் செய்து) இருப்பதை கண்டேன். அவர்கள் (தண்ணீர் நிரம்பிய) தோல் துருத்திகளைத் தங்கள் முதுகுகளில் சுமந்து கொண்டு எடுத்துச் சென்று (காயமுற்று வீழ்ந்து கிடக்கும்) மக்களின் வாய்களில் ஊற்றிவிட்டு, பிறகு திரும்பிச் சென்று, அவற்றை (மீண்டும்) நிரப்பிக் கொண்டு வந்து அவர்களின் வாய்களில் மீண்டும் உற்றிக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களின் கால் கொலுசுகளை கண்டேன். அபூ தல்ஹா(ரலி) அவர்களின் சுரத்திலிருந்து இரண்டு முறையோ மும்முறையோ வாள் (கீழே தவறி) விழுந்தது.

## அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்களின் சிறப்புகள்.

ஹதீஸ் 3812. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பூமியின் மீது நடந்து செல்லும் எவரையும், 'இவர் சொர்க்கவாசி'' என்று சொல்லி நான் கேட்டதில்லை அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்களைத் தவிர, அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்களைக் குறித்தே, 'மேலும், இஸ்ராயீலின் சந்ததிகளிலிருந்து சாட்சி சொல்பவர் ஒருவர் இது போன்ற வேதத்திற்கு சாட்சி கூறினார். அவர் நம்பிக்கையும் கொண்டிருந்தார்'' என்னும் (திருக்குர்ஆன் 46:10) இறைவசனம் அருளப்பட்டது.

அறிவிப்பாளர் அப்துல்லாஹ் இப்னு யூசு∴ப்(ரஹ்) கூறினார்:

(இதை அறிவித்த இமாம்) மாலிக்(ரஹ்) இந்த இறைவசனம் அருளப்பட்டதால் (தாமாகவே) கூறினார்களா அல்லது இந்த ஹதீஸிலேயே (இந்த இறைவசனம்) இடம் பெற்றிருக்கிறதா என்று எனக்குத் தெரியாது

ஹதீஸ் 3813. கைஸ் இப்னு உபாத்(ரஹ்) அறிவித்தார்

நான் மதீனாவின் (மஸ்ஜிதுந்நபவீ) பள்ளிவாசலில் (நபித்தோழர்கள் சிலருடன்) அமர்ந்திருந்தேன். அப்போது ஒருவர் தம் முகத்தில் சிரம் பணிந்(து சஜ்தா செய்)ததற்கான அடையாளத்துடன் உள்ளே வந்தார். மக்கள்,'இவர் சொர்க்கவாசிகளில் ஒருவர்'' என்று கூறினார்கள். அவர் இரண்டு ரக்அத்துகள் தொழுதார் அவற்றை (அதிக நேரம் எடுக்காமல்) சுருக்கமாகத் தொழுதார். பிறகு அவர் வெளியேற, நான் அவரைப் பின்தொடர்ந்து சென்று,'நீங்கள் பள்ளி வாசலுக்குள் நுழைந்தபோது மக்கள்,'இவர் சொர்க்கவாசி' என்று கூறினர்'' என்றேன். அதற்கு அவர் கூறினார்: அல்லாஹ்வின் மீதாணையாக! தமக்குத் தெரியாததைக் கூறுவது எவருக்கும் முறையல்ல. ஏன் அவ்வாறு (மக்கள் பேசிக்கொள்கிறார்கள்) என்று உங்களுக்கு இதோ தெரிவிக்கிறேன். அதாவது, நான் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் கனவொன்று கண்டேன். அதை அவர்களிடம் விவரித்தேன். நான் ஒரு பூங்காவில் இருப்பது போன்று கண்டேன் - அறிவிப்பாளர் கூறுகிறார்: அம்மனிதர் அதன் விசாலத்தையும் பசுமையையும் வர்ணித்தார் - அதன் நடுவே இரும்பாலான தூண் இருந்தது. அதன் அடிப்பகுதி பூமியில் இருந்தது. மேற்பகுதி வானத்தில் இருந்தது. அதன் மேற்பகுதியில் பிடி ஒன்று இருந்தது. என்னிடம்,'இதில் ஏறு'' என்று சொல்லப்பட்டது. நான்,'என்னால் இயலாதே'' என்று சொன்னேன். அப்போது என்னிடம் பணியாள் ஒருவர் வந்து என் ஆடையைப் பின்னாலிருந்து உயர்த்திவிட்டார். உடனே நான் (அதில்) ஏறினேன். இறுதியில் அதன் மேற்பகுதிக்கு நான் சென்றுவிட்டபோது அந்தப் பிடியை நான் பற்றினேன். உடனே என்னிடம்,'நன்கு பற்றிப் பிடித்துக் கொள்'' என்று சொல்லப்பட்டது. (நான் அதைப் பற்றினேன்.) அந்தப் பிடி என் கையில் இருக்க (திடுக்கிட்டு) நான் விழித்தெழுந்தேன். நபி(ஸல்) அவர்களிடம் அதை நான் விவரித்தபோது,'அந்தப் பூங்கா இஸ்லாமாகும். அந்தத் தூண் இஸ்லாம் எனும் தூணாகும். அந்தப் பிடி பலமான (இறை நம்பிக்கை என்னும்) பிடியாகும். எனவே, நீங்கள் இறங்கும் வரை இஸ்லாத்திலேயே நிலைத்து நிற்பீர்கள்'' என்று நபியவர்கள் பதிலளித்தார்கள் (இப்படிச் சொன்ன) அந்த மனிதர் அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) தாம்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. அதில்'பணியாள்' என்பதற்கு பதிலாக'சிறிய பணியாள்' என்னும் சொல் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 3814. அபூ புர்தா ஆமிர்(ரஹ்) அறிவித்தார்

நான் மதீனாவுக்கு வந்து அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்களைச் சந்தித்தேன். அவர்கள் (என்னிடம்),'நீங்கள் (என்னுடன்) வர மாட்டீர்களா? உங்களுக்கு நான் மாவையும் பேரீச்சம் பழத்தையும் உண்ணத் தருவேன். நீங்கள் நபி(ஸல்) அவர்கள் வருகை தந்த என்) வீட்டிற்கு வந்ததாகவும் இருக்குமே'' என்று கேட்டார்கள். பிறகு,'நீங்கள் வட்டி மலிந்துள்ள (இராக்) நாட்டில் வசிக்கிறீர்கள். உங்களுக்கு ஒருவர் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்து. அவர் ஒரு வைக்கோல் போரையோ, வாற்கோதுமை மூட்டையையோ, கால்நடைத் தீவன மூட்டையையோ அன்பளிப்பாகக் கொடுத்தாலும் அதுவும் வட்டியாகும்'' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்,'(என்) வீட்டிற்கு' என்னும் சொல் இடம் பெறவில்லை.

## கதீஜா(ரலி) அவர்களை நபி(ஸல்) அவர்கள் மணமுடித்துக் கொண்டதும் கதீஜா(ரலி) அவர்களின் சிறப்பும்.

ஹதீஸ் 3815. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உலகின் பெண்களிலேயே (அன்று) சிறந்தவர் மர்யம் ஆவார். (இன்று) உலகப் பெண்களிலேயே சிறந்தவர் கதீஜா ஆவார்.

என அலீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3816. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் ரோஷம் கொண்டதைப் போல் நபி (ஸல்) அவர்களின் (இதர) மனைவிமார்களில் வேறெவரின் மீதும் நான் ரோஷப்பட்டதில்லை. ஏனெனில், அவர்களை நபி (ஸல்) அவர்கள் (அடிக்கடி) நினைவு கூர்வதை நான் கேட்டு வந்தேன். என்னை நபி (ஸல்) அவர்கள் மணம் பரிந்து கொள்வதற்கு முன்பே கதீஜா இறந்து விட்டிருந்தார். மேலும், முத்து மாளிகை ஒன்று (சொர்க்கத்தில்) கதீஜாவுக்கு கிடைக்கவுள்ளது என்று அவர்களுக்கு நற்செய்தி சொல்லும்படி அல்லாஹ், நபி (ஸல்) அவர்களுக்குக் கட்டளையிட்டான். இன்னும் நபி (ஸல்) அவர்கள் ஆட்டை அறுத்து (அதன் இறைச்சியில்) சிறிது கதீஜா அவர்களின் தோழிகளிடையே அவர்களுக்குப் போதுமான அளவிற்கு அன்பளிப்பாகப் பங்கிட்டு விடுவது வழக்கம் (இதனாலெல்லாம் எனக்குள் ரோஷம் பிறந்தது.)

ஹதீஸ் 3817. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் ரோஷப்பட்டதைப் போல் வேறெந்தப் பெண்ணின் மீதும் ரோஷப்பட்டதில்லை. ஏனெனில், இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அவரை அதிகமாக நினைவு கூர்ந்து (புகழ்ந்து பேசி) வந்தார்கள். கதீஜா அவர்கள் இறந்து மூன்றாண்டுகள் கழித்து நபி (ஸல்) அவர்கள் என்னை மணந்தார்கள். கதீஜா அவர்களுக்கு சொர்க்கத்தில் முத்து மாளிகை ஒன்று கொடுக்கப்படும் என்று அவர்களுக்கு நற்செய்தி கூறும்படி நபியவர்களுக்கு அவர்களின் இறைவன் கட்டளையிட்டான்... அல்லது (இவ்வாறு நற்செய்தி சொல்லும்படி இறைவன் கட்டளையிட்டதை) ஜிப்ரீல் (அலை) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3818. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் ரோஷப்பட்டதைப் போல் நபி (ஸல்) அவர்களின் வேறெந்த மனைவியின் மீதும் ரோஷப்பட்டதில்லை. நான் (நபி (ஸல) அவர்களிடம்) அவரைப் பார்த்ததில்லை. ஆனால், நபி (ஸல்) அவர்கள் அவரை அதிகமாக நினைவு கூர்ந்து (புகழ்ந்து பேசி) வந்தார்கள். அவர்கள் சில வேளைகளில் ஆட்டை அறுத்து அதைப் பால துண்டுகளாகப் பிரித்து, பிறகு அதை கதீஜாவின் தோழிகளிடையே (பங்கிட) அனுப்பி விடுவார்கள். சில வேளைகளில் நான் நபி (ஸல்) அவர்களிடம், 'உலகில் கதீஜாவைத் தவிர வேறெந்தப் பெண்ணும் இல்லாததைப் போல் நடந்து கொள்கிறீர்களோ'' என்று கேட்டதுண்டு. அப்போது அவர்கள், 'அவர் (புத்திசாலியாக) இருந்தார் (சிறந்த குணமுடையவராக) இருந்தார். (இப்படி, இப்படியெல்லாம் இருந்தார்.) மேலும், எனக்கு அவர் வாயிலாகத்தான் பிள்ளைச் செல்வம் கிடைத்தது'' என்று பதில் கூறினார்கள்.

ஹதீஸ் 3819. இஸ்மாயீல் இப்னு அபீ காலித் (ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அவர்களிடம், 'நபி (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களுக்கு நற்செய்தி எதுவும் கூறினார்களா?' என்று கேட்டேன். அவர்கள், 'ஆம்! (சொர்க்கத்தில்) கூச்சல் குழப்பமோ, களைப்போ இல்லாத, துளையுள்ள முத்து மாளிகை ஒன்றை (இறைவன் அவர்களுக்கு அளிக்க இருப்பது) கொண்டு (நற்செய்தி கூறினார்கள்)'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3820. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்தார்கள். 'இறைத்தூதர் அவர்களே! இதோ, கதீஜா தம்முடன் ஒரு பாத்திரத்தில் குழம்பு.. அல்லது உணவு... அல்லது பானம் எடுத்துக் கொண்டு உங்களை நோக்கி வந்து கொண்டிருக்கிறார். அவர் உங்களிடம் வந்தவுடன் அவருக்கு அவரின் இறைவனின் தரப்பிலிருந்தும்

என் தரப்பிலிருந்தும் சலாம் கூறி அவருக்கு சொர்க்கத்தில் கூச்சல் குழப்பமோ, களைப்போ காண முடியாத முத்து மாளிகை ஒன்று தரப்படவிருப்பதாக நற்செய்தி சொல்லுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3821. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

ஹாலா பின்த்து குவைலித் - கதீஜா (ரலி) அவர்களின் சகோதரி - இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வருவதற்கு அனுமதி கேட்டார். உடனே நபி (ஸல்) அவர்கள் (கதீஜா - ரலி - அவர்களைப் போன்ற குரலில் ஹாலாவும் அனுமதி கேட்ட காரணத்தால்) கதீஜா (ரலி) அவர்களைப் போன்ற குரலில் ஹாலாவும் அனுமதி கேட்ட காரணத்தால்) கதீஜா (ரலி) அனுமதி கேட்கும் விதத்தை நினைவு கூர்ந்து கவனம் மாறி, 'இறைவா! இவர் ஹாலாவாக இருக்கட்டும்'' என்று கூறினார்கள். உடனே நான் ரோஷமடைந்துவிட்ட, தாடைகள் சிவந்த ஒரு குறைஷிக் கிழவியை ஏன் (எப்போது பார்த்தாலும்) நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவருக்கு பதிலாக அவரைவிடச் சிறந்த மனைவியை உங்களுக்கு அல்லாஹ் கொடுத்துவிட்டானே (அப்படியிருக்க, இன்னும் ஏன் அவரையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். )'' என்று கேட்டேன்.

## ஜரீர் இப்னு அப்தில்லாஹ் அல் பஜலீ (ரலி) பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3822. ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

நான் இஸ்லாதை ஏற்றதிலிருந்து (நான் சந்திக்க அனுமதி கேட்ட எந்தச் சமயத்திலும்) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னைத் தடுத்ததில்லை சிரித்த முகத்துடனே தவிர அவர்கள் என்னைக் கண்டதில்லை.

என கைஸ் இப்னு அபீ ஹாஸிம் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 3823. ஜரீர் (ரலி) அறிவித்தார்

அறியாமைக் காலத்தில்'துல்கலஸா' என்னும் ஆலயம் ஒன்று இருந்தது. அது யமன் நாட்டு கஅபா.. அல்லது ஷாம் நாட்டு கஅபா என்று அழைக்கப்பட்டு வந்தது. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், 'துல்கலஸாவி (ன் கவலையி) லிருந்து என்னை நீ விடுவித்து விடுவாயா?' என்று கேட்டார்கள். எனவே நான்'அஹ்மஸ்' என்னும் (என்) குலத்தாரிலிருந்து நூற்றி ஐம்பது குதிரை வீரர்களுடன் அதை நோக்கிப் புறப்பட்டேன். அதை நாங்கள் உடைத்து விட்டோம். அதனருகே இருந்த (பகை) வர்களை நாங்கள் கொன்று விட்டோம். பிறகு நபி (ஸல்) அவர்களிடம் வந்து விவரத்தைத் தெரிவித்தோம். அப்போது, நபி (ஸல்) அவர்கள் எங்களுக்காகவும்'அஹ்மஸ்' குலத்தாருக்காகவும் பிரார்த்தனை புரிந்தார்கள்.

## ஹு தைஃபா இப்னு யாமன் அல் அப்ஸீ (ரலி) பற்றிய குறிப்பு.

ஹதீஸ் 3824. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின் (ஆரம்பத்தின்) போது இணைவைப்பாளர்கள் அப்பட்டமாகத் தோற்கடிக்கப்பட்டனர். அப்போது இப்லீஸ், 'அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களைக் கவனியுங்கள்'' என்று கத்தினான். உடனே, முஸ்லிம்களில் முன் அணியினர் (எதிரிகள் என்றெண்ணி, ) பின் அணியினரை நோக்கித் திரும்பிச் செல்ல, பின் அணியினருடன் (மோதலேற்பட்டுப்) போரிட்டுக் கொண்டனர். அப்போது ஹுதைஃபா (ரலி), தம் தந்தை அங்கே (முஸ்லிம்களின் தாக்குதலுக்கு ஆளாக) இருப்பதைக் கண்டார். எனவே, 'அல்லாஹ்வின் அடியார்களே! என் தந்தை! என் தந்தை!"என்று உரக்கக் கூவினார். அல்லாஹ்வின் மீதாணையாக! அவரைக் கொன்ற பின்புதான் அவர்கள் (அவரைவிட்டும்) நகர்ந்தார்கள். அப்போது ஹுதைஃபா (ரலி), 'அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!"என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) கூறினார்:

“அல்லாஹ்வின் மீதாணையாக! ஹுதைஃபா(ரலி) மன்னித்ததால் (அவர்களின் வாழ்க்கையில்) அவர்கள் அல்லாஹ்வைச் சந்திக்கும் வரை நல்ல பலன் இருந்து கொண்டேயிருந்தது‘‘ என்று என் தந்தை (உர்வா - ரஹ் - அவர்கள்) கூறுகிறார்கள்.

## ஹிந்த் பின்த் உத்பா(ரலி) பற்றிய குறிப்பு.

**ஹதீஸ் 3825.** ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஹிந்த் பின்த் உத்பா, (நபி - ஸல் - அவர்களிடம்) வந்து,‘இறைத்தூதர் அவர்களே! (நான் இஸ்லாத்தை எதிர்த்து வந்த பொழுது) பூமியின் முதுகிலுள்ள வேறெந்த வீட்டார் இழிவடைவதையும் விட உங்கள் வீட்டார் இழிவடைவதே எனக்கு மிகவும் விருப்பமானதாக இருந்து வந்தது. (நான் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட) பிறகு இன்று பூமியின் முதுகிலுள்ள வேறெந்த வீட்டார் கண்ணியம் பெறுவதையும் விட உங்கள் வீட்டார் கண்ணியம் பெறுவதே எனக்கு அதிக விருப்பமானதாக மாறிவிட்டது’ என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,‘என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! (இந்த உன்னுடைய விருப்பம்) இன்னும் (அதிகமாகும்)‘‘ என்று பதிலளித்தார்கள். ஹிந்த் பின்த் உத்பா,‘இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) அபூ சுஃப்யான் மிகவும் கருமியான ஒருவர். எனவே, அவருக்குரிய பணத்திலிருந்து (அவருக்குத் தெரியாமல் எடுத்து) எங்கள் பிள்ளை குட்டிகளுக்கு நான் உண்ணக் கொடுத்தால் என் மீது குற்றமாகுமா?’ என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘நியாயமான அளவிற்கு எடுத்(து உண்ணக் கொடுத்)தால் குற்றமில்லை‘‘ என்று பதிலளித்தார்கள்.

## ஸைத் இப்னு அம்ர் இப்னி நுஃபைல் அவர்களைப் பற்றிய செய்தி.

**ஹதீஸ் 3826.** அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், தமக்கு வேத வெளிப்பாடு (வஹீ) அருளப்படுவதற்கு முன்பு கீழ்’பல்தஹில் ஸைத் இப்னு அம்ர் இப்னி நுஃபைல் அவர்களைச் சந்தித்தார்கள். அப்போது (குறைஷிகளின்) பயணஉணவு ஒன்று நபி(ஸல்) அவர்கள் முன்னிலையில் பரிமாறப்பட்டது. அந்த உணவை ஸைத் இப்னு அம்ர் உண்ண மறுத்துவிட்டார். பிறகு ஸைத் (உணவைப் பரிமாறிய குறைஷிகளிடம்),‘நீங்கள் உங்கள் (சிலைகளுக்கு பலியிடும்) பலிபீடக் கற்களில் வைத்து அறுப்பவற்றை நான் உண்ண மாட்டேன்‘‘ என்று கூறினார்கள். ஸைத் இப்னு அம்ர் அவர்கள், குறைஷிகளால் (சிலைகளுக்காக) அறுக்கப்பட்டவற்றைக் குறை கூறிவந்தார்கள். மேலும்,‘ஆட்டை அல்லாஹ்வே படைத்தான் அதற்காக, வானத்திலிருந்து தண்ணீரைப் பொழிந்தான் அதற்காக பூமியிலிருந்து (புற் பூண்டுகளை முளைக்கச் செய்தான். (இத்தனைக்கும்) பிறகு நீங்கள் அல்லாஹ்வின் பெயரால்லாத மற்ற (கற்பனைத் தெய்வங்களின்) பெயர் சொல்லி அதை அறுக்கிறீர்கள் இறைவனின் அருட் கொடையை நிராகரிக்கும் விதத்திலும் அல்லாஹ் அல்லாதவரை கண்ணியப்படுத்தும் விதத்திலம் இப்படிச் செய்கிறீர்கள்‘‘ என்று கூறி வந்தார்கள்.

**ஹதீஸ் 3827.** இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

ஸைத் இப்னு அம்ர் இப்னி நுஃபைல், (நபித்துவ காலத்திற்கு முன்பு) ஏகத்துவ மார்க்கத்தைப் பற்றி விசாரித்துப் பின் பற்றுவதற்காக ஷாம் நாட்டை நோக்கிப் புறப்பட்டார். அப்போது யூத அறிஞர் ஒருவரைச் சந்தித்து யூதர்களின் மார்க்கதைப் பற்றி அவரிடம் விசாரித்தார். அந்த அறிஞரிடம்,‘நான் உங்கள் மார்க்கத்தை ஏற்றுப் பின்பற்றக் கூடும். எனவே, எனக்கு (அதைப் பற்றித்) தெரிவியுங்கள்‘‘ என்று கூறினார். அதற்கு அந்த அறிஞர்,‘அல்லாஹ்வின் கோபத்தில் உனக்குள்ள பங்கை நீ

எடுத்துக் (கொண்டு அதற்காக வேதனையை அனுபவித்துக்) கொள்ளாத வரை நீ எங்கள் மார்க்கத்தில் இருக்க முடியாது'' என்று கூறினார். ஸைத் அவர்கள், 'நான் அல்லாஹ்வின் கோபத்திலிருந்து தானே வெருண்டோடி வருகிறேன்! மேலும், அல்லாஹ்வின் கோபத்தில் சிறிதளவைக் கூட ஒருபோதும் நான் தாங்க மாட்டேன். என்னால் எப்படி அதைத் தாங்க முடியும்? வேறெந்த மார்க்கத்தையாவது எனக்கு அறிவித்துத் தரமுடியுமா?' என்று கேட்டார். அந்த அறிஞர், 'அது (ஏகத்துவ மார்க்கமான) நேரிய மார்க்கமாகத் தவிர இருக்க முடியாது என்பதை நான் நன்கறிவேன்'' என்று பதிலளித்தார். ஸைத் அவர்கள், 'நேரிய மார்க்கம் என்பதென்ன?' என்று கேட்டதற்கு அந்த அறிஞர், 'இது இப்ராஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் மார்க்கம். அவர்கள் யூதராகவும் இருக்கவில்லை. கிறிஸ்தவராகவும் இருக்கவில்லை. மேலும், அல்லாஹ்வைத் தவிர வேறெவரையும் அவர்கள் வணங்க மாட்டார்கள்'' என்று கூறினார். (மீண்டும்) புறப்பட்டுச் சென்று கிறிஸ்தவ அறிஞர் ஒருவரைச் சந்தித்தார். அவரும் யூத அறிஞரைப் போன்றே, 'அல்லாஹ்வின் (கருணையைவிட்டு அப்புறப்படுத்தப்படும்) சாபத்தில்விட்டு அப்புறப்படுத்தப்படும்) சாபத்தில் உனக்குள்ள பங்கை நீ எடுத்துக் கொள்ளாத வரை நீ எங்கள் மார்க்கத்தில் இருக்க முடியாது'' என்று கூறினார். ஸைத் அவர்கள், 'அல்லாஹ்வின் சாபத்திலிருந்து தானே நான் வெரூண்டோடி வருகிறேன். அல்லாஹ்வின் சாபத்திலிருந்தும அவனுடைய கோபத்திலிருந்தும் சிறிதளவைக் கூட ஒருபோதும் நான் தாங்க மாட்டேன். (அவற்றை) எப்படி என்னால் தாங்க முடியும்? வேறெந்த மார்க்கத்தையாவது எனக்கு நீங்கள் அறிவித்துத் தருவீர்களா?' என்று கேட்க, அதற்கு அவர், 'நேரிய (ஏகத்துவ) மார்க்கமாகத் தான் அது இருக்குமென்பதை நான் நன்கறிவேன்'' என்று கூறினார். ஸைத் அவர்கள், 'நேரிய மார்க்கம் என்பதென்ன?' என்று கேட்டதற்கு அந்த அறிஞர், 'இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கம், அவர்கள் யூதராகவோ, கிறிஸ்தவராகவோ இருக்கவில்லை. மேலும், அல்லாஹ்வைத் தவிர வேறெவரையும் அவர்கள் வணங்க மாட்டார்கள்'' என்று பதிலளித்தார்கள். ஸைத் அவர்கள் அந்த அறிஞர்கள் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மார்க்கத்தைப் பற்றிக் கூறியதைக் கண்டபோது, (அவர்களிடமிருந்து) புறப்பட்டு வெளியே வந்ததும் தம் கைகளை உயர்த்தி, 'இறைவா! நான் இப்ராஹீம் (அலை) அவர்களின் (ஏகத்துவ) மார்க்கத்தில் உள்ளேன் என்று உறுதி கூறுகிறேன்' எனக் கூறினார்.

ஹதீஸ் 3828. அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்

ஸைத் இப்னு அம்ர் இப்னி நுஃபைல் அவர்கள் (நபித்துவ காலத்திற்கு முன்பு) இறையில்லம் கஅபாவின் மீது சாய்ந்து கொண்டு நின்றபடி, 'குறைஷிக் குலத்தாரே! அல்லாஹ்வின் மீதாணையாக! என்னைத் தவிர உங்களில் எவரும் இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தின் படி நடக்கவில்லை'' என்று சொல்லிக் கொண்டிருந்ததை பார்த்தேன். மேலும், அவர் உயிரோடு புதைக்கப்படவிருந்த பெண் குழந்தைகளைக் காப்பாற்றி வாழவைத்து வந்தார். எவரேனும் தன் பெண்மகவைக் கொல்ல நாடினால் அவரிடம், 'அவளைக் கொல்லாதே. அவளுடைய செலவுக்கு உன்னிடம் நான் பொறுப்பேற்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, அந்தப் பெண் குழந்தையை (தாமே வளர்க்க) எடுத்துக் கொள்வார். அவள் வளர்ந்ததும் அவளுடைய தந்தையிடம் (சென்று), 'நீ விரும்பினால் இவளை உன்னிடம் ஒப்படைத்து விடுகிறேன் நீ விரும்பினால் அவளுடைய செலவுக்குப் பொறுப்பேற்று (பழையபடி நானே பராமரித்)க் கொள்கிறேன்'' என்று சொல்வார்.

## கஅபாவைக் கட்டுதல்

ஹதீஸ் 3829. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

(நபியவர்களின் காலத்தில் குறைஷிகளால்) கஅபா (புதுப்பித்துக்) காட்டப்பட்டபோது நபி(ஸல்) அவர்களும் அப்பாஸ்(ரலி) அவர்களும் கற்களை(ச் சுமந்து) எடுத்து வந்து கொண்டிருந்தார்கள். அப்போது அப்பாஸ்(ரலி) (சிறுவரான) நபி(ஸல்) அவர்களிடம்,'உங்கள் வேட்டியை (கழற்றி) உங்கள் கழுத்துக்கு மேல் வைத்துக் கொள்ளுங்கள். கல்லி(ன் சுமையால் ஏற்படும் வலியி)லிருந்து அது உங்களைக் காப்பாற்றும்'' என்று கூறினார்கள். (நபி(ஸல்) அவர்கள் அப்படிச் செய்ய முனைந்த போது) அவர்கள் பூமியில் (மூர்ச்சித்து) விழுந்துவிட்டார்கள். அவர்களின் இரண்டு கண்களும் வானத்தை நோக்கியபடி நிலைகுத்தி நின்றுவிட்டன. பிறகு மூர்ச்சை தெளிந்ததும்,'என் வேட்டி, என் வேட்டி'' என்று கேட்கலானார்கள். (வேட்டி தரப்பட்ட) உடனே அதை இறுக்கமாக கட்டிக் கொண்டார்கள். 65

ஹதீஸ் 3830. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களும் உபைதுல்லாஹ் இப்னு அபீ யஸீத்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்கள்:

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (இறையில்லமான) பைத்துல் ஹராமைச் சுற்றிலும் சுற்றுச் சுவர் இருந்ததில்லை. 66 மக்கள் இறையில்லத்தைச் சுற்றிலும் தொழுது வந்தார்கள். உமர்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலம் வந்தபோது அதைச் சுற்றிலும் சுற்றுச் சுவர் கட்டினார்கள்.

அறிவிப்பாளர் உபைதுல்லாஹ்(ரஹ்),'அந்தச் சுவர் குட்டையாக இருந்தது. பிறகு அதை (அப்துல்லாஹ்) இப்னு ஸுபைர்(ரலி) (உயர்த்திக்) கட்டினார்கள்'' என்று கூறுகிறார்கள்.

## அறியாமைக் காலம்.

ஹதீஸ் 3831. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஆஸ ூரா (முஹர்ரம் 10-ம் நாள் என்பது அறியாமைக் காலத்தில் குறைஷிகள் நோன்பு நோற்கிற நாளாக இருந்து வந்தது. நபி(ஸல்) அவர்களும் அந்த நாளில் நோன்பு நோற்று வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்குச் சென்றபோது அந்த நாளில் தாமும் நோன்பு நோற்று, நோன்பு நோற்கும் படி (முஸ்லிம்களுக்கும்) உத்தரவிட்டார்கள். ரமளான் (நோன்பின் கட்டளை) வந்தபோது ஆஸூரா தினம், விரும்பியவர்கள் நோன்பு நோற்கவும் செய்யலாம் விரும்பாதவர்கள் நோன்பு நோற்காமலும் இருக்கலாம் என்ற நிலைக்கு வந்துவிட்டது.

ஹதீஸ் 3832. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

'ஹஜ்ஜுடைய மாதங்களில் (ஹஜ் மட்டுமே செய்ய வேண்டும்: அம்மாதங்களில்) உம்ரா செய்வது பூமியில் நடக்கும் பாவகரமான செயல்களில் ஒன்று' என (அறியாமைக் கால) மக்கள் கருதிக் கொண்டிருந்தார்கள். (போரிடுதல் தடை செய்யப்பட்ட நான்கு மாதங்களில் துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம் ஆகிய மூன்று மாதங்கள் தொடர்ந்து வந்ததால் சலிப்புற்று முஹர்ரம் மாதத்திற்கான தடையை அவர்கள் ஸஃபர் மாதத்திற்குமாற்றி) ஸஃபருக்கு முஹர்ரம் மாதத்திற்கான தடையை அவர்கள் ஸஃபர் மாதத்திற்கு மாற்றி) ஸஃபருக்கு முஹர்ரம் என்று பெயர் சூட்டி வந்தார்கள். (ஹஜ் பயணத்தில்) ஒட்டகங்களின் முதும்லுள்ள சுமைகளின் வடு காய்ந்து மறைந்து (ஸஃபர் மாதமும் கழிந்து)விட்டால் உம்ரா செய்ய நாடுபவருக்கு உம்ரா செய்ய அனுமதியுண்டு'' என்று கூறி வந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் (துல்ஹஜ் மாதம்) நான்காம் நாள் காலை, ஹஜ்ஜுககாக இஹ்ராம் அணிந்து கொண்டு (மதீனாவிலிருந்து) மக்கா நகருக்கு வந்தபோது நபி(ஸல்) அவர்கள், மக்கள் தம் இஹ்ராமை உம்ராவிற்குரியதாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்று கட்டளையிட்டார்கள். அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! (இவ்வாறு உம்ராவிற்குப் பிறகு) இஹ்ராமிலிருந்து விடுபடுவதால் எச்செயல்கள் அனுமதிக்கப்படும்?' எனக் கேட்டனர்.

அதற்கு,'இஹ்ராம் அணிந்தவருக்கு விலக்கப்பட்டிருந்த) அனைத்து செயல்களும் அனுமதிக்கப்படும்" என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3833. ஹஸன் இப்னு அபீ வஹ்ப் அல் முஹாஜிரீ(ரலி) அறிவித்தார்

(இஸ்லாத்திற்கு முந்திய) அறியாமைக் காலத்தில் (ஒரு முறை) பெருவெள்ளம் ஒன்று (பெருக்கெடுத்து) வந்து (மக்காவின்) இரண்டு மலைகளையும் மூடிக் கொண்டது.

இதை ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) தம் தந்தை முஸய்யப் இப்னு ஹஸ்ன்(ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

"இது பெரியதொரு நிகழ்ச்சியை விவரிக்கும் அறிவிப்பாகும்' என்று அம்ர் இப்னு தீனார்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 3834. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

அபூ பக்ர்(ரலி)'ஸைனப்' என்றழைக்கப்படும்'அஹ்மஸ்' குலத்துப் பெண்ணொருத்தியிடம் சென்றார்கள். அவளை (மௌன விரதம் பூண்டு) பேசாமலிருப்பவளாகக் கண்டார்கள். உடனே,'இவளுக்கென்ன ஆயிற்று? ஏன் பேசாமலிருக்கிறாள்?' என்று கேட்டார்கள். மக்கள்,'(இவள் ஹஜ் செய்யும் வரை) எவருடனும் பேச மாட்டேன் என்று நேர்ச்சை செய்திருக்கிறாள்" என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி) அவளிடம்,'நீ பேசு. ஏனெனில் இ(வ்வாறு மௌனவிரதம் பூணுவ)து அனுமதிக்கப்பட்ட காரியமல்ல. இது அறியாமைக் காலச் செயலாகும்" என்று கூறினார்கள். எனவே, அவள் (மௌன விரதத்தைக் கலைத்துப் பேசினாள்.'நீங்கள் யார்?' என்று கேட்டாள். அபூ பக்ர்(ரலி),'முஹாஜிர்களில் ஒருவன்" என்று பதிலளித்தார்கள். அப்பெண்,'முஹாஜிர்களில் நீங்கள் எந்தக் குலத்தைச் சேர்ந்தவர்?' என்று கேட்க, அபூ பக்ர்(ரலி),'குறைஷிகளின் குலத்தைச் சேர்ந்தவன்" என்று பதிலளித்தார்கள். அப்பெண்,'குறைஷிகளில் நீங்கள் எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்?' என்று கேட்க, அபூ பக்ர்(ரலி),'நீ அதிகமாகக் கேள்வி கேட்கிறாயே? நானே அபூ பக்ர்" என்று பதிலளித்தார்கள். அப்பெண்,'அறியாமைக் காலத்திற்குப் பிறகு எங்களிடம் வந்த இந்த (இஸ்லாம் எனும்) நல்ல நிலையில் நாங்கள் நீடித்து நிலைத்திருக்க வழி யாது?' என்று கேட்டாள். அபூ பக்ர்(ரலி),'உங்கள் தலைவர்கள் உங்களைச் சீராக நிர்வகித்து வரும் வரை அதில் நீங்கள் நீடித்து நிலைத்திருப்பீர்கள்" என்று பதிலளித்தாள் அபூ பக்ர்(ரலி),'அவர்கள் தாம் மக்களின் தலைவர்கள்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3835. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஓர் அரபுக் கோத்திரத்திற்குச் சொந்தமான கருப்பு (நிற அடிமைப்) பெண் ஒருத்தி இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டாள். அவளுக்குப் பள்ளி வாசலில் சிறிய (தங்கும்) அறையொன்று இருந்தது. அவள் எங்களிடம் வந்து பேசிக் கொண்டிருப்பாள். அவள் பேசி முடிக்கும்போது,'அரையணித் தோள் பட்டிகை72 (காணாமல் போன) நாள் எம் இறைவனின் விந்தைகளில் ஒன்றாகும். அந்த நாள் இறை மறுப்பு (மேலோங்கி) இருந்த ஊரிலிருந்து என்னை (வெளியேற்றிக்) காப்பாற்றிவிட்டது" என்று பாடுவாள். இவ்வாறு அவள் அதிகமாகப் பாடுவதைக் கேட்ட நான்,'அரையணித் தோள் பட்டிகை நாள்' என்றால் என்ன?' என்று கேட்டேன். அதற்கு அவள் சொன்னாள்: என் (எஜமானியர்) குடும்பத்தாரில் ஒருவருக்குரிய சிறுமி ஒருத்தி (மணப் பெண்ணாக இருந்ததால்) பதனிடப்பட்ட தோலால் ஆன (சிவப்பு) அரையணித் தோள் பட்டிகை ஒன்றை அணிந்து கொண்டு (குளியலறைக்குச்) சென்றாள். அப்போது அந்தப் பட்டிகை (எதிர்பாராத விதமாக) அவளிடமிருந்து

(கழன்று) விழுந்து விட, அதைப் பருந்து ஒன்று இறைச்சி என்று நினைத்துக் கவ்வி எடுத்துச் சென்றுவிட்டது. (என் எஜமானர்கள் நானே அதைச் திருடினேன் என்று) என் மீது குற்றம் சாட்டிச் என்னைச் சூழ்ந்திருக்க, நான் கடும் வேதனையில் (துடித்தபடி) இருந்தபோது, அந்தப் பருந்து எங்கள் தலைகளக்கு நேராக வந்து அந்தப் பட்டிகையை(க் கீழே) போட்டது. உடனே, அதை அவர்கள் எடுத்துக் கொண்டனர். அப்போது நான் அவர்களிடம்,'நான் குற்றமற்றவளாயிருக்க, நான் திருடிவிட்டதாக நீங்கள் குற்றம் சாட்டினீர்களே அந்தப் பட்டிகை தான் இது" என்று சொன்னேன்.

ஹதீஸ் 3836. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

"சத்தியம் செய்ய விரும்புகிறவர் அல்லாஹ்வின் மீதே தவிர (வேறெவர் மீதும்) சத்தியம் செய்ய வேண்டாம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். ஏனெனில், குறைஷிகள் தம் முன்னோர்களின் மீது சத்தியம் செய்து வந்தார்கள். எனவே, நபி(ஸல்ழு அவர்கள்,'உங்கள் முன்னோர்களின் மீது சத்தியம் செய்யாதீர்கள்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3837. அப்துர் ரஹ்மான் இப்னு காஸிம்(ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) காஸிம்(ரஹ்) ஜனாஸாவுக்கு (பிரேதத்திற்கு) முன்னால் நடந்து செல்வார்கள். அதற்காக எழுந்து நிற்கமாட்டார்கள்.

மேலும், ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து இப்படியும் அறிவிப்பார்கள்:

ஜனாஸாவுக்காக எழுந்து நிற்பதும் அதைக் கண்டால்,'(உன் வாழ் நாளில்) நீ எப்படி இருந்தாயோ அப்படியே இப்போதும் இருப்பாய்" என்று இருமுறை கூறுவதும் அறியாமைக் கால மக்களின் வழக்கமாகும்.

ஹதீஸ் 3838. உமர்(ரலி) அறிவித்தார்

(ஹஜ்ஜின் போது)'ஸபீர்' மலை மீது சூரியன் ஒளிராத வரை, இணைவைப்பவர்கள் முஸ்தலி∴பாவைவிட்டுப் புறப்பட மாட்டார்கள். அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் மாறு செய்து சூரியன் உதிக்கும் முன்பாகப் புறப்பட்டார்கள்.

ஹதீஸ் 3839. (இப்னு அப்பாஸ் - ரலி - அவர்களின் முன்னாள் அடிமையான) இக்ரிமா(ரஹ்) அறிவித்தார்

திருக்குர்ஆனில் (திருக்குர்ஆன் 78: 34-ல்) இடம் பெற்றுள்ள'க∴ஸன் திஹாக்கன் - நிரம்பிய கிண்ணமும்' என்பதற்கு'(தீரத்திரத்) தொடர்ந்து நிரம்பிக் கொண்டிருக்கக் கூடிய கிண்ணமும் (சொர்க்கத்தில் உண்டு)' என்று பொருளாகும்.

ஹதீஸ் 3840. மேலும், இப்னு அப்பாஸ்(ரலி),'என் தந்தை (அப்பாஸ் - ரலி - அவர்கள் இஸ்லாத்தில் இணைவதற்கு முன் அவர்களின்) அறியாமைக் காலத்தில்'எங்களுக்குத் தொடர்ந்து நிரம்பும் கிண்ண(திலிருப்ப)தை அருந்தச் செய்' என்று (தம் பணியாளரிடம்) கூற கேட்டேன்" எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 3841. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(கவிஞர்) லபீத் அவர்கள் சொன்ன'அறிக! அல்லாஹ்வைத் தவிர உள்ள பொருள்கள் அனைத்துமே அழியக் கூடியவையே" என்றும் சொல்தான், கவிஞர் சொன்ன சொற்களிலேயே மிக உண்மையான சொல்லாகும். (கவிஞர்) உமய்யா இப்னு அபிஸ் ஸல்த் (தன் கவிதையின் கருத்துகளால்) இஸ்லாத்தை ஏற்கும் அளவிற்கு வந்துவிட்டார்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3842. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

அபூ பக்ர் (ரலி) அவர்களுக்கு (ஓர் எஜமானனுக்கு அடிமை செலுத்த வேண்டிய சம்பாத்தியத்தில்) நிர்ணயிக்கப்பட்ட தொகையைச் செலுத்தி வந்த அடிமையொருவன் இருந்தான். அபூ பக்ர் (ரலி) அவன் செலுத்தும் தொகையிலிருந்து உண்டு வந்தார்கள். ஒரு நாள் அவன் ஏதோ ஒரு பொருளைக் கொண்டு வந்தான். அதிலிருந்து அபூ பக்ர் (ரலி) சிறிது உண்டார்கள். அப்போது அந்த அடிமை அவர்களிடம், 'இது என்ன என்று உங்களுக்குத் தெரியும்?' என்று கேட்டான். அபூ பக்ர் (ரலி), 'இது என்ன?' என்று கேட்டார்கள். அவன், 'நான் அறியாமைக் காலத்தில் ஒரு மனிதருக்குக் குறி சொல்லிவந்தேன் எனக்கு நன்றாகக் குறி சொல்லத் தெரியாது எனக்கு நன்றாகக் குறிசொல்லத் தெரியாது. ஆயினும் (குறி சொல்லத் தெரிந்தவன் போல் நடித்து) அவரை நான் ஏமாற்றி விட்டேன். அவர் அதற்காக எனக்குக் கூலி கொடுத்தார். நீங்கள் உண்டது (குறி சொன்னதற்காக) எனக்குக் கூலியாகக் கிடைத்த அந்தப் பொருளிலிருந்து தான்'' என்று சொன்னான். உடனே அபூ பக்ர் (ரலி) தம் கையை (வாய்க்குள்) நுழைத்துத் தம் வயிற்றிலிருந்து அனைத்தையும் வாந்தியெடுத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 3843. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

அறியாமைக் கால மக்கள் ஹபலுல் ஹபலாவுக்காக - கருவிலுள்ள ஒட்டகக் குட்டி பிறந்து அந்தக் குட்டி சுமந்து பெறவிருக்கும் குட்டிக்காக - ஒட்டகத்தின் இறைச்சிகளை விற்று வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் இத்தகைய வியாபாரம் செய்யக் கூடாது என்று அவர்களுக்குத் தடைவிதித்தார்கள்.

ஹதீஸ் 3844. ஃகைலான இப்னு ஜரீர் (ரஹ்) அறிவித்தார்

நாங்கள் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம் செல்வோம். அவர்கள் அன்சாரிகளைக் குறித்து எங்களிடம் பேசுவார்கள். அவர்கள், '(அறியாமைக் காலத்தில்) உங்கள் (அன்சாரிச்) சமுதாயத்தினர் இன்ன இன்ன நாளில் இப்படி இப்படியெல்லாம் செய்து வந்தார்கள். (அறியாமைக் காலத்தில்) உங்கள் (அன்சாரிச்) சமுதாயத்தினர் இன்ன இன்ன நாளில் இப்படி இப்படியெல்லாம் செய்து வந்தார்கள் என்று என்னிடம் சொல்வார்கள்.

## 'அல் கஸாமா என்னும் அறியாமைக் காலச் சத்தியம்

ஹதீஸ் 3845. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

அறியாமைக் காலத்தில் நடைபெற்ற முதல்'கஸாமா' (எனும் சத்தியம் தொடர்பான சட்டத்தின் அடிப்படையில் தீர்ப்பு வழங்கப்பட்ட சம்பவம்) எங்கள் பனு ஹாஷிம் குலத்தினரிடையே தான் நிகழ்ந்தது. (அதன் விவரம் வருமாறு:) பனு ஹாஷிம் குலத்தில் (அம்ர் இப்னு அல்கமா என்னும்) ஒருவர் இருந்தார். அவரைக் குறைஷிகளில் மற்றொரு கிளையைச் சேர்ந்த (ம்தாஷ் இப்னு அப்தில்லாஹ் என்னும்) ஒருவர் கூலிக்கு அமர்த்திக் கொண்டார். அந்தக் கூலிக்காரர் தம் முதலாளியுடன் அவரின் ஒட்டகத்தில் (வாணிபக் குழுவினருடன் ஷாம் நோக்கிச்) சென்றார். அப்போது பனு ஹாஷிம் குலத்தைச் சேர்ந்த இன்னொருவர் அந்தக் கூலிக்காரரின் அருகே சென்று கொண்டிருந்தார். அந்த பனு ஹாஷிம் குலத்தவருடைய (ஒட்டகத்தின் இரண்டு பக்கங்களிலும் தொங்க விடப்படும்) பையின் பிடி அறுந்து விட்டிருந்தது. அவர் அந்தக் கூலிக்காரரைப் பார்த்து, 'என்னுடைய ஒட்டகம்தப்பியோடாமல் இருக்க, (அறுந்து போன) என்னுடைய பையின் பிடியை (இணைத்து)க் கட்டுவதற்கு ஒரு கயிறு கொடுத்தார். உடனே அவர், அதன் மூலம் தன்னுடைய பையின் பிடியை (இணைத்து)க் கட்டிக் கொண்டார். அவர்கள் அனைவரும்

(ஓய்வெடுப்பதற்காக ஓரிடத்தில்) தங்கியபோது எல்லா ஒட்டகங்களும் (அவற்றுக்குரிய கறுகளால்) கட்டிப் போடப்பட்டன. ஒரேயோர் ஒட்டகம் மட்டும் (அதன் கயிற்றை பனு ஹாஷிம் குலத்தவருக்கு அந்தக் கூலிக்காரர் கொடுத்து விட்டிருந்ததால்) கட்டிப் போடப்படாமல் இருந்தது. அப்போது (கூலிக்காரரை நோக்கி) அந்தக் குறைஷி (முதலாளி),'இந்த ஒட்டகத்திற்கென்ன? பிற ஒட்டகங்களுக்கிடையே இது மட்டும் ஏன் கட்டிப் போடப்படவில்லை?' என்று கேட்டதற்கு அந்தக் கூலிக்காரர்,'அதற்குக் கயிறு இல்லை'' என்று கூறினார். முதலாளி,'(ஏன்)? அதன் கயிறு எங்கே (போனது)?' என்று கேட்டார். பிறகு அந்தக் கூலிக்காரரின் மீது (கோபம் கொண்டு) ஒரு தடியை (எடுத்து) எறிந்தார். அந்த அடியே அந்தக் கூலிக்காரரின் மரணத்திற்குக் காரணமாக அமைந்தது. அப்போது (அடிபட்டுக் குற்றுயிராய்க் கிடந்த) அந்தக் கூலிக்காரரை யமன் நாட்டைச் சேர்ந்த ஒருவர் கடந்து சென்றார். அவரை நோக்கி (அந்தக் கூலிக்காரர்),'ஹஜ் பருவத்தில் நீங்கள் (ஹஜ்ஜில்) கலந்து கொள்வீர்களா?' என்று கேட்டார். அந்த வழிப்போக்கர்,'நான் கலந்து கொள்ளமாட்டேன். ஒரு கால் நான் கலந்து கொள்ளவும் செய்யலாம்'' என்று கூறினார். அந்தக் கூலீக்காரர்,'என் சார்பாக ஒரு செய்தியை எப்போதாவது (நான் சொல்லும் குலத்தாரிடம்) தெரிவித்து விடுவாயா?' என்று கேட்டதற்கு அவர்,'ஆம் (செய்கிறேன்)'' என்று கூறினார். உடனே, அந்தக் கூலிக்காரர்,'நீ ஹஜ் பருவத்தில் பங்கெடுத்தால்'குறைஷிக் குலத்தாரே!' என்று கூப்பிடு! அவர்கள் பதில் தந்தால் உடனே (குறைஷிக் கிளையான)'பனு ஹாஷிம் குலத்தாரே! என்று கூப்பிடு! அவர்கள் உனக்கு பதிலளித்தால் (பனு ஹாஷிம் குடும்பத் தலைவரான)'அபூ தாலிப்' பற்றி விசாரி! (அவரைச் சந்தித்து) அவரிடம்'இன்னான் ஒரு கயிற்றுக்காக என்னைக் கொன்றுவிட்டான்' என்று தெரிவித்து விடு'' என்று கூறினார். பிறகு அந்தக் கூலிக்காரர் இறந்தும்விட்டார். அவரைக் கூலிக்கு அமர்த்திச் சென்ற அந்த குறைஷி முதலாளி (மக்காவிற்குத்) திரும்பி வந்தபோது அவரிடம் அபூ தாலிப் வந்து,'(கூலிக்காரரான) எங்கள் ஆள் என்ன ஆனார்?' என்று கேட்டார்.'அவர் நோய் வாய்ப்பட்டார். அவரை நல்ல முறையில் நான் கவனித்து வந்தேன். (ஆனாலும் அவர் இறந்துவிட்டார்.) அவரை அடக்கும் பொறுப்பையும் நானே ஏற்றுக் கொண்டேன்'' என்று கூறினார்.'உம்மிடமிருந்து (இந்த உதவிகளைப் பெறுவதற்கு) அவர் தகுதியானவரே!"என்று அபூ தாலிப் கூறினார். பின்னர் சிறிது காலம் கழிந்தது. தன்னைப் பற்றிய செய்தியைத் தெரிவித்து விடும்படி அந்தக் கூலிக்காரர் இறுதி உபதேசம் செய்து அனுப்பிய (யமன் நாட்டைச் சேர்ந்த) அந்த மனிதர் ஹஜ் பருவத்தில் (ஹஜ்ஜுக்கு) வந்தார். அவர்,'குறைஷிக் குலத்தினரே!' என்று அழைத்தார்.'(சிலரைக் குாட்டி) இவர்கள் தாம் குறைஷிகள்'' என்று மக்கள் கூறினார்கள்.'பனு ஹாஷிம் குலத்தினரே!"என்று அவர் அழைத்தார்.'இவர்கள் தாம் பனு ஹாஷிம் குலத்தினர்'' என்று மக்கள் தெரிவித்தனர். அவர்,'அபூ தாலிப் எங்கே?' என்று கேட்டார்.'இவர்தான் அபூ தாலிப்'' என்று கேட்டார்.'இவர்தான் அபூ தாலிப்'' என்று மக்கள் கூறினார்கள்.'ஒரு கயிற்றுக்காக இன்னான் என்னைக் கொன்றுவிட்டான் என்ற செய்தியை உங்களிடம் தெரிவித்து விடும்படி இன்னார் எனக்கு உத்தரவிட்டார்'' என்ற அவர் (அபூ தாலிபிடம்) கூறினார். அந்த முதலாளியிடம் அபூ தாலிப் சென்று,'எங்களிடமிருந்து மூன்றில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்'' என்று கூறி(விட்டு அறியாமைக் கால வழக்கப்படி பின்வருமாறு சொன்)னார்: 1. நீ விரும்பினால், எங்கள் ஆளை நீ கொலை செய்ததற்காக (நம்முடைய மரபுப்படி) நூறு ஒட்டகத்தை (நஷ்டயீடாக) செலுத்தலாம். 2. நீ விரும்பினால் உன்னுடைய சமுதாயத்திலிருந்து ஐம்பது பேர்'நீ அவரைக் கொலை செய்யவில்லை' என்று சத்தியம் செய்யலாம். 3. (இந்த இரண்டையும் செய்ய) நீ மறுத்தால் உன்னை நாங்கள் அவருக்குப் பதிலாகக் கொன்று விடுவோம்'' (என்று கூறினார்.) அந்தக் குறைஷி (முதலாளி) தம் சமுதாயத்தினரிடம் சென்றார். அப்போது அவர்கள்,'நாங்கள் சத்தியம் செய்கிறோம்'' என்று கூறினர்.

அபூ தாலிபிடம் பனு ஹாஷிம் குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்82 வந்தாள். பனு ஹாஷிம் குலத்(தில் கொலையாளியின் குடும்பத்)தைச் சேர்ந்த ஒருவரின் மனைவியாக அவள் இருந்தாள். அவருக்காக ஒரு குழந்தையையும் அவள் பெற்றெடுத்திருந்தாள். அவள் கூறினாள்:'அபூ தாலிப் அவர்களே! (சத்தியம் செய்ய வேண்டிய) ஐம்பது பேர்களில் இந்த என்னுடைய மகனும் ஒருவனாக இருக்க அனுமதிக்க வேண்டும் என விரும்புகிறேன். ஆனால், சத்தியம் மேற்கொள்ளப்படும் (கஅபாவிலுள்ள ருக்ன் மகாமு இப்ராஹீம் இடையிலான) இடத்தில் இவனை சத்தியம் செய்யும்படி கட்டாயப்படுத்தாதீர்கள்'' (அவனுடைய கோரிக்கைப்படி) அபூ தாலிப் செயல்பட்டார். அப்போது பனு ஹாஷிம் குலத்தாரில் (கொலையாளியின் குடும்பத்தைச் சேர்ந்த) இன்னொரு மனிதரும் வந்து,'அபூ தாலிப் அவர்களே! (கொலைக் குற்றத்திற்குப் பரிகாரமாகத் தரப்படும்) நூற ஒட்டகங்களுக்கு பதிலாக ஐம்பது ஆண்கள் சத்தியம் செய்ய வேண்டுமென்று நீங்கள் விரும்பினீர்கள். ஒவ்வோர் ஆணுக்கும் இரண்டு ஒட்டகங்கள் (விம்தம்) ஏற்படும். இதோ, இந்த இரண்டு ஒட்டகங்களை எனக்காக ஏற்றுக் கொள்ளுங்கள். சத்தியம் செய்யுமாறு (அவர்களை) நீங்கள் கட்டாயப்படுத்தும்போது என்னையும் கட்டாயப்படுத்தாதீர்கள்'' என்று கூறினார். அந்த இருவரின் கோரிக்கையையும் அபூ தாலிப் ஏற்றார். ஆக, நாற்பத்தியெட்டுப் பேர் வந்து, (''எங்கள் குலத்தைச் சேர்ந்த கிதாஷ் கொலை செய்யப்பட்டவரின் உயிரீட்டுத் தொகையைச் செலுத்த வேண்டிய பொறுப்பிலிருந்து விடுபட்டுவிட்டார்'' என்று) சத்தியம் செய்தனர்.

அறிவிப்பவர்:இப்னு அப்பாஸ்

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! (அவர்கள் சத்தியம் செய்து) ஓராண்டு கூடக் கழியவில்லை (பொய்ச் சத்தியம் செய்த) அந்த நாற்பத்தி எட்டுப் பேரின் கண்ணும் (எப்போதும்) துடிக்கும் படி (ஒரு தண்டனையாக) ஆக்கப்பட்டது.

ஹதீஸ் 3846. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

'புஆஸ்' போர் நாள், தன் தூதருக்காக அல்லாஹ் (சாதகமான சூழ்நிலையை உருவாக்கும் வகையில்) முன் கூட்டியே நிகழ்த்திக் காட்டிய நாளாகும். மதீனா வாசிகளின் கூட்டமைப்பு (குலைந்து) பிளவுபட்டிருந்த நிலையிலும், அவர்களில் முக்கியப் பிரமுகர்கள் கொல்லப்பட்டும் காயமுற்றும் இருந்த நிலையிலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்(அங்கு) வந்தார்கள். எனவே, மக்கள் இஸ்லாத்தை ஏற்க (ஏதுவான சூழ்நிலையை உருவாக்குவதற்காக) அல்லாஹ் தான், தன் தூதர்(ஸல்) அவர்களுக்குச் சாதகமாக அந்த நாளை முன் கூட்டியே நிகழச் செய்தான். 83

ஹதீஸ் 3847. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

'ஸஃபா' மற்றும்'மர்வா' (குன்றுகளுக்கு) இடையே பள்ளத்தாக்கின் மையப்பகுதியில் (வேகமாகத்) தொங்கோட்டம் ஓடுவது நபி(ஸல்) வழியன்று. அறியாமைக் காலத்தவர் தாம் அவ்வாறு (வேகமாகத்) தொங்கோட்டம் ஓடி வந்தனர் மேலும்,'நாங்கள் அந்தப் பள்ளத்தாக்கை வேகமாகவே கடப்போம்'' என்று கூறியும் வந்தார்கள். 84

ஹதீஸ் 3848. அபுஸ் ஸஃபர்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி),'மக்களே! நான் உங்களுக்குச் சொல்வதை என்னிடமிருந்து (காது கொடுத்து கவனமாகக்) கேளுங்கள். நீங்கள் சொல்வதை நான் (கவனமாகக்) கேட்க விடுங்கள். (என்னிடமிருந்து அரைகுறையாகக் கேட்டுக் கொண்டு) போய்,'இப்னு அப்பாஸ் கூறினார் இப்னு அப்பாஸ் கூறினார்'' என்று (தப்பும் தவறுமாகச்) சொல்லாதீர்கள். இறையில்லம் கஅபாவை வலம் வருபவர்'ஹிஜ்ர்' என்னும் (வளைந்த) பகுதிக்கு அப்பாலிருந்து சுற்றட்டும்!'அல் ஹத்தீம்' என்று (அதற்குப்) பெயர் சொல்லாதீர்கள். ஏனெனில், அறியாமைக் காலத்தில் ஒருவர் சத்தியம்

செய்துவிட்டு (சத்தியம் செய்ததற்கு அடையாளமாக) தன் சாட்டையையோ, தன் செருப்பையோ, தன் வில்லையோ அங்கே போட்டு விடுவார் (எனவேதான் அதற்கு'ஹத்தீம்' (வீழ்த்தக் கூடியது) என்ற பெயர் வந்தது)'' என்று சொல்வதை கேட்டேன்.

ஹதீஸ் 3849. அம்ர் இப்னு மைமூன் (ரஹ்) அறிவித்தார்

அறியாமைக் காலத்தில் விபசாரம் புரிந்த பெண் குரங்கொன்றைக் குரங்குகள் பல சூழ்ந்து கொண்டு கல்லெறிந்து தண்டிப்பதை கண்டேன். நானும் அவற்றுடன் சேர்ந்து கொண்டு கல்லெறிந்தேன்.

ஹதீஸ் 3850. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

பிறர் வமிசத்தைக் குறை கூறுவதும் ஒப்பாரி வைத்து அழுவதும் அறியாமைக் காலத்துப் பண்புகளாகும்.

அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் இப்னு அபீ யஸீத் (ரஹ்) மூன்றாவது பண்பொன்றை மறந்துவிட்டார்கள்.

"சந்திரனின் இன்னின்ன ராசிகளால் தான் எங்களுக்கு மழை பெய்தது என்று சொல்லுவதே (இறைவனுக்கு இணை கற்பிக்கும்) அந்த மூன்றாவது பண்பாகும்'' என சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) கூறினார். 86

நபி (ஸல்) அவர்கள் (இறைத்தூதராக) நியமிக்கப்படுதல்.

(இறைத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வமிசப் பரம்பரை பற்றிய விபரமாவது:) அத்னானின் மகன் மஅத்தும், மஅத்துடைய மகன் நிஸாரும், நிஸாருடைய மகன் முளரும் முளருடைய மகன் இல்யாஸும், இல்யாஸுடைய மகன் முத்ரிகாவும், முதரிகாவின் மகன் குஸைமாவும், குஸைமாவின் மகன் கினானாவும், கினானாவின் மகன் நள்ரும், நள்ரின் மகன் மாலிக்கும், மாலிக்கின் மகன் ஃபிஹ்ரும், ஃபிஹ்ரின் மகன் ஃகாலிபும், ஃகாலிபின் மகன் லுஅய்யும், லுஅய்யின் மகன் கஅபும், கஅபின் மகன் முர்ராவும், முர்ராவின் மகன் கிலாபும், கிலாபின் மகன் குஸய்யும், குஸய்யின் மகன் அப்து மனாஃபும், அப்து மனாஃபின் மகன் ஹாஷிமும், ஹாஷிமின் மகன் அப்துல் முத்தலிபும், அப்துல் முத்தலிபின் மகன் அப்துல்லாஹ்வும், அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத் (ஸல்) அவர்களும் ஆவார்கள். 87

ஹதீஸ் 3851. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நாற்பது வயதுடையவர்களாக இருக்கும்போது அவர்களுக்கு (வஹீ எனும்) வேத வெளிப்பாடு அருளப்பட்டது. அதன் பிறகு அவர்கள் மக்கா நகரில் பதின் மூன்றாண்டுகள் தங்கியிருந்தார்கள். பிறகு, (இறைமார்க்கத்திற்காகத் தாயகம் துறந்து) ஹிஜ்ரத் செய்து செல்லும்படி அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டது. எனவே, அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து சென்றார்கள் அங்கே பத்தாண்டுகள் தங்கினார்கள் பிறகு இறப்பெய்தினார்கள்.

நபி (ஸல்) அவர்களும் அவர்கள் தம் தோழர்களும் மக்கா நகரில் இணை வைப்பாளர்களால் அடைந்த (துன்பம், தொல்லை முதலிய)வை.

ஹதீஸ் 3852. கப்பாப் (இப்னுல் அரத் (ரலி) அவர்கள் அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் கஅபாவின் நிழலில் ஒரு சால்வையைத் தலையணையாக வைத்து சாய்ந்து கொண்டிருக்க, நான் அவர்களிடம் சென்றேன். அப்போது நாங்கள் இணைவைப்பவர்களால் கடும்

துன்பங்களைச் சந்தித்திருந்தோம். எனவே, நான்'இறைத்தூதர் அவர்களே! எங்களுக்காக நீங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்திக்க மாட்டீர்களா?' என்று கேட்டேன். உடனே அவர்கள் முகம் சிவந்து போய், (எழுந்து) உட்கார்ந்து கொண்டு கூறினார்கள்: உங்களுக்கு முன் (இந்த ஏகத்துவ மார்க்கத்தைத் தழுவி) இருந்தவர் (பழுக்கக் காய்ச்சிய) இரும்புச் சீப்புகளால் கோதப்பட்டு (கொடுமைப்படுத்தப்பட்டு) வந்தார். அது அவரின் எலும்புகளையும் கடந்து சென்று அதன் கீழுள்ள இறைச்சியையும் நரம்பையும் அடைந்து விடும். (ஆனால்,) அ(ந்தக் கொடுமையான)து அவரை அவரின் மார்க்கத்திலிருந்து (திசை) திருப்பி விட வில்லை. மேலும், அவரின் தலையின் வம்ட்டில் ரம்பம் வைக்கப்பட்டு இரண்டு கூறுகளாக அவர் பிளக்கப்படுவார். ஆனால், அதுவும் அவரை அவரின் மார்க்கத்திலிருந்து திருப்பி விடவில்லை. நிச்சயம் அல்லாஹ் இந்த மார்க்கத்தை முழுமைப்படுத்தியே தீருவான். எந்த அளவிற்கென்றால், (தன் வாகனத்தில்) சவாரி செய்து வரும் ஒருவன், (யமன் நாட்டிலுள்ள)'ஸன்ஆ‘விலிருந்து'ஹளரமவ்த்' வரை பயணம் செய்து செல்வான். (வழியில்) அவனுக்கு அல்லாஹ்வைப் பற்றிய அச்சத்தைப் தவிர வேறெந்த அச்சமும் இருக்காது.

வேறோர் அறிவிப்பில்,'தன் ஆடுகளின் விஷயத்தில் ஓநாய் பற்றிய அச்சத்தையும் தவிர‘' என்னும் வாக்கியத்தை பயான்(ரஹ்) அதிகப்படியாக அறிவித்தார்கள். 88

ஹதீஸ் 3853. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்காவில்)'அந்நஜ்கி' என்னும் (56-வது) அத்தியாயத்தை ஓதினார்கள். (ஓதி முடித்த) பிறகு (இறுதியில் ஓதலுக்குரிய) சஜ்தா செய்தார்கள். ஒரேயொரு மனிதனைத் தவிர (நபி - ஸல் அவர்களுடன் சேர்ந்து) சஜ்தா செய்யாதவர்கள் எவரும் இருக்கவில்லை. அந்த மனிதன் (தரையில் சிரம் பணியாமல்) ஒரு கைப்பிடியளவு சிறு கூழாங்கற்களை எடுத்து (முகத்தருகே) உயர்த்தி (அப்படியே) அதன் மீது சஜ்தா செய்து,'இது எனக்குப் போதும்‘' என்று சொல்லிக் கொண்டிருந்ததை கண்டேன். பின்னால், அவன் அல்லாஹ்வை நிராகரித்தவனாகக் கொல்லப்பட்டதையும் பார்த்தேன். 89

ஹதீஸ் 3854. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஒரு முறை (கஅபா அருகில்) நபி(ஸல்) அவர்கள் (தொழுது) சிர வணக்கம் (சஜ்தா) செய்து கொண்டிருக்க, அவர்களைச் சுற்றிலும் குறைஷிகளில் சிலர் இருந்தனர். அப்போது (குறைஷித் தலைவன்) உக்பா இப்னு அபீ முஐத், ஒட்டகக் கருவைச் சுற்றியுள்ள மெல்லிய சவ்வைக் கொண்டு வந்து, நபி(ஸல்) அவர்களின் முதுகின் மீது எறிந்தான். நபி(ஸல்) அவர்கள் தம் தலையை உயர்த்தவில்லை. உடனே ஃபாத்திமா(ரலி) வந்து, அதை நபி(ஸல்) அவர்களின் முதுகிலிருந்து எடுத்துவிட்டு, அதைச் செய்தவனுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! குறைஷித் தலைவர்களான அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம், உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, உமய்யா இப்னு கலஃப் அல்லது உபை இப்னு கலஃப்... ஆகியோரை நீ கவனித்துக் கொள்‘' என்று பிரார்த்தித்தார்கள். (அதன்படியே) இவர்கள் அனைவரும் பத்ருப்போரில் கொல்லப்பட்டு ஒரு (பாழுங்) கிணற்றில் போடப்பட்டிருக்கக் கண்டேன் உமய்யா இப்னு கலஃப் அல்லது உபையைத் தவிர. அவனுடைய மூட்டுகள் துண்டாம் (தனித்தனியாகி) விட்டிருந்த காரணத்தால் அவன் மட்டும் கிணற்றில் போடப்படவில்லை.

உமய்யா இப்னு கலஃப் அல்லது உபை இப்னு கலஃப் (இந்த இருவரில் நபி(ஸல்) அவர்கள் எவரைக் கூறினார்கள்) என்று சந்தேகப்படுவர் அறிவிப்பாளர்களில் ஒருவரனா ஷுஅபா(ரஹ்) அவர்களாவார். 90

ஹதீஸ் 3855. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறியாதவது:

அப்துர் ரஹ்மான் இப்னு அப்ஸா(ரலி),'(தக்க காரணமின்றிக் கொல்வதைத் தடைசெய்து)'அல்லாஹ் கண்ணியத்திற்குரியதாக்கிய எந்த (மனித) உயிரையும் நியாயமின்றிக் கொலை செய்யாதீர்கள்'' என்னும் இந்த (திருக்குர்ஆன் 06:151, 17:33) இரண்டு (குர்ஆன்) வசனங்களுக்கும்,'ஓர் இறைநம்பிக்கையாளரை ஒருவன் வேண்டுமென்றே கொலை செய்தால் அவனுக்குரிய தண்டனை நரகமாகும். மறுமை நாளில் அவனுக்கு இருமடங்கு தண்டனை அளிக்கப்படும். என்றென்றும் இழப்புக்குரியவனாய் அவன் அதில் வீழ்ந்து கிடப்பான்' என்னும் (திருக்குர்ஆன் 04:93) வசனத்திற்குமிடையே இணக்கமான கருத்துக் காண்பது எப்படி என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் நீ கேள்'' என்று எனக்குக் கட்டளையிட்டார்கள். 91 நான் (சென்று) இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அவர்கள்,'திருக்குர்ஆனில்,'கருணையாளனின் உண்மையான அடியார்கள் எத்தகையவர்கள் எனில், .. (தக்க காரணமின்றி) கொல்லக் கூடாதென்று தடைசெய்து) அல்லாஹ் கண்ணியத்திற்குரிய தாக்கியுள்ள மனித உயிரை நியாயத்துடனே தவிர கொல்ல மாட்டார்கள்.!"என்னும் அத்தியாயம் அல் ஃபுர்கானின் 68-ம் வசனம் அருளப்பட்டபோது மக்காவாசிகளில் இணைவைப்போராயிருந்தவர்கள்,'அல்லாஹ் கண்ணியத்திற்குரியதாய் ஆக்கிய மனித உயிரை நாங்கள் கொன்றிருக்கிறோம் அல்லாஹ்வுடன் மற்ற தெய்வத்தையும் அழைத்திருக்கிறோம் மேலும், தீய செயல்களையும் செய்திரக்கிறோம் (நாங்கள் நரகத்தில் தான் வீழ்நது கிடக்க வேண்டுமா? எங்களுக்கு இஸ்லாம் எப்படிப் பயன்தரும்?)'' என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்,'பாவமன்னிப்புக் கோரி நம்பிக்கை கொண்டு நற்செயலும் புரிகிறவர் தவிர! இத்தகையோரின் தீமைகளை அல்லாஹ் நன்மைகளாக மாற்றிவிடுவான். மேலும், அவன் பெரும் மன்னிப்பாளனும் கிருபையாளனும் ஆவான்'' என்றும் (திருக்குர்ஆன் 25:70-ம்) வசனம் அருளினான். இது குற்றம் புரிந்த நிராகரிப்பாளர்களுக்கான சட்டமாகும். அத்தியாயம் அந்நிஸாவில் (93-ம் வசனத்தில்) கூறப்பட்டிருப்பது இஸ்லாத்தையும் அதன் சட்டதிட்டங்களையும் அறிந்த (முஸ்லிமான) ஒரு மனிதன் விஷயத்தில் ஆகும். அவன் அறிந்த பிறகும் எவரையாவது வேண்டுமென்றே கொலை செய்தால் அவனுக்குரிய தண்டனை நரகமாகும். அதில் அவன் நிரந்தரமாக விழுந்து கிடப்பான்'' என்று பதிலளித்தார்கள். 92

அப்துர் ரஹ்மான் இப்னு அப்ஸா(ரலி) கூறினார்:

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் இந்தக் கருத்தை முஜாஹித்(ரஹ்) அவர்களிடம் சொன்னேன். அதற்கு அவர்கள்,'தன் குற்றத்திற்காக வருந்தி (பாவமன்னிப்புக்கோரி)யவனைத் தவிர (மற்றவர்கள் தாம் நிரந்தரமாக நரகம் புக வேண்டியிருக்கும்)'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3856. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்களிடம்,'இணைவைப்பாளர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு இழைத்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானது எது என்று எனக்கு அறிவியுங்கள்'' என்று கேட்டேன். அவர்கள்,'நபி(ஸல்) அவர்கள் கஅபாவின்'ஹிஜ்ர்' பகுதியில் தொழுது கொண்டிருந்தபோது, உக்பா இப்னு அபீ முஐத் என்பவன் முன்னோக்கி வந்து, தன் துணியை நபி(ஸல்) அவர்களின் கழுத்தில் வைத்து (முறுக்கி), அவர்கள் மூச்சுத் திணறும்படி (அவர்களின் கழுத்தைக்) கடுமையாக நெறித்தான். அப்போது அபூ பக்ர்(ரலி) முன்னால் வந்து அவனுடைய தோளைப் பிடித்து நபி(ஸல்) அவர்களைவிட்டுவிலக்கினார்கள். மேலும்,'என் இறைவன் அல்லாஹ் தான்' என்று சொல்கிறார் என்பதற்காகவா ஒரு மனிதரை நீங்கள் கொல்கிறீர்கள்'' (திருக்குர்ஆன் 40:28) என்று கேட்டார்கள்.

இதே போன்று இன்னும் சில அறிவிப்புகள் ஆரம்பத்தில் சிறு சிறு மாற்றங்களுடன் வந்துள்ளன. 93

அபூ பக்ர் அஸ்ஸித்தீக்(ரலி) இஸ்லாத்தை ஏற்றது. 94

ஹதீஸ் 3857. அம்மார் இப்னு யாசிர்(ரலி) அறிவித்தார்

(இஸ்லாத்தின் ஆரம்பக்காலத்தில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஐந்து அடிமைகளும் இரண்டு பெண்களும் (அடிமையல்லாத ஆண்களில்) அபூ பக்ர்(ரலி) அவர்களும் மட்டுமே இருக்கக் கண்டேன். 95

ஸஅத் இப்னு அபீ' வக்காஸ்(ரலி) இஸ்லாத்தை ஏற்றது.

ஹதீஸ் 3858. ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அறிவித்தார்

ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி), 'நான் இஸ்லாத்தை ஏற்ற நாளில் (தான் மற்றவர்களும் இஸ்லாத்தை ஏற்றனர். அந்நாளில்) தவிர, (அதற்கு முன்பு) வேறெவரும் இஸ்லாத்தை ஏற்றிடவில்லை. நான் இஸ்லாத்தில் மூன்றிலொரு பாகமாக ஏழு நாள்கள் (வரை) இருந்தேன்' என்று சொல்லக் கேட்டேன். 96

ஜின்கள் பற்றிய குறிப்பு 97

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) நீங்கள் சொல்லுங்கள்: எனக்கு இவ்வாறு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அனுப்பப்பட்டுள்ளது: ஜின்களில் ஒரு குழுவினர் கவனமாகக் கேட்டனர். (திருக்குர்ஆன் 72:1-15) 98

ஹதீஸ் 3859. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் மகன் அப்துர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஜின்கள் குர்ஆனை செவிமடுத்த இரவில், நபியவர்களை (இன்னாரென்று) அவர்களுக்கு அறிவித்துக் கொடுத்தவர் யார்?' என்று நான் மஸ்ரூக்(ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஜின்களுக்கு நபி(ஸல்) அவர்கள் இறைத்தூதர் தாம் என்று) அவர்களை அறிவித்துக் கொடுத்தது ஒரு மரம் தான் என உங்கள் தந்தை - அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) எனக்கு அறிவித்தார்கள்' என்று கூறினார்கள். 99

ஹதீஸ் 3860. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

உளூச் செய்யும் தண்ணீரும் (இயற்கைத்) தேவைக்கான தண்ணீரும் வைத்திருக்கும் குவளையை நபி(ஸல்) அவர்களுடன் நான் சுமந்து செல்வேன். (ஒரு நாள்) அவற்றைச் சுமந்து கொண்டு நான் நபி(ஸல்), அவர்களைப் பின்தொடர்ந்து சென்று கொண்டிருந்தபோது, 'யார் அது?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'நான் அபூ ஹுரைரா(ரலி) தான் (வருகிறேன்)' என்று நான் சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், 'நான் (இயற்கைக் கடன் முடித்தபின்) துப்புரவு செய்வதற்காக எனக்குச் சில கற்களைத் தேடி (எடுத்து)க் கொண்டு வா. நீ என்னிடம் எலும்பையோ கெட்டிச் சாணத்தையோ கொண்டு வந்து விடாதே' என்று கூறினார்கள். நான் என் ஆடையின் ஓரத்தில் கற்களை வைத்துச் சுமந்து கொண்டு வந்து அவர்களுக்குப் பக்கத்தில் வைத்துவிட்டுத் திரும்பி விட்டேன். அவர்கள் (இயற்கைக் கடனை) முடித்ததும் அவர்களுடன் நடந்து சென்றேன். அப்போது, 'எலும்பும் கெட்டிச் சாணமும் வேண்டாம். என்று ஏன் சொன்னீர்கள்?' என்று வேண்டாம். அதற்கு

அவர்கள், 'அவ்விரண்டும் ஜின்களின் உணவாகும். என்னிடம் 'நஸீபீன்' 100 என்னுமிடத்தைச் சேர்ந்த ஜின்களின் குழு ஒன்று வந்தது. அவை நல்ல ஜினகளாயிருந்தன. அவை என்னிடம் உணவு தரும்படி கேட்டன. நான், 'அவை எந்த எலும்பையும் எந்த கெட்டிச் சாணத்தையும் கடந்து சென்றாலும் அதில் உணவைப் பெற வேண்டும்'' என்று அல்லாஹ்விடம் அவற்றுக்காகப் பிரார்த்தித்தேன்'' என்று பதிலளித்தார்கள். 101

அபூ தர் கிஃபாரீ -(ரலி) இஸ்லாத்தை ஏற்ற நிகழ்ச்சி. 102

ஹதீஸ் 3861. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

அபூ தர் (ம்ஃபாரீ) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் இறைத்தூதராக நியமிக்கப்பட்ட செய்தி எட்டியபோது தம் சகோதரிடம், 'இந்த (மக்கா) பள்ளத்தாக்கை நோக்கிப் பயணம் செய்து, 'வானத்திலிருந்து (இறைச்) செய்தி தம்மிடம் வருகிற ஓர் இறைத்தூதர்' என்று தம்மை வாதிடுகிற இந்த மனிதரைக் குறித்த விவரத்தை (திரட்டி) எனக்கு அறிவி. அவரின் சொல்லைக் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகு என்னிடம் வா!"என்று கூறினார்கள். உடனே அச்சகோதரர் புறப்பட்டுச் சென்று நபி (ஸல்) அவர்களை அடைந்து அவர்களின் சொல்லைக் கேட்டார். பிறகு, அபூ தர்ரிடம் திரும்பிச் சென்று, 'அவர் நற்குணங்களைக் கைக் கொள்ளும்படி (மக்களுக்குக்) கட்டளையிடுவதை பார்த்தேன். ஒரு வாக்கையும், (செவியுற்றேன்) அது கவிதையாக இல்லை'' என்று கூறினார். அபூ தர், 'நான் விரும்பியதை நீ திருப்திகரமாகச் செய்ய வில்லை'' என்று கூறிவிட்டு, பயணஉணவு எடுத்துக் கொண்டு, நீர் நிரம்பிய தன்னுடைய தோல்பை ஒன்றைச் சுமந்து கொண்டு (அபூ தர்) புறப்பட்டார். மக்காவை வந்தடைந்து (கஅபா) பள்ளிவாசலுக்குச் சென்றனர். நபி (ஸல்) அவர்களை அவர் அறியாதவராயிருந்த காரணத்தால் அவர்களைத் தேடினார். (அங்கிருந்த குறைஷிகள் தமக்கு தொல்லை தரக்கூடும் என்பதால் அவர்களிடம்) நபியவர்களைப் பற்றிக் கேட்க அவர் விரும்பவில்லை. இரவில் சிறிது நேரம் கழிந்துவிட்டது. அப்போது அலீ (ரலி) அவரைக் கண்டு, அவர் அந்நியர் என்று புரிந்து கொண்டார்கள். அலீயைக் கண்டவுடன் (அலீ - ரலி - அவர்கள் அபூ தர்ரிடம், 'வீட்டுக்கு வாருங்கள்'' என்று சொல்ல) அபூ தர் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார். விடியும் வரை அவர்களில் ஒருவரும் (தம்முடனிருந்த) மற்றவரிடம் எதைப் பற்றியும் கேட்டுக் கொள்ளவில்லை. பிறகு அபூ தர் தம் தோல்பையையும் தம் பயண உணவையும் சுமந்து கொண்டு பள்ளிவாசலுக்குச் சென்றார். அன்று மாலையாகும் வரை நபி (ஸல்) அவர்கள் தம்மைப் பார்க்காத நிலையிலேயே அன்றைய பகலைக் கழித்தார். பிறகு (மாலையானதும்) தம் படுக்கைக்குத் திரும்பினார். அப்போது அலீ (ரலி) அவரைக் கடந்து சென்றார்கள். 'தம் தங்குமிடத்தை அறிந்து கொள்ள மனிதருக்கு வேளை இன்னும் வரவில்லையா?' என்று கேட்டுவிட்டு அவரை (ப் படுக்கையிலிருந்து) எழுப்பித் தம்முடன் அழைத்துச் சென்றார்கள். ஒருவர் மற்றவரிடம் எதைப் பற்றியம் கேட்டுக் கொள்ளவில்லை. இறுதியில் மூன்றாம் நாள் வந்தபோது அலீ (ரலி) அதே போன்று திரும்பச் செய்தார்கள். தம்முடன் அவரைத் தங்கவைத்துக் கொண்டு பிறகு, (அபூ தர்ரிடம்), 'நீங்கள் எதற்காக (இங்கே) வந்தீர்கள் என்று எனக்குச் சொல்லக் கூடாதா?' என்று கேட்டார்கள். அவர், '(நான் விரும்பி வந்ததை அடைய) எனக்குச் சரியான வழிகாட்டுவதற்கு நீங்கள் உறுதி மொழியளித்தால் நான் (எதற்காக வந்தேன் என்று சொல்லச்) செய்கிறேன்'' என்று பதிலளித்தார். அலீ (ரலி) அவர்களும் அவ்வாறே உறுதிமொழியளிக்க, அபூ தர் (தாம் வந்த காரணத்தை) அவர்களுக்குத் தெரிவித்தார். அலீ (ரலி), 'அவர்கள் உண்மையானவர்களே! அவர்கள் இறைத்தூதர் தாம். காலையானதும் நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். நான் உங்களுக்குத் தீங்கு நேரும் என்று அஞ்சுகிற எதையாவது கண்டால் நான் தண்ணீர் ஊற்றுவதைப்

போன்று நின்று கொள்வேன். 103 நான் போய்க் கொண்டேயிருந்தால் நான் நுழைய வேண்டிய இடத்தில் நுழையும் வரை என்னைப் பின்தொடருங்கள்'' என்று கூறினார்கள். அபூ தர்ரும் அவ்வாறே செய்தார். அலு அவர்களைப் பின்தொடர்ந்து நடந்தார். இறுதியில், அலீ(ரலி), நபி(ஸல்) அவர்கள் தங்கியிருந்த வீட்டில் நுழைந்தபோது அவர்களுடன் அவரும் நுழைந்தார். நபி(ஸல்) அவர்களின் சொல்லைக் கேட்டு அதே இடத்தில் இஸ்லாத்தை ஏற்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவரிடம், 'நீங்கள் உங்கள் (ஃம்ஃபார்) சமுதாயத்தாரிடம் திரும்பிச் சென்று என் கட்டளை உங்களிடம் வந்து சேரும் வரை (இஸ்லாத்தின் செய்தியை) அவர்களுக்குத் தெரிவியுங்கள்'' என்று கூறினார்கள். அபூ தர், 'என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீதாணையாக! நான் இச்செய்தியை (இறைமறுப்பாளர்களான) அவர்களிடையே உரக்கக் கூவிச் சொல்வேன்'' என்று சொல்லிவிட்டு வெளியேறி, பள்ளிவாசலுக்கு வந்து, உரத்த குரலில், 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும், முஹம்மத்(ஸல்) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) என்றும் உறுதி சொல்கிறேன்'' என்று கூறினார். உடனே, அங்கிருந்த (இறைமறுப்பாளர்களின்) கூட்டத்தார் எழுந்து அவருக்கு வலி ஏற்படும் அளவிற்கு அவரை அடித்தார்கள். அப்பாஸ்(ரலி) வந்து, அவரின் மீது கவிழ்ந்து படுத்து (அடி விழாமல் தடுத்து)க் கொண்டார்கள். 'உங்களுக்குக் கேடுண்டாகட்டும். இவர் கிஃபார் குலத்தைச் சேர்ந்தவர் என்பதும், உங்கள் வணிகர்கள் செல்லும்வழி (ஃம்ஃபார் குலத்தாரின் ஆதிக்கத்திற்குட்பட்ட) ஷாம் நாட்டுப் பாதையில் தான் உள்ளது என்பதும், உங்களுக்குத் தெரியாதா?' என்று சொல்லி அவர்களிடமிருந்து அபூ தர்ரைக் காப்பாற்றினார்கள். அடுத்த நாள் மீண்டும் (பள்ளிவாசலுக்குச் சென்று) அபூ தர் அதே போன்று செய்ய குறைஷிகளும் அடித்தபடி அவரின் மீது பாய்ந்தார்கள். உடனே (முன் போன்றே) அப்பாஸ்(ரலி) அபூ தர்ரின் மீது கவிழ்ந்து படுத்தார்கள். 104.

ஸயீத் இப்னு ஸைத்(ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றது. 105

ஹதீஸ் 3862. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரலி) அறிவித்தார்

"அல்லாஹ்வின் மீதாணையாக! உமர் அவர்கள், நான் இஸ்லாத்தை ஏற்றதைக் கண்டித்து அவர் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பு என்னைக் கட்டி வைத்(து தண்டித்)த (அனுபவத்)தை நான் கண்டிருக்கிறேன். நீங்கள் உஸ்மான்(ரலி) விஷயத்தில் (அன்னாரைக் கொலை செய்து) நடந்து கொண்டதைக் கண்டு (மனம் தாளாமல்), உஹுது மலை தன்னுடைய இடத்தைவிட்டுப் பெயர்ந்துவிட்டால் அதுவும் சரியானதே'' என்று ஸயீத் இப்னு ஸைத் இப்னு அம்ர் இப்னி நுஃபைல்(ரலி) கூஃபாவின் மஸ்ஜிதில் வைத்துக்கூற கேட்டேன்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) இஸ்லாத்தை ஏற்றது.

ஹதீஸ் 3863. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) இஸ்லாத்தை ஏற்றதிலிருந்து நாங்கள் வலிமையும் கண்ணியமும் உடையவர்களாகத் திகழலானோம்.

இதை கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார். 106

ஹதீஸ் 3864. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(என் தந்தை உமர் - ரலி - அவர்கள் இஸ்லாத்தை ஏற்றதால் தம்மைக் குறைஷிகள் கொல்ல வந்தார்கள் என்று) அஞ்சியவர்களாக(த் தம்) இல்லத்தினுள் அவர்கள் இருந்தபோது, ஆஸ் இப்னு

வாயில் அஸ்ஸஹ்மீ அபூ அம்ர் (எனும் குறைஷித் தலைவர்) 107 கோடு போட்ட சால்வை ஒன்றைப் போட்டுக் கொண்டு பட்டினால் தைக்கப்பட்ட சட்டையொன்றை அணிந்து கொண்டு வந்து, 'என்ன விஷயம்!" என்று கேட்டார் - அவர் அறியாமைக் காலத்தில் எங்கள் நட்புக் குலமாயிருந்த 'பனு சஹ்கி' குலத்தைச் சேர்ந்தவர் - உமர் அவர்கள், 'உங்கள் குலத்தார் நான் இஸ்லாத்தை ஏற்றதற்காக என்னைக் கொல்ல எண்ணுகிறார்கள்'' என்று அவரிடம் சொல்ல அதற்கவர், 'உன்னிடம் (நெருங்க அவர்களுக்கு) வழியில்லை'' என்று கூறினார். (உமர் - ரலி - கூறுகிறார்கள்:) 'இவ்வாறு அவர் சொன்ன பிறகு நான் அமைதியடைந்தேன்!" உடனே, 'ஆஸ் இப்னு வாயில்' வெளியே சென்று (மக்கா) பள்ளத்தாக்கே நிரம்பி வழியும்படி திரண்டு நின்ற மக்களைச் சந்தித்து, 'நீங்கள் எங்கே நாடிப் போகிறீர்கள்?' என்று கேட்டார். அவர்கள், 'மதம் மாறி (நமக்கு துரோகம் செய்து) விட்ட இந்த கத்தாபின் மகனைத் தான் நாடிச் செல்கிறோம்'' என்று பதிலளித்தார்கள். அதற்கு அவர், 'அவரிடம் (நெருங்க அவர்களுக்கு) வழியில்லை'' என்று கூறினார். (உமர் - ரலி - கூறுகிறார்கள்:) 'இவ்வாறு அவர் சொன்ன பிறகு நான் அமைதியடைந்தேன்'' உடனே, 'ஆஸ் இப்னு வாஇல்' வெளியே சென்று (மக்கா) பள்ளத்தாக்கே நிரம்பி வழியும்படி திரண்டு நின்ற மக்களைச் சந்தித்து, 'நீங்கள் எங்கே நாடிப் போகிறீர்கள்?' என்று கேட்டார். அவர்கள், 'மதம் மாறி (நமக்கு துரோகம் செய்து) விட்ட இந்த கத்தாபின் மகனைத் தான் நாடிச் செல்கிறோம்'' என்று பதிலளித்தார்கள். அதற்கு அவர், 'அவரிடம் (நெருங்க உங்களுக்கு) வழியில்லை'' என்று சொல்ல, (வேறு வழியின்றி) மக்கள் திரும்பிச் சென்றுவிட்டனர்.

ஹதீஸ் 3865. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

உமர் (ரலி) இஸ்லாத்தைத் தழுவியபோது மக்கள் அவர்களின் வீட்டருகே ஒன்று திரண்டு, 'உமர் மதம் மாறிவிட்டார்'' என்று சொலலலானார்கள். அப்போது நான் சிறுவனாக என் வீட்டுக் கூரை மீது அமர்ந்து கொண்டிருந்தேன் - அப்போது ஒருவர் பட்டு அங்கி ஒன்றை அணிந்து கொண்டு வந்து, 'உமர் மதம் மாறிவிட்டார். அதனால் என்ன? நான் அவருக்கு அபயம் அளித்திருக்கிறேன் (எனவே, அவரை யாரும் ஒன்றும் செய்ய முடியாது)'' என்று கூறினார். மக்கள் (அவர் சொன்னதைக் கேட்டு) அங்கிருந்து கலைந்து சென்றுவிட்டதைப் பார்த்தேன். நான், 'யார் இவர்?' என்று கேட்டேன். மக்கள், '(இவர்தான்) ஆஸ் இப்னு வாஇல்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3866. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

உமர் (ரலி) (ஒரு விஷயத்தைப் பற்றி) 'நான் இதைக் குறித்து இப்படிக் கருதுகிறேன்'' என்று சொல்ல நான் கேட்பேனாயின், அந்த விஷயம் அவர்கள் கூறியதைப் போன்றுதான் இருக்கும். ஒரு முறை உமர் (ரலி) (தம் இடத்தில்) அமர்ந்திருந்த பொழுது அழகான ஒருவர் அவர்களைக் கடந்து சென்றார். அப்போது உமர் (ரலி), 'ஒன்று நான் (இவர் அஞ்ஞானக் கலாசாரத்தில் இருப்பவர் என்று) நினைத்து தவறாயிருக்க வேண்டும் அல்லது (நான் நினைத்தது சரியாக இருக்குமானால்) இந்த மனிதர் தம் (பழைய) அஞ்ஞானக் காலத்து மார்க்கத்திலேயே இருக்கவேண்டும் அல்லது (அஞ்ஞானக் கால) அம்மக்களுக்குக் குறிசொல்பவராக (சோதிடராக) இருந்திருக்க வேண்டும். அந்த மனிதரை என்னிடம் அழைத்து வாருங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவர், உமர் (ரலி) அவர்களிடம் அழைத்து வரப்பட்டார். உமர் (ரலி), தாம் (முன்பு சந்தேகத்துடன்) கூறியதையே அந்த மனிதரிடமும் கேட்டார்கள். அந்த மனிதர், (தன்னைப் பற்றி உமர் முன் வைத்த சந்தேகத்தினால் வெறுப்படைந்தவராய்) 'இன்று ஒரு முஸ்லிமான மனிதருக்கு கொடுக்கப்பட்ட வரவேற்பு போன்று நான் (எப்போதும்) பார்த்ததில்லை'' என்று கூறினார். உமர் (ரலி), 'நீ எனக்கு (அறியாமைக் காலத்தில் நடந்த) செய்தியைச் சொல்லத் தான் வேண்டும் என்று விரும்புகிறேன்'' என்று கூறினார்கள். அதற்கு

அவர்,'நான் அஞ்ஞானக் காலத்தில் அம்மக்களின் சோதிடனாக (குறிகாரனாக) இருந்தேன்'' என்று கூறினார். உமர்(ரலி),'உன்னுடைய பெண் ஜின் உன்னிடம் கொண்டு வந்த செய்திகளிலேயே மிகவும் வியப்புக்குரியது எது?' என்று கேட்டார்கள். அம்மனிதர்,'நான் ஒரு நாள் கடைவீதியில் இருந்தபோது, பெட்டை ஜின் என்னிடம் வந்தது. அதனிடம் பீதியைக் கண்டேன். அப்போது'ஜின்கள் அடைந்துள்ள அச்சத்தை நீங்கள் பார்க்கவில்லையா? அவை (மேலுலகச் செய்திகளை ஒட்டுக் கேட்க முடியாமல்) தோல்வியுற்றுத் திரும்புவதால் அடைந்துளள நிராசையையும் நீங்கள் பார்க்கவில்லையா? அவை வாலிப ஒட்டகங்களையும் அவற்றின் (சேண இருக்கையின் கீழே விரிக்கப்படும்) துணியையும் பின்பற்றிச் செல்வதைக் காணவில்லையா?' 108 என்று கேட்டது'' என்று கூறினார். உமர்(ரலி),'இவர் கூறினார். உமர்(ரலி),'இவர் உண்மை கூறினார். நான் (கஅபாவில்) இணைவைப்பவர்களின் கடவுள் (சிலை)களுக்கு அருகே தூங்கிக் கொண்டிருந்தபோது, ஒருவர் காளைக் கன்று ஒன்றைக் கொண்டு வந்து (பலி கொடுத்து) அதை அறுத்தார். அப்போது அசரீரிக் குரல் ஒன்று வந்தது. அதை விடக் கடுமையான குரலில் குரல் கொடுப்பவர் எவரையும் நான் செவிமடுத்ததேயில்லை. அது,'பம்ரங்கமாகப் பகைத்துக் கொண்டவரே! வெற்றிகரமான ஒரு விஷயம். பேச்சுத் திறனுள்ள ஒருவர்,'(அல்லாஹ்வே!) வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறெவருமில்லை' என்று சொல்வார்'' என்று குரல் கொடுத்தது. உடனே (இணை வைக்கும்) மக்கள் குதித்தெழுந்தார்கள். நான்,'இந்த மர்மக் குரலுக்குப் பின்னால் என்ன உள்ளது என்பதை அறிந்து கொள்ளாமல் விட மாட்டேன்'' என்று சொன்னேன். பிறகு (மீண்டும்) அந்த அசரீரி'பம்ரங்கமாகப் பகைத்துக் கொண்டவரே! வெற்றிகரமான ஒரு விஷயம். பேச்சுத் திறனுள்ள ஒருவர்,'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று சொல்வார்'' என்று குரல் கொடுத்தது. நான் எழுந்து சென்று விட்டேன். சிறிது காலத்திற்குள்ளாகவே'இதோ ஒரு நபி (வந்துவிட்டார்)'' என்று சொல்லப்பட்டது.

ஹதீஸ் 3867. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

"உமர் அவர்கள், நானும் அவரின் சகோதரியும் இஸ்லாத்தை எற்றதற்காக என்னைக் கட்டி வைத்(து தண்டித்)த (அனுபவத்)தை நான் கண்டிருக்கிறேன் - அப்போது அவர் முஸ்லிமாயிருக்கவில்லை. - உஸ்மான்(ரலி) விஷயத்தில் (அன்னாரைக் கொலை செய்து) நீங்கள் நடந்து கொண்ட (விதத்)தைக் கண்டு (மனம் தாளாமல்) உஹுது மலை தன்னுடைய இடத்தைவிட்டுப் பெயர்ந்துவிட்டால் அதுவும் சரியானதே'' என்று (கூஃபாவின் மஸ்ஜிதில் கூடியிருந்த) மக்களிடம் ஸயீத் இப்னு ஸைத்(ரலி) கூற கேட்டிருக்கிறேன். 109

சந்திரன் பிளவுண்ட நிகழ்ச்சி

ஹதீஸ் 3868 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (அவர்கள் இறைத்தூதர் தாம் என்பதை உறுதிப்படுத்தும் விதத்தில்) தங்களுக்கு ஒரு சான்றைக் காட்டும்படி மக்காவாசிகள் கேட்டுக் கொண்டார்கள். அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் சந்திரனை இரண்டு துண்டுகளாக (பிளந்திருக்கக்) காட்டினார்கள். எந்த அளவிற்கென்றால், மக்கா வாசிகள் அவ்விரு துண்டுகளுக்கிடையே'ஹிரா' மலையைக் கண்டார்கள். 110

ஹதீஸ் 3869. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் மினாவில் இருந்தபோது சந்திரன் (இரண்டு துண்டுகளாகப்) பிளவுபட்டது. உடனே, நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் (இதைப் பார்த்து நினைவில் இருத்தி) சாட்சியாக இருங்கள்'' என்று கூறினார்கள். (அதன்) இரண்டு துண்டுகளில் ஒன்று (ஹிரா) மலையின் திசையில் சென்றது. 111

அறிவிப்பாளர் மஸ்ரூக்(ரஹ்) அவர்களின் ஓர் அறிவிப்பில்'மக்காவில் (சந்திரன்) பிளந்தது'' என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3870. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் சந்திரன் (இரண்டு துண்டுகளாகப்) பிளவுபட்டது. 112

ஹதீஸ் 3871. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

(நபி - ஸல் அவர்கள் காலத்தில்) சந்திரன் (இரண்டு துண்டுகளாகப்) பிளவுபட்டது.

அபிசீனிய ஹிஜ்ரத் 113

ஆயிஷா(ரலி) கூறினார்: நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் தாயகம் (மக்காவைத்) துறந்து (ஹிஜ்ரத் செல்லுகிற நாடு (கருங்கற்கள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கிடையே பேரீச்ச மரங்கள் கொண்டதாக எனக்கு (கனவில்) காட்டப்பட்டது. 114

(முஸ்லிம்களில்) சிலர் மதீனாவை நோக்கி ஹிஜ்ரத் செய்தனர். அப்போது அபிசீனியாவுக்கு ஹிஜ்ரத் சென்றிருந்தவர்கள் மதீனாவுக்குத் திரும்பினர்.

இது குறித்து அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அவர்களும் அஸ்மா பின்த் உமைஸ்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்துள்ளனர். 115

ஹதீஸ் 3872. உபைதுல்லாஹ் இப்னு அதீ இப்னி கியார்(ரஹ்) அறிவித்தார்

மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அவர்களும் அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்வத் இப்னு அப்தி யகூஸ்(ரஹ்) அவர்களும் என்னிடம்,'நீங்கள் உங்களுடைய (குலவழி) மாமா உஸ்மான்(ரலி) அவர்களிடம், அவர்களின் தாய் வழிச் சகோதரர் வலீத் இப்னு உக்பா பற்றிப் பேசாமலிருப்பது ஏன்? மக்கள் வலீதின் செயல்பாடுகள் குறித்து அதிகமாகக் குறை கூறுகிறார்களே!"என்று கேட்டார்கள். எனவே, நான் உஸ்மான்(ரலி) தொழுகைக்காக காத்திருந்தேன். அவர்களிடம்'எனக்கு உங்களிடம் சற்று(ப் பேச வேண்டிய) தேவை உள்ளது. அது (உங்களுக்கு நான் கூற விரும்பும்) அறிவுரை'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள்,'மனிதரே! உம்மிடமிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்'' என்று கூறினார்கள். உடனே, நான் திரும்பி (அவ்விருவரிடமும்) வந்தேன். நான் தொழுது முடித்தபோது மிஸ்வர்(ரலி) அவர்களுக்கும் இப்னு அப்தி யகூஸ்(ரஹ்) அவர்களுக்கும் அருகில் (சென்று) அமர்ந்து, உஸ்மான்(ரலி) அவர்களிடம் நான் (வலீத் இப்னு உக்பா விஷயமாகக்) கூறியதையும் அதற்கு அவர்கள் என்னிடம் சொன்ன பதிலையும் தெரிவித்தேன். அப்போது அவர்கள் இருவரும்,'உங்கள் மீதிருந்த கடமையை நீங்கள் நிறைவேற்றி விட்டீர்கள்!"என்று கூறினார்கள். அவ்விருவருடனும் நான் அமர்ந்திருந்தபோது உஸ்மான்(ரலி) அவர்களின் தூதுவர் (என்னைத் தேடி) வர, அவ்விருவரும்,'அல்லாஹ உங்களை சோதனைக்குள்ளாக்கிவிட்டான்!"என்று கூறினர். உடனே நான் (தூதுவருடன் புறப்பட்டு) உஸ்மான்(ரலி) அவர்களிடம் சென்றேன். உஸ்மான்(ரலி),'நீங்கள் சற்று முன் கூறி(ட விரும்பி)ய உங்கள் அறிவுரை என்ன?' என்று கேட்டார்கள். அதற்கு நான் ஏகத்துவ உறுதி மொழியைக் கூறி (இறைவனைப்

புகழ்ந்துவிட்டு)'அல்லாஹ், முஹம்மத்(ஸல்) அவர்களை (சத்திய மார்க்கத்துடன்) அனுப்பி அவர்களின் மீது இறை வேதத்தையும் இறக்கியருளினான். அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் அழைப்புக்கு பதிலளித்து அவர்களின் மீது நம்பிக்கை கொண்டவர்களில் நீங்களும் ஒருவராயிருந்தீர்கள். மேலும், முதல் இரண்டு ஹிஜ்ரத்துகளை மேற்கொண்டீர்கள். 116 நீங்கள் அல்லாஹ்வின் தூதருடன் தோழமை கொண்டு அவர்களின் வழிமுறையைப் பார்த்திருக்கிறீர்கள்?' என்று கேட்க நான்,'இல்லை. ஆனால், திரைக்கப்பால் இருக்கும் கன்னிப் பெண்களிடம் (கூட) அல்லாஹ்வின் தூதருடைய கல்வி சென்றடைந்து கொண்டிருக்கும் (போது, அந்த) அளவு கல்வி என்னிடம் வந்து சேர்ந்துள்ளது (குறித்து வியப்பில்லை.)'' என்று பதில் சொன்னேன். உடனே உஸ்மான்(ரலி), ஏகத்துவ உறுதி மொழியைக் கூறி,'அல்லாஹ் முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பி அவர்களுக்கு வேதத்தையும் அருளினான். அப்போது, அல்லாஹ்வின் அழைப்புக்கும் அல்லாஹ்வின் தூதருடைய அழைப்புக்கும் பதிலளித்தவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். மேலும், அவர்கள் எந்த வேதத்தைக் கொடுத்தனுப்பப்பட்டார்களோ அதை நான் நம்பி ஏற்றுக் கொண்டேன். நான் முதல் இரண்டு ஹிஜ்ரத்துகளையும் மேற்கொண்டேன். - நீங்கள் சொன்னதைப் போல் நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தோழமை கொண்டேன் அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்தேன். எனவே, அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் அவர்களை இறக்கச் செய்யும் வரை நான் அவர்களுக்கு மாறு செய்யவுமில்லை அவர்களை ஏமாற்றவுமில்லை. பிறகு அல்லாஹ் அபூ பக்ர் அவர்களை கலீஃபாவாக (ஆட்சியாளராக) ஆக்கினான். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களுக்கு மாறு செய்யவுமில்லை அவர்களை ஏமாற்றவுமில்லை. பிறகு நான் கலீஃபாவாக (ஆட்சியாளராக) ஆக்கப்பட்டேன். எனவே, அவர்களுக்ககிருந்தது போன்ற அதே உரிமை எனக்கில்லையா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம் (உங்களுக்கும் அதே போன்ற உரிமை இருக்கிறது)'' என்றேன். அவர்கள்,'அப்படியென்றால் உங்களைக் குறித்து எனக்கு எட்டுகிற (என்னைக் குறை கூறும்) இந்தப் பேச்சுகளெல்லாம் என்ன? நீங்கள் வலீத் இப்னு உக்பா தொடர்பாக சொன்னவற்றில் இறைவன் நாடினால் விரைவில் நான் சரியான நடவடிக்கையை எடுப்பேன்!"என்று கூறினார்கள். பிறகு வலீத் இப்னு உக்பாவுக்கு (எதிராக சாட்சிகள் கிடைத்ததால் அவருக்கு) நாற்பது கசையடிகள் தண்டனையாக அறிவித்து, அவருக்கு கசையடிகள் கொடுக்கும் படி அலீ(ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். அலீ(ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். அலீ(ரலி) தாம் வலீதுக்கு கசையடி வழங்கினார்கள். 117

ஹதீஸ் 3873. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

உம்மு ஹபீபா அவர்களும் உம்மு ஸலமா அவர்களும் அபிசீனியாவில் தாங்கள் பார்த்த உருவப் படங்கள் கொண்ட ஒரு கிறிஸ்தவ ஆலயத்தைக் குறித்து (என்னிடம்) பேசினார்கள். 118 மேலும், அவ்விருவரும் நபி(ஸல்) அவர்களிடம் (அதைப் பற்றிக்) கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'(அவர்கள் எத்தகையவர்கள் என்றால்) அவர்களிடையே நல்ல மனிதர் ஒருவர் வாழ்ந்து இறந்துவிடும்போது அவரின் மண்ணறையின் மீது வணக்கத்தலம் ஒன்றைக் கட்டி அதில் (அவருடைய) அந்த உருவங்களை வரைவார்கள். அவர்கள் தாம், மறுமை நாளில் அல்லாஹ்விடம் மக்களிலேயே மிக மோசமானவர்கள்'' என்று கூறினார்கள். 119

ஹதீஸ் 3874. உம்மு காலித் பின்த் காலித்(ரலி) அறிவித்தார்

அபிசீனியா நாட்டிலிருந்து நானும் ஜுவைரிய்யா அவர்களும் வந்தோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்குப் பட்டுத் துணி ஒன்றைக் உடுத்தக் கொடுத்தார்கள். அதில் அடையாளக் குறிகள் சில இருந்தன. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் கரத்தால் அந்த அடையாளங்களைத்

தடவியபடி,'அழகாயிருக்கிறதே! அழகாயிருக்கிறதே!"(என்பதைக் குறிக்க அபிசீனிய மொழியில்'சனா, சனா') என்று கூறலானார்கள். 120

ஹதீஸ் 3875. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும்போது நாங்கள் அவர்களுக்கு சலாம் சொல்லுவோம். உடனே, அவர்கள் எங்களுக்கு பதில் சலாம் சொல்வார்கள். நாங்கள் (அபிசீனிய மன்னர்) நஜாஷீயிடமிருந்து திரும்பி வந்தபோது நபி(ஸல்) அவர்களுக்கு (அவர்கள் தொழுகையிலிருக்கும் போது) சலாம் சொன்னோம். அப்போது அவர்கள் எங்களுக்கு பதில் சலாம் சொல்லவில்லை. நாங்கள்,'இறைத்தூதர் அவர்களே! (நீங்கள் தொழும் போது) நாங்கள் உங்களுக்கு சலாம் சொல்ல, நீங்களும் அதற்கு பதில் சலாம் சொல்லி வந்தீர்களே' என்று கேட்டோம். அதற்கு அவர்கள்,'நிச்சயமாக! தொழுகையில் கவனம் தேவைப்படுகிறது' என்று பதிலளித்தார்கள். 121

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் அல் அஃமஷ்(ரஹ்) (தமக்கு முந்திய அறிவிப்பாளரான) இப்ராஹீம் நகயீ(ரஹ்) அவர்களிடம்,'(நீங்கள் தொழும்போது எவரேனும் சலாம் சொல்லிவிட்டால்) நீங்கள் எப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்டதற்கு இப்ராஹீம்(ரஹ்),'என் மனத்திற்குள் நான் பதில் சலாம் சொல்லிவிடுகிறேன்' என்று கூறினார்.

ஹதீஸ் 3876. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

நாங்கள் யமன் நாட்டில் இருந்தபோது நபி(ஸல்) அவர்கள் (ஹிஜ்ரத் செய்து மக்காவிலிருந்து) வெளியேறிய செய்தி எங்களுக்கு எட்டியது. உடனே நாங்கள் ஒரு கப்பலில் ஏறிப் பயணம் புறப்பட்டோம். எங்கள் கப்பல் (திசைமாறி) எங்களை அபிசீனியாவில் மன்னர் நஜாஷீ அவர்களிடம் கொண்டு (போய் இறக்கிவிட்டுச்) சென்றுவிட்டது. நாங்கள் ஜஅஃபர் இப்னு அபீ தாலிப் அவர்களை(த் தற்செயலாக அங்கே) சந்தித்தோம். நாங்கள் அங்கிருந்து வரும் வரை ஜஅஃபர்(ரலி) அவர்களுடனேயே தங்கினோம். கைபரை நபி(ஸல்) அவர்கள் வெற்றிகொண்டிருந்த வேளையில் சென்று அவர்களை அடைந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள், (எங்களை நோக்கி),'கப்பல்காரர்களே! உங்களுக்குத் தான் இரண்டு ஹிஜ்ரத்துகள்' என்று கூறினார்கள்.

## (அபிசீனிய மன்னர்) நஜாஷீயின் மரணம்.

ஹதீஸ் 3877 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல் அன்சாரீ(ரஹ்) அறிவித்தார்

(மன்னர்) நஜாஷீ இறந்தபோது நபி(ஸல்) அவர்கள்,'இன்று (ஒரு) நல்ல மனிதர் இறந்துவிட்டார். எனவே, எழுந்து நின்று உங்கள் சகோதரர்'அஸ்ஹமா'வுக்காக (ஃகாயிப் ஜனாஸாத் தொழுகை) தொழுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3878. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல் அன்சாரீ(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (அபிசீனிய மன்னர்) நஜாஷீ (இறந்துவிட்டபோது) அவருக்காக (ஃகாயிப் ஜனாஸாத்) தொழுகை தொழுதார்கள். நாங்கள் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னே வரிசையாக நின்று கொண்டோம். நான் இரண்டாவது வரிசையில் அல்லது மூன்றாவது வரிசையில் இருந்தேன்.

ஹதீஸ் 3879. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்'அஸ்ஹமா' அந்நஜாஷீக்காக (ஃகாயிப்) ஜனாஸாத் தொழுகை தொழுதார்கள். அப்போது அவரின் மீதான தொழுகையில் நான்கு தக்பீர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 3880. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபிசீனியாவின் அதிபர் நஜாஷீ அவர்கள் இறந்துவிட்ட செய்தியை அவர் இறந்த நாளன்றே எங்களுக்கு அறிவித்தார்கள். மேலும்,'உங்கள் சகோதரருக்காகப் பாவமன்னிப்புக் கோருங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3881. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களை (ஜனாஸாத் தொழுகை) தொழுமிடத்தில் வரிசையாக நிற்க வைத்து நஜாஷீக்காக ஜனாஸாத் தொழுகை தொழு(வித்)தார்கள் (அதில்) நான்கு தக்பீர்கள் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களுக்கு(ம் அவர்களின் கிளையினருக்கும்) எதிராக, இணை வைத்தோர் எடுத்த சூளுரை.

ஹதீஸ் 3882. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹுனைன் போருக்குச் செல்ல விரும்பியபோது,'நாளை நாம் (போருக்காக) முகாமிடப் போகும் இடம் - இறைவன் நாடினால் -'பனூம்னானா' குலத்தாரின் (முஹஸ்ஸப்) பள்ளத்தாக்கிலாகும். அது அவர்கள்,'நாங்கள் கு∴ப்ரில் (இறைமறுப்பில்) நிலைத்திருப்போம்'' என்று சூளுரைத்த இடமாகும்.

## அபூ தாலிப் அவர்கள் குறித்த சம்பவம்

ஹதீஸ் 3883. அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி) அறிவித்தார்

நான் (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம்,'உங்கள் பெரிய தந்தை (அபூ தாலிபு)க்கு (அவர் செய்த உதவிகளுக்குக் கைமாறாக) நீங்கள் என்ன பயனை அளித்தீர்கள்? ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக, அவர் உங்களை (எதிரிகளின் தாக்குதலிருந்து) பாதுகாப்பவராகவும், உங்களுக்காக (உங்கள் எதிரிகளிடம்) கோபப்படுபவராகவும் இருந்தாரே'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'அவர் இப்போது (கணுக்கால் வரை தீண்டும்) சிறிதளவு நரக நெருப்பில் தான் இருக்கிறார். நான் மட்டும் இல்லையென்றால் அவர் நரகத்தின் அடித்தட்டில் இருந்திருப்பார்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3884. முஸய்யப் இப்னு ஹஸ்ன் இப்னி அபீ வஹ்ப்(ரலி) அறிவித்தார்

அபூ தாலிப் அவர்களுக்கு மரண வேளை வந்துவிட்டபோது நபி(ஸல்) அவர்கள் அவரிடம் சென்றார்கள். அப்போது அபூ ஜஹ்ல் அவரருகே இருந்தான். நபி(ஸல்) அவர்கள்,'என் பெரிய தந்தையே!'லா இலாஹ இல்லல்லாஹ்' - வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று சொல்லுங்கள். இச்சொல்லை (நீங்கள் சொல்லிவிட்டால் அதை) வைத்து (மறுமையில் நரகத்திலிருந்து விடுதலை கேட்டு) உங்களுக்காக அல்லாஹ்விடம் நான் வாதாடுவேன்'' என்று கூறினார்கள். அப்போது அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யாவும்,'அபூ தாலிபே! (பெரியவர், உங்கள் தந்தை) அப்துல் முத்தலிபின் மார்க்கத்தையா புறக்கணிக்கப் போகிறீர்கள்?' என்று கேட்டனர். அவ்விருவரும் இவ்வாறே தொடர்ந்து அவரிடம் பேச இறுதியில் அவர்,'(என் இறப்பு என் தந்தை) அப்துல் முத்தலிபின் மார்க்கத்தில் தான் (நிகழும்)'' என்று அவர்களிடம் கூறினார். எனவே, நபி(ஸல்) அவர்கள்,'நான் உங்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரக்கூடாது என்று) எனக்குத் தடைவிதிக்கப்படும் வரை'' என்று கூறினார்கள். அப்போதுதான்,'இணைவைப்பவர்கள் நரகவாசிகள் தாம் என்பது தெளிவாகிவிட்ட பின்பும் அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருவதற்கு, அவர்கள் உறவினர்களாயிருந்தாலும் கூட

இறைத்தூதருக்கும் இறை நம்பிக்கையாளர்களுக்கும் உரிமையில்லை'' என்னும் (திருக்குர்ஆன் 09:113) திருக்குர்ஆன் வசனமும், '(நபியே!) நீங்கள் விரும்பியவரை உங்களால் நேர்வழியில் செலுத்தி விட முடியாது'' என்னும் (திருக்குர்ஆன் 28:56) திருக்குர்ஆன் வசனமும அருளப்பட்டன.

ஹதீஸ் 3885. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களிடம் அவர்களின் பெரிய தந்தை அபூ தாலிப் அவர்களைப் பற்றிக் கூறப்பட்டபோது அவர்கள், 'அவருக்கு என் பரிந்துரை மறுமை நாளில் பயனளிக்கக் கூடும் (அதனால்) நரக நெருப்பு அவரின் (முழு உடலையும் தீண்டாமல்) கணுக்கால்கள் வரை மட்டுமே தீண்டும்படி ஆக்கப்படலாம். (ஆனால்) அதனால் அவரின் மூளை (தகித்துக்) கொதிக்கும்'' என்று சொல்ல கேட்டேன்.

மற்றோர் அறிவிப்பில்'அவரின் மூளையின் மூலப்பகுதி (தகித்துக்) கொதித்துக் கொண்டிருக்கும்'' என்று காணப்படுகிறது.

## இஸ்ராஉ பற்றிய நபிமொழியும் அது பற்றிய (திருக்குர்ஆன் 17:01) இறைவசனமும்

அல்லாஹ் கூறினான்:

ஓர் இரவி(ன் ஒரு சிறு பகுதியி)ல் தன் அடியாரை மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து (வெகு தொலைவில் அமைந்த) அல் மஸ்ஜிதுல் அக்ஸா வரையில், தன்னுடைய சான்றுகளை அவருக்குக் காட்டுவதற்காக, அழைத்துச் சென்ற (இறை)வன் மிகத் தூயவன். ('அல் அக்ஸா' பள்ளியான) அதன் சுற்றுப்புறங்களை நாம் அருள்வளம் மிக்கதாய் ஆக்கினோம். (திருக்குர்ஆன் 17:01)

ஹதீஸ் 3886. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(நான் இரவின் சிறு பகுதியில் கஅபாவிலிருந்து பைத்துல் மக்திஸ் வரை சென்றதாகச் சொன்ன சமயம்) என்னை குறைஷிகள் நம்ப மறுத்தபோது நான் கஅபாவின்'ஹிஜ்ர்' என்னும் (வளைந்த) பகுதியில் நின்றேன். அல்லாஹ் எனக்கு பைத்துல் மக்திஸைக் காட்சியளிக்கச் செய்தான். அப்போது அதைப் பார்த்தபடியே நான் அவர்களுக்கு அதன் அடையாளங்களை விவரிக்கலானேன்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

## மிஅராஜ் - விண்ணுலகப் பயணம்

ஹதீஸ் 3887. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (இறையில்லாம் கஅபா அருகில்) ஹத்தீமில்... அல்லது ஹிஜ்ரில்... படுத்துக் கொண்டிருந்தேன். அப்போது என்னிடம் ஒருவர் (வானவர் ஜிப்ரீல்) வந்து (என் நெஞ்சைப்) பிளந்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அனஸ் (ரலி), 'இங்கிருந்து இது வரையில் அவர் பிளந்தார்'' என்று நபி (ஸல்) அவர்கள் சொன்னதாகக் கூறினார்கள்.

அறிவிப்பாளர் கத்தாதா (ரஹ்) கூறினார்:

நான் என்னருகிலிருந்து (அனஸ் (ரலி) அவர்களின் நண்பர்) ஜாரூத் (ரஹ்) அவர்களிடம், 'அனஸ் (ரலி), 'இங்கிருந்து, இது வரையில்... என்று எதைக் கருத்தில் கொண்டு கூறினார்கள்?' என்று கேட்டேன். அதற்கு ஜாரூத் (ரஹ்), 'நபி (ஸல்) அவர்களின் நெஞ்சின் காறை யெலும்பிலிருந்து அடிவயிறு வரை... அல்லது நெஞ்சின் ஆரம்பத்திலிருந்து அடிவயிறு வரை... என்ற கருத்தில் அனஸ் (ரலி) கூறினார்'' என்று பதிலளித்தார்கள்.

பிறகு அ(ந்த வான)வர் (ஜீப்ரீல்) என்னுடைய இதயத்தை வெளியிலெடுத்தார். பிறகு, இறை நம்பிக்கையால் நிரப்பப்பட்ட தங்கத் தட்டு ஒன்று என்னிடம் கொண்டு வரப்பட்டது, என்னுடைய இதயம் கழுவப்பட்டு, (அதில்) அந்த இறை நம்பிக்கை நிரப்பட்டது. பிறகு பழையபடி மீண்டும் (என்னுடைய இதயம், மூடி) வைக்கப்பட்டது. பிறகு கோவேறு கழுதையை விடச் சிறியதும் கழுதையை விடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த (மின்னல் வேக) வாகனம் ஒன்றும் என்னிடம் கொண்டு வரப்பட்டது.

-(இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அனஸ்(ரலி) அவர்களிடம் ஜாரூத்(ரஹ்),'அது புராக் எனும் வாகனம் தானே அபூ ஹம்ஸா அவர்களே!"என்று கேட்டார்கள். அதற்கு அனஸ்(ரலி),'ஆம், (அது புராக் தான்.) அந்த வாகனம் பார்வை எட்டுகிற தூரத்திற்கு ஓர் எட்டு வைக்கும்'' என்று கூறினார்கள்.

பிறகு நான் அந்த வாகனத்தில் ஏற்றப்பட்டேன். என்னை ஜிப்ரீல் முதல் வானத்திற்கு அழைத்துச் சென்று அதன் கதவைத் திறக்கும்படி கூறினார். அப்போது,'யார் அது?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார்.'உங்களுடன் (வந்திருப்பவர்) யார்?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்,'முஹம்மது'' என்று பதிலளித்தார்.'(அவரை அழைத்து வரச் சொல்லி) அவரிடம் ஆள் அனுப்பப்பட்டிருந்ததா?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஆம்'' என்றார்.'அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை'' என்று (வாழ்த்துச்) சொல்லப்பட்டது. அப்போது (அந்த வானத்தின் காவலர்) கதவைத் திறந்தார். நான் அங்கு சென்றடைந்தபோது அங்கு ஆதம்(அலை) அவர்கள் இருந்தார்கள். (என்னிடம் ஜிப்ரீல்)'இவர்கள் உங்கள் தந்தை ஆதம், இவர்களுக்கு சலாம் சொல்லுங்கள்'' என்று கூறினார். அவர்களுக்கு நான் சலாம் சொன்னேன். அவர்கள் (எனக்கு) பதில் சலாம் கூறினார்கள். பிறகு, ஆதம்(அலை) அவர்கள்,'(என்) நல்ல மகனும், நல்ல இறைத்தூதருமான உங்கள் வரவு நல்வரவாகுக!"என்று கூறினார்கள். பிறகு (என்னை அழைத்துக் கொண்டு ஜிப்ரீல்) இரண்டாம் வானத்திற்கு உயர்ந்து அதைத் திறக்கும்படி கூறினார்.'யார் அது?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளிக்க, உங்களுடன் (இருப்பவர்) யார்?' என்று வினவப்பட்டது. (அதற்கு) அவர்,'முஹம்மது'' என்று பதிலளித்தார்,'(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்தா?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஆம்'' என்று பதிலளித்தார்.'அவரின் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை'' என்று (வாழ்த்துச்) சொல்லப்பட்டது. பிறகு (அந்த வானத்தின் காவலர் கதவைத்) திறந்தார். நான் அங்கு சென்றடைந்தபோது, அங்கு யஹ்யா (அலை) அவர்களும், ஈசா(அலை) அவர்களும் இருந்தனர் - அவ்விருவரும் சிற்றன்னையின் மக்களாவர். 134 இது யஹ்யா அவர்களும், ஈசா அவர்களும் ஆவர். இவர்களுக்கும் சலாம் சொல்லுங்கள்'' என்று ஜிப்ரீல் கூறினார். நான் (அவர்கள் இருவருக்கும்) சலாம் சொன்னபோது அவர்கள் சலாமிற்கு பதில் கூறினார்கள். பிறகு அவர்கள் இருவரும்,'நல்ல சகோதரரும், நல்ல இறைத்தூதருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்'' என்று (வாழ்த்துக்) கூறினர். பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக் கொண்டு மூன்றாம் வானத்திற்கு உயர்ந்தார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார்.'யார் அது?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார்.'உங்களுடன் (இருப்பவர்) யார்?' என்று கேட்கப்பட்டது. அவர்,'முஹம்மது'' என்று பதிலளித்தார்.'(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஆம்'' என்று பதிலளித்தார்.'அவர் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை'' என்று (வாழ்த்துச்) சொல்லப்பட்டது. பிறகு (அந்த வானத்தின் கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் சென்றடைந்தபோது அங்கு யூசுஃப்(அலை) அவர்கள் இருந்தார்கள்.'இவர்கள் தாம் (இறைத்தூதர்)

யூசு∴ப் இவர்களுக்கு சலாம் சொல்லுங்கள்'' என்று ஜிப்ரீல் கூறினார். நான் அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்களும் எனக்கு பதில் சலாம் கூறினார்கள். பிறகு,'நல்ல சகோதரரும் நல்ல இறைத்தூதருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்'' என்று (வாழ்த்தும்) கூறினார்கள். பிறகு என்னை அழைத்துக் கொண்டு ஜிப்ரீல் ஐந்தாம் வானத்திற்கு வந்து சேர்ந்து அதைத் திறக்கும்படி கூறினார். 'யார் அது'' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார். 'உங்களுடன் (இருப்பவர்) யார்?' என்று வினவப்பட்டது. அவர்,'முஹம்மது'' என்று பதிலளித்தார். '(அவரை அழைத்து வருமாறு) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஆம்'' என்றார். 'அவர் வரவு நல்வரவாகட்டும். அவர் வருகை மிக நல்ல வருகை'' என்று (வாழ்த்துச்) சொல்லப்பட்டது. நான் அங்கு சென்றடைந்தபோது ஹாரூன் (அலை) அவர்கள் அங்கிருந்தார்கள். 'இவர்கள் தாம் ஹாரூன் இவர்களுக்கும் சலாம் சொல்லுங்கள்'' என்று ஜிப்ரீல் கூறினார். நான் அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்கள் (எனக்கு) பதில் சலாம் கூறினார்கள். பிறகு அவர்கள்,'நல்ல சகோதரரும் நல்ல இறைத்தூதருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்'' என்று (வாழ்த்துச்) கூறினார்கள். பிறகு என்னுடன் அவர் ஆறாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படிக் கூறினார். 'யார் அது?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார். 'உங்களுடன் யார்?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஆம்'' என்றார். (அந்த வானத்தின் காவலர்,)'அவர் வரவு நல்வரவாகட்டும். அவரின் வருகை மிக நல்ல வருகை'' என்று (வாழ்த்துச்) கூறினார். அங்கு சென்றடைந்தபோது மூஸா (அலை) அவர்கள் அங்கிருந்தார்கள். 'இவர்கள் தாம் மூஸா இவர்களுக்கு சலாம் சொல்லுங்கள்'' என்று ஜிப்ரீல் கூறினார். நான் அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்கள் (எனக்கு) பதில் சலாம் கூறினார்கள். பிறகு,'நல்ல சகோதரரும் நல்ல இறைத்தூதருமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்'' என்று (வாழ்த்துச்) கூறினார்கள். நான் (மூஸா - அலை - அவர்களைக்) கடந்து சென்றபோது அவர்கள் அழுதார்கள். 'தங்கள் அழுகைக்கு என்ன காரணம்?' என்று அவர்களை நோக்கிக் கேட்கப்பட்டது. அவர்கள்,'என் சமுதாயத்தினரில் சொர்க்கம் புகுபவர்களை விட அதிகமானவர்கள், எனக்குப் பிறகு அனுப்பப்பட்ட இந்த இளைஞரின் சமுதாயத்திலிருந்து சொர்க்கம் புகுவார்கள் என்பதால் தான் அழுகிறேன்'' என்று பதிலளித்தார்கள். பிறகு என்னை அழைத்துக் கொண்டு ஜிப்ரீல் ஏழாவது வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி ஜிப்ரீல் கூறினார். 'யார் அது?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார். 'உங்களுடன் இருப்பவர் யார்?' என்று வினவப்பட்டபோது அவர்,'முஹம்மது'' என்று பதில் கூறினார். '(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?' என்று கேட்கப்பட்டது. அவர்,'ஆம்'' என்றார். (அந்த வானத்தின் காவலர்,)'அவரின் வரவு நல்வரவாகட்டும், அவரின் வருகை மிக நல்ல வருகை'' என்று (வாழ்த்துச்) கூறினார். நான் அங்கு சென்றடைந்தபோது, இப்ராஹீம் (அலை) அவர்கள் அங்கிருந்தார்கள். 'இவர்கள் தாம் உங்கள் தந்தை. இவர்களுக்கு சலாம் சொல்லுங்கள்'' என்று ஜிப்ரீல் கூறினார். நான் அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்கள் (எனக்கு) பதில் சலாம் உரைத்தார்கள். அவர்கள்,'நல்ல மகனும், நல்ல இறைத் தூதருமான இவரின் வரவு நல்வரவாகட்டும்'' என்று வாழ்த்துக் கூறினார்கள். பிறகு, (வான எல்லையில் அமைந்துள்ள இலந்தை மரமான)'சித்ரத்துல் முன்தஹா' என்னும் இடத்திற்கு நான் கொண்டு செல்லப்பட்டேன். அதன் (இலந்தைப்) பழங்கள் (யமனில் உள்ள)'ஹஜர்' என்னுமிடத்தின் (உற்பத்திப் பொருளான மண்) கூஜாக்கள் போல் இருந்தன. அதன் இலைகள் யானைகளின் காதுகள் போலிருந்தன. 'இதுதான் சித்ரத்துல் முன்தஹா'' என்று ஜிப்ரீல் (அறிமுகப்படுத்திக்) கூறினார். அங்கு (அந்த மரத்தின் வேர்ப்பகுதியில் இருந்து ஓடி வருகின்ற) நான்கு ஆறுகள் இருந்தன. இரண்டு ஆறுகள் உள்ளே இருந்தன. மற்றும் இரண்டு ஆறுகள்

வெளியே இருந்தன. 'ஜிப்ரீலே! இவ்விரண்டு ஆறுகள் எவை?' என்று கேட்டேன். அவர், 'உள்ளேயிருப்பவை இரண்டும் சொர்க்கத்தில் உள்ள (ஸல்ஸபீல், கவ்ஸர் ஆகியவை)வையாகும். வெளியே இருப்பவை இரண்டும் நைல் நதியும் யூப்ரடீஸ் நதியும் ஆகும்'' என்று பதிலளித்தார்கள். பிறகு, 'அல் பைத்துல் மஃமூர்' (எனும்'வானவர்கள் அதிகம் சஞ்சரிக்கும் இறையில்லம்') எனக்கு (அருகே கொண்டு வந்து) காட்டப்பட்டது. பிறகு என்னிடம் ஒரு பாத்திரத்தில் மதுவும், ஒரு பாத்திரத்தில் மதுவும், ஒரு பாத்திரத்தில் பாலும் இன்னொரு பாத்திரத்தில் தேனும் கொண்டு வரப்பட்டது. நான் பாலை (தேர்ந்து) எடுத்தேன். (பிறகு அதைக் குடித்தேன்.) அப்போது ஜிப்ரீல், 'இதுதான் நீங்களும் உங்கள் சமுதாயத்தாரும் இருக்கும் (இஸ்லாம் எனும்) இயற்கை நெறியாகும்'' என்று கூறினார்கள். பிறகு என் மீது ஒவ்வொரு தினத்திற்கு ஐம்பது (வேளைத்) தொழுகைகள் கடமையாக்கப்பட்டன. நான் திரும்பி வந்தபோது மூஸா (அலை) அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது அவர்கள், 'உங்களுக்கு என்ன உத்தரவிடப்பட்டது?' என்று கேட்டார்கள். 'ஒவ்வொரு நாளும் ஐம்பது (வேளைத்) தொழுகை (கட்டாயக் கடமையாக நிறை வேற்றும்படி) எனக்கு உத்தரவிடப்பட்டது'' என்று நான் பதிலளித்தேன். உங்கள் சமுதாயத்தார் ஒரு தினத்திற்கு ஐம்பது வேளைத் தொழுகையைத் தாங்க மாட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களுக்கு முன் மக்களிடம் அனுபவப்பட்டுள்ளேன்'' பனு இஸ்ராயீல்களுடன் பழம் நன்கு பக்குவப்பட்டுள்ளேன். எனவே, உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று அவனிடம் உங்கள் சமுதாயத்தினருக்காக (தொழுகையின் எண்ணிக்கையைக்) குறைத்துத் தரும்படி கேளுங்கள்'' என்று கூறினார்கள். நான் திரும்பிச் சென்றேன். (இறைவனிடம் குறைத்துத் தரும்படி கேட்டேன்) இறைவன் (ஐம்பதிலிருந்து) பத்தை எனக்குக் குறைத்தான். நான் மூஸா (அலை) அவர்களிடம் திரும்பி வந்தேன். முன் போன்றே (இன்னும் குறைத்துக் கேட்கும்படி) கூறினார்கள். நான் திரும்பிச் சென்றேன். அப்போது (நாற்பதிலிருந்து) பத்தைக் குறைத்தான். நான் மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தேன். அப்போதும் முன் போன்றே (இன்னும் குறைத்துக் கேட்கும் படி) கூறினார்கள். நான் (இறைவனிடம்) திரும்பிச் சென்றேன். எனக்குக (முப்பதிலிருந்து) பத்தைக் குறைத்தான். நான் மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தேன். அப்போது அவர்கள் முன்போன்றே (குறைத்து கேட்கும்படி) கூறினார்கள். நான் திரும்பிச் சென்றேன். எனக்கு (இருபதிலிருந்து பத்து குறைக்கப்பட்டு) தினந்தோறும் பத்து (வேளைத்) தொழுகைகள் (தொழும்படி) உத்தரவிடப்பட்டது. நான் (மூஸா - அலை - அவர்களிடம்) திரும்பி வந்தேன். அப்போதும் அவர்கள் முன் போன்றே கூறினார்கள். நான் திரும்பிச் சென்றேன். ஒவ்வொரு நாளும் ஐந்து (வேளைத்) தொழுகைகள் (நிறைவேற்றும்படி) எனக்கு உத்தரவிடப்பட்டது. நான் மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தேன். அப்போது'உங்களுக்கு என்ன உத்தரவிடப்பட்டது?' என்று கேட்டார்கள். ஒவ்வொரு நாளைக்கும் ஐந்து (நேரத்) தொழுகைகள் எனக்கு உத்தரவிடப்பட்டுள்ளது'' என்று சொன்னேன். 'ஒவ்வொரு நாளும் ஐந்து (நேரத்) தொழுகைகளை உங்கள் சமுதாயத்தினர் தாங்கமாட்டார்கள். உங்களுக்கு முன்பே மக்களுடன் பழகி நான் நன்கு அனுபவப்பட்டுள்ளேன். நான் பனு இஸ்ராயீல்களுடன் பழம் நன்கு பக்குவப்பட்டுள்ளேன். எனவே, உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று உங்கள் சமுதாயத்தினருக்காக இன்னும் குறைத்துத் தரும்படிக் கேளுங்கள்'' என்று கூறினார்கள். அதற்கு நான், '(கடமையான தொழுகைகளின் எண்ணிக்கையைக் குறைத்துத் தரும்படி பலமுறை இறைவனிடம்) எனக்கே வெட்கமேற்படும் வரையில் நான் கேட்டு விட்டேன். எனவே, நான் திருப்தியடைகிறேன் (இந்த எண்ணிக்கைக்கு) ஒப்புக் கொள்கிறேன்'' என்று கூறினேன். பிறகு (அந்த இடத்தை) நான் கடந்தபோது, (அல்லாஹ்வின் தரப்பிலிருந்து)'நான் என் (ஐந்து நேரத்தொழுகை எனும்) விதியை நடைமுறைப்படுத்திவிட்டேன்.

என் அடியார்களுக்கு (ஐம்பது வேளைகளிலிருந்து ஐந்து நேரமாகக் குறைத்துக் கடமையை) எளிதாக்கி விட்டேன்'' என்று ஒரு (அசரீரிக்) குரல் ஒலித்தது.

ஹதீஸ் 3888. இக்ரிமா (ரஹ்) அறிவித்தார்

"(நபியே! இப்போது) நாம் உங்களுக்குக் காண்பித்த (அந்த இரவுக்) காட்சியையும், குர்ஆனில் சபிக்கப்பட்டுள்ள மரத்தையும் (இந்த) மக்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம்'' என்ற (திருக்குர்ஆன் 17:60) இறை வசனத்திற்கு விளக்கம் தரும்போது இப்னு அப்பாஸ் (ரலி), 'இது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பைத்துல் மக்திஸுக்கு அழைத்துச் செல்லப்பட்ட இரவில் அவர்களுக்குக் காட்டப்பட்ட காட்சிகளைக் குறிக்கும். குர்ஆனில் சபிக்கப்பட்டுள்ள மரம் என்பது 'ஸக்கூம்' என்னும் (நரகத்திலுள்ள கள்ளி) மரத்தைக் குறிக்கும்'' என்று கூறினார்கள்.

## மக்காவில் நபி (ஸல்) அவர்களிடம் வந்த அன்சாரிகளின் தூதுக் குழுக்களும், அல் அக்பா உடன்படிக்கையாகும்.

ஹதீஸ் 3889. அப்துர் ரஹ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி அகப் (ரஹ்) கூறினார்

கஅப் இப்னு மாலிக் (ரலி) (முதுமையடைந்து) கண்பார்வையிழந்துவிட்டபோது அவர்களைக் கரம் பிடித்து அழைத்துச் செல்பவர்களாயிருந்த (அவர்களின் மகனும் என் தந்தையுமான) அப்துல்லாஹ் இப்னு கஅப் (ரஹ்) என்னிடம் கூறினார்கள்.

என் தந்தை கஅப் இப்னு மாலிக் (ரலி), தபூக் போரின்போது, நபி (ஸல்) அவர்களுடன் செல்லாமல் (அசிரத்தைக் காரணமாக) தாம் பின் தங்கிவிட்ட வேளை குறித்து என்னிடம் பேசியதை நான் செவிமடுத்தேன்... என்று கூறிவிட்டு முழு ஹதீஸையும் கூறினார்கள்.

இப்னு புகைர் (ரஹ்) உகைல் (ரஹ்) வாயிலாக அறிவிக்கும் அறிவிப்பில், கஅப் இப்னு மாலிக் (ரலி) கூறுவதாக அறிவித்தார்கள்:

'அகபா' (எனுமிடத்தில் உறுதிமொழி அளித்த நிகழ்ச்சி நடந்த) இரவில் இஸ்லாத்தை ஏற்பதாக (மதீனாவாசிகளான) நாங்கள் பிரமாணம் செய்த வேளையில் நான் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தேன். இதற்குப் பதிலாகப் பத்ருப் போரில் கலந்து (கொள்கிற வாய்ப்பைப் பெற்றுக்) கொள்ளுதல் எனக்கு இருந்திருக்க வேண்டும் என நான் விரும்பியதில்லை 'அல் அகபா' பிரமாணத்தை விட 'பத்ர்' மக்களிடையே பெயர் பெற்றதாக இருந்தாலும் சரியே!

ஹதீஸ் 3890. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

"என் இரண்டு மாமன்மார்களும் அகபா உடன்படிக்கையில் பங்கெடுத்தனர்'' சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்), 'அந்த இருவரில் ஒருவர் பராஉ இப்னு மஃரூர் (ரலி) அவர்களாவார்'' என்று கூறினார் என அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்.

ஹதீஸ் 3891. ஜாபிர் (ரலி) அறிவித்தார்

அகபா உடன்படிக்கையில் பங்கெடுத்தவர்கள் நானும், என் தந்தையும், என் இரண்டு தாய் மாமன்மார்களும் அடங்குவோம்.

ஹதீஸ் 3892. இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் பத்ருப் போரில் பங்கெடுத்தவரும், இரவில் நடந்த 'அகபா' உடன் பாட்டில் பங்கெடுத்த நபித் தோழர்களில் ஒருவருமான உபாதா இப்னு ஸாமித் (ரலி) கூறினார்

(அகபா இரவில்) தம்மைச் சுற்றிலும் தம் தோழர்களின் ஒரு குழுவினர் அமர்ந்திருக்க, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் 'வாருங்கள் நீங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்க

மாட்டீர்கள் என்றும், விபசாரம் புரிய மாட்டீர்கள் என்றும், உங்கள் குழந்தைகளைக் கொல்லமாட்டீர்கள் என்றும், உங்கள் தரப்பிலிருந்து நீங்களே இட்டுக்கட்டும் அவதூறு எதனையும் புனைந்து கொண்டு வரமாட்டீர்கள் என்றும், எனக்கு நல்ல விஷயங்களில் மாறு செய்ய மாட்டீர்கள் என்றும் என்னிடம் உறுதிமொழி கொடுங்கள். உங்களில் (இந்த உறுதிமொழியை) நிறைவேற்றுகிறவருக்குரிய நற்பலனைத் தருவது அல்லாஹ்வின் பொறுப்பாகும். இவற்றில் (மேற் சொன்ன குற்றங்களில்) எதையேனும் ஒருவர் செய்து, அதற்காக அவர் இந்த உலகத்திலேயே (இஸ்லாமியச் சட்டப்படி) தண்டிக்கப்பட்டால், அதுவே அவருக்குப் பரிகாரமாம் விடும். இவற்றில் எதையேனும் ஒருவர் செய்து அல்லாஹ் அவரின் குற்றத்தை (உலக வாழ்வில்) மறைத்துவிட்டால் (அவரின் மறுமை நிலை குறித்த) அவரின் விவகாரம் அல்லாஹ்விடம் உண்டு. (மறுமையில்) அவன் நாடினால் அவரைத் தண்டிப்பான் அவன் நாடினால் அவரை மன்னிப்பான் என்று கூறினார்கள் நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் அவற்றுக்காக உறுதிமொழி கொடுத்தோம்.

ஹதீஸ் 3893. உபாதா இப்னு ஸாமித்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்த (மதீனாவின்) தலைவர்களில் நானும் ஒருவனாவேன். நாங்கள் அல்லாஹ்வுக்கு எதனையும் இணை கற்பிக்க மாட்டோம் என்றும், திருட மாட்டோம் என்றும், விபச்சாரம் புரிய மாட்டோம் என்றும், அல்லாஹ் புனிதப் படுத்தியுள்ள (மனித) உயிரை நியாயமின்றிக் கொல்லமாட்டோம் என்றும், நாங்கள் (பிறர் பொருளை) அபகரிக்க மாட்டோம் என்றும், இந்த வாக்குறுதிகளை நாங்கள் நிறைவேற்றினால் (எங்களுக்கு) சொர்க்கம் உண்டு என நாங்களாகத் தீர்ப்பளித்துக் கொள்ள மாட்டோம் (இறைவனிடமே ஒப்படைத்து விடுவோம்) என்றும், இக்குற்றங்களில் எதையேனும் நாங்கள் செய்தால் அதன் தீர்ப்பு அல்லாஹ்விடமே உண்டு என்றும் நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்தோம்.

## நபி(ஸல்) அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களை மணம் முடித்துக் கொண்டதும் ஆயிஷா மதீனாவுக்கு வருகை தந்ததும் நபியவர்கள் ஆயிஷாவுடன் வீடு கூடியதும்.

ஹதீஸ் 3894 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான் ஆறு வயதுடையவளாக இருந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னை மணந்து கெண்டார்கள். பிறகு நாங்கள் மதீனா வந்து விடவே என் முடிகள் உதிர்ந்து விழுந்தன. பிறகு (என்) முடி வளர்ந்து அதிகமாகி விட்டது. நான் என் தோழிகள் சிலருடன் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தபோது என் தாயார் உம்மு ரூமான்(ரலி) என்னிடம் வந்து என்னைச் சத்தம் போட்டு அழைத்தார்கள். நன் அவர்களிடம் சென்றேன். அவர்கள் என்னிடம் எதை நாடி வந்திருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது. அவர்கள் என் கையைப் பிடித்து (அழைத்துச் சென்று) வீட்டின் கதவருகே என்னை நிறுத்திவிட்டார்கள். நான் (வேகமாக வந்ததால்) எனக்கு மூச்சிறைக்கத் தொடங்கிடவே, அவர்கள் சிறிது தண்ணீரை எடுத்து என் முகத்தையும் தலையையும் துடைத்துப் பிறகு என்னை வீட்டினுள் கொண்டு சென்றார்கள். அங்கு வீட்டில் சில அன்சாரிப் பெண்கள் இருந்தார்கள். அவர்கள், 'நன்மையுடனும் அருள்வளத்துடனும் வருக! (அல்லாஹ்வின்) நற்பேறு உண்டாகட்டும்'' என் தாய் என்னை அப்பெண்களிடம் ஒப்படைக்க, அவர்கள் என்னை அலங்கரித்து (வீடு கூடுவதற்காகத் தயார்படுத்தி)விட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முற்பகல் வேளையில் திடீரென வந்தார்கள். அவர்களிடம் அப்பெண்கள் என்னை ஒப்படைத்தனர். நான் அன்று ஒன்பது வயதுடையவளாக இருந்தேன்.

ஹதீஸ் 3895. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

“நான் உன்னைக் கனவில் இரண்டு முறை கண்டேன். உன்னைப் பட்டுத் (துணியின்) துண்டு ஒன்றில் (முக்காடிட்டபடி) கண்டேன். எவரோ,'இது உங்கள் மனைவி தான் (முக்காட்டை) நீக்கிப்பாருங்கள்' என்று கூற, (நானும் அவ்வாறே பார்த்தேன்.) அது நீயாகவே இருக்கக் கண்டேன். அப்போது நான்,'இது (நீ எனக்கு மனைவியாவது) அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (விதிக்கப்பட்டு) உள்ளதெனில் அதை அவன் நடத்தி வைப்பான்' என்று சொல்லிக் கொண்டேன்“ என்று நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள்.

ஹதீஸ் 3896. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு (ஹிஜ்ரத் செய்து) வெளியேறுவதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்பு கதீஜா(ரலி) இறப்பெய்திவிட்டார்கள். (அதன்பின்னர்) நபி(ஸல்) அவர்கள் இரண்டு ஆண்டுகள்... அல்லது கிட்டத்தட்ட இரண்டாண்டுகள்... (மக்காவில்) தங்கியிருந்தார்கள். ஆயிஷா(ரலி) ஆறுவயதுடையவர்களாயிருக்கும்போது அவர்களை மணந்தார்கள் பிறகு ஆயிஷா(ரலி) ஒன்பது வயதுடையவர்களாக இருக்கும்போது அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் வீடு கூடினார்கள்.

## நபி(ஸல்) அவர்களும், அவர்கள் தம் தோழர்களும் (மக்காவைத் துறந்து) மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து சென்றது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(இறை மார்க்கத்தைப் பாதுகாக்க மக்காவைத் துறந்து மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்து செல்ல வேண்டியிருந்திராவிட்டால் நான் அன்சாரிகளில் ஒருவனாய் இருந்திருப்பேன்.

இதை அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரலி) அவர்களும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பேரீச்ச மரங்கள் நிறைந்த ஒரு பூமிக்கு நான் ஹிஜ்ரத் செய்து செல்வதாகக் கனவில் கண்டேன். யமாமா அல்லது ஹஜராக இருக்கும் என்று கருததினேனே. ஆனால், (இறைக்கட்டளை வந்த) பிறகு தான் அது'யஸ்ரிப்' எனப்படும் மதீனா நகரம் என்று தெரிய வந்தது.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3897. அபூ வாயில்(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்களை நலம் விசாரிக்கச் சென்றோம். அப்போது அவர்கள் கூறினார்கள்: நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக ஹிஜ்ரத் செய்தோம். எங்களுக்கு (அதற்கான) பிரதிபலனையளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது. எங்களில் ஹிஜ்ரத் செய்ததற்கான (இவ்வுலகப்) பிரதிபலனில் சிறிதையும் பெறாமல் சென்றுவிட்டவர்களும் உண்டு. அவர்களில் ஒருவர் தாம் முஸ்அப் இப்னு உமைர்(ரலி) அவர் உஹுதுப் போரின்போது கொல்லப்பட்டார். கோடிட்ட வண்ணத் துணி ஒன்றை அவர்விட்டுச் சென்றிருந்தார். நாங்கள் (அவருக்குக் கஃபனிடுவதற்காக) அவரின் (சடலத்தின்) தலையை அதனால் மூடியபோது அவரின் கால்கள் இரண்டும் வெளியே தெரியலாயின. அவரின் கால்களை மூடினால் அவரின் தலை தெரியலாயிற்று. எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், முஸ்அப்(ரலி) அவர்களின் தலையை மூடி விடும்படியும் அவர்களின் இரண்டு கால்களிலும் இத்கிர் புல்லைச் சிறிது போட்டு (மறைத்து) விடும்படியும் எங்களுக்கு உத்தரவிட்டார்கள். (ஹிஜ்ரத் செய்தததற்கான) பலன் கனிந்து அதைப் பறித்து (அனுபவித்து)க் கொண்டிருப்பவர்களும் எங்களில் உள்ளனர்.

ஹதீஸ் 3898. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எண்ணத்தைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன. ஒருவரின் ஹிஜ்ரத் அவர் அடையவிருக்கும் உலகத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்ததால், அல்லது அவர் மணக்கவிருக்கும் ஒரு பெண்ணை நோக்கமாகக் கொண்டிருந்தால், அவரின் ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டதோ அதுவாகவே அமையும். ஒருவரின் ஹிஜ்ரத் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (திருப்தியுறச் செய்வதைக்) குறிக்கோளாகக் கொண்டிருந்தால் அவரின் ஹிஜ்ரத் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நோக்கியதாகவே அமைந்திருக்கும்.

என உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3899. முஜாஹித் இப்னு ஜபர் அல் மக்கீ(ரஹ்) கூறிதாவது:

ஹதீஸ் 3900. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அறிவித்தார்

நான் உபைத் இப்னு உமைர் அல் லைஸீ(ரஹ்) அவர்களுடன் ஆயிஷா(ரலி) அவர்களைச் சந்தித்தேன். (அப்போது ஆயிஷா(ரலி)'ஸபீர்' என்னும் மலைக்கருகில் தங்கியிருந்தார்கள்.) அவர்களிடம் ஹிஜ்ரத்தைப் பற்றிக் கேட்டோம். அதற்கு அவர்கள்,'இன்று (மக்கா வெற்றி கொள்ளப்பட்டுவிட்டபிறகு) ஹிஜ்ரத் கிடையாது. இறைநம்பிக்கையாளர்கள் (தம் மாமார்க்கத்தைப் பின்பற்ற முடியாதவாறு) தாம் சோதிக்கப்பட்டு விடுவோமோ என்று அஞ்சி தம் மார்க்கத்துடன் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (திருப்தியுறச் செய்வதை) குறிக்கோளாகக் கொண்டு (தம் தாய் நாட்டைத் துறந்து ஒரு காலத்தில்) ஓடி வந்தார்கள். ஆனால், இன்றோ அல்லாஹ் இஸ்லாதை ஓங்கச் செய்துவிட்டான். இன்று இறை நம்பிக்கையாளர், தான் விரும்பிய இடத்தில் தன் இறைவனை வணங்கலாம். ஆயினும் (ஹிஜ்ரத் தான் இனி இல்லையே தவிர) ஜிஹாத் (எனும் அறப்போர்) புரிவதும் (அதற்காகவும் பிற நற்செயல்களுக்காகவும்) நாட்டம் கொள்வதும் (இன்றும்) உண்டு'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3901. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஸஅத் இப்னு முஆத்(ரலி),'இறைவா! உன் பாதையில் எதிர்த்துப் போர் புரிய நான் மிகவும் விரும்புகிறவர்கள் உன் தூதரை நம்ப மறுத்து அவர்களை (மக்காவிலிருந்து) வெளியேற்றிய சமுதாயத்தினர் தாம் என்பதை நீ அறிவாய். இறைவா! எங்களுக்கும் அவர்களுக்குமிடையிலான போரை நீ முடித்து வைத்துவிட்டாய் என்று எண்ணுகிறேன்'' என்று (தம் மரணத்தருவாயில்) கூறினார்கள்.

ஆயிஷா(ரலி) வழியாகவே வரும் மற்றோர் அறிவிப்பில்,'உன் தூதரை நம்ப மறுத்து அவர்களை வெளியேற்றிய குறைஷிச் சமுதாயத்தினர் தாம்'' என்று ஸஅத்(ரலி) கூறினார் என இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 3902. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் நாற்பதாம் வயதில் நபியாக நியமிக்கப்பட்டார்கள். தமக்கு வஹீ (இறைச்செய்தி) (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டு வந்த நிலையில் மக்காவில் பதின்மூன்றாண்டுகள் தங்கியிருந்தார்கள். பிறகு ஹிஜ்ரத் செய்யும் படி அவர்களுக்குக் கட்டளையிடப்பட, ஹிஜ்ரத் செய்து (மதீனாவில்) பத்தாண்டுகள் வாழ்ந்து வந்தார்கள். தம் அறுபத்து மூன்றாம் வயதில் இறப்பெய்தினார்கள்.

ஹதீஸ் 3903. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நபியாக்கப்பட்ட பின்) மக்காவில் பதின் மூன்றாண்டுகள் தங்கியிருந்தார்கள். தம் அறுபத்து மூன்றாம் வயதில் இறப்பெய்தினார்கள்.

ஹதீஸ் 3904. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (தம் மரண நோயின் போதும்) மிம்பரின் மீதமர்ந்து, (மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அதில்), 'அல்லாஹ் தன் அடியார் ஒருவருக்கு உலகச் செல்வத்தில் அவர் விரும்புவ(து எதுவாயினும் அ)தைக் கொடுப்பதாகவும் அல்லது தன்னிடமுள்ள (மறுமைப் பெரு வாழ்வு) தனை எடுத்துக் கொள்ளும்படியும் (இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள) வாய்ப்பளித்தான். அப்போது அந்த அடியார் அல்லாஹ்விடமிருப்பதையே தேர்ந்தெடுத்தார்'' என்று கூறினார்கள். உடனே, அபூ பக்ர் (ரலி) அழுதார்கள். மேலும் (நபியவர்களை நோக்கி), 'தங்களுக்கு எங்கள் தந்தையரும் அன்னையரும அர்ப்பணமாகட்டும்'' என்று கூறினார்கள். நாங்கள் அபூ பக்ரு(டைய அழுகை)க்காக வியப்படைந்தோம். மக்கள், 'இந்த முதியவரைப் பாருங்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அல்லாஹ் தன் அடியார் ஒருவருக்கு உலகச் செல்வத்தில் அவர் விரும்புவதைக் கொடுப்பதாகவும் அல்லது தன்னிடமிருப்பதை எடுத்துக் கொள்ளும்படியும் இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வாய்ப்பு வழங்கிய (மம்ழ்ச்சியான விஷயத்)தைத் தெரிவித்துக் கொண்டிருக்க இவர், 'தங்களுக்கு என் தந்தையரும் தாய்களும் அர்ப்பணமாகட்டும்' என்று (அழுதபடி) கூறுகிறாரே'' என்று கூறினார்கள் - இறைத்தூதர் (ஸல்) அவர்களே இப்படி வாய்ப்பு வழங்கப்பட்டவராவார் - அபூ பக்ர் (ரலி) தாம் எங்களில் அல்லாஹ்வின் தூதரைப் பற்றி அதிகம் அறிந்தவராக இருந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'தம் தோழமையாலும் தம் செல்வத்தாலும் எனக்குப் பேருபகாரம் புரிந்தவர் அபூ பக்ர் அவர்கள் தாம். என் சமுதாயத்தாரிலிருந்து எவரையேனும் என் உற்ற நண்பராக நான் ஆக்கிக் கொள்வதாயிருந்தால் அபூ பக்ரையே ஆக்கிக் கொண்டிருப்பேன் எனினும், இஸ்லாத்தின் (காரணத்தால் உள்ள) நட்பே (சிறந்ததாகும்) போதுமானதாகும். (என்னுடைய இந்தப்) பள்ளிவாசலில் உள்ள சாளரங்களில் அபூ பக்ரின் சாளரம் தவிர மற்றவை நீடிக்க வேண்டாம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3905. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

என் பெற்றோர் (அபூ பக்ரும், உம்மு ரூமானும்) எனக்கு விவரம் தெரிந்தது முதல் (இஸ்லாமிய) மார்க்கத்தை கடைப்பிடிப்பவர்களாகவே இருந்தனர். பகலின் இரண்டு ஓரங்களான காலையிலும் மாலையிலும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வருகை தராமல் எங்களின் எந்த நாளும் கழிந்ததில்லை. (மக்கா நகரில் வாழ்ந்த) முஸ்லிம்கள் (இணை வைப்பவர்களால் பல்வேறு துன்பங்கள்) சோதனைகளுக்கு உள்ளாக்கப்பட்டபோது, அபூ பக்ர் அவர்கள் அபிசீனிய நாட்டை நோக்கி, நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றார்கள். அவர்கள் (யமன் செல்லும் வழியில்) 'பர்குல் கிமாத்' என்னும் இடத்தை அடைந்தபோது இப்னு தஃம்னா என்பவர் அவர்களைச் சந்தித்தார். அவர் 'அல்காரா' எனும் (பிரபல) குலத்தின் தலைவராவார் - அவர் 'அபூ பக்ரே எங்கே செல்கிறீர்?' என்று கேட்டார். 'என் சமுதாயத்தினர் என்னை (நாடு துறந்து) வெளியேறிச் செல்லும் நிலைக்குத் தள்ளிவிட்டனர். எனவே, நான் பூமியில் பரவலாகப் பயணம் செய்து (நிம்மதியாக) என் இறைவனை வணங்கப் போகிறேன்'' என்று அவர்கள் பதிலளித்தார்கள். அப்போது இப்னு தஃம்னா, 'அபூ பக்ரே! தங்களைப் போன்றவர்கள் (தாமாகவும்) வெளியேறக் கூடாது, (பிறரால்) வெளியேற்றப்படவும் கூடாது. (ஏனெனில்) நீங்கள் ஏழைகளுக்காக உழைக்கிறீர்கள். இரத்த பந்த உறவுகளைப் பேணி நடந்து கொள்கிறீர்கள். (சிரமப்படுவோரின்) பாரத்தைச் சுமக்கிறீர்கள். விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள். சத்திய சோதனைகளில் (ஆட்பட்டோருக்கு) உதவி புரிகிறீர்கள் என்று (அவர்களின் அறச் சேவைகளைப் புகழ்ந்து) கூறிவிட்டு, 'தங்களுக்கு அடைக்கலம் தருகிறேன். நீங்கள் (மக்காவிற்கே) திரும்பிச் சென்று உங்களின் (அந்த) ஊரிலேயே உங்களுடைய இறைவனை வணங்குங்கள்'' என்று கூறினார். அபூ பக்ர் (அபிசீனிய பயணத்தை ரத்துச்

செய்துவிட்டு மக்காவிற்குத்) திரும்பினார்கள். அவர்களுடன் இப்னு தஃம்னாவும் பயணமா(கித் திரும்பி)னார். மாலையில் இப்னு தஃம்னா குறைஷிக்குல பிரமுகர்களைப் போய்ச் சந்தித்து அவர்களிடம் (நாட்டு மக்களுக்காகப் பாடுபடும்) அபூ பக்ரைப் போன்றவர்கள் (நாட்டிலிருந்து தாமாக) வெளியேறுவதோ, (பிறரால்) வெளியேற்றப்படுவதோ கூடாது. ஏழைகளுக்காக உழைக்கும், உறவுகளைப் பேணிவாழும், (சிரமப்படுவோரின்) பாரம் சுமந்து வரும், விருந்தினர்களை உபசரித்து வரும், சத்திய சோதனைகளில் (ஆட்பட்டுத்தப்பட்டோருக்கு) உதவி வரும் ஒரு (ஒப்பற்ற) மனிதரையா (நாடு துறந்து) வெளியேறிச் செல்லும் நிலைக்கு உள்ளாக்குகிறீர்கள்?' என்று கேட்டார். (அபூ பக்ர் - ரலி - அவர்களுக்குத் தாம் அடைக்கலம் தரப் போவதாகக் கோரிய) இப்னு தஃம்னாவின் அடைக்கலத்தை குறைஷிகள் மறுக்கவில்லை. அவர்கள் இப்னு தஃம்னாவை நோக்கி,'அபூ பக்ர், தம் இல்லத்திற்குள்ளேயே தம் இறைவனை வணங்கவோ, தொழுகவோ, தாம் விரும்பியதை ஓதவோ செய்யட்டும். ஆனால், இவற்றின் மூலம் எங்களக்கு இடையூறு செய்யவோ இவற்றை பம்ரங்கமாகச் செய்வதோ கூடாது. ஏனெனில் எங்கள் மனைவி மக்கள் (புதிய மத நம்பிக்கை மற்றும் வணக்க வழிபாட்டு முறைகளைப் பார்த்து) குழப்பமடைந்து விடுவார்களோ என்று நாங்கள் அஞ்சுகிறோம் என்று அவரிடம் கூறிவிடுங்கள்'' என்று கூறினார்கள். அ(வர்கள் கூறிய)தை இப்னு தஃம்னா அபூ பக்ர்(ரலி) தம் இல்லத்திற்கு தம் இறைவனை வணங்கியும், தம் தொழுகையை பகிரங்கப்படுத்தாமலும் தம் வீட்டுக்கு வெளியில் (திருக்குர்ஆன் வசனங்களை) ஓதாமலும் (அவர்கள் விதித்த நிபந்தனைப்படி) இருந்து வந்தார்கள் பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு (மாற்று யோசனை) தோன்றியது. தம் வீட்டு முற்றத்தில் தொழுமிடம் ஒன்றை உருவாக்கி அதில் தொழுது கொண்டும் திருக்குர்ஆனை ஓதியும் வந்தார்கள். அப்போது, இணைவைப்பவர்களின் மனைவி மக்கள் அபூ பக்ர் அவர்களைப் பார்த்து ஆச்சரியப்பட்டு (அவர்களைச் சூழ்ந்து கொண்டு வேடிக்கை பார்ப்பதற்காக) அவர்களின் மீது முண்டியடித்து விழுந்தனர். அபூ பக்ர்(ரலி) குர்ஆன் ஓதும்போது தம் கண்களை கட்டுப்படுத்த முடியாமல் (கண்ணீர் உகுத்த வண்ணம்) அதிகமாக அழக்கூடியவராக இருந்தார்கள். (அபூ பக்ர் அவர்களின்) இந்த நடவடிக்கை (எங்கே தங்களின் இளகிய இதயம் படைத்த மனைவி மக்களை மதம் மாறச் செய்து விடுமோ என்ற அச்சம்) இணைவைப்பவர்களான குறைஷிகளை பீதிக்குள்ளாக்கியது. அதனால் அவர்கள் இப்னு தஃம்னாவிடம் ஆளப்பினர். அவரும் குறைஷிகளிடம் வந்தார். அப்போது அவர்கள்,'அபூ பக்ர் தம் இல்லத்திற்குள்ளேயே தம் இறைவனை வழிபட்டுக் கொள்ளட்டும் என்று (நிபந்தனையிட்டு) அவருக்கு நீங்கள் அடைக்கலம் தந்ததன் பேரிலேயே நாங்கள் அவருக்கு அடைக்கலம் தந்தோம். அவர் அதை மீறிவிட்டு தம் வீட்டு முற்றத்தில் தொழுமிடம் ஒன்றை உருவாக்கி அந்த இடத்தில் பம்ரங்கமாக தொழுது கொண்டும், (குர்ஆனை) ஓதிக் கொண்டும் இருக்கிறார். நாங்கள் எங்கள் மனைவி மக்கள் குழப்பத்திற்குள்ளாம் விடுவார்களோ என்று அஞ்சுகிறோம். எனவே, அபூ பக்ரைத் தடுத்துவையுங்கள். அவர் அவரின் இறைவனை தம் இல்லத்தில் வணங்குவதோடு மட்டும் நிறுத்திக் கொள்ள விரும்பினால் அவ்வாறு செய்யட்டும். அவர் அதை மறுத்து பம்ரங்கப்படுத்தவே செய்வேன் என்றால் அவரிடம் உம்முடைய (அடைக்கலப்) பொறுப்பைத் திரும்பத் தருமாறு கேளுங்கள். ஏனெனில், (உங்களின் உடன்பாட்டை முறித்து) உங்களுக்கு நாங்க்ள் மோசடி செய்வதை வெறுக்கிறோம். (அதே சமயம்) அபூ பக்ர் (அவற்றை) பம்ரங்கமாகச் செய்ய நாங்கள் அனுமதிப்போராகவும் இல்லை'' என்று கூறினார்.

ஆயிஷா(ரலி) கூறினார்: இப்னு தஃம்னா அபூ பக்ர் அவர்களிடம் வந்து,'நான் எ(ந்)த (நிபந்தனையி)ன் பேரில் உங்களிடம் ஒப்பந்தம் செய்தேன் என்பதை தாங்கள் அறிவீர்கள். எனவே ஒன்று, அதனோடு மட்டும் நீங்கள் நிறுத்திக் கொள்ள வேண்டும், அல்லது என்னுடைய (அடைக்கலப்) பொறுப்பை என்னிடம் திரும்பத் தந்து விடவேண்டும். ஏனென்றால் நான் உடன்படிக்கை செய்த ஒரு மனிதரின் விஷயத்தில் நான் ஏமாற்றப்பட்டேன் என்று அரபுகள் கேள்விப்படுவதை நான் விரும்பமாட்டேன்'என்று கூறினார். அதற்கு அபூ பக்ர்(ரலி),'உம்முடைய

அடைக்கலத்தை உம்மிடமே திரும்பத் தந்து விடுகிறேன். வல்லவனும் கண்ணியமிக்கவனுமான அல்லாஹ்வின் அடைக்கலம் குறித்து நான் திருப்திபடுத்துகிறேன்‘‘ என்று கூறினார்கள். அன்றைக்கு நபி(ஸல்) அவர்கள் மக்காவில் இருந்து கொண்டிருக்கிறார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம்களைப் பார்த்து,‘இரண்டு கருங்கல் மலைகளுக்கிடையே பேரீச்ச மரங்கள் நிறைந்த (மதீனா) பகுதியை நீங்கள் ஹிஜ்ரத் செல்கிற நாடாக நான் (கனவில்) காட்டப்பட்டேன்‘‘ என்று கூறினார்கள். எனவே, மதீனா நோக்கி ஹிஜ்ரத் சென்றவர்கள் சென்றார்கள். (ஏற்கெனவே) அபிசீனிய நாட்டிற்கு ஹிஜ்ரத் சென்றிருந்தவர்கள் பலர் (முஸ்லிம்கள் மதீனாவில் குடியேறுவதைக் கேள்விப்பட்டு) மதீனாவுக்குத் திரும்பினார்கள். (மக்காவிலிருந்து) அபூ பக்ர் அவர்களும் மதீனா நோக்கி (ஹிஜ்ரத் புறப்பட) ஆயத்தமானார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘சற்று பொறுங்கள். எனக்கு (ஹிஜ்ரத்திற்கு) அனுமதி வழங்கப்படுவதை நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்‘‘ என்று (அபூ பக்ர் அவர்களிடம்) கூறினார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி),‘என் தந்தை தங்களுக்கு அர்ப்பணம் அனுமதியை(த்தான்) எதிர் பார்க்கிறீர்களா?’ என்று கேட்டார்கள். அதற்கு,‘ஆம் (எதிர்பார்க்கிறேன்)‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். எனவே, அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் (ஹிஜ்ரத்) செல்வதற்காகத் தன் (பயணத்தி)னை நிறுத்தினார்கள். மேலும், அபூ பக்ர் அவர்கள் (இந்தப் பயணத்திற்காகவே) தம்மிடம் இருந்த இரண்டு வாகன (ஒட்டக)ங்களுக்கு நான்கு மாதம் கருவேலந்தழையைத் தீனிபோட்டு (வளர்த்து) வந்தார்கள்.

ஆயிஷா(ரலி) (தொடர்ந்து) கூறுகிறார்கள்:

நாங்கள் ஒரு நாள் அபூ பக்ர்(ரலி) அவர்களின் இல்லத்தில் உச்சிப் பொழுதில் அமர்ந்து கொண்டிருந்தோம். அப்போது ஒருவர் அபூ பக்ர் அவர்களிடம்’இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் தலையை மூடிய வண்ணம் - நம்மிடம் வருகைதராத நேரத்தில் (வழக்கத்திற்கு மாற்றமாக) இதோ வந்து கொண்டிருக்கிறார்கள்‘‘ என்று கூறினார். அதற்கு அபூ பக்ர்(ரலி),‘என் தந்தையும் என் தாயும் நபி(ஸல்) அவர்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதோ (முக்கிய) விஷயம் தான் அவர்களை இந்த நேரத்தில் (இங்கு) வரச் செய்திருக்கிறது‘‘ என்று கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்,‘உங்களிடம் இருப்பவர்களை வெளியே போகச் சொல்லுங்கள். (உங்களிடம் ஒரு ரகசியம் பேச வேண்டும்)‘‘ என்று கூறினார்கள். அதற்கு, அபூ பக்ர் அவர்கள் (இல்லத்திற்குள் இருக்கும்) இவர்கள் உங்களுடைய (துணைவியின்) குடும்பத்தினர் தாம். என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! இறைத்தூதர் அவர்களே!”என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் (ஹிஜ்ரத்) புறப்பட்டுச் செல்ல எனக்கு அனுமதி வழங்கப்பட்டுவிட்டது‘‘ என்று கூறினார்கள். அப்போது அபூ பக்ர் அவர்கள்,‘தங்களுடன் நானும் வர விரும்புகிறேன்! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும் இறைத்தூதர் அவர்களே! என்று கேட்டார்கள்.’சரி! (நீங்களும் வாருங்கள்)’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.’இறைத்தூதர் அவர்களே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். இந்த என்னுடைய இரண்டு வாகன (ஒட்டக)ங்களில் ஒன்றைத் தாங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘விலைக்கு தான் (இதை நான் எடுத்துக் கொள்வேன்)‘‘ என்று கூறினார்கள்:

ஆயிஷா(ரலி) கூறினார்: அவர்கள் இருவருக்காகவும் வேண்டிப் பயண ஏற்பாடுகளை வெகுவிரைவாக நாங்கள் செய்து முடித்தோம். ஒரு தோல்பையில் பயண உணவை நாங்கள் தயார் செய்து வைத்தோம். அப்போது அபூ பக்ரின் மகள் (என் சகோதரி) அஸ்மா தன்னுடைய இடுப்புக் கச்சிலிருந்து ஒரு துண்டை(க் கிழித்து) அதனை அந்தப் பையின் வாய் மீது வைத்துக் கட்டினார்கள். இதனால் தான் அவர்களுக்கு’கச்சுடையாள்’ என்று பெயர் வந்தது. பிறகு

இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் (பயணம் புறப்பட்டு)'ஸவ்ர்' மலையில் உள்ள ஒரு குகைக்கு வந்து சேர்ந்து அதில் மூன்று நாள்களில்) அவர்கள் இருவருடன் அப்துல்லாஹ் இப்னு அபீ பக்ரும் இரவில் வந்து தங்கியிருப்பார் - அவர் சமயோசித அறிவு படைத்த, புத்திக் கூர்மையுள்ள இளைஞராக இருந்தார் பின்னிரவு (சஹர்) நேரத்தில் அவர்கள் இருவரைவிட்டும் புறப்பட்டு மக்கா குறைஷிகளுடன் இரவு தங்கியிருந்தவர் போன்று அவர்களுடன் காலையில் இருப்பார். அவர்கள் இருவரைப் பற்றி (குறைஷிகளால் செய்யப்படும்) சூழ்ச்சிகளைக் கேட்டு, அவற்றை நினைவில் இருத்திக் கொண்டு இருள் சேரும் நேரத்தில் அவர்கள் இருவரிடமும் அச்செய்திகளைக் கொண்டு வந்து விடுவார்.

அவர்கள் இருவருக்காக அபூ பக்ர்(ரலி) அவர்களின் (முன்னாள்) அடிமை ஆமிர் இப்னு ஃபுஹைரா (அபூ பக்ர் அவர்களின்) மந்தையிலிருந்து ஒரு பால் தரும் ஆட்டை மேய்த்து வருவார். இரவின் சிறிது நேரம் கழிந்தவுடன் அதனை அவர்கள் இருவரிடமும் ஓட்டி வருவார். அந்தப் பாலிலேயே இருவரும் இரவைக் கழித்து விடுவார்கள் - அது புத்தம் புதிய, அடர்த்தி அகற்றப்பட்ட பாலாகும் - அந்த ஆட்டை ஆமிர் இப்னு ஃபுஹைரா இரவின் இருட்டு இருக்கும் போதே விரட்டிச் செல்வார். இதை (அவர்கள் இருவரும் அந்தக் குகையில் தங்கியிருந்த) மூன்று இரவுகளில் ஒவ்வோர் இரவிலும் அவர் செய்து வந்தார். மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்களும், அபூ பக்ர்(ரலி) அவர்களும் பனு அப்து இப்னு அதீ குலத்தில்'பனு அத்தீல்' என்னும் கிளையைச் சேர்ந்த கை தேர்ந்த ஒருவரை பயண வழி காட்டியாக இருக்கக் கூலிக்கு அமர்த்தினர். அவர் ஆஸ்பின் வாயில் அஸ்ஸஹ்மீ என்னும் குலத்தாருடன் நட்புறவு ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தார். (ஆனாலும்) அவர் குறைஷிகளில் இறைமறுப்பாளர்களின் மதத்தில் இருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களும், அபூ பக்ர்(ரலி) அவர்களும் அவரை நம்பி, தங்களின் இரண்டு வாகன (ஒட்டக)ங்களை ஒப்படைத்து மூன்று இரவுகளுக்குப் பின்'ஸவ்ர்' குகைக்கு வந்து விடுமாறு வாக்குறுதி வாங்கியிருந்தனர். மூன்றாம் (நாள்) அதிகாலையில் அந்த இருவாகனங்களுடன் (அவர் ஸவ்ர் குகைக்கு வந்து சேர்ந்தார்.) அவர்கள் இருவருடன் ஆமிர் இப்னு ஃபுஹைராவும் பயண வழிகாட்டியும் சென்றனர். பயண வழிகாட்டி அவர்களைக் கடற்கரைப் பாதையில் அழைத்துச் சென்றார்.

ஹதீஸ் 3906. சுராகா இப்னு (மாலிக் இப்னி) ஜுஃஷும்(ரலி) அறிவித்தார்

குறைஷிக்குலத்தின் தூதுவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களையும், அபூ பக்ர்(ரலி) அவர்களையும் கொலை செய்பவருக்கு, அல்லது (உயிருடன்) கைது செய்து வருபவருக்கு இருவரில் ஒவ்வொருவருக்கும் (நூறு ஒட்டகம் என்று) பரிசை நிர்ணயம் செய்(து அறிவித்)தவர்களாக எங்களிடம் வந்தனர். அப்போது நான் எங்களின் பனு முத்லிஜ் சமுதாயத்தின் அவைகளில் ஒன்றில் அமர்ந்திருந்தேன். அப்போது அவர்களில் ஒருவர் எழுந்து வந்து, அமர்ந்து கொண்டிருந்த எங்களிடையே நின்று கொண்டு,'சுராகாவே! சற்று முன் நான் கடலோரத்தில் சில உருவங்களைப் பார்த்தேன். அவர்கள் முஹம்மதும் அவரின் தோழர்களும் தாம் என்று கருதுகிறேன்'' என்று கூறினார். அவர்கள் முஹம்மதும் தோழர்களும் தாம் என்று அறிந்து கொண்டேன். (இருப்பினும் அவரைத் திசை திருப்புவதற்காக)'அவர்கள் முஹம்மதும் அவர்களின் தோழர்களும் அல்லர். மாறாக, இன்னார் இன்னாரைத்தான் நீ பார்த்திருப்பாய். அவர்கள் எங்கள் கண்ணெதிரே தான் (தங்களின் காணாமல் போன ஒட்டகங்களைத் தேடிப்) போனார்கள்'' என்று நான் அவரிடம் கூறினேன். பிறகு அந்த அவையிலேயே சிறிது நேரம் இருந்தேன். அதற்குப் பிறகு எழுந்து (என்னுடைய இல்லத்திற்குள்) நுழைந்து என் அடிமைப் பெண்ணிடம் என்னுடைய குதிரையை வெளியே கொண்டு வரும்படி உத்தரவிட்டேன் - அப்போது குதிரை ஒரு மலைக்குன்றுக்கு அப்பால் இருந்தது. - எனக்காக அதை அவள் (அங்கே) கட்டிவைத்திருந்தாள். பின்பு, நான் என்னுடைய ஈட்டியை எடுத்துக் கொண்டு வீட்டின் பின் புற வாசல் வழியாக வெளியேறினேன். (ஈட்டியை நான் தாழ்த்திப்

பிடித்திருந்ததால்) அதன் கீழ் முனையால் (என்னையும் அறியாமலேயே) தரையில் கோடு கிழித்தேன். மேலும் அதன் மேல் நுனியை தாழ்த்திக் கொண்டு என் குதிரையிடம் வந்து அதன் மீது ஏறிக் கொண்டேன். அதன் முன்னங்கால் இரண்டையும் ஒரே நேரத்தில் உயர்த்தி ஒரே நேரத்தில் பூமியில் வைக்குமாறு செய்து மிக வேகமாகப் புறப்பட்டு அவர்களை நெருங்கினேன். அப்போது என்னுடைய குதிரை காலிடறி அதிலிருந்து நான் விழுந்து விட்டேன். உடனே நான் எழுந்து தன்னுடைய கையை அம்புக்கூட்டை நோக்கி நீட்டி, அதிலிருந்து (சகுனச் சொற்கள் எழுதப்பட்ட) அம்புகளை எடுத்தேன். அவற்றின் மூலம் என்னால் அவர்களுக்கு பாதிப்பை உருவாக்க முடியுமா அல்லது முடியாதா என்று குறிபார்த்தேன். நான் விரும்பாத (வகையில், என்னால் அவர்களுக்குப் பாதிப்பு ஏற்படுத்த முடியாது என்ப)தே வந்தது. என்னுடைய அம்புகளுக்கு மாறு செய்துவிட்டு என்னுடைய குதிரையில் ஏறினேன். அது பாய்ந்த வண்ணம் சென்றது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (திருக்குர்ஆன்) ஓதியதை கேட்டேன். அவர்கள் திரும்பிப் பார்க்கவில்லை. அபூ பக்ர் அவர்கள் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். (அப்போது) என்னுடைய குதிரையின் முன்கால்கள் இரண்டும் முட்டுக்கால்கள் வரையிலும் பூமியில் புதைந்து கொண்டன. நான் குதிரையிலிருந்து கீழே விழுந்து விட்டேன். பிறகு (அதை எழச் செய்வதற்காக) அதை நான் அரற்றினேன். அது எழுந்(திருக்க முயற்றித்)தது. (ஆனால்,) அதன் கால்களை அதனால் வெளியே எடுக்க முடியவில்லை. அது நேராக எழுந்து நின்றபோது இரண்டு முன்னங்கால்களின் அடிச் சுவட்டிலிருந்து புகை போன்று வானத்தில் பரவலாகப் புழுதி கிளம்பிற்று. உடனே நான் (என்னுடைய) அம்புகளைக் கொண்டு (சகுனக்) குறிபார்த்தேன். நான் விரும்பாததே வந்தது. உடனே, நான் எனக்கு (உயிர்) பாதுகாப்பு நல்கும்படி அவர்களை அழைத்தேன். உடனே, அவர்கள் நின்றுவிட்டனர். நான் என்னுடைய குதிரையிலேறி அவர்களிடம் வந்து சேர்ந்தேன். அவர்களைவிட்டும் (என்னுடைய குதிரை) தடுக்கப்பட்ட அந்த நிகழ்ச்சியை நான் கண்டபோது என்னுடைய மனதிற்குள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (மார்க்க) விஷயம் மேலோங்கும் என்று தோன்றியது. நான் அல்லாஹ்வின் தூதரிடம்,'உங்களுடைய (குறைஷி) சமுதாயத்தினர் உங்களுக்காகப் பரிசை நிர்ணயித்துள்ளனர்'' என்று கூறிவிட்டு அந்த (குறைஷி) மக்கள் முஸ்லிம்களைப் பற்றி என்ன எண்ணுகிறார்கள் என்ற தகவல்களை அவர்களிடம் எடுத்துச் சொன்னேன். மேலும், என்னுடைய பயண உணவுப் பொருள்களை எடுத்துக் காட்டினேன். அவர்கள் என்னிடமிருந்து ஒன்றையும் (எடுத்து) எனக்கு குறைவு செய்யவுமில்லை. மேலும், (என்னிடமிருந்த எதையும்) அவர்கள் இருவரும் என்னிடம் கேட்கவுமில்லை. ஆயினும், நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்),'எங்களைப் பற்றி(ய செய்தியை) மறைத்து விடு'' என்று கூறினார்கள். உடனே, நான் நபி(ஸல்) அவர்களிடம் எனக்கு ஒரு பாதுகாப்புப் பத்திரம் எழுதித்தரும்படி வேண்டினேன். அப்போது, நபி(ஸல்) அவர்கள் ஆமிர் இப்னு ஃபுஹைறாவுக்கு உத்தரவிட அவர் பாடமிடப்பட்ட தோல் துண்டில் (பாதுகாப்புப் பத்திரத்தின் வாசகத்தை) எழுதினார். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (சகாக்களுடன் மதீனா நோக்கிச்) சென்றார்கள்.

உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்:

ஷாம் நாட்டிலிருந்து (வியாபாரத்தை முடித்துக் கொண்டு) திரும்பிக் கொண்டிருந்த முஸ்லிம்களின் வணிகக் குழுவிலிருந்த ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும், அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கும், வெண்ணிற ஆடைகளைப் போர்த்தினார்கள். மதீனாவிலிருந்த முஸ்லிம்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து புறப்பட்டுவிட்டதைக் கேள்விப்பட்டு, ஒவ்வொரு நாள் காலையிலும் (மதீனாவின் புறநகர்ப் பகுதியிலிருந்த கருற்கற்கள் நிறைந்த)'ஹர்ரா' எனுமிடத்திற்கு வந்து நண்பகலின் வெப்பம் அவர்களைத் திருப்பியனுப்பும் வரையில் நபி(ஸல்) அவர்களை எதிர்பார்த்திருந்தனர். அப்படி ஒரு நாள் நீண்ட நேரம் நபி(ஸல்) அவர்களை எதிர்பார்த்துவிட்டு (ஊருக்குள்) அவர்கள் திரும்பித் தத்தம் வீட்டுக்குள் ஒதுங்கியபோது யூதர்களில்

ஒருவர் அவர்களின் கோட்டைகளில் ஒன்றின் மீது எதையோ பார்ப்பதற்காக ஏறியிருந்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் வெண்ணிற ஆடையில், கானல் நீர் விலக வருவதைப் பார்த்தார். அந்த யூதரால் (தம்மைக்) கட்டுப்படுத்த இயலாமல் உரத்த குரலில்,'அரபுக் குழாமே!"இதோ நீங்கள் எதிர்பார்த்துக் காத்திருந்த உங்களுடைய நாயகர்.“... என்று கூவினார். உடனே, முஸ்லிம்கள் (நபி - ஸல் - அவர்களைப் பாதுகாப்புடன் வரவேற்பதற்காக). ஆயுதங்களை நோக்கி கிளர்ந்தெழுந்தனர். அந்த (கருங்கற்கள் நிறைந்த) ஹர்ராவின் பரப்பில் இறைத்தூதர்(ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் வலப்பக்கமாகத் திரும்பி (‘குபா‘வில் உள்ள) பனு அம்ர் இப்னு அவ்ஃப் குலத்தாரி(ன் குடியிருப்புப் பகுதியி)ல் தங்கினார்கள். இது ரபீஉல் அவ்வல் மாதம் திங்கள் கிழமை நடந்தது. அப்போது மக்களை நோக்கி அபூ பக்ர்(ரலி) எழுந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மௌனமாக அமர்ந்திருந்தார்கள். அப்போது அங்கு வந்திருந்த நபி(ஸல்) அவர்களைப் பார்த்திராத - அன்சாரிகளில் சிலர் (அபூ பக்ர்(ரலி) அவர்களை இறைத்தூதர் என்று எண்ணிக் கொண்டு) அபூ பக்ர், (ரலி) அவர்களுக்கு முகமன் கூறிக் கொண்டிருந்தனர். இறுதியில், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மீது நிழலிட்டார்கள். அப்போதுதான் அவர்களை அறிந்து கொண்டனர். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பனு அம்ர் இப்னு அவ்ஃபினரிடையே (குபாவில்) பத்துக்கும் மேற்பட்ட நாள்கள் தங்கியிருந்து'இறையச்சத்தின் மீது அடித்தளமிடப்பட்ட (மஸ்ஜித் குபா) பள்ளிவாசலை' நிறுவினார்கள். (தாம் தங்கியிருந்த நாள்களில்) அந்தப் பள்ளியில் தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தொழுதார்கள். பிறகு தம் வாகனத்திலேறி பயணமானார்கள். அவர்களுடன் மக்களும் நடந்து சென்றனர். முடிவாக (அவர்களின்) ஒட்டகம் மதீனாவில் (தற்போது) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பள்ளிவாசல் (அமைந்துள்ள இடம்) அருகே மண்டியிட்டு படுத்துக் கொண்டது. அந்த நாளில் முஸ்லிம்களில் சிலர் அங்கு தான் தொழுது கொண்டிருந்தனர். அது ஸஅத் இப்னு ஸுராரா(ரலி) அவர்களின் பொறுப்பிலிருந்த ஸஹ்ல், சுஹைல் என்ற இரண்டு அனாதைச் சிறுவர்களுக்குச் சொந்தமான பேரீச்சம் பழம் (உலர வைக்கப்படும்) களமாக இருந்தது. அந்த இடத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாகனம் மண்டியிட்டுப் படுத்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இன்ஷா அல்லாஹ் இதுதான் (நம்முடைய) தங்குமிடம்‘‘ என்று கூறினார்கள். பிறகு அந்த இரண்டு சிறுவர்களையும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழைத்து அந்தக்களத்தை பள்ளிவாயில் அமைப்பதற்காக விலைக்குக் கேட்டார்கள். அவர்கள் இருவரும்,'இல்லை. அதை உங்களுக்கு அன்பளிப்பாகத் தருகிறோம் இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிறுவர்களிடமிருந்து அதை அன்பளிப்பாகப் பெற மறுத்து இறுதியில் அதை அவர்களிடமிருந்து விலைக்கே வாங்கினார்கள். பிறகு அதில் ஒரு பள்ளிவாசலைக் கட்டினார்கள். அதைக் கட்டும்போது அவர்களுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் செங்கல் சுமக்கலானார்கள். (அப்போது,)'இந்தச் சுமை கைபரின் சுமையல்ல. இது எங்களின் இறைவனிடம் (சேமித்து வைக்கப்படும்) நீடித்த நன்மையும் (கைபரின் சுமையை விடப் பரிசுத்தமானதுமாகும்‘‘ என்று (‘ரஜ்ஸ்' எனும் யாப்பு வகைப் பாடலைப் பாடியபடி) கூறிக் கொண்டிருந்தார்கள். மேலும்,'இறைவா (உண்மையான) பலன் மறுமையின் பலனே. எனவே (மறுமைப் பலனுக்காக பாடுபடும்) அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் கருணையன்பு காட்டுவாயாக‘‘ என்று கூறினார்கள்.

அப்போது முஸ்லிம்களில் ஒருவரின் கவிதையை நபியவர்கள் பாடிக்காட்டினார்கள். அவரின் பெயர் என்னிடம் கூறப்படவில்லை (என்று அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப்(ரஹ்) கூறிவிட்டு தொடர்ந்து) இப்னு ஷிஹாப்(ரஹ்) கூறினார்கள்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இந்தப் பாடல்(வரி)களைத் தவிர ஒரு முழுமையான கவிதையின் பாடலைப் பாடியதாக எனக்கு ஹதீஸ்களில் (செய்தி) எட்டவில்லை.

ஹதீஸ் 3907. அஸ்மா (ரலி) அறிவித்தார்

(ஹிஜ்ரத்தின் போது) நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் மதீனா செல்ல நாடிய சமயம் நான் அவர்கள் இருவருக்கும் பயண உணவைத் தயாரித்தேன். என் தந்தை (அபூ பக்ர் (ரலி)யிடம், 'இதைக் கட்டுவதற்கு என்னிடம் என் இடுப்புக் கச்சுத் தவிர வேறெதுவும் இல்லை'' என்று சொன்னேன். அவர்கள், 'அப்படியென்றால் அதை இரண்டாகக் கிழி'' என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்(து என் இடுப்புக் கச்சை இரண்டாகக் கிழித்துப் பயண உணவைக் கட்டி முடித்)தேன். எனவே நான், 'இரண்டு கச்சுடையாள்'' என்று (புனைப் பெயர்) சூட்டப்பட்டேன்.

இப்னு அப்பாஸ் (ரலி) 'அஸ்மா கச்சுடையாள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3908. பராஉ (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவை நோக்கி (ஹிஜ்ரத்) சென்றபோது சுராக்கா இப்னு மாலிக் இப்னி ஜுஃஷும் என்பவர் அவர்களைப் (பிடித்து வரப்) பின்தொடர்ந்து சென்றார். நபி(ஸல்) அவர்கள் அவருக்கெதிராக (அவரைச் செயலிழக்கச் செய்யும் படிப்) பிரார்த்தித்தார்கள். உடனே, அவரின் குதிரை அவருடனேயே பூமியில் அழுந்திவிட்டது. சுராக்கா (நபியவர்களிடமே), 'எனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். நான் உங்களுக்குத் தீங்கு செய்ய மாட்டேன்'' என்று கூறினார். அவ்வாறே நபி(ஸல்) அவர்கள் அவருக்காகப் பிரார்த்தித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாகத்துடனிருக்க, ஓர் ஆட்டிடையன் அவ்வழியே சென்றான். உடனே, அபூ பக்ர்(ரலி) ஒரு கிண்ணத்தை எடுத்து (ஆடு ஒன்றிலிருந்து) சிறிது பாலை அதில் கறந்து அதை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார்கள். அபூ பக்ர் அவர்கள் திருப்தியடையும் வரை நபி(ஸல்) அவர்கள் (அதிலிருந்து) அருந்தினார்கள்.

ஹதீஸ் 3909. அஸ்மா (ரலி) அறிவித்தார்

நான் (என் மகன்) அப்துல்லாஹ் இப்னு ஸுபைரை (மக்காவில்) சூலுற்றிருந்தேன். சூல்காலம் பூர்த்தியானதும் நான் (ஹிஜ்ரத்) புறப்பட்டேன். மதீனா வந்தேன் (வழியில்) குபாவில் தங்கி, குபாவிலேயே அவனைப் பெற்றெடுத்தேன். பிறகு, நபி(ஸல்) அவர்களிடம் அவனைக் கொண்டு சென்று அவர்களின் மடியில் அவனை வைத்தேன். பிறகு அவர்கள் பேரீச்சம் பழம் ஒன்றைக் கொண்டு வரும்படிக் கூறி அதை மென்று அவனுடைய வாயில் உமிழ்ந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உமிழ் நீர் தான் அவனுடைய வாயில் நுழைந்த முதல் பொருளாக இருந்தது. பிறகு நபி(ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சம் பழத்தை அவனுடைய வாயினுள் வைத்து தேய்த்துவிட்டார்கள். பிறகு அவனுக்காக துஆ செய்து, இறைவனிடம் அருள்வளம் வேண்டி இறைஞ்சினார்கள். அவன்தான் இஸ்லாத்தில் (முஹாஜிர்களுக்கு மதீனாவில்) பிறந்த முதல் குழந்தையாக இருந்தான்.

வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே போன்று அறிவிக்கப்பட்டுள்ளது.

அதில், 'அஸ்மா (ரலி) நபி (-ஸல் - அவர்களிடம் மதீனா) நோக்கி கர்ப்பிணியான நிலையில் ஹிஜ்ரத் செய்தார்கள்' என்று கூறப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3910. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

(முஹாஜிர்களிலேயே) இஸ்லாத்தில் பிறந்த முதல் குழந்தை அப்துல்லாஹ் இப்னு ஸுபைராவார். (அவர் பிறந்தவுடன்) அவரை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தனர். நபி(ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சம் பழத்தை எடுத்து, அதை மென்று அவரின் வாய்க்குள் நுழைத்தார்கள். அவரின் வயிற்றினுள் முதலாவதாக நுழைந்து நபி(ஸல்) அவர்களின் உமிழ் நீரேயாகும்.

ஹதீஸ் 3911. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தமக்குப் பின்னால் அபூ பக்ர்(ரலி) வர (மக்காவிலிருந்து) மதீனா நோக்கி (ஹிஜ்ரத்) சென்றார்கள். அபூ பக்ர்(ரலி) (இள நரையின் காரணத்தினால் தோற்றத்தினால்) மூத்தவராகவும், (மதீனாவாசிகளிடையே வியாபார நிமித்தமாக அடிக்கடி சென்றதில் அவர்களிடையே) அறிமுகமானவராகவும் இருந்தார்கள். ஆனால், இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (நரை விழாத காரணத்தினால் உருவத்தில்) இளையவராகவும் (வெளியூர் சென்று நீண்ட காலமாம்விட்டதால் அந்த மக்களிடையே) அறிமுகமற்றவராகவும் இருந்தார்கள். (அவர்கள் இருவரும் ஹிஜ்ரத் சென்ற அந்தப் பயணத்தின் போது) அபூ பக்ர்(ரலி) அவர்களை ஒருவர் சந்தித்து,'அபூ பக்ரே! உமக்கு முன்னால் உள்ள இந்த மனிதர் யார்?' என்று என்று கேட்கிறார். அதற்கு, அபூ பக்ர்(ரலி),'இந்த மனிதர் எனக்கு வழிகாட்டுபவர்'' என்று (நபி - ஸல் அவர்களை எதிரிக்குக் காட்டிக் கொடுத்து விடாமலும், அதே சமயம் உண்மைக்குப் புறம்பில்லாமலும் இரண்டு பொருள்படும்படி) பதிலளிக்கிறார்கள். இதற்கு, (பயணத்தில்) பாதை (காட்டுபவர்)' என்றே அபூ பக்ர் பொருள் கொள்கிறார் என எண்ணுபவர் எண்ணிக் கொள்வார். ஆனால்,'நன் மார்க்கத்திற்கு (வழிகாட்டுபவர்)' என்ற பொருளையே அபூ பக்ர் கொண்டிருந்தார்கள்.

அப்போது, அபூ பக்ர்(ரலி) திரும்பிப் பார்த்தார்கள். அங்கு (அவர்களுக்குப் பின்னால்) ஒரு குதிரை வீரர் (சுராகா) அவர்களைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்தார். உடனே அபூ பக்ர்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! (இதோ!) இந்தக் குதிரை வீரர் நம்மை (நெருங்கி) வந்தடைந்துவிட்டார்'' என்று கூறினார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் திரும்பிப் பார்த்துவிட்டு,'இறைவா! அவரைக் கீழே விழச் செய்!"என்று பிரார்த்தித்தார்கள். உடனே குதிரை அவரைக் கீழே தள்ளிவிட்டது பிறகு கனைத்துக் கொண்டே எழுந்து நின்றது. (உடனே சுராகா மனம் திருந்தி),'இறைத்தூதர் அவர்களே!"நீங்கள் விரும்பியதை எனக்கு உத்தரவிடுங்கள்'' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'இங்கேயே நின்று கொள். எங்களை பின்தொடர்ந்து வரும் எவரையும்விட்டு விடாதே'' என்று கூறினார்கள். இந்த சுராகா முற்பகலில் அல்லாஹ்வின் நபிக்கெதிராகப் போரிடுபவராக இருந்தார் பிற்பகலில் நபியைக் காக்கும் ஆயுதமாக மாறினார். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (கருங்கற்கள் நிறைந்த)'ஹர்ரா' பகுதியில் இறங்கி(த் தங்கி)னார்கள். (அங்கே குபாவில் ஒரு பள்ளி வாசலையும் கட்டச் செய்தார்கள்.) பிறகு, (குபாவிலிருந்து கொண்டு மதீனாவாசிகளான) அன்சாரிகளிடம் ஆளனுப்பினார்கள். உடனே அன்சாரிகள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமும், அபூ பக்ர்(ரலி) அவர்களிடமும் வந்து, அவர்கள் இருவருக்கும் சலாம் கூறினார்கள். பிறகு,'(இப்போது) நீங்கள் இருவரும் அச்சமற்றவர்களாகவும், (ஆணையிடும்) அதிகாரம் படைத்தவர்களாவும் பயணம் செய்யலாம்'' என்று கூறினர். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களும், அபூ பக்ர்(ரலி) அவர்களும் (மதீனா நோக்கிப்) பயணமாயினர். அன்சாரிகள் (அவர்களுக்குப் பாதுகாப்பாக) ஆயுதங்களுடன் (அவர்களைச்) சூழ்ந்தபடி சென்றனர். அப்போது மதீனாவில்,'இறைத்தூதர்(ஸல்) வந்துவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) வந்துவிட்டார்கள்'' என்று கூறலாயினர். நபி(ஸல்) அவர்கள் சிறிது தூரம் பயணித்த பின்னர் (தம் வாகனத்திலிருந்து) அபூ அய்யூப் (அல் அன்சாரி (ரலி) அவர்களின் வீட்டிற்குப் பக்கத்தில் இறங்கினார்கள். (அங்கே) நபியவர்கள் தம் குடும்பத்தாரிடம் உரையாற்றிக் கொண்டிருந்தார்கள். அப்போது தம் குடும்பத்தாருக்குச் சொந்தமான பேரீச்சம் தோட்டத்தில் கனிகளைப் பறித்துக் கொண்டிருந்த (யூத அறிஞர்) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள் இதைக் கேட்டுவிட்டு, குடும்பத்தாருக்காகப் பறித்தவற்றை அவர்களுக்கென எடுத்து வைக்கத் தவறி, அவற்றைத் தம்முடன் கொண்டு வந்துவிட்டார். அங்கே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்த அறிவுரைகளை) அவர்களிடமிருந்து கேட்டுவிட்டு தம் வீட்டாரிடம் திரும்பிச் சென்றார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'எங்கள் குடும்பத்தாரின் வீடுகளில் அருகிலிருப்பது எது?' என்று

கேட்டார்கள். அதற்கு அபூ அய்யூப் அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! இது என் வீடு. இதுதான் என் (வீட்டு) வாசல். (நானே உங்கள் குடும்பத்தாரில் மிக அருகில் உள்ளவன்)'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் சென்று மதிய ஓய்வு கொள்வதற்காக (உங்கள் வீட்டை) எமக்குத் தயார் செய்யுங்கள்'' என்று கூறினார்ள். அபூ அய்யூப்(ரலி), 'உயர்ந்தவனான அல்லாஹ்வின் அருள்வளத்துடன் நீங்கள் இருவரும் எழுங்கள்'' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அபூ அய்யூப் அல் அன்சாரீ அவர்களின் இல்லத்திற்கு) வந்தபோது (யூத அறிஞர்) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள் வந்து, (சில விளக்கங்களைக் கேட்டு உறுதி செய்த பிறகு)'தாங்கள் இறைத்தூதர் என்றும், தாங்கள் சத்திய (மார்க்க)த்துடன் வந்துள்ளீர்கள் என்றும் நான் சாட்சியம் அளிக்கிறேன். யூதர்கள் என்னைப் பற்றி, நான் மிகவும் அறிந்தவன் என்றும், அவர்களில் மிகவும் அறிந்தவன் என்றும், அவர்களில் மிகவும் அறிந்தவரின் மகன் என்றும் அறிந்துள்ளனர். நான் முஸ்லிமாம் விட்டேன் என்பதை அவர்கள் அறியும் முன்பாக அவர்களை அழைத்து என்னைப் பற்றி அவர்களிடம் கேளுங்கள். ஏனெனில், நான் முஸ்லிமாம் விட்டேன் என்பதை அவர்கள் அறிந்தால்' என்னிடம் இல்லாத (குற்றங்களை முதலிய)வற்றை என்னிடமிருப்பதாகக் கூறுவர்'' என்று கூறினார்கள். (யூதர்களை அழைத்து வரும்படி) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆளனுப்பினார்கள். யூதர்கள் நபி(ஸல்) அவர்கள் ஆளனுப்பினார்கள். யூதர்கள் நபி(ஸல்) அவர்களை நோக்கி வந்தனர். (உடனே அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள் ஓரிடத்தில் மறைந்து கொண்டார்கள்.) அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், யூதக் கூட்டத்தினரே! அல்லாஹ்வை நீங்கள் அஞ்சுங்கள்! (இல்லையேல்,) உங்களுக்குக் கேடுதான். எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீதாணையாக! நான் உண்மையிலேயே இறைத்தூதர் தாம் என்றும், நான் சத்திய (மார்க்க)த்துடன் உங்களிடம் வந்துள்ளேன் என்றும் நீங்கள் அறிவீர்கள். எனவே, நீங்கள் முஸ்லிமாம் விடுங்கள்'' என்று கூறினார்கள். யூதர்கள் (ஏற்க மறுத்து), 'அ(த்தகைய தூதர் ஒரு)வரை நாங்கள் அறியமாட்டோம்'' என்று நபி(ஸல்) அவர்களிடம் கூற, நபியவர்கள் அதையே மூன்று முறை - கூறினார்கள். (பிறகு,) நபி(ஸல்) அவர்கள், 'உங்களிடையே அப்துல்லாஹ் இப்னு சலாம் எத்தகைய மனிதர்?' என்று கேட்டார்கள். அவர்கள், 'அவர் எங்களின் தலைவர் எங்களுடைய தலைவரின் மகன் மேலும் எங்களில் மிகப் பெரிய அறிஞர் மிகப் பெரிய அறிஞரின் மகன்'' என்று கூறினர். 'அவர் முஸ்லிமாம்விட்டால்... (என்ன செய்வீர்கள்) கூறுங்கள்'' என்றார்கள். அவர்கள், 'அல்லாஹ் காப்பாற்றட்டும்! அவர் முஸ்லிமாக மாட்டார்'' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள், 'அவர் முஸ்லிமாம்விட்டால் (என்ன செய்வீர்கள்) கூறுங்கள்'' என்று (மீண்டும்) கேட்க, அவர்கள் (முன்பு போன்றே), 'அல்லாஹ் காப்பாற்றட்டும்! அவர் முஸ்லிமாம்விட்டால்.. கூறுங்கள்'' என்று (மீண்டும்) நபி(ஸல்) அவர்கள் கேட்க, அவர்கள், 'அல்லாஹ் காப்பாற்றட்டும்! அவர் முஸ்லிமாக மாட்டார்'' என்று கூறினர். 'அவர் முஸ்லிமாம்விட்டால். கூறுங்கள்'' என்று (மீண்டும்) நபி(ஸல்) அவர்கள் கேட்க, அவர்கள், 'அல்லாஹ் காப்பாற்றட்டும்! அவர் முஸ்லிமாக மாட்டார்'' என்று கூறினர்.

நபி(ஸல்) அவர்கள், 'இப்னு சலாமே! இவர்களிடம் வாருங்கள்'' என்று கூறினார்கள். உடனே, அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள் வெளியே வந்து, 'யூதர்கள் கூட்டமே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீதாணையாக! இவர்கள் இறைத்தூதர் தாம் என்பதையும் இவர்கள் சத்திய (மார்க்க)த்துடன் வந்துள்ளார்கள் என்பதையும் நீங்கள் நன்கறிவீர்கள்'' என்று கூறினார்கள். உடனே யூதர்கள், 'நீ பொய் சொன்னாய்'' என்று கூறினார்கள். உடனே யூதர்களை நபி(ஸல்) அவர்கள் (தம்மிடத்திலிருந்து) வெளியேறச் செய்தார்கள்.

ஹதீஸ் 3912. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(என் தந்தை) உமர் இப்னு கத்தாப்(ரலி) முதன் முதலாக ஹிஜ்ரத் செய்து வந்தவர்களுக்கு (பொதுநிதியிலிருந்து) நான்காண்டுகளுக்கு நான்காயிரம் (திர்ஹம்) தீனார்) கொடுக்க வேண்டுமென நிர்ணயித்தார்கள். (தம் மகனான) எனக்கு மூவாயிரத்து ஐநூறு கொடுக்க வேண்டும் என நிர்ணயித்தார்கள். அவர்களிடம்,'(தங்க மகன்) இப்னு உமர் ஹிஜ்ரத் செய்து வந்தவர்களில் ஒருவர் தாமே! நான்காயிரம் கொடுக்காமல் அவருக்கு மட்டும் ஏன் குறைத்து நிர்ணயித்தீர்கள்?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,'அவரை அழைத்துக் கொண்டு ஹிஜ்ரத் செய்து வந்ததெல்லாம் அவரின் தாய் தந்தையர் தாம்'' என்று கூறினார்கள்.

"அவர் சுயமாக ஹிஜ்ரத் செய்து வந்தவர்களைப் போன்றவரல்லர்'' என்றும் உமர்(ரலி) சொல்வார்கள்.

ஹதீஸ் 3913. கப்பாப்(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹிஜ்ரத் செய்தோம்.

ஹதீஸ் 3914. கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக ஹிஜ்ரத் செய்தோம். எங்களுக்கு (அதற்கான) பிரதிபலனளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது. அதன் (உலகப்) பலன்களில் எதையுமே அனுபவிக்காமல் சென்றுவிட்டவர்களும் எங்களிடையே உண்டு. முஸ்அப் இப்னு உமைர்(ரலி) அத்தகையவர்களில் ஒருவர் தாம். அவர் உஹுதுப் போரின்போது கொல்லப்பட்டார். அவரைக் கஃபனிடுவதற்கு (அவரின்) கோடிட்ட வண்ணத் துணி ஒன்றைத் தவிர வேறெதுவும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. அந்தத் துணியினால் நாங்கள் அவரின் தலையை மூடியபோது அவரின் கால்கள் இரண்டும் வெளியே தெரியலாயின் அவரின் கால்கள் இரண்டையும் நாங்கள் மூடியபோது அவரின் தலை வெளியே தெரியலாயிற்று. எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்தத் துணியால் அவரின் தலையை மூடி விடும்படியும் அவரின் கால்கள் இரண்டின் மீதும்'இத்கிர்' புல்லைச் சிறிது போட்டு (மறைத்து) விடும்படியும் எங்களுக்கு உத்தரவிட்டார்கள். (ஹிஜ்ரத் செய்ததற்கான இவ்வுலகப்) பலன் கனிந்து அதைப் பறித்து (சுவைத்து)க் கொண்டிருப்பவர்களும் எங்களில் உள்ளனர்.

ஹதீஸ் 3915. அபூ புர்தா இப்னு அபீ மூஸா அல் அஷ்அரீ(ரஹ்) அறிவித்தார்

என்னிடம் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி),'என் தந்தை (உமர் - ரலி - அவர்கள்) உங்கள் தந்தை (அபூ மூஸா - ரலி - அவர்கள்) இடம் என்ன கூறினார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். நான்,'இல்லை'' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள் கூறினார்கள் என் தந்தை உங்கள் தந்தையிடம்'அபூ மூஸாவே! நாம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இஸ்லாத்தை ஏற்றதும், அவர்களுடன் ஹிஜ்ரத் செய்ததும், அவர்களுடன் (சேர்ந்து) அறப்போர் புரிந்த நற்செயல்களும் (இவையெல்லாம்) நிச்சயமாகப் பலன் தரும் என்பது உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கிறதா? மேலும், நபியவர்களுக்குப் பின் நாம் புரிந்த செயல்கள் அனைத்தும் (அவற்றிலுள்ள நிறைகளும் குறைகளும்) சரிக்குச் சரி நிகராம் (இறைவனின் தண்டனையிலிருந்து) நாம் தப்பித்துக் கொள்வோம் என்பதும் (உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கிறதா?)'' என்று கேட்டார்கள். அதற்கு என் தந்தையிடம் உங்கள் தந்தை (அபூ மூஸா),'இல்லை இறைவன் மீதாணையாக! நாம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிறகு அறப்போர் புரிந்துள்ளோம் தொழுதுள்ளோம். நோன்பு நோற்றுள்ளோம். நற்செயல்கள் நிறையப் புரிந்துள்ளோம். மேலும், நம்முடைய கரங்களால் நிறைய மக்கள் இஸ்லாத்தை ஏற்றுள்ளனர். இவற்றுக்கெல்லாம் (இறைவன் நமக்குப் பிரதிபலன் அளிப்பான்

என) நாம் எதிர்பார்க்கிறோம்" என்று பதிலளித்தார்கள். உடனே என் தந்தை (உமர்,)'ஆனால், உமரின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது ஆணையாக! நானோ, (நபியவர்களுடன் நாம் புரிந்த நற்செயல்களான) அவற்றின் பலன் நிச்சயம் நமக்குக் கிடைக்கும் என்பதும், நபிகளாருக்குப் பின் நாம் புரிந்த செயல்கள் அனைத்தும் (அவற்றிலுள்ள நிறைகளும் குறைகளும்) சரிக்குச்சரி நிகராம் (இறைவனின் தண்டனையிலிருந்து) நாம் தப்பித்துக் கொள்வோம் என்பதும் போதும் என்றே விரும்புகிறேன்" எனக் கூறினார்கள்.

அப்போது நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் தந்தை (உமர்) என் தந்தையை விடச் சிறந்தவர்" என்று சொன்னேன்.

ஹதீஸ் 3916. அபூ உஸ்மான் அந்நஹ்தீ(ரஹ்) கூறினார்

இப்னு உமர்(ரலி) அவர்களிடம்,'நீங்கள் உங்கள் தந்தையை விட முன்னதாக ஹிஜ்ரத் செய்து வந்தீர்கள்" என்று சொல்லப்படும்போது அவர்கள் கோபமுற்றுக் கூறுவார்கள்:'நானும் (என் தந்தை) உமர்(ரலி) அவர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ('பைஅத்' எனும் உறுதிமொழி எடுத்துக் கொள்வதற்காகச்) சென்றோம். நபி அவர்கள் மதிய ஓய்வெடுத்து (உறங்கி)க் கொண்டிருக்கக் கண்டோம். எனவே நாங்கள் வீட்டிற்குத் திரும்பி விட்டோம். பிறகு உமர்(ரலி) என்னை அனுப்பி,'நீ போய், அவர்கள் (உறக்கத்திலிருந்து) விழித்தெழுந்துவிட்டார்களா என்று பார்" என்று கூறினார்கள். நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். (அவர்கள் விழித்திருந்தார்கள். எனவே,) அவர்களிடம் உறுதி மொழி கொடுத்தேன். பிறகு உமர்(ரலி) அவர்களிடம் சென்று நபி(ஸல்) அவர்கள் விழித்தெழுந்துவிட்டார்கள் என்று தெரிவித்தேன். பிறகு நாங்கள் நபி(ஸல்) அவர்களை நோக்கிப் புறப்பட்டு விரைந்தோடிச் சென்றடைந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் உமர்(ரலி) உறுதிமொழி கொடுத்தார்கள். பிறகு நானும் (இரண்டாம் முறையாக) உறுதிமொழி கொடுத்தேன்.

ஹதீஸ் 3917. பராஉ(ரலி) அறிவித்தார்

அபூ பக்ர்(ரலி) (என் தந்தை) ஆஸிப்(ரலி) அவர்களிடமிருந்து ஒட்டகச் சேணம் ஒன்றை விலைக்கு வாங்கினார்கள். நான் அவர்களுடன் அதைச் சுமந்து சென்றேன். ஆஸிப்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (ஹிஜ்ரத்) பயணம் குறித்து அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு அவர்கள் கூறினார்கள்.'எங்களின் மீது (எதிரிகளால்) கண்காணிப்பு மேற்கொள்ளப்பட்டது. எனவே, நாங்கள் இரவில் புறப்பட்டோம். நாங்கள் நண்பகல் நேரம் வரும் வரை இரவும் பகலும் கண் விழித்துப் பயணித்தோம். பிறகு எங்களுக்குப் பாறை ஒன்று தென்பட்டது. நாங்கள் அதனருகே சென்றோம். அதற்கு ஏதோ கொஞ்சம் நிழல் இருந்தது. நான் அல்லாஹ்வின் தூதருக்காக என்னுடன் இருந்த தோல் ஒன்றை விரித்தேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் அதன் மீது படுத்தார்கள். நான் அவர்களைச் சுற்றிலுமிருந்த புழுதியைத் தட்டிக் கொண்டே சென்றேன். அப்போது (தற்செயலாக) ஓர் ஆட்டிடையனைக் கண்டேன். அவன் தன்னுடைய சிறிய ஆட்டு மந்தை ஒன்றுடன் நாங்கள் நாடிச் சென்ற (அதே பாறை நிழல்)தனை நாடி, அதை நோக்கி வந்து கொண்டிருந்தான். நான் அவனிடம்,'இளைஞனே! நீ யாருடைய பணியாள்?' என்று கேட்டேன். அவன்,'நான் இன்னாரின் பணியாள்" என்று சொன்னான். நான்,'உன் ஆடுகளிடம் சிறிது பால் இருக்குமா?' என்று கேட்டேன். அவன்,'ஆம்" என்றான். நான்,'நீ (எங்களுக்குப்) பால் கறந்து தருவாயா?' என்றான். பின்னர், அவன் தன் ஆடுகளில் ஒன்றைப் பிடித்து வந்தான். நான் அவனிடம்,'அதன் மடியை (புழுதி போக) உதறு" என்று சொன்னேன். பிறகு,'அவன் சிறிது பாலைக் கறந்தான். என்னிடம் தண்ணீருள்ள தோல்ப் பாத்திரம் ஒன்றிருந்தது. அதில் துண்டுத் துணியொன்று (மூடி) இருந்தது. அதில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காகத் தண்ணீர் வைத்திருந்தேன். அதைப் பால் (பாத்திரத்தின்) மீது அதன் கீழ்ப்பகுதி குளிர்ந்து போகும் வரை ஊற்றினேன். பிறகு அதை நபி(ஸல்) அவர்களிடம்

கொண்டு சென்று,'பருகுங்கள், இறைத்தூதர் அவர்களே!' என்று சொன்னேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நான் திருப்தியடையும் வரை (அதை)ப் பரும்னார்கள். பிறகு, எங்களைத் தேடிவந்தவர்கள் எங்கள் தடயத்தைப் பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்க நாங்கள் புறப்பட்டோம்.

ஹதீஸ் 3918. பராஉ(ரலி) அறிவித்தார்

நான் அபூ பக்ர்(ரலி) அவர்களுடன் அவர்களின் வீட்டாரிடம் சென்றேன். அப்போது அவர்களின் மகளான ஆயிஷா(ரலி), காய்ச்சல் கண்டு (படுக்கையில்) படுத்திருந்தார்கள். அவரின் தந்தை(யான அபூ பக்ர் - ரலி அவர்கள்) அவரின் கன்னத்தில் (பாசத்தோடு) முத்தமிட்டு,'எப்படியிருக்கிறாய்? அருமை மகளே!"என்று கேட்டதை கண்டேன்.

ஹதீஸ் 3919. நபி(ஸல்) அவர்களின் ஊழியரான அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) வந்தார்கள். அப்போது அவர்கள் தம் தோழர்களில் அபூ பக்ர்(ரலி) மட்டுமே கருப்பு - வெள்ளை முடி உடையவர்களாக இருந்தார்கள். அன்னார் மருதாணியாலும்,'கத்தம்' எனும் (ஒரு வகை) இலைச் சாயத்தாலும் தம் (தாடி) முடியைத் தோய்த்து (நரையை) மறைத்துக் கொண்டார்கள்.

ஹதீஸ் 3920. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருகை தந்தபோது, அவர்கள் தம் தோழர்களிலேயே அபூ பக்ர்(ரலி) தாம் அதிக வயதுடையவர்களாக இருந்தார்கள். பிறகு, தம் (தாடிமுடியை) அபூ பக்ர்(ரலி) மருதாணியாலும்,'கத்தம்' எனும் இலைச் சாயத்தாலும் தோய்த்து (நரையை) மறைத்துக் கொண்டார்கள். அதனால் அதன் நிறம் கருஞ்சிவப்பாகி விட்டது.

ஹதீஸ் 3921. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(என் தந்தை) அபூ பக்ர்(ரலி)'பனுகல்ப்' குலத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணை மணமுடித்தார்கள்.'உம்மு பக்ர்' என்று அவருக்குச் சொல்லப்படும். அபூ பக்ர்(ரலி) (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்தபோது அப்பெண்ணை விவாக விலக்கு செய்து விடவே, அவரை அவரின் தந்தையின் சகோதரர் மகன் (மறு) மணம் புரிந்து கொண்டார். அவர்தான் (பத்ருப் போரில்) கொல்லப்பட்டு, பத்ர் பாழுங்கிணற்றில் போடப்பட்ட) குறைஷிக்குல இறை மறுப்பாளர்களுக்காக இந்த இரங்கல் பாவைப் பாடிய கவிஞராவார்.

பத்ரின் பாழுங்கிணற்றுக்கு

(இப்போது)

என்ன களங்கம் நேர்ந்துவிட்டது?

ஒட்டகத் திமில்களால்

அலங்கரிக்கப்பட்ட மரத்தட்டுகளால்

(விருந்தளிக்கம் அதிபர்கள்

தூக்கி வீசப்பட்டதால்...)

பத்ரின் பாழுங்கிணற்றுக்கு

என்ன (களங்கமா)

நேர்ந்துவிட்டது?

அழகிய பாடம்களால்...

மதிப்புக்குரிய

மதுபோதைப்பிரியர்களால்...

(என் காதலி)

உம்முபக்ர் எங்கள்

மனச் சாந்திக்காக

ஆறுதல் சொல்கிறாள்.

என் சமுதாயமே

(சமாதிக்குப்) போன பின்

எனக்கேது மனச்சாந்தி...?

(மரணத்திற்குப் பின்)

நாம் மீண்டும் உயிர்தெழுவோம்

என்கிறார் இறைத்தூதர்!

(ஆனால்,)

ஆந்தைகளும் தேவாங்குகளும்

உயிர் பிழைப்பது எப்படி...?

ஹதீஸ் 3922. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்.

(ஹிஜ்ரத் பணயித்தின்போது வழியில்) நபி(ஸல்) அவர்களுடன் நான் ('ஸவ்ர்' மலைக்குகையில் (தங்கி) இருந்தேன். நான் தலையை உயர்த்தியபோது (எங்களைத் தேடி வந்த) கூட்டத்தாரின் பாதங்கள் என் (தலைக்கு) மேலே தெரிந்தன. நான்,'இறைத்தூதர் அவர்களே! அவர்களில் எவராவது தம் பார்வையைத் தாழ்த்தி (குகைக்குள் உற்று நோக்கி)னால் நம்மைப் பார்த்து விடுவாரே! (இப்போது என்ன செய்வது?' என்று சொன்னேன். (நபி(ஸல்) அவர்கள்,'அமைதியாயிருங்கள் அபூ பக்ரே! (நாம்) இருவர் நம்முடன் அல்லாஹ் மூன்றாமவன். (அவன் நம்மைக் காப்பாற்றுவான்)'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3923. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) அறிவித்தார்

கிராமவாசி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து ஹிஜ்ரத் குறித்துக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'உனக்கு என்ன கேடு?' (எனச் செல்லமாகக் கேட்டுவிட்டு) நிச்சயமாக அதன் நிலை மிகவும் கடினமானது. உன்னிடம் ஒட்டகங்கள் இருக்கின்றனவா?' என்று கேட்டார்கள். அவர்,'ஆம்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அவற்றிற்குரிய ஸகாத் கொடுத்து வருகிறாயா?' என்று கேட்டார்கள். அவர்,'ஆம்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அவற்றிலிருந்து (இலவசமாகப் பால் கறந்து கொள்ள, ஏழைகளுக்கு) இரவல் கொடுக்கிறாயா?' என்று கேட்டார்கள். அவர்,'ஆம்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அவை (நீர் நிலைகளுக்கு) நீரருந்தச் செல்லும் (முறை வரும்) நாளில் அவற்றின் பாலைக் கறந்து (ஏழைகளுக்குக்) கொடுக்கிறாயா?' என்று கேட்க அவர்,'ஆம்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அப்படியென்றால், நீ கடல்களுக்கு அப்பால் சென்று கூட வேலை செய்(து வாழலாம்..) அல்லாஹ் உன் நற் செயல்(களின் பிரதிபலன்)களிலிருந்து எதையும் குறைக்க மாட்டான்'' என்று கூறினார்கள்.

இரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாக இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

## நபி(ஸல்) அவர்கள் மற்றும் அவர்களின் தோழர்களின் மதீனா வருகை.

ஹதீஸ் 3924. பராஉ (ரலி) அறிவித்தார்

எங்களிடம் (மதீனாவுக்கு முஹாஜிராக) முதன் முதலில் வருகை தந்தவர்கள் முஸ்அப் இப்னு உமைர்(ரலி) அவர்களும், இப்னு உம்மி மக்தூம்(ரலி) அவர்களும் தாம். பிறகு எங்களிடம் அம்மார் இப்னு யாசிர்(ரலி) அவர்களும், பிலால்(ரலி) அவர்களும் வந்தனர்.

ஹதீஸ் 3925. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

எங்களிடம் (மதீனாவுக்கு முஹாஜிராக) முதலில் வருகை தந்தவர்கள் முஸ்அப் இப்னு உமைர்(ரலி) அவர்களும் இப்னு உம்மி மக்தூம்(ரலி) அவர்களும் தாம். இவர்கள் மக்களுக்கு (குர்ஆன்) ஓதக் கற்றுக் கொடுத்து வந்தனர். பிறகு பிலால்(ரலி) அவர்களும், ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களும், அம்மார் இப்னு யாசிர்(ரலி) அவர்களும் வருகை தந்தனர். பிறகு உமர்பின் கத்தாப்(ரலி), நபித்தோழர்கள் இருபது பேர் (கொண்ட ஒரு குழு) உடன் வந்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள(து வருகைய)ால் மதீனாவாசிகள் மகிழ்ச்சியடைந்ததைப் போன்று வேறெதற்காகவும் அவர்கள் மகிழ்ச்சியடைந்ததை நான் பார்க்கவில்லை. எந்த அளவுக்கென்றால் (மதீனாவின்) அடிமைப்பெண்கள், 'இறைத்தூதர் வந்துவிட்டார்கள்'' என்று பாடி (மகிழலா)னார்கள். 'ஸப்பிஹிஸ்ம ரப்பிக்கல் அஃலா' என்னும் (87-வது) அத்தியாயத்தை, குர்ஆனின் (மற்ற) விரிவான (முஃபஸ்ஸல்) அத்தியாயங்கள் சிலவற்றுடன் நான் (மனப்பாடமாக) ஓதும் வரை நபி(ஸல்) அவர்கள் (மதீனா) வருகை தரவில்லை.

ஹதீஸ் 3926. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருகை தந்தபோது அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கும் பிலால்(ரலி) அவர்களுக்கும் காய்ச்சல் கண்டிருந்தது. அவ்விருவரிடமும் நான் சென்று, 'என் தந்தையே! எப்படியிருக்கிறீர்கள்? பிலால் அவர்களே! எப்படியிருக்கிறீர்கள்'' என்று கேட்டேன். அபூ பக்ர் அவர்களுக்கு காய்ச்சல் ஏற்படும்போது அவர்கள் பின் வரும் கவிதையைக் கூறுவார்கள்:

காலை

வாழ்த்துக் கூறப்பெற்ற

நிலையில்

ஒவ்வொரு மனிதனும்

தம் குடும்பத்தாரோடு

காலைப் பொழுதை அடைகிறான்....

(ஆனால்,)

மரணம் - அவன் செருப்பு வாரை விட

மிக அருகில் இருக்கிறது

(என்பது -

அவனுக்குத் தெரிவதில்லை)

பிலால்(ரலி) காய்ச்சல் நீங்கியதும் வேதனைக்குரல் எழுப்பி,

'இத்கிர்' (நறுமணப்) புல்லும்

'ஜலீல்' (கூரைப்) புல்லும்

என்னைச் சூழ்ந்திருக்க..

(மக்காவின்) பள்ளத்தாக்கில்

ஓர் இராப் பொழுதையேனும்

நான் கழிப்பேனா?...

'மஜின்னா' எனும்

(மக்காவின் இனிப்புச்சுனை) நீரை

ஒரு நாள் ஒரு பொழுதாவது

நான் பருகுவேனா...?

(மக்கா நகரின்)

ஷாமா, த∴பீல் மலைகள்

(இனி எப்போதாவது)

எனக்குத் தென்படுமா?...

என்ற கவிதையைக் கூறுவார்கள்.

உடனே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, (அவர்களின் நிலையைத்) தெரிவித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! நாங்கள் மக்காவை நேசித்தது போல் அல்லது அதை விட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்கு! மேலும் இவ்வூரை ஆரோக்கியமானதாகவும் ஆக்கு! எங்களுடைய (அளவைகளான)'ஸாவு', 'முத்து' முதலியவற்றில் (எங்கள் உணவில்) எங்களுக்கு நீ அருள் வளத்தை வழங்கு! இங்குள்ள காய்ச்சலை இடம் பெயரச் செய்து அதை'ஜுஹ்∴பா' என்னுமிடத்தில் (குடி) அமர்த்திவிடு'' என்று பிரார்த்திதார்கள்.

ஹதீஸ் 3927. உபைதுல்லாஹ் இப்னு அதீ இப்னி கியார்(ரஹ்) அறிவித்தார்.

நான் உஸ்மான்(ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள் ஏகத்துவ உறுதிமொழி கூறி (இறைவனைப் புகழ்ந்து)விட்டு, 'நிற்க, அல்லாஹ் முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய(மார்க்க)த்துடன் அனுப்பினான். நான் அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் அழைப்பை ஏற்று முஹம்மத்(ஸல்) அவர்கள் எ(ந்த வேதத்)தைக் கொண்டு அனுப்பப்பட்டார்களோ அதை நான் நம்பி ஏற்றுக் கொண்டேன். பிறகு, (மக்காவைத் துறந்து அபிசீனியாவுக்கும் அடுத்து (மதீனாவுக்குமாக) இரண்டு ஹிஜ்ரத்துகள் செய்தேன். மேலும், நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மருமகனாக இருந்தேன். அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்து (உறுதிமொழி) கொடுத்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களை அல்லாஹ் மரணிக்கச் செய்யும் வரை அவர்களுக்கு நான் மாறு செய்யவுமில்லை மோசடி செய்யவுமில்லை'' என்று கூறினார்கள்.

"ஸுஹ்ரீ(ரஹ்) எனக்கு இதையே அறிவித்தார்கள்'' என்று இஸ்ஹாக் அல் கல்பீ(ரஹ்) என்னும் அறிவிப்பாளர் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 3928. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) செய்த இறுதி ஹஜ்ஜின்போது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி)'மினா' பெரு வெளியில் தங்கியிருந்த சமயம் தம் (தங்குமிடத்தில் இருந்த) வீட்டாரை நோக்கித் திரும்பினார்கள். அப்போது அவர்கள் என்னைக் கண்டு,'(நான் உமர் - ரலி - அவர்களிடம்) விசுவாசிகளின் தலைவரே! ஹஜ்ஜுப் பருவத்தில் (நன் மக்களுடன்) தரம் தாழ்ந்த மக்களும், (வாய்க்கு வந்தபடி பேசி) குழப்பம் செய்யும் மக்களும் ஒன்று கூடுவர். (எனவே,) தாங்கள் மதீனா சென்றடையும் வரையிலும், (அங்குள்ள) மார்க்க அறிஞர்கள், பிரமுகர்கள், ஆலோசகர்களைப் போய்ச் சேரும் வரையிலும் தாங்கள் நிதானிக்க வேண்டுமென்று கருதுகிறேன். ஏனெனில் மதீனா, ஹிஜ்ரத் பிரதேசமும், நபிவழி (நடைமுறைப்படுத்தப்படும்) நாடும், பாதுகாப்புமிக்க நாடும் ஆகும்'' என்று கூறினேன். அதற்கு உமர்(ரலி),'இனி, நான் மதீனாவில் (உரை நிகழ்த்த) நிற்கப் போகும் முதல் கூட்டத்திலேயே (இது குறித்து எச்சரிக்க) உறுதியோடு நிற்பேன்'' என்று கூறினார்கள் எனத் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 3929. காரிஜா இப்னு ஸைத் இப்னி ஸாபித்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்திருந்த அன்சாரிப் பெண்களில் ஒருவரான (என் தாயார்) உம்முல் அலா(ரலி) என்னிடம் தெரிவித்தார்கள்.

(மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து வந்த) முஹாஜிர்களின் தங்குமிடத்தி(னை முடிவு செய்வதற்)காக அன்சாரிகள் சீட்டுக் குலுக்கிப் போட்டபோது, உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) அவர்களின் பெயர் எங்கள் பங்கில் வந்தது. எங்களிடம் (வந்து தங்கிய) உஸ்மான்(ரலி) நோய் வாய்ப்பட்டார். எனவே, அவருக்கு நான் நோய்க் காலப் பணிவிடைகள் செய்து வந்தேன். இறுதியில் அவர் இறந்தும்விட்டார். அவருக்கு அவரின் துணிகளால் கஃபனிட்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். நான் (இறந்த உஸ்மானை நோக்கி)'அபூ சாயிபே! அல்லாஹ்வின் கருணை உங்களின் மீது உண்டாகட்டும்! அல்லாஹ் உங்களைக் கண்ணியப்படுத்திவிட்டான் என்பதற்கு நான் சாட்சியம் பகர்கிறேன்'' என்று கூறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் அவரை கண்ணியப்படுத்திவிட்டான் என்று உனக்கெப்படித் தெரியும்?' என்று கேட்டார்கள். நான்,'எனக்குத் தெரியாது. என் தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும், இறைத்தூதர் அவர்களே! (அல்லாஹ் இவரை கண்ணியப்படுத்தாவிட்டால் பின்) யாரைத் தான் (கண்ணியப்படுத்துவான்)'' என்று நான் சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'இவருக்கோ மரணம் வந்துவிட்டது அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதராக இருந்தும் என்னிடம் (மறுமையில்) எப்படி நடந்து கொள்ளப்படும் என்பதே அல்லாஹ்வின் மீதாணையாக எனக்குத் தெரியாது'' என்று கூறினார்கள். (இதைக்கேட்ட) நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இவருக்குப் பிறகு எவரையும் நான் தூய்மையானவர் என்று கூறமாட்டேன்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், இப்படிச் சொன்னது எனக்குக் கவலையளித்தது. பிறகு, நான் தூங்கியதும் (கனவில்) உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) அவர்களுக்குரிய ஓர் ஆறு (சொர்க்கத்தில்) ஓடிக் கொண்டிருப்பதாகக் கண்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து அதைத் தெரிவித்தேன். நபி(ஸல்) அவர்கள்,'அது அவரின் (நற்) செயல்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3930. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

'புஆஸ்' போர் நாள், தன் தூதருக்காக அல்லாஹ் (சாதகமான சூழ்நிலையை உருவாக்கும் வகையில்) முன் கூட்டியே நிகழச் செய்த நாளாக அமைந்தது. (அந்தப் போரின் காரணத்தால்) மதீனாவாசிகளின் கூட்டமைப்பு (குலைந்து) பிளவுபட்டிருந்த நிலையிலும், அவர்களில் முக்கியப் பிரமுகர்கள் கொல்லப்பட்டு விட்டிருந்த நிலையிலும் அவர்கள் இஸ்லாத்தில் இணைய ஏதுவான நிலை உருவாகியிருந்தபோது தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனா வந்தார்கள்.

**ஹதீஸ் 3931.** ஆயிஷா (ரலி) அறிவித்தார்

ஈதுல் பித்ர்... அல்லது ஈதுல் அள்ஹா... (பெரு) நாளில் நபி (ஸல்) அவர்கள் என்னிடம் அமர்ந்திருந்தபோது அபூ பக்ர் (ரலி) என்னிடம் வந்தார்கள். அப்போது 'புஆஸ்' போர் நாளில் அன்சாரிகள் பாடிய பாடல்களை (சலங்கையில்லா கஞ்சிராவை அடித்துக் கொண்டு) பாடியபடி இரண்டு பாடம்கள் என்னருகே இருந்தனர். அபூ பக்ர் (ரலி), 'ஷைத்தானின் (இசைக்) கருவி'' என்று இருமுறை கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'அவ்விருவரையும்விட்டுவிடுங்கள், அபூ பக்ரே! ஒவ்வொரு சமுதாயத்திற்கும் பண்டிகை (நாள்) ஒன்று உண்டு. நம்முடைய பண்டிகை (நாள்) இந்த நாள் தான்'' என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 3932.** அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு (ஹிஜ்ரத் செய்து) வந்தபோது மதீனாவின் மேற்பகுதியில் 'பனு அம்ர் இப்னு அவ்ஃப்' என்றழைக்கப்பட்டு வந்த ஒரு குடும்பத்தாரிடம் இறங்கி, அவர்களிடையே பதினான்கு நாள்கள் தங்கினார்கள். பிறகு பனு நஜ்ஜார் கூட்டத்தாருக்கு ஆளனுப்பினார்கள். பனு நஜ்ஜார் கூட்டத்தார் (நபியவர்களை வரவேற்கும் முகமாக) தம் வாட்களைத் தொங்கவிட்டபடி வந்தனர். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் வாகனத்தில் அமர்ந்திருக்க, அபூ பக்ர் (ரலி), அவர்களுக்குப் பின்னே அமர்ந்திருக்க, பனு நஜ்ஜார் கூட்டத்தார் அவர்களைச் சுற்றிலும் குழுமியிருந்த (அந்தக் காட்சி) தனை (இப்போதும்) நான் காண்பதைப் போன்றுள்ளது. இறுதியாக, நபி (ஸல்) அவர்கள் (தம் வாகனத்தை) அபூ அய்யூப் அன்சாரி (ரலி) அவர்களின் வீட்டு முற்றத்தில் நிறுத்தினார்கள். - தொழுகை நேரம் (தம்மை) வந்தடையும் இடத்திலேயே நபி (ஸல்) அவர்கள் தொழுகையை நிறைவேற்றுவார்கள். ஆட்டுத் தொழுவங்களிலும் தொழுவார்கள் - பிறகு நபி (ஸல்) அவர்கள் பள்ளிவாசல் கட்டும்படி உத்தரவிட்டார்கள். பனு நஜ்ஜார் கூட்டத்தாருக்கு நபி (ஸல்) அவர்கள் ஆளனுப்ப, அவர்கள் வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள், 'பனு நஜ்ஜார் கூட்டத்தாரே! (பள்ளிவாசல் கட்டுவதற்காக) உங்களின் இந்தத் தோட்டத்திற்கு என்னிடம் விலை கூறுங்கள்'' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அதன் விலையை நாங்கள் அல்லாஹ்விடமே கோருவோம்'' என்று பதிலளித்தார்கள். நான் உங்களிடம் சொல்பவை தாம் அந்தத் தோட்டத்தில் இருந்தன் அதில் இணைவைப்பவர்களின் மண்ணறைகள் இருந்தன. அதில் இடிபாடுகளும், சில பேரீச்ச மரங்களும் இருந்தன. எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள், இணைவைப்போரின் மண்ணறை களைத் தோண்டும்படி உத்தரவிட அவ்வாறே அவை தோண்டப்பட்டன. இடிபாடுகளை (அகற்றிச்) சமப்படுத்தும்படி உத்தரவிட அவ்வாறே அவை சமப்படுத்தப்பட்டன. பேரீச்ச மரங்களை வெட்டும்படி உத்தரவிட அவ்வாறே அவை வெட்டப்பட்டன. பள்ளிவாசலின் கிப்லா திசையில் பேரீச்ச மரங்களை வரிசையாக நட்டனர். பள்ளிவாசலின் (கதவின்) இரண்டு நிலைக்கால்களாக கல்லை (நட்டு) வைத்தனர். 'ரஜ்ஸ்' எனும் ஒருவித யாப்பு வகைப் பாடலைப் பாடிக் கொண்டே அந்தக் கல்லை எடுத்து வரலாயினர். அப்போது அவர்களுடன் இறைத்தூதர் (ஸல்) அவர்களும் இருந்தார்கள். 'இறைவா! மறுமையின் நன்மையைத் தவிர வேறு நன்மை கிடையாது எனவே, (மறுமை வெற்றிக்காகப் பாடுபடும்) அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் உதவி செய்!" என்று அவர்கள் பாடிக் கொண்டிருந்தார்கள்.

## முஹாஜிர் தம் (ஹஜ் அல்லது உம்ரா) வழிபாடுகளை நிறைவேற்றிய பின்பு மக்காவில் தங்குவது.

**ஹதீஸ் 3933.** அப்துர் ரஹ்மான் இப்னு ஹுமைத் அஸ் ஸுஹ்ரீ (ரஹ்) அறிவித்தார்

நமிர் அல் கிந்தீயின் சகோதரி மகனான சாயிப் இப்னு யஸீத்(ரலி) அவர்களிடம் உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்),'முஹாஜிர், (ஹஜ் வழிபாடுகளை நிறைவேற்றிவிட்டு மினாவிலிருந்து வந்த பிறகு) மக்காவில் தங்குவது பற்றி நீங்கள் என்ன செவியுற்றிருக்கிறீர்கள்?' என்று வினவினார்கள். அதற்கு சாயிப்(ரலி),'மினாவிலிருந்து வந்த பின்பு மூன்று நாள்கள் (மக்காவில் தங்க) முஹாஜிருக்கு அனுமதியுண்டு' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்று அலா இப்னு ஹள்ரமீ(ரலி) சொல்ல கேட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.

## ஆண்டுக்கணக்கு மக்கள் எப்போதிருந்து இஸ்லாமிய ஆண்டுக் கணக்கை ஆரம்பித்தார்கள்

ஹதீஸ் 3934. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

மக்கள் (ஆண்டுக்கணக்கை) நபி(ஸல்) அவர்கள் இறைத்தூதராக நியமிக்கப்பட்ட (அவர்களின் 40-ம் வய)திலிருந்தோ அவர்களின் மறைவிலிருந்தோ கணக்கிடவில்லை மதீனாவுக்கு நபி(ஸல்) அவர்கள் (ஹிஜ்ரத் செய்து) வந்ததிலிருந்தே கணக்கிட்டார்கள்.

ஹதீஸ் 3935. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(மக்காவில் தொழுகை இரண்டு ரக்அத்துகளாகக் கடமையாக்கப்பட்டது. பிறகு நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து சென்ற பின் நான்கு ரக்அத்துக்களாகக் கடமையாக்கப்பட்டது. மேலும், பயணத் தொழுகை மட்டும் முன்பு கடமையாக்கப்பட்டிருந்தவாறே (இரண்டு ரக்அத்தாகவே இருக்கட்டுமென்று)விட்டு விடப்பட்டது.

இதே ஹதீஸ் வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## "இறைவா! என் தோழர்கள் தங்களின் ஹிஜ்ரத்தை முழுமையாக நிறைவேற்றும்படி செய்'' என்று நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தும், (தம் தோழர்களில் ஹிஜ்ரத் செய்ய இயலாமல்) மக்காவிலேயே இறந்துவிட்டவர்களைக் குறித்து நபி(ஸல்) அவர்கள் இரங்கல் தெரிவித்ததும்.

ஹதீஸ் 3936. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

'விடை பெறும்' ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்கள் நோயுற்றிருந்த என்னை (நலம்) விசாரிக்க வந்தார்கள். அந்த நோயினால் நான் இறப்பின் விளிம்புக்கே சென்று விட்டிருந்தேன். (நபி-ஸல்) அவர்களைக் கண்டதும்) நான்,'இறைத்தூதர் அவர்களே! நான் ஒரு செல்வந்தன்' எனக்கு ஒரேயொரு மகளைத் தவிர வேறு (நேரடி வாரிசு) எவரும் இல்லை. இந்நிலையில் நீங்கள் பார்க்கிற வேதனை என்னை வந்தடைந்துவிட்டது. எனவே, நான் என் செல்வத்தில் மூன்றில் இரண்டு பங்கை தர்மம் செய்து விடட்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'வேண்டாம்'' என்று கூறினார்கள். நான்,'அப்படியென்றால் அதில் பாதியை தர்மம் செய்து விடட்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'மூன்றிலொரு பங்கு (போதும்) சஅதே! மூன்றிலொரு பங்கே அதிகம் தான். நீங்கள் உங்கள் வாரிசுகளை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாகவிட்டுச் செல்வதை விடத் தன்னிறைவுடையவர்களாகவிட்டுச் செல்வதே சிறந்ததாகும். நீங்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடிச் செலவழிக்கிற எதுவாயினும் அதற்குரிய பிரதிபலனை அல்லாஹ் உங்களுக்கு அளித்தே தீருவான் உங்கள் மனைவியின் வாயில் நீங்கள் ஊட்டும் ஒரு கவளம் உணவாயினும் சரியே'' என்று கூறினார்கள். நான்,'இறைத்தூதர் அவர்களே! என் தோழர்கள் (எல்லாரும் மதீனாவுக்குச்) சென்றுவிட்ட பிறகு நான் (மட்டும், இங்கே மக்காவில்) பின் தங்கிவிடுவேனா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'நீங்கள் (இங்கு) பின் தங்கியிருந்து அல்லாஹ்வின் திருப்தியை நாடி நீங்கள்

புரியும் நற்செயல் எதுவாயினும் அதனால் உங்களுக்கு அந்தஸ்தும் உயர்வும் அதிகமாகவே செய்யும். சில சமுதாயத்தார் உங்களால் பலனடைவதற்காகவும் வேறு சிலர் இழப்புக்குள்ளாவதற்காகவும் (உங்கள் ஆயுள் நீட்டிக்கப்பட்டு இங்கேயே) நீங்கள் பின்தங்கி விடக்கூடும்‘‘ சொல்லிவிட்டு,‘இறைவா! என் தோழர்கள் தங்கள் ஹிஜ்ரத்தை முழுமையாக நிறைவேற்றும்படிச் செய். அவர்களைத் தம் கால்சுவடுகளின் வழியே (பழைய அறியாமைக் கால நிலைக்குத்) திருப்பியனுப்பி விடாதே‘‘ என்று பிரார்த்தித்தார்கள். மேலும்,‘ஆயினும் ஸஅத் இப்னு கவ்லா தான் பாவம்‘‘ என்று கூறினார்கள். ஸஅத் இப்னு கவ்லா(ரலி) மக்காவிலேயே இறந்துவிட்டதற்காக இரங்கல் தெரிவிக்கும் விதத்தில் தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இப்படிக் கூறினார்கள். 184

இதன் அறிவிப்பாளர் இப்ராஹீம் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் மற்றோர் அறிவிப்பாளரான அஹ்மத் இப்னு யூனுஸ்(ரஹ்) (உன் வாரிசுகளை என்பதற்கு பதிலாக)’உன் சந்ததிகளை ஏழைகளாக நீவிட்டுச் செல்வது‘‘ என்று (இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என) அறிவித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் தம் (முஹாஜிர் மற்றும் அன்சார்) தோழர்களிடையே எப்படிச் சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள்?

‘‘நாங்கள் மதீனாவுக்கு (ஹிஜ்ரத் செய்து) வந்தபோது நபி(ஸல்) அவர்கள், எனக்கும் ஸஅத் இப்னு ரபீஉ(ரலி) அவர்களுக்குமிடையே சகோதர உறவை ஏற்படுத்தினார்கள்‘‘ என்று அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) கூறினார்.

‘‘நபி(ஸல்) அவர்கள், சல்மான் (ஃபாரிஸீ (ரலி) அவர்களுக்கும் அபுத்தர்தா(ரலி) அவர்களுக்கிடையே சகோதரத்துவ உறவை ஏற்படுத்தினார்கள்‘‘ என்று அபூ ஜுஹைஃபா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 3937. அனஸ்(ரலி) அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (ஹிஜ்ரத் செய்து) மதீனா வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவருக்கும் ஸஅத் இப்னு ரபீஉஅல் அன்சாரிக்கும் இடையே சகோதரத்துவ உறவை ஏற்படுத்தினார்கள். ஸஅத் இப்னு ரபீஉ(ரலி), தம் குடும்பத்தாரையும் தம் செல்வத்தையும் அவருக்கு சரிபாதியாகப் பங்கிட்டுத் தருவதாகக் கூறினார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி),‘அல்லாஹ் உங்களுக்கு உங்கள் வீட்டாரிலும் செல்வத்திலும் அருள்வளத்தை வழங்குவானாக! எனக்குக் கடை வீதியைக் காட்டுங்கள்‘‘ என்று கூறினார்கள். (அவ்வாறே அவர் கடை வீதியைக் காட்ட அங்கு வியாபாரம் செய்து) சிறிது பாலாடைக் கட்டியையும் நெய்யையும் இலாபமாகப் பெற்றார்கள். சில நாள்களுக்குப் பிறகு நபி(ஸல்) அவர்கள், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் அவர்களின் மீது (வாசனை திரவியத்தின்) மஞ்சள் அடையாளத்தைக் கண்டு (வியந்து,)’என்ன இது, அப்துர் ரஹ்மான்!”என்று கேட்டார்கள். அதற்கு அப்துர் ரஹ்மான் அவர்கள்,‘இறைத்தூதர் அவர்களே! நான் அன்சாரிப் பெண்ணொருவரை மணம் புரிந்து கொண்டேன்‘‘என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘அவளுக்கு (மஹ்ராக) என்ன கொடுத்தாய்?’ என்று கேட்க,‘ஒரு பேரீச்சங் கொட்டையளவு தங்கம்‘‘ என்று அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) பதிலளித்தார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள்,‘ஓர் ஆட்டை அறுத்தாவது வலீமா மணவிருந்து கொடு‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3938. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருகை தந்திருக்கும் செய்தி (யூத மதத்தில் இருந்த) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்களுக்கு எட்டியது. உடனே அவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து

சில விஷயங்களைக் குறித்துக் கேட்டார். 'தங்களிடம் நான் மூன்று விஷயங்களைப் பற்றிக் கேட்கப் போகிறேன். அவற்றை ஓர் இறைத்தூதர் மட்டுமே அறிவார்'' என்று கூறினார். பிறகு, '1. இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம் எது? 2. சொர்க்கவாசி முதலில் உண்ணும் உணவு எது? 3. குழந்தை தன் தந்தையின் சாயலிலோ, தன் தாயின் சாயலிலோ இருப்பது எதனால்?' என்று கேட்டார்கள்.

நபி(ஸல்) அவர்கள், 'சற்று முன்பு தான் ஜிப்ரீல் எனக்கு இவற்றைக் குறித்து (விளக்கம்) தெரிவித்தார்'' என்று கூறினார்கள். உடனே, அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள், 'ஜிப்ரீல் தான் வானவர்களிலேயே யூதர்களுக்குப் பகைவராயிற்றே!"என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம் ஒரு நெருப்பாகும். அது மக்களைக் கிழக்கிலிருந்து (துரத்திக் கொண்டு வந்து) மேற்குத் திசையில் ஒன்றுதிரட்டும். சொர்க்கவாசிகள் முதலில் உண்ணும் உணவு பெரிய மீனின் ஈரல் பகுதியில் உள்ள அதிகப்பயான சதையாகும். குழந்தை(யிடம் காணப்படும் தாயின் அல்லது தந்தையின்) சாயலுக்குக் காரணம், ஆண் மனைவியுடன் உடலுறவு கொள்ளும்போது அவனுடைய நீர் (விந்து உயிரணு) முந்திக் கொண்டால் குழந்தை அவனுடைய சாயலில் பிறக்கிறது. பெண்ணின் நீர் (கருமுட்டை உயிரணு) முந்திக் கொண்டால் குழந்தை அவளுடைய சாயலில் பிறக்கிறது'' என்று பதிலளித்தார்கள். (உடனே) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள், 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும், தாங்கள் இறைத்தூதர் தாம் என்றும் நான் உறுதி அளிக்கிறேன்'' என்று கூறினார்கள். பிறகு, 'இறைத்தூதர் அவர்களே! யூதர்கள் பொய்யில் ஊறித் திளைத்த சமுதாயத்தினர் ஆவர். எனவே, நான் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட செய்தியை அவர்கள் அறிவதற்கு முன்னால் தாங்கள் என்னைப் பற்றி அவர்களிடம் கேட்டுப் பாருங்கள்'' என்று கூறினார்கள். அப்போது யூதர்கள் (நபி - ஸல் - அவர்களிடம்) வந்தார்கள். (உடனே, அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) வீட்டினுள் புகுந்து (மறைந்து) கொண்டார்கள்.) நபி(ஸல்) அவர்கள் (யூதர்களிடம்), 'உங்களில் அப்துல்லாஹ் இப்னு சலாம் எத்தகைய மனிதர்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'அவர் எங்களில் நல்லவரும், எங்களில் நல்லவரின் மகனும் ஆவார் எங்களில் சிறந்தவரும், சிறந்தவரின் மகனும் ஆவார்'' என்று பதிலளித்தார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ் இப்னு சலாம்) இஸ்லாத்தை ஏற்றார் என்றால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'அல்லாஹ் அவரை அதிலிருந்து காப்பாற்றுவானாக!"என்று கூறினார்கள். மீண்டும் நபி(ஸல்) அவர்கள் யூதர்களிடம் முன்பு போன்றே கேட்டார்கள். அதற்கு அவர்கள் முன்பு போன்றே பதிலளித்தார்கள். உடனே (வீட்டினுள் மறைந்து கேட்டுக கொண்டிருந்த) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள் வெளியே வந்து, 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும் முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதரவார்கள் என்றும் நான் உறுதி அளிக்கிறேன்'' என்று கூறினார்கள். உடனே யூதர்கள், 'இவர் எங்களில் கெட்ட வரும் எங்களில் கெட்டவரின் மகனும் ஆவார்''என்று சொல்லிவிட்டு அவரைக் குறித்து (இல்லாத குற்றங்களைப் புனைந்து) குறை கூறலானார்கள். (அவற்றைக் கேட்ட) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள், 'இதைத் தான் நான் அஞ்சிக் கொண்டிருந்தேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3939 , ஹதீஸ் 3940 அப்துர் ரஹ்மான் இப்னு முத்யிம்(ரஹ்) அறிவித்தார்

என் கூட்டாளி ஒருவர், சில திர்ஹம்களைக் கடைவீதியில் தவணைக்கு விற்றார். நான் (வியப்படைந்து), 'சுப்ஹானல்லாஹ்! இது சரியாகுமா? (இப்படி விற்க அனுமதியுள்ளதா?)'' என்று கேட்டேன். அதற்கு அவர், 'சுப்ஹானல்லாஹ்! அல்லாஹ்வின் மீதாணையாக! அதை நான்

கடைவீதியில் தான் விற்றேன். அதை எவரும் குறை கூறவில்லை‘‘ என்று பதிலளித்தார். உடனே நான் பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்களிடம் கேட்டேன் அதற்கு அவர்கள்,‘நாங்கள் இந்த வியாபாரத்தை (இந்த முறையில்) செய்து வந்தபோது நபி(ஸல்) அவர்கள் (மதீனா) வந்தார்கள்.’கையோடு கையாக - (உடனுக்குடன்) செய்யும் வியாபாரம் குற்றமில்லை. கடனுக்கு விற்பதாக இருந்தால் சரியில்லை’ என்று கூறினார்கள்‘‘ என்று கூறிவிட்டு,‘ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களை நீ சந்தித்துக் கேள். ஏனென்றால், அவர்தான் நம்மில் மிகப் பெரிய வியாபாரி‘‘ என்று கூறினார்கள். அவ்வாறே ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களைச் சந்தித்து கேட்டேன். அவர்களும் பராஉ(ரலி) சொன்னதைப் போன்றே கூறினார்கள்.

(இதை சறிய மாற்றத்துடன்) அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) ஒரு முறை (பின்வருமாறு) கூறினார்கள்.

நாங்கள் இந்த வியாபாரத்தைச் செய்து வந்தபோது நபி(ஸல்) அவர்கள் மதீனா வந்தார்கள். ஹஜ் காலம் வரை கடனுக்கு (விற்பதாக இருந்தால் சரியில்லை) என்று கூறினார்கள் என பராஉ இப்னு ஆஸிப்(ரலி) தெரிவித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருகை தந்தபோது யூதர்கள் அவர்களிடம் வருதல்

(குர்ஆனில் 5:41-வது வசனத்தில் வரும்)’ஹாதூ’ என்னும் (அரபுச்) சொல்லுக்கு’யூதர்களாக மாறிவிட்டார்கள்’ என்று பொருள். (குர்ஆனில் 7:156-வது வசனத்தில் வரும்)’ஹுத்னா’ என்பதற்கு,‘நாங்கள் பாவமன்னிப்புக் கோரி இறைவனின் பக்கம் திரும்பினோம்’ என்றும்’ஹாயித்’ என்பதற்கு’பாவமன்னிப்புக் கோரி (இறைவனிடம் திரும்பி)யவன்’ என்றும் பொருள்.

ஹதீஸ் 3941. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யூதர்களில் (முக்கியப் பிரமுகர்கள்) பத்துப் பேர் என் மீது நம்பிக்கை கொண்டிருப்பார்களாயின், யூதர்கள் (அனைவருமே) என் மீது நம்பிக்கை கொண்டிருந்திருப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 3942. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனா நகருக்குள் நுழைந்தார்கள். அப்போது யூதர்களில் சிலர் (முஹர்ரம் மாதம் 10ஆம் நாளான) ஆஷூரா நாளைக் கண்ணியப்படுத்தி அதில் நோன்பு நோற்றுவந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள்,‘அந்த நாளில் நோன்பு நோற்க நாமே அதிக உரிமையுடையவர்கள்‘‘ என்று சொல்லி அந்த நாளில் நோன்பு நோற்கும் படி (முஸ்லிம்களுக்கு) உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 3943. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வருகை தந்தபோது யூதர்கள் (முஹர்ரம் 10-ஆம் நாளான) ஆஷூரா தினத்தன்று நோன்பு நோற்பதைக் கண்டார்கள். யூதர்களிடம் அதுபற்றிக் கேட்கப்பட்டபோது அவர்கள்,‘இந்த நாள் தான் ஃபிர்அவ்னுக்கெதிராக மூஸா(அலை) அவர்களுக்கும் இஸ்ரவேலர்களுக்கும் அல்லாஹ் வெற்றியளித்த நாள். எனவே, நாங்கள் மூஸா(அலை) அவர்களைக் கண்ணியப்படுத்தும் விதத்தில் அதில் நோன்பு நோற்கிறோம்‘‘ என்று கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘மூஸா(அலை) அவர்களைக் கண்ணியப்படுத்திட நாங்களே அதிக உரிமையுடையவர்கள்‘‘ என்று சொல்லிவிட்டு அந்நாளில் (தாமும் நோன்பு நோற்று) நோன்பு நோற்கும்படி (முஸ்லிம்களுக்கு) உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 3944. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் தம் (முன் தலை) முடியைத் (தம் நெற்றியின் மீது) தொங்கவிட்டு வந்தார்கள். இணை வைப்பவர்கள் தங்கள் தலை (முடி) களைப் பிரித்து (நெற்றியில் விழவிடாமல் இரண்டு பக்கமும் தொங்கவிட்டு) வந்தாகள். வேதக்காரர்கள் தங்கள் தலை (முடி) களைக் (தம் நெற்றிகளின் மீது) தொங்கவிட்டு வந்தார்கள். எந்த விஷயங்களில் (இறைக்) கட்டளை எதுவும் இடப்படவில்லையோ அந்த விஷயங்களில் வேதக் காரர்களுடன் ஒத்துப் போவதை நபி (ஸல்) அவர்கள் விரும்பி வந்தார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்கள் தம் தலை (முடி) யை (இரண்டு பக்கங்களிலும்) பிரித்து (வம்டெடுத்து) க் கொண்டார்கள்.

ஹதீஸ் 3945. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்

அந்த வேதக்காரர்கள் (எத்தயைவர்கள் எனில், குர்ஆன் எனும்) அதனைப் பல பகுதிகளாகப் பிரித்துக் கொண்டார்கள். அதில் சிலவற்றை நம்பி ஏற்று, சிலவற்றை ஏற்க மறுத்துவிட்டார்கள்.

## சல்மான் அல் ஃபாரிஸீ - ரலி அவர்கள் இஸ்லாத்தை ஏற்றது.

ஹதீஸ் 3946. அபூ உஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அறிவித்தார்

சல்மான் அல் ஃபாரிஸீ (ரலி), 'நான் ஓர் எஜமானிடமிருந்து இன்னோர் எஜமானாகப் பத்துக்கு மேற்பட்ட எஜமானர்களின் கைக்கு (விற்கப்பட்டு) மாறிக் கொண்டிருந்தேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3947. சல்மான் அல் ஃபாரிஸீ (ரலி) அறிவித்தார்

நான் 'ராம ஹுர்முஸ்' என்னுமிடத்திலிருந்து வந்தவன்.

ஹதீஸ் 3948. சல்மான் அல் ஃபாரிஸீ (ரலி) அறிவித்தார்

ஈசா (அலை) அவர்களுக்கும் முஹம்மத் (ஸல்) அவர்களுக்குமிடையிலுள்ள காலம் அறு நூறாண்டுகளாகும்.

# அத்தியாயம் 64 நபிகளார் காலத்துப் போர்கள்

## ‘உஷைரா அல்லது உஸைரா போர்

முஹம்மத் இப்னு இஸ்ஹாக்(ரஹ்) கூறினார் நபி(ஸல்) அவர்கள் புரிந்த முதாவது போர்’அல் அப்வா’ ஆகும் பிறகு’புவாத்’ ஆகும் பிறகு’உஷைரா’ ஆகும்.

ஹதீஸ் 3949. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்

நான் ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களுக்கும் அருகிலிருந்தபோது,‘நபி(ஸல்) அவர்கள் புரிந்த போர்கள் எத்தனை?’ என்று அவர்களிடம் வினவப்பட்டது.’பத்தொன்பது‘‘ என்று அவர்கள் பதிலளித்தார்கள்.’நபி(ஸல்) அவர்களுடன் நீங்களும் பங்கெடுத்த போர்கள் எத்தனை?’ என்று வினவப்பட்டபோது,‘பதினேழு‘‘ என்றார்கள்.’இவற்றில் முதல் போர் எது?’ என்று நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள்,‘உஸைரா’ அல்லது’உஷைர்’ என்று பதிலளித்தார்கள்.

கதாதா(ரஹ்) அவர்களிடம் நான் கேட்டபோது அவர்கள்,‘உஷைரா தான் (சரியான உச்சரிப்பு)‘‘ என்றார்கள்.

## பத்ருப் போரில் கொல்லப்படவிருந்த ஒருவன் குறித்த நபி(ஸல்) அவர்கள் (முன்னறிவிப்பாகக்) கூறியது.

ஹதீஸ் 3950. ஸஅத் இப்னு முஆத்(ரலி) வாயிலாக இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஸஅத் இப்னு முஆத்(ரலி) (அறியாமைக் காலத்தில் இணைவைப்போரின் முக்கிய தலைவர்களில் ஒருவனான) உமய்யா இப்னு கலஃபுக்கு நண்பராயிருந்தார். உமய்யா, மதீனா வழியாக (ஷாம் நாட்டிற்கு வியாபாரத்திற்காக)ச் செல்லும்போது (மதீனாவில்) ஸஅத்(ரலி) அவர்களிடம் தங்குவான். (அதே போல்) மக்கா வழியாக ஸஅத்(ரலி) சென்றால் உமய்யாவிடம் தங்குவார்கள்.

(ஹிஜ்ரத் நடைபெற்று) நபி(ஸல்) அவர்கள் மதீனா வந்து சேர்ந்த சமயம், உம்ரா செய்யும் நோக்கத்தில் ஸஅத்(ரலி) மக்காவிற்குச் சென்றபோது உமய்யாவிடம் தங்கினார்கள். (அப்போது நடந்ததை ஸஅத்(ரலி) கூறினார்:)’இறையில்லம் கஅபாவை வலம் (தவாஃப்) வருவதற்கு (ஏதுவாக) ஆள் நாடமாட்டமில்லாத (அமைதியான) ஒரு நேரத்தை எனக்குக் கூறு‘‘ என்று நான் உமய்யாவிடம் கேட்டேன். (மக்கள் ஓய்வெடுக்கும்) நண்பகலுக்கு நெருக்கமான நேரத்தில் என்னுடன் உமய்யா புறப்பட்டார். (நான் வலம்வந்து கொண்டிருந்த போது) எங்களை அபூ ஜஹ்ல் சந்தித்து (உமய்யாவின் குறிப்புப் பெயரைச் சொல்லி)’அபூ ஸஃப்வானே்ஸ உன்னோடு இருக்கும் இவர் யார்?’ என்று கேட்டார். உமய்யா,‘இவர்தான் ஸஅத்‘‘ என்றார. அப்போது என்னிடம் அபூ ஜஹ்ல்,‘மதம் மாறிச் சென்றவர்களுக்கு உதவி ஒத்தாசை புரிவதாக நினைத்துக் கொண்டு (அவர்களுக்கு மதீனாவில்) தஞ்சமளித்த நீங்கள் கொஞ்சமும் அஞ்சாமல் மக்கா(விற்குள்) வந்து (கஅபாவை) சுற்றிக் கொண்டிருப்பதை நான் காண்பதா...? அல்லாஹ்வின் மீதாணையாக! அபூ ஸஃப்வானோடு (மட்டும்) நீ இல்லாவிட்டால் நீ உன் வீட்டாரிடம் சுகமாகப் போய்ச் சேர்ந்திருக்க மாட்டாய்‘‘ என்று கூறினார்.

அதற்கு அபூ ஜஹ்லைப் பார்த்து, நான் உரத்த குரலில்,‘அல்லாஹ்வீன் மீதாணையாக!”(கஅபாவைச்) சுற்ற விடாமல் மட்டும் என்னை நீ தடுத்தால், நீ (வாணிபக்

குழுவுடன் கடந்து) செல்லும் மதீனாவின் தடத்தை நான் இடைமறிப்பேன். இதைவிட அது உனக்கு மிகவும் கடினமானதாயிருக்கும்'' என்று சொன்னேன்.

அப்போது என்னிடம் உமய்யா,'ஸஅத்! (மக்காப்) பள்ளத்தாக்கில் வசிப்பவர்களின் தலைவரான அபுல் ஹகம் (அபூ ஜஹ்ல்) எதிரில் சப்தமிட்டுப் பேசாதே!"என்று கூறினார்.

அதற்கு நான்,'உமய்யாவே! (அபூ ஜஹ்லுக்கு வக்கலாத்து வாங்காமல்) எம்மைவிட்டுவிடு. ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் (நபித்தோழர்கள் உன்னைக் கொலை செய்வார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூற கேட்டேன்'' என்று சொன்னேன்.

“மக்காவிலா... (நான் கொல்லப்படுவேன்?)'' என்று உமய்யா கேட்டதற்கு,'எனக்குத் தெரியாது'' என்று நான் பதிலளித்தேன்.

இதனால் உமய்யா மிகவும் பீதியடைந்தார். தன் வீட்டாரிடம் திரும்பி வந்தபோது, (தன் மனைவியிடம்),'உம்மு ஸஃப்வானே! என்னைப் பார்த்து ஸஅத் என்ன கூறினார் தெரியுமா?' என்று கேட்டார்.

“அவர் (அப்படி) என்ன கூறினார்?' என்று அவள் கேட்டதற்கு உமய்யா,'அவர்கள் (நபித்தோழர்கள்) என்னைக் கொலை செய்வார்கள் என்று அவர்களிடம் முஹம்மது தெரிவித்தாராம். நான்,'மக்காவிலா?' என்று (சஅதிடம்) கேட்டேன்.'தெரியாது' என்று ஸஅத் கூறினார்'' (என்று கூறிவிட்டு,)'அல்லாஹ்வீன் மீதாணையாக! நான்,'மக்கா'வைவிட்டு (இனிமேல்) வெளியேறப் போவதில்லை'' என்றும் கூறினார்.

பத்ருப் போர் நாள் வந்தபோது, போருக்குப் புறப்படும் படி மக்களைத் தூண்டிக் கொண்டிருந்த அபூ ஜஹ்ல்,'உங்கள் வணிகக் குழுவைச் சென்றடையுங்கள் (அதைக் காப்பாற்றுங்கள்)'' என்று கூறினார்.

ஆனால், உமய்யா (மக்காவிலிருந்து) வெளியே செல்வதை வெறுத்தார். (இதை அறிந்த) அபூ ஜஹ்ல் அவரிடம் வந்து,'அபூ ஸஃப்வானே! (மக்கா) பள்ளத்தாக்கின் தலைவரான நீங்களே (போருக்குச் செல்லாமல்) பின்வாங்குவதை மக்கள் கண்டால் உங்களுடன் அவர்களும் பின்வாங்கி (போருக்குச் செல்லாமல் இருந்து) விடுவார்களே'' என்று கூறினார். அபூ ஜஹ்ல், உமய்யாவிடம் இதை (வலியுறுத்திச்) சொல்லிக் கொண்டே இருந்தார்.

முடிவாக, உமய்யா'இப்போது நீ, என்னை வென்றுவிட்டாய் (உன் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன்). எனவே, அல்லாஹ்வின் மீதாணையாக, நான் மக்கா நகர சாதி ஒட்டகம் ஒன்றை வாங்கப் போகிறேன்'' என்று கூறினார் (தனக்கு ஏதாவது அசம்பாவிதம் ஏற்படும் நிலை வந்தால் தப்பி வந்து விடவேண்டும் என்ற எண்ணத்தில் ஒட்டகம் என்றும் வாங்கினார்.) பிறகு (தன் மனைவியிடம் வந்து)'உம்மு ஸஃப்வானே! (போருக்குச் செல்லத் தேவையான சாதனங்களை) எனக்குத் தயார் செய் என்றார் உமய்யா. அப்போது அவள்,'அபூ ஸஃப்வானே! உங்கள் யஸ்ரிப் (மதீனா) நண்பர் (ஸஅத், நீங்கள் கொல்லப்படுவது குறித்து) உங்களிடம் சொன்னதை மறந்துவிட்டீர்களா? என்று கேட்டாள். அதற்கு உமய்யா,'இல்லை. (மறக்கவில்லை.) இவர்களுடன் கடைசி ஆளாகச் செல்வதைத் தவிர வேறெந்த எண்ணமும் எனக்கில்லை'' என்றார்.

(பத்ருப் போருக்கு) உமய்யா புறப்பட்டுச் சென்றபோது (படையினர் முகாமிட்டுத்) தங்கும் ஒவ்வோர் இடத்திலும் (தப்பியோட ஆயத்தமாக தனக்கு அருகிலேயே) தன்னுடைய ஒட்டகத்தைக் கட்டி வைத்துக் கொள்ளலானார். பத்ருப்போர்க்களத்தில் உமய்யாவை வலிமையும் உயர்வும் மிகுந்த

அல்லாஹ் (முஸ்லிம் படையால்) கொலை செய்யும் வரையில் தொடர்ந்து அவர் இப்படியே செய்து கொண்டிருந்தார்.

## பத்ருப் போர் சம்பவம்

அல்லாஹ் கூறினான்:

(இதற்கு முன்) நீங்கள் வலுவிழந்தவர்களாக இருந்தும் பத்ருப் போரில் அல்லாஹ் உங்களுக்கு உதவியிருந்தான். எனவே, அல்லாஹ்வை அஞ்சி (நடந்து) கொள்ளுங்கள். நீங்கள் (அல்லாஹ்வுக்கு) நன்றி செலுத்தியவர்களாகலாம்.

“உங்களுடைய இறைவன் மூவாயிரம் வானவர்களை இறக்கி உங்களுக்கு (பத்ரில்) உதவியது போதுமானதில்லையா?' என்று (நபியே!) நீங்கள் இறைநம்பிக்கையாளர்களிடம் கேட்டதை நினைவு கூருங்கள். - ஆம், நீங்கள் நிலை குலையாமலிருந்து இறைவனுக்கு அஞ்சி நடந்தால் எந்தக் கணக்கில் பகைவர்கள் உங்களின் மீது படையெடுத்து வருகிறார்களோ, அந்தக் கணத்தில் உங்களுடைய இறைவன் (மூவாயிரம் என்ன) போர் அடையாளமுடைய ஐயாயிரம் வானவர்களின் மூலம் உங்களுக்கு உதவுவான். நீங்கள் மகிழ்ச்சி அடைவதற்காகவும் உங்கள் இதயங்கள் அமைதி பெற வேண்டும் என்பதற்காகவுமே இதனை அல்லாஹ் ஆக்கினான்! வெற்றி என்பது மிக்க வலிமையுடையவனும், நுண்ணறிவாளனுமான அல்லாஹ்விடமிருந்தே கிடைக்கிறது. (அல்லாஹ்) இத்தகைய உதவியை உங்களுக்குச் செய்வதெல்லாம்,) நிராகரித்தவர்களில் ஒரு பகுதியினரை அழிப்பதற்காக, அல்லது அவர்களைப் படுதோல்வியில் ஆழ்த்தி அவர்கள் ஏமாற்றமடைந்தவர்களாய் திரும்பிச் செல்வதற்காகத் தான். (திருக்குர்ஆன் 03: 123-127)

வஹ்ஷீ இப்னு ஹர்ப்(ரலி) கூறினார்

பத்ருடைய தினத்தன்று ஹம்ஸா(ரலி) துஅய்மா இப்னு அதீ இப்னி கியாரைக் கொன்றார்கள்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

இன்னும், இதனையும் நினைத்துப் பாருங்கள்:'இரண்டு கூட்டத்தாரில் ஒரு கூட்டத்தார் நிச்சயம் உங்கள் கைக்குக் கிடைத்து விடுவர்' என்று அல்லாஹ் உங்களிடம் வாக்குறுதி அளித்தான். ஆனால், நிராயுதபாணிகளான கூட்டத்தினர் உங்களுக்குக் கிடைக்க வேண்டும் என நீங்கள் விரும்பினீர்கள். (திருக்குர்ஆன் 08:07)

ஹதீஸ் 3951. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

தபூக் போரைத் தவிர்த்து நபி(ஸல்) அவர்கள் புரிந்த எந்தப் போரிலும் நான் கலந்து கொள்ளாமல் இருந்ததில்லை. இது தவிர, நான் பத்ருப் போரிலும் கலந்து கொள்ளவில்லை. அதில் கலந்து கொள்ளாத எவரும் (அல்லாஹ்வினால்) கண்டிக்கப்படவுமில்லை. (ஏனெனில்) நபி(ஸல்) அவர்கள் குறைஷிகளின் வாணிபக் குழுவை (வழி மறிக்க) எண்ணியே போனார்கள். (போன இடத்தில்) போரிடும் எண்ணம் இல்லாமலேயே அவர்களையும் எதிரிகளையும் அல்லாஹ் (பத்ருக் களத்தில்) சந்திக்கும்படி செய்துவிட்டான்.

அல்லாஹ் கூறினான்:

உங்களுடைய இறைவனிடம் நீங்கள் உதவி தேடி முறையிட்டுக் கொண்டிருந்ததையும் நினைத்துப் பாருங்கள். அப்போது அவன்'ஓராயிரம் வானவர்களைத் தொடர்ச்சியாக அனுப்பி, நிச்சயமாக உங்களுக்கு நான் உதவுவேன்‘‘ எனப் பதிலளித்தான். அல்லாஹ் இதனை, உங்களுக்கு ஒரு நற்செய்தியாகவும் இதன் மூலம் உங்கள் இதயங்கள் நிம்மதியடைவதற்காகவுமே ஆக்கினான்! தவிர,

வெற்றி (என்றைக்கும்) அல்லாஹ்விடமிருந்து தான் ஏற்படுகிறது. நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் மிகைத்தவனும் நுண்ணறிவாளனுமாவான்.

(நபியே! இதையும்) நினைத்துப் பாருங்கள்: அல்லாஹ் உங்களைச் சிற்றுறக்கம் கொள்ளச் செய்து தன் சார்பிலிருந்து உங்களுக்கு (மன) அமைதியை ஏற்படுத்தினான். மேலும், உங்களைத் தூய்மைப்படுத்துவதற்காகவும், ஷைத்தான் ஏற்படுத்திய அசுத்தங்களை உங்களைவிட்டு அகற்றுவதற்காகவும், உங்கள் இதயங்களை வலுப்படுத்துவதற்காகவும், அதன் மூலம் உங்கள் பாதங்களை நிலைப்படுத்துவதற்காகவும் வானத்திலிருந்து உங்களின் மீது மழையையும் பொழியச் செய்தான்.

(நபியே! இதனையும்) நினைவு கூருங்கள்: உங்களுடைய இறைவன் வானவர்களிடம் அறிவித்துக் கொண்டிருந்தான்: நிச்சயமாக நான் உங்களோடு இருக்கிறேன். எனவே நம்பிக்கைளயாளர்களை நீங்கள் உறுதியாக இருக்கச் செய்யுங்கள். இதோ! மறுத்துவீட்டவர்களின் உள்ளங்களில் நான் பீதியை ஏற்படுத்தி விடுகிறேன். எனவே, (நம்பிக்கையாளர்களே!) நீங்கள் அவர்களின் பிடரிகளில் தாக்குங்கள். அவர்களின் ஒவ்வொரு விரல் மூட்டுகளிலும் அடியுங்கள். (என்று கூறுங்கள்.)

இதற்குக் காரணம், (இறை மறுப்பாளர்களான) அவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் எதிர்த்துக் கொண்டிருந்தது தான். மேலும், அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் யார் எதிர்க்கிறார்களோ (அவர்களை) நிச்சயமாக அல்லாஹ் கடுமையாகத் தண்டிப்பவனாய் இருக்கிறான். (திருக்குர்ஆன் 08: 9-13)

ஹதீஸ் 3952. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நான் மிக்தாத் இப்னு அஸ்வத்(ரலி) அவர்களின் அவைக்குச் சென்றேன். நான் அவர்களின் அவையில் (பங்கெடுத்த, அவர்கள் கூறும் விஷயங்களை எடுத்துரைப்பவனாக) இருப்பது, அதற்கு நிகரான(மற்ற அனைத்)தை விடவும் எனக்கு விருப்பானதாயிருக்கும்.

(மிக்தாத் இப்னு அஸ்வத் -ரலி - அவர்கள் என்னிடம் கூறினார்கள்:)

நான், நபி(ஸல்) அவர்கள் இணைவைப்போருக்கெதிராகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தபோது சென்றேன். அப்போது நான்,'(இறைத்தூதர்) மூஸாவின் சமுதாயத்தார்,'நீங்களும் உங்களுடைய இறைவனும் போய்ப் போரிடுங்கள்' என்று (நகைப்பாகக்) கூறியது போன்று நாங்கள் கூற மாட்டோம். மாறாக, நாங்கள் தங்களின் வலப்பக்கமும், இடப்பக்கமும், முன்னாலும், பின்னாலும் நின்று (தங்கள் எதிரிகளிடம்) போரிடுவோம்'' என்று சொன்னேன். (இதைக் கேட்டதும்) நபி(ஸல்) அவர்களின் முகம் ஒளிர்ந்ததை கண்டேன். (என்னுடைய சொல்) அவர்களை மகிழச் செய்தது.

ஹதீஸ் 3953. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

பத்ருடைய தினத்தன்று (மிகக் குறைந்த எண்ணிக்கை கொண்ட தம் படையினரையும் மிகப்பெருந்தொகையினரான எதிரிகளையும் கண்ட) நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! (மறுப்பாளர்களுக்கெதிராக எங்களுக்கு நீ வெற்றியளிப்பதாக நீ அளித்த) உன்னுடைய உறுதி மொழியையும், வாக்குறுதியையும் (நிறைவேற்றித் தரும்படி) கோருகிறேன். (இறைவா! இந்த விசுவாசிகளை அழிக்க) நீ நினைத்தால், உன்னை (மட்டுமே) வழிபடுவோர் (இப்புவியில்) இல்லாமல் போய்விடுவர்'' என்று கூறினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் கரத்தைப் பற்றிக் கொண்டு,'போதும் (இறைத்தூதர் அவர்களே!)'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (தாம் தங்கியிருந்த கூடாரத்திலிருந்து)'' அந்தப் படையினர் தோற்கடிக்கப்படுவர். அவர்கள் புறமுதுகிட்டு ஓடுவர்'' என்று (திருக்குர்ஆன் 54:45-வது குர்ஆன் வசன வாசகத்தைக்) கூறிக் கொண்டே வெளியேறி வந்தார்கள்.

ஹதீஸ் 3954. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைவிசுவாசிகளில் இடையூறு எதுவுமின்றி அறப்போரில் கலந்து கொள்ளாமல் (தங்கள் இருப்பிடத்திலேயே) தங்கிவிடுகிறவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் போராடுகிறவர்களும் (அந்தஸ்தில்) சமமாகமாட்டார்கள்" என்னும் (திருக்குர்ஆன் 04:95-ம்) இறை வசனம், பத்ருப் போருக்குச் செல்லாதவர்களையும் அதில் கலந்து கொள்ளச் சென்றவர்களையும் குறிப்பிடுகிறது.

## பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களின் எண்ணிக்கை.

ஹதீஸ் 3955. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நானும் இப்னு உமர்(ரலி) அவர்களும் (பத்ருப் போரின் போது) சிறுவர்களாகக் கருதப்பட்டோம். (அதனால் எனக்கும் அவருக்கும் பத்ருப் போரில் கலந்து கொள்ள அனுமதி வழங்கப்படவில்லை.)

ஹதீஸ் 3956. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நானும் இப்னு உமர்(ரலி) அவர்களும் பத்ருப்போரின்போது சிறுவர்களாகக் கருதப்பட்டோம். பத்ருப்பே பாரில் அறுபதுக்கும் சற்றுக் கூடுதலான முஹாஜிர்களும் இரண்டு நூற்று நாற்பதுக்கும் சற்றுக் கூடுதலான அன்சாரிகளும் இருந்தனர்.

ஹதீஸ் 3957. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

பத்ருப் போரில் பங்கெடுத்த நபித்தோழர்கள் என்னிடம் கூறினார்கள்: தாலூத் அவர்களுடன் ஆற்றைக் கடந்து சென்றவர்களான முன்னூற்றுப் பத்துக்கும் சற்றுக் கூடுதலான அவர்களின் தோழர்களின் எண்ணிக்கையில் நாங்கள் இருந்தோம்.

மேலும், பராஉ(ரலி) கூறினார்:

அல்லாஹ்வின் மீதாணையாக! தாலூத் அவர்களுடன் இறைநம்பிக்கையாளர்களைத் தவிர வேறெவரும் ஆற்றைக் கடக்கவில்லை.

ஹதீஸ் 3958. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

முஹம்மத்(ஸல்) அவர்களின் தோழர்களான நாங்கள் பேசிக்கொள்வோம்.

பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களின் எண்ணிக்கையும், தாலூத் அவர்களுடன் ஆற்றைக் கடந்து சென்ற அவர்களின் தோழர்களின் எண்ணிக்கையும் முன்னூற்றுப் பத்துக்கும் சற்றுக் கூடுதலேயாகும். அவர்களுடன் இறை நம்பிக்கையாளர்களைத் தவிர வேறெவரும் ஆற்றைக் கடக்கவில்லை.

ஹதீஸ் 3959. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

"முன்னூற்றுப் பத்துக்கும் சற்றுக் கூடுதலாயிருந்த பத்ருப் போர் வீரர்களின் எண்ணிக்கை, தாலூத் அவர்களுடன் ஆற்றைக் கடந்து சென்ற அவர்களின் தோழாகளின் எண்ணிக்கையேயாகும். இறை நம்பிக்கையாளர்களைத் தவிர வேறெவரும் அவர்களுடன் ஆற்றைக் கடக்கவில்லை" என்று நாங்கள் பேசிக்கொள்வது வழக்கம்.

குறைஷிக் குல இறை மறுப்பாளர்(களின் தலைவர்க)ளான ஷைபா, உத்பா, வலீத், அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம் போன்றோர்க்கெதிராக நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தனை புரிந்ததும் அவர்கள் (அனைவரும்) அழிந்து போனதும்.

ஹதீஸ் 3960. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இறையில்லம் கஅபாவை நோக்கி, குறைஷிக் குலத்தைச் சேர்ந்த ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா, அபூ ஜஹ்ல் இப்னு ஹிஷாம் போன்ற சிலருக்கெதிராகப் பிரார்த்தனை புரிந்தார்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் (நால்வரும்) சூரிய வெப்பத்தால் (உடல் உப்பி, நிறம் மாறி) உருமாறி (பத்ருப் போர்க்களத்தில்) மாண்டு கிடந்ததை கண்டேன். அன்றைய தினம் வெப்பம் நிறைந்த நாளாக இருந்தது.

## அபூ ஜஹ்ல் கொல்லப்பட்டது.

ஹதீஸ் 3961. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

பத்ருப் போரில் அபூ ஜஹ்லின் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தபோது அவனிடம் வந்தேன். அப்போது அவன், 'நீங்கள் எவனைக் கொலை செய்தீர்களோ அவனை விடச் சிறந்தவன் ஒருவன் உண்டா?' என்று (தன்னைத் தானே புகழ்ந்தபடிச்) சொன்னான்.

ஹதீஸ் 3962. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

“அபூ ஜஹ்ல் என்ன ஆனான் என்று பார்த்து வருபவர் யார்?' என்று நபி(ஸல்) அவர்கள் (பத்ருப் போர் முடிந்த போது) கேட்டார்கள். உடனே இப்னு மஸ்வூத்(ரலி) (அவனைப் பார்த்து வரச்) சென்றார்கள். அப்போது அவனை அஃப்ராவின் இரண்டு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித் ஆகிய இருவரும பலமாகத்) தாக்கி விடவே, அவன் குற்றுயிராக இருக்கக் கண்டார்கள். அப்போது இப்னு மஸ்வூத்(ரலி) அவனுடைய தாடியைப் பிடித்துக் கொண்டு, 'அபூ ஜஹ்ல் நீ தானே!”என்று கேட்டார்கள்.

“நீங்கள் கொன்றுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக... அல்லது தன்னுடைய (சமுதாயத்து) மக்களாலேயே கொல்லப்பட்டுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக... ஒருவன் உண்டா?' என்று (தன்னைத் தானே பெருமைப்படுத்தியபடி) அவன் கேட்டான்.

ஹதீஸ் 3963. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

பத்ருப் போர் (நடந்த) நாளில், 'அபூ ஜஹ்ல் என்ன ஆனான் என்று பார்த்து வருபவர் யார்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். உடனே, இப்னு மஸ்வூத்(ரலி) (அவனைப் பார்த்து வரப்போனார்கள். அவனை அஃப்ராவின் இரண்டு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித் ஆகிய இருவரும் பலமாகத்) தாக்கிவிடவே அவன் குற்றுயிராக இருக்கக் கண்டார்கள். இப்னு மஸ்வூத்(ரலி) அவனுடைய தாடியைப் பிடித்துக் கொண்டு, 'அபூ ஜஹ்லே! நீயா?' என்று கேட்டார்கள். (அப்போது) அவன், 'தம் (சமுதாயத்து) மக்களாலேயே கொல்லப்பட்டுவிட்ட ஒரு மனிதனுகசு மேலாக... அல்லது நீங்களே கொன்று விட ஒரு மனிதனுக்கு மேலாக... ஒருவன் உண்டா?' என்று கேட்டான்.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே போன்று அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3964. பத்ருப் போரில் அஃப்ராவின் இரண்டு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித் ஆகியோர் அபூ ஜஹ்லைக் கொன்றது) தொடர்பான தகவல் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) வாயிலாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 3965. அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்

(இறை மறுப்பாளர்கள் போரிட்டது தொடர்பாக) மறுமை நாளில் (பெருங் கருணையாளன்) ரஹ்மானுக்கு முன்னால் வழக்காடுவதற்காக மண்டியிடுபவர்களில் (இந்தச் சமுதாயத்திலேயே) நானே முதல் நபராக இருப்பேன்.

கைஸ் இப்னு உபாத்(ரஹ்) கூறினார்கள்:

“இவர்கள் தங்களின் இறைவனின் (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்“ என்னும் (திருக்குர்ஆன் 22:19) இறைவசனம், பத்ருப்போரின்போது (களத்தில் இறங்கித்) தனித்து நின்று போராடிய (இஸ்லாமிய வீரர்களான) அலீ, ஹம்ஸா, உபைதா இப்னு ஹாரிஸ்(ரலி) ஆகியோர் மற்றும் (இறைமறுப்பாளர்களான) ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா ஆகியோர் தொடர்பாகவே அருளப்பட்டது.

ஹதீஸ் 3966. அபூ தர்(ரலி) அறிவித்தார்

குறைஷிக் குலத்தைச் சேர்ந்த ஆறு நபர்களான அலீ, ஹம்ஸா உபைதா இப்னு ஹாரிஸ்(ரலி) ஆகிய முஸ்லிம்கள்), மற்றும் ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா (ஆகிய இறைமறுப்பாளர்கள்) தொடர்பாகவே'இவர்கள் தங்கள் இறைவனது (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்“ என்னும் (திருக்குர்ஆன் 22:19) இறைவசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 3966. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்

குறைஷிக் குலத்தைச் சேர்ந்த ஆறு நபர்களான அலீ, ஹம்ஸா, உபைதா இப்னு ஹாரிஸ்(ரலி- ஆகிய முஸ்லிம்கள்), மற்றும் ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா (ஆகிய இறைமறுப்பாளர்கள்) தொடர்பாகவே'இவர்கள் தங்கள் இறைவனது (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்“ என்னும் (திருக்குர்ஆன் 22:19) இறைவசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 3967. அலீ(ரலி) அறிவித்தார்

“இவர்கள் தங்கள் இறைவனது (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்“ என்னும் இந்த (திருக்குர்ஆன் 22:19) இறைவசனம் எங்கள் தொடர்பாகவே அருளப்பட்டது.

ஹதீஸ் 3968. கைஸ் இப்னு உபாத்(ரஹ்) அறிவித்தார்

“இந்த வசனங்கள் (திருக்குர்ஆன் 22: 19, 20, 21) பத்ருப் போரின்போது (முன்னின்று போரிட்ட) ஆறு பேர்கள் குறித்து அருளப்பட்டன..!”என்று அபூ தர்(ரலி) (அல்லாஹ்வின் மீது) ஆணையிட்டுக் கூறினார்கள்.

ஹதீஸ் 3969. கைஸ் இப்னு உபாத்(ரஹ்) அறிவித்தார்

“இவர்கள் தங்கள் இறைவனுடைய (மார்க்க) விஷயத்தில் சண்டையிட்டுக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்“ என்னும் இந்த (திருக்குர்ஆன் 22: 19) வசனம் பத்ருப் போரன்று (படைக்கு முன்னால் வந்து) தனித்து நின்று போராடிய ஹம்ஸா, அலீ, உபைதா இப்னு ஹாரிஸ்(ரலி) ஆகியோர் மற்றும் (இறை மறுப்பாளர்களான) உத்பா இப்னு ரபீஆ, ஷைபா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா ஆகியோர் தொடர்பாகவே அருளப்பட்டது.

ஹதீஸ் 3970. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்

பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்களிடம் ஒருவர், 'அலீ(ரலி) பத்ருப் போரில் பங்கெடுத்தார்களா?' என்று கேட்டார். ("ஆம் பங்கெடுத்தார்கள்) கவசத்திற்கு மேல் கவசம் அணிந்து கொண்டு (களத்தில் இறங்கி) தனித்துப் போராடினார்கள்'' என்று பராஉ(ரலி) பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 3971. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்.ஃப்(ரலி) அறிவித்தார்

நானும் (மக்கா இறைமறுப்பாளர்களின் தலைவனான) உமய்யா இப்னு கல.ஃபும் (பரஸ்பரம் சொத்தையும், உறவினர்களையும் காப்பதென எங்களுக்குள்) எழுத்து பூர்வமான ஒப்பந்தம் செய்து கொண்டோம்.

பிறகு பத்ருப் போரில் உமய்யா கொல்லப்பட்டதையும் (எதிரிகளால்) தம் மகன் (அலீ இப்னு அப்திர் ரஹ்மான்) கொல்லப்பட்டதையும் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்.ஃப்(ரலி) குறிப்பிட்டுவிட்டு, அப்போது பிலால்(ரலி), 'உமய்யா பிழைத்துக் கொண்டால் நான் பிழைக்கப் போவதில்லை'' என்று கூறினார்கள் என்றும் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 3972. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்காவில்)'அந்நஜ்கி' என்னும் (56-வது) அத்தியாயத்தை ஓதினார்கள். (ஓதி முடித்த) உடன் நபி(ஸல்) அவர்கள்'ஸஜ்தா' செய்தார்கள். அங்கிருந்த ஒரு கிழவனைத் தவிர மற்ற அனைவரும் நபி(ஸல்) அவர்களுடன்'ஸஜ்தா' செய்தனர். அவன் ஒரு கை மண்ணை அள்ளித் தன்னுடைய நெற்றிக்குக் கொண்டு சென்றுவிட்டு, 'இது எனக்குப் போதும்'' என்று (ஸஜ்தாவைக் கேலி செய்து) சொன்னான். பிறகு, அந்த மனிதன் இறைமறுப்பாளனாகவே (பத்ரில்) கொல்லப்பட்டதை கண்டேன்.

ஹதீஸ் 3973. உர்வா(ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களி(ன் உடலி)ல் வாளினால் ஏற்பட்ட மூன்று காயங்கள் இருந்தன. அவற்றில் ஒன்று அவர்களின் தோள்பட்டையில் இருந்தது. நான் (சிறுவனாயிருந்த போது) என்னுடைய விரல்களை (விளையாட்டாக) அந்தக் காயத்துக்குள் நுழைப்பவனாக இருந்தேன். (இதில்) இரண்டு காயங்கள் பத்ருப் போரிலும் இன்னொன்று'யர்மூக்' போரிலும் ஏற்பட்டனவாகும். (என் சகோதரர்) அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் அவர்கள் கொல்லப்பட்ட சமயத்தில் (அவர்களின் வாள் கலீ.ஃபா அப்துல் மலிக் இப்னு மர்வானிடம் இருந்தது.) என்னிடம் அப்துல் மலிக் இப்னு மர்வான், 'உர்வாவே! ஸுபைர் அவர்களின் வாளைத் தங்களுக்கு (அடையாளம்) தெரியுமா?' என்று கேட்டார். நான், 'ஆம்'' (தெரியும்) என்றேன். 'அதில் என்ன (அடையாளம்) உள்ளது?' என்று கேட்டார். 'பத்ருப் போரில் அதன் முனை முறிந்து போய்விட்டது. அந்த முறிவு தான் (அடையாளம்)'' என்றேன். 'உண்மை சொன்னீர்'' என்று அப்துல் மலிக் இப்னு மர்வான் கூறினார். (பிறகு, 'அவர்களின் வாட்கள் பல்வேறு படைகளில் - பங்கெடுத்து எதிரிகளின் வாட்களுடன் - மோதி முனைகள் முறிந்திருந்தன'' என்னும் நாபி.ஃகாவின் பிரபல கவிதையிலிருந்து ஓர் அடியைக் கூறினார். ) பிறகு அந்த வாளை என்னிடம் அப்துல் மலிக் இப்னு மர்வான் திருப்பிக் கொடுத்துவிட்டார்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் இப்னு உர்வா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

பிறகு அந்த வாளை எங்கள் மத்தியில் மூவாயிரம் (திர்ஹம் ஃ தீனாருக்கு) விலை மதிப்பிட்டோம். எங்களில் ஒருவர் (என் சகோதரர் உஸ்மான்) அதை வாங்கினார். அதை நான் வாங்கியிருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன்.

ஹதீஸ் 3974. உர்வா(ரஹ்) அறிவித்தார்

யர்மூக் போரின் போது20 ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களிடம்,'(ரோம பைஸாந்தியர் மீது) நீங்கள் தாக்குதல் தொடுக்கக் கூடாதா? நாங்களும் உங்களுடன் சேர்ந்து தாக்குதல் தொடுப்போமே' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்கள் கூறினர். அப்போது ஸுபைர்(ரலி),'நான் தாக்குதல் தொடுக்கும்போது நீங்கள் வாக்கை காப்பாற்ற மாட்டீர்கள் (நீங்களும் என்னோடு சேர்ந்து போரிட மாட்டீர்கள்)'' என்ற கூறினார்கள்.'இல்லை. அப்படி நாங்கள் செய்ய மாட்டோம்'' என்று அவர்கள் கூறினர். பிறகு ஸுபைர்(ரலி) பைஸாந்தியவர்களின் மீது தாக்குதல் தொடுத்து, அவர்களின் அணிகளைச் சிதறடித்து, அவர்களைக் கடந்து கூறினார்கள். (ஒத்துழைப்பதாகச் சொன்ன) யாரும் (அப்போது) அவருடன் இருக்கவில்லை. பிறகு (தோழர்களை நோக்கி) அவர்கள் திரும்பி வந்து கொண்டிருந்தபோது அவர்களின் குதிரையின் கடிவாளத்தை பைஸாந்தியர்கள் பிடித்துக் கொண்டு அவர்களின் தோள் மீது வெட்டி இரண்டு காயங்களை ஏற்படுத்தினர். (ஏற்கெனவே) பத்ருப்போரில் ஏற்பட்ட ஒரு காயம் அந்த இரண்டுக்கும் மத்தியில் இருந்தது. நான் சிறுவனாக இருந்தபோது அந்த(க் காயத்தின்) தழும்புகளில் என்னுடைய விரல்களைவிட்டு விளையாடுபவனாயிருந்தேன். (யர்மூக் போர் நடந்த) அன்று ஸுபைர்(ரலி) அவர்களுடன் பத்து வயதுடைய (அவர்களின் மகன்) அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களும் இருந்தார். அவரை ஒரு குதிரையிலமர்த்தி அவருக்கு(ப் பாதுகாப்பாக) ஓர் ஆளையும் ஸுபைர்(ரலி) நியமித்திருந்தார்கள்.

ஹதீஸ் 3976. அபூ தல்ஹா(ரலி) அறிவித்தார்

பத்ருப் போர் (நடந்து முடிந்த) நாளில் நபி(ஸல்) அவர்கள், குறைஷித் தலைவர்களில் இருபத்தி நான்கு பேர்(களின் சடலங்)களை பத்ருடைய கிணறுகளில் அசுத்தமானதும், அசுத்தப்படுத்தக் கூடியதுமான (கற்களால் உட்சுவர் எடுக்கப்பட்ட) கிணறு ஒன்றில் தூக்கிப் போடுமாறு உத்தரவிட்டார்கள். (எதிரிக்) கூட்டத்தினர் எவரிடமாவது நபி(ஸல்) அவர்கள் போரிட்டு வெற்றி கண்டால் (போரிட்ட இடத்திலுள்ள) திறந்த வெளியில் மூன்று நாள்கள் தங்கிச் செல்வது அவர்களின் வழக்கமாக இருந்தது. பத்ர் முடிந்த மூன்றாம் நாள் தம் வாகன(மான ஒட்டக)த்தின் மீது அதன் சிவிகையை (ஏற்றிக்) கட்டுமாறு நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். எனவே, அதன் மீது அதன் சிவிகை கட்டப்பட்டது. பிறகு நபி(ஸல்) அவர்கள் (புறப்பட்டுச்) சென்றார்கள். அவர்களின் தோழர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர். நபி(ஸல்) அவர்கள் ஏதோ தம் தேவை ஒன்றிற்காகவே செல்கிறார்கள் என்றே நாங்கள் நினைத்தோம். இறுதியில், அந்தக் (குறைஷித் தலைவர்கள் போடப்பட்டிருந்த) கிணற்றருகில் நபியவர்கள் நின்றார்கள். (ம்ணற்றோரம் நின்றிருந்த) நபி(ஸல்) அவர்கள், (அதில் எறியப்பட்டிருந்த) அவர்களின் பெயர்களையும், அவர்களின் தந்தையரின் பெயர்களையும் குறிப்பிட்டு,'இன்னாரின் மகன் இன்னாரே! இன்னாரின் மகன் இன்னாரே! அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் நீங்கள் கீழ்ப்படிந்து நடந்திருந்தால் (இப்போது அது) உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் தானே! ஏனெனில், எங்களுடைய இரட்சகன் எங்களுக்கு வாக்களித்த (நன்மை)தனை உண்மையானதே என்று நாங்கள் கண்டு கொண்டோம். உங்களுக்கு உங்களுடைய இரட்சகன் வாக்களித்த (தண்டனை)தனை உண்மையானது தான் என்று நீங்கள் கண்டு கொண்டீர்களா?' என்று கூறினார்கள். உடனே (அருகிலிருந்த) உமர்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! உயிரற்ற சடலங்களிடமா பேசுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'என்னுடைய உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! நான் கூறுவதை (ம்ணற்றில் உள்ள) இவர்களை விட நன்கு செவியேற்பவர்களாக நீங்கள் இல்லை'' என்று கூறினார்கள்.

(இந்த ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான) கதாதா(ரஹ்) கூறினார்கள்:

அவர்களை இழிவுபடுத்தி சிறுமைப் படுத்தி தண்டிப்பதற்காகவும், அவர்கள் (தமக்கு நேர்ந்துவிட்ட) இழப்பை எண்ணி வருந்துவதற்காகவும் நபி(ஸல்) அவர்களின் சொல்லைச் செவியேற்கச் செய்யும் முகமாக (அந்த நேரத்தில் மட்டும்) அல்லாஹ் அவர்களை உயிராக்கினான்.

ஹதீஸ் 3977. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அறிவித்தார்

“அல்லாஹ்வின் அருட்கொடையை(ப் பெற்ற பின்பு அதனை) நன்றி கெட்ட போக்காக மாற்றி (தங்களுடன்) தம் சமூகத்தாரையும் அழிவுக்கிடங்கில் தள்ளிவிட்டவர்களை (நபியே!) நீங்கள் காணவில்லையா?' என்னும் (திருக்குர்ஆன் 14:28-ம்) இறைவசனம், அல்லாஹ்வின் மீதாணையாக! குறைஷிக் குல இறைமறுப்பாளர்களையே குறிக்கிறது‘‘ என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

“அவர்கள் குறைஷிகளாவர். 'அல்லாஹ்வின் அருட்கொடை' என்பது முஹம்மத்(ஸல்) அவர்களைக் குறிக்கும். 'அழிவுக் கிடங்கு' என்பது பத்ருடைய நாளில் (இறைத்தூதரை) எதிர்த்துப் போரிட்டு குறைஷிகள் வீழ்ந்த) நரகத்தைக் குறிக்கும்‘‘ என்று அம்ர் இப்னு தீனார்(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 3978. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

“குடும்பத்தினர் (ஒப்பாரி வைத்து) அழுவதால் மண்ணறையில் (இருக்கும் அவர்களின் உறவினரான) இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக இப்னு உமர்(ரலி) கூறினார் என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது ஆயிஷா(ரலி), ‘(நபி - ஸல் - அவர்கள் அப்படிச் சொல்லவில்லை), ‘இறந்தவர் (தன் வாழ்நாளில் புரிந்த) சிறிய, பெரிய பாவங்களின் காரணத்தால் வேதனை செய்யப்படுகிறார். அவரின் குடும்பத்தினரோ, இப்போது அவருக்காக அழுது கொண்டிருக்கின்றனர்' என்றே இறைத்தூதர்(ஸல்) அவர்கள்‘‘ என்று கூறினார்கள். 22

ஹதீஸ் 3979. (மேலும்) ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இது எப்படியிருக்கிறதென்றால், ‘(குறைஷித் தலைவர்களான) இணைவைப்பவர்கள் பத்ரில் கொல்லப்பட்டு எறியப்பட்டிருந்த கிணற்றுக்கு அருகில் நின்று கொண்டு, அவர்களைப் பார்த்து நபி(ஸல்) அவர்கள் ஏதோ பேசினார்கள். (அப்போது நபி(ஸல்) அவர்களிடம், ‘உயிரற்ற சடலங்களிடமா பேசுகிறீர்கள்?' என்று உமர்(ரலி) கேட்ட போது) 'நான் கூறுவதை அவர்கள் செவியேற்கிறார்கள்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்ததாக இப்னு உமர் கூறியதைப் போன்றது தான் இதுவும். ஆனால், 'நான் அவர்களுக்குச் சொல்லி வந்ததெல்லாம் உண்மையென்று இப்போது அறிவித்தார்‘‘ என்றே இறைத்தூதர்(ஸல்) அவர்கள். (இப்போது நான் கூறுவதை அவர்கள் செவியேற்கிறார்கள்‘‘ என்று நபியவர்கள் சொல்லவில்லை.)

பிறகு, (இறந்தவர்களை நாம் பேசுவதைச் செவியேற்பதில்லை என்ற தம் கருத்திற்குச் சான்றாக) ஆயிஷா(ரலி) (பின்வரும் வசனங்களை) ஓதினார்கள்:

(நபியே!) இறந்தவர்களை உங்களால் கேட்கச் செய்ய முடியாது. (திருக்குர்ஆன் 27:80)

(நபியே!) மண்ணறைகளில் இருப்பவர்களை உங்களால் செவியேற்கச் செய்யமுடியாது. (திருக்குர்ஆன் 35:22)

“நரகத்தில் அவர்கள் தங்களின் இருப்பிடங்களில் ஒதுங்கும்போது (இந்நிலை ஏற்படும்)‘‘ என ஆயிஷா(ரலி) (விளக்கம்) கூறினார்கள்.

ஹதீஸ் 3980 இ ஹதீஸ் 3981 இப்னு உமர்(ரலி) கூறினார்

பத்ரின் கிணற்றருகில் நபி(ஸல்) அவர்கள் நின்று கொண்டு (உள்ளே கிடந்த இறை மறுப்பாளர்களின் சடலங்களை நோக்கி),'உங்களுக்கு உங்களுடைய இறைவன் வாக்களித்த (தண்டனை)தனை உண்மையானது தான் என்று கண்டு கொண்டீர்களா?' என்று கூறினார்கள். பிறகு,'இவர்கள், நான் கூறுவதை இப்போது செவியேற்கிறார்கள்'' என்றும் கூறினார்கள். (''இறந்தவர்கள் செவியேற்கிறார்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக இப்னு உமர்(ரலி) கூறினார் என்ற) தகவல் ஆயிஷா(ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோது,'நான் அவர்களுக்குச் சொல்லி வந்த (கொள்கைகள்) எல்லாம் உண்மையென்று இப்போது அவர்கள் அறிகிறார்கள்' என்றே (நபி - ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என்று ஆயிஷா(ரலி) கூறினார்.

பிறகு (தம் கருத்திற்குச் சான்றாக),'(நபியே!) இறந்தவர்களை உங்களால் கேட்கச் செய்ய முடியாது'' என்னும் (திருக்குர்ஆன் 35:22) இறை வசனத்தை (இறுதிவரை) ஓதினார்கள்.

## பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களின் சிறப்பு.

ஹதீஸ் 3982. அனஸ்(ரலி) அறிவித்தார்

இளைஞராயிருந்த ஹாரிஸா இப்னு சுராகா அல் அன்சாரீ(ரஹ்) பத்ருப் போரில் கொல்லப்பட்டார்கள். எனவே, அவர்களின் தாயார் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர் அவர்களே! என்னிடம் ஹாரிஸாவுக்கு உள்ள அந்தஸ்தைத் தாங்கள் அறிந்திருக்கிறீர்கள். (இப்போது) ஹாரிஸா சொர்க்கத்தில் இருந்தால் நான் நன்மையை நாடி பொறுமை காப்பேன். (இதுவன்றி) வேறு நிலையாக இருப்பின், நான் என்ன செய்வேன் என்பதைத் தாங்களே ஊம்க்கலாம்'' என்று கூறினார்கள். அதற்கு, நபி(ஸல்) அவர்கள்,'அடப்பாவமே! இழந்து தவிக்கிறாயோ!"(என்று கூறிவிட்டு)'சொர்க்கம் ஒன்றே ஒன்று தான் உள்ளதா? சொர்க்கம் பல உண்டு. (உன் மகன்) ஹாரிஸா (உயர்ந்த சொர்க்கமான)'ஜன்னத்துல் பிர்தௌஸ்' என்னும் சொர்க்கத்தில் இருக்கிறார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3983. அலீ(பின் அபீ தாலிப் (ரலி) அவர்கள் அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குதிரை வீரர்களான என்னையும், அபூ மர்ஸத் (ம்னாஸ் இப்னு ஹுஸைன்) அவர்களையும், ஸுபைர் இப்னு அவ்வாம் அவர்களையும்,'நீங்கள்'ரவ்ளத்து காக்' என்னுமிடம் வரை செல்லுங்கள் ஏனெனில், அங்கு (ஒட்டகச் சிவிகையில் இணைவைப்பவர்களில் ஒருத்தி இருக்கிறாள். இணைவைப்பவர்(களின் தலைவர்)களுக்கு ஹாதிப் இப்னு அபீ பல்தஆ அனுப்பியுள்ள (நம்முடைய ரகசியத் திட்டங்களைத் தெரிவிக்கும்) கடிதம் ஒன்று அவளிடம் இருக்கும் (அவளிடமிருந்து கடிதத்தைக் கைப்பற்றி வாருங்கள்)'' என்று கூறினார்கள். (பிறகு நாங்கள் புறப்பட்டுப் போனோம்.) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குறிப்பிட்ட இடத்தில் அந்தப் பெண் தன்னுடைய ஒட்டகத்தில் சென்று கொண்டிருக்க, அவளை நாங்கள் அடைந்தோம். அவளிடம்,'கடிதம் (எங்கே? அதை எடு)'' என்று கேட்டோம். அவள்,'எம்மிடம் கடிதம் எதுவுமில்லை'' என்று பதிலளித்தாள். (அவள் அமர்ந்திருந்த) ஒட்டகத்தை நாங்கள் படுக்க வைத்து (அந்தக் கடிதத்தைத்) தேடினோம். எந்தக் கடிதத்தையும் நாங்கள் காணவில்லை. அப்போது,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பொய் சொல்லமாட்டார்கள். ஒன்று, நீயாக கடிதத்தை எடு(த்துக் கொடு) அல்லது உன்னை(ச் சோதிப்பதற்காக உன்னுடைய ஆடையை) நாங்கள் கழற்ற வேண்டியிருக்கும்'' என்று நாங்கள் சொன்னோம். விடாப் பிடியாக (நாங்கள்) இருப்பதை அவள் கண்டபோது, (கூந்தல் நீண்டு தொங்கும்) தன்னுடைய இடுப்புப் பகுதிக்கு அவள் கையைக் கொண்டு சென்றாள். அவள் ஒரு துணியை இடுப்பில் கட்டியிருந்தாள். (அங்கிருந்து) அ(ந்தக் கடிதத்)தை வெளியில் எடுத்தாள். அந்தக் கடிதத்துடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி

நடந்தோம். அப்போது உமர்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! அவர் (ஹாதிப் இப்னு அபீ பல்தஆ) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும், இறை நம்பிக்கையாளர்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார். என்னை விடுங்கள் அவரின் கழுத்தைக் கொய்துவிடுகிறேன்‘‘ என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (ஹாதிப் அவர்களை நோக்கி),'ஏன் இப்படிச் செய்தீர்கள்!”என்று கேட்டார்கள்.'அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் விசுவாசமில்லாதவனாக நடந்து கொள்ள வேண்டுமென்பது என் நோக்கமல்ல. இணைவைப்பாளர்(களுக்கு நான் செய்யும் இந்த உதவியால் அவர்)களிடம் எனக்கு ஒரு செல்வாக்குக் கிடைத்து, அதன் மூலம் அல்லாஹ் (மக்காவிலிருக்கும்) என் மனைவி மக்களையும், என் செல்வத்தையும் பாதுகாக்கவேண்டும் என்றே நான் நினைத்தேன். தங்கள் தோழர்கள் அனைவருக்குமே மக்காவில் அவர்களின் மனைவி மக்களையும், அவர்களின் செல்வத்தையும் எவரின் மூலமாக அல்லாஹ் பாதுகாப்பானோ அத்தகைய உறவினர்கள் இருக்கின்றனர்‘‘ என்று கூறினார். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,'இவர் உண்மை கூறினார். இவரைப் பற்றி நல்லதையே சொல்லுங்கள்‘‘ என்று (தோழர்களைப் பார்த்துக்) கூறினார்கள். அப்போது உமர்(ரலி),'இவர் அல்லஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும், இறைநம்பிக்கையாளர்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார். என்னை விடுங்கள் இவரின் கழுத்தைக் கொய்து விடுகிறேன்‘‘ என்று (மீண்டும்) கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இவர் பத்ருப் போரில் பங்கெடுத்தவர் அல்லவா? பத்ரில் பங்கெடுத்தவர்களை நோக்கி அல்லாஹ்,'நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள். உங்களுக்கு சொர்க்கம் உறுதியாகிவிட்டது‘... அல்லது'உங்கள் பாவங்களை நான் மன்னித்து விட்டேன்‘... என்று கூறி விட்டிருக்கலாம் அல்லவா?' என்று கூறினார்கள். இதைக் கேட்ட உமர்(ரலி) தம் கண்கள் கண்ணீர் உகுத்துக் கொண்டிருக்க,'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3984. அபூ உஸைத் (மாலிக் இப்னு ரபீஆ (ரலி) அவர்கள் அறிவித்தார்

பத்ருப் போரின்போது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம்,'(எதிரிகளான) அவர்கள் உங்களை நெருங்கி வந்தால் அவர்களின் மீது அம்பெய்யுங்கள். (அவர்கள் தூரத்திலிருக்கும்போது அம்புகளை எய்து வீணாக்கி விடாமல்) உங்கள் அம்புகளை மிச்சப்படுத்திக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3985. அபூ உஸைத் (மாலிக் இப்னு ரபீஆ(ரலி) அறிவித்தார்

பத்ருப் போரின்போது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம்,'(எதிரிகளான) அவர்கள் உங்களை நெருங்கி வந்தால் அவர்களின் மீது அம்பெய்யுங்கள். (அவர்கள் தூரத்திலிருக்கும்போது அம்புகளை எய்து வீணாக்கி விடாமல்) உங்கள் அம்புகளை மிச்சப்படுத்திக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3985. அபூ உஸைத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், பத்ருப் போரின்போது எங்களிடம்,'(எதிரிகளான) அவர்கள் உங்களை நெருங்கி வந்தால் - அதாவது அதிக எண்ணிக்கையில் உங்களை அவர்கள் சூழ்ந்து கொண்டால் - அம்பெய்யுங்கள். (எதிரிகளை அம்பு தாக்காது என்றிருப்பின், வீணாக்கிவிடாமல்) உங்கள் அம்புகளை மிச்சப்படுத்திக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3986. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்கள், (மலைக் கணவாயில் நிறுத்தப்பட்ட) அம்பெய்யும் வீரர்களுக்கு அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களை(த் தலைவராக) நியமித்தார்கள். (அந்தப் போரின்போது முஸ்லிம்களாகிய) எங்களில் எழுபது பேர்களை (இணைவைப்பவர்களான)

அவர்கள் கொன்றனர். (அதற்கு முன் நடந்த) பத்ருப் போரின்போது நபி(ஸல்) அவர்களும், அவர்களின் தோழர்களும் இணைவைப்பவர்களில் எழுபது பேர்களைக் கைது செய்து இன்னும் எழுபது பேர்களைக் கொன்று, (ஆக மொத்தம்) நூற்றி நாற்பது பேர்களை வீழ்த்தினார்கள். (இதைப் பற்றி) அபூ சுஃப்யான் கூறினார்: இந்த (உஹுதுப் போரின்) நாள் பத்ருடைய நாளுக்கு பதிலாகும். போர் என்பதே (கிணற்று) வாளிகள் தாம். (மாறி மாறி தான் இறைக்க முடியும்.)“

ஹதீஸ் 3987. நன்மை என்பது அல்லாஹ் (இந்த உஹுதுப் போருக்குப்) பின்பு நமக்குக் கொணர்ந்த நன்மையும், (இரண்டாம்) பத்ருப் போருக்குப் பிறகு அல்லாஹ் நமக்களித்த நம்முடைய வாய்மைக்கான பரிசும் (கைபர், மக்கா வெற்றிகளும்) ஆகும்.

“இதை (என் தந்தை) அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி), நபி(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டு அறிவித்தார்கள் என்று எண்ணுகிறேன்‘‘ என அபூ புர்தா(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 3988. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அறிவித்தார்

நான் பத்ருப் போரின்போது (படை) அணியில் நின்று கொண்டிருந்தேன். திரும்பிப் பார்த்தபோது என் வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் இளவயதுடைய இரண்டு இளைஞர்கள் (நின்று கொண்டு) இருந்தனர்.

அந்த இருவர் (அருகில்) இருப்பது குறித்து நான் அஞ்சினேன். அப்போது அந்த இருவரில் ஒருவர் தம் தோழரிடமிருந்து மறைவாக என்னிடம்,‘என் பெரிய தந்தையே! அபூ ஜஹ்லை எனக்குக் காட்டுங்கள்‘‘ என்று கூறினார். அப்போது நான்,‘என் சகோதரர் மகனே! அவனை என்ன செய்யப் போகிறாய்?’ என்று கேட்டேன். அதற்கு அவர்,‘அவனை நான் கண்டால் (ஒன்று,) அவனை நான் கொலை செய்வேன் அல்லது அதற்காக(ப் போராடி) மடிவேன் என்று அல்லாஹ்விடம் சபதம் எடுத்துக் கொண்டுள்ளேன்‘‘ என்றார். அப்போது மற்றொரு வரும் தம் சகாவிடமிருந்து மறைவாக, முதலமாவரைப் போன்றே கூறினார்.

அவர்களைப் போன்ற இருவருக்கிடையே நான் இருப்பது எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. எனவே, அவ்விருவருக்கும், அபூ ஜஹ்லை சமிக்கை செய்து காட்டினேன். அந்த இருவரும் இராஜாளிப் பறவைகள் போன்று பாய்ந்து அவனைப் பலமாகத் தாக்கினர். அந்த இருவரும்’அஃப்ரா‘வின் இரண்டு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித்) ஆவர்.

ஹதீஸ் 3989. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்துப் பேர்களை உளவுப்படையாக (ஓரிடத்திற்கு) அனுப்பிவைத்தார்கள். இப்படைக்கு உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களின் மகன் ஆஸிமின் (தாய் வழிப்)பாட்டனார் ஆஸிம் இப்னு ஸாபித் அல் அன்சாரி(ரலி) அவர்களைத் தலைவராக்கினார்கள். அவர்கள் (மதீனாவிலிருந்து புறப்பட்டு வந்து) மக்காவிற்கும் உஸ்ஃபானுக்கும் இடையிலுள்ள’ஹத்தா’ என்ற இடத்தில் இருந்தபோது’ஹுதைல்’ குலத்தைச் சேர்ந்த’பனு லிஹ்யான்’ எனும் கிளைக் குலத்தாருக்கு அவர்களைப் பற்றித் தெரிவிக்கப்பட்டது. உடனே அக்கிளையினர் (அவர்களைப் பிடிப்பதற்காக) அம்பெய்யும் வீரர்கள் சுமார் நூறு பேருடன் திரண்டு, உளவுப்படையினரின் பாதச் சுவடுகளைப் பின்தொடர்ந்து வந்தனர். அவர்கள் இறங்கித் தங்கி, சாப்பிட்டுவிட்டுச் சென்றிருந்த இடத்தில் பேரீச்சம் பழங்களைக் கண்டனர்.’(இது) யஸ்ரிப் (மதீனா) நகரின் பேரீச்சம் பழம்‘‘ என்று (தங்களுக்குள்) பேசிக் கொண்டனர். எனவே, அவர்களின் பாதச் சுவடுகளைப் பின்தொடர்ந்தனர். இவர்களின் வரவு ஆஸிம் அவர்களுக்கும், அவர்களின் தோழர்களுக்கும் தெரிந்தபோது அவர்கள் (மலைப் பாங்கான) உயரமான ஓரிடத்தில் தஞ்சம் புகுந்தனர். அப்போது (துரத்தி வந்த) அந்தக் கூட்டத்தினர் அவர்களைச் சுற்றி வளைத்துக் கொண்டு அவர்களைப்

பார்த்து,'இறங்கி வந்து சரணடைந்து விடுங்கள். உங்களில் யாரையும் கொல்ல மாட்டோம் என்று உங்களுக்கு உறுதிமொழியும் வாக்குறுதியும் தருகிறோம்'' என்று கூறினர். அப்போது ஆஸிம் இப்னு ஸாபித் அவர்கள் (தம் சகாக்களை நோக்கி),'(என்) சமூகத்தாரே! நான் ஓர் இறை மறுப்பாளனின் (வாக்குறுதியை) நம்பி அவனுடைய) பொறுப்பில் இறங்கிச் செல்ல மாட்டேன்'' (என்று கூறிவிட்டு),'இறைவா! எங்களைப் பற்றிய செய்தியை உன் தூதருக்குத் தெரிவித்து விடு'' என்று கூறினார்கள். அந்த இறைமறுப்பாளர்கள், உளவுப்படையினரின் மீது அம்பெய்து ஆஸிமை(யும், மற்றும் அறுவரையும்) கொன்றுவிட்டனர். பிறகு குபைப், ஸைத் இப்னு தஸினா மற்றும் இன்னொரு மனிதர் (ஆகிய மூவரும்) அவர்களின் உறுதிமொழி மற்றும் வாக்குறுதியின் பேரில் இறங்கி வந்தனர். அவர்கள் (மூவரும்) தங்கள் கையில் கிடைத்தவுடன் நிராகரிப்பாளர்கள் தம் விற்களின் நாண்களை அவிழ்த்து அதன் மூலம் அவர்களைப் பிணைத்தனர். (இதைக் கண்ட) அந்த மூன்றாம் மனிதர்,'இது முதல் துரோகம். அல்லாஹவின் மீதாணையாக! நான் உங்களுடன் வரமாட்டேன். இவர்களிடம் எனக்கு நல்ல பகுதி இருக்கிறது'' (என்று) கொல்லப்பட்ட தன்னுடைய சாக்களைக் கருத்தில் கொண்டு கூறினார். அவர்கள் அவரை (அடித்துத்) துன்புறுத்தி இழுத்துச சென்றனர். அவர் அவர்களுடன் செல்ல மறுத்தார். (எனவே, அவரைக் கொன்றுவிட்டனர்.) பிறகு, குபைப் அவர்களையும், ஸைத் இப்னு தஸினா அவர்களையும் கொண்டு சென்று பத்ருப் போர் நடந்து முடிந்திருந்த (அந்தச்) சமயத்தில் (மக்காவில்) விற்றுவிட்டனர். பனு ஹாரிஸ் இப்னு ஆமிர் இப்னி நவ்ஃபல் என்னும் குலத்தார் குபைப்(ரலி) அவர்களை (பழி தீர்ப்பதற்காக) விலைக்கு வாங்கிக் கொண்டனர். (ஏனெனில்) குபைப் அவர்கள் (இக்குலத்தாரின் தலைவர்) ஹாரிஸ் இப்னு ஆமிரை பத்ருப் போரின்போது கொலை செய்திருந்தார். (புனித மாதங்கள் முடிந்து பழிக்குப் பழியாக) தம்மைக் கொலை செய்ய அவர்கள் ஒன்று திரளும் (நாள் வரும்) வரை பனு ஹாரிஸ் குலத்தாரிடம் குபைப் கைதியாக இருந்து வந்தார். (கொலை செய்யப் போகும் நாள் நெருங்கியபோது தன்னுடைய மறைவான உறுப்புகளிலிருந்து முடிகளை) மழிப்பதற்காக ஹாரிஸின மகள் ஒருத்தியிடம் சவரக்கத்தி ஒன்றை குபைப் இரவலாகக் கேட்டார். அவளும் இரவல் தந்தாள். அப்போது, அவள் கவனிக்காமல் இருக்க. அவளுடைய சிறிய மகன் (விளையாடிக் கொண்டே) தவழ்ந்து குபைபிடம் வந்து சேர்ந்தான். குபைப் தன்னுடைய மடியில் அவனை அமர்த்திக் கொண்டிருக்க, அந்தக் கத்தி அவரின் கையிலிருக்கும் நிலையில் அவரை அவள் பார்த்தாள்.

அந்தப் பெண் (ஸைனப் பின்த் அல் - ஹாரிஸ்) கூறுகிறாள்: (கத்தி அவர் கையிலும் குழந்தை அவரின் மடியிலும் இருப்பதைப் பார்த்து எங்கே அவனை அவர் கொன்று விடுவாரோ) என்று நான் அஞ்சி நடுங்கினேன். என்னுடைய அச்சத்தை குபைப் புரிந்து கொண்டார். அப்போது அவர்,'அவனை நான் கொன்றுவிடுவேன் என்று அஞ்சுகிறாயா? நான் அப்படிச் செய்பவன் அல்லன்'' என்று கூறினார்.

(பின்னொரு நாளில், தாம் இஸ்லாத்தை ஏற்றபின் இந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்தபடி அந்தப் பெண்) கூறினார்:'குபைபை விடச் சிறந்த ஒரு கைதியை நான் (என் வாழ்நாளில்) ஒருபோதும் கண்டதில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! ஒரு நாள் திராட்சைப் பழக் குலையொன்றை தம் கையில் வைத்து அவர் சாப்பிட்டுக கொண்டிருப்பதை பார்த்தேன். அப்போது அவர் இரும்புச் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தார். (அந்தப் பருவத்தில்) மக்காவில் எந்தப் பழங்களும் இருக்கவில்லை.'அது குபைபுக்கு அல்லாஹ் வழங்கிய உணவு'' என்று அந்தப் பெண் கூறி வந்தார். (அவரைக் கொலை செய்வதற்காக மக்காவின்) புனித எல்லைக்கு வெளியே உள்ள இடத்திற்கு அவரைக் கொண்டு வந்தபோது,'என்னை இரண்டு ரக்அத்கள் தொழ விடுங்கள்'' என்று (குபைப்) கேட்டார். அவர்களும் அனுமதித்தபோது இரண்டு ரக்அத்கள் தொழுதார். பிறகு,'மரணத்தை அஞ்சித் தான் நான் (நீண்ட நேரம் தொழுகிறேன்) என்று நீங்கள் எண்ணாவிட்டால் நான் (தொழுகையை) அதிகமாக்கியிருப்பேன்'' என்று கூறினார். பின்பு,'இறைவா! இவர்களை நீ எண்ணி வைத்துக்

கொண்டு இவர்களை நீ தனித்தனியாகக் கொன்று விடு. இவர்களில் ஒருவனைக் கூடவிட்டு வைக்காதே'' என்று (அவர்களுக்கெதிராக) குபைப் பிரார்த்தனை புரிந்தார். அதன் பிறகு,'நான் முஸ்லிமாகக் கொல்லப்படும்போது எதைப் பற்றியும் நான் பொருட்படுத்த மாட்டேன். எந்த இடத்தில் நான் இறந்தாலும் நான் இறைவனுக்காகவே கொல்லப்படுகிறேன் (என்பதில் எனக்கு மகிழ்ச்சியே) நான் கொலையுறுவது அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காகத் தான் எனும்போது, அவன் நாடினால் என்னுடைய துண்டிக்கப்பட்ட உறுப்புகளின் இணைப்புகளின் மீது கூட (தன்) அருள்வளத்தைப் பொழிவான்'' என்று கவிபாடினார்கள்.

பிறகு,'அபூ சிர்வஆ - உக்பா இப்னு ஹாரிஸ்' என்பவன் குபைப் அவர்களிடம் வந்து, அவர்களைக் கொலை செய்தான். (அன்றிலிருந்து அடைத்து வைத்து அல்லது கட்டி வைத்துக் கொல்லப்படும் ஒவ்வொரு முஸ்லிமுக்கும் (கொல்லப்படுவதற்கு முன் இரண்டு ரக்அத்கள்) தொழுவதை முன்மாதிரியாக்கிவிட்டவர் குபபைப் அவர்களே என்றாயிற்று. மேலும், நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுக்கு உளவுப் படையினர் (கொல்லப்பட்ட) செய்தியை அவர்கள் கொல்லப்பட்ட அன்றே (இறையறிவிப்பின் மூலம்) தெரிவித்தார்கள். ஆஸிம் இப்னு ஸாபித் அவர்கள் கொல்லப்பட்டுவிட்ட செய்தி குறைஷிகளுக்குக் கிடைத்தபோது அவர்களில் சிலர் (கொல்லப்பட்டது ஆஸிம் தான் என்று) அடையாளம் தெரிந்து கொள்ள அவரின் (முக்கிய) உறுப்புகளில் ஒன்றை (வெட்டிக்) கொண்டு வருமாறு ஆளனுப்பி வைத்தனர். (ஏனெனில்) ஆஸிம்(ரலி) (பத்ருப் போரின் போது) அவர்களின் தலைவர் ஒருவரைக் கொன்று விட்டிருந்தார். (அவரின் உடலின் முக்கிய உறுப்பொன்றை வெட்டியெடுத்து வரப்போன போது) ஆஸிம் அவர்களுக்காக (அவர்களைப் பாதுகாக்கும் நோக்கில்) அல்லாஹ் மேகத்தைப் போன்று ஆண்தேனீக் கூட்டமொன்றை அனுப்பினான். அவை குறைஷிகளின் தூதர்களிடமிருந்து ஆஸிம் அவர்களை பாதுகாத்தன. அவர்களின் உடலிலிருந்து எதையும் வெட்டியெடுத்துச் செல்ல அவர்களால் முடியவில்லை.

கஅப் இப்னு மாலிக்(ரலி) கூறினார்:'முராரா இப்னு ரபீஉ அம்ரீ(ரலி) அவர்களும் ஹிலால் இப்னு உமைய்யா அல் வாக்கிஃபீ(ரலி) அவர்களும் பத்ருப் போரில் பங்கெடுத்த நல்ல மனிதர்கள்'' என்று என்னிடம் மக்கள் கூறினர்.

ஹதீஸ் 3990. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்

பத்ருப்போரில் பங்கெடுத்தவரான ஸயீத் இப்னு ஸைத் இப்னி அம்ர் இப்னி நுஃபைல்(ரலி) வெள்ளிக்கிழமை நோய் வாய்ப்பட்டார்கள். எனவே (அவர்களைக் கவனித்துக் கொள்ள) பகல் பொழுது உயர்ந்த பின்'ஜும்ஆ (தொழுகை)' நேரம் நெருங்கி விட்டிருந்த நிலையில், இப்னு உமர்(ரலி) ஸயீத்(ரலி) அவர்களிடம் புறப்பட்டுப் போனார்கள். மேலும் ஜும்ஆத் தொழுகையை இப்னு உமர் விட வேண்டியதாயிற்று.

ஹதீஸ் 3991. உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்

என் தந்தை அப்துல்லாஹ் இப்னு உத்பா அவர்கள், உமர் இப்னு அப்தில்லாஹ் இப்னி அர்கம் அஸ்ஸுஹ்ரீ அவர்களுக்கு கடிதம் எழுதினார்கள். அதில் சுபைஆ பின்த் ஹாரிஸ் அல் அஸ்லமிய்யா(ரலி) அவர்களிடம் சென்று, இறைத்தூதர்(ஸல) அவர்களிடம் சுபைஆ மார்க்கத்தீர்ப்பு கேட்டது பற்றியும், அதற்கு அவர்கள் அளித்த பதில் பற்றியும் கேட்டு எழுதுமாறு பணித்திருந்தார்கள். (அதன்படி, சுபைஆ -ரலி அவர்களிடம் சென்று) உமர் இப்னு அப்தில்லாஹ் அவர்கள் (கேட்டறிந்து என் தந்தை) அப்துல்லாஹ் இப்னு உத்பா அவர்களுக்கு(ப் பின்வருமாறு பதில்) செய்தி அனுப்பினார்கள்.

சுபைஆ பின்த் அல்ஹாரிஸ் அவர்கள்'பனு ஆமிர் இப்னு லுஅய்' குலத்தைச் சேர்ந்த ஸஅத் இப்னு கவ்லா(ரலி) அவர்களுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தார். ஸஅத்(ரலி) பத்ருப்போரில்

பங்கெடுத்தவராவார். 'விடைபெறும்' ஹஜ்ஜினபோது ஸஅத் (ரலி) இறந்துவிட்டார்கள். அப்போது'சுபைஆ' கர்ப்பமுற்றிருந்தார். ஸஅத் அவர்கள் இறந்த நீண்ட நாள்கள் ஆகியிருக்கவில்லை (அதற்குள்) சுபைஆ பிரசவித்துவிட்டார். (பிரசவத்திற்குப் பின் ஏற்படும்) உதிரப் போக்கிலிருந்து சுபைஆ அவர்கள் சுத்தமானபோது, பெண் பேச வருபவர்களுக்காகத் தன்னை அலங்கரித்துக் கொண்டார். அப்போது, பனு அப்தித் தார் குலத்தில் ஒருவரான'அபுஸ் ஸனாபில் இப்னு பஅக்கக் (ரலி) சுபை ஆ அவர்களிடம் வந்து,'திருமணம் புரியும் ஆசையில் பெண் பேச வருபவர்களுக்காக உங்களை நீங்கள் அலங்கரித்திருப்பதை காண்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (கணவன் இறந்த ஒரு பெண் அவனுடைய இறப்புக்குப் பின் இருக்க வேண்டிய'இத்தா' காலமாகிய) நான்கு மாதம் பத்து நாள்கள் முடியும் வரையில் நீங்கள் (மறு) மணம் புரிந்து கொள்ள முடியாது'' என்று கூறினார்கள். சுபைஆ (ரலி) கூறினார்: இதை அபுஸ்ஸனாபில் என்னிடம் சொன்னதையடுத்து நான் மாலை நேரத்தில் என்னுடைய உடையை உடுத்திக் கொண்டு இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் இது பற்றிக் கேட்டேன். அதற்கு,'நீ பிரசவித்துவிட்டபோதே (மணந்து கொள்ள) அனுமதிக்கப்பட்டவளான ஆம்விட்டாய். நீ விரும்பினால் (மறு)மணம் செய்து கொள்' என்று நபி (ஸல்) அவர்கள் மார்க்கத் தீர்ப்பு வழங்கினார்கள்.

மற்றோர் அறிவிப்பில், பத்ரில் பங்கெடுத்த இயாஸ் இப்னு புகைர் (ரலி) தமக்கு அறிவித்தாக முஹம்மத் இப்னு இயாஸ் (ரஹ்) தெரிவத்தார்கள்.

## பத்ருப்போரில் வானவர்கள் பங்கெடுத்தது.

ஹதீஸ் 3992. நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து,'உங்களிடையே பத்ருப்போரில் பங்கெடுத்தவரைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,'(பத்ரில் கலந்து கொண்டோர்) முஸ்லிம்களில் சிறந்தவர்கள்'' என்றோ அல்லது அது போன்ற வேறொரு வார்த்தையையோ கூறினார்கள். (உடனே) ஜிப்ரீல் (அலை) அவர்கள்,'இவ்வாறுதான் வானவர்களில் பத்ருப்போரில் பங்கெடுத்தவர்கள் (எங்களில் சிறந்தவர்கள் என்று நாங்களும் கருதுகிறோம்)'' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸை பத்ருப்போரில் பங்கெடுத்தவரான ரிஃபாஆ இப்னு ராஃபிஉ அஸ்ஸுரகீ (ரலி) அவர்களிடமிருந்து அவர்களின் புதல்வர் முஆத் இப்னு ரிஃபாஆ (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 3993. முஆத் இப்னு ரிஃபாஆ (ரஹ்) அறிவித்தார்

'அகபா' விசுவாசப் பிரமாணம் செய்தவர்களில் ஒருவரான ராஃபிஉ (ரலி), பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களில் ஒருவரான தம் மகன் ரிஃபாஆ (ரலி) அவர்களிடம்,'அகபா வாக்குப்பிரமாணத்திற்குப் பிரதியாக பத்ரில் நான் கலந்து கொள்வது எனக்கு மகிழ்ச்சியளிக்குமா?' என்று கேட்பது வழக்கம்.

"ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் (பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களைப் பற்றி முந்தைய ஹதீஸில் உள்ளபடி) கேட்டார்கள்'' என்றும் ராஃபிஉ (ரலி) கூறினார்.

ஹதீஸ் 3994. முஆத் இப்னு ரிஃபாஆ (ரஹ்) அறிவித்தார்

வானவர் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் (முந்தைய ஹதீஸில் உள்ளபடி) கேட்டார்.

அறிவிப்பாளர் யஹ்யா இப்னு ஸயீத் (ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸை முஆத் இப்னு ரிஃபாஆ(ரஹ்) எனக்கு அறிவித்த நாளில் யஸீத் இப்னு அல்ஹாத்(ரஹ்) அவர்களுடன் நான் இருந்தேன்.'(நபி-ஸல்- அவர்களிடம்) கேள்வி கேட்டவர் (வானவர்) ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள்தாம்'' என ரிஃபாஆ(ரஹ்) கூறினார்கள் என்று யஸீத் கூறினார்கள்.

ஹதீஸ் 3995. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

பத்ருப் போரின்போது நபி(ஸல்) அவர்கள்,'இதோ ஜிப்ரீல்! போர்த் தளவாடங்களுடன் தம் குதிரையின் தலையை (அதன் கடிவாளத்தை)ப் பிடித்துக் கொண்டிருக்கிறார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3996. அனஸ்(ரலி) அவர்களிடம் அறிவித்தார்

அபூ ஸைத்(ரலி) (தமக்குப் பின்) எந்தச் சந்ததியையும்விட்டுச் செல்லாமல் இறந்தார்கள். மேலும், அவர்கள் பத்ருப்போரில் பங்கெடுத்தவராயிருந்தார்கள்.

ஹதீஸ் 3997. அப்துல்லாஹ் இப்னு கப்பாப(ரஹ்) அறிவித்தார்

அபூ ஸயீத் இப்னு மாலிக் அல்குத்ரீ(ரலி) ஒரு பயணத்திலிருந்து திரும்பியபோது, அவர்களின் துணைவியார் குர்பானி இறைச்சியை (சாப்பிடுவதற்காகக்) கொண்டு வந்து அவர்களுக்கு முன்னால் வைத்தார். அப்போது அவர்கள்,'இது பற்றி நான் (மார்க்கத் தீர்ப்புக்) கேட்காத வரையில் இதை உண்ண மாட்டேன்'' என்று கூறினார்கள். உடனே, அவர்கள் தம் தாய் வழிச் சகோதரரான கதாதா இப்னு நுஅமான்(ரலி) அவர்களிடம் சென்றார்கள். அவர் பத்ருப்போரில் பங்கெடுத்தவராயிருந்தார். 38 (அவரிடம் சென்று) இது பற்றிக் கேட்டார்கள். அதற்கு கதாதா(ரலி),'குர்பானி இறைச்சியை மூன்று நாள்களுக்கு மேல் (சேமித்து வைத்து) எவரும் சாப்பிடக் கூடாது என்ற சட்டத்தை மாற்றும் உத்தரவு நீங்கள் (பயணம்) சென்றதற்குப் பின்னால் வெளியானது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 3998. ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அறிவித்தார்

பத்ருப்போரின்போது நான் உபைதா இப்னு ஸயீத் இப்னி ஆஸ் என்பவனைச் சந்தித்தேன். அவன் தன்னுடைய இரண்டு கண்களைத் தவிர வேறெதுவும் வெளியில் தெரியாத விதத்தில் தன் உடல் முழுவதையும் ஆயுதங்களால் மூடி மறைத்திருந்தான். அவன்'அபூ தாத்தில் கரிஷ்' (மக்கள் பலம் மிக்கவன்) என்னும் குறிப்புப் பெயரால் அறியப்பட்டு வந்தான். (போர்க்களத்தில் அவன்) நான்'அபூ தாத்தில் கரிஷ்' (என்று பெருமையாகச்) சொன்னான். நான் அவன் மீது ஈட்டியைப் பாய்ச்சி அவன் கண்களில் தாக்கினேன். உடனே அவன் இறந்துவிட்டான்.

“நான் அவன் மீது என்னுடைய காலை வைத்து மிதித்து மிகவும் சிரமப்பட்டு அந்த ஈட்டியை இழுத்தெடுத்தேன். அதன் இரண்டு ஓரங்களும் வளைந்து போயிருந்தன'' என்று ஸுபைர்(ரலி) சொன்னதாக ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) அறிவித்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்:

அந்த ஈட்டியை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸுபைர்(ரலி) அவர்களிடம் (இரவலாகக்) கேட்கவே, ஸுபைர்(ரலி) அதைக் கொடுத்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தபோது ஸுபைர்(ரலி) அதை (திரும்ப) எடுத்தார்கள். பிறகு அதை அபூ பக்ர்(ரலி) (இரவலாகக்) கேட்க, அதை அவர்களுக்கு ஸுபைர்(ரலி) கொடுத்தார்கள். அபூ பக்ர்(ரலி) இறந்தபோது, அதனை உமர்(ரலி) (இரவலாகக்) கேட்டார்கள். அதனை ஸுபைர் அவர்கள் உமர்(ரலி) அவர்களுக்குக் கொடுத்தார்கள். உமர்(ரலி) இறந்தபோது அதை ஸுபைர் அவர்கள் எடுத்து (தம்மிடம் வைத்து)க் கொண்டார்கள். பிறகு அவர்களிடம் உஸ்மான்(ரலி) அதைக் கேட்க, அவர்களுக்கும் அதை ஸுபைர்(ரலி) கொடுத்தார்கள். உஸ்மான்(ரலி) கொலை செய்யப்பட்டபோது, அந்த ஈட்டி அலீ(ரலி)

அவர்களி(ன் குடும்பத்திரி)டம் வந்தது. அதனை, ஸுபைர்(ரலி) அவர்களின் மகன் அப்துல்லாஹ், (அலீ - ரலி அவர்களின் பிள்ளைகளிடம்) கேட்டார்கள். அப்துல்லாஹ்(ரலி) கொல்லப்படும் வரையில் அது அவர்களிடமே இருந்து வந்தது.

ஹதீஸ் 3999. பத்ருப்போரில் பங்கெடுத்தவரான உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்கள் அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'என்னிடம் வாக்குறுதிப் பிரமாணம் தாருங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4000. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களில் ஒருவரான அபூ ஹுதைஃபா(ரலி) சாலிமைத் தம் வளர்ப்பு மகனாக ஆக்கினார்கள். அவருக்குத் தம் சகோதரரின் மகளான ஹிந்த பின்த் வலீத் இப்னு உத்பாவைத் திருமணமும் செய்து வைத்தார்கள். சாலிம் ஓர் அன்சாரிப் பெண்ணின் அடிமையாக இருந்தவர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸைதை வளர்ப்பு மகனாக ஆக்கிக் கொண்டது போன்று (சாலிமை, அபூ ஹுதைஃபா - ரலி - அவர்கள் வளர்ப்பு மகனாக்கிக் கொண்டார்கள்.) மேலும், அறியாமைக் காலத்தில் ஒருவரை அவரின் வளர்ப்புத் தந்தை(யின் பெயர்) உடன் இணைத்து மக்கள் அழைப்பதும் அவரின் சொத்துக்கு வாரிசாக (வளர்ப்பு மகனை) ஆக்கும் பழக்கமும் இருந்து வந்தது. 'வளர்ப்புப் புதல்வர்களை அவர்களின் சொந்தத் தந்தை(யின் பெயர்) உடன் இணைத்து அழையுங்கள்'' என்னும் (திருக்குர்ஆன் 33:05) வசனத்தை அல்லாஹ் அருளும் வரையில் (இந்தப் பழக்கம் நீடித்தது.)

"பிறகு (அபூ ஹுதைஃபாவின் துணைவியார்) சஹ்லா (பின்த் சுஹைல் (ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள்..!" என்று (தொடங்கும்) ஹதீஸை (அறிவிப்பாளர் அபுல் யமான் -ரஹ் - அவர்கள்) முழுமையாகக் கூறினார்கள்.

ஹதீஸ் 4001. ருபய்யிஉ பின்த் முஅவ்வித்(ரலி) அறிவித்தார்

எனக்குத் திருமணம் நடந்த அன்று காலை நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். (இந்த ஹதீஸைக் கேட்டுக் கொண்டிருந்த காலித் இப்னு தக்வான் - ரஹ் - அவர்களிடம்) 'எனக்கருகில் நீங்கள் அமர்ந்திருப்பது போன்று நபி(ஸல்) அவர்கள் என்னுடைய விரிப்பின் மீது அமர்ந்திருந்தார்கள்'' (என்று ருபய்யிஉ கூறினார்கள்) அங்கு சில (முஸ்லிம்) சிறுமிகள் (சலங்கையில்லா) கஞ்சிராக்களை அடித்துக் கொண்டு பத்ருப் போரில் கொல்லப்பட்ட தங்கள் முன்னோர்களைப் புகழ்ந்து (இரங்கல்) பாடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒரு சிறுமி, 'எங்களிடையே ஓர் இறைத்தூதர் இருக்கிறார். அவர் நாளை நடக்க விருப்பதையும் அறிவார்'' என்று கூறினாள். உடனே நபி(ஸல்) அவர்கள், 'இப்படிச் சொல்லதே. (இதைவிடுத்து) முன்பு நீ சொல்லிக் கொண்டிருந்ததை (வேண்டுமானால்) சொல்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4002. இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழரும், இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் பத்ரில் பங்கெடுத்தவருமான அபூ தல்ஹா (ஸைத் அல் அன்சாரீ(ரலி) அவர்கள் கூறினார்

"எந்த வீட்டினுள் நாயோ உருவப் படமோ உள்ளதோ அந்த வீட்டினுள் (இறையருளைச் சுமந்து வரும) வானவர்கள் நுழைய மாட்டார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உயிரினங்களின் சிலைகளையும், உருவப்படங்களையும் கருத்திற் கொண்டே நபி(ஸல்) அவர்கள் (இப்படிக்) கூறினார்கள்'' (என்று இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.)

ஹதீஸ் 4003. அலீ(ரலி) அறிவித்தார்

பத்ருப்போரின்போது போரில் கிடைத்த செல்வத்திலிருந்து என்னுடைய பங்காக வயதான ஒட்டகம் ஒன்று எனக்குக் கிடைத்திருந்தது. நபி(ஸல்) அவர்களும் (தமக்குக் கிடைத்த நிதியான ஐந்தில் ஒரு பாகமான) குமுஸில் இருந்து எனக்கு (மற்றொரு கிழட்டு ஒட்டகத்தைத்) தந்திருந்தார்கள். நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மகள் ஃபாத்திமாவுடன் (முதன் முறையாக) வீடு கூட விரும்பியபோது பனு கைனுகா குலத்தைச் சேர்ந்த பொற்கொல்லர் ஒருவரை, என்னுடன் வந்து 'இத்கிர்' புல்லை நாங்கள் கொண்டு வருவதெனச் சொல்லியிருந்தேன். அந்தப் புல்லைப் பொற்கொல்லர்களுக்கு விற்று அந்தப் பணத்தை என் மணவிருந்துக்குப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினேன். நான் என் ஒட்டகங்களுக்கான சேண இருக்கைக்களையும், தீவனப் பைகள் மற்றும் கயிறுகளையும் சேகரிக்கலானேன். அப்போது என் இரண்டு ஒட்டகங்களும் அன்சாரி ஒருவரின் அறையின் அருகே மண்டியிட்டு அமரச் செய்யப்பட்டிருந்தன. நான் சேகரிக்க விரும்பியவற்றைச் சேகரித்துவிட்டபோது (திரும்பி வந்தேன். அப்போது) என் இரண்டு ஒட்டகங்களின் திமில்களும் துண்டிக்கப்பட்டிருந்தன. அவற்றின் (அடிவயிற்று) இடுப்புப் பகுதி (கத்தியால்) பிளக்கப்பட்டிருந்தது. அவற்றின் ஈரல் குலைகள் பிடுங்கப்பட்டிருந்தன. அவற்றின் (இந்த அவலக்) காட்சியைக் கண்டபோது என்னால் என் கண்களைக் (கண்ணீர் சிந்த விடாமல்) கட்டுப்படுதத முடியவில்லை. நான், 'இதை(யெல்லாம்) செய்தவர் யார்?' என்று கேட்டேன். மக்கள், 'ஹம்ஸா இப்னு அப்தில் முத்தலிப் தான் இப்படிச் செய்துவிட்டார். அவர் இந்த வீட்டில் அன்சாரிகளின் மது அருந்தும் குழு ஒன்றில் தான் இருக்கிறார். அவருடன் அவரின் நண்பர்களும் பாடம்யொருந்தியும் உள்ளனர். அந்தப் பாடம் தம் பாடலினிடையே, 'ஹம்ஸாவேஸ இந்தக் கொழுத்த கிழம் ஒட்டகங்களைக் கொன்று (உங்கள் விருந்தாளிகளுக்குப் பரிமாறி) விடுங்கள்'' என்று பாடினாள். உடனே ஹம்ஸா தம் வாளை நோக்கிப் பாய்ந்து (எடுத்து வந்து) அந்த இரண்டு ஒட்டகங்களின் திமில்களை வெட்டி இடுப்பைப் பிளந்தார். மேலும், அதன் ஈரல் குலைகளை வெளியே எடுத்தார்!"என்று பதிலளித்தனர்.

(அலீ (ரலி) அவர்கள் தொடர்ந்து கூறுகிறார்கள்:) உடனே நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்களுடன் ஸைத் இப்னு ஹாரிஸா அவர்களும் இருந்தார்கள். நான் சந்தித்த (வேதனை) தனை நபி(ஸல்) அவர்கள் புரிந்து கொண்டு, 'உங்களுக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! இன்றைய நாளைப் போன்ற (பயங்கரமான) ஒரு நாளை (ஒருபோதும்) நான் பார்த்ததில்லை. ஹம்ஸா, என் இரண்டு ஒட்டகங்களையும் (அநியாயமாகத்) தாக்கி அவற்றின் திமில்களை அறுத்துவிட்டார். அவற்றின் (அடி வயிற்று) இடுப்புப் பகுதிகளை (வாளால்) பிளந்துவிட்டார். அவர் இப்போது ஒரு வீட்டில் மது அருந்தும் (நண்பர்கள்) குழுவுடன் இருக்கிறார்'' என்று சொன்னேன். உடனே நபி(ஸல்) அவர்கள் தங்களின் அங்கி ஒன்றைக் கொண்டு நடந்து செல்ல, அவர்களை நானும் ஸைத் இப்னு ஹாரிஸாகவும் பின்தொடர்ந்து சென்றோம். ஹம்ஸா இருந்த வீட்டிற்கு வந்தவுடன் நபி(ஸல்) அவர்கள் செல்ல அனுமதி கேட்டார்கள். நபிகளாருக்கு அனுமதியளிக்கப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள் ஹம்ஸாவை, அவர் செய்த காரியத்திற்காகக் கண்டிக்கத் தொடங்கினார்கள். ஹம்ஸாவின் இரண்டு கண்களும் சிவந்திருக்க அவர் போதையிலிருந்தார். ஹம்ஸா, அல்லாஹ்வின் தூதரைப் பார்த்தார். பிறகு (தம்) பார்வையை உயர்த்தி அவர்களின் இரண்டு முழங்கால்களையும் பார்த்தார். பிறகு பார்வையை உயர்த்தி நபி(ஸல்) அவர்களின் முகத்தைப் பார்த்தார். பிறகு, 'நீங்கள் எல்லாம் என் தந்தையின் அடிமைகள் தாமே?' என்று கேட்டார்.

அவர் போதையில் இருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டு, (திரும்பாமல்) அப்படியே பின் வாங்கிய வண்ணம் தாம் வந்த வழியே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளியேறினார்கள். நாங்களும் அவர்களுடன் வெளியேறினோம்.

ஹதீஸ் 4004. அப்துல்லாஹ் இப்னு மஅகில் அல்முஸனீ(ரஹ்) அறிவித்தார்

ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் (ரலி அவர்கள் இறந்த போது) அவர்களுக்கு (ஜனாஸா தொழுகை நடத்திய) அலீ(ரலி) (வழமையான தக்பீரை விடக் கூடுதலாக ஒரு முறை) தக்பீர் கூறினார்கள். (இது பற்றி அவர்களிடம் கேட்கப்பட்டபோது)'ஸஹ்ல் இப்னு ஹுனைப்ஃப் - ரலி அவர்கள் பத்ருப் போரில் பங்கெடுத்தார்கள். (பத்ருப் போரில் பங்கெடுத்தவருக்கு பிறரை விடச் தனிச் சிறப்பு உண்டு. அதனால் கூடுதலாக தக்பீர் கூறினேன்)" என்று அலீ(ரலி) பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4005. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

உமர் இப்னு கத்தாப்(ரலி) (தம் மருமகன்) குனைஸ் இப்னு ஹுதாஃபா அஸ்ஸஹ்மீ(ரலி) இறந்துவிட்டதால் (மகள்) ஹஃப்ஸா விதவையானபோது (அவர்களை வேறொவருக்குத் திருமணம் முடித்து வைக்க எண்ணினார்கள்.)

-குனைஸ் அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரும், பத்ருப்போரில் பங்கெடுத்தவருமாயிருந்தார்கள். மேலும், மதீனாவில் இறந்தார்கள்.

உமர்(ரலி) கூறினார்:

எனவே, நான் உஸ்மான் இப்னு அஃப்பான் அவர்களைச் சந்தித்து (என் மகள்) ஹஃப்ஸாவைக் குறித்து எடுத்துக் கூறி,'நீங்கள் விரும்பினால் என் மகள் ஹஃப்ஸாவை உங்களுக்குத் திருமணம் செய்து வைக்கிறேன்' என்று கூறினேன். (அதற்கு) உஸ்மான்(ரலி),'(உங்கள் மகளை நான் மணந்து கொள்ளும்) இந்த என் விஷயத்தில் நான் யோசிக்க வேண்டியுள்ளது (யோசித்த பின் என்னுடைய முடிவைக் கூறுகிறேன்)" என்று கூறினார்கள். சில நாள்கள் பொறுத்திருந்தேன். பிறகு (நான் உஸ்மானைச் சந்தித்த போது) அவர்'இப்போது திருமணம் செய்து கொள்ள வேண்டாம் என்றே எண்ணியுள்ளேன்" என்று கூறினார்கள். எனவே, நான் அபூ பக்ர் அவர்களைச் சந்தித்தேன். (அவர்களிடம்)'நீங்கள் விரும்பினால் என் மகள் ஹஃப்ஸாவைப் பெண் கேட்டார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவைத் திருமணம் செய்து வைத்தேன். பிறகு (ஒரு நாள்) அபூ பக்ர் அவர்கள் என்னைச் சந்தித்தபோது,'நீங்கள் என்னிடம் ஹஃப்ஸா அவர்களைக் குறித்துச் சொன்னபோது நான் உங்களுக்கு பதில் எதுவும் கூறாததால் உங்களுக்கு என் மீது மன வருத்தம் இருக்கக் கூடும்' என்று கூறினார்கள். நான்,'ஆம்" என்று கூறினேன். (அதற்கு அபூ பக்ர் (ரலி) அவர்கள்'நீங்கள் கூறியபோது நான் உங்களுக்கு பதில் கூறாததற்குக் காரணம், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸா அவர்களை (தாம் மணப்பது) பற்றிப் பேசியதை நான் அறிந்திருந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இந்த ரகசியத்தை நான் வெளிப்படுத்தவும் விரும்பவில்லை. (எனவேதான், உங்களுக்கு பதிலேதும் கூறவில்லை. நபி(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவை (திருமணம் செய்யாமல்) விட்டிருந்தால் உறுதியாக அவர்களை நான் (மனைவியாக) ஏற்றுக் கொண்டிருந்திருப்பேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4006. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தன் குடும்பத்தினருக்காகச் செய்யவும் செலவும் தர்மமே ஆகும்.

இதை பத்ருப் போரில் பங்கெடுத்தவரான அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4007. கூஃபாவின் ஆளுநர் முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) (ஒரு நாள்) அஸ்ருத் தொழுகையைத் தாமதப்படுத்திவிட்டார்கள். அப்போது ஸைத் இப்னு ஹஸன்(ரஹ்) அவர்களின் பாட்டனாரும் பத்ருப்போரில் பங்கெடுத்தவருமான அபூ மஸ்வூத் உக்பா இப்னு அம்ர் அல் அன்சாரி(ரலி) வந்து,'(முஃகீரா அவர்களே!) ஜிப்ரீல்(அலை) அவர்கள் இறங்கி (ஐவேளைத் தொழுகைகளையும் அவற்றுக்குரிய நேரங்களில்) தொழுதார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்)

அவர்களும் ஐந்து (நேரத்) தொழுகைகளை (அவ்வாறே) தொழுதார்கள். பிறகு, ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,)'இவ்வா(று குறித்த நேரங்களில் தொழுது காட்டுமா)றே நான் பணிக்கப்பட்டுள்ளேன் என்று (கூறியதெல்லாம்) உங்களுக்குத் தெரியுமே!"என்று கேட்டார்கள்.

உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்களின் ஆட்சிக் காலத்தில் (ஒரு நாள், அன்னார் தொழுகையைத் தாமதப்படுத்திய போது) அவர்களிடம் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) இந்த ஹதீஸைத் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 4008. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'அல்பகரா' அத்தியாயத்தின் இறுதி இரண்டு (திருக்குர்ஆன் 02:285 - 286) வசனங்களை இரவு நேரத்தில் ஓதுகிறவருக்கு (மனிதன் மற்றும் ஜின் இனத்தாரின் தீங்குகளிலிருந்து பாதுகாக்கப்) போதுமானதாக அவை ஆம்விடும்.

இதை பத்ருப்போரில் பங்கெடுத்தவரான அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத்(ரஹ்) கூறினார்.

அபூ மஸ்வூத்(ரலி) இறையில்லம் கஅபாவை வலம் வந்து கொண்டிருந்தபோது அவர்களை நான் சந்தித்து இந்த ஹதீஸ் குறித்துக கேட்டேன். அப்போது (அல்கமா - ரஹ்- அவர்களிடம் கூறியது போன்றே) என்னிடமும் அதைக் கூறினார்கள்.

ஹதீஸ் 4009. 'நபி(ஸல்) அவர்களின் தோழரும், அன்சாரிகளில் பத்ருப்போரில் பங்கெடுத்தவருமான இத்பான் இப்னு மாலிக்(ரலி),'நான், இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தேன்..!"(என்று கூறித் தொடங்கும்) இந்த ஹதீஸின் முழுவடிவத்தை மஹ்மூத் இப்னு ரபீஉ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4010. இப்னு ஷிஹாப் (அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்

பனு சாலிம் குலத்தில் ஒருவரும் அவர்களில் சிறப்புக்குரியவருமான ஹுஸைன் இப்னு முஹம்மத்(ரலி) அவர்களிடம் இத்பான் இப்னு மாலிக்(ரலி) குறித்து முஹ்மூத் இப்னு ரபீஉ(ரலி) அறிவித்த ஹதீஸைப் பற்றி நான் கேட்டபோது, அதை அவர்கள் உறுதிப்படுத்தினார்கள்.

ஹதீஸ் 4011. முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

பனு அதீ குலத்தில் பெரியவரும், நபி(ஸல்) அவர்களுடன் பத்ருப்போரில் பங்கெடுத்த ஆமிர் இப்னு ரபீஆ(ரலி) அவர்களின் மகனுமான அப்துல்லாஹ் இப்னு ஆமிர் இப்னு ரபீஆ(ரஹ்) என்னிடம் (பின்வருமாறு) அறிவித்தார்கள்.

(கலீஃபா) உமர்(ரலி) குதாமா இப்னு மழ்வூன்(ரலி) அவர்களை பஹ்ரைன் (நாட்டின்) ஆளுநராக நியமித்தார்கள். அவர் பத்ருப்போரில் பங்கெடுத்தவராவார். மேலும் அவர் (உமர்(ரலி) அவர்களின் மகன்) அப்துல்லாஹ் இப்னு உமருக்கும், (உமர்(ரலி) அவர்களின் மகள்) ஹஃப்ஸாவுக்கும் தாய் மாமன் ஆவார். அல்லாஹ் இவர்கள் அனைவரைக் குறித்தும் திருப்தி கொள்வானாக!

ஹதீஸ் 4012 , ஹதீஸ் 4013. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் அறிவித்தார்

"இறைத்தூதர்(ஸல்) அவர்கள் விளைநிலங்களைக் குத்தகைக்கு விடுவதைத் தடைசெய்தார்கள்' என்று பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களான என் தந்தையின் இரண்டு சகோதரர்கள் (ளுஹைர், முளஹ்ஹர்) கூறினர்.

இதை சாலிம் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அறிவித்தார்.

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) கூறினார்:

நான் சாலிம் அவர்களிடம், 'நீங்கள் விளை நிலங்களைக் குத்தகைக்கு விடுகிறீர்களா?' என்று கேட்டேன். அதற்கவர், 'ஆம்'' என்று கூறிவிட்டு, 'ரா∴பிஉ தன் மீது சிரமத்தை ஏற்படுத்திக் கொண்டார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4014. அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத் இப்னி ஹாதீ அல்லைஸீ (ரஹ்) அறிவித்தார்

நான் பத்ரில் பங்கெடுத்தவரான ரி∴பாஆ இப்னு ரா∴பிஉ அல் அன்சாரி (ரலி) அவர்களைப் பார்த்தேன்.

ஹதீஸ் 4015. மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) அறிவித்தார்

பனு ஆமிர் இப்னு லுஅய் குலத்தாரின் ஒப்பந்த நண்பரும் நபி (ஸல்) அவர்களுடன் பத்ருப் போரில் பங்கெடுத்தவருமான அம்ர் இப்னு அவ்∴ப் (ரலி) எனக்குக் கூறினார்கள்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரலி) அவர்களை பஹ்ரைனிலிருந்து ஜிஸ்யா (காப்பு வரியை) வசூலித்துக் கொண்டு வரும்படி (அரசு அதிகாரியாக்கி) அனுப்பியிருந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (நெருப்பு வணங்கிகளான) பஹ்ரைன் வாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்து அவர்களுக்கு அலா இப்னு ஹள்ரமீ (ரலி) அவர்களைத் தலைவராக ஆக்கியிருந்தார்கள். அபூ உபைதா அவர்கள் பஹ்ரைனிலிருந்து நிதியுடன் வந்தார்கள். அபூ உபைதா அவர்கள் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அன்சாரிகள் (வந்து) நபி (ஸல்) அவர்களுடன் ∴பஜ்ருத் தொழுகையை நிறைவேற்றினார். நபி (ஸல்) அவர்கள் (தொழுகையை முடித்துத்) திரும்ப அன்சாரிகள் நபியவர்களிடம் சைகையால் கேட்டார்கள். (ஆர்வத்துடனிருந்த) அவர்களைக் கண்டவுடன் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்துவிட்டு, 'அபூ உபைதா ஏதோ கொண்டு வந்திருக்கிறார் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் என நான் நினைக்கிறேன்'' என்று கூற, அன்சாரிகள், 'ஆம், இறைத்தூதர் அவர்களே!"என்று பதிலளித்தார்கள். 'அப்போது நபி (ஸல்) அவர்கள்'உங்களுக்கு நற்செய்தி! உங்களுக்கு மகிழ்வைத் தரும் நிகழ்ச்சி நடக்குமென்று நம்புங்கள்'' என்று கூறிவிட்டு, 'அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு வறுமை ஏற்பட்டு விடும் என்று நான் அஞ்ச வில்லை. மாறாக, உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களுக்கு உலகச் செல்வம் அதிகமாகக் கொடுக்கப்பட்டதைப் போல் உங்களுக்கும் அதிகமாகப் போட்டியிட்டதைப் போல் நீங்களும் போட்டியிட, அது அவர்களை அழித்துவிட்டதைப் போல் உங்களையும் அழித்து விடுமோ என்றே நான் அஞ்சுகிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4016. இப்னு உமர் (ரலி) எல்லாப் பாம்பு (வகை) களையும் சொல்பவர்களாக இருந்தார்கள்.

ஹதீஸ் 4017. 'வீடுகளில் வசிக்கும் ஜின் (களான) பாம்புகளைக் கொல்ல வேண்டாம்' என்று நபி (ஸல்) அவர்கள் தடை விதித்துள்ளார்கள்'' என்று பத்ருப் போரில் பங்கெடுத்தவரான அபூ லுபாபா (என்ற ரி∴பாஆ இப்னு அப்தில் முன்திர் (ரலி) அவர்கள் கூறியபோது அதனைக் கொல்வதை நிறுத்திக் கொண்டார்கள்.

என நா∴பிஉ (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4018. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

அன்சாரிகளில் சிலர் அல்லாஹ்வின் தூதரிடம், (பத்ருப்போரில் கைதியாகப் பிடிக்கப்பட்டிருந்த அப்பாஸ் - ரலி அவர்களின் விடுதலை தொடர்பாக) 'எங்கள் சகோதரி மகன் அப்பாஸ் அவர்களிடமிருந்து பிணைத் தொகை பெறாமல் நாங்கள் (அவரை) விட்டு விடுகிறோம் நீங்கள் எங்களுக்கு அனுமதி கொடுங்கள்'' என்று அனுமதி கோரினார்.

நபி(ஸல்) அவர்கள்,‘அவரிடமிருந்து ஒரு வெள்ளி நாணயத்தைக் கூட (வாங்காமல்) ஒருபோதும்விட்டு விடாதீர்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4019. உபைதுல்லாஹ் இப்னு அதீ இப்னி கியார்(ரஹ்) கூறினார்

பனு ஸுஹ்ரா குலத்தாரின் ஒப்பந்த நண்பராயிருந்தவரும், இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் பத்ரில் பங்கெடுத்தவருமான மிக்தாத் இப்னு அம்ர் அல்கிந்தீ(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்,‘இறைமறுப்பாளன் ஒருவனை நான் சந்தித்து, நாங்கள் இருவரும் சண்டையிட்டோம். அப்போது அவன் என் கை ஒன்றை வாளால் துண்டித்துவிட்டான். பிறகு, அவன் என்னைவிட்டுப் போய் ஒரு மரத்தில் அபயம் தேடிக் கொண்டு,‘அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்(து இஸ்லாத்தில் இணைந்)தேன்’ என்று சொன்னான். இதை அவன் சொன்னதற்குப் பிறகு நான் அவனைக் கொல்லலாமா? இறைத்தூதர் அவர்களே!”என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘(வேண்டாம்.) அவனைக் கொல்லாதே‘‘ என்று பதிலளித்தார்கள். அதற்கு மிக்தாத்(ரலி),‘இறைத்தூதர் அவர்களே! அவன் என் கை ஒன்றைத் துண்டித்துவிட்டான். அதைத் துண்டித்த பிறகு தானே இதைச் சொன்னான்!”என்று கேட்க, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘அவனை நீ கொல்லாதே! அவ்வாறு நீ அவனைக் கொன்றுவிட்டால் அவனைக் கொல்வதற்கு முன்பு நீயிருந்த (குற்றமற்ற) நிலைக்கு அவன் வந்துவிடுவான். அந்த வார்த்தையைச் சொல்வதற்கு முன்பு அவனிருந்த (குற்றவாளியான) நிலைக்கு நீ சென்று விடுவாய்’ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4020. அனஸ்(ரலி) அறிவித்தார்

‘‘அபூ ஜஹ்ல் என்ன ஆனான் என்று பார்த்து வருபவர் யார்?’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்ருப்போர் (நடந்த) நாளில் கேட்டார்கள். உடனே, இப்னு மஸ்வூத்(ரலி) (அவனைத் தேடிச்) சென்றார்கள். அப்போது அஃப்ராவின் இரண்டு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித் ஆகிய இருவரும் பலமாக) அவனைத் தாக்கிவிடவே அவன் குற்றுயிராக இருக்கக் கண்டார்கள். (அவனை நோக்கி),‘அபூ ஜஹ்லே! நீயா?’ என்றும் கேட்டார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு உலய்யா(ரஹ்)அவர்கள் கூறுகிறார்கள்:

‘‘இப்படித் தான் இந்த நிகழ்ச்சியினை (எனக்கு) அனஸ்(ரலி) அறிவித்தார்‘‘ என்று சுலைமான் இப்னு தர்கான்(ரஹ்) கூறினார்கள். மேலும்,‘இப்னு மஸ்வூத் அவர்கள் (அபூ ஜஹ்லை நோக்கி),‘அபூ ஜஹ்லே நீயா?’ என்று கேட்டபோது,‘நீங்களே கொன்றுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக... அல்லது தம் சமுதாயத்தாராலேயே கொல்லப்பட்டுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக.. யாரும் உண்டா?’ என்று (தன்னைத்தானே புகழ்ந்தவனாக) அபூ ஜஹ்ல் சொன்னான்‘‘ என சுலைமான்(ரஹ்) அறிவித்தார்.

அபூ மிஜ்லஸ்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,‘விவசாயி அல்லாத ஒருவன் என்னைக் கொன்றிருந்தால்... (நன்றாயிருந்திருக்குமே!)‘‘ என்று அபூ ஜஹ்ல் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4021. உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இறந்தபோது நான் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம்,‘என்னுடன் நம் அன்சாரித் தோழர்களிடம் (பனு சா இதா சமுதாயக் கூடத்துக்கு) வாருங்கள்‘‘ என்று கூறினேன். (நாங்கள் போய்க் கொண்டிருந்தோம்.) அப்போது அன்சாரிகளில் பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களான இரண்டு நல்ல மனிதர்கள் எங்களைச் சந்தித்தார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்: (இந்த ஹதீஸை) நான் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்களிடம் கூறியபோது,'உவைஸ் இப்னு சாஇதா(ரலி), மஅன் இப்னு அதீ(ரலி) ஆகியோரே அந்த இருவர்' என்று அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 4022. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களின் (வருடாந்திர உதவித்) தொகை (நபர் ஒன்றுக்கு, தீனார்∴திர்ஹம்) ஐயாயிரம், ஐயாயிரமாக இருந்தது. உமர்(ரலி) (தம் ஆட்சிக் காலத்தின் போது),'(உதவித் தொகையை) மற்றவர்களை விட இவர்களுக்கு அதிகமாக்கித் தருவேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4023. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ம∴க்ரிப் தொழுகையில்'அத்தூர்' (என்னும் 56-வது) அத்தியாயத்தை ஓதிக் கொண்டிருக்க கேட்டேன். இதுதான் இறைநம்பிக்கை என்னுடைய இதயத்தில் இடம் பிடித்த முதல் சந்தர்ப்பமாகும்.

ஹதீஸ் 4024. நபி(ஸல்) அவர்கள் பத்ருப்போரில் பிடிபட்ட கைதிகள் தொடர்பாகக் கூறினார்கள்:

முத்யிம் இப்னு அதீ உயிரோடியிருந்து இந்த அசுத்தம் பிடித்தவர்களை (பிணைத் தொகை வாங்காமலேயே)விட்டுவிடும்படி அவர் என்னிடம் (பரிந்து) பேசியிருந்தால், நான் அவருக்காக இவர்களை (பிணைத் தொகை வாங்காமலேயே)விட்டு விட்டிருப்பேன்.

என ஜுஸைர் இப்னு முஸய்யப்(ரலி) கூறினார்

முதல் குழப்பமான உஸ்மான்(ரலி) அவர்களின் கொலை நடைபெற்றது. அது பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களில் ஒருவரையும்விட்டு வைக்கவில்லை. பிறகு இரண்டாம் குழப்பமான'ஹர்ரா போர்' நடைபெற்றது. அது ஹுதைபிய்யா உடன் படிக்கையில் பங்கு கொண்ட மூன்றாவது (குழப்பம்) நடைபெற்றது. மக்களுக்கு ஆற்றல் இருந்தும் (அந்தக் குழப்பம்) விலகவே இல்லை. 65பர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4025. முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அவர்களின் (மீது சொல்லப்பட்ட அவதூறு) நிகழ்ச்சி குறித்து உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்), ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்), அல்கம இப்னு வக்காஸ்(ரஹ்), உபைதுல்லா இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) ஆகியோரிடம் செவியேற்றேன். (அவர்களில்) ஒவ்வொருவரும் நிகழ்ச்சியின் ஒரு பகுதியை எனக்கு அறிவித்தனர்.

ஆயிஷா(ரலி) கூறினார்: நானும் (அபூ ருஹ்மின் மகள்) உம்மு மிஸ்தஹும் (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக) சென்று கொண்டிருந்தோம். உம்மு மிஸ்தஹ் (மிஸ்தஹின் தாயார்) தம் கம்பளி அங்கியில் இடறிக் கொண்டார். அப்போது அவர், (அவதூறில் பங்கெடுத்த தம் மகன் மிஸ்தஹை சபித்தவராக)'மிஸ்தஹ் நாசமாகட்டும்'' என்று கூறினார். நான்,'மிக மோசமான சொல்லைச் சொல்லிவிட்டீர். பத்ருப் போரில் பங்கெடுத்த ஒரு மனிதரையா ஏசுகிறீர்!"என்று கூறினேன்... பிறகு அவதூறு பற்றிய ஹதீஸை (முழு வடிவத்துடன்) அறிவிப்பாளர் ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 4026. மூஸா இப்னு உக்பா(ரஹ்) அறிவித்தார்

(இறைத்தூதர்(ஸல்) அவர்களின் புனிதப் போர்கள் குறித்து அறிவிப்புச் செய்ததற்குப் பின்னால்) இப்னு ஷிஹாப் (அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள்,'இவை தாம் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் புனிதப்

போர்கள்‘‘ என்று கூறினார்கள். அப்போது (பத்ருப்போரில் மாண்டு போன குறைஷித் தலைவர்களின் சடலங்களைக் கிணற்றில்) எறிந்துவிட்டு அவர்களை நோக்கி இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ‘உங்களுடைய இரட்சகன் உங்களுக்கு வாக்களித்ததை உண்மையானதாகக் கண்டு கொண்டீர்களா?’ எனக் கேட்டார்கள் என்று (பத்ருப் போர் பற்றிய) ஹதீஸையும் கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்களின் தோழர்களில் சிலர், ‘இறந்த மக்களை நோக்கியா பேசுகிறீர்கள்? இறைத்தூதர் அவர்களே!”என்று கேட்டனர். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ‘அவர்களிடம் நான் கூறியதை, அவர்களை விட நீங்கள் நன்கு செவியேற்பவர்களாக இல்லை‘‘ என்று கூறினார்கள்.

(அறிவிப்பாளர் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ-ரஹ்-அவர்கள் கூறுகிறார்கள்:)

குறைஷி(முஸ்லிம்)களில் (ஏதேனும் தகுந்த காரணத்தினால்) பத்ருப்போரில் கலந்து (கொள்ளாத போதிலும், பங்கெடுத்ததாகத் கருதப்பட்டு போர்ச் செல்வத்தில்) பங்கு வழங்கப்பட்டவர்கள் மொத்தம் எண்பத்தியொரு பேராகும்.

‘‘(போர்ச் செல்வத்தில்) குறைஷிகளின் பங்கு பிரித்துக் கொடுக்கப்பட்டது் நூறு பேர் இருந்தனர். ’அல்லாஹ்வே மிக அறிந்தவன்’ என்று ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) கூறினார்’ என்று உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறுவது வழக்கம்.

ஹதீஸ் 4027. ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அறிவித்தார்

பத்ருப் போரின்போது முஹாஜிர்களுக்கு (போர்ச் செல்வத்திலிருந்து) நூறு பங்குகள் ஒதுக்கப்பட்டன.

என உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

## அபூ அப்தில்லாஹ் (புகாரி) அவர்கள் அல்ஜாமிஉ (என்னும் இந்)நூலில் குறிப்பிட்டுள்ள பத்ருப்போர் வீரர்களின் (அரபி) அகரவரிசையிலான பெயர்கள் (பட்டியல்).

1. நபி முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் அல் ஹாஷிமீ(ஸல்) அவர்கள்
2. இயாஸ் இப்னு புகைர்.
3. அபூ பக்ர் அஸ் ஸித்தீக் அல்குரஷீ அவர்களால் விடுதலை செய்யப்பட்ட பிலால் இப்னு ரபாஹ்.
4. ஹம்ஸா இப்னு அப்தில் முத்தலிப் அல் ஹாஷிமீ.
5. குறைஷியரின் நட்புக் குலத்தைச் சேர்ந்த ஹாத்திப் இப்னு அபீ பல்தஆ.
6. அபூ ஹுதைஃபா இப்னு ரபீஆ அல்குரஷீ
7. ஹாரிஸா இப்னு ருபய்யிஉ அல் அன்சாரி - இவர் பத்ருப்போரின்போது கண்காணிப்பாளர்களில் ஒருவராயிருந்தபோது கொலை செய்யப்பட்டார் - இவர்தான் ஹாரிஸா இப்னு சுராகா ஆவார்.
8. குபைப் இப்னு அதீ அல் அன்சாரி.
9. குனைஸ் இப்னு ஹுதாஃபா அஸ் ஸஹ்மீ.
10. ரிஃபாஆ இப்னு ராஃபிஉ அல் அன்ஸாரீ.
11. ரிஃபாஆ இப்னு அப்தில் முன்திர் அபூ லுபாபா அல் அன்சாரீ.

12. ஸுபைர் இப்னு அவ்வாம் அல்குரஷீ
13. ஸைத் இப்னு ஸஹ்ல் அபூ தல்ஹா அல்அன்சாரீ
14. அபூ ஸைத் (கைஸ் இப்னு சக்கன்) அல் அன்சாரீ
15. ஸஅத் மாலிக் அஸ் ஸுஹ்ரீ
16. ஸஅத் இப்னு ஃகவ்லா அல் குறஷீ
17. ஸயீத் இப்னு ஸைத் இப்னி அம்ர் இப்னி நுஃபைல் அல் குறஷீ
18. ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் அல் அன்சாரீ
19. ளுஹைர் இப்னு ராஃபிஉ அல் அன்சாரீ
20. அவரின் சகோதரர் (முளஹ்ஹர் இப்னு ராஃபிஉ அல் அன்சாரீ)
21. அப்துல்லாஹ் இப்னு உஸ்மான் அபூ பக்ர் அல்குறஷீ
22. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் அல் ஹுதலீ 7
23. உத்பா இப்னு மஸ்வூத் அல் ஹுதலீ
24. அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் அஸ் ஸுஹ்ரீ.
25. உபைதா இப்னு ஹாரிஸ் அல் குறஷீ
26. உபாதா இப்னு ஸாமித் அல் அன்சாரீ
27. உமர் இப்னு கத்தாப் அல் அத்வீ
28. உஸ்மான் இப்னு அஃப்பான் அல்குறஷீ

- இவரை நபி(ஸல்) அவர்கள், (நோய் வாய்ப்பட்டிருந்த) தம் மகளை கவனித்துக் கொள்வதற்காக (பத்ருப்போரின்போது மதீனாவிலேயே)விட்டுச் சென்றிருந்தார்கள். போர்ச் செல்வத்தில் அவருக்கும் பங்கு ஒதுக்கினார்கள்.

29. அலீ இப்னு அபீ தாலிப் அல் ஹாஷிமீ
30. பனு அமீர் இப்னு லுஅய் குலத்தாரின் நட்புக் குலத்தைச் சேர்ந்த அம்ர் இப்னு அவ்ஃப்
31. உக்பா இப்னுஅம்ர் அல் அன்சாரீ,
32. ஆமிர் இப்னு ரபீஆ அல் அன்ஸீ
33. ஆஸிம் இப்னு ஸாபித் அல் அன்சாரீ.
34. உவைம் இப்னு சாஇதா அல் அன்சாரீ.
35. இத்பான் இப்னு மாலிக் அல் அன்சாரீ
36. குதாமா இப்னு மழ்வூன்.
37. கத்தாதா இப்னு நுஅமான் அல் அன்சாரீ
38. முஆத் இப்னு அம்ர் இப்னி ஜமூஹ்
39. முஅவ்வித் இப்னு அஃப்ரா.
40. அவரின் சகோதரர் (முஆத் இப்னு அஃப்ரா)
41. மாலிக் இப்னு ரபீஆ அபூ உஸைத் அல் அன்சாரீ

42. முராரா இப்னு ரபீஉ அல் அன்சாரீ

43. மஅன் இப்னு அதீ அல் அன்சாரீ

44. மிஸ்தஹ் இப்னு உஸாஸா இப்னி அப்பாத் இப்னி அப்தில் முத்தலிப் இப்னி அப்தி மனா∴ப்.

45. பனு ஸுஹ்ரா குலத்தாரின் நட்புக்குலத்தைச் சேர்ந்த மிக்தாத் இப்னு அம்ர் அல் கிந்தீ83

46. ஹிலால் இப்னு உமய்யா அல் அன்சாரீ

இவர்கள் அனைவரைக் குறித்தும் அல்லாஹ் திருப்தி கொள்வானாக!

## ‘பனு நளீர் குலத்தார் பற்றிய செய்தியும் (பனு அமீர் குலத்தாரில் கொலையுண்ட) இருவருக்கான உயிரீட்டுத் தொகை தொடர்பாக (பனு நளீர் குலத்தாரிடம் உதவி நாடி நபி(ஸல்) அவர்கள் சென்றதும்

மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வஞ்சகம் செய்ய அவர்கள் திட்டம் தீட்டியதும்,

“பத்ருப் போர் நடந்த ஆறாவது மாதத்தின் தொடக்கத்தில் உஹுதுக்கு முன்பாக இந்த (பனூர் நளீர்) போர் நடந்தது‘‘ என்று உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்கள் என ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்.

மேலும்,‘அவனே வேதக்காரர்களில் மறுப்பாளர்களை அவர்களின் இல்லங்களிலிருந்து முதல் படையெடுப்பிலேயே வெளியேற்றினான்‘‘ என்று அல்லாஹ் கூறினான். (திருக்குர்ஆன் 59:02)

இப்னு இஸ்ஹாக்(ரஹ்) இந்தப் போர்,‘பி∴ரு மஊனா’போருக்கும் உஹுதுப் போருக்கும் பின்னால் நடந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்கள்.

ஹதீஸ் 4028. (மதீன யூதர்களான பனு) நளீர் குலத்தாரும் (பனு) குறைழா குலத்தாரும் (நபி - ஸல் அவர்களின் மீது) போர் தொடுத்தனர். எனவே, பனு நளீர் குலத்தாரை நபி(ஸல்) அவர்கள் நாடு கடத்தினார்கள். (பனு) குறைழா குலத்தார் (வருத்தம் தெரிவித்ததால் அவர்கள்) மீது கருணை காட்டி (மன்னித்து) அவர்களை அங்கேயே (வசிக்க)விட்டுவிட்டார்கள். (ஆனால், பனு) குறைழா குலத்தினரும் போர் தொடுத்தபோது அவர்களின் ஆண்களைக் கொலை செய்தார்கள். மேலும், அவர்களின் பெண்களையும் அவர்களின் குழந்தைகளையும், அவர்களின் உடைமைகளையும் முஸ்லிம்களுக்கு மத்தியில் (போர்ச் செல்வமாகப்) பங்கிட்டுக் கொடுத்தார்கள். நபி(ஸல்) அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்ட (பனு குறைழாக்கள்) சிலருக்கு அவர்கள் பாதுகாப்பு மாறிவிட்டனர். அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்களின் குலத்தாரான’பனு கைனுகா’ கூட்டத்தாரையும் பனு ஹாரிஸா (குலத்தாரான) யூதர்களையும், மதீனா நகரத்தைச் சேர்ந்த யூதர்கள் அனைவரையும் (ஆக) மதீனாவிலிருந்த எல்லா யூதர்களையும் நாடு கடத்திவிட்டார்கள்.

ஹதீஸ் 4029. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,‘(திருக்குர்ஆனின் 59-வது அத்தியாயத்தின் பெயரை)’அல்ஹஷ்ர்’ அத்தியாயம் அவர்கள்’அந்நளீர்’ அத்தியாயம் என்று கூறுங்கள் என்றார்கள்.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4030. (பனு) குறைழா, (பனு) நளீர் குலத்தாரை வெற்றி கொள்ளும் வரையில் (அன்சாரிகளில்) சிலர் நபி(ஸல்) அவர்க(ளின் செலவுக)ளுக்காக பேரீச்ச மரங்களை (அன்பளிப்பாக)க் கொடுத்திருந்தார்கள். அதற்குப் பிறகு நபி(ஸல்) அவர்கள் அவற்றை அவர்களிடமே திருப்பிக் கொடுத்துவிட்டார்கள்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4031. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தேசத் துரோம்களும் கொடுஞ்செயலாளர்களுமான) பனு நளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களை (போர்க் கால நடவடிக்கையாக) எரித்துவிட்டார்கள். இன்னும் (சிலவற்றை) வெட்டிவிட்டார்கள். 90 அது'புவைரா' என்னும் இடமாகும். 91 எனவேதான்'நீங்கள் சில பேரீச்ச மரங்களை வெட்டியதும், அல்லது அவற்றின் வேர்களில் நிற்கும்படிவிட்டுவிட்டதும் எல்லாமே அல்லாஹ்வின் அனுமதியுடன் தான் நடந்தன. அல்லாஹ் தீயவர்களை இழிவிலும் கேவலத்திலும் ஆழ்த்தி விடுவதற்காகவே (இந்த அனுமதியை அளித்தான்)'' என்னும் (திருக்குர்ஆன் 59:05) இறைவசனம் அருளப்பட்டது.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4032. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பனுநளீர் குலத்தாரின் பேரீச்ச மரங்களை (புவைரா எனுமிடத்தில்) எரித்தார்கள்.

இந்த (புவைரா) சம்பவம் குறித்தே (கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) பின்வருமாறு பாடினார்கள்.'புவைராவில் கொழுந்து விட்டெரிந்த நெருப்பு - பனு அய் (குறைஷிக்) குலத்தாரின் தலைவர்களுக்கு (அதை அணைக்க இயலாமல் வாளாவிருப்பது) எளிதாம்விட்டது'' அப்போது (முஸ்லிமாகாமலிருந்த) அபூ சு∴ப்யான் இப்னு ஹாரிஸ், ஹஸ்ஸான்(ரலி) அவர்களுக்கு (கவிதையிலேயே பின்வருமாறு) பதிலளித்தார்.

அந்த (தீயினால் எரிக்கும்) வேலையை அல்லாஹ் நிரந்தரமாக்குவானாக! அதன் சுற்று வட்டாரங்களிலும் நெருப்பு (பற்றி) எரியட்டும். புவைராவிலிருந்து நம்மில் யார் தொலைவில் இருக்கிறார்கள் என்பதை வெகு விரைவில் நீ அறிவாய். நம்மிருவரின் ஊர்களில் எது சேதமடையும் என்பதையும் நீ அறிவாய்"

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4033. மாலிக் இப்னு அவ்ஸ் அந்நஸ்ரீ(ரலி) அறிவித்தார்

உமர் இப்னு கத்தாப்(ரலி) என்னைக் கூப்பிட்(டு ஆளனுப்பி விட்)டார்கள். (நான் அவர்களிடம் சென்று அமர்ந்து கொண்டிருந்த போது) அவர்களிடம் அவர்களின் மெய்க்காவலர்'யர்∴பஉ' என்பவர் வந்து,'உஸ்மான் இப்னு அ∴ப்பான்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்∴ப்(ரலி), ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோர் தங்களைச் சந்திக்க அனுமதி கேட்கிறார்கள். தங்களுக்கு (அவர்களைச் சந்திப்பதில்) இசைவு உண்டா? என்று கேட்டார். உமர்(ரலி),'ஆம் (இசைவு உண்டு) அவர்களை உள்ளே வரச் சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். பிறகு'யர்∴பஉ' சற்று நேரம் தாமதித்து வந்து,'அலீ(ரலி) அவர்களும் அப்பாஸ்(ரலி) அவர்களும் (உள்ளே வர) அனுமதி கேட்கிறார்கள். தங்களுக்கு இசைவு உண்டா?' என்று கேட்டார் அதற்கு உமர்(ரலி)'ஆம் (இசைவு உண்டு)'' என்று கூற, அவ்விருவரும் உள்ளே நுழைந்தபோது அப்பாஸ்(ரலி),'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! எனக்கும் இவருக்கும் (அலீக்கும்) இடையே தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார்கள். அல்லாஹ், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு பனு நளீர் குலத்தாரின் செல்வத்திலிருந்து ('∴பய்உ' நிதியாக) ஒதுக்கிக் கொடுத்த சொத்துகள் தொடர்பாக இருவரும் சச்சரவிட்டு வந்தனர். அப்போது அலீ(ரலி) அவர்களும் அப்பாஸ்(ரலி) அவர்களும் ஒருவரையொருவர் குறைகூறிக் கொண்டனர். அப்போது (உஸ்மான் - ரலி - அவர்கள் மற்றும் அவர்களின் தோழர்களின்) குழு,'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! இவர்களுக்கிடையே

தீர்ப்பளித்து, ஒருவரை மற்றவரின் பிடியிலிருந்து விடுவித்து விடுங்கள்‘‘ என்று கூறியது. உமர்(ரலி),‘பொறுங்கள். எந்த அல்லாஹ்வின் கட்டளையால் வானமும் பூமியும் நிலைபெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் கேட்கிறேன்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘(நபிமார்களான) எங்களுக்கு எவரும் வாரிசாக மாட்டார். நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தர்மமே‘‘ என்று தம்மைக் குறித்துக் கூறியதை நீங்கள் அறிவீர்களா?’ என்று கேட்டார்கள். அதற்கு அந்தக் குழுவினர்,‘அவர்கள் அவ்வாறு சொல்லத் தான் செய்தார்கள்‘‘ என்று பதிலளித்தனர். உடனே, உமர்(ரலி), அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கி,‘அல்லாஹ்வின் பொருட்டால் உங்கள் இருவரிடமும் கேட்கிறேன்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்வாறு சொன்னதை நீங்கள் அறிவீர்களா?’ என்று கேட்டார்கள். அவ்விருவரும்,‘ஆம், (அவ்வாறு சொல்லியிருக்கிறார்கள்)‘‘ என்று பதிலளித்தனர். உமர்(ரலி),‘அவ்வாறெனில், உங்களிடம் இந்த விஷயத்தைக் குறித்துப் பேசுகிறேன். (போரிடாமல் கிடைத்த) இச்செல்வத்திலிருந்து சிறியதைத் தன் தூதருக்கு உரியதாக அல்லாஹ் ஆக்கியுள்ளான். அவர்களைத் தவிர வேறெவருக்கும் அவன் அதைக் கொடுக்கவில்லை.‘‘. (என்று கூறிவிட்டு),‘அல்லாஹ், எச்செல்வத்தை எதிரிகளின் பிடியிலிருந்து விடுவித்துத் தன் தூதரிடம் திருப்பிக் கொடுத்தானோ அச்செல்வம் உங்கள் குதிரைகளையும் ஒட்டகங்களையும் (அறப்போரிடுவதற்காக) நீங்கள் ஓட்டிச் சென்றதால் கிடைத்தல்ல. மாறாக அல்லாஹ், தான் நாடுகிறவர்களின் மீது தன்னுடைய தூதர்களுக்கு அதிகாரம் வழங்குகிறான். மேலும், அல்லாஹ் அனைத்தின் மீதும் பேராற்றல் உள்ளவனாக இருக்கிறான்‘‘ என்னும் (திருக்குர்ஆன் 59:6-வது) இறைவசனத்தை ஓதினார்கள். தொடர்ந்து,‘எனவே, இது இறைத் தூதருக்கென ஒதுக்கப்பட்ட செல்வமாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைவிட்டுவிட்டு அதை அவர்கள் தமக்காகச் சேகரித்துக் கொள்ளவில்லை. அதை உங்களை விடப் பெரிதாகக் கருதவுமில்லை. உங்களுக்கு அதைக் கொடுத்தார்கள் உங்களிடையே அதைப் (பரவலாகப்) பங்கிட்டார்கள். இறுதியில், அதிலிருந்து இச்செல்வம் மட்டுமே மீதமாயிற்று. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இச்செல்வத்திலிருந்து தம் வீட்டாரின் ஆண்டுச் செலவை அவர்களுக்குக் கொடுத்து வந்தார்கள். அப்படிக் கொடுத்த பிறகு மீதமுள்ளதை எடுத்து, அல்லாஹ்வின் (பாதையில் செலவிடும்) செல்வத்தை எந்த இனங்களில் செலவிடுவார்களோ அவற்றில் செலவிடுவார்கள். இவ்வாறே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் வாழ்நாளில் செயல்பட்டு வந்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் இறந்தபோது அபூ பக்ர்(ரலி),‘நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (ஆட்சிக்குப்) பிரதிநிதியாவேன் என்று கூறி, அ(ந்தச் செல்வத்)தைத் தம் கைவசம் எடுத்தார்கள். அ(ந்தச் சொத்)து விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செயல்பட்ட விதத்தில் தாமும் செயல்பட்டார்கள்‘‘ என்று உமர்(ரலி) கூறினார். பிறகு அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கி,‘நீங்களும் அப்போது இருந்தீர்கள் இந்நிலையில் (இப்போது வந்து) நீங்கள் கூறுவது போன்று அபூ பக்ர்(ரலி) செயல்பட்டார்கள் என்று கூறுகிறீர்களே!”என்று கேட்டார்கள். பிறகு,‘அபூ பக்ர் அவர்கள் செயல்பட்டார்கள் என்று கூறுகிறீர்களே!”என்று கேட்டார்கள். பிறகு,‘அபூ பக்ர் அவர்கள் அது விஷயத்தில் வாய்மையாகச் செயல்பட்டார்கள் நல்ல விதமாக நடந்து கொண்டார்கள் நேரான முறையில் நடந்து, உண்மையையே பின்பற்றினார்கள் என்பதை அல்லாஹ் அறிவான். பிறகு அபூ பக்ர் அவர்களையும் அல்லாஹ் அழைத்துக் கொண்டான். அப்போது நான்’அல்லாஹ்வின் தூதருடையவும் அபூ பக்ர் அவர்களின்வும் பிரதிநிதியாவேன்‘‘ என்று கூறி, அதை என் ஆட்சிக் காலத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு என் கைவசம் எடுத்துக் கொண்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதில் நடந்து கொண்ட முறைப்படியும் அபூ பக்ர்(ரலி) நடந்து கொண்ட முறைப்படியும் நானும் செயல்பட்டு வந்தேன். நான் அது விஷயத்தில் வாய்மையாகச் செயல்பட்டேன் நல்ல விதமாக நடந்து கொண்டேன் நேரான முறையில் நடந்து கொண்டேன்

உண்மையையே பின்பற்றினேன் என்பதை அல்லாஹ் அறிவான். பிறகு, நீங்கள் இருவருமே என்னிடம் வந்து பேசினீர்கள் உங்கள் இருவரின் கோரிக்கையும் ஒன்றாகவே இருந்தது. அப்பாஸே! நீங்கள் என்னிடம் (உங்கள் சகோதரர் மகனிடமிருந்து உங்களுக்குச் சேரவேண்டிய வாரிசுப் பங்கைக் கேட்டபடி) வந்தீர்கள். நான் உங்கள் இருவரிடமும், 'இறைத்தூதர் (ஸல்) அவர்கள், '(நபிமார்களான நாங்கள்விட்டுச் செல்லும் சொத்துக்களில்) எங்களுக்கு எவரும் வாரிசாவதில்லை. நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தர்மமே' என்று கூறினார்கள்' என்றேன். எனினும், 'அதை உங்கள் இருவரிடமே கொடுத்து விடுவது (தான் பொறுத்தமானது)' என்று எனக்குத் தோன்றியபோது நான், 'நீங்கள் இருவரும் விரும்பினால் அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தமும் அவனுக்களித்த உறுதி மொழியும் உங்கள் பொறுப்பாக இருக்க, நீங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, அபூ பக்ர் (ரலி) எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, நான் (ஆட்சிப்) பொறுப்பேற்றதிலிருந்து அதன் விஷயத்தில் எப்படிச் செயல்பட்டேனோ அதன்படியே நீங்கள் இருவரும் செயல்படுவீர்கள் என்னும் நிபந்தனையின் அடிப்படையில் உங்கள் இருவரிடமும் கொடுத்து விடுகிறேன். அதன் அடிப்படையில் என்னிடம் பேசுவதாயிருந்தால் பேசுங்கள் என்று கூறினேன். அதற்கு நீங்கள் இருவரும், 'எங்களிடம் இதே அடிப்படையில் அதைக் கொடுத்து விடுங்கள்' என்று சொன்னீர்கள். அதன்படியே அதை உங்கள் இருவரிடமும் கொடுத்து விட்டேன்'' (என்று சொல்லிவிட்டு)' (தற்போது) இதைத் தவிர வேறொரு தீர்ப்பை நீங்கள் என்னிடமிருந்து கோருகிறீர்களா? எவனுடைய அனுமதியுடன் வானமும் பூமியும் நிலைபெற்றுள்ளனவோ அவன் மீது சத்தியமாக! மறுமை நாள் வரை, நான் இந்த விஷயத்தில் இதைத் தவிர வேறெந்தத் தீர்ப்பையும் தர மாட்டேன். உங்கள் இருவராலும் அதைப் பராமரிக்க முடியவில்லை என்றால் என்னிடம் அதைக் கொடுத்து விடுங்கள். அதை உங்களுக்கு பதிலாக நானே பராமரித்துக் கொள்வேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4034. (மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுஹ்ரி (ரஹ்) அறிவித்தார்.

இந்த ஹதீஸை நான் உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்களிடம் கூறியபோது உர்வா அவர்கள், 'மாலிக் இப்னு அவ்ஸ் (ரலி) உண்மையே கூறினார்கள்'' என்று கூறி, இறைத்தூதர் (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) (பின்வருமாறு) கூறினார்கள் என அறிவித்தார்கள்:

(அபூ பக்ர் - ரலி அவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்ற போது) நபி (ஸல்) அவர்களின் துணைவியர் உஸ்மான் (ரலி) அவர்களை அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் அனுப்பி, அல்லாஹ் தன் தூதருக்கு ஒதுக்கித் தந்த (போர் புரியாமல் கிடைத்த ஃபய்உ எனும்) வெற்றிச் செல்வத்திலிருந்து தங்களுக்குச் சேரவேண்டிய எட்டில் ஒரு பகுதியைக் கேட்டனர். நான் அவர்களைத் தடுத்துக் கொண்டிருந்தேன். 'நீங்கள் அல்லாஹ்வை அஞ்சமாட்டீர்களா? நபி (ஸல்) அவர்கள், '(நபிமார்களான நாங்கள்விட்டுச் செல்லும் சொத்தில்) எங்களுக்கு எவரும் வாரிசாவதில்லை. நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தர்மமே' என்று தம்மை (யும் தம் ஃபய்உ சொத்தையும்) கருத்தில் கொண்டு கூறக் கூடிறயவர்களாக இருந்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியாதா? மேலும், 'முஹம்மதின் குடும்பத்தார் இச்செல்வத்திலிருந்து (சிறிதளவைத்) தான் உண்பார்கள் (இச்சொத்து முழுவதும் அவர்களுக்கு மட்டுமே உரியதன்று)' என்றும் நபியவர்கள் கூறினார்கள் (என்பதும் நீங்கள் அறியாததா?)'' என்று நான் எடுத்துரைத்தவற்றைக் கேட்டு நபி (ஸல்) அவர்களின் துணைவியர் (தங்களின் கருத்தை மாற்றிக் கொண்டு பங்கு கேட்பதை) நிறுத்திக் கொண்டார்கள்.

அறிவிப்பாளர் உர்வா (ரஹ்) கூறினார்:

இதை தர்மச் சொத்து அப்போது அலீ (ரலி) அவர்களி கையில் இருந்தது. அலீ (ரலி) அச்சொத்தை (பராமரிக்கும் அதிகாரத்தை) அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு (தர) மறுத்தார்கள். அச்சொத்தின்

(பராமரிப்பு) விஷயத்தில் அப்பாஸ்(ரலி) அவர்களை விட அலீ(ரலி) கூடுதல் அதிகாரம் செலுத்தி வந்தார்கள். பிறகு, அந்தப் பொறுப்பு அலீ(ரலி) அவர்களின் (மூத்த) மகன் ஹஸன்(ரலி) அவர்களின் கைவசம் வந்தது. அதற்குப் பிறகு அலீ அவர்களின் (இளைய) மகன் ஹுஸைன்(ரலி) அவர்களின் கரத்திற்கு வந்துது. அதற்குப் பிறகு ஹுஸைன்(ரலி) அவர்களின் மகன் அலீ(ரஹ்) என்பவரின் கரத்திலும், ஹஸன்(ரலி) அவர்களின் மகன் ஹஸன்(ரஹ்) என்பவரின் கரத்திலும் (கூட்டாக) இருந்து வந்தது. அவர்கள் இருவரும் முறைவைத்துக் கொண்டு மாறிமாறி அதனைப் பராமரித்து வந்தனர். பிறகு ஹஸன்(ரஹ்) அவர்களின் மகன் ஸைத்(ரஹ்) அவர்களின் கரத்தில் இருந்து வந்தது. (இவர்கள் அனைவரும் அச்சொத்தின் பராமரிப்பிற்குப் பொறுப்பாளர்களாக மட்டுமே இருந்தார்கள். அதை உடைமையாக ஆக்கிக் கொள்ளவில்லை) உண்மையாக இது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தர்மச் சொத்தாகும்.

ஹதீஸ் 4035. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஃபாத்திமா(ரலி) அவர்களும், அப்பாஸ்(ரலி) அவர்களும்'ஃபதக்' கிலிருந்த நபி(ஸல்) அவர்களின் நிலத்தையும் கைபரிலிருந்த நபி(ஸல்) அவர்களின் (குமுஸ்) பங்கையும் தங்களின் வாரிசுச் சொத்தாகக் கோரியவர்களாக அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சென்றனர்.

ஹதீஸ் 4036. அப்போது அபூ பக்ர்(ரலி),'(நபிமார்களான) எங்களுக்கு எவரும் வாரிசாக ஆகமாட்டார்கள். நாங்கள்விட்டுச செல்வது தர்மம் ஆகும். முஹம்மதின் குடும்பத்தினர் இச்செல்வத்திலிருந்து சிறிதளவைத்தான் உண்பார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'' என்று சொல்லிவிட்டு,'அல்லாஹ்வின் மீதாணையாக! என்னுடைய உறவினர்களுடன் உறவைப் பேணி வாழ்வதை விட இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உறவினர்களே எனக்கு உவப்பானவர்கள்'' என்று கூறினார்கள்.

## கஅப் இப்னு அஷ்ரஃப் (என்ற யூதன்) கொல்லப்படுதல்.

ஹதீஸ் 4037. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'கஅப் இப்னு அஷ்ரஃபைக் கொல்வதற்கு (தயாரயிருப்பவர்) யார்? ஏனெனில், அவன் அல்லாஹ்வுக்கும், அல்லாஹ்வின் தூதருக்கும் தொல்லை கொடுத்துவிட்டான்'' என்று கூறினார்கள். உடனே முஹம்மது இப்னு மஸ்லமா(ரலி) 99 எழுந்து,'நான் அவனைக் கொல்ல வேண்டுமென்று தாங்கள் விரும்புகிறீர்களா? இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,'ஆம்'' என்று பதிலளித்தார்கள். உடனே, முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி),'நான் (அவனைக் குதூகலப்படுத்தி நம்ப வைப்பதற்காக உங்களைக் குறைகூறி) ஏதேனும் சொல்ல எனக்கு அனுமதி தாருங்கள்'' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'(சரி) சொல்'' என்றார்கள். உடனே முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) கஅப் இப்னு அஷ்ரஃபிடம் சென்று,'இந்த மனிதர் (முஹம்மத் - ஸல்), எங்களிடம் (மக்களுக்குத் தருவதாக) தர்மம் கேட்டார். எங்களுக்குக் கடும் சிரமம் தந்துவிட்டார்'' என்று (நபி - ஸல் அவர்களைக் குறை கூறி சலித்துக் கொள்ளும் விதத்தில்) கூறிவிட்டு,'உன்னிடத்தில் கடன் கேட்பதற்காக நான் வந்துள்ளேன்'' என்றும் கூறினார்கள். கஅப் இப்னு அஷ்ரஃப்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இன்னும் அதிகமாக நீங்கள் அவரிடம் சலிப்படைவீர்கள்'' என்று கூறினான். (அதற்கு) முஹம்மத் இப்னு மஸ்லமா அவர்கள்,'நாங்கள் (தெரிந்தோ தெரியாமலோ) அவரைப் பின்பற்றி விட்டோம். அவரின் விவகாரம் எதில் முடிகிறது என்று பார்க்காமல் அவரைவிட்டு (விலம்) விட நாங்கள் விரும்பவில்லை. (எனவேதான் அவருடன் இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம்)'' என்று (சலிப்பாகப் பேசுவது

போல்) கூறிவிட்டு,'நீ எங்களுக்கு ஒரு வஸக்கு... அல்லது இரண்டு வஸக்கு... (பேரீச்சம் பழம்) கடன் தர வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம்'' என்று கூறினார்கள்.

அப்போது கஅப் இப்னு அஷ்ரஃப்,'சரி! (நான் கடன் தரத் தயார்.) என்னிடம் (எதையேனும்) அடைமானம் வையுங்கள்'' என்று கூறினான். அதற்கு அவர்கள்,'நீ எதை விரும்புகிறாய் (கேள்)?' என்று கூறினர். கஅப் இப்னு அஷ்ரஃப்,'உங்கள் பெண்களை என்னிடம் அடைமானமாக உன்னிடம் தர முடியும். நீயோ அரபுகளிலேயே மிகவும் அழகானவன். (அடைமானம் வைத்துத் தான் பெண்களை அடைய வேண்டிய அவசியம் உனக்கு இல்லை)'' என்று கூறினார்கள்'' (அப்படியானால்) உங்கள் ஆன் மக்களை என்னிடம் அடைமானம் வையுங்கள்'' என்று கூறினான். அதற்கு அவர்கள்,'எங்கள் ஆண் மக்களை உன்னிடம் எப்படி அடைமானம் வைப்பது? அவர்களில் ஒருவன் (கலந்துறவாடும் போது) ஏசப்பட்டால் அப்போது,'இவன் ஒரு வஸக்கு அல்லது இரண்டு வஸக்குகளுக்கு பதிலாக அடைமானம் வைக்கப்பட்டவன்' என்றல்லவா ஏசப்படுவான்? இது எங்களுக்கு அவமானமாயிற்றே! எனவே, உன்னிடம் (எங்கள்) ஆயுதங்களை அடைமானம் வைக்கிறோம்'' என்று கூறினார்கள். (அவன் சம்மதிக்கவே) முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி), அவனிடம் (பிறகு) வருவதாக வாக்களித்துவிட்டுச் சென்றார்கள். (பிறகு) அவர்கள் தம்முடன் அபூ நாயிலா(ரலி) இருக்க இரவு நேரத்தில் கஅபிடம் வந்தார்கள். - அபூ நாயிலா(ரலி), கஅப் இப்னு அஷ்ரஃபிற்கு பால்குடிச் சகோதரராவார் - அவர்களைத் தன்னுடைய கோட்டைக்கு (வரச் சொல்லி) கஅப் இப்னு அஷ்ரஃப் அழைத்தான். பிறகு அவர்களை நோக்கி அவனும் இறங்கிவந்தான். அப்போது கஅபின் மனைவி அவனிடம்,'இந்த நேரத்தில் எங்கே போகிறீர்கள்?' என்று கேட்டாள். அதற்கவன், அவர் (வேறுயாருமல்ல) முஹம்மத் இப்னு மஸ்லமாவும் என்னுடைய (பால்குடிச்) சகோதரர் அபூ நாயிலாவும் தான்'' என்று பதிலளித்தான்.

அப்போது முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) (தம் சகாக்களிடம்),'கஅப் இப்னு அஷ்ரஃப் வந்தால் நான் அவனுடைய (தலை) முடியை பற்றியிழுத்து அதை நுகருவேன். அவனுடைய தலையை என்னுடைய பிடியில் கொண்டு வந்துவிட்டேன் என்று நீங்கள் கண்டால் (அதை சைகையாக எடுத்துக் கொண்டு) அவனைப் பிடித்து (வாளால்) வெட்டி விடுங்கள்'' என்று (உபாயம்) கூறினார்கள்.

பிறகு கஅப் இப்னு அஷ்ரஃப் (தன்னுடைய ஆடை அணிகலன்களை) அணிந்து கொண்டு நறுமணம் கமழ இறங்கி வந்தான். அப்போது முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி),'இன்று போல் நான் எந்த உயர்ந்த நறுமணத்தையும் (நுகர்ந்து) பார்த்ததில்லை'' என்று கூறினார்கள்"

மேலும், முஹம்மது இப்னு மஸ்லமா(ரலி),'(கஅபை நோக்கி) உன் தலையை நுகர்ந்து பார்க்க என்னை அனுமதிக்கிறாயா?' என்று கேட்டார்கள். அவன்,'சரி (நுகர்ந்து பார்)'' என்று கூறினான். அப்போது முஹம்மத் இப்னு மஸ்லமா அவர்கள் அவனுடைய தலையை நுகர்ந்தார்கள். பிறகு தம் சகாக்களையும் நுகரக் கூறினார்கள்.'(மீண்டுமொருமுறை நுகர) என்னை அனுமதிக்கிறாயா? என்று கேட்டார்கள். அவன்'சரி (அனுமதிக்கிறேன்)'' என்று கூறினான். முஹம்மத் இப்னு மஸ்லமா அவர்கள் அவனைத் தம் வசம் கொண்டு வந்தபோது,'பிடியுங்கள்'' என்று கூறினார்கள். உடனே (அவர்களின் சகாக்கள்) அவனைக் கொன்றுவிட்டனர். பிறகு அவர்கள் (அனைவரும்) நபி(ஸல்) அவர்களிடம் வந்து நடந்ததைத் தெரிவித்தனர்.

(இந்த ஹதீஸில் இடையிடையே காணப்படும் வாசக மாற்றங்கள் தொடர்பாக அறிவிப்பாளர்கள் தெரிவித்துள்ள தகவல்கள் கீழே இடம் பெறுகின்றன...)

அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

அம்ர் இப்னு தீனார்(ரஹ்) பல முறை இந்த ஹதீஸை எமக்கு அறிவித்தார்கள். ஆயினும், அப்போது அவர்கள்'ஒரு வஸக்கு, இரண்டு வஸக்கு (அளவை)' சம்பந்தமாகக் கூறவில்லை. அன்னாரிடம் நான்,'இந்த அறிவிப்பில் ஒரு வஸக்கு, இரண்டு வஸக்கு சம்பந்தமாக (ஏதேனும்) இடம் பெற்றுள்ளதா?' என்று கேட்டேன். அதற்கவர்கள்,'அதில் ஒரு வஸக்கு, இரண்டு வஸக்கு பற்றி இடம் பெற்றுள்ளது என எண்ணுகிறேன்“ என்று பதிலளித்தார்கள்.

-(அறிவிப்பாளர் சுஃப்யான் - ரஹ் கூறுகிறார்கள்:)

அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அல்லாத இன்னொருவரின் அறிவிப்பில்,'குருதி சொட்டுவது போன்ற ஒரு சப்தத்தை கேட்கிறேன்“ என்று கஅபின் மனைவி (ஏதோ ஆபத்து நேரவிருப்பதை உணர்த்தும் விதத்தில்) கூற அவன்,'அவன் என் சகோதரர் முஹம்மது இப்னு மஸ்லமாவும், என் பால்குடிச் சகோதரர் அபூ நாயிலாகவும் தான். ஒரு கண்ணியவான் இரவு நேரத்தில் (ஈட்டி) எறிய அழைக்கப்பட்டாலும் அவன் அந்த அழைப்பை ஏற்றுக் கொள்ளவே செய்வான்“ என பதிலளித்ததாகவும் இடம் பெற்றுள்ளது.

-முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) தம்முடன் இருந்த இரண்டு மனிதர்களுடன் (கஅப் இப்னு அஷ்ரபின் வீட்டுக்கு) உள்ளே நுழைந்தார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவராக சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்களிடம்,'அம்ர் இப்னு தீனார்(ரஹ்), அந்த இரண்டு மனிதர்களின் பெயர்களையும் குறிப்பிட்டாரா?' என்று கேட்கப்பட்டது. அதற்கு சுஃப்யான்(ரஹ்),'அவர்களில் சிலரின் பெயரை மட்டும் அம்ர் குறிப்பிட்டார்.'இரண்டு மனிதர்கள் தம்முடனிருக்க முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) வந்தார்கள்' என்றே அம்ர் அறிவித்தார்“ என்று பதிலளித்தார்கள்.

அம்ர் அல்லாத மற்ற அறிவிப்பாளர்கள்,'(முஹம்மத் இப்னு மஸ்லமாவுடன் வந்தவர்கள்) அபூ அப்ஸ் இப்னு ஜப்ர்(ரலி), ஹாரிஸ் இப்னு அவ்ஸ்(ரலி), அப்பாத் இப்னு பிஷ்ர்(ரலி) ஆகியோர் தாம்“ என்று கூறினர்.

அம்ர் இப்னு தீனார்(ரஹ்),'தம்முடன் இருவரிருக்க முஹம்மத் இப்னு மஸ்லமா(ரலி) வந்தார்கள்“ என்று அறிவித்தார்கள்.

-அறிவிப்பாளர் அம்ர்(ரஹ்) ஒரு முறை,'(முஹம்மத் இப்னு மஸ்லமா - ரலி- அவர்கள் தம் சகாக்களை நோக்கி)'பிறகு அவனுடைய தலையை உங்களையும் நான் நுகரச் செய்வேன்' என்று கூறினார்கள்“ என்று அறிவித்தார்கள்.

-அம்ர்(ரஹ்) அல்லாத மற்றவர்களின் அறிவிப்பில்,'என்னிடம் அரபுப் பெண்களிலேயே நறுமணம்மிக்கவளும், அரபுகளிலேயே முழுமையானவளும் இருக்கிறாள்“ என்று கஅப் இப்னு அஷ்ரஃப் கூறினான் எனக் காணப்படுகிறது.

## அபூ ராஃபிஉ அப்துல்லாஹ் இப்னு அபில் ஹுகைக் (என்ற யூதத் தலைவன்) கொல்லப்படுதல்.

இவனுக்கு (இன்னொரு பெயர்) சல்லாம் இப்னு அபில் ஹுகைக் என்றும், இவன் கைபரில் வசித்து வந்தான் என்றும் சொல்லப்படுகிறது. ஹிஜாஸ் பிரதேசத்தில் தன்னுடைய கோட்டையொன்றில் வசித்து வந்தான் என்றும் சொல்லப்படுகிறது.

“கஅப் இப்னு அஷ்ரஃப் கொல்லப்பட்ட பிறகே இவன் கொல்லப்பட்டான்“ என்று ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்கள். 102

ஹதீஸ் 4038. பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (அன்சாரிகளில்) ஒரு குழுவினரை (யூதனான) அபூ ராஃபிஉ என்பவனிடம் அனுப்பினார்கள். அப்துல்லாஹ் இப்னு அத்தீக் (ரலி) (கோட்டைக்குள்ளிருந்த) அவனுடைய வீட்டிற்குள் இரவு நேரத்தில் நுழைந்து அவன் தூங்கிக் கொண்டிருக்கும்போது அவனைக் கொன்றுவிட்டார்கள்.

ஹதீஸ் 4039. பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அன்சாரிகளில் சிலரை அபூ ராஃபிஉவிடம் அனுப்பினார்கள். அவர்களுக்கு அப்துல்லாஹ் இப்னுஅத்தீக் (ரலி) அவர்களைத் தலைவராக நியமித்தார்கள். அபூ ராஃபிஉ இறைத்தூதர் (ஸல்) அவர்களைப் புண்படுத்தி வந்ததுடன், அவர்களுக்கெதிராக (ப் பகைவர்களுக்கு) உதவியும் செய்து வந்தான். 104 அவன் ஹிஜாஸ் பிரதேசத்திலிருந்து தன்னுடைய கோட்டையில் இருந்தான். எனவே, அன்சாரிகள் அந்தக் கோட்டையை நெருங்கினார்கள். அப்போது சூரியன் மறைந்து விட்டிருந்தது. மக்கள் தங்கள் மேய்ச்சல் கால்நடைகளுடன் திரும்பிக் கொண்டிருந்தனர். அப்போது அப்துல்லாஹ் இப்னு அத்தீக் (ரலி) தம் சகாக்களிடம், 'நீங்கள் இங்கேயே அமர்ந்திருங்கள். நான் காவலனிடம் சென்று ஏதாவது தந்திரம் செய்து (கோட்டைக்கு) உள்ளே நுழைய முடியுமா என்று பார்த்து வருகிறேன்'' என்று கூறினார். உடனே அவர் சென்று கோட்டை வாசலை நெருங்கினார். பிறகு, தம் ஆடையினால் தம்மை மூடிக் கொண்டு இயற்கைக்கடனை நிறைவேற்றுவது போல் (கோட்டைக்கு வெளியே ஓரிடத்தில்) அமர்ந்தார். (கோட்டை வாசிகளான) மக்கள் (அனைவரும்) உள்ளே நுழைந்துவிட்டனர். அப்போது காவலன், 'அல்லாஹ்வின் அடியானே! (கோட்டைக்கு) உள்ளே நுழைய விரும்பினால் நுழைந்து கொள். நான் வாசலை மூடப் போகிறேன்'' என்று கூறினான். உடனே நான் உள்ளே நுழைந்து (ஓரிடத்தில்) பதுங்கிக் கொண்டேன் மக்கள் (அனைவரும்) நுழைந்ததும் அவன் வாசலை மூடிவிட்டான். பிறகு சாவிகளை ஒது கொழுவி (கொக்கி) யில் தொங்கவிட்டான். நான் சாவிகளை நோக்கிச் சென்று அவற்றை எடுத்துக் கொண்டேன். பிறகு வாசலைத் திறந்தேன். அபூ ராஃபிஉவிடம் இராக்கதை சொல்லப்பட்டுக் கொண்டிருந்தது. அப்போது அவன் தன்னுடைய மாடியறையில் இருந்தான். அவனுடைய இராக்கதை நண்பர்கள் அவனைப் பிரிந்து (விடைபெற்றுச்) சென்றபோது அவனை நோக்கி நான் (ஏணியில்) ஏறினேன். (கோட்டையின்) ஒவ்வொரு வாசலையும் திறக்கும் போதும் உள்ளிருந்து நான் தாழிட்டுக் கொண்டே சென்றேன். மக்கள் என்னை இனம் கண்டு கொண்டாலும் அபூ ராஃபிஉவை நான் கொன்று விடும் வரையில் அவர்கள் என்னை வந்தடைய போவதில்லை'' என்று நான் (என் மனத்திற்குள்) கூறிக் கொண்டேன். பிறகு அவனிடம் போய்ச் சேர்ந்தேன். அவன் இருட்டான ஓர் அறையில் தன் குடும்பத்தாருக்கிடையே இருந்தான். அந்த வீட்டில் அவன் எங்கே இருக்கிறான் என்று எனக்குத் தெரியவில்லை. அப்போது நான், 'அபூ ராஃபிஉவே!''என்று அழைத்தேன். அவன், 'யார் அது?' என்று கேட்டான். குரல் வந்த திசையை நோக்கிக் குறிவைத்து வாளால் பதற்றத்துடன் ஒரு வெட்டு வெட்டினேன். (இருப்பினும், என் நோக்கம்) எதையும் நான் நிறைவேற்றி (விட்) ட (தாகத் கருத) வில்லை. அப்போது அவன் கூச்சலிட்டான். உடனே நான் அந்த வீட்டிலிருந்து வெளியேறி விட்டேன். சிறிது நேரம் தாமதித்து மீண்டும் அவனிடம் வந்து, 'அபூ ராஃபிஉவே! இது என்ன சத்தம்'' என்று (அவனுக்கு உதவ வந்தவன் போல்) கேட்டேன். அதற்கு அவன், 'உன்னுடைய தாய்க்குக் கேடு நேரட்டும்! எவனோ ஒருவன் வீட்டில் (நுழைந்து) சற்றுமுன் என்னை வாளால் வெட்டினான்'' என்று கூறினான். உடனே நான் ஆழப்பதியும் படி இன்னொரு வெட்டு வெட்டினேன். (அப்போதும்) அவனை நான் கொல்ல (முடிய) வில்லை. பிறகு வாள் முனையை அவன் வயிற்றில் வைத்து அழுத்தினேன். அது முதுகு வழியே வெளியேறியது. அப்போது நான் அவனைக் கொன்று விட்டேன் என்று அறிந்து கொண்டேன்.

பிறகு ஒவ்வொரு கதவாக எல்லாக் கதவுகளையும் திறந்து கொண்டே சென்று அவனுடைய ஏணிப்படியை அடைந்தேன். (ஏணியில் இறங்கலானேன்.) தரைக்கு வந்து விட்டேன் என்று நினைத்துக் கொண்டு என்னுடைய காலை வைத்தேன். (ஆனால்,) நிலவு காயும் (அந்த) இரவில் நான் விழுந்து விட்டேன். அப்போது என்னுடைய கால் உடைந்துவிட்டது. உடனே நான் தலைப்பாகதை(த் துணி)யால் அதற்குக் கட்டுப்பாட்டேன். பிறகு நடந்து வந்து (கோட்டை) வாசலில் அமர்ந்து கொண்டேன்.'நான் அவனைக் கொன்று விட்டேன் என்று (உறுதியாக) அறியும் வரையில் நான் இந்த இரவில் (இங்கிருந்து) நரக மாட்டேன்'' என்று (எனக்கு நானே) சொல்லிக் கொண்டேன். பிறகு, அதிகாலையில் சேவல் கூவியபோது மரணச் செய்தி அறிவிப்பவன் கோட்டைச் சுவர் மீது நின்று,'ஹிஜாஸ் வாசிகளின் (பிரபல) வியாபாரி அபூ ராஃபிஉ இறந்துவிட்டார்'' என்று அறிவிப்புச் செய்தான். உடனே நான் என் சகாக்களிடம் வந்து,'விரைவாகச் செல்லுங்கள். அபூ ராஃபிஉவை அல்லாஹ் கொன்றுவிட்டான்'' என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்களை அடைந்து நடந்ததை அவர்களுக்குத் தெரிவித்தேன். அப்போது அவர்கள்,'உன்னுடைய காலை நீட்டு'' என்று கூறினார்கள். நான் என் காலை நீட்டினேன். அதில் (தம் கரத்தால்) தடவிவிட்டார்கள். (என்னுடைய கால் குணமடைந்து) ஒருபோதும் நோய் காணாதது போல் அது மாறிவிட்டது.

ஹதீஸ் 4040 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபூ ராஃபிஉவிடம் அப்துல்லாஹ் இப்னு அத்தீக்(ரலி) அவர்களையும், அப்துல்லாஹ் இப்னு உத்பா(ரலி) அவர்களையும் அவர்களுடன் இன்னும் சிலரையும் அனுப்பி வைத்தார்கள். அவர்கள் சென்று கோட்டையை நெருங்கியபோது அவர்களை நோக்கி (தலைவர்) அப்துல்லாஹ் இப்னு அத்தீக்(ரலி),'நான் சென்று பார்த்து வரும் வரையில் நீங்கள் (இங்கேயே) இருங்கள்'' என்று கூறினார்கள். அப்போது (கோட்டை வாசிகளுக்குத் தெரியாமல்) கோட்டைக்குள் நுழைவதற்காக நான் உபாயம் செய்தேன். அப்போது அவர்களின் கழுதையொன்று காணாமல் போய்விட்டது. அதைத் தேடிய வண்ணம் தீப்பந்தத்துடன் அவர்கள் (கோட்டையிலிருந்து) வெளியேறினர். நான் அடையாளம் கண்டு கொள்ளப்பட்டுவிடுவேனோ என்று அஞ்சினேன். நான் இயற்கைக் கடனை நிறைவேற்றுவது போன்று (என்னுடைய ஆடையால்) என் தலையையும் காலையும் மூடிக் கொண்டேன். பிறகு காவலன்,'யார் (கோட்டைக்குள்) நுழைய விரும்புகிறார்களோ அவர்கள் நான் கதவை மூடுவதற்கு முன் நுழைந்து கொள்ளட்டும்'' என்று கூறினான். உடனே நான் நுழைந்து கோட்டைவாசலுக்கு அங்கிலிருந்த கழுதைத் தொழுவம் ஒன்றில் பதுங்கிக் கொண்டேன். அப்போது (யூத) மக்கள் அபூ ராஃபிஉவிடம் இரவுச் சாப்பாட்டை உண்டனர். பிறகு இரவின் ஒரு பகுதி முடியும் வரையில் (கதை) பேசிக் கொண்டிருந்தனர். பிறகு மக்கள் தத்தம் வீடுகளுக்குத் திரும்பினர். பின்னர் ஆரவாரங்கள் அடங்கி, எந்த அரவமும் கேட்காமலிருந்தபோது நான் (பதுங்கியிருந்து இடத்திலிருந்து) வெளியேறினேன். (கோட்டையின்) காவலன் மாடத்தில் கோட்டையின் சாவியை வைத்ததை நான் (பதுங்கிக் கொண்டிருந்தபோது) பார்த்திருந்தேன். அதை நான் எடுத்துக் கோட்டைக் கதவைத் திறந்தேன். நான் (என் மனத்திற்குள்)'மக்கள் என்னை இனம் கண்டு கொண்டால் நிதானமாக(த் தப்பி)ச் சென்றுவிடவேண்டும்'' என்று சொல்லிக் கொண்டேன். பிறகு, அந்த மக்கள் தங்கியிருந்த அறைகளின் கதவுகளை வெளியிலிருந்து பூட்டினேன். பிறகு அபூ ராஃபிஉ (தங்கியிருந்த மாடியறை) நோக்கி ஏணிவழியாக ஏறினேன். அப்போது அவனுடைய அறை இருள் சூழ்ந்திருந்தது. அதன் விளக்கு அணைக்கப்பட்டிருந்தது. அந்த மனிதன் எங்கே (இருக்கிறான்) என்று என்னால் அறிய முடியவில்லை. உடனே நான்,'அபூ ராஃபிஉவே!"என்று அழைத்தேன். அவன்,'யார் அது?' என்று கேட்டான். உடனே நான் சப்தம் வந்த திசையைக் குறி வைத்து அவனை வெட்டினேன். அவன் கூச்சலிட்டான். அது (நான் நினைத்த) பலனைத்தரவில்லை. பிறகு அவனுக்கு நான் உதவுவது போன்று'அபூ ராஃபிஉவே! உனக்கு என்ன

நேர்ந்தது?' என்று என் குரலை அவன், 'உனக்கு நான் ஆச்சரியமாகத் தெரிகிறேனா? உன் தாய்க்குக் கேடுண்டாகட்டும். என்னிடம் ஒருவன் வந்து வாளால் என்னை வெட்டினான்'' என்று கூறினான். மீண்டும் (குரல் வந்த திசையைக்) குறி வைத்து அவனை நான் வெட்டினேன். (நான் நினைத்த படி) அப்போதும் எந்தப் பலனும் கிடைக்கவில்லை. மீண்டும் அவன் கூச்சலிட்டான். அவனுடைய வீட்டார் எழுந்திருத்துவிட்டனர். பிறகு அவனுக்கு உதவுபவனைப் போன்று (பாசங்கு செய்தபடி) குரலை மாற்றிக் கொண்டு (அவனுக்கு அருகில்) வந்தேன். அப்போது அவன் மல்லாந்து படுத்திருந்தான். உடனே (என்னுடைய) வாளை அவனுடைய வயிற்றில் வைத்து சுழற்றினேன். அப்போது (அவனுடைய) எலும்பின் (மீது என் வாள் குத்துகின்ற) சப்தத்தை கேட்டேன். பிறகு பதறிக் கொண்டே (அவனுடைய அறையிலிருந்து) வெளியேறி ஏணிப்படிக்கு வந்தேன். இறங்க விரும்பினேன். (ஆனால்,) அதிலிருந்து நான் விழுந்துவிட்டேன். என்னுடைய கால் முறிந்துவிட்டது. நான் அதை (என்னுடைய தலைப்பாகைத் துணியால்) கட்டினேன். பிறகு கோட்டைக்கு வெளியிலிருந்த) என் சாகக்களிடம் நொண்டிக் கொண்டே வந்து அவர்களை நோக்கி, 'நீங்கள் (விரைவாகச்) சென்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (காரியம் முடிந்துவிட்ட) நற்செய்தியைச் சொல்லுங்கள். (மரணச் செய்தி அறிவிப்பனிடமிருந்து அபூ ராஃபிஉ வின் மரணச்) செய்தியை நான் கேட்கும் வரையில் நான் (இங்கிருந்து) நகரமாட்டேன்'' என்று கூறினேன். பிறகு, அதிகாலை நேரத்தில் மரணச் செய்தி அறிவிப்பவன் (கோட்டைச் சுவர் மீது) ஏறி, 'அபூ ராஃபிஉ இறந்துவிட்டார்'' என்று அறிவிப்புச் செய்தான். உடனே நான் எழுந்து நடக்கலானேன். (அளவு கடந்த மகிழ்ச்சியினால்) எனக்கு வலி கூடத் தெரியவில்லை. என் சகாக்கள் நபி(ஸல்) அவர்களிடம் சென்று சேர்வதற்கு முன் நான் சகாக்களைச் சென்றடைந்து விட்டேன். எனவே, நானே நபி(ஸல்) அவர்களிடம் (அந்த) நற்செய்தியைச் சொன்னே.

## உஹுது துப் போர்

அல்லாஹ் கூறினான்:

(நபியே! உஹுதுப்) போருக்காக நம்பிக்கையாளர்களை (உரிய) இடங்களில் நிறுத்தும் பொருட்டு நீங்கள் உங்கள் இல்லத்திலிருந்து அதிகாலையில் புறப்பட்டதை (நினைவு கூர்வீராக!) அல்லாஹ் மிக்க செவியுறுவோனும் நன்கு அறிவோனுமாவான். (திருக்குர்ஆன் 03:121)

மேலும், அல்லாஹ் கூறினான்:

நீங்கள் மனம் தளர்ந்து விடாதீர்கள் கவலையும் கொள்ளாதீர்கள். நீங்கள் (உண்மையிலேயே) இறை நம்பிக்கையுடையவராயின், நீங்களே மேலோங்குவீர்கள். (இப்பொழுது உஹுதுப் போரில்) உங்களுக்கு காயம் ஏற்பட்டுள்ளதென்றால், (இதற்கு முன்னர் - பத்ருப்போரில் உங்கள்) எதிரணியினருக்கும் இதே போன்ற காயம் ஏற்படத்தான் செய்தது. இவையெல்லாம் கால(த்தின் மாற்ற)ங்கள் ஆகும். இவற்றை மக்களிடையே நாம் மாறி மாறி வரச் செய்கிறோம். (உங்களுக்கு இப்படியொரு சந்தர்ப்பம் வரக் காரணம்) உங்களில் உண்மையான நம்பிக்கையுடையவர்கள் யார் என்பதனை அல்லாஹ் கண்டறிந்து உங்களில் இருந்து உயிர்த்தியாகிகளை அவன் உண்டாக்குவதற்காகத் தான். அக்கிரமக்காரர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை. (இவ்வாறெல்லாம் சோதனை செய்வதன் மூலம்) நம்பிக்கையாளர்களை பிரித்துத் தேர்ந்தெடுக்கவும் மறுப்போரை நசுக்கவும் (அல்லாஹ் நாடியிருந்தான்.) உங்களில் யார் (அவனுடைய பாதையில் முனைப்போடு) போராடுபவர்கள் என்பதை அல்லாஹ் அறியாமலும், உங்களில் நிலை குலையமால் நிற்பவர் யார் என்பதை அவன் அறியாமலும் நீங்கள் (எளிதில்) சொர்க்கம் புகுந்து விடலாம் என்று எண்ணிக் கொண்டீர்களா? நீங்கள் (இறைவழியில்) இறப்பைச் சந்திப்பதற்கு முன்னர், அதனை அடைய ஆர்வம் கொண்டிருந்தீர்கள். (இப்பொழுது) அதனை நீங்கள் கண்கூடாகப் பார்த்துக் கொண்டீர்கள். (திருக்குர்ஆன் 03:139 - 143)

மேலும், அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் உங்களுக்கு (உதவுவதாகக் கூறிய) தன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டான். (துவக்கத்தில்) அவனுடைய அனுமதியின் படி அவர்களை நீங்கள் தாம் (போரில்) வெட்டி வீழ்த்தினர்கள்! ஆனால் இறுதியில் நீங்கள் ஊக்கமிழந்து உங்களுடைய பணிகள் குறித்து ஒருவருக்கொருவர் பிணங்கிக் கொண்டீர்கள் மேலும் நீங்கள் மோகம் கொண்டிருந்தவற்றை (போர்ப் பொருட்களை) அல்லாஹ் உங்கள் கண்ணெதிரே காட்டிய உடனேயே (உங்கள் தலைவரின் கட்டளைக்கு) நீங்கள் மாறு செய்தீர்கள் - ஏனெனில் உங்களில் சிலர் இம்மையை விரும்புவோராய் இருந்தனர் வேறு சிலர் மறுமையை விரும்புவோராய் இருந்தனர். பிறகு அல்லாஹ் உங்களைச் சோதிக்கும் பொருட்டு (இறை மறுப்பாளர்களை எதிர்த்து நிற்கமுடியாத வண்ணம்) அவர்களைவிட்டு உங்களை திசை திருப்பிவிட்டான் (இதன் பிறகும்) அவன் உங்களை மன்னித் தருளினான். ஏனெனில், அல்லாஹ் இறை நம்பிக்கையுடையோர் மீது பெரிதும் கருணை பொழிபவனாக இருக்கிறான். (திருக்குர்ஆன் 03:152)

மேலும், அல்லாஹ் கூறினான்:

இறைவழியில் கொல்லப்பட்டவர்களை, இறந்தோர் என்று ஒருபோதும் நீங்கள் எண்ணவேண்டாம்... (திருக்குர்ஆன் 03: 169)

ஹதீஸ் 4041. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்கள், 'இதோ, ஜிப்ரீல் போர்த் தளவாடங்களுடன் தம் குதிரையின் தலையை (அதன் கடிவாளத்தை)ப் பிடித்துக் கொண்டிருக்கிறார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4042. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (உஹுதுப் போர் நடந்து) எட்டு ஆண்டுகளுக்குப் பின் உஹுதில் கொல்லப்பட்டவர்களுக்காக (ஜனாஸாத் தொழுகை) தொழுகை நடத்தினார்கள். (அது) உயிரோடுள்ளவர்களிடம் இறந்தவர்களிடமும் (மறுமைப் பயணத்திற்கு) விடைபெறுவது போலிருந்தது. பிறகு அவர்கள் மேடை மீது ஏறி, 'நிச்சயமாக நான் உங்களுக்காகக் காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சியும் ஆவேன். (என்னைச் சந்திக்க) உங்களுக்கு வாக்களிக்கப்பட்டுள்ள இடம் (கவ்ஸர் எனும்) தடாகம் ஆகும். நான் இங்கிருந்தே (மறுமையில் எனக்குப் பரிசளிக்கப்படவுள்ள) அந்தத் தடாகத்தைக் காண்கிறேன். நிச்சயமாக! (என்னுடைய மரணத்துக்குப் பின்னால்) நீங்கள் இணை வைப்பவர்களாக ஆம்விடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை ஆனால், உலகத்திற்காக நீங்கள் ஒருவரோடொவருர் (போட்டியிட்டு) மோதிக் கொள்வீர்களோ என்றே அஞ்சுகிறேன்'' என்று கூறினார்கள்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பார்த்த இறுதிப் பார்வையாக அது அமைந்தது.

ஹதீஸ் 4041

இணைவைப்போரை அன்றைய (உஹுதுப் போர்) தினத்தில் நாங்கள் சந்தித்தோம். நபி(ஸல்) அவர்கள் (ஐம்பது) அம்பெய்யும் வீரர்களை (உஹுத் மலைக் கணவாயில்) அமர்த்தினார்கள். அவர்களுக்கு அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களைத் தலைவராக நியமித்து, '(எதிரிகளான) அவர்களை நாங்கள் வெற்றி கொள்வதைப் பார்த்தாலும் நீங்கள் (இந்த இடத்திலிருந்து) நகராதீர்கள். எங்களை அவர்கள் வெற்றி கொள்வதைப் பார்த்தாலும் நீங்கள் (இந்த இடத்திலிருந்து) நகர வேண்டாம் நீங்கள் எங்களுக்கு உதவி செய்ய (எண்ணி கீழே வர) வேண்டாம்'' என்று கூறினார்கள். நாங்கள் அவர்களை (களத்தில்) சந்தித்தபோது அவர்கள் (தோல்வியுற்று) வெருண்டோடிவிட்டனர். பெண்களெல்லாம் (தம் கால்களில் அணிந்திருந்த) கால்

தண்டைகள் வெளியில் தெரிய மலையில் ஓடிக் கொண்டிருப்பதை பார்த்தேன். அப்போது (அம்பெய்யும் குழுவினரான) அவர்கள், '(நமக்கே வெற்றி!) போர்ச் செல்வம்! போர்ச் செல்வம்! (சேகரிப்போம், வாருங்கள்)'' என்று கூறலாயினர். அப்போது அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் (ரலி) (தம் சகாக்களை நோக்கி), 'என்னிடம் நபி (ஸல்) அவர்கள், 'இந்த இடத்தைவிட்டும் (எந்தச் சூழ்நிலையிலும்) நகராதீர்கள்' என அறுதியிட்டுக் கூறினார்கள். (எனவே, போர்ச் செல்வங்களை எடுப்பதற்காக இங்கிருந்து நரக வேண்டாம்) என்று கூறினார்கள். ஆனால் சகாக்கள் ஏற்க மறுத்துவிட்டனர். அவர்கள் மறுத்து விடவே (எங்கு செல்கிறோம் என்று தெரியாதவாறு) திசைமாறிப் போயினர். (இறுதியில் முஸ்லிம்களில்) எழுபது பேர் கொல்லப்பட்டனர். (அப்போது எதிரணித்தலைவர்) அபூ சுஃப்யான் முன்வந்து '(உங்கள்) கூட்டத்தில் முஹம்மது இருக்கிறாரா?' என்று (பலமுறை) கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அவருக்கு நீங்கள் பதில் தரவேண்டாம்'' என்று கூறிவிட்டார்கள். பிறகு, 'கூடடத்தில் கத்தாபின் மகன் (உமர்) இருக்கிறாரா?' என்று கேட்டுவிட்டு (பிறகு தம் தோழர்களின் பக்கம் திரும்பி) 'இவர்களெல்லாம் கொல்லப்பட்டுவிட்டனர் இவர்கள் உயிருடன் இருந்தால் (என் அறை கூவலுக்குப்) பதிலளித்தார்கள்'' என்று சொன்னார். (இதைக் கேட்டு) உமர் (ரலி) தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல், 'தவறாகச் சொன்னாய், அல்லாஹ்வின் பகைவனே! உனக்கு கவலை தரும் செய்தியைத் தான் உனக்காக அல்லாஹ் வைத்துள்ளான்'' என்று பதிலடி கொடுத்தார்கள். அதற்கு அபூ சுஃப்யான், '(கடவுள்) ஹுபலே! உன் கட்சி மேலோங்கிவிட்டது!"என்று கூறினார். அப்போது, நபி (ஸல்) அவர்கள், 'அவருக்கு பதிலளியுங்கள்'' என்று கூறினார்கள். '(இறைத்தூதர் அவர்களே!) நாங்கள் என்ன (பதில்) சொல்வது?' என்று மக்கள் கேட்டனர். 'அல்லாஹ்வே மிக உயர்ந்தவன். மிக மகத்துவமிக்கவன்'' என்று கூறுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். (அவ்வாறே பதில் தரப்பட்டது) அபூ சுஃப்யான், 'எங்களுக்குத் தான் 'உஸ்ஸா' (எனும் தெய்வம்) இருக்கிறது உங்களிடம் 'உஸ்ஸா' இல்லையே'' என்று கூறினார். அப்போது, நபி (ஸல்) அவர்கள், 'அவருக்குப் பதிலளியுங்கள்'' என்று கூறினார்கள். மக்கள், 'நாங்கள் என்ன (பதில்) சொல்வது?' என்று வினவ நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் எங்களின் உதவியாளன் உங்களுக்கு (அப்படியொரு) உதவியாளன் இல்லையே!"என்று சொல்லுங்கள் என்று பதிலளித்தார்கள். (அவ்வாறே முஸ்லிம்கள் பதிலளித்தனர்.) 'இந்த (உஹுதுடைய) நாள், பத்ருப்போர் (நடந்த) நாளுக்கு பதிலாகும். யுத்தம் என்பதே (கிணற்று) வாளிகள் தாம். (மாறி மாறித் தான் இறைக்க முடியும். உங்கள் தோழர்களில்) அங்கங்கள் சிதைக்கப்பட்டவர்களைக் காண்பீர்கள். அப்படிச் செய்யும்படி நான் கட்டளையிடவுமில்லை. அது எனக்கு மனத்துன்பத்தையளிக்கவும் செய்யாது'' என்று அபூ சுஃப்யான் கூறினார்.

ஹதீஸ் 4044. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்

(மது விலக்கு அமலுக்கு வரும் முன் நடந்த) உஹுதுப் போர் அன்று காலையில் சிலர் மது அருந்தினார்கள். பிறகு (அந்தப் போரில்) உயிர்த் தியாகிகளாகக் கொல்லப்பட்டார்கள்.

ஹதீஸ் 4045. இப்ராஹீம் இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி அவ்ஃப் (ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களிடம் (அவர்கள் நோன்பை நிறைவு செய்யும் நேரத்தில்) உணவு கொண்டு வரப்பட்டது. (அன்று பகல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்தார்கள். அப்போது அவர்கள் (உஹுதுப் போரில்) கொல்லப்பட்டார்கள் - அவர் என்னை விடச் சிறந்தவர் - அவர் ஒரு சால்வையால் கஃபனிடப்பட்டார். (அந்த சால்வையால்) அவரின் தலை

மூடப்பட்டால், அவரின் இரண்டு கால்கள் (அதனால்) மூடப்பட்டால், தலை வெளியில் தெரிந்தது'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் இப்ராஹீம்(ரஹ்) கூறினார்:

மேலும், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), (பின்வருமாறு) கூறினார்கள் என எண்ணுகிறேன்.

ஹம்ஸா இப்னு அப்தில் முத்தலிப்(ரலி) (உஹுதுப் போரில்) கொல்லப்பட்டார்கள். அவர் என்னை விடச் சிறந்தவர். (அவரும் அதுபோன்றே பற்றாக்குறை மிக்க சிறிய சால்வையாலேயே கஃபனிப்பட்டார்) பிறகு (அந்த ஏழ்மை நிலை நம்மைவிட்டும் நீங்கி, இதோ, நீங்கள் காண்கிறீர்களே) இந்த அளவுக்கு நமக்கு இந்த உலகின் வசதி வாய்ப்புகள் வழங்கப்பட்டன. அல்லது இந்த உலக(ச் செல்வத்)திலிருந்து (இதோ, நீங்கள் காண்கிறீர்களே) இந்த அளவுக்கு நமக்கு தரப்பட்டது - நாங்கள் புரிந்த நல்லறங்களுக்குப் பிரதிபலன் மிக விரைவாக (இவ்வுலம்லேயே) நமக்குக் கொடுக்கப்பட்டுவிட்டதோ என்று நாம் அஞ்சுகிறோம்'' என்று கூறினார்கள். பிறகு (தமக்காகப் கொண்டு வரப்பட்ட) உணவை (உண்ணாமல் அப்படியே)விட்டுவிட்டு அழலானார்கள்.

ஹதீஸ் 4046. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அர்கள் கூறினார்

உஹுதுப் போரின்போது ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம், 'நான் கொல்லப்பட்டால் எங்கே (இருப்பேன்)?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'சொர்க்கத்தில் என்று பதிலளித்தார்கள். (அந்த மனிதர்) தம் கையிலிருந்த பேரீச்சங் கனிகளை உடனே தூக்கி எறிந்துவிட்டு (களத்தில் குதித்து), தாம் கொல்லப்படும் வரையில் போரிட்டார்.

ஹதீஸ் 4047. கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹிஜ்ரத் செய்தோம். எங்களுக்கான பிரதிபலனை அளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது. எங்களில் சிலர் தங்கள் பிரதிபலனை (இவ்வுலகத்தில்) அனுபவிக்காமலேயே சென்றுவிட்டனர். அவர்களில் ஒருவர் தாம், முஸ் அப் உமைர்(ரலி) அவர் உஹுதுப் போர் நாளில் கொல்லப்பட்டார். அவர் கோடுபோட்ட வண்ணத்துணி ஒன்றை மட்டுமேவிட்டுச் சென்றார். அதைக் கொண்டு அவரின் தலையை நாங்கள் மறைத்தால் அவரின் இரண்டு கால்கள் வெளியில் தெரிந்தன் கால்களை மறைத்தால் தலை வெளியில் தெரிந்தது. அப்போது எங்களிடம் நபி(ஸல்) அவர்கள்'அவரின் கால் மீது சிறிது'இத்கிர்' புல்லைப் போடுங்கள்'' என்று கூறினார்கள்.

(உஹுதுப் போரில் பங்கெடுத்த) எங்களில் வேறு சிலர் இருக்கிறார்கள். அவர்களின் (தியாகத்திற்கான) பிரதிபலன் (இந்த உலம்லும்) கனிந்துவிட்டது. அதை அவர்கள் பறித்து (அனுபவித்து)க் கொண்டார்கள்.

ஹதீஸ் 4048. அனஸ்(ரலி) அறிவித்தார்

என் தந்தையின் சகோதரர் (அனஸ் இப்னு நள்ர் (ரலி) அவர்கள் பத்ருப்போரில் கலந்து கொள்ளாமல் எங்கோ சென்றார். அன்னார் (திரும்பி வந்தவுடன்), '(இணை வைப்பவர்களுடன்) நபி(ஸல்) அவர்கள் நடத்திய முதல் போரில் நான் கலந்து கொள்ள முடியவில்லை. நபி(ஸல்) அவர்களுடன் என்னையும் அல்லாஹ் பங்கு பெற வைத்திருந்தால் நான் கடும் முயற்சியெடுத்து (வீரமாகப்) போரிடுவதை அல்லாஹ் நிச்சயம் பார்த்திருப்பான்'' என்று கூறினார். அவர் உஹுதுப் போரைச் சந்தித்தார். (அதில் பங்கெடுத்தார். அந்தப் போரில்) மக்கள் தோல்வியுற்றனர். அப்போது அவர், 'இறைவா! இந்த முஸ்லிம்கள் செய்த (பின்வாங்கிச் சென்ற) செயலுக்காக உன்னிடம் நான்

மன்னிப்புக் கோருகிறேன். இணைவைப்பவர்கள் செய்த (நபியவர்களுக்கெதிரான) இந்தப்போருக்கும் எனக்கும் தொடர்பில்லை என்று அறிவிக்கிறேன்‘‘ என்று கூறிவிட்டு, பிறகு (போர்க்களத்தில்) தம் வாளுடன் முன்னேறிச் சென்றார். பிறகு, (உடல் முழுதும் சிதைந்து போனதால்) அடையாளம் அறியப்படாத நிலைமையில் கொல்லப்பட்டார். அவரை அவரின் சகோதரி மச்சத்தை வைத்தோ... அல்லது அவரின் கைவிரல் நுனிகளை வைத்தோ...அடையாளம் கண்டு கொண்டார். அவரின் உடலில் (வாளால்) வெட்டப்படும், (ஈட்டியால்) குத்தப்பட்டும், அம்பால் துளைக்கப்பட்டும் எண்பதுக்கும் மேற்பட்ட காயங்கள் இருந்தன.

ஹதீஸ் 4049. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்

(உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களின் உத்தரவுப்படி) நாங்கள் திருக்குர்ஆனைப் (பல ஏடுகளில்) பிரதியெடுத்துக் கொண்டிருந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓத, நான் கேட்டிருந்த'அல் அஹ்ஸாப்' (என்னும் 33-வது) அத்தியாயத்தின் ஒரு வசனம் எனக்குக் கிடைக்கவில்லை. எனவே, அதை நாங்கள் தேடிப் பார்த்தபோது அது குஸைமா இப்னு ஸாபித்(ரலி) அவர்களிடம் இருக்கக் கண்டோம். (அந்த வசனம் இதுதான்:)

இறை நம்பிக்கையாளரில் இத்தகையவர்களும் இருக்கின்றனர்: அல்லாஹ்விடம் தாங்கள் கொடுத்த வாக்குறுதியை அவர்கள் மெய்ப்படுத்திக் காட்டி விட்டிருக்கிறார்கள். அவர்களில் சிலர் தம் இலட்சியத்தை நிறைவேற்றிவிட்டார்கள் இன்னும் சிலர் (அதை நிறைவேற்ற தருணம்) எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். (திருக்குர்ஆன் 33:23)

உடனே அந்த வசனத்தைத் திருக்குர்ஆனில் அதற்குரிய அத்தியாயத்தில் (எழுதிச்) சேர்த்து விட்டோம்.

ஹதீஸ் 4050. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்

உஹுதுப்போருக்காக நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்றபோது, நபி(ஸல்)அவர்களுடன் புறப்பட்டுச் சென்றவர்களில் சிலர் (நயவஞ்சகர்கள்) திரும்பி வந்துவிட்டனர். (இவர்களின் மீது எப்படி நடவடிக்கை எடுப்பது என்னும் விஷயத்தில்) நபி(ஸல்) அவர்களின் தோழர்கள் இரண்டு பிரிவினராகப் பிரிந்துவிட்டார்கள். ஒரு பிரிவினர்,'(திரும்பி ஓடியவர்களைக்) கொன்று விடுவோம்‘‘ என்று கூறினர். மற்றொரு பிரிவினர்,'அவர்களை நாம் கொலை செய்யக் கூடாது‘‘ என்று கூறினர். (அவர்கள் கருத்து வேறுபட்டு பிரிந்தனர்.) அப்போது பின்வரும் வசனம் அருளப்பட்டது.

உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? நயவஞ்சகர்களின் விஷயத்தில் இரண்டு (வகையான கருத்துக் கொண்ட) பிரிவினர்களாய் ஆகி விட்டீர்கள்! ஆயினும் அல்லாஹ் அவர்கள் சம்பாதித்துக் கொண்ட தீவினைகளின் காரணமாக அவர்களைத் தலைகீழாகப் புரட்டி விட்டிருக்கிறான். (திருக்குர்ஆன் 04:88)

மேலும், நபி(ஸல்) அவர்கள்,'மதீனா தூய்மையானது நெருப்பு, வெள்ளியின் அழுக்கை நீக்குவதைப் போல் அது பாவங்களைப் போக்கிவிடுகிறது‘‘ என்று கூறினார்கள்.

## (திருக்குர்ஆன் 03: 122) இறைவசனம்.

உங்களில் இரண்டு குழுவினருக்கு அல்லாஹ் பாதுகாவலான இருக்க, அவர்கள் தைரியம் இழக்க முனைந்த நேரத்தையும் (நபியே! நினைவு கூருக!) இறைநம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்கட்டும்! (என்ற 3:122-வது இறைவசனம்)

ஹதீஸ் 4051. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

“(உஹுதுப் போரில்) உங்களில் இரண்டு பிரிவினர் தைரியம் இழக்க முனைந்த நேரத்தையும்..!”என்னும் இந்த (திருக்குர்ஆன் 03:122-ம்) இறைவசனம், பனு சலிமா மற்றும் பனு ஹாரிஸா கூட்டத்தாராகிய எங்களைக் குறித்தே இறங்கியது. மேலும், இந்த வசனம் இறங்காமலிருந்திருக்கக் கூடாதா என்று நான் ஆசைப்படமாட்டேன். (ஏனெனில்) அல்லாஹ்,‘அவ்விரு பிரிவாருக்கும் அல்லாஹ்வே பாதுகாவலனாக இருந்தான்“ என்று (எங்களை மேன்மைப்படுத்திக்) கூறுகிறான்.

ஹதீஸ் 4052. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவித்தார்

என்னிடம் இறைத்தூதர்(ஸல்)அவர்கள்,‘திருமணம் முடித்துக் கொண்டாயா? ஜாபிரே!”என்று கேட்டார்கள். நான்,‘ஆம்“ என்று கூறினேன்.’கன்னி கழிந்த பெண்ணையாக? கன்னிப் பெண்ணையா?’ என்று கேட்டார்கள். நான்,‘(கன்னிப் பெண்ணை) அல்ல் கன்னி கழிந்த பெண்ணைத்தான் (மணந்தேன்)“ என்று கூறினேன்.’உன்னோடு கொஞ்சிக் குலவும் கன்னிப் பெண்ணை மணந்திருக்கக் கூடாதா?’ என்று கேட்டார்கள். நான்,‘இறைத்தூதர் அவர்களே! என் தந்தை (அப்துல்லாஹ் - ரலி அவர்கள்) ஒன்பது பெண்மக்களைவிட்டுவிட்டு உஹுதுப் போரின்போது (உயிர் தியாகியாகக்) கொல்லப்பட்டார்கள். அவர்கள் (ஒன்பது பேரும்) என் சகோதரிகளாக இருந்தனர். எனவே, பக்குவமில்லாத அவர்களைப் போன்ற இன்னொருத்தியை அவர்களுடன் சேர்த்து விடுவதை நான் வெறுத்தேன். மாறாக, அவர்களுக்குத் தலை வாரிவிட்டு, அவர்களை (கருத்தாகப்) பராமரித்துவரும் ஒரு பெண்ணை (திருமணம் செய்ய நினைத்தே இவ்வாறு தேர்ந்தெடுத்தேன்)“ என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,‘நீ செய்தது சரிதான்“ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4053. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

தன் மீது கடன் இருக்கும் நிலையில் ஆறு பெண் மக்களை (அநாதைகளாக)விட்டுவிட்டு என் தந்தை உஹுதுப்போரில் உயிர்த் தியாகியாகக் கொல்லப்பட்டார். பேரீச்சம் பழங்களைக் கொய்யும் (அறுவடைக்) காலம் வந்தபோது, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று,‘என் தந்தை உஹுதுப் போரில் உயிர்த் தியாகியாகக் கொல்லப்பட்டார் என்பது தங்களுக்குத் தெரியும். அவர் நிறையக் கடனையும்விட்டுச் சென்றுள்ளார். கடன்காரர்கள் தங்களைச் சந்திக்க வேண்டுமென விரும்புகிறேன்“ என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘நீ சென்று எல்லாப் பேரீச்சங் கனிகளையும் களத்தில் ஒரு மூலையில் (தனித் தனியாகக்) குவித்து வை!”என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்தேன். பிறகு நபி(ஸல்) அவர்களை அழைத்தேன். நபி(ஸல்) அவர்கள் கண்டபோது, அதில் பெரிய குவியலை மூன்று முறை சுற்றி வந்து அதன் அருகே அமர்ந்தார்கள். பிறகு,‘உன் (கடன்காரத்) தோழர்களைக் கூப்பிடு“ என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்தேன். பிறகு நபி(ஸல்) அவர்களைக் கண்டபோது என்னால் ஆத்திரமூட்டப்பட்டவர்களைப் போல் அந்த நேரத்தில் தெரிந்தார்கள். கடன்காரர்கள் கண்டபோது என்னால் ஆத்திரமூட்டப்பட்டவர்களைப் போன்று அந்த நேரத்தில் தெரிந்தார்கள். கடன்காரர்கள் (கடுமையாக) நடந்து கொள்வதை நபி(ஸல்) அவர்கள் கண்டபோது, அதில் பெரிய குவியலை மூன்று முறை சுற்றி வந்து அதன் அருகே அமர்ந்தார்கள். பிறகு,‘உன் (கடன்காரத்) தோழர்களைக் கூப்பிடு“ என்று கூறினார்கள். (பிறகு) நபி(ஸல்) அவர்கள் (பேரீச்சங் கனிகளை) அவர்களுக்கு அளந்து கொடுத்துக் கொண்டேயிருந்தார்கள். என் தந்தையின் (கடன்) பொறுப்பை அல்லாஹ் நிறைவேற்றிவிட்டான். நானோ,‘அல்லாஹ் என் தந்தையின் (கடன்) பொறுப்பை நிறைவேற்றினால் போதும். என் சகோதரிகளிடம் ஒரு பேரீச்சம் பழத்துடன் திரும்பிச் செல்லாவிட்டாலும் கூடப் பரவாயில்லை’ என்று திருப்திப்பட்டுக் கொண்டிருந்தேன். அந்தப் பேரீச்சம் பழக் குவியல்கள்

முழுவதையும் (தீர்ந்து போகாமல்) அல்லாஹ் பாதுகாத்தான். எந்த அளவுக்கென்றால் நபி(ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த அந்தக் குவியலில் ஒரு பேரீச்சங் கனி கூட குறையாமலிருந்ததை பார்த்தேன்.

ஹதீஸ் 4054. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களை பார்த்தேன் அவர்களுடன் இரண்டு மனிதர்கள் இருந்தார்கள். அவ்விருவரும் நபியவர்களுக்காகக் கடுமையாகப் போரிட்டுக் கொண்டிருந்தார்கள் அவர்கள் வெள்ளை நிற உடையணிந்திருந்தார்கள். அதற்கு முன்போ அதற்குப் பின்போ அவ்விருவரையும் நான் பார்த்ததில்லை.

ஹதீஸ் 4055. ஸஅத் இப்னு அபீ வாக்காஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் அம்புக் கூட்டிலிருந்து எனக்காக (அம்புகளை) உருவிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்போது (என்னிடம்),'அம்பெய்யுங்கள். என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4056. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், எனக்காகத் தம் தாயையும் தந்தையையும் ஒன்று சேர்த்து, (“என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்'' என்று) கூறி (போர் புரிய உற்சாகமூட்டி)னார்கள்

ஹதீஸ் 4057. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் பெற்றோர் இருவரையும் ஒன்று சேர்த்து எனக்காக (அர்ப்பணிப்பதாகக்) கூறினார்கள்.

அறிவிப்பாளர் ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) கூறினார்.

தாம் போர் புரிந்து கொண்டிருக்கும்போது,'என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்'' என்று தம்மிடம் நபி(ஸல்) அவர்கள் கூறியதைப் பற்றியே இவ்வாறு ஸஅத்(ரலி) குறிப்பிடுகிறார்கள்.

ஹதீஸ் 4058. அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அவர்கள் அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம் பெற்றோர் இருவரையும் ஒன்று சேர்த்து ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களைத் தவிர வேறு யாருக்கும் (அர்ப்பணிப்பதாகக்) கூறியதை நான் கேட்டதில்லை.

ஹதீஸ் 4059. அலீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம் பெற்றோர் இருவரையும் ஒன்று சேர்த்து ஸஅத் இப்னு மாலிக்(ரலி) அவர்களைத் தவிர வேறு யாருக்கும் (அர்ப்பணிப்பதாகக்) கூறியதை நான் கேட்டதில்லை. ஏனெனில், நான் உஹுது (போர் நடந்த) நாளில்,'சஅதே! அம்பெய்யுங்கள். என் தந்தையும் என் தாயும் உங்களுக்கு அர்ப்பணமாகட்டும்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறுவதைக் கேட்டேன்.

ஹதீஸ் 4060-ஹதீஸ் 4061 அபூ உஸ்மான்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (உஹுதில்) போரிட்டு வந்த அந்த நாள்களில் ஒன்றில், தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) அவர்களையும் தவிர்த்து (முஹாஜிர்களில் வேறு யாரும்) அவர்களுடன் எஞ்சியிருக்கவில்லை.

இது குறித்து தல்ஹா(ரலி) அவர்களும், ஸஅத்(ரலி) அவர்களும் (நேரடியாக) அறிவித்த ஹதீஸையும் அபூ உஸ்மான்(ரஹ்) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 4062. சாயிப் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப், தல்ஹா இப்னு உபைதில்லாஹ், மிக்தாத் இப்னு அஸ்வத், ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோருடன் நான் தோழமை கொண்டிருந்தேன். அவர்களில் ஒருவரும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (நபிமொழி எதையும்) அறிவிப்பதை நான் கேட்டதில்லை. ஆயினும், தல்ஹா(ரலி) (மட்டும்) உஹுதுப் போர் நாள் பற்றி அறிவிப்பதை கேட்டுள்ளேன்.

ஹதீஸ் 4063. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்

நான் தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) அவர்களின் செயலிழந்து போன கையைப் பார்த்தேன். உஹுத் நாளில் அந்தக் கையால் நபி(ஸல்) அவர்களை அன்னார் காத்த (போது எதிரிகளால் வெட்டப்பட்ட)ார்கள்.

ஹதீஸ் 4064. அனஸ்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்களை (தனியே)விட்டுவிட்டு மக்கள் தோற்று (ஓடி)விட்டனர். அபூ தல்ஹா(ரலி) நபி(ஸல்) அவர்களைத் தம் தோல் கேடயத்தால் மறைத்துக் கொண்டு பாதுகாத்தபடி நின்றார்கள்.

மேலும், அபூ தல்ஹா(ரலி) வில்லின் நாணை நன்கு இழுத்து வேகமாக அம்பெய்யக் கூடியவர்களாக இருந்தார்கள். அன்று அவர்கள், இரண்டு அல்லது மூன்று விற்களை உடைத்துவிட்டார்கள். எவரேனும் ஒருவர் அம்புக் கட்டுடன் செல்வதைக் கண்டால் நபி(ஸல்) அவர்கள்,'அதை அபூ தல்ஹாவிடம் போடு'' என்று சொல்வார்கள். அந்த நேரத்தில் நபி(ஸல்) அவர்கள் மேலேயிருந்து மக்களை (தலையை உயர்த்தி) எட்டிப் பார்க்க, அபூ தல்ஹா அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! உங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும். எட்டிப் பார்க்காதீர்கள். எதிரிகளின் அம்புகளில் ஏதேனும் ஒன்று தங்களைத் தாக்கி விடலாம். (தாங்கள் எட்டிப் பார்க்காமலிருந்தால்) என் மார்பு தங்கள் மார்புக்கு முன்னால் (கேடயம் போன்று உங்களுக்குப் பாதுகாப்பாக) இருக்கும்'' என்று கூறினார்கள்.

அபூ பக்ர்(ரலி) அவர்களின் மகள் ஆயிஷா(ரலி) அவர்களும் (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களும் (காயமுற்றவர்களுக்கு) மும்முரமாக (பணிவிடைகள் செய்) இருப்பதை கண்டேன். அவர்கள் (தண்ணீர் நிரம்பிய) தோல் பைகளைத் தங்கள் முதுகுகளில் சுமந்து கொண்டு எடுத்துச் சென்று (காயமுற்று வீழ்ந்து கிடக்கும்) மக்களின் வாய்களில் ஊற்றிவிட்டு, பிறகு திரும்பிச் சென்று, அவற்றை (மீண்டும்) நிரப்பிக் கொண்டு வந்து, அவர்களின் வாய்களில் மீண்டும் ஊற்றிக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களின் கால் கொலுசுகளை கண்டேன். அபூ தல்ஹா(ரலி) அவர்களின் கரத்திலிருந்து இருமுறையோ மும்முறையோ நாள் (கீழே தவறி) விழுந்தது.

ஹதீஸ் 4065. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின் (தொடக்கத்தின்)போது இணைவைப்பாளர்கள் தோற்கடிக்கப்பட்டனர். அப்போது இப்லீஸ், அல்லாஹ் அவனைக் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக!'அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களைக் கவனியுங்கள்'' என்று கத்தினான். உடனே, முஸ்லிம்களில் முன் அணியினர் (எதிரிகள் என்றெண்ணி, பின் அணியினரை நோக்கித்) திரும்பிச் செல்ல, பின் அணியினருடன் (மோலேற்பட்டுப்) போரிட்டுக் கொண்டனர். அப்போது ஹுதைஃபா(ரலி), தம் தந்தை யமான் அவர்கள் அங்கே (முஸ்லிம்களின் தாக்குதலுக்கு ஆளாக)

இருப்பதைக் கண்டார்கள். எனவே,'அல்லாஹ்வின் அடியார்களே! என் தந்தை! என் தந்தை!"என்று (உரக்கக்) கூவினார்கள். (ஆனால்) அல்லாஹ்வின் மீதாணையாக! அவரைக் கொன்ற பின்புதான் அவர்கள் (அவரைவிட்டும்) நகர்ந்தார்கள். அப்போது ஹுதைஃபா(ரலி) (தம் தந்தையைக் கொன்றவர்களை நோக்கி),'அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!"என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உர்வா(ரஹ்) கூறினார்.

அல்லாஹ்வின் மீதாணையாக! ஹுதைஃபா(ரலி) (இவ்வாறு மன்னித்தால் அவர்கள்) அல்லாஹ்வைச் சந்திக்கும் வரை அவர்களிடம் நல்ல பலன் இருந்து கொண்டேயிருந்தது.

(திருக்குர்ஆன் 03: 155) இறைவசனம்.

"இரண்டு படைகள் மோதிக் கொண்ட நாளில் உங்களில் யார் புறங்காட்டி ஓடினார்களோ, அவர்கள் செய்த சில தவறுகள் காரணமாகத் தான் ஷைத்தான் அவர்களை அடிசறுக்கச் செய்தான். (எனினும்) அல்லாஹ் அவர்களை நிச்சயமாக மன்னித்துவிட்டான். நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பு வழங்குபவனும் சம்ப்புத் தன்மையுடையவனுமாய் இருக்கிறான்" என்னும் (திருக்குர்ஆன் 03: 155) இறைவசனம்.

ஹதீஸ் 4066. உஸ்மான் இப்னு மவ்ஹப்(ரஹ்) அறிவித்தார்

இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்ய (எம்ப்து வாசியான) ஒருவர் வந்தார். அப்போது ஒரு கூடடத்தார் (அங்கே) அமர்ந்திருப்பதைக் கண்டு,'இந்தக் கூடடத்தார் யார்?' என்று கேட்டார். மக்கள்,'இவர்கள் குறைஷிகள்" என்று கூறினர். அவர்,'(இவர்களில்) முதிர்ந்த அறிஞர் யார்?' என்று கேட்டார். மக்கள்,'அப்துல்லாஹ் இப்னு உமர் அவர்கள்" என்று பதிலளித்தனர். பிறகு அவர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் சென்று,'(இப்னு உமர் அவர்களே!) நான் தங்களிடம் ஒரு விஷயம் பற்றிக் கேட்பேன். நீங்கள் எனக்கு அதைப்பற்றி (பதில்) சொல்வீர்களா? இந்த இறையில்லத்தின் புனிதத்தை முன்வைத்து தங்களிடம் கேட்கிறேன் உஸ்மான் இப்னு அஃப்பான் உஹுது போரில் நாளில் (போர்க்களத்திலிருந்து) வெருண்டோடியத்தைத் தாங்கள் அறிவீர்களா?' என்று கேட்டதற்கு இப்னு உமர்(ரலி),'ஆம (அறிவேன்)" என்று பதிலளித்தார்கள். அவர்,'உஸ்மான்(ரலி), பத்ருப்போரில் கலந்து கொள்ளாமல் இருந்துவிட்டார் என்பது உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க, இப்னு உமர்(ரலி),'ஆம் (தெரியும்)" என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர்,'அவர் (ஹுதைபிய்யாவில் நடந்த)'பைஅத்துர் ரிள்வான்' சத்தியப் பிரமாணத்திலும் கலந்து கொள்ளவில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க, இப்னு உமர்(ரலி),'ஆம் (தெரியும்)" என்று பதிலளித்தார்கள். (இவற்றைக் கேட்டுவிட்டு) அந்த மனிதர், (உஸ்மான்(ரலி), தாம் நினைத்திருந்தது போன்றே இவ்வளவு குறைகளையும் கொண்டவர்கள் தாம் என்று தொனிக்கும்படி)'அல்லாஹ் அக்பர் அல்லாஹ் மிகப் பெரியவன்" என்று கூறினார்.

இப்னு உமர்(ரலி) கூறினார்:'வா! (இவற்றிற்கெல்லாம் உஸ்மான்(ரலி) ஏன் பங்கு பெறவில்லையென்று) நீ கேட்டது பற்றி உனக்கு நான் விளக்குகிறேன்.

உஸ்மான்(ரலி) உஹுதுப போரின்போது வெருண்டோடிய சம்பவமோ, அது சம்பந்தமாக அல்லாஹ் அவரை மன்னித்துவிட்டான் என்று நானே சாட்சியம் கூறுகிறேன்.

பத்ருப் போரில் அவர்கள் கலந்து கொள்ளாததற்குக் காரணம், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மகள் (ருகய்யா - ரலி - அவர்கள்) உஸ்மானுடைய மனைவியாக இருந்தார்கள். அப்போது அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், உஸ்மான்(ரலி) அவர்களிடம்,'பத்ருப் போரில் பங்கெடுத்த ஒரு மனிதருக்குரிய (மறுமைப்) பலனும் (போர்ச் செல்வத்தில்) அவரின் பங்கும்

உங்களுக்குக் கிடைக்கும். (நீங்கள் உங்கள் மனைவியைப் போய்க் கவனியுங்கள்)' என்று கூறினார்கள். (எனவேதான் அவர்கள் அதில் கலந்து கொள்ள முடியவில்லை.)

பைஅத்துர் ரிள்வான் சத்தியப் பிரமாண நிகழ்ச்சியில் அவர்கள் கலந்து கொள்ளாததற்குக் காரணம், உஸ்மான்(ரலி) அவர்களை விட கண்ணியம் வாய்ந்த ஒருவர் (மக்கா பள்ளத்தாக்கில் இல்லை. அப்படி) இருந்திருந்தால் உஸ்மான் அவர்களுக்கு பதிலாக அவரை நபி(ஸல்) அவர்கள் (குறைஷிகளிடம் பேச மக்காவிற்குத் தம் தூதுவராக) அனுப்பியிருப்பார்கள். (அப்படி ஒருவரும் இல்லை) எனவேதான், உஸ்மான்(ரலி) அவர்களை அனுப்பினார்கள். மேலும், இந்த சத்தியப் பிரமாண நிகழ்ச்சி உஸ்மான்(ரலி) மக்காவிற்குப் போன பின்புதான் நடைபெற்றது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் வலக்கையைச் சுட்டிக் காட்டி,'இது உஸ்மானுடைய கை' என்று சொல்லி அதைத் தம் இடக்கையின் மீது தட்டினார்கள். பிறகு,'(இப்போது நான் செய்த) இந்த சத்தியப் பிரமாணம் உஸ்மானுக்காகச் செய்யப்படுவதாகும்'' என்று கூறினார்கள்!"(இவ்வாறு இப்னு உமர்(ரலி) கூறிவிட்டு, உஸ்மான்(ரலி) அவர்களைப் பற்றித் தாழ்வாக எண்ணி வைத்திருந்த) அந்த மனிதரிடம்,'நான் சொன்ன இந்த பதில்களை எடுத்துக் கொண்டு இப்போது நீ போகலாம்'' என்று கூறினார்கள்.

"இறைத்தூதர் உங்கள் பின்னாலிருந்து உங்களை அழைத்துக கொண்டிருக்க, நீங்கள் யாரையும் திரும்பிப் பார்க்காதவாறு வெகுதூரம் சென்று கொண்டிருந்ததை (நினைத்துப் பாருங்கள்.) இதன் விளைவாக, அல்லாஹ் உங்களுக்குத் துக்கத்திற்கு மேல் துக்கத்தைக் கொடுத்தான். ஏனெனில், உங்களைவிட்டு நழுவிப் போனவை பற்றியும், உங்களுக்குத் துன்பம் ஏற்பட்டது பற்றியும், (இனிமேல்) நீங்கள் வருந்தக் கூடாது என்பதற்காகத்தான். அல்லாஹ் நீங்கள் செய்கிறவற்றை ஆழ்ந்து கவனிப்பவன் ஆவான்' (என்ற 3:153-வது இறைவசனம்)

ஹதீஸ் 4067. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்கள், (அம்பெய்யும்) காலாட்படையினருக்கு அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களை (தலைவராக) ஆக்கினார்கள். மேலும் அடிப்படையினர் தோற்றுப் போய் ஓடிவிட்டார்கள். 'இறைத்தூதர் உங்கள் பின்னால் இருந்து உங்களை அழைத்துக் கொண்டிருக்க..!"என்னும் (திருக்குர்ஆன் 03:153-ம்) வசனம் இதையே குறிக்கிறது.

"பின்னர் இந்தத் துக்கத்திற்குப் பிறகு (மன) அமைதி தருகிற சிற்றுறக்கத்தை அவன் உங்களின் மீது இறக்கினான். அது உங்களில் ஒரு பிரிவினரை ஆட்கொண்டது. மற்றொரு பிரிவினரோ, அவர்களின் மனங்கள் அவர்களைப் பற்றியே கவலையை உண்டாக்கின. உண்மைக்குப் புறம்பாக அல்லாஹ்வைப் பற்றி அறிவீனர்கள் எண்ணுவதைப் போன்று எண்ணிக் கொண்டிருந்தனர். 'இந்தக் காரியத்தில் எங்களுக்கு ஏதேனும் உரிமையுண்டா?' என்று கூறுகின்றனர். 'அனைத்து உரிமையும் அல்லாஹ்வுக்கே உண்டு'' என (நபியே!) கூறுக! உம்மிடம் வெளிப்படுத்த முடியாத (பல) விஷயங்களைத் தம் உள்ளங்களில் மறைத்து வைத்துள்ளனர். 'இந்தக் காரியத்தில் எங்களுக்கு உரிமை இருந்திருக்குமாயின், நாங்கள் இங்கே கொல்லப்பட்டிருக்க மாட்டோம்'' என்றும் அவர்கள் கூறுகின்றனர். (நபியே!) நீர் கூறுக:'நீங்கள் உங்கள் இல்லங்களில் தங்கியிருந்திருப்பினும், யார் மீது இறப்பு எழுதப்பட்டுவிட்டதோ அவர்கள், தாம் இறக்க வேண்டிய இடங்களை நோக்கி வந்தேயிருப்பார்கள். மேலும், அல்லாஹ் உங்கள் நெஞ்சங்களில் உள்ள (விசுவாசத்)தைச் சோதிக்கவும், உங்கள் இதயங்களில் உள்ள (சந்தேகத்)தை (அகற்றி) தூய்மைப்படுத்தவுமே

(இவ்வாறு செய்தான்.) இன்னும் அல்லாஹ் உங்கள் உள்ளங்களில் உள்ளதை நன்கறிந்தவன்‘‘ (என்ற 3:154வது இறைவசனம்)

ஹதீஸ் 4068. அபூ தல்ஹா (ஸைத் (ரலி) அவர்கள் அறிவித்தார்

உஹுதுப் போரின்போது சிற்றுறக்கம் ஆட்கொண்டவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன். எந்த அளவுக்கென்றால் என்னுடைய வாள் என்னுடைய கையிலிருந்து பலமுறை (நழுவி) விழுந்துவிட்டது. அது விழ, நான் அதை எடுப்பேன். (மீண்டும்) அது விழ, அப்போதும் நான் அதை எடுப்பேன்.

## “அல்லாஹ் அவர்களை மன்னிக்கும் வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும் வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை (என்ற 3:128-வது இறைவசனம்)

அனஸ்(ரலி) கூறினார்

உஹுதுப் போரன்று நபி(ஸல்) அவர்கள் காயப்படுத்தப்பட்டார்கள். அப்போது’தம் நபியையே காயப்படுத்திவிட்ட ஒரு சமூகம் எப்படி வெல்லும்?’ என்று (மனமுடைந்தவர்களாக) நபிகளார் கூறினார்கள். அப்போதுதான்’(நபியே!) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை..!”என்ற (திருக்குர்ஆன் 03:128-வது) வசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 4069. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

(உஹுத் போரில் காயம் ஏற்பட்டதற்குப் பிறகு) ஃபஜ்ருத் தொழுகையின் கடைசி ரக்அத்தில் ருகூவிலிருந்து தலையை உயர்த்தி,‘சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹு - ரப்பனா வல(க்)கல் ஹம்து’ என்று கூறியதற்குப் பின்னால், நபி(ஸல்) அவர்கள்,‘இறைவா! இன்னான், இன்னான், இன்னானை உன் அருளிலிருந்து அப்புறப்படுத்துவாயாக!”என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்,‘அல்லாஹ் அவர்களை மன்னிக்கும் வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும் வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, (நபியே!) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை‘‘ என்னும் (திருக்குர்ஆன் 03: 128-வது) வசனத்தை இறக்கியருளினான்.

ஹதீஸ் 4070. சாலிம் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (உஹுதுப் போரில் காயப்படுத்தப்பட்டபோது எதிரிகளான) ஸஃப்வான் இப்னு உமய்யா, சுஹைல் இப்னு அம்ர், ஹாரிஸ் இப்னு ஹிஷாம் ஆகியோருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள். அப்போது,‘அல்லாஹ் அவர்களை மன்னிக்கும் வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும் வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை (என்ற 3:129-வது வசனம்) அருளப்பட்டது.

## உம்மு சலீத்(ரலி) பற்றிய குறிப்பு

ஹதீஸ் 4071. ஸஅலபா இப்னு அபீ மாலிக்(ரலி) அறிவித்தார்

மதீனாவாசிகளான பெண்களில் சிலரிடையே உமர் இப்னு கத்தாப்(ரலி) பட்டாடைகளை (அல்லது கம்பளி ஆடைகளை) பங்கிட்டார்கள். அதில் தரமானதோர் ஆடை எஞ்சிவிட்டது. உமர்(ரலி) அவர்களுக்கு அருகில் இருந்த சிலர்,‘இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! இதனைத் தங்களிடமிருக்கும் (தங்களின் துணைவியாரான) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (மகளின்)

மகளுக்குக் கொடுத்து விடுங்கள்" என்று கூறினர். அலீ (ரலி) அவர்களின் மகளான உம்மு குல்ஸூம் (ரலி) அவர்களைக் கருத்தில் கொண்டே (இப்படிக்) கூறினர். அப்போது உமர் (ரலி), 'உம்மு குல்ஸூமை விட உம்மு சலீத் அவர்களே இதற்கு மிகவும் தகுதி வாய்ந்தவர்கள். மேலும், உம்மு சலீத் அவர்கள், இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்த அன்சாரிப் பெண்களில் ஒருவராவார்!" என்று கூறினார்கள். (மேலும்) 'அவர் எங்களுக்காக உஹுதுப் போர் நடந்த நாளில் தோலினால் ஆன தண்ணீர் பைகளைச் சுமந்து கொண்டு வந்து கொண்டிருந்தார்" என்றும் உமர் (ரலி) கூறினார்.

## ஹம்ஸா இப்னு அப்தில் முத்தலிப் (ரலி) கொல்லப்பட்ட நிகழ்ச்சி

ஹதீஸ் 4072. ஜஅஃபர் இப்னு அம்ர் இப்னி உமய்யா அள்ளம்ரீ (ரஹ்) அறிவித்தார்

நான் (ஒரு பயணத்தில்) உபைதுல்லாஹ் இப்னு அதீ இப்னி கியார் (ரலி) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றேன். நாங்கள் ஹிம்ஸு (நகரு)க்கு வந்து சேர்ந்தபோது என்னிடம், உபைதுல்லாஹ் இப்னு அதீ அவர்கள், '(உஹுதுப் போரின்போது ஹம்ஸா - ரலி - அவர்களைக் கொன்றவரான) வஹ்ஷீ அவர்களைச் சந்திக்க உங்களுக்கு விருப்பமுண்டா? (நாம் அவர்களைச் சந்தித்து) ஹம்ஸா (ரலி) அவர்களைக் கொன்றது பற்றிக் கேட்போமே!" என்று கூறினார்கள். நான், சரி என்றேன். வஹ்ஷீ அவர்கள் ஹிம்சில் வசித்துக் கொண்டிருந்தார். (நாங்கள் அங்கு போய் அங்குள்ளவர்களிடம்) அவரைப் பற்றி விசாரித்தோம். 'அவர் தம் அந்த கோட்டைக்குள் இருக்கிறார். அவர் தண்ணீரால் நிரப்பப்பட்ட பெரிய தோல்பை போன்று (பருமனாக) இருப்பார்" என்று எங்களிடம் கூறப்பட்டது.

பிறகு நாங்கள் (அவரிடம்) வந்தோம். சிறிது நேரம் அவரருகில் நின்றோம். பிறகு, அவருக்கு சலாம் சொன்னபோது, அவர் (எங்களுக்கு) பதில் சலாம் கூறினார்.

உபைதுல்லாஹ் (ரலி) தம் தலைப்பாகைத் துணியினால், தம் இரண்டு கண்களையும் கால்களையும் தவிர வேறெவதையும் வஹ்ஷீ அவர்கள் பார்க்காத முடியாத அளவிற்கு சுற்றிக் கட்டியிருந்தார். அப்போது, உபைதுல்லாஹ் (ரலி), 'வஹ்ஷீ அவர்களே! என்னை உங்களுக்கு அடையாளம் தெரிகிறதா?' என்று கேட்டார்கள்.

அப்போது வஹ்ஷீ, உபைதுல்லாஹ் அவர்களைப் பார்த்தார். பிறகு, 'அல்லாஹ்வின் மீதாணையாக!" இல்லை. (உங்களை எனக்கு அடையாளம் தெரியவில்லை.) ஆயினும், எனக்கு இது தெரியும்: அது பின்கியார் ஒரு பெண்ணைத் திருமணம் முடித்தார். அவருக்கு, 'உம்மு கித்தால் பின்த் அபில் ஈஸ்' என்று சொல்லப்படும். அதீ அவர்களுக்கு (மனைவி) உம்மு கித்தால் மக்காவில் வைத்து ஓர் ஆண் குழந்தையைப் பிரசவித்தார். அப்போது, அந்தக் குழந்தைக்கு பாலூட்டும் செவிலித் தாயை நானே தேடினேன். (பாலூட்டுபவளைக் கண்டுபிடித்த பிறகு) நான் அந்தக் குழந்தையைச் சுமந்து கொண்டு, அதன் தாயுடன் சென்று அந்தக் குழந்தையைப் பாலூட்டுபவளிடம் ஒப்படைத்தேன். (அந்தக் குழந்தையின் பாதங்களை அப்போது பார்த்தேன்.) உன் இரண்டு பாதகங்களைப் பார்த்தல் அது போன்றே இருக்கிறது" என்று கூறினார். அப்போது உபைதுல்லாஹ் (ரலி), மூடியிருந்த தம் முகத்தைத் திறந்தார்கள். பிறகு, 'ஹம்ஸா (ரலி) அவர்களை நீங்கள் கொன்றது பற்றி எங்களுக்கு அறிவிக்கக் கூடாதா?' என்று கேட்டார்கள். வஹ்ஷீ, 'சரி" (சொல்கிறேன்)" என்று கூறினார். (பிறகு, கொலைச் சம்பவத்தைப் பற்றிப் பின்வருமாறு கூறினார்:) ஹம்ஸா (ரலி) பத்ருப்போரில் (என் எஜமான் ஜுபைருடைய தந்தையின் சகோதரரான) துஜமா இப்னு அதீ இப்னி கியார் என்பாரைக் கொலை செய்திருந்தார். எனவே, என் எஜமான் ஜுபைர் இப்னு முத்யிம் என்னிடம், 'என் சிறிய தந்தை (யின் கொலை)க்குப் பதிலாக ஹம்ஸாவை நீ கொன்றால் நீ (அடிமைத் தளையிலிருந்து) விடுதலையாவாய்" என்று கூறினார்.

எனவே, அய்னைன் (உஹுது) ஆண்டில் - அய்னைன் என்பது உஹுது மலைக்கருகிலுள்ள ஒரு மலையாகும். இந்த இரண்டு மலைகளுக்குடையில் ஒரு பள்ளத்தாக்கு உண்டு (குறைஷி) மக்கள் (போருக்காகப்) புறப்பட்டுச் சென்றபோது அம்மக்களுடன் போர்(க் களம்) நோக்கி நானும் சென்றேன். மக்கள் போருக்காக அணிவகுத்து நின்றபோது சிபாஉ இப்னு அப்தில் உஸ்ஸா என்பவன் (அணியைவிட்டு) முன்னால் வந்து,'(என்னோடு) தனியே மோதுபவர் உண்டா?' என்று கேட்டான். அவனை நோக்கி ஹமஸா பின்அப்தில் முத்தலிப்(ரலி) கிளம்பி வந்து, பெண்களுக்கு விருத்தசேதனம் செய்யும் உம்மு அன்மாரின் மகனே! சிபாஉவே! நீ அல்லாஹ்வுடனும் அவனுடைய தூதருடனும் (பகைத்துக் கொண்டு) மோத வந்திருக்கிறாயா?' என்று கேட்டார்கள்.

பிறகு ஹம்ஸா(ரலி) அவன் மீது (பாய்ந்து) கடுமையாகத் தாக்கினார்கள். அவன் கழிந்து போட்டவிட்ட நேற்யை தினம் போல் (மடிந்தவனாக) ஆம்விட்டான். நான் ஹம்ஸா (அவர்களைக் கொல்லத் தருணம் எதிர்பார்த்து) அவர்களுக்காக ஒரு பாறைக்கு அடியில் ஒளிந்து கொண்டேன். ஹம்ஸா அவர்கள் என்னை (க் கவனிக்காமல்) நெருங்கி வந்தபோது, என்னுடைய ஈட்டியை அவரின் மர்மஸ்தானத்தை நோக்கி எறிந்தேன். அது (பாய்ந்து) அவரின் புட்டத்திற்கிடையிலிருந்து வெளியேறியது. அதுதான் ஹம்ஸா அவர்களின் வாழ்நாள் முடிவிற்குக் காரணமாக அமைந்தது. பிறகு குறைஷிகள் (உஹுதிலிருந்து மக்காவை நோக்கி) திரும்பிச் சென்றபோது நானும் அவர்களுடன் திரும்பினேன். மக்காவிற்குப் போய் அங்கு (வெற்றி கிடைத்து) இஸ்லாம் பரவும் வரையில் தங்கினேன். (மக்கா வெற்றி கொள்ளப்பட்ட பின்) அங்கிருந்து வெளியேறி தாயி∴பிற்கு (ஓடிச்) சென்று விட்டேன். தாயி∴ப் வாசிகள் (இஸ்லாத்தை அறிந்து கொள்ளவும், அதை ஏற்று நடக்கவும் கருதி) தங்கள் தூதுக் குழுவினரை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தனர். அப்போது, என்னிடம்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம்மிடம் வரும்) தூதுவர்களக்குத் தொல்லை தரமாட்டார்கள்: (எனவே, தூதுக் குழுவினருடன் சேர்ந்து நீங்களும் செல்லுங்கள்)'' என்று கூறப்பட்டது. எனவே, தூதுக் குழுவினருடன் நானும் புறப்பட்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து சேர்ந்தேன். என்னை அவர்கள் கண்டபோது,'நீ வஹ்ஷி தானே?' என்று கேட்டார்கள். நான்,'ஆம்'' என்று கூறினேன்.'நீ தானே ஹம்ஸாவைக் கொன்றாய்?' என்று கேட்டார்கள். நான்,'உங்களுக்கு எட்டியபடி விஷயம் நடந்தது உண்மைதான்'' என்று கூறினேன். அப்போது அவர்கள்,'(உன்னைக் காணும்போது என் பெரிய தந்தை ஹம்ஸாவின் நினைவு வரும், எனவே,) என்னைவிட்டும் உன் முகத்தை மறைத்துக் கொள்ள முடியுமா?' என்று கேட்டார்கள். உடனே, நான் (அங்கிருந்து) புறப்பட்டுவிட்டேன்.

நபி(ஸல்) அவர்கள் இறந்துவிட்டபோது, (தன்னை ஒரு நபி என்று வாதிட்ட வண்ணம்) பொய்யன் முஸைலிமா கிளம்பினான். (அவன் நபித்தோழர்களிடம் போரிடுவதற்காகப் பெரும்படை ஒன்றைத் திரட்டலானான். அவனை முறியடிப்பதற்காக அபூ பக்ர் ஸித்தீக்(ரலி) அவர்களும் படை திரட்டி அதற்கு காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களைத் தளபதியாக நியமித்தார்கள்) நான் (என் மனத்திற்குள்),'நிச்சயம் நான் முஸைலிமாவை நோக்கிப் புறப்பட்டுச் செல்வேன். அவனை நான் கொல்ல (வாய்ப்புக் கிடைக்க)லாம். அதன் மூலம், (முன்பு) நான் ஹம்ஸா(ரலி) அவர்களைக் கொன்தற்கு(ப் பிரயாசித்தம் தேடி) ஈடுசெய்யலாம்'' என்று கூறிக் கொண்டேன். (அபூ பக்ர் - ரலி அவர்கள அனுப்பிய போர்ப்படையிலிருந்து) மக்களுடன் நானும் புறப்பட்டுச் சென்றேன். அப்போதுதான்அவனுடைய விஷயத்தில் நடந்தது நடந்து முடிந்தது. 141

அப்(போரின்)போது ஒரு மனிதன் ஒரு சுவரின் இடைவெளியில் நின்றிருந்தான். அவன் தலைவிரி கோலத்துடன் (போரின் புழுதி படிந்து) சாம்பல் நிற ஒட்டகம் போன்றிருந்தான். அவன் மீது (ஹம்ஸா அவர்களைக் கொலை செய்த அதே) என்னுடைய ஈட்டியை எறிந்தேன். நான் அந்த ஈட்டியை அவனுடைய இரண்டு மார்புகளுக்கு மத்தியில் பாய்ச்சினேன். அது அவனுடைய பின்

தோள்களுக்கிடையிலிருந்து வெளியேறியது. அவனை நோக்கி அன்சாரிகளில் ஒருவர் ஓடி வந்தார். தம் வாளால் அவனுடைய உச்சந்தலை மீது ஓங்கி வெட்டிவிட்டார். (அவன்தான் முஸைலிமா)

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்:

(முஸைலிமா கொல்லப்பட்ட போது) ஒரு சிறுமி வீட்டின் முகட்டிலிருந்து கொண்டு,'அந்தோ! நம்பிக்கையாளர்களின் தலைவரை ஒரு கறுப்பு அடிமை (வஹ்ஷீ) கொலை செய்துவிட்டான்'' என்று (உரக்கச் சப்தமிட்டுச்) சொன்னாள்.

## உஹுத் நாளில் நபி(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட காயங்கள்.

ஹதீஸ் 4073. இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (உஹுதுப் போரில் உடைக்கப்பட்ட) தம் (முன் வாய்ப்பற்களில், கீழ்வரிசையில் வலப்புறம் இருந்த) பல்லைச் சுட்டிக்காட்டி 143'நபியை (இப்படிச்) செய்துவிட்ட சமுதாயத்தின் மீது அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது'' என்று கூறினார்கள். (மேலும்,'இறைவழியில் (அறப்போரில்) இறைத்தூதர் தம் கரத்தால் எவனைக் கொன்று விடுவார்களோ அவன் மீது(ம்) அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது'' என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4074. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

"இறைவழியில் நபி(ஸல்) அவர்கள் எவனைக் கொன்றுவிட்டார்களோ அவன் மீது அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது. (மேலும்) நபி(ஸல்) அவர்களின் முகத்தில் இரத்தக் காயம் ஏற்படுத்தியவர்களின் மீது அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது.

ஹதீஸ் 4075. அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்

ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களிடம், இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (உஹுதுப் போரின் (போது) ஏற்பட்ட காயங்கள் பற்றிக் கேட்கப்பட்டது. அப்போது அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காயத்தைக் கழுவிவிட்டவரையும், (கழுவுவதற்காகத்) தண்ணீரை ஊற்றிவிட்டுக் கொண்டிருந்தவரையும், மருந்துக்குப் பயன்படுத்தப்பட்ட பொருளையும் அறிவேன்'' என்று கூறிவிட்டு (பின்வருமாறு விளக்கிச்) கூறினார்கள்:'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மகள் ஃபாத்திமா(ரலி) அந்தக் காயத்தைக் கழுவிவிட்டுக் கொண்டிருந்தார்கள். அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) (தம்) கேடயத்தில் (தண்ணீர் நிரப்பி வந்து அந்தக் காயத்தைக் கழுவுவதற்காக) நீர் ஊற்றிக் கொண்டிருந்தார்கள். தண்ணீர் மேன்மேலும் இரத்தத்தை அதிகமாக்குவதையே கண்டபோது, ஃபாத்திமா(ரலி) பாயின் ஒரு பகுதியை எடுத்து வந்து (சாம்பலாகும் வரை) அதைச் கரித்து, அதனைக் காயத்தின் மீது அழுத்தி வைத்தார்கள். இரத்தம் (வருவது) நின்றுவிட்டது. அன்றைய (உஹுதுப் போர்) தினத்தில் நபி(ஸல்) அவர்களின் கீழ்ப்பல் உடைக்கப்பட்டது. மேலும், அவர்களின் முகம் காயப்படுத்தப்பட்டது. மேலும் (அவர்களின்) தலைக்கவசம் அவர்களின் தலையின் மீதே வைத்து நொறுக்கப்பட்டது.

ஹதீஸ் 4076. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

"ஒரு நபி எவனைக் கொன்றுவிட்டார்களோ அவன் மீது அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது. மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் முகத்தில் இரத்தக் காயம் ஏற்படுத்தியவன் மீதும் அல்லாஹ்வின் கோபம் மிகக் கடுமையாகிவிட்டது.

என இக்ரிமா (ரஹ்) அறிவித்தார்.

## “அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் அழைப்பை ஏற்றவர்கள்... (என்னும் 3:172-ம் இறைவசனம்)

ஹதீஸ் 4077. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்

“தமக்கு (ப் போரில்) படுகாயங்கள் எற்பட்ட பின்னரும் கூட அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் அழைப்பை அவர்கள் ஏற்றார்கள். நன்மை புரிந்து, தீமையிலிருந்து தம்மைக் காத்துக் கொண்ட இத்தகையோருக்கு மகத்தான பிரதிபலன் உண்டு“ என்னும் (திருக்குர்ஆன் 03:172 -வது) வசனத்தை (என் சிற்றன்னை) ஆயிஷா (ரலி) ஓதிவிட்டு என்னிடம், ‘என் சகோதரி மகனே! உன் தந்தை ஸுபைர் (ரலி) அவர்களும் (என் தந்தையும் உன் பாட்டனாருமான அபூ பக்ர் (ரலி) அவர்களும் (அந்த அழைப்பை ஏற்ற) அவர்களில் உள்ளவர்கள் தாம். உஹுத் நாளில் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்குக் காயங்கள் ஏற்பட்டபோது இணைவைப்பவர்கள் திரும்பிச் சென்றுவிட்டனர். அவர்கள் மீண்டும் திரும்பி வந்து விடுவார்களோ என்று நபி (ஸல்) அவர்கள் அஞ்சினார்கள். (அப்போது) ’அவர்களுக்குப் பின்னால் (அவர்களை அச்சுறுத்துவதற்காக அவர்களைத் துரத்திச்) செல்பவர்கள் யார்?’ என்று கேட்டார்கள். (உஹுதில் பங்கெடுத்த) நபித்தோழர்களில் எழுபது பேர் (அவர்களைத் துரத்தியடிக்க) முன்வந்தனர்“ என்று கூறினார்கள்.

அவர்களில் அபூ பக்ர் (ரலி) அவர்களும், ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களும் இருந்தனர்.

## உஹு த் நாளில் கொல்லப்பட்ட முஸ்லிம்கள்.

ஹம்ஸா இப்னு அபத்தில் முத்தலிப், யமான், அனஸ் இப்னு நள்ர், முஸ்அப் இப்னு உமைர் (ரலி) ஆகியோர் அவர்களில் அடங்குவர்.

ஹதீஸ் 4078. கதாதா (ரஹ்) அறிவித்தார்

அன்சாரிகளை விட, அதிக உயிர்த் தியாகிகள் கொண்ட, மறுமை நாளில் ஒளி மிகுந்த வேறெந்தக் குலத்தாரையும் அரபுக் குலங்களுக்கிடையே நாம் அறியவில்லை.

அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்

உஹுதுப் போரில் அன்சாரிகளில் எழுபது பேர் கொல்லப்பட்டனர். ’பிஃரு மஊனா’ போரின்போது எழுபது பேரும் யமாமா போரின்போது எழுபது பேரும் கொல்லப்பட்டனர். அறிவிப்பாளர் கத்தாதா (ரஹ்) கூறினார்:

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் ’பிஸரு மஊனாப்’ போர் நடந்தது. 149 பொய்யன் முஸைலிமாவின் மீதாண யமாமாப் போர் அபூ பக்ர் (ரலி) அவர்களின் (ஆட்சிக்) காலத்தில் நடந்தது.

ஹதீஸ் 4079. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

“உஹுதுப் போரில் (உயிர்த்தியாகிகளாகக்) கொல்லப்பட்டவர்களை இரண்டிரண்டு பேராக ஒரே துணியில் சேர்த்து வைத்து (க் கஃபனிட்டு) இவர்களில் குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார்?’ என்று நபி (ஸல்) அவர்கள் கேட்பார்கள். ஒருவர் சுட்டிக்காட்டப்பட்டதும் அவரின் உடலை உட்குழியில் முதலில் வைப்பார்கள். மேலும், ‘மறுமை நாளில் இவர்களுக்கு நானே சாட்சியாக்குவேன்“ என்று கூறிவிட்டு, அவர்களின் இரத்தத்துடனேயே அவர்களை அடக்கம் செய்யும்படி உத்தரவிட்டார்கள். அவர்களுக்காக நபி (ஸல்) அவர்கள் (ஜனாஸாத் தொழுகை) தொழவுமில்லை அவர்கள் நீராட்டப்படவுமில்லை.

ஹதீஸ் 4080. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவித்தார்

என் தந்தை (அப்துல்லாஹ் உஹுதுப் போரில்) கொல்லப்பட்டபோது நான் அழ ஆரம்பித்தேன். மேலும், அவரின் முகத்திலிருந்த துணியை விலக்க முனைந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்களின் தோழர்கள் என்னைத் தடுக்கத் தொடங்கினர். நபி(ஸல்) அவர்கள் (என்னைத்) தடுக்கவில்லை. மேலும் நபி(ஸல்) அவர்கள்,'அவருக்காக நீ அழவேண்டாம்... அல்லது அவருக்காக நீ ஏன் அழுகிறாய்?... ஜனாஸா (அந்த இடத்திலிருந்து) தூக்கப்படும் வரை, வானவர்கள் தங்கள் இறக்கைகளை விரித்து அவருக்கு நிழல் கொடுத்துக் கொண்டிருப்பார்கள்'' எஹதீஸ் 4081. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ஒரு கனவு கண்டேன். (அதில்) நான் ஒரு வாளை அசைத்தேன். அதன் முனை முறிந்துவிட்டது. உஹுதுப போரின்போது இறைநம்பிக்கையாளர்களுக்கு ஏற்பட்ட இழப்பை அது குறித்தது. பிறகு மீண்டுமொரு முறை அதை நான் அசைத்தேன். அது முன்பிருந்ததை விட மிக அழகாக மாறிவிட்டது. அது அல்லாஹ் (அதே உஹுதுப போரில்) கொணர்ந்த உறுதிப்பாட்டையும், (சிதறி ஓடிய) இறைநம்பிக்கையாளர்கள் (மீண்டும்) ஒன்று திரண்டதையும் குறித்தது. அந்தக் கனவில் நான் சில சாளை மாடுகளை (அவை அறுக்கப்படுவது போல்) கண்டேன். (உஹுதுப போரில் கொல்லப்பட்டவர்களுக்கு) அல்லாஹ் வழங்கிய அந்தஸ்து (அவர்கள் இவ்வுலகில் இருந்த நிலையை விட அவர்களுக்குச்) சிறந்தது ஆகும். எனவே, (அந்த மாடுகள்) உஹுத் நாளில் கொல்லப்பட்ட இறை நம்பிக்கையாளர்களைக் குறிப்பவையாகும்.

என அபூ மூஸா அஷ்அரீ(ரலி) அறிவித்தார். 153

ஹதீஸ் 4082. கப்பாப்(ரலி) அறிவித்தார்

நாங்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹிஜ்ரத் செய்தோம். எங்களுக்குரிய பிரதிபலன் அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது. எங்களில் சிலர் தமக்குரிய பிரதிபலனில் எதையுமே (இவ்வுலகத்தில்) அனுபவிக்காமல் சென்றுவிட்டனர். அவர்களில் ஒருவர் தாம், முஸ்அப் இப்னு உமைர்(ரலி). அவர் உஹுத் நாளில் கொல்லப்பட்டார். அவர் கோடுபோட்ட வண்ணத்துணி ஒன்றை மட்டுமேவிட்டுச் சென்றார். அவரின் தலையை நாங்கள் அதனால் மறைத்தால் அவரின் இரண்டு கால்கள் வெளியில் தெரிந்தன் கால்களை மறைத்தால் தலை வெளியில் தெரிந்தது. அப்போது எங்களிடம் நபி(ஸல்) அவர்கள்,'அவரின் தலையைத் துணியால் மறைத்துவிட்டு அவரின் மீது'இத்கிர்' புல்லையிடுங்கள்... அல்லது அவரின் கால் மீது'இத்கிர்' புல்லைப் போடுங்கள்..!"என்று கூறினார்கள்.

(உஹுதுப் போரில் பங்கெடுத்த) எங்களில் வேறு சிலரும் உள்ளனர். அவர்களின் (பிரதிபலன் இந்த உலம்லும்) கனிந்துவிட்டது. அதை அவர்கள் (இவ்வுலம்லும்) பறித்து (அனுபவித்து)க் கொண்டார்கள்.

"உஹு த் மலை நம்மை நேசிக்கிறது நாமும் அதனை நேசிக்கிறோம்."

இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுமைத்(ரலி) அவர்களும், அபூ ஹுமைத்(ரலி) அவர்களிடமிருந்து அப்பாஸ் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 4083. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்தார்

"இந்த (உஹுத்) மலை நம்மை நேசிக்கிறது. நாமும் அதனை நேசிக்கிறோம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 4084. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(கைபர் போரிலிருந்து நாங்கள் திரும்பி வந்து கொண்டிருந்த போது) உஹுத் (மலை) நபி(ஸல்) அவர்களுக்குத் தென்பட்டது. அப்போது அவர்கள், 'இந்த மலை நம்மை நேசிக்கிறது; நாமும் அதனை நேசிக்கிறோம். இறைவா! இப்ராஹீம்(அலை) அவர்கள் மக்காவைப் புனிதமானதாக அறிவித்தார்கள். நான் இரண்டு (கருங்கற்கள் நிறைந்த) மலைகளுக்கிடையிலுள்ள பகுதியை (மதீனாவை)ப் புனிதமானதாக அறிவிக்கிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4085. உக்பா பின் ஆமிர்(ரலி) அறிவித்தார்

ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து, இறந்தவர்களுக்காக (ஜனாஸா தொழுகை) தொழுகை நடத்தியதைப் போன்று உஹுதுப் போர் உயிர்த்தியாகிகளுக்காக (ஜனாஸா தொழுகை) தொழுகை நடத்தினார்கள். பிறகு மேடைக்கு (மிம்பருக்கு) வந்து, 'நிச்சயமாக நான் உங்களுக்காகக் காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சி ஆவேன். மேலும், நான் இப்போது (கவ்ஸர் எனும்) என்னுடைய தடாகத்தைக் காண்கிறேன். எனக்கு பூமியினுடைய கருவூலங்களின் திறவு கோல்கள்... அல்லது பூமியின் திறவு கோல்கள்... கொடுக்கப்பட்டுள்ளன. அல்லாஹ்வின் மீதாணையாக என(து இறப்பு)க்குப் பின்னால் நீங்கள் இணைவைப்பவர்களாக ஆம்விடுவீர்களோ என்று நான் பயப்படவில்லை ஆனால், (உலகத்திற்காக) நீங்கள் ஒருவரோடொருவர் (போட்டியிட்டுக் கொண்டு) மோதிக் கொள்வீர்களோ என்றே பயப்படுகிறேன்'' என்று கூறினார்கள்.

## ரஜீஉ, ரிஃல், தக்வான், பிஃரு மஊனா ஆகிய போர்களும் அளல், காரா குலத்தார் குறித்த செய்தியும் ஆஸிம் இப்னு ஸாபித்(ரலி), குபைப்(ரலி) மற்றும் அவர்களின் தோழர்கள் குறித்த செய்தியும்.

'ரஜீஉ' போர், உஹுதுப் போருக்குப் பின்னால் நடைபெற்றது' என ஆஸிம் இப்னு உமர்(ரஹ்) கூறினார்கள் என இப்னு இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4086. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (பத்துப் பேர் கொண்ட) உளவுப் படையொன்ற (ஓரிடத்திற்கு) அனுப்பினார்கள். உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களின் புதல்வர் ஆஸிமீன்(தாய் வழிப்)பாட்டனார் ஆஸிம் இப்னு ஸாபித்(ரலி) அவர்களை அப்படையினருக்குத் தலைவராக்கினார்கள். அவர்கள் (மதீனாவிலிருந்து புறப்பட்டு வந்து) மக்காவுக்கும் உஸ்ஃபானுக்கும் இடையிலுள்ள ('ஹத்தா' என்ற) இடத்தில் இருந்தபோது'ஹுதைல்' குலத்தைச் சேர்ந்த பனு லிஹ்யான் என்றழைக்கப்பட்ட கிளையினருக்கு அவர்களைப் பற்றித் தெரிவிக்கப்பட்டது. அவர்கள், அப்பெய்யும் வீரர்கள் சுமார் நூறு பேருடன் (ம்ளம்பி, உளவுப்படையினரைப் பிடிப்பதற்காக) அவர்களின் பாதச்சுவடுகளைப் பின்தொடர்ந்து வந்தனர். உளவுப்படையினர் இறங்கித் தங்கியிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனர். படையினர் மதீனாவிலிருந்து உணவாகக் கொண்டுவந்திருந்த பேரீச்சம் பழங்களின் கொட்டைகளை அங்கே கண்டனர். அப்போது'இது'யஸ்ரிப்' (மதீனா நகரின்) பேரீச்சம் பழம்'' என்று சொல்லிக் கொண்டனர். எனவே, உளவுப்படையினரின் பாதச்சுவடுகளைப் பின்தொடர்ந்து வந்து, இறுதியில் அவர்களை அடைந்தேவிட்டனர். ஆஸிம்(ரலி) அவர்களை அடைந்தேவிட்டனர். ஆஸிம்(ரலி) அவர்களும், அவர்களின் நண்பர்களும் இதை அறிந்தபோது (மலைப்பாங்கான) உயரமான ஓரிடத்தில் தஞ்சம் புகுந்தனர். அப்போது (துரத்தி வந்த) அந்தக் கிளையினர் அவர்களைச் சுற்றி வளைத்துக் கொண்டு அவர்களைப் பார்த்து, 'நீங்கள் எங்களிடம் இறங்கி வந்துவிட்டால், உங்களில் யாரையும் நாங்கள் கொலை செய்ய மாட்டோம் என்று உங்களக்கு உறுதிமொழியும் வாக்குறுதியும் தருகிறோம்'' என்று கூறினர். அப்போது ஆஸிமபின் ஸாபித்(ரலி), 'நான் ஓர் இறை மறுப்பாளனின் (வாக்குறுதியை நம்பிஅவனுடைய) பாதுகாப்பில் இறங்கிச் செல்ல மாட்டேன். இறைவா! எங்களைப்

பற்றிய செய்தியை உன் தூதருக்குத் தெரிவித்து விடு‘‘ என்று கூறினார்கள். அப்போது அக்கிளையினர் உளவுப்படையினருடன் சண்டையிட்டு ஆஸிம்(ரலி) அவர்கள உட்பட ஏழுபேரை அம்பெய்து கொன்றுவிட்டனர். இறுதியில் குபைப், ஸைத்(ரலி), மற்றொருவர் மட்டுமே எஞ்சியிருந்தனர். இம்மூவருக்கும் உறுதிமொழியும் வாக்குறுதியின் பேரில் இறங்கி வந்தனர். அவர்கள் (மூவரும்) ங்கள் கையில் கிடைத்தவுடன் (எதிரிகள்) தங்களின் அம்பின் நாணை அவிழ்த்து அதன் மூலம் அவர்களைப் பிணைத்தனர். (இதைக் கண்ட) அந்த மூன்றாம் மனிதர்,‘இது முதலாவது நம்பிக்கைத் துரோகம்!”என்று கூறி, அவர்களுடன் வர மறுத்துவிட்டார், எனவே, அவரை (அடித்து)த் துன்புறுத்தி தம்முடன் வரும்படி நிர்ப்பந்தித்தனர். ஆனால், அவர் உடன்படவில்லை. எனவே, அவரை அவர்கள் கொலைசெய்துவிட்டனர். பிறகு, குபைப்(ரலி) அவர்களையும், ஸைத் இப்னு தஸினா(ரலி) அவர்களையும் கொண்டு சென்று மக்காவில் விலைக்கு விற்றுவிட்டனர். ஹாரிஸ் இப்னு ஆமிர் இப்னி நவ்ஃபல் என்பவருடைய மக்கள், குபைப்(ரலி) அவர்களை (பழிதீர்ப்பதற்காக) விலைக்கு வாங்கிக் கொண்டனர். (ஏனெனில்,) குபைப்(ரலி) ஹாரிஸ் இப்னு ஆமிரை பத்ருபபோரின்போது கொன்றிருந்தார். ஹாரிஸின் மக்களிடத்தில் குபைப்(ரலி) (புனித மாதங்கள் முடீந்தது) அவரைக் கொல்ல அவர்கள் ஒன்று திரளும் (நாள் வரும) வரையில் கைதியாக இருந்தது வந்தார். (கொல்லப்படும நாள் நெருங்கியபோது தன்னுடைய மறைவான உறுப்புகளிலிருந்த முடிகளை) மழிப்பதற்காக ஹாரிஸின் மகள் ஒருத்தியிடம் சவரக்கத்தி ஒன்றை குபைப்(ரலி) இரவலாகக் கேட்டார். அவளும் அவருக்கு இரவலாகத் தந்தாள். (அதற்குப் பின் நடந்ததை அப்பெண்மணியே விளக்கிக்) கூறுகிறார்கள்: நான் என்னுடைய சிறிய மகனைக் கவனிக்காமல் இருந்துவிடவே, அவன் (விளையாடிக் கொண்டே) தவழ்ந்து குபைப் அவர்களிடம் வந்து சேர்ந்தான். அவனை குபைப் அவர்கள் தங்களின் மடியில் வைத்தார்கள். (இந்நிலையில்) அவரை நான் பார்த் பலமாக அதிர்ந்தேன். இதை அவர் புரிந்து கொண்டார். அவரின் கையில் கத்தி இருந்தது. அப்போது அவர்,‘இவனை நான் கொன்று விடுபவன் என்று அஞ்சுகிறாயா? அல்லாஹ்வின் நாட்டப்படி நான் அப்படிச் செய்பவன் அல்லன்‘‘ என்று கூறினார். குபைபை விடச் சிறந்த ஒரு கைதியை நான் (என் வாழ்நாளில்) கண்டதில்லை. ஒரு நாள் அவர் தம் கையிலிருந்த திராட்சைப் பழக் குலையிலிருந்து (பழங்களைப் பறித்து) சாப்பிட்டுக் கொண்டிருக்கக் கண்டேன். அந்நாளில் மக்காவில் எந்தப் பழவகையும் இருக்கவில்லை. மேலும், அப்போது அவர் இரும்புச் சங்கிலியால் பிணைக்கப்பட்டிருந்தார். (பிற்காலத்தில் அந்த நிகழ்ச்சியை நினைவு கூர்ந்து)‘‘ அது குபைபுக்கு அல்லாஹ் வழங்கிய உணவு‘‘ என்று அந்தப் பெண் கூறிவந்தார். (அவரைக் கொல்வதற்காக - மக்காவின்) புனித எல்லைக்கு வெளியே அவரை அவர்கள் கொண்டு வந்தபோது,‘இரண்டு ரக்அத்துகள் நான் தொழுது கொள்ள என்னை விடுங்கள்‘‘ என்று குபைப் கேட்டார். (அவர்களும் அனுமதிக்க, குபைப் இரண்டு ரக்அத்துகள் தொழுதார்.) பிறகு, அவர்களின் பக்கம் தருமபி,‘நான் மரணத்தைக் கண்டு அஞ்கிறேன் என்று நீங்கள் எண்ணி விடுவீர்கள் என்ற அச்சம் எனக்கில்லாமல் இருந்திருந்தால் நான் (தொழுகையை) அதிகமாக்கியிருப்பேன்‘‘ என்று கூறினார். அவர்தான் (இறைவழியில்) கொல்லப்படுவதற்கு முன் இரண்டு ரக்அத்கள் தொழுவதை முன்மாதிரியாக்கியவராவார். பிறகு’இறைவா! இவக்ளை நீ எண்ணி வைத்துக் (கொண்டு, தனித்தனியாக இவர்களைக் கவனித்துக்) கொள்வயாக!”என்று பிரார்த்தித்தார். அதன் பிறகு?’நான் முஸ்லீமாகக் கொல்லப்படுமபோது எதைப் பற்றியும் நான் பொருட்படுத்தமாட்டேன். எந்த இடத்தில் நான்இறந்தாலும் இறைவனுக்காகவே நான் கொல்லப்படுகிறேன் (என்பதில் எனக்கு மகிழ்ச்சியே). நான் கொலையுறுவது அல்லாஹ்வின் திருப்தியைப் பெறுவதற்காகத் தான் எனும்போது, அவன் நாடினால் என்னுடைய துண்டிக்கப்பட்ட உறுப்புகளின் இணைப்புகளின் மீது தன் அருள்வளத்தைப் பொழிவான்‘‘ என்று (கவிபாடிக்) கூறினார்கள்.

பிறகு, உக்பா இப்னு ஹாரிஸ் என்பவன் குபைப்(ரலி) அவர்களிடம் வந்து, அவர்களைக் கொன்றுவிட்டான். மேலும், (ஆஸிம் இப்னு ஸாபித்(ரலி) கொல்லப்பட்டுவிட்ட செய்தி குறைஷிகளுக்குக் கிடைத்தபோது அவர்கள் அவரை அடையாளம் கண்டு கொள்வதற்காக அவரின் உடலில் ஓர் உறுப்பை எடுத்து வரும்படி ஆளனுப்பினார்கள். (ஏனெனில்,) ஆஸிம்(ரலி) பத்ருப் போரின்போது அவர்களின் தலைவர்களில் ஒருவரை கொலை செய்திருந்தார். (அவரின் உடலின் ஒரு முக்கிய உறுப்பை வெட்ட போன போது) ஆஸிம்(ரலி) அவர்களுக்கு மேல் (அவர்களைப் பாதுகாக்கும் நோக்கில்) அல்லாஹ் மேகத்தைப் போன்று ஆண் தேனீக்களை அனுப்பினான். குறைஷிகளின் தூதர்களிடமிருந்து ஆஸிம்(ரலி) அவர்களை (சூழ்ந்து கொண்டு) அவை பாதுகாத்தன. எனவே, அவரிடமிருந்து எதையும் எடுக்க அவர்களால் இயலவில்லை.

ஹதீஸ் 4087. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் -ரலி அவர்கள் அறிவித்தார்

அபூ சிர்வஆ' (உக்பா இப்னு ஹாரிஸ்) என்பவனே குபைப்(ரலி) அவர்களைக் கொன்றான்.

ஹதீஸ் 4088. அனஸ் இப்னு மாலிக் - ரலி அவர்கள் கூறியாவது:

நபி(ஸல்) அவர்கள் எழுபது பேர்களை ஒரு தேவைக்காக அனுப்பி வைத்தார்கள். அவர்கள்'குர்ராஃ' (திருக்குர்ஆனை நன்கறிந்தவர்கள்) என்று அழைக்கப்பட்டனர். அப்போது பனு சுலைம் குலத்தைச் சேர்ந்த ரிஃல் மற்றும் தக்வான் ஆகிய இரண்டு கூட்டத்தார்,'பிஸரு மஊனா' என்றழைக்கப்படும் ஒரு கிணற்றுக்கு அருகில் அவர்களை இடைமறித்தனர். அப்போது அந்த நபித்தோழர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! (உங்களிடம் போரிடுவதற்காக) உங்களை நாடி நாங்கள் வரவில்லை. நபி(ஸல்) அவர்களின் ஒரு தேவைக்காகவே நாங்கள் சென்று கொண்டிருக்கிறோம்'' என்று கூறினர். ஆயினும், அவர்கள் அந்த நபித் தோழர்களைக் கொன்றுவிட்டனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் அவர்களுக்கெதிராக ஒரு மாத காலம் அதிகாலைத் தொழுகையில் பிரார்த்தித்தார்கள். இதுவே (தொழுகையில்)'குனூத்' (என்னும் துஆ ஓதுவ)தின் துவக்கமாகும். நாங்கள் அதற்கு முன்'குனூத்' ஓதுபவர்களாக இருக்கவில்லை.

அறிவிப்பாளர் அப்துல் அஸீஸ் இப்னு ஸுஹைப்(ரஹ்) கூறினார்:

ஒருவர் அனஸ்(ரலி) அவர்களிடம், குனூத் குறித்து,'அது ருகூவிற்குப் பின்பா? அல்லது கிராஅத் ஓதி முடித்த பின்பா? (எப்போது அதை ஓத வேண்டும்)'' என்று கேட்டதற்கு'அல்ல் கிராஅத் ஓதி முடித்த பின்புதான்'' என்று அனஸ்(ரலி) பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4089. அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ஒரு மாதம் (ஃபஜ்ர் தொழுகையில்) ருகூவிற்குப் பின்னால் அரபுக் குலத்தினர் பலருக்கெதிராகப் பிரார்த்தித்து'குனூத்' (என்னும் சிறப்பு துஆ) ஓதினார்கள்.

ஹதீஸ் 4090. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

ரிஃல், தக்வான், உஸய்யா மற்றும் பனு லிஹ்யான் குலத்தினர் (வந்து தங்களின்) பகைவர்களுக்கு எதிராக (படை தந்து) உதவும் படி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கோரினர். அப்போது அவர்களுக்கு அன்சாரிகளில் எழுபது பேர்களை அனுப்பித் தந்து நபி(ஸல்) அவர்கள் உதவினார்கள். அந்தக் காலத்தில் அவர்களை (அந்த எழுபது பேர்களை) நாங்கள்'குர்ராஃ - திருக்குர்ஆனை நன்கறிந்தவர்கள்' என்று பெயரிட்டு அழைத்து வந்தோம். அவர்கள் பகலில் (பிழைப்பிற்காக) விறகு கேசகரிப்பவர்களாகவும் இரவில் தொழககூடியவர்களாகவும் இருந்து வந்தனர். இவர்கள் (பயணம் செய்து)'பிஃரு மஊனா' என்னுமிடத்தை அடைந்தபோது (பனு சுலைம் குலத்தைச் சேர்ந்த) அவர்கள், இவர்களை வஞ்சித்துக கொன்றுவிட்டனர். இச்செய்தி நபி(ஸல்)

அவர்களை எட்டியபோது ஒரு மாத காலம் சுப்ஹுத் தொழுகையில் அரபுக் குலங்களான ரிஃல், தக்வான், உஸய்யா மற்றும் பனு லிஹ்யான் குலத்தினருக்கெதிராக பிரார்தயீதத்து'குனூத்' (எனும் சிறப்பு துஆ) ஓதினார்கள். இவர்கள் குறித்து (அருளப்பட்டிருந்த) குர்ஆன் (வசனமொன்றை) ஓதி வந்தோம். பின்னாளில் அது (இறைவனால்) நீக்கப்பட்டுவிட்டது.'நாங்கள் எங்கள் இறைவனிடம் சென்று சேர்ந்து விட்டோம். அவன் எங்களைக் குறித்து திருப்தியடைந்துவிட்டான் எங்களை அவன் திருப்தியுறச் செய்தான்' என்று எங்களைப் பற்றி எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்'' என்பதே அந்த வசனமாகும்.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து கத்தாதா(ரஹ்) கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு மாத காலம் வரையில் சுப்ஹுத் தொழுகையில் அரபுக் குலங்களைச் சேர்ந்த ரிஃல், தக்வான், உஸய்யா, மற்றும் பனு லிஹ்யான் கூட்டத்தினருக்கு எதிராக'குனூத்' பிரார்த்தனை புரிந்தார்கள்.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து இதே கருத்தில் அறிவிக்கப்படும் இன்னோர் அறிவிப்பில்,'அன்சாரிகளான அந்த எழுபது பேரும் பிஃரு மஊனாவில் கொல்லப்பட்டார்கள்'' என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 4091. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்தார்

(என் தாயார்) உம்மு சுலைம் அவர்களின் சகோதரர், என் தாய் மாமா (ஹராம் இப்னு மில்ஹான் (ரலி) அவர்களை (குர்ஆனை நன்கறிந்தவர்களான எழுபது) பயணிகளில் ஒருவராக நபி(ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். இணைவைப்பவர்களின் தலைவம் ஆமிர் இப்னு துஃபைல், பின்வரும் மூன்று விஷயங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும்படி (நபி - ஸல் - அவர்களிடம்) கூறினான்:

கிராமப்புற மக்கள் உங்களுக்குச் சொந்தம் (அவர்களுக்கு ஆட்சியாளராக நீங்கள் இருங்கள்) நகர்ப் புற மக்கள் எனக்குச் சொந்தம். (நான் அவர்களுக்கு ஆட்சியாளராக இருப்பேன்.)

அல்லது நான் உங்களுக்கு கலீஃபாவாக -பிரதிநிதியாக இருப்பேன்.

அல்லது ஆயிரக்கணக்கான கத்ஃபான் குலத்தனிருடன் (வந்து) உங்களிடம் போர் தெடுப்பேன்'' என்று கூறினான்.

பிறகு இன்னாரின் தாய் வீட்டில்'ஆமிர்' கொள்ளை நோயினால் பீடிக்கப்பட்டான். 165 அப்போது அவன்,'இன்னாரின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணின் வீட்டில் வாலிப ஒட்டகத்திற்கு ஏற்படும் கொள்ளை நோய் போன்று (எனக்கும்) ஏற்பட்டுவிட்டது. எனவே, என்னுடைய குதிரையை என்னிடம் கொண்டு வாருங்கள்'' என்று கூறினான். பிறகு அவன் தன்னுடைய குதிரையின் முதுகின் மீதே இறந்தான்.

(என் தாய்) உம்மு சுலைம் அவர்களின் சகோதரர் ஹராம் இப்னு மில்ஹான்(ரலி) அவர்களும், கால் ஊனமுற்றவர் ஒருவரும், இன்னாரின் குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவரும் 166 (நபி - ஸல் அவர்களின் ஆணையின் பேரில் பனு ஆமிர் குலத்தாரை நோக்கி) நடந்தார்கள். அப்போது ஹராம் அவர்கள்,'(தம்மிரு சகாக்களை நோக்கி)'நீங்கள் இருவரும் (எனக்கு) அருமிலேயே இருங்கள். நான் பனு ஆமிர் குலத்தாரிடம் செல்கிறேன். அவர்கள் எனக்குப் பாதுகாப்பளித்தால் நீங்கள் (அப்படியே) இருங்கள். என்னை அவர்கள் கொன்றுவிட்டால் நீங்கள் உங்கள் சகாக்களிடம் சென்று (தெரிவித்து) விடுங்கள்'' என்று கூறினார்கள். (பிறகு, பனு ஆமிர் குலத்தாரிடம் சென்று, அவர்களை நோக்கி,)'எனக்குப் பாதுகாப்பளித்தால் நீங்கள் (அப்படியே)

இருங்கள். என்னை அவர்கள் கொன்றுவிட்டால் நீங்கள் உங்கள் சகாக்களிடம் சென்று (தெரிவித்து) விடுங்கள்'' என்று கூறினார்கள். (பிறகு, பனு ஆமிர் குலத்தாரிடம் சென்று, அவர்களை நோக்கி,)'எனக்குப் பாதுகாப்புத் தருவீர்களா? இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தூதுச் செய்தியைத் தெரிவிக்கிறேன்'' என்று கேட்டுவிட்டு அவர்களிடம் (அச்செய்தியைப்) பேசலானார்கள். அப்போது அக்குலத்தார் ஒருவனுக்கு சைகை செய்ய, அவன் ஹராம்(ரலி) அவர்களுக்குப் பின்னால் வந்து அவர்களை (ஈட்டியால்) குத்திவிட்டான். அறிவிப்பாளர் ஹம்மாம் இப்னு யஹ்யா(ரஹ்) கூறினார்:'ஈட்டியால் குத்தி (மறுபக்கம் வரை) செலுத்தினான்' என்று கூறினார்கள் என எண்ணுகிறேன். உடனே ஹராம் அவர்கள்,'அல்லாஹு அக்பர் அல்லாஹ் மிகப்பெரியவன், கஅபாவின் அதிபதி மீதாணையாக! நான் வெற்றி பெற்று விட்டேன்'' என்று கூறினார்கள். பிறகு அன்னாரின் உயிர் பிரிந்தது. கால் ஊனமுற்றவரைத் தவிர மற்ற அனைவரும் கொல்லப்பட்டனர். அந்த நேரத்தில் அந்த ஊனமுற்றவர் மலை உச்சியில் இருந்தார். பிறகு, (இச் சம்பவத்தில் உயிர்நீத்தவர்கள் தொடர்பாக) அல்லாஹ் எங்களின் மீது (ஒரு வசனத்தை) அருளினான். பிறகு அந்த வசனம் (அல்லாஹ்வின் ஆணையின்படி) நீக்கப்பட்டுவிட்டது.'நாங்கள் எங்கள் இறைவனிடம் சென்று சேர்ந்து விட்டோம். அவன் எங்களைக் குறித்து திருப்தியடைந்தான். (அருள் வளங்களை அள்ளித் தந்து) எங்களை அவன் திருப்தியடையச் செய்தான்'' (என்பதே அந்த வசனம்). எனவே, நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் விரோதமாக நடந்து கொண்ட ரி..ல், தக்வான், பனு லிஹ்யான், மற்றும் உஸய்யா குலத்தாருக்கெதிராக முப்பது நாள் காலை(த் தொழுகை)யில் பிரார்த்தனை புரிந்தார்கள்.

ஹதீஸ் 4092. அனஸ்(ரலி) அறிவித்தார்

'பி..ரு மஊனா' சம்பவத்தின்போது, என்னுடைய தாய்மாமாவாகிய ஹராம் இப்னு மில்ஹான்(ரலி) (ஈட்டியால்) குத்தப்பட்ட சமயத்தில், தம் காயத்திலிருந்து - இதோ இப்படி - ரத்தத்தை அள்ளி தம் முகத்தின் மீதும் தலையின் மீதும் தெளித்துக் கொண்டு,'கஅபாவின் அதிபதி மீதாணையாக! நான் வெற்றி பெற்று விட்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4093. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(மக்கா இறைமறுப்பாளர்கள் கொடுத்த) தொல்லை கடுமையானபோது (மதீனாவுக்கு ஹிஜ்ரத்) புறப்பட அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'(சற்று) பொறுங்கள்'' என்று கூறினார்கள். உடனே அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! (அல்லாஹ்வின் தரப்பிலிருந்து நீங்கள் ஹிஜ்ரத் செல்ல) தங்களுக்கு அனுமதி வழங்கப்படுவதை எதிர்பார்க்கிறீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், (''ஆம்'') நான அதனை நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறேன்'' என்று கூறிவந்தார்கள்.

ஆயிஷா(ரலி) கூறினார்: அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். பின்பு ஒரு நாள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள், லுஹர் நேரத்தில் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் வந்து அவர்களை அழைத்தார்கள். மேலும்'(அபூ பக்ர் அவர்களே! நான் ரகசியம் பேசவேண்டும்) உங்களுடன் இருப்பவர்களை வெளியே செல்லும்படிக் கூறுங்கள்'' என்றும் கூறினார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி) (என்னுடனிருக்கும்) இந்த இருவரும் என்னிரு பெண்மக்கள் (ஆயிஷாவும், அஸ்மாவும் தாம்'' என்று பதிலளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (ஹிஜ்ரத் செய்து, மக்காவிலிருந்து) புறப்பட எனக்க அனுமதி வழங்கப்பட்டுவிட்டது. உங்களுக்குத் தெரிந்ததா?' என்று கேட்டார்கள். அதற்கு,'(ஆம்) உடன் வருவதை விரும்புகிறேன்'' என்று கூறினார்கள்.'இறைத்தூதர் அவர்களே! என்னிடம் இரண்டு ஒட்டகங்கள் இருக்கின்றன. அவற்றை

முன்கூட்டியே (ஹிஜ்ரத்) புறப்பட்டுச் செல்வதற்கென ஆயத்தமாக்கி வைத்துள்ளேன்‘‘ என்று அபூ பக்ர்(ரலி) கூறினார். பின்பு, அவற்றில் ஒன்றை இறைத்தூதர்(ஸல்) அவர்கள். பின்பு, அவற்றில் ஒன்றை நபி(ஸல்) அவர்களுக்குக் கொடுத்தார்கள். அந்த ஒட்டகத்திற்கு’ஜத்ஆ’ என்று பெயர். பிறகு இருவரும் ஒளிந்து கொண்டனர். ஆமிர் இப்னு ஃபுஹைரா, என் தாய்வழிச் சகோதரர் துஃபைல் இப்னு அப்தில்லாஹ் இப்னி சக்பரா அவர்களுக்கு அடிமையாக இருந்தார். மேலும் (என் தந்தை) அபூ பக்ர் அவர்களிடம் பால் தரும் ஒட்டகம் ஒன்றிருந்தது. ஆமிர் இப்னு ஃபுஹைரா அந்த ஒட்டகத்தை மக்காவாசிகளுடன் மதிய வேளையிலும் காலை வேளையிலும் ஓட்டிச் செல்லக் கூடியவராக இருந்தார். காலை நேரத்தில் மக்காவாசிகளுடன் இருக்கும் அவர், இரவின் கடைசி நேரத்தில் நபி(ஸல்) அவர்களிடமும் அபூ பக்ர்(ரலி) அவர்களிடமும் (அவர்களுக்கு ஒட்டகப் பால் தருவதற்காகச்) செல்வார். பிறகு அந்த ஒட்டகத்தை (மேய்ப்பதற்கு) ஓட்டிச் செல்வார். ஆனால், இடையர்களில் யாருக்கும் இது தெரியாது. நபி(ஸல்) அவர்கள் (குகையிலிருந்து அபூ பக்ருடன்) புறப்பட்டபோது அவ்விருவருடன் ஆமிர் இப்னு ஃபுஹைராகவும் புறப்பட்டார். மதீனா போய்ச் சேரும் வரையில் அவர்கள் இருவரும் (முறைமாற்றி) ஆமிரைத் தமக்குப் பின் அமர்த்திக் கொண்டனர். (பின்பு) பிஃரு மஊனா நாளில் ஆமிர் இப்னு ஃபுஹைரா கொல்லப்பட்டார்.

உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

பிஃரு மஊனாவில் இருந்த (குர்ஆனை நன்கறிந்த)வர்கள் கொல்லப்பட்டு அம்ர் இப்னு உமய்யா அள்ளம்ரீ(ரலி) கைது செய்யப்பட்டபோது அன்னாரைப் பார்த்து ஆமிர் இப்னு துஃபைல், கொல்லப்பட்டுக் கிடந்த (உயிர்த் தியாகிகளில் ஒருவரைச் சுட்டிக்காட்டி,‘இவர் யார்?’ என்று கேட்டான். அதற்கு அம்ர் இப்னு உமய்யா(ரலி)அவர்கள்,‘இவர் ஆமிர் இப்னு ஃபுஹைரா‘‘ என்று கூறினார். அதற்கு ஆமிர் இப்னு துஃபைல்’இவர் கொல்லப்பட்ட பின்பு இவர் வானத்திற்கு உயர்த்தப்படுவதை கண்டேன். எந்த அளவுக்கென்றால் வானத்தை நான் நோக்கியபோது, வானத்திற்கும் பூமிக்கும் இடையில் அவர் இருந்தார். பிறகு அவர் (பூமியில்) வைக்கப்பட்டார்‘‘ என்று கூறினான்.

(கொல்லப்பட்ட) அவர்களின் செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு (ஜிப்ரீல் - அலை - மூலம்) எட்டியது. அவர்கள் கொல்லப்பட்ட செய்தியினைத் தம் தோழர்களுக்கு (பின்வருமாறு) நபி(ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள். உங்கள் தோழர்கள் கொல்லப்பட்டுவிட்டனர். அவர்கள் தங்கள் இறைவனிடம்,‘இறைவா! நாங்கள் உன்னைக் குறித்து திருப்தி கொண்டோம். நீ எங்களைக் குறித்து திருப்தி கொண்டாய் எங்களைப் பற்றிய இச்செய்தியை எங்கள் சகோதரர்களுக்கு தெரிவித்துவிடுவாயாக!”என்று கூறினர். எனவே, இறைவன் அவர்களைப் பற்றிய செய்தியை நமக்கு அறிவித்தான்.

அறிவிப்பாளர் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்:

(பிஃரு மஊனா நிகழ்ச்சி நடந்த) அந்நாளில் அவர்களில் உர்வா இப்னு அஸ்மா இப்னி ஸல்த்(ரலி) அவர்களும் கொல்லப்பட்டார்கள். எனவேதான், (ஸுபைர் - ரலி - அவர்களின் மகனாகிய) எனக்கு அவரின் பெயர் சூட்டப்பட்டது. (அன்று) முன்திர் இப்னு அம்ர்(ரலி) அவர்களும் கொல்லப்பட்டார்கள். எனவேதான், (என் சகோதரர் முன்திர் இப்னு ஸுபைருக்கு)’முன்திர்’ எனப் பெயரிடப்பட்டது.

ஹதீஸ் 4094. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு மாத காலம் (தொழுகையில்) ருகூவிற்குப் பின்னால்’குனூத்’ (என்னும் சிறப்பு துஆ) ஓதினார்கள். (அதில்) ரிஅல், தக்வான் குலத்தாருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.

மேலும்,'உஸய்யா குலத்தார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டனர்'' என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 4095. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

பிஃரு மஊனாவில் தம் தோழர்களைக் கொலை செய்தவர்களுக்கெதிராக நபி(ஸல்) அவர்கள் முப்பது நாள் காலை(த் தொழுகை)யில் பிரார்த்தித்தார்கள். அப்போது, அல்லாஹ்வுக்கம் அவனுடைய தூதருக்கம் மாறு செய்த உஸய்யா, ரிஅல், தக்வான், (பனு) லிஹ்யான் குலத்தாருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.

அனஸ்(ரலி) கூறினார்:

எனவே, இறைவன் தன்னுடைய தூதர்(ஸல்) அவர்களுக்கு பிஃரு மஊனாவில் கொல்லப்பட்டவர்களின் விஷயத்தில் குர்ஆன் வசனம் ஒன்றை அருளினான். அதை நாங்கள் ஓதிவந்தோம். பின்னர் (இறைவனால் அந்த வசனம்) நீக்கப்பட்டுவிட்டது.

(அந்த வசனம் இதுதான்:)'நாங்கள் எங்கள் இறைவனைச் சந்தித்து விட்டோம். அவன் எங்களைக் குறித்துத் திருப்தியடைந்தான். நாங்களும் அவனைக் குறித்துத் திருப்தியடைந்தோம்' என்று எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்.

ஹதீஸ் 4096. ஆஸிம் அல் அஹ்வல்(ரஹ்) அறிவித்தார்

நான், அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் தொழுகையில் குனூத் (என்னும் சிறப்பு துஆ நபிகளார் காலத்தில் இருந்ததா என்பது) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆம்'' என்று பதிலளித்தார்கள். உடனே நான்,'ருகூவிற்கு முன்பா? அல்லது பின்பா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ருகூஉவிற்கு முன்புதான்'' என்று பதிலளித்தார்கள். உடனே நான்,'தாங்கள் ருகூவிற்குப் பின்னால் தான் என்று சொன்னதாக இன்னார் எனக்குத் தெரிவித்தாரே'' என்று கேட்டேன். அதற்கு'அவர் தவறாகக் கூறினார். நபி(ஸல்) அவர்கள் ருகூவிற்குப் பிறகு(ம் கூட) ஒரு மாத காலம் தான் குனூத் ஓதினார்கள். (அது எப்போது நடந்ததென்றால்) நபி(ஸல்) அவர்கள்'குர்ரா திருக்குர்ஆனை நன்கறிந்தவர்கள்' என்று கூறப்பட்டு வந்த சிலரை - அவர்கள் எழுபது பேர் ஆவர் - இணைவைப்பவர்கள் சிலரிடம் அனுப்பி வைத்தார்கள். இவர்களின் தரப்பிலிருந்து நபி(ஸல்) அவர்களுக்கும் இவர்களுக்கும் இடையே (பரஸ்பரப் பாதுகாப்பு) ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தது. (இவ்வாறு) அல்லாஹ்வின் தூதருடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்த இவர்களின் கையோங்கி (அந்த 70 பேர்களையும் கொன்று)விட்டனர். எனவேதான், அவர்களுக்கெதிராக ஒரு மாத காலம் ருகூவிற்குப் பின்பு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'குனூத் ஓதினார்கள்'' என்று அனஸ்(ரலி) பதிலளித்தார்கள்.

## அகழ்ப்போர் - இதுவே அஹ்ஸாப் போராகும்.

இது (ஹிஜ்ரி) நான்காம் ஆண்டு ஷவ்வால் மாதம் நடைபெற்றதென மூஸா இப்னு உக்பா(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4097. இப்னு உமர்(ரலி) கூறியதவது:

உஹுதுப் போரின்போது (படை வீரர்களைப் பார்வையிட்டு ஒழுங்குப்படுத்திக் கொண்டிருந்த) நபி(ஸல்) அவர்களிடம் நானாக முன்சென்று (என்னைப் படையில் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டேன். அப்போது எனக்குப் பதினான்கு வயது எனவே, என்னை நபி(ஸல்) அவர்கள் அனுமதிக்கவில்லை. பிறகு (அடுத்த ஆண்டு) அகழ்ப்போரின்போது நானாக முன்சென்று கேட்டேன். அப்போது எனக்கு வயது பதினைந்து. எனவே, என்னை அனுமதித்தார்கள்.

ஹதீஸ் 4098. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

அகழ்ப்போர் சமயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நாங்கள் இருந்தோம். நபித்தோழர்கள் அகழ் தோண்டிக் கொண்டிருந்தனர். நாங்கள் எங்கள் தோள் மீது மண் சுமந்து கொண்டிருந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இறைவா! மறுமை வாழ்வைத் தவிர வேறு (நிரந்தர) வாழ்வு கிடையாது. எனவே, (அதற்காக உழைக்கும்) முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் மன்னிப்பருள்வாயாக!"என்று (பாடிய படி) கூறினார்கள்.

ஹதீஸ் 4099. அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அகழ் (வெட்டும் பணியைப் பார்வையிடுவதற்காக அந்த இடத்தை) நோக்கிப் புறப்பட்டார்கள். அப்போது குளிரான காலை நேரத்தில் முஹாஜிர்களும் அன்சாரிகளும் (அகழ்) தோண்டிக் கொண்டிருந்தனர். அவர்களுக்காக அந்தப் பணியைச் செய்வதற்கு அவர்களிடம் அடிமை (ஊழியர்)கள் எவரும் இருக்கவில்லை. அவர்கள் படும் பாட்டையும், பசியையும் கண்டபோது'இறைவா! நிச்சயமாக (நிலையான) வாழ்க்கை என்பது மறுமை வாழ்க்கையே. எனவே, அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் மன்னிப்பு வழங்குவாயாக!"என்று நபி(ஸல்) அவர்கள் (பாடிய வண்ணம்) கூறினார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு பதிலளிக்கும் விதத்தில் அவர்கள், நாங்கள் வாழும் காலமெல்லாம் அறப்போரில் ஈடுபடுவோம் என முஹம்மத்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி வழங்கியுள்ளோம்'' என்று கூறினர்.

ஹதீஸ் 4100. அனஸ்(ரலி) அறிவித்தார்

முஹாஜிர்களும், அன்சாரிகளும் மதீனாவைச் சுற்றிலும் அகழ் தோண்ட ஆரம்பித்தனர். அப்போது தம் முதுகுகளின் மீது மண் எடுத்துச் சென்ற வண்ணம்'நாங்கள் வாழும் காலமெல்லாம் இஸ்லாத்தில் நீடித்திருப்போம்' என முஹம்மத்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி வழங்கியுள்ளோம்'' என்று (பாடியபடி) கூறிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு பதிலளிக்கும் விதத்தில் நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! மறுமையின் நன்மையைத் தவிர வேறு நன்மை எதுவுமில்லை. எனவே, (மறுமையின் நன்மையைப் பெற்றுக் கொள்வதற்காக உழைக்கும்) அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் நீ அருள்வளம் புரிவாயாக!"என்று (பாடலிலேயே) கூறினார்கள்.

அனஸ்(ரலி) கூறினார்: (அகழ் தோண்டிக் கொண்டிருக்கும்) அவர்களுக்கு என்னுடைய ஒரு கையளவு வாற்கோதுமை கொண்டு வரப்பட்டு, கெட்டுப் போன கொழுப்புடன் சேர்த்துச் சமைக்கப்பட்டு அந்த மக்களுக்கு முன் வைக்கப்படும். அப்போது அவர்கள் எல்லாரும் பசியுடன் இருப்பார்கள். அந்தக் கெட்டுப்போன கொழுப்பு நாற்றமடித்தபடி தொண்டையிலேயே சிக்கிக் கொள்ளும்.

ஹதீஸ் 4101. அய்மன் அல்ஹபஷீ(ரஹ்) அறிவித்தார்

நான் ஜாபிர்(ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் (பின் வருமாறு) கூறினார்கள்: நாங்கள் அகழ்ப் போரின்போது அகழ் தோண்டிக் கொண்டிருந்தோம். அப்போது கெட்டியான பாறாங்கல்லொன்று வெளிப்பட்டது. (அதை எவ்வளவோ முயன்றும் எங்களால் உடைக்க முடியவில்லை. உடனே இதுப பற்றித் தெரிவிக்க) நபி(ஸல்), அவர்களிடம் சென்று,'இதோ ஒரு பாறாங்கல் அகழில் காணப்படுகிறது'' என்று கூறினோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நான் இறங்கிப் பார்க்கிறேன்'' என்று கூறிவிட்டு எழுந்தார்கள். அப்போது அவர்களின் வயிற்றில் ஒரு கல் கட்டப்பட்டிருந்தது. (ஏனெனில்), நாங்கள் மூன்று நாள்கள் எதையும் உண்ணாமலிருந்தோம். பிறகு நபி(ஸல்) அவர்கள் குத்தாலி (ைஉமயஒந) எடுத்து பாறை மீது அடித்தார்கள். அது குறுமணலாக மாறியது. அப்போது நான்,'இறைத்தூதர் அவர்களே! வீடு வரை செல்ல அனுமதியுங்கள்'' என்று

கேட்டேன். (அவர்கள் எனக்கு அனுமதி வழங்கினார்கள். பிறகு, நான் வீட்டுக்குச் சென்று) என் மனைவி (சுஹைலா பின்த் மஸ்ஊத்) இடம்,'நபி(ஸல்) அவர்கள் பசியோடிருப்பதை பார்த்தேன். அதைப் பார்த்துக்கொண்டு என்னால் பொறுத்திருக்க முடியவில்லை. உன்னிடம் ஏதேனும் (உணவு) இருக்கிறதா?' என்று கேட்டேன். அதற்கு அவள்,'என்னிடம் சிறிதளவு கோதுமையும் பெட்டையாட்டுக் குட்டி ஒன்றும் உள்ளது'' என்று கூறினாள். உடனே நான் அந்த ஆட்டுக் குட்டியை அறுத்தேன். என் மனைவி கோதுமையை அரைத்தாள். பிறகு நாங்கள் இறைச்சியை சட்டியிலிட்டோம். குழைத்த மாவு இளம் (பக்குவ நிலைக்கு) வந்தது. மூன்று கற்களலானா அடுப்புக்கு மேல் சட்டியிருந்தது. அது முழுமையாக வெந்து விடும் நிலையிலிருந்தது. இந்த நிலையில் நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன்.'என்னிடம் கொஞ்சம் உணவு இருக்கிறது. இறைத்தூதர் அவர்களே! நீங்களும் (உங்களுடன்) இன்னும் ஒருவர்... அல்லது இருவர் வாருங்கள்'' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,'(உன்னிடம்) எவ்வளவு உணவு இருக்கிறது?' என்று கேட்டார்கள். அவர்களுக்கு அதை (அதன் அளவை)க் கூறினேன்.'இதுவே அதிகம் சிறந்ததும் கூட'' என்று கூறினார்கள். பிறகு நபி அவர்கள்,'நான் வரும் வரையில் (அடுப்பிலிருந்து) சட்டியை இறக்க வேண்டாம் சட்டியிலிருந்து ரொட்டியையும் இறக்க வேண்டாம் என்று நீ உன் மனைவியிடம் சொல்'' என்று கூறினார்கள். பிறகு (அங்கிருந்த தம் தோழர்களிடம்) நபி(ஸல்) அவர்கள்'(எல்லாரும்) எழுந்திருங்கள்'' என்று கூறினார்கள். உடனே முஹாஜிர்களும் அன்சாரிகளும் எழுந்தனர். நான் என் மனைவியிடம் சென்றபோது,'அடப்பாவமே! நபி(ஸல்) அவர்கள் தம்மோடு இருக்கும் முஹாஜிர்களுடனும் அன்சாரிகளுடனும் வருகிறார்கள்'' என்று கூறினேன். உடனே என் மனைவி'(உணவின் அளவு குறித்து) உங்களிடம் கேட்டார்களா?' என்று வினவியதற்கு நான்,'ஆம்'' என்று பதிலளித்தேன். (நபி - ஸல் - அவர்கள் தம் தோழர்களுடன் வந்து சேர்ந்து,)'(வீட்டிற்குள்) முண்டியடிக்காமல் நுழையுங்கள்'' என்று கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் ரொட்டியைப் பிய்த்து அதன் மீது இறைச்சியை வைத்தார்கள். அதிலிருந்து எடுத்தவுடன் சட்டியையும் அடுப்பையும் மூடி வைத்தார்கள். தம் தோழர்களுக்கு அருகில் அதை வைத்தார்கள். பிறகு (சட்டியிலிருந்து இறைச்சியை) எடுத்து (தம் தோழர்களுக்கு)க் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ரொட்டியைப் பிய்த்தபடியும் (பாத்திரத்திலிருந்து இறைச்சியை எடுத்து (ரொட்டியின் மீது வைத்து)க் கொடுத்தபடியும் இருந்தார்கள். அவர்கள் வயிறு நிரம்ப உண்டனர். இறுதியில் சிறிது எஞ்சியது. பிறகு நபி(ஸல்) அவர்கள் (ஜாபிர் அவர்களின் மனைவியை நோக்கி),'இதை நீயும் சாப்பிடு அன்பளிப்பும் செய். ஏனெனில், மக்கள் பசியோடுள்ளனர்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4102. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

(போருக்காக) அகழ் தோண்டப்பட்டுக் கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்களின் வயிறு (பசியினால்) மிகவும் ஒட்டியிருப்பதைக் கண்டேன். உடனே நான் திரும்பி என் மனைவியிடம் வந்து,'நபி(ஸல்) அவர்களின் வயிறு மிகவும் ஒட்டிப் போயிருப்பதைக் கண்டேன். உன்னிடம் ஏதேனும் (உண்ண) இருக்கிறதா?' என்று கேட்டேன். உடனே என்னிடம் என் மனைவி ஒரு பையைக் கொண்டு வந்தாள். அதில் ஒரு'ஸாவு' அளவு வாற்கோதுமையிலிருந்தது. வீட்டில் வளரும் ஆட்டுக்குட்டி ஒன்றும் எங்களிடம் இருந்தது. அதை நான் அறுத்தேன். என் மனைவி அந்தக் கோதுமையை அரைத்தாள். நான் (அறுத்து) முடிக்கும்போது அவளும் (அரைத்து) முடித்துவிட்டாள். மேலும் அதனைத் துண்டுகளாக்கி அதற்கான சட்டியிலிட்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் திரும்பி வந்தேன். (நான் புறப்படும்போது என் மனைவி,)'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்களுடன் இருப்பவர்களுக்கும் முன்னால் என்னை நீங்கள் கேவலப்படுத்திவிடவேண்டாம். ('உணவு கொஞ்சம் தானிருக்கிறது' என்று கூறிவிடுங்கள்)''

என்று சொன்னாள். நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்து இரகசியமாக,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் எங்களுக்குச் சொந்தமான ஆட்டுக் குட்டியொன்றை அறுத்து, எங்களிடம் இருந்த ஒரு'ஸாவு' அளவு வாற்கோதுமையை அரைத்தும் வைத்துள்ளோம். எனவே, தாங்களும் தங்களுடன் ஒரு சிலரும் (என் இல்லத்திற்கு) வாருங்கள்" என்று அழைத்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் உரத்த குரலில்,'அகழ்வாசிகளே! ஜாபிர் உங்களுக்காக உணவு தயாரித்துள்ளார். எனவே, விரைந்து வாருங்கள்" என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஜாபிர் - ரலி - அவர்களிடம்),'நான் வரும் வரை நீங்கள் சட்டியை (அடுப்பிலிருந்து) இறக்கவேண்டாம். உங்கள் குழைத்த மாவில் ரொட்டி சுடவும் வேண்டாம்" என்று கூறினார்கள். நான் திரும்பி வந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்களை அழைத்துக் கொண்டு) அவர்களுக்கு முன்னால் வந்து கொண்டிருந்தார்கள். நான் மனைவியிடம் வந்து சேர்ந்தேன். (நபி - ஸல் - அவர்கள் தோழர்கள் பலருடன் வருவதைப் பார்த்து என் மனைவி கோபமுற்று) என்னைக் கடிந்து கொண்டாள். உடனே நான்,'நீ நபி(ஸல்) அவர்களிடம் சொல்லச் சொன்ன விஷயத்தை நான் (அவர்களிடம்) சொல்லிவிட்டேன்" என்று கூறினேன். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் என் மனைவி குழைத்த மாவைக் கொடுத்தாள். நபி(ஸல்) அவர்கள் அதில் (தம் திரு வாயினால்) உமிழ்ந்தார்கள். மேலும், மாவில் பரக்கத் - பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள். பிறகு, எங்கள் இறைச்சிச் சட்டியை நோக்கி வந்தார்கள். பிறகு அதில் உமிழ்ந்து பரக்கத் - பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள், (என் மனைவியை நோக்கி),'ரொட்டி சுடுபவள் ஒருத்தியை (உதவிக்கு) அழை. அவள் என்னோடு ரொட்டி சுடட்டும். உங்களுடைய பாத்திரத்திலிருந்து நீ அள்ளிக் கொடுத்துக் கொண்டிரு. பாத்திரத்தை இறக்கி வைத்து விடாதே" என்று கூறினார்கள். அங்கு (வந்தவர்கள்) ஆயிரம் பேர் இருந்தனர்.

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் அனைவரும் சாப்பிட்டுவிட்டு, அந்த உணவைவிட்டுத் திரும்பிச் சென்றனர். அப்போது எங்கள் சட்டி நிறைந்து சப்தமெழுப்பியவாறு கொதித்துக கொண்டிருந்தது. அது (கொஞ்சம் குறையாமல்) முன்பிருந்தது போன்றே இருந்தது. மேலும், எங்கள் குழைத்தமாவும் (கொஞ்சமும் குறைந்து விடாமல்) முன்பு போன்றே ரொட்டியாகச் சுடப்பட்டுக் கொண்டிருந்தது.

ஹதீஸ் 4103. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

"(பகைவர்கள்) உங்களு(டைய கணவாய்)க்கு மேற்புறமிருந்தும், உங்களு(டைய கணவாய்)க்கு கீழ்புறமிருந்தும் உங்களிடம் (படையெடுத்து) வந்ததை நினைவுகூருங்கள். அப்போது (உங்கள்) கண்கள் நிலைகுத்தி நின்றன. இதயங்கள் தொண்டைகளை அடைத்துக் கொண்டன... என்ற (திருக்குர்ஆன் 33:10-வது) இறைவசனம் குறிப்பிடும் சம்பவம் அகழ்ப்போர் தினத்தில் நடந்தது.

ஹதீஸ் 4104. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

அகழ்ப்போரின்போது (அகழ் வெட்டிக் கொண்டிருந்த சமயத்தில்) நபி(ஸல்) அவர்கள் மண்ணைச் சுமந்து கொண்டிருந்ததார்கள். மண் அவர்களின் வயிற்றி(ன் முடியி)னை மறைத்(துப் படிந்)திருந்தது ... அல்லது அவர்களின் வயிற்றில் புழுதி படிந்ததிருந்தது... அப்போது அவர்கள் இவ்வாறு (பாடிய வண்ணம்) கூறிக் கொண்டிருந்தார்கள்:

அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்க மாட்டோம் தர்மம் செய்திருக்கவும் மாட்டோம் தொழுதிருக்கவும் மாட்டோம். நாங்கள் பகைவர்களைச் சந்திக்கும்போது எங்களின் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! இவர்கள்

(குறைஷிகள்) எங்களின் மீது அக்கிரமம் புரிந்துவிட்டார்கள். இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விருமபினால் அதற்கு நாங்கள் இடம் தர மாட்டோம்.

“நாங்கள் இடம் தரமாட்டோம் நாங்கள் இடம் தரமாட்டோம்‘‘ என்பதை உரத்த குரலில் கூறினார்கள்.

ஹதீஸ் 4105. நபி(ஸல்) அவர்கள் (அகழ்ப் போரின் வெற்றிக்குப் பிறகு) கூறினார்கள்:

நான் (‘ஸபா’ என்னும்) கீழைக் காற்றின் வாயிலாக வெற்றி அளிக்கப்பட்டுள்ளேன்’ஆது’ சமுகத்தார் (‘தபூர்’ என்னும்) மேலைக் காற்றினால் அழிக்கப்பட்டனர்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4106. பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அவர்கள் அறிவித்தார்

அகழ்ப் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அகழ் தோண்டினார்கள். அப்போது அவர்கள் மண்ணைச் சுமந்து எடுத்துச் சென்று கொண்டிருந்ததை பார்த்தேன். அவர்களின் வயிற்றின் தோலை என்னைவிட்டும் மண் மறைத்து விட்டிருந்தது. நபி(ஸல்) அவர்கள் நிறைய உரோமம் உடையவர்களாக இருந்தார்கள். அப்போது அவர்கள் மண் சுமந்து கொண்டே இப்னு ரவாஹா அவர்களின் யாப்பு வகை(ப்பாடல்) வரிகளைப் பாடிக் கொண்டிருந்ததை கேட்டேன் (அந்தப் பாடல் இதுதான்:)

இறைவா! நீ இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழியடைந்திருக்க மாட்டோம் தர்மம் செய்திருக்கவும் மாட்டோம் தொழுதிருக்கவும் மாட்டோம். நாங்கள் பகைவர்களைச் சந்திக்கும்போது எங்களின் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! இவர்கள் (குறைஷிகள்) எங்களின் மீது அக்கிரமம் புரிந்துவிட்டார்கள். இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தரமாட்டோம்.

“நபி(ஸல்) அவர்கள், (‘நாங்கள் இடம் தரமாட்டோம்’ என்ற) கடைசி வார்த்தையை நீட்டிய படி முழக்கமிட்டார்கள்‘‘ என்று அறிவிப்பாளர் கூறுகிறார்.

ஹதீஸ் 4107. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான் பங்கேற்ற முதல் (போர்த்) தினம் அகழ்ப்போர் தினமாகும்.

ஹதீஸ் 4108. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான் பங்கேற்ற முதல் (போர்த்) தினம் அகழ்ப்போர் தினமாகும்.

ஹதீஸ் 4108. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான் (என் சகோதரி) ஹ∴ப்ஸா(ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்களின் கூந்தலில் இருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. நான் அவக்ளிடம்,‘மக்களின் (அரசியல்) விவகாரங்களில் நீங்கள் பார்ப்பது நடந்து கொண்டிருக்கிறதுழூ எனக்கோ இந்த (ஆட்சியதிகார) விஷயத்தில் எந்தப் பங்கும் வழங்கப்படவில்லை. (இந்நிலையில், அவர்கள் கூட்டியுள்ள இந்த ஆலோசனைக் கூட்டத்திற்கு நான் செல்லத்தான் வேண்டுமா?’ என்று கேட்டேன். 1

அப்போது ஹ∴பஸா(ரலி),‘(நடந்து கொண்டிருக்கும் ஆலோசனைக் கூட்டத்திற்குப்) போய்ச் சேர். ஏனெனில், அவர்கள் உன்னை எதிர்பார்த்துக கொண்டிருப்பார்கள். நீ செல்லாமல் இருப்பதால் மக்களிடையே (மேலும்) பிளவு ஏற்பட்டு விடுமோ என்று நான் அஞ்சுகிறேன்‘‘ என்று கூறினார்கள். நான் செல்லும் வரை என்னை அவர்கள் விடாமல் வற்புறுத்திக் கொண்டே இருந்தார்கள். (நானும்

சென்றேன். அங்கே ஒருமித்த கருத்து உருவாகாமல்) மக்கள் பிளவுபட்டிருந்தபோது முஆவியா(ரலி) உரைநிகழ்த்தினார்கள். அவர்கள் தங்களின் உரையில் (இப்னு உமர் - ரலி - அவர்களையும் கருத்தில் கொண்டு,)'இந்த (ஆட்சிப் பொறுப்பு) விஷயத்தில் கருத்துச் சொல்ல விரும்புகிறவர் தன் தலையைக் காட்டட்டும். ஏனெனில், அவரை விடவும் அவரின் தந்தையை விடவும் நாமே ஆட்சிப் பொறுப்பிற்கு மிகவும் அருகதையானோர்'' என்று கூறினார்கள்.

ஹபீப் இப்னு மஸ்லமா(ரலி) கூறினார்:

நான் (இப்னு உமர் (ரலி) அவர்களிடம்'நீங்கள் (அப்போது) முஆவியா(ரலி) அவர்களுக்கு எந்தப் பதிலும் அளிக்க வில்லையா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்'அப்போது நான் என்னுடைய துண்டை அவிழ்த்து (உதறிப் போட்டு)க் கொண்டு'(உஹுத் மற்றும்'கன்தக்' போர்களில் முஆவியாவே,) உங்களுடனும் உங்கள் தந்தை (அபூ சுஃப்யான்) உடனும் இஸ்லாத்திற்காகப் போரிட்ட (அலீ - ரலி - போன்ற)வரே இந்த (ஆட்சியதிகார) விஷயத்திற்கு உங்களை விடத் தகுதி வாய்ந்தவர்' என்று சொல்ல நினைத்தேன். ஆயினும், மக்களிடையே பிளவை ஏற்படுத்தி, இரத்தம் சிந்தச் செய்து விடும் ஒரு வார்த்தையை நான் கூறி விடுவேனா் நான் கூறிய வார்த்தைக்கு நான் நினைக்காத கருத்து கற்பிக்கப்பட்டு விடுமோ என்றெல்லாம் அஞ்சினேன். மேலும், சொர்க்கத்தில் (பொறுமையாளர்களுக்காக) அல்லாஹ் தயாரித்து வைத்துள்ளவற்றை எண்ணிப் பார்த்தேன் (அதனால் அவர்களுக்கு பதில் கூறவில்லை)'' என்று கூறினார்கள்.

அப்போது நான்,'(நல்ல வேளை நீங்கள் கோப உணர்ச்சிக்கு ஆளாகாமல்) பாதுகாக்கப்பட்டீர்கள்'' என்று கூறினேன்.

ஹதீஸ் 4109. சுலைமான் இப்னு ஸுரத்(ரலி) அறிவித்தார்

அகழ்ப் போர் (முடிந்து குறைஷிகள் தோல்வியுற்றுத் திரும்பிச் சென்ற) தினத்தன்று நபி(ஸல்) அவர்கள்,'(இனி போர்தொடுப்பதானால்), நாமே அவர்களின் மீது போர் தொடுக்க வேண்டும் அவர்கள் நம் மீது (இனி) போர்தொடுக்க (சக்தி பெற) மாட்டார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4110. சுலைமான் இப்னு ஸுரத்(ரலி) அறிவித்தார்

(அகழ்ப்போரில் தோல்வியுற்று எதிர்) அணியினர் நபி(ஸல்) அவர்களிடமிருந்து திரும்பியபோது'இப்போது (போரிடுவதானால்) நாம் தாம் அவர்களுடன் போர் புரியவேண்டும் (இனி) அவர்கள் நம்முடன் போர் புரியமுடியாது நாம் தாம் அவர்களை நோக்கிச் செல்லவேண்டும்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை கேட்டேன்.

ஹதீஸ் 4111 அலீ(ரலி) அறிவித்தார்

அகழ்ப் போரின்போது நபி(ஸல்) அவர்கள்,'எதிரிகளுடைய வீடுகளையும், புதைகுழிகளையும் அல்லாஹ் நெருப்பினால் நிரப்புவானாக! ஏனெனில், அவர்கள் சூரியன் மறையும் வரை நடுத் தொழுகை(யான அஸர் தொழுகை)யிலிருந்து நம்முடைய கவனத்தைத் திருப்பிவிட்டார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4112. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

அகழ்ப்போரின்போது உமர்(ரலி) குறைஷிக்குல இறைமறுப்பாளர்களை ஏசிக் கொண்டே வந்து,'இறைத்தூதர் அவர்களே! சூரியன் மறையத் தொடங்கும் வரை நான் அஸர் தொழ இயலவில்லை'' என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் மீது ஆணையாக! நானும் இதுவரை அஸர் தொழவில்லை'' என்று கூறினார்கள். பின்னர்'புத்ஹான்' என்னும் பள்ளத்தாக்கிற்கு

நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் சென்றோம். அங்கே தொழுகைக்காக நபி(ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். நாங்களும் தொழுகைக்காக உளூச் செய்தோம். சூரியன் மறைந்த பிறகு அஸரையும் அதன் பின்னர் மஃக்ரிபையும் (எங்களுடன்) நபியவர்கள் தொழுதார்கள்.

ஹதீஸ் 4113. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் அறிவித்தார்

"அகழ்ப்போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'எதிரிகளின் செய்தியை (வேவு பார்த்துக்) கொண்டு வருபவர் யார்?' என்று கேட்டார்கள். ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி), 'நான்'' என்று (முன்வந்து) கூறினார்கள். மீண்டும் எதிரிகளின் செய்தியை அறிந்து எம்மிடம் கொண்டு வருபவர் யார்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போதும் ஸுபைர்(ரலி), 'நான்'' என்று கூறினார்கள். பிறகு, 'எதிரிகளின் செய்தியை எம்மிடம் கொண்டு வருபவர் யார்?' என்று (மீண்டும்) நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போதும் ஸுபைர்(ரலி), 'நான்'' என்று கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள், 'ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (பிரத்தியேகமான) உதவியாளர் உண்டு என்னுடைய (பிரத்தியேக) உதவியாளர் ஸுபைராவார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4114. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அகழ்ப்போரில் எதிரிகள் தோல்வியுற்றுத் திரும்பியது தொடர்பாகக் குறிப்பிடும் போது)'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். தன் படையினரை அவனே கண்ணியப்படுத்தினான். தன் அடிமை(யாகிய என)க்கு அவனே உதவி புரிந்தான். (மக்கா மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலிருந்து திரண்டு வந்த எதிர்) அணியினரை அவனே தனியாக சென்றான். எனவே, அவனுக்குப் பின்னால் வேறு எதுவும் (நிலைக்கப் போவது) இல்லை'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4115. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்

(அகழ்ப்போரின்போது ஒன்று திரண்டு தாக்க வந்த எதிர்) அணியினருக்குக் கெதிராக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பிரார்த்தனை புரிந்தார்கள். அப்போது, 'இறைவா! திருக்குர்ஆனை அருள்பவனே! விரைவாகக் கணக்கு வாங்குபவனே! (சத்திய மார்க்கத்தை வேரறுக்க ஒன்று திரண்டு படையெடுத்து வந்துள்ள இந்த) அணியினரைத் தோற்கடிப்பாயாக! இறைவா! இவர்களைத் தோல்வியுறச் செய்து நடுக்கத்திற்குள்ளாக்குவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 4116. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புனிதப் போரிலிருந்து, அல்லது ஹஜ்ஜிலிருந்து, அல்லது உம்ராவிலிருந்து திரும்பும்போது முதலில் மூன்று முறை, 'அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகவும் பெரியவன்) என்று கூறிவிட்டுப் பிறகு பின்வருமாறு கூறுவார்கள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவர் எவருமில்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றல் உடையோன். நாங்கள் பாவங்களிலிருந்து மீண்டு, பாவமன்னிப்புக் கோரியவர்களாகவும், வணக்கம் புரிந்தவர்களாகவும் திரும்புகிறோம். அல்லாஹ் தன் வாக்குறுதியை மெய்யாக்கிவிட்டான். தன் அடியாருக்கு உதவினான். தன்னந்தனியாக (எதிர்) அணியினரைத் தோற்கடித்துவிட்டான்!"

## நபி(ஸல்) அவர்கள் அகழ் யுத்த(க்கள)த்திலிருந்து (தம் வீடு) திரும்பியதும், அங்கிருந்து பனு குறைழா குலத்தாரை நோக்கிப் புறப்பட்டுச் சென்று, அவர்களை முற்றுகையிட்டதும்.

**ஹதீஸ் 4117.** ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள், அகழ்ப்போரிலிருந்து திரும்பி வந்து ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டுக் குளித்தார்கள். (அப்போது வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, 'நீங்கள் ஆயுதங்களைக் கீழே வைத்து விட்டீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (வானவர்களாகிய) நாங்கள் அதைக் கீழே வைக்கவில்லை. எனவே, அவர்களை நோக்கிப் புறப்படுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'எங்கே (போவது)?' என்று கேட்டார்கள். அதற்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள், 'இதோ, இங்கே!" என்று 'பனூ குறைழா' (என்னும் யூதக்) குலத்தினரை (அவர்கள் வசிக்குமிடம்) நோக்கி சைகை காட்டினார்கள். எனவே, நபி (ஸல்) அவர்களும் அவர்களை நோக்கிப் புறப்பட்டார்கள்.

**ஹதீஸ் 4118.** அனஸ் (ரலி) அறிவித்தார்

(கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்த) பனூ ஃகன்கி கிளையாரின் குறுகலான வீதியில் நபி (ஸல்) அவர்கள் 'பனூ குறைழா' குலத்தாரை நோக்கிச் சென்றபோது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் தங்களின் படை பரிவாரங்களுடன் கம்பீரமாக பவனிவந்தததால் கிளம்பிய புழுதியை (இப்போது கூட) நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.

**ஹதீஸ் 4119.** இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

அகழ்ப் போர் (முடிந்து வந்த) தினம், நபி (ஸல்) அவர்கள், 'பனூ குறைழா குலத்தினர் வசிக்குமிடத்தை நீங்கள் அடையும் வரை (உங்களில்) எவரும் அஸ்ருத் தொழுகையைத் தொழவேண்டாம்'' என்று கூறினார்கள். வழியிலேயே அஸ்ரு (த் தொழுகை) நேரத்தை அவர்கள் அடைந்தனர். அப்போது சிலர், 'பனூ குறைழாக் குலத்தினரை அடையும் வரை நாம் அஸ்ருத் தொழ வேண்டாம்'' என்று கூறினர். வேறு சிலர், '(தொழுகை நேரம் தவறிப் போனாலும் தொழவேண்டாம் என்ற) அந்த அர்த்தத்தில் நபி (ஸல்) அவர்கள் கூறவில்லை ('வேகமாக அங்கு போய்ச் சேருங்கள்' என்ற கருத்தில் தான் இந்த வார்த்தையைக் கூறினார்கள்) எனவே, நாம் தொழுவோம்'' என்று கூறினர். நபி (ஸல்) அவர்களிடம் இரண்டு சாரார் குறித்தும் தெரிவிக்கப்பட்டபோது அவர்களில் எவரையும் அவர்கள் குறை கூறவில்லை.

**ஹதீஸ் 4120.** அனஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் 'பனூ குறைழா' மற்றும் 'பனூ நளீர்' குலத்தாரை வெற்றி கொள்ளும் வரை, நபி (ஸல்) அவர்களுக்கு, (அன்சாரிகள்) சிலர் பேரீச்ச மரங்களை (ப் பயன்படுத்திக் கொள்ளும்படி அன்பளிப்பாக) க் கொடுத்திருந்தனர். (பனூ குறைழா, பனூ நளீர் குலத்தினரை நபி -ஸல் அவர்கள் வெற்றி கொண்ட பின்னர் அன்சாரிகளிடமே அந்த மரங்களைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். அந்தச் சமயத்தில் என் குடும்பத்தார் என்னை நபி (ஸல்) அவர்கள் அந்த மரங்களை (பராமரிக்கும் பொறுப்பை தம் வளர்ப்புத்தாய்) உம்மு அய்மன் (ரலி) அவர்களிடம் கொடுத்திருந்தார்கள். (நான் அந்த மரங்களை நபி (ஸல்) அவர்களிடம் திரும்பத் தரும்படி கேட்டுக் கொண்டிருந்தபோது அங்கு) உம்மு அய்மன் (ரலி) வந்தார்கள். என்னுடைய கழுத்தின் மீது துணியைப் போட்டு, 'முடியாது! எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீது சத்தியமாக! நபி (ஸல்) அவர்கள் உங்களுக்கு (அவற்றைத்) தரமாட்டார்கள். (ஏனெனில்,) அவற்றை அவர்கள் எனக்கு (உரிமையாக்கித்) தந்துவிட்டார்கள்'' என்றோ... அல்லது இது போன்று வேறொரு வார்த்தையையோ கூறினார்கள்... நபி (ஸல்) அவர்கள் (உம்மு அய்மன் அவர்களைப் பார்த்து அவற்றைக் கொடுத்து விடுங்கள். அதற்குப் பகரமாக) உங்களுக்கு இந்த அளவு தருகிறேன்'' என்று கூறினார்கள். (அப்போது) உம்மு அய்மன் (ரலி) (என்னைப் பார்த்து), 'அல்லாஹ்வின்

மீதாணையாக! அந்த அளவு நபி(ஸல்) அவர்கள் எனக்குத் தரும் வரை (அவற்றை உங்களிடம் திருப்பித் தர) முடியாது'' என்று கூறினார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான சுலைமான் இப்னு தர்கான் - ரஹ் - அவர்கள் கூறுகிறார்கள்:)

அனஸ்(ரலி)'அது போன்று பத்து மடங்கு (தருவதாக' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனவோ) அல்லது அது போன்ற வேறொரு வார்த்தையைக் கூறினார்கள் எனவோ எண்ணுகிறேன்.

ஹதீஸ் 4121. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்களின் தீர்ப்பை ஏற்பதாக ஒப்புக் கொண்டு (யூதர்களான)'பனூ குறைழா' குலத்தார் (கைபரிலிருந்த தங்கள் கோட்டையிலிருந்து) இறங்கி வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஸஅத் இப்னு முஆத் அவர்களுக்கு ஆளனுப்பிட, அன்னார் கழுதையின் மீது (சவாரி செய்தபடி) வந்தார்கள். (நபிகளார் தாற்காலிமாக அமைத்திருந்த) தொழுமிடத்திற்கு அருகே அன்னார் வந்து சேர்ந்ததும், நபி(ஸல்) அவர்கள்,'உங்கள் தலைவரை... அல்லது உங்களில் சிறந்த வரை... நோக்கி எழுந்திரு(த்துச் சென்று அவரை வாகனத்திலிருந்து இறக்கி விடுங்கள்'' என்று அன்சாரிகளிடம் கூறினார்கள். பிறகு,'(சஅதே!) இவர்கள் உங்கள் தீர்ப்பின் மீது (இசைவு தெரிவித்து) இறங்கி வந்திருக்கிறார்கள். (நீங்கள் என்ன தீர்ப்பு அளிக்கப் போகிறீர்கள்?') என்று கேட்டார்கள். ஸஅத்(ரலி),'இவர்களில் போரிடும் வலிமை கொண்டவர்களை நீங்கள் கொன்று விட வேண்டும் இவர்களுடைய பெண்களையும் குழந்தைகளையும் நீங்கள் கைது செய்திட வேண்டும் என்று நான் தீர்ப்பளிக்கிறேன்'' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் தீர்ப்புப்படியே நீங்கள் தீர்ப்பளித்தீர்கள்."... அல்லது'அரசனின் (அல்லாஹ்வின்) தீர்ப்புப்படியே நீங்கள் தீர்ப்பளித்தீர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4122. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அகழ்ப்போரின்போது ஸஅத் இப்னு முஆத்(ரலி) தாக்கப்பட்டார்கள். அன்னாரின் கை நரம்பில் குறைஷிகளில் ஒருவனான ஹிப்பான் இப்னு அரி:கா என்றழைக்கப்பட்டவன் அம்பெய்து (அவர்களைக் காயப்படுத்தி)விட்டான். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவரை அருகிலிருந்து நலம் விசாரிப்பதற்கு வசதியாக (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலிலேயே (அவருக்குக்) கூடாரமொன்றை அமைத்தார்கள். அகழ்ப் போரை முடித்துக் கொண்டு வந்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டுக் குளித்தார்கள். அப்போது ஜிப்ரீல்(அலை) அவர்கள் தங்களின் தலையிலிருந்து புழுதியைத் தட்டிய வண்ணம் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'நீங்கள் ஆயுதங்களைக் கீழே வைக்கவில்லை. அவர்களை நோக்கி (படை நடத்தி)ச் செல்லுங்கள்'' என்று கூறினார்கள். அதற்கு'எங்கே? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போது'பனு குறைழா' குலத்தினர் (வசிப்பிடம்) நோக்கி ஜிப்ரீல் (அலை) அவர்கள் சைகை செய்தார்கள். உடனே, அல்லாஹ்வின் சைகை செய்தார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், பனு குறைழா நோக்கிச் சென்றார்கள். (பல நாள் முற்றுகைக்குப் பின்னர்) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தீர்ப்புக்கு இறங்கி வந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள், தீர்ப்பை ஸஅத் இப்னு முஆத்(ரலி),'பனு குறைழாக்களில் போர் புரியும் வலிமை கொண்டவர்கள் கொல்லப்பட வேண்டும் குழந்தைகளும் பெண்களும் கைது செய்யப்படவேண்டும் அவர்களின் சொத்துகள் பங்கிடப்பட வேண்டும் என்று தீர்ப்பளிக்கிறேன்'' என்று கூறினார்கள்.

(காயப்படுத்தப்பட்டு இரத்தம் வழிந்தோடிக் கொண்டிருந்தபோது) ஸஅத்(ரலி),'இறைவா! உன்னுடைய தூதரை நம்பாமல் அவர்களை (ஊரைவிட்டு) வெளியேற்றிய சமுதாயத்தாரை எதிர்த்து உன் பாதையில் போர் புரிவதே மற்ற எதையும் விட எனக்கு மிகவும் விருப்பமானது என்பதை நீ

அறிவாய. இறைவா! எங்களுக்கும் (குறைஷிகளான) அவர்களுக்கும் இடையிலான போரை நீ (இத்துடன்) முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டாய் என்று எண்ணுகிறேன். குறைஷிகளுடனான போர் ஏதேனும் மீதியிருந்தால் அதற்காக என்னை உயிருடன் இருக்கச் செய். நான் உன் வழியில் போர் புரிவேன். போரை (இத்துடன்) நீ முடிவுக்குக் கொண்டு வந்திருந்தால் (காயும் நிலையில் இருக்கும் என்னுடைய காயத்தை) மீண்டும் (இரத்தம்) கொப்பளிக்கச் செய்து அதிலேயே எனக்கு மரணத்தை அளித்து விடு'' என்று பிரார்த்தித்தார்கள். அன்னாரின் நெஞ்சுப் பகுதியிலிருந்து (இரத்தம்) பீறிட்டது. (அவர்களின் கூடாரத்திற்கு அருகில்) கூடாரம் அமைத்திருந்த'பனு ஃம்பார்' குலத்தாருக்கு ஸஅத் அவர்களின் கூடாரத்திலிருந்து தங்களை நோக்கி வழிந்தோடி வரும் இரத்தம் தான் அச்சத்தை ஏற்படுத்தியது. அப்போது மக்கள்,'கூடார வாசிகளே! உங்கள் தரப்பிலிருந்து எங்களை நோக்கி(ப் பாய்ந்து) வருகிறதே, இது என்ன? என்று கேட்டுக் கொண்டு, அங்கே பார்த்தபோது காயத்திலிருந்து இரத்தம் வழிய'ஸஅத்'(ரலி) இருந்தார்கள். அந்தக் காயத்தினாலேயே ஸஅத்(ரலி) இறந்தார்கள். அல்லாஹ் அன்னாரைக் குறித்து திருப்தி கொள்வானாக!

ஹதீஸ் 4123. பராஉ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், ('பனு குறைழா' நாளில் கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களிடம்,'இணைவைப்பவர்களைத் தாக்கி வசைக்கவி பாடுங்கள். ஜிப்ரீல் உங்களுடன் (உறுதுணையாக) இருப்பார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4124. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'பனு குறைழா' போரின்போது ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களை நோக்கி, இணை வைப்பவர்களைத் தாக்கி வசைக் கவி பாடுங்கள். ஜிப்ரீல் உங்களுடன் (உறுதுணையாக) இருப்பார்'' என்று கூறினார்கள்.

## 'தாத்துர் ரிக்காஉ போர்.

இதுதான்'முஹாரிபு கஸ்ஃபா' போராகும். இவர்கள்'ஃகத்ஃபான்' குலத்தின் ஒரு பிரிவினரான'பனு ஸஅலபா' கூட்டத்தார் ஆவர்.

இப்போரில் நபி(ஸல்) அவர்கள்'நக்ல்' என்ற இடத்தில் (முகாமிட்டுத்) தங்கினார்கள். 200 இந்தப் போர் கைபருக்குப் பின்னால் நடந்தது. ஏனெனில், ('தாத்துர் ரிகாஉ' போரில் பங்கெடுத்தவர்களில் ஒருவரான) அபூ மூஸா(ரலி) கைபர் போருக்குப் பின்னால் தான் (அபிசீனியாவிலிருந்து மதீனாவிற்கு) வந்தார்கள்.

ஹதீஸ் 4125. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

(நபி-ஸல் அவர்கள் செய்த) ஏழாவது போரான'தாத்துர் ரிகாஉ' போரின்போது தம் தோழர்களுடன் நபி(ஸல்) அவர்கள் அச்ச நேரத்தொழுகையை தொழுதார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் அச்ச நேரத் தொழுகையை'தூ கரத்' என்று இடத்தில் தொழுதார்கள்.

ஹதீஸ் 4126. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

முஹாரிப் மற்றும் ஸஅலபாப் போரின்போது நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் (அச்ச நேரத் தொழுகையைத்) தொழுதார்கள்.

ஹதீஸ் 4127. ஜாபிர்(ரலி) கூறினார்

(நஜ்த் பகுதி'ஃகத்ஃபான்' குலத்தார் வசித்து வந்த)'நக்ல்' என்னுமிடத்திற்கு'தாத்துர் ரிகாஉ' போருக்காக நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். அப்போது'ஃகத்ஃபான்' குலத்தாரின் ஒரு கூட்டத்தைச் சந்தித்தார்கள். மக்களில் சிலர் சிலரைக் கண்டு அஞ்சினர். அப்போது நபி(ஸல்) அவர்கள் (தம் தோழர்களுடன்) அச்ச நேரத் தொழுகை இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள்.

ஸலமா(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்களுடன் நான்'அல்காத்' போரில் கலந்து கொண்டேன்.

ஹதீஸ் 4128. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போருக்காகச் சென்றோம். எங்களில் ஆறு பேருக்கு ஓர் ஒட்டகம் தான் இருந்தது. அதில் நாங்கள் முறைவைத்து சவாரி செய்தோம். (வாகனம் கிடைக்காமல் சவாரி செய்தோம். (வாகனம் கிடைக்காமல் நடந்தே செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டதால்) எங்களுடைய பாதங்கள் தேய்ந்துவிட்டன. என்னுடைய இரண்டு பாதங்களும் தேய்ந்து என் கால் நகங்கள் விழுந்துவிட்டன. அப்போது நாங்கள் எங்களுடைய கால்களில் கிழிந்த துணிகளைச் சுற்றிக் கொள்பவர்களாக இருந்தோம். இவ்வாறு கிழிந்த துணிகளை நாங்கள் கால்களில் கட்டியிருந்ததனால் தான் அந்தப் போருக்கு'தாத்துர் ரிகாஉ - ஒட்டுத் துணிப்போர்' என்று பெயர் சூட்டப்பட்டது.

அறிவிப்பாளர் அபூ புர்தா இப்னு அபீ மூஸா(ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸை அறிவித்த பின் அபூ மூஸா(ரலி), தாம் இதை அறிவித்ததைக் தாமே விரும்பாமல்,'நான் இதை (வெளியே) சொல்ல விரும்பாமல் தான் இருந்தேன்'' என்றார்கள். தம் நற்செயல் ஒன்றைத் தாமே வெளியே சொல்லிவிட்டதை அன்னார் விரும்பவில்லை போலும்.

ஹதீஸ் 4129. இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன்'தாத்துர் ரிகாஉ' போரில் பங்கெடுத்த (நபித்தோழர்களில்) ஒருவர் கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (அப்போரின் போது) அச்ச நேரத் தொழுகையைத் தொழுதார்கள். (எங்களில்) ஓர் அணியினர் நபி(ஸல்) அவர்களுடன் (தொழுகையில்) அணிவகுத்தனர். இன்னோர் அணியினர் எதிரிகளுக்கு எதிரே அணிவகுத்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள், தம்முடன் இருப்பவர்களுக்கு ஒரு ரக்அத் தொழுகை நடத்திவிட்டு அப்படியே நின்றார்கள். (நபி - ஸல் - அவர்களுடன் தொழுகையை நிறைவேற்றிய) அந்த அணியினர் தங்களுக்கு (மீதியிருந்த இன்னொரு ரக்அத்தைத் தனியாகப்) பூர்த்தி செய்து திரும்பிச் சென்று எதிரிகளுக்கு எதிரே அணிவகுத்து நின்றார்கள். பிறகு, (அதுவரை எதிரிகளுக்கு எதிரே நின்றிருந்த) இன்னோர் அணியினர் வந்தனர். நபி(ஸல்) அவர்கள் தங்களின் தொழுகையில் மீதியிருந்த ஒரு ரக்அத்தை இவர்களுக்குத் தொழுகை நடத்திவிட்டு (அப்படியே) அமர்ந்து கொண்டிருந்தார்கள். (இரண்டாவது அணியினர்) தங்களுக்கு (மீதியிருந்த ஒரு ரக்அத்தைப்) பூர்த்தி செய்தார்கள். பிறகு அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் சலாம் கொடுத்தார்கள்.

இதை ஸாலிஹ் இப்னு கவ்வாத்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4130. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

(நஜ்த் பகுதியின்)'நக்ல்' என்னுமிடத்தில் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். பிறகு - ஜாபிர்(ரலி) அச்ச நேரத்தொழுகையைப் பற்றி (முழுமையாக) அறிவித்தார்கள்.

இமாம் மாலிக்(ரஹ்) கூறினார்:

அது (ஸாலிஹ் இப்னு கவ்வாத்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் வந்துள்ள அச்சநேரத் தொழுகை முறை) தான் அச்ச நேரத்தொழுகை பற்றி நான் கேள்விப்பட்டதிலேயே மிகச் சிறந்ததாகும்.

காஸிம் இப்னு முஹம்மத்(ரஹ்) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் அச்ச நேரத் தொழுகையை'பனு அன்மார்' போரின்போது தொழுதார்கள்.

ஹதீஸ் 4131. ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) கூறினார்

(அச்ச நேரத் தொழுகையில்) கிப்லாவை முன்னோக்கி இமாமும் அவருடன் அவர்களில் ஓர் அணியினரும் நிற்பர். இன்னோர் அணியினர் எதிரிகளை நோக்கித் தங்கள் முகங்கள் இருக்கும் வண்ணம் (தொழாமல்) நிற்பர். அப்போது இமாம் தம்முடன் இருப்பவர்களுக்கு ஒரு ரக்அத் தொழுகை நடத்துவார். பிறகு, அவர்கள் எழுந்து தங்களுக்கு (மீதிமிருக்கும்) ஒரு ரக்அத்தை அந்த இடத்திலேயே இரண்டு சஜ்தாக்கள் செய்து பூர்த்தி செய்து கொள்வர். பிறகு, இவர்கள் மற்றோர் அணியினரின் இடத்திற்குச் சென்றுவிடுவர். அந்த (இரண்டாவது) அணியினர் (இமாமிடம்) வருவார்கள். அவர்களுடன் சேர்ந்து இன்னொரு ரக்அத்தை இமாம் தொழுவார். இப்போது இமாமுக்கு இரண்டு ரக்அத்துக்களாம்விட்டது. பிறகு இவர்கள் (மீதமிருக்கும் ஒரு ரக்அத்தைத் தனியாக எழுந்து) ருகூஉ செய்து இரண்டு சஜ்தாக்கள் செய்து தொழுவார்கள்.

இதை ஸாலிஹ் இப்னு கவ்வாத்(ரஹ்) அறிவித்தார்.

... இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் ஸாலிஹ் இப்னு கவ்வாத்(ரஹ்) அவர்களின் (அச்ச நேரத் தொழுகை பற்றிய நபிமொழி) அறிவிப்பு வந்துள்ளது.

... ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அவர்களிடமிருந்து ஸாலிஹ் இப்னு கவ்வாத்(ரஹ்) அறிவிக்கும் (அச்ச நேரத் தொழுகை பற்றிய) அறிவிப்பு இன்னோர் அறிவிப்பாளர் தொடரிலும் வருகிறது.

ஹதீஸ் 4132. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

('தாத்துர் ரிகாஉ') போருக்காக இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நஜ்தை நோக்கி நாங்கள் புறப்பட்டுச் சென்றோம். அப்போது நாங்கள் எதிரிகளை எதிர்கொண்டு அவர்களுக்காக அணி வகுத்தோம்.

ஹதீஸ் 4133. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரண்டு அணிகளில் ஓரணியினருக்கு (அச்ச நேரத் தொழுகையைத்) தொழுகை நடத்தினார்கள். (அப்போது) மற்றோர் அணியினர் எதிரிகளுக்கு முன்னால் (நின்று கொண்டு) இருந்தனர். பிறகு முதல் அணியினர் திரும்பிச் சென்று தம் தோழர்கள் (இரண்டாம் அணியினர்) நின்றிருந்த இடத்தில் (எதிரிகளுக்கு முன்னால்) நின்று கொண்டனர். பிறகு இரண்டாம் அணியினர் (தொழுகைக்கு) வந்தனர். அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் சேர்ந்து ஒரு ரக்அத் தொழுதுவிட்டு, அவர்கள் (தொழுகையில்) இருக்க நபியவர்கள் ஸலாம் கொடுத்தார்கள். பிறகு இந்த அணியினர் எழுந்து (மீதமிருந்த) தங்களின் ஒரு ரக்அத்தை நிறைவேற்றினர். முதல் அணியினரும் எழுந்து (மீதிமிருந்த) தங்களின் ஒரு ரக்அத்தை நிறைவேற்றினர்.

ஹதீஸ் 4134. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நஜ்தை நோக்கி ஒரு போருக்குச் சென்றேன்.

ஹதீஸ் 4135. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நஜ்தை நோக்கி (தாதுர் ரிகாஉ) போருக்காக சென்றேன். (போரை முடித்துக் கொண்டு) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் திரும்பியபோது நானும் அவர்களுடன் திரும்பிக் கொண்டிருந்தேன். கருவேல முள் மரங்கள் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கை அடைந்தபோது மதிய (ஓய்வு கொள்ளும் நண்பகல்) நேரம் வந்தது. எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அங்கு) தங்கினார்கள். மக்கள் (ஓய்வெடுப்பதற்காக) மர நிழல் தேடி (பல திசைகளிலும்) பிரிந்து போய்விட்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு முள் மரத்திற்குக் கீழே தங்கி ஓய்வெடுத்தார்கள் அப்போது தம் வாளை அந்த மரத்தில் தொங்கவிட்டார்கள். நாங்கள் ஒரு தூக்கம் தூங்கியிருப்போம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். உடனே நாங்கள் அவர்களிடம் சென்றோம். அங்கே நபி(ஸல்) அவர்களுக்கு அருகில் ஒரு கிராமவாசி அமர்ந்து கொண்டிருந்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது இவர் என்னுடைய வாளை (எனக்கெதிராக) உருவிக் கொண்டார். அந்த வாள் உருவப்பட்டு இவரின் கையிலிருந்த நிலையில் நான் கண்விழித்தேன். அப்போது இவர் என்னிடம்,'என்னிடமிருந்து உன்னைக் காப்பவர் யார்?' என்று கேட்டார். நான்,'அல்லாஹ்' என்று பதிலளித்தேன். இதோ அவர் இங்கே அமர்ந்திருக்கிறார்' என்று கூறினார்கள்.

பிறகு அவரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தண்டிக்கவில்லை (மன்னித்துவிட்டுவிட்டார்கள்.)

ஹதீஸ் 4136. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

'தாத்துர் ரிகாஉ' போரில் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். பிறகு (போரை முடித்துக் கொண்டு) நாங்கள் நிழல் நிறைந்த ஒரு மரத்தினருகே வந்தோம். அந்த மரத்தை நபி(ஸல்) அவர்களு(டைய மதிய ஓய்வு)க்காகவிட்டுவிட்டோம். அப்போது இணைவைப்பவர்களில் ஒருவர் வந்தார். நபி(ஸல்) அவர்களின் வாள் அந்த மரத்தில் தொங்கவிடப்பட்டிருந்தது. உடனே அதை அவர் உருவிக் கொண்டு நபி(ஸல்) அவர்களை நோக்கி,'எனக்கு நீர் அஞ்சுகிறீரா?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் (கொஞ்சமும் அஞ்சாமல்)'இல்லை'' என்று பதிலளித்தார்கள். அவர்,'இப்போது என்னிடமிருந்து உன்னைக் காப்பாற்றுவது யார்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்'' என்று பதிலளித்தார்கள். அப்போது நபித்தோழர்கள் அவரைக் கண்டித்தார்கள்.

பிறகு தொழுகைக்காக'இகாமத்' சொல்லப்பட்டது. அப்போது (தம் தோழர்களில்) ஓர் அணியினருக்கு நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்துகள் (அச்ச நேரத் தொழுகை) தொழுகை நடத்தினார்கள். பிறகு இந்த அணியினர் பின்னால் விலம்க் கொள்ளவே (எதிரிகளைக் கண்காணித்துக் கொண்டிருந்த அணியினர் வந்தனர்.) அந்த அணியினருக்கு நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்துகள் தொழுகை நடத்தினார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு நான்கு ரக்அத்துகளும், மக்களுக்கு இரண்டு ரக்அத்துகளும் ஆயின.

அந்த மனிதரின் பெயர்'கவ்ரஸ் இப்னு ஹாரிஸ்' என்றும், இப்போரில்'முஹாரிப் கஸஃபா' கூட்டத்தாரை நபி(ஸல்) அவர்கள் எதிர்கொண்டார்கள் என்றும் அபூ அவானா(ரஹ்) அவர்களிடமிருந்து முஸத்தத்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4137. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

(நஜ்த் பகுதியிலுள்ள)'நக்ல்' என்னுமிடத்தில் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள் அச்ச நேரத் தொழுகையைத் தொழுகை நடத்தினார்கள்.

அபூ ஹுரைரா(ரலி),'நான் நபி(ஸல்) அவர்களுடன் நஜ்துப் போரின்போது அச்சநேரத் தொழுகையைத் தொழுதேன்'' என்று கூறுகிறார்கள்.

அபூ ஹுரைரா(ரலி)'கைபர்' போரின்போது தான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள்.

## குஸாஆ குலத்தில் ஒரு பிரிவினரான பனு முஸ்தலிக் (குலத்தாருடன் நடந்த) போர். இதுதான்முரைசீஉ போர்.

'இந்தப் போர் (ஹிஜ்ரி) ஆறாம் ஆண்டு நடந்தது' என்று இப்னு இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்.

(ஹிஜ்ரி) நான்காம் ஆண்டு நடந்ததாக மூஸா இப்னு உக்பா(ரஹ்) கூறினார். (ஆயிஷா - ரலி - அவர்களின் மீது கூறப்பட்ட) அவதூறுச் சம்பவம் (இந்த ) முறை சீஉ போரின்போது தான் நடந்தது என்று ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 4138. இப்னு முஹைரீஸ்(ரஹ்) அறிவித்தார்

நான் பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். (அங்கு) நான் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களைப் பார்த்தேன். அவர்களிடம் (சென்று) அமர்ந்து கொண்டு'அஸ்ல்' பற்றிக் கேட்டேன். அபூ ஸயீத்(ரலி) கூறினார்.

நாங்கள் அல்லாஹ்வின் தூதருடன் பனு முஸ்தலிக் (குலத்திற்கெதிரான) போருக்குச் சென்றோம். அப்போது, அரபுகளிலிருந்து போர்க் கைதிகள் சிலர் எங்களுக்குக் கிடைத்தனர். நாங்கள் (அந்தக் கைதிகளிடையேயிருந்த) பெண்களை (உடலுறவு கொள்ள) விரும்பினோம். ஏனெனில், (எங்கள் மனைவியரைப் பிரிந்து) தனிமையில் இருந்தது எங்களை வாட்டியது. மேலும் (அந்தப் பெண்களுடன் உடலுறவு கொள்ளும் போது)'அஸ்ல்' செய்ய நினைத்தோம். (ஆனால்,) நம்மிடையே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இருக்க, அவர்களிடம் கேட்பதற்கு முன் நாம் அஸ்ல் செய்வதா?' என்று (எங்களுக்குள்) பேசிக் கொண்டு அது தொடர்பாக அல்லாஹ்வின் தூதரிடம் கேட்டோம். அதற்கு,'நீங்கள் அதைச் செய்யாமலிருந்தால் தவறேதுமில்லையே! மறுமை நாள் வரை (இறை விதிப்படி) உருவாக வேண்டிய எந்த உயிரும் கட்டாயம். உருவாகியே தீரும்'' என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4139. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

('தாத்துர் ரிகாஉ' எனும்) நஜ்துப் போருக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நாங்கள் சென்றோம். (போரை முடித்துக் கொண்டு திரும்பிய போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கருவேல முள் மரங்கள் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கினை அடைந்தபோது மதிய (ஓய்வு கொள்ளும் நண்பகல்) நேரம் வந்தது. அவர்கள் ஒரு மரத்திற்குக் கீழே நிழல் பெற்று ஓய்வெடுத்தார்கள். தம் வாளை அந்த மரத்தில் தொங்கவிட்டார்கள். (ஆங்காங்கே இருந்த) மரங்களின் கீழே மக்கள் பிரிந்து சென்று நிழல் பெற்று (ஓய்வெடுத்துக் கொண்டிருந்தனர். நாங்கள் இவ்வாறு இருந்து கொண்டிருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். உடனே நாங்கள் (அவர்களிடம்) வந்தோம். அப்போது ஒரு கிராமவாசி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்னால் அமர்ந்து கொண்டிருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்னால் அமர்ந்து கொண்டிருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது என்னிடம் இவர் வந்து என்னுடைய வாளை உருவி எடுத்தார். உடனே நான் விழித்துக் கொண்டேன். என்னுடைய வாளை உருவிய நிலையில் என்னுடைய தலைமாட்டில் இவர் நின்றிருந்தார். 'என்னிடமிருந்து உங்களைக் காப்பது யார்?' என்று கேட்டார். நான்,'அல்லாஹ்'' என்று பதிலளித்தேன். உடனே அவர் வாளை உறையிலிட்டார். பிறகு அவர் அமர்ந்தார். அது இவர்தான்'' என்று கூறினார்கள்.

பிறகு அவரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தண்டிக்காமல் (மன்னித்து)விட்டார்கள்.

## ‘அன்மார் போர்

**ஹதீஸ் 4140.** ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல் அன்சாரி(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்'அன்மார்' போரின்போது தம் வாகனத்தின் மீதமார்ந்தவாறு கிழக்குத் திசையை நோக்கி உபரித் தொழுகையைத் தொழுவதை பார்த்தேன்.

## அவதூறு சம்பவம்

(அரபி மொழியில்)'இஃப்க்' அல்லது'அஃபக்' என்றால் அவதூறு என்று பொருள். இதற்கு'(திசை) திருப்புதல்' என்பது சொற் பொருளாகும். இதே பொருளில் ான் 51:9-வது வசனத்தில் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

**ஹதீஸ் 4141.** இப்னு ஷிஹாப் (அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்

என்னிடம் உர்வா இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு முஸய்யப், அல்கமா இப்னு வக்காஸ், உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் இப்னி உத்பா இப்னி மஸ்வூத்(ரஹ்.. அலைஹிம்) ஆகியோர் நபி(ஸல்) அவர்களின் துணைவியானரான ஆயிஷா(ரலி) குறித்து அவதூறு கூறியவர்கள் சொன்னதைப் பற்றி அறிவித்தனர். அவர்கள் (நால்வரில்) ஒவ்வொருவரும் இச்சம்பவம் பற்றி ஆளுக்கொரு பகுதியினை அறிவித்தனர். அவர்களில் சிலர், சிலரை விட இந்தச் சம்பவத்தை நன்கு நினைவில் நிறுத்தியவர்களாகவும், அதை எடுத்துரைப்பதில் சிறந்தவர்களாகவும் இருந்தனர். ஆயிஷா(ரலி) அவர்களின் (இச்சம்பவம்) தொடர்பாக ஒவ்வொருவரும் அறிவித்த செய்தியை நான் மனனமிட்டுக் கொண்டேன். இவர்களில் சிலர் சிலரை விட இந்தச் சம்பவத்தை நன்கு மனனமிட்டவர்களாக இருந்தாலும் ஒருவரின் அறிவிப்பு மற்றவரின் அறிவிப்பை உறுதிப்படுத்தும் வகையில் அமைந்திருந்தது. அவர்கள் கூறினார்

ஆயிஷா(ரலி) கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பயணம் புறப்பட விரும்பினால் தம் மனைவிமார்களிடையே (எவரைப் பயணத்தில் தம்முடன் அழைத்துச் செல்வது எனத் தீர்மானித்திட) சீட்டுக் குலுக்கிப் போடுவார்கள். அவர்களில் எவருடைய (பெயருள்ள) சீட்டு வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு பயணம் புறப்படுவார்கள். இவ்வாறே, அவர்கள் மேற்கொண்ட (‘பனு முஸ்தலிக்' என்ற) ஒரு புனிதப் போரின்போது (பயணத்தில் உடன் அழைத்துச் செல்ல) எங்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அதில் என்னுடைய (பெயருள்ள) சீட்டு வந்தது. எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (பயணம்) புறப்பட்டுச் சென்றேன். இது (பெண்கள் கடைப்பிடிக்க வேண்டிய பர்தா என்னும்) ஹிஜாபின் சட்டம் அருளப்பட்ட பிறகு நடந்ததாகும். நான் என்னுடைய ஒட்டகச் சிவிகையில் வைத்து சுமந்து செல்லப்பட்டும் அதில் இருக்கும் நிலையிலேயே கீழே இறக்கி வைக்கப்பட்டும் வந்தேன்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுடன் அந்தப் போர் முடிந்து திரும்பிக் கொண்டிருந்த நிலையில் நாங்கள் மதீனாவை நெருங்கியபோது, இரவு நேரத்தில் (ஓரிடத்தில்) தங்கும் படி அறிவித்தார்கள். அப்போது நான் (சிவிகையிலிருந்து) எழுந்து (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக மறைவிடம் தேடி) படையைக் கடந்து சென்றேன். என் (இயற்கைத்) தேவையை நான் முடித்துக் கொண்ட பின் முகாமை நோக்கிச் சென்றேன். அப்போது என் நெஞ்சைத் தொட்டுப் பார்த்தேன். (என் கழுத்திலிருந்த யமன் நாட்டு)'ழஃபாரி' நகர முத்து மாலையொன்று அறுந்து (விழுந்து) விட்டிருந்தது. எனவே, நான் திரும்பிச் சென்று என்னுடைய மாலையைத் தேடலானேன் அதைத் தேடிக் கொண்டிருந்தது (நான் சீக்கிரம் திரும்பிச் சென்று படையினருடன் சேர விடாமல்) என்னைத் தாமதப்படுத்திவிட்டது. என்னை எடுத்துச் சென்று ஒட்டகத்தில் வைக்கும் குழுவினர்

என் சிவிகைக்குள் நான் இருப்பதாக எண்ணிக் கொண்டு, அதைச் சுமந்து சென்று, நான் சவாரி செய்து வந்த என் ஒட்டகத்தின் மீது வைத்துக் கட்டிவிட்டனர். அந்தக் கால கட்டத்தில் பெண்கள் பருமனாக இன்றி மெலிந்தவர்களாக இருந்தனர். அவர்களுக்கு சதை போட்டிருக்கவில்லை. சிறிதளவு உணவையே அவர்கள் உண்பார்கள். எனவே, சிவிகையைத் தூக்கிய போதும், அதைச் சுமந்த போதும் அது கனமில்லாமல் இருந்ததை மக்கள் வித்தியாசமாகக் கருதவில்லை மேலும், நான் வயது குறைந்த இளம் பெண்ணாக இருந்தேன். அவர்கள் ஒட்டகத்தை (முன்னே) அனுப்பிவிட்டு நடக்கலானார்கள். படையினர் சென்ற பிறகு (தொலைந்து போன) என்னுடைய மாலை கிடைத்துவிட்டது. நான் அவர்கள் தங்கியிருந்த இடத்திற்கு வந்தேன். (அங்கிருந்த அனைவரும் சென்றுவிட்டிருந்தனர்.) அங்கு அவர்களில் அழைப்பவரோ பதில் கொடுப்பவரோ எவரும் இருக்கவில்லை. நான் ஏற்கனவே தங்கியிருந்த இடத்தைத் தேடிப் போ(ய் அங்கு அமரலா)னேன். நான் காணாமல் போயிருப்பதைக் கண்டு படையினர் என்னிடம் திரும்பி வருவார்கள் என்று நான் கருதினேன். நான் என்னுடைய இடத்தில் அமர்ந்திருக்க, என் கண்ணில் உறக்கம் மிகைத்து விட, நான் தூங்கி விட்டேன். படை சென்றதற்குப் பின்னால் (படையினர் தவறவிட்டுச் சென்ற பொருள்களை எடுத்துச் செல்வதற்காக) ஸஃப்வான் இப்னு முஅத்தல் அஸ்ஸுலமீ அத் தக்வானீ என்பவர் அங்கு இருந்தார். நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் அவர் காலையில் வந்தார். அவர் (அங்கே) தூங்கிக் கொண்டிருந்த ஓர் உருவத்தை (என்னை)ப் பார்த்தார். பர்தாவுடைய சட்டம் அருளப்படுவதற்கு முன்னர் அவர் என்னைப் பார்த்திருந்தார். எனவே, என்னைப் பார்த்ததும் அவர் அடையாளம் புரிந்து கொண்டார். அவர், என்னை அறிந்து கொண்டு,'இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன் - நாம் அல்லாஹ்விற்கே உரியவர்கள் மேலும், நாம் அவனிடமே திரும்பிச் செல்லவிருக்கிறோம்'' என்று கூறும் சப்தத்தைக் கேட்டு நான் கண் விழித்தேன். உடனே என்னுடைய முகத்திரையால் என் முகத்தை மறைத்துக் கொண்டேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாங்கள் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவர்'இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்'' என்று கூறியதைத் தவிர வேறெதையும் நான் அவரிடமிருந்து கேட்கவுமில்லை. பிறகு, அவர் விரைவாக தம் ஒட்டகத்தை மண்டியிடச் செய்து (நான் ஏறிக் கொள்ள வசதியாக) அதன் முன்னங்காலை (தன் காலால்) மிதித்துக் கொள்ள நான் எழுந்து சென்று அதில் ஏறிக் கொண்டேன். அவர் என்னுடன் ஒட்டகத்தை ஓட்டிக் கொண்டு நடக்கலானார். இறுதியில் நாங்கள் படையினரை வந்தடைந்தோம். அப்போது அவர்கள் (மதிய ஓய்வுக்காக) நடுப்பகல் நேரத்தில் (ஓரிடத்தில்) தங்கி விட்டிருந்தார்கள். (இப்போது எங்கள் இருவரையும் கண்டு அவதூறு பேசி என் விஷயத்தில்) அழிந்தவர்கள் அழிந்து போனார்கள். என் மீது அவதூறு (பிரசாரம்) செய்வதில் பெரும்பங்கு எடுத்துக் கொண்டிருந்தவன் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு சலூல் (எனும் நயவஞ்சகர்களின் தலைவன்) ஆவான்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்: அந்தப் பழிச்சொல் பரப்பப்பட்டும், அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூலிடம் பேசப்பட்டும் வந்தது. அப்போது அவன் அதை ஏற்று, காது தாழ்த்திக் கேட்டு, அதை (மேன் மேலும்) கிளறிவிட்டுக் கொண்டிருந்தான் - என்று எனக்குச் செய்தி கிடைத்து.

அறிவிப்பாளர் உர்வா(ரஹ்) மேலும் கூறுகிறார்கள்: அவதூறு கூறியவர்(களான முஸ்லிம்)களில் ஹஸ்ஸான் இப்னு ஸாபித், மிஸ்தஹ் இப்னு உஸாஸா, ஹம்னா பின்த் ஜஹ்ஷ் ஆகியோரைத் தவிர மற்ற சிலரின் பெயர்கள் எனக்குத் தெரியாது. ஆயினும் அல்லாஹ் (தன்னுடைய வேதத்தில்,'அவதூறு கற்பித்தவர்களும் உங்களில் ஒரு குழுவினரே'' என்று 4:11-ம் வசனத்தில்) கூறியது போன்று அவர்கள் ஒரு குழுவினர் ஆவர். அ(ந்தச் சம்பவத்)தில் பெரும் பங்கெடுத்துக் கொண்டவன் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல் ஆவான். தமக்கு முனனால் ஹஸ்ஸான் அவர்கள் ஏசப்படுவதை ஆயிஷா(ரலி) விரும்பதாதவர்களாக இருந்தார்கள். மேலும்,'அந்த

ஹஸ்ஸான் அவர்கள் தாம் இந்தக் கவிதையைச் சொன்னவர்‘‘ என்று ஆயிஷா(ரலி) கூறுவார்கள்:’(பகைவர்களே!) என் தந்தையும், என் தந்தையின் தந்தையும், என்னுடைய மானமும் உங்களிடமிருந்து முஹம்மத்(ஸல்) அவர்களின் மானத்தைக் காக்கும் கேடயமாகும்‘‘

(தொடர்ந்து) ஆயிஷா(ரலி) கூறினார்.

பிறகு நாங்கள் மதீனா வந்தடைந்தோம். அங்கு வந்து சேர்ந்து ஒரு மாத காலம் நான் றோயுற்று விட்டேன். மக்களோ அவதூறு கற்பித்தவர்களின் சொல்லைப் பரப்பிக் கொண்டிருந்தார்கள். இந்த அவதூறு பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. நான் நோயுற்றுபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் வழக்கமாகக் காட்டுகிற பரிவை (இந்த முறை நான் நோய்வாய்ப்பட்டிருந்தபோது) அவர்களிடம் காண முடியாமல் போனது எனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தியது. அவர்கள் வருவார்கள் சலாம் சொல்வார்கள் பிறகு,‘எப்படி இருக்கிறாய்?’ என்று கேட்பார்கள் பிறகு போய் விடுவார்கள். அவ்வளவு தான் இதுதான் எனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தியது. (என்னைக் குறித்து வெளியே பேசப்பட்டு வந்த) அந்த தீய சொல்லில் ஒரு சிறிதும், நான் நோயிலிருந்து குணமடைந்து வெளியே செல்லும் வரை எனக்குத் தெரியாது. அப்போது நான் மிஸ்தஹ்ஹின் தாயாருடன் நாங்கள் கழிப்பிடமாகப் பயன்படுத்தி வந்த’மனாஸிஉ’ (எனப்படும் புறநகர்ப் பகுதியை) நோக்கிச் சென்றோம். நாங்கள் இரவு நேரங்களில் மட்டும் இவ்வாறு செல்வோம். எங்கள் வீடுகளுக்கு அருமிலேயே கழிப்பிடங்களை அமைத்துக் கொள்வதற்கு முன்னால் நாங்கள் இவ்வாறு (புறநகர்ப் பகுதிகளுக்கு) சென்று கொண்டிருந்தோம். எங்களுடைய இந்த வழக்கம் முந்தைய அரபுகளின் வழக்கத்தை ஒத்ததாயிருந்தது. எங்கள் வீடுகளுக்கு அருமிலேயே கழிப்பிடங்கள் அமைப்பதை நாங்கள் தொந்தரவாகக் கருதி வந்தோம். நானும் உம்மு மிஸ்தஹ்ஹும் சென்றோம். அவர் அபூ ருஹ்கி இப்னு முத்தலிப் இப்னி அப்து மனாஃப் அவர்களின் மகளாவார். அபூ பக்ர்(ரலி) அவர்களின் தாயின் சகோதரியான (சல்மா) பின்த் ஸக்ர் இப்னி ஆமிர் தான் உம்மு மிஸ்தஹ்ஹின் தாயாராவார். உம்மு மிஸ்தஹ்ஹின் மகனே, மிஸ்தஹ் இப்னு உஸாஸா இப்னி அப்பாத் இப்னு முத்தலிப் ஆவார். (இத்தகைய) உம்மு மிஸ்தஹ்ஹும் நானும் எங்கள் (இயற்கைத்) தேவைகளை முடித்துக் கொண்டு என் வீடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போது உம்மு மிஸ்தஹ் தன் ஆடையில் இடறிக் கொண்டார். உடனே அவர்,‘மிஸ்தஹ் நாசமாகட்டும்‘‘ என்று (தன் மகனை சபித்தவராகக்) கூறினார். நான்,‘மிக மோசமான சொல்லைச் சொல்லிவிட்டீர். பத்ருப்போரில் பங்கெடுத்த ஒரு மனிதரையா ஏசுகிறீர்‘‘ என்று கூறினேன். அதற்கு அவர்,‘அம்மா! அவர் என்ன கூறினார் என்று நீங்கள் கேள்விப்படவில்லையா?’ என்று கேட்டார்.’என்ன கூறினார்?’ என்று நான் வினவ, அவதூறு கற்பித்தவர்கள் சொன்ன (அபாண்டத்)தை அவர் எனக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு என் நோய் இன்னும் அதிகரித்துவிட்டது. நான் என் இல்லத்திற்குத் திரும்பி வந்தபோது (என் கணவர்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்து சலாம் கூறிவிட்டு’எப்படி இருக்கிறாய்?’ என்று கேட்டார்கள். அப்போது நான்,‘என் தாய் தந்தையரிடம் செல்ல எனக்கு அனுமதி தருவீர்களா?’ என்று கேட்டேன். (உண்மையிலேயே அப்படியொரு வதந்தி உலவுகிறதூா என்று விசாரித்து, என் மீதான அவதூறுச்) செய்தியை என் பெற்றோரிடமிருந்து (அறிந்து) உறுதிப்படுத்திக் கொள்ள விரும்பினேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். (நான் என் தாய் வீட்டிற்குச் சென்றேன்) என் தாயாரிடம்,‘அம்மா! மக்கள் (என்னைப் பற்றி) என்ன பேசிக் கொள்கிறார்கள்?’ என்று கேட்டேன். என் தாயார்,‘அன்பு மகளே! உன் மீது (இந்த விஷயத்தைப்) பெரிதுபடுத்திக் கொள்ளாதே அல்லாஹ்வின் மீதாணையாக! சக்களத்திகள் பலரும் இருக்க, (தன்) கணவரிடம் பிரியத்துக்குரியவளாக இருக்கும் அழகொளிரும் பெண்ணொருத்தியைக் குறித்து அவளுடைய சக்களத்திகள் அதிகமாக (வதந்திகள்) பேசத்தான் செய்வார்கள். அவ்வாறு பேசமாலிருப்பது (பெரும்பாலும்) குறைவேயாகும்‘‘ என்று கூறினார்கள். நான்,‘சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ்

தூயவன்) இப்படியா மக்கள் பேசிக் கொள்கிறார்கள்‘‘ என்று (வியப்புடன்) கேட்டேன். அன்றிரவு காலை வரை அழுதேன் என் கண்ணீரும் நிற்கவில்லை உறக்கமும் என்னைத் தழுவவில்லை. காலை நேரம் வந்த போதும் அழுதேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் மனைவியை (என்னை)ப் பிரிந்து விடுவது குறித்து ஆலோசனை கேட்பதற்காக அலீ இப்னு அபீ தாலிப் அவர்களையும், உஸாமா இப்னு ஸைத் அவர்களையும் அழைத்தார்கள் அப்போது வஹீ (இறைச்செய்தி) (வேத வெளிப்பாடு - தாற்காலிகமாக) நின்று போயிருந்தது. உஸாமா அவர்களோ, நான் நிரபராதி என தாம் அறிந்துள்ளதையும், நபி(ஸல்) அவர்களின் குடும்பத்தார் மீது உள்ளத்தில் தாம் கொண்டிருந்த (பாசத்)தையும் வைத்து ஆலோசனை கூறினார்கள். ’(இறைத்தூதர் அவர்களே!) தங்களின் துணைவியரிடம் நல்ல (குணத்)தைத் தவிர வேறெதையும் நான் அறியவில்லை‘‘ என்று உஸாமா கூறினார்கள். அலீ அவர்களோ (நபி-ஸல் - அவர்களின் மனவேதனையைக் குறைக்கும் விதமாக),‘இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்தவில்லை. ஆயிஷா அன்றிப் பெண்கள் நிறையப் பேர் இருக்கின்றனர். பணிப்பெண்ணை (பரீராவை)க் கேளுங்கள். அவள் உங்களிடம் உண்மையைச் சொல்வாள்‘‘ என்று கூறினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பணிப்பெண்ணான) பரீராவை அழைத்து,‘பரீராவே! நீ (ஆயிஷாவிடம்) உனக்கு சந்தேகத்தை ஏற்படுத்தும் (செயல்) எதையாவது பார்த்திருக்கிறாயா?’ என்று கேட்டார்கள். அதற்கு பரீரா,‘தங்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! அவர் குழைத்த மாவை அப்படியே போட்டுவிட்டு உறங்கிப் போய் விடுவார் வீட்டிலுள்ள ஆடு வந்து அதைத் தின்று விடும் அத்தகைய (கவனக்குறைவான) இளவயதுப் பெண் என்பதைத் தவிர அவரைக் குறை சொல்லக் கூடிய விஷயம் எதையும் அவரிடம் நான் பார்க்கவில்லை‘‘ என்று பதில் கூறினார்.

அன்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மிம்பரில் (மேடையில்) ஏறி நின்று அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூலை தண்டிப்பதற்கு (தமக்கு) உதவும்படி (தம் தோழர்களிடம்) கோரினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘முஸ்லிம்களே! என் வீட்டார் விஷயத்தில் (வதந்தி கிளப்பி) எனக்கு மனவேதனையளித்த ஒரு மனிதனை தண்டித்திட எனக்கு உதவி புரிபவர் யார்? அல்லாஹ்வின் மீதாணையாக! என் வீட்டாரிடம் நல்லதையே அறிவேன். அவர்கள் (அவதூறு கற்பித்த நயவஞ்சகர்கள்) ஒரு மனிதரை (என் மனைவியுடன் இணைத்து அவதூறு) கூறியுள்ளனர். ஆனால், அவரைப் பற்றி நல்லதையே அறிவேன். என்னோடு தான்அவர் என் வீட்டாரிடம் வந்திருக்கிறார் (தனியாக வந்ததில்லை)‘‘ என்ற கூறினார்கள். உடனே பனு அப்தில் அஷ்ஹல் கூட்டத்தைச் சேர்ந்த ஸஅத் இப்னு முஆத்(ரலி) எழுந்து நின்று,‘இறைத்தூதர் அவர்களே! அவனை தண்டிக்கத் தங்களுக்கு நான் உதவுகிறேன். அவன் (எங்கள்) அவ்ஸ் குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் நாங்கள் அவனுடைய கழுத்தைத் துண்டித்து விடுகிறோம். எங்கள் சகோதரர்களான கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்தவனாக அவன் இருந்தால் (என்ன செய்ய வேண்டுமென்று) தாங்கள் எங்களுக்கு உத்தரவிடுங்கள். தங்கள் உத்தரவை நாங்கள் நிறைவேற்றுகிறோம்‘‘ என்று கூறினார்கள். உடனே,‘கஜ்ரஜ்’ குலத்தைச் சேர்ந்த ஒருவர் எழுந்தார். அவர்’கஸ்ரஜ்’ குலத்தின் தலைவரான ஸஅத் இப்னு உபாதா ஆவார். ஹஸ்ஸான் இப்னு ஸாபித் அவர்களின் தாயார், இவரின் குடும்பத்தில் ஒருவரும், இவருடைய தந்தையின் சகோதரின் மகளும் ஆவார். இவர் அதற்கு முன் நல்ல மனிதராகத்தான் இருந்தார். ஆயினும், குலமாச்சரியம் அவரை உசுப்பிவிடவே ஸஅத் இப்னு முஆத் அவர்களைப் பார்த்து’அல்லாஹ்வின் மீதாணையாக! தவறாகச் சொல்லிவிட்டீர் அவனை நீர் கொல்லமாட்டீர். அது உம்மால் முடியாது. அவன் உம்முடைய குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் அவன் கொல்லப்படுவதை நீர் விரும்பமாட்டீர்‘‘ என்று கூறினார். உடனே உசைத் இப்னு ஹுளைர்(ரலி) எழுந்து நின்று இவர், ஸஅத் இப்னு முஆத் அவர்களின் தந்தையின் சகோதரர் மகன்

ஆவார். -ஸஅத் இப்னு உபாதா அவர்களிடம், 'நீர் தாம் தவறாகப் பேசினீர். அல்லாஹ்வின் மீதாணையாக! அவனை நாங்கள் கொன்றே தீருவோம். நீர் ஒரு நயவஞ்சகர். (அதனால்தான்) நயவஞ்சகர்களின் சார்பாக வாதிடுகிறீர்'' என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மேடை மீது நின்று கொண்டிருக்க அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரண்டு குலத்தாரும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து சண்டையிடத் தயாராம்விட்டனர். நபி(ஸல்) அவர்கள் (மேடையிலிருந்து இறங்கி) அவர்கள் மௌனமாகும் வரை அவர்களை அமைதிப்படுத்தினார்கள். பிறகு தாமும் மௌனமானார்கள். அன்றைய நாள் முழுவதும் நான் அழுது கொண்டிருந்தேன். என் கண்ணீரும் நிற்கவில்லை என்னை உறக்கமும் தழுவவிலை. காலையானதும் என் தாய் தந்தையர் என் அருகேயிருந்தனர். நானோ இரண்டு இரவுகள் ஒரு பகல் (முழுக்க), என் ஈரல் பிளந்து விடுமோ என்றெண்ணம் அளவிற்கு அழுதிருந்தேன். என் கண்ணீரும் நிற்கவில்லை என்னை உறக்கமும தழுவவில்லை. என் தாய் தந்தையர் என் அருகேயிருக்க நான் அழுது கொண்டிருந்தபோது அன்சாரிப் பெண்ணொருத்தி வந்து என்னிடம் உள்ளே வர அனுமதி கேட்டாள். நான் அவளுக்கு அனுமதியளித்தவுடன் என்னுடன் சேர்ந்து அவளும் அழுதபடி அமர்ந்து கொண்டாள். நாங்கள் இவ்வாறு இருந்து கொண்டிருக்கும்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து சலாம் கூறிவிட்டு அமர்ந்தார்கள். (என்னைப் பற்றி) அவதூறு சொல்லப்பட்ட நாளிலிருந்து அவர்கள் என்னருகே அமர்ந்ததில்லை. ஒரு மாத காலம் வரை என் விஷயத்தில் (அல்லாஹ்விடமிருந்து தீர்ப்பு) எதுவும் அவர்களுக்கு வஹீயாக அருளப்படாமலேயே அவர்கள் இருந்து வந்தார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏகத்துவ உறுதிமொழி கூறி இறைவனைப் புகழ்ந்துவிட்டு, 'நிற்க, ஆயிஷா! உன்னைக் குறித்து இன்னின்னவாறு எனக்குச் செய்தி வந்துள்ளது. நீ நிரபராதியாக இருந்தால் அல்லாஹ் விரைவில் உன்னை குற்றமற்றவள் என்று அறிவித்து விடுவான். நீ குற்றமேதும் செய்திருந்தால் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புகோரி அவன் பக்கம் திரும்பி விடு. ஏனெனில், அடியான் தன்னுடைய பாவத்தை ஒப்புக் கொண்டு (மனம் திருந்தி) பாவமன்னிப்புக் கோரினால் அவனுடைய கோரிக்கையை ஏற்று அல்லாஹ் அவனை மன்னிக்கிறான்'' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் பேச்சை முடித்தபோது என்னுடைய கண்ணீர் (முழுவதுமாக) நின்று போய் விட்டிருந்தது. அதில் ஒரு துளியும் (எஞ்சியிருப்பதாக) நான் உணரவில்லை. நான் என் தந்தையார் (அபூ பக்ர் அவர்கள்) இடம், 'இறைத்தூதர் சொன்னதற்கு என் சார்பாக பதில் கூறுங்கள்'' என்று சொன்னேன். அதற்கு என் தந்தை, 'அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் தூதரிடம் என்ன (பதில்) சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை'' என்று கூறினார்கள். நான் என் தாயார் (உம்மு ரூமான்) இடம், 'இறைத்தூதர் சொன்னதற்கு (என் சார்பாக) பதில் கூறுங்கள்'' என்று சொன்னேன். அதற்கு என் தாயார், 'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை'' என்று கூறினார்கள். அதற்கு நான், 'நானோ வயது குறைந்த இளம்பெண் ஆவேன். குர்ஆனிலிருந்து நிறையத் தெரியாதவளும் ஆவேன். இந்நிலையில், அல்லாஹ்வின் மீதாணையாக! (மக்கள் என்னைப் பற்றிப் பேசிக் கொண்ட) இச்செய்தியை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். அது உங்கள் மனத்தில் பதிந்து போய், அதை உண்மையென்று நீங்கள் நம்பி விட்டீர்கள் என்பதை அறிவேன். எனவே, நான் குற்றமற்றவள் என்று உங்களிடம் சொன்னால் நீங்கள் அதை நம்பப் போவதில்லை நான் (குற்றம்) ஏதேனும் புரிந்திருப்பதாக ஒப்புக் கொண்டால் - நான் குற்றமற்றவன் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும் - (நான் சொல்வதை அப்படியே உண்மையென்று ஏற்று) என்னை நம்பி விடுவீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்கும் உங்களுக்கும் (நபி) யூசுஃப்(அலை) அவர்களின் தந்தை (நபி - யஅகூப்- அலை) அவர்களையே உவமையாகக் கருதுகிறேன். (அதாவது:) (இதைச்) சகித்துக் கொள்வதே நல்லது நீங்கள் புனைந்து சொல்லும் விஷயத்தில் அல்லாஹ்விடம் தான் நான் பாதுகாப்புக் கோர வேண்டும். (திருக்குர்ஆன் 12:18)'' என்று கூறினேன்.'நான் அப்போது குற்றமற்றவள் என்பதை

அல்லாஹ் அறிவான் (அந்த) அல்லாஹ் நான் குற்றமற்றவள் என நிச்சயம் அறிவிப்பான்‘‘ என்ற நம்பிக்கையுடன் நான் என் படுக்கையில் (வேறுபக்கமாகத்) திரும்பிப் படுத்துக் கொண்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! என் விஷயத்தில் (மக்களால்) ஓதப்படுகிற வஹீ (இறைச்செய்தி) - வேத வெளிப்பாட்டை - (திருக்குர்ஆனில்) அல்லாஹ் அருளுவான் என்று நான் நினைத்தும் பார்த்திருக்கவில்லை. அல்லாஹ் என் தொடர்பாக ஏதேனும் பேசுகிற அளவிற்கு நான் உயர்ந்தவள் அல்ல என்பதே என் மனத்தில் என்னைப் பற்றிய முடிவாக இருந்தது. மாறாக,‘இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை அல்லாஹ் குற்றமற்றவள் என்று உணர்த்தும் ஏதேனுமொரு கனவைத் தம் உறக்கத்தில் காண்பார்கள்’ என்றே எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தாம் அமர்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்திருக்கவுமில்லை வீட்டார் எவரும் வெளியே செல்லவுமில்லை. அதற்குள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மீது (திருக்குர்ஆன் வசனங்கள்) அருளப்படத் தொடங்கிவிட்டன. உடனே (வேத வெளிப்பாடு வருகிற நேரங்களில்) ஏற்படும் கடுமையான சிரம நிலை நபிகளாருக்கு ஏற்பட்டது அது கடும் குளிர் நபிகளாருக்கு ஏற்பட்டது அது கடும் குளிர் காலமாயிருந்தும் அவர்களின் மேனியிலிருந்து சின்னஞ்சிறு முத்துகளைப் போல் வியர்வைத் துளிகள் வழியத் தொடங்கின. அவர்களின் மீது அருளப்பட்ட (இறைச்) சொற்களின் பாரத்தினால் தான் (அவர்களுக்கு வியர்வை வழியும் அளவிற்குச் சிரம நிலை) ஏற்பட்டது. அந்த நிலை அல்லாஹ்வின் தூதரைவிட்டு விலகியவுடன் அவர்கள் சிரித்துக் கொண்டே பேசிய முதல் வார்த்தையாக,‘ஆயிஷா! அல்லாஹ் உன்னை குற்றமற்றவள் என அறிவித்துவிட்டான்‘‘ என்று கூறினார்கள். உடனே என் தாயார்,‘அல்லாஹ்வின் தூதரிடம் எழுந்து செல்‘‘ என்று (என்னிடம்) கூறினாக்ாள். அதற்கு நான்,‘மாட்டேன் அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் செல்ல மாட்டேன். அல்லாஹ்வை மட்டுமே புகழ்(ந்து, அவனுக்கே நன்றி செலுத்துவேன்‘‘ என்றேன். (அப்போது) அல்லாஹ்,‘(ஆயிஷாவின் மீது) அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர் தாம்‘‘ என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 24:11 - 20) பத்து வசனங்களை அருளியிருந்தான். என் குற்றமற்ற நிலையைத் தெளிவுபடுத்தி அல்லாஹ் இதை அருளினான். (என் தந்தை) அபூ பக்ர் அஸ்ஸித்தீக்(ரலி),‘அல்லாஹ்வின் மீதாணையாக! (என் மகள்) ஆயிஷா குறித்து (அவதூறு) கூறிய பின்பு ஒருபோதும் மிஸ்தஹுக்காக நான் சிறிதும் செலவிட மாட்டேன்‘‘ என்று (சத்தியமிட்டுக்) கூறினார்கள் - மிஸ்தஹ் இப்னு உஸாஸா, தம் உறவினர் என்பதாலும் அவர் ஏழை என்பதாலும், அவருக்காக அபூ பக்ர் அவர்கள் செலவிட்டு வந்தார்கள் - அப்போது அல்லாஹ்,‘உங்களில் செல்வம் மற்றும் தயாள குணம் படைத்தோர் (தங்கள்) உறவினர்களுக்கோ, ஏழைகளுக்கோ, இறைவழியில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ (எதுவும்) கொடுக்க மாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம். (அவர்களால் தங்களுக்கு ஏதும் வருத்தம் ஏற்பட்டிருந்தால்) அவர்கள் அதனை மன்னித்துப் (பிழைகளைப்) பொருட்படுத்தாமல்விட்டுவிடட்டும். அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்ப மாட்டீர்களா? அல்லாஹ் மிகவும் மன்னிப்போனும் கிருபையுடையோனுமாய் இருக்கிறான்‘‘ என்னும் (திருக்குர்ஆன் 24:22) வசனத்தை அருளினான். அபூ பக்ர்(ரலி),‘ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு மன்னிப்பளிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்‘‘ என்று கூறிவிட்டு, மிஸ்தஹ் அவர்களுக்கு ஏற்கனவே தாம் செலவிட்டு வந்ததைத் திரும்பவும் தொடரலானார்கள்.’அல்லாஹ்வின் மீதாணையாக! அவருக்கு(ச் செய்யும் இந்த உதவியை) ஒருபோதும் நான் நிறுத்தமாட்டேன்‘‘ என்றும் கூறினார்கள். (திருக்குர்ஆனில் என்னுடைய கற்பொழுக்கம் பற்றிய வசனங்கள் அருளப்படுவதற்கு முன்னால்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் விஷயத்தில் (தம் இன்னொரு மனைவியான) ஸைனப் பின்த் ஜஹ்ஷ் அவர்களிடம் விசாரித்தார்கள்.’ஸைனபே! நீ (ஆயிஷாவைக் குறித்து) என்ன அறிந்திருக்கிறாய்?... அல்லது

(அவர் விஷயத்தில்) என்ன பார்த்திருக்கிறாய்?... என்று (ஸைனபிடம்) கேட்டார்கள். அதற்கு அவர், 'இறைத்தூதர் அவர்களே! என் காதுகளையும் என் கண்களையும் (அவற்றின் மீது பழி சுமத்தாமல்) நான் பாதுகாத்து வைத்திருக்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! ஆயிஷாவைக் குறித்து நல்லதையே அறிவேன்" என்று பதிலளித்தார்கள். ஸைனப் அவர்கள் தாம், நபியவர்களின் துணைவியரில் எனக்கு (அழம்லும் நபி-ஸல்-அவர்களின் அன்பிலும்) போட்டியாக இருந்தார்கள். ஆயினும், அல்லாஹ் அவர்களை (இறையச்சமுடைய) பேணுதலான பண்பையளித்துப் பாதுகாத்திருந்தான். ஆனால், ஸைனபுக்காக அவரின் சகோதரி ஹம்னா (என்னுடன்) போரிடலானார். (என் விஷயத்தில் அவதூறு பேசி) அழிந்து போனவர்களுடன் அவரும் அழிந்து போனார்.

அறிவிப்பாளர் இப்னு ஷிஹாப்(ரஹ்) கூறினார்:

இதுதான் அந்த (நால்வர்) குழுவிடமிருந்து எனக்கு கிடைத்த அறிவிப்பாகும்.

ஆயிஷா(ரலி) கூறினார்:

அல்லாஹ்வின் மீதாணையாக! எவரைக் குறித்து (அந்தப் பழிச்சொல்) கூறப்பட்டதோ அந்த மனிதர் (-ஸஃப்வான், தம் அன்னையான என்னுடன் தம்மை இணைத்து அவதூறு பேசுவதைக் கேட்டு), 'சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) என்னுடைய உயிர் எவன் கையில் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! நான் ஒருபோதும் எந்த (அந்நியப்) பெண்ணின் மறைவிடத்தையும் திறந்ததில்லை" என்று கூறினார். அதன் பிறகு அவர் இறைவழியில் (உயிர்த் தியாகியாகக்) கொல்லப்பட்டார்.

இதை உர்வா(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4142. இப்னு ஷிஹாப்(முஹம்மத் இப்னு முஸ்லிம்) அஸ் ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

"அலீ(ரலி), ஆயிஷா(ரலி) மீது அவதூறு கூறியவர்களில் ஒருவர் என்று உங்களுக்கு செய்தி கிடைத்தா?' என என்னிடம் வலீத் இப்னு அப்தில் மலிக் கேட்டார். நான், 'இல்லை (அலீ - ரலி - அவர்கள் அவ்வாறு கூறவில்லை.) மாறாக, 'தம் விஷயத்தில் அலீ(ரலி) மௌனம் சாதித்தார்கள்' என ஆயிஷா(ரலி) தங்களிடம் தெரிவித்தார்கள் என்று உங்கள் குலத்தைச் சேர்ந்த அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்களும், அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி ஹாரிஸ்(ரஹ்) அவர்களும் என்னிடம் கூறினர்" என்று பதிலளித்தேன்.

ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம் (மற்ற அறிவிப்பாளர்கள் இன்னும் இது பற்றி அதிக விளக்கம் கேட்ட போது) அவர்கள் பதிலளிக்கவில்லை. மேலும், சந்தேகத்திற்கு இடமளிக்காத'முஸல்லிமன் அலீ - ரலி- அவர்கள் மௌனமாகவே இருந்தார்கள்' என்ற வார்த்தையையே வலீத் அவர்களுக்கு ஸுஹ்ரீ(ரஹ்) பதிலாகக் கூறினார்கள். (வேறெதையும் அதிக பட்சமாகக் கூறவில்லை.)

ஹதீஸ் 4143. மஸ்ரூக் இப்னு அஜ்தஃ(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) அவர்களின் தாயார் உம்மு ரூமான்(ரலி) என்னிடம் கூறினார்கள்:

நானும் ஆயிஷாவும் உட்கார்ந்திருந்தோம். அப்போது அன்சாரிப் பெண் ஒருத்தி எங்களிடம், 'இன்னாரை அல்லாஹ் நிந்திக்கட்டும். இன்னாரை அல்லாஹ் நிந்திக்கட்டும்" என்று கூறியபடி வந்தாள். நான், 'ஏன் (இப்படிச் சொல்கிறாய்?)" என்று கேட்டேன். அதற்கு அவள், '(அவதூறுச்) செய்தியைப் பேசியவர்களில் என் மகனும் ஒருவன்" என்று பதிலளித்தாள். ஆயிஷா(ரலி), 'என்ன அது?' என்று கேட்டார்கள். அவள்'இன்னின்னவாறு பேசப்படுகிறது" என்றாள். ஆயிஷா(ரலி), 'இதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செவியுற்றார்களா?' என்று கேட்டார்கள்.

அவள், 'ஆம் (செவியுற்றார்கள்)'' என்று பதில் சொன்னாள். பிறகு, '(என் தந்தை) அபூ பக்ர்(ரலி) செவியுற்றார்களா?' என்று ஆயிஷா கேட்டார்கள் இதற்கும் அவள், 'ஆம்'' என்றாள். உடனே, ஆயிஷா(ரலி) மூர்ச்சையடைந்து விழுந்துவிட்டார்கள். பிறகு குளிர் காய்ச்சலுடன் தான் மூர்ச்சை தெளிந்து கண் விழித்தார்கள். நான் ஆயிஷாவின் மீது ஆடையொன்றைப் போர்த்தி மூடிவிட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் வந்து, 'இவளுக்கென்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! இவளைக் குளிர் காய்ச்சல் பீடித்துள்ளது'' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள் ஒருவேளை இவளைப்பற்றிப் பேசப்பட்டு வரும் செய்தியின் காரணத்தால் (காய்ச்சல் ஏற்பட்டு) இருக்கலாம்'' என்று கூறினார்கள். நான், 'ஆம்'' என்றேன். உடனே ஆயிஷா (படுக்கையிலிருந்து எழுந்து) உட்கார்ந்து கொண்டு, 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் சத்தியம் செய்தாலும் நீங்கள் என்னை நம்ப மாட்டீர்கள். நான் என்ன தான் (சமாதானம்) சொன்னாலும் நீங்கள் ஒப்புக் கொள்ளமாட்டீர்கள். எனக்கும் உங்களுக்கும் உவமை, (நபி) யஅகூப் -அலை - அவர்கள் சொன்னது போன்றே)'அல்லாஹ் தான் நீங்கள் (புனைந்து) கூறுபவற்றிற்கெதிராக உதவி கோரத் தகுதியானவன் ஆவான்'' என்று கூறினார்கள். உடனே (நபி(ஸல்) அவர்கள், ஒன்றும் சொல்லாமல் திரும்பிச் சென்றார்கள். பிறகு, ஆயிஷா நிரபராதி என (அறிவிக்கும் வசனத்தை) அல்லாஹ் அருளினான். அப்போது ஆயிஷா(ரலி) (நபி-ஸல் அவர்களிடம்'இதற்காக) அல்லாஹ்வையே நான் புகழ்கிறேன் வேறெவரையும் புகழமாட்டேன் உங்களையும் புகழமாட்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4144. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி), 'இப்பழியை (ஒருவரிடமிருந்து ஒருவராக) உங்கள் நாவுகளால் எடுத்துச் சொல்லிக் கொண்டு..!"என்னும் (திருக்குர்ஆன் 24:15) இறைவசனத்தை'இஃத தலிக் கூனஹு..' என ஓதி வந்தார்கள். (இதன் மூலச் சொல்லான)'வல்க்' (எடுத்துச் சொல்லுதல்) என்பதற்கு'பொய்(யை எடுத்துச்) சொல்லுதல்' என்று பொருள்'' என (விளக்கம்) கூறி வந்தார்கள்.

மேலும், அறிவிப்பாளர் இப்னு அபீ முலைக்கா(ரஹ்), 'இந்த வசனத்தைப் பற்றி ஆயிஷா அவர்களுக்கே நன்கு தெரியும். ஏனென்றால், இந்த வசனம் அவர்கள் குறித்துத் தான் இறங்கியது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4145. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களை ஏசிக் கொண்டே (என் சிற்றன்னை) ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள், 'ஹஸ்ஸானை ஏசாதே. ஏனென்றால், அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தரப்பிலிருந்து (எதிரிகளின் வசைக் கவிதைகளுக்கு) பதிலடி தருபவராய் இருந்தார்கள். (ஒரு நாள்) ஹஸ்ஸான் அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம் வந்து இணைவைப்பவர்(களான குறைஷி)களுக்கெதிராக வசைக் கவி பாட அனுமதி கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், 'பிறகு என்னுடைய வமிசாவளியை என்ன செய்வீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர், '(அவர்களைப் பற்றி நான் வசைக் கவி கூறும்போது) குழைத்த மாவிலிருந்து முடி உருவப்படுத்து போன்று உங்களை உருவி எடுத்து விடுவேன்'' என்று கூறினார்.

உர்வா(ரஹ்) அவர்களின் இன்னோர் அறிவிப்பில், 'நான் ஹஸ்ஸான்(ரலி) அவர்களை ஏசினேன். ஏனெனில், ஆயிஷா(ரலி) மீது அவதூறு கூறுவதில் பெரும்பங்கு வகித்தவர்களில் அவரும் ஒருவராக இருந்தார்'' என்று அன்னார் கூறினார்கள் எனக் காணப்படுகிறது.

ஹதீஸ் 4146. மஸ்ரூக் இப்னு அஸ்தஉ(ரஹ்) அறிவித்தார்

(ஒருமுறை) நாங்கள் (அன்னை) ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்களுக்கு அருகில் (கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அமர்ந்து கவிபாடிக் கொண்டும் தம் பாடல்களால் கவிபாடிக் கொண்டும் தம் பாடல்களால் (ஆயிஷாவை) பாராட்டிக் கொண்டுமிருந்தார்கள். (தம் பாடல்களில்) ஹஸ்ஸான், ஆயிஷா(ரலி) அவர்களைப் பற்றி, '(அவர்கள்) கற்பொழுக்கம் மிக்கவர்கள் கண்ணியம் நிறைந்தவர்கள் எந்த சந்தேகத்தின் பேரிலும் குற்றம் சாட்டப்பட்ட இயலாதவர்கள். (புறமும் அவதூறும் பேசுவதன் மூலம்) அப்பாவிப் பெண்களின் மாமிசங்களைப் புசித்துவிடாமல் பட்டினியோடு காலையில் எழுபவர்கள்'' என்று பாடினார்கள்.

அப்போது ஹஸ்ஸான் அவர்களைப் பார்த்து ஆயிஷா(ரலி), 'ஆனாலும், நீங்கள் அப்படியல்ல (என்னைப் பற்றி அவதூறு பேசுபவர்களுடன் சேர்ந்து கொண்டு நீங்களும் புறம் பேசினீர்கள்'') என்று கூறினார்கள்.

(தொடர்ந்து) அறிவிப்பாளர் மஸ்ரூக்(ரஹ்) கூறினார்:

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம், 'ஹஸ்ஸான் அவர்களைத் தங்களிடம் வர ஏன் அனுமதிக்கிறீர்கள்? அல்லாஹ் (தன்னுடைய வேதத்தில்), 'அவர்களில் (அவதூறு பரப்புவதில்) பெரும் பங்கு வகித்தவருக்கு கடினமான வேதனையுண்டு'' என்று (திருக்குர்ஆன் 24:11ல்) கூறுகிறானே'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'குருடாவதை விடக் கொடிய வேதனை ஏது?' என்று கூறிவிட்டு, 'அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சார்பில் பதிலளிப்பவராக... அல்லது இறைத்தூதர் சார்பில் (எதிரிகளுக்கு பதிலடியாக) வசைக் கவிபாடுபவராக... இருந்தார் என்று கூறினார்கள்.

## ஹு தைபிய்யாப் போரும், (நபியே!) இறை நம்பிக்கையாளர்கள் அந்த மரத்தடியில் உங்களிடம் உறுதிப் பிரமாணம் செய்தபோது மெய்யாகவே அல்லாஹ் அவர்கள் குறித்து திருப்தி கொண்டான்' என்னும் (திருக்குர்ஆன் 48:18-வது) இறைவசனமும்.

ஹதீஸ் 4147. ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா ஆண்டில் நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றோம். ஓரிரவு எங்களுக்கு மழைபெய்தது. (அன்று காலை) நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு ஸுப்ஹு தொழுகை நடத்தினார்கள். பிறகு எங்களை நோக்கி நேராகத் திரும்பி, 'உங்களுடைய இறைவன் என்ன கூறினான் என்பதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்'' என்று நாங்கள் கூறினோம்.

அப்போது, 'என்னை விசுவாசிக்கக் கூடியவர்களும் என்னை நிராகரிக்கக் கூடியவர்களுமாக என் அடியார்கள் (இரண்டு பிரிவினராக) உள்ளனர். 'அல்லாஹ்வின் கருணையினாலும், அல்லாஹ் அளித்த வாழ்வாதாரத்தாலும், அவனுடைய அருட்கொடையினாலும் நமக்கு மழை பொழிந்தது' என்று கூறுபவர்கள் என்னை நம்பி நட்சத்திரத்திரத்தை மறுத்தவர்களாவர். 'இந்த நட்சத்திரத்தினால் தான் எங்களுக்கு மழை பொழிந்தது' எனக் கூறுபவர்கள் என்னை நிராகரித்து நட்சத்திரத்தை விசுவாசித்தவர்களாவர்' என்று அல்லாஹ் சொன்னான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 4148. கத்தாதா(ரஹ்) அறிவித்தார்

அனஸ்(ரலி),'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் வாழ்நாளில்) நான்கு உம்ராக்கள் செய்தார்கள். அவற்றில் தம் ஹஜ்ஜின்போது செய்த உம்ராவைத் தவிர (மற்ற) அனைத்தையும்'துல் கஅதா' மாதத்திலேயே செய்தார்கள்'' என்று என்னிடம் சொல்லிவிட்டு, அந்த நான்கையும் கூறினார்கள்:

1. ஹுதைபிய்யா நிகழ்வின்போது செய்த உம்ரா. இதை (ஹிஜ்ரி 6-ம் ஆண்டு) துல்கஅதா மாதத்தில் செய்தார்கள்.

2. அதற்கு அடுத்த (ஹிஜ்ரி 7-ம்) ஆண்டு துல்கஅதாவில் செய்த உம்ரா.

3. ஹுனைன் போர்ச் செல்வங்களைப் பங்கிட்டுக் கொடுத்த'ஜிஃரானா' என்னுமிடத்திலிருந்து சென்று (ஹிஜ்ரி 8-ம் ஆண்டு) துல்கஅதாவில் செய்த உம்ரா.

4. தம் ஹஜ்ஜுடன் (ஹிஜ்ரி 10-ம் ஆண்டு) செய்த உம்ரா.

ஹதீஸ் 4149. அபூ கதாதா(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா ஆண்டில் நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் சென்றோம். அப்போது நபி(ஸல்) அவர்களின் தோழர்கள்'இஹ்ராம்' உடையணிந்திருந்தார்கள். நான் (மட்டும்) அணியவில்லை.

ஹதீஸ் 4150. பராஉ(ரலி) கூறினார்

(''நிச்சயமாக நாம் உங்களுக்கு ஒரு மகத்தான வெற்றியளித்துள்ளோம்'' என்னும் 48:1-ம் வசனத்திலுள்ள)'வெற்றி' என்பது மக்கா வெற்றி(யைத் தான் குறிக்கிறது) என்று நீங்கள் கருதுகிறீர்கள். மக்கா வெற்றியும் வெற்றியாகத்தானிருந்தது. (ஆனால்) நாங்கள் ஹுதைபிய்யா சமாதான ஒப்பந்த நாளில் (நடைபெற்ற)'ரிள்வான்' உறுதிப் பிரமாணத்தையே பெரும் வெற்றியாகக் கருதுகிறோம். (அன்று) நாங்கள் (இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன்) ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். ஹுதைபிய்யா என்பது ஒரு கிணறாகும். அந்தக் கிணற்றிலிருந்து ஒரு துளி நீரைக் கூடவிட்டு விடாமல் நாங்கள் (தண்ணீரைச்) சேந்தி விட்டோம். இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது அங்கு அவர்கள் வருகை தந்து அந்தக் கிணற்றின் ஓரத்தில் அமர்ந்தார்கள். பிறகு ஒரு பாத்திரம் தண்ணீர் கொண்டு வரும்படி கூறினார்கள். (அந்தத் தண்ணீரினால்) உளூச் செய்தார்கள். பின்னர் வாய் கொப்பளித்துவிட்டுப் பிரார்த்தித்தார்கள். பிறகு (உளூச் செய்து வாய் கொப்பளித்த) அந்தக் தண்ணீரைக் கிணற்றுக்குள் ஊற்றினார்கள். பின்பு சிறிது நேரம் அந்தக் கிணற்றை நாங்கள் அப்படியேவிட்டுவிட்டோம். பின்னர் அந்தக் கிணறு நாங்களும் எங்கள் வாகனப் பிராணிகளும் (குடிக்க) விரும்பிய (அளவு) தண்ணீரைத் திருப்பித் தந்த.

ஹதீஸ் 4151. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா தினத்தன்று இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஆயிரத்து நானூறு பேர்... அல்லது அதை விட(க் கொஞ்சம்) அதிகம் பேர்... இருந்தனர். அவர்கள் ஒரு கிணற்றருகில் தங்கினர். அப்போது அந்தக் கிணற்றிலிருந்து (எல்லா நீரையும்) இறைத்துவிட்டனர். (தண்ணீர் தீர்ந்து வட்ட போது) நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். (அது பற்றிக் கூறினர்.) அப்போது, நபி(ஸல்) அவர்கள் அந்தக் கிணற்றுக்கு வந்து அதன் ஓரத்தில் அமர்ந்தார்கள். பின்பு,'அந்தக் கிணற்று நீரிலிருந்து ஒரு வாளித் தண்ணீர் கொண்டு வாருங்கள்'' என்று கூறினார்கள். தண்ணீர் கொண்டு வரப்பட்டபோது அதில் உமிழ்ந்தார்கள். பிறகு பிரார்த்தனை புரிந்தார்கள். பிறகு (அதைக் கிணற்றுக்குள் கொட்டிவிட்டு),'அதைக் கொஞ்ச நேரம் அப்படியேவிட்டு விடுங்கள்'' என்று கூறினார்கள். பின்பு (நபித்தோழர்கள்) தாங்களும் தங்கள் வாகனப் பிராணிகளும் தாகம் தணித்துக் கொண்டுப் புறப்பட்டுச் சென்றார்கள்.

ஹதீஸ் 4152. ஜாபிர் (ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா உடன்படிக்கையின்போது மக்களுக்குத் தாகம் ஏற்பட்டது. இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு முன்னால் தோலால் ஆன (நீர்க்) குவளை ஒன்று இருந்தது. அதிலிருந்து நபி (ஸல்) அவர்கள் உளூச் செய்தார்கள். அதன் பிறகு மக்கள் நபி (ஸல்) அவர்களை நோக்கி வந்தனர். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'உங்களுக்கு என்ன (நேர்ந்தது) ?' என்று கேட்டார்கள். 'இறைத்தூதர் அவர்களே! தங்கள் குவளையிலிருக்கும் தண்ணீரைத் தவிர நாங்கள் உளூச் செய்வதற்கோ குடிப்பதற்கோ எங்களிடம் வேறு தண்ணீரில்லை" என்று கூறினர். அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்களின் கரத்தை அந்தக் குவளைக்குள் வைத்தார்கள். அவர்களின் விரல்களுக்கிடையிலிருந்து ஊற்றுக் கண் போன்று தண்ணீர் பொங்கி வரத் தொடங்கியது.

அப்போது நாங்கள் அந்தத் தண்ணீரை அருந்தவும் செய்தோம். மேலும், உளூவும் செய்தோம்.

(அறிவிப்பாளர் சாலிம் இப்னு அபில் ஜஅத் - ரஹ் - அவர்கள் கூறுகிறார்கள்:) 'நான் ஜாபிர் (ரலி) அவர்களிடம், 'அன்று நீங்கள் எத்தனை பேர் இருந்தீர்கள்?' என்று கேட்டேன். 'நாங்கள் ஒரு லட்சம் பேராக இருந்திருந்தாலும் அந்தத் தண்ணீர் எங்களுக்குப் போதுமானதாக இருந்திருக்கும். நாங்கள் ஆயிரத்து ஐநூறு பேர் தாம் இருந்தோம்!" என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4153. கத்தாதா (ரஹ்) கூறினார்

நான் ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) அவர்களிடம், 'அவர்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தார்கள்' என்று ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறி வந்தார்கள்' என்று எனக்குச் செய்தி கிடைத்துள்ளதே" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் என்னிடம், 'ஹுதைபிய்யா தினத்தன்று நபி (ஸல்) அவர்களிடம் உறுதிப் பிரமாணம் செய்து கொடுத்தவர்கள் ஆயிரத்து ஐநூறு பேர் இருந்தனர்' என்று ஜாபிர் அவர்களே எனக்கு அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 4154. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா தினத்தன்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம், 'பூமியிலிருப்பவர்களில் நீங்களே சிறந்தவர்கள்" என்று கூறினார்கள். (அப்போது) நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம். இப்போது (மட்டும்) எனக்குக் கண்பார்வை தெரியுமானால் அந்த (ரிள்வான் உறுதிப் பிரமாணம் நடைபெற்ற) மரத்தின் இடத்தைக் காண்பித்திருப்பேன்" என்று கூறினார்கள்.

ஜாபிர் (ரலி) அவர்களின் இன்னோர் அறிவிப்பிலும் (அவர்கள்) ஆயிரத்து நானூறு பேர் (இருந்ததாகக் காணப்படுகிறது)

ஹதீஸ் 4155. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அறிவித்தார்

மரத்தினடியில் உறுதிப் பிரமாணம் செய்தவர்கள் (சுமார்) ஆயிரத்து முன்னூறு பேர் ஆவர். (இதில்) 'அஸ்லம்' குலத்தினர் முஹாஜிர்களில் எட்டில் ஒரு பகுதியினராக இருந்தனர்.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 4156. மரத்தினடியில் உறுதிப்பிரமாணம் (பைஅத்துர் ரிள்வான்) செய்தவர்களில் ஒருவரான மிர்தாஸ் இப்னு மாலிக் அல் அஸ்லமீ (ரலி) கூறினார்.

நல்லவர்களில் முதன்மையானவர்கள் முதலாவதாகவும் அவர்களுக்கடுத்தவர்கள் அடுத்ததாகவும் (உயிர்) கைப்பற்றப்படுவர். (இவ்வாறு நல்லவர்கள் மறைந்த பின் இப்புவியில்) மட்டமான பேரீச்சம்

பழத்தையும் வாற்கோதுமையையும் போன்ற தரம் தாழ்ந்த மக்களே எஞ்சியிருப்பர். அவர்களை அல்லாஹ் சற்றும் பொருட்படுத்த மாட்டான்.

ஹதீஸ் 4157 ➘ ஹதீஸ் 4158 மர்வான் இப்னி ஹகம் அவர்களுக்கு மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்

ஹுதைபிய்யா ஆண்டில் நபி(ஸல்) அவர்கள் (சுமார்) ஆயிரத்துக்கும் மேற்பட்ட தம் தோழர்களுடன் (மதீனாவிலிருந்து) புறப்பட்டுச் சென்றார்கள். துல்ஹுலைஃபாவுக்கு வந்ததும் தியாகப் பிராணியின் கழுத்தில் மாலை போன்றவற்றைக் தொங்கவிட்டு அடையாளமும் இட்டுவிட்டு, பின்னர் உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அலீ இப்னு அப்தில்லாஹ் அல் மதீனீ(ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸை நான் சுஃப்யான்(ரஹ்) அவர்களிடமிருந்து எத்தனை முறை செவியேற்றேன் எனக் கணக்கிட்டுக் கூற முடியாது. மேலும் அன்னார்,'தியாகப் பிராணியின் கழுத்தில் மாலை போன்றவற்றைத் தொங்கவிட்டது, அடையாளம் இட்டது ஆகியன நடந்த இடம் குறித்து ஸுஹ்ரி(ரஹ்) அவர்களிடமிருந்து நான் அறியவில்லை'' என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 4159. கஅப் இப்னு உஜ்ரா(ரலி) அறிவித்தார்

(நான் ஹுதைபிய்யா ஆண்டில்'உம்ரா' வுக்காக'இஹ்ராம்' அணிந்திருந்த போது) என் முகத்தில் பேன்கள் விழுந்து கொண்டிருக்க, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னைக் கண்டார்கள். அப்போது'உன் (தலையிலுள்ள) பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம்'' என்றேன். அப்போது ஹுதைபிய்யாவிலிருந்த நபி(ஸல்) அவர்கள் என் தலையை மழிக்குமாறு எனக்குக் கட்டளையிட்டார்கள். மக்காவிற்குள் நுழைய வேண்டுமென்ற எதிர்பார்ப்பில் மக்கள் இருந்ததால் அவர்கள் ஹுதைபியாவிலேயே இஹ்ராமிலிருந்து விடுபடவேண்டுமென்று நபி(ஸல்) அவர்கள் கூறவில்லை. அப்போது, அல்லாஹ் (குற்றப்) பரிகாரம் சம்பந்தப்பட்ட (திருக்குர்ஆன் 02:196-வது) வசனத்தை அருளினான். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'ஒரு'ஃபரக்' தானியத்தை ஆறுபேருக்கு வழங்க வேண்டும் அல்லது ஓர் ஆட்டை குர்பானி செய்ய வேண்டும் அல்லது மூன்று நாள்கள் நோன்பு நோற்க வேண்டும்'' என்று எனக்குக் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 4160 ➘ ஹதீஸ் 4161. (உமர் - ரலி- அவர்களால் விடுதலை செய்யப்பட்ட முன்னாள் அடிமை) அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்

நான் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களுடன் கடைத்தெருவிற்குச் சென்றேன். அப்போது ஓர் இளம் பெண் உமர்(ரலி) அவர்களிடம் வந்து,'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! சின்னஞ்சிறு சிறுவர்களைவிட்டுவிட்டு என் கணவர் இறந்து போய்விட்டார். அல்லாஹ்வின் மீதாணையாக! ஆட்டுக் கால் குளம்பைச் சமைப்பதற்குக் கூட அவர்களால் முடியாது. மேலும், எந்த வித விவசாய நிலமோ, (பால் கறப்பதற்குக்) கால் நடையோ அவர்களிடம் இல்லை. (பசியும்) பஞ்சமும் அவர்களை அழித்து விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். நான் குஅபாஃப் இப்னு ஈமா அல் ஃம்ஃபாரி என்பவரின் மகளாவேன். என் தந்தை இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹுதைபிய்யாவில் பங்கெடுத்தவர்கள்'' என்று கூறினார். அங்கிருந்து நகராமல் அப்பெண்ணுடனே நின்றிருந்த உமர்(ரலி),'நெருங்கிய உறவே வருக!"என்று வாழ்த்துக் கூறினார்கள். பிறகு தம் வீட்டில் கட்டி வைக்கப்பட்டிருந்த சக்தி வாய்ந்த ஓட்டகம் ஒன்றை நோக்கித் திரும்பிச் சென்றார்கள். பின்பு உணவு தானியங்களை இரண்டு மூட்டைகளில் நிரப்பி, அந்த இரண்டையும் அந்த ஒட்டகத்தின் மீது ஏற்றி வைத்தார்கள். அந்த இரண்டு மூட்டைகளுக்குமிடையே (செலவுக்குத் தேவையான) காசுகளையும், ஆடைகளையும்

ஏற்றினார்கள். பிறகு அதன் மூக்கணாங் கயிற்றைப் பிடித்துக் கொண்டு, '(தற்போது) இதை ஓட்டிச் செல். இது தீர்ந்து போவதற்குள் அல்லாஹ் உங்களுக்கு நன்மையைத் தருவான்'' என்று (அப்பெண்மணியிடம்) கூறினார்கள். அப்போது ஒருவர், 'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! இந்தப் பெண்ணுக்கு அதிகமாகவே வழங்கி விட்டீர்கள்'' என்று கூறினார். (அதற்கு) உமர் (ரலி), 'உன்னை உன்னுடைய தாய் இழக்கட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! இந்தப் பெண்ணின் தந்தையும் சகோதரரும் சிறிது காலம் ஒரு கோட்டையை முற்றுகையிட்டு அதனை அவர்களிருவரும் வெற்றி கொண்டதை பார்த்தேன். பிறகு அதில் (கிடைத்த போர்ச் செல்வத்தில்) நமக்குரிய பங்குகளைக் கோரலானோம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4162. முஸய்யப் இப்னு ஹஸன் (ரலி) அறிவித்தார்

(பைஅத்துர் ரிள்வான் என்னும் உறுதிப்பிரமாணம் நடைபெற்ற) அந்த மரத்தை பார்த்திருக்கிறேன். பின்பு (ஒரு முறை) அங்கு வந்தேன். அப்போது என்னால் அதனை அறிய முடியவில்லை.

முஹ்மூத் இப்னு ஃகைலான் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில் 'பிறகு அது எனக்கு மறந்து போயிற்று'' என முஸய்யப் இப்னு ஹஸன் (ரலி) அவர்கள் கூறினார்கள் எனக் காணப்படுகிறது.

ஹதீஸ் 4163. தாரிக் இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) அறிவித்தார்

நான் ஹஜ்ஜுக்குச் சென்று கொண்டிருந்தபோது, தொழுது கொண்டிருந்த ஒரு கூட்டத்தினரைக் கடந்து சென்றேன். 'இது என்ன தொழுமிடம்?' என்று கேட்டேன். (அதற்கு) அவர்கள், 'இதுதான் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் 'பைஅத்துர் ரிள்வான்' எனும் உறுதிப் பிரமாணம் வாங்கிய மரம் இருந்த இடம்'' என்று கூறினர். பின்பு நான் ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) அவர்களிடம் வந்து இது பற்றித் தெரிவித்தேன். அப்போது அவர்கள், 'அந்த மரத்தினடியில் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிப் பிரமாணம் செய்து கொடுத்தவர்களில் ஒருவரான என் தந்தை (முஸய்யப் (ரலி) அவர்கள், '(உறுதிப் பிரமாணம் நடந்து முடிந்த) மறு ஆண்டு நாங்கள் அங்கு சென்றபோது அந்த மரத்தை நாங்கள் மறந்து விட்டோம். எங்களால் அதனை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை'' என்று கூறினார்கள் எனத் தெரிவித்துவிட்டு, பிறகு ஸயீத் (ரஹ்), 'முஹம்மத் (ஸல்) அவர்களின் தோழர்களே அதனை அறியவில்லை. நீங்கள் அறிந்து விட்டீர்களா? அப்படியானால், நீங்களே அதிகம் தெரிந்தவர்கள்'' என்று (பரிகாசமாகக்) கூறினார்கள்.

ஹதீஸ் 4164. அந்த மரத்தினடியில் (பைஅத்துர் ரிள்வான்) உறுதிப் பிரமாணம் செய்தவர்களில் ஒருவரான முஸய்யப் இப்னு ஹஸன் (ரலி) கூறினார்

நாங்கள் மறு ஆண்டு அந்த இடத்திற்குத் திரும்பவும் சென்றோம். அப்போது அந்த இடம் (அடையாளம் காண முடியாதவாறு) எங்களுக்குக் குழம்பிவிட்டது.

ஹதீஸ் 4165. தாரிக் இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) கூறினார்

ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) அவர்களிடம் அந்த மரத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டது. அப்போது ஸயீத் அவர்கள் சிரித்துவிட்டு, அ(ந்தப் பிரமாணத்)தில் பங்கெடுத்தவரான என் தந்தை (அடுத்த ஆண்டே அந்த மரத்தை எங்களால் கண்டு பிடிக்க முடியவில்லை என்று) தெரிவித்ததாகக் கூறினார்.

ஹதீஸ் 4166. அம்ர் இப்னு முர்ரா (ரஹ்) அறிவித்தார்

அந்த மரத்தின(டியில் பைஅத்துர் ரிள்வான் செய்தவ)ர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) சொல்ல கேட்டேன்.

எவரேனும் ஒரு கூட்டத்தினர் தம் ஸகாத் பொருள்களைக் கொண்டு வந்தால் நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! இவர்களின் மீது கருணை புரிவாயாக!"என்று பிரார்த்திப்பது வழக்கம். என் தந்தை (அபூ அவ்ஃபா(ரலி) தம் ஸகாத்தைக் கொண்டு வந்தார். அப்போது'இறைவா! அபூ அவ்ஃபாவின் குடும்பத்தினருக்குக் கருணை புரிவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 4167. அப்பாத் இப்னு தமீம்(ரஹ்) அறிவித்தார்

'ஹர்ரா' போரின்போது அப்துல்லாஹ் இப்னு ஹன்ழலா(ரலி) அவர்களிடம் மக்கள் உறுதிமொழி கொடுத்துக் கொண்டிருந்தபோது (அப்துல்லாஹ்) இப்னு ஸைத்(ரலி) மக்களிடம்,'எதற்காக இப்னு ஹன்ழலா உறுதிமொழி வாங்குகிறார்?' என்று கேட்டார்கள்.'மரணத்தைச் சந்திக்கத் தயாராயிருக்கும் படி (உறுதிமொழி வாங்குகிறார்)" என்று அவர்களிடம் கூறப்பட்டது. (அப்போது) அவர்கள்,'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (ஹுதைபிய்யாவில் அளித்த உறுதி மொழிக்குப்) பின்னர் வேறெவரிடமும் இதற்காக நான் உறுதி மொழியளிக்க மாட்டேன்" என்று கூறினார்கள்.

இப்னு ஸைத்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹுதைபிய்யாவில் பங்கெடுத்தவராவார்.

ஹதீஸ் 4168. இயாஸ் இப்னு ஸலமா(ரஹ்) அறிவித்தார்

என் தந்தை (ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்கள் அந்த மரத்தின(டியில்'பைஅத்துர் ரிள்வான்' செய்தவ)ர்களில் ஒருவராவார். அவர்கள் என்னிடம்'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (வெள்ளிக்கிழமை)'ஜுமுஆ' தொழுதுவிட்டு (வீட்டிற்கு)த் திரும்புவோம். அப்போது நாங்கள் நிழலுக்காக ஒதுங்கும் அளவிற்குக் கூட, சுவர்களுக்கு நிழல் படிந்திருக்காது" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4169. யஸீத் இப்னு அபீ உபைத்(ரஹ்) அறிவித்தார்

நான், ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்களிடம்,'ஹுதைபிய்யா தினத்தன்று (நபித் தோழர்களான) நீங்கள் எந்த விஷயத்திற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழியளித்தீர்கள்" என்று கேட்டேன். (அதற்கு) அவர்கள்,'மரணத்தைச் சந்திக்கத் தயாராயிருப்பதாக நாங்கள் உறுதிமொழியளித்தோம்" என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4170. முஸய்யப் இப்னு ராஃபிஉ(ரஹ்) அறிவித்தார்

நான் பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்களைச் சந்தித்து,'தங்களுக்கு நல்வாழ்வு கிடைக்கட்டும். தாங்கள் நபி(ஸல்) அவர்களின் நட்பைப் பெற்றதோடு, அவர்களிடம் அந்த மரத்தினடியில் (பை அத்துர் ரிள்வான்) உறுதிப் பிரமாணமும் செய்து கொடுத்தீர்கள்" என்று கூறினேன். அப்போது அவர்கள்,'என் சகோதரர் மகனே! (நபி -ஸல்) அவர்களுக்குப் பிறகு நாங்கள் உருவாக்கிவிட்டதை (எல்லாம்) நீ அறிய மாட்டாய்" என்று (பணிவுடன்) கூறினார்கள்.

ஹதீஸ் 4171.'அந்த மரத்தினடியில் நான் நபி(ஸல்) அவர்களிடம் (பை அத்துர் ரிள்வான்) உறுதிப் பிரமாணம் செய்து கொடுத்தோம்" என்று ஸாபித் இப்னு ளஹ்ஹாப்(ரலி) கூறினார்.

இதை அபூ கிலாபா அப்துல்லாஹ் இப்னு ஸைத்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4172. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

"நிச்சயமாக, நாம் உங்களுக்கு ஒரு வெளிப்படையான வெற்றியினை அளித்துள்ளோம்" என்னும் (திருக்குர்ஆன் 48:01) வசனம் ஹுதைபிய்யா (சமாதான ஒப்பந்தத்தைக் குறிக்கக் கூடியது) ஆகும்" என்று கூறினேன். (அப்போது) நபி(ஸல்) அவர்களின் தோழர்கள்,'(நபியவர்களே,) தங்களுக்கு இனிய வாழ்த்துகள். (தங்கள் பாவங்கள் அனைத்தையும் இறைவன் மன்னித்துவிட்டதாக அந்த

வசனத்தின் தொடர்ச்சியில் கூறுகிறானே, அந்த வெற்றியினால்) எங்களுக்கு என்ன (பயன்)?' என்று கேட்டனர். அப்போது,'இறைவிசுவாசிகளான ஆண்களையும் பெண்களையும் சொர்க்கங்களில் பிரவேசிக்கச் செய்வதற்காகவே (இவ்வாறு நாம் வெற்றியளித்தோம்) அந்த சொர்க்கங்களுக்குக் கீழே நதிகள் ஓடிக் கொண்டிருக்கும்'' என்னும் (திருக்குர்ஆன் 48:05) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா இப்னு ஹஜ்ஜாஜ்(ரஹ்) கூறினார்.

பிறகு நான் கூஃபாவுக்கு வந்து, இந்த ஹதீஸையெல்லாம் கத்தாதா(ரஹ்) அவர்களிடமிருந்து கேட்டதாக (அங்குள்ளவர்களிடம்) அறிவித்தேன். பிறகு நான் கூஃபாவிலிருந்து திரும்பி (கத்தாதா - ரஹ் - அவர்களிடம்) வந்து அவர்களிடம் இது பற்றிக் கூறினேன். அப்போது அவர்கள்,'நாம் உங்களுக்கு வெற்றியளித்தோம்'' என்னும் வசனம் ஹுதைபிய்யாவைக் குறிக்கிறது என்பதை எனக்கு அனஸ்(ரலி) அறிவித்தார். 'தங்களுக்கு இனிய வாழ்த்துகள்'' என்று (தொடங்கும் ஹதீஸை) இக்ரிமா(ரலி) அவர்களே எனக்கு அறிவித்தார்கள் (முழு ஹதீஸையும் ஒரே நபரிடமிருந்து நான் கேட்டு அறிவிக்கவில்லை)'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4173. மஜ்ஸஆ இப்னு ஸாஹிர் அல் அஸ்லமீ(ரஹ்) அறிவித்தார்

என் தந்தை ஸாயிர் இப்னு அல் அஸ்வத்(ரலி) அந்த மரத்தில் (நடந்த'பை அத்துர் ரிள்வான் உறுதிமொழி ஏற்பில்) பங்கெடுத்தவர்களாவார். அன்னார் கூறினார்கள்.

கழுதை இறைச்சி (வெந்து கொண்டிருந்த) சட்டிக்குக் கீழே நான் (நெருப்பு) மூட்டிக் கொண்டிருந்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அறிவிப்பாளர்,'கழுதை இறைச்சியை (உண்ண வேண்டாமென) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களுக்குத் தடை விதிக்கிறார்கள்'' என்று அறிவித்தார்.

ஹதீஸ் 4174. மஜ்ஸஆ இப்னு ஸாஹிர் இப்னி அல் அஸ்லமீ(ரஹ்) அறிவித்தார்

என்னுடைய (பனு அஸ்லம்) குலத்தைச் சேர்ந்த வரும், அந்த மரத்தின(டியில்'பை அத்துர் ரிள்வான்' செய்தவ)ர்களில் ஒருவருமான உஹ்பான் இப்னு அவ்ஸ்(ரலி) அவர்களுக்கு முழங்காலில் வலி ஏற்பட்டிருந்தது. அவர்கள் (தொழுகையில் தரையில் முழங்கால் மூட்டு அழுந்தாமலிருப்பதற்காக) சஜ்தா செய்யும்போது தம் முழங்காலுக்குக் கீழே தலையணை ஒன்றை வைத்துக் கொள்வார்கள்.

ஹதீஸ் 4175. புஷைர் இப்னு யஸார்(ரஹ்) அறிவித்தார்

அந்த மரத்தின(டியில்'பைஅத்துர் ரிள்வான்' செய்தவ)ர்களில் ஒருவரான சுவைத் இப்னு நுஅமான்(ரலி)'(கைபருக்கு அரும்லுள்ள'ஸஹ்பா' என்னுமிடத்தில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமும் அவர்களின் தோழர்களிடமும் மாவு கொண்டு வரப்பட்டது. அப்போது அதை அவர்கள் சாப்பிட்டார்கள்..!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4176. அபூ ஜம்ரா நஸ்ர் இப்னு இம்ரான்(ரஹ்) அறிவித்தார்

நான், நபித்தோழர்களில் ஒருவரும், அந்த மரத்தின(டியில் ஃபை அத்துர் ரிள்வான்' செய்தவ)ர்களில் ஒருவருமான ஆயித் இப்னு அம்ர்(ரலி) அவர்களிடம்,'வித்ரு(த் தொழுகை) உடைக்கப்படுமா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆரம்பத்திலேயே நீ வித்ரு தொழுதிருந்தால் இறுதியில் நீ வித்ருத் தொழ வேண்டாம்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4177. (உமர் - ரலி - அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் முன்னாள் அடிமை) அஸ்லம் (ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ஓர் இரவில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். 239 உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்களும் நபியவர்களுடன் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது உமர்பின் கத்தாப் (ரலி) ஏதோ ஒன்றைக் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை. மீண்டும் உமர் அவர்கள் பதிலளிக்கவில்லை. மீண்டும் உமர் அவர்கள் கேட்டார்கள். அப்போதும் அவர்களுக்கு நபிகளார் பதிலளிக்கவில்லை. பிறகு (மீண்டும்) அவர்கள் கேட்டார்கள். அப்போதும் அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை. 'உமரே! உன்னை உன் தாய் இழக்கட்டும். மூன்று முறை (கேள்வி கேட்டு) அல்லாஹ்வின் தூதரை வற்புறுத்தினாய். அந்த ஒவ்வொரு முறையும் அவர்கள் உனக்கு பதிலளிக்கவில்லையே'' (என்று தம்மை தாமே) உமர் அவர்கள் (கடிந்து) கூறினார்கள். மேலும் உமர் (ரலி), 'அதற்குப் பிறகு நான் என்னுடைய ஒட்டகத்தைச் செலுத்தி முஸ்லிம்களுக்கு முன்னால் வந்து சேர்ந்தேன். (அல்லாஹ்வின் தூதரிடம் இப்படி நான் நடந்து கொண்டதற்காக) என் விஷயத்தில் ஏதாவது குர்ஆன் (வசனம்) இறங்கிவிடுமோ என்று அஞ்சினேன். சற்று நேரத்திற்குள் என்னை ஒருவர் அழைப்பதைக் கேட்டேன். (நான் நினைத்தது போன்றே) என் விஷயத்தில் குர்ஆன் (வசனம்) இறங்கிவிட்டிருக்கும் என்று அஞ்சினேன் என்று சொல்லிக் கொண்டு, இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து அவர்களுக்கு சலாம் சொன்னேன். அப்போது அவர்கள், 'இந்த இரவு எனக்கு ஒரு (திருக்குர்ஆன்) அத்தியாயம் அருளப்பட்டுள்ளது. சூரியன் எதன் மீது உதயமாகிறதோ அ(ந்த உலகத்)தை விட எனக்கு அந்த அத்தியாயம் மிகவும் விருப்பமானதாகும்'' என்று கூறினார்கள். பிறகு, 'உங்களுக்கு நாம் வெளிப்படையான தொரு வெற்றியினை அளித்துள்ளோம்'' என்று (தொடங்கும் 48:1-ம் வசனத்தை) ஓதினார்கள்.

ஹதீஸ் 4178 ,4179 ஹதீஸ் 4179 மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி), மர்வான் இப்னி ஹகம் ஆகிய இருவரும் - ஒருவர் மற்றவரை விடக் கூடுதலாகக் கூறினார்

நபி (ஸல்) அவர்கள் 'ஹுதைபிய்யா' ஆண்டில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட தோழர்களுடன் மதீனாவிலிருந்து புறப்பட்டு துல்ஹுலைஃபாவுக்கு வந்ததும் தியாகப் பிராணியின் கழுத்தில் மாலை போன்றவற்றைத் தொங்கவிட்டு அதற்கு அடையாளமும் இட்டார்கள். பின்னர் அங்கிருந்து உம்ராவுக்காக இஹ்ராம் அணிந்தார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள் 'குஸாஆ' குலத்தாரில் (புஸ்ர் இப்னு சுஃப்யான் என்ற) ஒருவரை உளவாளியாக அனுப்பி வைத்தார்கள். 'ஃகதீருல் அஷ்தாத்' எனும் இடத்தில் நபியவர்கள் சென்று கொண்டிருந்தபோது, அவர்களின் உளவாளி வந்து, 'குறைஷிகள் உங்களைத் தாக்குவதற்காகப் பெரும் கூட்டத்தைக் கூட்டியுள்ளனர் பல்வேறு குலத்தினரை (ஓரிடத்தில்) ஒன்று திரட்டி வைத்துள்ளனர். அவர்கள் உங்களுடன் போரிட்டு உங்களை இறையில்லம் (கஅபாவிற்குச்) செல்ல (வோ, மக்காவிற்குள் நுழையவோ) விடாமல் தடுப்பார்கள்'' என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'மக்களே! இறையில்லத்திற்குச் செல்ல விடாமல் நம்மைத் தடுக்க நினைக்கும் இவர்களின் குடும்பத்தாரிடமும் சந்ததிகளிடமும் நான் (போர் தொடுக்கச்) செல்ல வேண்டுமென நீங்கள் கருதுகிறீர்களா? நம்மிடம் அவர்கள் (போர் புரிய) வந்தால், (அதற்கு நாம் பொறுப்பல்ல. நாம் அனுப்பி வைத்த) உளவாளியை (யும்) அந்த இணை வைப்பாளர்களுக்குத் தெரியாமல் அல்லாஹ் ஆக்கிவிட்டான். அவ்வாறு அவர்கள் வராவிட்டால் அவர்களை நாம் இழப்புக்குள்ளாக்கிவிட்டுச் செல்வோம்'' என்று கூறினார்கள். (அப்போது) அபூ பக்ர் (ரலி), 'இறைத்தூதர் அவர்களே! இந்த இறையில்லத்தை நாடித் தானே நீங்கள் வரவில்லையே. எனவே, இறையில்லத்திற்குச் செல்லவிடாமல் நம்மை எவன் தடுக்கிறானோ அவனிடம் நாம்

போரிடுவோம்‘‘ என்று (ஆலோசனை) கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘அல்லாஹ்வின் பெயரால் பயணத்தைத் தொடருங்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4180 , ஹதீஸ் 4181 மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) மர்வான் இப்னி ஹகம் ஆகிய இருவரும் ஹுதைபிய்யா (ஆண்டில் நடந்த)’உம்ரா’ (நிகழ்ச்சி) குறித்துக் கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹுதைபிய்யா தினத்தன்று (குறைஷிகளின் தலைவரான) சுஹைல் இப்னு அம்ரிடம் ஒரு (குறிப்பிட்ட) காலவரம்பிட்டு சமாதான ஒப்பந்தம் (செய்து கொள்வதாக பத்திரம்) எழுதியபோது, சுஹைல் இப்னு அம்ர் (பின்வரும்) சில நிபந்தனைகளையும் விதித்தார்:

எங்களிடமிருந்து ஒருவர் உங்களிடம் வந்தால், அவர் உங்கள் மார்க்கத்தில் இருந்தாலும் சரி, அவரை எங்களிடம் திருப்பி அனுப்பியே ஆகவேண்டும் அவரைவிட்டு நீங்கள் ஒதுங்கிவிட வேண்டும். இந்த நிபந்தனைகள் மீதே தவிர (வேறெதன் மீதும்) அல்லாஹ்வின் தூதரிடம் ஒப்பந்தம் செய்ய சுஹைல் மறுத்தார். (ஆனால், தங்களுக்குப் பாதகமான) இதனை இறைநம்பிக்கையாளர்கள் வெறுத்தார்கள். மேலும், (இதற்கு சம்மதிக்கச்) சிரமப்பட்டார்கள். அது பற்றி (வியந்து) பேசவும் செய்தார்கள். சுஹைல் இந்த நிபந்தனைகள் மீதே தவிர (வேறெதன் மீதும்) அல்லாஹ்வின் தூதரிடம் ஒப்பந்தம் செய்ய மறுத்துவிட்டபோது (அந்த நிபந்தனைகள் ஏற்று) அவருக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒப்பந்தப் பத்திரத்தை) எழுதினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம்மிடம் வந்து சேர்ந்த) சுஹைலின் மகன் அபூ ஜந்தலை அன்றைய தினமே அவரின் தந்தை சுஹைல் இப்னு அம்ரிடம் திரும்ப ஒப்படைத்தார்கள். மேலும், அந்த (ஒப்பந்த)க் காலத்தில் தம்மிடம் வந்த எந்த ஆண் மகனையும் - அவர் முஸ்லிமாக இருந்தாலும் - இறைத்தூதர்(ஸல்) அவர்கள் திருப்பி அனுப்பிவிட்டார்கள். (அப்போது) இறை நம்பிக்கைகொண்ட பெண்கள் ஹிஜ்ரத் செய்தவர்களாக வந்தனர். இவ்வாறு இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கிப் புறப்பட்டு (ஹிஜ்ரத் செய்து) வந்தவர்களில் உக்பா இப்னு அபீ முஐத்தின் மகள் உம்மு குல்ஸூமும் இருந்தார். அவர் இளம் பெண்ணாக இருந்தார். அவரைத் தங்களிடம் திருப்பியனுப்பிவிட வேண்டுமெனக் கோரியபடி அவர்களின் குடும்பத்தினர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்போது, இறை நம்பிக்கை கொண்ட பெண்களின் விஷயத்தில் தன்னுடைய (திருக்குர்ஆன் 60:10-ம்) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

இதை உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4182. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்

“நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் உங்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக வந்தால்...’ என்னும் இந்த (திருக்குர்ஆன் 60:12-ம்) வசனத்தின் காரணத்தினால் (தம்மிடம்) ஹிஜ்ரத் செய்து வந்த இறை நம்பிக்கை கொண்ட பெண்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பரிசோதித்து வந்தார்கள்.

மேலும், அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப்(ரஹ்) தம் தந்தையின் சகோதரிடமிருந்து பின்வருமாறு அறிவித்தார்கள்:

“இணைவைப்பவர்களின் மனைவிமார்களில் ஹிஜ்ரத் செய்து வந்து (முஸ்லிம்களை மணமுடித்துக் கொண்டு)விட்டவர்களுக்காக அவர்களின் (இணை வைப்பாளர்களான) கணவன்மார்கள் (மஹ்ராகச்) செலவிட்டதை அவர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும் என அல்லாஹ் தன் தூதருக்குக் கட்டளையிட்டான்‘‘ இதைக் கூறிவிட்டு, தொடர்ந்து அபூ பஸீர்(ரலி) தொடர்பான அறிவிப்பையும் முழுமையாகக் கூறினார்கள்.

ஹதீஸ் 4183. (இப்னு உமர் - ரலி - அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அன்னாரின் முன்னாள் அடிமை) நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி), குழப்ப(ம் நிறைந்த கால)த்தில் உம்ராவிற்காக (மக்காவிற்குப்) புறப்பட்டுச் சென்றார்கள். அப்போது அவர்கள், 'நான் கஅபாவிற்குச் செல்ல முடியாதவாறு தடுக்கப்பட்டால், நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் (சென்று தடுக்கப்பட்ட ஹுதைபிய்யா சம்பவத்தின் போது) செய்தது போல் செய்வோம்'' என்று கூறிவிட்டு, உம்ராவிற்காக (இஹ்ராம் அணிந்து)'தல்பியா' கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹுதைபிய்யா ஆண்டில் உம்ராவிற்காக இஹ்ராம் அணிந்ததே இதற்குக் காரணமாகும்.

ஹதீஸ் 4184. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) (குழப்பம் நிறைந்த காலத்தில் உம்ராவிற்காக) இஹ்ராம் அணிந்தார்கள். மேலும், (இறையில்லத்திற்குச் செல்ல முடியாமல்) நான் தடுக்கப்பட்டால் இறையில்லம் செல்லவிடாமல் (ஹுதைபிய்யா ஆண்டு) நபி(ஸல்) அவர்களை குறைஷிகள் தடுத்தபோது நபி(ஸல்) அவர்கள் செய்தது போன்று நானும் செய்வேன். 246 என்று கூறிவிட்டு, 'அல்லாஹ்வின் தூதரிடம் உங்களுக்கு அழகிய முன் மாதிரி உள்ளது'' என்னும் (திருக்குர்ஆன் 33:21-ம்) வசனத்தை ஓதினார்கள்.

ஹதீஸ் 4185. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

(அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் - ரலி - அவர்களை ஹஜ்ஜாஜின் ராணுவம் முற்றுகையிட்டிருந்த குழப்பமான கால கட்டத்தில், உம்ராவிற்காக மக்காவிற்குச் செல்லத் திட்டமிட்டிருந்த) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் அவர்களின் புதல்வர்களில் ஒருவர் - உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ், சாலிம் இப்னு அப்தில்லாஹ் ஆகிய இருவரும் என ஓர் அறிவிப்பில் காணப்படுகிறது-'இந்த ஆண்டு தாங்கள் (உம்ராவிற்குச் செல்லாமல் இங்கேயே) தங்கிவிடலாமே. ஏனென்றால், நீங்கள் கஅபாவிற்குச் சென்று சேர மாட்டீர்கள் என்று நான் அஞ்சுகிறேன்'' என்று கூறினார். அதற்கு அவர்கள், 'நாங்கள் (ஹுதைபிய்யா ஆண்டு) நபி(ஸல்) அவர்களுடன் (உம்ரா செய்வதற்காக மக்கா) புறப்பட்டுச் சென்றோம் அப்போது, குறைஷி குல இறைமறுப்பாளர்கள் எங்களை கஅபாவுக்குச் செல்லவிடாமல் தடுத்தனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் தங்களின் தியாகப் பிராணிகளை அறுத்துவிட்டுத் (தம்) தலையை மழித்துக் கொண்டார்கள். நபி(ஸல்) அவர்களின் தோழர்கள் தலைமுடியை குறைத்துக் கொண்டனர். (அனைவரும் இஹ்ராமிலிருந்து விடுபட்டனர்.)'' என்று கூறினார்கள். தொடர்ந்து அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி), 'நான் உம்ரா செய்ய முடிவு செய்து விட்டேன் என்பதற்கு உங்களை சாட்சியாக்குகிறேன். கஅபாவிற்குச் செல்ல எனக்கு வழி விடப்பட்டால் வலம்வருவேன். அங்கு செல்ல முடியாதவாறு நான் தடுக்கப்பட்டால், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்தது போன்று நானும் செய்வேன்'' என்று கூறினார்கள். பின்னர் சிறிது நேரம் நடந்துவிட்டு, '(இஹ்ராமிலிருந்து விடுபடுகிற விஷயத்தில் ஹஜ், உம்ரா ஆகிய) அந்த இரண்டையும் நான் ஒன்று போன்றே கருதுகிறேன். நான் என் உம்ராவுடன் ஹஜ்ஜையும் (என் மீது) கடமையாக்கிக் கொண்டேன் என்பதற்கு உங்களை சாட்சியாக்குகிறேன்'' என்று கூறினார்கள். (பிறகு மக்காவிற்குப் போன போது) ஒரேயொரு தவாஃபும் ஒரேயொரு சஃயும் செய்து (ஹஜ் உம்ரா ஆகிய) இரண்டிலிருந்தும் விடுபட்டார்கள்.

ஹதீஸ் 4186. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

'உமர்(ரலி) அவர்களுக்கு முன்பே (அவர்களின் புதல்வரான) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) முஸ்லிமானார்கள்' என்று மக்கள் பேசிக் கொள்கிறார்கள். (நடந்தது) அவ்வாறல்ல. மாறாக,

ஹுதைபிய்யா தினத்தில் உமர்(ரலி) அன்சாரிகளில் ஒருவரிடமிருந்த தம் குதிரையை அதன் மீது (அமர்ந்து) போரிடுவதற்காக அதனை வாங்கி வருமாறு (தம் புதல்வர்) அப்துல்லாஹ்வை அனுப்பினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்த மரத்தினருகில் (தம் தோழர்களிடம்) உறுதிமொழி வாங்கிக் கொண்டிருந்தார்கள். உமர்(ரலி) அவர்களுக்கு இது தெரியவில்லை. அப்போது அப்துல்லாஹ்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்தார்கள். பிறகு, போய் அந்த குதிரையை வாங்கி, அதனை உமர்(ரலி) அவர்களிடம் கொண்டு வந்தார்கள். அப்போது உமர்(ரலி) போருக்காக (தம் உருக்குச் சட்டையை) அணிந்து கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்த மரத்தினடியில் உறுதிமொழி வாங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்று அப்துல்லாஹ்(ரலி) தெரிவித்தார்கள். உடனே உமர்(ரலி) (தம் புதல்வர்) அப்துல்லாஹ்(ரலி) அவர்களுடன் சென்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி கொடுத்தார்கள். இதைத் தான் மக்கள்,'உமர் அவர்களுக்கு முன்பாகவே (அவர்களின் புதல்வர்) இப்னு உமர் முஸ்லிமானார்' என்று பேசிக் கொள்கிறார்கள்.

ஹதீஸ் 4187. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்

ஹுதைபிய்யாவில் நாளில் நபி(ஸல்) அவர்களுடனிருந்த மக்கள், பல்வேறு மரங்களின் நிழலில் பிரிந்து சென்று (ஓய்வெடுத்துக் கொண்டு) இருந்தனர். அப்போது சிலர் நபி(ஸல்) அவர்களைச் சூழ்ந்து கொண்டிருந்தனர். அப்போது உமர்(ரலி) (தம் புதல்வரை நோக்கி),'அப்துல்லாஹ்வே! மக்கள் அல்லாஹ்வின் தூதரைச் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். என்ன விஷயம் என்று பார்'' என்று கூறினார்கள். (அப்துல்லாஹ் - ரலி -அவர்கள் போய்ப் பார்த்தபோது அல்லாஹ்வின் தூதரிடம்) மக்கள் உறுதிமொழி கொடுத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். உடனே, அப்துல்லாஹ்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்துவிட்டு பின்னர் உமர்(ரலி) அவர்களிடம் திரும்பி வந்தார்கள். (அவர்களிடம் விவரத்தைக் கூறவே) உடனே உமர்(ரலி) அவர்களும் புறப்பட்டுச் சென்று உறுதி மொழியளித்தார்கள்.

ஹதீஸ் 4188. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் உம்ரா செய்தபோது நாங்களும் அவர்களுடனிருந்தோம். (மக்காவில் நுழைந்ததும் புனித கஅபாவை) வலம் வந்தார்கள். நாங்களும் அவர்களுடன் வலம் வந்தோம். அவர்கள் ஸஃபாவுக்கும் மர்வாவுக்கும் இடையே தொங்கோட்டம் ஓடினார்கள். (நாங்களும் ஓடினோம்.) அப்போது (இணைவைக்கும்) மக்காவாசிகளில் எவரும் அவர்களை எந்த விதத்திலும் தாக்கி விடக் கூடாது என்பதற்காக அவர்களை மறைத்துக் கொண்டு (அவர்களுக்கு பாதுகாப்பு அரணாக) இருந்தோம்.

ஹதீஸ் 4189. அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அறிவித்தார்

"ஸிஃப்பீன் சண்டையிலிருந்து ஸஹ்ல் இப்னு ஹுனைஃப்(ரலி) திரும்பி வந்தபோது நாங்கள் அவர்களிடம் (அன்னார் சண்டையில் ஈடுபட்டு காட்டாதது பற்றி) செய்தி அறியச் சென்றோம். அப்போது அவர்கள்,'(நான் இந்தப் போரில் ஈடுபாடு கொள்ளாதது குறித்து என்னைக் குற்றம் சாட்டாதீர்கள். உங்கள்) எண்ணத்தையே குற்றம் சாட்டுங்கள். அபூ ஜஹ்ல் (அபயம் தேடி வந்த ஹுதைபிய்யா உடன்படிக்கையின்) நாளில், நபி(ஸல்) அவர்களின் கட்டளையை ஏற்க மறுப்பதற்கு என்னால் முடிந்திருந்தால் ஏற்க மறுத்திருப்பேன் - அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள் -(அத்தகைய மனநிலையில் அன்று நான் இருந்தேன். அன்று) எங்கள் தோள்களில் நாங்கள் எங்கள் வாட்களை (முடக்கி) வைத்துக் கொண்டது எங்களுக்குச் சிரமம் தரக்கூடிய விஷயமான போருக்கு அஞ்சியல்ல. நாங்கள் அறிந்த எளிய விஷயமான சமாதானத்தை அடைந்திட (முடக்கப்பட்ட) அந்த வாட்களே வழி வகுத்தன. ஆனால், இதுவெல்லாம் ஸிஃப்பீன்

போருக்கு முன்னால் தான். (ஆனால், முஸ்லிம்களுக்கிடையிலேயே போர் மூண்டுவிட்ட இந்தச் சூழ்நிலையில்) நாங்கள் குழப்பத்தின் ஒரு மூலையை அடைக்கப் போனால் இன்னொரு மூலை பீறிட்டு வெடிக்கிறது. இதை எப்படிச் சமாளிப்பது என்று எங்களுக்குத் தெரியவில்லை‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4190. கஅப் இப்னு உஜ்ரா(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா சமயத்தில் (உம்ராவுக்காக நான்'இஹ்ராம்' அணிந்திருந்த போது) நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். (அப்போது என் தலையிலிருந்து) பேன்கள் என் முகத்தின் மீது உதிர்ந்து கொண்டிருந்தன. அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உன்னுடைய தலையிலுள்ள பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம்‘‘ என்று கூறினேன். அதற்கு,'உன்னுடைய தலையை மழித்துக் கொள். பின்பு மூன்று நாள்கள் நோன்பு நோற்றுக் கொள். அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவளி. அல்லது (உன்னால் முடிந்த) ஏதாவது ஒரு தியாகப் பிராணியை அறுத்துக் குர்பானி செய்திடு. (இதுவே இஹ்ராம் அணிந்த நிலையில் தலையை மழித்ததற்கான பரிகாரமாகும்)‘‘ என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர் வரிசையில் வரும்) அய்யூப்(ரஹ்) கூறினார்.

(இந்த மூன்றில்) எதனை முதலில் நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

ஹதீஸ் 4191. கஅப் இப்னு உஜ்ரா(ரலி) அறிவித்தார்

நாங்கள்'இஹ்ராம்' அணிந்தவர்களாக ஹுதைபிய்யாவில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தோம். எங்களை (கஅபாவிற்குச் செல்ல விடாமல்) இணை வைப்பவர்கள் தடுத்து விட்டிருந்தனர். எனக்கு (காது சோணை வரை) நிறைய தலைமுடி இருந்தது. (அதிலிருந்து) பேன்கள் என் முகத்தின் மீது (உதிர்ந்து) விழத் தொடங்கின. அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். அப்போது அவர்கள்,'உன்னுடைய தலையிலுள்ள பேன்கள் உனக்குத் துன்பம் தருகின்றனவா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம்‘‘ என்று கூறினேன். (அப்போதுதான்,'இஹ்ராம்' அணிந்தவர்'இஹ்ராம்' அணிந்திருக்கும்போது செய்யக் கூடாத காரியங்களைச் செய்தால் அதற்கான பரிகாரம் என்ன என்பது தொடர்பாக),'உங்களில் யாரேனும் நோயாளியாக, இருந்தால், அல்லது அவரின் தலையில் துன்பம் தரும் (பேன், பொடுகு, காயம் அல்லது நோய்) ஏதும் இருந்தால் (அதன் காரணத்தால் இஹ்ராம் அணிந்த நிலையிலேயே அவர் தம் தலையை மழித்துக் கொள்ள நேரிட்டால் அதற்குப்) பரிகாரமாக நோன்பு நோற்க வேண்டும் அல்லது தர்மம் செய்ய வேண்டும் அல்லது குர்பானி கொடுக்கவேண்டும்‘‘ என்னும் இந்த (திருக்குர்ஆன் 02:196-ம்) வசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 4192 ‘உக்ல்' மற்றும்'உரைனா' குலத்தாரில் சிலர் மதீனாவிற்கு வந்து நபி(ஸல்) அவர்களிடம், தாங்கள் இஸ்லாத்தை ஏற்பதாகப் பேசினர். அப்போது அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் பால்தரும் கால்நடைகள் வைத்திருப்பவர்கள். நாங்கள் விளைநிலங்கள் வைத்திருப்பவர்கள் அல்லர். (நாங்கள் பால்தரும் கால்நடைகளைக் காடுகளில் மேய்த்து அதன் பாலை அருந்துபவர்களாய் இருந்தோம்)‘‘ என்று கூறினர். அவர்களுக்கு மதீனா(வின் தட்ப வெப்பம்) ஒத்துக்கொள்ளவில்லை. எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (பத்துக்குட்பட்ட) ஒட்டகங்களையும் ஒரு மேய்ப்பரையும் அவர்களு(டைய உபயோகத்து)க்காக வழங்கும் படி உத்தரவிட்டார்கள். மேலும்'ஒட்டகங்கள் (மேயும்) இடத்திற்குச் சென்று அந்த ஒட்டகங்களின் பாலையும் மூத்திரத்தையும் பருகிக் கொள்ளுங்கள் (இன்ஷா அல்லாஹ் நிவாரணம் கிடைக்கும்)‘‘

என்று உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவர்கள் சென்றனர். (அவற்றின் பாலை அருந்தி நிவாரணமும் பெற்றுக் கொண்டனர்.) அவர்கள் (கருங் கற்கள் நிறைந்த)'ஹர்ரா' பகுதியில் இருந்தபோது இஸ்லாத்திலிருந்து விலம் இறை மறுப்பாளர்களாக (மதம்) மாறிவிட்டனர். மேலும், நபி(ஸல்) அவர்களின் கால்நடை மேய்ப்பாளர் (யஸார் (ரலி) அவர்களைக் கொலை செய்துவிட்டு ஒட்டகங்களை (தங்களுடன்) ஓட்டிச் சென்றுவிட்டனர். இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, (அவர்களைப் பிடித்து வர) அவர்களைத் தொடர்ந்து ஆளனுப்பினார்கள். (அவர்கள் பிடிபட்டு மதீனாவுக்குக் கொண்டு வரப்பட்ட போது) அவர்களுக்குத் தண்டனை கொடுக்குமாறு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். (மக்கள்) அவர்களின் கண்களில் பழுக்கக் காய்ச்சிய ஆணிகளால் சூடு போட்டார்கள். அவர்களின் கை கால்கள் வெட்டப்பட்டு, (மதீனாவின் புறநகரான)'ஹர்ரா' பகுதியில் அவர்கள் விடப்பட்டனர். அவர்கள் அந்த நிலையிலேயே மாண்டுபோயினர்.

அறிவிப்பாளர் கத்தாதா(ரஹ்) கூறினார்:

அதற்குப் பிறகு நபி(ஸல்) அவர்கள் (மக்களை) தர்மம் செய்யுமாறு தூண்டிக் கொண்டும் சித்திரவதை செய்யவேண்டாமென தடுத்துக் கொண்டும் இருந்தார்கள்.

கத்தாதா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்'(நபி - ஸல் - அவர்களிடம் வந்தவர்கள்) உரைனா குலத்தினர் (மட்டுமே)' என்று காணப்படுகிறது.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து அபூ கிலாபா(ரஹ்) அவர்களின் (வழியாக வரும்) அறிவிப்பில்,'உக்ல குலத்தாரில் சிலர் (வந்தனர்)" என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4193. (அபூ கிலாபா - ரஹ் - அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அன்னாரின் முன்னாள் அடிமை) அபூ ரஜாஉ(ரஹ்) அறிவித்தார்

நான் என் எஜமானர் அபூ கிலாபா அவர்களுடன் ஷாம் நாட்டிலிருந்தேன். (கலீஃபா) உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) ஒரு தினம் மக்களிடம்,'இந்த'கஸாமா' விஷயத்தில் நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என்று ஆலோசனை கேட்டார்கள். 'அது இறைத்தூதர்(ஸல்) அவர்களும் உங்களுக்கு முன் (வந்த) கலீஃபாக்களும் தீர்ப்பளித்த உண்மை (விதி) தான்" என்று மக்கள் பதிலளித்தனர். அபூ கிலாபா(ரஹ்), அப்போது உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்களின் அரியணைக்குப் பின்னால் இருந்தார்கள். அப்போது அன்பஸா இப்னு ஸயீத்(ரஹ்),'உரைனா குலத்தார் பற்றிய அனஸ்(ரலி) அவர்களின் ஹதீஸ் எங்கே (போயிற்று)?' என்று கேட்டார்கள். 255 அப்போது அபூ கிலாபா(ரஹ்),'(உரைனா குலத்தார் பற்றி) எனக்கும் அனஸ்(ரலி) அறிவித்தார்" என்று கூறினார்கள்.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து அப்துல் அஸீஸ் இப்னு ஸுஹைப்(ரஹ்) அறிவிக்கும் அறிவிப்பில்,'உரைனா குலத்தாரில் சிலர்' என்று காணப்படுகிறது.

அன்ஸ(ரலி) அவர்களிடமிருந்து அபூ கிலாபா(ரஹ்) அறிவிக்கிற அறிவிப்பில்,'உக்ல் குலத்தாரில் சிலர்' (என்று கூறிவிட்டு) முழு நிகழ்ச்சியையும் கூறினார்கள்.

## 'தாத்துல் கரத் போர்

அது, கைபருக்கு மூன்று நாள்களுக்கு முன்னால், நபி(ஸல்) அவர்களின் பால்தரும் ஒட்டகங்களை எதிரிகள் கடத்திச்சென்றபோது நடந்த போராகும்.

ஹதீஸ் 4194. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்

முதல் தொழுகை(யான ஃபஜ்ரு)க்கு அழைப்புக் கொடுக்கப்படுவதற்கு முன்பாகவே நான் (மதீனாவிலிருந்து சிரியா வழியிலுள்ள ஃகாபாவை நோக்கிப்) புறப்பட்டேன். 'தூகரத்' என்னுமிடத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (பால் தரும்) ஒட்டகங்கள் மேய்ந்து கொண்டிருந்தன. அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களுக்குரிய ஓர் அடிமை (வந்து) என்னைச் சந்தித்து, 'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பால் தரும் ஒட்டகங்கள் பிடித்துச் செல்லப்பட்டுவிட்டன'' என்று கூறினான். நான், 'அவற்றை யார் பிடித்துச் சென்றது?' என்று கேட்டேன். அதற்கவன், 'கத்ஃபான் குலத்தார்'' என்று பதில் சொன்னான். உடனே நான் உரக்கச் சப்தமிட்டு, 'யா ஸபாஹா! (அதிகாலை ஆபத்து! உதவி! உதவி!) என்று மதீனாவின் இரண்டு மலைகளுக்கிடையிலிருந்த அனைவருக்கும் கேட்கும்படி மும்முறை கத்தினேன். பிறகு முகத்தைத் திருப்பாமல் நேராக விரைந்து சென்று அவர்களை அடைந்தேன். அவர்கள் (கொள்ளையடித்துச் சென்ற ஒட்டகங்களைக்) கையில் பிடித்துக் கொண்டு நீர் புகட்டிக் கொண்டிருந்தனர். 'நான் அக்வஃ உடைய மகன். இன்று பால் திருடர்கள் (தண்டனை பெறப்போகும்) நாள்'' என்று (பாடியபடி) கூறிக் கொண்டே அவர்களின் மீது அம்பெய்யத் தொடங்கினேன். நான் அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவனாக இருந்தேன். மேலும், நான்'ரஜ்ஸ்' எனும் யாப்பு வகைப் பாடலை பாடிக் கொண்டே அவர்களிடமிருந்து (சில) ஒட்டகங்களை விடுவித்தேன். (அவர்களை நான் விரட்டிச் சென்ற போது) அவர்கள்விட்டுவிட்டுப் போன முப்பது சால்வைகளை நான் எடுத்துக் கொண்டேன். (அப்போது) நபி(ஸல்) அவர்களும் மக்களும் (அங்கு) வந்(து சேர்ந்த)னர். நான், 'இறைத்தூதர் அவர்களே! அந்தக் கூட்டத்தினர் தாகமுடன் இருந்த போதும் அவர்கள் தண்ணீர் குடிக்க விடாமல் நான் தடுத்து விட்டேன். எனவே, (அவர்கள் ஓட்டிச் சென்ற மற்ற ஒட்டகங்களையும் விடுவிக்க) அவர்களை நோக்கி ஒரு படையை இப்போதே அனுப்புங்கள் நோக்கி ஒரு படையை இப்போதே அனுப்புங்கள் என்று கூறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அக்வஃ உடைய மகனே! (அவர்களை) நீ தோற்கடித்துவிட்டாய். எனவே, மென்மையாக நடந்து கொள்'' என்று கூறினார்கள். பிறகு நாங்கள் (மதீனாவிற்குத்) திரும்பி வந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், மதீனாவிற்குள் நுழையும் வரையில் என்னைத் தமக்குப் பின்னே தம் ஒட்டகத்தின் மீது அமர்த்திக் கொண்டார்கள்.

## கைபர் போர்

**ஹதீஸ் 4195.** சுவைத் இப்னு நுஅமான்(ரலி) அறிவித்தார்

கைபர் போர் நடந்த வருடம், நபி(ஸல்) அவர்களுடன் நானும் புறப்பட்டேன். கைபருக்கு அரும்லுள்ள'ஸஹ்பா' என்ற இடத்தை அடைந்ததும் நபி(ஸல்) அவர்கள் அஸ்ருத் தொழுகையைத் தொழுதார்கள். பின்னர், பயண உணவைக் கொண்டு வரும்படிக் கூறினார்கள். அப்போது, மாவைத் தவிர வேறு எதுவும் கொண்டு வரப்படவில்லை. அதைக் குழைக்கும் படி கட்டளையிட்டார்கள். அது குழைக்கப்பட்டதும் அதை நபி(ஸல்) அவர்களும் நாங்களும் சாப்பிட்டோம். பின்னர் மஃக்ரிப் தொழுகைக்காகச் சென்றார்கள். அப்போது வாயை (மட்டும்) கொப்பளித்தார்கள். நாங்களும் வாய் கொப்பளித்தோம். பின்னர் (புதிதாக) உளூச் செய்யாமலேயே தொழுதார்கள்.

**ஹதீஸ் 4196.** ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கி(ப் போருக்காகப்) புறப்பட்டோம். இரவு நேரத்தில் நாங்கள் சென்று கொண்டிருந்தபோது ஒருவர், (என் தந்தையின் சகோதரர்) ஆமிர் இப்னு அக்வஃ(ரலி) அவர்களிடம், 'ஆமிரே! உங்கள் கவிதைகளில் சிலதை(ப் பாடி) எங்களுக்கு கேட்கச் செய்யமாட்டீர்களா?' என்று கூறினார். ஆமிர்(ரலி) கவிஞராக இருந்தார்கள். அவர்கள்

தங்களின் வாகனத்திலிருந்து இறங்கி மக்களுக்காக (பின்வரும் யாப்பு வகைக் கவிதையைப்) பாடி அவர்களின் ஒட்டகங்களைப் பாய்ந்தோடச் செய்தார்கள். 'இறைவா! நீ இல்லையென்றால் நாங்கள் நேர்வழி பெற்றிருக்க மாட்டோம் தொழுதிருக்கவும் மாட்டோம். உனக்காக (எங்களை) அர்ப்பணம் செய்கிறோம். (உன் கட்டளைகளில்) எதனை நாங்கள் கைவிட்டு விட்டோமோ அதற்காக எங்களை மன்னிப்பாயாக! நாங்கள் (போர்க் களத்தில் எதிரியைச்) சந்திக்கும்போது எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! எங்களின் மீது அமைதியைப் பொழிவாயாக! எங்களின் மீது அமைதியைப் பொழிவாயாக! (அறவழியில் செல்ல) நாங்கள் அழைக்கப்பட்டால் நாங்கள் (தயாராக) வந்து விடுவோம். எங்களிடம் மக்கள் அபயக்குரல் எழுப்பினால் (உதவிக்கு வருவோம்)‘‘ என்று பாடிக் கொண்டிருந்தார்கள். (வழக்கம் போன்று பாடலைக் கேட்டு ஒட்டகங்கள் விரைந்தோடத் தொடங்கின.) அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ‘யார் இந்த ஒட்டகவோட்டி?' என்று கேட்டார்கள். 'ஆமிர் இப்னு அக்வஃ' என்று மக்கள் பதிலளித்தார்கள். அப்போது, ‘அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள். அந்த மக்களில் ஒருவர், ‘இறைத்தூதரே! (அவருக்கு வீர மரணமும் அதையடுத்து சொர்க்கமும்) உறுதியாகிவிட்டது. அவர் (நீண்ட காலம் உயிர் வாழ்வதன்) மூலம் எங்களுக்குப் பயன் கிடைக்க (பிரார்த்தனை) செய்யக்கூடாதா? என்று கேட்டார். பிறகு நாங்கள் கைபருக்கு வந்து, கைபர் வாசிகளை முற்றுகையிட்டோம். அப்போது எங்களுக்குக் கடுமையான பசியேற்பட்டது. பிறகு உயர்ந்தோனான அல்லாஹ் அவர்களுக்கு எதிராக (எங்களுக்கு) வெற்றியளித்தான். வெற்றியளிக்கப்பட்ட அன்று மாலை, மக்கள் நிறைய நெருப்புகளை (ஆங்காங்கே) மூட்டினர். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘இது என்ன நெருப்பு? எதற்காக இதை மூட்டியிருக்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். 'இறைச்சி சமைப்பதற்காக‘‘ என்று மக்கள் கூறினர். 'எந்த இறைச்சி?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'நாட்டுக் கழுதைகளின் இறைச்சி' என்று மக்கள் கூறினர். அதற்கு நபி(ஸல்) அவர்கள், ‘அவற்றைக் கொட்டிவிட்டு, அந்தப் பாத்திரங்களை உடைத்து விடுங்கள்‘‘ என்று கூறினார்கள். அப்போது ஒருவர், ‘இறைத்தூதர் அவர்களே! இறைச்சிகளைக் கொட்டிவிட்டு அதன் பாத்திரங்களை கழுவிக் கொள்ளலாமா?' என்று கேட்டார். 'அப்படியே ஆகட்டும்‘‘ என்று கூறினார்கள். (அன்றைய தினம் போருக்காக) மக்கள் அணிவகுத்து நின்றபோது ஆமிர்(ரலி) அவர்களின் வாள் குட்டையாக இருந்தது. (அதனால்) அவர்கள் குனிந்து, ஒரு யூதனின் காலை வெட்டப் போனபோது அன்னாரின் வாளின் மேற்பகுதி, அன்னாரின் முழங்காலையே திருப்பித் தாக்கிவிட்டது. அதனால் அவர்கள் இறந்துவிட்டார்கள். (கைபர் வெற்றிக்குப் பின் மதீனாவை நோக்கி) மக்கள் திரும்பியபோது - ஸலமா(ரலி) கூறினார். 'என்னுடைய கையைப் பிடித்துக் கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னைப் பார்த்து, ‘உங்களுக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். 'என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். (என் தந்தையின் சகோதரர்) ஆமிரின் நற்செயல்கள் (அமல்கள்) அழிந்துவிட்டன் (அவர் தம் வாளினால் தம்மைத் தாமே குத்திக் கொண்டு தற்கொலை செய்தார்)‘‘ என்று மக்கள் எண்ணுகிறார்கள்!"என்று தெரிவித்தேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், ‘இதைக் கூறியவர் தவறிழைத்துவிட்டவர். ஆமிருக்கு நிச்சயமாக (நற்செயல் புரிந்த நன்மை, அறப்போர் புரிந்த நன்மை ஆகிய) இரண்டு நன்மைகள் உண்டு‘‘ என்று கூறியவாறு, தம் இரண்டு விரல்களையும் நபி(ஸல்) அவர்கள் இணைத்துக் காட்டினார்கள். (தொடர்ந்து)‘‘ அவர் துன்பங்களைத் தாங்கினார் (இறைவழியில்) அறப்போரும் புரிந்தார். (துன்பங்களைத் தாங்கியதுடன் அறவழியில் போரும் புரிந்து) பூமியில் உலவிய இவரைப் போன்ற அரபுகள் மிகவும் குறைவானவர்களே‘‘ என்று கூறினார்கள்.

ஹாத்திம்(ரஹ்) அவர்களிடமிருந்து குதைபா(ரஹ்) அறிவிக்கும் அறிவிப்பில், ‘(இவரைப் போன்றவர்) பூமியில் பிறப்பது அரிது‘‘ என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4197. அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரவு நேரத்தில் கைபருக்கு வந்தார்கள் அவர்கள் ஒரு சமுதாயத்தாரிடம் இரவு நேரத்தில் (படையெடுத்துச்) செல்வார்களாயின் காலை நேரம் வரும் வரையில் அவர்களை நெருங்கமாட்டோம். அவ்வாறே காலையானதும் யூதர்கள் தம் மண்வெட்டியையும் (பேரீச்ச ஓலைகளாலான) கூடைகளையும் எடுத்துக் கொண்டு (வயல் வெளிகளை நோக்கி) வெளியேறி வந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்களை யூதர்கள் பார்த்தபோது,'முஹம்மதும், அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மதும், (அவரின் ஐந்து அணிகள் கொண்ட) படையும் (வருகின்றனர்)'' என்று கூறினர். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'கைபர் பாழாம்விட்டது! நாம் ஒரு சமுதாயத்தின் களத்தில் (அவர்களுடன் போரிட) இறங்குவோமாயின் எச்சரிக்கப்பட்ட(வர்களான அந்தச் சமுதாயத்த)வர்களுக்கு அது மிகக் கெட்ட காலையாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4198. அனஸ்(ரலி) அறிவித்தார்

அதிகாலை நேரத்தில் நாங்கள் (போரிடுவதற்காக) கைபருக்குச் சென்றோம். அந்த ஊர்வாசிகள் மண்வெட்டிகளை எடுத்துக் கொண்டு வெளியில் வந்தனர். அவர்கள் நபி(ஸல்) அவர்களைப் பார்த்தபோது,'முஹம்மதும் - சத்தியமாக முஹம்மதும் -(அவரின் ஐந்தணிகள் கொண்ட) படையும் (வருகின்றனர்)'' என்று கூறினர். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் அக்பர் அல்லாஹ் மிகப் பெரியவன். கைபர் பாழாம்விட்டது. நாம் ஒரு சமுதாயத்தின் களத்தில் (அவர்களுடன் போரிட) இறங்குவோமாயின் எச்சரிக்கப்பட்ட அவர்களுக்கு அது மிகக் கெட்ட காலையாகும்'' என்று கூறினார்கள். அப்போது எங்களுக்குக் கழுதை இறைச்சி கிடைத்தது. எனவே, நபி(ஸல்) அவர்களின் அறிவிப்பாளர்,'கழுதை இறைச்சி உண்ண வேண்டாமென அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்களைத் தடுக்கின்றனர். ஏனெனில், அது அசுத்தமாகும்'' என்று அறிவித்தார்.

ஹதீஸ் 4199. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(கைபர் போரின் போது) ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'(இறைத்தூதர் அவர்களே!) கழுதைகள் சாப்பிடப்பட்டுவிட்டன'' என்று கூறினார். அதற்கு (பதிலளிக்காமல்) நபி(ஸல்) அவர்கள் மௌனமாக இருந்தார்கள். பிறகு இரண்டாம் முறையும் அவர் வந்து,'கழுதைகள் சாப்பிடப்பட்டுவிட்டன'' என்று கூறினார். அப்போதும் அவர்கள் மௌனமாகவே இருந்தார்கள். பிறகு மூன்றாம் முறையாக அவர் வந்து,'கழுதைகள் தீர்ந்து போய்விட்டன'' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'பொது அறிவிப்புச் செய்பவர் ஒருவருக்கு உத்தரவிட அவர்,'அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நாட்டுக் கழுதைகளை உண்ண வேண்டாமென உங்களுக்குத் தடை விதிக்கின்றனர்'' என்று மக்களிடையே அறிவித்தார். உடனே, இறைச்சி கொதித்துக் கொண்டிருந்த அந்தப் பாத்திரங்கள் கவிழ்க்கப்பட்டன.

ஹதீஸ் 4200. அனஸ்(ரலி) அறிவித்தார்

கைபருக்கு அருகே (ஓரிடத்தில்) நபி(ஸல்) அவர்கள் இருட்டிலேயே சுப்ஹுத் தொழுதுவிட்டு பிறகு,'அல்லாஹ் மிகப் பெரியவன். கைபர் பாழாம்விட்டது. நாம் ஒரு சமுதாயத்தின் களத்தில் (அவர்களுடன் போரிட) இறங்குவோமாயின் எச்சரிக்கப்பட்ட அவர்களுக்கு அது மிகக் கெட்ட காலையாக அமையும்'' என்று கூறினார்கள்.

கைபர்வாசிகள் (முஸ்லிம் படைகளைக் கண்டதும்) வீதிகளில் ஓடினர். அப்போது நபி(ஸல்) அவர்கள் (தம்முடன்) போரிட்டவர்களைத் தாக்கினார்கள். அவர்களின் குடும்பத்தின(ரான பெண்கள்,

சிறுவர்கள் ஆகியோ)ரைத் கைது செய்தார்கள். கைதியாகப் பிடிக்கப்பட்டவர்களில் ஸஃபிய்யா பின்த் ஹுயை அவர்களும் ஒருவர். அவர்கள் (முதலில்) திஹ்யா அல் கல்பீ(ரஹ்) அவர்களிடம் (அன்னாரின் போர்ச் செல்வத்தின் பங்காகப்) போய்ச் சேர்ந்தார்கள். பிறகு ஸஃபிய்யா அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு சொந்தமானார்கள். அவரின் விடுதலையையே மஹ்ராக ஆக்கி(அவரை நபி - ஸல் - அவர்கள் மணமுடித்துக்) கொண்டார்கள்.

அப்துல் அஸீஸ் இப்னு சுஹைப்(ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸை ஸாபித்(ரஹ்) அறிவிக்கும்போது அவர்களிடம்,'அபூ முஹம்மதே! நபி(ஸல்) அவர்கள் என்ன மஹ்ர் கொடுத்தார்கள் என்று அனஸ்(ரலி) அவர்களிடம் நீங்கள் தான் கேட்டீர்களா?' என்று கேட்டேன். அதற்கு ஸாபித் அவர்கள் தங்களின் கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக ("ஆம்" என்று கூறுவது போன்று) தம் தலையை அசைத்தார்கள்.

ஹதீஸ் 4201 அனஸ்(ரலி) அறிவித்தார்

(கைபர் போரில்) ஸஃபிய்யா பின்த்ஹுயை அவர்களை நபி(ஸல்) அவர்கள் கைது செய்து, பின்னர் அவர்களை விடுதலை செய்து, தாமே அவர்களை மணமுடித்தும் கொண்டார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸாபித்(ரஹ்) கூறினார்:

இச்செய்தியைக் கூறுகையில் அனஸ்(ரலி) அவர்களிடம்'நபி(ஸல்) அவர்கள் என்ன மஹ்ர் கொடுத்தார்கள்" என்று கேட்டேன்.'(ஸஃபிய்யா (ரலி) அவர்களின் விடுதலையையே அவர்களின் மஹ்ராக ஆக்கினார்கள்" என்று அனஸ்(ரலி) பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4202. அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் மீது போர் தொடுத்தபோது அல்லது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (கைபரை) நோக்கிச் சென்று (வெற்றி பெற்றுத்) திரும்பிய போது..., மக்கள் ஒரு பள்ளத்தாக்கில் (உள்ள மேடான பகுதியில்) ஏறுகையில்,'அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியோன், அல்லாஹ் மிகப் பெரியோன், லாஇலாஹ இல்லல்லாஹ் - வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை" என்று குரல்களை உயர்த்திக் கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'(மக்களே!) உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள். (அவசரப்படாதீர்கள் மென்மையாக, மெல்லக் கூறுங்கள்.) ஏனெனில், நீங்கள் காது கேட்காதவனையோ இங்கில்லாதவனையோ அழைப்பதில்லை. நன்கு செவியேற்பவனும் அருகில் இருப்பவனையுமே நீங்கள் அழைக்கிறீர்கள். அவன் உங்களுடனேயே இருக்கிறான்" என்று கூறினார்கள். அப்போது, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாகனப் பிராணிக்குப் பின்னால் இருந்து கொண்டு, இருந்து கொண்டு,'லாஹவ்ல வலா ஃகுவ்வத்த இல்லா பில்லாஹ் - அல்லாஹ்வின் உதவியில்லாமல் (பாவங்களிலிருந்து) விலகிச் செல்லவோ (நல்லறங்கள் புரிய) ஆற்றல் பெறவோ (மனிதனால்) முடியாது" என்று கூறுவதைக் கேட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அப்துல்லாஹ் இப்னு கைஸே!"என்று அழைத்தார்கள்.'கூறுங்கள் இறைத்தூதர் அவர்களே!"என்று நான் பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,'உனக்கு ஒரு வார்த்தையை நான் அறிவித்துத் தரட்டுமா? அது சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலமாகும்" என்று கூறினார்கள். நான்,'சரி (கட்டாயம் கூறுங்கள்) இறைத்தூதர் அவர்களே! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்" என்று கூறினேன். (அந்த வார்த்தை,)'லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்" - அல்லாஹ்வின் உதவியில்லாமல் (பாவங்களிலிருந்து) விலகிச் செல்லவோ (நல்லறங்கள் புரிய) ஆற்றல் பெறவோ (மனிதனால்)

முடியாது‘‘ என்று கூறுவதைக் கேட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘அப்துல்லாஹ் இப்னு கைஸே!”என்று அழைத்தார்கள்.’கூறுங்கள் இறைத்தூதர் அவர்களே!”என்று நான் பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,‘உனக்கு ஒரு வார்த்தையை நான் அறிவித்துத் தரட்டுமா?’ அது சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலமாகும்‘‘ என்று கூறினார்கள். நான்,‘சரி (கட்டாயம் கூறுங்கள்) இறைத்தூதர் அவர்களே!”என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்‘‘ என்று கூறினேன். (அந்த வார்த்தை,)’லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4203. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களும் (யூத) இணைவைப்பாளர்களும் (கைபர் போரில்) சந்தித்துப் போரிட்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (அன்றைய தினத்தின் போரை முடித்துக் கொண்டு) தம் படையினரிடமும், மாற்று அணியினர் அவர்கள் தம் படையினரிடமும் திரும்பியபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களிடையே (‘குஸ்மான்’ என்றழைக்கப்பட்ட) ஒருவர் இருந்தார். அவர், (யூதர்களின் அணியிலிருந்து) பிரிந்து சென்ற (போரிடாத) எவரையும், (படையிலிருந்து விலம்) தனியாகப் போரிட்ட எவரையும்விட்டுவிடாமல் அவர்களைப் பின்தொடர்ந்து சென்று தம் வாளால் (வீராவேசமாக) வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தார். அப்போது,‘இன்றைய தினம் இன்னவர் (உத்வேகத்துடன் போரிட்டு) தேவையை நிவர்த்தித்து போன்று வேறெவரும் நம்மில் தேவை தீரப் போரிடவில்லை‘‘ என்று (மக்களால்) பேசப்பட்டது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘அவர் நரகவாசிகளில் ஒருவர்‘‘ என்று கூறினார்கள். அப்போது மக்களில் (அக்ஸம் இப்னு அபில் ஜவ்ன் என்ற) ஒருவர்,‘நான் (பின்தொடர்ந்து) அவருடன் செல்லப் போகிறேன்‘‘ என்று கூறினார். (அவ்வாறே) அந்த மனிதருடன் இவரும் புறப்பட்டார்.

அவர் நிற்கும் போதெல்லாம் அவருடன் இவரும் நின்றார். அவர் விரைந்து சென்றால் அவருடன் இவரும் விரைந்து சென்றால். அந்த (குஸ்மான் என்ற) மனிதர் (அப்போரில் ஒரு கட்டத்தில்) கடுமையாக காயப்படுத்தப்பட்டார். அதனால் அவர் அவசரமாக இறந்து போக விரும்பி தன்னுடைய வாளை (அதன் கீழ் பகுதியை) பூமியில் வைத்து, அதன் கூரான மேல் பகுதியைத் தன் மார்புகளுக்கிடையில் வைத்து, பிறகு அந்த வாளின் மீது தன் உடலை அழுத்திக் கொண்டு தற்கொலை செய்தார். (பின்தொடர்ந்து சென்ற) அந்த மனிதர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,‘தாங்கள் இறைத்தூதர் என்று நான் உறுதி கூறுகிறேன்‘‘ என்றார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘என்ன அது?’ என்று கேட்டார்கள். அதற்கு அவர்,‘இவர் நரகவாசிகளில் ஒருவர் என்று ஒரு மனிதரைப் பற்றித் தாங்கள் சற்று முன்பு கூறினீர்களல்லவா? அதை மக்கள் பெரிதாகக் கருதினர். எனவே நான்,‘அவர் விஷயத்தில் உங்களுக்கு நான் பொறுப்பு‘‘ என்று (மக்களிடம்) கூறிவிட்டு அவரைத் தேடி நான் புறப்பட்டேன். (அவரைக் கண்டுபிடித்து பின்தொடர்ந்து சென்றேன்.) பிறகு அவர் மிகக் கடுமையாக (எதிரிகளால்) காயப்படுத்தப்பட்டார். எனவே, அவர் அவசரமாக இறந்து போக விரும்பி, தன்னுடைய வாளின் (கீழ்) முனையை பூமியில் (நட்டு) வைத்து அதன் மேல்முனையைத் தன் மார்புகளுக்கிடையில் வைத்துத் தன்னை அந்த வாளின் மீது அழுத்திக் கொண்டு தற்கொலை செய்தார்‘‘ என்று கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘மக்களின் வெளிப்பார்வைக்கு ஒருவர் சொர்க்கவாசிகளின் (நற்) செயலைச் செய்துவருவார். ஆனால், (உண்மையில்) அவர் நரகவாசிகளில் ஒருவராக இருப்பா. இன்னொரு மனிதர் மக்களின் வெளிப்பார்வைக்கு நரகவாசிகளின் (தீய) செயலைச் செய்து வருவார். ஆனால், (உண்மையில்) அவர் சொர்க்கவாசிகளில் ஒருவராக இருப்பார்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4204. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நாங்கள் கைபர் போரில் கலந்து கொண்டோம். அப்போது தம்முடன் இருந்தவர்களில், தன்னை முஸ்லிம் என்று கூறிக் கொண்ட ஒரு மனிதரைப் பார்த்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இவர் நரகவாசிகளில் ஒருவர்'' என்று கூறினார்கள். போரிடும் நேரம் வந்தபோது, அந்த மனிதர் மிகக் கடுமையாகப் போரிட்டார். அவருக்கு நிறையக் காயங்கள் ஏற்பட்டுவிட்டன. மக்களில் சிலர், (நபி - ஸல் - அவர்களின் அச்சொல்லை) சந்தேகப்படலாயினர். அப்போது அந்த மனிதர் காயத்தின் வேதனையை உணர்ந்தார். எனவே, தம் அம்புக்கூட்டுக்குள் கையை நுழைத்து, அதிலிருந்து அம்புகளை எடுத்து, அவற்றால் தம்மை அறுத்துக் கொண்டு தற்கொலை செய்தார். (அதைக் கண்ட) முஸ்லிம்களில் சிலர் விரைந்து வந்து, 'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் சொன்னது உண்மை தான் என அல்லாஹ் உறுதிப்படுத்திவிட்டான். இன்ன மனிதர் தன்னை அறுத்துக் கொண்டு தற்கொலை செய்தார்'' என்று கூறினர். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இன்னாரே! நீங்கள் எழுந்து சென்று (மக்களிடையே), 'இறைநம்பிக்கையாளரைத் தவிர (வேறெவரும்) சொர்க்கத்தில் நுழைய முடியாது, அல்லாஹ், இந்த மார்க்கத்திற்குப் பாவியான மனிதனின் வாயிலாகவும் வலுவூட்டுகிறான்'' என்று பொது அறிவிப்புச் செய்யுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4205. 'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஹுனைன் போரில் கலந்து கொண்டோம்...''

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

''கைபர் போரில் நபி(ஸல்) அவர்களுடன் பங்கெடுத்த ஒருவர் எனக்குக் கூறினார்...''

இதை உபைதுல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் பல அறிவிப்பாளர் தொடர்வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4206. யஸீத் இப்னு அபீ உபைத்(ரஹ்) கூறினார்

ஸலமா இப்னு அக்வஃ (ரலி) அவர்களின் காலில் ஒரு வெட்டுக் காயத்தின் அடையாளத்தை கண்டேன். அவரிடம், 'அபூ முஸ்லிமே! இது என்ன காயம்?' என்று கேட்டேன். 'இது கைபர் போர் தினத்தில் ஏற்பட்ட காயம். அப்போது மக்கள், 'ஸலமா தாக்கப்பட்டுவிட்டார்' என்று கூறினர். உடனே, நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்கள் அந்தக் காயத்தின் மீது மூன்று முறை இலேசாகத் துப்பினார்கள். (அதன்பின்னர்) இந்த நேரம் வரை (அதில்) எனக்கு நோவு ஏற்பட்டதில்லை'' என்று ஸலமா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 4207. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

ஒரு போரில் (கைபரில்) நபி(ஸல்) அவர்களும், யூத இணைவைப்பவர்களும் சந்தித்துப் போரிட்டுக் கொண்டனர். (போர் நடை பெற்றபோது ஒரு நாள் போரை நிறுத்திவிட்டு) முஸ்லிம்கள், யூதர்கள் ஆகியோரில் ஒவ்வொரு கூட்டத்தினரும் தத்தம் படையினர் (தங்கியிருந்த இடத்தை) நோக்கித் திரும்பினர். முஸ்லிம்களிடையே ஒருவர் இருந்தார். அவர் (போரின்போது யூதர்களான) இணைவைப்பவர்களின் அணியிலிருந்து பிரிந்து சென்ற (போரிடாத) எவரையும், (படையிலிருந்து விலம்) தனியாகப் போரிட்ட எவரையும்விட்டு விடாமல் பின்தொடர்ந்து சென்று, தன்னுடைய வாளால் (வீராவேசமாக) வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தார். அப்போது, 'இறைத்தூதர் அவர்களே! (இன்றைய தினம்) இன்னவர் (உத்வேகத்துடன் போரிட்டு) தேவையை நிவர்த்தித்தது போன்று வேறெவரும் தேவை தீரப்போரிடவில்லை'' என்று (மக்களால்) பேசப்பட்டது. உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அவர் நரகவாசிகளில் ஒருவர்'' என்று கூறினார்கள். '(வீரதீரத்துடன் கடுமையாகப் போரிட்ட) இவரே நரகவாசிகளில் ஒருவராயிருந்தால் எங்களில் யார் தான் சொர்க்கவாசி!''என்று மக்கள் கூறினர். அந்த மக்களில் ஒருவர், 'நான் அவரைப் பின்தொடர்ந்து செல்லப்போகிறேன். அவர்

விரைந்தாலும் மெதுவாகச் சென்றாலும் அவருடன் இருப்பேன்‘‘ என்று கூறினார். (பிறகு அவரைத் தேடி கண்டு பிடித்துத் தொடர்ந்து சென்றார். வீரதீரமாகப் போரிட்ட) அந்த மனிதர் (போரில்) காயப்படுத்தப்பட்டார். (வலி தாங்க முடியாமல்) அவசரமாக இறந்து போக விரும்பி, தன்னுடைய வாளின் (கீழ்) முனையை பூமியில் (நட்டு) வைத்து, அதன் மேல் முனையைத் தன் மார்புகளுக்கிடையில் வைத்து, அதன் மீது தன்னை அழுத்திக் கொண்டு தற்கொலை செய்தார். (அவரைப் பின்தொடர்ந்து சென்று இந்த காட்சிகளைக் கண்டு வந்த) அந்த மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,‘தாங்கள் இறைத்தூதர் என நான் உறுதி கூறுகிறேன்‘‘ என்று கூறினார்.’என்ன அது?’ என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் (கண்டு வந்ததை) நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,‘மக்களின் வெளிப்பார்வைக்கு ஒருவர் சொர்க்கவாசிகளின் (நற்) செயலைச் செய்து வருவார் ஆனால் உண்மையில் அவர் நரகவாசிகளில் ஒருவராக இருப்பார். (இன்னொரு மனிதர்) மக்களின் வெளிப்பார்வைக்கு நரகவாசிகளின் (தீய) செயலைச் செய்து வருவார். ஆனால், (உண்மையில்) அவர் சொர்க்கவாசிகளில் ஒருவராக இருப்பார்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4208. அபூ இம்ரான் (அப்துல் மலிக் இப்னு ஹபீப் அல் ஜவ்னீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்

அனஸ்(ரலி) (ஒரு முறை) ஜுமுஆ நாளில் (பஸராவிலிருந்த ஒரு பள்ளிவாசலில்) மக்களை நோட்டமிட்டார்கள். அப்போது (அவர்களின் தலையில்)’தைலசான்’ என்னும் ஒரு வகை சால்வையைக் கண்டார்கள். உடனே’இப்போது இவர்கள் கைபர் யூதர்களைப் போன்று உள்ளனர்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4209. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்

கைபர் போரின்போது நபி(ஸல்) அவர்களுடன் (போருக்குச்) செல்லாமல் அலீ இப்னு தாலிப் (ரலி) அவர்கள் பின்தங்கிவிட்டார்கள். அவர்களுக்குக் கண்வலி ஏற்பட்டிருந்தது. அப்போது அவர்கள்,‘நான் நபி(ஸல்) அவர்களுடன் செல்லாமல், பின்தங்கிவிட்டேனே‘‘ என்று (வருத்தத்துடன்) கூறினார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்களுடன் போய்ச் சேர்ந்தார்கள். (கைபர்) வெற்றி கொள்ளப்பட்ட நாளின் (முந்தைய) இரவில் நபி(ஸல்) அவர்கள்,‘அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நேசிக்கிற ஒரு மனிதரிடம் நாளை (இஸ்லாமிய சேனையின்) இந்தக் கொடியைத் தரப் போகிறேன்.‘‘.. அல்லது,‘(அத்தகைய) ஒருவர் நாளை இந்தக் கொடியைப் பிடித்திருப்பார்..!”(என்று சொல்லிவிட்டு,)’அவருக்கு அல்லாஹ் வெற்றியளிப்பான்‘‘ என்று கூறினார்கள். அதை (யாரிடம் கொடுக்கப் போகிறார்கள் என்று) நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். அப்போது,‘இதோ, அலீ!”என்று கூறப்பட்டது. (இறைத்தூதர் - ஸல்) அவர்கள் (அலீ (ரலி) அவர்களிடம் (அக்கொடியைக்) கொடுக்க, நபியவர்கள் சொன்னவாறே) அவர்களுக்கு வெற்றியளிக்கப்பட்டது.

ஹதீஸ் 4210. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் நாளில்’அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கின்ற, மேலும், அல்லாஹ்வினுடையவும் அவனுடைய தூதருடையவும் நேசத்தைப் பெற்ற ஒரு மனிதரிடம், நாளை (இஸ்லாமிய சேனையின்) இந்தக் கொடியைத் தரப் போகிறேன். அல்லாஹ் அவருக்கு வெற்றியளிப்பான்‘‘ என்று கூறினார்கள். அந்தக் கொடி தங்களில் எவரிடம் தரப்படும் என்ற யோசனையில் மக்கள் அந்த இரவெல்லாம் மூழ்கியிருந்தனர். மறுநாள் காலையில் அவர்களில் ஒவ்வொருவரும் அது தம்மிடமே தரப்படவேண்டுமென்று ஆசைப்பட்டவர்களாக, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள்,‘அலீ இப்னு அபீ தாலிப் எங்கே?’ என்று கேட்டார்கள்.’இறைத்தூதர் அவர்களே! அவருக்குக் கண்வலி ஏற்பட்டுள்ளது‘‘ என்று கூறப்பட்டது.

நபி(ஸல்) அவர்கள், '(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்புங்கள்'' என்று கூறினார்கள். அலீ(ரலி) அழைத்து வரப்பட்டபோது அவர்களின் கண், அதற்கு முன்பு வலி எதுவுமே இல்லாதிருந்ததைப் போல் குணமாம்விட்டது. அப்போது முன்பு வலி எதுவுமே இல்லாதிருந்ததைப் போல் குணமாம்விட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், அலீ(ரலி) அவர்களிடம் அந்தக் கொடியைக் கொடுத்தார்கள். உடனே அலீ(ரலி), 'நம்மைப் போன்று அவர்களும் (ஒரே இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவர்களாய்) ஆகும் வரை நான் அவர்களுடன் போரிடட்டுமா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நிதானமாகச் சென்று, அவர்களின் களத்தில் இறங்குங்கள். பிறகு, அவர்களை இஸ்லாத்திற்கு அழைத்து (அதை ஏற்கும் பட்சத்தில்) அவர்களின் மீது கடமையாகின்ற, அல்லாஹ்விற்குச் செய்யவேண்டிய கடமைகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களின் மூலம் ஒரேயொவருவருக்கு அல்லாஹ் நேர்வழியளிப்பது (அரபுகளின் உயரிய செல்வமான) சிவப்பு ஒட்டகங்களை (சொந்தமாக்கிக் கொள்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4211 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நாங்கள் கைபருக்கு(ப் படையெடுத்து) வந்தோம். அல்லாஹ், நபி(ஸல்) அவர்களுக்கு ('கமூஸ்' என்னும்) கோட்டையின் வெற்றியைத் தந்தபோது, (போர்க் கைதியான) ஸஃபிய்யா பின்த் ஹுயை இப்னி அக்தப் அவர்களின் அழகு பற்றிக் கூறப்பட்டது. புது மணப் பெண்ணாக இருந்த ஸஃபிய்யாவின் கணவர் (போரில்) கொல்லப்பட்டுவிட்டார். அவரை நபி(ஸல்) அவர்கள் (போர்ச் செல்வத்தில்'குமுஸ்'பங்கிலிருந்து) பெற்று (மணந்து) கொண்டார்கள். அவரைத் தம்முடன் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்கள். (கைபருக்கு அருமலுள்ள)'சத்துஸ் ஸஹ்பா' என்னுமிடத்தை நாங்கள் அடைந்தபோது மாதவிடாயிலிருந்து அவர் தூய்மையடைந்தார். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவருடன் வீடு கூடினார்கள். அதன் பிறகு (பேரீச்சம் பழம், நெய், பாலாடைக் கட்டி ஆகியவற்றைக் கலந்து)'ஹைஸ்' எனப்படும் ஓர் உணவைத் தயாரித்துச் சிறிய தோல் விரிப்பில் வைத்தார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் என்னிடம், 'உன் அக்கம் பக்கத்திலிருப்பவர்களுக்கு அறிவிப்புக் கொடு'' என்று கூறினார்கள். ஸஃபிய்யா(ரலி) அவர்களை மணந்ததற்காக நபி(ஸல்) அவர்கள் வழங்கிய வலீமா - மண(மகன்) விருந்தாய் அது அமைந்தது. பிறகு நாங்கள் மதீனா நோக்கிப் புறப்பட்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மேல், ஒரு போர்வை (போன்ற அங்கி)யால் ஸஃபிய்யா(ரலி) அவர்களுக்ககத் திரையமைத்தார்கள். பிறகு, தம் ஒட்டகத்தின் அருகில் நபி(ஸல்) அவர்கள் அமர்ந்து, தம் முழங்காலை வைக்க, அவர்களின் முழங்கால் மீது தம் காலை வைத்து (அன்னை) ஸஃபிய்யா(ரலி) ஒட்டகத்தில் ஏறியதை பார்த்தேன்.

ஹதீஸ் 4212. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஸஃபிய்யா பின்த் ஹுயை அவர்களுடன் கைபர் வழியில் ('சத்துஸ் ஸஹ்பா' என்னும் இடத்தில்) மூன்று நாள்கள் தங்கி வீடு கூடினார்கள். ஸஃபிய்யா(ரலி)'பர்தா' முறை விதியாக்கப்பட்டவர்களில் (-நபியவர்களின் துணைவியரில்-) ஒருவராக இருந்தார்கள்.

ஹதீஸ் 4213. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் கைபருக்கும் மதீனாவுக்கும் இடையில் (உள்ள'சத்துஸ் ஸஹ்பா' என்னுமிடத்தில் ஸஃபிய்யா பின்த் ஹுயை அவர்களை மண முடித்து) மூன்று நாள்கள் தங்கினார்கள். அங்கு ஸஃபிய்யா அவர்களுடன் வீடு கூடினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின்

வலீமா - மண விருந்துக்கு முஸ்லிம்களை அழைத்தேன். அந்த விருந்தில் ரொட்டியோ, இறைச்சியோ இருக்கவில்லை.

நபி(ஸல்) அவர்கள், பிலால்(ரலி) அவர்களிடம் தோல்விரிப்பைக் கொண்டு வருமாறு உத்தரவிட, அவ்வாறே அது கொண்டு வந்து விரிக்கப்பட்டது. பிறகு, அதில் பேரீச்சம் பழம், பாலாடைக் கட்டி, நெய் போன்றவற்றை இட்டார்கள். ('ஹைஸ் எனும் எளிமையான உணவு தயாரானது. அதை அங்கிருந்த முஸ்லிம்கள் உண்டனர்.) அப்போது முஸ்லிம்கள்'ஸஃபிய்யா அவர்கள் இறை நம்பிக்கையாளர்களின் அன்னை (-நபியவர்களின் துணைவி)-யரில் ஒருவரா? அல்லது நபி(ஸல்) அவர்களின் அடிமைப் பெண்ணா?' என்று பேசிக் கொண்டனர்.'ஸஃபிய்யா அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் ஹிஜாப் - திரையிட(டுக் கொள்ளும் படி கட்டளையிட்)டால், அவர் இறைநம்பிக்கையாளர்களின் அன்னையரில் (-நபியவர்களின் துணைவியரில்-) ஒருவர். அப்படி அவர்களுக்குத் திரை(யிட்டுக் கொள்ளும்படி கட்டளை)யிடாவிட்டால், அவர் அடிமைப் பெண்களில் ஒருவர்'' என்று (மக்களில் சிலர்) கூறினர். நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் புறப்பட்டபோது தமக்குப் பின்னால் ஸஃபிய்யா அவர்களுக்காக இருக்கையமைத்து இடம் கொடுத்து (அவர்கள் அமர்ந்த பிறகு) திரையை இழுத்து (மூடி)விட்டார்கள்.

ஹதீஸ் 4214. அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல்(ரலி) அறிவித்தார்

நாங்கள் கைபரை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தோம். அப்போது ஒருவர், கொழுப்பு அடங்கிய தோல் பை ஒன்றை எறிந்தார். நான் அதை எடுக்க பாய்ந்து சென்றேன். அப்போது நான் திரும்பிப் பார்த்தேன். அங்கே நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள். (என் ஆசையை நபியவர்கள் தெரிந்துவிட்டதால்) நான் வெட்கமடைந்தேன்.

ஹதீஸ் 4215 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

கைபர் போரின்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெள்ளைப் பூண்டையும் நாட்டுக் கழுதைகளின் இறைச்சிகளையும் உண்ண வேண்டாமெனத் தடை விதித்தார்கள்.

நாஃபிஉ(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் மட்டுமே'வெள்ளைப் பூண்டு உண்ண வேண்டாம்'' என்பது இடம் பெற்றுள்ளது.

நாட்டுக் கழுதைகளின் இறைச்சி (தொடர்பாக) சாலிம்(ரஹ்) அவர்களின் வாயிலாகவே அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4216. அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்

கைபர் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'முத்அத்துன்னிஸா.''.. (கால வரம்பிட்டுச் செய்யப்படும் திருமணம்) செய்ய வேண்டாம் என்றும், நாட்டுக் கழுதைகளை உண்ண வேண்டாம் என்றும் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 4217. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமென நபி(ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள்.

ஹதீஸ் 4218. நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமென நபி(ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள்.

ஹதீஸ் 4219. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது (நாட்டுக்) கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாம் எனத் தடைவிதித்தார்கள். குதிரைகளை (அவற்றின் இறைச்சியை உண்ணலாமென) அவர்கள அனுமதித்தார்கள்.

ஹதீஸ் 4220. இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்

கைபர் போர் அன்று எங்களுக்குப் பசியேற்பட்டது. அப்போது (சமையல் செய்யப்பட்டுக் கொண்டிருந்த) பாத்திரங்கள் கொதித்துக் கொண்டிருந்தன. அவற்றில் சில பாத்திரங்களில் (இருந்த இறைச்சி) வெந்தும்விட்டது. அப்போது நபி(ஸல்) அவர்களின் அறிவிப்பாளர் வந்து,'கழுதைகளின் இறைச்சியில் சிறிதும் உண்ணாதீர்கள். அதனைக் கொட்டி விடுங்கள்'' என்று கூறினார்.

இதன் அறிவிப்பாளர் கூறுகிறார்:

அப்போது நாங்கள்,'அதை (உண்ண வேண்டாமென) நபி(ஸல்) அவர்கள் தடை விதித்ததற்குக் காரணம், அதில் நபி(ஸல்) அவர்களுக்குச் சேர வேண்டிய) குமுஸ் நிதி எடுக்கப்பட்டிருக்கவில்லை (அதனால், தாற்காலிமாகத் தடைவிதித்துள்ளார்கள்)'' என்று பேசிக்கொண்டோம். எங்களில் சிலர்,'அறவே (நிரந்தரமாக உண்ண வேண்டாமென்றே) தடைவிதித்தார்கள். ஏனெனில், அவை மலத்தைத் தின்கின்றன'' என்று கூறினர்.

ஹதீஸ் 4221 ‍ ஹதீஸ் 4222 (கைபர் போரில்) மக்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்து கொண்டிருந்தபோது அவர்களுக்கு (நாட்டு)க் கழுதைகள் கிடைத்தன. உடனே அவற்றை மக்கள் சமைத்தனர். அப்போது நபி(ஸல்) அவர்களின் அறிவிப்பாளர்,'பாத்திரங்களைக் கவிழ்த்து விடுங்கள்'' என்று பொது அறிவித்தார்.

இதை பராஉ(ரலி) அவர்களும் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களும் அறிவித்தார்

ஹதீஸ் 4223 ‍ ஹதீஸ் 4224. கைபர் போரின்போது மக்கள் (அடுப்புகளில்) பாத்திரங்களை வைத்து (நாட்டுக்கழுதை இறைச்சியை சமைத்து) விட்டிருக்க நபி(ஸல்) அவர்கள்,'பாத்திரங்களைக் கவிழ்த்து விடுங்கள்'' என்று கூறினார்கள்.

என பராஉ மற்றும் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 4225'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (கைபர்) போருக்குச் சென்றோம்..!"(என்று தொடங்கும்) முந்தைய ஹதீஸின் கருத்தில் அமைந்த பராஉ(ரலி) அவர்களின் இன்னோர் அறிவிப்பும் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4226. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், கைபர் போரின்போது நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை - அது பச்சையாயிருந்தாலும் சமைக்கப்பட்டிருந்தாலும் - எறிந்து விடுமாறு எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். அதற்குப் பின்பு அதனை உண்ணும்படி (அனுமதியளித்து) எங்களுக்கு அவர்கள் உத்தரவிடவேயில்லை.

ஹதீஸ் 4227. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நாட்டுக் கழுதைகளின் இறைச்சியைப் புசிக்க வேண்டாமென இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடைவிதித்தற்குக் காரணம், அது மக்களைச் சுமந்து செல்லும் வாகனமாக இருப்பதனால் (அது உண்ணப்படும் பட்சத்தில்) அவர்களுக்கு வாகனம் இல்லாமல் போய் விடுவதை நபி(ஸல்) அவர்கள்

வெறுத்தார்கள் என்பதாலா? அல்லது கைபர் போரின்போது நாட்டுக் கழுதைகளை (புசிக்க வேண்டாமென) அவர்கள் (நிரந்தரமாகத்) தடைசெய்துவிட்டார்களா என்று எனக்குத் தெரியாது.

ஹதீஸ் 4228. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது (போர்ச் செல்வத்திலிருந்து) குதிரைக்கு இரண்டு பங்குகளையும் காலாட்படை வீரருக்கு ஒரு பங்கையும் கொடுத்தார்கள்.

இந்த அறிவிப்பிற்கு நாஃபிஉ(ரஹ்),'(போரில் பங்கெடுத்த) ஒரு மனிதருடன் ஒரு குதிரையிருந்தால் (குதிரைக்காக இரண்டு பங்குகளும், உரிமையாளருக்காக ஒரு பங்கும் சேர்த்து) அவருக்கு மூன்று பங்குகள் கிடைக்கும். அவருடன் குதிரை இல்லாவிட்டால் அவருக்கு ஒரு பங்கு கிடைக்கும்'' என்று விளக்கம் அளித்தார்கள்.

ஹதீஸ் 4229. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்

நானும், உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,'(இறைத்தூதர் அவர்களே!) கைபர் (போரில் கிடைத்த போர்ச் செல்வத்தின்)'குமுஸ்' (ஐந்தில் ஒரு பாகம்) நிதியிலிருந்து பனு முத்தலிப் கிளையினருக்குக் கொடுத்தீர்கள் எங்களுக்குக் கொடுக்காமல்விட்டு விட்டீர்கள். நாங்களும் அவர்களும் உங்களுடன் ஒரே மாதிரியான உறவுமுறை உடையவர்கள் தாமே?' என்று கேட்டோம். அப்போது (இறைத்தூதர் - ஸல்) அவர்கள்,'பனு முத்தலிபும் பனு ஹாஷிமும் ஒருவர் தாம்'' என்று கூறினார்கள்.

(மற்றோர் அறிவிப்பில்,)'பனு அப்திஷம்ஸ் கிளையாருக்கும் பனு நவ்ஃபல் கிளையாருக்கும் நபி(ஸல்) அவர்கள் (குமுஸில்) சிறிதும் பங்கு தரவில்லை'' என்று ஜுபைர்(ரலி) தெரிவித்துள்ளார்கள்.

ஹதீஸ் 4230. அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து மதீனாவை நோக்கி ஹிஜ்ரத்) புறப்பட்டுவிட்ட செய்தி, நாங்கள் யமன் நாட்டில் இருந்தபோது எங்களுக்குத் தெரியவந்தது. உடனே நானும் என் இரண்டு சகோதரர்களும் நபி(ஸல்) அவர்களை நோக்கி ஹிஜ்ரத் செய்யப் புறப்பட்டோம். அந்த என் இரண்டு சகோதரர்களில் ஒருவர் அபூ புர்தா ஆவார் மற்றொருவர் அபூ ருஹ்கி ஆவார். நானே அவர்களில் வயதில் சிறியவன் ஆவேன்.

-அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூ புர்தா ஆமிர் இப்னு அபீ மூஸா(ரஹ்) கூறினார்:

"என்னுடைய (அஷ்அரீ) குலத்தாரில் ஐம்பத்திற்கும் மேற்பட்டவர்களுடன் சேர்ந்து நாங்கள் சென்றோம்'' என்றோ...'ஐம்பத்திரண்டு பேர்களுடன்... அல்லது ஐம்பத்து மூன்று பேர்களுடன்... சேர்ந்து சென்றோம்."..என்றோ (என் தந்தை அபூ மூஸா(ரலி)) கூறினார்கள்.

நாங்கள் ஒரு கப்பலில் ஏறி (மதீனா நோக்கிப்) பயணித்தோம். எங்கள் கப்பல் (திசைமாறி) அபிசீனியாவில் (மன்னர்) நஜாஷீயிடம் எங்களை (கொண்டு சென்று) இறக்கிவிட்டது. (அபிசினியாவில்) ஜஅஃபர் இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களைத் தற்செயலாகச் சந்தித்தோம். (ஏற்னெவே அவர் மக்காவிலிருந்து ஹிஜ்ரத் செய்து வந்து, அவர் தம் சகாக்களுடன் அபிசீனியாவில் தங்கியிருந்தார்.) பிறகு (அவர் கேட்டுக் கொண்டதற்கிணங்க) அவருடன் நாங்களும் தங்கினோம். இறுதியில், நாங்கள் அனைவரும் சேர்ந்து (மதீனா) வந்து சேர்ந்தோம். நபி(ஸல்) அவர்கள் கைபரை வெற்றி கொண்டபோது அவர்களைச் சென்றடைந்தோம். 279

அப்போது சிலர், கப்பலில் வந்தவர்களான எங்களை நோக்கி,'உங்களுக்கு முன்பே நாங்கள் ஹிஜ்ரத் செய்துவிட்டோம்'' என்று கூறலாயினர். எங்களுடன் (மதீனாவிற்கு) வந்தவர்களில் ஒருவரான (ஜஅஃபர் (ரலி) அவர்களின் துணைவியார் ஹஃப்ஸா(ரலி) அவர்களைச் சந்திப்பதற்காகச்

சென்றார்கள். நஜாஷீ மன்னரை நோக்கி (அபிசீனியாவிற்கு) ஹிஜ்ரத் செய்தவர்களில் அஸ்மாவும் ஒருவராவார். பிறகு உமர்(ரலி) (தம் மகள்) ஹஃப்ஸா(ரலி) அவர்களின் இல்லத்திற்குச் சென்றார்கள். அப்போது ஹஃப்ஸா அவர்களுக்கு அருகில் அஸ்மா அவர்கள் இருந்தார்கள். உமர்(ரலி) அஸ்மா இருந்தார்கள். உமர்(ரலி) அஸ்மா அவர்களைக் கண்டபோது,'இவர் யார்?' என்று (தம் மகள் ஹஃப்ஸா அவர்களிடம்) கேட்டார்கள்.'(இவர்) அஸ்மா பின்த் உமைஸ்'' என்று ஹஃப்ஸா(ரலி),'இவர், அபிசீனியரா? இவர் கடல் மார்க்கமாக (மதீனா) வந்தவரா?' என்று கேட்டார்கள். அதற்கு,'ஆம்'' என்று அஸ்மா அவர்கள் பதிலளித்தார்கள். அப்போது உமர்(ரலி),'உங்களுக்கு முன்பே நாங்கள் (மதீனாவிற்கு) ஹிஜ்ரத் செய்து வந்து விட்டோம். எனவே, உங்களை விட நாங்களே இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மிகவும் உரியவர்கள் என்று கூறினார்கள். இது கேட்டு அஸ்மா(ரலி) கோபப்பட்டு,'அல்லாஹ்வின் மீது மீதாணையாக! அப்படியில்லை. நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தீர்கள். உங்களில் பசித்தவருக்கு அவர்கள் உணவளித்தார்கள். உங்களில் அறியாதவர்களுக்கு அவர்கள் அறிவூட்டினார்கள். (உடல் மற்றும் அறிவு ரீதியான நபியவர்களிடமிருந்து நீங்கள் உதவி பெற்று வந்தீர்கள்.) நாங்களோ வெகு தொலைவிலிருக்கும், பகைவர்கள் உள்ள அபிசீனிய நாட்டில்... அல்லது பூமியில்... இருந்தோம். அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவுமே இதைச் செய்தோம். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் சொன்னதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தெரிவிக்கும் வரையில் நான் எதையும் உண்ணவோ குடிக்கவோ மாட்டேன். நாங்கள் துன்புறுத்தப்பட்டோம் அச்சுறுத்தப்பட்டோம். நான் இதை நபி(ஸல்) அவர்களிடம் கூறி, அவர்களிடம் மீதாணையாக! நான் பொய் சொல்ல மாட்டேன் திரித்துப் பேசவு மாட்டேன். நீங்கள் சொன்னதை விட கூட்டிச் சொல்லவும் மாட்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4231. நபி(ஸல்) அவர்கள் வந்தபோது, அஸ்மா பின்த் உமைஸ்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! உமர் அவர்கள் இன்னின்னவாறு கூறினார்கள்'' என்று கூறினார்கள்.'அவருக்கு நீ என்ன பதிலளித்தாய்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டபோது,'அவருக்கு இன்னின்னவாறு பதிலளித்தேன்'' என்று அஸ்மா அவர்கள் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உங்களை விட அவர் எனக்கு உரியவர் அல்லர். அவருக்கும் அவரின் சகாக்களுக்கும் ஒரேயொரு ஹிஜ்ரத் (செய்த சிறப்பு) தான் உண்டு. (அபிசினியாவிலிருந்து) கப்பலில் வந்தவர்களே! உங்களுக்கு (அபிசீனியாவிற்கு ஒன்றும், மதீனாவிற்கு ஒன்றுமாக) இரண்டு ஹிஜ்ரத் (செய்த சிறப்பு) உண்டு'' என்று கூறினார்கள்.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் **4232** என்னிடம் அபுமூஸா (ரலி) அவர்கள் இந்த ஹதீஸைத் திரும்பத் திரும்ப கேட்டுக் கொண்டேயிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். என் அஸ்அரீ (குல) நண்பர்கள் இரவில் (தம் தங்குமிடங்களில்) நுழையும் போது அவர்கள் குர்ஆன் ஓதும் ஓசையை நான் அறிவேன். பகல் நேரத்தில் அவர்கள் தங்கியிருக்கும் இடங்களை நான் பார்த்திருக்காவிட்டாலும் இரவில் அவர்கள் குர்ஆன் ஓதும் ஓசையை கேட்டு அவர்கள் தங்கியிருக்கும் இடங்களை நான் அடையாளம் கண்டு கொள்கிறேன். மேலும் அவர்களில் விவேகம் மிக்க ஒருவர் இருக்கிறார். அவர் குதிரைப் படையினரைச் சந்தித்தால்.... அல்லது எதிரிகளைச் சந்தித்தால்..... அவர்களைப் பார்த்து 'என் தோழர்கள்' தங்களுக்காகக் காத்திருக்கும்படி உங்களுக்கு உத்தரவிடுகின்றனர் என்று (துணிவோடு) கூறுவார் என்று கூறினார்கள். இதை அபுமூஸா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 4233. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

(அபிசீனியாவிலிருந்து அஷ்அரீ குலத்தைச் சேர்ந்த) நாங்கள் கைபர் வெற்றிக்குப் பின் (ஜஅஃபர் (ரலி) அவர்களுடன்) நபி(ஸல்) அவர்களிடம் வந்தோம். அப்போது அவர்கள் (போர்ச் செல்வத்திலிருந்து) எங்களுக்கும் பங்கு தந்தார்கள். எங்களைத் தவிர (கைபர்) வெற்றியின்போது (படையில்) இருக்காத வேறெவருக்கும் நபி(ஸல்) அவர்கள் பங்கு தரவில்லை.

ஹதீஸ் 4234. அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்தார்

நாங்கள் கைபரை வெற்றி கொண்டோம். அப்போது நாங்கள் தங்கத்தையோ வெள்ளியையோ போர்ச் செல்வமாகப் பெறவில்லை. மாடு, ஒட்டகம், (வீட்டுப்) பொருள்கள், தோட்டங்கள் ஆகியவற்றையே போர்ச் செல்வமாகப் பெற்றோம். பிறகு நாங்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (மதீனாவிற்கு அரும்லுள்ள)'வாதில் குரா' என்னுமிடத்தை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தோம். நபியவர்களுடன்'மித்அம்' எனப்படும். ஓர் அடிமையும் இருந்தார். அவரை'பனுளிபாப்' குலத்தாரில் (ரிஃபாஆ இப்னு ஸைத் என்ற) ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கியிருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சிவிகையை அந்த அடிமை இறக்கிக் கொண்டிருந்தபோது எங்கிருந்தோ வந்த ஓர் அம்பு அவரின் மீது பாய்ந்தது. 'அவருக்கு இறைவழியில் உயிர்த் தியாகம் செய்யும் பேறு கிடைத்து வட்டது. வாழ்த்துகள்!"என்று மக்கள் கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இல்லை. என்னுடைய உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! போர்ச் செல்வங்கள் பங்கிடப்படும் முன் அவர் எடுத்துக் கொண்ட போர்வையே அவருக்கு நரக நெருப்பாய் எரிந்து கொண்டிருக்கிறது" என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து இதைக் கேட்டபோது ஒருவர், ஒரு செருப்புவாரை... அல்லது இரண்டு செருப்புவார்களைக் ... கொண்டு வந்து, 'இது (போர்ச் செல்வம் பங்கிடப்படும் முன்) நான் எடுத்துக் கொண்ட பொருள்" என்று கூறினார். அப்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '(இது சாதாரண செருப்பு வார் அல்ல. இதனைத் திருப்பித்தராமல் இருந்திருந்தால் இதுவே) நரகத்தின் செருப்பு வார்... அல்லது இரண்டு வார்கள்... ஆகும்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4235. உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்

என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! பின்னால் வரும் மக்களை ஏதுமில்லாத வறியவர்களாகவிட்டுச் சென்றுவிடுவோனோ என்ற அச்சம் எனக்கில்லையாயின், என்னுடைய ஆட்சிக் காலத்தில் எந்த ஊர் வெற்றி கொள்ளப்பட்டாலும் அதனை கைபர், நிலங்களை நபி(ஸல்) அவர்கள் பங்கிட்டுக் கொடுத்தது போன்று (தனி மனிதருக்கான வருவாய்மானியமாக) பங்கிட்டுக் கொடுத்திருப்பேன். எனினும், அவற்றை (எதிர்கால) மக்களுக்குக் கருவூலமாக (அறக் கொடையாக்கி)விட்டுச் செல்கிறேன். அதில் அவரவர் தத்தம் பங்கினைப் பெற்றுக்கொள்வர்.

ஹதீஸ் 4236. உமர்(ரலி) அறிவித்தார்

பின்னால் வரும் முஸ்லிம்கள் (உடைய ஏழ்மை பற்றிய அச்சம் எனக்கு) இல்லையாயின் எந்த ஊர் (என்னுடைய ஆட்சிக் காலத்தில்) வெற்றி கொள்ளப்படுகிறதோ அதனை, கைபர் நிலங்களை நபி(ஸல்) அவர்கள் பங்கிட்டுக கொடுத்தது போன்று நானும் பங்கிட்டுக் கொடுத்து விடுவேன்.

இதை அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4237. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(கைபர் வெற்றிக்குப் பிறகு) நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று, '(போரில் கிடைத்த செல்வத்தில் எனக்கும் ஒரு பங்கு கொடுங்கள்" என்று) கேட்டேன். அப்போது ஸயீத் இப்னு ஆஸ் உடைய

மகன்களில் (அபான் என்றழைக்கப்பட்ட) ஒருவர்'இவருக்குப் பங்கு கொடுக்காதீர்கள். இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார். உடனே நான்,'இவர் இப்னு கவ்கல் (என்ற நுஃமான் இப்னு மாலிக்) அவர்களை (உஹுதுப் போரில்) கொன்றவர்'' என்று கூறினேன். உடனே அவர் (என்னைப் பற்றி),'என்ன ஆச்சரியம்! (தன்னுடைய'தவ்ஸ்' குலத்தார் வசிக்கின்ற)'ளஃன்' என்னும் மலை உச்சியிலிருந்து வந்திருக்கும் இந்தக் குழிமுயல் (ஒரு முஸ்லிமைக் கொன்றுவிட்டதற்காக என்னைக் குறை சொல்கிறதே!)'' என்று கூறினார்.

ஹதீஸ் 4238. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அபான் இப்னு ஸயீத்) அவர்களை ஒரு போர்ப் படையில் (தளபதியாக) மதீனாவிலிருந்து நஜ்தை நோக்கி அனுப்பி வைத்தார்கள். பிறகு, கைபர் வெற்றிக்குப் பின் அங்கிருந்த நபி (ஸல்) அவர்களிடம் அபானும் அவரின் தோழர்களும் வந்தனர். அவர்களின் குதிரைகளின் சேணங்களெல்லாம் பேரீச்ச மர நார்களைப் போல் இருந்தன. (வெற்றிச் செல்வங்கள் ஏதுமின்றி வெற்றுடலாய் காணப்பட்டன.) அப்போது நான்,'இறைத்தூதர் அவர்களே! (கைபரில் கிடைத்த போர்ச் செல்வத்திலிருந்து) இவர்களுக்குப் பங்கிட்டுத் தராதீர்கள்'' என்று கூறினேன். அதற்கு அபான் அவர்கள்,'ளஃன்' மலை உச்சியிலிருந்து இறங்கி வந்த குழிமுயலே! நீயா இப்படி(ச் சொல்கிறாய்)?' என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள்,'அபானே! அமருங்கள்'' என்று கூறினார்கள். ஆனால், அவர்களுக்கு (போர்ச் செல்வத்தில்) பங்கு தரவில்லை.

ஹதீஸ் 4239. ஸயீத் இப்னு அம்ர் (ரஹ்) அறிவித்தார்

(கைபர் வெற்றிக்குப் பின்) அபான் இப்னு ஸயீத் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் வந்து சலாம் கூறினார்கள். அப்போது அபூ ஹுரைரா (ரலி),'இறைத்தூதர் அவர்களே! இவர் இப்னு கவ்கல் (என்ற நுஃமான் இப்னு மாலிக்) அவர்களைக் கொன்றவர்'' என்று கூறினார்கள். உடனே அபான் அவர்கள் அபூ ஹுரைரா அவர்களை நோக்கி,'என்ன ஆச்சரியம்!'ளஃன்' மலை உச்சியிலிருந்து துள்ளியோடி வந்திருக்கும். இந்தக் குழிமுயல் (நான் முஸ்லிமாகாமல் இருந்தபோது உஹுதுப் போரில் இப்னு கவ்கல் எனும் முஸ்லிமான) ஒரு மனிதரைக் கொன்றுவிட்டதற்காக என்னைக் குறை சொல்கிறதே! அல்லாஹ் என் கைகளால் (வீர மரணத்தை அவருக்கு வழங்கி) அவரை கண்ணியப்படுத்தியுள்ளான். (அப்போது என்னை அவர் கொன்றிருந்தால் நான் இழிவுக்குரியவனாம் இழப்புக்குள்ளாம்ப் போயிருப்பேன். ஆனால்,) அவரின் கைகளால் என்னைக் கேவலப்படுததாமல் அல்லாஹ் தடுத்துவிட்டான்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4240-ஹதீஸ் 4241. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களின் மகள் ஃபாத்திமா (ரலி) (நபியவர்களின் மறைவுக்குப் பிறகு, கலீஃபா) அபூ பக்ர் (ரலி) அவர்களுக்கு ஆளனுப்பி, இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் ஒதுக்கித் தந்திருந்த மதீனா மற்றும் ஃபதக் சொத்திலிருந்தும், கைபரின் ஐந்தில் ஒரு பகுதி நிதியில் மீதியிருந்ததிலிருந்து தமக்குச் சேர வேண்டிய வாரிசுமையைத் கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர் (ரலி),'இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ('நபிமார்களான) எங்கள் சொத்துக்களுக்கு வாரிசாக யாரும் வர முடியாது. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தர்மம் செய்யப்பட வேண்டியவை ஆகும். இச்செல்வத்திலிருந்தே முஹம்மதின் குடும்பத்தினர் சாப்பிடுவார்கள்' என்று சொல்லியிருக்கிறார்கள். (எனவே,) அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இறைத்தூதர் (ஸல்) அவர்களின் தர்மச் சொத்தில் நான் எந்தச் சிறு மாற்றத்தையும் செய்ய மாட்டேன். இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் எந்த நிலையில் அச்சொத்துகள் இருந்து வந்தனவோ, அதே நிலையில் அவை நீடிக்கம். அதில் (அச்சொத்துக்களைப் பங்கிடும் விஷயத்தில்) நபி (ஸல்) அவர்கள் செயல்பட்டபடியே நானும்

செயல்படுவேன்'' என்று (ஃபாத்திமா அவர்களுக்கு) பதில் கூறி(யனுப்பி)னார்கள். ஃபாத்திமா(ரலி) அவர்களிடம் அவற்றில் எதையும் ஒப்படைக்க அபூ பக்ர்(ரலி) மறுத்துவிட்டார்கள். இதனால் அபூ பக்ர்(ரலி) மீது மனவருத்தம் கொண்டு இறக்கும் வரையில் அவர்களுடன் ஃபாத்திமா(ரலி) பேசவில்லை. நபி(ஸல்) அவர்கள் இறந்த பின், ஆறுமாதகாலம் ஃபாத்திமா(ரலி) உயிர் வாழ்ந்தார்கள். ஃபாத்திமா(ரலி) இறந்தபோது, அவர்களின் கணவர் அலீ(ரலி), (இறப்படைவதற்கு முன் ஃபாத்திமா அவர்கள் கேட்டுக் கொண்டிருந்ததற்கிணங்க) இரவிலேயே அவர்களை அடக்கம் செய்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குக் கூட இது குறித்துத் தெரிவிக்கவில்லை. அலீ(ரலி) அவர்களே ஃபாத்திமா(ரலி) அவர்களுக்கு (ஜனாஸாத் தொழுகை) தொழுகை நடத்தினார்கள். ஃபாத்திமா(ரலி) வாழ்ந்த வரையில் அலீ(ரலி) வாழ்ந்த வரையில் அலீ(ரலி) மீது மக்களிடையே (மரியாதையுடன் கூடிய) தனிக்கவனம் இருந்து வந்தது. ஃபாத்திமா(ரலி) இறந்துவிட்ட பின் மக்களின் முகங்களில் (மரியாதையில்) மாற்றத்தை அலீ(ரலி) கண்டார்கள். 285 எனவே, (ஆட்சித் தலைவர்) அபூ பக்ரிடம் சமரசம் பேசவும் பைஅத் - விசுவாசப் பிரமாணம் செய்து கொள்ளவும் விரும்பினார்கள். அந்த (ஆறு) மாதங்களில் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு அலீ(ரலி) விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்திருக்கவில்லை. எனவே,'தாங்கள் (மட்டும்) எங்களிடம் வாருங்கள். தங்களுடன் வேறெவரும் வரவேண்டாம்'' என்று கூறி அலீ(ரலி) அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு ஆளனுப்பினார்கள். (அபூ பக்ர்-ரலி - அவர்களுடன்) உமர்(ரலி) வருவதை அலீ(ரலி) விரும்பாததே (அலீ-ரலி அவர்கள் இவ்வாறு கூறக்) காரணமாகும். அப்போது உமர்(ரலி) (அபூ பக்ர் - ரலி - அவர்களிடம்),'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் மட்டும் அவர்களிடம் தனியாகச் செல்லாதீர்கள் (உங்களுக்குரிய கண்ணியத்தை அவர்கள் கொடுக்காமல் இருந்து விடலாம்)'' என்று கூறினார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி), என் விஷயத்தில் அவர்கள் அப்படி நடந்து கொள்வார்கள் என்றா நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்? அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்களிடம் நான் செல்லத்தான் செய்வேன்'' என்று கூறிவிட்டு, அவர்களிடம் சென்றார்கள். அப்போது அலீ(ரலி), ஏகத்துவ உறுதிமொழியைக் கூறி இறைவனைத் துதித்தார்கள். பிறகு, (அபூ பக்ர் - ரலி- அவர்களை நோக்கி)'தங்கள் சிறப்பையும் தங்களுக்கு அல்லாஹ் வழங்கியிருக்கம் (ஆட்சித் தலைமைப்) பொறுப்பையும் நாங்கள் ஒப்புக் கொள்கிறோம். அல்லாஹ் உங்களுக்கு வழங்கியிருக்கும் இந்த (ஆட்சித் தலைமை எனும்) நன்மையைக் குறித்து நாங்கள் பொறமைப்படவில்லை. ஆயினும், இந்த (ஆட்சிப் பொறுப்பு) விஷயத்தில் (எங்களிடம் ஆலோசனை கலக்காமல்) தன்னிச்சையாகச் செயல்பட்டு விட்டீர்கள். ஆனால், இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் எங்களுக்குள் உறவு முறையின் காரணத்தால் (ஆட்சித் தலைவரைத் தேர்ந்தெடுக்கம் விஷயத்தில்) எங்களுக்குப் பங்கு உண்டு என நாங்கள் கருதிவந்தோம்'' என்று கூறினார்கள். (இது கேட்டு) அபூ பக்ர்(ரலி) அவர்களின் கண்கள் (கண்ணீரைச்) சொரிந்தன. அபூ பக்ர்(ரலி) பேசத் துவங்கியபோது,'என் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீது சத்தியமாக! என்னுடைய உறவினர்களுடன் உறவைப் பேணி நான் வாழ்வதை விட, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உறவினர்களே எனக்கு மிகவும் உவப்பானவர்கள். இச்செல்வங்கள் தொடர்பாக எனக்கும் உங்களுக்குமிடையில் ஏற்பட்ட (கருத்து வேறுபாட்டின்) விவகாரத்தில் நான் நன்மை எதையும் குறைத்து விடவில்லை. இது விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்யக் கண்ட எதையும் நான் செய்யாமல்விட்டு விடவுமில்லை'' என்று கூறினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் அலீ(ரலி),'தங்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுப்பதற்கான நேரம் (இன்று) மாலையாகும்'' என்று கூறினார்கள். பிறகு அபூ பக்ர்(ரலி) லுஹ்ருத் தொழுகையை முடித்ததும் மிம்பர் (மேடை) மீதேறி ஏகத்துவ உறுதிமொழி கூறி, இறைவனைப் புகழ்ந்த பிறகு அலீ(ரலி) குறித்தும், அவர்கள் தமக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்கத் தாமதமானது குறித்தும், அதற்கு அலீ(ரலி) தம்மிடம் கூறிய காரணம் குறித்தும் எடுத்துரைத்தார்கள். பிறகு அலீ(ரலி)

(இறைவனிடம்) பாவமன்னிப்புக் கோரிவிட்டு, ஏகத்துவ உறுதிமொழி கூறிய பின் அபூ பக்ர்(ரலி) அவர்களின் தகுதியைக் கண்ணியப்படுத்திப் பேசினார்கள். தொடர்ந்து அவர்கள், தாம் செய்த இக்காரியத்திற்குக் காரணம், அபூ பக்ர்(ரலி) மீது கொண்ட பொறாமையோ அல்லது அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிய சிறப்பை நிராகரித்தோ அல்ல் மாறாக, (ஆட்சித் தலைமையைத் தேர்ந்தெடுக்கும்) இந்த விஷயத்தில் எங்களுக்கும் பங்கு உண்டு என (நபி - ஸல் - அவர்களின் குடும்பத்தினராகிய) நாங்கள் கருதியதேயாகும். ஆனால், அபூ பக்ர்(ரலி) (எங்களிடம் கேட்காமல்) தன்னிச்சையாகச் செயல்பட்டுவிட்டார்கள். அதனால் எங்களுக்கு மனவருத்தம் ஏற்பட்டது‘‘ என்று கூறினார்கள். இதைக் கேட்டு முஸ்லிம்கள் மகிழ்ச்சியடைந்து (அலீ அவர்களைப் பார்த்து)’நீங்கள் சரியாகவே சொன்னீர்கள்‘‘ என்று கூறினர். தம் போக்கை அலீ(ரலி) திரும்பவும் இயல்பான நிலைக்குக் கொண்டு வந்துவிட்டபோது முஸ்லிம்கள் அலீ(ரலி) அவர்களுக்கு மிகவும் நெருக்கமானவர்களாக ஆம்விட்டனர்.

ஹதீஸ் 4242. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

கைபர் வெற்றி கொள்ளப்பட்டபோது,‘இனி நம் வயிறு பேரீச்சங்கனிகளால் நிரம்பும்‘‘ என்று நாங்கள் சொல்லிக் கொண்டோம்.

ஹதீஸ் 4243. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

கைபரை வெற்றி கொள்ளும் வரையில் நாங்கள் வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை.

## கைபர் வாசிகளுக்கு நபி(ஸல்) அவர்கள் அதிகாரி ஒருவரை நியமனம் செய்தது.

ஹதீஸ் 4244-ஹதீஸ் 4245 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்

(கைபர் வெற்றிக்குப் பின்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஸவாத் இப்னு ஃகஸிய்யா என்றழைக்கப்படும்) ஒருவரை கைபரின் அதிகாரியாக நியமனம் செய்தார்கள். அங்கிருந்து அவர் உயர் ரகப் பேரீச்சங்கனிகளை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘கைபரின் பேரீச்சங்கனிகள் எல்லாமே இப்படி (உயர் ரகமானதாக)த் தான் உள்ளனவா?’ என்று கேட்டார்கள். அதற்கவர்,‘அல்லாஹ்வின் மீதாணையாக! இல்லை இறைத்தூதர் அவர்களே! மட்டமான பேரீச்சங்கனிகளில் இரண்டு ஸாவுக்கு இந்த உயர் ரகப் பேரீச்சங்கனிகளில் மூன்று ஸாவுக்கு இந்தப் பேரீச்சங்கனிகளில் இரண்டு ஸாவையும் நாங்கள் வாங்குவோம்’ எனக் கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘இவ்வாறு செய்யாதீர். மட்டமான பேரீச்சங்கனியை திர்ஹங்களுக்கு விற்று, அந்தத் திர்ஹங்களைக் கொண்டு உயர் ரகப் பேரீச்சங்கனியை வாங்குவீராக!”எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 4246 - ஹதீஸ் 4247 அபூ ஸயீத்(ரலி) அவர்களும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் கூறினார்கள்

அன்சாரிகளில் பனு அதீ குடும்பத்தின் சகோதரர் (ஸாவத் இப்னு ஃகஸிய்யா என்றழைக்கப்படும்) ஒருவரை கைபருக்கு அதிகாரியாக்கி நபி(ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள்...

இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இடம் பெற்றுள்ளது.

## வயல்களில் பயிர் செய்ய கைபர் வாசிகளை நபி(ஸல்) அவர்கள் அனுமதித்து.

ஹதீஸ் 4248. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்தார்

கைபர் பகுதியில் உள்ள நிலங்களை யூதர்களுக்கு,'அவர்கள் அவற்றில் உழைத்து விவசாயம் செய்து கொள்ளலாம். அதிலிருந்து கிடைக்கும் விளைச்சலில் பாதி அவர்களுக்குரியது. (மீதிப் பாதியை மதீனாவின் இஸ்லாமிய அரசுக்குக் கொடுத்து விட வேண்டும்)' என்னும் நிபந்தனையின் பேரில் நபி(ஸல்) அவர்கள் கொடுத்தார்கள்.

## கைபரில் நபி(ஸல்) அவர்களுக்கு விஷம் தோய்த்துக கொடுக்கப்பட்ட ஆடு.

இது குறித்து ஆயிஷா(ரலி) அவர்களின் வாயிலாக உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 4249. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

கைபர் வெற்றி கொள்ளப்பட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு விஷயம் கலந்த ஆடு ஒன்று அன்பளிப்பாக தரப்பட்டது.

## ஸைத் இப்னு ஹாரிஸாப் போர்

ஹதீஸ் 4250. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களை ஒரு படைக் குழுவினருக்குத் தளபதியாக்கி அனுப்பினார்கள். மக்களில் சிலர் ஸைத் அவர்களின் தலைமையைக் குறை கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'(இப்போது) இவரின் தலைமையை நீங்கள் குறை கூறுகிறீர்கள் என்றால்... (இது ஒன்றும் புதிதல்ல). இவருக்கு முன் (மூத்தா போரின் போது) இவருடைய தந்தையின் (ஸைத் அவர்களின்) தலைமையையும் நீங்கள் குறைகூறிக் கொண்டிருந்தீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் தலைமைப் பொறுப்புக்குத் தகுதியுடையவராகவே இருந்தார். மேலும், அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் விருப்பமானவராக இருந்தார். (அவரின் மகனான) இவர்தான் அவருக்குப் பின் எனக்கு மிகவும் பிரியமானவராவார்'' என்று கூறினார்கள்.

## உம்ரத்துல் களா

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து அனஸ்(ரலி) அறிவிப்புச் செய்துள்ளார்கள்.

ஹதீஸ் 4251. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்'துல்கஅதா' மாதத்தில் உம்ரா செய்யச் சென்றபோது மக்காவாசிகள் அவர்களை மக்காவிற்குள் நுழைய விட மறுத்தார்கள். இறுதியில், நபி(ஸல்) அவர்கள்,'மக்காவில் (வரும் ஆண்டில்), தாம் (தம் தோழர்களுடன்) மூன்று நாள்கள் தங்க (அனுமதிக்க) வேண்டும்' என்னும் நிபந்தனையின் பேரில் மக்காவாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள். ஒப்பந்தத்தை அவர்கள் எழுதியபோது,'இது அல்லாஹ்வின் தூதரான முஹம்மத் அவர்கள் செய்த சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்துகள்' என்று எழுதினார்கள். உடனே மக்காவாசிகள்,'நாங்கள் இதை ஒப்புக் கொள்ள மாட்டோம். நீங்கள் இறைத்தூதர் தாம் என்று நாங்கள் நம்புவோமாயின் உங்களை (மக்காவில் நுழைய விடாமல்) தடுத்திருக்க மாட்டோம். ஆயினும், நீங்கள் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது தான்'' என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நான் அல்லாஹ்வின் தூதராவேன் அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மதும் ஆவேன்'' என்று பதிலளித்துவிட்டு, அலீ(ரலி) அவர்களை நோக்கி,'இறைத்தூதர்' என்பதை அழித்து விடுங்கள்'' என்று கூறினார்கள். அலீ(ரலி),'முடியாது. அல்லாஹ்வின் மீதாணையாக! நான் தங்கள் (அந்தஸ்தைக் குறிக்கும்) பெயரை ஒருபோதும் அழிக்க மாட்டேன்'' என்று கூறிவிட்டார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்திரத்தை எடுத்தார்கள் - அவர்களுக்கு எழுதத் தெரிந்திருக்கவில்லை-பிறகு,'இது

அப்துல்லாஹ்வின் குமாரர், முஹம்மத் செய்த சமாதான ஒப்பந்தம் ஆகும். அதன் விபரமாவது: முஸ்லிம்களில் எவரும்) உறையிலிட்ட வாளைத் தவிர வேறு ஆயுதங்களை மக்காவிற்குள் கொண்டு வரக் கூடாது. மக்கா வாசிகளில் எவரும் முஹம்மதைப் பின்தொடர்ந்து வர விரும்பினாலும் கூட, அவரை முஹம்மது தம்முடன் அழைத்துச் செல்லக் கூடாது. மேலும், தம் தோழர்களில் எவரும் மக்காவில் தங்கிவிட விரும்பினால் அவரை முஹம்மது தடுக்கக் கூடாது'' என்று எழுதி (விடுமாறு கூறி)னார்கள். (அடுத்த ஆண்டு) நபி(ஸல்) அவர்கள் மக்காவினுள் நுழைந்தபோது (அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட) தவணை(யான மூன்று நாள்கள்) முடிந்தவுடன் மக்காவாசிகள் அலீ(ரலி) அவர்களிடம் வந்து,'உங்கள் தோழரிடம் எங்களை (எங்கள் நகரை)விட்டு வெளியேறும் படிக் கூறுங்கள். ஏனெனில், தவணைக் காலம் முடிந்துவிட்டது'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்களும் (மக்காவைவிட்டு) வெளியேறினார்கள். அப்போது (உஹுதுப் போரில் கொல்லப்பட்டிருந்த) ஹம்ஸா(ரலி) அவர்களின் (அனாதை) மகள்,'என் சிறிய தந்தையே! என் சிறிய தந்தையே!"என்று (கூவிக் கொண்டே) நபி(ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து வந்தாள். அலீ(ரலி) அச்சிறுமியை (பரிவோடு) எடுத்து அவளுடைய கையைப் பிடித்தார்கள். ஃபாத்திமா(ரலி) அவர்களிடம்,'இவளை எடுத்துக் கொள். (இவள்) உன் தந்தையின் சகோதரருடைய மகள். இவளைத் தூக்கி வைத்துக்கொள்'' என்று கூறினார்கள். அச்சிறுமியின் விஷயத்தில் அலீ(ரலி) அவர்களும், ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களும், ஜஅஃபர்(ரலி) அவர்களும் (ஒவ்வொருவரும்,'அவளை நான்தான் வளர்ப்பேன்' என்று) ஒருவரோடொருவர் போட்டியிட்(டு சச்சரவிட்டுக் கொண்ட)னர். அலீ(ரலி),'நானே இவளுக்கு மிகவும் உரிமையுடையவன். ஏனெனில், இவள் என் சிறிய தந்தையின் மகள்'' என்று கூறினார்கள். ஜஅஃபர்(ரலி),'இவள் என் சிறிய தந்தையின் மகள். மேலும், இவளுடைய சிற்றன்னை (அஸ்மா பின்த் உமைஸ்) என் மனைவியாவார்'' என்று கூறினார்கள். ஸைத்(ரலி),'(இவள், நபியவர்கள் ஏற்படுத்திய சகோதரத்துவத்தின் மூலம் வந்த) என் சகோதரரின் மகள்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் அச்சிறுமியின் சிற்றன்னைக்கு சாதகமாக (சிற்றன்னையின் கணவரான ஜஅஃபர் - ரலி அவர்கள், அவளை வளர்க்கட்டும் என்று) தீர்ப்பளித்தார்கள். மேலும்,'சிற்றன்னை அன்னையின் அந்தஸ்தில் இருக்கிறாள்'' என்று கூறினார்கள். அலீ(ரலி) அவர்களை நோக்கி,'நீங்கள் என்னைச் சேர்ந்தவர் நான் உங்களைச் சேர்ந்தவன்'' என்று (ஆறுதலாகக்) கூறினார்கள். ஜஅஃபர்(ரலி) அவர்களை நோக்கி,'நீங்கள் தோற்றத்திலும் குணத்திலும் என்னை ஒத்திருக்கிறீர்கள்'' என்று கூறினார்கள். மேலும், ஸைத்(ரலி) அவர்களை நோக்கி,'நீங்கள் எம் சகோதரர் எம்(மால் விடுதலை செய்யப்பட்ட, எம்முடைய பொறுப்பிலுள்ள) அடிமை (ஊழியர்)'' என்று கூறினார்கள். அலீ(ரலி),'தாங்கள் ஹம்ஸாவின் மகளை மணந்துகொள்ளக் கூடாதா?' என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அவள் பால்குடி உறவு முறையில் என் சகோதரரின் மகள் ஆவாள். (எனவே, நான் அவளை மணமுடிக்க முடியாது)'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4245. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உம்ரா செய்ய நாடியவர்களாக (மக்காவை நோக்கிப்) புறப்பட்டார்கள். குறைஷிகளில் இறைமறுப்பாளர்கள் அவர்களை இறையில்லம் கஅபாவிற்குச் செல்ல விடாமல் தடுத்தனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் ஹுதைபிய்யாவில் தம் தியாகப் பிராணியை அறுத்து (பலியிட்டு)விட்டுத் தம் தலையை மழித்துக் கொண்டார்கள். மேலும், அவர்களுடன்,'வரும் ஆண்டில் தாம் (தம் தோழர்களுடன்) உம்ராசெய்ய (அனுமதிக்கப்பட) வேண்டும் வாள்களைத் தவிர வேறு ஆயுதங்களை நாங்கள் எடுத்து வர மாட்டோம் குறைஷிகள் விரும்புகிற வரை மட்டுமே மக்காவில் தங்கியிருப்போம்' என்னும் நிபந்தனையின் பேரில் சமாதான ஒப்பந்தம் செய்தார்கள்.

அவர்களிடம் செய்த சமாதான ஒப்பந்தத்தின் படியே அடுத்த ஆண்டுஉம்ரா செய்ய நாடி, மக்கா நகரினுள் நுழைந்தார்கள். அங்கு மூன்று நாள்கள் தங்கி (முடித்து)விட்டபோது, குறைஷிகள் நபி(ஸல்) அவர்களை (மக்காவைவிட்டு) வெளியேறும் படி உத்தரவிட, நபி(ஸல்) அவர்களும் வெளியேறிவிட்டார்கள்.

ஹதீஸ் 4253. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்

நானும் உர்வா இப்னு ஸுபைரும் மஸ்ஜிது(ன் நபவீ)க்குச் சென்றோம். அங்கே ஆயிஷா(ரலி) அவர்களின் அறைக்கருகே அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அமர்ந்திருந்தார்கள். அவர்களிடம்,'நபி(ஸல்) அவர்கள் எத்தனை உம்ராக்கள் செய்துள்ளார்கள்?' என உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கேட்டார்கள். அதற்கவர்கள்,'நான்கு அவற்றில் ஒன்றை ரஜப் மாதத்தில் செய்தார்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 4253. பிறகு, (அறையில்) ஆயிஷா(ரலி) பல்துலக்கும் சப்தத்தைக் கேட்டோம். அப்போது உர்வா(ரஹ்),'இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! அபூ அப்திர் ரஹ்மான் (இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுவதைச் செவியுற்றீர்களா?'நபி(ஸல்) அவர்கள், நான்கு உம்ராக்கள் செய்தார்கள் அவற்றில் ஒன்றை ரஜப் மாதத்தில் செய்தார்கள்' என்று இப்னு உமர் சொல்கிறார்கள்' எனக் கூறினார். ஆயிஷா(ரலி),'நபி(ஸல்) அவர்கள் உம்ரா செய்யும் போதெல்லாம் அவர்களுடன் இப்னு உமரும் இருந்திருக்கிறார். (மறந்துவிட்டார் போலும்.) நபி(ஸல்) அவர்கள் ரஜப் மாதத்தில் உம்ரா செய்ததே இல்லை'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4255. இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹுதைபிய்யா சமாதான உடன் படிக்கையின் படி ஹிஜ்ரீ 7-ம் ஆண்டு) உம்ரா செய்தபோது, நபி(ஸல்) அவர்களைத் (தாக்கித்) துன்புறுத்தி விடாமலிருப்பதற்காக அவர்களை இணைவைப்போரிடமிருந்தும் அவர்களின் இளைஞர்களிடமிருந்தும் நாங்கள் (பாதுகாப்பு வளையம் அமைத்து) மறைத்துக் கொண்டோம்.

ஹதீஸ் 4256. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தோழர்களுடன் (உம்ரத்துல் களாவிற்காக மக்காவுக்கு) வந்தபோது,'யஸ்ரிபின் ஜுரத்தால் (மதீனாவில் தோன்றிய காய்ச்சலால்) பலவீனப்பட்ட நிலையில் ஒரு குழு நம்மிடம் வந்துள்ளது'' என்று இணைவைப்போர் பேசிக் கொண்டனர். அப்போது (பலவீனப்படவில்லை எனக் காட்டுவதற்காக) நபி(ஸல்) அவர்கள்'(கஅபாவை வலம் வருகையில்) மூன்று சுற்றுகள் தோள்களைக் குலுக்கிய வாறு ஓட வேண்டும்' என்றும்'ஹஜருல் அஸ்வக்கும் ருக்னுல் யமானிக்கும் இடையே நடந்து செல்ல வேண்டும்' என்றும் கட்டளையிட்டார்கள்.'(வலம் வரும் போது) மொத்தச் சுற்றுக்களிலும் தோள்களைக் குலுக்கியவாறு ஓட வேண்டும்' என்று நபி(ஸல்) அவர்களின் மீது கொண்ட இரக்கமேயாகும்.

“நபி(ஸல்) அவர்கள் பாதுகாப்புப் பெற்ற ஆண்டில் (உம்ரத்துல் களாவிற்காக) மக்காவிற்கு வந்தபோது (தம் தோழர்களை நோக்கி,)'(கஅபாவை வலம் வருகையில்) தோள்களைக் குலுக்கியவாறு ஓடுங்கள் ஏனெனில், உங்கள் பலத்தை இணை வைப்போருக்கு நான் காட்டவேண்டும்'' என்று கூறினார்கள். அப்போது இணை வைப்பவர்கள்,'ஃகுஅய்கிஆன்' என்னும் மலையின் திசையில் (இருந்து எட்டிப் பார்த்துக் கொண்டு) இருந்தார்கள்'' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் என இப்னு சல்மா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில், அதிகப்படியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4257. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் இறையில்ல(ம் கஅபாவை வலம் வந்த நேர)த்திலும் ஸஃபா - மர்வா இடையேயும் தொங்கோட்டம் ஓடியதெல்லாம், இணைவைப்போருக்குத் தம் வலிமையைக் காட்டுவதற்காகத்தான்.

ஹதீஸ் 4258. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

(ஹுதைபிய்யா உடன்படிக்கையின் படி ஹிஜ்ரி 7-ல் உம்ரா செய்வதற்காக) நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் அணிந்திருந்த நிலையில் மைமூனா (ரலி) அவர்களை மணந்தார்கள். இஹ்ராமிலிருந்து விடுபட்ட நிலையில் அவர்களுடன் வீடு கூடினார்கள். பிறகு மைமூனா (ரலி) (மக்காவிலிருந்து சிறிது தொலையிலுள்ள) 'சரிஃப்' என்னுமிடத்தில் இறந்தார்கள்.

ஹதீஸ் 4259. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் (ஹிஜ்ரி 7-ல் செய்த) 'உம்ரத்துல களா'வின்போது (முந்தைய ஆண்டு விடுபட்ட உம்ராவை நிறை வேற்றிய போது) மைமூனா (ரலி) அவர்களை மணந்தார்கள்.

## ஷாம் நாட்டில் நடைபெற்ற மூத்தா போர்.

ஹதீஸ் 4260. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

மூத்தா போரின்போது நான் ஜஅஃபர் (ரலி) கொல்லப்பட்டு (விழுந்து) கிடக்க, அவர்களருகே நின்று (அவர்கள் அடைந்திருந்த) ஈட்டிக் காயங்களும் வாட்களின் காயங்களுமாக ஐம்பது காயங்களை எண்ணினேன். அவற்றில் ஒன்று கூட அவர்களின் முதுகில் (ஏற்பட்ட காயமாக) இருக்கவில்லை. (அனைத்தும் விழுப்புண்களாகவே இருந்தன.)

ஹதீஸ் 4261. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மூத்தா போரின்போது ஸைத் இப்னு ஹாரிஸா (ரலி) அவர்களைப் படைத் தளபதியாக நியமித்தார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'ஸைத் கொல்லப்பட்டால் ஜஅஃபர் (தலைமையேற்கட்டும்!) ஜஅஃபர் கொல்லப்பட்டால் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (தலைமையேற்கட்டும்)'' என்று கூறினார்கள். நான் அந்தப் புனிதப் போரில் அவர்களுடன் (பங்கேற்று) இருந்தேன். நாங்கள் ஜஅஃபர் இப்னு அபீ தாலிப் (ரலி) அவர்களைத் தேடிச் சென்றபோது கொலையுண்டவர்களில் அவரைக் கண்டோம். அவர்களின் உடலில் இருந்த காயங்கள், ஈட்டிக் காயங்களும் அம்புக் காயங்களுமாக மொத்தம் தொண்ணூற்றுக்கும் அதிகமானவையாய் இருக்கக் கண்டோம்.

ஹதீஸ் 4262. அனஸ் (ரலி) அறிவித்தார்

ஸைத் இப்னு ஹாரிஸா (ரலி) அவர்களும் ஜஅஃபர் இப்னு அபீ தாலிப் (ரலி) அவர்களும் (அப்துல்லாஹ்) இப்னு ரவாஹா (ரலி) அவர்களும் (மூத்தா போர்க்களத்தில்) கொல்லப்பட்டுவிட்ட செய்தியை, அது (மதீனாவிற்கு) வந்து சேர்வதற்கு முன்பே (இறைவனால் அறிவிக்கப் பெற்று மக்களுக்கு) நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள். அப்போது கூறினார்கள்.

(முதலில் இஸ்லாமியச் சேனையின்) கொடியை ஸைத் பிடித்தார். அவர் கொல்லப்பட்டுவிட்டார். அடுத்து ஜஅஃபர் பிடித்தார். அவரும் கொல்லப்பட்டுவிட்டார். அடுத்து இப்னு ரவாஹா பிடித்தார். அவரும் கொல்லப்பட்டுவிட்டார்.

அறிவிப்பாளர் கூறுகிறார்: அப்போது நபி (ஸல்) அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைச் சொரிந்து கொண்டிருந்தன. இறுதியில், அக்கொடியை அல்லாஹ்வின் வாட்களில் ஒரு வாள் (காலித்

இப்னு வலீத்) எடுத்தது. அல்லாஹ் (அவரின் கரத்தில்) முஸ்லிம்களுக்கு வெற்றியை அளித்துவிட்டான்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4263. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

(மூத்தா போரில்) இப்னு ஹாரிஸா, ஜஅஃபர் இப்னு அபீ தாலிப், ‘அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) ஆகியோர் கொல்லப்பட்ட செய்தி வந்தபோது நபி (ஸல்) அவர்கள் கவலை கொண்ட முகத்தோடு அமர்ந்திருந்தார்கள். நான் கதவின் இடைவெளி வழியாக நபி (ஸல்) அவர்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ‘இறைத்தூதர் அவர்களே!”என்றழைத்து, ஜஅஃபர் (ரலி) வீட்டுப் பெண்கள் (ஒப்பாரி வைத்து) அழுவதாகக் கூறினார். நபி (ஸல்) அவர்கள் அப்பெண்கள் (அவ்வாறு அழுவதைத்) தடுக்கும்படி கட்டளையிட்டார்கள். அவர் சென்று மீண்டும் வந்து, ‘அவர்களை நான் தடுத்தேன். ஆனால், அவர்கள் (என்னுடைய சொல்லிற்குக்) கட்டுப்படவில்லை‘‘ என்றார். உடனே, நபி (ஸல்) அவர்கள், ‘(நீ சென்று அவர்களைத் தடுத்து நிறுத்து‘‘ என) மீண்டும் கட்டளையிட்டார்கள். மீண்டும் அவர் சென்று திரும்பி வந்து, ‘இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! எங்களை (அப்பெண்கள்) மிஞ்சிவிட்டனர்‘‘ என்றார்.

“அப்பெண்களின் வாயில் மண்ணை அள்ளிப் போடுங்கள்’ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என நான் நினைக்கிறேன்.

பின்னர் நான் அம்மனிதரை நோக்கி, ‘அல்லாஹ் உம் மூக்கை மண்கவ்வச் செய்வானாக! நபி (ஸல்) அவர்கள் உமக்குக் கட்டளையிட்டதையும் உம்மால் செய்ய முடியவில்லை அவர்களைத் தொந்தரவு செய்வதையும் நீர் நிறுத்தவில்லை‘‘ எனக் கூறினேன்.

ஹதீஸ் 4264. ஆமிர் ஷஅபீ (ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர் (ரலி), ஜஅஃபர் (ரலி) அவர்களின் மகனா (ர் அப்துல்லாஹ் இப்னு ஜஅஃப) ருக்கு முகமன் கூறினால், ‘இரண்டு சிறகுகள் உடையவரின் மகனே! உங்களின் மீது சாந்தி உண்டாகட்டும்’ என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 4265. காலித் இப்னு வலீத் (ரலி) அறிவித்தார்

மூத்தா பேரின்போது (தீவிரமாகப் போர் புரிந்ததால்) என் கையில் இருந்த ஒன்பது வாட்கள் உடைந்து போயின. என்னுடைய அகலமான யமன் நாட்டு வாள் ஒன்று தான் என் கையில் உடையாமல் எஞ்சியிருந்தது.

ஹதீஸ் 4266. காலித் இப்னு வலீத் (ரலி) அறிவித்தார்

மூத்தா பேரின்போது (தீவிரமாகப் போர் புரிந்ததால்) என் கையில் இருந்த ஒன்பது வாட்கள் உடைந்து போயின. என்னுடைய அகலமான யமன் நாட்டு வாள் ஒன்று தான் என் கையில் உடையாமல் எஞ்சியிருந்தது.

ஹதீஸ் 4267. நுஅமான் இப்னு பஷீர் (ரலி) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு ரவாஹா (ரலி) (மூத்தா போருக்கு முன்பு ஒரு முறை நோயின் காரணத்தால்) மூர்ச்சையுற்றுவிட்டார்கள். உடனே (அன்னார் இறந்துவிட்டார் என எண்ணிய என் தாயாரும்) அன்னாருடைய சகோதரி (யுமான) அம்ரா (ரலி) ’அந்தோ! மலையாக இருந்தவரே! அப்படி இருந்தவரே! இப்படி இருந்தவரே! என்று (பலவாறாகப் புலம்பி) அழத் தொடங்கினார்கள். அவரைப் பற்றி ஒவ்வொன்றாக எடுத்துச் சொல்லலலானார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) மூர்ச்சை தெளிந்(து கண் விழித்)தபோது, தம் சகோதரியை நோக்கி,'நீ சொன்ன ஒவ்வொன்றுக்கும் என்னிடம்,'இவ்வாறுதான் நீ இருக்கிறாயா?' என்று (வானவர் ஒருவரால்) கேட்கப்பட்டது'' என்று (அழுது புலம்பியதைக் கண்டிக்கும் தொனியில்) கூறினார்கள்.

ஹதீஸ் 4268. நுஅமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்களுக்கு (நோயின் காரணத்தால்) மூர்ச்சை ஏற்பட்டபோது இப்படி நடந்தது. எனவே, அவர்கள் (மூத்தா போரில்) இறந்துவிட்ட (செய்தி எட்டிய)போது, அவரின் சகோதரி (அவர் முன்பே கண்டித்திருந்த காரணத்தால்) அவருக்காக அழவில்லை.

## ஜு ஹைனா குலத்தைச் சேர்ந்த ஹு ரக்கத் கூட்டத்தாரிடம் நபி(ஸல்) அவர்கள் உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களை அனுப்பியது.

ஹதீஸ் 4269. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்

எங்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஹுரக்கா' கூட்டத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள். நாங்கள் அந்தக் கூட்டத்தாரிடம் காலையில் சென்றடைந்தோம். (அவர்களுடன் நடந்த சண்டையில்) அவர்களைத் தோற்கடித்தோம். நானும் அன்சாரிகளில் ஒருவரும் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரைக் கண்டோம். அவரைச் சுற்றி வளைத்துக் கொண்டபோது அவர்,'லா இலாஹ இல்லல்லாஹ் - அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை' என்று சொல்ல, அந்த அன்சாரி (அவரைக் கொல்லாமல்) விலம்க் கொண்டார். நான் என் ஈட்டியால் அவரைக் குத்திக் கொன்று விட்டேன். நாங்கள் (திரும்பி) வந்தபோது நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டவே அவர்கள்,'உஸாமாவே! அவர்,'லா இலாஹ இல்லல்லாஹ்'' என்று (ஏகத்துவ வாக்கியத்தை) மொழிந்த பின்னருமா அவரை நீ கொன்றாய்?' என்று கேட்டார்கள். நான்,'(நாங்கள் அவரைக் கொன்றுவிடாமல்) தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவே அவர் அவ்வாறு கூறினார்'' என்று சொன்னேன். (ஆனால், என் சமாதானத்தை ஏற்காமல்) நபி(ஸல்) அவர்கள் அந்தக் கேள்வியையே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், நான்,'(அந்தப் பாவத்தைச் செய்த) அந்த நாளுக்கு முன்பாக இஸ்லாத்தை ஏற்காமல் (அதற்குப் பிறகு ஏற்று) இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்குமே (பாவம் மன்னிக்கப்பட்டிருக்குமே!) என்று கூட நினைத்தேன்.

ஹதீஸ் 4270. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஏழு புனிதப் போர்களில் கலந்து கொண்டேன். அவர்கள் அனுப்பிக் கொண்டிருந்த படைப் பிரிவுகளில் பங்கெடுத்த ஒன்பது புனிதப் போர்களுக்குச் சென்றுள்ளேன். (அவற்றில்) ஒரு முறை எங்களுக்கு அபூ பக்ர்(ரலி) தளபதியாக நியமிக்கப்படடிருந்தார்கள். ஒரு முறை எங்களுக்கு உஸாமா(ரலி) தளபதியாக நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

ஹதீஸ் 4271. ஸலமா இப்னு அக்வஃ(ரலி அவர்கள் அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஏழு புனிதப் போர்களில் கலந்து கொண்டேன். அவர்கள் அனுப்பிக் கொண்டிருந்த படைப் பிரிவுகளில் பங்கெடுத்து ஒன்பது புனிதப் போர்களுக்குச் சென்றுள்ளேன். (அவற்றில்) ஒரு முறை எங்களுக்கு அபூ பக்ர்(ரலி) தளபதியாக நியமிக்கப்பட்டிருந்தார்கள். ஒரு முறை உஸாமா(ரலி) தளபதியாக நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

ஹதீஸ் 4272. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒன்பது புனிதப் போர்களில் கலந்து கொண்டேன். நான் (உஸாமா) இப்னு (ஸைத் இப்னு) ஹாரிஸா(ரலி) அவர்களுடன் புனிதப் போர் புரிந்துள்ளேன். நபி(ஸல்) அவர்கள் உஸாமா(ரலி) அவர்களை எங்களுக்குத் தளபதியாக நியமித்திருந்தார்கள்.

ஹதீஸ் 4273. யஸீத் இப்னு அபீ உபைத்(ரஹ்) அறிவித்தார்

ஸலமா இப்னு அக்வஃ(ரலி), 'நான் நபி(ஸல்) அவர்களுடன் ஏழு புனிதப் போர்களில் கலந்து கொண்டேன்" என்று சொல்லிவிட்டு'கைபர் போர், ஹுதைபிய்யா(வில் நடக்கவிருந்து தவிர்க்கப்பட்ட) போர், ஹுனைன் போர், தூகரத் போர் ஆகியவற்றைக் குறிப்பிட்டார்கள். அவற்றில் மீதியை நான் மறந்து விட்டேன்.

## மக்கா வெற்றியின்போது நடந்த புனிதப் போரும் ஹாத்திப் இப்னு அபீ பல்தஆ(ரலி), நபி(ஸல்) அவர்கள் போர் தொடுக்கவிருக்கும் செய்தியை மக்காவாசிகளுக்கு (ஒரு பெண் மூலம் இரகசியமாக) அனுப்பி வைத்ததும்.

ஹதீஸ் 4274. அலீ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னையும் ஸுபைர் இப்னு அவ்வாம் அவர்களையும் மிக்தாத் இப்னு அஸ்வத் அவர்களையும், 'நீங்கள்'ரவ்ளத்து காக்' எனும் இடம் வரை செல்லுங்கள். ஏனெனில், அங்கு ஒட்டகச் சிவிகையில் ஒரு பெண் இருக்கிறாள். அவளிடம் ஒரு கடிதம் இருக்கும். அதை அவளிடமிருந்து எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறி அனுப்பினார்கள். (அவ்வாறே) நாங்கள் சென்றோம். எங்களைச் சுமந்து கொண்டு எங்கள் குதிரைகள் விரைந்தோடின. இறுதியில், நாங்கள்'ரவ்ளா' எனும் அந்த இடத்தை அடைந்தோம். அங்கு ஒரு (சிவிகைப்) பெண்ணைக் கண்டோம். நாங்கள் (அவளிடம்), 'கடிதத்தை வெளியே எடு" என்று கூறினோம். அவள், 'என்னிடம் கடிதம் எதுவுமில்லை" என்று சொன்னாள். நாங்கள், 'ஒன்று நீயாகக் கடிதத்தை எடுத்து (கொடுத்து) விடு இல்லையேல் (உன்) ஆடையை நாங்கள் கழற்றி (சோதனையிட்டு) விடுவோம்" என்று சொன்னோம். உடனே, அவள் (இடுப்பு வரை நீண்டிருந்த) தன்னுடைய சடையின் பின்னல்களுக்கிடையேயிருந்து கடிதத்தை வெளியே எடுத்தாள். நாங்கள் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றோம். அதில், ஹாத்திப் இப்னு அபீ பல்தஆ அவர்கள் மக்கா வாசிகளான இணைவைப்போரிடையேயுள்ள (பிரமுகர்கள்) சிலருக்கு, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (ரகசியத்) திட்டங்கள் சிலவற்றை (முன்கூட்டியே) தெரிவித்திருந்ததைக் கண்டோம். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'ஹாத்திபே! என்ன இது?' என்று கேட்டார்கள். ஹாத்திப்(ரலி), 'இறைத்தூதர் அவர்களே! என் விஷயத்தில் அவசரப்பட்டு (நடவடிக்கை எடுத்து) விடாதீர்கள். நான் குறைஷிகளில் ஒருவனாக இருக்கவில்லை. அவர்களைச் சார்ந்து வாழ்ந்தவனாகவே இருந்து வந்தேன். தங்களுடன் இருக்கும் முஹாஜிர்களுக்கு அவர்களின் வீட்டாரையும் சொத்துக்களையும் பாதுகாப்பதற்கு மக்கா நகரில் உறவினர்கள் பலர் இருக்கிறார்கள். எனக்கு அவர்களிடையே அத்தகைய உறவினர்கள் (எவரும்) இல்லாததால், (இணைவைப்பவர்களான) மக்காவாசிகளுக்கு நான் உபகாரம் எதையாவது செய்து அதற்குப் பிரதியுபகாரமாக அவர்கள் அங்குள்ள என் (பலவீனமான) உறவினர்களைக் காப்பாற்றட்டும் என்று விரும்பினேன். (அதனால், இணைவைப்பவர்கள் கேட்டுக் கொண்டதால் இந்தத் தகவலைத் தெரிவித்தேன்.) நான் என் மார்க்க(மான இஸ்லா)த்தைவிட்டு வேறு மதத்தைத் தழுவுவதற்காகவோ, இஸ்லாத்தைத் தழுவிய பின் இறைமறுப்பை விரும்பியோ இவ்விதம் செய்யவில்லை' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இவர் உங்களிடம் உண்மை பேசினார்" என்று கூறினார்கள். அப்போது உமர்(ரலி)'இறைத்தூதர்

அவர்களே! என்னை விடுங்கள். இந்த நயவஞ்சகனின் கழுத்தை வெட்டி விடுகிறேன்!"என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'இவர் பத்ருப் போரில் கலந்து கொண்டிருக்கிறார். மேலும், உங்களுக்கென்ன தெரியும்? ஒரு வேளை, அல்லாஹ் பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களிடம்'நீங்கள் விரும்பியதைச் செய்து கொள்ளுங்கள். உங்களை நான் மன்னித்து விட்டேன்' என்று கூறிவிட்டிருக்கலாம்" என்று கூறினார்கள்.

அப்போது அல்லாஹ் பின்வரும் (60-வது) அத்தியாயத்தை அருளினான்: இறைநம்பிக்கையாளர்களே! எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாக இருப்போரை நண்பர்களாக எடுத்துக் கொண்டு, நட்பின் காரணத்தினால் (உங்களின் இரகசியங்களை) அவர்களுடன் (பரிமாறிக் கொண்டு) உறவாட வேண்டாம்! அவர்கள், உங்களிடம் வந்துள்ள சத்திய (வேத)த்தை மறுத்துவிட்டவர்கள்... (திருக்குர்ஆன் 60:01)

## ரமளான் மாதத்தில் நடந்த மக்கா வெற்றிப்போர்.

ஹதீஸ் 4275. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ரமளானில் மக்கா வெற்றிப் போருக்காக (மக்கா நோக்கி)ப் புறப்பட்டார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில்,'அப்போது நபி(ஸல்) அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள்.'கதீத்' எனும் இடத்தை - உஸ்ஃபானுக்கும் குதைதுக்கும் இடையே உள்ள நீர்ப்பகுதியை - அடைந்ததும் நோன்பைவிட்டுவிட்டார்கள். அந்த மாதம் கழியும் வரையிலும் கூட அவர்கள் நோன்பு நோற்கவில்லை" என்று வந்துள்ளது.

ஹதீஸ் 4276. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் தம்முடன் முஸ்லிம்கள் பத்தாயிரம் பேரை அழைத்துக் கொண்டு (மக்கா வெற்றிப் போருக்காக) மதீனாவிலிருந்து மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

இது நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்கு (ஹிஜ்ரத் செய்து) வருகை தந்ததிலிருந்து எட்டரை ஆண்டின் தொடக்கத்தில் நடைபெற்றது.

நபி(ஸல்) அவர்களும் அவர்களுடன் இருந்த முஸ்லிம்களும் நோன்பு நோற்றபடி பயணம் செய்தார்கள். இறுதியில்'கதீத்' என்னுமிடத்திற்குச் சென்று நேர்ந்தார்கள். - இந்த இடம் உஸ்ஃபானுக்கும்'குதைத்' எனுமிடத்திற்குமிடையே உள்ள நீர்ப்பகுதியாகும் - (அங்கு) நபி(ஸல்) அவர்கள் நோன்பைவிட்டுவிட மக்களும் நோன்பைவிட்டுவிட்டார்கள்.

ஸுஹ்ரீ(ரஹ்),'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கட்டளைகளில் பிந்தியது, அதற்கடுத்துப் பிந்தியது தான் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்" என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 4277. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தில் (மக்கா வெற்றிக்குப் பின்) ஹுனைன் நோக்கி (புனிதப் போருக்காகப்) புறப்ப(டத் திட்டமி)ட்டார்கள். அப்போது மக்கள் (நோன்பு நோற்கும் விஷயத்தில்) பல தரப்பட்டவர்களாயிருந்தனர். சிலர் நோன்பு நோற்றிருந்தார்கள் சிலர் நோன்பு நோற்றிருக்கவில்லை. நபி(ஸல்) அவர்கள், தம் வாகனத்தில் நன்கு அமர்ந்து கொண்டபோது ஒரு பால் பாத்திரத்தை... அல்லது தண்ணீர்ப் பாத்திரத்தை... கொண்டு வரும்படிக் கூறி, அதைத் தம் உள்ளங்கையில்.. அல்லது தம் வாகனத்தில்... வைத்தார்கள். பிறகு மக்களைப் பார்த்தார்கள். உடனே நோன்பைவிட்டுவிட்டவர்கள் நோன்பு நோற்றிருந்தவர்களிடம்,'நீங்களும் நோன்பை விடுங்கள்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4278. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி ஆண்டில் (ரமளான் மாதம்) புறப்பட்டார்கள்...

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 4279. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவக்ாள (மதீனாவிலிரந்து மக்காவிற்குப்) பயணம் மேற்கொண்டார்கள். அப்போது அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள். 'உஸ்ஃபான்' எனும் இடத்தை அடைந்ததும் தண்ணீர் உள்ள பாத்திரம் கொண்டுவரச் செய்து (ரமளானின்) பகல் பொழுதில் மக்கள் காணவேண்டுமென்பதற்காக அதை அருந்தி நோன்பை முறித்துக் கொண்டார்கள். மக்காவை அடையும் வரை நோன்பு நோற்கவில்லை.

இக்ரிமா(ரஹ்) கூறினார்:

“நபி(ஸல்) அவர்கள் (பயணத்தில்) நோன்பு நோற்றும் இருக்கிறார்கள் நோன்பைவிட்டும் இருக்கிறார்கள். எனவே, (பயணத்தில் நோன்பு நோற்க) விரும்புபவர் நோன்பு நோற்கலாம் நோன்பைவிட்டுவிட விரும்புபவர்விட்டுவிடவும் செய்யலாம்‘‘ என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறுவார்கள்.

## மக்கா வெற்றி நாளில் (இஸ்லலாமியச் சேனையின்) கொடியை நபி(ஸல்) அவர்கள் எங்கே நட்டு வைத்தார்கள்?

ஹதீஸ் 4280. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் (அதனை வெற்றி கொள்வதற்காக மதீனாவிலிருந்து) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பயணம் மேற்கொண்டபோது, அவர்கள் வருகிற செய்தி (மக்கா) குறைஷிகளுக்கு எட்டியது. உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பற்றிய செய்தியை (உளவு) அறிவதற்காக அபூ சுஃப்யான் இப்னு ஹர்ப், ஹகீம் இப்னு ஹிஸாம், புதைல் இப்னு வர்கா ஆகியோர் (மக்காவிலிருந்து) புறப்பட்டனர். 319 அவர்கள் பயணம் மேற்கொண்டு'மர்ருழ் ழஹ்ரான்' என்னும் இடத்திற்கு வந்து சேர்ந்தபோது (அங்கே பல இடங்களில் மூடப்பட்டிருந்த) நெருப்புகளைக் கண்டனர். அவை, அரஃபா(வில் ஹாஜிகள் மூட்டும்) நெருப்புகள் போன்றிருந்தன. அப்போது அபூ சுஃப்யான், 'இது என்ன நெருப்பு? இது அரஃபா நெருப்பைப் போன்றறே இருக்கிறதே‘‘ என்று கேட்டதற்கு புதைல் இப்னு வர்கா, 'இது (‘குபா‘வில் குடியிருக்கும்'குஸாஆ' எனப்படும்) பனுஅம்ர் குலத்தாரின் நெருப்புகள்‘‘ என்று கூறினார். உடனே அபூ சுஃப்யான் (பனு) அம்ர் குலத்தவரின் எண்ணிக்கை இதை விட மிகக் குறைவாகும். (எனவே, அவர்களின் நெருப்புகளாக இருக்க வாய்ப்பில்லை)‘‘ என்று கூறினார். அப்போது அவர்கள் மூவரையும் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காவலர்களில் சிலர் பார்த்துவிட்டனர். உடனே, அவர்களை அடைந்து, அவர்களைப் பிடித்து (கைது செய்து) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தனர். பின்பு அபூ சுஃப்யான் இஸ்லாத்தை ஏற்றார். அதற்குப் பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள். (மக்காவை நோக்கி முன்னேறிச்) சென்றபோது அப்பாஸ்(ரலி) அவர்களிடம், 'குதிரைப் படை செல்லும்போது நெரிசல் ஏற்படக் கூடிய (குறுகலான) இடத்தில் அபூ சுஃப்யானை நிறுத்திவையுங்கள். அவர் முஸ்லிம்களைப் பார்க்கட்டும். (அவர்களின் படை பலத்தைப் புரிந்து கொள்ளட்டும்)‘‘ என்று கூறினார்கள். (அவ்வாறே) அப்பாஸ்(ரலி) அவரை (அந்த இடத்தில்) நிறுத்திவைத்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களுடன் அனைத்துக குலத்தாரின் படைகளும் ஒவ்வொன்றாக அபூ சுஃப்யானைக் கடந்து செல்லத் தொடங்கின. அவரை ஒரு படை கடந்து சென்றவுடன்'அப்பாஸே! இவர்கள் யார்?' என்று அபூ சுஃப்யான் கேட்டதற்கு அப்பாஸ்(ரலி), 'இவர்கள் ஃம்ஃபாரீ குலத்தினர்‘‘ என்று பதிலளித்தார்கள்.

(உடனே,)'எனக்கும் ஃம்ஃபார் குலத்தாருக்கும் என்ன சம்பந்தம்? (எங்களுக்கிடையில் பூசலோ மோதலோ இல்லையே!)'' என்று அபூ சுஃப்யான் கூறினார். பிறகு ஜுஹைனா குலத்தார் அவரைக் கடந்து சென்றனர். அப்போது அபூ சுஃப்யான் முன் போன்றே கேட்டார். பிறகு (அவரைக் கடந்து) ஸஅத் இப்னு ஹுதைம் குலத்தினர் சென்றனர். அப்போதும் அவ்வாறே அபூ சுஃப்யான் கேட்டார். (பிறகு) சுலைம் குலத்தினர் சென்றனர். முன்பு போன்றே அபூ சுஃப்யான் கேட்டார். (அப்பாஸ் - ரலி அவர்களும் முன்பு போன்றே பதிலளித்தார்கள்.) கடைசியில் ஒரு (பெரிய) படை முன்னோக்கி வந்தது. அதைப் போன்ற (பெரும்) படையை அபூ சுஃப்யான் பார்த்திருக்கவில்லை.'இவர்கள் யார்?' என்று அபூ சுஃப்யான் கேட்க,'இவர்கள் தாம் அன்சாரிகள். ஸஅத் இப்னு உபாதா இவர்களின் தலைவர். அவருடன் தான் (அன்சாரிகளின்) கொடியிருக்கிறது'' என்று அப்பாஸ்(ரலி) பதிலளித்தார்கள்.

அப்போது ஸஅத் இப்னு உபாதா(ரலி),'அபூ சுஃப்யானே! இன்று, (தப்பிக்க முடியாத மாபெரும்) யுத்த நாளாகும். இன்று கஅபாவி(ன் புனித எல்லையி)னுள்ளே கூட யுத்தம் அனுமதிக்கப்படும்'' என்று (உணர்ச்சி வசப்பட்டுக்) கூறினார்கள். அதற்கு அபூ சுஃப்யான்'அப்பாஸே! அழிவு நாளில் இது மிக நல்ல நாள் (குறைஷிகளுக்கு ஆபத்தே என்றாலும், நீங்கள் கருணை காட்டுவீர்கள் என்ற நம்பிக்கை உண்டு)'' என்று கூறினார்.

பிறகு, ஒரு படை வந்தது. அது (இதுவரை வந்த) படைகளிலேயே மிகவும் சிறியதாக இருந்தது. அவர்களிடையே இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் இருந்தார்கள். நபி(ஸல்) அவர்களுக்குரிய கொடி, ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களிடம் இருந்தது. அபூ சுஃப்யானைக் கடந்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சென்றபோது அவர், (இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்)'ஸஅத் இப்னு உபாதா என்ன கூறினார் என்பது உங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அவர் என்ன கூறினார்?' என்று கேட்டார்கள். இப்படி... இப்படி... எல்லாம் கூறினார்'' என்று அபூ சுஃப்யான் (விவரித்துச்) கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உண்மைக்குப் புறம்பானதை ஸஅத் கூறிவிட்டார்'' என்று சொல்லிவிட்டு,'மாறாக, இந்த நாள் இறையில்லம் கஅபாவை அல்லாஹ் கண்ணியப்படுத்தும் நாள். கஅபாவிற்குத் திரை போர்த்தப்படும் (முக்கியமான) நாள்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்தக் கொடியினை (மக்காவின் பொது அடக்கத்தலத்திற்கு அருமலுள்ள)'ஹஜூன்' என்னும் இடத்தில் நட்டு வைக்கும்படி உத்தரவிட்டார்கள்.

(மக்கா வெற்றிக்குப் பின்) அப்பாஸ்(ரலி) ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களிடம்,'அபூ அப்தில்லாஹ்வே!"இங்கு தான் அந்தக் கொடியினை நட்டு வைக்கும்படி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களுக்கு உத்தரவிட்டார்கள்'' என்றார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள் அன்றைய தினம் காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களை மக்காவின் மேற்பகுதியான'கதா' என்னும் கணவாய் வழியாக (மக்காவிற்குள்) நுழையுமாறு உத்தரவிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்'குதா' வழியாக நுழைந்தார்கள். அன்றைய தினம் காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களின் குதிரைப் படையினரில் இருவரான ஹுபைஷ் இப்னு அல் அஷ்அர்(ரலி) அவர்களும் குர்ஸ் இப்னு ஜாபிர் அல்ஃபிஹ்ரீ(ரலி) அவர்களும் (உயிர்த்தியாகிகளாகக்) கொல்லப்பட்டனர்.

ஹதீஸ் 4281. முஆவியா இப்னு குர்ரா(ரஹ்) அறிவித்தார்

“இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி தினத்தில் தம் ஒட்டகத்தின் மீதமர்ந்தபடி'அல்ஃபதஹ்' என்னும் (48-வது) அத்தியாயத்தை'தர்ஜீஉ' என்னும் ஓசை நயத்துடன் ஓதிக்கொண்டிருந்ததை கண்டேன்“ என்று அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல்(ரலி) கூற கேட்டேன். மக்கள் என்னைச் சுற்றிலும் திரண்டு விடுவார்கள் என்றில்லாவிட்டால் அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல் அவர்கள்'தர்ஜீஉ' செய்து ஓதிக்காட்டியதைப் போல் நானும் ஓதிக்காட்டியிருப்பேன்.

ஹதீஸ் 4282. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்

மக்கா வெற்றியின்போது,'அல்லாஹ்வின் தூதரே! நாம் நாளை (மக்காவில்) எங்கு தங்குவோம்?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'(அபூ தாலிபின் மகன்) அகீல் நமக்கு வீடு எதையேனும்விட்டுச் சென்றுள்ளாரா?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 4283. பிறகு நபி(ஸல்) அவர்கள்,'இறை நம்பிக்கையாளர், இறைமறுப்பாளருக்கு வாரிசாக மாட்டார் அவ்வாறே இறைமறுப்பாளரும் இறைநம்பிக்கையாளருக்கு வாரிசாக மாட்டார்“ என்று கூறினார்கள்.

ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம்,'அபூ தாலிபுக்கு யார் வாரிசானார்கள்?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,'அவருக்கு அகீலும் தாலிபும் வாரிசானார்கள்“ என்று பதிலளித்தார்கள்.

ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடமிருந்து மஅமர்(ரஹ்) அறிவித்துள்ளதில்'நபி(ஸல்) அவர்களின் ஹஜ்ஜின்போது நாளை நாம் எங்கு தங்குவோம்?' என்று கேட்டதாக இடம் பெற்றுள்ளது.

அறிவிப்பாளர் யூனுஸ் இப்னு யஸீத்(ரஹ்), ஹஜ்ஜின்போது என்றோ, மக்கா வெற்றியின்போது என்றோ (எதையும்) குறிப்பிடவில்லை.

ஹதீஸ் 4284. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

அல்லாஹ் (மக்கா மீது நமக்கு) வெற்றியளித்தால், இன்ஷா அல்லாஹ் அல்லாஹ் நாடினால் நாம் தங்கப்போகும் இடம் (பனு கினானா குலத்தாரின்'முஹஸ்ஸப்' என்னும்) பள்ளத்தாக்கு ஆகும். அந்த இடத்தில் தான் (குறைஷிகள்) இறைமறுப்பின் மீதே (நிலைத்து) இருக்கப் போவதாக சூளுரைத்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4285 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றி முடிந்து) ஹுனைன் (போருக்குச்) செல்ல திட்டமிட்டபோது,'அல்லாஹ் நாடினால் நாளை நாம் தங்கப் போகும் இடம்'பனு கினானா' குலத்தாரின் (முஹஸ்ஸப் என்னும்) பள்ளத்தாக்கு ஆகும். அந்த இடத்தில் தான் (மக்கா குறைஷிகள்) இறைமறுப்பின் மீதே (நிலைத்து) இருக்கப் போவதாக சபதம் செய்தார்கள்“ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4286. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி தினத்தில் தலையில் இரும்புத் தொப்பியுடன் (மக்காவினுள்) நுழைந்தார்கள். அதை அவர்கள் கழற்றியபோது ஒருவர் வந்து,'இப்னு கத்தல் என்பவன் கஅபாவின் திரைகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறான்' எனக் கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள்,'அவனைக் கொன்று விடுங்கள்“ என்று உத்தரவிட்டார்கள்.

மாலிக் இப்னு அனஸ்(ரஹ்),'நாம் அறிந்தவரை நபி(ஸல்) அவர்கள் அன்று இஹ்ராம் அணிந்தவர்களாய் இருக்கவில்லை. இறைவனே மிக அறிந்தவன்“ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4287. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

கஅபாவைச் சுற்றிலும் முந்நூற்று அறுபது சிலைகள் இருக்க, நபி(ஸல்) அவர்கள் மக்கா நகருக்குள் நுழைந்தார்கள். அப்போது அவர்கள்,'சத்தியம் வந்துவிட்டது அசத்தியம் அழிந்துவிட்டது. சத்தியம் வந்துவிட்டது (இனி) அசத்தியம் மீண்டும் ஒருமுறை பிடிக்காது'' என்று கூறிக்கொண்டே, தம் கையிலிருந்து குச்சியால் அவற்றை (குத்தி) அடிக்கத் தொடங்கினார்கள்.

ஹதீஸ் 4288. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(மக்கா வெற்றி நாளில்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவுக்கு) வந்தபோது, கஅபாவில் சிலைகள் இருந்ததால் உள்ளே நுழைய மறுத்து அவற்றை அப்புறப்படுத்துமாறு கட்டளையிட்டார்கள். உடனே அவை அப்புறப்படுத்தப்பட்டன. அச்சிலைகளில் (குறி பார்ப்பதற்குரிய) அம்புகளைக் கையில் தங்கியவாறு இருந்த (இறைத்தூதர்களான) இப்ராஹீம்(அலை), இஸ்மாயீல்(அலை) ஆகியோரின் உருவங்களும் அகற்றப்பட்டன. அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் இ(தைச் செய்த)வர்களை தன் கருணையைவிட்டு அப்பாற்படுத்துவானாக! அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவ்விருவரும் அம்புகளின் மூலம் குறிபார்ப்பவர்களாக ஒருபோதும் இருந்ததில்லை என்பதை இ(தைச் செய்த)வர்கள் அறிந்தே வைத்திருக்கிறார்கள்'' என்று கூறினார்கள். பிறகு, கஅபாவில் நுழைந்தார்கள். அதன் மூலைகளில் (நின்று) தக்பீர் கூறினார்கள். ஆனால், அதனுள் தொழாமல் வெளியேறிவிட்டார்கள்.

இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

## (மக்கா வெற்றியின் போது) நபி(ஸல்) அவர்கள் மக்காவின் மேற்பகுதியிலிருந்து ஊருக்குள் நுழைந்தது.

ஹதீஸ் 4289. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளில் தம் வாகனத்தின் மீது உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களை அமர வைத்துக் கொண்டு மக்காவின் மேற்பகுதியிலிருந்து முன்னேறிச் சென்றார்கள். அப்போது அவர்களுடன் பிலால்(ரலி) அவர்களும் கஅபாவின் பொறுப்பாளர்களில் ஒருவரான உஸ்மான் இப்னு தல்ஹா(ரலி) அவர்களும் இருந்தனர். நபி(ஸல்) அவர்களின் வாகனம் இறுதியில் பள்ளிவாசலில் சென்று மண்டியிட்டு அமர்ந்தது. நபி(ஸல்) அவர்கள், இறையில்லம் கஅபாவின் சாவியைக் கொண்டு வரும்படி உஸ்மான் இப்னு தல்ஹா(ரலி) அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். (சாவி கொண்டு வரப்பட்டதும்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (கஅபாவைத் திறந்து கொண்டு) உஸாமா(ரலி), பிலால்(ரலி), உஸ்மான்(ரலி) ஆகியோருடன் உள்ளே நுழைந்தார்கள். அங்கே நீண்ட ஒரு பகல் நேரத்திற்குத் தங்கியிருந்தார்கள் பிறகு வெளியே வந்தார்கள். மக்கள் கஅபாவினுள் நுழைய ஒருவரோடொருவர் போட்டியிட்டனர். நானே (அதனுள்) முதலில் நுழைந்தவன். அப்போது பிலால்(ரலி) (கஅபாவின்) வாசலுக்குப் பின்னே நின்று கொண்டிருக்கக் கண்டேன். உடனே அவர்களிடம்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கே தொழுதார்கள்?' என்று கேட்டேன். பிலால்(ரலி), நபி(ஸல்) அவர்கள் தொழுத இடத்தைச் சைகையால் சுட்டிக் காட்டினார்கள். நான் அவர்களிடம்,'எத்தனை ரக்அத்துகள் நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள்'' என்று கேட்க மறந்து விட்டேன்.

ஹதீஸ் 4290. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி ஆண்டில் மக்காவின் மேற்பகுதியிலிருந்த'கதா' எனும் கணவாயின் வழியாக (மக்காவினுள்) நுழைந்தார்கள்.

இதே அறிவிப்பு மற்றொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4291. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி ஆண்டில் மக்காவின் மேற்பகுதியான'கதா' எனும் கணவாய் வழியாக உள்ளே நுழைந்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது தங்கிய இடம்

ஹதீஸ் 4292. இப்னு அபீ லைலா(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்,'ளுஹா' தொழுகை தொழுததாக உம்முஹானீ(ரலி) அவர்களைத் தவிர வேறெவரும் எமக்கு அறிவிக்கவில்லை. ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் மக்கா நகரம் வெற்றி கொள்ளப்பட்ட நாளில் தம் வீட்டில் குளித்ததாகவும் பிறகு எட்டு ரக்அத்துகள் தொழுததாகவும் உம்முஹானீ(ரலி) கூறினார். மேலும் அவர்கள்,'நபி(ஸல்) அவர்கள் அதை விட விரைவாகத் தொழுத வேறெந்தத் தொழுகையையும் நான் கண்டதில்லை. ஆயினும், அவர்கள் (அந்தத் தொழுகையிலும்) ருகூவையும் சுஜூதையும் பரிபூரணமாகச் செய்தார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4293. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம் ருகூவிலும் சுஜூதிலும்,'சுப்ஹானகல்லாஹும்ம ரப்பனாவ பிஹம்திக்க அல்லாஹும்ம ம∴க்∴பிர் லீ - இறைவா! எம் அதிபதியே! உன்னைப் புகழ்ந்த படி உன் தூய்மையை நான் எடுத்துரைக்கிறேன். இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக!"என்று பிரார்த்திப்பார்கள்.

ஹதீஸ் 4294. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) பத்ருப் போரில் பங்கெடுத்த புண்ணியவான்களுடன் எனக்கும் (தம் அவையில்) இடமளித்து வந்தார்கள். எனவே, அவர்களில் சிலர்,'எங்களுக்கும் இவரைப் போன்ற (வயது ஒத்த) பிள்ளைகள் இருக்க, (அவர்களையெல்லாம்விட்டுவிட்டு) இந்த இளைஞரை மட்டும் எதற்காக அமரச் செய்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு உமர்(ரலி),'அவர் நீங்கள் அறிந்து வைத்துள்ள (கல்வித் தகுதி படைத்த)வர்களில் ஒருவர்'' என்று பதிலளித்தார்கள். பிறகு, ஒரு நாள் அவர்களையெல்லாம் அழைத்தார்கள். அவர்களுடன் என்னையும் அழைத்தார்கள் அவர்களுடன் என்னையும் அழைத்தார்கள். அவர்களுக்கு என் (தகுதியி)னைப் பற்றி உணர்த்திக் காட்டுவதற்காகவே என்னை அவர்கள் அழைத்ததாகக் கருதுகிறேன். (அவர்களெல்லாம் வந்தவுடன் அவர்களிடம்) உமர்(ரலி),'இதா ஜாஅ நஸ்ருல்லாஹி.. (நபியே!) இறைவனின் உதவியும் வெற்றியும் வந்து, மக்கள் கூட்டம் கூட்டமாக இறைமார்க்கத்தில் இணை வகை நீங்கள் பார்க்கும்போது உங்களுடைய இறைவனைப் புகழ்ந்து அவனுடைய தூய்மையை எடுத்துரையுங்கள் மேலும், அவனிடம் பாவ மன்னிப்புக் கோருங்கள்)'' என்னும் (திருக்குர்ஆனின் 110-வது'அந்நஸ்ர்') அத்தியாயத்தை, இறுதிவரை ஓதிக்காட்டி,'இதற்கு நீங்கள் என்ன (விளக்கம்) கூறுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். அவர்களில் சிலர்,'நமக்கு உதவியும் வெற்றியும் அளிக்கப்படும்போது அல்லாஹ்வைப் புகழும்படியும் அவனிடம் பாவமன்னிப்புக் கோரும்படியும் நாம் கட்டளையிடப்பட்டுள்ளோம்'' என்று (விளக்கம்) கூறினர். சிலர்,'எங்களுக்குத் தெரியாது'' என்றனர். அல்லது அவர்களில் சிலர் எந்தக் கருத்தும் கூறவில்லை. பிறகு உமர்(ரலி) என்னிடம்,'இப்னு அப்பாஸே! நீங்களும் இப்படித் தான் கூறுகிறீர்களா?' என்று கேட்டார்கள். நான்,'இல்லை'' என்றேன். அவர்கள்,'அப்படியென்றால் நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். நான்,'அது, அல்லாஹ், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு அவர்களின் ஆயுட்காலம் முடிந்து (இறப்பு நெருங்கி)விட்டதை அறிவிப்பதாகும்.

எனவே, 'அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வந்து' என்பதில் உள்ள 'வெற்றி' என்பது மக்கா வெற்றியைக் குறிக்கும். மக்கா வெற்றி தான், (நபியே!) உங்கள் ஆயுட்காலம் முடியவிருப்பதற்கான அடையாளம். எனவே, நீங்கள் உங்கள் அதிபதியைப் புகழ்ந்து அவனுடைய தூய்மையை எடுத்துரைத்து, அவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள். அவன் (நீங்கள் மன்னிப்புக் கோருவதை ஏற்று) உங்களுக்கு மன்னிப்பளிப்பவன் ஆவான்' என்பதே இதன் கருத்தாகும்'' என்று சொன்னேன். உமர் (ரலி), 'நீங்கள் இந்த அத்தியாயத்திலிருந்து என்ன (கருத்தை) அறிகிறீர்களோ அதையே நானும் அறிகிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4295. ஸயீத் இப்னு அபீ ஸயீத் (ரஹ்) அறிவித்தார்

(யஸீதின் ஆட்சியில் மதீனாவின் ஆளுநராயிருந்த) அம்ர் இப்னு ஸயீத், (அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் -ரலி- அவர்களுக்கு எதிராக), மக்காவை நோக்கிப் படைகளை அனுப்பியபோது அவரிடம் அபூ ஷுரைஹ் அல் அத்வீ (ரலி) கூறினார்:

தலைவரே! எனக்கு அனுமதி தாருங்கள். மக்கா வெற்றிக்கு மறு நாள், நபி (ஸல்) அவர்கள் கூறிய ஒரு செய்தியை உங்களுக்கு நான் கூறுகிறேன். என் காதுகள் அதைச் செவியுற்றன் என் உள்ளம் அதை நினைவில் வைத்திருக்கிறது் அவர்கள் அதைக் கூறும்போது என் கண்கள் அவர்களைப் பார்த்திருக்கின்றன. அப்போது நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றிவிட்டு, 'அல்லாஹ்வே மக்காவிற்குப் புனிதத்தை வழங்கியவன். அதற்குப் புனிதத்தை வழங்கியவர்கள் மனிதர்கள் அல்லர். அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பக் கூடிய எவருக்கும் இங்கே இரத்தத்தைச் சிந்துவதோ இங்குள்ள மரத்தை வெட்டுவதோ அனுமதிக்கப்படவில்லை. இறைத்தூதர் இங்கு போரிட்டதால் இதைப் பொது அனுமதி என்று யாரேனும் கருதினால், 'அல்லாஹ் தன் தூதருக்குத் தான் அனுமதி வழங்கினான் உங்களுக்கு அனுமதி வழங்கவில்லை'' என்று கூறிவிடுங்கள். எனக்குக் கூட பகலில் சிறிது நேரம் மட்டுமே (இங்கு போர் புரிய) அனுமதி அளிக்கப்பட்டது. இன்று அதன் புனிதத் தன்மை நேற்றைய அதன் புனிதத் தன்மையைப் போல் மீண்டு வந்துவிட்டது. (இதை இங்கு) வந்திருப்போர் வராதவருக்குச் சொல்லி விடுங்கள்'' என்று கூறினார்கள்.

அபூ ஷுரைஹ் (ரலி) அவர்களிடம், 'இதற்கு அம்ர் உங்களுக்கு என்ன பதில் கூறினார்?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 'அபூ ஷுரைஹே! உம்மை விட இதைப் பற்றி நான் நன்கு அறிந்தவன். நிச்சயமாக, 'ஹரம்' (புனித பூமி) குற்றவாளிக்கும், கொலை செய்துவிட்டு, அல்லது கொள்ளை அடித்துவிட்டு ஓடி வந்தவனுக்கும் பாதுகாப்பு அளிக்காது' என அம்ர் கூறினார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4296. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

மக்கா வெற்றி ஆண்டில் நபி (ஸல்) அவர்கள் மக்காவில் தங்கியிருந்தபோது, 'அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் மது வியாபாரத்தைத் தடை செய்துவிட்டார்கள்'' என்று அவர்கள் சொல்ல கேட்டிருக்கிறேன்.

## மக்கா வெற்றியின்போது நபி (ஸல்) அவர்கள் மக்காவில் தங்கியிருந்தது.

ஹதீஸ் 4297. அனஸ் (ரலி) அறிவித்தார்

நாங்கள், நபி (ஸல்) அவர்களுடன் தொழுகையைச் சுருக்கி (கஸ்ரு செய்து) தொழுதவர்களாக (மக்கா நகரில்) பத்து நாள்கள் தங்கினோம்.

ஹதீஸ் 4298. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மக்கா நகரில் இரண்டு ரக்அத்துகள் (கஸ்ராகத்) தொழுத படி பத்தொன்பது நாள்கள் தங்கியிருந்தார்கள்.

ஹதீஸ் 4299. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நாங்கள் ஒரு பயணத்தின்போது நபி(ஸல்) அவர்களுடன் தொழுகையைச் சுருக்கித் தொழுதவர்களாக பத்தொன்பது நாள்கள் தங்கினோம்.

(பொதுவாக) நாங்கள் (பயணம் மேற்கொண்டு தங்கினால்) பத்தொன்பது நாள்கள் வரை சுருக்கித் தொழு(தபடி தங்கு)வோம். அதற்கு மேலும் நாங்கள் தங்கும்போது (சுருக்கித் தொழாமல் வழக்கப்படி) முழுமையாகத் தொழுவோம்.

ஹதீஸ் 4300 இப்னு ஷிஹாப் ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு ஸஅலபா இப்னி ஸுஜைர்(ரலி) - அன்னாரின் முகத்தை நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி ஆண்டில் (அன்போடு) தடவிக் கொடுத்திருந்தார்கள் - எனக்குத் தெரிவித்தார்கள்...

ஹதீஸ் 4301. ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அவர்களுடன் இருந்தபோது, அபூ ஜமீலா சுனைன்(ரலி), தாம் நபி(ஸல்) அவர்களின் தோழமையைப் பெற்றிருந்ததாகவும் அவர்களுடன் மக்கா வெற்றி ஆண்டில் (மக்கா நோக்கி இஸ்லாமியச் சேனையில் ஒருவராகப்) புறப்பட்டதாகவும் கூறினார்கள்.

ஹதீஸ் 4302. அம்ர் இப்னு சலிமா(ரலி) அறிவித்தார்

நாங்கள் மக்கள் கடந்து செல்லும் பாதையிலிருந்த ஒரு நீர் நிலையின் அருகே இருந்தோம். வாகனத்தில் பயணிப்பவர்கள் எங்களைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். நாங்கள் அவர்களிடம், 'மக்களுக்கென்ன? மக்களுக்கென்ன? இந்த மனிதருக்கு (முஹம்மதுக்கு) என்ன?' என்று கேட்டுக் கொண்டிருந்தோம். அதற்கு அவர்கள், 'அந்த மனிதர் தன்னை அல்லாஹ் (இறைத்தூதராக) அனுப்பியிருப்பதாக... அல்லது அல்லாஹ் அவரை இன்ன (குர்ஆன்) போதனைகளைக் கொடுத்து அனுப்பியிருப்பதாகக்... கூறுகிறார்'' என்று (குர்ஆனின் சில வசனங்களை ஓதிக்காட்டி) கூறுவார்கள். உடனே நான் அந்த (இறை) வாக்கை மனப்பகுதி செய்து கொள்வேன். அது என் நெஞ்சில் பதிக்கப்பட்டது போன்று ஆம்விட்டது. அரபுகள், தாங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ள மக்கா வெற்றியை (தக்க தருணமாகக் கருதி) எதிர்பார்த்திருந்தார்கள். எனவே, அவர்கள், 'அவரை அவரின் குலத்தா(ரான குறைஷிய)ருடன்விட்டு விடுங்கள். ஏனெனில், அவர்களை அவர் வென்றுவிட்டால் அவர் உண்மையான இறைத்தூதர் தாம் (என்று நிரூபணமாம்விடும்)'' என்று கூறினார்கள். மக்கா வெற்றியாளர்கள் சம்பவம் நிகழ்ந்தவுடன் ஒவ்வொரு குலத்தாரும் விரைந்து வந்து இஸ்லாத்தை ஏற்றனர். என் தந்தை என் குலத்தாருடன் விரைந்து இஸ்லாத்தை ஏற்றார். நபி(ஸல்) அவர்களிடமிருந்து என் தந்தை திரும்பி வந்தபோது, 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உண்மையிலேயே நபி(ஸல்) அவர்களிடமிருந்து உங்களிடம் வந்துள்ளேன். நபி(ஸல்) அவர்கள், 'இன்ன தொழுகையை இன்ன வேளையில் தொழுங்கள். இன்ன வேளையில் இப்படித் தொழுங்கள். இன்ன வேளையில் இப்படித் தொழுங்கள். தொழுகை (வேளை) வந்துவிட்டால் உங்களில் குர்ஆனை அதிகம் அறிந்து வைத்துள்ளவர் உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுகை நடத்தட்டும்' என்று கூறினார்கள்' எனக் கூறினார்கள். எனவே, மக்கள் (குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார் எனத்) துருவிப் பார்த்தபோது நான் பயணிகளிடம் கேட்டு அறிந்துகொண்ட காரணத்தால் என்னை விட அதிகமாகக் குர்ஆனை அறிந்தவர்கள் எவரும், (எங்களிடையே) இருக்கவில்லை. எனவே, (தொழுகை நடத்துவதற்காக) என்னை அவர்கள் முன்னால் நிறுத்தினார்கள். நான் அப்போது ஆறு அல்லது ஏழு வயதுடைய

(சிறு)வனாக இருந்தேன். நான் ஒரு சால்வையைப் போர்த்தியிருந்தேன். நான் சஜ்தா செய்யும்போது அது என் முதுகை (விட்டு நழுவிப் பின் புறத்தைக்) காட்டிவந்தது. எனவே, அந்தப் பகுதிப் பெண்மணியொருவர், 'உங்கள் ஓதுவாரின் பின்புறத்தை எங்களிடமிருந்து மறைக்க மாட்டீர்களா?' என்று கேட்டார். எனவே, அவர்கள் (துணியொன்றை) வாங்கி வந்து எனக்குச் சட்டையொன்றை வெட்டித் தந்தார்கள். நான் அந்தச் சட்டையின் காரணத்தால் அடைந்த மகிழ்ச்சியைப் போன்று வேறெதனாலும் மகிழ்ச்சியடைந்ததில்லை.

ஹதீஸ் 4303. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

உத்பா இப்னு அபீ வக்காஸ் தம் சகோதரர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களிடம், 'ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகன் என் மகன் தான்' என்று கூறி (மக்கா செல்லும் போது) அவனைப் பிடித்து (வைத்து)க் கொள்ளும்படி உறுதிமொழி வாங்கியிருந்தார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், மக்கா வெற்றியின் சமயம் மக்காவுக்கு (தம் தோழர்களுடன்) வருகை தந்தபோது, ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகனைப் பிடித்துக் கொண்டு அல்லாஹ்வின் தூதரை நோக்கிச் சென்றார்கள். அவர்களுடன் ஸம்ஆவின் மகன் அப்து (ரலி) அவர்களும் சென்றார்கள். ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம், ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடன் மகனைச் சுட்டிக் காட்டி), 'இவன் என் சகோதரரின் மகன் இவனைத் தன் மகன் என்று (சொல்லி, இவனைப் பிடித்துக் கொள்ளும்படி என்னிடம்) என் சகோதரர் உறுதிமொழி வாங்கியுள்ளார்'' என்று கூறினார். அப்து இப்னு ஸம்ஆ, 'இறைத்தூதர் அவர்களே! இவன் என் சகோதரன். இவன் (என் தந்தை) ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகன் அவள் என் தந்தையின் அதிகாரத்தில் இருந்தபோது தான் இவன் பிறந்தான்'' என்று கூறினார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகனைக் கூர்ந்து பார்த்தார்கள். அவன் (மக்காவாசிகளிலேயே) உத்பா இப்னு அபீ வக்காஸுக்கு (தோற்றத்தில்) மிகவும் ஒத்திருந்தான். பிறகு இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'இவன் உனக்குத் தான் இவன் உன் சகோதரன் தான், அப்து இப்னு ஸம்ஆவே!" என்று கூறினார்கள். அவன் ஸம்ஆவின் அதிகாரத்தில் (அவனுடைய தாய்) இருந்தபோது பிறந்த காரணத்தால் அப்படிக் கூறினார்கள். மேலும், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உத்பா இப்னு அபீ வக்காஸின் சாயலில் அந்த இளைஞன் இருந்ததைப் பார்த்த காரணத்தால், (தம் துணைவியார் சவ்தா - ரலி அவர்களை நோக்கி, 'ஸம்ஆவின் மகள்) சவ்தாவே! இவனிடமிருந்து நீ திரையிட்டுக் கொள்'' என்று கூறினார்கள்.

இப்னு ஷிஹாப் ஸுஹ்ரீ (ரஹ்) கூறினார்கள்:

"இறைத்தூதர் (ஸல்) அவர்கள்' (ஒரு பெண்) யாருடைய அதிகாரத்தில் இருக்கும்போது குழந்தை பிறக்கிறதோ அவருக்கே அக்குழந்தை உரியது. விபசாரம் செய்தவருக்கு இழப்பு தான் உரியது' என்று கூறினார்கள்'' என ஆயிஷா (ரலி) கூறினார்.

மேலும், அபூ ஹுரைரா (ரலி) நபி (ஸல்) அவர்களின் இந்தத் தீர்ப்பை (மக்களுக்கு) உரக்க அறிவித்து வந்தார்கள்.

ஹதீஸ் 4304. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் மக்கா வெற்றிப்போரின்போது (மக்ஸூமி குலத்துப்) பெண்ணொருத்தி திருடிவிட்டாள். எனவே, அவளுடைய குலத்தார் (தண்டனைக்கு) அஞ்சி அவளுக்காகப் பரிந்துரைக்கும்படி கோரி, உஸாமா இப்னு ஸைத் (ரலி) அவர்களிடம் வந்தார்கள். உஸாமா (ரலி), 'எனக்காக (அல்லாய்விடம்) பாவமன்னிப்புக் கோரி பிரார்த்தியுங்கள், இறைத்தூதர்

அவர்களே!”என்று கூறினார்கள். மாலை நேரம் வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உரையாற்றிட எழுந்து நின்று, அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்ற படி போற்றிப் புகழ்ந்துவிட்டுப் பிறகு,‘நிற்க, உங்களுக்கு முன்னிருந்த மக்களை அழித்ததெல்லாம் அவர்கள், தம்மிடையேயுள்ள உயர்ந்த(குலத்த)வன் திருடிவிடும்போது அவனை (தண்டிக்காமல்)விட்டுவந்ததும், பலவீனமான (பிரிவைச் சேர்ந்த)வன் திருடி விடும்போது அவனுக்கு தண்டனை கொடுத்து வந்ததும் தான். முஹம்மதின் உயிரைத் தன் கையில் வைத்திருப்பவன் மீதாணையாக! முஹம்மதின் மகள் ஃபாத்திமாவே திருடி விட்டிருந்தாலும் அவளுடைய கையையும் நான் வெட்டியிருப்பேன்‘‘ என்று கூறினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்)அவர்கள் அந்தப் பெண்ணின் கையை வெட்டும்படி உத்தரவிட, அவ்வாறே அவளுடைய கை வெட்டப்பட்டது. அதன் பிறகு அவள் அழகிய முறையில் பாவமன்னிப்புக் கோரி (திருந்தி)விட்டாள் மேலும் மணந்தாள்.

ஆயிஷா(ரலி) கூறினார்:

அதன் பிறகு அவள் என்னிடம் வந்து கொண்டிருந்தாள். நான் அவளுடைய தேவையை(ப் பூர்த்தி செய்யும்படி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முறையிடுவேன்.

ஹதீஸ் 4305-ஹதீஸ் 4306 முஜாஷிஉ இப்னு மஸ்வூத் இப்னி ஸஅலபா(ரலி) கூறினார்

மக்கா வெற்றிக்குப் பிறகு, நான் என் சகோதரர் (முஜாலித் இப்னு மஸ்வூத்(ரலி) உடன் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,‘இறைத்தூதர் அவர்களே! ஹிஜ்ரத் செய்வதற்கான உறுதிமொழியை என் சகோதரரிடம் தாங்கள் பெறவேண்டுமென்பதற்காக அவரை அழைத்துக் கொண்டு நான் தங்களிடம் வந்துள்ளேன்‘‘ என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,‘(மக்கா வெற்றிக்கு முன்பு) ஹிஜ்ரத் செய்தவர்கள் அதிலுள்ள நன்மையை (முன்பே) கொண்டு சென்றார்கள்‘‘ என்று பதில் கூறினார்கள். நான்,‘(அப்படியென்றால்) எதற்காக அவரிடம் தாங்கள் உறுதிமொழி பெறுவீர்கள்‘‘ என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,‘இஸ்லாத்தின் படி நடக்கவும் இறை நம்பிக்கையில் நிலைத்திருக்கவும், (தேவைப்படும் போது) அறப்போர் புரியவும் நான் அவரிடம் உறுதிமொழி பெறுவேன்‘‘ என்று பதிலளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவான அபூ உஸ்மான் அந்நஹ்தீ(ரஹ்) கூறினார்கள்.

இதற்குப் பின் நான் (முஜாஷிஉ அவர்களின் சகோதரர்) மஅபத் (என்னும் முஜாலித்) அவர்களைச் சந்தித்தேன். அவரே சகோதரர்கள் இருவரில் பெரியவராக இருந்தார். (இச்செய்தி பற்றி) அவரிடம் விசாரித்தேன். அவர்,‘முஜாஷிஉ உண்மையே கூறினார்‘‘ என்று கூறினார்.

ஹதீஸ் 4307-ஹதீஸ் 4308 முஜாஷிஉ இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஹிஜ்ரத் செய்வதற்கான உறுதிமொழியைப் பெறுவதற்காக (என் சகோதரர்) அபூ மஅபத் (முஜாலித்) அவர்களை அழைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். நபி(ஸல்) அவர்கள்,‘ஹிஜ்ரத், அதற்குரியவர்களுக்குக் கடமையாகி (நிறைவேறி) முடிந்துவிட்டது. இனி, இஸ்லாத்தின் படி நடந்திடவும் அறப்போர் புரிந்திடவும் தான் இவரிடம் நான் உறுதிமொழி பெறுவேன்‘‘ என்று கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர் அபூ உஸ்மான் அந்நஹ்தீ(ரஹ்) கூறினார்கள்:

(இதை எனக்கு அறிவித்த முஜாஷிஉ - ரலி - அவர்களின் சகோதரர்) அபூ மஅபத் (முஜாலித் (ரலி) அவர்களைப் பின்னர் நான் சந்தித்து, அவரிடம் (இச்செய்தி பற்றி விசாரித்தேன். அவர்,‘முஜாஷி உண்மையே கூறினார்‘‘ என்று கூறினார்.

அபூ உஸ்மான்(ரஹ்) முஜாஷிஉ(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கிற மற்றோர் அறிவிப்பில்,'நான் என் சகோதரர் முஜாலிதுடன் நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன்'' என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4309. முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்,'நான் ஹிஜ்ரத் செய்து, ஷாம் நாட்டிற்குச் செல்ல விரும்புகிறேன்'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள்,'(மக்கா வெற்றிக்குப் பிறகு) ஹிஜ்ரத் என்பது இல்லை. ஆயினும், ஜிஹாத் - அறப்போர் உண்டு. எனவே, நீ சென்று (அறப்போரில் கலந்து கொள்ளும்) உன் (விருபத்தி)னை முன் வை! (அதற்கான வாய்ப்பு) எதுவும் உனக்குக் கிடைத்தால் அவ்வாறே சென்று அறப்போர் புரி இல்லையேல் திரும்பிவிடு'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4310. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்கள்.

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் (நான் ஹிஜ்ரத் செய்து, ஷாம் நாட்டிற்குச் செல்ல விரும்புவதாகக்) கூறினேன். அதற்கு அவர்கள்,'இன்று... அல்லது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிறகு... ஹிஜ்ரத் என்பதே கிடையாது'' என்று முன்பு (அறிவித்ததைப்) போன்றே கூறினார்கள்.

ஹதீஸ் 4311. முஜாஹித் இப்னு ஜப்ர் அல் மக்கீ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி),'(மக்கா) வெற்றிக்குப் பின் ஹிஜ்ரத் என்பதே கிடையாது'' என்று சொல்லிவந்தார்கள்.

ஹதீஸ் 4312. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்

நான் உபைத் இப்னு உமைர் அல் லைஸீ(ரஹ்) அவர்களுடன் ஆயிஷா(ரலி) அவர்களைச் சந்தித்தேன். அவர்களிடம் ஹிஜ்ரத்தைப் பற்றி அவர் கேட்டதற்கு அவர்கள்,'இன்று (மக்கா வெற்றி கொள்ளப்பட்டுவிட்ட பிறகு) ஹிஜ்ரத் கிடையாது. (ஒரு காலத்தில்,) இறை நம்பிக்கையாளர்கள் (தம் மார்க்கத்தைப் பின்பற்ற முடியாதவாறு) தாம் சோதிக்கப்பட்டு விடுவோமோ என்று அஞ்சி, தம் மார்க்கத்துடன் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (திருப்தியுறச் செய்வதை) குறிக்கோளாகக் கொண்டு (தம் தாய் நாட்டைத் துறந்து) ஓடி வந்தார்கள். ஆனால், இன்றோ அல்லாஹ் இஸ்லாத்தை ஓங்கச் செய்துவிட்டான். இன்று இறை நம்பிக்கையாளர், தான் விரும்பிய இடத்தில் தன் இறைவனை வணங்கலாம். ஆயினும், (ஹிஜ்ரத் தான் இனி இல்லையே தவிர) ஜிஹாத் (எனும் அறப்போர்) புரிவதும் (அதற்காகவும் பிற நற்செயல்களுக்காகவும்) நாட்டம் கொள்வதும் (இன்றும்) உண்டு'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4313 . முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது (மக்களிடையே) எழுந்து நின்று,'அல்லாஹ் வானங்களையும் பூமியையும் படைத்த போதே மக்காவைப் புனிதப்படுத்திவிட்டான். எனவே, அது அல்லாஹ் புனிதப்படுத்திய காரணத்தால் இறுதி நாள் வரை புனிதமானதாகும். எனக்கு முன்பும் எவருக்கும் இங்கு போரிடுதல் அனுமதிக்கப்படவில்லை. எனக்குப் பிறகும் எவருக்கும் அது அனுமதிக்கப்படாது. எனக்குக் கூட (மக்கா வெற்றி கொள்ளப்படும் இத்தருணத்தில்) சிறிது நேரம் மட்டுமே இங்கு போர் புரிய அனுமதிக்கப்பட்டது. இங்குள்ள வேட்டைப் பிராணிகளை விரட்டக் கூடாது. இங்குள்ள மரங்களை வெட்டக்கூடாது. இங்குள்ள புற்பூண்டுகளைக் கிள்ளக்கூடாது. பிறர் தவறவிட்ட பொருளை அதை அறிவிப்பவர் தவறவிட்ட பொருளை அதை அறிவிப்பவர் தவிர வேறவரும் எடுக்கக் கூடாது'' என்று கூறினார்கள். உடனே, அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி),'இறைத்தூதர் அவர்களே!'இத்கிர்' எனும் புல்லைத் தவிரவா? ஏனெனில், அது

உலோகத் தொழிலாளர்களுக்கும் வீடுகளுக்கும் தேவைப்படுகிறதே" என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள் (சிறிது நேரம்) மௌனமாயிருந்துவிட்டுப் பிறகு,'இத்கிரைத் தவிரத் தான் ஏனெனில், அதை வெட்டிப் பயன்படுத்துவது அனுமதிக்கப்பட்டதாகும்" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அல்லாஹ் கூறினான்:

(போர்க்)களங்கள் பலவற்றில் (உங்கள் எண்ணிக்கை குறைவாயிருந்தும்) நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு உதவியிருக்கிறான். எனினும், ஹுனைன் போரன்று உங்களை அகமம்ழச் செய்து கொண்டிருந்த, உங்களுடைய அதிகமாக (மக்கள்) தொகை உங்களுக்கு எந்தப் பலனையும் அளிக்கவில்லை. பூமி இவ்வளவு விசாலமாயிருந்தும், (அப்போது அது) உங்களுக்கு நெருக்கடி மிக்கதாகத் தோன்றியது. அன்றி, நீங்கள் புறமுதுகிட்டு ஓடவும் முற்பட்டீர்கள்... (திருக்குர்ஆன் 09: 25-27)

ஹதீஸ் 4314. இஸ்மாயீல் இப்னு அபீ காலித்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களின் கையில் வெட்டுக்காயம் ஒன்றைக் கண்டேன். அவர்கள்,'ஹுனைன் போரில் நபி(ஸல்) அவர்களுடன் நான் இருந்தபோது இந்தக் காயம் எனக்கு ஏற்பட்டது!"என்றார்கள். நான்,'ஹுனைன் போரில் நீங்கள் கலந்து கொண்டீர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'(ஆம், அதிலும்) அதற்கு முன்பு நடந்த போர்களிலும் கலந்து கொண்டேன்" என்றார்கள்.

ஹதீஸ் 4315. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

என்னிடம் ஒருவர் வந்து,'அபூ உமாராவே! ஹுனைன் போரின்போது நீங்கள் (தோற்றுப்) பின்வாங்கி விட்டீர்களா?' என்று கேட்டார். நான்,'நபி(ஸல்) அவர்கள் தோற்றுப் பின் வாங்கிச் செல்லவில்லை என்பதற்கு நான் சாட்சியமளிக்கிறேன். ஆயினும், சமுதாயத்தில் அவசரக்காரர்கள் சிலர் (பதுங்கியிருந்த எதிரிகளைக் கவனிக்காது அவர்களின் போர்ச் செல்வங்களைச் சேகரிப்பதில்) அவசரப்பட்டுவிட்டார்கள். அப்போது (அம்பெய்வதில் வல்லவர்களான) ஹவாஸின் குலத்தார் அவர்களின் மீது (சரமாரியாக) அம்பெய்தார்கள். அப்போது அபூ சுஃப்யான் இப்னு ஹாரிஸ்(ரலி) நபி(ஸல்) அவர்களின்'பைளா' என்னும் வெள்ளைக் கோவேறுக் கழுதையின் தலையைப் பிடித்துக் கொண்டிருக்க,'நான் இறைத் தூதர் தாம் இது பொய்யல்ல. நான் அப்துல் முத்தலிபின் (மகனுடைய) மகன் ஆவேன்" என்று நபி(ஸல்) அவர்கள் (பாடிய படி) கூறிக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 4316. அபூ இஸ்ஹாக்(ரஹ்)அவர்கள் அறிவித்தார்

பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்களிடம்,'நீங்கள் ஹுனைன் போரின்போது நபி(ஸல்) அவர்களுடன் தோற்றுப் பின்வாங்கிச் சென்றீர்களா?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,'(எங்களில் சிலர் பின் வாங்கிச் சென்றது உண்மையே. ஆயினும்,) நபி(ஸல்) அவர்களோ பின்வாங்கிச் செல்லவில்லை. (எதிரிகளான) ஹவாஸின் குலத்தார் அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தனர். நபி(ஸல்) அவர்கள்,'நான் இறைத்தூதர் தாம் இது பொய்யல்ல. நான் அப்துல் முத்தலிபின் (மகனுடைய) மகன் ஆவேன்' என்று (பாடிய படிக்) கூறிக் கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 4317. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

கைஸ் குலத்தைச் சேர்ந்த ஒருவர் என்னிடம், 'நீங்கள் ஹுனைன் போரின்போது இறைத்தூதர் (ஸல்) அவர்களை (தனியே) விட்டு (புறமுதுகிட்டு) ஓடவிட்டீர்களா?' என்று கேட்டார். நான், '(எங்களில் சிலர் அப்படி ஓடியது உண்மைதான்) ஆயினும், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பின்வாங்கி ஓடவில்லை. ஹவாஸின் குலத்தார் அம்பெய்வதில் தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தனர். நாங்கள் அவர்களின் மீது (முதலில்) தாக்குதல் நடத்தியபோது அவர்கள் தோன்று (சிதறியயோடி) விட்டனர். எனவே, நாங்கள் போர்ச் செல்வங்களைச் சேகரிக்க விரைந்தோம். அப்போது நாங்கள் அம்புகளை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று. நான் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தங்களின் 'பைளா' என்னும் வெள்ளைக் கோவேறுக் கழுதையின் மீது அமர்ந்து கொண்டிருக்கக் கண்டேன். அபூ சுஃப்யான் இப்னு ஹாரிஸ் (ரலி) அதன் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டிருந்தார். நபி (ஸல்) அவர்கள், 'நான் இறைத்தூதர் தாம் இது பொய்யல்ல..!" என்று (பாடியபடி) கூறிக் கொண்டிருந்தார்கள்.

அறிவிப்பாளர்களான இஸ்ராயீல் இப்னு யூனுஸ் (ரஹ்) மற்றும் ஸுஹைர் இப்னு முஆவியா (ரஹ்) ஆகியோர் மற்றோர் அறிவிப்பில், 'நபி (ஸல்) அவர்கள் தம் கோவேறுக் கழுதையிலிருந்து இறங்கினார்கள்'' என்று அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் 4318 ˅ ஹதீஸ் 4319 மர்வான் இப்னி ஹகம் மற்றும் மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) அறிவித்தார்

ஹவாஸின் குலத்தின் தூதுக் குழுவினர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் ('ஜிஇர்ரானா' என்னும் இடத்திற்கு) முஸ்லிம்களாக வந்தபோது நபி (ஸல்) அவர்கள் எழுந்திருந்தார்கள். (வந்தவர்கள்) நபியவர்களிடம் (முஸ்லிம்கள் ஹுனைன் போரில் கைப்பற்றிய) தம் செல்வங்களையும் போர்க் கைதிகளையும் திருப்பித்தந்து விடும்படி கேட்டார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'என்னுடன் நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் இவர்களும் (இந்தப் போர் வீரர்களும்) இருக்கின்றனர். (இவர்களுக்கும் நான் போர்ச் செல்வத்தில் பங்குதர வேண்டியுள்ளது.) பேச்சில் எனக்கு மிகவும் பிரியமானது உண்மையான பேச்சேயாகும். போர்க் கைதிகள் அல்லது (உங்கள்) செல்வங்கள் இரண்டில் நீங்கள் விரும்பியதைத் திரும்பப் பெறுங்கள். நான் உங்களை எதிர்பார்த்து (க் கைதிகளைப் பங்கிடாமல்) இருந்தேன்'' என்று கூறினார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தாயிஃபிலிருந்து திரும்பியபோது பத்துக்கும் மேற்பட்ட நாள்கள் ஹவாஸின் குலத்தாரை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இரண்டிலொன்றைத் தான் திருப்பித் தருவார்கள் என்று அவர்களுக்குத் தெளிவாகிவிட்டபோது, 'உங்கள் கைதிகளையே நாங்கள் திரும்பப் பெற்றுக் கொள்கிறோம்'' என்று கூறினார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடையே எழுந்து நின்று, அல்லாஹ்வை அவனுக்குரிய முறையில் புகழ்ந்துவிட்டு, 'அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்த பின் கூறுகிறேன்: உங்களுடைய இந்தச் சகோதரர்கள் நம்மிடம் மனம் திருந்தியவர்களாக வந்துள்ளனர். இவர்களில் (நம்மிடம்) போர்க் கைதிகளாக இருப்பவர்களை இவர்களிடமே திருப்பிக் கொடுத்து விடுவதைநான் பொறுத்தமானதாகக் கருதுகிறேன். உங்களில் மனப்பூர்வமாக இதற்குச் சம்மதிக்கிறவர் திருப்பித் தந்து விடட்டும் அல்லாஹ், (இனி வரும் நாள்களில்) முதலாவதாக நமக்குத் தரவிருக்கும் (வெற்றி கொள்ளப்படும் நாட்டின்) செல்வங்களிலிருந்து அவருக்கு நாம் தருகிற வரை அவற்றைத் தம்மிடமே வைத்திருக்க விரும்புகிறவர் அவ்வாறே வைத்திருக்கட்டும்'' என்று கூறினார்கள். மக்கள், 'நாங்கள் மனப்பூர்வமாக (போர்க் கைதிகளைத்) திருப்பிக் கொடுக்கச் சம்மதிக்கிறோம், இறைத்தூதர் அவர்களே!" என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'உங்களில் இதற்கு யார் சம்மதிக்கிறார், யார் சம்மதிக்கவில்லை என்று எமக்குத் தெரியாது. எனவே, நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள். உங்களிடையேயுள்ள தலைவர்கள் உங்கள் முடிவை எனக்குத் தெரிவிக்கட்டும்'' என்று

கூறினார்கள். மக்கள் திரும்பிச் செல்ல, அவர்களிடம் அவர்களின் தலைவர்கள் பேசினார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தலைவர்கள் திரும்பி வந்து, மக்கள் மனப்பூர்வமாகச் சம்மதித்துவிட்டதாகத் தெரிவித்தார்கள்.

(அறிவிப்பாளர் இப்னு ஷிஹாப்(ரஹ்) கூறினார்:)

இதுதான் ஹவாஸின் குலத்தாரின் போர்க் கைதிகள் குறித்து நமக்கு எட்டிய செய்தியாகும்.

ஹதீஸ் 4320. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் ஹுனைன் போரிலிருந்து திரும்பி வந்தபோது உமர்(ரலி), தாம் அறியாமைக் காலத்தில் நேர்ச்சை செய்திருந்த ஓர்'இஃதிகாஃப்' தொடர்பாக நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அதை நிறைவேற்றும்படிக் கட்டளையிட்டார்கள்.

இதே ஹதீஸ் வேறு பல அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4321. அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஹுனைன் (போர் நடந்த) ஆண்டில் (போருக்காக) நாங்கள் புறப்பட்டோம். (எதிரிகளைப் போர்க் களத்தில்) நாங்கள் சந்தித்தபோது (ஆரம்பத்தில்) முஸ்லிம்கள் (சிலர்) இடையே உறுதியற்ற நிலை ஏற்பட்டது. நான் இணைவைப்பவன் ஒருவனைப் பார்த்தேன். அவன் ஒரு முஸ்லிமின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு அவரைக் கொல்ல முயன்றான். நான் அவன் பின்பக்கமாகச் சென்று வாளால் அவனுடைய (கழுத்துக்குக் கீழே) தோள் நரம்பில் வெட்டி அவனுடைய கவசத்தைத் துண்டித்து விட்டேன். உடனே, அவன் (அந்த முஸ்லிமைவிட்டுவிட்டு) என்னை இறுக அணைத்துக் கொண்டான். அதனால் நான் மரணக் காற்றை சுவாசிக்கலானேன். பிறகு மரணம் அவனைத் தழுவ அவன் என்னைவிட்டுவிட்டான். உடனே நான் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களைச் சென்றடைந்து,'மக்களுக்கு என்ன நேர்ந்தது? (இப்படிக் களத்திலிருந்து பின்வாங்கி ஓடுகிறார்களே)'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'(எல்லாம்) அல்லாஹ்வின் ஏற்பாடு'' என்று பதிலளித்தார்கள். பிறகு, மக்கள் (அப்பாஸ் - ரலி - அவர்கள் அழைத்தால் போர்க் களத்திற்குத் திரும்பி வந்தார்கள். (தீரத்துடன் போராடி வென்றார்கள்.) பிறகு, நபி(ஸல்) அவர்கள் அமர்ந்து கொண்டு,'போரில் (எதிரி) ஒருவரைக் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் உடலிலிருந்து எடுத்த பொருள்கள் உரியவை'' என்று கூறினார்கள். அப்போது நான் எழுந்து நின்று,'எனக்கு சாட்சி சொல்வார்?' என்று கேட்டேன். பிறகு உட்கார்ந்து கொண்டேன். மீண்டும் நபி(ஸல்) அவர்கள்,'போரில் (எதிரி) ஒருவகை் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் உடலிலிருந்து எடுத்த பொருள்கள் உரியவை' என்று கூறினார்கள். உடனே, நான் எழுந்து நின்ற,'எனக்கு எவர் சாட்சி சொல்வார்?' என்று கேட்டேன். பிறகு உட்கார்ந்து விட்டேன். பிறகு, (மூன்றாவது முறையாக) அதே போன்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே, நான் எழுந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அபூ கத்தாதாவே! உங்களுக்கென்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். (நடந்த நிகழ்ச்சியை) நான் அவர்களிடம் எடுத்துரைத்தேன். ஒருவர்,'இவர் உண்மையே கூறினார், இறைத்தூதர் அவர்களே! இவரால் கொல்லப்பட்டவரின் உடலிலிருந்து எடுக்கப்பட்ட பொருள்கள் என்னிடம் உள்ளன. எனக்காக அவரை (ஏதாவது கொடுத்துத்) திருப்திப்படுத்தி விடுங்கள்'' என்று கூறினார். அப்போது அபூ பக்ர்(ரலி),'இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் சிங்கங்களில் ஒரு சிங்கம் அல்லாஹ்வின் சார்பாகவும் அவனுடைய தூதரின் சார்பாகவும் போரிட்டு, (தன்னால்) கொல்லப்பட்டவரின் உடலிலிருந்து எடுத்த பொருளை உனக்குக் கொடுத்து விடுவதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒருபோதும் விரும்பமாட்டார்கள்''

என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்,'(அபூ பக்ர்) உண்மை கூறினார்'' என்று கூறிவிட்டு என்னிடம் கொடுக்குமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அதை எனக்கே கொடுத்துவிட்டார்கள். நான் அந்தப் பொருளை விற்றுவிட்டு பனு சலிமா குலத்தார் வாழும் பகுதியில் ஒரு பேரீச்சந்தோட்டத்தை வாங்கினேன். அதுதான் இஸ்லாத்தைத் தழுவிய பின் நான் தேடிய முதல் சொத்தாகும்.

ஹதீஸ் 4322. அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்

ஹுனைன் போரின்போது முஸ்லிம்களில் ஒருவர் இணைவைப்பவர்களில் ஒருவரோடு போரிட்டுக் கொண்டிருந்ததை கண்டேன். இணைவைப்பவர்களில் இன்னொருவர் அந்த முஸ்லிமைக் கொல்வதற்காக அவருக்குப் பின்னாலிருந்து ஒளிந்து ஒளிந்து வந்து கொண்டிருப்பதையும் கண்டேன். ஒளிந்தபடி அவரைத் தாக்க வந்தவரை நோக்கி (அவரைத் தடுப்பதற்காக) நான் விரைந்தோட, அவர் என்னைத் தாக்குவதற்காகத் தன் கையை ஓங்கினார். நான் அவரின் கையில் தாக்கி அதைத் துண்டித்து விட்டேன். பிறகு அவர் என்னைப் பிடித்துக கொண்டு, நான் (என் உயிர் பிரிந்துவிடுமோ என்று) அஞ்சும் அளவிற்குக் கடுமையாக என்னைக் கட்டியணைத்தார். பிறகு என்னைவிட்டுவிட்டுப் பிடி தளர்ந்தார். பிறகு நான் அவரை(க் கீழே) தள்ளிக் கொன்று விட்டேன். (ஆனால்,) முஸ்லிம்கள் தோற்றுவிட்டனர். நானும் அவர்களுடன் தோற்றுப்போனேன். நான் அப்போது (தோற்ற) மக்களிடையே உமர் இப்னு கத்தாப்(ரலி) இருப்பதைக் கண்டேன். நான் அவர்களிடம்,'மக்களுக்கு என்னாயிற்று?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'(எல்லாம்) அல்லாஹ்வி ஏற்பாடு'' என்று கூறினார்கள். பிறகு மக்கள் நபி(ஸல்) அவர்களிடம் திரும்பி வந்து (தீரத்துடன் போரிட்டு வென்றார்கள். இறுதியில், தங்கள் போர்ச் செல்வத்தைக் குறித்துக்) கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'தன்னால் கொல்லப்பட்ட (எதிரி) ஒருவரை, அவர்தான் கொன்றார் என்பதற்கு ஒரு சான்றைக் கொண்டு வருகிறவருக்கே கொல்லப்பட்டவரின் உடலிலிருந்து எடுக்கப்படும் பொருள்கள் உரியன'' என்று கூறினார்கள். எனவே, என்னால் கொல்லப்பட்ட வரை நானே கொன்றேன் என்பதற்கு சான்று தேடுவதற்காக நான் எழுந்தேன். ஆனால், எனக்காக சாட்சி சொல்பவர் எவரையும் நான் காணவில்லை. எனவே, உட்கார்ந்து கொண்டேன். பிறகு ஏதோ தோன்ற, நான் ஒருவரைக் கொன்றதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சொன்னேன். உடனே நபி(ஸல் அவர்களுடன் அமர்ந்திருந்தவர்களில் ஒருவர்,'(இவரால் கொல்லப்பட்டதாக) இவர் சொல்கிற அந்த மனிதரின் ஆயுதம் என்னிடம் இருக்கிறது. நானே இதை எடுத்துக் கொள்ள அவரிடமிருந்து (எனக்கு) இசைவு பெற்றுத் தாருங்கள்'' என்று கூறினார். அப்போது அபூ பக்ர்(ரலி),'அப்படி முடியாது. (கொல்லப்பட்டவரின்) அந்த உடைமைகளை, அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் போரிகின்ற, அல்லாஹ்வின் சிங்கங்களில் ஒரு சிங்கத்தைவிட்டுவிட்டு குறைஷிகளின் (பலவீனமான) ஒரு குஞ்சுப் பறவைக்கு அதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கொடுக்க மாட்டார்கள்'' என்று கூறினார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து எனக்கு அந்தப் பொருளைக் கொடுத்தார்கள். நான் அதை விற்று பேரீச்சந் தோட்டம் ஒன்றை விலைக்கு வாங்கினேன். அதுதான் நான் இஸ்லாத்திற்கு வந்த பின் தேடிக் கொண்ட முதல் சொத்தாக இருந்தது.

## 'அவ்தாஸ் போர்

ஹதீஸ் 4323. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், ஹுனைன் போரை முடித்துக் கொண்டு திரும்பியபோது, அபூ அமீர் அவர்களை (தளபதியாக்கி)'அவ்தாஸ்' பள்ளத்தாக்கிற்கு ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். அப்போது அபூ ஆமிர் அவர்கள் (கவிஞன்)'துரைத் இப்னு ஸிம்மா'வைச் சந்தித்தார்கள். (அவர்கள்

இருவருக்குமிடையில் சண்டை நடந்தது. அதில்) துரைத் கொல்லப்பட்டான். அவனுடைய தோழர்களை அல்லாஹ் தோற்கடித்தான். அபூ ஆமிர் அவர்களுடன் என்னையும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அந்தப் போருக்கு) அனுப்பியிருந்தார்கள். அப்போரின்போது அபூ ஆமிர் அவர்களின் முழங்காலில் அம்பு பாய்ந்தது. ஜுஷம் குலத்தைச் சேர்ந்த ஒருவனே அந்த அம்மை எய்து, அதை அவர்களின் முழங்காலில் நிறுத்தினான். உடனே நான் அவர்களுக்கு அருகில் சென்று,'என் தந்தையின் சகோதரரே! உங்களின் மீது அம்பெய்தவன் யார்?' என்று கேட்டேன்.'என் மீது அம்பெய்து என்னைக் கொன்றவன் இதோ!"என்று (அவனை நோக்கி) என்னிடம் சைகை காட்டினார்கள். நான் அவனை நோக்கிச் சென்று, அவனை அடைந்தேன். என்னைக் கண்டதும் அவன் புறமுதுகிட்டு ஓடலானான். அவனைப் பின்தொடர்ந்து நானும் ஓடிக் கொண்டே,'(என்னைக் கண்டு ஓடுகிறாயே) உனக்கு வெட்கமில்லையா? நீ நிற்க மாட்டாயா?' என்று கேட்டேன். உடனே அவன் (ஓடுவதை) நிறுத்திக் கொண்டான். பிறகு நாங்கள் இருவரும் வாளினால் மோதிக் கொண்டோம். அப்போது அவனை நான் கொன்று விட்டேன். பிறகு நான் அபூ ஆமிர் அவர்களிடம் (சென்று),'உங்களைக் கொல்ல முயன்ற ஆளை அல்லாஹ் (என் மூலம்) கொன்றுவிட்டான்" என்று கூறினேன். பிறகு, ("என்னுடைய முழங்காலில் பாய்திருக்கும்) இந்த அம்மைப் பிடுங்கியெடு" என்று அவர்கள் கூற, உடனே நான் அதைப் பிடுங்கினேன். அதிலிருந்து நீர் கொட்டியது.'என் சகோதரரின்மகனே! நபி(ஸல்) அவர்களுக்க (என்) சலாம் கூறி, எனக்காக (அல்லாஹ்விடம்) பாவ மன்னிப்புக் கேட்கும்படி கோரு" என்று அபூ ஆமிர்(ரலி) கூறினார். பிறகு என்னைத் தம் பிரதிநிதியாக மக்களுக்கு நியமித்துவிட்டு, சிறிது நேரத்திற்குப் பின் அபூ ஆமீர்(ரலி) (வீர) மரணமடைந்தார்கள். பிறகு (அங்கிருந்து) நான் திரும்பி, நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் தங்களின் வீட்டில் (பேரீச்சம் நாரினால் வேயப்பட்ட) கயிற்றுக் கட்டிலில் படுத்திருந்தார்கள். அதன் மீது விரிப்பு ஒன்று இருந்தது. 352 (எனினும்) கட்டிலின் கயிறு நபி(ஸல்) அவர்களின் முதும்லும், இரண்டு விலாப்புறங்களிலும் அடையாளம் பதித்திருந்தது. பிறகு அவர்களிடம் எங்கள் செய்தியையும், அபூ ஆமிர் அவர்களின் செய்தியையும் கூறி, தமக்காகப் பாவமன்னிப்புக் கேட்கும்படி ஆமிர் அவர்கள் வேண்டியிருக்கிறார்கள் என்பது பற்றியும் கூறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டு வரும்படிக் கூறி, அதில் உளூச் செய்தார்கள். பிறகு தம் இரண்டு கரங்களையும் உயர்த்தி,'இறைவா! அபூ ஆமிர் உபைதுக்கு நீ மன்னிப்பு அளிப்பாயாக! மறுமை நாளில் உன் படைப்பினமான மனிதர்களில் பலரையும் விட (அந்தஸ்தில்) உயர்ந்தவராக அவரை ஆக்குவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள். அப்போது அவ்ாகளின் அக்குள்கள் இரண்டின் வெண்மையையும் பார்த்தேன். உடனே நான்,'எனக்காகவும் பாவமன்னிப்புக் கோருங்கள் (நபியே!)" என்று கூறினேன். அதற்கவர்கள்,'இறைவா! அப்துல்லாஹ் இப்னு கைஸின் பாவத்தை மன்னித்து, மறுமை நாளில் கண்ணியம் நிறைந்த இருப்பிடத்திற்கு அவரை அனுப்புவாயாக! என்று பிரார்த்தித்தார்கள்.

அபூ புர்தா(ரலி) கூறினார்:

(நபி - ஸல் - அவர்கள் புரிந்த இரண்டு பிரார்த்தனைகளில்) ஒன்று அபூ அமீர்(ரலி) அவர்களுக்கும் மற்றொன்று அபூ மூஸா(ரலி) அவர்களுக்கும் உரியதாகும்.

## ஹிஜ்ரி எட்டாமாண்டு ஷவ்வால் மாதம் நடந்த தாயிஃப் போர்.

இதை மூஸா இப்னு உக்பா(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4324. (நபிகளாரின் துணைவியார்) உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

என்னிடம் (ஆணுமல்லாத பெண்ணுமல்லாத)'அலி' ஒருவர் அமர்ந்திருந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அந்த'அலி', (என் சகோதரர்) அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யாவிடம்,'அப்துல்லாஹ்வே! நாளை தாயிஃப் நகர் மீது உங்களுக்கு அல்லாஹ் வெற்றியளித்தால் நீ ஃகய்லானின் மகளை மணந்துகொள். ஏனென்றால், அவள் முன்பக்கம் நாலு (சதை மடிப்புகளு)டனும், பின்பக்கம் எட்டு (சதை மடிப்புகளு)டனும் வருவாள்'' என்று சொல்வதை செவியுற்றேன். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,'இந்த அலிகள் (பெண்களாகிய) உங்களிடம் ஒருபோதும் வர (அனுமதிக்க)க் கூடாது'' என்று கூறினார்கள். இப்னு உயைனா(ரஹ்), இப்னு ஜுரைஜ்(ரஹ்) ஆகியோரின் அறிவிப்பில் அந்த அலியின் பெயர்'ஹீத்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

... மற்றோர் அறிவிப்பில்,'அப்போது நபி(ஸல்) அவர்கள் தாயிஃபை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தார்கள்'' என்று அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4325. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாயிஃப் நகரத்தை முற்றுகையிட்டபோது அவர்களால் அம்மக்களை ஒன்றும் செய்ய முடியவில்லை. எனவே,'இறைவன் நாடினால் நாம் (நாளை மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்'' என்று அவர்கள் கூறினார்கள். அவர்கள் இப்படிச் சொன்னது நபித் தோழர்களுக்கு வருத்தமளித்தது. அவர்கள்,'இதை வெற்றி கொள்ளாமல் நாம் திரும்பிச் செல்வதா?' என்று பேசிக்கொண்டார்கள். நபி(ஸல்) அவர்கள் (மீண்டும்) ஒரு முறை,'நாம் திரும்பிச் செல்வோம்'' என்று கூறினார்கள். பிறகு (தோழர்களின் தயக்கத்தைக் கண்டு) முற்பகலிலேயே போர் புரியுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் முற்பகலில் போர் புரிய, (அதனால்) (பலத்த) காயங்களுக்கு ஆளானார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இறைவன் நாடினால் நாளை நாம் (மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்'' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள் இப்படிச் சொன்னது நபித்தோழர்களுக்கு (இப்போது) மகிழ்ச்சியை அளித்தது. (அவர்களின் மகிழ்ச்சியைக் கண்டு) நபி(ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) இதை அறிவித்தபோது ஒரு முறை,'நபி(ஸல்) அவர்கள் (சிரித்தார்கள்'' என்பதற்கு பதிலாக) புன்கைத்தார்கள்'' என்று அறிவித்தார்கள்.

ஹதீஸ் 4326-ஹதீஸ் 4327 நபி(ஸல்) கூறினார்கள்:

எவன் தெரிந்து கொண்டே தன்னைத்தானே தந்தையல்லாத (வேறு) ஒருவருடன் இணைத்து, (''நான் அவரின் மகன் தான்'' என்று) வாதாடுகிறானோ அவனுக்கு சொர்க்கம் (புகுவது) தடை செய்யப்பட்டதாகும்.

''இறைவழியில் ஓர் அம்பை முதன் முதலாக எய்தவரான ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடமிருந்தும் (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய தாயிஃப் நகர மக்களின் அடிமைகள்) சிலரோடு தாயிஃப் கோட்டையின் சுவரைத் தாண்டிக் குதித்து நபி(ஸல்) அவர்களிடம் வந்த அபூ பக்ரா(ரலி) அவர்களிடமிருந்தும் இதை செவியுற்றேன்'' என்று அபூ உஸ்மான் அப்துர் ரஹ்மான் அந்நஹ்தீ(ரஹ்) கூறினார்கள்.

இது, மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

அறிவிப்பாளர் ஆஸிம் இப்னு சுலைமான் (ரஹ்), (தமக்கு இதை அறிவித்த அபுல் ஆலியா, அல்லது அபூ உஸ்மான் (ரஹ்) அவர்களிடம்'உங்களிடம் (இந்த நபிமொழிக்கு) இருவர் சாட்சியம் பகர்ந்துள்ளனர் அவர்கள் இருவரும் உங்களுக்குப் போதும்'' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், 'ஆம் அவ்விருவரில் ஒருவர் இறைவழியில் (முதன் முதலாக) ஓர் அம்பை எறிந்தவராவார். மற்றொருவரோ, நபி (ஸல்) அவர்களிடம் தாயிஃபிலிருந்து வந்து இருபத்து மூன்று பேரில் மூன்றாமவராவார்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4328. அபூ மூஸா (ரலி) அறிவித்தார்

மக்காவுக்கும் மதீனாவிற்குமிடையே'ஜிஃரானா' என்னுமிடத்தில் பிலால் (ரலி) அவர்களுடன் நபி (ஸல்) அவர்கள் தங்கியிருந்தபோது நான் அவர்களிடம் இருந்தேன். 360 அப்போது கிராமவாசி ஒருவர் (நபி -ஸல் - அவர்களிடம்) வந்து, 'நீங்கள் எனக்கு வாக்களித்ததைக் கொடுக்கமாட்டீர்களா?' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'நற்செய்தியைப் பெற்றுக் கொள்'' என்று கூறினார்கள். அதற்கு அவர், 'இந்த நற்செய்தியைத் தான் எனக்கு நீங்கள் நிறையச் சொல்லிவிட்டீர்களே!"என்று கூறினார். உடனே நபி (ஸல்) அவர்கள் கோபமடைந்தவரைப் போன்று என்னையும் பிலால் (ரலி) அவர்களையும் நோக்கி வந்தார்கள். 'இவர் (என்னுடைய) நற்செய்தியை ஏற்க மறுத்துவிட்டார். நீங்கள் இருவரும் அதை ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள். நாங்கள் இருவரும், 'நாங்கள் ஏற்றுக் கொண்டோம்'' என்று கூறினோம். பிறகு தண்ணீருள்ள ஒரு பாத்திரத்தைக் கொண்டு வரச் சொல்லி, அதில் தம் இருகைகளையும் தம் முகத்தையும் கழுவி, அதில் உமிழ்ந்தார்கள் 362. பிறகு (எங்களிடம்), 'இதிலிருந்து சிறிது அருந்திவிட்டு, 'உங்கள் முகங்களிலும் உங்கள் மார்புகளிலும் ஊற்றிக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள். எனவே, நாங்கள் இருவரும் அந்தப் பாத்திரத்தை எடுத்து அவ்வாறே செய்தோம். அப்போது (நபிகளாரின் துணைவியார்) உம்மு ஸலமா (ரலி) திரைக்குப் பின்னாலிருந்து எங்கள் இருவரையும் அழைத்து, '(இறை நம்பிக்கையாளர்களான) உங்களின் அன்னை (யான என) க்காகவும் அதிலிருந்து சிறிது (தண்ணீரை) மீதி வையுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே நாங்கள் இருவரும் அவர்களுக்காக அதில் சிறிது மீதி வைத்தோம்.

ஹதீஸ் 4329. ஸஃப்வான் இப்னு யஅலா (ரலி) அறிவித்தார்

(என் தந்தை) யஅலா இப்னு உமய்யா (ரலி), 'இறைத்தூதர் (ஸல) அவர்களின் மீது வஹீ (இறைச்செய்தி) (வேத வெளிப்பாடு) அருளப்படும்போது அவர்களைப் பார்க்கும் வாய்ப்புக்கிட்டதா என்று ஆசைப்பட்டு வந்தேன்'' என்று கூறுவது வழக்கம். ஒரு முறை, நபி (ஸல்) அவர்கள் (தாயிஃபிலிருந்து) திருமபும் சமயம்) ஜிஃரானாவில் இருக்கும்போது அவர்களுக்குத் துணியால் (ஏடாரம் அமைத்து) நீழல் கொடுக்கப்பட்டிருந்தது. அந்தத் துணிக் (கூடாரத்திற்) குள் நபி (ஸல) அவர்களுடன் அவர்களின் தோழர்கள் சிலரும் இருந்தனர். அப்போது வாசனைத் திரவியத்தில் தோய்ந்த, மேலங்கியொன்றை அணிந்து கொண்டு உம்ராவுக்காக வந்த ஒரு மனிதரைக் குறித்து நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று கேட்டார். உடனே உமர் (ரலி) யஅலா (ரலி) அவர்களை' (அருகில்) வாருங்கள்'' என்று கைகளால் சைகை செய்து அழைத்தார்கள். யஅலா (ரலி) தம் தலையை (கூடாரத்திற்கு) உள்ளே நுழைத்தார்கள். அப்போது (வேத வெளிப்பாடு அருளப்பட்டுக் கொண்டிருக்க) நபி (ஸல்) அவர்களின் முகம் சிவந்து, அவர்கள் அப்படியே சிறிது நேரம் குறட்டைவிட்ட படி இருந்தார்கள். பிறகு (சிறிது சிறிதாக) அந்த நிலை அவர்களைவிட்டு நீங்கியது. பிறகு அவர்கள், 'சற்று நேரத்திற்கு முன்பு என்னிடம் உம்ராவைப் பற்றிக் கேட்டவர் எங்கே?' என்று கேட்டார்கள். உடனே அந்த மனிதர், தேடி அழைத்து வரப்பட்டார். நபி (ஸல) அவர்கள், 'உம் மீதுள்ள வாசனைத் திரவியத்தை மூன்று முறை கழுவுக! (தைக்கப்பட்டு

அணிந்துள்ள) மேலங்கியைக் கழற்றிவிடுக! பிறகு, உம்முடைய ஹஜ்ஜில் செய்வது போன்றே உம்முடைய உம்ராவிலும் செய்து கொள்க!”என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4330. அப்துல்லாஹ் இப்னு ஸைத் இப்னி ஆஸிம்(ரலி) அறிவித்தார்

அல்லாஹ், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு ஹுனைன் நாளில் போர்ச் செல்வங்களை வழங்கியபோது உள்ளங்கள் இணக்க மாக்கப்பட்ட வேண்டிய (மக்கா வெற்றியின்போது புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய)வர் களிடையே (அவற்றைப்) பங்கிட்டார்கள். (மதீனாவாசிகளான) அன்சாரிகளுக்கு எதுவும் கொடுக்கவில்லை. மற்றவர்களுக்குக் கிடைத்தது போல் தமக்கும் கிடைக்காமல் போனதால் அவக்ள் கவலையடைந்தவர்களைப் போல் காணப்பட்டார்கள். எனவே, அவக்ளிடையே (ஆறுதலாக) நபி(ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள். (அவ்வுரையில்),‘அன்சாரிகளே! உங்களை வழிதவறியவர்களாக நான் காணவில்லையா?’ அல்லாஹ் என் மூலமாக உங்களுக்கு நேர் வழியை அளித்தான். நீங்கள் பிரிந்து (சிதறிக்) கிடந்தீர்கள். அப்போது அல்லாஹ் என் மூலமாக உங்களைப் பரஸ்பரம் நேசமுடையவர்களாக்கினான். நீங்கள் ஏழைகளாக இருந்தீர்கள். அல்லாஹ், என் மூலமாக உங்களுக்கு நேர்வழியை அளித்தான். நீங்கள் பிரிந்து (சிதறிக்) கிடந்தீர்கள். அப்போது அல்லாஹ் என் மூலமாக உங்களைப் பரஸ்பரம் நேசமுடையவர்களாக்கினான். நீங்கள் ஏழைகளாக இருந்தீர்கள். அல்லாஹ், என் மூலமாக உங்களைத் தன்னிறைவுடையவர்களாய் ஆக்கினான் (அல்லவா?)‘‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் (தம் வருகையால் அன்சாரிகள் அடைந்த நன்மைகளை) ஒவ்வொன்றாகச் சொல்லும் போதெல்லாம்,‘அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அதிக உபகாரம் புரிந்தவர்கள்‘‘ என்று அன்சாரிகள் கூறினர். நபி(ஸல்) அவர்கள்,‘அவ்வாறிருக்க, அல்லாஹ்வின் தூதருக்கு நீங்கள் பதிலளிக்கமாலிருப்பது எதனால்?’ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒன்றைச் சொல்லும் போதெல்லாம் அவர்கள்,‘அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே மிகப் பெரும் உபகாரிகள்‘‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘நீங்கள் விரும்பினால் இன்னின்னவாறெல்லாம் (நீங்கள் எனக்குச் செய்த உபகாரங்களை நினைவுபடுத்தும் வகையில்) சொல்ல முடியும். ஆனால், (இந்த) மக்கள் (நான் கொடுக்கும்) ஆடுகளையும் ஒட்டகங்களையும் (ஓட்டிக்) கொண்டு போக நீங்கள் உங்கள் இல்லங்களுக்கு இறைத்தூதரையே (என்னையே) உங்களுடன் கொண்டு செல்வதை விரும்பமாட்டீர்களா? ஹிஜ்ரத் (நிகழ்ச்சி) மட்டும் நடந்திருக்காவிட்டால் நான் அன்சாரிகளில் ஒருவனாய் இருந்திருப்பேன். மக்களெல்லாம் ஒரு கணவாயிலும் ஒரு பள்ளத்தாக்கிலும் சென்றாலும் நான் அன்சாரிகள் செல்லும் கணவாயிலும் பள்ளத்தாக்கிலும் தான் செல்வேன். அன்சாரிகள் (மேனியுடன் ஒட்டிய) உள்ளாடைகள் (போன்றவர்கள்) நீங்கள் எனக்குப் பின்னால் விரைவிலேயே (ஆட்சியதிகாரத்தில்) உங்களை விடப் பிறருக்கு முன்னுரிமை தரப்படுவதைக் காண்பீர்கள். எனவே, (எனக்குச் சிறப்புப் பரிசாக மறுமையில் கிடைக்கவிருக்கும்)’ஹவ்ள் (அல் கவ்ஸர்’ என்னும்) தடாகம் அருகே என்னைச் சந்திக்கும் வரை (நிலை குலையாமல்) பொறுமையுடன் இருங்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4331. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அல்லாஹ், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு ஹவாஸின் குலத்தாரின் செல்வத்தை (வெற்றிப் பரிசாக) அளித்தபோது நபி(ஸல்) அவர்கள் (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய) மக்களுக்கு நூறு ஒட்டகங்களைக் கொடுக்கலானார்கள். உடனே, (அன்சாரிகளில்) சிலர்,‘இறைத்தூதர்(ஸல்) அவர்களை அல்லாஹ் மன்னிப்பானாக! (எதிரிகளான) குறைஷிகளின் இரத்தம் நம் வாட்களில் சொட்டிக் கொண்டிருக்க, (நமக்குக் கொடுக்காமல்) இவர்களுக்குக் கொடுக்கிறார்களே! ஆனால், (தியாகங்கள் பல புரிந்த) நம்மைவிட்டு விடுகிறார்களே!”என்று (கவலையுடன்) கூறினார்கள்.

அவர்களின் இந்தப் பேச்சு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. உடனே, நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளுக்கு ஆளனுப்பி அவர்களைப் பதனிடப்பட்ட தோலால், ஆன ஒரு கூடாரத்தில் ஒன்று திரட்டினார்கள். அவர்களுடன் மற்றவர்களை நபி(ஸல்) அவர்கள் எழுந்து நின்று,'உங்களைக் குறித்து எனக்கு எட்டியுள்ள செய்தி என்ன? (உண்மை தானா?)‘' எங்கள் தலைவர்கள் எதுவும் சொல்லவில்லை. எங்களில் இளவயதுடைய மக்கள் சிலர் தான்,'இறைத்தூதர்(ஸல்) அவர்களை அல்லாஹ் மன்னிப்பானாக! நம்முடைய வாட்களில் குறைஷிகளின் இரத்தம் சொட்டிக் கொண்டிருக்க, நம்மைவிட்டுவிட்டு அவர்களுக்குக் கொடுக்கிறார்களே!' என்று பேசிக் கொண்டனர்‘' என்று கூறினார்கள். அப்போது, நபி(ஸல்) அவர்கள்,'இறை மறுப்பைவிட்டு இப்போது நான் புதிதாக இஸ்லாத்தில் இணைந்த சிலருக்கு கொடுக்கிறேன். (அதன் வாயிலாக) அவர்களுடன் நான் இணக்கம் ஏற்படுத்திக் கொள்கிறேன். மக்கள் (பிற உலக) செல்வங்களை எடுத்துக் கொண்டு செல்ல, நீங்கள் உங்கள் இல்லங்களுக்கு இரைத்தூதரையே கொண்டு செல்வதை விரும்பவில்லையா? அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் பெற்றுத்திரும்பும் செல்வங்களை விட நீங்கள் பெற்றுத் திரும்புவதே சிறந்ததாகும்‘' என்று கூறினார்கள். அன்சாரிகள்,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் (எங்களுடன் உங்களைக் கொண்டு செல்வதையே) விரும்புகிறோம்‘' என்று கூறினார்கள். அப்போது அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள்,'விரைவில் (உங்களை விடப் பிறருக்கு ஆட்சியதிகாரத்தில்) அதிகமாக முன்னுரிமை வழ‘கப்படுவதைக் காண்பீர்கள். எனவே, அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (மறுமையில்) சந்திக்கும் வரை பொறுமையாயிருங்கள். ஏனெனில், அன்று நான் (எனக்கு வழங்கப்படவுள்ள சிறப்புப்பரிசான'அல் கவ்ஸர்' எனும்) தடாகத்தின் அருகே இருப்பேன்‘' என்று கூறினார்கள். ஆனால், மக்கள் பொறுமையாக இருக்கவில்லை.

ஹதீஸ் 4332. அனஸ்(ரலி) அறிவித்தார்

மக்கா வெற்றியின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குறைஷிகளுக்கிடையே போர்ச் செல்வங்களைப் பங்கிட்டார்கள். எனவே, அன்சாரிகள் (தமக்குப் பங்கு தரவில்லையே என்று) கோபித்துக் கொண்டார்கள். (இதையறிந்த) நபி(ஸல்) அவர்கள்,'மக்கள் உலகச் செல்வத்தை எடுத்துக் கொண்டு செல்ல, நீங்கள் அல்லாஹ்வின் தூதரையே உங்களுடன் கொண்டு செல்வதை விரும்பவில்லையா?' என்று கேட்டார்கள். அதற்கு அன்சாரிகள்,'ஆம், (அதைத் தான் விரும்புகிறோம்)‘' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,'மக்கள் ஒரு கணவாயிலோ, பள்ளத்தாக்கிலோ சென்றால், நான் அன்சாரிகளின் கணவாயிலோ, பள்ளத்தாக்கிலோ தான் செல்வேன்‘' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4333 அனஸ்(ரலி) அறிவித்தார்

ஹுனைன் போரின்போது ஹவாஸின் குலத்தார் (நபி-ஸல் அவர்களைப்) போர்க்களத்தில் சந்தித்தனர். அப்போது நபி(ஸல) அவர்களுடன், (புனிதப் போர் வீரர்கள்) பத்தாயிரம் பேர் இருந்தனர். (மக்கா வெற்றியின் போது) மன்னிப்பளிக்கப்பட்டவர்களும் இருந்தனர். 367 அப்போது (ஹவாஸின் குலத்தாரின் அதிரடித் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல்) அவர்கள் பின்வாங்கிச் சென்றனர். நபி(ஸல்) அவர்கள்,'அன்சாரிகளே! (என்னாயிற்று உங்களுக்கு?)‘' என்று கேட்க, அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! உங்கள் அழைப்புக்கு பதிலளித்து உங்களுக்கு அடிபணிந்தோம். இதோ, உங்களுக்கு உதவக் காத்திருக்கிறோம். உங்கள் முன்னால் இருக்கிறோம்‘' என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள் (தம் வாகனத்தைவிட்டு இறங்கி,'நான் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவேன்‘' என்று கூறினார்கள். (பிறகு, அந்தப் போரில்) இணைவைப்பவர்கள் தோற்றுவிட்டனர். பின்னர், நபி(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியில்)

மன்னிப்பளிக்கப்பட்டு (புதிய முஸ்லிம்களாக) இருந்தவர்களுக்கும் முஸாஜிர்களுக்கும் (போர்ச் செல்வத்தில் பங்கு) கொடுத்தார்கள். அன்சாரிகளுக்கு எதையும் கொடுக்கவில்லை. அன்சாரிகள் (தமக்குக் கொடுக்காததைக் குறித்து அதிருப்தியுடன்) பேசினர். உடனே நபி(ஸல்) அவர்கள், அன்சாரிகளை அழைத்து (தாமிருந்த) கூடாரத்தினுள் இருக்கச் செய்து,'இந்த மக்கள் ஆடுகளையும் ஒட்டகங்களையும் கொண்டு செல்ல, நீங்கள் அல்லாஹ்வின் தூதரையே கொண்டு செல்வதை விரும்பவில்லையா?' என்று கேட்டார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள்,'மக்கள் ஒரு கணவாயில் நடந்து செல்ல, அன்சாரிகள் வேறொரு கணவாயில் சென்றால், நான் அன்சாரிகளின் கணவாயையே தேர்ந்தெடுப்பேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4334. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளில் சிலரை ஒன்று கூட்டி,'(இந்தக்) குறைஷிகள், அறியாமைக் கொள்கையை இப்போது தான் கைவிட்டுப் புதிதாக இஸ்லாத்திற்கு வந்தவர்கள் (இஸ்லாத்தை ஏற்றதனல் நேரும்) சோதனைகளுக்குப் புதியவர்கள். எனவே, அவர்களுக்கு நிவராணம் வழங்கவும், (இஸ்லாத்துடன்) அவர்களுக்கு இணக்கத்தை ஏற்படுத்தவும் விரும்பினேன். மக்கள் உலகச் செல்வத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பிச் செல்ல, நீங்கள் அல்லாஹ்வின் தூதருடனேயே உங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் செல்வதை நீங்கள் விரும்ப வில்லையா?' என்று கேட்டார்கள். அன்சாரிகள்,'ஆம் (அதைத் தான் விரும்புகிறோம்)" என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,'மக்கள் ஒரு கணவாயில் செல்ல, அன்சாரிகள் வேறொரு கணவாயில் செல்வார்களாயின், நான் அன்சாரிகளின் கணவாயில் தான் அல்லது அன்சாரிகளின் பள்ளத்தாக்கில் தான்... செல்வேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4335. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஹுனைன் போரில் கிடைத்த செல்வங்களை (மக்களிடையே) பங்கிட்டபோது அன்சாரிகளில் ஒருவர்'இந்தப் பங்கீட்டில் நபியவர்கள் இறைத் திருப்தியை நாடவில்லை" என்று (மனத்தாங்கலுடன்) பேசினார். நான் நபி(ஸல்) அவர்களிடம், சென்று (இதைத் தெரிவித்தேன். உடனே அவர்களின் முகம் (கோபத்தால் நிறம்) மாறிவிட்டது. பிறகு அவர்கள்,'(இறைத்தூதர்) மூஸாவின் மீது அல்லாஹ் கருணை புரிவானாக! அவர்கள் இதை விட அதிகமாக மனவேதனைக்கு ஆளாக்கப்பட்டார்கள். ஆயினும், சகித்துக் கொண்டார்கள்" என்று கூறினார்கள். 368

ஹதீஸ் 4336. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஹுனைன் போரின்போது, நபி(ஸல்) அவர்கள் மக்கள் சிலருக்கு முன்னுரிமை (அளித்து அதிகமாக) வழங்கினார்கள். (புதிய முஸ்லிம்களில் ஒருவரான) அக்ரஉ இப்னு ஹாபிஸ் (ரலி) அவர்களுக்கு நூறு ஒட்டகங்களைக் கொடுத்தார்கள். உயைனா இப்னு ஹஸன் ஃபஸாரீ(ரலி) அவர்களுக்கும் அதே போன்று கொடுத்தார்கள். இன்னும் சிலருக்கும் கொடுத்தார்கள். அப்போது ஒருவர்,'இந்தப் பங்கீட்டில் அல்லாஹ்வின் திருப்தி நாடப்படவில்லை" என்று கூறினார். 369 உடனே நான்,'இதை நிச்சயம் நான் நபி(ஸல்) அவர்களிடம் தெரிவிப்பேன்" என்று சொன்னேன். (அவ்வாறே நபி(ஸல்) அவர்களிடம் சென்று நான் சொல்ல) அவர்கள்,'(இறைத்தூதர்)'மூஸாவுக்கு அல்லாஹ் கருணை புரியட்டும். இதை விட அதிகமாக அவர்கள் மனவேதனைக்கு ஆளாக்கப்பட்டார்கள். ஆயினும், சகித்துக் கொண்டார்கள்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4337. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

ஹுனைன் போரின்போது ஹவாஸின் குலத்தாரும் கத்ஃபான் குலத்தாரும் மற்றவர்களும் தம் கால்நடைகளுடனும் குழந்தை குட்டிகளுடனும் (போர்க்களத்தில்) நபி(ஸல்) அவர்களை எதிர்கொண்டனர். அப்போது நபி(ஸல்) அவர்களுடன் பத்தாயிரம் பேர்களும் (மக்கா வெற்றியில்) மன்னிப்பளிக்கப்பட்டு (புதிய முஸ்லிம்களாக) இருந்தவர்களில் பலரும் இருந்தனர். அவர்கள் நபி(ஸல்) அவர்களை (தனியே)விட்டுப் பின்வாங்கிச் சென்றுவிட்டனர். இறுதியில் நபி(ஸல்) அவர்களை (தனியே)விட்டுப் பின்வாங்கிச் சென்றுவிட்டனர். இறுதியில் நபி(ஸல்) அவர்கள் மட்டும் தனியே எஞ்சி நின்றார்கள். அப்போது, அவர்கள் இரண்டு (முறை) அழைப்பு விடுத்தார்கள். இரண்டையும் கலந்து விடாமல் (இடைவெளி இருக்குமாறு) பார்த்துக் கொண்டார்கள். தம் வலப்பக்கம் திரும்பி,'அன்சாரிகளே!"என்று அழைக்க அவர்கள்,'இதோ, வந்துவிடோம், இறைத்தூதர் அவர்களே! நாங்கள் உங்களுடன் தான் இருக்கிறோம் (கவலைப்படாமல்) மகிழ்ச்சியுடனிருங்கள்" என்று கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் தம் இடப்பக்கம் திரும்பி,'அன்சாரிகளே! என்று அழைத்தார்கள். அவர்கள் (மீண்டும்),'இதோ, தங்கள் அழைப்புக்குக் கீழ்ப்படிந்து வந்தோம், இறைத்தூதர் அவர்களே! (கவலையின்றி) மகிழ்ச்சியுடனிருங்கள். நாங்கள் உங்களுடன் தான் இருக்கிறோம்" என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின்'பைளா' என்னும் வெள்ளைக் கோவேறுக் கழுதையின் மீது அமர்ந்திருந்தார்கள். பிறகு அதிலிருந்து இறங்கி,'நான் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவேன்" என்று கூறினார்கள். பிறகு, இணைவைப்பவர்கள் (அந்தப் போரில்) தோற்றுப்போனதால், ஏராளமான போர்ச் செல்வங்களை நபி(ஸல்) அவர்கள் பெற்றாக்ள் அவற்றை முஹாஜிர்களிடையேயும் (மக்கா வெற்றியில்) மன்னிப்பளிக்கப்பட்டவர்களிடேயேயும் பங்கிட்டார்கள். அன்சாரிகளுக்கு எதையும் கொடுக்கவில்லை. எனவே, அன்சாரிகள் (சிலர்),'ஏதேனும் (போர் போன்ற) கடுமையான பிரச்சினை என்றால் (உயிரை அர்ப்பணித்து உதவிட) நாங்கள் அழைக்கப்படுகிறோம். ஆனால், (பிரச்சனை தீர்ந்ததும்) மற்றவர்களுக்குப் போர்ச் செல்வங்கள் கொடுக்கப்படுகின்றன" என்று (மனக் குறையுடன்) பேசிக் கொண்டார்கள். இவர்கள் இப்படிப் பேசிக் கொள்ளும் செய்தி நபி(ஸல) அவர்களுக்கு எட்டியது. உடனே அன்சாரிகளை ஒரு கூடாரத்தில் ஒன்று கூட்டி,'அன்சாரிகளே! உங்களைக் குறித்து எனக்கு எட்டிய இச்செய்தி என்ன? (உண்மைதானா)" என்று கேட்டார்கள். அவர்கள் (உண்மை தான் என்பது போல்) மௌனமாயிருந்தார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள்,'அன்சாரிகளே! மக்கள் உலகச் செல்வத்தைத் தங்களுடன் கொண்டு செல்ல, நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை சொந்தமாக்கிக் கொண்டு உங்கள் இல்லங்களுக்குச் செல்வதை நீங்கள் விரும்பவில்லையா?' என்று கேட்டார்கள். அன்சாரிகள்,'ஆம் (நாங்கள் அதைத் தான் விரும்புகிறோம்) என்று பதிலளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'மக்களெல்லாம் ஒரு பள்ளத்தாக்கில் செல்ல, அன்சாரிகள் மட்டும் வேறொரு பள்ளத்தாக்கில் செல்வார்களாயின் நான் அன்சாரிகள் செல்லும் பள்ளத்தாக்கையே தேர்ந்தெடுப்பேன்" என்று கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் இப்னு ஸைத்(ரஹ்) (இதைத் தமக்கு அறிவித்த தம் பாட்டனாரான அனஸ் - ரலி - அவர்களிடம்,)'அபூ ஹம்ஸாவே! நீங்கள் இந்நிகழ்ச்சியைப் பார்த்தீர்களா?' என்று கேட்க,'அனஸ்(ரலி),'நான் நபி(ஸல்) அவர்களைவிட்டு எங்கே போவேன்" என்று பதிலளித்தார்கள்.

## 'நஜ்த் நோக்கி அனுப்பப்பட்ட படைப் பிரிவு.

ஹதீஸ் 4338. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் நஜ்த் பகுதியை நோக்கிப் படைப்பிரிவு ஒன்றை அனுப்பினார்கள். நான் அதில் இடம் பெற்றிருந்தேன். (அந்தப் போரில் கிடைத்த போர்ச் செல்வங்களில்) எங்கள் ஒவ்வொருவரின்

பங்கும் பன்னிரண்டு ஒட்டகங்களாக இருந்தன. எங்கள் ஒவ்வொருவருக்கும் எங்களுக்குரிய பங்குக்கும் மேல் அதிகமாக ஒவ்வோர் ஒட்டகம் கொடுக்கப்பட்டது. ஆக, நாங்கள் (ஒவ்வொரு வரும்) பதின்மூன்று ஒட்டகங்களைப் பெற்றுத் திரும்பினோம்.

## நபி(ஸல்) அவர்கள் காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களை பனு ஜதீமா குலத்தாரிடம் அனுப்பியது.

ஹதீஸ் 4339. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களை பனு ஜதீமா குலத்தாரிடம் அனுப்பினார்கள். அவர்களுக்கு அவர் இஸ்லாத்தை ஏற்கும்படி அழைப்புக் கொடுத்தார். அவர்களுக்கு'அஸ்லம்னா - நாங்கள் இஸ்லாத்தை ஏற்றோம்' என்று திருத்தமாகச் சொல்ல வரவில்லை. எனவே, அவர்கள் (தங்களின் வழக்குப்படி)'ஸபஃனா, ஸபஃனா' - நாங்கள் மதம் மாறி விட்டோம். மதம் மாறிவிட்டோம்'' என்று சொல்லானார்கள். உடனே காலித்(ரலி), அவர்களில் சிலரைக் கொல்லவும் சிலரைச் சிறை பிடிக்கவும் தொடங்கினார். அவர் (தம்முடன் வந்திருந்த) எங்களில் ஒவ்வொருவரிடமும் அவரவருடைய கைதியை ஒப்படைத்தார். ஒரு நாள் காலித், எங்களில் ஒவ்வொருவரும் தம்மிடமிருக்கும் கைதியைக் கொல்ல வேண்டுமென உத்தரவிட்டார். நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! என்னிடமுள்ள கைதியை கொல்ல மாட்டேன். மேலும், என் சகாக்களில் ஒருவரும் தம்மிடமிருக்கும் கைதியைக் கொல்ல வேண்டுமென உத்தரவிட்டார். நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! என்னிடமுள்ள கைதியை கொல்ல மாட்டேன் மேலும், என் சகாக்களில் ஒருவரும் தம்மிடமிருக்கும் கைதியைக் கொல்லமாட்டார்'' என்று சொன்னேன். இறுதியில், நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் சென்று, விஷயத்தைச் சொன்னோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம் கரங்களை உயர்த்தி,'இறைவா!'காலித் செய்த தவறுகளுக்கும் எனக்கும் தொடர்பில்லை' என்று உன்னிடம் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று இருமுறை கூறினார்கள்.

அப்துல்லாஹ் இப்னு ஹுதாஃபா அஸ்ஸஹ்மீ(ரலி) மற்றும் அல்கமா இப்னு முஜஸ்ஸிஸ் அல் முத்லிஜீ(ரலி) ஆகியோரின் படைப்பிரிவு.

## இது அன்சாரிகளின் படைப்பிரிவு என்று அழைக்கப்படுகிறது.

ஹதீஸ் 4340. அலீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு படைப்பிரிவை அனுப்பி அதற்கு அன்சாரிகளில் ஒருவரைத் தளபதியாக்கி அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி படைவீரர்களுக்கு உத்தரவிட்டார்கள். (அவர்கள் ஏதோ தவறிழைத்து விட) அவர்களின் மீது அவர் கோபமுற்று,'நபி(ஸல்) அவர்கள் எனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படி உங்களுக்குக் கட்டளையிடவில்லையா?' என்று கேட்டார். அவர்கள்,'ஆம் (கட்டளையிட்டார்கள்)'' என்று பதிலளித்தனர். அவர்,'அப்படியென்றால் எனக்காக விறகு சேகரியுங்கள்'' என்று சொல்ல, அவர்களும் அவ்வாறே சேகரித்தனர். அவர்,'நெருப்பு மூட்டுங்கள்'' என்று சொல்ல, அவர்களும் அவ்வாறே நெருப்பு மூட்டினார்கள். அவர்,'இதில் (இந்த நெருப்பில்) நீங்கள் நுழையுங்கள்'' என்று கூற, அவர்கள் அதில் நுழையப் போனார்கள். அதற்குள் (அதில் நுழைய விடாமல்) அவர்களில் ஒருவர் மற்றவரைத் தடுக்கலானார். மேலும், தடுக்கலானார். மேலும், அவர்கள்,'(நரக) நெருப்பிலிருந்து வெருண்டோடித் தான் நாம் நபி(ஸல்) அவர்களிடம் சென்றோம்'' என்று கூறலாயினர். நெருப்பு அணைந்து போகும் வரை இவ்வாறே கூறிக் கொண்டிருந்தனர். பிறகு, படைத்தளபதியின் கோபம் தணிந்து அவர் அமைதியடைந்தார். பிறகு நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டியபோது,'அதில் அவர்கள் நுழைந்திருந்தால் மறுமை நாள் வரையிலும் கூட அதிலிருந்து

அவர்கள் வெளியேறியிருக்க மாட்டார்கள். கீழ்ப்படிதல் என்பது நற்செயல்களில் தான்‘‘ என்று கூறினார்கள்.

அபூ மூஸா(ரலி) அவர்களும் முஆத்(ரலி) அவர்களும்’ஹஜ்ஜத்துல் வதா‘வுக்கு முன்பு யமன் நாட்டு அனுப்பப்படுதல்.

ஹதீஸ் 4341 ‍, ஹதீஸ் 4342 அபூ புர்தா(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என் தந்தை) அபூ மூஸா(ரலி) அவர்களையும் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பினார்கள். அவர்களில் ஒவ்வொருவரையும் (யமனின்) ஒரு மாகாணத்திற்கு அனுப்பினார்கள். நபி(ஸல்) அவர்கள்’யமன் இரண்டு மாகாணங்களாகும்‘‘ என்று கூறினார்கள். பிறகு,‘(மார்க்க விஷயத்தில் மக்களிடம்) எளிதாக நடந்து கொள்ளுங்கள். (மக்களைச்) சிரமப்படுத்தாதீர்கள். நற்செய்தி (களை அதிகம்) கூறுங்கள். (எச்சரிக்கை செய்யும்போது கூட) வெறுப்பேற்றி விடாதீர்கள்‘‘ என்று (அறிவுரை) கூறினார்கள். அவர்கள் இருவரும் தத்தம் பணி(இடங்களு)க்குச் சென்றனர். அவர்கள் தத்தம் (எல்லைக்கு உட்பட்ட) பகுதியில் சென்று கொண்டிருக்கும்போது, தம் சகாவின் (பகுதிக்கு) அருகில் வந்துவிட்டால் (அவருடன்) தம் சந்திப்பைப் புதுப்பித்துக் கொண்டு சகாவுக்கு சலாம் கூறுவார். ஒருமுறை முஆத்(ரலி) தம் பகுதிக்குள் சென்று கொண்டிருந்தபோது தம் சகாவான அபூ மூஸா(ரலி) அவர்களின் (பகுதிக்கு) அருகே வந்துவிட, தம் கோவேறுக் கழுதையின் மீது பயணித்தபடி அவர்களிடம் சென்று சேர்ந்தார். அப்போது அபூ மூஸா(ரலி), தம்மிடம் மக்கள் ஒன்று கூடியிருக்க (தம் அவையில்) அமர்ந்திருந்தார்கள். அப்போது அவர்களிடம், தம் இருகைகளும் தம் கழுத்துடனும் சேர்த்துக் கட்டப்பட்டிருந்த ஒருவர் நின்றிருந்தார். முஆத்(ரலி), அபூ மூஸா(ரலி) அவர்களிடம்,‘அப்துல்லாஹ் இப்னு கைஸ் அவர்களே! என்ன இது?’ என்று கேட்டார்கள். அதற்கு அபூ மூஸா(ரலி),‘இவன் இஸ்லாத்தை ஏற்ற பின் அதை நிராகரித்துவிட்டவன்‘‘ என்று பதிலளித்தார்கள்.

முஆத்(ரலி),‘இவன் கொல்லப்படும் வரை நான் (என் வாகனத்திலிருந்து) இறங்க மாட்டேன்‘‘ என்றார்கள். அபூ மூஸா(ரலி),‘இவன் கொண்டு வரப்பட்டிருப்பதே அதற்காகத் தான். எனவே, நீங்கள் இறங்குங்கள்‘‘ என்று கூறினார்கள். அதற்கு முஆத்,‘இவன் கொல்லப்படும் வரை நான் (வாகனத்திலிருந்து) இறங்க மாட்டேன்‘‘ என்று (மீண்டும்) கூறினார்கள். உடனே அபூ மூஸா(ரலி) அவனைக் கொல்லும் படி உத்தரவிட, அவ்வாறே அவன் கொல்லப்பட்டான். பிறகு, முஆத் (தம் வாகனத்திலிருந்து) இறங்கி,‘அப்துல்லாஹ்வே! நீங்கள் குர்ஆனை எப்படி ஓதுகிறீர்கள்?’ என்று கேட்டார்கள். அபூ மூஸா(ரலி),‘(இரவு, பகல் நேரங்களில்) அடிக்கடி ஓதிவருகிறேன்‘‘ என்று பதிலளித்தார்கள். பிறகு அவர்கள்,‘முஆதே! நீங்கள் எப்படி அதை ஓதுகீறீர்கள்?’ என்று கேட்க, முஆத்(ரலி),‘இரவின் முற்பகுதியில் நான் உறங்கி விடுகிறேன். உறக்கத்தில் என் பங்கை முடித்து எழுகிறேன். பிறகு, அல்லாஹ் எனக்கு விதித்துள்ள அளவு ஓதுகிறேன். எனவே, நான் எழு(ந்து வணக்கம் புரிவ)தற்கு இறைவனிடம் பிரதிபலனை எதிர்பார்ப்பதைப் போன்றே என் உறக்கத்திற்கும் எதிர்பார்க்கிறேன்‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4343. அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் என்னை யமன் நாட்டுக்கு அனுப்பி வைத்தார்கள். அப்போது அங்கு தயாரிக்கப்படும் பானங்கள் குறித்து (அவற்றின் சட்டம் என்ன என்று) நான் அவர்களிடம் விசாரித்தேன். அதற்கு அவர்கள்’அவை யாவை?’ என்று கேட்டார்கள். நான்’அல்பித்உ, அல் மிஸ்ர்’

என்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'போதை தரக்கூடிய ஒவ்வொன்றும் ஹராம் (விலக்கப்பட்டது) ஆகும்'' என்று பதிலளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஸயீத் இப்னு அபீ புர்தா(ரஹ்) கூறினார்:

நான் இதை எனக்கு அறிவித்த (என் தந்தை) அபூ புர்தா(ரஹ்) அவர்களிடம்,'பித் உ' என்றால் என்ன?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'பித் உ' என்பது தேனில் தயாரிக்கப்படும் பானம்,'மிஸ்ர்' என்பது வாற்கோதுமையில் தயாரிக்கப்படும் பானம்'' என்று பதிலளித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 4344 - ஹதீஸ் 4345 அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் என்னையும் முஆத்(ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பினார்கள். அப்போது,'(மார்க்க விஷயங்களில் மக்களிடம்) எளிதாக நடந்து கொள்ளுங்கள். (மக்களைச்) சிரமப்படுத்தாதீர்கள். நற்செய்தி(களை அதிகம்) கூறுங்கள். (எச்சரிக்கை செய்யும்போது கூட) வெறுப்பூட்டி விடாதீர்கள். (தீர்ப்பளிக்கும் போது) ஒத்த கருத்துடன் நடந்து கொள்ளுங்கள். (வேறுபட்டு விடாதீர்கள்)'' என்று (அறிவுரை) கூறினார்கள். நான்,'இறைத்தூதர் அவர்களே! எங்கள் (தாயகமான யமன்) நாட்டில் வாற்கோதுமையில் தயாரித்த ஒருவகை பானமான மிஸ்ரும், தேனில் தயாரித்த ஒருவகை பானமான'பித்உ'வும் உள்ளனவே (அவற்றுக்கான சட்டம் என்ன?)'' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், போதை தரக்கூடிய ஒவ்வொன்றும் விலக்கப்பட்டதாகும்'' என்று பதிலளித்தார்கள். பின்பு, நாங்கள் இருவரும் (எங்கள் பணிக்குச்) சென்றுவிட்டோம். (பின்னர் ஒரு முறை சந்தித்த போது) முஆத், என்னிடம்,'நீங்கள் குர்ஆனை எப்படி ஓதுகிறீர்கள்?' என்று கேட்டார். நான்,'நின்ற நிலையிலும் அமர்ந்த நிலையிலும் வாகனத்தின் மீதிருந்தபடியும் அடிக்கடி ஓதுகிறேன்'' என்று பதிலளித்தேன். முஆத்,'நானோ உறங்குவேன் எழுந்திருப்பேன். நான் எழு(ந்து வணக்கம் புரி)வதற்கு (இறைவனிடம்) பிரதிபலன் எதிர்பார்ப்பது போன்றே என் உறக்கத்திற்காகவும் எதிர்பார்க்கிறேன்'' என்று கூறினார். பிறகு முடியாலான கூடாரமொன்றை அமைத்துக் கொண்டார். பிறகு நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் (அடிக்கடி) சந்திக்கலானோம். முஆத் என்னைச் சந்தித்தபோது என்னிடம் ஒருவர் கட்டிவைக்கப்பட்டிருந்தார். (அதைக் கண்ட) முஆத்(ரலி)'என்ன இது?' என்று கேட்டார். நான்,'இவன் இஸ்லாத்தை ஏற்று, பிறகு மதம் மாறிவிட்ட ஒரு யூதன்'' என்று பதிலளித்தேன். முஆத்,'இவனுடைய கழுத்தை நான் துண்டிப்பேன்'' என்றார்.

இதே ஹதீஸ் வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4346. அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்கள், என் சமுதாயத்தாரின் (யமன்) நாட்டிற்கு அனுப்பி வைத்தார்கள். பின்னர், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அப்தஹ்' பள்ளத்தாக்கில் தங்கியிருந்தபோது அவர்களிடம் நான் சென்றேன். அவர்கள்,'அப்துல்லாஹ் இப்னு கைஸே! நீங்கள் ஹஜ் செய்ய நாடினீர்களா?' என்று கேட்டார்கள். நான்,'ஆம், இறைத்தூதர் அவர்களே!"என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,'நீங்கள் (இஹ்ராமின் போது) என்ன சொன்னீர்கள்?' என்று கேட்டார்கள். நான்,'தாங்கள் இஹ்ராம் அணிந்ததைப் போன்றே நானும் இஹ்ராம் அணிகிறேன்' என்று சொன்னேன்'' என்று பதிலளித்தேன். அவர்கள்,'உங்களுடன் தியாகப் பிராணியை நீங்கள் கொண்டு வந்தீர்களா?' என்று கேட்டார்கள். நான்,'கொண்டு வரவில்லை'' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், இறையில்லமான கஅபாவை வலம் வாருங்கள் ஸஃபாவுக்கும் மர்வாவுக்கமிடைய

தொங்கோட்டம் ஓடுங்கள் பிறகு, இஹ்ராமிலிருந்து விடுபட்டு (ஹலாலாம்) விடுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே செய்தேன். இறுதியில் கைஸ் குலத்துப் பெண்களில் ஒருத்தி எனக்குத்தலைவாரினாள். இவ்வாறே, உமர்(ரலி) கலீஃபாவாக ஆக்கப்படும் வரை நாங்கள் செயல்பட்டு வந்தோம்.

ஹதீஸ் 4347. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் யமன் நாட்டுக்கு அனுப்பியபோது கூறினார்கள்.

நீங்கள் வேதக்காரர்களில் ஒரு சமூகத்தாரிடம் செல்லப் போகிறீர்கள். அவர்களிடம் நீங்கள் செல்லும்போது,'வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும், முஹம்மத்(ஸல்) அவர்கள் இறைத்தூதர்என்றும் சாட்சியம் பகருமபடி அவர்களை அழையுங்கள். இதில் அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்படிந்தால், அல்லாஹ் அவர்களின் மீது ஒவ்வொரு நாளும் ஐந்து தொழுகைகளைக் கடமையாக்கஸயள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவியுங்கள். இதிலும் அவர்கள் உங்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்தால், அவர்களில் செல்வந்தர்களாயிருப்பவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டு அவர்களில் ஏழைகாளாயிருப்பவர்களிடையே பங்கிடப்பட வேண்டிய ஸகாத்தை அல்லாஹ் அவர்கள மீது கடமையாக்கியுள்ளான் என்று அவர்களுக்குத் தெரிவியுங்கள். இதிலும் அவர்கள உங்களுக்கக் கீழ்ப்படிந்து நடந்தால், அவர்களின் செல்வங்களில் உயர்ந்தவற்றை எடுத்துக் கொள்ள வேண்டாமென உங்களை எச்சரிக்கிறேன். அநீதிக்குள்ளானவரின் பிரார்த்தனைக்கு அஞ்சுங்கள். ஏனெனில், அதற்கும் அல்லாஹ்வுக்குமிடையே திரையேதுமில்லை.

ஹதீஸ் 4348. அம்ர் இப்னு மைமூன்(ரஹ்) அறிவித்தார்

முஆத்(ரலி) யமன் நாட்டிற்கு வந்தபோது மக்களுக்கு சுப்ஹுத் தொழுகை தொழுகை நடத்தினார்கள். அப்போது,'அல்லாஹ், (தன் தூதர்) இப்ராஹீம் அவர்களை உற்ற நண்பராக ஆக்கிக் கொண்டான்'' என்னும் (திருக்குர்ஆன் 04: 125-ம்) வசனத்தை ஓதினார்கள். அப்போது கூட்டத்திலிருந்த ஒருவர்,'இப்ராஹீம்(அலை) அவர்களின் அன்னையின் கண் (மம்ழ்ச்சியால்) குளிர்ந்துவிட்டது'' என்று கூறினார்.

மற்றோர் அறிவிப்பில் உள்ளதாவது:

நபி(ஸல்) அவர்கள் முஆத்(ரலி) அவர்களை யமன் நாடடிற்கு அனுப்பினார்கள். (அங்கு சென்ற பின்) முஆத்(ரலி) சுப்ஹுத் தொழுகையில் (இமாமாக நின்று திருக்குர்ஆனின் 4-வது அத்தியாயமான) சூரத்துந் நிஸாவை ஓதினார்கள்.'அல்லாஹ் இப்ராஹீம அவக்ளை உற்ற நண்பராக ஆக்கிக் கொண்டான்'' என்னும (திருக்குர்ஆன் 04: 125-ம்) வசனத்தை முஆத்(ரலி) ஓதியபோது அவர்களுக்குப் பின்னாலிருந்த ஒருவர்,'இப்ராஹீம்(அலை) அவர்களின் அன்னையின் கண் (மகிழ்ச்சியால்) குளிர்ந்துவிட்டது'' என்று கூறினார்.

## அலீ இப்னு அபீ தாலிப், காலித் இப்னு வலீத்(ரலி) ஆகிய இருவரும் ஹஜ்ஜத்துல் வதா'வுக்கு முன்பாக யமன் நாட்டிற்கு அனுப்பப்படுதல்.

ஹதீஸ் 4349. பராஉ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களுடன் யமன் நாட்டிற்கு எங்களை அனுப்பினார்கள். அதன் பிறகு, நபி(ஸல்) அவர்கள் காலித் இப்னு வலீதின்இடத்தில் அலீ(ரலி) அவர்களை அனுப்பினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அலீயே! காலிதின் சகாக்களில்'உங்களைத் தொடர்ந்து (யமன் நாட்டுக்கு) வரவிரும்புவர் தொடர்ந்து வரட்டும்!

(மதீனாவை முன்னோக்கிச் செல்ல) விரும்புபவர் முன்னோக்கிச் செல்லட்டும்!' என்று அவர்களுக்கு உத்தரவிடுங்கள்'' என்று கூறினார்கள். நான் அலீ(ரலி) அவர்களைத் தொடர்ந்து வந்தவர்களில் ஒருவனாயிருந்தேன். போர்ச் செல்வமாக, பெரும் எண்ணிக்கையில்'ஊக்கியா'க்களை நான் பெற்றேன்.

ஹதீஸ் 4350. புரைதா இப்னு ஹுஸைப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களிடம்'குமுஸ்' நிதியைப் பெற்றுவர அலீ(ரலி) அவர்களை அனுப்பினார்கள். அலீ(ரலி) (போர்ச் செல்வத்தில் தமக்கென அடிமைப் பெண்ணை எடுத்துக் கொண்ட பின்) குளித்துவிட்டு வந்தார்கள். அவர்கள் முது நான் கோபமடைந்து, காலிதிடம்,'இவரை நீங்கள் பார்க்கமாட்டீர்களா?' என்று கேட்டேன். நாங்கள் நபி(ஸல்) அவக்ளிடம் சென்றபோது, நான்அ வர்களிடம் அதைச் சொன்னனே். அதற்கு அவர்கள்,'புரைதாவே! நீ அலீ மீது கோபமடைந்து இருக்கிறாயா?' என்று கேட்க நான்,'ஆம்!"என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள்,'அவரின் மீது நீ கோபம் கொள்ளாதே! ஏனெனில், அவருக்கு'குமுஸ்' நிதியில் அதை விட அதிக உரிமையுள்ளது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4351. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

அலீ(ரலி) கருவேல இலையால் பதனிடப்பட்ட தோல்பை ஒன்றில், மண் அகற்றப்பட்டிராத சிறிய தங்கக் கட்டி ஒன்றை யமனிலிருந்து நபி(ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். அதை நபி(ஸல்) அவர்கள் நால்வரிடையே பங்கிட்டுவிட்டார்கள்: உயைனா இப்னு பத்ர்(ரலி), அக்ரஉ இப்னு ஹாபிஸ்(ரலி), ஸைத் அல் கைல்(ரலி) நான்காவது நபர் அல்கமா(ரலி) அல்லது ஆமிர் இப்னு துஃபைல்(ரலி) அப்போது நபித்தோழர்களில் ஒருவர்,'இதைப் பெறுவதற்கு இவர்களை விடத் தகுதி வாய்ந்தவர்கள் நாம் தாம்'' என்று கூறினார். இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், நான் வானத்திலுள்ளவனின் நம்பிக்கைக்குரியவனாயிருக்க, என் மீது நீங்கள் நம்பிக்கை வைக்க மாட்டீர்களா? காலையிலும் மாலையிலும் எனக்கு வானத்தின் செய்திகள் வந்த வண்ணமுள்ளன'' என்று கூறினார்கள். அப்போது கண்கள் பஞ்சடைந்த, கன்னங்கள் தடித்திருந்த, நெற்றி உயர்ந்திருந்த, அடர்த்தியான தாடி கொண்ட, தலைமுடி மழிக்கப் பட்டிருந்த, கீழாடையை வரிந்து கட்டியிருந்த மனிதர் ஒருவர் எழுந்து,'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்'' என்று கூறனிார். உடனே நபி(ஸல்) அவர்கள்,'உனக்குக் கேடு தான். பூமியிலிருப்பவர்களில் அல்லாஹ்வை அஞ்சுவதற்கு நானல்லவா மிகவும் அருகதை வாய்ந்தவன்?' என்று கேட்டார்கள். பிறகு அந்த மனிதர் திருமபிச் சென்றார். அப்போது காலித் இப்னு வலீத்(ரலி),'இறைத்தூதர் அவர்களே! நான் அவரின் தலையைக் கொய்து விடட்டுமா?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'(அவரைக் கொல்ல) வேண்டாம். அவர் தொழக்கூடியவராக இருக்கலாம்'' என்று கூறினார்கள். அதற்கு காலித்(ரலி),'எத்தனையோ தொழுகையாளிகள் தம் இதயத்தில் இல்லாததை நாவில் மொழிகிறார்கள்'' என்றார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மக்களின் இதயங்களைத் துளையிட்டுப் பார்க்கவோ அவர்களின் வயிறுகளைக் கிழித்துப் பார்க்கவோ எனக்கு உத்தரவிடப்படவில்லை'' என்று கூறிவிட்டு, திரும்பிச் சென்று கொண்டிருந்த அந்த மனிதரைப் பார்த்தார்கள். மேலும், கூறினார்கள்'இந்த மனிதரின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தினர் தோன்றுவர். அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தை நிறைய ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது. அவர்கள், வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (அதன் மீது எய்யப்பட்ட) அம்பு வெளியேறி விடுவதைப் போல்

மார்க்கத்திலிருந்து வெளியேறி விடுவார்கள். நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால்'ஆது' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நிச்சயம் அழித்து விடுவேன்.

ஹதீஸ் 4352. ஜாபிர் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களுக்கு, (அவர்கள் யமன் நாட்டிலிருந்து ஹஜ் செய்ய தியாகப் பிராணியுடன் வந்த போது) தம் இஹ்ராமிலேயே நீடித்திருக்கும்படி உத்தரவிட்டார்கள். அலீ (ரலி) யமன் நாட்டின் நிர்வாகியாக இருக்கும் நிலையிலேயே வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் அவரிடம், 'அலீஸே! எதற்காக நீங்கள் இஹ்ராம் அணிந்தீர்கள்'' என்று கேட்டார்கள். அலீ அவர்கள், 'நபி (ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்தார்களோ அதற்காகவே நானும் இஹ்ராம் அணிந்துள்ளேன்'' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், 'நீங்கள் இஹ்ராமிலேயே நீடித்து (ஹஜ்ஜையும் உம்ராவையும் முடித்த பின்) குர்பானி கொடுங்கள்'' என்று கூறினார்கள். அலீ (ரலி) நபி (ஸல்) அவர்களுக்காக ஒரு தியாகப் பிராணியை குர்பானி கொடுத்தார்கள். 384

ஹதீஸ் 4353 ஹதீஸ் 4354 அனஸ் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காகவும் உம்ராவுக்காகவும் (சேர்த்து ஒரே) இஹ்ராம் அணிந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்கு நிய்யத் செய்தபோது நாங்களும் அவர்களுடன் ஹஜ்ஜுக்கு நிய்யத் செய்தோம். நாங்கள் மக்காவுக்கு வந்தபோது நபி (ஸல்) அவர்கள், 'எவருடன் தியாகப் பிராணி இல்லையோ அவர் தம் ஹஜ்ஜை உம்ராவாக ஆக்கி (நிய்யத் செய்து ஹஜ்ஜைப் பிறகு செய்து) கொள்ளட்டும்'' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்களுடன் தியாகப் பிராணி இருந்தது. அப்போது எங்களிடம் அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) ஹஜ்செய்ய நாடியவண்ணம் யமனிலிருந்து வர, நபி (ஸல்) அவர்கள், 'எதற்காக இஹ்ராம் அணிந்தீர்கள்? ஏனெனில், உங்கள் மனைவி(யும் என் மகளுமான ஃபாத்திமா (ரலி) நம்முடன் தான் இருக்கிறார்'' என்று கேட்டார்கள். அலீ (ரலி), 'நபி (ஸல்) அவர்கள் எதற்காக இஹ்ராம் அணிந்தார்களோ அதற்காகவே நானும் இஹ்ராம் அணிந்துள்ளேன்'' என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், 'உங்கள் இஹ்ராமிலேயே நீடித்திருங்கள். ஏனெனில், நம்முடன் தியாகப் பிராணி உள்ளது'' என்று கூறினார்கள்.

## 'துல் கலஸா போர்.

ஹதீஸ் 4355. ஜரீர் இப்னு அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) கூறினார்

அறியாமைக் காலத்தில்'துல் கலஸா''என்றழைக்கப்பட்டு வந்த (இணைவைப்போரின்) ஆலயம் ஒன்று இருந்தது. அது'யமன் நாட்டு கஅபா' என்றும்'ஷாம் நாட்டு (திசையை நோக்கி வாசல் அமைந்த) கஅபா' என்றும் அழைக்கப்பட்டு வந்தது. எனவே, என்னிடம் நபி (ஸல்) அவர்கள், 'என்னை துல் கலஸாவி(ன் கவலையி)லிருந்து நீங்கள் விடுவிக்க மாட்டீர்களா?' என்று கேட்டார்கள். உடனே நான் நூற்றைம்பது (குதிரை) சவாரி செய்யும் வீரர்களுடன் புறப்பட்டு விரைந்து சென்றேன். அதை நாங்கள் உடைத்துப் போட்டுவிட்டு, அங்கு நாங்கள் உடைத்துப் போட்டுவிட்டு, அங்கு நாங்கள் கண்டவர்களைக் கொன்று விட்டோம். பிறகு நான் நபி (ஸல்) அவக்ாளிடம் சென்று அவர்களுக்கு (விபரம்) தெரிவித்தேன். அவர்கள் எங்களுக்காகவும் (இந்த நடவடிக்கையில் பங்கு பெற்ற)'அஹ்மஸ்' குலத்தாருக்காகவும் (நலம் நாடிப்) பிரார்த்தனை புரிந்தார்கள்.

ஹதீஸ் 4356. ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் என்னிடம், 'துல் கலஸாவி(ன் காலையி)லிருந்து என்னை நீங்கள் விடுவிக்க மாட்டீர்களா?' என்று கேட்டார்கள். அது'கஸ்அம்' குலத்தாரின் ஓர் ஆலயமாக இருந்தது.

அது'யமன்' நாட்டு கஅபா' என்று அழைக்கப்பட்டு வந்தது. அப்போது நான்'அஹ்மஸ்' குலத்தைச் சேர்ந்த நூற்றைம்பது குதிரை வீரர்களுடன் சென்றேன். 'அஹ்மஸ்' குலத்தார் சிறந்த குதிரை வீரர்களாக இருந்தனர். என்னால் குதிரையில் சரியாக உட்கார முடியவில்லை. எனவே, நபி(ஸல்) அவர்கள், தம் விரல்கள் பதிந்துள்ள அடையாளத்தை என் நெஞ்சில் நான் காணும் அளவிற்கு அதில் அடித்து, 'இறைவா! இவரை உறுதிப்படுத்து! இவரை நேர்வழி காட்டுபவராகவும் நேர்வழி செலுத்தப்பட்டவராகவும் ஆக்கு'' என்று பிரார்த்தித்தார்கள். உடனே, நான் அங்கு சென்று அதை உடைத்து எரித்து விட்டேன். பிறகு, அல்லாஹ்வின் தூதரிடம் (தூதுவர் ஒருவரை) அனுப்பினேன். அவர், 'தங்களை சத்திய(மார்க்கத்)துடன் அனுப்பியவன் மீது சத்தியமாக! அந்த ஆலயத்தை சிரங்கு படித்த ஒட்டகம் போன்ற நிலயில்விட்டுவிட்டுத் தான் நான் உங்களிடம் வந்துள்ளேன்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், '(இறைவா!)'அஹ்மஸ்' குலத்தாரின் குதிரைகளிலும் அதன் மக்களிலும் வளர்ச்சியை அருள்வாயாக!"என்று ஐந்து முறை பிரார்த்தித்தார்கள். 387

ஹதீஸ் 4357. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

"துல் கலஸாவி(ன் கவலையி)லிருந்து என்னை நீங்கள் விடுவிக்கமாட்டீர்களா?' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் கேட்டார்கள். நான், 'சரி (விடுவிக்கிறேன்)'' என்று சொன்னேன். அவ்வாறே, 'அஹ்மஸ்' குலத்தைச் சேர்ந்த நூற்றைம்பது குதிரை வீரர்களுடன் (துல் கலஸாவை நோக்கிப்) புறப்பட்டேன். 'அஹ்மஸ்' குலத்தார் சிறந்த குதிரை வீரர்களாக இருந்தார்கள். என்னால் குதிரையின் மீது சரியாக அமர முடியவில்லை. அதை நான் நபி(ஸல்) அவக்ாளிடம் சொன்னே. அவர்கள் தங்களின் கையை என் நெஞ்சின் மீது அடித்தார்கள். எந்த அளவிற்கென்றால், அவர்களின் கையின் அடையாளத்தை நெஞ்சில் பார்த்தேன். அப்போது அவர்கள், 'இறைவா! இவரை உறுதிப்படுத்து. இவரை நேர்வழி காட்டுபவராகவும், நேர்வழியில் செலுத்தப்பட்டவராகவும் ஆக்குவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள். அதன் பிறகு நான் (ஒருபோதும்) எந்த குதிரையிலிருந்தும் விழுந்ததில்லை. 'துல் கலஸா' என்பது யமன் நாட்டிலிருந்த'கஸ்அம்' மற்றும்'பஜீலா' குலத்தாரின் ஆலயமாகும். அதில், வணங்கப்பட்டு வந்த பலிபீடங்கள் இருந்தன. அது'அல்கஅபா' என்று அழைக்கப்பட்டு வந்தது. நான் அங்கு சென்று அதைத் தீயிட்டுக் கொளுத்தி உடைத்து விடேன். நான் யமன் நாட்டுக்குச் சென்றபோது அங்கு அம்புகளை வைத்துக குறிகேட்கிற மனிதர் ஒருவர் இருந்தார். அப்போது அவரிடம், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இங்கே (அருகில் தான்) இருக்கிறார்கள். அவர்களிடம் நீ சிக்கிக் கெண்டால் உன் கழுத்தைத் துண்டித்து விடுவார்கள்'' என்று கூறப்பட்டது. அந்த மனிதர் அந்தஅ கிபுகளை எறிந்து கொண்டிருந்தபோது நான் அவரருகே சென்று நின்றேன். நான் நிச்சயம் இந்த ஆலயத்தை உடைக்கப் போகிறேன். 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று நீ சாட்சியம் சொல். அல்லது நான் உன் கழுத்தை வெட்டிவிடுவேன்' என்று சொன்னேன். பிறகு நான் அதை உடைத்து விட்டேன். அந்த மனிதரும்'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று சாட்சியம் கூறினார். பிறகு'அஹ்மஸ்' குலத்தவரில்'அபூ அர்தாத்' என்னும் குறிப்புப் பெயர் கொண்ட ஒரு மனிதரை, 'நபி(ஸல்) அவர்களிடம் இந்த நற்செய்தியைத் தெரிவிக்க அனுப்பிவைத்தேன். அவர் நபி(ஸல்) அவர்களிடம் சென்றபோது, 'இறைத்தூதர் அவர்களே! உங்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! அதை சிரங்கு பிடித்த ஒட்டகத்தைப் போன்றே (ஆக்கி)விட்டு வந்துள்ளேன்'' என்று கூறினார். உடனே, நபி(ஸல்) அவர்கள் (இந்த நடவடிக்கையில் ஈடுபட்ட)'அஹ்மஸ்' குலத்தாருக்கும் அவர்களின் குதிரைகளுக்கும் வளர்ச்சியை அளிக்கும்படி ஐந்து முறை (அல்லாஹ்விடம்) பிரார்த்தித்தார்கள்.

## ‘தாத்துஸ் ஸலாஸில் போர்

இதுவே’லக்கி’ மற்றும்’ஜுதாம்’ போர் ஆகும். இதை இஸ்மாயீல் இப்னு அபீ காலித்(ரஹ்) கூறினார்.

“(தாத்துஸ் ஸாலிஸ் என்பது) பனு பலீ, பனு உத்ரா, பனுல் கைன் ஆகிய குலங்களின் ஊராகும்‘‘ என்று இப்னு இஸ்ஹாக்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4358. அம்ர் இன்னு ஆஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்’தாத்துஸ் ஸலாஸில்’ (போருக்குச் சென்ற) படைக்கு என்னை(த் தளபதியாக்கி) அனுப்பினார்கள். (நான் திரும்பி வந்தவுடன்) நபி(ஸல்) அவர்களிடம் சென்று,‘மனிதர்களில் தங்களுக்கு மிகவும் பிரியமானவர் யார்?’ என்ற கேட்டேன். அவர்கள்,‘ஆயிஷா‘‘ என்று பதிலளித்தார்கள். நான்,‘ஆண்களில் உங்களுக்கு மிகவும் பிரியமானவர் யார்?’ என்று கேட்டேன். அவர்கள்,‘அபூ பக்ர்(ரலி)‘‘ என்று பதிலளித்தார்கள். நான்,‘பிறகு யார்?’ என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,‘உமர்‘‘ என்று பதிலளித்தார்கள். இன்னும் பலரையும் கணித்து (அவர்களெல்லாம் தமக்கு மிகவும் பிரியமானவர்கள் என்று) கூறினார்கள்.’தமக்கு பிரியமானவர்களின் பட்டியலில் என்னைக் கடைசிய ஆளாக ஆக்கி விடுவார்களோ’ என்று அஞ்சியபடி நான் மௌனமாயிருந்து விட்டேன்.

## ஜரீர்(ரலி) யமன் நாட்டிற்குச் சென்றது.

ஹதீஸ் 4359. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நான் யமன் நாட்டில் இருந்தேன். அப்போது யமன் வாசிகளில்’தூ கலாஉ’ மற்றும்’தூ அம்ர்’ ஆகிய இருவரை சந்தித்தேன். அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றிப் பேசலானேன். அப்போது’தூ அம்ர்’ என்னிடம்,‘நீங்கள் சொல்லும் உங்கள் தோழரின் செய்தி உண்மையெனில் அவர் இறந்து போய் மூன்று நாள்கள் கடந்துவிட்டன என்பதை உங்களுக்குத் தெரிவிக்கிறேன்‘‘ என்றார். அவர்கள் இருவரும் என்னுடன் வந்தார்கள். நாங்கள் இன்னும் பயணத்திலேயே இருந்து கொண்டிருக்கும்போது மதீனாவின் திசையிலிருந்து ஒரு பயணக் கூட்டம் வந்து கொண்டிருப்பது தென்பட்டது. நாங்கள் அவர்களிடம் விசாரித்தோம். அவர்கள்,‘இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள். அபூ பக்ர் கலீஃபாவாக (ஆட்சியாளராக) ஆக்கப்பட்டுவிட்டார்கள். மக்கள் அனைவரும் நல்லவர்களாக உள்ளனர்‘‘ என்று பதிலளித்தனர். உடனே, தூ கலாஉ மற்றும் தூ அம்ர் இருவரும,‘நாங்கள் இருவரும் வந்திருந்தோம். (எனினும், இப்போது திரும்பிச் செல்கிறோம்.) இறைவன் நாடினால் (அவரிடம்) திரும்பி வருவோம்‘‘ என்று உங்கள் தோழரிடம் (அபூ பக்ரிடம்) சொல்லுங்கள்‘‘ என்று கேட்டுக் கொண்டார்கள். பிறகு யமன் நாட்டிற்குத் திரும்பிச் சென்றார்கள். நான் அபூ பக்ர் அவர்களிடம் யமன் வாசிகளின் செய்தியைத் தெரிவித்தேன். அபூ பக்ர் அவர்கள்,‘அவர்களை (என்னிடம்) நீங்கள் கொண்டு வந்திருக்கக் கூடாதா?’ என்று கேட்டார்கள். பிறகு (என்னைச் சந்திக்கும்) ஒரு சந்தர்ப்பம் வந்தபோது தூ அம்ர்,‘ஜரீரே! நீங்கள் எனக்கு உபகாரம் செய்திருக்கிறீர்கள். எனவே, நான் உங்களுக்கு ஒரு செய்தியைத் தெரிவிக்கிறேன். அரபு மக்களாகிய நீங்கள், தலைவர் ஒருவர் இறந்துவிட்டால், (உங்களுக்குள் ஒருவரையொருவர் கலந்தாலோசித்து) வேறொருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வரை நன்மையில் இருப்பீர்கள். (ஆட்சித் தலைமை) வாள் பலத்தால் உருவாவதாயிருந்தால், ஆட்சித் தலைவர்களாக வருபவர்கள் மன்னர்களாக இருப்பார்கள். அவர்கள் மன்னர்கள் கோபப்படுவதைப் போன்றே (சொந்த நலன்களுக்காகக்) கோபப்பட்டு, மன்னர்கள் திருப்தியடைவதைப் போன்றே (சொந்த நலன்களுக்காகத்) திருப்தியடைவார்கள்.

## ‘சீஃபுல் பஹ்ர் (கடற்கரையோரப்) போர்.

நபித்தோழர்களின் ஒரு படை குறைஷிகளின் வணிகக்குழு ஒன்றை (இடைமறிக்கத் தருணம் எதிர்பார்த்துக்) காத்துக் கொண்டிருந்தது. அப்போது அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரலி), அப்படையினருக்கு தளபதியாக இருந்தார்கள்.

ஹதீஸ் 4360. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கடற்கரையை நோக்கி ஒரு படையை அனுப்பினார்கள். அப்படையினருக்கு அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரலி) அவர்களைத் தளபதியாக்கினார்கள். அவர்கள் (மொத்தம்) முன்னூறு பேராக இருந்தனர். (அதில் நானும் கலந்து கொள்ள) நாங்கள் புறப்பட்டோம். சிறிது தொலைவு சென்றபின், வழியில் எங்கள் பயண உணவு தீர்ந்து போய்விட்டது. எனவே, அபூ உபைதா (ரலி) படையினரின் பயண உணவுகளை ஒன்று திரட்டும்படிக் கட்டளையிட, அவை ஒன்று சேகரிக்கப்பட்டன. அவை இரண்டு பைகள் நிறையப் பேரீச்சம் பழங்களாய் இருந்தன. அபூ உபைதா அவர்கள் அது தீரும் வரை (அதிலிருந்து) எங்களுக்கு ஒவ்வொரு நாளும் சிறிது சிறிதாக உண்ணக் கொடுத்தார்கள். எனவே, எங்களுக்கு ஒவ்வொரு பேரீச்சம்பழம் தான் (ஒவ்வொரு தினமும்) கிடைத்து வந்தது.

அறிவிப்பாளர்களில் ஒருவரான வஹ்ப் இப்னு கைஸான் (ரஹ்) கூறினார்:

நான் (ஜாபிர் - ரலி - அவர்களிடம்), '(ஒரு நாள் முழுவதற்கும்) ஒரு பேரீச்சம் பழம் உங்களுக்குப் போதாதே" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அதுவும் தீர்ந்து போன போதுதான் அதன் அருமையை நாங்கள் உணர்ந்தோம். இறுதியில், நாங்கள் கடலை வந்தடைந்தபோது சிறிய மலை போன்ற (திமிங்கில வகை) மீன் ஒன்றைக் கண்டோம். படை வீரர்கள் பதினெட்டு நாள்கள் அதிலிருந்து உண்டார்கள். பிறகு அபூ உபைதா (ரலி) அதன் விலா எலும்புகளில் இரண்டை (பூமியில்) நட்டுவைக்கும்படி உத்தரவிட, அவ்வாறே அவை நட்டுவைக்கப்பட்டன. பிறகு தம் வாகனத்தைச் செலுத்தும் படி அவர்கள் உத்தரவிட, அவ்வாறே செலுத்தப்பட்டது. அவ்விரு விலா எலும்புகளின் கீழே அவ்வாகனம் சென்றதுு எனினும், அவ்விரண்டையும் தொடாமலேயே அது (அவற்றுக்கிடையே புகுந்து வெளியே) சென்றவிட்டது.

ஹதீஸ் 4361. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவக்ள் எங்களில் குதிரைப்படை வீரர்களான முந்நூறு பேரை (ஒரு புனிதப் போருக்கு) அனுப்பினார்கள். அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் (ரலி) எங்கள் தலைவராக இருந்தார்கள். நாங்கள் குறைஷிகளின் வணிகக் குழுவை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். எனவே, நாங்கள் கடற்கரையோரமாக அரை மாதம் தங்கினோம். எங்களைக் கடுமையான பசி பீடிக்க, கருவேல மரத்தின் இலையை நாங்கள் புசித்தோம். எனவே, அந்தப் படைப் பிரிவு'கருவேல இலைப்படைப் பிரிவு' என்று பெயர் சூட்டப்பட்டது. கடல் எங்களக்காக'அல் அம்பர்' எனப்படும் (ஒரு வகை மீன் இனப்) பிராணியை (கரையில்) போட்டது. நாங்கள் அதிலிருந்து அரை மாதம் உண்டோம். அதன் கொழுப்பிலிருந்து எண்ணெய் எடுத்துக் கொண்டோம். அதனால் எங்கள் (வலிமையான) உடல்கள் எங்களுக்கு திரும்பக் கிடைத்துவிட்டன. அபூ உபைதா (ரலி) அந்த (பெரிய) மீனின் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து அதை (பூமியில்) நட்டுவிட்டுத் தம்முடனிருந்த மிக உயரமான மனிதரிடம் சென்றார்கள். (அவரை அந்த விலா எலும்பின் கீழே நடந்து செல்லும்படி கேட்டுக் கொண்டார்கள்.)

மற்றோர் அறிவிப்பில்'ஒரு மனிதரையும் ஓர் ஒட்டகத்தையும் அழைத்துக் கொண்டு அந்த எலும்பு(க் கூடடுக்)க்குக் கீழே நடந்து சென்றார்கள்" என்று இடம் பெற்றுள்ளது.

ஜாபிர் (ரலி) கூறினார்:

அந்தப் படையினரில் ஒருவர் மூன்று ஒட்டகங்களை அறுத்தார். பிறகு மூன்று ஒட்டகங்களையும் மீண்டும் மூன்று ஒட்டகங்களையும் அறுத்தார். பிறகு அபூ உபைதா(ரலி),'(இனி அறுக்க வேண்டாம்'' என்று) அவரைத் தடுத்துவிட்டார்கள்.

அபூ ஸாலிஹ்(ரஹ்) அறிவித்தார்.

கைஸ் இப்னு ஸஅத்(ரலி), (போரிலிருந்து திரும்பிய பின் தம் தந்தை ஸஅத் இப்னு உபாதா - ரலி அவர்களிடம்)'நான் அந்தப் படையில் இருந்தேன். அப்போது மக்கள் கடும் பசிக்கு ஆளானார்கள்!"என்று கூறினார்கள். அவரின் தந்தை,'நீ அவர்களுக்காக ஒட்டகத்தை அறுத்திருக்க வேண்டும்'' என்று கூறினார். கைஸ்(ரலி),'நான் அறுக்கத் தான் செய்தேன்'' என்று சொல்லிவிட்டு,'அவர்கள் மீண்டும் பசிக்கு ஆளானார்கள்'' என்று சொல்ல, அவரின் தந்தை,'நீ அவர்களுக்காக ஒட்டகத்தை அறுத்திருக்க வேண்டும்'' என்று கூறினார். அவர்,'நான் அறுக்கத்தான் செய்தேன்'' என்று சொல்லிவிட்டு,'மீண்டும் அவர்கள் பசிக்கு ஆளானார்கள்'' என்றார். மீண்டும் அவரின் தந்தை,'நீ அவர்களுக்காக ஒட்டகத்தை அறுத்திருக்க வேண்டும்'' என்று கூறினார். உடனே அவர்,'நான் அறுக்கத் தான் செய்தேன்'' என்று சொல்லிவிட்டு'மீண்டும், அவர்கள் பசிக்கு ஆளானார்கள்'' என்று சொல்ல, அவரின் தந்தை,'நீ ஒட்டகத்தை அறுத்திருக்க வேண்டும்'' என்றார். அவர்,'(மூன்று முறைக்குப் பிறகு) நான் அறுக்க வேண்டாமெனத் தடுக்கப்பட்டு விட்டேன்'' என்று கூறினார்.

ஹதீஸ் 4362. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

நாங்கள்'கருவேல இலைப்' படைப் பிரிவில் சென்றோம். அபூ உபைதா(ரலி) எங்களுக்குத் தளபதியாக நியமிக்கப்பட்டார்கள். எங்களக்குக் கடுமையான பசி ஏற்பட்டது. அப்போது இறந்த (பெரிய) மீன் ஒன்றைக் கடல், (கரையில் கொணர்ந்து) எறிந்தது. (அதற்கு முன்) அதைப் போல் (ஒரு மீனை) நாங்கள் பார்த்ததேயில்லை. அது'அம்பர்' என்று அழைக்கப்படுகிறது. அதிலிருந்து அரை மாதம் நாங்கள் உண்டோம். அபூ உபைதா அவர்கள் அதன் (விலா) எலும்புகளில் ஒன்றை எடுத்து பூமியில் நட்டுவைக்க (அதன் கீழே) ஒருவர் வாகனத்தில் சென்றார்.

அறிவிப்பாளர்: அபுஸ் ஸுபைர்(ரஹ்) கூறினார்.

ஜாபிர்(ரலி) இவ்விதம் கூற கேட்டேன்.

அபூ உபைதா(ரலி),'உண்ணுங்கள்'' என்று கூறினார்கள். நாங்கள் மதீனாவுக்கு (திரும்பி) வந்தபோது நபி(ஸல்), அவர்களிடம் அதைச் சொன்னோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் (கடலிலிருந்து) வெளிப்படுததிய அந்த உணவை உண்ணுங்கள். (அதனால் தவறில்லை) உங்களுடன் (அதில் சிறிது) இருந்தால் நமக்கும் உண்ணக் கொடுங்கள்'' என்று கூறினார்கள். உடனே, அவர்களில் சிலர், நபி(ஸல்) அவர்களிடம் (அந்த மீனில்) ஒரு துண்டைக் கொண்டு வந்தனர். அதை நபி(ஸல்) அவர்கள் உண்டார்கள்.

## அபூ பக்ர்(ரலி) மக்களுடன் ஒன்பதாம் ஆண்டில் ஹஜ் செய்தது.

ஹதீஸ் 4363. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

'ஹஜ்ஜத்துல வதா'வுக்கு முந்திய ஹஜ்ஜின்போது அபூ பக்கர்(ரலி) அவர்களை நபி(ஸல்) அவர்கள் (ஹஜ் பயணக் குழுவுக்குத்) தலைவராக ஆக்கியிருந்தார்கள். அப்போது (துல்ஹஜ் மாதம் 10-ம் நாளான) நஹ்ருடைய நாளில் (மினாவில் வைத்து),'இந்த ஆண்டுக்குப் பிறகு இணைவைப்பவர் எவரும் ஹஜ் செய்யக் கூடாது. இறையில்லம் கஅபாவை நிர்வாணமாக எவரும் வலம் வரவும்

கூடாது‘‘ என்று பொது அறிவிப்புச் செய்யும் குழுவினரில் ஒருவனாக என்னை அபூ பக்ர்(ரலி) அனுப்பி வைத்தார்கள்.

ஹதீஸ் 4364. பராஉ(ரலி) அறிவித்தார்

முழுமையான வடிவில் அருளப்பட்ட கடைசி அத்தியாயம்,‘பராஅத்’ (என்னும் 9-வது’அத் தவ்பா‘) அத்தியாயம் ஆகும். கடைசியாக அருளப்பட்ட அத்தியாயப் பகுதி’அந்நிஸா‘வின் இறுதிப் பகுதியாகும். அந்த வசனம் வருமாறு:

(நபியே!) மக்கள் உங்களிடம்’கலாலா’ பற்றி தீர்ப்பு வழங்குமாறு கேட்கிறார்கள். நீங்கள் கூறுங்கள்: அல்லாஹ் உங்களுக்கு’கலாலா’ பற்றி இவ்வாறு தீர்ப்பளிக்கிறான்.. (திருக்குர்ஆன் 04: 176)

4-ம் பாகம் முற்றிற்று.

# பாகம் 5

## அத்தியாயம் 64 நபிகளார் காலத்துப் போர்கள் (தொடர்ச்சி)

### பனு தமீம் குலத்தாரின் தூதுக்குழு.

ஹதீஸ் 4365. இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) அறிவித்தார்

பனு தமீம் குலத்தாரில் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். நபி (ஸல்) அவர்கள், 'நற்செய்தியை ஏற்றுக் கொள்ளுங்கள், பனு தமீம் குலத்தாரே!" என்று அவர்களிடம் கூறினார்கள். அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு நற்செய்தி சொன்னீர்கள் (அது இருக்கட்டும்! தர்மம்) கொடுங்கள்'' என்று கூறினார்கள். (இவர்கள் நம் நற்செய்தியை ஏற்க மறுத்து உலகப் பொருளையே விரும்புகிறார்களே என்று) நபி (ஸல்) அவர்களின் முகத்தில் கவலை காணப்பட்டது. அப்போது யமன் நாட்டிலிருந்து (அஷ்அரீ குலத்தார்) சிலர் வந்தனர். நபி (ஸல்) அவர்கள், '(யமன் வாசிகளே!) நற்செய்தியை ஏற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில், பனு தமீம் குலத்தார் அதை ஏற்கவில்லை'' என்று கூறினார்கள். அதற்கு யமனியர், 'நாங்கள் (அதை) ஏற்றுக் கொண்டோம், இறைத்தூதர் அவர்களே!" என்று கூறினார்கள்.

### (உயைனா படைப் பிரிவு)

இப்னு இஸ்ஹாக் (ரஹ்) கூறினார்.

உயைனா இப்னு ஹிஸ்ன் இப்னி ஹுதைஃபா இப்னி பத்ர் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் பனு தமீம் குலத்தைச் சேர்ந்த பனுல் அம்பர் கூட்டத்தாரிடம் அனுப்பினார்கள். எனவே அவர்கள், அக்கூட்டத்தார் மீது தாக்குதல் தொடுத்து அவர்களில் சிலரை வீழ்த்தினார்கள். அவர்களில் சிலரைக் கைது செய்தார்கள்.

ஹதீஸ் 4366. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பனு தமீம் குலத்தாரிடம் மூன்று அம்சங்கள் குடிகொண்டிருப்பதாகக் கூறியதைக் கேட்டதிலிருந்து நான் அவர்களை எப்போதும் நேசிக்கலானேன்.

அவையாவன:

1. 'பனு தமீம் குலத்தார் தாம் என் சமுதாயத்தாரிலேயே தஜ்ஜாலிடம் மிகக் கடுமையாக நடந்து கொள்பவர்கள்'' என்று (ஒருமுறை) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
2. அக்குலத்தாரைச் சேர்ந்த பெண் போர்க் கைதி ஒருவர் ஆயிஷா (ரலி) அவர்களிடம் இருந்தார். எனவே, (ஆயிஷா (ரலி) அவர்களிடம்) நபி (ஸல்) அவர்கள், 'அவளை விடுதலை செய்துவிடு. ஏனெனில், அவள் (இறைத்தூதர்) இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததிகளில் உள்ளவள்'' என்று கூறினார்கள்.
3. (ஒரு முறை) பனு தமீம் குலத்தாரின் தானப் பொருள்கள் வந்தன. அப்போது நபி (ஸல்) அவர்கள், 'இவை' ஒரு (முக்கிய) சமுதாயத்தின்' அல்லது' என் சமுதாயத்தின்' தானப் பொருள்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4367. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அறிவித்தார்

பனு தமீம் குலத்தாரில் ஒரு பயணக் குழுவினர் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். (தமக்கு ஒரு தலைவரை நியமிக்கும்படி கோரினர்.) அபூ பக்ர் (ரலி), '(இறைத்தூதர் அவர்களே!) கஅகாஉ இப்னு மஅபத் இப்னி ஸுராரா அவர்களை இவர்களுக்குத் தலைவராக்குங்கள்'' என்று கூறினார்கள். உமர் (ரலி), 'இல்லை அக்ரஉ இப்னு ஹாபிஸ் அவர்களைத் தலைவராக்குங்கள்'' என்று கூறினார்கள். அபூ பக்ர் (ரலி) (உமர் (ரலி) அவர்களிடம்), 'நீங்கள் எனக்கு மாறுசெய்யவே விரும்புகிறீர்கள்'' என்று சொல்ல, உமர் (ரலி), 'உங்களுக்கு மாறுசெய்வது என் நோக்கமல்ல'' என்று பதிலளித்தார்கள். இருவரும் இப்படி மாறி மாறிப்

பேசிச் சச்சரவிட்டுக்கொண்டார்கள். இறுதியில், இருவரின் குரல்களும் உயர்ந்தன. இது தொடர்பாகவே, `இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் முன்பாக (பேசுவதற்கு) நீங்கள் முந்தாதீர்கள். அல்லாஹ்வுக்கு பயந்து நடந்து கொள்ளுங்கள். திண்ணமாக, அல்லாஹ் (யாவற்றையும்) செவியுறுவோனும் நன்கறிந்தோனும் ஆவான்'' எனும் (திருக்குர்ஆன் 49:1வது) வசனம் அருளப்பட்டது.

## அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழு

ஹதீஸ் 4368. அபூ ஜம்ரா (ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், `என்னிடம் 'நபீத்' (பழச்சாறு மது) வைக்கப்படுகிற மண்பாண்டம் ஒன்று இருந்தது. மண்பாண்டத்தில் இனிப்பாக இருக்கும் நிலையில் நான் அதை அருந்துவேன். நான் அதை அதிகமாக அருந்தி, மக்களுடன் நீண்ட நேரம் அமர்ந்திருந்தால் (போதையில் தாறுமாறாக நடந்து) கேவலப்பட்டுப் போய் விடுவேன் என நான் அஞ்சினேன்'' என்று சொன்னேன். அப்போது இப்னு அப்பாஸ் (ரலி) (இவ்வாறு) கூறினார்கள்:

அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், `(அப்துல் கைஸ்) சமுதாயத்தாரே! உங்கள் நரவு நல்வரவாகட்டும். இழிவுக்குள்ளாகாமலும், மனவருத்தத்திற்குள்ளாகாமலும் வருக!"என்று கூறினார்கள். அம்மக்கள், `இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கும் உங்களுக்குமிடையே 'முளர்' குலத்து இணைவைப்பாளர்கள் (நாம் சந்திக்க முடியாதபடி) தடையாக உள்ளனர். இதனால், (போரிடக் கூடாதென தடைவிதிக்கப்பட்டுள்ள) புனித மாதங்களில் தவிர (வேறு மாதங்களில்) நாங்கள் உங்களிடம் வர முடியவில்லை. எனவே, எந்தக் கட்டளைகளை நாங்கள் செயல்படுத்தினால் நாங்கள் சொர்க்கம் புகவும் எங்களுக்குப் பின்னாலிருப்பவர்களை அவற்றின் பக்கம் நாங்கள் அழைக்கவும் ஏதுவாக இருக்குமோ அத்தகைய கட்டளைகளில் (முக்கியமான) சிலவற்றை எங்களுக்குச் சொல்லுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார்கள். நபி (ஸல்) அவர்கள், `உங்களுக்கு நான் நான்கு விஷயங்களைக் கட்டளையிடுகிறேன்:

1. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வது.

அல்லாஹ்வின் மீதான நம்பிக்கை என்பது என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை'' என்று உறுதி கூறுவதே. (அது).

2. தொழுகையை நிலை நிறுத்துவது.
3. ஸகாத் வழங்குவது.
4. ரமளான் மாதம் நோன்பு நோற்பது.

மேலும், `போர்ச் செல்வங்களில் ஐந்திலொரு பங்கை (அரசுக்குச்) செலுத்தும் படியும் (உங்களுக்குக்) கட்டளையிடுகிறேன். நான்கு பொருட்களைப் பயன்படுத்த வேண்டாமென உங்களுக்குத் தடை விதிக்கிறேன். மது ஊற்றி வைக்கப்படும் பாத்திரங்களான சுரைக்காய்க் குடுவை, (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்படும்) மரப்பீப்பாய், மண் சாடி மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் ஊறவைக்கப்படும் பானங்கள் தாம் அவை'' என்றார்கள்.

ஹதீஸ் 4369. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, `இறைத்தூதர் அவர்களே! நாங்கள் 'ரபீஆ' கோத்திரத்தின் இன்ன (அப்துல் கைஸ்) குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். (உங்களைச் சந்திக்கவிடாமல்) உங்களுக்கும் எங்களுக்குமிடையே 'முளர்' குலத்து இறைமறுப்பாளர்கள் தடையாக உள்ளனர். அதனால், (போர் புரியக் கூடாதெனத் தடை விதிக்கப்பட்ட) புனித மாதத்தில் தான் நாங்கள் உங்களிடம் வர முடியும். எனவே,

எங்களுக்குச் சில விஷயங்களைக் கட்டளையிடுங்கள். அவற்றை நாங்கள் கடைப்பிடிப்போம் எங்களுக்குப் பின்னாலிருப்பவர்களையும் கடைப்பிடித்து நடக்கும் படி அழைப்போம்'' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் நான்கு விஷயங்களை (செயல்படுத்தும்படி உங்களுக்குக் கட்டளையிடுகிறேன். நான்கு பொருட்களை உங்களுக்குத் தடை செய்கிறேன்.

(கட்டளையிடும் நான்கு விஷயங்களாவன:) அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வது (அதாவது) வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்று உறுதி கூறுவது - இவ்வாறு சொல்லி'ஒன்று' என (தம் விரலால்) எண்ணினார்கள் - தொழுகையை நிலை நிறுத்துவது, ஸகாத் வழங்குவது, மேலும், நீங்கள் அடைந்த போர்ச் செல்வங்களில் ஐந்திலொரு பங்கை அல்லாஹ்வுக்காகச் செலுத்துவது (ஆகியவைதாம் அவை)

(மது ஊற்றி வைக்கப் பயன்படும்) சுரைக்காய்க் குடுவை, (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரித்த) மரப் பீப்பாய், மண்சாடி மற்றும் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றை உபயோகிக்க வேண்டாமென உங்களுக்குத் தடை விதிக்கிறேன்.

ஹதீஸ் 4370. இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அன்னாருடைய அடிமையான குரைப்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ், அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்ஹர், மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) ஆகியோர் என்னிடம், `ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று எங்கள் அனைவரின் சலாமையும் அவருக்குக் கூறுங்கள். அஸ்ருக்குப் பின் இரண்டு ரக்அத்கள் தொழுவது பற்றி அவரிடம் கேளுங்கள். 'நபி(ஸல்) அவர்கள் அதைத் தடை செய்ததாக எங்களுக்குச் செய்தி கிடைத்திருக்க அத்தொழுகையை (அன்னையே!) தாங்கள் தொழுவதாகக் கேள்விப்படுகிறோமே' என்று கேளுங்கள்'' என்று (அம்மூவரும்) கூறினர். மேலும், இப்னு அப்பாஸ்(ரலி), தாமும் உமர்(ரலி) அவர்களும் இவ்வாறு (அஸ்ருக்குப் பின்) தொழுபவர்களை அடிப்பவர்களாக இருந்தோம் என்று கூறினார்கள்.

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று என்னை அம்மூவரும் அனுப்பிய விஷயத்தைக் கூறினேன். அதற்கு ஆயிஷா(ரலி), `நீங்கள் உம்மு ஸலமாவிடம் சென்று கேளுங்கள்'' என்று கூறினார்கள். நான் திரும்பி வந்து அவர்கள் மூவரிடமும் ஆயிஷா(ரலி) மூவரிடமும் ஆயிஷா(ரலி) சொன்னதைத் தெரிவித்தேன். ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்ட அதே கேள்வியை உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் சென்று கேட்குமாறு அவர்கள் மூவரும் முண்டும் என்னை அனுப்பினார்கள்.

(அவ்வாறே அவர்களிடம் வந்து நான் விஷயத்தைக் கேட்டபோது) உம்மு ஸலமா(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் இவ்விரு ரக்அத்களைத் தொழ வேண்டாமெனத் தடை செய்ததை கேட்டிருக்கிறேன். பிறகு (ஒரு முறை) அஸ்ருத் தொழுதுவிட்டு அவர்கள் என்னுடைய அறைக்கு வந்து, அந்த இரண்டு ரக்அத்களைத் தொழுதார்கள். அப்போது என்னுடன் அன்சாரிகளில்'பனு ஹராம்' குலத்தைச் சேர்ந்த பெண்கள் சிலர் இருந்தனர். நான் நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பணிப்பெண்ணை அனுப்பி, `நீ அவர்களுக்கு அருகில் சென்று, `இறைத்தூதர் அவர்களே! இந்த இரண்டு ரக்அத்களைத் தொழ வேண்டாமென நீங்கள் தடை தொழ வேண்டாமென நீங்கள் தடை செய்ததை நான் கேட்கவில்லையா? ஆனால், தாங்களே இப்போது அதைத் தொழப் பார்க்கிறேனே' என நான் கேட்டதாக அவர்களிடம் நீ சொல். அவர்கள் தம் கையால் சைகை செய்தால் நீ பின்வாங்கிவிடு' எனக் கூறினேன். அப்பெண்ணும் சொன்னபடி செய்தாள். நபி(ஸல்) அவர்கள் தம் கையால் சைகை செய்தபோது அப்பெண் திரும்பி வந்துவிட்டாள். தொழுகையை முடித்த நபி(ஸல்) அவர்கள், `அபூ உமய்யாவின் மகளே! (உம்மு ஸலமாவே!) அஸ்ருக்குப் பின்னால் (தொழுத) இரண்டு ரக்அத்கள் பற்றிக் கேட்டாய். அப்துல் கைஸ்

கிளையினரில் சிலர் தம் குலத்தார் இஸ்லாத்தை ஏற்றுள்ள செய்தியைத் தெரிவிக்க என்னிடம் வந்திருந்ததால், லுஹ்ருக்குப் பின்னாலுள்ள இரண்டு ரக்அத்களை என்னால் தொழ முடியவில்லை அத்தொழுகையே (இப்போது நான் தொழுத) இந்த இரண்டு ரக்அத்களாகும்' என்றார்கள்.

ஹதீஸ் 4371. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பள்ளிவாசலில் (வெள்ளிக்கிழமை) தொழுகை நடத்தப்பட்ட ஜுமுஆத் தொழுகைக்குப் பிறகு (இஸ்லாத்தில்) முதன் முதலாக நடத்தப்பட்ட ஜுமுஆத் தொழுகை, 'ஜுவாஸா' எனுமிடத்தில் - அதாவது பஹ்ரைனில் இருந்த ஒரு கிராமத்தில் - அப்துல் கைஸ் குலத்தாரின் பள்ளிவாசலில் நடைபெற்ற தொழுகையே ஆகும்.

## பனு ஹனீ∴பா குலத்தாரின் தூதுக் குழு மற்றும் ஸுமாமா இப்னு உஸால் அவர்களின் செய்தி.

ஹதீஸ் 4372. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்'நஜ்த்' பகுதியை நோக்கி குதிரைப் படையொன்றை அனுப்பினார்கள். அந்தப் படையினர்'பனு ஹனீ∴பா' குலத்தைச் சேர்ந்த ஸுமாமா இப்னு உஸால் என்றழைக்கப்படும் மனிதர் ஒருவரைக் (கைது செய்து) கொண்டு வந்தார்கள். பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அவரைக் கட்டிப் போட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அவரிடம் வந்து, '(உன் விஷயத்தில் நான் சொல்லப்போகும் முடிவைப் பற்றி) நீ என்ன கருதுகிறாய். ஸுமாமாவே!"என்று கேட்டார்கள். அவர், 'நான் நல்லதே கருதுகிறேன். முஹம்மதே! நீங்கள் என்னைக் கொன்றால் இரத்தப்பழி வாங்க வேண்டிய ஒருவனையே கொள்கிறீர்கள். (என்னை மன்னித்து எனக்கு) நீங்கள் உபகாரம் செய்தால், நன்றி செய்யக் கூடிய ஒருவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள். நீங்கள் செல்வத்தை விரும்பினால் அதில் நீங்கள் விரும்புவதைக் கேளுங்கள்'' என்று பதிலளித்தார். எனவே, அவர் (மன்னிக்கப்பட்டு) விடப்பட்டார். மறு நாள் வந்தபோது அவரிடம், 'ஸுமாமாவே! என்ன கருதுகிறாய்?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர், தங்களிடம் நான் (ஏற்கெனவே) கூறியது தான்: நீங்கள் உபகாரம் செய்தால் நன்றியுள்ளவனுக்கே உபகாரம் செய்கிறீர்கள்'' என்றார். அவரை நபியவர்கள் (அன்றும்)விட்டுவிட்டார்கள். மறுநாளுக்கு அடுத்த நாள் வந்தபோது, 'நீ என்ன கருதுகிறாய்? ஸுமாமாவே!"என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், 'நான் ஏற்கெனவே தங்களிடம் சொன்னதைத்தான் கருதுகிறேன்'' என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள், 'ஸுமாமாவை அவிழ்த்துவிடுங்கள்'' என்று கூறினார்கள்.

உடனே ஸுமாமா பள்ளிவாசலுக்கு அருகிலிருந்த பேரீச்சந் தோட்டத்திற்குச் சென்று குளித்துவிட்டு, பள்ளிவாசலுக்கு வந்து, 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறெவருமில்லை' என்று நான் உறுதி கூறுகிறேன். மேலும், 'முஹம்மது, இறைத்தூதர்' என்றும் நான் உறுதி கூறுகிறேன்' என்று மொழிந்துவிட்டு, 'முஹம்மதே! அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் முகத்தைவிட என்னிடம் வெறுப்புக்குரிய முகம் பூமியில் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், (இன்று) உங்களுடைய முகம் எல்லா முகங்களிலும் எனக்கு மிகவும் பிரியமானதாக ஆகிவிட்டது. அல்லாஹ்வின் மீதாணையாக! (இன்றுவரை) உங்கள் மார்க்கத்தைவிட என் வெறுப்புக்குரிய மார்க்கம் வேறெதுவும் இருக்கவில்லை. ஆனால், இன்று மார்க்கங்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானதாக உங்கள் மார்க்கம் ஆகிவிட்டது. அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் ஊரைவிட எனக்கு வெறுப்பான ஊர் வேறெதுவும் இருந்திருக்கவில்லை. ஆனால், இப்போது உங்கள் ஊரே எனக்கு மிகவும் பிரியமான ஊராம்விட்டது. உங்கள் குதிரைப்படையினர் என்னைப் பிடித்துகொண்டுவிட்டார்கள்'' என்று சொல்லிவிட்டு, 'மேலும் நான் இப்போது (மக்காவிற்குச்

சென்று) உம்ரா செய்ய விரும்புகிறேன். நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று கேட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவருக்கு நற்செய்தி கூறி உம்ரா செய்ய அவருக்கு அனுமதியளித்தார்கள். அவர் மக்காவிற்குச் சென்றபோது (அங்கே) ஒருவர் அவரிடம், 'நீ மதம் மாறிவிட்டாயா?' என்று கேட்டதற்கு ஸுமாமா(ரலி), 'இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் மதம் மாறவில்லை.) மாறாக, இறைத்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களுடன் இணைந்து இறைவனுக்குக் கீழ்ப்படியும் முஸ்லிமாக மாறிவிட்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் அனுமதி தரும்வரை (என்னுடைய நாடான) யமாமாவிலிருந்து ஒரு கோதுமை தானியம் கூட (மக்காவாசிகளான) உங்களுக்கு வராது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4373. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் (தன்னை இறைத் தூதர் என்று வாதிட்ட)'முஸைலிமா' எனும் மகா பொய்யன் (யமாமாவிலிருந்து மதீனா) வந்தான். அவன், 'முஹம்மத், தமக்குப் பிறகு (தூதுத்துவம் மற்றும் ஆட்சித் தலைமையின்) பொறுப்பை எனக்கு அளித்தால்தான் நான் அவரைப் பின்பற்றுவேன்'' என்று கூறலானான். அவன் தன் சமுதாயத்து மக்கள் பலபேருடன் மதீனா வந்திருந்தான். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , (தம் பேச்சாளர்) ஸாபித் இப்னு கைஸ்(ரலி) தம்முடன் இருக்க அவனை நோக்கி வந்தார்கள். அப்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கையில் பேரீச்ச மட்டைத் துண்டு ஒன்று இருந்தது. முஸைலிமா தன் தோழர்களுடனிருக்க நபி(ஸல்) அவர்கள் அவனருகே (சென்று) நின்று கொண்டு, 'இந்தத் துண்டை நீ கேட்டால் கூட நான் இதை உனக்குக் கொடுக்கமாட்டேன். அல்லாஹ் உனக்கு விதித்திருப்பதை மீறிச் செல்ல உன்னால் முடியாது. நீ (எனக்குக் கீழ்ப்படிய மறுத்து) முதுகைத் காட்டினால் அல்லாஹ் உன்னை அழித்துவிடுவான். மேலும், (என் கனவில்) எனக்குக் காட்டப்பட்ட அதே ஆளாகத்தான் உன்னை காண்கிறேன். இதோ, இவர்தாம் ஸாபித் இவர் என் சார்பாக உனக்கு பதிலளிப்பார்'' என்று சொல்லிவிட்டு அவனிடமிருந்து திரும்பிவிட்டார்கள்.

ஹதீஸ் 4374. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , '(என் கனவில்) எனக்குக் காட்டப்பட்ட அதே ஆளாகத்தான் உன்னை காண்கிறேன்'' என்று (முஸைலிமாவிடம்) சொன்னதைப் பற்றி நான் கேட்டபோது அபூ ஹுரைரா(ரலி) கூறினார்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என் இரண்டு கைகளிலும் இரண்டு தங்கக் காப்புகளைக் கண்டேன். அவற்றின் (விளக்கம் எனக்குத் தெரியாமல் இருந்த) நிலை என்னைக் கவலையில் ஆழ்த்தியது. எனவே, கனவில் அவ்விரண்டையும் ஊதும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது. அவ்வாறே நான் ஊதினேன். உடனே, அவ்விரண்டும் பறந்துவிட்டன. எனவே, நான் அவ்விரண்டுக்கும்'எனக்குப் பின் வெளிப்படவிருக்கிற மகா பொய்யர்கள் இருவர்' என்று விளக்கம் கண்டேன். அவ்விருவரில் ஒருவன் அன்ஸீ மற்றொருவன் முஸைலி என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4375. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் தூங்கிக்கொண்டிருக்கும்போது (கனவில்) பூமியின் கருவூலங்கள் எனக்கு வழங்கப்பட்டன. அப்போது என் கையில் தங்கக் காப்புகள் இரண்டு வைக்கப்பட்டன. அவை எனக்குப் பெரும் சுமையாகத் தென்பட்டன. அப்போது அவ்விரண்டையும் ஊதும்படி எனக்குக் கட்டளையிடப்பட்டது. அவ்விரண்டையும் நான் ஊதினேன். அவ்விரண்டும் (பறந்து) சென்றுவிட்டன.'அவ்விரண்டும், எந்த இரண்டு மகா பொய்யர்களுக்கிடையே நான் இருக்கிறேனோ அவர்களைக் குறீக்கும்' என்று நான் விளக்கம் கண்டேன். அவ்விரு பொய்யர்கள் (அன்ஸீ என்ற)'ஸன்ஆ' வாசியும் (முஸைலிமா என்ற)'யமாமா' வாசியும் ஆவர். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4376. அபூ ரஜாஉ அல்உதாரித்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்
நாங்கள் (அறியாமைக் காலத்தில்) கல்லை வணங்கிக் கொண்டிருந்தோம் (நாங்கள் வணங்கிக் கொண்டிருந்த) ஒரு கல்லைவிடச் சிறந்த மற்றொரு கல்லை நாங்கள் கண்டால் அதை எடுத்துக் கொண்டு பழையதை எறிந்து விடுவோம். கல் ஏதும் எங்களுக்குக் கிடைக்கவில்லையென்றால் நாங்கள் மண் கட்டியைச் சேகரி(த்துக் குவி)ப்போம். பிறகு, ஆட்டைக் கொண்டு வருவோம் அதன் பாலை (குவிந்து கிடக்கும்) அந்த மண்கட்டியின் மீது கறப்போம் பிறகு அதைச் சுற்றி வருவோம். ரஜப் மாதம் வந்துவிட்டால் (போர் நிறுத்தம் செய்வதைக் குறிக்கும் வகையில்)'ஆயுத முனையை அகற்றக்கூடியது' என அந்த மாதத்தை அழைப்போம். ரஜப் மாதத்தில் எந்த ஈட்டி முனையையும், அம்பு முனையையும் கழற்றி எறியாமல் விடமாட்டோம்.

ஹதீஸ் 4377. அபூ ரஜாஉ(ரஹ்) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் (இறைத் தூதராக) நியமிக்கப்பெற்ற நாளில் நான், என் வீட்டாருக்காக ஒட்டகத்தை மேய்க்கும் இளைஞனாக இருந்தேன். நபி(ஸல்) அவர்கள் இறைத்தூதராக வருகை தந்திருப்பதை நாங்கள் கேள்விப்பட்டவுடன் நரக நெருப்பை நோக்கி, (அதாவது) மகா பொய்யன் முஸைலிமாவை நோக்கி நாங்கள் ஓடினோம்.

## அல்அஸ்வத் அல் அன்ஸீயின் நிகழ்ச்சி

ஹதீஸ் 4378 உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் இப்னி உத்பா(ரஹ்) அறிவித்தார்
மகா பொய்யன் முஸைலிமா மதீனாவிற்கு வந்திருக்கிறான் என்ற செய்தி எங்களுக்கு எட்டியது. அவன் ஹாரிஸின் மகள் (கய்யிஸா என்பாள்) வீட்டில் தங்கினான். அந்த ஹாரிஸ் இப்னு குரைஸின் மகள் அவனுக்கு மனைவியாக இருந்தாள். அவள், அப்துல்லாஹ் இப்னு ஆமிருடைய (மக்களின்) தாய் ஆவாள். ஸாபித் இப்னு கைஸ் இப்னி ஷம்மாஸ்(ரலி) அவர்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முஸைலிமாவிடம் சென்றார்கள். இந்த ஸாபித் இப்னு கைஸ் இப்னி ஷம்மாஸ் அவர்கள் தாம், 'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (அதிகாரபூர்வ) பேச்சாளர்' என்று அழைக்கப்பட்டு வந்தவராவார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கையில் (பேரீச்ச மட்டைக்) குச்சியொன்று இருந்தது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முஸைலிமாவின் அருகே நின்று அவனிடம் (சிறிது) பேசினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் முஸைலிமா, 'நீங்கள் விரும்பினால் உங்களுக்கும் (உங்கள் நபித்துவ) பதவிக்கும் இடையே குறுக்கிடாமல் நாம் விலகிக் கொள்வோம். (ஆனால்,) உங்களுக்குப் பின் நீங்கள் அந்தப் பதவியை எமக்கு அளித்திட வேண்டும்'' என்று சொன்னான். நபி(ஸல்) அவர்கள், 'நீ என்னிடம் இந்தக் குச்சியைக் கேட்டாலும் கூட நான் இதை உனக்குக் கொடுக்கமாட்டேன். எனக்கு (கனவில்) காட்டப்பட்ட அதே ஆள் தான் நீ என்று உன்னை கருதுகிறேன். இதோ, இந்த ஸாபித் இப்னு கைஸ் உனக்கு என் சார்பாக பதிலளிப்பார்'' என்று கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் திரும்பிச் சென்றார்கள்.

ஹதீஸ் 4379. உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எடுத்துரைத்த அவர்களின் கனவைப் பற்றி நான் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்:
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'நான் உறங்கிக் கொண்டிருக்கும்போது என் இரண்டு கைகளிலும் தங்கத்தாலான காப்புகள் இரண்டு வைக்கப்பட்டன. நான் அவற்றை அருவருப்பாகக் கருதி வெறுத்தேன். உடனே (அவற்றை ஊதிவிட) எனக்கு அனுமதிக்கப்பட்டது. நான் அவ்விரண்டையும் ஊத, அவை பறந்து போய்விட்டன. அவ்விரண்டும் இனி வரவிருக்கும் இரண்டு பெரும் பொய்யர்களைக் குறிப்பாக நான் விளக்கம் கண்டேன்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்:
அவ்விருவரில் ஒருவன் யமன் நாட்டில் ஃபைரோஸ் என்பவரால் கொல்லப்பட்ட (அஸ்வத்) அல் அன்ஸீ ஆவான் மற்றொருவன் மகா பொய்யன் முஸைலிமா ஆவான்.

## நஜ்ரான் வாசிகளின் சம்பவம்

ஹதீஸ் 4380. ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அறிவித்தார்
ஆம்ப், சையித் எனும் நஜ்ரான் நாட்டுக்காரர்கள் இருவர், இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், 'முபாஹலா - சாபப் பிரார்த்தனை' செய்வதற்காக வந்தனர். 18 அவ்விருவரில் ஒருவர் தம் தோழரிடம், 'நீ அவ்வாறு செய்யாதே. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் உண்மையிலேயே இறைத்தூதராக இருந்து நாம் சாபப் பிரார்த்தனை செய்துவிட்டோமானால் நாமும் உருப்பட மாட்டோம் நமக்குப் பின்வரவிருக்கும் நம் சந்ததிகளும் உருவப்படமாட்டார்கள்'' என்று கூறினார். (பிறகு) இருவரும் சேர்ந்து (நபி(ஸல்) அவர்களிடம்), 'நீங்கள் எங்களிடம் கேட்கிறவற்றை நாங்கள் உங்களுக்குக் கொடுக்கிறோம். நம்பிக்கைக்குரிய ஒரு மனிதரை எங்களுடன் அனுப்புங்கள். நம்பிக்கைக்குரிய ஒரு மனிதரைத் தவிர வேறெவரையும் எங்களுடன் அனுப்பவேண்டாம்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'நம்பகத் தன்மையில் முறையோடு நடந்துகொள்ளும் நம்பிக்கையாளர் ஒருவரை நிச்சயம் நான் உங்களுடன் அனுப்புவேன்'' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்கள் (ஒவ்வொருவரும்) நபியவர்களின் அழைப்பை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள், 'அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் அவர்களே! எழுந்திருங்கள்'' என்று கூறினார்கள். அவர் எழுந்து நின்றபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இவர் இந்தச் சமுதாயத்தின் நம்பிக்கைக்குரியவர்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4381. ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அறிவித்தார்
நஜ்ரான் வாசிகள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'நம்பிக்கைக்குரிய ஒரு மனிதரை எங்களுக்காக அனுப்புங்கள்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'நம்பகத் தன்மையில் முறையோடு நடந்துகொள்ளும் நம்பிக்கையாளர் ஒருவரைத்தான் நான் உங்களிடம் அனுப்புவேன்'' என்று கூறினார்கள். மக்கள் (ஒவ்வொருவரும்) நபியவர்களின் அழைப்பை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ்(ரலி) அவர்களை அனுப்பினார்கள்.

ஹதீஸ் 4382. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒவ்வொரு சமுதாயத்திற்கும் (அவர்களின்) நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் ஒருவர் உண்டு. இந்தச் சமுதாயத்தினரின் நம்பிக்கைக்குரியவர் அபூ உபைதா இப்னு ஜர்ராஹ் அவர்களாவார்.
என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## உமான் மற்றும் பஹ்ரைனின் செய்தி

ஹதீஸ் 4383. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒருமுறை)'பஹ்ரைனின் நிதி வந்தால் உனக்கு நான் இப்படி இப்படி மூன்று முறை (அள்ளிக்) கொடுப்பேன்'' என்று என்னிடம் சொல்லியிருந்தார்கள். ஆனால், பஹ்ரைன் நிதி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறக்கும் வரை வரவில்லை. அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் (அவர்களின் ஆட்சிக் காலத்தில்) அந்த நிதி வந்தபோது அவர்கள் பொது அறிவிப்புகள் செய்பவர் ஒருவரிடம், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எவருக்காவது கடன் தரவேண்டியிருந்தாலோ, அவர்கள் எவருக்காவது ஏதேனும் வாக்களித்திருந்(து அதை நிறைவேற்றும் முன்பாக அவர்கள் இறந்துவிட்டிருந்)தாலோ அவர் என்னிடம் வரட்டும்'' என்று அறிவிப்புச் செய்யும்படி உத்தரவிட்டார்கள். எனவே, நான் அபூ பக்கர்(ரலி) அவர்களிடம் வந்து, 'நபி(ஸல்) அவர்கள், 'பஹ்ரைன் நிதி வந்தால் உனக்கு நான் இப்படி இப்படி மூன்று

முறை (அள்ளிக்) கொடுப்பேன்' என்று கூறினார்கள்'' எனத் தெரிவித்தேன். அப்போது எனக்கு அபூ பக்ர்(ரலி) (சிறிது) கொடுத்தார்கள். அதற்குப் பின் அவர்களை நான் சந்தித்து மீண்டும் கேட்டேன். அப்போது அவர்கள் (எதுவும்) எனக்குத் தரவில்லை. பிறகு மீண்டும் அவர்களிடம் நான் சென்றேன். அப்போதும் அவர்கள் ஏதும் தரவில்லை. மீண்டும் நான் அவர்களிடம் மூன்றாவது முறையாகச் சென்றேன். அப்போதும் எனக்குத் தரவில்லை. எனவே, நான் அவர்களிடம், '(முதலில்) நான் உங்களிடம் வந்தேன். அப்போது நீங்கள் எனக்குத் தரவில்லை. பிறகு (இரண்டாம் முறையாக) வந்தேன். அப்போதும் நீங்கள் எனக்குத் தரவில்லை. ஒன்று நீங்கள் எனக்குக் கொடுக்க வேண்டும். இல்லையென்றால், என்னிடம் நீங்கள் கருமித்தனம் காட்டுவதாகவே நான் கருதுவேன்'' என்று சொன்னேன். அப்போது அவர்கள்'நான் கருமித்தனம் காட்டுவதாகவா நீ சொன்னாய். கருமித்தனத்தை விடக் கொடிய நோய் ஏது?' என்று மூன்று முறை கேட்டார்கள்.'ஒவ்வொரு முறை உனக்குத் தர மறுத்த போதும் உனக்குக் கொடுக்க வேண்டுமென்றே கருதினேன்'' என்றும் கூறினார்கள்.
அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில், 'நான் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் என்னிடம், 'இதை எண்ணிக்கொள்' என்று கூறினார்கள். நான் அதை எண்ணிப் பார்த்தேன். அது ஐநூறு (தீனார் ∴ திர்ஹம்) இருந்தது. அப்போது அவர்கள், 'இதே போன்று இன்னும் இரண்டு மடங்கை நீ எடுத்துக்கொள்' என்று கூறினார்கள்'' என ஜாபிர்(ரலி) கூறினார் என வந்துள்ளது.

## அஷ்அரீ குலத்தார் மற்றும் யமன் வாசிகளின் வருகை

“அவர்கள் (அஷ்அரீ குலத்தார்) என்னைச் சேர்ந்தவர்கள் நான் அவர்களைச் சேர்ந்தவன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 4384. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்
நானும் என் சகோதரரும் யமன் நாட்டிலிருந்து வந்து (மதீனாவில்) சிறிது காலம் தங்கியிருந்தோம். அப்போது இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களும் அவர்களின் தாயாரும் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (அவர்களின் வீட்டினுள்) அதிகமாகச் சென்று வருவதையும் அவர்களுடனேயே எப்போதும் இருப்பதையும் கண்டு, அவர்கள் (இருவரும்) நபி(ஸல்) அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்றே நாங்கள் கருதினோம்.

ஹதீஸ் 4385. ஸஹ்தம் இப்னு முள்ரிப்(ரஹ்) அறிவித்தார்
அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) (உஸ்மான்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் கூஃபா நகரின் ஆட்சியாளராக) வருகை தந்தபோது இந்த'ஜர்ம்' குடும்பத்தாரை (சந்தித்து அவர்களை)க் கண்ணியப்படுத்தினார்கள். (ஒருமுறை) நாங்கள் அவர்களிடம் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்கள் கோழியைப் பகல் உணவாக உண்டு கொண்டிருந்தார்கள். அப்போது கூட்டத்தில் ஒருவர் அமர்ந்திருந்தார். அபூ மூஸா(ரலி) அவரை உணவு உண்ண அழைத்தார்கள். அம்மனிதர், 'இது, (அசுத்தம்) எதையோ தின்று கொண்டிருப்பதை பார்த்தேன். எனவே, நான் இதை அருவருக்கிறேன்'' என்றார். உடனே அபூ மூஸா(ரலி), 'இங்கே வா! நபி(ஸல்) அவர்கள் இதை உண்ணமாட்டேன் என்று சத்தியம் செய்துள்ளேன்'' என்று கூறினார். உடனே அபூ மூஸா(ரலி), 'இங்கே வா! உன் சத்தியத்தைப் பற்றி நான் உனக்குத் தெரிவிக்கிறேன். நாங்கள், அஷ்அரீ குலத்தாரில் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் சென்றோம். நாங்கள் (பயணம் செய்ய) வாகனம் அளித்து உதவும் படி அவர்களிடம் கேட்டோம். அவர்கள் எங்களுக்கு வாகனம் அளிக்க மறுத்துவிட்டார்கள். எனவே, மீண்டும் அவர்களிடம் (பயணம் செய்ய) வாகனம் கேட்டோம். அவர்கள், 'நீங்கள் பயணம் செய்வதற்காக உங்களுக்கு வாகனம் தரமாட்டேன். என்று சத்தியம் செய்துவிட்டார்கள். பிறகு சிறிது நேரம் தான் தங்கியிருந்திருப்பார்கள். அதற்குள் போரில் கிடைத்த ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டன. எங்களுக்கு (பத்துக்குட்பட்ட ஒட்டகங்கள் கொண்ட மந்தைகளில்) ஐந்து மந்தைகள்

வழங்கும்படி கட்டளையிட்டார்கள். நாங்கள் அதை எங்கள் கைவசம் பெற்றுக் கொண்டபோது, `நபி(ஸல்) அவர்களுக்கு அவர்களின் சத்தியத்தை நாம் மறக்கடித்து விட்டோம். எனவே, நாம் ஒருபோதும் முன்னேற முடியாது‘` என்று சொல்லிக் கொண்டோம். உடனே நான் அவர்களிடம் சென்று, `இறைத்தூதர் அவர்களே!”நாங்கள் பயணம் செய்ய வாகனம் தரமாட்டேன் என்று தாங்கள் சத்தியம் செய்துவிட்டு இப்போது நாங்கள் பயணம் செய்ய எங்களுக்கு வாகனம் தந்துவிட்டீர்களே‘` என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், `ஆம்! ஆயினும், நான் ஒரு விஷயத்திற்காகச் சத்தியம் செய்து அதன்பின்னர் அதுவல்லாத வேறொன்றை, அதைவிடச் சிறந்ததாகக் கண்டால் அந்தச் சிறந்ததையே செய்வேன் (சத்தியத்தை முறித்ததற்காகப் பரிகாரம் செய்துவிடுவேன்)‘` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4386. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்

பனு தமீம் குலத்தார் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள், `நற்செய்தி பெறுங்கள். பனுதமீம் குலத்தாரே!”என்று கூறினார்கள். அதற்கு அவர்கள், `நீங்கள் எங்களுக்கு நற்செய்தி சொல்லிவிட்டீர்கள் தானே! (இனி ஏதேனும்) எங்களுக்கு வழங்கிடுங்கள்‘` என்று கேட்டார்கள். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால் நிறம்) மாறிவிட்டது. அப்போது யமன்வாசிகளில் (அஷ்அரீ குலத்தார்) சிலர் வந்தனர். அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள், `நீங்கள் நற்செய்தியை ஏற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில், பனு தமீம் குலத்தார் அதை ஏற்க மறுத்துவிட்டார்கள்ஞ் என்று கூறினார்கள். அந்த யமனியர், `ஏற்றுக் கொண்டுவிட்டோம் இறைத்தூதர் அவர்களே!”என்று பதிலளித்தனர்.

ஹதீஸ் 4387. அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், `இறைநம்பிக்கை இங்கேயுள்ளது‘` என்று தம் கையால் யமன் நாட்டின் பக்கம் சைகை காட்டிக் கூறினார்கள். மேலும், `கல் மனமும் (இரக்கமற்ற) கடின சுபவாமும்) ஒட்டகங்களின் வால்களைப் பிடித்தபடி, அவற்றை அதட்டிக் கொண்டே (நாடோடிகளாகச்) சென்று கொண்டிருக்கும் (பாலைவன) ஒட்டக மேய்ப்பர்களிடையே காணப்படும். அங்கிருந்து தான் ஷைத்தானின் இரண்டு கொம்புகளும் உதயமாகும். (அதாவது) ரபீஆ மற்றும் முளர் குலத்தாரிடையே அவைதோன்றும்‘` என்று கூறினார்கள். 29

ஹதீஸ் 4388. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யமன் வாசிகள் உங்களிடம் வந்திருக்கிறார்கள். அவர்கள் இளகிய நெஞ்சமுடையவர்கள் மென்மையான இதயமுடையவர்கள். இறைநம்பிக்கை, யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். தற்பெருமையும் அகம்பாவமும் ஒட்டக மேய்ப்பர்(களிடமும் பண்ணை முதலாளி) களிட(மு)ம் காணப்படுகின்றன. கம்பீரமும் (அதே நேரத்தில்) அமைதியும் ஆடுகளின் உரிமையாளர்களிடம் காணப்படுகின்றன.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4389. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கை யமன் நாட்டைச் சேர்ந்ததாகும். குழப்பம் இங்கே (கிழக்கில்) உள்ளது. இங்குதான் ஷைத்தானின் கொம்பு உதயமாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4390. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யமன் வாசிகள் உங்களிடம் வந்துள்ளனர். அவர்கள் இளகியமனம் படைத்தவர்கள். மென்மையான நெஞ்சம் உடையவர்கள். மார்க்க ஞானம் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும் விவேகமும் யமன் நாட்டைச் சேர்ந்ததாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4391. அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) அறிவித்தார்
நாங்கள் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது கப்பாப்(ரலி) வந்து, 'அபூ அப்திர் ரஹ்மானே! நீங்கள் (குர்ஆன்) ஓதுவதைப் போல் இந்த இளைஞர்களால் ஓதமுடியுமா?' என்று கேட்டார்கள். அதற்கு இப்னு மஸ்வூத்(ரலி), 'நீங்கள் விரும்பினால் உங்களுக்கு (குர்ஆன்) ஓதிக் காட்டும்படி இவர்களில் சிலருக்குக் கட்டளையிடுகிறேன்'' என்று கூறினார்கள். அதற்கு கப்பாப்(ரலி), 'சரி! (ஓதிக் காட்டச் சொல்லுங்கள்)'' என்று கூறினார்கள். இப்னு மஸ்வூத்(ரலி) (என்னிடம்), 'அல்கமா! நீங்கள் ஓதுங்கள்'' என்று கூற, ஸியாத் இப்னு ஹுதைர்(ரஹ்) அவர்களின் சகோதரர் ஸைத் இப்னு ஹுதைர்(ரஹ்), 'அல்கமா, எங்களில் மிகச் சிறந்த ஓதுநராக இல்லாதிருக்க, அவரையா ஓதச் சொல்கிறீர்கள்?' என்று கேட்டார். உடனே இப்னு மஸ்ஊத்(ரலி), 'நீங்கள் விரும்பினால் நபி(ஸல்) அவர்கள் உங்கள் குலத்தார் (பனு அசத்) பற்றியும், அல்கமாவுடைய குலத்தார் (நகஉ) பற்றியும் கூறியதை உங்களுக்கு நான் அறிவிப்பேன்'' என்று கூறினார்கள். அப்போது நான் (குர்ஆனின் 19வது) அத்தியாயம் மர்யமிலிருந்து ஐம்பது வசனங்களை ஓதினேன். அப்போது அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) (கப்பாப்(ரலி) அவர்களை நோக்கி), '(இவரின் ஓதல்) எப்படியிருப்பதாகக் கருதுகிறீர்கள்?' என்று கேட்டதற்கு அவர்கள், 'நன்றாக ஓதினார்'' என்று பதிலளித்தார்கள். அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி), 'நான் எதை ஓதினாலும் அதை இருவரும் ஓதி விடுவார்'' என்று கூறினார்கள். பிறகு, கப்பாப்(ரலி) அவர்களின் பக்கம் திரும்பினார்கள். அப்போது அவர்கள் தங்க மோதிரம் ஒன்றை அணிந்திருந்தார்கள். எனவே, 'இந்த மோதிரம் கழற்றி எறியப்படும் வேளை (இன்னும்) வரவில்லையா?' என்று கேட்டார்கள். கப்பாப்(ரலி), 'இன்றைக்குப் பிறகு இதை நான் அணிந்திருப்பதைப் ஒருபோதும் நீங்கள் பார்க்க மாட்டீர்கள்'' என்று சொல்லிவிட்டு அதைக் கழற்றி எறிந்துவிட்டார்கள்.

## தவ்ஸ் குலத்தாரின் செய்தியும் துஃபைல் இப்னு அம்ர் இப்னி தவ்ஸீ அவர்களின் செய்தியும்.

ஹதீஸ் 4392. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
துஃபைல் இப்னு அம்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'தவ்ஸ் குலத்தார் அழிந்துவிட்டார்கள் (இறைவனுக்கும் இறைத்தூதருக்கும்) மாறு செய்துவிட்டார்கள் (இஸ்லாத்தை) ஏற்க மறுத்துவிட்டார்கள். எனவே, தாங்கள் அவர்களுக்கெதிராகப் பிரார்த்தியுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'இறைவா!' தவ்ஸ்' குலத்தாரை நேர்வழியில் செலுத்துவாயாக! அவர்களை (எம்மிடம்) கொண்டு வருவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 4393. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
நான் நபி(ஸல்) அவர்களிடம் (இஸ்லாத்தை ஏற்பதற்காக) வந்தபோது, வழியில், 'எவ்வளவு நீண்ட, களைப்பூட்டுகிற இரவு! ஆயினும், அது இறைமறுப்பு கோலோச்சும் நாட்டிலிருந்து என்னை விடுதலை செய்துவிட்டது'' என்று பாடினேன். என் அடிமை ஒருவன் வழியில் தப்பியோடிவிட்டான். நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தபோது அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்தேன். நான் அவர்களிடம் இருந்தபோது (என்னுடைய) அந்த அடிமை வந்தான். நபி(ஸல்) அவர்கள் என்னிடம், 'அபூ ஹுரைராவே! இதோ உன் அடிமை!"என்று கூறினார்கள். நான், 'அவன் அல்லாஹ்வின் திருப்திக்காக (விடுதலை)'' என்று சொல்லி அவனை விடுதலை செய்துவிட்டேன்.

## 'தய்யி குலத்தாரின் தூதுக் குழு நிகழ்ச்சியும் அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அவர்களின் செய்தியும்

ஹதீஸ் 4394. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) அவர்களிடம் (அவர்களின் ஆட்சிக் காலத்தில்) ஒரு குழுவாக நாங்கள் வந்தோம். அவர்கள் ஒவ்வொரு மனிதராகப் பெயர் சொல்லி அழைக்கலானார்கள் (என்னை முதலில் அழைக்கவில்லை.) எனவே நான், 'என்னைத் தெரியவில்லையா? நம்பிக்கையாளர்களின் தலைவரே!"என்று கேட்டேன். அவர்கள், 'ஆம், தெரியும். மக்கள் மறுத்தபோது நீங்கள் இஸ்லாத்தை ஏற்றீர்கள் அவர்கள் (இஸ்லாத்தை ஏற்காமல்) பின் வாங்கிச் சென்றபோது நீங்கள் (அதை ஏற்க) முன் வந்தீர்கள். அவர்கள் (ஸகாத்தை வழங்காமல்) மோசடி செய்தபோது நீங்கள் நிறைவேற்றினீர்கள். (உண்மையை) அவர்கள் நிராகரித்தபோது நீங்கள் ஏற்றீர்கள்'' என்று கூறினார்கள்.
நான், 'அப்படியென்றால் (என்னை முதலில் அழைக்காதது குறித்து) நான் பொருட்படுத்தப்போவதில்லை'' என்றேன்.

## ஹஜ்ஜத்துல் வதா

ஹதீஸ் 4395. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன்' ஹஜ்ஜத்துல் வதா'வுக்காகப் புறப்பட்டோம். (முதலில்) உம்ரா செய்வதற்காக இஹ்ராம் கட்டினோம். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'எவரிடம் தியாகப் பிராணியுள்ளதோ அவர்கள் உம்ராவுடன் ஹஜ்ஜும் செய்து கொள்ளட்டும். அவ்விரண்டையும் நிறைவேற்றிய பிறகே அவர்கள் இஹ்ராமிலிருந்து விடுபட வேண்டும்'' என்று கூறினார்கள். எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்த நிலையில் நபி(ஸல்) அவர்களுடன் மக்காவுக்குச் சென்றேன். (மாதவிடாயின் காரணத்தால்) நான் இறையில்லத்தைச் சுற்றிவரவில்லை. ஸஃபாவுக்கும் மர்வாவுக்குமிடையே ஓடவுமில்லை. எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் முறையிட்டேன். அப்போது அவர்கள், 'உன் தலை (முடியை) அவிழ்த்து வாரிக்கொள். ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக்கொள். உம்ராவைவிட்டு விடு'' என்று கூறினார்கள். அவ்வாறே செய்தேன். நாங்கள் ஹஜ்ஜை நிறைவேற்றி முடித்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர் அஸ்ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களுடன் தன்யீமுக்கு அனுப்பினார்கள். அங்கிருந்து நான் உம்ரா செய்தேன். 'இது (இந்த உம்ரா) உன்னுடைய (விடுபட்ட) உம்ராவுக்கு பதிலாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
உம்ராவுக்காக இஹ்ராம் கட்டியவர்கள் இறையில்லத்தைச் சுற்றிவந்து, ஸஃபா மர்வாவுக்கிடையே ஓடவும் செய்தனர். பிறகு, இஹ்ராமிலிருந்து விடுபட்டுப் பின்னர் மினாவிலிருந்து திரும்பிய பின் மற்றொரு முறையும் சுற்றிவந்தனர். ஹஜ்ஜையும் உம்ராவையும் சேர்த்து (ஹஜ்ஜுல் கிரான்) செய்தவர்கள் ஒரேயொரு முறைதான் சுற்றிவந்தனர்.

ஹதீஸ் 4396. இப்னு ஜுரைஜ்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி), 'உம்ரா செய்பவர் இறையில்லம் கஅபாவைச் சுற்றி வந்துவிட்டால் இஹ்ராமிலிருந்து விடுபட்டு விடுவார்'' என்று சொன்னதாக அதாஉ(ரஹ்) எனக்கு அறிவித்தார்கள். நான், 'எந்த ஆதாரத்தை வைத்து இப்னு அப்பாஸ்(ரலி) இப்படிக் கூறுகிறார்கள்'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'தியாகப் பிராணிகளை அறுத்துத் தியாகம் செய்வதற்கான இடம் தொன்மையான ஆலயத்தின் அருகில் உள்ளது'' எனும் (திருக்குர்ஆன் 22:33வது) இறைவசனத்தை ஆதாரமாகக் கொண்டும், நபி(ஸல்) அவர்கள், 'ஹஜ்த்துல வதாவின்போது இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடும் படி தம் தோழர்களுக்கு உத்தரவிட்டதை ஆதாரமாகக் கொண்டும் தான் இப்படிக் கூறினார்கள்'' என்று பதிலளித்தார்கள். நான், 'இஹ்ராமிலிருந்து விடுபடுவது அரஃபாவில் (போய்த்) தங்கிய பின்புதானே?' என்று கேட்டேன். அதற்கு அதாஉ(ரஹ்), 'அரஃபாவில் தங்குவதற்கு முன்பும் அங்கிருந்து வந்த பின்பும் (இரண்டு நேரங்களிலுமே) இஹ்ராமிலிருந்து விடுபடுவது அனுமதிக்கப்பட்டதே என்று இப்னு அப்பாஸ்(ரலி) கருதி வந்தார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4397. நபி(ஸல்) அவர்கள் பத்ஹாவில் இருந்தபோது, நான் அவர்களிடம் சென்றேன். அவர்கள், 'ஹஜ் செய்ய நாடிவிட்டீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு நான், 'ஆம்' என்றேன். அவர்கள், எதற்காக இஹ்ராம் கட்டினீர்கள்?' என்று கேட்டார்கள். நான், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டியதைப் போன்றே (அதே ஹஜ்ஜுல் கிரானுக்காகவே) நானும் இஹ்ராம் கட்டினேன்'' என்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இறையில்லம் கஅபாவைச் சுற்றி வந்து, ஸஃபா மர்வாவுக்கு இடையே ஓடுங்கள் பிறகு இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடுங்கள்'' என்று கூறினார்கள். எனவே, நான் இறையில்லம் கஅபாவைச் சுற்றிவந்து, ஸஃபா, மர்வாவுக்கு இடையே ஓடிய பிறகு கைஸ் குலத்துப் பெண் ஒருத்தியிடம் சென்றேன். அவள் என் தலையில் பேன் பார்த்தாள். என அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4398. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஹஃப்ஸா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜத்துல் வதாவை நிறைவேற்றிய ஆண்டில், (தவாஃபும் சஃயும் செய்து தலைமுடி குறைத்துவிட்டு) துணைவியருக்கு உத்தரவிட்டார்கள். அப்போது நான், 'நீங்கள் ஏன் (இஹ்ராமிலிருந்து) விடுபடவில்லை?' என்று கேட்டேன். அவர்கள், 'நான் என் தலைக்குக் களிம்பு தடவிப் படியச் செய்துவிட்டேன். என் தியாகப் பிராணிக்குக் கழுத்தில் (அடையாள) மாலை தொங்கவிட்டுவிட்டேன். எனவே, நான் தியாகப் பிராணியை அறுக்கும் வரை இஹ்ராமிலிருந்து விடுபடப் போவதில்லை'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4399. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஹஜ்ஜத்துல்வதாவின்போது'கஸ்அம்' குலத்துப் பெண்ணொருத்தி மார்க்கத் தீர்ப்பு கேட்டாள். அப்போது, ஃபள்ல் இப்னு அப்பாஸ்(ரலி) (வாகனத்தில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பின்னால் அமர்ந்து கொண்டிருந்தார். அவள், 'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ், தன் அடியார்களின் மீது கடமையாக்கிய (ஹஜ்ஜின்) விதி, வாகனத்தில் சரியாக அமர முடியாத அளவிற்குத் தள்ளாத முதியவரான நிலையில் என் தந்தையிடம் வந்து சேர்ந்தது. எனவே, நான் அவர் சார்பாக ஹஜ் செய்தால் அது நிறைவேறுமா?' என்று கேட்டாள். நபி(ஸல்) அவர்கள், 'ஆம் (நிறைவேறும்)'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4400. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றியின்போது'கஸ்வா' எனும் (தம்) ஒட்டகத்தின் மீது (பயணம் செய்தபடி) உஸாமா(ரலி) அவர்களைத் தமக்குப் பின்னால் அமர்த்திக் கொண்டு முன்னோக்கிச் சென்றார்கள். அப்போது அவர்களுடன் பிலால், உஸ்மான் இப்னு தல்ஹா(ரலி) ஆகியோர் இருந்தனர். இறுதியில், அவர்கள் தம் ஒட்டகத்தை இறையில்லம் (கஅபாவின்) அருகே மண்டியிட்டு அமரச் செய்தார்கள். பிறகு உஸ்மான் இப்னு தல்ஹா(ரலி) அவர்களிடம்'(கஅபாவின்) சாவியை எம்மிடம் கெண்டு வாருங்கள்'' என்று சொல்ல, அவரும் சாவியைக் கொண்டு வந்து, நபி(ஸல்) அவர்களும் உஸாமா, பிலால், உஸ்மான் இப்னு தல்ஹா) ஆகியோரும் உள்ளே நுழைந்தனர். பிறகு அவர்கள் (கஅபாவின்) கதவை மூடிக் கொண்டு நீண்ட பகல் முழுவதும் தங்கிப் பிறகு வெளியேறினர். மக்கள் (கஅபாவின்) உள்ளே நுழையப் போட்டியிட்டனர். நான் அவர்களை முந்திக் கொண்டு (உள்ளே நுழைந்து) விட்டேன். அப்போது பிலால்(ரலி) கதவுக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கக் கண்டேன். அவர்களிடம் நான், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கே தொழுதார்கள்?' என்று கேட்டேன். அவர்கள், 'அந்த இரண்டு தூண்களுக்கிடையே தொழுதார்கள்'' என்று கூறினார்கள். அப்போது இறையில்லம் கஅபாவுக்கு இரண்டு வரிசைகளில் ஆறு தூண்கள் இருந்தன. இறையில்லம் கஅபாவின் வாசல் தம் முதுகுக்குப் பின்னாலிருக்க முதல் வரிசையிலிருந்த இரண்டு தூண்களுக்கிடையே நபி(ஸல்) அவர்கள் தொழுதார்கள். அவர்கள் தொழுத இடம், நீங்கள்

கஅபாவினுள் நுழையும்போது உங்களுக்கும் உங்கள் எதிரிலிருக்கும் சுவருக்குமிடையே அமையும். நான் பிலால்(ரலி) அவர்களிடம், 'நபி(ஸல்) அவர்கள் எத்தனை (ரக்அத்கள்) தொழுதார்கள்?' என்று கேட்க மறந்துவிட்டேன். நபி(ஸல்) அவர்கள் தொழுத இடத்தில் சிவப்புச் சலவைக்கல் ஒன்று (பதிக்கப்பட்டு) இருந்தது.

ஹதீஸ் 4401. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் (மற்றொரு) துணைவியாரான ஸஃபிய்யா பின்த் ஹுயை(ரலி) அவர்களுக்கு'ஹஜ்ஜத்துல் வதா'வின்போது மாதவிடாய் ஏற்பட்டது. நபி(ஸல்) அவர்கள், 'அவர் நம்மை (மக்காவிலிருந்து செல்லவிடாமல்) தடுத்துவிட்டாரா?' என்று என்னிடம் கேட்டார்கள். அதற்கு நான், 'அவர் தவாஃபுஸ் ஸியாரத் செய்துவிட்டார்'' என்று கூற, நபி(ஸல்) அவர்கள், 'அப்படியானால் பரவாயில்லை. அவர் புறப்படலாம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4402. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்கள் எங்களிடையே இருக்க, ஹஜ்ஜத்துல் வதாவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். (நபி(ஸல்) அவர்கள் இறக்கும் வரை) ஹஜ்ஜத்துல் வதா ('விடை பெறும்'ஹஜ்) என்பதன் கருத்தென்ன என்று எங்களுக்குத் தெரியாது. இந்நிலையில், நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றி, (பிற்காலத்தில் தோன்றும் பெரும் பொய்யனான) அல்மஸீஹுத் தஜ்ஜாலைப் பற்றிக் கூறத் தொடங்கி, நீண்ட நேரம் அவனைப் பற்றியே கூறினார்கள். அப்போது, 'அல்லாஹ் அனுப்பிய எந்த இறைத்தூதரும் (அவனைப் பற்றித்) தம் சமுதாயத்தாரை எச்சரிக்காமல் இருந்ததில்லை. (இறைத்தூதர்) நூஹ்(அலை) அவர்கள் (தம் சமுதாயத்தாருக்கு) அவனைப் பற்றி எச்சரித்தார்கள். அவர்களுக்குப் பின்னால் வருகை தந்த இறைத்தூதர்களும் (அவனைப் பற்றித் தத்தம் சமுதாயத்தாருக்கு) எச்சரித்தனர். மேலும், (என் சமுதாயத்தினரான) உங்களிடையே தான் (இறுதிக் காலத்தில்) அவன் தோன்றுவான். அவனுடைய (அடையாளத்) தன்மைகளில் ஏதேனும் சில உங்களுக்குப் புலப்படாமல் போனாலும், நிச்சயமாக உங்களுடைய இறைவன் உங்களுக்குத் தெரியாதவனல்லன் என்பது உங்களுக்கு நன்றாகவே தெரியும் இதை மும்முறை கூறினார்கள் - உங்களுடைய இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்லன். அவனோ (தஜ்ஜாலோ) வலது கண் குருடானவன். அவனுடைய கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சை போன்றிருக்கும்.

ஹதீஸ் 4403. 'அறிந்து கொள்ளுங்கள். உங்களின் இந்த நகரத்தில், உங்களின் இந்த மாதத்தில் உங்களின் இந்த நாள் எப்படிப் புனிதமானதாக விளங்குகிறதோ அவ்வாறே அல்லாஹ் உங்களுக்கு உங்கள் இரத்தங்களையும் உங்கள் செல்வங்களையும் புனிதமானவையாக ஆக்கியுள்ளான்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொல்லிவிட்டு, 'நான் (இறைச்செய்தியை உங்களிடம்) சேர்த்துவிட்டேனா?' என்று கேட்டார்கள். மக்கள், 'ஆம் (சேர்த்து விட்டீர்கள்)'' என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! நீ சாட்சியாக இரு'' என்று மும்முறை கூறிய பின், 'உங்களுக்கு என்ன நேரப் போகிறதோ!"அல்லது'அந்தோ பரிதாபமே!"கவனமாக இருங்கள். எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்வதன் மூலம் இறைமறுப்பாளர்க(ளைப் போன்றவர்க)ளாய் நீங்கள் மாறிவிடாதீர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4404. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பத்தொன்பது புனிதப் போர்களில் கலந்துகொண்டார்கள். மேலும், அவர்கள் (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்த பின்பு ஒரேயொரு ஹஜ்தான் செய்தார்கள். அந்த ஹஜ்ஜத்துல் வதாவுக்குப் பிறகு அவர்கள் வேறெந்த ஹஜ்ஜும் செய்யவில்லை.

அறிவிப்பாளர் அபூ இஸ்ஹாக்(ரஹ்) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் (ஹிஜ்ரத்திற்கு முன்பு) மக்காவில் இருந்தவாறு மற்றொரு ஹஜ் செய்துள்ளார்கள்.

ஹதீஸ் 4405. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்' ஹஜ்ஜத்துல் வதா'வின்போது என்னிடம், 'மக்களை மௌனமாக இருக்கச் சொல்லுங்கள்!" என்று சொல்லிவிட்டு, 'எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்வதன் மூலம் இறைமறுப்பாளர்க(ளைப் போன்றவர்க)ளாய் மாறிவிடாதீர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4406. அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்

"வானங்களும் பூமியும் படைக்கப்பட்ட நாளில் இருந்த (பழைய) நிலைக்குக் காலம் திரும்பிவிட்டது. ஆண்டு என்பது பன்னிரண்டு மாதங்களாகும். அவற்றில் நான்கு மாதங்கள் புனிதமானவை. (அவற்றில்) மூன்று மாதங்கள் தொடர்ந்து வரக்கூடியவை. அவை துல்கஅதா, துல்ஹஜ் மற்றும் முஹர்ரம் ஆகியனவாகும். (மற்றொன்று) ஜுமாதல் ஆம்ராவுக்கும் ஷஅபான் மாதத்திற்கும் இடையிலுள்ள' முளர்' குலத்தாரின் ரஜப் மாதமாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(ஹஜ்ஜத்துல் வதாவின்போது, துல்ஹஜ் 10ஆம் நாளான) நஹ்ருடைய நாளில் நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது, 'இது எந்த மாதம் என்பதை நீங்கள் அறிவீர்களா?' எனக் கேட்டார்கள். நாங்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்'' என்றோம். அவர்கள் அந்த மாதத்திற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது துல்ஹஜ் இல்லையா?' என்று கேட்டார்கள். நாங்கள், 'ஆம்'' என்றோம். (பிறகு,)' இது எந்த நகரம்?' எனக் கேட்டார்கள். அதற்கு நாங்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்'' என்றோம். அப்போதும், அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது (புனிதமிக்க) நகரமல்லவா? எனக் கேட்க, நாங்கள், 'ஆம்'' என்றோம். மேலும், 'இது எந்த நாள்?' என்று கேட்டார்கள். நாங்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்'' என்றோம். அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது நஹ்ருடைய (துல்ஹஜ் 10ஆம்) நாள் அல்லவா?' எனக் கேட்க, நாங்கள், 'ஆம்'' என்றோம். (பிறகு,)' உங்களின் புனிதமிக்க இந்த நகரத்தில், உங்களின் புனிதமிக்க இந்த மாதத்தில் இன்றைய தினம் எந்த அளவு புனிதமானதோ அந்த அளவிற்கு உங்கள் உயிர்களும் உங்கள் உடைமைகளும் - உங்கள் மானமும் - உங்களுக்குப் புனிதமானவையாகும். நீங்கள் (மறுமையில்) உங்களுடைய இறைவனைச் சந்தீர்ப்பீர்கள். அப்போது அவன் உங்களிடம் உங்கள் செயல்கள் குறித்து விசாரணை செய்வான். அறிந்து கொள்ளுங்கள்: எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் வழி கெட்டவர்களாய் நீங்கள் மாறிவிடாதீர்கள்.

இதோ! இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு (நான் சொன்ன கட்டளைகளை) அறிவித்துவிடுங்கள். ஏனெனில், இச்செய்தி எவரிடம் தெரிவிக்கப்படுகிறதோ அவர், தாம் யாரிடமிருந்து இதைக் கேட்டாரோ அவரைவிட (அதாவது தமக்கு இதைச் சொன்னவரை விட) நன்கு (புரிந்து) பாதுகாப்பவராயிருக்கலாம்.

-இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) இதை அறிவிக்கும்போது, 'முஹம்மத்(ஸல்) அவர்கள் உண்மை கூறினார்கள்'' என்று கூறுவார்கள்.

பிறகு, நபி(ஸல்) அவர்கள், 'நான் உங்களிடம் (இறைச் செய்திகள் அனைத்தையும்) சேர்த்துவிட்டேனா?' என்று இரண்டு முறை கேட்டார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) கூறினார்.

"உங்கள் மானமும்'' என்பதையும் சேர்த்தே அபூ பக்ரா(ரலி) கூறினார் என எண்ணுகிறேன்.

ஹதீஸ் 4407. தாரிக் இப்னு ஷிஹாப்(ரஹ்) அறிவித்தார்
யூதர்களில் சிலர், (ஒரு குறிப்பிட்ட இறை வசனம் பற்றி), 'இந்த வசனம் (யூதர்களான) எங்களிடையே அருளப்பட்டிருந்தால் நாங்கள் (இது அருளப் பெற்ற) அந்த நாளை (கொண்டாடப்படவேண்டிய) பெருநாளாக ஆக்கிக்கொண்டிப்போம்'' என்று கூறினர். உமர்(ரலி), 'எந்த வசனம் அது?' என்று கேட்க அவர்கள், 'எந்த வசனம் அது?' என்று கேட்க அவர்கள், 'இன்று நான் உங்கள் மார்க்கத்தை உங்களுக்காக முழுமைப்படுத்திவிட்டேன் உங்களின் மீது என் அருட்கொடையை நிறைவாகப் பொழிந்து விட்டேன் உங்களுக்கு (உரிய) வாழ்க்கை நெறியாக இஸ்லாத்தை அங்கீகரித்துக் கொண்டேன்' எனும் (திருக்குர்ஆன் 05:03) இறைவசனம் தான் அது'' என்று பதிலளித்தார்கள். அதற்கு உமர்(ரலி), 'இது எந்த இடத்தில் அருளப்பெற்றது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4408. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ('விடைபெறும்' ஹஜ்ஜின் போது) புறப்பட்டோம். எங்களில் உம்ராவுக்காக இஹ்ராம் கட்டியவர்களும் இருந்தனர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டியவர்களும் இருந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டியிருந்தார்கள். ஹஜ் மற்றும் உம்ரா இரண்டிற்காகவும் சேர்த்து இஹ்ராம் கட்டியிருந்தவர்களும் நஹ்ருடைய (துல்ஹஜ் 10ஆம்) நாள் வரை இஹ்ராமிலிருந்து விடுபடவில்லை.
இது வேறிரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் (சிறிய மாற்றத்துடன்) அறிவிக்கப்பட்டுள்ளது. அவற்றில் ஒன்றில், 'ஹஜ்ஜத்துல் வதா ஆண்டில்' என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4409. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள்'ஹஜ்ஜத்துல் வதா'வின் சமயம் (நான் மக்காவிலிருந்தபோது எனக்கேற்பட்ட) ஒரு நோய்க்காக என்னை நலம் விசாரிக்க வருகை தந்தார்கள். அந்த நோயின் காரணத்தால் நான் மரணத்தை எதிர் நோக்கியிருந்தேன். நான், 'இறைத்தூதர் அவர்களே! செல்வந்தனாகிய எனக்கு என் ஒரே மகளைத் தவிர வேறு வாரிசு எவரும் இல்லாத நிலையில், நீங்கள் காணும் இந்த நோய் என்னைப் பீடித்துள்ளது. எனவே, நான் என் செல்வத்தில் இரண்டிலொரு பங்கை தர்மம் செய்து விடட்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'வேண்டாம்'' என்று கூறினார்கள். நான்'அப்படியானால் என் சொத்தில் பாதியை தர்மம் செய்யட்டுமா?' என்று கேட்க அதற்கும், 'வேண்டாம்'' என்று கூறினார்கள். நான், 'மூன்றிலொரு பங்கை தர்மம் செய்யட்டுமா?' என்று கேட்டேன். அவர்கள், 'மூன்றிலொரு பங்கா? மூன்றிலொரு பங்கே அதிகம் தான். நீங்கள் உங்களுடைய வாரிசுகளை மக்களிடம் கையேந்தும் நிலையில் ஏழைகளாகவிட்டுச் செல்வதை விட அவர்களைத் தன்னிறைவுடையவர்களாகவிட்டுச் செல்வது சிறந்ததாகும். நீங்கள் அல்லாஹ்வின் திருப்தியை விரும்பிச் செய்கிற செலவு எதுவாயினும் அதற்குப் பகரமாக உங்களுக்குப் பிரதிபலன் தரப்படும். எந்த அளவிற்கென்றால், நீங்கள் உங்கள் மனைவியின் வாய்க்குள் இடுகிற ஒரு கவளம் உணவுக்கும் கூட (உங்களுக்குப் பிரதி பலன் அளிக்கப்படும்.)'' என்று கூறினார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! (என் தோழர்களெல்லாம் மதீனாவுக்குச் செல்வார்கள்) நான் மட்டும் இங்கு (மக்காவில்) பின் தங்கியவனாக ஆகிவிடுவேனா?' எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், நீங்கள் இங்கு இருந்தபோதிலும் நல்லறங்கள் செய்துகொண்டே இருந்தால் உங்கள் அந்தஸ்தும் மேன்மையும் அதிகரித்துக் கொண்டேயிருக்கும்' எனக் கூறிவிட்டு உங்களை வைத்துச் சில கூட்டத்தினர் நன்மையடைவதற்காகவும் மற்ற சிலர் துன்பமடைவதற்காகவும் நீங்கள் இங்கேயே தங்கவைக்கப்படலாம்'' என்று கூறினார்கள். மேலும், 'இறைவா! என் தோழர்களின் ஹிஜ்ரத்தை முழுமையாக்குவாயாக! தங்கள் கால்

சுவடுகளின் வழியே (முந்தைய இணைவைக்கம் மார்க்கத்திற்கே) இவர்களைத் திரும்பிச் செல்லும்படி செய்துவிடாதே'' எனப் பிரார்த்தித்தார்கள். (நோயாளியாயிருந்த மற்றொருவரான) ஸஅத் இப்னு கவ்லா (ரலி) மக்காவிலேயே இறந்துவீட்டதற்காக, 'பாவம், ஸஅத் இப்னு கவ்லா! (அவர் நினைத்து நடக்கவில்லை) என்று நபி(ஸல்) அவர்கள் அனுதாபம் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 4410. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்'ஹஜ்ஜத்துல் வதா' வின்போது (ஹஜ் வழிபாடுகளை நிறைவு செய்த பின்) தம் தலையை மழித்துக் கொண்டார்கள்.

ஹதீஸ் 4411. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களில் சிலரும் ஹஜ்ஜத்துல் வதாவின்போது (ஹஜ் வழிபாடுகளை நிறைவு செய்த பின்) தம் தலையை மழித்துக் கொண்டார்கள். (தோழர்கள்) சிலர் தம் தலைமுடியைக் குறைத்துக் கொண்டார்கள்.

ஹதீஸ் 4412. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

ஹஜ்ஜத்துல் வதாவின்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மினாவில் மக்களுக்குத் தொழுகை நடத்தியபடி நின்றுகொண்டிருந்தபோது, கழுதையொன்றில் பயணித்தபடி நான் அவர்களை நோக்கிச் சென்றேன். (என்னுடைய) அந்தக் கழுதை (தொழுகையாளிகளின்) ஓரணியில் ஒரு பகுதிக்கு முன்னால் நடந்து சென்றது. பிறகு நான் அதிலிருந்து இறங்கி மக்களுடன் வரிசையில் நின்று கொண்டேன்.

ஹதீஸ் 4413. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்

உஸாமா இப்னு ஸைத் (ரலி) அவர்களுடன் நான் இருந்துகொண்டிருந்தபோது, நபி(ஸல்) அவர்கள் மேற்கொண்ட ஹஜ் பயணத்தின் வேகத்தைப் பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், '(அவர்களின் பயணவேகம்) நடு நிலையானதாய் இருந்தது. (மக்கள் நெரிசல் இல்லாத) விசாலமான இடம் வந்ததும் அவர்கள் விரைந்து செல்வார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4414. அபூ அய்யூப் அல்அன்சாரி (ரலி) அறிவித்தார்

நான் ஹஜ்ஜத்துல் வதாவின்போது இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் (முஸ்தலிஃபாவில்) மஃக்ரிபையும் இஷாவையும் ஒரு சேரத் தொழுதேன்.

## தபூக் போர் - அதுதான் உஸ்ராப் போர்

ஹதீஸ் 4415. அபூ மூஸா (ரலி) அறிவித்தார்

என் நண்பர்கள் என்னை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, தமக்காக (பயண) வாகனம் கேட்கும்படி அனுப்பினார்கள். அப்போது அவர்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் உஸ்ரா(ப் போரின்) படையுடன் செல்லவிருந்தனர் - உஸ்ராப் போரே தபூக் போராகும் - அப்போது நான், 'இறைத்தூதர் அவர்களே! என் நண்பர்கள் தமக்காக வாகனம் கேட்கும்படி என்னைத் தங்களிடம் அனுப்பி வைத்துள்ளனர்'' என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு எந்த வாகனத்தையும் என்னால் தரவியலாது'' என்று கூறினார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கோபத்திலிருந்து சமயத்தில் நான் அவர்களிடம் சென்றுவிட்டேன். நான் அதை அறிந்திருக்கவில்லை. நபி(ஸல்) அவர்கள் (வாகனம் தர) மறுத்ததனாலும் என் மீது அவர்கள் வருத்தம் கொண்டிருப்பார்கள் என்ற அச்சத்தினாலும் நான் கவலை கொண்டவனாகத் திரும்பினேன். நபி(ஸல்) அவர்கள் கூறியதை என் நண்பர்களிடம் வந்து தெரிவித்தேன். சிறிது நேரம் தான் கழிந்திருக்கும். அதற்குள், 'அப்துல்லாஹ் இப்னு கைஸே!''என்று பிலால் (ரலி) அழைப்பதைக் கேட்டேன். உடனே நான் பதிலளித்தேன். அப்போது அவர்கள், 'உங்களை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அழைக்கிறார்கள். அவர்களின் அழைப்பை ஏற்றுச் செல்லுங்கள்'' என்று கூறினார்கள். நான்

நபி(ஸல்) அவர்களிடம் சென்றபோது அவர்கள், 'ஒரே ஈற்றில் பிறந்த இந்த இரண்டு ஒட்டகங்களையும், ஒரே ஈற்றில் பிறந்த இந்த இரண்டு ஒட்டகங்களையும்..!" என்று ஆறு ஒட்டகங்களைக் காட்டி, 'பிடித்துக்கொள்'' என்று கூறினார்கள்.
அவற்றை அப்போதுதான் ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடமிருந்து விலைக்கு வாங்கியிருந்தார்கள். உங்கள் நண்பர்களிடம் இவற்றை (ஒட்டிக்) கொண்டு சென்று அவர்களிடம், 'அல்லாஹ்' அல்லது 'இறைத்தூதர்' அவர்கள் இந்த ஒட்டகங்களை உங்கள் பயணத்திற்காக அளித்துள்ளார்கள். எனவே, இவற்றிலேறிப் பயணம் செய்யும்படி சொல்லக் கூறினார்கள்' எனத் தெரிவியுங்கள்'' என்று கூறினார்கள். அவர்களிடம் நான் அவற்றை(ஓட்டி)க் கொண்டு சென்று, 'நபி(ஸல்) அவர்கள் இவற்றின் மீது உங்களைப் பயணம் செல்லும்படி கூறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் சிலர் என்னுடன் வந்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ('நான் எந்த வாகனமும் தர மாட்டேன்' என்று) கூறியதைக் கேட்டவர்களிடம் விசாரிக்கும் வரையில் உங்களை நான் விடமாட்டேன். ஏனெனில், நான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொல்லாத ஒன்றை உங்களிடம் சொல்லிவிட்டதாக நீங்கள் நினைத்துவீடக் கூடாதல்லவா?' எனக் கூறினேன். அதற்கு என் நண்பர்கள், '(அதற்கெல்லாம் அவசியமில்லை.) உங்களை உண்மையாளர் என்றே நாங்கள் கருதுகிறோம். (இருந்தாலும், நீங்கள் விரும்புகிறீர்கள் என்ற காரணத்தால்) நீங்கள் விரும்பியபடி நாங்கள் செய்கிறோம்'' என்று கூறினார்கள். நான் அவர்களுக்குத் தரமாட்டேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (முதலில்) மறுத்ததையும், பிறகு அவர்களே தந்தையும் அறிந்த சிலரிடம் அழைத்துச் சென்றேன். அப்போது அந்தச் சிலர், நான் மக்களிடம் சொன்னதைப் போன்றே கூறினார்கள்.
ஹதீஸ் 4416. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தபூக் போருக்குப் புறப்பட்டார்கள். (மனைவி மக்களைக் கவனித்துக் கொள்வதற்காக மதீனாவில்) அலீ(ரலி) அவர்களை (தாம் திரும்பிவரும் வரை தமக்கு)ப் பிரதிநிதியாக நியமித்தார்கள். அப்போது அலீ(ரலி), 'குழந்தைகளையும் பெண்களையும் கவனித்துக் கொள்வதற்காகவா என்னைவிட்டுச் செல்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'மூஸாவிடம் ஹாரூன் இருந்த அந்தஸ்தில் என்னிடம் நீங்கள் இருப்பதை விரும்பவில்லையா? ஆயினும், (ஒரு வேறுபாடு என்னவெனில்), எனக்குப் பிறகு எந்த இறைத்தூதரும் இல்லை'' என்று கூறினார்கள்.
ஹதீஸ் 4417. யஅலா இப்னு உமய்யா(ரலி) அறிவித்தார்
நான் நபி(ஸல்) அவர்களுடன் சிரம(ப் போரான தபூக்) யுத்தத்தில் கலந்து கொண்டேன். என் செயல்களிலேயே அந்தப் புனிதப் போர் தான் என்னிடம் மிக உறுதி வாய்ந்ததாகும். என்னிடம் கூலித் தொழிலாளி ஒருவர் இருந்தார். அவர் ஒரு மனிதரிடம் சண்டையிட்டார். அந்த இருவரில் ஒருவர் மற்றவரின் கையைக் கடித்துவிட்டார். கடிபட்டவர், கடித்தவரின் வாயிலிருந்து தன்னுடைய கையை இழுத்துக் கொள்ள முனைந்தபோது கடித்தவரின் முன்பற்களில் ஒன்று கழன்று (விழுந்து)விட்டது. இருவரும் (தங்கள் வழக்கை) நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றபோது, அவர்கள் பல்லை இழந்தவருக்கு நஷ்டயீடு தரத் தேவையில்லை (பழி வாங்கிக் கொள்ளவும் அனுமதியில்லை)'' என்று தீர்ப்பளித்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அதாஉ(ரஹ்) கூறினார்:
அறிவிப்பாளர் ஸஃப்வான் இப்னு யஅலா(ரஹ்), 'அவ்விருவரில் யார், யாரைக் கடித்தார் என்று எனக்குத் தெரிவித்தார்கள். ஆனால், நான் அதை மறந்துவிட்டேன். மேலும், 'ஒட்டகத்தின் வாயில் மெல்லக் கொடுப்பது போல் உன்னுடைய வாயில் நீ மெல்லுவதற்காக அவர் தன்னுடைய கையைவிட்டு வைத்திருப்பாரா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதாகவும் ஸஃப்வான் அவர்கள் கூறினார்கள் என்று நினைக்கிறேன்.

கஅப் இப்னு மாலிக்(ரலி) அவர்களின் நிகழ்ச்சியும், `(தபூக் போரில் தக்க காரணமின்றி கலந்து கொள்ளாமலிருந்துவிட்டதற்காக) யாருடைய விஷயத்தில் தீர்ப்பளிக்காமல் தள்ளிவைக்கப்பட்டிருந்தோ அந்த மூவரையும் அல்லாஹ் மன்னித்தான்‘` எனும் (திருக்குர்ஆன் 09:118வது) இறைவசனமும்.

ஹதீஸ் 4418. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

“தபூக் போரைத் தவிர, நபி(ஸல்) அவர்கள் புரிந்த எந்தப் போரிலும் நான் கலந்துகொள்ளாமல் இருந்ததில்லை. இதுவல்லாது நான் பத்ருப் போரிலும் கலந்து கொள்ளவில்லை. பத்ரில் கலந்துகொள்ளாத எவரும் (அல்லாஹ்வினால்) கண்டிக்கப்படவுமில்லை. (ஏனெனில்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குறைஷிகளின் வணிகக் குழுவை (வழி மறிக்க) நாடியே (பத்ருக்குப் போனார்கள். (போன இடத்தில்) போரிடும் திட்டம் இல்லாமலேயே அவர்களையும் எதிரிகளையும் அல்லாஹ் (பத்ருக் களத்தில்) சந்திக்கும்படி செய்துவிட்டான்.

‘இஸ்லாத்தில் நாங்கள் நிலைத்திருப்போம்’ என (அன்சாரிகளான) நாங்கள் உறுதிமொழி அளித்த’அகாப இரவில்’ இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நானும் இருந்தேன். இதற்கு பதிலாக பத்ருப் போரில் கலந்து கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கவேண்டும் என நான் விரும்பியதில்லை’அல் அகபா’ பிரமாணத்தைவிட’பத்ர்’ மக்களிடையே பெயர் பெற்றதாக இருந்தாலும் சரியே!

(தவூக் போரில் கலந்து கொள்ளாததையடுத்து நடந்த நிகழ்ச்சிகள் குறித்த) என்னுடைய செய்திகள் சில பின்வருமாறு:

அந்த (தபூக்) போரில் நான் கலந்து கொள்ளாதபோது இருந்த உடல் பலமும் பொருள் வசதியும் (என் வாழ்நாளில்) வேறெப்போதும் எனக்கு இருந்ததில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! ஒரே நேரத்தில் இரண்டு ஒட்டகங்கள் ஒருபோதும் என்னிடம் இருந்ததில்லை. ஆனால், அந்தப் போரின்போது ஒரே நேரத்தில் இரண்டு ஒட்டகங்களை நான் வைத்திருந்தேன். மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு புனிதப் போருக்குச் செல்ல நாடினால் (பெரும்பாலும்) வேறெதற்கோ செல்வது போன்று (இரண்டு பொருள்படும்படி பேசிப் பாசாங்கு செய்து) அதை மறைக்காமல் இருந்ததில்லை. ஆனால், தபூக் போர் (நேரம்) வந்தபோது அதற்காகக் கடும் வெயிலில் நபி(ஸல்) அவர்கள் படையெடுத்துச் செல்லவிருந்தார்கள். தொலைதூரப் பயணம் மேற்கொள்ள வேண்டியிருக்கும் என்றும், பெரும் (பாலைவன) வனாந்திரப் பிரதேசத்தைக் கடந்து செல்லவேண்டியிருக்கும் என்றும், அதிக (எண்ணிக்கையிலான) எதிரிகளைச் சந்திக்க வேண்டியிருக்கும் என்றும் எதிர் பார்த்தார்கள். எனவே, முஸ்லிம்களுக்கு அவர்கள் எதிர்கொள்ளவேண்டியது பற்றி வெளிப்படையாகவே தெரிவித்துவிட்டார்கள். அப்போதுதான் அவர்கள் தங்களின் போருக்கான ஆயத்த ஏற்பாடுகளைச் செய்து கொள்ள முடியும். தாம் விரும்பிய திசையை (தபூக்கை) அவர்களுக்குத் தெரிவித்தும்விட்டார்கள். ’எழுதப்படும் எந்தப் பதிவேடும் இத்தனைப் பேருக்கு இடமளிக்காது’ எனும் அளவிற்கு முஸ்லிம்கள் பெரும் எண்ணிக்கையில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தார்கள்.

(போரில் கலந்துகொள்ளாமல்) தலைமறைவாகிவிடலாமென நினைக்கும் எந்த மனிதரும், அல்லாஹ்விடமிருந்து இறை அறிவிப்பு (வஹீ) வராத வரையில் (தான் போருக்கு வராத) விஷயம் நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிய வராது என்று எண்ணவே செய்வார். (அந்த அளவிற்குப் படையினரின் எண்ணிக்கை மிகுந்திருந்தது. பேரீச்சம்) பழங்கள் பழுத்து மர நிழல்கள் அடர்ந்து நின்ற) அறுவடைக் காலமான அந்த வெப்பம் மிகுந்த வெயில்) காலத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்தப் போருக்குச் செல்ல ஆயத்தமானார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களும், அவர்களுடன் முஸ்லிம்களும் பயண ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தனர். நானும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு பயண ஏற்பாடுகளைச் செய்யக் காலை நேரத்தில் செல்லலாவேன். என்னுடைய பயணத்திற்கான எந்த ஏற்பாட்டையும் செய்து முடிக்காமல் திரும்பி வந்துவிடுவேன்.'(நினைக்கும் போது) அந்த ஏற்பாடுகளைச் செய்து முடிக்க எனக்குத் தான் சக்தியிருக்கிறதே! (பிறகு, நான் ஏன் அவசரப்படவேண்டும்?)' என்று என் மனத்திற்குள் கூறிக்கொண்டேன். என் நிலை இப்படியே நீடித்துக் கொண்டிருந்தது. மக்கள் பெரும்பாடுபட்டனர். (ஒரு வழியாகப் பயண ஏற்பாடு முடிந்தது.) பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , தம்முடன் முஸ்லிம்களை அழைத்துக் கொண்டு (ஒரு) காலை நேரத்தில் புறப்பட்டுவிட்டார்கள். அப்போதும் நான் என்னுடைய பயணத்திற்கு வேண்டிய எந்த ஏற்பாட்டையும் செய்து முடித்திருக்கவில்லை.'நபி(ஸல்) அவர்கள் சென்ற பின் ஒரு நாள் அல்லது இரண்டு நாள்களில் பயண ஏற்பாடுகளைச் செய்து அவர்களடன் போய்ச் சேர்ந்துகொள்வேன்' என்று நான் (என் மனத்திற்குள்) சொல்லிக் கொண்டேன். அவர்கள் அனைவரும் சென்ற பிறகு (அன்றைய இரவும் கழிந்து) மறுநாள் காலை பயண ஏற்பாடுகளைச் செய்ய நினைத்தேன். ஆனால், அன்றைய தினமும் எந்த ஏற்பாட்டையும் செய்து முடிக்காமல் திரும்பி வந்தேன். அதற்கு அடுத்த நாள் காலையிலும் நினைத்தேன். அன்றும் எந்த ஏற்பகுதி செய்து முடிக்கவில்லை. (இன்று நாளை என்று) என்னுடைய நிலை இழுபட்டுக் கொண்டே சென்றது. முஸ்லிம்கள் விரைவாகப் புறப்பட்டுச் சென்றார்கள். (எனக்கு) அந்தப் போர் கை நழுவிவிட்டது. நான் உடடினயாகப் புறப்பட்டுச் சென்று படையினருடன் சேர்ந்துகொள்ளலாம் என்று நினைத்தேன். அப்படி நான் செய்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். (ஆனால், என்ன செய்வது?) அது என் விதியில் எழுதப்பட்டிருக்கவில்லை.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் போருக்குச் சென்றதன் பின்னால், மதீனாவில் நான் மக்களிடையே சுற்றி வரும்போது எனக்குப் பெரும் வருத்தமே ஏற்பட்டது. நயவஞ்சகர் எனச் சந்தேம்க்கப்பட்ட மனிதர்களையும் இறைவனால் சலுகை வழங்கப்பட்ட (முதியோர், பெண்கள் போன்ற) பலவீனர்களையும் தவிர வேறெவரையும் நான் (மதீனாவிற்குள்) பார்க்கவில்லை. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , தபூக் சென்றடையும் வரையில் என்னை நினைவு கூரவேயில்லை. தபூக்கில் மக்களிடையே அமர்ந்து கொண்டிருக்கும்போது தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'கஅப் என்ன ஆனார்?' என்று கேட்டார்கள். பனு சலிமா குலத்தைச் சேர்ந்த ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! அவரின் இரண்டு சால்வைகளும் (ஆடை அணிகலன்களும்) அவற்றைத் தம் தோள்களில் போட்டு அவர் (அழகு) பார்த்துக் கொண்டிருப்பதும் தான் அவரை வரவிடாமல் தடுத்துவிட்டன'' என்று கூறினார். உடனே, முஆத் இப்னு ஜபல்(ரலி), (அந்த மனிதரை நோக்கி),'தீய வார்தை சொன்னாய். அல்லாஹ்வின் மேல் ஆணையாக! அவரைக் குறித்து நல்லதைத் தவிர வேறெதையும் நாங்கள் அறிந்திருக்கவில்லை இறைத்தூதர் அவர்களே!''என்று கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பதிலேதும் கூறாமல்) மௌனமாகவே இருந்தார்கள்.
நபி(ஸல்) அவர்கள் (தபூக்கிலிருந்து) திரும்பி வந்து கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி எனக்கு எட்டியபோது கவலை என் மனத்தில் (குடி) புகுந்தது. (அல்லாஹ்வின் தூதரிடம் சாக்குப் போக்குச் சொல்வதற்காகப்) பொய்யான காரணங்களை நான் யோசிக்கத் தொடங்கினேன்.'நாளை நபியவர்களின் கோபத்திலிருந்து நான் எப்படித் தப்புவேன்?' என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன். மேலும், அதற்காக நான் என் குடும்பத்தாரில் கருத்துள்ள ஒவ்வொருவரிடமும் (ஆலோசனை) உதவி தேடினேன். ஆனால், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மதீனாவை) நெருங்கி வந்துவிட்டார்கள் என்று (செய்தி) சொல்லப்பட்டபோது (நான் புனைந்து வைத்திருந்த) பொய்மை என் மனத்தைவிட்டு விலகிவிட்டது.'பொய்யான காரணம் எதையும் சொல்லி நபி(ஸல்) அவர்களிடமிருந்து

ஒருபோதும் தப்பித்துக் கொள்ள முடியாது. அல்லாஹ் எல்லாவற்றையும் அறிந்தவன். அவன் தன் தூதருக்கு உண்மை நிலவரத்தைத் தெரிவித்துவிடுவான்)' என்று உணர்ந்து, நபி(ஸல்) அவர்களிடம் உண்மையைச் சொல்லிவிட முடிவு செய்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் காலை நேரத்தில் (மதீனாவிற்கு) வருகை புரிந்தார்கள்.
(பொதுவாக) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து திரும்பி வந்தால் முதலில் பள்ளிவாசலுக்குச் சென்று அங்கு இரண்டு ரக்அத்கள் தொழுத பின் மக்களைச் சந்திப்பதற்காக (அங்கு) அமர்ந்து கொள்வது அவர்களின் வழக்கம். (வழக்கம் போல்) அதை அவர்கள் செய்தபோது, (தபூக் போரில் கலந்துகொள்ளச் செல்லாமல்) பின்தங்கிவிட்டவர்கள் அவர்களிடம் வந்து, அவர்களுக்கு முன்னால் சத்தியமிட்டு (தாம் போருக்கு வராமல் போனதற்கு) சாக்குப் போக்குக் கூறத் தொடங்கினர். அவர்கள் எண்பதுக்கும் மேற்பட்ட நபர்களாக இருந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , அவர்களின் வெளிப்படையான காரணங்களை ஏற்று அவர்களிடம் உறுதிப் பிரமாணம் செய்து கொடுத்தார்கள். அவர்களுக்காகப் பாவமன்னிப்பும் தேடினார்கள். அவர்களின் அந்தரங்கத்தை அல்லாஹ்விடம் ஒப்படைத்துவிட்டார்கள்.
அப்போது, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தேன். அவர்களுக்கு நான் சலாம் சொன்னபோது கோபத்திலிருப்பவர் எவ்வாறு புன்னகைப்பாரோ அது போன்று புன்னகைத்தார்கள். பிறகு, 'வாருங்கள்'' என்று கூறினார்கள். உடனே, நான் அவர்களிடம் (சில எட்டுகள் வைத்து) நடந்து சென்று அவர்களின் முன்னிலையில் அமர்ந்து கொண்டேன். அப்போது அவர்கள் என்னிடம், '(போரில்) நீங்கள் ஏன் கலந்துகொள்ளவில்லை. நீங்கள் (போருக்காக) வாகனம் வாங்கி வைத்துகொண்டிருக்கவில்லையா?' என்று கேட்டார்கள். நான், 'ஆம். (வாங்கி வைத்திருந்தேன்.) அல்லாஹ்வின் மீதாணையாக! தாங்கள் அல்லாத (வேறு எவரேனும் ஓர்) உலகாயதவாதிக்கு அருகில் நான் அமர்ந்து கொண்டிருந்தால் ஏதாவது (பொய்யான) சாக்குப் போக்குச் சொல்லி (அவருடைய) கோபத்திலிருந்து தப்பித்துக் கொள்ள உடனடியாக வழி கண்டிருப்பேன். (எவராலும் வெல்ல முடியாத) வாதத் திறன் எனக்கு வழங்கப்பட்டுள்ளது. ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களிடம் ஏதாவது பொய்யைச் சொல்லி இன்று உங்களை நான் என்னைக் குறித்துத் திருப்தியடையச் செய்துவிட்டாலும், அல்லாஹ் வெகுவிரைவில் (உண்மை நிலவரத்தைத் தங்களுக்குத் தெரியப்படுத்தி) என் மீது தங்களைக் கடுங்கோபம்கொள்ளச் செய்து விடுவான் என்பதை நான் நன்கு அறிந்துள்ளேன். (அதே சமயம்) தங்களிடம் நான் உண்மையைச் சொல்லிவிட்டால் (தற்போது) அது தொடர்பாக என் மீது தாங்கள் வருத்தப்படுவீர்கள். ஆயினும், அது விஷயத்தில் அல்லாஹ்வின் மன்னிப்பை நான் எதிர்பார்க்கிறேன். இல்லை அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் போல் கலந்து கொள்ளாததற்கு) என்னிடம் எந்தக் காரணமும் இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! தங்களைவிட்டும் நான் பின்தங்கிவிட்ட அந்த நேரத்தில் எனக்கு இருந்த உடல் பலமும் வசதி வாய்ப்பும் அதற்கு முன் ஒருபோதும் வசதி வாய்ப்பும் அதற்கு முன் ஒருபோதும் எனக்கு இருந்ததில்லை'' என்று கூறினேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இவர் உண்மை சொல்லிவிட்டார்'' (என்று கூறிவிட்டு என்னை நோக்கி) சரி! எழுந்து செல்லுங்கள். உங்களின் விஷயத்தில் அல்லாஹ்வே தீர்ப்பளிப்பான்'' என்று கூறினார்கள். உடனே நான் எழுந்து சென்றேன்.
பனு சலிமா குலத்தைச் சேர்ந்த சிலர் என்னைப் பின்தொடர்ந்து ஓடி வந்து, 'அல்லாஹ்வின் மீதாணையாக! இதற்கு முன்னால் எந்தப் பாவத்தையும் நீங்கள் செய்ததாக நாங்கள் அறிந்ததில்லை. (போரில்) கலந்து கொள்ளாத (மற்ற)வர்கள் சொன்ன அதே (பொய்க்) காரணத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சொல்வதற்குக் கூட உங்களால் இயலாமல் போய்விட்டதே! நீங்கள் செய்த பாவத்திற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கேட்கும் பாவ

மன்னிப்பே உங்களுக்குப் போதுமானதாய் இருந்திருக்குமே!"என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! பனு சலிமா குலத்தினர் என்னைக் கடுமையாக ஏசிக் கொண்டேயிருந்தனர். எந்த அளவிற்கென்றால், நான் (அல்லாஹ்விடம் தூதரிடம்) திரும்பிச் சென்று (இதற்கு முன்) நான் சொன்னது பொய் என்று (கூறி, போரில் கலந்து கொள்ளாததற்கு ஏதாவது பொய்க் காரணத்தைச்) சொல்லிவிடலாமா என்று நான் நினைத்தேன். பிறகு நான் பனு சலிமா குலத்தாரை நோக்கி, '(தீர்ப்பு தள்ளி வைக்கப்பட்ட) இந்த நிலையை என்னுடன் வேறு யாரேனும் சந்தித்திருக்கிறார்களா?' என்று கேட்டேன். அதற்கவர்கள், 'ஆம், இரண்டு பேர் நீங்கள் சொன்னதைப் போன்றே (உண்மையான காரணத்தை நபியவர்களிடம்) கூறினார்கள். உங்களுக்குச் சொல்லப்பட்டதும் தான் அப்போது அவர்கள் இருவருக்கும் (பதிலாகச்) சொல்லப்பட்டது!"என்று கூறினார்கள். உடனே நான், 'அவர்கள்'' இருவரும் யார்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'முராரா இப்னு ரபீஉ அல் அம்ரீ அவர்களும், ஹிலால் இப்னு உமய்யா அல் வாக்கிஃபீ அவர்களும்'' என்று பத்ருப்போரில் கலந்துகொண்ட இரண்டு நல்ல மனிதர்களின் பெயர்களை என்னிடம் கூறினர். அவர்கள் இருவராலும் (எனக்கு) ஆறுதல் கிடைத்தது. அவர்கள் இருவரின் பெயர்களையும் பனு சலிமா குலத்தார் என்னிடம் சொன்னவுடன் நான் (என் இல்லத்திற்குச்) சென்றுவிட்டேன்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்தப் போரில் கலந்துகொள்ளாதவர்களில் எங்கள் மூவரிடம் மட்டும் (யாரும்) பேசக் கூடாதென முஸ்லிம்களுக்குத் தடை விதித்துவிட்டார்கள். எனவே, மக்கள் எங்களைத் தவிர்த்தனர். மேலும், அவர்கள் (முற்றிலும்) எங்களின் விஷயத்தில் மாறிப் போய்விட்டார்கள். (வெறுத்துப் போனதால்) என் விஷயத்தில் இப்புவியே மாறிவிட்டது போன்றும் அது எனக்கு அன்னியமானது போன்றும் நான் கருதினேன். இதே நிலையில் நாங்கள் ஐம்பது நாள்கள் இருந்தோம். என்னுடைய இரண்டு சகாக்களும் (முராராவும், ஹிலாலும்) செயலிழந்து போய்த் தம் இல்லங்களிலேயே அமர்ந்து கொண்டு அழுது கொண்டிருந்தனர். ஆனால் நான், மக்களிடையே (உடல்) பலம் மிக்கவனாகவும் (மன) வலிமை படைத்தவனாகவும் இருந்தேன். எனவே, நான் (வீட்டைவிட்டு) வெளியேறி முஸ்லிம்களுடன் (ஜங்காலத்) தொழுகையில் கலந்துகொண்டும், கடை வீதிகளில் சுற்றிக்கொண்டுமிருந்தேன். என்னிடம் எவரும் பேசமாட்டார்கள். நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் செல்வேன். தொழுகையை முடித்துக் கொண்டு அவர்கள் அமர்ந்திருக்கும்போது சலாம் கூறுவேன். எனக்கு பதில் சலாம் சொல்வதற்காக அவர்கள், தம் உதடுகளை அசைக்கிறார்களா இல்லையா என்று எனக்கு நானே கேட்டுக்கொள்வேன். பிறகு, அவர்களுக்கு அருமேலேயே (கூடுதலான) தொழுகைகளை நிறைவேற்றுவேன். அப்போது (என்னை நபி(ஸல்) அவர்கள் பார்க்கிறார்களா என்று) ஓரக் கண்ணால் இரகசியமாகப் பார்ப்பேன். நான் என் தொழுகையில் ஈடுபட்டவுடன் அவர்கள் என்னைக் கவனிப்பதும், அவர்கள் பக்கம் நான் திரும்பியதும் அவர்கள் என்னிடமிருந்து முகத்தைத் திருப்பிக்கொள்வதுமாக இருந்தார்கள்.

மக்களின் புறக்கணிப்பு நீடித்துக் கொண்டே சென்றபோது, நான் நடந்து சென்று அபூ கத்தாதா(ரலி) அவர்களின் தோட்டத்தின் சுவர் மீதேறினேன். அவர் என் தந்தையின் சகோதரர் புதல்வரும், மக்களில் எனக்கு மிகவும் பிரியமானவரும் ஆவார் அவருக்கு நான் சலாம் சொன்னேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் எனக்கு பதில் சலாம் சொல்லவில்லை. உடனே நான், 'அபூ கத்தாதா! அல்லாஹ்வை முன்வைத்து உன்னிடம் கேட்கிறேன். அல்லாய்வையும் அவனுடைய தூதரையும் நான் நேசிக்கிறேன் என்று நீ அறிவாயாக?' என்று கேட்டேன். அதற்கு அவர் (பதிலேதும் கூறாமல்) மௌனமாயிருந்தார். பிறகு மீண்டும் அவரிடம் அல்லாஹ்வை முன்வைத்து (முன்பு போன்றே) கேட்டேன். அப்போதும் அவர் மௌனமாயிருந்தார். (மூன்றாம் முறையாக) மீண்டும் அவரிடம் நான் அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்டேன். அப்போது அவர், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே

நன்கறிந்தவர்கள்‘ ' என்று (மட்டும்) பதிலளித்தார். அப்போது என் இரண்டு கண்களும் (கண்ணீரைப்) பொழிந்தன. பிறகு நான் திரும்பி வந்த அந்தச் சுவரில் ஏறி (வெளியேறி) னேன்.

(நிலைமை இவ்வாறு வீடித்துக் கொண்டிருக்க) ஒரு நாள் மதீனாவின் கடைத்தெருவில் நடந்து சென்று கொண்டிருந்தேன். அப்போது மதீனாவிற்கு உணவு தானிய விற்பனைக்காக வந்திருந்த ஷாம் நாட்டு விவசாயிகளில் ஒருவர், 'கஅப் இப்னு மாலிக்கை எனக்கு அறிவித்துத் தருவது யார்?' என்று (என்னைக் குறித்து) விசாரித்துக் கொண்டிருந்தார். மக்கள் (என்னை நோக்கி) அவரிடம் சைகை செய்யலாயினர். உடனே, அவர் என்னிடம் வந்து, 'ஃகஸ்ஸான்' நாட்டின் அரசனிடமிருந்து (எனக்கு எழுதப்பட்டிருந்த) கடிதமொன்றைத் தந்தார். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

நிற்க! உங்கள் தோழர் (முஹம்மது) உங்களைப் புறக்கணித்து (ஒதுக்கி)விட்டார் என்று எனக்குச் செய்தி எட்டியது. உங்களை இழிவு செய்து (உங்கள் உரிமைகள்) வீணடிக்கப்படும் நாட்டில் நீங்கள் நீடிக்க வேண்டுமென்ற அவசியத்தை உங்களுக்கு அல்லாஹ் ஏற்படுத்தவில்லை. எனவே, எங்களிடம் வந்துவிடுங்கள். நாங்கள் உங்களிடம் நேசம் காட்டுகிறோம்.

இதை நான் படித்தபோது, 'இது இன்னொரு சோதனையாயிற்றே!"என்று (என் மனத்திற்குள்) கூறிக்கொண்டு அதை எடுத்துச்சென்று (ரொட்டி சுடும்) அடுப்பிலிட்டு எரித்துவிட்டேன்.

ஐம்பது நாள்களில் நாற்பது நாள்கள் கழிந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஒரு தூதர் என்னிடம் வந்து, 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , நீங்கள் உங்கள் மனைவியைவிட்டும் விலகி விட வேண்டுமென்று உத்தரவிடுகிறார்கள்‘ ' என்று கூறினார். அதற்கு நான், 'அவளை நான் விவாகரத்துச செய்துவிடவா? அல்லது நான் என்ன செய்யவேண்டும்?' என்று கேட்டேன். அவர், 'இல்லை. (விவாகரத்து செய்யவேண்டாம்.) அவரைவிட்டு நீங்கள் விலகி விடவேண்டும். அவரை நெருங்கக் கூடாது (இதுவே இறைத்தூதர் உத்தரவு)‘ ' என்று கூறினார். இதைப் போன்றே என் இரண்டு சகாக்களுக்கும் (நபி(ஸல்) அவர்கள் உத்தரவு) அனுப்பியிருந்தார்கள். எனவே, நான் என் மனைவியிடம், 'உன் குடும்பத்தாரிடம் சென்று, இது விஷயத்தில் அல்லாஹ் தீர்ப்பளிக்கும் வரையில் அவர்களிடத்திலேயே இருந்து வா!"என்று சொன்னேன். (என் சகா) ஹிலால் இப்னு உமய்யா(ரலி) அவர்களின் மனைவி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, '(என் கணவர்) ஹிலால் இப்னு உமய்யா செயல்பட முடியாத வயோதிகர். அவரிடம் ஊழியர் யாருமில்லை. நானே (தொடர்ந்து) அவருக்கு ஊழியம் செய்வதைத் தாங்கள் வெறுப்பீர்களா?' என்று கேட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இல்லை. ஆயினும், அவர் உன்னை (உடலுறவுகொள்ள) நெருங்க வேண்டாம்‘ ' என்று கூறினார்கள். ஹிலால் அவர்களின் மனைவி, 'அல்லாஹ்வின் மீதாணையாக! என் கணவரிடம் எந்த இயக்கமும் இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அவரின் விஷயத்தில் இந்த நிகழ்ச்சி நடைபெற்றதிலிருந்து இந்த நாள் வரையில் அழுது கொண்டேயிருக்கிறார்‘ ' என்றும் (அல்லாஹ்வின் தூதரிடம்) கூறினார்.

கஅப்(ரலி) கூறினார்:

என் வீட்டாரில் ஒருவர், 'தம் கணவருக்குப் பணிவிடை புரிய ஹிலால் இப்னு உமய்யா அவர்களின் மனைவியை அனுமதித்தது போல், உங்கள் மனைவியை (உங்களுக்குப் பணிவிடைபுரிய) அனுமதிக்கும்படி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்டால் (நன்றாயிருக்குமே)‘ ' என்று கூறினார். அதற்கு நான், 'அல்லாஹ்வின் மீதாணையாக! என் மனைவி விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் அனுமதி கேட்கமாட்டேன். என் மனைவி விஷயத்தில் நான் அனுமதி கோரும்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்ன(பதில்) சொல்வார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. நானோ இளைஞனாக (வேறு) இருக்கிறேன்.

(ஹிலால், வயோதிகர். அதனால் அவருக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சலுகை காட்டியிருக்கலாம்)'' என்று கூறி (மறுத்து) விட்டேன். அதற்குப் பின் பத்து நாள்கள் (இவ்வாறே) இருந்தேன். எங்களிடம் பேசக் கூடாதென இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடைவிதித்த நாளிலிருந்து ஐம்பது நாள்கள் எங்களுக்குப் பூர்த்தியாயின. நான் ஐம்பதாம் நாளின் ஃபஜ்ருத் தொழுகையை எங்கள் வீடுகளில் ஒன்றின் மாடியில் நிறைவேற்றிவிட்டு அல்லாஹ் (எங்கள் மூவரையும் குறித்து 9:118வது வசனத்தில்) குறிப்பிட்ட நிலையில் அமர்ந்திருந்தேன். (அதாவது:)'பூமி இத்தனை விரிவாய் இருந்தும் என்னைப் பொருத்த வரையில் அது குறும், நான் உயிர் வாழ்வதே மிகக் கஷ்டமாயிருந்தது அப்போது, 'சல்உ' மலை மீதேறி பொது அறிவிப்புச் செய்பவர் ஒருவர் உரத்த குரலில், 'கஅப் இப்னு மாலிக்கே! நற்செய்தி பெற்றுக்கொள்!"என்று கூறினார். உடனே நான் சஜ்தாவில் விழுந்தேன். சந்தோஷம் வந்துவிட்டது என்று அறிந்து கொண்டேன்.'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஃபஜ்ர் தொழுதுகொண்டிருந்தபோது (வஹீ அறிவிக்கப்பட்டு) எங்களை அல்லாஹ் மன்னித்துவிட்டான் என்று அறிவித்துவிட்டார்கள்' என நான் விளங்கிக் கொண்டேன். எங்களுக்கு நல்வாழ்த்துச் சொல்ல மக்கள் வரலாயினர். என் இரண்டு சகாக்களை நோக்கி நற்செய்தி சொல்பவர்கள் சென்றனர். என்னை நோக்கி ஒருவர் குதிரையில் விரைந்து வந்தார்.
அஸ்லம் குலத்தைச் சேர்ந்த ஒருவர் ஓடிச் சென்று மலை மீது ஏறிக்கொண்டார். (மேலும், உரத்த குரலில் எனக்கு நற்செய்தி கூறினார்.) மேலும், (மலை மீதிருந்து வந்த) வந்து சேர்ந்தது. எவருடைய குரலை (மலை மீதிருந்து) கேட்டேனோ அவர் என்னிடம் நற்செய்தி சொல்ல (நேரடியாக) வந்தபோது நான் என் இரண்டு ஆடைகளையும் கழற்றி அவர் சொன்ன நற்செய்திக்குப் பகரமாக (பரிசாக) அவருக்கு அணிவித்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (ஆடைகளில்) அந்த இரண்டைத் தவிர வேறெதுவும் அப்போது எனக்குச் சொந்தமானதாக இருக்கவில்லை. (வேறு) இரண்டு ஆடைகளை (அபூ கத்தாதா அவர்களிடமிருந்து) இரவல் வாங்கி நான் அணிந்துகொண்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி நடந்தேன். அப்போது (வழியில்) மக்கள் கூட்டங் கூட்டமாக வந்து என்னைச் சந்தித்து, எனக்குப் பாவமன்னிப்புக் கிடைத்ததால், 'அல்லாஹ் உங்கள் பாவத்தை மன்னித்துவிட்டதற்காக உங்களுக்கு வாழ்த்துச் சொல்கிறோம்' என்று கூறலாயினர். நான் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். அங்கு தம்மைச் சுற்றிலும் மக்களிருக்க இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அமர்ந்திருந்தார்கள். அப்போது என்னை நோக்கி தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) எழுந்தோடி வந்து எனக்குக் கைலாகு கொடுத்து என்னை வாழ்த்தவும் செய்தார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! முஹாஜிர்களில் அவர்களைத் தவிர வேறெவரும் என்னை நோக்கி (வருவதற்காக) எழவில்லை. தல்ஹா(ரலி) அவர்களின் இந்த அன்பை நான் ஒருபோதும் மறக்கமாட்டேன்.
நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சலாம் சொன்னபோது, சந்தோஷத்தினால் அவர்கள் தம் முகம் மின்னிக்கொண்டிருக்க, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'உன்னை உன் தாய் பெற்றெடுத்தது முதுல் உன்னைக் கடந்து சென்ற நாள்களில் மிகச் சிறந்த நாளான இன்று உனக்கு (பாவ மன்னிப்புக் கிடைத்த) நற்செய்தி கூறுகிறேன்'' என்று கூறினார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! (இந்த நற்செய்தியைத்) தாங்களே தங்கள் தரப்பிலிருந்து தெரிவிக்கிறீர்களா? அல்லது அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (வந்த வேத அறிவிப்பின் அடிப்படையில்) தெரிவிக்கிறீர்களா?' என்று கேட்டேன். அவர்கள், 'இல்லை. (என் தரப்பிலிருந்து நான் இதைத் தெரிவிக்கவில்லை.) அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (வந்துள்ள வேத அறிவிப்பின் அடிப்படையில்) தான் தெரிவிக்கிறேன்'' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களக்கு (ஏதாவது) சந்தோஷம் ஏற்படும்போது அவர்களின் முகம் சந்திரனின் ஒரு துண்டு போல் ஆம் பிரகாசிக்கும். அவர்களின் முகத்தின் பிரகாசத்தை

வைத்து அவர்களின் சந்தோஷத்தை நாங்கள் அறிந்துகொள்வோம். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்னால் நான் அமர்ந்து கொண்டபோது, 'இறைத்தூதர் அவர்களே! என்னுடைய பாவம் மன்னிக்கப்பட்டதற்காக என் செல்வமனைத்தையும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் (அவர்கள் விரும்பும் வழியில் செலவிட்டுக் கொள்வதற்காக) தர்மமாக அளித்துவிடுகிறேன்'' என்று சொன்னேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'உங்கள் செல்வத்தில் சிறிதளவை உங்களுக்காக வைத்துக்கொள்ளுங்கள். அதுவே உங்களுக்கு நல்லது'' என்று கூறினார்கள்.'கைபர் போரில் எனக்குக் கிடைத்த பங்கை நான் (எனக்காக) வைத்துக் கொள்கிறேன். 64 இறைத்தூதர் அவர்களே! உண்மை பேசிய காரணத்தினால் தான் அல்லாஹ் என்னைக் காப்பாற்றினான். (உண்மைக்குக் கிடைத்த பரிசாக) என் பாவம் மன்னிக்கப்பட்டதையடுத்து நான் உயிரோடு வாழும் வரையில் உண்மையைத் தவிர வேறெதையும் பேச மாட்டேன்'' என்று கூறினேன்.
எனவே, அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இந்த வார்த்தையை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கூறிய நாளிலிருந்து உண்மை பேசியதற்காக எனக்கு அல்லாஹ் அருள் புரிந்தது போன்று வேறெந்த முஸ்லிமுக்கும் அல்லாஹ் அருள் புரிந்ததாக நான் அறியவில்லை. இந்த உறுதி மொழியை நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சொன்ன நாளிலிருந்து என்னுடைய இந்த நாள் வரை நான் பொய்யை நினைத்துப் பார்த்தது கூட இல்லை. நான் (உயிரோடு) எஞ்சியிருக்கும் கால(மனை)த்திலும் அல்லாஹ் என்னைப் (பொய் சொல்லவிடாமல்) பாதுகாப்பான் என்று உறுதியாக நம்புகிறேன்.
மேலும், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ், 'திண்ணமாக, அல்லாஹ் (தன்) தூதர் மீது அருள் புரிந்தான். (அவ்வாறே) துன்ப வேளையில் அவரைப் பின்பற்றிய முஹாஜிர்களின் மீதும் அன்சாரிகளின் மீதும் (அருள் புரிந்தான்.) அவர்களில் ஒரு பிரிவினருடைய இதயங்கள் தடுமாறிக் கொண்டிருந்த பின்னரும் அவர்களை மன்னித்(து அவர்களின் மீது அருள் புரிந்)தான். நிச்சயமாக அவன் அவர்கள் முது அன்பும் கருணையும் உடையோனாக இருக்கிறான். (அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்துத் தீர்ப்புக் கூறாமல்) விவகாரம் தள்ளி வைக்கப்பட்டிருக்கும் மூவரையும் (அல்லாஹ் மன்னித்துவிட்டான்.) பூமி இவ்வளவு விசாலமானதாக இருந்தும் (அது) அவர்களுக்கு மிக்க நெருக்கடியாகத் தோன்றி அவர்கள் உயிர் வாழ்வதும் மிகக் கஷ்டமாம்விட்டது. அல்லாஹ்வையன்றி அவனைவிட்டுத் தப்புமிடம் அவர்களுக்கு இல்லவே இல்லை என்பதையும் அவர்கள் உறுதிபட அறிந்துகொண்டனர். எனவே, அவர்கள் பாவத்திலிருந்து விலகிக்கொள்ளும் பொருட்டு அவர்(களுடைய குற்றங்)களை மன்னித்(து அவர்களுக்கு அருள் புரிந்)தான். நிச்சயமாக, அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் கிருபையுடையோனுமாக இருக்கிறான். இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வுக்கு அஞ்சி (சொல்லிலும் செயலிலும்) உண்மையாளர்களுடன் இருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 09: 117-119) வசனங்களை அருளினான்.
எனவே, அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு இஸ்லாத்திற்கு வழி காட்டிய பின், தன் தூதர்(ஸல்) அவர்களிடம் என்னை உண்மை பேசச் செய்து உபகாரம் புரிந்தது போன்று வேறெந்த உபகாரத்தையும் நான் மிகப் பெரியதாக ஒருபோதும் கருதவில்லை. நான் அவர்களிடம் பொய் பேசியிருந்தால், (போருக்குச் செல்லாமல்) பொய் சொன்ன(வர்களான நயவஞ்சகர்)கள் அழிந்து போனது போன்று நானும் அழிந்து விட்டிருப்பேன். ஏனெனில், இறைவன் வேத அறிவிப்பு (வஹீ) அருளியபோது யாருக்கும் சொல்லாத கடுமையான சொற்களைப் பொய் சொன்னவர்கள் குறித்து அருளினான்.'நீங்கள் அவர்களிடம் திரும்பி வரும்போது, அவர்களை நீங்கள் கண்டுகொள்ளாமல் இருந்துவிடவேண்டும் என்பதற்காக உங்கள் முன்னிலையில் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்வார்கள். எனவே, நீங்கள் அவர்களைக் கண்டுகொள்ளாமல் இருந்துவிடுங்கள்! ஏனென்றால், அவர்கள் அசுத்தமானவர்கள்

உண்மையில் அவர்கள் சேருமிடம் நரகமாகும். அவர்கள் சம்பாதித்துக்கொண்டிருந்த தீவினைகளுக்கு இதுவே கூலியாகும். நீங்கள் அவர்களின் மீது திருப்தியுறவேண்டும் என்பதற்காக உங்களிடம் அவர்கள் சத்தியம் செய்வார்கள். நீங்கள் அவர்களின் மீது திருப்தி கொண்டாலும் நிச்சயமாக அல்லாஹ் பாவிகளான இத்தகைய மக்களின் மீது ஒருபோதும் திருப்திகொள்ளமாட்டான்'' என்று (கடிந்த வண்ணம்) அல்லாஹ் கூறினான். (திருக்குர்ஆன் 09:95, 96)
குறிப்பாக, எங்கள் மூவரின் விவகாரம் மட்டும் தள்ளிவைக்கப்பட்டிருந்தது. இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்னால் (பொய்) சத்தியம் செய்தவர்களை ஏற்றுக் கொண்டு அவர்களிடமும் உறுதிப்பிரமாணம் பெற்று அவர்களுக்காகப் பாவமன்னிப்பும் தேடினார்கள். (எங்களின்) அந்த விவகாரத்தில் அல்லாஹ்வே தீர்ப்பளிக்கும் வரையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கள் விவகாரத்தைத் தள்ளிப்போட்டு வந்தார்கள். இதனால் தான் (9வது அத்தியாயத்தின் 118-வது வசனத்தில்) அல்லாஹ் எங்களைக் குறித்து'போருக்குச் செல்லாமல் பின்தங்கிவிட்ட மூவர்' என்று (போரைக் குறிப்பிட்டுக்) கூறவில்லை. (மாறாக, 'பின்தங்கிவிட்ட மூவர்' என்று பொதுவாகவே குறிப்பிட்டுள்ளான்.)'நபி(ஸல்) அவர்கள் தம்மிடம் பொய்யான சாக்குப் போக்குக் கூறியவர்களின் காரணங்களை உடனுக்குடன் ஏற்றது போன்றல்லாமல் எங்கள் விவகாரத்தை (உடனே தீர்க்காது) அல்லாஹ் தள்ளிப்போட்டு வந்தான்'' என்பதே அதன் கருத்தாகும்.
“தபூக் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் செல்லாமல், தாம் பின்தங்கிவிட்ட கால கட்டத்தைக் குறித்து தம் தந்தை கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தபோது இதை அவர்கள் கூற கேட்டேன்'' என்று கஅப்(ரலி) முதிய வயதடைந்து கண்பார்வை இழந்துவிட்ட சமயம் அவர்களைக் கைப்பிடித்து அழைத்துச் செல்பவராயிருந்த - அவர்களின் புதல்வர் - அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) மேற்கண்ட ஹதீஸை அறிவித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் (ஸமூத் கூட்டத்தாரின் வசிப்பிடமாயிருந்த) ஹிஜ்ர் பிரதேசத்தில் தங்கியது.

ஹதீஸ் 4419. இப்னு உமர்(ரலி) அவர்கள அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள்'ஹிஜ்ர்' பிரதேசத்தைக் கடந்து சென்றபோது, 'தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்டவர்களின் வசிப்பிடங்களில் நுழையும்போது (இறைத் தண்டனையாக) அவர்களைத் தீண்டிய வேதனை, நம்மையும் தீண்டிவிடுமோ எனும் அச்சத்துடன் அழுதுகொண்டு நுழைவதைத் தவிர வேறு விதமாக நுழையாதீர்கள்'' என்று கூறினார்கள். பிறகு, தம் தலையை (தம் மேலங்கியால்) மறைத்துக்கொண்டு அந்தப் பள்ளத்தாக்கைக் கடக்கும் வரை வேக வேகமாகப் பயணித்தார்கள்.

ஹதீஸ் 4420. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
ஹிஜ்ர் வாசிகளைக் குறித்து, 'இவர்களைத் தீண்டியது போன்ற அதே வேதனை நம்மையும் தீண்டிவிடுமோ என்று அஞ்சி அழுதபடியே அல்லாமல் வேறுமுறையில், வேதனை செய்யப்பட்ட இந்த மக்களின் (வசிப்பிடங்கள்) வழியாகச் செல்லாதீர்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் (தம் தோழர்களை நோக்கிக்) கூறினார்கள்.

ஹதீஸ் 4421. முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் தம் (இயற்கைத்) தேவைக்காகச் சென்றார்கள். அவர்களின் தேவை முடிந்ததும் நான் அவர்களுக்குத் தண்ணீர் ஊற்றுவதற்காக எழுந்தேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தைக் கழுவினார்கள். தம் முழங்கைகள் இரண்டையும் அவர்கள் கழுவப்போனபோது அவர்களின் (மேலங்கியின்) சட்டைக் கைகள் இரண்டும் (இறுக்கமாக)

நெருக்கலாயின. அவர்கள் மேலங்கியின் கீழேயிருந்து கைகளை வெளியே எடுத்துக் கழுவினார்கள். பிறகு தம் காலுறைகளின் மீது (கையால் தடவி)'மஸ்ஹு' செய்தார்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான உர்வா இப்னு முஃகீரா(ரஹ்) கூறினார்கள்.
இது தபூக் போரின்போது நடைபெற்ற நிகழ்ச்சி என்றே (என் தந்தை) முஃகீரா(ரலி) குறிப்பிட்டார்கள் என அறிகிறேன்.

ஹதீஸ் 4422. அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ(ரலி) கூறினார்
நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் தபூக் போரிலிருந்து (திரும்பியவாறு மதீனாவை) முன்னோக்கிச் சென்றோம். நாங்கள் மதீனாவை நெருங்கியபோது அவர்கள், 'இது'தாபா' (தூய்மையானது) ஆகும். இதோ இந்த உஹுத் மலை நம்மை நேசிக்கிறது நாமும் அதை நேசிக்கிறோம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4423. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தபூக் போரிலிருந்து திரும்பி (வருகையில்) மதீனாவை நெருங்கியபோது, 'மதீனாவில் மக்கள் சிலர் இருக்கின்றனர். (அவர்களால் உங்களுடன் புனிதப் போரில் கலந்து கொள்ள முடியாவிட்டாலும்) நீங்கள் செல்லும் பாதை, அல்லது நீங்கள் கடந்து செல்லும் பள்ளத்தாக்கு எதுவாயினும் அவர்களும் (தம் உள்ளத்தாலும் எண்ணங்களாலும்) உங்களுடன் இருக்கிறார்கள்'' என்று கூறினார்கள். மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! அவர்கள் மதீனாவில்தானே இருக்கிறார்கள்?' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், 'அவர்கள் மதுனாவில் தான் இருக்கிறார்கள் அத்தியாவசியக் காரணங்கள் தாம் அவர்களை (இந்தப் புனிதப் போரில் கலந்துகொள்ளவிடாமல்) தடுத்துவிட்டன. (ஆயினும், அவர்களின் உள்ளம் நம்முடன் தான் உள்ளது)'' என்று பதிலளித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் கிஸ்ரா மற்றும் கைஸருக்கு எழுதிய நிருபம்

ஹதீஸ் 4424. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பாரசீக மன்னர்'குஸ்ரூ' எனும்) கிஸ்ராவுக்குத் தாம் எழுதிய கடிதத்தை அப்துல்லாஹ் இப்னு ஹுதைஃபா அஸ்ஸஹ்மீ(ரலி) அவர்களிடம் கொடுத்து, (அதைக் கிஸ்ராவிடம் கொடுத்துவிடச் சொல்லி) பஹ்ரைனின் ஆளுநரிடம் ஒப்படைக்க வேண்டுமென உத்தரவிட்டு அனுப்பினார்கள். பஹ்ரைன் ஆளுநர் அக்கடிதத்தை கிஸ்ராவிடம் ஒப்படைத்தார். கிஸ்ரா அதைப் படித்ததும் அதை(த் துண்டு துண்டாக)க் கிழித்துப் போட்டுவிட்டார்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்:
"எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'ம்ஸ்ரா' ஆட்சியாளர்கள் முற்றாகச் சிதறடிக்கப்பட வேண்டுமென அவர்களுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்'' என்று ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) சொன்னதாக நினைக்கிறேன்.

ஹதீஸ் 4425. அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்
ஜமல் போர் சமயத்தில், அதில் ஈடுபட்டவர்களுடன் நானும் சேர்ந்துகொண்டு (ஆயிஷா(ரலி) அவர்களுக்கு ஆதரவாகப்) போரிட முனைந்தபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றிருந்த ஒரு சொல் எனக்குப் பயனளித்தது.
பாரசீகர்கள் கிஸ்ராவின் மகளைத் தங்களுக்கு அரசியாக்கிவிட்டார்கள் எனும் செய்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அவர்கள்'தம் ஆட்சியதிகாரத்தை ஒரு பெண்ணிடம் ஒப்படைத்த சமுதாயம் ஒருபோதும் உருப்படாது'' என்று கூறினார்கள்.
(இதுதான் எனக்குப் பயனளித்த நபி(ஸல்) அவர்களின் சொல்.)

ஹதீஸ் 4426. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்

நான் (தபூக் போரிலிருந்து திரும்பி வந்த) இறைத்தூதர்(ஸல்) அவர்களை எதிர்கொண்டு வரவேற்பதற்காக 'வதா' மலைக் குன்றுக்கு சிறுவர்களுடன் சென்றதை நினைவு கூர்கிறேன்.
அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
('ஃகில்மான்' (சிறுவர்கள்) என்பதற்கு பதிலாக)'ஸிப்யான் (சிறுவர்கள்) என்று சாயிப் இப்னு யஸீத்(ரலி) மற்றொரு முறை (இதை அறிவிக்கும்போது) கூறினார்கள்.

ஹதீஸ் 4427. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் தபூக் போரிலிருந்து வந்தபோது, அவர்களை வழியிலேயே சந்தித்து வரவேற்க சிறுவர்களுடன் சேர்ந்து நான் 'வதா' மலைக்குன்றுக்குச் சென்றதை (இப்போது) நினைவு கூர்கிறேன்.

## நபி(ஸல்) அவர்களின் நோயும் அவர்களின் இறப்பும்.

அல்லாஹ் கூறினான்:
(நபியே!) நிச்சயமாக நீங்களும் இறந்துவிடக் கூடியவரே. இவர்களும் இறந்துவிடக் கூடியவர்கள் தாம். பிறகு திண்ணமாக, மறுமைநாளில் நீங்கள் (அனைவரும்) உங்களுடைய இறைவன் முன்னிலையில் (தத்தம் வாதங்களை எடுத்து வைத்துத்) தர்க்கித்துக் கொள்வீர்கள். (திருக்குர்ஆன் 39:30, 31)

ஹதீஸ் 4428. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, 'ஆயிஷாவே! கைபரில் (யூதப் பெண்ணொருத்தியால் விஷம் கலந்து தரப்பட்ட) அந்த உணவை நான் உண்டதால் ஏற்பட்ட வேதனையை நான் தொடர்ந்து அனுபவித்து வருகிறேன். அந்த விஷத்தின் காரணத்தால் என் இருதய இரத்தக்குழாய் அறுந்து போவதை நான் உணரும் நேரமாகும் இது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4429. உம்முல் ஃபள்ல் பின்த்தில் ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் (தம் வாழ்நாளில் கடைசியாகத் தொழுத) மஃக்ரிப் தொழுகையில், 'வல் முர்ஸலாத்தி உர்ஃபன்' எனும் (குர்ஆனின் 77வது) அத்தியாயத்தை ஓதுவதைச் செவியுற்றேன். அதன் பிறகு அவர்களின் உயிரை அல்லாஹ் கைப்பற்றும் வரை அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்தவில்லை.

ஹதீஸ் 4430. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
உமர் இப்னு கத்தாப்(ரலி), என்னைத் தமக்கு அருகிலேயே (எப்போதும்) அமர்த்திக்கொள்வது வழக்கம். எனவே, (ஒருநாள்) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள, உமர்(ரலி) அவர்களிடம், 'எங்களுக்கு இப்னு அப்பாஸை போன்ற (வயது ஒத்த) பிள்ளைகள் இருக்கின்றனர்'' என்று கூறினார்கள். அதற்கு உமர்(ரலி), 'அவரின் (கல்வித்) தகுதி உங்களுக்கே தெரியும்'' என்று (என்னைக் குறித்துச்) கூறினார்கள். பிறகு உமர்(ரலி) (தம் சகாக்களின் மத்தியில் வைத்து) என்னிடம், '(நபியே!) அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வந்து மக்கள் கூட்டம் கூட்டமாக அல்லாஹ்வின் மார்க்கத்தில் நுழைவதை நீங்கள் பார்க்கும்போது'' எனும் (திருக்குர்ஆன் 110:1, 2 வது) இறைவனத்தைப் பற்றி (விளக்கம்) கேட்டார்கள். அதற்கு நான், '(இவ்வசனத்தின் வாயிலாக) அல்லாஹ், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு, அவர்களின் ஆயுள் முடிந்து (இறப்பு நெருங்கி)விட்டதை அறிவித்தான்'' என்று பதிலளித்தேன். அதற்கு உமர்(ரலி), 'நீங்கள் இந்த வசனத்திலிருந்து அறிந்ததையே நானும் அறிந்து கொண்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4431. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
(ஒரு முறை) இப்னு அப்பாஸ்(ரலி), '(அன்று) வியாழக்கிழமை! எந்த வியாழக்கிழமை (தெரியுமா?)'' என்று கேட்டுவிட்டுக் கூறினார்கள்:

(வியாழக்கிழமையன்று) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (நோயின்) வேதனை கடுமையாயிற்று. அப்போது அவர்கள், 'என்னிடம் (எலும்பைக்) கொண்டு வாருங்கள். உங்களுக்கு ஒரு மடலை நான் எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்'' என்று கூறினார்கள். அப்போது மக்கள் (கருத்து வேறுபட்டு) சச்சரவிட்டுக் கொண்டனர். ஆனால், ஓர் இறைத்தூதரின் முன்னால் சச்சரவு செய்து முறையல்ல (என்று நபியவர்கள் குறிப்பிட்டார்கள்). மக்கள், 'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்கள் பலவீனத்தில் பேசுகிறார்களா? அவர்களிடமே விளக்கம் கேளுங்கள்'' என்று கூறினர். எனவே, நபி(ஸல்) அவர்கள், 'என்னைவிட்டுவிடுங்கள். நீங்கள் எதற்கு என்னை அழைக்கிறீர்களோ அந்த (மரணசாசனம் எழுதும்) பணியை விட நான் இப்போதுள்ள (இறைநினைவில் லயித்திருக்கும் இந்த) நிலையே சிறந்தது'' என்று சொல்லிவிட்டார்கள். (எதையும் எழுதித் தரவில்லை.) மேலும், அவர்கள் தம் தோழர்களுக்கு (தம் மரணத் தருவாயில்) மூன்று விஷயங்களைக் கட்டளையிட்டார்கள். 'அரபு தீபகற்பத்திலிருந்து இணை வைப்பவர்களை வெளியேற்றுங்கள். (அயல் நாடுகள் மற்றும் குலங்களின்) தூதுக் குழுவினருக்கு நான் கொடுத்து வந்ததைப் போல் நீங்களும் பரிசுப் பொருள்களை வழங்குங்கள்'' என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் இப்னு அபில் முஸ்லிம்(ரஹ்) கூறினார்:
(எனக்கு இந்த ஹதீஸை அறிவித்த) ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) (நபி(ஸல்) அவர்களின்)'மூன்றாவது கட்டளையைச் சொல்லாமல் மௌனமாயிருந்துவிட்டார்கள்' அல்லது'(அதை அவர்கள் அறிவித்திருக்கலாம் ஆனால்,) நான் அதை மறந்து விட்டேன்.

ஹதீஸ் 4432. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வீட்டில் மக்கள் பலரும் இருக்க, அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது நபி(ஸல்) அவர்கள், 'வாருங்கள். நான் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்'' என்று கூறினார்கள். அப்போது மக்களில் சிலர், 'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது. (அவர்களை எழுதித் தரச் சொல்லித் தொந்தரவு செய்யாதீர்கள்) உங்களிடம் தான் குர்ஆன் இருக்கிறதே. நமக்கு அல்லாஹ்வின் வேதமே போதும்'' என்று கூறினார்கள். உடனே அங்கு வீட்டிலிருந்தோர், கருத்து வேறுபட்டு சச்சரவிட்டுக் கொண்டார்கள். அவர்களில் சிலர்'(நபியவர்கள் கேட்ட எழுது பொருளை அவர்களிடம்) கொண்டு போய்க் கொடுங்கள். உங்களுக்கு ஒரு மடலை அவர்கள் எழுதுவார்கள். அதன் பிறகு நீங்கள் வழிதவறிச் செல்லமாட்டீர்கள்'' என்று கூறினார்கள். மற்ற சிலர் வேறு விதமாகக் கூறினார்கள். அவர்களின் கூச்சலும் சச்சரவும் அதிகரித்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'எழுந்திருங்கள்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்:
"அவர்கள் கருத்து வேறுபட்டு கூச்சலிட்டுக் கொண்டதனால் இறைத்தூதர்(ஸல்) அவர்களால் அந்த மடலை எழுத முடியாமல் போனதுதான் சோதனையிலும் பெரும் சோதனையாகும்'' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறி வந்தார்கள்.

ஹதீஸ் 4433 , ஹதீஸ் 4434 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், எந்த நோயில் இருக்கையில் அவர்களின் உயிர் கைப்பற்றப்பட்டதோ அந்த நோயின்போது (தம் புதல்வி), ஃபாத்திமா(ரலி) அவர்களை அழைத்து (அவர்களின் காதில்) இரகசியமாக ஏதோ சொல்ல, ஃபாத்திமா அழுதார்கள். பிறகு (மீண்டும்) அவர்களை நபி(ஸல்) அவர்கள் அழைத்து இரகசியமாக ஏதோ சொல்ல, அவர்கள் சிரித்தார்கள். நாங்கள் அதைப்பற்றி (ஃபாத்திமா(ரலி) அவர்களிடம்) விசாரித்தோம். அதற்கு அவர்கள், 'நபி(ஸல்) அவர்கள் (முதல் முறை அழைத்தபோது), தமக்கு ஏற்பட்டிருந்த அந்த (நோயின்) வலியிலேயே

இறந்துவிடப்போவதாக இரகசியமாக என்னிடம் கூறினார்கள். எனவே, நான் அழுதேன். பிறகு (இரண்டாம் முறையில்), `அவர்களின் குடும்பத்தாரிலேயே நான்தான் முதலாவதாக அவர்களைப் பின்தொடர்ந்து (உலகைப் பிரிந்து) செல்லவிருப்பவள்‘` என்று இரகசியமாக என்னிடம் தெரிவித்தார்கள். எனவே, நான் சிரித்தேன்‘` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4435. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

“உலக வாழ்வு, மறுமை வாழ்வு ஆகிய இரண்டில், தாம் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு வழங்கப்படாமல் எந்த இறைத்தூதரும் இறப்பதில்லை‘` என்று நான் (நபி (ஸல்) அவர்களிடமிருந்தே) செவியுற்றிருந்தேன். நபி (ஸல்) அவர்கள், எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அவர்களின் தொண்டை கட்ட (கம்மிய, கரகரப்பான குரலில்), `அல்லாஹ் அருள்புரிந்துள்ள இறைத்தூதர்கள், உண்மையாளர்கள், இறைவழியில் உயிர்த்தியாகம் புரிந்தவர்கள் மற்றும் நல்லடியார்களுடன்‘` எனும் (திருக்குர்ஆன் 04:69) இறைவாக்கைச் சொல்லத் தொடங்கினார்கள். எனவே, `இவ்வுலகம் மறுமை ஆகிய இரண்டிலொன்றைத் தேர்வு செய்யும் வாய்ப்பு அவர்களுக்கு வழங்கப்பட்டது’ என்று நான் எண்ணிக்கொண்டேன்.

ஹதீஸ் 4436. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, `(இறைவா!) உயர்ந்த தோழர்க(ளான இறைத்தூதர்கள், உண்மையாளர்கள், உயிர்த்தியாதிகள் மற்றும் நல்லடியார்க)ளுடன் (என்னைச் சேர்த்தருள்)‘` என்று சொல்லத் தொடங்கினார்கள்.

ஹதீஸ் 4437. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஆரோக்கியமானவர்களாக இருந்தபோது, `சொர்க்கத்தில் தம் இருப்பிடத்தைப் பார்த்து, பிறகு (இன்னும் சில காலம்) உயிர் வாழ்வதற்கு வாய்ப்பளிக்கப்படாத வரையில்’ அல்லது ’(உலக வாழ்வு, மறுமை ஆகிய இரண்டில் ஒன்றைத்) தேர்ந்தெடுத்துக்கொள்ளும் வாய்ப்பு வழங்கப்படாத வரையில்’ எந்த இறைத்தூத(ரின் உயி)ரும் கைப்பற்றப்படவில்லை‘` என்று சொல்லிவந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டு அவர்களின் தலை என் மடியின் மீதிருக்க, அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது அவர்கள் மூர்ச்சையடைந்துவிட்டார்கள். மூர்ச்சை தெளிந்தபோது அவர்களின் பார்வை வீட்டின் முகட்டை நோக்கி நிலைகுத்தி நின்றது. பிறகு அவர்கள், `இறைவா (சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்ந்தருள்)‘` என்று பிரார்த்தித்தார்கள். உடனே நான், `இனி (நபி (ஸல்) அவர்கள்) நம்முடன் இருக்க மாட்டார்கள்‘` என்று சொன்னேன். ஏனெனில், அவர்கள் ஆரோக்கியத்துடன் இருந்தபோது சொன்ன (இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு வாய்ப்பு அளிக்கப்படும்) செய்தி இதுதான் என்று (அவர்களின் மரண வேளையான இப்போது) அறிந்து கொண்டேன்.

ஹதீஸ் 4438. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

(என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர் (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்போது நான் நபி (ஸல்) அவர்களை என் நெஞ்சின் மீது சாய்த்து அணைத்துக்கொண்டிருந்தேன். அப்துர் ரஹ்மானுடன், அவர் பல்துலக்கும் ஈரமான (பேரீச்சங்)குச்சி இருந்து இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் பார்வையை அவர் பக்கம் செலுத்த, நான் அந்தப் பல் துலக்கும் குச்சியை எடுத்து அதை (வாயில் வைத்து என் பற்களால் அதன் முனையை) மென்றேன். அதை உதறிப் பக்குவப்படுத்திய பின் நபி (ஸல்) அவர்களிடம் கொடுததேன். அவர்கள் அதனால் பல் துலக்கினார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அதை விட அழகாகப் பல் துலக்கியதை அதற்கு முன் நான் பார்த்ததில்லை. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பல் துலக்கி முடித்தவுடன் ’தம் கையை’ அல்லது ’தம் விரலை’ உயர்த்திப் பிறகு, `(இறைவா! சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச்

சேர்த்தருள்)'' என்று மும்முறை பிரார்த்தித்தார்கள். பிறகு (தம் ஆயுளை) முடித்துக் கொண்டார்கள்.
அறிவிப்பாளர் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்:
"என் முகவாய்க்கும் என் நெஞ்சுக்குமிடையே நபி(ஸல்) அவர்களின் தலை (சாய்ந்தபடி) இருந்தபோது அவர்கள் இறந்தார்கள்'' என்று ஆயிஷா(ரலி) கூறிவந்தார்கள்.
ஹதீஸ் 4439. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டால் பாதுகாப்புக் கோரும் வசனங்களை(க் கொண்ட குர்ஆனின் கடைசி மூன்று அத்தியாயங்களை) ஓதித் தம் மீது ஊதி, தம் கையை (தம் உடல் மீது) தடவிக் கொள்வார்கள். நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, அவர்கள் (ஓதி) ஊதிக் கொள்ளும் பாதுகாப்பு வசனங்களை நான் அவர்களின் மீது (ஓதி) ஊதலானேன். அதை நபி(ஸல்) அவர்களின் (கையில் ஊதி அந்தக்) கையாலேயே அவர்களின் (உடல்) மீது தடவலானேன்.
ஹதீஸ் 4440. ஆயிஷாரலி) அவர்கள் அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் இறப்பதற்கு முன்பு அவர்கள் என் பக்கம் தம் முதுகைச் சாய்த்தபடி (என் அரவணைப்பில்) இருக்க, அவர்கள் பக்கம் நான் காது தாழ்த்திக் கேட்டுக் கொண்டிருந்தபோது, அவர்கள், 'இறைவா! என்னை மன்னித்து எனக்குக் கருணை புரிவாயாக! (சொர்க்கத்தில்) என்னை (உயர்ந்த) தோழர்களுடன் சேர்த்தருள்வாயாக'' என்று பிரார்த்திப்பதை செவியுற்றேன்.
ஹதீஸ் 4441. 'நபி(ஸல்) அவர்கள் எழாமல்போன அந்த நோயின்போது, 'அல்லாஹ் யூதர்களைத் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக. அவர்கள் தங்களின் இறைத்தூதர்களின் அடக்கத் தலங்களை வழிபாட்டுத் தலங்களாக்கிவிட்டார்கள்'' என்றார்கள். நபி(ஸல்) அவர்களின் இந்த அறிவிப்பு இல்லையானால் அவர்களின் அடக்கத் தலம் வெளிப்படையாக அமைக்கப்பட்டிருக்கும். 'தம் அடக்கத் தலம் எங்கே வணக்கத் தலமாக்கப்பட்டுவிடுமோ' என்று அவர்கள் அஞ்சினார்கள்'' என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
ஹதீஸ் 4442. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கடுமையாக நோய்வாய்ப்பட்டு, அவர்களின் வேதனை அதிகரித்தபோது, என் வீட்டில் தங்கி சிகிச்சையும் பராமரிப்பும் பெற்றிட, தம் (மற்ற) துணைவியரிடம் அனுமதி கேட்டார்கள். அவர்களும் நபி(ஸல்) அவர்களுக்கு அனுமதி அளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் கால்கள் பூமியில் இழுபட, அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் வேறு ஒரு மனிதருக்கும் இடையில் தொங்கியபடி (என் வீட்டிற்குப்) புறப்பட்டார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரனா) உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்:
ஆயிஷா(ரலி) கூறியதை அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் நான் தெரிவித்தபோது அவர்கள், 'ஆயிஷா(ரலி) பெயர் குறிப்பிடாத அந்த வேறொரு மனிதர் யார் என்று தெரியுமா?' என்று கேட்டார்கள். நான், 'இல்லை'' என்று பதிலளித்தேன். 'அவர் தாம் அலீ இப்னு அபீ தாலிப்'' என்று அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
மேலும், ஆயிஷா(ரலி) கூறினார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நோய்க்காலப் பராமரிப்புக்காக) என் இல்லத்திற்கு வந்து, அவர்களின் நோய் கடுமையாகிவிட்டபோது அவர்கள், 'வாய்ப்பகுதி அவிழ்க்கப்படாத ஏழு தோல் பைகளிலிருந்து (நீரை) என் மீது ஊற்றுங்கள். (அதன் குளிர்ச்சியினால்) மக்களுக்கு நான் உபதேசம் செய்யக்கூடும்'' என்று கூறினார்கள். எனவே, நாங்கள் அவர்களை ஹஃப்ஸா(ரலி) அவர்களுக்குச் சொந்தமான துணி அலசும் பாத்திரத்தின் மீது அமரவைத்தோம். பிறகு அவர்களின் மீது தோல் பைகளிலிருந்து (நீரை) ஊற்றத் தொடங்கினோம்.

அவர்கள், `(சொன்னபடி) செய்துவிட்டீர்கள் (போதும்)'' என்று கையால் சைகை செய்யலானார்கள். பிறகு மக்களை நோக்கிப் புறப்பட்டுச் சென்று அவர்களுக்குத் தொழுகை நடத்தினார்கள் பிறகு உபதேசமும் செய்தார்கள்.

ஹதீஸ் 4443ஹதீஸ் 4444 ஆயிஷா(ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டபோது தம் முகத்தின் மீது ஒரு கம்பளித் துணியைத் தூக்கிப் போட்டுக் கொள்ளலானார்கள். மூச்சுத் திணறுவது போல் உணர்ந்தால் தம் முகத்தைவிட்டு அதை விலக்கிக் கொண்டார்கள். அவர்கள் இந்நிலையில் இருக்கும்போது, `அல்லாஹ் யூதர்களையும் கிறிஸ்தவர்களையும் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்தட்டும். அவர்கள் தம் நபிமார்களின் அடக்கத்தலங்களை வணக்கத் தலங்களாக ஆக்கிக் கொண்டனர்'' என்று அவர்கள் செய்ததைக் குறித்து (“அதே போல் நீங்களும் செய்து விடாதீர்கள்'' என்று) எச்சரித்தார்கள்.

ஹதீஸ் 4445. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

“(மக்களுக்குத் தலைமை தாங்கித்) தொழுகை நடத்தும்படி (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு ஏன் கட்டளையிட்டீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் வாதிட்டேன். நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு அவர்களின் அந்தஸ்தில் செயல்படும் ஒரு மனிதரை மக்கள் விரும்புவார்கள் என்று என் மனத்திற்கு ஒருபோதும் படவில்லை. மேலும், அவர்களின் அந்தஸ்தில் செயல்பட முன்வரும் எவரையும் மக்கள் ஒரு துர்க்குறியாகவே கருதுவார்கள் என்றே நான் எண்ணிவந்தேன். எனவே, அபூ பக்ர்(ரலி) அவர்களைவிட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதை விலக்கி விடவேண்டும் என்று விரும்பினேன்.

ஹதீஸ் 4446. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

என் முகவாய்க்கும் என் நெஞ்சுக்குமிடையே சாய்ந்திருந்த நிலையில் நபி(ஸல்) அவர்கள் இறந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு எவருடைய மரணத்தின் வேதனையைக் கண்டும் ஒருபோதும் நான் வருந்துவதில்லை.

ஹதீஸ் 4447. முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு கஅப் இப்னு மாலிக் அல் அன்சாரி(ரலி) - (இவருடைய தந்தை) கஅப்பின் மாலிக்(ரலி) (தபூக் போரில் கலந்துகொள்ளத் தவறியதற்காக) பாவமன்னிப்பு வழங்கப்பட்டவர்களில் ஒருவராயிருந்தார். அன்னார் எனக்கு அறிவித்தார்கள்:

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) எனக்குத் தெரிவித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது அவர்களிடமிருந்து அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) (அவர்களை நலம் விசாரித்துவிட்டு) வெளியேறினார்கள். உடனே மக்கள், `அபுல் ஹசனே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படியுள்ளார்கள்?' என்று (கவலையுடன்) விசாரிக்க, அதற்கு அவர்கள், `அல்லாஹ்வின் அருளால் நலமடைந்துவிட்டார்கள்'' என்று கூறினார்கள். உடனே அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி), அலீ(ரலி) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டு அவர்களிடம், `அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் மூன்று நாள்களுக்குப் பிறகு, (பிறரின்) அதிகாரத்திற்குப் பணிந்தவராக ஆகிவிடப்போகிறீர்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் விரைவில் தம் இந்த நோயின் காரணத்தால் இறந்துவிடப் போகிறார்கள் என்றே கருதுகிறேன். மரணத்தின்போது அப்துல் முத்தலிபுடைய மக்களின் முகங்களை(ப் பார்த்து மரணக் களையை) அடையாளம் கண்டுகொள்பவன் நான். எனவே, எங்களை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அழைத்துச் செல்லுங்கள்.'இந்த ஆட்சியதிகாரம் (அவர்கள் இறந்த பிறகு) யாரிடமிருக்கும்?' என்று கேட்டுக் கொள்வோம். நம்மிடம்தான் இருக்கும் என்றால் அதை நாம் அறிந்துகொள்வோம். அது பிறரிடம் இருக்கும் என்றால் அதையும் நாம் அறிந்துகொள்வோம். (தமக்குப் பின் யார்

பிரதிநிதி என்பதை அறிவித்து) அவர்கள் நமக்கு இறுதி உபதேசம் செய்வார்கள்'' என்று கூறினார்கள். அதற்கு அலீ(ரலி), 'நமக்கு அதைத் தர மறுத்துவிட்டால் அவர்களுக்குப் பிறகு மக்கள் நமக்கு (ஒருபோதும்) அதைத் தரமாட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கமாட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4448. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

முஸ்லிம்கள் திங்கட்கிழமையன்று ஃபஜ்ருத் தொழுகையில் இருக்க, அபூ பக்ர்(ரலி) முஸ்லிம்களுக்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தபோது ஆயிஷா(ரலி) அவர்களின் அறையின் திரையை விலக்கிக் கொண்டு திடீரென (வெளியே) வந்தவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாம். மக்கள் தொழுகை அணிகளில் நின்று கொண்டிருக்க, அவர்களைக் கூர்ந்து பார்த்துவிட்டுப்பிறகு புன்னகைத்தார்கள். அபூ பக்ர்(ரலி) (தமக்குப் பின்னுள்ள முதல்) வரிசையில் சேர்ந்துகொள்ளத் தம் குதிகால்களால் பின்வாங்கிச் சென்றார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தொழுகை நடத்த வரவிரும்புகிறார்கள் என்று அபூ பக்ர்(ரலி) நினைத்துவிட்டார்கள். முஸ்லிம்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களைக் கண்ட மகிழ்ச்சியால் தம் தொழுகையில் (கவனம் சிதறி) குழப்பத்திற்குள்ளாக இருந்தார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'உங்கள் தொழுகையை நிறைவு செய்யுங்கள்' என்று தம் கரத்தால் சைகை செய்தார்கள். பிறகு, அறைக்குள் நுழைந்துகொண்டு திரையைத் தொங்கவிட்டார்கள்.

ஹதீஸ் 4449. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் வீட்டில் என்னுடைய (முறையில் தங்க வேண்டிய) நாளில் என்னுடைய நுரையீரலு(ள்ள பகுதி)க்கும் என் நெஞ்சுக்குமிடையே இறப்பெய்தினார்கள். அவர்களின் இறப்பின்போது அவர்களின் எச்சிலையும் என்னுடைய எச்சிலையும் அல்லாஹ் ஒன்று சேர்த்தான். இவை அல்லாஹ் என் மீது பொழிந்த அருட்கொடைகளில் சிலவாகும். (இருவரின் எச்சிலும் ஒன்று சேர்ந்தது எப்படியென்றால்,) என் சகோதரர் அப்துர் ரஹ்மான் தன்னுடைய கரத்தில் பல் துலக்கும் குச்சியுடன் என்னிடம் வந்தார். அப்போது நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களை என் நெஞ்சில் சாய்த்துக்கொண்டிருந்தேன். நபி(ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மானையே பார்ததுக் கொண்டிருந்ததைக் கண்டேன். அவர்கள் பல் துலக்க விரும்புகிறார்கள். என்று நான் புரிந்து கொண்டேன். எனவே, 'உங்களுக்கு அதை வாங்கிக் கொடுக்கட்டுமா?' என்று நான் கேட்க, அவர்கள், தம் தலையால், 'ஆம்'' என்று சைகை செய்தார்கள். நான் அதை வாங்கி அவர்களிடம் கொடுக்க, அ(தனால் பல் துலக்குவ)து அவர்களுக்குக் கடினமாக இருந்தது. நான், 'பல் துலக்கும் குச்சியை உங்களுக்கு மென்மையாக்கித் தரட்டுமா?' என்ற கேட்டேன். அவர்கள், தம் தலையால், 'ஆம்'' என்று சைகை செய்தார்கள். நான் அதை (மென்று) மென்மையாக்கினேன். அப்போது அவர்கள் முன்னே தண்ணீர் நிரம்பிய'தோல் பாத்திரம் ஒன்று' அல்லது'பெரிய மரக் குவளையொன்று' இருந்தது. (அறிவிப்பாளர்) உமர் இப்னு ஸயீத்(ரஹ்) (தோல் பாத்திரமா? மரக் குவளையா அவர்கள் (தோல் பாத்திரமா) மரக் குவளையா என்பதில்) சந்தேகம் தெரிவிக்கிறார்கள்.

நபி(ஸல்) அவர்கள், தம் இரண்டு கைகளையும் தண்ணீருக்குள் நுழைத்து அவ்விரண்டாலும் தம் முகத்தைத் தடவிக்கொண்டு, 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை மரணத்திற்குத் துன்பங்கள் உண்டு'' என்று கூறலானார்கள். பிறகு தம் கரத்தைத் தூக்கி, '(இறைவா! சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)'' என்று பிரார்த்திக்கலானார்கள். இறுதியில், அவர்களின் உயிர் கைப்பற்றப்பட, அவர்களின் கரம் சரிந்தது.

ஹதீஸ் 4450. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, 'நாளை நான் எங்கே இருப்பேன்? நாளை நான் எங்கே இருப்பேன்?' என்று என்னுடைய (மறை வரும்) நாளை மனத்தில் எண்ணியவாறு கேட்டுக்கொண்டிருந்தார்கள். எனவே, அவர்களின் (மற்ற) துணைவியர், தாம் விரும்பிய இடத்தில் நபி(ஸல்) அவர்கள் தங்கலாம் என்று அவர்களுக்கு அனுமதியளித்தார்கள். எனவே, அவர்கள் (விரும்பியபடி) தாம் இறக்கும்வரை என் வீட்டிலேயே இருந்தார்கள். அவர்கள் எந்த நாளில் முறைப்படி என் வீட்டில் தங்கி வந்தார்களோ அந்த நாளில் என் வீட்டில் வைத்து அவர்கள் இறந்தார்கள். என் நெஞ்சுக்கும் நுரையீரலு(ள்ள பகுதி)க்கும் இடையே அவர்களின் தலையிருந்தபோது, அவர்களின் எச்சில் என் எச்சிலுடன் கலந்திருந்த நிலையில் அல்லாஹ் அவர்களைக் கைப்பற்றிக் கொண்டான்.
(என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி), தாம் பல் துலக்கும் குச்சியைத் தம்முடன் கொண்டுவந்தார்கள். அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூர்ந்து பார்த்தார்கள். அவரிடம் நான், 'என்னிடம் இந்தப் பல் துலக்கும் குச்சியைக் கொடுங்கள்! அப்துர் ரஹ்மானே!" என்று கேட்க, அவர் என்னிடம் அதைக் கொடுத்தார். நான் அதைப் பற்களால் கடித்துமென்று (பல் துலக்க ஏதுவாக மென்மைப்படுத்தி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொடுத்தேன். (இவ்வகையிலேயே அவர்களின் எச்சில் என்னுடைய எச்சிலுடன் கலந்தது.) அவர்கள் என் நெஞ்சின் மீது சாய்ந்தபடி அதனால் பல் துலக்கினார்கள்.

ஹதீஸ் 4451. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் என்னுடைய (முறை வரும்) நாளில் என்னுடைய நுரையீரலு(ள்ள பகுதி)க்கும் என் நெஞ்சுக்குமிடையே (சாய்ந்திருந்த நிலையில்) இறந்தார்கள். (அவர்களின் துணைவியரான) எங்களில் ஒருவர் நபி(ஸல்) அவர்கள் நோயுற்றுவிடும்போது பிரார்த்தனையின் மூலம் (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோருவது வழக்கம். (அவ்வாறே இம்முறையும்) நான் அவர்களுக்காகப் பிரார்த்தித்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரிக்கொண்டே சென்றேன். அப்போது அவர்கள் தம் தலையை வானத்தை நோக்கி உயர்த்தி, '(இறைவா!) சொர்க்கத்தில் உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)'' என்று பிரார்த்தித்தார்கள். (என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) தம் கரத்தில் பச்சைப் பேரீச்ச மட்டை ஒன்றை எடுத்துக் கொண்டு (அப்பக்கமாகச்) சென்றார். நபி(ஸல்) அவர்கள் அவரைக் கூர்ந்து பார்க்கலானார்கள். அப்போது நான், அது அவர்களுக்குத் தேவைப்படுகிறது என்று எண்ணி, அதை வாங்கி அதன் நுனியை மென்று, அதை உதறி நபி(ஸல்) அவர்களிடம் கொடுத்தேன். நபி(ஸல்) அவர்கள் இதுவரை பல் துலக்கியதிலேயே மிக அழகான முறையில் அதனால் பல் துலக்கினார்கள். பிறகு அதை என்னிடம் கொடுத்துவிட்டார்கள். பிறகு 'அவர்களின் கரம் விழுந்துவிட்டது' அல்லது 'அ(க்குச்சியான)து அவர்களின் கரத்திலிருந்து விழுந்துவிட்டது' இவ்விதம் நபி(ஸல்) அவர்களின் எச்சிலையும் என்னுடைய எச்சிலையும் (அவர்களின்) உலக வாழ்வின் இறுதி நாளில், மறுமை வாழ்வின் முதல் நாளில் அல்லாஹ் ஒன்று சேர்த்தான்.

ஹதீஸ் 4452-ஹதீஸ் 4453 ஆயிஷா(ரலி) அறிவித்தார்
அபூ பக்ர்(ரலி) 'ஸுன்ஹ்' எனுமிடத்திலுள்ள தம் உறைவிடத்திலிருந்து ஒரு குதிரை மீது பயணம் செய்து முன்னோக்கி வந்து (மதீனாவை அடைந்து குதிரையைவிட்டு) இறங்கிப் பள்ளிவாசலுக்குள் நுழைத்தார்கள். மக்களிடம் பேசவில்லை. இறுதியில் என்னிடம் வந்து இறைத்தூதர்(ஸல்) அவர்களைத் தேடினார்கள். அவர்கள் (இறந்து) யமன் நாட்டுத் துணி ஒன்றினால் போர்த்தப்பட்டிருக்க, அவர்களின் முகத்தைவிட்டு (அத்துணியை) நீக்கி, அவர்களின் முகத்தின் மீது தம் தலையைக் கவிழ்த்து அவர்களை முத்தமிட்டு அழுதார்கள். பிறகு, 'என் தந்தையும் என் தாயும் தங்களக்கு அர்ப்பணமாகட்டும். உங்களுக்கு அல்லாஹ் இரண்டு

இருப்புகளை ஒன்று சேர்க்கவில்லை. உங்களின் மீது விதிக்கப்பட்டிருந்த இறப்பைத் தாங்கள் அனுபவித்துவிட்டீர்கள்' ' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4454 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(நபி(ஸல்) அவர்களின் உடலைப் பார்த்துவிட்டு) அபூ பக்ர்(ரலி) வெளியே வந்தார்கள். அப்போது உமர்(ரலி) மக்களிடம் (நபியவர்கள் இறக்கவில்லை என்று கோபமாகப்) பேசிக்கொண்டிருந்ததைக் கண்டதும், 'உமரே! அமருங்கள்' ' என்று அபூ பக்ர்(ரலி) கூறினார். உமர்(ரலி) உட்கார மறுத்தார்கள். அப்போது மக்கள் உமர்(ரலி) அவர்களைவிட்டுவிட்டு அபூ பக்ர்(ரலி) அவர்களை நோக்கி வந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) இறைவனைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு,

"நிற்க, உங்களில் யார் முஹம்மத்(ஸல்) அவர்களை (இறைவன் என நம்பி) வணங்கிக் கொண்டிருந்தார்களோ அவர்கள், முஹம்மத்(ஸல்) நிச்சயம் இறந்துவிட்டார்கள் என்பதை அறிந்துகொள்ளட்டும் உங்களில் யார் அல்லாஹ்வை வணங்கிக்கொண்டிருந்தார்களோ அவர்கள்' அல்லாஹ் என்றென்றும் உயிரோடிருப்பவன் மரணிக்கவேமாட்டான்' என்பதை அறிந்துகொள்ளட்டும்.

"அல்லாஹ் கூறினான் முஹம்மது ஒரு (இறைத்) தூதரேயன்றி வேறல்லர் அவருக்கு முன்னரும் (என்) தூதர்கள் பலர் (வந்து) சென்றிருக்கிறார்கள் எனவே, அவர் இறந்துவிட்டால், அல்லது கொல்லப்பட்டால் நீங்கள் உங்கள் கால் சுவடுகளின் வழியே (பழைய மதத்திற்கே) திரும்பிவிடுவீர்களா? அப்படி யாரேனும் தம் கால் சுவட்டில் திரும்பினால் அவர் அல்லாஹ்வுக்கு எவ்விதத் தீங்கும செய்துவிட முடியாது அன்றியும், அல்லாஹ் நன்றியுடையோருக்கு விரைவில் பிரதிபலன் வழங்குவான்' (திருக்குர்ஆன் 3:144) என்றார்கள்.

அல்லாஹ்வின் மீது ஆணையாக! அபூ பக்ர்(ரலி) இவ்வசனத்தை அங்கு ஓதிக்காட்டும் வரை, அல்லாஹ் அருளிய இவ்வசனத்தை இதற்கு முன்னர் அறியாதவர்கள் போன்றும், அபூ பக்ர்(ரலி) மூலமாகத்தான் இதை அவர்கள் அறிந்தது போன்றும் இதனை ஓதக் கேட்ட மக்கள் யாவரும் இதனைத் திரும்பத் திரும்ப ஓதிக் கொண்டேயிருந்தார்கள்.

உமர்(ரலி) கூறினார்:

அல்லாஹ்வின் மீதாணையாக! அபூ பக்ர் அவர்கள் இந்த வசனத்தை ஓத நான் கேட்டபோதுதான் அது என் நினைவுக்கே வந்தது. எனவே, அதிர்ச்சியடைந்தேன். அப்போது என் கால்களால் என் (உடல்) சுமையை தாங்க முடியவில்லை. அபூ பக்ர்(ரலி) ஓதிக்காட்டிய இவ்வசனத்தைக் கேட்டு நபி(ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள் என்பதை உணர்ந்து நான் தரையில் விழுந்துவிட்டேன்.

ஹதீஸ் 4455, ஹதீஸ் 4456 ும ஹதீஸ் 4457. ஆயிஷா(ரலி) அவர்களும், இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்

நபி(ஸல்) அவர்கள் இறந்த பின்னால் அவர்களை அபூ பக்ர்(ரலி) முத்தமிட்டார்கள்.

ஹதீஸ் 4458. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது (மயக்கமடைந்தார்கள். அப்போது) அவர்களின் வாய் ஓரத்தில் நாங்கள் மருந்தூற்றினோம். அப்போது அவர்கள் எங்களை நோக்கி, 'என்னுடைய வாயில் மருந்தூற்றாதீர்கள்' ' என்பது போல் சைகை செய்யலானாாகள். 'நோயாளி மருந்தை வெறுப்பது போன்றுதான் (நபி அவர்களும் வெறுக்கிறார்கள். ஊற்ற வேண்டாம் எனத் தடை செய்யவில்லை)' ' என்று நாங்கள் சொல்லிக்கொண்டோம். அவர்களின் மயக்கம் (முழுமையாகத்) தெளிந்தபோது, 'என் வாயில் மருந்தை ஊற்ற வேண்டாமென நான் தடுக்கவில்லையா? (அப்படியிருந்தும் ஏன் நான் மயக்கத்திலிருந்தபோது மருந்தூற்றினீர்கள்,' ' என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள், '(ஆம்! தடுத்தீர்கள்) நோயாளி மருந்தை வெறுப்பது போன்றுதான் (நீங்களும் இதை

வெறுத்து, 'வேண்டாம்' என்கிறீர்கள் என நாங்கள் நினைத்தோம்)'' என்று கூறினோம். அவர்கள், 'நான் பார்த்துக் கொண்டிருக்க, ஒருவர் பாக்கியில்லாமல் இந்த வீட்டிலுள்ள அனைவர் வாயிலும் மருந்தூற்றப்படவேண்டும்'' என்று கூறிவிட்டு, 'ஆனால், அப்பாஸ் அவர்களைத் தவிர! ஏனெனில், (மருந்தூற்றும்போது) உங்களுடன் அவர் கலந்து கொள்ளவில்லை'' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4459. அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

“நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம் (தமக்குப் பின் ஆட்சியாளராக இருக்கும்படி) இறுதிவிருப்பம் (வஸிய்யத்) தெரிவித்துவிட்டார்களாமே'' என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறப்பட்டது. அதற்கவர்கள், 'இதைச் சொன்னவர் யார்?' என்ற கேட்டுவிட்டு, '(நபி(ஸல்) அவர்களின் இறுதி வேளையில்) நான் அவர்களை என் நெஞ்சோடு அணைத்துக்கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் (எச்சில் துப்புவதற்காகப்) பாத்திரம் கொண்டு வரும்படி கூறிவிட்டு அப்படியே ஒரு பக்கம் சரிந்து இறந்துபோய்விட்டார்கள். (அவர்கள் இறந்ததைக் கூட) நான் உணரவில்லை. (நடந்தது இவ்வாறிருக்க) அலீ அவர்களுக்கு (ஆட்சிப் பொறுப்பை) எப்படி அவர்கள் சாசனம் செய்திருப்பார்கள்?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 4460. தல்ஹா இப்னு முஸர்ரிஃப்(ரஹ்) அறிவித்தார்

நான் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களிடம், 'நபி(ஸல்) அவர்கள் வஸிய்யத் - மரண சாசனம் செய்தார்களா?' என்று கேட்டேன். அவர்கள், 'இல்லை'' என்று பதிலளித்தார்கள். நான், 'அப்படியென்றால் மக்களின் மீது மரண சாசனம் செய்வது எப்படிக் கடமையாக்கப்பட்டது' அல்லது மரணசாசகனம் செய்யவேண்டுமென்று மக்களுக்கு எப்படிக் கட்டளையிடப்பட்டது?' 'அல்லாஹ்வின் வேதத்தின்படி செயல்படுமாறு நபி(ஸல்) அவர்கள் உபதேசம் செய்தார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4461. அம்ர் இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தபோது திர்ஹமையோ, தீனாரையோ (வெள்ளி நாணயத்தையோ, பொற்காசையோ), அடிமையையோ, அடிமைப் பெண்ணையோ, (வேறு எச்செல்வத்தையுமோ)விட்டுச் செல்லவில்லை'பைளா' எனும் தம் கோவேற கழுதையையும், தம் ஆயுதங்களையும், வழிப்போக்கர்களுக்குத் தர்மமாக ஆக்கி விட்டிருந்த ஒரு நிலத்தையும் தவிர.

ஹதீஸ் 4462. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் நோய் கடுமையானபோது, அவர்களுக்கு மயக்கமேற்படத் தொடங்கியது. அப்போது ஃபாத்திமா(ரலி), 'அந்தோ! என் தந்தைக்கு ஏற்பட்ட மரண வேதனையே!''என்று கூறினார்கள். ஃபாத்திமா(ரலி) அவர்களை நோக்கி நபி(ஸல்) அவர்கள், 'இன்றைய தினத்திற்குப் பின் உன் தந்தைக்கு எந்த வேதனையும் இல்லை'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் இறப்பெய்தியவுடன், ஃபாத்திமா(ரலி), 'அழைத்த அதிபதியின் அழைப்பை ஏற்ற என் தந்தையே! ஃபிர்தௌஸ் எனும் சொர்க்கத்தை தம் உறைவிடமாக்கிக் கொண்ட என் தந்தையே! இந்த இறப்புச் செய்தியை நாங்கள் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு அறிவிக்கிறோம், என் தந்தையே!''என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் அடக்கம் செய்யப்பட்டபோது ஃபாத்திமா(ரலி) (என்னை நோக்கி), 'அனஸே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மீது மண்ணைப் போட உங்கள் மனம் எப்படி இடம் தந்தது?' என்று கேட்டார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் பேசிய கடைசி வார்த்தை.

ஹதீஸ் 4463. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஆரோக்கியமானவர்களாய் இருந்தபோது, `சொர்க்கத்தில் தம் இருப்பிடத்தைப் பார்த்து, பிறகு (இன்னும் சில காலம் உயிர் வாழ்வதற்கு) வாய்ப்பளிக்கப்படாதவரை எந்த இறைத்தூத(ரின் உயி)ரும் கைப்பற்றப்படவில்லை' என்று கூறுவார்கள். பிறகு அவர்களுக்கு நோய் கண்டு, அவர்கள் தம் தலையை என்னுடைய மடி மீது வைத்திருந்த நிலையில் மயக்கமுற்றார்கள். பிறகு அவர்களின் மயக்கம் தெளிந்தபோது வீட்டின் கூரையை நோக்கி அவர்களின் பார்வை நிலை குத்திநின்றது. பிறகு, `இறைவா! (சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன்' (என்னைச் சேர்த்தருள்)' என்று கூறினார்கள். அப்போது நான், `அவர்கள் (இப்போது) நம்முடன் இருப்பதை விரும்பவில்லை. (மறுமைப் பெருவாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டார்கள்)' என்று (மனத்திற்குள்) கூறிக் கொண்டேன். ஆரோக்கியமானவர்களாய் இருந்தபோது ('இறைத்தூதர்கள் அனைவரும் இறக்கும் முன் இரண்டிலொன்றைத் தேர்வு செய்துகொள்ள வாய்ப்பளிக்கப்படுவார்கள்' என்று) அவர்கள் கூறியசொல் இதுதான் என நான் புரிந்துகொண்டேன். நபி(ஸல்) அவர்கள் பேசிய கடைசி வார்த்தை, `இறைவா! உயர்ந்த தோழர்களுடன் (என்னையும் சேர்த்தருள்)' என்பதுதான்.
இதை (உர்வா(ரஹ்) போன்ற) பல அறிஞர்களின் அவையில் ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அறிவித்தார்.

## நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இறப்பு(க் காலம்).

ஹதீஸ் 4464- ஹதீஸ் 4465 ஆயிஷா(ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்
நபி(ஸல்) அவர்கள் தம்மீது குர்ஆன் அருளப்பட்டுக்கொண்டிருந்த நிலையில் (தம் பிறந்தகமான) மக்காவில் பத்தாண்டுகள் தங்கி இருந்தார்கள் (ஹிஜ்ரத்துக்குப் பின்) மதீனாவில் பத்தாண்டுகள் இருந்தார்கள்.

ஹதீஸ் 4466. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
அறுபத்து மூன்று வயதுடையவர்களாய் இருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தார்கள்.
"இதையே ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) எனக்குத் தெரிவித்தார்கள்' என்று இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 4467. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
முப்பது 'ஸாவு' வாற்கோதுமைக்குப் பகரமாகத் தம் இரும்புக் காலம் யூதர் ஒருவரிடம் அடைமானம் வைக்கப்பட்டிருந்த நிலையில் நபி(ஸல) அவர்கள் இறந்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களை (ஒரு படைப்பிரிவுக்குத் தளபதியாக்கி) அனுப்பியது.

ஹதீஸ் 4468. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள், உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தளபதியாக்கி ஒரு படையை அனுப்பினார்கள். மக்களில் சிலர், உஸாமா அவர்களின் தலைமையைக் குறை கூறினர். அப்போது நபி(ஸல்) அவர்கள், `உஸாமாவின் (நியமன) விஷயத்தில் நீங்கள் (குறை) ஏதோ பேசியதாக எனக்குத் தெரியவந்தது. நிச்சயமாக அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவராவார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4469. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு புனிதப் போருக்காகப்) படையொன்றை அனுப்பி, அதற்கு உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தளபதியாக நியமித்தார்கள். (அவரை விட மூத்தவர்கள் பலர் இருக்க, அவர் தலைமை தாங்குவது சரியல்லவென்று) மக்கள் (சிலர்) அவரின் தலைமையைக் குறை கூறினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து, 'இவரின் தலைமையக் குறித்து நீங்கள் இப்போது குறை கூறுகிறீர்கள் என்றால், (இது ஒன்றும் புதிதன்று) இதற்கு முன்பு (மூத்தா போரின் போது) இவருடைய தந்தையின் தலைமையையும் தான் நீங்கள் குறை கூறிக்கொண்டிருந்தீர்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர் ஆட்சியதிகாரத்திற்குத் தகுதியானவராகத்தாம் இருந்தார். மேலும், அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவராகவும் இருந்தார். மேலும், அவருக்குப் பின் (அவரின் புதல்வரான) இவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவராவார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4470. அபுல்கைர் மர்ஸத் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்

நான் அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்ஸுனாபிஹீ(ரஹ்) அவர்களிடம், 'நீங்கள் எப்போது (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்து வந்தீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு ஸுனாபிஹீ(ரஹ்)'நாங்கள் யமன் நாட்டிலிருந்து (நபியின் நகரமான மதீனாவை நோக்கி) ஹிஜ்ரத் செய்து வந்தோம். நாங்கள்'ஜுஹ்ஃபா'வுக்கு வந்த சேர்ந்தபோது, (தம் வாகனத்தில் பயணித்தபடி) பயணி ஒருவர் எங்களை நோக்கி வந்தார். நான் அவரிடம், '(முக்கியச்) செய்தி ஏதும் உண்டா?' என்று கேட்டேன். அந்தப் பயணி, 'ஐந்து நாள்களுக்கு முன்பு நாங்கள் நபி(ஸல்) அவர்களை அடக்கம் செய்துவிட்டோம்'' என்று பதிலளித்தார்.

நான்'லைத்துல் கத்ர் (குர்ஆன் அருளப்பட்ட ரமளான் மாதத்தின் கண்ணியமிக்க இரவு) பற்றி நீங்கள் (மதீனாவில்) ஏதேனும் செவியுற்றீர்களா?' என்று ஸுனாபிஹி அவர்களிடம் கேட்க, அவர், 'ஆம். நபி(ஸல்) அவர்களின் (பள்ளிவாசலின்) தொழுகை அழைப்பாளரான பிலால்(ரலி), 'அது (ரமளான் மாதத்தின்) கடைசிப் பத்து நாள்களில் ஏழாவது இரவில் கிடைக்கும் என்று எனக்குத் தெரிவித்தார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் எத்தனை புனிதப் போர்களில் பங்கெடுத்தார்கள்?

ஹதீஸ் 4471. அபூ இஸ்ஹாக் அம்ர் அஸ்ஸபீஈ(ரஹ்) அறிவித்தார்

"இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் எத்தனை புனிதப் போர்களில் நீங்கள் கலந்து கொண்டீர்கள்?' என்று நான் ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'பதினேழு (புனிதப் போர்களில் நபி அவர்களுடன் நான் கலந்து கொண்டேன்)'' என்று பதிலளித்தார்கள். நான், 'நபி(ஸல்) அவர்கள் எத்தனை புனிதப் போர்களில் பங்கெடுத்தார்கள்'' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'பத்தொன்பது போர்களில் (பங்கெடுத்தார்கள்)'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4472. பராஉ(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் பதினைந்து புனிதப் போர்களில் கலந்து கொண்டேன்.

ஹதீஸ் 4473. புரைதா இப்னு ஹுஸைப்(ரலி) அறிவித்தார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் பதினாறு புனிதப் போர்களில் கலந்துகொண்டேன்.

# அத்தியாயம் 65 திருக்குர்ஆன் விளக்கவுரை

('பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்பதிலுள்ள) அர்ரஹ்மான் (அளவற்ற அருளாளன்), அர்ரஹீம் (நிகரற்ற அன்புடையோன்) ஆகிய இரண்டு சொற்களும்'ரஹ்மத் (கருணை') எனும் (வேர்ச்) சொல்லிருந்து பிறந்த இரண்டு பெயர்ச் சொற்களாகும். அர்ரஹீம், அர்ரஹிம் ஆகிய இரண்டும் ஒரே பொருளுடையவை தாம். இவை, (பொருள் தருவதில்) ஆலிம் மற்றும் அலீம் (அறிந்தவன்) எனும் சொற்களைப் போன்றவையாகும்.

## 'அல்ஃபாத்திஹா அத்தியாயம்

குர்ஆனின் தொடக்க (அத்தியாயமான அல்ஃபாத்திஹா) அத்தியாயம் தொடர்பாக வந்துள்ளவை. இதற்கு'உம்முல் கிதாப்' ('இறைவேதத்தின் தாய்') என்று பெயரிடப்பட்டுள்ளது காரணம், ஏடுகளில் (முதலாவதாக) இதை எழுதித்தான் (திருக்கர்ஆன்) தொடங்கப்படுகிறது. தொழுகையில் இதை (முதலாவதாக) ஓதித் தான் தொடங்கப்படுகிறது.

(இந்த அத்தியாயத்தின் மூன்றாவது வசனத்தின் மூலத்தில்'மாலிம் யவ்மித்தீன்' என்பதில் இடம் பெற்றுள்ள)'தீன்' எனும் சொல், நன்மைக்கும் தீமைக்கும் வழங்கப்படவிருக்கிற பிரதிபலனைக் குறிக்கும். (எனவே, 'பிரதிபலன் அளிக்கப்படும் நாளின் அதிபதி' என இவ்வசனத்தின் பொருள் அமையும்.)'கமாததீனு துதானு'' (நீ எப்படி நடந்து கொள்வாயோ அப்படியே நடத்தப்படுவாய் எனும் பழமொழியின் மூலத்தில்'தீன்' எனும் சொல்லில் தொனிக்கின்றபடி, ஒரு செயலுக்கு அதன் பதிலாக நிகழ்கின்ற, அதே போன்ற விளைவைத் தருகிற பிரதிபலனை இச்சொல் குறிக்கிறது.

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறுகிறார்கள்:

"அவ்வாறில்லை. மாறாக, (உண்மை என்னவெனில்) தீனை நீங்கள் நம்ப மறுக்கிறீர்கள்'' எனும் குர்ஆனின் (திருக்குர்ஆன் 82:9வது) வசனத்தில் உள்ள'தீனை' என்பதற்குச்'செயல்களுக்கான விசாரணையை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 56:86வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'மதீனீன்' எனும் சொல்லுக்கு'விசாரணைக்கு உட்படுத்தப்படுவோர்' என்று பொருள்.

ஹதீஸ் 4474. அபூ ஸயீத் இப்னு முஅல்லா(ரலி) அறிவித்தார்

நான் (மஸ்ஜிதுந் நபவி) பள்ளிவாசலில் தொழுது கொண்டிருந்தேன். அப்போது என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழைத்தார்கள். நான் அவர்களுக்கு பதிலளிக்கவில்லை. எனவே, நான் (தொழுது முடித்தபின்), 'இறைத்தூதர் அவர்களே! (தாங்கள் அழைத்தபோது) நான் தொழுது கொண்டிருந்தேன்'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், 'உங்களுக்கு வாழ்வளிக்கக் கூடியதன் பக்கம், இறைத்தூதர் உங்களை அழைக்கும்போது அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் (விரைந்து) பதிலளியுங்கள்'' என்று (திருக்குர்ஆன் 08:24வது வசனத்தில்) அல்லாஹ் கூறவில்லையா?' என்று கேட்டார்கள். பிறகு என்னிடம், 'குர்ஆனின் அத்தியாயத்தை நீ பள்ளிவாசலிலிருந்து வெளியே செல்வதற்கு முன்னால் நான் உனக்குக் கற்றுத் தருகிறேன்'' என்று கூறினார்கள். பிறகு என் கையைப் பிடித்தார்கள். அவர்கள் வெளியே செல்ல முனைந்தபோது நான் அவர்களிடம், 'நீங்கள் குர்ஆனின் அத்தியாயங்களிலேயே மகத்துவ மிக்க ஓர் அத்தியாயத்தை நான் உனக்குக் கற்றுத் தருகிறேன்' என்று சொல்லவில்லையா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அது'அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்' (என்று தொடங்கும்'அல்ஃபாத்திஹா' அத்தியாயம்) தான். அவை திரும்பத் திரும்ப

ஓதப்படும் ஏழு வசனங்கள் (அஃஸப்உல் மஸானீ) ஆகும். எனக்கு அருளப்பட்டுள்ள மகத்துவம் பொருந்திய குர்ஆன் ஆகும்'' என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 1:7

“(அவர்கள் உன்னுடைய) கோபத்திற்குள்ளானவர்களும் அல்லர் வழிதவறிச் சென்றவர்களும் அல்லர்'' (எனும் 1:7வது இறைவசனம்)

ஹதீஸ் 4475. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

(தொழுகையில்) இமாம், `ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வ லள்ளால்லீன்'' என்று ஓதியவுடன் நீங்கள், `ஆமீன் (அவ்வாறே ஆகட்டும்)'' என்று சொல்லுங்கள். ஏனெனில், வானவர்கள்' ஆமீன்' கூறுவதுடன் ஒத்து ஆமீன் கூறுகிறவருக்கு அதற்கு முன் செய்த பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## (2) அல்பகரா அத்தியாயம்

## திருக்குர்ஆன் வசனம் 02:31

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்... 'அவன் ஆதமுக்குப் பெயர்கள் அனைத்தையும் கற்றுக் கொடுத்தான்'' (எனும் 02:31வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4476. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

மறுமை நாளில் இறைநம்பிக்கையாளர்கள் ஒன்றுகூடி, `(நமக்கு ஏற்பட்டுள்ள துன்பங்களிலிருந்து நம்மைக் காக்கும்படி யார் மூலமாவது) நம் இறைவனிடம் நாம் மன்றாடினால் (எவ்வளவு நன்றாயிருக்கும்!)'' என்று (தங்களிடையே) பேசிக் கொள்வார்கள். பிறகு, அவர்கள் ஆதம் (அலை) அவர்களிடம் வந்து, `நீங்கள் மனிதர்களின் தந்தையாவீர்கள். அல்லாஹ், தன் கையால் உங்களைப் படைத்தான். தன்னுடைய வானவர்களை உங்களுக்குச் சிரம் பணியச் செய்தான். மேலும், உங்களுக்கு எல்லாப் பொருள்களின் பெயர்களையும் கற்றுத் தந்தான். எனவே, இந்த(ச் சோதனையான) கட்டத்திலிருந்து எங்களை விடுவிப்பதற்காக உங்களுடைய இறைவனிடத்தில் எங்களுக்காகப் பரிந்துரை செய்யுங்கள்'' என்று சொல்வார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள், `(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை'' என்று கூறிவிட்டு, தாம் புரிந்த பாவத்தை நினைத்துப் பார்த்து வெட்கப்படுவார்கள். 'நீங்கள் (நபி) நூஹ் அவர்களிடம் செல்லுங்கள். ஏனென்றால், அவர் (எனக்குப் பின்) பூமியிலுள்ளவர்களுக்கு அல்லாஹ் அனுப்பி வைத்த (முக்கிய) தூதர்களில் முதலாமவராவார்'' என்று சொல்வார்கள். உடனே, இறைநம்பிக்கையாளர்கள் நூஹ் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவரும், `(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை'' என்று கூறிவிட்டு, தாம் அறியாத ஒன்றைக் குறித்துத் தம் இறைவனிடத்தில் கேட்டதை நினைத்து வெட்கப்படுவார்கள். பிறகு, நீங்கள் கருணையாளனின் உற்ற நண்பரிடம் (இப்ராஹீம் (அலை) அவர்களிடம்) செல்லுங்கள்'' என்று சொல்வார்கள். உடனே, இறைநம்பிக்கையாளர்கள் (இப்ராஹீம் - அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவர்களும், `(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை. அல்லாஹ் உரையாடிய, தவ்ராத் (வேதத்)தையும் அளித்த அடியாரான (நபி) மூஸாவிடம் நீங்கள் செல்லுங்கள்'' என்று சொல்வார்கள். உடனே, அவர்கள் மூஸா (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவர்கள், `(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை'' என்று கூறிவிட்டு, (தம் வாழ்நாளில் ஒருமுறை) எந்த உயிருக்கும் ஈடாக இல்லாமல் ஒரு (மனித) உயிரைக் கொன்றதை நினைவு கூர்ந்து தம் இறைவனுக்கு முன் வெட்கப்படுவார்கள். 5 பிறகு, `நீங்கள் அல்லாஹ்வின் அடியாரும், அவனுடைய தூதரும், அவனுடைய வார்த்தையும், அவனுடைய ஆவியுமான (நபி) ஈசாவிடம் செல்லுங்கள்'' என்று

சொல்வார்கள். (அவ்வாறே அவர்கள் செல்ல,) அப்போது அவர்களும், `(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை. நீங்கள் முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட அடியாரான முஹம்மத்(ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்‘` என்று சொல்வார்கள்.
உடனே, அவர்கள் என்னிடம் வருவார்கள். அப்போது நான், `என்னுடைய இறைவனிடத்தில் அனுமதி கேட்பதற்காகச் செல்வேன். அப்போது (எனக்கு) அனுமதி வழங்கப்படும். என் இறைவனை நான் காணும்போது சஜ்தாவில் விழுவேன். தான் விரும்பியவரையில் (அப்படியே) என்னை அவன்விட்டு விடுவான். பிறகு, (இறைவனின் தரப்பிலிருந்து)′உங்கள் தலையை உயர்த்துங்கள்! கேளுங்கள்! உங்களுக்குத் தரப்படும் சொல்லுங்கள் செவியேற்கப்படும். பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்‘` என்று சொல்லப்படும் அப்போது நான் என்னுடைய தலையை உயர்த்தி, இறைவன் எனக்குக் கற்றுத் தரும் புகழ் மொழிகளைக் கூறி அவனைப் புகழ்வேன். பிறகு நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன், (நான் யார் வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு அவர்களை நான் சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். பிறகு மீண்டும் நான் இறைவனிடம் செல்வேன். என் இறைவனைக் காணும்போது நான் முன்பு போன்றே செய்வேன். பிறகு நான் பரிந்துரைப்பேன். அப்போதும் இறைவன், (நான் யார் யாருக்குப் பரிந்துஐர செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு, நான் அவர்களைச் சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். பிறகு மூன்றாம் முறையாக (இறைவனிடம்) நான் செல்வேன். பிறகு நான்காம் முறையும் செல்வேன். (இறுதியாக) நான், `குர்ஆன் தடுத்துவிட்ட, நிரந்தர நரகம் கட்டாயமாம்விட்டவர்(களான இறைமறுப்பாளர்கள், நயவஞ்சகர்)களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் மிஞ்சவில்லை‘` என்று சொல்வேன்.
என அனஸ்(ரலி) அறிவித்தார்.
அபூ அப்தில்லாஹ் (புகாரீயாகிய நான்) கூறுகிறேன்:
உயர்ந்தோனான அல்லாஹ் (திருக்குர்ஆனில் யாரைக் குறித்து), `நரகத்தில் இவர்கள் நிரந்தரமாக இருப்பார்கள்′ என்று குறிப்பிட்டுள்ளானோ அவர்களையே′குர்ஆன் தடுத்துவிட்டவர்கள்′ எனும் சொற்றொடர் குறிக்கிறது.
இரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாக இந்த நபிமொழி வந்துள்ளது.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 02:14வது வசனத்தில் மூலத்தில் இடம் பெற்றுள்ள)′இலா ஷயாத்தீனிஹிம்′ (தங்களின் ஷைத்தான்களுடன்) எனும் சொல்லுக்கு, `நயவஞ்சகர்களும் இணை வைப்பவர்களுமான தங்களின் தோழர்கள்′ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02:19வது வசனத்தின் மூலத்திலுள்ள)′முஹீத்துன் பில் கா∴பிரீன்′ (இந்த நிராகரிப்போரை அல்லாஹ் சூழ்ந்து கொண்டிருக்கிறான்) எனும் சொற்றொடருக்கு, `இறை மறுப்பாளர்களான அவர்களை அல்லாஹ் சுற்றி வளைத்துக் கொண்டிருக்கிறான். (அவர்களால் தப்ப முடியாது)‘` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02:138வது வசனத்தின் மூலத்திலுள்ள)′அலல் காஷியீன்′ (‘உள்ளச்சமுடையோர் மீது‘) எனும் சொற்றொடருக்கு′உண்மையான இறைநம்பிக்கையாளர்களின் மீது‘` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02:63வது வசனத்தின் மூலத்திலுள்ள)′பிகுவ்வத்தின்′ (உறுதியாக) எனும் சொல்லுக்கு, `வேதத்திலுள்ளபடி செயல்படுங்கள்‘` என்று பொருள்.
அபுல் ஆலியா(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 02:10வது வசனத்தின் மூலத்திலுள்ள)′மரள்′ (நோய்) எனும் சொல்லுக்குச்′சந்தேகம்′ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02:66வது வசனத்தின் மூலத்திலுள்ள 'வமா கல்∴பஹா' (பின்னால் உள்ளவர்களுக்கு) எனும் சொல்லுக்கு, 'அவர்களுக்குப் பின்னால் வருபவர்களுக்கும் (படிப்பினையாக நாம் ஆக்கினோம்)' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02:71வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'லா ஷியத்த' (மறு இல்லாதது) எனும் சொல்லுக்கு, 'வெண்மையில்லாதது' என்று பொருள்.
அபுல் ஆலியா (ரஹ்) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 02:49வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'யசூமூனக்கும்' (கொடிய வேதனையில் ஆழ்த்திக் கொண்டிருந்தார்கள்) எனும் சொல்லுக்கு, 'உங்களை ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்தனர்' என்று பொருள். (இப்பொருளின் மூலச் சொல்லான) 'அல்வலாயா' எனும் சொல், 'அல்வலா∴' என்பதன் வேர்ச் சொல்லாகும். இதற்கு இறையாண்மை' என்று பொருள். 'அல்விலாயா' என்று அதனை வாசித்தால், அதற்கு 'ஆட்சியதிகாரம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02:61வது வசனத்தின் மூலத்திலுள்ள) '∴பூம்' (கோதுமை) எனும் சொல், உண்ணப்படுகிற தானியங்கள் அனைத்தையுமே குறிக்கும்'' என்று சிலர் கூறுகின்றனர்.
கத்தாதா இப்னு திஆமா (ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 02:90 வது வசனத்தின் மூலத்திலுள்ள) '∴ப பாஊ' (இறை முனிவுக்கு ஆளாம்விட்டார்கள்) எனும் சொல்லுக்கு, 'அவர்கள் (இறை முனிவுடன்) திரும்பினார்கள்' என்று பொருள்.
கத்தாதா (ரஹ்) அல்லாதோர் கூறுகின்றனர்.
(திருக்குர்ஆன் 02:89 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'யஸ்த∴ப்திஹூன்' (வெற்றியளிக்கும்படி வேண்டினர்) எனும் சொல்லுக்கு, 'உதவி தேடினர்' என்று பொருள்
(திருக்குர்ஆன் 02:102வது வசனத்தின் மூலத்திலுள்ள 'ராஇனா' எனும் சொல், 'ருஊனத்' (மடமை) எனும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். அவர்கள் ஒரு மனிதனை மடையனாக்க விரும்பினால் அவனை நோக்கி, 'ராஇனா' (மடையனே) என்று சொல்வார்கள்.
(திருக்குர்ஆன் 02:48வது வசனத்தின் மூலத்திலுள்ள 'போதாது' எனும் சொற்பொருள் கொண்ட) 'லா தஜ்ஸீ' எனும் சொல்லுக்குப் 'பயனளிக்க முடியாது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02:168வது வசனத்தின் மூலத்திலுள்ள 'எட்டுகள்' எனும் சொற்பொருள் கொண்ட) 'குத்வாத்' எனும் சொல், 'கத்வ்' எனும் (மூலச்) சொல்லிலிருந்து பிறந்ததாகும். இதற்குக் 'கால் சுவடுகள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 02: 124 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'கஷ்டம் கொடுத்தான்' எனும் சொற்பொருள் கொண்ட) 'இப்தலா' எனும் சொல்லுக்குச் 'சோதித்தான்' என்று பொருள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:22

"எனவே, நீங்கள் அறிந்துகொண்டே அல்லாஹ்வுக்க இணைகளைக் கற்பிக்காதீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02:22வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4477. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்
நான் நபி (ஸல்) அவர்களிடம், 'அல்லாஹ்விடம் பாவங்களில் மிகப் பெரியது எது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணை கற்பிப்பது'' என்று கூறினார்கள். நான், 'நிச்சயமாக அது மிகப் பெரிய குற்றம் தான்'' என்று சொல்லிவிட்டு, 'பிறகு எது?' என்று கேட்டேன். 'உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதனை நீ கொல்வது'' என்று கூறினார்கள். நான், 'பிறகு எது?' என்று கேட்க, அவர்கள், 'உன் அண்டை வீட்டானின் மனைவியுடன் நீ விசாரம் செய்வது'' என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:57

“மேலும், நாம் உங்களின் மீது மேகத்தை நிழலிடும்படி செய்தோம். உங்களுக்கு மன்னு, சல்வா (எனும் உணவுகளை) இறக்கி வைத்தோம். ’நாம் உங்களுக்கு உணவாக அருளியுள்ள நல்ல பொருள்களைப் புசியுங்கள்’ (என்றும் உங்களிடம் கூறினோம். இக்கட்டளைகளை மீறியதால்) எமக்கொன்றும் அவர்கள் தீங்கிழைத்து விடவில்லை. மாறாக, தமக்குத்தாமே அவர்கள் தீங்கிழைத்துக் கொண்டார்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 02:57வது) இறைவசனம்.
முஜாஹித் இப்னு ஜபர்(ரஹ்) கூறினார்.
‘மன்னு’ என்பது வேலம் பசை ஆகும். ’சல்வா’ என்பது பறவை ஆகும்.

ஹதீஸ் 4478. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.
சமையல் காளான் (தானாக வளர்வதில்)’மன்னு’ வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.
என ஸயீத் இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

## திருக்குர்ஆன் வசனம் 02:58

மேலும், ‘(அங்கிருக்கும்) இந்த ஊருக்குள் நுழையுங்கள். பிறகு அங்கு (ம்டைப்பனவற்றை) நீங்கள் விரும்பியவாறு தாராளமாகப் புசியுங்கள். (ஊருக்குள் நுழையும்போது) அதன் தலைவாயிலில் சிரம் தாழ்த்தியவர்களாக நுழையுங்கள். ’ஹித்தத்துன்’ (பாவச் சுமையை இறக்கிடுவாயாக!) என்றும் கூறுங்கள். உங்கள் குற்றங்களை உங்களுக்கு நாம் மன்னித்துவிடுவோம். மேலும், நல்லவர்களுக்கு அதிகமாக வழங்குவோம்’ என நாம் கூறியதையும் நினைவுகூருங்கள் (எனும் 02:58வது இறைவசனம்).
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)’ர∴கதன்’ (தாரளமாக) எனும் சொல்லுக்கு’விசாலமாகவும் அதிகமாகவும்’ என்று பொருள்.

ஹதீஸ் 4479. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
பனு இஸ்ராயீல்களுக்கு, ‘(ஊருக்குள் நுழையும்போது) அதன் தலைவாயிலில் சிரம் தாழ்த்தியவர்களாக நுழையுங்கள். ’ஹித்தத்துன்’ (பாவச்சுமையை இறக்கிடுவாயாக!) என்றும் கூறுங்கள்‘‘ (திருக்குர்ஆன் 02:58) என்று கூறப்பட்டது. ஆனால், அவர்கள் தங்கள் புட்டங்களால் தவழ்ந்து சென்றபடி (நகருக்குள்) நுழைந்தார்கள். (கட்டளையிடப்பட்டதை) அவர்கள் மாற்றி, ‘ஹித்தத்துன் ஹபபத்துன் ∴பீ ஷஅரத்தின் (இறைவா! மன்னிப்பாயாக! ஒரு வாற்கோதுமைக்குள் ஒரு தானியவித்து)‘‘ என்று (பரிகாசமாகச்) கூறினார்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## திருக்குர்ஆன் வசனம் 02:97

“ஜிப்ரீலுக்குப் பகைவர் அல்லாஹ்வுக்கும் பகைவராவார். ஏனெனில், நிச்சயமாக அவர் அல்லாஹ்வீன் ஆணைக்கிணங்கவே இ(வ்வேதத்)தை உங்களின் இதயத்தில் இறக்கி வைத்தார். (இவ்வேதம்) தனக்கு முன்னிருந்த வேதங்களை உண்மைப்படுத்துவதடன், நம்பிக்கை கொண்டவர்களுக்கு நற்செய்தியாகவும் நேர்வழியாகவும் விளங்குகிறது‘‘ என்று (நபியே) கூறும்! எனும் (திருக்குர்ஆன் 02:97வது) இறை வசனம்.
இக்ரிமா(ரஹ்) கூறினார். ஆகிய வானவர்களின் பெயர்களில் தொடக்கத்திலுள்ள) ஜப்ர், மீக், சரா∴ப் ஆகியன’அடிமை’ எனும் பொருளுடையவை. இறுதியில் உள்ள’ஈல்’ எனும் சொல்லுக்கு’அல்லாஹ்’ என்று பொருள். (அதாவது’அல்லாஹ்வின் அடியார்’ என்பது இவற்றின் பொருளாகும்.)

ஹதீஸ் 4480. அனஸ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு) வந்திருக்கும் செய்தி (யூத அறிஞராயிருந்த) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்களுக்கு, அவர்கள் ஒரு (தோட்ட) நிலத்தில் பழம் பறித்துக் கொண்டிருந்தபோது எட்டியது. உடனே அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, ‘தங்களிடம்

நான் மூன்று விஷயங்களைப் பற்றிக் கேட்கப் போகிறேன். அவற்றை ஓர் இறைத்தூதர் மட்டுமே அறிவார்'' என்று கூறினார்கள். பிறகு, '1. இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம் எது? 2. சொர்க்கவாசிகள் உண்ணும் முதல் உணவு எது? 3. குழந்தை தன் தந்தையின் சாயலில், அல்லது தாயின் சாயலில் இருப்பது எதனால்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'சற்று முன்புதான் ஜிப்ரீல் எனக்கு இவற்றைக் குறித்து (விளக்கம்) தெரிவித்தார்'' என்று கூறினார்கள். உடனே அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள், 'ஜிப்ரீலா (தங்களுக்குத் தெரிவித்தார்!"என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'ஆம்'' என்று பதிலளிக்க, 'வானவர்களிலேயே ஜிப்ரீல்தாம் யூதர்களுக்குப் பகைவராயிற்றே!"என்று அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'ஜிப்ரீலுக்குப் பகைவவர் அல்லாஹ்வுக்கும் பகைவராவார். ஏனெனில், நிச்சயமாக அவர் அல்லாஹ்வின் ஆணைக்கிணங்கவே இ(வ்வேதத்)தை உங்களின் இதயத்தில் இறக்கி வைத்தார்'' என்று (நபியே) கூறும் எனும் இந்த (திருக்குர்ஆன் 02:97வது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள். பிறகு, 'அறிக! இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம், ஒரு நெருப்பாகும். அது கிழக்கிலிருந்து மக்களை(த் துரத்திக்கொண்டு வந்து) மேற்குத் திசையில் ஒன்று திரட்டும். அறிக! சொர்க்கவாசிகள் உண்ணும் முதல் உணவு, பெரிய மீனின் ஈரல் பகுதியிலுள்ள கூடுதலான சதையாகும். (குழந்தை தந்தையின் சாயலில், அல்லது தாயின் சாயலில் அமையக் காரணம், ஓர் ஆண் தன் மனைவியுடன் உடலுறவு கொள்ளும்போது) ஆணின் நீர் (விந்து உயிரணு) பெண்ணின் நீரை (கருமுட்டை உயிரணுவை) முந்திவிட்டால் குழந்தை அவனுடைய சாயலைப் பெறுகிறது. பெண்ணின் நீர் கருமுட்டை உயிரணு) முந்திக் கொண்டால் குழந்தை அவளுடைய சாயலைப் பெறுகிறது'' என்று பதிலளித்தார்கள்.

(உடனே) அப்துல்லாஹ் இப்னு சலாம் அவர்கள், 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை' என்று நான் உறுதி அளிக்கிறேன். தாங்கள் இறைத்தூதர்தாம் என்றும் நான் உறுதி அளிக்கிறேன்'' என்று கூறினார்கள். பிறகு, 'இறைத்தூதர் அவர்களே! யூதர்கள் பொய்யில் ஊறித் திளைத்த சமுதாயத்தினர் ஆவர். தாங்கள் (என்னைப் பற்றி) அவர்களிடம் விசாரித்து (அறிந்து) கொள்வதற்கு முன்பாக, நான் இஸ்லாத்தை ஏற்றதை அவர்கள் அறிந்தால் என்னைப் பற்றி (அவதூறு கற்பித்துத் தங்களிடம் பொய்யுரைப்பார்கள்'' என்று கூறினார்கள். அப்போது யூதர்கள் வந்தனர். (உடனே, அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அறைக்குள் சென்று மறைந்து கொண்டார்கள்.) பிறகு, நபி(ஸல்) அவர்கள் (யூதர்களிடம்), 'உங்களில் அப்துல்லாஹ் இப்னு சலாம் எத்தகைய மனிதர்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'அவர் எங்களில் நல்லவரும், எங்களில் நல்லவரின் புல்வருமாவார் எங்கள் தலைவரும், எங்கள் தலைவரின் புதல்வருமாவார்'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ் இப்னு சலாம் இஸ்லாத்தை ஏற்றார் என்றால் நீங்கள் என்ன நினைப்பீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு யூதர்கள், 'அல்லாஹ் அவரை அதிலிருந்து காப்பாற்றுவானாக!"என்று கூறினார்கள். உடனே, அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) வெளியே வந்து, 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்றும், முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள் என்றும் நான் உறுதி அளிக்கிறேன்'' என்று கூறினார்கள். உடனே யூதர்கள், 'இவர் எங்களில் கெட்டவரும் எங்களில் கெட்டவரின் மகனுமாவார்'' என்று அப்துல்லாஹ் இப்னு சலாமைக் குறித்துக் குறை கூறினர். அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி), 'இதைத்தான் நான் அஞ்சிக் கொண்டிருந்தேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:106

"எந்த ஒரு வசனத்தையாவது நாம் மாற்றிவிட்டால், அல்லது அகற்றிவிட்டால் (அதற்கு பதிலாக) அதனினும் சிறந்த, அல்லது அதைப்போன்ற வேறு வசனத்தை நாம் கொண்டு

வருகிறோம். நிச்சயமாக, அல்லாஹ் ஒவ்வொரு பொருளின் மீதும் பேராற்றலுள்ளவன் என்பதை நீங்கள் அறியவில்லையா?' எனும் (திருக்குர்ஆன் 02:106வது) இறைவசனம்.

ஹதீஸ் 4481. உமர்(ரலி) அறிவித்தார்.

எங்களில் (குர்ஆனை) நன்கு ஓதத் தெரிந்தவர் உபை இப்னு கஅப்(ரலி) ஆவார் எங்களில் நன்கு தீர்ப்பு வழங்கும் ஞானமுடையவர் அலீ(ரலி) ஆவார். நாங்கள் உபை அவர்களின் சொற்களில் சிலவற்றைவிட்டுவிடுவோம். ஏனெனில் அவர், `இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவிமடுத்த எதையும் கைவிடமாட்டேன்'' என்று சொல்வார். ஆனால், அல்லாஹ்வோ, எந்த ஒரு வசனத்தையாவது நாம் மாற்றிவிட்டால், அல்லது அகற்றிவிட்டால் (அதற்கு பதிலாக) அதனினும் சிறந்த, அல்லது அதைப்போன்ற வேறு வசனத்தை நாம் கொண்டு வருகிறோம்'' என்று கூறியுள்ளான்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## 'அல்லாஹ் (தனக்குச்) சந்ததியை ஏற்படுத்திக் கொண்டான் என்று அவர்கள் கூறுகின்றனர். அவன் (அதிலிருந்து) தூய்மையானவன்' (எனும் 02:11வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4482. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதமின் மகன் (மனிதன்) என்னை நம்ப மறுத்தான். ஆயினும், அதற்கான உரிமை அவனுக்கில்லை. என்னை அவன் ஏசினான். ஆயினும் அதற்கான உரிமை அவனுக்கில்லை. என்னை அவன் நம்ப மறுத்தது, `அவனை நான் முன்பிருந்தது போன்றே முண்டும் உயிராக்கி எழுப்ப என்னால் முடியாது' என்று அவன் எண்ணியதேயாகும். அவன் என்னை ஏசியது, `எனக்குக் குழந்தை உண்டு' என்று அவன் சொன்னதேயாகும். ஆனால், நான் ஒரு துணைவியையோ குழந்தையையோ பெற்றுக்கொள்வதிலிருந்து தூய்மையானவன் ஆவேன்'' என்று அல்லாஹ் கூறினான்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## திருக்குர்ஆன் வசனம் 02:125

"மேலும் (நினைவு கூருங்கள்:) நாம் (கஅபா எனும்) இந்த ஆலயத்தை மக்களுக்கு ஒன்று கூடும் இடமாகவும், அமைதி அளிக்கும் இடமாகவும் ஆக்கினோம். மேலும், `இப்ராஹீம் நின்ற இடத்தை நீங்கள் தொழும் இடமாக வைத்துக்கொள்ளுங்கள்' என்றும் மக்களுக்கு நாம் கட்டளையிட்டோம்'' எனும் (திருக்குர்ஆன் 02:125வது) வசனத் தொடர்.)

(இவ்வசனத்தின் மூலத்தில்'ஒன்று கூடும் இடம்' என்ற பொருளைக் குறிக்கும்)'மஸாபாத்தன்' எனும் சொல்லுக்கு'மீளுமிடம்' என்று பொருள். (அதன் எதிர்கால வினைச் சொல்லான)'யஸூபூன்' எனும் சொல்லுக்கு'மீண்டு(ம் மீண்டும்) வருவார்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4483. உமர்(ரலி) அறிவித்தார்

'மூன்று விஷயங்களில் நான் அல்லாஹ்வுக்கு இசைவான கருத்துக் கொண்டேன்' அல்லது'என் இறைவன் மூன்று விஷயங்களில் எனக்கு இசைவாகக் கருத்துக் கொண்டான்' நான் (நபி(ஸல்) அவர்களிடம்)'இறைத்தூதர் அவர்களே! இப்ராஹீம்(அலை) அவர்கள் (கஅபாவைக் கட்டும்போது) நின்ற இடத்தைத் தொழுமிடமாக நீங்கள் ஆக்கிக் கொள்ளலாமே!"என்று கேட்டேன். (அவ்வாறே ஆக்கிக்கொள்ளும்படி அல்லாஹ்வும் வசனத்தை அருளினான்.) மேலும், நான், (அவர்களிடம்), `இறைத்தூதர் அவர்களே! தங்களிடம் நல்லவரும் கெட்டவரும் (எல்லாவகை மனிதர்களும்) வருகிறார்கள். எனவே, (தங்கள் துணைவியரான) இறைநம்பிக்கையாளர்களின் அன்னயரை பர்தா அணியும் படி தாங்கள்

கட்டளையிடலாமே!”என்று கேட்டேன் உடனே, அல்லாஹ் பர்தா(சட்டம்) குறித்த வசனத்தை அருளினான். நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரில் சிலர் மீது அதிருப்தி அடைந்திருப்பதாக எனக்குச் செய்தி எட்டியது. எனவே, அவர்களிடம் நான் சென்று, `நீங்கள் (நபி(ஸல்) அவர்களுக்குச் சங்கடம் ஏற்படுத்துவதை) நிறுத்திக்கொள்ளவேண்டும்! இல்லையென்றால், அல்லாஹ் தன் தூதருக்கு உங்களைவிடச் சிறந்தவர்களை (உங்களுக்கு) பதிலாகத் தருவான்‘` என்று சொன்னேன். இந்நிலையில் அவர்களின் துணைவியரில் ஒருவரிடம் நான் சென்றபோது, `உமரே! தம் துணைவியருக்கு உபதேசம் செய்ய இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தெரியாதா? நீங்கள் ஏன் எங்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும்!”என்று கேட்டார். அப்போது அல்லாஹ், `இறைத்தூதர் உங்களை விவாக விலக்குச் செய்தால், உங்களைவிடச் சிறந்த முஸ்லிமான துணைவியரை (உங்களுக்கு பதிலாக) அல்லாஹ் அவருககு வழங்கலாம்‘` எனும் (திருக்குர்ஆன் 66:5வது) வசனத்தை அருளினான்.
இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## திருக்குர்ஆன் வசனம் 02:127

“மேலும், (நபியே! நினைவு கூருக:) இப்ராஹீமும் இஸ்மாயீலும் அந்த (இறை) இல்லத்தின் அடித்தளங்களை உயர்த்திக் கொண்டிருந்த பொழுது’எங்கள் இறைவா! எங்களிடமிருந்து (இப்பணியை) ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீயே (அனைத்தையும்) செவியுறுவோனும் நன்கறிவோனும் ஆவாய்’ (எனப் பிரார்த்தித்தார்கள்)‘` எனும் (திருக்குர்ஆன் 02:127 வது) இறைவசனம்.
(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)’அல்கவாஇத்’ (அடித்தளங்கள் எனும் சொல், அந்த இ(றையி)ல்லத்தின் அஸ்திவாரத்தைக் குறிக்கும். இதன் ஒருமை’காஇதா’ ஆகும். (மாதவிடாய் நின்று போன முதிய) பெண்களைக் குறிக்கிற’அல்காவஇத்’ எனும் சொல்லின் ஒருமை, `காஇத்’ என்பதாகும்.

ஹதீஸ் 4484. நபி(ஸல்) அவர்களின் துணைவியாராகிய ஆயிஷா(ரலி) கூறினார்
நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்,)’உன்னுடைய சமுதாயத்தார் (குறைஷியர்) கஅபாவை(ப் புதுப்பித்து)க் கட்டி இப்ராஹீம்(அலை) அவர்கள் அமைத்த அடித்தளங்களை விடச் சுருக்கி(சற்று உள்ளடக்கி)விட்டதை நீ காணவில்லையா?’ என்று கேட்டார்கள். அதற்கு நான், `இறைத்தூதர் அவர்களே! இப்ராஹீம்(அலை) அவர்கள் அமைத்த அடித்தளங்களின் மீது அதைத் தாங்கள் மீண்டும் கட்டக்கூடாதா?’ எனக் கேட்டேன்.’உன் சமுதாயத்தார் புதிதாக இஸ்லாத்தை ஏற்றவர்களாயில்லாவிட்டால் (அவ்வாறே நான் செய்திருப்பேன்)‘` என்றார்கள்.
(இதன் அறிவிப்பாளரான) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்:
ஆயிஷா(ரலி), நபி(ஸல்) அவர்களிடமிருந்து மேற் சொன்னவற்றைக் கேட்டிருந்தால் அது சரியே! ஏனென்றால், நபி(ஸல்) அவர்கள் ஹிஜ்ர் (எனும் கஅபாவின் வளைந்த) பகுதியை அடுத்துள்ள (கஅபாவின்) இரண்டு மூலைகளையும் தொட்டு முத்தமிடாததற்குக் காரணம், இறையில்லம் (கஅபா) இப்ராஹீம்(அலை) அவர்கள் இட்ட அடித்தளத்தில் முழுமையாக அமைக்கப்படாமல் (சற்றுத் தள்ளி அமைக்கப்பட்டு) இருப்பதே ஆகும்.

## திருக்குர்ஆன் வசனம் 02:136

(நம்பிக்கையாளர்களே!)’அல்லாஹ்வையும் எங்களுக்கு அருளப்பெற்ற (இவ்வேதத்)தையும், மற்றும் இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஅகூப் இன்னும் (இவர்களின்) சந்ததியினர்(களான நபிமார்கள்) மீது அருளப் பெற்றதையும் மற்றும் மூஸாவுக்கும் ஈசாவுக்கும் அருளப்பட்டவற்றையும், (இதர) அனைத்து இறைத்தூதர்களுக்கும் தங்களின் இரட்சகனிடமிருந்து அருளப்பட்டவற்றையும் நாங்கள் நம்புகிறோம். அவர்களில்

எவருக்கிடையிலும் நாங்கள் பாகுபாடு காட்டமாட்டோம். நாங்கள் அல்லாஹ்வுக்கே அடிபணிபவர்களாக இருக்கிறோம்'' என்று கூறுங்கள். (எனும் 02:136வது இறைவசனம்.)

ஹதீஸ் 4485. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

வேதக்காரர்(களான யூதர்)கள், தவ்ராத்தை ஹீப்ரு மொழியில் ஓதி, அதை இஸ்லாமியர்களக்கு அரபு மொழியில் விளக்கம் கொடுத்து வந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'வேதக்காரர்களை (அவர்கள் சொல்வதெல்லாம் உண்மை என) நம்பவும் வேண்டாம் (பொய் என) மறுக்கவும் வேண்டாம். (மாறாக, முஸ்லிம்களே!) நீங்கள் சொல்லுங்கள்: நாங்கள் அல்லாஹ்வையும் எங்களுக்கு அருளப்பெற்றதையும் இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஅகூப் ஆகியோருக்கும், யஅகூபின் வழித்தோன்றல்களுக்கும் அருளப்பெற்றதையும் மற்றும் மூஸாவுக்கும் ஈசாவுக்கும் வழங்கப்பெற்றதையும் மேலும் இறைத்தூதர்கள் அனைவருக்கும் அவர்களின் இறைவனிடமிருந்து வழங்கப்பெற்றவை அனைத்தையும் நாங்கள் நம்புகிறோம். நாங்கள் அவர்களில் யாருக்கிடையேயும் எந்த வேற்றுமையும் பாராட்டுவதில்லை. இன்னும் நாங்கள் அவனுக்கே முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களாக இருக்கிறோம்'' (திருக்குர்ஆன் 02:136) என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:142

"அவர்கள் முன்னர் (முன்னோக்கிக் கொண்டு) இருந்த தம் கிப்லா - தொழும் திசையிலிருந்து அவர்களைத் திருப்பியது எது?' என மக்களில் அறிவீனர்கள் வினவுவார்கள். (நபியே!) நீர் கூறும்:'மிழக்கும் மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியன. தான் நாடுகிறவர்களை அவன் நேரான வழியில் செலுத்துவான் (எனும் 02:142வது இறைவசனம்).

ஹதீஸ் 4486. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஜெரூசலத்திலுள்ள) பைத்துல் மக்திஸை நோக்கிப்'பதினாறு மாதங்கள்' அல்லது'பதினேழு மாதங்கள்' தொழுதார்கள். (மக்காவிலுள்ள) இறையில்லம் கஅபாவே தாம் முன்னோக்கும் திசையாக இருக்கவேண்டும் என்பதே அவர்களின் விருப்பமாக இருந்தது. (எனவே, தொழுகையில் கஅபாவையே முன்னோக்கும் படி ஆணையிட்டு அல்லாஹ் 02:144வது வசனத்தை அருளினான். உடனே, அவர்கள் அஸ்ருத் தொழுகையை (கஅபாவை முன்னோக்கித்) தொழுதார்கள். அவர்களுடன் மக்கள் சிலரும் தொழுதனர். பிறகு அவர்களுடன் தொழுதிருந்தவர்களில் ஒருவர் புறப்பட்டு, (மற்றொரு) பள்ளிவாசலில் (தொழுதுகொண்டு) இருந்தவர்களைக் கடந்து சென்றார். அப்போது அங்கிருந்தவர்கள்'ருகூஉ' செய்து கொண்டிருந்தனர். அவர், 'அல்லாஹ்வை முன்வைத்து நான் சொல்கிறேன். நான், நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்து மக்கா(விலுள்ள கஅபா)வை நோக்கித் தொழுதேன்'' என்று சொல்ல, அவர்கள் அப்படியே (தொழுகையில் ருகூவிலிருந்தபடியே சுற்றி) கஅபாவை நோக்கித் திரும்பிக்கொண்டார்கள். (புதிய கிப்லாவான) கஅபாவை நோக்கி கிப்லா மாற்றப்படுவதற்கு முன்பாக (பழைய வைத்துல் மக்திஸ்) கிப்லாவைப் பின்பற்றித் தொழுத சிலர் (இறைவழியில்) கொல்லப்பட்டு இறந்துவிட்டிருந்தனர். அவர்களின் விஷயத்தில் நாங்கள் என்ன கூறுவது என்று எங்களுக்குத் தெரியவில்லை. அப்போது'அல்லாஹ் உங்கள் நம்பிக்கையை வீணாக்குகிறவன் அல்லன். (ஏனெனில்) நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களிடம் மிகுந்த இரக்கமுடையோனும் கருணையுடையோனுமாவான்'' எனும் (திருக்குர்ஆன் 02:143வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

## திருக்குர்ஆன் வசனம் 02:143

இவ்வாறே, உங்களை நாம் நடுநிலையான சமுதாயமாக ஆக்கினோம். நீங்கள் மக்களுக்குச் சான்று வழங்குபவர்களாகவும், இறைத்தூதர் உங்களுக்குச் சான்று வழங்குபவராகவும் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக! (எனும் 02:143வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4487. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் (நபி) நூஹ் (அலை) அவர்கள் அழைக்கப்படுவார்கள். அவர்கள், 'இதோ வந்துவிட்டேன் என் இறைவா! கட்டளையிடு காத்திருக்கிறேன்'' என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், '(நம்முடைய செய்தியை மக்களுக்கு) நீங்கள் எடுத்துரைத்துவிட்டீர்களா?' என்று இறைவன் கேட்பான். அவர்கள், 'ஆம் (எடுத்துரைத்து விட்டேன்)'' என்று சொல்வார்கள். அப்போது அவர்களின் சமுதாயத்தாரிடம், 'உங்களுக்கு இவர் (நம் செய்தியை) எடுத்துரைத்தாரா?' என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், 'எங்களிடம் எச்சரிப்பவர் எவரும் வரவில்லை'' என்று சொல்வார்கள். அப்போது அல்லாஹ், 'உங்களுக்கு சாட்சியம் சொல்கிறவர் யார்?' என்று (நூஹிடம்) கேட்க அவர்கள், 'முஹம்மதும் அவரின் சமுதாயத்தினரும்'' என்று பதிலளிப்பார்கள். அவ்வாறே அவர்களும், 'நூஹ் (அலை) அவர்கள் (தம் சமுதாயத்தாருக்கு இறைச்செய்தியை) எடுத்துரைத்துவிட்டார்கள்'' என்று சாட்சியம் அளிப்பார்கள். மேலும், இறைத்தூதர் உங்களுக்கு சாட்சியாக இருப்பார். இதையே 'இவ்வாறே, உங்களை நாம் நடுநிலையான சமுதாயமாக ஆக்கினோம். நீங்கள் மக்களுக்குச் சான்று வழங்குபவர்களாகவும், இறைத்தூதர் உங்களுக்குச் சான்று வழங்குபவராகவும் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக'' எனும் (திருக்குர்ஆன் 02:143) இறைவசனம் குறிக்கிறது.

'நடுநிலையான' (வசத்) என்பதற்கு 'நீதியான' என்று பொருள்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## திருக்குர்ஆன் வசனம் 02:143

இறைத்தூதரைப் பின்பற்றுகிறவர் யார் தம் குதிகால் புறமாகத் திரும்பிவிடுகிறவர் யார் என்பதைப் பிரித்தறிவதற்காகவே நீங்கள் முன்பிருந்த கிப்லாவை(த் தொழும் திசையாக) ஆக்கி (பின்பு மாற்றி)னோம். அல்லாஹ் நேர்வழியில் செலுத்தியவர்களுக்கேயன்றி (மற்றவர்களுக்கு) இது நிச்சயம் பளுவாகவே இருந்தது. மேலும், அல்லாஹ் உங்களின் நம்பிக்கையை வீணாக்குகிறவன் அல்லன். (ஏனெனில்) நிச்சயமாக அல்லாஹ் மனிதர்களிடம் மிகுந்த இரக்கமுடையயோனும் கருணையுடையோனுமாவான் (எனும் 02:143வது வசனத்தொடர்)

ஹதீஸ் 4488. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

மக்கள் 'சுப்ஹு'த் தொழுகையை 'மஸ்ஜிது குபா'வில் தொழுது கொண்டிருந்தபோது ஒருவர் வந்து, 'கஅபாவை (த் தொழுகையில்) முன்னோக்கும்படி கட்டளையிட்டு நபி(ஸல்) அவர்களுக்கு குர்ஆ(னின் ஒருவசனத்தி)னை அல்லாஹ் அருளியுள்ளான்'' என்று கூறினார். உடனே, (பைத்துல் மக்திஸின் திசையை நோக்கித் தொழுதுகொண்டிருந்த) அம்மக்கள், கஅபாவை நோக்கித் (தங்கள் முகங்களைத்) திருப்பிக்கொண்டனர்.

## திருக்குர்ஆன் வசனம் 02:144

(நபியே!) உங்கள் முகம் (அடிக்கடி) வானத்தின் பக்கம் திரும்புவதை நாம் காண்கிறோம். எனவே, நீங்கள் விரும்புகிற கிப்லா(வாகிய கஅபா)வின் பக்கம் நிச்சயமாக (இதோ) உங்களை நாம் திரும்பச் செய்கிறோம். எனவே, உங்கள் முகத்தை மஸ்ஜிதுல் ஹராம் (புனிதப் பள்ளிவாசலை) நோக்கித் திருப்புங்கள். மேலும், அவர்கள் செய்கிறவற்றைப்பற்றி அல்லாஹ் கவனமற்றவன் அல்லன் (எனும் 02:144வது இறைவசனம்).

ஹதீஸ் 4489. அனஸ்(ரலி) அறிவித்தார்

(பைத்துல் மக்திஸ், கஅபா ஆகிய) இரண்டு கிப்லாக்களையும் நோக்கித் தொழுதவர்களில் என்னைத் தவிர வேறெவரும் இப்போது உயிரோடில்லை.

## திருக்குர்ஆன் வசனம் 02:145

(நபியே!) வேதம் வழங்கப்பட்டவர்களிடம் நீங்கள் எத்தனைச் சான்றுகளைக் கொண்டு வந்தாலும் உங்கள் கிப்லாவை அவர்கள் பின்பற்றப்போவதில்லை. நீங்களும் அவர்களின் கிப்லாவைப் பின்பற்றுவரல்லர். இன்னும் அவர்களில் ஒரு பிரிவினர் மற்ற பிரிவினரின் கிப்லாவைப் பின்பற்றுவோராயும் இல்லை. எனவே, உங்களுக்கு (வஹீ மூலம்) மெய்யறிவு வந்த பின்னரும் அவர்களின் சுயவிருப்பங்களை நீங்கள் பின்பற்றினால் நிச்சயம் நீங்களும் அக்கிரமக்காரர்களில் (ஒருவராக) ஆகிவிடுவீர்கள் (எனும் 02:145 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4490. இப்னு உமர்(ரலி) கூறினார்

மக்கள் குபாவில்' சுப்ஹுத் தொழுகையில் இருந்தபோது அவர்களிடம் ஒருவர் வந்து, 'சென்ற இரவு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குக் குர்ஆன் (வசனம் ஒன்று) அருளப்பட்டுள்ளது. (தொழுகையில் இது வரை முன்னோக்கித் வந்த பைத்துல் மக்திஸைவிட்டு) இனிமேல் இறையில்லம் கஅபாவை முன்னோக்க வேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. எனவே, (மக்களே!) கஅபாவையே நீங்கள் முன்னோக்கித் தொழுங்கள்'' என்று கூறினார். அப்போது மக்களின் முகம் (பைத்துல் மக்திஸ் இருக்கும் திசையான) ஷாம் நாட்டை நோக்கியிருந்தது. (இந்த அறிவிப்பைக் கேட்ட) உடனே மக்கள் தங்கள் முகங்களை (அப்படியே) கஅபாவின் பக்கம் திருப்பிக்கொண்டார்கள்.

## திருக்குர்ஆன் வசனங்கள் 02:146, 147

எவருக்கு நாம் வேதம் அருளியிருக்கிறோமோ அவர்கள் தங்களின் பிள்ளைகளை (இனம் கண்டு) அறிந்து கொள்வதைப் போல் அதை அவரை (-கஅபாவை அல்லது நபி முஹம்மதை) நன்கு அறிவார்கள். எனினும், அவர்களில் ஒரு பிரிவினர் நன்கு அறிந்திருந்தும் உண்மையை மறைக்கிறார்கள். இந்த உண்மை, உங்களுடைய இறைவனிடமிருந்து வந்தது ஆகும். எனவே, (இது பற்றி) ஐயம் கொண்டோரில் நீங்களும் (ஒருவராக) ஆகிவிடவேண்டாம் (எனும் 02:146, 147 ஆகிய இறைவசனங்கள்).

ஹதீஸ் 4491. இப்னு உமர்(ரலி) கூறினார்

மக்கள் குபாவில் சுப்ஹுத் தொழுகை தொழுது கொண்டிருந்தபோது அவர்களிடம் ஒருவர் வந்து, 'சென்ற இரவு நபி(ஸல்) அவர்களுக்குக் குர்ஆன் (வசனம் ஒன்று) அருளப்பட்டது. (அதில்) அவர்கள் (தொழுகையில் இதுவரை நாம் முன்னோக்கி வந்த பைத்துல் மக்திஸைவிட்டுவிட்டு இனிமேல் மக்காவிலுள்ள இறையில்லம்) கஅபாவை தொழுகையில் முன்னோக்க வேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. எனவே, நீங்களும் கஅபாவையே முன்னோக்குங்கள்'' என்று கூறினார். அப்போது மக்களின் முகங்கள் (பைத்துல் மக்திஸ் இருக்கும் திசையான) ஷாம் நாட்டை நோக்கியபடி இருந்தன. (இந்த அறிவிப்பைக் கேட்ட) உடனே மக்கள் வட்டமிட்டு கஅபாவை நோக்கித் திரும்பினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:148

ஒவ்வொரு (மதத்த)வருக்கும் அவரவர் திரும்பக் கூடிய ஒரு திசையிருக்கிறது. நீங்கள் நன்மைகள் புரிய முந்துங்கள். நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் அனைவரையும் அல்லாஹ் ஒன்று திரட்டிக் கொண்டு வருவான். நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொன்றின் மீதும் பேராற்றல் கொண்டவனாய் இருக்கிறான் (எனும் 02:148 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4492. பராஉ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் பைத்துல் மக்திஸை நோக்கி'பதினாறு' அல்லது'பதினேழு' மாதங்கள் தொழுதோம். பிறகு அல்லாஹ் நபி(ஸல்) அவர்களை (தற்போதைய கஅபா எனும்) இந்தக் கிப்லாவை நோக்கித் திருப்பிவிட்டான்.

## திருக்குர்ஆன் வசனம் 02:149

மேலும், நீங்கள் எங்கிருந்து புறப்பட்டுச் சென்றாலும் (தொழும்வேளையில்) உங்கள் முகத்தை மஸ்ஜிதுல் ஹராமை நோக்கித் திருப்புங்கள். இது உங்களுடைய இறைவனிடமிருந்து வந்த உண்மை(யான கட்டளை)யாகும். அல்லாஹ் நீங்கள் செய்கின்றவை பற்றிக் கவனமற்றவன் அல்லன் (எனும் 02:149வது இறைவசனம்).

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள'பாதி' எனும் சொற்பொருள் கொண்ட)'ஷத்ர்' எனும் சொல்லுக்கு'நோக்கி' (திசையில்) என்று பொருள்.

ஹதீஸ் 4493. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

மக்கள்'குபா'வில்'சுப்ஹு'த் தொழுகையிலிருந்தபோது, ஒருவர் வந்து,'சென்ற இரவு (நபி(ஸல்) அவர்களுக்கு) குர்ஆன் (வசனம் ஒன்று) அருளப்பட்டுள்ளது. (அதில் இனி தொழுகையில்) கஅபாவை நோக்கித் தொழ வேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. எனவே, நீங்கள் கஅபாவை நோக்கித் தொழுங்கள்'' என்று கூறினார். உடனே மக்கள் தாம் இருந்த அதே நிலையிலேயே வட்டமிட்டு கஅபாவை நோக்கி முகத்தைத் திருப்பினார்கள். (அதற்கு முன்) மக்களின் முகம் (பைத்துல் மக்திஸின திசையில்) ஷாம் நாட்டை நோக்கியிருந்தது.

## திருக்குர்ஆன் வசனம் 02:150

மேலும், (நபியே!) நீங்கள் எங்கிருந்து புறப்பட்டுச் சென்றாலும் (தொழும் வேளையில்) உங்கள் முகத்தை மஸ்ஜிதுல் ஹராம் பக்கமாகவே திருப்புங்கள். நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் முகங்களை (தொழுகையின் போது) அதன் பக்கமேத்திருப்புங்கள் (எனும் 02:150வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4494. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

மக்கள் குபாவில்'சுப்ஹுத்' தொழுகையில் இருந்தபோது ஒருவர் வந்து,'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் சென்ற இரவு (குர்ஆன்வசனம்) அருளப்பெற்றது. (அதில்) கஅபாவை நோக்கித் தொழ வேண்டும் என்று அவர்களுக்கு உத்தரவிடப்பட்டுள்ளது. எனவே, அ(ந்த இறையில்லத்)தை நீங்களும் முன்னோக்கித் தொழுங்கள்'' என்று கூறினார். அப்போது அவர்களின் முகங்கள் (பைத்துல் மக்திஸ் திசையில்) ஷாம் நாட்டை நோக்கியபடி இருந்தன. (இந்த அறிவிப்பைக் கேட்ட) உடனே அவர்கள் வட்டமிட்டு (தற்போதைய) கிப்லா(வான கஅபா)வை நோக்கித் திரும்பினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:158

நிச்சயமாக ஸஃபா, மர்வா (ஆகிய குன்றுகள்) அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும். எனவே, இறையில்லத்தில்'ஹஜ்' அல்லது'உம்ரா' (எனும் வழிபாடுகளைச்) செய்கிறவரின் மீது அவ்விரண்டுக்குமிடையே சுற்றி வருவது குற்றமாகாது. மேலும், தாமாக முன்வந்து நல்லவற்றைச் செய்கிறவரை அல்லாஹ் மதிப்பவனும் மிக அறிபவனுமாவான்'' எனும் (திருக்குர்ஆன் 02:158வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஷஆயிர்' (அடையாளச் சின்னங்கள்) எனும் சொல்லுக்கு'அடையாளங்கள்' என்று பொருள். அதன் ஒருமை'ஷஈரா' என்பதாகும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

'ஸஃப்வான்' எனும் சொல்லுக்கு'கற்கள்' என்று பொருள்.

எதையும் முளைக்கவிடாத வழுக்குப் பாறைகளும்’ஸஃப்வான்’ எனப்படுவதுண்டு. இதன் ஒருமை’ஸஃப்வானா’ என்பதாகும். இதுவும்’ஸஃபா‘வும் பொருளில் ஒன்றே. (ஆனால்,)’ஸஃபா’ என்பது பன்மைக்குப் பயன்படுத்தப்படுகிறது.

ஹதீஸ் 4495. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களின் துணைவியாராகிய ஆயிஷா(ரலி) அவர்களிடம், `நிச்சயமாக ஸஃபா, மர்வா (எனும் குன்றுகள்) அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவை. எனவே, யார் (கஅபா எனும்) அவ்வீட்டில் ஹஜ் அல்லது உம்ராச் செய்கிறார்களோ அவர்கள் அவ்விரண்டுக்குமிடையே சுற்றி வருவது குற்றமில்லை‘ ’ என்ற (திருக்குர்ஆன் 02:158) வளமும் உயர்வுமிக்க இறைவனின் வசனப்படி, ஸஃபா, மர்வாவுக்கிடையே சுற்றி வராவிட்டாலும் குற்றமேதுமில்லை என்று கருதுகிறேன். நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?’ எனக் கேட்டேன். அப்போது நான் சிறுவயதுடையவனாயிருந்தேன். அதற்கு (அன்னை) ஆயிஷா(ரலி), `(என் சகோதரி அஸ்மாவின் மகனே!) நீ சொன்னது தவறு அந்த வசனத்தில்’அவ்விரண்டையும் சுற்றி வராமலிருப்பது குற்றமில்லை’ என்றிருந்தால் தான் நீ கூறும் கருத்து வரும். ஆனால், இவ்வசனம் அன்சாரிகளின் விஷயத்தில் அருளப்பெற்றதாகும். அவர்கள் (இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளும் முன் தாங்கள் வணங்கி வந்த’முஷல்லல்’ எனும் குன்றில் உள்ள)’மனாத்’ எனும் சிலைக்காக இஹ்ராம் கட்டும் வழக்கம் உள்ளவர்களாக இருந்தனர். அந்த மனாத் (மக்காவிலிருந்து மதீனா செல்லும் சாலையிலிருந்த)’குதைத்’ எனும் இடத்திற்கு நேர் எதிரில் இருந்தது. அவர்கள் (இஸ்லாத்தை ஏற்றபின்) அந்த ஸஃபா, மர்வா குன்றுகளுக்கு மத்தியில் சுற்றி வருவது பாவமாகும் எனக் கருதினார்கள். எனவே, இஸ்லாம் வந்தபோது அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இதைப் பற்றி (இறைத்தூதர் அவர்களே! நாங்கள் ஸஃபா, மர்வா இடையே சுற்றி வருவதைப் பாவமாகக் கருதுகிறோம். இது சரியா? என)க் கேட்டார்கள். அப்போதுதான் அல்லாஹ், `நிச்சயமாக ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவை‘ ’ என்ற (திருக்குர்ஆன் 02:158) இந்த வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 4496. ஆஸிம் இப்னு சுலைமான்(ரஹ்) கூறினார்

நான் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம், `ஸஃபா மர்வா(வுக்கிடையே ஹஜ், உம்ராவின்போது ஓடுவதை நீங்கள் வெறுத்துவந்தீர்களா என்பது) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், `நாங்கள் அதனை அறியாமைக் காலச் செய்கை என்று கருதிவந்தோம். எனவே, இஸ்லாம் வந்தபோது நாங்கள் அவற்றுக்கிடையே ஓடுவதை நிறுத்திவிட்டோம். அப்போது உயர்ந்தோனாகிய அல்லாஹ், `ஸஃபாவும் மர்வாவும் அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும். எனவே, இறையில்லத்தில் ஹஜ் அல்லது உம்ரா செய்ய விரும்புகிறவர் அவ்விரண்டுக்குமிடையே சுற்றிவருவதில் குற்றமில்லை’ எனும் (திருக்குர்ஆன் 02:158வது) இவ்வசனத்தை அருளினான்‘ ’ என்று பதிலளித்தார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:165

“அல்லாஹ் அல்லாதவற்றை அவனுக்கு இணைகளாக்கி அல்லாஹ்வை நேசிப்பதைப் போல் அவற்றை நேசிக்கிறவர்களும் மனிதர்களில் உள்ளனர்‘ ’ எனும் (திருக்குர்ஆன் 02:165வது) வசனத் தொடர்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)’அன்தாத்’ (இணைகள்) எனும் சொல்லுக்கு’நேர் எதிரானவை’ (அள்தாத்) என்று பொருள். இதன் ஒருமை’நித்து’ என்பதாகும்.

ஹதீஸ் 4497. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஒரு கருத்தை) ஒரு வாக்கியத்தில் சொல்ல, நான் (அதே கருத்தை) வேறொரு வாக்கியத்தில் சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ் அல்லாததை அவனுக்கு இணை என வாதித்தபடி இறந்து விடுகிறவர் நரகம் புகுவார்'' என்று கூறினார்கள். '(அப்படியானால்) அல்லாஹ் அல்லாததை அவனுக்கு இணை கற்பிக்காதவராக இறந்துவிடுகிறவர் சொர்க்கம் புகுவார்'' என்று நான் சொன்னேன்.

## திருக்குர்ஆன் வசனம் 02:178

இறைநம்பிக்கை கொண்டோரே! கொலை செய்யப்பட்டவர்களுக்காகப் பழிவாங்குவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது. சுதந்திர மனிதன் சுதந்திர மனிதனுக்கு பதிலாகவும், அடிமை அடிமைக்கு பதிலாகவும், பெண் பெண்ணுக்கு பதிலாகவுமே (பழிவாங்கப்படுவர். கொலை செய்த) எவனுக்கேனும் (பாதிக்கப்பட்ட) அவனுடைய சகோதரனால் ஏதேனும் மன்னிப்பு அளிக்கப்பட்டால், நியதியைப் பின்பற்றி நன்முறையில் அவனிடம் (உயிரீட்டுத் தொகையை) நிறைவேற்றிட வேண்டும். இது, உங்களுடைய இறைவனிடமிருந்து வழங்கப்பட்ட சலுகையும் கருணையுமாகும். இதன் பின்னரும் எவரேனும் வரம்பு மீறினால் அவருக்குத் துன்பமிகு வேதனை உண்டு (எனும் 02:178வது இறைவசனம்).

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'உஃபிய' (மன்னிக்கப்பட்டால்) எனும் சொல்லுக்கு'விட்டுக்கொடுக்கப்பட்டால்' என்று பொருள்.

ஹதீஸ் 4498. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இஸ்ரவேலர்களிடையே பழிக்குப்பழி வாங்கும் (ம்ஸாஸ்) சட்டம் (நடை முறையில்) இருந்தது. ஆனால், அவர்களிடையே உயிரீட்டுத் தொகை (பெற்றுக் கொண்டு கொலை செய்தவனை மன்னித்துவிடும் சட்டம் நடைமுறையில்) இருக்கவில்லை. எனவே, அல்லாஹ் (முஹம்மத்(ஸல்) அவர்களின்) இந்தச் சமுதாயத்திற்கு, 'கொலை செய்யப்பட்டவர்களுக்காகப் பழிவாங்குவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. சுதந்திர மனிதன் சுதந்திர மனிதனுக்கு பதிலாகவும், அடிமை அடிமைக்கு பதிலாகவும், பெண் பெண்ணுக்கு பதிலாகவும் (பழிவாங்கப்படுவர். கொலை செய்த) எவனுக்கேனும் (பாதிக்கப்பட்ட கொலையுண்டவனின் உறவினரான) அவனுடைய சகோதரனால் ஏதேனும் மன்னிப்பு அளிக்கப்பட்டால் நியதியைப் பின்பற்றி நன்முறையில் அவனிடம் (உயிரீட்டுத் தொகை) நிறைவேற்றிட வேண்டும்'' என்று கூறுகிறான்.

'மன்னிப்பளித்தல்' (அஃப்வ்) என்பது வேண்டுமென்றே செய்த கொலைக்கு உயிரீட்டுத் தொகையை ஏற்றுக்கொள்வதைக் குறிக்கும். நியதியைப் பேணி நல்லமுறையில் அதனைக் கொலையாளி செலுத்திட வேண்டும்.

## திருக்குர்ஆன் வசனம் 02:178

"இது உங்களுடைய இறைவனிடமிருந்து கிடைத்த சலுகையும் கருணையுமாகும்'' அதாவது உங்களுக்கு முன்பிருந்தவர்(களான பனு இஸ்ராயீல்)களின் மீது கடைமையாக்கப்பட்டிருந்ததை விட இது இலேசாகும். இதற்கும் அப்பால் எவன் வரம்பு மீறுகிறானோ அவனுக்கு - அதாவது எவன் உயிரீட்டுத் தொகையைப் பெற்றுக்கொண்ட பின்பும் (பழிக்குப் பழியாகக்) கொலை செய்கிறானோ அவனுக்கு - துன்புறுத்தும் வேதனை உண்டு. (திருக்குர்ஆன் 02:178)

இதை முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4499. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(கொலைக் குற்றத்தில்) அல்லாஹ்வின் சட்டம் பழி வாங்குவதாகும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4500. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

என் தந்தையின் சகோதரி (அத்தை)'ருபய்யிஉ' (பின்த் நள்ர்) அவர்கள் ஓர் இளம் பெண்ணின் முன்பல்லை உடைத்துவிட்டார்கள். எனவே, என் அத்தையின் குலத்தார்

அப்பெண்ணி(ன் குலத்தாரி)டம் மன்னித்து விடும்படி கோரினார். அவர்கள் (மன்னிக்க) மறுத்துவிட்டார்கள். எனவே, என் அத்தையில் குலத்தார் ஈட்டுத் தொகை செலுத்த முன் வந்தனர். அதற்கும் அவர்கள் மறுத்துவிடவே இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (இறைச் சட்டப்படி தீர்ப்பளிக்கும்படி கேட்டு) வந்தனர். அப்போதும் அவர்கள் பழிவாங்குவதைத் தவிர வேறெதற்கும் (ஒப்புக் கொள்ள) மறுத்துவிட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பழிவாங்கும்படி உத்தரவிட்டார்கள். அப்போது (என் தந்தையின் சகோதரர்) அனஸ் இப்னு நள்ர்(ரலி), `இறைத்தூதர் அவர்களே! (என் சகோதரி)' ருபய்யிஉ'வின் முன்பல் உடைக்கப்படுமா? வேண்டாம்! உங்களைச் சத்திய (மார்க்கத்)துடன் அனுப்பிவைத்தவன் மீதாணையாக அவரின் முன்பல் உடைக்கப்படக்கூடாது'' என்று கூறினார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,`அன்ஸே! அல்லாஹ்வின் சட்டம் பழிவாங்குவதாகும்'' என்று கூறினார்கள். அதற்குள் அந்த (இளம் பெண்ணின்) குலத்தார் (ஈட்டுத் தொகை பெற) ஒப்புக்கொண்டு (ருபய்யிஉவை) மன்னித்தார்கள். அப்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,`அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் உள்ளனர் அவர்கள், அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு (எதையேனும் கூறி)விட்டால் அவன் அதை நிறைவேற்றி (மெய்யாக்கிக் காட்டி) விடுகிறான்'' என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:183

இறைநம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன்னிருந்தவர்களின் மீது கடமையாக்கப்பட்டதைப் போல் உங்களின் மீதும் நோன்பு கடமையாக்கப்பட்டுள்ளது; நீங்கள் தூய்மை அடையும்பொருட்டு (எனும் 02:183வது இறைவசனம்).

ஹதீஸ் 4501. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

அறியாமைக்கால மக்கள் (குறைஷியர்) ஆஸூரா (முஹர்ரம் பத்தாம்) நாளில் நோன்பு நோற்றுவந்தனர். ரமளான் (நோன்பு) கடமையானபோது நபி(ஸல்) அவர்கள், `(ஆஸூரா நோன்பை நோற்க) விரும்புகிறவர் அதை நோற்கலாம் (விட்டுவிட) விரும்புகிறவர் அதைவிட்டுவிடலாம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4502. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ரமளானு(டைய நோன்பு)க்கு முன்பு 'ஆஷூரா' (முஹர்ரம் பத்தாம்) நாளில் நோன்பு நோற்கப்பட்டு வந்தது. ரமளான் (நோன்பு) கடமையானபோது விரும்பியவர் ஆஸூரா நாளில் நோன்பு நோற்றனர் (விட்டுவிட) விரும்பியவர் அதைவிட்டுவிட்டார்கள்.

ஹதீஸ் 4503. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

(ஒருநாள்) நான் உணவுண்டு கொண்டிருந்தபோது அஷ்அஸ் இப்னு கைஸ் அவர்கள் வந்து, `இன்று ஆஷூரா (முஹர்ரம் பத்தாம்) நாளாயிற்றே'' என்று (நான் நோன்பு நோற்காமல் உண்டு கொண்டிருப்பதைக் கண்டு வியந்து) கூறினார். நான், `ரமளான் (நோன்பு) கடமையாவதற்கு முன்பு அந்த நாளில் நோன்பு நோற்கப்பட்டு வந்தது. ரமளான் (நோன்பு) கடமையானபோது அந்த (ஆஷூரா) நோன்பு (கட்டாயம் நோற்கப்பட வேண்டும் எனும் சட்டம்) கைவிடப்பட்டது. எனவே, அருகில் வந்து நீங்களும் உண்ணுங்கள்'' என்று சொன்னேன்.

ஹதீஸ் 4504. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அறியாமைக் காலத்தில் குறைஷியர் நோன்பு நோற்கும் நாளாக ஆஸூரா (முஹர்ரம் பத்தாம்) நாள் இருந்து வந்தது. நபி(ஸல்) அவர்களும் அந்நாளில் நோன்பு நோற்று வந்தார்கள். (ஹிஜ்ரத் செய்து) மதீனா நகருக்கு அவர்கள் வந்தபோது அந்நாளில் தாமும் நோன்பு நோற்று, (மற்றவர்களும்) நோன்பு நோற்கும்படி பணித்தார்கள். பிறகு ரமளான் (நோன்பு) கடமையானபோது ரமளான் (மாத நோன்பு) கடமையான வணக்கமாம், ஆஸூரா நோன்பு

கைவிடப்பட்டு, அன்று விரும்பியவர் நோன்பு நோற்கலாம் விரும்பியவர் நோன்பு நோற்காமலுமிருக்கலாம் என்று (கூடுதல் வணக்கமாக) ஆகிவிட்டது.

## திருக்குர்ஆன் வசனம் 02:184

“(நோன்பு நோற்கவேண்டும் என்ற விதி ரமளான் எனும்) குறிப்பிட்ட சில நாள்களில் தான். ஆனால், (அந்நாள்களில்) உங்களில் எவரேனும் நோயாளியாகவோ பயணத்திலோ இருந்தால், அவர் (அந்நாள்களில் நோன்பு நோற்காமல்) மற்ற நாள்களில் கணக்கிட்டு (நோற்று)க் கொள்ளவேண்டும். நோன்பு நோற்கச் சிரமப்படுகிறவர்கள் அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிப்பது கடமையாகும். ஆனால், எவரேனும் விரும்பி (கடமைக்குமேல்) அதிக நன்மை செய்தால், அது அவருக்கு மிகச் சிறந்ததாகும். நீங்கள் (நோன்பின் பலனை) அறிந்தவர்களாக இருப்பின் நோன்பு நோற்பதே மிக்க மேலானதாகும்‘‘ எனும் (திருக்குர்ஆன் 02:184வது) இறைவசனம்.

“அல்லாஹ் (பொதுவாகக்) கூறியிருப்பதைப் போன்றே, எல்லா வித நோய்களின் காரணமாகவும் (ரமளான்) நோன்பை நோற்காமல்விட்டுவிடலாம்‘‘ என்று’அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்)’ அவர்கள் கூறுகிறார்கள்.

ஹஸன் அல்பஸரீ, இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) ஆகியோர் கூறுகின்றனர்.

(குழந்தைக்குப்) பாலூட்டுகிறவளும் கார்ப்பிணிப்பெண்ணும் (நோன்பு நோற்பதால்) தம் உயிருக்கோ, தம் குழந்தையின் உயிருக்கோ ஆபத்து நேரும் என அஞ்சினால் நோன்பைவிட்டுவிட்டு, (பிறிதொரு சமயம்) விடுபட்டதை நிறைவேற்றலாம்.

தள்ளாத முதியவராயிருந்து அவரால் நோன்பு நோற்க இயலவில்லையென்றால், (நோன்பைவிட்டதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு) உணவளிக்க வேண்டும். அனஸ்(ரலி) முதுமையடைந்துவிட்ட பின்னால், ‘ஓராண்டு’ அல்லது’ஈராண்டுகள்’ ஒவ்வொரு நாளும் ஓர் ஏழைக்கு ரொட்டி மற்றும் இறைச்சியை உண்ணக்கொடுத்து (பரிகாரம் தேடிக்கொண்டு) நோன்பைவிட்டுவிட்டார்கள்.

(இந்த 02:184வது வசனத்திலுள்ள’சிரமப்படுகிறவர்கள்‘எனும் சொல்லின் மூலச் சொல்லைப்) பெரும்பாலோர்’யுதீகூனஹு‘ என்றே ஓதுகிறார்கள். இதுவே, பெரும்பான்மை (குர்ஆன் அறிஞர்களின் நிலை)யாகும்.

ஹதீஸ் 4505. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி), ‘வ அலல்லதீன யுதவ்வகூனஹு ஃபித்யத்துன் தஆமு மிஸ்கீன்‘‘ (ரமளான் நோன்பு கடமையாக்கப்பட்டு(ம் அதை நோற்கச் சக்தியின்றி) இருப்பவர்கள் (ஒரு நாள் நோன்பைவிட்டதற்குப்) பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிக்க வேண்டும்) எனும் (திருக்குர்ஆன் 02:184வது) இறைவசனத்தை ஓதி, ‘இது சட்டம் மாற்றப்பட்ட வசனம் அன்று நோன்பு நோற்க இயலாத தள்ளாத முதியவரையும் தள்ளாத வயதுடைய பெண்ணையும் இது குறிக்கும். அவர்கள் ஒவ்வொரு நாளுக்கும் பகரமாக ஓர் ஏழைக்கு உணவளிக்கட்டும்‘‘ என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:185

உங்களில் (ரமளான் எனும்) அந்த மாதத்தை அடைகிறவர் அதில் நோன்பு நோற்கட்டும் (எனும் 02:185வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4506. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி), (திருக்குர்ஆன் 02:184வது வசனத்தில்’அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிப்பது கடமையாகும்‘‘ என்பதன் மூலத்தை)’ஃபித்யத்து தஆமி மஸாகீன’ என்று (‘ஏழைகள்’ எனப் பன்மையாக) ஓதிக்காட்டி’இது, சட்டம் மாற்றப்பட்டுவிட்ட வசனமாகும்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4507. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்
“நோன்பு நோற்கச் சக்தியுள்ளவர்கள் (நோன்பு நோற்கத் தவறினால்) அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிப்பது கடமையாகும்‘` எனும் (திருக்குர்ஆன் 02:184வது) இறைவசனம் அருளப்பட்டபோது, விரும்பியவர் நோன்பு நோற்காமல்விட்டுவிட்டு பரிகாரம் செய்துவந்தார். பின்னர் இதை மாற்றி இதற்குப் பின்னுள்ள வசனம் (‘உங்களில் அந்த மாதத்தை அடைகிறவர் அதில் நோன்பு நோற்கட்டும்!’ என்ற 02:185வது வசனம்) அருளப்பெற்றது.
அபூ அப்துல்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான புகைர் பின் அப்தில்லாஹ்(ரஹ்) (தமக்கு அறிவிப்புச் செய்த) யஸீத் இப்னு அபீ உபைத் அல்அஸ்லமீ(ரஹ்) அவர்களுக்கு முன்பே இறந்துவிட்டார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:187

நோன்புக் கால இரவில் நீங்கள் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுதிக்கப்பட்டுவிட்டது. அவர்கள் உங்களுக்கு ஆடையாக இருக்கிறார்கள் நீங்கள் அவர்களுக்கு ஆடையாக இருக்கிறீர்கள். (இதுவரை) உங்களுக்கு நீங்களே அநீதியிழைத்துக் கொண்டிருந்ததை அல்லாஹ் அறிந்து, நீங்கள் பாவமன்னிப்புக் கோரியதை ஏற்று, உங்களை மன்னித்தும்விட்டான். எனவே, இனி நீங்கள் அவர்களுடன் (இரவு நேரங்களில்) ஒன்று கூடுங்கள் அல்லாஹ் உங்களுக்கு(ச் சந்ததிகளாக) ஏற்படுத்தியதைத் தேடிக்கொள்ளுங்கள் (எனும் 02:187வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4508. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்
ரமளான் மாத நோன்பு கடமையானபோது, மக்கள் ரமளான் மாதம் முழுவதும் (தம்) மனைவியரை நெருங்காமலிருந்தார்கள். (மக்களில்) சிலர் தங்களுக்குத் தாங்கே அநீதியிழைத்துக் கொண்டிருந்தார்கள். எனவே, அல்லாஹ், `(இதுவரை) உங்களுக்கு நீங்களே அநீதியிழைத்துக் கொண்டிருந்ததை அல்லாஹ் அறிந்து, நீங்கள் பாவமன்னிப்புக் கோரியதை ஏற்று, உங்களை மன்னித்துவிட்டான்‘` என்று (திருக்குர்ஆன் 02:187வது) வசனத்தை அருளினான்.
இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாக வந்துள்ளது.

## திருக்குர்ஆன் வசனம் 02:187

“இன்னும் இருள் ரேகையிலிருந்து விடியலின் வெள்ளை ரேகை உங்களுக்குத் தென்படும் வரை நீங்கள் உண்ணுங்கள் பருகுங்கள் பின்னர் இரவு (தொடங்கும்) வரை நோன்பைப் பூர்த்தி செய்யுங்கள். நீங்கள் பள்ளிவாசல்களில் (இஃதிகாஃப்) தங்கியிருக்கும்போது (உங்கள் மனைவியரான) அவர்களுடன் கூடி விடாதீர்கள். இவை அல்லாஹ்வின் வரம்புகளாகும். இவற்றை (மீறுகிற எண்ணத்தில்) நெருங்கிவிடாதீர்கள். இவ்வாறே மானிடர்களுக்கு அவர்கள் (தீமையிலிருந்து தம்மைப்) பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு அல்லாஹ் தன் வசனங்களைத் தெளிவாக்குகிறான்‘` எனும் (திருக்குர்ஆன் 02:187வது) வசனத் தொடர்.
‘இஃதிகாஃப் இருப்பர்’ என்றால்’தங்கியிருப்பவர்’ என்று பொருள்.

ஹதீஸ் 4509. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அறிவித்தார்
(இந்த 02:187வது வசனம் அருளப்பட்டவுடன்) நான் வெள்ளைக் கயிறு ஒன்றையும் கறுப்புக் கயிறு ஒன்றையும் எடுத்துக் கொண்டு இரவின் ஒரு பகுதி கழிந்தவுடன் (அவற்றை) உற்றுப் பார்த்தேன். ஆனால், அவற்றைப் பிரித்தறிந்து கொள்ள முடியவில்லை. காலையானதும் (நபி(ஸல்) அவர்களிடம் சென்று,)’இறைத்தூதர் அவர்களே!”என் தலையணையின் கீழே (இந்த இரண்டு கயிறுகளையும்) வைத்திருந்தேன். (ஆயினும் இரண்டையும்) பிரித்தறிய முடியவில்லையே?!)‘` என்று சொன்னேன். அதற்கு அவர்கள், `வெள்ளைக் கயிறும் கறுப்புக்

கயிறும் உங்கள் தலையணைக்குக் கீழே இருந்திருந்தால், உங்கள் தலையணை நிச்சயம் (மிக) விசாலமானதாய் இருக்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4510. அதீ இப்னு ஹாத்திம் (ரலி) அறிவித்தார்

"இறைத்தூதர் அவர்களே! கறுப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிற்றைப் பிரித்தறிய முடியும் நேரம் வரும் வரை'' என்ற (திருக்குர்ஆன் 02:187வது) வசனத்திலுள்ள கயிறுகள் (அல்கைத்) என்பவை உண்மையிலேயே இரண்டு கயிறுகள் தாமா?' என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'இரண்டு கயிறுகளையும் நீங்கள் (எடுத்துப்) பார்த்திருந்தால் உண்மையிலேயே நீங்கள் பிடரி அகலமானர் (அறிவு குறைந்தவர்) தாம் என்று கூறிவிட்டுப் பிறகு, '(அதன் பொருள்) அது வன்று மாறாக, அது இரவின் கருமையும், பகலின் வெண்மையுமாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4511. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்

(ஆரம்பத்தில்) 'வெள்ளைக் கயிற்றைக் கறுப்புக் கயிற்றிலிருந்து பிரித்தறியும் வரை உண்ணுங்கள் பருகுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02: 187வது வசனத்தின்) தொடர் 'விடியலின்' ('மினல் ஃபஜ்ர்') எனும் சொல் நீங்கலாக அருளப்பட்டது. அப்போது மக்கள் சிலர் தங்கள் இரண்டு கால்களிலும் (ஒன்றில்) வெள்ளைக் கயிற்றையும் (மற்றொன்றில்) கறுப்புக் கயிற்றையும் கட்டிக்கொண்டு இரண்டும் பார்வைக்குத் தெளிவாகப் புலப்படும் வரை சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். எனவே, அதற்குப் பின்னர் அல்லாஹ், 'மினல் ஃபஜ்ர்' (விடியலின்) எனும் சொல்லையும் சேர்த்து அருளினான். அப்போது அவர்கள், அதிகாலையையும் இரவையும் தான் இது குறிக்கிறது என்று அறிந்துகொண்டார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:189

நீங்கள் (உங்கள்) வீடுகளில் அவற்றின் பின் வாசல் வழியே நுழைவது புண்ணியமன்று மாறாக, இறைவனுக்கு அஞ்சுபவர்தாம் புண்ணியவான் ஆவார். மேலும், நீங்கள் உங்கள் வீடுகளில் அவற்றின் முன் வாசல்கள் வழியே நுழையுங்கள். நீங்கள் வெற்றி பெறுவதற்காக அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள் (எனும் 2189வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4512. பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்

அறியாமைக் காலத்தில் அன்சாரிகள் (ஹஜ் மற்றும் உம்ராவுக்காக) இஹ்ராம் கட்டிவிட்டால் தம் வீட்டிற்குள் (அதன் முன்புற வாசல் வழியாக நுழையாமல்) அதன் பின்பக்க வாசல் வழியே நுழைந்து கொண்டிருந்தார்கள். அப்போது அல்லாஹ், 'நீங்கள் (உங்கள்) வீடுகளில் அவற்றின் பின் வாசல் வழியே நுழைவது புண்ணியமன்று மாறாக, இறைவனுக்கு அஞ்சுபவர்தாம் புண்ணியவான் ஆவார். மேலும், நீங்கள் உங்கள் வீடுகளில் அவற்றின் முன் வாசல்கள் வழியே நுழையுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02:189 வது) வசனத்தை அருளினான்.

## திருக்குர்ஆன் வசனம் 02:193

குழப்பம் நீங்கி மார்க்கம் (முழுவதும்) அல்லாஹ்வுக்கு உரித்தானதாகும் வரை அவர்களுடன் நீங்கள் போரிடுங்கள். அவர்கள் (குழப்பத்திலிருந்து) விலகிக் கொண்டால் அப்பால் அநீதி இழைப்போர் மீதேயன்றி போர்தொடுத்தல் என்பது இல்லை (எனும் 02:193 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4513. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) (மக்காவினுள் ஹஜ்ஜாஜ் இப்னு யூசுஃபால் முற்றுகையிடப்பட்ட யுத்தக்) குழப்ப (வருட)த்தில் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் இரண்டு மனிதர்கள் வந்து, 'மக்கள் (அரசியல் காரணங்களுக்காகத் தங்களிடையே பிளவுபட்டு) அலைக்கழிக்கப்படுகிறார்கள். தாங்கள் உமர் (ரலி) அவர்களின் புதல்வரும் நபி (ஸல்) அவர்களின் தோழரும் ஆவீர்கள். (நியாயத்திற்காகப் போராட) தாங்கள் புறப்படுவதற்கு எது தடையாக உள்ளது?' என்று கேட்டனர். அதற்கு இப்னு உமர் (ரலி), 'என் சகோதரனின்

இரத்தத்தைச் சிந்துவதற்கு அல்லாஹ் தடை விதித்திருப்பதே (புறப்படவிடாமல்) என்னைத் தடுக்கிறது‘' என்று கூறினார்கள். அதற்கு அவர்களிருவரும்’குழப்பம் நீங்கி மார்க்கம் (முழுவதும்) அல்லாஹ்வுக்கு உரித்தானதாகும் வரை அவர்களுடன் நீங்கள் போரிடுங்கள்’ என்று (திருக்குர்ஆன் 02:193 வது வசனத்தில்) அல்லாஹ் கூறவில்லையா?’ என்று கேட்டார்கள். அதற்கு இப்னு உமர் (ரலி), '(ஆம்! இறைத்தூதர் (ஸல்) காலத்தில்) குழப்பம் நீங்கும் வரை (பகைவர்களுடன்) நாங்கள் போராடினோம். மார்க்கம் (முழுவதும்) அல்லாஹ்வுக்க உரித்தானதாக ஆனது. ஆனால், (இப்போது) நீங்களோ (அரசியல் காரணங்களுக்காகப்) போராடி குழப்பம் உருவாகுவதையும், மார்க்கம் (முழுவதும்) அல்லாஹ் அல்லாதோருக்கு உரித்தானதாக ஆவதையுமே விரும்புகிறீர்கள்!”என்றார்கள்.

ஹதீஸ் 4514. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர் (ரலி) அவர்களிடம், (காரிஜிய்யா கூட்டத்தைச் சேர்ந்த) ஒருவர் வந்து, அபூ அப்திர் ரஹ்மானே! நீங்கள் ஓர் ஆண்டு’ஹஜ்’ செய்கிறீர்கள் மறு ஆண்டு உம்ராச் செய்கிறீர்கள். (ஆனால்,) இறைவழியில் அறப்போராட்டம் புரிவதை (மட்டும்) கைவிட்டுவிடுகிறீர்களே, ஏன்? அறப்போர் (புரிவது) குறித்து அல்லாஹ் ஆர்வமூட்டியிருப்பதைத் தாங்கள் அறிந்துதானே உள்ளீர்கள்!”என்று கேட்டார். (அதற்கு) இப்னு உமர் (ரலி), 'என் சகோதரர் மகனே! இஸ்லாம் ஐந்து அம்சங்களின் மீது நிறுவப்பட்டுள்ளது. 1. அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்புவது 2. (தினம்) ஐவேளைத் தொழுகைகள். 3. ரமளான் (மாத) நோன்பு. 4. (கடமையானோர்) ஸகாத்தை நிறைவேற்றுதல். 5. (இயன்றோர்) இறையில்லமான) கஅபாவில் ஹஜ் செய்தல்‘' என்றார்கள்.

அந்த மனிதர், 'அபூ அப்திர் ரஹ்மானே! அல்லாஹ் தன்னுடைய வேதத்தில்’இறை நம்பிக்கையாளர்களிலுள்ள இரண்டு வகுப்பார் தங்களுக்குள் சச்சரவு செய்தால், அவர்களுக்கிடையே சமாதானம் செய்துவையுங்கள். பின்னர் அவர்களில் ஒரு வகுப்பார், மற்றொரு வகுப்பாரின் மீது (வரம்பு மீறி) அக்கிரமம் செய்தால், அக்கிரமம் செய்தவர்கள் அல்லாஹ்வின் கட்டளையின்பால் வரும் வரையில், அவர்களுடன் நீங்கள் (எதிர்த்துப்) போரிடுங்கள்‘' என்றும் (திருக்குர்ஆன் 49:09), 'குழப்பம் நீங்கும் வரை அவர்களுடன் போரிடுங்கள்‘' என்றும் (திருக்குர்ஆன் 02:193) குறிப்பிட்டிருப்பதை நீங்கள் செவியுற மாட்டீர்களா?’ என்று கேட்டார். இப்னு உமர் (ரலி), '(நீர் குறிப்பிட்டுக் காட்டிய வசனங்களின் படி) நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் செயல்பட்டோம். அப்போது இஸ்லாம் குறைந்த (அங்கத்தினர்களைக் கொண்ட) தாகவே இருந்தது. அப்போது (மார்க்கத்தை ஏற்ற) ஒருவர் தம் மார்க்கத்தைக் கட்டிக்காக்கும் விஷயத்தில் (பல்வேறு) சோதனைக்கு உள்ளாக்கப்பட்டார். ஒன்று, அவரை (எதிரிகள்) கொன்றனர் அல்லது அவரைத் துன்புறுத்தினர். முடிவில், இஸ்லாம் அதிகம் (அங்கத்தினர் கொண்டதாக) ஆனபோது குழப்பம் ஏதும் இருக்கவில்லை‘' என்றார்கள்.

ஹதீஸ் 4515. அந்த மனிதர், 'அலீ (ரலி) அவர்களைக் குறித்தும், உஸ்மான் (ரலி) அவர்களைக் குறித்தும் உங்கள் கருத்து என்ன?’ என்று கேட்டார்.

இப்னு உமர் (ரலி), 'உஸ்மான் (ரலி) அவர்களை (அன்னார் உஹுதுப் போரின்போது வெருண்டோடியதற்காக) அல்லாஹ்வே மன்னித்துவிட்டான். ஆனால், அல்லாஹ் அவரை மன்னிப்பதை நீங்கள் தாம் விரும்பவில்லை. அலீ (ரலி) இறைத்தூதர் (ஸல்) அவர்களின் தந்தையின் சகோதரர் புதல்வரும், நபி (ஸல்) அவர்களின் மருமகனுமாவார்‘' என்று கூறியவாறே, '(நபியவர்களின் வீடுகளுக்கு மிக நெருக்கத்தில்) நீங்கள் காண்கிறீர்களே இதுதான் அலீ அவர்களின் வீடாகும்‘' என்று தம் கையால் சைகை செய்தபடி கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:195

“மேலும், நீங்கள் இறைவழியில் செலவு செய்யுங்கள். இன்னும் உங்கள் கரங்களால் அழிவைத் தேடிக்கொள்ளாதீர்கள். (நல்லெண்ணத்துடன்) சிறந்த முறையில் செயல்படுங்கள். நிச்சயமாக அல்லாஹ், சிறந்த முறையில் செயலாற்றக்கூடியவர்களை நேசிக்கிறான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 02:195 வது) இறைவசனம்.
(இறை வசனத்தின் மூலத்திலுள்ள)’தஹ்லுகா’ (அழிவு) எனும் சொல்லும்’ஹலாக்’ எனும் சொல்லும் ஒன்றேயாகும். (இரண்டும் அழிவு’ எனும் பொருள் கொண்ட வேர்ச் சொற்களேயாகும். )

ஹதீஸ் 4516. ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்
“இறைவழியில் செலவிடுங்கள். உங்கள் கரங்களால் அழிவைத் தேடிக்கொள்ளாதீர்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 02:195 வது) இறைவசனம் (இறைவழியில்) செலவிடுவதைக் (கைவிடுவது) குறித்து அருளப்பட்டது.

## திருக்குர்ஆன் வசனம் 02:196

ஆயினும், (இஹ்ராம் கட்டிய நிலையில்) உங்களில் யாரேனும் நோயாளியாக, அல்லது தம் தலையில் பிணி ஏதும் உள்ளவராக இருந்து பலியீடுவதற்கு முன்பே தலை முடியைக் களைய வேண்டிய கட்டாயம் நேரிட்டிரு)ந்தால், அதற்குப் பரிகாரம் நோன்பு நோற்றல், அல்லது தர்மம் வழங்குதல், அல்லது பலிகொடுத்தல் ஆகும் (எனும் 02:196 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4517. அப்துல்லாஹ் இப்னு மஅகில்(ரஹ்) கூறினார்
நான் இந்தப் பள்ளிவாசலில் - அதாவது, கூஃபா நகரின் பள்ளிவாசலில் - கஅப்பின் உஜ்ரா(ரலி) அருகே அமர்ந்தேன். அவர்களிடம் (ஹஜ்ஜில் ஏற்படும் குறைகளுக்குப்) பரிகாரமாக நோன்புகள் நோற்பது குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், 'பேன்கள் என் முகத்தின் மீது உதிர்ந்து கொட்டிக்கொண்டிருக்க, நான் நபி(ஸல்) அவர்களிடம் தூக்கிச் செல்லப்பட்டேன். அவர்கள், 'உங்களுக்கு இந்த அளவிற்குச் சிரமம் ஏற்பட்டிருக்கும் என்று நான் நினைத்திருக்கவில்லை‘‘ என்று கூறிவிட்டு, 'உங்களுக்கு ஓர் ஆடு கிடைக்குமா?’ என்று கேட்டார்கள். நான், 'இல்லை‘‘ என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள், 'மூன்று நாள்கள் நோன்பு வையுங்கள்! அல்லது தலா ஓர் ஏழைக்கு அரை’ஸாவு’ உணவு வீதம் ஆறு ஏழைகளுக்கு உணவளியுங்கள் உங்கள் தலையை மழித்துக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறினார்கள். எனவே, இந்த (திருக்குர்ஆன் 02:196 வது) வசனம், குறிப்பாக என் விஷயத்தில் அருளப்பட்டது. ஆனால், (அதன் சட்டம்) உங்களுக்கும் பொதுவானதாகும்‘‘ என்று கூறினார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:196

எவரேனும்’உம்ரா‘(வை நிறைவேற்றுவதன்) மூலம் ஹஜ்ஜுக்கு முன்பே (ஹஜ் காலத்தில் தடுக்கப் பெற்றிருந்த) சுகத்தை அனுபவித்துவிட்டால் அவர் பலிப்பிராணி கிடைக்கப் பெறாதவர் ஹஜ் காலத்தில் மூன்று நாள்களும் (வீடு) திரும்பிவிட்ட பின் ஏழு நாள்களும் நோன்பு நோற்கவேண்டும். இவை முழுமையான பத்து (நோன்புகள்) ஆகும் (எனும் 02:196 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4518. இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்
‘தமத்துஉ’ (ஹஜ் தொடர்பான இந்த 02:196 வது) வசனம் அல்லாஹ்வின் வேதத்தில் அருளப்பட்டது. எனவே, நாங்கள் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் செயல்படுத்தினோம். அதைத் தடை செய்யும் குர்ஆன் (வசனம்) எதுவும் அருளப்படவில்லை. நபி(ஸல்) அவர்களும் தாம் இறக்கும் வரை அதைத் தடை செய்யவில்லை. (ஆனால், இந்த விஷயத்தில்) ஒருவர் மட்டும் தாம் விரும்பிய (மாற்றுக் கருத்)தைக் தம் (சொந்த) அபிப்பிராயப்படி தெரிவித்தார்.

முஹம்மத் இப்னு இஸ்மாயீல் புகாரீயாகிய நான் கூறுகிறேன்:'அவர் உமர்(ரலி) தாம்‘` என்று சொல்லப்படுகிறது.

## திருக்குர்ஆன் வசனம் 02:198

(ஹஜ் பயணத்தில்) உங்களுடைய இறைவனின் அருளை (வியாபாரத்தின் மூலம்) நீங்கள் தேடிக் கொள்வது உங்களின் மீது குற்றமாகாது (எனும் 02:198 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4519. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

உகாழ், மஜன்னா, மற்றும் ஃதுல்மஜாஸ் ஆகியன அறியாமைக் காலத்துச் சந்தைகளாக இருந்தன. (இஸ்லாம் வந்த பிறகு) மக்கள் ஹஜ்ஜுப் பருவத்தில் (அங்கு) வியாபாரம் செய்வதைப் பாவச் செயலாகக் கருதினர். எனவே, ஹஜ் பருவத்தில், `உங்களுடைய இறைவனின் அருளை (வியாபாரத்தின் மூலம்) தேடிக் கொள்வது உங்களின் மீது குற்றமாகாது‘` எனும் (திருக்குர்ஆன் 02:198 வது) வசனத்தொடர் அருளப்பட்டது.

## திருக்குர்ஆன் வசனம் 02:199

பின்னர் மக்கள் (அனைவரும்) திரும்பி வருகிற (‘அரஃபாத்' எனும்) இடத்திலிருந்து நீங்களும் திரும்பிவாருங்கள் (எனும் 02:199 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4520. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(அறியாமைக் காலத்தில் ஹஜ்ஜின் போது) குறைஷியரும் அவர்களின் மதத்தவர்களும் முஸ்தலிஃபாவிலேயே தங்கிவிடுவார்கள். (ஹரம் - புனித எல்லையைவிட்டு வெளியேறமாட்டார்கள்.) அவர்கள் (இந்த விஷயத்தில்)'உறுதிமிக்கவர்கள்' எனப் பெயரிடப்பட்டு வந்தனர். மற்ற அரபுகள் அனைவருமே அரஃபாத்தில் தங்கிவந்தார்கள். இஸ்லாம் வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (ஃதுல்ஹஜ் 9 வது நாளில்) அரஃபாத் சென்று, அங்கே தங்கியிருந்துவிட்டு அங்கிருந்தே திரும்ப வேண்டும் என்று அல்லாஹ் கட்டளையிட்டான். அந்தக் கட்டளைதான்'மக்கள் அனைவரும் திரும்புகிற இடத்திலிருந்து நீங்களும் திரும்புங்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 02:199 வது) இறைவசனமாகும்.

ஹதீஸ் 4521. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(மக்காவிலேயே தங்கியிருப்பவர், அல்லது'தமத்துஉ' ஹஜ் செய்கிற எண்ணத்தில் உம்ராவை முடித்து அதற்கான இஹ்ராமிலிருந்து விடுபட்ட நிலையில் இருப்பவர் எத்தனை முறை வேண்டுமானாலும் கூடுதலாக) இறையில்லம் கஅபாவை அவர் வலம்வரலாம் (சுற்றி வரலாம்.) ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டி (ஹஜ் கிரியைகளை நிறைவேற்றி) அரஃபா பயணமாம்விட்டால் அவர் தம்மால் இயன்ற குர்பானியைக் கொடுக்கவேண்டும். அது ஒட்டகம், அல்லது மாடு, அல்லது ஆடு இவற்றில் அவர் விரும்பும் எதுவாகவும் இருக்கலாம். குர்பானிப் பிராணி கிடைக்கவில்லையென்றால் ஹஜ் நாள்களில் அரஃபா நாளுக்கு முன்பாக மூன்று நோன்புகள் நோற்க வேண்டும். (மூன்று நோன்புகளில்) கடைசி நோன்பு அரஃபா நாளில் வந்துவிட்டாலும் பரவாயில்லை. பிறகு மக்காவிலிருந்து புறப்பட்டு அரஃபாத்திற்கு அவர் செல்லட்டும். அங்கு அஸ்ருத் தொழுகையிலிருந்து இரவின் இருள்படரும் வரைத் தங்கியிருக்கட்டும். பிறகு அரஃபாத்திலிருந்து மற்ற மக்களெல்லாம் புறப்பட்டு திரும்பிச் செல்லும்போது அவரும் திரும்பிச் செல்லட்டும். பிறகு மக்கள் அனைவருடனும் சேர்ந்து இரவை முஸ்தலிஃபாவில் கழிக்கட்டும். பிறகு, அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூரட்டும்! (அவர் மட்டுமின்றி) நீங்கள் (அனைவரும்) விடியும் வரை அதிகமாக அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப்பெரியவன்) என்றும், லாஇலாஹ இல்லல்லாஹு (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்றும் கூறி இறைவனைப் பெருமைப்படுத்துங்கள். பிறகு அங்கிருந்து திரும்பிச் செல்லுங்கள். ஏனெனில், மக்களும் அங்கிருந்துதான் திரும்பிக் கொண்டிருந்தனர். உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறினான்:'மக்கள் அனைவரும் திரும்புகிற இடத்திலிருந்து நீங்களும் திரும்பி வந்து,

அல்லாஹ்விடம் மன்னிப்பைக் கோருங்கள். நிச்சயமாக, அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் கருணையுள்ளவனும் ஆவான். (திருக்குர்ஆன் 02:199)
(அதாவது,) நீங்கள் (ஷைத்தானுக்குக்) கல்லெறியும் வரை (திரும்பிச் செல்லுங்கள் என்று அல்லாஹ் கூறினான்.)

## திருக்குர்ஆன் வசனம் 02:201

(அல்லாஹ்வைப் பல வழிகளிலும் நினைவு கூரும் மக்கள் உள்ளனர்.) அவர்களில் சிலர், 'எங்கள் இறைவனே! எங்களுக்கு இந்த உலகிலும் நன்மையை அருள்வாயாக! மறு உலகிலும் நன்மையை அருள்வாயாக! மேலும், நரக நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ காத்தருள்வாயாக!"எனப் பிரார்த்திக்கின்றனர் (எனும் 02:201 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4522. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வே! எங்கள் இறைவனே! எங்களுக்கு இந்த உலகிலும் நன்மையை அருள்வாயாக! மறு உலகிலும் நன்மையை அருள்வாயாக! மேலும், நரக நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ காத்தருள்வாயாக?' எனப் பிரார்த்தித்து வந்தார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:204

அவன் (எதற்கெடுத்தாலும்) கடுமையாகச் சண்டைபிடிக்கும் வழக்கமுடையவன் (எனும் 02:204 வது வசனத் தொடர்).

"(திருக்குர்ஆன் 02:205 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'நஸ்ல்' எனும் சொல்லுக்கு 'உயிரினம்' என்று பொருள்'' என அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்.

ஹதீஸ் 4523. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

"அல்லாஹ்விடம் மனிதர்களிலேயே மிகவும் வெறுப்புக்குரியவன் (எதற்கெடுத்தாலும்) கடுமையாகச் சண்டைபிடிப்பவனேயாவான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## திருக்குர்ஆன் வசனம் 02:214

உங்களுக்கு முன் சென்றுவிட்ட (இறை நம்பிக்கை கொண்ட)வர்களின் (சோதனையான) நிலை உங்களுக்கு நேராமலேயே நீங்கள் சொர்க்கம் புகுந்துவிடலாம் என நினைத்தீர்களா? அவர்களைத் துன்பங்களும் துயரங்களும் ஆட்கொண்டன. இறைத்தூதரும் அவருடன் நம்பிக்கை கொண்டவர்களும்'அல்லாஹ்வின் உதவி எப்போது வரும்?' என்று கேட்கிற அளவிற்கு அவர்கள் அலைக்கழிக்கப்பட்டார்கள். 'இதோ! அல்லாஹ்வின் உதவி நிச்சயமாக அண்மையில் இருக்கிறது'' (என அவர்களுக்குச் சமாதானம் கூறப்படடது (எனும் 02:214 வது இறைவசனம்).

ஹதீஸ் 4524 இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி)'(நிராகரிக்கும் மக்கள் இனி நம்பிக்கை கொள்ளமாட்டார்கள் என்று) இறைத் தூதர்கள் நிராசையடைந்தார்கள் மேலும், தங்களிடம் (இறையுதவி வருமென்று) பொய்யுரைக்கப்பட்டது என (நம்பிக்கை கொண்ட மக்களும் கூட) கருதலானார்கள். இந்நிலையில் நம்முடைய உதவி அவர்களுக்கு வந்தது'' எனும் (திருக்குர்ஆன் 12:110 வது) வசனத்தில் ('குத்திபூ' இறைத்தூதர்கள் தாம் பொய்ப்பிக்கப்பட்டுவிட்டோம் என்று கருதலானார்கள் - என்று வாசிக்காமல்)'குதிபூ' (தங்களிடம் பொய்யுரைக்கப்பட்டது என மக்கள் கருதலானார்கள்") என்று வாசித்துவிட்டு அவ்வசனத்திலிருந்து, 'இறைத் தூதரும் அவருடன் நம்பிக்கைகொண்டவர்களும் அல்லாஹ்வின் உதவி எப்போது வரும்? என்று கேட்கிற அளவிற்கு அலைக்கழிக்கப்பட்டார்கள். 'இதோ! அல்லாஹ்வின் உதவி நிச்சயமாக அண்மையில்

இருக்கிறது' (என அவர்களுக்குச் சமாதானம் கூறப்பட்டது") எனும் (திருக்குர்ஆன் 02:214 வது) வசனத்திற்குச் சென்று ஓதிக்காட்டினார்கள்.
பிறகு நான் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்களைச் சந்தித்து, அவர்களிடம் (குஃதிபூ என இப்னு அப்பாஸ்(ரலி)) அந்த வசனத்தை ஓதியது பற்றிச் சொன்னேன்.
ஹதீஸ் 4525. அதற்கு அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: ஆயிஷா(ரலி), 'அல்லாஹ் காப்பாற்றட்டும்! அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ், தன் தூதர் எவருக்கும் ஏதேனும் ஒரு வாக்குறுதி அளித்தால் அது தம் இறப்புக்கு முன் நடந்தே தீரும் என அத்தூதர் அறியாமல் இருந்ததில்லை. ஆனால், இறைத் தூதர்களுக்குத் தொடர்ந்து சோதனைகள் வந்துகொண்டேயிருந்தன. எந்த அளவிற்கென்றால், தம்முடன் இருப்பவர்கள் தம்மைப் பொய்ப்பிக்க முற்படுவார்களோ என அந்த இறைத் தூதர்கள் அஞ்சும் அளவிற்கு அவை தொடர்ந்து வந்தன'' என்று கூறினார்கள்.
மேலும், ஆயிஷா(ரலி), 'வழன்னூ அன்னஹும் கத் குஃத்திபூ' என்று (குஃதிபூ என்று லேசாகச் சொல்லாமல்'குஃத்திபூ' என்று) அழுத்தம் கொடுத்து ஓதி வந்தார்கள்.

## திருக்குர்ஆன் வசனம் 02:223

"உங்கள் மனைவியர் உங்களுக்குரிய'விளைநிலம்' ஆவர். எனவே, நீங்கள் விரும்பும் வகையில் உங்கள் விளைநிலத்திற்குச் செல்லுங்கள். இன்னும் உங்களு(டைய எதிர்கால நலன்களு)க்காக ஆயத்தம் செய்து கொள்ளுங்கள். மேலும், நீங்கள் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அவனை நீங்கள் சந்திப்பவர்கள் தாம் என்பதை நன்கு அறிந்துகொள்ளுங்கள். (நபியே!) நம்பிக்கையாளர்களுக்கு நற்செய்தி கூறுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02:223 வது) இறைவசனம்.
ஹதீஸ் 4526. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்
இப்னு உமர்(ரலி) குர்ஆனை ஓதினால் அதை ஓதி முடிக்கும் வரை (வேறு எதுவும்) பேசமாட்டார்கள். ஒரு நாள் (அவர்கள் குர்ஆன் ஓதிக்கொண்டிருந்த போது) அவர்களை (ஓதவிடாமல்) நான் பிடித்துக்கொண் டன். அவர்கள்'அல்பகரா' அத்தியாயத்தை ஓதியபடி ஓரிடத்தில் நிறுத்தி'இந்த வசனம் எந்த விஷயத்தில் அருளப்பட்டது என்று உனக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். நான், 'தெரியாது'' என்றேன். அதற்கு அவர்கள், 'இன்ன இன்ன விஷயத்தில் அருளப்பட்டது'' என்று கூறிவிட்டு பிறகு தொடர்ந்து ஓதினார்கள்.
ஹதீஸ் 4527. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்
"எனவே நீங்கள் விரும்பிய முறையில் உங்கள் விளைநிலத்திற்குச் செல்லுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02:223 வது) வசனத்திற்கு விளக்கமளிக்கையில் இப்னு உமர்(ரலி), 'மனைவியிடம் அவளுடைய... கணவன் புணரலாம்'' என்று குறிப்பிட்டார்கள்.
ஹதீஸ் 4528. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
ஒருவர் தம் மனைவியிடம் பின்பக்கத்திலிருந்து உடலுறவு கொண்டால் குழந்தை மாறுகண் கொண்டதாகப் பிறக்கும் என்று யூதர்கள் சொல்லிவந்தார்கள். எனவே, 'உங்கள் பெண்கள் உங்களுக்குரிய'விளை நிலம்' ஆவர். எனவே, உங்கள் விளை நிலத்திற்கு நீங்கள் விரும்பியபடி செல்லுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02:223 வது) இறைவசனம் அருளப்பட்டது.

## திருக்குர்ஆன் வசனம் 02:232

நீங்கள் (உங்களுடைய) மனைவியரை விவாகரத்துச் செய்து, அவர்கள் தங்களின் ('இத்தா') தவணையின் இறுதியை அடைந்தால், தங்களின் (பழைய) கணவர்களை முறையோடும் மனம் ஒப்பியும் அவர்கள் மணந்துகொள்வதை (உறவினர்களே!) நீங்கள் தடுக்கவேண்டாம் (எனும் 02:232 வது வசனத் தொடர்.)
ஹதீஸ் 4529. மஅகில் இப்னு யஸார்(ரலி) அறிவித்தார்

எனக்கு சகோதரி ஒருவர் இருந்தார். என்னிடம் அவரைப் பெண் கேட்டு வந்தனர்.
ஹஸன் அல்பஸரீ (ரஹ்) கூறினார்
மஅகில் இப்னு யஸார் (ரலி) அவர்களின் சகோதரியை அவரின் கணவர் விவாகரத்துச் செய்து 'இத்தா' காலம் கழியும் வரையிலும் (திரும்ப அழைத்துக் கொள்ளாமல் அப்படியே) விட்டுவிட்டார். (எனவே, இது முழு விவாகரத்து (தலாக் பாயின்) ஆகும்.) பிறகு, மீண்டும் அவரைப் பெண் பேச (விவாகரத்துச் செய்த கணவர்) வந்தார். (சகோதரிக்கு விருப்பமிருந்தும்) மஅகில் (ரலி) (அவரை மீண்டும் மணமுடித்துக் கொடுக்க) மறுத்துவிட்டார்கள்.
அப்போதுதான், 'அவர்கள் தங்களின் (பழைய) கணவர்களை மணந்துகொள்வதை நீங்கள் தடுக்கவேண்டாம்'' எனும் (திருக்குர்ஆன் 02:232 வது) வசனம் அருளப்பட்டது.

## திருக்குர்ஆன் வசனம் 02:234

உங்களில் எவரேனும் மனைவியரைவிட்டு இறந்துபோயிருந்தால், அவர் (களின் மனைவி) கள் நான்கு மாதம் பத்து நாள்கள் தங்களின் விஷயத்தில் காத்திருப்பார்கள். அவர்கள் தங்களின் தவணையின் இறுதியை எட்டிவிட்டால் தங்களின் விஷயத்தில் அவர்கள் முறையோடு செய்து கொள்கிற (அலங்காரம் முதலான) வற்றில் (உறவிர்களே! நீங்கள் தலையிடாமல் இருப்பதால்) உங்களின் மீது எவ்விதக் குற்றமும் இல்லை. நீங்கள் செய்கிறவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன் ஆவான் (எனும் 02:234 வது இறைவசனம்).
(திருக்குர்ஆன் 02:237 வது வசனத்தின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) 'யஅ்ஃபூன' (விட்டுக் கொடுத்தால்) எனும் சொல்லுக்கு 'அன்பளிப்பாகக் கொடுத்தால்' என்று பொருள்.

ஹதீஸ் 4530. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரலி) அறிவித்தார்
நான், உஸ்மான் இப்னு அஃப்பான் (ரலி) அவர்களிடம், 'உங்களில் மனைவியரைவிட்டு இற (க்கும் தருவாயில் இரு) ப்பவர்கள், தம் மனைவியரை (வீட்டிலிருந்து) வெளியேற்றி விடாமல் ஓராண்டுவரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரணசாசனம் செய்யட்டும்! ஆயினும், அவர்களாகவே வெறியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிற (மறுமணம் போன்ற) வற்றைச் செய்துகொண்டால் (உறவினர்களாகிய) உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் மிகைத்தோனும் விவேகமிக்கவனும் ஆவான்'' எனும் (திருக்குர்ஆன் 02:240 வது வசனம் குறித்து இந்த) இறை வசனத் (தின் சட்டத்) தை (முந்தைய) மற்றோர் இறைவசனம் (திருக்குர்ஆன் 02:234) மாற்றிவிட்டதே! இதை 'ஏன் நீங்கள் (இன்னமும் குர்ஆன் வசனங்களில் சேர்த்து) எழுதுகிறீர்கள்?' அல்லது 'இதை ஏன் (நீக்காமல் குர்ஆனில் அப்படியே) விட்டுவைக்கிறீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'என் சகோதரர் மகனே! நான் குர்ஆனிலிருந்து எதையும் அதன் இடத்தைவிட்டு மாற்றமாட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4531. அப்துல்லாஹ் இப்னு அபீ நஜீஹ் அல்மக்கீ (ரஹ்) அறிவித்தார்
"உங்களில் எவரேனும் மனைவியரைவிட்டு இறந்துபோயிருந்தால், அவர் (களுடைய மனைவி) கள் நான்கு மாதம் பத்து நாள்கள் தங்களின் விஷயத்தில் காத்திருப்பார்கள்'' (எனும் 02:234 வது வசனத்தின் விளக்கத்தில்) முஜாஹித் (ரஹ்) கூறினார்கள்:
(கணவன் இறந்த) அந்தப் பெண் (நான்கு மாதம், பத்து நாள்கள் காத்திருத்தல் எனும்) இந்த 'இத்தா'வைத் தம் கணவனுடைய குடும்பத்தாரிடம் மேற்கொள்வது கட்டாயமாக இருந்தது. இந்நிலையில் 'உங்களில் மனைவியரைவிட்டு இற (க்கும் தறுவாயில் இரு) ப்பவர்கள் தங்கள் மனைவியரை (வீட்டிலிருந்து) வெளியேற்றிவிடாமல் ஓராண்டு வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம் மரண சாசனம் செய்வார்களாக, ஆயினும், அவர்களாகவே வெளியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிற (மறுமணம் போன்ற) வற்றைச் செய்தார்களாயின் (உறவினர்களாகிய) உங்களின் மீது எந்தக் குற்றமும் கிடையாது!"எனும் (திருக்குர்ஆன்

02:240 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். (இதன் மூலம்) ஒரு முழு ஆண்டில் (நான்கு மாதம், பத்து நாள்கள் போக மீதியுள்ள) ஏழு மாதம், இருபது நாள்களை(க் கணவனின்) மரண சாசன(த்தை நிறைவேற்றுவதற்கான சந்தர்ப்ப)மாக அல்லாஹ் ஆக்கினான். அவள் விரும்பினால் (அந்த ஏழு மாதம் இருபது நாள்களில்) தம் கணவனின் சாசனப்படி (கணவனின் வீட்டிலேயே) தங்கியிருப்பாள். அவள் விரும்பினால் (நான்கு மாதம் பத்து நாள்களுக்குப் பின்) வெளியேறிக் கொள்ளலாம். இதைத்தான்'வெளியேற்றிவிடலாம் ஓராண்டுக்காலம் வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரண சாசனம் செய்வார்களாக. ஆயினும், அவர்களாகவே வெளியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிற (மறுமணம் போன்றவற்றைச்) செய்தார்களாயின் (உறவினர்களாகிய) உங்களின் மீது எந்தக் குற்றமும் கிடையாது'' என்று இவ்வசனம் (திருக்குர்ஆன் 02:240) குறிப்பிடுகிறது. ஆக, (நான்கு மாதம் பத்து நாள்கள் எனும்)'இத்தா' கால வரம்பு கணவனை இழந்த கைம் பெண்ணின் மீது கட்டாயமானதே ஆகும்.

(எனவே, 02:234 வது வசனம் 02:240 வது வசனத்தை மாற்றிடவில்லை என்ற) இந்தக் கருத்தையே முஜாஹித்(ரஹ்) அவர்களிடமிருந்து இப்னு அபீ நஜீஹ்(ரஹ்) கூறினார்.

அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்

இந்த வசனம் (திருக்குர்ஆன் 02:240), அவள் தன்னுடைய கணவனது வீட்டில்தான்'இத்தா' இருக்க வேண்டும் என்பதை மாற்றிவிட்டது. எனவே, அவள் தான் விரும்பிய இடத்தில் இத்தா இருப்பாள். இதையே'(தானாக விரும்பி வெளியேறினால் தவிர, கட்டாயப்படுத்தி) வெளியேற்றிவிடாமல் ஓராண்டுக்காலம் வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரண சாசனம் செய்வார்களாக'' எனும் இந்த இறைவசனத் தொடர் குறிக்கிறது.

(இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் கருத்தைச் சற்றுத் தெளிவுப்படுத்தும் விதத்தில்) அதாஉ(ரஹ்) கூறினார் அவள் விரும்பினால் தன் கணவனின் வீட்டில்'இத்தா' இருப்பாள். தனக்கு வழங்கப்பட்ட சாசனப்படி தங்கியிருப்பாள். அவள் விரும்பினால் வெளியேறி (வேறு எங்கேனும் தங்கி)க் கொள்வாள். ஏனெனில், அல்லாஹ் கூறினான்: ஆயினும் அவர்களாகவே வெளியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிற (மறுமணம் போன்ற)வற்றைச் செய்தார்களாயின் (உறவினர்களாகிய) உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை.

தொடர்ந்து அதாஉ(ரஹ்) கூறினார்: பிறகு சொத்துரிமைச் சட்டம் (குறித்த 4:12 வது வசனம்) வந்து, தங்கும் வசதி (செய்து தர கணவன் சாசனம் செய்து தரவேண்டுமென்ற முறை)யை மாற்றிவிட்டது. எனவே, அவள் தன் விரும்பிய இடத்தில்'இத்தா' இருக்கலாம். அவளுக்குத் தங்கும் வசதி செய்து கொடுக்க வேண்டியது. (கணவனின் உறவினர்களுக்குக் கடமையாக) இல்லை.

இதையே முஜாஹித்(ரஹ்) கூறினார்கள் என்றும் ஓர் அறிவிப்பாளர் தொடர் வழியாக இப்னு அபீ நஜீஹ்(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது.

மேலும், இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்து அதாஉ(ரஹ்) வழியாக முஜாஹித்(ரஹ்) அறிவித்த மேற்சொன்ன கருத்தைப் போன்றே அதாஉ அவர்கள் வழியாக இப்னு அபீ நஜீஹ்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 4532. முஹம்மத் இப்னு சீரின்(ரஹ்) அறிவித்தார்

அன்சாரிகளில் முக்கியமானவர்கள் பலர் அமர்ந்திருந்த அவையொன்றில் நான் அமர்ந்தேன். அவர்களிடையே அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா(ரஹ்) அவர்களும் இருந்தார்கள். அப்போது நான், சுபைஆ பின்த் ஹாரிஸ்(ரலி) தொடர்பான அப்துல்லாஹ் இப்னு உத்பா(ரஹ்) அவர்களின் ஹதீஸை எடுத்துரைத்தேன். அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா(ரஹ்), 'அப்துல்லாஹ் இப்னு உத்பாவின் தந்தையுடைய சகோதரர் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் அவர்கள்) இதை ஏற்றுக் கொண்டதில்லையே'' என்று கூறினார்.

உடனே நான் உரத்த குரலில், `கூஃபா நகரத்திற்கு அரும்லுள்ள (அப்துல்லாஹ் இப்னு உத்பா என்ற) மனிதரின் தவற்றை நான் வெளிப்படுத்துகிறேன் என்றால் நான் மிகக் துணிச்சலுடையவன் தான்‘` என்று சொன்னேன். பிறகு நான் (அந்த அவையிலிருந்து வெறியேறிவிட்டேன். (செல்லும் வழியில்)'மாலிக் இப்னு ஆமிர்' அல்லது'மாலிக் இப்னு அவ்ஃப்‘(ரஹ்) அவர்களைச் சந்தித்தேன். (அவரிடம்) நான், `தான் கர்ப்பிணியாயிருக்க, தன்னைவிட்டு (கணவன்) இறந்துவிட்ட பெண் விஷயத்தில் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் கருத்து என்னவாக இருந்தது?' என்று கேட்டேன். அதற்கவர், `இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் கருத்து என்னவாக இருந்தது?' என்று கேட்டேன். அதற்கவர், `இப்னு மஸ்வூத்(ரலி), `(கணவன் இறந்துவிட்ட கர்ப்பிணியான) அவளுக்குச் சலுகை அளிக்காமல் கடும் சிரமத்தை (மட்டும்) அளிக்கிறீர்களா?' என்று கேட்டார்கள். (இந்நிலையில் தான்) பெண்கள் தொடர்பான (சட்டங்கள் இடம் பெற்றுள்ள'அல்பகரா' எனும்) பெரிய அத்தியாயத்திற்குப் பிறகு (‘அத்தலாக்' எனும்) சிறிய அத்தியாயம் இறங்கிற்று‘` என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் முஹம்மத் இப்னு சீரின்(ரஹ்), `(வழியில்) நான் அபூ அதிய்யா மாலிக் இப்னு ஆமிர் அவர்களைச் சந்தித்தேன்‘` என்று (சந்தேகமின்றி ஒருவர் பெயரை மட்டும்) கூறினார்கள் என வந்துள்ளது.

## 02:238 வது திருக்குர்ஆன் வசனம்

(நம்பிக்கையாளர்களே!) அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத் தொழுகையையும் பேணி(த் தொழுது) வாருங்கள் (எனும் 02:238 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4533. அலீ(ரலி) அறிவித்தார்

அகழ்ப் போரின்போது நபி(ஸல்) அவர்கள், `நம்மை நடுத் தொழுகையைத் தொழவிடாமல் சூரியன் மறையும் வரை எதிரிகள் தாமதப்படுத்திவிட்டார்கள். அல்லாஹ் அவர்களின் புதை குழிகளையும்'வீடுகளையும்' அல்லது அவர்களின்'வயிறுகளையும்' நெருப்பால் நிரப்புவானாக' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் யஹ்யா இப்னு ஸயீத் அல்கத்தான்(ரஹ்) அவர்களே சந்தேகத்துடன் (“அல்லது அவர்களின் வயிறுகளையும்‘` என்று) கூறினார்கள்

## 02:238 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், நீங்கள் உள்ளச்சம் உடையவர்களாக நின்று அல்லாஹ்வை வணங்குங்கள் (எனும் 02:238 வது வசனத் தொடர்).

(இதன் மூலத்திலுள்ள)'கானித்தீன்' எனும் சொல்லுக்குக்'கீழ்படிந்தவர்களாக' என்று பொருள்

ஹதீஸ் 4534. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்

(ஆரம்பக் காலத்தில்) நாங்கள் தொழுகையில் பேசிக்கொண்டிருந்தோம். எங்களில் ஒருவர் தம் தோழரிடம் (சொந்தத்) தேவை குறித்துப் பேசுவார். 'அனைத்துத் தொழுகைகளையும் (குறிப்பாக) நடுத் தொழுகையையும் பேணி(த் தொழுது) வாருங்கள். மேலும், நீங்கள் உள்ளச்சம் உடையவர்களாக நின்று அல்லாஹ்வை வணங்குங்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 02:238 வது) வசனம் அருளப்படும் வரை (நாங்கள் இவ்வாறே தொழுகையில் பேசிவந்தோம்). இந்த வசனம் அருளப்பட்டவுடன் பேசாமலிருக்கும் படி எங்களுக்குக் கட்டளையிடப்பட்டது.

## 02:239 வது திருக்குர்ஆன் வசனம்

நீங்கள் (சூழ்நிலை குறித்து) அச்சம் கொண்டால் நடந்தவர்களாகவோ, வாகனத்தில் இருந்தவர்களாகவோ (தொழுங்கள்). அச்சம் அகன்றுவிடின், அல்லாஹ் உங்களுக்கு நீங்கள்

அறியாதவற்றைக் கற்றுக்கொடுத்த பிரகாரம் அவனை(த் தொழுது) நினைவு கூருங்கள் (எனும் 02:239 வது இறைவசனம்.)

இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 02:255 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'குர்சிய்யுஹு' (அவனுடைய அரசாட்சி) எனும் சொல்லுக்கு அவனுடைய அறிவு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02: 247 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'பஸ்தத்தன்' (அதிகம்) எனும் சொல்லுக்கு'கூடுதல்' 'சிறப்பு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02:250 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'அஃப்ரிஃக்' (பொழிவாயாக!) எனும் சொல்லுக்கு'இறக்கியருள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02:255 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'வலா யஊதுஹு' (அவனுக்குச் சுமையாகாது) எனும் சொற்றொடருக்கு'(வானங்கள் பூமியைப் பாதுகாப்பது) அவனுக்குப் பளுவானதல்ல' என்று பொருள். (இதன் இறந்த கால வினைச் சொல் இடம் பெற்றுள்ள)'அதனீ' என்பதற்கு'எனக்குப் பளுவாகிவிட்டது' என்று பொருள். 'அது' என்பதற்கும்'அய்த்' என்பதற்கும்'பலம்' என்று பொருள்.

(அதே வசனத்தில் இடம் பெற்றுள்ள)'சினா' எனும் சொல்லுக்குச்'சிற்றுறக்கம்' என்று பொருள்.)

(திருக்குர்ஆன் 02:259 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'யதசன்னஹ்' (கெட்டுப் போனது) எனும் சொல்லுக்கு'(இயல்பு) மாறிவிட்டது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02:258 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஃப புஹித்த' (வாயடைத்துப் போனான்) என்பதற்கு'அவனுடைய ஆதாரம் போய்விட்டது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02: 259 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'காவியான' (விழுந்து கிடந்தது) எனும் சொல்லுக்கு, 'மக்கள் சஞ்சாரமற்ற' என்று பொருள். 'உருஷிஹா' (முகடுகள்) என்பதற்கு'அதன் கட்டடங்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02:259 வது வசனத்தின் மூலத்தில் ஓர் ஓதல் முறைப்படி இடம் பெற்றுள்ள)'நுனஷிருஹா' எனும் சொல்லுக்கு'அதை வெளிப்படுத்துகிறோம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 02: 266 வது வசனத்தின் மூலத்தில் இடம்பெற்றுள்ள)'இஃஸார்' (சூறாவளி) எனும் சொல்லுக்குத்'தூணைப் போன்று பூமியிலிருந்து வானத்தை நோக்கி வீசுகிற நெருப்புடன் கூடிய சூறாவளிக் காற்று' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 02:264 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸல்த்' (வெறும் பாறை) எனும் சொல்லுக்கு'மேலே எதுவும் இல்லாத (எதுவும் வளராத வழுக்குப்பாறை)' என்று பொருள்.

இக்ரிமா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 02:265 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வாபில்' என்பது பெருமழையும்'அத்தல்லு' என்பது தூறலும் ஆகும். இது இறை நம்பிக்கையாளரின் செயலுக்கு உவமையாகும்.

(திருக்குர்ஆன் 02:259 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'யதசன்னஹ்' (கெட்டுப் போனது) என்பதற்கு'(இயல்பு) மாறிவிட்டது' என்று பொருள்.

ஹதீஸ் 4535. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் அச்ச நேரத் தொழுகை குறித்து கேட்கப்பட்டால் (இப்படிக்) கூறுவார்கள்:

(முதலில்) இமாமும் மக்களில் ஒரு பிரிவினரும் (ஓர் இடத்திற்கு) முன்னேறிச் செல்வார்கள். மக்களுக்கு இமாம் ஒரு ரக்அத் தொழுகை நடத்துவார். மக்களில் மற்றொரு பிரிவினர் தொழாமல் மக்களுக்கும் எதிரிகளுக்கும் இடையே (பாதுகாப்பு அரணாக) இருப்பார்கள்.

இமாமுடன் இருப்பவர்கள் ஒரு ரக்அத் தொழுது முடித்துவிட்டால், சலாம் கொடுக்காமலேயே இது வரை தொழாதவர்களின் இடத்திற்குச் சென்றுவிடுவர். இப்போது இதுவரை தொழாதவர்கள், முன் சென்று இமாமுடன் ஒரு ரக்அத்தைத் தொழுதுகொள்வர்.
பிறகு, இமாம் இரண்டு ரக்அத்களைத் தொழுது முடித்த நிலையில் திரும்பிச் சென்றுவிட, அதன் பிறகு இரண்டு பிரிவினரில் ஒவ்வொருவரும் நின்று தனித்தனியாக ஒரு ரக்அத் தொழுவார்கள். இப்படியாக, இரண்டு பிரிவினரில் ஒவ்வொருவரும் இரண்டு ரக்அத்களைத் தொழுதுவிட்டிருப்பார்கள். இதைவிடக் கடுமையான அச்ச நிலை ஏற்பட்டால் அவர்கள் நடந்தவர்களாகவோ, தம் கால்களால் நின்ற நிலையிலோ வாகனத்தில் பயணம் செய்தவர்களாகவோ கிப்லாத் திசையை முன்னோக்கியபடி, அல்லது முன்னோக்காமல் தொழலாம்.
இதன் அறிவிப்பாளரான மாலிக்(ரஹ்) கூறினார்:
அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்டே இதை அறிவித்திருப்பதாக கருதுகிறேன் என்று நாஃபிஉ (ரஹ்) கூறினார்கள்.

## 02:240 வது திருக்குர்ஆன் வசனம்

உங்களில் மனைவியரைவிட்டு இற(க்கும் தருணத்தில் இரு)ப்பவர்கள், தங்கள் மனைவியரை (வீட்டிலிருந்து) வெளியேற்றி விடாமல் ஓராண்டு வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரணசாசனம் செய்வார்களாக! (எனும் 02:240) வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4536. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்
நான், உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களிடம்'உங்களில் மனைவியரைவிட்டு இற(க்கும் தருணத்தில் இரு)ப்பவர்கள், தங்கள் மனைவியரை (வீட்டிலிருந்து) வெளியேற்றிவிடாமல் ஓராண்டு வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரணசாசனம் செய்வார்களாக!"எனும் இந்த (திருக்குர்ஆன் 02:240 வது) இறைவசனத்(தின் சட்டத்)தை மற்றோர் (திருக்குர்ஆன் 02:234 வது) இறை வசனத் மாற்றிவிட்டதே! இதை ஏன் நீங்கள் (இன்னமும் குர்ஆன் வசனங்களில் சேர்த்து) எழுதுகிறீர்கள்?' என்று கேட்டேன்.
உஸ்மான்(ரலி), இதை (நீக்காமல் குர்ஆனில் அப்படியே)விட்டுவிடு! என் சகோதரர் மகனே! நான் குர்ஆனிலிருந்து எதையும் அதன் இடத்தைவிட்டு மாற்றமாட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.

## 02:260 வது திருக்குர்ஆன் வசனம்

இப்ராஹீம் (இறைவனை நோக்கி,)'இறைவா! மரித்தவர்களை நீ எப்படி உயிர்ப்பிக்கிறாய் என்று எனக்குக் காட்டு!' எனக் கூறியபோது, அவன், `நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையா?' என்று கேட்டான். (அதற்கு)'ஆம்! ஆயினும் என் உள்ளம் நிம்மதியடைவதற்காகவே கேட்கிறேன்'' என்று அவர் கூறினார். (அதற்கு இறைவன்)'நான்கு பறவைகளைப் பிடித்து, அவற்றை உங்களிடம் வைத்து(ப் பல துண்டுகளாக்கி) பின்னர் அவற்றில் ஒவ்வொரு பாகத்தை, ஒவ்வொரு மலையின் மீது வைத்துவிட்டு அவற்றை நீங்கள் அழையுங்கள்! அவை உங்களிடம் விரைந்து வந்து சேரும். நிச்சயமாக அல்லாஹ், வல்லோனும் நுண்ணறிவு உள்ளோனுமாக இருக்கிறான் என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்'' என்றான் (எனும் (திருக்குர்ஆன் 02:260 வது இறைவசனம்).
(இவ்வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஸுர்ஹுன்ன' ('அவற்றை உங்களிடம் வைத்து') எனும் சொல்லுக்கு'அவற்றைப் பல துண்டுகளாக்கி' என்று பொருள்.

ஹதீஸ் 4537. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறந்தவற்றுக்க அல்லாஹ் எப்படி உயிரூட்டிகிறான் என்ற சந்தேகம் இறைத்தூதர்களுக்கு வருவதாயிருந்தால் இறைத்தூதர்) இப்ராஹீம்(அலை) அவர்களை விடவும் நாமே சந்தேகம் கொள்ள அதிகத் தகுதியுடையவர்கள் ஆவோம். (எனவே, சந்தேகப்பட்டு அவர்கள் அப்படிக் கேட்கவில்லை.) ஏனெனில், 'என் இறைவா! மரித்தவர்களை நீ எப்படி உயிர்ப்பிக்கிறாய் என்று எனக்குக் காட்டு'' என்று அன்னார் கேட்டார்கள். இறைவன், 'நீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையா?' என்று கேட்டான். அதற்கு அவர்கள், 'ஆம்! ஆயினும் என் உள்ளம் நிம்மதியடைவதற்காகவே கேட்கிறேன்'' என்று பதிலளித்தார்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 02:266 வது திருக்குர்ஆன் வசனம்

“நீரருவிகள் எப்போதும் ஓடிக் கொண்டிருக்கிற திராட்சை மற்றும் பேரீச்சந்தோட்டம் ஒருவருக்கு இருந்து, அதில் எல்லா வகையான கனிகளும் அவருக்குக் கிடைக்கின்றன. அவரை முதுமை வந்தடைகிறது. வலுவில்லாத குழந்தைகளும் அவருக்கு உள்ளனர். (இந்நிலையில்) நெருப்புடன் கூடிய சூறாவளி தாக்கி அது கரிந்து போவதை உங்களில் எவரேனும் விரும்புவாரா? இவ்வாறு அல்லாஹ் தன் வசனங்களை, நீங்கள் சிந்திக்கும் பொருட்டு (உதாரணங்களின் மூலம்) உங்களுக்கு தெளிவுபடுத்துகிறான்'' எனும் (திருக்குர்ஆன் 02:266 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4538. (அப்துல் அஸீஸ் இப்னு அப்தில் மலிக் இப்னி ஜுரைஜ்(ரஹ்) அறிவித்தார்
அப்துல்லாஹ் இப்னு அபீ முலைக்கா(ரஹ்), இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்தும், அவர்களின் சகோதரர் அபூ பக்ர் இப்னு அபீ முலைக்கா அவர்கள், உபைத் இப்னு உமைர்(ரஹ்) அவர்களிடமிருந்தும் (கேட்டு) அறிவித்தார்கள்:
உமர்(ரலி) ஒரு நாள் நபித்தோழர்களிடம், 'நீரருவிகள் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கிற திராட்சை மற்றும் பேரீச்சைத் தோட்டம் ஒருவருக்கு இருந்து..!"(என்று தொடங்கும்) இந்த (திருக்குர்ஆன் 02:266 வது) வசனம் எது தொடர்பாக இறங்கிற்று என நீங்கள் கருதுகிறீர்கள்?' என்று கேட்க, அவர்கள், 'அல்லாஹ்வே அறிந்தவன்'' என்று பதிலளித்தார்கள். உடனே, உமர்(ரலி) கோபமடைந்து, 'எங்களுக்குத் தெரியும் அல்லது தெரியாது என்று (இரண்டிலொன்றைத் தெளிவாகச்) சொல்லுங்கள்'' என்று கேட்க, இப்னு அப்பாஸ்(ரலி), 'அதைப் பற்றி என் உள்ளத்தில் ஞானம் உள்ளது. இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே!"என்று கூறினார்கள். உமர்(ரலி), 'என் சகோதரர் மகனே! சொல்லுங்கள் உங்களை நீங்களே அற்பமாகக் கருதிக்கொள்ளாதீர்கள்'' என்று கூறினார்கள். இப்னு அப்பாஸ்(ரலி), 'இது, ஒரு செயலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது'' என்று கூறினார்கள். உமர்(ரலி), 'என்ன செயல்?' என்று கேட்க, இப்னு அப்பாஸ், 'ஒரு செயலுக்கு'' என்று (மீண்டும்) கூறினார்கள். உமர்(ரலி), 'செல்வந்தனாகிய ஒரு மனிதன் வல்லமையும் மகத்துவமுமிக்க அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து நற்செயல் புரிந்து வந்தான். பிறகு அல்லாஹ் அவனிடம் ஷைத்தானை அனுப்ப, (அவனுடைய தூண்டுதலால்) அந்த மனிதன் பாவங்கள் புரிய, அது அவனுடைய (முந்தைய நற்)செயல்களை மூழ்கடித்துவிட்டது (அதைத்தான் இங்கு இறைவன் இப்படி உவமித்துக் கூறுகிறான்)'' என்று கூறினார்கள்.

## 02:273 வது திருக்குர்ஆன் வசனம்

(பொருளீட்ட முடியாதவாறு) இறைவழியில் தடுத்துவைக்கப்பட்ட ஏழைகளுக்கே, (தர்மங்கள்) உரியவையாகும். அவர்கள் (பொருளீட்டுவதற்காக) பூமியில் நடமாட இயலாதவர்கள். அவர்கள் இரவாததால், அறியாதோர் அவர்களைச் செல்வந்தர்கள் என எண்ணுவர். அவர்களின் (எளிமைத்) தோற்றத்தைக் கொண்டு அவர்களை நீர் அறிந்துகொள்ளலாம். அவர்கள் மக்களிடம் (எதையும்) வற்புறுத்திக் கேட்கமாட்டார்கள் (எனும் 02:273 வது வசனத்தொடர்).

“(தர்மம்) கேட்டு என்னைத் தொந்தரவு செய்தான் என்னை நச்சரித்தான்‘‘ என்று சொல்வதற்கு ’அல்ஹஃப அலய்ய’ என்று (அரபுகள்) கூறுவர். இச்சொல்லின் வேர்ச் சொல்லே மேற்காணும் வசனத்தின் மூலத்தில் ’இல்ஹாஃப்’ (வற்புறுத்தல்) என இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 4539. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓரிரு கவளம் உணவுக்காக, அல்லது ஓரிரு பேரீச்சம் பழங்களுக்காக மக்களிடம் அலைபவன் ஏழையல்லன் ஏழை யாரெனில், அவன் (தன் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளப் பிறரிடம் கேட்க வெட்கப்பட்டு) தன்மானத்துடன் நடந்து கொள்வான். நீங்கள் விரும்பினால், ‘அவர்கள் மக்களிடம் (எதையும்) வற்புறுத்திக் கேட்கமாட்டார்கள்‘‘ எனும் (இந்த 02:273 வது) இறை வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 02:275 வது திருக்குர்ஆன் வசனம்

வட்டியை (வாங்கி) விழுங்குகிறவர்கள் ஷைத்தானின் தீண்டலால் பைத்தியம் பிடித்தவன் எழுவது போலன்றி (வேறு விதமாக மறுமையில்) எழமாட்டர். இது ஏனெனில், நிச்சயமாக அவர்கள் ’வணிகம் என்பதே வட்டியைப் போன்றதுதானே‘‘ எனக் கூறியதனாலேயாகி. அல்லாஹ் வணிகத்தை அனுமதித்தும் வட்டியை விலக்கியும் இருக்கிறான் (எனும் 02:275 வது வசனத் தொடர்).

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள) ’அல்மஸ்ஸு‘ (தீண்டல்) எனும் சொல்லுக்குப் ’பைத்தியம்’ என்று பொருள்.

ஹதீஸ் 4540. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அல்பகரா அத்தியாயத்தின் இறுதிவசனங்கள் (திருக்குர்ஆன் 02:275 - 281) வட்டி தொடர்பாக இறங்கியபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களுக்கு அவற்றை (பள்ளி வாசலில் வைத்து) ஓதிக் காட்டினார்கள். பிறகு, மது வியாபாரத்தைத் தடை செய்தார்கள்.

## 02:276 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் வட்டிக்கு அழிவையும் தான தர்மங்களுக்கு வளர்ச்சியையும் அளிக்கிறான் (எனும் 02:276 வது வசனத் தொடர்).

(அதாவது) வட்டியைப் பயனற்றுப் போகச் செய்துவிடுகிறான்.

ஹதீஸ் 4541. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

‘அல்பகரா’ அத்தியாயத்தின் இறுதி வசனங்கள் (திருக்குர்ஆன் 02: 275 - 281) அருளப்பெற்றபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் இல்லத்திலிருந்து) புறப்பட்டுச் சென்று அவற்றைப் பள்ளிவாசலில் (மக்களுக்கு) ஓதிக் காட்டினார்கள். மேலும், மதுவியாபாரத்திற்குத் தடைவிதித்தார்கள்.

## 02:279 வது திருக்குர்ஆன் வசனம்

“(வட்டியில் எஞ்சியுள்ளவற்றையும் நீங்கள்விட்டுவிடவில்லையாயின்) அல்லாஹ்விடமும், அவனுடைய தூதரிடமும் நீங்கள் போரிடுகிறீர்கள் என்பதை அறிந்து கொள்ளுங்கள் (எனும் 02:279 வது வசனத் தொடர்).

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள) ’ஃபஃதனூ’ எனும் சொல்லுக்கு ’அறிந்து கொள்ளுங்கள்’ என்று பொருள்.

ஹதீஸ் 4542. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

‘அல்பகரா’ அத்தியாயத்தின் இறுதி வசனங்கள் (திருக்குர்ஆன் 02:275 - 281) அருளப்பெற்றபோது அவற்றை நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் வைத்து (மக்களுக்கு) ஓதிக் காட்டினார்கள். மேலும், மது வியாபாரத்தைத் தடைசெய்தார்கள்.

## 02:280 வது திருக்குர்ஆன் வசனம்

(உங்களிடம் கடன் வாங்கியவர் நிதி நெருக்கடி உள்ளவராக இருந்தால், வசதி வருகிறவரை எதிர்பார்(த்து பொறுத்திரு)த்தல் வேண்டும். நீங்கள் (தர்மத்தின் பலனை) அறிந்தவர்களாக இருப்பின், தர்மமாக வழங்கிவிடுவதே மிகவும் மேலானதாகும் (எனும் 02:280 வது இறைவசனம்),

ஹதீஸ் 4543. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அல்பகரா அத்தியாயத்தின் இறுதி வசனங்கள் (திருக்குர்ஆன் 02:275 - 281) அருளப்பெற்றபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து நின்று அவற்றை எங்களுக்கு ஓதிக் காட்டினார்கள். பிறகு மதுபான வியாபாரத்தைத் தடைசெய்தார்கள்.

## 02:285 வது திருக்குர்ஆன் வசனம்

ஒருநாளைப் பற்றி அஞ்சுங்கள். அந்நாளில் அல்லாஹ்விடமே நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள். ஒவ்வொரு மனிதனும் அவனவன் செய்தவற்றுக்கு நிறைவாக(ப் பிரதிபலன்) அளிக்கப்படுவான். இன்னும் அவர்கள் (எந்த வகையிலும்) அநீதி இழைக்கப்பட மாட்டார்கள் (எனும் 02:281 வது இறைவசனம்).

ஹதீஸ் 4544. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்ற இறுதி வசனம் வட்டியைக் குறித்த (இந்த 02:281 வது) வசனம் ஆகும்.

## 02:284 வது திருக்குர்ஆன் வசனம்

உங்கள் மனத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும், அவற்றை மறைத்துக் கொண்டாலும் அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களை விசாரணை செய்வான். அவன் விரும்பியவர்களை மன்னிப்பான் அவன் விரும்பியவர்களை வேதனை செய்வான். இன்னும், அல்லாஹ் அனைத்துப் பொருள்களின் மீதும் ஆற்றல் மிக்கவன் ஆவான் (எனும் 02:284 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4545. மர்வான் அல் அஸ்ஃபர்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் - அவர் இப்னு உமர்(ரலி) தாம் -'உங்கள் மனத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும், அவற்றை மறைத்துக் கொண்டாலும், அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களை விசாரணை செய்வான். அவன் விரும்பியவர்களை மன்னிப்பான் அவன் விரும்பியவர்களை வேதனை செய்வான். இன்னும் அல்லாஹ் அனைத்துப் பொருள்களின் மீதும் ஆற்றல்மிக்கவன் ஆவான்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 02:284 வது) இறைவசன(த்தின் சட்ட)ம் மாற்றப்பட்டுவிட்டது என்று கூறினார்கள்.

## 02:285 வது திருக்குர்ஆன் வசனம்

(மனிதர்களே! நம்முடைய) தூதர், தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்ற (வேதத்)தை நம்புகின்றனர். நம்பிக்கையாளர்களும் (நம்புகின்றனர்.) (இவர்கள்) யாவரும், அல்லாஹ்வையும், அவனுடைய வானவர்களையும், அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் நம்பிக்கை கொள்கின்றனர். (மேலும் கூறுகின்றனர்:) அவனுடைய தூதர்கள் எவருக்கிடையிலும் (சிலரை ஏற்றுச் சிலரை மறுத்து) நாங்கள் வேற்றுமை காட்டமாட்டோம்.'எங்கள் இறைவா! நாங்கள் செவியுற்றோம் வழிப்பட்டோம். உன்னிடம் மன்னிப்புக் கோருகிறோம். இன்னும் உன்னிடமே (எங்களின்) மீட்சியும் உள்ளது'' என்றும் வேண்டுகிறார்கள் (எனும் 02:285 வது இறைவசனம்).

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 02:286 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'இஸ்ரன்' (பளு, சுமை) எனும் சொல்லுக்குப்'பொறுப்பு' என்று பொருள்.

ஹதீஸ் 4546. மர்வான் அல்அஸ்ஃபர்(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் - அவர் இப்னு உமர்(ரலி)தாம் என்று எண்ணுகிறேன் -'உங்கள் மனத்திலுள்ளவற்றை நீங்கள் வெளியிட்டாலும், அவற்றை மறைத்துக்கொண்டாலும், அவற்றைப் பற்றியும் அல்லாஹ் உங்களை விசாரணை செய்வான்!"எனும் இந்த (திருக்குர்ஆன் 02:284 வது) இறைவசனத்(தின் சட்டத்)தை இதற்குப் பின்னுள்ள ("அல்லாஹ், எந்த ஆன்மாவுக்கும் அதன் சக்திக்கு மீறிய பொறுப்புகளைச் சுமத்துவதில்லை'' எனும் 02:286 வது) இறைவசனம் மாற்றிவிட்டது'' என்று கூறினார்கள்.

## (3)'ஆலுஇம்ரான்' அத்தியாயம்

(திருக்குர்ஆன் 03:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துக்காத்தன்' எனும் (வேர்ச்) சொல்லும் (மற்றொரு வேர்ச்சொல்லான)'தகிய்யத்தன்' எனும் சொல்லும் ('தற்காத்துக் கொள்ளல்' எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

(திருக்குர்ஆன் 03:117 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸிர்ருன்' எனும் சொல்லுக்குக்'கடுங்குளிர்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 03: 103 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷஃபா ஹுஃப்ரத்' (நெருப்புக் கிடங்கின் விளிம்பு) எனும் சொற்றொடர்'ஷஃபா அர்ரக்கியத்' (ம்ணற்றின் விளிம்பு) போன்றதாகும். 'ஷஃபா' என்பதற்கு'விளிம்பு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 03:121 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துபவ்விஉ(ல் முஃமினீன மகாஇத லில்கிதால்)' (நம்பிக்கையாளர்களை உரிய இடங்களில் நிறுத்தும் பொருட்டு) என்பதற்கு'நீங்கள் களம் அமைக்கும் பொருட்டு' என்று பொருள். (திருக்குர்ஆன் 03:125 வது வசனத்தின் மூலத்திலுள்ள'அல்முஸவ்விம்' (அல்லது'அல்முஸவ்வம்) எனும் சொல்லுக்கு ஒரு தோற்றக் குறியால், அல்லது கம்பளியால், அல்லது அதிலுள்ள ஏதேனும் ஒன்றால் அடையாளம் உள்ளது என்று பொருள்.

(திருக்குர்ஆன் 03:146 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரிப்பிய்யூன்' (இறைபக்தர்கள்) எனும் சொல் பன்மையாகும். அதன் ஒருமை'ரிப்பிய்யுன்' என்பதாகும்.

(திருக்குர்ஆன் 03:152 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஃத் தஹுஸ்ஸுனஹும்' எனும் சொற்றொடருக்கு'நீங்கள் அவர்களை (பகைவர்களை) வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தபோது..!"என்று பொருள்.

(திருக்குர்ஆன் 03:156 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகுஸ்ஸு' (போர் புரிபவர்கள்) என்பதன் ஒருமை'ஃகாஸ்' என்பதாகும்.

(திருக்குர்ஆன் 03:181 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஸ நக்த்துபு' (நாம் பதிவு செய்வோம்) எனும் சொல்லுக்கு'நாம் பாதுகாப்போம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 03:198 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நுஸுல்' எனும் சொல்லுக்கு'நற்பலன்' என்று பொருள். அல்லாஹ்விடமிருந்து கிடைத்த'விருந்து உபசரிப்பு' என்றும் பொருள் கொள்ளலாம். இது'அனஸல்த்துஹு' (அவனை நான் உபசரித்தேன்) என்பதைப் போன்றதாகும்.

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 03:125 வது வசனத்தின் மூலத்திலுள்ள'முஸவ்விமீன்' எனும் சொல் போன்ற)'அல்கைலுல் முஸவ்வமா' என்பதற்கு'நிறையழகுக் குதிரைகள்' என்று பொருள்.

ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 03:39 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹஸூர் (பற்றற்றவர்) எனும் சொல்லுக்குப்'பெண்களிடம் செல்லாதவர்' என்று பொருள்.

இக்ரிமா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 03:125 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மின் ஃபவ்ரிஹிம்' (இதே நேரத்தில் - திடீர்த் தாக்குதல் தொடுக்க - உங்களிடம் அவர்கள் வந்தாலும்) எனும் சொல்லுக்கு, 'பத்ர் நாளில் அவர்கள் கோபத்துடன் உங்களிடம் வந்தாலும்' என்று பொருள்.
('உயிரற்றதிலிருந்து உயிருள்ளதை நீ வெளியாக்குகிறாய். உயிருள்ளதிலிருந்து உயிரற்றதையும் நீ வெளியாக்குகிறாய்' எனும் 3:27 வது வசனத்தின் விளக்கவுரையில்) முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்), 'இறைவன் (உயிரற்றதிலிருந்து) உயிருள்ளதை வெளிப்படுத்துகிறான். விந்து உயிரற்றதாக (உடலிலிருந்து வெளியேறுகிறது் ஆனால், அதிலிருந்து உயிரினம் வெளிப்படுகிறது'' என்று கூறினார்கள்.
(திருக்குர்ஆன் 03:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்இப்கார்' எனும் சொல்லுக்கு'அதிகாலை' என்று பொருள்.'அல் அஷிய்யு' என்பதற்குச் சூரியன் மறையப் போகும் நேரம்' என்று பொருள்.

## 03:37 வது திருக்குர்ஆன் வசனம்

இ(ந்தவேதத்)தில் தெளிவான கருத்துள்ள வசனங்களும் இருக்கின்றன (எனும் 37 வது வசனத் தொடர்).
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.
(தெளிவான கருத்துள்ள வசனங்கள் என்பது)'அனுமதிக்கப்பட்டவை, தடை செய்யப்பட்டவை பற்றிக் குறிப்பிடும் வசனங்கள் ஆகும்.
(திருக்குர்ஆன் 03:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ உகரு முதாஷாபிஹாத்'' (ஒன்றையொன்று ஒத்த வேறுவசனங்களும் உள்ளன) எனும் தொடருக்கு'ஒன்றினையொன்று உறுதிப்படுத்துகிற வசனங்கள்'' என்று பொருள்.
எடுத்துக்காட்டாக, 'இன்னும் துன்மார்க்கர்களைத் தவிர (எவரையும்) அவன் வழி தவறச் செய்வதில்லை'' என்று (ஒரு வசனத்தில் 02:26) அல்லாஹ் கூறினான். (மற்றொரு வசனத்தில் 10-100)'சிந்தித்துணராதவர்கள் மீதே அவன் பாவச் சுமையை வைக்கிறான்'' என்று அல்லாஹ் கூறினான். (இன்னுமொரு வசனத்தில் 47-17)'நேர்வழி பெற்றிருக்கிறவர்களுக்கு அல்லாஹ் நேர் வழியை இன்னும் அதிகமாக அளிக்கிறான்'' என்று அல்லாஹ் கூறினான். (இவ்வசனங்களில் ஒன்று மற்றொன்றின் கருத்தை வலியுறுத்துகின்றன.)3
(திருக்குர்ஆன் 03:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸைஃக்' (கோணல்) எனும் சொல்லுக்குச்'சந்தேகம்' என்று பொருள்.
(இதே வசனத்திலுள்ள)'இப்திஃகா அல்ஃபித்னத்' எனும் சொல்லுக்குக்'குழப்பம் செய்ய விரும்புதல்' என்று பொருள்.
(இதே வசனத்திலுள்ள)'அர்ராஸிகூன ஃபில் இல்மி' எனும் தொடரின் பொருளாவது: இறிவில் முதிர்ந்தவர்களும் அவற்றின் விளக்கத்தை அறிவார்கள்.'இவற்றை நாங்கள் நம்பினோம்' என்றும் கூறுவார்கள்.
ஹதீஸ் 4547. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , '(நபியே!) அ(ந்த இறை)வனே இந்த வேத நூலை உங்களுக்கு அருளினான். (இதில்) தெளிவான கருத்துள்ள (முஹ்கமாத்) வசனங்களும் உள்ளன. அவைதாம் இவ்வேதத்தின் அடிப்படையாகும். பல பொருள்களுக்கு இடமளிக்கக்கூடிய வேறு சில (முதஷாபிஹாத்) வசனங்களும் (இதில்) உள்ளன. யாருடைய இதயங்களில்'கோணல்' உள்ளதோ, அவர்கள் குழப்பம் செய்ய விரும்பியதாலும், (சுய) விளக்கம் அளிக்க நாடியதாலும் பல பொருள்களுக்கு இடமளிக்கக்கூடிய (வசனத்)தையே பின்தொடர்கின்றனர். ஆனால், அவற்றின் (உண்மை) விளக்கத்தை அல்லாஹ்வையன்றி எவரும் அறியார். அறிவில் முதிந்தவர்களோ'இவற்றை நாங்கள் நம்பினோம். (இவ்விரு வகையான வசனங்கள்) அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்தே வந்துள்ளன' என்று கூறுகின்றனர்.

(எதையும்) அறிவாளிகளன்றி எவரும் (சரியாக) உணர்வதில்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:7 வது) வசனத்தை ஓதிவிட்டு, 'முதஷாபிஹாத்தான வசனங்களைத் தேடித் திரிபவர்களை நீங்கள் பார்த்தால் அவர்கள் தாம் (இந்த வசனத்தில்) அல்லாஹ்வால் குறிப்பிடப்பட்டவர்கள் (என்பதைப் புரிந்து கொண்டு) அவர்களைக் குறித்து எச்சரிக்கையாயிருங்கள்'' என்று கூறினார்கள்.

## 03:36 வது திருக்குர்ஆன் வசனம்

இன்னும் நான் இந்தக் குழந்தையையும் இதன் வழித்தோன்றல்களையும் சபிக்கப்பட்ட ஷைத்தானிடமிருந்து காக்குமாறு உன்னிடம் வேண்டுகிறேன் (என இறைவனை வேண்டினார் இம்ரானின் துணைவியார் எனும் 3:36 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4548 ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அறிவித்தார்

"(புதிதாகப்) பிறக்கும் குழந்தை எது வாயினும் அது பிறக்கும்போதே ஷைத்தான் அதைத் தீண்டுகிறான். ஷைத்தான் தீண்டுவதால் அக்குழந்தை உடனே கூக்குரலெழுப்பும். (ஆனால்,) மர்யமையும் அவரின் புதல்வரையும் தவிர!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார். பிறகு அபூ ஹுரைரா(ரலி), 'நீங்கள் விரும்பினால், 'இந்தக் குழந்தையையும் இதன் வழித்தோன்றல்களையும் சபிக்கப்பட்ட ஷைத்தானிடமிருந்து காக்குமாறு உன்னிடம் நான் வேண்டுகிறேன் (என இம்ரானின் துணைவியார் இறைவனை வேண்டினார்)'' எனும் (திருக்குர்ஆன் 03:36 வது) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

## 03:77 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும், தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை. மேலும், இறுதி நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவுமாட்டான் அவர்களைப் பார்க்கவுமாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான். இன்னும் அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனை உண்டு (எனும் 3:77 வது இறைவசனம்).

(இவ்வசனத்தில்'ஃபஈல்' எனும் வாய்பாட்டில் அமைந்த'துன்பம் தரும்' என்ற பொருளைக் குறிக்கும்)'அலீம்' எனும் சொல்லுக்கு'முஃப்இல்' வாய்பாட்டில் அமைந்த'முலீம்' என்பதன் பொருளாகும். (அதாவது)'துன்புறுத்துகின்ற' (என்று பொருள்.)

ஹதீஸ் 4549-ஹதீஸ் 4550 அபூ வாயில்(ரஹ்) அறிவித்தார்

"ஒரு முஸ்லிமான மனிதரின் செல்வத்தை (அநியாயமாக) பறித்துக் கொள்வதற்காக ஒரு பிரமாண (வாக்கு மூல)த்தின்போது துணிவுடன் பொய் சத்தியம் செய்பவர், அல்லாஹ் அவரின் மீது கோபம் கொண்டிருக்கும் நிலையில் தான் அவனை (மறுமையில்) சந்திப்பார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது அ(ந்தக் கருத்)தை உறுதிப்படுத்தும் விதத்தில் அல்லாஹ், 'அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும், தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை. மேலும், இறுதி நாளில் அல்லாஹ், அவர்களிடம் பேசவுமாட்டான் அவர்களைப் பார்க்கவுமாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான். இன்னும் அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனை உண்டு' எனும் (திருக்குர்ஆன் 03:77 வது) வசனத்தை அருளினான்'' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார். அப்பால், அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) (எங்களிடம்) வந்து, 'அபூ அப்திர் ரஹ்மான் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்) அவர்கள் கூறினார்கள். அப்பால், அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) (எங்களிடம்) வந்து, 'அபூ அப்திர் ரஹ்மான் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்) உங்களிடம் என்ன சொல்கிறார்?' என்று கேட்க, நாங்கள்'இப்படி இப்படிக் கூறினார்கள்'' என்று பதிலளித்தோம்.

(அதற்கு) அஷ்அஸ் இப்னு கைம்(ரலி) கூறினார்: (அவர் சொன்னது உண்மைதான்.) என் தொடர்பாகத்தான் அந்த (திருக்குர்ஆன் 03:77 வது) வசனம் அருளப்பெற்றது. என் தந்தையின் சகோதரர் மகன் ஒருவரின் நிலத்தில் என்னுடைய கிணறு (ஒன்று) இருந்தது. (அந்தக் கிணறு தொடர்பாக எனக்கும் யூதர் ஒருவருக்குமிடையே ஏற்பட்ட தகராறில் நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் எங்கள் வழக்கைக் கொண்டுசென்றோம்.) நபி(ஸல்) அவர்கள், `உன்னுடைய (இரு) சாட்சி(கள்) அல்லது (பிரதிவாதியான) அவரின் சத்தியம் (இவ்வழக்கில் தீர்ப்பளிக்கத் தேவைப்படுகிறது.)'' என்று கூறினார்கள்.
உடனே நான், `அப்படியென்றால், (யூதரான) இவர் (தயங்காமல் பொய்) சத்தியம் செய்வாரே! இறைத்தூதர் அவர்களே!''என்றேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `ஒரு பிரமாண(வாக்குமூல)த்தின்போது அதன் மூலம் ஒரு முஸ்லிமான மனிதரின் சொத்தை (அநியாயமாகப்) பறித்துக்கொள்வதற்காகத் திட்டமிட்டுப் பொய் சத்தியம் செய்கிறவரின் மீது அல்லாஹ் கோபம் கொண்ட நிலையில்தான் (மறுமையில்) அவனை அவர் சந்திப்பார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4551. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்.:பா(ரலி) அறிவித்தார்
கடை வீதியில் விற்பனைப் பொருட்களை ஒருவர் பரப்பினார். அப்போது அவர், தான் அந்தப் பொருளை(க் கொள்முதல் செய்த போது) கொடுக்காத ஒன்றைக் கொடுத்து வாங்கியதாக (அல்லாஹ்வின் மீது) சத்தியம் செய்தார். (வாங்க வந்த) முஸ்லிம்களில் ஒருவரைக் கவர்(ந்து அவரிடம்) தம் பொருளை விற்பனை செய்)வதற்காக இப்படிச் செய்தார்! அப்போது'அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும், தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:77 வது) இறைவசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 4552. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்
இரண்டு பெண்கள்'ஒரு வீட்டில்' அல்லது'ஓர் அறையில்' (காலுறை) தைத்துக் கொண்டிருந்தார்கள். அவ்விருவரில் ஒருத்தி தம் கையில் (தைக்கும்) ஊசி குத்தப்பட்ட நிலையில் வெளியே வந்து மற்றொருத்தியின் மீது குற்றம் சாட்டினாள். இந்த வழக்கு இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (தீர்ப்புக்காகக்) கொண்டு செல்லப்பட்டது. அப்போது இப்னு அப்பாஸ்(ரலி), `இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `மக்களின் வாதத்தை (முறையீட்டை) மட்டும் வைத்து அவர்களுக்கு (சாதகமாகத் தீர்ப்பு) அளிக்கப்பட்டால் பலருடைய உயிர்களும் செல்வங்களும் (வீணாக பலிகொள்ளப்பட்டுப்) போய்விடும்' என்று கூறினார்கள்' எனக் கூறிவிட்டு, (பிரதிவாதியான) அந்த மற்றொருத்திக்கு அல்லாஹ்வைப் பற்றி நினைவூட்டி, அவளுக்கு'அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும், தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்பவிலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:77 வது) இறைவசனத்தை ஓதிக்காட்டுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவளுக்கு மக்கள் அல்லாஹ்வைப் பற்றி நினைவூட்டினார்கள். அவளும் தன் (தோழியின் கையில் ஊசியால் குத்திய) குற்றத்தை ஒப்புக் கொண்டாள். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி), `நபி(ஸல்) அவர்கள், `பிரதிவாதி (தன் குற்றத்தை மறுத்தால்) சத்தியம் செய்யவேண்டும்' என்று கூறினார்கள்'' எனக் கூறினார்கள்.

## 03:64 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) கூறுக: வேதக்காரர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் மத்தியிலுள்ள பொதுவான விஷயத்திற்கு வாருங்கள். (அது யாதெனில்:)'அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் நாம் வணங்கலாகாது அவனுக்கு எதனையும் நாம் இணை வைக்கலாகாது அல்லாஹ்வையன்றி நம்மில் யாரும் யாரையும் இரட்சகர்களாக்கிக் கொள்ளலாகாது.' இதன் பிறகும் அவர்கள் ஏற்க

மறுத்தால்'நிச்சயமாக நாங்கள் (அல்லாஹ்வுக்கு அடிபணிகிறவர்கள்) முஸ்லிம்கள் தாம் என்பதற்கு நீங்கள் சாட்சிகளாக இருங்கள்' என்று கூறிவிடுங்கள் (எனும் 3:64 வது இறைவசனம்).
(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'சவாஇன்' (பொதுவான) எனும் சொல்லுக்கு'நடுநிலையான' என்று பொருள்.
ஹதீஸ் 4553. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
அபூ சுஃப்யான்(ரலி) தம் வாய்ப்பட எனக்கு அறிவித்தாவது:
(குறைஷியரின் முக்கிய தலைவராயிருந்த) எனக்கும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குமிடையிலான (ஹுதைபியா சமாதான ஒப்பந்தம் நடைமுறையில் இருந்த) காலகட்டத்தில் நான் (வியாபாரத்திற்காக வாணிபக் குழுவினருடன் ஷாம் நாட்டிற்குச்) சென்றிருந்தேன். நான் ஷாம் நாட்டில் இருந்துகொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்களிடமிருந்து (ரோம பைஸாந்தியப் பேரரசர் சீசர்) ஹெராக்ளியஸிற்கு நிருபமொன்று கொண்டுவரப்பட்டது. அதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து'திஹ்யா அல் கல்பீ' அவர்கள் கொண்டு வந்து, 'புஸ்ரா'வின் அரசரிடம் கொடுக்க, அவர் அதை ஹெராக்ளியஸிடம் கொடுத்தனுப்பியிருந்தார்.
அப்போது ஹெராக்ளியஸ் (தம்மைச்சூழ அமர்ந்திருந்த பிரதிநிதிகளிடம்)'தம்மை இறைவனின் தூதரெனக் கூறிக்கொண்டிருக்கும் இந்த மனிதரின் (முஹம்மதின்) சமுதாயத்தைச் சேர்ந்த எவரேனும் இங்கு (நம் நாட்டில்) இருக்கிறார்களா?' என்று கேட்டதற்குவர்கள், 'ஆம்'' என்று பதிலளித்தார்கள். அப்போது (ஷாமில் வியாபாரத்திற்காகத் தங்கயிருந்த) நான் குறைஷியர் சிலருடன் அழைக்கப்பட்டேன். எனவே, நாங்கள் ஹெராக்ளியஸிடம் சென்றோம். அவர் முன்னிலையில் (அரசவையில்) எங்களை அமரச் செய்தார்கள். அப்போது ஹெராக்ளியஸ், 'தம்மை இறைத்தூதர் என்று சொல்லிக் கொண்டிருக்கும் அந்த மனிதருக்கு உங்களில் நெருங்கிய உறவினர் யார்?' என்று கேட்டதற்கு நான், 'நான் (தான் நெருங்கிய உறவினன்)'' என்று சொன்னேன். எனவே, அவரின் முன்னிலையில் என்னை அமர்த்தினர். என் சகாக்களை எனக்குப் பின்னால் அமர்த்தினர். பிறகு ஹெராக்ளியஸ் தம் மொழிபெயர்ப்பாளரை அழைத்து (அவரிடம்), 'தம்மை இறைத்தூதர் என்று சொல்லிக்கொண்டிருக்கும் இந்த மனிதரைப் பற்றி இவரிடம் கேட்கப் போகிறேன் இவர் என்னிடம் பொய் சொன்னால் (நமக்குத்) தெரிவிக்கும்படி இவருடைய சகாக்களிடம் சொல்'' என்றார். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் பொய் சொன்னால் அதை என் சகாக்கள் தெரிவித்துவிடுவார்கள் என்பது (குறித்த அச்சம்) மட்டும் இல்லாதிருந்தால் (முஹம்மத்(ஸல்) அவர்களைப் பற்றி) நான் பொய்(யான விவரங்களைச்) சொல்லியிருப்பேன். பிறகு, ஹெராக்ளியஸ் தம் மொழிபெயர்ப்பாளரிடம், 'உங்களிடையே அந்த மனிதரின் குடும்பப் பாரம்பரியம் எப்படிப்பட்டது? என்று இவரிடம் கேள்'' என்று கூறினார். நான், 'அவர் எங்களிடையே சிறந்த குடும்பப் பாரம்பரியத்தை உடையவராவார்'' என்று பதிலளித்தேன்.
ஹெராக்ளியஸ்'அவரின் முன்னோர்களில் அரசர் எவராவது இருந்திருக்கிறாரா?' என்று கேட்டார். நான்'இல்லை'' என்று சொன்னேன். ஹெராக்ளியஸ்'அவர் தம்மை'நபி' என வாதிப்பதற்கு முன் அவர் (மக்களிடம்) பொய் கூறினார் என்று (எப்போதாவது) நீங்கள் சந்தேகித்திருக்கிறீர்களா?' என்று கேட்டார். நான், 'இல்லை'' என்று சொன்னேன்.'அவரை மக்களில் மேட்டுக்குடியினர் பின்பற்றுகின்றனரா? அல்லது அவர்களில் பலவீனர்கள் (ஒடுக்கப்பட்டவர்கள்) பின்பற்றுகின்றனரா?' என்று கேட்டார். நான், 'இல்லை பலவீனமானவர்கள் தாம் அவரைப் பின்பற்றுகின்றனர்'' என்றேன். அவர், 'அவரைப் பின்பற்றுவோர் அதிகரித்துக்கொண்டே செல்கின்றனரா? அல்லது குறைந்துகொண்டே போகின்றனரா?' என்று கேட்டார்.

நான்'இல்லை அவர்கள் அதிகரித்துக் கொண்டே செல்கின்றனர்'' என்று சொன்னேன். அவர், 'அவரின் மார்க்கத்தில் இணைந்த பிறகு தம் புதிய மார்க்கத்தின் மீது அதிருப்தியடைந்து எவரேனும் தம் பழைய மதத்திற்கே திரும்பிச் செல்வதுண்டா?' என்று கேட்டார். நான், 'இல்லை'' என்று சொன்னேன்.

அவர், 'அவருடன் நீங்கள் போர் புரிந்ததுண்டா?' என்று கேட்டார். நான், 'உண்டு'' என்று சொன்னேன். அவர், 'அவ்வாறாயின், அவருடன் நீங்கள் நடத்திய போர்க(ளின் முடிவு)கள் எவ்வாறு இருந்தன?' என்று கேட்டார். நான், எங்களிடையேயான போர்கள் (ம்ணற்று) வாளிகள்தாம். (அவை சுழல் முறையில் மாறி மாறி வருகின்றன. ஒரு முறை) அவர் எங்களை வெற்றிகொள்வார். (மறுமுறை) நாங்கள் அவரை வெற்றி கொள்வோம்'' என்று சொன்னேன்.

அவர், 'அந்த மனிதர் வாக்கு மீறுகிறாரா?' என்று கேட்டார். நான், 'இல்லை (தற்போது நடைமுறையிலுள்ள ஹுதைபியா சமாதான உடன்படிக்கையின்) இந்தக் கால கட்டத்தில் நாங்கள் இருக்கிறோம். இதில் அவர் எப்படி நடந்துகொள்வார் என்று எங்களுக்குத் தெரியாது'' என்று சொன்னேன்.

அல்லாஹ்வின் மீதாணையாக! இதைத் தவிர (நபியவர்களைக் குறைசொல்வதற்கு) வேறு எந்த வார்த்தையையும் புகுத்த எனக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை.

(பிறகு) அவர், 'இவருக்கு முன்னால் (குறைஷியரில்) வேறு எவரேனும் இப்படி (தம்மை'நபி' என) வாதித்ததுண்டா?' என்று கேட்டார். நான், 'இல்லை'' என்று சொன்னேன்.

பிறகு ஹெராக்ளியஸ் தம் மொழி பெயர்ப்பாளரிடம் (இவ்வாறு) கூறினார்:'அவரிடம் கூறுங்கள்: நான் உம்மிடம் உங்களிடையே அவரின் குடும்பப் பாரம்பரியம் குறித்துக் கேட்டேன். அவர் சிறந்த பாரம் பரியத்தைச் சேர்ந்தவர் என்று நீர் பதிலளித்தீர். இவ்வாறே இறைத்தூதர்கள் சிறந்த பாரம் பரியத்திலிருந்தே தேர்ந்தெடுக்கப்படுவார். நான் உம்மிடம் அவரின் முன்னோர்களில் அரசர் எவரேனும் இருந்திருக்கிறாரா என்று கேட்டேன். அதற்கு நீர்'இல்லை' என்றீர். அவரின் முன்னோர்களில் அரசர் எவரேனும் இருந்திருப்பாராயின், 'தம் முன்னோர்களின் ஆட்சியதிகாரத்தை (தாமும் அடைய) விரும்பும் ஒருவர் இவர்' என்று கூறியிருப்பேன்.

"மக்களில் அவரைப் பின்பற்றுபவர்கள் மேட்டுக்குடியினரா? அல்லது பலவீனமானவர்களா?' என்று அவரைப் பின்பற்றுபவர்களைக் குறித்துக் கேட்டேன். அதற்கு நீர் ஒடுக்கப்பட்ட மக்களே அவரைப் பின்பற்றுகின்றனர் என்று பதிலளித்தீர். (பெரும்பாலும்) அவர்கள் தாம் இறைத்தூதர்களைப் பின்பற்றுவோர் ஆவர். நான் உம்மிடம்'அவர் தம்மை'நபி' என வாதிப்பதற்கு முன்பு (அவர் மக்களிடம்) பொய் பேசினார் என்று எப்போதாவது நீங்கள் சந்தேகித்ததுண்டா?' என்று கேட்டேன். அதற்கு நீர்'இல்லை'' என்று பதிலளித்தீர். இதிலிருந்து மக்களிடம் பொய் பேச(த் துணிய)ாத அவர் அல்லாஹ்வின் மீது பொய் சொல்லமாட்டார் என்று நான் புரிந்துகொண்டேன். உம்மிடம் நான்'அவரின் மார்க்கத்தை ஏற்றுக் கொண்டோரில் எவராவது தம் (புதிய) மார்க்கத்தின் மீது அதிருப்திகொண்டு அதிலிருந்து வெளியேறிச் செல்வதுண்டா?' என்று கேட்டேன். அதற்கு'இல்லை' என்றீர். இறை நம்பிக்கை இத்தகையதே! உள்ளத்தின் எழிலோடு அது கலந்துவிடும்போது (அதைக் குறித்து யாரும் வெறுப்படையமாட்டார்.) உம்மிடம் நான்'அவரைப் பின்பற்றுவோர் (நாளுக்கு நாள்) அதிகரித்து வருகின்றனரா? அல்லது குறைந்து வருகின்றனரா?' என்று கேட்டேன், நீர்'அதிகரித்தே வருகின்றனர்' என்று பதிலளித்தீர். இறை நம்பிக்கை அத்தகையது தான். அது முழுமையடையும் வரை (அதிகரித்துக்கொண்டே செல்லும்). மேலும், உம்மிடம் நான்'அவருடன் நீங்கள் போர் புரிந்ததுண்டா?' என்று கேட்டேன். அதற்கு நீங்கள் போர் புரிந்தீர்கள் என்றும், உங்களுக்கும் அவருக்குமிடையே போர் கிணற்று வாளிகள் தாம் (போரில் வெற்றியும் தோல்வியும் சுழல் முறையில் மாறி மாறி வருகின்றன என்றும், (ஒரு முறை) அவர் உங்களை வெற்றி கொண்டால் (மறு முறை) நீங்கள் அவரை வெற்றிகொள்கிறீர்கள் என்றும்

பதிலளித்தீர். இறைத்தூதர்கள் அப்படித்தான் சோதிக்கப்படுவார்கள். ஆனால், இறுதி வெற்றி அவர்களுக்கே கிடைக்கும். 'அவர் வாக்கு மீறுகிறாரா?' என்று உம்மை நான் கேட்டதற்கு நீர், 'அவர் வாக்கு மீறுவதில்லை' என்று கூறினீர். இறைத்தூதர்கள் இத்தகையவர்களே் அவர்கள் வாக்கு மீறுவதில்லை.

நான்'இவருக்கு முன் உங்களில் எவராவது இந்த வாதத்தை முன் வைத்ததுண்டா?' என்று உம்மிடம் கேட்டபோது நீர்'இல்லை' என்று பதிலளித்தீர். அவருக்கு முன்னரும் எவரேனும் இந்த வாதத்தை முன் வைத்திருந்ததாக (நீர் கூறி) இருப்பின், 'தமக்கு முன்னர் (சிலரால்) முன் வைக்கப்பட்ட ஒரு வாதத்தையே பின்பற்றிச் செல்கிற ஒருவர் இவர்' என நான் சொல்லியிருப்பேன்' ' என்று கூறினார்.

பிறகு ஹெராக்ளியஸ், 'என்ன செய்யும் படி அவர் உங்களுக்குக் கட்டளையிடுகிறார்?' என்று கேட்டார். நான், 'தொழுகையை நிறைவேற்றும்படியும், தர்மம் செய்யும் படியும், உறவைக் காத்துவரும்படியும், ஒழுக்கமாக வாழும்படியும் அவர் எங்களுக்குக் கட்டளையிடுகிறார்' ' என்று சொன்னேன்.

ஹெராக்ளியஸ், 'அவரைக் குறித்து நீர் சொன்னவை அனைத்தும் உண்மையானால், அவர் இறைத்தூதர் தாம். அவர் வரப்போகிறார் என்று நான் அறிந்துவைத்திருந்தேன். ஆனால், அவர் (குறைஷிகளாகிய) உங்களிலிருந்து வருவார் என்று நான் எண்ணியிருக்கவில்லை. நான் அவரைச் சென்றடைவேன் என அறிந்தால் அவரைச் சந்திக்க நான் விரும்புவேன். அவர் அருகில் நான் இருந்திருந்தால் அவரின் கால்களைக் கழுவியிருப்பேன். அவரின் ஆட்சி (ஒரு காலத்தில்) என் இரண்டு பாதங்களுக்குக் கீழுள்ள (இந்த) இடத்தையும் எட்டியே தீரும்' ' என்று கூறினார்.

பிறகு ஹெராக்ளியஸ் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கடிதத்தைக் கொண்டு வரும்படி உத்தரவிட்டார். (அது கொண்டு வரப்பட்டது.) அதை அவர் வாசிக்கச் செய்தார். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது.

அளவிலா அருளும் நிகரிலா அன்பும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால்... இது இறைத்தூதர் முஹம்மதிடமிருந்து ரோமாபுரியின் அதிபர் ஹெராக்ளியஸுக்கு (எழுதப்பட்ட நிருபம்:)

நேர்வழியைப் பின்பற்றியவர் மீது (இறைவனின்) சாந்தி நிலவட்டும். இஸ்லாத்தை ஏற்குமாறு உங்களை நான் அழைக்கிறேன். இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். (ஏற்றால், ஈருலம்லும்) நீங்கள் பாதுகாப்புப் பெறுவீர்கள். நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்குச் சேர வேண்டிய நன்மையை இரண்டு மடங்காகத் தருவான். நீங்கள் புறக்கணித்தால், (குடிமக்களான) விவசாயிகளின் பாவமும் (அவர்கள் இஸ்லாத்தை ஏற்காமல் போவதின் குற்றமும்) உங்களையே சாரும். 'வேதக்காரர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் இடையிலுள்ள பொதுவான ஒரு விஷயத்திற்கு வாருங்கள். (அது யாதெனில்:)'அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் நாம் வணங்கலாகாது அவனுக்கு எதனையும் நான் இணை வைக்கலாகாது அல்லாஹ்வையன்றி நம்மில் யாரும் யாரையும் இரட்சகர்களாக்கிக் கொள்ளலாகாது. இதன் பிறகும் அவர்கள் ஏற்க மறுத்தால், 'நிச்சயமாக நாங்கள் (அல்லாஹ்வுக்கு அடிபணிகிறவர்கள்) முஸ்லிம்கள்தாம் என்பதற்கு நீங்கள் சாட்சிகளாக இருங்கள்' என்று கூறிவிடுங்கள்.

ஹெராக்ளியஸ் அந்த நிருபத்தைப் படித்து முடித்தபோது, அவருக்கு அருகிலேயே (அவரைச் சுற்றிலுமிருந்த ரோம பைஸாந்திய ஆட்சியாளர்களின்) குரல்கள் உயர்ந்தன. கூச்சல் அதிகரித்தது. எங்களை வெளியே கொண்டு செல்லும்படி உத்தரவிடப்பட்டது. உடனே, நாங்கள் (அரசவையிலிருந்து) வெளியேற்றப்பட்டோம்.

நாங்கள் வெளியே வந்தபோது, நான் என் சகாக்களிடம்'இப்னு அபீ கப்ஷா (முஹம்மது)வின் விவகாரம் வலிமை பெற்றுவிட்டது. மஞ்சள் நிற இனத்தாரின் (-ரோமரின்-) மன்னரே அவருக்கு அஞ்சுகிறாரே!"என்று சொன்னேன். (அன்று முதல்) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மார்க்கம் விரைவில் வெற்றி பெறும் என்று உறுதிகொண்டவனாகவே இருந்து வந்தேன். முடிவில் அல்லாஹ் என் உள்ளத்தில் இஸ்லாத்தைப் புகுத்தினான்.

ஸுஹ்ரி(ரஹ்) (தம் அறிவிப்பில்) கூறியிருப்பதாவது:'பிறகு ஹெராக்ளியஸ் ரோம பைஸாந்திய ஆட்சியாளர்களுக்கு அழைப்புவிடுத்து, அவர்களை தம் மாளிகை ஒன்றில் ஒன்றுகூட்டி அவர்களிடையே'அந்திமக் காலத்தில் உங்களுக்கு வெற்றியும் நேர்வழியும் கிடைக்க வேண்டுமென்ற ஆசையும், உங்களின் ஆட்சி உங்களிடமே நீடிக்க வேண்டும் என்ற எண்ணமும் உங்களுக்கு உண்டா? (அப்படியானால் இந்த இறுதித் தூதரை நம்புங்கள்)'' என்று பேசினார். இதைக் கேட்டவுடனேயே போன்று வாசல்களை நோக்கி அவர்கள் வெருண்டோடி, வாசல் அருகில் சென்றதும், அவை தாளிடப்பட்டிருக்கக் கண்டனர். அப்போது மன்னர் ஹெராக்ளியஸ்'அவர்களை என்னிடம் திருப்பிக்கொண்டு வாருங்கள்'' என அவர்களுக்கு அழைப்புவிடுத்தார். (அவ்வாறே அழைத்துவரப்பட்டனர். அவர்களிடம்)'நீங்கள் உங்கள் மதத்தின் மீது எவ்வளவு பிடிப்புக் கொண்டுள்ளீர்கள் என்பதை நான் சோதிக்கவே இவ்வாறு செய்தேன். நான் விரும்பியதை இப்போது ஐயமற அறிந்து கொண்டேன்'' என்று அவர் கூறியதும், அனைவரும் அவருக்குச் சிரம் பணிந்தனர். அவரைக் குறித்துத் திருப்தியும் அடைந்தனர்.

## 03:92 வது திருக்குர்ஆன் வசனம்

நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து தானம் செய்யாத வரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள். மேலும், நீங்கள் எப்பொருளை தானம் செய்தாலும், நிச்சயமாக அல்லாஹ் அதனை நன்கு அறிகிறவனாக இருக்கிறான் (எனும் 3:92 வது இறைவசனம்).

ஹதீஸ் 4554. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

மதீனா (முஸ்லிம்களான) அன்சாரிகளிலேயே அபூ தல்ஹா (ஸைத் இப்னு ஸஹ்ல் (ரலி) அவர்கள் அதிகமான பேரீச்சந் தோட்டங்கள் உடையவராய் இருந்தார்கள். (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு எதிரேயிருந்த'பீருஹா' (அல்லது'பைருஹா') எனும் தோட்டம் தம் சொத்துக்களிலேயே அவர்களுக்கு மிகவும் விருப்பமானதாயிருந்தது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , அந்த தோட்டத்திற்குச் சென்று அதிலுள்ள நல்ல(சுவையான) நீரைப் பருகும் வழக்கமுடையவராய் இருந்தார்கள்.

"நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து தானம் செய்யாதவரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள்' எனும் (திருக்குர்ஆன் 03:92 வது) இறைவசனம் அருளப்பட்டபோது அபூ தல்ஹா(ரலி) எழுந்து நின்று, 'இறைத்தூதர் அவர்களே!'நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து தானம் செய்யாதவரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள்'' என அல்லாஹ் கூறினான். என் சொத்துகளில் எனக்கு மிகவும் விருப்பமானது'பீருஹா' (எனும் இந்தத் தோட்டமே) ஆகும். (இனிமேல்,) அது அல்லாஹ்வுக்காக (நான் வழங்கும்) தர்மமாகும். இதற்கான நன்மையையும் (மறுமையில் எனக்குரிய) சேமிப்பாக இது இருப்பதையும் நான் அல்லாஹ்விடம் எதிர் பார்க்கிறேன். எனவே, இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் தங்களுக்குக் காட்டியுள்ள வழியில் இதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'நல்லது. அது (அழிந்து) போய்விடும் செல்வம் தானே! (அழிந்து) போய்விடும் செல்வம் தானே! (அதைத் தர்மம் செய்து, மறுமைக்குச் சேமிப்பாக்கிக் கொள்வது நல்லதுதான்.)'' என்று சொல்லிவிட்டு, நீர் கூறியதை நான் கேட்டுக்கொண்டிருந்தேன். அ(ந்தத் தோட்டத்)தை உம்முடைய நெருங்கிய

உறவினர்களிடையே (தர்மமாக) வழங்குவதையே நான் (பெரிதும்) விரும்புகிறேன்‘' என்றார்கள்.
அபூ தல்ஹா(ரலி), 'அவ்வாறே செய்கிறேன் இறைத்தூதர் அவர்களே!”என்று கூறிவிட்டுத் தம் உறவினர்களுக்கும் தம் தந்தையின் சகோதரர் மக்களுக்கும் அந்தத் தோட்டத்தைப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார்கள்.
ரவ்ஹ் இப்னு உபாதா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில், (‘அது அழிந்துபோய்விடும் செல்வம்தானே!’ என்பதற்கு பதிலாக)’அது (மறுமையில்) இலாபம் தரும் செல்வம் தானே’ என்று (நபிகளார் கூறினார்கள் என) இடம் பெற்றுள்ளது.
யஹ்யா இப்னு யஹ்யா(ரஹ்) கூறினார்:
நான் மாலிக்(ரஹ்) அவர்களிடம்’அது (அழிந்து) போய்விடும் செல்வம்தானே’ என்று வாசித்துக் காட்டினேன். (அவர்கள் அதை மறுக்கவில்லை.)
ஹதீஸ் 4555. அனஸ்(ரலி) அறிவித்தார்
எனவே, அந்த (பைருஹா)த் தோட்டத்தை ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களுக்கும் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களுக்கும் (அபூ தல்ஹா(ரலி) தர்மமாக) வழங்கிவிட்டார்கள். ஆனால், நானே (அவ்விருவரையும் விட) அவருக்கு நெருங்கிய உறவினராய் இருந்தேன். அதிலிருந்து எனக்கு அவர் சிறிதும் கொடுக்கவில்லை.

## 03:93 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) கூறுக: (யூதர்களாகிய) நீங்கள் உண்மையாளர்களாயின்’தவ்ராத்‘தைக் கொண்டுவந்து ஓதிக்காட்டுங்கள் (எனும் 3:93 வது வசனத் தொடர்).
ஹதீஸ் 4556. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்களிடம் யூதர்கள் தம் சமுதாயத்தாரிலிருந்து விபசாரம் புரிந்து விட்டிருந்த ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் அழைத்து வந்தார்கள். (தீர்ப்பளிக்கும்படி கேட்டார்கள்.) அப்போது நபி(ஸல்) அவர்கள், 'உங்களில் விபசாரம் புரிந்தவரை நீங்கள் என்ன செய்கிறீர்கள்?’ என்று கேட்டார்கள். அவர்கள்’நாங்கள் அவ்விருவரையும் (அவர்களின் முகங்களில்) கரும்புள்ளியிட்டு அடிப்போம்‘' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள், '(உங்கள் வேதமான) தவ்ராத்தில் (விபசாரம் செய்தவருக்கு)’ரஜ்கி’ (சாகும்வரை கல்லால் அடிக்கும்) தண்டனையை நீங்கள் காணவில்லையா?’ என்று கேட்க, யூதர்கள், '(அப்படி) ஒன்றும் அதில் நாங்கள் காணவில்லை‘' என்று பதிலளித்தனர். உடனே, (யூதமார்க்க அறிஞராயிருந்) அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி), யூதர்களிடம், 'பொய் சொன்னீர்கள், நீங்கள் உண்மையாளர்களாயின் தவ்ராத்தைக் கொண்டு வந்து ஓதிக் காட்டுங்கள்‘' என்று கூறினார்கள். (அவ்வாறே தவ்ராத் கொண்டுவரப்பட்டு ஓதப்பட்டது). அப்போது அவர்களுக்கு வேதம் கற்பிக்கும் வேதம் ஓதுநர்’ரஜ்கி’ தொடர்பான வசனத்தின் மீது தம் கையை வைத்து (மறைத்துக்கொண்டு) தம் கைக்கு முன்னால் இருப்பதையும் அதற்கு அப்பால் உள்ளதையும் மட்டும் ஓதலானார். (கைக்குக் கீழே உள்ள) ரஜ்முடைய வசனத்தை ஓதவில்லை. உடனே அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அந்த ஓதுநரின் கையை ரஜ்முடைய வசனத்தை ஓதவில்லை. உடனே, அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அந்த ஓதுநரின் கையை ரஜ்முடைய வசனத்தைவிட்டு இழுத்துவிட்டு, 'இது என்ன?’ என்று கேட்டார்கள். யூதர்கள் அதைப் பார்த்தபோது, 'இது ரஜ்முடைய வசனம்‘' என்று கூறினார்கள். எனவே, (விபசாரம் புரிந்த) அவ்விருவருக்கும் தண்டனை வழங்கும்படி நபியவர்கள் ஆணையிட்டார்கள். எனவே, அவ்விருவருக்கும் மஸ்ஜிதுந் நபவியில் ஜனாஸாக்கள் (இறுதிப் பிரார்த்தனைக்காகச் சடலங்கள்) வைக்குமிடத்திற்கருகே கல்லெறி தண்டனை தரப்பட்டது.
அந்தப் பெண்ணின் அந்த நண்பன் அவளைக் கல்லடியிலிருந்து காப்பாற்றும் விதத்தில் அவளின் மீது கவிழ்ந்து கொள்வதை பார்த்தேன்.

## 03:110 வது திருக்குர்ஆன் வசனம்

(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் மனிதர்களுக்கென்று தோற்றுவிக்கப்பெற்ற சமூகத்தாரில் மிகச் சிறந்தவர்களாவீர் (எனும் 3:110 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4557. அபூ ஹாஸிம் சுலைமான் அல்அஷ்ஜஈ(ரஹ்) அறிவித்தார்

"(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் மனிதர்களுக்கென்று தோற்றுவிக்கப்ப பெற்ற சமூகத்தாரில் மிகச் சிறந்தவர்களாவீர்'' எனும் (திருக்குர்ஆன் 03:110 வது வசனத்திற்கு விளக்கமளிக்கையில்' நீங்கள் மக்களில் சிலரை (போர்க் கைதிகளாகச் சிறைபிடித்து) அவர்களின் கழுத்தைச் சங்கிலிகளில் பிணைத்துக் கொண்டுவருகிறீர்கள். (இந்நிலையிலும் மனம் திருந்தி) முடிவாக அவர்கள் இஸ்லாத்தில் இணைகின்றனர். (இவ்வாறு அவர்களுக்குப் பயனளிக்கும் நீங்களே) மக்களிலேயே சிறந்தவர்களாவீர்கள்'' என்று அபூ ஹுரைரா(ரலி) கூறினார்.

## 03:122 வது திருக்குர்ஆன் வசனம்

உங்களில் இரண்டு குழுவினருக்கு அல்லாஹ் பாதுகாவலனாக இருக்க, அவர்கள் தைரியமிழக்கத் தொடங்கிய நேரத்தையும் (நினைவு கூருக!) இறை நம்பிக்கையாளர்கள் (எந்நேரமும்) அல்லாஹ்வையே சார்ந்திருக்கட்டும்! (எனும் 3:122 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4558. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

"உங்களில் இரண்டு குழுவினருக்கு அல்லாஹ் பாதுகாவலனாக இருக்க, அவர்கள் தைரியமிழக்கத் தொடங்கிய நேரத்தையும் (நினைவு கூருக!)'' எனும் (திருக்குர்ஆன் 03:122 வது) இறைவசனம் (அன்சாரிகளாகிய) எங்கள் விஷயத்திலேயே இறங்கியது. பனு ஹாரிஸா மற்றும் பனுசலிமா குலத்தாரான நாங்கள்தாம் அந்த இருபிரிவினர். இந்த இறைவசனம் (எங்கள் கோழைத்தனத்தை எடுத்துரைத்தாலும் அது) இறங்காமலிருந்திருக்கக் கூடாதா என்று நாங்கள் விரும்பமாட்டோம். ஏனெனில், 'அல்லாஹ் அவ்விரு பிரிவினருக்கும் பாதுகாவலனாக இருந்தான்'' என்று (அதில்) அல்லாஹ் கூறியிருக்கிறான்.

அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) மற்றொரு முறை அறிவிக்கும்போது, 'இது இறங்காமலிருந்திருந்திருந்தால் அது எனக்கு மகிழ்வைத் தந்திராது'' என்று கூறினார்கள்.

## 03:128 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் அவர்களை மன்னிக்கும் வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும்வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை (எனும் 3:128 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4559. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(உஹுத் போரில் பலத்த காயமுற்ற பின்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஃபஜ்ருத் தொழுகையின் கடைசி ரக்அத்தில் ருகூவிலிருந்து தம் தலையை உயர்த்தும்போது, 'சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ், ரப்பனா வல(க்)கல் ஹகித்' (அல்லாஹ், தன்னைப் புகழ்வோரின் புகழுரையைச் செவிமடுக்கிறான் எங்கள் இறைவா! உனக்கே எல்லாப் புகழும்.) என்று சொன்ன பின்பு, 'இறைவா! இன்னார், இன்னார், இன்னாரை உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக!"என்று (சில எதிரிகளுக்கெதிராகப்) பிரார்த்திப்பதை கேட்டிருக்கிறேன். அப்போது அல்லாஹ், 'அவர்களை அல்லாஹ் மன்னிக்கும்வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும்வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:128 வது) வசனத்தை அருளினான்.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 4560. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தொழுகையில்) எவருக்கேனும் எதிராகவோ, ஆதரவாகவோ பிரார்த்திக்க விரும்பினால் ருகூவுக்குப் பிறகு 'குனூத்' (எனும் சிறப்பு துஆ) ஓதுவார்கள். சில வேளை 'சமி அல்லாஹு லிமன் ஹமிதஹ், அல்லாஹும்ம ரப்பனா ல(க்)கல் ஹகித்' என்று சொன்ன பின்பு, 'இறைவா! வலீத் இப்னு வலீத், ஸலமா இப்னு ஹிஷாம் மற்றும் அய்யாஷ் இப்னு அபீ ரபீஆ ஆகியோரைக் காப்பாற்றுவாயாக! இறைவா! முளர் குலத்தாரின் மீது உன் பிடியை இறுக்குவாயாக! (இறைத்தூதர்) யூசுஃப் (அலை) அவர்களின் சமுதாயத்தாருக்கு அளித்த பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போல் அவர்களுக்கு அளிப்பாயாக!" என்று பிரார்த்திப்பார்கள். அதை சப்தமாகச் சொல்வார்கள். தம் ஃபஜ்ருத் தொழுகைகள் சிலவற்றில், 'இறைவா! இன்னார், இன்னாரை உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக'' என்று சில அரபுக் குலங்களைக் குறிப்பிட்டுப் பிரார்த்திப்பார்கள். அல்லாஹ் 'அவர்களை அல்லாஹ் மன்னிக்கும்வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவர்களை அவன் வேதனை செய்யும்வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:128 வது) வசனத்தை அருளும்வரை இப்படிப் பிரார்த்தித்து வந்தார்கள்.

## 03:153 வது திருக்குர்ஆன் வசனம்

"இறைத்தூதர் உங்கள் பின்னாலிருந்து உங்களை அழைத்துக்கொண்டிருக்க, நீங்கள் யாரையும் திரும்பிப் பார்க்காமல் வெகுதூரம் சென்று கொண்டிருந்ததை (நினைத்துப் பாருங்கள்). இதனால் (அல்லாஹ்) உங்களுக்கு துக்கத்திற்கு மேல் துக்கத்தைக் கொடுத்தான்'' எனும் (திருக்குர்ஆன் 03:153 வது) வசனத் தொடர்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள) 'உக்ராக்கும்' (உங்கள் பின்னால்) எனும் சொல், 'ஆம்ரிக்கும்' எனும் சொல்லின் பெண்பாலாகும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(உஹுதுப் போர் குறித்துப் பேசும் 9: 52 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'இஹ்தல் ஹுஸ்னயைன்' (இவ்விரு நன்மைகளில் ஒன்றை) எனும் சொற்றொடர் 'வெற்றி அல்லது வீர மரணத்தைக்' குறிக்கிறது.

ஹதீஸ் 4561. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் உஹுதுப் போரின்போது அப்துல்லாஹ் இப்னு ஜுபைர்(ரலி) அவர்களைக் காலாட்படையினருக்கு(த் தளபதியாக) நியமித்தார்கள். அப்படையினர் தோற்று ஓடினர். (அப்போது நடந்த) அந்தச் சம்பவத்தைத்தான் 'இறைத்தூதர் உங்கள் பின்னால் இருந்து உங்களை அழைத்துக் கொண்டிருக்க, நீங்கள் யாரையும் திரும்பிப் பார்க்காமல் வெகுதூரம் சென்று கொண்டிருந்ததை (நினைத்துப் பாருங்கள்)'' எனும் இந்த (திருக்குர்ஆன் 03:153 வது) இறைவசனம் குறிப்பிடுகிறது. அப்போது நபி(ஸல்) அவர்களுடன் பன்னிரண்டு பேரைத் தவிர வேறெவரும் எஞ்சியிருக்கவில்லை.

## 03:154 வது திருக்குர்ஆன் வசனம்

"பின்னர் இந்தத் துக்கத்திற்குப் பிறகு (மன) அமைதி தருகிற சிற்றுறக்கத்தை அவன் உங்களுக்கு அருளினான்'' எனும் (திருக்குர்ஆன் 03:154 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4562. அபூ தல்ஹா ஸைத் இப்னு ஸஹ்ல்(ரலி) அறிவித்தார்

உஹுதுப் போர் நாளில் எங்கள் அணிகள் (நின்றிருந்த) இடத்தில் நாங்கள் இருந்தபோது எங்களைச் சிற்றுறக்கம் ஆட்கொண்டது. அதனால் என்னுடைய வாள் என் கையிலிருந்து (நழுவி) விழத் தொடங்க, நான் அதை எடுப்பேன். (மீண்டும்) அது விழ, நானும் அதை எடுப்பேன்.

## 03:172 வது திருக்குர்ஆன் வசனம்

"அவர்கள் (எத்தகைய நம்பிக்கையாளர்கள் என்றால், போரில்) தமக்குப் படுகாயங்கள் ஏற்பட்ட பின்னரும் கூட அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் அழைப்புக்கு இணங்கினர். நன்மை புரிந்து, தீமையிலிருந்து தம்மைக் காத்துக் கொண்ட இத்தகையோருக்கு மகத்தான பிரதிபலன் உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 03:172 வது இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள) 'அல்கர்ஹ்' எனும் சொல்லுக்குப் 'படுகாயம்' என்று பொருள். 'இஸ்தஜாபூ' ('இணங்கினர்') எனும் சொல்லுக்கு 'பதிலளித்தார்கள்'' என்று பொருள். (இதன் எதிர்கால வினைச் சொல்லான) 'யஸ்தஜீபு' என்பதற்கு, 'பதிலளிப்பார்' என்று பொருள்.

## 03:173 வது திருக்குர்ஆன் வசனம்

'இவர்களிடம்' நிச்சயமாக மீண்டும் தாக்குதல் தொடுக்க எதிர்த்தரப்பு) மக்கள் உங்களுக்கெதிராக அணிதிரண்டுள்ளனர் எனவே, அவர்களுக்கு அஞ்சுங்கள்' என்று மக்கள் (சிலர்) கூறினர். ஆனால், இது இவர்களுக்கு நம்பிக்கையை மேலும் அதிகமாக்கியது. 'எங்களுக்கு அல்லாஹ் போதுமானவன் அவனே பொறுப்பேற்றுக் கொள்வோரில் சிறந்தவன்'' என்றும் இவர்கள் கூறினார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 03:173 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4563. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

(இறைத்தூதர்) இப்ராஹீம் (அலை) அவர்கள் தீயில் தூக்கி எறியப்பட்டபோது 'அல்லாஹ் எங்களுக்குப் போதுமானவன் அவனே பொறுப்பேற்றுக் கொள்வோரில் சிறந்தவன்'' என்று கூறினார்கள். இதே வார்த்தைகளை முஹம்மத் (ஸல்) அவர்கள், 'நிச்சயமாக (மீண்டும் தாக்குதல் தொடுக்க எதிர்த்தரப்பு) மக்கள் உங்களுக்கெதிராக அணிதிரண்டுள்ளனர் எனவே, அவர்களுக்கு அஞ்சுங்கள்'' என மக்கள் (சிலர்) கூறியபோது கூறினார்கள். இ(வ்வாறு அச்சுறுத்திய)து அவர்களுக்கு நம்பிக்கையை மேலும் அதிகமாக்கியது. 'எங்களுக்கு அல்லாஹ் போதுமானவன் அவனே பொறுப்பேற்றுக் கொள்வோரில் சிறந்தவன்'' என்றும் அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 4564. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

இப்ராஹீம் (அலை) அவர்கள் நெருப்பில் எறியப்பட்டபோது, 'எனக்கு அல்லாஹ்வே போதுமானவன் அவனே பொறுப்பேற்றுக் கொள்வோரில் சிறந்தவன்'' (ஹஸ்பியல்லாஹ் வநிமல் வக்கீல்) என்பதே அவர்களின் கடைசி வார்த்தையாக இருந்தது.

## 03:180 வது திருக்குர்ஆன் வசனம்

"அல்லாஹ் தன்னுடைய பேருதவியிலிருந்து தங்களுக்கு வழங்கியவற்றில் யார் கருமித்தனம் செய்கிறார்களோ அவர்கள் தமக்கு அதனை நல்லதென எண்ணிவிட வேண்டாம். மாறாக, அது அவர்களுக்கு தீங்கேயாகும். அவர்கள் நல்லதென எண்ணிவிடவேண்டாம். மாறாக, அது அவர்களுக்கு தீங்கேயாகும். அவர்கள் எதனை வழங்காது வைத்திருந்தார்களோ அது மறுமையில் அவர்களின் கழுத்தில் மாலையாக மாட்டப்படும். வானங்கள் மற்றும் பூமியின் உரிமை அல்லாஹ்வுக்கே உரியதாகும். மேலும், நீங்கள் செய்கிறவற்றை (யெல்லாம்) அல்லாஹ் நன்கறிபவன்' எனும் (திருக்குர்ஆன் 03:180 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள) 'சயு(த்) தவ்வக்கூன்' (அவர்களின் கழுத்தில் மாலையாக மாட்டப்படும்) எனும் சொற்றொடர் 'தவ்வக்துஹு பிதவ்கின்' (நான் அவனுக்கு மாலையிட்டேன்) எனும் வாக்கியத்திற்கு நிகரானதாகும்.

ஹதீஸ் 4565. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , 'அல்லாஹ் யாருக்கேனும் செல்வத்தையளித்து அதற்கான ஸகாத்தை அவர் செலுத்தவில்லையாயின் (மறுமையில்) அவரின் செல்வம் (தலை

வழுக்கையான) கொடிய நஞ்சுடைய (கிழட்டுப்) பாம்பாகக் காட்சி தரும். அதற்கு (அதன் நெற்றியில்) இரண்டு கறுப்புப் புள்ளிகள் இருக்கும் மறுமை நாளில் அது (அவரின் கழுத்தில்) மாலையாக) சுற்றப்படும். அந்தப் பாம்பு அவரின் முகவாய்க் கட்டையை அதாவது அவரின் இரண்டு தாடைகளைப் பிடித்துக்கொண்டு, 'நானே உன்னுடைய செல்வம் நான்தான் உன்னுடைய கருவூலம்' என்று சொல்லும்' எனக் கூறிவிட்டு, பிறகு, 'அல்லாஹ் தன்னுடைய பேருதவியிலிருந்து தங்களுக்கு வழங்கியவற்றில் யார் கருமித்தனம் செய்கிறார்களோ அவர்கள் தமக்கு அதனை நல்லதென எண்ணிவிடவேண்டாம். மாறாக, அது அவர்களுக்கு தீங்கேயாகும். அவர்கள் எதனை வழங்காது வைத்திருந்தார்களோ அது மறுமையில் அவர்களின் கழுத்தில் மாலையாக மாட்டப்படும். வானங்கள் மற்றும் பூமியின் உரிமை அல்லாஹ்வுக்கே உரியதாகும். மேலும், நீங்கள் செய்கிறவற்றை(யெல்லாம்) அல்லாஹ் நன்கறிபவன்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 03:180 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

## 03:186 வது திருக்குர்ஆன் வசனம்

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் உங்களுக்கு முன் வேதம் அருளப்பட்டவர்களிடமிருந்தும், இணைவைத்தோரிடமிருந்தும் ஏராளமான நிந்தனைகளை நிச்சயம் கேட்பீர்கள். (அப்போதெல்லாம்) நீங்கள் பொறுமை காத்துத் தீமையிலிருந்து விலகி நடந்தால் அதுவே உறுதிமிக்க செயல்களில் ஒன்றாகும் (எனும் 3:186 வது) வசனத் தொடர்.)

ஹதீஸ் 4566. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஃபதக்' நகர முரட்டுத் துணி விரிக்கப்பட்ட கழுதையொன்றின் மீது அமர்ந்து தமக்குப் பின் வாகனத்தில் என்னை அமர்த்திக் கொண்டு ஹாரிஸ் இப்னு அல்கஸ்ரஜ் குலத்தாரிடையே (உடல் நலமில்லாமல்) இருந்த ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களை நலம் விசாரிக்கச் சென்றார்கள் - இது பத்ருப் போருக்கு முன்னால் நடந்தது. - அப்போது ஓர் அவையைக் கடந்து சென்றார்கள். அதில் (நயவஞ்சகர்களின் தலைவர்)'அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல்' இருந்தார். -அவர் தம்மை முஸ்லிம் என்று காட்டிக்கொள்வதற்கு முன்பு இது நடந்தது. - அந்த அவையில் முஸ்லிம்கள், சிலை வணங்கும் இணைவைப்பாளர்கள், யூதர்கள், இறைநம்பிக்கையாளர்கள் ஆகிய பல்வேறு பிரிவினரும் இருந்தனர். அதே அவையில் (கவிஞர்) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்களும் இருந்தார்கள். (எங்கள்) வாகனப் பிராணியினால் கிளம்பிய புழுதி அந்த அவையைச் சூழ்ந்திருந்தபோது (நயவஞ்சகன்) அப்துல்லாஹ் இப்னு உபை தன்னுடைய மேல் துண்டால் தன் மூக்கைப் பொத்திக்கொண்டார். பிறகு, 'எங்களின் மீது புழுதி கிளப்பாதீர்'' என்று கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவையோருக்கு சலாம் (முகமன்) கூறினார்கள். பிறகு தம் வாகனத்தை நிறுத்தி இறங்கி, அல்லாஹ்வின் (மார்க்கத்தின்) பால் அவர்களை அழைத்தார்கள். மேலும், அவர்களுக்குக் குர்ஆனை ஓதிக்காட்டினார்கள்.

இதைக்கேட்ட அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல் (நபி(ஸல்) அவர்களிடம்)'மனிதரே! நீர் கூறுகிற விஷயம் உண்மையாயிருப்பின், அதைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை. (ஆனால்,) அதை எங்களுடைய (இதுபோன்ற) அவையில் (வந்து) சொல்லி எங்களுக்குத் தொல்லை தராதீர். உங்கள் இருப்பிடத்திற்குச் செல்லுங்கள். உம்மிடம் வருபவர்களிடம் (அதை) எடுத்துச் சொல்லுங்கள்'' என்றார். இதைக்கேட்ட அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி), 'ஆம்! இறைத்தூதர் அவர்களே! அதனை நம் அவைக்கு வந்து எங்களுக்கு எடுத்துரையுங்கள். ஏனெனில், நாங்கள் அதை விரும்புகிறோம்'' என்றார். இதைக் கேட்ட முஸ்லிம்களுக்கும் இணைவைப்பாளர்களும் யூதர்களும் (ஒருவரையொருவர்) ஏசத் தொடங்கி பரஸ்பரம் தாக்கிக்கொள்ளும் அளவிற்குச் சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், மக்கள் மௌனமாகும் வரை அவர்களை அமைதிப்படுத்திக் கொண்டேயிருந்தார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் ஏறி ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடம் சென்று, அவரிடம்'சஅதே! அபூ ஹுபாப் - அப்துல்லாஹ் இப்னு உபை - சொன்னதை நீங்கள் கேட்கவில்லையா? அவர் இன்னின்னவாறு கூறினார்'' என்றார்கள். ஸஅத் இப்னு உபாதா(ரலி), 'இறைத்தூதர் அவர்களே! அவரை மன்னித்துவிட்டுவிடுங்கள். தங்களுக்கு வேதத்தை அருளியவன் மீதாணையாக! தங்களுக்குத் தான் அருளிய சத்திய (மார்க்க)த்தை அல்லாஹ் கொண்டுவந்துவிட்டான். இந்த (மதீனா) ஊர்வாசிகள் அப்துல்லாஹ்வுக்குக் கீரிடம் அணிவித்து அவரைத் தலைவராக்க முடிவு செய்திருந்தனர். (இந்நிலையில்) அல்லாஹ் தங்களுக்கு வழங்கிய சத்திய(மார்க்க)த்தின் மூலம் அ(ந்த முடிவு)தனை அவன் நிராகரித்தால் அவர் ஆத்திரமடைந்துள்ளார். இதுதான் தாங்கள் பார்த்தபடி அவர் நடந்துகொண்டதற்குக் காரணம்'' என்று கூறினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ்வை மன்னித்தார்கள். நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் அல்லாஹ்வின் ஆணைக்கொப்ப இணைவைப்பவர்களையும் வேதக்காரர்களையும் மன்னிப்பவர்களாகவும் (அவர்களின்) நிந்தனைகளைப் பொறுத்துக் கொள்பவர்களாகவும் இருந்தனர்.

அல்லாஹ் கூறினான்:

(இறைநம்பிக்கையாளர்களே!) நீங்கள் உங்களுக்கு முன்வேதம் அருளப்பட்டவர்களிடமிருந்தும் இணைவைத்தோரிடமிருந்தும் ஏராளமான நிபந்தனைகளை நிச்சயம் கேட்பீர்கள். (அப்போதெல்லாம்) நீங்கள் பொறுமைகாத்துத் தீமையிலிருந்து விலகி நடந்தால், அதுதான் உறுதிமிக்க செயல்களில் ஒன்றாகும். (திருக்குர்ஆன் 03:186)

மேலும் அல்லாஹ் கூறினான்:

(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் இறைநம்பிக்கை கொண்டதற்குப்பின் உங்களை நிராகரிப்பவர்களாக மாற்றிவிட வேண்டும் என்று வேதக்காரர்களில் பலர் விரும்புகின்றனர். (இது) அவர்களுக்கு உண்மை தெளிவாகிவிட்ட பின்னர் அவர்களின் உள்ளத்துள் எழுந்த பொறாமையினாலேயாகி. ஆயினும், அல்லாஹ் தன் ஆணையைப் பிறப்பிக்கும் வரை (அவர்களை) நீங்கள் மன்னித்துக்கொள்ளுங்கள். திண்ணமாக! அல்லாஹ் அனைத்துப் பொருள்களின் மீதும் பேராற்றல் உள்ளவன். (திருக்குர்ஆன் 02:109)

அவர்களின் விஷயத்தில் அல்லாஹ் (நடவடிக்கையெடுக்க) அனுமதிக்கும்வரை நபி(ஸல்) அவர்கள் மன்னிக்கும் போக்கையே கைக்கொள்பவர்களாக இருந்தார்கள். அப்பால், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்ருப்போருக்குச் சென்றபோது அன்னாரின் மூலம் அல்லாஹ் குறைஷிகளில் இறைமறுப்பாளர்களின் தலைவர்களைக் கொன்றான். அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூலும் அவருடனிருந்த இணைவைப்பாளர்களும், சிலைவணங்கிகளும்'(இஸ்லாம் எனும்) இந்த விஷயம் மேலோங்கிவிட்டது. எனவே, இந்த (இறை)த் தூதரிடம் இஸ்லாத்தை ஏற்றோமென உறுதி மொழியளித்து விடுங்கள்'' என்று கூறி (வெளித்தோற்றத்தில்) இஸ்லாத்தை எற்றனர்.

## 03:188 வது திருக்குர்ஆன் வசனம்

தாம் செய்து (தீய)வை குறித்து மகிழ்ந்து கொண்டும், தாம் செய்யாதவற்றைக் கொண்டு பாராட்டப்படவேண்டும் என விரும்பிக்கொண்டும் இருப்போர் வேதனையிலிருந்து தப்பிவிடுவார்கள் என்று ஒருபோதும் நீர் எண்ண வேண்டாம் அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு (எனும் 3:188 வது இறைவசனம்).

ஹதீஸ் 4567. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் நயவஞ்சகர்கள் சிலர், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புனிதப் போருக்குச் புறப்பட்டுச் சென்றால், அவர்களுடன் செல்லாமல் ஊரிலேயே தங்கிவிடுவார்கள். (அவ்வாறு) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் செல்லாமல் தாம் தங்கிவிட்டதைப் பற்றி மகிழ்ச்சியும் அடைவார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்

(போரிலிருந்து) திரும்பி வரும்போது அவர்களிடம் (போய், தாம் கலந்து கொள்ளாமல் போனதற்குப் பொய்யான) சாக்குப் போக்குகளைக் கூறி, (பொய்ச்) சத்தியம் செய்வார்கள். தாம் செய்யாத (நற்) செயல்களுக்காகத் தம் புகழப்பட வேண்டுமென்றும் விரும்புவார்கள் அப்போதுதான்'தாம் செய்த (தீய)வை குறித்து மகிழ்ந்து கொண்டும், தாம் செய்யாதவற்றைக் கொண்டு பாராட்டப்படவேண்டும் என விரும்பிக்கொண்டும் இருப்போர் வேதனையிலிருந்து தப்பிவிடுவார்கள் என்று ஒருபோதும் நீர் எண்ண வேண்டாம் அவர்களக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 03:188 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

ஹதீஸ் 4568. அல்கமா இப்னு வக்காஸ்(ரஹ்) அறிவித்தார்

(மதீனா ஆளுநர்) மர்வான் இப்னி ஹகம்25 தம் காவலரிடம்'ரா∴பிஉ! நீ இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்று, 'தமக்கு அளிக்கப்பட்டவை குறித்து மகிழ்ச்சி அடைகின்ற, தாம் செய்யாத (சாதனைகள் முதலிய)வற்றுக்காகத் தாம் புகழப்படவேண்டுமென்று விரும்புகிற மனிதர் ஒவ்வொரு வரும் வேதனை செய்யப்படுவார் என்றிருப்பின் நாம் அனைவருமே வேதனை செய்யப்பட்ட வேண்டி வருமே!' என்று (நான் வினவியதாகக்) கேள்'' என்று கூறினார். (அவ்வாறே இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்று ரா∴பிஉ கேட்டபோது)'உங்களுக்கு இது தொடர்பாக என்ன (குழப்பம்) நேர்ந்தது? (இதன் உண்மை என்னவென்றால்,) நபி(ஸல்) அவர்கள் யூதர்களை அழைத்து அவர்களிடம் ஒரு விஷயம் (தவ்ராத்தில் உள்ளதா என்பது) குறித்துக்கேட்டார்கள். அப்போது யூதர்கள் அதனை மறைத்துவிட்டு (உண்மைக்கப் புறம்பான) வேறொன்றை நபியவர்களிடம் தெரிவித்தார்கள். தங்களிடம் நபி(ஸல்) அவர்கள் வினவியது தொடர்பாகத் தாங்கள் அன்னாரிடம் தெரிவித்த த(கவலி)ற்காகப் பாராட்டை எதிர்பார்ப்பது போல் அவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள்'' என்று கூறிவிட்டு (பின்வரும்) இந்த வசனங்களை இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் ஓதினார்கள்: வேதம் வழங்கப்பட்டவர்களிடம்'நீங்கள் அதனை மக்களுக்குத் தெளிவாக்கிட வேண்டும் அதனை மறைக்கக் கூடாது' என அல்லாஹ் உறுதிமொழி வாங்கினான். ஆனால், அதனை அவர்கள், தம் முதுகுக்குப் பின்னே எறிந்துவிட்டு, அதற்கு பதிலாக அற்ப விலையை வாங்கிக் கொண்டனர் என்பதை (நபியே! அவர்களுக்கு நினைவூட்டுவீராக!) அவர்கள் வாங்கிக் கொண்டது மிக மோசமானதாகும். தாம் செய்த(தீய)வை குறித்து மகிழ்ந்து கொண்டும், தாம் செய்யாதவற்றைக் கொண்டு பாராட்டபடவேண்டும் என விரும்பிக் கொண்டும் இருப்போர் வேதனையிலிருந்து தப்பிவிடுவார்கள் என்று ஒருபோதும் நீர் எண்ண வேண்டாம் அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை உண்டு. (திருக்குர்ஆன் 03:187, 188)

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## 03:190 வது திருக்குர்ஆன் வசனம்

“நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியின் படைப்(பு அமைப்)பிலும், இரவு -பகல் மாறி, மாறி, மாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல சான்றுகள் உள்ளன'' எனும் (திருக்குர்ஆன் 03:190 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4569. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

(ஒரு நாள்) நான் என் சிறிய தாயார் (அவர்களும் நபி(ஸல்) அவர்களின் துணைவியாருமான) மைமூனா(ரலி) அவர்களின் வீட்டில் இரவு தங்கியிருந்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் துணைவியாருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு உறங்கிவிட்டார்கள். இரவின் இறுதி மூன்றிலொரு பகுதி வந்தபோது (எழுந்து) அமர்ந்துகொண்டு வானத்தை நோக்கியவாறு'நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியின் படைப்(பு அமைப்)பிலும், இரவு - பகல் மாறி, மாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல சான்றுகள் உள்ளன'' எனும் (திருக்குர்ஆன் 03:190 வது) வசனத்தை ஓதினார்கள். பின்னர் எழுந்து (சென்று) உளூ (அங்க சுத்தி) செய்தார்கள் பல் துலக்கினார்கள். பதினொன்று ரக்அத்கள்

தொழுதார்கள். பிறகு பிலால்(ரலி) பாங்கு சொன்னபோது இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு (வீட்டிலிருந்து) புறப்பட்டுச் சென்று (மக்களுடன்)'சுப்ஹு' தொழுதார்கள்.

## 03:191 வது திருக்குர்ஆன் வசனம்

அவர்கள் நின்றவர்களாகவும், அமர்ந்தவர்களாகவும், ஒருக்களித்துப்படுத்தவர்களாகவும் அல்லாஹ்வை நினைக்கிறார்கள். மேலும், வானங்கள் மற்றும் பூமியின் படைப்புக் குறித்துச் சிந்திக்கிறார்கள். (சிந்தித்துவிட்டு இவ்வாறு பிரார்த்திக்கிறார்கள்:) எங்கள் இரட்சகனே! இதை(யெல்லாம்) நீ வீணாகப் படைக்கவில்லை. நீ தூயவன். எனவே, நரக வேதனையிலிருந்து எங்களை நீ காப்பாயாக! (எனும் 3:191 வது இறைவசனம்.

ஹதீஸ் 4570. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(ஒரு நாள்) நான் என் சிறிய தாயார் (அவர்களும் நபி(ஸல்) அவர்களின் துணைவியாருமான) மைமூனா(ரலி) வீட்டில் இரவு தங்கினேன். அப்போது நான்'நிச்சயம் (இன்று) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (இரவுத்) தொழுகையை பார்ப்பேன்'' என்று சொல்லிக் கொண்டேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தலையணையொன்று போடப்பட்டது. அவர்கள் அதன் நீள வாட்டில் (தலை வைத்து) உறங்கினார்கள். அவர்கள் (விழித்தெழுந்து) தம் முகத்திலிருந்து தூக்க(க் கலக்க)த்தைக் துடைக்கலானார்கள். பிறகு (குர்ஆனின் 3 வது அத்தியாயமான) ஆலுஇம்ரானிலிருந்து கடைசிப்பத்து வசனங்களை ஓதி முடித்தார்கள். பிறகு (கட்டித்) தொங்க விடப்பட்டிருந்த ஒரு தண்ணீர்ப் பையருகே சென்று, அதை எடுத்து'உளூ' (அங்கசுத்தி) செய்தார்கள். பிறகு தொழுவதற்காக எழுந்தார்கள். நானும் எழுந்து அவர்கள் செய்ததைப் போன்றே செய்தேன். பிறகு சென்று அவர்களுக்குப் பக்கத்தில் நின்று கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் தங்களின் (வலக்) கரத்தை என் தலை மீது வைத்தார்கள். பிறகு, என் காதைப் பிடித்துத் திருக் (உஷார்படுத்தி)னார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். மீண்டும் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். மீண்டும் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். மீண்டும் பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள் தொழுதுவிட்டு, பிறகு'வித்ர்' தொழுதார்கள்.

## 03:192 வது திருக்குர்ஆன் வசனம்

எங்கள் இரட்சகனே! நீ யாரை நரகத்தில் நுழைய வைக்கிறாயோ, நிச்சயமாக அவனை நீ இழிவுக்குள்ளாக்கிவிட்டாய். மேலும் (இத்தகைய) அக்கிரமக்காரர்களுக்கு உதவி புரிவோர் எவருமிலர் (எனும் 3:192 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4571. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் என் சிறிய தாயாரும் நபி(ஸல்) அவர்களின் துணைவியாருமான மைமூனா(ரலி) அவர்களிடம் (ஒரு நாள்) இரவு தங்கினேன். நான் தலையணையின் அகல வாட்டில் (தலைவைத்துப்) படுத்துக்கொண்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவர்களின் வீட்டாரும் அதன் நீளவாட்டில் (தலைவைத்துப்) படுத்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நடு இரவு நேரம் வரை, அல்லது அதற்குச் சற்று முன்பு வரை, அல்லது அதற்குச் சற்றுப் பின்பு வரை உறங்கினார்கள். பிறகு அவர்கள் விழித்தெழுந்து தம் முகத்திலிருந்து தம் இரண்டு கரங்களால் தூக்க(க் கலக்க)த்தைத் துடைக்கலானார்கள். பிறகு ஆலுஇம்ரான் அத்தியாயத்தின் கடைசிப் பத்து வசனங்களை (திருக்குர்ஆன் 03:190 - 200) ஓதினார்கள். பிறகு (கட்டித்) தொங்கவிடப்பட்டிருந்த ஒரு தண்ணீர்ப் பையருகே சென்று (அதைச் சாய்த்து) அதிலிருந்து'உளூ' (அங்கசுத்தி) செய்தார்கள். தம் உளூவை அவர்கள் செம்மையாகச் செய்து தொழுவதற்காக நின்றார்கள். அவர்கள் செய்தது போன்றே நானும் செய்துவிட்டுப் பிறகு அவர்களுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டேன். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்

தம் வலக்கரத்தை என் தலை மீது வைத்து என் வலக்காதைத் திருமினார்கள். (பிறகு) இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகும் இரண்டு ரக்அத்கள் தொழலானார்கள். மீண்டும் இரண்டு ரக்அத்கள் தொழலானார்கள். மீண்டும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு 'வித்ர்' தொழுதார்கள். பிறகு பாங்கு சொல்பவர் (தொழுகை அறிவிப்புச் செய்பவரான பிலால் அவர்கள் பாங்கு சொல்லிவிட்டு) தம்மிடம் வரும் வரை ஒருக்களித்துப்படுத்திருந்தார்கள். (அவர் வந்தவுடன்) எழுந்து சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு வெளியே புறப்பட்டுச் சென்று சுப்ஹுத் தொழுகையை (மக்களுடன்) தொழுதார்கள்.

## 03:193 வது திருக்குர்ஆன் வசனம்

"எங்கள் இரட்சகனே! உங்களுடைய இறைவனை நம்புங்கள் - என்று இறைநம்பிக்கைக்கு அழைப்புவிடுத்த ஒருவரின் அழைப்பினை நாங்கள் செவியேற்று, உறுதியாக நம்பிக்கை கொண்டோம். எனவே, எங்கள் இரட்சகனே! எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! இன்னும் எங்களைவிட்டுத் தீமைகளை அகற்றுவாயாக! மேலும் நல்லோருடன் எங்களை மரணிக்கச் செய்வாயாக!" எனும் (திருக்குர்ஆன் 03:193 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4572. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நான் என் சிறிய தாயாரும் நபி (ஸல்) அவர்களின் துணைவியாருமான மைமூனா (ரலி) அவர்களிடம் (ஒருநாள்) இரவு தங்கினேன். நான் தலையணையின் அகல வாட்டில் (தலைவைத்துப்) படுத்துக்கொண்டேன். இறைத்தூதர் (ஸல்) அவர்களும் அவர்களின் வீட்டாரும் அதன் நீள வாட்டில் (தலைவைத்துப்) படுத்துக்கொண்டார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நடு இரவு நேரம் வரை, அல்லது அதற்குச் சற்று முன்பு வரை, அல்லது அதற்குச் சற்றுப் பின்பு வரை உறங்கினார்கள். பிறகு, அவர்கள் விழித்தெழுந்து தம் முகத்திலிருந்து தம் கரத்தால் தூக்க(க் கலக்க)த்தைத் துடைக்கலானார்கள். பிறகு, ஆலுஇம்ரான் அத்தியாயத்தின் கடைசிப்பத்து வசனங்களை (திருக்குர்ஆன் 03:190 - 200) ஓதினார்கள். பிறகு (கட்டித்) தொங்கவிடப்பட்டிருந்த ஒரு தண்ணீர்ப் பையருகே எழுந்து சென்று (அதைச் சாய்த்து) அதிலிருந்து 'உளூ' (அங்கசுத்தி) செய்தார்கள். தம் உளூவை அவர்கள் செம்மையாகச் செய்துகொண்டு தொழுவதற்காக நின்றார்கள்.

அவர்கள் செய்தது போன்றே நானும் செய்துவிட்டுப் பிறகு அவர்களுக்குப் பக்கத்தில் நின்றுகொண்டேன். உடனே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் வலக்கரத்தை என் தலை மீது வைத்து என் வலக் காதைத் திருகலானார்கள்.

(பிறகு) இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகும் இரண்டு ரக்அத்கள் தொழலானார்கள். மீண்டும் இரண்டு ரக்அத்கள் தொழலானார்கள். மீண்டும் இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு 'வித்ர்' தொழுதார்கள்.

பிறகு பாங்கு சொல்பவர் (தொழுகை அறிவிப்புச் செய்பவரான பிலால் (ரலி) பாங்கு சொல்லிவிட்டுத்) தம்மிடம் வரும் வரை ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். (அவர் வந்தவுடன்) எழுந்து சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு, வெளியே புறப்பட்டுச் சென்று சுப்ஹுத் தொழுகையை (மக்களுடன்) தொழுதார்கள்.

## 4. 'அந்நிஸா' அத்தியாயம்

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 04:172 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'யஸ்தன்கி∴ப்' (இழிவாகக் கருதுகிறார். எனும் சொல்லுக்கு '(அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிய மறுத்து) அகந்தை கொள்கிறார்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ம்வா(யா)ம்' (ஆதாரமான ∴ அடிப்படையான) எனும் சொல்லுக்கு'உங்கள் வாழ்க்கைக்குத் தேவையான' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 04:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லஹுன்ன சபீலா' (அவர்களுக்கு ஒரு வழியை எனும் சொற்றொடரில் உள்ள'சபீல்' (வழி) என்பது, (விபசாரம் செய்த) கன்னி கழிந்த பெண்ணை கல்லெறிந்து கொல்வதையும் கன்னிப்பெண்ணுக்கு (நூறு) கசையடி வழங்குவதையும் குறிக்கிறது.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதவர்கள் கூறுகின்றனர்:
(திருக்குர்ஆன் 04:3 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'மஸ்னா, வ ஸுலாஸ, வ ருபாஅ எனும் சொற்களுக்கு இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக என்று பொருள்'ருபாஉ' (நான்கு நான்காக) என்பதைத் தாண்டி (குமாஸ் - ஐந்து ஐந்தாக, சுதாஸ் - ஆறு என்றெல்லாம்) அரபுகள் செ(ா)ல்வதில்லை.

## 04:03 வது திருக்குர்ஆன் வசனம்

அநாதை (ப் பெண்களை மணந்து அவர்)களின் விஷயத்தில் நீங்கள் நீதிசெலுத்த இயலாது என அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக நீங்கள் மணந்துகொள்ளலாம் (எனும் 4:3 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4573. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
ஒரு மனிதரின் பராமரிப்பில் அநாதைப் பெண் ஒருத்தி இருந்தாள். அவளை அவர் மணந்தார். அவளுக்குப் பேரீச்ச மரம் ஒன்று (சொந்தமாக) இருந்தது. அந்தப் பேரீச்ச மரத்திற்காகவே அந்தப் பெண்ணை அவர் தம்மிடம் வைத்திருந்தார். மற்றபடி அவளுக்கு அவரின் உள்ளத்தில் (இடம்) ஏதுமிருக்கவில்லை. எனவே, அவர் விஷயத்தில் தான்'அநாதை(ப் பெண்களை மணந்து அவர்)களின் விஷயத்தில் நீங்கள் நீதி செலுத்த இயலாது என அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக நீங்கள் மணந்து கொள்ளலாம்'' எனும் (திருக்குர்ஆன் 04:3 வது) வசனம் அருளப்பட்டது.
அறிவிப்பாளர் (ஹிஷாம் இப்னு யூசுஃப், அல்லது ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) கூறுகிறார்:
(இதை அறிவித்தபோது) உர்வா(ரஹ்), `அந்தப் பேரீச்ச மரத்திலும் அவரின் செல்வத்திலும் அப்பெண் அவருக்குப் பங்காளியாய் இருந்தாள்'' என்று அறிவித்தார் என்று எண்ணுகிறேன். 2

ஹதீஸ் 4574. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்
நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம், `அநாதை(ப் பெண்களை மணந்துகொண்டு அவர்)களின் விஷயத்தில் நீதி செலுத்த இயலாது என நீங்கள் அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக நான்கு நான்காக நீங்கள் மணந்து கொள்ளலாம்'' எனும் (திருக்குர்ஆன் 04:3 வது) இறைவசனம் குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) விளக்கமளித்தார்கள்:
என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! இந்த (வசனத்தில் கூறப்பட்டுள்ள) பெண், தன் காப்பாளரின் பொறுப்பில் வளர்கிற அவரின் செல்வத்தில் கூட்டாக இருக்கிற அநாதைப் பெண் ஆவாள். அவளுடைய செல்வத்தாலும் அழகாலும் கவரப்பட்டு, அவளுடைய காப்பாளர் அவளுடைய மஹ்ர் (விவாகக் கொடை) விஷயத்தில் நீதியுடன் நடக்காமல் - மற்றவர்கள் அவளுக்கு அளிப்பது போன்ற மஹ்ரை அவளுக்கு அளிக்காமல் - அவளை மணந்துகொள்ள விரும்புகிறார் எனும் நிலையில் இருப்பவள் ஆவாள்.
இவ்விதம் காப்பாளர்கள் தம் பொறுப்பிலிருக்கும் அநாதைப் பெண்களை அவர்களுக்கு நீதி செலுத்தாமல் அவர்களைப் போன்ற பெண்களுக்குக் கொடுக்கப்படும் மஹ்ரில் மிக உயர்ந்த மஹ்ர் எதுவோ அதை அவர்களுக்கு அளிக்காமல் அவர்களை மணந்துகொள்ள அவர்களுக்கு (இந்த இறைவசனத்தின் வாயிலாக)த் தடை விதிக்கப்பட்டது. அந்தப் பெண்களைத்

தவிரவுள்ள மற்றப் பெண்களில் தங்களுக்கு விருப்பமான பெண்களை மணந்துகொள்ளும்படி அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டது.
இந்த இறைவசனம் அருளப்பட்ட பின்பும் மக்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டு வரலாயினர். எனவே, அல்லாஹ், 'பெண்களின் விஷயத்தில் தீர்ப்பு வழங்கும்படி (நபியே!) உங்களிடம் கோருகின்றனர்‘ ' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:127 வது) வசனத்தை அருளினான்.
மேலும் (இந்த) பிந்திய வசனத்தில் (திருக்குர்ஆன் 04:127) உயர்வுக்குரிய அல்லாஹ்'மேலும் யாரை நீங்கள் நீங்கள் மணந்துகொள்ள விரும்புவதில்லையோ..!"என்று கூறியிருப்பது, உங்களில் (காப்பாளராயிருக்கும்) ஒருவர் தம் (பராமரிப்பில் இருந்துவரும்) அநாதைப் பெண்ணை அவள் செல்வமும் அழகும் குறைந்தவளாக இருக்கும்போது அவளை (மணந்து கொள்ள) விரும்பாமலிருப்பதைக் குறிப்பதாகும்.
அப்பெண்கள் செல்வத்திலும் அழம்லும் குறைந்தவர்களாக இருக்கும்போது அவர்களை மணந்துகொள்ள காப்பாளர்கள் விரும்பாமலிருந்த காரணத்தால், அவர்கள் எந்த அநாதைப் பெண்களின் செல்வத்திற்கும் அழகிற்கும் ஆசைப்பட்டார்களோ அந்தப் பெண்களையும்'நீதியான முறையிலேயே அல்லாமல் வேறு எந்த வகையிலும் மணந்துகொள்ளலாகாது' என்று அவர்களுக்குத் தடைவிதிக்கப்பட்டது.

## 04:06 வது திருக்குர்ஆன் வசனம்

(அநாதைகளைப் பராமரிப்பவராகிய) அவர் செல்வராக இருந்தால் (பராமரிப்புக்கான சன்மானம் எதையும் பெறாமல்) தவிர்த்து விடட்டும்! அவர் ஏழையாக இருந்தால் முறைப்படி உண்ணட்டும்! அநாதைகளிடம் அவர்களின் செல்வங்களை நீங்கள் ஒப்படைக்கும்போது அவர்களுக்காகச் சாட்சிகளை ஏற்படுத்திக்கொள்ளுங்கள். கணக்குக் கேட்க அல்லாஹ் போதுமானவன் (எனும் 4:6 வது வசனத் தொடர்).
(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'பிதாரன்' எனும் சொல்லுக்கு'அவசரமாக' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 04:18 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'அஃதத்னா' எனும் சொல்லுக்குத்'தயார்படுத்தி வைத்துள்ளோம்‘ ' என்று பொருள். இச்சொல்'இதாத்' (ஆயத்தம்) எனும் மூலச் சொல்லிலிருந்து'அஃப் அல்னா' எனும் வாய்ப்பாட்டில் வந்தாகும்.

ஹதீஸ் 4575. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
“அநாதைகளைப் பராமரிப்பவர் செல்வராக இருந்தால், அவர் (அநாதைகளின் சொத்துகளிலிருந்து உண்பதைத்) தவிர்த்துக் கொள்ளட்டும். அவர் ஏழையாக இருந்தால் முறைப்படி உண்ணட்டும்!"எனும் (திருக்குர்ஆன் 04:6 வது) இறைவசனம் அநாதையின் செல்வம் தொடர்பாக அருளப்பட்டது. (அதனைப்) பராமரிப்பவர் ஏழையாக இருந்தால், அதைப் பராமரிப்பதற்குப் பகரமாக நியாயமான அளவு அதிலிருந்து (எடுத்து) உண்ணலாம். (இதுதான் அதன் பொருள்.)

## 04:08 வது திருக்குர்ஆன் வசனம்

பாகப்பிரிவினை செய்துகொள்ளும்போது உறவினர்கள், அநாதைகள், ஏழைகள் ஆகியோர் வந்துவிட்டால் அவர்களுக்கும் அதிலிருந்து (சிறிது) அளியுங்கள். மேலும், அவர்களிடம் கனிவான வார்த்தைகளைக் கூறி(அனுப்பி)விடுங்கள் (எனும் 4:8 வது இறைவசனம்).

ஹதீஸ் 4576. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
பாகப்பிரிவினை செய்துகொள்ளும்போது உறவினர்கள், அநாதைகள், ஏழைகள் ஆகியோர் வந்துவிட்டால் அவர்களுக்கும் அதிலிருந்து (சிறிது) அளியுங்கள். மேலும், அவர்களிடம்

கனிவான வார்த்தைகளைக் கூறி (அனுப்பி) விடுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:8 வது) வசனம், (சட்டம்) நடை முறையிலுள்ள வசனமாகும் சட்டம் மாற்றப்பட்ட வசனமன்று.
இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## 04:11 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் உங்கள் பிள்ளைகளுடைய (பாகப்பிரிவினை) விஷயத்தில் (இவ்வாறு) கட்டளையிடுகிறான்... (என்று தொடங்கும் 4:11 வது வசனம்.)

ஹதீஸ் 4577. ஜாபிர் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களும் அபூ பக்ர் (ரலி) அவர்களும் (என்) பனுசலிமா குலத்தாரிடையே நான் (நோயுற்றுத் தங்கி) இருந்தபோது நடந்தே வந்து என்னை நலம் விசாரித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் நான் (நோயின் கடுமையால்) சுயநினைவு இழந்தவனாக இருந்த நிலையில் என்னைக் கண்டார்கள். எனவே, சிறிது தண்ணீரைக் கொண்டுவரச் சொல்லி அதிலிருந்து உளூ (அங்கசுத்தி) செய்து என் மீது தெளித்தார்கள். நான் மூர்ச்சை தெளிந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் என் செல்வத்தை என்ன செய்யவேண்டுமென்று எனக்குக் கட்டளையிடுகிறீர்கள்!" என்று கேட்டேன். அப்போதுதான் 'அல்லாஹ் உங்கள் பிள்ளைகளுடைய (பாகப்பிரிவினை) விஷயத்தில் உங்களுக்கு (இவ்வாறு) கட்டளையிடுகிறான்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:11 வது) வசனம் அருளப்பட்டது.

## 04:12 வது திருக்குர்ஆன் வசனம்

(இறந்த) உங்கள் மனைவியர்விட்டுச் சென்ற (சொத்)தில், அவர்களுக்குக் குழந்தைகள் இல்லையெனில் பாதிப் பாங்கு உங்களுக்குரியதாகும். (எனும் 4:12 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4578. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

(இறந்தவரின்) சொத்து (அவருடைய) பிள்ளைகளுக்குரியதாக இருந்தது (இறந்தவரின்) மரணசாசனம் (மூலம் கிடைப்பது) மட்டுமே தாய் தந்தையருக்கு உரியதாக இருந்து வந்தது. அல்லாஹ் அதிலிருந்து, தான் விரும்பியதை மாற்றி(யமைத்து), ஆணுக்கு இரண்டு பெண்களின் பங்கை நிர்ணயித்துத்தாய் தந்தையரில் (தலா) ஒவ்வொருவருக்கும் ஆறில் ஒரு பங்கையும் மூன்றிலொரு பங்கையும் நிர்ணயித்தான். மனைவிக்கு எட்டிலொரு பங்கையும் நான்கிலொரு பங்கையும் கணவனுக்குப் பாதிப்பங்கையும் நான்கிலொரு பங்கையும் நிர்ணயித்தான்.

## 04:19 வது திருக்குர்ஆன் வசனம்

"இறைநம்பிக்கையாளர்களே! (விதவைப்) பெண்களை நீங்கள் பலவந்தமாக அடைவது அனுமதிக்கப்பட்டதன்று. மேலும், அவர்கள் வெளிப்படையான இழிசெயல் எதையும் செய்தலான்றி, அவர்களுக்கு நீங்கள் வழங்கிய (மஹ்ர் போன்ற)வற்றில் ஒரு பகுதியைப் பறித்துக் கொள்வதற்காக அவர்களை நீங்கள் கட்டாயப்படுத்தாதீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:19 வது) இறைவசனம்.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 04:19 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள) 'லா தஃளுலூ ஹுன்ன' எனும் சொல்லுக்கு 'அவர்களைப் பலவந்தப்படுத்தாதீர்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தஊலூ' (பேதம் பாராட்டுவது ∴ நீதி தவறுவது) எனும் சொல்லுக்கு '(ஓர வஞ்சனையாக) நீங்கள் சாய்ந்துவிடுவது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'நிஹ்லா' எனும் சொல்லுக்கு 'மஹ்ர்' (மணாளன் மணாளிக்கு வழங்க வேண்டிய விவாகக் கொடை) என்று பொருள்.

ஹதீஸ் 4579. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

“(அறியாமைக் காலத்தில்) ஒருவர் இறந்துவிட்டால் அவரின் வாரிசுகளே அவரின் மனைவியின் மீது அதிக உரிமை உடையவர்களாக இருந்துவந்தனர். அவர்களில் சிலர் விரும்பினால் அவளைத் தாமே மணமுடித்துக்கொள்ளவும் செய்தார்கள். விரும்பினால் (வேறெவருக்காவது) அவளை மணமுடித்துக் கொடுத்துவிடுவார்கள். விரும்பினால் மணமுடித்துக் கொடுக்க(ாது அப்படியேவிட்டுவிடுவார்கள் வாழ அனுமதிக்க) மாட்டார்கள். ஆக, அவளுடைய வீட்டாரை விட (இறந்த கணவனின் வாரிசுகளான) அவர்கள் தாம் அவளின் மீது அதிக உரிமையுடையவர்களாக இருந்தார்கள். அப்போதுதான் இது தொடர்பாக ’இறை நம்பிக்கையாளர்களே! (விதவைப்) பெண்களை நீங்கள் பலவந்தமாக அடைவது அனுமதிக்கப்பட்டதன்று. மேலும், அவர்கள் வெளிப்படையான இழிசெயல் எதையும் செய்தாலன்றி, அவர்களுக்கு நீங்கள் வழங்கிய (மஹ்ர் போன்ற)வற்றில் ஒரு பகுதியைப் பறித்துக் கொள்வதற்காக அவர்களை நீங்கள் கட்டாயப்படுத்தாதீர்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 04:19 வது) வசனம் அருளப்பட்டது.

## 04:33 வது திருக்குர்ஆன் வசனம்

“தாய் தந்தையரும் நெருங்கிய உறவினரும்விட்டுச் சென்ற(சொத்)திலிருந்து (பங்கு பெறுகின்ற) வாரிசுக் காரர்களை நாம் ஒவ்வொருவருக்கும் நிர்ணயித்துள்ளோம். நீங்கள் யாரோடு உடன்படிக்கை செய்துள்ளீர்களோ அவர்களுக்கும் அவர்களின் பங்கை அளித்துவிடுங்கள். நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொரு பொருளையும் கண்காணிப்பவனாக இருக்கிறான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 04:33 வது) இறைவசனம்.

மஅமர்(ரஹ்) கூறினார்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)’மவாலிய’ எனும் சொல்லுக்கு’வாரிசுகள் எனும் நேசர்கள்’ என்று பொருள்.

‘ஆகதத் அய்மானுக்கும்’ (நீங்கள் யாரோடு உடன்படிக்கை செய்துள்ளீர்களோ அவர்கள்) என்பது நேச ஒப்பந்தப்படி அமையும் வாரிசுகளைக் குறிக்கிறது.

(‘மவாலி’ என்பதன் ஒருமையான)’மவ்லா’ என்பது தந்தையின் சகோதரர் மகனையும் குறிக்கும் (அடிமையை) விடுதலை செய்து, உபகாரம் புரியும் எஜமான் விடுதலை செய்யப்பட்ட அடிமை அரசன் ஆகியோரையும் குறிக்கும். மார்க்கத் தோழன் என்ற பொருளும் உண்டு.

ஹதீஸ் 4580. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இந்த (திருக்குர்ஆன் 04:33 வது) வசனத்தின் மூலத்திலுள்ள’மவாலிய’ எனும் சொல்லுக்கு’வாரிசுகள்’ என்று பொருள். இவ்வசனத்தின் விவரமாவது:

முஹாஜிர்கள் மதீனாவுக்கு வந்தபோது (ஆரம்பத்தில்) அன்சாரி (ஒருவர் இறந்துவிட்டால் அவரு)க்கு அவரின் உறவினர்கள் அன்றி (அவருடைய) முஹாஜிர் (நண்பர்) வாரிசாம் வந்தார். நபி(ஸல்) அவர்கள் முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்குமிடையே (இஸ்லாமிய) சகோதரத்துவத்தை ஏற்படுத்தியிருந்ததே இதற்குக் காரணம். (பின்னர்)’தாய் தந்தையரும் நெருங்கிய உறவினரும்விட்டுச் சென்ற(சொத்)திலிருந்து (பங்கு பெறுகின்ற) வாரிசுகளை நாம் ஒவ்வொருவருக்கும் ஏற்படுத்தியுள்ளோம்‘‘ எனும் (திருக்குர்ஆன் 04:33 வது) வசனம் அருளப்பட்டபோது இந்த நியதி (இறைவனால்) மாற்றப்பட்டுவிட்டது.

பின்னர் இப்னுஅப்பாஸ்(ரலி) கூறினார்:

நீங்கள் யாருடன் உடன்படிக்கை செய்துள்ளீர்களோ அவர்களுக்கு வாரிசுரிமை போய், உதவிபுரிதல், ஒத்துழைப்பு நல்குதல், அறிவுரை பகர்தல் ஆகியவைதாம் உள்ளன. உடன்படிக்கை செய்துகொண்டவருக்காக மரணசாசனம் (வேண்டுமானால்) செய்யலாம்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## 04:40 வது திருக்குர்ஆன் வசனம்

நிச்சயமாக அல்லாஹ் எவருக்கும் அணுவளவும் அநீதி இழைக்கமாட்டான் (எனும் 4:40 வது வசனத் தொடர்).

அதாவது அணுவின் எடையளவு கூட (மனிதர்கள் செய்த நன்மைகளுக்கான பிரதிபலனைக் குறைத்தோ, பாவங்களுக்கான தண்டனையைக் கூட்டியோ) அநீதி இழைக்கமாட்டான்.

ஹதீஸ் 4581. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் மக்கள் சிலர், 'இறைத்தூதர் அவர்களே! மறுமை நாளில் நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், 'ஆம்! (காண்பீர்கள்) மேகமே இல்லாத நண்பகல் வெளிச்சத்தில் சூரியனைப் பார்க்க ஒருவரை ஒருவர் முண்டியடிப்பீர்களா?' என்று கேட்டார்கள். மக்கள், 'இல்லை'' என்று கூறினர். நபி (ஸல்) அவர்கள், 'மேகமே இல்லாத பௌர்ணமி இரவின் வெளிச்சத்தில் நிலவைக் காண்பதற்காக நீங்கள் ஒருவரை ஒருவர் முண்டியடித்துக் கொள்வீர்களா?' என்று கேட்டார்கள். மக்கள் (அப்போதும்) 'இல்லை'' என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், 'இவ்விரண்டில் ஒன்றைப் பார்க்க நீங்கள் ஒருவரையொருவர் முண்டியடித்துக்கொள்ளாதது போன்றே மறுமை நாளில் கண்ணியமும் மகத்துவமுமிக்க அல்லாஹ்வைக் காணவும் நீங்கள் முண்டியடித்துக் கொள்ளமாட்டீர்கள்'' என்று கூறிவிட்டுப் பின்வருமாறு விளக்கினார்கள்.

மறுமை நாள் ஏற்படும்போது அழைப்பாளர் ஒருவர் 'ஒவ்வொரு சமுதாயமும் (உலக வாழ்வில்) தாம் வணங்கிக் கொண்டிருந்தவர்களைப் பின்தொடர்ந்து செல்லட்டும்'' என்றழைப்பார். அப்போது அல்லாஹ்வை விடுத்துக் கற்பனைக் கடவுளர்களையும் கற்சிலைகளையும் வணங்கிக் கொண்டிருந்தவர்கள் ஒருவர் (கூட) எஞ்சாமல் (அனைவரும்) நரக நெருப்பில் விழுவர். முடிவில் அல்லாஹ்வை வணங்கிக் கொண்டு நன்மைகளும் புரிந்து கொண்டிருந்தவர்கள், அல்லது (அல்லாஹ்வையும் வணங்கிக்கொண்டு பாவங்களும் புரிந்து வந்த) பாவிகள், மேலும் வேதக்காரர்களில் மிஞ்சியவர்கள் ஆகியோர் தவிர வேறெவரும் மீதியில்லாத நிலையில் (வேதக்காரர்களான) யூதர்கள் அழைக்கப்படுவர். அவர்களிடம் 'யாரை நீங்கள் வணங்கிக் கொண்டிருந்தீர்கள்'' என்று கேட்கப்படும். அவர்கள், 'அல்லாஹ்வின் மகன் உஸைர் அவர்களை நாங்கள் வணங்கிக் கொண்டிருந்தோம்'' என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், 'நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள். அல்லாஹ் தனக்கு எந்தத் துணைவியையும் குழந்தையையும் ஆக்கிக்கொள்ளவில்லை'' என்று கூறப்படும். மேலும், 'இப்போது உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று கேட்கப்படும். அதற்கவர்கள் 'எங்கள் இறைவா! எங்களுக்குத் தாகமாக உள்ளது. எங்களுக்கு (நீர்) புகட்டுவாயாக!''என்பார்கள். உடனே நீங்கள் தண்ணீர் உள்ள (அந்த) இடத்திற்குச் செல்லக்கூடாதா என (ஒரு திசையைச்) சுட்டிக்காட்டப்படும். பிறகு (அத்திசையிலுள்ள) நரகத்தின் பக்கம் அவர்கள் கொண்டு செல்லப்படுவார்கள். அது கானலைப் போன்று காணப்படும். அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதியைச் சிதைத்துக் கொண்டிருக்கும். அப்போது அவர்கள் அந்த நரக நெருப்பில் விழுவார்கள்.

பிறகு கிறிஸ்தவர்கள் அழைக்கப்பட்டு, 'நீங்கள் எதை வணங்கிக்கொண்டிருந்தீர்கள்?' என்று அவர்களிடம் கேட்கப்படும். அவர்கள் 'நாங்கள் அல்லாஹ்வின் மகன் மஸீஹை (ஈசாவை) வணங்கிக்கொண்டிருந்தோம்'' என்று கூறுவர். அப்போது அவர்களிடம், 'நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள். அல்லாஹ் (தனக்கு) எந்தத் துணைவியையும் குழந்தையையும் ஆக்கிக்கொள்ளவில்லை'' என்று கூறப்பட்ட பின் அவர்களைப் பார்த்து, 'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்று கேட்கப்படும். முன்பு (யூதர்கள்) கூறியது போன்று இவர்களும் கூறுவர். இறுதியில் அல்லாஹ்வை வணங்கிக் (கொண்டு நன்மைகளும் புரிந்து) கொண்டிருந்த நல்லோர், அல்லது (அல்லாஹ்வையும் வணங்கிக் கொண்டு பாவங்களும் புரிந்து வந்த) தீயோர் தவிர

வேறெவரும் மீதியில்லாத நிலையில் அவர்களிடம் அகிலத்தாரின் இரட்சகன் வருவான். (அவனின் தன்மைகளை முன்பே அறிந்திருந்ததன் மூலம் தம் உள்ளத்தில்) அவனைப் பற்றி அவர்கள் எண்ணி வைத்திருந்த தோற்றங்களில் (அடையாளம் கண்டுகொள்வதற்கு) மிக நெருக்கமானதொரு தோற்றத்தில் (அவன் வருவான்)12 அப்போது 'எதை நீங்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்? ஒவ்வொரு சமுதாயம் (உலகில்) தாம் வணங்கிக் கொண்டிருந்தவற்றைப் பின்தொடர்ந்து சென்றுகொண்டிருந்கின்றனரே!" என்று கேட்கப்படும். அவர்கள், 'உலகத்தில் நாங்கள் (வாழ்க்கையின் தேவைகளைப் பூர்த்திசெய்துகொள்வதற்காக) இந்த மக்களிடம் அதிக அளவில் தேவையுள்ளவர்களாக இருந்தும், அவர்களுடன் ஒட்டி உறவாடிக் கொண்டிராமல் அவர்களைப் பிரிந்திருந்தோம். (அப்படியிருக்க, இப்போதா அவர்களைப் பின்தொடர்வோம்?) நாங்கள் வணங்கிக் கொண்டிருந்த எங்கள் இறைவனையே நாங்கள் (இத்தருணத்தில்) எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கிறோம்'' என்று பதிலளிப்பர். அதற்கு அல்லாஹ், 'நானே உங்களுடைய இறைவன்'' என்பான். அதற்கு அவர்கள் 'நாங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்கமாட்டோம்'' என்று இரண்டு முறையோ அல்லது மூன்று முறையோ கூறுவர்.

## 04:41 வது திருக்குர்ஆன் வசனம்

ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களின் நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில்) கொண்டுவரும் போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாகக் கொண்டுவரும் போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்? (எனும் 4:41 வது இறைவசனம்.)

(திருக்குர்ஆன் 04:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'முக்தால்' எனும் சொல்லும், (இதே மூலத்திலிருந்து வந்த) 'கத்தால்' எனும் சொல்லும் ('கர்வம் பிடித்தவன்' எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

(திருக்குர்ஆன் 04:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'நத்மிஸ வுஜூஹன்' (முகங்களை மாற்றி விடுவோம்) எனும் சொற்றொடருக்கு 'அவர்களின் பிடரியைப் போன்று முகங்களையும் (தடவி) சம மட்டமாக மாற்றிவிடுவோம்' என்று பொருள்.

(இதன் இறந்தகால வினைச் சொல்லான) 'தமஸல் கி(த்)தாப்' என்பதற்கு 'எழுத்தை அழித்தான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:55 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'சஈர்' (கொழுந்து விட்டெரிகின்ற) எனும் சொல்லுக்கு 'எரிபொருள்' என்று அர்த்தம்.

ஹதீஸ் 4582. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் என்னிடம், 'எனக்கு (குர்ஆனை) ஓதிக்காட்டுங்கள்'' என்று கூறினார்கள். நான், 'தங்கள் மீதே குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக்காட்டுவதா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஏனெனில், நான் பிறரிடமிருந்து அதைக் கேட்க விரும்புகிறேன்'' என்று கூறினார்கள். எனவே, நான் அவர்களுக்கு 'அந்நிஸா' அத்தியாயத்தை ஓதிக்காட்டினேன். 'ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களின் நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில்) கொண்டுவரும் போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாகக் கொண்டுவரும் போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்?' எனும் (திருக்குர்ஆன் 04:41 வது) வசனத்தை நான் அடைந்தபோது நபி(ஸல்) அவர்கள், 'நிறுத்துங்கள்'' என்று கூறினார்கள். எனவே, நான் அவர்களுக்கு 'அந்நிஸா' அத்தியாயத்தை ஓதிக்காட்டினேன். 'ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களின் நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில்) கொண்டுவரும் போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாகக் கொண்டுவரும் போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்?' எனும் (திருக்குர்ஆன் 04:41 வது) வசனத்தை நான் அடைந்போது

நபி(ஸல்) அவர்கள், 'நிறுத்துங்கள்'' என்று கூறினார்கள். அப்போது அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைச் சொரிந்து கொண்டிருந்தன.

## 04:43 வது திருக்குர்ஆன் வசனம்

"நீங்கள் நோயாளிகளாகவோ, பயணத்திலோ இருந்தால், அல்லது உங்களில் ஒருவர் (மலஜலம் கழித்துவிட்டுக்) கழிப்பிடத்திலிருந்து வந்தால், அல்லது பெண்களை நீங்கள் தீண்டியிருந்தால் (இந்நிலைகளிலெல்லாம் துப்பரவு செய்ய) உங்களுக்குத் தண்ணீர் கிடைக்கவில்லையெனில் சுத்தமான மண்ணால்'தயம்மும்' செய்து கொள்ளுங்கள். அதாவது உங்களின் முகங்களிலும் கைகளிலும் (அதைத்) தடவிக் கொள்ளுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:43 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஸஈதன்' (மண்) எனும் சொல் பூமியின் மேல் பரப்பைக் குறிக்கிறது.

ஜாபிர்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 04: 60 வது வசனத்தில் -'அவர்கள்'தாஃகூத்தை' (விஷமியை) நிராகரித்துவிட வேண்டும் எனக் கட்டளையிடப்பட்டிருக்க, அந்த தாஃகூத்திடமே தீர்ப்புக் கேட்க அவர்கள் விரும்புகின்றனர்'' என்பதில் - உள்ள)'தாஃகூத்' எனும் சொல் சோதிடனைக் குறிக்கும். (அன்றைய அரபுகளில்)'ஜுஹைனா' குலத்தாரிடையே ஒருவனும், ஒவ்வொரு குலத்தாரிடையே ஒருவனுமாகப் பல சோதிடர்கள் இருந்தனர். அவர்களின் மீது (குறிசொல்லும்) ஷைத்தான் இறங்குவான். இத்தகைய தாஃகூத்களிடம் அவர்கள் தீர்ப்புக் கேட்டுவந்தனர்.

உமர்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 04:51 வது வசனத்திலுள்ள)'ஜிப்த்' எனும் சொல் சூனியத்தையும், 'தாஃகூத்' என்பது ஷைத்தானையும் குறிக்கும்.

இக்ரிமா(ரஹ்), 'ஜிப்த் என்பது அபிசீனிய(ர்களின்) மொழியில் ஷைத்தானைக் குறிக்கும் தாஃகூத் என்பது சோதிடனைக் குறிக்கும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4583. ஆயிஷா(ரலி) கூறினார்

(என் சகோதரி) அஸ்மாவின் கழுத்து மாலையொன்று (ஒரு பயணத்தில் என்னிடமிருந்து) தொலைந்துவிட்டது. எனவே, நபி(ஸல்) அவர்கள் அதைத் தேடுவதற்காகச் சிலரை அனுப்பிவைத்தார்கள். அப்போது தொழுகை (நேரம்) வந்துவிட்டது. அப்போது அவர்கள் உளூவுடன் (அங்க சுத்தியுடன்) இருக்கவில்லை. (உளூச் செய்வதற்கு) தண்ணீரும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. எனவே, உளூ இன்றியே அவர்கள் தொழுதார்கள். அப்போதுதான் உயர்ந்தோனாகிய அல்லாஹ் - தயம்மும் (பற்றிய சட்டத்தைக் கூறும்) இறைவசனத்தை - அருளினான்.

## 04:59 வது திருக்குர்ஆன் வசனம்

இறைநம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து நடப்பீராக! (அவ்வாறே) அவனுடைய தூதருக்கும், உங்களில் பொறுப்பு உள்ளோருக்கும் கீழ்ப்படிந்து நடப்பீராக! (எனும் 4:59 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4584. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

"அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்து நடப்பீராக! (அவ்வாறே) அவனுடைய தூருக்கும், உங்களில் பொறுப்பு உள்ளோருக்கும் கீழ்ப்படிந்து நடப்பீராக'' எனும் (திருக்குர்ஆன் 04:59 வது) வசனம், நபி(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு ஹுதாஃபா இப்னு கைஸ் இப்னி அதீ(ரலி) அவர்களை (தளபதியாக்கி) ஒரு படைப்பிரிவினருடன் அனுப்பியபோது இறங்கியது.

## 04:65 வது திருக்குர்ஆன் வசனம்

இல்லை! (நபியே!) உம் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட (சண்டை சச்சரவு முதலிய)வற்றில் உம்மை நீதிபதியாக ஏற்ற பின்னர் நீர் அளிக்கிற தீர்ப்புக் குறித்துத் தம் உள்ளங்களில் எத்தகைய அதிருப்தியும் கொள்ளாமல் முற்றிலும் அதற்கு இணங்கி நடக்காதவரை அவர்கள் நம்பிக்கை கொண்டவர்களாக மாட்டார்கள் (எனும் 4:65 வது இறைவசனம்).

ஹதீஸ் 4585. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) ஸுபைர்(ரலி) அவர்களுக்கு 'ஹர்ரா' எனுமிடத்திலிருந்த கால்வாய் ஒன்றின் விஷயத்தில் அன்சாரிகளில் ஒருவருடன் தகராறு ஏற்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'ஸுபைரே! (முதலில் உங்கள் தோப்புக்கு) நீங்கள் நீர் பாய்ச்சிக் கொள்ளுங்கள். பிறகு உங்கள் பக்கத்திலிருப்பவருக்குத் தண்ணீரை அனுப்புங்கள்'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) அந்த அன்சாரித் தோழர், 'இறைத்தூதர் அவர்களே! அவர் உங்கள் அத்தை (ஸஃபிய்யா பின்த் அப்தில் முத்தலிபின்) மகன் ஆயிற்றே! (எனவேதான் அவருக்குச் சாதகமாக தீர்ப்பளிக்கிறீர்கள்)'' என்று கூறினார். இதைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்களின் முகம் நிறம் மாறி (கோபத்தில் சிவந்து)விட்டது. பிறகு நபி(ஸல்) அவர்கள் (ஸுபைர்(ரலி) அவர்களைப் பார்த்து), 'ஸுபைரே! (உங்கள் மரங்களுக்கு) நீர் பாய்ச்சிக் கொள்ளுங்கள். பிறகு, வரப்புகளைச் சென்றடையும் வரை தண்ணீரைத் தடுத்து நிறுத்துங்கள். பிறகு உங்கள் பக்கத்திலிருக்கும் தோப்புக்காரருக்குத் தண்ணீரைவிட்டு விடுங்கள்'' என்று கூறினார்கள். அந்த அன்சாரித்தோழர் தம்மைக் கோபபப்படுத்தியபோது நபி(ஸல்) அவர்கள் ஸுபைர்(ரலி) அவர்களின் உரிமையைத் தெளிவான தீர்ப்பின் மூலம் முழுமையாக வழங்கிவிட்டார்கள். அதற்கு முன் அவர்கள் இருவருக்குமே சகாயம் கிடைக்கும் வகையில் ஒரு தீர்ப்பைச் சுட்டிக்காட்டியிருந்தார்கள்.

ஸுபைர்(ரலி) கூறினார்:

குர்ஆனின்'இல்லை! (நபியே!) உம் இறைவன் மீது சத்தியமாக! அவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட (சண்டை சச்சரவு முதலிய)வற்றில் உம்மை நீதிபதியாக ஏற்ற பின்னர் நீர் அளிக்கிற தீர்ப்புக்குறித்துத் தம் உள்ளங்களில் எத்தகைய அதிருப்தியும் கொள்ளாமல் முற்றிலும் அதற்கு இணங்கி நடக்காத வரை அவர்கள் நம்பிக்கைகொண்டவர்களாக மாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:65 வது) வசனம் இது தொடர்பாக இறங்கிற்று என்றே எண்ணுகிறேன்.

## 04:69 வது திருக்குர்ஆன் வசனம்

யார் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படிந்து நடக்கிறார்களோ அவர்கள், அல்லாஹ்வின் அருளைப் பெற்ற நபிமார்கள், உண்மையாளர்கள், உயிர்த் தியாகிகள், மற்றும் உத்தமர்கள் ஆகியோருடன் (மறுமையில்) இருப்பார்கள். இவர்கள் தாம் சிறந்த தோழர்கள் (எனும் 4: 69 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4586. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'(இறுதியாக) நோயுற்றுவிடுகிற எந்த ஓர் இறைத்தூதருக்கும் உலக வாழ்வு - மறுமை வாழ்வு ஆகிய இரண்டில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு வழங்கப்படாமல் இருந்ததில்லை'' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் (உயிர்) கைப்பற்றப்பட்டார்களோ அந்த நோயின்போது அவர்களின் குரல் கடுமையாகக் (கட்டிக் கொண்டு) கம்மிப் போய்விட்டது. அப்போது அவர்கள், 'அல்லாஹ் யார் மீது தன் அருட்கொடைகளைப் பொழிந்தானோ அந்த இறைத்தூதர்கள், உண்மையாளர்கள், உயிர்த் தியாகிகள், உத்தமர்களுடன் (என்னை சொர்க்கத்தில் சேர்த்தருள்)'' என்று சொல்லிக்கொண்டிருந்ததை கேட்டேன். (இதிலிருந்து) நபி(ஸல்) அவர்களுக்கும் (அந்த இறுதி) வாய்ப்பு வழங்கப்பட்டுவிட்டது என்பதை நான் அறிந்துகொண்டேன்.

## 04:75 வது திருக்குர்ஆன் வசனம்

“(அடக்கி ஒடுக்கப்பட்டு) பலவீனர்களாக்கப்பட்ட ஆண்கள், பெண்கள், மற்றும் குழந்தைகள் ஆகியோருக்காக இறைவழியில் நீங்கள் போர் புரியாமல் இருக்க உங்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்களோ’ எங்கள் இறைவனே! அக்கிரமக்காரர்கள் வசிக்கும் இவ்வூரிலிருந்து எங்களை வெளியேற்றிடுவாயாக! இன்னும் எங்களுக்குப் பாதுகாவலரையும் உதவியாளரையும் உன்னிடமிருந்து வழங்குவாயாக! எனப் பிராத்தித்துக்கொண்டிருக்கின்றனர்‘ ` எனும் (திருக்குர்ஆன் 04:75 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4587. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
நானும் என் தாயாரும் (மக்காவில் இஸ்லாத்தை ஏற்றிருந்த) ஒடுக்கப்பட்ட பலவீனமான பிரிவினரைச் சேர்ந்தவர்களாயிருந்தோம்.

ஹதீஸ் 4588. இப்னு அபீ முலைக்கா (அப்துல்லாஹ் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்கள் கூறினார்
இப்னுஅப்பாஸ்(ரலி), `எந்த உத்தியையும் கையாளமுடியாமல், எந்த வழியும் தெரியாமல் பலவீனமான நிலையில் இருக்கும் ஆண்கள், பெண்கள் மற்றும் குழந்தைகளைத் தவிர‘ ` எனும் (திருக்குர்ஆன் 04:98 வது) இறைவசனத்தை ஓதிவிட்டு, `(ஹிஜ்ரத் செய்ய இயலாததால்) அல்லாஹ் மன்னிப்பளித்த (பலவீனமான)வர்களில் நானும் என் தாயாரும் இருந்தோம்‘ ` என்று கூறினார்கள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 04:90 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஹஸிரத்’ (மனம் ஒப்பாது) எனும் சொல்லுக்கு, `(அவர்களின் உள்ளங்கள் இடம் கொடுக்காமல்) குறும்க்கொண்டன’ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 04:135 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’தல்வூ’ (தவறாக சாட்சியம் கூறினால்) எனும் சொல்லுக்கு’நீங்கள் (உண்மைக்குப் புறம்பாக) சாட்சியம் சொல்ல நாக்கைச் சுழற்றினால்‘ ` என்று பொருள்.
மற்றவர்கள் கூறுகின்றனர்:
(திருக்குர்ஆன் 04:100 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’முரா∴கம்’ எனும் சொல்லுக்கு’ஹிஜ்ரத் செல்லுமிடம்’ (தஞ்சம் புகுமிடம்) என்று பொருள். (இதன் இறந்த காலவினைச் சொல்லான)’ரா∴கமத்து’ எனும் சொல்லுக்கு’நான் என் சமுதாயத்தைத் துறந்துவிட்டேன்‘ ` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 04:103 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’மவ்கூத்’ எனும் சொல்லுக்கு’அவர்களுக்கு நேரம் குறிக்கப்பட்ட (கடமை)’ என்று பொருள்.

## 04:48 வது திருக்குர்ஆன் வசனம்

உங்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது? நயவஞ்சகர்களின் விஷயத்தில் இரண்டு (வேறு கருத்துகள் கொண்ட) குழுவினராய் ஆகிவிட்டீர்களே! அல்லாஹ்வோ அவர்களை, அவர்கள் சம்பாதித்துக்கொண்ட (தீய)வற்றின் காரணத்தால் தலைகுனியச் செய்துவிட்டான் (எனும் 4:48 வது வசனத்தொடர்).
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(இந்த’ வசனத்தின் மூலத்திலுள்ள)’அர்கஸ’ எனும் சொல்லுக்குப்’பிரித்துத் தனித்தனியாக அவர்களின் கூட்டமைப்பைச் சிதற அடித்துவிட்டான்’ என்று பொருள்.
‘∴பிஅத்’ எனும் சொல்லுக்குக்’குழுவினர்’ என்று பொருள்.

ஹதீஸ் 4589. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) 4:88 வது இறைவசனம் குறித்துக் கூறினார்

(உஹுதுப் போருக்காக) நபி(ஸல்) அவர்களுடன் (சென்று) இருந்தவர்களில் சிலர் (நயவஞ்சகர்கள்) உஹுதிலிருந்து (வழியிலேயே) திரும்பி வந்துவிட்டார்கள். இவர்களின் விஷயத்தில் (என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்பது தொடர்பாகக் கருத்து வேறுபட்டு) மக்கள் இரண்டு (வேறு கருத்துகள் கொண்ட) குழுவினராய் ஆகிவிட்டீர்களே! அல்லாஹ்வோ அவர்களை, அவர்கள் சம்பாதித்துக் கொண்ட(தீய)வற்றின் காரணத்தால் தலைகுனியச் செய்துவிட்டான்'' எனும் (திருக்குர்ஆன் 04:88 வது) இறைவசனம் அருளப்பட்டது.

மேலும், நபி(ஸல்) அவர்கள், 'மதீனா தூய்மையானது நெருப்பு, வெள்ளியின் அழுக்கை நீக்கிவிடுவதைப்போல் அது தீமையை அகற்றிவிடும்'' என்று கூறினார்கள். 20

அமைதியளிக்கக்கூடிய அல்லது அச்சம் தரக்கூடிய ஏதேனும் செய்தி அவர்களிடம் வந்தால் அதனை அவர்கள் பரப்பிவிடுகிறார்கள். ஆனால், அதனைத் தூதரிடமும் அவர்களில் பொறுப்புள்ளவர்களிடமும் தெரிவித்திருப்பார்களேயானால், நுணும் ஆராயும் திறனுடையவர்கள் அ(ச்செய்தியின் உண்மை நிலை)தனை நன்கு அறிந்திருப்பார்கள் (எனும் 4:82 வது வசனத் தொடர்).

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'அஃதாஊ' எனும் சொல்லுக்குப்'பரப்பிவிடுவார்கள்' என்று பொருள். 'யஸ்தன்பித்தூன்' எனும் சொல்லுக்கு'ஆராய்ந்து முடிவு செய்கிறார்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:86 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹஸீப்' எனும் சொல்லுக்குப்'போதுமானவன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04: 117 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இனாஸ்' எனும் சொல் கல், மண் போன்ற உயிரற்ற பொருட்களைக் குறிக்கும்.'மரீத்' எனும் சொல்லுக்கு'(தீமையில்) பிடிவாதமாக இருப்பவன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:119 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபல்யுபத்திகுன்ன' எனும் சொல்லுக்கு'அவர்கள் (தம் கால்நடைகளின் காதுகளைக்) கிழித்துத் துண்டிப்பார்கள்'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 04:122 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கீல்' எனும் பதமும்'கவ்ல்' எனும் பதமும் (பேச்சு, சொல் எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

(திருக்குர்ஆன் 04:155 வது வசனத்தின் மூலத்திலுள்ள'தபஅ' எனும் சொல்லின் செயப்பாட்டு வினைச்சொல்லான)'துபிஅ' எனும் சொல்லுக்கு'முத்திரையிடப்பட்டது' என்று பொருள்.

## 04:93 வது திருக்குர்ஆன் வசனம்

ஓர் இறைநம்பிக்கையாளரை வேண்டுமென்றே கொலை செய்கிறவனுக்குரிய தண்டனை நரகமேயாகும் (எனும் 4:93 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4590. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

இது (திருக்குர்ஆன் 04:93 வது வசனம், இராக்கைச் சேர்ந்த) கூஃபாவாசிகள் (அதன் சட்டம் மாற்றப்பட்டுவிட்டதா இல்லையா என்பது தொடர்பாகக்) கருத்து வேறுபாடு கொண்டிருந்த வசனமாகும். நான் இந்த வசனம் குறித்துக் கேட்பதற்காக இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்று அதைப்பற்றிக் கேட்டேன். அவர்கள், 'ஓர் இறைநம்பிக்கையாளரை வேண்டுமென்றே கொலை செய்கிறவனுக்குரிய தண்டனை நரகமேயாகும்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 04:93 வது) வசனம் அருளப்பட்டது. இதுதான் (இறைநம்பிக்கையாளரைக் கொலை செய்யும் குற்றம் தொடர்பாக) இறங்கிய கடைசி வசனமாகும் இதை எதுவும் மாற்றிவிடவில்லை'' என்று கூறினார்கள்.

## 04:94 வது திருக்குர்ஆன் வசனம்

(தம்மை இறைநம்பிக்கையாளர் என்று உங்களுக்குக் காட்ட) உங்களுக்கு சலாம் சொல்பவரிடம், நீ இறைநம்பிக்கை கொண்டவன் அல்லன் என்று சொல்லாதீர்கள் (எனும் 4:94 வது வசனத் தொடர்).
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'சலாம்' எனும் சொல்லுக்கு (இன்னும் இரண்டு வகையான ஓதுதல் முறையில் வந்துள்ள) சில்கி, சலம் ஆகிய சொற்களும் ('சாந்தி' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.

ஹதீஸ் 4591. இப்னு அப்பாஸ்(ரலி) 4:94 வது வசனம் குறித்துக் அறிவித்தார்
ஒருவர் தன்னுடைய சிறு ஆட்டு மந்தை(யை மேய்த்துக் கொண்டு அதன்) உடனிருந்தார். அப்போது (ஒரு படைப்பிரிவில் வந்த) முஸ்லிம்கள் அவரை (வழியில்) கண்டனர். அவர், `அஸ்ஸலாமு அலைக்கும்'' (உங்களின் மீது சாந்தி உண்டாகட்டும்) என்று கூறினார். அவர்கள் அவரைக் கொன்றுவிட்டார்கள். அவரின் ஆட்டுமந்தையையும் எடுத்துக் கொண்டனர். அப்போது இது தொடர்பாக (பின்வரும்) வசனத்தை அல்லாஹ் அருளினான். 'இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் இறைவழியில் (அறப்போருக்காக) புறப்படுவீர்களாயின் (பகைவனையும் நண்பனையும்) தெளிவாகப் பிரித்தறிந்து கொள்ளுங்கள். இவ்வுலகப் பொருளை நீங்கள் அடைய விரும்பி, (தம்மை இறை நம்பிக்கையாளர் என்று காட்ட) உங்களுக்கு சலாம் சொல்பவரிடம், நீ இறைநம்பிக்கை கொண்டவன் அல்லன் என்று சொல்லாதீர்கள். (திருக்குர்ஆன் 04:94) (இங்கே'உலகப் பொருள்' என்பது) அந்த ஆட்டு மந்தைதான்.
அறிவிப்பாளர் அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்கள்.
இப்னு அப்பாஸ்(ரலி), (இந்த வசனத்தில்'சலாம்' எனும் வார்த்தையை) சலாம் என்றே ஓதினார்கள். (சலம் என்று உச்சரிக்கவில்லை.)

## 04:95 வது திருக்குர்ஆன் வசனம்

இறைநம்பிக்கையாளர்களில் - இடையூறு உள்ளவர்கள் தவிர - அறப்போரில் கலந்து கொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாகமாட்டார்கள் (எனும் 4:95 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4592. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்
நான் மர்வான் இப்னு ஹகமைப் பள்ளி வாசலில் பார்த்தேன். அவரை நோக்கிச் சென்று அவருக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டேன். அப்போது அவர், ஸைத் இப்னு ஸாபித்(ரலி) (பின்வருமாறு) தமக்குத் தெரிவித்ததாக எங்களிடம் கூறினார்:
“இறை நம்பிக்கையாளர்களில் அறப்போரில் கலந்துகொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாக மாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:95 வது) வசனத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நான் எழுதிப் பதிவு செய்வதற்காக) என்னிடம் ஓதிக்காட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் என்னிடம் ஓதிக்காட்டிக் கொண்டிருக்கும்போது, இப்னு உம்மி மகத்தூம்(ரலி) வந்து, `அதல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வின் மீதாணையாக! என்னால் அறப்போர் புரிய முடிந்திருந்தால் அறப்போர் புரிந்திருப்பேன்'' என்று கூறினார்கள். அவர் கண் பார்வையற்றவராக இருந்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தொடை என் தொடை மீதிருக்க, அவர்களின் மீது அல்லாஹ் (வேத அறிவிப்பை) அருளினான். எனவே, என் தொடை நசுங்கிப் போய்விடுமோ என்று நான் அஞ்சும் அளவிற்கு நபி(ஸல்) அவர்களின் தொடை என் மீது கனத்து (அழுத்தத் தொடங்கி)விட்டது. பிறகு, அந்நிலை அகன்றது. அப்போதுதான் அல்லாஹ்'இடையூறு உள்ளவர்களைத் தவிர' எனும் சொற்றொடரை (மேற்கண்ட வசனத்துடன் சேர்த்து) அருளியிருந்தான்.

ஹதீஸ் 4593. பராஉ (ரலி) அறிவித்தார்
“இறை நம்பிக்கையாளர்களில் அறப்போரில் கலந்துகொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாக மாட்டார்கள்‘ ` எனும் (திருக்குர்ஆன் 04:95 வது) இறைவசனம் அருளப்பட்டபோது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஸைத் இப்னு ஸாபித் (ரலி) அழைக்க அவர் (வந்து) அதனை எழுதினார். அப்போது இப்னு உம்மி மக்த்தூம் (ரலி) வந்து தம் ஊனத்தைப் பற்றி முறையிட்டார். அப்போதுதான் அல்லாஹ் ’இடையூறு உள்ளவர்களைத் தவிர’ எனும் சொற்றொடரை அருளினான்.

ஹதீஸ் 4594. பராஉ (ரலி) அறிவித்தார்
“இறை நம்பிக்கையாளர்களில் அறப்போரில் கலந்துகொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாக மாட்டார்கள்‘ ` எனும் (திருக்குர்ஆன் 04:95 வது) இறைவசனம் அருளப்பட்டபோது நபி (ஸல்) அவர்கள், `இன்னாரைக் கூப்பிடுங்கள்‘ ` என்று கூறினார்கள். (ஸைத் இப்னு ஸாபித்) அவர்கள், மைக்கூட்டையும் ’பலகையையும்’ அல்லது ’அகலமான எழும்பையும்’ தம்முடன் கொண்டுவந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ’இந்த (திருக்குர்ஆன் 04:95 வது) வசனத்தை எழுதிக் கொள்ளுங்கள்‘ ` என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களுக்குப் பின்புறம் இப்னு உம்மி மக்த்தூம் (ரலி) இருந்தார்கள். அவர்கள், `இறைத்தூதர் அவர்களே! நான் கண்பார்வையற்றவன் ஆயிற்றே!”என்று கேட்டார்கள். அப்போது அதே இடத்தில் ’இறைநம்பிக்கையாளர்களில் இடையூறு உள்ளவர்கள் தவிர அறப்போரில் கலந்துகொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாகமாட்டார்கள்‘ ` என்ற இறைவசனம் (திருக்குர்ஆன் 04:95 முழுமையாக) இறங்கிற்று.

ஹதீஸ் 4595. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்
“இறைநம்பிக்கையாளர்களில் அறப்போரில் கலந்துகொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாக மாட்டார்கள்‘ ` எனும் வசனம் (திருக்குர்ஆன் 04:95) பத்ருப்போர் பற்றியும், பத்ருக்காகப் புறப்பட்டவர்கள் பற்றியும் குறிப்பிடுகிறது.

## 04:97 வது திருக்குர்ஆன் வசனம்

“(மார்க்கக் கடமைகளைச் சரிவர நிறைவேற்ற முடியாதவாறு இறைமறுப்பாளர்களின் ஊரில் இருந்துகொண்டு) தமக்குத் தாமே அநீதி இழைத்துக்கொண்டிருந்தவர்களின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும்போது, (அவர்களை நோக்கி, `மார்க்கக் கடமைகளை நிறைவேற்றமுடியாத இந்த ஊரில்) நீங்கள் எவ்வாறு இருந்தீர்கள்?’ என வினவுவார்கள். அதற்கு அவர்கள், `பூமியில் நாங்கள் பலவீனர்களாய் இருந்தோம்‘ ` என பதிலளிப்பார்கள். ’அல்லாஹ்வின் பூமி விசாலமான தாய் இருக்கவில்லையா? அதில் நீங்கள் நாட்டைத் துறந்து (ஹிஜ்ரத்) சென்றிருக்க வேண்டாமா?’ என வானவர்கள் வினவுவார்கள். இவர்களின் இருப்பிடம் நரகம் தான். மேலும், அது மோசமான இருப்பிடமாகும்‘ ` எனும் (திருக்குர்ஆன் 04:97 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4596. முஹம்மத் இப்னு அப்திர் ரஹ்மான் அபுல் அஸ்வத் (ரஹ்) அறிவித்தார்
மதீனாவாசிகள் ஒரு படைப் பிரிவை அனுப்பிவிடவேண்டும் எனக் கட்டாயப்படுத்தப்பட்டனர். 25 அந்தப் படைப் பிரிவில் என் பெயரும் பதிவுசெய்யப்பட்டது. அப்போதுதான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான இக்ரிமா (ரஹ்) அவர்களைச் சந்தித்தேன். அவர்களிடம் இதைப் பற்றித் தெரிவித்தேன். அவர்கள் என்னை வன்மையாகத் தடுத்தார்கள். பிறகு தமக்கு இப்னு அப்பாஸ் (ரலி) (பின்வருமாறு) அறிவித்ததாகக் கூறினார்கள்:

(நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) முஸ்லிம்களில் சிலர் இணைவைப்பாளர்களுடன் இருந்தனர். அவர்கள் (பத்ருப்போரில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கெதிராக இணைவைப்பாளர்களின் கூட்டத்தை அதிகப்படுத்தி(க் காட்டக் காரணமாக இருந்த)னர். எனவே, (முஸ்லிம்களின் அணியிலிருந்து அவர்களை நோக்கி) எய்யப்படும் அம்பு செல்லும். அது அவர்களில் ஒருவரைத் தாக்கிக் கொன்றுவிடும் அல்லது அவர் (வாளால்) அடிபட்டுக் கொல்லப்படுவார். (இது தொடர்பாகவே) அல்லாஹ் இவ்வசனத்தை (திருக்குர்ஆன் 04:97) அருளினான்: (மார்க்கக் கடமைகளைச் சரிவர நிறைவேற்ற முடியாதவாறு இறை மறுப்பாளர்களின் ஊரில் இருந்துகொண்டு) தமக்குத்தாமே அநீதி இழைத்துக்கொண்டிருந்தவர்களின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும்போது (அவர்களை நோக்கி' இந்த ஊரில்) நீங்கள் எவ்வாறு இருந்தீர்கள்?' என வினவுவார்கள். அதற்கு அவர்கள், 'பூமியில் நாங்கள் பலவீனர்களாய் இருந்தோம்'' என பதிலளிப்பார்கள். 'அல்லாஹ்வின் பூமி விசாலமானதாய் இருக்கவில்லையா? அதில் நீங்கள் நாட்டைத் துறந்து (ஹிஜ்ரத்) சென்றிருக்க வேண்டாமா?' என வானவர்கள் வினவுவார்கள். இவர்களின் இருப்பிடம் நரகம் தான். மேலும், அது மோசமான இருப்பிடமாகும். இதை அபுல் அஸ்வத்(ரஹ்) அவர்களிடமிருந்து ஸைத் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

## 04:98 வது திருக்குர்ஆன் வசனம்

ஆனால், எவ்வித உபாயத்தையும் மேற்கொள்ள முடியாமல், எந்த வழிவகையும் பெறாமல் உண்மையிலேயே இயலாதவர்களாயிருக்கும் ஆண்கள், பெண்கள் மற்றும் குழந்தைகளைத் தவிர! (எனும் 4:98 வது வசனம்.)

ஹதீஸ் 4597. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்

"இயலாதவர்களாயிருக்கும் ஆண்கள், பெண்கள் மற்றும் குழந்தைகளைத் தவிர!"எனும் (திருக்குர்ஆன் 04:98 வது) இறைவசனத்தைப் பற்றி இப்னு அப்பாஸ்(ரலி) பின் வருமாறு) கூறினார்கள்: இயலாதவர்கள் என அல்லாஹ் அறிவித்தவர்களில் என் தாயார் (உம்முல் ஃபள்ல்) அவர்களும் ஒருவராயிருந்தார்.

## 04:99 வது திருக்குர்ஆன் வசனம்

"அத்தகையோரின் பிழைகளை அல்லாஹ் பொறுக்கக் கூடும். அல்லாஹ் மிக்க பிழை பொறுப்பவனும் மன்னிப்பு வழங்குபவனும் ஆவான்' எனும் (திருக்குர்ஆன் 04:99 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4598. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இஷா தொழுது கொண்டிருந்தபோது, 'சமி அல்லாஹுலிமன் ஹமிதஹ்' என்று சொல்லிவிட்டு, பிறகு சஜ்தா செய்வதற்கு முன்பாக, 'இறைவா! (மக்காவில் சிக்கிக் கொண்டிருக்கும்) அய்யாஷ் இப்னு அபீ ரபீஆவைக் காப்பாற்றுவாயாக! இறைவா! ஸலமா இப்னு ஹிஷாமைக் காப்பாற்றுவாயாக! இறைவா! வலீத் இப்னு வலீதைக் காப்பாற்று வாயாக! இறைவா! இறைநம்பிக்யாளர்களில் ஒடுக்கப்பட்டவர்களைக் காப்பாற்றுவாயாக! இறைவா! முளர் குலத்தாரின் மீது உன் பிடியை இறுக்கிக் கடுமைப்படுத்துவாயாக! இறைவா! யூசுஃப்(அலை) அவர்களின் சமுதாயத்தாருக்கு அளித்த பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் பஞ்சம் நிறைந்த ஆண்டுகளை அளிப்பாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.

## 04:102 வது திருக்குர்ஆன் வசனம்

"(ஆயினும்,) மழையின் காரணமாக உங்களுக்குச் சிரமம் ஏற்பட்டால், அல்லது நீங்கள் நோயுற்றவர்களாயிருந்தால் ஆயுதங்களைக் கீழே வைத்துவிடுவதில் உங்களின் மீது தவறேதுமில்லை. ஆனாலும் எச்சரிக்கையாகவே இருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:102 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4599. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
இப்னு அப்பாஸ்(ரலி) '(ஆயினும்,) மழையின் காரணமாக உங்களுக்குச் சிரமம் ஏற்பட்டால், அல்லது நீங்கள் நோயுற்றவர்களாயிருந்தால் ஆயுதங்களைக் கீழே வைத்துவிடுவதில் உங்களின் மீது தவறேதுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 04:102 வது) வசனத்திற்கு விளக்கமளிக்கும்போது, 'அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) காயமுற்றுக் கிடந்தார்கள். (அப்போது இந்த வசனம் அருளப்பட்டது)'' என்று கூறினார்கள்.
"(நபியே!) பெண்களின் விஷயத்தில் தீர்ப்பு வழங்கும்படி உங்களிடம் அவர்கள் கோருகின்றனர். நீங்கள் கூறுங்கள்: அவர்களின் விஷயத்தில் அல்லாஹ் உங்களுக்குத் தீர்ப்பு வழங்குகிறான். மேலும், எந்த அநாதைப் பெண்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட (மஹ்ர் போன்ற)வற்றை நீங்கள் கொடுக்காமல், அவர்களை நீங்களே திருமணம் செய்து கொள்ள விரும்புகிறீர்களோ அந்தப் பெண்களின் விஷயத்தில் (முன்பிருந்தே) உங்களுக்கு இவ்வேதத்தில் எடுத்துரைக்கப்பட்டு வருகிற சட்டமும் (உங்களுக்குத் தீர்ப்பளிக்கிறது.)'' எனும் (திருக்குர்ஆன் 04:127 வது) வசனத் தொடர்.
ஹதீஸ் 4600. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்
ஆயிஷா(ரலி) இந்த வசனத்திற்கு (திருக்குர்ஆன் 04:127) விளக்கமளிக்கையில் (பின்வருமாறு) கூறினார்கள். (அறியாமைக் காலத்தில்) ஒருவர் தம்மிடமுள்ள அநாதைப் பெண்ணுக்குத் தாமே காப்பாளராகவும், வாரிசாகவும் இருந்து வருவார். பேரீச்ச மரம் உள்பட அவரின் செல்வத்தில் அவள் பங்காளியாக இருந்துவரும் நிலையில் அப்பெண்ணை அவரே மணந்துகொள்ள விரும்புவார். மேலும், அவளை வேறோர் ஆணுக்கு மணமுடித்துக் கொடுத்து, அவள் (ஏற்கெனவே) பங்காளியாக இருப்பதன் மூலம் அவ(ளுக்குக் கணவனாக வருகிறவ)னும் தம் சொத்தில் பங்காளியாக மாறுவதை அவர் (காப்பாளர்) வெறுத்துவந்தார். எனவே, அவளை (வேறொருவன் மணமுடிக்க விடாமல்) காப்பாளர் தடுத்துவந்தார். அப்போதுதான் 'ஒரு பெண் தன்னிடம் கணவன் நல்ல முறையில் நடந்து கொள்ள மாட்டான் என்றோ, புறக்கணித்து விடுவான் என்றோ அஞ்சினால் கணவன் - மனைவி இருவரும் (தம் உரிமைகளில் சிலவற்றை ஒருவருக்கொருவர்விட்டுக் கொடுத்து) தமக்கிடையே சமாதானம் செய்துகொள்வதில் தவறேதும் இல்லை (எந்நிலையிலும்) சமாதானம் செய்து கொள்வதே நலம் தரக்கூடியதாகும்'' எனும் (திருக்குர்ஆன் 04:128 வது) வசனம் அருளப்பட்டது.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 04:35 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஷிகாக்' எனும் சொல்லுக்குப்'பரஸ்பரப் பிணக்கு' என்று பொருள்.

## 04:128 வது திருக்குர்ஆன் வசனம்

மனித உள்ளங்கள் உலோபித்தனத்திற்கு(ம் குறுகிய எண்ணத்திற்கும் விரைவாக உட்பட்டுவிடுகின்றன (எனும் 4:128 வது வசனத் தொடர்).
(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'அஷ்ஷுஹ்ஹு' எனும் சொல், மனிதன் ஒன்றின் மீது பேராசைகொண்டு அதிகமாக விரும்புவதைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 04:129 வது வசனத்திலுள்ள)'கல்மு அல்லகா' (அந்தரத்தில் தொங்கவிடப்பட்டவள் போன்று) எனும் சொல், அவள் விதவையாகவும் இல்லாமல் கணவன் உடையவளாகவும் இல்லாமல் கணவன் உடையவளாகவும் இல்லாமல் இருக்கும் (தொங்கு) நிலையைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 04:128 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நுஷுஸ்' (நல்ல விதமாக நடந்து கொள்ளாமை) எனும் சொல்லுக்குச்'சினம் கொள்ளல்' என்று பொருள்.
ஹதீஸ் 4601. ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அறிவித்தார்

ஆயிஷா(ரலி), `ஒரு பெண் தன்னிடம் கணவன் நல்ல முறையில் நடந்துகொள்ள மாட்டான் என்றோ, புறக்கணித்துவிடுவான் என்றோ அஞ்சினால், கணவன் - மனைவி இருவரும் (தம் உரிமைகளில் சிலவற்றை ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து) தமக்கிடையே சமாதானம் செய்துகொள்வதில் தவறேதுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 04:128 வது) வசனம் குறித்துக் கூறுகையில், `தம்மிடம் இருந்துவரும் மனைவியுடன் முறையாக இல்லறம் நடத்த விரும்பாத ஓர் ஆண் அவளைப் பிரிந்துவிட விரும்புகிறான். (இந்நிலையில் கணவனிடம்) அவள்'என்னுடைய (செலவுத் தொகை உள்ளிட்ட) உரிமையை உனக்கு நான் விட்டுக்கொடுத்து விடுகிறேன் (என்னை விவாகாரத்துச் செய்து விடாமல் தொடர்ந்து மனைவியாகவே இருக்க அனுமதிக்கவேண்டும்)' என்று கோருகிறாள். இது தொடர்பாகவே இவ்வசனம் (திருக்குர்ஆன் 04:128) இறங்கிற்று'' என்று குறிப்பிட்டார்கள்.

## 04:145 வது திருக்குர்ஆன் வசனம்

நிச்சயமாக நயவஞ்சகர்கள் நரகத்தின் கீழ்த்தட்டிலேயே இருப்பார்கள். (அங்கு) அவர்களுக்கு உதவியாளர் எவரையும் ஒருபோதும் நீங்கள் காணமாட்டீர்கள் (எனும் 4:145 வது வசனம்).
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'அத் தர்க்குல் அஸ்ஃபல்' எனும் சொல்லுக்கு'நரகத்தின் கீழ்த்தட்டு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:35 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நஃபக்' (சுரங்கப்பாதை) எனும் சொல்லுக்கு'வழி' என்று பொருள்.

ஹதீஸ் 4602. அஸ்வத் இப்னு யஸீத் அந்நகஈ(ரஹ்) கூறினார்
நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் அவையில் இருந்தோம். அப்போது ஹுதைஃபா(ரலி) வந்து எங்கள் அருகே நின்று சலாம் (முகமன்) கூறினார்கள். பிறகு, `உங்களைவிடச் சிறந்த கூட்ட(த்தாரான நபிகளார் கால)த்தவர் மத்தியிலேகூட நயவஞ்சகம் இறக்கிவைக்கப்(பட்டு சோதிக்கப்)பட்டது என்று கூறினார்கள். நான், `சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ் தூய்மையானவன்.)'நயவஞ்சகர்கள் நரகத்தின் கீழ்த்தட்டில் இருப்பார்கள்' என்று அல்லாஹ் கூறுகிறானே'' என்று சொல்ல, அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) புன்னகைத்தார்கள்.
ஹுதைஃபா(ரலி) பள்ளி வாசலின் ஒரு மூலையில் அமர்ந்துகொண்டார்கள். அப்போது அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) எழுந்து நிற்க, அவர்களின் தோழர்கள் கலைந்து சென்றார்கள். உடனே, ஹுதைஃபா(ரலி) பொடிக் கற்களை என் மீது எறிந்(து என்னை அழைத்)தார்கள். நான் அவர்களிடம் சென்றேன். அவர்கள், `நான் அப்துல்லாஹ்வின் சிரிப்பைக் கண்டு வியப்படைந்தேன். ஆனால், நான் சொன்னதை அவர்கள் நன்கு அறிந்துகொண்டார்கள். உங்களை விடச் சிறந்தவர்களாயிருந்த ஒரு சமுதாயத்தினர் மீதும் நயவஞ்சகம் இறக்கிவைக்கப்பட்டது. பிறகு அவர்கள் பாவமன்னிப்புக் கோரினர் அல்லாஹ் அவர்களின் குற்றங்களை மன்னித்துவிட்டான்'' என்றார்கள்.

## 04:163 வது திருக்குர்ஆன் வசனம்

“(நபியே!) நூஹுக்கும் அவருக்குப் பின்னர் வந்த நபிமார்களுக்கும் நாம் வஹீ அறிவித்ததைப் போன்ற நிச்சயமாக உமக்கும் நாம் வஹீ அறிவித்துள்ளோம். மேலும், இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஅகூப் ஆகியோருக்கும் மற்றும் யஅகூப் உடைய வழித் தோன்றல்களுக்கும், ஈசா, அய்யூப், யூனுஸ், ஹாரூன் மற்றும் சுலைமான் ஆகியோருக்கும் நாம் வஹீ அறிவித்திருக்கிறோம். தாவூதுக்கு ஸபூர் (எனும் வேதம்)தனை வழங்கினோம்'' எனும் (திருக்குர்ஆன் 04:163 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4603. பராஉ(ரலி) அறிவித்தார்

(நபி(ஸல்) அவர்களுக்கு) இறுதியாக அருளப்பெற்ற (குர்ஆன்) அத்தியாயம்'பராஅத்' எனும் (9 வது) அத்தியாயமாகும். (பாகப்பிரிவினை தொடர்பாக) இறுதியாக இறங்கிய வசனம்'(நபியே!) உங்களிடம் மக்கள் தீர்ப்புக் கேட்கிறார்கள்'' எனும் (இந்த 4:176 வது) வசனமாகும்.

ஹதீஸ் 4604 நான் யூனுஸ் பின் மத்தா அவர்களைவிடச் சிறந்தவன் என்று (என்னைப் பற்றிக்) கூறியவர் பொய் சொல்லிவிட்டார். இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## 04:176 வது திருக்குர்ஆன் வசனம்

ஹதீஸ் 4605 (நபி (ஸல்) அவர்களுக்கு) இறுதியாக அருளப்பெற்ற (குர்ஆன்) அத்தியாயம் பாராஅத் எனும் (9ஆவது) அத்தியாயமாகும். (பாகப்பிரிவினை தொடர்பாக) இறுதியாக இறங்கிய வசனம் (நபியே) உங்களிடம் மக்கள் தீர்ப்புக் கேட்கிறார்கள் எனும் (இந்த 4-176 ஆவது) வசனமாகும்.

## (5)'அல்மாயிதா' அத்தியாயம்

'அல்மாயிதா' அத்தியாயத்தின் பதவுரை

(திருக்குர்ஆன் 05:1 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஹுரும்' (இஹ்ராம் கட்டியவர்கள்) எனும் சொல்லின் ஒருமை'ஹராம்' என்பதாகும்.

(திருக்குர்ஆன் 05:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபபிமா நக்ளிஹிம் மீஸாக்கஹும்' என்பதற்கு'அவர்கள் தம் வாக்குறுதியை முறித்துவிட்ட காரணத்தால்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்லத்தீ க(த்)த பல்லாஹு' எனும் வாக்கியத்திற்கு அல்லாஹ் உங்களுக்காக அமைத்து(வைத்)துள்ள (புனித பூமியினுள் நுழையுங்கள்)' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தபூஅ' எனும் சொல்லுக்கு'நீயே சுமந்து கொண்டு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தாயிரத்துன்' எனும் சொல்லுக்கு'ஏதேனும் துன்பம்' என்று பொருள்.

மற்றவர்கள் கூறுகின்றனர்:

(திருக்குர்ஆன் 05:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஃக்ரய்னா' (ஊட்டினோம்) எனும் சொல்லின் வேர்ச் சொல்லான)'இஃக்ராஃ' என்பதற்குச்'சாட்டுதல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உஜூரஹுன்ன' எனும் சொல்லுக்கு'அப்பெண்களுக்குரிய மஹ்ர் (விவாகக் கொடை)களை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்முஹைமின்' எனும் சொல்லுக்கு'அல்அமீன் - நம்பகமான காவலன்' என்று பொருள். அதாவது இந்தக் குர்ஆன் தனக்கு முந்தியுள்ள வேதம் ஒவ்வொன்றையும் நம்பகமான முறையில் பாதுகாக்கக் கூடியது.

சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) கூறினார்:

குர்ஆனிலுள்ள'வேதக்காரர்களே! தவ்ராத்தையும், இன்ஜீலையும் மற்றும் உங்களுடைய இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பெற்ற (இதர வேதங்கள் யா)வற்றையும் முழுமையாகச் செயல்படுத்தாத வரை, நீங்கள் எந்த அடிப்படையிலும் இல்லை'' என்று (நபியே! தெளிவாகக்) கூறிவிடுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 05:68) வசனத்தை விட எனக்குக் கடுமையானது வேறெதுவுமில்லை.

(திருக்குர்ஆன் 05:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஃக்மஸா' எனும் சொல்லுக்குப்'பசி' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:32 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மன் அஹ்யாஹா' (எவன் ஓர் உயிரை வாழ வைக்கிறானோ..) என்பதற்கு'முறையின்றியே தவிர ஓர் உயிரைக் கொலை செய்வதிலிருந்து விலகிக்கொள்கிறவன் மக்கள் அனைவரையுமே வாழவைத்தவன் ஆவான்' என்பது நோக்கப் பொருளாகும்.
(திருக்குர்ஆன் 05:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷிர்அத்தன் வ மின்ஹாஜன்' என்பதற்கு'பாதை மற்றும் நடைமுறை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 05:107 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃப இன் உஸிர' எனும் சொல்லுக்கு'வெளிப்பட்டால், - தெரியவந்தால்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 05:107 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் அவ்லயானி' (அதிகத் தகுதி வாய்ந்த இருவர்) எனும் சொல்லின் ஒருமை'(அல்) அவ்லா' என்பதாகும்.

## 05:03 வது திருக்குர்ஆன் வசனம்

"இன்று உங்களின் மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்விட்டேன். என்னுடைய அருட்கொடையையும் உங்களின் மீது நான் நிறைவு செய்துவிட்டேன். இன்னும் உங்களுக்காக இஸ்லாத்தை (உங்களின் மார்க்கமாக ஏற்றுக் கொண்டுவிட்டேன்'' எனும் (திருக்குர்ஆன் 05:3 வது) வசனத் தொடர்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'மஃக்மஸா' எனும் சொல்லுக்குப்'பசி' என்று பொருள்.
ஹதீஸ் 4606. தாரிக் இப்னு ஷிஹாப்(ரஹ்) அறிவித்தார்
யூதர்கள் உமர்(ரலி) அவர்களிடம், 'நீங்கள் ஓர் இறைவசனத்தை ஓதுகிறீர்கள், அந்த வசனம் மட்டும் எங்களிடையே இறங்கியிருந்தால் அந்நாளை நாங்கள் பண்டிகை நாளாக ஆக்கிக் கொண்டிருப்போம்'' என்று கூறினர். உமர்(ரலி), 'அது எப்போது இறங்கியது? எங்கே இறங்கியது? அது இறங்கிய வேளையில் அரஃபா (ஃதுல்ஹஜ் -9ஆம்) நாளில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கேயிருந்தார்கள் என்பதையெல்லாம் அறிவேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் அப்போது அரஃபாவில் இருந்தோம்.
(இதன் மூன்றாம்) அறிவிப்பாளர் சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) கூறுகிறார்கள்
"இன்று உங்களின் மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கி விட்டேன்'' எனும் (திருக்குர்ஆன் 05:3 வது) வசனம் அருளப்பட்ட நாள் (சிலரின் அறிவிப்பிலுள்ளது போல்) வெள்ளிக் கிழமையாக இருந்ததா? அல்லது (வெள்ளிக்கிழமையாக) இல்லையா என்று நான் (தீர்மானிக்க முடியாமல்) சந்தேகப்படுகிறேன்.

## 05:06 வது திருக்குர்ஆன் வசனம்

"நீங்கள் நோயாளியாகவோ, பயணத்திலோ இருந்தால், அல்லது உங்களில் எவரேனும் (மல ஜலம் கழித்துவிட்டு) கழிப்பிடத்திலிருந்து வந்திருந்தால், அல்லது நீங்கள் பெண்களைத் தீண்டியிருந்தால் தண்ணீர் கிடைக்காதபோது தூய்மையான மண்ணைப் பயன்படுத்தித்'தயம்மும்' செய்து கொள்ளுங்கள். (அதாவது) அதில் உங்கள் கரங்களைப் பதித்து முகங்களிலும், கரங்களிலும் தடவிக் கொள்ளுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 05:6 வது) வசனத்தொடர்.
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'தயம்மமூ)' எனும் சொல்லுக்கு'நாடுங்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 05:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆம்மீன்' எனும் சொல்லுக்கு'நாடியவர்களாக' எனும் பொருள்.'அம்மகித்து' என்பதும்'தயம்மகித்து' என்பதும் ('நாடினேன்' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

(குர்ஆனில் இடம்பெற்றுள்ள) லமஸ்த்தும், தமஸ்ஸூஹுன்ன, வல்லாத்தி தகல்த்தும் பிஹின்ன, அல்இஃப்ளாஃ ஆகிய சொற்கள் திருமணத்தை (தாம்பத்திய உறவை)க் குறிக்கும்.

ஹதீஸ் 4607. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பயணம் ஒன்றில் (பனு முஸ்தலிக் போரின் பயணத்தில்) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றோம். நாங்கள் (மதீனாவுக்கருகில் உள்ள)'பைதா' அல்லது'தாத்துல் ஜைஷ்' எனுமிடத்தில் (வந்துகொண்டு) இருந்தபோது என்னுடைய கழுத்தணி அவிழ்ந்து (காணாமற்போய்)விட்டது. அதைத் தேடுவதற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அங்கு முகாமிட்டுத்) தங்கினார்கள். அவர்களுடன் மக்களும் (முகாமிட்டுத்) தங்கினர். அப்போது அவர்கள் எந்த நீர்நிலை அரும்லும் இருக்கவில்லை அவர்களிடமும் தண்ணீர் எதுவும் இருக்கவில்லை அவர்களிடமும் தண்ணீர் எதுவும் இருக்கவில்லை. அப்போது மக்கள் (என் தந்தை) அபூ பக்ர் அஸ்ஸித்தீக்(ரலி) அவர்களிடம் சென்று, `(உங்கள் புதல்வி) ஆயிஷா செய்ததை நீங்கள் பார்த்தீர்களா? அல்லாஹ்வின் தூதரையும் மக்களையும் (இங்கு) தங்கும்படி செய்துவிட்டார்கள். இங்கும் தண்ணீர் இல்லை மக்களிடமும் தண்ணீர் இல்லை‘` என்று முறையிட்டனர். உடனே அபூ பக்ர்(ரலி) (என்னிடம்) வந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் மடி மீது தலை வைத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) (என்னைப் பார்த்து), `அல்லாஹ்வின் தூதரையும் மக்களையும் (பயணத்தைத் தொடர முடியாமல்) தடுத்துவிட்டாயே! இங்கும் தண்ணீர் இல்லை‘` என்று கூறினார்கள். அவர்கள் எதைச் சொல்ல இறைவன் நாடினானோ அதையெல்லாம் சொல்லி என்னைக் கண்டித்தபடி தம் கரத்தால் என்னுடைய இடுப்பில் குத்தலானார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் மடிமீது (தலைவைத்துப் படுத்து) இருந்தது தான் என்னை அசையவிடாமல் (அடிவாங்கிக் கொண்டிருக்கும்படி) செய்துவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதிகாலையில் விழித்தெழுந்தபோதும் தண்ணீர் இருக்கவில்லை. அப்போதுதான்'தயம்மும்' உடைய (திருக்குர்ஆன் 05:6 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

(இது குறித்து) உசைத் இப்னு ஹுளைர்(ரலி), `அபூ பக்ரின் குடும்பத்தினரே! உங்கள் மூலமாக ஏற்பட்ட பரக்கத்(சமுதாயநலன்)களில் இது (தயம்மும் எனும் சலுகை) முதலாவதாக இல்லை. (எத்தனையோ நலன்கள் இதற்கு முன்பும் உங்களின் மூலம் ஏற்பட்டுள்ளன.)‘` என்று கூறினார்கள்.

(பிறகு) நானிருந்த ஒட்டகத்தைக் கிளம்பியபோது, அதன் அடியில் (காணாமற்போன) அந்தக் கழுத்தணி கிடந்தது.

ஹதீஸ் 4608. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நாங்கள் (பனு முஸ்தலிக் போர் முடிந்தது) மதீனாவிற்கு வந்து கொண்டிருந்தபோது (மதீனாவுக்கருகில் உள்ள)'பைதா' எனுமிடத்தில் என் கழுத்து மாலையொன்று (அவிழ்ந்து) விழுந்துவிட்டது. நபி(ஸல்) அவர்கள் அங்கே தம் ஒட்டகத்தை மண்டியிடச் செய்து, இறங்கி, என்னுடைய மடியில் தலை வைத்து உறங்கினார்கள். (அப்போது என் தந்தை) அபூ பக்ர்(ரலி) என்னை நோக்கி வந்து, என்னை வேகமாகக் குத்தி, `ஒரே கழுத்து மாலைக்காக தடுத்து நிறுத்திவிட்டாயே‘` என்று கூறினார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என் மடிமீது தலைவைத்துப் படுத்து) இருந்த காரணத்தால் நான் (அசையாமல்) உயிரற்(ற சடலம் போன்)று இருந்துவிட்டேன். அதனால் எனக்குக் கடும்வேதனை ஏற்பட்டது. பிறகு (நபி(ஸல்) அவர்கள் விழுத்தெழுந்தார்கள். சுப்ஹுத் தொழுகை (நேரம்) வந்துவிட்டது. உளூ (அங்கச் சுத்தி) செய்வதற்காக தண்ணீர் தேடப்பட்டது. அது கிடைக்கவில்லை. அப்போதுதான், `இறைநம்பிக்கையாளர்களே! தொழுகைக்காகச் செல்லும்போது உங்கள் முகங்களையும், முழங்கைகள் வரை

உங்களுடைய கரங்களையும் கழுவிக் கொள்ளுங்கள்'' என்று தொடங்கி 'தண்ணீர் கிடைக்காதபோது தூய்மையான மண்ணைப் பயன்படுத்தித் 'தயம்மும்' செய்து கொள்ளுங்கள்'' என்று கூறும் (திருக்குர்ஆன் 05:6 வது) வசனம் அருளப்பட்டது. அப்போது உசைத் இப்னு ஹுளைர் (ரலி), 'அல்லாஹ் உங்களால் மக்களுக்கு அருள்வளம் பொழிந்துள்ளான், அபூ பக்ரின் குடும்பத்தாரே! நீங்களே அவர்களுக்கு ஓர் அருள்வளம்தான்'' என்று கூறினார்கள்.

## 05:24 வது திருக்குர்ஆன் வசனம்

“(மூஸா!) நீங்களும் உங்களுடைய இறைவனும் சென்று போரிடுங்கள் நாங்கள் இங்கேயே அமர்ந்திருக்கிறோம்'' (என்று பனு இஸ்ராயீல் கூறினர்) எனும் (திருக்குர்ஆன் 05:24 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4609. இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவித்தார்

மிக்தாத் (ரலி), பத்ருப் போரின்போது, 'இறைத்தூதர் அவர்களே! பனு இஸ்ராயீல்கள் மூஸா (அலை) அவர்களிடம் 'நீங்களும் உங்களுடைய இறைவனும் சென்று போரிடுங்கள் நாங்கள் இங்கேயே அமர்ந்திருக்கிறோம்'' என்ற சொன்னதைப் போல் உங்களிடம் நாங்கள் சொல்ல மாட்டோம். மாறாக, செல்லுங்கள் நாங்களும் உங்களுடன் இருப்போம்'' என்று கூறினார்கள். இதைக் கேட்டவுடன் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்குத் தம் கவலைகள் அனைத்தும் நீங்கிவிட்டதைப் போலிருந்தது.

இதே ஹதீஸில் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில்,

“மிக்தாத் இப்னு அஸ்வத் (ரலி) சொன்னபோது நான் இருந்தேன்'' என்ற தொடங்குகிறது.

இன்னும் ஓர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

## 05:33 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ்வோடும் அவனுடைய தூதரோடும் போரிடுகிறவர்களும், பூமியில் கலகம் விளைவிக்கத் தீவிரமாக முயற்சிக்கிறவர்களுக்கும் உரிய தண்டனை இதுதான் அவர்கள் கொல்லப்பட வேண்டும் அல்லது தூக்கில் ஏற்றப்பட வேண்டும் அல்லது அவர்களின் மாறுகை, மாறுகால்கள் வெட்டப்பட வேண்டும் அல்லது அவர்கள் நாடு கடத்தப்பட வேண்டும் (எனும் 5: 33 வது வசனத் தொடர்.)

(இந்த வசனத்தில் இடம்பெற்றுள்ள) 'அல்லாஹ்வுடன் போரிடுதல்' என்பதற்கு அவனை மறுத்தல்' என்பது கருத்தாகும்.

ஹதீஸ் 4610. அபூ கிலாபா அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்

நான் (உமய்யா கலீஃபா) உமர் இப்னு அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்களுக்கப் பின்னால் அமர்ந்திருந்தேன். (அறியாமைக் காலத்து 'அல்கஸாமா' எனும் சத்தியமுறை பற்றி அன்னார் கேட்க, அதுபற்றி), மக்கள் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள். (இதில் பழிவாங்கல் இருப்பது உண்மைதான். உங்களுக்கு முன்பிருந்த) கலீஃபாக்கள் இதன்படி பழிவாங்க உத்தரவிட்டுள்ளார்கள் என்றும் கூறினார்கள்.

உமர் இப்னு அப்தில் அஸீஸ் (ரஹ்) தம் முதுகுக்குப் பின்னால் அமர்ந்திருந்த என் பக்கம் திரும்பி, 'அப்துல்லாஹ் இப்னு ஸைத் அவர்களே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்' அல்லது அபூ கிலாபாவே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். நான், 'திருமணமான பின்பு விபசாரம் புரிந்த மனிதனையும், அல்லது உயிருக்கு பதிலாக அன்றி (அநியாயமாக) ஓர் உயிரைக் கொன்றவனையும், அல்லது அல்லாஹ்வையும் அவனுடைய தூதர் (ஸல்) அவர்களையும் எதிர்த்துப் போரிட்டவனையும் தவிர, வேறு எந்த மனிதரையும் கொல்வதற்கு இஸ்லாத்தில் அனுமதியிருப்பதாக நான் அறியவில்லை'' என்று சொன்னேன். அப்போது அன்பஸா இப்னு ஸயீத் (ரஹ்), 'என்னிடம் அனஸ் இப்னு மாலிக் (ரலி) ('அல்கஸாமா'

மற்றும்'உரைனா' சம்பவம் குறித்து) இப்படி இப்படியெல்லாம் அறிவித்தார்கள்'' என்று கூறினார்கள்.
நான் சொன்னேன்:
"அனஸ்(ரலி) என்னிடம் கூட (இப்படிச்) கூறினார்கள்: நபி(ஸல்) அவர்களிடம் ஒரு சமுதாயத்தார் ('உக்ல்'' மற்றும்'உரைனா' குலத்தைச் சேர்ந்தவர்கள்) வந்து உரையாடினார்கள். அப்போது அவர்கள், 'இந்த பூமி (மதீனா) எங்களுக்கு ஒத்துக் கொள்ளவில்லை (நாங்கள் நோய்வாய்ப்பட்டு விட்டோம்)'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'இதோ, எங்களின் (தர்மத்திற்குரிய) இந்த ஒட்டகங்கள் (மேய்ச்சலுக்காக நகருக்கு) வெளியே செல்லவிருக்கின்றன. நீங்களும் இவற்றுடன் சென்று இவற்றின் பாலையும் இவற்றின் சிறுநீரையும் அருந்துங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் அவற்றுடன் வெளியே சென்று அவற்றின் சிறுநீரையும் அவற்றின் பாலையும் அருந்தி (நோய்நீங்கி) குணமடைந்தனர். பின்னர், ஒட்டகம் மேய்ப்பவரின் மீது பாய்ந்து அவரைக் கொன்றுவிட்டார்கள் ஒட்டகங்களை ஓட்டியும் சென்றார்கள்.
ஓர் உயிரை (அநியாயமாகக்) கொன்று அல்லாஹ்வுடனும் அவனுடைய தூதருடனம் போர்புரிந்து, அல்லாஹ்வின் தூதரை அச்சுறுத்திய இ(ந்தக் கொடுஞ்செயல் புரிந்த)வர்களுக்குத் தண்டனை கொடுப்பதில் தாமதம் காட்டமுடியுமா, என்ன?
அப்போது அன்பஸா(ரஹ்), (வியப்புத் தெரிவிப்பது போன்று)'சுப்ஹானல்லாஹ்- அல்லாஹ் தூயவன்'' என்று கூறினார்கள்.
நான், 'என்னை நீங்கள் சந்தேகப்படுகிறீர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், '(இல்லை) இதை எங்களுக்கு அனஸ்(ரலி) அறிவித்தார்'' என்ற கூறிவிட்டு, 'இந்த ஊர் (ஷாம்)வாசிகளே! இவரையும் இவரைப் போன்றவர்களையும் அல்லாஹ் உங்களிடையே வாழவைத்திருக்கும் வரை நீங்கள் நன்மையிலேயே நீடிப்பீர்கள்'' என்று கூறினார்கள்.

## 05:45 வது திருக்குர்ஆன் வசனம்

"(குற்றவியல் தண்டனையில்) காயங்களுக்கும் பழிவாங்கல் உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 05:45 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4611. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
என் தந்தையின் சகோதரி - ருபய்யிஉ பின்த் நள்ர்(ரலி) ஓர் அன்சாரி இளம் பெண்ணின் முன் பல்லை உடைத்துவிட்டார். அப்பெண்ணின் குலத்தார் பழிவாங்கலைக் கோரி நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். நபி(ஸல்) அவர்களும் பழிவாங்கும்படி உத்தரவிட்டார்கள். அப்போது என் தந்தையின் சகோதரர் அனஸ் இப்னு நள்ர்(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! அவ்வாறு நடக்காது ருபய்யிஉவின் பல் உடைக்கப்படாது, இறைத்தூதர் அவர்களே!"என்றார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'அனஸே! (இந்த வழக்கில்) அல்லாஹ்வின் சட்டம் பழி வாங்குவதாகும் (எனவே, அதை வெறுக்கவோ மறுக்கவோ வேண்டாம்)'' என்று கூறினார்கள். பிறகு அந்த (இளம்பெண்ணின்) குலத்தார் திருப்தியுடன் ஈட்டுத் தொகையை ஏற்றனர். (ருபய்யிஉவை பழி வாங்காமல் மன்னித்தார்கள்.) அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு (எதையேனும் கூறி) விடுவார்களாயின் அதை அல்லாஹ் நிறைவேற்றி விடுகிறான்'' என்று கூறினார்கள்.

## 05:67 வது திருக்குர்ஆன் வசனம்

(எம்) தூதரே! உங்களுடைய இறைவனிடமிருந்து உங்கள் அருளப்பெற்ற (வேதத்)தை (மக்களுக்கு) எடுத்துரைத்துவிடுங்கள் (எனும் 5:67 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4612. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

முஹம்மத்(ஸல்) அவர்கள், தம் மீது அருளப்பெற்ற (வேதத்)திலிருந்து எதையும் மறைத்தார்கள் என்று உங்களிடம் யாரும் சொன்னால் அவர் பொய் சொல்லிவிட்டார். அல்லாஹ்வோ'(எம்) தூதரே! உங்களுடைய இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பெற்ற (வேதத்)தை (மக்களுக்கு) எடுத்துரைத்து விடுங்கள்!"என்று கூறுகிறான்.

## 05:89 வது திருக்குர்ஆன் வசனம்

“நீங்கள் செய்த வீணாண சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களுக்குத் தண்டனை வழங்குவதில்லை‘‘ எனும் ( 5: 89 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4613. ஆயிஷா(ரலி) கூறினார்

“நீங்கள் செய்த வீணான சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களுக்குத் தண்டனை வழங்குவதில்லை‘‘ எனும் (திருக்குர்ஆன் 05:89 வது ) இறைவசனம்'லா வல்லாஹி (இல்லை் அல்லாஹ்வின் மீதாணையாக!‘) என்றும், `பலா வல்லாஹி (ஆம் அல்லாஹ்வின் மீதாணையாக!' என்றும் (பொருள் கொள்ளாமல் பழக்கத்தின் காரணமாக சத்தியம் செய்யும் சொற்களைக்) கூறுகிறவரின் விஷயத்தில் அருளப்பெற்றது.

ஹதீஸ் 4614. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

என் தந்தை (அபூ பக்ர்(ரலி)) சத்தியத்தை முறித்ததற்கான பரிகார(ம் தொடர்பான வசன)த்தை அல்லாஹ் அருளும்பரை எந்தச் சத்தியத்தையும் முறிக்காமலிருந்து வந்தார்கள். அபூ பக்ர்(ரலி), `நான் ஒரு சத்தியத்தைச் செய்து, (அதன்பின் அதைக் கைவிட்டு) மற்ற (ஒன்றைத் தேர்ந்தெடுப்ப)தே அதைவிடச் சிறந்தது என்று நான் கருதினால் (அதைக் கைவிட்டு) அல்லாஹ் அளித்த சலுகையை ஏற்றுக் கொண்டு எது சிறந்தோ அதையே செய்வேன் என்று கூறினார்கள்.

## 05:87 வது திருக்குர்ஆன் வசனம்

“இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த நல்லவற்றை விலக்கி (ஹராமாக்கி)க் கொள்ளாதீர்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 05:87 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4615. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) கூறினார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி)'எங்களுடன் துணைவியர் எவரும் இல்லாத நிலையில் நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் (ஒரு) புனிதப் போரில் கலந்து கொண்டிருந்தோம். எனவே, நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம், `நாங்கள் காயடித்து (ஆண்மை நீக்கம் செய்து)க் கொள்ளலாமா?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள் அப்படிச் செய்யவேண்டாமென்று எங்களைத் தடுத்தார்கள். அதன் பிறகு துணியை (மஹ்ராக)க் கொடுத்துப் பெண்ணை மணந்துகொள்ள எங்களுக்கு அனுமதியளித்தார்கள்!"என்று கூறிவிட்டு பிறகு, `இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த நல்லவற்றை விலக்கி(ஹராமாக்கி)க் கொள்ளாதீர்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 05:87 வது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## 05:90 வது திருக்குர்ஆன் வசனம்

“இறைநம்பிக்கையாளர்களே! நிச்சயமாக மதுபானம், சூதாட்டம், பலிபீடங்கள், குறிபார்க்கும் அம்புகள் ஆகியவை ஷைத்தானின் அருவருக்கத்தக்க செயலாகும்‘‘ எனும் (திருக்குர்ஆன் 05:90 வது) வசனத் தொடர்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'அல்அஸ்லாம்' என்பது (அறியாமைக்கால மக்கள்) தங்கள் விவகாரங்களில் (ஒன்றைச் செய்யலாமா, வேண்டாமா என்பதை) முடிவு செய்வதற்காகப் பயன்படுத்தி வந்த குறிபார்க்கும் அம்புகள் ஆகும்.

‘நுஸுப்' என்பது பலிப் பிராணிகளை அறுக்கும் பலிபீடங்களாகும்.

மற்றவர்கள் கூறுகின்றனர்:
'அல்அஸ்லாம்' என்பதன் ஒருமையான 'அஸ்ஸலம்' என்பது (இரும்பு) முனை பொருத்தப்பட்டிராத அம்பாகும்.
'இஸ்திக்ஸாம்' (குறிபார்த்தல்) என்பது அம்புகளைக் குலுக்கிப்போட்டு, `வேண்டாம்' எனும் அம்பு வந்தால் (தான் எண்ணிய காரியத்தை) விட்டுவிடுவதையும், `செய்' எனும் அம்பு வந்தால் அதன்படி செய்வதையும் குறிக்கும்.
அம்புகளில் ('செய்யலாம்', `செய்ய வேண்டாம்'' செய்தால் நல்லது', `செய்யாவிட்டால் கேடு நேரிடும்' என்றெல்லாம்) பலவகையான அடையாளங்கள் இட்டு அவற்றால் (அறியாமைக் கால மக்கள்) குறி பார்த்து வந்தார்கள். இதிலிருந்து 'ஃபஅல்(த்)து' எனும் வாய்பாட்டில் 'கஸம்து' எனும் கடந்த கால வினையும் 'குஸூம்' எனும் வேர்ச் சொல்லும் வரும்.

ஹதீஸ் 4616. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
மது பானத்தைத் தடைசெய்யும் இறைவசனம் அருளப்பட்டபோது ஐந்து வகையான மதுபானங்கள் மதீனாவில் இருந்தன. அவற்றில் திராட்சை மதுபானம் இருக்கவில்லை.

ஹதீஸ் 4617. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்
நீங்கள் 'ஃபளீக்' என்றழைக்கிற (பழுக்காத) இந்தப் பேரீச்சங்காய் மதுவைத் தவிர வேறெந்த மதுவும் (நபி(ஸல்) அவர்கள் காலத்தில்) எங்களிடம் இருக்கவில்லை. (ஒரு முறை) நான் (என் தாயாரின் இளைய கணவர்) அபூ தல்ஹா(ரலி) அவர்களுக்கும் இன்னாருக்கும் இன்னாருக்கும் மது ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தபோது ஒருவர் வந்து, `உங்களுக்குச் செய்தி எட்டியதா?' என்று கேட்டார். அங்கிருந்தவர்கள், `என்ன அது?' என்று கேட்டனர். அவர், `மது தடை செய்யப்பட்டுவிட்டது'` என்று பதிலளித்தார். அப்போது அவர்கள், `அனஸே! இந்த (மதுப்) பீப்பாய்களைக் கீழே கொட்டிவிடுங்கள்'` என்று கூறினர். அந்த மனிதர் அறிவித்த பிறகு அவர்கள் மதுவைக் குறித்து (வேறு யாரிடமும்) கேட்கவுமில்லை மதுவைத் திரும்பிப் பார்க்கவுமில்லை.

ஹதீஸ் 4618. ஜாபிர்(ரலி) அறிவித்தார்
மக்கள் சிலர், உஹுதுப் போர் நடந்த நாளின் காலையில் மது அருந்தினர். அன்று அவர்கள் அனைவருமே வீர மரணம் அடைந்தார்கள். இது, மது தடை செய்யப்படுவதற்கு முன்னர் நடந்ததாகும்.

ஹதீஸ் 4619. இப்னு உமர்(ரலி) கூறினார்
உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் உரைமேடையிலிருந்தபடி, `இறைவனைப் போற்றிப் புகழ்ந்த பின்பு) மக்களே! மதுபானத்தடை(ச் சட்டம்) இறங்கிவிட்டது. திராட்சை, பேரீச்சம் பழம், தேன், கோதுமை, வாற்கோதுமை ஆகிய ஐந்து பொருட்களிலிருந்தும் மது தயாரிக்கப்படுகிறது. (ஆயினும்,) அறிவை மயக்கும் அனைத்தும் மதுதான்'` என்று கூறினார்கள்.

## 05:93 வது திருக்குர்ஆன் வசனம்

இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிகிறவர்கள் (விலக்கப்பட்ட பொருட்களில்) எதையேனும் (தடை செய்யப்படுவதற்கு முன்னர்) உட்கொண்டிருந்தால் அவர்களின் மீது (அது) குற்றமாகாது. (ஆனால், இனி தடுக்கப்பட்ட பொருள்களிலிருந்து) அவர்கள் விலகியிருக்க வேண்டும். மேலும், இறைநம்பிக்கையில் உறுதியாக நிலைத்திருப்பவர்களாகவும், நற்செயல்கள் புரிகிறவர்களாகவும், இன்னும் (எந்த எந்தப் பொருள்களைவிட்டுத் தடுக்கப்படுகின்றனரோ அவற்றிலிருந்து) விலகியிருப்பவர்களாகவும், மேலும் இறைக் கட்டளைகளை ஏற்று வாழ்பவர்களாகவும், இன்னும் இறையச்சத்துடன் நன்னடத்தையை மேற்கொள்பவர்களாகவும் திகழ வேண்டும். அல்லாஹ் (இத்தகைய) நன்னடத்தையுடையோரை நேசிக்கிறான் (எனும் 5:93 வது இறைவசனம்)

ஹதீஸ் 4620. அனஸ் (ரலி) அறிவித்தார்
(மதுபானம் தடைசெய்யப்பட்ட அன்று மதீனாவின் வீதிகளில்) கொட்டப்பட்ட மது, (பழுக்காத) பேரீச்சங்காய் மது (ஃபளீக்) ஆகும்.
அபுந் நுஅமான் (ரஹ்) அவர்களிடமிருந்து முஹம்மத் இப்னு சலாம் (ரஹ்) அதிகப்படியாக அறிவித்ததாவது:
அனஸ் (ரலி) கூறினார்: (மதுபானம் தடைசெய்யப்பட்ட நாளில்) நான் அபூ தல்ஹா (ரலி) அவர்களின் வீட்டில் (அங்கிருந்த) மக்களுக்கு மது ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தேன். அப்போது மது விலக்கிற்கான இறைவசனம் அருளப்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள் பொது அறிவிப்புச் செய்பவர் ஒருவருக்கு (மது தடைசெய்யப்பட்ட செய்தியை மக்களுக்குத் தெரிவிக்க) பொது அறிவிப்புச் செய்யும்படி உத்திரவிட்டார்கள். அவர் அவ்வாறே அறிவித்தார். இதைக் கேட்டதும் அபூ தல்ஹா (ரலி), 'வெளியே போய் இது என்ன சப்தம் என்று பார் (த்து வா)' எனக் கூறினார்கள். உடனே நான் வெளியே சென்றேன். (பார்த்துவிட்டுத் திரும்பி வந்து), 'இதோ பொது அறிவிப்புச் செய்பவர், (மக்களே!) எச்சரிக்கை! மதுபானம் தடைசெய்யப்பட்டுவிட்டது என்று அறிவித்தார்'' என்று சொன்னேன். அதற்கு அபூ தல்ஹா (ரலி) என்னிடம், "நீ போய், இதைக் கொட்டிவிடு!" என்று கூறினார்கள். (மக்கள் மதுவைத் தரையில் கொட்ட) அது மதீனாவின் தெருக்களில் ஓடியது. அந்த நாளில் அவர்களின் மதுபானம் (பழுக்காத) பேரீச்சங்காய் மதுவாக இருந்தது. அப்போது மக்களில் சிலர், '(உஹுதுப் போரில்) ஒரு கூட்டத்தார் தம் வயிறுகளில் மது இருக்கக் கொல்லப்பட்டார்களே!" என்று கூறினார். அப்போதுதான் 'இறைநம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிகிறவர்கள் (விலக்கப்பட்ட பொருட்களில் ) எதையேனும் (தடைசெய்யப்படுவதற்கு முன்னர்) உட்கொண்டிருந்தால் அவர்களின் மீது (அது) குற்றமாகாது!" எனும் (திருக்குர்ஆன் 05:93 வது இறைவசனத்தை அல்லாஹ் அருளினான்.

## 05:101 வது திருக்குர்ஆன் வசனம்

"இறைநம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைப் பற்றி (துருவித் துருவிக்) கேட்டுக் கொண்டிருக்காதீர்கள்! (ஏனெனில்,) அவை உங்களிடம் வெளிப்படுத்தப்பட்டால் அவை உங்களுக்கு மனவருத்தத்தை ஏற்படுத்தும்'' எனும் (திருக்குர்ஆன் 05:101 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4621. அனஸ் (ரலி) அறிவித்தார்
இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு நாள்) ஓர் உரை நிகழ்த்தினார்கள். அதைப் போன்ற ஓர் உரையை நான் (என் வாழ்நாளில்) ஒருபோதும் கேட்டதில்லை. (அதில்) அவர்கள், 'நான் அறிகிறவற்றை நீங்கள் அறிந்தால், நீங்கள் குறைவாகச் சிரிப்பீர்கள் அதிகமாக அழுவீர்கள்'' என்று குறிப்பிட்டார்கள்.
அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் தம் முகங்களை மூடிக்கொண்டு சப்தமிட்டு அழுதார்கள். அப்போது ஒருவர், 'என் தந்தை யார்?' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'இன்னார்'' என்று கூறினார்கள். அப்போதுதான் 'இறைநம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைப் பற்றி (துருவித் துருவிக்) கேட்காதீர்கள். (ஏனெனில்,) அவை உங்களிடம் வெளிப்படுத்தப்பட்டால் அவை உங்களுக்கு மன வருத்தத்தை ஏற்படுத்தும்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 05:101 வது) இறைவசனம் அருளப்பட்டது.
இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 4622. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்
சிலர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் விளையாட்டாகக் கேள்வி கேட்பது வழக்கம். இவ்வாறாக ஒருவர் (நபி (ஸல்) அவர்களிடம்), 'என் தந்தை யார்?' என்று கேட்டார். தம்

ஒட்டகம் காணாமற் போய்விட்ட இன்னொருவர்'என் ஒட்டகம் எங்கே?' என்று கேட்டார். அப்போதுதான் அல்லாஹ், அவர்களின் விஷயத்தில் இந்த வசனத்தை அருளினான்.
இறைநம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைப் பற்றி (துருவித் துருவிக்) கேட்காதீர்கள். (ஏனெனில்,) அவை உங்களிடம் வெளிப்படுத்தப்பட்டால் அவை உங்களுக்கு மனவருத்தத்தை ஏற்படுத்தும். குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்கும் வேளையில் அவற்றைப் பற்றி நீங்கள் வினவினால் அப்போது அவை உங்களுக்கு வெளிப்படையாகக் கூறப்பட்டுவிடும். நீங்கள் (இதுவரை விளையாட்டுத் தனமாக) வினவியவற்றை அல்லாஹ் மன்னித்துவிட்டான். அல்லாஹ் மன்னிப்பு வழங்குபவனாகவும் சம்புத் தன்மையுடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 05:101)

## 05:103 வது திருக்குர்ஆன் வசனம்

(கால்நடைகள் சம்பந்தப்பட்ட சடங்குகளான) பஹீரா, ஸாயிபா, வஸீலா, ஹாம் என்பனவற்றையெல்லாம் அல்லாஹ் ஏற்படுத்தவில்லை. மாறாக, மறுப்பாளர்கள் தாம் அல்லாஹ்வின் மீது பொய்களைப் புனைந்து கூறுகின்றனர். அவர்களில் பெரும்பாலோர் (இத்தகைய மூட நம்பிக்கைகளை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு) அறிவற்றவர்களாய் இருக்கின்றனர். (எனும் 5:103 வது இறைவசனம்)
(திருக்குர்ஆன் 05:116 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ இஃத் காலல்லாஹ்' எனும் சொற்றொடரில் உள்ள'கால' (சொன்னான்) எனும் (இறந்த கால வினைச்) சொல்லுக்குச்'சொல்வான்' என்று (எதிர்கால வினையின்) பொருளாகும்.
இந்த வசனத்திலுள்ள'இஃத்' எனும் சொல்'சொல்லிடை இணைப்புக் குறி' (ஸிலா) ஆகும்.
(திருக்குர்ஆன் 05:112 வது வசனத்திலுள்ள வினையாலணையும் பெயரான)'அல்மாயிதா' எனும் சொல் உண்மையில் (பொருளைப் பொருத்தவரை'விருந்தாக்கப்படும் உணவு' எனும்) செயப்பாட்டு எச்ச வினையாகும்.'ஈஷத்துன் ராளியா' (திருப்தியான வாழ்க்கை),'தத்லீக் கத்துல்பாயினா' (இறுதிசெய்யப்பட்ட விவாகரத்து) ஆகிய சொற்றொடர்களைப் போன்று.
(இதன்படி'அல்மாயிதா' என்பதன்) சொற்பொருள்'விருந்தாளிக்கு அளிக்கப்படும் நல்ல உணவு' என்பதாகும்.
('இஷ்திகாக்' எனும்'சொல் திரிபு வேறுபாட்டில்' இச்சொல்லை'ஃபஅல, யஃப்இலு' எனும் வாய்பாட்டில்)'மாத,யமீது' (உணவளித்தான், உணவளிப்பான்) என்றும் ஆளப்படுவதுண்டு.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
(திருக்குர்ஆன் 03:55 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முத்தவஃப்பீக்க' எனும் சொல்லுக்கு'உம்மை இறக்கச் செய்வோம்' என்பது கருத்தாகும்.
ஹதீஸ் 4623. ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அறிவித்தார்
'பஹீரா' என்பது, (அறியாமைக்கால) சிலைகளுக்காக (அவற்றின் பெயரால்) பால்கறக்கக் கூடாதெனத் தடை விதிக்கப்பட்டு வந்த ஒட்டகமாகும் மக்களில் யாரும் அதன் பாலைக் கறக்கமாட்டார்கள்.
'சாயிபா' என்பது, (அறியாமைக்கால) சிலைகளுக்கா (அவற்றின் பெயரால்) பால் கறக்கக் கூடாதெனத் தடை விதிக்கப்பட்டு வந்த ஒட்டகமாகும் மக்களில் யாரும் அதன் பாலைக் கறக்கமாட்டார்கள்.
'சாயிபா' என்பது, (அறியாமைக் காலத்தில் நோய் குணமாதல் போன்ற தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும் என்ற வேண்டுதலில்) சிலைகளுக்காக (நேர்ந்து) சுதந்திரமாகத் திரியவிடப்பட்டு வந்த ஒட்டகமாகும். அதன் மீது எந்தச் சுமையும் ஏற்றப்படவதில்லை. (அது நினைத்த தண்ணீரில் வாய்வைக்கும் நினைத்த நிலத்தில் மேயும் யாரும் அதைத் தடுக்கமாட்டார்கள்.)
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'அம்ர் இப்னு ஆமிர் அல்குஸாஈ' தம் குடலை இழுத்தபடி நரகத்தில் சென்று கொண்டிருப்பதை கண்டேன். முதன் முதலாக 'சாயிபா' (ஒட்டகத்தை சிலைகளுக்காக நேர்ச்சை செய்துத்) திரியவிட்டவர் அவர்தாம்.
'வஸிலா' என்பது, முதல் ஈற்றிலும் இரண்டாம் ஈற்றிலும் பெண்குட்டியிடுகிற இளம் ஒட்டகமாகும் இதை (அறியாமைக் கால) மக்கள் தங்கள் சிலைகளுக்காக (நேர்ந்து) சுதந்திரமாகத் திரியவிட்டு வந்தனர். இரண்டு(ஈற்று)க்கு மத்தியில் ஆண்குட்டியிடாமல் ஒன்றையடுத்து மற்றொன்றும் (பெண்குட்டியாக) அமைந்திருப்பதனால் (இதனைத்'தொடர்ந்து வரக்கூடியது' எனும் பொருளில்)'வஸீலா' என்று அழைத்தனர்.
'ஹாம்' என்பது, குறிப்பிட்ட எண்ணிக்கையிலான ஒட்டகங்களைச் சூல்கொள்ளச் செய்த (பொலி) ஒட்டகமாகும். இவ்வாறு சூல்கொள்ளச் செய்த பின் அந்த (பொலி) ஒட்டகத்தை (அறியாமைக்கால) மக்கள் தங்கள் சிலைகளுக்காகவிட்டுவந்தனர் அதன் மீது சுமை ஏற்றாமல்விட்டுவிட்டார்கள் எனவே, அதன் மீது சுமை எதுவும் ஏற்றப்படவில்லை. இதனை'ஹாமீ(தன் முதுகைப் பாதுகாத்துக் கொண்ட ஒட்டகம்) என்று பெயரிட்டு அழைத்தனர்.
இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் மேற்சொன்ன விளக்கமும் ஹதீஸும் வந்துள்ளன.

ஹதீஸ் 4624. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியைத் (தின்று) தகர்த்துக் கொண்டிருப்பதை கண்டேன்.'அம்ர் இப்னு ஆமிர் அல்குஸாஈ' நரகத்தில்) தன் குடலை இழுத்தபடி சென்று கொண்டிருப்பதையும் கண்டேன். முதன் முதலாக ஒட்டகங்களைச் சிலைகளுக்காக (நேர்ச்சை செய்து)த் திரியவிட்டவர் அவர் தாம்.
என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## 05:117 வது திருக்குர்ஆன் வசனம்

மர்யமின் மகன் ஈசா கூறினார்:) மேலும், நான் அவர்களுடன் இருந்தவரையில், அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்துக் கொண்டபோது நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய்! நீயோ அனைத்தையும் கண்காணிப்பனாக இருக்கிறாய் (எனும் 5:117 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4625 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒருமுறை மக்களுக்கு) உரை நிகழ்த்தினார்கள். (அதில்), 'மக்களே! நீங்கள் (மறுமையில்) செருப்பணியாதவர்களாகவும், நிர்வாண மானவர்களாகவும், விருத்தசேதனம் செய்யப்படாதவர்காளகவும் அல்லாஹ்விடம் கொண்டுவரப்படுவீர்கள்'' என்று கூறிவிட்டுப் பிறகு'எழுதப்பட்ட ஏடு சுருட்டப்படுவதைப் போல் நாம் வானத்தைச் சுருட்டும் அந்நாளில், நாம் முதலில் எவ்வாறு படைக்கத் தொடங்கினோமோ அவ்வாறே நாம் மீண்டும் (அவர்களுக்கு உயிர் கொடுத்து) படைப்போம்'' எனும் (திருக்குர்ஆன் 21:104 வது இறைவசனத்தை இறுதிவரை ஓதினார்கள்.
பிறகு, 'அறிந்துகொள்ளுங்கள் மறுமை நாளில் (சொர்க்கத்தின்) ஆடை அணிவிக்கப்படும் முதல் நபர் (இறைத்தூதர்) இப்ராஹீம் அவர்கள் தாம்.
அறிந்துகொள்ளுங்கள்: என் சமுதாயத்தாரில் சிலர் கொண்டுவரப்பட்டு, இடப்பக்கத்(திலுள்ள நரகத்)திற்குக் கொண்டு செல்லப்படுவார்கள். அப்போது நான், 'என் இறைவா! (இவர்கள்) என் தோழர்களில் சிலர்'' என்று சொல்வேன். அதற்கு'இவர்கள் உங்க(ளுடைய மரணத்து)க்குப் பின் என்னவெல்லாம் புதிது புதிதாக உருவாக்கினார்கள் என்று உங்களுக்குத் தெரியாது'' என்று கூறப்படும். அப்போது நான், நல்லடியார் ஈசா(அலை) அவர்கள் சொன்னதைப் போன்று, 'நான் அவர்களுடன் இருந்த வரையில் அவர்களைக்

கண்காணிப்பவனாக இருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்துக் கொண்டபோது நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய்!"என்று பதிலளிப்பேன். அதற்கு, 'இவர்களை நீங்கள் பிரிந்ததிலிருந்து, இவர்கள் தங்கள் குதிகால் சுவடு)களின் வழியே தம் மார்க்கத்திலிருந்து வெளியேறிக் கொண்டுதான் இருந்தார்கள்'' என்று கூறப்படும்.

## 05:118 வது திருக்குர்ஆன் வசனம்

"(இப்போது) நீ அவர்களுக்கு வேதனை அளித்தால் அவர்கள் நிச்சயமாக உன்னடைய அடியார்களே! நீ அவர்களை மன்னித்தாலும் (அப்போதும்) நீயே யாவற்றையும் மிகைத்தவனும், நுண்ணறிவுடையவனுமாய் இருக்கிறாய் (என்றும் மர்யமின் மகன் ஈசா கூறுவார்)'' எனும் (திருக்குர்ஆன் 05:118 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4626. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் (மறுமையில் உயிருடன்) எழுப்பப் படவிருக்கிறீர்கள். சிலர் இடப் பக்கத்திலுள்ள நரகத்திற்குக் கொண்டு செல்லப்படுவார்கள். அப்போது நான் நல்லடியார் (ஈசா(அலை) அவர்கள்) சொன்னதைப் போல், 'நான் அவர்களுடன் இருந்தவரை அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்துக் கொண்டபோது நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய்! (இப்போது) நீ அவர்களுக்கு வேதனை அளித்தால் அவர்கள் நிச்சயமாக உன்னுடைய அடியார்களே! நீ அவர்களை மன்னித்தாலும் (அப்போதும்) நீயே யாவற்றையும் மிகைத்தவனும், நுண்ணறிவுடையவனுமாய் இருக்கிறாய்'' (திருக்குர்ஆன் 05:117, 118) என்று சொல்வேன்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## 6. 'அல்அன்ஆம்' அத்தியாயம்

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 06:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபித்னத்துஹூம்' எனும் சொல்லுக்கு'அவர்கள் கூறும் காரணம் (அல்லது) சாக்குப் போக்கு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:141 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஃரூஷாத்' எனும் சொல்லுக்குத்'திராட்சை முதலான (பந்தல்களில்) படரும் கொடிகள்'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:142 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹமூலத்' எனும் சொல்லுக்குச்'சுமை சுமக்கும் பிராணி' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லபஸ்னா' எனும் சொல்லுக்கு'நாம் சந்தேகத்தில் ஆழ்த்தியவர்களாகியிருப்போம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யன்அவ்ன' எனும் சொல்லுக்குத்'தொலைவாகி விடுகிறார்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துப்ஸல' எனும் சொல்லுக்கு'இழிவுபடுத்தப்படும் என்று பொருள். 'உப்ஸிலூ' என்பதற்கு'அவர்கள் இழிவுபடுத்தப்பட்டனர்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:93 வது வசனத்தின் மூலத்தில்)'பாஸிதூ அய்தீஹிம்' என்பதிலுள்ள (பாஸிதூ எனும் சொல்லின் வேர்ச் சொல்லான)'அல்பஸ்த்' எனும் சொல்லுக்கு'அடித்தல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:128 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஸ்தக்ஸர்த்தும்' எனும் சொல்லுக்கப்'பலரைக் கெடுத்துவிட்டீர்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:136 வது வசனத்தின் விளக்கமாவது:) இணைவைப்பாளர்கள் தங்களின் (பயிர், கால்நடை முதலியவற்றின்) பலன்களிலிருந்தும் செல்வத்திலிருந்தும் ஒரு பகுதியை

அல்லாஹ்விற்கென்றும், மற்றொரு பகுதியை ஷைத்தான் மற்றும் சிலைகளுக்கென்றும் படைக்கின்றனர்.
(திருக்குர்ஆன் 06:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அகின்னத்' (திரைகள்) எனும் சொல்லின் ஒருமைம்னான்.
(திருக்குர்ஆன் 06:143 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அம் மஷ்தமலத்' எனும் சொற்றொடரின் விளக்கமாவது ஆன், பெண் ஆகிய இரண்டு வகைகளையே ஆடுகள் கர்ப்பத்தில் சுமக்கின்றன. பிறகேன் (சில கால்நடைகளின் வயிற்றிலுள்ளவற்றை) சிலருக்குத் தடை விதிக்கிறீர்கள் மற்றச் சிலருக்கு அனுமதிக்கிறீர்கள் (என்பதாகும்)
(திருக்குர்ஆன் 06:145 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஸ்ஃபூஹ்' (வடியக்கூடிய) எனும் சொல்லுக்குச்'சிந்தப்படும் (இரத்தம்) என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:157 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸதஃப்' எனும் சொல்லுக்குப்'புறக்கணித்தான்' எனும் பொருள்.
(திருக்குர்ஆன் 06:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள'முப்லிஸூன்' (‘நம்பிக்கை இழந்தவர்கள்‘) எனும் சொல்லின் வினைச் சொல்லான)'உப்லிஸூ‘` எனும் சொல்லுக்கு'நம்பிக்கை இழந்து (செயலாற்று)விட்டார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உப்ஸிலூ' எனும் சொல்லுக்கு'(அழிவுக்கு) ஆளாக்கப்பட்டார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:96 வது வசனத்தின் கருத்தில் அமைந்த 28:71 வது வசனத்தின் மூலத்திலுள்ள'சர்மதன்' எனும் சொல்லுக்கு'நிரந்தரமானது' எனும் பொருள்.
(திருக்குர்ஆன் 06:71 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஸ்தஹ்வத்ஹு` எனும் சொல்லுக்கு'அவனை வழி கெடுத்துவிட்டன' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தம்தரூன்' எனும் சொல்லுக்கு'நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அசாத்தீர்' எனும் சொல்லுக்குக்'கட்டுக்கதைகள்' என்று பொருள். இதன் ஒருமை'உஸ்த்தூரத்' மற்றும்'இஸ்த்தாரத்' ஆகும்.
(திருக்குர்ஆன் 06:42 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்பஃஸா' எனும் சொல், `பஃஸ்' (துன்பம்) எனும் சொல்லிருந்து பிறந்ததாகும்.'புஃஸ்' (வறுமை) எனும் சொல்லிருந்தும் பிறந்திருக்கலாம்.
(திருக்குர்ஆன் 06:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜஹ்ரத்' எனும் சொல்லுக்கு'நேருக்கு நேர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:73 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸுவர்' எனும் சொல்'ஸூரத்' (உருவம்) எனும் சொல்லின் பன்மையாகும்.'சூரத்' (எல்லைச் சுவர்) என்பதையும் (அதன் பன்மையான)'சுவர்' (எல்லைச் சுவர்கள்) என்பதையும் போல். 3
(திருக்குர்ஆன் 06:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மலக்கூத்' எனும் சொல்லுக்கு'ஆட்சி' என்று பெருள். (‘மலக்கூத்' என்பதிலுள்ள இறுதி எழுத்துகளான வாவும் தாவும் அதிகப்படியானவை எவ்வாறென்றால்) ரஹபூத் கைருன் மின் ரஹ்மூத் என்ப(தில் உள்ள ரஹபூத், ரஹமூத் ஆகிய சொற்களின் இறுதியிலுள்ள வாவும் தாவும் கூடுதலானைவையாக இருப்ப)தைப் போன்று. இதையே'துர்ஹபு கைருன் மின் அன் துர்ஹம்‘` என்றும் கூறலாம். 4
(திருக்குர்ஆன் 06:76 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜன்ன' எனும் சொல்லுக்கு'இருள் கவ்வியது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:100 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஆலா' எனும் சொல்லுக்கு'உயர்ந்தான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இன் தஅதில்' என்று தொடங்கும் வசனத்திற்குப்'பிரதியாகக் கொடுத்தால், அந்நாளில் அது அங்கீகரிக்கப்படமாட்டாது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:96 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹுஃபான்' எனும் சொல்லுக்கு'(காலத்தின் கணக்கை அறிதல்' என்று பொருள்.'அலல்லாஹி ஹுஃபானுஹு' (‘அதன் கணக்கு வழக்கு அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது‘) என்று கூறப்படுவதுண்டு.'ஹுஃபான்' எனும் (இந்த சொல்லுக்கு (‘வானுலுகச் செய்திகளை) ஒட்டுக் கேட்க வரும் ஷைத்தான்களை நோக்கி எறியப்படும் அம்பு' என்று பொருளும் உண்டு.

(திருக்குர்ஆன் 06:98 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸ்தகர்ருன்' எனும் சொல்லுக்கு'(தந்தையின்) முதுகந் தண்டில் தங்கவைக்கப்பட்டது' என்று பொருள்.'முஸ்தவ்தஉ' எனும் சொல்லுக்குத்'(தாயின்) கர்ப்பத்தில் பாதுகாப்பட்டது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 06:99 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கின்வான்' எனும் சொல்லுக்குப்'பழக் குலைகள்' என்று பொருள். இதன் ஒருமை'கின்வ்' என்பதாகும். இதன் இருமை'கின்வானி' என்பதாகும். பன்மையும்'கின்வான்' என்பதே ஆகும்.'சின்வ்' (ஒருமை)'சின்வான்' (இருமை மற்றும் பன்மை என்பதைப் போல் (ஒரே வேரிலிருந்து தோன்றும் இரண்டு பேரீச்ச மரங்கள் என்பது இதன் பொருளாகும்.)

## 06:59 வது திருக்குர்ஆன் வசனம்

மறைவானவற்றின் திறவுகோல்கள் அல்லாஹ்விடமே உள்ளன. அவற்றை அவனைத் தவிர வேறு யாரும் அறிவதில்லை (எனும் 6:59 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4627. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறைவானவற்றின் திறவுகோல்கள் ஐந்தாகும். (ஏனெனில், அல்லாஹ் கூறினான்:)'நிச்சயமாக (இறுதித் தீர்ப்பிற்குரிய) அந்த நேரத்தைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது. அவனே மழையைப் பொழிவிக்கிறான். (பெண்களின்) கருவறைகளில் இருப்பவற்றையும் அவனே அறிவான். எந்தமனிதனும், அவன் நாளை என்ன சம்பாதிக்கப் போகிறேன் என்பதை அறிவதில்லை. தாம் எந்த இடத்தில் மரணிப்பார் என்பதும் எந்த மனிதருக்கும் தெரியாது. நிச்சயமாக, அல்லாஹ்தான் (யாவற்றையும்) நன்கு அறிந்தவனாகவும் நுண்ணறிவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 31:34)

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## 06:65 வது திருக்குர்ஆன் வசனம்

“(நபியே!) கூறுக: உங்களுக்கு மேலிருந்தோ உங்களின் கால்களுக்குக் கீழிருந்தோ ஏதேனுமொரு வேதனையை உங்கள்மீது இறக்கவும், அல்லது உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து உங்களில் சிலர் தரும் துன்பத்தை மற்றச் சிலர் சுவைக்கும்படி செய்யவும் அவன் ஆற்றலுள்ளவன்‘' எனும் (திருக்குர்ஆன் 06:65 வது) வசனத் தொடர்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'யல்பிஸகும்' எனும் சொல்லுக்குக்'கலந்து விடுவது' என்று பொருள். இது'இல்த்திபாஸ்' எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததாகும்.

‘ஷியஉ' எனும் சொல்லுக்குப்'பிரிவுகள்' என்று பொருள்.

ஹதீஸ் 4628. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

“(நபியே!) கூறுக: உங்களுக்கு மேலிருந்தோ உங்கள் கால்களுக்குக் கீழேயிருந்தோ ஏதேனுமொரு வேதனையை உங்களின் மீது இறக்கவும், அல்லது உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து உங்களில் சிலர் தரும் துன்பத்தை மற்றச் சிலர் சுவைக்கும்படி

செய்யவும் அவன் ஆற்றலுள்ளவன்'' எனும் (திருக்குர்ஆன் 06:65 வது) இறைவசனம் அருளப்பட்டபோது, `உங்களுக்கு மேலிருந்து ஏதேனுமொரு வேதனையை உங்களின் மீது இறக்கவும் வைக்கவும் அதன் ஆற்றலுள்ளவன்'' என்பதைக் கேட்டவுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `(இறைவா!) உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்'' என்று கூறினார்கள். 'உங்கள் கால்களுக்குக் கீழேயிருந்தோ'' என்று கூறினார்கள். 'அல்லது உங்களைப் பல்வேறு குழுககளாகப் பிரித்து உங்களில் சிலர் தரும் துன்பத்தை மற்றச் சிலர் சுவைக்கும்படி செய்யவும்'' என்பதைக் கேட்டவுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `இது (முந்தைய வேதனையை விட)'எளிதானது' அல்லது'இது சுலபமானது' ஆகும்'' என்று கூறினார்கள்.

## 06:82 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், நம்பிக்கை கொண்டு பிறகு தம் நம்பிக்கையுடன் அநீதியைக் கலக்காதவர்களுக்கு உண்மையில் அமைதி உண்டு. மேலும், அவர்களே நேர்வழி அடைந்தவர்களாவார்கள் (எனும் 6:82 வது இறைவசனம்).

ஹதீஸ் 4629. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

"நம்பிக்கை கொண்டு பிறகு தம் நம்பிக்கையுடன் அநீதியைக் கலந்திடாதவர்களுக்கு உண்மையில் அமைதி உண்டு. மேலும், அவர்களே நேர்வழி அடைந்தவர்கள் ஆவர்'' எனும் (திருக்குர்ஆன் 06:82 வது) வசனம் அருளப்பட்டபோது நபித்தோழர்கள், `எங்களில் எவர் தாம் (தமக்குத்தாமே) அநீதியிழைக்கவில்லை?' என்று கேட்டனர். அப்போது, `இணைவைப்புத்தான் மாபெரும் அநீதியாகும்'' எனும் (திருக்குர்ஆன் 31:13 வது) இறைவசனம் அருளப்பட்டது.

## 06:86 வது திருக்குர்ஆன் வசனம்

"(நம் தூதர்களாகிய) இஸ்மாயீல், அல்யஸஉ, யூனுஸ், லூத் (ஆகியோரையும் நாம் நேரான பாதையில் செலுத்தினோம்). அகிலத்தார் அனைவரையும் விட இவர்கள் ஒவ்வொருவரையும் நாம் மேன்மையாக்கினோம்' எனும் (திருக்குர்ஆன் 06:86 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4630. அபுல் ஆலியா ரு∴பைஉ இப்னு மிஹ்ரான்(ரஹ்) கூறினார்

உங்கள் நபியினுடைய தந்தையின் சகோதரருடைய புதல்வர், அதாவது இப்னு அப்பாஸ்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என எனக்கு அறவித்தார்கள்.

"நான் யூனுஸ் இப்னு மத்தா அவர்களை விடச் சிறந்தவன்'' என்று (என்னைப் பற்றிக்) கூறுவது எந்த மனிதருக்கும் தகாது.

ஹதீஸ் 4631. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"நான் யூனுஸ் இப்னு மத்தா அவர்களை விடச் சிந்தவன்'' என்று (என்னைப் பற்றிக்) கூறுவது எந்த மனிதருக்கும் முறையாகாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 06:90 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) அல்லாஹ்வினால் நேர்வழியில் செலுத்தப்பட்டவர்கள்தாம் இவர்கள். எனவே, இவர்களின் நேரான வழியையே நீங்களும் பின்பற்றுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 06:90 வது) வசனத்தொடர்.

ஹதீஸ் 4632. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம், `ஸாத்'' (எனும் 38 வது) அத்தியாயத்தில் (ஓதலுக்குரிய) சஜ்தா உண்டா?' என்று கேட்டேன். அவர்கள், `ஆம் (திருக்குர்ஆன் 38:24 வது வசனத்தில் சஜ்தா உண்டு)'' என்று கூறிவிட்டு'நாம் இப்ராஹீமுக்கு இஸ்ஹாக்கையும் யஅகூபையும் (சந்ததிகளாக) வழங்கினோம்'' என்று தொடங்கி'இவர்களுடைய நேரான வழியையே நீங்களும் பின்பற்றுங்கள்'' என்பது வரை (திருக்குர்ஆன் 06:84-90 வசனங்களை) ஓதினார்கள்.

பிறகு இப்னு அப்பாஸ் (ரலி), `தாவூத் (அலை) அவர்கள் இந்த (வசனத்தில் கூறப்பட்டுள்ள) இறைத்தூதர்களில் ஒருவர் தாம்'' என்று கூறினார்கள்.
யஸீத் இப்னு ஹாரூன் (ரஹ்) அவர்களின் மற்றோர் அறிவிப்பில் அதிகப்படியாக இடம் பெற்றிருப்பதாவது:
முஜாஹித் (ரஹ்) கூறினார்:
நான் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் (மேற்கண்டவாறு) கேட்டேன். அதற்கு அவர்கள்'முந்தைய இறைத்தூதர்களைப் பின்பற்றும்படி கட்டளையிடப்பட்டவர்களில் உங்களில் நபி (ஸல்) அவர்களும் ஒருவர்தாம்'' என்றும் கூறினார்கள்.

## 06:146 வது திருக்குர்ஆன் வசனம்

நகமுடைய பிராணிகள் ஒவ்வொன்றையும் யூதர்களுக்கு நாம் தடைசெய்திருந்தோம். அவர்களுக்கு ஆடு மாடுகளின் கொழுப்பையும் தடைசெய்திருந்தோம் (எனும் 6:146 வது இறைவசனம்).
இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:
நகமுடைய ஒவ்வொரு பிராணியும் என்பது, ஒட்டகத்தையும் தீக்கோழியையும் குறிக்கம். (இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹவாயா' என்பது குடல்களைக் குறிக்கும்.
மற்றவர்கள் கூறுகின்றனர்.
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹாதூ' என்பதற்கு'யூதர்களாய் ஆகிவிட்டவர்கள்' என்று பொருள்.
(இதே சொல்லிருந்து பிறந்த 7:156 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹுத்னா' என்பதற்கு'பாவமன்னிப்புக் கோரினோம்' என்று பொருள். (இதன் வினையாலணையும் பெயரான)'ஹாயித்' என்பதற்கு'பாவமன்னிப்புக் கோருகிறவர்' என்று பொருள்.
ஹதீஸ் 4633. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:
அல்லாஹ் யூதர்களைத் தன் அருளிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அவர்களுக்கு அல்லாஹ் செத்த பிராணிகளின் கொழுப்புகளை (ஹராமாக்கித்) தடை செய்தபோது அதை அவர்கள் உருக்கி அத(ன் விலையி)னை உட்கொண்டார்கள்.
என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.
இது வேறோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## 06:151 வது திருக்குர்ஆன் வசனம்

"மானக்கேடான செயல்களில் வெளிப்படையானவை, மறைவானவை எதனையும் நெருங்காதீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 06:151 வது) வசனத்தொடர்.
ஹதீஸ் 4634. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்
"அல்லாஹ்வை விட அதிக ரோஷமுள்ளவர் வேறெவருமிலர். அதனால்தான், மானக்கேடான செயல்களில் வெளிப்படையானவை, அந்தரங்கமானவை அனைத்திருக்கும் அல்லாஹ் தடைவிதித்துள்ளான். தன்னைப் புகழ்வதைவிட அல்லாஹ்வுக்கு மிகவும் பிரியமானது எதுவுமில்லை. எனவேதான், அவன் தன்னைத் தானே புகழ்ந்து கொண்டுள்ளான்'' (என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.)
அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் இப்னு முர்ரா (ரஹ்) கூறினார்:
நான் அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா (ரஹ்) அவர்களிடம்'இதை நீங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடமிருந்து (நேரடியாகக்) கேட்டீர்களா?' என்று கேட்க, அவர்கள், `ஆம்'' என்று பதிலளித்தார்கள். நான், `இதை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ் (ரலி) குறிப்பிட்டார்களா?' என்று கேட்க, அவர்கள், `ஆம்'' என்று பதில் கூறினார்கள்.

(திருக்குர்ஆன் 06:102 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ(க்)கீல்' எனும் சொல்லுக்குக்'கண்காணித்துப் பாதுகாப்பவன்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 06:111 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'குபுல்' எனும் சொல் கபீல் எனும் சொல்லின் பன்மையாகும். 'பல வகை சோதனைகள்' என்பது அதன் பொருளாகும். ஒவ்வொரு வகையும்'கபீல்' என்று கூறப்படும்.
(திருக்குர்ஆன் 06:112 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸுக்ருஃபுல் கவ்ல்' எனும் சொற்றொடரானது, நீ எழிலூட்டி அலங்கரித்துக் காட்டும் எல்லா போலிகளையும் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 06:138 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹிஜ்ர்' எனும் சொல்லுக்குத் தடுக்கப்பட்டது' என்று பொருள். தடைவிதிக்கப்பட்ட எல்லாப் பொருட்களுக்கும்'ஹிஜ்ருன் மஹ்ஜுர்' எனப்படும். நீ கட்டி முடித்த கட்டடங்களுக்கும்'அல் ஹிஜ்ர்' எனலாம். பெட்டைக் குதிரையும்'ஹிஜ்ர்' எனப்படுகிறது. (அதைப்போன்று) அறிவும்'ஹிஜ்ர்' என்றும், 'ஹிஜா' என்றும் சொல்லப்படுவதுண்டு.
'ஸமூத் குலத்தார் வாழ்ந்த பகுதியும்'ஹிஜ்ர்' எனப்படுவதுண்டு.
தரையில் நீ பிரித்துவிட்ட பகுதியும்'ஹிஜ்ர்' எனப்படும். இதனால்தான், 'இறையில்லம் கஅபாவை ஒட்டியுள்ள'ஹத்தீம்' (எனும் வில் வடிவ அமைப்பிலுள்ள கால் வட்டச் சுவரும்)'ஹிஜ்ர்' (பிரிக்கப்பட்டது) எனப்படுகிறது.
('ஃபஈல்' எனும் வாய்ப்பாட்டில் அமைந்த இந்த)'ஹத்தீம்' எனும் சொல் (செயப்பாட்டு வினை எச்சமான)'மஹ்த்தூம் (பிரிக்கப்பட்டது) என்ற பொருள் கொண்டதாகும். 'கத்தீல்' என்பதற்கு'மக்த்தூல்' (கொல்லப்பட்டவன்) உடைய பொருள் இருப்பதைப் போன்று.
யமாமாவின்'ஹஜ்ர்' என்பது, (யமனுக்கும் ஹிஜாஸுக்கும் இடையிலுள்ள) ஒரு பகுதியாகும்.

## 06:150 வது திருக்குர்ஆன் வசனம்

"உங்கள் சாட்சிகளைக் அழைத்து வாருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 06:150 வது) வசனத் தொடர்.
(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹலும்ம' (கொண்டு வாருங்கள்) எனும் சொல் ஹிஜாஸ்வாசிகளின் மொழி வழக்குப்படி ஒருமைக்கும் இருமைக்கும் பன்மைக்கும் ஆக, அனைத்துக்குமே பயன்படுத்தப்படுவதாகும்.

## 06:158 வது திருக்குர்ஆன் வசனம்

உம்முடைய இறைவனின் சான்றுகள் சில வெளிப்படும் (இறுதி) நாளில், முன்னரே நம்பிக்கை கொள்ளாதிருந்த மனிதருக்கோ, நம்பிக்கை கொண்டிருந்தாலும் அதற்கேற்ப நன்மை புரியாதிருந்த மனிதருக்கோ அவர் (அப்போது) நம்பிக்கை கொள்வது எவ்விதப் பயனையும் அளிக்காது (எனும் 6:158 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4635. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
சூரியன் மேற்குத் திசையிலிருந்து உதயமாகாத வரை மறுமை நாள் வராது. அதை மக்கள் பார்க்கும்போது, பூமியின் மீதிருபபவர்கள் இறைநம்பிக்கை கொள்வார்கள். அதற்கு முன் நம்பிக்கை கொள்ளாமலிருந்த எந்த மனிதனுக்கும் அவன் (அப்போது) கொள்ளும் இறைநம்பிக்கை பயனளிக்காத வேளையாய் அது இருக்கும்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4636. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'சூரியன் மேற்குத் திசையிலிருந்து உதயமாகாத வரை உலக முடிவு நாள் வராது. சூரியன் (மேற்குத் திசையில்) உதயமாம் மக்கள் அதைப் பார்க்கும்போது அவர்கள் அனைவருமே இறைநம்பிக்கை கொள்வார்கள். அது, எந்த மனிதருக்கும் அவரின் (அப்போதைய புதிய) நம்பிக்கை பயனளிக்காத நேரமாகும்'' என்று கூறிவிட்டு, 'உம்முடைய

இறைவனின் சான்றுகள் சில வெளிப்படும் (இறுதி) நாளில் முன்னரே நம்பிக்கை கொள்ளாதிருந்த மனிதருக்கும், அல்லது நம்பிக்கை கொண்டிருந்தும் அதற்கேற்ப நன்மை புரியாதிருந்த மனிதருக்கும் அவர் (அப்போது) நம்பிக்கை கொள்வது எவ்விதப் பயனையும் அளிக்காது‘‘ எனும் இந்த (திருக்குர்ஆன் 06:158 வது) வசனத்தை ஓதினார்கள்.

## (7)’அல்அ.்ரா.்ப்’ அத்தியாயம்

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 07: 26 வது வசனத்தின் மூலத்திலுள்ள’ரீஷ்’ எனும் சொல், மற்றோர் ஓதல் முறையில்’ரியாஷ்’ என்று ஓதப்பட்டுள்ளது. அந்த)’ரியாஷ்’ எனும் சொல்லுக்குச்’செல்வச் செழிப்பு’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 07:55 வது வசனத்தில் இடம்பெற்றுள்ள)’நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை நேசிப்பதில்லை‘‘ எனும் தொடருக்கு துஆ (பிரார்த்தனை) முதலானவற்றில் வரம்பு மீறுவோரை என்றுபொருள்.

(திருக்குர்ஆன் 07:95 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அ.்பவ்’ எனும் சொல்லுக்கு’அவர்களின் எண்ணிக்கையும் அவர்களின் சொத்து பத்துக்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது‘‘ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 07:89 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’இ.்ப்தஹ் பைனனா’ எனும் சொற்றொடருக்கு’எங்களிடையே தீர்ப்பளி’ என்று பொருள். (இச்சொல்லில் இருந்து வந்த 34:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அல்.்பத்தாஹ்’ எனும் சொல்லுக்குத்’தீர்ப்பளிப்பவன்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 07:171 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’நத்தக்னல் ஜபல’ எனும் வாகயீகயத்திற்கு’அந்த (சினாய்) மலையை நாம் உயர்த்தினோம்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 07:160 வது வசனத்தில்)’பீறிட்டோடின’ என்று குறிப்பிடப்பட்டுள்ள பொருள், மூலத்திலுள்ள’.்பம்பஜஸத்’ எனும் சொல்லுக்குரியதாகும்.

(திருக்குர்ஆன் 07:139 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’முத்தப்பர்’ எனும் சொல்லுக்கு’நட்டமானது’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 07:93 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஆஸா’ எனும் சொல்லுக்குக்’கவலைப்படுவேன்’ என்று பொருள். (இதே இனச் சொல்லும், 5:26 வது வசனத்தின் மூலத்திலுள்ளதுமான)’த.்ஸ’ எனும் சொல்லுக்க’கவலைப்படுதல்’ என்று பொருள்.

(இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாத) மற்றவர்கள் கூறுகிறார்கள்.

(திருக்குர்ஆன் 07:12 வது வசனத்தில்)’நீ சிரம் பணியாதிருக்கும்படி உன்னைத் தடுத்தது எது?’ என்று குறிப்பிடப்பட்டுள்ளதற்கு’நீ ஏன் சிரம் பணியவில்லை?’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 07:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ய.்க்ஸி.்பானி’ எனும் சொல்லுக்கு’அச்சோலையின் இலைகளை எடுத்துத் தங்களை மூடிக்கொள்ள அவர்கள் இருவரும் முயன்றனர்’ என்று பொருள். அதாவது அந்த இலைகளில் ஒன்றோடொன்றைக் கோத்துத் தங்க(ள் மறைவிடங்)களை மறைத்துக் கொள்ள முயன்றனர்’ என்று பொருள் விரியும்.

(இதே வசனத்திலுள்ள)’சவ்ஆத்’ (மறைவிடங்கள்) எனும் சொல், அவர்களின் பிறவி உறுப்புகளைக் குறிப்பிடுகிறது.

(திருக்குர்ஆன் 07:24 வது வசனத்திலுள்ள)’ஒரு காலம்வரை சுகம்’ என்பது அப்போதிருந்து மறுமை நாள் வரை உள்ள காலத்தைக் குறிக்கிறது.’அல்ஹீன்’ (காலம், நேரம்) எனும் சொல் அரபுகளிடம் சிறிது நேரம் முதல் எண்ணிறந்த காலம்வரை (எல்லா நேரத்தையும்) குறிக்கும்.

'ரியாஷ்' எனும் சொல்லும் (திருக்குர்ஆன் 07:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'ரீஷ்' எனும் சொல்லும் ('ஆடையின் வெளிப்பாகம்' என்ற) ஒரே பொருளை கொண்டவை ஆகும்.
(திருக்குர்ஆன் 07:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'கபீலுஹு' (அவனுடைய இனத்தார்) எனும் சொல், ஷைத்தானுடைய தலைமுறையைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 07:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'இத்தாரகூ' எனும் சொல்லுக்கு 'அவர்கள் குழுமினர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'சம்மு' எனும் சொல்லுக்கு 'அவர்கள் குழுமினர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'சம்மு' எனும் சொல்லுக்குத் 'துவாரம்' என்று பொருள். இதன் பன்மை 'கழூம்' என்பதாகும். மனிதன் மற்றும் கால்நடைகளின் (உடலிலுள்ள) அனைத்துத் துவாரங்களையும் இது குறிக்கும். அவையாவன: இரண்டு கண்கள், இரண்டு நாசிகள், வாய், இரண்டு காதுகள், ஆசனம், பிறவு உறுப்பு (ஆகிய உறுப்புகளின் துவாரங்கள்) ஆகும்.
(திருக்குர்ஆன் 07:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ஃகவாஷ்' எனும் சொல்லுக்கு 'அவர்களுக்குப் போர்த்தப்படும் போர்வை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:57 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'புஷ்ரா - நன்மாராயம்' எனும் சொல், மற்றோர் ஓதல் முறையில் 'நுஷ்ரா' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த) 'நுஷ்ரா' எனும் சொல்லுக்குப் 'பரவலானாது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:58 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'நம்தா' எனும் சொல்லுக்குச் 'சொற்பமானது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:92 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'யஃக்னவ்' எனும் சொல்லுக்கு 'வாழ்வார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:105 வது வசனத்தில்) 'கடமை' என்று குறிப்பிடப்பட்டுள்ள பொருள், மூலத்திலுள்ள 'ஹகீக்' எனும் சொல்லுக்குரியதாகும்.
(திருக்குர்ஆன் 07:116 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'இஃதர்ஹபூஹும்' (அவர்களைத் திடுக்கிடச் செய்தனர்) என்பது 'ரஹ்பத் (திடுக்கம்) எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததாகும்.
(திருக்குர்ஆன் 07:117 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தல்கஃபு' எனும் சொல்லுக்கு 'விழுங்கிவிட்டது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:131 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தாயிருஹும்' எனும் சொல்லுக்கு 'அவர்களுக்கேற்பட்ட கதி' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:133 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தூஃபான்' எனும் சொல்லுக்கு 'வெள்ளப்பெருக்கு' என்று பொருள். ஏராளமான உயிர்ச் சேதமும் 'தூஃபான்' எனப்படுவதுண்டு.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள) 'கும்மல்' எனும் சொல், சிறு பூச்சி வகையான பேனைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 07:137 வது வசனத்தின் 'மா கானூ யஃரிஷூன்' என்பதற்கு 'அவர்கள் கட்டியிருந்த' என்று பொருள். 'யஃரிஷூன்' எனும் சொல்லின் பெயர்ச் சொற்களான) 'உருஷ்', 'அரீஷ்' ஆகிய சொற்களுக்குக் 'கட்டடம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:149 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'சும்(த்)த' எனும் சொல்லுக்கு 'வருந்தினான்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:160 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அஸ்பாத்' எனும் சொல், இஸ்ராயீலின் சந்ததிகளின் (பன்னிரு) குலங்களைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 07:163 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ய.்தூன ்.பிஸ்ஸப்தி' என்பதற்கு'சனிக்கிழமையன்று வரம்பு மீறிக் கொண்டிருந்தனர்' என்று பொருள்.'த.்து' எனும் சொல்லுக்கு'நீ வரம்பு மீறுகிறாய்' என்று பொருள்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷுர்ரஅன்' எனும் சொல்லுக்கு'நீர் மட்டம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:165 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்லத இலல் அர்ள்' எனும் சொற்றொடருக்கு'அவன் இவ்வுலக (ஆசாபாச)த்தின் பால்சரிந்து முடங்கிக் கிடந்தான்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:182 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ச நஸ்தத்ரிஜுஹும்' எனும் சொல்லுக்கு, 'அவர்கள் அச்சமற்று இருக்குமிடத்தில் நாம் அவர்களை (அழிக்க) வந்தோம்' என்று பொருள்.'அவர்கள் எதிர்பார்க்காத வகையில் அல்லாஹ் அவர்களிடம் வந்(து அழித்)தான்'' எனும் (திருக்குர்ஆன் 59:02) வது வசனத்தைப் போன்று.
(திருக்குர்ஆன் 07:84 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மின் ஜின்னத்' எனும் சொல்லுக்குப்'பைத்தியம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:187 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அய்யான முர்சாஹா' எனும் வாக்கியத்திற்கு'மறுமையில் வருகை எப்போது?' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:189 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'.்ப மர்ரத் பிஹி' எனும் வாக்கியத்திற்கு'அவர் (ஹவ்வா) கர்ப்பத்தைச் சுமந்து கொண்டேயிருந்து பூர்த்தி செய்தார்'' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:200 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யன்ஸ.்கன்னக்க' எனும் சொல்லுக்கு'உம்மை குழப்பமடையச் செய்தான்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:201 வது வசனத்தின் மூலத்திலுள்ள'தாயி.்ப்' எனும் சொல் மற்றோர் ஓதல் முறையில்'தய்.்ப்' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த)'தய்.்ப்' எனும் சொல்லுக்கு'ஷைத்தானின் தீண்டுதல்' என்று பொருள். ('தய்.்ப்' என்ற இச்சொல்) தாயி.்ப் என்றும் ஓதப்படுகிறது. இதற்கும் அர்த்தம் ஒரே பொருள் தான்.
(திருக்குர்ஆன் 07:202 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யமுத்தூனஹும்' எனும் சொல்லுக்கு'அவர்களுக்கு (சாத்தானின் சகோதரர்கள் தவறான வழிகளை) அலங்கரித்துக் காட்டுகிறார்கள்'' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 07:205 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ கீ.்பத்' எனும் சொல்லுக்கு'பயம்' என்று பொருள் (ம்ட்டத்தட்ட இதே சாடையிலமைந்த)'கு.்ப்யத்' எனும் சொல்'இக்.்பா' (மறைத்தல்) என்பதிலிருந்து பிரிந்ததாகும்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'வல் ஆஸால்' (மாலை) என்பதற்கு அஸ்ருக்கும் ம.்க்ரிபுக்கும் இடைப்பட்ட நேரம்' என்று பொருள். இதன் ஒருமை'அஸீல்' என்பதாகும்.'புக்ரத்தன் வ அஸீலா' (காலை, மாலை) என்று நீ குறிப்பிடுவதைப் போன்று.

## 07:33 வது திருக்குர்ஆன் வசனம்

என் இறைவன் வெளிப்படையாகவும், மறைவாகவும் உள்ள மானக்கேடான செயல்களையே தடைசெய்துள்ளான் என்று (நபியே!) நீங்கள் சொல்லுங்கள் (எனும் 7:33 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4637 அம்ர் இப்னு முர்ரா(ரஹ்) அறிவித்தார்
நான் அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்களிடம், 'நீங்கள் (பின்வரும்) இந்த ஹதீஸை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடமிருந்து நேரடியாகச் செவியுற்றீர்களா?' என்று கேட்டேன். அவர்கள், ஆம்! அதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும் அவர்கள் கூறினார்கள் என்று பதிலளித்தார்கள்.

**“அல்லாஹ்வை விட அதிக ரோஷமுடையவர் வேறெவருமிலர். எனவேதான் மானக் கேடான செயல்களில் வெளிப்படையானவை, மறைவானவை அனைத்தையும் அவன் தடைசெய்துள்ளான். மேலும், அல்லாஹ்வை விட அதிகமாகப் புகழ்ச்சியை விரும்பக்கூடியவர் வேறெவரும் இலர். எனவே, தான் அவன் தன்னைத்தானே புகழ்ந்து கொண்டுள்ளான்‘` என்று கூறினார்கள்.**

## 07:143 வது திருக்குர்ஆன் வசனம்

**நாம் குறிப்பிட்டிருந்த நேரத்தில் (குறித்த இடத்திற்கு) மூஸா வந்தார். பிறகு அவரின் இறைவன் அவரிடம் உரையாடியபோது'என் இறைவா! எனக்கு உன்னைக் காண்பிப்பாயாக! நான் உன்னைப் பார்க்கவேண்டும்‘` என்று அவர் வேண்டினார். அதற்கு இறைவன், `என்னை நீர் ஒருபோதும் காணமுடியாது. ஆயினும் (எதிரிலுள்ள) மலையைப் பாரும்! அது தன்னுடைய இருப்பிடத்தில் நிலைத்திருந்தால் என்னை நீ காண முடியும்‘` என்று கூறினான். அவ்வாறே அவரின் இறைவன் அம்மலையின் மீது வெளிப்பட்டபோது அது பொடிப் பொடியாகிவிட்டது. மூஸாவும் திடுக்கிட்டு மயங்கி விழுந்தார். பிறகு உணர்வு பெற்றபோது'உன்னை நான் துதிக்கிறேன். உன்னிடம் மன்னிப்புக் கோருகிறேன். மேலும், நான் நம்பிக்கை கொண்டோரில் முதன்மையானவனாக இருக்கிறேன்‘` என்று கூறினார் (எனும் 7:143 வது வசனம்).**

ஹதீஸ் 4638. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

யூதர்களில் ஒருவர் (அன்சாரி ஒருவரிடம்) தம் முகத்தில் அறைவாங்கிக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்து, `முஹம்மதே! உங்கள் அன்சாரித் தோழர்களில் ஒருவர் என் முகத்தில் அறைந்துவிட்டார்‘` என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `அவரைக் கூப்பிடுங்கள்‘` என்று கூறினார்கள். உடனே மக்கள் அவரை அழைத்(து வந்)தனர். நபி(ஸல்) அவர்கள், `நீங்கள் இவர் முகத்தில் ஏன் அறைந்தீர்கள்?' என்று கேட்க அவர், `இறைத்தூதர் அவர்களே! நான் யூதர்களைக் கடந்து சென்றேன். அப்போது இவர், `மனிதர்கள் அனைவரிலும் மூஸாவை (சிறந்தவராக)த் தேர்ந்தெடுத்தவன் மீதாணையாக!"என்று சொல்லக் கேட்டேன். உடனே நான், `முஹம்மதை விடவுமா?' என்று கேட்டேன். எனக்குக் கோபம் மேலிட, நான் இவரை அறைந்துவிட்டேன்‘` என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `இறைத்தூதர்களுக்கிடையே என்னைச் சிறந்தவர் ஆக்காதீர்கள். ஏனெனில், மக்கள் மறுமை நாளில் மூர்ச்சையாகிவிடுவார்கள். மூர்ச்சை தெளிந்து எழுகிறவர்களில் முதல் ஆளாக நான் இருப்பேன். அப்போது நான் மூஸாவின் அருகே இருப்பேன். அவர் இறைவனுடைய அரியாசனத்தின் (அர்ஷின்) கால்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டிருப்பார். அவர் எனக்கு முன்பே மூர்ச்சை தெளிந்து (எழுந்து)விட்டாரா, அல்லது'தூர்சீனா' மலையில் (இறைவனைச் சந்திக்கச் சென்ற போது) அடைந்த மூர்ச்சைக்கு பதிலாக இங்கு (மூர்ச்சையாக்கப்படாமல்)விட்டுவிடப்பட்டாரா என்று எனக்குத் தெரியாது‘` என்று கூறினார்கள்.

மன்னும் சல்வாவும்4

ஹதீஸ் 4639. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சமையல் காளான் (தானாக வளர்வதில்)'மன்னு‘வின் வகையைச் சேர்ந்ததாகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.

என ஸயீத் இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

## 07:185 வது திருக்குர்ஆன் வசனம்

**(நபியே!) கூறுக: மனிதர்களே! நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியின் ஆட்சி எவனுக்குரியதோ அந்த அல்லாஹ்வின் தூதராக நான் உங்கள் அனைவருக்காகவும் அனுப்பப்பட்டுள்ளேன். அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவனே உயிரளிக்கிறான் இறக்கச் செய்கிறான். எனவே, அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்ளுங்கள் அவனால் அனுப்பப்பட்ட'உம்மீ' (எழுத்தறிவற்ற) தூதர் மீதும் நம்பிக்கை கொள்ளுங்கள். அவரோ அல்லாஹ்வையும்**

அவனுடைய வேத வாக்குகளையும் நம்புகின்றனர். எனவே, அவரைப் பின்பற்றுங்கள் அதனால் நீங்கள் நேர்வழி பெறக்கூடும் (எனும் 7:185 வது இறைவசனம்).

ஹதீஸ் 4640. அபுத் தர்தா(ரலி) அறிவித்தார்

(ஒரு சமயம்) அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கும் உமர்(ரலி) அவர்களுக்குமிடையே நடந்த வாக்குவாதத்தில் அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) அவர்களை கோபப்படுத்திவிட்டார்கள். அப்போது உமர்(ரலி) கோபத்துடன் அங்கிருந்து திரும்பிச் சென்றார்கள். உடனே அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) அவர்களுக்குப் பின்னாலேயே சென்று தம்மை மன்னித்து விடுமாறு வேண்டினார்கள். ஆனால், உமர்(ரலி) மன்னிக்காமல் அபூ பக்ர்(ரலி) அவர்களின் முகத்திற்கு முன்னால் (தம் வீட்டுக்) கதவைச் சாத்தினார்கள். எனவே, அபூ பக்ர்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி வந்தார்கள்.

(அப்போது) நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தோம். (அபூ பக்ர்(ரலி) வருவதைக் கண்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'இதோ உங்கள் தோழர் வழக்காடிவிட்டு வந்திருக்கிறார்'' என்று கூறினார்கள். (பிறகு) உமர்(ரலி) அவர்களும் தம்மால் ஏற்பட்டுவிட்ட செயலுக்கு வருந்தியவராக நபி(ஸல்) அவர்களை நோக்கி வந்து சலாம் (முகமன்) கூறி அமர்ந்தார்கள். (நடந்த) செய்தியை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் எடுத்துரைத்தார்கள். (அப்போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கோபப்பட்டார்கள். (இதைக் கண்ட) அபூ பக்ர்(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! (வாக்கு வாதத்தை தொடங்கி வைத்ததால் உமரை விட) நானே அதிகம் அநீதியிழைத்தவனாம் விட்டேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறலானார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'(மக்களே!) என் தோழரை எனக்காக நீங்கள் (மன்னித்து)விட்டுவிடுவீர்களா? என் தோழரை எனக்காக நீங்கள் (மன்னித்து)விட்டுவிடுவீர்களா? (ஒரு காலத்தில்)'மக்களே! நான் உங்கள் அனைவருக்கும் இறைத்தூதராக அனுப்பப்பட்டுள்ளேன்' என்று சொன்னேன். அப்போது நீங்கள்'பொய் சொல்கிறீர்' என்று கூறினீர்கள். ஆனால், அபூ பக்ர் அவர்களோ,'நீங்கள் உண்மையே சொன்னீர்கள்' என்று கூறினார்'' என்றார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)'ஃகாமர' எனும் சொல்லுக்கு'நன்மையில் முந்தினார்' என்று பொருள்.

## 07:161 வது திருக்குர்ஆன் வசனம்

"ஹித்தத்துன் (எங்கள் பாவச்சுமையை இறக்கிடுவாயாக!) என்று (திருக்குர்ஆன் 07:161 வது வசனத்தொடர்.

ஹதீஸ் 4641. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இஸ்ரவேலர்களிடம், 'ஹித்ததுன்'' (எங்கள் பாவச்சுமையை இறக்கிடுவாயாக!) என்று கூறிக்கொண்டே அதன் வாசலில் சிரம் தாழ்த்தியவர்களாய் நுழையுங்கள். நாம் உங்களுடைய குற்றங்களை மன்னித்து விடுவோம்'' என்று கூறப்பட்டது. ஆனால், (அவர்கள் தமக்குக் கூறப்பட்ட வார்த்தையை) மாற்றி(க் கூறி)யபடி தம் பிட்டங்களால் தவழ்ந்த வண்ணம் சென்றார்கள். மேலும், (உள்ளே நுழையும் போது)'ஹப்பத்துன் ஃபீ ஷஅரத்தின்'' (ஒரு வாற்கோதுமைக்குள் ஒரு தானியவித்து) என்று (பரிகாசமாகச்) கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 07:199 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) மன்னிக்கும் போக்கை மேற்கொள்வீராக! மேலும், நன்மை புரியுமாறு ஏவுவீராக! இன்னும் அறிவீனர்களைவிட்டு விலகியிருப்பீராக! (எனும் 7:199 வது இறைவசனம்.)

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'உர்ஃப்' எனும் சொல்'நன்மை'யைக் குறிக்கும்.

ஹதீஸ் 4642. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
'உயைனா இப்னு ஹிஸ்ன் இப்னி ஹுதைஃபா'(ரலி) (மதீனாவுக்கு) வந்து, தம் சகோதரருடைய புதல்வர் ஹுர்ரு இப்னு கைஸ்(ரலி) அவர்களிடம் தங்கினார். உமர்(ரலி) தம் அருகில் அமர்த்திக்கொள்பவர்களில் ஒருவராக (அந்த அளவுக்கு அவர்களுக்கு நெருக்கமானவராக) ஹுர்ரு இப்னு கைஸ் இருந்தார். முதியவர்களோ இளைஞர்களோ யாராயினும், குர்ஆனை நன்கறிந்தவர்களே உமர்(ரலி) அவர்களின் அவையினராகவும் ஆலோசகர்களாகவும் இருந்தனர். எனவே, உயைனா, தம் சகோதரருடைய புதல்வரிடம், 'என் சகோதரர் மகனே! உனக்கு இந்தத் தலைவரிடம் செல்வாக்கு உள்ளது. எனவே, அவரைச் சந்திக்க எனக்கு அனுமதி பெற்றுத் தா'' என்று கூறினார். அதற்கு அவர், 'உமர்(ரலி) அவர்களிடம் செல்ல நான் உமக்காக அனுமதி கேட்கிறேன்'' என்று கூறினார். அவ்வாறே உமரைச் சந்திக்க உயைனாவுக்காக ஹுர்ரு அவர்கள் அனுமதி கேட்டார். உமர்(ரலி) அவர்களும் அவருக்கு (தம்மைச் சந்திக்க) அனுமதி கொடுத்தார்கள். உயைனா அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம் சென்றபோது, 'கத்தாபின் புதல்வரே! அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் எங்களுக்கு அதிகமாக வழங்குவதில்லை. எங்களிடையே நீங்கள் நீதியுடன் தீர்ப்பளிப்பதில்லை'' என்று கூறினார். உமர்(ரலி) கோபமுற்று அவரை நாடி (அடிக்க)ச் சென்றார்கள். உடனே ஹுர்ரு அவர்கள் உமர்(ரலி) அவர்களை நோக்கி, 'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! உயர்ந்தோனான அல்லாஹ் தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு, '(நபியே!) மன்னிக்கும் போக்கை மேற்கொள்வீராக! மேலும், நன்மை புரியுமாறு ஏவுவீராக! இன்னும் அறிவீனர்களைவிட்டு விலகியிருப்பீராக!" (திருக்குர்ஆன் 07:199) என்று கூறியுள்ளான். இவர் அறியாதவர்களில் ஒருவர்'' என்று கூறினார். அல்லாஹ்வின் மீதாணையாக! ஹுர்ரு அவர்கள் இந்த வசனத்தை உமர்(ரலி) அவர்களுக்கு ஓதிக் காட்டியபோது உமர்(ரலி) அதை மீறவில்லை. (பொதுவாக) உமர்(ரலி) இறைவேதத்திற்கு மிகவும் கட்டுப்படக்கூடியவர்களாய் இருந்தார்கள்.

ஹதீஸ் 4643. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்
"(நபியே!) மன்னிக்கும் போக்கை மேற்கொள்வீராக! மேலும், நன்மை புரியுமாறு ஏவுவீராக!"எனும் (திருக்குர்ஆன் 07:199 வது) வசனத்தை, மக்களின் நற்குணங்களில் ஒன்றாகவே அல்லாஹ் அருளினான்.

ஹதீஸ் 4644. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்
மக்களின் நற்குணங்களில் ஒன்றான மன்னிக்கும் போக்கை மேற்கொள்ளும்படி தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு (இவ்வசனத்தில் 7:199) அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான்.

## (8)'அல் அன்ஃபால்' அத்தியாயம்

## 08:01 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) போரில் கிடைத்த பொருட்களை குறித்து அவர்கள் வினவுகிறார்கள். கூறும்: போரில் கிடைத்த பொருள்கள் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியனவாகும். எனவே, அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். மேலும், உங்களுக்கிடையே (உள்ள உறவுகளைச்) சீராக்கிக் கொள்ளுங்கள். மேலும், நீங்கள் நம்பிக்கை கொண்டோராயின் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 08:1 வது) இறைவசனம்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: (மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள)'அன்ஃபால்' எனும் சொல்லுக்குப்'போரில் கிடைத்த பொருள்கள் (ஃகனீமத்துகள்)' என்று பொருள்.
கத்தாதா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 08:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரீஹுக்கும்' எனும் சொல்லுக்கு'உங்கள் போர் (வலிமை') என்று பொருள்.

நன்கொடையும்'நா∴பிலா' என்று சொல்லப்படும்.

ஹதீஸ் 4645. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்'அல்அன்∴பால்' அத்தியாயம் (எது தொடர்பாக அருளப்பெற்றது என்பது) குறித்து வினவினேன். (அதற்கு) அவர்கள், 'அது பத்ருப்போர் தொடர்பாக அருளப்பெற்றது'' என்று கூறினார்கள்.

(மேலும், இந்த அத்தியாயத்தின் மூலத்தில் இடம்பெற்றுள்ள கீழ்க்கண்ட சொற்களுக்குப் பின்வருமாறு விளக்கமளிக்கப்பட்டுள்ளது:)

(திருக்குர்ஆன் 08:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஷ்ஷவ்கத்'' எனும் சொல்லுக்கு'(ஆயுத) முனை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 08:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முர்தி∴பீன்' எனும் சொல்லுக்குப்'படை படையாக' என்று பொருள். (இதன் வினைச் சொல்லான)'ரதி∴பனீ' மற்றும்'அர்த∴பனீ' என்பதற்கு'என்னைத் தொடர்ந்து வந்தான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 08:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴தூகூ' (சுவைத்துப் பாருங்கள்) எனும் சொல்லுக்கு'அனுபவித்துப் பாருங்கள்' என்று பொருள். வாயினால் சுவைப்பதை இது குறிக்காது.

(திருக்குர்ஆன் 08:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴பயர்குமஹு' எனும் சொல்லுக்குத்'தீயோரை அவன் ஒன்றுசேர்ப்பான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 08:57 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷர்ரித்' எனும் சொல்லுக்குச்'சிதறி(யோ)டச் செய்யுங்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 08:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ இன் ஜனஹு' எனும் சொற்றொடருக்கு'அவர்கள் (சமாதானத்தைக்) கோரினால்' என்று பொருள்.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'வ இன் ஜனஹு' எனும் சொற்றொடருக்கு'அவர்கள் (சமாதானத்தைக்) கோரினால்' என்று பொருள்.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸில்கி' எனும் சொல்லும்'அஸ்ஸல்கி' அஸ்ஸலாம் ஆகிய சொறக்ளும் ('சமாதானம்' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.

(திருக்குர்ஆன் 08:67 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஸ்கின' எனும் சொல்லுக்கு'முறியடிப்பார்' என்று பொருள்.

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 08:35 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முகா∴' எனும் சொல்'அவர்கள் தங்கள் விரல் (நுனி)களைத் தங்கள் வாய்களுக்குள், நுழைத்துக் கெள்வதைக்' குறிக்கும்.'தஸ்தியா' எனும் சொல்லுக்குச்'சீட்டியடித்தல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 08:30 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸி யுஸ்பித்தூக்க' எனும் சொல்லுக்கு'உங்களை அடைத்துவைக்க' என்று பொருள்.

## 08:22 வது திருக்குர்ஆன் வசனம்

நிச்சயமாக சிந்தித்துணராத செவிடர்களும் ஊமையர்களும் தாம் அல்லாஹ்விடம் மிகவும் இழிவான விலங்குகளாவர் (எனும் 8:22 வது இறைவசனம்).

ஹதீஸ் 4646 முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) அறிவித்தார்

நிச்சயமாக சிந்தித்துணராத செவிடர்களும் ஊமையர்களும்தாம் அல்லாஹ்விடம் மிகவும் இழிவான விலங்குகளாவர் எனும் (திருக்குர்ஆன் 08:22 வது) வசனம் குறித்து இப்னு அப்பாஸ்(ரலி) கூறுகையில்'பனு அப்தித்தார் குலத்தைச் சேர்ந்த சிலர் தாம் அவர்கள்'' என்று கூறினார்கள்.

## 08:24 வது திருக்குர்ஆன் வசனம்

இறை நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு வாழ்வளிக்கக் கூடியதன் பக்கம் இறைத்தூதர் உங்களை அழைக்கும்போது அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் விரைந்து பதில் அறிளியுங்கள். அல்லாஹ், மனிதனையும் அவனுடைய உள்ளத்தையும் சூழ்ந்து நிற்கிறான் என்பதையும், நிச்சயமாக அவனிடமே நீங்கள் ஒன்று திரட்டப்படுவீர்கள் என்பதையும் அறிந்துகொள்ளுங்கள் (எனும் 8:24 வது இறைவசனம்).
(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'இஸ்தஜீபு' எனும் சொல்லுக்கு'பதிலளியுங்கள்' என்று பொருள்.'லிமா யுஹ்யீக்கும்' (உங்களுக்கு வாழ்வளிக்கின்ற) என்பதற்கு'உங்களைச் சீராக்குகின்ற' என்று பொருள்.

ஹதீஸ் 4647. அபூ ஸயீத் இப்னு முஅல்லா(ரலி) அறிவித்தார்
நான் ('மஸ்ஜிதுந் நபவீ' பள்ளிவாசலில்) தொழுது கொண்டிருந்தேன். அப்போது என்னைக் கடந்து சென்ற இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். நான் தொழு(து முடிக்கு)ம்வரை அவர்களிடம் செல்லவில்லை. பிறகு நான்அவர்களிடம் சென்றேன். அவர்கள் என்னிடம், `நீங்கள் ஏன் என்னிடம் உடனே வரவில்லை? அல்லாஹ், `இறைநம்பிக்கையாளர்களே! இறைத்தூதர் உங்களை அழைக்கும்போது அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் விரைந்து பதில் அளியுங்கள்' என்று கூறவில்லையா?' எனக் கேட்டார்கள். பிறகு, `நான் (பள்ளிவாசலிலிருந்து) புறப்படுவதற்கு முன்பாக குர்ஆனில் மகத்துவமிக்க ஓர் அத்தியாயத்தை நான் உங்களுக்குக் கற்பிக்கிறேன்'` என்று கூறினார்கள். பின்னர் நபி அவர்கள் (பள்ளிவாசலிலிருந்து) வெளியேறப் போனார்கள். அப்போது நான் அவர்களுக்கு (அவர்கள் வாக்களித்ததை) நினைவூட்டினேன். நபி(ஸல்) அவர்கள், `அது அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்' எனும் (அல்ஃபாத்திஹா அத்தியாயத்தின்) திரும்பத் திரும்ப ஓதப்படும் ஏழு வசனங்கள் தாம்'` என்று கூறினார்கள். 3
இதே ஹதீஸை நபித்தோழர் அபூ ஸயீத்'பின் முஅல்லா(ரலி) அவர்களிடமிருந்தே செவியுற்று வேறு அறிவிப்பாளர்களும் அறிவித்தார்கள்.

## 08:32 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், அவர்கள் இவ்வாறு கூறியதையும் (நபியே!) நினைத்துப் பாருங்கள்:'இறைவா! இது உன்னிடமிருந்து அருளப்பெற்ற சத்தியம் தான் என்றிருப்பின், எங்களின் மீது வானத்திலிருந்து கல்மாரி பொழிந்துவிடு அல்லது துன்புறுத்தும் வேதனையை எங்களுக்குக் கொண்டுவா!"எனும் (திருக்குர்ஆன் 08:32 வது) இறைவசனம்.
சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
குர்ஆனில் அல்லாஹ்'மத்தர்' எனக் குறிப்பிட்டிருப்பது (பெரும்பாலும்)'வேதனை'யையே குறிக்கும். (மழையைக் குறிக்காது). மழையைக் குறிக்க அரபுகள்'அல்ஃகைஸ்' எனும் சொல்லையே பயன்படுத்துவர்.'அவர்கள் நம்பிக்கையிழந்த பின்னரும் அவனே மழையைப் பொழிவிக்கிறான்'` எனும் (திருக்குர்ஆன் 42:28 வது) வசனத்தில் இவ்வாறே (மழை என்பதைக் குறிக்க'அல்ஃகைஸ்' எனும் சொல்லே) ஆளப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4648. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
(குறைஷி இணைவைப்பாளர்களின் தலைவன்) அபூ ஜஹ்ல்'இறைவா! இது (-குர்ஆன்-) உன்னிடமிருந்து வந்த சத்தியம் தான் என்றிருப்பின் எங்களின் மீது வானத்திலிருந்து கல்மாரியைப் பொழி! அல்லது துன்புறுத்தும் (ஒரு) வேதனையை எங்களுக்குக் கொண்டு வா!"என்று சொன்னான். அப்போது'(நபியே!) நீர் அவர்களுக்கிடையே இருக்கும்போது அல்லாஹ் அவர்களின் மீது வேதனையை இறக்குபவன் அல்லன். மேலும், மக்கள் பாவமன்னிப்பை வேண்டிக்கொண்டிருக்கும் நிலையில் அவர்களை அல்லாஹ் வேதனை செய்யப் போவதில்லை. அவர்கள் (கஅபா உள்ளிட்ட) மஸ்ஜிதுல் ஹராமுக்கு (முறையான) நிர்வாகிகளாக இல்லாத நிலையில் (மக்களை) அங்கு செல்லவிடாமல்

தடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்நிலையில் அல்லாஹ் அவர்களை வேதனைக்குள்ளாக்காமல் இருப்பதற்கு அவர்களிடம் என்ன காரணம் உள்ளது? இறையச்சமுடையவர்கள் மட்டுமே அதன் (முறையான) நிர்வாகிகளாக ஆகமுடியும்! அவர்களில் பெரும்பாலோர் (இதனை) அறியமாட்டார்கள்‘ ' எனும் வசனங்கள் (திருக்குர்ஆன் 08:33, 34) அருளப்பெற்றன.

## 08:33 வது திருக்குர்ஆன் வசனம்

“(நபியே!) நீர் அவர்களுக்கிடையே இருக்கும்போது அல்லாஹ் அவர்களின் மீது வேதனையை இறக்குபவன் அல்லன். மேலும், மக்கள் பாவ மன்னிப்பை வேண்டிக்கொண்டிருக்கும் நிலையில் அவர்களை அல்லாஹ் வேதனை செய்யப் போவதில்லை‘ ' எனும் (திருக்குர்ஆன் 08:33 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4649. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(குறைஷி இணைவைப்பாளர்களின் தலைவன்) அபூ ஜஹ்ல், 'இறைவா! இது (-குர்ஆன்-) உன்னிடமிருந்து வந்த சத்தியமே என்றிருப்பின், எங்களின் மீது வானத்திலிருந்து கல்மாரியைப் பொழி! அல்லது துன்புறுத்தும் (ஒரு) வேதனையை எங்களுக்குக் கொண்டுவா!”என்று சொன்னான். அப்போது ′(நபியே!) நீர் அவர்களுக்கிடையே இருக்கும்போது அல்லாஹ் அவர்கள்மீது வேதனையை இறக்குபவன் அல்லன். மேலும், மக்கள் பாவமன்னிப்பை வேண்டிக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களை அல்லாஹ் வேதனை செய்யப்போவதில்லை. அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமுக்கு (முறையான) நிர்வாகிகளாக இல்லாத நிலையில் (மக்களை) அங்கு செல்லவிடாமல் தடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்நிலையில் அல்லாஹ் அவர்களை வேதனைக்குள்ளாக்காமல் இருப்பதற்கு அவர்களிடம் என்ன காரணம் உள்ளது? இறையச்சமுடையவர்கள் மட்டுமே அதன் (முறையான) நிர்வாகிகளாக ஆக முடியும்! அறியமாட்டார்கள்‘ ' எனும் வசனங்கள் (திருக்குர்ஆன் 08:33, 34) அருளப்பெற்றன.

## 08:39 வது திருக்குர்ஆன் வசனம்

(பூமியிலிருந்து) குழப்பம் நீங்கி, கீழ்ப்படிதல் முற்றிலுமாக அல்லாஹ்வுக்கென்றே ஆகிவிடும்வரை அவர்களுடன் நீங்கள் போர் புரியுங்கள் (எனும் 8:39 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4650. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(காரிஜிய்யா கூட்டத்தைச் சேர்ந்த) ஒருவர் என்னிடம் வந்து, 'அபூ அப்திர் ரஹ்மானே! அல்லாஹ் தன் வேதத்தில் (பின் வருமாறு) கூறியிருப்பதை நீங்கள் கேட்கவில்லையா? என்று கேட்டார். ′இறை நம்பிக்கையாளர்களில் இருபிரிவினர் தங்களுக்குள் சண்டையிட்டால் அவ்விரு வருக்குமிடையே சமாதானப்படுத்தி விடுங்கள். பின்னர் அவர்களில் ஒரு பிரிவினர் மற்றொரு பிரிவினரின் மீது (வரம்பு மீறி) அக்கிரமம் புரிந்தால் அக்கிரமம் புரிந்தவர்கள் அல்லாஹ்வின் கட்டளையின் பக்கம் வரும்வரை அவர்களை நீங்கள் எதிர்த்துப் போரிடுங்கள். அவர்கள் (அல்லாஹ்வின் கட்டளைகளின் பக்கம்) திரும்பிவிட்டால், நியாயமான முறையில் அவ்விருவருக்கிடையே நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக, அல்லாஹ் நீதி வான்களை நேசிக்கிறான்‘ ' (திருக்குர்ஆன் 49:09). ′இந்நிலையில், அல்லாஹ் தன் வேதத்தில் கூறியுள்ளபடி நீங்கள் போரிட முன்வராமல் இருப்பது ஏன்?′ என்றும் கேட்டார். நான், 'என் சகோதரர் மகனே! இந்த (திருக்குர்ஆன் 49:9 வது) வசனத்திற்கு ஏதேனும் சமாதானம் கூறிவிட்டு (முஸ்லிம்களில் ஒரு பிரிவினருக்குக்கெதிராகப்) போர் புரியாமல் இருந்துவிடுவது, 'ஓர் இறை நம்பிக்கையாளரை ஒருவன் வேண்டுமென்றே கொலைசெய்தால் அவனுக்குரிய பிரதிபலன் நரகமாகும். அதில் அவன் நிலையாக வீழ்ந்து கிடப்பான். மேலும், அவன் மீது அல்லாஹ்வின் கோபமும் அவனுடைய சாபமும் உள்ளது. மேலும், மிகப் பெரிய வேதனையும் அவனுக்காகத் தயார் செய்து வைத்துள்ளான்‘ ' என்ற (திருக்குர்ஆன் 04:93 வது) வசனத்திற்கு சமாதானம் சொல்வதைவிட எனக்கு உவப்பானதாயிருக்கும்‘ ' என்று கூறினேன். அந்த

மனிதர்“ `(பூமியிலிருந்து) குழப்பம் நீங்கி, கீழ்ப்படிதல் முற்றிலுமாக அல்லாஹ்வுக்கென்றே ஆகிவிடும்வரை அவர்களுடன் நீங்கள் போர் புரியுங்கள்’ (திருக்குர்ஆன் 08:39) என்று அல்லாஹ் கூறுகிறானே!”என்று கேட்டார். நான், `(இதை) நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் செயல்படுத்தி விட்டோம். அப்போது இஸ்லாம் (உறுப்பினர் எண்ணிக்கையில்) குறைவானதாக இருந்தது. அப்போது (இஸ்லாத்தை ஏற்ற) ஒருவர் தம் மார்க்கத்தின் விஷயத்தில் குழப்பத்திற்கு(ம் சோதனைக்கும்) உள்ளாக்கப்பட்டார் ஒன்று (எதிரிகள்) அவரைக் கொன்றுவிடுவார்கள். முடிவில் இஸ்லாம் (அதன் உறுப்பினர்களால்) அதிகரித்தபோது எந்தக் குழப்பமும் (எஞ்சி) இருக்கவில்லை‘` என்று பதிலளித்தேன். தாம் எண்ணி வந்ததற்கு நான் இணங்காததை அவர் கண்டதும், `அலீ இப்னு அபீ தாலிப்) மற்றும் உஸ்மான் இப்னு அஃப்பான்) விஷயத்தில் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?’ என்று கேட்டார். நான், `அலீ மற்றும் உஸ்மான் ஆகியோர் விஷயத்தில் என் கருத்து (இதுதான்:) உஸ்மான்(ரலி) அவர்களை அல்லாஹ்வே மன்னித்துவிட்டான். ஆனால், அவர்களை மன்னிக்க நீங்கள் விரும்பவில்லை. அலீ(ரலி) அவர்களின் தந்தையின் சகோதரர் மகனும் நபியவர்களின் மருமகனுமாவார்கள்‘` என்று கூறினேன்.

(இதன் அறிவிப்பாளர் நாஃபிஉ(ரஹ்) கூறினார்:)

இப்னு உமர்(ரலி)’இதோ நீங்கள் காண்கிற இந்த இடத்தில் உள்ளது தான் நபியவர்களின் புதல்வியார் (ஃபாத்திமாவின்) இல்லமாகும்“- என்று தம் கரத்தால் சைகை செய்தவாறு - கூறினார்கள்.

ஹதீஸ் 4651. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

எங்களிடம் இப்னு உமர்(ரலி) புறப்பட்டு வந்தார்கள். (அப்போது) ஒருவர் (அன்னாரிடம்), `நீங்கள் (இந்த முஸ்லிம்களுக்கிடையிலான) குழப்பத்தின் (காரணமாக விளைந்துள்ள) போரைக் குறித்து என்ன கருதுகிறீர்கள்?’ என்று கேட்டதற்கு, இப்னு உமர்(ரலி), `குழப்பம்’ (ஃபித்னா) என்றால் என்ன என்று உமக்குத் தெரியுமா? முஹம்மத்(ஸல்) அவர்கள் இணைவைப்பவர்களுடன் போரிட்டு வந்தார்கள். இணைவைப்பவர்களிடம் முஸ்லிம் ஒருவர் சென்றால் குழப்பத்தில் (சோதனையில்) சிக்கிக்கொள்வார்‘` என்று பதிலளித்துவிட்டு, `அவர்களின் போர் ஆட்சியதிகாரத்திற்காக நடக்கும் உங்களின் போரைப் போன்று இருந்ததில்லை‘` என்றும் கூறினார்கள்.

## 08:65 வது திருக்குர்ஆன் வசனம்

நபியே! இறைநம்பிக்கையாளர்களுக்குப் போர் புரிவதில் ஆர்வமூட்டுவீராக! உங்களில் (நிலைகுலையாத) பொறுமையாளர்கள் இருபது பேர் இருந்தால் (எதிரிகளில்) இரண்டு நூறு பேரை அவர்கள் கொன்றுவிடுவார்கள். மேலும், (இத்தகையோர்) உங்களில் நூறு பேர் இருந்தால் இறைமறுப்பாளர்களில் ஓராயிரம் பேரை அவர்கள் வென்றுவிடுவார்கள் ஏனெனில், இவர்கள் புரிந்த கொள்ளாத மக்களாக இருக்கிறார்கள் (எனும் 8:65 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4562. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

“உங்களில் (நிலைகுலையாத) பொறுமையாளர்கள் இருபது பேர் இருந்தால் (எதிரிகளில்) இரண்டு நூறு பேரை அவர்கள் வென்றுவிடுவார்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 08:65 வது) இறைவசனம் அருளப்பட்டபோது, ஒருவர் பத்து பேரைக் கண்டு வெருண்டோடாமல் (எதிர்த்து நின்று சமாளித்துப் பொறுமையாக) இருக்க வேண்டும் என்று அவர்களுக்கு விதியாக்கப்பட்டது. இதையே’இருநூறு பேரைக் கண்டு இருபது பேர் வெருண்டோடக் கூடாது‘` என சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) பலமுறை தெரிவித்தார்கள். அதன் பிறகு’எனினும் உங்களிடம் பலவீனம் இருக்கிறது என்பதை அல்லாஹ் நன்கறிந்து கொண்டு, தற்போது (அதனை) உங்களுக்குத் தளர்த்திவிட்டான். எனவே, உங்களில் (பொறுமையும்) சம்புத் தன்மை(யும்) உடைய நூறு பேர் இருந்தால் அவர்கள் (மற்ற) இருநூறு பேர்களை வெற்றிகொள்வார்கள்.

(இத்தகைய) ஆயிரம் பேர் உங்களிடம் இருந்தால் அல்லாஹ்வின் உதவியால் (மற்ற) இரண்டாயிரம் பேர்களை வெற்றி கொள்வார்கள். அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 08:66 வது) இறைவசனம் அருளப்பெற்றது. (அதன்மூலம்) அல்லாஹ் நூறு முஸ்லிம்கள் இருநூறு பேரைக் கண்டு வெருண்டோடக் கூடாது என்று விதித்தான்.

ஒரு முறை சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) இவ்வசனம் (திருக்குர்ஆன் 08:65) குறித்துக் கூறியபோது (கூஃபாவின் நீதிபதியும் தாபிஈயுமான (அப்துல்லாஹ்) இப்னு ஷுப்ருமா(ரஹ்), 'நன்மை புரியும்படி கட்டளையிட்டுத் தீமையிலிருந்து தடுப்பதையும் கூட நான் இது போன்றே கருதுகிறேன் என்று கூறினார்'' என்றும் அதிகப்படியாக அறிவித்தார்கள்.

## 08:66 வது திருக்குர்ஆன் வசனம்

"எனினும் உங்களிடம் பலவீனம் இருக்கிறது என்பதை அறிந்துகொண்டு தற்போது (அதனை) உங்களுக்கு அல்லாஹ் தளர்த்திவிட்டான்'' எனும் (திருக்குர்ஆன் 08:66 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4653. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

"உங்களில் (நிலைகுலையாத) பொறுமையாளர்கள் இருபது பேர் இருந்தால் (எதிரிகளில்) இரண்டு நூறு பேரை அவர்கள் வென்றுவிடுவார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 08:65 வது) வசனம் அருளப்பெற்று, (முஸ்லிம்) ஒருவர் (இறைமறுப்பாளர்கள்) பத்துப் பேரைக் கண்டு வெருண்டோடாமல் (எதிர்த்து நின்று சமாளித்துப் பொறுமையாக) இருக்கவேண்டும் என்று விதிக்கப்பட்டபோது அது முஸ்லிம்களுக்குச் சிரமமாயிருந்தது. எனவே, (சட்டத்தைத்) தளர்த்தும் வசனம் வந்தது. அதில் அல்லாஹ், 'எனினும், உங்களிடம் பலவீனம் இருக்கிறது என்பதை அல்லாஹ் அறிந்துகொண்டு தற்போது (அதனை) உங்களுக்குத் தளர்த்திவிட்டான். எனவே, உங்களில் (நிலை குலையாத) பொறுமைசாலிகள் நூறு பேர் (எதிரிகளில்) இருநூறு பேரை வெற்றிகொள்வார்கள்'' எனும் வசனம் (திருக்குர்ஆன் 08:66) அருளப்பெற்றது. (எதிரிகளைச் சமாளிக்கும்) விம்தத்தை அல்லாஹ் குறைத்துவிட்ட போதே அதே அளவுக்கு சம்ப்புத்தன்மையையும் அவன் குறைத்துவிட்டான்.

## (9)'பராஅத்' ('அத்தவ்பா') அத்தியாயம்

(திருக்குர்ஆன் 09:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மர்ஸத்' எனும் சொல்லுக்குப்'பாதை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 09:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இல்லன்' எனும் சொல்லுக்கு பந்தம், பொறுப்பு, உடன்படிக்கை ஆகிய பொருள்கள் உண்டு.

(திருக்குர்ஆன் 09:16 வது வசனத்திலுள்ள'அந்தரங்க நண்பர்கள்' என்பது மூலத்திலுள்ள'வலீஜத்' எனும் சொல்லின் பொருளாகும். பொதுவாக) மற்றொன்றினுள் நி நுழைவித்த எல்லாப் பொருள்களையும்'வலீஜத்' எனும் சொல் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 09:42 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஷ்ஷுக்கா' எனும் சொல்லுக்குப்'பயணம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 09:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கபால்' எனும் சொல்லுக்குச் சீர்குலைவு, மரணம் (அல்மவ்த்) ஆகிய பொருள்கள் உண்டு. ('அல்மூத்தா' என்பதன்படி'மனநோய்' எனும் பொருளும் உண்டு.)

(திருக்குர்ஆன் 09:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வலா தஃப்தின்னீ' எனும் சொற்றொடருக்கு'என்னை நீர் கண்டிக்காதீர்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 09:53 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கர்ஹ்' எனும் சொல்லும் (அதே வகைச் சொல்லான'குர்ஹ்' எனும் சொல்லும் ('வெறுப்பு' எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

(திருக்குர்ஆன் 09:57 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முத்தகலன்' எனும் சொல்லுக்கு (அதே வகைச் சொல்லான'`குர்ஹ்' எனும் சொல்லும் ('வெறுப்பு' எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'யஜ்மஹூன்' எனும் சொல்லுக்கு'விரைந்தோடுவார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் மு:த:பிக்காத்' எனும் சொல்லுக்குத்'தலைகீழாகப் புரண்டு போன ஊர்' என்று பொருள்.'வல் மு:த:பிக்கத்த அஹ்வா' எனும் (திருக்குர்ஆன் 53:53 வது) வசனத்திற்கு, `(லூத்தின் மக்களுடைய) கவிழ்ந்து போன நகரங்களை அதல பாதாளத்தில் தூக்கிப் போட்டவனும் அவன்தான்'` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்ன்' எனும் சொல்லுக்கு, `நிலையானது' என்று பொருள். (அதன்வினைச் சொல்லான)'அதன்த்து பி அர்ளின்' எனும் வாக்கியத்திற்கு'நான் ஒரு நாட்டில் நிலையாகத் தங்கினேன்' என்று பொருள்.
இதிலிருந்து'மஅதின்' (சுரங்கம்) என்ற சொல் பிறந்தது. மேலும்'மஅதனி சித்க்' என்றால்'சத்தியத்தின் பிறப்பிடம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:87 வது வசனத்திலுள்ள'கவாலி:ப்' (பின்தங்கிவிட்டவர்கள்) எனும் சொல்லின் ஒருமையான)'அல்காலி:ப்' எனும் சொல், என் பின்னால் வராமல் நான் சென்ற பின் (தன் வீட்டிலேயே) அமர்ந்துகொண்டவனைக் குறிக்கும். இச்சொல்லிலிருந்து'யக்லு:புஹூ :பில் :காபிரீன்' (இறைவா! அவருக்குப் பின்னால் அவருக்கு பதிலாக ஒருவரை வழங்கிடுவாயாக!) எனும் வழக்கு பிறந்தது.
'கவாலி:ப்' என்பது'காலி:பா' எனும் பெண்பால் ஒருமையின் பன்மையாகவும் இருக்கலாம். ஏனெனில், இந்த அமைப்பில் ஆண்பால் பன்மை :பாரிஸ் - :பவாரிஸ், ஹாலிக் - ஹவாலிக் ஆகிய இரண்டு சொற்களில் மட்டுமே உண்டு.
(திருக்குர்ஆன் 09:88 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கைராத்' எனும் சொல்லின் ஒருமை'அல்கைரத்' என்பதாகும். இதற்குச்'சிறந்தவை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:106 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முர்ஜவ்ன' எனும் சொல்லுக்குத்'தாமதப்படுத்தி வைக்கப்பட்டவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:109 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷ:பா' எனும் சொல்லுக்குத்'தாமதப்படுத்தி வைக்கப்பட்டவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:109 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷ:பா' எனும் சொல்லுக்கு'விளிம்பு' என்று பொருள்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜுரு:ப்' எனும் சொல்லுக்குச்'சரிந்து விழக்கூடிய வெள்ளம் மற்றும் ஓடைகள்' என்று பொருள்.'ஹாரின்' எனும் சொல்லுக்கு'இடிந்து விழக்கூடியது என்று பொருள்.'தஹவ்வரத்தில் பி:ரு' என்றால், `ம்ணறு இடிந்துவிட்டது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:114 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ல அவ்வாஹ்' எனும் சொல்லுக்குப் பரிவோடும் பயத்தோடும் அடி பணிகிறவர்' என்று பொருள்.
ஒரு கவிஞர் கூறினார்: நான் இரவில் அந்த ஒட்டகத்தில் சிவிகை பூட்ட எழுந்தால், சஞ்சலம் உள்ள மனிதன் அடங்கி ஒடுங்குவதைப் போன்று அந்த ஒட்டகமும் அடிபணியும்.

## 09:01 வது திருக்குர்ஆன் வசனம்

“(நம்பிக்கையாளர்களே!) இணைவைத்து வணங்குவோரில் யாரிடம் நீங்கள் உடன்படிக்கை செய்து கொண்டிருந்தீர்களோ அவர்களிடமிருந்து அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் விலகிக் கொண்டனர்‘` எனும் (திருக்குர்ஆன் 09:1 வது) இறைவசனம்.
(திருக்குர்ஆன் 09:3 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'அஃதான்' எனும் சொல்லுக்கு'அறிவிப்பு' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 09:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உதுனு (யுஃமினு)' எனும் சொற்றொடருக்கு'(அல்லாஹ்வை) உண்மை என நம்பும் செவி' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 09:103 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தூய்மைப்படுத்துகின்ற' எனும் ஒரே பொருள் கொண்ட)'துதஹ்ஹிருஹும்' மற்றும்'துஸக்கீஹிம்' போன்ற இரண்டு சொற்களைப் பயன்படுத்துவது (அரபுகள் வழக்கில்) மிகுதியாக உண்டு.
(‘துஸக்கீஹிம்' என்பதன் வேர்ச் சொல்லான)'ஸகாத்' எனும் சொல்லுக்குக்'கீழ்ப்படிதல்'மனத் தூய்மை' ஆகிய பொருள்கள் உண்டு.
(இதே'ஸகாத்' எனும் சொல் இடம் பெற்றுள்ள 41:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லாயுஃத்தூனஸ் ஸகாத்த' (ஸகாத் வழங்காதவர்கள்) என்பதன் கருத்து: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்று உறுதி கூறாதவர்கள்.
(திருக்குர்ஆன் 09:30 வது வசனத்தின் மூலத்திலுள்ள'யுளாஹிஊன' எனும் சொல்லின் மற்றோர் ஓதல் முறையான)'யுளாஹுன' எனும் சொல்லுக்கு'ஒத்திருக்கிறார்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4654. பராஉ(ரலி) அவர்களிடம் அறிவித்தார்
“(நபியே!) உங்களிடம் அவர்கள் (வாரிசுகள் இல்லாமல் இறந்துவிடுவோர் குறித்து) தீர்ப்புக் கேட்கிறார்கள் அல்லாஹ் அத்தகையவர்கள் குறித்து உங்களுக்குத் தீர்ப்பு அளிக்கிறான்.. என்று நீங்கள் கூறுங்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 04:17 வது) இறை வசனம் தான் கடைசியாக அருளப்பெற்ற இறைவசனமாகும்.
(9 வது அத்தியாயமான)'பராஅத்' (அத்தவ்பா) அத்தியாயமே கடைசியாக அருளப்பெற்ற அத்தியாயம் ஆகும்.

## 09:02 வது திருக்குர்ஆன் வசனம்

“எனவே, (இணைவைப்பவர்களே!) நீங்கள் (விரும்பியபடி) பூமியில் நான்கு மாதங்கள் (எங்கு வேண்டுமானாலும்) சுற்றித் திரியுங்கள். நீங்கள் அல்லாஹ்விடமிருந்து தப்பியோட முடியாது என்பதையும் அல்லாஹ் மறுப்பாளர்களை இழிவுபடுத்து வான் என்பதையும் அறிந்துகொள்ளுங்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 09:2 வது) இறைவசனம்.
(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'சீஹூ' எனும் சொல்லுக்குச்'சுற்றித் திரியுங்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4655. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
(அபூ பக்ர்(ரலி) தலைமையில்'ஹஜ்ஜத்துல் வதா‘விற்கு முந்தைய ஆண்டு நடந்த) அந்த ஹஜ்ஜின்போது அபூ பக்ர்(ரலி)'இந்த ஆண்டிற்குப் பிறகு இணைவைப்பவர் எவரும் ஹஜ் செய்ய(வர)க்கூடாது நிர்வாணமானவர் எவரும் இறையில்லத்தைச் சுற்றி வரக்கூடாது' என்று மினாவில் பொது அறிவிப்புச் செய்யும்படி அனுப்பிவைத்த அறிவிப்பாளர்களுடன் என்னையும் அனுப்பிவைத்தார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹுமைத் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) கூறினார்: பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பின்னால்) அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களை அனுப்பி, (இணைவைப்பாளர்களிடமிருந்து அல்லாஹ்வும் அவனுடைய

தூதரும்) விலகிக்கொண்டது (பராஅத்) குறித்துப் பிரகடனம் செய்யும்படி அலீ(ரலி) அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள்.
அபூ ஹுரைரா(ரலி) (தொடர்ந்து) கூறுகிறார்கள்:
எங்களுடன் அலீ(ரலி) அவர்களும் நஹ்ருடைய (ஃதுல்ஹஜ் 10ஆம்) நாளில் மினாவாசிகளிடையே' (இணைவைப்போரிடமிருந்து அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்) விலகிக்கொண்டது (பராஅத்) குறித்தும், இந்த ஆண்டுக்குப் பிறகு இணைவைப்பாளர் எவரும் ஹஜ் செய்யமாட்டார் என்றும், இறையில்லத்தை நிர்வாணமானவர் எவரும் சுற்றி வரக் கூடாது என்றும் அறிவித்தார்கள்.

## 09:03 வது திருக்குர்ஆன் வசனம்

"மேலும், மாபெரும் ஹஜ்ஜுடைய நாளில் அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் சார்பில் எல்லா மக்களுக்கும் விடுக்கப்படும் பொது அறிவிப்பு என்னவெனில், இறைவனுக்கு இணைவைப்பவர்களைவிட்டு அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் நிச்சயமாக விலகிவிட்டார்கள். எனவே, (இறைமறுப்பிலிருந்தும் ஒப்பந்த மீறலிலிருந்தும்) நீங்கள் விலகிக்கொண்டால் அது உங்களுக்குத் தான் நல்லது. (அவ்வாறன்றி) நீங்கள் புறக்கணித்தால், அல்லாஹ்வை நீங்கள் தோல்வியுறச் செய்ய முடியாது என்பதை நன்கறிந்துகொள்ளுங்கள். மேலும், (நபியே!) கடுமையான தண்டனை உண்டெனும்'நற்செய்தி'யை இறை மறுப்பாளர்களுக்கு அறிவிப்பீராக'' எனும் (திருக்குர்ஆன் 09:3 வது) இறைவசனம்.
(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'அதான்' எனும் சொல்லுக்கு'அறிவிப்பு' என்று பொருள்.

ஹதீஸ் 4656. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
அபூ பக்ர்(ரலி) (தம் தலைமையில் நடந்த) அந்த ஹஜ்ஜின்போது'துல்ஹஜ் மாதம் பத்தாம் (நாளான நஹ்ருடைய நாளில் மினாவில்'இந்த ஆண்டிற்குப் பிறகு இணைவைப்பவர் எவரும் ஹஜ் செய்யக் கூடாது என்றும், இறையில்லத்தை நிர்வாணமானவர் எவரும் சுற்றி வரக்கூடாது' என்றும் அறிவிப்புச் செய்யும்படி அனுப்பிவைத்த அறிவிப்பாளர்களுடன் என்னையும் (ஒருவனாக) அனுப்பிவைத்தார்கள்.
பிறகு, நபி(ஸல்) அவர்கள் (அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பின்னால்) அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களை அனுப்பி, (இணை வைப்பாளர்களிடமிருந்து அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்) விலகிக்கொண்டது (பராஅத்) குறித்துப் பொது அறிவிப்புச் செய்யும்படி கட்டளையிட்டார்கள்.
எனவே, எங்களுடன் அலீ(ரலி) அவர்களும் நஹ்ருடைய (ஃதுல்ஹஜ் 10ஆம்) நாளில் மினாவாசிகளிடையே (இணைவைப்போரிடமிருந்து அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்) விலகிக்கொண்டனர் என்றும், இந்த ஆண்டுக்குப் பிறகு இணைவைப்பாளர் எவரும் ஹஜ் செய்யக்கூடாது என்றும் இறையில்லத்தை நிர்வாணமானவர் எவரும் சுற்றி வரக்கூடாது என்றும் அறிவித்தார்கள்.

## 09:04 வது திருக்குர்ஆன் வசனம்

...ஆயினும், இணைவைப்பாளர்களில் எவருடன் உங்களுக்கு உடன்படிக்கை ஏற்பட்டு, பின்னர் அவர்கள் (தம் உடன்படிக்கையை நிறைவேற்றுவதில்) உங்களுக்கு எந்தக் குறைபகுதி வைக்காமலும் உங்களுக்கு எதிராக எவருக்கும் உதவாமலும் இருக்கிறார்களோ அவர்களுக்கு விதிவிலக்கு உண்டு (எனும் 9:4 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4657. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
ஹஜ்ஜத்துல் வதாவுக்கு முன்பு அபூ பக்ர்(ரலி) அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தலைவராக்கி அனுப்பிய ஹஜ்ஜின்போது அபூ பக்ர்(ரலி)'இந்த ஆண்டிற்குப் பிறகு இணைவைப்பவர் எவரும் ஹஜ் செய்யக்கூடாது' என்றும், 'நிர்வாணமானவர் எவரும்

இறையில்லத்தைச் சுற்றி வரக்கூடாது' என்றும் மக்களிடையே பொது அறிவிப்புச் செய்யும் ஒரு குழுவினருடன் என்னையும் (ஓர் அறிவிப்பாளராக) அனுப்பி வைத்தார்கள்.
இதன் அறிவிப்பாளரான ஹுமைத் இப்னு அப்திர்ரஹ்மான்(ரஹ்) அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் (இந்த) ஹதீஸின் அடிப்படையில்'(துல்ஹஜ் 10ஆம் நாளான) நஹ்ருடைய நாள்தான் பெரிய ஹஜ் நாளாகும்'' என்று சொல்லிவந்தார்கள்.

## 09:12 வது திருக்குர்ஆன் வசனம்

(சத்தியம் செய்து) உடன்படிக்கை செய்த பிறகு இவர்கள் தங்களின் சத்தியங்களை முறித்துவிட்டு உங்களின் மார்க்கத்தைத் தாக்க முற்பட்டால் (இத்தகைய) இறைமறுப்பின் தலைவர்களோடு போர் புரியுங்கள். ஏனென்றால், அவர்களுக்கு சத்தியங்கள் (என்பதெல்லாம்) கிடையாது. அவர்கள் (பின்னர் வாளுக்கு அஞ்சியேனும் இத்தகைய விஷமத்தனங்களிலிருந்து) ஒதுங்கியிருக்கக் கூடும் (எனும் 9:12 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4658. ஸைத் இப்னு வஹ்ப்(ரஹ்) அறிவித்தார்
(ஒரு முறை) நாங்கள் ஹுதைஃபா இப்னு யமான்(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள், 'இந்த இறைவசனத்தில் (திருக்குர்ஆன் 09:12) குறிபிட்டப்பட்டுள்ள (இறைமறுப்பாளர்களின் தலை)வர்களில் மூன்று பேரைத் தவிர வேறெவரும் (இப்போது) எஞ்சியிருக்கவில்லை. நயவஞ்சகர்களிலும் நான்கு பேரைத் தவிர வேறெவரும் எஞ்சியிருக்கவில்லை'' என்று கூறினார்கள். அப்போது கிராமவாசி ஒருவர், 'முஹம்மத்(ஸல்) அவர்களின் தோழர்களே! நீங்கள் எங்களுக்குத் தெரிவியுங்கள்: எங்கள் வீடுகளைத் துளையிட்டு, எங்களின் உயர் தரமான பொருள்களைத் திருடிச் செல்கிற இவர்களின் நிலை என்ன என்று எங்களுக்குத் தெரியவில்லையே'' என்று கேட்டதற்கு ஹுதைஃபா(ரலி), 'அவர்கள் பாவிகளே! (இறைமறுப்பாளர்களோ நயவஞ்சகர்களோ அல்லர்.) ஆம்! அவர்களில் நால்வர் மட்டுமே தற்போது எஞ்சியுள்ளார்கள். அவர்களில் ஒருவர் வயது முதிர்ந்த கிழவர். (எந்த அளவிற்கு முதியவரென்றால்) குளிர்ந்த நீரைப் பருமினால் கூட அதன் குளிர்ச்சி அவருக்குத் தெரியாது'' என்று கூறினார்கள்.

## 09:34 வது திருக்குர்ஆன் வசனம்

"தங்கத்தையும், வெள்ளியையும் சேகரித்து வைத்துக்கொண்டு அவற்றை இறைவழியில் செலவிடுகிறவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை இருக்கிறது எனும்'நற்செய்தியினை (நபியே!) நீர் அறிவிப்பீராக'' எனும் (திருக்குர்ஆன் 09:34 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4659. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
உங்களின் கருவூலம் மறுமைநாளில் கொடிய நஞ்சுடைய பாம்பாக மாறிவிடும்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4660. ஸைத் இப்னு வஹ்ப்(ரஹ்) அறிவித்தார்
நான் (மதீனாவிற்கு அரும்லுள்ள)'ரபதா' எனுமிடத்தில் அபூ தர்(ரலி) அவர்களைக் கடந்து சென்றேன். அப்போது நான், 'இந்த இடத்தில் நீங்கள் தங்கியிருக்கக் காரணமென்ன?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'நாங்கள் ஷாம் நாட்டில் இருந்தோம். அப்போது நான், 'தங்கத்தையும் வெள்ளியையும் சேகரித்து வைத்து, அவற்றை இறைவழியில் செலவிடாதிருக்கிறவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை இருக்கிறது எனும்'நற்செய்தி'யினை (நபியே!) நீர் அறிவிப்பீராக'' எனும் (திருக்குர்ஆன் 09:34 வது) இறைவசனத்தை ஓதினேன். அதற்கு (ஷாமின் ஆட்சியாளர்) முஆவியா(ரலி), இந்த வசனம் (முஸ்லிம்களாகிய) நம் விஷயத்தில் (நம்மை எச்சரிப்பதற்காக) அருளப்படவில்லை வேதக்காரர்களின் விஷயத்தில் (அவர்களை எச்சரிப்பதற்காகத்தான்) அருளப்பட்டது'' என்று கூறினார்கள். நான், 'இது நம்

விஷயத்திலும் அவர்கள் விஷயத்திலுமே (இருவரையும் சேர்த்து எச்சரிச்சை விடுக்கவே) அருளப்பட்டது என்று சொன்னேன்'' என பதிலளித்தார்கள்.

## 09:35 வது திருக்குர்ஆன் வசனம்

நபியே! ஒரு நாளை அவர்களுக்கு நினைவுபடுத்துக!) அந்நாளில் (தங்கம், வெள்ளி ஆகிய) அவற்றை நரகநெருப்பில் பழுக்கக் காய்ச்சப்பட்டுப் பிறகு அவற்றால் அவர்களின் நெற்றிகளிலும், விலாப் புறங்களிலும், முதுகுகளிலும் சூடுபோடப்படும். இவைதாம் நீங்கள் உங்களுக்காக சேகரித்து வைத்திருந்த கருவூலங்கள்! எனவே, நீங்கள் சேகரித்து வைத்திருந்த இவற்றைச் சுவையுங்கள் (என்று சொல்லப்படும்)'' எனும் (திருக்குர்ஆன் 09:35 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4661 காலித் இப்னு அஸ்லம்(ரஹ்) கூறினார்

நாங்கள் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் (பயணம்) புறப்பட்டுச் சென்றோம். அப்(பயணத்தின்)போது அவர்கள், (திருக்குர்ஆன் 03:95 வது இறைவசனத்தைப் பற்றி) இது ஸகாத் (தொடர்பான வசனம்) அருளப்பெறுவதற்கு முந்தையதாகும். ஸகாத் (தொடர்பான வசனம்) அருளப்பெற்றபோது செல்வங்களைத் தூய்மைப்படுத்தக் கூடியதாய் ஸகாத்தை அல்லாஹ் ஆக்கிவிட்டான்'' என்று கூறினார்கள்.

## 09:36 வது திருக்குர்ஆன் வசனம்

உண்மையாக, அல்லாஹ்விடம் மாதங்களின் எண்ணிக்கை பன்னிரண்டாகும். வானங்களையும் பூமியையும் அவன் படைத்த நாள்முதல் அல்லாஹ்வின் பதிவேட்டில் இவ்வாறே உள்ளது. அவற்றில் நான்கு மாதங்கள் சங்கைக்குரியனவாகும். இதுதான் சரியாக நெறிமுறையாகும்!''எனும் (திருக்குர்ஆன் 09:36 வது) வசனத் தொடர்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கய்யிம்' எனும் சொல்லுக்கு'நிலையான' என்று பொருள்.

ஹதீஸ் 4662('ஹஜ்ஜத்துல் வதாவில்' உரையாற்றிய போது) நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ் வானங்களையும் பூமியையும் படைத்த நாளில் இருந்த (பழைய) நிலைக்கே காலம் திரும்பிவிட்டது. ஓர் ஆண்டு என்பது பன்னிரண்டு மாதங்கள் ஆகும். அவற்றில் நான்கு மாதங்கள் (போரிடுதல் விலக்கப்பட்ட) புனித மாதங்களாகும். (அந்த நான்கு மாதங்களில்) மூன்று மாதங்கள் தொடர்ந்து வருகின்றவையாகும். அவை ஃதுல்கஅதா, ஃதுல்ஹஜ், முஹர்ரம் மற்றும் ஜுமாதஸ்ஸானீக்கும் ஷஅபானுக்கும் இடையிலுள்ள முளர் குலத்து'ரஜப்' மாதம் ஆகும்.

என அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

## 09:40 வது திருக்குர்ஆன் வசனம்

அவர்கள் இருவரும் குகையில் இருந்தபோது இருவரில் இரண்டாமவராய் இருந்த அவர் தம் தோழரை நோக்கிக் கவலை கொள்ளாதீர் நிச்சயமாக, அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்று கூறினார். அப்போது அல்லாஹ் அவருக்குத் தன்னிடமிருந்து மன அமைதியை அருளினான்'' எனும் (திருக்குர்ஆன் 09:40 வது) வசனத் தொடர்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'சகீனா' (மனஅமைதி) எனும் சொல்'சுகூன்' எனும் வேர்ச் சொல்லிலிருந்து'ஃபர்லா' எனும் வாய்ப்பாட்டில் அமைந்தாகும்.

ஹதீஸ் 4663. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்

நான் (ஹிஜ்ரத் பயணத்தின் போது) நபி(ஸல்) அவர்களுடன் ('ஸவ்ர்' எனும்) அந்தக் குகையில் (ஒளிந்து கொண்டு) இருந்தேன். அப்போது நான் இணைவைப்பாளர்களின் (கால்) சுவடுகளைக் கண்டேன். நான், `இறைத்தூதர் அவர்களே! (நம்மைத் தேடி வந்துள்ள) இவர்களில் ஒருவன் தன் காலைத் தூக்கி(க் குனிந்து நோக்கி)னால் நம்மைப்

பார்த்துவிடுவானே!'' என்று (அச்சத்துடன்) சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், `எந்த இருவருடன் அல்லாஹ் மூன்றாமவனாக இருக்கிறானோ அவர்களைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 4664. இப்னு அபீ முலைக்கா அப்துல்லாஹ் இப்னு அப்திர்ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களுக்குமிடையே மனத்தாங்கல் ஏற்பட்டபோது நான் (இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,) 'இப்னு ஸுபைரின் தந்தை ஸுபைர்(ரலி) அவர்களும், அவர்களின் பாட்டனார் அபூ பக்ர்(ரலி) அவர்களின் பாட்டனார் அபூ பக்ர்(ரலி) அவர்களும், அவர்களின் பாட்டி ஸஃபிய்யா(ரலி) அவர்களும் ஆயிற்றே! (இத்தகைய சிறப்புகள் மிக்க இப்னு ஸுபைர்(ரலி) அவர்களுக்கு நீங்கள் விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்து, ஏன் கலீஃபாவாக ஏற்கக்கூடாது?)‘‘ என்று கேட்டேன்.

ஹதீஸ் 4665. இப்னு அபீ முலைக்கா அப்துல்லாஹ் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

இப்னு ஸுபைர்(ரலி) அவர்களுக்கும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுக்குமிடையே சிறிது (மனத்தாங்கல்) ஏற்பட்டிருந்தது. அப்போது நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் காலையில் சென்று, `நீங்கள் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களுடன் போரிட்டு அல்லாஹ்வின் (புனிதத் தலமான) ஹரமை (இரத்தம் சிந்த) அனுமதிக்கப்பட்ட இடமாக (ஹலாலானதாக) ஆக்க விரும்புகிறீர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், `இறைவன் காப்பாற்றட்டும். இப்னு ஸுபைரையும் பனு உமய்யாக்களையும் தாம் ஹரமில் போர் புரிவதை அனுமதிக்கிறவர்களாக அல்லாஹ் எழுதி வைத்துள்ளான். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அதை ஒருபோதும் அனுமதிக்க மாட்டேன்!'' என்று கூறினார்கள்:

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: மக்கள் (என்னிடம்) 'இப்னு ஸுபைர் அவர்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்யுங்கள்' என்று கூறினார்கள். நான், `இந்த ஆட்சியதிகாரம் அவரைவிட்டு எங்கே போய்விடும்? அவரின் தந்தையோ நபி(ஸல்) அவர்களின் பிரத்தியேக உதவியாளராவார் - ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களையே குறிப்பிடுகிறார்கள் - அவரின் தாயாரோ 'கச்சுடையாள்' (என்று நபி(ஸல்) அவர்களால் பட்டப் பெயர் சூட்டப்பெற்றவர்) ஆவார். - அஸ்மா(ரலி) அவர்களையே குறிப்பிடுகிறார்கள் - அவர்களின் சிறிய தாயாரோ இறைநம்பிக்கையாளர்களின் அன்னையாவார். - ஆயிஷா(ரலி) அவர்களையே குறிப்பிடுகிறார்கள் - அவர்களின் துணைவியராவார். - கதீஜா(ரலி) அவர்களையே குறிப்பிடுகிறார்கள். நபி(ஸல்) அவர்களின் அத்தையோ அவரின் பாட்டியாவார். -ஸஃபிய்யா(ரலி) அவர்களையே குறிப்பிடுகிறார்கள். மேலும் அவர், இஸ்லாத்தில் நெறி தவறாதவர் குர்ஆனை நன்கறிந்தவர். அல்லாஹ்வின் மீதாணையாக! உமய்யாக்கள் என்னுடன் உறவாடுகிறார்கள் என்றால் சொந்தத்தின் காரணத்தினால் உறவாடுகிறார்கள். எனக்கு அவர்கள் ஆட்சியாளர்களானால் அதற்குத் தகுதியுடையோராயும் சிறந்த பாரம்பரியமுடையோராயுமே ஆட்சியாளர்களாகின்றனர். (அப்படியிருந்தும் நான் அவர்களைத் கைவிட்டு, இப்னு ஸுபைருக்கு விசுவாசப் பிரமாணம் செய்ய உறுதி பூண்டேன். ஆனால்) அவரோ 'துவைத்‘களுக்கும், `உசாமா‘க்களுக்கும், `ஹுமைதா‘க்களுக்கும் (என்னைவிட) முன்னுரிமை அளித்துவிட்டார். (இப்னு ஸுபைரின் குலத்தினரான) 'பனு அஸத்' குலத்தைச் சேர்ந்த பனு துவைத், பனு உசாமா, பனு ஹுமைத் ஆகிய குடும்பங்களையே குறிப்பிடுகிறார்கள். இப்னு அபில் ஆஸ் - அப்துல் மலிக் இப்னு மர்வான் - அவர்கள் (தம் சகாக்களிடையே பல சிறப்புகள் பெற்று) முன்னேறிச் செல்கிறார். இவரோ - இப்னு ஸுபைரோ - பின்னடைவுக்கு ஆளாம்விட்டார்.

ஹதீஸ் 4666 இப்னு அபீ முலைக்கா அப்துல்லாஹ் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்கள் கூறினார்கள்: இந்த (ஆட்சியதிகாரத்தின்) விஷயத்தில் (அது தனக்கே சேரவேண்டுமென்று) இப்னு ஸுபைர் அவர்கள் உறுதியாக நிற்பதைக் கண்டு நீங்கள் வியப்படையவில்லையா?' நான் இப்னு ஸுபைருக்காக (அவருக்கு ஆதரவு கொடுப்பதாக வேண்டாமா என்பதில்) என் மனசாட்சியுடன் விவாதித்து வருகிறேன். (இந்த அளவிற்கு) நான் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்காவோ உமர்(ரலி) அவர்களுக்காகவோ வாதாடியதில்லை. அவர்கள் இருவருமோ இப்னு ஸுபைரைவிட அனைத்து நன்மைகளுக்கும் தகுதிவாய்ந்தோராய் இருந்தனர்'' என (எனக்கு நானே) சொல்லிக்கொண்டேன்.

“இப்னு ஸுபைர் அவர்கள், நபி(ஸல்) அவர்களின் அத்தை (ஸஃபிய்யா) உடைய (புதல்வரின்) புதல்வரும், ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்களின் புதல்வரும் ஆவார். மேலும், அவர் அபூ பக்ர்(ரலி) அவர்களின் (புதல்வி அஸ்மாவின்) புதல்வரும், கதீஜா(ரலி) அவர்களின் சகோதரர் (அவ்வாம்) உடைய (புதல்வர் ஸுபைரின்) புதல்வருமாவார். இன்னும் அவர் ஆயிஷா(ரலி) அவர்களின் சகோதரி (அஸ்மா) உடைய புதல்வரும் ஆவார்'' என்று (மக்களிடம்) கூறினேன். ஆனால், இப்னு ஸுபைரோ, தம்மை உயர்வாகக் கருதிக்கொண்டு என்னைவிட்டு ஒதுங்கிக்கொள்கிறார். நான் அவருக்கு நெருக்கமாக இருப்பதை அவர் விரும்பவில்லை.

“மேலும், நானாக முன்வந்து இதற்கு ஆதரவு தெரிவித்தால் அதனை அவர் ஏற்கவே செய்வார் என்றே நான் கருதியிருந்தேன். (இனியும் எனக்கு) அவர் நன்மை ஏதேனும செய்வார் என்று நான் கருதவில்லை. (அப்படி) அவர் (தன் நிலையில்) உறுதியாக இருப்பாரென்றால், (பனு உமய்யா) என் மீது ஆட்சிசெலுத்துவதே மற்றவர்கள் (பனு அஸத்) என் மீது ஆட்சிசெலுத்துவதைவிட எனக்கு மிகவும் விருப்பமானதாகும்'' என்று நான் எண்ணிக்கொண்டேன்.

## 09:60 வது திருக்குர்ஆன் வசனம்

“உள்ளங்கள் இணக்கமாக்கப்பட வேண்டிய (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய)வர்களுக்கும் ('ஸகாத்' எனும் தானம் உரியதாகும்)'' எனும் (திருக்குர்ஆன் 09:60 வது) வசனத் தொடர்.

“நன்கொடை மூலம் மக்களை ஈர்ப்பவர்களாக நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள்'' என முஜாஹித்(ரஹ்) (விளக்கம்) கூறினார்கள்.

ஹதீஸ் 4667. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு பொருள் அனுப்பி வைக்கப்பட்டது. அதை அவர்கள் (புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய) நான்கு பேருக்கிடையே பங்கிட்டார்கள். மேலும், 'இவர்களுடைய உள்ளங்களை நான் இணக்கமாக்குகிறேன்'' என்று கூறினார்கள். (அப்போது பங்கு கிடைக்காத) ஒருவர்'நீங்கள் நீதி செய்யவில்லை'' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இவருடைய சந்ததியினரிடமிருந்து (வேட்டைப் பிராணியின் உடலிலிருந்து) அம்பு வெளியேறிச் செல்வதைப் போல் மார்க்கம் வெளியேறிச் சென்றுவிடுகிற கூட்டத்தினர் தோன்றுவர்'' என்று கூறினார்கள்.

## 09:79 வது திருக்குர்ஆன் வசனம்

“(நயவஞ்சகர்களான) அவர்கள் எத்தகையோரென்றால், இறைநம்பிக்கையாளர்களில் மனமுவந்து வாரி வழங்குவோரின் தான தர்மங்களைப் பற்றியும் குறை பேசுகிறார்கள். (இறைவழியில் செலவழிப்பதற்காக) சிரமப்பட்டு சம்பாதித்ததைத் தவிர வேறெதுவும் இல்லாதவர்களைப் பற்றியும் அவர்கள் நகைக்கிறார்கள். அல்லாஹ் அவர்களை நகைக்கிறான். மேலும் அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையும் உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 09:79 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'யல்மிஸூன' எனும் சொல்லுக்குக்'குறை பேசுகிறார்கள்'' என்று பொருள்.
'ஜுஹ்தஹும்' என்பதற்கு'அவர்களால் முடிந்ததை - சக்திக்குட்பட்டதை' என்று பொருள்.

ஹதீஸ் 4668. அபூ மஸ்வூத் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்

தானதர்மம் செய்யும்படி எங்களுக்குக் கட்டளையிடப்பட்டபோது நாங்கள் கூலி வேலை செய்யலானோம். அபூ அகீல் (ஹப்ஹாப்(ரலி) அவர்கள் (கூலி வேலை செய்து) ஒரு ஸாவு (பேரீச்சம் பழம்) கொண்டு வந்தார். மற்றொரு மனிதர் அதைவிட அதிகமாகக் கொண்டுவந்தார். இதைக்கண்ட நயவஞ்சகர்கள், '(அரை ஸாவு கொண்டு வந்த) இவருடைய தர்மமெல்லாம் அல்லாஹ்வுக்குத் தேவையில்லை (அதிகமாகக் கொண்டுவந்த) இந்த மற்றொரு மனிதர் பிறர் பாராட்ட வேண்டுமென்பதற்காகவே இதைக்கொண்டு வந்திருக்கிறார்'' என்று (குறை) கூறினார்கள். அப்போதுதான்'(நயவஞ்சகர்களான) அவர்கள் எத்தகையவர்களென்றால், இறை நம்பிக்கையாளர்களில் மனமுவந்து வாரி வழங்குவோரின் தானதர்மங்களைப் பற்றியும் குறை பேசுகிறார்கள். (இறைவழியில் செலவழிப்பதற்காக) சிரமப்பட்டு சம்பாதித்ததைத் தவிர வேறெதுவும் இல்லாதவர்களைப் பற்றியும் அவர்கள் நகைக்கிறார்கள். அல்லாஹ் அவர்களை நகைக்கிறான். மேலும், அவர்களுக்குத் துன்புறுத்தும் வேதனையும் உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 09:79 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

ஹதீஸ் 4669. அபூ வாயில் ஷகீக் இப்னு சலாமா(ரஹ்) அறிவித்தார்

அபூ மஸ்வூத் அல்அன்சாரி(ரலி)'தர்மம் செய்யும்படி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கட்டளையிடுவார்கள். அப்போது நாங்கள் இரண்டு கையளவு (தானியம் தர்மமாகக்) கொண்டு வருவதற்குக் கூடக் கடுமையாக உழைப்போம். (ஆனால்,) எங்களில் சிலருக்கு இன்று ஒரு லட்சம் (தீனார் ∴ திர்ஹம்) உள்ளது'' என்று - தம்மைப் பற்றியே குறிப்பிடுவதைப் போன்று - கூறினார்கள்.

## 09:80 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) இந்த நயவஞ்சகர்களுக்காக நீங்கள் பாவமன்னிப்புக் கோருங்கள் அல்லது பாவமன்னிப்புக் கோராமலிருங்கள். (இரண்டும் ஒன்றுதான். ஏனெனில்,) எழுபது முறை இவர்களுக்காக நீங்கள் பாவமன்னிப்புக் கோரினாலும் அல்லாஹ் இவர்களை ஒருபோதும் மன்னிக்க மாட்டான். ஏனென்றால் அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும் இவர்கள் மறுத்துவிட்டார்கள். பாவம் புரியும் மக்களை அல்லாஹ் நேர்வழியில் சேர்ப்பதில்லை'' எனும் (திருக்குர்ஆன் 09:80 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4670. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு உபை இறந்துவிட்டபோது, அவரின் புதல்வர் அப்துல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து தம் தந்தைக்குக் கஃபனிடுவதற்காக நபி(ஸல்) அவர்களின் சட்டையைக் கேட்டார்கள். 17 நபி(ஸல்) அவர்கள் அவரிடம் தம் சட்டையைக் கொடுத்தார்கள். பிறகு அப்துல்லாஹ்(ரலி) தம் தந்தைக்கு (ஜனாஸாத்) தொழுகையை முன்னின்று நடத்தும்படி நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவருக்கு (ஜனாஸாத்) தொழுகை நடத்துவதற்காக எழுந்தார்கள். உடனே உமர்(ரலி) எழுந்து இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஆடையைப் பிடித்துக்கொண்டு, 'இறைத்தூதர் அவர்களே! இவருக்குத் தொழுகை நடத்த வேண்டாமென்று உங்களுடைய இறைவன் உங்களுக்குத் தடைவித்திருக்க, இவருக்கா தொழுகை நடத்தப்போகிறீர்கள்!"என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , '(பாவமன்னிப்புக் கோரவும் கோராமலிருக்கவும்) எனக்கு அல்லாஹ் உரிமையளித்துள்ளான்''

என்று கூறிவிட்டு, `(நபியே!) நீங்கள் அவருக்காகப் பாவமன்னிப்புக் கோருங்கள் அல்லது கோராமலிருங்கள். (இரண்டும் சமம்தான். ஏனெனில்,) அவர்களுக்காக நீங்கள் எழுபதுமுறை பாவமன்னிப்புக் கோரினாலும் சரி அவர்களை ஒருபோதும் அல்லாஹ் மன்னிக்கமாட்டான்‘` என்று கூறுகிறான். நான் எழுபது முறையைவிட அதிகமாக (இவருக்காகப்) பாவமன்னிப்புக் கோருவேன்‘` என்று கூறினார்கள்.
உமர்(ரலி), `இவர் நயவஞ்சகராயிற்றே!”என்று கூறினார்கள். இருந்தும் நபி(ஸல்) அவர்கள் அவருக்கு (ஜனாஸாத்) தொழுகையை முன்னின்று நடத்தினார்கள். அப்போது உயர்ந்தோனான அல்லாஹ், `அவர்களில் இறந்துவிட்ட எவருக்காகவும் (நபியே!) தொழுகை நடத்தாதீர். அவரின் மண்ணறை அருகேயும் நீங்கள் நிற்க வேண்டாம்‘` எனும் (திருக்குர்ஆன் 09:84 வது) வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 4671. உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்
(நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு உபை சலூல் இறந்துவிட்டபோது அவருக்கு (ஜனாஸாத்) தொழுகையை முன்னின்று நடத்துவதற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழைக்கப்பட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அதற்காக) எழுந்தபோது அவர்களிடம் நான் குதித்தோடிச் சென்று, `இறைத்தூதர் அவர்களே! இப்னு உபைக்கு நீங்கள் முன்னின்று தொழுகை நடத்துகிறீர்களா? அவரோ இன்னின்ன காலகட்டத்தில் இப்படி இப்படியெல்லாம் சொன்னாரே!”என்று அவர் சொன்னவற்றை (எல்லாம்) நபியவர்களுக்கு எண்ணிக் காட்டிக் கூறினேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புன்னகைபுரிந்துவிட்டு, `ஒதுங்கிக்கொள்ளுங்கள், உமரே!”என்று கூறினார்கள். நான் அவர்களை இன்னும் அதிகமாகத் தடுக்கவே, அவர்கள், `இவருக்காகப் பாவமன்னின்புக் கோரவும் கோராமல் இருக்கவும் எனக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. நான் (அவருக்காகப் பாவமன்னிப்புக் கோருவதைத் தேர்ந்தெடுத்துக்கொண்டான்.) நான் எழுபது முறையை விட அதிகமாகப் பாவமன்னிப்புக் கோரினால் இவருக்குப் பாவமன்னிப்பு அளிக்கப்படும் என்று எனக்குத் தெரியவருமாயின் எழுபது முறையை விட அதிகமாகப் பாவமன்னிப்புக் கோருவேன்‘` என்று கூறினார்கள். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவருக்குத் தொழுகை நடத்திவிட்டுத் திரும்பினார்கள். சற்று நேரம் தான் கழிந்திருக்கும். அதற்குள்’பராஅத்’ (9 வது) அத்தியாயத்திலிருந்து’அவர்களில் இறந்துவிட்ட எவருக்காகவும் (நபியே!) நீங்கள் (ஜனாஸாத்) தொழுகை நடத்த வேண்டாம் அவரின் மண்ணறை அருகேயும் நீங்கள் நிற்க வேண்டாம். ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுத்துவிட்டார்கள். மேலும், பாவிகளாகவே அவர்கள் இறந்தார்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 09:84, 85ஆகிய) இரண்டு வசனங்கள் அருளப்பெற்றன. இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன் பேசிய என் துணிச்சலைக் கண்டு பின்னர் நான் வியந்தேன். (எனினும்) அல்லாஹ்வும், அவனுடைய தூதருமே மிகவும் அறிந்தவர்கள்.

## 09:84 வது திருக்குர்ஆன் வசனம்

“அவர்களில் இறந்துவிட்ட எவருக்காகவும் (நபியே!) நீங்கள் (ஜனாஸாத்) தொழுகை நடத்த வேண்டாம் அவரின் மண்ணறை அருகேயும் (அவருக்காகப் பாவமன்னிப்புக் கோரி) நீங்கள் நிற்க வேண்டாம்‘` எனும் (திருக்குர்ஆன் 09:84 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4672. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
அப்துல்லாஹ் இப்னு உபை இறந்துவிட்டபோது அவரின் புதல்வர் அப்துல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் தங்களின் சட்டையை அவரிடம் கொடுத்து அப்துல்லாஹ் இப்னு உபையை அதில் க∴பனிடும்படி உத்தரவிட்டார்கள். பிறகு அவருக்கு (ஜனாஸா)த் தொழுகை நடத்துவதற்காக நபி(ஸல்) அவர்கள் எழுந்தார்கள். அப்போது உமர் இப்னு கத்தாப்(ரலி) நபி(ஸல்) அவர்களின்

ஆடையைப் பிடித்துக்கொண்டு, `நயவஞ்சகராயிருந்த இவருக்கு நீங்கள் தொழுகை நடத்துகிறீர்களா? அல்லாஹ்வோ, இவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோர வேண்டாம் என்று உங்களைத் தடுத்துள்ளானே!'' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், (அவர்களுக்காக நான் பாவமன்னிப்புக் கோரலாம். அல்லது கோரமலும் இருக்கலாம் என்று)' எனக்கு அல்லாஹ் நான் விரும்பியதைச் செய்துகொள்ள அனுமதியளித்துள்ளான்' அல்லது' அல்லாஹ் எனக்கு இவ்வாறு அறிவித்துள்ளான்' என்று கூறி, `(நபியே!) நீங்கள் அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோருங்கள் அல்லது கோராமல் இருங்கள். (இரண்டும் ஒன்றுதான். எனெனில்,) அவர்களுக்காக நீங்கள் எழுபது முறை பாவமன்னிப்புக் கோரினாலும் அவர்களை ஒருபோதும் அல்லாஹ் மன்னிக்கவே மாட்டான்'' எனும் (திருக்குர்ஆன் 09:80 வது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள். பிறகு, `நான் எழுபது முறையை விட அதிகமாக (இவருக்காக அல்லாஹ்விடம்) பாவமன்னிப்புக் கோருவேன்'' என்று கூறினார்கள். பின்னர், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , அவருக்கு (ஜனாஸா)த் தொழுகை நடத்தினார்கள். நாங்களும் அவர்களுடன் தொழுதோம். பிறகு அல்லாஹ்' அவர்களில் இறந்துவிட்ட எவருக்காகவும் (நபியே!) நீங்கள் (ஜனாஸாத்) தொழுகை நடத்த வேண்டாம் அவரின் மண்ணறை அருகேயும் (அவருக்காகப் பாவமன்னிப்புக் கோரி) நீங்கள் நிற்கவேண்டாம். ஏனென்றால், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுத்துவிட்டார்கள். மேலும், பாவிகளாகவே அவர்கள் இறந்தார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 09:84 வது) வசனத்தை நபிகளாருக்கு அருளினான்.

## 09:95 வது திருக்குர்ஆன் வசனம்

“நீங்கள் அவர்களிடம் திரும்பி வரும்போது அவர்களை நீங்கள் கண்டுகொள்ளாமல் இருந்துவிடவேண்டும் என்பதற்காக உங்கள் முன்னிலையில் அல்லாஹ்வின் மீது அவர்கள் சத்தியம் செய்வார்கள். எனவே, நீங்கள் அவர்களைக் கண்டுகொள்ளாமல் இருந்துவிடுங்கள். (ஏனென்றால்) அவர்கள் அசுத்தமானவர்கள் அவர்கள் சேருமிடம் நரகமாகும். அவர்கள் சம்பாதித்துக் கொண்டிருந்த(தீய)வற்றுக்கு இதுவே பிரதிபலனாகும்'' எனும் (திருக்குர்ஆன் 09:95 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4673. அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) கஅப் இப்னு மாலிக்(ரலி)' தபூக்' போரில் கலந்து கொள்ளாமல் தாம் பின்தங்கிவிட்டது குறித்துக் கூறியதை கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் என்னை (இஸ்லாம் எனும்) நேர்வழியில் செலுத்திய பிறகு அவன் எனக்கு வழங்கிய மாபெரும் அருட்கொடை என்னவென்றால், (தபூக் போரில் நான் கலந்துகொள்ளாதது குறித்து வினவியபோது) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் (மற்றவர்களைப் போன்று) பொய்யுரைக்காமல் உண்மை பேசியதுதான். அவ்வாறு நான் பொய் சொல்லியிருந்தால் பொய் கூறிய(மற்ற)வர்கள் அழிந்ததைப் போன்று நானும் அழிந்து போயிருப்பேன்.' நீங்கள் அவர்களிடம் திரும்பி வரும்போது அவர்களை நீங்கள் கண்டுகொள்ளாமல் இருந்துவிடவேண்டும் என்பதற்காக உங்கள் முன்னிலையில் அல்லாஹ்வின் மீது அவர்கள் சத்தியம் செய்வார்கள். எனவே, நீங்கள் அவர்களைக் கண்டுகொள்ளாமல் இருந்து விடுங்கள். (ஏனென்றால்) அவர்கள் அசுத்தமானவர்கள் அவர்கள் சேருமிடம் நரகமாகும். அவர்கள் சம்பாதித்துக் கொண்டிருந்த (தீய)வற்றுக்கு இதுவே பிரதிபலனாகும். நீங்கள் அவர்களின் மீது திருப்தியுறவேண்டும் என்பதற்காக உங்களிடம் அவர்கள் சத்தியம் செய்வார்கள். நீங்கள் அவர்களின் மீது திருப்தி கொண்டாலும் நிச்சயமாக அல்லாஹ் பாவிகளான (இத்தகைய) மக்களின் மீது ஒருபோதும் திருப்திகொள்ளமாட்டான்'' எனும் வசனங்களை (திருக்குர்ஆன் 09:95, 96) அருளப்பெற்றபோது அந்தப் பொய்யர்கள் அழிந்து போனார்கள்.

## 09:96 வது திருக்குர்ஆன் வசனம்

“நீங்கள் அவர்களின் மீது திருப்தியுறவேண்டும் என்பதற்காக உங்களிடம் அவர்கள் சத்தியம் செய்வார்கள். நீங்கள் அவர்களின் மீது திருப்திகொண்டாலும் நிச்சயமாக அல்லாஹ் பாவிகளான (இத்தகைய) மக்களின் மீது ஒருபோதும் திருப்தி கொள்ளமாட்டான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 09:96 வது) இறைவசனம்.

## 09:102 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், தம் குற்றங்களை ஒப்புக்கொண்டிருக்கும் வேறு சிலரும் (அவர்களில்) உள்ளனர் அவர்கள் நற்செயலுடன் தீயசெயலையும் கலந்துவிட்டிருக்கிறார்கள். (ஆயினும்,) அல்லாஹ் அவர்(களின் குற்றங்)களை மன்னித்துவிடலாம். நிச்சயமாக அல்லாஹ் பெரிதும் மன்னிப்பவனும், கருணை புரிபவனுமாவான் (எனும் 9:102 வது இறைவசனம்).

ஹதீஸ் 4674. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்:

இன்றிரவு எங்களிடம் (வானவர்கள்) இருவர் வந்து என்னை (தூக்கத்திலிருந்து) எழுப்பி (அழைத்து)ச் சென்றார்கள். அவர்கள் இருவரும் தங்கச் செங்கல்லாலும் வெள்ளிச் செங்கல்லாலும் கட்டப்பெற்றிருந்த ஒரு நகரத்திற்கு சென்று சேர்ந்தார்கள். அப்போது எங்களைச் சில மனிதர்கள் எதிர்கொண்டார்கள். அவர்களின் உடலமைப்பில் பாதி நீ பார்த்திலேயே மிக அழகானதாயும், மற்றொரு பாதி நீ பார்த்ததிலேயே மிக அருவருப்பானதாயும் இருந்தது. அ(ந்த வான)வர்கள் இருவரும் அந்த மனிதர்களிடம், `நீங்கள் சென்று அந்த ஆற்றில் விழுங்கள்‘‘ என்று கூற அவர்களும் அவ்வாறே அதில் விழுந்தனர். பிறகு எங்களிடம் திரும்பி வந்தனர். (அதற்குள்) அந்த அருவருப்பான தோற்றம் அவர்களைவிட்டுச் சென்றுவிட்டிருந்தது. அவர்கள் மிக அழகான தோற்றமுடையவர்களாக மாறி விட்டிருந்தனர். (என்னை அழைத்துச் சென்ற) அந்த இருவரும் என்னிடம்'இதுதான்'அத்ன்' எனும் சொர்க்கம். இதுதான் உங்கள் தங்குமிடம்‘‘ என்று கூறிவிட்டு பிறகு, `பாதி (தோற்றம்) அழகானதாயும் பாதி (தோற்றம்) அருவருப்பானதாயும் இருந்தவர்கள் (உலக வாழ்வில்) நற்செயலையும் வேறு தீய செயலையும் கலந்துவிட்டவர்கள். அல்லாஹ் அவர்களின் குற்றங்களை மன்னித்துவிட்டான்‘‘ என்று (விளக்கம்) கூறினார்கள்.
என சமுரா இப்னு ஜுன்தப்(ரலி) அறிவித்தார்.

## 09:113 வது திருக்குர்ஆன் வசனம்

“இறைவனுக்கு இணைவைப்பவர்கள் நரகவாசிகள்தாம் என்பது நன்கு தெளிவாகிவிட்ட பின்னர் - அவர்கள் நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் - அவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரிப் பிரார்த்திப்பதற்கு நபிக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் உரிமையில்லை‘‘ எனும் (திருக்குர்ஆன் 09:113 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4675. முஸய்யப் இப்னு ஹஸன்(ரலி) அறிவித்தார்

(நபி(ஸல்) அவர்களின் பெரிய தந்தை) அபூ தாலிபுக்கு மரணவேளை வந்தபோது அவரருகில் அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யாவும் இருக்க, நபி(ஸல்) அவர்கள் வந்து, `என் பெரிய தந்தையே!'லாஇலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று சொல்லுங்கள். நான் அல்லாஹ்விடம் தங்களுக்காக வாதாடுவேன்‘‘ என்று கூறினார்கள். அப்போது அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் இப்னு உமய்யாவும், `அபூ தாலிபே! (உங்கள் தகப்பனார்) அப்துல் முத்தலிப் அவர்களின் மார்க்கத்தையா நீங்கள் வெறுத்து ஒதுக்கப்போகிறீர்கள்?' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், `(பெரிய தந்தையே!) உங்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரக் கூடாது என்று இறைவனால் எனக்குத் தடை விதிக்கப்படும்வரை நான் உங்களுக்காகப் பாவமன்னிப்புக்

கோரிக்கொண்டிருப்பேன்'' என்று கூறினார்கள். அப்போதுதான், `இறைவனுக்கு இணைவைப்பவர்கள் நரகவாசிகள் தாம் என்பது நன்கு தெளிவாகிவிட்ட பின்னரும் - அவர்கள் நெருங்கிய உறவினர்களாகிய கூட - அவர்களுக்காபப் பாவமன்னிப்புக் கோரிப் பிரார்த்திப்பதற்கு நபிக்கும் நம்பிக்கையாளர்களுக்கும் உரிமையில்லை'' எனும் (திருக்குர்ஆன் 09:113 வது) இறைவசனம் அருளப்பட்டது.

## 09:117 வது திருக்குர்ஆன் வசனம்

"திண்ணமாக, அல்லாஹ் (தன்) தூதர் மீது அருள் புரிந்தான். (அவ்வாறே) துன்ப வேளையில் அவரைப் பின்பற்றிய முஹாஜிர்கள் மற்றும் அன்சார்களின் மீதும் (அருள் புரிந்தான்.) அவர்களில் ஒரு பிரிவினருடைய இதயங்கள் தடுமாறிக் கொண்டிருந்த பின்னரும் அவர்களை மன்னித்(து அவர்களின் மீது அருள் புரிந்)தான். நிச்சயமாக அவன் அவர்களின் மீது அன்பும் கருணையும் உடையோனாக இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 09:117 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4676. அப்துர் ரஹ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி கஅப்(ரஹ்) அறிவித்தார்

(என் பாட்டனார்) கஅப் இப்னு மாலிக்(ரலி) (அந்திமக் காலத்தில்) கண் பார்வையற்றிருந்தபோது அவர்களைக் கைப்பிடித்து அழைத்துச் சென்று கொண்டிருந்த அன்னாருடைய புதல்வரான (என் தந்தை) அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) தெரிவித்தார்.

(என் தந்தை கஅப் இப்னு மாலிக்(ரலி) (தபூக் போரில் தாம் கலந்து கொள்ளாததைப் பற்றிய) தம் செய்தியை விவரித்தபோது 'எவருடைய விவகாரத்தில் தீர்ப்பு தள்ளி வைக்கப்பட்டிருந்தோ அவர்களின் குற்றத்தை அல்லாஹ் மன்னித்துவிட்டான்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 09:118 வது) இறைவசனம் குறித்துச் சொன்னவற்றை செவியுற்றேன்.

கஅப்(ரலி) தம் பேச்சின் இறுதியில் கூறினார்கள்: நான் நபி(ஸல்) அவர்களிடம், (இறைத்தூதர் அவர்களே!) என் பாவம் மன்னிக்கப்பட்டதற்காக என் செல்வத்தின் மீதான (என்னுடைய) உரிமையைவிட்டுவிட்டு அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் அதைத் தர்மமாக அளித்துவிடுகிறேன்'' என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `உங்கள் செல்வத்தில் சிறிதளவை உங்களுக்காக வைத்துக்கொள்ளுங்கள். அதுவே உங்களுக்கு நல்லது'' என்று கூறினார்கள்.

## 09:118 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், எவருடைய விவகாரத்தில் தீர்ப்பு தள்ளி வைக்கப்பட்டிருந்தோ அந்த மூவரையும் அவன் மன்னித்தான் (அவர்கள் நிலைமை எந்த அளவு மோசமாம்விட்டிருந்ததெனில்) பூமி இத்துணை விரிவாய் இருந்தும் அவர்களைப் பொறுத்தவரை அது குறும் அவர்கள் உயிர் வாழ்வதே சிரமமாம்விட்டிருந்தது. இன்னும் அல்லாஹ்விடமிருந்து தப்பிப்பதற்கு அவன் பக்கம் திரும்புவதைத் தவிர வேறு புகலிடம் இல்லை என்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள். பின்னர், அவர்கள் பாவத்திலிருந்து மீளவேண்டும் என்பதற்காக அல்லாஹ் அவர்களை மன்னித்தான். நிச்சயமாக அல்லாஹ்தான் மிக மன்னிப்போனும், கருணையுடையோனுமாயிருக்கிறான் (எனும் 9:118 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4677. அப்துல்லாஹ் இப்னு கஅப் இப்னு மாலிக்(ரஹ்) அறிவித்தார்

என் தந்தையும் (தபூக் போரில் கலந்து கொள்ளாததற்காக) பாவமன்னிப்பு வழங்கப்பெற்ற மூவரில் ஒருவருமான கஅப் இப்னு மாலிக்(ரலி) கூறினார்.

'அல்உஸ்ரா' (எனும் தபூக்) போர், பத்ருப்போர் ஆகிய இரண்டு போர்களைத் தவிர, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பங்கெடுத்த எந்த அறப்போரிலும் ஒருபோதும் நான் கலந்துகொள்ளாமல் இருந்ததில்லை.

மேலும் (தபூக் போரில் கலந்து கொள்ளாதது பற்றிய) உண்மையை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முற்பகலில் நான் சொல்லிவிட முடிவு செய்தேன். தாம் மேற்கொண்ட எந்தப் பயணத்திலிருந்து (ஊரை நோக்கித் திரும்பி) வரும்போதும் முற்பகல் நேரத்தில்தான் பெரும்பாலும் நபி(ஸல்) அவர்கள் வருவார்கள். (அப்படி வந்ததும்) தம் வீட்டிற்குச் செல்லாமல் முதலில் பள்ளி வாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுவது அவர்களின் வழக்கம். (வழக்கப்படி அன்றும் தொழுதுவிட்டு, தபூக்போரில் கலந்து கொள்ளாதவர்களான) என்னிடமும் (ஹிலால், முராரா எனும்) என்னிரு சகாக்களிடமும் பேசக் கூடாதென நபி(ஸல்) அவர்கள் (மக்களுக்குத்) தடை விதித்தார்கள்.
(அந்த அறப்போருக்குச் செல்லாமல்) பின் தங்கிவிட்டவர்களில் எங்களைத் தவிர வேறெவரிடமும் பேசக் கூடாதென்று நபி(ஸல்) அவர்கள் தடை விதிக்கவில்லை.
எனவே, மக்கள் எங்களிடம் பேசுவதைத் தவிர்த்தனர். இந்த விவகாரமும் நீண்டு கொண்டே சென்றது. நானும் இதே நிலையில் இருந்துவந்தேன். (அப்போது) எனக்கிருந்த கவலையெல்லாம், (இதே நிலையில்) நான் இறந்துவிட நபி(ஸல்) அவர்கள் எனக்கு (ஜனாஸா)த் தொழுகை நடத்தாமல் இருந்துவிடுவார்களோ! அல்லது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்துவிட மக்கள் மத்தியில் இதே நிலையில் நான் இருக்க, அவர்களில் யாரும் என்னிடம் பேசாமலும் (நான் இறந்தால்) எனக்கு (ஜனாஸா)த் தொழுகை நடத்தப்படாமலும் போய்விடுமோ என்பது தான். அப்போதுதான் அல்லாஹ் எங்கள் பாவமன்னிப்புக் குறித்து தன் தூதருக்கு அருளினான். (எங்களுடன் பேசக்கூடாதென மக்களுக்குத் தடை விதித்திலிருந்து ஐம்பது நாள்கள் முடிந்த பின்) இரவின் இறுதி மூன்றில் ஒரு பகுதி நேரம் எஞ்சியிருந்தபோது இது நடந்தது. அந்நேரம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் துணைவியாரான) உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் இருந்து கொண்டிருந்தார்கள். உம்முஸலமா(ரலி) என்னைக் குறித்து நல்லெண்ணம் கொண்டவராகவும் என் விவகாரத்தில் தனிக்கவனம் செலுத்துபவராகவும் இருந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'உம்முஸலமா! கஅபின் பாவம் மன்னிக்கப்பட்டுவிட்டது'' என்று கூறினார்கள். உம்மு ஸலமா(ரலி), '(இறைத்தூதர் அவர்களே!) கஅபிடம் நான் ஆளனுப்பி அவருக்கு இந்த நற்செய்தியைத் தெரிவிக்கட்டுமா?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் (நடுநிசியைக் கடந்துவிட்ட இந்த நேரத்தில் நீ இச்செய்தியைத் தெரியப்படுத்தினால்) மக்கள் ஒன்றுகூடி எஞ்சிய இரவு முழுவதும் உங்களை உறங்கவிடாமல் செய்துவிடுவார்கள்'' என்றார்கள்.
ஆக, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்' ஃபஜ்ருத் தொழுகையை நிறைவேற்றியபின் எங்கள் (மூவரின்) பாவங்களை அல்லாஹ் மன்னித்துவிட்டது. குறித்து (மக்களுக்கு) அறிவித்தார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு (ஏதேனும்) மகிழ்ச்சி ஏற்படும்போது அவர்களின் முகம் நிலவின் ஒரு துண்டு போலாம்ப் பிரகாசிக்கும்.
(போருக்குச் செல்லாமல் இருந்துவிட்டு) சாக்குப் போக்குச் சொன்னவர்களிடமிருந்து அது ஒப்புக்கொள்ளப்பட்டிருந்த நிலையில், எங்கள் மூவரின் விஷயத்தில் மட்டுமே தீர்ப்பு தள்ளிவைக்கப்பட்டிருந்தது. இச்சமயத்தில் தான் எங்கள் பாவமன்னிப்புக் குறித்து அல்லாஹ் (வசனத்தை) அருளினான். போரில் கலந்து கொள்ளாமலிருந்தவர்களில் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் பொய்யுரைத்துத் தவறான சாக்குப்போக்குகளைக் கூறியவர்கள் குறித்து மிகக் கடுமையாகப் பேசப்பட்டது. அதுபோல் யாரைக் குறித்தும் பேசப்பட்டதில்லை. அல்லாஹ் கூறினான்.
(நம்பிக்கையாளர்களே! போர் முடிந்து) நீங்கள் அவர்களிடம் திரும்பிய சமயத்தில் உங்களிடம் அவர்கள் (வந்து போருக்குத் தாம் வராதது குறித்து மன்னிப்புத் தேடி) சாக்குப் போக்குக் கூறுகின்றனர். (எனவே, அவர்களை நோக்கி, நபியே!) நீங்கள் கூறுங்கள்: நீங்கள் சாக்குப் போக்குக் கூறாதீர்கள். நாங்கள் உங்களை ஒருபோதும் நம்பவேமாட்டோம். உங்கள்

(வஞ்சக) விஷயங்களை நிச்சயமாக அல்லாஹ் எங்களுக்க அறிவித்துவிட்டான். இனி அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்கள் செயலைப் பார்ப்பார்கள். பின்னர் நீங்கள், மறைவானவை, வெளிப்படையானவை ஆகிய அனைத்தையும் அறிந்தவனிடம் கொண்டுவரப்படுவீர்கள். நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அந்த நேரத்தில் அவனே உங்களுக்கு அறிவிப்பான். (திருக்குர்ஆன் 09:94)

## 09:119 வது திருக்குர்ஆன் வசனம்

இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் மேலும், வாய்மையாளர்களுடன் இருங்கள் (எனும் 9:119 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4678. அப்துர் ரஹ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி கஅப்(ரஹ்) அறிவித்தார்

(என் பாட்டனார்) கஅப் இப்னு மாலிக்(ரலி) அவர்களின் (இறுதிக் காலத்தில் கண் பார்வையற்ற அவர்களுக்கு) வழிகாட்டியாக இருந்த (என் தந்தை) அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) கூறினார்கள்.

(என் தந்தை) கஅப்பின் மாலிக்(ரலி) தாம் தபூக் போரில் கலந்து கொள்ளாமலிருந்துவிட்ட செய்தியை அறிவித்தபோது நான் அவர்களிடமிருந்து (பின்வருமாறு) செவியுற்றேன்.

அல்லாஹ்வின் மீதாணையாக! உண்மை பேசுவதில் என்னைச் சோதித்ததைவிட சிறப்பாக வேறவரையும் அல்லாஹ் சோதித்தாக நான் அறியவில்லை. அல்லாஹ்வின் தூதரிடம் நான் உண்மை பேசியதிலிருந்து இறுதி நாள் வரை நான் வேண்டுமென்றே பொய் சொல்ல முனைந்ததில்லை. அந்தச் சமயத்தில் (என் உண்மைக்குப் பரிசாக) அல்லாஹ் பின் வரும் வசனங்களை அருளினான்.

“நிச்சயமாக அல்லாஹ் (தன்) தூதர் மீது அருள்புரிந்தான். (அவ்வாறே) துன்பவேளையில் அவரைப் பின்பற்றிய முஹாஜிர்கள் மற்றும் அன்சார்களின் மீதும் (அருள் புரிந்தான்). அவர்களில் ஒரு பிரிவினரின் இதயங்கள் தடுமாறிக் கொண்டிருந்த பின்னரும் அவர்களை மன்னித்(து அவர்களின் மீது அருள் புரிந்)தான். நிச்சயமாக அவன் அவர்களின் மீது அன்பும் கருணையும் உடையோனாக இருக்கிறான்.“

“மேலும் எவருடைய விவகாரத்தில் தீர்ப்பு தள்ளிவைக்கப்பட்டிருந்தோ அந்த மூவரையும் அவன் மன்னித்தான் (அவர்கள் நிலைமை எந்த அளவு மோசமாம் விட்டிருந்ததெனில்), பூமி இத்துணை விரிவாய் இருந்தும் அவர்களைப் பொறுத்தவரை அது குறும் அவர்கள் உயிர் வாழ்வதே சிரமமாம் விட்டிருந்தது. இன்னும் அல்லாஹ்விடமிருந்து தப்பிப்பதற்கு அவன் பக்கம் திரும்புவதைத் தவிர வேறு புகலிடம் இல்லை என்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள். பின்னர், அவர்கள் பாவத்திலிருந்து மீள வேண்டும் என்பதற்காக அல்லாஹ் அவர்களை மன்னித்தான். நிச்சயமாக அல்லாஹ்தான் மிக மன்னிப்போனும், கருணையுடையோனுமாயிருக்கிறான். இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் மேலும் வாய்மையாளர்களுடன் இருங்கள்!” (திருக்குர்ஆன் 09:117-119)

## 09:128 வது திருக்குர்ஆன் வசனம்

“உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றனார். நீங்கள் துன்பத்திற்குள்ளாவது அவருக்குக் கடினமாக இருக்கிறது. மேலும், உங்கள் (வெற்றியின்) விஷயத்தில் பேராவல் கொண்டவராகவும், நம்பிக்கையாளர்களின் மீது அதிகப் பரிவும், கருணையும் உடையோராகவும் இருக்கிறார்‘` எனும் (திருக்குர்ஆன் 09:128 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4679. ஸைத் இப்னு ஸாபித் அல்அன்சாரி(ரலி) - அன்னார் வேத அறிவிப்பினை (வஹியை) எழுதுவோரில் ஒருவராக இருந்தார் அவர்கள் கூறினார்

யமாமா போர் நடைபெற்ற பின் (கலீஃபா) அபூ பக்(ரலி), எனக்கு ஆளனுப்பி (என்னை அழைத்துவரக் கூறினார்கள். (நான் சென்றேன். அங்கே) அவர்களுக்கு அருகில் உமர் இப்னு கத்தாப்(ரலி) இருந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) (என்னிடம்) கூறினார்கள்:
உமர் அவர்கள் என்னிடம் வந்து, 'இந்த யமாமாப் போரில் ஏராளமான மக்கள் கொல்லப்பட்டுவிட்டார்கள். (இறைமறுப்பாளர்களுடன் போர் நடக்கும்) பல்வேறு இடங்களில் குர்ஆன் அறிஞர்களில் ஏராளமான பேர் கொல்லப்பட்டு, அதனால் குர்ஆனை நீங்கள் திரட்டினால் தவிர, அதன் பெரும் பகுதி (நம்மைவிட்டுப்) போய்விடுமோ என நான் அஞ்சுகிறேன். (எனவே,) தாங்கள் குர்ஆனைத் திரட்டி ஒன்று சேர்க்க வேண்டுமென கருதுகிறேன்'' என்று கூறினார்கள். நான் 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்யாத ஒன்றை நான் எப்படிச் செய்வேன்?' என்று உமர் அவர்களிடம் கேட்டேன். அதற்கு உமர் அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! இது (குர்ஆனைத் திரட்டுவது) நன்மை(யான பணி)தான்'' என்று கூறினார்கள். இதற்காக என் மனத்தை அல்லாஹ் விரிவாக்கும் வரை இது விஷயத்தில் (தொடர்ந்து) அவர்கள் என்னிடம் வலியுறுத்திக் கொண்டேயிருந்தார்கள். (முடிவில்) உமர் அவர்கள் கருதியதை(யே) நானும் (பொறுத்தமானதாகக்) கண்டேன். (இதை அபூ பக்ர் அவர்கள் என்னிடம் கூறியபோது) உமர்(ரலி) (ஏதும்) பேசாமல் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு அருகில் அமர்ந்துகொண்டிருந்தார்கள்.
(பிறகு) அபூ பக்ர்(ரலி) (என்னிடம்) 'நீங்கள் புத்திசாலியான இளைஞர் உங்களை நாங்கள் (எந்த விதத்திலும் சந்தேகப்படமாட்டோம். நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காக வஹி (வேத வசனங்களை) எழுதக்கூடியவராயிருந்தீர்கள். எனவே, நீங்கள் குர்ஆனைத் தேடிக் கண்டுபிடித்து (ஒரே பிரதியில்) ஒன்று திரட்டுங்கள்'' என்று கூறினார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! மலைகளில் ஒன்றை நகர்த்த வேண்டுமென எனக்கு அவர்கள் கட்டளையிட்டிருந்தாலும் கூட அது எனக்குப் பளுவாக இருந்திருக்காது குர்ஆனை ஒன்று திரட்டும்படி எனக்கு அவர்கள் கட்டளையிட்டது அதைவிட எனக்குப் பளுவாக இருந்தது. நான், நபி(ஸல்) அவர்கள் செய்யாத ஒன்றை நீங்கள் இருவரும் எப்படிச் செய்யப்போகிறீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அபூ பக்ர்(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! இது நன்மை(யான பணி)தான்'' என்று பதிலளித்தார்கள். இதையே நான் தொடர்ந்து (அவர்கள் இருவரிடமும்) வலியுறுத்திக் கொண்டிருந்தேன்.
முடிவில் எதற்காக அபூ பக்ர் மற்றும் உமர் ஆகியோரின் மனத்தை அல்லாஹ் விரிவாக்கினானோ அதற்காக என் மனத்தையும் அல்லாஹ் விரிவாக்கினான். (குர்ஆனை ஒன்று திரட்ட முன்வந்தேன்.) எனவே, நான் எழுந்து சென்று (மக்களின் கரங்களிலிருந்த) குர்ஆன் (சுவடிகளைத்) தேடினேன். அவற்றை துண்டுக் தோல்கள், அகலமான எலும்புகள், பேரீச்சமட்டைகள் மற்றும் (குர்ஆன் வசனங்களை மனனம் செய்திருந்த) மனிதர்களின் நெஞ்சுகள் ஆகியவற்றிலிருந்து திரட்டினேன். (இவ்வாறு திரட்டிபோது) 'அத்தவ்பா' எனும் (9 வது) அத்தியாயத்தின் (கடைசி) இரண்டு வசனங்களை குஸைமா இப்னு ஸாபித் அல்அன்சாரி(ரலி) அவர்களிடமிருந்து பெற்றேன் இவை வேறெவரிடமிருந்தும் (எழுதப்பட்டு) கிடைக்கவில்லை.
(அவை:) 'உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார். நீங்கள் துன்பத்திற்குள்ளாவது அவருக்குக் கடினமாக இருக்கிறது. மேலும், உங்கள் (வெற்றியின்) விஷயத்தில் பேராவல் கொண்டவராகவும், நம்பிக்கையாளர்களின் மீது அதிகப் பரிவும், கருணையும் உடையோராகவும் இருக்கிறார். (நபியே! இதற்குப்) பின்னரும் அவர்கள் உம்மைப் புறக்கணித்தால் நீர் கூறிவிடும்: அல்லாஹ் எனக்குப் போதுமானவன். அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனையே நான் முழுமையாகச் சார்ந்திருக்கிறேன். மேலும், அவன் மகத்தான அரியாசனத்தின் (அர்ஷின்) அதிபதியாயிருக்கிறான்!''(திருக்குர்ஆன் 09:128 , 129)

(என் வாயிலாக) திரட்டித் தொகுக்கப்ப பெற்ற குர்ஆன் பிரதிகள் (கலீஃபா) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம், அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை இருந்(து வந்)தது. பின்னர். (கலீஃபாவான) உமர்(ரலி) அவர்களிடம், அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை இருந்தது. பிறகு உமர் அவர்களின் புதல்வியார் ஹஃப்ஸா(ரலி) அவர்களிடம் இருந்தது.
இந்த ஹதீஸ் இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
இப்ராஹீம் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்களின் ஓர் அறிவிப்பில், '(அவ்விரு வசனங்கள்)'குஸைமா'(ரலி) அல்லது'அபூ குஸைமா'(ரலி) அவர்களிடம் இருந்தன'' என (ஐயப்பாட்டுடன்) அறிவிக்கப்பட்டுள்ளது.

## (10)'யூனுஸ்' அத்தியாயம்

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 10:24 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபக்த்தலத்த' (அது கலந்தது) என்பதன் கருத்தாவது: அந்த (மழை) நீரினால் பல்வேறு நிறங்களில் (மனிதனும் மிருகமும் புசிக்கிற புற்பூண்களாக) முளைத்தன.
(அல்லாஹ் கூறினான்:) அல்லாஹ்வுக்கு சந்ததி உண்டென்று அவர்கள் கூறுகின்றனர். அவனோ (இக்கற்பனையிலிருந்து) மிகப் பரிசுத்தமானவன். அவன் (சந்ததி முதலியவற்றின்) தேவையற்றவன். (திருக்குர்ஆன் 10:68)
ஸைத் இப்னு அஸ்லம்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 10:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கதம ஸித்கின்' எனும் சொல் முஹம்மத்(ஸல்) அவர்களைக் குறிக்கிறது.
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(கதம ஸித்கின் எனும்) இச்சொல்லுக்கு, ('முன்னேற்பாடாகச் செய்த) நன்மை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 10:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தில்க்க ஆயாத்' (இவை இவ்வேதத்தின் வசனங்களாகும்) எனும் வாக்கியத்திற்கு'இவை இவ்வேதத்தின் குறியீடுகளாகும்'' என்று பொருள்.
இதைப்போன்றே (திருக்குர்ஆன் 10:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜரைன பிஹிம்' (அவர்களை நடத்திச் சென்றது) என்பதற்கு'பிக்கும்' (உங்களை நடத்திச் சென்றது) என்று பொருள்.
(திருக்குர்ஆன் 10:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஅவாஹும்' எனும் சொல்லுக்கு'அவர்களின் பிரார்த்தனை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 10:22 வது வசனத்தில்)'நிச்சயமாக நாம் (அலைகளால் நாலாபக்கங்களிலிருந்தும்) சூழந்து கொள்ளப்பட்டோம்'' என்பதற்கு'அழிவை நெருங்கிவிட்டோம்' என்று பொருள். (அல்லாஹ் கூறினான்:)'அவர்களின் பாவம் அவர்களைச் சூழ்ந்து கொண்டது'' (திருக்குர்ஆன் 02:81)
(திருக்குர்ஆன் 10:90 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபஅத்பஅஹும்' எனும் சொல்லும் (அதே வேர்ச் சொல்லில் இருந்து வந்த)'ஃபத்தபஅஹும்' எனும் சொல்லுக்கு ('அவர்களைப் பின்தொடர்ந்தனர்' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
''மனிதர்கள் நன்மையைப் பெற அவசரப்படுவதைப் போல், (அவர்கள் அவசரப்பட்டுக் கோரும்) தீமையை அல்லாஹ் அவர்களுக்கு அவசரமாக வழங்கினால், அவர்களின் ஆயுள் அவர்களுக்கு (என்றோ) முடிக்கப்பட்டிருக்கும்'' எனும் (திருக்குர்ஆன் 10:11 வது) வசனத்தின் கருத்தாவது:

மனிதன் கோபப்படுகிறபோது தன் குழந்தை மற்றும் தன் செல்வத்தைப் பார்த்து'அல்லாஹ்வின் சாபம் இதன் மீது உண்டாகட்டும்! இதில் வளம் (பரக்கத்) இல்லாமல் போகட்டும்!''என்று பிரார்த்திக்க, அதை அல்லாஹ் அவரசப்பட்டு நடைமுறைப்படுத்தினால், யாருக்கெதிராக இது கூறப்பட்டதோ அவர் (உடனுக்குடன்) அழிக்கப்பட்டிருப்பார் அவரை அல்லாஹ் இறக்கச் செய்திருப்பான்.

"நன்மை புரிந்தோருக்கு நன்மையும், (அதைவிட) அதிகமும் கிடைக்கும்'' எனும் (திருக்குர்ஆன் 10:26 வது) வசனத்தின் கருத்தாவது: நன்மை செய்தவர்களுக்கு அதுபோன்ற நன்மையும், அதைவிடக் கூடுதலாகப் பாவமன்னிப்பும் கிடைக்கும்.

மற்றவர்கள் கூறுகிறார்கள்: அதைவிடக் கூடுதலாக அல்லாஹ்வின் தரிசனமும் கிடைக்கும்.

(திருக்குர்ஆன் 10:78 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கிப்ரியாஉ' எனும் சொல், 'ஆட்சியதிகாரத்தைக் குறிக்கும்.

மேலும், நாம் இஹ்ராயீலின் வழித்தோன்றல்களைக் கடலைக் கடக்கச் செய்தோம். ஃபிர்அவ்னும், அவனுடைய படைகளும் அநீதியும், அக்கிரமமும் இழைப்பதற்காக அவர்களைப் பின்தொடர்ந்து சென்றனர். இறுதியில், ஃபிர்அவ்ன் நீரில் மூழ்கத் தொடங்கியபோது'இஸ்ராயீலின் வழித்தோன்றல்கள் எந்த இறைவன் மீது நம்பிக்கை கொண்டார்களோ அவனைத் தவிர உண்மையான இறைவன் வேறு யாருமில்லை என்று நானும் நம்பிக்கை கொண்டேன். மேலும், (அந்த இறைவனுக்குக்) கீழ்ப்படிந்து நடப்பவர்களில் நானும் ஒருவனாவேன்' என்று கூறினான் (எனும் 10:90 வது இவைசனம்).

(திருக்குர்ஆன் 10:92 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நுன்ஜீக்க' (அல்லது'நுனஜ்ஜீக்க') எனும் சொல்லுக்கு'உன்னை (பூமியின்) மேடான ஓரிடத்தில் எறிவோம்'' என்று பொருள்.

ஹதீஸ் 4680. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து) மதீனாவுக்கு வந்தார்கள். (அங்கு) யூதர்கள்'ஆபூரா' (முஹர்ரம் 10ஆம் நாள்) நோன்பு நோற்றுக் கொண்டிருந்தார்கள். அன்றி அவர்கள், 'இது மூஸா(அலை) அவர்கள் ஃபிர்அவ்னை வெற்றிகொண்ட நாள்'' என்று கூறினார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் தம்தோழர்களிடம், '(யூதர்களான) இவர்களைவிட மூஸா(அலை) அவர்களுக்கு நீங்கள்தாம் அதிக உரிமையுடையவர்கள் எனவே, (அந்நாளில்) நீங்கள் நோன்பு நோற்பீர்களாக!''என்று கூறினார்கள்.

## (11)'ஹூத்' அத்தியாயம்

அபூ மைஸரா அம்ர் பின் ஷர்ஹபீல்(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 11:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் அவ்வாஹ்' எனும் சொல்லுக்கு அபிசீனிய மொழியில்'இரக்க சிந்தனையுடையவர்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 11:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பாதியர் ரஃயி' (எங்கள் பார்வையில்) எனும் சொற்றொடருக்கு'எங்களுக்குத் தென்பட்ட வகையில்' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 11:44 வது வசனத்திலுள்ள)'ஜூதீ' என்பது ஒரு தீவிலுள்ள மலையாகும்.2

ஹஸன் அல் பஸரீ(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 11:87 வது வசனத்திலுள்ள)'நிச்சயமாக நீர் கருணைமிக்க நேர்மையாளர்தாம்' எனும் வாக்கியத்தை (மத்யன் நகர மக்கள்) ஷுஐப்(அலை) அவர்களிடம் பரிகாசமாகவே கூறினர்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 11:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்லிஈ:' எனும் சொல்லுக்கு'(வானமே!) நிறுத்திக் கொள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 11:77 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸீப்' எனும் சொல்லுக்குக்'கடுமையானது என்று பொருள்.
(திருக்குர்ஆன் 11:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லாஜரம' எனும் சொல்லுக்கு'ஆம் (மெய்யாகவே!)' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 11:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ ஃபாரத் தன்னூர்' (அடுப்புப் பொங்கியது) எனும் வாக்கியத்திற்கு'வெள்ளம் பீறிட்டது' என்று பொருள்.
இக்ரிமா(ரஹ்) கூறினார்:
('அத்தன்னூர்' எனும்) இச்சொல்லுக்கு'பூமியின் மேற்பரப்பு' என்று பொருள்.

## 11:05 வது திருக்குர்ஆன் வசனம்

இதோ! அவர்கள் (தம் தீய எண்ணங்களை) அல்லாஹ்விடமிருந்து மறைப்பதற்காகத் தம் நெஞ்சங்களைத் திருப்பிக்கொள்கிறார்கள். தெரிந்துகொள்ளுங்கள்: இவர்கள் ஆடைகளால் தங்களை மூடி மறைத்துக்கொண்ட போதிலும் அவர்கள் மறைக்கிறவற்றையும், அவர்கள் வெளிப்படுத்துகிறவற்றையும் அல்லாஹ் நன்கறிகிறான். நிச்சயமாக அவன் நெஞ்சங்களில் உள்ளவற்றை நன்கறிந்தவன் (எனும் 11:5 வது இறைவசனம்).
(திருக்குர்ஆன் 11:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹாக்க' எனும் சொல்லுக்கு'இறங்கியது' என்று பொருள். (அதன் எதிர்காலவினைச் சொல்லான)'யஹீக்கு' என்பதற்கு'இறங்கும்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 11:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஊஸுன்' (நம்பிக்கையிழந்தவன்) எனும் சொல்'யஇஸ்த்து (நம்பிக்கையிழந்தேன்) என்பதிலிருந்து'ஃபஊல்' எனும் வாய்ப்பாட்டில் வந்ததாகும்.
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 11:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தப்தயிஸ்' எனும் சொல்லுக்குக்'கவலைப்படுதல்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 11:5 வது வசனத்திலுள்ள)'அவனிடமிருந்து மறைப்பதற்காகத் தம் நெஞ்சங்களைத் திருப்பிக் கொள்கிறார்கள்'' என்பதன் கருத்தாவது: முடிந்தால் அல்லாஹ்விடமிருந்து மறைத்துவிடலாம் என்ற எண்ணத்தில் அவர்கள் சத்தியத்தில் சந்தேகம் கொள்கிறார்கள்.

ஹதீஸ் 4681. முஹம்மத் இப்னு அப்பாத் இப்னி ஜஅஃபர்(ரஹ்) அறிவித்தார்
இப்னு அப்பாஸ்(ரலி) இந்த (திருக்குர்ஆன் 11:5 வது) வசனத்தை'அலா இன்னஹும் தஸ்னவ்னீ ஸுதூருஹும்'' என ஓத கேட்டேன். அவர்களிடம் அது குறித்து நான் (விளக்கம்) கேட்டதற்கு அவர்கள்'மக்கள் சிலர், இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்று (ஆடையை நீக்கிடத் தம் பிறவு உறுப்பு) வானத்திற்குத் தெரியும்படி உட்காருவதையும், இவ்வாறே தம் மனைவிமார்களுடன் உறவு கொள்ளும்போது (தம் ஆடையை நீக்கிப் பிறவி உறுப்பு) வானத்திற்குத் தெரிந்து விடுவதையும் எண்ணி வெட்கப்பட்டு (அதை மறைக்க முயன்று தலைகுனிந்து) கொள்வார்கள். அவர்களைக் குறித்தே இந்த வசனம் அருளப்பட்டது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4682. முஹம்மத் இப்னு அப்பாத் இப்னி ஜஅஃபர்(ரஹ்) கூறினார்
இப்னு அப்பாஸ்(ரலி)'அலா இன்னஹும் தஸ்னவ்னீ ஸுதூருஹும்'' என்று இந்த (திருக்குர்ஆன் 11:5 வது) இறைவசனத்தை ஓதினார்கள். நான், 'அபுல் அப்பாஸே! இந்த வசனத்திலுள்ள'தங்கள் நெஞ்சங்களைத் திருப்பிக் கொள்கிறார்கள்'' என்பதன் பொருள்

என்ன?' என்று கேட்டேன். அவர்கள், `சிலர் தம் மனைவியுடன் உடலுறவு கொள்ள விரும்பும்போது, அல்லது (இயற்கைக் கடனை நிறைவேற்ற) தனியே ஒதுங்கச் செல்லும்போது (தம் பிறவி உறுப்பு வெளியே தெரிந்து விடுகிறதே என்று) வெட்கப்பட்டு (குனிந்து தம் நெஞ்சுகளால் அதை மூடி மறைக்க முற்பட்டு) வந்தார்கள். அப்போது இந்த இறை வசனம் அருளப்பட்டது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4683. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி)'இதோ! அவர்கள் (தம் தீய எண்ணங்களை) அல்லாஹ்விடமிருந்து மறைப்பதற்காகத் தம் நெஞ்சங்களைத் திருப்பிக்கொள்கிறார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 11:5 வது) இறைவசனத்தை (பிரபல ஓதலின் படி)'அலா இன்னஹும் யஸ்னூன ஸுதூரஹும்' என்றே ஓதினார்கள்.

அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களல்லாத மற்ற சிலர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்:

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'யஸ்தஃக்ஷூன' எனும் சொல்லுக்கு'அவர்கள் தங்கள் தலைகளை மூடிக்கொள்கிறார்கள்' எனும் பொருள்.

(திருக்குர்ஆன் 11:77 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சீஅ பிஹிம்' என்பதற்கு'லூத் (அலை) நல்லெண்ணத்தை இழந்தார்கள்' என்று பொருள்.'ளாக்க பிஹிம்' என்பதற்குத்'தம் விருந்தினர்களைக் குறித்து(அவர்களைத் தம் தீய செயலுக்குப் பயன்படுத்திக்கொள்ளத் தம் சமுதாயத்தார் முயல்வார்களோ எனும்) சங்கடம் லூத்(அலை) அவர்களுக்கு ஏற்பட்டது'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 11:81 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பிகித்இம் மினல் லைல்' என்பதற்கு'இரவின் இருட்டு இருக்கும்போதே' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 11:88 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இலைஹி உனீப்' எனும் வாக்கியத்திற்கு'அவன் பக்கமே நான் திரும்புகிறேன்' என்று பொருள்.

## 11:07 வது திருக்குர்ஆன் வசனம்

"(அப்போது) அவனுடைய அரியாசனம் (அர்ஷ்) நீரின் மீதிருந்தது'' எனும் (திருக்குர்ஆன் 11:7 வது வசனத் தொடர்.

ஹதீஸ் 4684. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வலிவும் உயர்வும் கொண்ட அல்லாஹ், `நீ (என் திருப்தியை அடைந்திட) செலவுசெய். உனக்காக நான் செலவுசெய்வேன்'' என்று சொன்னான்.

மேலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் கரம் நிரம்பியுள்ளது. செலவிடுவதால் அது வற்றிப் போய்விடுவதில்லை. அது இரவிலும் பகலிலும் (அருள் மழையைப்) பொழிந்து கொண்டேயிருக்கிறது. வானத்தையும் பூமியையும் அவன் படைத்தது முதல் அவன் செலவிட்டமு எதுவும் அவனுடைய கைவசமுள்ள (செல்வத்)தைக் குறைத்துவிட வில்லை பார்த்தீர்களா! (வானங்களையும் பூமியையுளம் படைப்பதற்கு முன்னர்) அவனுடைய அரியாசனம் (அர்ஷ்) நீரின் மேலிருந்தது. அவனுடைய கரத்திலேயே தராசு உள்ளது. அவனே (அதைத்) தாழ்த்துகிறான் உயர்த்துகிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(திருக்குர்ஆன் 11:54 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஉதராக்க' எனும் சொல்'அரவ்த்துஹு` எனும் (வினைச்) சொல்லிலிருந்து'இஃப்த அல்த்த' எனும் வாய்பாட்டு வினையெச்சத்தில் அமைந்துள்ளது.'அரவ்த்துஹு` என்பதற்கு'அவனுக்கு நான் கேடு உண்டாக்கினேன்' என்று பொருள். இ(ந்த மூலத்)திலிருந்துதான்'யஉரூஹு` (அவனுக்குப் பாதிப்பை உண்டாக்கினான்) ஆகிய வினைச்சொற்கள் பிறந்தன.

“ஒவ்வோர் உயிரினத்தின் குடுமியும் அவனுடைய பிடியிலேயே இருக்கிறது‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 11:56 வது) வசனத்தின் கருத்தாவது: அவனுடைய ஆட்சியதிகாரத்திலேயே உள்ளது.
(திருக்குர்ஆன் 11:59 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’யகூலுல் அஷ்ஹாத்’ (சாட்சியாளர்கள் கூறுவர்) என்பதன் ஒருமை ’ஸாஹிப்’ (நண்பன்) என்பதைப் போன்று.
(திருக்குர்ஆன் 11:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’இஸ்தஉமரக்கும்’ எனும் சொல்லுக்கு ’உங்களை (அதில்) வசிப்பவர்களாக ஆக்கினான்’ என்று பொருள். இதே வகையைச் சேர்ந்ததே ’அஉமர்த்துஹுத் தார’ என்பதும். இதன் பொருள்: அவனுக்கு இவ்வீட்டை (அவன் வாழ்நாள் முழுவதும்) உடைமையாக்கிக் கொடுத்தேன்.
(திருக்குர்ஆன் 11:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’நம்ரஹும்’ எனும் சொல்லும், (அதே போன்ற) ’அன்கரஹும்‘, ‘இஸ்தன்கரஹும்’ ஆகிய சொற்களும் (‘அவர்களைப் பற்றிச் சந்தேகம் கொண்டார்’ என்ற) ஒரே பொருள் கொண்டவையாகும்.
(திருக்குர்ஆன் 11:73 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’ஹமீதுன் மஜீத்’ என்பதில் ’மஜீத்’ (மாட்சிமை மிகுந்தவன்) எனும் சொல் ’மாஜித்’ எனும் (வினையாலணையும் பெயர்ச்) சொல்லில் இருந்து ’ஃபாஇல்’ எனும் வாய்பாட்டில் அமைந்ததாகும். ’ஹமீத்’ (புகழுக்குரியவன்) எனும் சொல் ’ஹமித’ எனும் (வினைச்) சொல்லிலிருந்து செயப்பாட்டு எச்சவினையின் (மஹ்மூத்) பொருள் கொண்டதாகும்.
(திருக்குர்ஆன் 11:82 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’சிஜ்ஜீல்’ எனும் சொல்லுக்குக் ’கெட்டியான, பெரிய’ என்று பொருள். ’சிஜ்ஜீல்‘, ‘சிஜ்ஜீன்’ இரண்டுக்கும் பொருள் ஒன்றே. (இச்சொற்களின் இறுதியிலுள்ள) ’லாம்‘, நூன்’ ஆகிய எழுத்துகள் (உச்சரிப்பில்) நெருக்கமானவையாகும்.
(கவிஞர்) தமீம் இப்னு முக்பில் கூறினார்:
எத்தனையோ காலாட் படையினர் முற்பகல் வேளையில் தலைக் கவசங்களில் மிகக் கடுமையாகத் தாக்கிவிடுகின்றனர் (அது சாதாரணத் தாக்குதல் அல்ல! அதை) மாபெரும் வீரர்கள் கூட தம் இறுதி உபதேசத்தில் குறிப்பிடுவர்.

## 11:84 வது திருக்குர்ஆன் வசனம்

“மத்யனுக்கு அவர்களின் சகோதரர் ஷுஐபை (நம் தூதராக நியமித்தோம்.) எனும் 11:84 வது வசனத் தொடர்.
அதாவது ’மத்யன்வாசிகளுக்கு (நாம் நியமித்தோம்)‘ ‘ என்று பொருள். ஏனென்றால், ‘மத்யன்’ என்பது ஓர் ஊராகும்.
இதைப் போன்றுதான் (திருக்குர்ஆன் 12:82 வது வசனத்திலுள்ள) ’அந்த ஊரைக் கேளுங்கள் அந்த ஓட்டகக் கூட்டத்தைக் கேளுங்கள்‘ ‘ என்பதற்கு அந்த ஊர்வாசிகளையும் ஒட்டகக் கூட்டத்தினரையும் (கேளுங்கள்)‘ ‘ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 11:92 வது வசனத்திலுள்ள) ’நீங்கள் அவனைப் புறக்கணித்துவிட்டீர்கள்‘ ‘ என்பதற்கு ’இறைவனின் பக்கம் நீங்கள் திரும்பவில்லை என ஷுஐப்(அலை) அவர்கள் (அந்த மத்யன்வாசிகளிடம்) கூறினார்கள்‘ ‘ என்று பொருள்.
(இதன் மூலத்திலுள்ள ’ழிஹ்ரிய்யு‘என்பதற்கு ’முதுகுக்கப்பால்’ என்று பொருள். பொதுவாக) ஒரு மனிதன் தன் தேவை நிறைவேறாதபோது ’ழஹர்த்த பி ஹாஜத்தீ’ (என் தேவையைப் புறக்கணித்துவிட்டாய்) என்றும், ‘வ ஜஅல்த்தனீ ழிஹ்ரிய்யன்’ (என்னை முதுகுக்கப்பால் ஆக்கிவிட்டாய்) என்றும் கூறுவதுண்டு. ஒரு வாகனப் பிராணியை, அல்லது ஒரு பையை உதவிக்காக உடன் எடுத்துச் செல்வதற்கும் ’ழிஹ்ரிய்யு’ என்பர்.
(திருக்குர்ஆன் 11:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’அராஃதில்’ எனும் சொல்லுக்குத் ’தரம் தாழ்ந்தோர்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 11:35 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஜ்ராமீ' (என் குற்றம்) என்பது'அஜ்ரகித்து' எனும் (வினைச்) சொல்லின் வேர்ச் சொல்லாகும். 'ஜம்ரத்து' எனும் (வினைச்) சொல்(லின் வேர்ச் சொல்) என்றும் சிலர் கூறுகின்றனர்.
(திருக்குர்ஆன் 11:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஃபுல்க்' எனும் சொல்லே ஒருமைக்கும் பன்மைக்கும் உரியதாகும். பொருள்: மரக்கலம், மரக்கலங்கள்.
(திருக்குர்ஆன் 11:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஜ்ராஹா' எனும் சொல்லுக்கு'அது ஓடுகிறபோது' என்று பொருள். இச்சொல்'அஜ்ரைத்து' எனும் (வினைச்) சொல்லின் வேர்ச் சொல்லாகும். (இதிலுள்ள'முர்ஸாஹா (நிறுத்தும் போது) எனும் சொல்)'அர்ஸைத்து' எனும் (வினைச்) சொல்லின் (வேர்ச் சொல்லாகும். இதன்) பொருள்.: நிறுத்தினேன்.
(இதே சொல் இன்னோர் ஓதல் முறையில்)'மர்ஸாஹா' என்றும் ஓதப்படுகிறது. (இப்போது அச்சொல்)'ரஸத் ஹிய' (அது அசையாமல் நின்றது) என்ற வினைச் சொல்லிலிருந்து பிரிந்ததாகும். 'மஜ்ராஹா' என்பது'ஜரத் ஹிய' (அது ஓடியது) என்பதிலிருந்து பிரிந்ததாகும். முஜ்ரீஹா, முர்ஸீஹா எனும் சொற்கள், செயப்பாட்டு வினைச் சொற்களாகும்.
'அர் ராஸியாத்' எனும் சொல்லுக்கு'அசையாத்' என்று பொருள்.

## 11:18 வது திருக்குர்ஆன் வசனம்

"அல்லாஹ்வின் மீது பொய்யைப் புனைந்து கூறுபவர்களைவிடக் கொடிய அக்கிரமக்காரர்கள் யார்? இத்தகையோர் தம் இறைவனின் திருமுன் கொண்டுவரப்படுவார்கள். அப்போது சாட்சியாளர்கள்'இவர்கள் தாம் தம் இறைவன் மீது பொய்யைப் புனைந்துரைத்தவர்கள்'' என்று கூறுவார்கள். எச்சரிக்கை! இத்தகைய அக்கிரமக்காரர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகும்'' எனும் (திருக்குர்ஆன் 11:18 வது) இறைவசனம்.
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'அஷ்ஹாத்' (சாட்சியாளர்கள்) எனும் சொல்லின் ஒருமை'ஷாஹித்' என்பதாகும். இது (வாய்பாட்டில்) ஸாஹிப், அஸ்ஹாப் தோழர்கள்) போன்றதாகும்.
ஹதீஸ் 4685. ஸஃப்வான் இப்னு முஹ்ரிஸ்(ரஹ்) அறிவித்தார்
'(அபூ அப்திர் ரஹ்மான்) இப்னு உமர்(ரலி) (கஅபாவைச்) சுற்றி வந்து கொண்டிருந்தபோது ஒருவர் குறுக்கிட்டு,அபூ அப்திர்ரஹ்மானே!''அல்லது'இப்னு உமரே!' (மறுமை நாளில் அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடியார்களுக்குமிடையே நடைபெறும்) இரகசிய உரையாடல் பற்றி (நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றுள்ளீர்களா?' என்று கேட்டதற்கு இப்னுஉமர்(ரலி), 'இறைநம்பிக்கையாளர் தம் இறைவனுக்கருகில் கொண்டு வரப்படுவார்.' அல்லது'இறைநம்பிக்கையாளர் தம் இறைவனுக்கருகில் வருவார்.' அப்போது அவர்மீது அவன் தன் திரையைப் போட்டு மறைத்துவிடுவான். அப்போது அவர் தாம் செய்த பாவங்களை ஒப்புக்கொள்வார். அவரிடம் இறைவன்)'நீ செய்த இன்ன பாவம் உனக்கு நினைவிருக்கிறதா'' என்(று கேட்)பான். அவர், '(ஆம்) அறிவேன். என் இறைவா! என்று இரண்டு முறை கூறுவார். அப்போது இறைவன், 'இவற்றையெல்லாம் உலகில் நான் (பிறருக்குத் தெரியாமல்) மறைத்துவைத்திருந்நேன். இன்று உனக்கு அவற்றை மன்னித்துவிடுகிறேன்!''என்று கூறுவான். பிறகு அவரின் நற்செயல்களின் பதிவேடு (அவரிடம் வழங்கப்பட்டுச்) சுருட்டப்படும். 'மற்றவர்கள்' அல்லது'இறைமறுப்பாளர்கள்' சாட்சியாளர்கள் முன்னிலையில் அழைக்கப்பட்டு, 'இவர்கள்தாம், தம் இறைவன்மீது பொய்யைப் புனைந்துரைத்தவர்கள்'' என்று அறிவிக்கப்படும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறக்கேட்டேன் என்றார்கள்.
இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## 11:102 வது திருக்குர்ஆன் வசனம்

‘மேலும அக்கிரமம் புரிந்து கொண்டிருக்கக் கூடிய ஊர்(க்காரர்)களை உம் இறைவன் தண்டிக்கும்போது அவனுடைய பிடி இப்படித்தானிருக்கும். நிச்சயமாக அவனுடைய பிடிவேதனை மிக்கதும் மிகக் கடுமையானதுமாகும்!”எனும் (திருக்குர்ஆன் 11:102 வது) இறைவசனம்.

(திருக்குர்ஆன் 11:99 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர் ரிஃப்த்' எனும் சொல்லுககு'உதவி' என்று பொருள். 'அல் மர்ஃபூத்' எனும் சொல்லுக்கு'உதவியாளர்' என்று பொருள. (அதன் இறந்த கால வினைச் சொல்லான)'ரஃபத்துஹு` எனும் சொல்லுக்கு'அவனுக்கு நான் உதவியுரிந்தேன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 11:113 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தர்கனூ' எனும் சொல்லுக்குச்'சாய்ந்து விடுதல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 11:116 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃப லவ் லா கான' எனும் சொற்றொடருக்கு'இருந்திருக்க வேண்டாமா' என்று பொருள். 'உத்ரிஃபூ‘`(ஆசாபாசங்களைப் பின்பற்றி) அழிந்து போயினர்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 11:106 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸஃபீர்' எனும் சொல்லுக்குக்'கடுமையான (கூச்சல்)' என்று பொருள. 'ஷஹீக்' எனும் சொல்லுக்குப்'பலவீனமான குரல்' என்று பொருள்.

ஹதீஸ் 4686. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அல்லாஹ் அக்கிரமக்காரனுக்குவிட்டுக் கொடுத்து அவகாசமளிப்பான். இறுதியில் அவனைப் பிடித்துவிட்டால் அவனை விடவே மாட்டான்‘` என்று கூறிவிட்டு, பிறகு, `மேலும் அக்கிரமம் புரிந்துகொண்டிருக்கக்கூடிய ஊர்(க்காரர்)களை உம் இறைவன் தண்டிக்கும்போது அவனுடைய பிடி இப்படித்தானிருக்கும். நிச்சயமாக அவனுடைய பிடி வேதனை மிக்கதும் மிகக் கடுமையானதுமாகும்‘` எனும் (திருக்குர்ஆன் 19:102 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

## 11:114 வது திருக்குர்ஆன் வசனம்

“பகலின் இரண்டு ஓரங்களிலும இரவிலன் நிலைகளிலும் தொழுகையை நிலைநாட்டுங்கள். திண்ணமாக, நன்மைகள் தீமைகளைக் களைந்துவிடுகின்றன. அல்லாஹ்வை நினைவுகூர்கிறவர்களுக்கு இது ஒரு நினைவூட்டி ஆகும்‘` எனும் (திருக்குர்ஆன் 11: 114 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'ஸுலஃப்' எனும் சொல்லுக்கு ஒரு நேரத்திற்குப்பின் ஒரு நேரம்' என்று பொருள். 'ஸுலஃப்' எனும் சொல்லிலிருந்துதான்'அல் முஸ்தலிஃபா' (இரவில் சிறிது தூரம் மக்கள் கூடுமிடம்) என்ற பெயர் மக்காவிலிருந்து ஓரிடத்திற்கு) வந்தது.

‘அஸ்ஸுல்ஃப்' எனும் இச்சொல்லுக்கு'ஒரு நிலைக்குப்பின் ஒரு நிலை' என்ற பொருளும் உண்டு. (திருக்குர்ஆன் 38:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ஸுல்ஃபா' என்பது'நெருக்கம்' என்ற பொருள் கொண்ட வேர்ச் சொல்லாகும். 'இஸ்தலஃபூ' எனும் சொல்லுக்கு'ஒன்று கூடினர்' என்று பொருள். (திருக்குர்ஆன் 26:64 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்லஃப்னா' எனும் சொல்லுக்கு'நாம் ஒன்று கூட்டினோம்' என்று பொருள்.

ஹதீஸ் 4687. இப்னு மஸ்ஊத்(ரலி) கூறினார்

ஒருவர் (அன்னியப்) பெண் ஒருத்தியை முத்தமிட்டுவிட்டார். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் வந்து (பரிகாரம் கேட்டு), இந்த விவரத்தைக் கூறினார். அப்போது'பகலின் இரண்டு ஓரங்களிலும் இரவின் நிலைகளிலும் தொழுகையை நிலை நாட்டுங்கள். திண்ணமாக, நன்மைகள் தீமைகளைக் களைந்துவிடுகின்றன. அல்லாஹ்வை நினைவு கூர்கிறவர்களுக்கு இது ஒரு நினைவூட்டி ஆகும்‘` எனும் (திருக்குர்ஆன் 11:114 வது) இறைவசனம்

அருளப்பட்டது. அந்த மனிதர், `இது எனக்கு மட்டுமா? (அல்லது அனைவருக்குமா?)‘` என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள், `என் சமுதாயத்தினரில் இதன்படி செயல்படும் அனைவருக்கும்தான்‘` என்று பதிலளித்தார்கள்.

## 12. 'யூசுஃப்' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) அறிவித்தார்

(திருக்குர்ஆன் 12:31 வது வசனத்தின் மூலத்தில் ஓர் ஓதல் முறைப்படி இடம்பெற்றுள்ள'முத்கஅன்' எனும் சொல்லுக்கு'எலுமிச்சை‘` (அல்உத்ருஜ்ஜு) என்று பொருள். இதை'ஹுஸைன் இப்னு அப்திர் ரஹ்மான்‘(ரஹ்) அவர்களிடமிருந்து'ஃபுளைல் இப்னு இயாள்‘(ரஹ்) அவர்ககள் அறிவித்தார்கள். மேலும் பெயர் குறிப்பிடாத) ஒருவரிடமிருந்து சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

ஃபுளைல்(ரஹ்) கூறினார்:

அபிசீனிய மொழியில் எலுமிச்சை'முத்கன்' எனப்படும்.

கத்தியால் வெட்டப்(பட்டு உண்ணப்)படும் எல்லாப் பொருள்களுக்கும்'முத்கன்' என்று சொல்லப்படும்.

கத்தாதா(ரஹ்) கூறினார்

(திருக்குர்ஆன் 12:68 வது வசனத்தின் மூலத்திலுளள)'ல ஃதூ இல்கி' எனும் சொற்றொடருக்கு'அறிந்தபடி செயலாற்றுபவர்' என்று பொருள்.

ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்

(திருக்குர்ஆன் 12:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸுவாஉ' எனும் சொல், (மேற்) பாகங்கள் இணைந்து (குறுகலான) பாரசீர்களின் மரக்கால் (அளவுப்படியைக் குறிக்கும் அரபியரல்லாதோர் அதை (நீர் அருந்துவதற்கு உபயோகித்து வந்தனர்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 12:94 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துஃபன்னிதூன்' எனும் சொல்லுக்கு'என்னை நீங்கள் முட்டாளாக்கிவிடுவீர்கள்' என்று பொருள்.

மற்றவர்கள் கூறுகின்றனர்:

(திருக்குர்ஆன் 12:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ஃகயாபத்' எனும் சொல் பொதுவாக, உன்னுடைய கண்ணைவிட்டு ஒன்றை மறைக்கிற யாவற்றையும் குறிக்கும். சுற்றுச் சுவர் எழுப்பப்படாத (பாழுங்) கிணறு'ஜுப்பு' எனப்படும்.

(திருக்குர்ஆன் 12:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வமா அன்த்த பி முஃமினீன் லனா' எனும் வாக்கியத்திற்கு'எங்களை நீங்கள் நம்பவே மாட்டீர்கள்‘` என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அபீ ுத்தஹு`' எனும் சொல், ஒருவருக்கு (முதுமையின்) பலவீனம் தொடங்கும் முன்புள்ள பருவத்தைக் குறிக்கும்.'பலஃக அபீ ுத்தஹு`' (அவன் தன் வாலிபத்தை அடைந்தான்), `பலஃகூ அபீ ுத்தஹும்' (அவர்கள் தம் வாலிபத்தை அடைந்தான்), `பலஃகூ அபீ ுத்தஹும்' (அவர்கள் தம் வாலிபத்தை அடைந்தனர்) என்று (ஒருமை, பன்மை இரண்டுக்குமே'அபீ ுத்து' என்றே) கூறப்படுகிறது'அபீ ுத்து' எனும் சொல்லின் ஒருமை'ஷத்துன்' என்றும் சிலர் கூறுவர்.

(திருக்குர்ஆன் 12:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முத்தகஅன்' எனும் சொல், `உண்ண, பருக, உரையாட நீ எதன் மீது சாய்ந்து அமர்ந்தாயோ அ(ந்தப் பொருள்)தனைக் குறிக்கும்.'(‘முத்தகஅன்' என்பதற்கு)'எலுமிச்சை' என்று பொருள் கொள்பவர்களின் கருத்துப் பொருத்தமற்றதாகும் அரபுகளின் மொழி வழக்கில்'எலும்பிச்சை' அல்லது நாரத்தைக் காய்' எனும் பொருளில் இச்சொல் வரவேயில்லை.

‘முத்தகஉ’ என்பதற்குச்’சாய்ந்துகொள்ளப் பயன்படும் திண்டு’ என்பதே பொருள் என நிரூபிக்கப்பட்டவுடன், (மாற்றுப் பொருள் கூறுவோர்)’எலுமிச்சை’ என்பதைக் குறிப்பது’முத்க்’ எனும் சொல்லே என்று கூறி, அதை விட மோசமானதொரு பொருளுக்கு ஓடுகிறார்கள். ஏனெனில்’முத்க்’ எனும் சொல் பெண்குறியின் ஓரத்தையே குறிக்கும். இதனாலேயே பெண்ணை’மத்கா’ (நுனித்தோல் அகற்றப்படாதவள்) என்றும், அவளுடைய மகனை’இப்னுல் மத்கா’ என்றும் கூறுவர். அப்படி ஒருக்கால் அங்கே (திருக்குர்ஆன் 12:31 வது வசனம் கூறுகிற நிகழ்ச்சியில்) எலுமிச்சை இருந்திருப்பின், அது சாய்வுத் திண்டு (வைக்கப்பட்டது)க்குப் பிறகே இருந்திருக்கும்.

(திருக்குர்ஆன் 12:30 வது வசனத்தின் மூலத்திலுள்ள’ஷ∴க∴பஹா’ எனும் சொல்லுக்கு, ‘அவளுடைய இதயத் திரை வரையில் காதல் வந்துவிட்டது‘‘ என்று பொருள். (இதே சாயலில் உள்ள)’ஷஅ∴பஹா’ எனும் சொல்லுக்கு’அவளுடைய இதயத்தைக் காதல் எரித்துவிட்டது’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அஸ்பு’ எனும் சொல்லுககுச்’சாய்ந்திடுவேன்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அள்∴காஸு அஹ்லாம்’ எனும் சொற்றொடருக்கு’விளக்கம் கூற முடியாத (வீண்) கனவுகள்’ என்று பொருள். இதன் ஒருமை’ளி∴க்ஸ்’ என்பதாகும். (எனினும்,)’ஒரு பிடி(புல்) கற்றையை கையில் எடுங்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 38:44 வது) வசனத்தின் மூலத்திலுள்ள’ளி∴க்ஸ்’ எனும் சொல் இதன் ஒருமையன்று, ‘ஒரு கைப்பிடி புல் போன்றது’ என்பதே இதன் பொருளாகும்.

(திருக்குர்ஆன் 12:65 வது வசனத்தின் மூலத்லுள்ள)’நமீரு’ (நாம் உணவு தானியங்கள் வாங்கி வருவோர் எனும் (வினைச்) சொல், ‘மீரத்’ எனும் வேர்ச் சொல்லில் இருந்து பிறந்ததாகும்’நஸ்தாது கைல பஈர்’ எனும் வாக்கியத்திற்கு’ஓர் ஒட்டகம் சுமக்கும் அளவிற்குக் கூடுதலாக தானியம் பெற்று வருவோம்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:69 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அஸ்ஸிக்காயா’ எனும் சொல்லுக்கு’அளவைப் படி’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:80 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’இஸ்தய் அஸூ’ எனும் சொல்லுக்கு’யஇஸூ’ (அவர்கள் நம்பிக்கையிழந்துவிட்டார்கள்) என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:87 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’இஸ்தய் அஸூ’ எனும் சொல்லுக்கு’யஇஸூ’ (அவர்கள் நம்பிக்கையிழந்துவிட்டார்கள்) என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:80 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’கலஸூ நஜிய்யா’ எனும் வாக்கியத்திற்கு’அவர்கள் இரகசியமாக ஒப்புக் கொண்டனர்’ என்று பொருள். (‘நஜிய்யு எனும் சொல்லின்) பன்மை:’அன்ஜியா’ என்பதாகும். (அதன் எதிர் கால வினைச் சொல்:)’யத்தனாஜூன’ என்பதாகும். ஒருமை, இருமை, பன்மை ஆகிய அனைத்திலும்’நஜிய்யு’ என்பர். பன்மையில்’அன்ஜியா’ என்றும் கூறுவர்.

(திருக்குர்ஆன் 12:85 வது வசனத்தின் மூலத்திலுள்ள) .’த∴பதஉ (த∴த்குரு) எனும் சொல்லுக்கு’எப்போதும் (நினைத்துக் கொண்டே) இருப்பீர்’ என்று பொருள்.’ஹரள்’ எனும் (வேர்ச்) சொல்லுக்கு’முஹ்ரள்’ (உடல் இளைத்துப் போனவர்) எனும் (செயப்பாட்டு வினை எச்சத்தின் பொருளாகும்.’கவலை உங்களை உருக்கிவிடும்’ என இதற்குப் பொருள் விரியும்.

(திருக்குர்ஆன் 12:87 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’தஹ்ஸ்ஸஸூ’ எனும் சொல்லுக்குத்’தகவல் அறிந்து வாருங்கள்’ என்று பொருள.

(திருக்குர்ஆன் 12: 88 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’முஸ்ஜாத்’ எனும் சொல்லுக்கு’அற்பமானது’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12: 107 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகாஷியா' எனும் சொல்லுககு'நன்கு சூழ்ந்து கொள்ளக்கூடியது' என்று பொருள்.

## 12:06 வது திருக்குர்ஆன் வசனம்

"இதற்கு முன்னர் உம்முடைய மூதாதையராகிய இப்ராஹீம், இஸ்ஹாக் ஆகியோர் மீது தன் அருட்பேற்றினை அவன் நிறைவு செய்தது போன்று உம் மீதும், யஅகூபின் குடும்பத்தினர் மீதும் நிறைவு செய்வான்'' எனும் (திருக்குர்ஆன் 12:6 வது வசனத் தொடர்)

ஹதீஸ் 4688. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
கண்ணியத்திற்குரியவரின் புதல்வரான கண்ணியத்திற்குரியவரின் புதல்வரான கண்ணியத்திற்குரியவரின் புதல்வர்தாம் கண்ணியத்திற்குரியவர். அவர் இப்ராஹீம் (அலை) அவர்களின் புதல்வரான யஅகூப்(அலை) அவர்களின் புதல்வரான யூசுஃப்(அலை) அவர்களேயாவார்.
என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## 12:07 வது திருக்குர்ஆன் வசனம்

"திண்ணமாக, (நம் தூதர்) யூசுஃப் மற்றும் அவரின் சகோதரர்களி(ன் வரலாற்றி)ல் (அது குறித்து) வினவுகிறவர்களுக்குப் பல படிப்பினைகள் உள்ளன'' எனும் (திருக்குர்ஆன் 12:7 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4689. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்'மக்களில் மிகவும் கண்ணியத்திற்குரியவர் யார்?' என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்விடம் மக்களிலேயே கண்ணியத்திற்குரியவர் அல்லாஹ்வுக்கு அதிகமாக அஞ்சுபவர் தாம்'' என்று பதிலளித்தார்கள். அதற்கு மக்கள்'நாங்கள் தங்களிடம் இதைப்பற்றிக் கேட்கவில்லை'' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள், 'அப்படியென்றால், அல்லாஹ்வின் உற்ற நண்பர் (இப்ராஹீம்) உடைய புதல்வரான இறைத்தூதர்(இஸ்ஹாக்) உடைய புதல்வரான இறைத்தூதர் (இஸ்ஹாக்) உடைய புதல்வரான இறைத்தூதர் (யஅகூப்) உடைய புதல்வரான இறைத்தூதர் யூசுஃப் அவர்கள் தாம்'' என்று பதிலளித்தார்கள். மக்கள், 'இதைப் பற்றியும் நாங்கள் தங்களிடம் கேட்கவில்லை'' என்று கூறினர். உடனே நபி(ஸல்) அவர்கள், 'அரபுகளின் சுரங்கங்கள் (எனப்படும் அரபுகளின் பரம்பரைகள்) குறித்தா என்னிடம் கேட்கிறீர்கள்? என்றார்கள். மக்கள்'ஆம்' என்றனர். நபி(ஸல்) அவர்கள்'அறியாமைக் காலத்தில் உங்களில் சிறந்தவர்களாயிருந்தவர்கள்தாம் இஸ்லாத்தை ஏற்ற பின்பும் சிறந்தவர்களாயிருப்பார்கள் அவர்கள் மார்க்க ஞானத்தைப் பெற்றால்'' என்று பதிலளித்தார்கள்.
இதே நபிமொழி இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## 12:18 வது திருக்குர்ஆன் வசனம்

"இல்லை உங்கள் மனம் ஒரு (மா பாவச்) செயலை(க் கூட) உங்களுக்குக் கவர்ச்சியாக்கிவிட்டது. எனவே, அழகான பொறுமைதான் (எனக்கு நன்று)'' என்று (திருக்குர்ஆன் 12:18 வது) வசனத் தொடர்.
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'சவ்வலத்' எனும் சொல்லுக்கு'அலங்கரித்துக் காட்டியது' என்று பொருள்.

ஹதீஸ் 4690. இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) மீது அவதூறு கற்பித்தவர்கள், தாம் சொன்னதைச் சொல்லிக் கொண்டிருந்தபோது ஆயிஷா குற்றமற்றவர்கள் என்று அல்லாஹ் அறிவித்ததைப் பற்றி நான், உர்வா இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு முஸய்யப், அல்கமா இப்னு

வக்காஸ், உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) ஆகியோரிடமிருந்து செவியுற்றுள்ளேன். இவர்களில் ஒவ்வொருவரும் அந்தச் சம்பவத்தின் ஒரு பகுதியை எனக்கு எடுத்துரைத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் (ஆயிஷா(ரலி) அவர்களிடம்)'நீ நிரபராதி என்றால், அல்லாஹ் விரைவில் உன்னைக் குற்றமற்றவள் என்று அறிவித்துவிடுவான். நீ குற்றமேதும் புரிந்திருந்தால் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம் திரும்பிவிடு'' என்று கூறினார்கள். அதற்கு ஆயிஷா(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! யூசுஃப்(அலை) அவர்களின் தந்தையை விட(ச் சிறந்த) முன்னுதாரணம் எனக்குக் கிடைக்கப்போவதில்லை. எனவே, அழகான பொறுமைதான் (எனக்கு நன்று). நீங்கள் புனைந்து கூறும் விஷயத்தில் அல்லாஹ்விடம்தான் உதவி கோர வேண்டும்'' (திருக்குர்ஆன் 12:18) என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ்'இந்த அவதூற்றைப் புனைந்துகொண்டு வந்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர் தாம்..!"என்று (தொடங்கும் 24:11முதல் 20 வரையுள்ள) பத்துவசனங்களை அருளினான்.

ஹதீஸ் 4691. ஆயிஷா(ரலி) அவர்களின் தாயார் உம்மு ரூமான்(ரலி) கூறினார்

நானும் ஆயிஷாவும் வீட்டில் (அமர்ந்து கொண்டு) இருந்தபோது ஆயிஷாவுக்கு காய்ச்சல் கண்டுவிட்டது. (இதையறிந்த) நபி(ஸல்) அவர்கள், '(அவபைப் பற்றிப்) பேசப்பட்டு வரும் பேச்சின் காரணத்தினால் (காய்ச்சல்வந்து) இருக்கலாம்!"என்று கூறினார்கள். நான்'ஆம்! (அப்படித்தான்)'' என்றேன். ஆயிஷா எழுந்து உட்கார்ந்து கொண்டு, எனக்கும் உங்களுக்கும் உரிய முன்னுதாரணம் யஅகூப்(அலை) அவர்களும் அவர்களின் பிள்ளைகளுமாவார். இல்லை உங்கள் மனம் ஒரு (பெரிய) காரியத்தை உங்களுக்குக் கவர்ச்சியாக்கிவிட்டது. எனவே, அழகான பொறுமையே (எனக்கு நன்று.) நீங்கள் புனைந்துரைப்பவற்றிலிருந்து அல்லாஹ்விடமே உதவிகோர வேண்டும்'' (திருக்குர்ஆன் 12:18) என்று கூறினார்கள்.

## 12:23 வது திருக்குர்ஆன் வசனம்

"அவர் எந்தப் பெண்ணின் வீட்டில் இருந்தாரோ அந்தப் பெண் தன் விருப்பத்திற்கு இணங்குமாறு அவரிடம் கோரி, வாயில்களையெல்லாம் அடைத்துத் தாழிட்டுவிட்டு, 'வாரும்' என்று அழைத்தாள்'' எனும் (திருக்குர்ஆன் 12:23) வது வசனத் தொடர்.

இக்ரிமா(ரஹ்) கூறினார்:

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹய்த்தலக்க' என்பதற்கு'ஹவ்ரானியா' எனும் (சிரியா) மொழியில்'இங்கே வா!' என்று பொருள்.

இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களும், இச்சொல்லின் பொருள்'வா!' என்பதுதான் என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 4692. அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அறிவித்தார்

(திருக்குர்ஆன் 12:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'காலத் ஹைத்த லக்க' எனும் தொடரை, அது நமக்கு எப்படிக் கற்றுத் தரப்பட்டுள்ளதோ அப்படியே நாம் ஓதுகிறோம் என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) கூறினார்.

(திருக்குர்ஆன் 12:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள'மஸ்வாஹு' எனும் சொல்லுக்கு'இவரின் அந்தஸ்து' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 12:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஃபயா' எனும் சொல்லுக்கு'அவர்கள் இருவரும் கண்டனர்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:69 வது வசனத்தின் மூலத்திலுள்ள'அல்ஃபவ் ஆபா அஹும்' என்பதற்கு'அவர்கள் தம் மூதாதையரைக் கண்டார்கள்' என்று பொருள்.

இப்னு மஸ்ஊத்(ரலி), (திருக்குர்ஆன் 37:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள'பல்அஜிப்த்த வ யஸ்கரூன்' என்பதை)'பல் அஜீப்த்து வ யஸ்கரூன்' (நான் ஆச்சரியப்படுகிறேன் அவர்களே பரிகசிக்கின்றனர்) என்று ஓதினார்கள்.

ஹதீஸ் 4693 அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) கூறினார்
நபி(ஸல்) அவர்களிடமிருந்து குறைஷியர் இஸ்லாத்தை ஏற்கக் காலம் தாழ்த்தியபோது நபி(ஸல்) அவர்கள், இறைவா! (நபி) யூசுஃப் (அலை) அவர்களின் (காலத்தில் பஞ்சம் ஏற்பட்ட) ஏழாண்டுகளைப் போன்று இவர்களுக்கும் ஏற்படுத்தி என்னை இவர்களிடமிருந்து பாதுகாத்திடு'' என்று (அவர்களுக்கெதிராகப்) பிரார்த்தித்தார்கள். அவ்வாறே அவர்களுக்குப் பஞ்சம் வந்து (வளங்கள்) எல்லாவற்றையும் அழித்துவிட்டது. எந்த அளவிற்கென்றால், அவர்கள் எலும்புகளைச் சாப்பிட்டனர் (கடும் பசி, பட்டினியால் கண் பஞ்சடைத்து பார்வை மங்கி அவர்களில்) ஒருவர் வானத்தை நோக்கினால் அவர் தமக்கும் வானத்திற்குமிடையே புகை போன்ற ஒன்றையே காண்பார். அல்லாஹ் கூறுகிறான்: கிஇனி ஒரு நாளை எதிர்ப்பார்த்திருப்பீராக! அந்நாளில் வானம் வெளிப்படையான புகையைக் கொண்டு வரும்“(திருக்குர்ஆன் 44:10). மேலும், அல்லாஹ் கூறினான்: கிநாம் சற்று வேதனையை அகற்றிவிடுகிறோம். (ஆனால், அப்போதும்) நீங்கள் (பழைய நிலைக்கே மீள்கிறீர்கள் (திருக்குர்ஆன் 44:15) இந்நிலையில், மறுமை நாளில் இறைமறுப்பாளர்களைவிட்டு வேதனை நீக்கப்படுமா என்ன? (நிச்சயம் நீக்கப்படபோவதில்லை) ஆக, (கடுமையான பசி, பட்டினி ஏற்பட்டதன் மூலம்) அந்த புகையும் வந்துவிட்டது் பத்ருப் போரில் (இறைவனின்) தண்டனையும் வந்துவிட்டது.

## 12:50, 51 வது திருக்குர்ஆன் வசனங்கள்

அரசர், 'அவரை என்னிடம் அழைத்து வாருங்கள்' என்றார். (அரசரின்) தூதுவர் யூசுஃப் அவரிடம் நீர் உம் எஜமானிடம் திரும்பிச் சென்று, 'தம் கரங்களை அறுத்துக் கொண்ட பெண்களின் நிலை என்னவாயிற்று? என்று கேட்டு வாரும். திண்ணமாக, என் இறைவன் அப் பெண்களின் சூழ்ச்சியை நன்கு அறிந்தவனாவான்' என்று கூறினார். பிறகு அரசர் அப்பெண்களிடம்'நீங்கள் யூசுஃபை உங்கள் ஆசைக்கு இணங்க வைக்க முயன்றபோது உங்களுக்கு ஏற்பட்ட அனுபவம் என்ன?' என்று வினவியதற்கு அப்பெண்கள், அல்லாஹ் தூய்மையானவன்! நாங்கள் அவரிடம் எத்தகைய தீய அம்சத்தையும் காணவில்லை' என்று கூறினர்'' எனும்(12 : 50, 51 ஆகிய) வசனங்கள்.
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹாஷ' மற்றும்'ஹாஷா' ஆகிய சொற்களுக்கு'தூயவன்' என்றும்'தவிர' என்றும் (அரபி மொழி வழக்கில்) பொருள்.
'ஹஸ்ஹஸ' எனும் சொல்லுக்குத் தெளிவாகிவிட்டது என்று பொருள்.

ஹதீஸ் 4694 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
(இறைத்தூதர்)'லூத்' (அலை) அவர்களுக்கு அல்லாஹ் கருணைகாட்டுவானாக! அன்னார் வலுவான ஓர் ஆதவாளனிடமே தஞ்சம் புகுபவர்களாக இருந்தார்கள். யூசுஃப் (அலை) அவர்கள் கழித்த காலம் அளவிற்கு நான் சிறையில் காலம் கழித்திருந்தால் (என்னைச் சிறையிலிருந்து விடுதலை செய்ய) அழைப்பு விடுத்தவரை ஏற்று (விடுதலை பெற்று)க் கொண்டிருப்பேன். இப்ராஹீம் (அலை) அவர்களைவிட நாமே (இறைவனின் படைப்பாற்றலைக் கண்கூடாகக் கண்டு உறுதி பெற) அதிகத் தகுதியுடையவர்கள் ஆவோம். அல்லாஹ், கிநீங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையா?' என்று கேட்டபோது அவர்கள், கிஆம் (நம்பிக்கை இருக்கத்தான் செய்கிறது) ஆயினும், என் நெஞ்சம் நிம்மதியடைவதற்காகத்தான் (இறந்ததை உயிர்ப்பித்துக் காட்டும்படி) கேட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 12:110 வது திருக்குர்ஆன் வசனம்

(முந்தைய இறைத்தூதர்களுக்கும் இதே நிலை ஏற்பட்டது. அவர்கள் நீண்ட காலம் மக்களுக்கு நல்லுரை புகன்று வந்தார்கள். ஆனால், மக்கள் அதனைக் கேட்கவில்லை)

எதுவரையேனில், (மக்கள் இனி நம்பிக்கை கொள்ளமாட்டார்கள் என்று) இறைத்தூதர்கள் நிராசையடைந்துவிட்டார்கள் மேலும், தங்களிடம் பொய்தான் சொல்லப்பட்டது என்று மக்களும் கரதலானார்கள். அப்பொழுது, நம் உதவி அவர்களை வந்தடைந்தது'' எனும் (திருக்குர்ஆன் 12:110 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4695 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்.

நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம், '(நிராகரிக்கும் மக்கள் இனி நம்பிக்கை கொள்ளமாட்டார்கள் என்று) இறைத்தூதர்கள் நிராசையடைந்தார்கள் மேலும், தங்களிடம் (இறைஉதவி வருமென்று) பொய்யுரைக்கப்பட்டது என (நம்பிக்கை கொண்ட மக்களும் கூட)க் கருதலானார்கள். இந்நிலையில் நம்முடைய உதவி அவர்களை வந்தடைந்தது'' என்று அல்லாஹ் கூறினான். (திருக்குர்ஆன் 12:110) இவ்வசனத்தின் மூலத்தில் ('பொய்யுரைக்கப்பட்டது என்பதைக் குறிப்பதற்குரிய சொல்லை)'குஃத்திபூ' (தாம் பொய்ப்பிக்கப்பட்டு விட்டோம் என்று இறைத்தூதர்கள் கருதலானார்கள்) என்று வாசிக்க வேண்டுமா? அல்லது'குஃதிபூ' (மக்கள் தங்களிடம் பொய்யுரைக்கப்பட்டது எனக் கருதலானார்கள்) என்று வாசிக்க வேண்டுமா? என்று கேட்டேன்.

"குஃத்திபூ (தாம் பொய்ப்பிக்கப்பட்டு விட்டோம் என்று இறைத்தூதர்கள் கருதலானார்கள்) என்றே வாசிக்க வேண்டுமென ஆயிஷா(ரலி) பதிலளித்தார்கள்.

உடனே, 'தங்களின் சமுதாயத்தினர் தங்களைப் பொய்ப்பித்திருக்கிறார்கள் என்று இறைத்தூதர்கள் சந்தேம்க்கவில்லையே! உறுதியாக நம்பித்தானே இருந்தார்கள். (ஆனால், 'ழன்னூ - நபிமார்கள் சந்தேகித்தார்கள்' என்று தானே குர்ஆனின் இந்த வசனத்தில் இடம் பெற்றுள்ளது. அவ்வாறிருக்க, நீங்கள் கூறுகிறவாறு எப்படிப்பொருள் கொள்ளமுடியும்?)'' என்று கேட்டேன்.

அதற்கு ஆயிஷா(ரலி), 'ஆம்! என் ஆயுளின் (இரட்சகன்) மீதாணையாக! அதை அவர்கள் உறுதியாக நம்பியே இருந்தார்கள். (எனவே, இந்த வசனத்தில், 'ழன்னூ' என்பதற்கு'நபிமார்கள் உறுதியாக நம்பினார்கள்' என்றே பொருள் கொள்ளவேண்டும்'சந்தேகித்தார்கள்' என்று பொருள் கொள்ளக்கூடாது)'' என்று பதிலளித்தார்கள்.

(தொடர்ந்து) அவர்களிடம் நான், ''கத்குஃதிபூ' (தங்களிடம் பொய் சொல்லப்பட்டுவிட்டது என்ற நபிமார்கள் கருதலானார்கள்) என்று இருக்கலாமோ!"என்று கேட்டேன்.

அதற்கு ஆயிஷா(ரலி) அவர்கள கூறினார்கள்: அல்லாஹ் காப்பாற்றட்டும்! நபிமார்கள் தங்கள் இறைவனைப் பற்றி அப்படி (தங்களிடம் இறைவன் பொய் சொல்லிவிட்டதாக) நினைக்கவில்லை'' என்றார்கள்.

உடனே நான், 'இந்த வசனம் (கூறும் பொருள்) தான் என்ன?' என்று கேட்டேன். ஆயிஷா(ரலி), 'இறைத்தூதர்களைப் பின்பற்றிய சமுதாயத்தினர் தங்கள் இறைவனை நம்பி, இறைத்தூதர்களை உண்மையாளர்கள் என்று ஏற்று, அதன்பிறகு (தாம் ஏற்ற மார்க்கத்தின் பாதையில் நேரிட்ட) துன்பங்கள் தொடர்ந்து நீடித்துக்கொண்டே போய், இறை உதவியும் தள்ளிப்போய்க்கொண்டிருந்த அந்த(ச் சூழ்) நிலையில்தான், அந்த இறைத்தூதர்கள், தம் சமுதாயத்தினரில் தம் செய்தியை பொய்யென்று கருதி, தம்மை ஏற்காமலிருந்துவிட்டவர்களைக் குறித்து நிராசையடைந்துவிட்டார்கள். மேலும், தம்மை ஏற்றுப் பின்பற்றியவர்கள் கூட (இறை உதவி வரத் தாமதமானதாலும், துன்பமும் துயரமும் நீண்டுகொண்டே சென்ற காரணத்தாலும்) நம்முடைய செய்தியைப் பொய்யென்று, கருதுகிறார்கள் என்றும் அந்த இறைத்தூதர்கள் எண்ணலானார்கள். அப்போதுதான் நம்முடைய உதவி அவர்களை வந்தடைந்தது'' (என்பதே அந்த வசனத்தின் பொருள்) என பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4696. உர்வா(ரஹ்) அறிவித்தார்

நான், (ஆயிஷா (ரலி) அவர்களிடம்) 'அது அழுத்தல் குறி இல்லாமல்' கு∴திபூ' என்றிருக்கலாம் அல்லவா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அல்லாஹ் காப்பாற்றட்டும்' என்று மேற்கண்டபடி கூறினார்கள்.

## (13) 'அர்ர அத்' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்..)

"தண்ணீரை நோக்கித் தன் இரண்டு கரங்களையும் நீட்டிக்கொண்டிருப்பவனைப் போன்று' ' எனும் (திருக்குர்ஆன் 13:14 வது) வசனத்திற்கு இப்னு அப்பாஸ் (ரலி) (விளக்கம்) கூறுகிறார்கள்:

அல்லாஹ்வுடன் அவன் அல்லாத (பொய்யான) தெய்வங்களை வணங்குகிற இணைவைப்பாளனின் நிலை, தாகத்திலுள்ள ஒருவன் தண்ணீரைக் கற்பனை செய்துகொண்டு அதை அடையவிரும்பி, தொலைவிலிருந்து தன் கைகளை நீட்டிக்கொண்டிருப்பதைப் போன்றதாகும். ஆனால், அவனால் (அதை அடைய) முடியாது. மற்றவர்கள் கூறுகின்றனர்:

(திருக்குர்ஆன் 13:2 வது வசனத்தின் மூலத்தில் இடம்பெற்றுள்ள) 'ஸக்கர' எனும் சொல்லுக்குத் 'தனக்குப் பணியவைத்துள்ளான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 13:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'மஸுலாஸ்' (முன்னுதாரணங்கள்) எனும் சொல்லின் ஒருமை 'மஸுலா' என்பதாகும். அதற்கு 'ஒப்பானவை', 'நிகரானவை' என்று பொருள். அல்லாஹ் கூறினான்: தங்களுக்கு முன் சென்றவர்களுக்கு வந்த (வேதனை நிறைந்த) நாள்கள் போன்றதைத் தவிர வேறு எதனை இவர்கள் எதிர்பார்க்கிறார்கள்? (திருக்குர்ஆன் 10:102)

(திருக்குர்ஆன் 13:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'பி மிக்தார்' எனும் சொல்லுக்குக் 'காலக்கெடு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 13:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'முஅக்கிபாத்' (அடுத்தடுத்து வரக்கூடியவர்கள் எனும் சொல்லானது, (மனிதனின்) பாதுகாப்பில் ஈடுபடும் வானவர்களைக் குறிக்கும் இவர்கள் ஒருவர் பின் ஒருவராக (காலை மாலையில் முறைவைத்து) வருகை புரிகின்றனர். இச்சொல்லி(ன் வேர்ச் சொல்)லிருந்துதான் 'அல்அகீப்' (பின்தொடர்பவன்) எனும் சொல் பிறந்ததாகக் கூறப்படுகிறதுஇ 'அக்கப்து∴பீ அஸரிஹி' எனும் வாக்கியத்திற்கு 'அவனுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சென்றேன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 13:13 வது வசனத்தின் மூலத்தின் இறுதியிலுள்ள) 'அல்மிஹால்' என்பதற்குத் 'தண்டனை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 13:14 வது வசனத்திலுள்ள) 'தண்ணீரை நோக்கித் தன் இரண்டு கைகளையும் நீட்டிக் கொண்டிருப்பவனைப் போன்று' என்பதற்குத் 'தண்ணீரைப் பெறுவதற்காக (கைகை நீட்டிக் கொண்டு இருப்பவன்)' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 13:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ராபியா' எனும் சொல் ரபா, யர்பூ (உயர்ந்தது, உயரும்) எனும் (வினைச்) சொற்களிலிருந்து பிரிந்ததாகும்.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள) 'அவ் மத்தாஇன் ஸபதும் மிஸ்லுஹு' (அல்லது அதைப்போன்ற சாமான்களுக்காவோ) என்று குறிப்பிடப்பட்டுள்ளதில் 'மத்தாஉ' ('சாமான்கள்') எனும் சொல், 'நீ எதனைப் பயன்படுத்தி வருகிறாயோ அ(த்தகைய தட்டுமுட்டுச் சாமான்கள், வேளாண் கருவிகள், போர்த் தளவாடங்கள் முதலிய)வற்றைக் குறிக்கும்.

மேலும், 'ஜு∴பாஅன்' எனும் சொல், '(அடுப்பிலுள்ள) பாத்திரம் பொங்கி நுரையெழுந்து, பிறகு அது அடங்கியபோது அந்த நுரை எந்தப் பயனுமில்லாமல் (நொடியில்) மறைந்து போவதை'க் குறிக்கும். இவ்வாறுதான் பொய்மையிலிருந்து உண்மை பாகுபடுத்தப்படுகிறது.

(திருக்குர்ஆன் 13:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அல்மிஹாத்' எனும் சொல்லுக்குப் 'படுக்கை விரிப்பு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 13:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யத்ரஊன' எனும் சொல்லுக்குத்'தள்ளிவிடுவார்கள் என்று பொருள். (இதன் இறந்த கால வினைச்சொல் இடம் பெற்றுள்ள)'தர.:.துஹு அன்னீ' எனும் வாக்கியத்திற்கு'என்னைவிட்டும் அவனைத் தள்ளிவிட்டேன்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 13:24 வது வசனத்திலுள்ள)'உங்களுக்குச் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக' எனும் வாக்கியத்திற்கு'உங்களுக்கு சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக என்று கூறுவார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 13:30 வது வசனத்திலுள்ள)'அவனிடமே நான் மீளுவேன்' எனும் வாக்கியத்திற்கு'அவனிடமே நான் பாவமன்னிப்புக் கோாி மீளுவேன்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 13:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அ.:.பலம் யய்அஸ்' எனும் சொற்றொடருக்குத்'தெளிவாகவில்லையா' என்று பொருள்.
(அதே வசனத்தின் மூலத்திலுள்ள)'காாிஆ' எனும் சொல்லுக்குத்'திடுக்கிடச் செய்கின்ற' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 13:32 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'.:.பஅம்லைத்து' எனும் சொல்லுக்கு'நீட்டித்தேன்' என்று பொருள். இது,'மலிய்யு' மற்றும்'முலாவா' எனும் (வேர்ச்) சொற்களிலிருந்து பிறந்ததாகும்.
இதிலிருந்துதான் (திருக்குர்ஆன் 19:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மலிய்யா' (வெகுகாலம்) எனும் சொல் பிறந்தது. பூமியின் விசாலமான பகுதி'மலன்' எனப்படும்.
(திருக்குர்ஆன் 13:34 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அபீ க்கு' எனும் சொல்லுக்குக்'கடுமையானது' என்று பொருள். இச்சொல்'மஷக்கத்' (துன்பம்) எனும் (வேர்ச்) சொல்லிலிருந்து பிறந்ததாகும்.
(திருக்குர்ஆன் 13:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஅக்கிப்' எனும் சொல்லுக்கு'மாற்றக்கூடியவன்' என்று பொருள்.
முஜாஹித்(ரஹ்) கூறினாா்.
(திருக்குர்ஆன் 13:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முத்தஜாவிராத்' எனும் சொல், பூமியில் அடுத்துடுத்துள்ள விளைநிலத்தையும் தாிசு நிலத்தையும் குறிக்கும். (இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸின்வான்' எனும் சொல் ஒரே அடித்தண்டைக் கொண்ட இரண்டு, அல்லது அதற்கு மேற்பட்ட பேரீச்ச மரங்களையும்,'.:.கைருஸின்வான்' எனும் சொல் ஒரே மரத்தையும் குறிக்கும். இவ்வாறுதான் ஒரே தந்தையான ஆதமுடைய மக்களில் நல்லவர்களும் கெட்டவர்களும் உள்ளனர்.
(திருக்குர்ஆன் 13:12 வது வசனத்திலுள்ள)'கனமான மேகம்' என்பது'மழை நீருள்ள மேகத்தைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 13:14 வது வசனத்தில் வரும்'தண்ணீரை நோக்கித் தன் இரண்டு கரங்களையும் நீட்டிக் கொண்டிருப்பவனைப் போன்று' என்பதன் கருத்தாவது: (எங்கோ இருக்கின்ற) தண்ணீரை நோக்கித் தன்னிடம் வருமாறு நாவால் அழைத்து, கையால் அதற்கு சைகை செய்வான். ஆனால், அது ஒருபோதும் அவனிடம் வரப்போவதில்லை.
(திருக்குர்ஆன் 13:47 வது வசனத்திலுள்ள)'நீருக்குத் தக்கவாறு ஓடைகளாக ஓடுகிறது' என்பதற்கு'ஓடை நிரம்பி வழிகிறது' என்று பொருள்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸபதா் ராபியா எனும் சொல்'ஓடும் வெள்ளத்தின் நுரையைக்' குறிக்கும். ('ஸபதும் மிஸ்லுஹு-அதைப் போன்ற நுரை' என்பது) இரும்பு மற்றும் ஆபரணங்களின் அழுக்கு நுரையைக் குறிக்கிறது.

## 13:08 வது திருக்குர்ஆன் வசனம்

ஒவ்வொரு கர்ப்பிணியும் (தன் கருப்பையில்) சுமந்து கொண்டிருப்பவற்றையும் அல்லாஹ் நன்கு அறிகிறான். மேலும், கருப்பைகளில் ஏற்படுகிற குறைவையும் கூடுதலையும் அவன் அறிகிறான். அவன் ஒவ்வொன்றுக்கும் ஓர் அளவை நிர்ணயித்துள்ளான்'' எனும் (திருக்குர்ஆன் 13:8 வது) இறைவசனம்.
(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'தஃகீளு' எனும் சொல்லுக்குக்'குறைகின்ற' என்று பொருள்.
ஹதீஸ் 4697 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
மறைவானவற்றின் திறவுகோல்கள் ஐந்தாகும். அவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். நாளை என்ன நடக்கவிருக்கிறது என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். (பெண்களின்) கருவறைகளில் ஏற்படும் குறைவை(யும் கூடுதலையும்) அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். மழை எப்போது வருமென்பதையும் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். எந்த உயிரும் தாம் எந்த இடத்தில் இறக்கும் என்பதை அறியாது. மேலும், மறுமை (நாள்) எப்போது நிகழும் என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள்.
என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## (14)'இப்ராஹீம்' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
(திருக்குர்ஆன் 13:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹாதின்' (வழிகாட்டி) எனும் சொல்லுக்கு'(நேர்வழிக்கு)அழைப்பவர்' என்று பொருள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 14:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸகீத்' எனும் சொல்லுக்குச்'சீழும் இரத்தமும்' என்று பொருள்.
சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
'உங்களின் மீது அல்லாஹ் புரிந்திருக்கும் அருட்கொடைகளை நினைத்துப் பாருங்கள்' எனும் (திருக்குர்ஆன் 05:20 வது) வசனத் தொடரின் கருத்தாவது: உங்கள் வசமுள்ள அல்லாஹ்வின் அருட்கொடைகளையும் அவன் (நிகழ்த்தக்காட்டிய) சம்பவங்களையும் நினைத்துப் பாருங்கள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
ம்நீங்கள் கேட்டவற்றை எல்லாம் அவன் உங்களுக்கு அளித்தான்'' எனும் (திருக்குர்ஆன் 13:34 வது) வசனத் தொடரின் கருத்தாவது: அவனிடம் நீங்கள் விரும்பி ஆசைப்பட்டதையெல்லாம் அவன் உங்களுக்கு வழங்கினான்.
(திருக்குர்ஆன் 14:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யப்ஃகூனஹா இவஜா' என்பதற்கு'இறைவழியில் கோணலைத் தேடுகின்றனர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 14:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஃத் தஅஃத்தன ரப்பு(க்)கும்' என்பதற்கு'உங்களுடைய இறைவன் அறிவிப்புச் செய்ததை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 14:9 வது வசனத்தில்)'அவர்களின் கைகளை அவர்களின் வாயின் பக்கமே தட்டிவிட்டார்கள்' என்று கூறப்பட்டிருப்பது, தங்களுக்குக் கட்டளையிடப்பட்டதை நிறைவேற்றாமல் தங்களைத் தாங்களே தடுத்துக் கொண்டதற்கு ஓர் உதாரணமாகும்.
(திருக்குர்ஆன் 14:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மகாமீ' (எனக்கு முன்னால்) என்பது, (விசாரணைக்காக மறுமை நாளில்) மனிதனை அல்லாஹ் தனக்கு முன்னால் நிறுத்திவைக்கும் இடத்தைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 14:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மின் வராயிஹி' எனும் சொற்றொடருக்கு'அவர்களுக்கு முன்பாக' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 14:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லகும் தபஅன்' எனும் சொற்றொடருக்கு'உங்களைப் பின்பற்றியோர்' என்று பொருள். இதிலுள்ள'தபஉ' என்பதன் ஒருமை'தாபிஉ' என்பதாகும். '∴கயப்' (மறைந்தோர்), `∴காயிப்' (மறைந்தவன்) ஆகியவற்றைப் போன்று.

(திருக்குர்ஆன் 14:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பி முஸ்ரிம்க்கும்' என்பதற்கு'உங்களுக்கு உதவக்கூடியவனாக' என்று பொருள். இது'சுராக்' (அபயக்குரல்) எனும் வேர்ச்சொல்லில் இருந்து பிறந்ததாகும்.

(திருக்குர்ஆன் 14:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வலா கிலால' எனும் சொற்றொடருக்கு'எந்த நட்பும் இல்லாத' என்று பொருள். இது, `காலல்துஹு கிலாலன்' (நான் அவனுடன் மிக நெருக்கமான நேசம் பாராட்டினேன்) எனும் (வினைச்) சொல்லின் வேர்ச் சொல்லாகும். 'ம்லால்' எனும் இச்சொல்'குல்லத்' (நண்பன்) என்பதன் பன்மையாகவும் இருக்கலாம்.

(திருக்குர்ஆன் 14:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உஜ்துஸ்ஸத்' எனும் சொல்லுக்கு'வேரோடு பிடுங்கப்பட்டது' என்று பொருள்.

## 14:24, 25 வது திருக்குர்ஆன் வசனங்கள்

நல்ல வார்த்தை (கலிமா தய்யிபாவு)க்கு அல்லாஹ் எவ்வாறு உவமை கூறுகிறான் என்பதை நீர் கவனிக்கவில்லையா? அது ஒரு நல்ல மரத்தைப் போன்றதாகும். அதன் வேர் பூமியில் ஆழப் பதிந்திருக்கிறது் அதன் கிளைகள் வானளாவ உயர்ந்த நிற்கின்றன் எந்நேரமும் அம்மரம் தன் இறைவனின் ஆணைக்கேற்பக் கனிகளை வழங்கிக் கொண்டிருக்கிறது"எனும் (திருக்குர்ஆன் 14:24, 25) இறைவசனங்கள்.

ஹதீஸ் 4698 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள், `ஒரு முஸ்லிமான மனிதரை ஒத்திருக்கும்' அல்லது'(அவரைப்) போன்றிருக்கும்' ஒரு மரத்தை எனக்கு அறிவியுங்கள். அதன் இலை உதிராது. மேலும் இப்படி.. இப்படி.. இப்படியெல்லாம் இராது. அது தன் கனிகளை எல்லாப் பருவங்களிலும் கொடுத்துக் கொண்டிருக்கும். (அத்தகைய ஒரு மரத்தை எனக்கு அறிவியுங்கள்)'` என்று கூறினார்கள். அப்போது என் மனத்தில்'இது பேரீச்ச மரம்தான்'` என்று தோன்றியது. அபூ பக்ர், உமர் (போன்றவர்களே பதில்) பேசாமல் இருப்பதை கண்டேன். எனவே, நான் பேசவிரும்பவில்லை. (அங்கிருந்த) மக்கள் ஒன்றும் சொல்லாமலிருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தாமே)'அது பேரீச்ச மரம்'` என்று கூறினார்கள். நாங்கள் (புறப்பட) எழுந்தபோது நான் உமர்(ரலி) அவர்களிடம், `என் அன்புத் தந்தையே! அல்லாஹ்வின் மீதாணையாக! என் மனத்தில் அது பேரீச்ச மரம் தான் என்று தோன்றியது'` என்றேன். அதற்கு அவர்கள், `(அப்துல்லாஹ்!) நீ ஏன் (மனத்தில் தோன்றியதைக்) கூறாமலிருந்தாய்?' என்று கேட்டார்கள். நான், `நீங்கள் பேசாமலிருப்பதைப் பார்த்தேன். எனவே, நான் பேசவோ எதுவும் சொல்லவோ விரும்பவில்லை'` என்று பதிலளித்தேன். உமர்(ரலி), `நீ அதைச் சொல்லியிருந்தால் அதுவே இன்ன இன்ன(செல்வம் கிடைப்ப)தைவிட எனக்கு மிகவும் பிரியமான தாய் இருந்திருக்கும்'` என்று கூறினார்கள்.

## 14:27 வது திருக்குர்ஆன் வசனம்

நம்பிக்கை கொண்டோரை, அல்லாஹ் ஒரு வலுவான வாக்கின் அடிப்படையில் இம்மையிலும், மறுமையிலும் உறுதிப்படுத்துகிறான். (எனும் 14:27 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4699. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிம் (இறந்தபின்) மண்ணறையில் விசாரிக்கப்படும்போது, அவர்'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின்

தூதராவார்கள்‘` என்று உறுதிமொழி கூறுவார். இதுதான்'(இறை) நம்பிக்கை கொண்டோரை, அல்லாஹ் ஒரு வலுவான வாக்கின் அடிப்படையில் இம்மையிலும், மறுமையிலும் உறுதிப்படுத்துகிறான்‘` எனும் (திருக்குர்ஆன் 14:27 வது) இறை வசனத்தின் கருத்தாகும்.
என பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

## 14:28 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ்வின் அருட்கொடையை (அடைந்தபின் அதனை) நன்றிகொல்லும் போக்கைக் கொண்டு மாற்றி (தங்களுடன்) தங்கள் சமூகத்தாரையும் அழிவுக் கிடங்கில் (நரகில்) தள்ளியவர்களை நீர் பார்க்கவில்லையா? (எனும் 14:28 வது இறை வசனம்.)
(இவ்வசனத்திலுள்ள)'நீர் பார்க்கவில்லையா?' (அலம் தர) எனும் சொற்றொடருக்கு'நீர் அறியவில்லையா?' என்று பொருள்.'அலம் தர கைஃப்' (திருக்குர்ஆன் 14:24 89:6, 105:01) மற்றும்'அல தர இலல்லஃதீன கரஜூ' (திருக்குர்ஆன் 02:243) ஆகிய வசனங்களிலும் இதே பொருள்தான்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்பவார்' எனும் சொல்லுக்கு'அழிவு' என்று பொருள். (திருக்குர்ஆன் 25:18, 48:12 ஆகிய வசனங்களின் மூலத்திலுள்ள'கவ்மன் பூரா' என்பதன் பொருள்'அழிந்துவிடும் சமுதாயம்' என்பதாகும்.
ஹதீஸ் 4700. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அறிவித்தார்
“அல்லாஹ்வின் அருட்கொடையை(ப் பெற்ற பின்பு அதனை) நன்றி கெட்ட போக்கால் மாற்றி (தங்களுடன்) தம் சமூகத்தாரையும் அழிவுக் கிடங்கில் தள்ளிவிட்டவர்களை (நபியே!) நீங்கள் பார்க்கவில்லையா?' எனும் (திருக்குர்ஆன் 14:28 வது) இறைவசனம், மக்காவாசிகளில் இருந்து இறைமறுப்பாளர்களைக் குறிக்கிறது‘` என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## (15)'அல்ஹிஜ்ர்' அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
“அதுதான் என்னிடம் (வருவதற்குரிய) நேரான வழி‘` எனும் (திருக்குர்ஆன் 15:41 வது) வசனத்தின் கருத்தாவது: சத்திய வழி அல்லாஹ்விடமே உண்டு அதன்படி நடப்பதே அல்லாஹ்வை அடைவதற்கான பாதையாகும்.
(திருக்குர்ஆன் 15:79 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லபிஇமாமிம் முபீன்' எனும் சொற்றொடருக்கு'(அனைவருக்கும்) தெரிந்த பாதையில்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 15:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லஅம்ர்க்க' எனும் சொல்லுக்கு'உம்முடைய ஆயுள் மீது சத்தியமாக' என்று பொருள்.
‘நீங்கள் அறிமுகமற்ற மக்களாக இருக்கிறீர்களே!' எனும் (திருக்குர்ஆன் 15:62 வது) வசனத்தின் கருத்தாவது:'லூத்(அலை) அவர்கள் (தம்மிடம் மனிதர்கள் தோற்றத்தில் வந்த) வானவர்களை அன்னியர்களாகக் கண்டார்கள்.
மற்றவர்கள் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 15:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ம்தாபும் மஃலூம்' என்பதற்குக்'குறிப்பிட்ட தவணை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லவ்மா தஃதீனா' எனும் சொற்றொடருக்கு'நீர் எம்மிடம் (வானவர்களை) அழைத்துக்கொண்டு வரவேண்டாமா?' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷியாஉ' எனும் சொல்லுக்குச்'சமுதாயங்கள்' என்று பொருள். (இறை) அன்பர்களுக்கும்'ஷியஉன்' எனும் சொல் ஆளப்படுவதுண்டு.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: (‘ஹூத்’ அத்தியாயத்தில் 11:78 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’யுஹ்ரஊன’ எனும் சொல்லுக்கு’விரைந்தவர்களாக’ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’லில் முத்தவஸ்ஸிமீன்’ எனும் சொல்லுக்குச்’சிந்திப்போருக்கு’ என்று பெயர்.
(திருக்குர்ஆன் 15:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஸுக்கிரத்’ எனும் சொல்லுக்குத்’திரையிடப்பட்டது’ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’லவாம்ஹ்’ எனும் சொல்லுக்கு’மேகத்தை சூல் கொள்ளச் செய்யக்கூடியவை’ (மலாம்ஹ்) என்று பொருள். ’மலாம்ஹ்’ எனும் சொல்’முல்கிஹா’ என்பதன் பன்மையாகும்.
(திருக்குர்ஆன் 15:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஹமஃ’ எனும் சொல், ‘ஹம்அத்’ என்பதன் பன்மையாகும். அதற்கு’(நீண்ட நாள்கள் நீரோடு சேர்ந்திருந்ததனால் குழைந்த கறுப்பு நிறத்தில்) மாறிவிட்ட (பிசுபிசுப்பான) களிமண்’ என்று பொருள்.
(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள)’மஸ்னூன்’ எனும் சொல்லுக்கு’அச்சில் வார்க்கப்பட்டது’ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:53 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’தவ்ஜல்’ எனும் சொல்லுக்கு’பயப்படுதல்’ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:66 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’தாபிர்’ எனும் சொல்லுக்குக்’கடைசி நபர்’ என்று பொருள்.
(திருக்குர்ஆன் 15:79 வது வசனத்தின் மூலத்தில்)’லபிஇமாமிம் முபீன்’ என்பதிலுள்ள’அல் இமாம்’ எனும் சொல்’நீ எதனையெல்லாம் பின்பற்றி நேர்வழியடைவாயோ’ அவற்றைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 15:83 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஸைஹத்’ (பயங்கர சப்தம்) என்பது, அழிவைக் குறிக்கும்.

## 15:17, 18 வது திருக்குர்ஆன் வசனங்கள்

விரட்டப்பட்ட ஒவ்வொரு ஷைத்தானைவிட்டும் வான்வெளியை நாம் காத்தோம். (ஆகையால் எந்த ஒரு ஷைத்தானும் அங்கு செல்ல முடியாது) எதையேனும் ஒட்டுக் கேட்பவர் தவிர! (அப்படி அவர் ஒட்டுக் கேட்க முயன்றால்) பிரகாசமான ஒரு தீச்சுவாலை அவரைப் பின்சென்று விரட்டும் (எனும் 15:17, 18 ஆகிய வசனங்கள்).

ஹதீஸ் 4701. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
அல்லாஹ் ஒரு விஷயத்தை வானத்தில் தீர்மானித்துவிட்டால், வானவர்கள் தம் சிறகுகளை இறைக்கட்டளைக்குப் பணிந்தவர்களாக அடித்துக் கொள்வார்கள். (அல்லாஹ்வின் அந்தக் கட்டளையை) பாறையின் மீது சங்கிலியை அடிப்பதால் எழும் ஓசையைப் போல் (வானவர்கள் கேட்பார்கள்.)
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அலீ இப்னுஅப்தில்லாஹ் அல்மதீனி(ரஹ்) கூறினார்:
(சுஃப்யான்(ரஹ்) அல்லாத) மற்றவர்களின் அறிவிப்பில், ‘(அந்த ஓசையின் மூலம்) அல்லாஹ் தன் கட்டளையை வானவர்களுக்கு எட்டச்செய்வான்‘ என்று (கூடுதலாகக்) காணப்படுகிறது.
(இறைக் கட்டளையைச் செவியுறும் வானவர்கள் பீதிக்குள்ளாகிறார்கள். பின்னர்) அவர்களின் இதயத்தைவிட்டு பீதி அகற்றப்படும்போது அவ்வானவர்கள், (அல்லாஹ்விற்கு நெருக்கமாயிருக்கும்) வானவர்களிடம், ‘நம் இறைவன் என்ன சொன்னான்?’ என்று வினவுகின்றனர். அவர்கள் வினவியோரிடம், ‘(நம் இறைவன் இன்னின்ன) உண்மை(யான கட்டளை)யைச் சொன்னான். அவன் உயர்ந்தவன் பெரியவன்‘ என்று பதிலளிப்பர். உடனே, (இறைவனின் கட்டளை குறித்த) அந்த உரையாடலை ஒட்டுக்கேட்பவர்கள்

செவியேற்றுவிடுகின்றனர். ஒருவர் மற்றவர் மேலே இருந்து கொண்டு இவ்வாறாக (கடைசி ஆள்வரை) ஒட்டுக் கேட்கின்றனர்.
சுஃப்யான் (ரஹ்) (தம் அறிவிப்பில், அவர்களில் ஒருவர் மற்றவர் மேல் இருக்கும் விதத்தை) தம் வலக் கையின் விரல்களை விரித்துவைத்து அவற்றில் ஒன்றை மற்றொன்றின் மீது அடுக்கி வைத்து (சைகையால்) விளக்கிக் காட்டினார்கள்.
அந்த உரையாடலை ஒட்டுக்கேட்கும் ஒருவர் அதைத் தன் சகாவிடம் தெரிவிப்பதற்கு முன்பாகவே சில சமயங்களில் அவரைத் தீச்சுவாலை தாக்கிக் கரித்துவிடுவதுண்டு. இன்னும் சில நேரங்களில் (தீச்சுவாலை) அவரைச் சென்றடைவதற்குள்ளாகவே (அந்த உரையாடலை) அவர் தமக்கு அடுத்துள்ளவரிடமும், அவர் தமக்குக் கீழுள்ளவரிடமும் தெரிவித்து இறுதியாக பூமிவரை அதைச் சேர்த்துவிடுகிறார்கள்.
சுஃப்யான் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில், 'கடைசியில் அது பூமிக்கு வந்துசேர்ந்து சூனியக்காரனின் வாயில் இடப்படுகிறது. உடனே அவன் அதனுடன் நூறு பொய்களைக் கலந்து சில உண்மைகளை (மட்டும்) கூறுகிறான். (இதைக் கேட்கும்) மக்கள், 'இன்னின்ன நாளில் இன்னின்னவாறு நடக்குமென சூனியக்காரர்கள் நம்மிடம் கூற, அதை நாம் உண்மையானதாகவே காணவில்லையா?' என்று கூறுவார்கள். வானிலிருந்து ஒட்டுக்கேட்கப்பட்ட தகவலினாலேயே இவ்வாறு அவர்கள் கூறுகிறார்கள்'' என்று இடம் பெற்றுள்ளது.
அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து வந்துள்ள மற்றோர் அறிவிப்பில், 'சூனியக்காரன் மற்றும் சோதிடனின் வாயில் இடப்படுகிறது' எனக் கூடுதலாக இடம்பெற்றுள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவரான அலீ இப்னு அப்தில்லாஹ் அல் மதீனி (ரஹ்) கூறினார்: நான் சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அவர்களிடம், 'நீங்கள் இந்த ஹதீஸை அம்ர் இப்னு தீனாரிடம் கேட்டபோது, அன்னார் இக்ரிமாவிடமும், இக்ரிமா அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடமும் கேட்டதாகத் தெரிவித்தாரா?' என வினவினேன். அதற்கு சுஃப்யான் 'ஆம்' என்று பதிலளித்தார்கள். மேலும், நான் சுஃப்யான் அவர்களிடம் 'இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள 'ஃபுஸ்ஸிஅ' (பீதி அகற்றப்படும் போது) எனும் சொல்லை நபி (ஸல்) அவர்கள் அவ்வாறுதான் ('ஃபுஸ்ஸிஅ' என்று) ஓதினார்கள் என நீங்கள் குறிப்பிட்டதாக ஒருவர் அறிவித்தாரே! (அது சரிதானா?)'' என்று வினவினேன். அதற்கு அன்னார் 'அம்ர் இப்னு தீனார் அவர்கள் இவ்வாறுதான் ஓதினார்கள். ஆனால், அம்ர் (இக்ரிமாவிடமிருந்து) இவ்வாறுதான் செவிமடுத்தாரா என்பது எனக்குத் தெரியாது. இதுவே, எங்களின் ஓதல் முறையாகும்'' என்று பதிலளித்தார்கள்.

## 15:80 வது திருக்குர்ஆன் வசனம்

“ஹிஜ்ர்'' வாசிகளும் இறைத்தூதர்களைப் பொய்யர்களெனக் கூறினார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 15:80 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4702. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்
இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , 'ஹிஜ்ர்' வாசிகளைக் குறித்து, 'இந்தச் சமுதாயத்தாரின் (வசிப்பிடங்கள்) வழியாகச் செல்லும்போது அழுதுகொண்டே செல்லுங்கள். நீங்கள் அழுதபடி செல்லப்போவதில்லையென்றால், அவர்களைத் தீண்டிய வேதனை உங்களையும் தீண்டிவிடாமலிருக்க அவர் (களின் வசிப்பிடங்)களைக் கடந்து செல்லாதீர்கள்'' என்று கூறினார்கள்.

## 15:87 வது திருக்குர்ஆன் வசனம்

“திரும்பத் திரும்ப ஓதப்படக்கூடிய ஏழு வசனங்களையும் மகத்துவமிக்க குர்ஆனையும் நிச்சயமாக நாம் உமக்கு வழங்கியுள்ளோம்'' எனும் (திருக்குர்ஆன் 15:87 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4703. அபூ ஸயீத் இப்னு முஅல்லா (ரலி) அறிவித்தார்
நபி (ஸல்) அவர்கள் நான் தொழுது கொண்டிருக்கும் நிலையில் என்னைக் கடந்து சென்றார்கள். அப்போது என்னை அவர்கள் அழைத்தார்கள். நான் தொழுது முடிக்கும் வரை அவர்களிடம் செல்லவில்லை. (தொழுது முடித்த) பிறகு சென்றேன். அவர்கள், '(நான் அழைத்தவுடன்) நீ ஏன் என்னிடம் வரவில்லை?' என்று கேட்டார்கள். அதற்கு, 'நான் தொழுது கொண்டிருந்தேன்'' என்று சொன்னேன். அப்போது அவர்கள், 'இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கும் இறைத்தூதருக்கும் நீங்கள் பதிலளியுங்கள்'' என்று (திருக்குர்ஆன் 08:24 வது வசனத்தில்) அல்லாஹ் சொல்லவில்லையா?' என்று கேட்டார்கள். பிறகு, 'நீ பள்ளிவாசலிலிருந்து வெளியே செல்லும் முன்பாக குர்ஆனிலேயே மகத்தான அத்தியாயமொன்றை உனக்கு நான் கற்றுத் தர வேண்டாமா?' என்று கேட்டார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள் (பள்ளிவாசலிலிருந்து) வெளியேறப் போனார்கள். நான் அவர்களுக்கு (அன்னார் சொன்னதை) நினைவுபடுத்தினேன். அவர்கள், 'அகிலத்தாரின் அதிபதியான அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்'' (என்று தொடங்கும் 'அல்ஃபாத்திஹா' அத்தியாயம் தான்) அது திரும்பத் திரும்ப (தொழுகையில்) ஓதப்படும் ஏழு வசனங்களும் எனக்கு வழங்கப்பட்டிருக்கும் இந்த மகத்தான குர்ஆனுமாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4704. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
திரும்பத் திரும்ப (தொழுகையில்) ஓதப்படும் ஏழு வசனங்கள் ('அல்ஃபாத்திஹா' அத்தியாயம்) குர்ஆனின் அன்னையும் மகத்தான குர்ஆனும் ஆகும்.
என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## 15:91 வது திருக்குர்ஆன் வசனம்

"அவர்களோ (இந்தக்) குர்ஆனைப் பல கூறுகளாக ஆக்கிவிட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 15:91 வது) இறைவசனம்.
(திருக்குர்ஆன் 15:90 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அல்முகத்ஸிமீன்' எனும் சொல்லுக்குச் 'சத்தியம் செய்தவர்கள்' என்று பொருள். 5 இதே இனத்தில் உள்ளதுதான் (திருக்குர்ஆன் 90:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'லா உக்ஸிமு' எனும் சொல்லும். இதற்குச் 'சத்தியம் செய்கிறேன்' என்று பொருள். இதனை 'ல உக்ஸிமு' (உறுதியாக சத்தியம் செய்கிறேன்) என்றும் ஓதலாம்.
(திருக்குர்ஆன் 07:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'காஸமஹுமா' எனும் சொல்லுக்கு, '(ஆதம், ஹவ்வா ஆகிய) அவ்விருவரிடமும் ஷைத்தான் சத்தியம் செய்தான். ஆனால், அவ்விருவரும் அவனிடம் சத்தியம் செய்யவில்லை' என்று பொருள்.
முஜாஹித் இப்னு ஜப்ர் (ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 27:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தகாஸமூ' எனும் சொல்லுக்கு 'ஒருவருக்கொருவர் சத்தியம் செய்துகொள்ளுங்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4705. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்
"அவர்களோ (இந்தக்) குர்ஆனைப் பல கூறுகளாக ஆக்கிவிட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 15:91 வது) வசனம் வேதக்காரர்களைக் குறிக்கிறது. அவர்கள் (இந்தக்) குர்ஆனைப் பல கூறுகளாகப் பிரித்துக்கொண்டு, அதில் (தமக்கு இசைவான) சிலவற்றை நம்பி ஏற்றார்கள். (இசைவில்லாத) சிலவற்றை ஏற்க மறுத்துவிட்டார்கள்.
என ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 4706. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

“(தம்) வேதத்தைப் பலவாறாகப் பிரித்தோர் மீது (முன்னர்) நாம் (வேதனையை) இறக்கியதைப் போன்றே‘‘ எனும் (திருக்குர்ஆன் 15:90 வது) வசனம் (வேதக்காரர்களான) யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களைக் குறிக்கிறது. அவர்கள் (தம் வேதத்தில்) சிலவற்றை நம்பி ஏற்று, சிலவற்றை மறுத்தார்கள்.
இதை அபூ ழப்யான் ஹுஸைன் இப்னு ஜுன்துப்(ரஹ்) அறிவித்தார்.

## 15:99 வது திருக்குர்ஆன் வசனம்

“உறுதி உங்களிடம் வரும் வரை (நபியே!) நீங்கள் உங்களுடைய இறைவனை வணங்கி வாருங்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 15:99 வது) இறைவசனம்.
“இவ்வசனத்திலுள்ள'உறுதி' (யகீன்) எனும் சொல் இறப்பைக் குறிக்கிறது‘‘ என்று சாலிம் இப்னு அப்தில்லாஹ் இப்னி உமர்(ரஹ்) கூறினார்கள்.

## (16)'அந்நஹ்ல்' அத்தியாயம்

(திருக்குர்ஆன் 16:102 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரூஹுல் குத்ஸ்' (பரிசுத்த ஆவி) என்பது (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்களைக் குறிக்கும். '(எம்முடைய கட்டளைப்படி)'ரூஹுல் அமீன்' (நம்பிக்கையாளரான ஆவி எனப்படும் ஜிப்ரீல்) இதை உங்கள் இதயத்தில் இறக்கி வைத்தார்‘‘ எனும் (திருக்குர்ஆன் 26:193 வது) இறைவசனம் இதை உறுதிப்படுத்துகிறது.
(திருக்குர்ஆன் 16:127 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ளைகின்' எனும் சொல்லுக்கு'நெருக்கடியானது' என்று பொருள். 'அம்ர்ன் ளைகுன்' என்பதற்கும், `ளய்யிகுன்' என்பதற்கும் (‘நெருக்கடி நிலை' என்ற) ஒரே பொருள்தான்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
(திருக்குர்ஆன் 16:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தத்த.:.பய்யஉ' எனும் சொல்லுக்குத்'தயாராகும்' என்று பொருள். 2
(திருக்குர்ஆன் 16:69 வது வசனத்திலுள்ள)'உன்னுடைய இறைவன் ஏற்படுத்தியுள்ள வழிகளில் எளிதாகச் சென்று கொண்டேயிரு‘‘ எனும் தொடர், `அது செல்லும் எந்த இடமும் அதற்கு இடராக இராது' என்பதைக் காட்டுகிறது.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 16:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தகல்லுப்' எனும் சொல்லுக்கு'நடமாட்டம்' என்ற பொருள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 16:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தகல்லுப்' எனும் சொல்லுக்கு'நடமாட்டம்' என்று பொருள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 16:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தமீத்' எனும் சொல்லுக்கு'அசைதல்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 16:62 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மு.:.ப்ரத்தூன்' எனும் சொல்லுக்கு'மறக்கடிப்பட்டவர்கள்' (கேட்பாரற்றவர்கள்) என்று பொருள். (இதற்கு, `முதன் முதலில் விரட்டப்படுகிறவர்கள்' என்றும் பொருள் செய்யப்படுவதுண்டு.)
முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 16:98 வது வசனத்திலுள்ள)'(நபியே! நீர் குர்ஆனை ஓதினால் வெருட்டப்பட்ட ஷைத்தானைவிட்டும் பாதுகாக்கும்படி அல்லாஹ்விடம் கோருவீராக!''என்பது (வெளிப்படையில் பார்க்குமிடத்து) முன் பின்னாகக் கூறப்பட்டுள்ளது. ஏனென்றால், `(ஷைத்தானைவிட்டும்) பாதுகாப்புக் கோருதல்' என்பது குர்ஆன் ஓதுவதற்கு முன்பு செய்யவேண்டியதாகும். (ஆனால்,

இந்த வசனத்தில்'நீர் குர்ஆனை ஓதினால் பாதுகாப்புக் கோரும்' என்றிருப்பது, நீர் குர்ஆனை ஓதிய பின்னர் பாதுகாப்புக் கோரும்' என்று கூறுவதுபோல் இருக்கிறது. உண்மையில் அது நோக்கமல்ல.)
மேலும், `பாதுகாப்புக் கோருதல்' என்பதற்கு'(ஷைத்தானின் ஊசலாட்டங்களைவிட்டும் தப்ப) அல்லாஹ்வைப் பலமாகப் பற்றிக்கொள்ளுதல்' என்று பொருளாகும்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 16:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துசீமுன்' எனும் சொல்லுக்கு'(கால் நடைகளை) நீங்கள் மேய்க்கிறீர்கள்'` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:84 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷாக்கிலத்திஹி' எனும் சொல்லுக்கு'தன் தரப்பில்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 16:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கஸ்துஸ் ஸபீல்' என்பதற்கு'வழிகாட்டுதல்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 16:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தி∴ப்உ' எனும் சொல், குளிர்காயப் பயன்படும் பொருளைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 16:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தி∴பஉ' எனும் சொல், குளிர்காயப் பயன்படும் பொருளைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 16:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷிக்கு' எனும் சொல்லுக்குக்'கஷ்டம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 16:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தகவ்வு∴ப்' எனும் சொல்லுக்கு'இழப்புக்கு மேல் இழப்பு' என்று பொருள். (இதற்கு'திம்லுக்கு மேல் திகில்' என்றும், `அச்சுறுத்தல்' என்றும், `படிப்படியான வீழ்ச்சி' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)
(திருக்குர்ஆன் 16:66 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்அன்அம்' (கால்நடைகள்) எனும் சொல் பெண்பாலுக்கும், ஆண்பாலுக்கும் பொருந்தும்.'அந்நஅம்' எனும் சொல்லும் இதைப் போன்றது தான்.'அல்அன்ஆம்' எனும் சொல்'அந்நஅம்' எனும் சொல்லின் பன்மையாகும்.
(திருக்குர்ஆன் 16:81 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்னான்' (தங்குமிடங்கள்) எனும் சொல்லின் ஒருமை'கின்னு' என்பதாகும்.'ஹகில்' (சுமை - ஒருமை)'அஹ்மால்' (சுமைகள் - பன்மை) ஆகியவற்றைப் போன்று.'சராபீல தகீகுமுல்ஹர்ர' எனும் சொற்றொடருக்கு'வெப்பம் காக்கும் சட்டைகள்' என்று பொருள்.'சராபீல தகீகும் ப∴ஸகும்' (போரில் உங்களைக் காக்கும் சட்டைகள்) என்பது கவசங்களைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 16:92, 16:94 ஆகிய வசனங்களின் மூலத்திலுள்ள)'தகல்' (காரணம்) எனும் சொல், நேர்மையற்ற, அனுமதிக்கப் பெறாத எல்லாவற்றையும் குறிக்கும்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 16:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹ∴பதா' (பேரர்கள்) எனும் சொல்'மகனின் குழந்தைகளைக்' குறிக்கும்.
(திருக்குர்ஆன் 16:67 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸக்ர்' (போதைப் பொருள்) எனும் சொல், (பேரீச்சம் பழம், திராட்சை ஆகிய) பழங்களிலிருந்து (தயாரிக்கப்படும்) தடைவிதிக்கப்பட்ட (போதைப்) பொருளைக் குறிக்கும்.'ரிஸ்குன் ஹஸன்' (நல்ல ஆகாரம்) என்பது, அல்லாஹ் அனுமதித்துள்ள பொருளைக் குறிக்கும்.
சு∴ப்யான் இப்னு உயைனா(ரஹ்) அறிவித்தார்.
(திருக்குர்ஆன் 16:92 வது வசனத்தில்)'தான் நூற்ற நூலைத் தானே துண்டுதுண்டாக ஆக்குபவள்' என்று கூறப்பட்டிருப்பது, (மக்காவில் வாழ்ந்த மனநிலை சரியில்லாத)'கர்கா∴' எனும் பெண்ணைக் குறிக்கிறது. அவள் (தன் தோழியருடன் சேர்ந்து காலையிலிருந்து

நண்பகல் வரை) தான் நூற்ற நூலை (நண்பகலுக்குப் பின்) தானே துண்டித்துவிடுபவளாக இருந்தாள் என்று அபூ ஹுதைல் ஸதக்கா(ரஹ்) கூறினார்கள்.
அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 16:120 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உம்மத்தன்' எனும் சொல்லுக்கு'நல்லவற்றைக் கற்பிப்பவர்' என்று பொருள். (இதற்கு வழிகாட்டும் தலைவர், சமுதாயம் எனும் பொருள்களுமுண்டு.)
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கானித்' எனும் சொல்லுக்கு'வழிப்பட்டு நடப்பவர்' என்று பொருள்.

## 16:70 வது திருக்குர்ஆன் வசனம்

“தள்ளாத முதுமை வயதுவரை (வாழ) விடப்படுகிறவர்களும் உங்களில் உள்ளனர்‘‘ எனும் (திருக்குர்ஆன் 16:70 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4707. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
“(இறைவா!) நான் உன்னிடம் கஞ்சத் தனத்திலிருந்தும், சோம்பலிலிருந்தும், தள்ளாமையிலிருந்தும், மண்ணறையின் (கப்ரின்) வேதனையிலிருந்தும், தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்தும், வாழ்வு மற்றும் மரண வேளையின் சோதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பிரார்த்தனை புரிந்து வந்தார்கள்.

## (17)'பனு இஸ்ராயீல்' அத்தியாயம்

ஹதீஸ் 4708. அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்
இப்னு மஸ்வூத்(ரலி), பனு இஸ்ராயீல், கஹ்ஃப் மற்றும் மர்யம் ஆகிய அத்தியாயங்கள் குறித்துக் கூறுகையில், `இவை அதிசயமான முதல் தர அத்தியாயங்களில் உள்ளவையாகும். மேலும், இவை நான் மனனம் செய்த பழைய அத்தியாயங்களில் அடங்கும்‘` என்று குறிப்பிட்டார்கள்.
(இந்த அத்தியாயத்தில் 56 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபஸயுன்ஃகிளூன' எனும் சொல்லுக்கு, `(தலையை) அசைப்பார்கள்‘` என்று பொருள்.
(இதே வார்த்தையின் இறந்தகால வினைச் சொல்லான)'நஃகளத் சின்னுக்க' என்பதற்கு'உன் பல் அசைந்தது' என்று பொருள் - என மற்றவர்கள் கூறுகிறார்கள்.
(திருக்குர்ஆன் 17:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'களைனா இலா பனீ இஸ்ராயீல்' எனும் தொடருக்கு'இஸ்ராயீலின் வழித்தோன்றல்கள் குழப்பம் விளைவிப்பார்கள் என அவர்களிடம் (அவர்களின் வேதத்தில்) நாம் தெரிவித்துள்ளோம்‘` என்று பொருள். (இத்தொடரில் இடம் பெற்றுள்ள)'களா' எனும் சொல்லுக்குப் பல்வேறு பொருள்கள் உண்டு:
1.'களா ரப்புக்க' என்பதற்கு'உம்முடைய இறைவன் உத்தரவிட்டான்' என்று பொருள். (திருக்குர்ஆன் 17:23)
2.'தீர்ப்பு' எனும் பொருளும் அதற்கு உண்டு. (அல்லாஹ் கூறினான்:)'உம்முடைய இறைவன் அவர்களிடையே தீர்ப்பளிப்பான்!"(திருக்குர்ஆன் 10:93)
3.'படைத்தல்' எனும் பொருளும் அதற்கு உண்டு. (அல்லாஹ் கூறினான்:)'பின்னர் அவன் இரண்டு நாள்களில் ஏழு வானங்களாக அவற்றைப் படைத்தான்!"(திருக்குர்ஆன் 41:12)
(திருக்குர்ஆன் 17:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நஃபீர்' (கூட்டத்தார்) எனும் சொல், ஒருவருக்குப் பக்கபலமாக வருவோரைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 17:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மைசூர்' எனும் சொல்லுக்கு'மென்மையானது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வலியுத்தப்பிரூ' எனும் சொல்லுக்குத்'தம் கைக்கு எட்டியவற்றையெல்லாம் அழிப்பதற்காக‘` என்று பொருள்.

(திருக்குர்ஆன் 17:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹஸீர்' எனும் சொல்லுக்குச்'சிறைக்கூடம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹக்க' எனும் சொல்லுக்கு'உறுதியாகிவிட்டது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கித்உ' எனும் சொல்லுக்கு'பாவம்' என்று பொருள். இது'கதிஃத்து' (நான் பாவம் செய்தேன்) எனும் வினைச் சொல்லின் பெயர்ச் சொல்லாகும்.'கதாஉ' (குற்றமிழைத்தல்) என்பது'கதிஃத்து' என்பதன் வேர்ச் சொல்லாகும். இதற்கு'குற்றமிழைத்தேன்' (அக்தஃத்து) என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தக்ரிக்க' எனும் சொல்லுக்குப்'பிளந்து விடுவீர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வஇஃத் ஹும் நஜ்வா' (அவர்கள் இரகசியம் பேசிக்கொள்ளும்போது) எனும் சொற்றொடரில்'நஜ்வா' என்பது'நாஜைத்து' (நான் இரகசியம் பேசினேன்) என்பதன் வேர்ச் சொல்லாகும். வேர்ச் சொல்லே இங்கு (பயனிலையில்) அடைமொழியாக இருந்து வினைச் சொல்லின் பொருள் தருகிறது.
(திருக்குர்ஆன் 17:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ருஃபாத்' எனும் சொல்லுக்குத்'துகள் துகளாக' என்று பொருள். (இதற்கு'மக்கிப் போனது', 'மண்' ஆகிய பொருள்களும் உண்டு.)
(திருக்குர்ஆன் 17:64 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வஸ்த்ஃப்ஸிஸ்' எனும் சொல்லுக்கு'ஆட்டங் காணச் செய் வழி பிறழச் செய்!' என்று பொருள்.'பி கைலிக்க' எனும் சொல்லுக்கு'உன்னுடைய குதிரைப் படை' என்று பொருள்.
'அர்ரஜ்ல்' எனும் சொல்லுக்குக்'காலாட்படை' என்று பொருள். இதன் ஒருமை'அர்ராஜில்' என்பதாகும். இது'ஸாஹிப்' (நண்பன்), 'ஸஹ்ப்' (நண்பர்கள்) என்பனவற்றையும், 'தாஜிர்' (வியாபாரி), 'தஜ்ர்' (வியாபாரிகள்) என்பனவற்றையும் போன்றதாகும்.
(திருக்குர்ஆன் 17:68 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹாஸிப்' எனும் சொல்லுக்குக்'கடுமையாக வீசும் புயல் காற்று' என்று பொருள். காற்று வாரியிறைக்கும் பொடிக் கற்களுக்கும்'ஹாஸிப்' என்பர். இதிலிருந்து வந்ததுதான்'ஹஸபு ஜஹன்னம்' (நரகத்தின் எரிபொருள்) என்ற சொல்லும். நரகத்தில் வீசப்படும் பொருள்களையே இது குறிக்கிறது. பூமிக்குள் செல்வது'ஹஸப' எனப்படும்.'ஹஸப்' எனும் சொல், 'ஹஸ்பாஉ' (பொடிக்கற்கள்) எனும் சொல்லிலிருந்து மருவியதாகும்.
(திருக்குர்ஆன் 17:69 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தாரத்' எனும் சொல்லுக்கு'மீண்டும் ஒரு முறை' என்று பொருள்.'தியரத்', தாராத்' ஆகியன இதன் பன்மைகளாகும்.
(திருக்குர்ஆன் 17:62 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ல அஹ்த்தனிக்கன்ன' எனும் சொல்லுக்கு'அவர்களை நான் (வழிகெடுத்து) வேரறுத்து விடுவேன்' என்பது பொருளாகும்.'இஹ்தனக்க' என்பதற்கு, ஒருவர் மற்றவரிடமிருந்து எல்லா அறிவையும் தம்மாக்கிக் கொண்டார் என்று (மொழி வழக்கில்) பொருள்கொள்ளப்படும்.
(திருக்குர்ஆன் 17:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தாயிரஹு' எனும் சொல்லுக்கு'அவனுக்குரிய பங்கு' என்று பொருள். (இச்செயலுக்கு செயல்கள் பற்றிய குறிப்பு, செயல் சகுனம் ஆகிய பொருள்களும் உண்டு.)
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
குர்ஆனில் எங்கெல்லாம்'சுல்த்தான்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளதோ அங்கெல்லாம்'ஆதாரம்' (அல்லது அதிகாரம்) என்றே பொருள் கொள்ளப்படும்.
(திருக்குர்ஆன் 17:111 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வலிய்யும் மினஃத்துல்லி' என்பதன் கருத்தாவது:'(இடர் ஏற்பட்டு, அதிலிருந்து தன்னைக் காக்க) அதன் யாரையும் நண்பராக்கிக் கொள்வதில்லை. (காரணம், இறைவனுக்கு இடர் ஏற்படும் என்ற பேச்சுக்கே இடமில்லை.)

## 17:01 வது திருக்குர்ஆன் வசனம்

"அல்லாஹ் தூயவன். அவன் தன்னுடைய அடியாரை(க் கஅபாவாகிய) புனிதப் பள்ளி வாசலிலிருந்து (வெகு தூரத்தில் இருக்கும் பைத்துல் மக்தஸிலள்ள) மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு ஓரிரவில் அழைத்துச் சென்றான்' எனும் (திருக்குர்ஆன் 17:1 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4709. அபூ ஹுரைரா(ரலி), அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஈலியா' (எனும் ஜெரூசலத்து)க்கு அழைத்துச் செல்லப்பட்ட இரவில் அன்னாரிடம் மது மற்றும் பால் கோப்பைகள் இரண்டு கொண்டுவரப்பட்டன. அவ்விரண்டையும் அவர்கள் கூர்ந்து நோக்கிவிட்டு, பால் கோப்பையை எடுத்துக்கொண்டார்கள். அப்போது (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள்'உங்களை இயற்கை நெறியின் பக்கம் செலுத்திய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! மதுக் கோப்பையை நீங்கள் எடுத்திருந்தால் உங்கள் சமுதாயம் வழிதவறிப் போயிருக்கும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4710. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இரவின் ஒரு சிறு பகுதியில் நான் புனித கஅபாவிலிருந்து பைத்துல் மக்திஸ் வரை சென்றுவந்த தகவலைச் சொன்ன சமயம்) குறைஷியர் என்னை நம்ப மறுத்தனர். அப்போது நான் (கஅபாவின்)'ஹிஜ்ர்' எனும் (வளைந்த) பகுதியில் நின்றிருந்தேன். அல்லாஹ் எனக்க அப்போது பைத்துல் மக்திஸைக் காட்சியளிக்கச் செய்தான். உடனே நான் அதைப் பார்த்தப்படியே அதன் அடையாளங்களை அவர்களுக்கு விவரிக்கலானேன்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களின் அறிவிப்பில், 'இரவில் நான் பைத்துல் மக்திஸிற்கு அழைத்துச் செல்லப்பட்ட சமயத்தில் குறைஷியர் என்னை நம்பமறுத்தனர். (அப்போது நான்'ஹிஜ்ர்' பகுதியில் நின்றிருந்தேன்.)'' என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

(திருக்குர்ஆன் 17:68 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'காஸிஃப்' எனும் சொல்லுக்கு'எல்லாவற்றையும் பிடுங்கி எறியும் பலத்த காற்று' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 17:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கர்ரம்னா' எனும் சொல்லுக்கு (இதே வகையிலான)'அக்ரம்னா' எனும் சொல்லும் ('கண்ணியப்படுத்தினோம்' என்ற) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

(திருக்குர்ஆன் 17:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ளிஉஃபல் ஹயாத்தி வளிஉஃபல் மமாத்தி' எனும் சொற்றொடருக்கு'உலக வாழ்விலும் இரண்டு மடங்கு வேதனை, மரணத்திற்குப் பின்பும் இரண்டு மடங்கு வேதனை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 17:76 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃம்லாஃபக்க' எனும் சொல்லும் (மற்றோர் ஓதல் முறைப்படியான)'கல்ஃபக்க' எனும் சொல்லும் ('உமக்குப் பின்னர்' எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

(திருக்குர்ஆன் 17:83 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நஆ' எனும் சொல்லுக்கு'ஒதுங்கிக் கொண்டான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 17:84 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷாம்லாத்திஹி' எனும் சொல்லுக்குத்'தன் தரப்பில்' என்று பொருள். இச்சொல்'ஷக்ல்' (நிகர்) எனும் சொல்லிருந்து பிரிந்ததாகும்.

(திருக்குர்ஆன் 17:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸர்ரஃப்னா' எனும் சொல்லுக்கு'முன் வைத்துள்ளோம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 17:92 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கபீல்' எனும் சொல்லுக்கு'நேரடியாக் கண்ணெதிரே' என்று பொருள். (இச்சொல்லிருந்து பிறந்ததே)'அல்காபிலா' ('பிரசவப் பெண்

மருத்துவர்') எனும் சொல்லும். ஏனெனில், இந்தப் பெண் மருத்துவர், பிரசவிக்கும் பெண்ணுக்கெதிரில் இருந்து அவளுடைய குழந்தையை எதிர்நோக்குகிறார்.
(திருக்குர்ஆன் 17:100 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கஷ்யத்தல் இன்ஃபாக்' எனும் சொல்லுக்குச்'செலவாகிவிடுமோ என்ற அச்சம்' என்று பொருள். 'இன்ஃபாக்' என்பதற்கு'வறுமை' என்றும், 'நஃபிக' என்பதற்குப்'போய்விட்டது' என்றும் பொருள். (இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'கத்தூர்' எனும் சொல்லுக்குக்'கஞ்சன்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:107 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்அஃத்கான்' எனும் சொல்லுக்கு'முகத்தாடைகள் இரண்டும் இணையுமிடங்கள்' (முகவாய்கள்) என்று பொருள். இதன் ஒருமை'ஃதகன்' என்பதாகும்.
முஜாஹித இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 17:63 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மவ்ஃபூர்' (நிறைவாக்கப்பட்டது) எனும் (செயப்பாட்டு எச்சவினைப் பெயர்ச்) சொல்லுக்கு (வினையாலணையும் பெயரான)'வாஃபிர்' (நிறைவானது) என்பதன் பொருளாகும்.
(திருக்குர்ஆன் 17:69 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தபீஉன்' எனும் சொல்லுக்குப்'பழிவாங்குபவன்' என்று பொருள். இப்னு அப்பாஸ்(ரலி), 'உதவியாளர்' எனப் பொருள் கொள்கிறார்கள். (இதற்குக்'குற்றம் சாட்டுவோர்', 'விசாரணை செய்யக்கூடியவர்' என்றும் பொருள் கொள்ளப்பட்டுள்ளது.)
(திருக்குர்ஆன் 17:97 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கபத்' எனும் சொல்லுக்குத்'தணிந்தது' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
(திருக்குர்ஆன் 17:26 வது வசனத்திலுள்ள)'வீண் செலவு செய்யவேண்டாம்' என்பதன் கருத்தாவது: (மார்க்கம் அனுமதிக்காத) தீய வழியில் செலவு செய்யவேண்டாம்.
(திருக்குர்ஆன் 17:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரஹ்மத்' (அருள்) எனும் சொல், (வாழ்க்கைக்குத் தேவைப்படும்) வாழ்வாதாரத்தைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 17:102 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஸ்பூர்' எனும் சொல்லுக்கு'சபிக்கப்பட்டவன்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃப ஜாஸூ' எனும் சொல்லுக்குத்'திட்டமிட்டனர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 17:107 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்அஃத்கான்' எனும் சொல்லுக்கு'முகங்கள்' என்று பொருள்.

## 17:16 வது திருக்குர்ஆன் வசனம்

"(அக்கிரமக்காரர்கள் வாழ்கின்ற) ஏதேனும் ஓர் ஊரை நாம் அழிக்க விரும்பினால், அங்கு சொகுசாக வாழ்வோருக்கு நாம் கட்டளையிடுகிறோம் அதில் அவர்கள் பாவம் இழைக்கிறார்கள். அதையடுத்து அவ்வூரின் மீது நம்முடைய ஆணை உறுதியாகி, அதனை நாம் அடியோடு அழித்துவிடுகிறோம்'' எனும் (திருக்குர்ஆன் 17:16 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4711. அப்துல்லாஹ் இப்னுமஸ்வூத்(ரலி) அறிவித்தார்
அறியாமைக் காலத்தில், ஒரு குலத்தாரின் எண்ணிக்கை அதிகரித்துவிட்டால், 'அமிர பனு ஃபுலான்'' (இன்ன குலத்தார் எண்ணிக்கையில் பெருகிவிட்டார்கள்) என்று கூறிவந்தோம்.
மற்றோர் அறிவிப்பில்'(அமிர என்பதற்கு பதிலாக)'அமர' என்று காணப்படுகிறது. 6

## 17:03 வது திருக்குர்ஆன் வசனம்

நாம் நூஹுடன் கப்பலில் ஏற்றியிருந்த மக்களின் வழித் தோன்றல்களே நீங்கள். திண்ணமாக, நூஹ் நன்றியுள்ள ஓர் அடியாராகவே திகழ்ந்தார் (எனும் 17:3 வது இறைவசனம்).

ஹதீஸ் 4712. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்
இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் (ஒரு விருந்தில்) இறைச்சி கொண்டுவரப்பட்டது. அப்போது (சமைக்கப்பட்ட) புஜம் (முன்கால் சப்பை) ஒன்றை அவர்களிடம் நீட்டப்பட்டது. அது அவர்களுக்கு மிகவும் பிடித்தமானதாக இருந்து வந்தது. நபி (ஸல்) அவர்கள் (அதை) வாயாலேயே (பற்களால்) பற்றிக்கொண்டு அதிலிருந்து சிறிது உண்டார்கள். பிறகு 'நான் மறுமை நாளில் மனிதர்களின் தலைவன் ஆவேன். (அந்நாளில்) அல்லாஹ் (மனிதர்களில்) முந்தியவர்களையும் பிந்தியவர்களையும் ஒரே சமவெளியில் எதன் மூலம் ஒன்று திரட்டுவான் என்பது உங்களுக்குத் தெரியுமா? அழைப்பவர் எவரும் அந்த மக்களை அழைத்தால் அதனை அவர்கள் செவியேற்க முடியும். (பார்ப்போரின்) பார்வை அவர்களை (நன்கு) சூழ்ந்துகொண்டிருக்கும். சூரியன் (அவர்களுக்கு) அருகில் வரும். அப்போது மனிதர்களிடம், அவர்களால் தாங்கிக்கொள்ளவோ, பொறுத்துக்கொள்ளவோ முடியாத துன்பங்களும் துயரங்களும் வந்து சேரும். அப்போது மனிதர்கள் (சிலர் வேறு சிலரை நோக்கி) 'உங்களுக்கு எத்தகைய (ஆபத்தான) நிலை நேர்ந்திருக்கிறது என்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? உங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்து பேசுபவரை (த் தேடிப்) பார்க்கமாட்டீர்களா?' என்று கேட்பார்கள். அப்போது மனிதர்களில் சிலர் வேறு சிலரிடம், '(உங்களுடைய ஆதி பிதா) ஆதம் (அலை) அவர்களை அணுகுங்கள் (அவர் உங்களுக்காகப் பரிந்து பேசுவார்) என்பர்.
எனவே மனிதர்கள், ஆதம் (அலை) அவர்களிடம் சென்று, 'நீங்கள் மனித இனத்தின் தந்தையாவீர்கள் உங்களை அல்லாஹ் தன் கரத்தால் படைத்தான். உங்களுக்குள் தன் (னால் உருவாக்கப்பட்ட) உயிரை ஊதினான். வானவர்களை உங்களுக்குச் சிரம்பணியும்படி உத்தரவிட்டான். அவ்வாறே அவர்கள் உங்களுக்குச் சிரம் பணிந்தார்கள். நீங்கள் உங்களுடைய இறைவனிடம் எங்களுக்காகப் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையையும், எங்களுக்கு நேர்ந்திருக்கும் (துன்ப) நிலையையும் நீங்கள் கவனிக்கவில்லையா?' என்று கேட்பார்கள். அதற்கு 'ஆதம் (அலை) அவர்கள் ('நான் செய்ததவற்றின் காரணத்தால்) என் இறைவன் என் மீது இன்று (கடும்) கோபம்கொண்டிருக்கிறான். இதற்கு முன் இதைப்போன்று அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் அவன் இதைப் போல் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை. (நான் நெருங்கக் கூடாத ஒரு) மரத்திலிருந்து (உண்ண வேண்டாமென்று) என்னை அவன் தடுத்தான். நான் அவனுக்கு மாறு செய்தேன். என்னையே நான் காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது' என்று கூறிவிட்டு 'நீங்கள் வேறெவரிடமாவது சொல்லுங்கள். நீங்கள் (இறைத்தூதர்) நூஹிடம் செல்லுங்கள்'' என்று சொல்வார்கள்.
உடனே மக்களும் நூஹ் (அலை) அவர்களிடம் சென்று 'நூஹே! நீங்கள் பூமியில் வசிப்பவர்களுக்கு (அனுப்பப்பெற்ற) முதல் (புதிய சட்ட அமைப்புடன் வருகை தந்த) இறைத்தூதர் ஆவீர்கள். உங்களை அல்லாஹ் நன்றியுள்ள அடியார் என்று குறிப்பிட்டுள்ளான். 7 எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையை நீங்கள் கவனிக்கவில்லையா?' என்று கேட்பார்கள். அதற்கு நூஹ் (அலை) அவர்கள் 'என் இறைவன் இன்று என் மீது (கடும்) கோபம் கொண்டுள்ளான். இதற்கு முன் அவன் இதைப் போல் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் அவன் இதைப்போல் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை. (எல்லா நபிமார்களுக்கும் இருப்பது போன்று விசேஷமான) பிரார்த்தனை ஒன்று எனக்கு (வழங்கப்பட்டு) இருந்தது. அதை நான் என் சமுதாயத்தினருக்கு எதிராகப் பிரயோகித்துவிட்டேன். 8 நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது. நான் என்னையே காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது!

நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது!' (எனவே,) வேறெவரிடமாவது நீங்கள் செல்லுங்கள். (இறைத் தூதர்) மூஸாவிடம் செல்லுங்கள்' என்று கூறுவார்கள்.
அவ்வாறே மக்களும் மூஸா(அலை) அவர்களிடம் சென்று'மூஸாவே நீங்கள் இறைத்தூதர் ஆவீர்கள். தன்னுடைய தூதுவத்தினை வழங்கியும் உங்களிடம் உரையாடியும் மக்கள் அனைவரையும் விட உங்களை அல்லாஹ் மேன்மைப்படுத்தியுள்ளான். (எனவே,) எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையை நீங்கள் கவனிக்கவில்லையா?' என்று கூறுவார்கள். அதற்கு மூஸா(அலை) அவர்கள்'இன்று என் இறைவன் (என் மீது கடும்) கோபம் கொண்டுள்ளான். இதற்கு முன்பும் இதைப்போல் அவன் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பின்பும் இதைப் போல் அவன் ஒருபோதும் கோபம்கொள்ளப் போவதுமில்லை. கொலை செய்யுமாறு எனக்கு ஆணையிடப்பாடாமலேயே நான் ஒரு மனித உயிரைக் கொலை செய்துவிட்டிருக்கிறேன். 10 நான் என்னையே காப்பாற்றிக் கொள்ளவேண்டியுள்ளது! நான் என்னையே காப்பாற்றிக்கொள்ள வேண்டியுள்ளது! நான் என்னையே காப்பாற்றிக் கொள்ளவேண்டியுள்ளது. (எனவே,) வேறெவரிடமாவது நீங்கள் சொல்லுங்கள். (இறைத்தூதர்) ஈசாவிடம் செல்லுங்கள்' என்று கூறுவார்கள்.
அவ்வாறே மக்கள் ஈசா(அலை) அவர்களிடம் சென்று, 'ஈசாவே! நீங்கள் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறீர்கள். மர்யமிடம் இறைவனிட்ட அவனுடைய வார்த்தையும் அவன் (ஊதிய) உயிரும் ஆவீர்கள். நீங்கள் தொட்டிலில் சிறுவராய் இருந்தபோதே மனிதர்களிடம் பேசினீர்கள். (எனவே,) எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக்கொண்டு) இருக்கும் (அவல) நிலையை நீங்கள் கவனிக்கவில்லையா?' என்று கேட்பார்கள். அதற்கு ஈசா(அலை) அவர்கள், 'என் இறைவன் இன்று (என் மீது கடும்) கோபம்கொண்டுள்ளான். இதற்கு முன் அவன் இதைப்போல் கோபம் கொண்டதில்லை. இதற்குப் பிறகும் இதைப் போல் அவன் ஒருபோதும் கோபம் கொள்ளப்போவதுமில்லை - (தாம் புரிந்துவிட்டதாக) எந்தப் பாவத்தையும் அவர்கள் குறிப்பிடாமல் - நான் என்னையே காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது! நான் என்னையே காப்பாற்றிக் கொள்ள வேண்டியுள்ளது! (எனவே,) நீங்கள் வேறெவரிடமாவது சொல்லுங்கள் நீங்கள் முஹம்மதிடம் செல்லுங்கள்' என்று கூறுவார்கள்.
அப்போது மக்கள் என்னிடம் வந்து'முஹம்மதே! நீங்கள் இறைத்தூதர். இறைத்தூதர்களில் இறுதியானவர். உங்களின் முன் பின் பாவங்களை இறைவன் மன்னித்துவிட்டான். எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்து பேசுங்கள். நாங்கள் (சிக்கிக் கொண்டு) இருக்கம் (அவல) நிலையை நீங்கள் கவனிக்கவில்லையா?' என்று கூறுவர். அப்போது நான் நடந்து இறைவனின் அரியாசனத்திற்குக் கீழே சென்று, என் இறைவனுக்கு (பணிந்து) சஜ்தாவில் விழுவேன். பிறகு இறைவன் எனக்கு முன் வேறெவருக்கும் (உள்ளத்தில்) உதிக்கச் செய்திராத இறைப் புகழ் மாலைகளையும் அழகிய தோத்திரங்களையும் எனக்கு உதிக்கச் செய்வான். பிறகு'முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள்! கேளுங்கள் அது உங்களுக்குத் தரப்படும். பரிந்துரையுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்'' என்று சொல்லப்படும். அப்போது நான் என் தலையை உயர்த்தி'இறைவா! என் சமுதாயம். இறைவா! என் சமுதாயம்' என்பேன். அதற்கு'முஹம்மதே! சொர்க்கத்தின். வாசல்களில் வலப்பக்க வாசல் வழியாக எந்த விதக் கேள்விக் கணக்கும் இல்லாமல் உங்கள் சமுதாயத்தார் சிலரை நுழையச் செய்யுங்கள் அவர்கள் மற்ற வாசல்களிலும் மக்களுடன் இணைந்து நுழைந்துகொள்ளலாம்' என்று கூறப்படும். என் உயிர் எவன் கையில் உள்ளதோ அவன் மீது சத்தியமாக! சொர்க்கவாசலின் இரண்டு பக்கங்களுக்கிடையேயான தூரம்'மக்காவிற்கும்

(யமனிலுள்ள)'ஹிகியர்' எனும் ஊருக்கும் இடையிலுள்ள' அல்லது'மக்காவிற்கும் (ஷாமிலுள்ள) புஸ்ரா எனும் ஊருக்கும் இடையிலுள்ள' தூரமாகும்'' என்று கூறினார்கள்.

## 17:55 வது திருக்குர்ஆன் வசனம்

“மேலும், நாம் தாவூதுக்கு ஸபூர் வேதத்தை வழங்கினோம்'' எனும் (திருக்குர்ஆன் 17:55 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4713. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தாவூத்(அலை) அவர்களுக்கு வேதம் ஓதுவது இலேசாக்கப்பட்டிருந்தது. அவர்கள் தம் வாகனப் பிராணிக்குச் சேணம் பூட்டிடக் கட்டளையிடுவார்கள். (பணியாள்) சேணம் பூட்டி முடிப்பதற்குள் -வேதம் - முழுவதையும் ஓதிவிடுவார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 17:56 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) இவர்களிடம் கூறுக: அல்லாஹ்வை விடுத்து (உங்கள் தேவைகளை நிறைவேற்றும் கடவுளர்களாய்) யாரை நீங்கள் கருதுகிறீர்களோ அவர்களை அழைத்துப் பாருங்கள்! உங்களின் எந்தத் துன்பத்தையும் அவர்களால் அகற்றிவிடவோ மாற்றிவிடவோ முடியாது (எனும் 17:56 வது இறைவசனம்).

ஹதீஸ் 4714. அபூ மஅமர்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)'இந்த இணைவைப்பாளர்கள் யாரை(க் கடவுளர்களாக) அழைக்கின்றனரோ அவர்களே கூட தங்களின் (உண்மையான) இறைவனுக்கு அதிகம் நெருக்கமானவராய் வது யார் என்பதற்காக அவனுடைய நெருக்கத்தை அடைவதற்குரிய வழியைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 17:57 வது) வசனம் குறித்து விளக்கமளிக்கையில் பின்வருமாறு கூறினார்கள்: மனிதர்களில் சிலர்'ஜின்' இனத்தாரில் சிலரை வழிபட்டுக் கொண்டிருந்தனர். இந்நிலையில் அந்த ஜின்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்(டு அல்லாஹ்வை வழிபட்)டனர். (அப்படியிருந்தும்,) இந்த மனிதர்கள் தம் (இணைவைக்கும்) மார்க்கத்தையே (தொடர்ந்து) பின்பற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

மற்றோர் அறிவிப்பில்'17:56 வது வசனம் குறித்து விளக்கமளிக்கையில்..!"என்று காணப்படுகிறது.

## 17:57 வது திருக்குர்ஆன் வசனம்

“இந்த இணைவைப்பாளர்கள் யாரை(க் கடவுளர்களாக) அழைக்கின்றனரோ அவர்களே கூட தங்களின் (உண்மையான) இறைவனின் நெருக்கத்தை அடைவதற்குரிய வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்'' எனும் (திருக்குர்ஆன் 17:57 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4715. அபூ மஅமர்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)'இந்த இணைவைப்பாளர்கள் யாரை(க் கடவுளர்களாய்) அழைக்கின்றனரோ அவர்களே கூடத் தங்களின் (உண்மையான) இறைவனது நெருக்கத்தை அடைவதற்கான வழியைத் தேடிக்கொண்டிருக்கின்றனர்'' எனும் (திருக்குர்ஆன் 17:57 வது) வசனம் தொடர்பாக(ப் பின்வருமாறு) விளக்கமளித்தார்கள்:'ஜின்' இனத்தாரில் சிலர் (மனிதர்கள் சிலரால்) வணங்கப்பட்டுவந்தனர். பின்னர் அந்த ஜின்கள் இஸ்லாத்தை ஏற்றார்கள்.

## 17:60 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) உங்களுக்கு நாம் காண்பித்த (இக்) காட்சியையும், சபிக்கப்பட்ட (கள்ளி) மரத்தை (அது மறுமையில் பாவிகளுக்கு உணவாகும் என) குர்ஆனில் நாம் கூறியிருப்பதையும் இம் மக்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம் (எனும் 17:60 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4716. இக்ரிமா(ரஹ்) அறிவித்தார்

“(நபியே!) உங்களுக்கு நாம் காண்பித்த (இக்) காட்சியையும், சபிக்கப்பட்ட மரத்தை (அது மறுமையில் பாவிகளுக்கு உணவாகும் என) குர்ஆனில் நாம் கூறியிருப்பதையும் இம்மக்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 17:60 வது) வசனம் தொடர்பாக இப்னு அப்பாஸ்(ரலி) கூறியதவாது: இது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவிலிருந்து பைத்துல் மக்திஸிற்கு) அழைத்துச் செல்லப்பட்ட இரவில் அன்னாருக்குக் காட்டப்பட்ட கண்கூடான காட்சியைக் குறிக்கிறது.’சபிக்கப்பட்ட மரம்’ என்பது’சப்பாத்திக் கள்ளி’ மரத்தைக் குறிக்கிறது.

## 17:78 வது திருக்குர்ஆன் வசனம்

“நிச்சயமாக அதிகாலையில் ஓதுவது சாட்சியம் சொல்லப்படக் கூடியதாகும்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 17:78 வது) வசனத் தொடர்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்: (‘அதிகாலையில் ஓதுவது’ என்பது) அதிகாலை (ஃபஜ்ர்)த் தொழுகையைக் குறிக்கும்.

ஹதீஸ் 4717. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தனியாகத் தொழுவதை விடக் கூட்டாகத் தொழுது இருபத்தைந்து மடங்கு அதிகச் சிறப்புடையதாகும். அதிகாலைத் தொழுகையில் இரவு நேரத்து வானவர்களும், பகல் நேரத்து வானவர்களும் ஒன்று சேர்கிறார்கள்.

இதை அறிவித்த அபூ ஹுரைரா(ரலி), ‘நீங்கள் விரும்பினால், ‘(நபியே!) அதிகாலையில் ஓதுவதைக் கடைப்பிடியுங்கள். (ஏனெனில்,) அதிகாலையில் ஓதுவது (வானவர்களால்) சாட்சியம் சொல்லப்படக்கூடியதாகும்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 17:78 வது) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்‘ ‘ என்று கூறினார்கள்.

## 17:79 வது திருக்குர்ஆன் வசனம்

“இரவில்’தஹஜ்ஜுத்’ எனும் தொழுகையைக் கடைப்பிடிப்பீராக. இது உமக்கு அதிகப்படியான தொழுகையாகும். உம்முடைய இறைவன் உம்மை (‘மகாமு மஹ்மூத்’ எனும்) உயர் அந்தஸ்துக்கு அனுப்பலாம்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 17:79 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4718. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

மக்கள் மறுமை நாளில் பல குழுக்களாக ஆகிவிடுவார்கள். ஒவ்வொரு சமுதாயத்தினரும் தத்தம் நபியைப் பின்தொடர்ந்து சென்று, ‘இன்னாரே (எங்களுக்காக அல்லாஹ்விடம்) பரிந்துரை செய்யுங்கள்‘ ‘ என்று கேட்பார்கள். (ஒவ்வொருவராகத் தம்மால் இயலாதென்று மறுத்துக்கொண்டே வர) இறுதியில் நபி(ஸல்) அவர்களிடம் பரிந்துரை (கோரிக்கை) செல்லும். நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் பரிந்துரைப்பார்கள்.) நபியவர்களை அல்லாஹ் (‘மகாமு மஹ்மூத்’ எனும்) உயர் அந்தஸ்திற்கு அனுப்பும் நாளில் இது நடக்கும்.

ஹதீஸ் 4719. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தொழுகை அழைப்பான) பாங்கு சப்தத்தைக் கேட்(டு முடிக்)கும்போது’இறைவா! இந்த முழுமையான அழைப்பிற்கும், நிலைநிற்கவிருக்கும் தொழுகைக்கும் அதிபதியே! முஹம்மத்(ஸல்) அவர்களுக்கு மட்டுமே உரித்தான (சொர்க்கத்தின்) உயரிடத்தையும் தனிச் சிறப்பையும் அன்னாருக்குத் தந்தருள்வாயாக! அவர்களுக்கு நீ வாக்களித்துள்ள உயர் அந்தஸ்திற்கு அவர்களை அனுப்பி வைப்பாயாக!”என்று பிரார்த்திக்கிறவருக்கு மறுமை நாளில் என் பரிந்துரை கிடைக்கும்.

இதை ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார். இதே ஹதீஸ் வேறொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## 17:81 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும் (நபியே!)'சத்தியம் வந்துவிட்டது; அசத்தியம் அழிந்துவிட்டது. நிச்சயமாக அசத்தியம் அழியக்கூடியதே!' என்று கூறும்! (எனும் (திருக்குர்ஆன் 17:81 வது இறைவசனம்).
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸஹக' எனும் சொல்லுக்கு'அழிந்தது' என்று பொருள்.

ஹதீஸ் 4720. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
இறையில்லம் கஅபாவைச் சுற்றிலும் முந்நூற்று அறுபது சிலைகள் இருந்த நிலையில், நபி(ஸல்) அவர்கள் மக்காவில் நுழைந்தார்கள். தம் கரத்திலிருந்த குச்சியால் அவற்றைக் குத்தியபடி, 'சத்தியம் வந்தது அசத்தியம் அழிந்தது. அசத்தியம் அழியக்கூடியதே!"என்றும்'உண்மை வந்துவிட்டது அசத்தியம் புதிதாக ஒன்றையும் செய்துவிடவுமில்லை (இனி) அது மீண்டும் ஒருமுறை பிறக்கப்போவதுமில்லை'' என்றும் கூறலானார்கள்.

## 17:85 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) உயிர் (ரூஹ்) குறித்து உங்களிடம் அவர்கள் வினவுகிறார்கள் (எனும் 17:85 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4721. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு வேளாண்பூமியில் (பேரீச்சந்தோப்பில்) இருந்தேன். அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றை (கையில்) ஊன்றியிருந்தார்கள். அப்போது யூதர்கள் (அவ்வழியே) சென்றார்கள். அவர்களில் ஒருவர் இன்னொருவரிடம், (நபியவர்களைச் சுட்டிக்காட்டி)'இவரிடம் உயிரைப் பற்றிக் கேளுங்கள்'' என்றார். மற்றவர், 'உங்களுக்கு அதற்கான தேவை என்ன ஏற்பட்டது?' என்று அவரிடம் கேட்டார். இன்னொருவர்'நீங்கள் விரும்பாத ஒன்றை அவர் உங்களிடம் சொல்லிவிடக்கூடாது. (எனவே, அவரிடம் நீங்கள் கேட்க வேண்டாம்)'' என்றார். பின்னர், (அனைவரும் சேர்ந்து)'அவரிடம் கேளுங்கள்'' என்றனர். அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் உயிரை(ரூஹைப்) பற்றிக் கேட்டனர். நபி(ஸல்) அவர்கள் மௌனமாக இருந்துவிட்டார்கள். அவர்களுக்கு எந்த பதிலும் அளிக்கவில்லை. அப்போது நான், அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்படுகிறது என அறிந்துகொண்டேன். எனவே, நான் என்னுடைய இடத்திலேயே எழுந்து நின்று கொண்டேன். வேத அறிவிப்பு (வஹீ) இறங்கியபோது, அவர்கள், '(நபியே!) உயிரைப் பற்றி அவர்கள் உங்களிடம் கேட்கின்றனர். சொல்லுங்கள்: உயிர் என்பது என் இறைவனின் கட்டளையினால் உருவானது. உங்களுக்கு ஞானத்தில் சிறிதளவே கொடுக்கப்பட்டுள்ளது'' எனும் (திருக்குர்ஆன் 17:85 வது) இறைவசனத்தைக் கூறினார்கள்.

## 17:110 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) உங்கள் தொழுகையில் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம். மிகவும் தாழ்த்தவும் வேண்டாம். இவ்விரண்டுக்குமிடையில் ஒரு வழியை (-மிதமான தொனியை-)க் கடைப்பிடியுங்கள் (எனும் 17:110 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4722. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
இப்னு அப்பாஸ்(ரலி), '(நபியே!)'' உங்கள் தொழுகையில் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம். மிகவும் தாழ்த்தவும் வேண்டாம்'' எனும் (திருக்குர்ஆன் 17:110 வது) இறைவசனம் தொடர்பாகக் கூறினார்கள்:'இறைத்தூதர்(ஸல) அவர்கள் (இஸ்லாத்தின் ஆரம்பக் காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் கருதி) மக்காவில் தம் தோழர்களுடன் மறைந்து தொழும்போது குர்ஆனை சப்தமிட்டு ஓதுவார்கள். அதை இணைவைப்பவர்கள் கேட்கும்போது, குர்ஆனையும் அதை இறக்கியருளிய இறைவனையும், அதை (மக்கள் முன்) கொண்டு வந்த (நபிய)வர்களையும் ஏசுவார்கள். எனவே, உயர்ந்தவனாகிய அல்லாஹ் தன் நபியிடம்'நீங்கள் உங்கள் தொழுகையில் குரலை உயர்த்தாதீர்கள். அதாவது உரத்த குரலில் ஓதாதீர்கள்.

(ஏனெனில்,) இணைவைப்போர் அதைக் கேட்டுவிட்டு குர்ஆனை ஏசுவார்கள். (அதற்காக உடன் தொழுகின்ற) உங்கள் தோழர்களுக்கே கேட்காதவாறு ஒரேயடியாகக் குரலைத் தாழ்த்தவும் செய்யாதீர்கள். இவ்விரண்டுக்குமிடையே, மிதமான போக்கைக் கைக்கொள்ளுங்கள்'' என்று கூறினான்.

ஹதீஸ் 4723. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

"இந்த (திருக்குர்ஆன் 17:110 வது) வசனம், பிரார்த்தனை (துஆ எனும் வேண்டுதல்) தொடர்பாக அருளப்பெற்றது'' என ஆயிஷா(ரலி) கூறினார்.

## (18)'அல்கஹ்ஃப்' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 18:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள) தக்ரிளுஹும் எனும் சொல்லுக்கு'அவர்களைவிட்டு விடுகிறது' என்று பொருள். (இதற்குக்'கடந்து செல்கிறது' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)

(திருக்குர்ஆன் 18:34 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஸமர்' எனும் சொல் மற்றோர் ஓதல் முறைப்படி'ஸுமுர்' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த)'ஸுமுர்' எனும் சொல்லுக்குத்'தங்கமும் வெள்ளியும்' என்று பொருள். முஜாஹித்(ரஹ்) அல்லாதோர், `('ஸுமுர்' என்பது)'ஸமர்' என்பதன் பன்மையாகும்'' என்று கூறுகிறார்கள்.

(திருக்குர்ஆன் 18:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பாம்உன்' எனும் சொல்லுக்கு'அழித்துக்கொள்ளக்கூடியவர்' என்று பொருளாகும்.'அஸஃப்' எனும் சொல்லுக்குக்'கவலை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கஹ்ஃப்' எனும் சொல்லுக்கு'மலைக் குகை' என்று பொருள்.'அர்ரக்கீம்' எனும் சொல்லுக்கு'எழுதப்பட்டது' என்று பொருள். (இதற்குக்'கல்வெட்டு' என்ற பொருளும் உண்டு..)

"அவர்களின் உள்ளங்களை நாம் திடப்படுத்தினோம்'' எனும் (திருக்குர்ஆன் 18:14 வது வசனத்) தொடரின் கருத்தாவது: பொறுமையை அவர்களுக்கு வழங்கினோம். (திருக்குர்ஆன் 28:10 வது வசனத்தில் வரும்)'' அவரின் இதயத்தை நாம் உறுதிப்படுத்தியிராவிட்டால்'' என்ற தொடருக்கும் இதே பொருள்தான்.

(திருக்குர்ஆன் 18:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷ(த்)தத்' எனும் சொல்லுக்கு'எல்லை மீறுதல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்வஸீத்' எனும் சொல்லுக்கு'முற்றம்' என்று பொருள். இதற்குத்'தலைவாயில்' என்ற பொருளும் உண்டு. இதன் பன்மை:'வஸாயித்' மற்றும்'வுஸுத்'. (இதே சொல்லிலிருந்து வந்த 104:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஃஸதா' எனும் சொல்லுக்கு'மூடப்பட்டது' என்று பொருள். (இதன் வினைச்சொற்களான)'ஆஸத்' மற்றும்'அவ்ஸத' ஆகியவற்றுக்குக்'கதவை மூடினான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்கா' எனும் சொல்லுக்கு'அதிகமான' என்று பொருள். ஹலால் (அனுமதிக்கப்பட்டது) என்றும் (இதற்குப் பொருள்) கூறப்படுகிறது.'அதிகம் விளையக்கூடியது' என்றும் (பொருள்) சொல்லப்படுகிறது.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 18:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வலம் தழ்லிம்' எனும் சொல்லுக்கு, `அது குறைக்கவில்லை' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) சொன்னதாக ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 18:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ரக்கீம்' என்பது'ஓர் ஈயப் பலகை'யைக் குறிக்கிறது. அந்தப் பலகையில் குகையிலிருந்தவர்களின் பெயர்களை அவர்களின் ஆட்சியாளர் பொறிக்கச் செய்து அதனைத் தம் பெட்டகத்தில் போட்டு வைத்திருந்தார்.
(திருக்குர்ஆன் 18:11 வது வசனத்திலுள்ள'அவர்களின் காதுகளை நாம் தட்டிக் கொடுத்தோம்' என்பதற்கு)' எனவே, அல்லாஹ் அவர்களின் காதுகளைத் தட்டிக் கொடுத்தான். எனவே, அவர்கள் உறங்கிவிட்டார்கள்' (என்று பொருள்.)
(திருக்குர்ஆன் 18:58 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மவ்யில்' எனும் சொல்லுக்குத்'தப்புமிடம்' என்று பொருள். இதன் வினைச் சொற்களாவன: அலத், தஇலு.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(இச்சொல்லுக்கு)'காப்பகம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:101 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா யஸ்தத்தீஊன சம்ஆ' (அவர்கள் செவியுறும் சக்தியற்றுவிட்டார்கள்) என்பதற்கு'அவர்கள் விளங்கிக் கொள்ளமாட்டார்கள்' என்று பொருள்.

## 18:54 வது திருக்குர்ஆன் வசனம்

"மனிதன் அதிகம் தர்க்கம் செய்பவனாக இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 18:54 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4724. அலீ(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடமும், ஃபாத்திமாவிடமும் இரவு நேரத்தில் வந்து, 'நீங்கள் இருவரும் ("தஹஜ்ஜுத்") தொழவில்லையா?' என்று கேட்டார்கள்.
(திருக்குர்ஆன் 18:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரஜ்மம் பில் ஃகைப்' (மறைவான விஷயங்களைத் தாங்கள் கண்டுபிடித்துவிட்டவர்களைத் தாங்கள் கண்டுபிடித்துவிட்டவர்களைப் போல்) என்பதன் கருத்தாவது: (குகைவாசிகள் எத்தனைபேர் என்பது பற்றிய உண்மை நிலை) அவர்களுக்குத் தென்படவில்லை.
(திருக்குர்ஆன் 18:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபுருத்' எனும் சொல்லுக்குக்'கவலைக்குரியது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சுராதிக்' எனும் சொல்லுக்கு'(நரகத்தின் ஜுவாலை) கூடாரங்களையும், கூடாரங்களால் சூழப்பட்ட அறையையும் போன்று (அவர்களைச் சூழ்ந்து கொள்ளும்)' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஹாவிருஹு' (அவனிடம் பேசிக்கொண்டிருக்கிறான்) எனும் சொல்'முஹாவரா' (உரையாடல்) எனும் வேர்ச் சொல்லிருந்து பிறந்ததாகும்.
(திருக்குர்ஆன் 18:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லாகின்ன ஹுவல்லாஹு ரப்பீ' எனும் தொடருக்கு'லாகின் அன ஹுவல்லாஹு ரப்பீ' (நிச்சயமாக அந்த அல்லாஹ்தான் என்னைப் படைத்துப் பராமரிப்பவன் என்று நான் உறுதியாக நம்பியிருக்கிறேன்) என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ம்லாலஹுமா எனும் சொல்லுக்கு'அவ்விரண்டுக்கும் இடையே' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸலக்' எனும் சொல்லுக்கு'யாரும் காலூன்றி நிற்கமுடியாத அளவுக்கு வழுவழுப்பானது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் வலாயா' (அதிகாரம்) எனும் சொல், 'அல்வல்யு' எனும் வேர்ச் சொல்லிருந்து பிறந்ததாகும். (இதே வசனத்திலுள்ள)'உக்பன்' எனும் சொல்லுக்கு ஆம்பத், உக்பா, உக்பத் ஆகிய சொற்களும் ஒன்றாகும். இவற்றுக்கு'முடிவு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:55 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'குபுல்' மற்றும் (இன்ன பிற ஓதல் முறைகளில் வந்துள்ள) கபல், கிபல் ஆகிய சொற்களுக்குக்'(கண்) எதிரில்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 18:56 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லியுத்திஹளூ' எனும் சொல்லுக்கு'வீழ்த்தி விடுவதற்காக' என்று பொருள். (இச்சொல்)'வழுக்கிவிடுதல்' எனும் பொருள் கொண்ட'தஹள்' எனும் வேர்ச் சொல்லிருந்து வந்ததாகும்.

## 18:60 வது திருக்குர்ஆன் வசனம்

மூஸா தம் பணியாளரிடம்'நான் இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்தை அடைந்தே தீருவேன் அல்லது (இப்படியே) நீண்ட காலம் நடந்து கொண்டேயிருப்பேன்' என்று கூறியதை (நபியே!) நினைவுகூருக! (எனும் 18:60 வது இறைவசனம்.)
"இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹுகுப்' எனும் சொல்லுக்கு'(நீண்ட) காலம்' என்று பொருள். இதன் பன்மை'அஹ்காப்'.
ஹதீஸ் 4725. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்'களிர் (அலை) அவர்களின் தோழரான மூஸா, இஸ்ரவேலர்களின் இறைத்தூதரான மூஸா(அலை) அல்லர். (அவா வேறொரு மூஸா) என்று (பேச்சாளரான) நவ்ஃப் அல்பிகாலி3 கூறுகிறாரே!"என்று கேட்டேன்.
அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி), 'அல்லாஹ்வின் விரோதி பொய் உரைத்துவிட்டார். உபை இப்னு கஅப்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் செவிமடுத்ததாக எமக்கு அறிவித்தார்கள்.
(ஒரு முறை) மூஸா (அலை) அவர்கள், பனு இஸ்ராயீல்களிடையே நின்று சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம், 'மக்களிலேயே மிகவும் அறிந்தவர் யார்?' என்று வினவப்பட்டது. அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'நானே' ' என்று பதிலளித்துவிட்டார்கள்.
எனவே, அவர்களை அல்லாஹ் கண்டித்தான். ஏனெனில் மூஸா(அலை) அவர்கள்'(இதைப் பற்றிய) அறிவு அல்லாஹ்வுக்கே உண்டு' ' என்று சொல்லாமல்விட்டுவிட்டார்கள். எனவே, அல்லாஹ் மூஸா(அலை) அவர்களுக்கு, '(இல்லை) இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்தில் என் அடியார்களில் ஒருவர் இருக்கிறார். அவர் உம்மைவிட அதிகமாக அறிந்தவர்' ' என்று அறிவித்தான்.
மூஸா(அலை) அவர்கள், 'என் இறைவா! அவரைச் சந்திப்பதற்கு எனக்கு வழி எப்படி?' என்று கேட்டார்கள்.
அதற்கு அல்லாஹ், 'நீங்கள் ஒரு மீனைப் பிடித்து அதை ஒரு (ஈச்சங்) கூடையில் போட்டுக் கொள்ளுங்கள். (அப்படியே கடலோரமாக நடந்து பயணம் செய்யுங்கள்!) நீங்கள் எங்கே அந்த மீனைத் தவறவிடுகிறீர்களோ அங்கேதான் அவர் இருப்பார்' ' என்று சொன்னான்.
எனவே, மூஸா(அலை) அவர்கள் ஒரு கூடையில் மீனை எடுத்துக்கொண்டு நடந்தார்கள். தம்முடன் தம் உதவியாளர் யூஷஉ இப்னு நூனையும் அழைத்துக்கொண்டார்கள். இருவரும் (இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்திற்கு அருகிலிருந்த) பாறைக்கு வந்து சேர்ந்தபோது அங்கு இருவரும் தலைவைத்து உறங்கினார்கள்.
கூடையிலிருந்த அந்த மீன் கூடையிலிருந்து குதித்து வெளியேறிக் கடலில் விழுந்தது. கடலில் (சுரங்கம் போன்று) பாதை அமைத்துக் கொண்டு (செல்லத் தொடங்கி)விட்டது. நீரோட்டத்தை மீனைவிட்டு அல்லாஹ் தடுத்துவிடவே அதைச் சுற்றி ஒரு வளையம் போல் நீர் ஆகிவிட்டது.
மூஸா(அலை) அவர்கள் (தூக்கத்திலிருந்து) விழித்தபோது அன்னாருடைய தோழர் (யூஷஉ) மீனைப் பற்றி அன்னாருக்குத் தெரிவிக்க மறந்துவிட்டார். எஞ்சிய பகலிலும் இரவிலும் அவர்கள்'(தம் பயணத்தில்) தொடர்ந்து) நடந்தனர். மறு நாள் ஆனபோது மூஸா தம் உதவியாளரை நோக்கி, 'நம்முடைய காலைச் சிற்றுண்டியைக் கொண்டு வாரும்! நாம்

நம்முடைய இந்தப் பயணத்தில் மிகவும் களைப்படைந்துவிட்டோம்'' என்று கூறினார்கள். (திருக்குர்ஆன் 18:62)
அல்லாஹ் தமக்குக் கட்டளையிட்ட (இடத்)தை தாண்டிச் செல்லும் வரை, மூஸா(அலை) அவர்கள் களைப்பை உணரவில்லை.
அவர்களின் உதவியாளர்'நாம் அந்தப் பாறையில் (ஓய்வெடுக்க) ஒதுங்கினோமே பார்த்தீர்களா? அங்கேதான் நான் மீனை மறந்து (தவறவிட்டு) விட்டேன். அதனை நான் (உங்களுக்குக்) கூறுவதை ஷைத்தான் தான் எனக்கு மறக்கடித்துவிட்டான். (அவ்விடத்தில் அது, கடலில் செல்ல) விந்ததையான விதத்தில் தன் வழியை அமைத்துக் கொண்டது'' என்று கூறினார். (திருக்குர்ஆன் 18:63)
“அது மீனுக்குப் பாதையாகவும் மூஸா(அலை) அவர்களுக்கும் அன்னாருடைய உதவியாளருக்கும் வியப்பாகவும் அமைந்தது.
அதற்கு மூஸா(அலை) அவர்கள்'அதுதான் நாம் தேடிக் கொண்டிருந்த இடம்'' என்று கூறினார்கள். உடனே, அவர்களிருவரும் தங்கள் அடிச் சுவடுகளைப் பின்பற்றி வந்த வழியே திரும்பிச் சென்றார்கள். இறுதியில் அந்தப் பாறைக்கு இருவரும் வந்துசேர்ந்தார்கள். அங்கே தம்மை முழுவதுமாக ஆடையால் மூடிக்கொண்டபடி ஒருவர்(களிர்) இருந்தார். மூஸா(அலை) அவர்கள் அவருக்கு சலாம் (முகமன்) சொல்ல, அம்மனிதர் (களிர்)'உங்களுடைய (இந்த) வட்டாரத்தில் (அறியப்படாத) சலாம் (உங்களுக்கு மட்டும்) எவ்வாறு (தெரியும்? நீங்கள் யார்)?' என்று வினவினார்.
அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'நானே மூஸா'' என்று பதிலளித்தார்கள். அம்மனிதர், 'பனு இஸ்ராயீல்களின் (இறைத்தூதரான) மூஸாவா?' என்று கேட்டார். மூஸா(அலை) அவர்கள், 'ஆம்' என்று பதிலளித்துவிட்டு, 'உங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத் தருவதற்காக உங்களிடம் வந்துள்ளேன்'' என்று கூறினார்கள்.
அதற்கு களிர் (அலை) அவர்கள் மூஸா(அலை) அவர்களிடம், 'உங்களால் என்னுடன் பொறுமையுடன் இருக்க முடியாது. மூஸாவே! அல்லாஹ் எனக்குக் கற்றுத் தந்த ஓர் அறிவு என்னிடம் உள்ளது. அதை நீங்கள் அறியமாட்டீர்கள் அல்லாஹ் உங்களுக்கும் கற்றுத்தந்த ஓர் அறிவு உங்களிடம் உள்ளது. அதை நான் அறியமாட்டேன்'' என்று கூறினார்கள்.
அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'அல்லாஹ் நாடினால் என்னை நீங்கள் பொறுமையாளனாகக் காண்பீர்கள். எந்த விஷயத்திலும் உங்களுக்கு நான் மாறுசெய்யமாட்டேன்'' என்று கூறினார்கள். அதற்கு களிர்(அலை) அவர்கள் மூஸா(அலை) அவர்களிடம், 'நீர் என்னைப் பின்தொடர்ந்து வருவதாயின், எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் நானாக உமக்கு அதனை அறிவிக்கும் வரையில் நீர் என்னிடம் (அதைப் பற்றி ஏன், எதற்கு என்று விளக்கம்) கேட்கலாகாது'' என்று கூறினார்.
பிறகு (மூஸா களிர்) இருவரும் கடற்கரையோரமாக நடந்து சென்றார்கள். அப்போது மரக்கலம் ஒன்று அவர்களைக் கடந்து சென்றது. அப்போது அவர்கள் (மூவரும்) தங்களை ஏற்றிச் செல்லுமாறு மரக்கலக்காரர்களிடம் கோரினர். (ஏழைகளான மரக்கல உரிமையாளர்கள்) களிர்(அலை) அவர்களை அடையாளம் கண்டுகொண்டு அவர்களை(த் தங்கள் மரக்கலத்தில்) கட்டணம் ஏதுமின்றி ஏற்றிக்கொண்டனர்.
இருவரும் மரக்கலத்தில் ஏறியதுதான் தாமதம் களிர்(அலை) அவர்கள் வாய்ச்சி ஒன்றால் மரக்கலத்தின் (அடித்தளப்) பலகைகளில் ஒன்றைக் கழற்றி (அந்த இடத்தில் முளைக்குச்சியை அறைத்து)விட்டார்கள். (இதைக் கண்ட) மூஸா(அலை) அவர்கள் திடுக்குற்றார்கள்.
உடனே மூஸா(அலை) அவர்கள், களிரை நோக்கி, 'கட்டணம் இல்லாமலேயே நம்மை ஏற்றிக்கொண்ட மக்களின் மரக்கலத்தை வேண்டுமென்றே ஓட்டையாக்கி விட்டீர்களே! இதில்

பயணம் செய்பவர்களை மூழ்கடிக்கவா (இப்படிச் செய்தீர்கள்)? நீங்கள் பெரிய (அபாயமான) செயலைச் செய்து விட்டீர்கள்' ' என்று கூறினார்கள்.
அதற்கு களிர், 'என்னுடன் உங்களால் பொறுமையுடன் இருக்க முடியாது என்று நான் கூறவில்லையா?' என்று கேட்டார்கள். அதற்கு மூஸா(அலை) அவர்கள், நான் மறந்து போனதற்காக என்னைத் தண்டித்து, என்னைச் சிரமத்திற்குள்ளாக்கிவிடாதீர்கள்' ' என்று கூறினார்கள்.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: முதல் முறையில் மூஸா(அலை) அவர்கள் பொறுமையிழந்தது மறதியினாலாகும்.
(அப்போது) சிட்டுக்குருவியொன்று வந்து மரக்கலத்தின் விளிம்பில் மீது விழுந்து, தன் (சின்னஞ்சிறு அலகால்) கடலில் ஒரு முறை உறிஞ்சி (நீர் அருந்தி)யது. அப்போது மூஸா(அலை) அவர்களிடம் களிர்(அலை) அவர்கள்'உம்முடைய அறிவும், என்னுடைய அறிவும் அல்லாஹ்வின் அறிவோடு ஒப்பிடுகையில், இந்தச் சிட்டுக்குருவி தன் அலகால் கடலிலிருந்து எடுத்த (நீரின்) அளவுதான் (நம் அறிவு)' ' என்று கூறினார்கள்.
பிறகு இருவரும் மரக்கலத்திலிருந்து வெளியேறி, கடலோரமாக நடந்து கொண்டிருந்தபோது சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த ஒரு சிறுவனைக் கண்ட களிர்(அலை) அவர்கள், அச்சிறுவனின் தலையைப் பிடித்துத் திரும்க் கொன்றுவிட்டார்கள். உடனே மூஸா(அலை) அவர்கள், களிர்(அலை) அவர்களிடமும், 'ஒரு பாவமும் அறியாத (பச்சிளம்) உயிரையா நீங்கள் பறித்து விட்டீர்கள்? அவன் வேறெந்த உயிரையும் பறிக்கவில்லையே! நீங்கள் மிகக் கேடான செயலைச் செய்துவிட்டீர்கள்!''என்று கூறினார்கள். அதற்கு களிர்(அலை) அவர்கள், 'நீங்கள் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று (முன்பே) உங்களுக்கு நான் சொல்லவில்லையா?' என்று கேட்டார்கள்.
-(அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்)'இம்முறை களிர்(அலை) அவர்கள் கூறியது முதல்முறை கூறியதை விட (சற்று)க் கடுமையானதாகும்' ' என்று கூறினார்கள். 4
அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'இதற்குப் பின்னால் நான் உங்களிடம் ஏதாவது (விளக்கம்) கேட்டால் என்னை உங்களுடன் சேர்த்துக்கொள்ளாதீர்கள். என்னிடமிருந்து (பிரிந்து செல்ல) உங்களுக்குத் தக்க காரணம் கிடைத்துவிட்டது' ' என்றார்கள்.
தொடர்ந்து இருவரும் நடந்தார்கள். இறுதியில் ஓர் ஊருக்கு வந்தார்கள். அந்த ஊர் மக்களிடம் உணவு கேட்டார்கள். ஆனால், அவர்கள் அவ்விருவரையும் உபசரிக்க மறுத்துவிட்டார்கள். (இந்நிலையில்) அந்த ஊரில் சாய்ந்தபடி கீழே விழவிருந்த சுவர் ஒன்றை அவர்கள் இருவரும் கண்டார்கள். (அதைப் பார்த்த) உடன் களிர்(அலை) அவர்கள் அந்தச் சுவரைத் தம் கரத்தால் செப்பனிட்டார்கள்.
அப்போது மூஸா(அலை) அவர்கள், 'இந்த மக்களிடம் நாம் வந்து(உணவு கேட்டு)ம், இவர்கள் நமக்கு உணவளிக்கவுமில்லை உபசரிக்கவுமில்லை. (அவ்வாறிருந்தும் வேண்டுமென்றே நீங்கள் அவர்களின் சுவரைச் செப்பனிட்டுள்ளீர்கள்.) நீங்கள் நினைத்திருந்தால் அதற்குக் கூலி பெற்றுக் கொண்டிருக்கலாமே!''என்றார்கள்.
களிர்(அலை) அவர்கள், 'இதுதான் நானும் நீங்களும் பிரியவேண்டிய நேரம். உங்களால் பொறுமையாக இருக்க முடியாத (இம்மூன்று) விஷயங்களின் விளக்கத்தை நான் உங்களுக்கு (இப்போது) அறிவித்துவிடுகிறேன்' ' என்று கூறினார்கள்.
(இந்த நிகர்ச்சியைக் கூறி முடித்த பின்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'மூஸா பொறுமையாக இருந்திருப்பாரேயானால் அவ்விருவர் பற்றி(ய நிறைய செய்திகளை) நமக்கு இறைவன் அறிவித்திருப்பான் என்று நாம் விரும்பினோம்' ' என்று கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), (திருக்குர்ஆன் 18:79 வது வசனத்தின் மூலத்தில்)'வகான அமாமஹும் மலிக்குன் யஃகுஃது குல்ல சஃபீனத்தின் ஸாலிஹத்தின் ஃகஸ்பா'' என்று ஓதுவார்கள். (பொருள்: அவர்களுக்கு முன்பே ஒரு மன்னன் ஆளும் பகுதி இருந்தது. அவன் பழுதில்லா நல்ல மரக்கலங்கள் ஒவ்வொன்றையும் அபகரித்துக் கொண்டிருந்தான்.) மேலும், (திருக்குர்ஆன் 18:80 வது வசனத்தின் மூலத்தில்)'வஅம்மல் ஃகுலாமு ஃபகான காஃபிரன் வகான அபவாஹு முஃமினைனி'' என்று ஓதுவார்கள். (பொருள்: அச்சிறுவன் இறைமறுப்பாளனாகவும் அவனுடைய தாய் தந்தை நம்பிக்கையாளர்களாகவும் இருந்தனர்"5)

"பிறகு இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்தை அவ்விருவரும் அடைந்தபோது, தங்கள் மீனை மறந்துவிட்டார்கள். அது கடலில் (சுரங்கம் போல்) பாதை அமைத்துக் கொண்டு (தப்பித்துச் சென்று)விட்டது'' எனும் (திருக்குர்ஆன் 18:61 வது) இறைவசனம்.
இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'சரப்' எனும் சொல்லுக்கு'வழி' என்று பொருள். (அதன் எதிர்கால வினைச் சொல்லான)'யஸ்ருபு' என்பதற்கு'நடப்பான்' என்று பொருள். இச்சொல்லிலிருந்துதான் (திருக்குர்ஆன் 13:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சாரிபும் பின்னஹார்' (பகலில் சுற்றித் திரிபவன்) எனும் சொற்றொடர் வந்தது.
ஹதீஸ் 4726. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
நாங்கள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் இல்லத்தில் இருந்துகொண்டிருந்தபோது அவர்கள், `என்னிடம் (ஏதேனும் விளக்கம் கேட்க நினைத்தால்) கேளுங்கள்!"என்றார்கள்.
நான், `அபூ அப்பாஸ் அவர்களே!"அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்! (இராக்கிலுள்ள)'கூஃபா'நகரில் கதை சொல்லும் மனிதர் ஒருவர் இருக்கிறார். அவருக்கு'நவ்ஃப்' என்று சொல்லப்படும். அவர், (களிர்(அலை) அவர்களின் தோழரான) மூஸா(அலை) அவர்கள் பனு இஸ்ராயீல்களின் (இறைத்தூதரான) மூஸா(அலை) அவர்கள் அல்லர் (அவர் வேறொரு மூஸா தாம்)' என்று கூறுகிறார்'' என்று சொன்னேன்.
அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: அல்லாஹ்வின் விரோதி பொய் சொல்லிவிட்டார். உபை இப்னு கஅப்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து எமக்கு (பின்வருமாறு) அறிவித்தார்கள்.
ஒருநாள் இறைத்தூதர் மூஸா(அலை) அவர்கள் (தம் சமுதாய) மக்களுக்கு, (இறைவன் அவர்களுக்கு வழங்கிய அருட்கொடைகளை) நினைவூட்டிக் கண்கள் ததும்ப இதயங்கள் நெகிழ்ந்துருகும் அளவுக்கு உபதேசித்துவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். அப்போது அவர்களிடம் ஒருவர் வந்து சேர்ந்து, `அல்லாஹ்வின் தூதரே! பூமியில் உங்களைவிட அறிந்தவர் எவரேனும் உண்டா?' என்று கேட்டார். மூஸா(அலை) அவர்கள், `இல்லை'' என்று பதிலளித்தார்கள். எனவே, மூஸா(அலை) அவர்களை அல்லாஹ் கண்டித்தான். ஏனெனில், மூஸா(அலை) அவர்கள்'(இதைப் பற்றிய) அறிவு அல்லாஹ்வுக்கே உண்டு'' என பதிலளிக்காமல்விட்டுவிட்டார்கள். எனவே, மூஸா(அலை) அவர்களிடம், `இல்லை. (உம்மைவிட அறிந்தவர் ஒருவர் பூமியில் இருக்கிறார்)'' என்று (அல்லாஹ்வின் தரப்பிலிருந்து) சொல்லப்பட்டது. மூஸா(அலை) அவர்கள், `என் இறைவா! எங்கே (அவர் இருக்கிறார்)?' என்று கேட்க, இறைவன், `இரண்டு கடல்கள் சங்கமிக்குமிடத்தில் (அவர் இருக்கிறார்)'' என்றான்.
மூஸா(அலை) அவர்கள், `என் இறைவா! நான் அவரைப் புரிந்துகொள்ள அடையாளமொன்றை எனக்கு ஏற்படுத்துவாயாக!"என்று கேட்டார்கள்.
அறிவிப்பாளர் இப்னு ஜுரைஜ்(ரஹ்) கூறினார்:
"மீன் உங்களைவிட்டுப் பிரிகிற இடத்தில் (அவர் இருப்பார்) என அல்லாஹ் கூறினான்'' என்று அறிவிப்பாளர் அம்ர் இப்னு தீனார் என்னிடம் கூறினார்கள்.

“உயிரற்ற மீன் ஒன்றை எடுத்துச் செல்லுங்கள் அதற்கு உயிரூட்டப்படும் இடமே (அவர் இருக்கும் இடமாகும்) என அல்லாஹ் கூறினான்‘` என்று யஅலா இப்னு முஸ்லிம்(ரஹ்) என்னிடம் கூறினார்கள்.
ஆக, மூஸா(அலை) அவர்கள் ஒரு மீனை எடுத்துக் கூடையில் போட்டுக்கொண்டு (‘யூஷஉ பின் நூன்′ எனும்) தம் உதவியாளரிடம், `மீன் உம்மைவிட்டுப் பிரிந்துவிடும் இடத்தை நீர் எனக்குத் தெரிவிக்கவேண்டும் என்பதைத் தவிர வேறெந்தச் சிரமத்தையும் உமக்கு நான் தரமாட்டேன்‘` என்றார்கள்.
உதவியாளர், `(எனக்கு) நீங்கள் அதிகமான சிரமத்தைத் தரவில்லை‘` என்றார்.′மூஸா தம் உதவியாளரை நோக்கி.!″என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 18:60 வது) இறைவசனம் இதையே குறிப்பிடுகிறது. உதவியாளர் என்பது யூஷஉ இப்னு நூனைக் குறிக்கிறது. அவரின் பெயர் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் இல்லை.
மூஸா(அலை) அவர்கள் ஈரப்பசை மிகுந்த ஓரிடத்தில் பாறையொன்றின் நிழலில் இருந்து கொண்டிருந்தபோது அந்த மீன் (உயிர் பெற்றுக் கடலில்) துள்ளிக் குதித்தது. அப்போது மூஸா(அலை) அவர்கள் உறங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களின் உதவியாளர், `தாமாக விழித்தெழும் வரை நான் இவர்களை எழுப்பமாட்டேன்‘` என்று சொல்லிக்கொண்டார். இறுதியில் (மீன் உயிர் பெற்றுவிட்ட செய்தியை) அவர்களுக்குத் தெரிவிக்க மறந்துவிட்டார். மீன் (கூடையிலிருந்து) துள்ளிக் குதித்துக் கடலினுள் நுழைந்துகொண்டது. மீனின் வழியில் குறுக்கிடாதவாறு நீரோட்டத்தை அல்லாஹ் தடுத்துவிட, மீன் சென்ற அடையாளம் கல்லில் பதிந்தது போலானது.
அறிவிப்பாளர் இப்னு ஜுரைஜ்(ரஹ்) கூறினார்.
என்னிடம் அம்ர் இப்னு தீனார்(ரஹ்), `அந்த மீன் சென்ற (வழியின்) அடையாளம் வளையம் போலாம்விட்டது‘` என்று கூறியவாறு தம்மிரு பெருவிரல்களையும் அவற்றை அடுத்துள்ள இரண்டு (ஆட்காட்டி) விரல்களையும் வளையமிட்டு இவ்வாறெனக் காட்டினார்கள்.
(மீதமிருந்த இரவும் பகலும் அவர்கள் நடந்து சென்றுகொண்டேயிருந்தார்கள். மறுநாள் புலர்ந்தபோது, மூஸா(அலை) அவர்கள் தம் உதவியாளரிடம், `நம்முடைய காலைச் சிற்றுண்டியைக் கொண்டு வா!) நாம் நம்முடைய இந்தப் பயணத்தில் மிகவும் களைப்படைந்து விட்டோம்‘` என்று கூறினார்கள்.
அதற்கு உதவியாளர், (மூஸா(அலை) அவர்களிடம்,)‘` அல்லாஹ் உங்களிடமிருந்து களைப்பை அகற்றிவிட்டான்‘` என்று கூறினார்.
இத்தகல் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் இல்லை.
உடனே அவர்கள் இருவரும் (வந்த வழியே) திரும்பியபோது களிர்(அலை) அவர்களைக் கண்டார்கள்.
அறிவிப்பாளர் உஸ்மான் இப்னு அபீ சுலைமான்(ரஹ்), `களிர்(அலை) அவர்கள் கடல் நடுவி(லிருந்த தீவி)ல் பசுமையான விரிப்பொன்றின் மீது விற்றிருந்ததார்கள்‘` என்று என்னிடம் கூறினார்கள்.
(தொடர்ந்து) ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்:
களிர்(அலை) அவர்கள், தம்மை முழுவதுமாக ஆடையால் போர்த்தி மூடிக்கொண்டு (அமர்ந்து) இருந்தார்கள். ஆடையின் ஓர் ஓரத்தைத் தம் தலைக்குக் கீழேயும் வைத்திருந்தார்கள். அப்போது மூஸா (அலை) அவர்கள் அன்னாருக்கு சலாம் (முகமன்) கூற, அவர் (பதில் சலாம் கூறிவிட்டு) தம் முகத்திலிருந்து (அந்த ஆடையை) விலக்கி, `என்னுடைய இந்தப் பகுதியில் (இவ்வாறு) சலாம் கூறும் வழக்கமும் உண்டா? நீங்கள் யார்?′ என்று கேட்டார்கள்.
மூஸா(அலை) அவர்கள், `நானே மூஸா‘` என்று பதிலளித்தார்கள். அதற்கு களிர் (அலை) அவர்கள், `பனு இஸ்ராயீல்களின் (இறைத்தூதரான) மூஸாவா?′ என்று கேட்டார்கள்.

மூஸா(அலை) அவர்கள், 'ஆம்' என்றார்கள். அதற்கு களிர்(அலை) அவர்கள், 'என்ன விஷயம்?' எனக் கேட்க, 'உங்களுக்குக் கற்றுத்தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத்தருவதற்காக நான் (உங்களிடம்) வந்துள்ளேன்'' என்று மூஸா(அலை) அவர்கள் கூறினார்கள்.

"உங்கள் கரங்களிலுள்ள'தவ்ராத்' வேதமும் உங்களுக்கு இறைச்செய்தி (வஹி) வந்துகொண்டிருப்பதும் உங்களுக்குப் போதாதா? மூஸாவே! (அல்லாஹ் வழங்கியுள்ள) சில அறிவு என்னிடம் உள்ளது. அதை (எல்லாம்) அறிந்துகொள்வது உங்களுக்கு அவசியமாகாது. (இதைப் போன்றே அல்லாஹ் வழங்கியுள்ள) சில அறிவு உங்களிடம் உள்ளது. அதை (எல்லாம்) அறிந்துகொள்வது எனக்கு முறையாகாது'' என்று களிர் (அலை) அவர்கள் கூறினார்கள்.

அப்போது பறவை ஒன்று (பறந்து வந்து) தன் அலகால் கடலிலிருந்து (நீரை உறிஞ்சி) எடுத்தது.

களிர் (அலை) அவர்கள் (மூஸா(அலை) அவர்களிடம், 'அல்லாஹ்வின் மீதாணையாக! இந்தப் பறவை தன் அலகால் இந்தக் கடலிலிருந்து எவ்வளவு (நீரை) எடுத்திருக்குமோ அந்த அளவுதான் அல்லாஹ்வின் அறிவோடு ஒப்பிடுகையில் என அறிவும் உங்கள் அறிவும் உள்ளது'' என்றார்கள்.

அவர்கள் இருவரும் மரக்கலத்தில் (ஏறி) பயணம் செய்தபோது சிறு சிறு மரக்கலங்களைக் கண்டனர். அவை இக்கரைக்காரர்களை அக்கரைக்காரர்களிடம் ஏற்றிச் சென்று கொண்டிருந்தன. அவர்கள் களிர்(அலை) அவர்களை அடையாளம் புரிந்து கொண்டு, '(இவர்) அல்லாஹ்வின் நல்லடியார் இவரிடம் நாம் கட்டணம் கேட்கக்கூடாது'' என்று கூறினார்.

-அறிவிப்பாளர் ஒருவர் கூறுகிறார்:

நாங்கள் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களிடம், 'அவர் களிர்(அலை) அவர்கள் தாமே?' என்று கேட்டோம். ஸயீத்(ரஹ்), 'ஆம்' என்றார்கள்.

அப்போது களிர்(அலை) அவர்கள் (வாய்ச்சியின் உதவியால்) மரக் கலத்தின் ஒரு பலகையைக் கழற்றி அந்த இடத்தில் ஒரு முளைக்கச்சியை வைத்(து அறைந்)தார்கள். (இதைக் கண்ணுற்ற) மூஸா(அலை) அவர்கள் (களிர் அவர்களிடம்), '(கட்டணம் இல்லாமலேயே நம்மை ஏற்றி வந்தவர்களின்) மரக்கலத்தை ஓட்டையாக்கிவிட்டீர்களே! இதில் பயணம் செய்பவர்களை மூழ்கடிக்கவா (இப்படிச் செய்தீர்கள்)? நீங்கள் மாபெரும் (அபாயமான) செயலையன்றோ செய்து விட்டீர்கள்!"என்று கூறினார்கள்.

-'அபாயமானது' என்பதைக் குறிக்க மூலத்தில் ஆளப்பட்டுள்ள'இம்ர்' எனும் சொல்லுக்கு'வெறுக்கப்பட்டது' என்று முஜாஹித்(ரஹ்) (விளக்கம்) கூறினார்கள்.

களிர்(அலை) அவர்கள், 'உங்களால் என்னுடன் பொறுமையுடன் இருக்கமுடியாது என்று நான் உங்களுக்கு (ஏற்கெனவே) சொல்லவில்லையா?' என்று கேட்டார்கள்.

(களிர்(அலை) அவர்களின் நடவடிக்கைகள் குறித்து மூஸா(அலை) அவர்கள்) முதல் முறை பொறுமையிழந்தது மறதியினாலாகும். இரண்டாம் முறை பொறுமையிழந்தது சார்பு நிலை (ஷர்த்) ஆகும். மூன்றாம் முறை பொறுமையிழந்தது வேண்டுமென்றேயாகும். 8

மூஸா(அலை) அவர்கள், 'நான் மறந்துவிட்டதை வைத்து என்னைத் தண்டித்து என்னைச் சிரமத்திற்குள்ளாக்கிவிடாதீர்கள்!"என்று கூறினார்கள். பிறகு இருவரும் (நடந்தனர். வழியில்) ஒரு சிறுவனைச் சந்திக்கவே, களிர்(அலை) அவர்கள் அவனைக் கொன்றுவிட்டார்கள்.

அறிவிப்பாளர் யஅலா இப்னு முஸ்லிம்(ரஹ்) கூறினார்:

"களிர்(அலை) அவர்கள், (வழியில்) விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்களைக் கண்டார்கள். உடனே (அவர்களில்) இறை மறுப்பாளனாகவும் அழகாகவும் இருந்த சிறுவன் ஒருவனைப்

பிடித்துப் படுக்கவைத்துக் கத்தியால் அறுத்துவிட்டார்கள்'' என ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்கள்.
அப்போது மூஸா(அலை) அவர்கள் (களிர்(அலை) அவர்களிடம்,)'ஒரு பாவமும் அறியாத ஒரு (பச்சிளம்) உயிரையா நீங்கள் கொன்றுவிட்டீர்கள்? அவன் வேறெந்த உயிரையும் பறிக்கவில்லையே?' என்று கூறினார்கள்.
-('ஒரு பாவமும் அறியாத' என்பதைக் குறிக்க குர்ஆன் மூலத்தில் ஆளப்பட்டுள்ள)'ஸகிய்யத்' எனும் சொல்லை மற்றோர் ஓதல் முறையில் இப்னு அப்பாஸ்(ரலி), 'ஸாக்கியத்' என்று ஓதுவார்கள். அதற்குக்'கீழ்ப்படிகிறவன்' என்று பொருள். 'ஃகுலாமன் ஸாக்கியா' ('கீழ்ப்படியும் சிறுவன்') என்பதைப் போன்று.
மீண்டும் இருவரும் நடந்தார்கள். (இறுதியில் ஓர் ஊருக்கு வந்தார்கள்.)
அந்த ஊரில் கீழே விழவிருந்த சுவர் ஒன்றை இருவரும் கண்டார்கள். அதைக் கண்ட உடனே, களிர்(அலை) அவர்கள் அந்தச் சுவரை நிலை நிறுத்தினார்கள்.
-இதைக் கூறும்போது ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்), தம் கையால் இவ்வாறு என சாடைசெய்து காட்டினார்கள்.
யஅலா(ரஹ்) கூறினார்:
"களிர்(அலை) அவர்கள், தம் கையால் சுவரைத் தடவ, அது நேராக நின்று கொண்டது'' என்று ஸயீத் இப்னு ஜுபைர் கூறினார்கள் எனவே கருதுகிறேன்.
மூஸா(அலை) அவர்கள், 'நீங்கள் இதற்குக் கூலி வாங்கிக் கொண்டிருக்கலாமே'' என்றார்கள். 'நாம் சாப்பிடுவதற்காக(வாவது) கூலி வாங்கியிருக்கலாமே' என்று மூஸா(அலை) அவர்கள் கூறினார்கள் என ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்.
(திருக்குர்ஆன் 18:79 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வகான வராஅஹும் மலிக்' (அவர்களுக்கப்பால் ஓர் அரசன் இருந்தான்) என்பதை'வகான அமாமஹும் மலிக்' (அவர்களுக்கு முன்னால் ஓர் அரசன் இருந்தான்) என்று இப்னு அப்பாஸ்(ரலி) ஓதியுள்ளார்கள்.
ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அல்லாத மற்ற அறிவிப்பாளர்கள், 'அ(ம்மன்ன)வன் (பெயர்)'ஹுதத் இப்னு புதத்' என்றும், கொல்லப்பட்ட அச்சிறுவன் (பெயர்)'ஜைஸூர்' என்றும் கருதுகின்றனர்.
"அந்த மரக்கலம் கடலில் (கூலி) வேலை பார்க்கும் ஏழைகள் சிலருக்குரியது. அதனைப் பின்னப்படுத்தவே நான் அவ்வாறு செய்தேன். (ஏனென்றால், அம்மரக்கலம் செல்லும் மார்க்கத்தில்) இவர்களுக்கு முன் ஓர் (கொடுங்கோல்) அரசன் இருக்கிறான். அவன் (தான் காணும் நல்ல) மரக்கலங்கள் யாவற்றையும் அக்கிரமமாக அபகரித்துக் கொள்வான்'' என்று களிர்(அலை) அவர்கள் கூறினார்கள். (திருக்குர்ஆன் 18:79)
அதாவது பின்னமான மரக்கலங்கள் அவனைக் கடந்து சென்றால் அதிலுள்ள பின்னத்தைக் கண்டு அதனை அவன்விட்டு விடுவான். மரக்கலக்காரர்கள் அவனைக் கடந்து சென்றதும் அதனைப் பழுது பார்த்து பயன் பெற்றுக்கொள்வர். (அவர்களின் கையிலிருந்து மரக்கலம் போகாது.)
அறிவிப்பாளர்களில் சிலர், '(மரக்கலத்தில் ஏற்பட்ட) ஓட்டையைக் கண்ணாடியால் அவர்கள் அடைத்துவிட்டார்கள்' என்பர். வேறு சிலர், 'அதைத் தாரினால் அடைத்துவிட்டார்கள்'' என்பர்.
(கொல்லப்பட்ட சிறுவனுடைய விஷயம் என்னவெனில்,) அவனுடைய தாய் தந்தையர் இருவரும் (நல்ல) இறைநம்பிக்கையாளர்களாய் இருந்தனர். (ஆனால்,) அந்தச் சிறுவன் இறைமறுப்பாளனாக இருந்தான். அவன் (வாலிபத்தை அடைந்து) அவ்விருவரையும் அக்கிரமம் செய்யும்படியும் (இறைவனை) நிராகரிக்கும்படியும் செய்துவிடுவான் என்று நாம் பயந்(து அவ்வாறு செய்)தோம். அதாவது அவன் மீதுள்ள பாசம் அவனுடைய (பொய்மையான)

மதத்தைப் பின்பற்றும்படி அவர்களைத் தூண்டிவிடுமோ என்றஞ்சினோம். 'அவ்விருவருக்கும் இறைவன், இவனை விட நல்லவனையும் பரிசுத்தமானவனையும் (பெற்றோர் மீது) அதிக அன்பு கொள்ளக்கூடியவனையும் பிரதியாகக் கொடுப்பதை நாம் விரும்பினோம்!''என்று களிர்(அலை) அவர்கள் கூறினார்கள்.

“ஒரு பாவமும் அறியாத ஒரு (பச்சிளம்) உயிரையா (நீங்கள்) கொன்றுவிட்டீர்கள்?' என்று மூஸா(அலை) அவர்கள் வினவியதற்கேற்பவே இவ்வாறு களிர்(அலை) அவர்கள் பதிலளித்தார்கள்.

(திருக்குர்ஆன் 18:81 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்ரப ருஹ்மா' எனும் சொற்றொடருக்கு'களிர்(அலை) அவர்கள் கொன்ற முதல் (சிறு)வனைவிட (பெற்றோரான) அவர்கள் இருவர் மீதும் மிகவும் அன்பு பாராட்டுபவன்‘' என்று பொருள். '(அவனுக்குப்) பிரதியாக ஒரு பெண் மகவு அவர்கள் இருவருக்கும் வழங்கப்பட்டது‘' என ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அல்லாதவர்களின் அறிவிப்பில் காணப்படுகிறது.

“அ(ச்சிறுவனுக்குப் பிரதியான வழங்கப்பட்ட)து பெண் மகவாகும்‘' என (அறிஞர்) பலர் வாயிலாக தாவூத் இப்னு அபூ ஆஸிம்(ரஹ்) அறிவித்தார்.

## 18:62,63 வது திருக்குர்ஆன் வசனங்கள்

“அவ்விருவரும் (அவ்விடத்தைக்) கடந்து சென்றபோது மூஸா தம் பணியாளரிடம்'நம்முடைய காலைச் சிற்றுண்டியைக் கொண்டுவா! நாம் நம்முடைய இந்தப் பயணத்தில் மிகவும் களைப்படைந்துவிட்டோம்' என்று கூறினார். அதற்குப் பணியாளர்'நாம் அந்தப் பாறையில் (ஓய்வெடுக்க) ஒதுங்கினோமே பார்த்தீர்களா? அங்குதான் நான் மீனை மறந்து(தவறவிட்டு) விட்டேன்' என்று கூறினார்‘' எனும் (திருக்குர்ஆன் 18:62, 63 ஆகிய) இறைவசனங்கள்.

(திருக்குர்ஆன் 18:104 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸுன்உ' எனும் சொல்லுக்குச்'செயல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:108 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹிவல்' எனும் சொல்லுக்குத்'திரும்புதல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:71 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இம்ர்' எனும் சொல்லுக்கும் (திருக்குர்ஆன் 18:74 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நுக்ர்' எனும் சொல்லுக்கும்'அதிர்ச்சியளிப்பது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 18:77 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யன்கள்ள' எனும் சொல்லும், 'யன்காளு' எனும் சொல்லும் (‘விழுந்து விடுகிற நிலையில் உள்ளது' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும். 'யன்காளுஸ் ஸின்னு' (பல் விழப்போகிறது) என்பதைப் போல். இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'லத்தக்கஃத்த' எனும் சொல்லும் (மற்றோர்) ஓதல் முறையில் வந்துள்ள)'ல தம்ஃத்த' எனும் சொல்லும் (‘பெறுதல்' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.

(திருக்குர்ஆன் 18:81 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ருஹ்கி' (அதிக பாசமிக்கவர்) எனும் சொல்'ரஹ்மத்' (அன்பு) எனும் சொல்லைவிட மிகையான பொருளைக் கொண்டதாகும். இது'ரஹீம்' (நிகரிலா அன்புடையோன்) எனும் சொல்லிலிருந்து வந்தது என்றும் கருதப்படுகிறது. இறையருள் பொழிவதால் மக்கா நகர்'உம்மு ருஹ்கி' (அருளின் அன்னை) என் அழைக்கப்படுவதுண்டு.

ஹதீஸ் 4727 ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்'இறைத்தூதரான மூஸா(அலை) அவர்கள், களிரைச் சந்தித்த மூஸா(அலை) அல்லர்'( அவர் வேறொரு மூஸா) என்று (பேச்சாளர்) நவ்ஃப் அல்பிகாலி கூறுகிறார்‘' என்றேன்.

அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி), `அல்லாஹ்வின் விரோதி பொய் சொல்லிவிட்டார். உபை இப்னு கஅப்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து எமக்கு அறிவித்தார்கள்:
(ஒருமுறை) மூஸா(அலை) அவர்கள், பனு இஸ்ராயீல்களிடையே நின்று சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம், `மக்களில் மிகவும் அறிந்தவர் யார்?' என்று வினவப்பட்டது. அதற்கு மூஸா (அலை) அவர்கள், `நானே'' என்று பதிலளித்துவிட்டார்கள்.
எனவே, அவர்களை அல்லாஹ் கண்டித்தான். ஏனெனில், மூஸா(அலை) அவர்கள்'(இதைப் பற்றிய) அறிவு அல்லாஹ்வுக்கே உண்டு'' என்று சொல்லாமல்விட்டுவிட்டார்கள். எனவே, அல்லாஹ் மூஸா(அலை) அவர்களுக்கு, `இல்லை இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்தில் என் அடியார்களில் ஒருவர் இருக்கிறார். அவர் உம்மைவிட அதிகமாக அறிந்தவர்'' என்று அறிவித்தான்.
அதற்கு அல்லாஹ், `நீங்கள் ஒரு மீனைப் பிடித்து அதை ஒரு கூடையில் போட்டுக் கொள்ளுங்கள். (அப்படியே கடலோரமாக நடந்து பயணம் செய்யுங்கள்.) நீங்கள் எங்கே அந்த மீனைத் தவற விடுகிறீர்களோ அங்கேதான் அவர் இருப்பார். அவரைப் பின்பற்றிச் செல்லுங்கள்' என்று சொன்னான்.
எனவே, மூஸா(அலை) அவர்கள் தம் உதவியாளர்'யூஷஉ இப்னு நூனுடன்' அந்த மீன் சம்தமாகப் புறப்பட்டு (இரண்டு கடல்கள் சங்கமிக்கும் இடத்திற்கு அருகிலிருந்த) பாறைக்கு வந்து சேர்ந்து அதனருகில் ஓய்வெடுத்தனர். உடனே மூஸா(அலை) அவர்கள் தம் தலையை வைத்து (படுத்து) உறங்கியும்விட்டார்கள்.
அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அல்லாதோரின் அறிவிப்பில், `மேலும் அந்தப் பாறைக்கடியில் ஒரு நீரூற்று இருந்தது. அதற்கு'ஜீவ நீரூற்று' எனப்படும். அதன் நீர் பட்ட எந்தப் பொருளும் உயிர் பெறாமல் இருக்காது. அவ்வாறே அந்த மீனின் மீதும் அந்த ஊற்றின் நீர்பட்டது'' என்று காணப்படுகிறது.
உடனே, அந்த மீன் (உயிர் பெற்று) அசைந்து, கூடையிலிருந்து நழுவி கடலுக்குள் புகுந்தது. மூஸா(அலை) அவர்கள் கண் விழித்தபோது தம் உதவியாளரை நோக்கி, `நம்முடைய காலைச் சிற்றுண்டியைக் கொண்டு வா! நாம் நம்முடைய இந்தப் பயணத்தில் மிகவும் களைப்படைந்துவிட்டோம்'' என்று கூறினார்கள். (திருக்குர்ஆன் 18:62)
தமக்குக் கட்டளையிடப்பட்ட (இடத்)தைத் தாண்டிச் செல்லும்வரை மூஸா(அலை) அவர்கள் களைப்பை உணரவில்லை.
உதவியாளர் யூஷஉ இப்னு நூன் மூஸா(அலை) அவர்களிடம், `நாம் அந்தப் பாறையில் (ஓய்வெடுக்க) ஒதுங்கினோமே பார்த்தீர்களா? அங்கேதான் நான் மீனை மறந்து (தவறவிட்டு) விட்டேன். அதனை நான் (உங்களுக்குக்) கூறுவதை ஷைத்தான் தான் எனக்கு மறக்கடித்துவிட்டான். (அவ்விடத்தில் அது, கடலில் செல்ல) விந்தையான விதத்தில் தன் வழியை அமைத்துக் கொண்டது'' என்று கூறினார். அதற்கு மூஸா, `நாம் தேடி வந்த இடம் அதுதான்'' என்று கூறினார். (திருக்குர்ஆன் 18:63, 64)
எனவே, அவர்களிருவரும் தங்கள் அடிச் சுவடுகளைப் பின்பற்றி வந்த வழியே திரும்பிச் சென்றார்கள். (மீன் நழுவிய பாறைக்கு அருகிலிருந்த கடற்பகுதிக்கு அவர்கள் வந்து சேர்ந்தபோது) மீன் (நீந்திச்) சென்ற இடத்தில் (இருந்த தண்ணீர்) வளையம் போலிருக்கக் கண்டனர்.
மூஸா(அலை) அவர்களின் உதவியாளருக்கு அது வியப்பாகவும், மீனுக்கு அது (தப்பும்) வழியாகவும் இருந்தது.
அவர்கள் இருவரும் அந்தப் பாறைக்குப் போய்ச் சேர்ந்தபோது அங்கே தம்மை முழுவதுமாக ஆடையால் (போர்த்தி) மூடிக் கொண்டபடி ஒருவர் (களிர்) இருந்தார். மூஸா(அலை) அவர்கள்

அவருக்கு சலாம் (முகமன்) சொல்ல, அம்மனிதர்'உங்களுடைய (இந்த) வட்டாரத்தில் (அறியப்படாத) சலாம் (உங்களுக்கு மட்டும்) எவ்வாறு (தெரியும்? நீங்கள் யார்)?' என்று வினவினார்.

அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'நானே மூஸா'' என்று பதிலளித்தார்கள். அம்மனிதர், 'பனு இஸ்ராயீல்களின் (இறைத்தூதரான) மூஸாவா?' என்று கேட்டார். மூஸா (அலை) அவர்கள், 'ஆம்' என்று பதிலளித்துவிட்டு, 'உங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத் தருவதற்காக உங்களைப் பின்தொடர்ந்து வரட்டுமா?' என்று கேட்டார்கள்.

அதற்கு களிர் (அலை) அவர்கள், மூஸா(அலை) அவர்களிடம், 'மூஸாவே! அல்லாஹ் உங்களுக்குக் கற்றுத் தந்த ஓர் அறிவு உங்களிடம் உள்ளது. அதை நான் அறிய மாட்டேன். அல்லாஹ் எனக்குக் கற்றுத் தந்த ஓர் அறிவு என்னிடம் உள்ளது. அதை நீங்கள் அறியமாட்டீர்கள்'' என்று கூறினார்கள்.

(மீண்டும்) மூஸா(அலை) அவர்கள், 'இல்லை நான் உங்களைத் தொடர்ந்து வருவேன்'' என்று கூறினார்கள். அதற்கு களிர் (அலை) அவர்கள், 'நீர் என்னைப் பின்தொடர்ந்து வருவதாயின், எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும், நானாக உமக்கு அதனை அறிவிக்கும் வரையில் நீர் என்னிடம் (அதைப் பற்றி ஏன், எதற்கு என்று) கேட்கலாகாது'' என்று கூறினார்.

பிறகு (மூஸா, களிர்) இருவரும் கடற்கரையோரமாக நடந்து சென்றார்கள். அப்போது மரக்கலம் ஒன்று அவர்களைக் கடந்து சென்றது. அப்போது (ஏழைகளான மரக்கல உரிமையாளர்களால்) களிர்(அலை) அவர்கள் அடையாளம் கண்டுகொள்ளப்பட்டு அவர்களை தங்கள் மரக்கலத்தில் அவர்கள் கட்டணம் ஏதுமின்றி ஏற்றிக்கொண்டனர். அவர்களிருவரும் மரக்கலத்தில் பயணம் மேற்கொண்டனர்.

அப்போது சிட்டுக்குருவியொன்று வந்து மரக்கலத்தின் விளிம்பின் மீது விழுந்து, தன் (சின்னஞ் சிறிய) அலகைக் கடலில் அமிழ்த்தி (ஓரிரு'திவலை' நீர் அருந்தி)யது. அப்போது மூஸா(அலை) அவர்களிடம் களிர் (அலை) அவர்கள்'உம்முடைய அறிவும், என்னுடைய அறிவும், (ஏன்) படைப்பினங்கள் யாவற்றின் அறிவும் அல்லாஹ்வின் அறிவோடு ஒப்பிடுகையில், இந்தச் சிட்டுக்குருவி தன் அலகை (கடலுக்குள்) அமிழ்த்தி(நீர் எடுத்தி)ட்ட அளவுதான்'' என்று கூறினார்கள்.

மூஸா(அலை) அவர்கள் மரக்கலத்தில் ஏறிச் சிறிது நேரம் தான் கழிந்திருக்கும் களிர் (அலை) அவர்கள் வாய்ச்சி ஒன்றை எடுத்து மரக்கலத்தை ஓட்டையாக்கி (அதை முளைக்குச்சியால் அடைத்து)விட்டார்கள். உடனே மூஸா(அலை) அவர்கள், களிரை நோக்கி, 'கட்டணம் இல்லாமலேயே நம்மை ஏற்றி வந்தவர்களின் மரக்கலத்தை வேண்டுமென்றே ஓட்டையாக்கிவிட்டீர்களே! இதில் பயணம் செய்பவர்களை மூழ்கடிக்கவா (இப்படிச் செய்தீர்கள்)? நீங்கள் பெரிய (அபாயமான) செயலைச் செய்து விட்டீர்கள்'' என்று கூறினார்கள்.

பிறகு இருவரும் (மரக்கலத்திலிருந்து இறங்கி?) நடந்து, சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த ஒரு சிறுவனுக்கருகில் சென்றனர். அப்போது களிர்(அலை) அவர்கள், அச்சிறுவனின் தலையைப் பிடித்து துண்டாக்கி(த் தனியே எடுத்து)விட்டார்கள். உடனே மூஸா(அலை) அவர்கள், களிர்(அலை) அவர்களிடம், 'ஒரு பாவமும் அறியாத (பச்சிளம்) உயிரையா நீங்கள் பறித்து விட்டீர்கள்? அவன் வேறெந்த உயிரையும் பறிக்கவில்லையே! நீங்கள் மிகக் கேடான செயலைச் செய்துவிட்டீர்கள்!"என்று கூறினார்கள்.

அதற்கு களிர்(மலை) அவர்கள், 'நீங்கள் என்னுடன் பொறுமையாக இருக்க முடியாது என்று முன்பே நான் சொல்லவிலையா?' என்று கேட்டார்கள். மூஸா(அலை) அவர்கள், 'இதற்குப்

பின்னால் நான் உங்களிடம் ஏதாவது (விளக்கம்) கேட்டால், என்னை உங்களுடன் சேர்த்துக்கொள்ளாதீர்கள். என்னிடமிருந்து (பிரிந்து செல்ல) உங்களுக்குத் தக்க காரணம் கிடைத்துவிட்டது'' என்றார்கள்.
தொடர்ந்து இருவரும் நடந்தார்கள். இறுதியில் ஓர் ஊருக்கு வந்தார்கள். அந்த ஊர் மக்களிடம் உணவு கேட்பார்கள். ஆனால், அவர்கள் அவ்விருவரையும் உபசரிக்க மறுத்துவிட்டார்கள். (இந்நிலையில்) அந்த ஊரில் சாய்ந்தபடி கீழே விழவிருந்த சுவர் ஒன்றை அவர்கள் இருவரும் கண்டார்கள். (அதைப் பார்த்த) உடன் களிர்(அலை) அவர்கள் இவ்வாறு தம் கரத்தால் அதைநிலை நிறுத்தினார்கள்.
அப்போது மூஸா(அலை) அவர்களிடம், 'இந்த ஊருக்குள் நாம் வந்து(உணவு கேட்டு)ம், இவர்கள் நம்மை உபசரிக்கவில்லை நமக்கு உணவளிக்கவுமில்லை. (அவ்வாறிருந்தும் வேண்டுமென்றே நீங்கள் அவர்களின் சுவரைச் செப்பனிட்டுள்ளீர்கள்.) நீங்கள் நினைத்திருந்தால் அதற்குக் கூலி பெற்றுக் கொண்டிருக்கலாமே!''என்றார்கள்.
களிர்(அலை) அவர்கள், 'இதுதான் நானும் நீங்களும் பிரியவேண்டிய நேரம். உங்களால் பொறுமையாக இருக்கமுடியாத (இம்மூன்று) விஷயங்களின் விளக்கத்தை நான் உங்களுக்கு (இப்போது) அறிவித்துவிடுகிறேன்'' என்று கூறினார்கள்.
(இந்த நிகழ்ச்சியைக் கூறி முடித்தபின்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'மூஸா பொறுமையாக இருந்திருப்பாரேயானால் அவ்விருவர் பற்றி(ய நிறைய செய்திகள்) நமக்கு அறிவிக்கப்பட்டிருக்கும் என்று நாம் விரும்பினோம்'' என்று கூறினார்கள்.
இப்னு அப்பாஸ்(ரலி), (திருக்குர்ஆன் 18:79 வது வசனத்தின் மூலத்தில்)'வகான அமாமஹும் மலிக்குன் யஃகுது குல்ல சஃபீனத்தின் ஸாலிஹத்தின் ஃகஸ்பா'' என்று ஓதுவார்கள். (பொருள்: அவர்களுக்கு முன்னே ஒரு மன்னன் ஆளும் பகுதி இருந்தது. அவன் பழுதில்லா நல்ல மரக்கலங்கள் ஒவ்வொன்றையும் அபகரித்துக்கொண்டிருந்தான்.) மேலும், (திருக்குர்ஆன் 18:80 வது வசனத்தின் மூலத்தில்)'வ அம்மல் ஃகுலாமு ஃபகான காஃபிரன்'' என்று ஓதுவார்கள். (பொருள்: அந்தச் சிறுவன் இறைமறுப்பாளனாக இருந்தான்.)

## 18:103 வது திருக்குர்ஆன் வசனம்

"தம் செயல்களில் பெரும் இழப்பிற்கு ஆளானவர்கள் யார் என்பதை நாம் உங்களுக்கு அறிவிக்கட்டுமா என்று (நபியே!) கேளுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 18:103 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4728. முஸ்அப் இப்னு ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரஹ்) அறிவித்தார்
நான் என் தந்தை (ஸஅத் இப்னு அபீ வக்காஸ்) அவர்களிடம்'இந்த (திருக்குர்ஆன் 18:103 வது) வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவர்கள், 'ஹரூரிய்யாக்களா? என்று கேட்டேன். 10 அதற்கு அவர்கள், '(ஹரூரிய்யாக்கள்) இல்லை யூதர்களும் கிறிஸ்தவர்களும் தாம் அவர்கள். யூதர்கள், முஹம்மத்(ஸல்) அவர்களை ஏற்க மறுத்தார்கள். கிறிஸ்தவர்களோ சொர்க்கத்தை நிராகரித்துள்ளார்கள் அங்கு உணவோ, பானமோ கிடையாது என்று கூறினார்கள். 11'ஹரூரிய்யாக்களோ', அல்லாஹ்விடம் வாக்குறுதி அளித்தபின் அல்லாஹ்வுடன் தாங்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்தை முறிப்பவர்கள் ஆவார்கள்'' என்று கூறினார்கள்.
(என் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஹரூரிய்யாக்களை'பாவிகள்' என்று குறிப்பிட்டு வந்தார்கள். ('இறைமறுப்பாளர்கள்' என்று கூறுவதில்லை.)

## 18:105 வது திருக்குர்ஆன் வசனம்

"அவர்கள்தாம் தம் இறைவனின் வசனங்களையும் (மறுமையில்) அவனுடைய சந்திப்பையும் ஏற்க மறுத்தவர்கள் ஆவர். எனவே, அவர்களின் செயல்கள் வீணாம்விட்டன. மேலும், மறுமை

நாளில் அவர்களுக்கு எத்தகைய மதிப்பையும் அளிக்கமாட்டோம்‘` எனும் (திருக்குர்ஆன் 18:105 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4729. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் உடல் பருத்த கொழுத்த மனிதன் ஒருவன் வருவான். அல்லாஹ்விடம் கொசுவின் இறக்கையளவு எடை கூட அவன் (மதிப்பு) பெறமாட்டான். ’மறுமை நாளில் அவர்களுக்கு எத்தகைய மதிப்பையும் அளிக்கமாட்டோம்‘` எனும் (திருக்குர்ஆன் 18:105 வது) இறைவசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## (19)’கா∴ப், ஹா, யா, ஐன், ஸாத்’ (‘மர்யம்‘) அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்..)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

“அவர்கள் நம்மிடம் வரும்நாளில் அவர்களின் கேள்விதான் என்ன! பார்வைதான் என்ன!! ஆயினும், இன்னோ அந்த அக்கிரமக்காரர்கள் பம்ரங்கமான வழிகேட்டிலேயே உள்ளனர்‘` எனும் (திருக்குர்ஆன் 19:38 வது) வசனத்தின் கருத்தாவது: இறைமறுப்பாளர்கள் இன்று (இவ்வுலகில் நல்லதைக் கேட்பதுமில்லை பார்ப்பதுமில்லை. அன்று (மறுமையில்) நன்றாகவே கேட்பார்கள் நன்றாகவே பார்ப்பார்கள். (ஆனால், அதனால் எந்தப் பயனும் விளையப் போவதில்லை.)

(திருக்குர்ஆன் 19: 46 வது வசனத்தின் மூலத்திலஉள்ள)’ல அர்ஜு மன்னக்க’ எனும் சொல்லுக்கு’உன்னை நான் ஏசுவேன்‘` என்று பொருள். (இச்சொல்லுக்கு’உன்னை நான் கல்லால் அடிப்பேன்’ என்றும்’கல்லெறிந்து கொல்வேன்’ என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.

(திருக்குர்ஆன் 19:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ல அர்ஜுமன்னக்க’ எனும் சொல்லுக்கு’உன்னை நான் ஏசுவேன்’ என்று பொருள். (இச்சொல்லக்கு’உன்னை நான் கல்லால் அடிப்பேன்’ என்றும், `கல்லெறிந்து கொல்வேன்’ என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)

(திருக்குர்ஆன் 19:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ரி∴யு’ எனும் சொல்லுக்குத்’தோற்றம்’ என்று பொருள்.

அபூ வாயில் ஷகீக் இபனு ஸலமா(ரஹ்) கூறினார்.

‘இறையச்சமுள்ளவர் நல்லறிவுபடைத்தவராகவே இருப்பார்’ என மர்யம் விளங்கினர். எனவேதான், (மனித உருவில் வந்த வானவர் ஜிப்ரீலை நோக்கி:)’உம்மைவிட்டுக் கருணைமிக்க இறைவனிடம் பாதுகாப்புக் கோருகிறேன். நீர் இறையச்சம் உள்ளவராயின்!”(திருக்குர்ஆன் 19:18) என்று மர்யம்(அலை) அவர்கள் கூறினார்கள்.

சு∴ப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 19:83 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’த உஸ்ஸுஹும் அஸ்ஸா’ எனும் சொற்றொடருக்கு’முழு முனைப்புடன் பாவங்களைச் செய்யுமாறு தூண்டிக் கொண்டிருக்கிறார்கள்‘` என்று பொருள்.

(திருக்குர்ஆன் 19:89 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’இத்து’ எனும் சொல்லுக்குக்’கோணலாகாது’ என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 19:86 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’விர்து’ எனும் சொல்லுக்குத்’தாகித்தவர்கள்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 19:74 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸாஸ்' எனும் சொல்லுக்குச்'செல்வம்' என்று பொருள். (இச்சொல்லுக்குத்'தளவாடம்', 'சாதனம்' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.
(திருக்குர்ஆன் 19:89 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரிக்ஸ்' எனும் சொல்லுக்கு'சப்தம்' என்று பொருளாகும்.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகின்றனர்:
(திருக்குர்ஆன் 19:59 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகைய்யு' எனும் சொல்லுக்கு'இழப்பு' (என்று பொருள்.
(திருக்குர்ஆன் 19:58 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'புகிய்யா' (அழுதவர்களாக) எனும் சொல்' பார்க்கின் என்பதன் பன்மையாகும்.
(திருக்குர்ஆன் 19:70 வது வசத்தின் மூலத்திலுள்ள)'ஸிலிய்யு' (நரகத்தில் நுழைதல்) எனும் வேர்ச் சொல்லின் வினைச் சொற்களே ஸலிய, யஸ்லா ஆகியன.
(திருக்குர்ஆன் 19:73 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நதிய்யு' எனும் சொல்லும்'நாதி' எனும் சொல்லும், ('சபை அவை' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.

## 19:39 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) துக்கத்திற்குரிய அந்த (மறுமை) நாளைக் குறித்து இவர்களை எச்சரியுங்கள் (எனும் 19:39 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4730. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
(மறுமை நாளில்) கருமை கலந்த வெண்ணிற ஆடு ஒன்றின் தோற்றத்தில் மரணம் கொண்டுவரப்படும். அப்போது அறிவிப்புச் செய்யும் (வானவர்களில்) ஒருவர், 'சொர்க்கவாசிகளே!' 'இதை (இந்த ஆட்டை) நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார். அவர்கள், 'ஆம்! இதுதான் மரணம்'' என்று பதிலளிப்பார்கள். அவர்கள் அனைவரும் அதை (முன்பே) பார்த்திருக்கிறார்கள்.
பிறகு அவர் நரகவாசிகளை நோக்கி:'நரகவாசிகளே!' என்று அழைப்பார். அவர்கள் தலையை நீட்டிப் பார்ப்பார்கள். அவர்'இதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்பார். அவர்கள், 'ஆம் (அறிவோம்) இதான் மரணம்'' என்று பதில் சொல்வார்கள். அவர்கள் அனைவரும் அதை (முன்பே) பார்த்துள்ளனர். உடனே அது (ஆட்டின் உருவத்திலுள்ள மரணம்) அறுக்கப்பட்டுவிடும். பிறகு அவர், 'சொர்க்கவாசிகளே நிரந்தரம் இனி மரணமே இல்லை. நரகவாசிகளே! நிரந்தரம் இனி மரணம் என்பதே இல்லை'' என்று கூறுவார்.
இதை அறிவித்த அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்:
இதைக் கூறிவிட்டு நபி(ஸல்) அவர்கள், '(நபியே!) நியாயத் தீர்ப்பளிக்கப்படும் துக்கம் நிறைந்த அந்நாளைப் பற்றி நீங்கள் அவர்களை எச்சரியுங்கள்! எனினும், (இன்று உலக வாழ்வில்) இவர்கள் கவலையற்றிருக்கிருக்கின்றனர். எனவே, இவர்கள் நம்பிக்கைகொள்ளவே மாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 19:39 வது) இறைவசனத்தை ஓதினார்கள். மேலும், 'இன்று உலகில் வசிக்கும் இவர்கள் கவலையற்று, அசட்டையாக உள்ளனர். எனவே இவர்கள் நம்பிக்கைகொள்ள மாட்டார்கள்'' என்றும் கூறினார்கள்.

## 19:64 வது திருக்குர்ஆன் வசனம்

"(வானவர்கள் கூறுகின்றனர்:'நபியே!) உங்களுடைய இறைவனின் உத்தரவுப்படியே தவிர நாங்கள் இறங்குவதில்லை. எங்களுக்கு முன்னிருப்பவையும், பின்னிருப்பவையும், இரண்டுக்குமிடையே இருப்பவையும் அவனுக்கே உரியவையாகும்.! (இதில் எதையும்) உங்களுடைய இறைவன் மறப்பவன் அல்லன்' எனும் (திருக்குர்ஆன் 19:64 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4731. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களிடம்: 'நீங்கள் இப்போது என்னைச் சந்திப்பதைவிட அதிகமாகச் சந்திக்கத் தடையாக இருப்பதென்ன?' என்று கேட்டார்கள். அப்போதுதான் '(நபியே!) உங்களுடைய இறைவனின் உத்தரவுப்படியே தவிர நாங்கள் இறங்குவதில்லை. எங்களுக்கு முன்னிருப்பவையும், பின்னிருப்பவையும், இரண்டுக்குமிடையே இருப்பவையும் அவனுக்கே உரியவையாகும். (இதில் எதையும்) உங்களுடைய இறைவன் மறப்பவன் அல்லன்'' எனும் (திருக்குர்ஆன் 19:64 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

## 19:77 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) நம் வசனங்களை நிராகரித்ததுடன் (மறுமையிலும்) தனக்குச் செல்வமும், சந்ததியும் வழங்கப்படும் என்று கூறினானே அவனை நீங்கள் பார்த்தீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 19:77 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4732. கப்பாப் இப்னு அரத் (ரலி) அறிவித்தார்

'ஆஸ் இப்னு வாயில் அஸ்ஸஹ்மீ' என்பவர் எனக்குத் தர வேண்டியிருந்த ஒரு கடனைக் கேட்டு அவரிடம் நான் சென்றேன். 'நீ முஹம்மதை நிராகரிக்காமல் (ஏற்றுக் கொண்டு) இருக்கும்வரை, நான் உனக்குத் தரமாட்டேன்'' என்று அவர் கூறினார். நான், 'நீ இறந்து உயிருடன் எழுப்பப்படும் வரை நான் முஹம்மதை நிராகரிக்க மாட்டேன்'' என்று கூறினேன். அவர் 'நான் இறந்து மீண்டும் எழுப்பப்படுவேனா?' என்று கேட்டார். நான் 'ஆம்' என்று பதிலளித்தேன். அதற்கவர், 'அப்படியாயின், எனக்கு அங்கேயும் செல்வமும் சந்ததியும் கிடைக்கும். அப்போது உனக்குத் தரவேண்டிய கடனை நான் செலுத்திவிடுகிறேன்'' என்று கூறினார். அப்போதுதான் '(நபியே!) நம் வசனங்களை நிராகரித்ததுடன் (மறுமையிலும்) தனக்குச் செல்வமும், சந்ததியும் வழங்கப்படும் என்று கூறினானே அவனை நீங்கள் பார்த்தீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 19:77 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

"(நபியே!) நம் வசனங்களை நிராகரித்ததுடன் (மறுமையிலும்) தனக்குச் செல்வமும், சந்ததியும் வழங்கப்படும் என்று கூறினானே அவனை நீங்கள் பார்த்தீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 19:77 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4732. கப்பாப் இப்னு அரத் (ரலி) அறிவித்தார்

'ஆஸ் இப்னு வாயில் அஸ்ஸஹ்மீ' என்பவர் எனக்குத் தரவேண்டியிருந்த ஒரு கடனைக் கேட்டு அவரிடம் நான் சென்றேன். 'நீ முஹம்மதை நிராகரிக்காமல் (ஏற்றுக் கொண்டு) இருக்கும்வரை, நான் உனக்குத் தரமாட்டேன்'' என்று அவர் கூறினார். நான், 'நீ இறந்து உயிருடன் எழுப்பப்படும் வரை நான் முஹம்மதை நிராகரிக்க மாட்டேன்' எனக் கூறினேன். அவர் 'நான் இறந்து மீண்டும் எழுப்பப்படுவேனா?' என்று கேட்டார். நான் 'ஆம்' என்று பதிலளித்தேன். அதற்கவர், 'அப்படியாயின், எனக்கு அங்கேயும் செல்வமும் சந்ததியும் கிடைக்கும். அப்போது உனக்குத் தரவேண்டிய கடனை நான் செலுத்திவிடுகிறேன்'' என்று கூறினார். அப்போதுதான் '(நபியே!) நம் வசனங்களை நிராகரித்ததுடன் (மறுமையிலும்) தனக்குச் செல்வமும், சந்ததியும் வழங்கப்படும் என்று கூறினானே அவனை நீங்கள் பார்த்தீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 19:77 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

## 19:78 வது திருக்குர்ஆன் வசனம்

"மறைவானவற்றை அவன் அறிந்து கொண்டானா? அல்லது கருணையாளனிடத்தில் அவன் உறுதிமொழி ஏதேனும் வாங்கியுள்ளானா?' எனும் (திருக்குர்ஆன் 19:78 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4733. கப்பாப் இப்னு அரத் (ரலி) அறிவித்தார்

நான் மக்காவில் (அறியாமைக் காலத்தில்) கொல்லனாக (தொழில் செய்துகொண்டு) இருந்தேன். அப்போது 'ஆஸ் இப்னு வாயில் அஸ்ஸஹ்மீ' என்பவருக்கு வாள் ஒன்றைச் செய்து கொடுத்தேன். பின்னர், அதற்கான கூலியைத் தரும்படி கேட்டு அவரிடம் நான் சென்றேன். அவர், நீ முஹம்மதை நிராகரிக்காத வரை உனக்குத் தரமாட்டேன்'' என்று கூறினார். நான், 'உன்னை அல்லாஹ் மரணிக்கச் செய்து, பிறகு உயிர்கொடுக்கும் வரை நான் முஹம்மதை நிராகரிக்க மாட்டேன்'' என்று சொன்னேன். அதற்கவர் 'என்னை அல்லாஹ் மரணிக்கச் செய்து பிறகு என்னை எழுப்பினால், அப்போதும் எனக்கு செல்வமும் சந்ததியும் இருக்கும்'' என்று கூறினார். உடனே அல்லாஹ்: 'நம் வசனங்களை நிராகரித்ததுடன் (மறுமையிலும்) தனக்குச் செல்வமும் சந்ததியும் வழங்கப்படும் என்று சொன்னவனை நீங்கள் பார்த்தீர்களா? மறைவானவற்றை அவன் அறிந்துகொண்டானா? அல்லது கருணையாளனிடம் உறுதிமொழி ஏதேனும் வாங்கியிருக்கிறானா?' எனும் (திருக்குர்ஆன் 19:77, 78) வசனங்களை அருளினான்.

## 19:79 வது திருக்குர்ஆன் வசனம்

“இல்லை, அவன் சொல்வதை நாம் எழுதி வைப்போம். (மறுமையில்) நீண்ட நெடும் வேதனையை நாம் அவனுக்கு அளிப்போம்'' (எனும் 19:79 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4734. கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்

நான் அறியாமைக் காலத்தில் கொல்லனாக (தொழில் செய்துகொண்டு) இருந்தேன். ஆஸ் இப்னு வாயில் என்பவர் எனக்குக் கடன் தரவேண்டியிருந்தது. நான் திருப்பித் தரும் படி கேட்டு அவரிடம் சென்றேன். அவர் 'நீ முஹம்மதை நிராகரிக்காத வரைல நான் உனக்குத் தரமாட்டேன்'' என்று கூறினார். நான் 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ் உன்னை மரணிக்கச் செய்து, பிறகு நீ மறுமையில் உயிரூட்டப்பட்டு எழுப்பப்படும் வரை நான் முஹம்மத்(ஸல்) அவர்களை நிராகரிக்கமாட்டேன்'' என்றேன். அவர், 'அப்படியாயின், நான் இறந்து மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படும் வரை என்னைவிட்டு விடு! பின்பு மறுமையில், எனக்குச் செல்வமும் சந்ததியும் கொடுக்கப்படும். அப்போது நான் உன்னுடைய கடனைச் செலுத்துவேன்'' என்று கூறினார். அப்போதுதான் 'நம் வசனங்களை நிராகரித்து (மறுமையிலும்) தனக்குச் செல்வமும் சந்ததியும் வழங்கப்படும் என்று சொன்னவனை நீங்கள் பார்த்தீர்களா? மறைவானவற்றை அவன் அறிந்துகொண்டானா? அல்லது கருணையாளனிடம் உறுதிமொழி ஏதேனும் வாங்கியிருக்கிறானா? எனும் (திருக்குர்ஆன் 19:77, 78 வது) வசனங்கள் இறங்கின.

## 19:80 வது திருக்குர்ஆன் வசனம்

“அவன் (தன் உடைமைகள் எனப் பெருமையடித்துப்) பேசிக்கொண்டிருப்பவை (அனைத்தும் இறுதியில்) நமக்கே உரியனவாகிவிடும். அவன் தனியாகவே நம்மிடம் வருவான்'' எனும் (திருக்குர்ஆன் 19:80 வது) இறைவசனம்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 19:90 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தம்ர்ருல் ஜிபாலு ஹத்தா' எனும் வாக்கியத்திற்கு 'மலைகள் இடிந்து சரிந்து விழக்கூடும்'' என்று பொருள்.

ஹதீஸ் 4735. கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்

நான் (அறியாமைக் காலத்தில்) கொல்லாக (தொழில் செய்துகொண்டு) இருந்தேன். ஆஸ் இப்னு வாயில் என்பவர் எனக்குக் கடன் தரவேண்டியிருந்தது. எனவே, அதைத் திருப்பித் தரும்படி கேட்டு நான் அவரிடம் சென்றேன். அவர் என்னிடம் 'நீ முஹம்மதை நிராகரிக்காதவரை நான் உன்னுடைய கடனைச் செலுத்தமாட்டேன்'' என்று கூறினார். நான், 'நிர் இறந்து உயிருடன் எழுப்பப்படும் வரை நான் அவரை ஒருபோதும்

நிராகரிக்கமாட்டேன்‘‘ என்று சொன்னேன். அதற்கவர்’இறந்த பிறகு நான் உயிருடன் எழுப்பப்படுவேனா? அப்படியானால், செல்வமும் மக்களும் அங்கே திரும்பக் கிடைக்கும்போது உன் கடனை நிறைவேற்றிவிடுகிறேன்‘‘ என்று கூறினார். அப்போதுதான்‘‘ நம் வசனங்களை நிராகரித்து (மறுமையிலும்) தனக்குச் செல்வமும் சந்ததியும் வழங்கப்படும் என்று சொன்னவனை நீங்கள் பார்த்தீர்களா? அவன் மறைவானவற்றை அறிந்துகொண்டானா? அல்லது, கருணையாளனிடம் உறுதிமொழி ஏதேனும் வாங்கியிருக்கிறானா? இல்லை அவன் சொல்வதை நாம் எழுதிவைப்போம். (மறுமையில்) நீண்ட நெடும் வேதனையை நாம் அவனுக்கு அளிப்போம். அவன் (தன் உடைமைகள் எனப் பெருமையடித்துப்) பேசிக் கொண்டிருப்பவை (அனைத்தும் இறுதியில்) நமக்கே உரியனவாகிவிடும். அவன் (செல்வம் சந்ததி எதுவுமின்றி) தனியாகவே நம்மிடம் வருவான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 19:77-80) இறைவசனங்கள் அருளப்பெற்றன.

## (20)’தாஹா’ அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

ஸயீத் இப்னு ஜுபைர், ளஹ்ஹாக் இப்னு முஸாஹிம்(ரஹ்)2 ஆகியோர் கூறுகின்றனர்:

‘நப்த்தீ’ மொழிவழக்கில்3’தாஹா’ எனும் சொல்லுக்கு’மனிதரே!’ என்று பொருள்.

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 20:87 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அல்கா (எறிந்தான்) என்பதற்கு’உருவாக்கினான்’ என்று பொருள்.

(‘என் நாவிலுள்ள முடிச்சை அவிழ்ப்பாயாக!”எனும் 20:27 வது வசனத்திலுள்ள)’முடிச்சு’ (உக்தத்) என்பதன் பொருளாளவது: ஓரிரு எழுத்துகள் கூட நாவிலிருந்து (முழுமையாக) வெளிவர முடியாத நிலை. அல்லது (பேசும்போது அடிக்கடி) தா..தா.. என்றோ, ஃபா... ஃபா.. என்றோ, திக்கிக் கொண்டேயிருக்கும் (கொண்ணல்) நிலை.

(திருக்குர்ஆன் 20:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அஸ்ரீ’ எனும் சொல்லுக்கு’என் முதுகு’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 20:91 வது வசனத்தின் மூலத்தில் - ஓர் ஓதல் முறைப்படி உள்ள‘)’ஃப யஸ்ஹித்தகும்’ எனும் சொல்லுக்கு’உங்களை அழித்துவிடுவான்’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 20:63 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அல் முஸ்லா’ (மிக மேலானது) எனும் சொல்’அல் அம்ஸல்’ என்பதன் பெண்பாலாகும்.’தரீகத்’ எனும் சொல்லுக்கு’மார்க்கம்’ என்று பொருள்.’குஃதில் முஸ்லா’ என்று (வழக்கில்) கூறப்படுவதுண்டு. இதற்கு’குஃதில் அம்ஸல்’ (உயர்வானதை எடுத்துக்கொள்) என்று பொருள்.

(திருக்குர்ஆன் 20:64 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஸஃப்பா’ எனும் சொல்லுக்கு’அணி அணியாக’ என்று பொருள். தொழுமிடத்தையும்’ஸஃப்பு’ என்பர்.

(திருக்குர்ஆன் 20:67 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’அவ்ஜஸ’ எனும் சொல்லுக்கு’உள்ளூர ஊசாடியது’ என்று பொருள்.’கீஃபத்’ எனும் சொல்லுக்குப்’பயம்’ என்று பொருள். (அதன் அசல் வடிவம்’ம்வ்ஃபத்’ என்பதாகும்.) முதல் எழுத்து’ம்’ இகரம் பெற்றிருப்பதனால் இரண்டாம் எழுத்தான’வ’ ஆனது இகரத்திற்கு இயைந்த’ய்’ ஆக (சொல் இலக்கண விதிப்படித்) திரிந்துவிட்டது.

(திருக்குர்ஆன் 20:71 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஃபீ ஜுதூஇந் நக்லி’ (பேரீச்ச மரங்களில்) என்பதற்கு’அலா ஜுதூஇந்நக்லி’ (பேரீச்ச மரங்களின் மீது) என்று பொருள்.

(திருக்குர்ஆன் 20:95 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’கத்புக்க’ எனும் சொல்லுக்கு’உன்னுடைய நிலை’ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 20:97 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மிஸாஸ்' (தீண்டல்) எனும் சொல்'மாஸ்ஸஹு என்பதன் வேர்ச் சொல்லாகும்.'ல நன்ஸி∴பன்னஹு' எனும் சொல்லுக்கு'நாம் அதனை (சாம்பலாக்கித்) தூற்றுவோம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:106 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'காஉ' எனும் சொல்லுக்கு'மேற்பரப்பில் தண்ணீர் ஓடத்தக்க' என்று பொருள்.'ஸ∴ப்ஸ∴ப்' எனும் சொல்லுக்கு'சமதளம்' என்று பொருள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 20:87 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அவ்ஸார்' எனும் சொல்லுக்கு'சுமைகள்' என்று பொருள். இது,'∴பிர்அவ்னுடைய குடும்பத்தாரிடமிருந்து (இஸ்ராயீலின் சந்ததியான) அவர்கள் இரவலாகப் பெற்ற ஆபரணங்களைக்' குறிக்கும்.'ப கதா∴ப்துஹா' எனும் சொல்லுக்கு'அதை நான் போட்டேன்' என்று பொருள்.'அல்க்கா' எனும் சொல்லுக்கு'(அவர்களைப் போன்றே) அவன் செய்தான் (போட்டான்)' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:88 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴பநஸிய' எனும் சொல்லுக்கு'அவர் - மூஸா- மறந்துவிட்டார்' என்று பொருள். அதாவது'(காளைக்கன்று எனும்) தம் இறைவனுக்கு மாறுசெய்துவிட்டார் மூஸா'' என்று சாமிரீயும் அவனுடைய பக்தர்களும் கூறினர்.'லா யர்ஜிஉ' (அது பதிலளிக்காது) என்றால்'காளைமாடு பதிலளிக்காது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:108 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹம்ஸ்' எனும் சொல்லுக்குக்'காலடி ஓசை' என்று பொருள்.
“என் இறைவா! நான் பார்வையுடையவனாக இருந்தேனே! என்னை ஏன் குருடனாக எழுப்பினாய்? என்று கூறுவான்'' எனும் (திருக்குர்ஆன் 20:125 வது) வசனத்தின் கருத்தாவது: உலகில் நான் எதை எனக்கு ஆதாரம் என்று நம்பியிருந்தேனோ அதனை ஏன் இங்கு இல்லாமல் செய்துவிட்டாய்? என்று கேட்பான்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 20:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கபஸ்' (எரிகொள்ளி) என்பதன் விளக்கம் பின்வருமாறு மூஸா(அலை) அவர்களும், அன்னாருடைய குடும்பத்தாரும் எம்ப்தை நோக்கிக் குளிர் காலத்தில் வந்தபோது பாதை மாறிப் போய்விட்டார்கள். (இருள் கப்பிய அந்த இரவில்) அப்போது மூஸா(அலை) அவர்கள் தம் குடும்பத்தாரை நோக்கி,'சற்று நேரம் நீங்கள் இங்கேயே இருங்கள்! நான் (மலை மீது) ஏதோ நெருப்பைக் காண்கிறேன். அங்கு நமக்குப் பாதை காட்டக்கூடிய ஒருவரையும் நான் காணவில்லையாயின் நீங்கள் தீ மூட்டுவதற்காக எரி கொள்ளியையாவது உங்களிடம் ஏதேனும் வருகிறேன்'' என்று கூறினார்கள்.
சு∴ப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 20:104 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அம்ஸலுஹும், தரீக்கத்தன்' எனும் சொற்றொடருக்கு'நேர்மையான வழியில் செல்பவர்கள்'' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
'அவன் குறைக்கப்படுவதையும் அஞ்சான்' எனும் (திருக்குர்ஆன் 20:112 வது வசனத்) தொடருக்கு அவனுடைய நன்மைகளைக் குறைத்து அவனுக்கு அநியாயம் செய்யப்படாது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:107 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இவஜ்' (பள்ளம்) எனும் சொல்லுக்கு'ஓடை' என்றும்,'அகித்' எனும் சொல்லுக்கு'மேடு' என்றும் பொருள்.
(திருக்குர்ஆன் 20:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள'சீரத்தஹா' எனும் சொல்லுக்கு'அதன் (முன்னைய) நிலை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:128 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அந்நூஹா' (அறிவு) எனும் சொல்லுக்கு'இறையச்சம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 20:124 வது வசனத்தின் மூலத்திலுளள்)'ளன்க்' (நெருக்கடி) என்பதற்குத்'துர்பாக்கியமான' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:81 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹவா' (வீழ்வான்) எனும் சொல்லுக்கு'பாக்கியமற்றவனாம் விடுவான்' என்று பொருள். (இச்சொல்லுக்கு'அழிந்துவிடுவான்' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)
(திருக்குர்ஆன் 20:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பி மல்க்கினா' எனும் சொல் மற்றோர் ஓதல் முறையில்'பி மில்கினா' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த)'பி மில்க்கினா' எனும் சொல்லுக்கு'எங்கள் கட்டளைப் பிரசாரம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:58 வது வசனத்தின் மூலத்தில் மற்றோர் ஓதல் முறைப்படியுள்ள)'மகானன் சிவா' (சமதூரமுள்ள) என்பதற்கு'அவர்களிடையே பொதுவாக அமைந்துள்ள இடம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:77 வது வசனத்திலுள்ள)'உலர்ந்தது' எனும் பொருள், மூலத்திலுள்ள'யபஸ்' எனும் சொல்லுக்குரியதாகும்.
(திருக்குர்ஆன் 20:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கத்ர்' எனும் சொல்லுக்குக்'குறித்த நேரம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 20:42 வது வசனத்திலுள்ள)'நீங்கள் இருவரும் சோர்வடைந்துவிடாதீர்கள்' எனும் பொருள், மூலத்திலுள்ள'லா தனியா' எனும் சொல்லுக்குரியதாகும்.
(திருக்குர்ஆன் 20:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஃப்ருத்த' எனும் சொல்லுக்கு'(நாங்கள் எங்கள் அறிவுரையை சொல்லி முடிப்பதற்குள்) அவன் எங்களை வரம்புமீறி தண்டித்துவிடுவான்' என்று பொருள்.

## 20:41 வது திருக்குர்ஆன் வசனம்

"(மூஸாவே!) எனக்காக உங்களை நான் தெரிந்தெடுத்திருக்கிறேன்'' எனும் (திருக்குர்ஆன் 20:41 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4736. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஆதம்(அலை) அவர்களும் மூஸா(அலை) அவர்களும் சந்தித்துக்கொண்டபோது மூஸா(அலை) அவர்கள் ஆதம்(அலை) அவர்களிடம், 'நீங்கள் தாம் மக்களைத் துர்பாக்கியவான்களாக்கி, அவர்களைச் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றியவரா?' என்று கேட்டார்கள். ஆதம்(அலை) அவர்கள் மூஸா(அலை) அவர்களிடம், 'அல்லாஹ் தன் தூதர் பதவிக்காகவும் தனக்காகவும் தேர்ந்தெடுத்து தவ்ராத்தையும் அருளினானே அவரா நீங்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'ஆம்' என்று பதிலளித்தார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள், 'என்னைப் படைப்பதற்கு முன்பாகவே (நீங்கள் குறிப்பிட்டபடி செய்வேன் என) என் மீது விதிக்கப்பட்டிருந்ததாக, தவ்ராத்தில் நீங்கள் கண்டீர்களா?' என்று கேட்டார்கள். மூஸா(அலை) அவர்கள்'ஆம்' (கண்டேன்) என்றார்கள். இப்படி(ப் பேசி) மூஸா(அலை) அவர்களை ஆதம்(அலை) அவர்கள் (வாதத்தில்) வென்றார்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
(திருக்குர்ஆன் 20:39 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் யம்மு' எனும் சொல்லுக்குக்'கடல்' என்று பொருள்.

## 20:77 - 79 வது திருக்குர்ஆன் வசனங்கள்

நாம் மூஸாவிற்கு வஹீ (இறைச்செய்தி) (செய்தி) அனுப்பினோம்: நீர் இரவோடு இரவாக என் அடியார்களை அழைத்துச் சென்று, கடலில் அவர்களுக்காக உலர்ந்த பாதையை அமைப்பீராக! உம்மை யாரேனும் பின்தொடர்வார்களோ எனச் சற்றும் நீர் அஞ்சத் தேவையில்லை (கடலைக் கடந்து செல்லும் போது) உமக்கு பயமும் ஏற்பட வேண்டியதில்லை. ஃபிர்அவ்ன் தன்

படைகளுடன் அவர்களைப் பின்தொடர்ந்தான். பிறகு அவர்களைக் கடல் எவ்வாறு மூழ்கடிக்க வேண்டுமோ அவ்வாறு மூழ்கடித்தது. ஃபிர்அவ்ன் தன்னுடைய சமுதாயத்தை வழிகெடுத்தே இருந்தான் அவர்களுக்குச் சரியான வழியைக் காட்டியிருக்கவில்லை (எனும் 20:77 - 79 வசனங்கள்).

ஹதீஸ் 4737. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது யூதர்கள் ஆஸூரா (முஹர்ரம் பத்தாம்) நாளில் நோன்பு நோற்றுக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் அது பற்றி விசாரித்தார்கள். அதற்கு அவர்கள்'இதுதான் மூஸா(அலை) அவர்கள் ஃபிர்அவ்னை வெற்றி கொண்ட நாள்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்'இவர்களை விட மூஸா(அலை) அவர்களுக்கு நாமே அதிக உரிமையுடையவர்கள். எனவே, நீங்கள் இந்நாளில் நோன்பு வையுங்கள்'' என்று (முஸ்லிம்களுக்குக்) கூறினார்கள்.

## 20:117 வது திருக்குர்ஆன் வசனம்

"ஆதமே! இவன் (இப்லீஸ்) உமக்கும் உம்முடைய மனைவிக்கும் பகைவனானவான். எனவே, இவன் உங்களிருவரையும் சொர்க்கத்திலிருந்தும் வெளியேற்றிவிட (இடமளிக்க) வேண்டாம் (அப்படி வெளியேற்றிவிட்டால்) நீங்கள் இன்னலுக்குள்ளாம் விடுவீர்கள்'' என்று நாம் கூறினோம் எனும் (திருக்குர்ஆன் 20:117 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4738. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூஸா(அலை) அவர்கள் ஆதம்(அலை) அவர்களிடம் வாதிட்டார்கள். அப்போது உங்கள் பாவத்தின் காரணமாக மக்களைச் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றி அவர்களைத் துர்பாக்கியசாலிகளாய் ஆக்கியவர்கள் நீங்கள் தாமே!"என்று மூஸா(அலை) அவர்கள் ஆதம்(அலை) அவர்களிடம் கேட்டார்கள். (பதிலுக்கு) ஆதம்(அலை) அவர்கள்'மூஸா! தன் தூதுச் செய்திகளை (மக்களிடம்) எடுத்துரைப்பதற்காகவும் தன்னுடன் உரையாடுவதற்காகவும் அல்லாஹ் தேர்ந்தெடுத்த மனிதர் நீங்கள் தாமே? என்னைப் படைப்பதற்கு முன்பே என் மீது அல்லாஹ்'எழுதிவிட்ட' அல்லது'விதித்துவிட்ட'ஒரு விஷயத்திற்காகவா என்னை நீங்கள் குறை கூறுகிறீர்கள்'' என்று திருப்பிக் கேட்டார்கள். இதைக் கூறிவிட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'ஆதம் (அலை) அவர்கள் (தம் இந்த பதிலால்) மூஸா(அலை) அவர்களைத் தோற்கடித்துவிட்டார்கள்'' என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (21)'அல்அன்பியா' அத்தியாயம்

ஹதீஸ் 4739. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

பனு இஸ்ராயீல், அல்கஹ்ஃப், மர்யம், தாஹா மற்றும் அல்அன்பியா ஆகிய அத்தியாயங்கள் அதிசயமான முதல் தர அத்தியாயங்களில் அடங்கும். மேலும், இவை நான் மனனம் செய்த பழைய அத்தியாயங்களில் உள்ளவையாகும்.

கத்தாதா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 21:58 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜுஃதாதன்' எனும் சொல்லுக்குத்'துண்டு துண்டாக்கினார்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 21:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபலக்' எனும் சொல்லி(ன் விளக்கவுரையி)ல் ஹஸன் அல்பஸரீ(ரஹ்)'நூற்பு இயந்திரத்தின் தகளி போல் (சுழன்றபடி கோள்கள் அனைத்தும் அதன்னுடையன் நீள்வட்டப்பாதையில் நீந்திச் செல்கின்றன)'' என்று கூறினார்கள்.'யஸ்பஹூன்' எனும் சொல்லுக்குச்'சுற்றுகின்றன' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 21:78 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நஃபஷத்' எனும் சொல்லுக்கு'மேய்ந்தது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:43 வது வசனத்தின் மூலத்திலள்ள'வலா ஹும் மின்னா) யுஸ்ஹபூன்' எனும் சொல்லுக்கு'(எம்முடைய வேதனையிலிருந்து) அவர்கள் தடுக்கப்படமாட்டார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:92 வது வசனத்திலுள்ள)'நீங்கள் யாவரும் ஒரே சமுதாயத்தைச் சேர்ந்தவர்களே' என்பதற்கு'நீங்கள் யாவரும் ஒரே மார்க்கத்தைச் சேர்ந்தவர்களே' என்று பொருள்.
இக்ரிமா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 21:98 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹஸப்' எனும் சொல்லுக்கு அபிசீனிய மொழியில்'விறகு' என்று பொருள்.
இக்ரிமா(ரஹ்) அல்லாதோர் கூறுகின்றனர்:
(திருக்குர்ஆன் 21:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஹஸ்ஸூ' (உணர்ந்தனர்) எனும் சொல்லுக்கு'அதை எதிர்பார்த்தனர்' என்று பொருள். இச்சொல்'அஹஸஸ்த்து (இஹ்ஸாஸன்)' எனும் சொல்லிலிருந்து பிரிந்ததாகும். (இதற்கு'ஐம்புலன்களால் உணர்ந்தேன்' என்று பொருள்.)
(திருக்குர்ஆன் 21:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'காமிதீன்' எனும் சொல்லுக்கு'அணைந்து போனவர்கள்' என்று பொருள்.'ஹஸீத்' எனும் சொல்லுக்கு'வேரோடு அறுவடை செய்யப்பட்டது' என்று பொருள்.'ஹஸீத்' எனும் சொல்லுக்கு'வேரோடு அறுவடை செய்யப்பட்டது' என்று பொருள். இச்சொல்லே ஒருமை, இருமை, பன்மை ஆகிய மூன்று நிலைகளுக்கும் பொருந்தும்.
(திருக்குர்ஆன் 21:19 வது வசனத்திலுள்ள)'அவர்கள் சோர்வடையமாட்டார்கள்' எனும் பொருள், மூலத்திலுள்ள'லா யஸ்தஸ்ஹிரூன்' எனும் சொல்லுக்குரியதாகும்.'ஹஸீர்' (சோர்வடைந்தவன்), 'ஹஸர்த்து பயீ' (என் ஒட்டகத்தைக் களைப்படையச் செய்தேன்) ஆகிய சொற்கள் இதில் அடங்கும்.
(அடுத்த அத்தியாயத்தில் வரும் 22:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அமீக்' எனும் சொல்லுக்குத்'தொலைவு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:65 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நும்கூ' எனும் சொல்லுக்கு'அவர்கள் மீண்டும் (இறைமறுப்பின் பக்கமே) திருப்பப்பட்டனர்' என்று பொருள். (இச்சொல்லுக்கு'வெட்கத்தால் தலை குனிந்தனர்' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)
(திருக்குர்ஆன் 21:80 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஸன் அத்த லபூஸ்' எனும் சொல்லுக்குக்'கவசங்கள் தயாரிப்பு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:93 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தகத்தஊ அம்ர்ஹும்' எனும் வாக்கியத்திற்குத்'தங்களின் (மார்க்க) விஷயங்களில் பிளவுபட்டனர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:102 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஹஸீஸ்' எனும் சொல்லும் அல்ஹிஸ்ஸு, அல்ஜர்ஸ், அல்ஹம்ஸ் ஆகிய சொற்களும் ஒரே பொருள் கொண்டவையாகும். இவற்றுக்'மெல்லிய சபதம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:109 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆஃதன்த்துகும்' எனும் சொல்லுக்கு'உங்களுக்கு நான் அறிவித்துவிட்டேன்' என்று பொருள். (இதைப் போன்றே 41:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆஃதன்னாக்க' எனும் சொல்லுக்கு'உமக்கு நாங்கள் அறிவிக்கிறோம்' என்று பொருள்.'ஒளிவு மறைவின்றி நீயும் எதிராளியும் சம நிலையில் இருக்கும் வகையில் போர்ப் பிரகடனம் செய்வதை'' இது (திருக்குர்ஆன் 21:109 வது வசனம்) குறிக்கும்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 21:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லஅல்லக்கும் துஸ்அலூன்' எனும் சொற்றொடருக்கு'நீங்கள் (மற்றவர்களால்) புரிந்துக் கொள்ளப்படலாம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இர்தளா' எனும் சொல்லுக்கு'அவன் விரும்பினான்' ('ரளிய') என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:65 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நும்கூ' எனும் சொல்லுக்கு'அவர்கள் மீண்டும் (இறைமறுப்பின் பக்கமே) திருப்பப்பட்டனர்' என்று பொருள். (இச்சொல்லுக்கு'வெட்கத்தால் தலை குனிந்தனர்' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)
(திருக்குர்ஆன் 21:80 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஸன்அத்த லபூஸ்' எனும் சொல்லுக்கக்'கவசங்கள் தயாரிப்பு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:90 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸன்அத்த லபூஸ்' எனும் சொல்லுக்குக்'கவசங்கள் தயாரிப்பு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:93 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தகத்தஊ அம்ர்ஹும்' எனும் வாக்கியத்திற்குத்'தங்களின் (மார்க்க) விஷயங்களில் பிளவுபட்டனர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:102 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஹஸீஸ்' எனும் சொல்லும் அல்ஹிஸ்ஸு, அல்ஜர்ஸ், அல்ஹம்ஸ் ஆகிய சொற்களும் ஒரே பொருள் கொண்டவையாகும். இவற்றுக்கு'மெல்லிய சப்தம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:109 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆ∴தன்த்துகும்' எனும் சொல்லுக்கு'உங்களுக்கு நான் அறிவித்துவிட்டேன்' என்று பொருள். (இதைப் போன்றே 41:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆ∴தன்னாக்க' எனும் சொல்லுக்கு'உமக்கு நாங்கள் அறிவிக்கிறோம்' என்று பொருள்.'ஒளிவு மறைவின்றி நீயும் எதிராளியும் சம நிலையில் இருக்கும் வகையில் போர்ப் பிரகடனம் செய்வதை'' இது (திருக்குர்ஆன் 02:109 வது வசனம்) குறிக்கும்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 21:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லஅல்லக்கும் துஸ்அலூன்' எனும் சொற்றொடருக்கு'நீங்கள் (மற்றவர்களால்) புரிந்துக் கொள்ளப்படலாம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இர்தளா' எனும் சொல்லுக்கு'அவன் விரும்பினான்' ('ரளிய') என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தமாஸீல்' எனும் சொல்லுக்குச்'சிலைகள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 21:104 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸிஜில்லு' எனும் சொல்லுக்கு'ஏடு' என்று பொருள்.

## 21:104 வது திருக்குர்ஆன் வசனம்

முதலில் (அவர்களை) நாம் படைத்தது போன்றே (அந்நாளில்) அவர்களை மீண்டும் படைப்போம். இது நம்முடைய வாக்குறுதியாகும் (எனும் 21:104 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4740. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்களிடையே) உரையாற்றினார்கள். அப்போது, `(மனிதர்களே!) நீங்கள் அல்லாஹ்விடம் (செருப்பணியாத) வெறுங்காலுடையவர்களாக, உடையணியாதவர்களாக, `விருத்த சேதனம்' செய்யப்படாதவர்களாக மறுமையில் எழுப்பப்படுவீர்கள்'' என்று கூறிவிட்டு, `முதலில் நாம் (அவர்களைப்) படைத்தது போன்றே (மறுமை நாளில்) நாம் அவர்களை மீண்டும் படைப்போம். இது நம்முடைய வாக்குறுதியாகும். நாம் இதனைச் செய்தே தீருவோம்'' எனும் (திருக்குர்ஆன் 21:104 வது) இறைவசனத்தை ஓதினார்கள். பிறகு, மறுமை நாளில் உடை அணிவிக்கப்படும் முதல் மனிதர் (இறைத்தூதர்) இப்ராஹீம் அவர்கள் தாம். அறிந்து கொள்ளுங்கள்: என்னுடைய சமுதாயத்தாரில் சிலர் கொண்டுவரப்பட்டு அவர்கள் இடப்பக்கம் (நரகத்தை நோக்கிக்) கொண்டு செல்லப்படுவர்.

அப்போது நான், `என் இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்'' என்று சொல்வேன். அதற்கு, `இவர்கள் உங்களு(டைய இறப்பு)க்குப் பின் என்னவெல்லாம் புதிது புதிதாக உருவாக்கினார்கள் என்று உங்களுக்குத் தெரியாது'' என்று சொல்லப்படும். அப்போது நான், நல்லடியார் ஈசா(அலை) அவர்கள் சொன்னதைப் போல்'நான் அவர்களிடையே (வாழ்ந்துகொண்டு) இருந்தவரை நான் அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். நீ என்னை அழைத்துக் கொண்டபோது நீயே அவர்களைக் கண்காணிப்பவன் ஆகிவிட்டாய்'' என்று பதிலளிப்பேன். அதற்கு, `இவர்களை நீங்கள் பிரிந்து வந்ததிலிருந்து இவர்கள் தங்கள் குதிகால் (சுவடு)களின் வழியே தம் மார்க்கத்திலிருந்து விலகிச் சென்றுகொண்டேயிருந்தார்கள்'' என்று கூறப்படும்.

## (22)'அல்ஹஜ்' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்..)

சு∴ப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 22:34 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்முக்பித்தீன்' எனும் சொல்லுக்கு' (எல்லா நிலைகளிலும் இறைவிதியின் மீது)'நிம்மதிகொள்வோர்', `திருப்தியடைவோர்' என்று பொருள் (இதற்கு இசைவான வேறு பல பொருள்களும் இச்சொல்லுக்கு உண்டு.)

"(நபியே! உமக்குமுன் நாம் அனுப்பிய ஒவ்வொரு தூதருடைய நபியுடையவும் விருப்பத்தில் ஷைத்தான் குழப்பத்தை உண்டுபண்ண முயலாது இருந்ததில்லை'' எனும் (திருக்குர்ஆன் 22:52 வது) வசனத்தி(ன் விளக்கவுரையி)ல் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: நபியவர்கள் பேசினால், அவர்களின் பேச்சினூடே ஷைத்தான் (நுழைந்து) குழப்பத்தை விளைவிப்பான். உடனே, அல்லாஹ் ஷைத்தான் விளைவிக்கும் குழப்பங்களை முறியடித்து, தன் வசனங்களை நிலைநிறுத்திவிடுவான். (இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'உம்னிய்யத்' எனும் சொல்லுக்கு'ஓதல்' என்று பொருள் எனக்கூறப்படுகிறது. (திருக்குர்ஆன் 02:78 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அமானிய்யு' என்னும் சொல்லுக்கு'ஓதுவார்கள்: ஆனால் எழுதமாட்டார்கள்' என்று பொருள் (கொள்ளப்பட்டிருப்பது இதற்குச் சான்றாகும்).

முஜாஹித்(ரஹ்) கூறினார்

(திருக்குர்ஆன் 22:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள'கஸ்ரின்) மஷீத்' எனும் சொல்லுக்குக்'கரையினால் உறுதியாக்கப்பட்ட (எத்தனையோ மாடமாளிகைகள்)'' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகின்றனர்:

(திருக்குர்ஆன் 22:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஸ்த்தூன' எனும் சொல்லுக்கு'எல்லை மீறி (அடக்கு முறையை அவிழ்த்து) விடுவர்' என்று பொருள். இச்சொல்'சத்வத்' (அடக்கியாளுதல்) எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். ('யஸ்த்தூன' எனும்) இச்சொல்லுக்கு'பாய்ந்தது (தாக்கி) விடுவார்கள்' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.

'பரிசுத்தமான வாக்கியத்தின் பக்கம் அவர்களுக்கு வழிகாட்டப்பட்டது' எனும் (திருக்குர்ஆன் 22:24 வது) வசனத்திற்குப்'பரிசுத்தமான வாக்கியம் அவர்களின் உள்ளுணர்வில் வைக்கப்பட்டது' என்று பொருள்.

(இதே வசனத்திலுள்ள)'மிக்க புகழுக்குரிய பாதை' என்பது இஸ்லாமாகும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 22:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பி ஸபபின் இலஸ் ஸமாயி' எனும் சொற்றொடருக்கு'வீட்டின் கூரையில் ஒரு கயிற்றைக் கட்டி' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 22:20 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'த∴த்ஹலு' எனும் சொல்லுக்கு'மறக்கடிக்கப்படுவாள்' என்று பொருள்.

## 22:02 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், (மறுமை நாளில்) மக்களை போதையுற்றோராய்க் காண்பீர். (உண்மையில்) அவர்கள் போதையில் இருக்கமாட்டார்கள். ஆயினும், (அந்த அளவு) அல்லாஹ்வின் வேதனை கடுமையாய் இருக்கும் (எனும் 22:2 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4741. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வல்லவனும் மாண்புடையோனுமாகிய அல்லாஹ் மறுமை நாளில் (ஆதி மனிதரை நோக்கி,)'ஆதமே!' என்பான். அதற்கு அவர்கள், 'என் இறைவா! இதோ வந்து விட்டேன். கட்டளையிடு! காத்திருக்கிறேன்' என்று கூறுவார்கள். அப்போது'நீங்கள் உங்கள் வழித்தோன்றல்களிருந்து நரகத்திற்கு அனுப்பப்படவிருப்பவர்களை (மற்றவர்களிலிருந்து) தனியாகப் பிரித்திடுமாறு அல்லாஹ் உங்களுக்கு ஆணையிடுகிறான்' என்று ஒருவர் அறைகூவல் விடுப்பார். ஆதம்(அலை) அவர்கள், 'எத்தனை நரகவாசிகளை?' என்று கேட்பார்கள். அதற்கு அவர், 'ஒவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை (வெளியே கொண்டு வாருங்கள்)' என்று பதிலளிப்பார். இப்படி அவர் கூறும் வேளையில் (அங்கு நிலவும் பயரங்க சூழ்நிலையின் காரணத்தால்) கர்ப்பம் கொண்ட பெண் ஒவ்வொருத்தியும் கர்ப்பத்தை (பீதியின் காரணத்தால் அரை குறையாகப்) பிரசவித்துவிடுவாள் பாலகன் கூட நரைத்து (மூப்படைந்து) விடுவான். மக்களை போதையுற்றவர்களாய் நீங்கள் காண்பீர்கள். ஆனால், அவர்கள் (உண்மையிலேயே மதுவால்) போதையுற்றிருக்க மாட்டார்கள். ஆனால், (அந்த அளவிற்கு) அல்லாஹ்வின் வேதனை கடுமையாய் இருக்கும்."

நபியவர்கள் இவ்வாறு கூறியது (அங்கு கூடியிருந்த) மக்களுக்குச் சிரமமாக இருந்தது. (அச்சத்தினால்) அவர்களின் முகங்கள் நிறம் மாறிவிட்டன. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'உங்களில் ஒருவருக்கு ய∴ஜூஜ், ம∴ஜூஜ் கூட்டத்தினரில் ஓராயிரம் பேர் (தனியாகப் பிரிக்கப்படாமல், நரகம் செல்லும் குழுவிலேயே) இருப்பார்கள்' என்று கூறிவிட்டு பிறகு, 'நீங்கள் (மறுமை நாளில் கூடியிருக்கும்) மக்களில் வெண்ணிறக் காளையின் மேனியில் உள்ள கறுப்பு முடியைப் போன்றுதான்' அல்லது'கருநிறக் காளையின் மேனியில் உள்ள வெண்ணிற முடியைப் போன்றுதான்' (மொத்த மக்களில் குறைந்த எண்ணிக்கையில்) இருப்பீர்கள்' என்று கூறினார்கள். பின்னர்'(என் சமுதாயத்தினராகிய) நீங்கள் சொர்க்கவாசிகளில் கால் பங்கினராக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்' என்று கூறினார்கள். உடனே நாங்கள் (மகிழ்ச்சியூட்டும் இந்த நற்செய்தி கேட்டு)'அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று கூறினோம். பிறகு நபியவர்களில், 'சொர்க்கவாசிகளில் நீங்கள் மூன்றில் ஒருபங்கினராக இருக்கவேண்டும்' என்று கூறினார்கள். நாங்கள் (பெரும் மகிழ்ச்சியால் மீண்டும்,)'அல்லாஹு அக்பர்' என்று கூறினோம். பிறகு நபியவர்கள், 'சொர்க்கவாசிகளில் பாதித் தொகையினராக நீங்கள் இருக்கவேண்டும்' என்று கூறினார்கள். நாங்கள் (இப்போதும்)'அல்லாஹு அக்பர்' என்று கூறினோம்.

இதை அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) இவ்வாறே காணப்படுகிறது.

ஜரீர் இப்னு அப்தில் ஹமீத், ஈசா இப்னு யூனுஸ், அபூ முஆவியா(ரஹ்) ஆகியோரின் அறிவிப்பில், (இந்த 22:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள'சுகாரா' எனும் சொல்லுக்கு பதிலாக)'சக்ரா' என்று காணப்படுகிறது. (பொருள் ஒன்றே).

## 22:11, 12 வது திருக்குர்ஆன் வசனங்கள்

மேலும், மனிதர்களில் சிலர் இருக்கிறார்கள் அவர்கள் விளிம்பில் நின்றுகொண்டு அல்லாஹ்வை வழிபடுகிறார்கள். தங்களுக்கு ஏதேனும் ஆதாயம் கிடைக்குமாயின் அதைக்கொண்டு மன நிறைவுகொள்கிறார்கள். துன்பம் ஏற்படுமாயின் தலைகீழாக மாறிவிடுகிறார்கள். அவர்கள் இம்மையையும் இழந்துவிட்டார்கள் மறுமையையும் இழந்துவிட்டார்கள். இதுதான் பம்ரங்கமான நஷ்டமாகும் (எனும் 22:11, 12ஆகிய இறைவசனங்கள்.)

(முதல் வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹர்ஃப்' (விளிம்பு) என்பதற்குச்'சந்தேகம்' என்பது நோக்கப் பொருளாகும்.

(அடுத்த அத்தியாயத்தில் 23:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்ரஃப்னாஹும்' என்பதற்கு'ஆடம்பரமான வாழ்க்கையை அவர்களுக்கு நாம் வழங்கியிருந்தோம்' என்று பொருள்.

ஹதீஸ் 4742. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

"விளிம்பில் நின்றுகொண்டு அல்லாஹ்வை வழிபடுகிற சிலரும் மக்களிடையே உள்ளனர்'' எனும் (திருக்குர்ஆன் 22:11 வது) இறைவசனம் தொடர்பாக இப்னு அப்பாஸ்(ரலி) கூறுகையில், `சிலர் மதீனாவுக்கு வருவர். (இஸ்லாத்தையும் ஏற்றுக்கொள்வர்.) அவர்கள் தம் மனைவியர் ஆண் பிள்ளைகள் பெற்றெடுத்தால், அவர்களின் குதிரைகள் குட்டி ஈன்றால் அப்போது, `இது (-இஸ்லாம்-) நல்ல மார்க்கம்'' என்று கூறுவார்கள். அவர்களின் மனைவியர் ஆண் குழந்தைகள் பெறவில்லையென்றால், அவர்களின் குதிரைகள் குட்டியிடவில்லையென்றால், `இது கெட்ட மார்க்கம்'' என்று சொல்வார்கள். (இவர்கள் தொடர்பாக இந்த இறைவசனம் அருளப்பெற்றது)'' என்று கூறினார்கள்.

## 22:19 வது திருக்குர்ஆன் வசனம்

"இவர்கள் தங்களின் இறைவனின் (மார்க்க) விஷயத்தில் தர்க்கித்துக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்'' எனும் (திருக்குர்ஆன் 22:19 வது) வசனத்தொடர்.

ஹதீஸ் 4743. கைஸ் இப்னு உபாதா(ரஹ்) அறிவித்தார்

அபூ தர்(ரலி)'இவர்கள் தங்களின் இறைவனின் (மார்க்க) விஷயத்தில் தர்கித்துக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 22:19 வது) வசனத், பத்ருப் போரன்று (படைக்கு முன்னால் வந்து) தனித்து நின்று போராடிய (இஸ்லாமிய வீரர்களான) ஹம்ஸா மற்றும் அவர்களின் இரண்டு நண்பர்கள் (அலீ, உபைதா) விஷயத்திலும், (இறைமறுப்பாளர்களான) உத்பா மற்றும் அவரின் இரண்டு நண்பர்கள் (ஷைபா, வலீத்) விஷயத்திலுமே அருளப்பெற்றது'' எனச் சத்தியமிட்டுக் கூறி வந்தார்கள்.

இந்த ஹதீஸ் இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 4744. அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்

(இறைமறுப்பாளர்கள் போரிட்டது தொடர்பாக) மறுமை நாளில், (அளவிலா அருளாளன்) ரஹ்மானுக்கு முன்னால் வழக்காடுவதற்காக மண்டியிடுபவர்களில் (இந்தச் சமுதாயத்திலேயே) நான்தான் முதல் ஆளாக இருப்பேன்.

அறிவிப்பாளர் கைஸ் இப்னு உபாத்(ரஹ்) கூறினார்: இவர்களைக் குறித்தே, `இவர்கள் தங்களின் இறைவனின் (மார்க்க) விஷயத்தில் தர்கித்துக் கொண்ட இரண்டு பிரிவினர் ஆவர்'' எனும் (திருக்குர்ஆன் 22:19 வது) இறைவசனம் அருளப்பெற்றது. அவர்கள் பத்ருப்போரின்போது (களத்தில் இறங்கி) தனித்து நின்று போராடிய (முஸ்லிம்களான) அலீ, ஹம்ஸா, உபைதா(ரலி) ஆகியோரும் (மறுப்போரான) ஷைபா இப்னு ரபீஆ, உத்பா இப்னு ரபீஆ, வலீத் இப்னு உத்பா ஆகியோரும் ஆவர்.

## (23)'அல்முஃமினூன்' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

சு∴ப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 23:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சப்உ தராயிக்' (ஏழு அடுக்குகள்) என்பதற்கு'ஏழு வானங்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள'சாபிகூன்' (ஒருவரையொருவர் முந்திக் கொள்பவர்கள்) என்பதற்கு'(அல்லாஹ்விடமிருந்து) அவர்களுக்கு நற்கதி முந்திவிட்டிருக்கிறது. (எனவே, அவர்கள் நன்மையான காரியங்களில் போட்டியிட்டு ஒருவரையொருவர் முந்துகின்றனர்)‘` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:60 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வஜிலத் குலூபுஹும்' எனும் சொற்றொடருக்கு'அஞ்சுபவர்கள்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 23:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹய்ஹாத்த, ஹய்ஹாத்த' எனும் சொற்றொடருக்கு'வெகுதூரம், வெகுதூரம்' (அசாத்தியம்) என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:113 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஆத்தீன்' (கணக்கு வைத்திருப்பவர்கள்) எனும் சொல், வானவர்களைக் குறிக்கிறது.
(திருக்குர்ஆன் 23:74 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ல நாக்கிபூன்' எனும் சொல்லுக்குப்'புறக்கணித்தவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:104 வது வசனத்திலுள்ள)'முகம் விகாரமானவர்கள்' எனும் பொருள் மூலத்திலுள்ள)'காலிஹூன்' எனும் சொல்லுக்குரியதாகும்.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 23:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சுலாலத்' (‘சத்து‘) என்பதில் (மனிதனிலிருந்து பிரியும்) விந்தும், (அதிலிருந்து உருவாகும்) குழந்தையும் அடங்கும். 2
(திருக்குர்ஆன் 23:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜின்னத்' எனும் சொல்லும், `அல்ஜுனூன்' எனும் சொல்லும் (‘பைத்தியம்' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.
(திருக்குர்ஆன் 23:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴குஸா∴' எனும் சொல்லும், `அல்ஜுனூன்' எனும் சொல்லும் நுரை மற்றும் பயனற்ற குப்பை கூளங்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:65 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஜ்அரூன்' எனும் சொல்லுக்கு'மாடு போன்றுகத்துவார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:66 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அலா அஉகாபிக்கும்' எனும் சொல்லுக்குப்'புறங்காட்டி (வந்த வழியே) சென்றான்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 23:67 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சாமிர்' (நிலவொளியில் இராக்கதை பேசுபவர்) எனும் சொல்'சமர்' எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிரிந்ததாகும். பன்மை: சுமார், சாமிர் எனும் இச்சொல் இந்த வசனத்தில் பன்மையின் இடத்தில் ஆளப்பட்டுள்ளது.
(திருக்குர்ஆன் 23:89 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துஸ்ஹரூன்' எனும் சொல்லுக்கு' அறிவை இழந்து விட்டிருக்கிறீர்கள்‘` என்ற பொருள். இச்சொல்'சிஹ்ர்' (சூனியம்) எனும் மூலச் சொல்லிலிருந்து தோன்றியதாகும்.

## (24) அந்நூர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
(திருக்குர்ஆன் 24:43 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மின் கிலாலிஹி' (அதற்கிடையிலிருந்து) என்பதற்கு'அடுக்கடுக்கான மேகங்களுக்கிடையேயிருந்தது' என்று கருத்து.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'சனா பர்ம்ஹி' எனும் சொல்லுக்கு'(மின்) ஒளி' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 24:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மு∴த்இனீன்' எனும் சொல்லுக்குப்'பணிந்தவர்களாக என்று பொருள்.
(திருக்குர்ஆன் 24:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஷ்த்தாத்' எனும் சொல்லும்'ஷத்தா', 'ஷதாத்', 'ஷத்து' எனும் சொற்களும் ('தனித் தனியானவை' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 24:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சூரத்துன் அன்ஸல்னாஹா' எனும் சொற்றொடருக்கு'நாமே இதனை (இறக்கி)த் தெளிவுபடுத்தினோம்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகிறார்கள்:
பல அத்தியாயங்கள் ஒன்று சேர்க்கப்பட்டிருப்பதனால் தான் குர்ஆனுக்கு'குர்ஆன்' (ஒன்று சேர்க்கப்பட்டது) என்று பெயர் சூட்டப்பட்டது.
அத்தியாயத்திற்கு'சூரா' (பிரிக்கப்பட்டது) என்று பெயரிடப்படக் காரணம், ஓர் அத்தியாயத்திலிருந்து மற்றோர் அத்தியாயம் தனியாகப் பிரிக்கப்பட்டிருப்பதேயாகும். (தனித் தனியாகப் பிரிக்கப்பட்ட அத்தியாயங்களில்) ஒன்றை ஒன்றோடு சேர்த்தபோது குர்ஆனுக்கு'திருக்குர்ஆன்' (ஒன்று சேர்க்கப்பட்டது) என்று பெயர் வழங்கப்பட்டது.
ஸஅத் இப்னு இயாள் அஸ்ஸுமாலீ(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 24:35 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மிஷ்காத்' எனும் சொல்லுக்கு அபிசீனிய மொழியில்'மாடம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 75:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ குர் அனஹு' எனும் சொல்லுக்கு'அதில் ஒன்றை மற்றொன்றுடன் சேர்ப்பது' என்று பொருள். (திருக்குர்ஆன் 75:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴பஇதா கர∴னாஹு' எனும் சொற்றொடருக்கு, 'அதனை நாம் ஒருங்கிணைந்து ஒன்று சேர்த்தால்' என்று பொருள்.'∴பத்தபிஉ குர்ஆனஹு' எனும் வாக்கியத்திற்கு' அதில் ஒன்று சேர்க்கப்பட்டுள்ளதன்படி செயலாற்று (அதாவது) அல்லாஹ் உனக்கிட்டுள்ள கட்டளைப்படி செயலாற்று அவன் தடை விதித்துள்ளனவற்றைவிட்டும் விலகியிரு!"என்று பொருள்.
"அவனுடைய கவிதையில்'குர்ஆன்' இல்லை'' என்றால், 'ஒருங்கிணைப்பு' இல்லை என்று பொருள். சத்தியத்தையும் அசத்தியத்தையும் பாகுபடுத்திக்காட்டுவதனால் தான் (குர்ஆனுக்கு) ∴புர்கான் (பாகுபடுத்தக்கூடியது) என்று பெயர் வந்தது.
"ஒரு பெண், தன் வயிற்றில் சிசுவை ஒன்று சேர்க்கவில்லை'' என்பதைக் குறிக்க'மா கர அத்' எனும் சொல் ஆளப்படுவதுண்டு.
(திருக்குர்ஆன் 24:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள'∴பரள்னாஹா' என்னும் சொல் மற்றோர் ஓதலில்'∴பர்ரள்னாஹா' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த)'∴பர்ரள்னாஹா' எனும் சொல்லுக்கு'இதில் நாம் பல்வேறு விதமான விதிகளை அருளியுள்ளோம்' என்று பொருள். (அதே சொல்லை)'∴பரள்னாஹா' என்று ஓதியவர்கள்', 'உங்களுக்கும் விதியாக்கினோம் உங்களுக்குப் பின்னால் வருபவர்களுக்கும் விதியாக்கினோம்' என்று (பொருள்) கூறுகிறார்கள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 24:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴பரள்னாஹா' என்னும் சொல் மற்றோர் ஓதலில்'∴பரள்னாஹா' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த)'∴பரள்னாஹா' எனும் சொல்லுக்கு'இதில் நாம் பல்வேறு விதமான விதிகளை அருளியுள்ளோம்' என்று பொருள். (அதே சொல்லை)'∴பரள்னாஹா' என்று ஓதியவர்கள், 'உங்களுக்கம் விதியாக்கினோம் உங்களுக்குப் பின்னால் வருபவர்களுக்கும் விதியாக்கினோம்' என்று (பொருள்) கூறுகிறார்கள்.

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 24:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அவித் தி∴ப்லில்ல∴தீன லம் யழஹரு அலா அவ்ராத்தின்னிஸா' எனும் சொற்றொடர், வயது சிறியதாயிருப்பதானால் பெண்களின் மறைவான உறுப்புகள் குறித்து அறிந்திராத சிறுவர்களைக் குறிக்கிறது.
ஷஅபீ (ரஹ்) கூறினார்:
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'∴கைரி உலில் இர்பத்' எனும் சொல், பெண் தேவையற்ற (வயோதிகர்கள், பாலுணர்வற்றவர்கள் போன்ற) ஆண்களைக் குறிக்கிறது.
முஜாஹித்(ரஹ்), 'தம் வயிற்றைக் குறித்த எண்ணத்தைத் தவிர (உணவைத் தவிர) வேறு எண்ணம் வராத (இவனால் பெண்களுக்குப் பாலியல் தொல்லை ஏதும் நேருமோ என்று பெண்களின் விஷயத்தில் அஞ்சப்படாத ஆணைக் குறிக்கும்' எனக் கூறுகிறார்கள்.
தாவூஸ்(ரலி) கூறினார்:
பெண் வேட்கையற்ற வெகுளியே'∴கைரு உலில் இர்பத்' ஆவான்.

## 24:06 வது திருக்குர்ஆன் வசனம்

“யார் தம் மனைவியர் மீது அவதூறு கூறி (அதை நிரூபிக்கத்) தம்மையன்றி அவர்களிடம் வேறு சாட்சிகள் இல்லையோ அத்தகையோரில் ஒருவர், நிச்சயமாக தாம் (தம் குற்றச்சாட்டில்) உண்மையாளர் தாம் என அல்லாஹ்வின் மீது நான்கு முறை சத்தியம் செய்து சாட்சியம் அளிக்கவேண்டும்‘' எனும் (திருக்குர்ஆன் 24:6 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4745. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்
‘பனு அஜ்லான்' குலத்தாரின் தலைவராயிருந்த ஆஸிம் இப்னு அதீ(ரலி) அவர்களிடம் (அதே குலத்தைச் சேர்ந்த)'உவைமிர்' என்பவர் வந்து'தன் மனைவியுடன் வேறொரு அன்னிய ஆடவன் (தகாத உறவுகொண்டபடி) இருக்கக் கண்ட ஒரு மனிதனின் விஷயத்தில் என்ன கூறுகிறீர்கள்? அவன் அந்த அன்னிய ஆடவனைக் கொன்று விடலாமா? அவ்வாறு கொன்றுவிட்டால், (பழி வாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்யவேண்டும்? எனக்காக இந்த விவகாரம் குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நீங்கள் கேட்டுச் சொல்லுங்கள்‘' என்று கூறினார். எனவே, ஆஸிம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று, 'இறைத்தூதர் அவர்களே!”என்று (விஷயத்தைச் சொல்லி) கேட்க, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை (என்பதை உணர்ந்துகொண்டு திரும்பி வந்துவிட்டார்). நபி(ஸல்) அவர்கள் என்ன கூறினார்கள் என்று ஆஸிம்(ரலி) அவர்களிடம் உவைமிர்(ரலி) கேட்க, அவர்கள், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இத்தகைய கேள்விகளை விரும்பவில்லை மேலும், இப்படிக் கேட்பதை அவர்கள் அசிங்கமாகக் கருதுகிறார்கள்‘' என்று பதில் கூறினார்கள். உடனே உவைமிர்(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இதைப் பற்றிக் கேட்காமல் ஓயமாட்டேன்‘' என்று கூறிவிட்டு, நபி(ஸல்) அவர்களிடம் சென்று, 'இறைத்தூதர் அவர்களே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அன்னிய ஆடவன் இருக்கக் கண்டால் அவன் அம்மனிதனைக் கொல்லலாமா? (அப்படிக் கொன்றுவிட்டால், பழிக்குப்பழியாக) நீங்கள் அம்மனிதனைக் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்யவேண்டும்?' என்று கேட்டார்.
அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அல்லாஹ் உம்முடைய விஷயத்திலும் உம்முடைய மனைவி விஷயத்திலும் குர்ஆன் வசனத்தை அருளியுள்ளான்‘' என்று கூறி, அவ்விருவருக்கும் அல்லாஹ் தன் வேதத்தில் குறிப்பிட்டுள்ள (‘லிஆன்' எனும்) சாப அழைப்புப் பிரமாணம் செய்யும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே, தம் மனைவி மீது (குற்றம் சாட்டி) உவைமிர்(ரலி)'லிஆன்' செய்தார்கள். பிறகு'இறைத்தூதர் அவர்களே! நான் இவளை (விவாகரத்துச் செய்யாமல் என் மனைவியாகவே) வைத்திருந்தால், இவளுக்கு அநீதி

இழைத்தவனாகி விடுவேன்‘ ‘ என்று கூறிவிட்டு, அவளை விவாகரத்துச் செய்துவிட்டார். இந்த வழிமுறையே அவர்களுக்குப் பின் ’லிஆன்’ செய்யும் கணவன் மனைவியருக்கு முன் மாதிரியாகிவிட்டது. பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , ‘கவனியுங்கள்! கரு நிறமும் கன்னங்கரிய கண் பாவையும், பெருத்த புட்டங்களும், தடித்த கால்களும் உடைய பிள்ளையை இவள் பெற்றெடுத்தால், உவைமிர் அவளைப் பற்றி உண்மை பேசியதாகவே, கருதுகிறேன். அரணையைப் போல், சிவப்பான பிள்ளையை அவள் பெற்றெடுத்தால், உவைமிர் அவளைப் பற்றிப் பொய் பேசியதாகவே நான் கருதுவேன்‘ ‘ என்று கூறினார்கள். பின்னர் உவைமிர் சொன்னதை மெய்ப்பிக்கும் விதத்தில் அவள், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வர்ணித்த தோற்றத்திலேயே (கருநிறமும், கன்னங்கரிய கருவிழியும் தடித்த கால்களும் உடைய) பிள்ளையைப் பெற்றெடுத்தாள். இதனால் அக்குழந்தை தன் தாயுடன் இணைத்தே (‘இன்னவளின் மகன்’ என்று) அழைக்கப்படலாயிற்று.

## 24:07 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், ஐந்தாவது முறை (தன்னுடைய குற்றச்சாட்டில்) தான் பொய்யனாக இருந்தால்’அல்லாஹ்வின் சாபம் தன் மீது உண்டாகட்டும்!’ என்று கூறவேண்டும் (எனும் 24:7 வது இறைவசனம்).

ஹதீஸ் 4746. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, ‘இறைத்தூதர் அவர்களே! தன் மனைவியுடன் வேறோர் ஆடவனைக் கண்ட ஒரு மனிதன் அவனைக் கொன்றுவிடலாமா? (அப்படிக் கொன்றுவிட்டால், பழிக்குப் பழியாக) அவனை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்யவேண்டும்?’ என்று கேட்டார். அப்போது அல்லாஹ் அந்தக் கணவன் மனைவி தொடர்பாகக் குர்ஆனில் தான் கூறியுள்ள’லிஆன்’ எனும் சாப அழைப்புப் பிரமாணச் சட்டத்தை அருளினான். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அம்மனிதரிடம், ‘உம்முடைய விஷயத்திலும், உம்முடைய மனைவி விஷயத்திலும் தீர்ப்பளிக்கப்பட்டுவிட்டது‘ ‘ என்று கூறினார்கள். பிறகு அந்த (கணவன், மனைவி) இருவரும்’லிஆன்’ செய்தார்கள். அப்போது நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அந்த மனிதர் தம் மனைவியிடமிருந்து பிரிந்துவிட்டார். (அன்றிலிருந்து) அந்த நிகழ்ச்சியே’லிஆன்’ செய்யும் கணவன் மனைவியரைப் பிரித்து வைப்பதற்கு முன்மாதிரியாகிவிட்டது. அப்பெண் கருவுற்றிருந்தாள். அவளுடைய கணவர் அக்கருவை (‘தனக்குரியது’ என) ஏற்க மறுத்தார். (பின்னர் அவளுக்குப் பிறந்த) அவளுடைய மகன் அவளுடன் இணைத்தே (இன்னவளின் மகன்) என்று அழைக்கப்பட்டு வந்தான். பிறகு, அவன் அவளிடமிருந்தும், அவள் அவனிடமிருந்தும் அல்லாஹ் ஏற்படுத்திய பங்கினைப் பெறுகிற வாரிசுரிமைச் சட்டம் நடைமுறைக்கு வந்தது.

## 24:08 வது திருக்குர்ஆன் வசனம்

(தன் மீது தன்னுடைய கணவன் சுமத்திய குற்றச்சாட்டை மறுக்கும் வகையில்) அவன் பொய்யன் ஆவான் என மனைவி நான்கு முறை அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறுவது, (விபசாரக் குற்றத்திற்கான) தண்டனையை அவளைவிட்டும் அகற்றி விடும் (எனும் 24:8 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4747. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

ஹிலால் இப்னு உமய்யா(ரலி) (கர்ப்பவதியான) தம் மனைவியை’ஷரீக் இப்னு சஹ்மா’ என்பவருடன் இணைத்து (இருவருக்குமிடையே தகாத உறவு இருப்பதாகக்) குற்றம் சாட்டினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘(உன்) ஆதாரத்தைக் கொண்டு வா! இல்லையென்றால், உன் முதுகில் கசையடி கொடுக்கப்படும்‘ ‘ என்று கூறினார்கள். அதற்கு

ஹிலால்(ரலி), `தங்களைச் சத்திய(மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீது ஆணையாக! நான் உண்மையே சொல்கிறேன். என்னுடைய முதுகைக் கசையடிலிருந்து காப்பாற்றும் செய்தியை அல்லாஹ் நிச்சயம் அருள்வான்‘` என்று கூறினார்கள். உடனே (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறங்கி, நபி(ஸல்) அவர்களுக்கு ’யார் தம் துணைவியர் மீது அவதூறு கூறி‘` என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 24:6-9) வசனங்களை ஓதிக் காட்டினார்கள். 5

நபி(ஸல்) அவர்கள் திரும்பி வந்து ஹிலால்(ரலி) அவர்களின் மனைவி ஆளனுப்பினார்கள். (இதற்கிடையே) ஹிலால்(ரலி) அவர்களும் வந்து (தாம் சொன்னது உண்மையே என நான்கு முறை) சத்தியம் செய்து சாட்சியமளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், `உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் அறிவான். எனவே, உங்கள் இருவரில் பாவமன்னிப்புக்கோரி (தவறு தன்னுடையதுதான் என்று ஒப்புக்கொண்டு, இறைவன் பக்கம்) திரும்புகிறவர் யார்?’ என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். பிறகு, ஹிலால்(ரலி) அவர்களின் மனைவி எழுந்து நின்று (நான்கு முறை சத்தியம் செய்து) சாட்சியம் அளித்தார். ஐந்தாம் முறையாக (சாப அழைப்புப் பிரமாணம்) செய்யச் சென்றபோது மக்கள் அவரை நிறுத்தி ’இது (பொய்யான சத்தியமாயிருந்தால் இறை தண்டனையை) உறுதிப்படுத்திவிடும். (எனவே, நன்கு யோசித்துச் செய்!)‘` என்று கூறினார்கள். ஹிலால் அவர்களின் மனைவி சற்றே தாமதித்து, பிரமாணம் செய்யத் தயங்கினார். நாங்கள் அவர் தம் பிரமாணத்திலிருந்து பின்வாங்கிவிடுவார் என்றே எண்ணினோம். ஆனால், பிறகு அவர், `காலமெல்லாம் என் சமுதாயத்தாரை நான் இழிவுக்குள்ளாக்கப் போவதில்லை‘` என்று கூறி (சாப அழைப்புப் பிரமாணத்தைச்) செய்துமுடித்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் ’இவளைக் கவனித்து வாருங்கள். இவள் கரிய விழிகளும், பெருத்த புட்டங்களும், தடித்த கால்களும் உடைய பிள்ளையைப் பெற்றெடுத்தால், அது ’ஷரீக் இப்னு சஹ்மா‘வுக்கே உரியதாகும்‘` என்று கூறினார்கள். அப்பெண் நபியவர்கள் வர்ணித்தவாறே குழந்தை பெற்றெடுத்தார். இதையறிந்த நபி(ஸல்) அவர்கள், `இது பற்றிய இறைச்சட்டம் (‘லிஆன்’ விதி) மட்டும் வந்திருக்காவிட்டால் நான் அவளைக் கடுமையாகத் தண்டித்திருப்பேன்‘` என்று கூறினார்கள்.

## 24:09 வது திருக்குர்ஆன் வசனம்

“ஐந்தாவது முறை, `அவன் (தன்னுடைய குற்றச்சாட்டில்) உண்மையாளனாக இருந்தால் தன் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாவதாக’ என்று அவள் சாட்சியம் அளிக்கவேண்டும்’ எனும் (திருக்குர்ஆன் 24:9 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4748. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் ஒருவர் (உவைமிர்) தம் மனைவியின் மீது (விபசாரக்) குற்றம்சாட்டி அவளுடைய குழந்தையை (தன்னுடையதாக) ஏற்க மறுத்தார். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்விருவருக்கும் (‘சாப அழைப்புப் பிரமாணம்’ செய்திடுமாறு) உத்தரவிட்டார்கள். அவர்களும் (குர்ஆனில்) அல்லாஹ் கூறியுள்ள முறைப்படி (‘லிஆன்’ எனும்) சாப அழைப்புப் பிரமாணம் செய்தனர். பிறகு, நபி(ஸல்) அவர்கள் ’குழந்தை அப்பெண்ணிற்குரியது‘` என்று தீர்ப்பளித்து, `லிஆன்’ செய்த (கணவன், மனைவி) இருவரையும் (மண பந்தத்திலிருந்து) பிரித்துவைத்தார்கள்.

## 24:11 வது திருக்குர்ஆன் வசனம்

“அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர்தாம். அதை உங்களுக்குத் தீங்காகக் கருதாதீர்கள். அது உங்களுக்கு நன்மையானதே! (அவதூறு கற்பித்த) அவர்களில் ஒவ்வொருவருக்கும், அவர் சம்பாதித்த பாவம் உண்டு. அதில் அதிகப் பங்குபெற்ற (அவர்களின் தலை)வனுக்கு மிகப்பெரும் வேதனையுண்டு‘` எனும் (திருக்குர்ஆன் 24:11 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள 'இஃப்க்' என்னும் சொல்லின் மிகைச் சொல்லான) 'அஃப்பாக்' எனும் சொல்லுக்கு 'மகா பொய்யன்' (பொய் சொல்வதை வழக்கமாகக் கொண்டவன்) என்று பொருள்.

ஹதீஸ் 4749. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

"அதில் அதிகப் பங்குபெற்ற (அவர்களின் தலை)வனுக்கு மிகப்பெரும் வேதனையுண்டு'' எனும் (திருக்குர்ஆன் 24:11 வது) இறைவசனம், (நயவஞ்சகர்களின் தலைவன்) 'அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல்' என்பானைக் குறிக்கிறது.

## 24:12, 13 வது திருக்குர்ஆன் வசனங்கள்

"நீங்கள் இதனைச் செவியுற்றபோதே நம்பிக்கையாளர்களான ஆண்களும் பெண்களும் தங்களைப்பற்றி நல்லெண்ணம் கொண்டு, இது ஓர் 'அப்பட்டமான அவதூறு' என்று கூறியிருக்கவேண்டாமா? அவர்கள் (தங்களின் குற்றச்சாட்டை நிரூபிக்க) நான்கு சாட்சிகளைக் கொண்டு வந்திருக்கவேண்டாமா? அவ்வாறு அவர்கள் சாட்சிகளைக் கொண்டுவராத நிலையில் அல்லாஹ்விடம் அவர்களே பொய்யர்கள் ஆவர்'' (எனும் 24:12, 13 ஆகிய வசனங்கள்.)

ஹதீஸ் 4750. இப்னு ஷிஹாப் (முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்

என்னிடம் உர்வா இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு முஸய்யப், அல்கமா இப்னு வக்காஸ், உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் இப்னி உத்பா இப்னி மஸ்வூத் (ரஹ்) ஆகியோர் நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா (ரலி) குறித்து அவதூறு கூறியவர்கள் என்ன கூறினார்கள் என்பது பற்றியும், அவதூறு கற்பித்தவர்கள் சொன்னவற்றிலிருந்து ஆயிஷா (ரலி) தூய்மையானவர்களென்று இறைவன் (தன்னுடைய வேதத்தில்) அறிவிப்புச் செய்ததைப் பற்றியும் தெரிவித்தனர். அவர்கள் (நால்வரில்) ஒவ்வொருவரும் இந்தச் சம்பவத்தில் ஆளுக்கொரு பகுதியினை அறிவித்தனர். அவர்களில் சிலர் சிலரை விட இந்தச் சம்பவத்தை நன்கு மனனமிட்டு வைத்திருந்தாலும், ஒருவரின் அறிவிப்பை உறுதிப்படுத்தும் வகையில் மற்றவரின் அறிவிப்பு அமைந்திருந்தது.

நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா (ரலி) தெரிவித்ததாக உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) கூறினார்கள்:

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு பயணம்) புறப்பட விரும்பினால் தம் துணைவியரிடையே (எவரைப் பயணத்தில் தம்முடன் அழைத்துச் செல்வது எனத் தீர்மானித்திட) சீட்டுக் குலுக்கிப் போடுவது வழக்கம். அவர்களில் எவருடைய (பெயருள்ள) சீட்டு வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு செல்வார்கள்.

இவ்வாறே அவர்கள் தம் மேற்கொண்ட (பனு முஸ்தலிக் என்ற) ஒரு போரின்போது எங்களிடையே சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அதில் என்னுடைய (பெயருள்ள) சீட்டு வந்தது. எனவே, நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் (பயணம்) புறப்பட்டுச் சென்றேன். (இது பெண்கள் கடைப்பிடிக்க வேண்டிய பர்தா எனும்) ஹிஜாபின் சட்டம் அருளப்பட்ட பிறகு நடந்ததாகும். (அப்பயணத்தின்போது) நான் என்னுடைய ஒட்டகச் சிவிகையில் வைத்து சுமந்து செல்லப்படுவேன். அதில் நான் இருக்கும் நிலையிலேயே (கீழே) இறக்கி வைக்கவும்படுவேன்.

நபி (ஸல்) அவர்கள் அந்தப் போர் முடிந்து (வெற்றியுடன்) திரும்பிக் கொண்டிருந்த நிலையில் நாங்கள் மதீனாவை நெருங்கியபோது இரவு வேளையில் (ஓரிடத்தில்) தங்கும்படி அறிவித்தார்கள்.

அவர்கள் தங்கும்படி அறிவிப்புச் செய்தபோது நான் (சிவிகையிலிருந்து) எழுந்து (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக மறைவிடம் தேடி) படையைக் கடந்து (தனியாகச்) சென்றேன். என் (இயற்கைத்) தேவையை நான் முடித்துக்கொண்ட பின் முகாமை நோக்கிச் சென்றேன்.

அப்போது (என் கழுத்திலிருந்த யமன் நாட்டு)'ழஃபாரி' நகர முத்து மாலையொன்று அறுந்து(விழுந்து)விட்டது. எனவே, நான் (திரும்பிச் சென்று) என்னுடைய மாலையைத் தேடலானேன். அதைத் துழாவிக்கொண்டிருந்தது, (நான் சீக்கிரம் திரும்பிச் சென்று படையினருடன் சேரவிடாமல்) என்னைத் தடுத்துவிட்டது.
எனக்காகச் சிவிகையை ஒட்டகத்தில் கட்டும் குழுவினர் என் சிவிகைக்குள் நான் இருப்பதாக எண்ணிக்கொண்டு அதைத் தூக்கிச் சென்று நான் பயணம் செய்து வந்த ஒட்டகத்தின் மீது வைத்துக்கட்டிவிட்டார்கள்.
அந்தக் காலகட்டத்தில் பெண்கள் மெலிந்தவர்களாக இருந்தனர். உடல் கனக்கு அளவுக்கு அவர்களுக்கு சதைபோட்டிருக்கவில்லை. (அப்போதையை) பெண் சிறிதளவு உணவையே உண்பாள். எனவே, அந்தச் சிவிகையைத் தூக்கியபோது அது கனமில்லாமல் இருந்ததை அம்மக்கள் வித்தியாசமாகக் கருதவில்லை. மேலும், நான் அப்போது வயது குறைந்த இளம் பெண்ணாக வேறு இருந்தேன்.
எனவே, அவர்கள் ஒட்டகத்தைக் கிளப்பி (அதில் நானிருப்பதாக நினைத்தபடி) நடக்கலாயினர். படை கடந்து சென்ற பிறகு (காணாமல்போன) என்னுடைய மாலை கிடைத்துவிட்டது. நான் அவர்கள் முகாமிட்டிருந்த இடத்திற்கு வந்தேன். (அங்கிருந்த அனைவரும் சென்றுவிட்டிருந்தனர்.) அங்கு (அவர்களில்) அழைப்பவரும் இருக்கவில்லை பதிலளிப்பவரும் இருக்கவில்லை. நான் (ஏற்கெனவே) தங்கியிருந்த இடத்தை நாடிப் போனேன். நான் காணாமல் போயிருப்பதை அறிந்து படையினர் நிச்சயம் என்னிடம் திரும்பி வருவார்கள் என்று நான் கருதினேன். நான் என்னுடைய இடத்தில் அமர்ந்திருக்க என் கண்ணில் உறக்கம் மேலிட்டு விட நான் தூங்கிவிட்டேன்.
படை சென்றதற்குப் பின்னால் (படையினர் முகாமிட்ட இடத்தில் தவறவிட்டுச் சென்ற பொருள்களை எடுத்துச் செல்வதற்காக) ஸஃப்வான் இப்னு முஅத்தல் அஸ்ஸுலமி அத்தக்வானீ என்பவர் இரவின் பிற்பகுதியில் புறப்பட்டு நான் தங்கியிருந்த இடத்திற்கு அருகில் அதிகாலையில் (தவறவிடப்பட்ட பொருள்களைத் தேடுவதற்காக) வந்து சேர்ந்தார்.
அவர் (அங்கே) தூங்கிக்கொண்டிருந்த ஒரு மனிதனின் உருவத்தை (என்னை)ப் பார்த்தார். எனவே, என்னிடம் வந்தார். என்னைப் பார்த்ததும் அவர் அடையாளமும் கண்டுகொண்டார். பர்தாவுடைய சட்டம் அருளப்படுவதறகு முன்னர் அவர் என்னைப் பார்த்திருந்தார்.
அவர் என்னை அறிந்துகொண்டு'இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்' (நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள். மேலும், நாம் அவனிடமே திரும்பிச் செல்லவிருக்கிறோம்) என்று அவர் கூறிய சப்தத்தைக் கேட்டு நான் கண்விழித்தேன். உடனே (உறக்கத்தில்) விலகியிருந்த) என்னுடைய மேலங்கியால் முகத்தை மறைத்துக்கொண்டேன்.
அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர் என்னிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அவர்'இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்' என்று கூறியதைத் தவிர வேறெதையும் அவரிடமிருந்து நான் செவியேற்கவுமில்லை. பிறகு அவர் தம் ஒட்டகத்தை மண்டியிடச் செய்து (நான் ஏறிக் கொள்வதற்கு ஏதுவாக) அதன் முன்னங்கால்களை (தம் காலால்) மிதித்துக் கொள்ள, நான் அதில் ஏறிக்கொண்டேன். அவர் நானிருந்த ஒட்டகத்தை நடத்திச் செல்லலானார்.
இறுதியில் படையினர் (மதிய ஓய்வுக்காக) நடுப்பகல் நேரத்தில் (ஓரிடத்தில்) தங்கிவிட்ட பின்னர் நாங்கள் அவர்களை வந்தடைந்தோம். இப்போது (எங்கள் இருவரையும் கண்டு அவதூறு பேசி என் விஷயத்தில்) அழிந்தவர்கள் அழிந்து போனார்கள். என் மீது அவதூறு(ப் பிரசாரம்) செய்ததில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டிருந்தவன் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல் (எனும் நயவஞ்சகர்களின் தலைவன்) ஆவான்.

பிறகு நாங்கள் மதீனா வந்தடைந்தோம். அங்கு வந்து ஒரு மாதகாலம் நான் நோயுற்று விட்டேன்.
மக்களோ அவதூறு கற்பித்தவர்களின் சொல்லைப் பரப்பிக்கொண்டிருந்தார்கள். இந்த அவதூறு பற்றி எதுவுமே எனக்குத் தெரியாது.
நான் நோயுறும்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் வழக்கமாகக் காட்டுகிற பரிவை (இம்முறை நான் நோயுற்றிருந்த போது) அவர்களிடம் காணமுடியாமல் போனது எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. அவர்கள் வருவார்கள் சலாம் சொல்வார்கள் பிறகு'எப்படி இருக்கிறாய்' என்று கேட்பார்கள். பிறகு திரும்பிச் செல்வார்கள். அவ்வளவுதான். இதுதான் எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. அவர்கள் வருவார்கள் சலாம் சொல்வார்கள் பிறகு'எப்படி இருக்கிறாய்' என்று கேட்பார்கள். பிறகு திரும்பிச் செல்வார்கள். அவ்வளவுதான், இதுதான் எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தியது. (என்னைப் பற்றி வெளியே பேசப்பட்டு வந்த) அந்தத் தீய சொல் பற்றி ஒரு சிறிதும் (உடல் நலம் தேறுவதற்கு முன்) எனக்குத் தெரியாது.
நோயிலிருந்து குணமடைந்த பின் நானும் என்னுடன் மிஸ்தஹுின் தாயாரும் நாங்கள் கழிப்பிடமாகப் பயன்படுத்தி வந்த'மனாஸிஉ' (எனப்படும் புறநகர் பகுதியை) நோக்கிச் சென்றோம். நாங்கள் இரவு நேரங்களில் மட்டும் இவ்வாறு செல்வோம். எங்கள் வீடுகளுக்கு அருமலேயே கழிப்பிடங்களை அமைத்துக்கொள்வதற்கு முன்னால் நாங்கள் இவ்வாறு (புறநகர்ப் பகுதிகளுக்கு) சென்று கொண்டிருந்தோம். கழிப்பிடம் நோக்கி வெளியே செல்லும் எங்களின் இந்த வழக்கம் முந்தைய அரபுகளின் வழக்கத்தை ஒத்ததாயிருந்தது. அப்போது நாங்கள் எங்கள் வீடுகளுக்கு அருமலேயே கழிப்பிடங்கள் அமைப்பதைத் தொந்தரவாகக் கருதிவந்தோம். நானும் உம்மு மிஸ்தஹூம் நடந்தோம். அவர் அபூ ருஹ்கி இப்னு முத்தலிப்) பின் அப்தி மனா..்ப் அவர்களின் புதல்வியாவார். அபூ பக்ர்(ரலி) அவர்களின் தாயின் சகோதரியான (ராயித்தா) பின்த் ஸகர் இப்னு ஆமிர்தான் உம்மு மிஸ்தஹின தாயாராவார். உம்மு மிஸ்தஹின் புதல்வரே மிஸ்தஹ் இப்னு உஸாஸா இப்னு அப்பாத் இப்னு முத்தலிப்) ஆவார்.
(இத்தகைய) உம்மு மிஸ்தஹூம் நானும் எங்கள் (இயற்கைத்) தேவைகளை முடித்துக் கொண்டு என்னுடைய வீடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போது உம்மு மிஸ்தஹ் தன்னுடைய ஆடையில் இடறிக்கொண்டார். உடனே அவர், 'மிஸ்தஹ் நாசமாகட்டும்'' என்று (தம் புதல்வரைச் சபித்தவராகக்) கூறினார். நான், 'மிக மோசமான சொல்லைச் சொல்லிவிட்டீர். பத்ருப்போரில் பங்கெடுத்த ஒரு மனிதரையா ஏசுகிறீர்கள்?' என்று கூறினேன். அதற்கு அவர், 'அம்மா! அவர் என்ன கூறினார் என்பதை நீங்கள் கேள்விப்படவில்லையா?' என்று கேட்டார். 'என்ன கூறினார்?' என நான் வினவ, அவதூறு கற்பித்தவர்கள் சொன்ன (அபாண்டத்)தை அப்போது அவர் எனக்குத் தெரிவித்தார். அதைக் கேட்டு என்னுடைய நோய் இன்னும் அதிகரித்துவிட்டது. நான் என்னுடைய வீட்டுக்குத் திரும்பி வந்தபோது (என் கணவர்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்து எனக்கு சலாம் சொல்லிவிட்டு, 'எப்படி இருக்கிறாய்?' என்று கேட்டார்கள். அப்போது நான்'என் தாய் தந்தையரிடம் செல்ல எனக்கு அனுமதி தருவீர்களா?' என்று கேட்டேன். (உண்மையிலேயே அப்படியொரு வதந்தி உலவுகிறதா என்று விசாரித்து என் மீதான அவதூறுச்) செய்தியை என் பெற்றோரிடமிருந்து (அறிந்து) உறுதிப்படுத்திக் கொள்ள அப்போது விரும்பினேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். உடனே நான் என் பெற்றோரிடம் வந்து(சேர்ந்)தேன்.
என் தாயாரிடம், 'அம்மா! மக்கள் (என்னைப் பற்றி) என்ன பேசிக்கொண்கிறார்கள்?' என்று கேட்டேன். என் தாயார், 'என் அன்பு மகளே! உன் மீது (இந்த விஷயத்தைப்) பெரிதுப்படுத்திக்கொள்ளாதே! அல்லாஹ்வின் மீதாணையாக! சக்களத்திகள் பலரும் இருக்க, தம் கணவரிடம் பிரியத்துக்குரியவளாக இருக்கும் அழகொளிரும் பெண்ணைக் குறித்து

அவளுடைய சக்களத்திகள் அதிகமாக (வதந்திகள்) பேசத்தான் செய்வார்கள். அவ்வாறு பேசாமலிருப்பது (பெரும்பாலும்) குறைவேயாகும்'' என்று கூறினார்.
உடனே நான், 'சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ் தூயவன்.) இப்படியா மக்கள் பேசிவிட்டார்கள்!"என்று (வியப்புடன்) சொன்னேன். அன்றிரவு காலை வரை நான் அழுதேன். என் கண்ணீரும் நிற்கவில்லை உறக்கமும் என்னைத் தழுவவில்லை. காலை நேரம் வந்த போதும் அழுதேன்.
(இதற்கிடையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் மனைவியை (அதாவது என்னை)ப் பிரிந்துவிடுவது குறித்து ஆலோசனை கேட்பதற்காக அலீ இப்னு அபீ தாலிப் அவர்களையும், உஸாமா இப்னு ஸைத் அவர்களையும் அழைத்தார்கள். அத்தருணத்தில் வஹீ (இறைச்செய்தி) (வேத அறிவிப்பு - தாற்காலிமாக) நின்று போயிருந்தது.
உஸாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களோ நான் நிரபராதி என தாம் அறிந்துள்ளதையும் நபி(ஸல்) அவர்களின் உள்ளத்தில் (குடும்பத்தார் மீது) இருந்த பாசத்தில் தாம் அறிந்துள்ளதையும் வைத்து ஆலோசனை கூறினார்கள்.'இறைத்தூதர் அவர்களே! தங்களின் துணைவியாரிடமும் நல்ல (குணத்)தைத் தவிர வேறெதையும் நான் அறியவில்லை'' என்று அப்போது உஸாமா கூறினார்கள்.
அலீ அவர்களோ (நபி(ஸல்) அவர்களின் மனவேதனையைக் குறைக்கும் விதமாக)'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் உங்களுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்தவில்லை. ஆயிஷா அன்றிப் பெண்கள் நிறையப் பேர் இருக்கின்றனர். பணிப்பெண் (பரீரா) இடம் கேட்டால், அவள் உங்களிடம் உண்மையைச் சொல்வாள்'' என்று கூறினார்கள்.
எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பணிப் பெண்ணான) பரீராவை அழைத்து, 'பரீராவே! (ஆயிஷாவிடம்) உனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தும் (செயல்) எதையாவது நீ பார்த்திருக்கிறாயா?' என்று கேட்டார்கள். அதற்கு பரீரா, 'தங்களைச் சத்திய(மார்க்க)த்துடன் அனுப்பியவன் மீதாணையாக! அவர், தம் வீட்டாரின் குழைத்த மாவை அப்படியேவிட்டுவிட்டு உறங்கிப் போய்விடுவார். (வீட்டிலுள்ள) ஆடுவந்து அதைத் தின்றுவிடும். அத்தகைய (விபரமும்) வயது(ம்) குறைந்த இளம்பெண் என்பதைத் தவிர அவரைக் குறை சொல்லக் கூடிய விஷயம் எதையும் அவரிடம் நான் பார்க்கவில்லை'' என்று பதில் கூறினார்.
அன்றைய தினம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூலுக்கு எதிராக உதவி கோரி எழுந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உரை மேடையில் (மிம்பரில்) இருந்தவாறு'முஸ்லிம் மக்களே! என் வீட்டார் விஷயத்தில் (வதந்தி கிளப்பி) எனக்கு மனவேதனையளித்த ஒரு மனிதனுக்கெதிராக எனக்கு உதவிபுரிபவர் யார்? ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! என் வீட்டாரிடம் நல்லதையே அறிவேன். அவர்கள் (அவதூறு கிளப்பிய நயவஞ்சகர்கள்) ஒரு மனிதரை (என் வீட்டாருடன் இணைத்து) அவதூறு கூறியுள்ளனர். அவரைப் பற்றி நல்லதையே அறிவேன். நான் இருக்கும்போது தான் அவர் என் வீட்டிற்கு வந்திருக்கிறார். (தனியாக வந்ததில்லை)'' என்று கூறினார்கள்.
உடனே (பனு அப்தில் அஷ்ஹல் கூட்டத்தைச் சேர்ந்த) ஸஅத் இப்னு முஅத் அல் அன்சாரி(ரஹ்) எழுந்து நின்று, 'இறைத்தூதர் அவர்களே! அவனுக்கெதிராகத் தங்களுக்கு நான் உதவுகிறேன். அவன் (எங்கள்) அவ்ஸ் குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் அவனுடைய கழுத்தைத் துண்டித்துவிடுகிறோம். எங்கள் சகோதரர்களான கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்தவனாக அவன் இருந்தால் (என்ன செய்ய வேண்டுமென்று) தாங்கள் எங்களுக்கு உத்தரவிடுங்கள். தங்கள் உத்தரவை நாங்கள் செய்து முடிக்கிறோம்'' என்று கூறினார்கள்.
உடனே ஸஅத் இப்னு உபாதா எழுந்தார். இவர் கஸ்ரஜ் குலத்தில் தலைவராவார். இவர் அதற்கு முன் நல்ல மனிதராகத்தான் இருந்தார். ஆயினும், குலமாச்சர்யம் அவரை

உசுப்பிவிடவே, அவர் ஸஅத் இப்னு முஆத் அவர்களைப் பார்த்து, `அல்லாஹ்வின் மீதாணையாக! தவறாகச் சொல்லிவிட்டீர்! அவனை நீர் கொல்லமாட்டீர். அவனைக் கொல்ல உம்மால் முடியாது‘` என்று கூறினார்.

உடனே உசைத் இப்னு ஹுளைர்(ரலி) எழுந்து நின்றார். இவர் (அவ்ஸ் குலத்தைச் சேர்ந்த) ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்களின் தந்தையின் சகோதரர் மகன் ஆவார். அவர் ஸஅத் இப்னு உபாதா அவர்களிடம்'நீர்தாம் தவறாகப் பேசினீர்! அல்லாஹ்வின் மீதாணையாக! அவனை நாங்கள் கொன்றேதீருவோம். நீர் ஒரு நயவஞ்சகர். எனவேதான் நயவஞ்சகர்களின் சார்பாக வாதிடுகிறீர்!''என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உரை மேடைமீது நின்றுகொண்டிருக்க, அவ்ஸ், கஸ்ரஜ் ஆகிய இரண்டு குலத்தாரும் ஒருவர் மீதொருவர் பாய்ந்து சண்டையிட்டுக் கொள்ளத் தயாராம்விட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மேடையிலிருந்து இறங்கி) அவர்கள் மௌனமாகும்வரை அவர்களை அமைதிப்படுத்திக்கொண்டிருந்தார்கள். பிறகு தாமும் அமைதியாகிவிட்டார்கள்.

அன்றைய நாள் முழுவதும் நான் அப்படியே இருந்தேன். என் கண்ணீரும் ஓயவில்லை என்னை உறக்கமும் தழுவவில்லை. காலையானதும் என் தாய் தந்தையர் என் அருகே இருந்தார்கள். நானோ இரண்டு இரவுகள் ஒரு பகல் (முழுக்க) தூக்கம் என்னைத் தழுவாமலும் கண்ணீர் ஓயாமலும் அழுதுவிட்டிருந்தேன். என் ஈரல் பிளந்து விடுமோ என்று என் பெற்றோர் எண்ணிக்கொண்டிருந்தனர்.

நான் அழுது கொண்டிருக்க, என்னருகில் என் தாய் தந்தையர் அமர்ந்து கொண்டிருந்தபோது, அன்சாரிப் பெண்ணொருத்தி வந்து என்னிடம் (உள்ளேவர) அனுமதி கேட்டாள். நான் அவர்களுக்கு அனுமதியளித்தவுடன் என்னுடன் சேர்ந்து அவளும் அழுதபடி அமர்ந்துகொண்டாள்.

நாங்கள் இவ்வாறு இருக்கையில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து சலாம் கூறிவிட்டு, அமர்ந்தார்கள். (என்னைப் பற்றி) அவதூறு சொல்லப்பட்ட நாளிலிருந்து அவர்கள் என்னருகே அமர்ந்ததில்லை. ஒரு மாதகாலம் வரை என் விஷயத்தில் (அல்லாஹ்விடமிருந்து தீர்ப்பு எதுவும்) அவர்களுக்கு வஹீயாக அருளப்படாமலேயே அவர்கள் இருந்து வந்தார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏகத்துவ உறுதி மொழி கூறி, இறைவனைப் புகழ்ந்துவிட்டு, `ஆயிஷா! உன்னைக் குறித்து இன்னின்னவாறு எனக்குச் செய்தி வந்தது. நீ நிரபராதியாக இருந்தால், அல்லாஹ் விரைவில் உன்னைக் குற்றமற்றவள் என்று (வஹீயின் மூலம்) அறிவித்துவிடுவான். (ஒருக்கால்) நீ குற்றமேதும் செய்திருந்தால், அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கம் திரும்பிவிடு! ஏனெனில், அடியான் தன்னுடைய பாவத்தை ஒப்புக்கொண்டு (மனம் திருந்தி) பாவமன்னிப்புக்கோரினால், அவனுடைய கோரிக்கையை ஏற்று அல்லாஹ் அவனை மன்னிக்கிறான்‘` என்று கூறினார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் பேச்சை முடித்தபோது என்னுடைய கண்ணீர் (முழுவதுமாக) நின்றுபோய்விட்டிருந்தது. அதில் ஒரு துளியும் (எஞ்சியிருப்பதாக) நான் உணரவில்லை.

அப்போது நான் என் தந்தையார் (அபூ பக்ர்(ரலி)) இடம், `இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னதற்கு பதில் கூறுங்கள்!''என்று சொன்னேன். அதற்கு என் தந்தையார், `அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்ன (பதில்) சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை‘` என்று கூறினார்கள். பிறகு நான் என் தாயார் (உம்மு ரூமான்) இடம், `இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பதில் கூறுங்கள்!''என்று சொன்னேன். அதற்கு என் தாயார், `இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு என்ன பதில் சொல்வது என்றே எனக்குத் தெரியவில்லை‘` என்று கூறினார்கள். அதற்கு நான், `நானோ வயது குறைந்த இளம் பெண் குர்ஆனிலிருந்து நிறையத் தெரியாதவள். இந்நிலையில் (மக்கள் என்னைப் பற்றிப் பேசிக்கொண்ட) இச்செய்தியை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். அது உங்கள் மனங்களில்

பதிந்துபோய் அதை உண்மை என்று நீங்கள் நம்பிவிட்டீர்கள் என்பதை அல்லாஹ்வின் மீதாணையாக அறிவேன். எனவே, உங்களிடம் நான் குற்றமற்றவள் என்று கூறினால், நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும் - அதை நீங்கள் நம்பப் போவதில்லை. நான் (குற்றம்) ஏதேனும் புரிந்திருப்பதாக ஒப்புக்கொண்டால், நான் குற்றமற்றவள் என்பது அல்லாஹ்வுக்குத் தெரியும் - நான் சொல்வதை அப்படியே (உண்மை என்று ஏற்று) என்னை நம்பிவிடுவீர்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! (எனக்கும்) உங்களுக்கும் நபி யூசுஃப்(அலை) அவர்களின் தந்தை (நபி யாகூப் - அலை) அவர்களையே உவமானமாகக் காண்கிறேன். (அதாவது:) (இதைச்) சகித்துக்கொள்வதே நல்லது நீங்கள் புனைந்து சொல்லும் விஷயத்தில் அல்லாஹ்விடம் தான் நான் பாதுகாப்புக் கோரவேண்டும் (திருக்குர்ஆன் 12:18) என்று கூறினேன். பிறகு (வேறு பக்கமாகத்) திரும்பிப் படுத்துக் கொண்டேன். அப்போது நான் குற்றமற்றவள் என்பதையும் மேலும், அல்லாஹ் நான் குற்றமற்றவள் என நிச்சயம் அறிவிப்பான் என்பதையும் நன்கறிவேன். ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! ஓதப்படுகிற வஹீயை (வேத அறிவிப்பை) என் விஷயத்தில் அல்லாஹ் அருள்வான் என்று நான் நினைத்தும் பார்த்திருக்கவில்லை. அல்லாஹ் என் தொடர்பாக ஏதேனும் ஓதப்படுகிற ஒன்றைச் சொல்கிற அளவுக்கு நான் உயர்ந்தவள் அல்ல என்பதே என் மனத்தில் என்னைப் பற்றிய முடிவாக இருந்தது. மாறாக, அல்லாஹ் என்னைக் குற்றமற்றவள் என அறிவிக்கும் ஒரு கனவை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் உறக்கத்தில் காண்பார்கள் என்றே நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (எங்கள் வீட்டில் அமர்ந்திருந்த இடத்திலிருந்து) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்திருக்கவுமில்லை. வீட்டார் எவரும் வெளியே செல்லவுமில்லை. அதற்குள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மீது (குர்ஆன் வசனங்கள்) அருளப்படத் தொடங்கிவிட்டன. உடனே அவர்களுக்கு (வேத அறிவிப்பு வருகிற நேரங்களில்) ஏற்படும் கடுமையான சிரமநிலை அவர்களைப் பற்றிக் கொண்டது. அது கடுங்குளிர் காலமாயிருந்தும் அவர்களின் மேனியிலிருந்து வேர்வைத் துளிகள் சிறு முத்துகளைப் போல் வழியத் தொடங்கிவிட்டன. அவர்களின் மீது அருளப்பட்ட இறைவசனத்தின் பாரத்தினால்தான் (அவர்களுக்கு வியர்வை அரும்பி வழியுமளவுக்கு) இந்தச் சிரமநிலை ஏற்பட்டது. அந்த நிலை அல்லாஹ்வின் தூதரைவிட்டு விலகியவுடன் (மகிழ்ச்சியுடன்) சிரித்தவாறே அவர்கள் பேசிய முதல் வார்த்தை 'ஆயிஷா! மாண்பும் மகத்துவமுமிக்க அல்லாஹ் உன்னை குற்றமற்றவள் என்று அறிவித்துவிட்டான்'' என்பதாகவே இருந்தது.

உடனே என் தாயார் 'அல்லாஹ்வின் தூதரிடம் எழுந்து செல்!"என்று (என்னிடம்) கூறினார்கள். அதற்கு நான் 'அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களிடம் நான் செல்லமாட்டேன். மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ்வையே புகழ்(ந்து, அவனுக்கே நன்றி செலுத்து)வேன்'' என்று சொன்னேன்.

(அப்போது) அல்லாஹ், 'அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர் தாம்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 24:11-20) பத்து வசனங்களை அருளியிருந்தான். என் குற்றமற்ற நிலை தொடர்பாக அல்லாஹ் இதை அருளியபோது (என் தந்தை) அபூ பக்ர் சித்தீக்(ரலி), 'அல்லாஹ்வி மீதாணையாக! (என் மகள்) ஆயிஷா குறித்து மிஸ்தஹ் (அவதூறு) கூறிய பின்பு ஒருபோதும் அவருக்காக நான் சிறிதும் செலவிடமாட்டேன்'' என்று (சத்தியமிட்டுக்) கூறினார்கள். மிஸ்தஹ் இப்னு உஸாஸா தம் உறவினர் என்பதாலும், அவர் ஏழை என்பதாலும் அவருக்காக, அபூ பக்ர்(ரலி) செலவிட்டுவந்தார்கள். அப்போது அல்லாஹ் 'உங்களில் செல்வம் மற்றும் தாயாளகுணம் படைத்தோர் (தங்கள்) உறவினர்களுக்கோ ஏழைகளுக்கோ இறைவழியில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ (எதுவும்) வழங்கமாட்டேன் என்று சத்தியம் செய்யவேண்டாம். (அவர்களால் தங்களுக்கு ஏதேனும்

வருத்தம் ஏற்பட்டிருந்தால்) அவர்கள் அதனை மன்னித்து (பிழைகளைப்) பொருட்படுத்தாமல்விட்டுவிடட்டும்! அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? அல்லாஹ் மிகவும் மன்னிப்போனும் கருணையுடையோனுமாய் இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 24:22 வது) இறைவசனத்தை அருளினான்.

அபூ பக்ர் (ரலி), `ஆம்'' அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு மன்னிப்பளிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்'' என்று கூறிவிட்டு, மிஸ்தஹ் அவர்களுக்கு ஏற்கெனவே தாம் செலவிட்டு வந்ததைத் திரும்பவும் தொடரலானார்கள். 'அல்லாஹ்வின் மீதாணையாக! அவருக்கு(ச் செய்யும் இந்த உதவியை) ஒருபோதும் நான் நிறுத்தமாட்டேன்'' என்றும் கூறினார்கள்.

(குர்ஆனில் என்னுடைய கற்பொழுக்கம் குறித்த வசனங்கள் அருளப்படுவதற்கு முன்னால்) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என் விஷயத்தில் (தம் இன்னொரு துணைவியாரான) ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் விசாரித்திருந்தார்கள். 'ஸைனபே! நீ (ஆயிஷா குறித்து) என்ன 'அறிந்திருக்கிறாய்?' அல்லது 'பார்த்திருக்கிறாய்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர், `இறைத்தூதர் அவர்களே! என் காதையும் என் கண்ணையும் (அவற்றின் மீது பழி சுமத்தாமல்) நான் பாதுகாத்துக் கொள்கிறேன். ஆயிஷாவைக் குறித்து நல்லதையே அறிவேன்'' என்று கூறினார்கள். ஸைனப் அவர்கள்தாம் நபியவர்களின் துணைவியரில் எனக்கு (அழகிலும் நபி (ஸல்) அவர்களின் அன்பிலும்) போட்டியாக இருந்தவர். ஆயினும், அல்லாஹ் அவரை (இறையச்சமுடைய) பேணுதலான பண்பையளித்துப் பாதுகாத்திருந்தான். ஆனால், ஸைனபுக்காக அவரின் சகோதரி ஹம்னா (என்னுடன்) மோதிக் கொள்ளலானார். (என் விஷயத்தில் அவதூறு பேசி அழிந்து போனவர்களுடன் அவரும் அழிந்து போனார்.

## 24:14 வது திருக்குர்ஆன் வசனம்

"உங்களின் மீது இம்மையிலும் மறுமையிலும் அல்லாஹ்வின் அருளும் அவனுடைய அன்பும் இல்லாதிருந்தால், எந்த விஷயத்தில் நீங்கள் மூழ்கியிருந்தால், எந்த விஷயத்தில் நீங்கள் மூழ்கியிருந்தீர்களோ அதன் விளைவாக, உங்களுக்குப் பெரும் வேதனை நேர்ந்திருக்கும்'' எனும் (திருக்குர்ஆன் 24:14 வது இறைவசனம்)

முஜாஹித் (ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 24:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தலக்கவ்னஹு' (அதை எடுத்துக்கொண்டிருந்தீர்கள்) என்பதற்கு 'உங்களில் சிலர் சிலருக்கு அறிவித்துக்கொண்டிருந்தீர்கள்'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 25:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'அஃபளத்தும்' எனும் சொல்லின் எதிர்கால வினைச்சொல்லும் 10:61 வது வசனத்தின் மூலத்திலுள்ளதுமான) 'துஃபீளுன்' என்பதன் பொருள் 'நீங்கள் சொல்லிக்கொண்டிருந்தீர்கள்' என்பதாகும்.

ஹதீஸ் 4751. ஆயிஷா (ரலி) அவர்களின் தாயார் உம்மு ரூமான் (ரலி) அறிவித்தார்

தம் மீது அவதூறு கூறப்பட்டபோது (அதைக் கேள்விப்பட்ட) ஆயிஷா மூர்ச்சையடைந்து கீழே விழுந்துவிட்டார்.

## 24:15 வது திருக்குர்ஆன் வசனம்

இப்பழியை (ஒருவரிடமிருந்து ஒருவராக) உங்கள் நாவுகளால் பரப்பிக்கொண்டிருந்த நேரத்(தில் நீங்கள் எவ்வளவு கடும் தவற்றைச் செய்துகொண்டிருந்தீர்கள் என்ப)தைச் சற்றுச் சிந்தியுங்கள்! நீங்கள் எந்த வகையிலும் அறிந்திராத ஒரு விஷயத்தைப் பற்றி உங்கள் வாய்களால் கூறிக்கொண்டு திரிந்தீர்கள் அதனைச் சாதாரணமாகக் கருதி விட்டீர்கள். ஆனால், அல்லாஹ்விடம் அதுவோ, மிகப் பெரிய விஷயமாய் இருந்தது (எனும் 24:15 வது இறைவசனம்).

ஹதீஸ் 4752. இப்னு அபீ முலைக்கா (ரஹ்) அறிவித்தார்
(திருக்குர்ஆன் 24:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'இஃத் தலக்கவ்னஹு' (உங்கள் நாவுகளால் பரப்பிக்கொண்டிருந்த நேரத்தை) எனும் பதத்தை) ஆயிஷா (ரலி) 'இஃத் தலிகூனஹு' (நீங்கள் பொய் சொல்லிக் கொண்டிருந்த நேரத்தை) என்று ஓதுவதை செவியுற்றேன்.

## 24:16 வது திருக்குர்ஆன் வசனம்

நீங்கள் இதனைக் கேள்விப்பட்டதுமே 'இவ்வாறான விஷயத்தை நாம் பேசுவது நமக்கு ஏற்றதன்று சுப்ஹானல்லாஹ் - அல்லாஹ் தூய்மையானவன்! பெரும் அவதூறாயிற்றே இது!'' என்று நீங்கள் கூறியிருக்கவேண்டாமா? (எனும் 24:16 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4753. இப்னு அபீ முலைக்கா (ரஹ்) அறிவித்தார்
ஆயிஷா (ரலி) இறப்பதற்கு முன், (இறப்பின் துன்பத்தால்) அவதிக்குள்ளாக்கப்பட்டிருந்த வேளையில் (அவர்களைச் சந்திக்க) இப்னு அப்பாஸ் (ரலி) அனுமதி கோரினார்கள். ஆயிஷா (ரலி) 'என்னை அவர் புகழ்ந்து பேசி விடுவாரோ என அஞ்சுகிறேன்' என்றார்கள். அப்போது '(வந்திருப்பவர்) நபி (ஸல்) அவர்களின் பெரிய தந்தையின் புதல்வரும் முஸ்லிம்களில் முக்கியமானவரும் ஆவார்' என்று சொல்லப்பட்டது. உடனே ஆயிஷா (ரலி), 'அவரை (உள்ளே வர) அனுமதியுங்கள்' என்று கூறினார்கள். (அன்னார் உங்ளே வந்ததும்,) 'உங்களுக்குத் தற்போது எப்படியுள்ளது?' என்று கேட்டார்கள். அதற்கு ஆயிஷா (ரலி), 'நான் அல்லாஹ்வை அஞ்சி நடந்திருந்தால் நலத்துடனேயிருப்பேன்' என்று பதிலளித்தார்கள். இப்னு அப்பாஸ் (ரலி), 'அல்லாஹ் நாடினால் நலத்துடனேயே இருப்பீர்கள். நீங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உங்களைத் தவிர வேறெந்தக் கன்னிப் பெண்ணையும் மணக்கவில்லை. நீங்கள் நிரபராதி எனும் செய்தி வானத்திலிருந்து (வேத அறிவிப்பாகவே) இறங்கிற்று' என்று (புகழ்ந்து) கூறினார்கள். (அவர்கள் சென்றவுடன்) அவர்களுக்குப் பின்னாலேயே இப்னு ஸுபைர் (ரலி) வந்தார்கள். அப்போது ஆயிஷா (ரலி), 'இப்னு அப்பாஸ் (என்னிடம்) வந்து என்னைப் புகழ்ந்தார். நான் முற்றாக மறக்கப்பட்டுவிட்ட (சாதாரணமான)வளாக இருந்திருக்க வேண்டும் என விரும்பினேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4754. காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர் அஸ்ஸித்தீக் (ரஹ்) கூறினார்
இப்னு அப்பாஸ் (ரலி) ஆயிஷா (ரலி) அவர்களிடம் வர அனுமதி கேட்டார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்:
காசிம் (ரஹ்) மேற்கண்ட ஹதீஸைப் போன்றே அறிவித்தார்கள். அவர்கள் தம் அறிவிப்பில், 'மறக்கப்பட்டுவிட்டவளாக' என்பதைக் கூறவில்லை.

## 24:17 வது திருக்குர்ஆன் வசனம்

“நீங்கள் நம்பிக்கையாளர்களாயின் இனி ஒருபோதும் இதுபோன்ற தவற்றை மீண்டும் செய்யக்கூடாது என்று அல்லாஹ் உங்களுக்க அறிவுறுத்துகிறான்' எனும் (திருக்குர்ஆன் 24:17 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4755. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ (ரஹ்) அறிவித்தார்
ஆயிஷா (ரலி) (மரணப் படுக்கையில் இருந்தபோது) தம்மைச் சந்திக்க (கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித் அனுமதி கோரியதாக (என்னிடம்) கூறினார்கள். அப்போது நான் '(அவதூறு பரப்புவதில் பங்கெடுத்துக் கொண்ட) இவருக்கா அனுமதி அளிக்கிறீர்கள்?' என்று கேட்டேன். ஆயிஷா (ரலி) 'அவருக்குப் பெரும் வேதனை ஏற்பட்டுவிட்டதல்லவா?' என்று கூறினார்கள். 'ஹஸ்ஸான் (ரலி) (கடைசி காலத்தில்) கண்பார்வை இழந்துவிட்டதையே ஆயிஷா (ரலி) குறிப்பிடுகிறார்கள்' என சுஃப்யான் (ரஹ்) கூறினார்.

“நீங்கள் பத்தினி அறிவாளி சந்தேகத்திற்கப்பாற்பட்டவர். (அவதூறு பேசுவதன் மூலம்) அப்பாவிப் பெண்களின் மாமிசங்களைப் புசித்துவிடாமல் பட்டினியோடு காலையில் எழுபவர்‘‘ என்று ஹஸ்ஸான்(ரலி) (ஆயிஷா(ரலி) குறிப்பிடுகிறார்கள்‘‘ என சுஃப்யான்(ரஹ்) கூறினார்.
“நீங்கள் பத்தினி அறிவாளி சந்தேகத்திற்கப்பாற்பட்டவர். (அவதூறு பேசுவதன் மூலம்) அப்பாவிப் பெண்களின் மாமிசங்களைப் புசித்துவீடாமல் பட்டினியோடு காலையில் எழுபவர்‘‘ என்று ஹஸ்ஸழன்(ரலி) (ஆயிஷா(ரலி) அவர்களைக் குறித்து கவிதை) பாடினார்கள். அதைக் கேட்ட ஆயிஷா(ரலி), ‘ஆனால், நீங்கள் 9அத்தகையவரல்லர். அவதூறு பரப்பியவர்களுடன் சேர்ந்து கொண்டவர்தாம் நீங்கள்)‘‘ என்று கூறினார்கள்.

## 24:18 வது திருக்குர்ஆன் வசனம்

(இவ்வாறு) அல்லாஹ தன் வசனங்களை உங்களுக்கு விவரித்துக் கூறுகிறான். அல்லாஹ் நன்கறிந்தவனும் நுண்ணறிவாளனும் ஆவான் (எனும் 24:18 வது இறைவசனம்).

ஹதீஸ் 4756. மஸ்ருக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) ஆயிஷா(ரலி) அவர்களிடம் (அவர்கள் மரணப்படுக்கையில் இருந்போது) வந்து, ‘நீங்கள் பத்தினி அறிவாளி சந்தேகத்திற்கப்பாற்பட்டவர் (அவதூறு பேசுவதன் மூலம்) அப்பாவிப் பெண்களின் மாமிசங்களைப் புசித்துவிடாமல் பட்டினியோடு காலையில் எழுபவர்‘‘ என்று அவர்களைப் புகழ்ந்து கவிதை பாடினார்கள். ஆயிஷா(ரலி)’(ஹஸ்ஸானே!) நீங்கள் அப்படியில்லையே!”என்று கூறினார்கள். நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம், ‘இவரைப் போன்றவர்களை நீங்கள் உங்களிடம் வர விடுகிறீர்களா? அல்லாஹ்வோ’இந்த அவதூறுப் பிரசாரத்தில் பெரும் பங்கு வகித்தவர்களுக்குப் பெரும் வேதனை உண்டு‘‘ என்று (திருக்குர்ஆன் 24:11 வது வசனத்தில்) கூறுகிறானே!”என்று சொன்னேன். அதற்கு ஆயிஷா(ரலி), ‘குருடாவதைவிடப் பெரிய தண்டனை வேறெது?’ என்று கேட்டுவிட்டு, ‘அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சார்பாக (அவர்களின் மீது வசைக் கவிதை பாடிய எதிரிகளுக்குக் கவிதை மூலமே) பதிலடி கொடுத்துவந்தார்‘‘ என்று கூறினார்கள்.

## 24:19,20 வது திருக்குர்ஆன் வசனங்கள்

இறைநம்பிக்கை கொண்டோரிடையே மானக்கேடான செயல் பரவிட வேண்டுமென யார் விரும்புகிறார்களோ, அவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் துன்புறுத்தும் வேதனை உண்டு. மேலும், அல்லாஹ் (யாவற்றையும்) அறிகிறான் நீங்கள் அறியமாட்டீர்கள். அல்லாஹ்வின் அருளும் அவனுடைய அன்பும் உங்களின் மீது இல்லாதிருந்து, அல்லாஹ் மிகுந்த பரிவும் கருணையும் கொண்டவனாய் இல்லாமலுமிருந்தால் (இப்போது உங்களிடையே பரப்பப்பட்டிருந்த இச்செய்தி படுமோசமான விளைவுகளை ஏற்படுத்தியிருக்கும் (எனும் 24:19, 20 ஆகிய இறைவசனங்கள்.)

(திருக்குர்ஆன் 24:19 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)’தஷீஅ’ எனும் சொல்லுக்கு’வெளிப்படுவது’ என்று பொருள்.

“உங்களில் செல்வமும் தயாளகுணமும் உள்ளவர்கள் (தங்களின்) உறவினர்களுக்கோ, ஏழைகளுக்கோ, இறைவழியில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ (எதுவும்) வழங்கமாட்டேன் என்று சத்தியம் செய்யவேண்டாம். (அவர்களால் தங்களுக்கு வருத்தம் ஏதேனும் ஏற்பட்டிருந்தால்) அவர்கள் அதனை மன்னித்துவிட்டுவிடட்டும்! அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பு அளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? அல்லாஹ் மிகவும் மன்னிப்போனும் கருணையுடையோனும் ஆவான்‘‘ (எனும் 24:22 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4757. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

என் தொடர்பாக அவதூறு பேசப்பட்டபோது எனக்க இன்னும் அது தெரிந்திராத நிலையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தொடர்பாக உரையாற்றிட எழுந்து நின்றார்கள். ஏகத்துவ உறுதிமொழி கூறி, அல்லாஹ்வைத் தக்கபடி போற்றிவிட்டு, 'என் மனைவியின் மீது அபாண்டப் பழி சுமத்தியவர்களின் விஷயத்தில் (அவர்களை என்ன செய்வதென்று) எனக்கு ஆலோசனை கூறுங்கள்! அல்லாஹ்வின் மீதாணையாக! என் மனைவியிடம் எந்தத் தீயொழுக்கத்தையும் நான் காணவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! எவரிடம் எந்தத் தீய பண்பையும் நான் காணவில்லையோ அத்தகைய ஒருவருடன் என் வீட்டாரை இணைத்து அவர்கள் பழி சுமத்தியுள்ளார்கள். நான் இருக்கும்போதே தவிர வேறு எந்தச் சமயத்திலும் அவர் என் வீட்டினுள் நுழைந்ததில்லை. நான் பயணத்தில் வெளியில் சென்றால் அவரும் என்னுடனேயே இருப்பார்'' என்று கூறினார்கள். உடனே, ஸஅத் இப்னு முஆத்(ரலி) எழுந்து, 'அவர்களின் கழுத்தைச் சீவுவதற்கு என்னை அனுமதியுங்கள் இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள். 'கஸ்ரஜ்' குலத்தாரிடையேயிருந்து ஒருவர் எழுந்து, 'பொய் சொன்னீர்! அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் (அவதூறு கற்பித்தவர்கள்) அவ்ஸ் குலத்தைச் சேர்ந்தவர்களாய் இருந்தால், அவர்களின் கழுத்துச் சீவப்படுவதை நீர் விரும்பமாட்டீர்'' என்று கூறினார். 'ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களின் தாயார் அந்த மனிதரின் குலத்தைச் சேர்ந்தவர்களாய் இருந்தார்கள். (அவர்களிடையே வாக்குவாதம் எந்த அளவுக்கு முற்றிவிட்டதென்றால்)'அவ்ஸ்' குலத்தாருக்கும்'கஸ்ரஜ்' குலத்தாருக்குமிடையே பள்ளிவாசலிலேயே குழப்பமும், கைகலப்பும் மூண்டுவிடப்பார்த்து. (இவற்றில் எதுவுமே) எனக்குத் தெரியாது.

அன்று மாலை நான் (இயற்கைத்) தேவைக்காக உம்மு மிஸ்தஹ் என்பாருடன் புறப்பட்டேன். (வழியில்) அவரின் கால் (அவரின் கம்பளி அங்கியால்) இடறியது. அவர், 'மிஸ்தஹ் நாசமாகட்டும்'' என்று கூறினார். நான், 'என் அன்னையே! உங்கள் புதல்வரையா திட்டுகிறீர்கள்?' என்று கேட்டேன். அவர் மௌனமாயிருந்தார். பிறகு இரண்டாவது முறையாக அவரின் கால் இடறியது. அப்போதும் அவர், 'மிஸ்தஹ் நாசமாகட்டும்'' என்று கூறினார். நான், 'உங்கள் புதல்வரையா திட்டுகிறீர்கள்?' என்று கேட்டேன். பின்னர், மூன்றாம் முறையாக அவரின் கால் இடறியது. அப்போதும் அவர், 'மிஸ்தஹ் நாசமாகட்டும்'' என்று கூறினார். நான் அவரை அதட்டினேன். அவர்'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவனை உங்களுக்காகத்தான் திட்டுகிறேன்'' என்று கூறினார். நான், 'என்னுடைய எந்த விஷயத்திற்காக?' என்று கேட்டேன். அப்போதுதான் அவர் என்னிடம் விஷயத்தை உடைத்தார். நான், 'இப்படியா நடந்தது?' என்று கேட்டேன். அவர்'ஆம்!' அல்லாஹ்வின் மீதாணையாக, (இப்படித்தான் நடந்தது)'' என்று பதிலளித்தார். நான் என் வீட்டிற்குத் திரும்பினேன். (அதிர்ச்சியில்) நான் எங்கே போனேன் எதற்காகப் போனேன் என்பது கூட எனக்கு நினைவில்லாதது போலாம்விட்டது. அதில் கொஞ்சமோ அதிகமோ எதுவும் நினைவில் இல்லை. எனக்குக் காய்ச்சல் வந்துவிட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், 'என் தந்தையின் வீட்டிற்கு என்னை அனுப்பிவிடுங்கள்'' என்று சொன்னேன். (என்னை என் தந்தை வீட்டில்விட்டுவர) என்னுடன் ஒரு சிறுவனை நபி(ஸல்) அவர்கள் அனுப்பிவைத்தார்கள்.

நான் வீட்டினுள் சென்றபோது என் தாயார் உம்மு ரூமான்(ரலி) அவர்களைக் கீழ்த்தளத்திலும் (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்களை (குர்ஆன்) ஓதியவர்களாய் வீட்டின் மேல்தளத்திலும் இருக்கக் கண்டேன். என் தாயார், 'என் அன்பு மகளே! என்ன விஷயமாக வந்திருக்கிறாய்?' என்று கேட்டார்கள். நான் அவர்களுக்கு விஷயத்தைத் தெரிவித்து செய்தியைச் சொன்னேன். ஆனால், எனக்கு ஏற்பட்ட அளவிற்குக் கவலை அவர்களுக்கு ஏற்படவில்லை! அப்போது அவர்கள்'என் அன்பு மகளே! இந்த விவகாரத்தை, உன் மீது (பெரிதாக்கிக் கொள்ளாமல்) இலோசாக்கிக் கொள்! ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! தன்னை விரும்பும் கணவரிடம்

இருக்கும் ஓர் அழகிய பெண்ணுக்குச் சக்களத்திகள் பல பேர் இருக்க, அவர்கள் அவளின் மீது பொறாமைப்படுவதும், அவளைப் பற்றிக் குறை கூறுவதும் இயல்பு தான்'' என்று கூறினார்கள். எனக்கு ஏற்பட்ட அளவிற்கு இந்த விஷயத்தில் அவர்களுக்குக் கவலை ஏற்படவில்லை என்பது இதிலிருந்து தெரிந்தது. நான் 'என் தந்தைக்கு இந்த விஷயம் தெரியுமா?' என்று கேட்டேன். தாயார் 'ஆம்' என்று கூறினார். 'இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு..?' என்று கேட்டேன். 'ஆம்' அல்லாஹ்வின் தூதருக்கும் தெரியும் என்றார் என் தாயார். நான் கண்ணீர் சிந்தி வாய்விட்டு அழலானேன். அபூ பக்ர் (ரலி) வீட்டின் மேல் தளத்தில் ஒதிக்கொண்டிருக்கையில், என் அழுகைச் சப்தத்தைக் கேட்டு கீழே இறங்கி வந்தார்கள். என் தாயாரிடம் 'இவள் விஷயம் என்ன?' என்று கேட்டார்கள். என் தாயார், 'அவளைப் பற்றிக் கூறப்பட்ட அவதூறுச் செய்தி அவளுக்கு எட்டிவிட்டது'' என்று கூறினார். உடனே அபூ பக்ர் (ரலி) அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைப் பொழிந்தன. பிறகு அவர்கள், 'என் அன்பு மகளே! நீ என் வீட்டிற்குத் திரும்பிச் செல்லவேண்டுமென்று உன்னிடம் வற்புறுத்துகிறேன்'' என்று கூறினார்கள். நான் திரும்பி வந்துவிட்டேன்.

அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , என் வீட்டிற்கு வந்திருந்து என் பணிப் பெண்ணிடம் என்னைப் பற்றிக் கேட்டிருந்தார்கள். அவள் 'இல்லை! அல்லாஹ்வின் மீதாணையாக! ஆடு நுழைந்து 'அவர்கள் பிசைந்து வைத்த மாவை' அல்லது 'அவர்கள் குழைத்து வைத்த மாவை'த் தின்றுவிட்டுச் செல்லும் அளவிற்கு (மெய் மறந்து) உறங்கிவிடுவார்கள் என்பதைத் தவிர வேறு எந்தக் குறையையும் நான் (அவரிடமிருந்து) அறியவில்லை'' என்று சொல்லியிருந்தாள். அப்போது நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் அவளை அதட்டி, 'இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் உண்மையைச் சொல்!''என்று அவளிடம் விரிவாக விஷயத்தை விளக்கினார். அப்போதும் அவள் 'அல்லாஹ்வின் மீதாணையாக, பொற்கொல்லன், சிவப்பான (தூய்மையான) தங்கக் கட்டியை எப்படி மாசுமாறுவற்றதாகக் கருதுவோனோ அவ்வாறே நான் அவரைக் கருதுகிறேன்'' என்றே சொன்னாள். எந்த மனிதரைக் குறித்து (என்னுடன் இணைத்து) அவதூறு பேசப்பட்டதோ அந்த மனிதருக்கும் இந்த விஷயம் எட்டியது. அவர் 'அல்லாஹ் தூய்மையானவன். நான் இதுவரை எந்த அன்னியப் பெண்ணின் ஆடையையும் நீக்கியதில்லையே!''என்று கூறினார். பிறகு அவர் இறைவழியில் வீரமரணம் அடைந்தார். என் தாய் தந்தை இருவரும் என்னிடம் காலையில் வந்தனர். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுதுவிட்டு வரும்வரை அவர்கள் (என்னிடமே) இருந்தார்கள்.

பிறகு நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தபோது, என் தாய் தந்தை இருவரும் (ஒருவர்) என் வலப்பக்கமும், (மற்றவர்) என் இடப்பக்கமும் இருந்தனர். நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து, போற்றிவிட்டு, 'ஆயிஷா! நீ 'தீய செயல் ஏதும் புரிந்திருந்தால்' அல்லது 'அநீதியிழைத்திருந்தால்', அல்லாஹ்விடம் பாவமன்னிப்புத் தேடிக் கொள்! ஏனெனில் அல்லாஹ், தன் அடியார்களிடமிருந்து பாவமன்னிப்புக் கோரிக்கையை ஏற்றுக்கொள்கிறான்'' என்று கூறினார்கள். அப்போது அன்சாரிப் பெண்யொருத்தி வந்து வாசலில் அமர்ந்திருந்தாள். நான், (நபி (ஸல்) அவர்களிடம்,) 'இந்தப் பெண் பெளியே சென்று ஏதாவது சொல்வாள் என்று நீங்கள் வெட்கப்படவில்லையா?' என்று கேட்டேன். பிறகு, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (எனக்கு) அறிவுரை கூறினார்கள். நான் என் தந்தையின் பக்கம் திரும்பி, 'இவர்களுக்கு பதில் சொல்லுங்கள்'' என்றேன். அவர்கள் 'நான் என்ன பதில் சொல்வது?' என்று கேட்டார்கள். பிறகு நான் என் தாயாரிடம் திரும்பி, 'இவர்களுக்கு பதில் சொல்லுங்கள்!''என்றேன். அவர்கள், 'நான் என்ன சொல்வேன்?' என்று கேட்டார்கள். அவ்விருவருமே பதில் அளிக்காத காரணத்தால், நான் ஏகத்துவ உறுதிமொழிகூறி, அல்லாஹ்வைப் புகழ்ந்து, அவனுடைய தகுதிக்கேற்ப அவனைப் போற்றிவிட்டு, 'அல்லாஹ்வின் மீதாணையாக, நான் (இப்படிச்) செய்யவில்லையென்று உங்களிடம் சொன்னால், -வலிவும் உயர்வும் மிக்க அல்லாஹ் நான்

உண்மையே பேசுகிறேன் என்பதை அறிவான். -அது எனக்கு உங்களிடம் பயனளிக்கப்போவதில்லை. நீங்கள் அதைப் பேசிவிட்டீர்கள். அது உங்கள் உள்ளத்தில் பதிந்தும்விட்டது. நான் அப்படிச் செய்தேன் என்று சொன்னால் - நான் அப்படிச் செய்யவில்லை என்பதை அல்லாஹ் அறிவான்'தனக்குத்தானே (செய்த குற்றத்தை ஏற்று) ஒப்புதல் வாக்குமூலம் அளித்துவிட்டாள்‘‘ என்று நீங்கள் சொல்வீர்கள்! அல்லாஹ்வின் மீதாணையாக, (இறைத்தூதர்) யூசுஃப்(அலை) அவர்களின் தந்தையே உங்களுக்கும் எனக்கும் உவமையாக காண்கிறேன்‘‘ -அப்போது (யூசுஃப் அவர்களின் தந்தை) யஅகூப்(அலை) அவர்களின் பெயரை நினைவுபடுத்திப் பார்த்தேன். ஆனால், நினைவுக்கு வரவில்லை.'(இந்நிலையில்,) பொறுமையை மேற்கோள்வதே அழகானது. நீங்கள் புனைந்து கூறும் விஷயத்தில் அல்லாஹ்விடமே பாதுகாப்புக் கோருகிறேன்‘‘ என யஅகூப்(அலை) அவர்கள் கூறியதையே நானும் கூறுகிறேன்.

அந்த நேரத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மீது, (குர்ஆன்வசனங்கள்) அருளப்பெற்றன. எனவே, நாங்கள் மௌனமாக இருந்தோ.'வஹீ' (வேத அறிவிப்பு அருளப்படுவது) அவர்களுக்கு நிறுத்தப்பட்டபோது, நான் அவர்களின் முகத்தில் மகிழ்ச்சியைத் தெளிவாகக் கண்டேன். அவர்க ளதம் நெற்றி (வியர்வை)யைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். மேலும், 'ஆயிஷா! ஒரு மகிழ்ச்சியான செய்தி. அல்லாஹ் நீ குற்றமற்றவள் என்று (குர்ஆன் வசனத்தை) அருளிவிட்டான்‘‘ என்று கூறினார்கள். நான் அன்று கடுங்கோபத்துடன் இருந்தேன். என் தாய் தந்தையர் என்னிடம்'நீ எழுந்து நபி(ஸல்) அவர்களிடம் செல்!"என்று கூறினர். அதற்கு, 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களிடம் எழுந்து செல்லவுமாட்டேன். அவர்களைப் பாராட்டவுமாட்டேன். உங்கள் இருவரையுங் கூட பாராட்டமாட்டேன். மாறாக, என்னைக் குற்றமற்றவளாக அறிவித்து வேத அறிவிப்பை அருளிய அல்லாஹ்வையே புகழ்வேன். நீங்கள் (என் மீதான) அவதூற்றைக் கேட்டுக் கொண்டிருந்தீர்கள். அதை மறுக்கவுமில்லை அதை மாற்ற முயலவுமில்லை‘‘ என்று சொன்னேன்.

அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்:

மேலும், ஆயிஷா(ரலி) (இவ்வாறு) கூறிவந்தார்கள்: (நபியவர்களுடைய துணைவியரில் ஒருவரான) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை அவர்களின் மார்க்கப் பேணுதலின் காரணத்தினால், அல்லாஹ் (அவதூறுப் பிரசாரத்தில் பங்கு பெறவிடாமல்) காப்பாற்றிவிட்டான். அவர்கள் என்னைப் பற்றி நல்ல கருத்தையே கூறினார்கள். ஆனால், அவர்களின் சகோதரியான ஹம்னாவோ (அவதூறுபேசி) அழிந்தவர்களுடன் சேர்ந்து அழிந்து போனார். (முஸ்லிம்களில்) அதைப் பற்றிப் பேசியவர்கள் மிஸ்தஹும், ஹஸ்ஸான் இப்னு ஸாபித்தும் ஆவர். நயவஞ்சகன் அப்துல்லாஹ் இப்னு உபைதான் அதனுடன் (பல குற்றச்சாட்டுகளைத்) தேடி இணைத்து அதைப் பரப்பி வந்தவன் ஆவான். அவதூறு பரப்பியவர்களில் பெரும் பங்கு வகித்தவனும் அவன்தான். ஹம்னாவும் கூட.

(என் தந்தை) அபூ பக்ர்(ரலி), 'மிஸ்தஹுக்கு எந்தப் பயன்தரும் உதவியும் இனி ஒருபோதும் செய்யமாட்டேன்‘‘ என்று சத்தியம் செய்தார்கள். அப்போது அல்லாஹ்'உங்களில் செல்வம் மற்றும் தாயாளகுணம் படைத்தோர் (தங்கள்) உறவினர்களுக்கோ ஏழைகளுக்கோ இறைவழியில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கோ (எதுவும்) வழங்கமாட்டேன் என்று சத்தியம் செய்யவேண்டாம். (அவர்களால் தங்களுக்கு ஏதேனும் வருத்தம் ஏற்பட்டிருந்தால்) அவர்கள் அதனை மன்னித்து (பிழைகளைப்) பொருட்படுத்தாமல்விட்டு விடட்டும்! அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? அல்லாஹ் மிகவும் மன்னிப்போனும் கருணையுடையோனுமாய் இருக்கிறான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 24:22 வது) இறைவசனத்தை அருளினான். (இந்த வசனத்தில்)'உலுல் ஃபள்ல்' (செல்வம் படைத்தோர்) என்று அபூ

பக்ர்(ரலி) அவர்களையே அல்லாஹ் குறிப்பிட்டான். 'மஸாக்கீன்' (ஏழைகள்) என்று மிஸ்தஹ் அவர்களைக் குறிப்பிட்டான். இதையடுத்து அபூ பக்ர்(ரலி), 'ஆம், அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் இறைவா! எங்களை நீ மன்னிப்பதையே நாங்கள் விரும்புகிறோம்'' என்று கூறி, தாம் முன்பு செய்து வந்தது போன்றே (மிஸ்தஹுக்குப் பொருள் உதவி) செய்து வரத் தொடங்கினார்கள்.

## 24:31 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) இறை நம்பிக்கை கொண்ட பெண்களிடம் கூறுக:) அவர்கள் தங்களின் மார்புகள் மேல் துப்பட்டாவைப் போட்டு (மறைத்து)க் கொள்ளட்டும்! (எனும் 24:31 வது வசனத் தொடர்:)

ஹதீஸ் 4758. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஆரம்ப கால முஹாஜிர் பெண்களுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக!' (நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்களிடம் கூறுக:) அவர்கள் தங்கள் மார்புக்கு மேல் தங்களின் துப்பட்டாவைப் போட்டு (மறைத்து)க் கொள்ளட்டும்!"எனும் (திருக்குர்ஆன் 24:31 வது) வசனத்தை அல்லாஹ் அருளியபோது, அவர்கள் தங்கள் கீழ்ஆடை(யில் ஒரு பகுதி)யைக் கிழித்து அதனைத் துப்பட்டா ஆக்கி (மறைத்து)க் கொண்டார்கள்.

ஹதீஸ் 4759. ஸஃபிய்யா பின்த் ஷைபா(ரஹ்) கூறினார்

"(நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்களிடம் கூறுக:) அவர்கள் தங்களின் மார்புகள் மேல் தங்களின் துப்பட்டாவைப் போட்டு (மறைத்து)க் கொள்ளட்டும்'' எனும் (திருக்குர்ஆன் 24:31 வது) வசனம் அருளப்பட்டபோது பெண்கள் தங்கள் கீழ் அங்கிகளின் ஓரத்தைக் கிழித்து அதனைத் துப்பாட்டா ஆக்கி (மறைத்து)க் கொண்டார்கள்.

## (25) அல்ஃபுர்கான் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 25:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹபாஅம் மன்ஸூரா' எனும் சொல்'காற்று வாரியிறைக்கக்கூடிய (புழுதி போன்ற)வற்றை'க் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 25:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மத்தழ் ழில்ல' (நிழலை நீட்டுகிறான்) என்பது, 'ஃபஜ்ர் முதல் சூர்யோதயம் வரையிலான நிழலைக் குறிக்கிறது.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'சாகின்' எனும் சொல்லுக்கு'நிலையானது' என்று பொருள். 'அலைஹி தலீல்' (நிழலுக்கு ஆதாரமாக) என்பதற்கு'சூர்யோதயம் நிழலுக்கு ஆதாரமாகும்'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 25:62 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கில்ஃபத்' (பிரதி) எனும் சொல்லின் கருத்தாவது: இரவில் விடுபட்ட செயலைப் பகலிலும், பகலில் விடுபட்ட செயலை இரவிலும் ஒருவர் நிறைவேற்றிக் கொள்ளமுடியும். ('கில்ஃபத் எனும் இச்சொல்லுக்கு'அடுத்தடுத்து வரக்கூடியது' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)

ஹஸன் அல் பஸரீ(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 25:74 வது வசனத்திலுள்ள)'கண் குளிர்ச்சி' என்பதன் கருத்தாவது: இறைவா! (என் மனைவி, மக்கள்) உனக்குக் கீழ்ப்படிவதன் மூலம் (என் கண்களைக் குளிர்ச்சி ஆக்குவாயாக!) தன் அன்பிற்குரியோர் இறைவனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதைக் காண்பதைவிட வேறெதுவும் ஓர் இறைநம்பிக்கையாளனின் கண்ணைக் குளிர்ச்சியடையச் செய்துவிடுவதில்லை.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

(திருக்குர்ஆன் 25:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸுபூர்' எனும் சொல்லுக்கு'நாசம்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 25:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸஈர்' (கொழுந்துவிட்டெரியும் நெருப்பு) எனும் சொல் ஆண்பாலாகும். (அதன் வேர்ச் சொல்லான)'தஸஃஉர்' எனும் சொல்லுக்கும்'அல் இள்திராம்' எனும் சொல்லுக்கும்'கொழுந்துவிட்டெரிதல்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 25:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தும்லா அலைஹி' எனும் சொற்றொடருக்கு'இவருக்கு ஓதிக்காட்டப்படுகின்றன' என்று பொருள். இச்சொல்'அம்லைத்து','அகிலல்து' (ஓதிக் காட்டினேன்) ஆகிய (வினைச்) சொற்களிலிருந்து பிரிந்ததாகும்.
(திருக்குர்ஆன் 25:38 வது வசனத்தின் மூலத்தில்'அஸ்ஹாபுர் ரஸ்ஸி' என்பதிலுள்ள)'அர்ரஸ்ஸு' எனும் சொல்லுக்குச்'சுரங்கம்' என்று பொருள்.'ரிஸாஸ்' (சுரங்கங்கள்) என்பது இதந் பன்மையாகும். (இச்சொல்லுக்குக்'மண்று' என்றும் பொருள் கொள்வோர் உள்ளனர்.)
(திருக்குர்ஆன் 25:77 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மா யஉபஉ' எனும் சொல்லுக்குப் பொருட்படுத்தியிருக்கமாட்டான்'' என்று பொருள். (இதன் இறந்த காலவினைச் சொல் இடம்பெற்ற)'மா அபஉத்து பிஹி ஷைஆ' எனும் வாக்கியத்திற்கு'அவனை நான் ஒரு பொருட்டாகவே கருதவில்லை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 25:65 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகராம்' எனும் சொல்லுக்கு'நாசம்' என்று பொருள். (இச்சொல்லுக்கு'சதா தொல்லை தரக்கூடியது' என்றும்'நிரந்தரமானது' என்றும் பொருள் கூறப்படுவதுண்டு.)
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 25:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ அத்தவ்' எனும் சொல்லுககு'வரம்பு கடந்து அக்கிரமம் புரிந்தனர்' என்று பொருள.
சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 25:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள'அத்தவ்' எனும் சொல்லின் வினையாலணையும் பெயரும், 69:6 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றதுமான)'ஆத்தியா' எனும் சொல்லுக்குக்'காற்றின் காவலர்களான வானவர்களின் கட்டுப்பாட்டை மீறிவிட்டது போன்றே கடுமையான சூறாவளிக் காற்று' என்று பொருள்.

## 25:34 வது திருக்குர்ஆன் வசனம்

“நரகத்தை நோக்கி தம் முகங்களால் (நடத்தி) இழுத்துச் செல்லப்படவிருப்பவர்களின் தங்குமிடம் மிகவும் மோசமானதாகும் அவர்களின் வழியும் மிக மிக்த தவறானதாகும்'' எனும் (திருக்குர்ஆன் 25:34 வது) இறைவசனம்.
ஹதீஸ் 4760. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
ஒருவர்'இறைத்தூதர் அவர்களே! இறைமறுப்பாளன் மறுமை நாளில் தன் முகத்தால் (நடத்தி) இழுத்துச் செல்லப்படுவானா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'இந்த உலகில் அவனை இரண்டு கால்களினால் நடக்கச் செய்தவனுக்கு, மறுமை நாளில் அவனைத் தன் முகத்தால் நடக்கச் செய்திட முடியாதா?' என்று (பதிலுக்குக்) கேட்டார்கள்.
(இதை அறிவித்த அறிவிப்பாளர்) கத்தாதா இப்னு திஆமா(ரஹ்)'ஆம்! (முடியும்.) எங்கள் இறைவனின் வலிமையின் மீதாணையாக!”என்று கூறினார்கள்.

## 25:68 வது திருக்குர்ஆன் வசனம்

“மேலும், அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைப்பதில்லை. மேலும், (கொலை செய்யக் கூடாது என்று) அல்லாஹ் தடைவிதித்துள்ள எந்த உயிரையும் நியாயமின்றி அவர்கள் கொலை செய்வதில்லை மேலும், விபசாரமும் செய்வதில்லை. யாரேனும் இச்செயல்களைச் செய்தால் அவன் (தன் பாவத்திறக்கான) தண்டனையைப் பெற்றே தீருவான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 25:68 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4761. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

“அல்லாஹ்விடம் எந்தப் பாவம் மிகப் பெரியது?’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்’கேட்டேன்’ அல்லது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது’ அதற்கு அவர்கள், ‘அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணைவைப்பது தான் (பெரும் பாவம்)‘‘ என்று பதிலளித்தார்கள். நான், ‘பிறகு எது?’ என்று கேட்டேன். அவர்கள், ‘உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதை நீ கொல்வது‘‘ என்று கூறினார்கள். நான்’பிறகு எது?’ என்று கேட்க, அவர்கள்’உன் அண்டை வீட்டானின் மனைவியுடன் நீ விபசாரம் செய்வது‘‘ என்று பதிலளித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில், ‘மேலும், அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைப்பதில்லை. மேலும், (கொலை செய்யக்கூடாது என்று) அல்லாஹ் தடைவிதித்துள்ள எந்த உயிரையும் நியாயமின்றி அவர்கள் கொலை செய்வதில்லை. யாரேனும் இச்செயல்களைச் செய்தால் அவன் (தன் பாவத்திற்கான) தண்டனையைப் பெற்றே தீருவான்‘‘ எனும் இந்த (திருக்குர்ஆன் 25:68 வது) இறைவசனம் அருளப்பட்டது.

ஹதீஸ் 4762. காசிம் இப்னு அபீ பஸ்ஸா(ரஹ்) அறிவித்தார்

நான் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களிடம், ‘இறைநம்பிக்கையாளரை வேண்டுமென்றே கொலைசெய்வதனுக்குப் பாவமன்னிப்பு உண்டா?’ என்று கேட்டுவிட்டு, ‘மேலும், (கொலை செய்யக்கூடாது என்று) அல்லாஹ் தடை விதித்துள்ள எந்த உயிரையும் நியாயமின்றி அவர்கள் கொலை செய்வதில்லை..!”எனும் (திருக்குர்ஆன் 25:68 வது) இறைவசனத்தையும் அவர்களிடம் ஓதிக் காட்டினேன். அதைக் கேட்ட ஸயீத்(ரஹ்), ‘இதே வசனத்தை நீங்கள் (என்னிடம்) ஓதிக்காட்டியது போன்றே நானும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் ஓதிக் காட்டினேன். அப்போது அவர்கள், ‘இது (திருக்குர்ஆன் 25:68) மக்காவில் அருளப்பெற்ற வசனமாகும். இ(தன் சட்டத்)தை, மதீனாவில் அருளப்பெற்ற’அந்நிஸா’ அத்தியாயத்திலுள்ள ஒரு வசனம் (திருக்குர்ஆன் 04:93) மாற்றிவிட்டது‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4763. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

இறைநம்பிக்கையாளரை (வேண்டுமென்றே) கொலை செய்தல் (பாவமன்னிப்புக்குரிய குற்றமா என்பது) தொடர்பாக (இராக்கைச் சேர்ந்த) கூஃபாவாசிகள் கருத்து வேறுபாடு கொண்டிருந்தனர். எனவே, நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களை நோக்கி பயணம் மேற்கொண்டேன். அவர்கள், ‘இது (திருக்குர்ஆன் 04:93) இறுதியாக இறங்கிய வசனங்களில் ஒன்றாகும். இதை எந்த வசனமும் மாற்றவில்லை‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4764. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் நான், ‘அவனுக்குரிய தண்டனை நகரம் தான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 04:93 வது) இறைவசனத்தைப் பற்றிக் கேட்டேன். அவர்கள்’அவனுக்குப் பாவமன்னிப்புக் கிடையாது‘‘ என்று கூறினார்கள். புகழுயர்ந்த இறைவனின்’மேலும், அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைப்பதில்லை‘‘ எனும் (திருக்குர்ஆன் 25:68 வது) வசனத்தைக் குறித்துக் கேட்டதற்கு, ‘இந்த வசனம் அறியாமைக் காலத்தைப் பற்றியதாகும்‘‘ என்று அவர்கள் பதிலளித்தார்கள்.

## 25:69 வது திருக்குர்ஆன் வசனம்

“மறுமை நாளில் அவனுக்கு இரட்டிப்பு வேதனை அளிக்கப்படும். மேலும், அதிலேயே இழிவுக்குரியவனாய் அவன் என்றென்றும் வீழ்ந்து கிடப்பான்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 25:69 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4765. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம், 'ஓர் இறைநம்பிக்கையாளரை ஒருவன் வேண்டுமென்றே கொலை செய்தால் அவனுக்குரிய தண்டனை நரகம்தான்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 04:93 வது) இறைவசனத்தைப் பற்றியும், 'மேலும், (கொலை செய்யக்கூடாது என) அல்லாஹ் தடைவிதித்துள்ள எந்த உயிரையும் அவர்கள் கொல்லமாட்டார்கள்‘ ‘ என்று தொடங்கி'பாவமன்னிப்புக்கோரி இறை நம்பிக்கை கொண்டு நற்செயல் புரிபவர் தவிர‘ ‘ என்று முடியும் (திருக்குர்ஆன் 25:68-70) வசனங்கள் பற்றியும் (விளக்கம்) கேட்கப்பட்டது. நானே அன்னாரிடம் கேட்டேன். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி), 'இந்த வசனங்கள் (திருக்குர்ஆன் 25:63-69) இறங்கியபோது (புதிதாக இஸ்லாத்தைத் தழுவியிருந்த) மக்காவாசிகள், நாம் அல்லாஹ்வுக்க இணை கற்பித்தோம் அல்லாஹ் தடைவிதித்த உயிர்களை நியாயமின்றிக் கொலை செய்தோம் தீயசெயல்கள் புரிந்தோம். (எனவே, இனி நமக்கு மன்னிப்புக் கிடைக்காது போலும்)‘ ‘ என்று கூறிக்கொண்டனர். எனவே, அல்லாஹ்'அவர்களில், மன்னிப்புக் கோரி, இறைநம்பிக்கை கொண்டு, நற்செயல்கள் புரிவோரைத் தவிர. அவர்களின் பாவங்களை அல்லாஹ் மன்னித்து அவற்றை நன்மையாகவும்மாற்றிவிடுகிறான். அல்லாஹ் மன்னிப்போனும், கருணையுடையோனும் ஆவான்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 25:70 வது) வசனத்தை அருளினான்‘ ‘ என்று பதிலளித்தார்கள்.

## 25:70 வது திருக்குர்ஆன் வசனம்

“அவர்களில், மன்னிப்புக்கோரி, இறை நம்பிக்கை கொண்டு, நற்செயல்கள் புரிவோரைத் தவிர, அவர்களின் பாவங்களை அல்லாஹ் மன்னித்து அவற்றை நன்மையாகவும் மாற்றிவிடுகிறான். அல்லாஹ் மன்னிப்போனும், கருணையுடையோனும் ஆவான்‘ ‘ (எனும் 25:70 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4766. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அப்ஸா(ரலி)'ஓர் இறைநம்பிக்கையாளரை ஒருவன் வேண்டுமென்றே கொலை செய்தால் அவனுக்குரிய தண்டனை நரகம் தான்.!"என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:93 வது) வசனம் குறித்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (விளக்கம்) கேட்கும்படி எனக்கு உத்தரவிட்டார்கள். (அவ்வாறே) நான் அந்த வசனம் குறித்து அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'இந்த (திருக்குர்ஆன் 04:93 வது) வசனத்(தின் சட்டத்)தை வேறெந்த வசனமும் மாற்றவில்லை‘ ‘ என்று கூறினார்கள்.'அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அவர்கள் அழைப்பதில்லை‘ ‘ என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 25:68 வது) வசனம் குறித்துக் கேட்கும்படியும் உத்தரவிட்டிருந்தார்கள். அது குறித்து இப்னு அப்பாஸ்(ரலி), 'இது இணைவைப்போர் விஷயத்தில் அருளப்பெற்றது‘ ‘ என்று பதிலளித்தார்கள்.

## அதன் வேதனை உங்களைப் பிடித்தே தீரும் (எனும் 25:77 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4767. மஸ்ரூக்(ரஹ்) அறிவித்தார்

(இந்த 25:77 வது வசனத்தில்'லிஸாமன்' எனும் சொல்லுக்கு விளக்கமளிக்கும் போது) அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)'(மறுமை நாளின் அடையாளங்களில்) ஐந்து அடையாளங்கள் (வந்து) சென்றுவிட்டன. ஒன்று: புகை இரண்டாவது, சந்திரன் பிளப்பது் மூன்றாவது, ரோமர்கள் (வெற்றி கொள்ளப்பட்டு மீண்டும் அவர்கள் வெற்றி பெறுவது)

நான்காவதும், ஐந்தாவதும் இறைவனின் தண்டனைப் பிடியும் அவனுடைய வேதனையும்'' என்று கூறினார்கள்.

## (26) அஷ்ஷுஃ அரா அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்

(திருக்குர்ஆன் 26:128 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஅபஸூன்' எனும் சொல்லுக்குத்'(தேவையில்லாமல் உயர உயரமான) கட்டடங்களை எழுப்புகிறீர்கள்'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 26:148 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹளீம்' எனும் சொல்லுக்குத்'தொட்டால் பிய்ந்துவிடும் அளவுக்கு கனிந்தது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 26:153 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸஹ்ஹரீன்' எனும் சொல்லுக்கு'மஸ்ஹூரீன்' (சூனியம் செய்யப்பட்டவர்கள்) என்று பொருள்.

(திருக்குர்ஆன் 26:176 வது வசனத்தின் மூலத்தில் ஓர் ஓதல் முறைப்படி இடம் பெற்றுள்ள)'லைக்கத்' எனும் சொல்லும் (மற்றோர் ஓதல் முறைப்படி வந்துள்ள)'ஜகத்' எனும் சொல்லும்'ஐக்கா' எனும் சொல்லின் பன்மையாகும். இதற்கு'மரத் தொகுப்பு (தோப்பு)' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 26:189 வது வசனத்தின் மூலத்திலள்ள'யவ்முழ் ழுல்லத்தி' (நிழலுடைய நாள்) எனும் சொல் அவர்களுக்கு வேதனை நிழலிட்டதைக் குறிக்கிறது.

(திருக்குர்ஆன் 15:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மவ்ஸுன்' எனும் சொல்லுக்கு'அறியப்பட்டது' என்று பொருள். (இச்சொல்லுக்கு ஒழுங்கான முறை, மிகப் பொருத்தமான அளவு, நிர்ணயிக்கப்பட்ட அளவு எனும் பொருள்களும் கொள்ளப்படுவதுண்டு.)

(திருக்குர்ஆன் 26:63 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மலையைப் போல்' எனும் பொருள் மூலத்திலுள்ள'கத் தவ்த்' எனும் சொல்லுக்குரியதாகும்.

முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகின்றனர்:

(திருக்குர்ஆன் 26:54 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷிர்ஃதிமத்' எனும் சொல்லுக்குச்'சிறிய குழு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 26:219 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸாஜிதீன்'(சிரம்பணியக் கூடியவர்கள்) எனும் சொல்லுக்குத்'தொழக் கூடியவர்கள்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 26:129 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லஅல்லக்கும் தக்லுதூன்' எனும் சொற்றொடருக்கு'நீங்கள் (அழியாது) என்றென்றும் இருக்கப் போகிறவர்களைப் போல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 26:128 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உயரமான இடம்' எனும் பொருள் (மூலத்திலுள்ள)'ரீஉ' எனும் சொல்லுக்குரியதாகும். 'ரீஅத்' என்பது இதன் பன்மையாகும். 'அர்யாஉ' என்பது'ரீஅத்' என்பதன் ஒருமையாகும்.

(திருக்குர்ஆன் 26:129 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஸானிஉ' (எனும் சொல்'மஸ்னஅத்' எனும் சொல்லின் பன்மையாகும்.) ஒவ்வொரு கட்டத்திற்கும்'மஸ்னஅத்' எனப்படும்.

(திருக்குர்ஆன் 26:149 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபரிஹுன்' எனும் சொல்லுக்குக்'கர்வமுடையவர்கள்' என்று பொருள். ('பேரானந்தமுடையவர்கள்' என்றும் பொருள கொள்ளப்படுவதுணடு.)'ஃபரீஹீன்' என்பதற்கும் இதே பொருள்தான். 'ஃபாரிஹீன்' என்பதற்கு'கைதேர்ந்தவர்கள்' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.

(திருக்குர்ஆன் 26:183 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஅஸவ்' எனும் சொல்' மிகக் கொடிய விஷமத்தைக்' குறிக்கும். ஆஸ, யஊஸு, ஐஸன் என இதன் வாய்பாடு அமையும்.
(திருக்குர்ஆன் 02:184 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஜிபில்லா' எனும் சொல்லுக்குப்'படைப்பினங்கள்' என்று பொருள். (அதன் வினைச் சொல்லான)'ஜுபில்' எனும் சொல்லுக்கு'குலிக்க (படைக்கப்பட்டது) என்று பொருள்.'ஜுபுல்' ,'ஜிபில்', 'ஜுப்ல்' ஆகிய சொற்களும் இந்த வகையைச் சேர்ந்தவையே. அதாவது, படைப்பினங்கள் எனும் பொருள் கொண்டவையே. இதை இப்னுஅப்பாஸ்(ரலி) தெரிவிக்கிறார்கள்.

## 26:87 வது திருக்குர்ஆன் வசனம்

"மேலும், மனிதர்கள் அனைவரும் உயிர் கொடுக்கப்பட்டு எழுப்பப்படும் நாளில் என்னை இழிவுபடுத்திவிடாதே! (என்றும் இப்ராஹீம் வேண்டினார்'' எனும் 26:87 வது இறைவசனம்)

ஹதீஸ் 4768. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:
இப்ராஹீம்(அலை) அவர்கள் மறுமை நாளில் தம் தந்தையின் மீது தூசியும், கரும் புழுதியும் படிந்திருக்கும் நிலையில் அவர்களைக் காண்பார்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
(இந்த ஹதீஸின் முகத்தில் இடம்பெற்றுள்ள)'அல்ஃகபரா', அல்கத்தரா' ஆகிய சொற்களுக்கு ('புழுதி' எனும்) ஒரே பொருள் ஆகும்.

ஹதீஸ் 4769. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
(மறுமை நாளில்) இப்ராஹீம்(அலை) அவர்கள் தம் தந்தையைச் சந்திப்பார்கள். அப்போது'இறைவா! மக்கள் அனைவரும் உயிர் கொடுத்து எழுப்பப்படும் அந்நாளில் நீ என்னை இழிவுபடுத்தமாட்டாய்' என எனக்கு வாக்களித்தாயே!"என்று கேட்பார்கள். அதற்கு அல்லாஹ், 'இறைமறுப்பாளர்கள் சொர்க்கத்தில் நுழையத் தடை விதித்து விட்டேன்'' என்ற பதிலளிப்பான்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
(இந்த ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ள)'அல்ஃகபரா' 'அல்கத்தரா' ஆகிய சொற்களுக்கு ('புழுதி' எனும்) ஒரே பொருள் ஆகும்.

ஹதீஸ் 4769. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
(மறுமை நாளில்) இப்ராஹீம்(அலை) அவர்கள் தம் தந்தையைச் சந்திப்பார்கள். அப்போது'இறைவா!'மக்கள் அனைவரும் உயிர் கொடுத்து எழுப்பப்படும் அந்நாளில் நீ என்னை இழிவுபடுத்தமாட்டாய்' என எனக்கு வாக்களித்தாயே!"என்று கேட்பார்கள். அதற்கு அல்லாஹ், 'இறைமறுப்பாளர்கள் சொர்க்கத்தில் நுழையத் தடை விதித்து விட்டேன்'' என்று பதிலளிப்பான்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 26:214 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களை நீங்கள் எச்சரியுங்கள் (எனும் 26:214 வது இறைவசனம்).
மேலும், (திருக்குர்ஆன் 26:215 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வக்ஃபின்ள் ஜனாஹக்க' எனும் வாசகத்திற்கு, 'உங்களைப் பின்பற்றும் இறை நம்பிக்கையாளர்களிடம் மென்மையாக நடந்துகொள்ளுங்கள்'' என்று பொருள்.

ஹதீஸ் 4770. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
"(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களை நீங்கள் எச்சரியுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 26:214 வது) இறைவசனம் அருளப் பெற்றபோது நபி(ஸல்) அவர்கள்'ஸஃபா' மலைக் குன்றின் மீது ஏறிக்கொண்டு, 'பனு ஃபிஹ்ர் குலத்தாரே! பனு அதீ குலத்தாரே!"என்று

குறைஷிக் குலங்களை (பெயர் சொல்லி) அழைக்கலானார்கள். அவர்கள் அனைவரும் ஒன்று கூடினார்கள். அங்கு வரமுடியாத நிலையில் இருந்த சிலர், அது என்ன என்று பார்த்து வர (தம் சார்பாக) ஒரு தூதரை அனுப்பினார்கள். இவ்வாறு அபூ லஹப் உள்ளிட்ட குறைஷியர் (அனைவரும்) வந்(து சேர்ந்)தனர். நபி(ஸல்) அவர்கள், 'சொல்லுங்கள்: இந்தப் பள்ளத்தாக்கில் குதிரைப் படை ஒன்று உங்களின் மீது தாக்குதல் தொடுக்கப் போகிறது என்று நான் உங்களுக்குத் தெரிவித்தால், நான் உண்மை சொல்வதாக என்னை நீங்கள் நம்புவீர்களா?' என்று கேட்க, மக்கள்'ஆம். (நம்புவோம்) உங்களிடம் நாங்கள் உண்மையைத் தவிர வேறெதையும் அனுபவித்ததில்லை'' என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள், 'அப்படியென்றால், நான் கடும் வேதனையொன்று எதிர் நோக்கியுள்ளது என்று உங்களை எச்சரிக்கிறேன்'' என்று (தம் மார்க்கக் கொள்கையைச்) கூறினார்கள். (இதைக் கேட்ட) அபூ லஹப், 'நாளெல்லாம் நீ நாசமாக! இதற்காகவா எங்களை ஒன்று கூட்டினாய்?' என்று கூறினான். அப்போதுதான்'அபூ லஹபின் கரங்கள் நாசமாகட்டும்! அவனும் நாசமாகட்டும்..!"என்று தொடங்கும் (111 வது) அத்தியாயம் அருளப்பெற்றது.

ஹதீஸ் 4771. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

அல்லாஹ்'(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களை எச்சரியுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 26:214 வது) வசனத்தை அருளியபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து நின்று, 'குறைஷிக் கூட்டத்தாரே!' அல்லது'இது போன்ற ஒரு வார்த்தையைக் கூறியழைத்து, 'உங்கள் உயிர்களை (இஸ்லாத்தை ஏற்பதன் மூலம்) விலைக்கு வாங்கிக் (காப்பாற்றிக்) கொள்ளுங்கள். உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்றிவியலாது. அப்து மனாஃபின் மக்களே! உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒருசிறிதும் என்னால் காப்பாற்றமுடியாது. அப்துல் முத்தலிபின் புதல்வரான (என் பெரிய தந்தை) அப்பாஸ் அவர்களே! உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்ற இயலாது. இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அத்தையான ஸஃபியாவே! உங்களை அல்லாஹ்விடமிருந்து ஒரு சிறிதும் என்னால் காப்பாற்ற முடியாது. முஹம்மதின் புதல்வியான ஃபாத்திமாவே! என் செல்வத்திலிருந்து நீ விரும்பியதை என்னிடம் கேள்! (தருகிறேன்). ஆனால், அல்லாஹ்விடமிருந்து, உன்னை என்னால் ஒரு சிறிதும் காப்பாற்ற முடியாது'' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் வேறொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## (27) அந்நம்ல் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 27:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கப்உ' எனும் சொல்லுக்கு'மறைக்கப்பட்டிருப்பவை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 27:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா கிபல்' எனும் சொல்லுக்கு'(எதிர்க்க) வலிமை இல்லை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 27:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸர்ஹ்' எனும் சொல்லுக்கு'மாளிகை' என்று பொருள். இதன் பன்மை'ஸுருஹ்' என்பதாகும். கண்ணாடிச் சாந்துக்கும்'ஸர்ஹ்' என்பர்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

(திருக்குர்ஆன் 27:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ஷுன் அழீம்' (மகத்தான அரியாசனம்) என்பது, அழகான வேலைப்பாடுமிக்க விலை உயர்ந்த தரமான அரியாணையைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 27:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வழிப்பட்டவர்கள்' எனும் சொல்லுக்கு'நெருங்கிவிட்டது' என்று பொருள். (இச்சொல்லுக்குப்'பின்தொடர்ந்து' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)

(திருக்குர்ஆன் 27:88 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜாமிதா' எனும் சொல்லுக்கு'நிலை கொண்டிருக்கக்கூடியது' என்று பொருள். (இச்சொல்லுக்கு'வெகு உறுதியானது' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)
(திருக்குர்ஆன் 27:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அவ்ஸிஉனீ' எனும் சொல்லுக்கு'என்னை ஆக்குவாயாக' என்று பொருள்.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 27:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மாற்றி அமைத்துவிடுங்கள்' எனும் பொருள், மூலத்திலுள்ள'நக்கிரூ' எனும் சொல்லுக்குரியதாகும்.
(திருக்குர்ஆன் 27:42 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நாங்கள் முன்பே அறிந்திருந்தோம்' எனும் வாசகம், சுலைமான்(அலை) அவர்களின் கூற்றாகும்.
(திருக்குர்ஆன் 27:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸர்ஹ்' எனும் சொல், சுலைமான் (அலை) அவர்கள் கண்ணாடியிட்டு மூடிவைத்திருந்த நீர் நிலையைக் குறிக்கிறது.

## (28) அல்கஸஸ் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 28:88 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இல்லா வஜ்ஹஹு` எனும் சொல்லுக்கு'அவனுடைய ஆட்சியதிகாரத்தைத் தவிர' என்று பொருள்.'இறைவனின் திருமுகத்திற்காகச் செய்யப்பட்ட (நற்செயல் முதலிய)வற்றைத் தவிர' என்றும் பொருள் கூறப்படுகிறது.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 28:66 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் அன்பாஉ' எனும் சொல்லுக்கு'ஆதாரங்கள் என்று பொருள். (இச்சொல்லுக்கு'சகல விஷயங்கள்' என்றும் அர்த்தம் கொள்ளப்படுவதுண்டு.

## 28:56 வது திருக்குர்ஆன் வசனம்

“(நபியே!) நீங்கள் விரும்பாதவரை(யெல்லாம்) நேர்வழியில் செலுத்திவிடமுடியாது. மாறாக, அல்லாஹ்தான் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான்‘` எனும் (திருக்குர்ஆன் 28:56 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4772. முஸய்யப் இப்னு ஹஸன்(ரலி) அறிவித்தார்
(நபி(ஸல்) அவர்களின் பெரிய தந்தை) அபூ தாலிப் அவர்களுக்கு மரணவேளை வந்துவிட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரிடம் சென்றார்கள். அங்கே, அவரருகே அபூ ஜஹ்லையும், `அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யா இப்னி முஃகீரா‘வையும் கண்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'என் பெரிய தந்தையே!'லா இலாஹா இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை)' என்று சொல்லுங்கள்! இந்த (ஏகத்துவ உறுதிமொழிக்கான) சொல்லை வைத்து நான் உங்களுக்காக அல்லாஹ்விடம் வாதாடுவேன்‘` என்று கூறினார்கள். அப்போது அபூ ஜஹ்லும் அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யாவும்'அபூ தாலிபே! நீங்கள் (உங்கள் தந்தை) அப்துல் முத்தலிபின் மார்க்கத்தையா வெறுத்து ஒதுக்கப்போகிறீர்கள்?' என்று கேட்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏகத்துவ உறுதிமொழியைக் கூறும்படி அவர்களை வற்புறுத்திக் கொண்டேயிருந்தார்கள். அவ்விருவரும் தாம் முன்பு சொன்னதையே சொல்லி (அவரைத் தடுத்து)க் கொண்டேயிருந்தார்கள். இறுதியில் அபூ தாலிப் கடைசியாக அவர்களிடம் பேசியது, `நான் (என் தந்தை) அப்துல் முத்தலிப் மார்க்கத்தில் இருக்கிறேன்‘` என்பதாகவே இருந்தது.'லாஇலாஹா இல்லல்லாஹ்' எனும் உறுதிமொழியைச் சொல்ல அவர் மறுத்துவிட்டார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்குத் தடை விதிக்கப்படும்வரை உங்களுக்காக நான் பாவமன்னிப்புக் கேட்டுக்

கொண்டேயிருப்பேன்'' என்று கூறினார்கள். அப்போதுதான், `இணைவைப்போருக்காகப் பாவமன்னிப்புக் கோர இறைத்தூதருக்கும், இறைநம்பிக்கையாளர்களுக்கும் உரிமை இல்லை'' எனும் (திருக்குர்ஆன் 09:113 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். அபூ தாலிப் தொடர்பாக (நபியவர்கள் வருந்தியபோது) அல்லாஹ்'(நபியே!) நீங்கள் விரும்பியவரை(யெல்லாம்) நேர்வழியில் செலுத்திவிடமுடியாது. மாறாக, அல்லாஹ்தான் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான்'' எனும் (திருக்குர்ஆன் 28:56 வது) வசனத்தை அருளினான்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 28:76 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உலில் குவ்வத்தி' (பலவான்கள்) என்பதன் கருத்தாவது: (காரூனின் பொக்கிஷங்களின் சாவிகளைப் பலவான்களான) ஆண்களில் ஒரு குழுவினரால் கூட சுமக்கமுடியாது. 'லதனூஉ' எனும் சொல்லுக்குச்'சிரமமாக மாறும்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 28:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபாரிஃகா' எனும் சொல்லுக்கு'(மூஸாவுடைய தாயாரின் உள்ளம்) மூஸாவின் நினைவைத்தவிர (வேறெல்லாக் கவலைகளிலிருந்தும் நீங்கி) வெறுமையாக இருந்தது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 28:76 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபரிஹீன்' எனும் சொல்லுக்கு'ஆணவம் கொண்டோர்' என்று பொருள். (இச்சொல்லுக்குப்'பூரிப்படைவோர்' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)

(திருக்குர்ஆன் 28:11 வது வசனத்திலுள்ள)'அவரை நீ பின்தொடர்ந்து செல்' எனும் பொருள் மூலத்திலுள்ள'குஸ்ஸீஹி' எனும் சொல்லுக்குரியதாகும். சில நேரங்களில்'சம்பவத்தை எடுத்துரைத்தல்' எனும் பொருளிலும் இச்சொல் வருவதுண்டு. (இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'அன் ஜுனுபின்' எனும் சொல்லுக்கு'தூரத்திலிருந்து' என்று பொருள். (இச்சொல்லும்)'அன் ஜனாபத்தின்' எனும் சொல்லும் (பொருளில்) ஒன்றே. 'அன் இஜ்தினாப்' எனும் சொல்லும் அவ்வாறே!

(திருக்குர்ஆன் 28:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யப்திஷ்' (தாக்க) எனும் சொல்'யப்துஷ்' என்றும் வாசிக்கப்பட்டுள்ளது.

(திருக்குர்ஆன் 28:20 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஃதமிரூன்' எனும் சொல்லுக்கு'ஆலோசனை செய்து கொண்டிருக்கின்றனர்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 28:28 வது வசனத்தின் மூலத்திலள்ள)'அல்உத்வான்' எனும் சொல்லும், `அல் அதாஉ' எனும் சொல்லும், `அத்தஅத்தீ' எனும் சொல்லும் ('வரம்பு மீறல்' எனும்) ஒரே பொருள் கொண்டவையாகும்.

(திருக்குர்ஆன் 28:29 வது வசனத்திலுள்ள)'கண்டார்' எனும் பொருள், மூலத்திலுள்ள'ஆனஸ' எனும் சொல்லுக்குரியதாகும்.

(திருக்குர்ஆன் 28:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஜஃத்வா' எனும் சொல்லுக்குத்'தீக்கொழுந்து இல்லாத கெட்டியான எரி கொள்ளி' என்று பொருள். (திருக்குர்ஆன் 27:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஷ்ஷிஹாப்' எனும் சொல்லுக்குத்'தீக்கொழுந்து உள்ள எரிகொள்ளி' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 28:31 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜான்' எனும் சொல், பாம்பு வகைகளில் ஒன்றை (வெண்ணிறச் சிறிய பாம்பை)க் குறிக்கும். 'அஃபாஈ` (பெண்ணின விஷப் பாம்பு) மற்றும்'அசாவித்' (கருநாகம்) ஆகியவற்றையும் (திருக்குர்ஆன் 20:20 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹய்யத்' (பாம்பு) எனும் சொல் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 28:34 வது வசனத்திலுள்ள)'உதவியாளர்' எனும் பொருள், மூலத்திலுள்ள'ரித்ஃ' எனும் சொல்லுக்குரியதாகும். (இதே வசனத்திலுள்ள சொல்லை) இப்னு

அப்பாஸ்(ரலி)'யுஸத்திக்குனீ' (அவர் என்னை உண்மைப்படுத்திவைப்பார்) என்று ஓதினார்கள். (மற்ற சிலர்'யுஸத்திக்னீ' என்று ஓதியுள்ளார்கள்.)
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 28:35 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸ நஷுத்து' எனும் சொல்லுக்கு, 'உமக்கு நாம் உதவி புரிவோம்' என்று பொருள். ('ஸநஷுத்து அளுதக்க' என்பதற்கு உம்முடைய கரத்தை நாம் வலுப்படுத்துவோம்' என்று பொருள்.) நீ யாருக்காவது உதவி புரியும்போதெல்லாம் நீ அவருக்காக கரமாக ஆகிறாய்! (அதனால், இங்கு'கரம்' அல்லது'கொடுங்கை' ('அளுத்') எனும் சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது.)
(திருக்குர்ஆன் 28:42 வது வசனத்தின் மூலத்திலள்ள)'மக்பூஹுன்' எனும் சொல்லுக்கு'நாசமடைந்தவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 28:51 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வஸ்ஸல்னா லஹுமுல் கவ்ல்' எனும் வாக்கியத்திற்கு'(நம்முடைய வேத) வாக்கை அவர்களுக்கு நிறைவாகத் தெளிவுபடுத்தினோம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 28:57 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மக்பூஹீன்' எனும் சொல்லுக்கு'நாசமடைந்தவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 28:51 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வஸ்ஸல்னா லஹுமுல் கவ்ல' எனும் வாக்கியத்திற்கு'(நம்முடைய வேத) வாக்கை அவர்களுக்கு நிறைவாகத் தெளிவுபடுத்தினோம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 28:57 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஜ்பா' எனும் சொல்லுக்குக்'கொண்டுவரப்படுகிறது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 28:58 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உம்மிஹா' (அதன் தலைநகர்) என்பது மக்காவையும் அதன் சுற்றுவட்டாரத்தையும் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 28:69 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உம்மிஹா' (அதன் தலைநகர்) என்பது மக்காவையும் அதன் சுற்றுவட்டாரத்தையும் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 28:69 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துகின்னு' எனும் சொல்லுக்கு'(உள்ளங்கள்) மறைத்துவைக்கின்ற' என்று பொருள். (இதன் இறந்தகால வினைச்சொல்லான)'அக்னன்த்து' என்பதற்கு'மறைத்தேன்' என்று பொருள். (இதையே)'கனன்த்து' என்று சொன்னால்'மறைத்தேன்' என்றும், 'வெளிப்படுத்தினேன்' என்றும் (எதிரிடைப்) பொருள் வரும்.
(திருக்குர்ஆன் 28:82 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வை கஅன்ன' எனும் சொல், 'அலம் தர' (நீர் பார்க்கவில்லையா?) எனும் சொல்லுக்கு நிகரானதாகும். (இதே சொல்லுக்கு'என்ன நேர்ந்தது' என்றும், 'ஆச்சரியம்' என்றும் பொருள் கொள்ளப்படுவதுண்டு.)
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'யப்சுத்து' எனும் சொல்லுக்குத்'தாராளமாக வழங்குகிறான்' என்றும், 'யக்திரு' எனும் சொல்லுக்குச்'சுருக்கிவிடுகிறான்' என்றும் பொருள்.

## 28:85 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) இந்தக் குர்ஆனை உங்களுக்குச் சட்டமாக்கியவன் உங்களை நீங்கள் திரும்ப வேண்டிய இடத்திற்கு மீண்டும் கொண்டு போய்ச் சேர்க்கவிருக்கிறான் (எனும் 28:85 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4773. இக்ரிமா(ரஹ்) அறிவித்தார்
இப்னு அப்பாஸ்(ரலி), (திருக்குர்ஆன் 28:85 வது வசனத்திலுள்ள)'நீங்கள் திரும்பவேண்டிய இடம்' (மஆத்) என்பது மக்காவைக் குறிக்கிறது என்று கூறினார்கள்.

## (29) அல் அன்கபூத் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 29:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸ்தப்ஸிரீன்' எனும் சொல்லுக்கு'வழி தவறியவர்கள் (தங்களைத் தெளிவானவர்கள் எனக் கருதிக்கொண்டிருந்தார்கள்)' என்று பொருள்.
முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 29:64 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஹயவான்' எனும் சொல்லும், 'அல் ஹய்யு' எனும் சொல்லும் ('நிலையானது' என்ற) ஒரே பொருள் கொண்டவையாகும்.
(திருக்குர்ஆன் 29:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃப ல யஅமலமன்னல்லாஹு' எனும் சொல்லுக்கு'அல்லாஹ் அதை அறிந்தே உள்ளான்' என்று பொருள். இது, 'அல்லாஹ் பகுத்துக் காட்டுவான்' என்று கூறுவதற்கு ஒத்ததாகும். 'நல்லவர்களிலிருந்து கெட்டவர்களை அல்லாஹ் பகுத்துக் காட்டுவதற்காக'' எனும் (திருக்குர்ஆன் 08:37 வது) வசனத்தைப் போன்று.
(திருக்குர்ஆன் 29:13 வது வசனத்திலுள்ள)'தங்களின் சுமைகளுடன் மற்ற சுமைகளையும்' என்பதன் கருத்தாவது: தங்களின் பாவங்களுடன் மற்ற(வர்களை வழிகெடுத்த) பாவங்களையும் அவர்கள் சுமந்தே தீருவார்கள்.

## (30) அர்ரூம் அத்தியாயம்

30:39 வது வசனத்தின் கருத்தாவது:
தாம் வழங்கியதைவிடச் சிறந்தது தமக்குக் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பில் ஒருவர் வழங்கினால், அதற்கு (அல்லாஹ்விடம்) நற்பலன் கிடைப்பதில்லை.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 30:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஹ்பரூன்' எனும் சொல்லுக்குப்'புதுப் புது இன்பங்களில் ஆழ்த்தப்படுவார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 30:44 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யம்ஹதூன்' எனும் சொல்லுக்குத்'தங்களுக்காக படுக்கையை விரித்து வைக்கின்றனர்' என்று பொருள். (இச்சொல்லுக்குத்'தங்களுக்காக படுக்கையை விரித்துவைக்கின்றனர்' என்று பொருள். (இச்சொல்லுக்குத்'தயார்படுத்துகின்றனர்' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.)
(திருக்குர்ஆன் 30:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்வத்க்' எனும் சொல்லுக்கு'மழை' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
"உங்கள் வலக்கரம் உடைமையாக்கிக் கொண்டவர்(களான அடிமை)களில் எவரையும், நாம் உங்களுக்கு வழங்கியுள்ள (செல்வம் முதலான)வற்றில் பங்காளிகளாக்கி அவற்றில் அவர்களுடன் நீங்கள் சமமாக இருப்பீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 30:28 வது) இறைவசனம் பொய்த் தெய்வங்கள் தொடர்பாகக் கூறப்பட்ட உதாரணம் ஆகும். அதாவது உங்கள் உறவினர்க)ளில் ஒருவர் மற்றவருக்கு வாரிசாவது போன்று அந்த அடிமைகள் உங்களுக்கு வாரிசாம்விடுவார்களோ என நீங்கள் அஞ்சுகிறீர்கள்.
(திருக்குர்ஆன் 30:43 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஸ்ஸதத்ஊன' எனும் சொல்லுக்குப்'பிரிந்து விடுவார்கள்' என்று பொருள். (இதிலிருந்து வந்ததே ஏவல் வினையான)'ஃபஸ்தஉ' எனும் (திருக்குர்ஆன் 15:94 வது வசனத்தின் மூலத்திலுள்ள) சொல்லும்.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகின்றனர்:
(திருக்குர்ஆன் 30:54 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ளுஉஃப்' எனும் சொல்லும், 'ளஉஃப்' எனும் சொல்லும் ('பலவீனம்' என்ற) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

முஜாஹித் (ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 30:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அஸ்ஸூஆ' எனும் சொல்லுக்குத் 'தீங்கு' என்று பொருள். தீயோருக்குக் கிடைக்கும் தண்டனை தீங்காகவே இருக்கும்.

ஹதீஸ் 4774. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ (ரஹ்) அறிவித்தார்
'ம்ந்தா3 எனும் இடத்தில் ஒருவர் பேசிக்கொண்டிருக்கும்போது' மறுமை நாளில் புகை ஒன்று வந்து நயவஞ்சகர்களின் செவிப்புலன்களையும் பார்வைப் புலன்களையும் பிடித்துக்கொள்ளும். இறைநம்பிக்கையாளருக்கு ஜலதோஷம் ஏற்படுவது போன்றிருக்கும்'' என்று கூறினார். (இதைக்கேட்ட) நாங்கள் பீதியடைந்தோம். உடனே நான், இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள் சாய்ந்தபடி அமர்ந்திருந்தார்கள். (இதைக் கேட்டதும்) அவர்கள் கோபமுற்று (எழுந்து நேராக) அமர்ந்து கொண்டு (பின்வருமாறு) கூறினார்கள்: அறிந்தவர் சொல்லட்டும்! அறியாதவர், அல்லாஹ்வே நன்கறிந்தவன் என்று சொல்லட்டும்! ஏனெனில், ஒருவர் தாம் அறியாததை, எனக்குத் தெரியாது என்று சொல்வதும் அறிவின்பாற்பட்டதாகும். ஏனெனில், அல்லாஹ் தன் தூதர் (ஸல்) அவர்களுக்குச் 'சொல்லுங்கள்: நான் இதற்காக, உங்களிடம் கூலி எதுவும் கேட்கவில்லை. நான் (இல்லாததைச் சொல்லி) பாவனை செய்வோரில் ஒருவனல்லன்'' என்று (திருக்குர்ஆன் 38:86) கூறியுள்ளான். மேலும், குறைஷியர் இஸ்லாத்தை ஏற்பதில் காலம் தாழ்த்தினர். எனவே, நபி (ஸல்) அவர்கள் குறைஷியருக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள். அப்போது அவர்கள், 'இறைவா! யூசுஃப் (அலை) அவர்களின் (காலத்து) ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைக் கொடுத்து, எனக்கு உதவி செய்!" என்று வேண்டினார்கள். அவ்வாறே அவர்களைப் பஞ்சம் வாட்டியது. இறுதியில் அதில் அவர்கள் (பலரும்) அழிந்து போனார்கள். மேலும், பலர் செத்தவற்றையும் எழும்புகளையும் உண்ண வேண்டியதாயிற்று. இன்னும் (கடும் பசியினால் கண் பஞ்சடைந்து அவர்களில்) ஒருவர் வானத்திற்கும் பூமிக்குமிடையே புகை போன்ற ஒன்றையே கான்பார் இந்நிலையில் அபூ சுஃப்யான் வந்து முஹம்மதே நீர் எங்ககளிடம் உறவுகளைப் பேணுமாறு கட்டளையிட்டபடி வந்தீர் உம் சமுதாயத்தினரோ அழிந்துகொண்டிருக்கிறார்கள் எனவே நீங்கள் (இந்தப் பஞ்சத்தை நீக்கும்படி) அல்லஹ்விடம் பிரார்த்தியுங்கள் என்று கூறினார் அப்போது நபி (ஸல்)அவர்கள் (நபியே) வெளிப்படையானதொரு புகை வானத்திலுருந்து வரும் நாளை நீங்கள் எதிர்பார்த்திருங்கள் மனிதர்களை அது துன்புறுத்தும் வேதனையாகும் என்று தொடங்கி மெய்யாகவே (நீங்கள் உணர்ச்சிபெறக் கூடுமென்று) அவ்வேதனையை இன்னும் சிறிது காலத்திற்கு நீக்கிவைத்தோம் எனினும் நீங்கள் (பாவம்செய்யவே) திரும்பச் செல்கிறீர்கள் என்பது வரையிலான (திருக்குர்ஆன் 44: 10- 15) வசனங்களை ஓதிக்காட்டினார்கள். நபி (ஸல்) அவர்களின் வேண்டுதலால் அவர்களைவிட்டுப் பஞ்சம் அகன்றுவிட்டாலும் மறுமை வேதனை வந்தால் அது அவர்களைவிட்டு அகற்றப்படவா போகிறது (இல்லை . பஞ்சம் நீங்கிய) பிறகு மீண்டும் அவர்கள் இறை மறுப்புக்கே திரும்பிட்டனர். இதைத்தான் அல்லாஹ் மிக பலமாக அவர்களை நாம் பிடிக்கும் நாளில் நிச்சயமாக அவர்களிடம் பழி வாங்கியே தீருவோம் என்று (திருக்குர்ஆன் 44:16 வது வசனத்தில் பத்ருப் போரக் குறிக்கும் வகையிலும் வ லிஸாமன் (தண்டனை உங்களை பிடித்தே தீரும்) என்று (திருக்குர்ஆன் 25:77 வது வசனத்தில் அதே பத்ருப் போரைக்குறிக்கும் வகையிலும் கூறுகிறான்.
மேலும் , 'அலிஃ. லாம். மீம் . (நபியே) ரோமர்கள் அண்டை நாட்டில் (இப்போது) தோற்டிக்கப்பட்டுவிட்டார்கள். (எனினும்) அவர்கள் இத்தோல்விக்குப்பின் சில ஆண்டுக்குள்ளேயே வெற்றி அடைவார்கள்'' என்றும் அல்லாஹ் கூறுகிறான் (திருக்குர்ஆன் 30:1-3) இது முன்பே (நடந்து) முடிந்துவிட்டது.

## 30:30 வது திருக்குர்ஆன் வசனம்

"அல்லாஹ்வின் படைப்பில் எத்தகைய மாற்றமும் கிடையாது'' எனும் (திருக்குர்ஆன் 30:30 வது வசனத் தொடர்)
(இந்த 30:30 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'கல்கில்லாஹ்' ('அல்லாஹ்வின் படைப்பு') என்பதற்கு, 'அல்லாஹ்வின் நெறி' என்று கருத்து. 'ஃபித்ரத்' (இயற்கை) என்பதற்கு 'இஸ்லாம்' என்று பொருள். (இதைப் போன்றே, ஓர் ஓதலின்படி 26:137 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'கல்குல் அவ்வலீன்' என்பதற்கு 'முந்தையவர்களின் வழி' என்று பொருள்.

ஹதீஸ் 4775. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒரு விலங்கு முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப் பெற்றெடுப்பதைப்போன்றே எல்லாக் குழந்தைகளுமே இயற்கையி(ன் மார்க்கத்தி)ல் பிறக்கின்றன. விலங்குகள் நாக்கு, மூக்கு வெட்டப்பட்ட நிலையில் பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? (முழுமையான விலங்கை அங்கசேதப்படுத்துவது போல்,) பெற்றோர்கள் தாம் குழந்தைகளை (இயற்கையான மார்க்கத்தைவிட்டும் திருப்பி,) யூதர்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ, நெருப்பு வணங்கிகளாகவோ ஆக்கிவிடுகின்றனர். இதை அபூ ஹுரைரா(ரலி) அறிவித்துவிட்டுப், பிறகு, 'எந்த இயற்கை(யான நெறி)யில் அல்லாஹ் மனிதர்களைப் படைத்தானோ அதுவே நிலையான மார்க்கமாகும். அல்லாஹ்வின் படைப்பில், (அதாவது மார்க்கத்தில்) எத்தகைய மாற்றமும் கிடையாது'' எனும் (திருக்குர்ஆன் 30:30 வது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## (31) லுக்மான் அத்தியாயம்

## 31:13 வது திருக்குர்ஆன் வசனம்

"என் அன்பு மகனே! அல்லாஹ்வுக்கு இணைவைக்காதே! இணைவைப்பது மாபெரும் அநியாயமாகும்'' (என்று லுக்மான் கூறினார் எனும் 31:13 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4776. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்
"இறைநம்பிக்கை கொண்டு (பின்னர்) தம் இறைநம்பிக்கையுடன் அநீதியைக் கலந்திடாதவர்கள்..!" எனும் (திருக்குர்ஆன் 06:82 வது) இறைவசனம் அருளப்பெற்றபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களுக்கு அது கடினமாகத் தெரிந்தது. எனவே, அவர்கள், 'எங்களில் எவர்தாம் தம் இறைநம்பிக்கையுடன் அநீதியைக் கலந்துவிடாமல் (கலப்பற்ற இறைநம்பிக்கைமிக்கவராய்) இருக்கிறார்?' என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'அது அப்படியல்ல (அறிஞர்) லுக்மான் அவர்கள் தம் புதல்வரிடம் 'இணைவைப்பது மாபெரும் அநியாயமாகும்'' என்று சொல்லியிருப்பதை (குர்ஆன் வாயிலாக) நீர் கேட்கவில்லையா?' என்று கூறினார்கள்.

## 31:34 வது திருக்குர்ஆன் வசனம்

"நிச்சயமாக மறுமை(நாள் எப்போது சம்பவிக்கும் என்பது) பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது'' எனும் (திருக்குர்ஆன் 31:34 வது) வசனத்தொடர்.

ஹதீஸ் 4777. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒருநாள் மக்கள் முன்வந்திருந்தார்கள். அப்போது ஒருவர் (வாகனமேதுமின்றி) நடந்துவந்து, 'இறைத்தூதர் அவர்களே!" ஈமான் எனும் இறைநம்பிக்கை என்றால் என்ன?' என்று கேட்டார். அவர்கள், 'ஈமான் எனும் இறைநம்பிக்கை என்பது, அல்லாஹ்வையும், அவனுடைய வானவர்களையும், அவனுடைய தூதர்களையும், அவனுடைய சந்திப்பையும் நீங்கள் நம்புவதும், (மரணத்திற்குப் பின்) இறுதியாக (அனைவரும்) உயிருடன் எழுப்பப்படுவதை நம்புவதும் ஆகும்'' என்று பதிலளித்தார்கள். 'இறைத்தூதர்

அவர்களே!''‘இஸ்லாம்' (அடிபணிதல்) என்றால் என்ன?' என்று அவர் கேட்டார். நபி(ஸல்) அவர்கள், `இஸ்லாம் என்பது அல்லாஹ்வை நீங்கள் வணங்குவதும், அவனுக்கு நீங்கள் எதையும் இணைவைக்காமலிருப்பதும், தொழுகையை நிலைநிறுத்துவதும், கடமையான'ஸக்காத்' தை வழங்கிவருவதும், ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதும் ஆகும்‘` என்றார்கள். அம்மனிதர், `இறைத்தூதர் அவர்களே!'இஹ்ஸான்' (நன்மை புரிதல் என்றால் என்ன?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், `இஹ்ஸான் என்பது அல்லாஹ்வை நீங்கள் பார்த்துக்கொண்டிருப்பது போன்ற உணர்வுடன் வணங்குவதாகும். நீங்கள் அவனைப் பார்க்கவில்லை என்றாலும், அவன் உங்களைப் பார்க்கிறான் (எனும் உணர்வுடன் அவனை வணங்குவதாகும்.)‘` என்று பதிலளித்தார்கள். அம்மனிதர், `இறைத்தூதர் அவர்களே! மறுமை (நாள்) எப்போது வரும்?' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், `கேள்வி கேட்கப்படுபவர் (அதாவது நான்,) கேட்பவரைவிட (அதாவது உங்களைவிட) அதிகம் அறிந்தவர் அல்லர். ஆயினும், நான் உங்களுக்க மறுமை நாளின் அடையாளங்கள் சிலவற்றை எடுத்துக் கூறுகிறேன்:

ஒரு (அடிமைப்) பெண் தன் எஜமானியைப் பெற்றெடுப்பாளாயின் அது மறுமையின் அடையாளங்களில் ஒன்றாகும். காலில் செருப்பணியாத, நிர்வாணமானவர்கள் மக்களின் தலைவர்களாக இருந்தால் அதுவும் அதன் அடையாளங்களில் ஒன்றாகும். (மறுமை நாள் எப்போது வரவிருக்கிறது எனும் அறிவானது) அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியாத ஐந்து விஷயங்களில் அடங்கும்.'நிச்சயமாக, மறுமை (நாள் எப்போது சம்பவிக்கும் என்பது) பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது. அவனே மழையை இறக்கிவைக்கிறான். இன்னும், அவன் கர்ப்பங்களில் உள்ளவற்றையும் (தீர்க்கமாக) அறிகிறான். தாம் நாளை என்ன சம்பாதிப்போம் என்பதை (அவனைத் தவிர வேறு) யாரும் (உறுதியாக) அறிவதில்லை. எந்த இடத்தில் தாம் இறக்கப்போகிறோம் என்பதையும் எவரும் அறிவதில்லை. அல்லாஹ்தான் (இவற்றையெல்லாம்) நன்கறிந்தவன் நுணுக்கமானவன்‘` (எனும் 31:34 வது வசனத்தை நபியவர்கள் ஓதினார்கள்.) பிறகு அந்த மனிதர் திரும்பிச் சென்றார். நபி(ஸல்) அவர்கள்'அந்த மனிதரைத் திரும்ப என்னிடம் அழைத்து வாருங்கள்!''என்று கூறினார்கள். மக்கள் அம்மனிதரைத் திரும்ப அழைத்து வரச் சென்றார்கள். எங்கேயும் காணவில்லை. பின்னர், நபி(ஸல்) அவர்கள்'இ(ப்போது வந்து போன)வர், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் தாம். மக்களுக்கு அவர்களின் மார்க்கத்தைக் கற்றுத்தருவதற்காக அவர் வந்திருந்தார்‘` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4778. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், `மறைவானவற்றின் திறவுகோல் ஐந்தாகும்‘` என்று கூறிவிட்டு, பிறகு'நிச்சயமாக, மறுமை (நாள் எப்போது வருமென்பது) பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது‘` என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 31:34 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

## (32) அஸ்ஸஜ்தா அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 32:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஹீன்' எனும் சொல்லுக்கு'பலவீனமானது' என்ற பொருள். இது ஆணுடைய விந்தைக் குறிக்கிறது.

(திருக்குர்ஆன் 32:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ளல்னா' எனும் சொல்லுக்கு'நாங்கள் அழிந்து போனோம்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 32:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஜுருஸ்' எனும் சொல் பயனேதுமில்லாத வகையில் மிகக்குறைவாகவே மழை பெய்யும் (வறண்ட களர்) நிலத்தைக் குறிக்கிறது.

(திருக்குர்ஆன் 32:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'யஹ்தி' எனும் சொல் மற்றோர் ஓதலில் 'நஹ்தி' என்று ஓதப்பட்டுள்ளது. அந்த) 'நஹ்தி' எனும் சொல்லுக்கு 'நாம் தெளிவுபடுத்தினோம்' என்று பொருள்.

## 32:17 வது திருக்குர்ஆன் வசனம்

“அவர்கள் செய்துகொண்டிருந்த (நற்செயல்களின் பலனாகக் கண்களைக் குளிரச் செய்யும் எத்தகைய இன்பங்கள் அவர்களுக்காக மறைந்து வைக்கப்பட்டுள்ளன என்பதை யாரும் அறியமாட்டார்கள்' ' எனும் (திருக்குர்ஆன் 32:17 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4779. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அருள் வளமும் உயர்வும் உடைய அல்லாஹ், 'என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் மனத்திலும் தோன்றியிராத இன்பங்களை நான் சொர்க்கத்தில் தயார்படுத்தி வைத்திருக்கிறேன்' ' என்று கூறுகிறான்.

இதை அறிவித்த அபூ ஹுரைரா(ரலி), 'நீங்கள் விரும்பினால், 'அவர்கள் செய்துகொண்டிருந்த (நற்)செயல்களின் பலனாகக் கண்களைக் குளிரச் செய்யும் எத்தகைய இன்பங்கள் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ளன என்பதை யாரும் அறியமாட்டார்கள்' ' எனும் (திருக்குர்ஆன் 32:17 வது) இறைவசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்.“

மற்றோர் அறிவிப்பிலும் இவ்வாறே காணப்படுகிறது. அதில் (கூடுதலாக:) அறிவிப்பாளர் சுஃப்யான்(ரஹ்) அவர்களிடம் 'இது நபிமொழியா? (அல்லது உங்களின் கருத்தா?)' ' என வினவப்பட, அன்னார் '(இது நபிமொழி இல்லாமல்) வேறென்ன?' என்று (திருப்பிக்) கேட்டார்கள் எனக் கூறப்பட்டுள்ளது.

இன்னுமோர் அறிவிப்பில், அபூ ஹுரைரா(ரலி) (திருக்குர்ஆன் 32:17 வது வசனத்தின் மூலத்தில் உள்ள 'குர்ரத்' (குளிர்ச்சி) எனும் ஒருமையான சொல்லை) 'குர்ராத்' என(ப் பன்மையாக) வாசித்தார்கள் என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 4780. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், 'மேன்மைமிக்க அல்லாஹ், 'என் நல்லடியார்களின் சேமிப்பாக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் மனத்திலும் தோன்றியிராத இன்பங்களை நான் சொர்க்கத்தில் தயார்படுத்தி வைத்துள்ளேன். (சொர்க்கத்தின் இன்பங்கள் குறித்து) உங்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளவை, (அங்கே கிடைக்கவிருக்கும் இன்பங்களுக்கு முன்னே) சொற்பமானவையே ஆகும்' எனக் கூறுகிறான்' ' என்று சொல்லிவிட்டு, பிறகு, 'அவர்கள் செய்துகொண்டிருந்த (நற்) செயல்களின் பலனாகக் கண்களைக் குளிரச் செய்யும் எத்தகைய இன்பங்கள் அவர்களுக்காக மறைத்து வைக்கப்பட்டுள்ளன என்பதை யாரும் அறியமாட்டார்கள்' ' எனும் (திருக்குர்ஆன் 32:17 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

## (33) 'அல் அஹ்ஸாப்' அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 33:26 வது வசனத்திலுள்ள) 'அவர்களின் கோட்டைகள்' எனும் பொருள், மூலத்திலுள்ள 'ஸயாஸீஹிம்' எனும் சொல்லுக்குரியதாகும்.

## 33:06 வது திருக்குர்ஆன் வசனம்

திண்ணமாக, நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உயிரை விட நபிதான் முன்னுரிமை பெற்றவராவார். (எனும் 33:6 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4781. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எந்த ஓர் இறைநம்பிக்கையாளருக்கும், இந்த உலகிலும் மறுமையிலும் நானே மக்களில் மிக நெருக்கமானவன் ஆவேன். நீங்கள் விரும்பினால், 'திண்ணமாக, நம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உயிரை விட நபிதான் முன்னுரிமை பெற்றவராவார்' ' எனும் (திருக்குர்ஆன் 33:6

வது) இறைவசனத்தை ஓதிக்கொள்ளுங்கள். ஒரு நம்பிக்கையாளர் (அவர் எவராயினும் சரி, இறந்துபோய்) செல்வத்தைவிட்டுச்சென்றால் அவரின் தந்தை வழி உறவினர்கள்'அவர்கள் எவ்வகையினராயினும் சரி - அதற்கு அவர்கள் வாரிசாகட்டும்! (இறக்கும் போது) ஒரு கடனை (அடைக்காமல்)விட்டுச் செல்கிறவர்கள், அல்லது (தம்மைத் தவிர வேறு திக்கற்ற) மனைவி மக்களைவிட்டுச் செல்கிறவர்கள் என்னிடம் வரட்டும். நானே அவர்களுக்குரிய காப்பாளன் (பொறுப்பேற்றுப் பராமரிப்பவன்) ஆவேன்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 33:05 வது திருக்குர்ஆன் வசனம்

வளர்ப்புப் புதல்வர்களை அவர்களின் சொந்தத் தந்தையுடன் சேர்த்தே அழையுங்கள். இதுவே அல்லாஹ்விடம் நீதியாகும் (எனும் 33:5 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4782. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
"வளர்ப்புப் புதல்வர்களை அவர்களின் சொந்தத் தந்தையுடன் சேர்த்தே அழையுங்கள். இதுவே, அல்லாஹ்விடம் நீதியாகும்'' எனும் (திருக்குர்ஆன் 33:5 வது) குர்ஆன் வசனம் அருளப்படும்வரை, நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட (அவர்களின் வளர்ப்பு மகன்) ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களை'ஸைத் இப்னு முஹம்மத்' (முஹம்மதின் புதல்வர் ஸைத்) என்றே அழைத்து வந்தோம்.

## 33:23 வது திருக்குர்ஆன் வசனம்

அவர்களில் சிலர் (தாம் வீரமரணம் அடையவேண்டும் என்ற) தம் நோக்கத்தை அடைந்துவிட்டார்கள். இன்னும் அவர்களில் சிலர் (தமக்குரிய வாய்ப்பை) எதிர்பார்த்துக் காத்திருக்கின்றனர். தம் வாக்குறுதியை ஒருபோதும் அவர்கள் மாற்றிக்கொள்ளவில்லை'' (எனும் 33:23 வது வசனத் தொடர்).
(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'நஹ்பஹு' எனும் சொல்லுக்குத்'தம் வாக்குறுதி' என்று பொருள். (இதற்கு இலட்சியம், நோக்கம், நேர்ச்சை ஆகிய பொருள்களும் உண்டு.)
(திருக்குர்ஆன் 33:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்தாரிஹா' எனும் சொல்லுக்கு'அதன் பல பாகங்கள்' என்று பொருள்.'அல்ஃபித்னத்த லஆத்தவ்ஹா' எனும் சொற்றொடருக்கு'குழப்பத்தைத் தந்திருப்பார்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4783. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்
"இறைநம்பிக்கையாளர்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்விடம் தாம் அளித்த வாக்குறுதியில் உண்மையாக நடந்துகொண்டார்கள்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 33:23 வது) வசனம், அனஸ் இப்னு நள்ர்(ரலி) விஷயத்தில் அருளப்பெற்றதென்றே நாங்கள் கருதுகிறோம்.

ஹதீஸ் 4784. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்
நாங்கள் (உஸ்மான்(ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில்,) குர்ஆனுக்குப் பிரதிகள் எடுத்தபோது'அல்அஹ்ஸாப்' எனும் (33 வது) அத்தியாயத்தின் ஒரு வசனத்தை நான் காணவில்லை. அதை நான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓதக் கேட்டிருந்தேன். குஸைமா அல்அன்சாரி(ரலி) அவர்களிடம் தவிர வேறு யாரிடமும் அது எனக்குக் கிடைக்கவில்லை. இந்த குஸைமாவின் சாட்சியத்தைத் தான் (ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரண்டு பேரின் சாட்சியத்திற்குச் சமமானதாக ஆக்கினார்கள். (அந்த வசனம் இதுதான்:)'இறைநம்பிக்கையாளர்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்விடம் தாம் அளித்த வாக்குறுதியில் உண்மையாக நடந்துகொண்டார்கள்!"(திருக்குர்ஆன் 33:23)6

## 33:28 வது திருக்குர்ஆன் வசனம்

நபியே! உங்களுடைய துணைவியரிடம் கூறுங்கள்: நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும், அதன் அலங்காரத்தையும் (மட்டுமே) விரும்புவீர்களாயின், வாருங்கள்! உங்களுக்கு வாழ்க்கைக்கு உரியதைக் கொடுத்து நல்ல முறையில் உங்களை விடுவித்துவிடுகிறேன் (எனும் 33:28வது இறைவசனம்).

மஅமர் இப்னு அல் முஸன்னா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 33:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தபர்ருஜ்' எனும் சொல், ஒரு பெண் தன் அழகை (அந்நிய ஆடவர்களுக்கு) வெளிக்காட்டுவதைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 33:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சுன்னத்தல்லாஹ்' எனும் சொல்லுக்கு'அல்லாஹ்வின் வழிமுறை (மரபு') என்று பொருள். (இதன் வினைச்சொல்லான)'இஸ்தன்ன' என்பதற்கு'வழிமுறையாக்கினான்' என்று பொருள்.

ஹதீஸ் 4785. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் துணைவியருக்கு (அவர்கள் விரும்பினால் தம்முடன் சேர்ந்து வாழலாம் அல்லது பிரிந்துவிடலாம் என) உரிமை அளித்திடுமாறு தன் தூதருக்கு அல்லாஹ் கட்டளையிட்டபோது, நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். என்னிடம் தான் முதன் முதலாக விஷயத்தைக் கூறினார்கள்:'(ஆயிஷாவே)! நான் உனக்கு ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். (என்று அதைச் சொல்லிவிட்டு,) நீ உன் பெற்றோரிடம் அனுமதி கேட்டுக்கொள்ளும் வரை அவசரப்பட வேண்டாம்'' என்று கூறினார்கள். என்னுடைய பெற்றோர் நபி(ஸல்) அவர்களைப் பிரிந்துவிடும்படி எனக்கு உத்தரவிடப்போவதில்லை என்று நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிந்திருந்தது. பிறகு அவர்கள், `நபியே! உங்களுடைய துணைவியரிடம் கூறுங்கள்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 33:28, 29) இரண்டு வசனங்களை முழுமையாகக் கூறினார்கள். அப்போது நான், `இது தொடர்பாக என் பெற்றோரிடம் நான் என்ன அனுமதி கேட்பது? நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுமை வீட்டையுமே விரும்புகிறேன்'' என்று நபியவர்களிடம் சொன்னே.

## 33:29 வது திருக்குர்ஆன் வசனம்

"ஆனால், நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும், மறுஉலகையும் விரும்புவீர்களானால், நிச்சயமாக அல்லாஹ் உங்களிலுள்ள (இத்தகைய) நல்லவர்களுக்காக மகத்தான நற்பலனைத் தயார் செய்து வைத்துள்ளான்'' எனும் (திருக்குர்ஆன் 33:29 வது) இறைவசனம்.

கத்தாதா(ரஹ்) கூறினார்:

"உங்கள் வீடுகளில் ஓதப்படுகிற இறைவசனங்களையும், ஞான (வாக்கிய)ங்களையும் நினைவில் வையுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 33:34 வது வசனத்திலுள்ள)'இறைவசனங்கள்' என்பது குர்ஆனையும், `ஞானங்கள்' என்பது நபிவழியையும் குறிக்கிறது.

ஹதீஸ் 4786. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் துணைவியருக்கு (அவர்கள் விரும்பினால் தம்முடன் சேர்ந்து வாழலாம் அல்லது பிரிந்துவிடலாம் என) உரிமையளித்திடுமாறு அல்லாஹ்வின் தூதருக்குக் கட்டளையிட்டப்பட்டபோது, அவர்கள் என்னிடம்தான் முதன்முதலாக விஷயத்தைக் கூறினார்கள்:'(ஆயிஷா!) நான் உனக்கு ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். (என்று அதைச் சொல்லிவிட்டு,)'நீ உன் பெற்றோரிடம் அனுமதி கேட்டுக்கொள்ளும் வரை அவசரப்படவேண்டாம்'' என்று கூறினார்கள். என் பெற்றோர் நபி(ஸல்) அவர்களைப் பிரிந்துவிடும்படி உத்தரவிடப்போவதில்லை என்று அவர்களுக்குத் தெரிந்திருந்தது. பிறகு அவர்கள், `நபியே! உங்கள் துணைவியரிடம் கூறுங்கள்: நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும், அதன் அலங்காரத்தையும் (மட்டுமே) விரும்புவீர்களாயின், வாருங்கள்! உங்களின் வாழ்க்கைக்க

உரியதைக் கொடுத்து நல்லமுறையில் உங்களை விடுவித்து விடுகிறேன். ஆனால், நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுஉலகையும் விரும்புவீர்களானால், நிச்சயமாக அல்லாஹ் உங்களிலுள்ள (இத்தகைய) நல்லவர்களுக்காக மகத்தான நற்பலனை தயார் செய்து வைத்துள்ளான்'' எனும் (திருக்குர்ஆன் 33:28, 29 வசனங்களை ஓதினார்கள். அப்போது நான், 'இது தொடர்பாக என் பெற்றோரிடம் நான் என்ன அனுமதி கேட்பது? நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுமை வீட்டையுமே விரும்புகிறேன்'' என்று சொன்னேன். பிறகு நபி(ஸல்) அவர்களின் இதரத் துணைவியரும் என்னைப் போன்றே செயல்பட்டனர்.

இந்த ஹதீஸ் இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## 33:37 வது திருக்குர்ஆன் வசனம்

“(நபியே!) நீங்கள் (அந்நேரத்தில்) அல்லாஹ் வெளிப்படுத்த நாடியிருந்த விஷயத்தை உங்களின் உள்ளத்தில் மறைத்து வைத்துக் கொண்டிருந்தீர்கள். மேலும், நீங்கள் மனிதர்களுக்கு அஞ்சிக்கொண்டிருந்தீர்கள். ஆனால், அல்லாஹ்தான் நீங்கள் அஞ்சுவதற்கு அதிகத் தகுதியுடையவன்'' எனும் (திருக்குர்ஆன் 33:37 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4787. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

'(நபியே!) நீங்கள் (அந்நேரத்தில்) அல்லாஹ் வெளிப்படுத்தி நாடியிருந்த விஷயத்தை உங்களின் உள்ளத்தில் மறைத்து வைத்துக்கொண்டிருந்தீர்கள்!”எனும் இந்த (திருக்குர்ஆன் 33:27 வது) வசனம் (நபி(ஸல்) அவர்களின் அத்தை மகளான) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) மற்றும் நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனான) ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களின் விஷயத்தில் அருளப்பெற்றது.

“(நபியே!) உங்கள் துணைவியரான) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) ஒதுக்கி வைக்கலாம். நீங்கள் விரும்பியவர்களை (விரும்புக் காலம்வரை,) உங்களுடன் இருக்க வைக்கலாம். நீங்கள் ஒதுக்கி வைத்தவர்களில் யாரை விரும்புகிறீர்களோ அவர்களை (மறுபடியும்) உங்களுடன் சேர்த்துக் கொள்ளலாம். இதனால் உங்களின் மீது குற்றம் ஏதுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 33:51 வது) வசனத் தொடர்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள)'துர்ஜீ' எனும் சொல்லுக்கு'ஒதுக்கி வைக்கலாம்' என்று பொருள். (இதன் ஏவல் வினைச்சொல்லும், 7:111 மற்றும் 26:36ஆகிய வசனங்களின் மூலத்திலுள்ளதுமான)'அர்ஜிஹி' எனும் சொல்லுக்கு'அவரைவிட்டுப்பிடி' என்று பொருள்.

ஹதீஸ் 4788. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தங்களையே கொடையாக வழங்க முன்வந்த பெண்களைப் பற்றி நான் ரோஷம் கொண்டிருந்தேன். மேலும் நான், 'ஒரு பெண் தம்மைத் தாமே (ஓர் ஆணுக்கு) கொடையாக வழங்கவும் செய்வாளா?' எனும் சொல்லிக் கொண்டேன். '(நபியே! உங்கள் துணைவியரான) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) ஒதுக்கி வைக்கலாம். நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை,) உங்களுடன் இருக்கவைக்கலாம். நீங்கள் ஒதுக்கி வைத்தவர்களில் யாரை விரும்புகிறீர்களோ அவர்களை (மறுபடியும்) உங்களுடன் சேர்த்துக் கொள்ளலாம். இதனால் உங்களின் மீது குற்றம் ஏதுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 33:51 வது) இறைவசனத்தை அல்லாஹ் அருளியபோது, நான்'உங்களுடைய இறைவன் உங்கள் விருப்பத்தை விரைவாக பூர்த்தி செய்வதையே நான் பார்க்கிறேன்'' என்று (நபியவர்களிடம்) சொன்னேன்.

ஹதீஸ் 4789. முஆதா பின்த் அப்தில்லாஹ் அல்அதவிய்யா(ரஹ்) அறிவித்தார்

“(நபியே! உங்கள் துணைவியரான) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) ஒதுக்கி வைக்கலாம். நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம்வரை) உங்களுடன் இருக்க வைக்கலாம். நீங்கள் ஒதுக்கி வைத்தவர்களில் யாரை விரும்புகிறீர்களோ அவர்களை (மறுபடியும்) உங்களுடன் சேர்த்துக்கொள்ளலாம். இதனால் உங்களின் மீது குற்றம் ஏதுமில்லை‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 33:51 வது) இறைவசனம் அருளப்பட்ட பிறகும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களில் ஒரு மனைவியின் நாளில் மற்றொரு மனையிடம் செல்ல விரும்பினால், அந்நாளை விட்டுக்கொடுக்கும்படி அனுமதி கேட்பார்கள்‘ ‘ என்று ஆயிஷா(ரலி) கூறினார். நான், ‘அதற்கு நீங்கள் என்ன சொல்வீர்கள்?’ என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ‘நான் நபி(ஸல்) அவர்களிடம், ‘இறைத்தூதர் அவர்களே! (வேறொரு மனைவிக்காக என்னுடைய நாளை விட்டுக்கொடுக்கும்படி,) நீங்கள் என்னிடம் அனுமதி கேட்பதாயிருந்தால், நான் யாருக்காக வேண்டியும் தங்களைவிட்டுக் கொடுக்க விரும்பமாட்டேன்’ என்று சொல்வேன்‘ ‘ என்றார்கள்.

இதே ஹதீஸ் வேறுவழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## 33:53 வது திருக்குர்ஆன் வசனம்

“இறைநம்பிக்கையாளர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள். அவ்வாறு (நபியின் இல்லத்தில் நடக்கும்) விருந்துக்காக உங்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டாலும், அப்போதும் கூட உணவு தயாராவதை எதிர்பார்த்து (அங்கே காத்து) இராதீர்கள். மாறாக, (உணவு தயார் வாருங்கள் என) நீங்கள் அழைக்கப்படும்போது நுழையுங்கள். சாப்பிட்டு முடிந்ததும் கலைந்து சென்றுவிடுங்கள். பேசிக்கொண்டிருப்பதில் ஆர்வமாய் இருந்துவிடாதீர்கள். நிச்சயமாக, உங்களின் இச்செயல் நபிக்கு வேதனை அளிக்கிறது. இதனை உங்களிடம் கூற அவர் வெட்கப்படுகிறார். ஆனால், அல்லாஹ்வோ சத்தியத்தைக் கூற வெட்கப்படுவதில்லை. நபியின் துணைவியரிடம் நீங்கள் ஏதேனும் ஒருபொருளை (அவசியப்பட்டு) கேட்க வேண்டுமென்றால், திரைக்குப் பின்னாலிருந்து கேளுங்கள். உங்களுடையவும், அவர்களின்வும் உள்ளங்களின் தூய்மைக்கு இதுவே ஏற்ற முறையாகும். அல்லாஹ்வின் தூதருக்கு தொல்லை தருவது உங்களுக்குத் தகாது. அவருக்குப் பின்னர் அவரின் துணைவியரை நீங்கள் மணந்து கொள்வதும் ஒருபோதும் கூடாது. அவ்வாறு செய்வது அல்லாஹ்விடம் திண்ணமாக, பெரும் பாவமாகும்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 33:53 வது) இறைவசனம்.

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)’இனாஹு‘ எனும் சொல்லுக்குத்’தயாராதல்’ என்று பொருள். அனா, யஃனீ, அனாத்தன் (என இதன் வாய்பாடு அமையும்.)

## 33:63 வது திருக்குர்ஆன் வசனம்

“உங்களுக்குத் தெரியுமா? அது (மறுமை நாள்), சமீபமாகவும் இருக்கக் கூடும்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 33:63 வது) வசனத்தொடர்.

(இவ்வசனத்தில்’சமீபமாக’ என்பதைக் குறிக்க மூலத்தில் ஆளப்பட்டுள்ள)’கரீப்’ எனும் சொல் அடைமொழியாக இருப்பின் (அடைமொழிக்குரிய’சாஅத்’ எனும் பெண்பால் வார்த்தைக்கேற்ப)’கரீபத்’ என்றே வரவேண்டும். அதை இடப்பெயர், அல்லது காலப்பெயராகக் கருதுகையில்’கரீப் என (ஆண்பாலாகவே) வரும். இந்நிலையில் ஆண்பால், பெண்பால், ஒருமை, இருமை, பன்மை அனைத்திலும் ஒரே மாதிரியாகவே சொல் அமையும்.

ஹதீஸ் 4790. உமர்(ரலி) அறிவித்தார்

நான், ‘இறைத்தூதர் அவர்களே! தங்களிடம் நல்லவரும் கெட்டவரும் வருகின்றனர். எனவே, தாங்கள் (தங்களின் துணைவியரான) இறை நம்பிக்கையாளர்களின் அன்னையரை பர்தா

அணியும்படி கட்டளையிட்டால் நன்றாயிருக்குமே!"என்று சொன்னேன். அப்போது அல்லாஹ் பர்தா (சட்டம்) தொடர்பான வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 4791. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை மணமுடித்துக்கொண்டபோது மக்களை அவர்கள் (வலீமா விருந்துக்கு) அழைத்தார்கள். 15 மக்கள் (விருந்து) உண்டுவிட்டு, பிறகு பேசிக்கொண்டே அமர்ந்துவிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் எழுந்து போகத் தயாராயிருப்பது போல் (பலமுறை) காட்டினார்கள். ஆனால், மக்கள் எழுந்திருக்கவில்லை. அதைக் கண்டபோது நபி(ஸல்) அவர்கள் (ஒரேயடியாக) எழுந்துவிட்டார்கள். அவர்கள் எழுந்துவிடவே (அவர்களுடன்) மற்றவர்களும் எழுந்துவிட்டார்கள். ஆனால், மூன்று பேர் மட்டும் அமர்ந்து (பேசிக்) கொண்டேயிருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் (ஸைனப்(ரலி) அவர்களிடம்) செல்லப் போனார்கள். அப்போதும் அவர்கள் அமர்ந்து (கொண்டு பேசிக்) கொண்டேயிருந்தார்கள். பிறகு அவர்கள் (மூவரும்) எழுந்து சென்றார்கள். நான் உடனே, உள்ளே சென்று நபி(ஸல்) அவர்களிடம், அவர்கள் எழுந்து சென்றார்கள் என்று தெரிவித்தேன். மீண்டும் (வெளியே) வந்து பார்த்துவிட்டு நபி(ஸல்) அவர்கள் உள்ளே சென்றார்கள். நானும், அவர்களுடன் உள்ளே செல்லப்போனேன். அதற்குள் நபி(ஸல்) அவர்கள் எனக்கும் தமக்குமிடையே திரையைப் போட்டுவிட்டார்கள். அப்போதுதான் அல்லாஹ்'இறைநம்பிக்கையாளர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள்'' என்று தொடங்கும் இந்த (திருக்குர்ஆன் 35:53 வது) வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 4792. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

பர்தா (சட்டம்) தொடர்பான இந்த இறைவசனத்தை மக்களிலேயே அதிகமாக அறிந்தவன் நான்தான். (நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் மணப்பெண்ணாக அனுப்பி வைக்கப்பட்டு அவர்களுடன் வீட்டில் இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் ('வலீமா'விருந்துக்கான) உணவைத் தயாரித்து மக்களை அழைத்தார்கள். மக்கள் (சாப்பிட்டுவிட்டு) பேசிக்கொண்டே அமர்ந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் வெளியே வரவும் திரும்பச் செல்லவுமாக இருந்தார்கள். மக்களோ பேசிக் கொண்டே அமர்ந்திருந்தனர். அப்போதுதான் அல்லாஹ்'' இறைநம்பிக்கையாளர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள். அவ்வாறு (நபியின் இல்லத்தில் நடக்கும்) விருந்துக்காக உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டாலும், அப்போதும் கூட உணவு தயாராவதை எதிர்பார்த்து (அங்கே காத்து) இராதீர்கள். மாறாக, (உணவு தயார் வாருங்கள் என) நீங்கள் அழைக்கப்படும்போது நுழையுங்கள். சாப்பிட்டு முடிந்ததும் கலைந்து சென்றுவிடுங்கள். பேசிக்கொண்டிருப்பதில் ஆர்வமாய் இருந்துவிடாதீர்கள். நிச்சயமாக உங்களின் இச்செயல் நபிக்கு வேதனை அளிக்கிறது. ஆயினும், இதனை உங்களிடம் கூற அவர் வெட்கப்படுகிறார். ஆனால், அல்லாஹ்வோ சத்தியத்தைக் கூற வெட்கப்படுவதில்லை. நபியின் துணைவியரிடம் நீங்கள் ஏதேனும் ஒரு பொருளை (அவசியப்பட்டு) கேட்கவேண்டுமென்றால், திரைக்குப் பின்னாலிருந்து கேளுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 33:53 வது) வசனத்தை அருளினான். இதையடுத்துத் திரை போடப்பட்டது. மக்களும் எழுந்துவிட்டார்கள்.

ஹதீஸ் 4793. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ரொட்டியும் இறைச்சியும் விருந்தாக அளித்து, ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். (வலீமா விருந்து) உணவுக்காக, மக்களை அழைப்பதற்கு நான் அனுப்பப்பட்டேன். ஒரு கூட்டத்தார் வருவார்கள். அவர்கள் உண்பார்கள். புறப்பட்டுவிடுவார்கள். பிறகு, மற்றொரு கூட்டத்தார் வருவார்கள். உண்பார்கள். போய்விடுவார்கள். இனி அழைப்பதற்கு ஒருவரும் இல்லை என்பது வரை நான் மக்களை

அழைத்தேன். பிறகு, `இறைத்தூதர் அவர்களே! நான் அழைப்பதற்கு இனி ஒருவரும் இல்லை‘` என்றேன். அவர்கள், `உங்கள் உணவை எடுத்துச் செல்லுங்கள்! என்றார்கள். (விருந்து முடிந்தும்) மூன்று பேர் மட்டும் வீட்டில் பேசிக்கொண்டே இருந்துவிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு ஆயிஷா(ரலி) அவர்களின் அறைக்குச் சென்று'வீட்டாரே! அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்கிதுல்லாஹ் (உங்களின் மீது அல்லாஹ்வின் சாந்தியும் கருணையும் உண்டாகட்டும்!)‘` என்று கூறினார்கள். ஆயிஷா(ரலி), `வ அலைக்குமுஸ்ஸலாம், வரஹ்மத்துல்லாஹ் (தங்களின் மீதும் அல்லாஹ்வின் சாந்தியும் கருணையும் உண்டாகட்டும்!) தங்களின் (புதிய) துணைவியாரை எப்படிக் கண்டீர்கள்? பாரக்கல்லாஹ் (அல்லாஹ் தங்களுக்கு சுபிட்சம் வழங்கட்டும்!)‘` என்று (மணவாழ்த்துச்) கூறினார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியர் அனைவரின் அறைகளையும் தேடிச்சென்று ஆயிஷா(ரலி) அவர்களுக்குச் சொன்னது போன்றே, (முகமன்) சொல்ல, அவர்களும் ஆயிஷா(ரலி) அவர்களுக்குச் சொன்னது போன்றே, (முகமன்) சொல்ல, அவர்களும் ஆயிஷா(ரலி) கூறியது போன்றே (பிரதி முகமனும், மணவாழ்த்தும்) கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் (புதுமணப் பெண் ஸைனப்(ரலி) அவர்களிடம்) திரும்பி வர, அப்போதும் வீட்டில் அந்த மூன்று பேரும் பேசிக்கொண்டிருந்தனர். நபி(ஸல்) அவர்களோ அதிக வெட்க(சுபாவ)ம் உடையவர்களாய் இருந்தார்கள். எனவே, (அவர்களைச் சீக்கிரம் போகச் சொல்லாமல்,) ஆயிஷா(ரலி) அவர்களின் அறையை நோக்கி நடந்தபடி (மீண்டும்) புறப்பட்டார்கள். அந்த மூவரும் வெளியேறிவிட்டார்கள் என்று'நான் அவர்களுக்குத் தெரிவித்தேனா?' அல்லது, `(மற்றவர் மூலம்) தெரிவிக்கப்பட்டதா?' என்று எனக்குத் தெரியவில்லை. (இதைக் கேட்ட உடன்) நபி(ஸல்) அவர்கள் (ஸைனபின் அறைக்கு) திரும்பி வந்தார்கள். அவர்கள் ஒருகாலை வாசல்படியிலும் மற்றொன்றை வெளியேயும் வைத்தபோது, எனக்கும் தமக்குமிடையே திரையைத் தொங்கவிட்டார்கள். (அப்போதுதான்) பர்தா (சட்டம்) தொடர்பான இறைவசனம் அருளப்பெற்றது.

ஹதீஸ் 4794. அனஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கியபோது'வலீமா' (மணவிருந்து) கொடுத்தார்கள். மக்களுக்கு ரொட்டியும், இறைச்சியும் வயிறு நிரம்ப உண்ணக் கொடுத்தார்கள். பிறகு, துணைவியாருடன் தாம்பத்தியத்தைத் தொடங்கும் நாளின் காலையில் வழக்கமாகத் தாம் செய்து வந்ததைப் போன்று (தம் துணைவியரான) இறைநம்பிக்கையாளர்களுடைய அன்னையரின் அறைகளுக்கு (அன்றும்) சென்றார்கள். அவர்களுக்கு சலாம் (முகமன்) சொல்லி, அவர்களுக்காகப் பிரார்த்தனை புரிந்தார்கள். துணைவியரும் நபி(ஸல்) அவர்களுக்கு சலாம் (பிரதி முகமன்) சொல்லி, அவர்களுக்காகப் பிரார்த்தனை புரிந்தார்கள். (ஸைனப்(ரலி) அவர்களிருந்த, (தம் இல்லத்திற்குத் திரும்பி வந்தபோது, இரண்டு பேர் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அவ்விருவரைக் கண்டதும் அவர்கள் வீட்டிலிருந்து திரும்பிச் சென்றார்கள். அவ்விருவரும் அல்லாஹ்வின் நபி(ஸல்) அவர்கள் தம் வீட்டிலிருந்து திரும்பிச் சென்றதைப் பார்த்தபோது, வேகமாக (வெளியே) சென்றார்கள். அவ்விருவரும் வெளியே சென்றுவிட்டதாக'நானே நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிவித்தேனா் அல்லது'அவர்களுக்கு (இச் செய்தி வேறு யார் மூலமும்) தெரிவிக்கப்பட்டதா?' என்று எனக்குத் தெரியவில்லை. (இதையறிந்த) உடனே, நபி(ஸல்) அவர்கள் வீட்டினுள் சென்று, (அவர்களைத் தொடர்ந்து வீட்டிற்குள் செல்ல முயன்ற) எனக்கம் தமக்குமிடையே திரையைத் தொங்கவிட்டார்கள். அப்போதுதான் பர்தா தொடர்பான இறைவசனம் அருளப்பெற்றது.

இந்த ஹதீஸ் அனஸ்(ரலி) அவர்களிடமிருந்தே வேறொரு அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4795. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

பர்தா அணிவது சட்டமாக்கப்பட்ட பின்னால், தம் தேவைக்காக வேண்டி (நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான) சவ்தா பின்த் ஸம்ஆ (ரலி) வெளியே சென்றார்கள். அவர்கள், (உயரமான) கனத்த சரீரமுடைய பெண்மணியாக இருந்தார்கள். அவர்களை அறிந்தவர்களுக்கு அவர்கள் யார் என்று (அடையாளம்) தெரியாமலிருக்காது. அவர்களை அப்போது, உமர் இப்னு கத்தாப் (ரலி) பார்த்துவிட்டு 'சவ்தாவே, அல்லாஹ்வின் மீதாணையாக, நீங்கள் யார் என்று எங்களுக்குத் தெரியாமலில்லை. நீங்கள் (யார் என்று அடையாளம் தெரிகிற வகையில்) எப்படி வெளியே வந்திருக்கிறீர்கள் பாருங்கள்!"என்று கூறினார்கள். சவ்தா (ரலி) உடனே அங்கிருந்து திரும்பிவிட்டார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என் வீட்டில் இரவு உணவு அருந்திக்கொண்டிருந்தார்கள். அவர்களின் கரத்தில் எலும்புத் துண்டு ஒன்று இருந்தது. அப்போது சவ்தா (ரலி) வீட்டினுள் வந்து, `இறைத்தூதர் அவர்களே! நான் என் தேவை ஒன்றிற்காக வெளியே சென்றேன். உமர் (ரலி) என்னிடம் இவ்வாறெல்லாம் கூறினார்கள்‘' என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், நபி (ஸல்) அவர்களுக்கு 'வஹீ' (வேத வெளிப்பாடு) அறிவித்தான். பிறகு அந்நிலை அவர்களைவிட்டு நீக்கப்பட்டது. எலும்புத் துண்டு அவர்களின் கரத்தில் அப்படியே இருந்தது. அதை அவர்கள் (கீழே) வைத்துவிடவில்லை. அப்போது நபி (ஸல்) அவர்கள் 'நீங்கள் உங்கள் தேவைக்காக வெளியே செல்லலாம் என்று உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது‘' என்று கூறினார்கள்.

## 39:54,55 வது திருக்குர்ஆன் வசனங்கள்

“நீங்கள் எதையேனும் வெளிப்படுத்தினாலும், அல்லது அதனை மறைத்தாலும் நிச்சயமாக அல்லாஹ் ஒவ்வொன்றையும் நன்கறிந்தவனாக இருக்கிறான். (நபியின் துணைவியரான) அவர்களின் மீது தம் தந்தையர், தம் புதல்வர்கள், தம் சகோதரர்கள், தம் சகோதரிகளின் புதல்வர்கள், தம் (மார்க்கத் தோழியரான) பெண்கள் மற்றும் தம் வலக்கரம் உடைமையாக்கிக் கொண்டவர்கள் (ஆன அடிமைகள்) ஆகியோர் விஷயத்தில் (பர்தாவைக் கைவிடுவதில்) குற்றமில்லை. அல்லாஹ்வுக்கு பயந்து நடந்துகொள்ளுங்கள். நிச்சயமாக, அல்லாஹ் அனைத்தையும் கண்காணிப்பவனாக இருக்கிறான்‘' எனும் (திருக்குர்ஆன் 33:54, 55) வசனங்கள்.

ஹதீஸ் 4796. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

பர்தா தொடர்பான வசனம் அருளப் பெற்ற பிறகு, என் வீட்டினுள் வருவதற்கு அபுல் குஅய்ஸின் சகோதரர் 'அஃப்லஹ்‘ (ரலி) அனுமதி கேட்டார்கள். அப்போது, `நபி (ஸல்) அவர்களிடம் நான் அனுமதி கேட்டுப் பெறாதவரை உள்ளே வர அவருக்கு நான் அனுமதி தரமாட்டேன்‘' என்று கூறிவிட்டேன். ஏனெனில், எனக்குப் பாலூட்டியவர், அஃப்லஹின் சகோதரரான அபுல் குஅய்ஸ் அல்லர். அபுல் குஅய்ஸின் மனைவிதான் எனக்குப் பாலூட்டியவர். அப்போது நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். நான், `இறைத்தூதர் அவர்களே! அபுல் குஅய்ஸின் சகோதரரான 'அஃப்லஹ்' என்னிடம் (வீட்டினுள் வர) அனுமதி கேட்டார். தங்களிடம் அனுமதி கேட்காத வரை அவருக்கு நான் அனுமதி தரமாட்டேன் என்று மறுத்துவிட்டேன்‘' என்றேன். நபி (ஸல்) அவர்கள் 'உன் (பால்குடித்) தந்தையின் சகோதரருக்கு நீ ஏன் அனுமதி தரவில்லை?' என்று கேட்டார்கள். நான், `இறைத்தூதர் அவர்களே! எனக்குப் பாலூட்டியவர் அந்த (அபுல் குஅய்ஸ் என்ற) ஆண் அல்லவே? மாறாக, அபுல் குஅய்ஸின் மனைவிதானே எனக்குப் பாலூட்டினார்!"என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், `அவருக்கு (அஃப்லஹுக்கு) அனுமதி கொடு! ஏனென்றால், அவர் உன் (பால்குடித்) தந்தையின் சகோதரர் தாம். உன் வலக்கரம் மண்ணாகட்டும்‘' என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளரான) உர்வா (ரஹ்) கூறினார்:

இதனால்தான் ஆயிஷா(ரலி), `பிறப்பினால் (ஏற்படும் நெருங்கிய உறவுகளில்) யாரை மணப்பதற்குத் தடை விதிக்கிறீர்களோ, அவர்களை மணக்கப் பால்குடி உறவினாலும் தடைவிதியுங்கள்‘` என்று கூறுவார்கள்.

## 33:58 வது திருக்குர்ஆன் வசனம்

“அல்லாஹ்வும், அவனுடைய வானவர்களும், நபியின் மீது ஸலவாத்துச் சொல்கிறார்கள். நம்பிக்கையாளர்களே! நீங்களும் அவரின் மீது ஸலவாத்தும், ஸலாமும் சொல்லுங்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 33:58 வது) இறைவசனம்.

அபுல் ஆலியா இப்னு மிஹ்ரான் அர்ரியாஹீ(ரஹ்) கூறினார்:

நபியின் மீது அல்லாஹ்'ஸலவாத்' கூறுவதன் பொருளாவது, வானவர்களிடம் அவன் நபியைப் புகழ்ந்து பேசுகிறான் என்பதாகும். வானவர்களின்'ஸலவாத்' என்பது (நபிக்காக அவர்கள் இறைவனிடம்) வேண்டுவதாகும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஸல்லூன' எனும் சொல்லுக்கு'நபியின் சுபிட்சத்திற்காகப் பிரார்த்திக்கிறார்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 33:60 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ல நுஃக்ரியன்னக்க' எனும் சொல்லுக்கு'நாம் உம்மை ஏவி விடுவோம்' என்று பொருள்.

ஹதீஸ் 4797. கஅப் இப்னு உஜ்ரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம், `இறைத்தூதர் அவர்களே! தங்களின் மீது'ஸலாம்' கூறுவது என்றால் என்ன என்பதை நாங்கள் அறிவோம். 18 (தங்களின் மீது)'ஸலவாத்' கூறுவது எப்படி?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், `அல்லாஹும்ம ஸல்லிஅலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா ஆலி இப்ராஹீம, இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின், கமா பாரக்த்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்‘` என்று சொல்லுங்கள்!”என பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4798. அபூ ஸயீத் அல் குத்ரீ(ரலி) கூறினார்

நாங்கள், `இறைத்தூதர் அவர்களே! இது (தங்களின் மீது) ஸலாம் கூறும் முறை (தொழுகையில் ஓதப்படும்'அத்தஹிய்யாத்' மூலம் இதனை நாங்கள் அறிவோம்.) ஆனால், உங்களின் மீது நாங்கள்'ஸலவாத்' சொல்வது எப்படி?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள், `அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் அப்திக்க வ ரசூலிக்க கமா ஸல்லைத்த அலா ஆலி இப்ராஹீம வ பாரிக் அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த அலா இப்ராஹீம‘` என்று சொல்லுங்கள்‘` என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில், `கமா பாரக்த்த அலா அலீ இப்ராஹீம' (இப்ராஹீம் (அலை) அவர்களின் குடும்பத்தாருக்கு நீ சுபிட்சத்தை வழங்கியதைப்போன்று) என்று காணப்படுகிறது.

...யஸீத் இப்னு ஹாத்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் (பின்வருமாறு) காணப்படுகிறது:

“கமா ஸல்லைத்த அலா இப்ராஹீம, வ பாரிக் அலா முஹம்மதின் வஆலி முஹம்மதின், கமா பாரக்த்த அலா இப்ராஹீம வ அலா ஆலி இப்ராஹீம' (என்று சொல்லுங்கள்!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.)

## 33:69 வது திருக்குர்ஆன் வசனம்

“மூஸாவைப் புண்படுத்தியவர்களைப் போன்று நீங்கள் ஆகி விடாதீர்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 33:69 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4799. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூஸா(அலை) அவர்கள் அதிகம் வெட்கப்படுபவர்களாக இருந்தார்கள். 'மூஸாவைப் புண்படுத்தியவர்களைப் போன்று நீங்களும் ஆகிவிடாதீர்கள். அவர்கள் சொன்ன

குறைபாட்டிலிருந்து அவர் தூய்மையானவர் என்பதை அல்லாஹ் நிரூபித்தான். அவர் அல்லாஹ்விடம் கண்ணியம் பொருந்தியவராய் இருந்தார்'` எனும் (திருக்குர்ஆன் 33:69 வது) இறைவசனம் அதைத்தான் குறிக்கிறது.

## (34) 'ஸபஉ' அத்தியாயம்

(திருக்குர்ஆன் 34:5 வது வசனத்திலுள்ள)'முஆஜிஸீன' என்பதற்கு'முந்திச் செல்ல முயல்பவர்கள்' என்று பொருள்.

(இதே வகையைச் சேர்ந்ததும் 29:22 வது வசனத்தின் மூலத்தில் இடம்பெற்றதுமான)'முஃஜிஸீன' எனும் சொல்லுக்குத்'தப்பிச் செல்ல முயல்பவர்கள்' என்று பொருள்.

(முதலில் கூறப்பட்ட)'முஆஜிஸீன' என்பதற்குத்'தோல்வியுறச் செய்ய முயல்பவர்கள்' என்றும் பொருள் உண்டு.

'முஆஜிஸிய்ய' என்பதற்கு'என்னை முந்திச் செல்ல முயல்பவன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 08:59 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸபகூ' எனும் சொல்லுக்குத்'தப்பிவிட்டார்கள்' என்று பொருள். 'லா யுஃஜிஸூ' எனும் சொல்லுக்கு'(நம்மைவிட்டும்) அவர்கள் தப்பமுடியாது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 29:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஸ்பிகூனா' எனும் சொல்லுக்கு, `அவர்கள் நம்மை மிகைத்துவிடலாம் (என நினைக்கிறார்களா?)' என்று பொருள்.

'முஆஜிஸீன' என்பதற்குப்'பரஸ்பரம் மிகைத்துவிட நினைப்பவர்கள்' என்று பொருள். (அதாவது,)'ஒவ்வொருவரும் தம் சகாவின் இயலாமையை வெளிப்படுத்திவிட எண்ணுவது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மிஃஷார்' எனும் சொல்லுக்குப்'பத்திலொரு பங்கு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் உக்ல்' எனும் சொல்லுக்குக்'கனிகள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பாஇத்' என்பதற்கும் (இன்னோர் ஓதலில் வந்துள்ள)'பய்யித்' என்பதற்கும்'தூரத்தை அதிகப்படுத்து' என்றே பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 34:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா யஃஸுபு' எனும் சொல்லுக்கு'மறையாது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்அரிம்' எனும் சொல்லுக்கு'அணைக்கட்டு' என்று பொருள். அதாவது, அல்லாஹ் அனுப்பிய செந்நீர், அணைக்கட்டை உடைத்துத் தகர்த்து, ஓடையை அரித்துப் பள்ளமாக்கிவிட்டது. (ஸபஉ சமுதாயத்தாரின்) இரண்டு தோட்டங்களும் இரண்டு மருங்கிலும் காணாமல் போய்விட்டன. தண்ணீர் வடிந்ததும் அவ்விரு தோட்டங்களும் வறண்டு காய்ந்து போய்விட்டன. இந்த செந்நீர் அணைக்கட்டிலிருந்த தண்ணீர் அல்ல. மாறாக, அல்லாஹ் தான் நாடிய இடத்திலிருந்து அனுப்பி வைத்த சோதனையே ஆகும்.

அம்ர் இப்னு ஷுரஹ்பீல்(ரஹ்) கூறினார்.

'யமன்' வாசிகளின் மொழி வழக்கில் அணைக்கட்டிற்கே'அல் அரிம்' எனப்படும்.

வேறு சிலர், `அல்அரிம்' என்பது நீரோடையையே குறிக்கும் என்பர்.

(திருக்குர்ஆன் 34:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சாபிஃகாத்' எனும் சொல்லுக்கு'இரும்புக் கவசங்கள்' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 34:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'நுஜாஸீ' என்பதற்கு நாம் 'தண்டனை வழங்குகிறோம்' என்று பொருள்.) 'யுஜாஸா' என்பதற்குத் 'தண்டிக்கப்படுவான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அஇழுக்கும் பிவாஹிதா' (நான் உங்களுக்குப் உபதேசிப்பதெல்லாம் ஒரே விஷயத்தைத்தான்) என்பதன் கருத்தாவது: அல்லாஹ்விற்குக் கீழ்ப்படிவதைத்தான்.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள) 'மஸ்னா வ∴புராதா' என்பதற்கு 'ஒருவரொருவராய், இருவரிருவராய்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அத்தனாவுஷ்' எனும் சொல்லுக்கு 'மறுமையிலிருந்து உலகை நோக்கித் திரும்புதல்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:54 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'வபைன மா யஷ்தஹூன்' (அவர்கள் ஆசைப்பட்டவை) என்பது, செல்வங்கள், குழந்தைகள் (உலக) அலங்காரப் பொருள்கள் ஆகியவற்றைக் குறிக்கும்.

(அதே வசனத்திலுள்ள) 'அஷ்யா இஹிம்' என்பதற்கு 'அவர்களைப் போன்றவர்கள்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 34:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'கல்ஜவாப்' எனும் சொல்லுக்கு 'பூமியிலுள்ள தடாகம் போன்ற' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 34:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அல்ககித்' என்பதற்கு 'அராக் (மிஸ்வாக்) மரம்' என்று பொருள். 'அஸ்ல்' என்பதற்கு 'சவுக்கு மரம்' என்று பொருள். 'அல்அரிம்' என்பதன் (சொற்)பொருள் 'வலிமை வாய்ந்தது' என்பதாகும்.

## 34:23 வது திருக்குர்ஆன் வசனம்

(தீர்ப்பு நாளில்) மக்களின் உள்ளங்களிலிருந்து அச்சம் அகற்றப்படும்போது (பரிந்துரை புரிபவர்களிடம்), 'உங்களுடைய இறைவன் என்ன (பதில்) சொன்னான்?' என்று அவர்கள் கேட்பார்கள். அதற்கு, 'சரியான பதில் தந்துள்ளான். அவன் மிக உயர்ந்தவனும் பெரியவனாகவும் இருக்கிறான்' என்று கூறுவார்கள் (எனும் 34:23 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4800. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் ஒரு விஷயத்தை வானத்தில் தீர்மானித்துவிட்டால், வானவர்கள் இறைக்கட்டளைக்குப் பணிந்தவர்களாகத் தம் சிறகுகளை அடித்துக்கொள்வார்கள். (அல்லாஹ்வின் அந்தக் கட்டளையை,) பாறை மேல் சங்கிலியை அடிப்பதால் எழும் ஓசையைப் போல் (வானவர்கள் கேட்பார்கள். அப்போது வானவர்கள் பீதிக்குள்ளகிறார்கள்.) பின்னர், அவர்களின் இதயங்களிலிருந்து பீதி அகற்றப்படும்போது (அல்லாஹ்விற்கு நெருக்கமான வானவர்களிடம்) 'நம் இறைவன் என்ன சொன்னான்?' என்று வினவுகிறார்கள்.

அதற்கு அவர்கள் வினவியோரிடம், '(நம் இறைவன் இன்னின்ன) உண்மை(யான கட்டளை)யைச் சொன்னான் - அவன் உயர்ந்தவன் பெரியவன்'' என்று கூறுவர். உடனே அந்த உரையாடலை ஒட்டுக் கேட்பவர்களும் (அவர்களிடமிருந்து) ஒட்டுக்கேட்பவர்களும் ஒருவர் மற்றவர் மேலே இவ்வாறு இருந்துகொண்டு செவியேற்று விடுகின்றனர்.

இதைக் கூறும்போது (அறிவிப்பாளர்) சு∴ப்யான் (ரஹ்), தம் விரல்களைச் சாய்த்து அவற்றுக்கிடையே பிரித்துக்காட்டி (ஒன்றன் மீது ஒன்றை அடுக்கி) விளக்கிக் காட்டினார்கள்.

ஆக, முதலில் ஒட்டுக் கேட்டவர் அந்த உரையாடலைத் தனக்குக் கீழேயிருப்பவரிடமும், பிறகு அவர் தமக்குக் கீழேயிருப்பவரிடமும், இறுதியில் (கேட்டவர்) சூனியக்காரனின் அல்லது குறிசொல்பவனின் நாவில் போட்டு விடுகிறார்கள்.

சில நேரங்களில் அந்த உரையாடலை அடுத்தவரிடம் தெரிவிப்பதற்கு முன்பாகவே (முதலில் ஒட்டுக் கேட்டவரைத்) தீச் சுவாலை சென்றடைந்து (கரித்து) விடுவதுண்டு. இன்னும் சில நேரங்களில் தீச் சுவாலை சென்றடைவதற்கு முன்பே அந்த உரையாடலை (அடுத்தவரிடம்) சேர்த்துவிடுவதுமுண்டு. (இவ்வாறு ஒருவர் பின் ஒருவராக பூமியிலுள்ள குறிகாரன் வரை அது போய்ச்சேர்கிறது.) அவன் அதனுடன் நூறு பொய்களை(க் கலந்து மக்களிடம்) பேசுகிறான். அப்போது இதைக்கேட்கும் மக்களிடையே) இன்னின்ன நாளில் இன்னின்னவாறு நடக்குமென அவர் (குறிகாரர்) நம்மிடம் (முன்னறிவிப்பாக) சொல்லிவிட்டிருக்கவில்லையா?' என்று பேசப்படும். இப்போது வானத்திலிருந்து செவியேற்கப்பட்ட அந்த வார்த்தையினால் (குறி சொல்லும்) அவர் உண்மை சொல்லிவிட்டதாகக் கருதப்படுவார்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 34:46 வது திருக்குர்ஆன் வசனம்

(இறைத்தூதரான) அவரோ ஒரு கடினமான (நரக) வேதனை வருமுன் உங்களை எச்சரிக்கை செய்பவர் மட்டுமே ஆவார் (எனும் 34:46 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4801. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
ஒருநாள் நபி(ஸல்) அவர்கள்'ஸஃபா' மலைக்குன்றின் மீது ஏறி, 'யா ஸபாஹா!"("உதவி! உதவி! அதிகாலை ஆபத்து!") என்று கூறினார்கள். 4 உடனே அவர்களை நோக்கி குறைஷியர் ஒன்றுதிரண்டு வந்து, 'உங்களுக்கு என்ன (நேர்ந்துவிட்டது)?' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், 'எதிரிகள், காலையிலோ, மனைவியிலோ உங்களைத் தாக்க வருகிறார்கள் என்று நான் அறிவித்தால் என்னை நீங்கள் நம்புவீர்களா?' என்று கேட்டார்கள். 'ஆம் (நம்புவோம்)' என்று அவர்கள் கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'நான் ஒரு கடினமான (நரக) வேதனை வருமுன் உங்களை எச்சரிக்கை செய்பவனாவேன்'' என்று கூறினார்கள். உடனே அபூ லஹப், 'உனக்கு நாசம் உண்டாகட்டும். இதைச் சொல்லத்தான் எங்களை (இங்கே) ஒன்று கூட்டினாயா?' என்று கேட்டான். உடனே அல்லாஹ், 'அபூ லஹபின் இரண்டு கைகளும் நாசமாகட்டும்.!"எனும் (திருக்குர்ஆன் 111:1 வது) வசனத்தை அருளினான்.

## (35) அல்மலாயிகா (ஃபாத்திர்) அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 35:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கித்மீர்' எனும் சொல்லுக்குப்'பேரீச்சங் கொட்டையினை மூடியுள்ள (மெல்லிய) இழை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 35:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸ்கலா' எனும் சொல்லுக்கு'(பாவச்) சுமை ஏற்றப்பட்ட (ஆத்மா)' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 35:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஹரூர்' எனும் சொல், இரவு நேர வெப்பத்தைக் குறிக்கும். (மற்றொரு சொல்லான)'சமூம்' என்பது, பகல் நேர வெப்பத்தைக் குறிக்கும்.
மற்றவர்கள் கூறுகின்றனர்:'அல்ஹரூர்' என்பது, பகல் நேர வெயிலைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 35:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகராபீப்' எனும் சொல்லுக்கு'அடர்ந்த கரிய நிறம் கொண்டவை' என்று பொருள்.

## (36)'யாசீன்' அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 36:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபஅஸ்ஸஸ்னா' எனும் சொல்லுக்கு'நாம் வலுவூட்டினோம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 36:30 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யா ஹஸ்ரத்தன் அலல் இபாத்' (அந்தோ! அடியார்களுக்கு ஏற்பட்ட நஷ்டமே!) என்பதன் கருத்தாவது: இறைத்தூதர்களை அவர்கள் பரிகாசம் செய்ததே அவர்களின் நஷ்டத்திற்குக் காரணமாக அமைந்தது.
(திருக்குர்ஆன் 36:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அன்துத்ரிகல் கமர' (சூரியன் சந்திரனை எட்டிப் பிடிக்கமுடியாது) என்பதன் கருத்தாவது: சூரியன் சந்திரன் இரண்டில் ஒன்றின் ஒளி மற்றதன் ஒளியை மறைக்காது அவைகளுக்கு அந்தத் தகுதியுமில்லை. (இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'சாபிக்குன்னஹார்' (இரவு, பகலை முந்த முடியாது) என்பதன் கருத்தாவது: இரவும் பகலும் ஒன்றன் பின் ஒன்றாக விடாது பின்தொடரும்.
(திருக்குர்ஆன் 36:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நஸ்லகு' என்பதற்கு'(இரவு பகல்) ஒன்றிலிருந்து மற்றொன்றை நாம் வெளியேற்றுகிறோம் அவை ஒன்றொடொன்று சேராமல் தனியாகவே சென்று கொண்டிருக்கின்றன' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 36:42 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மிம் மிஸ்லிஹி' எனும் சொற்றொடருக்கு, 'அதைப் போன்ற கால்நடைகளை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 36:55 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஃபாம்ஹுன்' எனும் சொல் இன்னோர் ஓதலில்'ஃபம்ஹுன்' என்று ஓதப்பட்டுள்ளது அந்த)'ஃபம்ஹுன்' என்பதற்கு'(இன்பத்தில் திளைத்து) மகிழ்பவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 36:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜுன்தும் முஹ்ளரூன்' எனும் சொல்லுக்கு'(சிலை வணங்கிகளுக்கு எதிரான) படைகளாக, (அந்தச் சிலைகளே) விசாரணை நாளில் ஆஜர்படுத்தப்படும்'' என்று பொருள்.
"(திருக்குர்ஆன் 36:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஷ்ஹுன்' எனும் சொல்லுக்கு'நிரப்பப்பட்ட' என்று பொருள்' என இக்ரிமா(ரஹ்) கூறினார்கள் என அறிவிக்கப்படுகிறது.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 36:51 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யன்சிலூன்' எனும் சொல்லுக்கு'வெளியேறுவார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 36:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மர்கதினா' எனும் சொல்லுக்கு'நாங்கள் வெளியேறுமிடம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 36:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஹ்ஸைனாஹு' எனும் சொல்லுக்கு'நாம் எல்லாவற்றையும் பாதுகாத்து வைத்துள்ளோம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 36:67 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மகானத்திஹிம்' எனும் சொல்லும், 'மகானிஹிம்' எனும் சொல்லும் ('அவர்களின் இருப்பிடம்' எனும்) ஒரே பொருள் கொண்டவை ஆகும்.

## 36:38 வது திருக்குர்ஆன் வசனம்

"சூரியனும் (நம்முடைய வல்லமையைப் பறைசாற்றும் பிறிதொரு சான்றாகும்). அதுதான் நிலைகொள்ளும் ஓர் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. இது வல்லமை மிக்கவனும், பேரறிவு கொண்டவனுமான (இறை)வனின் நிர்ணயமாகும்'' எனும் (திருக்குர்ஆன் 36:38 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4802. அபூ தர் அல்ஃம்ஃபாரீ(ரலி) அறிவித்தார்
சூரியன் மறையும் நேரத்தில் நான் நபி(ஸல்) அவர்களுடன் பள்ளிவாசலில் இருந்தேன். அப்போது அவர்கள், 'சூரியன் எங்கு (சென்று) மறைகிறது என்று உமக்குத் தெரியுமா, அபூ தர்ரே?' என்று கேட்டார்கள். நான், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அறிவார்கள்'' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள், 'அது அர்ஷுக்கு (இறைவனின் அரியாசனத்திற்கு)க் கீழே சிரவணக்கம் (சஜ்தா) செய்வதற்காகச் செல்கிறது. இதைத்தான், 'சூரியன், தான்

நிலைகொள்ளும் ஓர் இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது. இது வல்லமை மிக்கவனும் பேரறிவு கொண்டவனுமான (இறை)வனின் நிர்ணயமாகும்'' எனும் (திருக்குர்ஆன் 36:38 வது) இறைவசனம் குறிக்கிறது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4803. அபூ தர்(ரலி) அறிவித்தார்

நான், நபி(ஸல்) அவர்களிடம், 'சூரியன், தான் நிலைகொள்ளும் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது'' எனும் (திருக்குர்ஆன் 36:38 வது) வசனம் தொடர்பாகக் கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'அதன் நிலை கொள்ளுமிடம் இறைவனின் அரியாசனத்திற்குக் கீழே உள்ளது'' என்று கூறினார்கள்.

## (37) அஸ்ஸா∴ப்பாத் அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 37:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வாஸிப்' எனும் சொல்லுக்கு'நிலையானது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'த∴தூனனா அனில் யமீன்' எனும் வாக்கியத்திற்கு'நீங்கள் சத்தியவழியில் வருவதுபோல் (தவறான வழிக்குக் கொண்டு செல்வதற்காக) எங்களிடம் வந்து கொண்டிருந்தீர்கள்'' என்று பொருள். இதை (மறுமையில்) இறைமறுப்பாளர்கள், ஷைத்தான்க(ளான தம் தலைவர்க)ளை நோக்கிக் கூறுவார்கள்.

(திருக்குர்ஆன் 37:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴கவ்ல்' எனும் சொல்லுக்கு'வயிற்று உபாதை' என்று பொருள்.'வலாஹும் அன்ஹா யுன்ஸ∴பூன்' எனும் வாக்கியத்திற்கு'(சொர்க்கத்தின் மதுவினால்) அவர்களின் அறிவு அகன்றுவிடாது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:51 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கரீன்' (நண்பன்) எனும் சொல் ஷைத்தானைக் குறிக்கிறது.

(திருக்குர்ஆன் 37:70 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஹ்ரஊன்' எனும் சொல்லுக்கு'ஓடுவதைப் போன்று (தம் மூதாதையர்களின் அடிச்சுவட்டைப்) பின்பற்றினார்கள்'' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:94 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஸி∴ப்∴பூன்' எனும் சொல், அடுத்தடுத்து நெருக்கமாகக் கால் வைத்து நடப்பதைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 37:158 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ பைனல் ஜின்னத்தி நஸபா' (அல்லாய்வுக்கும் ஜின்களுக்குமிடையே வமிசாவளி உறவை அவர்கள் ஏற்படுத்துகின்றனர்) என்பதன் கருத்தாவது:'வானவர்கள் அல்லாஹ்வின் புதல்வியர் அவர்களின் அன்னையர் முக்கிய ஜின்களின் புதல்வியர்' எனக் குறைஷிகளில் இறைமறுப்பாளர்கள் கூறிவந்தனர். (இதற்கு மறுப்பாக)'அந்த ஜின்களும் விசாரணைக்காகத் தாங்கள் ஆஜர்படுத்தப்படுவோம் என்பதை அறிந்துள்ளனர்'' என அல்லாஹ் கூறினான்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

(திருக்குர்ஆன் 37:165 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ல நஹ்னுஸ் ஸா∴ப்பூன்' (நாங்கள் அணிவகுத்து நிற்கிறோம்) எனும் சொல், வானவர்களைக் குறிக்கிறது.

(திருக்குர்ஆன் 37:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸிராத்துல் ஜஹீம்' எனும் சொல்லுக்கு'நரகத்தின் நடுப்பகுதி' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:67 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ல ஷவ்பன்' என்பதற்குக்'கொதிக்கும் நீரில் அவர்களின் உணவு கலக்கப்படும்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள'துஹூர்' எனும் சொல்லின் செய்யப்பாட்டு எச்சவினையும், 7:18, 17:18, 17:39 ஆகிய வசனங்களின் மூலத்தில் இடம் பெற்றதுமான)'மத்ஹூரா' எனும் சொல்லுக்கு'விரட்டப்பட்டவன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 37:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பைளும் மக்னூன்' எனும் சொல்லுக்கு'(சிப்பிக்குள்) மறை(த்துப் பாதுகா)க்கப்பட்டிருக்கும் முத்து' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 37:78 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வதரக்னா அலைஹி ஃபில் ஆம்ரீன்' என்பதன் கருத்தாவது: (இறைத்தூதர்) நூஹுடைய புகழை மறுமை நாள்வரை பேசப்படும்படி நாம்விட்டு வைத்தோம்.
(திருக்குர்ஆன் 37:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யஸ்தஸ்கிரூன்' எனும் சொல்லுக்கு'ஏளனம் செய்கிறார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 37:125 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பஅல்' எனும் சொல்லுக்கு (யமனியரின் வழக்கில்)'தெய்வம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 38:10, 40:36ஆகிய வசனங்களின் மூலங்களிலுள்ள)'அல்அஸ்பாப்' எனும் சொல், வானத்தைக் குறிக்கிறது.

## 37:139 வது திருக்குர்ஆன் வசனம்

“நிச்சயமாக யூனுஸும் (இறைத்) தூதர்களாக அனுப்பப்பட்டவர்களில் ஒருவராவார்‘` எனும் (திருக்குர்ஆன் 37:139 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4804. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
“எவரும் தம்மை (இறைத்தூதர் யூனுஸ்) இப்னு மத்தாவைவிடச் சிறந்தவர் என வாதிடுவது தகாது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 4805. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
“நான் யூனுஸ் இப்னு மத்தாவைவிடச் சிறந்தவர்‘` என்று (என்னைக் குறித்து புகழ்ந்து) கூறுகிறவர் பொய் சொல்லிவிட்டார்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (38) ஸாத் அத்தியாயம்

ஹதீஸ் 4806. அவ்வாம் இப்னு ஹவ்ஷப் அஷ்ஷைபானீ(ரஹ்) அறிவித்தார்
நான் முஜாஹித்(ரஹ்) அவர்களிடம், `ஸாத்' அத்தியாயத்திலுள்ள (ஓதலுக்குரிய) சஜ்தா (வசனம்) தொடர்பாகக் கேட்டேன். அவர்கள், `இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (இது குறித்துக்) கேட்கப்பட்டபோது அதற்கு அன்னார், `(நபியே!) அவர்கள் தாம் அல்லாஹ்வினால் நேர்வழி காட்டப்பட்டவர்கள். அவர்களின் வழியினையே நீங்களும் பின்பற்றிச் செல்லுங்கள்.!”என்ற (திருக்குர்ஆன் 06:90 வது) வசனத்தை பதிலாகக் கூறினார்கள். இப்னு அப்பாஸ்(ரலி) இந்த வசனத்தில் (ஓதலுக்குரிய) சஜ்தா செய்வது வழக்கம்.

ஹதீஸ் 4807. அவ்வாம் இப்னு ஹவ்ஷப் அஷ்ஷைபானீ(ரஹ்) கூறினார்
நான் முஜாஹித்(ரஹ்) அவர்களிடம், `ஸாத்' அத்தியாயத்தின் (ஓதலுக்குரிய) சஜ்தா (வசனம்) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், `நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம், `தாங்கள் (ஸாத் அத்தியாயத்தில்) சஜ்தா செய்வதற்கு என்ன ஆதாரம் உள்ளது?' என்று கேட்டேன். அதற்கு அன்னார், `மேலும், இப்ராஹீமுடைய வழித்தோன்றல்களே தாவூதும் சுலைமானும்‘` என்று தொடங்கி, `(நபியே!) அவர்கள் தாம் அல்லாஹ்வினால் நேர்வழிகாட்டப்பட்டவர்கள். அவர்களின் வழியினையே நீங்களும் பின்பற்றுங்கள்..!”என்று முடியும் (திருக்குர்ஆன் 06:84-90 ஆகிய) வசனங்களை நீங்கள் ஓதவில்லையா? என்று கேட்டார்கள். பிறகு, `எவரைப் பின்பற்றுமாறு உங்கள் நபி(ஸல்) அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டிருந்தோ அத்தகையவர்களில் தாவூத்(அலை) அவர்களும் ஒருவராவார். எனவே, (நபி தாவூத்(அலை) அவர்களைப் பின்பற்றி) இறைத்தூதர்(ஸல்) அவர்களும் (‘ஸாத்' அத்தியாயத்தில் நன்றிக்காக) சஜ்தா செய்யவேண்டும்) என்று பதிலளித்தார்கள்.

(திருக்குர்ஆன் 38:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உஜாப்' எனும் சொல்லுக்கு'வியப்புக்குரியது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 38:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கித்து' எனும் சொல்லுக்கு (பொதுவாக)'ஏடு' என்று பொருள். ஆனால், இங்கு'நற்செயல்களின் பதிவேடு' என்று பொருள்.
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 38:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஸ்ஸத்' எனும் சொல்லுக்கு'ஆணவம் கொண்டவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 38:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்மில்லத்துல் ஆம்ரா' (வேறு சமுதாயம்) எனும் சொல், குறைஷியர் சமுதாயத்தைக் குறிக்கிறது.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'இக்திலாக்' எனும் சொல்லுக்குப்'பொய்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 38:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்அஸ்பாப்' எனும் சொல், வானத்தின் வாயில்களுக்குச் செல்லும் வழிகளைக் குறிக்கிறது.
(திருக்குர்ஆன் 38:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜுன்த்' (படையினர்) எனும் சொல் குறைஷியரைக் குறிக்கிறது.
(திருக்குர்ஆன் 38:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உலாயிகல் அஹ்ஸாப்' (அந்தக் கூட்டத்தினர்) என்பது முந்தைய தலைமுறையினரைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 38:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபவாக்' (தாமதித்தல்) எனும் சொல்லுக்கு'(உலகின் பால்) திரும்புதல்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 38:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இத்த கஃத்னாஹும் சிக்ரிய்யா' (நாம் அவர்களைப் பரிகாசம் செய்துகொண்டிருந்தோமா? என்பதன் கருத்தாவது: (தாழ்ந்தவர்களாக) அவர்களை நாம் அறிந்திருந்தோமா?
(திருக்குர்ஆன் 38:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்ராப்' எனும் சொல்லுக்கு'வயதொத்தவர்கள்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 38:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள'அல்அய்த்' எனும் சொல்லுக்கு'வணக்க வழிபாட்டில் செயலாற்றல்' என்றும், 'அல் அப்ஸார்' எனும் சொல்லுக்கு'அல்லாஹ்வின் விஷயத்தில் ஆழ்ந்த சிந்தனை' என்றும் பொருள்.
(திருக்குர்ஆன் 38:32 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹுப்பல் கைரி அன் ஃதிக்ரி ரப்பீ' எனும் சொற்றொடரிலுள்ள'அன்' எனும் இடைச்சொல்லுக்கு'மின்' எனும் இடைச்சொல்லின் பொருளாகும். (இதன்படி,)'என்னுடைய இறைவனை நினைக்காமல் இந்த நல்ல (குதிரைச்) செல்வங்களில் லயித்துவிட்டேன்'' என்று இவ்வசனத்திற்குப் பொருள் அமையும்.
(திருக்குர்ஆன் 38:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஃபிக்க மஸ்ஹன்' என்பதற்கு'அவற்றின் கணைக் கால்களையும் கழுத்துகளையும் தடவிக் கொடுக்கலானார்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 38:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்அஸ்ஃபாத்' எனும் சொல்லுக்கு'விலங்குச் சங்கிலி' என்று பொருள்.

## 38:35 வது திருக்குர்ஆன் வசனம்

"(இறைவா!) எனக்குப் பின் எவருக்கும் கிடைக்க முடியாத ஓர் ஆட்சியதிகாரத்தை எனக்கு நீ வழங்குவாயாக! திண்ணமாக, நீயே உண்மையாக கொடையாளன்'' (என்று சுலைமான் கூறினார்) எனும் (திருக்குர்ஆன் 38:35 வது) வசனத் தொடர்.
ஹதீஸ் 4808. நபி(ஸல்) அவர்கள் (ஒரு நாள்) கூறினார்கள்:

முரட்டு ஜின் ஒன்று நேற்றிரவு என் தொழுகையை (இடையில்) துண்டிப்பதற்காக திடீரென்று வந்து நின்றது - என்றோ, இதைப் போன்ற வார்த்தையையோ கூறினார்கள் - அதன் மீது அல்லாஹ் எனக்கு சக்தியை வழங்கினான். நீங்கள் அனைவரும் காலையில் வந்து அதைக் காணும்வரை இந்தப் பள்ளிவாசலின் தூண்களில் ஒன்றில் அதைக் கட்டிவைக்க விரும்பினேன். அப்போது 'இறைவா! எனக்குப் பின்வேறு எவருக்கும் கிடைக்கமுடியாத ஓர் ஆட்சியதிகாரத்தை எனக்கு நீ வழங்குவாயாக'' (திருக்குர்ஆன் 38:35) என்று என் சகோதரர் சுலைமான் (அலை) அவர்கள் செய்த வேண்டுதல் என் நினைவுக்கு வந்தது.
ரவ்ஹ் இப்னு உபாதா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் 'எனவே, அதை நான் விரட்டி அடித்துவிட்டேன்'' என்றும் இடம் பெற்றுள்ளது.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 38:86 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே! கூறுக:) நான் (இல்லாததைச் சொல்லி) பாவனை செய்வோரில் ஒருவன் அல்லன்'' எனும் (திருக்குர்ஆன் 38:86 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4809. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்
நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் சென்றோம். அவர்கள், 'மக்களே! ஒன்றை அறிந்தவர், அதைப் பற்றிக் கூறட்டும்! அறியாதவர், 'அல்லாஹ்வே நன்கறிந்தவன்' என்று கூறட்டும்! ஏனெனில் ஒருவர் தாம் அறியாததைக் குறித்து 'அல்லாஹ்வே நன்கறிந்தவன் (எனக்குத் தெரியாது)' என்று சொல்வதும் அறிவின்பால்பட்டதாகும். வல்லவனும் மாண்புடையோனுமாகிய அல்லாஹ், '(நபியே!) கூறுக: நான் இதற்காக உங்களிடம் கூலி எதையும் கோரவில்லை. மேலும், நான் (இல்லலாததைச் சொல்லி) பாவனைசெய்வோரில் ஒருவனும் அல்லன்'' என்று தன் தூதர்(ஸல்) அவர்களுக்குக் கூறியுள்ளான். (திருக்குர்ஆன் 38:86) இதோ (ம்ந்தா எனுமிடத்தில் ஒருவர் பேசிவரும்) புகையைக் குறித்து உங்களுக்கு நான் சொல்கிறேன் கேளுங்கள்): இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குறைஷியரை இஸ்லாத்திற்கு (வருமாறு) அழைத்தார்கள். ஆனால், அவர்கள் அதில் காலம் தாழ்த்தினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் 'இறைவா! (இவர்களைத் திருத்த உன் தூதர்) யூசுஃப் (அலை) அவர்கள் அதில் காலம் தாழ்த்தினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் 'இறைவா! (இவர்களைத் திருத்த உன் தூதர்) யூசுஃப்(அலை) அவர்கள் காலத்து ஏழு (பஞ்சம் நிலவிய) ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைக் கொடுத்து இவர்களுக்கெதிராக எனக்கு உதவி செய்!"எனப் பிரார்த்தித்தார்கள். எனவே, அவர்களைப் பஞ்சம் வாட்டியது. அது அனைத்தையும் அழித்துவிட்டது. எந்த அளவிற்கென்றால், (பஞ்சத்தின் கோரப் பிடியினால்) அவர்கள் பிணத்தையும், (பிராணிகளின்) தோல்களையும் உண்டார்கள். மேலும், கடும் பசியினால் (கண் பஞ்சடைந்து அவர்களில்) ஒருவர் தமக்கும் வானத்திற்குமிடையே புகையைத்தான் காண்பார்.
அல்லாஹ் கூறினான்: (நபியே!) தெளிவானதொரு புகை வானத்திலிருந்து வரும் நாளை நீங்கள் எதிர்பார்த்திருங்கள். மனிதர்களை அது சூழ்ந்துகொள்ளும். அது துன்புறுத்தும் வேதனையாகும். (திருக்குர்ஆன் 44:10, 11)
உடனே குறைஷியர், 'எங்கள் இறைவனே! எங்களைவிட்டு இவ்வேதனையை நீக்கிவிடு நிச்சயமாக நாங்கள் (உன்னை) விசுவாசிக்கிறோம்'' என்று வேண்டினர். (திருக்குர்ஆன் 44:12)
"(ஆனால், அந்நேரத்தில்) அவர்களுக்கு நல்லுணர்ச்சி எவ்வாறு பயனளிக்கும்? நிச்சயமாக (நம்முடைய) வெளிப்படையான தூதர் அவர்களிடம் வந்தே இருக்கிறார். எனினும், அவர்கள் அவரைப் புறக்கணித்து (அவரைப் பற்றி, 'இவர்) எவராலோ பயிற்றுவிக்கப்பட்ட ஒரு பைத்தியக்காரர்தாம்' என்று கூறினர்.

மெய்யாகவே (நீங்கள் திருந்தக் கூடுமென்று) அவ்வேதனையை (இன்னும்) சிறிது (காலத்திற்கு) நீக்கிவைத்தோம். (எனினும்,) நிச்சயமாக நீங்கள், (பாவம் செய்யவே) மீளுகிறீர்கள்!" (திருக்குர்ஆன் 44:13-15)
(நபி(ஸல்) அவர்களின் வேண்டுதலால் அவர்களைவிட்டுப் பஞ்சம் அகன்றது.) ஆனால், மறுமை நாள் வேதனை (அவர்களைவிட்டு) அகற்றப்படவா போகிறது? ஆக, பஞ்சம் அகற்றப்பட்டது. பிறகு மீண்டும் அவர்கள் இறைமறுப்பிற்கே திரும்பிவிட்டார்கள். எனவே, அல்லாஹ் அவர்களை பத்ர் போரின்போது (கடுமையாகப்) பிடித்தான்.
அல்லாஹ் கூறினான்:
மிக்க பலமாக அவர்களை நாம் பிடிக்கும் அந்நாளில் நிச்சயமாக (அவர்களிடம்) பழிவாங்கியே தீருவோம். (திருக்குர்ஆன் 44:16)

## (39) அஸ்ஸுமர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித்(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 39:24 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யத்தக்கீ பி வஜ்ஹிஹி' (மறுமையின் கொடிய வேதனையைத் தன் முகத்தால் தடுத்துக்கொள்வான்) என்பதன் கருத்தாவது: தலைகீழாக இழுத்துச் செல்லப்பட்டு நரகத்தில் எறியப்படுவான். இதையே'நரகத்தில் எறியப்படுபவன் சிறந்தவனா? அல்லது மறுமை நாளில் நிம்மதியாக வருகை தருபவன் சிறந்தவனா?' எனும் (திருக்குர்ஆன் 41:40 வது) வசனம் குறிப்பிடுகிறது.
(திருக்குர்ஆன் 39:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இவஜ்' (கோணல்) சொல்லுக்குக்'குழப்பம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 39:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வரஜுலன் சலமன் லிரஜுல்' என்பதன் பொருளாவது: ஒரே மனிதனுக்குக் கட்டுப்பட்டு நடக்கும் நல்ல மனிதன். இது, இணைவைப்பாளர்களின் (பல) பொய்த் தெய்வங்களுக்கும் உண்மையான (ஒரே) இறைவனுக்கும் சொல்லப்பட்ட ஓர் உவமையாகும்.
"(குறைஷிக் குலத்தோரான) இவர்கள் அவன் அல்லாதவர்களைக் கொண்டு (நபியே!) உங்களை அச்சுறுத்துகின்றனர்'' எனும் (திருக்குர்ஆன் 39:36 வது) வசனத்திற்கு, ('அல்லாஹ்அல்லாத) சிலைகளைக் காட்டி அச்சுறுத்துகிற்னர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 39:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கவ்வல்னா' எனும் சொல்லுக்கு, 'நாம் வழங்கினோம்' என்று பொருள்.
"எந்த மனிதர் உண்மையைக் கொண்டுவந்தாரோ, மேலும், அவரை உண்மையாளரென ஏற்றவர்களே வேதனையிலிருந்து தப்பக்கூடியவர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 39:33 வது) வசனத்திலுள்ள'உண்மை' என்பது குர்ஆனையும், 'அவரை உண்மையாளர் என ஏற்றவர்' என்பது இறைநம்பிக்கையாளரையும் குறிக்கும். இத்தகைய இறை நம்பிக்கையாளர் (நாளை) மறுமை நாளில் (அல்லாஹ்வின் திருமுன்னில்) வந்து நின்றுகொண்டு, '(இறைவா!) எனக்கு நீ வழங்கிய இந்தக் குர்ஆனில் உள்ள (உபதேசப்)படி நான் (உலகில்) செயல்பட்டேன்'' என்று கூறுவார்.
(திருக்குர்ஆன் 39:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முதஷாம்சூன்' எனும் சொல், நேர்மையை விரும்பாத முரடர்களைக் குறிக்கும்.'சலமன்' எனும் சொல்லும்'சாலிமன்' எனும் சொல்லும் நல்லவரைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 39:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஷ்மஅஸ்ஸத்' என்பதற்கு'வெறுக்கும்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 39:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பி மஃபாஸத்திஹிம்' எனும் சொல், 'ஃபவ்ஸ்' (வெற்றி) எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிரிந்ததாகும்.

(திருக்குர்ஆன் 39:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ஹா:ப்பீன்' எனும் சொல்லுக்கு '(இறைவனின் அரியாசனத்தை,) அதன் நாலாபாகங்களையும் சூழ்ந்த வண்ணம் சுற்றி வந்து கொண்டிருப்பார்கள்'' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 39:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'முத்தஷாபிஹ்' எனும் சொல் 'இஷ்த்திபாஹ் (குழப்பம்) எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததன்று ஷபஹ் (ஒப்பாகுதல்) எனும் சொல்லிலிருந்து பிரிந்ததாகும். இதன்படி, 'அல்லாஹ் அருளிய இந்த வேதத்தில் முன்னுக்குப் பின் முரணான கருத்துகள் இல்லை. மாறாக, இதன் ஒரு வசனம் மறுவசனத்தை உறுதிப்படுத்தும் வகையில் ஒன்றுக்கொன்று ஒத்ததாய்த் திகழ்கிறது'' என்று பொருள் அமையும்.

## 39:53 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) கூறுங்கள்: வரம்புமீறி தமக்குத் தாமே அநீதி இழைத்துக்கொண்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் கருணையில் அவநம்பிக்கை கொள்ளாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பாவங்களையும் மன்னித்துவிடுகிறான். அவன் பெரிதும் மன்னிப்பவனும், கருணை காட்டுபவனும் ஆவான்'' எனும் (திருக்குர்ஆன் 39:53 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4810. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்
இணைவைப்பவர்களில் சிலர், நியைக் கொலைகளைப் புரிந்தனர் விபசாரம் அதிகமாகச் செய்திருந்தனர். (ஒருநாள்) அவர்கள் முஹம்மத்(ஸல்) அவர்களிடம் வந்து, நீங்கள் கூறிவருகிற (போதனை முதலிய)வையும் நீங்கள் அழைப்புவிடுகிற (இஸ்லாமிய) மார்க்கமும் உறுதியாக நல்லவையே! நாங்கள் புரிந்துவிட்ட பாவங்களுக்குப் பரிகாரம் ஏதேனும் உண்டா என நீங்கள் எங்களுக்குத் தெரிவித்தால் (நன்றாயிருக்குமே)'' என்று கூறினர். அப்போது, '(ரஹ்மானின் உண்மையான அடியார்களான) அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைப்பதில்லை. மேலும், (கொலை செய்யக்கூடாது) என்று அல்லாஹ் தடை செய்துள்ள எந்த உயிரையும் முறையின்றி அவர்கள் கொலை புரிவதில்லை மேலும் விபசாரம் செய்வதில்லை..!" எனும் (திருக்குர்ஆன் 25:68 வது) வசனம் அருளப்பெற்றது. மேலும், '(நபியே!) கூறுங்கள்: வரம்புமீறி தமக்குத் தாமே அநீதியிழைத்துக்கொண்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் கருணையில் அவநம்பிக்கை கொள்ளாதீர்கள்.!" எனும் (திருக்குர்ஆன் 39:53 வது) வசனமும் அருளப்பெற்றது.

## 39:67 வது திருக்குர்ஆன் வசனம்

'அவர்கள் அலலாஹ்வை எவ்வாறு மதிக்கவேண்டுமோ, அவ்வாறு மிதிக்கவில்லை' எனும் (திருக்குர்ஆன் 39:67 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4811. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
யூதம் அறிஞர்களில் ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, 'முஹம்மதே! அல்லாஹ், வானங்களை ஒரு விரல் மீதும், பூமிகளை ஒரு விரல் மீதும், இதரப் படைப்பினங்களை ஒரு விரல் மீதும் வைத்துக் கொண்டு, 'நானே (ஏகாதிபத்தியம் உள்ள) அரசன்'' என்று சொல்வான் என நாங்கள் (எங்களின் வேத நூலான தவ்ராத்தில்) கண்டோம்'' என்று கூறினார். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள் அந்த அறிஞரின் கருத்தை உண்மையென ஆமோதிக்கும் விதத்தில், தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்தார்கள். பிறகு, 'அவர்கள் அல்லாஹ்வை எவ்வாறு மதிக்க வேண்டுமோ, அவ்வாறு மதிக்கவில்லை. மறுமை நாளில் பூமி முழுவதும் அவன் கைப் பிடியில் இருக்கும். வானங்கள் அவனுடைய வலக்கரத்தில் சுருட்டப்பட்டிருக்கும். அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து அவன் தூயவன் உயர்ந்தவன் எனும் (திருக்குர்ஆன் 39:67 வது) வசனத்தை ஓதினார்கள்.

## 39:67 வது திருக்குர்ஆன் வசனம்

“மறுமை நாளில் பூமி முழுவதும் அல்லாஹ்வின் கைப்பிடியில் இருக்கும். மேலும் வானங்கள் அவனுடைய வலக்கரத்தில் சுருட்டப்பட்டு இருக்கும். அவர்கள் இணைவைப்பவற்றிலிருந்து அவன் தூய்மையானவன் உயர்ந்தவன் எனும் (திருக்குர்ஆன் 39:67 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4812 (மறுமை நாளில்) அல்லாஹ் பூமியை தனது கைப்பிடிக்குள் அடக்கிக்கொள்வான். வானங்களை தனது வலக்கரத்தில் சுருட்டிக் கொள்வான். பிறகு நானே அரசன் எங்கே பூமியின் அரசர்கள் என்று கேட்பான். இதை அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## 39:68 வது திருக்குர்ஆன் வசனம்

“மேலும், (அந்நாளில்) எக்காளம் (ஸூர்) ஊதப்படும். அப்போது வானங்களிலும் பூமியிலும் உள்ள அனைவரும் மூர்ச்சையாகி விடுவார்கள் அல்லாஹ் நாடியவர்களைத் தவிர! பின்னர் மற்றொருமுறை எக்காளம் ஊதப்படும். உடனே, அனைவரும் எழுந்து பார்க்க ஆரம்பித்து விடுவார்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 39:68 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4813. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
இரண்டாவது எக்காளம் ஊதப்பட்ட பின், (மூர்ச்சை தெளிந்து,) தலையை உயர்த்துபவர்களில் நான்தான் முதல் ஆளாக இருப்பேன். அப்போது நான் மூஸா (அலை) அவர்களுக்கு அருகே இருப்பேன். அன்னார் இறைவனது அரியாசனத்தைப் பிடித்தபடி (நின்று கொண்டு) இருப்பார்கள். (முதல் எக்காளம் ஊதப்பட்ட போதே மூர்ச்சையாகாமல்) இதே நிலையில் அன்னார் இருந்தார்களா அல்லது இரண்டாவது எக்காளம் ஊதப்பட்டதற்குப் பின்புதானா (அந்நிலைக்கு வந்தார்கள்)?’ என்று எனக்குத் தெரியாது.
என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4814. அபூ சாலிஹ் ஃதக்வான் அஸ்ஸம்மான் (ரஹ்) அறிவித்தார்
நபி (ஸல்) அவர்கள், ‘அந்த இரண்டு எக்காளத்திற்கும் மத்தியில் (இடைப்பட்ட காலம்) நாற்பது‘‘ என்று கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) கூறினார். அவர்களின் நண்பர்கள், ‘அபூ ஹுரைரா அவர்களே! நாள்களில் நாற்பதா?’ என்று கேட்டனர். ’(இதற்கு பதில் சொல்வதைவிட்டும்) நான் விலகிக் கொள்கிறேன்‘‘ என்று அபூ ஹுரைரா (ரலி) பதிலளித்தார்கள். நண்பர்கள், ‘ஆண்டுகள் நாற்பதா?’ என்று கேட்டனர். அபூ ஹுரைரா (ரலி), ‘நான் விலகிக்கொள்கிறேன்‘‘ என்று பதில் கூறினார்கள். நண்பர்கள், ‘மாதங்கள் நாற்பதா?’ என்று கேட்டனர். அப்போதும் அபூ ஹுரைரா (ரலி), ‘நான் விலகிக் கொள்கிறேன். (ஏனெனில், எனக்கே இது குறித்துத் தெரியாது)‘‘ என்று கூறிவிட்டு, ‘மனிதனின் எல்லா உறுப்புகளும் (மண்ணுக்குள்) மக்கிப் போய்விடும். ஆனால் அவனுடைய (முதுகந்தண்டின் வேர்ப்பகுதியிலிருக்கும்) உள்வால் எலும்பின் (அணுவளவு) நுனியைத் தவிர! அதை வைத்தே படைப்பினங்கள் (மீண்டும் மறுமை நாளில்) படைக்கப்படும்‘‘ என்று கூறினார்கள்.

## (40) அல்முஃமின் அத்தியாயம்

முஜாஹித் (ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 40:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ’ஹாமீம்’ எனும் (‘ஹுரூஃபுல் முகத்தஆத்’ வகையைச் சேர்ந்த) தனி எழுத்துகளுக்கு, மற்றச் சில அத்தியாயங்களின் தொடக்கத்தில் வரும் தனி எழுத்துகளின் சட்டமே ஆகும். ஹாமீம்’ என்பது (இந்த அத்தியாயத்தின்) பெயராகும் என்றும் சொல்லப்படுகிறது. ’ஷுரைஹ் இப்னு அபீ அவ்ஃப் அல்அப்ஸீ’ என்பவரின் இந்தக் கவிதைவரி இதற்குச் சான்றாகும்:

அம்புகள் (களத்தில்) பின்னிக்கொண்டிருக்கிற நேரத்திலே அவன் எனக்கு ஹாமீமை நினைவுபடுத்துகிறான்!
(இங்கு) வருவதற்கு முன்பே அவன் ஹாமீமை ஓதியிருக்கக் கூடாதா?!
(திருக்குர்ஆன் 40:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தவ்ல்' எனும் சொல்லுக்கு'இழிவுக்குள்ளானவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 40:60 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தாம்ரீன்' எனும் சொல்லுக்கு'இழிவுக்குள்ளானவர்கள்' என்று பொருள்.
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 40:41 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இலந் நஜாத்தி' (ஈடேற்றம்) என்பது இறை நம்பிக்கையைக் குறிக்கிறது.
(திருக்குர்ஆன் 40:43 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லைஸ லஹு தஅவா' (அவற்றிற்கு எவ்வித அழைப்பும் இல்லை) எனும் வாகத்திற்கு, '(தெய்வங்களாகக் கற்பனை செய்யப்பட்டு வணங்கப்பட்டு வரும்) கற்சிலைகளுக்கு (உங்கள் அழைப்பிற்கு பதில் தரும் சக்தியில்லை)' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 40:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஸ்ஜரூன்' எனும் சொல்லுக்கு'அவர்கள் நரகத்தின் எரிபொருளாக ஆக்கப்படுவர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 40:75 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தம்ரஹூன்' எனும் சொல்லுக்கு'இறுமாப்புக் கொண்டவர்களாக இருந்தீர்கள்' என்று பொருள்.
(ஒரு முறை) அல்அலாவு இப்னு ஸியாத்(ரஹ்) மக்களுக்கு நரகத்தை நினைவூட்டி (உபதேசித்துக்) கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர், '(அச்சுறுத்தும் தகவல்களைக் கூறி, அல்லாஹ்வின் கருணை குறித்து) மக்களுக்கு ஏன் அவநம்பிக்கையை ஏற்படுத்துகிறீர்கள்?' என்று கேட்டதற்கு அன்னார், 'மக்களுக்கு அவநம்பிக்கையை ஏற்படுத்தும் ஆற்றல் எனக்கு ஏது? அல்லாஹ்வே, '(நபியே!) கூறுங்கள்: வரம்பு மீறி தமக்குத்தாமே அநீதியிழைத்துக் கொண்ட என் அடியார்களே! அல்லாஹ்வின் கருணையில் அவநம்பிக்கை கொள்ளாதீர்கள்'' (திருக்குர்ஆன் 39:53) என்று கூறுகிறான். அதே நேரத்தில்'வரம்பு மீறுவோர் நரகம் செல்லக்கூடியவர்களாவர்'' (திருக்குர்ஆன் 40:43) என்றும் கூறுகிறான். (ஒன்றை நன்றாக நான் புரிந்து கொண்டேன்:) நீங்கள் புரிந்த தீய செயல்களுக்குக் கூட சொர்க்கத்தை உங்களுக்கு (இறைவன் வழங்குவதாக) நற்செய்தி வழங்கப்பட வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள்! (ஆனால் ஒன்றை மட்டும் மறந்து விடாதீர்கள்:) அல்லாஹ், தனக்குக் கீழ்படிந்து வாழ்பவருக்கு சொர்க்கத்தை நற்செய்தியாகக் கூறுபவராகவும், தனக்கு மாறு செய்யும் மனிதருக்கு நரகம் உண்டு என்று எச்சரிக்கை செய்பவராகவுமே முஹம்மத்(ஸல்) அவர்களை அனுப்பினான்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4815. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்
நான் அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அவர்களிடம், 'இணைவைப்பவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு இழைத்த மிகக் கடுமையான துன்பம் எதுவென்று எனக்கு அறிவியுங்கள்!"என்று கேட்டேன். அதற்கு அன்னார் (பின்வருமாறு) கூறினார்கள்: (ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் கஅபாவின் வளாகத்தில் (ஹிஜ்ர் பகுதியில்) தொழுது கொண்டிருந்தபோது, உக்பா இப்னு அபீ முஐத் என்பவன் முன்னோக்கி வந்து, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோளைப் பிடித்து, தன் துணியை அவர்களின் கழுத்தில் போட்டு முறுக்கி (மூச்சுத் திணறும்படி) கடுமையாக நெறித்தான். அப்போது அபூ பக்ர்(ரலி) முன்னால் வந்து, அவனுடைய தோளைப் பிடித்து இழுத்துவிட்டு, (நபியவர்களைத் துன்புறுத்தவிடாமல் தடுத்து,)'என் இறைவன் அல்லாஹ்தான்' என்று சொல்கிறார் என்பதற்காகவா ஒரு மனிதரை நீங்கள்

கொல்கிறீர்கள்? அவரோ உங்களுடைய இறைவனின் சார்பிலிருந்து உங்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்திருக்கிறார்'' (திருக்குர்ஆன் 40:28) என்று கேட்டார்கள்.

## (41) ஹாமீம் அஸ்ஸஜ்தா அத்தியாயம்

(அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
தாவூஸ் (ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 41:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'இஃதியா தவ்அன்' எனும் சொல்லுக்கு '(என் கட்டளைக்கு இணக்கம்) தாருங்கள்' என்று பொருள். அவை இரண்டும் (-வானமும் பூமியும்-) அவ்வாறே (இணக்கம்) தந்தோம் என்று கூறின என இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்.
ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) கூறினார்
ஒருவர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், `எனக்குக் குர்ஆனில் சில (நான்கு) வசனங்கள் முரண்படுவதாகக் தெரிகிறதே!''என்று கேட்டார். அவையாவன:
1. 'பிறகு எக்காளம் (ஸூர்) ஊதப்பட்டதும் அவர்களிடையே எந்த உறவுகளும் அந்நாளில் இருக்காது. ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொள்ளவுமாட்டார்கள்'' என்று (திருக்குர்ஆன் 21:101 வது வசனத்தில்) காணப்படுகிறது. (அதே சமயம்) 'பின்னர் அவர்கள் ஒருவரை ஒருவர் முன்னோக்கிக் கேள்வி கேட்டுக்கொண்டும் இருப்பார்கள்'' என்று (திருக்குர்ஆன் 37:27 வது வசனத்தில்) காணப்படுகிறது.
2. 'அங்கு அவர்கள் தங்களின் எச்செய்தியையும் அல்லாஹ்விடம் மறைத்திட முடியாது'' என்கிறது ஒரு (திருக்குர்ஆன் 04:42) வசனம்.
(அதே சமயம்) 'எங்கள் இறைவனாகிய அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் இணைவைப்போராய் இருக்கவில்லை'' என்று (இணைவைப்பாளர்கள்) கூறுவார்கள்'' என்கிறது மற்றொரு (திருக்குர்ஆன் 06:23) வசனம். இங்கே அவர்கள் (உண்மையை) மறைத்துவிடுகிறார்களே!
3. 'உங்களைப் படைப்பது அதிகச் சிரமமான வேலையா? அல்லது வானத்தைப் படைப்பதா? அல்லாஹ் அதனை நிர்மாணித்தான். அதன் முகட்டை அவன் உயர்த்தினான். பிறகு அதை ஒழுங்குபடுத்தினான். மேலும், அதன் இரவை மூடி, அதன் பகலை வெளிப்படுத்தினான். இதன் பின்னர், பூமியை அவன் விரித்தான்.!''எனும் (திருக்குர்ஆன் 79:27-30) வசனங்கள் பூமியை அல்லாஹ் படைப்பதற்கு முன்னால் வானத்தை நிர்மாணித்ததாகக் குறிப்பிடுகின்றன.

## 41:22 வது திருக்குர்ஆன் வசனம்

(உலகில் நீங்கள் குற்றங்களைச் செய்தபோது) உங்களின் காதுகளும் கண்களும் தோல்களும் உங்களுக்கெதிராகச் சாட்சியம் அளிக்கும் என்பதை அஞ்சிக் கூட (குற்றங்களிலிருந்து) தவிர்ந்து கொள்பவர்களாக நீங்கள் இருக்கவில்லை. மாறாக, நீங்கள் செய்கிற செயல்களில் பெரும்பாலானவற்றை அல்லாஹ்கூட அறியமாட்டான் என்றே நீங்கள் எண்ணிருந்தீர்கள்'' (எனம் 41:22 வது இறைவசனம்).

ஹதீஸ் 4816. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்
(ஒருமுறை) 'குறைஷியரில் இருவரும் அவர்களின் துணைவியரின் உறவினரான ஸகீஃப் குலத்தைச் சேர்ந்த ஒருவரும்' அல்லது 'ஸகீஃப்' குலத்தைச் சேர்ந்த இரண்டு பேரும், குறைஷிக் குலத்தைச் சேர்ந்த இரண்டு பேரும், குறைஷிக் குலத்தைச் சேர்ந்த அவர்களின் மனைவிமார்களின் உறவுக்காரர் ஒருவரும்' (ஆக மூவருமாக) ஒரு வீட்டில் (அமர்ந்து கொண்டு) இருந்தனர். அப்போது அவர்களில் ஒருவர் மற்றவரிடம் 'நம்முடைய பேச்சை அல்லாஹ் கேட்டுக் கொண்டிருக்கிறான் என்று நீங்கள் கருதுகிறீர்களா?' என்று கேட்டார். அவர்களில் ஒருவர், `(நம்முடைய பேச்சுகளில்) சிலவற்றை மட்டும் அவன் கேட்கிறான்'' என்று

பதிலளித்தார். மற்றொருவர்' நம்முடைய பேச்சுகளில் சிலவற்றை அவன் கேட்டுக்கொண்டிருப்பதானால் அனைத்தையும் அவன் கேட்கத்தானே செய்வான்'' என்று கூறினார். அப்போதுதான், '(உலகில் நீங்கள் குற்றங்கள் புரிந்தபோது) உங்கள் காதுகளும் கண்களும் தோல்களும் உங்களுக்கெதிராகச் சாட்சியம் அளிக்கும் என்பதை அஞ்சிக் கூட (குற்றங்களிலிருந்து) தவிர்ந்து கொள்பவர்களாக நீங்கள் இருக்கவில்லை'' எனும் இந்த வசனம் (திருக்குர்ஆன் 41:22) அருளப்பெற்றது.

## 41:23 வது திருக்குர்ஆன் வசனம்

உங்களுடைய இறைவனைப் பற்றி நீங்கள் கொண்டிருந்த உங்களின் இந்த எண்ணமே உங்களை அழிவில் ஆழ்த்திவிட்டது. எனவே, நீங்கள் இழப்புக்குரியவர்களாய் ஆகிவிட்டீர்கள் (என்று அவர்களின் தோல்கள் கூறும் எனும் 41:23 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4817. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

இறையில்லம் (கஅபாவிற்கு) அருகில்' குறைஷியரில் இருவரும் ஸகீஃபியரில் ஒருவரும்' அல்லது' ஸகீஃபியரில் இருவரும் குறைஷியரில் ஒருவரும்' (ஆக மூவர் ஓரிடத்தில்) ஒன்று கூடினர். அவர்களின் வயிறுகளில் கொழுப்பு நிறைய இருந்தது. இதயங்களில் சிந்தனை குறைவாக இருந்தது. அவர்களில் ஒருவர், 'நாம் பேசுவதை அல்லாஹ் கேட்கிறான் என்று நீங்கள் கருதுகிறீர்களா?' என்று கேட்டார். மற்றொருவர், 'நாம் சப்தமாகப் பேசினால் அவன் கேட்கிறான். நாம் இரகசியமாகப் பேசினால் அவன் கேட்பதில்லை' என்று பதிலளித்தார். (அவர்களில்) இன்னும் ஒருவர், 'நாம் சப்தமிட்டுப் பேசும்போது அவன் கேட்பானெனில் நாம் இரகசியமாகப் பேசும் போதும் அவன் கேட்கத்தான் செய்வான்'' என்று கூறினார். அப்போது அல்லாஹ், '(உலகில் நீங்கள் குற்றங்கள் புரிந்தபோது) உங்கள் காதுகளும் கண்களும் தோல்களும் உங்களுக்கெதிராகச் சாட்சியம் அளிக்கும் என்பதை அஞ்சிக் கூட (குற்றங்களிலிருந்து) தவிர்த்து கொள்பவர்களாக நீங்கள் இருக்கவில்லை'' எனும் வசனங்களை (திருக்குர்ஆன் 41:22-24) அருளினான்.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## (42) ஹாமீம் ஐன் சீன் காஃப் (அஷ்ஷூரா) அத்தியாயம்

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் என அறிவிக்கப்படுகிறது:

(திருக்குர்ஆன் 42:50 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அகீம்' எனும் சொல்லுக்குக்'குழந்தை பெற(முடிய)ாத மலடி' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 42:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரூஹம் மின் அம்ரினா' (நம் கட்டளைகளில் உயிரான ஒன்றை) என்பது குர்ஆனைக் குறிக்கிறது.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 42:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யத்ரஉகும் ஃபீஹி' எனும் சொல்லுக்கு'ஒரு சந்ததிக்குப் பின் அடுத்த சந்ததியென (உங்கள் சந்ததிகளைப் பெருகச் செய்கிறான்)' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 42:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தர்ஃபின் கஃபிய்யின்' எனும் சொல்லுக்கு'அற்பமான கடைக்கண் பார்வை' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகின்றனர்:

(திருக்குர்ஆன் 42:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃப யழ்லல்ன ரவாம்த அலா ழுஹ்ரிஹி' என்பதற்கு, 'பிறகு அந்தக் கப்பல்கள் கடலில் செல்ல முடியாமல் (அலையசைவில்) ஆடிக்கொண்டு அப்படியே நின்று போய்விடும்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 42:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷறஊ' எனும் சொல்லுக்கு, 'ஒரு புதிய வழிமுறையை வகுத்துக் கொடுத்தார்கள்'' என்று பொருள்.

## 42:23 வது திருக்குர்ஆன் வசனம்

"உறவினர்களிடம் அன்பு காட்டுவதைத் தவிர, இந்த (இறை)ப் பணிக்காக உங்களிடம் நான் எந்தப் பிரதிபலனையும் கேட்கவில்லை என (நபியே!) கூறுக!"எனும் (திருக்குர்ஆன் 42:23 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4818. தாவூஸ் இப்னு கைஸான் அல்யமானீ (ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், 'உறவினர்களிடம் அன்பு காட்டுவதைத் தவிர' ' எனும் (திருக்குர்ஆன் 42:23 வது) வசனத் தொடர் குறித்துக் கேட்கப்பட்டது. அப்போது (அங்கிருந்த) ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்), '(இந்த வசனத்திலுள்ள) 'உறவினர்கள்' என்பது 'முஹம்மத் (ஸல்) அவர்களின் உறவினர்களை (பனு ஹாஷிமை)க் குறிக்கும்' ' என்று கூறினார்கள். உடனே, இப்னு அப்பாஸ் (ரலி), 'அவசரப்பட்டுவிட்டீர் குறைஷிக் குலத்தின் எல்லாக் கிளையினருக்கும் நபி (ஸல்) அவர்களுடன் உறவு முறை இருக்கத்தான் செய்தது' ' என்று கூறிவிட்டு, 'நபி (ஸல்) அவர்கள், (குறைஷியரின் அனைத்துக் கிளையினரையும் நோக்கி) குறைந்தபட்சம் எனக்கும் உங்களுக்கும் இடையிலுள்ள உறவு முறையைப் பேணி (நல்ல முறையில்) நடந்து கொள்வேண்டுமென்றே பெரிதும் விரும்புகிறேன் என்று கூறினார்கள்' ' என விளக்கமளித்தார்கள்.

## (43) ஹாமீம் அஸ் ஸுக்ருஃப் அத்தியாயம்

முஜாஹித் (ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 43:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அலா உம்மத்தின்' எனும் சொல்லுக்கு 'முன்னோடியாக' என்று பொருள்.

'(இறை மறுப்பாளர்களான) இவர்கள், நாம் அவர்களின் இரகசிய உரையாடல்களையும் ஆலோசனைகளையும் பேச்சுவார்த்தைகளையும் கேட்க முடியாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்களா? என்பதே 'வகீலிஹி யாரப்பி'.. என்று தொடங்கும். (திருக்குர்ஆன் 43:88 வது) வசனத்தின் விளக்கமாகும்.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:

## 43:77 வது திருக்குர்ஆன் வசனம்

"(நரகத்தின் பொறுப்பாளரான வானவர்) மாலிக்கே! உங்களுடைய இறைவன் எங்களுக்கு (மரணத்தின் மூலமாவது) தீர்ப்பளிக்கட்டும்! என்று (நரகவாசிகள்) சப்தமிடுவார்கள். அவர் 'நீங்கள் (இப்படியே) இருக்கப் போகிறீர்கள்' என்று பதிலளிப்பார்' எனும் (திருக்குர்ஆன் 43:77 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4819. யஅலா இப்னு உமைய்யா அத்தமீமி (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள், உரைமேடை (மிம்பர்) மீதிருந்தபடி, '(நரகத்தின் பொறுப்பாளரான வானவர்) மாலிக்கே! உங்களுடைய இறைவன் எங்களுக்கு (மரணத்தின் மூலமாவது) தீர்ப்பளிக்கட்டும்!' என்று (நரகவாசிகள்) சப்தமிடுவார்கள்' ' எனும் (திருக்குர்ஆன் 43:77 வது) வசனத்தை ஓதக் கேட்டேன்.

கத்தாதா (ரஹ்) கூறினார்

(திருக்குர்ஆன் 43:56 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'மஸலன் லில் ஆம்ரீன்' எனும் சொற்றொடருக்குப் 'பிற்கால மக்களுக்கு அறிவுரையாக (ஆக்கினோம்)' என்று பொருள்.

கத்தாதா (ரஹ்) அல்லாதோர் கூறினார்

(திருக்குர்ஆன் 43:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'முக்ரினீன்' எனும் சொல்லுக்குக் 'கட்டுப்படுத்தக் கூடியவர்கள்' என்று பொருள். 'இன்னார் இன்னாரைக் கட்டுப்படுத்தக் கூடியவர்' என்பதைக் குறிக்க 'முக்ரின்' எனும் சொல் ஆளப்படுவதுண்டு.

(திருக்குர்ஆன் 43:71 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்வாப்' எனும் சொல்லுக்குக்'கைப்பிடிகள் இல்லாத கோப்பைகள்' என்று பொருள்.
கத்தாதா(ரஹ்) கூறினார்
(திருக்குர்ஆன் 43:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'உம்முல் கிதாப்' என்பதற்கு'மொத்த ஏடு - மூல ஏடு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 43:81 வது வசனத்தின் பொருளாவது:) ரஹ்மானுக்குக் குழந்தை இல்லை (அவ்வாறு இருப்பதாக யாரும் கூறினால்) கடுமையாக எதிர்ப்பவர்களில் நானே முதல் ஆளாக இருப்பேன்.'ரஜுலுன் ஆபிதுன்' எனும் சொல்லுக்கும், 'ரஜுலுன் அபிதுன்' எனும் சொல்லுக்கும்'வணங்கும் மனிதன்' என்றே பொருள்.
(வகீலிஹீ யா ரப்பீ எனும் 43:88 வது வசனத்தை)'வ காலர் ரஸூலு யாரப்பீ' என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) ஓதியுள்ளார்கள். 3'அபித, 'ய அபது எனும் வினைச் சொற்கள் வழியாக வரும் (ஆபித் எனும் விணையாலணையும் பெயரின் பன்மையான)'ஆபிதின்' என்பதற்கு மறுக்கக் கூடியவர்கள்' என்று பொருள்'' என்றும் கூறப்படுகிறது.
''நீங்கள் வரம்பு மீறிச் சென்றுவிட்டிருக்கிறீர்கள் என்பதற்காக நாம் உங்களின் மீது வெறுப்படைந்து இந்த அறிவுரையை உங்களிடம் அனுப்பாமல் நிறுத்தி விடுவோமா, என்ன?' எனும் (திருக்குர்ஆன் 43:5 வது) வசனத்திலுள்ள'வரம்பு மீறிச் சென்றவர்கள்' என்பதற்கு'இணைவைப்பவர்கள்' என்று பொருள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த (இறுதிச்) சமுதாயத்தின் முன்னோர்கள் (குறைஷியர்) இந்தக் குர்ஆனை நிராகரித்தபோது அது திருப்பி எடுத்துக்கொள்ளப்பட்டிருக்குமானால் இந்தச் சமுதாயமே அழிந்துபோயிருக்கும்.
(திருக்குர்ஆன் 43:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஸலுல் அவ்வலீன்' எனும் சொற்றொடருக்கு, 'முன்பு வாழ்ந்த சமூகங்களின் தண்டனைகள் (முன்னுதாரணங்களாக) வந்து போயிருக்கின்றன' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 43:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜுஸ்ஆ' என்பதற்கு'நிகரானவர்' என்று பொருள்.

## (44) அத்துகான் அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித்(ரஹ்) கூறினார்
(திருக்குர்ஆன் 44:24 வது வசனத்தில் மூலத்திலுள்ள)'ரஹ்வன்' எனும் சொல்லுக்குக்'காய்ந்த வழி' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 44:32 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஆலமீன்' (உலகத்தார்) எனும் சொல் அக்காலத்தில் வாழ்ந்த மக்களைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 44:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபஉத்திலூஹு' எனும் சொல்லுக்கு'அவனை இழுத்துச் செல்லுங்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 44:54 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ ஸவ்வஜ்னாஹும் பி ஹூர்' எனும் சொற்றொடருக்கு, 'அகன்ற விழி கொண்ட அழகிய நங்கையரை அவர்களுக்கு மணமுடித்துக் கொடுப்போம். அவர்களைக் காணும் கண்கள் (அவர்களின் அழகைக் கண்டு) பிரமிக்கும்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 44:20 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தர்ஜுமுன்' எனும் சொல்லுக்கு, 'என்னை நீங்கள் கொல்வது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 44:24 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரஹ்வன்' எனும் சொல்லுக்கு'அசையாததாக' என்றும் பொருளுண்டு.

## 44:10 வது திருக்குர்ஆன் வசனம்

எனவே, வானம் ஒரு வெளிப்படையான புகையைக் கொண்டுவரும் நாளை எதிர்பார்த்திருப்பீராக! (எனும் 44:10 வது இறைவசனம்.)

கத்தாதா(ரஹ்), `(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபர்தம்ப்' எனும் சொல்லுக்கு 'எனவே, எதிர்பார்த்திருப்பீராக' என்று பொருள்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 4820. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), `(மறுமைநாளின் அடையாளங்களில்) ஐந்து அடையாளங்கள் நடந்து(முடிந்து)விட்டன. ஒன்று புகை இரண்டாவது ரோமர்கள் (பாரசீகர்களால் தோற்கடிக்கப்பட்டு மீண்டும் வெற்றி கண்டது) மூன்றாவது சந்திரன் பிளந்தது நான்காவதும், ஐந்தாவதும் இறைவனின் தண்டனைப் பிடியும் அவனுடைய வேதனையும்'' என்று கூறினார்கள்.

## 44:11 வது திருக்குர்ஆன் வசனம்

அ(ந்தப் புகையான)து, மக்களைச் சூழ்ந்து கொள்ளும். இது துன்புறுத்தக்கூடிய வேதனையாகும். (எனும் 44:11 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4821. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

(குறைஷியருக்கு ஏற்பட்ட) இந்தப் பஞ்சத்திற்குக் காரணம், குறைஷியர் நபி(ஸல்) அவர்களுக்கு மாறுசெய்தபோது நபி(ஸல) அவர்கள், `யூசுஃப்(அலை) அவர்களின் காலத்துப் பஞ்சத்தைப் போன்று இவர்களுக்கும் ஏற்படட்டும்' எனக் குறைஷியருக்கு எதிராகப் பிரார்த்தித்தார்கள். அதையடுத்து அவர்களுக்குப் பஞ்சமும் கஷ்டமும் ஏற்பட்டது. எலும்புகளை அவர்கள் சாப்பிடும் அளவிற்கு(ப் பஞ்சம் கடுமையாக இருந்தது.) அவர்களில் ஒருவர் (கடும் பசியினால் கண் பஞ்சடைந்து) களைப்படைந்து தமக்கும் வானத்திற்கும் இடையே புகை போன்ற ஒன்றையே காணலானார். அப்போது அல்லாஹ், `(நபியே!) வெளிப்படையொனதொரு புகை வானிலிருந்து வரும் நாளை நீங்கள் எதிர்பார்த்திருங்கள். அது மனிதர்களைச் சூழ்ந்து கொள்ளும் அது துன்புறுத்தும் வேதனை ஆகும்'' எனும் (திருக்குர்ஆன் 44:10, 11ஆகிய) வசனங்களை அருளினான். அப்போது ஒருவர் (அபூ சுஃப்யான்) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, `இறைத்தூதர் அவர்களே! முளர் குலத்தாருக்கு மழைவேண்டிப் பிரார்த்தியுங்கள். அவர்கள் அழிவுக்குள்ளாம்விட்டார்கள்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `முளர் குலத்தினருக்கா? நீங்கள் துணிவுமிக்கவர் தாம்'' என்று கூறிவிட்டு, (அவர்களுக்காக) மழைவேண்டிப் பிரார்த்தித்தார்கள். உடனே, அவர்களுக்கு வானம் பொழிந்தது. அப்போது, `மெய்யாகவே (நீங்கள் உணர்வு பெறக்கூடுமென்று) அவ்வேதனையை இன்னும் சிறிது காலத்திற்கு நீக்கி வைத்தோம். எனினும், நீங்கள் (பாவத்திற்கே) திரும்பச் செல்கிறீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 44:15 வது) வசனம் அருளப்பட்டது. (பிறகு அவர்களுக்குப் பஞ்சம்விலகி,) வளமான வாழ்வு ஏற்பட்டபோது, பழைய (இணைவைக்கும்) நிலைக்கே திரும்பிச் சென்றனர்.

அப்போது வல்லவனும் மாண்பாளனுமாகிய அல்லாஹ், `மிக பலமாக அவர்களை நாம் பிடிக்கும் நாளில் நிச்சயம் நாம் பழிவாங்கியே தீருவோம்'' எனும் (திருக்குர்ஆன் 44:16 வது) வசனத்தை அருளினான். அந்நாள் பத்ருப்போர் நாளாகும்.

## 44:12 வது திருக்குர்ஆன் வசனம்

“எங்கள் இறைவனே! எங்களைவிட்டு இந்த வேதனையை நீக்கிடுவாயாக! நிச்சயமாக, நாங்கள் நம்பிக்கை கொண்டு விடுகிறோம் (என்று அப்போது கூறுவார்கள்)'' எனும் (திருக்குர்ஆன் 44:12 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4822. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

(ஒருமுறை) நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: நீங்கள் அறியாத ஒன்றைக் குறித்து (கேட்கப்படும்போது,) 'அல்லாஹ்வே நன்கறிவான்'' என்று கூறுவது அறிவின்பாற்பட்டதாகும். ஏனெனில், அல்லாஹ் தன் தூதரிடம், '(நபியே! அவர்களிடம்) நீங்கள் கூறிவிடுங்கள்: இந்த (அழைப்பு)ப் பணிக்காக உங்களிடம் எந்தக் கூலியையும் நான் கேட்கவில்லை. மேலும், நான் (இல்லாததைச் சொல்லி) பவானை செய்வோரில் ஒருவன் அல்லன்'' என்று கூறியுள்ளான். (திருக்குர்ஆன் 38:86). குறைஷியர் நபி(ஸல்) அவர்களிடம் வரம்பு மீறி நடந்து, மாறுசெய்தபோது நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! யூசுஃப்(அலை) அவர்களின் (காலத்து) ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைக் கொடுத்து, இவர்களுக்கெதிராக எனக்கு உதவுவாயாக!''என்று பிரார்த்தித்தார்கள். அவ்வாறே அவர்களைப் பஞ்சம் வாட்டியது. மக்கள் (பசிக்) கொடுமையால் எலும்புகளையும், செத்தவற்றையும் தின்றனர். அவர்களில் ஒருவர் பசி மயக்கத்தால், (கண் பஞ்சடைந்து) தமக்கும் வானத்திற்குமிடையே புகை போன்ற ஒன்றையே காணலானார். அவர்கள் 'எவர்கள் இறைவனே! எங்களைவிட்டு இந்த வேதனையை நீக்கிடுவாயாக! நிச்சயமாக, நாங்கள் நம்பிக்கை கொண்டு விடுகிறோம்'' என்று கூறினர். (திருக்குர்ஆன் 44:12)

அப்போது, (அல்லாஹ்வின் தரப்பிலிருந்து) 'நாம் அவர்களைவிட்டுச் சற்று வேதனையை அகற்றிவிட்டால், அவர்கள் (பழைய இணைவைப்புநிலைக்குத்) திரும்பச் சென்றுவிடுவர்'' என்று கூறப்பட்டது. ஆனாலும், நபி(ஸல்) அவர்கள் (அவர்களுக்காக) தம் இறைவனிடம் பிரார்த்தித்தார்கள். அப்போது அல்லாஹ், அவர்களைவிட்டு (தன்னுடைய வேதனையை) அகற்றினான். உடனே அவர்கள் (பழைய இணைவைக்கும் நிலைக்கே) திரும்பச் சென்றனர். (சத்திய நெறியை ஏற்போம் என்று அவர்கள் செய்து கொடுத்த வாக்குறுதியை விட்டெறிந்தனர்.) எனவே, அல்லாஹ் பத்ருப் போர் நாளில், அவர்களைப் பழிவாங்கினான் இதைத்தான் '(நபியே!) வெளிப்படையானதொரு புகை வானிலிருந்து வரும் நாளை எதிர்பார்த்திருங்கள்'' என்று தொடங்கி, 'நிச்சயம் நாம் பழிவாங்கியே தீருவோம்'' என்று முடியும் (திருக்குர்ஆன் 44:10-16) வசனங்கள் குறிப்பிடுகின்றன.

## 44:13 வது திருக்குர்ஆன் வசனம்

(அந்நேரத்தில்) இவர்கள் உணர்வு பெறுவது எவ்வாறு அவர்களுக்குப் பயனளிக்கும்? (நம்முடைய) வெளிப்படையான தூதர் (முன்பே) அவர்களிடம் வந்திருந்தார் (எனும் 44:13 வது இறைவசனம்).

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள) 'திக்ரா' என்பதற்கும், 'திக்ர்' என்பதற்கும் ('உணர்வு பெறுதல்' என்ற) ஒரே பொருளாகும்.

ஹதீஸ் 4823. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் நான் சென்றேன். (சிறு உரையாடலுக்குப்) பிறகு அவர்கள் கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்மை நம்ப மறுத்துத் தமக்கு மாறுசெய்த குறைஷியருக்கெதிராக, 'இறைவா! யூசுஃப்(அலை) அவர்களின் (காலத்து) ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் ஏழு (பஞ்ச) ஆண்டுகளைக் கொடுத்து, இவர்களுக்கெதிராக எனக்கு உதவுவாயாக!''என்று பிரார்த்தித்தார்கள். அப்போது அவர்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டு, எல்லாவற்றையும் அழித்துவிட்டது. எந்த அளவுக்கென்றால், அவர்கள் (பசியினால்) செத்த பிராணிகளைப் புசிக்கலாயினர். அவர்களில் ஒருவர் பசியினாலும் களைப்பினாலும் எழுந்து (பார்த்தால் கண் பஞ்சடைந்துப் போய்) தமக்கும் வானுக்குமிடையே புகை போன்ற ஒன்றையே காண்பார். பிறகு, '(நபியே!) வெளிப்படையானதொரு புகை வானிலிருந்து வரும் நாளை எதிர்பார்த்திருங்கள்'' என்று தொடங்கி, 'மெய்யாகவே (நீங்கள்

உணர்வு பெறக் கூடுமென்று) அவ்வேதனையை இன்னும் சிறிது காலத்திற்கு நீக்கி வைத்தோம். எனினும், நீங்கள் (பாவத்திற்கே) திரும்பச் செல்கிறீர்கள்‘ ‘ என்று முடியும் (திருக்குர்ஆன் 44:10-15) வசனங்களை இப்னு அப்பாஸ் (ரலி) ஓதினார்கள். பிறகு அன்னார், அவர்கள் ’ மறுமை நாளில் அவர்களைவிட்டு வேதனை அகற்றப்படுமா என்ன?’ என்று கேட்டுவிட்டு, ‘பலமாக பிடிக்கும் நாள்’ என்பது, ‘பத்ருப் போர் தினமாகும்’ என்று (திருக்குர்ஆன் 44:16 வது வசனத்திற்கு விளக்கம்) கூறினார்கள்.

## 44:14 வது திருக்குர்ஆன் வசனம்

பின்னர் அவர்கள் அவரைப் புறக்கணித்தது மட்டுமின்றி, ‘பயிற்றுவிக்கப்பட்ட பைத்தியக்காரர்’ என்றும் கூறினார்கள் (எனும் 44:14 வது இறைவசனம்).

ஹதீஸ் 4824. மஸ்ரூக்பின் அஜ்தஉ (ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார்: அல்லாஹ் முஹம்மத் (ஸல்) அவர்களை (நபியாக) அனுப்பி’ (நபியே!) கூறிவிடுங்கள்: இந்த (அழைப்பு)ப் பணிக்காக உங்களிடம் நான் எந்தப் பிரதிபலனையும் கோரவில்லை. மேலும், நான் (இல்லாததைச் சொல்லி) பாவனை செய்வோரில் ஒருவன் அல்லன்‘ ‘ என்று கூறினான். (திருக்குர்ஆன் 36:86) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , தமக்குக் குறைஷியர் மாறுசெய்ததைக் கண்டபோது ’ இறைவா! யூசு..ப் (அலை) அவர்களின் (காலத்து) ஏழு (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் ஏழு (பஞ்ச) ஆண்டுகளைக் கொடுத்து இவர்களுக்கெதிராக எனக்கு உதவுவாயாக!”என்று பிரார்த்தித்தார்கள். உடனே அவர்களைப் பஞ்சம் வாட்டியது; அனைத்துப் பொருட்களையும் அழித்துவிட்டது. அவர்கள் (பசியினால்) எலும்புகளையும் தோல்களையும் புசிக்க வாட்டியது.
அறிவிப்பாளர்களில் ஒருவர் ’ அவர்கள் தோல்களையும், செத்தவற்றையும் சாப்பிட்டனர்‘ ‘ என்று கூறினார். (அப்போது) பூமியிலிருந்து புகையின் தோற்றத்தைப் போல் வெளியேறத் தொடங்கியது. அப்போது அபூ சு..ப்யான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து ’ முஹம்மதே! உம் சமுதாயத்தினர் அழிந்துவிட்டார்கள். அவர்களைவிட்டும் (பஞ்சம்) விலகப் பிரார்த்தனை புரியுங்கள்!”என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். (பஞ்சமும் அகன்றது.) பிறகு ’ இதற்குப் பின் நீங்கள் (இறைமறுப்புக்கே) திரும்பிவிடுவீர்கள்‘ ‘ என்று கூறினார்கள்.
மன்ஸூர் இப்னு மு..தமிர் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில், ‘பிறகு அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) ’ (நபியே!) வெளிப்படையானதொரு புகை வானிலிருந்து வரும் நாளை எதிர்பார்த்திருங்கள்‘ ‘ என்று தொடங்கித் ’ திரும்பச் செல்கிறீர்கள்‘ ‘ என்று முடியும் (திருக்குர்ஆன் 44:10-15) வசனங்களை ஓதினார்கள்‘ ‘ என்றும், ‘ (அவர்களைவிட்டும்) மறுமையின் வேதனை அகற்றப்படுமா என்ன? புகை, பலமான பிடி, வேதனை ஆகியன நடந்து முடிந்துவிட்டன‘ ‘ என்றும் கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.
அறிவிப்பாளர்களில் ஒருவர் சந்திரன் பிளந்தது பற்றியும், இன்னொருவர் ரோம (பைஸாந்திய)ர்கள் (தோற்கடிக்கப்பட்டு, பிறகு வென்றது) குறித்தும் குறிப்பிட்டுள்ளனர்.

## 44:16 வது திருக்குர்ஆன் வசனம்

மிக பலமாக அவர்களை நாம் பிடிக்கும் நாளில் நிச்சயம் நாம் பழிவாங்கியே தீருவோம் (எனும் 44:16 வது இறைவசனம்).

ஹதீஸ் 4825. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

(மறுமை நாளின் அடையாளங்களில்) ஐந்து அடையாயங்கள் நடந்து (முடிந்து)விட்டன. ஒன்று, (பத்ருப் போரில் எதிரிகளுக்குக் கிடைத்த) தண்டனை இரண்டாவது, ரோமர்கள் (பாரசீகர்களால் தோற்கடிக்கப்பட்டு மீண்டும் வெற்றி கண்டது). மூன்றாவது, இறைவனின் தண்டனைப் பிடி, நான்காவது, சந்திரன் பிளந்தது. ஐந்தாவது, புகை

## (45) அல்ஜாஸியா அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
(திருக்குர்ஆன் 45:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜாஸியா' எனும் சொல்லுக்கு, 'முழந்தாளிட்டு நிம்மதியற்ற நிலையில் இருப்பவர்கள்' என்று பொருள்.
முஜாஹித்(ரஹ்) கூறினார்
(திருக்குர்ஆன் 45:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நஸ்தன்ஸிகு' எனும் சொல்லுக்கு'நாம் பதிவுச் செய்து கொண்டிருந்தோம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 45:34 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'நன்ஸாக்கும்' எனும் சொல்லுக்கு'நாம்உங்களை (நினைக்காது)விட்டுவிடுகிறோம்' என்று பொருள்.

## 45:24 வது திருக்குர்ஆன் வசனம்

காலம் தவிர வேறெதுவும் நம்மை அழிப்பதில்லை என (மறுமையை நம்பாத) அவர்கள் கூறுகிறார்கள் (எனும் 45:24 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4826. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
வல்லமையும் மாண்பும் உடைய அல்லாஹ் சொன்னான்: ஆதமின் மகன் என்னைப் புண்படுத்துகிறான். அவன் காலத்தை ஏசுகிறான். நானே காலம் (படைத்தவன்) என் கையிலேயே அதிகாரம் உள்ளது நானே இரவு பகலை மாறி மாறி வரச் செய்கிறேன்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (46) அல்அஹ்கா.:.ப் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 46:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'து.:.பீளூன்' எனும் சொல்லுக்க'நீங்கள் கூறுவதை' என்று பொருள்.
சிலர் கூறுகின்றனர்: (திருக்குர்ஆன் 46:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸாரத்' எனும் சொல்லுக்கும் (இன்ன பிற ஓதல்களில் வந்துள்ள)'உஸ்ரத்', 'அஸரத்' ஆகிய சொற்களுக்கும்'எஞ்சியுள்ள ஏதேனும் ஞானம்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 46:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பித்அம் மினர் ருசுலி' எனும் சொற்றொடருக்கு'நான் ஒன்றும் முதன் முதலாய் வந்த இறைத்தூதர் அல்லன்' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகின்றனர்.
(திருக்குர்ஆன் 46:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அ ரஅய்த்தும்' (நீங்கள் கவனித்தீர்களா?) என்பதிலுள்ள (வினாப் பொருளைத் தரும்)'அ' எனும் இடைச்சொல், (அல்லாஹ் அல்லாத கற்பனைக் கடவுள்களை வணங்குவது நியாயம் தான் என்று வாதிட்டு வந்த மக்கா நகர இறை மறுப்பாளர்களுக்கு) எச்சரிக்கையாகவே கூறப்பட்டுள்ளது. (மறுப்பாளர்களே!) உங்களின் வாதம் உண்மை என வைத்துக் கொண்டாலும் அந்தக் கடவுள்கள் வணக்கத்திற்குத் தகுதியானவர்கள் அல்லர். (படைத்தவனே வணங்குவதற்குத் தகுதியானவன் ஆவான். படைக்கப்பட்ட பொருள்கள் அல்ல.) என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
'அரஅய்த்தும்' (நீங்கள் கவனித்தீர்களா) என்பதற்கு'நீங்கள் கண்ணால் கண்டீர்களா?' என்பது பொருளன்று. நீங்கள் வணங்கிவரும் அல்லாஹ் அல்லாதவை ஏதேனும் ஒன்றைப் படைத்தன என்பதை நீங்கள் அறிவீர்களா? (நிலைமை இவ்வாறிருக்க, அந்த இயக்கமற்ற கற்பனைக் கடவுள்களை வணங்கிவரும் நீங்கள் அநியாயக்காரர்கள் அல்லவா? உங்களின் இந்தப் பகுத்தறிவற்ற நிலையை நீங்களே யோசித்துப் பார்த்ததுண்டா?)'' என்றே பொருள்.

## 46:17 வது திருக்குர்ஆன் வசனம்

ஒருவன் தன் பெற்றோரிடம்’சீ! உங்களுக்கு என்ன நேர்ந்தது? (நான் இறந்த பின்னர் மண்ணறையிலிருந்து உயிரோடு) வெளிக் கொணரப்படுவேன் என்று என்னை அச்சுறுத்துகிறீர்களா? எனக்கு முன்னர் எத்தனையோ தலைமுறையினர் வாழ்ந்து சென்றுள்ளார்களே! (அவர்களில் எவரும் மண்ணறையிலிருந்து எழுந்து வரவில்லையே)’ என்று கூறுகிறான். பெற்றோர் இருவரும் (மகனுக்காக) அல்லாஹ்வின் உதவியை வேண்டியவர்களாக, `உனக்குக் கேடுதான்! நம்பிக்கை கொள்! அல்லாஹ்வின் வாக்கு உண்மையானது‘` என்று கூறினார்கள். ஆனால், அவனோ’இவையெல்லாம் முன்னோர்களின் கட்டுக்கதைகளேயன்றி வேறில்லை‘` என்று கூறுகிறான் (எனும் 46:17 வது இறைவசனம்).

ஹதீஸ் 4827. யூசுஃப் இப்னு மாஹக்(ரஹ்) அறிவித்தார்

மர்வான் இப்னு அல்ஹகமை ஹிஜாஸ் மாகாணத்தின் ஆளுனராக முஆவியா(ரலி) நியமித்திருந்தார்கள். மர்வான் (ஒரு நாள் மக்களை ஒன்றுகூட்டி,) உரை நிகழ்த்தினார். அப்போது, முஆவியா(ரலி) அவர்களின் புதல்வர் யஸீத் குறித்துப் பேசியவாறு முஆவியாவுக்குப் பின்னர் யஸீதுக்கு வாக்களிப்புப் பிரமாணம் (பைஅத்) செய்ய வேண்டுமெனக் கூறினார். அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) மர்வானுக்கு (மறுப்புக் தெரிவித்து) ஏதோ கூறினார். உடனே மர்வான்’அவரைப் பிடியுங்கள்“! என்று (தம் சிப்பாய்களுக்கு) உத்தரவிட்டார். உடனே, அப்துர் ரஹ்மான்(ரலி) தம் சகோதரி ஆயிஷா(ரலி) அவர்களின் இல்லத்திற்குள் நுழைந்து கொண்டார்கள். எனவே, அவரைப் பிடிக்க அவர்களுக்குத் துணிச்சல் ஏற்படவில்லை. அப்போது மர்வான்’ஒருவன் தன் பெற்றோரிடம்’சீ! உங்களுக்கு என்ன நேர்ந்தது? (நான் இறந்த பின்னர் (மண்ணறையிலிருந்து உயிரோடு) வெளிக் கொணரப்படுவேன் என்று என்னை அச்சுறுத்துகிறீர்களா?..!”எனும் (திருக்குர்ஆன் 46:17 வது) வசனத்தை இவர் (போன்றவர்களின்) விஷயத்தில் தான் அல்லாஹ் அருளினான்‘` என்று கூறினார். அப்போது ஆயிஷா(ரலி) திரைக்கப்பால் இருந்துகொண்டு, `(அபூ பக்ர்(ரலி) அவர்களின் குடும்பத்தினராகிய) எங்களின் விஷயத்தில், என் கற்பொழுக்கத்தை அறிவிக்கும் வசனத்தைத் தவிர, வேறு எந்த வசனத்தையும் குர்ஆனில் அல்லாஹ் அருளவில்லை‘` என்று கூறினார்கள்.

## 46:24 வது திருக்குர்ஆன் வசனம்

“ஆனால், அவர்கள் (தங்களுக்கு அனுப்பப்பட்ட வேதனை) தாங்கள் வசித்து வந்த பள்ளத்தாக்குகளை நோக்கி மேகமாக வருவதைக் கண்டதும், `இது நமக்கு மழையைப் பொழிவிக்கக் கூடிய மேகமாகும்’ என்று கூறினார்கள்.’அப்படியல்ல! மாறாக, நீங்கள் எதற்காக அவசரப்பட்டுக்கொண்டிருந்தீர்களோ அதுதான் இது! இது (புயல்) காற்று! இதில் துன்புறுத்தக் கூடிய வேதனை உண்டு’ (எனக் கூறப்பட்டது)‘` எனும் (திருக்குர்ஆன் 46:24 வது) இறைவசனம்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: (இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)’ஆரிள்’ எனும் சொல்லுக்கு’மேகம்’ என்று பொருள்.

ஹதீஸ் 4828. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களை உள்நாக்குத் தெரியும் அளவிற்குச் சிரிப்பவர்களாகக் கண்டதில்லை. அவர்கள் புன்னகைப்பவர்களாகவே இருந்தார்கள்.

ஹதீஸ் 4829. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

மேகத்தையோ அல்லது (சூறாவளிக்) காற்றையோ கண்டால், நபி(ஸல்) அவர்களின் முகத்தில் (ஒருவிதமான கலக்கத்தின்) ரேகை தென்படும். (ஒருநாள்) நான், `இறைத்தூதர் அவர்களே! மக்கள் மேகத்தைக் காணும்போது அது மழை மேகமாக இருக்கலாம் என்றெண்ணி மகிழ்ச்சியடைகின்றனர். ஆனால், தாங்கள் மேகத்தைக் காணும்போது ஒருவிதமான கலக்கம்

தங்கள் முகத்தில் தென்படக் காண்கிறேனே (ஏன்)?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், `ஆயிஷா! அதில் (அல்லாஹ்வின்) வேதனை இருக்கலாம் என்பதால் என்னால் கலக்கமடையாமல் இருக்க இயலவில்லை. ('ஆத்' எனும்) ஒரு சமூகத்தார் (சூறாவளிக்) காற்றினால் வேதனை செய்யப்பட்டனர். (அந்தச்) சமூகத்தார் (மேகமாக வந்த) அந்த வேதனையைப் பார்த்துவிட்டு, `இது நமக்கு மழையைப் பொழிவிக்கும் மேகம்' என்றே கூறினர்'` என பதிலளித்தார்கள்.

## (47) முஹம்மத் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 47:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அவ்ஸாரஹா' எனும் சொல்லுக்கு'எதிரணியின் பாவங்கள் முற்றுப்பெற்று அல்லாஹ்விற்குக் கீழ்ப்படிந்தவர் தவிர வேறெவரும் எஞ்சாத வரையில்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 47:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ர∴பஹா' எனும் சொல்லுக்கு'எந்த சொர்க்கத்தை அறிமுகப்படுத்தி வைத்திருக்கிறானோ' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 47:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மவ்லல்லதீன ஆமனூ' எனும் சொற்றொடருக்கு'நம்பிக்கையாளர்களுக்கு உதவி புரிந்து பாதுகாப்பவன்'` என்று பொருள்.

(திருக்குர்ஆன் 47:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸமல் அம்ர்' எனும் சொற்றொடருக்குக்'கட்டளை முடிவானது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 47:35 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'∴பலா தஹினூ' எனும் சொல்லுக்கு'எனவே, நீங்கள் பலவீனமடைந்துவிடாதீர்கள்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 47:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அள்∴கானஹும்' எனும் சொல்லுக்கு'அவர்களின் குரோதங்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 47:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆசின்' எனும் சொல்லுக்குச்'சுவை மாறுகின்ற' என்று பொருள். (இதன்படி, `∴கைரி ஆசினின்' என்பதற்குச்'சுவைமாறாத' என்று பொருள் அமையும்).

## 47:22 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், நீங்கள் உங்கள் (இரத்த பந்த) உறவுகளைத் துண்டித்துவிட முனைகிறீர்களா? (எனும் 47:22 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4830. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்புகளைப் படைத்து முடித்தபோது, உறவானது எழுந்து அன்பாளன் அல்லாஹ்வின் அரியாசனத்தின் கால்களில் ஒன்றைப் பற்றி(க் கொண்டு மன்றாடி)யது. அப்போது அல்லாஹ், `என்ன?' என்று கேட்டான். அதற்கு உறவு, `உறவுகளைத் துண்டிப்பதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோரி நிற்கிறேன்'` என்று கூறியது. 'உன்னை (உறவை)ப் பேணி நல்ல முறையில் நடந்து கொள்பவருடன் நானும் நல்லமுறையில் நடந்துகொள்வேன் என்பதும், உன்னைத் துண்டித்துவிடுகிறவரை நானும் துண்டித்து விடுவேன் என்பதும் உனக்குத் திருப்தியளிக்க வில்லையா?' என்று கேட்டான். அதற்கு உறவு, `ஆம் (திருப்தியே) என் இறைவா!"என்று கூறியது. அல்லாஹ்'இது (அவ்வாறுதான்) நடக்கும்'` என்று கூறினான்.

அறிவிப்பாளர் அபூ ஹுரைரா(ரலி), `நீங்கள் விரும்பினால்'(நயவஞ்சகர்களே!) நீங்கள் (போருக்கு வராமல்) பின்வாங்கிக் கொண்டு பூமியில் குழப்பம் விளைவிக்கவும், உங்கள் உறவுகளைத் துண்டிக்கவும் முனைகிறீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 47:22 வது) வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்'` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4831. ஸயீத் இப்னு யஸார்(ரஹ்) அறிவித்தார்
மேற்கண்ட இந்த ஹதீஸை அபூ ஹுரைரா(ரலி) அறிவித்துவிட்டுப் பிறகு, 'நீங்கள் விரும்பினால், '(நயவஞ்சகர்களே!) நீங்கள் (போருக்கு வராமல்) பின்வாங்கிக் கொண்டு பூமியில் குழப்பம் விளைவிக்கவும், உங்கள் உறவுகளைத் துண்டிக்கவும் முனைகிறீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 47:22 வது) இறைவசனத்தை ஓதிக்கொள்ளுங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4832. மேற்சொன்ன இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் அறிவிக்கப்பட்டுளள்து.
(திருக்குர்ஆன் 47:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆசின்' எனும் சொல்லுக்கு'மாறுகின்ற' என்று பொருள்.

## (48) அல்ஃபத்ஹ் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 48:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பூறா' எனும் சொல்லுக்கு'அழிவிற்குள்ளானவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 48:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சீமாஹும் ஃபீ வுஜூஹிஹிம்' (அவர்களின் முகங்களில் உள்ள அடையாளம்) என்பது, முகமலர்ச்சியைக் குறிக்கும் என்று முஜாஹித்(ரஹ்) கூறினார்கள் என ஓர் அறிவிப்பில் காணப்படுகிறது.
மன்ஸூர் இப்னு முஃதமிர்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில், 'அது பணிவைக் குறிக்கும்'' என்று முஜாஹித்(ரஹ்) கூறினார்கள் எனக் காணப்படுகிறது.
(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷத்அஹு' எனும் சொல்லுக்கு, 'அதன் தளிர்' என்று பொருள். 'ஃபஸ்தஃக்லழ' எனும் சொல்லுக்கு'அது பருத்துக் கனமாகிறது' என்று பொருள். 'சூக்' எனும் சொல்லுக்குப்'பயிரைத் தாங்கி நிற்கும் தண்டு' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 48:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தாயிரத்துஸ் ஸவ்ஃ' எனும் சொல்லுக்குத்'தீமையின் சுழற்றி' என்று பெருள். 'ரஜ்லுஸ் ஸவ்ஃ' (தீய மனிதன்) என்று சொல்லப்படுவது போல் இங்கு (தீமையின் சுழற்றி என்று சொல்லப்பட்டுள்ளது)'தீமையின் சுழற்சி' என்பது (இறைவன் அளிக்கும்) வேதனையைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 48:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துஅஸ்ஸிரூஹு' எனும் சொல்லுக்கு, 'நீங்கள் அவருக்கு உதவி புரிவீர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 48:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷத்அஹு' (அதன் தளிர்) என்பது, கதிரின் தளிரைக் குறிக்கும். அந்தக் கதிர் பத்து, அல்லது எட்டு, அல்லது ஏழு தானிய விதையைத் தந்து ஒன்றை மற்றோடொன்று சேர்த்து பலப்படுத்துகிறது. இதைத்தான் அல்லாஹ், 'ஃபஆஸரஹு' (அதனைப் பலப்படுத்தியது) என்று கூறுகிறான். அந்தக் கதிர் ஒன்றே ஒன்றாக இருக்குமானால், ஒரு தண்டின் மீது நிலைத்து நிற்க முடியாது.
இது நபி(ஸல்) அவர்கள் குறித்து அல்லாஹ் கூறியுள்ள உவமையாகும். (இஸ்லாமிய அழைப்புப் பணிக்காக,) நபி(ஸல்) அவர்கள் தன்னந்தனியாக புறப்பட்டார்கள். முளைத்து வரும் தளிரின் மூலம் விதைக்கு வலுவூட்டுவது போல், அவர்களின் தோழர்களின் மூலம் நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் வலுவூட்டினான்.

## 48:01 வது திருக்குர்ஆன் வசனம்

நபியே! நாம் உங்களுக்கு பம்ரங்கமான வெற்றியை அளித்துள்ளோம் (எனும் 48:1 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4833. அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓர் இரவில் பயணம் செய்துகொண்டிருந்தார்கள். உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களும் நபி அவர்களுடன் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது உமர்(ரலி) ஏதோ ஒன்றைக் குறித்து நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை. பிறகு (மீண்டும்) அவர்கள் கேட்டார்கள். அப்போதும் அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் பதிலளிக்கவில்லை. பிறகு (மூன்றாம் முறையாக) உமர் கேட்டார்கள். அப்போதும் நபிகளார் பதிலளிக்கவில்லை. பின்னர் உமர்(ரலி) (தம்மைத் தாமே கடிந்து கொண்டவர்களாக), 'உம்மை உமரின் தாய் இழக்கட்டும்! மூன்று முறை (கேள்வி கேட்டு) அல்லாஹ்வின் தூதரை வற்புறுத்தினாய். அந்த ஒவ்வொரு முறையும் அவர்கள் உனக்கு பதிலளிக்கவில்லையே'' என்று கூறினார்கள்.
மேலும், உமர்(ரலி) கூறினார்: அதற்குப் பிறகு நான் என்னுடைய ஒட்டகத்தைச் செலுத்தி மக்களுக்கு முன்னால் வந்தேன். (அல்லாஹ்வின் தூதரிடம் இப்படி நான் நடந்துகொண்டதற்காக) என் விஷயத்தில் ஏதாவது குர்ஆன் (வசனம்) அருளப்பட்டு விடுமோ என்று நான் அஞ்சினேன். சற்று நேரத்திற்குள் என்னை ஒருவர் சப்தமிட்டு அழைப்பதைக் கேட்டேன். நான் நினைத்த படி என் விஷயத்தில் குர்ஆன் (வசனம்) இறங்கிவிட்டிருக்கும் என அஞ்சினேன் என்று சொல்லிக்கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து அவர்களுக்கு சலாம் சொன்னேன். அப்போது அவர்கள்'இந்த இரவு எனக்கு ஒரு (குர்ஆன்) அத்தியாயம் அருளப்பட்டுள்ளது. சூரியன் எதன் மீது உதயமாகிறதே அ(ந்த உலகத்)தை விட எனக்கு அந்த அத்தியாயம் மிகவும் விருப்பமானதாகும்'' என்று கூறிவிட்டு, 'உங்களுக்கு நாம் பம்ரங்கமான வெற்றியை அளித்துள்ளோம்'' என்று (தொடங்கும் 48:1 வது இறைவசனத்தை) ஓதினார்கள்.

ஹதீஸ் 4834. கத்தாதா இப்னு தீஆமா(ரஹ்) அறிவித்தார்
"(நபியே!) நாம் உங்களுக்கு பம்ரங்கமான வெற்றியை அளித்துள்ளோம்'' எனும் (திருக்குர்ஆன் 48:1 வது) இறைவசனம் ஹுதைபிய்யா உடன் படிக்கையையே குறிக்கிறது'' என்று அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 4835. அப்துல்லாஹ் இப்னு முக..ப்பல்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் மக்காவெற்றி தினத்தில் (தம் ஒட்டகத்தின் மீதமர்ந்தபடி)'அல்..பத்ஹ்' எனும் (48 வது) அத்தியாயத்தைத்'தர்ஜீஉ' செய்து (ஓசை நயத்துடன்) ஓதிக் கொண்டிருந்தார்கள்.
நபி(ஸல்) அவர்கள் ஓதியதைப் போன்று உங்களிடம் நான் ஓதிக்காட்ட நினைத்தால் (அவ்வாறு) நான் செய்திருப்பேன்.

## 48:02 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) உங்களின் முந்தைய பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னிப்பதற்காகவும் அவன் தன்னுடைய அருட்கொடையை உங்களின் மீது நிறைவு செய்து, உங்களுக்கு வேர்வழியைக் காட்டுவதற்காகவும் தான் (அந்த வெற்றியை அவன் வழங்கினான்)'' எனும் (திருக்குர்ஆன் 48:2 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4836. மு..கீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் தம் பாதங்கள் வீங்கும் அளவிற்கு நின்று (அல்லாஹ்வைத்) தொழுதார்கள். அப்போது அவர்களிடம்'தங்களின் முந்தைய பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே! (பிறகு ஏன் நீங்கள் இந்த அளவு சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டும்?)'' என்று கேட்கப்பட்டது. (அதற்கு அவர்கள்,)'நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 4837. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இரவு நேரத்தில் தம் பாதங்கள் வீங்கும் அளவிற்கு நின்று வணங்குவார்கள். எனவே நான், 'ஏன் இப்படிச் செய்கிறீர்கள், இறைத்தூதர் அவர்களே! தங்களின் முந்தைய பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே?' என்று கேட்டேன். அவர்கள், 'நான் நன்றியுள்ள அடியானாக இருக்க விரும்பவேண்டாமா?' என்று கேட்டார்கள். (தம் வாழ்நாளின் கடைசிக் காலத்தில்) நபி(ஸல்) அவர்களின் உடல் சதை போட்டபோது அமர்ந்து தொழுதார்கள். 'ருகூஉ' செய்ய நினைக்கும்போது, எழுந்து (சிறிதுநேரம்) ஓதுவார்கள். பிறகு, 'ருகூஉ' செய்வார்கள்.

## 48:08 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) நிச்சயமாக நாம் உங்களை சான்று வழங்குபவராகவும், நற்செய்தி அறிவிப்பவராகவும், எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பியிருக்கிறோம் (எனும் 48:8 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4838. அப்துல்லாஹ் இப்னு அமர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்

"(நபியே!) நிச்சயமாக நாம் உங்களை (விசுவாசிகளின் விசுவாசம் குறித்து) சான்று பகர்பவராகவும், (அவர்களுக்கு) நற்செய்தி அறிவிப்பவராகவும், (பாவிகளுக்கு அச்சமூட்டி) எச்சரிக்கை செய்பவராகவும் அனுப்பியிருக்கிறோம்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 48:8 வது) குர்ஆன் வசனத்தையே'தவ்ராத்' வேதத்தில் (இறைவன்) பின்வருமாறு கூறினான்:

"நபியே! நிச்சயமாக, நாம் உங்களை சான்று பகர்பவராகவும், நற்செய்தி அறிவிப்பவராகவும், எச்சரிக்கை செய்பவராகவும், எழுத வாசிக்கத் தெரியாத பாமரர்களின் பாதுகாவலராகவும் நாம் அனுப்பியிருக்கிறோம். நீங்கள் என் அடியாரும் என் தூதருமாவீர். தம் காரியங்கள் அனைத்திலும் அல்லாஹ்வையே சார்ந்திருப்பவர் ('முத்தவக்கில்') என்று உங்களுக்கு நான் பெயரிட்டுள்ளேன் (என அவரிடம் கூறுவோம்.)

(என் தூதரான) அவர் கடின சித்தமுடையவராகவோ, முரட்டுத்தனம் கொண்டவராகவோ, கடைவீதியில் கூச்சலிட்டுச் சச்சரவு செய்பராகவோ இருக்கமாட்டார். ஒரு தீமைக்கு இன்னொரு தீமையினால் தீர்வு காணமாட்டார். மாறாக, மன்னித்துவிட்டு விடுவார். வளைந்த சமுதாயத்தை அவர் மூலம் நிமிர்த்தும் வரை அல்லாஹ் அவரின் உயிரைக் கைப்பற்றமாட்டான். மக்கள்'அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை' என்று கூறுவார்கள். (ஓரிறைக் கோட்பாடான) அதன் மூலம் அவர் குருட்டுக் கண்களையும், செவிட்டுக் காதுகளையும், திரையிடப்பட்ட உள்ளங்களையும் திறப்பார்.

## 48:04 வது திருக்குர்ஆன் வசனம்

அவன்தான் இறை நம்பிக்கையாளர்களின் இதயங்களில் அமைதியை அருளினான் (எனும் 48:4 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4839. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

நபித்தோழர்களில் ஒருவர் (குர்ஆன்) ஓதிக் கொண்டிருந்தார். அவரின் குதிரை அவர் வீட்டில் கட்டப்பட்டிருந்தது.

அப்போது அது மிரளத் தொடங்கியது. அவர் வெளியே வந்து பார்த்தபோது, ஒன்றையும் அவர் காணவில்லை. (அப்போதும்) அது மிரண்டு கொண்டிருந்தது. விடிந்தவுடன் அவர் நபி(ஸல்) அவர்களிடம் அந்த விஷயத்தைத் தெரிவித்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்'குர்ஆன் ஓதிய காரணத்தால் இறங்கிய அமைதிதான் அது'' என்று கூறினார்கள்.

## 48:18 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) இறை நம்பிக்கையாளர்கள் உங்களிடம் அந்த மரத்திற்குக் கீழே சத்தியப் பிரமாணம் செய்துகொண்டிருந்தபோது அல்லாஹ் அவர்களைக் குறித்து திருப்தி அடைந்துகொண்டான்'' எனும் (திருக்குர்ஆன் 48:18 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4840. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

ஹுதைபிய்யா நாளில் நாங்கள் ஆயிரத்து நானூறு பேர் இருந்தோம்.

ஹதீஸ் 4841. அந்த மரத்தினடியில் நடைபெற்ற ('பைஅத்துர் ரிள்வான்' எனும்) சத்தியப் பிரமாணத்தில் கலந்துகொண்டவர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல் அல்முஸனீ (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் (பொடிக்கற்களை) இரண்டு விரல்களால் எறிந்து விளையாடும்) 'கத்ஃப்' எனும் கல்சுண்டு விளையாட்டிற்குத் தடைவிதித்தார்கள்.

ஹதீஸ் 4842. உக்பா இப்னு ஸுஹ்பான் (ரஹ்) கூறினார்

குளியலறையில் சிறுநீர் கழிப்பது தொடர்பாக அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல் (ரலி) கூற கேட்டேன். (நபி (ஸல்) அவர்கள் அதற்குத் தடைவிதித்ததாக அன்னார் தெரிவித்தார்கள்.)

ஹதீஸ் 4843. அபூ கிலாபா அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரஹ்) கூறினார்

அந்த மரத் (தடியில் சத்தியப் பிரமாணம் செய்) தவர்களில் ஒருவரான ஸாபித் இப்னு அள்ளஹ்ஹாக் (ரலி) (கூறினார்கள்:)

ஹதீஸ் 4844. ஹுபைப் இப்னு அபீ ஸாபித் (ரஹ்) கூறினார்

நான் அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா (ரஹ்) அவர்களிடம் ('காரிஜிய்யா' எனும் கிளர்ச்சியாளர்கள் குறித்து) கேட்பதற்காகச் சென்றேன். அப்போது அவர்கள் பின் வருமாறு கூறினார்கள்.

நாங்கள் 'ஸிஃப்பீன்' எனுமிடத்தில் இருந்துகொண்டிருந்தோம். அப்போது '(அப்துல்லாஹ் இப்னு அல்கவ்வா' என்றழைக்கப்படும்) ஒருவர், 'அல்லாஹ்வின் வேதத்தின்பால் (தீர்ப்புக்காக) அழைக்கப்படுகிறவர்களை நீங்கள் காணவில்லையா?' என்று கேட்டதற்கு அலீ (ரலி), 'ஆம், (அல்லாஹ்வின் வேதம் கூறுகிற தீர்ப்புப்படி செயல்பட அழைப்புவிடுக்கப் பெற்றால் அதை நான் ஏற்றுக்கொள்வேன்") என்று கூறினார்கள். அப்போது ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் (ரலி) கூறினார்: (இப்போரில் கலந்துகொள்ளாததற்காக யார் மீதும் குற்றம் சாட்டாதீர்கள். மாறாக,) உங்களையே குற்றம் சாட்டிக் கொள்ளுங்கள். நபி (ஸல்) அவர்களுக்கும் இணைவைப்பாளர்களுக்கும் இடையே சமாதான உடன்படிக்கை நடைபெற்ற ஹுதைபியா நாளில் எங்களை பார்த்திருக்கிறேன். அன்று, நாங்கள் போரிடுதல் பொறுத்தமென்று கருதியிருந்தால் போர் புரிந்திருப்போம். (ஆனால், போர் புரியாமல் இணைவைப்பவர்கள் விதித்த பாதகமான நிபந்தனைகளைக் கூட ஏற்றுக் கொண்டோம்.) அப்போது உமர் (ரலி) வந்து, '(அல்லாஹவின் தூதரே!) நாம் சத்தியத்திலும் எதிரிகள் அசத்தியத்திலும்) இல்லையா? (சத்தியத்திற்காகப் போராடி) போரில் கொலையுண்டுவிடும்போது நம் வீரர்கள் சொர்க்கத்திலும் எதிரிகளுடைய வீரர்கள் நரகத்திலும் இருப்பார்கள் இல்லையா?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் 'ஆம்'' என்று பதிலளித்தார்கள். உமர் (ரலி) 'அப்படியிருக்க, நாம் நம்முடைய மார்க்கத்தின் விஷயத்தில் எதற்காகத் தாழ்ந்து போக வேண்டும்? அல்லாஹ் நமக்கும் அவர்களுக்குமிடையில் தீர்ப்பளிக்காமல் இருக்கும் நிலையில் நாம் ஏன் திரும்பிச் செல்ல வேண்டும்?' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் 'கத்தாபின் புதல்வரே! நான் அல்லாஹ்வின் தூதராவேன். என்னை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்க மாட்டான்'' என்று கூறினார்கள்: (முஸ்லிம்களை இழிவுக்குள்ளாக்க நினைக்கும் இணைவைப்பாளர்களின் மீது) உமர் (ரலி) கோபம் கொண்ட நிலையில் திரும்பிச் சென்றார்கள். தாங்கிக் கொள்ள முடியாமல் அவர்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் வந்து 'அபூ பக்ர் அவர்களே! நாம் சத்தியத்திலும் எதிரிகள் அசத்தியத்திலும் இல்லையா?' என்று (நபி (ஸல்) அவர்களிடம் கேட்டது போன்றே) கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர் (ரலி) 'கத்தாபின் புதல்வரே! நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள். அவர்களை அல்லாஹ் ஒருபோதும் வீணாக்கமாட்டான்'' என்று கூறினார்கள். அப்போது 'அல்ஃபத்ஹ்' எனும் (48 வது) அத்தியாயம் இறங்கிற்று.

## (49) அல்ஹுஜுராத் அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 49:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா துக்கத்திமூ' (முந்தாதீர்கள்) எனும் சொல்லுக்குத்'தன்னுடைய தூதரின் நாவால் அல்லாஹ் தீர்ப்பளிப்பதற்கு முன்பாக, முந்திக் கொண்டு நீங்களாகத் தீர்ப்பு வழங்க முற்படாதீர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 49:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இம்தஹன (பரிசோதித்தான்) எனும் சொல்லுக்குத்'தூய்மைப்படுத்தினான்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 49:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா தனாபஸூ' (புனைபெயர் சூட்டாதீர்கள்) என்பது இஸ்லாத்தை ஏற்ற பின்னர், ஒருவரை (அவரின் பழைய) இறைமறுப்பு (மதத்து)டன் இணைத்து அழைப்பதைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 49:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா யலித்கும்' எனும் சொல்லுக்குக்'குறைக்க மாட்டான்' என்று பொருள். (இதன் இறந்த கால வினைச் சொல்லும், 52:21 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றதுமான)'வமா அலத்னாஹும்' எனும் சொல்லுக்கு'அவர்களுக்கு நாம் குறைத்துவிடமாட்டோம்'' என்று பொருள்.

### 49:02 வது திருக்குர்ஆன் வசனம்

“இறைநம்பிக்கையாளர்களே! உங்கள் குரல்களை நபியின் குரலுக்கு மேல் உயர்த்தாதீர்கள். மேலும், ஒருவர் மற்றவரிடம் உரத்த குரலில் பேசுவதைப் போல் நபியிடம் உரத்த குரலில் பேசாதீர்கள். நீங்கள் செய்த செயல்களெல்லாம், நீங்களே உணராத வகையில் வீணாம்விடக் கூடும்'' என்று (திருக்குர்ஆன் 49:2 வது) இறைவசனம்.
(இந்த வசனத்திலுள்ள)'நீங்கள் அறியாத நிலையில்' என்பது (மூலத்திலுள்ள)'லா தஷ்உரூன்' எனும் சொல்லின் பொருளாகும். இதனடிப்படையில் தான்'அஷ்ஷாஇர்' (கவிஞர்) எனும் சொல்லுக்கு'அறிஞர்' என்றும் பொருள் சொல்லப்படுகிறது.

ஹதீஸ் 4845. இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்
(ஒருமுறை) நல்லவர்களான அபூ பக்ர்(ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் அழிவில் சிக்கிக்கொள்ள இருந்தார்கள். பனு தமீம் குலத்தைச் சேர்ந்த பயணக் குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் (தங்களுக்கு ஒரு தலைவரை நியமிக்கும்படி கோரியவர்களாக) வந்தபோது நபி(ஸல்) அவர்களுக்கு அருகில் அவர்கள் இருவரும் குரலை உயர்த்திப் பேசினார்கள். அந்த இருவரில் ஒருவர் (உமர்), பனு முஜாஷிஉ குலத்தவரான அக்ரஃ இப்னு ஹாபிஸ் அவர்களை நோக்கி (அவரைத் தலைவராக நியமிக்கும்படி) சைகை செய்தார். மற்றொருவர் (அபூ பக்ர்), இன்னொருவரை (கஅகாஉ இப்னு மஅபத்) நோக்கி, (அவரைத் தலைவராக நியமிக்கும்படி) சைகை செய்தார்.'அந்த இனனொருவருடைய பெயர் எனக்குத் தெரியாது'' என்று அறிவிப்பாளர்களில் ஒருவரான நாஃபிஉ(ரஹ்) கூறினார்: அப்போது அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) அவர்களிடம், `எனக்க மாறு செய்யவே நீங்கள் விரும்புகிறீர்கள்'' என்று கூறினார்கள். உமர்(ரலி), `தங்களுக்கு மாறு செய்வது என் விருப்பமன்று'' என்று கூறினார்கள். இந்த விவகாரத்தில் அவர்கள் இருவரின் குரல்களும் உயர்ந்தன. அப்போது, `இறைநம்பிக்கையாளர்களே! உங்கள் குரலை நபியின் குரலுக்கு மேல் உயர்த்தாதீர்கள்!"எனும் (திருக்குர்ஆன் 49:2 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.
இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்:
இந்த வசனம் அருளப்பெற்ற பின் உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் இந்த அளவுக்கு மெதுவாகப் பேசுவார்கள் (அவர் என்ன கூறினார் என்பதை) நபி(ஸல்) அவர்கள் அவரிடம் (திரும்ப) விசாரித்தே தெரிந்துகொள்வார்கள்.

இப்னு ஸுபைர்(ரலி) இந்த ஹதீஸில் தம் பாட்டனார் அபூ பக்ர்(ரலி) அவர்களின் பெயரைக் குறிப்பிடவில்லை.

ஹதீஸ் 4846. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(திருக்குர்ஆன் 49:2 வது வசனம் அருளப்பெற்ற நாளிலிருந்து) நபி(ஸல்) அவர்கள் ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களைக் காணவில்லை என்று தேடினார்கள். அப்போது ஒருவர்'அவரைக் குறித்த செய்தியை தங்களுக்காக நான் அறிந்து வருகிறேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார். அவரிடம் அந்த மனிதர் சென்றார். அப்போது அவர் தம் தலையைக் கவிழ்த்தபடி (கவலையோடு) தம் வீட்டில் அமர்ந்துகொண்டிருக்கக் கண்டார். அந்த மனிதர் ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களிடம், 'உங்களுக்கு என்ன ஆயிற்று?' என்று கேட்டதற்கு ஸாபித்(ரலி), '(என்னுடைய நிலை) மோசம் தான். நான் நபி(ஸல்) அவர்களின் குரலுக்கு மேல் என்னுடைய குரலை உயர்த்தி(ப் பேசி) வந்தேன். நான் நரகவாசிகளில் ஒருவன்தான்'' என்று கூறினார். (செய்தியறிந்த) அந்த மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'ஸாபித் இப்னு கைஸ் இப்படி இப்படிக் கூறினார்'' என்று தெரிவித்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான மூஸா இப்னு அனஸ்(ரஹ்) கூறினார்:

அந்த மனிதர் ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களிடம், (இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து,) மகத்தான நற்செய்தியை வாங்கிக்கொண்டு மீண்டும் ஒருமுறை சென்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள்'ஸாபித் இப்னு கைஸ் அவர்களிடம் சென்று'நிச்சயம் நீர் நரகவாசிகளில் ஒருவரல்லர். சொர்க்கவாசிகளில் ஒருவரே' என்று சொல்!"என்று கூறினார்கள்.

## 49:04 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே! உங்கள்) அறைகளுக்கு வெளியே இருந்து உங்களை இரைந்து கூப்பிடுவோரில் பெரும்பாலோர் விவரமில்லாதவர்களே! (எனும் 49:4 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4847. அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களிடம் பனு தமீம் குலத்தைச் சேர்ந்த ஒரு பயணக் குழுவினர் வந்தனர். (தமக்கு ஒரு தலைவரை நியமிக்கும் படி கோரினார்.) அப்போது அபூ பக்ர்(ரலி), '(இறைத்தூதர் அவர்களே!)'கஅகாஉ இப்னு மஅபத்' அவர்களை (பனு தமீம்) குலத்தாருக்குத் தலைவராக நியமனம் செய்யுங்கள்'' என்று (யோசனை) கூறினார்கள். உமர்(ரலி), 'அக்ரஉ இப்னு ஹாபிஸ் அவர்களைத் தலைவராக நியமனம் செய்யுங்கள்!"என்று (யோசனை) கூறினார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) உமர்(ரலி) அவர்களை நோக்கி, 'எனக்கு மாறு செய்வதை' அல்லது'எனக்கு எதிராக மாறு செய்வதையே' நீங்கள் விரும்பினீர்கள்'' என்று கூறினார்கள். அதற்கு உமர்(ரலி), 'உங்களுக்கு எதிராகப் பேசுவது என்னுடைய நோக்கமன்று'' என்று கூறினார்கள். (இது விஷயமாக) அவ்விருவரும் பேசித் தர்க்கித்துக் கொண்டபோது அவர்கள் இருவரின் குரல்களும் உயர்ந்துவிட்டன. இது தொடர்பாகவே'இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதருக்கு முன்பாக (பேசுவதற்கு) நீங்கள் முந்தாதீர்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள். திண்ணமாக, அல்லாஹ் அனைத்தையும் செவியுறுவோனாகவும் அறிபவனாகவும் இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 49:1 வது) இறைவசனம் முழுவதும் இறங்கிற்று. 4

"(நபியே!) நீங்கள் அவர்களை நோக்கி வெளியே வரும்வரையில் அவர்கள் பொறுமையுடன் இருந்திருந்தால் அது அவர்களுக்கே நலமாய் இருந்திருக்கும்'' எனும் (திருக்குர்ஆன் 49:5 வது) வசனத் தொடர்.

## (50) காஃப் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 50:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரஜ்உம் பஈத்' எனும் சொல்லுக்கு'மீண்டும் எழுப்பப்படுவது என்பது (பார) தூரமானது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபுருஜ்' எனும் சொல்லுக்குப்'பிளவுகள்' என்று பொருள். இதன் ஒருமை'ஃபர்ஜ்' என்பதாகும்.
(திருக்குர்ஆன் 50:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மின் ஹப்லில் வரீத்' எனும் சொற்றொடருக்குக்'கழுத்து நரம்பைவிட' என்று பொருள் இவ்வாறு இரண்டு கழுத்து நரம்புகள் உண்டு.
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 50:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மா தன்குஸுல் அர்ளு மின்ஹும்' எனும் சொற்றொடருக்கு, 'அவர்களின் உடலிலுள்ள எலும்புகளை பூமி அந்த அளவு சாப்பிடுகிறது என்பதை நாம் அறிந்துள்ளோம்'' என்று கருத்து.
(திருக்குர்ஆன் 50:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தப்ஸிரா' எனும் சொல்லுக்கு'அகப் பார்வை' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹப்பல் ஹஸீத்' (அறுவடைத் தானியம்) என்பது, மணிக் கோதுமையைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 50:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பாஸிகாத்' எனும் சொல்லுக்கு, 'நீண்ட' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஃபஅயீனா' எனும் சொல்லுக்கு'அது நமக்கு இயலாத காரியமாம்விட்டதா?' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கால கரீனுஹு' (அவனுடைய கூட்டாளி கூறுவான்) என்பது, ஒவ்வொரு மனிதனுடனும் சாட்டப்பட்டுள்ள ஷைத்தானைக் குறிக்கிறது.
(திருக்குர்ஆன் 50:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபனக்கபூ' எனும் சொல்லுக்கு, 'அவர்கள் சுற்றித் திரிந்தார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அவ் அல்கஸ் ஸம்அ' (செவி தாழ்த்திக் கேட்பவன்) என்பதற்கு'வேறு எதைப் பற்றியும் சிந்திக்காமல் மன ஒர்மையுடன் இருப்பவன்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஃப அயீனா' (நாம் இயலாதவர்களாய் இருந்தோமா என்ன') என்பதற்கு, 'உங்களை முதன் முதலாய் படைத்தபோது, அதாவது உங்களின் மூலத்தை படைத்தபோது, நாம் இயலாதவர்களாய் இருந்தோமா என்ன?' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சாயிக்குன் வஷஹீத்' எனும் சொற்றொடருக்கு, 'விரட்டிக்கொண்டு வருபவரும், சாட்சி அளிப்பவருமான இரண்டு வானவர்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷஹீத்' எனும் சொல்லுக்கு'மன ஓர்மையுடன் கவனிப்பவர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 50:38 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லுஃகூப்' எனும் சொல்லுக்குக்'களைப்பு' என்று பொருள்.
முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகிறார்கள்:
(திருக்குர்ஆன் 50:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தல்உன் நளீத்' எனும் சொல்லுக்குக்'குலைகள் ஒன்றன் மேலொன்றாய் அடுக்கடுக்காய்த் தொங்குகின்ற' என்று பொருள். கனிகள் பாளைகளில் இருக்கும்வரை தான் அவற்றுக்கு'நளீத்' என்று கூறப்படும் பாளைகளைவிட்டுக் கனிகள் வெளியேறிவிட்டால் அது'நளீத்' எனும் பெயரைப் பெறாது.

(திருக்குர்ஆன் 50:40 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்பாரஸ் ஸுஜூத்' எனும் வார்த்தையில்'அத்பார்' என அகரத்திலும், (திருக்குர்ஆன் 52:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இத்பாரன்னுஜூம்' என்பதில்'இத்பார்' என இகரத்திலும் தான் ஆஸிம்(ரஹ்) ஓதுவார்கள். சிலர் இரண்டையும் இகரத்திலும் (இத்பார்), இன்னும் சிலர் இரண்டையும் அகரத்திலும் (அத்பார்) ஓதியுள்ளனர்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 50:42 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யவ்முல் குரூஜ்' (வெளிப்படும் நாள்) என்பது மண்ணறைகளிலிருந்து மக்கள் வெயியேறும் நாளைக் குறிக்கும்.

## 50:30 வது திருக்குர்ஆன் வசனம்

'இன்னும் அதிகம் இருக்கிறதா? என்று அது (நரகம்) கேட்கும்'' எனும் (திருக்குர்ஆன் 50:30 வது) வசனத் தொடர்.

ஹதீஸ் 4848. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
(நரகவாசிகள்) நரகத்தில் போடப்படுவார்கள். நரகம், (வயிறு நிரம்பாத காரணத்தால்)'இன்னும் அதிகம் இருக்கிறதா?' என்று கேட்கும். இறுதியில் அல்லாஹ் தன்னுடைய பாதத்தை (அதில்) வைப்பான். அப்போது அது, `போதும்! போதும்!"என்று கூறும்.
என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4849. முஹம்மத் இப்னு சீரின்(ரஹ்) அறிவித்தார்
நரகத்திடம்'உனக்கு வயிறு நிரம்பிவிட்டதா?' என்று கேட்கப்படும். அது, `இன்னும் அதிகம் இருக்கிறதா?' என்று கேட்கும். அப்போது அருள்வளமிக்கவனும், உயர்ந்தோனுமான அல்லாஹ் தன்னுடைய பாதத்தை அதன்மீது வைப்பான். உடனே அது'போதும்! போதும்!"என்று கூறும்.
இதை அபூ ஹுரைரா(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள். (ஆனால், இதன்) அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூ சுஃப்யான் அல்ஹிகியரீ(ரஹ்) பெரும்பாலும்'அபூ ஹுரைரா(ரலி) கூறினார்'' என்றே (மவ்கூஃபாக) அறிவிப்பார்கள்.

ஹதீஸ் 4850. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
சொர்க்கமும் நரகமும் வாக்குவாதம் செய்துகொண்டன. அப்போது நரகம், `பெருமையடிப்பவர்களுக்காகவும் அக்கிரமக்காரர்களுக்காகவும் நான் சொந்தமாக்கப்பட்டுள்ளேன்'' என்று சொன்னது. சொர்க்கம், `எனக்கு என்ன நேர்ந்தோ! மக்களில் பலவீனர்களும் அவர்களில் கீழ்நிலையினருமே (அதிகமாக) என்னுள் நுழைவார்கள்'' என்று கூறியது.
அல்லாஹ் சொர்க்கத்திடம், `நீ என்னுடைய அருள். உன் மூலமே என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு அருள் புரிகிறேன்'' என்று கூறினான். நரகத்திடம்'நீ வேதனை(க்காகத்) தான். உன் மூலமே என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு வேதனை கொடுக்கிறேன்'' என்று கூறினான். அந்த இரண்டில் ஒவ்வொன்றும் வயிறு நிரம்பத் தரப்படும். ஆனால், நரகமோ இறைவன் தன்னுடைய காலை அதன் மீது வைக்கும் வரை வயிறு நிரம்பாது. இறைவன் காலை வைக்கும்போது நரகம்'போதும்! போதும்!"என்று கூறும். அப்போதுதான் அதற்கு வயிறு நிரம்பும். மேலும், (நரகத்திற்கெனப் புதிதாக யாரையும் அல்லாஹ் படைப்பதில்லை மாறாக,) அதில் ஒரு பகுதியை மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும். அல்லாஹ் தன்னுடைய படைப்புகளில் யாருக்கும் அநியாயம் செய்யமாட்டான். ஆனால், வல்லவனும் மாண்புடையோனுமான அல்லாஹ், சொர்க்கத்திற்கென்றே (புதிதாகச்) சிலரைப் படை(த்து அதை நிறை)ப்பான்.

## 50:39 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) சூரியன் உதயமாகும் முன்னரும், மறையும் முன்னரும் உங்களுடைய இறைவனைப் புகழ்ந்து துதியுங்கள் (எனும் (திருக்குர்ஆன் 50:39 வது வசனத் தொடர்.)

ஹதீஸ் 4851. ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

ஓர் இரவில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்துகொண்டிருந்தோம். அப்போது அவர்கள் பதினான்காம் இரவின் முழுநிலவைக் கூர்ந்து நோக்கியபடி, 'இந்த நிலவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பது போல் உங்களுடைய இறைவனையும் காண்பீர்கள். எனவே, சூரியன் உதிக்கும் முன்னரும் சூரியன் மறையும் முன்னரும் தொழும் விஷயத்தில் (தூக்கம் போன்றவற்றால்) நீங்கள் மிகைக்கப்படாதிருக்க இயலுமானால் அதைச் செய்யுங்கள்'' என்று கூறிவிட்டு, 'சூரியன் உதயமாகும் முன்னரும், மறையும் முன்னரும் உங்களுடைய இறைவனைப் புகழ்ந்து துதியுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 50:39 வது) வசனத்தை ஓதினார்கள். 3

ஹதீஸ் 4852. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

எல்லாத் தொழுகைகளுக்குப் பின்பும் (தன்னைத்) துதிக்கும்படி நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் கட்டளையிட்டான். இதுவே 'சுஜூத் செய்து வணங்கி முடித்த பின்பும்..!" எனும் (திருக்குர்ஆன் 50:40 வது) இறை வசனத்தின் கருத்தாகும்.

## (51) அஃத்தாரியாத் அத்தியாயம்

அலீ (ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 51:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அஃத்தாரியாத்' (புழுதியைக் கிளப்பக்கூடியவை) என்பது, காற்றுகளைக் குறிக்கும்.

அலீ (ரலி) அல்லாதோர் கூறுகிறார்கள்:

(இதன் வினைச் சொல்லும் 18:45 வது வசனத்தின் மூலத்திலுள்ளதுமான 'தஃத்ரூஹுர் ரியாஹ்' என்பதற்குக் 'காற்றுகள் சிதறடிக்கும்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'வஃபீ அன்ஃபுஸிக்கும் அஃபலா துப்ஸிரூன்' (உங்களுக்குள்ளேயும் (பல) சான்றுகள் இருக்கின்றன. (அவற்றை) நீங்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டாமா?) என்பதற்கு, 'ஒரேயொரு துவாரத்தின் (வாயின்) வழியாகச் சாப்பிடுகிறாய் குடிக்கிறாய் ஆனால், அது இரண்டு துவாரங்கள் வழியாக (கழிவாகி) வெளியேறிச் செல்கின்றன. (இதை நீ ஆய்வு செய்து பார்க்கவேண்டாமா?)' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:26 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ஃபராஃக்' எனும் சொல்லுக்குப் 'பிறகு அவர் திரும்பிச் சென்றார்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ஃபஸக்கத்' (அவள் தன் முகத்தில் அடித்துக் கொண்டாள்) என்பதற்குத் 'தன் கை விரல்களை நெருக்கமாகச் சேர்த்துக் கொண்டு அதனால் தன் நெற்றியில் அவள் அறைந்து கொண்டாள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:42 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அர்ரமீம்' எனும் சொல், காய்ந்த மிதிபட்டு சிதைந்துபோன சருகைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 51:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ல மூஸிஊன்' எனும் சொல்லுக்கு, 'நாம் அதற்கான சக்தி உடையவராக இருக்கிறோம்' என்று பொருள். இதைப் போன்று (திருக்குர்ஆன் 02:236 வது) வசனத்தின் மூலத்திலுள்ள) 'வஅலல் மூஸிஇ கதருஹு' (செல்வந்தன் அவனுக்குத் தக்க அளவும்) என்பதற்கு 'வசதியுள்ளவன் தன் சக்திக்கேற்பவும்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ஸவ்ஜைனி' (இணை இணையாய்) என்பதன் பொருளாளவது:

'நாம் எல்லாவற்றையும் ஆண் பெண் இணைகளாய்ப் படைத்துள்ளோம். இதைப்போன்றே நிறங்கள் மாறுபட்டிருப்பது, இனிப்பு புளிப்பு (என சுவகைள் மாறுபட்டிருப்பது) ஆகியவனவும் இணைகளே ஆகும்.

(திருக்குர்ஆன் 51:50 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபஸிபிர்ரூ இலல்லாஹ்' (எனவே அல்லாஹ்வின் பக்கம் விரைந்து செல்லுங்கள்) என்பதற்கு, 'அல்லாஹ்விற்கு மாறு செய்வதிலிருந்து (விலகி) அவனுக்குக் கீழ்ப்படிவதன் பக்கம் விரைந்து செல்லுங்கள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:56 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இல்லா லியஉ துபுதூன்' (என்னை அவர்கள் வழிபடவேண்டும் என்பதற்காகவே) என்பதன் கருத்தாவது: ஜின், மனிதன் ஆகிய இரண்டு பிரிவினர்களில் நற்பாக்கியவான்களை நான் படைத்தது, அவர்கள் என் ஏகத்துவத்தை ஏற்று நடப்பதற்காகவே!

(அறிஞர்களில்) சிலர் கூறுகிறார்கள்:

(தன்னுடைய ஏகத்துவத்தை ஏற்று) செயல்படவேண்டும் என்பதற்காகவே அனைவரையும் இறைவன் படைத்தான். ஆனால், சிலர் ஏற்றனர். இன்னும் சிலர் ஏற்கவில்லை.

இந்த வசனத்தில், 'கதரிய்யா' எனும் பிரிவினருக்குச் சாதகமான எந்த ஆதாரமும் இல்லை.

(திருக்குர்ஆன் 51:59 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃதனூப்' எனும் சொல்லுக்கு, (அகராதியில்)'மிகப் பெரிய வாளி' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

'ஃதனூப்' எனும் சொல்லுக்குப் பாதை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:29 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸர்ரத்' எனும் சொல்லுக்கு'சப்தம்' என்று பொருள்.

'அகீம்' எனும் சொல்லுக்குக்'குழந்தை பெற்றெடுக்க முடியாத மலடி' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 51:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஹுபுக்' என்பது, வானத்தின் சமன்பாட்டையும், அதன் ரம்மியமான தோற்றத்தையும் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 51:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகம்ரா' (அறியாமை) எனும் சொல், அவர்கள் வழி கேட்டில் நீடிப்பதைக் குறிக்கும்.

இப்னு அப்பாஸ்(ரலி) அல்லாதோர் கூறுகிறார்கள்:

(திருக்குர்ஆன் 51:53 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அ தவாஸவ்' எனும் சொல்லுக்கு'இவர்கள் அனைவரும் தமக்குள் ஒருமித்த கருத்துக் கொண்டார்களா?' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:34 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முசவ்வமா' எனும் சொல்லுக்கு, 'அடையாளமிடப்பட்ட' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 51:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'குத்தில' எனும் சொல்லுக்கு'சாபத்திற்குள்ளாம்விட்டார்கள்' என்று பொருள்.

## (52) அத்தூர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

கத்தாதா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 52:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஸ்த்தூர்' எனும் சொல்லுக்கு'எழுதப்பட்ட' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 52:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தூர்' எனும் சொல்லுக்கு'சிரியாக்' மொழியில்'மலை' என்று பொருள்.

ஹதீஸ் 4853. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

"நான் நோயுற்றுள்ளேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (ஹஜ்ஜின்போது) நான் முறையிட்டேன். அதற்கு அவர்கள், 'நீ மக்களுக்கப்பாலிருந்து வாகனத்தில் அமர்ந்து (கஅபாவைச்) சுற்றி வருவாயாக!"என்று கூறினார்கள். அவ்வாறே நான் சுற்றி வந்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அத்தூர்' எனும் (52 வது) அத்தியாயத்தை ஓதியவாறு கஅபாவின் ஒரு பக்கத்தில் தொழுதுகொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 4854. ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மஃக்ரிப் தொழுகையில்'அத்தூர்' எனும் (52 வது) அத்தியாயத்தை ஓதக்கேட்டேன். '(படைப்பாளன்) யாருமின்றி தாமாகவே இவர்கள் பிறந்துவிட்டார்களா? அல்லது இவர்கள் தங்களுக்குத் தாங்களே படைப்பாளர்களாய் இருக்கிறார்களா? அல்லது வானங்களையும் பூமியையும் இவர்கள் படைத்துள்ளார்களா? இல்லை (உண்மை என்னவெனில்,) இவர்கள் உறுதியான நம்பிக்கை கொள்வதில்லை. உங்களுடைய இறைவனின் கருவூலங்கள் இவர்களிடம் உள்ளனவா? அல்லது (அவற்றின் மீது) இவர்கள் தாம் ஆதிக்கம் செலுத்துபவர்களா?' எனும் இந்த (திருக்குர்ஆன் 52:35-37ஆகிய) வசனங்களை நபி அவர்கள் ஓதியபோது, என் இதயம் பறந்துவிடுமளவுக்குப் போய்விட்டது.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

"மஃக்ரிப் தொழுகையில் நபி(ஸல்) அவர்கள்'அத்தூர்' அத்தியாயத்தை ஓதினார்கள்'' என்று முஹம்மத் இப்னு ஜுபைர்(ரஹ்) தம் தந்தை (ஜுபைர் இப்னு முத்யிம்)யிடமிருந்து அறிவித்தார்கள்'' என்பதை மட்டுமே ஸுஹ்ரி(ரஹ்) எனக்கு அறிவித்தார்கள். என் நண்பர்கள் எனக்கு அறிவித்த (மீதமுள்ள) கூடுதல் தகவலை நான் ஸுஹ்ரீ அவர்களிடமிருந்து செவியேற்கவில்லை.

## (53) அந்நஜ்ம் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 53:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃதூமிர்ரா' எனும் சொல்லுக்கு'வலிமை வாய்ந்தவர் என்று பொருள்.

(திருக்குர்ஆன் 53:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'காப கவ்சைன்' (வில்லின் இரண்டு முனைகளுக்குச் சமமான அளவு) என்பது, வில்லில் நாண் இருக்கும் இடத்தைக் குறிக்கிறது.

(திருக்குர்ஆன் 53:22 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வ அக்தா' எனும் சொல்லுக்கு'மேலும் தான் கொடுப்பதை நிறுத்திக் கொண்டான்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 53:49 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ரப்புஷ் ஷிஅரா' என்பதிலுள்ள'ஷிஅரா' எனும் சொல், 'மிர்ஸமுல் ஜவ்ஸாஃ' எனும் நட்சத்திரத்தைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 53:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்லஃதீ வஃப்பா' (நிறைவேற்றிய அவர்) என்பது, 'தம் மீது விதியாக்கப்பட்டிருந்த இறையாணைகளை நிறைவேற்றிய இப்ராஹீம்(அலை) அவர்களைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 53:57 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸிஃபத்தில் ஆஸிஃபா' (வரவேண்டிய நேரம் நெருங்கி வந்துவிட்டது) எனும் வாக்கியத்திற்கு'மறுமை நெருங்கிவிட்டது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 53:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சாமிதூன்' எனும் சொல்லுக்கு'ஆடிப்பாடி ஆர்ப்பாட்டம் செய்கிறீர்' என்று பொருள். 'யமன் நாட்டுப் பாடல்களைப் பாடி ஆரவாரம் செய்தனர் என்பதையே இந்த வசனம் குறிப்பிடுகிறது'' என இக்ரிமா(ரஹ்) கூறினார்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 53:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஃபதுமாருனஹு' எனும் சொல்லுக்கு, 'நீங்கள் அவருடன் தர்க்கம் செய்கிறீர்களா?' என்று பொருள். (இதை)'அஃபதம்ரூனஹு' என்று ஓதியவர்கள்'அவரை நீங்கள் ஏற்க மறுக்கிறீர்களா?' என்று பொருள் கொள்கின்றனர்.

(திருக்குர்ஆன் 53:17 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மா ஸாஃகல் பஸர்' (பார்வை விலகிவிடவுமில்லை) என்பதிலுள்ள பார்வை என்பது, முஹம்மத்(ஸல்) அவர்களின் பார்வையைக் குறிக்கும்.'மா தஃகா' எனும் சொல்லுக்கு'அவரின் பார்வை, தான் கண்டதைக் கடந்துவிடவுமில்லை'' என்று பொருள். (அடுத்த அத்தியாயத்தில் 54:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபதமாரவ்' என்னும் சொல்லுக்கு, அவர்கள் (எல்லா எச்சரிக்கையையும்) பொய்யனவை எனக் கருதினர்' என்று பொருள்.

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 53:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஃதா ஹவா' எனும் சொல்லுக்கு'அது மறையும் போது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 53:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஃக்னா வ அக்னா' எனும் வாக்கியத்திற்கு, 'அவனே செல்வத்தை வழங்கித் தன்னிறைவு அடையச் செய்தான்' என்று பொருள்.

ஹதீஸ் 4855. மஸ்ரூக் இப்னு அஜ்த(ரஹ்) அறிவித்தார்

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம்'அன்னையே முஹம்மத்(ஸல்) அவர்கள் தம் இறைவனை (மிஅராஜ் - விண்ணுலகப் பயணத்தின்போது நேரில்) பார்த்தார்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'நீங்கள் சொன்னதைக் கேட்டு என் ரோமம் சிலிர்த்துவிட்டது. மூன்று விஷயங்கள் (பற்றிய உண்மைகள்) உங்களுக்கு எப்படித் தெரியாமல் போயின?) அவற்றை உங்களிடம் தெரிவிக்கிறவர் பொய்யுரைத்துவிட்டார். முஹம்மத்(ஸல்) அவர்கள் தம் இறைவனை (நேரில்) பார்த்தார்கள் என்று உங்களிடம் கூறுகிறவர் பொய் சொல்லிவிட்டார்'' என்று கூறிவிட்டு, பிறகு (தம் கருத்திற்குச் சான்றாக), 'கண் பார்வைகள் அவனை எட்ட முடியாது அவனோ அனைத்தையும் பார்க்கிறான். அவன் நுட்பமானவனும் நன்கறிந்தவனும் ஆவான்'' எனும் (திருக்குர்ஆன் 06:103 வது) வசனத்தையும், 'எந்த மனிதருடனும் அல்லாஹ் நேருக்கு நேர் பேசுவதில்லை. ஆயினும், வஹியின் (வேத அறிவிப்பின்) மூலமோ, திரைக்கு அப்பாலிருந்தோ, ஒரு தூதரை அனுப்பிவைத்துத் தன் அனுமதியின் பேரில் தான் நாடுகிறவற்றை அறிவிக்கச் செய்தோ அல்லாமல் நேரடியாகப் பேசுவதில்லை'' எனும் (திருக்குர்ஆன் 42:51 வது) வசனத்தையும் ஓதினார்கள். மேலும், 'உங்களிடம் முஹம்மது(ஸல்) அவர்கள் நாளை நடப்பவற்றையும் அறிவார்கள்'' என்று சொல்கிறவரும் பொய்யே கூறினார்'' என்று கூறிவிட்டு, பிறகு (தம் கருத்திற்குச் சான்றாக,)'எந்த மனிதனும் நாளை என்ன சம்பாதிக்கப் போகிறான் என்பதை அறிவதில்லை'' எனும் (திருக்குர்ஆன் 31:34 வது) வசனத்தை ஓதினார்கள். மேலும், 'உங்களிடம் முஹம்மத்(ஸல்) அவர்கள் (மக்களுக்கு எடுத்துரைத்துவிடுமாறு பணிக்கப்பட்ட ஒன்றை) மறைத்துவிட்டார்கள்'' என்று சொன்னவரும் பொய்யே கூறினார்'' என்று கூறிவிட்டு, பிறகு (தம் கருத்திற்குச் சான்றாக)'தூதரே! உங்களுடைய இறைவனிடமிருந்து உங்களின் மீது இறக்கி வைக்கப்பட்டவற்றை (மக்களுக்கு) எடுத்துரைத்துவிடுங்கள்..!"(எனும் 5:67 வது) வசனத்தை ஓதினார்கள்.'மாறாக, முஹம்மத்(ஸல்) அவர்கள் (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்களையே அவரின் (நிஜத்) தோற்றத்தில் இரண்டு முறை கண்டார்கள்'' என்று கூறினார்கள்.

## 53:09 வது திருக்குர்ஆன் வசனம்

(வளைந்த) வில்லின் இருமுனைகளுக்கிடையிலான நெருக்கத்தைப் போல், அல்லது அதைவிடச் சமீபமாக (வானவர் ஜிப்ரீலுக்கும் நபிக்கும் இடையிலான நெருக்கம்) இருந்தது (எனும் 53:9 வது இறைவசனம்.)
வில்லில் நாண் இருக்கும் இடத்தை இது குறிக்கும்.

ஹதீஸ் 4856. ஸிர்ரு இப்னு ஹுபைஷ்(ரஹ்) அறிவித்தார்
“(வளைந்த) வில்லின் இரண்டு முனைகளுக்கிடையிலான நெருக்கத்தைப் போல், அல்லது அதைவிடச் சமீபமாக (வானவர் ஜிப்ரீலுக்கும் நபிக்கும் இடையிலான நெருக்கம்) இருந்தது. பிறகு, அல்லாஹ் அவருக்கு (ஜிப்ரீலுக்கு) அறிவித்ததையெல்லாம் அவர் அவனுடைய அடியாருக்கு அறிவித்தார்‘ ‛ எனும் (திருக்குர்ஆன் 53:9, 10) வசனங்களைக் குறித்து இப்னு மஸ்வூத்(ரலி) எங்களுக்குப் பின்வருமாறு தெரிவித்தார்கள்: நபி(ஸல்) அவர்கள், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு அறுநூறு இறக்கைகள் இருக்க (அவரின் நிஜத் தோற்றத்தில்) அவரைப் பார்த்தார்கள்.

## 53:10 வது திருக்குர்ஆன் வசனம்

“பிறகு, அல்லாஹ் அவருக்கு (ஜிப்ரீலுக்கு) அறிவித்ததையெல்லாம் அவர் அவனுடைய அடியாருக்கு அறிவித்தார்‘ ‛ எனும் (திருக்குர்ஆன் 53:10 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4857. அபூ இஸ்ஹாக் அஷ்ஷைபானீ(ரஹ்) அறிவித்தார்
நான் ஸிர்ரு இப்னு ஹுபைஷ்(ரஹ்) அவர்களிடம், ‛(வளைந்த) வில்லின் இரண்டு முனைகளுக்கிடையிலான நெருக்கத்தைப் போல், அல்லது அதைவிடச் சமீபமாக (வானவர் ஜிப்ரீலுக்கும் நபிக்கும் இடையிலான நெருக்கம்) இருந்தது. பிறகு, அல்லாஹ் அவருக்கு (ஜிப்ரீலுக்கு) அறிவித்ததையெல்லாம் அவர் அவனுடைய அடியாருக்கு அறிவித்தார்‘ ‛ எனும் (திருக்குர்ஆன் 53:9, 10) வசனங்கள் குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், ‛ஜிப்ரீல் (அலை) அவர்களை அறு நூறு இறக்கைகள் இருக்க (அவரின் நிஜத் தோற்றத்தில்) முஹம்மத்(ஸல்) அவர்கள் கண்டார்கள்‘ ‛ என்பதே இவ்வசனத்தின் கருத்தாகும் என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) எங்களிடம் தெரிவித்தார்கள்‘ ‛ என்று பதிலளித்தார்கள்.

## 53:18 வது திருக்குர்ஆன் வசனம்

உறுதியாக அவர் தம் இறைவனின் சான்றுகளில் மிகப் பெரியதைக் கண்டார் (எனும் 53:18 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4858. அர்கமா இப்னு கைஸ் அந்நகஈ(ரஹ்) கூறினார்
“உறுதியாக அவர் தம் இறைவனின் சான்றுகளில் மிகப் பெரியதைக் கண்டார்’ எனும் (திருக்குர்ஆன் 53:18 வது) வசனத்தின் கருத்தாவது: அடிவானத்தை அடைத்திருந்த பச்சை விரிப்பு ஒன்றை நபி(ஸல்) அவர்கள் கண்டார்கள்‘ ‛ என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்.

## 53:19 வது திருக்குர்ஆன் வசனங்கள்

(நீங்கள் வழிபட்டுவரும் சிலைகளாகிய)’லாத்’ மற்றும்’உஸ்ஸா’ ஆகியன பற்றி (எப்போதாவது) நீங்கள் சிந்தித்துண்டா? (எனும் 53:19 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4859. அபுல் ஜவ்ஸா அவ்ஸ் இப்னு அப்தில்லாஹ் அர்ரப்ஈ(ரஹ்) கூறினார்
“லாத், உஸ்ஸா..!”எனும் (திருக்குர்ஆன் 53:19 வது) வசனத்திலுள்ள’லாத்’ என்பது, ஹாஜிகளுக்காக மாவு பிசைந்து தந்து கொண்டிருந்த ஒரு மனிதராவார் என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 4860. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:
யார் சத்தியம் செய்யும்போது’லாத்தின் மீது சத்தியமாக! உஸ்ஸாவின் மீது சத்தியமாக! என்று கூறிவிட்டாரோ, அவர் (அதற்குப் பரிகாரமாக)’லா இலாஹ இல்லல்லாஹ் (அல்லாஹ்வைத்

தவிர வேறு இறைவன் இல்லை) என்று சொல்லட்டும்! தம் நண்பரிடம், `வா சூது விளையாடுவோம்‘ ` என்று கூறியவர் (எதையேனும்) தர்மம் செய்யட்டும்.
என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## 54:20 வது திருக்குர்ஆன் வசனங்கள்

மேலும், மூன்றாவதான ′மனாத்′ (எனும் விக்ரகத்தைப்) பற்றியும் (நீங்கள் சிந்தித்ததுண்டா? எனும் 53:20 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4861. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்
நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் (“ஹஜ்ஜில் ஸஃபா மர்வாவுக்கிடையே சுற்றி வராவிட்டாலும் குற்றமில்லைதானே? அப்படித்தானே 02:158 வது இறைவசனம் தெரிவிக்கிறது. தங்கள் கருத்து என்ன?′ என்று) கேட்டேன். அதற்கு அவர்கள், `முஷல்லல் எனும் குன்றில் இருந்து ′மனாத்′ எனும் சிலைக்காக ′இஹ்ராம்′ கட்டியவர்கள் (ஹஜ்ஜில்) ஸஃபாவுக்கும் மர்வாவுக்குமிடையில், சுற்றி வராமலிருந்தார்கள். அப்போதுதான் ′நிச்சயமாக ′ஸஃபா‘, `மர்வா′ (எனும் இரண்டு குன்றுகள்) அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் உள்ளவையாகும்..!″எனும் (திருக்குர்ஆன் 02:158 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்களும் முஸ்லிம்களும் சுற்றி வந்தனர்‘ ` என்று கூறினார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்), `மனாத் என்பது, (மக்காவிலிருந்து மதீனா செல்லும் சாலையில்) ′குதைத்′ எனும் இடத்தில் ′முஷல்லல்′ எனும் குன்றிலிருந்த சிலையாகும்‘ ` என்று கூறினர்கள். ஆயிஷா (ரலி) அவர்களின் இன்னோர் அறிவிப்பில், `இந்த (திருக்குர்ஆன் 02:158 வது) இறைவசனம் அன்சாரிகள் குறித்து அருளப்பட்டது. அன்சாரிகளும், `ஃகஸ்ஸான்′ குலத்தாரும் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளும் முன் ′மனாத்′ சிலைக்காக, இஹ்ராம் கட்டி வந்தனர்′ என்று தொடங்கி, முந்தைய ஹதீஸில் உள்ளது போன்றே காணப்படுகிறது.
ஆயிஷா (ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில், `மக்காவிற்கும் மதீனாவிற்கும் இடையேயிருந்த ′மனாத்′ எனும் சிலைக்காக ′இஹ்ராம்′ கட்டி வந்தவர்களில் சில அன்சாரிகளும் இருந்தனர். அவர்கள் இறைத்தூதர் அவர்களே! மனாத்திற்கு மரியாதை செய்யும் முகமாக நாங்கள் ஸஃபாவுக்கும் மர்வாவுக்குமிடையே சுற்றிவராமலிருந்தோம்... என்று கூறினார்‘ ` எனத் தொடங்கி, முந்தைய ஹதீஸில் உள்ளது போன்றே காணப்படுகிறது.

## 53:62 வது திருக்குர்ஆன் வசனம்

எனவே, அல்லாஹ்விற்கு நீங்கள் சிரவணக்கம் (சஜ்தா) செய்திடுங்கள் அவனையே வழிபடுங்கள் (எனும் 53:62 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4862. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்
நபி (ஸல்) அவர்கள் (53 வது அத்தியாயமான) ′அந்நஜ்கி′ அத்தியாயத்தை ஓதி (ஓதலுக்கான) சிரவணக்கம் (சஜ்தா) செய்தார்கள். அவர்களுடன் இருந்த முஸ்லிம்களும், இணைவைப்பாளர்களும், ஏனைய மக்களும், ஜின்களும் சஜ்தாச் செய்தனர்.
இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.
இப்னு உலைய்யா (ரஹ்) தம் அறிவிப்பில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களை (அவர்கள் அறிவித்ததாக)க் குறிப்பிடவில்லை.

ஹதீஸ் 4863. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்
(ஓதலுக்குரிய) ′சஜ்தா′ அருளப்பெற்ற முதல் அத்தியாயம் ′அந்நஜ்கி′ ஆகும். அதை ஓதியபோது இறைத்தூதர் (ஸல்) அவர்களும் சிரவணக்கம் (சஜ்தா) செய்தார்கள். அவர்களுக்குப் பின்னால் இருந்த அனைவரும் (அவர்களுடன் சேர்ந்து) ′சஜ்தா′ செய்தார்கள். ஒரேயொரு மனிதனைத் தவிர!

அம்மனிதன் ஒரு பிடி மண்ணை எடுத்து (தன் நெற்றிக்குக் கொண்டு சென்று) அதன் மீது சஜ்தாச் செய்ததை கண்டேன். பின்னர் அவன் (பத்ருப் போரின் போது) இறைமறுப்பாளனாகக் கொல்லப்பட்டதை கண்டேன். அவன்தான் உமய்யா இப்னு கலஃப் ஆவான்.

## (54) இக்தரபத்திஸ் ஸாஅத் (அல்கமர்) அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 54:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸ்தமிர்' எனும் சொல்லுக்கு'நிலைத்து நில்லாமல் சென்றுவிடுகின்ற' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 54:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸ்தஜர்' எனும் சொல்லுக்கு'உச்சகட்ட எச்சரிக்கை' என்று பொருள். (திருக்குர்ஆன் 54:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வஸ்துஜிர்' என்பதற்கு, 'இவருக்குப் பைத்தியம் பிடித்து ஆட்டுகிறது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 54:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'துஸுர்' எனும் சொல், மரக்கலத்தின் (ஆணி, கயிறு போன்ற) உதிரிப் பாகங்களைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 54:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லிமன் கான குஃபிர்' எனும் சொற்றொடருக்கு'அவமரியாதை செய்யப்பட்ட அந்த மனிதரின் நிமித்தம் நாம் அளித்த பிரதிபலனாகும் இது' என்று பொருள்.

### 54:12 வது திருக்குர்ஆன் வசனம்

சந்திரன் பிளந்துவிட்டது. ஆனால் (இந்த மக்களின் நிலைமை என்னவெனில், (எந்தச் சான்றினைப் பார்த்தாலும் புறக்கணிக்கிறார்கள் (எனும் 54:12ஆகிய வசனங்களின் தொடர்.)

ஹதீஸ் 4864. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது. (பிளவுண்ட சந்திரனின்) ஒரு துண்டு மலைக்கு மேலேயும் மற்றொரு துண்டு மலைக்குக் கீழேயும் சென்றது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நீங்கள் சாட்சியாக இருங்கள். என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4865. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (மினாவில்) இருந்து கொண்டிருந்தபோது சந்திரன் பிளவுபட்டு இரண்டு துண்டுகளாக மாறிற்று. அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம், 'நீங்கள் சாட்சியாக இருங்கள். நீங்கள் சாட்சியாக இருங்கள்'' என்று (இரண்டு முறை) கூறினார்கள்.

ஹதீஸ் 4866. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் சந்திரன் (இரண்டாகப்) பிளவுபட்டது.

ஹதீஸ் 4867. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

மக்காவாசிகள் (நபி(ஸல்) அவர்களிடம்) ஓர் அற்புதச் சான்றைக் காட்டும்படி கேட்டார்கள். எனவே, சந்திரன் (இரண்டாகப்) பிளவுண்ட நிகழ்ச்சியை (தம் உண்மைக்குச் சான்றாக) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் காட்டினார்கள்.

ஹதீஸ் 4868. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) சந்திரன் இரண்டு துண்டுகளாகப் பிளந்தது.

### 54:14, 15 வது திருக்குர்ஆன் வசனங்கள்

அவமரியாதை செய்யப்பட்டு வந்தவருக்குப் பிரதிபலனாக நம் கண்முன்னே அது (-மரக்கலம்-) மிதந்து சென்று கொண்டிருந்தது. அதனை நாம் (எதிர் காலத்திற்கு) ஒரு சான்றாகவிட்டுவைத்தோம். (இதன் மூலம்) நல்லுணர்வு பெறுவோர் உண்டா? (எனும் 54:14, 15ஆகிய இறைவசனங்கள்.)

“நூஹ் (அலை) அவர்களின் மரக்கலத்தை அல்லாஹ் அப்படியேவிட்டுவைத்தான். அதனை இந்தச் சமுதாயத்தின் முன்னோர்கள் கண்டனர்‘` என்று கத்தாதா (ரஹ்) கூறினார்கள். 5

ஹதீஸ் 4869. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

(குர்ஆனின் 54 வது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ள ’ஃபஹல் மின் (ம்) முத்தம்ர்’ எனும் தொடரைப் பிரபலமான முறைப்படி) ’ஃபஹ்ல் மின் (ம்) முத்தம்ர் (நல்லுணர்வு பெறுவோர் எவரும் உண்டா?) என்றே நபி (ஸல்) அவர்கள் ஓதிவந்தார்கள். (‘முஸ்தம்ர்’ என்றோ, `முஸ்ஸம்ர்’ என்றோ ஓதவில்லை. )

## 54:17, 22, 32 வது திருக்குர்ஆன் வசனங்கள்

(மக்கள்) நல்லுணர்வு பெவறுவதற்காகவே இந்தக் குர்ஆனை நாம் எளிதாக்கியுள்ளோம். எனவே, நல்லுணர்வு பெறுவோர் உண்டா? (எனும் 54:17, 22, 32, 40ஆகிய வசனங்கள். )

“இந்த வசனத்தின் மூலத்திலுள்ள ’யஸ்ஸர்னா’ எனும் சொல்லுக்கு ’இந்தக் குர்ஆனை ஓதுவதை நாம் எளிதாக்கியுள்ளோம்‘` என்று பொருள்‘` என முஜாஹித் (ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 4870. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

(குர்ஆனின் 54 வது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ள ’ஃபஹல் மின் (ம்) முத்தம்ர்’ எனும் தொடரைப் பிரபலமான முறைப்படி) ’ஃஹல் மின் (ம்) முத்தம்ர்’ (நல்லுணர்வு பெறுவோர் எவரும் உண்டா?) என்றே நபி (ஸல்) அவர்கள் ஓதிவந்தார்கள். (‘முஸ்தம்ர்’ என்றோ, `முஸ்ஸம்ர்’ என்றோ ஓதவில்லை.

## 54:20, 21 வது திருக்குர்ஆன் வசனங்கள்

வேரோடு வீழ்ந்த பேரீச்சமரங்களின் அடிப்பாகங்களைப் போல் (அக்காற்று) மனிதர்களைப் பிடுங்கி எறிந்துவிட்டது. (பார்த்தீர்களா?) நான் அனுப்பிய வேதனையும் எச்சரிக்கையும் எப்படி இருந்தன? (எனும் 54:20, 21 ஆகிய வசனங்கள். )

ஹதீஸ் 4871. அபூ இஸ்ஹாக் அஸ்ஸபீஈ (ரஹ்) அறிவித்தார்

ஒருவர் அஸ்வத் இப்னு யஸீத் (ரஹ்) அவர்களிடம் (54 வது) அத்தியாயத்தின் மூலத்திலுள்ள இத்தொடரை) ’ஃபஹல் மின் (ம்) முத்தம்ர்’ என்று ஓத வேண்டுமா? அல்லது ’முஃதக்கிர்’ என்று ஓத வேண்டுமா? என்று கேட்டதற்குவர்கள், `ஃபஹல் மின் முத்தம்ர்’ என்றே அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) ஓதக் கேட்டேன். மேலும், `நபி (ஸல்) அவர்கள், `ஃபஹல் மின் (ம்) முத்தம்ர்’ என ’தால்’ (எனும் எழுத்து) கொண்டே ஓதியதை கேட்டேன் என அப்துல்லாஹ் கூறினார்கள்‘` என்று பதிலளித்தார்கள்.

## 54:31, 32 வது திருக்குர்ஆன் வசனங்கள்

உடனே அவர்கள், மிதிபட்ட காய்ந்த வைக்கோல் போல் ஆகிவிட்டார்கள். (மக்கள்) நல்லுணர்வு பெறுவதற்காகவே இந்தக் குர்ஆனை நாம் எளிதாக்கியுள்ளோம். எனவே, நல்லுணர்வு பெறுவோர் உண்டா? (எனும் 54:31, 32 ஆகிய வசனங்கள்).

ஹதீஸ் 4872. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

(54 வது அத்தியாயத்தின் மூலத்திலுள்ள இத்தொடரை) நபி (ஸல்) அவர்கள் ’ஃபஹல் மின் (ம்) முத்தம்ர்’ என்றே ஓதினார்கள்.

## 54:38, 39 வது திருக்குர்ஆன் வசனங்கள்

அதிகாலையில் ஒரு நிலையான வேதனை அவர்களை வந்தடைந்தது. அப்போது, நான் அனுப்பிய வேதனையையும் எச்சரிக்கையையும் சுவையுங்கள் (என்று நாம் கூறினோம் எனும் 54:38, 39ஆகிய வசனங்கள்).

ஹதீஸ் 4873. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் (54 வது அத்தியாயத்தின் மூலத்திலுள்ள இத்தொடரை) ’ஃபஹல் மின் (ம்) முத்தக்கிர்’ என்றே ஓதினார்கள்.

## 54:51 வது திருக்குர்ஆன் வசனம்

உங்களைப் போன்ற பலரை நாம் அழித்து விட்டிருக்கிறோம். எனவே, (இதிலிருந்து) நல்லுணர்வு பெறுவோர் உண்டா? (எனும் 54:51 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4874. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் முன்னிலையில்'ஃபஹல் மின்(ம்) முஸ்ஸமிர்' என்று நான் ஓதிக்காட்டினேன். அப்போது அவர்கள், 'ஃபஹல் மின்(ம்) முத்தமிர் (என்றே ஓதுக!)'' என்றார்கள்.

## 54:45 வது திருக்குர்ஆன் வசனம்

"அதிவிரைவில் இக்குழுவினர் தோற்கடிக்கப்பட்டுப் புறங்காட்டி ஓடுவார்' எனும் (திருக்குர்ஆன் 54:45 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4875 பத்ருப் போரின்போது கூடாரமொன்றில் இருந்தபடி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , '(இறைவா! எங்களுக்கு வெற்றி அளிப்பதாக நீ கொடுத்துள்ள) உன் உறுதி மொழியையும், வாக்குறுதியையும் (நிறைவேற்றித்தரும்படி) உன்னிடம் கோருகிறேன். இறைவா! (இந்த விசுவாசிகளை அழிக்க) நீ நினைத்தால், உன்னை (மட்டுமே) வழிபடுவோர் (இப்புவியில்) இன்றைக்குப் பிறகு இல்லாமல் போய்விடுவர்'' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி), நபி(ஸல்) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டு, 'போதும்! இறைத்தூதர் அவர்களே! தங்கள் இறைவனிடம் தாங்கள் நிறையவே மன்றாடி விட்டீர்கள்'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் கவசஉடையுடன் எழுந்து, 'இந்த (இறை நிராகரிப்பாளர்) குழுவினர் அதிவிரைவில் தோற்கடிக்கப்பட்டுப் புறங்காட்டி ஓடுவர்'' எனும் (திருக்குர்ஆன் 54:45 வது) வசனத்தை ஓதியபடி அங்கிருந்து வெளியேறினார்கள்.

## 54:46 வது திருக்குர்ஆன் வசனம்

"தவிரவும், மறுமைதான் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட காலமாகும் மறுமை (அவர்களுக்கு) அதிர்ச்சியளிக்கக்கூடியதும் மிகவும் கசப்பானதுமாகும்'' எனும் (திருக்குர்ஆன் 54:46 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'அமர்ரு' (மிகவும் கசப்பானது) எனும் சொல், 'மர்ராரத்' (கசப்பு) எனும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததாகும்.

ஹதீஸ் 4876. யூசுஃப் இப்னு மாஹக்(ரஹ்) அறிவித்தார்

நான் இறைநம்பிக்கையாளர்களின் அன்னையான ஆயிஷா(ரலி) அவர்களுக்கு அருகில் இருந்தேன். அவர்கள், 'நான் விளையாடும் சிறுமியாக இருந்தபோது, மக்காவில் முஹம்மத்(ஸல்) அவர்களுக்கு, 'தவிரவும், மறுமைதான் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட காலமாகும். மறுமை (அவர்களுக்கு) அதிர்ச்சியளிக்கக் கூடியதும் மிகவும் கசப்பானதுமாகும்'' எனும் (திருக்குர்ஆன் 54:46 வது) இறைவசனம் அருளப்பெற்றது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4877. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பத்ருப்போரின்போது தம் கூடாரமென்றில் இருந்தபடி, '(இறைவா! எங்களுக்கு வெற்றியளிப்பதாக நீ கொடுத்துள்ள) உன் உறுதி மொழியையும், உன் வாக்குறுதியையும் (நிறைவேற்றித் தரும்படி) உன்னிடம் கோருகிறேன். இறைவா! (இந்த விசுவாசிகளை அழிக்க) நீ நினைத்தால், உன்னை (மட்டுமே) வழிபடுவோர் இனி ஒருபோதும் (உலகில்) இருக்கப் போவதில்லை'' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்டு, 'போதும்! இறைத்தூதர் அவர்களே! தங்கள் இறைவனிடம் தாங்கள் நிறையவே மன்றாடிவிட்டீர்கள்'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் கவச உடையில் இருந்தார்கள். பிறகு, 'இந்த (இறைநிராகரிப்பாளர்) குழுவினர் அதிவிரைவில் தோற்கடிக்கப்பட்டுப் புறங்காட்டி ஓடுவர்.

தவிரவும், மறுமைதான் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட காலமாகும். மறுமை (அவர்களுக்கு) அதிர்ச்சியளிக்கக் கூடியதும் மிகவும் கசப்பானதுமாகும்'' எனும் (திருக்குர்ஆன் 54:45,46) வசனங்களை ஓதியபடி அங்கிருந்து நபியவர்கள் வெளியேறினார்கள்.

## (55) அர்ரஹ்மான் அத்தியாயம்

## 55:72 வது திருக்குர்ஆன் வசனம்

('அவ்விரு சோலைகள் நீங்கலாக வேறிரு சோலைகளும் (அங்கு) இருக்கும்'' எனும் (திருக்குர்ஆன் 55:62 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4878 இரண்டு சொர்க்கங்கள் உண்டு. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருட்களும் வெள்ளியினால் ஆனவை (வேறு) இரண்டு சொர்க்கங்களும் உண்டு. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருள்களும் பொன்னால் ஆனவையாகும். 'அத்ன்' எனும் சொர்க்கத்தில் இருப்பவர்கள் தங்கள் இறைவனைக் காண்பதற்கு, அவன் மீதுள்ள'பெருமை' எனும் மேலாடை தவிர வேறெந்தத் தடையும் இராது.

என அப்துல்லாஹ் இப்னு கைஸ்(ரலி) அறிவித்தார்.

## 55:72 வது திருக்குர்ஆன் வசனம்

கூடாரங்களி(ன் வடிவிலுள்ள மாளிகைகளி)ல் தங்கவைக்கப்பெற்ற'ஹூர்' எனும் பேரழகிகளும் (அங்கு) இருப்பார்கள் (எனும் 55:72 வது இறைவசனம்).

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(இந்த வசனத்திலுள்ள)'ஹூர்' எனும் சொல்லுக்குக்'கன்னங்கரு விழியாள்'' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'மக்ஸூராத்' எனும் சொல்லுக்குத்'தடுத்து வைக்கப்பட்டவர்கள்' என்று பொருள். அதாவது அவர்கள் தங்களின் பார்வையும், தங்களையும் தங்களின் துணைவர்கள் அல்லாத மற்றவர்களைவிட்டும் தடுத்துப் பாதுகாத்துக்கொள்ளக்கூடிய பெண்கள் தங்கள் துணைவர்கள் அல்லாத வேறு யாரையும் விரும்பாத பெண்கள் என்று பொருள்.

ஹதீஸ் 4879. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

நடுவில் துளையுள்ள முத்தாலான ஒரு கூடாரம் சொர்க்கத்தில் உள்ளது. அதன் அகலம் அறுபது மைல்களாகும். அதன் ஒவ்வொரு மூலையிலும் (இறைநம்பிக்கையாளருக்கு) துணைவியர் இருப்பார்கள். ஒரு மூலையிலுள்ள துணைவியை மற்ற மூலையிலுள்ள துணைவி பார்க்க முடியாது. இறைநம்பிக்கையாளர்கள் அவர்களைச் சுற்றிவருவர்.

ஹதீஸ் 4880. மேலும், இரண்டு சொர்க்கங்கள் உள்ளன. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருட்களும் வெள்ளியால் ஆனவை. (வேறு) இரண்டு சொர்க்கங்கள் உள்ளன. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருட்களும் தங்கத்தினால் ஆனவை.'அத்ன்' எனும் சொர்க்கத்தில் இருப்பவர்கள், தங்கள் இறைவனைக் காண்பதற்கு, அவன் மீதுள்ள'பெருமை' எனும் மேலாடை தவிர வேறெந்தத் தடையும் இராது.

என அப்துல்லாஹ் இப்னு கைஸ் (அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

## 56. அல்வாகிஆ அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

## “(படர்ந்து விரிந்த) நீண்ட நிழலில் அவர்கள் இருப்பார்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 56:30 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4881. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
சொர்க்கத்தில் ஒரு மரம் இருக்கிறது. அதன் நிழலில் (மிக வேகமாகப்) பயணிப்பவர் (அதில்) நூறாண்டுகள் (பயணித்தபடி சென்று கொண்டேயிருப்பார். ஆனால், அவரால் அதைக் கடக்க முடியாது. (அந்த அளவிற்கு அது பெரிய மரமாகும்.) நீங்கள் விரும்பினால், `(படர்ந்து விரிந்த) நீண்ட நிழலிலும் அவர்கள் இருப்பார்கள்‘` எனும் (திருக்குர்ஆன் 56:30 வது) வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (57) அல்ஹதீத் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 57:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அழ்ழாஹிருண்டு வல்பாத்தின்' (வெளிப்படையானவனும் மறைவானவனும்) எனும் சொற்றொடருக்கு'அவனுடைய இருப்பைப் பற்றிய அறிவு எல்லாப் பொருட்களிலும் வெளிப்படையாக உண்டு அவனுடைய உள்ளமை பற்றிய அறிவு அனைவருக்கும் மறைவானது‘` என்று பொருள்.
(திருக்குர்ஆன் 57:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அன்ழிரூனா' எனும் சொல்லுக்கு'எங்களை எதிர் பாருங்கள்' என்று பொருள்.
(58)'அல்முஜாதலா' அத்தியாயம்.
(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 58:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஹாத்தூன' எனும் சொல்லுக்கு'மோதுகிறவர்கள்' என்று பொருள்.'குபித்தூ' எனும் சொல்லுக்கு'இழிவுக்கு ஆளாக்கப்படுவார்கள்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 58:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இஸ்தஹ்வத' எனும் சொல்லுக்கு'ஆதிக்கம் செலத்தி வென்றுவிட்டான்' என்று பொருள்.

## (59) அல்ஹஷ்ர் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 59:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்ஜலாஃ' (நாடு கடத்தல்) எனும் சொல்லுக்கு'ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு வெளியேற்றுதல்' என்று பொருள்.

ஹதீஸ் 4882. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்
நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்'அத்தவ்பா' எனும் (9 வது) அத்தியாயம் தொடர்பாகக் கேட்டேன். அவர்கள், `அது (நயவஞ்சகர்களை) அம்பலப்படுத்தக்கூடிய அத்தியாயமாகும். அவர்களில் இத்தகையோர் உள்ளனர் அவர்களில் இத்தகையோர் உள்ளனர் என (நயவஞ்சகர்களிலுள்ள எல்லாப் பிரிவினரையும் இனங்காட்டி) இவ்வத்தியாயம் இறங்கிக் கொண்டேயிருந்தது. எந்த அளவுக்கென்றால், தங்களில் ஒருவரைக் கூடவிட்டுவைக்காமல் (அனைவரையும்) இது குறிப்பிட்டுவிட்டது என (நயவஞ்சகர்கள்) எண்ணினார்கள்‘` என்று கூறினார்கள்.
நான் அவர்களிடம் , `அல் அன்ஃபால்' எனும் (8 வது) அத்தியாயம் குறித்துக் கேட்டேன். அவர்கள், `பத்ருப்போர் குறித்து அது அருளப்பெற்றது‘` என்று பதிலளித்தார்கள். நான்'அல்ஹஷ்ர்' என்று பதிலளித்தார்கள். நான்'அல்ஹஷ்ர்' எனும் (59 வது) அத்தியாயம்

குறித்துக் கேட்டேன். அவர்கள், `பனூநளீர் குலத்தார் குறித்து அருளப் பெற்றது‘` என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4883. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (59 வது அத்தியாயத்தின் பெயரை)'அல்ஹஷ்ர்' அத்தியாயம் எனக் குறிப்பிட்டேன். அவர்கள்'அந்நளீர்' அத்தியாயம் என்று கூறுங்கள் என்றார்கள்.

## 59:05 வது திருக்குர்ஆன் வசனம்

“நீங்கள் சில பேரீச்சமரங்களை வெட்டியது.!”எனும் (திருக்குர்ஆன் 59:5 வது) வசனத் தொடர்.

(இந்த வசனத்திலுள்ள மூலத்திலுள்ள)'லீனத்' எனும் சொல்'அஜ்வா' (எனும் அடர்த்தியான பேரீச்ச மரம்) மற்றும்'பர்னீ' (எனும் சிவப்பு - மஞ்சள் நிற பேரீச்ச) அல்லாத (மலிவான) பேரீச்ச மரத்தைக் குறிக்கும்.

ஹதீஸ் 4884. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'புவைரா' எனுமிடத்திலிருந்து'பனு நளீர்' குலத்தாருடைய சில பேரீச்ச மரங்களை (அவர்களின் தேசத் துரோகக் கொடுஞ் செயல்களுக்காக) எரித்தார்கள். இன்னும், (சிலவற்றை) வெட்டினார்கள். அப்போது அல்லாஹ், `நீங்கள் சில பேரீச்ச மரங்களை வெட்டியதோ, அவற்றின் அடி மரங்களின் மீது அவற்றை நிற்கும்படிவிட்டுவிட்டதோ எல்லாமே அல்லாஹ்வின் அனுமதியுடன் தான் நடந்தன. அல்லாஹ் தீயவர்களை இழிவிலும் கேவலத்திலும் ஆழ்த்திவிடுவதற்காகவே (இந்த அனுமதியை அளித்தான்)‘` எனும் (திருக்குர்ஆன் 59:5 வது) வசனத்தை அருளினான்.

## 59:06 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் எச்செல்வத்தை அவர்களிடமிருந்து (விடுவித்து,) தன் தூதரின் பக்கம் திருப்பிக் கொடுத்தானோ (என்று தொடங்கும் 59:6 வது இறைவசனம்).

ஹதீஸ் 4885. உமர்(ரலி) அறிவித்தார்

பனூநளீர் குலத்தாரின் செல்வங்கள் அல்லாஹ் தன் தூதருக்கு அளித்தவையாகும். அதைப் பெறுவதற்காக முஸ்லிம்கள் (தங்களின்) குதிரைகளையோ, ஒட்டகங்களையோ செலுத்திப் போரிட்டிருக்கவில்லை. எனவே, அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மட்டுமே உரியனவாக இருந்தன. அவற்றிலிருந்து நபியவர்கள் தம் ஆண்டுச் செலவுக்காகத் தம் வீட்டாருக்குக் கொடுத்து வந்தார்கள். பிறகு, மீதமானவற்றை இறைவழியில் (போரிடுவதற்கான) ஆயத்தப் பொருள்கள் வாங்க, ஆயுதங்களுக்காகவும் குதிரைகளுக்காகவும் செலவிட்டு வந்தார்கள்.

## 59:07 வது திருக்குர்ஆன் வசனம்

“இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுத்தாரோ அதைப் பெற்றுக்கொள்ளுங்கள்‘` (எனும் 59:7 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4886. அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), `பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றக் கேட்டுக் கொள்ளும் பெண்கள், அழகிற்காக அரத்தால் தேய்த்து, தம் முன் பற்களைப் பிரித்துக் கொள்ளும் பெண்கள், (ஆக) அல்லாஹ் தந்த உருவத்தை மாற்றிக்கொள்ள முயலும் பெண்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்?' என்று கூறினார்கள். இச்செய்தி பனு அசத் குலத்தைச் சேர்ந்த, `உம்மு யஅகூப்' எனப்படும். ஒரு பெண்மணிக்கு எட்டியது. அந்தப் பெண் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் வந்து, `இப்படிப்பட்ட பெண்களை நீங்கள் சபித்ததாக எனக்குச் செய்தி கிடைத்துள்ளதே என்றார். அதற்கு அப்துல்லாஹ் இப்னு

மஸ்வூத் (ரலி), `இறைத்தூதர் (ஸல்) அவர்கள் யாரைச் சபித்தார்களோ அவர்களையும், அல்லாஹ்வின் வேதத்தில் சபிக்கப்பட்டு உள்ளவர்களையும் நான் ஏன் சபிக்கக்கூடாது?' என்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பெண், `(குர்ஆன் பிரதியில்) இரண்டு அட்டைகளுக்கிடையிலுள்ள அனைத்தையும் நான் ஓதியுள்ளேன். நீங்கள் குறிப்பிட்டதை நான் அதில் காணவில்லையே!" என்று கேட்டதற்கு அவர்கள், `நீ குர்ஆனை (ச் சரியாக) ஓதியிருந்தால் அதில் நான் கூறியதைக் கண்டிருப்பாய். 'இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுத்தாரோ, அதைப் பெற்றுக்கொள்ளுங்கள். அவர் உங்களைத் தடுப்பதைவிட்டும் நீங்கள் விலகி இருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 59:7 வது) வசனத்தை நீ ஓதவில்லையா?' என்று கேட்டார்கள். அந்தப் பெண், `ஆம் (ஓதினேன்)'' என்று பதிலளித்தார். அப்துல்லாஹ் (ரலி), `நபி (ஸல்) அவர்கள் (மேலே குறிப்பிட்ட) இவற்றைச் செய்ய வேண்டாமெனத் தடுத்துள்ளார்கள்'' என்று கூறினார்கள். அந்தப் பெண்மணி, `உங்கள் துணைவியார் இதைச் செய்வதாக கருதுகிறேன்'' என்று கூறினார். அப்துல்லாஹ் (ரலி), `சரி, நீ சென்று, (என் மனைவியைப்) பார்!" என்று கூறினார்கள். எனவே, அந்தப் பெண் சென்று பார்த்தார். தம் எண்ணப்படி எதையும் அவர் காணவில்லை. அப்போது அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி), `என் மனைவி (மட்டும்) அப்படிச் செய்பவளாக இருந்தால், அவளுடன் நான் சேர்ந்து வாழமாட்டேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4887. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்

ஒட்டுமுடி (முடியாலான சவுரி) வைத்துக் கொள்ளும் பெண்களை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ் (ரஹ்) கூறினார்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடமிருந்து உம்மு யஅகூப் எனும் பெண்மணி அறிவித்த இந்த ஹதீஸை நானும் கேள்விப்பட்டுள்ளேன்.

## 59:09 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், (அச்செல்வம்) இந்த முஹாஜிர்களின் வருகைக்கு முன்பே நம்பிக்கை கொண்டு, ஹிஜ்ரத் பூமியில் (மதீனாவில்) வாழ்ந்து கொண்டிருந்தவர்களுக்கும் (உரியதாகும் என்று தொடங்கும் 59:9 வது இறைவசனம்.

ஹதீஸ் 4888. அம்ர் இப்னு மைமூன் (ரஹ்) அறிவித்தார்

('அபூ லுஃலுஆ ஃபைரோஸ்' என்பவனால் கத்தியால் குத்தப்பட்ட பிறகு) உமர் (ரலி), `(இஸ்லாத்தில்) முன்னவர்களான முஹாஜிர்களின் உரிமைகளை அறிந்து (அவர்களின் கண்ணியத்தைக் காத்துக்) கொள்ளவேண்டும் என்று (எனக்குப் பின்னர் வரவிருக்கும்) 'கலீஃபா'வுக்கு நான் இறுதி உபதேசம் செய்கிறேன். மேலும், நபி (ஸல்) அவர்கள் (மற்றும் நபித்தோழர்கள்) 'ஹிஜ்ரத்' செய்து வருவதற்கு முன்பே ஹிஜ்ரத் நாட்டை (மதீனாவை) தம் இருப்பிடமாகக் கொண்டு இறைநம்பிக்கையை (உறுதியாகப்) பற்றிக் கொண்ட அன்சாரிகளில் நன்மை புரிபவரிடமிருந்து (அவரின் நன்மையை) ஏற்று, அவர்களில் தவறிழைப்பவரை மன்னித்திட வேண்டும் என்று நான் அந்த கலீஃபாவுக்கு உபதேசம் செய்கிறேன்'' என்றார்கள்.

## "மேலும், தமக்கே தேவையிருந்தும் கூட தம்மைவிடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குவார்கள்' எனும் (திருக்குர்ஆன் 59:9 வது) வசனத்தொடர்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள) 'கஸாஸா' (தேவை) எனும் சொல்லுக்கு 'வறுமை' என்று பொருள்.

‘முஃப்லிஹூன்’ (வெற்றியாளர்கள்) எனும் சொல்லுக்கு, நிரந்தர வெற்றியாளர்கள்’ என்று பொருள். (இதன் வேர்ச் சொல்லான)’ஃபலாஹ்’ என்பதற்கு, `நிரந்தர வாழ்க்கை’ என்று பொருள். (தொழுகை அழைப்பில் இடம் பெற்றுள்ள)’ஹய்ய அலல் ஃபலாஹ்’ என்பதற்கு’நிரந்தரத்தை நோக்கி விரைந்து வாருங்கள்’ என்று பொருள்.
ஹஸன் அல்பஸரீ (ரஹ்), `(இதே வசனத்தின் தொடக்கத்தில் இடம் பெற்றுள்ள)’ஹாஜத்’ (தேவை) எனும் சொல்லுக்கு’பொறாமை’ என்று பொருள்‘` எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 4889. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

ஒருவர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து எனக்கு (தாங்க முடியாத பசித்) துன்பம் ஏற்பட்டுள்ளது, இறைத்தூதர் அவர்களே!”என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரிடம் ஆளனுப்பி (அவர்களிடம் உணவு ஏதேனும் இருக்கிறதா என்று கேட்டு வரச்சொன்)னார்கள். அவர்களிடம் ஏதும் இருக்கவில்லை. அப்போது, `இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (தம் தோழர்களை நோக்கி), `இன்றிரவு இவருக்கு விருந்தளிக்கும் ஆள் உண்டா? அவருக்கு அல்லாஹ் அருள் புரிவான்‘` என்று கேட்டார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், `நான் (இவருக்கு விருந்தளிக்கிறேன்), இறைத்தூதர் அவர்களே!”என்று சொல்லி (அவரை அழைத்துக் கொண்டு) தம் வீட்டாரிடம் சென்று தம் துணைவியாரை நோக்கி, `(இவர்) இறைத்தூதர் (ஸல்) அவர்களின் விருந்தாளி. (இவருக்குத் தராமல்) எதனையும் நீ (உன்னிடமே) சேமித்து வைத்துக்கொள்ளாதே!”என்று கூறினார்.
அதற்கு அவர் மனைவி, `அல்லாஹ்வின் மீதாணையாக! நம் குழந்தைகளின் உணவைத் தவிர என்னிடம் வேறெதுவுமில்லை‘` என்று பதிலளித்தார். அவர், `(நம்) குழந்தைகள் உணவு உண்ண விரும்பினால் அவர்களை (எப்படியாவது சமாதானப்படுத்தி) தூங்கச் செய்துவிடு! பிறகு நீ வந்து, (வீட்டிலிருக்கும் உணவைத் தயாராக எடுத்து வைத்துவிட்டு, விளக்கை ஏற்றிவிடுவது போல் பாவனை செய்து) விளக்கை அணைத்துவிடு! (இருப்பதை விருந்தாளிக்குக் கொடுத்துவிட்டு) இன்றிரவு நாம் வயிற்றைச் சுருக்கிக் கொள்வோம்‘` என்று கூறினார். அவ்வாறே அவர் (மனைவி) செய்தார். பிறகு, (விருந்தளித்த) அம்மனிதர் காலையில் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , `இன்னார் இன்னாரை (உங்கள் இருவரை)க் கண்டு மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ்’வியப்படைந்தான்’ அல்லது (மகிழ்ச்சியால்)’சிரித்துக்கொண்டான்‘` என்று கூறினார்கள். அப்போது மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ், `தமக்கே தேவை இருந்தும கூட தம்மைவிடப் பிறருக்கே அவர்கள் முன்னுரிமை வழங்குகிறார்கள்.“. எனும் (திருக்குர்ஆன் 59:9 வது) வசனத்தை அருளினான். 8
(60)’அல்மும்தஹினா’ அத்தியாயம்1
(திருக்குர்ஆன் 60:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’லா தஜ்அல்னா ஃபித்னா’ (எங்களை ஒரு சோதனையாக ஆக்கிவிடாதே) என்பதற்கு, `இறைமறுப்பாளர்களின் கரங்களால் எங்களை வேதனை செய்து விடாதே! அப்போது அவர்கள், `உண்மையில் இந்த முஸ்லிம்கள் சத்தியத்தின் மீதிருந்திருந்தால் அவர்களுக்கு இத்துன்பம் நேர்ந்திராது‘` என்று கூறி (தங்களின் தவறான வழியில் தொடர்ந்து இருந்து) விடுவார்கள். (இதனால் நாங்கள் அவர்களுக்கு ஒரு சோதனையாகிவிடுவோம். அப்படி ஆக்கிவிடாதே) என்று பொருள்.

## (இறை நம்பிக்கையாளர்களே!) எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாய் இருப்பவர்களை நண்பர்களாக்கிக்கொள்ளாதீர்கள் (எனும் 60:1 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 4890. அலீ (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (குதிரை வீரர்களான) என்னையும், ஸுபைர் இப்னு அவ்வாம் அவர்களையும், மிக்தாத் இப்னு அஸ்வத் அவர்களையும்’நீங்கள்’ரவ்ளத்துகாக்’ எனுமிடம்

வரை செல்லுங்கள். ஏனெனில், அங்கு ஒட்டகச் சிவிகையில் பெண்ணொருத்தி இருக்கிறாள். (மக்காவிலுள்ள விரோதிகளுக்கு 'ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ' நம்முடைய இரகசியத் திட்டங்களை எழுதித் தெரிவித்துள்ள) கடிதம் ஒன்று அவளிடம் இருக்கும். அதை அவளிடமிருந்து கைப்பற்றி வாருங்கள்!" என்று கூறியனுப்பினார்கள்.

உடனே நாங்கள் (புறப்பட்டுச்) சென்றோம். எங்களைச் சுமந்து கொண்டு எங்கள் குதிரைகள் விரைந்தன. நாங்கள் அந்த 'ரவ்ளத்து காக்' எனும் இடத்திற்குச் சென்றோம். அங்கு ஒட்டகச் சிவிகையில் இருந்த அந்தப் பெண்ணைக் கண்டோம். (அவளிடம்) நாங்கள், 'கடிதத்தை வெளியே எடு!" என்று சொன்னோம். அதற்கு அவள், 'என்னிடம் கடிதம் ஏதுமில்லை'' என்று பதிலளித்தாள். நாங்கள், 'ஒன்று, நீயாயக் கடிதத்தை எடுத்து(க் கொடுத்து)விடு! இல்லையேல், (உன்னைச் சோதனையிடுவதற்காக உன்னுடைய) ஆடையை நீ களைய வேண்டியிருக்கும்'' என்று சொன்னோம். உடனே அவள் (இடுப்புவரை நீண்டிருந்த) தன்னுடைய சடையின் பின்னல்களுக்கிடையேயிருந்து கடிதத்தை வெளியே எடுத்தாள். நாங்கள் அதை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டுசென்றோம்.

அதில் 'ஹாத்திப் இப்னு அபீ பல்தஆ(ரலி) மக்காவாசிகளான இணைவைப்போரிடையேயுள்ள (பிரமுகர்கள்) சிலருக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (இரகசியத்) திட்டங்கள் சிலவற்றை (முன்கூட்டியே) தெரிவித்திருக்கக் கண்டோம்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'ஹாத்திபே! என்ன இது?' என்று கேட்டார்கள். ஹாத்திப்(ரலி) (தம் குற்றத்தை ஒப்புக்கொண்டு), 'இறைத்தூதர் அவர்களே! என் விஷயத்தில் அவசரப்பட்டு (நடவடிக்கை எடுத்து)விடாதீர்கள். நான் குறைஷியரில் ஒருவனாக இருக்காமல் அவர்களிடையே (வசித்துவந்த) ஒருவனாகவே இருந்தேன்.

தங்களுடன் இருக்கும் முஹாஜிர்களுக்கு அவர்களின் வீட்டாரையும், சொத்துகளையும் பாதுகாப்பதற்கு மக்காவில் உறவினர் பலர் இருக்கிறார்கள். எனக்கு அவர்களிடையே அத்தகைய உறவினர் (எவரும்) இல்லாததால்,மக்காவாசிசளுக்கு உபகாரம் எதையாவது செய்து, அதன் காரணத்தால் அவர்கள் (பிரதியுபகாரமாக) என் உறவினரைக் காப்பாற்றவேண்டும் என்று விரும்பினேன். (அதனால், அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க இந்தத் தகவலைத் தெரிவித்தேன்.) நான் சத்திய மார்க்கத்தை நிராகரித்தோ, (இஸ்லாமைத் துறந்து) வேறு மதத்தைத் தழுவுவதற்கோ இவ்விதம் செய்யவில்லை'' என்று (காரணம்) கூறினார்கள். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள், 'இவர் உங்களிடம் உண்மையே கூறினார்'' என்று கூறினார்கள். அப்போது உமர்(ரலி) இறைத்தூதர்! என்னை விடுங்கள் (சதி வேலைகளை செய்த) இவரின் கழுத்தைக் கொய்து விடுகிறேன்'' என்று கூறினார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'இவர் பத்ருப் போரில் பங்கெடுத்தார். மேலும், உமக்கென்ன தெரியும்? ஒருவேளை மாண்பும் மகத்துவமும் வாய்ந்தவனான அல்லாஹ், பத்ருப்போரில் பங்கேற்றவர்களிடம் 'நீங்கள் விரும்பியதைச் செய்துகொள்ளுங்கள் உங்களை நான் மன்னித்துவிட்டேன்' என்று கூறிவிட்டிருக்கலாம்'' என்று கூறினார்கள்.

'ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ'(ரலி) விஷயத்தில்தான் 'இறைநம்பிக்கையாளர்களே! எனக்கும் உங்களுக்கும் பகைவர்களாயிருப்பவர்களை நீங்கள் நண்பர்களாக்கிக் கொள்ளாதீர்கள்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 60:1 வது) வசனம் அருளப்பட்டது என (அறிவிப்பாளர்களில் ஒருவரான) அம்ர் இப்னு தீனார்(ரஹ்) கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:) இந்த இறைவசனம் (அலீ(ரலி) அவர்களின்) அறிவிப்பிலேயே உள்ளதா? அல்லது அம்ர் இப்னு தீனார் அவர்களின் (அறிவிப்பின்போது வந்த) சொல்லா என்று எனக்குத் தெரியாது.

அலீ இப்னு அல்மதீனீ(ரஹ்) கூறினார்

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்களிடம், 'ஹாத்திப் இப்னு அபீ பல்த்த ஆ(ரலி) தொடர்பாகத்தான் இவ்வசனம் (திருக்குர்ஆன் 60:01) இறங்கிற்றா?' என்று கேட்கப்பட்டது. சுஃப்யான்(ரஹ்), 'இப்படித்தான் மக்களின் அறிவிப்புகளில் காணப்படுகிறது. இந்த அறிவிப்பை நான் அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களிடமிருந்து செவியேற்றேன். அதில் ஒரு வார்த்தையைக் கூட நான்விட்டுவிடவில்லை. நான் அல்லாத வேறு யாரும் அம்ர் அவர்களிடமிருந்து இதனை நன்கு நினைவில் நிறுத்திக் கொண்டதாக நான் கருதவில்லை'' என்று கூறினார்கள்.

## இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் (நாடு துறந்து) ஹிஜ்ரத் செய்து உங்களிடம் வந்தால் (என்று தொடங்கும் 60:10 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4891. நபி(ஸல்) அவர்கள் துணைவியாரான ஆயிஷா(ரலி) கூறினார்

இந்த (திருக்குர்ஆன் 60:10-12 வது வசனங்களின் ஆணைக்கேற்ப இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவிலிருந்து) நாடு துறந்து தம்மிடம் வந்த இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் சோதனை செய்து வந்தார்கள்.

இந்த (இறைவசனத்திலுள்ள) நிபந்தனையை இறைநம்பிக்கை கொண்ட பெண்களில் ஏற்றுக் கொண்டவரிடம்'உன் நம்பிக்கைப் பிரமாணத்தை ஏற்றுக்கொண்டேன்'' என்று பேச்சால் மட்டுமே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறுவார்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்களின் கரம், விசுவாசப் பிரமாணம் வாங்கும்போது எந்தப் பெண்ணின் கரத்தையும் தொட்டதில்லை. பெண்களிடம், 'நான் உன் விசுவாசப் பிரமாணத்தை ஏற்றுக்கொண்டேன்'' என்று அவர்கள் வாய்மொழியாகவே தவிர வேறெந்த முறையிலும் விசுவாசப் பிரமாணம் வாங்கியதில்லை.

இது இன்னும் பல அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.

## நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் உங்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக வந்தார்களாயின் (என்று தொடங்கும் 60:12 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4892. உம்மு அத்திய்யா(ரலி) அறிவித்தார்

நாங்கள் (மகளிர்) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் விசுவாசப் பிரமாணம் செய்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வுடன் எதனையும் இணை வைக்கமாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 60:12 கூது) இறை வசனத்தை எங்களுக்கு ஓதிக்காட்டினார்கள். மேலும், (இறந்தவர்களுக்காக) ஒப்பாரிவைத்து அழ வேண்டாமென எங்களைத் தடுத்தார்கள். அப்போது (நபிகளாரிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக, அவர்களை நோக்கி சமிக்கை செய்யும் வகையில் கையை நீட்டிய) ஒரு பெண்மணி தம் கையை பின்வாங்கினார். மேலும், அவர்'இன்னவள் (என்னுடன் சேர்ந்து என் உறவினர் ஒருவருக்காக ஒப்பாரிவைத்து) எனக்கு உதவி புரிந்தாள். பதிலுக்கு (அவளுடன் சேர்ந்து நான் ஒப்பாரி வைத்து) அவளுக்கு உதவ விரும்புகிறேன்'' என்று கூறினார். அவளுக்கு எந்த பதிலையும் நபி(ஸல்) அவர்கள் கூறவில்லை. அவள் சென்று (ஒப்பாரிவைத்து)விட்டுத் திரும்பி நபி(ஸல்) அவர்களிடம் வந்தாள். அப்போது, அவர்களிடமிருந்து நபி(ஸல்) அவர்கள் விசுவாசப் பிரமாணத்தை ஏற்றார்கள்.

ஹதீஸ் 4893. இக்ரிமா(ரஹ்) அறிவித்தார்

"எந்த ஒரு நற்செயலிலும், (நபியே!) உங்களுக்கு அவர்கள் மாறு செய்ய மாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 60:12 வது) இறைவசனத்தி)ன், விளக்கவுரையி)ல், 'இதுவும் பெண்களின் மீது அல்லாஹ் விதித்த நிபந்தனைகளில் ஒன்றாகும்' என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 4894. உபாதா இப்னு ஸாமித்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்கள் அருகில் இருந்துகொண்டிருந்தோம். அப்போது அவர்கள், 'அல்லாஹ்விற்கு எதையும் இணை கற்பிக்கமாட்டீர்கள் விபசாரம் புரியமாட்டீர்கள் திருடமாட்டீர்கள் என்று எனக்கு உறுதிமொழி அளிப்பீர்களா?' என்று கேட்டுவிட்டுப் பெண்கள் பற்றிய (திருக்குர்ஆன் 60:12 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

சுஃப்யான் இப்னு உயையனா(ரஹ்) அவர்களின் அதிகமான அறிவிப்பில்'அந்த வசனத்தை ஓதிக்காட்டினார்கள்'' என்றே காணப்படுகிறது. ('பெண்கள் பற்றிய வசனம்' என்று காணப்படவில்லை) தொடர்ந்து நபி(ஸல்) அவர்கள், 'உங்களில் (இந்த உறுதி மொழியை) நிறைவேற்றுகிறவருக்குரிய பிரதிபலனைத் தருவது அல்லாஹ்வின் பொறுப்பாகும். மேற்கூறப்பட்ட (விபசாரம் முதலான)வற்றில் எதையாவது ஒருவர் செய்து அதற்காக (இவ்வுலகில் இஸ்லாமியச் சட்டப்படி) அவர் தண்டிக்கப்பட்டால், அதுவே அவருக்குப் பரிகாரமாம்விடும். மேற்கூறப்பட்டவற்றில் எதையாவது ஒருவர் செய்து, பின்னர் அல்லாஹ் அதனை (யாருக்கும் தெரியாமல்) மறைத்துவிட்டால், அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் விடப்படுகிறார். அவன் நாடினால் அவரை வேதனை செய்வான் அவன் நாடினால் அவரை மன்னிப்பான்'' என்று கூறினார்கள்.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 4895. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடனும். அபூ பக்ர், உமர், உஸ்மான்(ரலி) ஆகியோருடனும் நோன்புப் பெருநாள் தொழுகையில் பங்கெடுத்துள்ளேன். அப்போது அவர்கள் அனைவரும் உரை (குத்பா) நிகழ்த்துவதற்கு முன் தொழுபவர்களாக இருந்தனர். அதன் பிறகே உரை நிகழ்த்துவார்கள். (உரை முடிந்த பின்) நபி(ஸல்) அவர்கள் (மிம்பர் - மேடையிலிருந்து) இறங்கி, மக்களைத் தம் கையால் அமரச் செய்ததை இன்றும் நான் (என் கண்ணெதிரே) காண்பது போல் உள்ளது. பிறகு ஆண்(களின் வரிசை)களைப் பிளந்துகொண்டு பிலால்(ரலி) அவர்களுடன் பெண்கள் பகுதிக்குச் சென்றார்கள்.

அப்போது'நபியே! இறைநம்பிக்கை கொண்ட பெண்கள் உம்மிடம் விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக வந்து, அவர்கள் அல்லாஹ்வுடன் எதனையும் இணைவைக்கமாட்டார்கள் என்றும், திருடமாட்டார்கள் என்றும், விபசாரம் செய்யமாட்டார்கள் என்றும், தம் குழந்தைகளைக் கொல்லமாட்டார்கள் என்றும், தங்கள் கை கால்களுக்கிடையே எந்த அவதூறையும் இட்டுக்கட்டமாட்டார்கள் என்றும், எந்த ஒரு நற்செயலிலும் உமக்கு மாறு செய்ய மாட்டார்கள் என்றும் வாக்குறுதி அளித்தால், அப்போது அவர்களிடமிருந்து விசுவாசப் பிரமாணத்தை ஏற்றுக் கொள்ளும். மேலும், அவர்களுக்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரும். திண்ணமாக, அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும், கருணைபுரிபவனுமாய் இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 60:12 வது) இறைவசனம் முழுவதையும் ஓதிமுடித்துவிட்டு, 'இந்த உறுதிமொழியில் நீங்கள் நிலையாக இருப்பீர்களா?' என்று கேட்டார்கள்.

ஒரேயொரு பெண்மணி மட்டும், 'ஆம் (நீடிப்போம்), இறைத்தூதர் அவர்களே!"என்றார். அவரைத் தவிர வேறெவரும் நபி(ஸல்) அவர்களுக்கு பதிலளிக்கவில்லை. அந்தப் பெண் யாரென்று (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹஸன் இப்னு முஸ்லிம்(ரஹ்) அவர்களுக்குத் தெரியவில்லை - அப்பெண்களை நோக்கி நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் தர்மம் செய்யுங்கள்!"என்று கூறினார்கள். பிலால்(ரலி) தம் ஆடையை விரித்தார்கள். அப்போது மோதிரங்களையும் மெட்டிகளையும் அப்பெண்கள் பிலால்(ரலி) அவர்களின் ஆடையில் போடலானார்கள்.

## (61) அஸ்ஸஃப் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 61:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மன் அன்சாரீ இலல்லாஹ்' (இறைவனின் பக்கம் எனக்கு உதவி புரிபவர் யார்?) என்பதன் கருத்தாவது: இறைவழியில் என்னைப் பின்பற்றி நடப்பவர் யார்?
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 61:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மர்ஸூஸ்' எனும் சொல்லுக்கு'ஒன்றோடொன்று (வலுவுடன்) இணைக்கப்பட்டது'' என்று பொருள். மற்றவர்கள் கூறுகிறார்கள். 'மர்ஸூஸ்' என்பதற்கு'ஈயத்தால் வார்க்கப்பட்டது' என்று பொருள்.

## "எனக்குப் பிறகு அஹ்மத் எனும் பெயருடைய தூதர் ஒருவர் வருவார் (என ஈசா கூறினார்)' எனும் (திருக்குர்ஆன் 61:6 வது) வசனத்தொடர்.

ஹதீஸ் 4896. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:
எனக்குப் பல பெயர்கள் உண்டு. நான்'முஹம்மது' (புகழப்பட்டவர்) ஆவேன். இன்னும் நான்'அஹ்மத்' (இறைவனை அதிகம் புகழ்பவர்) ஆவேன். நான்'மாஹீ' (அழிப்பவர்) ஆவேன் அல்லாஹ் என் மூலம் இறைமறுப்பை அழிப்பான். நான்'ஹாஷிர்' (ஒருங்கிணைப்பாவர்) ஆவேன் என் தலைமையின் கீழ் மக்கள் ஒருங்கிணைக்கப்படுவார்கள் நான்'ஆம்ப்' (இறைத்தூதர்களில் இறுதியானவர்) ஆவேன்.
என ஜுபைர் இப்னு முதஇம்(ரலி) அறிவித்தார்.

## (62) அல்ஜுமுஆ அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

## "இன்னும் இவர்களுடன் வந்து சேராமலிருக்கும் ஏனைய மக்களுக்காகவும் (இந்தத் தூதரை அவன் அனுப்பியுள்ளான்)' எனும் (திருக்குர்ஆன் 62:3 வது) வசனத்தொடர்.

(திருக்குர்ஆன் 62:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஃபஸ்அவ் இலா ஃதிக்ரில்லாஹ்' - அல்லாஹ்வை நினைவுகூர விரையுங்கள் என்பதை) உமர்(ரலி), `ஃபம்ளூ இலா ஃதிக்ரில்லாஹ்' (அல்லாஹ்வை நினைவுகூரச் செல்லுங்கள்) என்று ஓதினார்கள்.

ஹதீஸ் 4867. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
நாங்கள் (ஒரு சமயம்) நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது அவர்களுக்கு'அல்ஜுமுஆ' எனும் (62 வது) அத்தியாயத்தில்'இன்னும் இவர்களுடன் வந்து சேராமலிருக்கும் ஏனைய மக்களுக்காகவும் (இந்தத் தூதரை அவன் அனுப்பியுள்ளான்)'' எனும் (3 வது வசனம் அருளப்பெற்றது. அப்போது, `அந்த (ஏனைய) மக்கள் யார்? இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்டேன். நான் மூன்று முறை கேட்டும் அவர்கள் (எனக்கு) பதிலளிக்கவில்லை. எங்களிடையே சல்மான் அல் ஃபாரிசீ(ரலி) இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் சல்மான் மீது தம் கரத்தை வைத்தார்கள். பிறகு, கிருத்திகா (ஸுரய்யா) நட்சத்திரக் குழுமத்தின் அருகில் இறைநம்பிக்கை இருந்தாலும்'சில மனிதர்கள்' அல்லது'இவர்களில் ஒருவர்' அதனை அடைந்தே தீருவார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4898. அபுல் ஃகைஸ் சாலிம்(ரஹ்) அறிவித்தார்
அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில், `இவர்களில் சில மனிதர்கள் இதனை அடைந்தே தீருவர்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

## அவர்கள் வியாபாரத்தையோ விளையாட்டு வேடிக்கையையோ பார்த்துவிட்டால், அவற்றின் பக்கம் விரைந்து சென்றுவிடுகின்றனர் (எனும் 62:11 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4899. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் வெள்ளிக்கிழமை (ஜுமுஆத் தொழுகையில்) இருந்தபோது, (வியாபாரத்திற்காக உணவுப் பொருட்களை ஏற்றிக்கொண்டு) ஒட்டகக் குழு ஒன்று வந்தது. (அதைக் கண்ட மாத்திரத்தில், நபிகளாரின் முன்னிலையிருந்த மக்கள்) கலைந்து சென்றார்கள். பன்னிரண்டு நபர்களே எஞ்சியிருந்தனர். அப்போதுதான்'அவர்கள் வியாபாரத்தையோ விளையாட்டு வேடிக்கையையோ கண்டுவிட்டால் அவற்றின் பக்கம் விரைந்து சென்றுவிடுகின்றனர்‘' எனும் (திருக்குர்ஆன் 62:11 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

## (63) அல்முனா∴பிகூன் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
“(நபியே!) இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகிறபோது, 'திண்ணமாக, நீங்கள் அல்லாஹ்வின் தூதராவீர்கள் என நாங்கள் சாட்சியம் அளிக்கிறோம்' என்று கூறுகின்றனர். திண்ணமாக, நீங்கள் தன்னுடைய தூதர்தாம் என்பதை அல்லாஹ் நன்கறிவான். ஆனால், இந்த நயவஞ்சகர்கள் நிச்சயம் பொய்யர்கள் என்பதற்கு அல்லாஹ் சாட்சியம் அளிக்கிறான்‘' எனும் (திருக்குர்ஆன் 63:1 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4900. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்
ஒரு புனிதப் போரில் நான்இருந்து கொண்டிருந்தேன். அப்போது, (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை என்பவன்'அல்லாஹ்வின் தூதருடன் இருப்பவர்களுக்கு (-முஹாஜிர்களுக்கு-) செலவு செய்வதை நிறுத்திவிடுங்கள் அதனால், அவர்கள் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து விலகிச் சென்றுவிடுவார்கள்‘' என்று கூறிவிட்டுத் தொடர்ந்து, 'நாம் இங்கிருந்து (மதீனாவுக்குத்) திரும்பினால், (எங்கள் இனத்தவர்களான) கண்ணியவான்கள் இழிந்தோ(ரான முஹாஜி)ர்களை மதீனாவிலிருந்து நிச்சயம் வெளியேற்றுவார்கள்‘' என்று கூறினான். அவன் கூறியதை'(நான்) என் சிறிய தந்தை(யாக மதிக்கும் ஒருவர்) இடம்' அல்லது'உமர்(ரலி) அவர்களிடம்' கூறினேன். அவர் அதை நபி(ஸல்) அவர்களிடம் கூறிவிட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். (நான் சென்று அவன் சொன்னதை) நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துரைத்தேன். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ்விற்கும் அவனுடைய நண்பர்களுக்கும் ஆளனுப்பினார்கள். (அவர்கள் தம்மிடம் வந்தபோது) அது குறித்து நபியவர்கள் வினவினார்கள்.)'நாங்கள் அதைச் சொல்லவேயில்லை‘' என்று அவர்கள் சாதித்தார்கள்.
அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நான் சொன்னதை நம்ப மறுத்துவிட்டார்கள் அப்துல்லாஹ் இப்னு உபை (சத்தியமிட்டுச்) சொன்னதை உண்மையென்று நம்பினார்கள். அப்போது, எனக்குக் கவலை ஏற்பட்டது. அது போன்ற கவலை என் வாழ்நாளில் ஒருபோதும் எனக்கு ஏற்பட்டதில்லை. பிறகு நான் என் வீட்டில் அமர்ந்துகொண்டிருந்தேன். அப்போது என் சிறிய தந்தை என்னிடம், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உன்னை நம்ப மறுத்து, உன் மீது கோபம் கொள்ளும் அளவிற்குச் செல்வார்கள் என நான் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை‘' என்று கூறினார்கள். அப்போது, 'இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகிற போது‘' என்று தொடங்கும் இந்த (திருக்குர்ஆன் 63:1 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். உடனே, நபி(ஸல்) அவர்கள் எனக்கு ஆளனுப்பினார்கள். (நான் சென்றபோது தம்மீது அருளப்பட்டிருந்த வசனத்தை எனக்கு) ஓதிக்காட்டினார்கள். பிறகு, 'ஸைதே! அல்லாஹ் உன்னை உண்மைப்படுத்திவிட்டான் (நீ சொன்னதை உண்மை என்று தெளிவுபடுத்திவிட்டான்)‘' என்று கூறினார்கள்.

## 63:02 வது திருக்குர்ஆன் வசனம்

இவர்கள் தாங்கள் செய்யும் சத்தியங்களை (தங்களைத் தற்காத்துக் கொள்ளும்) கேடயமாக்கிக் கொண்டிருக்கிறார்கள் (எனும் 63:2 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 4901. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்

நான் என் சிறிய தந்தையாருடன் இருந்து கொண்டிருந்தேன். அப்போது (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல் என்பான், 'அல்லாஹ்வின் தூதருடன் இருப்பவர்களுக்கு (-முஹாஜிர்களுக்கு-) நீங்கள் செலவு செய்வதை நிறுத்தி விடுங்கள். அவர்கள் (அவரைவிட்டும்) விலகிச் சென்றுவிடுவார்கள்' என்று சொல்வதையும், மேலும், 'நாம் மதீனாவுக்குத் திரும்பினால் (எங்கள் இனத்தவர்களாகிய) கண்ணியவான்கள், இழிந்தோ(ரான முஹாஜி)ர்களை நகரிலிருந்து நிச்சயம் வெளியேற்றுவார்கள்'' என்று கூறுவதையும் கேட்டேன். அதை நான் என் சிறிய தந்தையாரிடம் கூறினேன். அதை என் சிறிய தந்தையார் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சொல்லிவிட்டார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபை மற்றும் அவனுடைய நண்பர்களுக்கு ஆளனுப்பினார்கள். அவர்கள் வந்து, 'நாங்கள் அப்படிச் சொல்லவேயில்லை'' என்று சத்தியம் செய்தனர். எனவே, அவர்களை நம்பிவிட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை (நம்ப) மறுத்துவிட்டார்கள். (என் வாழ்நாளில் அதற்கு முன்) இதுபோன்ற ஒரு கவலை ஏற்பட்டதேயில்லை எனும் அளவிற்கு என்னைக் கவலை ஆட்கொண்டது. எனவே, நான் என்னுடைய வீட்டில் (கவலையோடு) அமர்ந்திருந்தேன். அப்போது அல்லாஹ், '(நபியே!) இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகிறபோது'' என்று தொடங்கி' ஆயினும், நயவஞ்சகர்கள் அறிய மாட்டார்கள்'' என்று முடியும் (திருக்குர்ஆன் 63:1-8) வசனங்களை அருளினான். உடனே, எனக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆளனுப்பினார்கள். (நான் அவர்களிடம் சென்றபோது) அவற்றை எனக்கு ஓதிக்காட்டி, 'ஸைதே! அல்லாஹ் உன்னை உண்மைப்படுத்திவிட்டான்'' என்று கூறினார்கள்.

## 63:03 வது திருக்குர்ஆன் வசனம்

"இவை (அனைத்துக்கும் காரணம்,) இவர்கள் (முதலில்) நம்பிக்கை கொண்டு பின்னர் மறுத்துவிட்டதுதான். இதனால் இவர்களின் உள்ளங்களில் முத்திரையிடப்பட்டுவிட்டது. இனி இவர்கள் எதனையும் புரிந்துகொள்ள மாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 63:3 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4902. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்

(நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை' அல்லாஹ்வின் தூதருடன் இருப்போருக்கு (-முஹாஜிர்களுக்கு-) நீங்கள் செலவழிக்காதீர்கள்'' என்றும், 'நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால்,....' என்றும் கூறியபோது, அதனை நான் நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிவித்தேன். அப்போது என்னை அன்சாரிகள் கண்டித்தார்கள். அப்துல்லாஹ் இப்னு உபை, தான் அப்படிச் சொல்லவில்லை என்று சத்தியம் செய்தான். எனவே, நான் என் வீட்டிற்குத் திரும்பி வந்து தூங்கிவிட்டேன். அப்போது என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழைத்தார்கள் (எனத் தகவல் வந்தது). உடனே, நான் அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள், '(ஸைதே!) அல்லாஹ் உன்னை உண்மைப்படுத்திவிட்டான்'' என்று கூறினார்கள். மேலும், 'இவர்கள் தாம்' இறைத்தூதருடன் இருப்பவர்களுக்குச் செலவு செய்வதை நிறுத்திவிடுங்கள்' என்று கூறினார்கள்..!"எனும் (திருக்குர்ஆன் 63:7 வது) வசனமும் அருளப்பெற்றது.

இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது.

## 63:04 வது திருக்குர்ஆன் வசனம்

(நபியே!) நீங்கள் இவர்களைப் பார்த்தால் இவர்களின் உடல் அமைப்பு உங்களை வியப்பில் ஆழ்த்தும். இவர்கள் பேச ஆரம்பித்தால் நீங்கள் இவர்களின் பேச்சைக் கேட்டுக்கொண்டே இருந்துவிடுவீர்கள். ஆனால், உண்மையில் இவர்கள் (சுவரில்) சாய்த்து வைக்கப்பட்டிருக்கும் மரக்கட்டைகளைப் போன்றவர்கள். இவர்கள் ஒவ்வோர் உரத்த சப்தத்தையும் தங்களுக்கு எதிரானதாய்க் கருதுகின்றனர். இவர்கள் தாம் (கடும்) பகைவர்கள் இவர்களைக் குறித்து எச்சரிக்கையோடு இருங்கள். அல்லாஹ் இவர்களை நாசமாக்கட்டும்! இவர்கள் எங்கே திசை மாறிச் சென்று கொண்டிருக்கின்றனர்? (எனும் 63:4 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4903. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்திற்காகப் புறப்பட்டோம். அந்தப் பயணத்தில் (உணவுப் பற்றாக்குறையால்) மக்களுக்குச் சிரமம் ஏற்பட்டது. அப்போது (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை தம் நண்பர்களிடம், 'அல்லாஹ்வின் தூதருடன் இருக்கும் இவர்களுக்கு நீங்கள் செலவு செய்வதை நிறுத்திவிடுங்கள். அவர்கள் நபியிடமிருந்து விலகிச் செல்வார்கள்'' என்றும், 'நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால், (எங்கள் இனத்தாரான) கண்ணியவான்கள், இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை அங்கிருந்து வெளியேற்றி விடுவர்'' என்றும் சொன்னான். நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று, (அவன் சொன்னதை) அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபைக்கு ஆளனுப்பினார்கள். (அவன் வந்தவுடன்,) அவனிடம் (அது குறித்துக்) கேட்டார்கள். தான் அப்படிச் செய்யவேயில்லை என்று அவன் சத்தியம் செய்து சாதித்தான். அன்சாரிகள், 'இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஸைத் பொய் சொல்லிவிட்டார்'' என்று (என்னைப் பற்றிக்) கூறினார்கள். அவர்கள் அப்படிச் சொன்னதால் என் உள்ளத்தில் கடுமை(யான கவலை) ஏற்பட்டது.

அப்போது என் வாய்மையைக் குறிக்கும் வகையில்' (நபியே!) இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகிறபோது..!"என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 63:1 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். அப்போது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்த நயவஞ்சகர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோர அவர்களை அழைத்தார்கள். (அவர்கள் அதற்கு இணங்காமல்) தங்கள் தலையைத் திருப்பினார்கள்.

(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள'குஷுபும் முசன்னதா' (சாய்த்துவைக்கப்பட்டிருக்கும் மரக்கட்டை) என்பது, அவர்கள் மிகவும் அழகானவர்களாக (வாட்ட சாட்டமானவர்களாக) இருந்ததைக் குறிக்கிறது.

## 63:05 வது திருக்குர்ஆன் வசனம்

“வாருங்கள், இறைத்தூதர் உங்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரி இறைஞ்சுவார் என்று அவர்களிடம் கூறப்பட்டால், (அவர்கள்) தங்களின் தலையைத் திருப்பிக் கொள்கிறார்கள். மேலும், அவர்கள் பெரும் ஆணவத்தால் அலட்சியப்படுத்துவதை (நபியே!) நீங்கள் காண்பீர்கள்' எனும் (திருக்குர்ஆன் 63:5 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'லவ்வவ்' (தலையைத் திருப்பினார்கள்) எனும் சொல், 'தங்கள் தலையை அசைத்த வண்ணம் அவர்கள் நபியைப் பரிகாசம் செய்ததைக் குறிக்கிறது. (இதே சொல்லை இன்னோர் ஓதலில்)'லவய்த்து' எனும் வினைச்சொல்லிருந்து அழுத்தமில்லாமல் ('லவவ்' என்று) ஓதப்படுகிறது.

ஹதீஸ் 4904. ஸைத் இப்னு அர்கம்(ரலி) அறிவித்தார்

நான் என் சிறிய தந்தையாருடன் இருந்து கொண்டிருந்தேன். அப்போது (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல் என்பான், 'அல்லாஹ்வின் தூதருடன் இருப்போருக்கு (-முஹாஜிர்களுக்கு) நீங்கள் செலவு செய்வதை நிறுத்தி விடுங்கள். அவர்கள் (அவரிடமிருந்து) விலகிச் சென்றுவிடுவர். நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால்,

(எங்கள் இனத்தாரான) கண்ணியவான்கள் இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை அங்கிருந்து நிச்சயம், வெளியேற்றிவிடுவர்'' என்று கூறுவதை கேட்டேன். அதை நான் என் நிசிய தந்தையாரிடம் கூறினேன். என் சிறிய தந்தையார் அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சொல்லிவிட்டார்கள். (ஆனால்,) அப்துல்லாஹ்வையும் அவனுடைய ஆட்களையும் உண்மையாளர்கள் என நபியவர்கள் நம்பினார்கள். அவர்கள் வந்து, `நாங்கள் அப்படிச் சொல்லவேயில்லை'' என்று சத்தியம் செய்தனர். (அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நம்பினார்கள்.) என்னை நம்ப மறுத்துவிட்டார்கள். என் வாழ்நாளில், அதற்கு முன் இது போன்ற ஒரு கவலை ஏற்பட்டதே இல்லை எனும் அளவிற்கு என்னைக் கவலை ஆட்கொண்டது. எனவே, நான் என்னுடைய வீட்டில் (கவலையோடு) அமர்ந்தேன். என் சிறிய தந்தையார் (என்னிடம்), `நபி(ஸல்) அவர்கள் உன்னை நம்ப மறுத்து, உன் மீது கோபமடையும் அளவிற்குச் செல்வார்கள் என நான் நினைக்கவில்லை'' என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், `(நபியே!) இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகிறபோது, திண்ணமாக, நீங்கள் அல்லாஹ்வின் தூதராவீர்கள் என நாங்கள் சாட்சியம் அளிக்கிறோம் என்று கூறுகின்றனர்'' எனும் (திருக்குர்ஆன் 63:1 வது) வசனத்தை அருளினான். உடனே, எனக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆளனுப்பினார்கள். (நான் அவர்களிடம் சென்றபோது) அந்த வசனத்தை எனக்கு ஓதிக் காட்டினார்கள். பிறகு, `ஸைதே! அல்லாஹ் உன்னை உண்மைப்படுத்திவிட்டான்'' என்று கூறினார்கள்.

## 63:06 வது திருக்குர்ஆன் வசனம்

"(நபியே!) நீங்கள் இவர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோரினாலும் கோராவிட்டாலும் இவர்களைப் பொறுத்துச் சமம் தான். அல்லாஹ் இவர்களை ஒருபோதும் மன்னிக்கமாட்டான். பாவிகளான மக்களை அல்லாஹ் ஒருபோதும் நேர்வழியில் செலுத்தமாட்டான்'' எனும் (திருக்குர்ஆன் 63:6 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4905. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நாங்கள்'ஒரு போரில்' அல்லது'ஒரு படையில்' இருந்து கொண்டிருந்தோம். முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரைப் பிட்டத்தில் அடித்துவிட்டார். 4அப்போது (அடி வாங்கிய) அன்சாரி'அன்சாரிகளே! (உதவுங்கள்.)'' என்று கூறினார். அந்த முஹாஜிர்'முஹாஜிர்களே! உதவுங்கள்!"என்று கூறினார்.

இந்தப் பேச்சை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செவியேற்று, `இது என்ன அறியாமைக் காலக் கூப்பாடு?' என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், இறைத்தூதர் அவர்களே! முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரைப் பிட்டத்தில் அடித்துவிட்டார்'' என்று கூறினர். அப்போது நபி(ஸல்) அவர்கள், `இத்தகைய கூப்பாடுகளைக் கைவிடுங்கள். (குலமோதல்களைத் தூண்டுகின்ற) இவை நாற்றம் பிடித்தவை'' என்று கூறினார்கள்.

அப்போது (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை இதைக் கேட்டுவிட்டு'இப்படியா அவர்கள் செய்துவிட்டார்கள்? அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால், (எங்கள் இனத்தாரான) கண்ணியவான்கள் இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை அங்கிருந்து வெளியேற்றிவிடுவர்'' என்று (அன்சாரிகளுக்குப் பரிந்துகொண்டு) கூறினான். நபி(ஸல்) அவர்களுக்கு இந்தக் தகவல் எட்டியது. மேலும், (தகவலறிந்த) உமர்(ரலி) எழுந்து, `என்னை விடுங்கள் இறைத்தூதர் அவர்களே! இந்த நயவஞ்சகனின் கழுத்தை வெட்டிவிடுகிறேன்'' என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `அவரைவிட்டு விடுங்கள். முஹம்மது தம் தோழர்களையே கொலை செய்கிறார் என்று மக்கள் பேசிவிடக் கூடாது'' என்று கூறினார்கள். மக்காவாசிக(ளான முஹாஜிர்க)ள் மதீனாவிற்கு வந்தபோது அங்கு அன்சாரிகளே (முஹாஜிர்களை விட) அதிகமாக இருந்தார்கள். பின்னர் (முஹாஜிர்கள்) அன்சாரிகளை விட அதிகமானார்கள்.

மற்றோர் அறிவிப்பில், `நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் இருந்து கொண்டிருந்தோம்'' என ஜாபிர்(ரலி) கூறினார் எனக் காணப்படுகிறது.

## 63:07 வது திருக்குர்ஆன் வசனம்

“அல்லாஹ்வின் தூதருடன் இருப்போருக்குச் செலவழிப்பதை நிறுத்திவிடுங்கள். (அவரிடமிருந்து) அவர்கள் விலகிச் செல்வார்கள் என்று சொல்கிறவர்கள் இவர்கள்தாம். உண்மையில், வானங்கள் மற்றும் பூமியின் கருவூலங்கள் அல்லாஹ்வுக்கே உரியனவாகும். ஆனால், இந்த நயவஞ்சகர்கள் புரிந்துகொள்ளமாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 63:7 வது) இறைவசனம்.

(இதன் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'யன்ஃபள்ளூ' எனும் சொல்லுக்குப்'பிரிந்து விடுவார்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4906. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அல்ஹர்ராப் போரில் கொல்லப்பட்டோருக்காக, நான் (பெரிதும்) துக்கப்பட்டேன். நான் கடுமையாகத் துக்கப்படுவது பற்றிய செய்தி, ஸைத் இப்னு அர்கம்(ரலி) அவர்களுக்கு எட்டியபோது எனக்கு அவர்கள் (பின்வருமாறு குறிப்பிட்டுக் கடிதம்) எழுதினார்கள்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'இறைவா! அன்சாரிகளுக்கும் அன்சாரிகளின் மக்களுக்கும் நீ மன்னிப்பு அளிப்பாயாக'' என்று பிரார்த்தித்ததை நான் செவியேற்றேன்.

அன்சாரிகளுடைய பிள்ளைகளின் பிள்ளைகளையும் நபி(ஸல்) அவர்கள் (துஆவில்) குறிப்பிட்டார்களா? இல்லையா என்பதை உறுதிசெய்யமுடியவில்லை என அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு ஃபள்ல்(ரஹ்) தெரிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸை அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தபோது அன்னாருடன் இருந்தவர்களில் சிலர், (ஸைத் இப்னு அர்கம் பற்றிக்) கேட்டனர். அதற்கு அனஸ்(ரலி)'(நயவஞ்சகர்களின் முறைகேடான பேச்சுக் குறித்து இவர் தெரிவித்த தகவலை நபிகளார் ஏற்க மறுத்துவிட்ட பின்னர், இவரை உண்மைப்படுத்தி அல்லாஹ் வசனத்தை அருளியபோது)'இவர் தம் காதால் கேட்டது உண்மையே என அல்லாஹ்வே அறிவித்துவிட்டான்' என்று இவர் தொடர்பாகத்தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என பதிலளித்தார்கள்.

## 63:08 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும் அவர்கள்'நாங்கள் மதீனாவுக்குத் திரும்பிச் சென்றால், கண்ணியவான்கள் அங்கிருந்து இழிந்தோரை வெளியேற்றி விடுவர்'' என்றும் கூறுகிறார்கள். ஆயினும், கண்ணியம் என்பது, அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் நம்பிக்கையாளருக்குமே உரியதாகும். ஆனால், இந்த நயவஞ்சகர்கள் அறியமாட்டார்கள் (எனும் 63:8 வது இறைவசனம்).

ஹதீஸ் 4907. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நாங்கள் ஒரு போரில் இருந்துகொண்டிருந்தோம். முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரைப் பிட்டத்தில் அடித்துவிட்டார். அப்போது (அடி வாங்கிய) அன்சாரி, `அன்சாரிகளே! (உதவுங்கள்)'' என்று கூறினார். முஹாஜிர், `முஹாஜிர்களே! (உதவுங்கள்)'' என்று கூறினார்.

இந்தப் பேச்சை அல்லாஹ் தன்னுடைய தூதருக்கு எட்டச் செய்துவிட்டான். நபி(ஸல்) அவர்கள், `இது என்ன?' என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், `முஹாஜிர்களில் ஒருவர் அன்சாரிகளில் ஒருவரைப் பிட்டத்தில் அடித்துவிட்டார். உடனே, அன்சாரி'அன்சாரிகளே, (உதவுங்கள்)' என்று கூற, முஹாஜிரும், `முஹாஜிர்களே, (உதவுங்கள்)'' என்று கூறினார்'' என்று பதிலளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் இத்தகைய வாதங்களைக் கைவிடுங்கள். (குலமோதல்களைத் தூண்டுகின்ற) இவை நாற்றம் பிடித்தவை'' என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவிற்கு வந்தபோது அங்கு அன்சாரிகளே (முஹாஜிர்களை விட) அதிகமாக இருந்தார்கள். அதன் பின்னர் முஹாஜிர்கள் (அன்சாரிகளைவிட) அதிகரித்துவிட்டார்கள். அப்போது (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபை'இப்படியா அவர்கள் செய்துவிட்டார்கள்? அல்லாஹ்வின் மீதாணையாக, நாங்கள் மதீனாவிற்குத் திரும்பிச் சென்றால், (எங்கள் இனத்தோரான) கண்ணியவான்கள் இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை அங்கிருந்து வெளியேற்றிவிடுவர்'' என்று கூறினான். அப்போது (செய்தி அறிந்த) உமர் இப்னு கத்தாப்(ரலி), `என்னை விடுங்கள் இந்த நயவஞ்சகனின் கழுத்தை வெட்டிவிடுகிறேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், `அவரைவிட்டு விடுங்கள்.'முஹம்மது தம் தோழர்களையே கொலை செய்கிறார்' என்று மக்கள் பேசி விடக்கூடாது'' என்று கூறினார்கள்.

## (64) அத்தஃகாபுன் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

"(திருக்குர்ஆன் 64:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வமய் யுஃமின் பில்லாஹி யஹ்தி'கல்பஹு` (எவரேனும் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்தால், அவரின் உள்ளத்திற்கு அல்லாஹ் வழி காட்டுதல் வழங்குகிறான்) என்பது, தமக்குத் துன்பம் நேரும்போது, அதைத் தாங்கி, திருப்தியடைந்து, அது அல்லாஹ்வின் தரப்பிலிருந்தே தமக்கு வந்தது என்று எண்ணும் இறை நம்பிக்கையாளரையே குறிக்கிறது'' என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார் என அல்கமா(ரஹ்) கூறினார்கள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 64:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஃகாபுன்' என்பதற்கு, `நரகவாசிகளுடன் சொர்க்கவாசிகள் போட்டியிடல்' என்று பொருள்.

## (65) அத்தலாக் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 65:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இனிர் தப்த்தும்' (உங்களுக்குச் சந்தேகம் வந்தால்) என்பதற்கு, `(உங்கள் பெண்ணுக்கு) மாத விலக்கு நின்றுவிட்டதா, இல்லையா என உங்களுக்குத் தெரியவில்லையென்றால்' என்று பொருள்.

இந்த வசனம், மாதவிலக்கு நின்றுவிட்ட பெண்ணுக்கும், எந்தப் பெண்ணுக்கும் இதுவரை மாதவிலக்கு வரவில்லையோ அவளுக்கும்'இத்தா' காலம் மூன்று மாதங்களாகும் என்று குறிப்பிடுகிறது.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 65:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வபால்' (விளைவு) எனும் சொல்லுக்கு'தண்டனை' என்று பொருள்.

ஹதீஸ் 4908. சாலிம்(ரஹ்) அறிவித்தார்

(என் தந்தை) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) தம் துணைவியாரை விவாகரத்துச் செய்துவிட்டார்கள். அப்போது அவர்களின் துணைவியாருக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்தது. எனவே, (என் பாட்டனார்) உமர்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (இதைத்) தெரிவித்தார்கள். (இதைக்கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மிகவும் கோபப்பட்டார்கள். பிறகு, `அவர் (அப்துல்லாஹ் இப்னு உமர்) தம் மனைவியைத் திரும்ப அழைத்து, அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடையும் வரைத் தம் மனைவியாகவே வைத்துக் கொள்ளட்டும்! பிறகு, (மீண்டும்) அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டு (அதிலிருந்து) தூய்மையும் அடைந்தால், அப்போது அவருக்குத் தோன்றினால் விவாகரத்துச் செய்யட்டும்! அதுவும் தாம்பத்திய உறவுக்கு முன்னால். (மாதவிலக்கிலிருந்து தூய்மையாகியிருக்கும்) இந்தக் காலமே, (பெண்களை

விவாகரத்துச் செய்ய) ஆண்களுக்கு இறைவன் உத்தரவிட்ட காலமாகும்'' என்றும் கூறினார்கள்.

## 65:04 வது திருக்குர்ஆன் வசனம்

மேலும், கர்ப்பினிகளுக்கான 'இத்தாக' காலம், அவர்கள் குழந்தை பெற்றெடுப்பது (வரையில்) ஆகும். அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறவரின் காரியத்தை அவன் எளிதாக்குகிறான் (எனும் 65:4 வது வசனத் தொடர்.)

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள) 'உலாத்துல் அஹ்மால்' (கர்ப்பிணிகள்) என்பதன் ஒருமை 'ஃதாத்து ஹமல்' (கர்ப்பிணி) என்பதாகும்.

ஹதீஸ் 4909. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி அவ்ஃப்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் ஒருவர் வந்தார். அப்போது அவர்களுக்கு அருகில் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் அமர்ந்திருந்தார்கள். (அங்கு வந்த) அந்த மனிதர், `தன் கணவன் இறந்து நாற்பது நாள்களுக்குப் பின் பிரசவித்த ஒரு பெண்(ணின் 'இத்தா' பிரசவத்தோடு முடிந்துவிடுமா என்பது) பற்றி எனக்குத் தீர்ப்பு வழங்கிடுங்கள்'' என்று கேட்டதற்கு இப்னு அப்பாஸ்(ரலி), `இரண்டு தவணைகளில் பிந்தியது'' என்று கூறினார்கள்.

உடனே நான் (இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,) 'கர்ப்பிணிகளுக்கான இத்தா காலம் அவர்கள் குழந்தை பெற்றெடுக்கும் வரையிலாகும்'' (என்று குர்ஆன் 65:4 வது வசனம் கூறுகிறதே!) என்று கேட்டேன்.

அப்போது அபூ ஹுரைரா(ரலி), `நானும் என் சகோதரர் மகன் அபூ ஸலமா(வின் கருத்துடன்) உடன்(பட்டு) இருக்கிறேன் என்று கூறினார்கள். அப்போது, இப்னு அப்பாஸ்(ரலி) தம் பணியாளர் 'குரைப்' என்பவரை, (இது குறித்து) கேட்பதற்காக உம்முஸலமா(ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். அதற்கு உம்மு ஸலமா(ரலி) (பின்வருமாறு) பதிலளித்தார்கள்:

சுபைஆ (பின்த் அல்ஹாரிஸ்) அல் அஸ்லமிய்யா கர்ப்பிணியாக இருந்த சமயத்தில், அவரின் கணவர் (ஸஅத் இப்னு கவ்லா (ரலி) இறந்துவிட்டார். அவர் இறந்து நாற்பது நாள்களுக்குப் பின்னால், சுபைஆ குழந்தை பெற்றெடுத்தார். உடனே, அவரைப் பெண் பேசப்பட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவருக்குத் திருமணம் முடித்து வைத்தார்கள். அவரைப் பெண் கேட்டவர்களில் அபுஸ் ஸனாபில் இப்னு பஅக்கக்(ரலி) அவர்களும் ஒருவராவார். (எனவே, கர்ப்பிணிக்கு 'இத்தா' பிரசவம் வரையில்தான்.)

ஹதீஸ் 4910. முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) அறிவித்தார்

நான் (மார்க்க அறிஞர்) அப்துர்ரஹ்மான் இப்னு அபீ லைலா(ரஹ்) இருந்த அவையில் இருந்துகொண்டிருந்தேன். அவரின் நண்பர்கள் அவரைக் கண்ணியப்படுத்திவந்தனர். (அப்போது அன்னாரின் நண்பர்களில் ஒருவர், கணவன் இறந்துவிட்ட கர்ப்பிணியின் 'இத்தா' காலம் குறித்துப் பேசினார்.) அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா(ரஹ்), `இரண்டு தவணைகளில் பிந்தியது'' என்று கூறினார்கள். உடனே நான், `அப்துல்லாஹ் இப்னு உத்பா(ரஹ்) வாயிலாகக் கிடைத்த 'சுபைஆ பின்த் அல்ஹாரிஸ்'(ரலி) அவர்களின் (நிகழ்ச்சி குறித்த) அறிவிப்பைச் சொன்னேன். அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா(ரஹ்) அவர்களின் நண்பர்களில் சிலர் என்னை நோக்கி (அமைதியாக இருக்கும்படி) சைகை செய்தனர்.

அதைச் சட்டெனப் புரிந்து கொண்டேன். எனவே, நான் 'அப்துல்லாஹ் இப்னு உத்பா (தற்போது) 'கூஃபா'வில் தான் இருக்கிறார். (அவர் சொல்லாத ஒன்றை) அவரின் மீது நான் பொய்யாகச் சொல்வதானால் நான் துடுக்கானவன் ஆவேன்'' என்று சொன்னேன். உடனே (என்னைப் பேசாமலிருக்கும்படி சைகை செய்தவர்) கூச்சப்பட்டார். மேலும், அப்துர் ரஹ்முான்பின் அபீ லைலா அவர்கள் 'ஆனால், அப்துல்லாஹ் இப்னு உத்பா அவர்களின் தந்தையின் சகோதரர் (இப்னு மஸ்வூத்) அவர்கள் அப்படிக் கூறவில்லையே!"என்று கூறினார்.

எனவே, நான் அபூ அத்திய்யா மாலிக் இப்னு ஆமிர்(ரஹ்) அவர்களைச் சந்தித்து இது குறித்துக் கேட்டேன். அவர்களும் சுபைஆ அவர்களின் (நிகழ்ச்சி குறித்த) அறிவிப்பைக் கூறலானார்கள். நான் (அவர்களிடம்), 'இது குறித்து அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் ஏதேனும் கேட்டுள்ளீர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களுடன் நாங்கள் இருந்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்.

(கணவர் இறந்து கர்ப்பிணியாக இருக்கும் ஒரு பெண் விஷயத்தில்'இத்தா' காலத்தை நீட்டித்து) அவளுக்குச் சிரமத்தை அளிக்கிறீர்களா? அவளுக்குச் சலுகை காட்டக்கூடாதா? (உண்மை என்னவென்றால்,) பெண்கள் தொடர்பான ('அத்தலாக்' எனும்) சிறிய அத்தியாயம், பெண்கள் தொடர்பான ('அல்பகரா' எனும்) பெரிய அத்தியாயத்திற்குப் பின்னரே அருளப்பெற்றது. (பின்னால் அருளப்பெற்ற அந்த வசனம் இதுதான்)'மேலும், கர்ப்பிணிகளுக்கான இத்தா காலம், அவர்கள் குழந்தை பெற்றெடுப்பது (வரையில்) ஆகும்'' (திருக்குர்ஆன் 65:04)

## (66) அத்தஹ்ரீம் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

நபியே! உங்களுடைய துணைவியரின் திருப்தியை எதிர்பார்த்து, அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்துள்ள ஒன்றை நீங்கள் ஏன் விலக்கிகொள்கிறீர்கள்? அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் கிருபை மிக்கவனாகவும் இருக்கிறான் (எனும் 66:1 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4911. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி)'(ஒருவர் அனுமதிக்கப்பட்ட ஒன்றை சத்தியமிட்டு) விலக்கிக்கொள்ளும் பட்சத்தில், (சத்தியத்தின் கட்டுப்பாட்டிலிருந்து வெளியேறுவதற்கான) பரிகாரத்தை அவர் செய்யவேண்டும்'' என்று கூறிவிட்டு, 'உங்களுக்கு அல்லாஹ்வின் தூதரிடம் ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறது'' எனும் (திருக்குர்ஆன் 33:21 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

ஹதீஸ் 4912. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களிடம், (அவர்களின் அறையில்) தேன் சாப்பிட்டுவிட்டு, அவரிடம் (அதிகநேரம்) தங்கிவிடுவார்கள். (இது பிடிக்காமல் நபியவர்களுடைய துணைவியரான) நானும் ஹஃப்ஸாவும் இவ்வாறு கூடிப் பேசி முடிவு செய்துகொண்டோம்: (தேன் சாப்பிட்ட பின்,) நம்மவரில் எவரிடம் நபி(ஸல்) அவர்கள் முதலில் வருவார்களோ அவர், நபி(ஸல்) அவர்களிடம்'கருவேலம் பிசின் சாப்பிட்டீர்களா? உங்களிடமிருந்து, பிசினின் துர்வாடை வருகிறதே'' என்று கூறிட வேண்டும்.

(வழக்கம் போல் ஸைனபின் வீட்டிலிருந்து தேன் சாப்பிட்டுவிட்டு, நபி(ஸல்) அவர்கள் வந்தபோது நாங்கள் பேசி வைத்திருந்த பிரகாரம் கூறியதற்கு) அவர்கள், 'இல்லை (நான் பிசின் சாப்பிடவில்லை). ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் (அவரின் அறையில்) தேன் குடித்து வந்தேன். (இனிமேல்,) நான் ஒருபோதும் அதைக் குடிக்கமாட்டேன் நான் சத்தியமும் செய்து விட்டேன்'' என்று கூறிவிட்டு, 'இது குறித்து எவரிடமும் தெரிவித்துவிடாதே!"என்றும் கூறினார்கள். (இது குறித்தே மேற்கண்ட 66:1 வது இறைவசனம் அருளப்பெற்றது.)

## 66:02 வது திருக்குர்ஆன் வசனம்

அல்லாஹ் நீங்கள் செய்யும் சத்தியத்தி(ன் கட்டுப்பாட்டி)லிருந்து விடுபடுவதற்கான வழியை உங்களுக்கு நிர்ணயித்துள்ளான். அல்லாஹ் உங்கள் பாதுகாவலன். மேலும், அவன் யாவும் அறிந்தவன் நுண்ணறிவாளன் (எனும் 66:2 வது இறைவசனம்).

ஹதீஸ் 4913. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் ஒரு வருட காலமாக ஒரு வசனத்தைப் பற்றி உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களிடம் (விளக்கம்) கேட்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால், அன்னார் மேலிருந்த (மரியாதை கலந்த) அச்சம் காணரமாகக் கேட்பதற்குத் தைரியம் வரவில்லை.
(ஒரு முறை) உமர்(ரலி) ஹஜ்ஜுக்காகப் புறப்பட்டுச் சென்றபோது நானும் அவர்களுடன் புறப்பட்டேன். நான் (ஹஜ்ஜை முடித்துக் கொண்டு) திரும்பி வரும் வழியில் நாங்கள் (மர்ருழ் ழுஹ்ரான் எனும்) ஒரு சாலையில் இருந்தோம். அப்போது உமர்(ரலி) தம் (இயற்கைத்) தேவை ஒன்றிற்காக 'அராக்' மரத்தை நோக்கி ஒதுங்கிச் சென்றார்கள். அவர்கள், தம் தேவையை முடித்துக்கொண்டு வரும் வரை நான் அவர்களை எதிர்பார்த்தபடி அவர்களுக்காக நின்றுகொண்டிருந்தேன். பிறகு அவர்களுடன் செல்லலானேன். அப்போது நான் அவர்களிடம், 'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! நபி(ஸல்) அவர்களின் துணைவியரில், (நபியவர்களைச் சங்கடப்படுத்தும் வகையில்) கூடிப் பேசிக் செயல்பட்ட இருவர் யார்?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஆயிஷாவும் ஹஃப்ஸாவும் தாம் அந்த இருவர்'' என்று பதிலளித்தார்கள்.
உடனே நான், 'அல்லாஹ்வின் மீதாணையாக! ஒரு வருட காலமாக இது குறித்து உங்களிடம் கேட்க வேண்டுமென்று நான் எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால், உங்களின் மீது (எனக்கு) உள்ள (மரியாதை கலந்த) அச்சம் காரணமாக எனக்குத் தைரியம் வரவில்லை'' என்று சொன்னேன். அப்போது '(இப்படிச்) செய்யாதீர்கள். என்னிடம் ஓர் அறிவு இருப்பதாக நீங்கள் எண்ணினால் என்னிடம் கேட்டுவிடுங்கள். (உண்மையிலேயே) அவ்வறிவு என்னிடம் இருக்குமானால், அதை உங்களுக்கு நான் தெரிவிக்கிறேன்'' என்று கூறிய உமர்(ரலி), பிறகு (பின் வருமாறு) தெரிவித்தார்கள். 'அல்லாஹ்வின் மீதாணையாக! அறியாமைக் காலத்தில் பெண்களுக்கு எந்த உரிமையும் இருப்பதாக நாங்கள் கருதியதில்லை. அவர்(களின் உரிமை)கள் தொடர்பாக, தான் அருளிய (சட்டத்)தை அல்லாஹ் அருளும் வரையிலும், அவர்களுக்குரிய (செலவுத் தொகை, சொத்துரிமை ஆகிய பங்கு)தனை அவன் நிர்ணயிக்கும் வரையிலும் (இந்நிலை நீடித்தது.)
(ஒரு நாள்) நான் ஒரு விவகாரம் குறித்து ஆலோசித்துக் கொண்டிருந்தபோது என் மனைவி, 'நீங்கள் இப்படிச் செய்யலாமே'' என்று (என்னிடம் ஆலோசனை) கூறினார். அதற்கு நான் அவரிடம், 'உனக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? நான் தீர்மானிக்க வேண்டிய ஒரு விஷயத்தில் உன் தலையீடு எதற்கு?' என்று கேட்டேன். அதற்கு அவர் என்னிடம், 'கத்தாபின் புதல்வரே! (இப்படிச் சொன்ன) உங்களைப் பார்த்து நான் ஆச்சரியப்படுகிறேன். உங்களுடன் விவாதிக்கப்படுவதை நீங்கள் விரும்பவில்லை. ஆனால், உங்களுடைய புதல்வி (ஹஃப்ஸாவோ தம் துணைவர்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் விவாதித்தால் அன்றைய நாள் முழுக்க இறைத்தூதர் கோபமாக இருந்தார்கள்'' என்று கூறினார்.
உடனே நான் எழுந்து, அதே இடத்தில் என்னுடைய மேலங்கியை எடுத்துக்கொண்டு, ஹஃப்ஸாவிடம் சென்று, 'என் அருமை மகளே! நீ இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் வாதம் புரிந்து, அதனால் அவர்கள் அன்றைய தினம் கோபமாக இருந்தார்களாமே! (உண்மையா?)'' என்று கேட்டேன். அதற்கு ஹஃப்ஸா, 'அல்லாஹ்வின் மீதாணையாக! (நபிகளாரின் துணைவியரான) நாங்கள் நபியவர்களுடன் விவாதிப்பதுண்டு'' என்றார். அதற்கு நான், 'அல்லாஹ்வின் தண்டனையையும் அவனுடைய தூதர்(ஸல்) அவர்களின் கோபத்தையும் பற்றி உனக்கு நான் எச்சரிக்கை விடுக்கிறேன். அருமை மகளே! தன்னுடைய அழகும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் மீது கொண்டுள்ள அன்பும் எவரைப் பூரிப்படைய வைத்துள்ளதோ அவரை - ஆயிஷாவை-ப் பார்த்து நீயும் துணிந்து விடாதே!"என்று (அறிவுரை) சொன்னேன்.

பிறகு நான் (அங்கிருந்து) புறப்பட்டு, (நபி(ஸல்) அவர்களின் மற்றொரு துணைவியாரான) உம்மு ஸலமாவிடம் (அறிவுரை கூறச் சென்றேன். ஏனெனில், அவர் (என் தாய்வழி) உறவினராவார்.
இது குறித்து அவரிடமும் நான் பேசினேன். அப்போது உம்மு ஸலமா, 'கத்தாபின் புதல்வரே! உம்மைக் கண்டு நான் வியப்படைகிறேன். எல்லா விஷயங்களிலும் தலையிட்டு வந்த நீங்கள் இப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்களின் துணைவியருக்கும் இடையேயும் தலையிடும் அளவிற்கு வந்துவிட்டீர்கள்'' என்று கூறினார். அல்லாஹ்வின் மீதாணையாக! உம்மு ஸலமா (தம் பேச்சால்) என்னை ஒரு பிடி பிடித்துவிட்டார். எனக்கு ஏற்பட்டிருந்த பாதி(கோப உணர்ச்சி)யை உடைத்தெறிந்துவிட்டார். எனவே, நான், அவரிடமிருந்து வெளியேறி (வந்து) விட்டேன்.
மேலும், அன்சாரிகளில் எனக்கொரு நண்பர் இருந்தார். நான் (நபி(ஸல்) அவர்களின் அவையில்) இல்லாதபோது கிடைக்கும் செய்திகளை அவர் எனக்குத் தெரிவிப்பதும், அவர் இல்லாதபோது கிடைக்கும் செய்திகளை நான் அவருக்குத் தெரிவிப்பதும் வழக்கம்.
(அந்தக் காலக்கட்டத்தில் ஷாம் நாட்டு)'ஃகஸ்ஸான்' வமிச மன்னர்களில் ஒருவனைப் பற்றிய அச்சம் எங்களுக்கு இருந்துவந்தது. அவன் எங்கள் (மதீனா) மீது படையெடுக்க விரும்புவதாக எங்களிடம் சொல்லப்பட்டிருந்தது. இதனால், அவனைப் பற்றிய அச்சம் எங்கள் நெஞ்சங்களில் நிரம்பியிருந்தது. இந்நிலையில், (ஒரு நாள்) அந்த அன்சாரி நண்பர் (என் வீட்டுக்) கதவைத் தட்டினார். 'திறங்கள், திறங்கள்'' என்று கூறினார். (கதவைத் திறந்த) நான், 'ஃகஸ்ஸானிய மன்னன் (படையெடுத்து) வந்துவிட்டானா?' என்று கேட்டேன். அதற்கவர், 'அதைவிடப் பெரியது நடந்துவிட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் துணைவியரைவிட்டு விலகிவிட்டார்கள்'' என்றார்.
உடனே நான், 'ஹஃப்ஸா, ஆயிஷா ஆகியோரின் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்!"என்று கூறிவிட்டு, என்னுடைய உடையை எடுத்து (அணிந்து) கொண்டு புறப்பட்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தபோது அவர்கள் தமக்குரிய (மாடி) அறையொன்றில் (தங்கி) இருந்தார்கள். ஏணிப்படி வழியாக மேலே அந்த அறைக்குச் செல்ல முடியும். அங்கே இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கறுப்பு நிற அடிமை ஒருவர் ஏணியின் மேற்படியில் இருந்தார். அவரிடம் நான், 'இந்த உமர் இப்னு கத்தாபுக்காக (அல்லாஹ்வின் தூதரிடம் அனுமதி) கேள்!"என்றேன். (அவர் உள்ளே சென்று அனுமதி கேட்டார்.) அவர்களும் எனக்கு அனுமதி அளித்துவிட்டார்கள். (நான் உள்ளே சென்று) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (எனக்கும் அவர்களின் துணைவியருக்குமிடையே நடைபெற்ற) இந்த உரையாடல்களை எடுத்துரைத்தேன். உம்மு ஸலமாவின் பேச்சு வந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள். அப்போது அவர்கள் ஓர் ஈச்சம் பாயில் (அமர்ந்து) இருந்தார்கள். அவர்களுக்கும் அந்தப் பாய்க்குமிடையே (விரிப்பு) எதுவும் இருக்கவில்லை. அவர்களின் தலைக்குக் கீழே ஈச்ச நார்கள் நிரப்பப்பட்ட தோல் தலையணை ஒன்றிருந்தது. அவர்களின் கால்களுக்கருகில் கருவேலை இலைகள் குவிக்கப்பட்டிருந்தன. அவர்களின் தலைமாட்டில் பதனிடப்படாத தோல் தொங்கிக் கொண்டிருந்தது. அப்போது அவர்களின் விலாப்புறத்தில் ஈச்சம்பாயின் சுவடு (பதிந்து) இருப்பதைக் கண்டு அழுதுவிட்டேன்.
அப்போது நபி(ஸல்) அவர்கள், 'ஏன் அழுகிறீர்கள்?' என்றார்கள். அதற்கு நான், 'இறைத்தூதர் அவர்களே! (பைஸாந்திய மற்றும் பாரசீக மன்னர்களான) சீசரும் குஸ்ரூவும் (தாராளமான உலகச் செல்வங்களைப் பெற்று) வளமுடன் இருந்து வருகின்றனர். தாங்களோ அல்லாஹ்வின் தூதராயிற்றே!"என்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அ(ம்மன்ன)வர்களுக்கு இம்மையும் நமக்கு மறுமையும் இருப்பதை நீங்கள் விரும்பவில்லையா?' என்று கேட்டார்கள்.

நபி தம் துணைவியரில் ஒருவரிடம் ஒரு விஷயத்தை இரகசியமாகச் சொல்லியிருந்தார். (ஆனால்,) அதை அந்தத் துணைவி (மற்றொரு துணைவிக்கு) தெரிவித்துவிடவே, நபிக்கு அல்லாஹ் அதை வெளிப்படுத்தினேன். அப்போது, நபி அதில் சிலவற்றை (அந்தத் துணைவியிடம்) சொல்லிக்காட்டிவிட்டு சிலவற்றைச் சொல்லாமல்விட்டுவிட்டார். இவ்வாறு (இரகசியம் வெளிப்பட்டது பற்றி) நபி தம் துணைவியிடம் தெரிவித்தபோது)'தங்களுக்கு இதனைத் தெரிவித்த யார்?' என்று அந்தத் துணைவி கேட்டதற்கு நபி'அனைத்தையும் அறிந்தவனும் நன்கு தெரிந்தவனும் தான் எனக்கு அறிவித்தான்'' என்று பதிலளித்தார் (எனும் 66:3 வது இறைவசனம்.)

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து, ஆயிஷா(ரலி) அறிவிப்புச் செய்துள்ளார்கள்.

ஹதீஸ் 4914. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் உமர்(ரலி) அவர்களிடம் (ஒரு வசனம் குறித்து) கேட்க நினைத்துக் கொண்டிருந்தேன். எனவே, (வாய்ப்புக் கிடைத்தபோது அவர்களிடம்)'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! இறைத்தூதர்(ஸல்) அவர்(களைச் சங்கடப்படுத்தும் வகையில், அவர்)களின் விஷயத்தில் கூடிப் பேசிச் செயல்பட்ட இரண்டு துணைவியர் யார்?' என்று கேட்டேன். என் பேச்சை நான் முடிப்பதற்குள்'ஆயிஷாவும் ஹஃப்ஸாவும் தாம்'' என்று உமர்(ரலி) பதிலளித்தார்கள்.

## 66:04 வது திருக்குர்ஆன் வசனம்

“நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டால், (அது உங்களக்குச் சிறந்ததாகும். ஏனெனில்,) உங்களிருவரின் இதயங்களும் நேரிய வழியிலிருந்து பிறழ்ந்து விட்டிருக்கின்றன'' எனும் (திருக்குர்ஆன் 66:4 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸஃகத்' எனும் சொல்லுக்கப்'பிறழ்தல்' என்று பொருள். (இதன் தன்மை வினைச் சொற்களான)'ஸஃகவ்த்து' மற்றும்'அஸ்ஃகைத்து' ஆகியவற்றுக்கு'நான் சாய்ந்தேன்' என்று பொருள். (திருக்குர்ஆன் 06:113 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லி தஸ்ஃகா' எனும் சொல்லுக்கு அவை பொருள். (திருக்குர்ஆன் 06:113 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லி தஸ்ஃகா' எனும் சொல்லுக்கு'அவை சாய்வதற்காக' என்று பொருள். 'தழாஹரூன' எனும் சொல்லுக்குக்'கூடிப் பேசிச் செயல்படுதல்' என்று பொருள். 'ழஹீர்' எனும் சொல்லுக்கு'உதவியாளர்' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

“(திருக்குர்ஆன் 66:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கூ அன்ஃபுசக்கும் வஅஹ்லீக்கும்' (உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள) என்பதன் கருத்தாவது: இறையச்சத்தைக் கைக்கொள்ளமாறு உங்களுக்கும் உங்கள் குடும்பத்தாருக்கும் நீங்கள் அறிவுரை பகர்வதுடன், அவர்களுக்கு ஒழுக்கத்தையும் கற்பியுங்கள்.

ஹதீஸ் 4915. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்(களைச் சங்கடப்படுத்தும் வகையில், அவர்)களின் விஷயத்தில் கூடிப் பேசிச் செயல்பட்ட இரண்டு துணைவியர் யார்? என்பது பற்றி உமர்(ரலி) அவர்களிடம் கேட்க வேண்டும் என்று (நெடுநாள்களாக) எண்ணிக்கொண்டிருந்தேன். இவ்வாறு ஓராண்டு காலம் இருந்து விட்டேன். அதற்கான சந்தர்ப்பம் எனக்கு வாய்க்கவில்லை. (இந்நிலையில் ஒரு முறை) நான் ஹஜ்ஜுக்காக உமர்(ரலி) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றேன். நாங்கள்'(மர்ருழ்) ழஹ்ரான்' எனுமிடத்தில் இருந்தபோது உமர்(ரலி) தம் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காகச் சென்றபோது'உளூ (அங்கசுத்தி) செய்வதற்கான தண்ணீரை என்னிடம் கொண்டுவாருங்கள்'' என்று கூறினார்கள். எனவே, நான் அவர்களுக்காக தண்ணீர்க் குவளையை எடுத்து வந்து அவர்களுக்குத் தண்ணீரை ஊற்றலானேன். நான் (நினைத்திருந்ததைக் கேட்பதற்கு இதுதான்) சந்தர்ப்பம் எனக் கருதினேன். உடனே நான், `இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! (இறைத்தூதர்(ஸல்) அவர்களைச்

சங்கடப்படுத்தும் வகையில்) கூடிப் பேசிச் செயல்பட்ட அந்த இரண்டு துணைவியர் யார்?' என்று கேட்டேன். நான் என் பேச்சை முடிப்பதற்குள், 'ஆயிஷாவும் ஹஃப்ஸாவும் தாம் (அவர்கள் இருவரும்)!"என்று உமர்(ரலி) பதிலளித்தார்கள்.

## 66:05 வது திருக்குர்ஆன் வசனம்

நபி (தம் துணைவியராகிய) உங்களை விவாகரத்துச் செய்துவிடுவாராயின், உங்களுக்கு பதிலாக உங்களைவிடவும் சிறந்த துணைவியரை அவரின் இறைவன் அவருக்கு வழங்கிட முடியும். அவர்கள் (வாய்மையான) முஸ்லிம்களாய், இறைநம்பிக்கையுள்ளோராய், கீழ்ப்படிபவர்களாய், பாவமன்னிப்புக் கோருபவர்களாய், அடிபணிந்து வணங்குபவர்களாய், நோன்பு நோற்பவர்களாய்த் திகழ்வார்கள் அவர்கள் விதவைகளாயும், கன்னிகளாயும் இருப்பார்கள் (எனும் 66:5 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4916. உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் துணைவியர் அனைவரும் சேர்ந்துகொண்டு நபி(ஸல்) அவர்களிடம் வைராக்கியமாக நடந்து கொண்டபோது, 'நபி(ஸல்) அவர்கள் உங்களை விவாக விலக்குச் செய்தால் உங்களைவிடவும் சிறந்த துணைவியரை உங்களுக்கு பதிலாக இறைவன் அவர்களுக்குத் தர முடியும்'' என்று சொன்னேன். அப்போது (நான் கூறியவாறு) இந்த (திருக்குர்ஆன் 66:5 வது) இறைவசனம் அருளப்பட்டது.

## (67) அல்முல்க் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 67:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தஃபாவுத்' எனும் சொல்லுக்கும், (மற்றொரு வாய்பாட்டில் அமைந்த)'தஃபவ்வுத்' எனும் சொல்லுக்கும் பொருள் ஒன்றே, அதாவது'முரண்பாடு' அல்லது'மாற்று'.

## (68) அல்கலம் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 68:23 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யத்தஃகாஃப்பத்தூன' எனும் சொல்லுக்கு'இரகசியமாகப் பேசிக்கொண்டு போனார்கள்'' என்று பொருள்.

கத்தாதா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 68:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹர்த்' எனும் சொல்லுக்கு'மனதுக்குள் தீர்மானித்துக் கொண்டு' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 68:20 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கஸ்ஸரீம்' எனும் சொல்லுக்கு'இரவிலிருந்து பிரிந்த வந்த அதிகாலை போன்று பகலிலிருந்து பிரிந்த இரவைப் போன்று' என்று பொருள்.

மேலும், மணல் குவியலிலிருந்து பிரிந்து வந்த ஒவ்வொரு மணல் துகளும்'ஸரீம்' என்று கூறப்படுவதுண்டு.

## 68:13 வது திருக்குர்ஆன் வசனம்

(அவன்) இரக்கமற்ற கொடுமைக்காரனாகவும், இத்தனைக்கும் பிறகு இழிபிறவியாகவும் இருக்கிறான். (இவன் போன்றவனுக்கெல்லாம் நபியே! நீங்கள் அடங்கிவிடாதீர்கள் (எனும் 68:13 வது) இறைவசனம்.)

ஹதீஸ் 4917. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்

(திருக்குர்ஆன் 68:13 வது வசனத்தின் விளக்கத்தில்) இப்னு அப்பாஸ்(ரலி), 'அவன் குறைஷிக் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதனாவான். ஆட்டிற்கு (வேறுபடுத்திக் காட்டும்) ஓர் அடையாளம்

(காதணி) இருப்பதுபோல், அவனுக்கும் (அவனுடைய கழுத்தில் ஓர்) அடையாளம் உள்ளது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4918. ஹாரிஸா இப்னு வஹ்ப் அல் ஃகுஸாஈ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை பின் வருமாறு) கூறக் கேட்டேன்: சொர்க்கவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் தெரிவிக்கவா? அவர்கள் (மக்களின் பார்வையில்) பலவீனமானவர்கள் பணிவானவர்கள் (ஆனால்,) அவர்கள் அல்லாஹ்வின் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால் அல்லாஹ் அதை (அவ்வாறே) நிறைவேற்றிவைப்பான்.

(இதைப் போன்றே) நரகவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் தெரிவிக்கவா? அவர்கள் இரக்கமற்றவர்கள் (அதிகமாகச் சாப்பிட்டு) உடல் கொழுத்தவர்கள் பெருமை அடிப்பவர்கள் ஆவர்.

## 68:42 வது திருக்குர்ஆன் வசனம்

காலின் திரை அறக்கப்ப(ட்)டு (இறைவன் காட்சியளிக்கு)ம் அந்த (மறுமை) நாளில் (மக்களெல்லாம் தாமாகவே) சிரவணக்கம் செய்ய நிர்ப்பந்திக்கப்படும்போது கூட (இறைமறுப்பாளர்களான) இவர்கள் (அதற்கு) சக்திபெறமாட்டார்கள் (எனும் 68:42 வது இறைவசனம்).

ஹதீஸ் 4919. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நம் இறைவன் (காட்சியளிப்பதற்காகத்) திரையை அகற்றித் தன் காலை வெளிப்படுத்தும் அந்த (மறுமை) நாளில், இறை நம்பிக்கையுள்ள ஒவ்வோர் ஆணும், இறைநம்பிக்கையுள்ள ஒவ்வொரு பெண்ணும் அவனுக்கு முன்னால் சிரவணக்கம் (சஜ்தா) செய்வார்கள். முகஸ்துதிக்காவும், மக்களின் பாராட்டைப் பெறுவதற்காகவும் இவ்வுலகில் (தொழுது) சஜ்தா செய்து வந்தவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பர். அப்போது அவர்கள் சஜ்தா செய்ய முற்படுவார்கள். (ஆனால்,) அவர்களின் முதுகு (குனிய முடியாதவாறு) ஒரே கட்டையைப் போல் மாறிவிடும்.

இதைஅபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.

## (69)'அல்ஹாக்கா' அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

(திருக்குர்ஆன் 69:21 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஈஷத்துர் ராளியா' (திருப்தியான வாழ்க்கை) என்பதன் கருத்தாவது: அந்த வாழ்க்கையில் அவர் திருப்தியைக் காண்பார்.

(திருக்குர்ஆன் 69:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் காளியா' (முடிந்து போனதாக) எனும் சொல், மறுமையில் எழுப்பப்படுவதற்கு முன் ஏற்படும் மரணத்தைக் குறிக்கும். (அந்த மரணத்தோடு எல்லாம் முடிந்திருக்கக் கூடாதா எனப் புலம்புவான்.)

(திருக்குர்ஆன் 69:47 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஹத்' (எவரும்) எனும் சொல் ஒருமை, பன்மை ஆகிய இரண்டு நிலையிலும் பிரயோகிக்கப்படுகிறது.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 69:46 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் வத்தீன்' எனும் சொல்லுக்கு'நாடி நரம்பு' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 69:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஃகா' எனும் சொல்லுக்கு'அதிகமானது' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 69:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தாஃகியா' எனும் சொல்லுக்கு'(எல்லை மீறிய) அழிச்சாட்டியம்' என்று பொருள்.

('தாஃகியா' என்பதற்குப்'புயல்' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.) அந்தப் புயல் வானவர்களால் கூடக் கட்டுப்படுத்த முடியாத அளவிற்கு மிகக் கடுமையாக வீசியது.

இறைத்தூதர் நூஹ்(அலை) அவர்களின் சமூகத்தாரின் மீது பெருவெள்ளம் மிகக் கடுமையாகப் பாய்ந்தது போல் இந்த ('ஸமூத்' மற்றும்'ஆத்' சமூகத்தினருக்கும்) வேதனை ஏற்பட்டது.

## (70) அல்மஆரிஜ் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 70:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஃபஸீலத்திஹி' (அவனுடைய நெருங்கிய உறவினர்) எனும் சொல், ஒரு மனிதனின் குடும்ப உறவு எந்தத் தந்தை மற்றும் பாட்டனார் மூலம் வந்து சேர்கிறதோ அத்தகைய நெருக்கமான மூதாதையரைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 70:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லிஷ்ஷவா' எனும் சொல், இரண்டு கைகள், இரண்டு கால்கள், மற்றும் உடலின் அனைத்து பாகங்களையும், தலையின் சருமத்தையும் குறிக்கும் என்று சொல்லப்படுகிறது. எந்த உறுப்பைத் துண்டிப்பதனால் மனிதன் இறந்துவிடமாட்டானோ அதுவும்'ஷவா' என்று சொல்லப்படுகிறது.

(திருக்குர்ஆன் 70:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்இஸீன்' எனும் சொல்லுக்கு, 'கூட்டம் கூட்டமாக' என்று பொருள்.'இஸத்' (கூட்டம்) என்பது அதன் ஒருமையாகும்.

## (71) நூஹ் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 71:28 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தபார்' எனும் சொல்லுக்கு'அழிவு' என்று பொருள்.

### 71:23 ஆவது இறைவசனம்

ஹதீஸ் 4920 இறைத்தூதர் நூஹ் (அலை) அவர்களின் (காலத்து) மக்களிடையே (வணங்கப்பட்டுக் கொண்டு) இருந்த சிலைகள் பின்பு அரபுகளிடையே இருந்தன. வத் என்பது தூமத்துல் கூந்தல் எனும் இடத்திலிருந்த கல்ப் குலத்தாரின் சிலையாகும். சுவாஉ என்பது பனூஹுஃதைல் குலத்தாரின் சிலையாகும். யஃஜ் என்பது பனூமுராத் குலத்தாரின் சிலையாக இருந்தது. பின்னர் ஜபஉ சமுதாயத்தாருக்கு அருகில்(யமனிலுள்ள) ஜவ்ஃப் எனுமிடத்தில் வசித்துவந்த பனூஹுஃதைப் குலத்தாருக்குச் சொந்தமானது. யஊக் என்பது பனூ ஹமதான் குலத்தாரின் சிலையாகும். நஜ்ர் என்பது (யமனின் பழங்குடியரான) ஹிம்யர் மக்களின் சிலையாகும். இவர்கள் துல்கிலாஃ என்பவருடைய சந்ததியினராவர். (தெய்வச் சிலைகளாகக் கற்பிக்கப்பட்ட) இவை (ஐந்தும்) நூஹ் (அலை) அவர்களின் காலத்தில் வாழ்ந்த ஐந்து நல்ல மனிதர்களின் பெயர்களேயாகும். பின்னர் இவர்கள் மரணமடைந்தபொழுது இவர்களுடைய மக்களின் மனத்தில் சைத்தான் அ(ந்த நல்ல)வர்கள் அமர்ந்து வந்த அவைகளில் சிலைகளை நிறுவுங்கள். (அவர்களின் நினைவாக) அவற்றுக்கு அவர்களின் பெயர்களையே சூட்டுங்கள். என்று எண்ணச் செய்தான். (அதன்படியே) அவர்களும் செய்தனர். அப்போது அந்த சிலைகள் வணங்கப்படவில்லை. ஆனால் (தங்களின் பெரியவர்களை நினைவுகூர்வதற்காகச் சிலை நிறுவிய) அந்த மக்களும் இறந்து (அந்தச் சிலைகள் நிறுவப்பட்டதற்கான காரணம் குறித்த) அறிவும் மங்கிவிட்டபோது அச்சிலைகள் வணங்கப்படத் தொடங்கின.

### (உங்கள் தெய்வங்களாகிய) வத், சுவாஉ, யஃகூஸ், யஊக் மற்றும் நஸ்ர் ஆகியவற்றை(க் கேட்பாரற்று)விட்டுவிடாதீர்கள் என்று அவர்கள் சொல்லிக் கொண்டனர் (எனும் 71:23 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4921. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன்'உக்காழ்' எனும் சந்தையை நோக்கிச் சென்றார்கள். (இந்த நேரத்தில்) ஷைத்தான்களுக்கும் வானுலகச் செய்திகளுக்குமிடையே திரையிடப்பட்டு (அச்செய்திகளைக் கேட்கவிடாமல் ஷைத்தான்களைத்

தடுக்கப்பட்டு)விட்டது. (வானுலகச் செய்திகளை ஒட்டுக் கேட்கச் சென்ற) ஷைத்தான்களின் மீது தீப்பந்தங்கள் ஏவிவிடப்பட்டன. (ஒட்டுக் கேட்கச் சென்ற) அந்த ஷைத்தான்கள் (ஒரு செய்தியும் கிடைக்காமல் தம் தலைவர்களிடம்) திரும்பி வந்தன. அப்போது தலைவர்கள், 'உங்களுக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். ஷைத்தான்கள், 'வானத்துச் செய்திகளுக்கும் எங்களுக்குமிடையே திரையிடப்பட்டுவிட்டது எங்களின் மீது தீப்பந்தங்கள் ஏவி விடப்பட்டன'' என்று பதிலளித்தனர். 'புதியதொரு நிகழ்ச்சி ஏதேனும் சம்பவித்திருக்கும். அதுவே, உங்களுக்கும் வானத்துச் செய்திகளுக்குமிடையே தடையாக அமைந்திருக்கவேண்டும். எனவே நீங்கள், பூமியின் கீழ்த்திசை, மேல்திசை (என நாலா பாகங்களிலும்) சென்று புதிதாகச் சம்பவித்துவிட்ட இந்த நிகழ்ச்சி என்னவென்று ஆராயுங்கள்'' என்றனர். உடனே ஷைத்தான்கள் பூமியின் கீழ்த்திசை, மேல்திசை எங்கும் பயணம் செய்து தங்களுக்கும் வானுலகச் செய்திகளுக்கும் இடையே தடுப்பாய் அமைந்த அந்த நிகழ்ச்சி என்னவென்று ஆராயலாயினர்.

'திஹாமா' எனும் (மக்கா) பகுதியை நோக்கி ஷைத்தான்கள் வந்தபோது 'உக்காழ்' சந்ததையை நோக்கிச் சென்றுகொண்டிருந்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'நக்லா' எனுமிடத்தில் தம் தோழர்களுக்கு 'ஃபஜ்ரு'த் தொழுகையை முன்னின்று நடத்திக் கொண்டிருந்தார்கள் அப்போது ஓதப்பட்ட குர்ஆன் வசனங்களை அந்த ஷைத்தான்கள் கேட்டபோது அதைக் கவனமாகச் செவிகொடுத்துக் கேட்டனர். அப்போது ஷைத்தான்கள் (தங்களுக்கிடையில்) 'வானத்துச் செய்திகளை (கேட்கமுடியாமல்) உங்களைத் தடுத்தது இதுதான்'' என்று கூறிவிட்டு, தம் கூட்டத்தாரிடம் சென்று, 'எங்கள் கூட்டத்தாரே! நிச்சயமாக நாங்கள் ஆச்சரியமானதொரு குர்ஆனை செவிமடுத்தோம். அது நேர் வழியைக் காட்டுகிறது. எனவே, நாங்கள் அதை விசுவாசித்தோம். எங்கள் இறைவனுக்கு (இனி) நாங்கள் ஒருபோதும் யாரையும் இணையாகக் கருதமாட்டோம்'' என்று கூறினர். (இதையொட்டி) மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ் தன் தூதருக்கு, '(நபியே!) நீர் கூறுக: வஹீ (இறைச்செய்தி) மூலம் எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது: மெய்யாகவே ஜின்களில் சிலர் (இவ்வேதத்தைச்) செவியேற்றனர்..!" என்று தொடங்கும் இந்த (72 வது) அத்தியாயத்தை அருளினான்.

ஜின்கள் (தம் கூட்டத்தாரிடம்) கூறியதைப் பற்றி 'வஹீ'யின் மூலம் தான் நபி(ஸல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

## (73) அல்முஸ்ஸம்மில் அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 73:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'தபத்தல்' எனும் சொல்லுக்குக் 'கலப்பற்ற முறையில் அவனுக்காகவென்றே ஆகிவிடுங்கள்' என்று பொருள்.

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 73:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அன்கால்' எனும் சொல்லுக்கு '(கை) விலங்குகள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 73:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'முன்ஃபதிருன் பிஹி' எனும் சொல்லுக்கு 'அதன் பளுவால் தகர்ந்துவிடும்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 73:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'கஸீபம் மஹீலா' எனும் சொல்லுக்குச் 'சிதறிய மணற் குவியலாய்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 73:16 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'வபீலா' எனும் சொல்லுக்குக் 'கடுமையாக' என்று பொருள்.

## (74) அல்முத்தஸ்ஸிர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
(திருக்குர்ஆன் 74:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அபூ ர்' எனும் சொல்லுக்கு'மிகக் கடுமையான' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 74:51 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அபூ ர்' எனும் சொல்லுக்கு'மிகக் கடுமையான' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 74:50 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முஸ்தன்ஃபிரா' எனும் சொல்லுக்கு'மிரண்டு வெருண்டோடுகின்ற' என்று பொருள்.

ஹதீஸ் 4922. யஹ்யா இப்னு அபீ கஸீர்(ரஹ்) அறிவித்தார்
நான் அபூ ஸலமா இப்னு அப்திர்ரஹ்மான்(ரஹ்) அவர்களிடம் முதன்முதலாக அருளப்பெற்ற திருக்குர்ஆன் வசனம் குறித்துக் கேட்டேன். அதற்கு அன்னார்'போர்த்தியிருப்பவரே!"(யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்) எனும் (திருக்குர்ஆன் 74:1 வது) வசனம் என்றார்கள். நான்'(நபியே!) படைத்த உங்களுடைய இறைவனின் பெயரால் ஓதுக!"(இக்ரஃ பிஸ்மி ரப்பிகல்லஃதீ கலக்) எனும் (திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் என்றல்லவா மக்கள் கூறுகிறார்கள் என்றேன். அதற்கு அபூ ஸலமா அவர்கள், `நான் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம் இது குறித்துக் கேட்டேன். நீங்கள் (என்னிடம்) கேட்டது போன்றே நானும் அவர்களிடம் கேட்டேன். அதற்கு ஜாபிர்(ரலி), `இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களுக்குச் சொன்னதைத் தவிர வேறெதையும் உங்களுக்கு நான் சொல்லப்போவதில்லை. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் ஹிரா மலைக் குகையில் தங்கியிருந்தேன். பிறகு என் தங்குதலை முடித்துக்கொண்டு (மலையிலிருந்து) இறங்கினேன்.) அப்போது என்னை அழைக்கும் குரலைக் கேட்டு நான் என் வலப் பக்கத்தில் பார்த்தேன். அங்கு எதையும் நான் காணவில்லை. என் இடப்பக்கத்தில் பார்த்தேன். அங்கும் எதையும் நான் காணவில்லை. எனவே, நான் என் தலையை உயர்த்திப் பார்த்தேன். அங்கு ஒன்றை கண்டேன். எனவே, நான் (என் துணைவியாரான) கதீஜாவிடம் சென்று, `எனக்குப் போர்த்திவிடுங்கள். குளிர்ந்த நீரை என் மீது ஊற்றுங்கள்!"என்று கூறினேன். அவர்கள் எனக்குப் போர்த்தியும்விட்டார்கள் என் மீது குளிர்ந்த நீரை ஊற்றவும் செய்தார்கள். அப்போது, `போர்த்திக்கொண்டு (படுத்து) இருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள். மேலும், உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்துங்கள்'` எனும் (திருக்குர்ஆன் 74:1-3) வசனங்கள் அருளப்பெற்றன.

## "எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 74:2 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4923. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
நான்'ஹிரா' மலைக் குகையில் தங்கியிருந்தேன். (எனத் தொடங்கி) மேற்கண்ட ஹதீஸ் போன்றே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

## உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்திடுங்கள் (எனும் 74:3 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4924. யஹ்யா இப்னு அபீ கஸீர்(ரஹ்) அறிவித்தார்
நான் அபூ ஸலமா(ரஹ்) அவர்களிடம்'முதன் முதலாக அருளப்பெற்ற குர்ஆன் வசனம் எது?' என்று கேட்டேன். அதற்கு அன்னார், `போர்த்தியிருப்பவரே!"(யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்) எனும் (திருக்குர்ஆன் 74:1 வது) வசனம் என்றார்கள். அப்போது நான், `(நபியே!) படைத்த உங்களுடைய இறைவனின் பெயரால் ஓதுக!"(இக்ரஃ பிஸ்மி ரப்பிக் கல்லஃதீ கலக்) எனும்

(திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் என்றல்லவா எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளது! என்றேன். அதற்கு அபூ ஸலமா(ரஹ்), 'நான் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்களிடம், 'முதன் முதலாக அருளப்பெற்ற குர்ஆன் வசனம் எது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'யா அய்யுஹல் முத்தஸ்ஸிர்'' எனும் (திருக்குர்ஆன் 74:1 வது) வசனம் என்று கூறினார்கள். உடனே நான், 'இக்ரஃ பிஸ்மி ரப்பிக்கல்லஃதீ கலக்'' எனும் (திருக்குர்ஆன் 96:1 வது) வசனம் தான் (முதன் முதலில் அருளப்பட்ட வசனம்) என்று எனக்கு அறிவிக்கப்பட்டுள்ளதே! என்று கேட்டேன். அதற்கு ஜாபிர்(ரலி), 'நபி(ஸல்) அவர்கள் சொன்னதைத் தவிர வேறெதையும் உங்களுக்கு நான் தெரிவிக்கப்பபோவதில்லை. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:

நான்'ஹிரா' மலைக் குகையில் தங்கியிருந்தேன். நான் என் தங்குதலை முடித்துக்கொண்டு (மலையிலிருந்து) இறங்கி அங்கிருந்த பள்ளத்தாக்கின் நடுவே வந்து சேர்ந்திருப்பேன். அப்போது என்னை அழைக்கும் குரலைக் கேட்டேன். உடனே நான் எனக்கு முன்புறத்திலும் எனக்குப் பின்புறத்திலும் எனக்கு வலப்பக்கத்திலும் எனக்கு இடப்பக்கத்திலும் பார்த்தேன். அப்போது அவர் (ஜிப்ரீல்) வானத்திற்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். உடனே நான் கதீஜாவிடம் சென்று'எனக்குப் போர்த்திவிடுங்கள்! என் மீது குளிர்ந்த நீரை ஊற்றுங்கள்!"என்று கூறினேன். மேலும், எனக்கு, 'போர்த்திக் கொண்டு (படுத்து) இருப்பவரே, எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள். மேலும், உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்துங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 74:1-3) இறைவசனங்கள் அருளப்பெற்றன.

## மேலும், உங்கள் ஆடைகளைத் தூய்மையாக வைத்திருங்கள் (எனும் 74:4 வது இறைவசனம்).

ஹதீஸ் 4925. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தமக்கு வஹீ (இறைச்செய்தி) (வேத அறிவிப்பு) நின்று போயிருந்த இடைக்காலத்தைப் பற்றி அறிவிக்கையில் (பின் வருமாறு) கூறினார்கள்:

நான் நடந்து போய் கொண்டிருக்கும்போது வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு என்னுடைய தலையை உயர்த்தினேன். அங்கே, நான்'ஹிரா'வில் இருந்தபோது என்னிடம் வந்த வானவர் (ஜிப்ரீல்) வானுக்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். அவரைப் பார்த்து அச்சமேற்பட்டு நான் அதிர்ச்சிக்குள்ளாக்கப்பட்டேன். உடனே நான் (வீட்டிற்குத்) திரும்பி, (என் துணைவியாரான) கதீஜாவிடம், 'எனக்குப் போர்த்திவிடுங்கள்: என்று சொன்னேன். அவர்களும் என்னைப் போர்த்திவிட்டார்கள். அப்போது அல்லாஹ், 'போர்த்தியிருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள். உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்துங்கள். உங்கள் ஆடைகளைத் தூய்மையாக வைத்திருங்கள். அசுத்தத்திலிருந்து விலகியிருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 74:1-5) வசனங்களைத் தொழுகை கடமையாக்கப்படுவதற்கு முன்னர் அருளினான். 5

(மேற்கண்ட 74:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ருஜ்ஸ்' (அசுத்தம்) என்பது சிலைகளைக் குறிக்கும்.

## அசுத்தத்திலிருந்து விலகியிருங்கள் (எனும்) 74:5 வது இறைவசனம்.)

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ருஜ்ஸ்' எனும் சொல்லுக்கும்'அர்ரிஜ்ஸ்' எனும் சொல்லுக்கும்'வேதனை' என்று பொருள் என்று கூறப்படுகிறது.

ஹதீஸ் 4926. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

வஹீ (வேத அறிவிப்பு) நின்று போயிருந்த இடைக் காலத்தைப் பற்றி இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் நடந்து போய்க் கொண்டிருக்கும்போது வானத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டேன். உடனே வானை நோக்கி என் பார்வையை உயர்த்தினேன். அங்கு, 'ஹிரா' குகையில் என்னிடம் வந்த அதே வானவர் (ஜிப்ரீல்) வானத்திற்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்து கொண்டிருந்தார். உடனே நான் அவரைக் கண்டு அதிர்ச்சிக்குள்ளாக்கப்பட்டு (கீழே) பூமியில் விழுந்து விட்டேன். அப்போது நான் (நடுக்கமுற்றவனாக) என் வீட்டாரிடம் (திரும்பி) வந்து (கதீஜாவிடம்), 'எனக்குப் போர்த்திவிடுங்கள்'' என்றேன். அப்போது, 'போர்த்தியிருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள். உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்துங்கள். உங்கள் ஆடைகளைத் தூய்மையாக வைத்திருங்கள். அசுத்தத்திலிருந்து விலகியிருங்கள்' எனும் (திருக்குர்ஆன் 74:1-5) வசனங்களை அல்லாஹ் அருளினான்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 74:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ருஜ்ஸ்' (அசுத்தம்) எனும் சொல், சிலைகளைக் குறிக்கும். (மேற்கண்ட வசனம் அருளப்பெற்ற) பின்னர்'வஹீ' தொடர்ந்து அதிகமாக வரலாயிற்று.

## 75 அல்கியாமா அத்தியாயம்

## (நபியே!) இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள் (எனும் 75:16 வது இறைவசனம்.)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 75:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சுதா' எனும் சொல்லுக்கு, 'வெறுமனே' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 75:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லி யஃப்ஜுர அமாமஹு' (எதிர்காலத்திலும் தீமை செய்துகொண்டேயிருக்கவேண்டும் என்று விரும்புகிறான்) என்பதற்கு, 'வெகு விரைவில் பாவமன்னிப்புக் கோருவேன் நல்லறங்கள் புரிவேன் என்று சொல்லிக் கொண்டே பாவங்களைக் செய்ய விரும்புகிறான்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 75:11 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா வஸர' எனும் சொல்லுக்கு, 'எந்தப் புகலிடமும் இருக்காது' என்று பொருள்.

ஹதீஸ் 4927. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்
தம் மீது'வஹீ' (வேத அறிவிப்பு) அருளப்படும்போது, நபி(ஸல்) அவர்கள் (தாம் இதனை எங்கே மறந்துவிடப் போகிறோமோ என்ற அச்சத்தினால் வேக வேகமாக ஓதி,) தம் நாவை அசைப்பவர்களாக இருந்தார்கள். -அருளப்படும் வேத வசனங்களை நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் தான் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு தம் நாவை அசைத்து ஓதினார்கள் என சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்கள்- அப்போது, '(நபியே!) இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 75:16 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

## அதனை (உங்கள் மனத்தில்) ஒன்று சேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எம்முடைய பொறுப்பாகும் (எனும் 75:17 வது இறைவசனம்).

ஹதீஸ் 4928. மூஸா இப்னு அபீ ஆயிஷா(ரஹ்) அறிவித்தார்
நான் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களிடம், '(நபியே!) இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள்'' எனும்

(திருக்குர்ஆன் 75:16 வது) இறை வசனம் குறித்துக் கேட்டேன். அவர்கள் (பின் வருமாறு) கூறினார்கள்:
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: தம்மீது 'வஹீ' (வேத அறிவிப்பு) அருளப்படும்போது நபி(ஸல்) அவர்கள் தம்மிரு உதடுகளையும் அசைத்துக் கொண்டிருந்தார்கள். எனவே, (அல்லாஹ்விடமிருந்து) நபி(ஸல்) அவர்களுக்கு 'வஹீ அருளப்படும்போது அவசர அவசரமாக உங்கள் நாவை அசைக்காதீர்கள்' என்று உத்தரவிடப்பட்டது. (எங்கே தம் மீது அருளப்படும் வேத வசனங்கள் நினைவில் பதியாமல் மறதியில்,) தம்மைவிட்டு நழுவிப் போய்விடுமோ என்று நபி(ஸல்) அவர்கள் அஞ்சியதே இதற்குக் காரணமாகும்.
"அதை ஒன்றுசேர்த்து, ஓதும்படி செய்வது எம்முடைய பொறுப்பாகும்'' எனும் (திருக்குர்ஆன் 75:17 வது) வசனத்திற்கு 'நாமே உங்களின் நெஞ்சத்தில் அதனை(ப் பதியச் செய்து,) ஒன்று சேர்ப்போம். நீங்கள் அதனை ஓதும்படி செய்வோம்' என்று பொருள்.
"நாம் இதனை ஓதிவிட்டோமாயின்.!"எனும் (திருக்குர்ஆன் 75:18 வது) வசனத்திற்கு, 'ஜிப்ரீல் மூலமாக உங்களுக்கு என் வசனங்கள் அருளப்பட்டு விடுமாயின்..' என்று பொருள்.
"நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள். பின்னர் அ(தன் கருத்)தை விளக்குவதும் நம்முடைய பொறுப்பாகும்'' (எனும் (திருக்குர்ஆன் 75:19 வது) வசனத்திற்கு, 'உங்களுடைய நாவினால் பிறருக்கு விளக்கிக்கொடுக்கச் செய்வதும் எம்முடைய பொறுப்பேயாகும்'' என்று பொருள்.

## (நபியே! நாம் இதனை ஓதிவிட்டோமாயின் நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள் (எனும் 75:18 வது இறைவசனம்.)

இப்னு அப்பாஸ்(ரலி), 'நாம் இதனை விவரிக்கும்படி அதன்படி செயல்படுங்கள்' என்று இவ்வசனத்திற்குப் பொருள்'' என்று கூறினார்கள்.
ஹதீஸ் 4929. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
"(நபியே!) இந்த வஹியை (வேத அறிவிப்பை) அவசரம் அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 75:16 வது) வசனம் குறித்து இப்னு அப்பாஸ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:
(வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள் தம்மிடம் 'வஹீ'யைக் கொண்டுவரும்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் நாவையும், இரண்டு உதடுகளையும் (எங்கே மறந்து விடப்போகிறதோ என்ற அச்சத்தினால், மனனமிடுவதற்காக ஓதியபடி) அசைத்துக் கொண்டிருப்பார்கள். இது அவர்களுக்குச் சிரமமாக இருந்தது. அது அவர்களின் வதனத்திலேயே காணப்படலாயிற்று. எனவே, அல்லாஹ், 'லா உக்ஸிமு பி யவ்மில் கியாமா'' என்று தொடங்கும் (75 வது அத்தியாயத்திலுள்ள) 'இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக, உங்கள் நாவை அசைக்காதீர்கள். அதை (உங்கள் மனத்தில்) ஒன்று சேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எம்முடைய பொறுப்பாகும்'' எனும் (திருக்குர்ஆன் 75:16,17) வசனங்களை அருளினான்.
அதாவது, 'உங்கள் நெஞ்சத்தில் பதியச் செய்வதும் அதை உங்கள் நாவால் ஓதும்படிச் செய்வதும் எம்முடைய பொறுப்பாகும்'' என்று இறைவன் கூறினான். மேலும், 'நாம் இதனை ஓதிவிட்டோமாயின், நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள்'' என்ற (திருக்குர்ஆன் 75:18 வது) வசனத்தையும் அருளினான். அதாவது, 'நாம் (வானவர் மூலம்) அருளும்போது, அதனைக் கவனத்துடன் கேளுங்கள்'' என்று கூறினான். 'பின்னர், அதனை விளக்குவதும் எம்முடைய பொறுப்பாகும்'' எனும் (திருக்குர்ஆன் 75:19 வது) வசனத்தையும் அருளினான். அதாவது, 'உங்கள் னாவினால் அதனை(ப் பிறருக்கு) விளக்கித் தரும்படி உங்களை (ஆயத்தம்) செய்வது நம்முடைய பொறுப்பாகும்' என்று கூறினான்.

(இந்த வசனங்கள் அருளப்பட்ட பின்னர்) தம்மிடம் ஜிப்ரீல்(அலை) அவர்கள் ('வஹீ' கொண்டு வரும்போது,) தலையைத் தாழ்த்தி (அருளப்படுவதை நபி(ஸல்) அவர்கள் மௌனத்துடன் கேட்டு)க் கொண்டிருப்பார்கள். (வசனங்களை அருளிவிட்டு) ஜிப்ரீல்(அலை) அவர்கள் சென்றுவிடும்போது, அல்லாஹ் வாக்களித்த பிரகாரம் நபி(ஸல்) அவர்கள் அவற்றை ஓதினார்கள்.

"(மனிதனே! இது) உனக்குக் கேடுதான்! கேடேதான்'' எனும் (திருக்குர்ஆன் 75:34 வது வசனம் ஓர் எச்சரிக்கையாகும்.

## (76) அத்தஹ்ர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

(திருக்குர்ஆன் 76:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹல் அத்தா அலல் இன்சான்' எனும் சொற்றொடருக்கு'மனிதன் குறிப்பிடத்தக்க ஒரு பொருளாக இல்லாதிருந்த ஒரு காலம் நிச்சயம் அவன் மீது சென்றுவிட்டது' என்று பொருள்.

## (77) அல்முர்சலாத் அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 77:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஜிமாலாத்' எனும் சொல்'ஜுமாலாத்' என்றும் ஓதப்பட்டுள்ளது. இந்த)'ஜுமாலாத்' எனும் சொல்லுக்கு, 'கப்பலின் கயிறுகள்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 77:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இர்கஊ' (குனிந்து வழிபடுங்கள்) எனும் சொல்லுக்குத்'தொழுகையை நிறைவேற்றுங்கள்' என்று பொருள்.

(இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'லா யர்கஊன்' (அவர்கள் குனிந்து வழிபடுவதில்லை) எனும் சொல்லுக்கு, 'அவர்கள் தொழுவதில்லை' என்று பொருள்.

ஹதீஸ் 4930. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் (ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (மினாவிலுள்ள ஒரு குகையில் தங்கி) இருந்தோம். அப்போது அவர்களுக்கு, 'வல் முர்சலாத்தி (ஒன்றன் பின் ஒன்றாக அனுப்பப்படுகின்றவை மீது சத்தியமாக!)'' எனும் (77 வது) அத்தியாயம் அருளப்பட்டது. அதை நாங்கள் நபி(ஸல்) அவர்களின் வாயிலிருந்து (அவர்களே ஓதக்) கேட்டுக் கொண்டிருந்தோம். அப்போது பாம்பு ஒன்று (தன்னுடைய புற்றிலிருந்து) வெளிப்பட்டது. (அதைக் கொல்ல) போட்டியிட்டுக் கொண்டு நாங்கள் விரைந்தோம். அது எங்களை முந்திக் கொண்டு தன்னுடைய புற்றுக்குள் நுழைந்துவிட்டது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'நீங்கள் அதன் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டதைப் போன்றே அதுவும் உங்கள் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டுவிட்டது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4931. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

(ஒருநாள் மினாவிலுள்ள) ஒரு குகையில் நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்துகொண்டிருந்தபோது அவர்களுக்கு, 'வல் முர்சலாத்தி (ஒன்றின் பின் ஒன்றாக அனுப்பப்படுகின்றவை மீது சத்தியமாக!)'' எனும் (77 வது) அத்தியாயம் அருளப்பட்டது. அதை நாங்கள் நபி(ஸல்) அவர்களின் வாயிலிருந்து புத்தம் புதியதாக (ஓதக்) கேட்டுக் கொண்டிருந்தோம். அந்நேரம் பாம்பு ஒன்று (தன்னுடைய புற்றிலிருந்து) வெளிப்பட்டது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அதை விடாதீர்கள் கொன்று விடுங்கள்'' என்று கூறினார்கள். உடனே (அதைக் கொல்ல) போட்டியிட்டுக் கொண்டு நாங்கள் விரைந்தோம். அது எங்களை முந்திக் கொண்டு (தன்னுடைய புற்றுக்குள் புகுந்து)விட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் அதன் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டதைப் போன்றே அதுவும் உங்கள் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டுவிட்டது'' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## “அந்த நெருப்பு, மாளிகைகளைப் போன்ற பெரும் பெரும் தீக்கங்குகளைக் கக்கும்‘ எனும் (திருக்குர்ஆன் 77:32 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4932. அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ்(ரஹ்) அறிவித்தார்

(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள'கஸ்ர்' எனும் சொல்லுக்கு விளக்கம் கூறுகையில்,) இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

நாங்கள் குளிர்காலத்தில் குளிர் காய்வதற்காக மூன்று முழம், அல்லது அதைவிடக் குறைந்த அளவில் மரக்கட்டைகளை வெட்டி எடுத்துவருவோம். அவற்றுக்கு நாங்கள்'கஸர்' எனப் பெயரிட்டழைத்துவந்தோம்.

## “அது (குமுறி எழும்போது) மஞ்சள் நிற ஒட்டகங்களைப் போல் இருக்கும்‘ எனும் (திருக்குர்ஆன் 77:33 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4933. அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ்(ரஹ்) அறிவித்தார்

“அந்த நெருப்பு, மாளிகைகளைப் போன்ற பெரும் பெரும் தீக்கங்குகளைக் கக்கும்‘' எனும் (திருக்குர்ஆன் 77:32 வது) இறைவசனத்திற்கு விளக்கம் கூறுகையில், இப்னு அப்பாஸ்(ரலி) (பின்வருமாறு) கூறக்கேட்டேன்.

நாங்கள் மூன்று முழம், அல்லது அதைவிட அதிகமான அளவிலுள்ள மரக்கட்டைகளை நாடிச் செல்வோம். அவற்றைக் குளிர்காலத்திற்காக நாங்கள் எடுத்து வைப்போம். அவற்றுக்கு'அல்கஸர்' எனப் பெயரிட்டு அழைத்து வந்தோம்.

(திருக்குர்ஆன் 77:33 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஜுமாலத்துன் ஸுஃபர்' எனும் சொல், மரக்கலங்களைக் கட்டும் கயிறுகளைக் குறிக்கும். அக்கயிறுகள் மனிதர்களின் இடுப்புகளைப் போல் (பருமனாக) மாறும் அளவிற்கு திரிக்கப்படும்.

## இது, அவர்கள் (ஏதும்) பேச முடியாத நாளாகும் (எனும் 77:35 வது இறைவசனம்).

ஹதீஸ் 4934. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

நாங்கள் (ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (மினாவிலுள்ள) ஒரு குகையில் இருந்துகொண்டிருந்தோம். அப்போது அவர்களுக்கு, `வல் முர்சலாத்தி‘' (ஒன்றன் பின் ஒன்றாக அனுப்பப்படுகின்றவை மீது சத்தியமாக!) எனும் (77 வது) அத்தியாயம் அருளப்பட்டது. அதை நபி(ஸல்) அவர்கள் ஓதிக்கொண்டிருந்தார்கள். நான் அதை அவர்களின் வாயிலிருந்து புத்தம் புதிதாகச் செவியேற்றுக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு பாம்பு (புற்றிலிருந்து) எங்களை நோக்கித் துள்ளி வந்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள், `அதைக் கொல்லுங்கள்‘' என்றார்கள். அதை நோக்கி போட்டியிட்டுக் கொண்டு நாங்கள் விரைந்தோம். அது (தன்னுடைய புற்றுக்குள் ஓடிப்) போய் (நுழைந்து)விட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், `நீங்கள் அதன் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டதைப் போன்றே அதுவும் உங்கள் தீங்கிலிருந்து காப்பாற்றப்பட்டுவிட்டது‘' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளரான உமர் இப்னு ஹஃப்ஸ்(ரஹ்) கூறினார்.

“இந்நிகழ்ச்சி மினாவிலிருந்த ஒரு குகையில் நடந்தது‘' என்று என் தந்தையாரிடமிருந்து (கேட்டு) நான் மனனமிட்டுள்ளேன்.

## (78) அந்நபஉ அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 78:27 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா யர்ஜூன ஹிசாபா' (அவர்கள் கேள்வி கணக்குக் கேட்கப்படும் என்பதை நம்பக் கூடியவர்களாக இருக்கவில்லை) என்பதன் கருத்தாவது: அதைப் பற்றிய அச்சம் அவர்களுக்கு இருக்கவில்லை.
(திருக்குர்ஆன் 78:37 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா யமலிகூன கிதாபா' (அவனிடம் பேச அவர்களுக்கு அதிகாரம் கிடையாது) என்பதன் கருத்தாவது: இறைவன் அனுமதித்தாலன்றி அவனிடம் அவர்கள் பேசமுடியாது.

## 'ஸூர் எனும் எக்காளம் ஊதப்படும் நாளில் நீங்கள் கூட்டம் கூட்டமாக (கிளம்பி) வருவீர்கள் (எனும் 78:18 வது இறைவசனம்).

இதன் மூலத்திலுள்ள'அஃப்வாஜ்' எனும் சொல்லுக்குக்'கூட்டங்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4935. அபூ சாலிஹ் ஃதக்வான் அஸ்ஸம்மான்(ரஹ்) அறிவித்தார்
"(உலக முடிவு நாளில் அனைத்தையும் அழிப்பதற்காகவும், பின்னர் அனைவரையும் எழுப்புவதற்காகவும் ஊதப்படும்) இரண்டு எக்காளத்திற்கும் (ஸூர்) மத்தியில் (இடைப்பட்ட காலம்) நாற்பது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறினார். (அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் நண்பர்கள்,)'(அபூ ஹுரைரா அவர்களே!) நாள்களில் நாற்பதா?' என்று கேட்டனர். அபூ ஹுரைரா(ரலி), '(நான் அறியாததற்கு பதிலளிப்பதிலிருந்து) நான் விலகிக் கொள்கிறேன்'' என்று கூறினார்கள். (நண்பர்களான) அவர்கள், 'நாற்பது மாதங்களா?' என்று கேட்டனர். அதற்கும்'நான் விலகிக் கொள்கிறேன்'' என அபூ ஹுரைரா(ரலி) கூறினார். 'ஆண்டுகள் நாற்பதா?' என்று கேட்டனர். அப்போதும் அபூ ஹுரைரா(ரலி), 'நான் விலகிக்கொள்கிறேன்'' என்று கூறினார்கள். பின்னர், 'வானத்திலிருந்து அல்லாஹ் தண்ணீரை இறக்குவான். அப்போது (மண்ணறைக்குள் உக்கிப்போயிருக்கும் மனித சடலங்கள்) தாவரங்கள் முளைத்து எழுவதுபோல் எழுவார்கள். மனிதனிலுள்ள (உறுப்புகள்) அனைத்துமே (மண்ணுக்குள்) உக்கிக்போகாமல் இருப்பதில்லை. ஆனால், ஒரேயோர் எலும்பைத் தவிர! அதுதான் (முதுகந் தண்டின் வேர்ப் பகுதியிலிருக்கும்) உள்வால் எலும்பின் (அணுவளவு) நுனியாகும். அதை வைத்தே படைப்பினங்கள் (மீண்டும்) மறுமை நாளில் உருவாக்கப்படும்'' என்று மேலும் கூறினார்கள்.

## (79) அந்நாஸிஆத் அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 79:20 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஆயத்துல் குப்ரா' (பெரும் சான்று) எனும் சொல், மூஸா(அலை) அவர்களின் கைத்தடியையும் (அற்புதமாகப் பிரகாசித்த) அன்னாரின் கரத்தையும் குறிக்கும்.

ஹதீஸ் 4936. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்
தம் நடுவிரலையும், பெருவிரலை அடுத்துள்ள (ஆட்காட்டி) விரலையும் இணைத்தவாறு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'நானும் மறுமை நாளும் இதோ இந்த இரண்டு விரல்கள் போல் (நெருக்கமாகவே) அனுப்பப்பட்டுள்ளோம்'' என்று கூறக்கேட்டேன்.
(திருக்குர்ஆன் 79:34 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தாம்மா' (அமளி) எனும் சொல்லுக்கு'அனைத்துப் பொருள்களையும் துவம்சம் செய்யக்கூடியது' என்று பொருள்.

## (80) அபச அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
(திருக்குர்ஆன் 80:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அபச வத்தவல்லா' எனும் வாக்கியத்திற்கு' அவர் கடுகடுத்தார் மேலும் முகத்தைத் திருப்பிக்கொண்டார்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 80:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தலஹ்ஹா' எனும் சொல்லுக்குப்'பாராமுகமாக இருந்துவிடுகிறீர்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 4937. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
குர்ஆனை மனனமிட்டு(ச் சிரமமின்றி) ஓதிவருபவர் கண்ணியம் நிறைந்த தூதர்க(ளான வானவர்க)ளைப் போன்றவராவார். குர்ஆனை (மனனம் செய்திராவிட்டாலும் அதனைச்) சிரமத்துடன் தொடர்ந்து ஓதி வருகிறவருக்கு இரண்டு மடங்கு நன்மைகள் உண்டு.
என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## (81) அத்தக்வீர் அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகிறார்கள்:

## (82) அல் இன்ஃபித்தார் அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
ரபீஉ இப்னு குஸைம்(ரஹ்) கூறினார்.

## (83) அத்தத்ஃபீஃப் அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...
முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 83:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முதஃப்பிஃப்' எனும் சொல்லுக்குப்'பிறருக்கு அளவையை நிறைவு செய்யாதோர்' என்று பொருள்.

## (அது) அகிலத்தாரின் அதிபதி முன் மக்களெல்லாம் நிற்கும் நாள் (எனும் 83:6 வது இறைவசனம்)

ஹதீஸ் 4938. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள், '(அது) அகிலத்தாரின் அதிபதி முன் மக்களெல்லாம் நிற்கும் நாள்'' எனும் (திருக்குர்ஆன் 83:6 வது) இறை வசனத்தை ஓதிவிட்டு, 'அன்று தம் இரண்டு காதுகளின் பாதி வரை தேங்கி நிற்கும் தம் வேர்வையில் அவர்களில் ஒருவர் மூழ்கிப் போய்விடுவார்'' என்று கூறினார்கள்.

## (84) அல்இன்ஷிகாக் அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 84:10 வது வசனத்தின் கருத்துக்கு ஒத்த 69:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கித்தாபஹு பிஷிமாலிஹி' (தன்னுடைய இடக் கரத்தில் வினைப் பதிவுச் சீட்டு கொடுக்கப்படுவார்) என்பதற்குத்'தன்னுடைய வினைச் சீட்டை முதுகிற்குப் பின்னாலிருந்த (இடக் கையால்) வாங்குவார்'' என்று பொருள்.

## எவருடைய வினைப் பதிவுச் சீட்டு அவரின் வலக்கரத்தில் வழங்கப்படுமோ அவரிடம் எளிதான முறையில் கணக்கு வாங்கப்படும் (எனும் 84:8 வது) இறைவசனம்).

ஹதீஸ் 4939. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , '(மறுமை நாளில்) கணக்கு வாங்கப்படும் எவரும் அழிந்தே போய்விடுவார்'' என்று கூறினார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! என்னை அல்லாஹ் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்!
"எவருடைய வினைப் பதிவுச் சீட்டு அவரின் வலக்கரத்தில் வழங்கப்படுமோ, அவரிடம் எளிதான முறையில் கணக்கு வாங்கப்படும்'' என்றல்லவா அல்லாஹ் (திருக்குர்ஆன் 84:8 வது வசனத்தில்) கூறுகிறான்?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'இது (கேள்வி கணக்கு தொடர்பானது அன்ற் மாறாக, மனிதர்கள் புரிந்த நன்மை தீமைகளின் பட்டியலை)

அவர்களுக்கு முன்னால் சமர்ப்பிக்கப்படுதலாகும் கேள்வி கணக்கின்போது எவன் துருவித் துருவி விசாரிக்கப்படுவானோ, அவன் அழிந்தான்'' என்று கூறினார்கள். 2
இந்த ஹதீஸ் மூன்று அறிவிப்பாளர் தொடர் வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது.

திண்ணமாக, நீங்கள் படிப்படியாக ஒரு நிலையில் இருந்து மற்றொரு நிலைக்குக் கடந்து செல்வீர்கள் (எனும் 84:19 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4940. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்
இப்னு அப்பாஸ்(ரலி), '(திருக்குர்ஆன் 84:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தபக்கன் அன் தபக்கின்' எனும் சொற்றொடருக்குத்'திண்ணமாக, நீங்கள் படிப்படியாக ஒரு நிலையில் இருந்து மற்றொரு நிலைக்குக் கடந்து செல்ல வேண்டியதுள்ளது'' என்று பொருள்'' என்று கூறிவிட்டு, 'இந்த வசனம் உங்களுடைய நபி(ஸல்) அவர்களையே முன்னிலைப்படுத்திப் பேசுகிறது'' என்று கூறினார்கள்.

## (85) அல்புரூஜ் அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 85:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் உக்தூத்' எனும் சொல்லுக்குப்'பூமியிலுள்ள அகழ், அல்லது'குண்டம்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 85:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்மஜீத்' எனும் சொல்லுக்கு'மேன்மைமிக்கவன்' என்று பொருள்.

## (86) அத்தாரிக் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 86:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத்தாரிக்' எனும் சொல், இரவில் தோன்றும் விண்மீன்களைக் குறிக்கும். இரவில் (திடீரென) வரும் ஒவ்வொன்றுக்கும்'தாரிக்' என்பர்.
(திருக்குர்ஆன் 86:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லம்மா அலைஹா ஹா∴பிழ்' எனும் சொற்றொடருக்குப்'பாதுகாப்பவன் இல்லாத எந்த ஓர் உயிருமில்லை' என்று பொருள். (மூலத்திலுள்ள'லம்மா' எனும் இடைச் சொல்லுக்கு'இல்லா' எனும் இடைச்சொல்லின் பொருளாகும்.)

## (87) அல்அ∴லா அத்தியாயம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 87:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கத்தர' (அவனே விதியை நிர்ணயித்தான்) எனும் சொல்லுக்கு'மனிதனின் நற்பாக்கியம் மற்றும் துர்பாக்கியத்தை நிர்ணயித்தான்' என்று பொருள் (இதே வசனத்தின் மூலத்திலுள்ள)'∴ப ஹதா' (வழிகாட்டினான்) எனும் சொல்லுக்குக்'கால் நடைகளுக்கு, அவற்றின் மேய்ச்சல் நிலங்களுக்குச் செல்ல வழிகாட்டினான்' என்று பொருள்.

ஹதீஸ் 4941. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்
நபித்தோழர்களில் (நாடு துறந்து மதீனாவிற்கு'ஹிஜ்ரத்' செய்து) எங்களிடம் முதலில் வந்தவர்கள்'முஸ்அப் இப்னு உமைர்'(ரலி) அவர்களும், 'இப்னு உம்மி மக்தூம்'(ரலி) அவர்களும் தாம்.
அவர்களிருவரும் (மதீனாவாசிகளான) எங்களுக்குக் குர்ஆனைக் கற்றுத் தந்தார்கள். பிறகு, அம்மார்(ரலி), பிலால்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோர் வந்தனர். அதன் பின்னர் இருபது பேர் (கொண்ட குழு) உடன் உமர் இப்னு கத்தாப்(ரலி) வந்தார்கள். அதற்குப் பிறகு நபி(ஸல்) அவர்கள் வருகை புரிந்தார்கள். நபி(ஸல்) அவர்கள(து வருகைய)ால், மதீனாவாசிகள் மகிழ்ச்சியடைந்ததைப் போன்று வேறெதற்காகவும் அவர்கள்

மகிழ்ச்சியடைந்ததை நான் கண்டதில்லை. எந்த அளவிற்கென்றால், (மதீனாவிலுள்ள) சிறுமியரும் சிறுவர்களும், 'இதோ இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்துவிட்டார்கள்' என்று கூறி (மம்ழலாயி)னர். நான், 'ஸப்பிஹிஸ்ம ரப்பிக்கல் அஃலா' எனும் (87 வது) அத்தியாயத்தை, அது போன்ற (மற்ற முஃபஸ்ஸல்) அத்தியாயங்களுடன் ஓதும் வரையில் நபி(ஸல்) அவர்கள் (மதீனாவிற்கு) வருகை தரவில்லை.

## (88) அல்ஃகாஷியா அத்தியாயம்

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

(திருக்குர்ஆன் 88:25 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'இயாபஹும்' எனும் சொல்லுக்கு'(மரணத்துக்குப் பின்) அவர்கள் திரும்புவது' என்று பொருள்.

## (89) அல்ஃபஜ்ர் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 89:18 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லா தஹாள்ளூன்' எனும் சொல்லுக்கு, 'ஏழைக(ளின் உரிமைக)ளைப் பேணுவதில்லை' என்று பொருள். (மற்றோர் ஓதலில் வந்துள்ள)'லாதஹுள்ளூன்' எனும் சொல்லுக்கு'(ஏழைகளுக்கு) உணவிடுமாறு தூண்டுவதில்லை' என்று பொருள்.

## (90) அல்பலத் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 90:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பி ஹாஃதல் பலத்' (இந்த நகரம்) எனும் சொல், மக்காவையே குறிக்கிறது.

"அகபா' என்ன என்று நீர் அறிவீரா?

(திருக்குர்ஆன் 90:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கபத்' எனும் சொல்லுக்குக்'கஷ்டம்' என்று பொருள்.

## (91) அஷ்ஷம்சு அத்தியாயம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

### (திருக்குர்ஆன் 91:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள) ளுஹாஹா எனும் சொல்லுக்கு அதன் ஒளி என்று பொருள்.

ஹதீஸ் 4942. அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) கூறினார்

(ஒரு சமயம்) நபி(ஸல்) அவர்கள் உரையாற்றியதை செவியுற்றேன். அப்போது அவர்கள், '(இறைத்தூதர் ஸாலிஹ்(அலை) அவர்களின் தூதுவத்திற்குச் சான்றாகப் பாறையிலிருந்து வெளிப்பட்ட) ஒட்டகத்தையும் (அதன் கால் நரம்புகளை) அறுத்துக் கொன்றவனையும் நினைவு கூர்ந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'அவர்களிலுள்ள துர்பாக்கியசாலி ஒருவன் முன்வந்தபோது..!"எனும் (திருக்குர்ஆன் 91:12 வது) இறைவசனத்தைக் கூறிவிட்டு, 'அபூ ஸம்ஆவைப் போன்று ஸாலிஹ்(அலை) அவர்களின் சமுதாயத்தில் மதிப்புமிக்கவனும் ஆதிக்கவாதியும் பராக்கிரமசாலியுமான ஒருவன் அந்த ஒட்டகத்(தைக் கொல்வ)துக் காக முன் வந்தான்' என்று கூறினார்கள். 2

மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பெண்க(ளின் உரிமைக)ள் குறித்து பின்வருமாறு குறிப்பிட்டார்கள்.

உங்களில் ஒருவர் தம் மனைவியை, அடிமையை அடிப்பது போல் அடிக்க முற்படுகிறார். (ஆனால்,) அவரே அந்நாளின் இறுதியில் (இரவில்) அவளுடன் (தாம்பத்திய உறவுக்காக) படுக்க நேரலாம். (இது முறையா?). பிறகு, (உடலிலிருந்து பிரியும்) வாயு காரணமாக மக்கள் சிரிப்பது குறித்து, '(அப்படிச் சிரிக்க வேண்டாமெனக் குறிப்பிடும் வகையில்)'உங்களில் ஒருவர்

தாம் செய்யும் ஒரு செயலிற்காக (அதே செயலைப் பிறர் செய்யும்போது) ஏன் சிரிக்கிறார்?' என்று கேட்டபடி உபதேசித்தார்கள்.
இன்னோர் அறிவிப்பில், '(ஒட்டகத்தைக் கொன்றவன்) ஸுபைர் இப்னு அவ்வாம் அவர்களின் தந்தையின் சகோதரர் அபூ ஸம்ஆவைப் போன்று (செல்வாக்குமிக்கவனாக) இருந்தான்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக (அறிவிப்பாளர்) அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) கூறினார்.

## (92) அல்லைல் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 92:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'பில் ஹுஸ்னா' (நல்லறம்) எனும் சொல்லுக்கு'(நல்வழியில் செலவிட்ட தன்னுடைய செல்வத்திற்கு)'அழகிய பிரதி' (பலனை இறைவன் வழங்குவான் என்று உறுதியாக அவன் நம்புவதில்லை)' என்று பொருள்.

### ஒளிரும் பகலின் மீது சத்தியமாக! (எனும் 92:2 வது இறைவசனம்).

ஹதீஸ் 4943. அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) அறிவித்தார்
நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் (மாணவ) சகாக்கள் சிலருடன் (அன்றைய) ஷாம் நாட்டிற்குச் சென்றேன். அப்போது, நாங்கள் (அங்கு) வந்திருப்பது பற்றிக் கேள்விப்பட்டு, (எங்களைச் சந்திப்பதற்காக,) அபுத்தர்தா(ரலி) வந்தார்கள். அப்போது'(குர்ஆனை) ஓதத் தெரிந்தவர்கள் உங்களிடையே உண்டா?' என்று கேட்டார்கள். நாங்கள், 'ஆம்'' என்று சொன்னோம். 'சரி, உங்களில் (குர்ஆனை) நன்கு ஓதத் தெரிந்தவர் யார்?' என்று கேட்டார்கள். அப்போது தோழர்கள், என்னை நோக்கி சைகை செய்தார்கள். அபுத்தர்தா(ரலி), 'ஓதுங்கள்!"என்று (என்னிடம்) கூறினார்கள்.
உடனே நான், 'வல்லைலி இ∴தா ய∴க்ஷா, வந்நஹாரி இ∴தா தஜல்லா, வ∴த்தகரி வல் உன்ஸா'' என்று (92 வது அத்தியாயத்திலிருந்து) ஓதினேன். அபுத்தர்தா(ரலி), 'இதை உங்கள் தோழர் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் வாயிலிருந்து நீங்கள் செவியேற்றீர்களா?' என்று கேட்டார்கள். நான், 'ஆம்'' என்று கூறினேன்.
"(இப்படித்தான்) நபி(ஸல்) அவர்களின் வாயிலிருந்து நான் ஓதக் கேட்டுள்ளேன். ஆனால், இவர்கள் (ஷாம்வாசிகள்) நான் கூறுவதை மறுக்கிறார்கள். (பிரபல ஓதலிலுள்ள'வமா கலக்க∴த் தகர வல் உன்ஸா'' என்றே ஓத வேண்டும் என்று கூறுகிறார்கள்)'' என்று கூறினார்கள்.

### ஆணையும், பெண்ணையும் படைத்தவன் மீது சத்தியமாக! (எனும் 92:3 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4944. இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) அறிவித்தார்
அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் தோழர்கள் (ஷாம் நாட்டிலிருந்து அபுத்தர்தா(ரலி) அவர்களிடம் (அவர்களைக் காண) வந்தனர். (அதற்குள் அவர்கள் வந்துள்ள செய்தியறிந்து,) அபுத்தர்தா(ரலி) தோழர்களைத் தேடிவந்து சந்தித்தார்கள்.
பிறகு, 'அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் ஓதல் முறைப்படி உங்களில் ஓதத் தெரிந்தவர் யார்?' என்று அபுத்தர்தா(ரலி) கேட்டார்கள். அதற்கு நாங்கள், 'நாங்கள் அனைவரும் தாம்'' என்று பதிலளித்தோம். அபுத்தர்தா(ரலி), '(இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் ஓதல் முறையை) நன்கு மனனமிட்டிருப்பவர் உங்களில் யார்?' என்று கேட்டார்கள். தோழர்கள், அல்கமா(ரஹ்) அவர்களை நோக்கி சைகை செய்தார்கள். 'வல்லைலி இ∴தா ய∴க்ஷா'' எனும் வசனத்தில் இப்னு மஸ்வூத்(ரலி) எவ்வாறு ஓதக் கேட்டீர்கள்? என்று கேட்டார்கள். அல்கமா(ரஹ்), 'வ∴த்தகரி வல் உன்ஸா' என்றே

ஓதினார்கள்'' என்று பதிலளித்தார்கள். அபுத்தர்தா (ரலி), 'நான் சாட்சியம் கூறுகிறேன்: நபி (ஸல்) அவர்களும் இவ்வாறு ஓதவே கேட்டுள்ளேன். இந்த மக்கள் (ஷாம்வாசிகள்) 'வமா கலக்க..்த் தக்கர வல் உன்ஸா' என்றே நான் ஓதவேண்டுமென விரும்புகிறார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! இவர்களைப் பின்பற்றமாட்டேன்'' என்று கூறினார்கள்.

## "(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்ப்பிக்கிறவருக்கு, சுலபமான வழியில் செல்ல நாம் வகை செய்வோம்' எனும் (திருக்குர்ஆன் 92:5-7) இறை வசனங்கள்.

ஹதீஸ் 4945. அலீ (ரலி) அறிவித்தார்

நாங்கள் (ஒருநாள்) ஒரு ஜனாஸாவிற்காக நபி (ஸல்) அவர்களுடன் 'பகீஉல் ..்கர்கதி (எனும் மதீனாவின் பொது மையவாடியி)ல்' இருந்து கொண்டிருந்தோம். அப்போது நபியவர்கள், 'சொர்க்கத்திலுள்ள தம் இருப்பிடத்தையோ நரகத்திலுள்ள தம் இருப்பிடத்தையோ எழுதப்பட்டிராத எவரும் உங்களில் இல்லை'' என்று கூறினார்கள். உடனே மக்கள், 'அல்லாஹவின் தூதரே! நாங்கள் (இதன் மீதே) நம்பிக்கை கொண்டு (நல்லறங்கள் ஏதும் செய்யாமல்) இருந்து விடமாட்டோமா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் (அவரவர் செல்லும் வழி) எளிதாக்கப்பட்டுள்ளது'' என்று கூறினார்கள். பிறகு, '(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சிவாழ்ந்து, நல்லறங்களை மெய்ப்பிக்கிறவருக்கு, சுலபமான வழியில் செல்ல நாம் வகைசெய்வோம். உலோபித்தனம் செய்து, (அல்லாஹ்வையும்) பொருட்படுத்தாது, (இம்மார்க்கதிலுள்ள) நல்லறங்களையும் பொய்யாக்கி விடுகிறவருக்குக் கஷ்டத்திற்குரிய (நரகத்தின்) வழியைத்தான் நாம் எளிதாக்கிவைப்போம்'' எனும் (திருக்குர்ஆன் 92:5-10) இறைவசனங்களை ஓதிக் காட்டினார்கள்.

## "மேலும், நல்லறங்களை மெய்ப்பிக்கிறவருக்கு, சுலபமான வழியில் செல்ல நாம் வகைசெய்வோம்' எனும் (திருக்குர்ஆன் 92:6,7) இறைவசனங்கள்.

..அபூ அப்திர் ரஹ்மான் அஸ்ஸுலமீ (ரஹ்) கூறினார்

அலீ (ரலி), 'நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம்'' என்று தொடங்கி, மேற்கண்ட (ஹதீஸ் 4945 வது) ஹதீஸைக் கூறினார்கள்.

## அவருக்கு, இலகுவான வழியில் செல்வதற்கு நாம் வகைசெய்வோம் (எனும் 92:7 வது இறைவசனம்).

ஹதீஸ் 4946. அலீ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் ஒரு ஜனாஸாவிற்காக (வருகை தந்து) இருந்தார்கள். அப்போது நபியவர்கள் குச்சியொன்றை எடுத்துத தரையில் குத்தியபடி (அழ்ந்த சிந்தனையில்) இருந்தார்கள். பின்னர், 'தம் இருப்பிடம் நரகத்திலா, அல்லது சொர்க்கத்திலா என்று எழுதப்பட்டிராத எவரும் உங்களில் இல்லை'' என்று கூறினார்கள். மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் (இதன்மீதே) நம்பிக்கை கொண்டு (நல்லறங்கள் ஏதும் செய்யாமல்) இருந்துவிடமாட்டோமா?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், 'நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் (அவரவர் செல்லும் வழி) எளிதாக்கப்பட்டுள்ளது'' என்று கூறினார்கள். பிறகு, '(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்யாக்குகிறவருக்கு, சுலபமான வழியில் செல்ல நாம் வகை செய்வோம்'' எனும் (திருக்குர்ஆன் 95:5-10) இறைவசனங்களை ஓதிக்காட்டினார்கள்.

## "கஞ்சத்தனம் செய்து, (தம் இறைவனைப்) பொருட்படுத்தாமல் நடந்துகொண்டு நல்லறங்களைப் பொய்யாக்கிவிடுகிறவருக்குக் கஷ்டத்திற்குரிய (நரகத்தின்) வழியைத்தான் நாம் எளிதாக்குவோம்' எனும் (திருக்குர்ஆன் 92:8-10) வசனங்கள்.

ஹதீஸ் 4947. அலீ (ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) நாங்கள் ('ஜனாஸா') ஒன்றிற்காக) நபி(ஸல்) அவர்களுடன் ('பகீஉல் ஃகர்கத்' எனும் மதீனாவின் பொது மையவாடியில்) அமர்ந்திருந்தோம். அப்போது நபியவர்கள், 'சொர்க்கத்திலுள்ள தம் இருப்பிடத்தையோ, நரகத்திலுள்ள தம் இருப்பிடத்தையோ எழுதப்பட்டிராத எவரும் உங்களில் இல்லை'' என்று கூறினார்கள். உடனே நாங்கள், 'இறைத்தூதர் அவர்களே! (இதன் மீதே) நம்பிக்கை கொண்டு (நல்லறங்கள் ஏதும் செய்யாமல்) நாங்கள் இருந்துவிடமாட்டோமா?' என்று கேட்டோம். (அதற்கு,) நபி(ஸல்) அவர்கள், 'இல்லை! நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் (அவரவர் செல்லும்வழி) எளிதாக்கப்பட்டுள்ளது'' என்று கூறினார்கள். பிறகு, '(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்யாக்குகிறவருக்கு சுலபமான வழியில் செல்ல நாம் வகைசெய்வோம்'' எனும் (திருக்குர்ஆன் 92:5-10) இறைவசனங்களை ஓதிக் காட்டினார்கள்.

## "நல்லறங்களைப் பொய்யாக்கிவிடுகிறவர்..!எனும் (திருக்குர்ஆன் 92:9 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4948. அலீ (ரலி) அறிவித்தார்

நாங்கள் (ஒருநாள்) மதீனாவிலுள்ள பொது மையவாடியான)'பகீஉல்' ஃகர்கதில்' ஒரு ஜனாஸாவில் கலந்து கொண்டிருந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து அமர்ந்தார்கள். நாங்களும் அவர்களைச் சுற்றி அமர்ந்தோம். நபியவர்களுடன் ஓர் ஊன்றுகோல் இருந்தது. அவர்கள் (தம் தலையைக்) கவிழ்த்தவாறு ஊன்றுகோலை(த் தரையில்) குத்தியபடி (ஆழ்ந்த சிந்தனையில்) இருக்கலானார்கள். பிறகு, 'உங்களில் எவரும், பிறந்துவிட்ட எந்த உயிரும் தம் இருப்பிடம் சொர்க்கத்திலா அல்லது நரகத்திலா, அது துர்பாக்கியசாலியா, அல்லது நற்பாக்கியசாலியா என்று எழுதப்பட்டிராமல் இல்லை'' என்று கூறினார்கள். ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! எங்கள் (தலை) எழுத்தின் மீது நாங்கள் பாரத்தைப் போட்டுவிட்டு, நல்லறங்கள் செய்யாமல் இருந்துவிடமாட்டோமா? எங்களில் யார் (விதியின்படி) நற்பாக்கியம் பெற்றவரோ அவர் நற்பாக்கியசாலியாக மாறுவார். எங்களில் யார் (விதிப்படி) துர்பாக்கியசாலியோ அவர் துர்பாக்கியசாலிகளின் செயலுக்கு மாறுவார்'' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'(இதோ பாருங்கள்!) நல்லவருக்கு நல்லவர்களின் செயலைப் புரிய வகைசெய்யப்படும். கெட்டவருக்குக் கெட்டவர்களின் செயலைச் செய்ய வகை செய்யப்படும்'' என்று கூறினார்கள். பிறகு'(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்யாக்கிறவர்..!"எனும் (திருக்குர்ஆன் 92:5-10) வசனங்களை ஓதினார்கள்.

## அவருக்குக் கஷ்டத்திற்குரிய (நரகத்தின்) வழியைத்தான் நாம் எளிதாக்குவோம் (எனும் 92:10) வசனங்களை ஓதினார்கள்.

ஹதீஸ் 4949. அலீ (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ('பகீஉல் ஃகர்கத்' மையவாடியில்) ஒரு ஜனாஸாவில் கலந்து கொண்டிருந்தார்கள். அப்போது அன்னார் ஒரு பொருளை எடுத்து அதனைத் தரையில் குத்தியபடி (ஆழ்ந்த சிந்தனையில்) இருக்கலானார்கள். மேலும் அவர்கள், 'தம் இருப்பிடம்

நரகத்திலா அல்லது சொர்க்கத்திலா என்று (விதியில்) எழுதப்பட்டிராத எவரும் உங்களில் இல்லை‘ ‘ என்று கூறினார்கள். மக்கள், ‘இறைத்தூதர் அவர்களே! (அவ்வாறாயின்,) எங்கள் (தலை) எழுத்தின் மீது பாரத்தைப் போட்டுவிட்டு, நல்லறங்கள் புரிவதைக் கைவிட்டுபிடமாட்டோமா?’ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், ‘நீங்கள் செயலாற்றுங்கள். (உங்களில்) ஒவ்வொருவருக்கும், அவர் படைக்கப்பட்ட (நோக்கத்)தை அடைய வகை செய்யப்படும். நல்லவர்களில் உள்ளவருக்கு நல்லோரின் செயலைப் புரியவும், கெட்டவர்களில் உள்ளவருக்குக் கெட்டோரின் செயலைச் செய்யவும் வழி காணப்படும்‘ ‘ என்று கூறிவிட்டு, ‘(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்யாக்குகிறவர்..!’’எனும் (திருக்குர்ஆன் 92:5-10) வசனங்களை ஓதிக் காட்டினார்கள். 5

## (93) அள்ளுஹா அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 93:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’இஃதா சஜா’ எனும் சொல்லுக்கு’அது (பகலுக்குச்) சமமாகும் போது’ என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) அல்லாதோர் கூறுகிறார்கள்:

(இச்சொல்லுக்கு) இருட்டிவிடும்போது, (உறக்கம் வந்து) அமைதியடையும்போது என்று பொருள்.

(திருக்குர்ஆன் 93:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’ஆயில்’ என்னும் சொல்லுக்குக்’குழந்தை குட்டிகள் உடையவர்’ (குடும்பஸ்தர்) என்று பொருள்.

### (நபியே!) உங்களுடைய இறைவன் உங்களைக் கைவிடவுமில்லை கோபங்கொள்ளவும் இல்லை (எனும் 93:3 வது இறைவசனம்).

ஹதீஸ் 4950. ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ் இப்னி சுஃப்யான்(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டபோது’இரண்டு இரவுகள்’ அல்லது’மூன்று இரவுகள்’ (இரவுத் தொழுகைக்காகக் கூட) அவர்கள் எழவில்லை. அப்போது ஒரு பெண் வந்து, ‘முஹம்மதே! உம்முடைய ஷைத்தான் உம்மைக் கைவிட்டுவிட்டான் என நினைக்கிறேன். (அதனால்தான்)’இரண்டு இரவுகளாக’ அல்லது’மூன்று இரவுகளாக’ உம்மை ஷைத்தான் நெருங்கி வந்ததை நான் பார்க்கவில்லை‘ ‘ என்று கூறினாள். 2 அப்போது மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ், ‘முற்பகலின் மீது சத்தியமாக! மேலும் இருண்டுவிட்ட இரவின் மீது சத்தியமாக! (நபியே!) உங்களுடைய இறைவன் உங்களைக் கைவிடவுமில்லை கோபங்கொள்ளவும் இல்லை‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 93:1-3) வசனங்களை அருளினான்.

### (நபியே!) உங்களுடைய இறைவன் உங்களைக் கைவிடவுமில்லை கோபங்கொள்ளவும் இல்லை‘ எனும் (திருக்குர்ஆன் 93:3 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள சொல்லை)’மா வத்தஅக்க’ என அழுத்தத்துடனும், ‘மா வதஅக்க’ என அழுத்தமின்றியும் ஓதப்படுகிறது. பொருள் ஒன்றே!’உங்களைக் கைடவிடவுமில்லை.“

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(இந்த வசனத்தின் பொருளாவது:) உங்களை உங்களுடைய இறைவன் கைவிடவுமில்லை உங்களின் மீது கோபங்கொள்ளவுமில்லை.

ஹதீஸ் 4951. ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ் அல்பஜலீ(ரலி) கூறினார்

ஒரு பெண், 'இறைத்தூதர் அவர்களே! தங்கள் நண்பர் (வானவர் ஜிப்ரீல்) தங்களிடம் தாமதமாகத்தான் வந்துள்ளார் என்று கருதுகிறேன்'' என்று கூறினார். 4 அப்போதுதான், '(நபியே!) உங்களுடைய இறைவன் உங்களைக் கைவிடவுமில்லை கோபங்கொள்ளவும் இல்லை'' எனும் (திருக்குர்ஆன் 93:3 வது) இறைவசனம் அருளப்பட்டது.

## (94) அலம் நஷ்ரஹ் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்.
(திருக்குர்ஆன் 94:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'விஸ்ரக்க' (உம்முடைய சுமை) எனும் சொல், அறியாமைக் காலத்து (பாவ)ச் சுமைகளைக் குறிக்கும்.
(திருக்குர்ஆன் 94:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அன்கள' எனும் சொல்லுக்கு'அழுத்திக் கொண்டிருந்தது' என்று பொருள்.
சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 94:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மஅல் யுஸ்ரா' எனும் சொற்றொடருக்கு'அந்தச் சிரமத்துடன் இன்னோர் இலகுவும் இருக்கிறது' என்று பொருள்.
இந்த வசனம், 'எங்களின் விஷயத்தில் இரண்டு நன்மைகளில் ஒன்றைத்தவிர வேறு எதனை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?' எனும் (திருக்குர்ஆன் 09:52 வது) இறைவசனத்தின் கருத்தில் அமைந்துள்ளது.
முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 94:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபன்ஸப்' எனும் சொல்லுக்கு'உம்முடைய தேவைகளுக்காக உம்முடைய இறைவனிடத்தில் (கோரி) முயல்வீராக' என்று பொருள்.
'(நபியே!) நாம் உங்களுடைய இதயத்தை உங்களுக்காக விரிவாக்கித் தரவில்லையா?' எனும் (திருக்குர்ஆன் 94:1 வது) வசனத்தி(ன் விளக்கவுரையி)ல் இப்னு அப்பாஸ்(ரலி), 'இஸ்லாத்துக்காக அவர்களின் இதயத்தை இறைவன் விரிவாக்கினான்'' என்று சொன்னதாகக் கூறப்படுகிறது.

## (95) அத்தீன் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
அந்த (திருக்குர்ஆன் 95:1 வது) வசனம், மக்கள் உட்கொள்ளும் அத்திப்பழத்தையும் ஆலிவ் பழத்தையுமே குறிக்கிறது.
(திருக்குர்ஆன் 95:7 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபமா யுகஃத்திபுக்க' (உம்மை யாரால் பொய்யாக்க முடியும்) எனும் சொற்றொடருக்கு'மக்கள் (மறுமை நாளில்) தங்கள் (நல்ல, கெட்ட) செயல்களுக்கேற்ப பிரதிபலன் வழங்கப்படுவார்கள் எனும் உங்களின் கூற்றை எவரால் பொய்யாக்க முடியும்?' என்று பொருள். 'நற்பலன், அல்லது தண்டனை வழங்கப்படும் விஷயத்தில் உம்மை பொய்யர் என்று கூற எவருக்குத் துணிவுண்டு?' என்று கூறுவது போன்றுள்ளது.
ஹதீஸ் 4952. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அப்போது இஷாத் தொழுகையின் இரண்டு ரக்அத்களில் ஒன்றில் (95 வது அத்தியாயமான)'வத்தீனி வஸ்ஸைத்தூனி'யை ஓதினார்கள்.
(திருக்குர்ஆன் 95:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தக்வீம்' எனும் சொல்லுக்குப்'படைப்பு' என்று பொருள்.

## (96) அல்அலக் அத்தியாயம்

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) கூறினார்

திருக்குர்ஆனின் ஆரம்பத்தில் ('அல்ஃபாத்திஹா' அத்தியாயத்திற்கு முன்பாக) பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீமை எழுதுங்கள். பிறகு, ஒவ்வோர் இரண்டு அத்தியாயங்களுக்கிடையேயும் (பிரித்துக் காட்டும் அடையாளமாக) ஒரு கோடு வரைந்து கொள்ளுங்கள்.

ஹதீஸ் 4953. நபி(ஸல்) அவர்களின் துணைவியரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த(வேத அறிவிப்பான)து தூக்கத்தில் கண்ட உண்மைக் கனவுகளாகவே இருந்தது. அப்போது அவர்கள் எந்தக்கனவு கண்டாலும் அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போல் (தெளிவாக) இருக்கும். பின்னர் தனிமையிலிருப்பது அவர்களுக்கு விருப்பமாயிற்று. எனவே, அவர்கள் 'ஹிரா'க் குகைக்குச் சென்று அங்கு வணக்க வழிபாட்டில் ஈடுபட்டு வந்தார்கள். (இவ்வாறு) தம் குடும்பத்தாரிடம் திரும்புவதற்கு முன் பல இரவுகள் (அங்கு தங்கி) இருந்துவந்தார்கள். அதற்காக (பல நாள்களுக்கு வேண்டிய) உணவைத் தம்முடன் கொண்டு செல்வார்கள். பிறகு (அந்த உணவு முடிந்ததும்) மீண்டும் (தம் துணைவியார்) கதீஜாவிடம் திரும்பச் சென்று அது போன்று (பல நாள்களுக்கு வேண்டிய) உணவைக் கொண்டு செல்வார்கள். இந்நிலை, ஹிராக் குகையில் அவர்களுக்கு சத்திய(வேத)ம் வரும் வரை நீடித்தது. ஒரு நாள் அவர்களிடம் அந்த வானவர் (ஜிப்ரீல்) வந்து, 'ஓதும்!"என்றார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'நான் ஓதத் தெரிந்தவனில்லையயே!"என்றார்கள். (பின்பு நடந்தவற்றை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பின்வருமாறு எடுத்துக்) கூறினார்கள்:

அவர் என்னைப் பிடித்து என்னால் தாங்கிக் கொள்ள முடியாத அளவிற்கு என்னை இறுகக் கட்டியணைத்தார். பின்னர் என்னைவிட்டுவிட்டு, 'ஓதும்!' என்றார். அப்போதும்'நான் ஓதத்தெரிந்தவனல்லவே!"என்றேன். உடனே அவர் என்னைப் பிடித்து என்னால் தாங்கமுடியாத அளவிற்கு இரண்டாவது முறையாக இறுகக் கட்டியணைத்தார். பிறகு, என்னைவிட்டுவிட்டு, 'ஓதும்!' என்று கூறினார். அப்போதும்'நான் ஒதத் தெரிந்தவனல்லவே!"என்று கூறினேன். உடனே, அவர் என்னைப் பிடித்து என்னால் தாங்க முடியாத அளவிற்கு மூன்றாவது முறையாக என்னை இறுகத் தழுவினார். பின்னர் என்னைவிட்டுவிட்டு, 'படைத்த உம்முடைய இறைவனின் (திருப்) பெயரால் ஓதும்! அவனே மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து படைத்தான். (நபியே!) நீர் ஓதுக! உம்முடைய இறைவன் மாபெரும் கொடையாளி அவன்தான் எழுதுகோல் மூலம் (எழுதக்) கற்றுக் கொடுத்தான். மனிதன் அறியாதவற்றையெல்லாம் அவனுக்குக் கற்பித்தான்'' எனும் (திருக்குர்ஆன் 96:1-5) இறைவசனங்களை அவர் ஓதினார்.

பிறகு, அசல் வசனங்களுடன், தம் கழுத்து சதைகள் (அச்சத்தால்) படபடக்க திரும்பி வந்து, (தம் துணைவியார்) கதீஜாவிடம் நபியவர்கள் நுழைந்தார்கள்.'எனக்குப் போர்த்திவிடுங்கள் எனக்குப் போர்த்திவிடுங்கள்' என்றார்கள். அவ்வாறே கதீஜாவும் அவர்களுக்குப் போர்த்திவிட அச்சம் அவர்களைவிட்டு அகன்றது. கதீஜா அவர்களிடம் (நடந்தவற்றைத் தெரிவித்துவிட்டு,)'கதீஜா! எனக்கென்ன நேர்ந்தது? எனக்கேதும் நேர்ந்துவிடுமோ என நான் அஞ்சுகிறேன்'' என்று கூறினார்கள். அதற்கு கதீஜா(ரலி), 'அப்படியொன்றும் ஆகாது. நீங்கள் ஆறுதலடையுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்த மாட்டான் ஏனெனில் அல்லாஹ்வின் மீதாணை(யிட்டுச் சொல்கிறேன்)! நீங்கள் உறவுகளைப் பேணி நடந்துகொள்கிறார்கள் உண்மையே பேசுகிறீர்கள் (சிரமப்படுவோரின்) பாரத்தை சுமக்கிறீர்கள் வறியவர்களுக்காகப் பாடுபடுகிறீர்கள் விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள் சத்திய சோதனையில் ஆட்படுவோருக்கு சகாயம் செய்கிறீர்கள். (அதனால் நீங்கள் சஞ்சலப்பட வேண்டியதில்லை)'' என்று (ஆறுதல்) கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்களை அழைத்துக் கொண்டு தம் தந்தையின் சகோதரரான'வரக்கா இப்னு நவ்ஃபல்' என்பாரிடமும் சென்றார்கள். -'வராக்க' அறியாமைக் காலத்திலேயே கிறித்தவ

சமயத்தைத் தழுவியராக இருந்தார். அவர் அரபு மொழியில் எழுதத் தெரிந்தவராயிருந்தார் இன்ஜீல் வேதத்தை (ஹீப்ரு மொழியிலிருந்து) அரபு மொழியில் அல்லாஹ் நாடிய அளவு எழுதுபவராயிருந்தார் மேலும் அவர் கண் பார்வையிழந்த முதியவராகவும் இருந்தார். அவரிடம் கதீஜா அவர்கள், 'என் தந்தையின் சகோதரர் புதல்வரே! உங்களுடைய சகோதரரின் புதல்வர் (முஹம்மது) இடம் (அவர் கூறுவதைக்) கேளுங்கள்!"என்றார்கள். அப்போது அவர் (நபியவர்களிடம்), 'என் சகோதரர் புதல்வரே! நீங்கள் என்ன பார்த்தீர்கள்?' எனக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள் தாம் பாார்த்தவற்றின் செய்தியை அவரிடம் தெரிவித்தார்கள். இதைக்கேட்ட'வரக்கா', '(நீர் கண்ட) இவர் தாம் (இறைத்தூதர்) மூஸாவிடம் (இறைவனால்) அனுப்பப்பட்ட வானவர் (ஜிப்ரீல்) ஆவார்'' என்று கூறிவிட்டு, (மகனே!) உம்மை உம் சமூகத்தார் உம்முடைய நாட்டிலிருந்து வெளியேற்றும்) அந்தச் சமயத்தில் நான் திடகாத்திரமானவனாக இருந்தால் நன்றாயிருக்குமே! நான் அந்தச் சமயத்தில் உயிருள்ளவனாய் இருந்தால் நன்றாயிருக்குமே!"என்று சொல்லி வேறு சில வார்த்தைகளையும் கூறினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , '(என் சமூக) மக்கள் என்னை (நாட்டைவிட்டும்) வெளியேற்றவா செய்வார்கள்?' என்று கேட்க, 'வரக்கா', 'ஆம். நீங்கள் பெற்றிருக்கிற (உண்மையான வேதம் போன்ற)தைப் பெற்ற (இறைத்தூதர்) எவரும் (மக்களால்) துன்புறுத்தப்படாமல் இருந்ததில்லை. உம்முடைய (பிரசாரம் பரவுகின்ற) நாளில் நான் (உயிருடன்) இருந்தால் உமக்குப் பலமான உதவிபுரிவேன்'' என்று கூறினார். அதன் பின்னர்'வரக்கா' நீண்ட நாள் உயிருடன் இராமல் இறந்துவிட்டார். (இந்த முதலாவது வேத அறிவிப்புடன்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (சூவத அறிவிப்பு) வருவது சிறிது காலம் நின்று போயிற்று. அதனால் அவர்கள் கவலைப்பட்டார்கள்.

ஹதீஸ் 4954. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

வேத அறிவிப்பு (வஹீ) நின்றுபோயிருந்த இடைக்காலம் குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நான் நடந்து போய்க் கொண்டிருக்கும்போது ஆகாயத்திலிருந்து ஒரு குரலைக் கேட்டு என்னுடைய பார்வையை உயர்த்தினேன். அங்கே, நான்'ஹிரா'வில் இருந்தபோது என்னிடம் வந்த வானவர் (ஜிப்ரீல்) வானுக்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். அவரைப் பார்த்து நான் அதிர்ச்சியடைந்தேன். உடனே நான் (என் துணைவியார் கதீஜாவிடம்) திரும்பி வந்து, 'எனக்குப் போர்த்திவிடுங்கள் எனக்குப் போர்த்திவிடுங்கள்'' என்றேன். அவர்களும் எனக்குப் போர்த்திவிட்டார்கள். அப்போது அல்லாஹ், 'போர்த்தியிருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்யுங்கள். உங்களுடைய இறைவனைப் பெருமைப்படுத்துங்கள். உங்கள் ஆடைகளைத் தூய்மையாக வைத்திருங்கள். அசுத்தத்திலிருந்து விலகியிருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 74:1-5) வசனங்களை அருளினான்.

-(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஸலமா(ரஹ்) கூறினார்: (மேற்கண்ட 74:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ருஜ்ஸ்' (அசுத்தம்) என்பது, அறியாமைக் கால மக்கள் வழிபட்டுவந்த சிலைகளைக் குறிக்கும்.

இதன் பின்னர் வேத அறிவிப்பு (வஹீ) தொடரலாயிற்று.

## "அவனே மனிதனை இரத்தக்கட்டியிலிருந்து படைத்தான்' எனும் (திருக்குர்ஆன் 96:2 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4955. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த(வேத அறிவிப்பான)து உண்மைக் கனவுகளே ஆகும். அப்பால் அந்த வானவர் (ஜிப்ரீல்) நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'படைத்த உம்முடைய இறைவனின் (திருப்) பெயரால் ஓதும்! அவனே மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து

படைத்தான். (நபியே!) நீர் ஓதுக! உம்முடைய இறைவன் மாபெரும் கொடையாளி அவன்தான் எழுதுகோல் மூலம் (எழுதக்) கற்றுக் கொடுத்தான். மனிதன் அறியாதவற்றையெல்லாம் அவனுக்கக் கற்பித்தான்'' எனும் (திருக்குர்ஆன் 96:1-5) இறைவசனங்களை ஓதினார்.

"(நபியே!) நீர் ஓதுக! உம்முடைய இறைவன் மாபெரும் கொடையாளி' எனும் (திருக்குர்ஆன் 96:3 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4956. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த(வேத அறிவிப்பான)து உண்மைக் கனவுகளே ஆகும். அப்பால் அந்த வானவர் (ஜிப்ரீல்) நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'படைத்த உம்முடைய இறைவனின் (திருப்)பெயரால் ஓதும்! அவனே மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து படைத்தான். (நபியே!) நீர் ஓதுக! உம்முடைய இறைவன் மாபெரும் கொடையாளி அவன்தான் எழுதுகோல் மூலம் (எழுதக்) கற்றுக் கொடுத்தான். மனிதன் அறியாதவற்றையெல்லாம் அவனுக்குக் கற்பித்தான்'' எனும் (திருக்குர்ஆன் 96:1-5) இறைவசனங்களை ஓதினார்.

அவன்தான் எழுதுகோல் மூலம் (எழுதக்) கற்றுக்கொடுத்தான் (எனும் 96:4 வது) இறைவசனம்.

ஹதீஸ் 4957. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஹிராக் குகையிலிருந்து, கதீஜா(ரலி) அவர்களிடம் திரும்பி வந்து, 'எனக்குப் போர்த்திவிடுங்கள் எனக்குப் போர்த்திவிடுங்கள்'' என்று கூறினார்கள். பிறகு இந்த ஹதீஸை (மேற்கண்ட படி முழுதுவமாக) அறிவிப்பாளர் குறிப்பிடுகிறார்.

"அவ்வாறன்று! அவன் (இந்த நடத்தையிலிருந்து) விலகிக் கொள்ளவில்லையெனில், திண்ணமாக, அவனுடைய நெற்றிமுடியைப் பற்றி இழுப்போம் கடும் தவறிழைத்த பொய்யுரைத்த அந்த நெற்றியை! எனும் (திருக்குர்ஆன் 96:15, 16ஆகிய) இவைசனங்கள்.

ஹதீஸ் 4958. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

'கஅபா' அருகில் முஹம்மது தொழுது கொண்டிருப்பதை நான் கண்டால் அவரின் கழுத்தின் மீது நிச்சயமாக மிதிப்பேன் என்று அபூ ஜஹ்ல் சொன்னான். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, 'அவன் மட்டும் அப்படிச் செய்தால், வானவர்கள் அவனைக் கடுமையாகப் பிடி(த்துத் தண்டி)ப் பார்கள்'' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## (97) அல்கத்ர் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 97:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மத்லஉ' எனும் சொல்லுக்கு'உதயமாகுதல்' என்று பொருள். (மற்றோர் ஓதலில் வந்துள்ள இதே சொல்லான)'மத்லிஉ' என்பதற்கு'உதயமாகுமிடம்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 97:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அன்ஸல்னாஹு' என்பதிலுள்ள'ஹு' எனும் பிரதிப் பெயர்ச்சொல், குர்ஆனையே சுட்டுகிறது.

(குர்ஆனை) அருளியவன் அல்லாஹ் ஒருவனாயிருக்க (நான் இதனை இறக்கி வைத்தேன் என்பதற்குப் பிரதியாக) நாம் இ(ந்)த(குர்ஆ)னை இறக்கி வைத்தோம்' என்று பன்மையாகக் குறிப்பிட்டதற்குக் காரணம், (பொதுவாக) அரபுகள் ஒருமை வினையை வலியுறுத்த பன்மையைப் பயன்படுத்துவர். இதன் மூலம் அச்சொல் ஊர்ஜிதம் செய்யப்பட்டதாக ஆகும்.

(98)'அல்பய்யினா' அத்தியாயம்1

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

(திருக்குர்ஆன் 98:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'முன்ஃபக்கீன்' எனும் சொல்லுக்கு'விலகிக் கொள்வோர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 98:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்கய்யிமா' எனும் சொல்லுக்கு'நிலையானது' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 98:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தீனுல் கய்யிமா' (நிலையான மார்க்கம்) என்பதில், 'தீன்' எனும் (ஆண்பால்) சொல்லை'அல்கய்யிமா' எனும் பெண்பால் சொல்லுடன் இறைவன் இணைத்துள்ளான். ('தீன்' எனும் ஆண்பால் சொல்லை'அல்மில்லத்' (மார்க்கம்) எனும் பெண்பால் சொல்லாலும் அழைப்பதே காரணம்.)

ஹதீஸ் 4959. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்
நபி(ஸல்) அவர்கள் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம், 'உங்களுக்கு'லம் யகுனில்லஃதீன கஃபரூ' எனும் (98 வது) அத்தியாயத்தை ஓதிக்காட்டுமாறு அல்லாஹ் என்னைப் பணித்துள்ளான்'' என்று கூறினார்கள். உபை(ரலி), 'அல்லாஹ் என் பெயரைச் குறிப்பிட்டா (அப்படிச்) சொன்னான்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'ஆம்' என்று பதிலளிக்க, (ஆனந்த மிகுதியால்) அப்போது உபை(ரலி) அழுதார்கள்.

ஹதீஸ் 4960. அனஸ்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம், 'உங்களுக்குக் குர்ஆனை ஓதிக்காட்டுமாறு அல்லாஹ் எனக்குக் கட்டளையிட்டுள்ளான்'' என்று கூறினார்கள். உபை(ரலி), 'அல்லாஹ் என் பெயரைத் தங்களிடம் குறிப்பிட்டானா?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், '(ஆம்), அல்லாஹ் உங்கள் பெயரைக் குறிப்பிட்டான்'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) உபை(ரலி), (ஆனந்த மேலீட்டால்) அழலானார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) கத்தாதா இப்னு திஆமா(ரஹ்), 'உபை இப்னு கஅப்(ரலி) அவர்களுக்கு'லம் யகுனில்லஃதீன கஃபரூ' எனும் (98 வது) அத்தியாயத்தை நபி(ஸல்) அவர்கள் ஓதிக் காட்டினார்கள் என எனக்குச் செய்தி எட்டியுள்ளது'' என்றார்கள்.

ஹதீஸ் 4961. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம், 'உங்களுக்கு நான் குர்ஆனை ஓதிக்காட்ட வேண்டுமென எனக்கு அல்லாஹ் உத்தரவிட்டுள்ளான்'' என்று கூறினார்கள். உபை(ரலி), 'என் பெயரை அல்லாஹ் தங்களிடம் குறிப்பிட்டானா?' என (பெருமிதத்துடன்) கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'ஆம்' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) உபை(ரலி), 'அகிலத்தாரின் அதிபதியிடம் நான் பிரஸ்தாபிக்கப்பட்டேனா?' என்று (மீண்டும்) கேட்க, நபி(ஸல்) அவர்கள், 'ஆம்' என்று கூறினார்கள். இதைக்கேட்ட (உபை) அவர்களின் கண்கள் (ஆனந்தத்தால்) கண்ணீரை உகுத்தன.

## (99) அஸ்ஸில்ஸால் அத்தியாயம்

## "எனவே, ஓர் அணுவளவு நன்மை செய்தவர் (மறுமையில்) அதனையும் கண்டுகொள்வார்' எனும் (திருக்குர்ஆன் 99:7 வது) இறைவசனம்.

(திருக்குர்ஆன் 99:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அவ்ஹா லஹா' (வஹீ மூலம் அதற்கு அறிவித்தான்) எனும் (சொல்லின் நான்கெழுத்து) வினைச்சொல்லும், 'அவ்ஹா இலைஹா' எனும் சொல்லும், (மூன்றெழுத்து வினைச் சொற்களான)'வஹா லஹா', 'வஹா இலைஹா' ஆகியனவும் (பொருளில்) ஒன்றேயாகும்.

ஹதீஸ் 4962. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
குதிரை (வைத்திருப்பது) மூன்று பேருக்கு (மூன்று வகையான விளைவுகளைத் தருவதாகும்.) ஒரு மனிதருக்கு நற்பலன் பெற்றுத் தருவதாகும். மற்றொரு மனிதருக்குப் (பொருளாதாரப்) பாதுகாப்பளிக்கக் கூடியதாகும். இன்னொரு மனிதருக்கு பாவச் சுமையாகும்.

அதை இறைவழியில் பயன்படுத்துவதற்காகப் பசுமையான ஒரு'வெட்ட வெளியில்' அல்லது'தோட்டத்தில்' ஒரு நீண்ட கயிற்றால் கட்டிவைத்துப் பராமரிக்கும் மனிதருக்கு அது (மறுமையில்) நற்பலனைப் பெற்றுத்தரும். அந்தக் குதிரை தன்(னைக் கட்டிவைத்திருக்கும்) கயிற்றின் நீளத்திற்கேற்ப எந்த அளவிற்கு'அந்தப் பசும் புல்வெளியில்' அல்லது'அந்தத் தோட்டத்தில்' மேயுமோ அந்த அளவிற்கு அவருக்கு நன்மைகள் கிடைக்கும். அது தன் கயிற்றினைத் துண்டித்துக் கொண்டு ஓரிருமுறை குதித்து (அல்லது ஒன்றிரண்டு மேடுகளைக் கடந்து) சென்றால், அதன் பாதச் சுவடுகளும், கெட்டிச் சாணங்களும் கூட அவருக்கு நன்மைகளாக மாறும். அந்தக் குதிரை ஓர் ஆற்றைக் கடந்து செல்லும்போது, அதிலிருந்து தண்ணீர் குடித்தால் அதற்குத் தண்ணீர் புகட்டும் எண்ணம் (குதிரையின் உரிமையாளரான) அவருக்கு இல்லாமலிருந்தாலும் அதுவும் (அவர் புகட்டியதாகவே கருதப்பட்டு) அவருக்குரிய நன்மையாகவே ஆகும்.
இன்னொருவர் தம் தேவைகளை நிவர்த்தி செய்துகொள்ளவும் பிறரிடம் கையேந்துவதிலிருந்து தம்மைக் காத்துக் கொள்ளவும் அதைக் கட்டிவை(த்துப் பராமரி)க்கிறவராவார். மேலும், அதனுடைய பிடரியின் (ஸகாத்தை செலுத்தும்) விஷயத்திலும் (அதனால் தாங்கவியலும் சுமையை மட்டுமே) அதன் முதுகின் (மீது தூக்கி வைக்கும்) விஷயத்திலும் அல்லாஹ்வின் கட்டளையை (நிறைவேற்றிட) மறக்காதவராவார். இப்படிப்பட்டவருக்கு, (அவருடைய) இந்தக் குதிரை (வறுமையிலிருந்து அவரைக் காக்கும்) திரையாகும்.
மற்றொருவன் பெருமைக்காகவும் பகட்டுக்காகவும் (சன்மார்க்கத்தாருடன்) பகைமை பாராட்டுவதற்காகவும் அதனைக் கட்டிவை(த்துப் பராமரி)க்கிறவன் ஆவான். அதன் காரணத்தால், அது அவனுக்குப் பாவச் சுமையாக மாறிவிடுகிறது.
அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கழுதைகள் குறித்து கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், `அவற்றைக் குறித்து எந்தக் கட்டளையையும் அல்லாஹ் எனக்கு அருளவில்லை" `அணுவளவு நன்மை செய்தவர் அத(ன் நற்பல)னைக் கண்டுகொள்வார். மேலும், அணுவளவு தீமை புரிந்தவரும் அத(ற்கான தண்ட)னை(யை)க் கண்டு கொள்வார்' எனும் தனித்துவம் வாய்ந்த ஒருங்கிணைந்த இந்த (திருக்குர்ஆன் 99:7,8) வசனங்களைத் தவிர'` என்று கூறினார்கள். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஓர் அணுவளவு தீமை செய்தவர் அதனையும் கண்டுகொள்வார் (எனும் 99:8 வது இறைவசனம்).

ஹதீஸ் 4963. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்களிடம் கழுதைகள் குறித்து வினவப்பட்டது. அப்போது அவர்கள், `இவை குறித்து எனக்கு இந்தத் தனித்துவம் வாய்ந்த ஒருங்கிணைந்த வசனத்தைத் தவிர வேறெதுவும் அருளப்படவில்லை'` என்று கூறிவிட்டு, `அணுவளவு நன்மை செய்தவர் அத(ன் நற்பல)னைக் கண்டுகொள்வார். மேலும், அணுவளவு தீமை செய்தவரும் அத(ற்கான தண்ட)னை(யை)க் கண்டுகொள்வார்' எனும் (திருக்குர்ஆன் 99:7,8) இறை வசனங்களை ஓதிக் காட்டினார்கள்.

## (100) அல்ஆதியாத் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 100:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கநூத்' எனும் சொல்லுக்கு'நன்றி கெட்டவன்' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 100:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃபஅஸர்ன பிஹி நக்ஆ' எனும் வாக்கியத்திற்கு'அதனால் புழுதியைக் கிளப்புகிறவற்றின் மீது சத்தியமாக' என்று பொருள் எனக் கூறப்படுகிறது.

(திருக்குர்ஆன் 100:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லி ஹுப்பில் கைரி ல ஷதீத்' என்பதன் பொருளாவது: செல்வத்தை அவன் நேசிப்பவன் காரணத்தால் கருமியாக இருக்கிறான். கருமிக்கு'ஷதீத்' எனச் சொல்லப்படுவதுண்டு.

(திருக்குர்ஆன் 100:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஹுஸ்ஸில' எனும் சொல்லுக்குப்'பகுத்து ஆயப்படும்' என்று பொருள்.

(101)'அல்காரிஆ' அத்தியாயம்1

(திருக்குர்ஆன் 101:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கல் ஃபராஷில் மப்ஸூஸ்' எனும் (தொடருக்கு'ஒன்றன் மீது ஒன்றாக வீழ்ந்து போகும் திக்குத் தெரியாத வெட்டுக்கிளிகள் போல், (அந்நாளில்) மனிதர்கள் ஒருவரை ஒருவர் சுற்றி வருவர்'` என்று பொருள்.

(திருக்குர்ஆன் 101:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கல் இஹ்ன்' எனும் சொல்லுக்குப்' பல் வேறு நிறங்களைக் கொண்ட பஞ்சுகள் போன்று' என்று பொருள். (இந்த வசனத்தில்) அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), ('கல் இஹ்ன் என்னுமிடத்தில்)'கஸ்ஸூஃப்' (கம்பளியைப் போன்று) என்று ஓதியுள்ளார்கள்.

## (102) அத்தாகாஸுர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 102:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அத் தகாஸுர்' எனும் சொல்லுக்கு'வசதி வாய்ப்புகளையும் குழந்தை குட்டிகளையும் கூடுதலாகப் பெறவேண்டுமென்ற ஆசை' என்று பொருள்.

## (103) அல்அஸ்ர் அத்தியாயம்

யஹ்யா இப்னு ஸியாத் அல்ஃபர்ராஉ(ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 103:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வல் அஸ்ரி' எனும் சொல்லில், இறைவன் காலத்தின் மீது சத்தியமிட்டுக் கூறுகிறான்.

## (104) அல்ஹுமஸா அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

(திருக்குர்ஆன் 104:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஹுத்தமா' என்பது, `சகர்', `லழா' ஆகியன போன்று நரகத்தின் பெயராகும்.

(105)'அல்ஃபீல்' அத்தியாயம்1

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார். (திருக்குர்ஆன் 105:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அலம் தர' எனும் சொற்றொடருக்கு, `நீர் அறியவில்லையா?' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 105:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அபாபீல்' எனும் சொல்லுக்குச்'சாரைசாரையாக கூட்டங்கூட்டமாக' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 105:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சிஜ்ஜீல்' எனும் சொல், `சன்கி கில்' எனும் (பாரசீகச்) சொல்லின் மருவலாகும். (பொருள்: களிமண் கற்கள்.)

## (106) குறைஷ் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 106:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லி ஈலாஃபி குறைஷ்' (குறைஷியரைப் பழக்கப்படுத்துவதற்காக) என்பதன் கருத்தாவது: கோடை காலத்திலும் குளிர் காலத்திலும்

(வணிகப்) பயணம் மேற்கொள்வதைக் குறைஷியர் பழக்கப்படுத்திக்கொண்டனர். எனவே, அது அவர்களுக்குச் சிரமம் அளிக்கவில்லை.
(திருக்குர்ஆன் 106:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆமனஹும்' (அவர்களுக்கு அபயமளித்தான்) எனும் சொல்லுக்கு'ஹரம் - புனித எல்லா எதிரிகளின் அச்சத்திலிருந்தும் அவர்களுக்கு அபயமளித்தான்' என்று பொருள்.
சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 106:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லி ஈலாஃபி குறைஷ்' எனும் சொற்றொடருக்குக்'குறைஷியருக்கு நான் அருள்புரிந்ததற்காக' என்று பொருள்.

## (107) அல்மாஊன் அத்தியாயம்

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:
(திருக்குர்ஆன் 107:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யதுஃஉ' எனும் சொல்லுக்கு'அவர்களின் உரிமையைத் தருவதில்லை' என்று பொருள். இச்சொல்'தஅஉத்து (நான் மறுத்தேன்) எனும் (வினைச்) சொல்லிலிருந்து வந்ததாகும்.
(திருக்குர்ஆன் 52:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுதஃஊன எனும் சொல்லுக்கு' விரட்டியடிக்கப்படுவர்' என்று பொருள்.
(திருக்குர்ஆன் 107:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'சாஹூன்' எனும் சொல்லுக்கு'(அலட்சியத்தினால்) பாழாக்குபவர்கள்' என்று பொருள்.
இக்ரிமா(ரஹ்) கூறினார்.
மாஊனில் உயர்ந்தது கடமையாக்கப்பட்ட'ஸகாத்' ஆகும். அதில் மிகத் தாழ்ந்தது (ஊசி போன்ற சிறு) பொருட்களை இரவலாக வழங்குவதாகும்.

## (108) அல்கவ்ஸர் அத்தியாயம்

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 108:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஷானிஅக்க' எனும் சொல்லுக்கு'உங்களுடைய பகைவன்' என்று பொருள்.

ஹதீஸ் 4964. தாம் அழைத்துச் செல்லப்பட்ட விண்ணுலகப் பயணம் குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நான் ஓர் ஆற்றின் அருகே சென்றேன். அதன் இரண்டு மருங்கிலும் துளையுள்ள முத்துக் கலசங்கள் காணப்பட்டன. அப்போது நான், 'ஜிப்ரீலே, இது என்ன?' என்று கேட்டேன்.
"இது அல்கவ்ஸர்'' என்று ஜிப்ரீல் (அலை) அவர்கள் பதிலளித்தார்கள்.
என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4965. அபூ உபைதா ஆமிர் இப்னு அப்தில்லாஹ் இப்னி மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம்,
"(நபியே!) நாம் உங்களுக்கு அல்கவ்ஸரை அருளினோம்'' எனும் (திருக்குர்ஆன் 108:1 வது) இறை வசனம் தொடர்பாகக் கேட்டேன். அவர்கள், '(அது சொர்க்க) நதியாகும். அது உங்கள் நபி(ஸல்) அவர்களுக்கு வழங்கப்படவுள்ளது. அதன் இரண்டு மருங்கிலும் துளையுள்ள முத்துகள் உள்ளன. அதன் பாத்திரங்கள் விண்மீன்களின் எண்ணிக்கை போன்று (எண்ணற்றதாய்) இருக்கும்'' என்று கூறினார்கள்.
இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 4966. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
(திருக்குர்ஆன் 108:1 வது வசனத்தில் இடம் அப்பாஸ்(ரலி) கூறுகையில், 'அது, நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் வழங்கியுள்ள (அனைத்து) நன்மைகளாகும்'' எனத் தெரிவித்தார்கள்.
(அறிவிப்பாளர்களில், ஒருவரான) அபூ பிஷ்ர்(ரஹ்) கூறினார்:

நான் ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்களிடம், 'மக்கள்'அல்கவ்ஸர்' என்பது சொர்க்கத்திலுள்ள நதி என்று கூறுகின்றனரே?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் அருளிய (அளவற்ற) நன்மைகளில் சொர்க்கத்திலுள்ள அந்த நதியும் அடங்கும்'' என்று கூறினார்கள்:

## (109) அல்கா∴பிருன் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 109:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லக்கும் தீனுக்கும்' (உங்களுடைய மதம் உங்களுக்கு) என்பதன் கருத்தாவது: இறைமறுப்பு உங்களுக்கு'வலிய தீன்' (என்னுடைய மார்க்கம் எனக்கு) என்பதன் கருத்தாவது: இஸ்லாம் எனக்கு.

இதில், 'என்னுடைய மார்க்கம்' என்று குறிப்பிட, 'தீனி' என்று (தன்னிலைப் பிரதிப் பெயர்ச் சொல்லுடன் இணைத்து) அல்லாஹ் கூறவில்லை. காரணம், இந்த (அத்தியாயத்திலுள்ள) எல்லா வசனங்களும் னகர ஒலியுடன் (நூனில்) முற்றுப்பெற்றுள்ளன. எனவேதான், ('தீனி' என்பதிலுள்ள) யகரம் நீக்கப்பட்டது. இறைவன் ('யஹ்தீனீ' என்பதற்கு பதிலாக)'யஹ்தீன்' என்றும் ('யஷ்∴பீனீ' என்பதற்கு பதிலாக)'யஷ்∴பீன்' என்றும் கூறியிருப்பதைப் போன்று. (காண்க: குர்ஆன்மூலம் 26:7,8,80)

மற்றவர்கள் கூறுகிறார்கள்:

உம் இறைவனிடமிருந்து உமக்கு அருளப்பெற்ற (இவ்வேதமான)து அவர்களில் பெரும்பாலோருக்கு அட்டூழியத்தையும் இறைமறுப்பையும் நிச்சயமாக அதிகப்படுத்தி வருகிறது. எனவே, இறைமறுப்பாளர்களான இம்மக்களுக்காக நீர் கவலை கொள்ளாதீர். (திருக்குர்ஆன் 05:68)

## (110) அந்நஸ்ர் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

ஹதீஸ் 4967. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

"(நபியே! உங்களுக்கு) அல்லாஹ்வின் உதவியும், (அவன் அளிக்கும்) வெற்றியும் கிடைத்து..!"எனும் (110 வது) அத்தியாயம் தமக்கு அருளப்பட்ட பின்'சுப்ஹானக்க ரப்பனா வபி ஹம்திக்க, அல்லாஹும்ம ∴க்பிர்லீ'' (எங்கள் இறைவா! நீ தூயவன் உன்னைப் போற்றுகிறோம் இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக!) என்று தொழுகையில் கூறாமல் எந்தவொரு தொழுகையையும் நபி(ஸல்) அவர்கள் தொழுததில்லை.

ஹதீஸ் 4968. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குர்னின் (110 வது அத்தியாயத்தின்) கட்டளையைச் செயல்படுத்தும் முகமாக, தம் (தொழுகையின்) ருகூஉவிலும் சுஜுதிலும் அதிகமாக'சுப்ஹானக்க ரப்பனா வபிஹம்திக்க, அல்லாஹும்ம ∴க்பிர்லீ' (எங்கள் இறைவா! நீ தூயவன் உன்னைப் போற்றுகிறோம் இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக!) என்று கூறிவந்தார்கள்.

### மேலும், (நபியே!) அல்லாஹ்வின் மார்க்கத்தில் மக்கள் கூட்டம் கூட்டமாக நுழைவதை நீங்கள் காணும்போது (எனும் 110:2 வது இறைவசனம்.)

ஹதீஸ் 4969. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி), '(நபியே! உங்களுக்கு) அல்லாஹ்வின் உதவியும், (அவன் அளிக்கும்) வெற்றியும் கிடைத்து.!"எனும் (110 வது) அத்தியாயம் குறித்து (பத்ருப் போரில் கலந்துகொண்ட) நண்பர்களிடம் கேட்டார்கள். நண்பர்கள்'பல நாடுகளையும் கோட்டைகளையும் வெற்றிகொள்வது (குறித்துத்தான் இந்த வசனம் முன்னறிவிப்புச் செய்கிறது)'' என்று கூறினர். 'இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று உமர்(ரலி) (என்னிடம்) கேட்டார்கள். '(இது,) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஆயுட்காலம், அல்லது ஓர்

உதாரணமாகும். (இதன் மூலம்) அவர்களின் இறப்புச் செய்தி முன்னறிவிப்புச் செய்யப்பட்டுள்ளது‘‘ என்று (விளக்கம்) கூறினேன்.

**“உங்களுடைய இறைவனைப் புகழ்ந்து கொண்டு அவனைத் துதியுங்கள்! (மேலும், அவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள். நிச்சயமாக அவன் பாவமன்னிப்பைப் பெரிதும் ஏற்பவனாக இருக்கிறான்‘ எனும் (திருக்குர்ஆன் 110:3 வது) இறைவசனம்.**

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'தவ்வாப்' எனும் சொல்லுக்கு, அடியார்களின் பாவமன்னிப்புக் கோரிக்கையை ஏற்பவன்' என்று பொருள். மக்களில் பாவமன்னிப்புக் கோருபவருக்கும்'தவ்வாப்' என்று கூறப்படுவதுண்டு.

ஹதீஸ் 4970. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

உமர்(ரலி) பத்ருப்போரில் கலந்துகொண்ட புண்ணியவான்களுடன் எனக்கும் (தம் அவையில்) இடமளித்து வந்தார்கள். எனவே, அவர்களில் சிலர் வருத்தமடைந்து, ‘எங்களுக்கு இவரைப் போன்ற (வயது ஒத்த) பிள்ளைகள் இருக்க, (அவர்களையெல்லாம்விட்டுவிட்டு) இவரை மட்டும் எங்களுடன் ஏன் அமரச்செய்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு உமர்(ரலி), ‘அவர் நீங்கள் அறிந்துள்ள வகையில் (அருமை பெருமைகள் உடையவராக) இருக்கிறார் என்பதால் தான்‘‘ என்றார்கள். பின்னர் ஒருநாள் (எங்களை) உமர்(ரலி) (அவைக்கு) அழைத்தார்கள். அப்போதும் என்னை அவர்களுடன் அமரச் செய்தார்கள். அவர்களுக்கு (என் தகுதியினை உணர்த்திக்) காட்டுவதற்காகவே அன்று என்னை அழைத்தார்கள் என்றே கருதினேன். (எனவே, அனைவரும் வந்ததும் அவர்களிடம்) உமர்(ரலி), ‘அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வந்துவிட்டால்.!”எனும் (திருக்குர்ஆன் 110:1 வது) இறைவசனம் குறித்து நீங்கள் என்ன (விளக்கம்) கூறுகிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்களில் சிலர், ‘நமக்கு உதவியும் வெற்றியும் அளிக்கப்படுமபோது அல்லாஹ்வைப் புகழும்படியும் அவனிடம் பாவமன்னிப்புக் கோரும்படியும் நாம் பணிக்கப்பட்டுள்ளோம்‘‘ என்று (அவ்வசனத்திற்கு விளக்கம்) கூறினர். அவர்களில் இன்னும் சிலர் ஏதும் சொல்லாமல் அமைதியாயிருந்தனர். அப்போது உமர்(ரலி) என்னிடம், ‘இப்னு அப்பாஸே! நீங்களும் இவ்வாறுதான் கூறுகிறீர்களா?' எனக் கேட்டார்கள். நான், ‘இல்லை‘‘ என்றேன். 'அவ்வாறாயின், நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். நான், ‘அது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அவர்களின் ஆயுட்காலம் (முடிந்துவிட்டதைக்) குறித்து (முன்) அறிவிப்புச் செய்ததாகும். 'இறைவனின் உதவியும் வெற்றியும் வந்துவிட்டால்‘.. அதாவது இது, உங்களின் ஆயுட்காலம் (முடிந்துவிட்டது) பற்றிய அறிகுறியாகும். எனவே, உங்களுடைய இறைவனைப் புகழ்ந்து, அவனுடைய தூய்மையை எடுத்துரைத்து, அவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள். அவன் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்பவன் ஆவான் (என்பதே இதன் விளக்கமாகும்)‘‘ என்று பதிலளித்தேன். அப்போது உமர்(ரலி), ‘நீங்கள் கூறுகிற விளக்கத்தையே இ(ந்த அத்தியாயத்)திலிருந்து நானும் அறிகிறேன்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 4971. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

“(நபியே!) உங்களுடைய நெருங்கிய உறவினர்களுக்கு எச்சரிக்கை செய்வீராக!”(அதாவது,)'தூய மனம் படைத்த உம்முடைய குழுவினரையும் (எச்சரிக்கை செய்வீராக!‘) எனும் (திருக்குர்ஆன் 26:214 வது) இறைவசனம் அருளப்பட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்று'ஸஃபா' (மலை) மீதேறி உரத்த குரலில், ‘யா ஸபாஹா (அதிகாலை ஆபத்து! உதவி! உதவி!)‘‘ என்று கூறினார்கள். அப்போது (மக்கா நகர) மக்கள், ‘யார் இவர்?' என்று கூறியவாறு நபியவர்களிடம் ஒன்று கூடினர். அப்போது நபி(ஸல்) அவர்கள், ‘இந்த மலையின் அடிவாரத்திலிருந்து (உங்களைத்

தாக்குவதற்காக பகைவர்களின்) குதிரைப் படையொன்று புறப்பட்டு வருகிறது என்று நான் உங்களிடம் தெரிவித்தால், என்னை நீங்கள் நம்பியிருப்பீர்களா?' என்று கேட்டார்கள். மக்கள், 'உம்மிடமிருந்து எந்தப் பொய்யையும் நாங்கள் அனுபவித்ததில்லை. (அவ்வாறிருக்க, இதை நாங்கள் நம்பாமல் இருப்போமா?)'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அப்படியென்றால், நான் கடும் வேதனையொன்று எதிர்நோக்கியுள்ளது என்று உங்களை எச்சரிக்கை செய்கிறேன்'' என்றார்கள். (அப்போது நபியவர்களைப் பார்த்து) அபூ லஹப், 'உமக்கு அழிவுண்டாகட்டும்! இதற்காகத்தான் எங்களை ஒன்றுகூட்டினாயா?' என்று கேட்டான். பின்னர் நபி(ஸல்) அவர்கள் எழுந்தார்கள். அப்போது 'அழியட்டும் அபூ லஹபின் இரண்டு கரங்கள் அவனுமே அழியட்டும்'' எனும் (111 வது) அத்தியாயம் அருளப்பெற்றது. இந்த (திருக்குர்ஆன் 111:1 வது) வசனத்தை (அதன் இறுதியில் 'கத்' எனும் இடைச் சொல்லை இணைத்து) 'வ கத் தப்ப' (அவன் அழிந்தும்விட்டான்) என்றே அப்போது (அறிவிப்பாளர்) அஃமஷ் (ரஹ்) ஓதினார்கள்.

அவனும் நாசமாம்விட்டான். அவனுடைய செல்வமும் அவன் சம்பாதித்தவையும் அவனுக்கு எந்தப் பலனையும் அளிக்கா (எனும் 111:2 வது இறைவசனம்).

ஹதீஸ் 4972. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்காவின்) பள்ளத்தாக்கு நோக்கிக் கிளம்பிச் சென்று (அங்குள்ள 'ஸஃபா' எனும்) அந்த மலை மீதேறி, 'யா ஸபாஹா! (இதோ, அதிகாலை ஆபத்து! உதவி! உதவி!) என்று கூவியழைத்தார்கள். உடனே, அவர்களிடம் குறைஷியர் குழுமினர். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'நான் உங்களிடம் 'காலையிலோ மாலையிலோ (உங்களைத் தாக்குவதற்காக) உங்களை நோக்கிப் பகைவர்கள் வருகிறார்கள்' என்று தகவல் சொன்னால் என்னை நீங்கள் நம்பியிருப்பீர்களா?, கூறுங்கள்!"என்று கேட்டார்கள். (குழுமியிருந்த மக்கா) மக்கள், 'ஆம் (நம்பவே செய்வோம்)'' என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள், 'அப்படியானால், கடும் வேதனையொன்று எதிர்நோக்கியுள்ளது என உங்களை எச்சரிக்கை செய்கிறேன்'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) உடன் அபூ லஹப், 'உனக்கு அழிவுண்டாகட்டும் இதற்காகத்தான் எங்களை ஒன்று திரட்டினாயா?' என்று கேட்டான். அப்போது மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ், 'அழியட்டும் அபூ லஹபின் இரண்டு கரங்கள்'' என்று தொடங்கும் (111 வது) அத்தியாயத்தை அருளினான்.

"அவன் கொழுந்துவிட்டெரியும் நெருப்பில் நுழைவான்' எனும் (திருக்குர்ஆன் 111:3 வது) இறைவசனம்.)

ஹதீஸ் 4973. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

'உமக்கு அழிவுண்டாகட்டும் இதற்காகவா எங்களை நீ ஒன்று கூட்டினாய்!"என்று (நபி(ஸல்) அவர்களைப் பார்த்து) அபூ லஹப் கேட்டான். அப்போது 'அழியட்டும், அபூ லஹபின் இரண்டு கரங்கள்.!"எனும் (111 வது) அத்தியாயம் அருளப்பெற்றது.

அவனுடன் அவன் மனைவியும் (அழியட்டும்) அவளோ விறகு சுமப்பவன் (எனும் 111:4 வது இறைவசனம்.)

முஜாஹித்(ரஹ்) கூறினார்.

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள) 'ஹம மாலத்தல் ஹதப்' எனும் சொல்லுக்குப் 'புறம் பேசித் திரிகிறவள்' (முஸ்லிம்களுக்கும் இணைவைப்பாளர்களுக்குமிடையே பகைமையை வளர்ப்பவள்) என்று பொருள்.

(திருக்குர்ஆன் 111:5 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'மசத்' எனும் சொல், பனைமர நாருக்குச் சொல்லப்படும். இதுவே (மறுமையில்) நரகத்தின் சங்கிலியைக் குறிக்கும்.

## (112) அல்இக்லாஸ் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

(திருக்குர்ஆன் 112:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஹத்' எனும் சொல்லை ('அஹதுன்' என்று'தன்வீன்')'னகர ஒலி இணை'யுடன் வாசிக்கப்படாது என்று சொல்லப்படுகிறது. பொருள்: ஒருவன்.

ஹதீஸ் 4974. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

அல்லாஹ் கூறினான்: ஆதமின் மகன் என்னை நம்ப மறுக்கிறான் ஆனால், அவனுக்கு அது (தகுதி) இல்லை. அவன் என்னை ஏசுகிறான் ஆனால், அவனுக்கு அது (தகுதி) இல்லை. நான், (மனிதனான) அவனை முதலில் படைத்தது போன்றே மீண்டும் அவனை நான் படைக்கமாட்டேன் என்று அவன் கூறுவதே அவன் என்னை நம்ப மறுப்பதாகும். (உண்மையில், மனிதன் மரித்த பிறகு) அவனுக்கு மீண்டும் உயிர் கொடுத்து எழுப்புவதைவிட, அவனை ஆரம்பமாகப் படைத்தது சுலபமன்று. (அதையே செய்துவிட்ட எனக்கு மீண்டும் உயிர் கொடுப்பது கடினமல்ல.)'அல்லாஹ் (தனக்குக்) குழந்தையை ஆக்கிக்கொண்டான்' என்று அவன் கூறுவதே அவன் என்னை ஏசுவதாகும். ஆனால், நானோ ஏகன் (எவரிடமும்) எந்தத் தேவையுமற்றவன் நான் யாரையும் பெற்றவனுமல்லன் யாருக்கும் பிறந்தவனுமல்லன். எனக்கு நிகராக யாருமில்லை.

## "அல்லாஹ் (எவரிடமும்) எத்தேவையுமில்லாதவன்' எனும் (திருக்குர்ஆன் 112:2 வது) இறைவசனம்.

அரபுகள் தங்களின் பிரமுகர்களை'அஸ்ஸமத்' என்று அழைக்கின்றனர்.

அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) கூறினார்: எவரிடம் தலைமைப் பதவி போய்முடிகிறதோ அத்தகைய (உயர் மட்டத்) தலைவரே'அஸ்ஸமத்' எனப்படுவார்.

ஹதீஸ் 4975. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்: ஆதமின் மகன் என்னை நம்ப மறுக்கிறான் ஆனால், அவனுக்கு அது (தகுதி) இல்லை. அவன் என்னை ஏசுகிறான் ஆனால், அவனுக்கு அது (தகுதி) இல்லை. நான், (மனிதனான) அவனை ஆரம்பத்தில் படைத்தது போன்றே மீண்டும் அவனை நான் படைக்கமாட்டேன் என்று அவன் கூறுவதே அவன் என்னை நம்ப மறுப்பதாகும்.'அல்லாஹ் (தனக்குக்) குழந்தையை ஆக்கிக் கொண்டான்' என்று அவன் கூறுவதே அவன் என்னை ஏசுவதாகும. ஆனால், நானோ (எவரிடமும்) எந்தத் தேவையுமற்றவன் நான் யாரையும் பெற்றவனுமல்லன் யாருக்கும் பிறந்தவனுமல்லன். எனக்கு நிகராக யாருமில்லை. (அல்லாஹ் கூறினான்:)'அவன் (எவரையும்) பெற்றவனுமல்லன் (யாருக்கும்) பிறந்தவனுமல்லன். (எனவே, அவனுக்குப் பெற்றோருமில்லை பிள்ளைகளுமில்லை) தவிர, அவனுக்கு நிகராகவும் யாருமில்லை'' (திருக்குர்ஆன் 112:3,4)

(திருக்குர்ஆன் 112:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'குஃப்வ்' எனும் சொல்லும், கஃபீஃ, கிஃபாஉ ஆகிய சொற்களும் ('நிகரானவன்' என்ற) ஒரே பொருள் கொண்டவையாகும்.

## (113) அல்ஃபலக் அத்தியாயம்

(அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...)

முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 113:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல் ஃபலக்' எனும் சொல்லுக்கு'வைகறை' என்று பொருள்.

(திருக்குர்ஆன் 113:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஃகாஸிக்' (இருள் கப்பியது) எனும் சொல் இரவைக் குறிக்கிறது.
(இதே வசனத்திலுள்ள)'வகப' (அது படர்ந்தது) எனும் சொல், சூரிய அஸ்தமனத்தைக் குறிக்கிறது.
(பொதுவாக அரபுகளின் வழக்கில்)'அப்யனு மின் ஃபரக்கி வ ஃபலக்கிஸ் ஸுப்ஹி' (அது வைகறையை விடத் தெளிவானது) என்று ('ஃபரக்' எனும் சொல்லையும்'ஃபலக்' எனும் சொல்லையும் ஒரே பொருளில் ஆண்டு) வழங்குகின்றனர்.'ஒரு பொருள் மற்றொரு பொருளுக்குள் முழுவதுமாக நுழைந்து, இருள் கப்பிக்கொள்ளும்போது, `வகப' என்பர்.
ஹதீஸ் 4976. ஸிர்ரு இப்னு ஹுபைஷ்(ரஹ்) அறிவித்தார்
நான் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம்'முஅவ்வஃதத்தைனி' (பாதுகாப்புக் கோரும் பிரார்த்தனைகளான 113, 114 வது அத்தியாயங்கள் குர்ஆனில் கட்டுப்பட்டவையா? என்பது) பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:
இது குறித்து நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்'என்னிடம் (நபியே!) கூறுக: நான் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று) கூறப்பட்டது. நானும் கூறினேன்'` என்று கூறினார்கள்.
(அறிவிப்பாளர் ஸிர்ருபின் ஹுபைஷ்(ரஹ்) கூறினார்:)
எனவே, நாங்களும் (நானும் உபை இப்னு கஅபும்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்றே சொல்வோம்.

## (114) அந்நாஸ் அத்தியாயம்

(திருக்குர்ஆன் 114:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அல்வஸ்வாஸ்' எனும் சொல்லி(ன் (விளக்கவுரையி)ல் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்
குழந்தை பிறந்தால் அக்குழந்தையை ஷைத்தான் தீண்டுகிறான். அப்போது மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ்(வின் பெயர்) கூறப்பட்டால், அவன் போய்விடுகிறான் அல்லாஹ்(வின் பெயர்) கூறப்படவில்லையாயின், அக்குழந்தையின் இதயத்தின் மீதே அவன் நிலைகொண்டு விடுகிறான்.
ஹதீஸ் 4977. ஸிர்ரு இப்னு ஹுபைஷ்(ரஹ்) கூறினார்
நான் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களிடம்'அபூ முன்ஃதிரே! தங்கள் சகோதரர் இப்னு மஸ்வூத்(ரலி) இப்படி இப்படி சொல்கிறாரே?' என்று கேட்டேன். 2 அதற்கு உபை(ரலி), `நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (இது குறித்துக்) கேட்டேன். அதற்கு அவர்கள், `என்னிடம் (இவ்விரு அத்தியாயங்களிலும்'நபியே! கூறுக: பாதுகாப்புக் கோருகிறேன்' என்று) கூறப்பட்டது. (அதற்கேற்ப) நானும் கூறினேன்'` என்று கூறினார்கள்.
(அறிவிப்பாளர் ஸிர்ரு கூறுகிறார்கள்:)
எனவே, நாங்கள் (நானும் உபை அவர்களும்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்றே சொல்வோம்.

# அத்தியாயம் : 66 குர்ஆனின் சிறப்புகள்.

## வேத அறிவிப்பு (வஹீ) எவ்வாறு அருளப் பெற்றது? என்பது பற்றியும், முதன் முதலில் அருளப் பெற்றது எது? என்பது பற்றியும்.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:
(திருக்குர்ஆன் 05:48 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அல்முஹைமின்' எனும் சொல்லுக்குப் 'பாதுகாக்கக்கூடியது' என்று பொருள் தனக்கு முன்வந்த எல்லா வேதங்களையும் பாதுகாக்கும் (நம்பிக்கைக்குரிய) வேதம் குர்ஆன்.

ஹதீஸ் 4978-ஹதீஸ் 4979 ஆயிஷா (ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் கூறினார்கள்
நபி (ஸல்) அவர்கள் தம் மீது குர்ஆன் அருளப்பெற்றுக் கொண்டிருந்த நிலையில் (தம் பிறந்தகமான) மக்காவில் பத்தாண்டுகள் தங்கி இருந்தார்கள். (ஹிஜ்ரத்திற்குப் பின்) மதீனாவில் பத்தாண்டுகள் தங்கியிருந்தார்கள்.

ஹதீஸ் 4980. அபூ உஸ்மான் அப்துர் ரஹ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அறிவித்தார்
நபி (ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் வந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் அருகில் (அன்னை) உம்மு ஸலமா (ரலி) இருந்தார்கள். (ஜிப்ரீல் எழுந்து சென்றதும்) நபி (ஸல்) அவர்கள் உம்மு ஸலமா (ரலி) அவர்களிடம், 'இவர் யார் (தெரியுமா)?' என்றோ, இது போன்ற வேறொரு வார்த்தையைக் கூறியோ கேட்டார்கள். உம்மு ஸலமா (ரலி), 'இவர் (தங்களின் தோழர்) திஹ்யா' என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள் எழுந்து சென்ற பின், உம்மு ஸலமா (ரலி), 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்கள் சொன்ன செய்தி குறித்து நிகழ்த்திய உரையை நான் செவியுறும் வரை, வந்தவர் திஹ்யா அல்கல்பீ என்றே நினைத்திருந்தேன். (அந்த உரையைக் கேட்ட பின்புதான் அவர் திஹ்யாவின் உருவில் வந்த வானவர் ஜிப்ரீல் என்று எனக்குத் தெரியவந்தது.)' என்று கூறினார்கள்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் இப்னு தர்கான் அத்தைமீ (ரஹ்) கூறினார்கள்: நான் அபூ உஸ்மான் (ரஹ்) அவர்களிடம், 'இந்த அறிவிப்பைத் தாங்கள் யாரிடமிருந்து செவியேற்றீர்கள்?' என்று கேட்டேன். அவர்கள், 'உஸாமா இப்னு ஸைத் (ரலி) அவர்களிடமிருந்து' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 4981. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒவ்வோர் இறைத்தூதருக்கும் சில அற்புதங்கள் வழங்கப்பட்டே இருந்தன. அவற்றைக் காணும் மக்கள் நம்பித்தான் ஆகவேண்டிய நிலை இருந்தது. எனக்கு வழங்கப்பெற்ற அற்புதமெல்லாம், அல்லாஹ் எனக்கு அருளிய வேத அறிவிப்பு (வஹீ) தான். எனவே, நபிமார்களிலேயே மறுமை நாளில், பின்பற்றுவோர் அதிகம் உள்ள நபியாக நான் இருக்கவேண்டும் என எதிர்பார்க்கிறேன். என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4982. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்
அல்லாஹ், தன் தூதர் (ஸல்) அவர்கள் இறக்கும் வரையிலும் அவர்களுக்குத் தொடர்ந்து 'வஹீ' (வேத அறிவிப்பை) அருளினான். அவர்கள் இறப்பதற்குச் சற்று முன்பு அருளப்பெற்ற வேத அறிவிப்பு (மற்ற காலங்களில் அருளப்பெற்றதை விட) அதிகமாக இருந்தது. அதற்குப் பின்னரே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இறந்தார்கள்.

ஹதீஸ் 4983. ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ் இப்னி சுஃப்யான் (ரலி) கூறினார்

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டபோது 'ஓர்இரவு' அல்லது 'இரண்டு இரவுகள்' அவர்கள் (இரவுத் தொழுகைக்காகக் கூட) எழவில்லை. அப்போது ஒரு பெண் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'முஹம்மதே! உம்முடைய ஷைத்தான் உம்மைக் கைவிட்டுவிட்டதாகவே கருதுகிறேன். (எனவேதான் ஓரிரு இரவுகளாக உம்மை அவன் நெருங்கவில்லை)'' என்று கூறினாள். அப்போது மாண்பும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ், 'முற்பகலின் மீது சத்தியமாக! மேலும், இருண்டுவிட்ட இரவின் மீது சத்தியமாக! (நபியே!) உங்களுடைய இறைவன் உங்களைக் கைவிடவுமில்லை கோபங்கொள்ளவும் இல்லை'' எனும் (திருக்குர்ஆன் 93:1-3ஆகிய) வசனங்களை அருளினான்.

## குர்ஆன், குறைஷி அரேபியர் மொழி (நடை)யில் இறங்கியது

(அல்லாஹ் கூறினான்:)

"நாம் இதனை அரபி மொழிக்குர்ஆனாக அமைத்துள்ளோம்'' (திருக்குர்ஆன் 43:03)

"தெள்ளத் தெளிந்த அரபி மொழியில் (இது அருளப்பட்டுள்ளது)'' (திருக்குர்ஆன் 26:195)

ஹதீஸ் 4984. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(மூன்றாவது கலீஃபா) உஸ்மான்(ரலி) (நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஹஃப்ஸா(ரலி) வசமிருந்த குர்ஆன் பதிவுகளை வாங்கி வரச்செய்து), ஸைத் இப்னு ஸாபித், ஸயீத் இப்னு ஆஸ், அப்துல்லாஹ் இப்னு ஸுபைர், அப்துர் ரஹ்மான் இப்னு ஹாரிஸ் இப்னி ஹிஷாம்(ரலி) ஆகியோரை (அழைத்து வரச்செய்து அவர்களிடம்) அவற்றை ஏடுகளில் பிரதியெடுக்கப் பணித்தார்கள். மேலும், உஸ்மான்(ரலி) (அன்சாரியான ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களைத் தவிர இருந்த குறைஷியரான மற்ற மூவரிடமும்), 'நீங்கள் மூவரும் ஸைத் இப்னு ஸாபித்தும் குர்ஆனின் ஏதேனும் ஓர் அரபி மொழி (எழுத்திலக்கணம்) விஷயத்தில் கருத்து வேறுபட்டால், குறைஷியரின் மொழி வழகம்லேயே அதைப் பதிவு செய்யுங்கள்! ஏனெனில், குர்ஆன் குறைஷியரின் மொழி வழக்கில்தான் அருளப்பெற்றது'' என்று கூறினார்கள். அம்மூவரும் அவ்வாறே செய்தனர்.

ஹதீஸ் 4985. ஸஃப்வான் இப்னு யஅலா(ரஹ்) கூறினார்

(என் தந்தை) யஅலா இப்னு உமைய்யா(ரலி), 'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்பெறும்போது நான் அவர்களைப் பார்க்கவேண்டும். (என்று ஆசையாக உள்ளது)'' என்று கூறுவது வழக்கம். நபி(ஸல்) அவர்கள் (மக்காவிற்கு அரும்லுள்ள) 'ஜிஅரானா' எனும் இடத்தில் தமக்கு மேலே துணியொன்று நிழலிட்டுக் கொண்டிருக்கத் தங்கியிருந்தார்கள். அவர்களுடன் தோழர்கள் சிலரும் இருந்தனர். அப்போது நறுமணம் பூசிய ஒருவர் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நறுமணம் பூசப்பட்ட அங்கியால் (உம்ராவுக்காக) இஹ்ராம் அணிந்தவர் பற்றி என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் சிறிது நேரம் (மௌனத்துடன்) காத்திருந்தார்கள். அப்போது அவர்களுக்கு 'வஹீ' (வேத அறிவிப்பு) வந்தது. உமர்(ரலி) யஅலா அவர்களை 'இங்கு வாருங்கள்'' என்று சைகையால் அழைத்தார்கள்.

(என் தந்தை யஅலா(ரலி) கூறினார்:)

நான் சென்றேன். (நபி(ஸல்) அவர்களுக்கு நிழல் தருவதற்காகக் கட்டப்பட்டிருந்த துணிக்குள்) நான் என்னுடைய தலையை நுழைத்தேன். நபி(ஸல்) அவர்கள் முகம் சிவந்த நிலையில் (வஹீயின் கனத்தால்) முனகியவர்களாக சிறிதுநேரம் காணப்பட்டார்கள். பிறகு (சிறிது சிறிதாக,) அந்தச் சிரம நிலை விலகியது. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'சற்று முன் என்னிடம் உம்ராவைப் பற்றிக் கேட்டவர் எங்கே?' என்றார்கள். அந்த மனிதரைத் தேடி அவரை நபி(ஸல்) அவர்களிடம் (அழைத்துக்) கொண்டு வரப்பட்டது. அவரிடம் உம் மீதுள்ள நறுமணத்தை மூன்று முறை கழுவிக்கொள்க! பிறகு உம்முடைய ஹஜ்ஜில் செய்வதைப் போன்றே உம்முடைய உம்ராவிலும் செய்துகொள்க!"என்று கூறினார்கள்.

## குர்ஆன் திரட்டப்படுதல்.

ஹதீஸ் 4986. (வேத அறிவிப்பை எழுதுவோரில் ஒருவராக இருந்த) ஸைத் இப்னு ஸாபித் அல் அன்சாரி(ரலி) கூறினார்

யமாமா போர் நடைபெற்ற பின் (கலீஃபா) அபூ பக்ர்(ரலி), எனக்கு ஆளனுப்பி (என்னை அழைத்து வரச் சொன்)னார்கள். (நான் சென்றேன்.) அங்கே அவர்களுடன் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) கூறினார்:

உமர்(ரலி) என்னிடம் வந்து, 'இந்த யமாமா போரில் ஏராளமான குர்ஆன் அறிஞர்கள் கொல்லப்பட்டுவிட்டார்கள். (இறை மறுப்பாளர்களுடன் போர் நடக்கும்) பல்வேறு இடங்களில் குர்ஆன் அறிஞர்களில் ஏராளமான பேர் கொல்லப்பட்டு, அதனால் குர்ஆனின் பெரும்பகுதி (நம்மைவிட்டுப்) போய்விடுமோ என நான் அஞ்சுகிறேன். (எனவே,) தாங்கள் குர்ஆனைத் திரட்டி ஒன்று சேர்க்க உத்தரவிட வேண்டுமென நான், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்யாத ஒன்றை நாம் எப்படிச் செய்வது?' என உமர் அவர்களிடம் கேட்டேன். அதற்கு உமர் அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! இது (குர்ஆனைத் திரட்டுவது) நன்மை(யான பணி)தான்'' என்று கூறினார்கள். இதற்காக என் மனத்தை அல்லாஹ் விரிவாக்கும் வரை இது விஷயத்தில் (தொடர்ந்து) அவர்கள் என்னிடம் வலியுறுத்திக் கொண்டேயிருந்தார்கள். (முடிவில்) உமர் அவர்கள் கருதியதை(யே) நானும் (பொறுத்தமானதாகக்) கண்டேன். (இதை அபூ பக்ர் அவர்கள் என்னிடம் தெரிவித்தபோது உமர்(ரலி) ஏதும் பேசாமல் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு அருகில் அமர்ந்துகொண்டிருந்தார்கள்.)

(பிறகு) அபூ பக்ர்(ரலி) (என்னிடம்)'(ஸைதே!) நீங்கள் புத்திசாலியான இளைஞர் உங்களை நாங்கள் (எந்த விதத்திலும்) சந்தேகப்படமாட்டோம். நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காக'வஹீ' (வேத வசனங்களை) எழுதக்கூடிய வராயிருந்தீர்கள். எனவே, நீங்கள் குர்ஆனைத் தேடிக் கண்டுபிடித்து (ஒரே பிரதியில்) ஒன்று திரட்டுங்கள்'' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! மலைகளில் ஒன்றை நகர்த்த வேண்டுமென எனக்கு அவர்கள் கட்டளையிட்டிருந்தாலும் கூட அது எனக்குப் பளுவாக இருந்திருக்காது. குர்ஆனை ஒன்றுதிரட்டும்படி எனக்கு அவர்கள் கட்டளையிட்டது அதைவிட எனக்குப் பளுவாக இருந்தது. நான், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்யாத ஒன்றை நீங்கள் எப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அபூ பக்ர்(ரலி), 'அல்லாஹ்வின் மீதாணையாக! இது நன்மை(யான பணி) தான்'' என்று பதிலளித்தார்கள். இதையே அன்னார் என்னிடம் தொடர்ந்து வலியுறுத்திக் கொண்டிருந்தார்கள். முடிவில் எதற்காக அபூ பக்ர் மற்றும் உமர் ஆகியோரின் மனத்தை அல்லாஹ் விரிவாக்கினானோ அதற்காக என் மனத்தையும் அல்லாஹ் விரிவாக்கினான். (குர்ஆனை ஒன்றுதிரட்ட முன் வந்தேன்.) எனவே, (மக்களின் கரங்களிலிருந்த) குர்ஆன் (சுவடிகளைத்) தேடினேன். அவற்றை பேரீச்ச மட்டைகள், ஓடுகள் மற்றும் (குர்ஆனை மனனம் செய்திருந்த) மனிதர்களின் நெஞ்சுகளிலிருந்து திரட்டினேன். (இவ்வாறு திரட்டியபோது)'அத்தவ்பா' எனும் (9 வது) அத்தியாயத்தின் கடைசி (இரு) வசனங்களை அபூ குஸைமா அல் அன்சாரி(ரலி) அவர்களிடமிருந்து பெற்றேன் அவரல்லாத வேறெவரிடமிருந்தும் இதனை நான் பெறவில்லை. (அவை:)'உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கிறார். நீங்கள் துன்பத்திற்குள்ளாவது அவருக்குக் சிரமமாக இருக்கிறது. மேலும், உங்கள் (வெற்றியின்) விஷயத்தில் பேராவல் கொண்டவராகவும், நம்பிக்கையாளர்களின் மீது அதிகப் பரிவும், கருணையும் உடையோராகவும் இருக்கிறார். (நபியே! இதற்குப்) பின்னரும் அவர்கள் உம்மைப் புறக்கணித்தால் நீர் கூறிவிடும்: அல்லாஹ் எனக்குப் போதுமானவன். அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவனையே நான் முழுமையாகச் சார்ந்திருக்கிறேன். மேலும், அவன் மகத்தான அரியாசனத்தின் அதிபதியாயிருக்கிறான்!''(திருக்குர்ஆன் 09:128, 129)

(என் வாயிலாக) திரட்டித் தொகுக்கப்பட்ட குர்ஆன் பிரதிகள் (கலீஃபா) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம், அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை இருந்(து வந்)தது. பின்னர் (கலீஃபாவான) உமர்(ரலி) அவர்களிடம் அவர்களின் வாழ்நாளில் இருந்தது. (அவர்களின் இறப்பிற்குப்) பிறகு உமர்(ரலி) அவர்களின் புதல்வி ஹஃப்ஸா(ரலி) அவர்களிடம் இருந்தது.

ஹதீஸ் 4987. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

ஹுதைஃபா யமான்(ரலி) உஸ்மான்(ரலி) அவர்களிடம் (அவர்களின் ஆட்சிக் காலத்தின்போது மதீனாவிற்கு) வருகை புரிந்தார்கள். (அப்போது) உஸ்மான்(ரலி), அர்மீனியா மற்றும் அஃதர் பைஜான் ஆகிய நாடுகளை இராக்கியருடன் சேர்ந்து வெற்றிகொள்வதற்கான போரில் கலந்துகொள்ளுமாறு ஷாம்வாசிகளுக்கு ஆணை பிறப்பித்தார்கள். ஹுதைஃபா(ரலி) அவர்களை, (இராக் மற்றும் ஷாம் நாட்டு) முஸ்லிம்கள் குர்ஆனை ஓதும் முறையில் கருத்துவேறுபாடுகொண்டு அதிர்ச்சிக்குள்ளாக்கியது. எனவே, ஹுதைஃபா(ரலி) உஸ்மான்(ரலி) அவர்களிடம், 'யூதர்களும் கிறிஸ்தவர்களும் (தங்களின் வேதங்களில்) கருத்து வேறுபாடுகொண்டது சூபால் இந்தச் சமுதாயமும் இந்த(த் திருக்குர்ஆன்) வேதத்தில் கருத்து வேறுபாடு கொள்வதற்கு முன்பே இவர்களைக் காப்பாற்றுங்கள், இறை நம்பிக்கையாளர்களின் தலைவர் அவர்களே!"என்று கூறினார்கள். எனவே, உஸ்மான்(ரலி) (அன்னை) ஹஃப்ஸா(ரலி) அவர்களிடம் ஆளனுப்பி'தங்களிடமுள்ள குர்ஆன் பதிவை எங்களிடம் கொடுத்து அனுப்புங்கள்! நாங்கள் அதனைப் பல பிரதிகள் படியெடுத்துவிட்டு திருப்பித் தந்து விடுகிறோம்'' என்று தெரிவித்தார்கள்.

எனவே, ஹஃப்ஸா(ரலி) தம்மிடமிருந்த குர்ஆன் பதிவை உஸ்மான்(ரலி) அவர்களிடம் கொடுத்தனுப்பினார்கள். ஸைத் இப்னு ஸாபித்(ரலி), அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி), ஸயீத் இப்னு ஆஸ்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு ஹாரிஸ் இப்னி ஹிஷாம்(ரலி) ஆகியோரிடம் அவற்றைப் பல பிரதிகளில் படியெடுக்கும்படி உஸ்மான்(ரலி) உத்தரவிட்டார்கள். மேலும், உஸ்மான்(ரலி) (அந்த நால்வரில்) குறைஷிக் குழுவினரான மூவரை நோக்கி, 'நீங்களும் (அன்சாரியான) ஸைத் இப்னு ஸாபித் அவர்களும் குர்ஆனில் ஏதேனும் ஒரு (எழுத்திலக்கண) விஷயத்தில் கருத்து வேறுபட்டால் குறைஷியரின் (வட்டார) மொழிவழககுப்படியே பதிவு செய்யுங்கள். ஏனெனில், குர்ஆன் குறைஷியரின் மொழிவழக்குப்படியே இறங்கிற்று'' என்று கூறினார்கள். அந்த நால்வரும் அவ்வாறே செயல்பட்டார்கள். (ஹஃப்ஸா(ரலி) அவர்களிடமிருந்த) அந்தக் குர்ஆன் பதிவை பல பிரதிகளில் படியெடுத்தார்கள். பிறகு உஸ்மான்(ரலி) அந்தப் பிரதியை ஹஃப்ஸா(ரலி) அவர்களிடம் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். பிறகு அவர்கள் படியெடுத்த பிரதிகளில் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பகுதிக்கு அனுப்பிவைத்தார்கள். இதுவல்லாமல் (புழக்கத்திலிருந்த) இதர பிரதிகளை, அல்லது ஏடுகளை எரித்து விடும்படி உஸ்மான்(ரலி) உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 4988. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்

நாங்கள் (உஸ்மான்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில்) குர்ஆனுக்குப் பிததிகள் எடுத்தபோது'அல்அஹ்ஸாப்' எனும் (33 வது) அத்தியாயத்தில் ஒரு வசனம் காணவில்லை. அதனை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓத நான் கேட்டிருந்தேன். அதை நாங்கள் தேடியபோது அது குஸைமா இப்னு ஸாபித் அல்அன்சாரி(ரலி) அவர்களிடம் இருக்கக் கண்டோம். (அந்த வசனம் இதுதான்:)'அல்லாஹ்விடம் தாங்கள் கொடுத்த வாக்குறுதியை மெய்ப்படுத்திவிட்டவர்களும் இறைநம்பிக்கையாளர்களில் உள்ளனர். அவர்களில் சிலர் (இறை வழியில் உயிரை அர்ப்பணிக்க வேண்டுமென்ற) தம் இலட்சியத்தை நிறைவேற்றிவிட்டார்கள். அவர்களில் சிலர் (அதை நிறைவேற்ற தக்க தருணம்) எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கின்றனர். (திருக்குர்ஆன் 33:23)

உடனே நாங்கள் அ(ந்த வசனத்)தை குர்ஆன் பிரதியில் அதற்குரிய அத்தியாயத்தில் இணைத்துவிட்டோம்.

## நபி(ஸல்) அவர்களின் எழுத்தர்.

ஹதீஸ் 4989. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்

(கலீஃபா) அபூ பக்ர்(ரலி) எனக்கு ஆளனுப்பி (என்னை அழைத்து வரச் சொன்)னார்கள். (நான் அவர்களிடம் சென்றேன். என்னிடம்) அவர்கள் 'நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்ற 'வஹீ' (வேத வசனங்)களை எழுதிவந்தீர்கள். எனவே, குர்ஆன் வசனங்களைத் தேடுங்கள்!" என்று கூறினார்கள். எனவே, நான் குர்ஆன் வசனங்களைத் தேடும் பணியில் ஈடுபட்டேன். இறுதியாக 'அத்தவ்பா' எனும் (9 வது அத்தியாயத்தின் கடைசி இரண்டு வசனங்களை அபூ குஸைமா அல்அன்சாரி(ரலி) அவர்களிடமிருந்து பெற்றேன். அவரல்லாத வேறு எவரிடமும் அவற்றை நான் காணவில்லை. (அவ்விரு வசனங்களாவன:) 'உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கிறார். நீங்கள் துன்பத்திற்குள்ளாவது அவருக்குச் சிரமமாக இருக்கிறது. மேலும், உங்கள் (வெற்றியின்) விஷயத்தில் பேராவல் கொண்டவராகவும், நம்பிக்கையாளர்களின் மீது அதிகப் பரிவும், கருணையும் உடையோராகவும் இருக்கிறார். (நபியே! இதற்குப்) பின்னரும் அவர்கள் உம்மைப் புறக்கணித்தால் நீர் கூறிவிடும்: அல்லாஹ் எனக்குப் போதுமானவன். அவனைத் தவிர வேறு இறைவன் யாருமில்லை. அவனையே நான் முழுமையாகச் சார்ந்திருக்கிறேன்.
மேலும், அவன் மகத்தான அரியாசனத்தின் அதிபதியாயிருக்கிறான்.' (திருக்குர்ஆன் 09:128, 129)

ஹதீஸ் 4990. பராஉ(ரலி) அறிவித்தார்

"இறைநம்பிக்கையாளர்களில் அறப்போரில் கலந்து கொள்ளாமல் இருந்துவிட்டவர்களும், தம் உயிராலும் பொருளாலும் இறைவழியில் அறப்போர் புரிந்தவர்களும் சமமாக மாட்டார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:95 வது) இறைவசனம் அருளப்பட்டபோது, நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்) 'ஸைதை அழைத்து வாருங்கள். அவர் தம்முடன் 'பலகை, மைக்கூடு, அகலமான எலும்பு அல்லது 'அகலமான எலும்பு, மைக்கூடு' ஆகியவற்றை எடுத்துவரட்டும்'' என்று கூறினார்கள். (ஸைத் இப்னு ஸாபித்(ரலி) வந்தபோது,) 'இந்த (திருக்குர்ஆன் 04:95 வது) இறைவசனத்தை எழுதிக்கொள்ளுங்கள்!" என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் முதுகுக்குப் பின்னால், கண் பார்வையற்றவரான அம்ர் பின் உம்மி மக்த்தூம்(ரலி) இருந்தார்கள். அவர், 'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எனக்கு என்ன உத்தரவிடுகிறீர்கள். நானோ, கண்பார்வையற்ற மனிதனாயிற்றே!" என்று கேட்டார்கள். உடனடியாக அதே இடத்தில் 'இடையூறு உள்ளவர்கள் தவிர'' எனும் (இணைப்புடன்) இவ்வசனம் (முழுமையாக) இறங்கிற்று.

ஹதீஸ் 4991. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரேயொரு (வட்டார) மொழிவழக்குப் படி ஜிப்ரீல்(அலை) அவர்கள் (குர்ஆனை) எனக்கு ஓதக் கற்றத்தந்தார்கள். அதை இன்னும் பல(வட்டார) மொழிவழக்குகளின் படி எனக்கு ஓதக் கற்றுத்தருமாறு அவர்களிடம் நான் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டேயிருந்தேன். (நான் கேட்க, கேட்க) எனக்கு அவர்கள் அதிகப்படுத்திக்கொண்டே வந்து இறுதியில் ஏழு (வட்டார) மொழி வழக்குகள் அளவிற்கு வந்து நின்றது.
என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 4992. உமர்பின் கத்தாப்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாழ்நாளில் ஹிஷாம் இப்னு ஹகீம்(ரலி) 'அல்ஃபுர்கான்' எனும் (25 வது) அத்தியாயத்தை (தொழுகையில்) ஓதுவதை செவியுற்றேன். அவரின் ஓதலை நான்

செவிதாழ்த்திக் கேட்டபோது எனக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓதிக் காண்பிக்காத பல (வட்டார) மொழி வழக்குகளில் அதை அவர் ஓதிக்கொண்டிருந்தார். தொழுகையில் வைத்தே நான் அவரைத் தண்டிக்க முனைந்தேன். பிறகு (யோசித்து) அவர் (தொழுகையை முடித்து) சலாம் கொடுக்கும்வரை பொறுத்துக் கொண்டேன்.

(அவர் தொழுது முடித்த) பிறகு அவரின் மேல் துண்டைக் கழுத்தில் போட்டுப் பிடித்து, `நீர் ஓதியபோது நான் செவியுற்ற இந்த அத்தியாயத்தை உமக்கு ஓதிக் காண்பித்தது யார்?' என்று கேட்டேன். அவர், `இதை எனக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாம் ஒதிக் காண்பித்தார்கள்'' என்று பதிலளித்தார். உடனே நான், `நீர் பொய் சொல்லிவிட்டீர்! ஏனெனில், நீர் ஓதிக்கொடுத்தார்கள்'' என்று கூறியபடி அவரை இழுத்துக் கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்றேன். அவர்களிடம், `(இறைத்தூதர் அவர்களே!) தாங்கள் எனக்கு ஓதிக்கொடுக்காத பல (வட்டார) மொழி வழக்குகளில்'அல்ஃபுர்கான்' அத்தியாயத்தை இவர் ஓதக் கேட்டேன்'' என்று சொன்னேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், `அவரை விடுங்கள்!"என்று கூறிவிட்டு (ஹிஷாம் அவர்களை நோக்கி), `ஹிஷாமே, நீங்கள் ஓதுங்கள்!"என்றார்கள். அவர் என்னிடம் ஓதியது போன்றே நபி(ஸல்) அவர்களுக்கு முன்னாலும் ஓதிக் காட்டினார். (இதைக்கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது'' என்று கூறினார்கள்.

பிறகு (என்னைப் பார்த்து), `உமரே, ஓதுங்கள்!"என்று கூறினார்கள். எனக்கு அவர்கள் ஓதிக்கொடுத்திருந்த ஓதல்முறைப்படி நான் ஓதினேன். (அதைக்கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது. இந்தக் குர்ஆன் ஏழு முறைகளில் அருளப்பட்டிருக்கிறது. எனவே, உங்களுக்கு அதில் சுலபமானது எதுவோ அதை ஓதிக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

## குர்ஆன் (அத்தியாயங்கள் வரிசைப்படி) தொகுக்கப்படுதல்.

ஹதீஸ் 4993. யூசுஃப் இப்னு மாஹக்(ரஹ்) அறிவித்தார்

இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா(ரலி) அவர்களிடம் நான் இருந்து கொண்டிருந்தேன். அப்போது இராக் நாட்டைச் சேர்ந்த ஒருவர் வந்து, `(இறந்தவருக்கு அணிவிக்கப்படும்)'கஃபன்' துணியில் சிறந்தது எது? (வெள்ளை நிறமா? மற்ற நிறமா?)'' என்று கேட்டார். ஆயிஷா(ரலி), `அடப்பாவமே! (நீங்கள் இறந்ததற்குப் பின்னால் எந்தக் கஃபன் துணியால் அடக்கப்பட்டாலும்) உங்களுக்கு என்ன கஷ்டம் வந்துவிடப்போகிறது?' என்று கேட்டார்கள். அதற்கவர், `இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! தங்களிடமுள்ள குர்ஆன் பிரதியை எனக்குக் காட்டுங்கள்?' என்று கூறினார். (அன்னை) அவர்கள், `ஏன்?' என்று கேட்டார்கள். அதற்கவர், `அதனை (முன்மாதிரியாக)க் கொண்டு நான் குர்ஆனை (வரிசைக் கிரமமாக) தொகுக்க வேண்டும். ஏனெனில், (தற்போது) வரிசைப் பிரகாரம் தொகுக்கப்படாமல் தான் குர்ஆன் ஓதப்பட்டு வருகிறது'' என்று கூறினார். ஆயிஷா(ரலி), `(வரிசைப்படுத்தப்படாமல் உள்ள குர்ஆன் அத்தியாயங்களில்) எதை நீங்கள் முதலில் ஓதினால் (என்ன? எதை அடுத்து ஓதினால்) என்ன கஷ்டம் (ஏற்பட்டு விடப்போகிறது?)'' என்று கேட்டார்கள்.

'முஃபஸ்ஸல்' (எனும் ஓரளவு சிறிய) அத்தியாயங்களில் உள்ள ஒன்றுதான் முதன் முதலில் அருளப்பட்டது் அதில் சொர்க்கம் முதலில் அருளப்பட்டது் அதில் சொர்க்கம் நரகம் பற்றிக் கூறப்பட்டது. அடுத்து மக்கள் இஸ்லாத்தை நோக்கித் திரும்பி (அதன் நம்பிக்கைகளின் மீது திருப்தியடையத் தொடங்கி)யபோது அனுமதிக்கப்பட்டவை மற்றும் விலக்கப்பட்டவை குறித்த வசனங்கள் அருளப்பட்டன. எடுத்த எடுப்பிலேயே'நீங்கள் மது அருந்தாதீர்கள்'' என்று வசனம் அருளப்பட்டிருந்தால் அவர்கள், அல்லது, `விபச்சாரம் செய்யாதீர்கள்'' என்ற (முதன் முதலில்) வசனம் அருளப்பட்டிருக்குமானால், நிச்சயம் அவர்கள், `நாங்கள் ஒருபோதும்

விபசாரத்தைக் கைவிடமாட்டோம்'' என்று கூறியிருப்பார்கள். (எனவேதான் அல்லாஹ், படிப்படியாகச் சட்ட விதிகளைக் கூறும் வசனங்களை அருளினான்.) நான் விளையாடும் சிறுமியாக இருந்தபோதுதான் மக்காவில் முஹம்மத் (ஸல்) அவர்களுக்க' (இவர்களின் கணக்கைத் தீர்ப்பதற்காக உண்மையில்) வாக்களிக்கப்பட்ட நேரம் மறுமை நாளாகும். மேலும், அந்த நேரம் மிகவும் அதிர்ச்சியளிக்கக் கூடியதும், கசப்பானதுமாகும்'' எனும் (திருக்குர்ஆன் 54:56 வது) வசனம் அருளப்பட்டது. (சட்டங்கள் சம்பந்தமான வசனங்கள் இடம் பெற்றுள்ள) அல்பகரா (2 வது) அத்தியாயமும், அந்நிஸா (4 வது) அத்தியாயமும் நான் (மதீனாவில்) நபி (ஸல்) அவர்களுடன் (அவர்களின் மனைவியாக) இருந்தபோதுதான் இறங்கின என்று கூறிவிட்டு, ஆயிஷா (ரலி) தம்மிடமிருந்த அந்தக் குர்ஆன் பிரதியை (இராக் நாட்டவரான) அந்த மனிதருக்காகக் கொண்டுவந்து அவருக்காக ஒவ்வோர் அத்தியாயத்தின் வசனங்களையும் எழுதச் செய்தார்கள்.

ஹதீஸ் 4994. அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத் (ரஹ்) அறிவித்தார்

இப்னு மஸ்வூத் (ரலி) பனூ இஸ்ராயீல், அல்கஹ்ஃப், மர்யம் (ஆகிய 17, 18, 19ஆம்) அத்தியாயங்கள் குறித்துக் கூறுமையில், 'இவை அதிசயமான முதல் தர அத்தியாயங்களில் உள்ளவையாகும். மேலும், இவை நான் மனனம் செய்த பழைய அத்தியாயங்களில் அடங்கும்'' என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 4995. பராஉ (ரலி) கூறினார்

நான்' சப்பிஹிஸ்ம ரப்பிக்கல் அஃலா' எனும் (87 வது) அத்தியாயத்தை நபி (ஸல்) அவர்கள் (மதீனாவிற்கு) வருவதற்கு முன்பே கற்றுக்கொண்டேன்.

ஹதீஸ் 4996. அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா (ரஹ்) கூறினார்

"நபி (ஸல்) அவர்கள் தங்களின் தொழுகையில் ஒவ்வொரு ரக்அத்திலும் இரண்டிரண்டாக ஓதிவந்த சரிநிகர் அத்தியாயங்களை நான் கற்றுள்ளேன்'' என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார். (இதைக் கூறிய) பிறகு, அப்துல்லாஹ் (ரலி) எழுந்து (தம் இல்லத்தினுள்) சென்றார்கள். அவர்களுடன் அல்கமா இப்னு கைஸ் அந்நகஈ (ரஹ்) அவர்களும் உள்ளே சென்றார்கள். (சிறிது நேரம் கழித்து) அல்கமா (ரஹ்) வெளியே வந்தார்கள். நாங்கள் அவர்களிடம் அது குறித்துக் கேட்டோம். அதற்கவர்கள், 'அவை, இப்னு மஸ்வூத் (ரலி) (தொகுத்து வைத்துள்ள) குர்ஆன் பிரதியின்படி ஆரம்ப இருபது' முஃபஸ்ஸல்' அத்தியாயங்களாகும். அவற்றின் கடைசி அத்தியாயங்கள்' ஹாமீம்' அத்தியாயங்களாகும். ' ஹாமீம் அத்துகான்' மற்றும்' அம்ம யத்தசாஅலூன' ஆகியனவும் அவற்றில் அடங்கும்' என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்களை, (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் குர்ஆனை ஓதச்செய்து வந்தார்கள்.

ஃபாத்திமா (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் என்னிடம் இரகசியமாக, '(வானவர்) ஜிப்ரீல் என்னை ஒவ்வோர் ஆண்டும் ஒருமுறை குர்ஆனை ஓதச் செய்து வந்தார்கள். இந்த ஆண்டு மட்டும் அவர்கள் என்னை அதை இருமுறை ஓதச் செய்தார்கள். என் வாழ்நாள் முடிவடையும் நேரம் வந்துவிட்ட (தைக் குறிப்ப)தாகவே அதை கருதுகிறேன்'' என்று தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 4997. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் மக்களிலேயே நல்லவற்றை அதிகமாக வாரிவழங்குபவர்களாகத் திகழ்ந்தார்கள். அவர்கள் ரமளான் மாதத்தில் இன்னும் அதிகமாக வாரி வழங்குவார்கள். ஏனென்றால், (வானவர்) ஜிப்ரீல் ரமளானின் ஒவ்வோர் இரவும் - ரமளான் முடியும் வரை - நபி (ஸல்) அவர்களைச் சந்திப்பது வழக்கம். (அப்போது) அவரிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் குர்ஆனை ஓதிக் காட்டுவார்கள். (அவ்வாறு) ஜிப்ரீல் தம்மைச் சந்திக்கும்போது

தொடர்ந்து வீசும் (மழைக்) காற்றைவிட அதிகமாக நபி(ஸல்) அவர்கள் நல்லவற்றை வாரி வழங்குவார்கள்.

ஹதீஸ் 4998. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

ஒவ்வோர் ஆண்டுக்கொரு முறை (வானவர் ஜிப்ரீல் அதுவரை அருளப்பெற்ற) குர்ஆன் வசனங்களை நபி(ஸல்) அவர்களுக்கு (மொத்தமாக) ஓதிக்காட்டுவது வழக்கம். நபி(ஸல்) அவர்கள் இறந்த ஆண்டில் இரண்டுமுறை அவர்களுக்கு (ஜிப்ரீல்) ஓதிக்காட்டினார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒவ்வோர் ஆண்டும் (ரமளான் மாதத்தின் இறுதிப்)பத்து நாள்கள்'இஉதிகாஃப்' மேற்கொள்வது வழக்கம். அவர்கள் இறந்த ஆண்டு, (ரமளானில்) இருபது நாள்கள்'இஉதிகாஃப்' மேற்கொண்டார்கள்.

## நபித்தோழர்களில் குர்ஆன் அறிஞர்கள்

ஹதீஸ் 4999. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) குறித்து அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) கூறுகையில், 'நான் என்றென்றும் அவர்களை நேசிப்பேன் (ஏனெனில்,) நபி(ஸல்), அவர்கள், அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், சாலிம், முஆத் இப்னு ஜபல், உபை இப்னு கஅப் ஆகிய நால்வரிடமிருந்தும் குர்ஆனை (ஓதக்) கற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறக் கேட்டுள்ளேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 5000. ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அறிவித்தார்

எங்களிடையே அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) உரையாற்றினார்கள். அப்போது, 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாயிலிருந்து எழுபதுக்கும் மேற்பட்ட அத்தியாயங்களைக் கேட்டறிந்துள்ளேன். அல்லாஹ்வின் மீதாணையாக, தங்களிலேயே அல்லாஹ்வின் வேதனை குர்ஆனை நபித்தோழர்கள் நன்கறிவார்கள். (அதற்காக எல்லாவகையிலும்) நான் அவர்களில் சிறந்தவன் அல்லன்'' என்று குறிப்பிட்டார்கள்.

(இது குறித்து) மற்றவர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதைச் செவிமடுத்தவாறே அந்த அவையில் நான் அமர்ந்திருந்தேன். இப்னு மஸ்வூத்(ரலி) சொன்னதை மறுத்து வேறுவிதமாகப் பேசியதை யாரிடமிருந்தும் நான் கேட்கவில்லை.

ஹதீஸ் 5001. அல்கமா இப்னு கைஸ் அந்நகஈ(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் (சிரியா நாட்டின் பிரபல நகரமான) ஹிம்ஸில் இருந்துகொண்டிருந்தோம். (ஒரு சமயம்) இப்னு மஸ்வூத்(ரலி)'யூசுஃப்' எனும் (12 வது) அத்தியாயத்தை ஓதினார்கள். அப்போது ஒருவர் (அதனை ஆட்சேபிக்கும் விதமாக)'இவ்வாறு இந்த அத்தியாயம் அருளப்படவில்லை'' என்று கூறினார். இப்னு மஸ்வூத்(ரலி), '(இவ்வாறுதான்) நான் இறைத்தூதர்(ஸல்) முன்னிலையில் ஓதினேன். அவர்களும், 'மிகச் சரியாக ஓதினாய்' என்று கூறினார்கள்'' என்று பதிலளித்தார்கள். அப்போது (ஆட்சேபிக்க வந்த) அந்த மனிதரின் வாயிலிருந்து மதுவின் வாடை வருவதைக் கண்டார்கள்.'மதுவையும் அருந்திக்கொண்டு அல்லாஹ்வின் வேதத்தை மறுக்கவும் முனைகிறாயா?' என்று இப்னு மஸ்வூத்(ரலி) கூறிவிட்டு, அந்த மனிதருக்கு (மது அருந்திய குற்றத்திற்கான) தண்டனையை நிறைவேற்றும்படி செய்தார்கள்.

ஹதீஸ் 5002. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

எவனைத் தவிர வேறு இறைவன் யாருமில்லையோ அத்தகைய அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் வேதத்தில் ஓர் அத்தியாயம் அருளப்பட்டால், அது எங்கே அருளப்பட்டது என்பதை நான் நன்கு அறிவேன். அல்லாஹ்வின் வேதத்தில் ஒரு வசனம் அருளப்பட்டால் அது யார் விஷயத்தில் அருளப்பட்டது என்பதையும் நான் நன்கறிவேன். என்னை விட அல்லாஹ்வின்

வேதத்தை நன்கு அறிந்தவர்கள், ஒட்டகம் சென்றடையும் தூரத்தில் இருந்தால் நான் (அவரிடமிருந்து அதைக் கற்றுக்கொள்வதற்காக) அவரை நோக்கி நிச்சயம் பயணம் புறப்பட்டுவிடுவேன்.
இதை மஸ்ரூக் இப்னு அஜ்தஉ (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 5003. கத்தாதா (ரஹ்) கூறினார்
நான் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம், `நபி (ஸல்) அவர்களின் காலத்தில் குர்ஆனை (மனனம் செய்து) திரட்டியவர்கள் யார்?' என்று கேட்டேன். அவர்கள், `நால்வர்: 1. உபை இப்னு கஅப் (ரலி). 2. முஆத் இப்னு ஜபல் (ரலி). 3. ஸைத் இப்னு ஸாபித் (ரலி) 4. அபூ ஸைத் (ரலி) அவர்கள் அனைவருமே அன்சாரிகளாவர்' என்று கூறினார்கள்.
இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5004. அனஸ் (ரலி) அறிவித்தார்
இந்த நால்வரைத் தவிர வேறு எவரும் (குர்ஆனைக் கேட்டுத்) திரட்டியிராத நிலையில் நபி (ஸல்) அவர்கள் இறந்தார்கள்
(அந்த நால்வர்:)
1. அபுத்தர்தா. 2. முஆத் இப்னு ஜபல். 3. ஸைத் இப்னு ஸாபித். 4. அபூ ஸைத் (ரலி) ஆவர்.
நாங்களே (என் தந்தையின் சகோதரர்களில் ஒருவரான) அபூ ஜைத் (ரலி) அவர்களுக்கு வாரிசானோம். (அன்னாருக்கு வேறு வாரிசுகள் இல்லை.)

ஹதீஸ் 5005. உமர் (ரலி) கூறினார்
எங்களில் (குர்ஆனை) நன்கு ஓதத் தெரிந்தவர் உபை இப்னு கஅப் (ரலி) ஆவார். நாங்கள் உபை (ரலி) அவர்களின் சொற்களில் சிலவற்றைவிட்டுவிடுவோம். ஏனெனில் அவர்கள், `இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவிமடுத்த எதையும் கைவிடமாட்டேன்' என்று சொல்வார். ஆனால், அல்லாஹ்வோ, `எந்த ஒரு வசனத்தையாவது நாம் மாற்றிவிட்டால், அல்லது அகற்றிவிட்டால் (அதற்கு பதிலாக) அதனினும் சிறந்த, அல்லது அது போன்ற வேறு வசனத்தை நாம் கொண்டு வருகிறோம்' என்று கூறியுள்ளான்.
என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

## குர்ஆனின் தோற்றுவாய் (எனும் அல்ஃபாத்திஹா அத்தியாயத்தின் சிறப்பு.)

ஹதீஸ் 5006. அபூ ஸயீத் இப்னு முஅல்லா (ரலி) அறிவித்தார்
நான் (பள்ளிவாசலில்) தொழுது கொண்டிருந்தபோது என்னை நபி (ஸல்) அவர்கள் அழைத்தார்கள். (தொழுகையில் இருந்தமையால்) நான் அவர்களுக்கு உடனடியாக பதிலளிக்கவில்லை. (தொழுது முடித்த பிறகு) 'இறைத்தூதர் அவர்களே! நான் தொழுது கொண்டிருந்தேன். (எனவேதான் உடனடியாக தங்களுக்கு நான் பதிலளிக்கவில்லை)' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், `அல்லாஹ், `(இறைநம்பிக்கையாளர்களே!) அல்லாஹ்வும் (அவனுடைய) தூதரும் உங்களை அழைக்கும்போது அவர்களுக்கு பதிலளியுங்கள்' என்று (திருக்குர்ஆன் 08:24 வது வசனத்தில்) சொல்லவில்லையா?' என்று கேட்டார்கள். பிறகு, `நீங்கள் பள்ளி வாசலிலிருந்து வெளியேறுவதற்கு முன்பாக குர்ஆனிலேயே மகத்துவமிக்க ஓர் அத்தியாயத்தை உங்களுக்கு நான் கற்றுத் தரவேண்டாமா?' என்று வினவியபடி என்னுடைய கையைப் பிடித்தார்கள். நாங்கள் (பள்ளிவாசலிலிருந்து) வெளியேற முனைந்தபோது நான், (அவர்கள் வாக்களித்ததை நினைவூட்டி) 'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் குர்ஆனிலேயே மகத்துவம் பொருந்தியதோர் அத்தியாயத்தை நான் உங்களுக்குக் கற்றுத்தர வேண்டாமா என்று கேட்டீர்களே!"என்று வினவினேன். நபி (ஸல்) அவர்கள்' (அது) அல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன் (என்று தொடங்கும்'அல்ஃபாத்திஹா' அத்தியாயமே)

ஆகும். அது திரும்பத் திரும்ப ஓதப்படும் ஏழு வசனங்களும் எனக்கு வழங்கப் பெற்றுள்ள மேன்மை மிகு குர்ஆனுமாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5007. அபூ ஸயீத் அல் குத்ரீ (ரலி) கூறினார்

நாங்கள் ஒரு பயணத்தில் சென்று கொண்டிருந்தபோது, (ஓய்வெடுப்பதற்காக) ஓரிடத்தில் இறங்கித் தங்கினோம். அப்போது ஓர் இளம் பெண் வந்து 'எங்கள் கூட்டத் தலைவரை தேள் கொட்டிவிட்டது. எங்கள் ஆட்கள் வெளியே சென்றுள்ளார்கள். அவருக்கு ஓதிப்பார்ப்பவர் உங்களில் எவரேனும் உண்டா?' என்று கேட்டாள். அவளுடன் எங்களில் ஒருவர் சென்றார். அவருக்கு ஓதிப்பார்க்கத் தெரியும் என்று நாங்கள் நினைத்தது கூட இல்லை. அவர் சென்று ஓதிப்பார்த்தார். உடனே, அந்தத் தலைவர் குணமடைந்துவிட்டார். எனவே, எங்களுக்கு முப்பது ஆடுகள் (அன்பளிப்பாக) வழங்குமாறு அவர்களின் தலைவர் உத்தரவிட்டதுடன் எங்களுக்குப் பாலும் கொடுத்தனுப்பினார். (ஓதிப்பார்க்கச் சென்ற) அந்த மனிதர் திரும்பி வந்தபோது, அவரிடம் 'உமக்கு நன்றாக ஓதிப்பார்க்கத் தெரியுமா?' அல்லது 'ஏற்கனவே, நீர் ஓதிப்பார்பவராக இருந்தீரா?' என்று கேட்டோம். அவர், 'இல்லை குர்ஆனின் அன்னை' என்றழைக்கப்படும் ('அல்ஃபாத்திஹா') அத்தியாயத்தைத் தான் ஒதிப்பார்த்தேன்'' என்று கூறினார். (இந்த முப்பது ஆடுகளையும்) நாம் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் 'செல்லும் வரையில்' அல்லது 'சென்று (விளக்கம்) கேட்கும் வரையில்' ஒன்றும் செய்துவிடாதீர்கள்'' என்று (எங்களுக்கிடையே) பேசிக்கொண்டோம். நாங்கள் மதீனா வந்து சேர்ந்தபோது, இது குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கூறினோம். 'இது ('அல் ஃபாத்திஹா' அத்தியாயம்) ஓதிப்பார்த்து நிவாரணம் பெறத்தக்கது என்று அவருக்கு எப்படித் தெரியும்? அந்த ஆடுகளைப் பங்கிட்டு அதில் ஒரு பங்கை எனக்கும் தாருங்கள்! என்று கூறினார்கள்.

இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

## 'அல்பகரா அத்தியாயத்தின் சிறப்பு

ஹதீஸ் 5008. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

யார் இரண்டு வசனங்களை ஓதினார்களோ...

என அபூ மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5009. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

'அல்பகரா' எனும் (2 வது) அத்தியாயத்தின் இறுதி இரண்டு வசனங்களை (285, 286) இரவில் ஓதுகிறவருக்கு அந்த இரண்டுமே போதும்.!

என அபூ மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5010. முஹம்மத் இப்னு சீரீன் (ரஹ்) அறிவித்தார்

அபூ ஹுரைரா (ரலி), 'இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ரமளானின் (ஃபித்ரா) ஸகாத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார்கள். அப்போது யாரோ ஒருவன் என்னிடம் வந்து அந்த (ஸகாத்) உணவுப் பொருளை அள்ளலானான். உடனே அவனை நான் பிடித்து, 'உன்னை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்' என்று சொன்னேன்' என்று கூறிவிட்டு, - அந்த நிகழ்ச்சியை முழுமையாகக் குறிப்பிட்டார்கள். - (இறுதியில், திருட வந்த) அவன், 'நீங்கள் படுக்கைக்குச் செல்லும்போது (ஆயத்துல் குர்ஸீ'யை ஓதுங்கள்! (அவ்வாறு செய்தால்,) விடியும்வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (உங்களைப் பாதுகாக்கின்ற) காவலர் (வானவர்) ஒருவர் இருந்துகொண்டேயிருப்பார் எந்த ஷைத்தானும் உங்களை நெருங்கமாட்டான்'' என்று கூறினான். (இதை நான் நபி (ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன்). அப்போது நபியவர்கள், 'அவன் பெரும் பொய்யானாயிருப்பினும் அவன் உம்மிடம் உண்மையாகத்தான் சொல்லியிருக்கிறான் (உம்மிடம் வந்த) அவன்தான் ஷைத்தான்'' என்று கூறினார்கள் என்றும் கூறினார்கள்.

## ‘அல்கஹ்ஃப் எனும் (18 வது) அத்தியாயத்தின் சிறப்பு.

ஹதீஸ் 5011. பராஉ (ரலி) அறிவித்தார்

ஒருவர் ’அல் கஹ்ஃப்’ எனும் (18 வது) அத்தியாயத்தை (தம் இல்லத்தில் அமர்ந்து) ஓதிக்கொண்டிருந்தார். அவருக்கு அருகில் இரண்டு கயிறுகளால் குதிரையொன்று கட்டப்பட்டிருந்தது. அதனை ஒரு மேகம் சூழ்ந்துகொண்டு, அது குதிரையை மெல்ல மெல்ல நெருங்கலாயிற்று. மேலும், அவரின் குதிரை மிரளத் தொடங்கியது. விடிந்தவுடன் அவர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைத் தெரிவித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் ’குர்ஆன் ஓதியக் காரணத்தால் இறங்கிய அமைதிதான் அது‘ ‘ என்று கூறினார்கள்.

## ‘அல்ஃபத்ஹ் எனும் (48 வது) அத்தியாயத்தின் சிறப்பு.

ஹதீஸ் 5012. அஸ்லம் (ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஓர் இரவில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். உமர் இப்னு கத்தாப் (ரலி) அவர்களும் நபியவர்களுடன் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது உமர் (ரலி) ஏதோ ஒன்றைக் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பதில் சொல்லவில்லை. பிறகு (மீண்டும்) உமர் அவர்கள் கேட்டார்கள். அப்போதும் அவர்களுக்கு நபியவர்கள் பதில் சொல்லவில்லை. பிறகு (மூன்றாம் முறையாக) உமர் அவர்கள் கேட்டார்கள். அப்போதும் அவர்களுக்கு நபியவர்கள் பதில் சொல்லவில்லை. பின்னர், (தம்மைத் தாமே கடிந்த வண்ணம்) ’உமரே! உன்னை உன் தாய் இழக்கட்டும்! மூன்று முறை (கேள்வி கேட்டு) இறைத்தூதர் (ஸல்) அவர்களை வற்புறுத்தினாய். அந்த ஒவ்வொரு முறையும் அவர்கள் உனக்கு பதில் சொல்லவில்லையே‘ ‘ என்று உமர் (ரலி) கூறினார்.

மேலும், உமர் (ரலி) கூறினார்: அதற்குப் பிறகு நான் என்னுடைய ஒட்டகத்தைச் செலுத்தி மக்களுக்கு முன்னால் வந்து சேர்ந்தேன். (அல்லாஹ்வின் தூதரிடம் இப்படி நான் நடந்துகொண்டதற்காக) என் விஷயத்தில் ஏதாவது குர்ஆன் (வசனம்) இறங்கிவிடுமோ என நான் அஞ்சினேன். சற்று நேரத்திற்குள் யாரோ ஒருவர் என்னை அழைப்பதைக் கேட்டேன். (நான் நினைத்த படி) என் விஷயத்தில் குர்ஆன் (வசனம்) ஏதும் இறங்கியிருக்கும் என அஞ்சினேன் என்று கூறியபடி இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அவர்களுக்கு சலாம் சொன்னேன். அப்போது அவர்கள், ‘இந்த இரவு எனக்கு ஒரு (குர்ஆன்) அத்தியாயம் அருளப்பட்டுள்ளது. சூரியன் என்னுடையன் மீது உதிக்கிறதோ அ(ந்த உலகத்)தைவிட எனக்கு அந்த அத்தியாயம் மிகவும் விருப்பமானதாகும்‘ ‘ என்று கூறினார்கள். பிறகு, ‘உங்களுக்கு நாம் பம்ரங்கமானதொரு வெற்றியினை அளித்துள்ளோம்‘ ‘ என்று (தொடங்கும் 48:1 வது வசனத்தை) ஓதினார்கள்.

## ‘குல் ஹுவல்லாஹு அஹத் எனும் (112 வது) அத்தியாயத்தின் சிறப்பு.

இது குறித்து நபி (ஸல்) அவர்கள் கூறியதை ஆயிஷா (ரலி) அவர்களும் அவர்களிடமிருந்து அம்ரா (ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5013. அபூ ஸயீத் அல் குத்ரீ (ரலி) அறிவித்தார்

ஒருவர் ’குல்ஹுவல்லாஹு அஹத்’ எனும் (112 வது) அத்தியாயத்தைத் திரும்பத் திரும்ப ஓதிக்கொண்டிருந்ததை மற்றொரு மனிதர் செவிமடுத்தார்.

(இதைக்கேட்ட) அந்த மனிதர் விடிந்ததும் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து அதைப் பற்றிக் கூறினார். அந்தச் சிறிய அத்தியாயத்தை(த் திரும்பத் திரும்ப அவர் ஓதியதை) இவர் சாதாரணமாக மதிப்பிட்டதைப் போல் தெரிந்தது. அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள்

, `என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! அந்த அத்தியாயமும் குர்ஆனின் மூன்றில் ஒரு பங்கிற்கு ஈடானதாகும்‘ ` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5014. கத்தாதா இப்னு நுஅமான்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் ஒருவர் (அதிகாலைக்கு முன்னுள்ள)'ஸஹர்' நேரத்தில் எழுந்து, `குல்ஹுவல்லாஹு அஹத்' எனும் (112 வது) அத்தியாயத்தை மட்டுமே ஓதி (தொழுது)வந்தார். அதைவிட அதிகமாக (வேறு எதையும்) அவர் ஓதுவதில்லை. காலையானபோது இன்னொரு மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து மேற்கண்ட (திருக்குர்ஆன் 50:13) ஹதீஸில் உள்ளபடி கூறினார்.

ஹதீஸ் 5015. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, `ஓர் இரவில் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதியை உங்களில் ஒருவரால் ஓத முடியாதா?' என்று கேட்டார்கள். அதனைச் சிரமமாகக் கருதிய நபித்தோழர்கள், `எங்களில் யாருக்கு இந்தச் சக்தி உண்டு, இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `அல்லாஹ் ஒருவனே அல்லாஹ் தேவையற்றவன்' (என்று தொடங்கும் 112 வது அத்தியாயம்) குர்ஆனின் மூன்றிலொரு பகுதியாகும்' என்று கூறினார்கள்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) வழியாக வரும் இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடர் (முர்சல்) - முறிவுள்ளதாகும்.

ளஹ்ஹாக் அல்மஷ்ரிம்(ரஹ்) வழித்தொடர் (முஸ்னத்) முழுமைபெற்றதாகும் என அபூ அப்துல்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்.

## ‘அல்முஅவ்வி∴தாத் அத்தியாயங்களின் சிறப்பு

ஹதீஸ் 5016. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டால், `அல்முஅவ்வி∴தாத்' (பாதுகாப்புக் கோரும் கடைசி மூன்று) அத்தியாயங்களை ஓதித் தம் மீது ஊதிக் கொள்வார்கள். அவர்களின் (இறப்பிற்கு முன்) நோய் கடுமையானபோது, நான் அவற்றை ஓதி அவர்களின் (கையில் ஊதி அந்தக்) கையாலேயே (அவர்களின் உடல் மீது) தடவிக் கொண்டிருந்தேன். நபியவர்களின் கரத்திற்குள் சுபிட்சத்தை (பரக்கத்தை) நாடியே அவ்வாறு செய்தேன்.

ஹதீஸ் 5017. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தங்களின் படுக்கைக்கு (உறங்கச்) சென்றால் ஒவ்வோர் இரவிலும் தம் உள்ளங்கைகளை இணைத்து, அதில்'குல் ஹுவல்லாஹு அஹத்‘, `குல் அஊது பிரப்பில் ∴பலக்‘, ` குல் அஊது பிரப்பின்னாஸ்' ஆகிய (112, 113, 114) அத்தியாயங்களை ஓதி ஊதிக்கொள்வார்கள். பிறகு தம் இரண்டு கைகளால் (அவை எட்டும் அளவிற்கு) தம் உடலில் இயன்ற வரையில் தடவிக் கொள்வார்கள். முதலில் தலையில் ஆரம்பித்து, பிறகு முகம், பிறகு தம் உடலின் முற்பகுதியில் கைகளால் தடவிக் கொள்வார்கள். இவ்வாறு மூன்று முறை செய்வார்கள்.

## குர்ஆன் ஓதும்போது மனஅமைதியும் வானவர்களும் இறங்குதல்.

ஹதீஸ் 5018. உசைத் இப்னு ஹுளைர்(ரலி) அறிவித்தார்

நான் இரவு நேரத்தில் (என் வீட்டில்)'அல்பகரா' எனும் (2 வது) அத்தியாயத்தை ஓதிக்கொண்டிருந்தேன். என்னுடைய குதிரை எனக்குப் பக்கத்தில் கட்டப்பட்டிருந்தது. திடீரென அந்தக் குதிரை மிகக் கடுமையாக மிரண்டது. உடனே ஓதுவதை நிறுத்திக் கொண்டேன். குதிரை மிகக் கடுமையாக மிரண்டது. உடனே ஓதுவதை நிறுத்தினேன். குதிரை அமைதியாகிவிட்டது. பிறகு ஓதினேன். அப்போது குதிரை (முன் போன்றே) மிரண்டது. நான் ஓதுவதை நிறுத்தினேன். குதிரையும் அமைதியானது. மீண்டும் நான் ஓதியபோது குதிரை

மிரண்டது. நான் திரும்பிப் பார்த்தேன் அப்போது என் மகன் யஹ்யா குதிரைக்குப் பக்கத்தில் இருந்தான். அவனை அது (மிதித்துக்) காயப்படுத்திவிடுமோ என்று அஞ்சினேன். எனவே, அவனை (அந்த இடத்திலிருந்து) இழுத்துவிட்டு வானை நோக்கித் தலையைத் தூக்கினேன். அங்கு (விளக்குகள் நிறைந்த மேகம் போன்றதொரு பொருள் வானில் மறைந்தது. அதனால்) அதைக் காணமுடியவில்லை.

காலை நேரமானதுபோது நான் நபி(ஸல்) அவர்களிடம் நடந்ததைத் தெரிவித்தேன். அவர்கள் என்னிடம்’இப்னு ஹுளைரே! தொடர்ந்து ஓதியிருக்கலாமே! இப்னு ஹுளைரே! தொடர்ந்து ஓதியிருக்கலாமே (ஏன் ஓதுவதை நிறுத்தினீர்கள்?)‘ என்று கேட்டார்கள். நான், என் மகன் யஹ்யாவைக் குதிரை மிதித்துவிடுமோ என்று அஞ்சினேன். இறைத்தூதர் அவர்களே! அவன் அதன் பக்கத்தில் இருந்தான். எனவே, நான் தலையைத் தூக்கிப் பார்த்துவிட்டு அவன் அருகில் சென்றேன். பிறகு, நான் வானை நெருங்கியபோது அங்கு மேகம் போன்றதொரு பொருளைக் கண்டேன். அதில் விளக்குகள் போன்ற (பிரகாசிக்கும்) பொருள்கள் இருந்தன. உடனே நான் வெளிய வந்(து பார்த்)தபோது அதைக் காணவில்லை‘ என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், ‘அது என்னவென்று நீ அறிவாயா?’ என்று கேட்டார்கள். நான், ‘இல்லை (தெரியாது)‘ என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்’உன் குரலைக் கேட்டு நெருங்கிவந்த வானவர்கள் தாம் அவர்கள். நீ தொடர்ந்து ஓதிக்கொண்டிருந்திருந்தால் காலையில் மக்களும் அதைப் பார்த்திருப்பார்கள் மக்களைவிட்டும் அது மறைந்திருக்காது‘ என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் தமக்குக் கிடைத்துள்ளதாக அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னுல் ஹாதி(ரஹ்) கூறினார்கள்.

## “(குர்ஆனின்) இரண்டு அட்டைகளுக்கிடையே உள்ளவற்றைத் தான் நபி(ஸல்) அவர்கள் (நம்மிடையே)விட்டுச் சென்றார்கள்‘ எனும் கூற்று.

ஹதீஸ் 5019. அப்துல் அஸீஸ் இப்னு ருஃபைஉ(ரஹ்) கூறினார்

நானும் ஷத்தாத் இப்னு மஅகில்(ரஹ்) அவர்களும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் ஷத்தாத்(ரஹ்), ‘நபி(ஸல்) அவர்கள் (உலகைப் பிரிந்தபோது , இந்தக் குர்ஆனில் இடம் பெறாத) வேறு (இறைவசனங்கள்) எதையும் (நம்மிடையே)விட்டுச் சென்றார்களா?’ என்று கேட்டார்கள். இப்னு அப்பாஸ்(ரலி), ‘(இந்தக் குர்ஆனின்) இரண்டு அட்டைகளுக்கிடையேயுள்ள வசனங்களைத் தான் (இறைவேதமாக) நபி(ஸல்) அவர்கள்விட்டுச் சென்றார்கள்‘ என்று பதிலளித்தார்கள்.

நாங்கள் (அலீ(ரலி) அவர்களின் புதல்வரான) முஹம்மத் இப்னு ஹனஃபிய்யா(ரஹ்) அவர்களிடம் சென்று, இது குறித்துக் கேட்டோம். அதற்கு அவர்கள் (இப்னு அப்பாஸ்(ரலி) பதிலளித்தது போன்றே)’(இந்தக் குர்ஆனின்) இரண்டு அட்டைகளுக்கிடையேயுள்ள வசனங்களைத்தான் (இறைவேதமாக) நபி(ஸல்) அவர்கள்விட்டுச் சென்றார்கள்‘ என்று பதிலளித்தார்கள்.

## மற்றெல்லா உரைகளையும் விடக் குர்ஆனுக்குள்ள தனிச்சிறப்பு.

ஹதீஸ் 5020. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்ஆனை ஓதுகின்ற(நல்ல)வரின் நிலையானது எலுமிச்சை போன்றதாகும். அதன் சுவையும் நன்று வாசனையும் நன்ற. மற்ற நற்செயல்கள் புரிந்துகொண்டு) குர்ஆன் ஓதாமலிருப்பவர், பேரீச்சம் பழத்தைப் போன்றவராவார். அதன் சுவை நன்று (ஆனால்) அதற்கு வாசனை கிடையாது. தீயவனாக (நயவஞ்சகனாக)வும் இருந்துகொண்டு, குர்ஆனையும் ஓதிவருகிறவனின் நிலையானது, துளசிச் செடியின் நிலையை ஒத்திருக்கிறது. அதன் வாசனை நன்று சுஜவயோ கசப்பு. தீமையும் செய்துகொண்டு, குர்ஆனையும் ஓதாமலிருப்பவனின்

நிலையானது, குமட்டிக்காயின் நிலையை ஒத்திருக்கிறது. அதன் சுவையும் கசப்பு அதற்கு வாசனையும் கிடையாது.
என அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அறிவித்தார்
ஹதீஸ் 5021. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
(உங்களுக்கு) முன் சென்ற சமுதாயங்களின் ஆயுட்காலத்துடன் ஒப்பிடுகையில் உங்கள் ஆயுட்காலம், அஸர் தொழுகைக்கும் சூரியன் மறைவதற்கும் இடையேயுள்ள (குறைந்த) கால அளவேயாகும். உங்களின் நிலையும் (வேதக்காரர்களான) யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களின் நிலையும் தொழிலாளர்கள் சிலரை வேலைக்கு அமர்த்திய ஒரு மனிதனின் நிலை போன்றதாகும். அவர் (தொழிலாளர்களிடம்) 'எனக்காக நண்பகல் வரை ஒவ்வொரு கீராத் (ஊதியத்)திற்கு வேலை செய்பவர் யார்?' என்று கேட்டார். அப்போது யூதர்கள் (ஒவ்வொரு கீராத்திற்கு நண்பகல் வரை) வேலை செய்தனர். அடுத்து அந்த மனிதர், 'நண்பகல் முதல் அஸ்ர் வரை (ஒவ்வொரு கீராத் ஊதியத்திற்கு) எனக்காக வேலை செய்பவர் யார்?' என்று கேட்க, (அவ்வாறே) கிறிஸ்தவர்கள் வேலை செய்தார்கள். பிறகு (என் சமுதாயத்தவராகிய) நீங்கள் இரண்டு கீராத் (ஊதியத்)திற்காக அஸ்ர் முதல் மஃக்ரிப் (நேரம்) வரை வேலை செய்கிறீர்கள். (இதைக் கண்ட வேதக்காரர்களாகிய) அவர்கள் 'நாங்கள் அதிகமாக வேலை செய்திருக்க, ஊதியம் (மட்டும் எங்களுக்குக்) குறைவாகக் கிடைப்பதா?' என்று கேட்டனர். அதற்கு (இறைவன்), 'நான் (ஊதியமாக நிர்ணயித்த) உங்களின் உரிமையில் (ஏதேனும் குறைத்து) உங்களுக்கு அநீதி இழைத்துவிட்டேனா?' என்று கேட்டான். அவர்கள், 'இல்லை'' என்றனர். இறைவன், அ(ப்படி சிலருக்கு மட்டும் சிறிது நேர பணிக்கு அதிகமாகக் கொடுப்ப)து என் (தனிப்பட்ட) அருளாகும். அதை நான் விரும்பியோருக்கு வழங்குகிறேன்'' என்று சொன்னான். என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## இறைவேதத்தின் படி (செயல்படுமாறு) உபதேசித்தல்.

ஹதீஸ் 5022. தல்ஹா இப்னு முஸர்ரிஃப் (ரஹ்) அறிவித்தார்
நான் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அவர்களிடம், 'நபி (ஸல்) அவர்கள் மரண சாசனம் (வஸிய்யத்) செய்துள்ளார்களா?' என்று கேட்டேன். அன்னார் 'இல்லை' என்றார்கள். நான் 'அப்படியானால் மரண சாசனம் செய்வது மக்களின் மீது எப்படிக் கடமையாக்கப்பட்டது? நபியவர்கள் மரண சாசனம் செய்திராமலேயே மக்களுக்கு அந்தக் கட்டளை பிறப்பிக்கப்பட்டதா?' என்று வினவினேன். அன்னார் 'இறைவேதத்தின்படி செயல்படுமாறு நபியவர்கள் உபதேசித்தார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

## குர்ஆனைக் கொண்டு தன்னிறைவு பெறாதவர் (நம்மைச் சார்ந்தவரல்லர் என்ற நபிமொழியும்) அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்படுகிற வேதத்தை உம்மீது நாம் அருளியிருப்பது அவர்களுக்குப் போதுமானதாக இல்லையா? எனும் (திருக்குர்ஆன் 29:51 வது) இறைவசனமும். 46

ஹதீஸ் 5023. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
அல்லாஹ், தன் தூதர் (முழு ஈடுபாட்டுடன்) இனிய குரலில் குர்ஆனை ஓதும்போது அதனைச் செவிகொடுத்துக் கேட்டது போல் வேறெதையும் அவன் செவி கொடுத்துக் கேட்டதில்லை.
என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஸலமா (ரஹ்) அவர்களின் தோழர் ஒருவர் (அப்துல் ஹமீத் இப்னு அப்திர் ரஹ்மான்) கூறுகிறார்:
குரலெடுத்து (இனிமையாகக்) குர்ஆனை ஓதுவதே இங்கு நோக்கமாகும்.
ஹதீஸ் 5024. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், `நான் (முழு ஈடுபாட்டுடன்) இனிய குரலில் குர்ஆனை ஓதும்போது அல்லாஹ் செவிகொடுத்துக் கேட்டது போல் வேறெதனையும் அவன் செவி கொடுத்துக் கேட்டதில்லை‘ ` என்று கூறினார்கள்.
“இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள’யத ஃகன்னா’ என்பதற்குக்’குர்ஆனைக் கொண்டு தன்னிறைவு பெற்றார்’ என்று பொருள்‘ ` என சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்கள்.

## குர்ஆன் அறிஞர் போல் தாமும் ஆக வேண்டும் என ஆர்வம் கொள்ளுதல்.

ஹதீஸ் 5025. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
இரண்டு விஷயங்களைத் தவிர வேறெதற்காகவும் பொறாமைகொள்ளக்கூடாது.
1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் வேத ஞானத்தை வழங்கியுள்ளான். அதனை அவர் இரவு நேரங்களிலும் ஓதி வழிபடுகிறார்.
2. இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை அளித்துள்ளான். அவர் அதனை இரவு, பகல் எல்லா நேரங்களிலும் தானம் செய்கிறார். (இவ்விருவரைப் பார்த்து நாமும் அப்படியாக வேண்டும் எனப் பொறாமை கொள்ளலாம்.)
என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5026. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
இரண்டு விஷயங்களைத் தவிர வேறெதற்காகவும் பொறாமைகொள்ளக்கூடாது. 1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் குர்ஆனைக் கற்றுத் தந்தான். அவர் அதனை இரவு, பகல் எல்லா நேரங்களிலும் ஓதிவருகிறார். இதைக் கேள்விப்பட்டு அவரின் அண்டைவீட்டுக்காரர், `இன்னாருக்குக் வழங்கப்பட்டது போல் எனக்கும் வழங்கப்பட்டிருந்தால் நானும் அவர் செயல்படுவது (ஓதுவது) போல் செயல்பட்டிருப்பேனே (ஓதியிருப்பேனே)!”என்று கூறுகிறார்.
2. இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கினான். அவர் அதனை நேர் வழியில் செலவிட்டு வருகிறார். (இதைக் காணும்) ஒருவர், `இன்னாருக்கு வழங்கப்பட்டது போல் எனக்கும் (செல்வம்) வழங்கப்பட்டிருக்குமானால் அவர் (தர்மம்) செய்தது போல் நானும் செய்திருப்பேனே‘ ` என்று கூறுகிறார்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## குர்ஆனைத் தாமும் கற்று அதனைப் பிறருக்கும் கற்பித்தவரே உங்களில் சிறந்தவர்.

ஹதீஸ் 5027. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
குர்ஆனைத் தாமும் கற்று பிறருக்கும் அதனைக் கற்பித்தவரே உங்களில் சிறந்தவர்.
இதை உஸ்மான்(ரலி) அவர்களிடமிருந்து அபூ அப்திர் ரஹ்மான் வழியாக ஸஅத் இப்னு உபைதா(ரஹ்) அறிவித்தார்.
உஸ்மான்(ரலி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் அபூ அப்திர்ரஹ்மான்(ரஹ்) (மக்களுக்கு) குர்ஆனைக் கற்றுக் கொடுத்துவந்தார்கள். ஹஜ்ஜாஜ் இப்னு யூசுஃப் (இராக்கின் ஆட்சியாளராக) ஆகும் வரையில் இது தொடர்ந்து. அபூ அப்திர்ரஹ்மான் அவர்கள், `(குர்ஆனின் சிறப்பு குறித்துக் கூறப்பட்ட) இந்த நபிமொழியே என்னை (மக்களுக்குக் கற்றுத்தரும்) இந்த இடத்தில் உட்காரவைத்தது‘ ` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5028. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
குர்ஆனைத் தாமும் கற்று பிறருக்கும் அதைக் கற்றுக் கொடுத்தவரே உங்களில் சிறந்தவர்.
என உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5029. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் தம்மை (அர்ப்பணித்து) அன்பளிப்புச் செய்துவிட்டதாகக் கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,`(இனி) எனக்கு எந்தப் பெண்ணும் தேவையில்லை' என்று கூறினார்கள். அப்போது அங்கிருந்த ஒருவர்'இந்தப் பெண்ணை எனக்கு மணமுடித்து வையுங்கள்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `ஏதேனும் ஆடையொன்றை அவளுக்கு ('மஹ்ர்' எனும் விவாகக் கொடையாக)க் கொடு!"என்று (அந்த மனிதரிடம்) கூறினார்கள். அவர், `என்னிடம் இல்லை' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `அவளுக்கு (எதையேனும் மஹ்ராகக்) கொடு! அது இரும்பாலான மோதிரமாக இருந்தாலும் சரியே' என்று கூறினார்கள். இதைக்கேட்டு அந்த மனிதர் கலங்கினார். எனவே, நபி(ஸல்) அவர்கள், `குர்ஆனிலிருந்து உன்னிடம் என்ன (அத்தியாயம் மனனமாக) இருக்கிறது?' என்று கேட்டார்கள். அவர் இன்ன இன்ன அத்தியாயங்கள் (எனக்கு மனப்பாடமாக) உள்ளன' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `உம்முடன் இருக்கும் (குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்து வைத்தேன்' என்று கூறினார்கள்.

## மனப்பாடமாகக் குர்ஆனை ஓதுதல்

ஹதீஸ் 5030. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

ஒரு பெண்மணி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, `இறைத்தூதர் அவர்களே! என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிட (-மஹ்ரின்றி என்னைத் தாங்கள் மணந்துகொள்ள-) வந்துள்ளேன்' என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரை நோக்கிப் பார்வையை உயர்த்தி நேராகப் பார்த்துவிட்டு பார்வையைத் தாழ்த்திக் கொண்டார்கள். பிறகு, தம் தலையைத் தொங்கவிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , தம் விஷயத்தில் எந்த முடிவையும் செய்வில்லை என்பதைக் கண்ட அந்தப்பெண் (அந்த இடத்திலேயே) அமர்ந்துகொண்டார். அப்போது நபித்தோழர்களில் ஒருவர் எழுந்து, `இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு அவர் தேவையில்லையென்றால், அவரை எனக்கு மணமுடித்து வைய்யுங்கள்!"என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `(மஹ்ராகச் செலுத்த) உம்மிடம் ஏதேனும் பொருள் உண்டா?' என்று கேட்டார்கள். அதற்கவர், `அல்லாஹ்வின் மீதாணையாக! என்னிடம் ஏதுமில்லை, இறைத்தூதர் அவர்களே!"ஏதுமில்லை, இறைத்தூதர் அவர்களே!"என்றார். நபி(ஸல்) அவர்கள், உம் குடும்பத்தாரிடம் சென்று ஏதாவது கிடைக்குமா என்று பார்!"என்றார்கள். அவரும் போய் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து, `அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதும் கிடைக்கவில்லை இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார்.'இரும்பாலான ஒரு மோதிராவது கிடைக்குமா என்று பார்!"என்று நபி(ஸல்) அவர்கள் சொல்லியனுப்பினார்கள். அவர் மீண்டும் சென்றுவிட்டுத் திரும்பிவந்து, `இறைத்தூதர் அவர்களே! இரும்பாலான மோதிரம் கூடக் கிடைக்கவில்லை. ஆனால், இதோ இந்த என்னுடைய வேட்டி உள்ளது' என்று கூறினார்.

-அறிவிப்பாளர் ஸஹ்ல்(ரலி) கூறினார்: அவரிடம் ஒரு மேல்துண்டு கூட இல்லை. எனவேதான் தன்னுடைய வேட்டியில் பாதியை அவளுக்குத் தருவதாகக் கூறினார். -

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `இந்த வேட்டியை நீர் அணிந்தால், அவளின் மீது ஏது இருக்காது. அவள் அணிந்தால், உம்மீது ஏதும் இருக்காது. (ஒரு வேட்டியை வைத்துக்கொண்டு என்ன செய்வாய்?)' என்று கேட்டார்கள். பிறகு அந்த மனிதர் நீண்ட நேரம் அங்கேயே அமர்ந்துகொண்டார். பிறகு, அவர் எழுந்தார். அவர் திரும்பிச் செல்வதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பார்த்தபோது அவரை அழைத்து வரும்படி உத்தரவிட்டார்கள். அவர் வரவழைக்கப்பட்டபோது, `உம்முடன் குர்ஆனில் என்ன (அத்தியாயங்கள் மனப்பாடமாக) உள்ளது' என்று கேட்டார்கள். அவர், `இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம் என்னுடன் உள்ளன' என்று எண்ணி எண்ணிக் கூறினார். நபி(ஸல்)

அவர்கள், 'அவற்றை நீர் மனப்பாடமாக ஓதுவீரா?' என்று கேட்டார்கள். அவர், 'ஆம் (ஓதுவேன்)'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'உம்முடன் உள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இப்பெண்ணை உமக்குத் திருமணம் முடித்துக் கொடுத்தேன். நீர் செல்லலாம்!''என்று கூறினார்கள்.

## குர்ஆனை நினைவுப்படுத்திக்கொள்வதும் அதனுடனான தொடர்பைப் புதுப்பித்துக் கொள்வதும்.

ஹதீஸ் 5031. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்ஆனை(ப் பார்த்தோ மனப்பாடமாகவோ) ஓதுகிறவரின் நிலையெல்லாம், கயிற்றால் கட்டிவைக்கப்பட்டுள்ள ஒட்டகத்தின் உரிமையாளரின் நிலையை ஒத்திருக்கிறது. அதனை அவர் கண்காணித்து வந்தால் தன்னிடமே அதை அவர் தக்கவைத்துக் கொள்ளலாம். அதை அவிழ்த்துவிட்டுவிட்டாலோ அது ஓடிப்போய்விடும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5032. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

''இன்ன இன்ன குர்ஆன் வசனங்களை நான் மறந்துவிட்டேன்'' என்று ஒருவர் கூறுவதுதான் அவரின் வார்த்தைகளிலேயே மிகவும் மோசமான வார்த்தைகளிலேயே மிகவும் மோசமான வார்த்தையாகும். வேண்டுமானால், 'மறக்கவைக்கப்பட்டுவிட்டது' என்று அவர் கூறட்டும்! குர்ஆனைத் தொடர்ந்து (ஓதி) நினைவுபடுத்தி வாருங்கள். ஏனெனில், ஒட்டகங்களை விடவும் வேகமாக மனிதர்களின் நெஞ்சங்களிலிருந்து குர்ஆன் தப்பக்கூடியதாகும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

இந்த நபிமொழி, வேறு சில அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5033. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்ஆனை (ஓதி அதை)க் கவனித்து வாருங்கள். ஏனெனில், என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! கயிற்றில் கட்டிவைக்கப்பட்டுள்ள ஒட்டகத்தை விட மிக வேகமாகக் குர்ஆன் (நினைவிலிருந்து) தப்பக்கூடியதாகும்.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## வாகனத்தில் இருந்தபடி குர்ஆன் ஓதுதல்.

ஹதீஸ் 5034. அப்துல்லாஹ் இப்னு முஃகஃப்பல்(ரலி) அறிவித்தார்

மக்கா வெற்றியின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , வாகனத்தில் இருந்தபடி'அல்ஃபத்ஹ்' எனும் (48 வது) அத்தியாயத்தை ஓதிக்கொண்டிருந்ததை பார்த்தேன்.

## சிறுவர்களுக்குக் குர்ஆனைக் கற்றுக் கொடுத்தல்.

ஹதீஸ் 5035. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நீங்கள்'அல்முஃபஸ்ஸல்' என்று கூறிவரும் அத்தியாயங்களே'அல்முஹ்கம்' ஆகும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறக்கும்போது நான் பத்து வயதுடைய (சிறு)வனாக இருந்தேன். அப்போது நான்'அல்முஹ்கம்' அத்தியாயங்களை ஓதிமுடித்திருந்தேன்.

ஹதீஸ் 5036. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

''நான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (வாழ்ந்த) காலத்திலேயே'அல்முஹ்கம்' அத்தியாயங்களை மனனம் செய்திருந்தேன்'' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். நான் அவர்களிடம், 'அல்முஹ்கம்' என்றால் என்ன?' என்று கேட்டேன். அவர்கள்'அல்முஃபஸ்ஸல்'தான் ('அல்முஹ்கம்')'' என்று (பதில்) கூறினார்கள்.

## குர்ஆனை மறப்பதும், இன்ன இன்ன வசனங்களை நான் மறந்துவிட்டேன்' என்று சொல்லலாமா? என்பதும், (நபியே!) நாம் உம்மை ஓதிடச் செய்வோம். பிறகு நீர் மறக்கமாட்டீர் ஆனால், அல்லாஹ் நாடியதைத் தவிர' எனும் (திருக்குர்ஆன் 87:6 வது) இறைவசனமும்.

ஹதீஸ் 5037. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

பள்ளிவாசலில் ஒருவர் குர்ஆனை ஓதிக்கொண்டிருப்பதை நபி(ஸல்) அவர்கள் செவியுற்றார்கள். அப்போது அவர்கள் 'அல்லாஹ் அவருக்குக் கருணைபுரியட்டும்! இன்ன அத்தியாயத்தின் இன்ன இன்ன வசனங்களை எனக்கு அவர் நினைவூட்டிவிட்டார்' ' என்று கூறினார்கள்.

"இன்ன அத்தியாயத்தில் நான் மறந்திருந்த இன்ன இன்ன வசனங்களை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும் ஹிஷாம்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் காணப்படுகிறது.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5038. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

ஒருவர் இரவு நேரத்தில் ஓர் அத்தியாயத்தை ஓதிக்கொண்டிருப்பதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'அல்லாஹ் அவருக்குக் கருணை புரியட்டும்! இன்ன இன்ன அத்தியாயங்களிலிருந்து எனக்கு மறக்கவைக்கப்பட்டிருந்த இன்ன இன்ன வசனங்களை அவர் எனக்கு நினைவூட்டிவிட்டார்' ' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5039. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இன்ன இன்ன குர்ஆன் வசனங்களை நான்மறந்துவிட்டேன் என்று ஒருவர் கூறுவதே அவரின் வார்த்தைகளிலேயே மிகவும் மோசமான வார்த்தையாகும். உண்மையில், அவர் மறக்கவைக்கப்பட்டுவிட்டார்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## 'அல்பகரா அத்தியாயம் என்றும், இன்ன இன்ன அத்தியாயம் என்றும் கூறுவதைக் குற்றமாகக் கருதலாகாது.

ஹதீஸ் 5040. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'அல்பகரா' எனும் (2 வது) அத்தியாயத்தின் இறுதி இரண்டு வசனங்களை (285, 286) இரவில் ஓதுகிறவருக்கு அந்த இரண்டுமே போதும்!

என அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5041. உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாழ்நாளில் ஹிஷாம் இப்னு ஹகீம்(ரலி) 'அல்ஃபுர்கான்' எனும் (25 வது) அத்தியாயத்தை (தொழுகையில்) ஓதுவதை செவியுற்றேன். அவரின் ஓதலை நான் செவிதாழ்த்திக் கேட்டபோது எனக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓதிக் காண்பிக்காத பல (வட்டார) மொழி வழக்குகளில் அவர் அதை ஓதிக்கொண்டிருந்தார். தொழுகையில் வைத்தே அவரை நான் தண்டிக்க முனைந்தேன். (சற்று நிதானித்து) அவர் தொழுகையை முடித்து) சலாம் கொடுக்கும் வரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்.

(அவர் தொழுகையை முடித்ததும் அவரின் மேல் துண்டை) அவரின் கழுத்தில் போட்டுப் பிடித்து, 'இந்த அத்தியாயத்தை நான் (உம்மிடமிருந்து) செவியேற்றபடி உமக்கு ஓதிக்கொடுத்தது யார்?' என்று கேட்டேன். அவர், 'இதை எனக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாம் ஓதிக் கொடுத்தார்கள்' ' என்று பதிலளித்தார். உடனே நான், 'நீர் பொய் சொல்லிவிட்டீர்! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உம்மிடம் நான் செவியேற்ற இந்த அத்தியாயத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்களே எனக்கு (நீர் ஓதியதற்கு மாற்றமாக) ஓதிக்

கொடுத்தார்கள்‘' என்று கூறியபடி அவரை இழுத்துக்கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்றேன். அவர்களிடம், '(இறைத்தூதர் அவர்களே!) தாங்கள் எனக்கு ஓதிக் கொடுக்காத பல (வட்டார) மொழி வழக்குகளில்' அல்ஃபுர்கான்' அத்தியாயத்தை இவர் ஓதக் கேட்டேன். இந்த அத்தியாயத்தை நீங்கள் எனக்கு (வேறு முறையில்) ஓதிக் கொடுத்துள்ளீர்கள்‘' என்று சொன்னேன். அப்போது, நபி(ஸல்) அவர்கள், 'ஹிஷாமே, அதை ஓதுங்கள்!"என்றார்கள். உடனே அவர் நான் அவரிடமிருந்து செவியேற்றபடியே (நபி(ஸல்) அவர்களுக்கு முன்னாலும்) ஓதிக் காட்டினார். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்' இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது‘' என்று கூறினார்கள்.
பிறகு (என்னைப் பார்த்து), 'நீங்கள் ஓதுங்கள், உமரே!"என்று கூறினார்கள். எனக்கு அவர்கள் ஓதிக் கொடுத்தபடி நான் ஓதினேன். (அதைக் கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது‘' என்று கூறிவிட்டு, இந்தக் குர்ஆன் ஏழு முறைகளில் அருளப்பட்டுள்ளது. எனவே, உங்களுக்கு அதில் சுலபமானது எதுவோ அதை ஓதிக் கொள்ளுங்கள்‘' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5042. ஆயிஷா(ரலி) கூறினார்
இரவு நேரம் பள்ளிவாசலில் ஒருவர் குர்ஆன் ஓதிக்கொண்டிருப்பதை நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போது நபியவர்கள், 'அல்லாஹ் அவருக்குக் கருணை புரியட்டும்! இன்ன அத்தியாயங்களிலிருந்து நான் மறந்துவிட்டிருந்த இன்ன இன்ன வசனங்களை அவர் எனக்கு நினைவூட்டிவிட்டார்‘' என்று கூறினார்கள்.

## திருத்தமாகவும் நிதானமாகவும் குர்ஆனை ஓதுதல்.

அல்லாஹ் கூறினான்: மேலும் (நபியே!) குர்ஆனை நிறுத்தி நிதானமாக ஓதும்!"(திருக்குர்ஆன் 73:04)
“மனிதர்களுக்கு நீர் இதனைச் சிறிது சிறிதாக ஓதிக்காட்ட வேண்டும் என்பதற்காகவே இந்தக் குர்ஆனைப் படிப்படியாக அருளினோம்!"(திருக்குர்ஆன் 17:106)
பாடல்களை அவசரம் அவரசமாகப் படிப்பதைப் போன்று குர்ஆனை ஓதுவது வெறுப்புக்குரிய செயலாகும்.
(திருக்குர்ஆன் 44:4 வது வசனத்தின் மூலத்திலுள்ள)' ஃபீஹா யுஃப்ரகு' என்பதற்கு' அந்த இரவில் தெளிவுப்படுத்தப்படுகிறது' என்று பொருள்.
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: (திருக்குர்ஆன் 17:106 வது வசனத்தின் மூலத்திலுள்ள)' ஃபரக்னாஹு' எனும் சொல்லுக்கு, 'நாம் தெளிவுபடுத்தினோம்' என்று பொருள்.

ஹதீஸ் 5043. அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) கூறினார்
நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் (ஒரு நாள்) காலையில் சென்றோம். அப்போது ஒருவர், 'நேற்றிரவு நான்' அல்முஃபஸ்ஸல்' அத்தியாயங்களை (முழுமையாக) ஓதி முடித்தேன்‘' என்றார். அதற்கு அப்துல்லாஹ்(ரலி), 'பாட்டுப் பாடுவதைப் போன்று அவரச அவரசமாக ஓதினீரா? யாகி (சரியான) ஓதல் முறையைச் செவியேற்றுள்ளோம். மேலும், நபி(ஸல்) அவர்கள் தாம் (வழக்கமாக) ஓதிவந்த ஒரே அளவிலமைந்த' அல்முஃபஸ்ஸல்' அத்தியாயங்களில் பதினெட்டையும்' ஹாமீம்' (எனத் தொடங்கும் அத்தியாயங்களின்) குடும்பத்தில் இரண்டு அத்தியாயங்களையும் நான் மனனமிட்டுள்ளேன்‘' என்றார்கள்.

ஹதீஸ் 5044. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
“(நபியே!) இந்த' வஹீ‘யை (வேத அறிவிப்பை) அவசரம் அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள்‘' எனும் (திருக்குர்ஆன் 75:16 வது) இறைவசனத்தி(ன் விளக்கவுரையி)ல் இப்னு அப்பாஸ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:

(வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள் தம்மிடம்'வஹீ'யைக் கொண்டு வரும்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (எங்கே வேத வசனங்களை மறந்துவிடப் போகிறோமோ என்ற அச்சத்தினால் அதை மனனமிடுவதற்காக ஓதியபடி) தம் நாவையும் தம் இதழ்களையும் அசைத்துக் கொண்டிருப்பார்கள். இது அவர்களுக்குச் சிரமமாக இருந்தது. அது அவர்களின் வதனத்திலேயே காணப்படலாயிற்று. எனவே, அல்லாஹ்'லா உக்சிமு பி யவ்மில் கியாமா' என்று தொடங்கும் (75 வது) அத்தியாயத்திலுள்ள'இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவசரம் அவசரமாக மனனம் செய்வதற்காக உங்களின் நாவை அசைக்காதீர்கள். அதை (உங்கள் மனத்தில்) ஒன்றுசேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எம்முடைய பொறுப்பாகும்'' எனும் (திருக்குர்ஆன் 75:16, 17) வசனங்களை அருளினான். (அதாவது,)'உங்கள் நெஞ்சில் பதியச்செய்வதும் அதை நீங்கள் ஓதும்படி செய்வதும் எம்முடைய பொறுப்பாகும்' (என்று சொன்னான்).'மேலும், நாம் இதனை ஓதிவிட்டோமாயின் நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள்'' (திருக்குர்ஆன் 75:18) (அதாவது,)'நாம் இதனை அருளும்போது செவி கொடுத்துக் கேட்டுக்கொண்டிருங்கள்' (என்றும் சொன்னான்).'பின்னர், இதன் கருத்தை விவரிப்பதும் எம்முடைய பொறுப்பேயாகும்'' (திருக்குர்ஆன் 75:19) (அதாவது,)'உங்கள் நாவினால் அதனை (மக்களுக்கு) விளக்கித் தரச்செய்வதும் எம்முடைய பொறுப்பாகும்'' என இறைவன் கூறினான்.

(இந்த வசனங்கள் அருளப்பட்ட பின்பு) தம்மிடம் ஜிப்ரீல்(அலை) அவர்கள் (வஹீயுடன்) வருகையில் நபி(ஸல்) அவர்கள் தலையைத் தாழ்த்தி (மௌமானகக் கேட்டு)க் கொண்டிருப்பார்கள். அவர் (வசனங்களை அருளிவிட்டுச்) சென்றுவிடும்போது அல்லாஹ் வாக்களித்தபடி நபி(ஸல்) அவர்கள் வசனங்களை ஓதிக்கொண்டார்கள்.

## நீட்டி ஓதுதல்

ஹதீஸ் 5045. கத்தாதா(ரஹ்) அறிவித்தார்

நான் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்களின் ஓதுதல் முறைபற்றிக் கேட்டேன் அதற்கவர்கள், '(நீட்டி ஓதவேண்டிய இடங்களில்) நன்றாக நிட்டி ஓதுவது நபி(ஸல்) அவர்களின் வழக்கமாக இருந்தது'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5046. கத்தாதா(ரஹ்) அறிவித்தார்

''நபி(ஸல்) அவர்களின் ஓதுதல் முறை எப்படியிருந்தது?' என அனஸ்(ரலி) அவர்களிடம் வினவப்பட்டது.

அதற்கவர்கள், 'நீட்டி ஓதலே அவர்களின் வழக்கம் என்று கூறிவிட்டு, 'பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' என்பதில்'பிஸ்மில்லா..ஹ்' என நீட்டுவார்கள், 'அர்ரஹ்மா..ன்' என்றும் நீட்டுவார்கள்'அர்ரஹ்மா..ன்' என்றும் நீட்டுவார்கள்'அர்ரஹீ...ம்' என்றும் நீட்டுவார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

## தர்ஜீஉ (முறையில் ஓதுதல்.)

ஹதீஸ் 5047. அப்துல்லாஹ் இப்னு முஃகஃப்பல்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றி நாளில்) பயணித்துக் கொண்டிருந்த தம் ஒட்டகத்தின் மீது இருந்தவாறு'அல்ஃபத்ஹ் எனும் (48 வது) அத்தியாயத்தை' அல்லது'அந்த அத்தியாயத்திலிருந்து ஒரு பகுதியை' மெல்லிய குரலில்'தர்ஜீஉ' எனும் ஓசை நயத்துடன் ஓதிக்கொண்டிருந்ததை பார்த்தேன்.

## இனிய குரலில் குர்ஆனை ஓதுதல்.

ஹதீஸ் 5048. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (நான் இனிய குரலில் குர்ஆன் ஓதுவதைப் பாராட்டி)'அபூ மூஸா! (இறைத்தூதர்) தாவூத் (அலை) அவர்களுக்கு வழங்கப்பட்டிருந்த (சங்கீதம் போன்ற) இனிய குரல் உங்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது'' என என்னிடம் கூறினார்கள்.

## அடுத்தவரிடமிருந்து குர்ஆனைச் செவியேற்க விரும்புவது.

ஹதீஸ் 5049. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் என்னிடம்'குர்ஆனை எனக்கு ஓதிக்காட்டுங்கள்!"என்று கூறினார்கள். நான்'தங்கள் மீதே குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக்காட்டுவதா?' என்று கேட்டேன். அவர்கள்'பிறரிடமிருந்து அதை நான் செவியேற்க விரும்புகிறேன்'' என்று கூறினார்கள்.

## ஓதச் சொன்னவர் ஓதிக்கொண்டிருப்பவரிடம் (ஓதியது) போதும்' எனக் கூறுவது.

ஹதீஸ் 5050. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் என்னிடம், 'எனக்கு (குர்ஆனை) ஓதிக் காட்டுங்கள்!"என்று கூறினார்கள். நான், 'தங்கள் மீதே குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக் காட்டுவதா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஆம்'' என்று கூறினார்கள். எனவே, நான்'அந்நிஸா' எனும் (4 வது) அத்தியாயத்தை ஓதினேன். 'ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களின் நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில் கொண்டு வரும் போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாக நாம் கொண்டு வரும்போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்?' எனும் (திருக்குர்ஆன் 04:41 வது) வசனத்தை நான் அடைந்தபோது நபி(ஸல்) அவர்கள், 'இத்துடன் போதும்!"என்று கூறினார்கள். அப்போது நான் அவர்களைப் பார்த்தேன் அவர்களின் கண்கள் இரண்டும் கண்ணீரைச் சொரிந்து கொண்டிருந்தன. 62

## எத்தனை நாள்களில் குர்ஆனை ஓதிமுடிக்க வேண்டும் (என்ற வரைமுறை உண்டா) என்பதும் குர்ஆனில் உங்களுக்கு சுலபமான அளவு ஓதுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 73:20 வது) இறைவசனமும்.

ஹதீஸ் 5051. சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அறிவித்தார்

என்னிடம் (கூஃபா நகர நீதிபதி) அப்துல்லாஹ் இப்னு ஷுப்ருமா(ரஹ்), 'ஒருவர் (தொழுகையில், அல்லது நாளொன்றுக்கு) குர்ஆனிலிருந்து (குறைந்தது) எவ்வளவு ஓதினால் போதும் என்று நான் ஆய்வு செய்தபோது, மூன்று வசனங்களை விடக் குறைவான (வசனங்களைக் கொண்ட) ஓர் அத்தியாயத்தை நான் காணவில்லை அதனால் மூன்று வசனங்களுக்குக் குறைவாக ஒருவர் ஓதுவது முறையாகாது என்ற முடிவுக்கு வந்தேன்'' என்று கூறினார்கள்.

அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) கூறினார்

அபூ மஸ்வூத் உக்பா இப்னு ஆமிர்(ரலி) இறையில்லம் கஅபாவைச் சுற்றி வந்து கொண்டிருந்தபோது, அன்னாரை சந்தித்தேன். அப்போது அவர்கள், ''அல்பகரா' எனும் (2 வது) அத்தியாயத்தின் இறுதி இரண்டு வசனங்களை (285, 286) இரவில் ஓதுகிறவருக்கு அவ்விரண்டுமே போதும்'' என்ற நபிமொழியைக் கூறினார்கள்.

ஹதீஸ் 5052. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

பாரம்பரியமிக்க ஒரு பெண்ணை என் தந்தை எனக்கு மணமுடித்து வைத்தார்கள். (என் தந்தை) அமர்(ரலி) தம் மருமகளை அணுகி அவளுடைய கணவர் குறித்துக் கேட்பது (அதாவது என்னைப் பற்றி விசாரிப்பது) வழக்கம்.

அப்போது அவள், `அவர் நல்ல மனிதர் தாம் (ஆனால்,) அவர் படுக்கைக்கு வரவுமில்லை் அவரிடம் நான் வந்து சேர்ந்தது முதல் எனக்காகத் திரைச் சீலையை அவர் இழுத்து மூடவுமில்லை' என்று சொல்வாள். இதே நிலை நீடித்தபோது, (என் தந்தை) அம்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் (இதைப் பற்றிக்) கூறினார்கள். அப்போது, `என்னை வந்து சந்திக்குமாறு உங்கள் மகனிடம் சொல்லுங்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். பிறகு நான் நபி(ஸல்) அவர்களைச் சந்தித்தேன். அப்போது அவர்கள், `நீ எப்படி நோன்பு நோற்கிறாய்?' என்று கேட்டார்கள். நான், `தினந்தோறும் நோன்பு நோற்கிறேன்' என்று சொன்னேன். ("குர்ஆனை) எப்படி ஓதி முடிக்கிறாய்' என்று கேட்டார்கள். நான், `ஒவ்வோர் இரவிலும் (குர்ஆனை ஓதி முடிக்கிறேன்)' என்று சொன்னேன். அவர்கள், `மாதந்தோறும் மூன்று நாள்கள் நோன்பு நோற்றுக்கொள். குர்ஆனை ஒவ்வொரு மாதமும் (ஒரு முறை முழுமையாக) ஓதிக்கொள்' என்று கூறினார்கள். 'நான் இதைவிட அதிகமாக (நோன்பு நோற்க) சக்திபெற்றுள்ளேன்' என்று கூறினேன். 'இரண்டு நாள்கள் நோன்பைவிட்டுவிட்டு, ஒரு நாள் நோற்றுக்கொள்!"என்று கூறினார்கள். நான் இதைவிடவும் அதிகமாக (நோன்பு நோற்க) சக்தி பெற்றுள்ளேன்' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள், `(இறைத்தூதர்) தாவூத்(அலை) அவர்களின் உயர்ந்த நோன்பு வழக்கப்படி, ஒரு நாள்விட்டு ஒரு நாள் நோன்பு நோற்றுக் கொள்! மேலும், ஒவ்வோர் ஏழு இரவுகளிலும் (ஒரு முறை குர்ஆனை) ஓதி(முடித்து)க் கொள்' என்று கூறினார்கள்.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வழங்கிய இந்தச் சலுகையை நான் ஏற்று நடந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்! காரணம் நான் (இப்போது) தள்ளாமை வயதையடைந்து மிகவும் பலவீனம் அடைந்துவிட்டேன்.
(அறிவிப்பாளர்களில் ஒருவரான முஜாஹித்(ரஹ்) கூறினார்கள்:)
அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) (தம் முதுமையில்) குர்ஆனில் ஏழில் ஒரு பாகத்தை (அதாவது ஒரு மன்ஸிலை) தம் வீட்டாரில் சிலரிடம் பகலில் ஓதிக் காட்டுவார்கள். (இரவில்) ஓதவேண்டுமென அவர்கள் விரும்பிய பாகத்தையே (இவ்வாறு) பகலில் ஓதிக் காட்டுவார்கள். இரவில் (ஓதும்போது) சுபலமாக இருக்கட்டும் என்பதே இதற்குக் காரணம். அன்னார் (நோன்பு நோற்க) சக்தி பெறவேண்டும் என விரும்பும்போது, பல நாள்கள் நோன்பு நோற்காமல்விட்டுவிட்டு அந்நாள்களைக் கணக்கில் வைத்துக் கொள்வார்கள். பிறகு (வசதிப்படும்போது) அதே அளவு நாள்கள் நோன்பு நோற்பார்கள். நபி(ஸல்) அவர்களிடமிருந்து பிரிந்தபோது (-நபியவர்கள் இறந்தபோது) தாம் செய்து வந்த எந்த வழிபாட்டையும் கைவிடுவதை அன்னார் விரும்பாததே இதற்குக் காரணம்.
அபூ அப்தில்லாஹ் (புகாரியாகி நான்) கூறுகிறேன்:
(அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களிடம், `மாதம் ஒரு முறை குர்ஆனை ஓதி நிறைவுசெய்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது, அதைவிட அதிகமாக ஓதுவதற்குத் தம்மால் முடியும் என அன்னார் தெரிவிக்க, நபியவர்கள் நாள்களைக் குறைத்துக் கொண்டே வந்து) மூன்று நாள்களுக்கு ஒருமுறை (குர்ஆனை ஓதி நிறைவு செய் என்று நபியவர்கள் கூறினார்கள்) என அறிவிப்பாளர்களில் சிலர் தெரிவித்துள்ளனர். 'ஏழு நாள்களுக்கு ஒரு முறை' என்றே பெரும்பாலோர் கூறியுள்ளனர்.

ஹதீஸ் 5053. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) கூறினார்
என்னிடம் நபி(ஸல்) அவர்கள், `எத்தனை நாள்களில் குர்ஆனை ஓதிமுடிக்கிறாய்?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5054. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்
என்னிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `ஒவ்வொரு மாதமும் (ஒருமுறை குர்ஆனை) ஓதி நிறைவுசெய்!"என்று கூறினார்கள். அப்போது நான், `(அதை விடவும் குறைந்த நாள்களில்

குர்ஆனை முழுமையாக ஓதி முடிக்கும்) சக்தி எனக்கு உள்ளது‘` என்று கூறினேன். ’அப்படியானால், ஏழு நாள்களில் (ஒருமுறை) ஓதி நிறைவு செய் அதைவிட (ஓதுவதை) அதிகமாக்கிவிடாதே‘` என்று கூறினார்கள்.

## குர்ஆன் ஓதும்போது அழுவது.

ஹதீஸ் 5055. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

“எனக்குக் குர்ஆனை ஓதிக்காட்டுக!’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னிடம்) கூறினார்கள். அதற்கு நான், `தங்கள் மீதே குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக் காட்டுவதா?’ என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், `பிறரிடமிருந்து அதைக் கேட்க நான் பெரிதும் ஆசைப்படுகிறேன்‘` என்று கூறினார்கள். நான் ’அந்நிஸா’ எனும் (4 வது) அத்தியாயத்தை ஓதினேன். ’ஒவ்வொரு சமுதாயத்திலிருந்தும் (அவர்களின் நபியாகிய) சாட்சியை நாம் (மறுமையில்) கொண்டுவரும் போதும், (நபியே!) உங்களை இவர்களுக்கெதிரான சாட்சியாக நாம் கொண்டுவரும்போதும் (இவர்களின் நிலை) எப்படியிருக்கும்?’ எனும் (திருக்குர்ஆன் 04:41 வது) வசனத்தை நான் அடைந்தபோது ’நிறுத்துங்கள்’ என்று கூறினார்கள் அப்போது அவர்களின் கண்கள் கண்ணீரைச் சொரிவதை கண்டேன்.

இந்த ஹதீஸ் இன்னும் சில அறிவிப்பாளர்கள் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5056. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

“எனக்குக் குர்ஆனை ஓதிக்காட்டுக!’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் கூறினார்கள். அதற்கு நான், `தங்கள் மீதே குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்க, தங்களுக்கே நான் ஓதிக்காட்டுவதா?’ என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் ’பிறரிடமிருந்து அதைக் கேட்க விரும்புகிறேன்‘` என்று கூறினார்கள்.

## பிறருக்குக் காட்டுவதற்காக, அல்லது வயிற்றுப் பிழைப்பிற்காக, அல்லது குற்றமிழைப்பதற்காகக் குர்ஆனை ஓதுவது பாவமாகும்.

ஹதீஸ் 5057. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறுதிக் காலத்தில் ஒரு கூட்டத்தினர் வருவார்கள்: அவர்கள் குறைந்தவயது கொண்ட இளைஞர்களாயிருப்பார்கள். முதிர்ச்சியற்ற புத்தியுடையவர்களாயிருப்பார்கள். பூமியிலேயே மிகச் சிறந்த சொல்லை (குர்ஆன் வசனங்களை) எடுத்துச் சொல்வார்கள். அவர்கள், வேட்டைப் பிராணியி(ன் உடலி)லிருந்து (வேடன எய்த) அம்பு (அதன் உடலுக்குள் பாய்ந்து மறுபுறமாக) வெளிப்பட்டுச் சென்று விடுவதைப் போன்று இஸ்லாத்திலிருந்து வெளியேறிச் சென்றுவிடுவார்கள். அவர்களின் இறைநம்பிக்கை(யும் மார்க்க விசுவாசமும்) அவர்களின் தொண்டைக் குழிகளைத் தாண்டி (இதயம் வரை) செல்லாது. எனவே, அவர்களை நீங்கள் எங்கு எதிர்கொண்டாலும் கொன்றுவிடுங்கள். ஏனெனில், அவர்களை ஒழிப்பது, அவர்களைக் கொன்றவர்களுக்கு மறுமை நாளில் நற்பலனாக அமையும்‘` என்று கூறினார்கள்.

என அலீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5058. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களிடையே ஒரு கூட்டத்தினர் கிளம்புவார்கள். அவர்களின் தொழுகையுடன் உங்களுடைய தொழுகையையும், அவர்களின் நோன்புடன் உங்களுடைய நோன்பையும், அவர்களின் நற்செயல்களுடன் உங்களின் நற்செயல்களையும் ஒப்பிட்டுப் பார்த்து உங்களுடைய தொழுகை, நோன்பு மற்றும் நற்செயல்களை அற்பமானவையாகக் கருதுவீர்கள். (அந்த அளவிற்கு அவர்களின் வழிபாடு களைகட்டியிருக்கும்.) மேலும், அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு

(அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபுறம்) வெளிப்பட்டு சென்று விடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிவிடுவார்கள்.
(அந்தப் பிராணியின் உடலைத் துளைத்து வெளிவந்ததற்கான அடையாளம் ஏதுமிருக்கிறதா என்று) அம்பின் முனையைப் பார்ப்பார். அதில் (அடையாளம்) ஏதும் காணமாட்டார். பிறகு அம்பின் (அடிப்பாகக்) குச்சியைப் பார்ப்பார். அதிலும் (அடையாளம்) ஏதும் காணமாட்டார். அம்பி(ன் முனையி)ல் நாணைப் பொருத்தும் இடம் தொடர்பாகவும் (அது வேட்டைப் பிராணியைத் தைத்தா) என்று சந்தேகம் கொள்வார். (அந்த அளவிற்கு அம்பில் எந்தச் சுவடும் இராது.)என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.
ஹதீஸ் 5059. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
குர்ஆனை ஓதி அதன்படி செயலும் ஆற்றக்கூடிய இறைநம்பிக்கையாளர் எலுமிச்சை போன்றவர் அதன் சுவையும் நன்று வாசனையும் நன்று. குர்ஆனை ஓதாமல் அதன்படி செயலாற்றி மட்டும் வருபவர், பேரீச்சம் (பழம்) போன்றவர். அதன் சுவை நன்று (ஆனால்,) அதற்கு மணமில்லை. குர்ஆனை ஓதுகிற நயவஞ்சகனின் நிலை, துளசிச் செடியின் நிலைக்கு ஒத்திருக்கிறது. அதன் வாசனை நன்று அதன் சுவையோ கசப்பானது. குர்ஆனை ஓதாத நயவஞ்சகனின் நிலை, குமட்டிக்காய் போன்றதாகும். அதன் சுவையும்'கசப்பானது' அல்லது'அருவருப்பானது' அதன் வாடையும் வெறுப்பானது.என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும் வரை குர்ஆனை ஓதுங்கள்.

ஹதீஸ் 5060. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
உங்களின் உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும் வரை குர்ஆனை ஓதுங்கள். (அதன் கருத்தை அறிவதில்) உங்களிடையே கருத்து வேறுபாடு எழுந்தால் அ(ந்த இடத்)தைவிட்டு எழுந்து (சென்று) விடுங்கள்.
என ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.
ஹதீஸ் 5061. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
உங்களின் உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும் வரை குர்ஆனை ஒதுங்கள். (அதன் கருத்தை அறிவதில்) நீங்கள் கருத்து வேறுபட்டால் அ(ந்த இடத்)தைவிட்டு எழுந்து (சென்று) விடுங்கள்.
என ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.
இது, மற்ற அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.
ஹதீஸ் 5062. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்
ஒருவர் (குர்ஆனின்) ஒரு வசனத்தை ஓதுவதை கேட்டேன். அவர் ஓதியதற்கு மாற்றமாக அந்த வசனத்தை நபி(ஸல்) அவர்கள் ஓத நான் கேட்டிருந்தேன். எனவே, அந்த மனிதரின் கையைப் பிடித்து அல்லாஹ்வின் தூதரிடம் அழைத்துச் சென்றேன். (விவரத்தை விசாரித்தறிந்த) நபி(ஸல்) அவர்கள், `நீங்கள் இருவருமே சரியாகத்தான் ஓதியிருக்கிறீர்கள்'` என்று கூறிவிட்டு, (ஒவ்வொருவரையும் பார்த்து, `அவ்வாறே) ஓதுங்கள்!"என்றார்கள்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா(ரஹ்) கூறினார்:
நபி(ஸல்) அவர்கள், `(வேற்றுமைகொள்ளாதீர்கள்!) ஏனெனில், உங்களுக்கு முன்னிருந்தவர்கள் (இப்படித்தான்) வேறுபட்டனர். அது அவர்களை அழித்துவிட்டது'` என்று கூறினார்கள் எனவே பெரும்பாலும் கருதுகிறேன்.

# அத்தியாயம் 67 திருமணம்

## மணமுடித்துக்கொள்ள ஆர்வமூட்டுதல்

அல்லாஹ் கூறினான்: உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக மணந்துகொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 04:03)

ஹதீஸ் 5063. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களின் துணைவியரின் வீடுகளுக்கு மூன்று பேர் கொண்ட குழுவினர் வந்து நபி (ஸல்) அவர்களின் வணக்க வழிபாடுகள் குறித்து வினாத் தொடுத்தனர். 2 அதுபற்றி அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டபோது, அவர்கள் நபி (ஸல்) அவர்களின் வணக்க வழிபாடுகளைக் குறைத்து மதிப்பிட்டது போல் தெரிந்தது. பிறகு (அவர்களே அதற்குச் சமாதானமும் கூறிக்கொண்டு), 'முன்பின் தவறுகள் மன்னிக்கப்பட்டுவிட்ட நபி (ஸல்) அவர்கள் எங்கே? நாம் எங்கே என்று சொல்லிக்கொண்டனர். அவர்களில் ஒருவர், '(இனிமேல்) நான் என்ன செய்யப்போகிறேன் என்றால், எப்போதும் இரவில் தொழுதுகொண்டே இருக்கப்போகிறேன்'' என்றார். இன்னொருவர், 'நான் ஒருநாள் கூட விடாமல் காலமெல்லாம் நோன்பு நோற்கப்போகிறேன்'' என்று கூறினார். மூன்றாம் நபர்'நான் பெண்களைவிட்டும் ஒதுங்கியிருக்கப் போகிறேன்'' என்று கூறினார். மூன்றாம் நபர்'நான் பெண்களைவிட்டும் ஒதுங்கியிருக்கப்போகிறேன். ஒருபோதும் மணந்துகொள்ளமாட்டேன்'' என்று கூறினார். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , (அந்தத் தோழர்களிடம்) வந்து, 'இப்படி இப்படியெல்லாம் பேசிக்கொண்டது நீங்கள்தாமே! அறிந்து கொள்ளுங்கள்: அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை விட அதிகமாக நான் அல்லாஹ்வை அஞ்சுபவன் ஆவேன். அல்லாஹ்வைப் பயந்து நடப்பவன் ஆவேன். ஆயினும், நான் நோன்பு நோற்கவும் செய்கிறேன், விட்டுவிடவும் செய்கிறேன் தொழுகவும் செய்கிறேன், உறங்கவும் செய்கிறேன் மேலும், நான் பெண்களை மணமுடித்தும் உள்ளேன். எனவே, என் வழிமுறையை கைவிடுகிறவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5064. உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்

நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா (ரலி) அவர்களிடம், 'அநாதை (ப் பெண்களை மணந்து அவர்) களின் விஷயத்தில் நீதி செலுத்த இயலாது என நீங்கள் அஞ்சினால், உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக நீங்கள் மணமுடித்துக கொள்ளலாம். ஆனால் (அவர்களிடையே) நீதமாக நடந்திட முடியாது என்று நீங்கள் அஞ்சுவீர்களாயின் ஒரு பெண்ணை மட்டும் மணந்துகொள்ளுங்கள் அல்லது உங்கள் கரங்கள் சொந்தமாக்கிக் கொண்ட பெண்ணையே மனைவியாக்கிக் கொள்ளுங்கள். நீதி தவறாமலிருப்பதற்கு இதுவே ஏற்றதாகும்'' எனும் (திருக்குர்ஆன் 04:3 வது) இறைவசனத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) (பின்வருமாறு) விளக்கமளித்தார்கள்.

என் சகோதரியின் (அஸ்மாவின்) புதல்வரே! இந்த (வசனத்தில் கூறப்பட்டுள்ள) பெண் தன் காப்பாளரின் மடியில் (பொறுப்பில்) வளர்கிற அநாதைப் பெண் ஆவாள். அவளுடைய செல்வத்தின் மீதும், அழகின் மீதும் ஆசைப்பட்டு அவளை (கர்ப்பளாரான) அவர், மற்றவர்கள் அவளுக்கு வழங்குவது போன்ற (விவாகக் கொடையான) மஹ்ரை விடக் குறைவானதை வழங்கி அவளை மணந்துகொள்ள விரும்புகிறார் (எனும் நிலையில் இருப்பவள் ஆவாள்.) இவ்விதம் காப்பாளர்கள் (தம் பொறுப்பிலிருக்கும்) அநாதைப் பெண்களுக்கு நிறைவான மஹ்ரை அளித்து அந்தப் பெண்களுக்கு நீதி செய்யாமல் அவர்களை மணந்துகொள்ள (இந்த

வசனத்தின் மூலம்) அவர்களுக்குத் தடை விதிக்கப்பட்டது. அந்தப் பெண்களைத் தவிரவுள்ள மற்ற (மனதுக்குப் பிடித்த) பெண்களை மணமுடித்துக்கொள்ளும்படி அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டது'' என்று பதிலளித்தார்கள்.

## "தாம்பத்தியம் நடத்த சக்தியுள்ளவர் திருமணம் செய்து கொள்ளட்டும்! ஏனெனில், அது (தகாத) பார்வையைக் கட்டுப்படுத்தும் கற்பைக் காக்கும்' எனும் நபிமொழியும், திருமண ஆசை இல்லாதவர் திருமணம் செய்து கொள்ளலாமா என்பதும்.

ஹதீஸ் 5065. அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) அறிவித்தார்

நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களுடன் இருந்துகொண்டிருந்தேன். அப்போது 'மினா'வில் அன்னாரை உஸ்மான்(ரலி) சந்தித்து, 'அபூ அப்தில் ரஹ்மானே! (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் அவர்களே!) தங்களிடம் எனக்கு ஒரு தேவை இருக்கிறது'' என்று கூறினார்கள். பிறகு அவர்கள் இருவரும் ஒரு தனியான இடத்திற்குச் சென்றார்கள். அங்கே உஸ்மான்(ரலி) (அப்துல்லாஹ்(ரலி) அவர்களிடம்)'அபூ அத்திர் ரஹ்மானே! உங்களின் இளமைக் காலத்தை நினைவுபடுத்துகிற ஒரு கன்னிப் பெண்ணை உங்களுக்கு நான் மணமுடித்துத் தருவதில் தங்களுக்கு விருப்பமுண்டா?' என்று கேட்டார்கள். திருமணம் தமக்குத் தேவையில்லை என்று அப்துல்லாஹ்(ரலி) கருதியபோது என்னை நோக்கி அவர்கள் சுட்டிக்காட்டி 'அல்கமாவே!"என்று அழைத்தார்கள். நான் அவர்களை அடைந்தேன். அப்போது (உஸ்மான்(ரலி) அவர்களிடம் அப்துல்லாஹ்) அவர்கள், நீங்கள் இப்படிச் சொல்லிவிட்டீர்கள். ஆனால், நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் பின்வருமாறு அல்லவா கூறினார்கள்:

"இளைஞர்களே! உங்களில் தாம்பத்தியம் நடத்த சக்தி பெற்றவர் மணந்துகொள்ளட்டும்! இயலாதோர் நோன்பு நோற்றுக் கொள்ளட்டும். ஏனெனில், நோன்பு (ஆசையைக்) கட்டுப்படுத்தக்கூடியதாகும்'' என்று தெரிவித்தார்கள்.

## தாம்பத்தியம் நடத்த சக்திபெறாதோர் நோன்பு நோற்கட்டும்!

ஹதீஸ் 5066. அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

நானும் அல்கமா மற்றும் அஸ்வத்(ரஹ்) ஆகியோரும் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் சென்றோம். அப்போது அப்துல்லாஹ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்: நாங்கள் (வசதி வாய்ப்பு) ஏதுமில்லாத இளைஞர்களாக நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களிடம்'இளைஞர்களே! தாம்பத்தியம் நடத்த சக்தி பெற்றோர் திருமணம் செய்து கொள்ளட்டும். ஏனெனில், அது (தகாத) பார்வையைக் கட்டுப்படுத்தும் கற்பைக் காக்கும். (அதற்கு) இயலாதோர் நோன்பு நோற்றுக்கொள்ளட்டும்! ஏனெனில், நோன்பு (ஆசையைக்) கட்டுப்படுத்தக் கூடியதாகும்'' என்று கூறினார்கள்.

## பலதார மணம்

ஹதீஸ் 5067. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அறிவித்தார்

(அன்னை) மைமூனா(ரலி) அவர்களின் ஜனாஸாவில் (இறுதிப் பிரார்த்தனையில்) நாங்கள்'சரிஃப்' எனும் இடத்தில் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுடன் கலந்து கொண்டோம். 6 அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:

இவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் துணைவியாராவார்.

இவரின் (உடல் வைக்கப்பட்டுள்ள) கட்டிலைத் தூக்கும்போது குலுக்கவோ அசைக்கவோ செய்யாதீர்கள் மென்மையுடன் (எடுத்துச்) செல்லுங்கள். நபி(ஸல்) அவர்களுக்கு ஒன்பது துணைவியர் இருந்தனர். எட்டுப்பேருக்கு இரவைப் பங்கிட்டு வந்தார்கள். ஒரேயொருவருக்கு மட்டும் பங்கிட்டுத் தரவில்லை.

ஹதீஸ் 5068. அனஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் ஒரே இரவில் தம் துணைவியர் அனைவரிடமும் சென்று வந்து விடுவார்கள். (அப்போது) அவர்களுக்கு ஒன்பது துணைவியர் இருந்தனர்.

இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 5069. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

என்னிடம் இப்னு அப்பாஸ்(ரலி), 'மணமுடித்தீரா?' என்று கேட்டார்கள். நான், 'இல்லை'' என்றேன். அவர்கள்' மணந்துகொள்ளுங்கள்! ஏனெனில், இந்தச் சமுதாயத்திலேயே சிறந்தவர் (ஆன முஹம்மத்(ஸல்) அவர்கள்) அதிகமான பெண்களை மணமுடித்தவராவார்'' என்று கூறினார்கள்.

## ஒருவர் ஒரு பெண்ணை மணந்து கொள்வதற்காக ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) மேற்கொண்டாலோ, ஏதேனும் நல்லறம் புரிந்தாலோ அவர் எண்ணியதே அவருக்குக் கிடைக்கும்.

ஹதீஸ் 5070. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எண்ணத்தைப் பொறுத்தே செயல் அமைகிறது:

ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கிறது. எனவே, எவருடைய ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (திருப்பதிப்படுத்துவதை) நோக்கமாகக் கொண்டு அமைகிறதோ, அவரின் ஹிஜ்ரத்(தின் பலனும் அவ்வாறே) அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் அமையும். எவருடைய ஹிஜ்ரத் அவர் அடைய விரும்பும் உலக(ஆதாய)த்தை, அல்லது அவர் மணக்கவிரும்பும் பெண்ணை நோக்கமாகக் கொண்டுள்ளதோ, அவரின் ஹிஜ்ரத்(தின் பலனும்) அதுவாகத்தான் இருக்கும்.

என உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்.

## குர்ஆனையும் இஸ்லாத்தையும் தம்முடன் வைத்துள்ள ஓர் ஏழைக்கு மணமுடித்து வைத்தல்.

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்துள்ள ஹதீஸ் உண்டு.

ஹதீஸ் 5071. இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போரில் கலந்து கொண்டிருந்தோம். அப்போது எங்களுடன் துணைவியர் எவரும் இருக்கவில்லை. எனவே, நாங்கள், 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் காயடித்து (ஆண்மை நீக்கம் செய்து) கொள்ளலாமா?' என்று கேட்டோம். அப்போது நபி(ஸல்) அவ்வாறு செய்ய வேண்டாமென எங்களைத் தடுத்தார்கள்.

## ஒருவர் தம் சகோதரிடம், என் இரண்டு மனைவியரில் யாரை நீ விரும்புகிறாயோ கூறு, உனக்காக அவளை விவாக விலக்குச் செய்து (திருமணம் முடித்துத்) தருகிறேன்' என்று சொல்வது.

இது குறித்து அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5072. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (நாடு துறந்து மதீனாவுக்கு) வந்தார்கள். அப்போது அவருக்கும் ஸஅத் இப்னு ரபீஉ அல் அன்சாரி(ரலி) அவர்களுக்கும் இடையே நபி(ஸல்) அவர்கள் சகோதரத்துவ உறவை ஏற்படுத்தினார்கள். இந்த ஸஅத் இப்னு ரபீஉ அல்அன்சாரி(ரலி) அவர்களுக்கு இரண்டு துணைவியர் இருந்தனர். எனவே ஸஅத்(ரலி) தம் வீட்டாரிலும் தம் செல்வத்திலும் சரிபாதியை அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), 'அல்லாஹ்

உங்களுக்கு, உங்கள் வீட்டாரிலும் செல்வத்திலும் சுபிட்சத்தை அருள்வானாக! எனக்குக் கடை வீதியைக் காட்டுங்கள்!''என்று கூறினார்கள்.
பிறகு கடைவீதிக்கு வந்து (வியாபாரம் செய்து) சிறிது பாலாடைக் கட்டியையும் சிறிது நெய்யையும் இலாபமாகப் பெற்றார்கள். சில நாள்களுக்குப் பிறகு நபி(ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) மீது (வாசனைத் திரவியத்தின்) மஞ்சள் அடையாளத்தைக் கண்டு, 'என்ன இது அப்துர் ரஹ்மானே?' என்று கேட்டார்கள். அதற்கு அப்துர்ரஹ்மான்(ரலி), 'நான் அன்சாரிப் பெண் ஒருவரை மணந்தேன்'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அவளுக்கு (மஹ்ராக) என்ன கொடுத்தாய்?' என்று கேட்க, 'ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவு தங்கத்தை'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா - மணவிருந்து கொடு!''என்று கூறினார்கள்.

## துறவறமும் (ஆண்மை நீக்கம் செய்து கொள்ள) காயடித்துக் கொள்வதும் வெறுக்கத்தக்கவை ஆகும்.

ஹதீஸ் 5073. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்
உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) துறவம் மேற்கொள்ள (விரும்பி அனுமதி கேட்டபோது) நபி(ஸல்) அவர்கள் அனுமதி மறுத்தார்கள். அவருக்கு (மட்டும்) நபி(ஸல்) அவர்கள் அனுமதியளித்திருந்தால் (ஆண்மை நீக்கம் செய்து கொள்வதற்காக) நாங்கள் காயடித்துக் கொண்டிருப்போம்.

ஹதீஸ் 5074. ஸஅத் இப்னு ஆபி வக்காஸ்(ரலி) அறிவித்தார்
உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) துறவறம் மேற்கொள்ள நபி(ஸல்) அவர்கள் அனுமதியளிக்கவில்லை. (அப்படி) துறவறம் மேற்கொள்ள அவருக்கு (மட்டும்) நபி(ஸல்) அவர்கள் அனுமதியளித்திருந்தால் (ஆண்மை நீக்கம் செய்துகொள்வதற்காக) நாங்கள் காயடித்துக் கொண்டிருப்போம்.

ஹதீஸ் 5075. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்
அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)'நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஓர் அறப்போரில் கலந்து கொண்டிருந்தோம். அப்போது எங்களுடன் (எங்கள் துணைவியரோ, வேறு பெண்களை மணந்துகொள்ளத் தேவையான செல்வமோ) ஏதும் இருக்கவில்லை. எனவே நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், '(ஆண்மை நீக்கம் செய்துகொள்ள) நாங்கள் காயடித்துக் கொள்ளலாமா?' என்று கேட்டோம். அவ்வாறு செய்யவேண்டாமென நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்தார்கள். அதன் பின்னர் ஆடைக்கு பதிலாகப் பெண்களை மணந்துகொள்ள எங்களுக்கு அனுமதியளித்தார்கள்'' என்று கூறிவிட்டு, பின்வரும் வசனத்தை அன்னார் எங்களுக்கு ஓதிக்காட்டினார்கள்:
இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்துள்ள தூய்மையான பொருட்களை நீங்கள் விலக்கிக் கொள்ளாதீர்கள். மேலும், நீங்கள் வரம்புமீறாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் வரம்பு மீறுவோரை நேசிப்பதில்லை. (திருக்குர்ஆன் 05:87)

ஹதீஸ் 5076. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
நான் (ஒருமுறை)'இறைத்தூதர் அவர்களே! நான் ஓர் இளைஞன் பெண்களை மணந்துகொள்ளத் தேவையான பொருள் ஏதும் என்னிடம் இல்லை. (இந்நிலையில்) நான் தவறான வழிக்குச் சென்றுவிடுவேனோ என என்னைப் பற்றி நானே அஞ்சுகிறேன். (நான் காயடித்துக்கொள்ளலாமா?)'' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் (பதிலளிக்காமல்) மௌனமாக இருந்தார்கள். மீண்டும் நான் முன் போன்றே கேட்டேன். அப்போதும் மௌனமாகவே இருந்தார்கள். பிறகும், நான் முன் போன்றே கேட்டேன்.

அப்போதும் மௌனமாகவே இருந்தார்கள். பிறகு (நான்காது முறையாக) முன்போன்றே நான் கேட்டபோது, `அபூ ஹுரைரா! நீங்கள் (வாழ்க்கையில்) சந்திக்கவிருக்கிற அனைத்தையும் (ஏற்கெனவே எழுதியாயிற்று அவற்றை) எழுதிய எழுதுகோலும் கூட காய்ந்துவிட்டது. எனவே, நீங்கள் காயடித்துக் கொள்ளுங்கள் அல்லது சும்மா இருங்கள். (எல்லாம் ஒன்று தான். )'` என்று கூறினார்கள்.

## கன்னிப்பெண்ணை மணமுடித்தல்.

இப்னு அப்பாஸ்(ரலி) ஆயிஷா(ரலி) அவர்களிடம்'உங்களைத் தவிர வேறு எந்தக் கன்னிப் பெண்ணையும் நபி(ஸல்) அவர்கள் மணந்துகொள்ளவில்லை'` என்று கூறினார்கள்.

என இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 5077. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) நான் நபி(ஸல்) அவர்களிடம்'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் ஒரு பள்ளத்தாக்கில் இறங்குகிறீர்கள். அதில் (கால்நடைகளினால்) உண்ணப்பட்டுப்போன ஒரு மரத்தையும் உண்ணப்படாத ஒரு மரத்தையும் காண்கிறீர்கள். இந்த இரண்டில் எந்த மரத்தில் தங்கள் ஒட்டகத்தை மேயவிடுவீர்கள்? கூறுங்கள்!"என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்'எதில் ஏற்கெனவே மேயவிடப்படவில்லையோ அதில்தான் (நான் என் ஒட்டகத்தை மேய்ப்பேன்)'` என்று பதிலளித்தார்கள்.

தம்மைத் தவிர வேறு எந்த கன்னிப் பெண்ணையும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மணக்கவில்லை என்ற கருத்தில் தான் ஆயிஷா(ரலி) இவ்வாறு கூறினார்கள்:

ஹதீஸ் 5078. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(என்னிடம்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: (நான் உன்னை மணப்பதற்கு முன்னால்) இரண்டு முறை உன்னை நான் கனவில் கண்டேன். ஒருவர் (உடைய தோற்றத்திலிருந்த வானவர்) உன்னை ஒரு பட்டுத் துண்டில் எடுத்துச் செல்கிறார். அப்போது அவர்'இவர் உங்கள் (வருங்கால) மனைவி'` என்று கூறினார். உடனே நான் அந்தப் பட்டுத் துண்டை விலக்கிப் பார்க்கிறேன். அதில் இருந்தது நீதான். அப்போது நான் (என் மனத்திற்குள்)'இக்கனவு அல்லாஹ்வின் தரப்பிலிருந்து வந்ததாயின், இதனை அல்லாஹ் நனவாக்குவான்'` என்று சொல்லிக்கொண்டேன்.

## கன்னிகழிந்த பெண்ணை மணமுடித்தல்.

(அன்னை) உம்மு ஹபீபா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியாரான) என்னிடம், `(முந்தைய கணவன்மார்களின் மூலம் உங்களுக்குப் பிறந்த) உங்களுடைய பெண் மக்களையோ, உங்களுடைய சகோதரிகளையோ திருமணம் செய்து கொள்ளும்படி என்னிடம் கோராதீர்கள்'` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5079. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

நாங்கள் (தபூக்) போரிலிருந்து நபி(ஸல்) அவர்களுடன் திரும்பிக் கொண்டிருந்தோம். அப்போது நான் மெதுவாகச் செல்லக்கூடிய என்னுடைய ஒட்டகத்தின் மீது இருந்துகொண்டு அவசரப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் எனக்குப் பின்னாலிருந்து வாகனம் ஒன்றில் வந்து சேர்ந்து தம்மிடமிருந்த கைத்தடியால் என்னுடைய ஒட்டகத்தைக் குத்தினார். உடனே என்னுடைய ஒட்டகம் நீ காணுகிற ஒட்டகங்களிலேயே மிக உயர் ரகமானது போன்று ஓடலாயிற்று. (உடனே நான் திரும்பிப் பார்த்தேன்.) அங்கு நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள். அவர்கள் (என்னிடம்,)'என்ன அவரசம் உனக்கு?' என்று கேட்டார்கள்.'நான் புதிதாகத் திருமணம் செய்துகொண்டவன்'` என்றேன். நபி(ஸல்) அவர்கள் கன்னிப் பெண்ணையா? (மணந்தாய்)?' என்று கேட்டார்கள். நான்'கன்னி கழிந்த பெண்ணைத் தான் (மணந்தேன்)'`

என்று சொன்னேன்.'கன்னிப் பெண்ணை மணந்துகொண்டு அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கூடிக்குலவி மகிழ்ந்திருக்கலாமே!"என்று கேட்டார்கள்.
பிறகு நாங்கள் (மதீனா வந்து சேர்ந்து ஊருக்குள்) நுழையப் போனபோது நபி(ஸல்) அவர்கள், '(நீங்கள் ஊர் வந்து சேர்ந்துவிட்ட தகவல்விட்டுப் பெண்களைச் சென்றடைய) இரவு இஷா - நேரம் வரும் வரை சற்று பொறுத்திருங்கள்! தலைவிரிகோலமாயிருக்கும் பெண்கள் தலைவாரிக்கொள்ளட்டும் (கணவனைப்) பிரிந்திருந்த பெண்கள் சவரக்கத்தியைப் பயன்படுத்தி(த் தங்களை ஆயத்தப்படுத்தி)க் கொள்ளட்டும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5080. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
நான் திருமணம் செய்துகொண்டேன். (சில நாள்களுக்குப் பின்) என்னிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'யாரை மணமுடித்தாய்?' என்று கேட்டார்கள். நான்'கன்னி கழிந்த ஒரு பெண்ணை மணமுடித்தேன்'' என்று பதிலளித்தேன். அதற்கவர்கள், 'உனக்கென்ன நேர்ந்தது? கன்னிப் பெண்களும் அவர்களின் உமிழ்நீரும் உனக்கு வேண்டாமா?' என்று கேட்டார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹாரிப் இப்னு திஸார்(ரஹ்) கூறினார்:
நான் இந்த ஹதீஸை அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களிடம் கூறினேன். அதற்கவர்கள், ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்ள் பின்வருமாறு கூறியதை நான் செவியேற்றேன் என்று கூறினார்கள்: என்னிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'கன்னிப் பெண்ணை மணந்துகொண்டு அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கூடிக்குலவி மகிழ்ந்திருக்கலாமே!"என்று கேட்டார்கள்.

## (வயதில்) சிறியவர்களைப் பெரியவர்களுக்கு மணமுடித்து வைத்தல்.

ஹதீஸ் 5081. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் (அவர்களின் புதல்வியும் சிறு வயதினருமான) ஆயிஷா(ரலி) அவர்களைப் பெண் கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி)'நான் தங்களின் சகோதரன் ஆயிற்றே!"என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மார்க்கத்தின் அடிப்படையிலும் வேதத்தின் அடிப்படையிலுமே நீங்கள் எனக்கு சகோதரர் ஆவீர்கள். உங்களுடைய புதல்வி எனக்கு மணமுடிக்க அனுமதிக்கப்பட்டுள்ளவர் தாம்'' என்று கூறினார்கள்.

## யாரை மணமுடிப்பது? பெண்களில் சிறந்தவர் யார்? தன் வாரிசைச் சுமப்பதற்காக (நல்ல பெண்ணை)த் தேர்ந்தெடுப்பது விரும்பத்தக்கது - இவையெல்லாம் கட்டாயமின்றி (விருப்பத்தின்பாற்பட்டவை).

ஹதீஸ் 5082. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒட்டகங்களில் பயணம் செய்த (அரபுப்) பெண்களிலேயே சிறந்தவர்கள், நல்ல குறைஷிக்குல பெண்களாவர். அவர்கள் குழந்தைகளின் மீது அதிகப் பாசம் கொண்டவர்கள் தம் கணவனின் செல்வத்தை அதிகமாகப் பேணிக் காப்பவர்கள்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அடிமைப் பெண்களை அமர்த்திக்கொள்வதும் ஒருவர் தம் அடிமைப் பெண்ணை விடுதலை செய்து மணந்துகொள்வதும்.

ஹதீஸ் 5083. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒரு மனிதரிடம் அடிமை(பணி)ப் பெண் ஒருத்தி இருந்து, அவளுக்கு அவர் கல்வி கற்பித்து, அதையும் நன்கு கற்பித்து, அவளுக்கு ஒழுக்கம் கற்பித்து, அதையும் அழகுற (நவீனமாகக்) கற்பித்து, பிறகு அவளை (அடிமைத்தளையிலிருந்து) விடுதலையும் செய்து, திருமணமும்

செய்தால் அவருக்கு (விடுதலை செய்தது மற்றும் மணந்ததற்காக) இரண்டு நற்பலன்கள் கிடைக்கும்.
வேதக்காரர்களில் உள்ள ஒருமனிதர் தம் (சமூகத்திற்கு நியமிக்கப்பட்டிருந்த) இறைத்தூதரையும் நம்பிக்கை கொண்டு என்னையும் (இறைத்தூதரென) நம்பிக்கை கொள்வாராயின் அவருக்கும் இரண்டு நற்பலன்கள் கிடைக்கும்.
மேலும், ஓர் அடிதை தன் எஜமானுக்குச் செய்யவேண்டிய கடமையையும் தன் இறைவனின் கடமையையும் (ஒழுங்காக) நிறைவேற்றுவாராயின் அவருக்கும் இரண்டு நற்பலன்கள் கிடைக்கும்.
என அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.
(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சாலிஹ் இப்னு சாலிஹ் (ரஹ்) கூறினார்:)
(இந்த நபிமொழியை எனக்கு அறிவித்த) ஷஅபி (ரஹ்), `பிரதிபலன் ஏதுமின்றி (உங்களுக்கு நான் அறிவித்த) இவற்றைப் பெற்றுக்கொள்ளுங்கள். இதைவிடச் சிறிய விஷயங்களை அறிந்துகொள்வதற்காகவெல்லாம் சிலர் மதீனா வரை பயணம் சென்றதுண்டு' ' என்றார்கள்.
இன்னோர் அறிவிப்பில் (அடிமைப் பெண்ணின் எசமான் குறித்து), `அவளை அவர் விடுதலை செய்து, பின்னர் அவளுக்கு மஹ்ரும் கொடுத் (து மணமுடித்)தால் (...இரண்டு நற்பலன்கள் உண்டு)' ' என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 5084. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
(இறைத்தூதர்) இப்ராஹீம் (அலை) அவர்கள் மூன்று முறையே உண்மைக்குப் புறம்பாகப் பேசினார்கள். தம்முடன் (துணைவியார்) சாரா இருக்க இப்ராஹீம் (அலை) அவர்கள் ஒரு சர்வாதிகார அரசனைக் கடந்து சென்றார்கள்.
இதை அபூ ஹுரைரா (ரலி) அறிவித்துவிட்டு, இந்த ஹதீஸை முழுமையாக அறிவித்தார்கள். அதில், `ஹாஜர் அவர்களை சாரா அவர்களுக்கு (பணியாளாகக்) கொடுத்தான்' ' என்றும், `அல்லாஹ் அந்த இறைமறுப்பாள (னான அரச) னின் கரத்தைத் தடுத்து, ஆஜரை எனக்குப் பணியாளாகக் கொடுத்தான்' ' என சாரா கூறினார்கள் என்றும் காணப்படுகிறது.
அபூ ஹுரைரா (ரலி) கூறினார்: வான் மழை (பிரதேச) மக்களே! அவர் (ஹாஜர்)தாம் உங்கள் அன்னை.

ஹதீஸ் 5085. அனஸ் (ரலி) அறிவித்தார்
நபி (ஸல்) அவர்கள் கைபருக்கும் மதீனாவுக்கும் இடையில் (உள்ள 'சத்துஸ் ஸஹ்பா' எனுமிடத்தில் 'ஸஃபிய்யா பின்த் ஹுயை' அவர்களை மணமுடித்து) மூன்று நாள்கள் தங்கினார்கள். அங்கு ஸஃபிய்யா (ரலி) அவர்களுடன் தாம்பத்திய உறவுகொண்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களின் 'வலீமா' -மணவிருந்துக்கு முஸ்லிம்களை அழைத்தேன். அந்த விருந்தில் ரொட்டியோ, இறைச்சியோ இருக்கவில்லை.
நபி (ஸல்) அவர்கள் தோல் விரிப்பைக் கொண்டு வருமாறு உத்தரவிட்டு (அவ்வாறே அது கொண்டு வந்து விரிக்கப்பட்டபோது) அதில் பேரீச்சம்பழம், பாலாடைக்கட்டி, நெய் ஆகியவற்றை இட்டார்கள். ('ஹைஸ்' எனும் எளிய உணவு துரிதமாகத் தயாரானது.) இதுவே நபி (ஸல்) அவர்களின் வலீமா 'மணவிருந்தாக அமைந்தது.
அப்போது முஸ்லிம்கள், `ஸஃபிய்யா (ரலி) இறைநம்பிக்கையாளர்களின் அன்னை (-நபியவர்களின் துணைவி-)யரில் ஒருவரா? அல்லது நபி (ஸல்) அவர்களின் அடிமைப் பெண்ணா?' என்று பேசிக் கொண்டனர். அப்போது 'ஸஃபிய்யா (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் 'ஹிஜாப்' - திரையிட் (டுக் கொள்ளும்படி கட்டளையி)ட்டால், அவர் இறைநம்பிக்கையாளர்களின் அன்னையரில் (-நபி (ஸல்) அவர்களின் துணைவியரில்-) ஒருவர் அப்படி அவர்களுக்குத் திரை (யிட்டுக் கொள்ளும்படி கட்டளை)யிடாவிட்டால், அவர் அடிமைப் பெண்களில் ஒருவர்' ' என்று (மக்களில் சிலர்) கூறினர்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் புறப்பட்டபோது தமக்குப் பின்னால் ஸஃபிய்யா அவர்களுக்காக இருக்கையமைத்து இடம்கொடுத்து (அவர்கள் அமர்ந்த பிறகு) ஸஃபிய்யா(ரலி) அவர்களுக்கும் மக்களுக்குமிடையே திரையிட்டு இழுத்து (மூடி)விட்டார்கள்.

## ஒருவர் தம் அடிமைப்பெண்ணை விடுதலை செய்வதையே மஹ்ர் ஆக்குவது.

ஹதீஸ் 5086. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(கைபர் போர்க் கைதியான) ஸஃபிய்யாவை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் விடுதலை செய்தார்கள். மேலும், அவர்களை விடுதலை செய்ததையே மஹ்ர் (விவாகக் கொடையாக) ஆக்கி (தாமே அவர்களை மணந்து) கொண்டார்கள்.

## ஏழைக்கு மணமுடித்து வைத்தல்.

அல்லாஹ் கூறினான்:

(ஆணாயினும் பெண்ணாயினும்) உங்களில் எவருக்கு வாழ்க்கைத் துணை இல்லையோ அவர்களுக்குத் திருமணம் செய்துவிடுங்கள். (அவ்வாறே வாழ்க்கைத் துணையில்லாத) உங்கள் அடிமைகளிலுள்ள நல்லவர்களுக்கும் திருமணம் செய்து வையுங்கள். அவர்கள் ஏழைகளாயிருந்தால், அல்லாஹ் தன்னுடைய அருளைக்கொண்டு அவர்களைச் சீமானாக்கிவைப்பான். (கொடை கொடுப்பதில்) அல்லாஹ் மிக விசாலமானவனும் (மனிதர்களின் நிலைமையை) நன்கு அறிந்தோனுமாக இருக்கிறான். (திருக்குர்ஆன் 24:32)

ஹதீஸ் 5087. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்

ஒரு பெண்மணி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிட (-மஹ்ரின்றி என்னைத் தாங்கள் மணந்துகொள்ள-) வந்துள்ளேன்'' என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்தப் பெண்ணை நோக்கி தம் பார்வையை உயர்த்தி நேராகப் பார்த்துவிட்டு பார்வையைத் தாழ்த்திக்கொண்டார்கள். பிறகு, தம் தலையைத் தொங்கவிட்டார்கள்.

தம் விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எந்த முடிவுக்கும் வரவில்லை என்பதைக் கண்ட அந்தப் பெண்மணி, (அந்த இடத்திலேயே) அமர்ந்துகொண்டார். அப்போது நபித்தோழர்களில் ஒருவர் எழுந்து, 'இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு இவர் தேவையில்லையென்றால் எனக்கு இவரை மணமுடித்துவையுங்கள்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் (அவரிடம்)'(மஹ்ராகச் செலுத்த) உம்மிடம் பொருள் ஏதேனும் இருக்கிறதா?' என்று கேட்டார்கள். அதற்கவர், 'அல்லாஹ்வின் மீதாணையாக! (என்னிடம் ஏதும்) இல்லை, இறைத்தூதர் அவர்களே!"என்று பதில் கூறினார்.

நபி(ஸல்) அவர்கள், 'உம் குடும்பத்தாரிடம் சென்று ஏதாவது கிடைக்குமா என்று பார்!"என்றார்கள்.

அவர் போய் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து, 'இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதும் கிடைக்கவில்லை'' என்றார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'இரும்பாலான ஒரு மோதிரமாவது (ம்டைக்குமா எனப்)பார்!"என்றார்கள்.

அவர் மீண்டும் சென்றுவிட்டுத் திரும்பி வந்து, 'அல்லாஹ்வின் மீதாணையாக! (ஒன்றும்) கிடைக்கவில்லை, இறைத்தூதர் அவர்களே! இரும்பாலான மோதிரம் கூடக் கிடைக்கவில்லை ஆனால், இதோ இந்த என்னுடைய வேட்டி உள்ளது'' என்றார்.

-அறிவிப்பாளர் ஸஹ்ல்(ரலி) கூறினார்: அவரிடம் ஒரு மேல் துண்டு கூட இல்லை எனவேதான் தம் வேட்டியில் பாதியை அவளுக்குத் தருவதாகக் கூறினார்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'உம்முடைய வேட்டியை வைத்துக் கொண்டு என்ன செய்வாய்? அந்த வேட்டியை நீ உடுத்திக் கொண்டால் அவளின் மீது அதில் ஏதும் இருக்காது. அதை அவள் உடுத்திக் கொண்டால் உன் மீது அதில் ஏதும் இருக்காது.

(உம்முடைய வேட்டியை கொடுத்துவிட்டு என்ன செய்யப்போகிறாய்?)‘ ‘ என்று கேட்டார்கள். பிறகு அவர் நெடுநேரம் (அங்கேயே) அமர்ந்திருந்துவிட்டு எழுந்தார். அவர் திரும்பிச் செல்வதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கண்டபோது அவரை அழைத்து வருமாறு கட்டளையிட்டார்கள்.
அவ்வாறே அவர் அழைத்துவரப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள், ‘உம்முடன் குர்ஆனில் என்ன (அத்தியாயம் மனப்பாடமாக) உள்ளது‘ ‘ என்று கேட்டார்கள்.
அவர், ‘(குர்ஆனில்) இன்ன இன்ன அத்தியாயங்கள் என்னுடன் உள்ளன‘ ‘ என்று எண்ணி எண்ணிக் கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள், ‘அவற்றை நீ மனப்பாடமாக ஓதுவாயா?’ என்று கேட்டார்கள். ’ஆம் (ஓதுவேன்)‘ ‘ என்று அவர் பதிலளித்தார்.
நபி(ஸல்) அவர்கள், ‘உம்முடனுள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இப்பெண்ணை உமக்கு மணமுடித்துக் கொடுத்துவிட்டேன். நீர் செல்லலாம்!”என்று கூறினார்கள்.

## (மணமக்களிடையே) மார்க்கப் பொருத்தம் (பார்த்தல்.)

அல்லாஹ் கூறினான்:
மேலும், (ஒருதுளி) நீரிலிருந்து மனிதனைப் படைத்தவன் அவனே! பிறகு, (பிறப்பினால் வந்த) இரத்த உறவையும், (திருமணத்தால் வந்த) சம்பந்தி உறவையும் அவன் ஏற்படுத்தினானன். உம்முடைய இறைவன் பெரும் ஆற்றல் மிக்கவனாய் இருக்கிறான். (திருக்குர்ஆன் 25:54)

ஹதீஸ் 5088. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்களுடன் பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களில் ஒருவரான அபூ ஹுதைஃபா இப்னு உத்பா(ரலி), (பாரசீகரான மஅகில் என்பவரின் புதல்வர்) சாலிம் அவர்களைத் தம் வளர்ப்பு மகனாக ஆக்கினார்கள். மேலும், அவருக்குத் தம் சகோதரர் வலீத் இப்னு உத்பாவின் மகள் ஹிந்த் என்பாரைத் திருமணமும் செய்து வைத்தார்கள். சாலிம் ஓர் அன்சாரிப் பெண்ணின் அடிமையாக இருந்தவர். நபி(ஸல்) அவர்கள் ஸைதைத் தம் வளர்ப்பு மகனாக ஆக்கிக்கொண்டது போல் (சாலிமை அபூ ஹுதாஃபா(ரலி) வளர்ப்பு மகனாக ஆக்கிக்கொண்டார்கள்.
மேலும், அறியாமைக் காலத்தில் ஒருவரை அவரின் வளர்ப்புத் தந்தை(யின் பெயர்) உடன் இணைத்து மக்கள் அழைக்கும் வழக்கமும், அவரின் சொத்துக்கு வாரிசாக (வளர்ப்பு மகனை) நியமிக்கும் வழக்கமும் இருந்தது.
எனவே, ‘நீங்கள் (வளர்த்த) அவர்களை அவர்களின் (உண்மையான) தந்தை(யின் பெயர்) உடன் இணைத்து அழையுங்கள். அதுதான் அல்லாஹ்விடம் மிக நீதியாக இருக்கிறது. அவர்களின் தந்தையரை நீங்கள் அறியாவிட்டால், அவர்கள் உங்களுடைய மார்க்கச் சகோதரர்களாகவும் உங்கள் மார்க்க சிநேம்தர்களாகவும் இருக்கிறார்கள்‘ ‘ எனும் (திருக்குர்ஆன் 33:5 வது) வசனத்தை அல்லாஹ் அருளும் வரையில் (இந்த வழக்கம் நீடித்தது.)
பின்னர் வளர்ப்புப் பிள்ளைகள் அவர்களின் சொந்தத் தந்தையாருடன் இணைக்கப்பட்டனர். எவருக்குத் தந்தையருடன் இணைக்கப்பட்டனர். எவருக்குத் தந்தை (இருப்பதாக) அறியப்படவில்லையோ அவர் மார்க்க சிநேம்தராகவும் மார்க்கச் சகோதராகவும் ஆனார்.
பிறகு, அபூ ஹுதைஃபா இப்னு உத்பா(ரலி) அவர்களின் துணைவியார் சஹ்லா பின்த் சுஹைல்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்து, ‘இறைத்தூதர் அவர்களே! நாங்கள் சாலிமை (எங்களுடைய) பிள்ளையாகவே கருதிக்கொண்டிருந்தோம். (வளர்ப்பு மகனான) அவர் விஷயத்தில் அல்லாஹ் தாங்கள் அறிந்துள்ள (திருக்குர்ஆன் 33:5 வது) வசனத்தை அருளிவிட்டான்‘ ‘ என்று தொடங்கும் ஹதீஸை (அறிவிப்பாளர் அபுல் யமான் இப்னு ஹகம்(ரஹ்) முழுமையாகக்) கூறினார்கள்.

ஹதீஸ் 5089. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் தந்தையின் சகோதரர் புதல்வியான) ளுபாஆ பின்த் ஸுபைர்(ரலி) அவர்களிடம் சென்று, 'நீ ஹஜ் செய்ய விரும்புகிறாய் போலும்! என்றார்கள். அதற்கு அவர், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இன்னும் நோயாளியாகவே இருக்கிறேன்'' என்று கூறினார்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் அவரிடம், 'நீ முன் நிபந்தனையிட்டு ஹஜ்ஜுக்காக 'இஹ்ராம்' கட்டி, இறைவா! நீ எந்த இடத்தில் (ஹஜ்ஜின் கிரியைகளைச் செய்ய முடியாதவாறு) என்னைத் தடுக்கிறாயோ அதுதான் நான் இஹ்ராமிலிருந்து விடுபடும் இடமாகும்'' என்று சொல்லிவிடு!' எனக் கூறினார்கள்.

ளுபாஆ(ரலி) மிக்தாத் இப்னு அஸ்வத்(ரலி) அவர்களின் துணைவியாராவார்.

ஹதீஸ் 5090. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான்கு நோக்கங்களுக்காக ஒரு பெண் மணமுடிக்கப்படுகிறாள்:

1. அவளுடைய செல்வத்திற்காக
2. அவளுடைய குடும்பப் பாரம்பரியத்திற்காக.
3. அவளுடைய அழகிற்காக
4. அவளுடைய மார்க்க (நல்லொழுக்க)த்திற்காக. எனவே, மார்க்க (நல்லொழுக்க)ம் உடையவளை (மணந்து) வெற்றி அடைந்து கொள்! (இல்லையேல்) உன்னிரு கரங்களும் மண்ணாகட்டும்!

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5091. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

ஒரு (பணக்கார) மனிதர் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் சென்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்), 'இவரைப் பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். தோழர்கள், 'இவர் பெண் கேட்டால் இவருக்கு மணமுடித்து வைக்கவும், இவர் பரிந்துரைத்தால் அதனை ஏற்கவும், இவர் பேசினால் செவிசாய்க்கப்படவும் தகுதியான மனிதர்'' என்று கூறினர். பிறகு நபி(ஸல்) அவர்கள் சிறிது நேரம் மௌனமாயிருந்தார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் அருகில் முஸ்லிம்களில் ஓர் ஏழை மனிதர் சென்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'இவரைக் குறித்து நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். தோழர்கள், 'இவர் பெண் கேட்டால் இவருக்கு மணமுடித்து வைக்காமலும், இவர் பரிந்துரைத்தால் அது ஏற்கப்படாமலும், இவர் பேசினால் செவிதாழ்த்தப்படாமலும் இருக்கத் தகுதியானவர்'' என்று கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'அவரைப் போன்ற (வசதி படைத்த)வர்கள் இந்தப் பூமி நிரம்ப இருந்தாலும் (அவர்கள் அனைவரையும் விட) இந்த ஏழையே மேலானவர்' எனக் கூறினார்கள்.

## பொருளாதாரத்தில் பொருத்தம் பார்ப்பதும், ஏழைக்குப் பணக்காரியை மணமுடித்து வைப்பதும்.

ஹதீஸ் 5092. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம், 'அநாதை(ப் பெண்களை மணந்துகொண்டு அவர்)களின் விஷயத்தில் நீதி செலுத்த இயலாது என நீங்கள் அஞ்சினால்.!"எனும் (திருக்குர்ஆன் 04:3 வது) இறைவசனம் குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள் கூறினார்கள்:

என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! இந்த (வசனத்தில் கூறப்பட்டுள்ள) பெண் தன் காப்பாளரின் மடியில் (பொறுப்பில்) வளர்ந்து வருகிற அநாதைப் பெண் ஆவாள்.

அப்பால் அவளுடைய அழகையும் செல்வத்தையும் கண்டு ஆசைப்பட்டு (காப்பாளரான) அவர் அவளை மணமுடித்துக்கொள்ள) விரும்புகிறார். (ஆனால்) அவளுக்குரிய (தகுதியான) மஹ்ரை

(விவாக கொடையை)க் குறைத்துவிட விரும்புகிறார். இத்தகைய பெண்களுக்குரிய உரிய மஹ்ரை நிறைவாகச் செலுத்தும் விஷயத்தில் நீதி தவறாது நடந்தால் தவிர, அவர்களை மணந்து கொள்ளக்கூடாது என்று (காப்பாளர்களுக்கு இவ்வசனத்தின் மூலம்) தடைவிதிக்கப்பட்டது. மேலும், இதரப் பெண்கள் அல்லாத (மனதுக்குப் பிடித்த) இதரப் பெண்களை மணந்துகொள்ளும்படியும் கட்டளையிடப்பட்டது.

இதற்குப் பின்பும் மக்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டார்கள். உயர்ந்தவனான அல்லாஹ் அப்போது, `பெண்களின் விஷயத்தில் தீர்ப்பு வழங்கும்படி (நபியே!) உங்களிடம் கோருகின்றனர்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:127 வது) வசனத்தை அருளினான். அதாவது'ஓர் அநாதைப் பெண் அழகும் செல்வமும் உள்ளவளாக இருந்தால் நிறைவான மஹ்ரை (விவாகக் கொடையை) அளித்து அவளை மணந்துகொள்ளவும் அவளுடன் உறவு முறையை ஏற்படுத்திக் கொள்ளவும் காப்பாளர்கள் விரும்புகின்றனர். (அதே சமயம்) அவள் செல்வமும் அழகும் குறைந்தவளாக இருப்பதால் விரும்பத்தகாதவளாக இருப்பின், அவளைவிட்டுவிட்டு வேறு பெண்களைப் பிடித்துக்கொள்கின்றனர்' என்று அல்லாஹ் அவர்களுக்கு அருளினான்.

"அவர்கள் அப்பெண்ணை விரும்பாத நேரம் (மணந்துகொள்ளாமல்)விட்டு விடுவது போல், அவளை விரும்பும் நேரம் மஹ்ர் விஷயத்தில் அவளுடைய உரிமையை நிறைவாக வழங்கி, அவளிடம் நீதியுடன் நடந்துகொண்டாலே ஒழிய அவளை மணந்து கொள்ளும் உரிமை அவர்களுக்கு இல்லை'' என்று இவ்வசனத்தின் மூலம் இறைவன் தெரிவித்தான்.

## பெண்ணின் அப சகுனத்திலிருந்து தவிர்ந்து கொள்ளல்.

அல்லாஹ் கூறினான்: இறைநம்பிக்கையாளர்களே! உங்களுடைய துணைவியரிலும், பிள்ளைகளிலும் (உங்களை இறைவழியிலிருந்து திருப்பிவிடும்) பகைவர்கள் உங்களுக்கு உள்ளனர். (திருக்குர்ஆன் 64:14)

ஹதீஸ் 5093. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அபசகுனம் என்பது (எதிலாவது இருக்கமுடியும் என்றால்) பெண், வீடு, குதிரை ஆகிய மூன்று விஷயங்களில் தான் (இருக்க முடியும்).

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5094. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களுக்கு அருகில் மக்கள் அப சகுனம் குறித்துப் பேசினர். அப்போது நபி(ஸல்) அவர்கள் அப சகுனம் எதிலேனும் இருக்குமானால், வீட்டிலும் பெண்ணிலும் குதிரையிலும் தான் இருக்கும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5095. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(அப சகுனம் எனும்) அது எதிலாவது இருக்குமானால் குதிரையிலும் பெண்ணிலும் குடியிருப்பிலும் தான்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5096. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பெண்களைத் திருப்திப்படுத்துவதற்காக எதையும் செய்யும் துணிகின்ற) ஆண்களுக்கு (அந்த)ப் பெண்களை விட அதிகமாக இடரளிக்கும் (வேறு) எந்தச் சோதனையையும் என(து வாழ்நாளு)க்குப் பிறகு நான்விட்டுச் செல்லவில்லை.

என உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

## ஓர் அடிமை, சுதந்திரமான பெண்ணை மணந்து கொள்வது.

ஹதீஸ் 5097. ஓர் அடிமை, சுதந்திரமான பெண்ணை மணந்து கொள்வது.

ஹதீஸ் 5097. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(அடிமையாயிருந்து விடுதலை பெற்ற) பரீராவினால் மூன்று வழிமுறைகள் (நமக்கு) கிட்டின:
1. அவர் விடுதலைசெய்யப்பட்டபோது (தம் அடிமைக் கணவருடனான உறவைத் தொடரவும் முறித்துக் கொள்ளவும்) அவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.
2. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,`விடுதலை செய்வதவருக்கே அடிமையின் வாரிசுரிமை கிட்டும்'` என்றார்கள்.
3. நெருப்பின் மேல் பாத்திரம் இருக்கும் நிலையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது அவர்களுக்கு முன்னால் ரொட்டியும் வீட்டிலிருந்த குழப்பம் வைக்கப்பட்டது. உடனே அவர்கள், `நான் (நெருப்பின் மேல்) பாத்திரத்தைக் கண்டேனே (அது என்ன வாயிற்று?)'` என்று கேட்டார்கள். அதற்கு, `அது பரீராவுக்குத் தர்மமாகக் கொடுக்கப்பட்ட இறைச்சி, தர்மப் பொருளைத் தாங்கள் உண்ணமாட்டீர்களே!"என்று செல்லப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்'அது பரீராவிற்குத் தான் தர்மம். நமக்கு அது அன்பளிப்பு!"என்று கூறினார்கள்.

## ஒருவர் நான்கு பெண்களைவிட அதிகமானவர்களை மணக்கக் கூடாது.

அல்லாஹ் கூறினான்: உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக மணந்துகொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 04:03)
அதாவது'இரண்டிரண்டாக, அல்லது மும்மூன்றாக, நான்கு நான்காக மணமுடித்துக் என அலீ இப்னு ஹுஸைன்(ரஹ்) கூறினார்கள்.
இதைப் போன்றுதான்'இரண்டிரண்டு, மும்மூன்று, நான்கு இறக்கைகளை உடைய வானவர்களை'` எனும் (திருக்குர்ஆன் 35:1 வது) வசனமும்.

ஹதீஸ் 5098. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
ஓர் அநாதைப் பெண் ஒரு மனிதரிடம் (அவரின் பொறுப்பில்) இருப்பாள். அவரே அவளுடைய காப்பாளராவார். அவளை அவர் அவளுடைய செல்வத்திற்காக மணந்த அவளுடன் மோசமான முறையில் உறவாடுவார் அவளுடைய செல்வம் தொடர்பான விஷயத்தில் நீதி செலுத்தமாட்டார். இத்தகைய பெண்ணைக் குறித்தே இந்த (திருக்குர்ஆன் 04:3 வது) வசனம் பேசுகிறது. அந்தக் காப்பாளர், (இவளைவிட்டுவிட்டு) இவளல்லாத அவரின் மனதுக்குப் பிடித்த வேறு பெண்களை இரண்டிரண்டாக, அல்லது மும்மூன்றாக, அல்லது நான்கு நான்காக மணக்கட்டும் (என்று இவ்வசனத்தில் இறைவன் கூறுகிறான்)
"உங்களுக்குப் பாலூட்டிய செவிலித் தாய்மார்களையும் (நீங்கள் மணப்பது விலக்கப்பட்டுள்ளது)'` (எனும் 4:23 வது இறைவசனம்)

## இரத்த உறவினால் மணமுடிக்கக் கூடாதவர்களைப் பால்குடி உறவினாலும் மணமுடிக்கக் கூடாது.

ஹதீஸ் 5099. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்
(ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் இருந்தார்கள். நான் ஹஃப்ஸா(ரலி) அவர்களின் வீட்டில் (யாரோ) ஒருவர் உள்ளே செல்ல அனுமதி கேட்கும் குரலைக் கேட்டேன். அப்போது நான் (நபி(ஸல்) அவர்களிடம்) இறைத்தூதர் அவர்களே! இதோ உங்கள் (துணைவியார் ஹஃப்ஸாவின்) வீட்டுக்குள் செல்ல ஒருவர் அனுமதி கேட்கிறார்'` என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `அவர் இன்னார் என கருதுகிறேன்'` என்று ஹஃப்ஸாவின் பால்குடித் தந்தையின் சகோதரர் குறித்துக் கூறினார்கள். நான்'இன்னார் உயிருடன் இருந்தால் அவர் என்னைத் திரையின்றி சந்தித்திருக்க முடியும்தானே!"என்று என்னுடைய பால்குடித் தந்தையின் சகோதரர் குறித்துக கேட்டேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,`ஆம்! (முடியும்.) பிறப்பு (இரத்த உறவு) எந்த உறவுகளையெல்லாம் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவுகளாக்குமோ அந்த உறவுகளையெல்லாம் பால் குடியும் நெருங்கியவையாக ஆக்கிவிடும்'` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5100. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம்'தாங்கள் ஹம்ஸா(ரலி) அவர்களின் புதல்வியை மணந்துகொள்ளக் கூடாதா?' என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள், 'அவள் பால்குடி உறவு முறையினால் எனக்குச் சகோதரர் மகள் ஆவாள்'' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5101. உம்மு ஹபீபா பின்த் அபீ சுஃப்யான்(ரலி) கூறினார்

நான் (என் கணவர்) நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! என் சகோதரியான அபூ சுஃப்யானின் மகளை தாங்கள் மணந்துகொள்ளுங்கள்!"என்று கூறினேன். அதற்கவர்கள், 'இதை நீயே விரும்புகிறாயா?' என்று (வியப்புடன்) கேட்டார்கள். நான், 'ஆம்! (மனைவியென்று) தங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் இல்லையே! (தங்களுக்குத் துணைவியாகும்) பாக்கியத்தில் என்னுடன் என் சகோதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்'' என்றேன்.

அதற்கு அவர்கள், 'என்னை அ(வளை மணப்ப)து அனுமதிக்கப்பட்டதன்று'' என்றார்கள். நான்'தாங்கள் அபூ ஸலமாவின் புதல்வியை மணக்க விரும்புவதாக எங்களுக்குச் சொல்லப்பட்டதே!"என்று கேட்டேன்.'(அதாவது என் துணைவியார்) உம்முஸலமாவிற்கு (முந்தைய கணவன் மூலம்) பிறந்த மகளையா?' என நபியவர்கள் கேட்க, நான்'ஆம்' என்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அவள் (-உம்முஸலமாவின் மகள்-) என்னுடைய மடியில் வளர்ப்பு மகளாக இருந்து வருகிறாள். அப்படி) இல்லாவிட்டாலும் கூட, அவளை நான் மணக்க முடியாது. (ஏனென்னில்) அவள் பால்குடி உறவு முறையில் என் சகோதரின் புதல்வியாவாள். எனக்கும் (அவளுடைய தந்தை) அபூ ஸலமாவுக்கும் ஸுவைபா பாலூட்டினார். எனவே, என்னிடம் உங்கள் பெண் மக்களையோ, உங்கள் சகோதரிகளையோ (மணந்துகொள்ளுமாறு) பரிந்துரைக்க வேண்டாம்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் உர்வா(ரஹ்) கூறினார்:

ஸுவைபா, அபூ லஹபின் அடிமைப் பெண்ணாவார். அபூ லஹப் அவரை விடுதலை செய்திருந்தார். அவர் நபி(ஸல்) அவர்களுக்குப் பாலூட்டினார். அபூ லஹப் இறந்தபோது அவரின் குடும்பத்தாரில் ஒருவர் அவரைக் (கனவில்) கண்டார். அபூ லஹப் மோசமான நிலையில் அவருக்குக் காட்டப்பட்டார். அபூ லஹபிடம், '(மரணத்திற்குப் பிறகு) நி எதிர்கொண்டது என்ன?' என்று அவர் கேட்டார். உங்களைவிட்டுப் பிரிந்த பின் ஒரு சுகத்தையும் நான் சந்திக்கவில்லை. ஆயினும், நான் ஸுவைபாவை விடுதலை செய்ததற்குப் பிரதியாக இந்த விரல்களினூடே எனக்கு நீர் புகட்டப்படுகிறது'' என்று கூறினார்.

'பால்குடி என்பது இரண்டு வயதுக்குப் பின்கிடையாது' என்போரின் கருத்து.

(அல்லாஹ் கூறினான்:) தம் குழந்தைகளுக்குப்) பால்குடியை முழுமையாக்க விரும்புகிற(கண)வர்களுக்காகத் தாய்மார்கள் தம் குழந்தைகளுக்கு நிறைவான இரண்டாண்டுகள் அமுதூட்டுவார்கள். (திருக்குர்ஆன் 02:233)

## பால்குடியில் சிறிதளவும் அதிகளவும் நெருங்கிய உறவை (மஹ்ரம்) ஏற்படுத்தும்.

ஹதீஸ் 5102. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள என் வீட்டிற்கு வந்தார்கள். அப்போது என் அருகில் ஓர் ஆண் இருந்தார். (அவரைக் கண்டதும்) நபி(ஸல்) அவர்களின் முகம் (கோபத்தால்) மாறிவிட்டது போல் தோன்றியது. அ(ந்த மனிதர் அங்கு இருந்த)தை நபியவர்கள் விரும்பவில்லை என்று தெரிந்தது. அப்போது நான், 'இவர் என் (பால்குடி) சகோதரர்'' என்றேன். அதற்கு நபி(ஸல) அவர்கள், 'உங்கள் சகோதரர்கள் யார் என்று ஆராய்ந்து பார்த்து முடிவு செய்யுங்கள்.

ஏனெனில், பால்குடி உறவு என்பதே பசியினால் (பிள்ளைப்பால் அருந்தியிருந்தால்) தான்‘‘ என்று கூறினார்கள்.

## ஆணின் பால்குடி உறவு.

ஹதீஸ் 5103. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அபுல் குஐஸின் சகோதரர் அஃப்லஹ்(ரலி) வந்து என் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கேட்டார். அவர் என் பால்குடித் தந்தையின் சகோதரராவார். ஹிஜாப் (பர்தா) சட்டம் அருளப்பட்ட பின் இந்தச் சம்பவம் நடைபெற்றது. அப்போது நான் அவருக்கு அனுமதியளிக்க மறுத்து விட்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்ததும் நான் செய்தது குறித்து அவர்களிடம் தெரிவித்தேன். நான்அவருக்கு அனுமதியளிக்க வேண்டும் என அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு உத்தரவிட்டார்கள்.

## பாலூட்டிய செவிலித் தாயின் சாட்சியம்.

ஹதீஸ் 5104. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்

நான் (உம்மு யஹ்யா பின்த் அபி இஹாப் எனும்) ஒரு பெண்ணை மணந்துகொண்டேன். பின்னர் ஒரு கறுப்பு நிற (அடிமைப்) பெண் எங்களிடம் வந்து நான் உங்கள் இருவருக்கும் (உனக்கும் உன் மனைவிக்கும் உங்கள் மழலைப் பருவத்தில்) பாலூட்டினேன். (இந்த வகையில் நீங்கள் இருவரும் சகோதரத்துவ உறவுடையவர்கள்)‘‘ என்று கூறினாள். எனவே (இப்பிரச்சினைக்குத் தீர்வு காண மக்காவிலிருந்து மதீனாவிற்கு) நபி(ஸல்) அவர்களிடம் சென்று, 'நான்' இன்னவர் மகள் இன்னவளை மணந்துகொண்டேன். அப்பால் ஒரு கறுப்பு நிறப்பெண் எங்களிடம் வந்து என்னை நோக்கி'நான் உங்கள் இருவருக்கும் பாலூட்டியிருக்கிறேன்' என்று பொய் சொல்கிறாள்‘‘ என்று சொன்னேன். (அதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் (முகம் திருப்பிக்கொண்டு என்னைப் புறக்கணித்தார்கள். மீண்டும் நான் நபியவர்களின் முகத்துக்கு நேராக வந்து'அவள் பொய் தான் சொல்கிறாள்‘‘ என்றேன். நபி(ஸல்) அவர்கள், 'அவள் உங்கள் இருவருக்கும் பாலூட்டியதாக சொல்லிவிட்ட நிலையில் அந்தப் பெண்ணுடன் நீ எப்படி (இல்லறம் நடத்த முடியும்)? அவளை உன்னிடமிருந்து பிரித்துவிட்டுவிடு!”என்று (யோசனை) கூறினார்கள்.

அறிவிப்பாளர் அலீ இப்னு அப்தில்லாஹ் அல்மதீனி(ரஹ்) கூறினார்:

(எனக்கு இதை அறிவித்த) இஸ்மாயீல் இப்னு இப்ராஹீம்(ரஹ்) (நபி(ஸல்) அவர்கள்'விட்டுவிடு' என்று கூறி சைகை செய்ததை) அறிவிப்பாளர் அய்யூப்(ரஹ்) எடுத்துரைத்தபடி தம் சுட்டுவிரல் மற்றும் நடுவிரலால் சைகை செய்து காட்டினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல்லாஹ் இப்னு அபீ முலைக்கா(ரஹ்) கூறினார்:

இந்த அறிவிப்பை நான் (சம்பவத்தில் நேரடித் தொடர்புடைய) உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அவர்களிடமிருந்தே செவியுற்று விட்டேன். ஆயினும், நான் உபைத் இப்னு அபீ மர்யம்(ரஹ்) அவர்களின் அறிவிப்பையே நன்கு நினைவில் நிறுத்தியுள்ளேன்.

## (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்ட பெண்களும் அனுமதிக்கப்படாதவர்களும்.

அல்லாஹ் கூறினான்: (பின்வரும் பெண்களை மணப்பது) உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது: உங்கள் தாய்மார்கள், உங்கள் புதல்வியர், உங்கள் சகோதரிகள், உங்கள் அன்னையின் சகோதரிகள் மேலும் சகோதரனின் புதல்வியர் சகோதரியின் புதல்வியர்..(திருக்குர்ஆன் 04:23)

அனஸ்(ரலி) கூறினார்: (திருக்குர்ஆன் 04:24 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'வல் முஹ்ஸனாத்து மினன் னிஸா' என்பதன் கருத்தாவது: (ஏற்கெனவே திருமணமாம் கணவன்மார்கள் இருக்கும் (அடிமையல்லாத) சுதந்திரமான பெண்களை மணமுடிப்பது விலக்கப்பட்டதாகும்.'இல்லா மா மலக்கத் அய்மானுக்கும்' (உங்கள் கைவசம் வந்துவிட்ட

அடிமைப் பெண்களைத் தவிர என்பதன் கருத்தாவது: ஒருவர் தம் அடிமைப் பெண்ணை (அவளுடைய கணவரான) தம் அடிமையின் மண பந்ததிலிருந்து விலக்கிவிடுவது குற்றமன்று.
மேலும், அல்லாஹ் கூறினான்: இறைவனுக்கு இணைவைக்கும் பெண்களை அவர்கள் ஈமான் (ஏகத்துவ நம்பிக்கை) கொள்ளும் வரை நீங்கள் திருமணம் செய்யாதீர்கள். (திருக்குர்ஆன் 02:221)
இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: ஒருவர் தம் தாய், தம் புதல்வி, மற்றும் தம் சகோதரியை மணமுடிப்பது விலக்கப்பட்டிருப்பது போன்றே நான்கை விட அதிகமான பெண்களை மணமுடிப்பதும் விலக்கப்பட்டதாகும்.
ஹதீஸ் 5105. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்
“இரத்த உறவினால் ஏழு பேரும், திருமண உறவினால் ஏழு பேரும் மணமுடிக்கக் கூடாதென தடை விதிக்கப்பட்டுள்ளனர். என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறிவிட்டு, `(பின்வரும் பெண்களை மணப்பது) உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது: உங்கள் தாய்மார்கள், உங்கள் புதல்வியர், உங்கள் சகோதரிகள்.!”எனும் (திருக்குர்ஆன் 04:23 வது) இறைவசனத்தை ஓதினார்கள். பிறகு’அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர்(ரலி), அலீ(ரலி) அவர்களின் புதல்வியையும், அலீ(ரலி) (அவர்களுக்குப் பின்) அவர்களின் மனைவியையும் ஒரே நேரத்தில் மணந்தார்கள்‘` என்றும் கூறினார்கள்.
“ஒருவர், ஒரு பெண்ணையும் அவளுடைய கணவரின் (இன்னொரு மனைவிக்குப் பிறந்த) மகளையும் ஒரே நேரத்தில் மணமுடிப்பது குற்றமன்று‘` என இப்னு சீரீன்(ரஹ்) கூறினார்கள்.
இது வெறுக்கப்பட்ட செயலாகும் என முதலில் கூறிவந்த ஹஸனுல் பஸரீ(ரஹ்), பின்னர் (தம் கருத்தை மாற்றிக் கொண்டு) இதனால் குற்றமில்லை என்று கூறினார்கள்.
(அலீ(ரலி) அவர்களின் பேரரான) ஹஸன் இப்னு ஹஸன் இப்னி அலீ(ரஹ்) தம் தந்தையின் இரண்டு சகோதரர்களின் புதல்வியரை ஒரே இரவில் மணந்துகொண்டார்கள். 43
இதனால் (சக்களத்தி சண்டை ஏற்பட்டு) உறவு முறிய வாய்ப்புண்டு என்பதால் இத்திருமணத்தை ஜாபிர் இப்னு ஸைத்(ரஹ்) வெறுத்தார்கள். ஆனால், (இத்திருமணம்) தடை செய்யப்பட்டதன்று. ஏனெனில், அல்லாஹ் (மணமுடிக்கத் தகாத பெண்களின் பட்டியலைச் சொல்லிவிட்டு)’இவர்களைத் தவிர மற்ற பெண்களை (மஹ்ர் கொடுத்து) அடைந்து கொள்வது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது‘` (திருக்குர்ஆன் 04:24) என்று கூறுகிறான்.
இக்ரிமா(ரஹ்) கூறினார்
“ஒருவன் தன் மனைவியின் சகோதரியை விபசாரம் செய்வதால், அவனுடைய மனைவி அவனுக்கு விலக்கப்பட்டவளாக, (ஹராமாக) ஆகிவிடமாட்டாள்‘` என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.
ஒருவன் ஒரு சிறுவனுடன் ஓரினச் சேர்க்கை செய்தால், அச்சிறுவனுடைய தாயை மணமுடிப்பது செல்லாது என ஷஅபீ (ரஹ்) அவர்களும், அபூ ஜஅஃபர்(ரஹ்) அவர்களும் கூறினார்கள்கள் என யஹ்யா(ரஹ்) கூறினார்கள். இந்த யஹ்யா நேர்மையானவரா என்பது அறியப்படவில்லை. இந்த அறிவிப்புக்கு பக்கபலமாக அமையும் மற்ற அறிவிப்புகளும் கிடையாது.
இக்ரிமா(ரஹ்) கூறினார்:’ஒருவன் தன் மனைவியின் தாயுடன் விபசாரம் புரிந்துவிட்டால், மனைவி அவனுக்கு விலக்கப்பட்டவளாக ஆகமாட்டாள்‘` என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். ஆனால், `விலக்கப்பட்டவளாக ஆகிவிடுவாள்‘` என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் என அபூ நஸ்ர்(ரஹ்) வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ளது.
இந்த அபூ நஸ்ர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்து செவியேற்றாரா என்பது அறியப்படவில்லை.

'விலக்கப்பட்டவளாக ஆகிவிடுவாள்' என்பதே இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி), ஜாபிர் இப்னு ஸைத்(ரஹ்), ஹஸன் அல்பஸரீ(ரஹ்) மற்றும் இராக் அறிஞர்களில் சிலர் ஆகியோரின் கருத்தாகும்.

அபூ ஹுரைரா(ரலி) கூறினார்: ஒரு பெண்ணை உடலுறவு கொண்டால் மட்டுமே அவளுடைய மகள் இவனுக்கு விலக்கப்பட்டவள் ஆவாள். (வெறுமனே தொடுவதற்கும், கட்டி அணைப்பதற்கும் இச்சட்டம் பொருந்தாது.) ("இந்நிலையில் அப்பெண்ணின்) மகளை மணமுடிப்பது செல்லும்' என இப்னுல் முஸய்யப், உர்வா, ஸுஹ்ரீ(ரஹ்) ஆகியோர் கூறினர்.

'அவளை மணமுடிப்பது விலக்கப்படவில்லை' என அலீ(ரலி) சொன்னதாக ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்கள். இதன் அறிவிப்பாளர் வரிசை முறிவு கண்டது (முர்சல் எனும் முன்கத்திஉ) ஆகும்.

## நீங்கள் உடலுறவுகொண்ட மனைவியர் (தம் முன்னாள் கணவர் மூலம்) பெற்றெடுத்து, உங்கள் மடிகளில் வளர்ந்துள்ள புதல்வியர் உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளனர் (எனும் 4:23 வது வசனத் தொடர்.)

இப்னு அப்பாஸ்(ரலி), '(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள'தகல்த்தும்' எனும் சொல்லின் வேர்ச் சொல்லான)'துகூல்' எனும் சொல்லுக்கும்'மஸீஸ்' எனும் சொல்லுக்கும், 'லிமாஸ்' எனும் சொல்லுக்கும்'உடலுறவு கொள்ளுதல்' என்று பொருள்' எனக் கூறினார்கள்.

"மனைவிக்கு (மற்றொரு கணவன் மூலம்) பிறந்த பிள்ளையின் புதல்வியரும் (பேத்திகளும்) அவளுடைய புதல்விகளைப் போன்றே கணவனுக்கு விலக்கப்பட்டவர்கள் ஆவர்'' என்று கூறுவோர் பின்வரும் நபிமொழியை ஆதாரம் காட்டுகின்றனர்:

"உங்களுடைய பெண் மக்களையோ, சகோதரிகளையோ (மணமுடித்துகொள்ளுமாறு) என்னிடம் பரிந்துரைக்க வேண்டாம்'' என்று நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியானரா) உம்மு ஹபீபா(ரலி) அவர்களிடம் கூறினார்கள். (பேத்திகளும் பெண்மக்களைப் போன்றவர்களே!)

(ஒருவருக்கு மகன் வழிப்பேரர்களின் மனைவிமார்களும் புதல்வர்களுடைய மனைவியரை (மருமகள்களை)ப் போன்றே மணமுடிக்க விலக்கப்பட்டுள்ளனர்.

(ஒருவரின் மனைவிக்கு முந்தைய கணவர் மூலம் பிறந்த மகள்) அவரின் பொறுப்பில் வளராவிட்டாலும் அவளை'வளர்ப்பு மகள்' (ரபீபத்) என்று குறிப்பிடலாமா? (என்பதில் கருத்து வேறுபாடு உண்டு.)

நபி(ஸல்) அவர்கள், தம் வளர்ப்பு மகளைக் காப்பாளர் ஒருவரிடம் ஒப்படைத்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் புதல்வியின் மகனை (பேரனை)'மகன்' என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 5106. (நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான) உம்மு ஹபீபா(ரலி) அறிவித்தார்

நான் (ஒருமுறை)'இறைத்தூதர் அவர்களே! (என் சகோதரியான) அபூ சுஃப்யானின் மகளின் விஷயத்தில் தங்களுக்கு விருப்பம் உண்டா?' என்று கேட்டேன். அவர்கள், 'நான் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டார்கள். நான், '(அவளை) நீங்கள் மணந்துகொள்ள வேண்டும்'' என்றேன். நபி(ஸல்) அவர்கள், 'இதை நீயே விரும்புகிறாயா?' என்று கேட்டார்கள். நான், '(ஆம்!) மனைவியென்று உங்களுக்கு நான் ஒருத்தி மட்டுமில்லையே! தங்களை அடைந்து கொள்ளும் பாக்கியத்தில் என்னுடன் என் சகோதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், 'அவள் எனக்கு (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்டவள் இல்லையே!"என்று கூறினார்கள். நான், 'தாங்கள் பெண் கேட்டதாக எனக்குச் செய்தி எட்டியதே!"என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், '(என் துணைவியார்) உம்மு ஸலமாவின் மகளையா?' என்று கேட்டார்கள். நான், 'ஆம்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், 'அவள் என் மடியில் வளர்ந்த வளர்ப்பு

மகளாக (இருக்கிறாள். அப்படி) இல்லாவிட்டாலும் கூட, அவள் எனக்கு (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்டவள் அல்லள். (ஏனெனில்,) எனக்கும் அவளுடைய தந்தை ('அபூ ஸலமா')வுக்கும் ஸுவைபா அவர்களே பாலூட்டினார்கள். எனவே, உங்களுடைய பெண்மக்களையோ, சகோதரிகளையோ என்னிடம் (மணந்துகொள்ளுமாறு) பரிந்துரைக்காதீர்கள்'' என்றார்கள்.

லைஸ் இப்னு ஸஅத் (ரஹ்) கூறினார்:

(அறிவிப்பாளர்) ஹிஷாம் இப்னு உர்வா (ரஹ்), உம்மு ஸலமா (ரலி) அவர்களின் மகளின் பெயர்' துர்ரா பின்த் அபீ ஸலமா' என்றே நமக்கு அறிவித்தார்கள்.

## இரண்டு சகோதரிகளை ஒருசேர நீங்கள் மனைவியராக்குவதும் உங்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளது ஏற்கெனவே (அறியாமைக் காலத்தில்) நடந்துவிட்டதைத் தவிர (எனும் 4:23 வது) வசனத் தொடர்.)50

ஹதீஸ் 5107. உம்மு ஹபீபா பின்த் அபீ சுஃப்யான் (ரலி) அறிவித்தார்

நான் (என் கணவர்) நபி (ஸல்) அவர்களிடம்' இறைத்தூதர் அவர்களே! என் சகோதரியான அபூ சுஃப்யானின் மகளைத் தாங்கள் மணந்துகொள்ளுங்கள்!"என்று கூறினேன். அதற்கவர்கள், 'இதை நீயே விரும்புகிறாயா?' என்று (வியப்புடன்) கேட்டார்கள். நான், 'ஆம்! (மனைவியென்று) தங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் இல்லையே! (தங்களுக்குத் துணைவியாகும்) பாக்கியத்தில் என்னுடன் என் சகேதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்'' என்றேன்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'எனக்கு அ(வளை மணப்ப)து அனுமதிக்கப்பட்டதன்று'' என்று கூறினார்கள். நான், இறைத்தூதர் அவர்களே, அல்லாஹ்வின் மீதாணையாக! தாங்கள் அபூ ஸலமாவின் மகள் துர்ராவை மணக்க விரும்புவதாக எங்களிடையே பேச்சு நடைபெறுகிறதே!"என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், '(என் துணைவியார்) உம்மு ஸலமாவிற்கு (மூத்த கணவன் மூலம்) பிறந்த மகளையா?' என்று கேட்டார்கள். அதற்கு நான், 'ஆம்'' என்று பதிலளித்தேன். நபியவர்கள், 'அவள் என்னுடைய மடியில் (வளர்ப்பு மகளாக இருந்துவருகிறாள். அப்படி) இல்லாவிட்டாலும் கூட, எனக்கு அவள் (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்டவள் அல்லள். (ஏனெனில்) அவள் பால்குடி உறவு முறையில் என் சகோதரரின் மகளாவாள். எனக்கும் (அவளின் தந்தை) அபூ ஸலமாவுக்கும் ஸுவைபா அவர்களே பாலூட்டினார்கள். எனவே, என்னிடம் உங்கள் பெண் மக்களையோ, உங்கள் சகோதரிகளையோ (மணந்துகொள்ளுமாறு) பரிந்துரைக்க வேண்டாம்'' என்று கூறினார்கள்.

## (ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும் (அத்தையையும்) சேர்த்து மணமுடிப்பது விலக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5108. ஜாபிர் (ரலி) அறிவித்தார்

(ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், அல்லது தாயின் சகோதரியையும் (சேர்த்து) மணமுடிப்பதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5109. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும் ஒரு சேர மனைவியராக்கிக் கொள்ளலாகாது. (இதைப் போன்றே) ஒரு பெண்ணையும் அவளுடைய தாயின் சகோதரியையும் ஒருசேர மனைவியராக்கிக் கொள்ளலாகாது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5110. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

(ஒருவர்) ஒரு பெண்ணையும் அவளுடைய தந்தையின் சகோதரியையும், ஒரு பெண்ணையும் அவளுடைய தாயின் சகோதரியையும் (ஒருசேர) மணமுடிப்பதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். (அறிவிப்பாளர் ஸுஹ்ரீ (ரஹ்) கூறினார்கள்:) இதை வைத்து, ஒரு பெண்ணுடைய தாயின் சகோதரியைப் போன்றே, அவளுடைய தந்தையின் தாயுடைய சகோதரியையும் நாங்கள் கருதுகிறோம்.

ஹதீஸ் 5111. ஏனெனில், ஆயிஷா (ரலி), 'இரத்த பந்த உறவால் யாரை மணப்பது கூடாதோ அவர்களை மணப்பதைப் பால்குடி உறவாலும் தடைசெய்யுங்கள்'' என்று கூறினார்கள்.

## மஹ்ரின்றி பெண் கொடுத்து பெண் எடுத்தல்.

ஹதீஸ் 5112. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

'ஷிஃகார்' முறைத் திருமணத்திற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். ஒருவர் மற்றொருவரிடம் 'நான் என் மகளை உனக்குத் திருமணம் செய்து தருகிறேன் நீ உன் மகளை எனக்குத் திருமணம் செய்து தரவேண்டும்'' என்று (முன் நிபந்தனை) விதித்து மணமுடித்து வைப்பதற்கே 'ஷிஃகார்' எனப்படும். இதில் இரண்டு பெண்களுக்கும் 'மஹ்ர்' (விவாகக் கொடை) இராது.

## ஒரு பெண், தன்னை ஒருவருக்கு அன்பளிப்பது (அதாவது மஹ்ரின்றி அவரை மணக்க முன்வருவதோ, தன்னை அன்பளித்தேன் என்று கூறி திருமணம் செய்து கொள்வதோ) செல்லுமா?

ஹதீஸ் 5113. உர்வா வின் ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களுக்குத் தங்களையே கொடையாக வழங்க முன் வந்த பெண்களில் கவ்லா பின்த் ஹகீம் (ரலி) அவர்களும் ஒருவராவார். (இது குறித்து) ஆயிஷா (ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:

ஒரு பெண் தம்மைத் தாமே ஓர் ஆணுக்கு கொடையாக வழங்க வெட்கப்படமாட்டாளா? பின்னர் '(நபியே! உங்கள் துணைவியராகிய) அவர்களில் நீங்கள் விரும்பியவர்களை (விரும்பும் காலம் வரை) ஒதுக்கி வைக்கலாம்'' எனும் (திருக்குர்ஆன் 33:51 வது) வசனம் அருளப்பட்டதுபோது 'இறைத்தூதர் அவர்களே! தங்களின் விருப்பத்தைத் தங்களின் இறைவன் விரைவாக பூர்த்தி செய்வதையே காண்கிறேன்'' என்று (நபியவர்களிடம்) கூறினேன்.

இதே ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர்கள் வழியாகவும் சற்று கூடுதல் குறைவுடன் வந்துள்ளது.

## (ஹஜ் அல்லது உம்ராவுக்காக) இஹ்ராம் கட்டியவர் திருமணம் செய்துகொள்வது.

ஹதீஸ் 5114. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

இஹ்ராம் கட்டியிருந்த நிலையில் நபி (ஸல்) அவர்கள் (மைமூனா (ரலி) அவர்களை) மணந்தார்கள்.

## இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அல்முத்அ (தவணை முறைத்) திருமணத்தை இறுதியாகத் தடைசெய்தது.

ஹதீஸ் 5115. முஹம்மத் இப்னு அலீ (ரஹ்) அவர்களும், அப்துல்லாஹ் இப்னு அலீ (ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்

(எம் தந்தை) அலீ (ரலி) இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், 'அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணத்திற்கும், நாட்டுக் கழுதைகளின் இறைச்சிக்கும், கைபர் போரின்போது நபி (ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்'' என்று கூறினார்கள். 58

ஹதீஸ் 5116. அபூ ஜம்ரா நஸ்ர் இப்னு இம்ரான் (ரஹ்) அறிவித்தார்
'அல்முத்ஆ' (தவணை முறைத்) திருமணம் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வினவப்பட்டது. அவர்கள், 'அதற்கு அனுமதி உண்டு' என்றார்கள். அப்போது அவர்களின் முன்னாள் அடிமை ஒருவர்' (பயணத்தில் மனைவி இல்லாத) நெருக்கடியான சூழ்நிலை, பெண்கள் குறைவாக இருத்தல் போன்ற சமயங்களில் தான் இத்திருமணத்திற்க அனுமதியுண்டாமே!"என்று கேட்டதற்கு இப்னு அப்பாஸ் (ரலி), 'ஆம்!"என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5117 ・ ஹதீஸ் 5118 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்களும் ஸலமா இப்னு அக்வஉ (ரலி) அவர்களும் அறிவித்தார்கள்
நாங்கள் ஒரு போர் படையில் இருந்தோம். அப்போது எங்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் தூதர் ஒருவர் வந்து, 'அல்முத்ஆ' (தவணைமுறை)த் திருமணம் உங்களுக்கு (தாற்காலிமாக) அனுமதிக்கப்பட்டுள்ளது. நீங்கள்' அல்முத்ஆ' திருமணம் செய்துகொள்ளலாம்' என்று அறிவித்தார்.

ஹதீஸ் 5119. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஓர் ஆணும் ஒரு பெண்ணும் (தவணை முறைத் திருமணத்திற்கு) பரஸ்பரம் இசைந்தால், (குறைந்த பட்சம்) மூன்று நாள்களாவது இல்லறம் நடந்திடவேண்டும். இதைவிட அதிகமாக்கிக் கொள் அவ்விருவரும் விரும்பினால் அதிகமாக்கிக் கொள்ளலாம். (அத்தோடு) பிரிந்துவிட விரும்பினாலும் பிரிந்துவிடலாம்.
இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் ஸலமா இப்னு அக்வஉ (ரலி) கூறினார்:
இந்த (த் தவணை முறை)த் திருமணம் (நபித்தோழர்களாகிய) எங்களுக்கு மட்டும் (நெருக்கடி நிலையில்) அனுமதிக்கப்பட்டதா? அல்லது மக்கள் அனைவருக்கும் உள்ள பொது அனுமதியா என்று எனக்குத் தெரியவில்லை.
அபூ அப்தில்லாஹ் புகாரீ (யாகிய நான்) கூறுகிறேன்:
இத்திருமணத்திற்கான அனுமதி விலக்கிக் கொள்ளப்பட்டுவிட்டது என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அலீ (ரலி) தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

## ஒரு பெண் தன்னை மணந்துகொள்ளுமாறு ஒரு நல்ல மனிதரிடம் கோருதல்.

ஹதீஸ் 5120. ஸாபித் அல் புனானி (ரஹ்) அறிவித்தார்
நான் அனஸ் (ரலி) அருகில் இருந்தேன். அன்னாருடன் அவர்களின் புதல்வியார் ஒருவரும் இருந்தார். (அப்போது) அனஸ் (ரலி), 'இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் தன்னை மணந்து கொள்ளுமாறு கோரியடிப ஒரு பெண் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! (மணந்துகொள்ள) நான் தங்களுக்கு அவசியமா?' எனக் கேட்டார்'' என்று கூறினார்கள்.
அப்போது அனஸ் (ரலி) அவர்களின் புதல்வி, 'என்ன வெட்கங்கெட்டத் தனம்! என்ன அசிங்கம்! என்ன அசிங்கம்!"என்று கூறினார். அனஸ் (ரலி), 'அந்தப் பெண்மணி உன்னைவிடச் சிறந்தவர் அந்தப் பெண் நபியவர்களை (மணந்து கொள்ள) ஆசைப்பட்டார். எனவே, தன்னை மணந்து கொள்ளுமாறு கோரினார்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5121. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்
ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம் தன்னை மணந்துகொள்ளுமாறு கோரினார். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர், 'இவளை எனக்கு மணமுடித்து வையுங்கள், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், '(இவருக்கு மஹ்ர் கொடுக்க) உம்மிடம் என்ன உள்ளது?' என்று கேட்டார்கள். அவர், என்னிடம் ஒன்றுமில்லை'' என்று

பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள், 'நீர் சென்று, இரும்பினாலான ஒரு மோதிரத்தையாவது தேடு!'' என்று கூறினார்கள்.
அவர் போய் (தேடிப் பார்த்து)விட்டுத் திரும்பி வந்து, 'அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதும் கிடைக்கவில்லை இரும்பாலான மோதிரம் கூட கிடைக்கவில்லை. ஆனால், இதோ என்னுடைய இந்த வேட்டி உண்டு. இதில் பாதி அவளுக்கு (மஹ்ர்) என்றார். - அவரிடம் ஒரு மேல்துண்டு கூட இல்லை. (அதனால்தான், வேட்டியில் பாதியைத் தருவதாகக் கூறினார்.)
அப்போது நபி(ஸல்) அவர்கள், 'உம்முடைய வேட்டியை வைத்துக் கொண்டு என்ன செய்வீர்? அதை நீர் உடுத்திக்கொண்டால் அவளின் மீது (அதில்) ஏதும் இருக்காது அதை அவள் உடுத்திக்கொண்டால் அதில் உம்மீது ஏதும் இருக்காது. (உம்முடைய வேட்டியை கொடுத்துவிட்டு என்ன செய்யப்போகிறாய்?)'' என்று கூறினார்கள். பிறகு அவர் நெடுநேரம் (அங்கேயே) அமர்ந்திருந்துவிட்டு எழுந்தார். அவர் செல்வதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், 'அவரை அழைத்தார்கள்' அல்லது 'அவர் அழைக்கப்பட்டார்' (அவர் வந்தவுடன்) அவரிடம், 'உம்முடன் குர்ஆனில் என்ன உள்ளது?' என்று நபியவர்கள் கேட்டார்கள்.
அதற்கு அவர் நபியவர்களிடம், '(குர்ஆனில்) இன்ன அத்தியாயம் இன்ன அத்தியாயம் என்னுடன் (மனப்பாடமாக) உள்ளது'' என்று சில அத்தியாயங்களை எண்ணி எண்ணிக் கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'உம்முடனுள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக அவளை உமக்கு மணமுடித்து கொடுத்துவிட்டேன்'' என்று கூறினார்கள்.

## ஒருவர் தம் மகளையோ சகோதரியையோ மணந்துகொள்ளுமாறு நல்லோரிடம் கோருவது.

ஹதீஸ் 5122. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்
(என் தந்தை) உமர் இப்னு கத்தாப்(ரலி) (தம் மருமகன்) குனைஸ் இப்னு ஹுதாஃபா அஸ்ஸஹ்மீ(ரலி) இறந்துவிட்டதால் (மகள்) ஹஃப்ஸா விதவையானபோது (அவரை வேறொருவருக்கு மணமுடித்து வைக்க எண்ணினார்கள்.)
-குனைஸ்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவராவார். மேலும், அவர் மதீனாவில் இறந்தார்.
உமர் இப்னு கத்தாப்(ரலி) கூறினார்.
எனவே, நான் உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களிடம் சென்று, (என் மகள்) ஹஃப்ஸாவைக் குறித்து எடுத்துக் கூறினேன். அதற்கு உஸ்மான்(ரலி), '(தங்கள் மகளை நான் மணந்துகொள்ளும் இந்த) என் விஷயத்தில் நான் யோசிக்க வேண்டியுள்ளது (யோசித்து என் முடிவைக் கூறுகிறேன்)'' என்று கூறினார்கள்.
சில நாள்கள் பொறுத்திருந்தேன். பிறகு உஸ்மான்(ரலி) என்னைச் சந்தித்து 'இப்போது திருமணம் செய்துகொள்ளவேண்டாம் என்றே எனக்குத் தோன்றியது'' என்று கூறினார்கள்.
எனவே, நான் அபூ பக்ர் ஸித்தீக்(ரலி) அவர்களைச் சந்தித்தேன். (அவர்களிடம்) 'நீங்கள் விரும்பினால், என் மகள் ஹஃப்ஸாவைத் தங்களுக்குத் திருமணம் முடித்து வைக்கிறேன்'' என்று கூறினேன். அபூ பக்ர்(ரலி) அமைதியாக இருந்தார்கள். எனக்கு அவர்கள் எந்த பதிலையும் கூறவில்லை. எனவே, உஸ்மான்(ரலி) அவர்களை விட அபூ பக்ர்(ரலி) மீதே நான் மிகவும் மனவருத்தம் கொண்டவனாக இருந்தேன். சில நாள்கள் பொறுத்திருந்தேன். பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவைப் பெண் கேட்டார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஹஃப்ஸாவைத் திருமணம் செய்து வைத்தேன்.
பிறகு(ஒருநாள்) அபூ பக்ர்(ரலி) என்னைச் சந்தித்து, 'நீங்கள் என்னிடம் ஹஃப்ஸா அவர்களைக் குறித்துச் சொன்னபோது நான் உங்களுக்கு பதிலேதும் கூறாததால், உங்களுக்கு என் மீது மனவருத்தம் இருக்கக்கூடும்'' என்று கூறினார்கள். நான், 'ஆம்''

என்று சொன்னேன். (அதற்கு) அபூ பக்ர்(ரலி), `நீங்கள் கூறியபோது நான் உங்களுக்கு பதில் கூறாததற்குக் காரணம், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸா அவர்களை (தாம் மணப்பது) பற்றிப் பேசியதை நான் அறிந்திருந்ததே ஆகும். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இந்த இரகசியத்தை நான் வெளிப்படுத்த விரும்பவில்லை. (எனவேதான், உங்களுக்கு பதிலோதும் கூறவில்லை). இறைத்தூதர்(ஸல்) அவர்கள்' ஹஃப்ஸாவை (திருமணம் செய்யாமல்) விட்டிருந்தால், உறுதியாக அவர்களை நான் (மனைவியாக) ஏற்றுக் கொண்டிருப்பேன்.

ஹதீஸ் 5123. ஸைனப் பின்த் அபீ ஸலமா(ரலி) அறிவித்தார்

(அன்னை) உம்மு ஹபீபா(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், `அபூ ஸலமாவின் மகள்' துர்ரா'வைத் தாங்கள் மணக்கப் போவதாக செய்தியறிந்தோம். (இது உண்மையா?)'' என்று கேட்டார்கள் அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `(என் துணைவியார்) உம்முஸலமா இருக்கவா (அவர் மகளை நான் மணப்பேன்?' என்று கேட்டுவிட்டு, `உம்மு ஸலமாவை நான் மணந்திருக்காவிட்டாலும் (அவரின் மகள்) துர்ரா எனக்கு மணமுடிக்க அனுமதிக்கப்பட்டவளல்லள். ஏனெனில், அவளுடைய தந்தை (அபூ ஸலமா) என் பால்குடி சகோதரராவார்'' என்று கூறினார்கள்.

"('இத்தா'வில் இருக்கும்) பெண்களிடம் திருமணப் பேச்சை மறைமுகமாக எடுத்துரைப்பதிலோ, (அதனை) உங்கள் உள்ளங்களில் மறைத்துவைப்பதிலோ உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை..! எனும் (திருக்குர்ஆன் 02:235 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)'அக்னன்த்தும்' எனும் சொல்லுக்கு, `உங்கள் உள்ளங்களில் மறைத்துவைப்பது' என்று பொருள். (பொதுவாக) நீ பாதுகாத்து மறைத்து வைக்கும் யாவற்றுக்கும் (அரபி மொழி வழக்கில்)'மக்னூன்' எனப்படுகிறது.

ஹதீஸ் 5124. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்

"('இத்தா'வில் இருக்கும்) பெண்களிடம் திருமணப் பேச்சை மறைமுகமாக எடுத்துரைப்பதில் உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை'' எனும் (திருக்குர்ஆன் 02:235 வது) வசனத்திற்கு விளக்கமளிக்கையில் இப்னு அப்பாஸ்(ரலி), `ஒருவர், `(இத்தா'விலிருக்கும் ஒரு பெண்ணிடம்)'நான் மணமுடித்துக்கொள்ள விரும்புகிறேன்' என்றோ'ஒரு நல்ல பெண் எனக்கு விரைவில் கிடைப்பாள் என நம்புகிறேன்' என்றோ (சாடையாகக்) கூறுவதாகும்'' என்று கூறினார்கள்.

காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) கூறினார்: நீ என்னிடம் மதிப்புக்குரியவள் நான் உன்னை விரும்புகிறேன் அல்லாஹ் உனக்கு நன்மைபுரிவான் என்பன போன்ற வார்த்தைகளைக் கூறுவதாகும்.

அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்கள்: (இத்தாவில் இருக்கும் பெண்ணிடம் தம் திருமண விருப்பத்தை) ஒருவர் மறை முகமாகச் சொல்ல வேண்டும் வெளிப்படையாகச் சொல்லக் கூடாது. (உதாரணமாக)'எனக்கு ஒரு தேவை உள்ளது' என்றோ அல்லது'ஒரு மகிழ்ச்சியான செய்தி உனக்கு (காத்திருக்கிறது)' என்றோ, `அல்லாஹ்வின் அருளால் நீ கடைத்தேறிவிடுவாய்' என்றோ கூறுவார். அதற்கு (பதிலாக) அவள், `நீங்கள் சொல்வதை நான் செவியேற்றேன்'' என்று மட்டும் சொல்வாள். அவனுக்கு எந்த வாக்குறுதியையும் அவள் அளிக்கக் கூடாது. (இதைப்போன்றே) அவளுடைய காப்பாளரும் அவளுக்குத் தெரியாமல் (யாருக்கும்) வாக்குக் கொடுக்கக் கூடாது.'இத்தா'க் காலத்தில் வைத்தே ஒரு பெண் ஒரு மனிதருக்கு (மணமுடிக்க) வாக்குக் கொடுத்துவிட்டுப் பிறகு (வாக்குக் கொடுத்தபடி) இருவரும் மணந்தால் இருவருக்கு மத்தியில் மணமுறிவு ஏற்படுத்தப்படாது.

"(திருக்குர்ஆன் 02:235 வது வசனத்தின் மூலத்திலுள்ள 'அஸ்ஸிர்ரு' (இரகசியம்) எனும் சொல்லுக்கு 'விபசாரம்' என்று பொருள்' என ஹஸன் அல் பஸரீ (ரஹ்) கூறினார்கள்.
(இதே வசனத்தின் மூலத்திலுள்ள) ஹத்தா யப்லுஃகல் கிதாபு அஜலஹு (குறித்த தவணை முடிகிற வரை) என்பது 'இத்தா' முடிவதைக் குறிக்கும் என இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார் என அறிவிக்கப்பட்டுள்ளது.

## திருமணத்திற்கு முன் மணப் பெண்ணைப் பார்ப்பது.

ஹதீஸ் 5125. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

என்னிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , 'இரண்டு முறை உன்னை நான் கனவில் கண்டுள்ளேன். ஒரு வானவர் உன்னைப் பட்டுத் துணியொன்றில் எடுத்துச் செல்கிறார். அப்போது அவர், 'இவர் உங்கள் (வருங்கால) மனைவி'' என்று கூறினார். உடனே நான் அந்தப் பட்டுத் துணியை விலக்கிப் பார்த்தேன். அதில் இருந்தது நீதான். அப்போது நான் (என் மனத்திற்குள்) 'இக்கனவு அல்லாஹ்வின் தரப்பிலிருந்து வந்ததாயின், இதனை அல்லாஹ் நனவாக்குவான்'' என்று சொல்லிக்கொண்டேன். 65

ஹதீஸ் 5126. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்

ஒரு பெண்மணி இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிட (-மஹ்ரின்றி என்னைத் தாங்கள் மணந்துகொள்ள-) வந்துள்ளேன்'' என்று கூறினார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அந்தப் பெண்ணை நோக்கிப் பார்வையை உயர்த்தி நேராகப் பார்த்துவிட்டு அதைத் தாழ்த்திக் கொண்டார்கள். பிறகு தம் தலையைத் தொங்கவிட்டார்கள்.
தம் விஷயத்தில் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எந்த முடிவுக்கும் வரவில்லை என்பதைக் கண்ட அப்பெண்மணி, (அந்த இடத்திலேயே) அமர்ந்துகொண்டார். அப்போது நபித்தோழர்களில் ஒருவர் எழுந்து, 'இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு இவர் தேவையில்லையென்றால் எனக்கு இவரை மணமுடித்துவையுங்கள்!''என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள் (அவரிடம்), '(மஹ்ராகச் செலுத்த) உம்மிடம் பொருள் ஏதேனும் இருக்கிறதா?' என்று கேட்டார்கள். அவர், 'அல்லாஹ்வின் மீதாணையாக! (என்னிடம் ஏதும்) இல்லை, இறைத்தூதர் அவர்களே!''என்று பதில் கூறினார்.
நபி (ஸல்) அவர்கள், 'உம் குடும்பத்தாரிடம் சென்று ஏதாவது கிடைக்குமா என்று பார்!''என்றார்கள்.
அவர் போய் பார்த்துவிட்டு பிறகு திரும்பி வந்து, 'இல்லை. இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! (ஏதும் கிடைக்கவில்லை)'' என்றார். நபி (ஸல்) அவர்கள், 'இரும்பாலான ஒரு மோதிராமாவது (ம்டைக்குமா எனப்) பார்!''என்றார்கள்.
அவர் (மீண்டும்) சென்றுவிட்டுத் திரும்பி வந்து, 'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! (ஏதும் கிடைக்கவில்லை)'' என்றார். நபி (ஸல்) அவர்கள், 'இரும்பாலான ஒரு மோதிராமாவது (ம்டைக்குமா எனப்) பார்!''என்றார்கள்.
அவர் (மீண்டும்) சென்றுவிட்டுத் திரும்பி வந்து, 'அல்லாஹ்வின் மீதாணையாக! (ஒன்றும்) கிடைக்கவில்லை. இறைத்தூதர் அவர்களே! இரும்பாலான மோதிரம் கூட கிடைக்கவில்லை ஆனால், இதோ இந்த என்னுடைய வேட்டி உள்ளது'' என்றார்.
-அறிவிப்பாளர் ஸஹ்ல் (ரலி) கூறினார்: அவரிடம் ஒரு மேல்துண்டு கூட இல்லை எனவேதான் தம் வேட்டியில் பாதியை அவளுக்குத் தருவதாகக் கூறினார்.
அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , 'உம்முடைய (இந்த ஒரு) வேட்டியை வைத்துக்கொண்டு என்ன செய்வீர்? அந்த வேட்டியை நீர் உடுத்திக்கொண்டால், அவளின் மீது அதில் ஏதும் இருக்காது. அதை அவள் உடுத்திக் கொண்டால் உம் மீது அதில் ஏதும் இருக்காது. (உம்முடைய வேட்டியைக் கொடுத்து)விட்டு என்ன செய்யப்போகிறாய்?)'' என்று

கேட்டார்கள். அவர் நெடுநேரம் (அங்கேயே) அமர்ந்திருந்துவிட்டுப் பிறகு எழுந்தார். அவர் திரும்பிச் செல்வதைக் கண்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரை அழைத்து வருமாறு உத்தரவிட்டார்கள்.
அவ்வாறே அவர் அழைத்துவரப்பட்டபோது நபி(ஸல்) அவர்கள், 'உம்முடன் குர்ஆனில் என்ன (அத்தியாயம் மனப்பாடமாக) உள்ளது?' என்று கேட்டார்கள். அதற்கு அவர், '(குர்ஆனில்) இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம் என்னுடன் உள்ளன'' என்று அவற்றை அவர் எண்ணி எண்ணிக் கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'அவற்றை நீர் மனப்பாடமாக ஓதுவீரா?' என்று கேட்டார்கள். 'ஆம் (ஓதுவேன்)'' என்று அவர் பதிலளித்தார்.
நபி(ஸல்) அவர்கள், 'உம்முடனுள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக அவளை உமக்கு மணமுடித்துக் கொடுத்துவிட்டேன். நீர் செல்லலாம்!''என்று கூறினார்கள்.

## '(மணப் பெண்ணின்) காப்பாளர் இல்லாத திருமணம் செல்லாது என்று கூறியோரின் கருத்து.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:
நீங்கள் (உங்களுடைய) துணைவியரை விவாகரத்துச செய்து அவர்கள் தங்களின் (இத்தா) தவணையின் இறுதியை அடைந்தால், அவர்கள் தங்களுக்குரிய துணைவர்களை முறையோடும் மனம் ஒப்பியும் மணந்துகொள்வதை (காப்பாளர்களே!) நீங்கள் தடுக்கவேண்டாம்! (திருக்குர்ஆன் 02:232)
இதில் கன்னிகழிந்த பெண்களும், அவ்வாறே கன்னிப் பெண்களும் அடங்குவர்.
அல்லாஹ் கூறினான்:
இணைவைக்கும் ஆண்கள் (ஏக) இறை நம்பிக்கைகொள்ளும் வரை (காப்பாளர்களே!) அவர்களுக்கு (உங்கள் பெண்களை) மணமுடித்து வைக்காதீர்கள். (திருக்குர்ஆன் 02:221)
மேலும் அல்லாஹ் கூறினான்:
“உங்களில் வாழ்க்கைத் துணையின்றி இருப்பவர்களுக்குத் திருமணம் செய்து வையுங்கள்!'' (திருக்குர்ஆன் 24:32)

ஹதீஸ் 5127. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்
அறியாமைக் காலத்தில் நான்கு வகைத் திருமணங்கள் நடைபெற்றன:
முதல் வகை:
இன்று மக்களிடையே வழக்கிலுள்ள திருமணத்தைப் போன்றதாகும்: ஒருவர் மற்றொருவரின் பொறுப்பிலுள்ள ஒரு பெண்ணையோ அல்லது அவரின் மகளையோ பெண் பேசி 'மஹ்ர்' (விவாகக் கொடை) கொடுத்து மணந்து கொள்வார்.
இரண்டாம் வகைத் திருமணம்:
ஒருவர் தம் மனைவியிடம், 'நீ உன் மாதவிடாயிருந்து தூய்மையடைந்தவுடன் இன்ன பிரமுகருக்குக் தூதனுப்பி (அவர் மூலம் கருத்தரித்துக் கொள்வதற்காக) அவருடன் உடலுறவு கொள்ளக் கேட்டுக்கொள்!' என்று கூறிவிட்டு, அவளுடன் உடலுறவு கொள்ளாமல் அவளைவிட்டு அந்தக் கணவர் விலகி இருப்பார். அவள் உடலுறவுகொள்ளக் கேட்டுக்கொண்ட அந்த மனிதர் மூலம் அவள் கருவுற்றிருப்பது தெரிகிறவரை கணவர் அவளை ஒருபோதும் தீண்டமாட்டார். அந்தப் பிரமுகர் மூலம் அவள் கருத்தரித்துவிட்டாளெனத் தெரியவந்தால், விரும்பும்போது அவளுடைய கணவர் அவளுடன் உடலுறவு கொள்வார். குலச் சிறப்புமிக்க குழந்தை பிறக்க வேண்டுமென்ற (அற்ப) ஆர்வத்தினாலேயே இப்படிச் செய்து வந்தனர். இந்தத் திருமணத்திற்கு 'நிகாஹுல் இஸ்திப்ளாஉ' (விரும்பிப் பெறும் உடலுறவுத் திருமணம்) என்று பெயர்.

மூன்றாம் வகைத் திருமணம்:
பத்துப்பேருக்குக் குறைவான ஒரு குழுவினர் ஓரிடத்தில் ஒன்றுகூடி அவர்கள் அனைவரும் ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வார்கள். அவள் கருத்தரித்து பிரசவமாம் சில நாள்கள் கழியும்போது, அவர்கள் அனைவரையும் அவள் தம்மிடம் வரச் சொல்வாள். அவர்களில் எவரும் மறுக்க முடியாது. அனைவரும் அவளிடம் ஒன்று கூடுவார்கள். அப்போது அவர்களிடம்'நீங்கள் செய்தது உங்களுக்கே தெரியும். (இப்போது) எனக்குக் குழந்தை பிறந்துவிட்டது'' என்று கூறிவிட்டு (அவர்களில் ஒருவரை நோக்கி)'இவன் உங்கள் மகன், இன்னாரே!"என்றே விரும்பிய ஒருவரின் பெயரை அவள் குறிப்பிடுவாள். அவ்வாறே குழந்தை அந்த நபருடன் இணையும். அவரால் அதனை மறுக்க முடியாது.
நான்காம் வகைத் திருமணம்:
நிறைய மக்கள் (ஓரிடத்தில்) ஒன்று கூடி ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வார்கள். தன்னிடம் வரும் யாரையும் அவள் தடுக்கமாட்டாள்.
இந்தப் பெண்கள் விலைமாதுகள் ஆவர். அவர்கள் தங்களின் வீட்டு வாசலில் பல அடையாளக் கொடிகளை நட்டு வைத்திருந்தனர். அவர்களை விரும்பியவர்கள் அங்கே செல்வார்கள். இந்தப் பெண்களில் ஒருத்திக்குக் கருத்தரித்து குழந்தை பிறந்தால், அவளுடன் உடலுறவு கொண்ட அனைவரும் அவளுக்காக ஒன்றுகூட்டப்படுவார்கள். அங்க அடையாளங்களை வைத்து தந்தை - பிள்ளையைக் கண்டறியும் நிபுணர்களை அழைத்து வருவார்கள். தாம் (தந்தையெனக்) கருதிய ஒருவனுடன் அந்தக்குழந்தையை அந்த நிபுணர்கள் இணைத்துவிடுவார்கள். அந்தக் குழந்தை அந்தத் தந்தையிடம் சேர்க்கப்பட்டு'அவரின் மகன்' என்று பெயர் சொல்லி அழைக்கப்பட்டு வந்தது. (அவன் தன் குழந்தையல்ல என்று) அவனால் மறுக்கமுடியாது.
சத்திய(மார்க்க)த்துடன் முஹம்மத்(ஸல்) அவர்கள் அனுப்பி வைக்கப்பட்டபோது இன்று மக்களின் வழக்கிலுள்ள (முதல் வகைத்) திருமணத்தைத் தவிர அறியாமைக் காலத் திருமணங்கள் அனைத்தையும் தகர்த்துவிட்டார்கள்.
ஹதீஸ் 5128. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
"அந்த அநாதைப் பெண்களுக்கு நிர்ணயிக்கப்பட்டதை நீங்கள் கொடுக்காமல், அவர்களை நீங்களே திருமணம் செய்து கொள்ள விரும்புகிறீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:127 வது) இறைவசனம், ஒரு மனிதரின் பாதுகாப்பில் இருக்கும் அநாதைப் பெண்ணைக் குறிக்கிறது. அவள் அவரின் செல்வத்தில் பங்காளியாக இருக்கலாம். அவரே (மற்றவர்களைவிட) அவளுக்கு(க் காப்பாளராக இருக்க)த் தகுந்தவராகவும் இருக்கலாம். எனவே, அவளுடைய சொத்தில் வேறு யாரும் தம்முடன் பங்காளியாவதை விரும்பாமல் அவளைத் தாமே மணந்துகொள்ளவிரும்பி வேறு யாருக்கும் அவளை மணமுடித்துக் கொடுக்காமல் தம்மிடமே அவளை முடக்கிவைத்துக் கொண்டிருப்பார்.
ஹதீஸ் 5129. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
(என் தந்தை) உமர் இப்னு கத்தாப்(ரலி) (தம் மருமகன்) குனைஸ் இப்னு ஹுதா∴பா அஸ்ஸஹ்மீ(ரலி) இறந்துவிட்டதால் (மகள்) ஹ∴ப்ஸா விதவையானபோது (அவரை வேறொருவருக்கு மணமுடித்து வைக்க எண்ணிலானார்கள்.)
-குனைஸ்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரும், பத்ருப் போரில் கலந்துகொண்ட வருமாயிருந்தார்கள். மேலும், அன்னார் மதீனாவில் இறந்தார்கள்.
உமர் இப்னு கத்தாப்(ரலி) கூறினார்:
எனவே, நான் உஸ்மான் இப்னு அ∴ப்பான்(ரலி) அவர்களைச் சந்தித்து (என் மகள் ஹ∴ப்ஸா குறித்து) எடுத்துரைத்து, 'நீங்கள் விரும்பினால் ஹ∴ப்ஸாவைத் தங்களுக்கு மணமுடித்து வைக்கிறேன்'' என்று சொன்னேன். அதற்கு உஸ்மான்(ரலி), '(தங்கள் மகளை நான்

மணந்துகொள்ளும் இந்த) என் விஷயத்தில் நான் யோசிக்க வேண்டியுள்ளது (யோசித்து என் முடிவைக் கூறுகிறேன்)‘` என்று கூறினார்கள்.
சில நாள்கள் பொறுத்திருந்தேன். பிறகு உஸ்மான்(ரலி) என்னைச் சந்தித்து, `இப்போது திருமணம் செய்து கொள்ள வேண்டாம் என்றே எனக்குத் தோன்றுகிறது‘` என்று கூறினார்கள். எனவே, நான் அபூ பக்ர்(ரலி) அவர்களைச் சந்தித்தேன். (அவர்களிடம்)’நீங்கள் விரும்பினால், (என் மகள்) ஹஃப்ஸாவைத் தங்களுக்கு திருமணம் முடித்துவைக்கிறேன்‘` என்று கூறினேன்.

ஹதீஸ் 5130. மஅகில் இப்னு யஸார்(ரலி) அறிவித்தார்
அந்த (திருக்குர்ஆன் 02:232 வது) வசனம் என்னைக் குறித்தே அருளப்பட்டது: என்னுடைய ஒரு சகோதரி ஒருவருக்கு நான் மணமுடித்துக் கொடுத்திருந்தேன். அவளை அவர் விவாக விலக்குச் செய்துவிட்டார். அவளுடைய’இத்தா‘க் காலத் தவணை முடிந்தபோது, அவர் அவளை மீண்டும் பெண் கேட்டு வந்தார். அப்போது நான் அவரிடம், `நான் (என் சகோதரியை) உங்களுக்கு மணமுடித்துக் கொடுத்து மஞ்சத்திலே உங்களை இருக்கச் செய்து கண்ணியப்படுத்தினேன். ஆனால், அவளை நீங்கள் விவாகரத்துச் செய்துவிட்டு, இப்போது (மீண்டும்) அவளை பெண் கேட்டு வந்துள்ளீர்கள். இல்லை! அல்லாஹ்வின் மீதாணையாக! இனி ஒருபோதும் அவள் உங்களிடம் திரும்பமாட்டாள்‘` என்று சொன்னேன். அவர் நல்ல மனிதராகத் தான் இருந்தார். என் சகோதரி அவரிடமே திரும்பச் சென்று வாழ விரும்பினாள். அப்போதுதான் அல்லாஹ், `...அவர்களை நீங்கள் தடுக்காதீர்கள்‘` எனும் இந்த (திருக்குர்ஆன் 02:232 வது) வசனத்தை அருளினான். எனவே, நான் நபி(ஸல்) அவர்களிடம், `இப்போது நான் (அல்லாஹ் கூறியபடியே) செய்கிறேன், இறைத்தூதர் அவர்களே!”என்று கூறிவிட்டு, மீண்டும் அவருக்கே என் சகோதரியை மணமுடித்து வைத்தேன்.

## காப்பாளரே பெண் கேட்பவராயிருந்தால் (அவரே காப்பாளராகவும் இருந்து மணந்துகொள்வாரா? அல்லது பிறரைக் காப்பாளராக்கி, மணந்துகொள்வாரா?)

முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி), தம் பாதுகாப்பில் இருந்த ஒரு பெண்ணைப் பெண் பேசி மணந்துகொள்ள விரும்பினார்கள். எனவே, (உஸ்மான் இப்னு அபில் ஆஸ் என்ற தூரத்து உறவினர்) ஒருவருக்கு அன்னார் உத்தரவிட, அவர் (காப்பாளராக) இருந்து) முஃகீராவுக்கு (அப்பெண்ணை) மணமுடித்து வைத்தார்.
அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (இடம்’நீங்கள் விரும்பிய ஒருவருக்கு என்னை மணமுடித்து வையுங்கள்‘` என்று கோரிய) உம்மு ஹகீம் பின்த் காரிழ் என்ற பெண்மணியிடம்’(மணமகனைத் தேர்ந்தெடுக்கும்) உன்னுடைய அதிகாரத்தை என்னிடம் ஒப்படைத்துவிடுகிறாயா?’ என்று கேட்டார்கள். அப்பெண், `ஆம் (ஒப்படைக்கிறேன்)!”என்று கூறினார். அதற்கு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), `நானே உன்னை மணந்து கொள்கிறேன்‘` என்றார்கள்.
அத்தாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்), `(காப்பாளரே தம் பொறுப்பிலுள்ள பெண்ணை மணந்து கொள்ள விரும்பினால்)’உன்னை மணந்தேன்‘` என்று அவர் கூறும்போது சாட்சி வைத்துக்கொள்ளட்டும்! அல்லது அவள் குடும்பத்தில் ஒருவரை (மணமுடித்துத் தர) அவா உத்தரவிடட்டும்!”என்று கூறினார்கள்.
ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்
ஒரு பெண் நபி(ஸல்) அவர்களிடம் வந்து’என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிட (-மஹ்ரின்றி என்னைத் தாங்கள் மணந்துகொள்ள) வந்துள்ளேன்‘` என்று கூறினார். அப்போது ஒருவர், `இறைத்தூதர் அவர்களே! இந்தப் பெண் தங்களுக்குத் தேவையில்லையாயின் எனக்கு இவளை மணமுடித்துத் தாருங்கள்‘` என்று கேட்டார்.

ஹதீஸ் 5131. ஆயிஷா (ரலி) அறிவித்தார்
"(நபியே!) பெண்களின் விஷயத்தில் தீர்ப்பு வழங்குமாறு உங்களிடம் அவர்கள் கோருகிறார்கள். நீங்கள் கூறுங்கள்: அவர்களின் விஷயத்தில் அல்லாஹ் (இவ்வாறு) தீர்ப்பளிக்கிறான். !" எனும் (திருக்குர்ஆன் 04:127 வது) இறைவசனம், ஓர் அநாதைப் பெண்ணைக் குறிக்கிறது. அவள் ஒரு மனிதரின் பாதுகாப்பில், அவரின் சொத்தில் பங்காளியாக இருந்து வருவாள். இந்நிலையில், அவளைத் (தாமே மணந்து கொள்ள விரும்பினாலும், அவளுடன் அவர் முறையாக இல்லறம் நடத்தமாட்டார். அல்லது) தாமும் மணந்துகொள்வதை விரும்பமாட்டார். பிறருக்கு அவளை மணமுடித்துக் கொடுத்து தம் சொத்தில் அவர் தலையிடுவதையும் விரும்பமாட்டார். (இவ்வாறு) தம்மிடம் அவளை முடக்கி வைத்துக் கொள்வார். ஆனால், அல்லாஹ் இதற்குத்தடை விதித்தான்.

ஹதீஸ் 5132. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்
நாங்கள் நபி(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தோம். அப்போது ஒரு பெண்மணி அவர்களிடம் வந்து தம்மை மணந்து கொள்ளுமாறு கோரினார். அவளைவிட்டும் தம் பார்வையைத் தாழ்த்திக் கொண்ட நபி(ஸல்) அவர்கள், பிறகு பார்வையை உயர்த்தினார்கள். ஆனால், அந்தப் பெண்ணை நபி(ஸல்) அவர்கள் (மணந்துகொள்ள) விரும்பவில்லை. அப்போது நபியவர்களின் தோழர்களில் ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! இந்தப் பெண்ணை எனக்கு மணமுடித்து வையுங்கள்!" என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், '(மஹ்ராகச் செலுத்த) உன்னிடம் (பொருள்) ஏதேனும் உள்ளதா?' என்று கேட்டார்கள். அவர், 'என்னிடம் ஏதும் இல்லை' ' என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள், 'இரும்பினால் ஆன மோதிரம் கூட இல்லையா?' என்று கேட்டார்கள். அவர், '(இரும்பு) மோதிரம் கூட இல்லை. ஆயினும், (நான் கீழாடையாக உடுத்திக் கொள்ளும்) என்னுடைய இந்தப் போர்வையை இரண்டாகக் கிழித்து அவளுக்குப் பாதியைக் கொடுத்துவிட்டு மீதிப் பாதியை நான் எடுத்துக் கொள்கிறேன்' ' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'இல்லை! குர்ஆனில் ஏதேனும் (உமக்கு மனனம்) உண்டா?' என்று கேட்டார்கள். அவர், 'ஆம்' ' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், '(அப்படியானால்) நீர் செல்லலாம்! உம்முடனுள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்துவைத்தேன்' ' என்றார்கள்.

## ஒருவர் தம் சிறு பிள்ளைகளுக்கு மணமுடித்துவைப்பது (செல்லும்).

ஏனெனில், அல்லாஹ் (திருக்குர்ஆன் 65:4 வது வசனத்தில்), 'பருவம் அடையாத பெண்ணின்' இத்தா' வரம்பு மூன்று மாதம்' ' என்று கூறுகிறான்.

ஹதீஸ் 5133. ஆயிஷா (ரலி) அறிவித்தார்
நான் ஆறு வயதுடையவளாய் இருந்தபோது என்னை நபி(ஸல்) அவர்கள் மணந்தார்கள். எனக்கு ஒன்பது வயதானபோது என்னுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். நான் அவர்களுடன் ஒன்பது ஆண்டுகள் (மனைவியாக) வாழ்ந்தேன்.

## தந்தை தம் மகளைத் தலைவருக்கு மணமுடித்து வைப்பது.

உமர் (ரலி) கூறினார்
என்னிடம் நபி(ஸல்) அவர்கள் (என் மகள்) ஹஃப்ஸாவைப் பெண் கேட்டார்கள். நான் (அவர்களுக்கு) மணமுடித்துக கொடுத்தேன்.

ஹதீஸ் 5134. ஆயிஷா (ரலி) அறிவித்தார்
நான் ஆறு வயதுடையவளாய் இருந்தபோது, என்னை நபி(ஸல்) அவர்கள் மணந்தார்கள். எனக்கு ஒன்பது வயதானபோது, என்னுடன் தாம்பத்திய உறவு கொண்டார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் இப்னு உர்வா (ரஹ்) கூறினார்கள்:

ஆயிஷா(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் ஒன்பது ஆண்டுகள் வாழ்ந்தார்கள் என்று எனக்குச் செய்தி எட்டியது.

## (காப்பாளர் இல்லாதோருக்கு) ஆட்சியாளரே காப்பாளராவார். ஏனெனில், உம்முடன் (மனப்பாடமாக) உள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு நான் மணமுடித்துத் தந்தேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 5135. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து, 'என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிவிட்டேன்'' என்று கூறிவிட்டு, நீண்ட நேரம் நின்றிருந்தார். அப்போது ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம், 'தங்களுக்கு இவள் அவசியமில்லையானால், இவளை எனக்கு மணமுடித்து வையுங்கள்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'இவளுக்கு மஹ்ராகக் கொடுக்க உன்னிடம் ஏதேனும் உள்ளதா?' என்று கேட்டார்கள். அவர், 'என்னுடைய வேட்டியைத் தவிர என்னிடம் வேறொன்றுமில்லை'' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அவளுக்கு நீர் இதைக் கொடுத்துவிட்டால், வேட்டியில்லாமல் நீர் உட்கார்ந்து கொள்ள வேண்டியதுதான். எனவே, (இவளுக்கு மஹ்ர் செலுத்த) ஏதேனும் தேடுக!''என்றார்கள். 'அவர் (தேடிவிட்டு வந்து)'ஒன்றும் கிடைக்கவில்லை'' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'இரும்பினாலான ஒரு மோதிரத்தையாவது தேடுக'' என்று கூறினார்கள். அப்போதும அவருக்கு எதுவும்கிடைக்கவில்லை. பிறகு நபி(ஸல்) அவர்கள், 'குர்ஆனில் ஏதேனும் உம்முடன் (மனனமாக) உள்ளதா?' என்று கேட்டார்கள். அதற்கவர், 'ஆம் இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம்'' எனச் சில அத்தியாயங்களின் பெயரைக் குறிப்பிட்டார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'உம்முடன் (மனனமாய்) உள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்துத் தந்தேன்'' என்று கூறினார்கள்.

## தந்தையோ, மற்ற காப்பாளரோ கன்னிப்பெண்ணிற்கோ, கன்னி கழிந்த பெண்ணிற்கோ அவர்களின் விருப்பமில்லாமல் மணமுடித்து வைக்கக் கூடாது.

ஹதீஸ் 5136. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், 'கன்னிகழிந்த பெண்ணை, அவளுடைய (வெளிப்படையான) உத்தரவு பெறாமல் மணமுடித்துக் கொடுக்க வேண்டாம். கன்னிப் பெண்ணிடம் (ஏதேனும் ஒருமுறையில்) அனுமதி பெறாமல் மணமுடித்துக் கொடுக்கவேண்டாம்'' என்று கூறினார்கள். மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! எப்படி கன்னியின் அனுமதி(யைத் தெரிந்து கொள்வது)'' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அவள் மௌனம் சாதிப்பதே (அவளுடைய சம்மதம்) என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5137. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான், 'இறைத்தூதர் அவர்களே! கன்னிப் பெண் வெட்கப்படுவாளே?' என்று கேட்டேன். அதற்கு, 'அவளுடைய மௌனமே சம்மதம்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ஒருவர் தம் மகளுக்கு அவளுடைய விருப்பமின்றி மணமுடித்து வைத்தால், அத்திருமணம் செல்லாது.

ஹதீஸ் 5138. கன்ஸா பின்த் கிதாம் அல்அன்சாரியா(ரலி) கூறினார்

கன்னி கழிந்த பெண்ணான என்னை என் தந்தை (ஒருவருக்கு) மணமுடித்துவைத்தார்கள். எனக்கு இதில் விருப்பமிருக்கவில்லை. எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் போ(ய் என் விருப்பத்தைச் சொன்)னேன். அத்திருமணத்தை நபி(ஸல்) அவர்கள் ரத்துச் செய்தார்கள்.

ஹதீஸ் 5139. காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) அறிவித்தார்
அப்துர் ரஹ்மான் இப்னு யஸீத்(ரஹ்) அவர்களும், முஜம்மிஉ இப்னு யஸீத்(ரஹ்) அவர்களும், 'ம்தாம் என்றழைக்கப்படும் ஒருவர் தம் புதல்வி ஒருவரை மணமுடித்து வைத்தார்‘' என்று ஆரம்பித்து மேற்கண்ட ஹதீஸைப போன்றே அறிவித்தனர்.

## அநாதைப் பெண்ணிற்கு மணமுடித்து வைப்பது (செல்லும்).

ஏனெனில், அல்லாஹ், 'நீங்கள் அநாதை(ப் பெண்களை மணந்துகொண்டு அவர்)களின் விஷயத்தில் நீதிசெலுத்த இயலாது என அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக மணந்துகொள்ளுங்கள்‘' (திருக்குர்ஆன் 04:03) என்று கூறுகிறான்.
மேலும், ஒருவர் காப்பாளரிடம்'(உம்முடைய பொறுப்பிலுள்ள) இன்ன பெண்ணை எனக்கு மணமுடித்து வை‘' என்று கூறினார். அப்போது காப்பாளர் சிறிது நேரம் பொறுத்திருந்தார். அல்லது'(மஹ்ர் செலுத்த) உன்னிடம் என்ன உள்ளது?' என்று கேட்டார். பெண் கேட்டவர் என்னிடம் இன்ன இன்னது உள்ளது என்று கூறினார். அல்லது அவர்கள் இருவருமே (சிறிது நேரம்) அமைதியாக இருந்தனர். பிறகு காப்பாளர், 'அவளை உனக்கு மணமுடித்துத் தந்தேன்‘' என்று கூறினால், இத்திருமணம் செல்லும். இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஸஹ்ல்(ரலி) அவர்களின் அறிவிப்பு வந்துள்ளது.

ஹதீஸ் 5140. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்
நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம், 'என் அருமைத் தாயார் அவர்களே! (என விளித்து,)'அநாதை(ப் பெண்)களின் விஷயத்தில் நீதிசெலுத்த இயலாது என நீங்கள் அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான பெண்களை இரண்டிரண்டாக, மும்மூன்றாக, நான்கு நான்காக மணமுடித்துக்கொள்ளுங்கள்.' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:3 வது) இறைவசனத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்:
என் சகோதரி (அஸ்மாவின்) மகனே! இந்த (வசனம் குறிப்பிடும்) அநாதைப் பெண் ஒரு காப்பாளரின் பொறுப்பில் இருந்து வருவாள். அவரோ, இவளுடைய அழம்லும் செல்வத்திலும் ஆசை(ப்பட்டு இவளைத் திருமணம் செய்ய விருப்பம்) கொள்வார். ஆனால், அவளுக்குரிய மஹ்ரைக் குறைத்திட நினைப்பார். அப்போதுதான்'நிறைவான மஹ்ரைத் தந்து அவர்களுடன் நீதியாக நடந்து கொள்ளாமல், அவர்களை நீங்கள் மணக்கக் கூடாது' என்று அவர்கள் தடைவிதிக்கப்பட்டனர். (அநாதையல்லாத) மற்ற பெண்களை மணந்துகொள்ளுமாறு அவர்களுக்கு உத்தரவிடப்பட்டது. அதற்குப் பிறகு மக்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து தீர்ப்புக் கேட்டனர். அப்போது அல்லாஹ்'(நபியே!) பெண்களின் விஷயத்தில் தீர்ப்பு வழங்கும்படி உங்களிடம் அவர்கள் கோருகின்றனர்‘' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:127 வது) வசனத்தை அருளினான்.
இந்த வசனத்தில் அல்லாஹ் கூறியிருப்பதன் கருத்தாவது:
ஓர் அநாதைப் பெண்ணிடம் செல்வமும் அழகுமிருந்தால் அவளை மணந்து கொள்ளவும் அவளுடன் உறவு முறையை ஏற்படுத்திக் கொள்ளவும்'மஹ்ர்' (விவாகக் கொடை) கொடுக்கவும் மக்கள் முன்வந்தனர். அதே சமயம் அவள் செல்வமும் அழகும் குறைந்தவளாய் இருந்தால் அவளைவிட்டுவிட்டு வேறு பெண்களை மணந்துகொண்டனர். அவளை விரும்பாதபோது (மணந்து கொள்ளாமல்)விட்டுவிதைப் போல் அவளை அவர்கள் விரும்பும்போது மஹ்ர் விஷயத்தில் அவளுடைய உரிமையை நிறைவாக வழங்கி, அவளிடம் நீதியுடன் நடந்துகொண்டால் ஒழிய அவளை மணந்துகொள்ளும் உரிமை அவர்களுக்கு இல்லை.

## பெண்கேட்பவர் காப்பாளரிடம்,இன்ன பெண்ணை எனக்கு மணமுடித்துவையுங்கள்! என்று கேட்க, அதற்கவர்,இன்னின்னவற்றிற்குப்

## பகரமாக உனக்கு அவளை நான் மணமுடித்துவைத்தேன் என்று கூறினால் திருமணம் செல்லும். மணமகனிடம் காப்பாளர் இதில் உமக்கு விருப்பமுண்டா என்றோ, சம்மதமா என்றோ கேட்காவிட்டாலும் சரியே!

ஹதீஸ் 5141. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்
ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து, தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'இப்போது எனக்கு (மணப்) பெண் தேவையில்லை' எனக் கூறினார்கள். அப்போது ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! இவளை எனக்கு மணமுடித்து வையுங்கள்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'உம்மிடம் (மஹ்ர் செலுத்த) என்ன உள்ளது?' என்று கேட்டார்கள். அவர், 'என்னிடம் எதுவுமில்லை'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'இரும்பாலான மோதிரத்தையேனும் இவளுக்கு (மஹ்ராகக்) கொடு!"என்று கூறினார்கள். அவர், 'என்னிடம் ஏதுமில்லை!"என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள், 'சரி, குர்ஆனில் ஏதேனும் உம்மிடம் (மனனமாய்) உள்ளதா?' என்று கேட்டார்கள். அவர், 'இன்னது இன்னது (மனனமாய்) உள்ளதா?' என்று கேட்டார்கள். அவர், 'இன்னது இன்னது (மனனமாய்) உள்ளது'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'உம்முடனுள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்துக் கொடுத்துவிட்டேன்'' என்று கூறினார்கள்.

## தம் சகோதர (இஸ்லாமிய)ன் கேட்டுக் கொண்டிருக்கும் ஒரு பெண்ணை மற்றவர் பெண் கேட்கலாகாது. ஒன்று, அவர் மணந்து கொள்வார் அல்லது கைவிட்டுவிடுவார். (அதுவரை இவர் பொறுத்திருக்கவேண்டும்.)

ஹதீஸ் 5142. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும்போது மற்றவர் தலையிட்டு வியாபாரம் செய்வதற்கு நபி(ஸல்) அவர்கள் தடைவிதித்தார்கள். மேலும், ஒருவர் தம் சகோதர (இஸ்லாமிய)ன் பெண்பேசிக்கொண்டிருக்கும்போது இடையில் குறுக்கிட்டு (தமக்காக அவளைப்) பெண்பேசலாகாது. தமக்கு முன் பெண்கேட்டவர் அதைக் கைவிடும்வரை அல்லது இவருக்கு அவர் அனுமதியளிக்கும் வரை (இவர் பொறுத்திருக்க வேண்டும்) என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 5143. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:
(பிறர் மீது) கெட்ட எண்ணம் கொள்வது குறித்த உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், கெட்ட எண்ணம் தான் பேச்சுகளிலேயே மிகவும் பொய்யானதாகும். (மற்றவர்களின் குற்றங் குறைகளை) துருவித் தருவி ஆராயாதீர்கள். ஒட்டுக்கேட்காதீர்கள். ஒருவரோடொருவர் பகைத்துக்கொள்ளாதீர்கள். (அல்லாஹ்வின் அடியார்களே!) சகோதரர்களாய் இருங்கள்.

ஹதீஸ் 5144. (ஒரு பெண்ணை) தம் சகோதர (இஸ்லாமிய)ன் பெண்பேசிக் கொண்டிருக்கும்போது மற்றவர் (அவளை) மணந்து கொள்வார் அல்லது அவர் கைவிட்டு விடுவார். (அதுவரை இவர் பொறுத்திருக்க வேண்டும்.)
இதைஅபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பெண் கேட்பதைக் கைவிடுவதன் விளக்க (மாய் அமைந்த சம்பவ)ம்.

ஹதீஸ் 5145. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்
(என் தந்தை) உமர் இப்னு கத்தாப்(ரலி) (தம் மருமகன் குனைஸ் இப்னு ஹுதா∴பா அஸ்ஸஹ்மீ(ரலி) இறந்துவிட்டதால் மகள்) ஹ∴ப்ஸா விதவையானபோது (அவரை வேறொருவருக்கு மணமுடித்து வைக்க எண்ணினார்கள்.
உமர்(ரலி) கூறினார்:

நான் அபூ பக்கர்(ரலி) அவர்களைச் சந்தித்து, `நீங்கள் விரும்பினால், என் மகள் ஹஃப்ஸாவைத் தங்களுக்கு திருமணம் முடித்து வைக்கிறேன்'' என்று கூறினேன். (அவர்கள் பதிலேதும் கூறவில்லை.) எனவே, சிலநாள்கள் காத்திருந்தேன். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவைப் பெண் கேட்டார்கள். (இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஹஃப்ஸாவைத் திருமணம் செய்து வைத்தேன்.

பிறகு (ஒருநாள்) அபூ பக்ர்(ரலி) என்னைச் சந்தித்து, `நீங்கள் (என்னிடம் ஹஃப்ஸா அவர்களைக் குறித்துச்) சொன்னபோது நான் உங்களுக்கு பதில் கூறாததற்குக் காரணம், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸா அவர்களை (தாம் மணப்பது) பற்றிப் பேசியதை நான் அறிந்திருந்ததே ஆகும். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இந்த இரகசியத்தை நான் வெளிப்படுத்த விரும்பவில்லை (எனவேதான், உங்களுக்கு பதிலேதும் கூறவில்லை). இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவை (திருமணம் செய்யாமல்) விட்டிருந்தால், உறுதியாக அவர்களை நான் (மனைவியாக) ஏற்றுக் கொணடிருந்திருப்பேன்'' என்று கூறினார்கள்.

## (திருமண) உரை (குத்பா).

ஹதீஸ் 5146. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(மதீனாவிற்கு) கிழக்கிலிருந்து இரண்டு மனிதர்கள் வந்து (எங்களிடையே சொற்பொழிவும் கருத்துச் செறிவும் மிக்கதோர்) சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், `நிச்சயமாகப் பேச்சில் கவர்ச்சி உள்ளது'' என்று கூறினார்கள்.

## திருமணத்திலும் வலீமா (எனும் மண)விருந்திலும் (சலங்கையில்லா) கஞ்சிரா (தஃப்) அடிப்பது.

ஹதீஸ் 5147. ருபய்யிஉ பின்த் முஅவ்வித் இப்னி அஃப்ரா(ரலி) (காலித் இப்னு ஃதக்வான்(ரஹ்) அவர்களிடம்) கூறினார்

எனக்குக் கல்யாணம் நடந்த நாள் (காலை) நபி(ஸல்) அவர்கள் (எங்கள் வீட்டுக்கு) வந்தார்கள். எனக்கருகில் நீங்கள் அமர்ந்திருப்பது போன்று நபி(ஸல்) அவர்கள் என்னுடைய விரிப்பின் மீது அமர்ந்தார்கள். (அங்கு) சில (முஸ்லிம்) சிறுமியர் (சலங்கையில்லா) கஞ்சிராக்களை அடித்துக்கொண்டு பத்ருப் போரில் கொல்லப்பட்ட எம் முன்னோரைப் புகழ்ந்து (இரங்கல்) பாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களில் ஒரு சிறுமி, `எங்களிடையே ஓர் இறைத்தூதர் இருக்கிறார். அவர் நாளை நடக்கவிருப்பதையும் அறிவார்'' என்று கூறினாள். உடனே, நபி(ஸல்) அவர்கள், `(இப்படிச் சொல்லாதே!) இதைவிட்டுவிட்டு முன்பு நீ சொல்லிக்கொண்டிருந்ததை (வேண்டுமானால்) சொல்!''என்று கூறினார்கள்.

## “மேலும், பெண்களுக்கு அவர்களுக்குரிய மஹ்ரை மனமுவந்து அளித்துவிடுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 04:4 வது) இறைவசனமும், அதிகபட்ச மஹ்ர் மற்றும் அனுமதிக்கப்பட்ட குறைந்த பட்ச மஹ்ரும்.

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் அவர்களில் ஒருத்திக்கு செல்வக் குவியலையே (மஹ்ராகக்) கொடுத்திருந்தாலும் கூட, அதிலிருந்து எதனையும் நீங்கள் (திரும்ப) எடுத்துக் கொள்ளாதீர்கள். (திருக்குர்ஆன் 04:20)

மேலும், அல்லாஹ் கூறினான்:

நீங்கள் உங்கள் மனைவியரைத் தீண்டாமலேயே, அல்லது அவர்களுக்கு மஹ்ரை நிர்ணயிக்காமலேயே அவர்களை விவாகரத்துச் செய்விடுவீர்களாயின் உங்களின் மீது குற்றமேதுமில்லை. (திருக்குர்ஆன் 02:236)

ஸஹ்ல்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள், `இரும்பினாலான மோதிரத்தையேனும் (மஹ்ராகக் கொடுக்கத்) தேடுக!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5148. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவை (மஹ்ராகக்) கொடுத்து ஒரு (அன்சாரிப்) பெண்ணை மணந்தார்கள். (அவரின் முகத்தில்) திருமணத்தின் மகிழ்ச்சி(யின் ரேகை)யைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் அவரிடம் அது குறித்துக் கேட்டார்கள். அதற்கு அப்துர் ரஹ்மான்(ரலி), ஒரு பேரீச்சங் கொட்டையின் எடையளவை (மஹ்ராக)க் கொடுத்து ஒரு பெண்ணை மணமுடித்துக் கொண்டேன்'' என்று பதிலளித்தார்கள்.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து கத்தாதா(ரஹ்) அறிவித்துள்ள தகவலில்'அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) ஒரு பேரீச்சங்கொட்டையின் எடையளவு தங்கத்தை (மஹ்ராக)க் கொடுத்து ஒரு பெண்ணை மணமுடித்துக்கொண்டார்கள்'' என்று காணப்படுகிறது.

## குர்ஆனை கற்றுத் தருவதற்கு பதிலாகவோ மஹ்ர் ஏதும் குறிப்பிடாமலோ மணமுடித்து வைப்பது.

ஹதீஸ் 5149. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஅதீ(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்த மக்களிடையே இருந்து கொண்டிருந்தேன். அப்போது ஒரு பெண்மணி (வந்து) நின்று,`என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக (-மஹ்ரின்றி மணந்துகொள்வதற்காக) வழங்கிவிட்டேன் தங்கள் விருப்பப்படி செயல்படுங்கள்!"என்று கூறினார். அவருக்கு நபியவர்கள் பதிலேதும் சொல்லவில்லை. பிறகு மீண்டும் எழுந்து நின்று'என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிவிட்டேன் என்று கூறினார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணுக்கு பதிலேதும் சொல்லவில்லை. மூன்றாவது முறையாக அப்பெண்மணி எழுந்து'என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிவிட்டேன் தங்கள் விருப்பப்படி செயல்படுங்கள்'' என்றார். அப்போது ஒருவர் எழுந்து, `இறைத்தூதர் அவர்களே! இவரை எனக்கு மணமுடித்துவையுங்கள்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `(இவருக்கு மஹ்ராகக் கொடுக்க) உம்மிடம் ஏதேனும் பொருள் உள்ளதா?' என்று கேட்டார்கள். அவர், `இல்லை'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், `நீர் சென்று (இவருக்கு மஹ்ராகச் செலுத்த) இரும்பினானலான ஒரு மோதிரத்தையாவது தேடுக'' என்று கூறினார்கள். அவர் போய்த் தேடிவிட்டு பிறகு (திரும்பி) வந்து, `ஏதும் கிடைக்கவில்லை. இரும்பாலான மோதிரம் கூட கிடைக்கவில்லை'' என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `குர்ஆனில் ஏதேனும் உம்முடன் (மனனமாக) உள்ளதா?' என்று கேட்டார்கள். அதற்கவர், `ஆம் இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம் என்னிடம் (மனப்பாடமாக) உள்ளது'' என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள், `உம்முடன் (மனனமாய்) உள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இவளை உமக்கு மணமுடித்துத் தந்தேன், நீர் செல்லலாம்!"என்று கூறினார்கள்.

## இரும்பு மோதிரம் உள்ளிட்ட பொருட்களை மஹ்ராக வழங்குதல்.

ஹதீஸ் 5150. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், `இரும்பாலான மோதிரத்தையாவது கொடுத்து மணந்துகொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

## திருமணத்தில் (அங்கீகரிக்கப்பட்ட) முன் நிபந்தனைகள்

"முன் நிபந்தனைகள் விதிக்கப்படும்போது உரிமைகள் துண்டிக்கப்படுகின்றன'' என்று உமர்(ரலி) கூறினார்.

மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம் மருமகன் ஒருவரை (அபுல் ஆஸ்(ரலி) அவர்களை) நினைவு கூர்ந்து, (அவரின் மாமனாரான) தம்(முடன் அவர் வைத்திருந்த) உறவு முறையில் நல்லவிதமாக

நடந்துகொண்டதாக மிகவும் புகழ்ந்துரைத்தார்கள். 'அவர் பேசியபோது உண்மையே பேசினார். எனக்கு வாக்களித்தபோது, அதை எனக்கு நிறைவேற்றித் தந்தார்'' என்று கூறினார்கள். 90

ஹதீஸ் 5151. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
நீங்கள் நிறைவேற்றவேண்டிய நிபந்தனைகளில் முதன்மையானது யாதெனில், உங்கள் மனைவியரை உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்களாக ஆக்கிக்கொள்வதற்காக நீங்கள் (அவர்களுக்குத்) தரும் மஹ்ர் (விவாகக் கொடை)தான்.
என உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

## திருமணத்தில் அனுதிக்கப்படா நிபந்தனைகள்.

இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்:
ஒரு பெண் (தன்னை மணக்கவிரும்புகிறவரிடம் அவரின் முதல் மனைவியான) மற்றொரு பெண்ணை விவாகவிலக்குச் செய்துவிடவேண்டும் என நிபந்தனை விதிக்கக் கூடாது.

ஹதீஸ் 5152. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒரு பெண், மற்றொரு பெண்ணின் பாத்திரத்தை (வாழ்வாதாரத்தை)க் காலி செய்(துவிட்டு அதைத் தன்னுடையாக்கிக் கொள்)வதற்காக அவளை விவாகவிலக்குச் செய்திடுமாறு (தம் மணாளரிடம்) கோர அனுமதியில்லை. ஏனெனில், அவளுக்கென விதிக்கப்பட்டது நிச்சயம் அவளுக்கே கிடைக்கும். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## மணமுடித்தவர் மஞ்சள் நிற வாசனைத் திரவியத்தைப் பூசிக்கொள்வது.

இது குறித்து அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவிப்புச் செய்துள்ளார்கள்.

ஹதீஸ் 5153. அனஸ் இப்னு மாலிக்(ரலி) திரவியத்தைப் பூசிக்கொள்வது.
இது குறித்து அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவிப்புச் செய்துள்ளார்கள்.

ஹதீஸ் 5153. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) தம் மீது (வாசனைத் திரவியத்தின்) மஞ்சள் நிற அடையாளம் இருக்க, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்போது (அது குறித்து) அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வினவியபோது, தாம் ஓர் அன்சாரிப் பெண்ணை மணமுடித்துக்கொண்டதாக அப்துர் ரஹ்மான்(ரலி) நபியவர்களிடம் தெரிவித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அந்தப் பெண்ணுக்கு எவ்வளவு மஹ்ர் (விவாகக் கொடை) செலுத்தினீர்?' என்று கேட்டார்கள். அதற்கு அப்துர் ரஹ்மான்(ரலி), 'ஒரு பேரீச்சங் கொட்டையின் எடையளவு தங்கத்தை'' என்று பதிலளித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா-மணவிருந்து அளிப்பீராக!"என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5154. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை மணமுடித்துக் கொண்டபோது முஸ்லிம்களுக்கு நல்ல விசாலமான மணவிருந்து கொடுத்தார்கள். வழக்கம் போல் மணமுடித்த கையோடு (தம் துணைவியரான) இறைநம்பிக்கையாளர்களுடைய அன்னையரின் இல்லங்களுக்குச் சென்று அவர்களுக்கு (சலாம் கூறி) பிரார்த்தித்தார்கள். அன்னையரும் நபியவர்களுக்காகப் பிரார்த்தித்தனர். பிறகு (புது மணப் பெண் ஸைனப் இருந்த இல்லத்திற்கு) திரும்பி வந்தார்கள். அப்போது இருவர் (எழுந்து செல்லாமல் அங்கேயே அமர்ந்து பேசிக்கொண்டு) இருப்பதைக் கண்டார்கள். எனவே, (இல்லத்தினுள் நுழையாமல்) திரும்பிச் சென்றார்கள்.

பிறகு அவர்கள் இருவரும் வெளியேறிவிட்டது குறித்து நபியவர்களுக்கு நான் தெரிவித்தேனா, அல்லது (பிறர் மூலம்) தெரிவிக்கப்பட்டதா என்று எனக்குத் தெரியவில்லை.

## மணமகனுக்காக எவ்வாறு பிரார்த்திப்பது?

ஹதீஸ் 5155. அனஸ்(ரலி) அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களின் (ஆடையின்) மீது (வாசனை திரவியத்தின்) மஞ்சள் நிற அடையாளத்தைக் கண்ட நபி(ஸல்) அவர்கள், 'இது என்ன?' என்று கேட்டார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), 'ஒரு பேரீச்சங் கொட்டையின் எடையளவு தங்கத்தை (மஹ்ராக)க் கொடுத்து, ஒரு பெண்ணை நான் மணமுடித்துக் கொண்டேன்'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'பாரக்கல்லாஹ் - அல்லாஹ் உங்களுக்கு சுபிட்சத்தை வழங்குவானாக!"என்று பிரார்த்தித்துவிட்டு, 'ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா - மணவிருந்து அளியுங்கள்'' என்று கூறினார்கள்.

## மணமகளை மணமகனிடம் அனுப்பி வைக்கும் பெண்கள் மக்களுக்காகச் செய்யும் பிரார்த்தனை.

ஹதீஸ் 5156. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(நான் ஆறு வயதுடையவளாக இருந்த போது) என்னை நபி(ஸல்) அவர்கள் மணந்தார்கள். பின்னர் (ஒன்பது வயதில் தாம்பத்திய உறவைத் தொடங்கிய போது) என் தாயார் (உம்மு ரூமான்) என்னிடம் வந்து, என்னை வீட்டினுள் அனுப்பி வைத்தார்கள். அங்கு வீட்டில் சில அன்சாரிப் பெண்கள் இருந்தனர். அவர்கள்'நன்மையுடனும் சுபிட்சத்துடனும் வருக! (அல்லாஹ்வின்) நற்பேறு உண்டாகட்டும்!"என்று (வாழ்த்துக்) கூறினர்.

## புனிதப் போருக்குச் செல்வதற்கு முன் (மணமகன்) தாம்பத்திய உறவைத் தொடங்க விரும்புவது.

ஹதீஸ் 5157. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைத்தூதர்களில் ('யூஷஉ இப்னு நூன்' எனும்) ஒருவர் புனிதப் போருக்குச் சென்றார். அப்போது அவர் தம் சமுதாயத்தாரிடம், 'ஒரு பெண்ணிடம் இல்லற உரிமையைப் பெற்ற ஒருவர், அவளுடன் தாம்பத்திய உறவைத் தொடங்க விரும்பி (இதுவரை) தாம்பத்திய உறவு கொள்ளாதிருப்பின் அவர் என்னைப் பின்பற்றி (போருக்கு) வரவேண்டாம்'' என்று கூறினார்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். 96

## (பூப்பெய்திவிட்ட) ஒன்பது வயது மனைவியுடன் தாம்பத்திய உறவைத் தொடங்குவது.

ஹதீஸ் 5158. நான் ஆறு வயதுடையவளாய் இருந்தபோது என்னை நபி(ஸல்) அவர்கள் மணந்தார்கள். எனக்கு ஒன்பது வயதானபோது என்னுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். நான் அவர்களுடன் ஒன்பது ஆண்டுகள் (மனைவியாக) வாழ்ந்தேன்.

## பயணத்தில் தாம்பத்திய உறவைத் தொடங்குவது.

ஹதீஸ் 5159. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் கைபருக்கும் மதீனாவுக்கும் இடையில் ('சத்துஸ் ஸஹ்பா' எனுமிடத்தில்'ஸஃபிய்யா பின்த் ஹுயை' அவர்களை மணமுடித்து) மூன்று நாள்கள் தங்கினார்கள். அங்கு ஸஃபிய்யா அவர்களுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். அப்போது நபியவர்களின் வலீமா - மணவிருந்துக்காக முஸ்லிம்களை அழைத்தேன். அந்த விருந்தில் ரொட்டியோ, இறைச்சியோ இருக்கவில்லை.

நபி(ஸல்) அவர்கள் (பிலால்(ரலி) அவர்களிடம்) தோல் விரிப்பைக் கொண்டு வருமாறு உத்தரவிட, (அவ்வாறே அது கொண்டுவந்து விரிக்கப்பட்டது.) அதில் பேரீச்சம் பழம், பாலாடைக் கட்டி, நெய் போன்றவை இடப்பட்டன. இதுவே அன்னாரின் வலீமா - மணவிருந்ததாக அமைந்தது.
அப்போது முஸ்லிம்கள், 'ஸஃபிய்யா(ரலி) இறைநம்பிக்கையர்களின் அன்னை (-நபியவர்களின் துணைவி-)யரில் ஒருவரா? அல்லது நபி(ஸல்) அவர்களின் அடிமைப் பெண்ணா?' என்று பேசிக்கொண்டனர். அப்போது'ஸஃபிய்யா அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் திரையிட்(டுக் கொள்ளும்படி கட்டளையிட்)டால், அவர் இறைநம்பிக்கையாளர்களின் அன்னையரில் (-நபியவர்களின் துணைவியரில்) ஒருவர் அப்படி அவருக்குத் திரை(யிட்டுக் கொள்ளும்படி கட்டளை)யிடாவிட்டால், அவர் அடிமைப் பெண்களில் ஒருவர்'' என்று (சிலர்) கூறினர். நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்தில் புறப்பட்டபோது, தமக்குப் பின்னல் ஸஃபிய்யா அவர்களுக்காக இருக்கையமைத்து இடம் கொடுத்து (அவர்கள் அமர்ந்த பிறகு) அவர்களுக்கும் மக்களுக்கும் இடையில் திரையிட்டு இழுத்து மூடிவிட்டார்கள்.

## நெருப்பின்றி, வாகனமின்றி பகல் வேளையில் தாம்பத்திய உறவைத் தொடங்குவது.

ஹதீஸ் 5160. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் என்னை (ஆறு வயதில்) மணந்தார்கள். பின்னர் (ஒன்பது வயதில் தாம்பத்திய உறவைத் தொடங்கியபோது) என் தாயார் (உம்மு ரூமான்) என்னிடம் வந்து என்னை வீட்டுக்குள் அனுப்பி வைத்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முற்பகல் வேளையில் தான் என்னிடம் வந்து என்னை அதிர்ச்சிக் குள்ளாக்கினார்கள்.

## மென்பட்டு விரிப்புகள் போன்றவற்றைப் பெண்களுக்காகப் பயன்படுத்துவது.

ஹதீஸ் 5161. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
(எனக்குத் திருமணமான பொழுது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'மென்பட்டு விரிப்புகளை அமைத்துவீட்டீர்களா?' என்று கேட்டார்கள். நான், 'எங்களிடம் எவ்வாறு மென்பட்டு விரிப்புகள் இருக்கும்?' என்றேன். அதற்கு அவர்கள், 'விரைவில் (உங்களிடம்) மென்பட்டு விரிப்புகள் இருக்கும்'' என்று பதிலளித்தார்கள்.

## மணப்பெண்ணை மாப்பிள்ளையிடம் அனுப்பி வைக்கும் (தோழிப்) பெண்களும், அவர்கள் சுபிட்சம் வேண்டி பிரார்த்திப்பதும்.

ஹதீஸ் 5162. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
நான் ஒரு பெண்ணை அன்சாரிகளில் ஒருவ(ருக்கு மணமுடித்து வைத்து அவளை அவ)ரிடம் அனுப்பிவைத்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'ஆயிஷாவே! உங்களுடன் பாடல் (பகுதி சிறுமியர்) இல்லையா? ஏனெனில், அன்சாரிகளுக்குப் பாடலென்றால் மிகவும் பிடிக்குமே'' என்றார்கள்.

## மணமகனுக்கு அன்பளிப்பு வழங்குதல்.

ஹதீஸ் 5163. அபூ உஸ்மான் அல்ஜஅத் இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்
(பஸராவிலுள்ள) பனூ ரிஃபாஆ பள்ளி வாசலில் (நாங்கள் இருந்துகொண்டிருந்த போது) அனஸ்(ரலி) எங்களைக் கடந்து சென்றார்கள். அப்போது அவர்கள் கூறினார்கள்:
நபி(ஸல்) அவர்கள் (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) இருக்கும் பகுதியைக் கடந்து சென்றால் அவர்களின் இல்லத்திற்குச் சென்று அவர்களுக்கு சலாம் (முகமன்) கூறுவது வழக்கம்.

நபி(ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை மணமுடித்து மணாளராக இருந்தபோது உம்முசுலைம்(ரலி) என்னிடம், `இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏதாவது ஒன்றை நாம் அன்பளிப்பாக வழங்கினால் நன்றாயிருக்குமே!"என்று கூறினார்கள். அதற்கு நான், `(அவ்வாறே) செய்யுங்கள்!"என்று அவர்களிடம் கூறினேன். எனவே, அவர்கள் பேரீச்சம் பழம், நெய், பாலாடைக் கட்டி ஆகியவற்றை எடுத்து 'ஹைஸ்' எனும் ஒருவகைப் பண்டத்தை ஒரு பாத்திரத்தில் தயாரித்தார்கள். அதை என்னிடம் கொடுத்து நபி(ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். அதை நான் எடுத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களை நோக்கி நடந்(து சென்று கொடுத்)தேன். அப்போது அவர்கள் என்னிடம், `அதைக் கீழே வைக்குமாறு கூறிவிட்டு, சிலரின் பெயரைக் குறிப்பிட்டுவிட்டு, அவர்களைத் தம(து மணவிருந்து)க்காக அழைத்து வருமாறும், நான் சந்திக்கிறவர்களையும் தமக்காக அழைதது வருமாறும என்னைப் பணித்தார்கள். நபி(ஸல்) அவர்கள் எனக்கு உத்தரவிட்ட பணியைச் செய்து (முடித்து)விட்டு, நான் திரும்பி வந்தேன்.

அப்போது (நபியவர்களின்) அந்த இல்லம் மக்களால் நிரம்பியிருந்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள் தம்மிரு கைகளையும் அந்தப் பண்டத்தின் மீது வைத்து அல்லாஹ் நாடிய (பிரார்த்தனைச் சொற்கள் முதலிய)வற்றை மொழியக் கண்டேன். பிறகு அதனை உண்பதற்காக அங்கிருந்த மக்களைப் பத்துப் பத்துப் பேராக அழைக்கலானார்கள். அவக்ாளிடம், `அல்லாஹ்வின் பெயரைக் கூறுங்கள்! ஒவ்வொருவரும் அவரவர்(கைக்கு) அருகிலிருக்கும் பகுதியிலிருந்து உண்ணுங்கள்!"என்று கூறினார்கள். அவர்கள் அனைவரும் அதனைச் சாப்பிட்டுவிட்டு கலைந்து சென்றனர். அவர்களில் வெளியே சென்றுவிட்டவர்கள் போக ஒரு சிலர் மட்டும் (அங்கேயே) பேசிக்கொண்டு இருந்துவிட்டார்கள். (அவர்கள் எழுந்து செல்லாமல் இருப்பது குறித்து) நான் வருந்தலானேன். பிறகு, நபி(ஸல்) அவர்கள் (வழக்கம் போல்) தம் துணைவியரின்) அறைகளை நோக்கி (அவர்களுக்கு சலாம் கூறிப் பிரார்த்திப்பதற்காக)ப் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களுக்குப் பின்னால் நானும் போனேன். '(எழுந்து செல்லாமல் பேசிக்கொண்டிருக்கும்) அவர்கள் போய்விட்டிருப்பார்கள்'` என்று கூறினேன். எனவே, நபி(ஸல்) அவர்கள் திரும்பி வந்து (ஸைனப்(ரலி) அவர்களின்) அந்த இல்லத்திற்குள் சென்று திரையைத் தொங்கவிட்டார்கள். நான் அந்த அறையிலேயே இருந்து கொண்டிருந்தேன்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் (தமக்கு அருளப்பெற்ற) பின்வரும் (திருக்குர்ஆன் 33:53 வது) வசனத்தை ஓதினார்கள்: இறைநம்பிக்கையாளர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி நுழையாதீர்கள். அவ்வாறு (நபியின் இல்லத்தில் நடக்கும்) விருந்துக்காக உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டாலும், அப்போதும் கூட உணவு தாயராவதை எதிர்பார்த்து (அங்கே காத்து) இராதீர்கள். மாறாக, (உணவு தயார் வாருங்கள் என) நீங்கள் அழைக்கப்படும்போது நுழையுங்கள். சாப்பிட்டு முடிந்ததும் கலைந்து சென்று விடுங்கள். பேசிக்கொண்டிருப்பதில் ஆர்வமாய் இருந்துவிடாதீர்கள். நிச்சயமாக உங்களின் இச்செயல் நபிக்கு வேதனை அளிக்கிறது. ஆயினும், இதனை உங்களிடம் கூற அவர் வெட்கப்படுகிறார். ஆனால், அல்லாஹ்வோ சத்தியத்தைக் கூற வெட்கப்படுவதில்லை.

அனஸ்(ரலி) கூறினார்: நான் (சிறுவயதில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பத்தாண்டுகள் பணிவிடை செய்தேன்.

## மணப்பெண்ணுக்காக ஆடை அணிகலன்களை இரவல் வாங்குதல்.

ஹதீஸ் 5164. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(என் சகோதரி) அஸ்மாவிடம் நான் கழுத்தணி ஒன்றை இரவல் வாங்கினேன். அது (பனு முஸ்தலிக் போரின் பயணத்தில்) காணாமல் போய்விட்டது. எனவே, அதைத் தேடுவதற்காகத் தம் தோழர்களில் சிலரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அனுப்பி வைத்தார்கள். (அவர்கள்

அதைத் தேடச் சென்றனர்.) அப்போது (வழியில்) அவர்களுக்குத் தொழுகை நேரம் வந்துவிட்டது. அந்த நேரம் (உளூச் செய்யாமலேயே அவர்கள் தொழுதார்கள். அவர்கள் திரும்பி வந்தபோது (உளூச் செய்யாமல் தொழுதது குறித்து) நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டனர். அப்போதுதான்'தயம்மும்' தொடர்பான (திருக்குர்ஆன் 05:6 வது) இறைவசனம் அருளப்பட்டது. எனவே, (ஆயிஷா(ரலி) அவர்களிடம்) உசைத் இப்னு ஹுளைர்(ரலி), 'தங்களுக்கு அல்லாஹ் நற்பலன் வழங்கட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! ஓர் (இக்கட்டான) சம்பவம் நேரும்போதெல்லாம் அதிலிருந்து விடுபடுவதற்கான முகாந்திரத்தைத் தங்களுக்கும், அதில் ஒரு சுபிட்சத்தை முஸ்லிம்களுக்கும் அல்லாஹ் ஏற்படுத்தாமல் இருந்ததில்லை'' என்று கூறினார்கள்.

## ஒருவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ளும்போது செய்யவேண்டிய பிரார்த்தனைகள்.

ஹதீஸ் 5165. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
உங்களில் ஒருவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவுகொள்ளும்போது'பிஸ்மில்லாஹ் அல்லாஹும்ம ஜன்னிப்னிஷ்ஷைத்தான் வ ஜன்னிபிஷ் ஷைத்தான் மா ரஸக்த்தனா' (அல்லாஹ்வின் திருப்பெயரால்! இறைவா! என்னை விட ஷைத்தானை விலக்கிவைப்பாயாக! எனக்கு நீ வழங்கும் குழந்தைச் செல்வத்தைவிட்டும் ஷைத்தானை விலக்கிவைப்பாயாக!') என்று பிரார்த்தித்து அதன்பின்னர் அந்தத் தம்பதியருக்கு விதிக்கப்பட்டபடி குழந்தை பிறந்தால், அக்குழந்தைக்கு ஒருபோதும் ஷைத்தான் தீங்கிழைப்பதில்லை.
என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## 'வலீமா எனும் மணவிருந்து (மார்க்கத்தில்) உள்ளதுதான்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) கூறினார்
நபி(ஸல்) அவர்கள் என்னிடம், 'ஓர் ஆட்டையாவது (அறுத்து) மணவிருந்து அளியுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 5166. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து) மதீனாவிற்கு வந்தபோது நான் பத்து வயதுடைய (சிறு)வனாய் இருந்தேன். என் அன்னையர் (-என் அன்னையும் அன்னையின் சகோதரிகளும்-) என்னை நபி(ஸல்) அவர்களுக்குப் பணிவிடை செய்யுமாறு வற்புறுத்திக் கொண்டேயிருந்தனர். எனவே, நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பத்தாண்டு காலம் பணிவிடைகள் சென்றேன். நான் இருபது வயதுடையவனாய் இருந்தபோது நபி(ஸல்) அவர்கள் இறப்பெய்தினார்கள். 'பர்தா' தொடர்பான வசனம் அருளப்பெற்றது குறித்து மக்களில் நானே மிகவும் அறிந்தவனாயிருந்தேன். (அன்னை) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் திருமணம் செய்து தாம்பத்திய உறவைத் தொடங்கியபோது தான் ஆரம்பமாக அந்த வசனம் அருளப்பெற்றது. நபி(ஸ) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை மணந்தபோது (வலீமா - மணவிருந்திற்காக) மக்களை அழைத்தார்கள். மக்கள் வந்து சாப்பிட்டுவிட்டு (நபியவர்களின் வீட்டிலிருந்து) வெளியேறிச் சென்றனர். ஆனால், அவர்களில் ஒரு குழுவினர் (மட்டும் எழுந்து செல்லாமல்) அங்கேயே நீண்ட நேரம் நபி(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தனர். அவர்கள் வெளியேறட்டும் என்பதற்காக நபி(ஸல்) அவர்கள் எழுந்து வெளியே சென்றார்கள். நானும் அவர்களுடன் வெளியேறிவிட்டேன்.
(பிறகு நேராக) ஆயிஷா(ரலி) அவர்களின் அறையின் நிலைப்படிக்கு வந்தார்கள். நானும் அவர்களுடன் நடந்தேன். பிறகு (வீட்டில் அமர்ந்திருந்த) அக்குழுவினர் வெளியேற்றியிருப்பார்கள் என்று எண்ணியவாறு (வீட்டிற்குத்) திரும்பி வந்தார்கள். நானும் அவர்களுடன் திரும்பி வந்தேன். (தம் துணைவியார்) ஸைனப்(ரலி) அவர்களின் அறைக்கு அவர்கள் வந்தபோது

அப்போதும் அந்தக் குழுவினர் எழுந்து செல்லாமல் அங்கேயே அமர்ந்த வண்ணம் (பேசிக் கொண்டு) இருந்தனர். உடனே, நபி(ஸல்) அவர்கள் திரும்பிவிட்டார்கள். நானும் அவர்களுடன் திரும்பினேன். மீண்டும் அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களின் அறையின் நிலைப்படிக்கு வந்துவிட்டு அந்த மூவரும் வெளியேறியிருப்பார்கள் என்று எண்ணி (ஸைனபின் அறைக்குத்) திரும்பி வந்தார்கள். நானும் அவர்களுடன் திரும்பி வந்தேன். அப்போது அவர்கள் (மூவரும் எழுந்து) வெளியே சென்றுவிட்டிருந்தார்கள். அப்போது எனக்கும் (தம் துணைவியாரான) ஸைனப்(ரலி) அவர்களுக்குமிடையே நபியவர்கள் திரையிட்டார்கள். இவ்வேளையில்தான்'பர்தா' தொடர்பான (திருக்குர்ஆன் 33:53 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

## ஓர் ஆட்டை அறுத்தேனும் வலீமா - மணவிருந்து அளிப்பது.

ஹதீஸ் 5167. அனஸ்(ரலி) அறிவித்தார்

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்∴ப்(ரலி) அன்சாரிகளில் ஒரு பெண்ணை மணந்துகொண்டபோது அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள், 'அவளுக்கு எவ்வளவு மஹ்ர் (விவாகக் கொடை) கொடுத்தாய்?' என்று கேட்டார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்∴ப்(ரலி), 'ஒரு பேரீச்சங் கொட்டை எடை அளவுத் தங்கத்தை'' என்று கூறினார்கள்.

ஹுமைத்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் அனஸ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

(மக்கா முஸ்லிம்களான) முஹாஜிர்கள் (மக்காவைத் துறந்து) மதீனா வந்தபோது அவர்கள் அன்சாரிகளிடம் தங்கினார்கள். அதன்படி அப்துர் ரஹ்மான் இப்னு அவ்∴ப்(ரலி) ஸஅத் இப்னு ரபீஉ அல்அன்சாரி(ரலி) அவர்களிடம் தங்கினார்கள். அப்போது (அப்துர் ரஹ்மான் இப்னு அவ்∴ப்(ரலி) அவர்களிடம்) ஸஅத் இப்னு ரபீஉ(ரலி), 'நான் தங்களுக்கு என் சொத்தை (சரிபாதியாக)ப் பங்கிட்டுத் தருகிறேன். என் இரண்டு மனைவியரில் ஒருவரை விவாகவிலக்குச் செய்து உங்களுக்கு அவரை மணமுடித்து வைக்கிறேன்'' என்று கூறினார்கள். (அதை மறுத்துவிட்ட) அப்துர்ரஹ்மான்(ரலி)'அல்லாஹ் உங்கள் குடும்பத்திலும் செல்வத்திலும் சுபிட்சத்தை வழங்குவானாக!"என்று பிரார்த்தித்துவிட்டு, கடைத் தெருவை நோக்கிச் சென்று வியாபாரத்தில் ஈடுபடலானார்கள். (முதன் முதலில்) பிறிது பாலாடைக் கட்டியையும் நெய்யையும் (இலாபமாக) அடைந்தார்கள். பின்னர் (அன்சாரிப் பெண்மணியை) மணந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்'ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா - மணவிருந்து அளியுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5168. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஸைனப்(ரலி) அவர்களை மணந்துகொண்டபோது அளித்த (வலீமா) மணவிருந்ததைப் போன்று தம் மனைவியரில் வேறெவரை மணந்தபோதும் அளிக்கவில்லை ஸைனப்(ரலி) அவர்களை மணந்தபோது நபி(ஸல்) அவர்கள் ஓர் ஆட்டை (அறுத்து) மணவிருந்தளித்தார்கள்.

ஹதீஸ் 5169. அனஸ்(ரலி) அறிவித்தார்

(கைபர் போரில் கைது செய்யப்பட்ட) ஸ∴பிய்யா பின்த் ஹுயை அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் விடுதலை செய்து, தாமே அவர்களை மணமுடித்தும் கொண்டார்கள் (ஸ∴பிய்யா(ரலி) அவர்களின் விடுதலையையே அவர்களுக்குரிய மஹ்ராகவும் (விவாகக் கொடையாகவும்) ஆக்கினார்கள். அ(வர்களை மணந்த)தற்காக (விதை நீக்கப்பட்ட பேரீச்சம் பழம், பாலாடைக் கட்டி, நெய் ஆகியவற்றைக் கலந்து தயாரிக்கப்படும்)'ஹைஸ்' எனும் பண்டத்தை வலீமா (மணவிருந்தில் அளித்தார்கள்.

ஹதீஸ் 5170. அனஸ்(ரலி) அறிவித்தார்

தம் (புதிய) மனைவி ஒருவருடன் நபி(ஸல்) அவர்கள் தாம்பத்திய உறவைத் தொடங்கியபோது (வலீமா விருந்திற்காக மக்களை அழைக்க) என்னை அனுப்பி வைத்தார்கள். நான் (தயாராயிருந்த) அந்த விருந்துக்காகச் சிலரை அழைத்தேன்.

## ஒருவர் தம் மனைவியரில் சிலருக்காகச் சிலரைவிடப் பெரிய அளவில் வலீமா விருந்தளிப்பது.

ஹதீஸ் 5171. ஸாபித் அல்புனானீ(ரஹ்) அறிவித்தார்

(அன்னை) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களின் திருமணம் குறித்து அனஸ்(ரலி) முன்னிலையில் பேசப்பட்டது. அப்போது அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், ஸைனப்(ரலி) அவர்களுக்காக (அன்னாரை மணந்து பின்) வலீமா - மணவிருந்தளித்த அளவு வேறு எவரை மணந்தபோதும் அவர்கள் மணவிருந்தளிக்க நான் கண்டதில்லை நபி(ஸல்) அவர்கள் (ஸைனப்(ரலி) அவர்களை மணந்ததற்காக) ஓர் ஆட்டை (அறுத்து) வலீமா விருந்தளித்தார்கள்.

## ஓர் ஆட்டைவிடக் குறைந்ததைக் கொண்டு வலீமா விருந்தளிப்பது.

ஹதீஸ் 5172. ஸஃபிய்யா பின்த் ஷைபா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரில் சிலருக்காக (அவர்களை மணந்ததன் பின்) வாற்கோதுமையில் இரண்டு 'முத்து' அளவில் வலீமா விருந்தளித்தார்கள்.

## வலீமா உள்ளிட்ட விருந்து அழைப்புகளை ஏற்பது கடமை ஏழு நாள்கள் அல்லது அது போன்ற சில நாள்கள் வலீமா விருந்தளிப்பது் நபி(ஸல்) அவர்கள் (வலீமா விருந்துக்கென) ஒன்றிரண்டு நாள்கள் என்று காலம் குறிப்பிட்டதில்லை.

ஹதீஸ் 5173. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் வலீமா (மண) விருந்துக்கு அழைக்கப்பட்டால் அதனை ஏற்றுச் செல்லட்டும்! என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5174. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், '(போர்க்) கைதியை (எதிரியிடமிருந்து) விடுவியுங்கள் (வலீமா - மணவிருந்து முதலியவற்றிற்காக) அழைத்தவருக்கு (அவரின் அழைப்பை ஏற்று) பதிலளியுங்கள் நோயாளியை நலம் விசாரியுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5175. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏழு விஷயங்களை(க் கடைப்பிடிக்கும்படி) எங்களுக்குக் கட்டளையிட்டு, ஏழு விஷயங்களை எங்களுக்குத் தடைசெய்தார்கள்.

நோயாளியிடம் நலம் விசாரிக்கும்படியும், ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்லும்படியும், தும்மியவ(ர் அல்ஹம்துலில்லாஹ் எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே என்று கூறுகையில் அவ)ருக்கு (யர்ஹமுகல்லாஹ் -உங்களுக்கு அல்லாஹ் கருணை காட்டுவானாக என) பதில் சொல்லும்படியும், (உன்னை நம்பிச்) சத்தியம் செய்தவர் (அதை) நிறைவேற்ற உதவும்படியும், அநீதியிழைக்கப்பட்டவருக்கு உதவும்படியும், 'சலாம்' எனும் முகமனைப் பரப்புப்படியும், விருந்து அழைப்பை ஏற்கும்படியும் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

மேலும், (ஆண்கள்) தங்க மோதிரங்களை அணிய வேண்டாமென்றும், வெள்ளிப்பாத்திரங்களைப் பயன்படுத்த வேண்டாமென்றும்'மைஸரா' எனும் பட்டுமெத்தை, பட்டு கலந்த (எம்ப்திய) பஞ்சாடை, தடித்தபட்டு, (கலப்படமில்லாத) சுத்தப்பட்டு ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமென்றும் எங்களுக்குத் தடை விதித்தார்கள்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 5176. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

அபூ உசைத் மாலிக் இப்னு ரபீஆ அஸ்ஸா இதீ(ரலி), தம் திருமணத்திற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களை அழைத்தார்கள். (அதில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பங்கெடுத்தார்கள்.) மணப் பெண்ணாயிருந்த அபூ உசைதுடைய துணைவியார் (உம்மு உசைத் சலாமா பின்த் வஹ்ப்) அவர்களே அன்றைய தினம் மக்களுக்குப் பணிவிடை செய்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மணப்பெண் (உம்மு உசைத்) பருகுவதற்கு என்ன தந்தார் தெரியுமா?
அவர் நபி(ஸல்) அவர்களுக்கென்றே இரவில் பேரீச்சம் பழங்களைத் தண்ணீரில் ஊறப்போட்டு வைத்திருந்தார். நபி(ஸல்) அவர்கள் (வலீமா - மணவிருந்தை) சாப்பிட்டு முடித்ததும் அந்தப் பேரீச்சம் பழச் சாற்றை அவர் நபி(ஸல்) அவர்களுக்குப் பருகத் தந்தார்.

## விருந்து அழைப்பை ஏற்காதவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்தவராவார்.

ஹதீஸ் 5177. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

ஏழைகளைவிட்டுவிட்டு, செல்வந்தர்கள் மட்டுமே அழைக்கப்படும் வலீமா - மணவிருந்து உணவே உணவுகளில் மிகத் தீய தாகும். விருந்து அழைப்பை ஏற்காதவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்தவராவார்.

## ஆட்டுக்காலின் கீழ்ப்பகுதியை (வலீமா - மணவிருந்தாக வழங்கப்பட்டாலும் அதை) ஒருவர் (மனதார) ஏற்றுக் கொள்வது.

ஹதீஸ் 5178. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் ஆட்டுக் காலின் கீழ்ப்பகுதி(யை விருந்தாக்கி, அந்த விருந்து)க்கு நான் அழைக்கப்பட்டாலும் நிச்சயம் நான் (அந்த அழைப்பை) ஏற்றுக் கொள்வேன். ஆட்டுக்காலின் கீழ்ப்பகுதி எனக்கு அன்பளிப்பாகத் தரப்பட்டாலும் நிச்சயம் நான் அதைப் பெற்றுக் கொள்வேன். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## மணவிருந்து முதலியவற்றுக்காக அழைப்பவரின் அழைப்பை ஏற்றுக்கொள்வது.

ஹதீஸ் 5179. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இந்த (மண) விருந்திற்கு நீங்கள் அழைக்கப்பட்டால் அதை ஏற்றுக்கொள்ளுங்கள்.
இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான நாஃபிஉ(ரஹ்) கூறினார்:
இந்த ஹதீஸை அறிவித்த அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) ('நஃபில்' எனும் கூடுதல்) நோன்பு நோற்றிருந்த நிலையில் கூட மணவிருந்து உள்ளிட்ட அழைப்புகளை ஏற்றுச் சென்று வந்தார்கள்.

## மணவிருந்திற்குப் பெண்களும் சிறுவர்களும் செல்வது.

ஹதீஸ் 5180. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

திருமண விருந்தொன்றுக்குச் சென்றுவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்த (அன்சாரிப்) பெண்களையும் சிறுவர்களையும் நபி(ஸல்) அவர்கள் கண்டார்கள். உடனே (அவர்களை நோக்கி) மகிழ்ச்சியுடன்) எழுந்து சென்று, 'இறைவா! (நீயே சாட்சி' என்று கூறிவிட்டு, அவர்களைப் பார்த்து,) மக்களிலேயே நீங்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்'' என்று கூறினார்கள்.

## விருந்து நடக்கும் இடத்தில் வெறுக்கத்தக்கச் செயல் ஏதேனும் நடைபெறக் கண்டால், திரும்பி வந்துவிடவேண்டுமா?

(வலீமா - மணவிருந்து நடைபெற்ற) வீட்டில் உருவப்படமிருப்பதைக் கண்ட இப்னு மஸ்வூத்(ரலி) திரும்பி வந்துவிட்டார்கள்.

இப்னு உமர்(ரலி) (தம் புதல்வர் சாலிமின் மணவிருந்திற்கு) அபூ அய்யூப் அல்அன்சாரி(ரலி) அவர்களை அழைத்திருந்தார்கள். (இப்னு உமர்(ரலி) அவர்களின் அழைப்பை ஏற்று அவர்களின் இல்லத்திற்கு வந்த) அபூ அய்யூப் அல் அன்சாரி(ரலி) அந்த இல்லத்தின் சுவரில் (ஆடம்பரமான) திரை (தொங்கவிடப்பட்டு) இருப்பதைக் கண்டார்கள். (அதைக் கண்ணுற்ற இல்லத்தின் உரிமையாளர்) இப்னு உமர்(ரலி) உடனே, '(சுவரில் திரையைத் தொங்கவிடும்) இந்த விஷயத்தில் எங்களைப் பெண்கள் மிகைத்துவிட்டார்கள். (எனவேதான் இந்தத்திரையை இங்கு காண்கீறீர்கள்)'' என்று கூறினார்கள். அதற்கு அபூ அய்யூப் அல்அன்சாரி(ரலி), (இது போன்ற வெறுக்கத்தக்கச் செயலை செய்துவிடுவார்களோ என) யார் விஷயத்தில் நான் அஞ்சினேனோ (இல்லையா,) உங்களின் விஷயத்தில் எனக்கு அந்த அச்சம் ஏற்பட்டதில்லை. (ஆனால், நீங்களே இப்படிச் செய்துவிட்டீர்களே!) அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் உணவை உண்ணமாட்டேன்'' என்று கூறிவிட்டு, திரும்பிச் சென்றார்கள்.

ஹதீஸ் 5181. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான் சிறியமெத்தை ஒன்றை விலைக்கு வாங்கினேன். அதில் உருவப் படங்கள் வரையப்பட்டிருந்தன. (வீட்டுக்கு வந்த) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதைக் கண்டதும் வாசற்படியிலேயே நின்றுவிட்டார்கள் உள்ளே வரவில்லை. அவர்களின் முகத்தில் அதிருப்தி(ன் அறிகுறி)யினை நான் அறிந்து கொண்டு, 'இறைத்தூதர் அவர்களே! நான் அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் மன்னிப்புக் கோருகிறேன். நான் என்ன குற்றம் செய்துவிட்டேன்?' என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இது என்ன மெத்தை?' என்று கேட்டார்கள். அதற்கு நான், 'தாங்கள் இதில் அமர்ந்துகொள்வதற்காகவும், தலை சாய்த்துக் கொள்வதற்காகவும் இதைத் தங்களுக்காகவே நான் விலைக்கு வாங்கினேன்'' என்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'இந்த உருவப் படங்களை வரைந்தவர்கள் மறுமைநாளில் வேதனை செய்யப்படுவார்கள். மேலும் அவர்களின்'நீங்கள் படைத்தவற்றுக்கு (நீங்களே) உயிர் கொடுங்கள்' என (இறைவன் தரப்பிலிருந்து இடித்து)க் கூறப்படும்'' என்று சொல்லிவிட்டு, 'உருவப்படங்கள் உள்ள வீட்டில் நிச்சயமாக (இறைவனின் கருணையைக் கொண்டுவரும்) வானவர்கள் நுழைவதில்லை'' என்று கூறினார்கள்.

## மணவிருந்தின்போது ஆண்களுக்குப் பணிவிடைசெய்யும் பொறுப்பினைப் பெண்கள் தாமே ஏற்பது.

ஹதீஸ் 5182. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) கூறினார்

அபூ உசைத் அஸ்ஸாஇதீ(ரலி) (தம்) மணவிருந்தின்போது நபி(ஸல்) அவர்களையும் நபித்தோழர்களையும் அழைத்தார்கள். இவர்களுக்காக அபூ உசைத்(ரலி) அவர்களின் துணைவியார் (மணப்பெண்) உம்மு உசைத்(ரலி) அவர்களே உணவு தயாரித்துப் பரிமாறவும் செய்தார்கள். உம்மு உசைத்(ரலி) (முந்தைய நாள்) இரவிலேயே கல் பாத்திரம் ஒன்றில் பேரீச்சங்கனிகள் சிலவற்றை ஊறப்போட்டு வைத்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் சாப்பிட்டு முடிந்தவுடன் அவர்களுக்காக உம்மு உசைத்(ரலி) அந்தப் பேரீச்சங்கனிகளை(த் தம் கரத்தால்) பிழிந்து அன்பளிப்பாக ஊட்டினார்கள்.

## போதையளிக்காத பேரீச்சம் பழச்சாறு போன்ற பானங்களை மணவிருந்திற்காகத் தயாரித்தல்.

ஹதீஸ் 5183. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

அபூ உசைத் அஸ்ஸாஇதீ(ரலி), தம் திருமணத்திற்கு இறைத்தூதர்(ஸல் அவர்களை அழைத்தார்கள். (அதில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பங்கெடுத்தார்கள்.) மணப்பெண்ணாயிருந்த அபூ உசைதுடைய துணைவியார் (உம்மு உசைத்) அவர்களே

அன்றைய தினம் மக்களுக்குப் பணிவிடை செய்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்(குப் பருகக் கொடுப்பதற்)காக மணப்பெண் (உம்மு உசைத்) என்ன ஊறவைத்தார் தெரியுமா? இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குகென்றே (தண்ணீரில்) பேரீச்சம் பழங்களை (முந்தைய) இரவிலேயே கல் பாத்திரம் ஒன்றில் ஊறப்போட்டு வைத்திருந்தார். (நபி(ஸல்) அவர்கள் மணவிருந்தைச் சாப்பிட்டு முடித்ததும் அந்தப் பேரீச்சம் பழச்சாற்றை அவர் நபி(ஸல்) அவர்களுக்குப் பருகத் தந்தார்.)

## பெண்களுடன் நளினமாக நடந்து கொள்வதும், பெண்கள் (வளைந்த) விலா எலும்பைப் போன்றவர்கள் என்று நபி(ஸல்) அவர்கள் (உவமித்துக்) கூறியதும்.

ஹதீஸ் 5184. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பெண், (வளைந்த) விலா எலும்பைப் போன்றவளாவாள். அவளை நீ நிமிர்த்த நினைத்தால் அவளை ஓடித்தேவிடுவாய். (அதற்காக அப்படியே) அவளை நீ அனுபவித்துக்கொண்டே இருந்தால், அவளில் கோணல் இருக்க அனுபவிக்க வேண்டியதுதான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பெண்களுக்கு நலம் நாடுதல்.

ஹதீஸ் 5185. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டிருப்பவர் தம் அண்டை வீட்டாருக்குத் தொல்லை தர வேண்டாம்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5186. பெண்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள் என உங்களுக்கு நான் உபதேசிப்பதை ஏற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில், பெண்கள் (வளைந்த) விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டுள்ளனர். விலா எலும்பின் மிகக் கோணலான பகுதி அதன் மேல்பகுதியாகும். அதை நீ (பலவந்தமாக) நிமிர்த்திக் கொண்டே போனால் அதை நீ ஒடித்தே விடுவாய். அதை அப்படியே நீவிட்டுவிட்டால் கோணலுள்ளதாகவே அது நீடிக்கும். எனவே, பெண்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்ளுங்கள் என உங்களுக்கு நான் உபதேசிப்பதை ஏற்றுக்கொள்ளுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5187. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் எங்கள் பெண்களுடன் (அதிகமாகப்) பேசுவதையும் சகஜமாகப் பழகுவதையும் தவிர்த்து வந்தோம். (அவ்வாறு பழம், தவறு ஏதேனும் நிகழ்ந்துவிட்டால்) எங்கள் தொடர்பாக (குர்ஆன் வசனம்) ஏதேனும் இறங்கி (தடை விதிக்கப்பட்டு) விடுமோ என்ற அச்சமே இதற்குக் காரணம். நபி(ஸல்) அவர்கள் இறந்த பிறகு (பெண்களுடன் தாராளமாகப்) பேசினோம் சகஜமாகப் பழம்னோம்.

## உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் நரக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 66:06)

ஹதீஸ் 5188. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒவ்வொருவருக்கும் பொறுப்பாளியே. நீங்கள் ஒவ்வொருவருக்கும் (அவரவர் பொறுப்பு குறித்து மறுமையில்) விசாரிக்கப்படுவீர்கள்: ஆட்சித்தலைவரும் பொறுப்பாளரே. அவர் (தம் குடிமக்கள் குறித்து) விசாரிக்கப்படுவார். ஆண்மகன் (-குடும்பத்தலைவன்-) தன் மனைவி மக்களின் பொறுப்புக்கு உட்பட்டவர்கள் பற்றி) விசாரிக்கப்படுவான். பெண் (-மனைவி-), தன் கணவரின் வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள். அவள் (அந்தப் பொறுப்பு குறித்து)

விசாரிக்கப்படுவாள். அடிமை தன் எசமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவன் (தனக்குரிய பொறுப்பு குறித்து) விசாரிக்கப்படுவான்.
அறிந்துகொள்ளுங்கள்! நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. உங்களில் ஒவ்வொருவரும் விசாரிக்கப்படுவீர்கள்.
என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## மனைவியுடனான நல்லுறவு.

ஹதீஸ் 5189. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
(முற்காலத்தில்) பதினொன்று பெண்கள் (ஓரிடத்தில் கூடி) அமர்ந்து கொண்டு ஒவ்வொரு வரும் தத்தம் கணவர் குறித்த செய்திகளில் எதையும் மூடி மறைக்காமல் (உள்ளதை உள்ளபடி) எடுத்துரைப்பதென உறுதிமொழியும் தீர்மானமும் எடுத்துக்கொண்டனர்.
முதலாவது பெண் கூறினார்:
என் கணவர், (உயரமான) மலைச் சிகரத்தில் வைக்கப்பட்டுள்ள மிகவும் இளைத்துப்போன ஒட்டகத்தின் இறைச்சிக்கு நிகரானவர். (இளைத்த ஒட்டகத்தின் இறைச்சியாயினும், அதை எடுக்க) மேலே செல்லலாம் என்றால் (அதை மலைப்பாதை) சுலபமானதாக இல்லை. (சிரமத்தைத் தாங்கி) மேலே ஏற (அது ஒன்றும்) கொழுத்த (ஒட்டகத்தின்) இறைச்சியுமில்லை.
இரண்டாவது பெண் கூறினார்:
நான் என் கணவர் பற்றிய செய்திகளை அம்பலப்படுத்தப் போவதில்லை. (அப்படி அம்பலப்படுத்த முயன்றாலும்) அவரைப் பற்றிய செய்திகளை ஒன்று கூட விடாமல் சொல்ல முடியுமா என்ற அச்சமும் எனக்கு உண்டு. அவ்வாறு கூறுவதானாலும் அவரின் வெளிப்படையான மற்றும் அந்தரங்கமான குற்றங் குறைகளைத் தான் கூறவேண்டியதிருக்கும்.
மூன்றாவது பெண் கூறினார்:
என் கணவர் மிகவும் உயரமான மனிதர் அவரைப் பற்றி நான் (ஏதேனும்) பேசி (அது அவரின் காதுக்கு எட்டி)னால். நான் விவாகரத்துச் செய்யப்பட்டு விடுவேன் (அதே நேரத்தில் அவரிடம் எதுவும் பேசாமல்) நான் மௌனமாயிருந்தால் அந்தரத்தில் விடப்படுவேன். (என்னுடன் நல்லபடி வாழவுமாட்டார் என்னை விவாகரத்தும் செய்யமாட்டார்.)
நான்காவது பெண் கூறினார்.
என் கணவர் (மக்கா உள்ளிட்ட)'திஹாமா' பகுதியின் இரவு நேரத்தைப் போன்ற (இதமான)வர். (அவரிடம்) கடும் வெப்பமும் இல்லை கடுங்குளிருமில்லை. (அவரைப் பற்றி எனக்கு) அச்சமும் இல்லை கடுங்குளிருமில்லை. (அவரைப் பற்றி எனக்கு) அச்சமும் இல்லை (என்னைப் பற்றி அவரும்) துச்சமாகக் கருதியதுமில்லை.
ஐந்தாவது பெண் கூறினார்:
என் கணவர் (வீட்டுக்குள்) நுழையும்போது சிறுத்தை போல் நுழைவார். வெளியே போனால் சிங்கம் போலிருப்பார். (வீட்டினுள்) தாம் கண்டுபிடித்த (குறைபாடுகள் முதலிய)வை பற்றி எதுவும் கேட்கமாட்டார்.
ஆறாவது பெண் கூறினார்:
என் கணவர் உண்டாலும் வாரி வழித்து உண்டு விடுகிறார். குடித்தாலும் மிச்சம் மீதி வைக்காமலும் குடித்துவிடுகிறார். படுத்தாலும் (விலகி) சுருண்டு போய்ப் படுத்துக்கொள்கிறார். என் சஞ்சலத்தை அறிய தம் கையைக் கூட அவர் (என் ஆடைக்குள்) நுழைப்பதில்லை. 124
ஏழாவது பெண் கூறினார்:
என் கணவர்'விவரமில்லாதவர்' அல்லது'ஆண்மையில்லாதவர்', சற்றும் விவேகமில்லாதவர். எல்லா நோய்களும் (குறைகளும்) அவரிடம் உண்டு. (அவரிடம் பேசினால் உன்னை ஏசுவார்.

கேலி செய்தால்) உன் தலையைக் காயப்படுத்துவார். (கோபம் வந்துவிட்டால்) உன் உடலைக் காயப்படுத்துவார். அல்லது இரண்டையும் செய்வார்.
எட்டாவது பெண் கூறினார்:
என் கணவர் தொடுவதற்கு முயலைப் போன்ற (மிருதுவான மேனி உடைய)வர் முகர்வதற்கு மரிக்கொழுந்து போல் மணக்கக் கூடியவர்.
ஒன்பதாவது பெண் கூறினார்:
என் கணவர் (அவரை நாடி வருவோரைக் கவரும் வகையில்) உயரமான தூண்(கள் கொண்ட மாளிகை) உடையவர். நீண்ட வாளுறை கொண்ட (உயரமான)வர். (விருந்தினருக்குச் சமைத்துப் போட்டு வீட்டுமுற்றத்தில்) சாம்பலை நிரைத்துவைத்திருப்பவர். (மக்கள் அவரைச் சந்திப்பதற்கு வசதியாக) சமுதாயக் கூடத்திற்கு அரும்லேயே வீட்டை அமைத்துக் கொண்டவர்.
பத்தாவது பெண் கூறினார்:
என் கணவர் செல்வந்தர் எத்துணை பெரும் செவ்வந்தர் தெரியுமா? எல்லா செல்வந்தர்களையும் விட மேலான செல்வந்தர். அவரிடம் ஏராளமான ஒட்டகங்கள் உள்ளன. (அவற்றை அறுத்து விருந்தினருக்குப் பரிமாறுவதற்கு வசதியாகப்) பெரும்பாலும் அவை தொழுவங்களிலேயே (தயார் நிலையில்) இருக்கும். (விருந்தினர் வராத சில நாள்களில் மட்டும்) குறைவாகவே மேய்ச்சலுக்கு விடப்படும். (விருந்தினர் வருகையை முனனிட்டு மகிழ்ச்சியில் ஒலிக்கப்படும்) குழலோசையை அந்த ஒட்டகங்கள் கேட்டுவிட்டால் தாம் அழிந்தோம் என அவை உறுதிசெய்து கொள்ளும்.
பதினொன்றாவது பெண் கூறினார்:
என் கணவர் (பெயர்) அபூ ஸர்உஅபூ ஸர்உ எத்தகையவர் தெரியுமா? ஆபரணங்களை அவர் என் காதுகளில் ஊஞ்சலாடச் செய்திருக்கிறார். (ஆசையாசையாக உணவளித்து) என் கொடுங்கைகளை கொழுக்கச் செய்துள்ளார். அவர் என்னைப் பூரிப்படையச் செய்திருக்கிறார். என் மனம் நிறைந்திருக்கிறது. ஒரு மலைக் குகையில் (அல்லது)'ஷிக்' எனுமிடத்தில்) சிறிது ஆடுகளுடன் (திரிந்துகொண்டு) இருந்த குடும்பத்தில் என்னைக் கண்ட அவர், என்னை (மனைவியாக ஏற்று) குதிரைகளும் ஒட்டகங்களும் உள்ள, தானியக் களஞ்சியமும் கால்நடைச் செல்வங்களின் அரவமும் நிறைந்த (அவரின் பண்ணை) வீட்டில் என்னை வாழச் செய்தார். நான் அவரிடம் எதையும் பேசுவேன் நான் அலட்சியப்படுத்தப்பட்டதில்லை. நான் தூங்கினாலும் (நிம்மதியாக) முற்பகல் வரைத் தூங்குகிறேன். (என் தூக்கத்தை யாரும் கலைப்பதில்லை.) நான் (உண்டாலும்) பரும்னாலும் பெருமிதப்படும் அளவிற்கு (உண்ணுகிறேன்) பருகுகிறேன்.
(என்கணவரின் தாயார்) உம்மு அபீ ஸர்உ எத்தகையவர் தெரியுமா? அவரின் வீட்டுக்கு களஞ்சியம் (எப்போதும்) கனமாகவே இருக்கும் அவரின் வீடு விசாலமானதாகவே இருக்கும்.
(என் கணவரின் புதல்வர்) இப்னு அபீ ஸர்உ எத்தகையவர் தெரியுமா? அவரின் படுக்கை, உருவப்பட்ட கோரை போன்று (அல்லது உறையிலிருந்து எடுக்கப்பட்ட வாளைப் போன்று (சிறியதாக) இருக்கும். (அந்த அளவிற்குக் கச்சிதமான உடலமைப்பு உள்ளவர்.) ஓர் ஆட்டுக் குட்டியின் ஒரு சப்பை(இறைச்சி) அவரின் பசியைத் தணித்துவிடும். (அந்த அளவிற்குக் குறைவாக உண்ணுவர்.)
(என் கணவரின் புதல்வி) பின்த் அபீ ஸர்உ எத்தயைவர் தெரியுமா? தம் தாய் தந்தைக்கு அடங்கி நடப்பவர். (கட்டான உடல் கொண்ட) அவரின் ஆடை நிறைவானதாக இருக்கும். அண்டை வீட்டுக்காரி அவரைக் கண்டு பொறாமை கொள்வாள்.
(என் கணவர்) அபூ ஸர்உ உடைய பணிப்பெண் எத்தகையவள் தெரியுமா? அவள் எங்கள் (இரகசிய) செய்திகளை அறவே வெளியிடுவதில்லை. வீட்டிலுள்ள உணவுப் பொருள்களைச் சேதப்படுத்துவதுமில்லை. வீட்டில் குப்பை கூளங்கள் சேர விடுவதுமில்லை. (அவ்வளவு நம்பிக்கையானவள் பொறுப்புமிக்கவள் தூய்மை விரும்பி.)

(ஒருநாள்) பால் பாத்திரங்களில் (மோர் கடைந்து) வெண்ணெய் எடுக்கப்படும் (வசந்த கால அதிகாலை) நேரம் (என் கணவர்) அபூ ஸர்உ வெளியே சென்றார். (வழியில்) ஒரு பெண்ணைச் சந்தித்தார். அவளுடன் சிறுத்தைகள் போன்ற அவளுடைய இரண்டு குழந்தைகள் இருந்தனர். அந்தக் குழந்தைகள் அவளுடைய இடைக்குக் கீழே இரண்டு மாதுகளங் கனிகளை வைத்து விளையாட்டிக் கொண்டிருந்தனர். எனவே, (அவளுடைய கட்டழகில் மனதைப் பறி கொடுத்து) என்னை விவாக விலக்குக் செய்துவிட்டு, அவளை மணந்தார். அவருக்குப் பின் இன்னொரு நல்ல மனிதருக்கு நான் வாக்கப்பட்டேன். அவர் வேகமாகச் செல்லும் குதிரையில் ஏறி, (பஹ்ரைன் நாட்டிலுள்ள)'கத்' எனும் இடத்தைச் சேர்ந்த ஈட்டி ஒன்றை எடுத்தார். மாலையில் வீடு திரும்பியபோது ஏராளமான கால்நடைகளை என்னிடம் கொண்டு வந்தார். மேலும், எனக்கு ஒவ்வொரு பொருட்களிலும் ஒரு ஜோடியை வழங்கி, `உம்மு ஸாஉவே! (நன்றாக) நீயும் சாப்பிடு! உன்(தாய்) வீட்டாருக்கும் சாப்பிடக் கொடு'` என்றார்.

(ஆனாலும்,) அவர் எனக்கு (அன்புடன்) வழங்கிய எல்லாப் பொருள்களையும் நான் ஒன்றாய்க் குவித்தாலும் (என் முதல் கணவரான) அபூ ஸர்உவின் சின்னஞ்சிறு பாத்திரத்தைக் கூட அவை நிரப்பமுடியாது (என்று கூறி முடித்தார்.)

ஆயிஷா(ரலி) கூறினார்:

(என்னருமைக் கணவரான) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னிடம்), `(ஆயிஷாவே!) உம்மு ஸர்விற்கு அபூ ஸர்உ எப்படியோ அப்படியே உனக்கு நானும் (அன்பாளனாக) இருப்பேன்' என்றாக்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரி ஆகிய நான்) கூறுகிறேன்.

மற்ற சில அறிவிப்புகளில் சிற்சில வார்த்தைகள் மாறியுள்ளன.

ஹதீஸ் 5190. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

அபிசீனியர்கள் தம் ஈட்டிகளால் (வீர விளையாட்டு) விளையாட்டிக் கொண்டிருந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை மறைத்தபடி (வீட்டு வாசலில் நின்று கொண்டு) இருக்க, நான் (அவர்களின் விளையாட்டைப்) பார்த்துக் கொண்டிருந்தேன். நானாக (ரசித்து முடித்து, சலிப்புற்று) திரும்பிச் செல்லும்வரை நான் (அதைப்) பார்த்துக்கொண்டேயிருந்தேன். வயது குறைந்த இளம்பெண் எவ்வளவு நேரம் கேளிக்கை (விளையாட்டு)களைக் கேட்டுக் கொண்டு(ம் பார்த்துக்கொண்டும்) இருப்பாள் என்பதை நீங்களே மதிப்பிட்டுக் கொள்ளுங்கள்.

## ஒருவர் தம் மகளுக்கு, அவளுடைய கணவரின் நிலை குறித்து புத்திமதி சொல்வது.

ஹதீஸ் 5191. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நான் நீண்ட நாள்களாக நபி(ஸல்) அவர்களின் துணைவியரில் இருவரைப் பற்றி உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களிடம் கேட்கவேண்டும் என்று பேராவல் கொண்டிருந்தேன். (ஏனெனில், அவ்விருவரைப் பற்றித் தான்) அல்லாஹ் (குர்ஆனில்), `நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டால் (அது உங்களக்குச் சிறந்ததாகும்.) ஏனெனில், உங்கள் உள்ளங்கள் (நேரிய வழியிலிருந்து சற்றே) பிறழ்ந்து விட்டிருக்கின்றன'` (திருக்குர்ஆன் 66:04) என்று கூறியிருந்தான்.

(ஒரு முறை) உமர்(ரலி) ஹஜ்ஜுக்குச் சென்றார்கள். நானும் (அந்த ஆண்டு) அவர்களுடன் ஹஜ் செய்தேன். (ஹஜ்ஜை முடித்துக்கொண்டு திரும்பும் வழியில்) உமர்(ரலி) (தம்) இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக) ஒதுங்கினார்கள். அவர்களுடன் நானும் தண்ணீர்க் குவளையுடன் சென்றேன். அவர்கள் இயற்கைக் கடனை முடித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். நான் அவர்களின் கைகளில் (குவளையிலிருந்த) தண்ணீரை ஊற்றினேன். (அதில்)

அவர்கள்'உளூ'ச் செய்தார்கள். அப்போது நான் அன்னாரிடம், 'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! நபி(ஸல்) அவர்களின் துணைவியரில் இருவரைக் குறித்து, 'நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீண்டால் (அது உங்களுக்குச் சிறந்ததாகும்). ஏனெனில், உங்கள் உள்ளங்கள் (நேரிய வழியிலிருந்து சற்றே) பிறழ்ந்து விட்டிருக்கின்றன' என்று அல்லாஹ் கூறியுள்ளானே, அந்த இருவர் யார்?' என்று கேட்டேன். அதற்கு உமர்(ரலி), 'இப்னு அப்பாஸே! உங்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். (உங்களுக்குமா இது தெரியாமல் போயிற்று!) ஆயிஷா(ரலி) அவர்களும் ஹஃப்ஸா(ரலி) அவர்களும் தாம் அந்த இருவர்'' என்று பதிலளித்தார்கள்.

பிறகு உமர்(ரலி) நடந்த நிகழ்ச்சி முழுவதையும் கூறலானார்கள். அப்போது அவர்கள் கூறினார் நான் அன்சாரியான என் பக்கத்து வீட்டுக் காரர் ஒருவருடன் பனு உமய்யா இப்னு ஸைத் குலத்தாருடன் வசித்து வந்தேன். இவர்கள் மதீனாவின் மேடான பகுதிகளில் ஒன்றில் குடியிருப்பவர்களாவர்.

நாங்கள் இருவரும் முறை வைத்துக் கொண்டு (அங்கிருந்து) இறங்கிவந்து நபி(ஸல்) அவர்களுடன் இருப்போம். அவர் ஒரு நாள் நபியவர்களுடன் இருப்பார். நான் ஒரு நாள் நபியவர்களுடன் இருப்பேன். நான் நபி(ஸல்) அவர்களுடன் இருக்கும் அன்றைய நாளின் வேத அறிவிப்புகள் (நபியவர்களின் சொல், செயல்) முதலானவற்றை நான் அவரிடம் வந்து தெரிவிப்பேன். அவர் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தால் இதைப் போன்றே அவரும் செய்வார்.

குறைஷிக் குலத்தினராகிய நாங்கள் (மக்காவிலிருந்தபோது) பெண்களை மிஞ்சி விடுபவர்களாக இருந்து வந்தோம். (பெண்களை எங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தோம்.) நாங்கள் (மக்காவைத் துறந்து) அன்சாரிகளிடம் (மதீனா நகருக்கு) வந்தபோது பெண்கள் ஆண்களை மிஞ்சிவிடக் கூடியவர்களாக இருந்தனர். (பெண்கள் ஆண்களைக் கட்டுப்படுத்துபவர்களாக, தம் மனத்திற்குப் பிடிக்காதவற்றைக் கூறும்போது ஆண்களை எதிர்த்துப் பேசக் கூடியவர்களாக இருந்தனர். (இதைக் கண்ட) எங்களுடைய பெண்களும் அன்சாரிப் பெண்களின் வழக்கத்தைக் கையாளத் தொடங்கினர்.

(ஒரு நாள்) நான் என் மனைவி (ஸைனப் பின்த் மழ்வூன்) இடம் (கோபத்துடன்) இரைந்து பேசினேன். உடனே என் மனைவியும் என்னை எதிர்த்துச் பேசினார். அவர் என்னை எதிர்த்துப் பேசிய(து (எனக்குப் பிடிக்கவில்லை அ)தை நான் வெறுத்தேன். அதற்கு அவர், 'நான் உங்களை எதிர்த்துப் பேசியதற்காக நீங்கள் ஏன் (என்னை) வெறுக்கிறீர்கள்? அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்களின் துணைவியர் கூட (அன்னாரின் பேச்சுக்கு) மறு பேச்சு பேசத்தான் செய்கிறார்கள். அவர்களில் சிலர் நபியவர்களிடம் பகலில் இருந்து இரவு வரை பேசுவதில்லை'' என்று கூறினார். இது என்னை அதிர்ச்சி அடையச் செய்யவே, 'அவர்களில் இப்படிச் செய்தவர் பெரும் இழப்புக்கு ஆளாம்விட்டார்'' என்று என் மனைவியிடம் கூறினேன்.

பிறகு உடை அணிந்து கொண்டு (அங்கிருந்து) இறங்கி, (நபியவர்களுடைய துணைவியரில் ஒருவராயிருந்த என் மகள்) ஹஃப்ஸாவிடம் சென்றேன்.'ஹஃப்ஸாவேஸ உங்களில் சிலர் அல்லாஹ்வின் தூதரிடம் பகலில் இருந்து இரவு வரை கோபமாக இருக்கிறார்களா?' என்று கேட்டேன். அதற்கு ஹஃப்ஸா, 'ஆம்'' என்று பதிலளித்தார். நான்'அப்படியானால், நீ நஷ்டப்பட்டுவிட்டாய் இழப்புக்குள்ளாம்விட்டாய். இறைத்தூதருக்குக் கோபம் ஏற்பட்டால் அதனால் அல்லாஹ்வும் கோபமடைந்து நீ அழிந்து போய்விடுவாய் எனும் அச்சம் உனக்கில்லையா? நபி(ஸல்) அவர்களிடம் அதிகமாக(த் தேவைகளை)க் கேட்காதே. எதற்காகவும் அவர்களை எதிர்த்துப் பேசாதே. அவர்களிடம் பேசாமல் இருக்காதே. உனக்கு (அவசியத் தேவையென்று) தோன்றியதை என்னிடம் கேள். உன் அண்டை வீட்டுக்காரர் - ஆயிஷா - உன்னை விட அழகு மிக்கவராகவும் நபி(ஸல்) அவர்களுக்குப் பிரியமானவராகவும் இருப்பதை வைத்து (அவர் நபியவர்களிடம் சற்று கூடுதல் உரிமை எடுத்துக் கொண்டு

ஊடலும் கோபமும் கொள்வதைப் பார்த்து) நீ ஏமாந்து போய் (அவரைப் போல் நடந்து கொண்டு) விடாதே'' என்று நான் (என் மகளுக்குப் புத்திமதி) கூறினேன்.
அந்தக் காலகட்டத்தில் நாங்கள், (ஷாம் நாட்டில் வாழும்)'ஃகஸ்ஸான்' குலத்தார் எங்களின் மீது போர் தொடுப்பதற்காக, (தங்கள்) குதிரைகளுக்கு லாடம் அடித்து(த் தயாராம்)க் கொண்டிருக்கின்றனர் என்று ஒரு (வதந்தியான) செய்தியைப் பேசிக்கொண்டிருந்தோம்.
(இவ்வாறிருக்க ஒருநாள்) என் அன்சாரித் தோழர் தம் முறைக்குரிய நாளில் (எங்கள் பகுதியிலிருந்து) இறங்கி நபி(ஸல்) அவர்களிடம் சென்றுவிட்டு, இஷா நேரத்தில் திரும்பி வந்தார். என் வீட்டுக் கதவை மிக பலமாகத் தட்டினார். (கதவைத் திறக்க நான் சற்று தாமதித்தபோது)'அவர் (உமர்) இங்கே இருக்கிறாரா? அல்லது பெளியில் சென்றுவிட்டாரா?' என்று கேட்டார். (வழக்கத்திற்கு மாறாக அவர் கதவைத் தட்டியதால்) நான் கலக்கமுற்று அவரைப் பார்க்க வெளியே வந்தேன். அவர், 'இன்று மிகப் பெரிய சம்பவமொன்று நடந்துவிட்டது'' என்று கூறினார். நான், 'என்ன அது? ஃகஸ்ஸான் குலத்தார் (படையெடுத்து) வந்துவிட்டனரா?' என்று கேட்டேன். 'இல்லை. அதைவிடப் பெரிய, அதை விட அதிர்ச்சியான சம்பவம் நடந்துவிட்டது. நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரை விவாகரத்துச் செய்துவிட்டார்கள்!"என்று கூறினார்.
நான், '(என் மகள்) ஹஃப்ஸா நஷ்டமடைந்து இழப்புக்குள்ளாம்விட்டார். நான் இப்படி (கூடிய விரைவில்) நடக்கத்தான் போகிறது என்று எண்ணியிருந்தேன்' எனக் கூறிவிட்டு, உடை அணிந்துகொண்டு புறப்பட்டேன். நபி(ஸல்) அவர்களுடன் ஃபஜ்ருத் தொழுகை தொழுதேன். (தொழுகை முடிந்த) உடனே நபி(ஸல்) அவர்கள் தமக்குரிய மாடியறைக்குச் சென்று அங்கே தனியே இருந்தார்கள். நான் ஹஃப்ஸாவிடம் சென்றேன். அப்போது அவர் அழுதுகொண்டிருந்தார். நான், 'ஏன் அழுகிறாய்? இது குறித்து உன்னை நான் எச்சரித்திருக்கவில்லையா? நபி(ஸல்) அவர்கள் உங்களை விவாகரத்துச செய்துவிட்டார்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர், 'எனக்கு (ஒன்றும்) தெரியாது. அதோ அவர்கள் அந்த மாடி அறையில் தனியாக இருக்கிறார்கள்'' என்று கூறினார்.
உடனே நான் (அங்கிருந்து) புறப்பட்டு சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகில் சென்றேன். அதைச் சுற்றி ஒரு கூட்டத்தினர் இருந்தனர். அவர்களில் சிலர் (கேள்விப்பட்ட செய்தியை எண்ணி) அழுதுகொண்டிருந்தனர். அவர்களுடன் நான் சிறிது நேரம் தாளாமல் நபியவர்கள் இருந்த மாடி அறைக்க அருகே வந்தேன். (அங்கிருந்த) நபி(ஸல்) அவர்களின் கறுப்பு அடிமை (ரபாஹ் அவர்கள்) இடம், 'உமருக்காக (நபியவர்களின் அறைக்குள் வர) அனுமதி கேள்'' என்று சொன்னேன்.
அந்த அடிமை அறைக்கு உள்ளே சென்று நபி(ஸல்) அவர்களிடம் பேசிவிட்டுப் பிறகு வெளியே வந்து, 'நபி(ஸல்) அவர்களிடம் பேசினேன். உங்களைப் பற்றி அவர்களிடம் கூறினேன். அவர்கள் மெளனமாக இருந்துவிட்டார்கள்'' என்று கூறினார். எனவே, நான் திரும்பி வந்து மிம்பருக்கு அருகில் இருந்த கூட்டத்தினருடன் அமர்ந்துகொண்டேன். பின்னர், அங்கு நிலவிய (துக்ககரமான) சூழ்நிலையைத் தாங்க முடியாமல் (மீண்டும்) அந்த அடிமையிடம் சென்று, 'உமருக்காக அனுமதிகேள்'' என்று கூறினேன். அவர் உள்ளே சென்றுவிட்டுத் திரும்பி வந்து, 'உங்களைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கூறினேன். அவர்கள் (பதிலேதும் சொல்லாமல்) மெளனமாக இருந்துவிட்டார்கள்'' என்று (முன் போன்றே) கூறினார். நான் (மறு படியும்) திரும்பிவந்து மிம்பருக்கருகில் இருந்த கூட்டத்தாருடன் அமர்ந்து கொண்டேன். மறுபடி அங்கு நான் கண்ட (கவலையான) சூழ்நிலையைத் தாங்க முடியாமல் (மூன்றாம் முறையாக) அந்த அடிமையிடம் சென்று, 'உமருக்காக அனுமதி கேள்!"என்று சொன்னேன். அவர் உள்ளே சென்றுவிட்டு என்னிடம் திரும்பி வந்து, 'நான் உங்களைப் பற்றி நபி(ஸல்)

அவர்களிடம் கூறினேன். அவர்கள் (பதிலேதும் சொல்லாமல்) மௌனமாக இருந்துவிட்டார்கள்'' என்று கூறினார்.
நான் திரும்பிச் செல்ல இருந்தபோது அந்த அடிமை என்னை அழைத்து, 'உங்களுக்கு நபி(ஸல்) அவர்கள் அனுமதியளித்துவிட்டார்கள்'' என்று கூறினார். உடனே, நான் நபி(ஸல்) அவர்களின் அறைக்குள் நுழைந்தேன். அங்கு அவர்கள் ஓர் ஈச்சம் பாயில், ஈச்ச நார்கள் அடைந்த தோல் தலையணை ஒன்றின் மீது சாய்ந்தபடி படுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கும் (அவர்கள் படுத்திருந்த) அந்தப் பாய்க்குமிடையே விரிப்பு ஏதும் இருக்கவில்லை. எனவே, அவர்களின் விலாவில் அந்த ஈச்சம் பாய் அடையாளம் பதித்திருந்தது. அவர்களுக்கு நான் சலாம் சொன்னேன். பிறகு நான் நின்று கொண்டே, 'இறைத்தூதர் அவர்களே! தங்கள் துணைவியரைத் தாங்கள் விவாகரத்துச் செய்துவிட்டீர்களா?' என்று கேட்டேன்.
நபிவர்கள் தம் பார்வையை என்னை நோக்கி உயர்த்தி, 'இல்லை (விவாக விலக்குச் செய்யவில்லை)'' என்று கூறினார்கள். உடனே நான்'அல்லாஹு அக்பர்'' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று சொன்னேன். (அவர்களின் கோபத்தைக் குறைத்து) அவர்களைச் சாந்தப்படுத்த விரும்பி, நின்றபடியே (பின்வருமாறு) சொல்லத் தொடங்கினேன்.
இறைத்தூதர் அவர்களே! நான் சொல்வதைச் சற்று கேளுங்கள்! குறைஷிக் குலத்தினராகிய நாங்கள் பெண்களை எங்கள் அதிகாரத்திற்குள் வைத்திருந்தோம். நாங்கள் மதீனாவிற்கு வந்தபோது பெண்கள் ஆண்களின் மீது ஆதிக்கம் செலுத்தும் ஒரு கூட்டத்தாரைக் கண்டோம். (எங்கள் பெண்களும் அவர்களைப் பார்த்துக் கற்றுக் கொண்டு எங்களிடம் எதிர்த்துப் பேசத் தொடங்கிவிட்டனர்)'' என்று சொன்னேன். (அதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் புன்னகைத்தார்கள்.
பிறகு நான்'இறைத்தூதர் அவர்களே! நான் கூறுவதைச் சற்று கேளுங்கள்! நான் ஹஃப்ஸாவிடம் சென்று, 'உன் அண்டை வீட்டுக்காரர் - ஆயிஷா - உன்னை விட அழகானவராகவும் அல்லாஹ்வின் தூதருக்குப் பிரியமானவராகவும் இருப்பதை வைத்து (அவர் நபியவர்களிடம் அதிக உரிமை எடுத்துக்கொண்டு ஊடலும் கோபமும் கொள்வதைக் கண்டு) நீ ஏமாந்து போய் (அவரைப் போன்று நடந்து கொண்டு) விடாதே' என்று கூறியதைச் சொன்னேன். (இதை நான் சொல்லக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் இன்னொரு முறை புன்கைத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் புன்னகைத்ததைக் கண்ட நான் (அங்கு) அமர்ந்து கொண்டேன். பிறகு, நான் என்னுடைய பார்வையை உயர்த்தி அவர்களின் அறையை நோட்டமிட்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! கண்ணைக் கவருகிற பொருள் எதையும் நான் அவர்களின் அறையில் காணவில்லை் மூன்றே மூன்று தோல்களைத் தவிர அப்போது நான், 'தங்கள் சமுதாயத்தினருக்கு (உலகச் செல்வங்களை) தாராளமாக வழங்கும்படி தாங்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். ஏனெனில், பாரசீகர்களுக்கும் ரோமர்களுக்கும் - அவர்கள் (ஏக இறைவன்) அல்லாஹ்வை வணங்காதவர்களாக இருந்தும் - உலகச் செல்வங்கள் தாராளமாக வழங்கப்பட்டிருக்கின்றனவே'' என்று கூறினேன்.
(தலையணையில்) சாய்ந்து அமர்ந்திருந்த நபி(ஸல்) அவர்கள் (இதைக் கேட்டவுடன்) நிமிர்ந்து அமர்ந்துகொண்டு, 'கத்தாபின் புதல்வரே! நீங்கள் இன்னும் இந்த எண்ணத்தில் தான் இருக்கிறீர்களா? அவர்களின் (நற்செயல்களுக்கான) பிரதிபலன்கள் அனைத்தும் இந்த உலக வாழ்விலேயே (மறுமை வாழ்வுக்கு) முன்னதாக அவர்களுக்கு வழங்கப்பட்டுவிட்டன'' என்று கூறினார்கள். உடனே நான், 'இறைத்தூதர் அவர்களே! (அவசரப்பட்டு இப்படிக் கேட்ட) எனக்காகப் பாவமன்னிப்புக்கோரிப் பிராத்தியுங்கள்'' என்று கூறினேன்.
நபி(ஸல்) அவர்களின் அந்த இரகசியத்தை ஹஃப்ஸா, ஆயிஷா அவர்களிடம் கூறி வெளிப்படுத்திவிட்டபோது, அதன் காரணத்தால் தான் நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரிடமிருந்து விலகி, இருபத்தொன்பது நாள்கள் தனிமையில் இருக்கத்

தொடங்கினார்கள். மேலும், நபி(ஸல்) அவர்களை அல்லாஹ் (திருக்குர்ஆன் 66:1 வது வசனத்தின் மூலம்) கண்டித்தபோது தம் துணைவியர் மீது ஏற்பட்ட கடும் வருத்தத்தின் காரணத்தினால்' (என் துணைவியரான) அவர்களிடம் ஒரு மாத காலத்திற்கு நான் செல்லமாட்டேன்'' என்றும் கூறியிருந்தார்கள். இருபத்தொன்பது நாள்கள் கழிந்துவிட்ட பொழுது? நபி(ஸல்) அவர்கள் ஆரம்பமாக ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றார்கள். (அதற்குப் பின் மற்ற மனைவிமார்களிடம் சென்றார்கள்.) அப்போது ஆயிஷா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம், 'இறைத்தூதர் அவர்களே! எங்களிடம் ஒரு மாத காலத்திற்கு வரப் போவதில்லை என்று நீங்கள் சத்தியம் செய்திருந்தீர்களே! நீங்கள் இருபத்தொன்பது இரவுகளைத்தானே கழித்திருக்கிறீர்கள்! (ஒரு நாள் முன்னதாக வந்துவிட்டீர்களே!) அதை நான் ஒவ்வொரு நாளாக எண்ணிக் கொண்டே வருகிறேனே!''என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'மாதம் என்பது (குறைந்தபட்சம்) இருபத்தொன்பது நாள்களும் தான்'' என்று பதில் கூறினார்கள். அந்த மாதமும் இருபத்தொன்பது நாள்களாகவே இருந்தது.

ஆயிஷா பதில் அவர்கள் கூறினார்கள்:

பிறகு (நபி(ஸல்) அவர்களின் துணைவியருக்கு, அவர்கள் விரும்பினால் நபியுடன் சேர்ந்து வாழலாம் அல்லது பிரிந்து விடலாம் என) உரிமை அளித்திடும் (திருக்குர்ஆன் 33:28 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். (இந்த இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுமாறு) தம் துணைவியரில் முதலாவதாக என்னிடமே (கூறத்) தொடங்கினார்கள். நான் நபி(ஸல்) அவர்களை(ச் சேர்ந்து வாழும் வாழ்க்கையை)யே தேர்ந்தெடுத்தேன். பிறகு தம் துணைவியர் அனைவருக்கும் நபி(ஸல்) அவர்கள் இதே உரிமையை வழங்கினார்கள். துணைவியர் அனைவரும் நான் சொன்னது போன்றே சொல்லிவிட்டார்கள்.

## ஒரு பெண் தன் கணவரின் அனுமதியுடன் தான் கூடுதலான (நஃபில்) நோன்பு நோற்கலாம்.

ஹதீஸ் 5192. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கணவர் உள்ளூரில் இருக்கும் நிலையில் ஒரு பெண் அவரின் அனுமதி இல்லாமல் (கூடுதல்) நோன்பு நோற்கக் கூடாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கணவனுடன் படுக்கையை(ப் பகிர்ந்து கொள்வதை) வெறுத்து ஒரு பெண் (தனியாக) இரவைக் கழித்தால்...?

ஹதீஸ் 5193. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தம் மனைவியைப் படுக்கைக்கு அழைக்கும்போது அவள் வர மறுத்திட்டால், அவளைப் பொழுது விடியும் வரை வானவர்கள் சபித்துக் கொண்டேயிருக்கின்றனர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5194. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு பெண் தன் கணவருடன் படுக்கையை(ப் பம்ர்ந்து கொள்வதை) வெறுத்து (தனியாக) இரவைக் கழித்தால், (கணவனின் படுக்கைக்கு) அவள் திரும்பும் வரை வானவர்கள் அவளைச் சபிக்கின்றனர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஒரு பெண் தன் கணவரின் இசைவின்றி யாரையும் அவரின் இல்லத்திற்குள் அனுமதிக்கக் கூடாது.

ஹதீஸ் 5195. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு பெண் தன் கணவர் உள்ளூரில் இருக்க, அவரின் அனுமதியில்லாமல் (கூடுதல்) நோன்பு நோற்பது அனுமதிக்கப்பட்டதன்று. அவரின் அனுமதியில்லாமல் (யாரையும்) அவரின் இல்லத்திற்குள் அவள் அனுமதிக்கலாகாது. கணவர் கட்டளையிடாமலேயே ஒரு பெண் (அறவழியில் கணவரின் பொருளைச்) செலவிட்டால் (அதன் பலனில்) பாதி அவருக்கும் கிடைக்கும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸிலுள்ள (கூடுதல்) நோன்பு பற்றிய தகவல் (மட்டும்) மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5196. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் சொர்க்கத்தின் வாசலில் நின்று கொண்டிருந்தேன். அதில் நுழைவோரில் பெரும்பாலானோர் ஏழைகளாகவே இருந்தனர். செல்வர்கள், (சொர்க்கத்தின் வாசலில் விசாரணைக்காக) தடுத்து நிறுத்தப்பட்டிருந்தனர். எனினும், (அவர்களில்) நரகவாசிகள் (எனத் தீர்மானிக்கப்பட்டோர்) ஏற்கெனவே) நரகத்திற்கு அனுப்பப்பட்டுவிட்டனர். நான் நரகத்தின் வாசலில் நின்று கொண்டிருந்தேன். அதில் நுழைவோரில் பெரும்பாலானோர் பெண்களாகவே இருந்தனர்.

என உஸாமா இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

## கணவருக்கு மாறு செய்தல்.

(கணவர் என்பதைச் சுட்டட மூலத்தில் ஆளப்பட்டுள்ள) 'அல்அஷீர்' எனும் சொல்லுக்குத் துணைவன் என்று பொருள். (திருக்குர்ஆன் 22:13 வது இறைவசனத்தின் மூலத்திலுள்ள இதே சொல்லுக்கு) 'வாழ்க்கைக் கூட்டாளி' என்று பொருள்.

இது குறித்து நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஸயீத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5197. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் சூரிய கிரகணம் ஏற்பட்டது. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (ம்ரகணத் தொழுகை) தொழுதார்கள். அவர்களுடன் (சேர்ந்து) மக்களும் தொழுதார்கள். அத்தொழுகையில் 'அல்பகரா' எனும் (2 வது) அத்தியாயம் ஓதுமளவுக்கு வெகு நேரம் நின்றார்கள். பின்பு நீண்ட நேரம் (குனிந்து) 'ருகூஉ' செய்தார்கள். பின்பு ('ருகூஉ'விலிருந்து) நிமிர்ந்து (நிலைக்கு வந்து) நீண்ட நேரம் நின்றார்கள்.

இ(ந்த நிலையான)து, முதலாம் நிலையை விடக் குறைவானதாகவே இருந்தது. பின்னர் நீண்ட நேரம் 'ருகூஉ' செய்தார்கள்.

இ(ந்த இரண்டாம் ருகூஉவான)து, முதலாம் 'ருகூஉ'வை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு 'சஜ்தா' (சிரவணக்கம்) செய்தார்கள். பின்னர் (சஜ்தாவிலிருந்து) எழுந்து (நிலையில்) நீண்ட நேரம் நின்றார்கள்.

இ(ந்த நிலையான)து, முந்தைய நிலையை விடக் குறைவானதாக இருந்தது. பிறகு நீண்ட நேரம் 'ருகூஉ' செய்தார்கள்.

இ(ந்த 'ருகூஉ'வான)து, முந்தைய 'ருகூஉ'வை விடக் குறைவானதாக இருந்தது.

பிறகு நீண்ட நேரம் 'ருகூஉ' செய்தார்கள். இ(ந்த 'ருகூஉ''வான)து முந்தைய 'ருகூஉ'வை விடக் குறைவானதாக இருந்தது.

பிறகு, 'சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரண்டு சான்றுகளாகும். எவருடைய இறப்பிற்காகவோ பிறப்பிற்காகவோ அவற்றுக்குக் கிரகணம் பிடிப்பதில்லை. எனவே, இ(த்தகைய கிரகணத்)தை நீங்கள் கண்டால் அல்லாஹ்வை நினைவுகூருங்கள்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது மக்கள், `இறைத்தூதர் அவர்களே! நீங்கள் (தொழுது கொண்டிருக்கையில்) இதோ இந்த இடத்தில் எதையோ பிடிக்க முயன்றதைக் கண்டோம். பிறகு (அந்த முயற்சியிலிருந்து) பின்வாங்கியதையும் கண்டோமே! (அது ஏன்?)‘` என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்), `நான் (தொழுது கொண்டிருக்கையில்)’சொர்க்கத்தைக் கண்டேன்‘` அல்லது’சொர்க்கம் எனக்குக் காட்டப்பட்டது‘. அதிலிருந்து (பழக்) குலையொன்றை எடுக்க முயன்றேன். அதை நான் எடுத்திருந்தால் இந்த உலகம் உள்ளவரை நீங்கள் அதிலிருந்(தப் பழத்திலிருந்)து புசித்திருப்பீர்கள்.

மேலும் நான் (தொழுது கொண்டிருக்கையில்) நரகத்தையும் கண்டேன். இன்றைய தினத்தைப் போல் (ஒரு பயங்கரமான) காட்சி எதையும் ஒருபோதும் (ஒரு பயங்கரமான) காட்சி எதையும் ஒருபோதும் நான் கண்டதேயில்லை. மேலும், நரகவாசிகளில் அதிகமாகப் பெண்களையே கண்டேன்‘` என்று கூறினார்கள்.

மக்கள், `ஏன் (அது?) இறைத்தூதர் அவர்களே!”என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `பெண்களின் நிராகரிப்பே காரணம்‘` என்றார்கள். அப்போது’பெண்கள் அல்லாஹ்வையா நிராகரிக்கிறார்கள்?’ என வினவப்பட்டது. அதற்கு’கணவன்மார்களை நிராகரி(த்து நிந்தி)க்கிறார்கள். (கணவன் செய்த) உதவிகளுக்கு நன்றி காட்ட மறுக்கிறார்கள். காலமெல்லாம் ஒருத்திக்கு நீ உதவி, பிறகு உன்னிடம் ஏதேனும் (குறை) ஒன்றை அவள் கண்டால்’உன்னிடமிருந்து எந்த நலனையும் நான் கண்டதேயில்லை’ என்று சொல்லிவிடுவாள்‘` என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5198. நபி(ஸல்) அவர்கள் அவர்கள் கூறினார்கள்:

நான் (மிஅராஜ் - விண்ணுலகப் பயணத்தின் போது) சொர்க்கத்தை எட்டிப் பார்த்தேன். அங்கு குடியிருப்போரில் அதிகமானவர்களாக ஏழைகளையே கண்டேன். நரகத்தையும் எட்டிப் பார்த்தேன். அதில் குடியிருப்போரில் அதிகமானவர்களாகப் பெண்களையே கண்டேன்.

என இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

இது இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## உன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உனக்கு உண்டு.

இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5199. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்

என்னிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , `அப்துல்லாஹ்வே! நீ பகல் எல்லாம் நோன்பு நோற்று இரவெல்லாம் நின்று வணங்குவதாகக் கேள்விப்பட்டேனே! (உண்மைதானா?)‘` என்று கேட்டார்கள். நான், `ஆம் (உண்மைதான்) இறைத்தூதர் அவர்களே!”என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள், `அவ்வாறு செய்யாதே! (சில நாள்) நோன்பு நோற்றுக்கொள். (சில நாள்) நோன்பைவிட்டு விடு! (இரவில் சிறிது நேரம்) நின்று வணங்கு! (சிறிது நேரம்) உறங்கு! உன் உடலுக்கென (நீ செய்ய வேண்டிய) கடமைகள் உனக்கு உண்டு. உன்னுடைய கண்ணுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உனக்கு உண்டு. உன் மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உனக்கு உண்டு‘` என்று கூறினார்கள்.

## ஒரு பெண் தன் கணவரின் வீட்டிற்குப் பொறுப்பாளியாவாள்.

ஹதீஸ் 5200. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே. நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் பொறுப்பு குறித்து (மறுமையில்) விசாரிக்கப்படுவீர்கள்: (ஆட்சித்) தலைவரும் பொறுப்பாளரே. ஆண்மக(னான குடும்பத் தலைவ)னும் தன் மனைவி மக்களின் பொறுப்பாளன் ஆவான். பெண் (மனைவி), தன் கணவனின் வீட்டுக்கும் அவனுடைய குழந்தைகளுக்கும் பொறுப்பாளியாவாள். ஆக,

நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளரே. நீங்கள் ஒவ்வொருவரும் தத்தம் பொறுப்பு குறித்து விசாரிக்கப்படுவீர்கள்.
என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## திருக்குர்ஆன் 04:34 வது) இறைவசனம்.

“ஆண்கள், பெண்களை நிர்வம்ப்போர் ஆவர். இதற்குக் காரணம், அல்லாஹ் அவர்களில் சிலருக்குச் சிலரைவிட உயர்வை அளித்திருக்கிறான் என்பதும், ஆண்கள் தங்களின் செல்வத்திலிருந்து செலவு செய்கிறார்கள் என்பதுமாகும்... நிச்சயமாக அல்லாஹ் உயர்வானவனும் பெரியோனுமாய் இருக்கிறான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 04:34 வது) இறைவசனம்.

ஹதீஸ் 5201. அனஸ்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , தம் துணைவியரிடம் செல்லமாட்டேன் எனச் சத்தியம் செய்துவிட்டுத் தம் மாடி அறைக்குச் சென்று அமர்ந்துகொண்டார்கள். இருபத்தொன்பதாம் நாள் (அங்கிருந்து) இறங்கி வந்தார்கள். அப்போது, `ஒரு மாதம் (துணைவியரை) நெருங்கமாட்டேன் எனச் சத்தியம் செய்தீர்களே, இறைத்தூதர் அவர்களே! (இன்னும் ஒரு நாள் மீதி இருக்கிறதே அதற்குள் வந்துவிட்டீர்களே?)‘‘ என்று வினவப்பட்டது. அதற்கு, `இந்த மாதம் இருபத்தொன்பது நாள்கள் தாம்‘‘ என்று நபியவர்கள் பதிலளித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரிடமிருந்து விலகி, துணைவியரின் இல்லம் அல்லாத வேறு இடத்தில் இருந்தது.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து முஆவியா இப்னு ஹைதர்(ரலி) அறிவிக்கும் ஹதீஸில் (மனைவியரைவிட்டும் விலகியிருப்பதானால் அவர்களின்) வீட்டுக்குள்தான் விலகியிருக்க வேண்டுமெனக் காணப்படுகிறது. ஆனால், முதல் அறிவிப்பே சரியானதாகும்.

ஹதீஸ் 5202. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்
நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரில் சிலரிடம் ஒருமாதம் செல்லமாட்டேன் எனச் சத்தியம் செய்தார்கள். இருபத்தொன்பதாம் நாள்'காலையில்' அல்லது'மாலையில்' துணைவியரிடம் சென்றார்கள். அப்போது அவர்களிடம், `இறைத்தூதர் அவர்களே! அவர்களிடம் ஒரு மாதம் செல்ல மாட்டேன் எனச் சத்தியம் செய்(திருந்)தீர்களே?' என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள், `மாதம் என்பது இருபத்தொன்பது நாள்களாகவும் இருக்கலாம்‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5203. அபூ யஅஃபூர் அப்துர் ரஹ்மான் இப்னு உபைத் அல்கூஃபீ(ரஹ்) அறிவித்தார்
நாங்கள் அபுள்ளுஹா(ரஹ்) அவர்களிடம் (ஒரு மாதத்திற்கு எத்தனை நாள் என்பது குறித்து) விவாதித்துக கொண்டிருந்தோம். அப்போது அவர்கள், இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் என (பின்வரும் ஹதீஸை)க் கூறினார்கள்:
ஒரு நாள் காலை நபி(ஸல்) அவர்களின் துணைவியர் அழுதுகொண்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அருகில் அவரவர் குடும்பத்தினரும் இருந்தனர். நான் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்குப் புறப்பட்டுச் சென்றேன். பள்ளிவாசல் மக்களால் நிரம்பியிருந்தது. அப்போது உமர் இப்னு கத்தாப்(ரலி) வந்து, நபி(ஸல்) அவர்கள் தங்கியிருந்த மாடியறைக்க ஏறிச் சென்றார்கள். (நபி(ஸல்) அவர்களுக்கு) சலாம் (முகமன்) கூறினார்கள். ஆனால் யாரும் உமருக்கு பதில் சலாம் சொல்லவில்லை. மீண்டும்'சலாம்' கூறினார்கள். அப்போதும் யாரும் (உமர்(ரலி) அவர்களுக்கு) யாரும் (உமர்(ரலி) அவர்களுக்கு) பதில் சலாம் சொல்லவில்லை. அப்போது உமர்(ரலி) அவர்களை நபி(ஸல்) அவர்கள் அழைத்தார்கள். உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் சென்று, `தங்கள் துணைவியரை (தாங்கள்)'விவாக ரத்துச் செய்துவிட்டீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், `இல்லை. ஆனால், ஒரு மாதகாலம்

(அவர்களை) நெருங்கமாட்டேன். எனச் சத்தியம் (ஈலா உ) செய்துவிட்டேன்'' என்று பதிலளித்தார்கள்.
அங்கு நபி(ஸல்) அவர்கள் இருபத்தொன்பது நாள்கள் தங்கியிருந்துவிட்டுப் பிறகு தம் துணைவியரிடம் சென்றார்கள்.

## மனைவியரை அடிப்பது வெறுக்கப்பட்ட செயலாகும்.

"(அறிவுரை கூறி, படுக்கையில் ஒதுக்கி வைத்த பிறகும் திருந்தாதபோது உங்கள் (துணைவியரான) அவர்களை அடியுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:34 வது) வசனத் தொடர்.
இதன் பொருளாவது: வலி ஏற்படாதவாறு (காயமின்றி இலேசாக) அடியுங்கள்.

ஹதீஸ் 5204. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
நீங்கள் உங்கள் மனைவியரை அடிமையை அடிப்பது போன்று அடிக்க வேண்டாம். (ஏனெனில்,) பிறகு அதே நாளின் இறுதியில் (இரவில்) அவளுடனேயே (நாணமில்லாமல்) உறவுகொள்வீர்கள்.
என அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) அறிவித்தார்.

## ஒரு பெண் பாவமான காரியத்தில் தன் கணவருக்குக் கீழ்ப்படியலாகாது.

ஹதீஸ் 5205. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
அன்சாரிகளில் ஒரு பெண் தம் மகளுக்கு மணமுடித்து வைத்தார். அவரின் மகளின் தலைமுடி உதிர்ந்துவிட்டது. அவள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து இது குறித்து தெரிவித்துவிட்டு, 'என் கணவர், என்னுடைய தலையில் ஒட்டுமுடி வைத்துக்கொள்ளுமாறு பணிக்கிறார்'' என்று கூறினாள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'வேண்டாம்! (ஒட்டுமுடிவைக்காதே) ஒட்டுமுடி வைக்கும் பெண்கள் சபிக்கப்பட்டுள்ளனர்'' என்று கூறினார்கள்.

## 4:128 வது இறைவசனம்

ஒரு பெண், தன்னிடம் கணவன் நல்ல முறையில் நடந்துகொள்ளமாட்டான் என்றோ, புறக்கணித்துவிடுவான் என்றோ அஞ்சினால் கணவன் - மனைவி இருவரும் (தம் உரிமைகளில் சிலவற்றைப் பரஸ்பரம் விட்டுக்கொடுத்து) தமக்கிடையே சமாதானம் செய்துகொள்வதில் தவறேதும் இல்லை (எனும் 4:128 வது இறைவசனம்).

ஹதீஸ் 5206. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
ஒரு பெண் ஒருவரின் மனைவியாக இருந்து வருகிறாள். (அவளுடைய முதுமை, நோய் போன்ற காரணத்தினால்) அவளை அவருக்குப் பிடிக்காமல் போய்விடுகிறது் அவளை விவாகரத்துச் செய்துவிட்டு மற்றொருத்தியை மணமுடிக்கவும் அவர் விரும்புகிறார். (இந்நிலையில்) அவள்'என்னை (மனைவியாக) இருக்கவிடுங்கள் என்னை விவாகரத்துச் செய்துவிடாதீர்கள். பின்னர் (வேண்டுமானால்) மற்றொரு பெண்ணை மணந்துகொள்ளுங்கள். எனக்காகச் செலவழிப்பதிலிருந்தும், இரவைப் பம்ர்ந்தளிப்பதிலிருந்தும், இரவைப் பம்ர்ந்தளிப்பதிலிருந்தும் நீங்கள் விலகிக் கொள்ளலாம்'' என்று தம் கணவரிடம் கூறுகிறாள். இதையே இவ்வசனம் கூறுகிறது: ஒரு பெண், தன்னிடம் கணவன் நல்ல முறையில் நடந்து கொள்ளமாட்டான் என்றோ, புறக்கணித்துவிடுவான் என்றோ அஞ்சினால், கணவன் - மனைவி இருவரும் (தம் உரிமைகளில் சிலவற்றைப் பரஸ்பரம்விட்டுக் கொடுத்து) தமக்கிடையே சமாதானம் செய்துகொள்வதில தவறேதும் இல்லை. (திருக்குர்ஆன் 04:128)

## 'அஸ்ல் (புணர்ச்சி இடைமுறிப்பு)

ஹதீஸ் 5207. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில்'அஸ்ல்' (புணர்ச்சி இடைமுறிப்பு) செய்து வந்தோம்.

ஹதீஸ் 5208. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருக்க, நாங்கள் 'அஸ்ல்' (புணர்ச்சி இடைமுறிப்பு) செய்துகொண்டிருந்தோம்.

ஹதீஸ் 5209. ஜாபிர் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் குர்ஆன் அருளப்பட்டுக் கொண்டிருந்த நிலையில் நாங்கள் 'அஸ்ல்' (புணர்ச்சி இடைமுறிப்பு) செய்து கொண்டிருந்தோம்.

ஹதீஸ் 5210. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரஹ்) அறிவித்தார்

நாங்கள் (பனு முஸ்தலிக் போரில்) சில (அரபு) போர்க் கைதிகளைப் பெற்றோம். (அவர்களிடையே இருந்த பெண் கைதிகளுடன் உடலுறவுகொள்ளவும்) 'அஸ்ல்' செய்து கொள்ளவும் விரும்பினோம். (அது குறித்து) இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினோம். அப்போது அவர்கள் '(இந்த அஸ்லை) நீங்கள் செய்து கொண்டுதான் இருக்கிறீர்கள்?' என்று கேட்டுவிட்டு, 'மறுமை நாள் வரை உருவாக வேண்டிய எந்த உயிரும் கட்டாயம் உருவாகியே தீரும்'' என்று கூறினார்கள்.

## கணவன் பயணம் செய்யவிரும்பும்போது தம் துணைவியரிடையே (யாரை அழைத்துச் செல்வது என்பதைக்) குலுக்கல் முறையில் முடிவு செய்வது.

ஹதீஸ் 5211. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் பயணம் மேற்கொள்ள விரும்பினால் தம் துணைவியரிடையே சீட்டுக் குலுக்குவார்கள். (யாருடைய பெயர் வருகிறதோ அவரைத் தம்முடன் அழைத்துச் செல்வார்கள்.) (ஒரு முறை) என்னுடைய பெயரும் ஹஃப்ஸாவின் பெயரும் (குலுக்கலில்) வந்தது. இரவு நேரப் பயணத்தில் நபி (ஸல்) அவர்கள் என்னுடன் பேசிக்கொண்டே வருவார்கள். (ஒரு நாள்) ஹஃப்ஸா (என்னிடம்), 'இந்த இரவு நீங்கள் என்னுடைய ஒட்டகத்தில் பயணம் செய்து பாருங்கள் நான் உங்களின் ஒட்டகத்தில் பயணம் செய்து பார்க்கிறேன்'' என்று கூறினார்கள். நான், 'சரி'' என்று (சம்மதம்) கூறினேன். எனவே, (நாங்களிருவரும்) ஒருவர் மற்றவரின் ஒட்டகத்தில்) ஏறிப் பயணிக்கலானோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் (நான் முதலில் ஏறி வந்த) என்னுடைய ஒட்டகத்தை நோக்கி வந்தார்கள். (அதில் நானிருப்பதாக நினைத்தார்கள். ஆனால்,) அதில் ஹஃப்ஸா இருந்தார். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் 'சலாம்' (முகமன்) கூறினார்கள். பிறகு பயணத்தைத் தொடர்ந்தார்கள். (பயணத்தினிடையே) அவர்கள் ஓர் இடத்தில் இறங்கினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களை(க் காணாததால் அவர்களை (நான் தேடினேன். அவர்கள் இறங்கிய அந்த நேரம் நான் என்னுடைய இரண்டு கால்களையும் 'இத்கிர்' புற்களுக்கிடையே (புகுத்தி) வைத்துக்கொண்டு, 'இறைவா! ஒரு தேளையோ அல்லது பாம்பையோ என் மீது ஏவிவிடு! அது என்னைத் தீண்டட்டும்'' என்று சொன்னேன். (இப்படி என்னை நானே கடிந்துகொள்ளத்தான் முடிந்ததே தவிர,) நபி (ஸல்) அவர்களை (ஹஃப்ஸாவுடன் தங்கியதற்காக) என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

## ஒரு பெண் தன் கணவரிடமிருந்து தனக்குக் கிடைக்கும் நாளை தன் சக்களத்திக்காக விட்டுக்கொடுப்பதும், அது எவ்வாறு ஒதுக்கீடு செய்யப்படவேண்டும் என்பதும்.

ஹதீஸ் 5212. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

(நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான) சவ்தா பின்த் ஸம்ஆ (ரலி), (நபி (ஸல்) அவர்கள்) தம்மிடம் தங்கும் நாளை எனக்கு அன்பளிப்பாக (விட்டு)க் கொடுத்தார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னுடைய நாளையும் 'சவ்தா' அவர்களின் நாளையும் எனக்கே ஒதுக்கிவந்தார்கள்.

## மனைவியரிடையே நீதி செலுத்துவது.

(அல்லாஹ் கூறினான்:) பல மனைவியரிடையே நீதி செலுத்த வேண்டும் என்று நீங்கள் ஆசைப்பட்டாலும் ஒருபோதும் உங்களால் அது முடியாது. அதற்காக (ஒரே மனைவியிடம்) நீங்கள் முற்றிலும் சாய்ந்து மற்றவளை அந்தரத்தில்விட்டுவிடாதீர்கள்... அல்லாஹ் பரந்த ஆற்றலுடையவனும் அறிவார்ந்தவனுமாவான். (திருக்குர்ஆன் 04:129, 130) 145

கன்னிகழிந்த பெண்(ணான மனைவி) இருக்க கன்னிப் பெண்ணை ஒருவர் மணந்தால்..?

ஹதீஸ் 5213. அனஸ்(ரலி) அறிவித்தார்

கன்னிப் பெண்ணை ஒருவர் மணந்தால் அவளிடம் ஏழு நாள்கள் தங்குவார். கன்னி கழிந்த பெண்ணை ஒருவர் மணந்திருந்தால் அவளிடம் மூன்று நாள்கள் தங்குவார். இதுவே நபிவழியாகும்.

அறிவிப்பாளர்களில் ஒருவர் (காலித், அல்லது அபூ கிலாபா) கூறுகிறார்: இதை நபி(ஸல்) அவர்களே கூறினார்கள் என்று நான் சொன்னால் (அது தவறாகாது எனினும், அனஸ்(ரலி) அவர்களிடம் கேட்டதன்படி'நபிவழி' என்று கூறியுள்ளேன்.)

## கன்னிப் பெண்(ணான மனைவி) இருக்க, கன்னிகழிந்த பெண்ணை ஒருவர் மணந்தால்...?

ஹதீஸ் 5214. அனஸ்(ரலி) அறிவித்தார்

ஒருவர் கன்னிகழிந்த பெண் (ஒருத்தி மனைவியாக) இருக்க, கன்னிப் பெண்ணை மணந்துகொண்டால் முதலில் கன்னிப் பெண்ணிடம் ஏழு நாள்கள் தங்குவார். பிறகு (மற்ற மனைவிக்கு இரவை) ஒதுக்குவார்.

ஒருவர் கன்னிப் பெண் (ஒருத்தி மனைவியாக) இருக்க, கன்னிகழிந்த பெண்ணை மணந்தால் (முதலில்) கன்னிகழிந்த பெண்ணிடம் மூன்று நாள்கள் தங்கிவிட்டு பிறகு தான் (மற்ற மனைவிக்கு இரவை) ஒதுக்குவார். இதுவே நபிவழியாகும்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அபூ கிலாபா(ரஹ்) கூறினார்:

நான் நினைத்தால், இதை நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக அனஸ்(ரலி) கூறினார் என்று சொல்ல முடியும். (அது தவறாகாது. ஆயினும், முறைப் படி அனஸ் அவர்கள் கூறிய பிரகாரமே அறிவித்துள்ளேன்.)

மற்றோர் அறிவிப்பில், காலித்(ரஹ்) கூறினார்: நான் நினைத்தால் இதை நபி(ஸல்) அவர்களே கூறினார்கள் என்று சொல்லமுடியும்.

## ஒரே குளியலில் ஒருவர் தம் மனைவியர் அனைவரிடமும் சென்றுவருவது.

ஹதீஸ் 5215. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரே இரவில் தம் எல்லா துணைவியரிடமும் சென்றுவிட்டு வந்துவிடுவார்கள். அப்போது அவர்களுக்கு ஒன்பது துணைவியர் இருந்தனர்.

## ஒருவர் தம் துணைவியரைச் சந்திக்க பகலில் செல்வது.

ஹதீஸ் 5216. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகை முடிந்தவுடன் தம் துணைவியரிடம் செல்வார்கள். அப்போது அவர்களில் சிலருடன் நெருக்கமாக இருப்பார்கள். அவ்வாறே (ஒருநாள்) தம் துணைவியாரான ஹஃப்ஸாவிடம் சென்று வழக்கமாகத் தங்கும் நேரத்தைவிட அதிக நேரம் தங்கினார்கள்.

## ஒருவர் தம் துணைவியரில் குறிப்பிட்ட ஒருவரின் இல்லத்தில் தங்கி மருத்துவ சிகிச்சை பெற (மற்றவர்களிடம்) அனுமதி கோரி, அவர்களும் அவருக்கு அனுமதியளித்தால் (அது செல்லும்).

ஹதீஸ் 5217. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது, `நாளை நான் எங்கே இருப்பேன்? நாளை நான் எங்கே இருப்பேன்?' என்று என்னுடைய (முறைவரும்) நாளை மனத்தில் எண்ணியவாறு கேட்டுக்கொண்டிருந்தார்கள். எனவே, அவர்களின் (மற்ற) துணைவியர், தாம் விரும்பிய இடத்தில் நபி (ஸல்) அவர்கள் தாங்கிக் கொள்ளலாம் என அவர்களுக்கு அனுமதியளித்தனர். எனவே, நபி (ஸல்) அவர்கள் (விரும்பியபடி) தாம் இறக்கும்வரை என்னுடைய வீட்டிலேயே தங்கி இருந்தார்கள். அவர்கள் எந்த நாளில் முறைப்படி என் வீட்டில் தங்கி வந்தார்களோ அந்த நாளில் தான் என் வீட்டில் வைத்து இறப்பெய்தினார்கள். என்னுடைய நெஞ்சுக்கும் நுரையீலுள்ள பகுதிக்கும் இடையே அவர்களின் தலை இருந்தபோது, (மிஸ்வாக் குச்சியை என் வாயால் கடித்து மென்மைப்படுத்திக் கொடுத்திருந்தால்) அவர்களின் உமிழ்நீர் என் உமிழ் நீருடன் கலந்திருந்த நிலையில் அல்லாஹ் அவர்களைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

## ஒருவர் தம் துணைவியரில் ஒருவரை மற்றவரை விட அதிகமாக நேசிப்பது.

ஹதீஸ் 5218. உமர் இப்னு கத்தாப் (ரலி) அறிவித்தார்

(என் அண்டை வீட்டு அன்சாரி நண்பர், நபி (ஸல்) அவர்கள் தம் துணைவியரை விவாகவிலக்குச் செய்துவிட்டதாகத் தந்த தவறான தகவலையடுத்து நான் என் மகள்) ஹஃப்ஸாவிடம் சென்று, என்னருமை மகளே! தம் அழகும், தம் மீது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கொண்டுள்ள அன்பும் யாரைக் குதூகலப்படுத்தியுள்ளதோ அவர் - ஆயிஷா - (நபியவர்களிடம்) சற்று கூடுதல் உரிமை எடுத்துக் கொள்வது) கண்டு நீ ஏமாந்து விடாதே!"என்று கூறினேன். பிறகு இந்தச் சம்பவத்தை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் நான் எடுத்துரைத்தபோது அவர்கள் புன்னகைத்தார்கள்.

## தம்மிடம் இல்லாத ஒன்றை இருப்பதாகக் காட்டிக் கொள்வதும், தடை செய்யப்பட்ட சக்களத்திப் பெருமையும்.

ஹதீஸ் 5219. அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்

ஒரு பெண்மணி நபி (ஸல்) அவர்களிடம், `இறைத்தூதர் அவர்களே! எனக்குச் சக்களத்தி ஒருவர் இருக்கிறார். நான் (அவரிடம்) என் கணவர் எனக்கு வழங்காத ஒன்றை வழங்கியதாகக் காட்டிக் கொண்டால், அது குற்றமாகுமா?' என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் , `ம்டைக்கப் பெறாத ஒன்றைக் கிடைத்ததாகக் காட்டிக் கொள்கிறவர், போலியான இரண்டு ஆடைகளை (அதாவது இரவல் மற்றும் அமானித ஆடைகளை, அல்லது போலியான மேல் மற்றும் கீழ் ஆடைகளை) அணிந்துகொண்டவர் போலாவார்'` என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாக வந்துள்ளது.

## ரோஷம் கொள்வது.

முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) கூறினார்

ஸஅத் இப்னு உபாதா (ரலி), `என் மனைவியுடன் ஓர் ஆண் (தவறான உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால், என் வாளின் கூர்மையான பகுதியாலேயே நிச்சயம் நான் அவனை வெட்டுவேன்'` என்று கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், `ஸஅத் அவர்களின் ரோஷத்தைக் கண்டு வியப்படைகிறீர்களா? நான் சஅதை விட ரோஷக்காரன் அல்லாஹ் என்னைவிடவும் ரோஷக்காரன்'` என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5220. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வை விட அதிக ரோஷமுள்ளவர் யாருமில்லை. எனவேதான் மானக்கேடான செயல்கள் அனைத்திற்கும் அவன் தடை விதித்துள்ளான். அல்லாஹ்வைவிட மிகவும் புகழை விரும்புகிறவர் வேறெவருமிலர்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.
ஹதீஸ் 5221. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
முஹம்மதின் சமுதாயமே!
தன் அடியார்களில் ஆணோ பெண்ணோ யார் விபசாரத்தில் ஈடுபடுவதைக் கண்டாலும் அல்லாஹ்வைவிடக் கடுமையாக ரோஷம் கொள்பவர் வேறெவருமிலர்.
முஹம்மதின் சமுதாயமே!
நான் அறிவதையெல்லாம் நீங்களும் அறிந்தால் குறைவாகச் சிரிப்பீர்கள் அதிகமாக அழுவீர்கள்.
என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
ஹதீஸ் 5222 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
அல்லாஹ்வைவிட அதிக ரோஷமுடையவர் யாருமில்லை.
என அஸ்மா(ரலி) அறிவித்தார்.
ஹதீஸ் 5223. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
நிச்சயம் அல்லாஹ் ரோஷம் கொள்கிறான். அல்லாஹ்வின் ரோஷம் என்பது, அவன் தடைவிதித்துள்ள ஒன்றை (தடையை மீறி) இறைநம்பிக்கையாளர் செய்வதுதான்.
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.
ஹதீஸ் 5224. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்
என்னை ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) (மக்காவிலிருக்கும் போதே) மணந்துகொண்டார்கள். இந்தப் பூமியில் அவருக்குத் தண்ணீர் இறைக்கும் ஓர் ஒட்டகத்தையும் அவரின் குதிரையையும் தவிர வேறு எச்சொத்துபத்துகளும் அடிமைகளும் உடைமைகளும் இருக்கவில்லை. அந்தக் குதிரைக்கு நான் தீனிபோடுவேன் தண்ணீர் இறைப்பேன் அவரின் தோல் சுமலையைத்தைப்பேன் மாவு குழைப்பேன். ஆனால், எனக்கு நன்றாக ரொட்டி சுடத் தெரியாது. என் அண்டைவீட்டு அன்சாரிப் பெண்களே எனக்கு ரொட்டி சுட்டுத் தருவார்கள். அந்தப் பெண்கள் உண்மையாளர்களாயிருந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் கணவருக்கு வருவாய் மானியமாய்த் தந்த நிலத்திலிருந்து - நானே பேரீச்சங்கொட்டைகளை(ப் பொறுக்கி) என் தலை மீது வைத்துச் சுமந்துவருவேன். அந்த நிலம் இங்கிருந்து இரண்டு மைல் தொலைவில் இருந்தது.
(ஒரு நாள்) நான் என் தலை மீது பேரீச்சங்கொட்டைகளை வைத்து வந்து கொண்டிருந்தேன். (வழியில்) நான், இறைத்தூதர்(ஸல்) அவர்களை, (அவர் தம் தோழர்களான அன்சாரிகளில் சிலர் அவர்களுடன் இருக்கச் சந்தித்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னை அழைத்தார்கள். எனக்குத் தமக்குப் பின்னால் அமர்த்திக் கொள்வதற்காக 'இஃக், இஃக்' என்ற சொல்லித் தம் ஒட்டகத்தை மண்டியிட வைத்தார்கள். (ஆனால்,) நான் ஆண்களுடன் செல்ல வெட்கப்பட்டேன். மேலும், நான் (என் கணவர்) ஸுபைர்(ரலி) அவர்களையும், அவரின் ரோஷத்தையும் நினைத்துப் பார்த்தேன். அவர் மக்களில் மிகவும் ரோஷக்காரராக இருந்தார். நான் வெட்கப்படுவதைப் புரிந்துகொண்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சென்றார்கள். நான் (என் கணவர்) ஸுபைரிடம் வந்து '(வழியில்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தலையில் பேரீச்சங்கொட்டைகளிருக்க என்னைச் சந்தித்தார்கள். அவர்களுடன் அவர்களின் தோழர்கள் சிலரும் இருந்தனர். நான் ஏறிக்கொள்வதற்காக(த் தம் ஒட்டகத்தை) மண்டியிடச் செய்தார்கள். நான் அவர்களைக் கண்டு வெட்கப்பட்டேன். மேலும், உங்களின் ரோஷத்தை நான் அறிந்துள்ளேன்'' என்று கூறினேன். அதற்கு என் கணவர், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்களுடன் நீ வாகனத்தில் வருவதைவிட பேரீச்சங்கொட்டைகளை நீ சுமந்து வந்தது தான் எனக்குக் கடினமானதாக இருக்கிறது'' என்று கூறினார்.

(இவ்வாறாக வீட்டுப் பணிகளில் பெரும் பகுதியை நானே மேற்கொண்ட வந்தேன்.) அதற்குப் பிறகு (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) எனக்கு ஓர் அடிமையை (உதவிக்காக) அனுப்பி வைத்தார்கள். அந்த அடிமை குதிரையைப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றார். என்னவோ எனக்கு விடுதலை கிடைத்தது போல் இருந்தது.

ஹதீஸ் 5225. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

(ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரில் ஒருவரிடம் இருந்(து கொண்டிருந்)தார்கள். இறைநம்பிக்கையாளர்களின் அன்னையரில் ஒருவ(ரான நபியவர்களுடைய மற்றொரு துணைவியா)ர் உணவுப் பண்டமுள்ள தட்டு ஒன்றை (நபியவர்களுக்காகப் பணியாள் ஒருவரிடம்) கொடுத்தனுப்பினார்கள். 153 (அப்போது) நபி(ஸல்) அவர்கள் எவருடைய வீட்டில் தங்கியிருந்தார்களோ அந்தத் துணைவியார் (ரோஷத்தில்) அந்தப் பணியாளரின் கையைத் தட்டிவிட்டார். அந்தத் தட்டு (கீழே விழுந்து) உடைந்துவிட்டது. உடனே (ஆத்திரப்படாமல்) நபி(ஸல்) அவர்கள் அந்த உடைந்த தட்டின் துண்டுகளை ஒன்று சேர்த்தார்கள். பிறகு தட்டிலிருந்த உணவை (மீண்டும்) அதிலேயே ஒன்று சேர்க்கலானார்கள். மேலும், (அங்கிருந்த தோழர்களை நோக்கி), 'உங்கள் தாயார் ரோஷப்பட்டுவிட்டார்'' என்று கூறினார்கள். பின்னர் அந்தப் பணியாளை (அங்கேயே) நிறுத்திவிட்டு தாமிருந்த வீட்டுக்கார (துணைவியா)ரிடமிருந்து மற்றொரு தட்டைக்கொண்டு வரச் செய்து, உடைபட்ட தட்டுக்குரியவரிடம் நல்ல தட்டை (மாற்றாக)க் கொடுத்து அனுப்பிவிட்டார்கள். உடைந்த தட்டை உடைக்கப்பட்ட வீட்டிலேயே வைத்துவிட்டார்கள்.

ஹதீஸ் 5226. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள், '(கனவில்)'நான் சொர்க்கத்தினுள் நுழைந்தேன்' அல்லது'சொர்க்கத்திற்குச் சென்றேன்' அங்கு ஒரு மாளிகையைக் கண்டேன். நான், 'இது யாருடையது?' என்று கேட்டன். அவர்கள் (வானவர்கள்), 'இது உமர் இப்னு கத்தாப் அவர்களின்து'' என பதிலளித்தார்கள். அந்த மாளிகைக்குள் நான் செல்ல நினைத்தேன். ஆனால், (உமரே!) உம்முடைய ரோஷம் குறித்து நான் அறிந்திருந்தது என்னை (உள்ளே செல்லவிடாமல்) தடுத்துவிட்டது'' என்று கூறினார்கள். (இதைக் கேட்ட) உமர் இப்னு கத்தாப்(ரலி), 'என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5227. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

நாங்கள் (ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தோம். அப்போது அவர்கள், 'நான் தூங்கிக்கொண்டிருந்தபோது (கனவில்) என்னைச் சொர்க்கத்தில் கண்டேன். அப்போது (அங்கிருந்த) மாளிகை ஒன்றின் அருகில் ஒருபெண் (உலகில் தான் இறைவணக்கம் புரிபவளாய் இருந்துவந்ததைக் குறிக்கும் வகையிலும் தன் அழகையும் பொலிவையும் மெருகேற்றிக் கொள்ளவும்)'உளூ'ச் செய்து கொண்டிருந்தாள். அப்போது நான், 'இந்த மாளிகை யாருக்குரியது?' என்று கேட்டேன். (வானவர்) ஒருவர், 'இது உமக்குரியது'' என பதிலளித்தார். (அந்த மாளிகைக்குள் நான் செல்ல நினைத்தேன். உமர் அவர்களின் ரோஷம் என் நினைவுக்கு வந்தது. உடனே அங்கிருந்து திரும்பி வந்துவிட்டேன்'' என்று கூறினார்கள். அங்கு அவையிலிருந்த உமர்(ரலி) (இதைக்கேட்டு) அழுதார்கள். பிறகு, 'தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன், இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்டார்கள்.

## பெண்களின் ரோஷமும் கோபமும்.

ஹதீஸ் 5228. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

என்னிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'எப்போது நீ என்னைக் குறித்து திருப்தியுடன் இருக்கிறாய் எப்போது நீ என் மீது கோபத்துடன் இருக்கிறாய் என்று (உன்னைப் பற்றி) நான்

நன்றாக அறிந்து வைத்துள்ளேன்‘‘ என்று கூறினார்கள். அதற்கு நான், ‘எப்படி நீங்கள் அறிந்துகொள்வீர்கள்?’ என்று கேட்டேன். அதற்கவர்கள், ‘என்னைக் குறித்து நீ திருப்தியுடன் இருக்கும்போது (பேசினால்), ‘முஹம்மதுடைய அதிபதி மீது சத்தியமாக’ என்று கூறுவாய்! என் மீது கோபமாய் இருந்தால், ‘இப்ராஹீம் (அலை) அவர்களின் அதிபதி மீது சத்தியமாக’ என்று கூறுவாய்‘‘ என்று கூறினார்கள். நான், ‘அல்லாஹ்வின் மீதாணையாக! ஆம் (உண்மைதான்,) இறைத்தூதர் அவர்களே! நான் தங்களின் பெயரைத்தான் கோபித்துக் கொள்வேன். (தங்களின் மீதுன்று)‘‘ என்று கூறினேன்.

ஹதீஸ் 5229. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் ரோஷம் கொண்டதைப் போல் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் (இதர) துணைவியர் எவர் மீதும் நான் ரோஷப்பட்டதில்லை. ஏனெனில், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கதீஜாவை அதிகமாக நினைவுகூர்ந்து, அவரை (அடிக்கடி) புகழ்ந்து பேசிவந்தார்கள். கதீஜா அவர்களுக்கென சொர்க்கத்தில் முத்து மாளிகை ஒன்று கொடுக்கப்படும் என்று அவருக்கு நற்செய்தி கூறும்படி இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்க’வஹீ’ மூலம் உத்தரவிடப்பட்டது.

## ஒருவர் தம் புதல்வியின் தன்மான உணர்வைக் காக்கவும், நீதி கோரியும் வாதிடுவது.

ஹதீஸ் 5230. மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்த படி, ‘ஹிஷாம் இப்னு மு∴கீரா கோத்திரத்தார் தங்கள் (உறவினரான அபூ ஜஹ்லுடைய) மகளை அலீ இப்னு அபீ தாலிப் அவர்களுக்கு மணமுடித்து வைக்க (என்னிடம்) அனுமதி கோரினர். அதற்கு நான் அனுமதிக்க மாட்டேன். மீண்டும் நான் அனுமதிக்க மாட்டேன். மீண்டும் நான் அனுமதிக்கமாட்டேன். அலீ இப்னு தாலிப் அவர்கள் என் மகளை (∴பாத்திமாவை) விவாகவிலக்குச் செய்துவிட்டு, அவர்களின் மகளை மணமுடித்துக்கொள்ள விரும்பினாலே தவிர (அவர்களுக்கு நான் அனுமதி வழங்கமாட்டேன்). ∴பாத்திமா என்னில் ஒரு பகுதியாவார். ∴பாத்திமாவை வெறுப்படையச் செய்வது என்னை வெறுப்படையச் செய்வதாகும் அவரை என் வேதனைப்படுவது என்னை மன வேதனைப்படுத்துவதாகும்‘‘ என்று கூறினார்கள். 159

## (இறுதிக் காலத்தில்) ஆண்கள் குறைந்து விடுவர் பெண்கள் அதிகரித்துவிடுவர்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(மறுமைநாள் நெருங்கும் இறுதிக் காலத்தில்) ஓர் ஆணை நாற்பது பெண்கள் பின்தொடர்வதை நீ காண்பாய்! ஆண்கள் குறைந்து பெண்கள் அதிகரித்துவிடுவதனால் ஆண்களிடம் அபயம் தேடியே இவ்வாறு செல்வர்.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5231. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

என் அல்லாத வேறு எவரும் உங்களுக்கு அறிவிக்க முடியாத, இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியேற்ற செய்தி ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கப் போகிறேன், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

கல்வி அகற்றப்பட்டுவிடுவதும், அறியாமை மலிந்துவிடுவதும், விபசாரம் அதிகரித்து விடுவதும், மது அருந்துதல் அதிகரித்து விடுவதும், ஐம்பது பெண்களுக்கு - அவர்களை நிர்வம்க்க ஒரே ஆண் என்ற நிலைமைவரும் அளவுக்குப் பெண்கள் மிகுந்து, ஆண்கள் குறைந்துவிடுவதும் மறுமை நாளின் அடையாளங்களில் அடங்கும்.

## (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவினர் தவிர (வேறு) எந்த (அன்னிய) ஆணும் ஒரு பெண்ணுடன் தனிமையில் இருக்கலாகாது கணவன் இல்லாத நேரத்தில் ஒரு பெண்ணிடம் செல்லலாகாது.

ஹதீஸ் 5232. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'(அந்நியப்) பெண்கள் இருக்குமிடத்திற்குச் செல்ல வேண்டாம் என உங்களை எச்சரிக்கிறேன்'' என்று கூறினார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! கணவருடைய (சகோதரன் போன்ற) உறவினர்கள் (அவள் இருக்கும் இடத்திற்குச் செல்வது) குறித்து தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'கணவருடைய (சகோதரன் போன்ற) உறவினர்கள் மரணத்திற்கு நிகரானவர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5233. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

"ஒரு பெண்ணுடன் எந்த (அன்னிய) ஆடவனும் தனிமையில் இருக்கலாகாது (மணமுடிக்காத தகாத) நெருங்கிய உறவினருடன் (அவள்) இருக்கும்போது தவிர!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே ஒருவர் எழுந்து, 'இறைத்தூதர் அவர்களே! என் மனைவி ஹஜ் செய்யப் புறப்பட்டுவிட்டாள். இன்ன இன்ன போரில் என் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. (இந்நிலையில்) நான் என்ன செய்வது?)'' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், '(போருக்குச் செல்வதிலிருந்து பெயரை) திரும்பப் பெற்றுக்கொண்டு, நீர் உம்முடைய மனைவியுடன் ஹஜ் செய்வீராக!"என்று கூறினார்கள்.

## மக்கள் அருகிலிருக்க, அந்நியப் பெண்ணுடன் ஓர் ஆண் தனியாக(ப் பேசிக்கொண்டு) இருப்பது அனுமதிக்கப்பட்டதே!

ஹதீஸ் 5234. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அன்சாரிகளில் ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது அவருடன் தனியாக (எங்கள் காதில் விழாத விதத்தில்) நபியவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், அந்தப் பெண்மணியிடம், 'அல்லாஹ்வின் மீதாணையாக! (அன்சாரிகளாகிய) நீங்கள் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவர்கள்'' என்று கூறினார்கள்.

## பெண்களைப் போல் நடந்துகொள்கிறவர்(களான அலி)கள் ஒரு பெண்ணிடம் செல்வது தடைசெய்யப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5235. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

(ஒரு நாள் என் கணவர்) நபி(ஸல்) அவர்கள் என் அருகில் இருந்து கொண்டிருந்தார்கள். அங்கு எங்கள் வீட்டில் (பெண்களைப் போல் நடந்து கொள்ளும்)'அலி' ஒருவனும் இருந்துகொண்டிருந்தான். அந்த'அலி' என் சகோதரர் அப்துல்லாஹ் இப்னு அபீ உமைய்யாவிடம், 'நாளை தாயிஃப் நகர் மீது உங்களுக்கு அல்லாஹ் வெற்றியளித்தால், ஃகைலானுடைய மகளை உனக்கு நான் அடையாளம் காட்டுகிறேன். (அவளை நீ மணந்துகொள்.) ஏனென்றால், அவள் முன்பக்கம் நாலு(சதை மடிப்புகளு)டனும் பின்பக்கம் எட்டு (சதை மடிப்புகளு)டனும் வருவாள்'' என்று (அவளுடைய மேனி அழகை வர்ணித்துக்) கூறினான். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், 'இவன் உங்களிடம் ஒருபோதும் வரக்கூடாது'' என்று கூறினார்கள்.

## (அந்நிய ஆடவர்களான) அபிசீனியர்கள் போன்றவர்களைக் குழப்பத்திற்கிடமில்லாதிருப்பின் ஒரு பெண் பார்க்கலாம்.

ஹதீஸ் 5236. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் என்னைத் தம் மேல் துண்டால் மறைத்துக்கொண்டிருக்க பள்ளிவாசல் வளாகத்தில் (ஈட்டியெறிந்து) விளையாடிக் கொண்டிருந்த அபிசீனியர்களை நான் (என் வீட்டிலிருந்தபடி) பார்த்துக கொண்டிருந்தேன். நானாகச் சடைந்துவிடும் வரைப் பார்த்துக் கொண்டிருந்தேன். விளையாட்டுகளின் மீது பேராவல் கொண்ட இளம் வயதுப் பெண் எவ்வளவு நேரம் வேடிக்கை பார்ப்பாள் என்பதை நீங்களே மதிப்பிட்டுக்கொள்ளுங்கள்.

## தம் தேவைகள் நிமித்தம் பெண்கள் வெளியே செல்லலாம்.

ஹதீஸ் 5237. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான) சவ்தா பின்த் ஸம்ஆ(ரலி) (பர்தா அணிவது சட்டமாக்கப்பட்ட பின் ஒரு நாள்) இரவு நேரத்தில் வெளியே சென்றார்கள். அவர்களைப் பார்த்து உமர்(ரலி) அடையாளம் புரிந்து கொண்டு, 'சவ்தாவே! அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் யார் என்று எங்களுக்குத் தெரியாமலில்லை'' என்று கூறினார்கள். உடனே சவ்தா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் திரும்பி வந்து, அது குறித்து அவர்களிடம் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னுடைய அறையில் உணவு அருந்திக் கொண்டிருந்தார்கள். அவர்களின் கரத்தில் எலும்புத் துண்டு ஒன்று இருந்தது. அந்தச் சமயத்தில் அவர்களுக்கு (வஹீ - வேத அறிவிப்பு) அருளப்பெற்று (வழக்கம் போல் அதனால் ஏற்படும் சிரம நிலை) அகற்றவும் பட்டது. அப்போது அவர்கள், '(என் துணைவியரே!) நீங்கள் உங்களின் தேவைகளுக்காக வெளியே செல்ல அல்லாஹ் அனுமதியளித்துவிட்டார்கள்'' என்றார்கள்.

## பள்ளிவாசல் உள்ளிட்ட இடங்களுக்குச் செல்ல பெண் தன் கணவரிடம் அனுமதி கோருவது.

ஹதீஸ் 5238. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்கள் மனைவியர் பள்ளிவாசலுக்குச் செல்ல உங்களிடம் அனுமதி கேட்டால் அவர்களைத் தடுக்காதீர்கள்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

பால்குடி உறவு முறையுள்ள ஒரு பெண்ணிடம் செல்வதும், அவளைப் பார்ப்பதும் அனுமதிக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 5239. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(ஒருநாள்) என் பால்குடித் தந்தை (அபுல் குஐஸ்) அவர்களின் சகோதரர் (அஃப்லஹ் என்பார்) வந்து என் வீட்டுக்குள்ளே வர அனுமதி கேட்டார். அல்லாஹ்வின் தூதரிடம் கேட்காமல் அவருக்க அனுமதியளிப்பதில்லை என்று நான் இருந்துவிட்டேன். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர்களிடம் நான் அது குறித்துக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'அவர் உன் (பால்குடித்) தந்தையின் சகோதரர் தாமே! அவருக்கு உள்ளே வர அனுமதி கொடு!"என்று கூறினார்கள். உடனே நான், இறைத்தூதர் அவர்களே! அந்தப் பெண்தானே எனக்குப் பாலூட்டினார். இந்த ஆண் எனக்குப் பாலூட்டவில்லையே! (பாலூட்டிய தாயின் கணவரும் அவரின் சகோதரரும் எனக்கு எந்த வகையில் உறவினராவார்கள்)?' என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,'அவர் உன்னுடைய (பால் குடித்) தந்தையின் சகோதரர் தாம். எனவே, அவர் உன்னிடம் (உன் வீட்டுக்குள்) வரலாம்'' என்று கூறினார்கள்.

-இது எங்களுக்கு 'பர்தா' அணியும் சட்டம் விதியாக்கப்பட்ட பின்னால் நடந்தது.

(மேலும்,) இரத்த உறவின் காரணத்தால் (மணமுடிக்கத் தகாத) நெருங்கிய உறவு ஏற்படுவது போன்றே பால் குடியினாலும் நெருங்கிய உறவு ஏற்படும்.

## ஒரு பெண் மற்றொரு பெண்ணை (வெற்று மேனியோடு) கட்டித் தழுவுவதும், அவளைப் பற்றி இவள் தன் கணவனிடம் வர்ணித்துக் கூறுவதும் கூடாது.

ஹதீஸ் 5240. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒரு பெண் இன்னொரு பெண்ணை (வெற்றுமேனியோடு) கட்டித் தழுவிட வேண்டாம். பின்னர் அவளைப் பற்றி இவள் தன் கணவனிடம் - அவளை அவன் நேரில் பார்ப்பதைப் போன்று வர்ணணை செய்ய வேண்டாம்.
என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5241. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
ஒரு பெண் இன்னொரு பெண்ணை (வெற்று மேனியோடு) கட்டித் தழுவிட வேண்டாம். பின்னர் அவளைப் பற்றி இவள் தன் கணவனிடம் - அவளை அவன் நேரில் பார்ப்பதைப் போன்று வர்ணனை செய்ய வேண்டாம்.
என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## ஒருவர் நான் இன்றிரவு என் துணைவியர் அனைவரிடம் (தாம்பத்திய உறவுக்காகச்) சென்றுவருவேன்' என்று கூறுவது.

ஹதீஸ் 5242. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்
(ஒருமுறை இறைத்தூதர்) தாவூத்(அலை) அவர்களின் புதல்வர் சுலைமான்(அலை) அவர்கள், 'நான் இன்றிரவு (என்னுடைய) நூறு துணைவியரிடமும் சென்று வருவேன். அப்பெண்களில் ஒவ்வொருவரும் இறைவழியில் அறப்போர் புரியும் (வீரக்) குழந்தை ஒன்றைப் பெற்றெடுப்பார்கள்'' என்று கூறினார்கள். அப்போது (சுலைமான் -அலை) அவர்களிடம் அந்த வானவர் (ஜிப்ரீல்)'இன்ஷா அல்லாஹ் - இறைவன் நாடினால்'' என்று (சேர்த்துச்) சொல்லுங்கள்'' என்றார். (ஆனால்,) சுலைமான்(அலை) அவர்கள், 'இன்ஷா அல்லாஹ்' என்று கூறிவில்லை மறந்துவிட்டார்கள். அவ்வாறே சுலைமான் (அலை) அவர்களும் தம் துணைவியரிடம் சென்றார்கள். ஒரே ஒரு மனைவியைத் தவிர வேறெவரும் குழந்தை பெற்றெடுக்கவில்லை. அந்த ஒரு மனைவியும் (ஒரு புஜமுடைய) அரை மனிதரைத்தான் பெற்றெடுத்தார்.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அவர்'இன்ஷா அல்லாஹ் - இறைவன் நாடினால்' என்று கூறியிருந்தால் அவர் தம் சத்தியத்தை முறித்திருக்கமாட்டார். (சபதத்தை நிறைவேற்றியிருப்பார்.) தம் தேவை நிறைவேறுவதைப் பெரிதும் அவர் நம்பியிருப்பார்'' என்று கூறினார்கள்.

## நீண்ட பயணத்திலிருந்து திரும்புகிறவர் இரவில் திடீரென தம் வீட்டினுள் நுழையலாகாது. தம் வீட்டார் மீது துரோகக் குற்றச்சாட்டு சுமத்திடவும், அவர்களின் குற்றங்க குறைகளைக் கண்டுபிடிக்கவும் வாய்ப்பு நேர்ந்திடுமோ என்ற அச்சமே இதற்குக் காரணம்.

ஹதீஸ் 5243. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
ஒருவர் (வெளியிலிருந்து) இரவு நேரத்தில் திடீரெனத் தம் வீட்டாரிடம் வருவதை நபி(ஸல்) அவர்கள் வெறுக்கக் கூடியவர்களாயிருந்தார்கள்.

ஹதீஸ் 5244. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்
உங்களில் ஒருவர் நீண்ட நாள்கள் கழித்து ஊர் திரும்பினால் இரவு நேரத்தில் திடீரெனத் தம் வீட்டாரிடம் செல்ல வேண்டாம்.
என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

## குழந்தைத் தோட்டம்.

ஹதீஸ் 5245. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
நான் ஒரு போரில் (தபூக்கில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தேன். நாங்கள் (போரை முடித்து) திரும்பிக் கொண்டிருந்தபோது, மெதுவாகச் செல்லக் கூடிய ஒட்டகத்தின் மீது இருந்தவாறு நான் அவசரப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்போது ஒருவர் எனக்குப் பின்னாலிருந்து வாகனமொன்றில் வந்து சேர்ந்தார். நான் திரும்பிப் பார்த்தேன். அங்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இருந்தார்கள். அவர்கள் (என்னிடம்,)'உமக்கு என்ன அவசரம்?' என்று கேட்டார்கள்.'நான் புதிதாகத் திருமணம் செய்துகொண்டவன்'' என்றேன். நபி(ஸல்) அவர்கள், 'கன்னிப் பெண்ணை மணந்தாயா. அல்லது கன்னி கழிந்த பெண்ணை மணந்தாயா?' என்று கேட்டார்கள். நான், 'இல்லை. கன்னிகழிந்த பெண்ணைத்தான் (மணந்தேன்)'' என்றேன். நபி(ஸல்) அவர்கள், அவளோடு நீயும் உன்னோடு அவளுமாகக் கூடிக் குலாவி மகிழ்ந்திருக்கலாமே!"என்றார்கள்.
பிறகு நாங்கள் (மதீனா) வந்து சேர்ந்து (ஊருக்குள்) நுழையப் போனபோது நபி(ஸல்) அவர்கள், (நீங்கள் வந்து சேர்ந்துவிட்ட தகவல் வீட்டுப் பெண்களைச் சென்றடைய) இஷா நேரம் வரை சற்றுப் பொறுத்திருங்கள். தலைவிரி கோலமாயிருக்கும் பெண்கள் தலைவாரிக் கொள்ளட்டும். (கணவனைப்) பிரிந்திருந்த பெண்கள் சவரக்கத்தியைப் பயன்படுத்தி(த் தங்களை ஆயத்தப்படுத்தி)க் கொள்ளட்டும் என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹுஷைம் இப்னு பஷீர்(ரஹ்) கூறுகிறார்கள்:
நபி(ஸல்) அவர்கள் ஜாபிர்(ரலி) அவர்களிடம், 'புத்திசாலித்தனமாக நடந்துகொள்'' என்றார்கள். அதாவது'குழந்தையைத் தேடிக்கொள்'' என்றார்கள் என நம்பத் தகுந்த (அறிவிப்பாளர்) ஒருவர் என்னிடம் கூறினார்.

ஹதீஸ் 5246. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்
(தபூக் போரிலிருந்து திரும்பிக் கொண்டிருந்த என்னிடம்) நபி(ஸல்) அவர்கள், 'நீ இரவில் (மதீனாவுக்குள்) நுழைந்த கையோடு உன் வீட்டாரிடம் சென்றுவிடாதே! (வெளியூர் சென்ற கணவரைப்) பிரிந்திருக்கும் பெண் சவரக்கத்தியைப் பயன்படுத்தி(த் தன்னை ஆயப்பத்தப்படுத்தி)க் கொள்ளும் வரை, தலைவிரி கோலமாயிருக்கும் பெண் தலைவாரிக்கொள்ளும் வரை (பொறுமையாயிரு!“) என்று கூறிவிட்டு, 'புத்திசாலித்தனமாக நடந்து (குழந்தையைத் தேடிக்)கொள் புத்திசாலித்தனமாக நடந்துகொள்'' என்று கூறினார்கள்.
இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் வந்துள்ளது.

## (கணவனைப்) பிரிந்திருந்த பெண் சவரக்கத்தியைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் தலைவிரி கோலமாக இருந்தவள் தலைவாரிக் கொள்ள வேண்டும்.

ஹதீஸ் 5247. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்க்ள அறிவித்தார்
நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (தபூக் எனும்) ஒரு போரில் இருந்தோம். (போர் முடிந்து) திரும்பி வந்து நாங்கள் மதீனாவை நெருங்கிக் கொண்டிருந்தோம். அப்போது நான் மெதுவாகச் செல்லும் என் ஒட்டகத்தில் இருந்தவாறு அவசரப்பட்டுக்கொண்டிருந்தேன். அந்த நேரம் எனக்குப் பின்னால் இருந்து வாகனத்தில் ஒருவர் என்னை வந்தடைந்து தம்மிடமிருந்த கைத் தடியால் என்னுடைய ஒட்டகத்தைக் குத்தினார். உடனே என்னுடைய ஒட்டகம் நீ கண்ட ஒட்டகங்களிலேயே அதிவிரைவாக ஓடக் கூடியது போன்று ஓடியது. நான் திரும்பிப் பார்த்தேன். அங்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களே இருந்தார்கள்.

நான், `இறைத்தூதர் அவர்களே! நான் புதிதாகத் திருமணம் ஆனவன்‘` என்றேன். நபி(ஸல்) அவர்கள், `திருமணம் செய்துகொண்டுவிட்டாயா?' என்று கேட்க, நான், `ஆம்‘` என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள், `கன்னிப் பெண்ணையா, கன்னி கழிந்த பெண்ணையா (யாரை மணந்தாய்)?' என்று கேட்டார்கள். நான், `இல்லை. கன்னி கழிந்த பெண்ணைத்தான் (மணந்தேன்)‘` என்றேன். நபி(ஸல்) அவர்கள், `கன்னிப் பெண்ணை மணந்து, அவளோடு நீயும், உன்னோடு அவளுமாய்க் கூடிக் குலாவி மகிழ்ந்திருக்கலாமே!"என்றார்கள். பிறகு நாங்கள் (மதீனாவுக்கு) வந்து (ஊருக்குள்) நுழைய முற்பட்டோம். அப்போது நபி(ஸல்) அவர்கள், (நீங்கள் வந்து சேர்ந்துவிட்ட தகவல் வீட்டுப் பெண்களை சென்றடைய) இஷா நேரம் வரைப் பொறுத்திருங்கள். தலைவிரி கோலமாயிருக்கும் பெண்கள் தலைவாரிக் கொள்ளட்டும். (கணவனைப்) பயன்படுத்தி(த் தங்களை ஆயத்தப்படுத்தி)க் கொள்ளட்டும்‘` என்றார்கள்.

## 24:31 வது இறைவசனம்

தங்கள் கணவன்மார்கள், தங்களின் தந்தையர்கள், தங்கள் கணவன்மார்களின் தந்தையர், தங்களின் புதல்வர்கள், தங்கள் கணவன்மார்களின் புதல்வர்கள், தங்கள் சகோதரர்கள், தங்கள் சகோதரர்களின் புதல்வர்கள், சகோதரிகளின் புதல்வர்கள், தங்கள் (உடன் நெருங்கிப் பழகும்) பெணக்ள், தங்களின் அடிமைகள், (பெண்களின் மீது) வேட்கையில்லாத தம்மை அண்டி வாழுகிற ஆண்கள், பெண்களின் அந்தரங்க விஷயங்களைப் பற்றி ஏதும் தெரிந்திராத சிறுவர்கள் ஆகிய இவர்கள் முன்னிலையிலன்றி (வேறு எவரிடமும்) தங்களின் அழகை இறை நம்பிக்கை கொண்ட பெண்கள் வெளிக்காட்ட வேண்டாம் (எனும் 24:31 வது இறைவசனம்)

ஹதீஸ் 5248. அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்

உஹுத் போர் நாளில் (காயமுற்ற) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காயத்திற்கு என்ன மருந்திடப்பட்டது என்பது தொடர்பாக மக்கள் கருதது வேறுபாடு கொண்டனர். எனவே, சஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதி(ரலி) அவர்களிடம் (சென்று அது பற்றிக்) கேட்டார்கள். - ஸஹ்ல்(ரலி) மதீனாவில் கடைசியாக எஞ்சியிருந்த நபித்தோழர்களில் ஒருவராய் இருந்தார்கள் - அதற்கு ஸஹ்ல்(ரலி) (பின்வருமாறு) பதிலளித்தார்கள்.

மக்களிலேயே இது குறித்து என்னை விட நன்கறிந்தவர் எவரும் (இப்போது) எஞ்சியிருக்கவில்லை. (உஹுத் போரில் காயமடைந்த) நபி(ஸல்) அவர்களின் முகத்திலிருந்து (அவர்களின் புதல்வி) ஃபாத்திமா(ரலி) அவர்களே இரத்தத்தைக் கழுவிக் கொண்டிருந்தார்கள். அலீ(ரலி) தம் கேடயத்தில் தண்ணீர் கொண்டுவந்து கொண்டிருந்தார்கள். பின்பு ஒரு பாய் எடுத்துக் கரிக்கப்பட்டது. பிறகு (கரிக்கப்பட்ட பாயின்) சாம்பலை நபியவர்களின் காயத்தில் வைத்து அழுத்தப்பட்டது.

## உங்களில் பருவ வயதை அடையாத (சிறு)வர்கள் (உங்களிடம் வருவதற்கு மூன்று நேரங்களில் மட்டும் அனுமதி பெறட்டும்! எனும் 24:58 வது வசனத்தொடர்.)

ஹதீஸ் 5249. அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ்(ரலி) அறிவித்தார்

ஒருவர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம், `தாங்கள் (பெரு நாள்களான) ஈதுல் அள்ஹாவிலோ, ஈதுல் ஃபித்ரிலோ இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்திருக்கிறீர்களா?' என்று கேட்டார். இப்னு அப்பாஸ்(ரலி), `ஆம் (இருந்திருக்கிறேன்.) (உறவின் காரணத்தினால்) அவர்களுடன் எனக்கு நெருக்கம் இல்லாதிருந்திருப்பின் சிறுவனாக இருந்த நான் (பெரு நாள் தொழுகையில்) அவர்களுடன் பங்கெடுத்து (பெண்கள் பகுதிவரை சென்று) இருக்கமுடியாது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்று (மக்களுடன் பெருநாள்) தொழுகையை நிறைவேற்றினார்கள். பிறகு உரை நிகழ்த்தினார்கள்.

இந்த இடத்தில் இப்னு அப்பாஸ்(ரலி) (அத்தொழுகைக்கு முன்) பாங்கும் இகாமத்தும் சொல்லப்பட்டதாகக் கூறவில்லை.
பிறகு நபி(ஸல்) அவர்கள் பெண்கள் இருந்த பகுதிக்கு வந்து (மார்க்க விஷயங்களையும், மறுமை நாளையும்) நினைவூட்டி உபதேசம் புரிந்தார்கள். மேலும், (ஏழை எளியோருக்கு) தர்மம் செய்யுமாறும் அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். உடனே அப்பெண்கள், தங்களின் காதுகளுக்கும் கழுத்துகளுக்கும் தங்களின் கைகளைக் கொண்டுசென்று (அவர்கள் அணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி) பிலால்(ரலி) அவர்களிடம் கொடுப்பதை கண்டேன். பிறகு நபி(ஸல்) அவர்களும் பிலால்(ரலி) அவர்களும் வீட்டிற்குத் திரும்பிச் சென்றனர்.

## ஒருவர் தம் நண்பரிடம் இன்றிரவு தாம்பத்திய உறவைத் தொடங்கினீர்களா? என்று கேட்பதும், ஒருவர் தம் புதல்வியைக் கண்டிக்கும்போது இடுப்பில் குத்துவதும்.

ஹதீஸ் 5250. ஆயிஷா(ரலி) அறிவித்தார்
(ஒரு நாள் என் தந்தை) அபூ பக்ர்(ரலி) என்னைக் கண்டித்தார்கள். என் இடுப்பில் தம் கரத்தால் குத்தலானார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னுடைய மடியில் தலைவைத்து படுத்திருந்தது தான் என்னை அசையவிடாமல் (அடிவாங்கிக் கொண்டிருக்கும்படி) செய்துவிட்டது.

## 5வது பாகம் முற்றிற்று

# பாகம்: 6

## அத்தியாயம் - 68 - மணவிலக்கு (தலாக்)

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

நபியே! (மக்களிடம் கூறுக:) நீங்கள் பெண்களுக்கு மணவிலக்கு அளிப்பீர்களானால், அவர்களின்இத்தா'விற்கேற்ற நேரத்தில் மணவிலக்கு அளித்து,இத்தா'வைக் கணக்கிட்டு வாருங்கள். (திருக்குர்ஆன் 65:01)

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ளஅஹ்ஸூ எனும் சொல்லின் வினைச் சொல்லான)அஹ்ஸய்னாஹு எனும் சொல்லுக்குஅதை நாம் கணக்கிட்டு மனனமிட்டோம் என்று பொருள்.

ஒருவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ளாமல் (மாதவிடாய் போன்றவற்றிலிருந்து) அவள் தூய்மையானவளாய் இருக்கும் சமயத்தில் இரண்டு சாட்சிகளின் முன்னிலையில் அளிக்கிற மணவிலக்கு (நபிவழியில் அமைந்த)தலாக்குஸ் ஸு ன்னா ஆகும்.

ஹதீஸ் 5251. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் என் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டேன். அப்போது அவள் மாதவிடாய்ப் பருவத்தில் இருந்தாள்.

எனவே, (என் தந்தை) உமர் இப்னு கத்தாப்(ரலி) இதைப் பற்றி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வினவியபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தந்தையாரிடம்,உங்கள் புதல்வருக்குக் கட்டளையிடுங்கள்: அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும்! பிறகு, அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்து, அடுத்து மீண்டும் அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டுப் பின்னர் அதிலிருந்து அவள் தூய்மையடையும் வரை அவளைத் தம்மிடமே வைத்திருக்கட்டும். பிறகு அவர் விரும்பினால், (இரண்டாம் மாதவிடாயிலிருந்து தூய்மையான) பின்னர் (தொடர்ந்து அவளை) தம்மிடமே (தம் மனைவியாக) வைத்திருக்கட்டும். அவர் விரும்பினால் அவளுடன் உடலுறவு கொள்வதற்கு முன்பாக அவளை மணவிலக்குச் செய்யட்டும். (மாதவிடாயிலிருந்து தூய்மையான) இந்தக் காலக் கட்டமே மனைவியரை மணவிலக்குச் செய்ய அல்லாஹ் (திருக்குர்ஆன் 02:228 வது வசனத்தில்) அனுமதித்துள்ள ('இத்தாக் காலத்தைக் கணக்கிட்டுக் கொள்வதற்கு ஏற்ற) காலக் கட்டமாகும்' என்று கூறினார்கள்.

### மாதவிடாயிலிருக்கும் பெண்ணுக்கு மணவிலக்கு அளிக்கப்பட்டாலும் அந்த மணவிலக்கு நிகழ்ந்ததாகவே கருதப்படும்.

ஹதீஸ் 5252. அனஸ் இப்னு சீரீன்(ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி) கூறினார்:

மாதவிடாயிலிருந்த என் மனைவியை நான் மணவிலக்குச் செய்துவிட்டேன். எனவே, இது குறித்து (என் தந்தை) உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,(உங்கள் புதல்வர்) தம் மனைவியைத் திரும்ப அழைத்துக் கொள்ளட்டும்!"என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் அனஸ் இப்னு சீரீன்(ரஹ்) தொடர்ந்து கூறுகிறார்கள்:

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்(மாதவிடாயின்போது சொல்லப்பட்ட இந்த தலாக்) ஒரு தலாக்காகக் கருதப்படுமா? என்று கேட்டேன். அதற்கு இப்னு உமர்(ரலி)(தலாக்காகக் கருதப்படாமல்) வேறென்ன? என்று கேட்டார்கள்.

இப்னு உமர்(ரலி) அவர்களிடமிருந்து யூனுஸ் இப்னு ஜு பைர்(ரஹ்) அறிவித்துள்ள தகவலில் (பின்வருமாறு) காணப்படுகிறது:

நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம்(உங்கள் புதல்வர்) தம் மனைவியைத் திரும்ப அழைத்துக் கொள்ளுமாறு அவருக்கு நீங்கள் கட்டளையிடுங்கள்' என்று கூறினார்கள். நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்(மாதவிடாய்ப் பருவத்தில்) செய்யப்பட்ட இந்த மணவிலக்கு) மணவிலக்காகக் கருதப்படுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்அவன் (தன் கடமையை நிறைவேற்ற) இயலாமலும் (அதை) அறிந்து கொள்ளாமலும் இருந்துவிட்டால் (மணவிலக்கு நிகழாமல் போய்விடுமா) என்ன? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5253. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(என் மனைவி மாதவிடாய்ப் பருவத்தில் இருந்தபோது நான் அளித்த) அந்த மணவிலக்கை, நான் கூறிய ஒரு தலாக் என்றே கணிக்கப்பட்டது.

## தம் மனைவியை மணவிலக்குச் செய்யும் ஒருவர், அதை மனைவியிடமே நேரடியாகத் தெரிவிக்கலாமா?

ஹதீஸ் 5254 அப்துர்ரஹ்மான் இப்னு அல் அவ்ஸாயீ(ரஹ்) அறிவித்தார்

நான் முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) அவர்களிடம், (நபி(ஸல்) அவர்களிடம்)நான் தங்களிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன் என்று அவர்களின் துணைவியரில் யார் கூறியது? எனக் கேட்டேன். அதற்கு ஸு ஹ்ரீ(ரஹ்) ஆயிஷா(ரலி) எடுத்துரைத்தபடி உர்வா(ரஹ்) அறிவித்த (பின்வரும்) ஹதீஸைக் கூறினார்கள்.

அல்ஜவ்ன் குலத்துப் பெண் ஒருவரை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (திருமணத்திற்குப் பின் தாம்பத்திய உறவிற்காக) உள்ளே அனுப்பியபோது அவரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நெருங்கினார்கள். அப்போது அவர், உங்களிடத்திலிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று கூறினார். அவரிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்மகத்துவமிக்க (இறை)வனிடம் நீ பாதுகாப்புக் கோரிவிட்டாய்! உன் குடும்பத்தாரிடம் நீ சென்றுவிடு!"என்று கூறிவிட்டார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 5255. அபூ உசைத் மாலிக் இப்னு ரபீஆ அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டு (மதீனாவிலுள்ள)அஷ்ஷவ்த் (அல்லதுஅஷ்ஷவ்ழ்') என்றழைக்கப்படும் ஒரு தோட்டத்தை நோக்கி நடந்தோம். (அதனருகில் இருந்த வேறு) இரண்டு தோட்டங்களை அடைந்து, அந்த இரண்டிற்கும் இடையே அமர்ந்தோம்.

அப்போது நபி(ஸல்) அவர்கள், இங்கேயே அமர்ந்திருங்கள்' என்று சொல்லிவிட்டுத் தோட்டதிற்குள்ளே சென்றார்கள். (அங்கு) அல்ஜவ்ன் குலத்துப் பெண் அழைத்து வரப்பட்டுப் பேரீச்சந் தோட்டத்திலிருந்த ஒரு வீட்டில் தங்கவைக்கப்பட்டிருந்தார். அப்பெண்(ணின் பெயர்) உமைமா பின்த் நுஅமான் இப்னி ஷராஹீல் (என்பதாகும்). அவருடன் அவரை வளர்த்த செவிலித் தாயும் இருந்தார். (அப்பெண்ணுக்கும் நபியவர்களுக்கும் முன்பே திருமண ஒப்பந்தம் முடிந்திருந்ததால்) அப்பெண் இருந்த வீட்டிற்குள் நபி(ஸல்) அவர்கள் நுழைந்துஉன்னை எனக்கு அன்பளிப்புச் செய்!"என்று கூறினார்கள். அந்தப்பெண்ஓர் அரசி, தன்னை இடையருக்கெல்லாம் அன்பளிப்புச் செய்வாளா? என்று கேட்டார். அவரை அமைதிப்படுத்துவதற்காக நபி(ஸல்) அவர்கள் தங்களின் கரத்தை அவரின் மீது வைக்கப் போனார்கள். உடனே அவர்உங்களிடமிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவரை நோக்கிகண்ணியமான (இறை) வனிடம் தான் நீ பாதுகாப்புக் கோரியிருக்கிறாய்' என்று சொல்லிவிட்டு, அங்கிருந்து வெளியேறி

எங்களிடம் வந்தார்கள். மேலும்,அபூ உசைதே! இரண்டு வெண்ணிறச் சணல் ஆடைகளை அவளுக்கு அளித்து, அவளை அவளுடைய குடும்பத்தாரிடம் கொண்டுபோய்விட்டு விடு' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5256 - ஹதீஸ் 5257 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி), அபூ உசைத்(ரலி) ஆகியோர் கூறினார்கள்

நபி(ஸல்) அவர்கள் உமைமா பின்த் ஷராஹீல் என்ற பெண்மணியை மணமுடித்தார்கள். (தாம்பத்திய உறவைத் தொடங்குவதற்காக) அப்பெண் நபியவர்களிடம் அனுப்பி வைக்கப்பட்டபோது, அவரை நோக்கித் தம் கரத்தை நபி(ஸல்) அவர்கள் நீட்டினார்கள். அதை அப்பெண் விரும்பவில்லை போலும். எனவே, அப்பெண்ணை (அவளுடைய குடும்பத்தாரிடம்) அனுப்பி வைத்திடுமாறும், அவளுக்கு இரண்டு வெண்ணிறச் சணல் ஆடைகளை அளித்திடுமாறும் அபூ உசைத்(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

...இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5258. யூனுஸ் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்ஒருவர் மாதவிடாயிலிருக்கும் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டார். (அது குறித்து மார்க்கம் என்ன தீர்ப்புச் செய்கிறது?)' என்று கேட்டேன் அதற்கு அவர்கள்,இப்னு உமர் (அதாவது நான்) யார் என்று உங்களுக்குத் தெரியும்.

நான் மாதவிடாய்ப் பருவத்திலிருந்து என் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டேன். எனவே, (என் தந்தை) உமர்(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் சென்று இது குறித்துத் தெரிவித்தார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்உங்கள் புதல்வர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ள வேண்டும் அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையான பிறகு அவளை மணவிலக்குச் செய்ய விரும்பினால் அவளை அவர் மணவிலக்குச் செய்து கொள்ளட்டும்' என உத்தரவிடுங்கள்' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் கூறுகிறார்:

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் (மனைவி மாதவிடாயிலிருந்தபோது தாங்கள் அளித்த மணவிலக்கை) நபி(ஸல்) அவர்கள்தலாக் என்றே கருதினார்களா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்அவன் (தன் கடமையை நிறைவேற்ற) இயலாமலும் (அதை) அறிந்து கொள்ளாமலும் இருந்துவிட்டால் (மணவிலக்கு நிகழாமல் போய்விடுமா) என்ன? என்று கேட்டார்கள்.

## முத்தலாக் செல்லும் என்று கூறுவோர்

(முத்தலாக் செல்லும் என்று கூறுவோர் பின்வரும் வசனத்தை ஆதாரமாகக் கொள்கிறார்கள்:)

மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

(திரும்ப அழைக்கும் உரிமையுள்ள)தலாக் இரண்டேதாம். பின்னர் முறைப்படி (அவர்களை மனைவியராகத் தம்முடன்) வைத்துக் கொள்ளலாம். அல்லது நன்முறையில் அவர்களை விடுவித்துவிடலாம். (திருக்குர்ஆன் 02:229)

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்

(மரணப் படுக்கையில் உள்ள) நோயாளி ஒருவர் தம் மனைவியை ('அல்பத்தா எனும்) ஒட்டுமொத்தத் தலாக் சொல்லிவிட்டால், (அவரின் மறைவுக்குப் பிறகு அவரின் சொத்துக்கு) அவள் வாரிசு ஆவாள் என நான் கருதவில்லை.

ஆமிர் இப்னு ஷராஹீல் அஷ்ஷஅபீ (ரஹ்),அவள் தன் கணவனுக்கு வாரிசாவாள்' என்ற கூறினார்கள்.

**“இந்தப் பெண்இத்தா‘க் காலம் முடிந்த பின் வேறொருவரை மணந்துகொள்ளலாமா? என்று இப்னு ஷு ப்ருமா(ரஹ்) கேட்டார்கள். அதற்கு ஷஅபீ (ரஹ்),ஆம். (மணந்துகொள்ளலாம்)‘ என்று பதிலளித்தார்கள். உடனே இப்னு ஷு ப்ருமா(ரஹ்),இரண்டாம் கணவரும் இறந்துவிட்டால் (ஒரே நேரத்தில் அவள் இரண்டு கணவர்களின் சொத்திலிருந்தும் பங்கு பெறுவாளே?‘) என்று கேட்டார்கள். அப்போது ஷஅபீ (ரஹ்) தம் கருத்தினை திரும்பப் பெற்றுக்கொண்டார்கள்.**

ஹதீஸ் 5259. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்

அஜ்லான் குலத்தைச் சேர்ந்த உவைமிர்(ரலி) (தம் குலத்தின் தலைவரான) ஆஸிம் இப்னு அதீ அல்அன்சாரி(ரலி) அவர்களிடம் வந்து,ஆஸிம் அவர்களே! தம் மனைவியுடன் மற்றோர் அந்நிய ஆடவன் (தகாத உறவு கொண்டபடி) இருக்கக் கண்ட ஒரு மனிதனின் விஷயத்தில் என்ன கூறுகிறீர்கள்? அவன் அந்த (அந்நிய) ஆடவனைக் கொன்றுவிடலாமா? அவ்வாறு கொன்றுவிட்டால் (பழிவாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்ய வேண்டும்? எனக்காக இந்த விவகாரம் குறித்து ஆஸிமே! நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்டுச் சொல்லுங்கள்‘ என்று கூறினார்.

எனவே, (ஆஸிம்(ரலி) அல்லாஹ்வின் தூதரிடம் சென்று கேட்கத் தொடங்க) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை. அவற்றை அசிங்கமாகக் கருதலானார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட (கண்டன) வார்த்தைகள் ஆஸிம்(ரலி) அவர்களுக்குக் கடினமாயிற்று. ஆஸிம்(ரலி) தம் வீட்டாரிடம் திரும்பி வந்தபோது உவைமிர் வந்துஆஸிம் அவர்களே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உங்களிடம் என்ன கூறினார்கள்? என்று கேட்டார்கள். அதற்கு ஆஸிம்(ரலி)நீ எனக்கு நன்மை செய்யவில்லை. (சிக்கலில் என்னைச் சிக்க வைத்துவிட்டாய்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு நான் கேட்ட இந்தக் கேள்வி பிடிக்கவில்லை‘ என்று பதிலளித்தார்கள்.

அதற்கு உவைமிர்,அல்லாஹ்வின் மீதாணையாக! நானே (நேரடியாக) இது குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்காமல் ஓயமாட்டேன்‘ என்று கூறியபடி மக்களிடையேயிருந்த அல்லாஹ்வின் துதர்(ஸல்) அவர்களை நோக்கிச் சென்றார். பிறகு,அவர்களை நோக்கிச் சென்றார். பிறகு,இறைத்தூதர் அவர்களே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அந்நிய ஆடவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால் அவன் அந்த ஆடவனைக் கொல்லலாமா? (அப்படிக் கொன்றுவிட்டால் பழிக்குப் பழியாக) நீங்கள் அம்மனிதனைக் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்‘ என்று கேட்டார்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,அல்லாஹ் உம்முடைய விஷயத்திலும் உம்முடைய மனைவி விஷயத்திலும் (குர்ஆன் வசனத்தை) அருளிவிட்டான். எனவே, நீர் சென்று, உம்முடைய மனைவியை அழைத்து வாரும்!”என்று கூறினார்கள்.

பிறகு அவர்கள் இருவரும் (‘லிஆன் எனும்) சாப அழைப்புப் பிரமாணம் செய்தனர். அப்போது மக்களுடன் நானும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் இருந்தேன். (தம்பதியர்) இருவரும் (லிஆன் செய்து) முடித்தபோது (கணவரான) உவைமிர்,இறைத்தூதர் அவர்களே! நான் இவளை (மணவிலக்குச் செய்யாமல் மனைவியாகவே இனியும்) வைத்திருந்தால் இவள் மீது நான் பொய்(யான குற்றச்சாட்டு) கூறியவனாக ஆம்விடுவேன்‘ என்று கூறிவிட்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவருக்கு ஆணையிடுவதற்கு முன்பே அவளை முத்தலாக் சொல்லிவிட்டார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) கூறினார்.

பிறகு இந்த வழிமுறையே (அவர்களுக்கப் பின்)லிஆன் செய்யும் தம்பதியருக்கு முன்மாதிரி ஆம்விட்டது.

ஹதீஸ் 5260. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ரிஃபாஆ அல்குறழீ (ரலி) அவர்களின் துணைவியார் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) ரிஃபாஆ என்னை நோக்கி ஒட்டுமொத்தத் தலாக்கையும் கூறிவிட்டார். நான் அவருக்குப் பிறகு அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர் அல்குறழீ அவர்களை மணமுடித்துக் கொண்டேன். ஆனால், அவருக்கு (இன உறுப்பு என்று) இருப்பதெல்லாம் இந்த (முகத்திரையின்) குஞ்சத்தைப் போன்றதுதான்' என்று கூறினார். (ஆனால், இந்தக் குற்றச் சாட்டை அப்துர் ரஹ்மான் மறுத்தார். முதல் மனைவி மூலம் தமக்குப் பிறந்த குழந்தைகளையும் காட்டினார்.)

அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நீ (உன் பழைய கணவர்ரிஃபாஆ'விடம் திரும்பிச் செல்ல விரும்புகிறாயா? இல்லை! (அவ்வாறு பழைய கணவரை மீண்டும் மணந்துகொள்ள முடியாது உன்னுடைய இரண்டாம் கணவரான) இவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும், நீ அவரிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும் (முன்னாள் கணவரான ரிஃபாஆவை மணக்கமுடியாது)' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5261. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

ஒருவர் தம் மனைவியை மூன்று தலாக் சொல்லிவிட்டார். எனவே, அவள் இன்னொருவரை மணந்துகொண்டாள். அவரும் தலாக் சொல்லிவிட்டார். எனவே, நபி (ஸல்) அவர்களிடம் (இது குறித்து) முந்திய கணவருக்கு அவள் (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்டவளா? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள்இல்லை முந்தைய கணவர் (தாம்பத்திய) இன்பம் அனுபவித்ததைப் போன்றே (அவளுடைய இரண்டாம் கணவரான) இவரும் அவளிடம் இன்பம் அனுபவிக்கும் வரையில் முடியாது' என்று கூறிவிட்டார்கள்.

## ஒருவர் தம் துணைவியருக்கு (தம்மிடமிருந்து பிரிந்துவிட) உரிமை அளிப்பது.

மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

நபியே! உங்களுடைய துணைவியரிடம் கூறுங்கள்: நீங்கள் இவ்வுலக வாழ்க்கையையும், அதன் அலங்காரத்தையும் (மட்டுமே) விரும்புவீர்களாயின், வாருங்கள்! உங்களுக்கு வாழ்க்கைக்கு உரியதைக் கொடுத்து நல்ல முறையில் உங்களை விடுவித்துவிடுகிறேன். (திருக்குர்ஆன் 33:28)

ஹதீஸ் 5262. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (தம் துணைவியரான) எங்களுக்கு (விரும்பினால் தம்முடன் சேர்ந்து வாழலாம் அல்லது பிரிந்துவிடலாம் என) உரிமை அளித்தார்கள். அப்போது நாங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் தேர்ந்தெடுத்தோம். இ(வ்வாறு உரிமை அளித்த)தை அவர்கள் தலாக் எனக் கருதவில்லை.

ஹதீஸ் 5263. மஸ்ரூக் (ரஹ்) அறிவித்தார்

நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம், (ஒருவர் தம் மணபந்தயத்திலிருந்து விலகிக் கொள்ள தம் மனைவிக்கு) உரிமை அளிப்பது ('கியார்') குறித்துக் கேட்டேன். அதற்கு ஆயிஷா (ரலி) (தம் துணைவியரான) எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் (தம் மண பந்தத்திலிருந்து விலகிக் கொள்ள) உரிமை அளித்தார்கள் அது என்ன தலாக்காவா ஆம்விட்டது? என்று கேட்டார்கள்.

(தொடர்ந்து அறிவிப்பாளர்) மஸ்ரூக் (ரஹ்) கூறினார்கள்.

(இவ்வாறு நான் என் மனைவிக்கு உரிமையளித்து) அவள் என்னையே தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டால், நான் அவளுக்கு (ஆரம்பத்தில்) ஒன்றென்ன! நூறு (தலாக்கு)க்கு உரிமை அளித்திருந்தாலும் அதை நான் பொருட்படுத்தமாட்டேன்.

## ஒருவர் தம் மனைவியிடம்உன்னை நான் பிரிந்துவிட்டேன் என்றோஉன்னை நான் விடுவித்துவிட்டேன் என்றோ அல்லதுநீங்கி விட்டேன் என்றோ அல்லது தலாக்கின் கருத்திலமைந்த ஒரு சொல்லையோ கூறினால், அது அவரின் எண்ணப்படியே அமையும்.

வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் கூறினான்:

நல்ல முறையில் அவர்களை விடுவித்து விடுங்கள். (திருக்குர்ஆன் 33:49)

உங்களுக்கு வாழ்க்கைக்கு உரியதைக் கொடுத்து நல்ல முறையில் உங்களை விடுவித்து விடுகிறேன். (திருக்குர்ஆன் 33:28)

பின்னர் முறைப்படி (அவர்களை மனைவியராகத் தம்முடன்) வைத்துக் கொள்ளலாம். அல்லது நன்முறையில் அவர்களை விடுவித்துவிடலாம். (திருக்குர்ஆன் 02:229)

எனவே, அவர்கள் தங்கள் (இத்தாவின்) தவணையை அடைந்தால், அப்பொழுது முறைப்படி (மனைவியராக) அவர்களை நிறுத்தி வைத்துக்கொள்ளுங்கள் அல்லது முறைப்படி அவர்களைப் பிரித்து (விட்டு) விடுங்கள். (திருக்குர்ஆன் 65:02)

ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

(அவதூறு சம்பவத்தின் போது) நபி (ஸல்) அவர்களிடமிருந்து பிரிந்துவிடுமாறு என் தாய் தந்தையர் எனக்குக் கட்டளையிடப் போவதில்லை என்பதை நபியவர்கள் அறிந்திருந்தார்கள்.

## ஒருவர் தம் மனைவியிடம்நீ எனக்குவிலக்கப்பட்டவள் என்று கூறினால்..

ஹஸன் அல்பஸரீ (ரஹ்) கூறினார்கள்:

(இவ்வாறு ஒருவர் கூறினால்) அவரின் எண்ணப்படி முடிவு அமையும்.

ஒருவர் தம் மனைவியை மூன்று தலாக் சொல்லிவிட்டால் அவள் அவருக்கு விலக்கப்பட்டவளாக ஆம்விடுவாள் என்று அறிஞர்கள் கூறுவதுடன், அதனைஹராமுன் பித்தலாக் என்றும்ஹராமுன் பில்ஃபிராக் என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். ஆனால், இது உணவை ஒருவர் தம் மீது ஹராமாக்கிக் கொள்வதைப் போன்றதன்று. ஏனெனில், அனுமதிக்கப்பட்ட உணவை (ஒருவர் தமக்கு விலக்கிக் கொள்வதால்)ஹராமான உணவு என்று சொல்லப்படாது. ஆனால், மணவிலக்குச் செய்யப்பட்ட பெண்ணைவிலக்கப்பட்டவள் என்று சொல்வதுண்டு. மூன்று (கட்டத்) தலாக் விஷயத்தில் அல்லாஹ் கூறினான்:

பின்னர் அவன் (மூன்றாவது தவணையில்) அவளைத் தலாக் சொல்லிவிட்டால், பிறகு அவனல்லாத வேறொரு கணவனை அவள் மணக்கிறவரை, அவனுக்கு அவள் அனுமதிக்கப்பட்டவளாகமாட்டாள். (திருக்குர்ஆன் 02:230)

ஹதீஸ் 5264. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

மூன்று தலாக் சொல்லிவிட்டவர் குறித்து இப்னு உமர் (ரலி) அவர்களிடம் வினவப்பட்டால்,ஒரு தலாக், அல்லது இரண்டு தலாக் சொல்லியிருந்தால் (திரும்ப அழைத்துக்கொள்ளலாமே!) ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் இவ்வாறுதான் எனக்குக் கட்டளையிட்டார்கள். ஆனால், அவளை நீ மூன்று தலாக் சொல்லிவிட்டால் வேறொரு கணவரை அவள் மணக்கும் வரை உனக்கு அவள் விலக்கப்பட்டவளாக ஆம்விடுவாள்' என்று பதிலளிப்பார்கள்.

ஹதீஸ் 5265. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

ஒருவர் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்டார். எனவே அவள் வேறொருவரை மணந்துகொண்டாள். பிறகு அவரும் மணவிலக்குச் செய்துவிட்டார். (இரண்டாவதாக மணந்த) கணவருக்கு இந்த (முகத்திரையின்) குஞ்சத்தைப் போன்றுதான் (இனஉறுப்பு) இருந்தது. அந்தக் கணவரிடமிருந்து தான் விரும்பிய எ(ந்தச் சுகத்)தையும் அவள் அனுபவிக்கவில்லை.

வெகு விரைவில் அவளை அவர் மணவிலக்குச் செய்தும்விட்டார். எனவே, அவள் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! என் கணவர் என்னை மணவிலக்குச் செய்துவிட்டார். பிறகு நான் இன்னொருவரை மணந்துகொண்டேன். அவர் என்னருகில் வந்தார். ஆனால், அவருக்கு இந்த (முகத்திரையின்) குஞ்சத்தைப் போன்றுதான் (இனஉறுப்பு) இருந்தது. அவர் என்னை ஒரு முறைதான் நெருங்கினார். என்னிடமிருந்து அவர் எ(ந்தச் சுகத்)தையும் அனுபவிக்கவில்லை. எனவே, நான் என் முதல் கணவருக்கு அனுமதிக்கப்பட்டவளாக ஆவேனா? என்று கேட்டாள். (ஆனால், இந்தக் குற்றச்சாட்டை கணவர் மறுத்தார்.) எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,உன் இரண்டாவது கணவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும் நீ அவரிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும் நீ உன் முதல் கணவருக்கு அனுமதிக்கப்பட்டவளாக ஆகமாட்டாய்' என்று கூறினார்கள்.

## அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த ஒன்றை நீங்கள் ஏன் விலக்கிக்கொள்கிறீர்கள்? (எனும் 66:1 வது இறைவசனம்.)

ஹதீஸ் 5266. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

இப்னு அப்பாஸ்(ரலி),ஒருவர் (தம் மனைவியை நோக்கி)அவள் எனக்குவிலக்கப்பட்டவள் என்று கூறினால் அது (மணவிலக்காகக் கருதப்படும்) ஒரு விஷயமே அல்ல' என்று கூறிவிட்டு,உறுதியாக அல்லாஹ்வின் தூதரில் உங்களுக்கு ஓர் அழகிய முன்மாதிரி இருக்கிறது' (திருக்குர்ஆன் 33:21) என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 5267. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களிடம் (அவர்களின் அறையில் அதிக நேரம்) தங்கியிருந்து தேன் சாப்பிடுவது வழக்கம். எனவே, (இது பிடிக்காமல் நபியவர்களுடைய துணைவியரான) நானும் ஹஃப்ஸாவும் எங்களுக்குள்நபி(ஸல்) அவர்கள் (ஸைனபின் அறைக்குச் சென்றுவிட்டு) நம்மில் யாரிடம் முதலில் வந்தாலும் தங்களிடமிருந்து கருவேலம் பிசினின் துர்வாடை வருகிறதே! பிசின் சாப்பிட்டீர்களா? என்று கூறிட வேண்டும்' என்று கூடிப் பேசி முடிவு செய்து கொண்டோம். எங்களில் ஒருவரிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தபோது முன்பு பேசிவைத்திருந்தபடி கூறினோம். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,(அப்படியெல்லாம்) ஒரு குறையும் நடந்திடவில்லை. ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் (அவரின் அறையில்) தேன் அருந்தினேன். (அவ்வளவுதான் சத்தியமாக) இனிமேல் ஒருபோதும் இவ்வாறு செய்யமாட்டேன்' என்று கூறினார்கள். எனவே,நபியே! உங்களுடைய துணைவியரின் திருப்தியை எதிர்பார்த்து, அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த ஒன்றை நீங்கள் ஏன் விலக்கிக் கொள்கிறீர்கள்? என்று தொடங்கிநீங்கள் இருவரும் - இதற்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால் (அது உங்களுக்கே நன்று)' என முடியும் (திருக்குர்ஆன் 66:1-4) வசனங்களை அல்லாஹ் அருளினான்.

(இந்த 66:4 வது வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள)நீங்கள் இருவரும் என்பது ஆயிஷா(ரலி) அவர்களையும், ஹஃப்ஸா(ரலி) அவர்களையுமே குறிக்கிறது. (திருக்குர்ஆன் 66:3 வது வசனத்தில்)நபி தம் துணைவியரில் ஒருவரிடம் ஒரு விஷயத்தை இரகசியமாகச் சொல்லியிருந்தார்' என்பதுஇல்லை. நான் தேன்தான் அருந்தினேன். (சத்தியமாக இனி நான் அதனை அருந்தமாட்டேன். இது குறித்து யாரிடமும் சொல்லிவிடாதே)' என்று நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டதையே குறிக்கிறது.

ஹதீஸ் 5268. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தேனும் இனிப்பும் மிக விருப்பமானவையாக இருந்தன. அஸ்ர் தொழுகையை முடித்ததும் நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியரிடம் செல்வார்கள் அவர்களில் சிலருடன் நெருக்கமாகவும் இருப்பார்கள். இவ்வாறு (ஒரு முறை) தம் துணைவியரில் ஒருவரான ஹ∴ப்ஸா பின்த் உமர்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் சென்று வழக்கத்திற்கு மாறாக அதிக நேரம் இருந்துவிட்டார்கள். எனவே, நான் ரோஷப்பட்டேன். அது குறித்து நான் விசாரித்தேன். அப்போது ஹ∴ப்ஸாவின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் அவருக்கு (தாயி∴ப் நகரத்)த் தேன் உள்ள ஒரு தோல் பையை அன்பளிப்பாக வழங்கினாள் என்றும், அதிலிருந்து தயாரித்த பானத்தை நபி(ஸல்) அவர்களுக்கு ஹ∴ப்ஸா புகட்டினார் என்றும் என்னிடம் கூறப்பட்டது. உடனே நான்அல்லாஹ்வின் மீதாணையாக! இதனை நிறுத்துவதற்காக இதோ ஒரு தந்திரம் செய்வோம்' என்று கூறிக்கொண்டு (நபி(ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவரான) சவ்தா பின்த் ஸம்ஆவிடம், (ஹ∴ப்ஸா வீட்டில் தேன் அருந்திவிட்டு) நபி(ஸல்) அவர்கள் உங்கள் அருகில் வருவார்கள். அப்போது கருவேல பிசின் சாப்பிட்டீர்களா? என்று கேளுங்கள்!இல்லை என்று நபியவர்கள் கூறுவார்கள். உடனே தங்களிடமிருந்து ஏதோ துர்வாடை வருகிறதே அது என்ன? என்று கேளுங்கள்! அதற்கு நபி அவர்கள்எனக்கு ஹ∴ப்ஸா தேன் பானம் புகட்டினார் என்று கூறுவார்கள். உடனே நீங்கள்இதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்துவிட்டு (தேனை உறிஞ்சிக் கொண்டு) வந்திருக்கலாம். (எனவேதான் வாடை வருகிறது) என்று சொல்லுங்கள்! நானும் இவ்வாறே சொல்கிறேன். ஸ∴பிய்யாவே! நீங்களும் இவ்வாறே சொல்லுங்கள் என்று (மற்றொரு துணைவியாரான ஸ∴பிய்யாவிடமும்) கூறினேன். (நான் கூறியவாறு செய்துவிட்டு) சவ்தா அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் என் வீட்டு வாசலில் வந்து நின்றவுடன் உங்களுக்கு பயந்து நீங்கள் என்னிடம் கூறியபடி நபியவர்களிடம் சொல்ல விரைந்தேன். என்னை நபி(ஸல்) அவர்கள் நெருங்கியதும், இறைத்தூதர் அவர்களே! கருவேலம் பிசினைச் சாப்பிட்டீர்களா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்இல்லை என்றார்கள். தங்களிடமிருந்து ஏதோ துர்வாடை வருகிறதே அது என்ன? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்ஹ∴ப்ஸா எனக்குத் தேன் பானம் புகட்டினார் என்றார்கள். உடனே நான்இதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (தேன் உறிஞ்சி)விட்டு வந்திருக்கலாம். (எனவேதான் தேனில் வாடை ஏற்பட்டது போலும்.) என்று சொன்னேன்.

(தொடர்ந்து ஆயிஷா(ரலி) கூறினார்:)

என்னிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தபோது நானும் அவ்வாறே கூறினேன். ஸ∴பிய்யாவிடம் நபியவர்கள் சென்றபோதும் அவரும் அவ்வாறே கூறினார். பிறகு (மறுநாள்) ஹப்ஸாவிடம் சென்றபோதுஇறைத்தூதர் அவர்களே! தாங்கள் அருந்துவதற்குச் சிறிது தேன் தரட்டுமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்அது எனக்குத் தேவையில்லை' என்று கூறினார்கள். (இது குறித்து) சவ்தா(ரலி)அல்லாஹ்வின் மீதணையாக! நபி(ஸல்) அவர்களை அதைக் குடிக்கவிடாமல் தடுத்துவிட்டோமே என்று கூறினார்கள். உடனே அவரிடம் நான் ,சும்மா இருங்கள்! (விஷயம் பரவிவிடப்போகிறது!)' என்று சொன்னேன்.

## மணமுடிப்பதற்கு முன்னால் மணவிலக்கு என்பது கிடையாது.

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! இறைநம்பிக்கை கொண்ட பெண்களை நீங்கள் மணந்து, பிறகு நீங்கள் அவர்களைத் தொடுவதற்கு முன்பே மணவிலக்குச் செய்து விட்டீர்களானால், அவர்களின் விஷயத்தில் நீங்கள் கணக்கிடக்கூடிய (இத்தா) தவணை உங்களுக்கு ஒன்றுமில்லை. எனவே, அவர்களுக்கு (ஏற்றவகையில்) ஏதேனும் அளித்து நல்ல முறையில் அவர்களை விடுவித்து விடுங்கள். (திருக்குர்ஆன் 33:49)

"(இந்த வசனத்தில்) மணவிலக்கைப் பற்றி திருமணத்திற்குப் பின்னரே அல்லாஹ் கூறியுள்ளான்' என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறியுள்ளாக்ள்.(மணமுடிப்பதற்கு முன்னால் ஒரு பெண்ணிற்கு

மணவிலக்கு அளித்தால்) அவள் மணவிலக்குப் பெற்றவளாகமாட்டாள்' என்று அலீ(ரலி), ஸயீத் இப்னு முஸய்யப், உர்வா இப்னு ஸு பைர், அபூ பக்ர் இப்னு அப்திர் ரய்மான், உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் இப்னி உத்பா, அபான் இப்னு உஸ்மான், அலீ இப்னு ஹு சைன், ஷு ரைஹ், ஸயீத் இப்னு ஜு பைர், காசிம், சாலிம், தாவூஸ், ஹஸன் அல்பஸரீ, இக்ரிமா, அதாஉ, ஆமிர் இப்னு ஸஅத், ஜாபிர் இப்னு ஸைத், நாஃபிஃ இப்னு ஜு பைர், முஹம்மத் இப்னு கஅப், சுலைமைான் இப்னு யாசர், முஜாஹித், காசிம் இப்னு அப்திர் ரஹ்மான், அம்ர் இப்னு ஹரிம் மற்றும் ஷஅபீ (ரஹ்) ஆகியோர் கூறினார்கள்கள் என அறிவிக்கப்படுகிறது,

## ஒரு நிர்ப்பந்தத்தின் காரணமாக ஒருவர் தம் மனைவியை நோக்கி இவள் என் சகோதரி என்று கூறினால் அது அவரைப் பாதிக்கும் (மணவிலக்கு போன்ற) ஒரு விஷயமே அல்ல.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(இறைத்தூதர்) இப்ராஹீம்(அலை) அவர்கள் (தம் துணைவியாரான) சாராவைப் பார்த்துஇவர் என் சகோதரி' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் திருப்திக்காகவே அப்படிக் கூறினார்கள்.

## நெருக்கடி, நிர்ப்பந்தம், போதை, பைத்தியம் தவறுதல், மறதி ஆகிய நிலைகளில் ஒருவர் மணவிலக்கு அளித்தல், (இறைவனுக்கு) இணைவைத்தல் உள்ளிட்ட செயல்களைச் செய்தால் (சட்டம் என்ன)? குடிகாரனின் நிலையும் பைத்தியக்காரனின் நிலையும் (ஒன்றா? வேறா?)

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

"எண்ணங்களைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் எண்ணியதே கிடைக்கும்.

('தவறுதலாக அல்லது மறதியாக தலாக் கூறினால் அது நிகழாது என்பதற்கு ஆதாரமாக) ஆமிர் இப்னு ஷராஹீல் அஷ்ஷஅபீ (ரஹ்)எங்கள் இறைவா! நாங்கள் மறந்துபோயிருப்பினும், அல்லது நாங்கள் தவறுதலாகச் செய்திருப்பினும் எங்களைத் தண்டிக்காதிருப்பாயாக!"எனும் (திருக்குர்ஆன் 02:286 வது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## மனபிரமைக்கு உள்ளானவனின் ஒப்புதல் வாக்குமூலம் செல்லாது (என்பது பற்றிய விளக்கம்)

(தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக) தமக்குத் தாமே வாக்குமூலம் அளித்த ஒருவரிடம் நபி(ஸல்) அவர்கள்உனக்குப் பைத்தியமா? என்று கேட்டார்கள்.

அலீ(ரலி) கூறினார்.

ஹம்ஸா(ரலி) என்னுடைய இரண்டு (ம்ழ) ஒட்டகங்களின் இடுப்புகளை (குடிபோதையில்) பிளந்துவிட்டார். எனவே, நபி(ஸல்) அவர்கள் ஹம்ஸாவைக் கண்டிக்கலானார்கள். அப்போது ஹம்ஸாவின் இரண்டு கண்களும் சிவந்திருக்க அவர் போதையிலிருந்தார். பிறகு ஹம்ஸா(எங்களைப் பார்த்து)நீங்கள் எல்லாரும் என் தந்தையின் அடிமைகள் தாமே? என்று கேட்டார். அவர் போதையில் இருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டு, (திரும்பாமல் அப்படியே பின்வாங்கிய வண்ணம் வந்த வழியே) நபி(ஸல்) அவர்கள் வெளியேறினார்கள். நாங்களும் அவர்களுடன் வெளியேறினோம்.

"போதையிலுள்ளவன் மற்றும் நிர்ப்பந்திக்கப்பட்டவனின் மணவிலக்கு செல்லாது என உஸ்மான்(ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்.மனபிரமையில்

உள்ளவனின் மணவிலக்கு செல்லாது' என உக்பா இப்னு ஆமிர்(ரலி) கூறினார். ஒருவர் மணவிலக்குச் செய்யும்போது (தாம் விரும்பும்) நிபந்தனைகளைச் சேர்க்க அவருக்கு உரிமையுண்டு' என அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்கள்.

நாஃபிஉ(ரஹ்) கூறினார் ஒருவர், தம் மனைவி வீட்டைவிட்டு வெளியேறினால் ஒட்டுமொத்த (அல்பத்தா)த் தலாக் சொல்லப்பட்டவள் ஆவாள் என்று கூறினார். ('இது குறித்து நான் வினவிய போது) இப்னு உமர்(ரலி),அவ்வாறு அவள் (வீட்டைவிட்டு) வெளியேறினால் அவன் மூலம் ஒட்டுமொத்தத் தலாக் சொல்லப்பட்டவளாம்விடுவாள். வெளியேறாவிட்டால் ஒன்றும் நிகழாது' என்று கூறினார்கள்.

முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) கூறினார் ஒருவர்,நான் இப்படி இப்படிச் செய்யாவிட்டால் என் மனைவி மூன்று தலாக் சொல்லப்பட்டவள் ஆம்விடுவாள் என்று கூறினால், அவர் அந்தப் பிரமாணத்தைக் கூறும்போது எப்படிக் கூறினார்? மேலும், எதைக் கருத்தில் கொண்டு கூறினார்? என்று கேட்கப்படும். அந்தப் பிரமாணத்தைக் கூறும்போதுகுறிப்பிட்ட ஒரு தவணையை மனத்தில் உறுதி செய்து கொண்டே நான் அவ்வாறு கூறினேன் என்று அவர் குறிப்பிட்டால், அது அவரின் பொறுப்பிலும் நம்பிக்கையிலும் விடப்படும்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) கூறினார் ஒருவர் தம் மனைவியை நோக்கிநீ எனக்குத் தேவையில்லை என்று கூறினால் அவர் என்ன எண்ணத்தில் கூறினாரோ அதன்படி அமையும். ஒவ்வொரு சமுதாயத்தாரின் தலாக்கும் அவரவர் மொழிப்படியே அமையும்.

கத்தாதா(ரஹ்) கூறினார் ஒருவர் தம் மனைவியை நோக்கிநீ கர்ப்பமுற்றால் மூன்று தலாக் சொல்லப்பட்டவள் ஆம்விடுவாய்' என்று கூறியிருந்தால், மாதவிடாயிலிருந்து தூய்மையடையும் ஒவ்வொரு நேரத்திலும் ஒரு முறை அவளுடன் அவர் தாம்பத்திய உறவு கொள்ளலாம். எப்போது அவள் கர்ப்பமடைந்திருப்பது தெரியவருகிறதோ அப்போது அவரிடமிருந்து அவள் பிரிந்து விடுவாள்.

"ஒருவர் தம் மனைவியிடம் ,நீ உன் தாய் வீட்டிற்குப் போய்விடு என்று கூறினால் அவர் என்ன எண்ணத்தில் கூறினாரோ அப்படியே அமையும்' என ஹஸன் அல்பஸரீ(ரஹ்) கூறினார்கள்.

"அவசியத்தை முன்னிட்டே தலாக் சொல்லப்படவேண்டும். (ஆனால்) அடிமை விடுதலை அல்லாஹ்வின் திருப்பொருத்தத்திற்காக (எப்போதும்) நடைபெறலாம்' என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

"ஒருவர் தம் மனைவியை நோக்கி, நீ என் மனைவி அல்லள்' என்று கூறினால், அவர் என்ன எண்ணத்தில் கூறினாரோ அப்படியே அமையும். (அதாவது) மணவிலக்குச் செய்யும் எண்ணத்தில் அவர் அவ்வாறு கூறியிருந்தால் அவர் எண்ணப்படியே மணவிலக்கு நிகழ்ந்து விடும்' என ஸு ஹ்ரீ(ரஹ்) கூறினார்.

அலீ(ரலி) (உமர்(ரலி) அவர்களை நோக்கி)மூன்று நபர்களிடமிருந்து பேனா உயர்த்தப்பட்டுவிட்டது என்பது உங்களுக்குத் தெரியாதா? எனக் கேட்டார்கள்.

1. பைத்தியக்காரனிடமிருந்து அவன் புத்தி சுவாதீனம் அடையும் வரை.

2. சிறுவனிடமிருந்து அவன் பருவ வயதை அடையும் வரை.

3. தூங்குபவனிடமிருந்து அவன் கண் விழிக்கும் வரை. மேலும்,அறிவு குறைந்தவனின் மணவிலக்கைத் தவிர மற்றெல்லா மணவிலக்குகளும் செல்லும்' என்று அலீ(ரலி) கூறினார்.

ஹதீஸ் 5269. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாரின் உள்ளங்களில் எழும் தீய எண்ணங்களை அவர்கள் அதன் படி செயல்படாத வரை அல்லது அதை (வெளிப்படுத்திப்) பேசாத வரை அல்லாஹ் மன்னித்துவிட்டான்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) கூறினார்.

## ஒருவர் மனத்துக்குள்ளேயே தலாக் சொல்லிக் கொண்டால் அதனால் (தலாக்) எதுவும் நிகழப்போவதில்லை.

ஹதீஸ் 5270. ஜாபிர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்து கொண்டிருந்தபோது,அஸ்லம் குலத்தைச் சேர்ந்த ஒருவர் அவர்களிடம் வந்து,நான் விபசாரம் செய்துவிட்டேன்' என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள் அவரைவிட்டு முகத்தைத் திருப்பினார்கள். உடனே அவர் நபி(ஸல்) அவர்கள் திரும்பிய திசைக்கே சென்று (தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக) நான்கு முறை ஒப்புதல் வாக்குமூலம் அளித்தார். எனவே, நபி(ஸல்) அவர்கள் அவரை அழைத்து,உனக்கு என்ன பைத்தியமா? என்றும்,உனக்குத் திருமணம் ஆகி விட்டதா? என்றும் கேட்டார்கள். அவர்ஆம்' என்றார். எனவே, அவரை (பெருநாள்) தொழுகைத் திடலுக்குக் கொண்டு சென்று அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கும்படி நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். (அவ்வாறே அவர் அழைத்துச் செல்லப்பட்டு தண்டனை வழங்கப்பட்டார்.) அவரின் மீது கற்கள் விழுந்தபோது அவர் (வலி தாங்க முடியாமல்) வெருண்டோட ஆரம்பித்தார். இறுதியில் (மதீனாவின் புறநகர்ப் பகுதியில்) பாதைகள் நிறைந்த (அல்ஹர்ரா எனும்) இடத்தில் அவர் பிடிக்கப்பட்டு, மரண தண்டனை வழங்கப்பட்டார்.

ஹதீஸ் 5271. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்து கொண்டிருந்தபோதுஅஸ்லம் குலத்தைச் சேர்ந்த ஒருவர் அவர்களிடம் வந்துஇறைத்தூதர் அவர்களே!"என்று அழைத்து,பிற்போக்கானவன் விபசாரம் செய்துவிட்டான்' என்று தம்மைப் பற்றிக் கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தை அவரைவிட்டுத் திருப்பினார்கள். உடனே அவர் நபி(ஸல்) அவர்கள் திரும்பிய பகுதிக்கு வந்து அவர்களின் முகத்திற்கு நேராக நின்று கொண்டு முன்போன்றே கூறினார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள் முகத்தை (வேறு திசையில்) திருப்பினார்கள். அவர் மறுபடியும் நபி(ஸல்) அவர்கள் திரும்பிய பகுதிக்கு அவர்களின் முகத்தை நேராக நின்று கொண்டு முன்போன்றே கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வேறு பக்கம் திரும்பினார்கள். (இவ்வாறு) நான்காம் முறையளாக நபி(ஸல்) அவர்களின் முகத்திற்கு நேராக நின்று கொண்டு, தாம் விபசாரம் செய்துவிட்டதாக நான்கு முறை ஒப்புதல் வாக்குமூலம் அளித்தபோது அவரை நபி(ஸல்) அவர்கள் (அருகில்) அழைத்துஉனக்கு என்ன பைத்தியமா? (சுயநினைவோடுதான் கூறுகிறாயா?)" என்று கேட்டார்கள். அவர்,எனக்குப் பைத்தியம்) இல்லை. நான் தெளிவுடன்தான் இருக்கிறேன்)' என்று கூறினார்.

பிறகு நபி(ஸல்) அவர்கள்இவரை அழைத்துச் சென்று கல்லெறி தண்டனை வழங்கிடுங்கள்' என்று உத்தரவிட்டார்கள். அந்த மனிதர் திருமணம் ஆனவராக இருந்தார்.

ஹதீஸ் 5272. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கியவர்களில் நானும் ஒருவனாக இருந்தேன்.

அப்போது அவரை மதீனாவின் (பெருநாள்) தொழுகைத் திடலில் வைத்து நாங்கள் கல்லெறிந்தோம். அவரின் மீது கல்லடி விழத் தொடங்கியதும் (வலி தாங்க முடியாமல்) அவர் வெருண்டோடலானார். இறுதியில் அவரை நாங்கள் பாறைகள் நிறைந்த ('அல்ஹர்ரா எனும்) இடத்தில் பிடித்து அவர் மரணிக்கும் வரை அவரைக் கல்லால் அடித்தோம்.

## 'அல்குல்உ (ஈடாக ஏதேனும் கொடுத்து ஒரு பெண் தன் கணவனிடமிருந்து பிரிந்து கொள்வது) பற்றியும், அதுவே மணவிலக்கு ஆம்விடுமா? என்பது பற்றியும்.

அல்லாஹ் கூறினான்:

(தம்பதியர்) இருவரும் அல்லாஹ்வின் விதிகளை நிலைநாட்டமாட்டார்கள். என்று அஞ்சினால் தவிர, மனைவியருக்கு நீங்கள் வழங்கிய எந்தப் பொருளையும் (திரும்பப்) பெறுவது உங்களுக்குத் தகாது. அப்படி அவ்விருவரும அல்லாஹ்வின் விதிகளை நிலைநாட்டமாட்டார்கள் என நீங்கள் அஞ்சினால், அவள் ஈட்டுத் தொகை வழங்குவதில் (கணவன் அதைப் பெறுவதில்) இருவர் மீதும் எந்தக் குற்றமும் இல்லை. (திருக்குர்ஆன் 02:229)

ஆட்சியாளர் (அல்லது நீதிபதியின் அனுமதி) இல்லாமலேயேகுல்உ நிகழ்வதை உமர்(ரலி) அனுமதித்துள்ளார்கள். மனைவியின் பின்னலில் கட்டும் கயிற்றைத் தவிர (அவளின் அனைத்துச் சொத்துகளுக்கும் ஈடாக)குல்உ நிகழ்ந்தாலும் அதையும் உஸ்மான்(ரலி) அனுமதித்துள்ளார்கள்.

தாவூஸ்(ரஹ்) கூறினார்

“(தம்பதியர்) இருவரும் அல்லாஹ்வின் விதிகளை நிலைநாட்டமாட்டார்கள் என அஞ்சினால் தவிர..!”எனும் (திருக்குர்ஆன் 02:229 வது வசனத்) தொடரின் கருத்தாவது: இல்லறவாழ்க்கையிலும் ஒவ்வொருவரும் மற்றவருக்குச் செய்யவேண்டிய கடமையென அல்லாஹ் விதித்துள்ளவற்றை அவர்கள் நிறைவேற்றமாட்டார்கள் என் அஞ்சினால் தவிர.

(உன்னுடன் படுக்கையைப் பம்ர்ந்து கொண்டு உன் மூலம் ஏற்பட்ட பெருந்துடக்கிற்காக நான் குளிக்கப்போவதில்லை என்று மனைவி கூறுகிற அளவிற்கு (பிணக்கு முற்றியதாக) இருந்தால்தான்குலா செய்வது செல்லும் என்று விவரம் அறியாத சிலர் கூறியதைப் போன்று தாவூஸ்(ரஹ்) கூறவில்லை.

ஹதீஸ் 5273. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

ஸாபித் இப்னு கைஸ் இப்னு ஷம்மாஸ்(ரலி) அவர்களின் துணைவியர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) ஸாபித் இப்னு கைஸின் குணத்தையோ, மார்க்கப் பற்றையோ நான் குறைகூறவில்லை. ஆனால், நான் இஸ்லாத்தில் இருந்துகொண்டே இறைநிராகரிப்புக்குரிய செயல்களைச் செய்து விடுவேனோ என்று அஞ்சுகிறேன் என்று கூறினார். அப்போது,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,ஸாபித் உனக்கு (மணக்கொடையாக) அளித்த தோட்டத்தை நீ அவருக்கே திருப்பித் தந்துவிடுகிறாயா? என்று கேட்டார்கள் அவர்,ஆம் (தந்து விடுகிறேன்)‘ என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஸாபித் அவர்களிடம்),தோட்டத்தை ஏற்றுக் கொண்டு, அவளை ஒரு முறை தலாக் சொல்லி விடுங்கள்!”என்று கூறினார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படும் இந்த ஹதீஸில்முதாபஆ (அறிவிப்பாளர் தொடரில் ஒற்றுமை இல்லை.)

ஹதீஸ் 5274. இக்ரிமா(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு உபை என்பவரின் சகோதரி (ஜமீலா) இடம் நபி(ஸல்) அவர்கள்உன் கணவரின் தோட்டத்தை அவரிடமே திருப்பித் தந்துவிடுகிறாயா? என்று கேட்டார்கள். அவர்ஆம் என்றார். எனவே, அதனை அவர் திருப்பித் தந்துவிட்டார். பின்னர், தலாக் சொல்லிவிடும்படி நபி(ஸல்) அவர்கள் அவரின் கணவருக்கு உத்தரவிட்டார்கள்.

இக்ரிமா(ரஹ்) அவர்களின் இன்னோர் அறிவிப்பில்அவரைத் தலாக் சொல்லி விடுங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்‘ என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 5275. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

ஸாபித் இப்னு கைஸ்(ரலி) அவர்களின் துணைவியார் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்துஇறைத்தூதர் அவர்களே! நான் ஸாபித் அவர்களின் மார்க்கப்பற்றையோ அவரின்

குணத்தையோ குறை சொல்லவில்லை. ஆனால், அவருடன் வாழ என்னால் முடியவில்லை' என்று கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,அவரின் தோட்டத்தை அவரிடமே திருப்பித் தந்துவிடுகிறாயா? என்று கேட்டார்கள். அவரும்ஆம் (திருப்பித் தந்துவிடுகிறேன்) என்று கூறினார்.

ஹதீஸ் 5276. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

ஸாபித் இப்னு கைஸ் இப்னி ஷம்மாஸ்(ரலி) அவர்களின் துணைவியார் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! நான் ஸாபித் அவர்களின் மார்க்கப் பற்றையோ, அவரின் குணத்தையோ பழி சொல்லவில்லை. ஆயினும் நான் இறை நிராகரிப்புக்குரிய செயலைச் செய்து விடுவேனோ என்று அஞ்சுகிறேன்' என்று கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,சரி! அவரின் தோட்டத்தை அவரிடமே திருப்பித் தந்து விடுகிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு அவரும்ஆம் என்று கூறினார்கள். பின்னர், (அந்தத் தோட்டத்தை) ஸாபித் அவர்களுக்கே திருப்பிக் கொடுத்துவிட்டார். நபி(ஸல்) அவர்கள் ஸாபித் அவர்களுக்கு உத்தரவிட, அவரும் தம் மனைவியிடமிருந்து பிரிந்துவிட்டார்.

ஹதீஸ் 5277. இக்ரிமா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் (அந்தப் பெண்ணின் பெயர்) ஜமீலா என்று மேற்கண்ட ஹதீஸ் தொடங்குகிறது.

## (கணவன்- மனைவிக்கிடையே பிரிவினை ஏற்படு(மோ என அஞ்சு)வதும், அவசியம் நேரும்போது குலா செய்யும்படி (நடுவர்) யோசனை கூறலாமா என்பதும்.

மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

(கணவன்- மனைவி ஆகிய) அவ்விருவருக்கிடையே (பிணக்குண்டாம்) பிரிவினை ஏற்பட்டுவிடும் என்று நீங்கள் அஞ்சினால் கணவனின் குடும்பத்தாரிலிருந்து ஒரு நடுவரையும், மனைவியின் குடும்பத்தாரிலிருந்து ஒரு நடுவரையும் அனுப்புங்கள். அல்லாஹ் தம்பதியரிடையே ஒற்றுமை ஏற்படும்படி செய்துவிடுவான். நிச்சயமாக அல்லாஹ் நன்கு அறிகிறவனாகவும், நன்கு உணர்கிறவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04: 35)

ஹதீஸ் 5278. மிஸ்வர் இப்னு மக்ரமா அஸ்ஸுஹ்ரீ(ரலி) அறிவித்தார்

"பனு முஃகீரா குலத்தார், தங்கள் புதல்வியை அலீ(ரலி) மணந்துகொள்ள அனுமதி கோரினார். (ஆனால், அதை) நான் அனுமதிக்கமாட்டேன்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறுவதை கேட்டேன். "

## (திருமணமான) அடிமைப் பெண்ணை விற்பது மணவிலக்கு ஆகாது.

ஹதீஸ் 5279. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(அடிமைப் பெண்ணாயிருந்து விடுதலை அடைந்த) பரீராவின் விஷயத்தில் மூன்று வழிமுறைகள் கிடைக்கப்பெற்றன:

1. அவர் தம் (அடிமைக்) கணவர் விஷயத்தில் (அவருடன் தொடர்ந்து வாழவும், அல்லது பிரிந்துவிடவும்) உரிமை அளிக்கப்பட்டார்.

2. அடிமையின் வாரிசுரிமை ('வலா") விடுதலை செய்தவருக்கே உண்டு என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

3. பாத்திரம் ஒன்றில் இறைச்சி கொதித்துக் கொண்டிருந்த நிலையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (வீட்டுக்குள்) நுழைந்தார்கள். அப்போது அவர்களுக்கு முன் ரொட்டியும் வீட்டிலிருந்த குழம்பும் வைக்கப்பட்டது. அப்போது அவர்கள்பாத்திரத்தில் இறைச்சி இருக்கக் கண்டேனே!

(அது என்னவாயிற்று?)' என்று கேட்டார்கள். அதற்குக் குடும்பத்தார்ஆம்! (இருக்கிறது)ஆனால், அது பரீராவுக்கு தர்மமாக வழங்கப்பட்டதாகும். தாங்கள் தாம் தர்மப் பொருட்களைச் சாப்பிடமாட்டீர்களே? என்று கூறினர். அப்போது நபி(ஸல்) அவர்கள்அது பரீராவுக்குத்தான் தர்மம் நமக்கு அது (பரீராவிடமிருந்து) அன்பளிப்பு' என்றார்கள்.

## ஓர் அடிமைப் பெண் (விடுதலை செய்யப்பட்டால்) அடிமையான தன் கணவனுடன் வாழ(வும் பிரிந்துவிடவும் அவளுக்கு) உரிமையுண்டு.

**ஹதீஸ் 5280.** இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(ஆயிஷா(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட) பரீராவின் கணவர் ஓர் அடிமையாக இருந்ததை பார்த்தேன்.

**ஹதீஸ் 5281.** இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

பரீராவின் கணவர் முஃகீஸ் இன்ன குலத்தாரின் அடிமையாவார். அவர் (தம் மனைவி விடுதலையாகி விருப்ப உரிமை அளிக்கப்பட்ட பின், தம்மிடமிருந்து பிரிந்து விடுவதைத் தேர்ந்தெடுத்துக் கொண்ட போது) மதீனாவின் தெருக்களில் பரீராவுக்குப் பின்னால் சென்றதை இப்போதும் நான் காண்பதைப் போன்றுள்ளது.

**ஹதீஸ் 5282.** இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

கறுப்பு அடிமையான பரீராவின் கணவர் முஃகீஸ்இன்ன குலத்தாரின் அடிமையாயிருந்தார். அவர் (தம் மனைவி விடுதலையாகி விருப்ப உரிமை அளிக்கப்பட்ட பின், தம்மிடமிருந்து பிரிந்துவிடுவதைத் தேர்ந்தெடுத்த போது) மதீனாவின் தெருக்களில் பரீராவுக்குப் பின்னால் சுற்றிச் சுற்றி வந்ததை இப்போதும் நான் காண்பதைப் போன்றுள்ளது.

## பரீராவின் கணவருக்காக நபி(ஸல்) அவர்கள் பரிந்துரை செய்தது.

**ஹதீஸ் 5283.** இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

பரீராவின் கணவர் அடிமையாக இருந்தார். அவருக்கு முஃகீஸ் என்று (பெயர்) சொல்லப்படும். அவர் (பரீரா தம்மைப் பிரிந்துவிட நினைக்கிறார் என்பதை அறிந்த போது) தம் தாடியில் கண்ணீர் வழியும் அளவிற்கு அழுத வண்ணம் பரீராவிற்குப் பின்னால் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்ததை இப்போதும் நான் காண்பதைப் போன்றுள்ளது அப்போது நபி(ஸல்) அவர்கள் அப்பாஸ்(ரலி) அவர்களிடம்அப்பாஸ் அவர்களே! முஃகீஸ் பரீராவின் மீது வைத்துள்ள நேசத்தையும், பரீரா முஃகீஸின் மீது கொண்டுள்ள கோபத்தையும் கண்டு நீங்கள் வியப்படையவில்லையா? என்று கேட்டார்கள். (முஃகீஸிடமிருந்து பரீரா பிரிந்துவிட்ட போது) நபி(ஸல்) அவர்கள்முஃகீஸிடம் நீ திரும்பிச் செல்லக்கூடாதா? என்று (பரீராவிடம்) கேட்டார்கள். அதற்கு பரீராஇறைத்தூதர் அவர்களே! எனக்குத் தாங்கள் கட்டளையிடுகிறீர்களா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்இல்லை' நான் பரிந்துரைக்கவே செய்கிறேன்' என்றார்கள். அப்போது பரீரா, (அப்படியானால்) அவர் எனக்குத் தேவையில்லை' என்று கூறிவிட்டார்.

**ஹதீஸ் 5284.** ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான் (அடிமைப் பெண்ணான) பரீராவை விலைக்கு வாங்க விரும்பினேன். பரீராவின் எசமான்கள்வலா எனும் வாரிசுரிமை தங்களுக்கே இருக்கவேண்டும் என நிபந்தனையிட்டு, இல்லையேல் விற்கமுடியாது என) மறுத்தனர். எனவே, இதைப் பற்றி நான் நபி(ஸல்) அவர்களிடம் கூறினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் (உன் விருப்பப்படியே) பரீராவை நீ வாங்கி விடுதலை செய்தவருக்கே உரியதாகும் என்று கூறினார்கள்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம், இறைச்சி கொண்டுவரப்பட்டது. அப்போதுஇ(ந்த இறைச்சியான)து, பரீராவுக்கு தர்மமாக வழங்கப்பட்டதாகும்' என்று சொல்லப்பட்டது. அதற்கு

நபி(ஸல்) அவர்கள்,இது பரீராவுக்குத்தான் தர்மம் நமக்கு (இது)அன்பளிப்பாகும்' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்பரீரா தம் கணவர் விஷயத்தில் விருப்ப உரிமை அளிக்கப்பட்டார் எனக் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

## "(அல்லாஹ்வுக்கு) இணைவைக்கும் பெண்களை அவர்கள் இறைநம்பிக்கை கொள்ளும் வரை நீங்கள் திருமணம் செய்து கொள்ளாதீர்கள். இணைவைக்கும் (சுதந்திரமான) ஒரு பெண் உங்களைக் கவரக்கூடியவளாக இருந்தபோதிலும், அவளை விட இறைநம்பிக்கையுள்ள அடிமைப் பெண்ணே நிச்சயமாக மேலானவள் ஆவாள் எனும் (திருக்குர்ஆன் 02:221 வது) இறைவசனம்.

ஹதீஸ் 5285. நா..பிஉ(ரஹ்) அறிவித்தார்

( ஒரு முஸ்லிம்) கிறிஸ்துவப் பெண்ணையோ அல்லது யூதப் பெண்ணையோ மணந்துகொள்வது தொடர்பாக இப்னு உமர்(ரலி) அவர்களிடம் வினவப்பட்டால், அவர்கள்இறைநம்பிக்கையாளர்கள் இணைவைக்கும் பெண்களை மணமுடித்துக கொள்வதை அல்லாஹ் அனுமதிக்கவில்லை. அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவரான ஈசா(அலை) அவர்களைத் தன்னுடைய இறைவன் என்று ஒரு பெண் கூறுவதைவிட மிகப் பெரிய இணைவைப்பாக வேறொன்றையும் நான் அறியவில்லை என்பார்கள்.

## இணைவைப்பவர்களாக இருந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பெண்களை மணந்துகொள்வதும், (மணப்பதற்கு முன் மேற்கொள்ளவேண்டிய) அவர்களின் இத்தா'க் காலமும்.

ஹதீஸ் 5286. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களையும் முஸ்லிம்களையும் பொறுத்தவரையில் இணைவைப்பாளர்கள் இரண்டு வகையினராக பகைவர்களாக இருந்தனர். அவர்கள் நபி(ஸல்) அவர்களுடன் போர் புரிவார்கள். நபியவர்களும் அவர்களுடன் போர் புரிவார்கள். மற்றொரு வகை இணைவைப்பாளர்கள் (சமாதான) ஒப்பந்தம் செய்தவர்களாக இருந்தனர். அவர்கள் நபி(ஸல்) அவர்களுடன் போர் புரியமாட்டார்கள் நபியவர்களும் அவர்களுடன் போர் புரியமாட்டார்கள். பகைவர்களின் கூட்டத்திலிருந்து ஒரு பெண் (முஸ்லிமாம்) நாடு துறந்து (மதீனாவுகு) வந்தால் அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டு தூய்மையடையும் வரை அவளை யாரும் பெண் பேச அனுமதிக்கப்படவில்லை. அவ்வாறு அவள் (மாதவிடாய்க்குப் பின்) தூய்மையடைந்தால் மண முடித்துக் கொள்ள அவளுக்கு அனுமதி வழங்கப்பட்டது. அத்தகைய பெண் (முஸ்லிம் ஒருவரை) மணந்து கொள்வதற்கு முன் அவளுடைய (முன்னாள்) கணவன் (முஸ்லிமாம்) நாடு துறந்து வந்தால் அவள் அவரிடமே திருப்பி ஒப்படைக்கப்பட்டாள். பகைவர்களிலுள்ள அடிமையான ஆணோ பெண்ணோ (முஸ்லிமாம்) நாடு துறந்து வந்தால் அவர் சுதந்திரமானவராகவே கருதப்பட்டார். அவருக்கு மற்ற முஹாஜிர்களுக்குள்ள (நாடு துறந்து வந்தோருக்குள்ள) அனைத்து மரியாதைகளும் அளிக்கப்பட்டன.

பின்னர் (இதன் அறிவிப்பாளரான) அதாஉ(ரஹ்), (சமாதான) ஒப்பந்தம் செய்துகொண்ட இணைவைப்பாளர்(களின் பெண்)கள் குறித்து முஜாஹித்(ரஹ்) அறிவித்திருப்பதைப் போன்று (பின்வருமாறு) அறிவித்தார்கள்.

(சமாதான) ஒப்பந்தம் செய்த இணைவைப்பாளர்களின் ஆண் அடிமையோ, பெண் அடிமையோ (முஸ்லிமாம்) நாடு துறந்து வந்தால் அவர்கள் (தம் நாட்டிற்குத்) திருப்பி அனுப்பிவைக்கப்படவில்லை அவர்களுக்குரிய விலை மட்டுமே திருப்பித் தரப்பட்டது.

ஹதீஸ் 5287. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

அபூ உமைய்யாவின் மகள்குறைபா என்பவர் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களின் மனைவியாக இருந்தார். அவரை உமர் இப்னு கத்தாப்(ரலி) மணவிலக்குச் செய்துவிட்டார்கள். பின்னர் அவரை முஆவியா இப்னு அபீ சு..ப்யான்(ரலி) மணந்தார்கள்.

அபூ சு..ப்யான்(ரலி) அவர்களின் புதல்வியார் உம்முல் ஹகம் அவர்கள், இயாள் இப்னு ..கன்கி அல்..பிஹ்ரீ(ரலி) அவர்களின் மனைவியாக இருந்தார். அவரை இயாள் மணவிலக்குச் செய்துவிட்டார்கள். பிறகு அவரை அப்துல்லாஹ் இப்னு உஸ்மான் அஸ்ஸக..பீ என்பவர் மணந்தார்.

## பகை நாட்டு இணைவைப்பாளரின், அல்லது இஸ்லாமிய நாட்டு முஸ்லிமல்லாத குடிமகனின் கிறிஸ்தவ மனைவி, அல்லது இணைவைப்பாளியான மனைவி முஸ்லிமாகி விட்டால் (என்ன சட்டம்?)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

தன் கணவனுக்குச் சிறிது நேரத்திற்கு முன்பாக ஒரு கிறிஸ்தவப் பெண் முஸ்லிமாம்விட்டால் கூட உடனே அவள் தன் கணவனுக்கு விலக்கப்பட்டவளாக ஆம்விடுவாள்.

இப்ராஹீம் அஸ்ஸாயி..க்(ரஹ்) கூறினார்

அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அவர்களிடம், இஸ்லாமிய நாட்டின் ஒப்பந்தப் பிரஜையான முஸ்லிமல்லாத ஒரு பெண் முஸ்லிமாம்விட்டாள். பிறகு அவள்இத்தா'க் காலத்தில் இருந்து கொண்டிருந்தபோது அவளுடைய கணவனும் முஸ்லிமானார். இப்போது அவள் அவரின் மனைவிதானா? (அவர்கள் இடையிலான மணஉறவு முறிந்துவிட்டதா அல்லது தொடருகிறதா?)' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், இல்லை (முறிந்துவிட்டது) இனி அவளாக முன்வந்து (அதே கணவனைப்) புதிதாகத் திருமணம் செய்துகொண்டுமஹ்ர் பெற விரும்பினால் தவிர. (அப்போதுதான் பழைய கணவனுடன் தொடர்ந்து அவள் வாழ முடியும்)' என்று பதிலளித்தார்கள்.

முஜாஹித்(ரஹ்) கூறினார்

(மேற்கண்ட நிலையில்) அவள்இத்தா'வில் இருந்து கொண்டிருக்கும்போது கணவன் முஸ்லிமாம்விட்டால் (புதிதாக) அவளை மணந்து கொள்ள வேண்டும்.

மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

(முஸ்லிமாம்விட்ட) அந்தப் பெண்கள் (முஸ்லிமல்லாத) தங்கள் கணவன்மார்களுக்கு அனுமதிக்கப்பட்டவர்கள் அல்லர் அந்தக் கணவன்மார்களும் இந்தப் பெண்களுக்கு அவமதிக்கப்பட்டவர்கள் அல்லர். (திருக்குர்ஆன் 60:10)

ஹஸன் அல்பஸரீ(ரஹ்), கத்தாதா(ரஹ்) ஆகியோர் கூறினார்கள்

(நெருப்பை வழிபடுகிறவர்களான) மஜூஸித் தம்பதிகள் ஒரே நேரத்தில் முஸ்லிமானால் (பழைய) மணஉறவிலேயே அவர்கள் இருவரும் நீடிப்பார்கள். அதே சமயம் அவர்களில் ஒருவர் மற்றவரை முந்திக்கொண்டு முஸ்லிமாம், மற்றொருவர் (முஸ்லிமாக) மறுத்தார் எனில், (அவர்கள் இருவருக்குமிடையே) மணமுறிவு ஏற்பட்டுவிடும் அவளின் மீது அவன் உரிமை கொண்டாட முடியாது.

இப்னு ஜு ரைஜ் (ரஹ்) கூறினார்

நான் அதாஉ இப்னு அபீ ரபாஹ் (ரஹ்) அவர்களிடம், இணைவைப்பாளர்களிலுள்ள ஒரு பெண் (இஸ்லாத்தை ஏற்று) முஸ்லிம்களிடம் வந்து சேர்ந்தால், (இணைவைப்பவரான) அவளுடைய (முன்னாள்) கணவனுக்கு அவள் மணக் கொடையை (மஹ்ரை)த் திருப்பிச் செலுத்த வேண்டுமா? ஏனெனில், அல்லாஹ் (இப்பெண்களுக்காக) அவர்கள் செலவு செய்திருந்ததை அவர்களுக்குக் கொடுத்துவிடுங்கள்!" (திருக்குர்ஆன் 60:10) என்று கூறுகிறானே? என்று கேட்டேன். அதற்கு அதாஉ (ரஹ்), (அவசியம்) இல்லை. அதுவெல்லாம் நபி (ஸல்) அவர்களுக்கும் (இணைவைப்பாளர்களான) ஒப்பந்தக்காரர்களுக்கும் இடையே இருந்த ஒன்றுதான் (இன்று அது நடைமுறையில் இல்லை)' என்று பதிலளித்தார்கள்.

முஜாஹித் (ரஹ்) கூறினார்

இதுவெல்லாம் நபி (ஸல்) அவர்களுக்கும் குறைஷியருக்குமிடையே ஏற்பட்டிருந்த உடன்பாட்டின்போது தான். (பின்னர், மக்கா வெற்றியின்போது காலாவதியாகிவிட்டது.)

ஹதீஸ் 5288. நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) கூறினார்

"நம்பிக்கையாளர்களே! (இறைமறுப்பாளர்களிலுள்ள) பெண்கள் நம்பிக்கை கொண்டு ஹிஜ்ரத் செய்து (நாடு துறந்து) உங்களிடம் வந்தால் அவர்களைச் சோதித்துப் பாருங்கள்' எனும் (திருக்குர்ஆன் 60:10 வது) வசனம் முழுமையாக அருளப்பெற்ற காரணத்தினால் தம்மிடம் ஹிஜ்ரத் செய்துவரும் இறைநம்பிக்கை கொண்ட பெண்களை நபி (ஸல்) அவர்கள் சோதித்துவந்தார்கள். இறைநம்பிக்கை கொண்ட அப்பெண்களில் (இணைவைக்கமாட்டோம் திருடமாட்டோம் விபசாரம் புரியமாட்டோம் என்று) இந்த நிபந்தனைகளுக்கு ஒப்புதல் அளிக்கிறவர் சோதனை செய்யப்பட்டுவிட்டார் என்று முடிவு செய்யப்பட்டது இந்த உறுதிமொழியை அப்பெண்கள் வாய்மொழியாக ஒப்புக்கொண்டபோது அவர்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ,உங்களிடம் உறுதிப் பிரமாணம் வாங்கிவிட்டேன். நீங்கள் செல்லலாம்' என்று கூறினார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (உறுதிப் பிரமாணம் வாங்கியபோது) இறைத்தூதர் (ஸல்) அவர்களின் கை எந்தப் பெண்ணின் கையையும் ஒருபோதும் தொட்டதில்லை. வாய் மொழியாகவே அப்பெண்களிடம் உறுதிமொழி வாங்கினார்கள். அல்லாஹ் ஆணையிட்ட நிபந்தனை (வாசகங்களைத்) தவிர வேறெதையும் அப்பெண்களிடமிருந்து இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (உறுதிமொழியாகப்) பெறவில்லை. அவர்களிடம் உறுதிமொழி வாங்கியதும்உங்களிடம் உறுதிப் பிரமாணம் பெற்றுக் கொண்டேன் என்று வார்த்தை மட்டுமே கூறினார்கள். (பொதுவாக ஆண்களிடம் உறுதிமொழி வாங்கியபோது கரம் பற்றியதைப் போன்று பெண்களிடம் செய்யவில்லை")

## திருக்குர்ஆன் 02:226, 227 ஆகிய இறைவசனங்கள்

"தங்களின் மனைவியரை நெருங்குவதில்லை எனச் சத்தியம் (ஈலா) செய்கிறவர்களுக்காக (அவர்களின் மனைவியர்) நான்கு மாதங்கள் எதிர்பார்க்கும் உரிமையுண்டு. (இக்காலத்திற்குள் அவர்கள் சத்தியத்திலிருந்து) மீண்டுவிட்டால், நிச்சயமாக அல்லாஹ் (அவர்களை) மிக்க மன்னிக்கிறவனும் மிக்க அருள்கிறவனும் ஆவான். (ஆனால்) அவர்கள் மணவில்கையே உறுதிசெய்வார்களாயின், நிச்சயமாக அல்லாஹ் மிக்க செவியுறுவோனும் நன்கு அறிவோனும் ஆவான்' எனும் (திருக்குர்ஆன் 02:226, 227 ஆகிய) இறைவசனங்கள்'.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள) ஃபஇன் ஃபாஊ எனும் சொற்றொடருக்குஅவர்கள் மீண்டுகொண்டார்களானால் என்று பொருள்.

ஹதீஸ் 5289. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் துணைவியரை (ஒரு மாதகாலம்) நெருங்க மாட்டேன் எனச் சத்தியம் செய்தார்கள் (இந்தக் காலக்கட்டத்தில்) அவர்களின் காலில்களுக்கு ஏற்பட்டிருந்தது. எனவே, அவர்கள் தங்களின் மாடியறையில் இருபத்தொன்பது நாள்கள் தங்கியிருந்துவிட்டு பிறகு இறங்கி வந்தார்கள். அப்போது மக்கள்,இறைத்தூதர் அவர்களே! ஒரு மாத காலம் (தங்கள் துணைவியரை) நெருங்கமாட்டேன் எனச் சத்தியம் செய்திருந்தீர்களே? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இந்த மாதத்திற்கு இருபத்தொன்பது நாள்கள் தாம்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5290. நா∴பிஉ (ரஹ்) அறிவித்தார்

அல்லாஹ் குறிப்பிட்டுள்ளஈலா எனும் சத்திய விஷயத்தில் இப்னு உமர்(ரலி),அந்த (நான்கு மாத கால) தவணை முடிந்துவிட்ட பின்னால் அல்லாஹ் உத்திரவிட்டிருப்பதைப் போன்று ஒருவர் நல்ல முறையில் (தம் மனைவியைத்) தம்மிடம் வைத்துக் கொள்ள வேண்டும் அல்லது அவளை மணவிலக்குச் செய்ய உறுதியான முடிவு செய்திடவேண்டும். இதைத் தவிர வேறெதற்கும் அனுமதியில்லை' என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 5291. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான்கு மாதம் முடிந்துவிட்டால், கணவன் மணவிலக்குச் செய்யும் வரை (முடிவு) நிறுத்திவைக்கப்படும். கணவனாக மணவிலக்குச் செய்யும் வரை (ஈலாவின்) மணவிலக்கு நிகழாது.

இதே கருத்து நபித்தோழர்களில் உஸ்மான், அலீ, அபுத்தர்தா, ஆயிஷா(ரலி) மேலும் பன்னிரன்ட பேரிடமிருந்து அறிவிக்கப்பட்டுள்ளது.

## மனைவி மக்களையும் சொத்து பத்துக்களையும்விட்டுவிட்டுக் காணாமற்போனவர் பற்றிய சட்டம்.

போரின்போது (நம்) அணியிலிருந்து ஒருவர் காணாமற்போய்விட்டால் அவரை அவரின் மனைவி ஒரு வருட காலம் எதிர்பார்ப்பாள் என ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) கூறினார்கள்.

இப்னு மஸ்ஊத்(ரலி) ஓர் அடிமைப் பெண்ணை விலைக்கு வாங்கினார்கள். (பிறகு விலையை ஒப்படைப்பதற்காக) அவளுடைய எசமானை ஒரு வருட காலம் தேடினார்கள். அவரைத் தேடியும் கிடைக்கவில்லை. அவர் காணாமல் போய்விட்டார். எனவே, இப்னு மஸ்ஊத்(ரலி) ஏழைகளுக்கு ஒன்றிரண்டு வெள்ளி நாணயத்தைக் கொடுத்துக் கொண்டேஇறைவா! இதை இன்ன மனிதருக்காக வழங்குகிறேன். அவர் வந்துவிட்டால் (தர்மம் வழங்கியதற்காக) எனக்கு (நன்மை) உண்டு (அவரின் கடனைச் செலுத்தவேண்டிய பொறுப்பும்) என் மீது உண்டு' என்று கூறிவிட்டு,கண்டெடுக்கப்பட்ட பொருள விஷயத்தில் இவ்வாறே செயல்படுங்கள்' என்று கூறினார்கள்.

இதைப்போன்றே இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்.

இருக்கும் இடம் அறியப்படுகிற கைதி விஷயத்தில் ஸுஹ்ரீ(ரஹ்),அவனுடைய மனைவி மறுமணம் செய்து கொள்ளமாட்டாள். அவனுடைய சொத்துகள் தகவல் கிடைக்காவிட்டால், காணாமல் போனவன் விஷயத்தில் கையாளப்படும் அதே வழிமுறை இவன் விஷயத்திலும் கையாளப்படும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5392. அல்முன்பஇஸ்(ரஹ்) அவர்களின் முன்னாள் அடிமையான யஸீத்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம், வழிதவறி வந்துவிட்ட ஆட்டைப் பற்றி வினவப்பட்டது நபி(ஸல்) அவர்கள் (வினவியவரிடம்),அதை நீ பிடித்துக் கொள். ஏனெனில், அது உனக்குரியது அல்லது உன் சகோதரனுக்குரியது அல்லது ஓநாய்க்குரியது' என்று பதிலளித்தார்கள்.

பிறகு, நபி(ஸல்) அவர்களிடம் வழி தவறி வந்துவிட்ட ஒட்டகத்தைப் பற்றி வினவப்பட்டது. (இதைச் செவியுற்ற) உடன் நபி(ஸல்) அவர்கள் கோபமடைந்தார்கள். (எந்த அளவிற்கென்றால்) அவர்களின் கன்னங்கள் இரண்டும் சிவந்துவிட்டன. பிறகு,உனக்கும் அதற்கும் என்ன தொடர்பு? அதனுடன் தான் (நடப்பதற்கு) குளம்பும், (நீரைச் சேமிக்கத்) தண்ணீர் பையும் (வயிறும்) உள்ளதே! அதை அதன் உரிமையாளன் சந்திக்கும் வரை தண்ணீர் அருந்தி (தாகம் தணித்து)க் கொள்கிறது. மரத்திலிருந்து அது (இலை தழைகளைத்) தின்கிறது' என்று கூறினார்கள்.

மேலும், நபி(ஸல்) அவர்களிடம், கண்டெடுக்கப்பட்ட பொருள் குறித்தும் வினவப்பட்டது. அதற்கு அவர்கள்,அதன் பை(உறை)யையும் அதன் முடிச்சையும் அடையாள்ம தெரிந்து வைத்துக் கொண்டு ஓராண்டுக் காலத்திற்கு அதை அறிவிப்புச் செய்!

"அதன் உரிமையாளரான உடையாளம் அறிந்தவர் வந்தால் சரி! (அதை அவரிடம் கொடுத்துவிடு) இல்லாவிட்டால் அதை உன்னுடைய செல்வத்துடன் சேர்த்துக் கொள்!"என்றார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

நான் ரபீஆ இப்னு அபீ அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்களைச் சந்தித்தபோது, இந்த அறிவிப்பைத் தவிர வேறெதையும் நான் அவரிடமிருந்து (கேட்டு) மனனமிடவில்லை.வழிதவறி வந்துவிட்டவை தொடர்பாக யஸீத்(ரஹ்) அறிவித்துள்ள மேற்கண்ட ஹதீஸ், (நபித்தோழர்) ஸைத் இப்னு காலித் அல்ஜு ஹைனீ(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்பட்டதுதானே! எனக்குத் தெரிவியுங்கள் எனக் கேட்டேன். அதற்கு ரபீஆ(ரஹ்)ஆம் என்றார்கள்.

யஹ்யா இப்னு ஸயீத்(ரஹ்) கூறினார்:

(மேற்கண்ட ஹதீஸை) ஸைத் இப்னு காலித்(ரலி) அவர்களிடமிருந்து யஸீத்(ரஹ்) அவர்களும், அவர்களிடமிருந்து ரபீஆ இப்னு அபீ அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள். சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்), ரபீஆ இப்னு அபீ அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்களைச் சந்தித்து இது குறித்துக் கேட்டார்கள்.

## ழிஹார் (மனைவியைத் தாய்க்கு ஒப்பிடுதல்)

"(நபியே) எவள் தன் கணவனைப் பற்றி உம்மிடம் விவாதித்து, அல்லாஹ்விடமும் முறையிட்டுக் கொண்டாளோ அவளுடைய முறையீட்டை அல்லாஹ் செவிமடுத்துவிட்டான்' என்று தொடங்கி,அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும்' என்று முடியும் (திருக்குர்ஆன் 58:1-4) இறைவசனங்கள்.

மாலிக்(ரஹ்) கூறினார்

நான் இப்னு ஷிஹாப் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) அவர்களிடம், அடிமை தன் மனைவியைத் தாய்க்கு ஒப்பிடுவது ('ழிஹார் செய்வது)அடிமையின்ழிஹார் சுதந்திரமானவனின் ழிஹாரைப் போன்றதுதான்' என்று கூறினார்கள். (ழிஹாரின் பரிகாரம் சம்பந்தமாக) மாலிக்(ரஹ்),அடிமையின் நோன்பு இரண்டு மாதங்களாகும்' என்று கூறினார்கள்.

ஹஸன் இப்னு அல்ஹு ர்ரு(ரஹ்) கூறினார்சுதந்திரமானவனும் அடிமையும் தம் மனைவியரான சுதந்திரமான பெண்ணையும் அடிமைப் பெண்ணையும் நோக்கிச் செல்லும் ழிஹாரானது ஒன்றுதான்.

இக்ரிமா(ரஹ்) கூறினார்

ஒருவர் தம் அடிமைப்பெண்ணைத் தாய்க்கு ஒப்பிட்டு ('ழிஹார் செய்து)விட்டால், (அதற்குப் பரிகாரம்) ஒன்றுமில்லை.ழிஹார் என்பதே (சுதந்திரமான) பெண்களுக்குரியது தான்.

(திருக்குர்ஆன் 58:3 வது வசனத்தின் மூலத்திலுள்ளயஊதூன)லிமா காலூ (பின்னர் அவர்கள் தம் கூற்றுக்குத் திரும்பினால்) எனும் சொற்றொடருக்கு,மனைவியைத் தாய்க்கு ஒப்பிட்டுக் கூறியவர்கள், அவ்வாறு கூறியபின்) தாம் சொன்ன சொல்லில் இருந்து மீண்டு, அதை ரத்துச் செய்தால் என்று பொருள். இப்பொருள் அரபு மொழி வழக்கில் உள்ளதுதான். இதுவே ஏற்றதாகும். ஏனெனில், (சிலரின் கருத்துக்கேற்பமுதலில் தாம் கூறியதையே அவர்கள் மறுபடியும் சொன்னால் எனப் பொருள் கொண்டால் வெறுக்கப்பட்ட இச்சொல்லை மீண்டும் ஒரு முறை சொல்வதற்கு அல்லாஹ்வே வழி காட்டுகிறான் என்றாம்விடும். ஆனால், )அல்லாஹ் (அவ்வாறு) வெறுக்கப்பட்ட, தவறான சொல்லுக்கு வழிகாட்டுவதில்லை.

## மணவிலக்கு உள்ளிட்ட (சட்டப்) பிரச்சினைகளில் சைகை செய்(து நோக்கத்தைத் தெரிவித்)தல்.

நபி(ஸல்) அவர்கள்,கண்ணீரினால் அல்லாஹ் வேதனை செய்யமாட்டான். ஆனால், இதன் காரணத்தினால் அல்லாஹ் வேதனை செய்வான்' என்று கூறியவாறு தம் நாவைக் காட்டி சைகை செய்தார்கள்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

கஅப் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

(கடனில்) பாதியை வாங்கிக் கொள்! (மீதியைவிட்டுவிடு) என்று நபி(ஸல்) அவர்கள் எனக்கு சைகையால் தெரிவித்தார்கள்.

அஸ்மா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத் தொழுகையை (மக்களுடன்) தொழுதார்கள். அப்போது நான் தொழுதுகொண்டிருந்த ஆயிஷா(ரலி) அவர்களிடம் (சென்று)மக்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டேன். உடனே அவர்கள் தங்களின் தலையால் சூரியனை நோக்கி சைகை செய்தார்கள். அப்போது, நான் (சூரிய கிரகணம் ஏற்பட்டுள்ளதைப் புரிந்துகொண்டு)அல்லாஹ்வின் சான்றுகளில்) ஒரு சான்றா? என்று கேட்டேன். அதற்கவர்கள்ஆம்' என்று தலையாலேயே சைகை செய்தார்கள்.

அனஸ்(ரலி) கூறினார்

(தொழுகை நடத்துவதற்காக) முன் செல்லுமாறு அபூ பக்ர்(ரலி) அவர்களை நோக்கித் தம் கையால் நபி(ஸல்) அவர்கள் சைகை செய்தார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

'பரவாயில்லை என்பது போல் தம் கையால் நபி(ஸல்) அவர்கள் சைகை செய்தார்கள்.

அபூ கத்தாதா(ரலி) கூறினார்

இஹ்ராம் கட்டியவருக்காக (இஹ்ராம் கட்டாதவர்) வேட்டையாடிய பிராணி விஷயத்தில் நபி(ஸல்) அவர்கள்,உங்களில் எவராவது அதைத் தாக்குமாறு அவரிடம் கூறினாரா? அல்லது அதைச் சுட்டிக் காட்டி சைகை செய்தாரா? என்று கேட்டார்கள். மக்கள்இல்லை' என்றனர். அப்படியானால் நீங்கள் சாப்பிடலாம் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 5293. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் ஒட்டகத்தின் மீதிருந்தபடி (புனித கஅபாவைச்) சுற்றி வந்தார்கள்.

அந்த ('ஹஜருல் அஸ்வத் கல் இருக்கும்) மூலைக்கு வரும்போதெல்லாம் அதனை நோக்கி (தம் கையிலுள்ள ஒரு பொருளினால் முத்தமிடுவது போல்) சைகை செய்தபடிஅல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று சொல்வார்கள்.

ஸைனர் (ரலி) கூறினார்.

நபி (ஸல்) அவர்கள்யஃஜூஜ் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இதைப் போல் (சிறிது) திறக்கப்பட்டது' என்று கூறி தம் கையால் 90 என்று (அரபி எண்வடிவில்) மடித்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 5294. அபுல் காசிம் (முஹம்மத்- ஸல்) அவர்கள் கூறினார்கள்:

வெள்ளிக்கிழமையன்று ஒரு நேரம் இருக்கிறது. அந்த நேரத்தை ஒரு முஸ்லிம் அடியார் (சரியாக) அடைந்து, அதில் தொழுகையில் நின்று அல்லாஹ்விடம் எந்த நன்மையைக் கோரினாலும், அவருக்கு அதை அல்லாஹ் வழங்காமல் இருப்பதில்லை.

இதைக் கூறும்போது நபி (ஸல்) அவர்கள் தம் விரல் நுனியை நடுவிரல் மற்றும் மோதிர விரலின் அடிப்பாகத்தின் மீது வைத்துத் தம் கையால் சைகை செய்தார்கள். இதன்மூலம் அது குறைந்த நேரம் என்பதை நபியவர்கள் உணர்த்துகிறார்கள்' என நாங்கள் பேசிக்கொண்டோம்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5295. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் யூதர்களில் ஒருவன் ஒரு சிறுமியின் (கழுத்தில் கிடந்த) வெள்ளிக் காசு மாலையைப் பறித்துக் கொண்டு அவளுடைய மண்டையை உடைத்துவிட்டான். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த அவளை உடனே அவளுடைய குடும்பத்தார் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார்கள். அவளால் பேச முடியவில்லை. அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள்உன்னைத் தாக்கியவன் யார்? இவனா? என்று அவளைத் தாக்காத வேறொருவரின் பெயரைக் குறிப்பிட்டுக் கேட்டார்கள். அதற்கு அச்சிறுமி, இல்லை' என்று தன்னுடைய தலையால் சைகை செய்தாள். பிறகு அவளைத் தாக்காத இன்னொருவரின் பெயரைக் குறிப்பிட்டு (இவரா உன்னைத் தாக்கியவர்? என்று) கேட்டார்கள். அதற்கும் அவள், இல்லை என்று சைகை செய்தாள். இறுதியில்இன்னாரா? என்று அவளைத் தாக்கியவனின் பெயரைச் சொல்லிக் கேட்டதும் அவள், ஆம் என்று சைகை செய்தாள். உடனே அந்த நபருக்குத் தண்டனை வழங்கும்படி இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட, அவனுடைய தலை இரண்டு கற்களுக்கிடையில் வைத்து நசுக்கப்பட்டது.

ஹதீஸ் 5296. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் கிழக்குத் திசையை நோக்கி சைகை செய்து, இங்கிருந்துதான் குழப்பம் தோன்றும்' என்று சொல்லக் கேட்டேன்.

ஹதீஸ் 5297. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் (மக்கா வெற்றியின்) பயணத்தில் இருந்து கொண்டிருந்தோம். (அப்போது அவர்கள் ரமளான் நோன்பு நோற்றிருந்தார்கள்.) சூரியன் மறைந்ததும் ஒரு மனிதரிடம் நபி (ஸல்) அவர்கள், இறங்கிச் சென்று எனக்காக மாவு கரைப்பீராக!"என்று கூறினார்கள். அந்த மனிதர், இறைத்தூதர் அவர்களே! மாலை நேரம் (முழுமையாக) முடிவடையட்டுமே!"என்றார். பிறகு நபி (ஸல்) அவர்கள், இறங்கிச் சென்று மாவு கரைப்பீராக!"என்று (மீண்டும்) கூறினார்கள். அதற்கவர், பகல் (வெளிச்சம்) இன்னும் எஞ்சியிருக்கிறதே! மாலை நேரம் (முழுமையாக) முடிவடையட்டுமே, இறைத்தூதர் அவர்களே!"என்றார். அப்போதும் நபி (ஸல்) அவர்கள், இறங்கிச் சென்று மாவு கரைப்பீராக' என்று கூறினார்கள்.

மூன்றாம் முறையில் அவர் இறங்கிவந்து நபி (ஸல்) அவர்களுக்காக மாவு கரைத்தார். அதை நபி (ஸல்) அவர்கள் அருந்தி (நோன்பு திறந்து)விட்டுத் தம் கையால் கிழக்கு நோக்கி சைகை

செய்தவாறு,நீங்கள் (கிழக்குத் திசையான) இங்கிருந்து இரவு முன்னோக்கி வந்துவிடக் கண்டால் நோன்பாளி நோன்பை நிறைவு செய்திட வேண்டும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5298. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் ஸஹர் உணவு உண்பதிலிருந்துபிலாவின் அழைப்பு அல்லதுபிலாலின் (தொழுகை) அறிவிப்பு உங்களைத் தடுத்து விடவேண்டாம் . ஏனெனில், அவர் அழைப்பது அல்லதுஅவர் (தொழுகை) அறிவிப்புச் செய்வது,உங்களில் இரவுத் தொழுகையில் ஈடுபட்டுக் கொண்டிருப்போர் திரும்பி வருவதற்காகத்தான்சுப்ஹு அல்லது:பஜர் நேரம் வந்துவிட்டது என்பதைத அறிவிப்பதற்காக அல்ல.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஸீத் இப்னு ஸு ரைஉ(ரஹ்) இதை அறிவிக்கும்போது தம் கைகளை வெளிப்படுத்தினார்கள். பிறகு ஒரு கையை விட இன்னொரு கையை (நீளவாட்டில்) நீட்டிக் காட்டி (நீளவாட்டில் தோன்றும் அதி காலை வெளிச்சமே உண்மையான ஃபஜர் நேரம் ஆகும். அகலவாட்டில் தோன்றுவதன்று (என்பது போல்) சைகை செய்தார்கள்.

ஹதீஸ் 5299. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(செலவே செய்யாத) கஞ்சன், செலவு செய்கிற (தாராள மனம் படைத்த)வன் ஆகிய இருவரின் நிலையானது, இரண்டு மனிதர்களின் நிலை போன்றதாகும். அவ்விருவரும் தம் மார்பிலிருந்து கழுத்தெலும்பு வரை இரும்பாலான நீளங்கி அணிந்துள்ளனர். செலவு செய்கிறவர் எதைச் செலவு செய்தாலும் அவரின் அங்கி உடல் மீது நீண்டு கொண்டே சென்று விரல் நுனியையும் மறைத்து, (அதற்கப்பால்) அவரின் பாதச் சுவடுகளைக் கூட(த் தொட்டு) அழித்து விடுகிறது.

கஞ்சன் (எதையாவது) செலவு செய்ய விரும்பினால் (அவனுடைய இரும்பு அங்கியின்) ஒவ்வொரு வளையமும் அதன்னுடையன் இடத்தை இறுக்கிப் பிடித்துக் கொள்கிறது. அவன் அதை(த் தளர்த்தி) விரிவாக்க முயல்கிறான். ஆனால், அது விரிவடைவதில்லை.

(இதைக் கூறியபோது) நபி(ஸல்) அவர்கள் (குரல் வளையைக் கழுத்துச் சட்டை இறுக்கிப் பிடிப்பதை உணர்த்தும் முகமாக) தம் விரலல் தம் குரல்வளையைக் காட்டி சைகை செய்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## லிஆன்- (மனைவி மீதும் கணவன் தகுந்த சாட்சிகளின்றி சுமத்திய விபசாரக் குற்றச்சாட்டையடுத்து தம்பதியர் செய்யும்) சாப அழைப்புப் பிரமாணமும் அது பற்றி இறைவசனமும்.

அல்லாஹ் கூறினான்.

தம் மனைவியர் மீது (விபச்சாரக்) குற்றம்சாட்டி (அதை நிரூபிக்கத் தம்மையன்றி வேறு சாட்சிகள் தம்மிடம் இல்லாத ஒருவர், நிச்சயமாகத் தாம் (தம் குற்றச்சாட்டில்) உண்மையாளர் தாம் என அல்லாஹ்வின் மீது நான்கு முறை சத்தியம் செய்து சாட்சியம் அளிக்க வேண்டும். மேலும் ஐந்தாவது முறை (தம் குற்றச்சாட்டில்) தாம் ஒரு பொய்னாக இருந்தால்அல்லாஹ்வின் சாபம் தம் மீது உண்டாகட்டும் என்று கூறவேண்டும். கணவன் பொய்யன் ஆவான் என மனைவி நான்கு முறை அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து சாட்சியம் கூறுவது, (விபசாரக் குற்றத்திற்கான) தண்டனையை அவளைவிட்டு அகற்றிவிடும். ஐந்தாவது முறை, அவன் உண்மையாளனாக இருந்தால், அல்லாஹ்வின் கோபம் தன் மீது உண்டாவதாக என அவள் கூறவேண்டும். (திருக்குர்ஆன் 24: 6-9)

எனவே ஊமை, அறிந்து கொள்ளப்படுகிற வகையில் எழுத்தால், அல்லது (கை) சாடையால், அல்லது (தலை) சைகையால் தன் மனைவி மீது (விபசாரக்) குற்றம் சாட்டினால், அவன்

(வாயால்) பேசியவனைப் போனறே கருதப்படுவான். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் 9தொழுகை போன்ற) கடமைகளில் சைகைளை அனுமதித்துள்ளார்கள். மேலும், இதுவே ஹிஜாஸ்வாசிகள் மற்றும் (இதர) அறிஞர்கள் சிலரின் கூற்றுமாகும்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

(ஆனால், தம் குழந்தையிடம் கேட்கும் படி மர்யம்) அதை நோக்கி சைகை செய்தார். நாங்கள் தொட்டிலில் இருக்கும் குழந்தையிடம் எப்படிப் பேசுவோம்? என்று அவர்கள் கூறினார்கள். (திருக்குர்ஆன் 19:29)

ளஹ்ஹாக் (ரஹ்) கூறினார்.

(திருக்குர்ஆன் 03:41) வது வசனத்தின் மூலத்திலுள்ள) இல்லா ரம்ஸன் எனும் சொற்றொடருக்குசைகையால் தவிர என்று பொருள்.

“(அவதூறு வழக்கில் ஊமைக்குத்) தண்டனை கிடையாது (‘லிஆன் எனும்) சாப அழைப்புப் பிரமாணமும் (ஊமைக்குக் கிடையாது) என்று கூறும் சிலர் , (அவ்வாறு கூறிக் கொண்டே) எழுத்தால், அல்லது (கை) சாடையால், அல்லது (தலை) சைகையால் அளிக்கப்படும் மணவிலக்கு (மட்டும்) செல்லும் என்று கூறுகின்றனர். ஆனால், (மனைவி மீது விபசாரக்) குற்றம் சாட்டுவதற்கும், (அவளை) மணவிலக்குச் செய்வதற்கும் நடவடிக்கைகளே என்பதில்) எந்த வித்தியாசமும் இல்லை. (விபசாரக்) குற்றச்சாட்டு சுமத்துவதானால் அது பேச்சினால் தான் முடியும் என்று அவர்கள் வாதிட்டால், மணவிலக்கும் அவ்வாறே பேச்சினால் தான் முடியும் என்று சொல்ல வேண்டியிருக்கும். வித்தியாசம் இல்லை என்று வாதிட்டால், (விபசாரக்) குற்றச்சாட்டு மட்டுமன்றி மணவிலக்கும், அதைப்போன்ற (அடிமையை) விடுதலை செய்வதும் எல்லாமே செல்லாது போகும்.

இதைப்போன்றே செவிடனும் சாப அழைப்புப் பிரமாணம் (‘லிஆன்) செய்யலாம்.

ஷஅபீ மற்றும் கத்தாதா (ரஹ்) ஆகியோர் கூறுகின்றனர்.

ஊமை (தன் மனைவியை நோக்கி)த் தன் விரல்களால் சைகை செய்து தலாக் சொன்னால்( எத்தனை விரல்களைக் காட்டினானோ அதற்கேற்ப) அவனிடமிருந்து அவள் மணவிலக்கப் பெற்றவளகி விடுவாள்.

இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) கூறினார்

ஊமை தன்னுடைய கரத்தால் மணவிலக்கு எழுதினால் கட்டாயம் அது அவனைக் கட்டுப்படுத்தும்.

ஹம்மாத் (ரஹ்) கூறினார் ஊமையும், செவிடனும் தலையால் (சைகை) செய்து சொன்னால் செல்லும்.

ஹதீஸ் 5300. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்

“அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்ததை உங்களுக்குத் தெரிவிக்கட்டுமா? என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். மக்கள், ஆம்! (தெரிவியுங்கள்) இறைத்தூதர் அவர்களே!”என்று கூறினர்.

“(அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது,) பனு நஜ்ஜார் குடும்பமாகும். பிறகு அவர்களைத் தொடர்ந்து பனு அப்தில் அஷ்ஹல் குடும்பமாகும். பின்னர் அவர்களைத் தொடர்ந்து பனு ஹாரிஸ் இப்னு கஸ்ரஜ் குடும்பமாகும். பின்னர் அவர்களைத் தொடர்ந்து பனு சாஇதா குடும்பமாகும்‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறிய பின் தம் விரல்களை மடக்கிப் பின்பு அவற்றை விரித்துவிட்டுத் தம் கையால் (எதையோ) எறிபவர் போல் (சைகை) செய்தார்கள். பிறகுஅன்சாரி கிளைக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் நன்மை உண்டு‘ என்ற கூறினார்கள்.

ஹதீஸ் 5301. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நானும் மறுமையும்இதிலிருந்து இதைப் போல் அல்லது இந்த இரண்டையும் போல் (நெருக்கமாக) அனுப்பப்பட்டுள்ளோம்' என்று கூறியபடி தம் சுட்டுவிரலையும் நடுவிரலையும் இணைத்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 5302. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்மாதம் என்பது இப்படியும், இப்படியும், இப்படியும் இருக்கும்' என்று (இரண்டு கைகளையும் மும்முறை விரித்துக் காட்டி) முப்பது நாள் எனச் சொல்லிவிட்டு, பிறகுமேலும் இப்படியும், இப்படியும், இப்படியும் இருக்கலாம்' (என்று இரண்டு கைகளையும் மும்முறை விரித்துக் காட்டி மூன்றாம் முறை பெருவிரலை மடக்கியபடி) - இருபத்தொன்பது நாள்களாகவும் இருக்கலாம் என்று கூறினார்கள். அதாவது (மாதம் என்பது,) சில வேளை முப்பது நாள்களாக இருக்கும் மற்ற சில வேளை இருபத்தொன்பது நாள்களாக இருக்கும் என்று கூறினார்கள். 71

ஹதீஸ் 5303. அபூ மஸ்வூத் உக்பா இப்னி அம்ர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தங்களின் கரத்தால் யமன் நாட்டுத் திசையைக் காட்டிய சைகை செய்துஇறைநம்பிக்கை அங்குள்ள (யமனைச் சார்ந்த)தாகும்' என்று இருமுறை கூறிவிட்டு,அறிந்து கொள்ளுங்கள்! கல் மனமும் (இரக்கமற்ற) கடின சுபாவமும் (பாலைவன) ஒட்டக மேய்ப்பர்களிடையே காணப்படும். அங்கிருந்து தான் ஷைத்தானின் இரண்டு கொம்புகளும் உதயமாகும். (குழப்பங்கள் தலை தூக்கும். அதாவது,) ரபீஆ மற்றும் முளர் குலத்தாரிடையே அவை தோன்றும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5304. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்நானும் அநாதையின் காப்பாளரும் சொர்க்கத்தில் இப்படி இருப்போம்' என்று கூறியபடி தம் சுட்டுவிரலையும் நடுவிரலையும் இணைத்து அந்த இரண்டுக்குமிடையே சற்று இடைவெளிவிட்டு சைகை செய்தார்கள்.

## இந்தக் குழந்தை தன்னுடையது அல்ல என ஒருவர் குறிப்பால் உணர்த்துவது.

ஹதீஸ் 5305

அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(கிராமவாசியான) ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! (வெள்ளை நிறமுடைய) எனக்குக் கறுப்பு நிறத்தில் ஒரு மகன் பிறந்துள்ளான்! (அவன் எப்படி எனக்குப் பிறந்தவனாக இருக்க முடியும்?)' என்று (சாடையாகக்) கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,உன்னிடம் ஒட்டகம் ஏதேனும் உள்ளதா? என்று கேட்டார்கள். அதற்கவர்,ஆம் என்றார். நபி(ஸல்) அவர்கள்,அதன் நிறம் என்ன? என்ற கேட்டார்கள். அவர்,சிவப்பு என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள்,உன் ஒட்டகங்களுக்கிடையே சாம்பல் நிற ஒட்டகம் உள்ளதா? என்று கேட்டார்கள். அவர்,ஆம் என்றார். நபி(ஸல்) அவர்கள்,(தன்னுடைய தாயிடம் இல்லாத) அந்த நிறம் அதற்கு மட்டும் எவ்வாறு வந்தது? என்று கேட்டார்கள். அவர்,அதன் (தந்தையான) ஆண் ஒட்டகத்தின் பரம்பரையிலிருந்து வந்திருக்கலாம்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,உன்னுடைய இந்த மகனும் உன் பரம்பரையிலுள்ள (மூதாதையரின்) நிறத்தினைக் கொண்டிருக்கக் கூடும்' என்று கூறினார்கள்.

## சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்பவரை சத்தியம் செய்வித்தல்.

ஹதீஸ் 5306 அன்சாரிகளில் ஒருவர் தம் மனைவி மீது விபசாரக் குற்றம் சாட்டினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் (தம்பதியராகிய) அவ்விருவரையும் சத்தியம் செய்ய வைத்தார்கள். பிறகு அவர்கள் இருவரையும் பிரித்து வைத்தார்கள்.

## சாப அழைப்புப் பிரமாணத்தை ஆண்தான் ஆரம்பிக்கவேண்டும்.

ஹதீஸ் 5307 ஹிலால் பின் உமய்யா (ரலி) அவர்கள் தம் மனைவி மீது (விபசாரக்) குற்றம் சாட்டினார்கள். எனவே ஹிலால் அவர்கள் வந்து (தாம் சொன்னது உண்மையே என நான்கு முறை சத்தியம் செய்து) சாட்சியமளித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் அறிவான். ஆகவே உங்கள் இருவரில் பாவமன்னிப்புக் கோரி (தவறு தன்னுடையதுதான் என்று ஒப்புக் கொண்டு இறைவன் பக்கம் ) திரும்புகின்றவர் யார், என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். பிறகு ஹிலால் (ரலி) அவர்களின் மனைவி எழுந்து நின்று (நான்கு முறை சத்தியம் செய்து) சாட்சியம் அளித்தார்.

## சாப அழைப்புப் பிரமாணமும், சாப அழைப்புப் பிரமாணத்திற்குப் பிறகு மணவிலக்கு அளிப்பது.

ஹதீஸ் 5308. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

உவைமிர் அல்அஜ்லானீ(ரலி) ஆஸிம் இப்னு அதீ அல்அன்சாரி(ரலி) அவர்களிடம் வந்து,ஆஸிமே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அந்நிய ஆணொருவன் (தகாத உறவுகொண்டபடி) இருப்பதைக் கண்டால், அவனை இந்த மனிதன் கொன்று விடலாமா? அவ்வாறு கொன்றுவிட்டால், (பழிவாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்றுவிடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள். ஆஸிமே! எனக்காக இது குறித்து (நபி(ஸல்) அவர்களிடம்) கேட்டுச் சொல்லுங்கள்' என்றார்கள். எனவே, ஆஸிம்(ரலி) இது குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை. அவற்றை அசிங்கமாகக் கருதினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட (கண்டன) வார்த்தைகள் ஆஸிம்(ரலி) அவர்களுக்குக் கடினமாயிற்று.

ஆஸிம்(ரலி) தம் வீட்டாரிடம் திரும்பி வந்தபோது அவர்களிடம் உவைமிர்(ரலி) வந்துஆஸிமே! உங்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்ன கூறினார்கள்? என்ற கேட்டார்கள். அதற்கு ஆஸிம்(ரலி) உவைமிர்(ரலி) அவர்களிடம்,நீ எனக்கு நன்மை செய்யவில்லை. (சிக்கலில் என்னைச் சிக்க வைத்துவிட்டாய்) நான் கேட்ட கேள்வி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிடிக்கவில்லை' என்று கூறினார்கள். அதற்கு உவைமிர்(ரலி),அல்லாஹ்வின் மீதாணையாக! இது குறித்து நானே (நேரடியாக) அவர்களிடம் கேட்காமல் ஓயமாட்டேன்' என்று கூறிவிட்டு, மக்களுக்கு மத்தியில் இருந்த இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கிச் சென்றார். பிறகு,இறைத்தூதர் அவர்களே! ஒரு மனிதன் தன் மனைவியுடன் அந்நிய ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால், அவன் அந்த ஆடவனைக் கொன்று விடலாமா? (அவ்வாறு கொன்றுவிட்டால் பழிக்குப் பழியாக) அவனை நீங்கள் கொன்று விடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள்!என்று கேட்டார்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,உம்முடைய விஷயத்திலும் உம்முடைய மனைவி விஷயத்திலும் அல்லாஹ் (வசனத்தை) அருளிவிட்டான். எனவே, நீர் சென்ற உம்முடைய மனைவியை அழைத்து வாரும்!என்றார்கள். (பிறகு அவர்கள் இருவரும் வந்தனர்.) நான் மக்களுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் இருந்து கொண்டிருக்கும்போது அவர்கள் இருவரும் பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தனர். அவர்கள் லிஆன் செய்து முடித்தபோது உவைமிர்(ரலி),இறைத்தூதர் அவர்களே! நான் இவளை (மணவிலக்குச் செய்யாமல் மனைவியாகவே இனியும்) வைத்திருந்தால் இவள் முது நான் பொய்(யான குற்றச்சாட்டு) சொன்னவனாக ஆம்விடுவேன்' என்று கூறிவிட்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவருக்கு ஆணையிடுவதற்கு முன்பே அவளை மூன்று தலாக் சொல்லிவிட்டார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்.

பிறகு இதுவே சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யும் தம்பதியருக்கு முன்மாதிரி ஆகி விட்டது.

## பள்ளிவாசலில் (வைத்து) சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தல்.

ஹதீஸ் 5309. பனு சாஇதா குலத்தைச் சேர்ந்த ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

அன்சாரிகளில் (உவைமிர் என்றழைக்கப்பட்ட) ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! சொல்லுங்கள்: ஒரு மனிதன் தன் மனைவியுடன் வேறொரு (அந்நிய) ஆடவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால், அவனை இவன் கொன்றுவிடலாமா? (அவ்வாறு கொன்றுவிட்டால், பழிவாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்று விடுவீர்களா? அல்லது அவன் வேறு என்ன செய்யவேண்டும்? என்றார். அப்போது அல்லாஹ், சாப அழைப்புப் பிரமாணம் செய்துகொள்ளும் தம்பதியர் தொடர்பாகக் குர்ஆனில் குறிப்பிட்டுள்ள விதியை அருளினான். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள்உம்முடைய விஷயத்திலும் உம்முடைய மனைவி விஷயத்திலும் அல்லாஹ் தீர்ப்பளித்துவிட்டான்' என்று கூறினார்கள். எனவே, அவர்கள் இருவரும் பள்ளிவாசலில் வைத்து சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தார்கள். அப்போது அங்கு நானும் இருந்தேன். இருவரும் சாப அழைப்புப் பிரமாணயம் செய்து முடித்தபோது உபைமிர்(ரலி)அவளை நான் (மணவிலக்குச் செய்யாமல் மனைவியாகவே) வைத்திருந்தால், அவளின் மீது நான் (பொய்(க் குற்றச்சாட்டு) சொன்னவனாம் விடுவேன், இறைத்தூதர் அவர்களே!என்று சொல்லிவிட்டு, லிஆன்- பிரமாணம் முடிந்ததும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உத்தரவிடுவதற்கு முன்பாகவே அவளை அவர் மூன்று தலாக் சொல்லிவிட்டார். நபி(ஸல்) அவர்கள் முன்னிலையிலேயே அவளைவிட்டுப் பிரிந்துகொண்டார். இதுவே லிஆன்- பிரமாணம் செய்யும் இருவரைப் பிரித்துவைக்கும் வழியாயிற்று.

-தம்பதியர் பரஸ்பரம் செய்துகொள்ளும் சாப அழைப்புப் பிரமாணம் குறித்தும் அதன் வழிமுறைகள் குறித்தும் ஸஹ்ல்(ரலி) அவர்களிடமிருந்து இதை அறிவித்துள்ள இப்னு ஷிஹாப்(ரஹ்) கூறினார்: இந்த இருவருக்கும் பின்னால் சாப அழைப்புப் பிரமாணம் செய்யும் இருவரைப் பிரித்து வைக்க இதுவே முன்மாதிரி ஆனது.

அந்த லிஆன் நடந்தபோது அப்பெண் கர்ப்பமுற்றிருந்தார். அவருக்குப் பிறந்த குழந்தை அதன் தாயோடு இணைத்துத்தான் (இன்னவளின் மகன் என்று) அழைக்கப்படலானது. பின்னர் மகனிடமிருந்து அந்தப் பெண்ணும், அப்பெண்ணிடமிருந்து மகனும் அல்லாஹ் அவர்களுக்கு நிர்ணயித்த முறையில் வாரிசாவார்கள் என்ற நடைமுறையும் வந்தது.

தொடர்ந்து ஸஹ்ல்(ரலி) கூறினார்.

(லிஆன் நடந்து முடிந்ததும்) நபி(ஸல்) அவர்கள்,இவள் அரணையைப் போன்ற குட்டையான சிவப்பு நிறக் குழந்தையைப் பெற்றெடுத்தால் இவள் உண்மை சொல்லிவிட்டாள். கணவர் இவள் மீது பொய் சொல்லிவிட்டார் (என்று பொருள்) கறுப்பு நிறத்தில் விசாலமான கண்கள் கொண்ட பெரிய பிட்டங்களை உடைய குழந்தையைப் பெற்றெடுத்தால் அவளின் மீது அவளுடைய கணவர் சொன்ன குற்றச்சாட்டு உண்மை தான் என்று கருதுகிறேன்' என்றார்கள். பிறகு விரும்பத்தகாத அந்தத் தோற்றத்திலேயே அப்பெண் குழந்தையைப் பெற்றெடுத்தார். (கணவரின் குற்றச்சாட்டு நியாயமானதாகப்பட்டது.)

## "நான் சாட்சியில்லாமல் (ஒருவருக்கு) கல்லெறி தண்டனை அளிப்பவனாயிருந்தால் (இதோ இந்தப் பெண்ணுக்கு அளித்திருப்பேன்)' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 5310. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

சாப அழைப்புப் பிரமாணம் (நடை முறையில் வருவதற்கு முன் ஒரு முறை மனைவி மீது கணவன் விபசாரக் குற்றம் சாட்டுவது) தொடர்பாக நபி(ஸல்) அவர்கள் அருகில் பேசப்பட்டது. அப்போது

ஆஸிம் இப்னு அதீ(ரலி) அது தொடர்பாக ஏதோ (ஆக்ரோஷமாகப்) பேசிவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். (சிறிது நேரத்தில்) ஆஸிம்(ரலி) அவர்களின் குலத்தைச் சேர்ந்த ஒருவர் அவரிடம் சென்று தம் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்டு) இருந்ததைத் தாம் கண்டதாகக் கூறினார். அதற்கு ஆஸிம்(ரலி),நான் (ஆக்ரோஷமாகப்) பேசியதாலேயே இப்படி (என் குலத்தாரிடையே நடந்து) நானே சோதிக்கப்பட்டுள்ளேன்‘ என்று கூறினார்கள். எனவே, ஆஸிம்(ரலி) அவரை அழைத்துக்கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்று அவரின் மனைவியின் நடத்தை குறித்துத் தெரிவித்தார்கள்.

-(உவைமிர் என்ற) அந்த மனிதர் நல்ல மஞ்சள் நிறம் உடையவராகவும், சதைப் பிடிப்புக் குறைவானவராகவும், நீண்ட முடிகளைக் கொண்டவராகவும் இருந்தார். தம் மனைவியுடன் இருக்கக் கண்டதாக அவர் வாதிட்ட அந்த அந்நிய மனிதரோ, மாநிறம் உடையவராகவும் உடல் பருத்து அதிக சதைப்பிடிப்பு உள்ளவராகவும் இருந்தார்.

(இந்த குற்றச்சாட்டைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,இறைவா! (இந்தப் பிரச்சினையில் ஒரு) தெளிவைத் தருவாயாக!என்று பிரார்த்தித்தார்கள். பிறகு, தம் மனைவியுடன் கண்டதாக அவர் குறிப்பிட்ட அந்த (அந்நிய) ஆடவரின் சாயலில் அவள் குழந்தை பெற்றெடுத்தாள். (அதற்கு முன்பே) இந்தத் தம்பதியரை நபி(ஸல்) அவர்கள் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்ய வைத்தார்கள்.

(இந்த ஹதீஸ் கூறப்பட்ட) அவையில் இருந்த ஒருவர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,சாட்சி இல்லாமலேயே ஒருவருக்கு நான் கல்லெறி தண்டனை அளிப்பவனாயிருந்தால் இவளுக்கு அளித்திருப்பேன்‘ என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னது (உவைமிருடைய மனைவியான) இந்தப் பெண் குறித்தா? என்று கேட்டதற்கு இப்னு அப்பாஸ்(ரலி),இல்லை (அவள் வேறொரு பெண்ணாவாள்.) அந்தப் பெண் இஸ்லாத்தில் இருந்துகொண்டே தகாத உறவுகொண்டு வந்தாள் எனப் பரவலாகப் பேசப்பட்டவள். (ஆனால், அவள் குற்றத்தை ஒப்புக் கொள்ளவுமில்லை தகுந்த சாட்சியும் இல்லை. அவள் குறித்தே நபியவர்கள் இவ்வாறு குறிப்பிட்டார்கள்.)‘ என்று பதிலளித்தார்கள்.

## சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யப்பட்ட பெண்ணின் மஹ்ர் (மணக் கொடை குறித்த சட்டம்).

ஹதீஸ் 5311. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்ஒருவர் தம் மனைவி மீது விபசாரக் குற்றம் சாட்டினால் (சட்டம் என்ன)? என்று கேட்டேன். அதற்கவர்கள் பனு அஜ்லான் குலத்தைச் சேர்ந்த (தம்பதியரான) இருவரை (இதைப் போன்ற நிலையில்) நபி(ஸல்) அவர்கள் பிரித்துவைத்தார்கள். பிறகுஉங்களிருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோரி (இறைவன் பக்கம்) திரும்புகிறவர் உண்டா? என்றார்கள். உடனே அவர்கள் இருவருமே மறுத்தனர். பிறகு (மீண்டும்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோரி (இறைவன் பக்கம்) திரும்புகிறவர் உண்டா? என்று கேட்டார்கள். அப்போதும் அவர்கள் இருவருமே மறுத்தனர். பிறகு (மூன்றாம் முறையாக அதைப் போன்றே)உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் நன்கறிவான். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோரித் திரும்புகிறவர் உண்டா? என்று கேட்டார்கள். அப்போதும் அவர்கள் இருவரும் மறுத்தார்கள். எனவே, அவர்கள் இருவரையும் நபி(ஸல்) அவர்கள் பிரித்துவைத்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அய்யூப்(ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸில் (ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) குறிப்பிட்ட) ஒரு விஷயத்தைத் தாங்கள் கூறவில்லை எ ன்றே கருதுகிறேன்‘ என்று என்னிடம் அம்ர் இப்னு தீனார்(ரஹ்) கூறினார்கள்.

பிறகு அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்: (சாப அழைப்புப் பிரமாணம் செய்த) அந்த மனிதர், (மஹ்ராக நான் அளித்த) என்னுடைய பொருள் (என்ன வது)? என்று கேட்டார். அதற்கு அவரிடம், (உம்முடைய மனைவி மீது நீர் சுமத்திய குற்றச்சாட்டில்) நீர் உண்மையாளராய் இருந்தால், அவளுடன் நீர் ஏற்கெனவே தாம்பத்திய உறவுகொண்டுள்ளீர்! (அதற்கு இந்த மஹ்ர் நிகராம் விடும்.) நீர் பொய் சொல்லியிருந்தால் (மனைவியை அனுபவித்துக் கொண்டு அவதூறும் கற்பித்த காரணத்தால்) அச்செல்வம் உம்மைவிட்டு வெகு தொலைவில் இருக்கிறது என்று கூறப்பட்டது.

## சாப அழைப்புப் பிரமாணம் செய்யும் தம்பதியரிடம் உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோருபவர் யார்? என்று தலைவர் கேட்பது.

ஹதீஸ் 5312. ஸயீத் இப்னு ஜு பைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொள்ளும் தம்பதியரைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொண்ட தம்பதியரிடம் நபி(ஸல்) அவர்கள், உங்கள் இருவரின் விசாரணையும் அல்லாஹ்விடம் உள்ளது. உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர். (இனி) அவளின் மீது (கணவராகிய) உமக்கு எந்த அதிகாரமும் இல்லை' என்று கூறினார்கள். உடனே அவர், இறைத்தூதர் அவர்களே! (நான் இவளுக்கு மஹ்ராக அளித்த) என்னுடைய பொருள் (என்ன வது? அதைத் திரும்பப் பெறலாமா?)' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், உமக்கு (அந்தப்) பொருள் கிடைக்காது. நீர் அவள் விஷயத்தில் (சொன்ன குற்றச்சாட்டில்) உண்மையாளராய் இருந்தால், அவளுடைய கற்பை நீர் பயன்படுத்திக் கொள்வதற்காகப் பெற்ற அனுமதிக்கு அந்தப் பொருள் பகரமாம் விடும். அவளின் மீது நீர் பொய் சொல்லியிருந்தால் (அவளை அனுபவித்துக் கொண்டு அவதூறும் கற்பித்த காரணத்தினால்) அப்பொருள் உம்மைவிட்டு வெகு தூரத்தில் உள்ளது' என்று கூறினார்கள்.

தொடர்ந்து ஸயீத் இப்னு ஜு பைர்(ரஹ்) கூறினார்: நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம், தம் மனைவியுடன் சாபஅழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்த மனிதர் தொடர்பாகக் கேட்டேன். அப்போது அவர்கள், (தம்பதியர் இருவரையும் பிரித்து வைக்க வேண்டும் என்பதைக் காட்ட) தம் இரண்டு விரல்களால் சைகை செய்தார்கள். (அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான்(ரஹ்) அப்போது தம் சுட்டுவிரலையும் நடுவிரலையும் பிரித்துக் காட்டினார்கள். மேலும், நபி(ஸல்) அவர்கள் பனு அஜ்லான் குலத்தைச் சேர்ந்த தம்பதியரை (லிஆனுக்குப் பின்) பிரித்து வைத்தார்கள். பிறகுஉங்கள் இருவரில் ஒருவர் பொய்யர் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோருபவர் உண்டா? என மூன்று முறை கேட்டார்கள் என்று பதிலளித்தார்கள்.

சுஃப்யான்(ரஹ்) கூறினார்கள்:

(இப்போது) உங்களுக்கு நான் தெரிவித்ததைப் போன்றே அம்ர் இப்னு தீனார், அய்யூப்(ரஹ்) ஆகியோரிடமிருந்து இந்த ஹதீஸை நான் மனனமிட்டுள்ளேன்.

## சாப அழைப்புப்பிரமாணம் (லிஆன்) செய்த தம்பதியரைப் பிரித்துவைத்தல்.

ஹதீஸ் 5313. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பெண்ணையும் அவளின் மீது விபசாரக் குற்றம் சாட்டிய கணவரையும் சத்தியப் பிரமாணம் (லிஆன்) செய்யவைத்து அவர்கள் இருவரையும் பிரித்துவைத்தார்கள்.

ஹதீஸ் 5314. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளில் உள்ள ஒரு தம்பதியரை சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யவைத்து அவர்கள் இருவரையும் பிரித்துவைத்தார்கள்.

## சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யப்பட்ட பெண்ணிடமே (அவளுடைய) குழந்தை சேர்க்கப்படும்.

**ஹதீஸ் 5315.** இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு மனிதரையும் அவரின் மனைவியையும் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யவைத்தார்கள். அப்போது அந்த மனிதர் அவளுடைய குழந்தையைத் தம்தல்ல என்று கூறினார். எனவே, அவ்விருவருரையும் நபி(ஸல்) அவர்கள் பிரித்துவைத்தார்கள் மேலும், குழந்தையை மனைவியிடம் சேர்த்தார்கள்.

## (சாப அழைப்புப் பிரமாணத்தின்போது) இறைவா! (உண்மையை) வெளிப்படுத்துவாயாக என்று தலைவர் கூறுவது.

**ஹதீஸ் 5316.** இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொள்வது (நடைமுறையில் வருவதற்கு முன், மனைவி மீது கணவன் விபசாரக் குற்றம் சாட்டுவது) தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் பேசப்பட்டது. அப்போது ஆஸிம் இப்னு அதீ(ரலி) அது தொடர்பாக ஏதோ (ஆக்ரோஷமாகச்) சொல்லிவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். (சிறிது நேரத்தில்) ஆஸிம்(ரலி) அவர்களின் குலத்தைச் சேர்ந்த ஒருவர் அவர்களிடம் சென்று, தம் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவுகொண்டு) இருந்ததைத் தாம் கண்டதாகக் கூறினார். அப்போதுநான் (ஆக்ரோஷமாகப்) பேசியதாலேயே (என் குலத்தாரில் நடந்த) இந்த நிகழ்ச்சியால் நானே சோதிக்கப்பட்டுள்ளேன்' என்று ஆஸிம்(ரலி) கூறினார். எனவே, ஆஸிம்(ரலி) அவரை அழைத்துக் கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்று அவரின் மனைவியின் நடத்தை குறித்துத் தெரிவித்தார்கள்.

-(உவைமிர் என்ற) அந்த மனிதர் நல்ல மஞ்சள் நிறம் உடையவராகவும், சதைப் பிடிப்புக் குறைந்தவராகவும், நீண்ட முடிகளைக் கொண்டவராகவும் இருந்தார். தம் மனைவியுடன் இருக்கக் கண்டதாக அவர் வாதிட்ட அந்த அந்நிய மனிதரோ மாநிறம் உடையவராகவும் உடல் பருத்து அதிக சதைப்பிடிப்பு உள்ளவராகவும், சுருட்டை முடி உள்ளவராகவும் இருந்தார்.

இந்தக் குற்றச்சாட்டைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இறைவா! (இந்தப் பிரச்சினையில் ஒரு) தெளிவைத் தருவாயாக!என்று பிரார்த்தித்தார்கள். பிறகு, தம் மனைவியுடன் தாம் கண்டதாகக் கணவர் குறிப்பிட்ட அந்த (அந்நிய) ஆடவரின் சாயலில் அவள் குழந்தையைப் பெற்றெடுத்தாள். (அதற்கு முன்பே) இந்தத் தம்பதியரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யவைத்தார்கள்.

(இந்த ஹதீஸ் கூறப்பட்ட) அவையில் இருந்த ஒருவர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,சாட்சி இல்லாமலேயே ஒருவருக்கு நான் கல்லெறி தண்டனை அளிப்பவனாயிருந்தால், இவளுக்கு அளித்திருப்பேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியது, (உவைமிருடைய மனைவியான) இந்தப் பெண் தொடர்பாகவா? என்று கேட்டதற்கு இப்னு அப்பாஸ்(ரலி),இல்லை. (அவள் வேறொரு பெண்ணாவாள்.) அந்தப் பெண் இஸ்லாத்தில் இருந்துகொண்டே தகாத உறவுகொண்டாள் எனப் பரவலாகப் பேசப்பட்டவள் ஆவாள். (ஆனால், அவள் குற்றத்தை ஒப்புக்கொள்ளவுமில்லை தகுந்த சாட்சியும் இல்லை. அவள் குறித்தே நபியவர்கள் இவ்வாறு குறிப்பிட்டார்கள்)' என்று பதிலளித்தார்கள்.

## மூன்று தலாக் சொல்லப்பட்ட பெண் இத்தா'க் காலத்திற்குப் பின் வேறொரு கணவனை மணமுடித்து, அவர் அவளைத் தாம்பத்திய உறவுகொள்ளாத

## நிலையில் (அவரும் அவளைத் தலாக் சொல்லிவிட்டால், முதல் கணவன் அவளை மணந்து கொள்ளலாமா?)

ஹதீஸ் 5317. ஆயிஷா (ரலி) அறிவித்தார்

ரி..பாஆ அல்குறழீ (ரலி) ஒரு பெண்ணை மணமுடித்தார்கள். பிறகு அப்பெண்ணை அவர்கள் மணவிலக்குச் செய்துவிட்டார்கள். எனவே, அந்தப் பெண் வேறொருவரை மணந்துகொண்டார். பிறகு அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, தம் கணவர் தம்மிடம் (உறவுகொள்ள) வருவதில்லை என்றும், அவருக்கு (இன உறுப்பு என்று) இருப்பதெல்லாம் இந்த (முகத்திரையின்) குஞ்சம் போன்றதுதான் என்றும் கூறினார். (பிறகு தாம் தம் முதல் கணவருடன் வாழ விரும்புவதாகவும் கூறினார்.) (அப்போது அங்கிருந்த அவரின் இரண்டாவது கணவர் இந்தக் குற்றச்சாட்டை மறுத்தார். தமக்கு முதல் மனைவி மூலம் பிறந்த குழந்தைகளையும் அவர் காட்டினார்.) உடனே நபி (ஸல்) அவர்கள், இல்லை நீ (உன்னடைய இரண்டாம் கணவரான) இவரிடம் (தாம்பத்திய) சுகத்தை அனுபவிக்கும் வரையிலும், அவர் உன்னிடம் (தாம்பத்திய) சுகத்தை அனுபவிக்கும் வரையிலும் (முதல் கணவரை நீ மணந்து கொள்ள முடியாது)' என்று கூறினார்கள்.

இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## மேலும், உங்கள் பெண்களில் எவரும் மாதவிடாயின் நம்பிக்கையிழந்து (அவர்களின் இத்தாவைக் கணக்கிடுவது பற்றி) நீங்கள் சந்தேகப்பட்டாலும், இன்னும் யாருக்கு (இதுவரை) மாதவிடாயே ஏற்படவில்லையோ அவர்களுக்கும் இத்தா (தவணை) மூன்று மாதங்களாகும் (எனும் 65:4 வது வசனத் தொடர்).

முஜாஹித் (ரஹ்) கூறினார்:

அதாவது மாதவிடாய் ஏற்படுகிறதா அல்லது இல்லையா என உங்களுக்குத் (தெளிவாகத்) தெரியாத பெண்களுக்கும், (முதுமையின் காரணத்தினால்) மாதவிடாய் நின்றுவிட்ட பெண்களுக்கும், (பருவம் அடையாததால் இதுவரை) மாதவிடாயே ஏற்பட்டிராத பெண்களுக்கும்இத்தா (தவணை) மூன்று மாதங்களாகும்.

## கர்ப்பமுடைய பெண்களுக்கு அவர்களின் ('இத்தா'வின்) தவணை அவர்கள் பிரசவிக்கும் வரையாகும் (எனும் 65:4 வது வசத் தொடர்).

ஹதீஸ் 5318. நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான உம்மு ஸலமா (ரலி) அறிவித்தார்

அஸ்லம் குலத்தைச் சேர்ந்தசுபைஆ என்றழைக்கப்பட்ட ஒரு பெண் கர்ப்பிணியாக இருந்த நிலையில் அவரின் கணவர் (ஸஅத் இப்னு கவ்லா) இறந்துவிட்டார். (நாற்பது நாள்களுக்குப் பிறகு அவருக்குக் குழந்தை பிறந்தது.) இந்நிலையில் அவரைஅபுஸ் ஸனாபில் பின்பஅக்கக் (ரலி) என்பவர் பெண் கேட்டார். அவரை மணக்க அப்பெண் மறுத்துவிட்டார். பிறகு (வேறொருவரை மணக்கவிருக்கும் செய்தி கேட்டு) அவரைப் பார்த்து அபுஸ் ஸனாபில் (ரலி), அல்லாஹ்வின் மீதாணையாக! இரண்டு தவணைகளில் பிந்தியது எதுவோ அது வரையில் நீஇத்தா இருக்காமல் அவரை நீ மணந்துகொள்ள முடியாது' என்று கூறினார்கள். (பிரசவத்திற்குப் பின்) சுமார் பத்து நாள்கள் அப்பெண் இருந்துவிட்டு பிறகு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், (பிரசவத்துடன் உன் இத்தா முடிந்துவிட்டது.) நீ மணந்துகொள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5319. அப்துல்லாஹ் இப்னு உத்பா இப்னி மஸ்வூத் (ரஹ்) அறிவித்தார்

நான் உமர் இப்னு அப்தில்லாஹ் இப்னி அல் அர்கம்(ரஹ்) அவர்களை, அஸ்லம் குலத்தைச் சேர்ந்த சுபைஆ(ரலி) அவர்களிடம் சென்று, அவருக்கு நபி(ஸல்) அவர்கள் ('இத்தா தொடர்பாக) என்ன தீர்ப்பளித்தார்கள்? என்று கேட்கும்படி கடிதம் எழுதினேன். (அவ்வாறே அவரும் கேட்டார்.)

அப்போது சுபைஆ(ரலி)நீ பிரசவித்தவுடன் மணமுடித்துக்கொள்' என்று நபி(ஸல்) அவர்கள் எனக்குத் தீர்ப்பு வழங்கினார்கள் என்று பதிலளித்தார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) யஸீத் இப்னு அபீ ஹபீப்(ரஹ்) அவர்களுக்கு இப்னு ஷிஹாப்(ரஹ்) தம் கடிதத்தில் இந்த ஹதீஸைக் குறிப்பிட்டிருந்தார்கள்.

ஹதீஸ் 5320. மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்

தம் கணவர் இறந்த சில நாள்களுக்குப் பின் சுபைஆ அல்அஸ்லமிய்யா(ரலி) பிரசவித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் சென்று (மறு)மணம் புரிந்து கொள்ள அனுமதி கோரினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதி அளித்ததையடுத்து அவர் (ஒருவரை) மணந்தார்.

"மணவிலக்கு அளிக்கப்பட்ட பெண்கள் மூன்று மாதவிடாய்கள் வரை தங்களின் விஷயத்தில் காத்திருக்க வேண்டும்' எனும் (திருக்குர்ஆன் 02:228 வது) வசனத் தொடர்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ) அவர்கள் கூறுகிறார்கள்.

'இத்தா'வில் உள்ள ஒரு பெண்ணை ஒருவர் திருமணம் செய்து, அவரிடம் வந்த பின் அவளுக்கு மூன்று மாதவிடாய்க் காலம் முடிந்தால், முதல் கணவனிடமிருந்து அவள் முற்றாகப் பிரிந்தவள் ஆவாள். (ஆனால்,) இந்த மாதவிடாய்க் காலத்தை இரண்டாம் கணவனுக்கானஇத்தா'வாக அவள் கணக்கிட முடியாது.

அவ்வாறு கணக்கிடலாம் என ஸு ஹ்ரீ(ரஹ்) கூறினார். ஸு ஹ்ரீ(ரஹ்) அவர்களின் கருத்தே சுஃப்யான்(ரஹ்) அவர்களுக்கு மிக உவப்பானதாகும்.

மஅமர் இப்னு முஸன்னா(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 02:228 வது வசனத்தின் மூலத்திலுள்ளகுரூஉ எனும் சொல்லின் வினைச் சொல்லான)அக்ரஅத் எனும் சொல்லுக்கு ஒரு பெண்ணின் மாதவிடாய்க் காலம் நெருங்கிவிட்டது என்ற பொருளும்,ஒரு பெண் மாதவிடாயிலிருந்து தூய்மையடையும் காலம் நெருங்கிவிட்டது என்ற (எதிரிடையான) பொருளும் உண்டு. ஒரு பெண், தன் வயிற்றில் சிசுவை ஒன்று சேர்ப்பதைக் குறிக்கவும்கரஅத் எனும் சொல் ஆளப்படுவதுண்டு.

## ஃபாத்திமா பின்த் கைஸ்(ரலி) அவர்களின் நிகழ்ச்சி.

வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் கூறினான்:

உங்களுடைய இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். (மணவிலக்கு அளிக்கப்பட்டுஇத்தா'வில் இருக்கும் பெண்கள்) பம்ரங்கமான மானக்கேடான (காரியத்)தைச் செய்தாலன்றி அவர்களை அவர்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றாதீர்கள் அவர்களும் வெளியேறலாகாது. இவை அல்லாஹ் (விதிக்கும்) வரம்புகள். அல்லாஹ்வின் வரம்புகளை மீறுகிறவர் திடமாகத் தமக்குத் தாமே அநியாயம் செய்துகொள்கிறார். (ஏனெனில், சேர்ந்து வாழ்வதற்காக) இதன் பின்னரும் அல்லாஹ் ஏதேனும் ஒரு வழியை உண்டாக்கலாம் என்பதை நீர் அறியமாட்டீர். (திருக்குர்ஆன் 65:1 வது வசனத்தொடர்.)

உங்கள் சக்திக்கேற்ப நீங்கள் குடியிருக்கும் இடத்திலேயே ('இத்தா'விலிருக்கும்) பெண்களைக் குடியிருக்கச் செய்யுங்கள் அவர்களுக்கு நெருக்கடி உண்டாக்குவதற்காக அவர்களுக்குத்

தொல்லை கொடுக்காதீர்கள். அவர்கள் கர்ப்பமுடையவர்களாக இருந்தால், அவர்கள் பிரசவிக்கும் வரை அவர்களுக்காகச் செலவு செய்யுங்கள். !(திருக்குர்ஆன் 65:6,7)

ஹதீஸ் 5321, ஹதீஸ் 5322 காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) அவர்களும் சுலைமான் இப்னு யஸார்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்

யஹ்யா இப்னு ஸயீத் இப்னி ஆஸ்(ரஹ்) (தம் துணைவியாரான) அப்துர் ரஹ்மான் இப்னு அல்ஹகம் அவர்களின் புதல்வியை (ஒட்டுமொத்த)த் தலாக் சொல்லிவிட்டார். எனவே, அவரை (அவரின் தந்தை) அப்துர் ரஹ்மான் (தலாக் சொல்லப்பட்ட இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக்) குடிமாற்றினார். (இச்செய்தி அறிந்த) ஆயிஷா(ரலி) மதீனாவின் (அப்போதைய) ஆட்சித் தலைவராக இருந்து (அப்துர் ரஹ்மானின் சகோதரர்) மர்வான் இப்னு அல்ஹகம் அவர்களிடம் ஆளனுப்பி,மர்வானே! அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள். (உங்கள் சகோதரர் புதல்வியான) அவளை (மணவிலக்கு அளிக்கப்பட்ட) அவளுடைய வீட்டிற்கே திருப்பி அனுப்புங்கள்!என்று கூறினார்கள். மர்வான்,(என் சகோதரர்) அப்துர் ரஹ்மான் என்னை மிகைத்துவிட்டார். (என்னால் அவரைத் தடுக்க முடியவில்லை)‘ என்று பதிலளித்தார். இவ்வாறு சுலைமான் இப்னு யஸார் அவர்களின் அறிவிப்பில் காணப்படுகிறது.

காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) கூறினார்:

மேலும், மர்வான்ஃபாத்திமா பின்த் கைஸ் தொடர்பான தகவல் தங்களை வந்தடையவில்லையா? (அவர் இடம் மாறித்தானேஇத்தா இருந்தார்!என்று (ஆயிஷா(ரலி) அவர்களிடம்) கேட்டார். ஆயிஷா(ரலி), ஃபாத்திமா பின்த் கைஸின் செய்தியை நீங்கள் (ஆதாரமாகக்) குறிப்பிடாமல் இருப்பதால் உங்களுக்கு எந்தப் பாதிப்பும் நேர்ந்துவிடாது. (அவர் இடம் மாறியதற்குத் தக்க காரணம் இருந்தது.)‘ என்று கூறினார்கள். அதற்கு மர்வான் இப்னி ஹகம் அவர்கள்,(ஃபாத்திமா இடம் மாறியதற்குக் காரணமாக அமைந்த) இடர்ப்பாடு ஏதேனும் தங்களுக்கு (ஏற்புடையதாக இருக்குமென்றால், இந்தத் தம்பதியரிடையே உள்ள (அதே விதமான) இடர்ப்பாடு (என் சகோதரர்) மகள் இடம் மாறுவதில்) தங்களுக்குப் போதும்தானே!என்று கூறினார்.

ஹதீஸ் 5323, ஹதீஸ் 5324 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஃபாத்திமா பின்த் கைஸிற்கு என்ன நேர்ந்தது?(மூன்று தலாக் சொல்லப்பட்ட பெண்ணுக்குஇத்தா‘வின் போது) உறைவிடமோ ஜீவனாம்சமோ (கணவன் அளிக்கவேண்டியது) இல்லை‘ என்று கூறுகிறாரே! அவர் அல்லாஹ்வை அஞ்சக் கூடாதா?

ஹதீஸ் 5325, ஹதீஸ் 5326 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம்,அப்துர் ரஹ்மான் இப்னு அல்ஹகமுடைய புதல்வியான இன்னவளைப் பார்த்தீர்களா? அவரை அவரின் கணவர் ஒட்டுமொத்தத் தலாக் சொல்லிவிட்டார். (தம் கணவர் வீட்டில்இத்தா இருக்காமல்) அவர் வெளியேறி (மற்றோர் இடத்திற்குச் சென்று)விட்டாரே!என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி)அவர் செய்தது தவறு‘ என்றார்கள். நான் ஃபாத்திமா பின்த் கைஸ், (தான் மற்றோர் இடத்தில்இத்தா இருந்தது பற்றிக்) கூறிவருவதை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷாரலி) அவர்கள்,இச்செய்தியைக் கூறி வருவதில் ஃபாத்திமாவுக்கு எந்த நன்மையுமில்லை என்பதைப் புரிந்துகொள்!“என்று கூறினார்கள்.

அப்துர் ரஹ்மான் இப்னு அபிஸ் ஸினாத்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் கூடுதலாகக் காணப்படுவதாவது:

ஆயிஷா(ரலி) (ஃபாத்திமா பின்த் கைஸைக்) கடுமையாகச் சாடினார்கள். மேலும்,(இந்த) ஃபாத்திமா தன்னந் தனியானதோர் இடத்தில் இருந்தார். இதனால் அவர் (பாதுகாப்பு) குறித்து அஞ்சப்பட்டது. இதையடுத்தே அவருக்கு (மற்றோர் இடத்தில்இத்தா இருக்க) நபி(ஸல்) அவர்கள் சலுகை அளித்தார்கள்‘ என்றும் ஆயிஷா கூறினார்கள்.

## மணவிலக்கு அளிக்கப்பட்ட பெண் தன்னுடைய கணவன் வீட்டில் ('இத்தா மேற்கொண்டால்) அத்துமீறி யாரும் புகுந்துவிடலாம் என்றோ, அவள் தன் (கணவனின்) குடும்பத்தாரிடம் அசிங்கமாகப் பேசிவிடுவாள் என்றோ அஞ்சப்படுமானால் (அவள் இடம் மாறிக் கொள்ளலாம்).

ஹதீஸ் 5327, ஹதீஸ் 5328 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அறிவித்தார்

ஆயிஷா(ரலி), ஃபாத்திமா பின்த் கைஸ் அவ்வாறு (மணவிலக்கு அளிக்கப்பட்ட பெண் கணவனின் இல்லத்திலிருந்து வெளியேறி மற்றோர் இடத்தில்இத்தா மேற்கொள்ளலாம் என்று) கூறி வந்ததை நிராகரித்தார்கள்.

## "(மணவிலக்கு அளிக்கப்பட்ட) அந்தப் பெண்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் (உண்மையிலேயே) நம்பினால், தம் கருவறைகளில் அல்லாஹ் படைத்துள்ள எதையும் அவர்கள் மறைக்கலாகாது' எனும் (திருக்குர்ஆன் 02:228 வது) வசனத் தொடர்.

அதாவது (தம் கருவறைகளில் ஏற்பட்டுள்ள) மாதவிடாயோ கர்ப்பமோ எதையும் மறைக்கலாகாது.

ஹதீஸ் 5329 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் ஹஜ்ஜை முடித்துக்கொண்டு மக்காவிலிருந்து) புறப்பட விரும்பியபோது ஸஃபிய்யா(ரலி) (மாதவிடாய் ஏற்பட்டதால்) தம் கூடாரத்தின் வாசலில் கவலை அடைந்தவராய் நின்றிருந்தார்கள். அப்போது அவரிடம் நபி(ஸல்) அவர்கள் (செல்லமாக)அல்லாஹ் உன்னை அறுக்கட்டும்! உனக்குத் தொண்டை வலி வரட்டும்! எம்மை (புறப்படவிடாமல்) தடுத்துவிட்டாயே! நஹ்ருடைய (துல்ஹஜ் -10 வது) நாளில் நீ (கஅபாவைச்) சுற்றிவந்தாயா? என்று கேட்டார்கள். ஸஃபிய்யா(ரலி)ஆம் என்று கூற, நபி(ஸல்) அவர்கள்அப்படியானால், நீ புறப்படு' என்று கூறினார்கள்.

## "(மணவிலக்கு அளிக்கப்பட்ட) அந்தப் பெண்களை (இத்தா முடிந்தபின் அவர்களின் கணவர்களே மீண்டும் மணந்துகொள்வதை) நீங்கள் தடுக்கவேண்டாம்' எனும் (திருக்குர்ஆன் 02:232 வது) வசனத்தொடர்.

ஹதீஸ் 5330. ஹஸன் அல்பஸரீ(ரஹ்) அறிவித்தார்

மஅகில் இப்னு யஸார்(ரலி) தம் சகோதரியை (ஒருவருக்கு) மணமுடித்துக் கொடுத்தார்கள். பிறகு அவரை அவரின் கணவர் மணவிலக்கு அளித்துவிட்டார். பின்னர் அவரின்இத்தா'க் காலம் முடியும் வரை (திருப்பி அழைக்காமல்) அப்படியேவிட்டுவிட்டார். பிறகு (பழைய கணவரே மீண்டும்) அவரைப் பெண்கேட்டு வந்தார். இதனால் ஆத்திரமடைந்த மஅகில்(ரலி) பிடிவாதமாக மறுத்துவிட்டார்கள். மேலும்,(என் சகோதரிஇத்தா'வில் இருந்தபோது) அவளைத் திருப்பி அழைத்துக் கொள்ள அவருக்கு சக்தியிருந்தும் அப்படியேவிட்டுவிட்டு, ('இத்தா முடிந்த) பிறகு (இப்போது வந்து) பெண்கேட்கிறாரே!என்று கூறி, இருவருக்கும் இடையே மஅகில் தடையாக இருந்தார். அப்போதுதான் அல்லாஹ்நீங்கள் (உங்கள்) மனைவியரை மணவிலக்குச் செய்து, அவர்கள் தங்களின் ('இத்தா') தவணையின் இறுதியை அடைந்தால், தங்களின் (பழைய) கணவர்களை முறையோடும் மனம் ஒப்பியும் அவர்கள் மணந்து கொள்வதை நீங்கள் தடுக்கவேண்டாம்' எனும் (திருக்குர்ஆன் 02:232 வது) வசனத்தை முழுமையாக அருளினான். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மஅகில்(ரலி) அவர்களை அழைத்து (அந்த வசனத்தை) அவருக்கு முன் ஓதிக் காட்டினார்கள். எனவே, அவர் தம் பிடிவாதத்தைக் கைவிட்டு அல்லாஹ்வின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தார்.

ஹதீஸ் 5331 மஅகில் பின் யசார் (ரலி) அவர்களின் சகோதரி ஒருவரின் துணைவியாராக இருந்தார். அவருக்கு அவருடைய கணவர் மணவிலக்கு அளித்து விட்டார். பின்னர் அவரது இத்தாக் காலம் முடியும் வரை (திருப்பி அழைக்காமல்) அப்படியே விட்டு விட்டார். பிறகு (பழைய கணவரே மீண்டும்) அவரைப் பெண்கேட்டு வந்தார். இதனால் ஆத்திரமடைந்த மஅகில் (ரலி) அவர்கள் பிடிவாதமாக மறுத்துவிட்டார்கள். மேலும் (என் சகோதரி இத்தாவில் இருந்தபோது) அவளைத் திருப்பி அழைத்துக் கொள்ள அவருக்கு சக்தியிருந்தும் அப்படியே விட்டு விட்டு (இத்தா முடிந்த) பிறகு (இப்போது வந்து) பெண்கேட்கிறாரே என்று கூறி இருவருக்கும் இடையே மஅகில் தடையாக இருந்தார். அப்போதுதான் அல்லாஹ் நீங்கள் (உங்கள்) மனைவியரை மணவிலக்குச் செய்து அவர்கள் தங்களின் (இத்தா) தவணையின் இறுதியை அடைந்துவிட்டால் தங்களின் (பழைய) கணவர்களை முறையோடும் மனம் ஒப்பியும் அவர்கள் மணந்து கொள்வதை நீங்கள் தடுக்க வேண்டாம் எனும் (2232ஆவது) வசனத்தை முழுமையாக அருளினான். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மஅகில் (ரலி) அவர்களை அழைத்து (அந்த வசனத்தை) அவருக்கு முன் ஓதிக் காட்டினார்கள். ஆகவே அவர் தமது பிடிவாதத்தைக் கைவிட்டு அல்லாஹ்வின் கட்டளைக்குப் கீழ்ப்படிந்தார்.

ஹதீஸ் 5332. நா..பிஉ (ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி) தம் மனைவியை அவர் மாதவிடாயிலிருந்த சமயத்தில் ஒரு தலாக் சொல்லிவிட்டார்கள்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இப்னு உமர்(ரலி) அவர்களுக்கு(ப் பின்வருமாறு) கட்டளையிட்டார்கள்:

அவர் தம் மனைவியைத் திருப்பி அழைத்துக்கொள்ளவேண்டும். பிறகு மனைவி மாதவிடாயிலிருந்து தூய்மையாகும் வரை தம்மிடமே வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு தம்மிடம் இருக்கும் அவளுக்கு இரண்டாம் முறை மாதவிடாய் ஏற்பட்டு, அதன் பிறகு அந்த மாதவிடாயிலிருந்து அவள் தூய்மையடையும் வரை காத்திருந்துவிட்டு, அவர் அவளைத் தலாக் சொல்ல விரும்பினால் அவளுடன் உடலுறவு கொள்வதற்கு முன்னால் அவள் (மாதவிடாய் காலத்தில் இல்லாமல்) தூய்மையானவளாய் இருக்கும்போது தலாக் சொல்லிக்கொள்ளட்டும்! இதுவே, பெண்களை மணவிலக்குச் செய்ய அல்லாஹ் உத்தரவிட்டுள்ள காலமாகும்.

இப்னு உமர்(ரலி) அவர்களிடம் இது குறித்து வினவப்பட்டால்உன் மனைவியை நீ மூன்று முறை தலாக் சொல்லிவிட்டால் வேறொரு கணவரை அவள் மணந்து (உடலுறவு) கொள்ளும் வரை அவள் உனக்கு விலக்கப்பட்டவளாக ஆம்விடுவாள்‘ என்று பதிலளிப்பார்கள்.

மற்றோர் அறிவிப்பில் கூடுதலாகக் காணப்படுவதாவது:

இப்னு உமர்(ரலி)நீ ஒரு றை, அல்லது இருமுறை தலாக் சொல்லியிருந்தால் (அவளைத் திருப்பி அழைத்துக் கொள்ளலாம்). இவ்வாறு (திருப்பி அழைத்துக் கொள்ளுமாறு) தான் நபி(ஸல்)அவர்கள் எனக்குக் கட்டளையிட்டார்கள்‘ என்று கூறுவார்கள்.

## மாதவிடாயிலிருக்கும்(போது மணவிலக்கு அளிக்கப்பட்ட) பெண்ணைத் திரும்ப அழைத்துக்கொள்வது.

ஹதீஸ் 5333. யூனுஸ் இப்னு ஜு பைர்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் (மாதவிடாயிலிருக்கும் மனைவியை மணவிலக்குச் செய்வது குறித்துக்) கேட்டேன். அதற்கு இப்னு உமர்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:

நான் மாதவிடாயிலிருந்த என் மனைவிக்கு மணவிலக்கு அளித்தேன். எனவே, (என் தந்தை) உமர்(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் (இது குறித்து) வினவனிார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக் கொள்ளவேண்டும். பிறகு அவள்இத்தா‘வை எதிர்கொள்வதற்கேற்ற (வகையில் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்த) நேரத்தில்

(விரும்பினால்) அவர் தலாக் சொல்லட்டும் என அவருக்கு உத்தரவிடுங்கள்‘ என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் கூறுகிறார்:

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்அது ஒரு தலாக்காகக் கருதப்படுமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்அவன் (தன் கடமையை நிறைவேற்ற) இயலாமலும் (அதை) அறிந்து கொள்ளாமலும் இருந்துவிட்டால் (மணவிலக்கு நிகழாமல் போய்விடுமா) என்ன? என்று கேட்டார்கள்.

## கணவன் இறந்த பெண் நான்கு மாதம் பத்து நாள்கள் துக்கம் கடைப்பிடிப்பாள்.

ஸு ஹ்ரீ(ரஹ்) கூறினார்

கணவன் இறந்த (பருவமடையாத) சிறுமி நறுமணம் பூசலாமென்று நான் கருதவில்லை. ஏனெனில், அவளுக்கும் (பருவமடைந்த பெண்ணைப் போன்றே)இத்தா இருக்கும் கடமையுள்ளது.

ஹு மைத் இப்னு நா∴பிஉ(ரஹ்) கூறினார்

(பின்வரும்) இந்த மூன்று ஹதீஸ்களையும் (நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகளான) ஸைனப் பின்த் அபீ ஸலமா(ரலி) எனக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5344. ஸைனப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான (அன்னை) உம்மு ஹபீபா(ரலி) அவர்களிடம், அவரின் தந்தை அபூ சு∴ப்யான் இப்னு ஹர்ப்(ரலி) (ஷாம் நாட்டில்) இறந்துவிட்ட சமயம் சென்றேன்.

அப்போது (மூன்றாவது நாள்) உம்மு ஹபீபா(ரலி) மஞ்சள் நிறமுடைய ஒருவகை நறுமணப் பொருளைக் கொண்டு வருமாறு கூறி அதனை (அங்கிருந்த) ஒரு சிறுமியின் மீது தடவினார்கள். பிறகு தம் இரண்டு கன்னங்களிலும் தடவினார்கள். பின்னர்,அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்கு இந்த நறுமணம் தேவையே இல்லை. ஆயினும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்டிருக்கும் எந்தப் பெண்ணும், இறந்த ஒருவருக்காக மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிப்பதற்கு அனுமதியில்லை ஆனால், கணவருக்காக நான்கு மாதம் பத்து நாள்கள் தவிர! என்று கூறக்கேட்டுள்ளேன். (எனவேதான் இப்போது நறுமணம் பூசினேன்.)‘ என்றார்கள்.

ஹதீஸ் 5335. ஸைனப் பின்த் அபீ ஸலமா(ரலி) அறிவித்தார்

(அன்னை) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களின் சகோதரர் இறந்த சமயம் அவர்களிடம் நான் சென்றேன். அப்போது அவர்கள் நறுமணப் பொருள் ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி பூசிக்கொண்டார்கள்.

பிறகு,இதோ! (பாருங்கள்.) அல்லாஹ்வின் மீதாணையாக எனக்கு இந்த நறுமணம் தேவையே இல்லை. ஆயினும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (சொற்பொழிவு) மேடையில் இருந்தபடிஅல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் இறந்த ஒருவருக்காக மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க அனுமதியில்லை. ஆனால், தன் கணவருக்காக நான்கு மாதம் பத்து நாள்கள் தவிர! என்று கூறக் கேட்டுள்ளேன்‘ என்றார்கள்.

ஹதீஸ் 5336. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து,இறைத்தூதர் அவர்களே! என் மகளுடைய கணவர் இறந்துவிட்டார். (‘இத்தா‘விலிருக்கும்) என் மகளின் கண்ணில் அஞ்சனம்

(சுர்மா) இட்டுக் கொள்ளலாமா? என்று கேட்டதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்வேண்டாம் என இரண்டு அல்லது மூன்று முறை கூறினார்கள். ஒவ்வொரு முறையும் வேண்டாம் என்றே கூறினார்கள். பிறகு,(கணவனை இழந்த ஒரு பெண்ணின்)இத்தா'க் காலம் நான்கு மாதங்களும் பத்து நாள்களும் தாம். (ஆனால்,) அறியாமைக் காலத்தில் (கணவன் இறந்தபின்) மனைவி (ஓராண்டுஇத்தா இருப்பாள்.) ஆண்டின் முடிவில் ('இத்தா முடிந்ததன் அடையாளமாக) ஒட்டகச் சாணத்தை எறிவாள். (அந்த நிலை இப்போது இல்லை)' என்றார்கள்.

ஹதீஸ் 5337. ஹுமைத் இப்னு நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

நான் ஸைனப் பின்த் அபீ ஸலமா(ரலி) அவர்களிடம்,ஆண்டின் முடிவில் ஒட்டகச் சாணத்தை எறிவாள்' என்றால் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: (அறியாமைக் காலத்தில்) ஒரு பெண்ணின் கணவன் இறந்துவிட்டால் அவள் ஒரு சிறிய குடிசைக்குள் நுழைந்துகொண்டு தன் ஆடைகளிலேயே மிகவும் மோசமானதை அணிந்துகொள்வாள். ஓராண்டு செல்லும் வரை எந்த நறுமணத்தையும் தொடமாட்டாள். (ஓராண்டு கழிந்த) பிறகு கழுதை, ஆடு போன்ற கால்நடை ஒன்று, அல்லது பறவை ஒன்று அவளிடம் கொண்டுவரப்படும். அதன் மீது (அழுக்கடைந்த தன் உடலைக்) கடுமையாகத் தேய்த்துக்கொள்வாள். அவ்வாறு அவள் தேய்க்கும் எந்த உயிரினமும் (அவளுடைய உடல் அசுத்தத்தால்) சாகாமல் இருப்பது அரிதேயாகும். பிறகு அவள் (அந்தக் குடிசையிலிருந்து) வெளியே வருவாள். அப்போது அவளிடம் ஒட்டகச் சாணம் கொடுக்கப்படும். உடனே அவள் அதை (தனக்கு முன்பக்கத்தில்) தூக்கி எறிந்துவிடுவாள். (இதுவேஇத்தா முடிந்ததற்கு அடையாளமாகும்.) பிறகு அவள் தான் விரும்பிய நறுமணத்தையோ மற்றவற்றையோ பழையபடி உபயோகித்துக்கொள்வாள்.

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)தஃப்தள்ளு பிஹி (அதன் மீது தேய்த்துக் கொள்வாள்) எனும் சொற்றொடரின் கருத்தென்ன? என்று மாலிக்(ரஹ்) அவர்களிடம் வினவப்பட்டபோது, அவர்கள்,அந்தப் பெண் அந்த உயிரினத்தின் மீது தன் உடலைத் தேய்த்துக்கொள்வாள் என்று (பொருள்) கூறினார்கள்.

## (கணவனை இழந்து) துக்கம் கடைப்பிடிக்கும் பெண் (கண்ணில்) அஞ்சனம் தீட்டிக்கொள்வது (கூடாது).

ஹதீஸ் 5338. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

ஒரு பெண்ணின் கணவர் இறந்துவிட்டார். ('இத்தா'வில் இருந்த அவளுடைய கண்ணில் வலி ஏற்பட்டதால்) அவளின் கண்கள் குறித்து அவ(ளுடைய உறவின)ர்கள் அஞ்சினர். எனவே, அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று அப்பெண் அஞ்சனம் (சுர்மா) இட்டுக்கொள்ள அனுமதி கேட்டனர். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,அவள் அஞ்சனம் இடவேண்டாம். (அறியாமைக் காலத்தில் கணவன் இறந்தபின்) மனைவி அவளுடையஆடைகளிலேயே மோசமானதில் அல்லதுமோசமான வீட்டில் தங்கியிருப்பாள். (கணவர் இறந்து) ஒருவருடம் கழிந்துவிட்டால் (அவ்வழியாகக்) கடந்துசெல்லும் ஏதேனும் ஒரு நாய் மீது ஒட்டகச் சாணத்தை அவள் வீசியெறிவாள். (அந்த அவலம் இப்போது இல்லை.) எனவே, அவள் நான்கு மாதம் பத்து நாள்கள் கழியும் வரை அஞ்சனம் இட வேண்டாம்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5339. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும், இறந்த ஒருவருக்கு மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிப்பதற்கு அனுமதியில்லை ஆனால், தன் கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாள்கள் தவிர!

இதை (அன்னை) உம்மு ஹபீபா பின்த் அபீ சுஃப்யான்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5340. உம்மு அத்திய்யா(ரலி) அறிவித்தார்

கணவருக்காகத் தவிர (வேறு யாருடைய இறப்புக்காகவும்) மூன்று நாள்களுக்கு அதிகமாகத் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாதென எங்களுக்குத் தடைவிதிக்கப்பட்டது.

இதை முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) அறிவித்தார்.

## (கணவனை இழந்து) துக்கம் கடைப்பிடிக்கும் பெண் (மாதவிடாயிலிருந்து) தூய்மை அடையும்போது கோஷ்டக் கட்டையால் (குஸ்த்) நறுமணப் புகையிடுதல் (செல்லும்).

ஹதீஸ் 5341. உம்மு அத்திய்யா(ரலி) கூறினார்

இறந்த எவருக்காகவும் மூன்று நாள்களுக்கு மேல் நாங்கள் துக்கம் கடைப்பிடிக்கலாகாது எனத் தடை விதிக்கப்பட்டிருந்தோம் ஆனால், கணவனுக்காக நான்கு மாதம் பத்து நாள்கள் தவிர!

(அதாவதுஇத்தா'வில் இருக்கும்போது) நாங்கள் அஞ்சனம் தீட்டிக்கொள்ளக் கூடாது நறுமணம் பூசிக்கொள்ளக்கூடாது சாயமிடப்பட்ட ஆடையை அணியக் கூடாது (என்று எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது) ஆனால், நெய்வதற்கு முன் நூலில் சாயமிடப்பட்டுத் தயாரிக்கப்பட்ட ('அஸ்ப் எனும்) ஆடை தவிர! எங்களில் ஒருவர் மாதவிடாயிலிருந்து குளித்துத் தூய்மையடையும்போதுழஃபார் எனும் இடத்தில் கிடைக்கும் கோஷ்டக் கட்டைத் துண்டால் நறுமணப் புகையிட்டுக் கொள்ள எங்களுக்கு அனுமதிக்கப்பட்டது. மேலும், நாங்கள் ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்லக் கூடாதென்றும் தடை விதிக்கப்பட்டிருந்தோம். 96

அபூ அப்தில்லாஹ் (புகாரி ஆகிய நான் கூறுகிறேன்.)

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)குஸ்த் (கோஷ்டம்) எனும் சொல் (ஃகுஸ்த், குஸ்த்) என இரண்டு முறைகளிலும் ஆளப்படுகிறது. காஃபூர் (கற்பூரம்) எனும் சொல் (ஃகாபூர், காஃபூர்) என இரண்டு முறைகளிலும் ஆளப்படுவதைப் போன்று. மேலும், (இதிலுள்ள)நுப்ஃதத் எனும் சொல்லுக்குத் துண்டு என்று பொருள்.

## துக்கம் கடைப்பிடிக்கும் பெண், நெய்வதற்கு முன் நூலில் சாயமிடப்பட்டுத் தயாரிக்கப்பட்ட ('அஸ்ப் எனும்) ஆடையை அணியலாம்,

ஹதீஸ் 5342. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் மீதும் மறுமை நாளின் மீதும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிப்பதற்கு அனுமதியில்லை கணவனுக்காகத் தவிர! ஏனெனில், (கணவன் இறந்த) அவள் (நான்கு மாதம் பத்து நாள்கள் துக்கம் கடைப்பிடிப்பாள். அப்போது) அஞ்சனம் தீட்டிக்கொள்ள மாட்டாள். சாயமிடப்பட்ட ஆடையை அணியமாட்டாள் நெய்வதற்கு முன் நூலில் சாயமிட்டுத் தயாரிக்கப்பட்ட ('அஸ்ப் எனும்) ஆடையைத் தவிர!

என உம்முஅத்திய்யா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5343. உம்மு அதிய்யா(ரலி) அறிவித்தார்

(கணவன் இறந்து இத்தாவிலிருக்கும் பெண்) நறுமணம் பூசிக்கொள்ளக் கூடாது என்று நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். ஆனால், (மாதவிடாயிலிருந்து) அவள் தூய்மையடையும் சமயத்தில் தவிர! அப்போதுகுஸ்த் மற்றும்ழஃபார் ஆகிய கோஷ்டக் கட்டைத் துண்டால் நறுமணப் புகையிட்டுக்கொள்ளலாம்.

அபூ அப்தில்லாஹ் (புகாரீ ஆகிய நான்) கூறுகிறேன்:

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)குஸ்த் (கோஷ்டம்) எனும் சொல் (ஃகுஸ்த், குஸ்த்) என இரண்டு முறைகளிலும் ஆளப்படுகிறதுகாஃபூர் (கற்பூரம்) எனும் சொல் (ஃகாபூர், காஃபூர்) என இரண்டு முறைகளிலும் ஆளப்படுவதைப் போன்று.

## 02:234 வது இறைவசனம்

உங்களில் எவரேனும் மனைவியரைவிட்டு இறந்துபோயிருந்தால், அம்மனைவியர் நான்கு மாதம் பத்து நாள்கள் தங்களின் விஷயத்தில் காத்திருப்பார்கள். தங்கள் தவணையின் இறுதியை அவர்கள் எட்டிவிட்டால், தங்களின் விஷயத்தில் முறையோடு அவர்கள் செய்து கொள்கிற (அலங்காரம் முதலான)வற்றில் (தலையிடாமல் இருப்பதால்) உங்களின் மீது எந்தக் குற்றமுமில்லை. நீங்கள் செய்கிறவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன் ஆவான் (எனும் 02:234 வது இறைவசனம்).

ஹதீஸ் 5344. முஜாஹித்(ரஹ்) அறிவித்தார்

"உங்களில் எவரேனும் மனைவியரைவிட்டு இறந்து போயிருந்தால், அந்த மனைவியர் நான்கு மாதம் பத்து நாள்கள் தங்களின் விஷயத்தில் காத்திருப்பார்கள்' எனும் (திருக்குர்ஆன் 02:234 வது) வசனத்தின் கருத்தாவது:

(கணவன் இறந்த) அந்தப் பெண் (நான்கு மாதம் பத்து நாள்கள் காத்திருத்தல் எனும்) இந்தஇத்தா'வைத் தம் கணவனுடைய குடும்பத்தாரிடம் மேற்கொள்வது கட்டாயமாக இருந்தது. இந்நிலையில்உங்களில் மனைவியரைவிட்டு இற(க்கும் தருவாயில் இரு)ப்பவர்கள் தங்கள் மனைவியரை (வீட்டிலிருந்து வெளியேற்றிவிடாமல் ஓராண்டு வரை பாரமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரணசாசனம் செய்வார்களாக. ஆயினும், அவர்களாகவே வெளியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிற (மறுமணம் போன்ற)வற்றைச் செய்தார்களாயின் (உறவினர்களாகிய) உங்களின் மீது எந்தக் குற்றமும் கிடையாது' எனும் (திருக்குர்ஆன் 02:240 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். (இதன் மூலம்) ஒரு முழு ஆண்டில் (நான்கு மாதம் பத்து நாள்கள் போக மீதியுள்ள) ஏழு மாதம் இருபது நாள்களை(க் கணவனின்) மரண சாசன(த்தை நிறைவேற்றுவதற்கான சந்தர்ப்ப)மாக அல்லாஹ் ஆக்கினான். அவள் விரும்பினால் (அந்த ஏழு மாதம் இருபது நாள்களில்) தம் கணவனின் சாசனப்படி (கணவன் வீட்டிலேயே) தங்கியிருப்பாள். அவள் விரும்பினால் (நான்கு மாதம் பத்து நாள்களுக்குப் பின்) வெளியேறிக் கொள்ளலாம். இதைத்தான்வெளியேற்றிவிடாமல் ஓராண்டுக் காலம் வரை பராமரிக்குமாறு (உறவினர்களிடம்) மரண சாசனம் செய்வார்களாக. ஆயினும், அவர்களாகவே வெளியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிற (மறுமணம் போன்ற)வற்றை செய்தார்களாயின் (உறவினர்களாகிய) உங்களின் மீது எந்தக் குற்றமும் கிடையாது' எனும் இந்த (திருக்குர்ஆன் 02:240 வது) வசனம் குறிக்கிறது. ஆக, (நான்கு மாதம் பத்து நாள்கள் எனும்)இத்தா'க் கால வரம்பு கணவனை இழந்த கைம்பெண்ணின் மீது கட்டாயமானதே ஆகும்.

(எனவே, 02:234 வது வசனம், 02:240 வது வசனத்தை மாற்றிடவில்லை என்ற) இந்தக் கருத்தையே முஜாஹித்(ரஹ்) அவர்களிடமிருந்து இப்னு அபீ நஜாஹ்(ரஹ்) கூறினார்.

"இந்த வசனம் (திருக்குர்ஆன் 02:240), அவள் தன்னுடைய கணவன் வீட்டில்தான் இருக்கவேண்டும் என்பதை மாற்றிவிட்டது. எனவே, அவள் தான் விரும்பிய இடத்தில்இத்தா இருப்பாள். இதையே இந்த (திருக்குர்ஆன் 02:240 வது) வசனத் தொடர் குறிக்கிறது' என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார் என அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்கள்.

(இதைத் தெளிவுபடுத்தும் விதத்தில்) அதாஉ(ரஹ்) கூறினார்

அவள் விரும்பினால் தன் கணவனின் வீட்டில்இத்தா இருப்பாள். தனக்கு வழங்கப்பட்ட சாசனப்படி தங்கியிருப்பாள். அவள் விரும்பினால் வெளியேறி (வேறு எங்கேனும் தங்கி)க் கொள்வாள். ஏனெனில், அல்லாஹ் கூறினான்: ஆயினும், அவர்களாகவே வெளியேறித் தங்களுக்கு நன்மை பயக்கிறவற்றைச் செய்துகொண்டால் உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை.

தொடர்ந்து அதாஉ(ரஹ்) கூறினார்: பிறகு சொத்துரிமைச் சட்டம் (குறித்த 4:12 வது வசனம்) வந்து, தங்கும் வசதி (செய்துதர கணவன் சாசனம் செய்ய வேண்டுமென்ற முறை)யை

மாற்றிவிட்டது. எனவே, அவள் தான் விரும்பிய இடத்தில்இத்தா இருக்கலாம். அவளுக்குத் தங்கும் வசதி செய்து கொடுக்க வேண்டியது (கணவனின் உறவினர்களுக்குக் கடமையாக) இல்லை.

ஹதீஸ் 5345. ஸைனப் பின்த் அபீ ஸலமா(ரலி) அறிவித்தார்

தம் தந்தை (அபூ சுஃப்யான்(ரலி) அவர்களின் இறப்புச் செய்தி வந்தபோது (அன்னை) உம்மு ஹபீபா(ரலி) நறுமணத்தைக் கொண்டுவரச் சொல்லி அதனைத் தம் இரண்டு கைகளிலும் தடவினார்கள். மேலும், (பின்வருமாறு) கூறினார்கள்: எனக்கு இந்த நறுமணம் தேவையே இலை. ஆயினும், நபி(ஸல்) அவர்கள்அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் இறந்த ஒருவருக்காக மூன்று நாள்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க அனுமதியில்லை. ஆனால், கணவருக்காக நான்கு மாதம் பத்து நாள்கள் தவிர' என்று சொல்லக் கேட்டுள்ளேன்.

## விலைமாதின் வருமானமும், செல்லாத திருமணமும்.

“ஒருவர் தமக்கு மணமுடிக்கத் தடை செய்யப்பட்டுள்ள பெண்ணைத் தம்மை அறியாமல் மணந்துகொண்டால் அவர்கள் இருவரும் பிரித்துவைக்கப்படுவர். மண ஒப்பந்தத்தின்போது முடிவு செய்யப்பட்ட மணக்கொடை (மஹ்ர்) அவளுக்குக் கிடைக்கும் வேறெதுவும் கிடைக்காது' என்று ஹஸன் அல்பஸரீ(ரஹ்) கூறினார்கள். பிறகு (அக்கருத்திலிருந்து மாறி) அவளுக்கு (நிகரான பெண்களுக்குத் தரப்படும்) நிகர மணக்கொடை (மஹ்ருல் மிஸ்ல்) உண்டென்று கூறினார்கள்.

ஹதீஸ் 5346. அபூ மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நாய் விற்ற காசு, சோதிடனின் தட்சணை, விபசாரியின் வருமானம் ஆகியவற்றுக்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5347. அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்

பச்சை குத்திவிடுபவளையும், பச்சை குத்திக்கொள்பவளையும், வட்டி உண்பவனையும், வட்டி உண்ணக் கொடுப்பவனையும் நபி(ஸல்) அவர்கள் சபித்தார்கள். நாய் விற்ற காசு, விபசாரியின் வருமானம் ஆகியவற்றைத் தடை செய்தார்கள். மேலும், (உயிரினங்களின்) உருவப் படங்கள் வரைபவரையும் நபி(ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

ஹதீஸ் 5348. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

அடிமைப் பெண்கள் (விபசாரம் போன்ற தகாத வழிகளில்) பொருளீட்டுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள்.

## தாம்பத்திய உறவு கொள்ளப்பட்ட பெண்ணுக்குரிய மணக்கொடை, தாம்பத்திய உறவு தீர்மானிக்கப்படும் முறை, தாம்பத்திய உறவுக்கு முன் மணவிலக்கு அளித்தல் (ஆகியன குறித்த சட்டம்).

ஹதீஸ் 5349. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்

நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்ஒருவர் தம் மனைவியின் மீது விபசாரக் குற்றம் சாட்டினால் (சட்டம் என்ன?)' என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள் கூறினார்கள்:

அஜ்லான் குலத்தைச் சேர்ந்த (தம்பதியரான) இருவரை நபி(ஸல்) அவர்கள் பிரித்து வைத்துவிட்டு,உங்கள் இருவரில் ஒருவர் பொய் சொல்கிறார் என்பதை அல்லாஹ் அறிவான். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோரி (இறைவன் பக்கம்) திரும்புகிறவர் உண்டா? என்று கேட்க, (தம்பதியர்களான) அவர்கள் இருவருமே மறுத்தனர். பிறகும் நபி(ஸல்) அவர்கள்உங்கள்

இருவரில் ஒருவர் பொய் சொல்கிறார் என்பதை அல்லாஹ் அறிவான். எனவே, உங்களில் பாவமன்னிப்புக் கோரி (இறைவன் பக்கம்) திரும்புகிறவர் உண்டா? என்று கேட்க, அப்போதும் அவர்கள் இருவரும் மறுத்தனர். எனவே, (தம்பதியரான) அவர்கள் இருவரையும் நபி(ஸல்) அவர்கள் பிரித்துவைத்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அய்யூப்(ரஹ்) கூறினார்:

என்னிடம் அம்ர் இப்னு தீனார்(ரஹ்)இந்த ஹதீஸில் ஒரு விஷயத்தைத் தாங்கள் சொல்லவில்லை என்றே கருதுகிறேன்' என்று கூறிவிட்டு, பிறகு அவர்களே (பின்வருமாறு) கூறினார்கள்: (தம் மனைவி மீது விபசாரக் குற்றம் சாட்டிய) அந்த மனிதர்(மஹ்ராக நான் அளித்த) என் பொருள் (என்ன வது?)' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்(உம்முடைய குற்றச் சாட்டில்) நீர் உண்மையாளராய் இருந்தால், அவளுடன் நீர் ஏற்கெனவே தாம்பத்திய உறவு கொண்டுள்ளீர். (அதற்கு இந்த மஹ்ர் நிகராம்விடும்.) நீர் பொய் சொல்லியிருந்தால் (மனைவியை அனுபவித்துக்கொண்டு அவதூறும் கற்பித்த காரணத்தால்) அச்செல்வம் (மஹ்ர்) உம்மைவிட்டு வெகு தொலைவில் இருக்கிறது' என்று கூறினார்கள்.

## மணக்கொடை (மஹ்ர்) நிர்ணயிக்கப்படாத பெண்ணுக்கு உதவித் தொகை (முத்ஆ) வழங்குதல்.

ஏனெனில் மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

பெண்களை நீங்கள் தீண்டுவதற்கு முன், அல்லது அவர்களின் மணக்கொடையை நிர்ணயிப்பதற்கு முன் தலாக் சொன்னால் உங்களின் மீது குற்றமில்லை. (இந்நிலையில்) வசதியுள்ளவர் தன் தகுதிக்கேற்றவாறும், ஏழை தன் தகுதிக்கேற்றவாறும் அவர்களுக்குப் பயனுள்ள ஏதேனும் பொருட்களை (உதவித் தொகையை) நல்ல முறையில் வழங்கிட வேண்டும். (இது) நல்லோர் மீது கடமையாகும். (திருக்குர்ஆன் 02:236, 237)

மேலும், மணவிலக்கு அளிக்கப்பட்ட பெண்களுக்கு (கணவனிடமிருந்து) முறையான பராமரிப்புப் பெற உரிமையுண்டு. (இது) தீமையிலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்வோர் மீது கடமையாகும். இவ்வாறே அல்லாஹ் தன் வசனங்களை, நீங்கள் சிந்தித்து உணரும் பொருட்டு விளக்கிக் காட்டுகிறான். (திருக்குர்ஆன் 02:241, 242)

சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்யப்பட்ட பெண்ணை, அவளுடைய கணவர் தலாக் சொன்னபோது உதவித் தொகை (முத்ஆ) வழங்கிடுமாறு நபி(ஸல்) அவர்கள் கூறவில்லை.

ஹதீஸ் 5350. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்த அந்தத் தம்பதியரிடம் நபி(ஸல்) அவர்கள்,உங்கள் இருவரின் விசாரணையும் அல்லாஹ்விடம் உள்ளது. உங்கள் இருவரில் ஒருவர் பொய்யர்' என்று கூறிவிட்டு, (கணவரான உவைமிரைப் பார்த்து),இனி அவளின் மீது உமக்கு எந்த அதிகாரமும் கிடையாது' என்று கூறினார்கள்.

அதற்கு அவர்,இறைத்தூதர் அவர்களே! (அவளுக்கு நான் மணக்கொடையாக அளித்திருந்த) என்னுடைய பொருள் (என்னாவது)? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,உமக்கு (அந்த)ப் பொருள் கிடைக்காது. நீர் அவளின் மீது உண்மை(யான குற்றச்சாட்டைச்) சொல்லியிருந்தால், அவளுடைய கற்பை நீர் பயன்படுத்திக் கொள்வதற்காகப் பெற்ற அனுமதிக்கு அந்தப் பொருள் பகரமாம்விடும். நீர் அவளின் மீது பொய்(யான குற்றச்சாட்டைச்) சொல்லியிருந்தால், (அவளை அனுபவித்துக்கொண்டு அவதூறும் கற்பித்த காரணத்தினால்) அப்பொருள் உம்மைவிட்டு வெகுதொலைவில் உள்ளது' என்று கூறினார்கள்.

# அத்தியாயம் 69 (குடும்பச்) செலவுகள்.

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## குடும்பத்தாருக்குச் செலவிடுவதன் சிறப்பு.

அல்லாஹ் கூறினான்:

“(நபியே!) இவர்கள் உங்களிடம்,நாங்கள் எதை (தர்மமாக)ச் செலவிடவேண்டும்? என்று கேட்கிறார்கள். (தேவைக்குப் போக) மீதமுள்ளதை‘ என்று நீங்கள் சொல்லுங்கள். நீங்கள் இம்மை மறுமை குறித்துச் சிந்தித்து உணர வேண்டும் என்பதற்காக அல்லாஹ் தன் வசனங்களை இவ்வாறு விளக்கிக் காட்டுகிறான். (திருக்குர்ஆன் 02:219)

ஹஸன் அல்பஸரீ (ரஹ்) கூறினார்:

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)அஃப்வ் எனும் சொல், (குடும்பச் செலவுகள் போக) மீதத்தைக் குறிக்கும்.

ஹதீஸ் 5351. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவனின் திருப்பொருத்தத்தை நாடி ஒரு முஸ்லிம் தம் குடும்பத்தாருக்குச் செலவிட்டால் அதுவும் அவருக்கு தர்மமாக மாறும்.

என அபூ மஸ்வூத் உக்பா இப்னு அம்ர் (ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவர் (அப்துல்லாஹ் இப்னு யஸீத், அல்லது ஷுஅபா இப்னு ஹஜ்ஜாஜ் (ரஹ்)) கூறுகிறார்:

நான் அபூ மஸ்வூத் (ரலி) அவர்களிடம்,இதை நீங்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கிறீர்களா? (அல்லது நீங்களாக இதைக் கூறுகிறீர்களா?‘) என்று கேட்டதற்கு, அவர்கள்நபி (ஸல்) அவர்களிடமிருந்தே (இதை அறிவிக்கிறேன்)‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5352. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்“

அல்லாஹ்,ஆதமின் மகனே! (-மனிதனே! மற்றவர்களுக்காகச்) செலவிடு உனக்கு செலவிடுவேன்‘ என்று கூறினான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5353. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(கணவனை இழந்த) கைம்பெண்ணுக்காகவும் ஏழைக்காகவும் பாடுபடுகிறவர்,இறைவழியில் அறப்போர் புரிபவரைப் போன்றவராவார் அல்லதுஇரவில் நின்று வணங்கிப் பகலில் நோன்பு நோற்பவரைப் போன்றவராவார்‘.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5354 ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்தார்

நான் மக்காவில் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, நபி (ஸல்) அவர்கள் என்னை நலம் விசாரித்துவந்தார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! என்னிடம் செல்வம் உள்ளது. என்னுடைய செல்வம் முழுவதையும் (தர்மத்திற்காக) நான் மரணசாசனம் செய்துவிடட்டுமா? என்று கேட்டேன். அவர்கள்,வேண்டாம்‘ என்று பதிலளித்தார்கள். நான்பாதியை (மரணசாசனம் செய்துவிடட்டுமா)? என்று கேட்டேன். அதற்கும் அவர்கள்வேண்டாம்‘ என்று கூறினார்கள்.

நான், (அப்படியென்றால்,) மூன்றிலொரு பங்கை (நான் மரணசாசனம் செய்யட்டுமா)? என்று கேட்டேன்.

அதற்கவர்கள்மூன்றிலொரு பங்கா! மூன்றிலொரு பங்கு கூட அதிகம் தான். நீங்கள் உங்கள் வாரிசுகளை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாகவிட்டுச் செல்வதைவிட அவர்களைத் தன்னிறைவு கொண்டவர்களாகவிட்டுச் செல்வதே சிறந்ததாகும். நீங்கள் (அவர்களுக்காக) எதைச் செலவு செய்தாலும் அது நீங்கள் செய்த தர்மமே எந்த அளவிற்கென்றால், நீங்கள் உங்கள் மனைவியின் வாயில் இடுகிற ஒரு கவளம் உணவும் கூட (தர்மமாகவே உங்களுக்கு எழுதப்படும்). அல்லாஹ் உங்களுக்கு நீண்ட ஆயுளை அளிக்கக்கூடும். அப்போது மக்கள் சிலர் உங்களால் பயன் அடைந்திடவும், வேறு சிலர் உங்களால் இழப்புக்குள்ளாகவும் கூடும்' என்று கூறினார்கள்.

## மனைவி, மக்கள் நெருங்கிய உறவினர் ஆகியோருக்குச் செலவு செய்வது கடமையாகும்.

ஹதீஸ் 5355. அபூ ஸாலிஹ் தக்வான் அஸ்ஸம்மான்(ரஹ்) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்(ஒருவர் தமக்குத் தேவையானது போக மீதத்தை) தன்னிறைவான நிலையில் செய்யும் தர்மமே சிறந்த தர்மமாகும். மேலேயுள்ள (கொடுக்கும்) கைதான், தாழ்ந்துள்ள (வாங்கும்) கையை விடச் சிறந்ததாகும். உன் வீட்டாரிடமிருந்தே (உன் தர்மத்தை) நீ தொடங்கு!என்று கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறிவிட்டு, (கணவனிடம்) மனைவி, எனக்கு உணவளி, அல்லது என்னை மணவிலக்குச் செய்துவிடு' என்று கூறுகிறாள். அடிமை (தன் எசமானிடம்), எனக்கு உணவளி. என்னிடம் நீ வேலை வாங்கிக் கொள்!என்று கூறுகிறான். மகன் (தன் தந்தையிடம்), எனக்கு உணவளியுங்கள். (உங்களைவிட்டால் வேறு) யார்தான் எனக்குப் பொறுப்பு? என்று கூறுகிறான் எனக் கூறினார்கள். மக்கள், அபூ ஹுரைரா(ரலி) அவர்களே! இதையுமா நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றீர்கள்? என்று கேட்டனர். அதற்கு அவர்கள், இல்லை இது அபூ ஹுரைராவின் (என்னுடைய) கூற்றாகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5356. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன்னிறைவு பெற்ற நிலையில் (தேவை போக எஞ்சியதை) வழங்குவதே சிறந்த தர்மம் ஆகும். உன் வீட்டாரிடமிருந்தே (உன்னுடைய தர்மத்தைத்) தொடங்கு.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஒருவர் தம் குடும்பத்தாருக்கு ஓராண்டுக்குத் தேவையான உணவைச் சேமித்து வைப்பது (செல்லும் என்பது)ம், தம்மைச் சார்ந்தோருக்கு அவர் செலவிட வேண்டிய முறையும்.

ஹதீஸ் 5357. மஅமர் இப்னு ராஷித்(ரஹ்) அறிவித்தார்

சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) என்னிடம், தம் குடும்பத்தாருக்காக ஓர் ஆண்டுக்கான, அல்லது ஆண்டின் ஒரு பகுதிக்கான உணவை (முன்கூட்டியே) சேமித்து வைப்பவரைப் பற்றி நீங்கள் (ஏதேனும் ஹதீஸ்) கேள்விப்பட்டிருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். நான்(அப்படியொரு ஹதீஸ்) எனக்கு நினைவில்லை' என்று சொன்னேன். பிறகு, உமர்(ரலி) அறிவித்துள்ள ஒரு ஹதீஸ் என் நினைவில் வந்தது: நபி(ஸல்) அவர்கள் பனு நளீர் குலத்தாரின் பேரீச்சந் தோட்டத்தை விற்றுத் தம் குடும்பத்தாருக்கு, அவர்களின் ஓர் ஆண்டுக்கான உணவை (முன்கூட்டியே) சேமித்து வைப்பவர்களாக இருந்தார்கள்.

ஹதீஸ் 5358. முஹம்மது இப்னு ஜுபைர் இப்னி முத்யிம்(ரஹ்) அறிவித்தார்

நான் மாலிக் இப்னு அவ்ஸ்(ரலி) அவர்களிடம் சென்று ('ஃபதக் சொத்து தொடர்பான பிரச்சினை குறித்துக்) கேட்டேன். அவர்கள் கூறினார்கள்:

நான் ('கலீஃபா) உமர்(ரலி) (அழைத்தன் பேரில் அவர்கள்) இடம் சென்றேன். (சிறிது நேரம் அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தேன்.) அப்போது உமர்(ரலி) அவர்களின் மெய்க்காவலர்யர்ஃபஉ என்பவர் அவர்களிடம் வந்து,உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), ஸு பைர் இப்னு அவ்வாம்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோர் (தங்களைச் சந்திக்க) அனுமதி கேட்கிறார்கள். தாங்கள் அவர்களுக்கு அனுமதியளிக்கிறீர்களா? என்று கேட்டார். உமர்(ரலி),சரி என்று கூறி, அவர்களுக்கு (தம்மைச் சந்திக்க) அனுமதியளித்தார்கள். அவர்கள் (அனைவரும்) உள்ளே வந்து, சலாம் (முகமன்) சொல்லி அமர்ந்தார்கள். பிறகு சற்று நேரம் கழித்து யர்ஃபஉ (வந்து) உமர்(ரலி) அவர்களிடம்,அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் சந்திக்கத் தங்களுக்கு விருப்பமுண்டா? என்று கேட்டதற்கு உமர்(ரலி),ஆம்' என்று அவ்விருவருக்கும் (தம்மைச் சந்திப்பதற்கு) அனுமதியளிக்க, அவ்விருவரும் உள்ளே நுழைந்தனர். இருவரும் சலாம் சொல்லி அமர்ந்தனர்.

அப்பாஸ்(ரலி),இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! எனக்கும் இவருக்கும் (அலீக்கும்) இடையே தீர்ப்பளியுங்கள்' என்று கூறினார்கள்.

அப்போது உஸ்மான்(ரலி) அவர்களும் அவர்களின் நண்பர்களும் அடங்கிய குழுவினர்,இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! (இந்த) இருவரிடையே தீர்ப்பளித்து, ஒருவரின் பிடியிலிருந்து மற்றவரை விடுவித்து விடுங்கள்' என்று கூறினார்கள். அதற்கு உமர்(ரலி),பொறுங்கள். எந்த அல்லாஹ்வின் கட்டளையால் வானமும் பூமியும் நிலை பெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் உங்களிடம் கேட்கிறேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,(நபிமார்களான எங்களுக்கு) யாரும் வாரிசாக மாட்டார். நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தர்மமே! என்று இறைத்தூதராகிய தம்மைக் குறித்துச் சொன்னதை நீங்கள் அறிவீர்களா? என்று (அக்குழுவினரிடம்) கேட்டார்கள். அந்தக் குழுவினர்,அவ்வாறு நபி(ஸல்) அவர்கள் சொல்லத்தான் செய்தார்கள்' என்று பதிலளித்தார்கள்.

பிறகு உமர்(ரலி) (வாதியும் பிரதிவாதியுமான) அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கி,அல்லாஹ்வின் பொருட்டால் உங்கள் இருவரிடமும் கேட்கிறேன்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்வாறு சொன்னதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள்.

அவ்விருவரும், (ஆம்) அவ்வாறு நபி(ஸல்) அவர்கள் சொல்லியிருக்கிறார்கள்' என்று பதிலளித்தார்கள்.

உமர்(ரலி),அவ்வாறெனில், உங்களிடம் நான் இந்தப் பிரச்சினைக் குறித்துப் பேசுகிறேன். (போரிடாமல் கிடைத்த) இந்த (ஃபய்உ) செல்வத்திலிருந்து சிறிதைத் தன் தூதருக்கு உரியதாக அல்லாஹ் ஆக்கியிருந்தான். அவர்களைத் தவிர வேறெவருக்கும் அவன் அதை அளிக்கவில்லை' (என்று கூறிவிட்டு,)அல்லாஹ் எச்செல்வத்தை (எதிரிகளான) அவர்களின் பிடியிலிருந்து விடுவித்துத் தன் தூதரிடம் திருப்பி அளித்தானோ அச்செல்வம், உங்கள் குதிரைகளையும் ஒட்டகங்களையும் (அறப்போரிடுவதற்காக) நீங்கள் ஓட்டிச் சென்றதால் கிடைத்தன்று. மாறாக, அல்லாஹ், தான் நாடுகிறவர்களின் மீது தன்னுடைய தூதர்களுக்கு அதிகாரம் வழங்குகிறான். மேலும், அல்லாஹ் அனைத்தின் மீதும் பேராற்றல் உள்ளவனாக இருக்கிறான்' எனும் (திருக்குர்ஆன் 59:6 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

தொடர்ந்து,எனவே இது இறைத்தூதருக்கென ஒதுக்கப்பட்ட செல்வமாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைவிட்டுவிட்டு அதை நபி(ஸல்) அவர்கள் தமக்காகச் சேகரித்துக் கொள்ளவில்லை. அதை உங்களைவிடப் பெரிதாகக் கருதவுமில்லை. அதை உங்களுக்கு வழங்கவே செய்தார்கள். உங்களிடையே வழங்கவே செய்தார்கள். உங்களிடையே அதைப் பரவலாகப் பங்கிட்டார்கள். இறுதியில் (இறைத்தூதர் நிதியான) அதிலிருந்து இச்செல்வம்

மட்டுமே மீதமாயிற்று. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இச்செல்வத்திலிருந்து தம் வீட்டாரின் வருடச் செலவை அவர்களுக்கு வழங்கி வந்தார்கள். அப்படிக் கொடுத்த பிறகு மீதமுள்ளதை எடுத்து, அல்லாஹ்வின் (பாதையில் செலவிடும்) செல்வத்தை எந்த இனங்களில் செலவிடுவார்களோ அவற்றில் (சேமநல நிதியாக வைத்துச்) செலவிட்டு வந்தார்கள். இவ்வாறே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் வாழ்நாளில் செயல்பட்டுவந்தார்கள். எனவே, அல்லாஹ்வின் பொருட்டால் உங்களை கேட்கிறேன்: இதை நீங்கள் அறிவீர்களா? என்று கேட்டார்கள்.

அதற்கு (அங்கிருந்த குழுவினரான) அவர்கள்,ஆம் (அறிவோம்)' என்று பதிலளித்தார்கள். (பிறகு) அலீ(ரலி) அவர்களிடமும் அப்பாஸ்(ரலி) அவர்களிடமும்,உங்கள் இருவரையும் அல்லாஹ்வின் பொருட்டால் கேட்கிறேன்: நீங்கள் இதை அறிவீர்களா? என்று கேட்க, அவர்களிருவரும்ஆம் (அறிவோம்)' என்று பதிலளித்தார்கள்.

(தொடர்ந்து உமர்(ரலி),)பிறகு அல்லாஹ் தன் தூதரை அழைத்துக் கொண்டான். அப்போது (ஆட்சித் தலைவராகத் தேர்வு செய்யப்பட்ட) அபூ பக்ர்(ரலி),நான் அல்லாஹ்வின் தூதருடைய (ஆட்சிக்குப்) பிரதிநிதியாவேன்' என்று கூறி அ(ந்தச் செல்வத்)தைத் தம் கைவசம் எடுத்துக்கொண்டார்கள். அது விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செயல்பட்டதைப் போன்றே தாமும் செயல்பட்டார்கள்' (என்று கூறிவிட்டு,) அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ருலி) அவர்களையும் நோக்கி உமர்(ரலி),அப்போதும் நீங்கள் இருவரும் அபூ பக்ர்(ரலி) இப்படி இப்படி(ச் சொல்கிறார்கள் இறைத்தூதர் நிதியான எங்களுடைய சொத்தைத் தர மறுக்கிறார்கள்)' என்று சொன்னீர்கள்! (ஆனால்,) அபூ பக்ர்(ரலி) அந்த விஷயத்தில் உண்மையே கூறினார்கள் நல்ல விதமாக நடந்து கொண்டார்கள் நேர்வழி நடந்து வாய்மையையே பின்பற்றினார்கள் என்பதை அல்லாஹ் அறிவான். பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்களையும் அல்லாஹ் அழைத்துக்கொண்டான்.

அப்போது (ஆட்சித் தலைவராக தேர்வு செய்யப்பட்ட) நான்அல்லாஹ்வின் தூதரு(டைய ஆட்சி)க்கும் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கும் பிரதிநிதியாவேன்' என்று கூறி அ(ந்தச் செல்வத்)தை என்னுடைய ஆட்சிக் காலத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு என் கைவசம் எடுத்துக்கொண்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் (அவர்களுக்குப் பிறகு) அபூ பக்ர்(ரலி) அவர்களும் நடந்து கொண்ட முறைப்படி நானும் செய்லபட்டு வந்தேன்.

பிறகு நீங்கள் இருவரும் (இச்செல்வம் தொடர்பாகப் பேச) என்னிடம் வந்தீர்கள். உங்களிருவரின் பேச்சும் ஒன்றாகவே இருந்தது் இருவரின் நிலையும் ஒன்றுபட்டதாகவே இருந்தது.

"(அப்பாஸே!) நீங்கள் என்னிடம் உங்கள் சகோதரர் புதல்வரிடமிருந்து (-நபியிடமிருந்து) உங்களுக்குச் சேரவேண்டிய (வாரிசுப்) பங்கைக் கேட்டபடி வந்தீர்கள்.

(இதோ!) இவரும் (அலீயும்) என்னிடம் தம் மனைவிக்கு அவரின் தந்தை (ஆகிய நபி)யிடமிருந்து கிடைக்க வேண்டிய பங்கைக் கேட்டபடி வந்தார். அப்போது (உங்கள் இருவரிடமும்) நான்நீங்கள் இருவரும் விரும்பினால், அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தமும் அவனுக்களித்த உறுதிமொழியும் உங்கள் பொறுப்பாக இருக்க,அதன் விஷயத்தில், இறைத்தூதர்(ஸல்) அவர்களும், அபூ பக்ர்(ரலி), செயல்பட்டவாறும், நான் ஆட்சிக்கு வந்ததிலிருந்து செயல்பட்படியுமே நீங்கள் இருவரும் செயல்பட வேண்டும் எனும் நிபந்தனையின் அடிப்படையில் உங்கள் இருவரிடமும் இச்செல்வத்தை ஒப்படைத்துவிடுகிறேன். அவ்வாறில்லையாயின், இது தொடர்பாக என்னிடம் நீங்கள் இருவரும் பேச வேண்டாம்' என்று சொன்னேன். அதற்கு நீங்கள் இருவரும்அ(ந்)த (நிபந்தனையி)ன் அடிப்படையில் அதை எங்களிடம் ஒப்படைத்துவிடுங்கள்' என்று சொன்னீர்கள். அதன்படியே அ(ச்செல்வத்)தை உங்கள் இருவரிடமும் நான் ஒப்படைத்தேன்' என்று கூறினார்கள்.

பிறகு (அங்கிருந்த குழுவினரிடம்),அல்லாஹ்வின் பெயரால் உங்களிடம் கேட்கிறேன்: நான் அ(ச் செல்வத்)தை இவர்கள் இருவரிடமும் அ(ந்)த (நிபந்தனையி)ன்படியே ஒப்படைத்தேனா? (இல்லையா?)‘ என்று கேட்க, அதற்கு அக்குழுவினர்ஆம்‘ என்றார்கள்.

அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கி உமர்(ரலி),நான் உங்கள் இருவரையும் அல்லாஹ்வின் பொருட்டால் கேட்கிறேன்: நான் அ(ச் செல்வத்)தை உங்கள் இருவரிடமும் அ(ந்)த நிபந்தனையி)ன் படியே ஒப்படைத்தேனா? (இல்லையா?)‘ என்று கேட்க, அவ்விருவரும்ஆம்‘ என்று பதிலளித்தார்கள்.

உமர்(ரலி)இதைத் தவிர வேறொரு தீர்ப்பை நீங்கள் என்னிடம் கோருகிறீர்களா? எவனுடைய கட்டளையால் வானமும் பூமியும் நிலைபெற்றுள்ளனவோ அவன் மீது சத்தியமாக! நான் இந்த விஷயத்தில் இதைத் தவிர வேறெந்த தீர்ப்பையும் மறுமை நாள் நிகழும்வரை அளிக்கமாட்டான். உங்கள் இருவராலும் அதைப் பராமரிக்க முடியாவிட்டால், என்னிடம் அதை ஒப்படைத்துவிடுங்கள். அதை உங்களுக்கு பதிலாக நானே பராமரித்துக் கொள்வேன்‘ என்று கூறினார்கள்.

## கணவன் (ஊரில்) இல்லாதபோது மனைவி மற்றும் குழந்தைகளின் (பராமரிப்புச்) செலவு.

ஹதீஸ் 5339. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) ஹிந்த் பின்த் உத்பா(ரலி) (நபி(ஸல்) அவர்களிடம்) வந்து,இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) அபூ சுஃப்யான் கருமியான ஒருவர் அவருக்குரிய (செல்வத்)திலிருந்து எங்கள் பிள்ளைகளுக்கு நான் உணவளித்தால் அது என் மீது குற்றமாகுமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்நியாயமன அளவு தவிர (அவ்வாறு செய்ய) வேண்டாம்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5360. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு பெண், தன் கணவனின் சம்பாத்தியத்திலிருந்து அவனுடைய உத்தரவின்றி (அறவழியில்) செலவிட்டால், அதன் பிரதிபலனில் பாதி அவனுக்கும் கிடைக்கும்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் கூறினான்:

(தம் குழந்தைகளுக்குப்) பால்குடியை முழுமையாக்க விரும்புகிற(கண)வர்களுக்காகத் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு நிறைவான இரண்டு ஆண்டுகள் அமுதூட்டுவார்கள். அமுதூட்டும் அவர்களுக்கு உணவும் உடையும் முறைப்படி வழங்குவது குழந்தைக்குரிய தகப்பன் மீது கடமையாகும். எவருக்கும் அவரின் சக்திக்கேற்பவே தவிர கட்டளைகள் பிறப்பிக்கப்படமாட்டா. ஒரு தாய் தன் குழந்தைக்காகவோ, ஒரு தந்தை தன் குழந்தைக்காகவோ துன்புறுத்தப்படமாட்டார்கள். (தந்தை இறந்துவிட்டால்) அதைப் போன்ற கடமை வாரிசுகளின் மீதும் உண்டு. (தாய், தந்தை) இருவரும் ஆலோசனை கலந்து திருப்தி அடைந்து (ஈராண்டுகளுக்கு முன்பே) பால்குடிப் பழக்கத்தை நிறுத்திவிட விரும்பினால் இருவர் மீதும் எந்தக் குற்றமும் இல்லை. (திருக்குர்ஆன் 02:233)

மேலும், அல்லாஹ் கூறினான்:

அவள் கர்ப்பமானதிலிருந்து, இவன் பால்குடி மறக்கும் வரையில் முப்பது மாதங்கள் (மிக்க கஷ்டத்துடனேயே கழிகின்றன). (திருக்குர்ஆன் 46:15)

மேலும், அல்லாஹ் கூறினான்:

(குழந்தைக்குப் பாலூட்டுவதில் தம்பதியரான) உங்களுக்கிடையே பிரச்சினை தந்தையின் சார்பில் வேறொரு பெண் பாலூட்டுவாள். வசதியுடையவர் தம் வசதிக்கேற்பச் செலவு

செய்யட்டும்! யாருக்கு அளவான வசதி அளிக்கப்பட்டுள்ளதோ அவர் தமக்கு இறைவன் வழங்கியதிலிருந்து செலவழிக்கட்டும்! அல்லாஹ், தான் வழங்கிய தற்கேற்பவே தவிர எவருக்கும் கட்டளைகள் பிறப்பிப்பதில்லை. கஷ்டத்திற்குப் பின் வசதியை அல்லாஹ் வழங்குவான். (திருக்குர்ஆன் 65:6,7)

ஸு ஹ்ரீ (ரஹ்) (திருக்குர்ஆன் 02:233 வது வசனத்தின் விளக்கவுரையில்) கூறினார்கள்:

எந்தத் தாயும் தன் குழந்தை மூலம் (குழந்தையின் தந்தைக்கு) இடையூறு அளிப்பதை அல்லாஹ் தடை செய்துள்ளான். அது எவ்வாறெனில், தன்னால் குழந்தைக்குப் பாலூட்ட முடியாது எனத் தாய் மறுக்கிறாள். உண்மையில், தாய்ப்பால் தான் குழந்தைக்குச் சிறந்த உணவாகும். மற்றவர்களைவிடத் தாயே தன் குழந்தை மது அதிகப் பரிவும் பாசமும் கொண்டவள் ஆவாள். எனவே, (குழந்தையின்) தந்தை, தன் மீது இறைவன் விதித்துள்ள கடமையை (ஜீவனாம்சத்தை) அவளுக்கு நிறைவேற்றிய பின்பும் அவள் (பாலூட்ட) மறுக்கக் கூடாது. (இதைப் போன்றே,) குழந்தையின் தந்தை தன் குழந்தை மூலம் அதன் தாய்க்கு இடையூறு அளிக்கலாகாது. (உதாரணமாக) தாய் பாலூட்ட முன்வந்தும், அவளுக்கு இடரளிப்பதற்காக மற்றொரு பெண்ணைப் பாலூட்டுமாறு கூறி, தாயைத் தடுப்பது கூடாது. ஆனால், தாயும் தந்தையும் மனமொப்பி வேறோரு பெண்ணைப் பாலூட்ட ஏற்பாடு செய்தால் குற்றமாகாது. மேலும், இருவரின் திருப்தியோடும் ஆலோசனையின் பேரிலும் பால்குடியை நிறுத்த இருவரும் விரும்பினால் அதுவும் குற்றமாகாது.

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள) ஃபிஸால் எனும் சொல்லுக்குப்பால்குடியை நிறுத்துதல் என்று பொருள்.

## கணவனின் வீட்டு வேலைகளை மனைவி செய்வது.

ஹதீஸ் 5361. அலீ (ரலி) அறிவித்தார்

(என் துணைவி) ஃபாத்திமா திரிகை சுற்றுவதால் தம் கையில் ஏற்பட்ட காய்ப்பு குறித்து (தம் தந்தை) நபி (ஸல்) அவர்களிடம் முறையிடுவதற்காகச் சென்றார்கள். ஏனெனில், (போர்க் கைதிகளான) அடிமைகள் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்திருப்பதாக அவருக்குச் செய்தி வந்திருந்தது. ஆனால், ஃபாத்திமா நபி (ஸல்) அவர்களைக் காணவில்லை. தாம் வந்த நோக்கத்தை ஆயிஷா (ரலி) அவர்களிடம் ஃபாத்திமா கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் (வீட்டிற்கு) வந்தபோது, ஆயிஷா (ரலி) நபி (ஸல்) அவர்களிடம் விவரத்தைத் தெரிவிக்கவே, நபி அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது நாங்கள் எங்கள் படுக்கைக்குச் சென்றுவிட்டிருந்தோம். (நபியவர்களைப் பார்த்த) உடனே, நாங்கள் எழுந்திருக்கப்போனோம். அவர்கள்,நீங்கள் இருவரும் உங்கள் இடத்திலேயே இருங்கள்' என்று சொல்லிவிட்டு, அவர்களே வந்து எனக்கும் ஃபாத்திமாவுக்கும் இடையே அமர்ந்தார்கள். அவர்களின் பாதங்கள் என் வயிற்றில் பட்டு அதன் குளிர்ச்சியை நான் உணரும் அளவுக்கு (நெருக்கமாக அமர்ந்தார்கள்.) அப்போது அவர்கள்,நீங்கள் இருவரும் கேட்டதைவிடச் சிறந்ததை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?நீங்கள் இருவரும் உங்கள் படுக்கைக்குச் செல்லும்போது அல்லதுஉங்கள் விரிப்புக்குச் செல்லும் போது முப்பத்து மூன்று முறைசுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) என்றும், முப்பத்து மூன்று முறைஅல்ஹம்துலில்லாஹ் (அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்) என்றும், முப்பத்து நான்கு முறைஅல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்றும் சொல்லுங்கள். அது உங்களுக்குப் பணியாள் ஒருவர் இருப்பதை விடச் சிறந்ததாகும்' என்று கூறினார்கள்.

## மனைவியின் பணியாள்.

ஹதீஸ் 5362. அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்

ஃபாத்திமா அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் பணியாள் ஒருவரைக் கேட்டுச் சென்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள்,அதைவிடச் சிறந்த ஒன்றை நான் உனக்கு அறிவிக்கட்டுமா? நீ

உறங்கும்போது முப்பத்து மூன்றுமுறைசுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் மிகத் தூயவன்) என்றும், முப்பத்து மூன்று முறைஅல்ஹம்துலில்லாஹ் (அல்லாஹுவுக்கே புகழ் அனைத்தும்) என்றும், முப்பத்து நான்கு முறைஅல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்றும் சொல்' என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயையனா(ரஹ்) கூறினார்:

இந்த மூன்றில் (ஏதோ) ஒன்று முப்பத்து நான்கு (முறை ஓத வேண்டியது) ஆகும்.

(தொடர்ந்து அலீ(ரலி))இவற்றை (நபி(ஸல்) அவர்களிடம் கேட்ட) பின்னால் (ஒரு நாளும் ஓதாமல்) நான்விட்டதில்லை' என்று கூறினார்கள். அவர்களிடம்,ஸிஃப்பீன் போரின் இரவில் கூடவாவிட்டதில்லை? என்று கேட்கப்பட்டது. அவர்கள்,ஆம் ஸிஃப்பீன் போரின் இரவில் கூடத்தான்' என்று பதிலளித்தார்கள்.

## ஆண் தன் வீட்டுப் பணிகளைச் செய்வது.

ஹதீஸ் 5363. அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம்நபி(ஸல்) அவர்கள் வீட்டில் என்ன (வேலை) செய்து வந்தார்கள்? என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி),நபி(ஸல்) அவர்கள் தம் வீட்டாருக்காக (வீட்டு) வேலைகளைச் செய்துவந்தார்கள். தொழுகை அறிவிப்பை (பாங்கு சப்தத்தை)ச் செவிமடுத்தால் (தொழுகைக்காகப்) புறப்பட்டு விடுவார்கள்' என்று பதிலளித்தார்கள்.

## கணவன் செலவுக்கு(ப் பணம்) தராவிட்டால் அவனுக்குத் தெரியாமல் தனக்கும் தன் குழந்தைக்கும் வேண்டியதை நியாயமான அளவில் எடுத்துக்கொள்ள மனைவிக்கு உரிமை உண்டு.

ஹதீஸ் 5364. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) ஹிந்த் பின்த் உத்பா(ரலி), நபி(ஸல்) அவர்களிடம்இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) அபூ சுஃப்யான் கருமியான ஒருவர். எனக்கும் என் குழந்தைக்கும் போதுமான (பணத்)தை அவர் தருவதில்லை. நான் அவரிடமிருந்து அவருக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டதைத் தவிர (போதுமான தொகையை அவராகத் தரமாட்டார்)' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,உனக்கும் உன் குழந்தைக்கும் போதுமானதை நியாயமான அளவுக்கு நீ எடுத்துக்கொள்!என்று கூறினார்கள்.

## கணவனின் செல்வத்தையும் (அவன் வழங்கும்) செலவுத் தொகையையும் பாதுகாப்பது மனைவியின் பொறுப்பாகும்.

ஹதீஸ் 5365. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஒட்டகத்தில் பயணம் செய்த (அரபுப்) பெண்மணிகளிலேயே சிறந்தவர்கள் குறைஷிப் பெண்களேயாவர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்களில் இப்னு தாவூஸ், அபுஸ்ஸினாத் ஆகிய இருவரில்) ஒருவரின் அறிவிப்பில் காணப்படுவதாவது:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(ஒட்டகத்தில் பயணம் செய்த அரபுப் பெண்களிலேயே சிறந்தவர்கள்) நல்ல குறைஷிக் குலப் பெண்களாவர். அவர்கள் குழந்தைகளின் மீது அதிகப் பாசம் கொண்டவர்கள் தம் கணவனின் செல்வத்தை அதிகமாகப் பேணிக் காப்பவர்கள் ஆவர்.

முஆவியா (ரலி) மற்றும் இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியோரிடமிருந்து இவ்வாறே அறிவிக்கப்பட்டுள்ளது.

## நியாயமான வகையில் மனைவிக்கு ஆடை வழங்குவது (கணவனின் கடமையாகும்).

ஹதீஸ் 5366. அலீ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் எனக்குக் கோடு போட்ட பட்டு அங்கி ஒன்றை (அன்பளிப்பாக) வழங்கினார்கள். எனவே, அதை நான் அணிந்து கொண்டேன். (இதைக் கண்ட) நபி (ஸல்) அவர்களின் முகத்தில் கோபக் குறியை பார்த்தேன். உடனே, அதைப் பல துண்டுகளாக்கி எங்கள் (குடும்பப்) பெண்களிடையே பங்கிட்டுவிட்டேன்.

## கணவனின் குழந்தை (யைப் பராமரிக்கும்) விஷயத்தில் அவனுக்கு மனைவி ஒத்துழைப்பது (விரும்பத்தக்கதாகும்).

ஹதீஸ் 5367. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்

என் தந்தை (உஹுது ப் போரில்) இறந்துவிட்டார்கள். (இறக்கும்போது) ஏழு பெண் குழந்தைகளை அல்லதுஒன்பது பெண் குழந்தைகளை'விட்டுச் சென்றார்கள். எனவே, (கன்னி கழிந்த) ஒரு பெண்ணை நான் மணமுடித்துக் கொண்டேன். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், ஜாபிரே! நீ மணமுடித்துக்கொண்டாயா? என்று கேட்டார்கள். நான்ஆம்' என்று சொன்னேன். அவர்கள், கன்னிப் பெண்ணையா? கன்னி கழிந்த பெண்ணையா (யாரை மணந்தாய்)? என்று கேட்டார்கள். நான், இல்லை கன்னி கழிந்த பெண்ணைத் தான் (மணந்தேன்)' என்று பதிலளித்தேன். நபி (ஸல்) அவர்கள், கன்னிப் பெண்ணை மணந்து, நீ அவளுடனும் அவள் உன்னுடனும் கூடிக் குலாவி விளையாடலாமே நீ அவளுக்கும் அவள் உனக்கும் மகிழ்வூட்டலாமே!என்று கூறினார்கள்.

அதற்கு நான் நபி (ஸல்) அவர்களிடம், (என் தந்தை) அப்துல்லாஹ் (ரலி), பல பெண் மக்களைவிட்டுவிட்டு இறந்துவிட்டார்கள். (வயதில்) அந்தப் பெண் மக்களைப் போன்ற ஒரு (இளம் வயதுப்) பெண்ணை (மணமுடித்து) அவர்களிடம் அழைத்துச் செல்வதை நான் விரும்பவில்லை. எனவே, நான் அவர்களைப் பராமரித்துச் சீராட்டி வளர்க்கும் (அனுபவமுள்ள) ஒரு பெண்ணை மணந்துகொண்டேன்' என்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் உனக்குசுபிட்சத்தை அளிப்பானாக அல்லதுநன்மையைப் பொழிவானாக என்று கூறினார்கள்.

## ஏழை (தமக்குக் கிடைக்கும் பொருளைத்) தம் வீட்டாருக்கே செலவிடுதல்.

ஹதீஸ் 5368. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, நான் அழிந்துவிட்டேன்' என்ற கூறினார். நபி (ஸல்) அவர்கள்ஏன் (என்ன நடந்தது)? என்று கேட்டார்கள். அவர், நான் ரமளான் மாதத்தில் (பகலில்) என் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்' என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஓர் அடிமையை விடுதலை செய்து விடுவீராக' என்று கூறினார்கள். அதற்கு அவர்என்னிடம் அடிமை இல்லையே!என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள்அப்படியென்றால், தொடர்ந்து இரண்டு மாதங்கள் நோன்பு நோற்பீராக' என்று கூறினார்கள். அதற்கு அவர், அது என்னால் இயலாது' என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், அப்படியென்றால், அறுபது ஏழைகளுக்கு உணவளிப்பீராக' என்று கூறினார்கள். அம்மனிதர், என்னிடம் வசதி இல்லையே!என்று கூறினார். அப்போது நபி (ஸல்) அவர்களிடம் பேரீச்சம் பழம் உள்ள ஒரு கூடை (அரக்) கொண்டு வரப்பட்டது. உடனே அவர்கள், கேள்வி கேட்டவர் எங்கே? என்று கேட்டார்கள். அவர், இதோ! நானே அது' என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், இதை

தர்மம் செய்யுங்கள்' என்று கூறினார்கள். அதற்கு அவர்எங்களை விட அதிகத் தேவையுள்ள ஒருவருக்கா தர்மம் செய்யச் சொல்கிறீர்கள்? இறைத்தூதர் அவர்களே! உங்களை சத்தியத்துடன் அனுப்பிய (இறை)வன் மீது ஆணையாக! மதீனாவின் இரண்டு மலைகளுக்கிடையே எங்களைவிட அதிகத் தேவையுள்ள குடும்பத்தார் எவரும் இல்லை' என்று கூறினார். உடனே நபி(ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்தார்கள். பிறகு,அப்படியென்றால் நீங்கள்தாம் (அதற்கு உரியவர்கள்)' என்று கூறினார்கள்.

## "(குழந்தையின் தந்தை இறந்துவிட்டால் அதைப் பராமரிக்கும்) அதைப் போன்ற கடமை வாரிசுகளின் மீதும் உண்டு' எனும் (திருக்குர்ஆன் 02:233 வது) வசனத் தொடரும், குழந்தைக்குப் பாலூட்டும் பொறுப்பில் தாய்க்குப் பங்கு உண்டா? என்பதும்.

அல்லாஹ் கூறினான்:

மேலும், அல்லாஹ் இரண்டு மனிதர்களை ஓர் உதாரணமாகக் கூறுகிறான்: அவ்விருவரில் ஒருவன் ஊமை(யான அடிமை) எந்தப் பொருளின் மீதும் சக்தி அற்றவன். தன் எசமானுக்குப் பெரும் சுமையாகவும் அவன் இருக்கிறான் எங்கு அவனை அனுப்பினாலும் அவன் யாதொரு நன்மையும் கொண்டு வரமாட்டான். மற்றவனோ தானும் நேர்வழியில் இருந்துகொண்டு, (பிறரையும் நன்மை செய்யுமாறு) நீதியைக் கொண்டு ஏவுகிறான். இவ்விருவரும் சமம் ஆவார்களா? (திருக்குர்ஆன் 16:76)

ஹதீஸ் 5369. (நபி(ஸல்) அவர்கள் துணைவியாரான) உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்

(நபி(ஸல்) அவர்களிடம்) நான்,இறைத்தூதர் அவர்களே! என் (முதல் கணவரான) அபூ ஸலமாவின் பிள்ளைகளுக்குச் செலவழிப்பதால் எனக்கு நன்மை உண்டா? நான் அவர்களை இன்னின்னவாறு (தேவை உள்ளவர்களாக)விட்டுவிட விரும்பவில்லை. அவர்களும் என் பிள்ளைகளே!என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,ஆம்! அவர்களுக்காக நீ செலவிட்ட(தால் அ)தற்கான நன்மை உனக்கு உண்டு' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5370. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(அபூ சுஃப்யான்(ரலி) அவர்களின் துணைவியாரான) ஹிந்த் பின்த் உத்பா(ரலி) (நபி(ஸல்) அவர்களிடம் வந்து)இறைத்தூதர் அவர்களே! அபூ சுஃப்யான் கருமியான ஒருவர். எனக்கும் என் குழந்தைக்கும் போதுமான(பணத்)தை அவரின் செல்வத்திலிருந்து நான் எடுத்துக்கொள்வதால் என்மீது குற்றம் உண்டாகுமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்நியாயமான அளவிற்கு நீ எடுத்துக்கொள்' என்று கூறினார்கள்.

## "ஒரு (கடன்) சுமையை, அல்லது நலிந்தவர்க(ளான வாரிசுக)ளைவிட்டுச் செல்வோரின் பொறுப்பு என்னுடையதாகும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 5371. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

கடன்பட்ட நிலையில் இறந்துவிட்ட ஒருவர் (உடைய ஜனாஸா) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டால்,இவர் தம் கடனை அடைக்கப் பொருள் எதையும்விட்டுச் சென்றுள்ளாரா? என்று கேட்பது வழக்கம். அவர் (தம் கடனை அடைக்கத்) தேவையானதைவிட்டுச் சென்றுள்ளார்' என்று தெரிவிக்கப்பட்டால், (அவருக்கு ஜனாஸா) தொழுகை நடத்துவார்கள். இல்லையென்றால், முஸ்லிம்களிடம்உங்கள் தோழருக்காகத் தொழுங்கள்' என்று கூறிவிடுவார்கள். நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் பல வெற்றிகளை அளித்தபோது அவர்கள்,நான் இறைநம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உயிர்களைவிட நெருக்கமானவன் ஆவேன். எனவே, இறைநம்பிக்கையாளர்களில் (தம் மீது) கடனைவிட்டுவிட்டு

இறந்துவிடுகிறவரின் கடனை அடைப்பது என் பொறுப்பாகும். ஒரு செல்வத்தைவிட்டுச்செல்கிறவரின் வாரிசுகளுக்கு அது உரியதாகும்‘ என்று கூறினார்கள்.

## அடிமைப் பெண்களும் அவர்கள் அல்லாத (சுதந்திரமான)வர்களும் செவிலித் தாயாக இருப்பது.

ஹதீஸ் 5372. நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான உம்மு ஹபீபா(ரலி) கூறினார்.

நான் (ஒரு முறை)இறைத்தூதர் அவர்களே! என் சகோதரியான அபூ சுஃப்யானின் புதல்வியைத் தாங்கள் மணந்துகொள்ளுங்கள்‘ என்று (நபி(ஸல்) அவர்களிடம்) சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,இதை நீயே விரும்புகிறாயா? என்று கேட்டார்கள். நான்,ஆம்! (மனைவியென்று) தங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் இல்லையே! (தங்களுக்குத் துணைவியாகும்) பாக்கியத்தில் என்னுடன் என் சகோதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்‘ என்று சொன்னேன்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்அ(வளை மணப்ப)து எனக்கு அனுமதிக்கப்பட்டதன்று என்றார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! தாங்கள் அபூ ஸலமாவின் மகள்துர்ரா‘வை மணந்து கொள்ள விரும்புகிறீர்கள் என்று நாங்கள் பேசிக் கொண்டிருக்கிறோமே! என்று சொன்னேன். அதற்கு அவர்கள், (அதாவது என் துணைவியார்) உம்மு ஸலமாவுக்கு (முந்தைய கணவன் மூலம்) பிறந்த மகளையா? என்று கேட்க, நான்ஆம்‘ என்று சொன்னேன். அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! அவள் (-உம்முஸலமாவின் மகள்-) என்னுடைய மடியில் வளர்ப்பு மகளாக (இருந்து வருகிறாள். அப்படி) இல்லாவிட்டாலும் கூட, அவளை நான் மணக்கமுடியாது. (ஏனெனில்,) அவள் என் பால்குடி சகோதரரின் புதல்வியாவாள். எனக்கும் (அவளுடைய தந்தை) அபூ ஸலமாவிற்கும்ஸு வைபா (எனும் அடிமைப் பெண்) பாலூட்டியிருக்கிறார். எனவே, உங்கள் பெண் மக்களையோ உங்கள் சகோதரிகளையோ (மணந்து கொள்ளும்படி) என்னிடம் கோராதீர்கள்!என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உர்வா(ரஹ்) கூறினார்:

(ஸு வைபா, அபூ லஹபின் அடிமைப் பெண் ஆவார்.) ஸு வைபாவை அபூ லஹப் விடுதலை செய்திருந்தார்.

# அத்தியாயம் 70 உணவு வகைகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## திருக்குர்ஆன் 20:81 , 23:51, 2:267 வது இறைவசனங்கள்

"நாம் உங்களுக்கு அளித்துள்ள தூய்மையான உண்பொருட்களை உண்ணுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 20:81 வது) இறைவசனமும்,நீங்கள் சம்பாதித்த நல்ல பொருள்களிலிருந்து செலவு செய்யுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 02:267 வது) இறைவசனமும்,(தூதர்களே) தூய்மையானவற்றிலிருந்து உண்ணுங்கள் நற்செயல் புரியுங்கள். நீங்கள் செய்பவற்றை நான் நன்கறிபவன் ஆவேன்' எனும் (திருக்குர்ஆன் 23:51 வது) இறைவசனமும்.

ஹதீஸ் 5373. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பசியாளருக்கு உணவளியுங்கள். நோயாளியை நலம் விசாரியுங்கள். (போர்க் கைதியை (எதிரியிடமிருந்து) விடுவியுங்கள்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) கூறினார்:

(இந்த ஹதீஸின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)அல்அனீ எனும் சொல்லுக்குக்கைதி என்று பொருள்.

ஹதீஸ் 5374. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

முஹம்மத்(ஸல்) அவர்கள் இறக்கும் வரை அவர்களின் குடும்பத்தார் (தொடர்ந்து) மூன்று நாள்கள் வயிறு நிரம்ப உணவு உண்டதில்லை.

ஹதீஸ் 5375. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

எனக்கு (பசியினால்) கடும் சோர்வு ஏற்பட்டது. எனவே, நான் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களைச் சந்தித்தேன். அப்போது நான் அவர்களிடம், அல்லாஹ்வின் வேதத்திலிருந்து ஏதேனும் ஒரு வசனத்தை ஓதும்படி கேட்டேன். உடனே அவர்கள் தம் வீட்டினுள் நுழைந்து குர்ஆன் வசனத்தை எனக்கு ஓதிக் காட்டினார்கள். (அங்கிருந்து வெளியேறி) சற்று தூரம்தான் நான் நடந்திருப்பேன். அதற்குள் சோர்வினாலும் பசியினாலும் நான் முகம் குப்புற விழுந்துவிட்டேன். (மூர்ச்சை தெளிந்து பார்த்தபோது) என் தலைமாட்டில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நின்றிருந்தார்கள். அவர்கள் (என்னை நோக்கி),அபூ ஹு ரைரா! என்று அழைத்தார்கள். நான்,இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன், இறைத்தூதர் அவர்களே! கட்டளையிடுங்கள்' என்று பதிலளித்தேன். அவர்கள் என் கரத்தைப் பிடித்து என்னைத் தூக்கி நிறுத்தினார்கள். எனக்கேற்பட்டிருந்த நிலையைப் புரிந்துகொண்டார்கள். என்னைத் தம்முடன் அழைத்துக்கொண்டு தம் இல்லம் சென்றார்கள். எனக்கு ஒரு பெரிய பாத்திரத்தில் பால் வழங்க உத்தரவிட்டார்கள். நான் அதிலிருந்து (பால்) அருந்தினேன். பிறகு நபி(ஸல்) அவர்கள்இன்னும் அருந்துங்கள், அபூ ஹிர்!என்று கூறினார்கள். அவ்வாறே நான் மறுபடியும் அருந்தினேன். பிறகுமீண்டும் (அருந்துங்கள்)' என்றார்கள். நான் வயிறு நிரம்பும் வரை மீண்டும் அருந்தினேன். எனவே, வயிறு (உப்பி) பாத்திரத்தை போன்றாகி விட்டது.

பிறகு, நான் உமர்(ரலி) அவர்களைச் சந்தித்து, அவர்களிடம் எனக்கு நடந்த நிகழ்ச்சியைத் தெரிவித்தேன்.(என் பசியைப் போக்கும் பொறுப்பினை) உங்களைவிட அதற்கு மிகவும் தகுதியுடையவரிடம் அல்லாஹ் ஒப்படைத்துவிட்டான், உமரே! அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைவிட நான் இறைவசனத்தை நன்கு ஓதத் தெரிந்தவனாக இருந்துகொண்டே அதை

எனக்கு ஓதிக் காட்டும்படி உங்களிடம் கேட்டேன்‘ என்று சொன்னேன். உமர்(ரலி),அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை (என் வீட்டிற்கு) அழைத்துச் சென்று (உங்களுக்கு உணவளித்து) இருந்தால், அதுவே எனக்கு (விலை உயர்ந்த) சிவப்பு ஒட்டகங்கள் கிடைப்பதைவிட விருப்பமான தாய் இருந்திருக்கும்‘ என்று கூறினார்கள்.

## உணவு உண்ணும்போது அல்லாஹ்வின் பெயர் (பிஸ்மில்லாஹ்) கூறுவதும், வலக்கரத்தால் உண்பதும்.

ஹதீஸ் 5376. (நபி(ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனாகிய) உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மடியில் வளர்ந்துவந்த சிறுவனாக இருந்தேன். (ஒரு முறை) என் கை உணவுத்தட்டில் (இங்கும் அங்குமாக) அலைந்து கொண்டிருந்தது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம்,சிறுவனே! அல்லாஹ்வின் பெயரைச் சொல். உன் வலக் கரத்தால் சாப்பிடு. உன(து கை)க்கு அருகிலிருக்கும் பகுதியிலிருக்கும் எடுத்துச் சாப்பிடு!என்று கூறினார்கள். அதன் பிறகு இதுவே நான் உண்ணும் முறையாக அமைந்தது.

## (கைக்கு) அருகிலிருக்கும் பகுதியிலிருந்து எடுத்து உண்பது.

அனஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். ஒவ்வொருவரும் அவரவர் (கைக்கு) அருகிலிருக்கும் பகுதியிலிருந்து உண்ணுங்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5377. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஸலமா(ரலி) (அவர்களுக்கு) அவர்களின் (முதல் கணவர் மூலம் பிறந்த) புதல்வரான உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) கூறினார்

நான் ஒரு நாள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் உணவு உண்டேன். தட்டின் ஓரங்களிலிருந்து எடுத்து உண்ணத் தொடங்கினேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம்,உன(து கை)க்கு அருகிலிருக்கும் பகுதியிலிருந்து எடுத்துச் சாப்பிடு‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5378. வஹ்ப் இப்னு கைசான் அபீ நுஐம்(ரஹ்) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உணவொன்று கொண்டுவரப்பட்டது. அவர்களுடன் அவர்களின் வளர்ப்பு மகன் உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் பெயரைச் சொல். உன(து கை)க்கு அருகிலிருக்கும் பகுதியிலிருந்து எடுத்து உண்‘ என்று கூறினார்கள்.

## உடனிருப்பவர் தம் செயலால் அருவருப்பு அடையவில்லை என்றால் (உணவருந்தும்) ஒருவர் உணவுத் தட்டின் நாலா பாகங்களிலும் (உணவுப் பொருளைத்) தேடுவது (ஒழுக்கக்கேடு ஆகாது).

ஹதீஸ் 5379. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களைத் தையற்காரர் ஒருவர் தாம் தயாரித்த உணவுக்காக (விருந்துக்கு) அழைத்தார். நானும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் சென்றேன். அப்போது அவர்கள் உணவுத் தட்டின் நாலா பாகங்களிலும் சுரைக்காயைத் தேடுவதை கண்டேன். அன்றிலிருந்து நான் சுரைக்காயை விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன்.

## உணவு உண்பது உள்ளிட்ட செயல்களில் வலக் கரத்தைப் பயன்படுத்துவது.

உமர் இப்னு அபீ ஸலமா(ரலி) கூறினார்

என்னிடம் நபி(ஸல்) அவர்கள்உன் வலக் கரத்தால் சாப்பிடு‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5380. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (உளூ மற்றும் குளியல் மூலம்) தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் போதும், அவர்கள் காலணி அணியும் போதும், தலைவாரிக் கொள்ளும்போதும் தம்மால் இயன்ற வரை வலப்பக்கத்திலிருந்து தொடங்குவதையே விரும்பிவந்தார்கள்.

அறிவிப்பாளர் ஷு அபா இப்னு ஹஜ்ஜாஜ்(ரஹ்) கூறினார்.

(இந்த ஹதீஸை) இதற்கு முன் (இராக்கில் உள்ள)வாஸித் நகரில் வைத்து அஷ்அஸ்(ரஹ்) அறிவித்தபோதுநபி(ஸல்) அவர்கள் தம் செயல்கள் அனைத்திலும் (வலப் பக்கத்தை விரும்பக் கூடியவர்களாக இருந்தார்கள்)‘ என்று (கூடுதலாகக்) கூறியிருந்தார்கள்.

## வயிறு நிரம்பும் அளவுக்கு உண்ணுதல்

ஹதீஸ் 5381. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

அபூ தல்ஹா (ஸைத் அல்அன்சாரி(ரலி) தம் துணைவியார் உம்மு சுலைம்(ரலி) அவர்களிடம்,நான் நபி(ஸல்) அவர்களின் குரலைப் பலவீனமானதாகக் கேட்டேன். அதில் நான் (அவர்களுக்கு இருக்கும்) பசியை அறிந்துகொண்டேன். உன்னிடம் (உணவு) ஏதேனும் இருக்கிறதா? என்று கேட்டார்கள். எனவே, உம்மு சுலைம்(ரலி) வாற்கோதுமை ரொட்டித் துண்டுகள் சிலவற்றை எடுத்து வந்தார்கள். பிறகு, உம்மு சுலைம் அவர்கள் தங்களின் முகத்திரை ஒன்றை எடுத்து அதன் ஒரு பகுதியால் ரொட்டியைச் சுருட்டி என்னுடைய கை (அக்குள)க்குக் கீழே மறைத்து வைத்துவிட்டு, மற்றொரு பகுதியை எனக்கு மேல்துண்டாக ஆக்கினார்கள். பிறகு என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுப்பினார்கள். நான் அதைக் கொண்டு சென்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பள்ளிவாசலில் கண்டேன். அவர்களுடன் மக்களும் இருந்தனர். நான் அவர்களுக்கு முன்னால் (போய்) நின்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்உன்னை அபூ தல்ஹா அனுப்பினாரா? என்று கேட்டார்கள். நான்,ஆம்‘ என்று சொன்னேன்.உணவுடனா அனுப்பியுள்ளார்? என்று அவர்கள் கேட்க, நான்ஆம் என்றேன்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடன் இருந்தவர்களிடம்,எழுந்திருங்கள்‘ என்று சொல்லிவிட்டு நடக்கலானார்கள். நான் அவர்களுக்கு முன்னால் நடந்தேன். இறுதியில் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம் வந்(து விவரத்தைத் தெரிவித்)தேன். உடனே அபூ தல்ஹா(ரலி) (என் தாயாரிடம்)உம்மு சுலைமே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களுடன் வந்திருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு உணவளிக்க நம்மிடம் உணவு இல்லையே!என்று கூறினார்கள். (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி),அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்‘ என்று கூறினார்கள். உடனே அபூ தல்ஹா(ரலி) (தாமே நபி(ஸல்) அவர்களை முன்சென்று வரவேற்பதற்காகப்) போய் இறைத்தூதர்(ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். அபூ தல்ஹா அவர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் வந்து வீட்டுக்குள் நுழைந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,உம்மு சுலைமே! உன்னிடமிருப்பதைக் கொண்டுவா!என்று கூறினார்கள். உடனே உம்மு சுலைம் அவர்கள் அந்த ரொட்டியைக் கொண்டு வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதைத் துண்டு துண்டாகப் பிய்க்கும்படி பணித்தார்கள். அவ்வாறே அது பிய்க்கப்பட்டது. பிறகு, உம்மு சுலைம்(ரலி) தோல் பையிலிருந்து வெண்ணெய் எடுத்துப் பிழிந்து அதை உருக்கினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறைவன் நாடிய (பிஸ்மில்லாஹ் மற்றும் இதர பிரார்த்தனை வரிகள் சில)வற்றைக் கூறினார்கள். பிறகுபத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதியுங்கள்‘ என்று (அபூ தல்ஹாவிடம்) கூறினார்கள்.

அவ்வாறே அவர்களுக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதியளித்தார்கள். அப்போது அவர்கள் (பத்துப் பேரும்) வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்)

அவர்கள்இன்னொரு பத்துப் பேருக்கு (உள்ளே) வர அனுமதி அளியுங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே அபூ தல்ஹா(ரலி) அனுமதியளிக்க, அவர்களும் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு,மேலும் பத்துப் பேருக்கு அனுமதியுங்கள்' என்று கூற, அபூ தல்ஹாவும் அனுமதியளித்தார்கள். அவர்களும் வயிறு நிரம்பச் சாப்பிட்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு பத்துப் பேருக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதி கொடுத்தார்கள். மக்கள் அனைவரும் (இவ்வாறே) வயிறு நிரம்பும் வரை உண்டார்கள். (அப்படி உண்ட) அந்த மக்கள் எண்பது பேர் ஆவர்.

ஹதீஸ் 5382. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நூற்றி முப்பது பேர் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்உங்களில் யாரிடமாவது உணவேதும் இருக்கிறதா? என்று கேட்டார்கள். அப்போது ஒரு மனிதரிடம்ஒரு ஸாஉ அல்லதுஅது போன்ற அளவு உணவு(மாவு)தான் இருந்தது. அது தண்ணீர் கலந்து குழைக்கப்பட்டது.

(சற்று நேரத்திற்குப்) பின் மிக உயரமான பரட்டைத் தலை கொண்ட இணைவைக்கும் மனிதர் ஒருவர் ஆடுகளை ஓட்டியபடி வந்தார். நபி(ஸல்) அவர்கள் அவரிடம்,(இவை) விற்பதற்கா? அல்லது அன்பளிப்பா? என்று கேட்டார்கள்.

அவர்இல்லை. விற்பதற்காகத்தான் (கொண்டு வந்துள்ளேன்)' என்று பதிலளித்தார்.

அவரிடமிருந்து ஓர் ஆட்டை நபி(ஸல்) அவர்கள் விலைக்கு வாங்கினார்கள். அது அறு(த்து சமை)க்கப்பட்டது. அதன் ஈரலைப் பொறிக்கும்படி நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! எங்கள் நூற்றி முப்பது பேரில் ஒருவர் விடாமல் அனைவருக்கும் அதன் ஈரலில் ஒரு துண்டை நபி(ஸல்) அவர்கள் துண்டித்துத் தந்தார்கள். அங்கிருந்தவருக்கு அவரிடமே (நேரடியாக) அதைக் கொடுத்துவிட்டார்கள். அங்கில்லாதவருக்காக எடுத்து(ப் பாதுகாத்து) வைத்தார்கள். பிறகு இரண்டு (அகன்ற) தட்டுகளில் அந்த ஆட்டு இறைச்சியை வைத்தார்கள். நாங்கள் அனைவரும் வயிறு நிரம்ப உண்டோம். அப்படியிருந்தும் இரண்டு தட்டுகளிலும் மீதியிருந்தது. எனவே, நான் அதை ஒட்டகத்தின் மீது ஏற்றிச் சென்றேன்.

ஹதீஸ் 5383. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இரண்டு கறுப்பு நிறப் பொருள்களான பேரீச்சம்பழம் மற்றும் தண்ணீரை அருந்தி நாங்கள் வயிறு நிரம்பி இருந்தபோது நபி(ஸல்) அவர்கள் இறந்தார்கள்.

## "கண் பார்வையற்றவர், கால் ஊனமுற்றவர் மற்றும் நோயாளி ஆகியோர் (பிறர் இல்லங்களுக்குச் சென்று உணவருந்துவதில் அவர்கள்) மீது எந்தக் குற்றமும் இல்லை' எனும் (திருக்குர்ஆன் 24:61 வது) இறைவசனமும், பயணச் செலவைப் பகிர்ந்துகொள்வதும், உணவைச் சேர்ந்து உண்பதும்.

ஹதீஸ் 5384. சுவைத் இப்னு நுஅமான்(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் கைபருக்குச் சென்றோம். நாங்கள்சஹ்பா எனும் இடத்தில் இருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உணவைக் கொண்டுவரும்படி கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா இப்னு ஸயீத்(ரஹ்) கூறினார்: ஸஹ்பா என்பது கைபரிலிருந்து ஒரு மாலை நேரப் பயணத் தொலைவில் உள்ள இடமாகும்.

அப்போது மாவுதான் கொண்டுவரப்பட்டது. அதை நாங்கள் மென்று சாப்பிட்டோம். பிறகு நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டு வரும்படி பணித்தார்கள். (தண்ணீர் வந்தவுடன்) வாய் கொப்பளித்தார்கள். நாங்களும் கொப்பளித்தோம். எங்களுடன் மஃக்ரிப் தொழுகையைத் தொழுதார்கள். (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்),இந்த ஹதீஸை நான் யஹ்யா இப்னு ஸயீத்(ரஹ்) அவர்களிடமிருந்து முதலாவதாகவும் இறுதியாகவும் கேட்டேன்' என்று கூறுகிறார்கள்.

## மிருதுவான ரொட்டியும், உணவு மேசை மற்றும் விரிப்பின் மீது (வைத்துச்) சாப்பிடுவதும்.

ஹதீஸ் 5385. கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் அனஸ்(ரலி) அவர்களிடம் இருந்தோம். அவர்களுடன் அவர்களுக்காக ரொட்டி தயாரிப்பவர் ஒருவரும் இருந்தார். அப்போதுநபி(ஸல்) அவர்கள் தாம் இறக்கும் வரை மிருதுவான ரொட்டியையோ, வெந்நீரால் முடி களையப்பட்டுத் தோலுடன் சமைக்கப்பட்ட (இளம்) ஆட்டையோ உண்டதில்லை' என்று அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 5386. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பெரிய வட்டிலில் (ஸஹனில்) வைத்து (உணவு) உண்டதை ஒருபோதும் நான் அறிந்ததில்லை. அவர்களுக்காக ஒருபோதும் மிருதுவான ரொட்டி தயாரிக்கப்பட்டதில்லை. மேலும், அவர்கள் உணவு மேசையில் (அமர்ந்து) ஒருபோதும் சாப்பிட்டதில்லை.

இதன் அறிவிப்பாளரான கத்தாதா(ரஹ்) அவர்களிடம்,அப்படியென்றால், அவர்கள் எதில் அமர்ந்து உண்டுவந்தார்கள்? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,உணவு விரிப்பில்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5387. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஸஃபிய்யா(ரலி) அவர்களுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கி, (கைபருக்கும் மதீனாவுக்கும் இடையே மூன்று நாள்கள்) தங்கினார்கள். அப்போது நான் அவர்களின் வலீமா - மணவிருந்துக்காக முஸ்லிம்களை அழைத்தேன். நபி(ஸல்) அவர்கள் தோல் விரிப்புகளைக் கொண்டுவரும்படி பணித்தார்கள். அவ்வாறே அவை (கொண்டு வந்து) விரிக்கப்பட்டன. பிறகு, அவற்றில் பேரீச்சம் பழங்கள், பாலாடைக் கட்டி, நெய் ஆகியன வைக்கப்பட்டன.

அம்ர் இப்னு அபீ அம்ர்(ரஹ்) வழியாக அறிவிக்கப்படும் மற்றோர் அறிவிப்பில் அனஸ்(ரலி) கூறினார்

(அன்னை) ஸஃபிய்யா(ரலி) அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். பிறகு (வலீமா - மணவிருந்திற்காக) தோல் விரிப்பில்ஹைஸ் எனும் ஒரு வகைப் பண்டத்தைத் தயாரித்து வைத்தார்கள்.

ஹதீஸ் 5388. வஹ்ப் இப்னு கைசான்(ரஹ்) அறிவித்தார்

ஷாம்வாசிகள் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களைக் குறை கூறிக் கொண்டிருந்தார்கள்.7 இரண்டு கச்சுடையாளின் மகனே! என்று (அவரை) அழைப்பார்கள். அப்போது (அப்துல்லாஹ்வின் தாயார்) அஸ்மா(ரலி),என்னருமை மகனே! அவர்கள் உன்னை இரண்டு கச்சுகளைச் சொல்லிக் குறை சொல்கிறார்கள்.இரண்டு கச்சுகள் என்பது என்ன என்று உனக்குத் தெரியுமா? அது என் கச்சுதான் அதை நான் இரண்டு பாதிகளாகக் கிழித்து அவற்றில் ஒன்றினால் (ஹிஜ்ரத் பயணத்தின் போது) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோல் பை(யின் வா)யைக் கட்டினேன். மற்றொன்றை அவர்களின் உணவு விரிப்புக்காக வைத்தேன்' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் வஹ்ப் இப்னு கைசான்(ரஹ்) கூறினார்கள்:

(இதன் பின்) ஷாம்வாசிகள் இரண்டு கச்சுகளைக் குறிப்பிட்டு அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களைக் குறை கூறும்போது அவர்கள்ஆம்! (உண்மைதான்.) இறைவன்

மீதாணையாக! இது ஒரு கூப்பாடு இதில் உன் மீது எந்தக் குறையுமில்லை' என்று (ஒரு கவிதை வரியை மேற்கோள் காட்டி தமக்குத் தாமே) கூறுவார்கள்.

ஹதீஸ் 5389. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

என் தாயாரின் சகோதரியான உம்மு ஹு ஃபைத் பின்த் ஹாரிஸ் இப்னி ஹஸ்ன்(ரலி) நபி(ஸல்) அவர்களுக்கு நெய்யையும் பாலாடைக் கட்டியையும் உடும்புகளையும் அன்பளிப்பாக வழங்கினார்கள். நபி(ஸல்) அவர்கள் அந்த உடும்புகளை எடுத்து வரச்கூறினார்கள். அவை (சமைக்கப்பட்டு) அவர்களின் விரிப்பின் மீது உண்ணப்பட்டன. நபி(ஸல்) அவர்கள் அவற்றை அருவருப்பது போல் தோன்றியது. அவற்றை உண்ணாமல்விட்டுவிட்டார்கள். அவை தடைசெய்யப்பட்டவையாக இருந்திருந்தால் நபி(ஸல்) அவர்களின் உணவு விரிப்பில் அவை உண்ணப்பட்டிருக்கமாட்டா. அவற்றை உண்ணும்படி அவர்கள் கட்டளையிட்டிருக்கவுமாட்டார்கள்.

## மாவு

ஹதீஸ் 5390. சுவைத் இப்னு நுஅமான்(ரலி) அறிவித்தார்

நாங்கள்ஸஹ்பா எனுமிடத்தில் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அது கைபரிலிருந்து ஒரு மாலை நேரப் பயணத் தொலைவிலுள்ள இடமாகும். அப்போது தொழுகை நேரம் வந்தது. உடனே நபி(ஸல்) அவர்கள் உணவு கொண்டு வரச்கூறினார்கள். மாவைத் தவிர வேறெதுவும் கிடைக்கவில்லை. அதை அவர்கள் மென்று சாப்பிட்டார்கள். நாங்களும் அவர்களுடன் மென்று சாப்பிட்டோம். பிறகு அவர்கள் தண்ணீரைக் கொண்டு வரச் சொல்லி வாய் கொப்பளித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் தொழுதிட நாங்களும் தொழுதோம். ஆனால், நபி(ஸல்) அவர்கள் (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை. 20

நபி(ஸல்) அவர்கள் எந்த உணவுப் பொருளையும் அதன் பெயர் அவர்களுக்குக் குறிப்பிடப்பட்டு அது என்னவென்று அவர்கள் அறிந்துகொள்ளாத வரை அந்த உணவை உண்டதில்லை.

ஹதீஸ் 5391. அல்லாஹ்வின் வாள் என்றழைக்கப்படும் காலித் இப்னு வலீத்(ரலி) அறிவித்தார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (அன்னை) மைமூனா(ரலி) அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். அவர்கள் எனக்கும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் சிறிய தாயாராவார்கள். (அன்னை) மைமூனாவிடம் பொரிக்கப்பட்ட உடும்பு ஒன்றைக் கண்டேன். அதை அவர்களின் சகோதரி ஹு ஃபைதா பின்த் ஹாரிஸ்(ரலி) நஜ்திலிருந்து கொண்டு வந்திருந்தார்கள். (அன்னை) மைமூனா(ரலி) அந்த உடும்பு இறைச்சியை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முன் வைத்தார்கள். இறைத்தூதர் அவர்களோ, எந்த உணவாயினும் அதன் பெயர் தமக்குக் கூறப்பட்டு, அதைப் பற்றிய விவரம் சொல்லப்படாத வரை அதன் பக்கம் தம் கையை நீட்டுவது அரிதாகும். (இந்நிலையில்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் கையை அந்த உடும்பின் பக்கம் நீட்ட அங்கிருந்த பெண்களில் ஒருவர்நீங்கள் பரிமாறியிருப்பது என்னவென்று இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தெரிவியுங்கள். அது உடும்பு, இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார். உடனே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உடும்பைவிட்டுத் தம் கையை எடுத்துக்கொண்டார்கள். அப்போது நான்உடும்பு தடை செய்யப்பட்டதா? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,இல்லை ஆயினும், அது என் சமுதாயத்தாரின் பூமியில் இல்லை. எனவே, என் மனம் அதை விரும்பவில்லை' என்று கூறினார்கள். உடனே நான் அதைத் துண்டித்துச் சாப்பிட்டேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

## ஒருவரின் உணவு இருவருக்குப் போதுமாகும்.

ஹதீஸ் 5392. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இருவருடைய உணவு மூவருக்குப் போதுமானதாகும். மூவரின் உணவு நால்வருக்குப் போதுமானதாகும்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

## இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் உண்பார்.

இது குறித்து அபூ ஹு ரைரா (ரலி) நபி (ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5393. நாஃபிஉ (ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர் (ரலி) தம்முடன் சாப்பிட ஓர் ஏழையேனும் அழைத்து வரப்படாமல் உணவு உண்ணமாட்டார்கள். எனவே, (ஒரு நாள்) அவர்களுடன் சாப்பிட ஒருவரை நான் அழைத்துச்சென்றேன். அம்மனிதர் நிறைய உண்டார். இப்னு உமர் (ரலி) நாஃபிஉ! இவரை (இனிமேல்) என்னிடம் அழைத்து வராதீர்கள். நபி (ஸல்) அவர்கள்இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் சாப்பிடுவார். இறைமறுப்பாளனோ ஏழு குடல்களில் சாப்பிடுவான் எனக் கூறுவதை கேட்டிருக்கிறேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5394. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் சாப்பிடுவார்இறைமறுப்பாளன் அல்லதுநயவஞ்சகன் ஏழு குடல்களில் சாப்பிடுவான். இதை இப்னு உமர் (ரலி) அறிவித்தார். அறிவிப்பளர்களில் ஒருவரான அப்தா இப்னு சுலைமான் (ரஹ்), இதை எனக்கு அறிவித்த உபைதுல்லாஹ் இப்னு உமர் (ரஹ்), இறைமறுப்பாளன்', நயவஞ்சகன் ஆகிய இரண்டு சொற்களில் எதைக் கூறினார் என்று எனக்குத் தெரியாது (நினைவில்லை)' என்று கூறுகிறார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 5395. அம்ர் இப்னு தீனார் (ரஹ்) கூறினார்

(மக்காவாசியான) அபூ நஹீக் என்பவர் அதிகம் சாப்பிடக்கூடியவராக இருந்தார். அவரிடம் இப்னு உமர் (ரலி), இறைத்தூதர் (ஸல்) அவர்கள்இறை மறுப்பாளன் ஏழு குடல்களில் சாப்பிடுவான் என்று கூறினார்கள் எனக் கூறினார்கள். அதற்கு அபூ நஹீக்நான் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளேன். (எனவே இதில் விதிவிலக்கு உண்டு)' என்று கூறினார்.

ஹதீஸ் 5396. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உண்மையான) முஸ்லிம் ஒரே குடலில் சாப்பிடுவார். இறைமறுப்பாளனோ ஏழு குடல்களில் சாப்பிடுவான்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5397. அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்

ஒருவர் அதிகமாகச் சாப்பிட்டு வந்தார். அவர் இஸ்லாத்தை ஏற்றார். (அதிலிருந்து) குறைவாக உண்பவராம்விட்டார். இவ்விஷயம் நபி (ஸல்) அவர்களிடம் எடுத்துரைக்கப்பட்டது. அப்போது அவர்கள், இறைநம்பிக்கையாளர் ஒரே குடலில் சாப்பிடுவார். இறைமறுப்பாளனோ ஏழு குடல்களில் சாப்பிடுவான்' என்று கூறினார்கள்.

## சாய்ந்தபடி சாப்பிடுவது

ஹதீஸ் 5398. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் சாய்ந்தபடி சாப்பிடமாட்டேன்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5399. அபூ ஜு ஹைஃபா (ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களிடம் இருந்தேன். அப்போது அவர்கள் தம்முடனிருந்த ஒரு மனிதரிடம்,நான் சாய்ந்துகொண்டு சாப்பிட மாட்டேன்' என்று கூறினார்கள்.

## பொரித்த உணவு

அல்லாஹ் கூறினான்:

(அதன் பின்னர்) அவர் (-இப்ராஹீம்-) பொரித்த காளைக் கன்றி(ன் இறைச்சியி)னை உடனே கொண்டு வந்தார். (திருக்குர்ஆன் 11:69)

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)ஹனீ.ஃத் எனும் சொல்லுக்குப்பொரிக்கப்பட்டது என்று பொருள்.

ஹதீஸ் 5400. காலித் இப்னு வலீத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களிடம் பொரிக்கப்பட்ட உடும்பு ஒன்று கொண்டுவரப்பட்டது. அதை உண்பதற்காக அவர்கள் தங்களின் கையைக் கொண்டுபோனார்கள். அவர்களிடம்,இது உடும்பு' என்று சொல்லப்பட்டது. உடனே அவர்கள் தங்களின் கையை இழுத்துக்கொண்டார்கள். நான்,இது தடை செய்யப்பட்டுள்ளதா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,இல்லை. ஆனால், இது என் சமுதாயத்தாரின் பூமியில் இருப்பதில்லை. எனவே, என் மனம் இதை விரும்பவில்லை' என்று பதிலளித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பார்த்துக்கொண்டிருக்க, நான் அதைச் சாப்பிட்டேன்.24

மற்றோர் அறிவிப்பில், ('பொரிக்கப்பட்டது என்பதைக் குறிக்கமஷ்விய்யு எனும் சொல்லுக்கு பதிலாக)மஹ்னா.ஃத் எனும் சொல் இடம்பெற்றுள்ளது.

## அல்கஸீரா (கோதுமைக் குறுணைக் கஞ்சி)

'அல்கஸீரா என்பது (கோதுமைக்) குறுணையால் தயாரிக்கப்படும் (கஞ்சி) உணவாகும்அல்ஹரீரா என்பது பாலால் தயாரிக்கப்படும் (பாயசம்) உணவாகும் என்று நள்ர் இப்னு ஷு மைல்(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 5401. பத்ருப் போரில் கலந்துகொண்ட அன்சாரி நபித்தோழர்களில் ஒருவரான இத்பான் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,இறைத்தூதர் அவர்களே! நான் என் சமூகத்தாருக்குத் தொழுகை நடத்துபவனாக இருக்கிறேன். நான் கண் பார்வையை இழந்துவருகிறேன். மழை வந்தால் எனக்கும் (என் சமூகத்தாரான) அவர்களுக்குமிடையே உள்ள பள்ளத்தாக்கில் வெள்ளம் வழிந்தோடும். அவர்களின் பள்ளிவாசலுக்குச் சென்று அவர்களின் பள்ளிவாசலுக்குச் சென்று அவர்களுக்கு என்னால் தொழவைக்க இயலவில்லை. எனவே, இறைத்தூதர் அவர்களே! தாங்கள் வந்து என்னுடைய வீட்டில் தொழுகை நடத்த வேண்டுமென்றும் (தாங்கள் நின்று தொழும்) அந்த இடத்தை நான் (என்) தொழுமிடமாக ஆக்கிக்கொள்ள வேண்டுமென்றும் விரும்பினேன்' என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) நான் (அவ்வாறே) செய்வேன்' என்று கூறினார்கள்.

தொடர்ந்து இத்பான்(ரலி) கூறலானார்கள்: இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் மறுநாள் நண்பகல் நேரத்தில் என்னிடம் வந்தனர். நபி(ஸல்) அவர்கள் (என் இல்லத்தினுள் வர) அனுமதி கேட்டார்கள். நான் அனுமதியளித்தேன். வீட்டினுள் வந்த நபி(ஸல்) அவர்கள் உடனே உட்காரவில்லை. பிறகு என்னிடம்,(இத்பானே!) உங்கள் வீட்டில் எந்த இடத்தில் நான் தொழ வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள்? என்று கேட்டார்கள். நான் வீட்டின் ஒரு மூலையைக் காட்டினேன்.

நபி(ஸல்) அவர்கள் (அந்த இடத்தில்) நின்றுதக்பீர் (தஹ்ரீமா) கூறினார்கள். நாங்கள் (அவர்களுக்குப் பின்னே) அணிவகுத்து நின்றுகொண்டோம். அவர்கள் இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டுசலாம் கொடுத்தார்கள். நாங்கள் தயாரித்திருந்தகஸீர் எனும் (கஞ்சி) உணவி(னை உட்கொள்வத)ற்காக அவர்களை நாங்கள் இருக்கவைத்தோம். (நபி(ஸல்) அவர்கள் வந்திருந்ததைக் கேள்விப்பட்ட) அந்தப் பகுதி மக்களில் கணிசமான பேர் (சிறுகச் சிறுக) வந்து என் வீட்டில் திரண்டுவிட்டனர். அம்மக்களில் ஒருவர்,மாலிக் இப்னு துக்ஷு ன் எங்கே? என்று கேட்டதற்கு அவர்களில் மற்றொருவர்,அவர் அல்லாஹ்வையு அல்லாஹ்வின் தூதரையும் நேசிக்காத ஒரு நயவஞ்சகர். (எனவேதான் அல்லாஹ்வின் தூதரைச் சந்திக்க அவர் வரவில்லை)' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்அப்படிச் சொல்லதீர்கள். அல்லாஹ்வின் திருப்தியை நாடியவராக அவர்லா இலாஹ இல்லல்லாஹு ' (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை) என்று சொன்னதை நீங்கள் பார்க்கவில்லையா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்,அல்லாஹ்வும் அவனுடைய தூதரே!) அவர் (மாலிக் இப்னு துக்ஷு ன்) நயவஞ்சகர்களுடன் தொடர்பு வைத்திருப்பதையும் அவர்களின் மீது அபிமானம் கொண்டிருப்பதையும் காண்கிறோம். (எனவேதான் அவ்வாறு சொல்லப்பட்டது)' என்று கூறினோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வின் திருப்தியை நாடிலா இலாஹ இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று சொன்னவரை நரகத்திலிருந்து அல்லாஹ் தடுத்து (ஹராமாக்கி)விட்டான் அல்லவா? என்று கேட்டார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு ஷிஹாப் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) கூறினார்கள்:

பனு சாலிம் குலத்தாரில் ஒருவரும் அவர்களில் முக்கியமானவர்களில் ஒருவருமான ஹு சைன் இப்னு முஹம்மத் அல் அன்சாரி(ரஹ்) அவர்களிடம் முஹ்மூத் இப்னு ரபீஉ அல்அன்சாரி அவர்கள் அறிவித்த இந்த ஹதீஸ் குறித்துக் கேட்டேன். அவர்கள் அதை ("இது உண்மைதான்' என்று) உறுதிப்படுத்தினார்கள்.

## பாலாடைக் கட்டி

ஹு மைத் அத்தவீல்(ரஹ்) கூறினார்

நான் அனஸ்(ரலி) கூறக் கேட்டேன்.

நபி(ஸல்) அவர்கள் (அன்னை) ஸஃபிய்யா(ரலி) அவர்களுடன் தாம்பத்திய உறவைத் தொடங்கினார்கள். (மணவிருந்தில் விரிக்கப்பட்ட உணவு விரிப்பில்) பேரீச்சம் பழம், பாலாடைக் கட்டி, நெய் ஆகியவற்றை வைத்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில்(மணவிருந்துக்காக) நபி(ஸல்) அவர்கள்ஹைஸ் எனும் உணவைத் தயாரித்தார்கள்' என்று கூறப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5402. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களுக்கு என் தாயாரின் சகோதரி (உம்மு ஹு ஃபைத்) அவர்கள் உடும்பு, பாலாடைக் கட்டி, பால் ஆகியவற்றை அன்பளிப்புச் செய்தார்கள். நபி(ஸல்) அவர்களின் உணவு விரிப்பின் மீது உடும்பு வைக்கப்பட்டது. அது விலக்கப்பட்டதாக இருந்திருப்பின் அவ்வாறு வைக்கப்பட்டிராது. நபி(ஸல்) அவர்கள் (உடும்பை மட்டும்விட்டுவிட்டு) பாலை அருந்தினார்கள். பாலாடைக் கட்டியையும் சாப்பிட்டார்கள்.

## தண்டுக் கீரையும் வாற் கோதுமையும்

ஹதீஸ் 5403. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்

வெள்ளிக்கிழமை வருவதால் நாங்கள் மகிழ்ச்சியடைந்துவந்தோம். எங்களுக்கு ஒரு மூதாட்டி இருந்தார். அவர் தண்டுக் கீரையின் தண்டுகளை எடுத்து தன்னுடைய பாத்திரமொன்றில் அவற்றையிட்டு அதில் வாற்கோதுமை தானியங்கள் சிறிதைப் போட்டு(க் கடைந்து) வைப்பார்.

நாங்கள் (வெள்ளிக்கிழமைத் தொழுகை) தொழுத பின்னர் அவரைச் சந்திப்போம். அவர் அதை எங்களுக்குப் பரிமாறுவார். இதன் காரணத்தால் நாங்கள் வெள்ளிக்கிழமை மூலம் மகிழ்ச்சியடைந்து வந்தோம். நாங்கள் வெள்ளிக்கிழமை தொழுகைக்குப் பின்புதான் காலைச் சிற்றுண்டி அருந்துவோம் மதிய ஓய்வெடுப்போம். அல்லாஹ்வின் மீதாணையாக! (அவர் பரிமாறிய) அந்த உணவில் கெட்டியான கொழுப்போ, திரவக் கொழுப்போ எதுவும் இருந்ததில்லை.

## குழம்பிலிருந்து இறைச்சியை எடுத்துக் கடித்துச் சாப்பிடுவது.

ஹதீஸ் 5404. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஆட்டின்) சப்பை எலும்பு ஒன்றை (அது வெந்து கொண்டிருந்த பாத்திரத்தில் இருந்து) எடுத்து அதிலிருந்த இறைச்சியைக் கடித்துச் சாப்பிட்டார்கள். பிறகு எழுந்து தொழுதார்கள். ஆனால் (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை.

ஹதீஸ் 5405. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (குழம்புப்) பாத்திரத்திலிருந்து எலும்பொன்றை எடுத்து (அதிலிருந்து இறைச்சியைக் கடித்து)ச் சாப்பிட்டார்கள். பிறகு தொழுதார்கள் ஆனால் (புதிதாக) அங்கசுத்தி (உளூச்) செய்யவில்லை.

## முன்னங்கால் சப்பை எழும்பிலிருந்து இறைச்சியைக் கடித்துச் சாப்பிடுவது.

ஹதீஸ் 5406. அபூ கத்தாதா(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (ஹுதைபிய்யா ஆண்டில்) மக்காவை நோக்கிப் புறப்பட்டோம்.

ஹதீஸ் 5407. அபூ கத்தாதா அஸ்ஸலமீ(ரலி) கூறினார்

நான் (ஹுதைபிய்யா ஆண்டில்) ஒரு நாள் மக்கா (செல்லும்) சாலையில் இருந்த ஓரிடத்தில் நபித்தோழர்கள் சிலருடன் அமர்ந்திருந்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கள் முன்னால் தங்கியிருந்தார்கள். மக்கள் அனைவரும் இஹ்ராம் கட்டியிருந்தார்கள். நான் (மட்டும்) இஹ்ராம் கட்டியிருக்கவில்லை. அப்போது மக்கள் ஒரு காட்டுக் கழுதையைக் கண்டனர். நானோ என்னுடைய செருப்பைத் தைப்பதில் ஈடுபட்டிருந்தேன். அவர்கள் அக்கழுதை குறித்து எனக்கு அறிவிக்கவில்லை. (ஆனால்,) நான் அதைப் பார்க்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். நான் (தற்செயலாக) அதைத் திரும்பிப் பார்த்தேன். உடனே நான் எழுந்து குதிரையின் பக்கம் சென்று அதற்குச் சேணமிட்டு அதில் ஏறினேன். சாட்டையையும் ஈட்டியையும் (எடுத்துக் கொள்ள) நான் மறந்துவிட்டேன். நான் அவர்களிடம்அந்தச் சாட்டையையும் ஈட்டியையும் எடுத்து என்னிடம் கொடுங்கள்' என்று சொன்னேன். அதற்கு (இஹ்ராம் கட்டியிருந்த) அவர்கள்,மாட்டோம். அல்லாஹ்வின் மீதாணையாக! இதற்குச் சிறிதும் நாங்கள் உமக்கு உதவமாட்டோம்' என்று கூறினார்கள்.

நான் கோபமுற்று இறங்கி அவ்விரண்டையும் எடுத்துக்கொண்டு (குதிரையின் மீது) ஏறினேன். காட்டுக் கழுதையைத் தாக்கி அதை (அதன் கால் நரம்புகளில்) வெட்டினேன். பிறகு அதை (மக்களிடம்) கொண்டு வந்தேன். அதற்குள் அது இறந்துவிட்டிருந்தது. மக்கள் அதை(ச் சமைத்து) உண்பதற்காக அதன் மீது பாய்ந்தார்கள். பிறகு அவர்கள்தாம் இஹ்ராம் கட்டியிருந்த நிலையில் அதை உண்டது சரிதானா? என்று சந்தேகம் கொண்டார்கள். அப்போது நாங்கள் (அல்லாஹ்வின் தூதரிடம்) சென்றோம். நான் (அதன்) முன்னங்கால் சப்பையை (எடுத்து) என்னிடம் பத்திரப்படுத்தி வைத்திருந்தேன். நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்றவுடன் இது குறித்து அவர்களிடம் வினவினோம். அவர்கள்,அதிலிருந்து மிச்சம் மீதி ஏதாவது உள்ளதா? என்று கேட்டார்கள். நான் அந்த முன்னங்கால் சப்பையை எடுத்துக் கொடுத்தேன். அதன் எலும்பைக் கடித்துத் துப்பும் வரை அதை அவர்கள் சாப்பிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்தார்கள். 30

அபூ கத்தாதா(ரலி) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் தமக்கு அறிவிக்கப்பட்டிருப்பதாக (அறிவிப்பாளர்களில் ஒருவரான) முஹம்மத் இப்னு ஜஅ..பர்(ரஹ்) கூறினார்.

## இறைச்சியைக் கத்தியால் துண்டித்து உண்பது.

**ஹதீஸ் 5408.** அம்ர் இப்னு உமய்யா(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களைத் தம் கரத்திலிருந்து ஆட்டுச் சப்பையை(க் கத்தியால்) துண்டுபோ(ட்டுச் சாப்பி)டுவதைப் பார்த்தேன். அப்போது தொழுகைக்காக அழைக்கப்பட்டது. உடனே, அவர்கள் அந்த ஆட்டுச் சப்பையையும் அதைத் துண்டிக்கப் பயன்படுத்திய கத்தியையும் (அப்படியே) கீழே போட்டுவிட்டு எழுந்து தொழுதார்கள். (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை.

## நபி(ஸல்), அவர்கள் எந்த உணவையும் குறை கூறியதில்லை.

**ஹதீஸ் 5409.** அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் எந்த உணவையும் ஒருபோதும் குறை சொன்னதில்லை. பிடித்தால் அதை உண்பார்கள். பிடிக்காவிட்டால் அதை (உண்ணாமல்)விட்டுவிடுவார்கள்.

## வாற்கோதுமையில் (உமியை நீக்க) ஊதுவது.

**ஹதீஸ் 5410.** அபூ ஹாஸிம்(ரஹ்) கூறினார்

ஸலமா இப்னு தீனார்(ரஹ்) ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (சலித்து) சுத்தம் செய்யப்பட்ட வெள்ளை மாவை நீங்கள் பார்த்ததுண்டா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,இல்லை' என்று பதிலளித்தார்கள். நான்,அப்படியானால் நீங்கள் வாற்கோதுமையைச் (சல்லடையில்) சலிப்பீர்கள் தானே? என்று கேட்க, அவர்கள்இல்லை ஆனால், நாங்கள் அதை (வாயால்) ஊதி (சுத்தப்படுத்தி) வந்தோம்' என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் சாப்பிட்டுவந்தவை.

**ஹதீஸ் 5411.** அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் தம் தோழர்களிடையே பேரீச்சம் பழங்களைப் பங்கிட்டார்கள். அப்போது ஒவ்வொரு மனிதருக்கும் ஏழு பேரீச்சம் பழங்களை வழங்கினார்கள். எனக்கும் ஏழு பேரீச்சம் பழங்கள் கொடுத்தாக்ாள். அவற்றில் ஒன்று (நன்றாகக் கனியாத காய்ந்த) தாழ்ந்த ரகப் பேரீச்சம் பழமாக இருந்தது. அந்தப் பழங்களிலேயே அதுதான் எனக்கு வியப்பளித்தது. மெல்வதற்குச் சிரமப்பட வேண்டியிருந்தது.

**ஹதீஸ் 5412.** ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களுடன் (ஆரம்பமாக இஸ்லாத்தை ஏற்று) இருந்த ஏழு பேரில் ஏழாவது நபராக நான் இருந்தேன். (உண்பதற்கு)ஹுப்லா அல்லதுஹபலா எனும் (முள்) மரத்தின் இலையைத் தவிர வேறெதுவும் எங்களிடம் இருக்கவில்லை. எந்த அளவுக்கென்றால் (அந்த இலைகளை உண்டு) நாங்கள் ஆடு கழிக்கிற (கெட்டிச் சாணத்)தைப் போன்றே மலம் கழித்து வந்தோம். பிறகு (கூ..பாவாசிகளான)பனூஅசத் குலத்தார் (நான் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்று கூறி, என்னுடைய) இஸ்லாம் தொடர்பாக என்னைக் குறை கூறலானார்கள். அப்படியானால், (இதுவரை நான் செய்துவந்த வழிபாட்டு) முயற்சியெல்லாம் வீணாம், நான் இழப்புக்குள்ளாம் விட்டேன் (போலும் என வருந்தினேன்.)

**ஹதீஸ் 5413.** அபூ ஹாஸிம்(ரஹ்) கூறினார்

நான் ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களிடம்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நன்கு சலித்து சுத்தம் செய்யப்பட்ட மாவில் தயாரிக்கப்பட்ட) வெள்ளை ரொட்டியைச் சாப்பிட்டதுண்டா? என்று கேட்டேன். அதற்கு ஸஹ்ல்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்மை (இறைத்தூதராக) அல்லாஹ் தேர்ந்தெடுத்ததிலிருந்து தமக்கு அவன் இறப்பை அளிக்கும் வரை (சலித்து சுத்தமாக்கப்பட்ட மாவினாலான) வெள்ளை ரொட்டியைப் பார்த்ததேயில்லை‘ என்று பதிலளித்தார்கள். நான்,இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் உங்களிடம் சல்லடைகள் இருந்ததுண்டா? என்று கேட்டேன். அவர்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்மை (இறைத்தூதராக) அல்லாஹ் தேர்ந்தெடுத்ததிலிருந்து தம்மை அவன் இறக்கச் செய்யும் வரை சல்லடையைக் கண்டதேயில்லை‘ என்றார்கள். நான்,கோதுமையை நீங்கள் எப்படிச் சாப்பிட்டுவந்தீர்கள்? சலிக்காமலேயா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,நாங்கள் கோதுமையை அரைத்து, (உமியை நீக்க) அதில் (வாயால்) ஊதுவோம். அதிலிருந்து (தவிடு, உமி போன்ற) பறப்பன பறந்து விடும். எஞ்சியதைத் தண்ணீர் கலந்து (ரொட்டி தயாரித்து) உண்போம்‘ என்றார்கள்.

ஹதீஸ் 5414. ஸயீத் இப்னு அபீ ஸயீத் அல்மக்புரீ(ரஹ்) கூறினார்

(நபித்தோழர்) அபூ ஹு ரைரா(ரலி) (ஒரு நாள்), தம் முன்னே பொரிக்கப்பட்ட ஓர் ஆட்டை(ச் சாப்பிடுவதற்காக) வைத்திருந்த ஒரு கூட்டத்தாரைக் கடந்து சென்றார்கள். அவர்கள் அபூ ஹு ரைரா(ரலி) அவர்களை(த் தம்முடன் அதைச் சாப்பிட வருமாறு) அழைத்தார்கள். ஆனால், அன்னார் அவர்களுடன் சாப்பிட மறுத்துஇறைத்தூதர்(ஸல்) அவர்கள் வாற்கோதுமை ரொட்டியால் வயிறு நிரம்பாத நிலையிலேயே இந்த உலகிலிருந்து சென்றார்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5415. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் உணவு மேசையில் (அமர்ந்து) சாப்பிட்டதில்லை பெரிய வட்டிலில் (ஸஹனில்) வைத்தும் சாப்பிட்டதில்லை அவர்களுக்காக மிருதுவான ரொட்டி தயாரிக்கப்பட்டதுமில்லை.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) யூனுஸ் இப்னு அபி ல்ஃபுராத் அல்குறஷீ(ரஹ்) கூறினார்.

இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) அவர்களிடம்,எதன் மீது அமர்ந்து அவர்கள் சாப்பிடுவார்கள்? என்று கேட்டேன். அவர்கள்,(தோலாலான) உணவு விரிப்புகளின் மீது‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5416. ஆயிஷா(ரலி) கூறினார்

முஹம்மத்(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்ததிலிருந்து அவர்கள் இறக்கும் வரை அவர்களின் குடும்பத்தார் கோதுமை உணவைத் தொடர்ந்து மூன்று நாள்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.

## ‘அத்தல்பீனா (பால் பாயசம்)

ஹதீஸ் 5417. உர்வா இப்னு ஸு பைர்(ரஹ்) கூறினார்

நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அவர்களின் குடும்பத்தாரில் யாரேனும் இறந்துவிட்டால், அதற்காகப் பெண்கள் கூடிப் பிறகு, அவர்களின் குடும்பத்தாரும் நெருங்கிய உறவினர்களும் தவிர மற்ற பெண்கள் அனைவரும் கலைந்து சென்றுவிடுவார்கள். அப்போது ஒரு பாத்திரத்தில்தல்பீனா (எனும் பால் பாயசம்) தயாரிக்கும்படி ஆயிஷா(ரலி) கூறுவார்கள். அவ்வாறே அது தயாரிக்கப்படும். பிறகுஸரீத் (எனும் தக்கடி) தயாரிக்கப்படும். அதில்தல்பீனா ஊற்றப்பட்ட பிறகு (அங்குள்ள பெண்களிடம்) ஆயிஷா(ரலி)இதைச் சாப்பிடுங்கள் ஏனெனில்,தல்பீனா (எனும் பாயசம்) நோயாளியின் மனத்திற்கு ஆறுதல் அளிக்கும் கவலைகளில் சிலவற்றைப் போக்கும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்‘ என்று சொல்வார்கள்.

## ‘அஸ்ஸரீத் (தக்கடி எனும் உணவு.)

ஹதீஸ் 5418. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆண்களில் பல பேர் முழுமை பெற்றிருக்கிறார்கள். ஆனால், பெண்களில் இம்ரானின் புதல்வி மர்யமையும், ஃபிர்அவ்னின் துணைவியார் ஆசியாவையும் தவிர வேறெவரும் முழுமைபெறவில்லை. மற்ற பெண்களைவிட ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பு எல்லா வகை உணவுகளையும் விடஸரீது‘க்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5419. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மற்றப் பெண்களைவிட ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பு மற்ற எல்லா வகையான உணவுகளையும் விடஸரீது‘க்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5420. அனஸ்(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் அவர்களின் பணியாளரும் தையற்காரருமான ஒருவரிடம் சென்றேன். அவர் நபி(ஸல்) அவர்கள் முன்னேஸரீத் எனும் உணவு இருந்த ஒரு தட்டை வைத்தார். பிறகு தம் வேலையைப் பார்க்கச் சென்றார். (அத்தட்டில்) நபி(ஸல்) அவர்கள் சுரைக்காயைத் தேடலானார்கள். நானும் அதைத் தேடி எடுத்து அவர்கள் முன்னே வைக்கலானேன். அதற்குப் பின் நான் சுரைக்காயை விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன்.

## முடி அகற்றப்பட்டு பொரிக்கப்பட்ட ஆடு, அதன் முன்கால் சப்பை மற்றும் விலா (ஆகியவற்றை உண்பது).

ஹதீஸ் 5421. கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) கூறினார்

நாங்கள் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் சென்றுவருவோம். அவர்களுடன் அவர்களுக்காக ரொட்டி தயாரிப்பவர் ஒருவரும் இருப்பார். (ஒருநாள்) அனஸ்(ரலி),சாப்பிடுங்கள்! (ஆனால்,) நான் அறிந்த மட்டில் நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை மிருதுவான ரொட்டியைப் பார்த்ததில்லை. வெந்நீரால் முடி களையப்பட்டு தோலுடன் சமைக்கப்பட்ட (இளம்) ஆட்டை அவர்கள் தங்களின் கண்ணாலும் ஒருபோதும் கண்டதில்லை‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5422. அம்ர் இப்னு உமய்யா அள்ளம்ரீ(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆட்டின் சப்பையை(க் கத்தியால்) துண்டு போட்டு, அதிலிருந்து (இறைச்சியை) உண்டதை பார்த்தேன். அப்போது தொழுகைக்காக அழைப்பு விடுக்கப்பட்டது. உடனே அவர்கள் எழுந்து கத்தியை எறிந்துவிட்டுத் தொழுதார்கள். ஆனால், (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை.

## முன்னோர்கள் தம் வீடுகளிலும் பயணங்களிலும் சேமித்து வைத்துவந்த உணவு, இறைச்சி உள்ளிட்டவை.

“நபி(ஸல்) அவர்களுக்காகவும் (எங்கள் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்களுக்காகவும் (அவர்கள் ஹிஜ்ரத் செய்தபோது) பயண உணவு தயாரித்தோம்‘ என ஆயிஷா(ரலி) அவர்களும் அஸ்மா(ரலி) அவர்களும் கூறினார்கள்கள்.

ஹதீஸ் 5423. ஆபிஸ் இப்னு ரபீஆ அல்கூஃபீ(ரஹ்) கூறினார்

நான், ஆயிஷா(ரலி) அவர்களிடம்(ஈதுல் அள்ஹா பெருநாளில் அறுக்கப்படும்) குர்பானி இறைச்சியை மூன்று நாள்களுக்கு மேல் வைத்துச்சாப்பிடுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்களா? என்று கேட்டேன். அவர்கள், மக்கள் (பஞ்சத்தால்) பசி பட்டினியோடு இருந்த ஓர் ஆண்டில் தான் அவர்கள் அப்படி(த் தடை) செய்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (பட்டினியைப் போக்க) வசதி உள்ளவர், ஏழைக்கு உணவளிக்க வேண்டும் என்று விரும்பினார்கள். (பிறகு) நாங்கள் ஆட்டுக் காலை எடுத்து வைத்துப் பதினைந்து நாள்களுக்குப் பிறகும் கூட அதைச் சாப்பிட்டுவந்தோம்' என்று பதிலளித்தார்கள். உங்களுக்கு இப்படிச் செய்ய வேண்டிய கட்டாயம் என்ன வந்தது? என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் சிரித்துவிட்டு, முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை அவர்களின் குடுமபத்தார் தொடர்ச்சியாக மூன்று நாள்கள் கூட (கறிக்) குழம்புடன் வெள்ளைக் கோதுமை ரொட்டியை வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5424. ஜாபிர்(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (ஹஜ்ஜின்போது அறுக்கப்படும்) தியாகப் பிராணிகளின் இறைச்சிகளை (மக்காவிலிருந்து) மதீனாவுக்கு(ச் செல்லும் போது) பயண உணவாக எடுத்துச் செல்வோம்.

இந்த ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

இப்னு ஜுரைஜ் (அப்துல் மலிக் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான், அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அவர்களிடம், ஜாபிர்(ரலி) மதீனாவுக்கு நாங்கள் வந்து சேரும் வரை எனும் வாக்கியத்தையும் சேர்த்து அறிவித்தார்களா? எனக் கேட்டேன். அதற்கு அவர்கள், இல்லை' என்று பதிலளித்தார்கள்.

## 'அல்ஹைஸ் (எனும் பலகாரம்)

ஹதீஸ் 5425. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா (ஸைத் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களிடம், உங்கள் சிறுவர்களில் ஒருவரை எனக்குச் சேவகம் செய்ய அழைத்து வாருங்கள்' என்று கூறினார்கள். உடனே அபூ தல்ஹா(ரலி) (தம் வாகனத்தில்) என்னைத் தமக்குப் பின்னால் அமர்த்திக் கொண்டு புறப்பட்டார்கள். எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் சேகவம் புரிந்துவந்தேன். அவர்கள் (வழியில் எங்கேனும்) இறங்கித் தங்கும்போதெல்லாம் இறைவா! துக்கம், கவலை, ஆற்றாமை, சோம்பல், கஞ்சத்தனம், கோழைத்தனம், கடன்சுமை, மனிதர்களின் அடக்குமுறை ஆகியவற்றிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று அதிகமாகப் பிரார்த்தனை புரிவதை நான் செவியேற்றுள்ளேன்.

நாங்கள் கைபரிலிருந்து புறப்பட்டுச் செல்லும் வரை நான் அவர்களுக்குச் சேவகம் செய்து கொண்டேயிருந்தேன். ஸஃபிய்யா பின்த் ஹுயை அவர்களை (கைபர் போர்ச் செல்வத்தில் தம் பங்காகத்) தேர்ந்தெடுத்துக்கொண்ட பின் அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஸஃபிய்யாவுக்காக ஓர்அங்கியால் அல்லதுஒரு போர்வையால் தமக்குப் பின்னே திரை அமைத்துப் பிறகு அவர்களைத் தமக்குப் பின்னால் (வாகனத்தில்) அமர்த்திக்கொள்வதை பார்த்தேன். நாங்கள்(சத்துஸ்) ஸஹ்பா எனும் இடத்தை அடைந்தபோது அவர்கள்ஹைஸ் எனும் பலகாரத்தைத் தயாரித்து ஒரு தோல் விரிப்பில் வைத்தார்கள். பிறகு என்னை அவர்கள் அனுப்பிட நான் (வலீமா விருந்திற்காக) மக்களை அழைத்தேன். அவர்கள் வந்து விருந்து சாப்பிட்டார்கள். அது (அன்னை) ஸஃபிய்யா(ரலி) அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் தாம்பத்திய உறவைத் தொடங்கிய(தற்கு அளித்த வலீமா - மணவிருந்)தாக அமைந்தது.

பிறகு அவர்கள் முன்னேறிச் செல்ல அவர்களுக்குஉஹு த் மலை தென்பட்டது. அவர்கள்,இது நம்மை நேசிக்கிற ஒரு மலை. இதை நாமும் நேசிக்கிறோம்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் மதீனா நகரை நெருங்கிவிட்டபோதுஇறைவா! இப்ராஹீம்(அலை) அவர்கள் மக்காவைப் புனிதமானதாக அறிவித்ததைப் போன்று மதீனாவின் இரண்டு மலைகளுக்கிடையேயுள்ள அதன் நிலப்பரப்பை நான் புனிதமானதாக அறிவிக்கிறேன். இறைவா! மதீனாவாசிகளின்ஸாஉ மற்றும் அவர்களின்முத்(து) ஆகிய அளவைகளில் அவர்களுக்கு வளத்தைக் கொடுப்பாயாக' என்று பிரார்த்தித்தார்கள்.

## வெள்ளி கலந்த பாத்திரத்தில் உண்பது

ஹதீஸ் 5426. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா(ரஹ்) கூறினார்

நாங்கள் ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அவர்களிடம் (இராக்கில் உள்ளதைஃபூன் நகரில்) இருந்தோம். அப்போது அவர்கள் குடிக்கத் தண்ணீர் கேட்டார்கள். அக்னி ஆராதனை செய்பவர் (மஜூ ஸி) ஒருவர் (வெள்ளிப் பாத்திரத்தில்) தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தார். கோப்பையை அவர்களின் கையில் அவர் வைத்தபோது அதை அவர்கள் அவரின் மீது வீசியெறிந்தார்கள். பிறகுநான் பலமுறை இவரை (வாய்மொழியால்) தடுத்திராதிருந்தால்..!என்று கூறினார்கள். (அதாவதுபல முறை வாய்மொழியால் தடுத்தபோது அவர் இணங்கியிருந்தால்) நான் இவ்வாறு (வீசியெறியும் செயலைச்) செய்திருக்க மாட்டேன்' என அவர்கள் சொல்வதைப் போன்றுள்ளது. ஆயினும், (நான் ஏன் இவ்வாறு செய்தேன் என்றால்,) நபி(ஸல்) அவர்கள்சாதாரண பட்டையோ அலங்காரப் பட்டையோ அணியாதீர்கள். பொன் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களில் அருந்தாதீர்கள். பொன் மற்றும் வெள்ளித் தட்டுகளில் உண்ணவும் செய்யாதீர்கள். ஏனெனில், அவை இம்மையில் (இறைமறுப்பாளர்களான) அவர்களுக்கும், மறுமையில் (இறைநம்பிக்கையாளர்களான) நமக்கும் உரியனவாகும்' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

## உணவு பற்றிய குறிப்பு

ஹதீஸ் 5427. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்ஆனை ஓதும் இறைநம்பிக்கையாளரின் நிலையானது, நாரத்தைப் பழம் போன்றதாகும். அதன் மணமும் நன்று; சுவையும் நன்று. குர்ஆனை ஓதாத இறைநம்பிக்கையாளரின் நிலையானது பேரீச்சம் பழத்தைப் போன்றதாகும். அதற்கு மணம் கிடையாது (ஆனால்,) அதன் சுவை இனிமையானது. குர்ஆனை ஓதுகிற நயவஞ்சகனின் நிலையானது, துளசிச் செடியின் நிலைக்கு ஒத்திருக்கிறது. அதன் மணம் நன்று. அதன் சுவையோ கசப்பானது. குர்ஆனை ஓதாத நயவஞ்சகனின் நிலையானது, குமட்டிக்காயின் நிலைக்கு ஒத்திருக்கிறது. அதற்கு மணமும் கிடையாது. அதன் சுவையும் கசப்பானதாகும்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5428. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மற்றப் பெண்களைவிட ஆயிஷாவுக்கு உள்ள சிறப்பு, மற்ற எல்லா உணவுகளையும் விடஸரீத் எனும் உணவுக்குள்ள சிறப்பைப் போன்றதாகும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5429. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பயணம் வேதனையின் ஒரு பகுதியாகும். உங்கள் தூக்கத்தையும் உணவையும் அது தடுத்துவிடுகிறது. எனவே, பயணி தாம் நாடிச் சென்ற நோக்கத்தை முடித்துக் கொண்டுவிட்டால், உடனே தம் வீட்டாரை நோக்கி விரைந்து வரட்டும்!

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## ரொட்டிக் குழம்பு

ஹதீஸ் 5430. காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) கூறினார்

(அடிமைப் பெண்ணாயிருந்து விடுதலை பெற்ற) பரீரா(ரலி) அவர்களின் விஷயத்தில் மூன்று வழிமுறைகள் கிடைத்தன:

1. (அன்னை) ஆயிஷா(ரலி) அவரை வாங்கி விடுதலை செய்ய விரும்பினார்கள். அப்போது பரீராவின் எசமான்கள்அவளுடைய வாரிசுரிமை ('வலா') எங்களுக்கு உரியதாகவே இருக்கும்' என்று கூறினார்கள். அதை ஆயிஷா(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் குறிப்பிட்டபோது, அவர்கள்நீ விரும்பினால், பரீராவின் வாரிசுரிமை உனக்கேயுரியது என்று நீ அவர்களுக்கு நிபந்தனையிடலாம். ஏனெனில், வாரிசுரிமை (அவ்வடிமையை) விடுதலை செய்தவருக்கே கிடைக்கும்' என்று கூறினார்கள்.

2. அவ்வாறே அவர் விடுதலை செய்யப்பட்டபோது அவர் தம் (அடிமைக்) கணவருடன் அவரின் மணபந்தத்தில் நீடிக்கவும் செய்யலாம். அல்லது கணவரைப் பிரிந்துவிடவும் செய்யலாம் என (இரண்டில் விரும்பியதைச் செய்து கொள்ள) விருப்ப உரிமை அளிக்கப்பட்டார்.

3. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு நாள் ஆயிஷா(ரலி) அவர்களின் வீட்டினுள் நுழைந்தார்கள். அப்போது அடுப்பில் பாத்திரம் ஒன்று கொதித்துக் கொண்டிருந்தது. நபி(ஸல்) அவர்கள் காலை உணவைக் கொண்டு வரும்படி பணித்தார்கள். உடனே அவர்களுக்கு ரொட்டியும் வீட்டிலிருந்த குழம்பும் கொண்டுவரப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்இறைச்சி (சமைக்கப்பட்ட)தனை நான் பார்க்கவில்லையா? என்று கேட்டார்கள். அதற்கு வீட்டார்,ஆம், இறைத்தூதர் அவர்களே! ஆனால் அது பரீராவுக்கு தர்மமாக வழங்கப்பட்ட இறைச்சியாகும். அதை அவர் நமக்கு அன்பளிப்பாகத் தந்தார்' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்அது அவருக்கு தர்மமாகும். நமக்கு அன்பளிப்பாகும்' என்று கூறினார்கள்.

## இனிப்புப் பண்டமும் தேனும்

ஹதீஸ் 5431. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இனிப்புப் பண்டத்தையும் தேனையும் விரும்பி வந்தார்கள்.

ஹதீஸ் 5432. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

('நபிமொழிகளை அதிகமாக அபூ ஹுரைரா அறிவிக்கிறாரே என்று மக்கள் என்னைப் பற்றிக் குறை கூறிக் கொண்டிருந்தார்கள்.) நான் என் பசி அடங்கினால் போதும் என்று நபி(ஸல்) அவர்களுடனேயே எப்போதும் இருந்துவந்தேன். அந்தக் காலக் கட்டத்தில் புளித்து உப்பிய (உயர் தரமான) ரொட்டியை நான் உண்பதுமில்லை (மெல்லிய) பட்டாடையை நான் அணிவதுமில்லை இன்னவரோ இன்னவளோ எனக்குப் பணிவிடை செய்வதுமில்லை. (பசியின் காரணத்தால்) நான் என் வயிற்றில் கூழாங்கற்களை வைத்துக் கட்டிக்கொண்டிருந்தேன்.

என்னை ஒருவர் (தம் இல்லத்திற்கு) அழைத்துச் சென்று, எனக்கு உணவளிக்க வேண்டும் என்ப(தை உணர்த்துவ)தற்காக ('எனக்கு விருந்தளியுங்கள் என்ற பொருள் கொண்டஅக்ரினீ எனும் சொல்லைச் சற்று மாற்றி)அக்ரிஃனீ-எனக்கு (ஓர்) இறைவசனத்தை ஓதிக் காட்டுங்கள் என்பேன். அவ்வசனம் என்னுடன் (முன்பே மனப்பாடமாக) இருக்கும். மக்களிலேயே ஜஅஃபர் இப்னு அபீ தாலிப்(ரலி) தாம் ஏழைகளுக்கு அதிகமாக உதவுபவராவார். அவர் எங்களை அழைத்துச் சென்று தம் வீட்டிலிருக்கும் உணவை எங்களுக்கு அளிப்பார். எந்த அளவிற்கென்றால் அவர் எதுவுமில்லாத நெய் (அல்லது தேன்) பையை எங்களிடம் கொண்டு வருவார். அதை நாங்கள் பிளந்து அதில் (ஒட்டிக்கொண்டு) இருப்பதை நாக்கால் வழித்து உண்போம்.

## சுரைக்காய்

ஹதீஸ் 5433. அனஸ்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் அடிமையும் தையற்காரருமான ஒருவரிடம் சென்றார்கள். அவர்களுக்கு சுரைக்காய் (உணவு) கொண்டுவரப்பட்டது. அதை நபி(ஸல்) அவர்கள் உண்ணத் தொடங்கினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதை (விரும்பி)ச் சாப்பிடுவதைப் பார்த்ததிலிருந்து அதை நானும் விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன்.

## ஒருவர் தம் சகோதரர்களுக்காக உணவு தயாரிக்க சிரமம் எடுத்துக்கொள்வது.

ஹதீஸ் 5434. அபூ மஸ்வூத் உக்பா இப்னு ஆமிர் அல்அன்சாரி(ரலி) கூறினார்

அபூ ஷுஐப் என்று அழைக்கப்படும் ஒருவர் அன்சாரிகளில் இருந்தார். அவர் அந்தப் பணியாளரிடம்,எனக்காக உணவு தயாரித்து வை! (ஐந்து பேரை விருந்துக்கு அழைக்கவிருக்கிறேன். அந்த) ஐவரில் ஒருவராக இறைத்தூதர்(ஸல்) அவர்களை அழைக்கவிருக்கிறேன்' என்று கூறிவிட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களை ஐந்து பேரில் ஒருவராக அழைத்தார். அப்போது அவர்களைப் பின்தொடர்ந்து மற்றொருவரும் வந்துவிட்டார். எனவே, நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் என்னை ஐந்து பேரில் ஒருவராக (விருந்துக்கு) அழைத்தீர்கள்! இந்த மனிதரோ எங்களைப் பின்தொடர்ந்து வந்துவிட்டார். நீங்கள் விரும்பினால் அவருக்கு அனுமதியளிக்கலாம் நீங்கள் நினைத்தால் அவரைவிட்டு விடலாம்' என்று கூறினார்கள். அதற்கு அபூ ஷுஐப்(ரலி)இல்லை அவருக்கு நான் அனுமதியளித்துவிட்டேன்' என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) முஹம்மத் இப்னு யூசுஃப்(ரஹ்) கூறினார்:

முஹம்மத் இப்னு இஸ்மாயீல் (அல்புகாரீ (ரஹ்) அவர்கள்,(விருந்தில்) ஒரு வட்டிலில் (ஸஹனில்) அமர்ந்துள்ள நபர்கள் மற்றொரு வட்டிலில் இருந்து (உணவை) எடுத்துண்ணலாகாது. ஆனால், ஒரே வட்டிலில் அமர்ந்திருப்போர் (வேண்டுமானால், அதிலுள்ள உணவை) ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்ளலாம் அல்லது (அதைச் செய்வதைக்கூட) கைவிடலாம்' என்று கூறினார்கள்.

## ஒருவரை விருந்துக்கு அழைத்துவிட்டு (அவருடன் சேர்ந்து உண்ணாமல் விருந்தளிப்பவர்) தம் பணியைக் கவனிக்கலாம்.

ஹதீஸ் 5435. அனஸ்(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (அவர்கள் செல்லுமிடமெல்லாம்) செல்கிற சேவகனாக இருந்தேன். (ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் பணியாளரும் தையற்காரருமான ஒருவரிடம் சென்றார்கள். அவர் உணவும் அதன் மீது சுரைக்காய்க் குழம்பும் உள்ள ஒரு தட்டை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சுரைக்காயைத் தேடலானார்கள். அதை நான் பார்த்தவுடன் சுரைக்காயை அவர்களுக்கு முன்னால் ஒன்று சேர்த்து வைக்கலானேன். அப்போது அந்தப் பணியாளர் தம் பணியைக் கவனிக்கச் சென்றார். நபி(ஸல்) அவர்கள் இப்படிச் செய்வதை (பிரியமாக சுரைக்காய் உண்பதை)ப் பார்த்த பின் நானும் சுரைக்காயை விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன். 57

## கறிக்குழம்பு

ஹதீஸ் 5436. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

தையற்காரர் ஒருவர் நபி(ஸல்) அவர்களைத் தாம் தயாரித்திருந்த உணவி(னை உண்பத)ற்காக அழைத்தார். நானும் நபி(ஸல்) அவர்களுடன் சென்றேன். அவர் வாற்கோதுமை ரொட்டியையும்,

சுரைக்காயையும் உப்புக்கண்டமும் இருந்த குழம்பையும் நபி(ஸல்) அவர்களின் முன்னால் வைத்தார். நபி(ஸல்) அவர்கள் உணவுத் தட்டின் நாலா பாகங்களிலும் சுரைக்காயைத் தேடுவதை பார்த்தேன். அன்றிலிருந்து நானும் சுரைக்காயை விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன்.

## உப்புக்கண்டம்

ஹதீஸ் 5437. அனஸ்(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களிடம் சுரைக்காயும் உப்புக்கண்டமும் உள்ள குழம்பு கொண்டு வரப்பட்டதைக் கண்டேன். அப்போது அவர்கள் சுரைக்காயைத் தேடி உண்பதைப் பார்த்தேன்.

ஹதீஸ் 5438. ஆயிஷா(ரலி) கூறினார்

(நபி(ஸல்) அவர்கள்) அதை (குர்பானி இறைச்சிகளை மூன்று நாள்களுக்கு மேலும் சேமித்து வைத்து உண்பதை) மக்கள் பட்டினியோடு இருந்த ஓர் ஆண்டில் தான் அப்படி(த் தடை) செய்தார்கள். வசதியுள்ளவர் ஏழைக்கு உணவளிக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். நாங்கள் ஆட்டுக் காலை எடுத்து வைத்துப் பதினைந்து நாள்களுக்குப் பிறகு அதை உண்டுவந்தோம். முஹம்மத்(ஸல்) அவர்களின் குடும்பத்தினர் குழம்புடன் கூடிய வெள்ளைக் கோதுமை ரொட்டியை (தொடர்ச்சியாக) மூன்று நாள்கள் கூட வயிறு நிரம்ப உண்டதில்லை.

## ஒருவர் வட்டிலில் இருந்து எதையேனும் எடுத்து மற்றவருக்குக் கொடுப்பது, அல்லது அவர் முன் வைப்பது.

அப்துல்லாஹ் இப்னு முபாரக்(ரஹ்) கூறினார்: (ஒரே வட்டிலில் அமர்ந்திருப்போர் அதிலுள்ளதை) ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்வதில் தவறில்லை. (ஆனால்,) ஒரு வட்டிலில் இருந்து மற்றொரு வட்டிலுக்குப் பரிமாறுவது கூடாது.

ஹதீஸ் 5439. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

தையற்காரர் ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களைத் தாம் தயாரித்த உணவி(னை உண்பத)ற்காக அழைத்தார். நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அருகே வாற்கோதுமை ரொட்டியையும், சுரைக்காயும் உப்புக்கண்டமும் உள்ள குழம்பையும் வைத்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தட்டைச் சுற்றிலும் சுரைக்காயைத் துழாவுவதை கண்டேன். அன்றிலிருந்து சுரைக்காயை நானும் விரும்பி(ச் சாப்பிட்டு)க் கொண்டே இருக்கிறேன்.

(மற்றோர் அறிவிப்பில்) ஸு மாமா இப்னு அப்தில்லாஹ் இப்னி அனஸ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள். அனஸ்(ரலி),நான் சுரைக்காயை ஒன்று சேர்த்து நபி(ஸல்) அவர்கள் முன் வைத்தேன்' என்று கூறினார்கள்.

## பேரீச்சச் செங்காய்களுடன் வெள்ளரிக் காயை(யும் சேர்த்து) உண்பது.

ஹதீஸ் 5440. அப்துல்லாஹ் இப்னு ஜஅ:பர் இப்னு அபீ தாலிப்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெள்ளரிக்காயுடன் (சேர்த்து) பேரீச்சச் செங்காய்களை உண்பதை கண்டேன்.

ஹதீஸ் 5441. அபூ உஸ்மான்(ரலி) கூறினார்

நான் அபூ ஹு ரைரா(ரலி) அவர்களிடம் ஏழு இரவுகள் விருந்தாளியாகத் தங்கியிருந்தேன். அவர்களும் அவர்களின் துணைவியாரும் அவர்களின் பணியாளும் இரவை மூன்று பங்குகளாகப் பிரித்துக் கொண்டு முறைவைத்து எழுந்து தொழுது வந்தார்கள். முதலில் ஒருவர் தொழுவார் பிறகு அவர் மற்றொருவரை எழுப்பிவிடுவார். (அவர் தொழுது முடித்தவுடன் இன்னொரு வரை தொழுகைக்கு எழுப்புவார். அபூ ஹு ரைராவுடன் தங்கியிருந்தபோது) அவர்கள் (இவ்வாறு) கூற

கேட்டேன்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு முறை) தம் தோழர்களிடையே பேரீச்சம் பழங்களைப் பங்கிட்டார்கள். எனக்கு ஏழு பேரீச்சம் பழங்கள் கிடைத்தன. அவற்றில் ஒன்று (நன்றாகக் கனியாத) தாழ்ந்த ரகப் பேரீச்சம் பழமாக இருந்தது.

ஹதீஸ் 5441. (மற்றோர் அறிவிப்பில்) அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) எங்களிடையே பேரீச்சம் பழங்களைப் பங்கிட்டார்கள். அவற்றிலிருந்து எனக்கு ஐந்து பழங்கள் கிடைத்தன் அவற்றில் நான்கு (கனிந்த) பேரீச்சம் பழங்களும் (நன்கு கனியாத) தாழ்ந்த ரகப் பேரீச்சம் பழம் ஒன்றும் இருந்தன. பிறகு நான் அந்தத் தாழ்ந்த ரகப் பேரீச்சம் பழத்தை என் கடைவாய்ப் பல்லால் மெல்வதற்குச் சிரமப்பட வேண்டியிருந்தது.

## பேரீச்சச் செங்காய்களும் பேரீச்சங்கனிகளும்.

அல்லாஹ் கூறினான்: மேலும், (ஈசாவின் அன்னை மர்யமிடம் வானவர் கூறினார்:) பேரீச்ச மரத்தின் அடிப்பகுதியைப் பிடித்துச் சற்று உலுக்குங்கள். அது உங்களின் மீது புத்தம் புதிய செங்காய்களை உதிர்க்கும் (திருக்குர்ஆன் 19:25)

ஹதீஸ் 5442. ஆயிஷா(ரலி) கூறினார்

நாங்கள் இரண்டு கறுப்பு நிறப் பொருள்களான பேரீச்சம் பழம் மற்றும் தண்ணிரால் வயிறு நிரம்பியிருந்த நிலையில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தார்கள்.

ஹதீஸ் 5443. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

மதீனாவில் யூதர் ஒருவர் இருந்தார். அவர் என் பேரீச்சம் பழங்களுக்காக, அவை இறக்கப்படும் (நாள்) வரை (எனக் கால வரம்பிட்டு) எனக்குக் கடன் கொடுத்திருந்தார். ரூமா கிணற்றுச் சாலையிலிருந்த நிலம் எனக்குச் சொந்தமாயிருந்தது. அது விளைச்சல் தரவில்லை. எனவே, கடன் ஓர் ஆண்டு தள்ளிப்போனது. அந்த யூதர் அறுவடை வேளையில் என்னிடம் (கடனைத் திருப்பிக் கேட்டு) வந்தார். (ஆனால்,) அந்த நிலத்திலிருந்து நான் எதையும் (அந்த ஆண்டு) அறுவடை செய்யவில்லை. எனவே, நான் அவரிடம் அடுத்த ஆண்டு வரை அவகாசம் தரும்படி கேட்கலானேன். அவர் மறுக்கலானார். இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அவர்கள் தம் தோழர்களிடம்புறப்படுங்கள் நாம் ஜாபிருக்காக அந்த யூதரிடம் அவகாசம் கேட்போம்' என்று கூறினார்கள். நான் என்னுடைய பேரீச்சந் தோப்பில் இருந்தபோது அவர்கள் (அனைவரும்) என்னிடம் வந்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் அந்த யூதரிடம் பேசத் தொடங்க, அவர்அபுல் காசிமே! நான் அவருக்கு அவகாசம் அளிக்க மாட்டேன்' என்று கூறலானார். இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் எழுந்து பேரீச்சம் மரங்களுக்கு இடையே சுற்றி வந்தார்கள் பிறகு, அவர் யூதரிடம் சென்று மீண்டும் பேசலானார்கள். அப்போதும் அவர் மறுத்துவிட்டார். பிறகு, நான் எழுந்து செங்காய்கள் சிலவற்றைக் கொண்டுவந்து நபி(ஸல்) அவர்கள் முன் வைத்தேன். அவர்கள் (அதை) உண்டார்கள். பிறகு(நீ ஓய்வெடுக்கும்) பந்தல் எங்கே, ஜாபிர்? என்று கேட்டார்கள். நான் அதைக் காட்டினேன். நபி(ஸல்) அவர்களுக்குப் படுக்கை விரித்துக் கொடுத்தேன். அவர்கள் (அதனுள்) சென்று உறங்கிப் பிறகு விழித்தார்கள். இன்னொரு கைப்பிடி (செங்காய்களை) அவர்களிடம் கொண்டு வந்து கொடுத்தேன். அதிலிருந்து அவர்கள் உண்டார்கள். பிறகு, எழுந்து அந்த யூதரிடம் (மீண்டும்) பேசினார்கள். அவர் அதற்கும் (உடன்பட) மறுத்துவிட்டார். உடனே நபி(ஸல்) அவர்கள் இரண்டாம் முறையாக செங்காய்கள் கொண்ட பேரீச்சம் மரங்களுக்கிடையே நின்றார்கள். பிறகு,ஜாபிரே! (பழத்தைப்) பறித்து (உன்னுடைய கடனை) அடைப்பாயாக!என்று கூறினார்கள். அவர்கள் பறிக்குமிடத்தில் நிற்க, நான் (என்னுடைய கடனை) அடைக்கும் அளவுக்கு மரத்திலிருந்து (பழங்களைப்) பறித்தேன். (பிறகும்) பழம் மீதமிருந்தது. நான் புறப்பட்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்று அவர்களுக்கு இந்த மகிழ்ச்சியான

செய்தியைத் தெரிவித்தேன். அவர்கள்,நான் இறைத்தூதர்தாம் என்று நானே சாட்சியம் அளிக்கிறேன்' என்று கூறினார்கள்.

(இந்த ஹதீஸின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)அரீஷ் (பந்தல்) மற்றும்அர்ஷ் ஆகிய சொற்களுக்குக்கட்டடம் என்று பொருள்.(இச்சொல்லில் இருந்து பிறந்த)மஅரூஷாத் எனும் சொல்லுக்குத் திராட்சை முதலியவற்றின் பந்தல் என்று பொருள்' என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## பேரீச்சங் குருத்தை உண்ணுதல்

ஹதீஸ் 5444. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தபோது பேரீச்ச மரத்தின் குருத்து ஒன்று கொண்டுவரப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,மரங்களில் ஒன்று உண்டு. அதன் வளம் முஸ்லிமுக்குள்ள வளத்தைப் போன்றதாகும்' என்று கூறினார்கள். உடனே நான்,அவர்கள் பேரீச்ச மரத்தைத்தான் குறிப்பிடுகிறார்கள்' என்று நினைத்தேன். எனவே, நான்அது பேரீச்சம் மரம் தான், இறைத்தூதர் அவர்களே!என்று கூற விரும்பினேன். பிறகு (என்னுடனிருப்பவர்களைத்) திரும்பிப் பார்த்தேன். (அங்கிருந்த) பத்து பேரில் நான் பத்தாமவனாக, அவர்கள் அனைவரிலும் இளம் வயதுடையவனாக இருந்தேன். எனவே, மௌனமாம்விட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்களே,அது பேரீச்ச மரம் தான்' என்று கூறினார்கள்.

## 'அல்அஜ்வா (எனும் அடர்த்தியான மதீனாப் பேரீச்சம் பழம்).

ஹதீஸ் 5445. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தினந்தோறும் காலையில் (வெறும் வயிற்றில்) ஏழுஅஜ்வா (ரகப்) பேரீச்சம் பழங்களைச் சாப்பிடுகிறவருக்கு, அந்த நாள் எந்த விஷமும் இடரளிக்காது எந்தச் சூனியமும் அவருக்கு இடையூறு செய்யாது. என ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

## (பலர் இருக்கும் இடத்தில் ஒருவரே) இரண்டு பேரீச்சம் பழங்களைச் சேர்த்துச் சாப்பிடுவது.

ஹதீஸ் 5446. ஜபலா இப்னு சுஹைம்(ரஹ்) கூறினார்

அப்துல்லாஹ் இப்னு ஸு பைர்(ரலி) (ஹிஜாஸ் பகுதியின் ஆட்சியாளராக) இருந்தபோது எங்களுக்குப் பஞ்ச ஆண்டு ஏற்பட்டது. அவர்கள் எங்களுக்குப் பேரீச்சம் பழம் கொடுத்தார்கள். நாங்கள் அவற்றைச் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) எங்களைக் கடந்து செல்வார்கள். அப்போது அவர்கள்,(பேரீச்சம் பழங்களை) இரண்டிரண்டாக ஒன்று சேர்த்துச் சாப்பிடாதீர்கள். ஏனெனில், (இரண்டு பழங்களை) ஒன்றாகச் சேர்த்துச் சாப்பிடுவதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள்' என்று சொல்வார்கள். பிறகு,ஒருவர் தம் சகோதரிடம் (அவ்வாறு சேர்த்துச் சாப்பிட) அனுமதி பெற்றிருந்தாலே தவிர' என்று சொல்வார்கள்.

"அனுமதி (தொடர்பான இக்கருத்து) இப்னு உமர்(ரலி) அவர்களின் கூற்றாகும்' என்று (அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷு அபா(ரஹ்) கூறினார்.

## வெள்ளரிக்காய்

ஹதீஸ் 5447. அப்துல்லாஹ் இப்னு ஜஅஃபர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் வெள்ளரிக்காய்களுடன் (சேர்த்து) பேரீச்சச் செங்காய்களை உண்பதை பார்த்திருக்கிறேன்.

## பேரீச்ச மரங்களில் உள்ள வளம் (பரக்கத்).

ஹதீஸ் 5448. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மரங்களில் ஒரு மரம் உண்டு. அது முஸ்லிமைப் போன்று (வளமுள்ளது) ஆகும். அதுதான் பேரீச்ச மரமாகும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## ஒரே சமயத்தில் இரண்டு வகைப் பழங்களை அல்லது இரண்டு வகை உணவுகளைச் சேர்த்து உண்பது.

ஹதீஸ் 5449. அப்துல்லாஹ் இப்னு ஜஅ..பர்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , வெள்ளரிக்காய்களுடன் பேரீச்சச் செங்காய்களையும் ஒன்றாகச் சேர்த்துச் சாப்பிடுவதை பார்த்திருக்கிறேன். 67

## பத்துப் பத்துப் பேராக விருந்தாளிகளை அனுமதிப்பதும், பத்துப் பத்துப் பேராக உணவு விரிப்பில் அமர்வதும்.

ஹதீஸ் 5450. அனஸ்(ரலி) கூறினார்

என் தாயார் உம்மு சுலைம்(ரலி) ஒருமுத்(து) அளவு வாற்கோதுமையை எடுத்து நொறுகலாக அரைத்து (பால் கலந்து) கஞ்சி தயாரித்துத் தம்மிடமிருந்த நெய் உள்ள தோல் பை ஒன்றையும் எடுத்து (அதிலிருந்த நெய்யை அந்தக் கஞ்சியில்) ஊற்றினார்கள். பிறகு என்னை நபி(ஸல்) அவர்களிடம் அனுப்பிவைத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களிடையே அமர்ந்திருக்க நான் அவர்களிடம் சென்று அவர்களை அழைத்தேன். அவர்கள்,என்னுடன் இருப்பவர்களும் (வரலாமா)? என்று கேட்டார்கள். நான் சென்று (என் தாயாரிடம்),நபி(ஸல்) அவர்கள் தம்முடன் இருப்பவர்களும் வரலாமா? என்று கேட்கிறார்கள்' என்று சொன்னேன். உடனே (என் தாயாரின் இரண்டாம் கணவர் (அபூ தல்ஹா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! இது (என் மனைவி) உம்மு சுலைம் தயாரித்த (சிறிதளவு) உணவுதான்' என்று கூறினார்கள். பிறகு, நபி(ஸல்) அவர்கள் (எங்கள் வீட்டினுள்) வந்தார்கள். அந்த உணவு கொண்டு வரப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,என்னிடம் பத்துப்பேரை வரச் சொல்லுங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே பத்துப் பேர் வந்தார்கள். அவர்கள் அனைவரும் வயிறு நிரம்பும் வரை உண்டார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள்,என்னிடம் (இன்னுமொரு) பத்துப்பேரை வரச் சொல்லுங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் பத்துப் பேரும் வந்து வயிறு நிரம்பும் வரை உண்டார்கள். பிறகு மீண்டும்(மற்றுமொரு) பத்துப்பேரை என்னிடம் வரச்சொல்லுங்கள்' என்று கூறினார்கள். இவ்வாறே நாற்பது பேரை எண்ணும் வரை கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களும் உண்டுவிட்டு எழுந்தார்கள். நான் அதிலிருந்து ஏதேனும் குறைந்துள்ளதா என்று கவனிக்கலானேன். (குறையாமல் அப்படியே இருந்தது. )

## வெள்ளைப்பூண்டு மற்றும் (வாடையுள்ள) கீரை வகைகளை உண்பது விரும்பத் தக்கதன்று.

இது தொடர்பாக நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5451. அப்துல் அஸீஸ் இப்னு ஸு ஹைப்(ரஹ்) கூறினார்

அனஸ்(ரலி) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்கள் வெள்ளைப்பூண்டு குறித்து என்ன சொல்ல நீங்கள் கேட்டிக்கிறீர்கள்? என்று வினவப்பட்டது. அதற்கு அனஸ்(ரலி),(அதைச்) சாப்பிட்டவர் நம் பள்ளிவாசலை நெருங்க வேண்டாம் எனக் கூறினார்கள்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5452. அதாஉ (ரஹ்) கூறினார்

நபி (ஸல்) அவர்கள், வெள்ளைப் பூண்டோ வெங்காயமோ சாப்பிட்டவர்நம்மிடமிருந்து விலகியிருக்கட்டும் அல்லதுநம் பள்ளிவாசலிலிருந்து விலகியிருக்கட்டும்' என்று சொன்னதாக ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்.

## 'அல்கபாஸ் அது மிஸ்வாக் மரத்தின் பழமாகும்.

ஹதீஸ் 5453. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன்மர்ருழ் ழஹ்ரான் எனுமிடத்தில் ('கபாஸ் எனும்) மிஸ்வாக் மரத்தின் பழத்தைப் பறித்துக் கொண்டிருந்தோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், இதில் கறுப்பானதைப் பறியுங்கள் ஏனெனில், அதுதான் மிகவும் நன்றாக இருக்கும்' என்று கூறினார்கள். அப்போதுதாங்கள் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தீர்களா? என்று கேட்கப்பட்டது. அவர்கள், ஆம்! அதை மேய்க்காத இறைத் தூதரும் உண்டா? என்று கேட்டார்கள்.

## உணவு உண்ட பின் வாய் கொப்பளித்தல்.

ஹதீஸ் 5454. சுவைத் இப்னு நுஅமான் (ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் கைபருக்குப் புறப்பட்டோம். நாங்கள்ஸஹ்பா எனுமிடத்தில் இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் உணவு கொண்டு வரக் கூறினார்கள். அவர்களிடம் மாவு மட்டுமே கொண்டுவரப்பட்டது. அதை நாங்கள் (அனைவரும்) உண்டோம். பிறகு நபி (ஸல்) அவர்கள் தொழுகைக்காக எழுந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் வாய் கொப்பளித்தார்கள். நாங்களும் வாய் கொப்பளித்தோம்.

ஹதீஸ் 5455. சுவைத் (ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் கைபருக்குச் சென்றோம். நாங்கள்ஸஹ்பா எனுமிடத்தில் இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் உணவு கொண்டு வரக் கூறினார்கள். மாவு மட்டும்தான் அவர்களிடம் கொண்டு வரப்பட்டது. நாங்கள் அவர்களுடன் அதை மென்று உண்டோம். பிறகு தண்ணீர் கொண்டு வரச் சொல்லி வாய் கொப்பளித்தார்கள். நாங்களும் அவர்களுடன் வாய் கொப்பளித்தோம். பிறகு, எங்களுடன் அவர்கள் மஃக்ரிப் தொழுகை தொழுதார்கள். ஆனால், (புதிதாக) அவர்கள் அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை.

யஹ்யா இப்னு ஸயீத் (ரஹ்) கூறினார்:ஸஹ்பா எனும் அந்த இடம் கைபரிலிருந்து ஒரு மாலை நேரப் பயணத் தொலைவில் உள்ளது.

## விரல்களைக் கைக்குட்டையால் துடைப்பதற்கு முன் அவற்றை நாக்கால் வழித்து உறிஞ்சுவது.

ஹதீஸ் 5456. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் சாப்பிட்டால் அவர் தம் கையைத் தாமே உறிஞ்சாமல், அல்லது (மனைவி போன்றவரிடம்) உறிஞ்சத் தராமல் அதை அவர் துடைத்துக் கொள்ளவேண்டாம்.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

## கைக்குட்டை (யால் துடைப்பது)

ஹதீஸ் 5457. ஸயீத் இப்னு ஹாரிஸ் (ரஹ்) கூறினார்

நான் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்களிடம், நெருப்புத் தீண்டிய (சமைத்த) உணவை உண்பதால் (தொழுகைக்காக மீண்டும்) அங்கசுத்தி (உளூ) செய்ய வேண்டுமா? என்று

கேட்டேன். அவர்கள்,தேவையில்லை. நபி(ஸல்) அவர்களின் காலத்தில் அது போன்ற உணவு அரிதாகவே எங்களுக்குக் கிடைத்துவந்தது. அவ்வாறு எங்களுக்கு அது கிடைக்கும்போது எங்கள் முன்கைகள், மேல்கைகள் மற்றும் பாதங்கள் தாம் எங்களின் கைகுட்டைகளாக இருந்தன. பிறகு நாங்கள் தொழுவோம். (நெருப்பால் சமைத்த உணவை உண்டதற்காகப் புதிதாக) அங்கசுத்தி செய்யமாட்டோம்' என்று பதிலளித்தார்கள்.

## உணவு உண்ட பின் சொல்ல வேண்டிய பிரார்த்தனை.

ஹதீஸ் 5458. அபூ உமாமா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (சாப்பிட்டு முடித்த பின்) தம் உணவு விரிப்பை எடுக்கும்போதுஅல்ஹம்து லில்லாஹி கஸீரன் தய்யிபன் முபாரக்கன் ஃபீஹி, ஃகைர மக்ஃபிய்யின் வலா முவத்தஇன் வலா முஸ்தஃக்னன் அன்ஹு ரப்பனா' என்று பிரார்த்திப்பார்கள். (பொருள்: அதிகமான, தூய்மையான, வளமிக்க எல்லாப் புகழும் (நன்றியும்) அல்லாஹ்வுக்கே உரியது. இறைவா! இப்புகழ் முற்றுப் பெறாதது கைவிடப்படக் கூடாதது தவிர்க்க முடியாதது ஆகும்.)

ஹதீஸ் 5459. அபூ உமாமா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்உணவு உண்ட பின் அல்லதுதம் உணவு விரிப்பை எடுக்கும் போத'அல்ஹம்துலில்லாஹி கஅபானா வ அர்வானா ஃகைர மக்ஃபிய்யின் வலா மக்ஃபூரின்' என்று கூறுவார்கள். (பொருள்: எங்களுக்குப் போதுமான உணவு அளித்து, எங்களின் தாகம் தணித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் (நன்றியும்) உரியது. இப்புகழ் முற்றுப் பெறாதது மறுக்க முடியாதது ஆகும்.)

சில வேளைகளில்,ல(க்)கல் ஹம்து ரப்பனா, ஃகைர மக்ஃபிய்யின் வலா முவத்தஇன் வலா முஸ்தஃக்னன் ரப்பனா' என்று கூறுவார்கள். (பொருள்: உனக்கே எல்லாப் புகழும் (நன்றியும்) உரியது எங்கள் இறைவா! இப்புகழ் முற்றுப் பெறாதது கைவிடப்படக் கூடாதது தவிர்க்க இயலாதது ஆகும்.)

## பணியாளுடன் உண்பது

ஹதீஸ் 5460. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவரிடம் அவரின் பணியாள் அவரின் உணவைக்கொண்டு வந்தால், அவர் அப்பணியாளைத் தம்முடன் (அமர வைத்துக்கொள்ளட்டும். அவ்வாறு) அமர வைத்துக்கொள்ளவில்லையென்றாலும் அவருக்குஒரு பிடி அல்லது இருபிடிகள் அல்லதுஒரு கவளம் அல்லது இரண்டு கவளங்கள் உணவு கொடுக்கட்டும். ஏனெனில், அவர் (அதை சமைத்தபோது) அதன் வெப்பத்தையும் அதன் சிரமத்தையும் சகித்துக் கொண்டார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## உணவு உண்டுவிட்டு (இறைவனுக்கு) நன்றி செலுத்துகிறவர் (பசியைப்) பொறுத்துக் கொள்ளும் நோன்பாளியைப் போன்றவராவார்.

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## விருந்துக்கு அழைக்கப்படும் ஒருவர் தம்முடன் மற்றவரும் வரலாமா என (அனுமதி) கேட்பது.

அனஸ்(ரலி) கூறினார்:

ஒரு முஸ்லிம் (நல்வழியில் சம்பாதிப்பது குறித்து) சந்தேகம் கொள்ளப்படாதவராக இருந்தால், அவரிடம் நீ செல்லும்போது அவர் (அளிக்கும்) உணவை நீ உண்ணலாம் அவர் (வழங்கும்) பானத்தை நீ பருகலாம்.

ஹதீஸ் 5461. அபூ மஸ்வூத் அல்அன்சாரி(ரலி) கூறினார்

அபூ ஷு ஐப் எனும் குறிப்புப் பெயரால் அழைக்கப்படும் ஒருவர் அன்சாரிகளில் இருந்தார். அவருக்கு இறைச்சி விற்கும் பணியாளர் ஒருவர் இருந்தார். (ஒருமுறை) அபூ ஷு ஐப்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது நபியவர்கள் தம் தோழர்களுடன் இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் முகத்தில் பசியின் வாட்டத்தைக் கண்டார். உடனே இறைச்சிவிற்கும் தம் பணியாளிடம் சென்று,ஐந்து பேருக்குப் போதுமான உணவொன்றை எனக்காகத் தயார் செய். நான் அந்த ஐந்து பேரில் ஒருவராக நபி(ஸல்) அவர்களை அழைக்கக்கூடும்' என்று கூறினார். உடனே அந்தப் பணியாளர் அவருக்காகச் சிறிய அளவில் ஓர் உணவைத் தயாரித்தார். பிறகு அபூ ஷு ஐப்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் வந்து அவர்களை (உணவுண்ண) அழைத்தார்கள். அப்போது நபியவர்களைப் பின்தொடர்ந்து மற்றொருவரும் வந்தார். எனவே, நபி(ஸல்) அவர்கள்அபூ ஷு ஐபே! ஒருவர் எம்மைப் பின்தொடர்ந்து வந்துவிட்டார். நீங்கள் நினைத்தால் அவருக்கும் (நம்மோடு உணவருந்த) அனுமதியளிக்கலாம் நீங்கள் நினைத்தால் அவரைவிட்டுவிடலாம்' என்று கூறினார்கள். அதற்கு அபூ ஷு ஐப்(ரலி),(அவரைத் திருப்பி அனுப்ப) வேண்டாம். நான் அவருக்கு அனுமதியளித்துவிட்டேன்' என்று கூறினார்கள்.

## இரவு உணவு வைக்கப்பட்டால் அந்த உணவை விடுத்து (தொழுகைக்கு) விரைந்து செல்லவேண்டாம்.

ஹதீஸ் 5462. அம்ர் இப்னு உமய்யா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் கரத்திலிருந்த ஆட்டுச் சப்பையை(க் கத்தியால்) துண்டு போ(ட்டுச் சாப்பி)டுவதை பார்த்தேன். அப்போது தொழுகைக்கு அழைப்பு விடுக்கப்பட்டது. உடனே அவர்கள் அதையும் அதைத் துண்டிக்கப் பயன்படுத்திய கத்தியையும் (அப்படியே) போட்டுவிட்டு எழுந்து தொழுதார்கள். (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை.

ஹதீஸ் 5463. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவு உணவு உங்களுக்கு முன் வைக்கப்பட்டுக் கொண்டிருக்கத் தொழுகைக்குஇகாமத் சொல்லப்பட்டால், முதலில் உணவை உண்ணுங்கள். (பிறகு தொழச் சொல்லுங்கள்.)

இதைப் போன்றே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5464. நாஃபிஉ(ரஹ்) கூறினார்

ஒருமுறை அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) இரவு உணவு அருந்தினார்கள். அப்போது (தொழுகையில்) இமாம் ஓதியதை இப்னு உமர் கேட்டுக்கொண்டே இருந்தார்கள்.

ஹதீஸ் 5465. நபி(ஸல்) அவர்கள் கூறினார்

தொழுகைக்குஇகாமத் சொல்லப்பட்டுக் கொண்டிருக்க இரவு உணவு வந்துவிட்டால் முதலில் உணவை அருந்துங்கள். (பின்னர் தொழுங்கள்.)

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில்(இரவு உணவு வந்துவிட்டால்' என்பதற்கு பதிலாக)இரவு உணவு வைக்கப்பட்டால்' என்று கூறப்பட்டுள்ளது.

## "நீங்கள் உணவருந்திவிட்டால் (உடனே) கலைந்து சென்றுவிடுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 33:53 வது) வசனத்தொடர்.

ஹதீஸ் 5466. அனஸ்(ரலி) கூறினார்

பர்தாவின் சட்டத்தை (எடுத்துரைக்கும் வசனம் அருளப்பட்ட சூழ்நிலை குறித்து) மக்களிலேயே அதிகமாக அறிந்தவன் நானே. உபை இப்னு கஅப்(ரலி) என்னிடம் அது பற்றிக் கேட்டுவந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களின் மணாளராக ஆனார்கள். ஸைனப்(ரலி) அவர்களை நபி(ஸல்) அவர்கள் மதீனா நகரில் மணந்தார்கள். அப்போது அவர்கள் உச்சிப் பொழுதுக்குப் பின் மக்களை வலீமா மணவிருந்துக்காக அழைத்திருந்தார்கள். (விருந்து முடிந்து) மக்கள் எழுந்து சென்ற பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (சற்று நேரம்) அமர்ந்திருந்தார்கள். அவர்களுடன் வேறு சிலரும் அமர்ந்திருந்தார்கள். இறுதியில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து சென்றார்கள். அவர்களுடன் நானும் சென்றேன். அவர்கள் (அன்னை) ஆயிஷா(ரலி) அவர்களின் அறைவாசலை அடைந்தார்கள். பிறகு வீட்டில் அமர்ந்திருந்தவர்கள் வெளியேறிவிட்டதாகக் கருதித் திரும்பி வந்தார்கள். நானும் அவர்களுடன் திரும்பி வந்தேன். அப்போதும் அந்தச் சிலர் அதே இடத்தில் அமர்ந்திருந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் திரும்பி விட, அவர்களுடன் நானும் இரண்டாவது முறையாகத் திரும்பினேன். இறுதியில் ஆயிஷா(ரலி) அவர்களின் அறை வாசலை அடைந்தார்கள். பிறகு (ஸைனப்(ரலி) அவர்களின் இல்லத்திற்கு) நபியவர்கள் திரும்ப, நானும் அவர்களுடன் திரும்பி வந்தேன். அப்போது அவர்கள் எழுந்து சென்றுவிட்டிருந்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் தமக்கும் எனக்குமிடையே திரையிட்டார்கள். அப்போதுதான் பர்தா(வின் சட்டத்தைக் கூறும் இறைவசனம்) அருளப்பெற்றது.

# அத்தியாயம் 71 அகீகா

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## அகீகா கொடுக்கப்படாத குழந்தைக்கு, அது பிறந்த நாளன்றே பெயர் சூட்டுவதும் இனிப்பான பொருளை மென்று அதன் வாயிலிடுவதும்.

ஹதீஸ் 5467. அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) கூறினார்

எனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதை நான் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றேன். அப்போது அவர்கள்இப்ராஹீம் என அக்குழந்தைக்குப் பெயர் சூட்டினார்கள். பிறகு, பேரீச்சம் பழத்தை மென்று குழந்தையின் வாயில் அதை இட்டார்கள். மேலும், அதற்காக சுபிட்சம் (பரக்கத்) வேண்டிப் பிரார்த்தித்தார்கள். பிறகு என்னிடம் கொடுத்துவிட்டார்கள்.

அக்குழந்தையே அபூ மூஸா (ரலி) அவர்களின் மூத்த குழந்தையாகும்.

ஹதீஸ் 5468. ஆயிஷா (ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களிடம், அவர்கள் இனிப்புப் பொருளை மென்று வாயிலிடுவதற்காக ஆண் குழந்தை ஒன்று கொண்டு வரப்பட்டது. அது அவர்களின் மீது சிறுநீர் கழித்துவிட்டது. (சிறுநீர் கழித்த) இடத்தில் நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் ஊற்றும்படி செய்தார்கள்.

ஹதீஸ் 5469. அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) கூறினார்

மக்காவில் (என் புதல்வர்) அப்துல்லாஹ் இப்னு ஸு பைரை நான் கருவுற்றேன். கர்ப்ப காலம் முழுமையடைந்துவிட்ட நிலையில் புறப்பட்டு நான் மதீனா சென்றேன். (வழியில்)குபா'வில் தங்கினேன். குபாவிலேயே எனக்குப் பிரசவமாகி விட்டது. பிறகு குழந்தையை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்று அவர்களின் மடியில் வைத்தேன். பிறகு நபி(ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சம் பழத்தைக் கொண்டு வரச்சொல்லி அதை மென்று குழந்தையின் வாயில் உமிழ்ந்தார்கள். அப்துல்லாஹ்வின் வயிற்றுக்குள் சென்ற முதல் (உணவுப்) பொருள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உமிழ் நீராகத்தான் இருந்தது. பிறகு, அவர்கள் பேரீச்சம் பழத்தை மென்று அப்துல்லாஹ்வின் வாயில் அதை இட்டார்கள். பின்னர், அப்துல்லாஹ்வுக்கு சுபிட்சம் (பரக்கத்) வேண்டிப் பிரார்த்தனை செய்தார்கள். (என் புதல்வர்) அப்துல்லாஹ்தான் இஸ்லாத்தில் பிறந்த முதல் குழந்தையாவார். எனவே, முஸ்லிம்கள் அவர் பிறந்ததற்காக மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். ஏனெனில், அவர்களிடம்,யூதர்கள் உங்களுக்கு சூனியம் வைத்துவிட்டார்கள். எனவே, உங்களுக்கு (இனி) குழந்தை பிறக்காது எனக் கூறப்பட்டுவந்தது.

ஹதீஸ் 5470. அனஸ் இப்னு மாலிக் (ரலி) கூறினார்

(என் தாயார் உம்மு சுலைம் அவர்களின் இரண்டாவது கணவரான) அபூ தல்ஹா (ரலி) அவர்களின் புதல்வர் ஒவர் நோய்வாய்ப்பட்டு இருந்தார். (ஒரு முறை) அபூ தல்ஹா (ரலி) வெளியே செல்ல அப்போது அந்தப் பையன் இறந்துவிட்டான். அபூ தல்ஹா (ரலி) திரும்பி வந்தபோதுஎன் மகன் என்ன ஆனான்? என்று கேட்டார்கள். (அவரின் துணைவியார்) உம்மு சுலைம் (துக்கத்தை வெளிக்காட்டாமல்),அவன் முன்பைவிட நிம்மதியாக இருக்கிறான்' என்று பதிலளித்துவிட்டு, அவர்களுக்கு முன்னால் இரவு உணவை வைத்தார். அபூ தல்ஹா (ரலி) இரவு உணவை அருந்தினார்கள். பிறகு உம்மு சுலைம் அவர்களுடன் (அன்றிரவு) தாம்பத்திய உறவுகொண்டார்கள். உறவு கொண்டு முடித்தபோது, உம்மு சுலைம் அவர்கள் (தம் கணவரிடம்)பையனை அடக்கம் செய்(ய ஏற்பாடு செய்)யுங்கள்' என்று கூறினார்கள். விடிந்ததும் அபூ தல்ஹா (ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று (நடந்ததைத்) தெரிவித்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இன்றிரவு தாம்பத்திய உறவுகொண்டீர்களா? எனக்

கேட்டார்கள். அபூ தல்ஹா(ரலி),ஆம்' என்றார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இறைவா! அவர்களின் இரவில் அவர்கள் இருவருக்கும் சுபிட்சம் வழங்குவாயாக' என்று பிரார்த்தித்தார்கள். 5 பின்னர் உம்முசுலைம்(ரலி) ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தார்கள். என்னிடம் அபூ தல்ஹா(ரலி),குழந்தையை நபி(ஸல்) அவர்களிடம் பத்திரமாகக் கொண்டுசெல்' என்று கூறினார்கள். அவ்வாறே நான் குழந்தையை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டுசென்றேன். என்னிடம் உம்மு சுலைம்(ரலி) பேரீச்சம் பழங்கள் சிலவற்றைக் கொடுத்தனுப்பியிருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் குழந்தையை வாங்கிக்கொண்டு,இக்குழந்தையுடன் ஏதேனும் (இனிப்புப்) பொருள் உள்ளதா? என்று கேட்டார்கள். (அங்கிருந்த) மக்கள்ஆம் பேரீச்சம் பழங்கள் உள்ளன' என்று பதிலளித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் அதை வாங்கி (தம் வாயால்) மென்று பிறகு தம் வாயிலிருந்து அதை எடுத்துக் குழந்தையின் வாயில் வைத்து அதைத் தடவினார்கள். குழந்தைக்குஅப்துல்லாஹ் எனப் பெயர் சூட்டினார்கள்.

இதே ஹதீஸ் அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## அகீகா கொடுக்கும்போது பையனின் (பிறந்த முடி களைந்து) பாரத்தை இறக்குவது.

ஹதீஸ் 5471. சல்மான் இப்னு ஆமிர்(ரலி) கூறினார்

பையன் (பிறந்த) உடன்அகீகா (கொடுக்கப்படல்) உண்டு.

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து சல்மான் இப்னு ஆமிர்(ரலி) அறிவிக்கும் ஹதீஸை ஒன்றுக்கும் மேற்பட்டவர்கள் அறிவித்தார்கள்.

இப்னு சீரின்'(ரஹ்) வழியாக வரும் சல்மான்(ரலி) அவர்களின் இந்த ஹதீஸை யஸீத் இப்னு இப்ராஹீம்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5472. சல்மான் இப்னு ஆமிர் அள்ளப்பீ(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,பையன் (பிறந்த) உடன்அகீகா (கொடுக்கப்படல்) உண்டு. எனவே, அவனுக்காக (ஆடு அறுத்து)குர்பானி கொடுங்கள். அவன் (தலை முடி களைந்து) பாரத்தை இறக்கிடுங்கள்' என்று சொல்ல கேட்டிருக்கிறேன்.

--ஹபீப் இப்னு அஷ்ஷமீத்(ரஹ்) கூறினார்

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) அவர்களிடம்,அவர்கள் யாரிடமிருந்து அகீகா பற்றிய ஹதீஸைக் கேட்டார்கள்' என்று வினவும்படி என்னை இப்னு சீரின்(ரஹ்) பணித்தார்கள். அவ்வாறே நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள்,சமுரா இப்னு ஜு ன்தப்(ரலி) அவர்களிடமிருந்து நான் (அகீகா பற்றிய ஹதீஸைச்) செவியுற்றேன்' என்று பதிலளித்தார்கள்.

## 'அல்ஃபரஉ (ஆடு, அல்லது ஒட்டகத்தின் முதலாவது குட்டியைப் பலியிடுவது).

ஹதீஸ் 5473. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இனி), தலைக்குட்டி(யைப் பலியிடும் அறியாமைக் காலச் செய்கை)யும் இல்லை. (ரஜப் மாதத்தின் முதல் பத்து நாள்களில்) பிராணிகளைப் பலியிடுவதும் இல்லை.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

(ஆடு மற்றும் ஒட்டகம் ஆகியவை ஈனும்) முதலாவது குட்டிஃபரஉ ஆகும் அதை (அறியாமைக் கால) மக்கள் தம் தெய்வச் சிலைகளுக்காகப் பலியிட்டுவந்தனர். ரஜப் மாதத்தி(ன் முதல் பத்து நாள்களி)ல் பலியிடப்படும் பிராணிஅத்தீரா'வாகும்.

## ‘அத்தீரா (ரஜப் மாதத்தின் முதல் பத்து நாள்களில் பிராணிகளைப் பலியிடல்).

ஹதீஸ் 5474. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இனி), தலைக் குட்டி(யைப் பலியிடும் அறியாமைக் காலச் செய்கை)யும் இல்லை. (ரஜப் மாதத்தின் முதல் பத்து நாள்களில்) பிராணிகளைப் பலியிடுவதும் இல்லை.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

(அறியாமைக் காலம்) மக்களுடைய (ஆடு ஒட்டகம் ஆகியவை ஈனும்) முதலாவது குட்டியே:பரஉ ஆகும் அதை அம்மக்கள் தம் தெய்வச் சிலைகளுக்காகப் பலியிட்டு வந்தனர். ரஜப் மாதத்தி(ன் முதல் பத்து நாள்களி)ல் பலியிடப்படும் பிராணிஅத்தீரா‘வாகும்.

# அத்தியாயம் 72 (உண்பதற்காக) அறுக்கப்படும் பிராணிகளும் வேட்டைப் பிராணிகளும்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## வேட்டைப் பிராணியின் மீது (அம்பு எய்யும் போது) அல்லாஹ்வின் பெயர் ('பிஸ்மில்லாஹ்) கூறுவது.

உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! (நீங்கள் இஹ்ராம் கட்டிய நிலையில்) உங்கள் கைகளும் உங்கள் ஈட்டிகளும் (சுலபமாக) அடையக்கூடிய வேட்டைப் பிராணிகளில் ஒன்றின் மூலம் அல்லாஹ் உங்களை நிச்சயமாகச் சோதிப்பான். (திருக்குர்ஆன் 05:94)2

(இறைநம்பிக்கையாளர்களே!) உங்களின் மீது (தடைவிதித்துக்) கூறப்பட்டிருப்பவை தவிர மற்ற நாற்கால் பிராணிகள் உங்களுக்கு (உணவிற்காக) அனுமதிக்கப்பட்டுள்ளன. (திருக்குர்ஆன் 05:01)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(திருக்குர்ஆன் 05:1 வது வசனத்தின் மூலத்திலுள்ள)அல்உகூத் (ஒப்பந்தங்கள்) எனும் சொல் அனுமதிக்கப்பட்டவை என்றும், விலக்கப்பட்டவை என்றும் அறியப்பட்டவற்றைக் குறிக்கும்.

(இதே வசனத்தில் இடம்பெற்றுள்ள)உங்களின் மீது (தடைவிதித்துக்) கூறப்பட்டவை என்பது பன்றியைக் குறிக்கும்.

(திருக்குர்ஆன் 05:2 வது வசனத்தின் மூலத்திலுள்ள)லா யஜ்ரிமன்னகும் ஷனஆனு கவ்மின் எனும் தொடருக்குஅந்த மக்களின் மீதுள்ள விரோதம் உங்களைத் தூண்டிவிட வேண்டாம் என்று பொருள்.

(திருக்குர்ஆன் 05:3 வது வசனத்தின் மூலத்திலுள்ள)அல்முன்கனிக்கா' எனும் சொல்லுக்குக்கழுத்து நெறித்துக் கொல்லப்பட்டது என்று பொருள்.

'அல்மவ்கூதா என்பது தடியால் பலமாக அடித்துக் கொல்லப்பட்டதைக் குறிக்கும்.

'அல்முத்தரத்தியா என்பது மலையிலிருந்து விழுந்து செத்துப்போனதைக் குறிக்கும்.

'அந்நத்தீஹா என்பது மற்ற விலங்குகளின் கொம்பால் குத்தப்பட்டு இறந்ததாகும்.

ஆனால், (இந்தப் பிராணிகளில்) இன்னும் தன்னுடைய வாலையோ அல்லது கண்களையோ அசைத்துக்கொண்டு (குற்றுயிராக) இருக்கும் பிராணியை நீங்கள் கண்டால் அதை (அல்லாஹ்வின் பெயர் கூறி) அறுத்து நீங்கள் சாப்பிடலாம்.

ஹதீஸ் 5475. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

இறகு இல்லாத அம்பின் ('மிஅராள்') மூலம் வேட்டையாடப்பட்ட பிராணி குறித்து நான் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அவர்கள்.பிராணி அம்பின் முனையால் கொல்லப்பட்டிருந்தால் அதைச் சாப்பிடுங்கள். அம்பின் பக்கவாட்டுப் பகுதியால் தாக்கப்பட்டுக் கொல்லப்பட்டிருந்தால் அது தடியால் அடித்துக் கொல்லப்பட்ட(து போன்ற)தேயாகும். (எனவே, அதைச் சாப்பிடாதீர்கள்)' என்று பதிலளித்தார்கள்.

நான் அவர்களிடம் (பயிற்சியளிக்கப்பட்ட) நாய், வேட்டையாடிய பிராணி குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள்,உங்களுக்காக அது கவ்விக்கொண்டு வருவதை நீங்கள் சாப்பிடுங்கள். ஏனெனில், (பழக்கப்படுத்தப்பட்ட) நாய் (வேட்டைப் பிராணியைக்) கவ்விப் பிடிப்பதும் (அதை முறைப்படி) அறுப்பதாகவே அமையும்உங்களின் நாயுடன் அல்லதுஉங்கள் நாய்களுடன் வேறோரு

நாயையும் நீங்கள் கண்டு அந்த நாயும் உங்களின் நாயுடன் சேர்ந்து வேட்டைப் பிராணியைப் பிடித்துக் கொன்றிருக்குமோ என்று நீங்கள் அஞ்சினால் அதை உண்ணாதீர்கள்! ஏனெனில், நீங்கள் அல்லாஹ்வின் பெயரைச் சொன்னது உங்களின் நாயை அனுப்பியபோதுதான் வேறொரு நாய்க்காக அல்ல‘ என்று பதிலளித்தார்கள்.

## இறகு இல்லாத அம்பினால் (‘மிஅராள்‘) வேட்டையாடப்பட்ட பிராணி.

களிமண் குண்டு, அல்லது ஈயக்குண்டு (‘அல்புந்துகா‘) மூலம் (வேட்டையாடிக்) கொல்லப்பட்ட பிராணி குறித்து இப்னு உமர்(ரலி) கூறும்போதுஅது தடியால் அடித்துக் கொல்லப்பட்டது. (‘மவ்கூதா‘) போன்றே (விலக்கப்பட்டது) ஆகும்‘ என்று குறிப்பிட்டார்கள்.

இந்தக் குண்டினால் கொல்லப்பட்ட பிராணியை உண்பதை சாலிம் இப்னு அப்தில்லாஹ் இப்னி உமர்(ரஹ்), காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர்(ரஹ்), முஜாஹித் இப்னு ஜப்ர்(ரஹ்), இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்), அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) மற்றும் ஹஸன் அல்பஸரீ(ரஹ்) ஆகியோர் வெறுத்துள்ளனர். ஹஸன் அல்பஸரீ(ரஹ்) சிற்றூர்களிலும் நகரங்களிலும் இந்தக் குண்டை எறி(ந்து வேட்டையாடு)வதை விரும்பவில்லை. (மனித நடமாட்டமில்லாத) மற்ற இடங்களில் அதை உபயோகிப்பதை அவர்கள் தவறாகக் கருதவில்லை.

ஹதீஸ் 5476. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் இறகு இல்லாத அம்பு (‘மிஅராள் மூலம் வேட்டையாடப்பட்ட பிராணி) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள்,அதன் முனையால் (அந்தப் பிராணியை) நீங்கள் தாக்கியிருந்தால் அதைச் சாப்பிடுங்கள். அம்பின் பக்கவாட்டுப் பகுதியால் தாக்கிக் கொன்றிருந்தால் அது தடியால் அடித்துக் கொல்லப்பட்டது(போல்)தான். எனவே, (அதைச்) சாப்பிடாதீர்கள்‘ என்று கூறினார்கள்.

நான்,என்னுடைய நாயை (வேட்டைக்காக) அவிழ்த்துவிட்டேன். (அது வேட்டையாடியக் கொண்டு வருவதை நான் சாப்பிடலாமா)? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் அல்லாஹ்வின் பெயர் சொல்லி அந்த நாளை அவிழ்த்துவிட்டிருந்தால் (அது வேட்டையாடிக் கொண்டு வருவதை) நீங்கள் சாப்பிடுங்கள்‘ என்று பதிலளித்தார்கள்.

நான்,அந்த நாய் வேட்டைப் பிராணியைத் தின்றிருந்தால்...? என்று கேட்டேன். அவர்கள்,அப்படியென்றால், அதை உண்ணாதீர்கள். ஏனெனில், அது உங்களுக்காக அதைக் கொண்டு வரவில்லை தனக்காகவே கவ்விப் பிடித்திருக்கிறது‘ என்று பதிலளித்தார்கள்.

“நான் என்னுடைய நாயை அனுப்புகிறேன். (வேட்டையாடித் திரும்பி வரும்போது) அதனுடன் வேறொரு நாயையும் பார்க்கிறேன் என்றால்... (இப்போது என்ன செய்வது? அது வேட்டையாடி வந்த பிராணியை நான் உண்ணலாமா?)‘ என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,உண்ணாதீர்கள்! ஏனெனில், நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறியது உங்களின் நாய்க்காகத்தான் மற்றொரு நாய்க்கு நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறவில்லை‘ என்று பதிலளித்தார்கள்.

## இறகு இல்லாத அம்பின் பக்கவாட்டினால் வேட்டையாடப்பட்ட பிராணி.

ஹதீஸ் 5477. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

நான்,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் பயிற்சியளிக்கப்பட்ட நாய்களை (வேட்டைக்காக) அனுப்புகிறோம். (அவை வேட்டையாடியக் கொண்டு வருகிறவற்றை நாங்கள் உண்ணலாமா?)‘ என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,அவை உங்களுக்காக (வேட்டையாடிக்) கவ்விப் பிடித்தவற்றை நீங்கள் சாப்பிடுங்கள்‘ என்று பதிலளித்தார்கள்.

நான், (வேட்டைப் பிராணியை) அவை கொன்றுவிட்டாலுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், (வேட்டைப் பிராணியை) அவை கொன்றுவிட்டாலும் சரியே‘ என்று பதிலளித்தார்கள்.

நான்,நாங்கள் இறகு இல்லாத அம்பை (வேட்டைப் பிராணிகளின் மீது) எய்கிறோமே! (அதன் சட்டம் என்ன?)' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,அது (தன்னுடைய முனையால்) குத்தி (வீழ்த்தி)யதைச் சாப்பிடுங்கள். அந்த அம்பின் பக்கவாட்டுப் பகுதியால் தாக்கப்பட்டதைச் சாப்பிடாதீர்கள்' என்ற கூறினார்கள்.

## வில்லால் வேட்டையாடுவது

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) மற்றும் இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) ஆகியோர் கூறினார்கள்

(அம்பு போன்ற ஆயுதத்தால்) ஒரு வேட்டைப் பிராணியைத் தாக்கியதால் அதன் கை, அல்லது கால் துண்டாம் விழுந்துவிட்டால் துண்டான உறுப்பைச் சாப்பிடாதீர்கள்! உடலின் மற்ற பகுதிகளைச் சாப்பிடுங்கள்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்),நீங்கள் வேட்டைப் பிராணியின் கழுத்தையோ அதன் நடுப் பகுதியையோ தாக்கியிருந்தால் அதை உண்ணுங்கள்' என்றார்கள்.

ஸைத் இப்னு வஹ்ப்(ரஹ்) கூறினார்:

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மனிதருக்கு (அவர் வேட்டையாடச் சென்ற காட்டு)க் கழுதை ஒன்று அடங்க மறுத்தது. எனவே, அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) (தம் சகாக்களிடம்) அவர்களால் இயன்ற முறையில் அதைத் தாக்கும்படி கட்டளையிட்டு,அதிலிருந்து (துண்டாம்) விழுவதைவிட்டுவிடுங்கள். (மற்றதை) உண்ணுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5478. அபூ ஸஅலபா அல்குஷனீ(ரலி) கூறினார்

நான்,அல்லாஹ்வின் நபியே! நாங்கள் வேதம் வழங்கப்பெற்ற ஒரு சமுதாயத்தாரின் நாட்டில் இருக்கிறோம். அவர்களின் பாத்திரத்தில் நாங்கள் சாப்பிடலாமா? மேலும், வேட்டைப் பிராணிகள் உள்ள ஒரு நாட்டில் நாங்கள் இருக்கிறோம். நான் என்னுடைய வில்லாலும், பயிற்சியளிக்கப்படாத மற்றும் பயிற்சியளிக்கப்பட்ட என்னுடைய நாயை ஏவியும் வேட்டையாடுவேன் (இவற்றில்) எது எனக்கு (சட்டப்படி) தகும்? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் குறிப்பிட்ட வேதக்காரர்களின் (பாத்திரத்தில் உண்ணும்) விஷயம் எப்படியெனில், அவர்களின் பாத்திரமல்லாத வேறு பாத்திரம் உங்களுக்குக் கிடைத்தால் அவர்களின் பாத்திரத்தில் நீங்கள் சாப்பிடாதீர்கள். வேறு பாத்திரம் கிடைக்காவிட்டால் கழுவிவிட்டு அவர்களின் பாத்திரங்களில் உண்ணுங்கள். அல்லாஹ்வின் பெயர் கூறி உங்கள் வில்லால் நீங்கள் வேட்டையாடிய பிராணியை உண்ணுங்கள். பயிற்சியளிக்கப்பட்ட உங்கள் நாயை அல்லாஹ்வின் பெயர் கூறி அனுப்பி வேட்டையாடிய பிராணியையும் சாப்பிடுங்கள். பயிற்சியளிக்கப்படாத உங்கள் நாயை அனுப்பி நீங்கள் வேட்டையாடிய பிராணியை (அது இறப்பதற்கு முன்பாக) நீங்கள் (அல்லாஹ்வின் பெயர் கூறி) அறுக்க முடிந்தால் (அதைச்) சாப்பிடுங்கள்' என்று கூறினார்கள்.

## சிறு கற்களாலும் களிமண் குண்டு அல்லது ஈயக் குண்டாலும் வேட்டையாடுவது.

ஹதீஸ் 5479. அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல்(ரலி) கூறினார்

நான் சிறு கற்களை எறிந்து (வேட்டையாடிக்) கொண்டிருந்த ஒரு மனிதரைக் கண்டேன். அவரிடம்,சிறு கற்களை எறியாதே. ஏனெனில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிறு கற்களை எறிய வேண்டாமென்று தடுத்தார்கள் அல்லதுசிறுகற்களை எறிவதை வெறுத்து வந்தார்கள்'. மேலும், நபி அவர்கள்அவ்வாறு சிறு கற்களை எறிவதால் எந்தப் பிராணியும் வேட்டையாடப்படாது எந்த எதிரியும் வீழ்த்தப்படமாட்டான். மாறாக, அது பல்லை உடைக்கலாம் கண்ணைப் பறித்து விடலாம். (அவ்வளவுதான் அதனால் முடியும்) என்று கூறினார்கள் எனக் கூறினேன். அதன் பிறகு ஒரு முறை அதே மனிதர் சிறு கற்களை எறிந்துகொண்டிருப்பதைக் கண்டேன்.

அவரிடம்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள்சிறு கற்கள் எறிவதைத் தடை செய்தார்கள் அல்லதுசிறு கற்கள் எறிவதை வெறுத்தார்கள் என்று நான் உனக்குச் சொல்கிறேன். ஆனால், நீயோ (அதை அலட்சியம் செய்துவிட்டு) சிறு கற்களை எறிகிறாயே? நான் உன்னிடம் இவ்வளவு இவ்வளவு காலம் பேசமாட்டேன்' என்று சொன்னேன்.

## வேட்டையாடுவதற்காகவோ கால்நடைகளைப் பாதுகாப்பதற்காகவே அல்லாமல் (தக்க காரணமின்றி) நாய் வைத்திருப்பது.

ஹதீஸ் 5480. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கால்நடையைப் பாதுகாப்பதற்காகவோ, வேட்டையாடுவதற்காகவோ அல்லாமல் நாய் வைத்திருப்போரின் நற்செயலி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டுகீராத்'கள் அளவு குறைந்து விடும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5481. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்நாய் வைத்திருப்பவரின் (நற்செயல்களுக்குரிய) நன்மையிலிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு கீராத்கள் குறைந்துவிடும் பிராணிகளை வேட்டையாடும் நாயையும், கால்நடைகளைப் பாதுகாக்கும் நாயையும் தவிர.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

பாடம் வேட்டையாடுவதற்காகவோ கால்நடை களைப் பாதுகாப்பதற்காகவோ அல்லாமல் (தக்க காரணமின்றி) நாய் வைத்திருப்பது. ஹதீஸ் **5481** யார் நாய் வைத்திருக்கின்றாரோ அவருடைய (நற் சேயல்களுக்குரிய) நன்மையிலிருந்து ஒவ்வோரு நாளும் இரண்டு கீராத்கள் குறைந்துவிடும் பிராணிகளை வேட்டையாடும் நாயையஜம்: கால்நடைகளைப் பாதுகாக்கும் நாயையஜம் தவிர. இதை இப்னு உமர் (ரலி)அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 5482. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாய் வைத்திருப்போரின் நற்செயலி(ன் நன்மையி)லிருந்து ஒவ்வொரு நாளும் இரண்டு கீராத்கள் அளவிற்குக் குறைந்துவிடும் கால்நடையைப் பாதுகாக்கும் நாயையும் வேட்டையாடும் நாயையும் தவிர!

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## வேட்டை நாய் (தான் வேட்டையாடிய பிராணியைத்) தின்றுவிட்டால் (அப்பிராணியை உண்பது கூடாது).

உயர்ந்தோனாகிய அல்லாஹ் கூறினான்:

(நபியே!) தமக்கு அனுமதிக்கப்பட்ட உண்பொருள் எது என அவர்கள் உம்மிடம் வினவுகிறார்கள். நீங்கள் கூறுங்கள்: தூய்மையான பொருள்கள் (அனைத்தும்) உங்களுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கின்றன. மேலும், அல்லாஹ் உங்களுக்குக் கற்றுக் கொடுத்ததிலிருந்து நீங்கள் கற்பித்துப் பயிற்சியளித்த (வேட்டை விலங்கு முதலான)வை எதை உங்களுக்காகக் கவ்விக் கொண்டுவந்தனவோ அதையும் நீங்கள் உண்ணுங்கள். அவற்றின் மீது அல்லாஹ்வின் பெயர் கூறுங்கள். அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்ளுங்கள். நிச்சயம் அல்லாஹ் கணக்குக் கேட்பதில் மிக விரைவானவன். (திருக்குர்ஆன் 05:04)

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)ஜவாரிஹ் எனும் சொல்லுக்குவேட்டையாடி உழைக்கும் நாய்கள் என்று பொருள். (இதன் வினைச் சொல்லும், 45:21 வது வசனத்தின் மூலத்திலுள்ளதுமான)இஜ்தரஹூ எனும் சொல்லுக்குசெய்தவர்கள் என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: வேட்டைப் பிராணியை வேட்டை நாய் தின்றுவிட்டால் அது அதைக் கெடுத்துவிட்டது (என்று பொருள்). அது தனக்காகவே அதைப் பிடித்து வைத்துக் கொண்டுள்ளது. (எனவே, அதை உண்ணலாகாது.)உங்களுக்கு அல்லாஹ் கற்றுக்கொடுத்ததிலிருந்து அதற்கு நீங்கள் கற்றுத்தந்திருக்கிறீர்கள்' என்று அல்லாஹ் கூறினான். எனவே, வேட்டை நாயை அடித்துத் திருத்தி அப்பிராணியை அது (தன் எசமானுக்காக)விட்டுவிடும் வரை அதற்குப் பயிற்சியளிக்கவேண்டும். நாய் தின்ற வேட்டைப் பிராணியை (உண்பதை) இப்னு உமர்(ரலி) வெறுத்திருக்கிறார்கள். அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்),வேட்டை நாய், தான் வேட்டையாடிய பிராணியின் இரத்தத்தை மட்டுமே குடித்திருந்து (இறைச்சியைத்) தின்னாமல் இருந்தால் அப்போது அந்தப் பிராணியை உண்ணலாம்' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 5483. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

"நாங்கள் இந்த (வேட்டை) நாய்களின் மூலம் வேட்டையாடும் ஒரு சமுதாயத்தார் ஆவோம்' என்று நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கூறி (அதன் சட்டம் என்னவென்று) வினவினேன். அதற்கு அவர்கள்,பயிற்சியளிக்கப்பட்ட உங்கள் (வேட்டை) நாய்களை அல்லாஹ்வின் பெயர் சொல்லி (வேட்டையாட) நீங்கள் அனுப்பியிருந்தால் உங்களுக்காக அவை கவ்விப் பிடித்து வைத்திருப்பவற்றை நீங்கள் உண்ணலாம் அவை அதைக் கொன்றுவிட்டாலும் சரியே! நாய் தின்றுவிட்டதை மட்டும் உண்ணாதீர்கள்! ஏனென்றால், அது தனக்காக அதைப் பிடித்து வைத்திருக்குமோ என நான் அஞ்சுகிறேன். இவ்வாறே வேறு நாய்கள் அதனுடன் கலந்து விட்டிருந்தாலும் (அது வேட்டையாடியக் கொண்டு வரும் பிராணியை) உண்ணாதீர்கள்!9

## (காயமடைந்த) வேட்டைப் பிராணி இரண்டு மூன்று நாள்கள் கழித்து (இறந்த நிலையில்) காணப்பட்டால்...?

ஹதீஸ் 5484. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறி, உங்களின் (வேட்டை) நாயை (வேட்டையாட) அனுப்பி, அது வேட்டைப் பிராணியைக் கவ்விப் பிடித்துவைத்துக் கொன்றுவிட்டிருந்தால் அதை நீங்கள் உண்ணலாம். அது (அந்தப் பிராணியைத்) தின்றிருந்தால் நீங்கள் அதை உண்ணாதீர்கள். ஏனெனில், அப்போது அது அந்தப் பிராணியைத் தனக்காகவே பிடித்து வைத்துக்கொண்டுள்ளது. அல்லாஹ்வின் பெயர் கூறி அனுப்பப்படாத பல நாய்களுடன் உங்கள் வேட்டை நாயும் கலந்துவிட அவை (அப்பிராணியைப்) பிடித்துவைத்துக் கொன்றுவிட்டிருந்தால் அதை நீங்கள் உண்ணாதீர்கள். ஏனெனில், அவற்றில் எது அப்பிராணியைக் கொன்றது என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் வேட்டைப் பிராணியின் மீது அம்பெய்து ஒன்று அல்லது இரண்டு நாள்கள் கழித்து அதன் மீது உங்கள் அம்பின் அடையாளத்தைத் தவிர வேறெதுவுமில்லாதிருக்க நீங்கள் அதைக் கண்டால் அதை நீங்கள் உண்ணலாம். அது தண்ணீரில் விழுந்துவிட்டால் அதை நீங்கள் உண்ணாதீர்கள். (ஏனெனில், அது தண்ணீரில் விழுந்ததால் இறந்திருக்கலாம்.)

என அதீபின் ஹாத்திம்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5485. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

நான்,ஒருவர் ஒரு வேட்டைப் பிராணியின் மீது அம்பெய்து, (அது தலைமறைவாகி விட) இரண்டு அல்லது மூன்று நாள்கள் அவர் அதன் கால் சுவட்டைத் தொடர்ந்து சென்று தம் அம்பு அதன் உடலில் இருக்க, அது இறந்திருக்கக் கண்டால் (அவர் அதை உண்ணலாமா?)' என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(கெட்டுப் போகாமல் இருக்கையில்) அவர் விரும்பினால் உண்ணலாம்' என்று பதிலளித்தார்கள்.

## வேட்டைப் பிராணியுடன் மற்றொரு நாயைக் கண்டால்...?

ஹதீஸ் 5486. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

நான்,இறைத்தூதர் அவர்களே! நான் அல்லாஹ்வின் பெயர் கூறி என்னுடைய (வேட்டை) நாயை (வேட்டையாடி வர) அனுப்புகிறேன். (என்றால் அதன் சட்டம் என்ன?)' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் உங்கள் நாயை அல்லாஹ்வின் பெயர் சொல்லி அனுப்ப, அது (ஒரு பிராணியைப்) பிடித்து அதைக் கொன்றது மட்டுமின்றி, (அதிலிருந்து சிறிது) தின்றுவிட்டால், அதை நீங்கள் உண்ணாதீர்கள்! ஏனெனில், அப்போது அது (அப்பிராணியைத்) தனக்காகவே கவ்விக்கொண்டுள்ளது' என்று பதிலளித்தார்கள்.

"நான் என்னுடைய நாயை (வேட்டையாட) அனுப்புகிறேன். (வேட்டையாடியத் திரும்பும் போது) அதனுடன் வேறொரு நாயையும் பார்க்கிறேன். அவ்விரு நாய்களில் எந்த நாய் அந்தப் பிராணியைப் பிடித்தது என்று எனக்குத் தெரியாது (இந்நிலையில் என்ன செய்வது?)' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(அதை) நீங்கள் உண்ணாதீர்கள்! ஏனெனில், நீங்கள் நாயின் மீதுதான் மற்றதன் மீது நீங்கள் அல்லாஹ்வின் பெயரைச் சொல்லவில்லை' என்று பதிலளித்தார்கள்.

இறகு இல்லாத அம்பின் ('மிஅராள்') மூலம் வேட்டையாடுவது குறித்து நான் அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்,அம்பின் முனையால் அதனை நீங்கள் தாக்கிக் கொன்றிருந்தால், (அதை) நீங்கள் உண்ணலாம். அம்பின் பக்கவாட்டுப் பகுதியால் தாக்கியிருந்தால் அது தடியால் அடித்துக் கொல்லப்பட்டதுதான் (என்றே கருதப்படும்). எனவே, நீங்கள் (அதை) உண்ணாதீர்கள்' என்று பதிலளித்தார்கள்.

## வேட்டையாடும் பழக்கம் குறித்து வந்துள்ளவை.

ஹதீஸ் 5487. அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

நான் அல்லாஹ்வின் (தூதர்) அவர்களிடம் (வேட்டையாடுவது குறித்து) வினவினேன்.நாங்கள் இந்த நாய்களின் மூலம் வேட்டையாடுகிற சமுதாயத்தார் ஆவோம். (எனவே, அதன் சட்டத்தை எங்களுக்குக் கூறுங்கள்)' என்று சொன்னேன்.

அதற்கு அவர்கள்,பயிற்சி அளிக்கப்பட்ட உங்கள் நாய்களை அல்லாஹ்வின் பெயர் கூறி நீங்கள் அனுப்பியிருந்தால் அவை உங்களுக்காகக் கவ்விக்கொண்டு வந்தவற்றை நீங்கள் உண்ணலாம். ஆனால், நாய் (அதில் சிறிது) தின்றுவிட்டிருந்தால் (அதை) நீங்கள் உண்ணாதீர்கள். ஏனெனில், அப்போது நாய் (அப்பிராணியைத்) தனக்காகப் பிடித்து வைத்திருக்கலாம் என்று நான் அஞ்சுகிறேன். அதனுடன் வேறொரு நாய் கலந்துவிட்டால் (அவை வேட்டையாடிக் கொண்டுவரும் பிராணியை) நீங்கள் உண்ணாதீர்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5488. அபூ ஸஅலபா அல்குஷனீ(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் வேதம் வழங்கப்பெற்ற ஒரு சமுதாயத்தாரின் நாட்டில் வசிக்கிறோம் அவர்களின் பாத்திரத்தில் சாப்பிடுகிறோம். மேலும், நான் வேட்டைப் பிராணிகள் நிறைந்த ஒரு நாட்டில் வசிக்கிறேன். நான் என்னுடைய வில்லாலும் வேட்டையாடுகிறேன். பயிற்சியளிக்கப்பட்ட என்னுடைய நாயை அனுப்பியும் வேட்டையாடுகிறேன் பயிற்சியளிக்கப்படாத நாயின் மூலமாகவும் வேட்டையாடுகிறேன். எனவே, இவற்றில் எது எங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்பதை எங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்பதை எனக்குத் தெரிவியுங்கள்' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்:

வேதம் வழங்கப்பெற்றவர்களின் நாட்டில் நீங்கள் வசிப்பதாகவும் அவர்களின் பாத்திரத்தில் உண்பதாகவும் நீங்கள் சொன்னதைப் பொறுத்த அளவில், அவர்களின் பாத்திரமல்லாத வேறு பாத்திரம் உங்களுக்குக் கிடைத்தால் அவர்களின் பாத்திரத்தில் நீங்கள் உண்ணாதீர்கள். (வேறு பாத்திரம்) உங்களுக்குக் கிடைக்காவிட்டால், அதைக் கழுவிவிட்டு பின்னர் அதில்

உண்ணுங்கள். வேட்டைப் பிராணிகள் நிறைந்த ஒரு நாட்டில் நீங்கள் வசிப்பதாகச் சொன்னதைப் பொறுத்த வரை, உங்கள் வில்லால் நீங்கள் வேட்டையாடியதை நீங்கள் அல்லாஹ்வின் பெயர் கூறி (அறுத்து) பிறகு உண்ணலாம். பயிற்சியளிக்கப்பட்ட உங்கள் நாயின் மூலம் நீங்கள் வேட்டையாடியதை அல்லாஹ்வின் பெயர் கூறி நீங்கள் உண்ணலாம். பயிற்சியளிக்கப்படாத உங்கள் நாயின் மூலம் நீங்கள் வேட்டையாடியது அறுப்பதற்கு ஏதுவாக (உயிர் பிரியாத நிலையில்) உங்களுக்குக் கிடைத்திருந்தால் அதை (அறுத்து) நீங்கள் உண்ணலாம்.

ஹதீஸ் 5489. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

நாங்கள்மர்ருழ் ழஹ்ரான் எனுமிடத்தில் முயல் ஒன்றைத் துரத்திச் சென்றோம். மக்கள் அதைப் பிடிக்க முயன்று இறுதியில் களைத்துவிட்டனர். நான் அதைப் பிடிக்க முயன்று இறுதியில் பிடித்தேவிட்டேன். அதை எடுத்துக்கொண்டு அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள்அதன்பின்னர் சப்பைகளை அல்லதுஅதன் இரண்டு தொடைகளை நபி(ஸல்) அவர்களுக்கு (அன்பளிப்பாக) அனுப்பி வைத்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அதை ஏற்றார்கள்.

ஹதீஸ் 5490. அபூ கத்தாதா(ரலி) கூறினார்

(ஒரு முறை) நான் நபி(ஸல்) அவர்ளுடன் (பயணத்தில்) இருந்தேன். நான் மக்கா (செல்லும்) சாலை ஒன்றில் இருந்தபோது (உம்ராவுக்காக)இஹ்ராம் கட்டியிருந்த என் தோழர்கள் சிலருடன் பின் தங்கி விட்டேன். அப்போது நான் இஹ்ராம் கட்டியிருக்கவில்லை. இந்நிலையில் நான் (வழியில்) காட்டுக் கழுதையொன்றைக் கண்டு என்னுடைய குதிரையின் மீது நன்கு அமர்ந்து கொண்டு என் தோழர்களிடம் என் சாட்டையை எடுத்துத் தரும்படி கேட்டேன். அவர்கள் (இஹ்ராம் கட்டியிருந்தால் எடுத்துத் தர) மறுத்துவிட்டார்கள். அவர்களிடம் என்னுடைய ஈட்டியை எடுத்துத் தரும்படி கேட்டேன். அதற்கும் அவர்கள் மறுத்துவிட்டார்கள். எனவே, நானே அதையெடுத்து அந்தக் கழுதையைத் தாக்கிக் கொன்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் சிலர் அதிலிருந்து உண்டார்கள். வேறு சிலர் (உண்ண) மறுத்துவிட்டனர். அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் போய்ச்சேர்ந்தபோது அதைப் பற்றி அவர்களிடம் கேட்டார்கள். நபி(ஸல்) ஆவர்கள்,இதுவெல்லாம் அல்லாஹ் உங்களுக்கு உண்ணக் கொடுத்த உணவாகும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5491. அதாஉ இப்னு யஸார்(ரஹ்) அபூ கத்தாதா(ரஹ்) அவர்களிடமிருந்து இதே ஹதீஸை அறிவித்தார்கள். அந்த அறிவிப்பில், நபி(ஸல்) அவர்கள்உங்களிடம் அதன் இறைச்சியில் ஏதேனும் (மீதி) உள்ளதா? என்று கேட்டார்கள் என (அதிகப்படியாக) வந்துள்ளது.

## மலைகளில் வேட்டையாடுதல்

ஹதீஸ் 5492. அபூ கத்தாதா(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் மக்காவுக்கும் மதீனாவுக்குமிடையே ('அல்கஹா எனுமிடத்தில்) இருந்தேன். அப்போது மக்கள் (உம்ராவுக்காக)இஹ்ராம் கட்டியிருந்தார்கள். நான்இஹ்ராம் கட்டாமல் குதிரை மீது (பயணம் செய்துகொண்டு) இருந்தேன். நான் அதிகமாக மலையேறுபவனாக இருந்தேன். இந்நிலையில் மக்கள் ஆவலுடன் எதையோ பார்ப்பதைக் கண்டேன். நானும் கூர்ந்து கவனிக்கலானேன். அப்போது அங்கு ஒரு காட்டுக் கழுதை தென்பட்டது. நான் மக்களிடம்,என்ன இது? என்று கேட்டேன். அவர்கள் (இஹ்ராம் கட்டியிருந்த காரணத்தினால்)எங்களுக்குத் தெரியாது' என்றனர். நான்,இது ஒரு காட்டுக் கழுதை' என்று சொன்னேன். அப்போது மக்கள்,நீங்கள் பார்த்தது அதுதான்' என்று கூறினார்கள். நான் என்னுடைய சாட்டையை மறந்து விட்டிருந்தேன். எனவே, அவர்களிடம்என் சாட்டையை எடுத்து என்னிடம் கொடுங்கள்' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,நாங்கள் உங்களுக்கு இந்த விஷயத்தில் உதவ மாட்டோம்' என்றனர். உடனே நானே இறங்கி அதை

எடுத்தேன். பிறகு காட்டுக் கழுதையைப் பின்தொடர்ந்து சென்று தாக்கினேன். சிறிது நேரத்திற்குள் அதன் கால் நரம்புகளை வெட்டி (வீழ்த்தி)விட்டேன். பிறகு மக்களிடம் சென்று, (இப்போது) எழுந்து, கழுதையை எடுத்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், நாங்கள் அதைத் தொடமாட்டோம்' என்று கூறினர். எனவே, நானே அதைச் சுமந்து அவர்களிடம் கொண்டு சென்றேன். அவர்களில் சிலர் (அதை உண்ண) மறுத்துவிட்டனர். வேறு சிலர் உண்டனர். நான் உங்களுக்காக நபி(ஸல்) அவர்களிடம் (இதன் சட்டம் என்ன என்று) கேட்டுத் தெரிந்துவருகிறேன்' என்று சொன்னேன். பிறகு நபி(ஸல்) அவர்களைச் சென்றடைந்து செய்தியை அவர்களிடம் தெரிவித்தேன். அவர்கள் என்னிடம், அதிலிருந்து உங்களிடம் ஏதேனும் எஞ்சியுள்ளதா? என்று கேட்டார்கள். நான், ஆம் (எஞ்சியுள்ளது)' என்று பதிலளித்தேன். அதற்கு அவர்கள், உண்ணுங்கள் அது அல்லாஹ் உங்களுக்கு உண்ணக் கொடுத்த உணவாகும்' என்று கூறினார்கள்.

## "(இஹ்ராம் கட்டியுள்ள) உங்களுக்கும் இதர பயணிகளுக்கும் பயன் தரும் பொருட்டு கடலில் வேட்டையாடுவதும் அதை உண்பதும் உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது' எனும் (திருக்குர்ஆன் 05:96 வது) வசனத்தொடர்.

உமர்(ரலி) கூறினார்:

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)ஜைத்ல் பஹ்ர் (கடல்வேட்டை) எனும் சொல், வேட்டையாடப்பட்ட பிராணியையும்வ தஆமுஹு (அதன் உணவு) என்பது, கரையில் ஒதுங்கிய (மீன் முதலிய)வற்றையும் குறிக்கும்.

அபூ பக்ர்(ரலி), செத்துப் போய் (நீரில்) மிதக்கும் உயிரினமும் அனுமதிக்கப்பட்டதே' என்று கூறுகிறார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி), வ தஆமுஹு ' (அதன் உணவு) என்பது கடலின் செத்த பிராணியைக் குறிக்கும். அவற்றில் நீ அருவருப்பாகக் கருதுவதைத் தவிர் விலாங்கு மீனை யூதர்கள் உண்ணமாட்டார்கள். ஆனால், நாம் அதை உண்போம்' என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்களின் தோழரான ஷு ரைஹ்(ரலி), கடலில் உள்ளவை அனைத்தும் அறுக்கப்பட்ட(தைப் போன்ற)வை தாம்' என்று கூறினார்கள்.

அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்)(கடல்) பறவைகளை அறுக்க வேண்டும் என்றே கருதுகிறேன்' என்று கூறினார்கள்.

இப்னு ஜு ரைஜ்(ரஹ்) கூறினார்:

நான் அதாஉ(ரஹ்) அவர்களிடம், ஆறுகள் மற்றும் வெள்ளப் பெருக்கினால் நிரம்பிய குளங்குட்டைகள் ஆகியவற்றின் வேட்டை(களான மீன் வகை)கள் கடல் வேட்டைப் பிராணிகளில் அடங்குமா? என்று கேட்டேன். அவர்கள், ஆம்' என்று பதிலளித்தார்கள். பிறகுஇ(ந்த ஆற்று நீரான)து மதுரமானதும் குடிப்பதற்கு சுலபமானதும் ஆகும். இ(ந்தக் கடல் நீரான)து உவர்ப்பானதும் (தொண்டையைக்) கரகரக்கச் செய்யக் கூடியதும் ஆகும். (இருப்பினும்,) இந்த இரண்டிலிருந்தும் நீங்கள் புத்தம் புதிய (மீன்) இறைச்சியை உண்கிறீர்கள்' எனும் (திருக்குர்ஆன் 35:12 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

ஹஸன் இப்னு அலீ(ரலி) (அல்லது ஹஸன் அல்பஸரீ(ரஹ்)) நீர் நாயின் தோலால் ஆன சேணம் பூட்டிய வாகனத்தின் மீது பயணம் செய்துள்ளார்கள்.

ஆமிர் இப்னு ஷராஹீல் அஷ்ஷஅபீ (ரஹ்), என் வீட்டார் தவளைகளை உண்ணத் தயாராயிருந்திருந்தால் அவர்களுக்கு நான் உண்ணக் கொடுத்திருப்பேன்' என்று கூறினார்கள்.

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) ஆமையை உண்பதைத் தவறாகக் கருதவில்லை.

இப்னு அப்பாஸ்(ரலி),கடல் வேட்டைப் பிராணிகளை உண்ணலம் அதைப் பிடித்தவர் யூதராகவோ, கிறிஸ்தவராகவோ, (அக்னி ஆராதனை புரியும்) மஜூஸியாகவோ இருந்தாலும் சரி' என்று கூறினார்கள்.

அபுத்தர்தா(ரலி),முரீ எனும் (போதை நீங்கிய) பானத்தைப் பற்றிக் கூறும்போது,மீன்களும் சூரிய வெப்பமும் இந்த மதுவை (போதையிழக்கச் செய்து) அனுமதிக்கப்பட்டதாக ஆக்கிவிட்டான்' என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 5493.** ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

'கருவேல இலை ('கபத்') படை(ப் பிரிவு)ப் போருக்கு நாங்கள் சென்றோம். (எங்களுக்கு) அபூ உபைதா(ரலி) தளபதியாக நியமிக்கப்பட்டார்கள். (வழியில்) எங்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டது. அப்போது செத்துப்போன பெரிய (திமிங்கல வகை) மீன் ஒன்று கரையில் ஒதுங்கியது. (அதற்கு முன்பு) அது போன்ற (பெரிய) மீன் காணப்பட்டதில்லை. அதுஅம்பர் என்றழைக்கப்படும். அதிலிருந்து நாங்கள் அரை மாதம் உண்டோம். அபூ உபைதா(ரலி) அதன் எலும்புகளில் ஒன்றை எடுத்து (நட்டு) வைத்தார்கள். வாகனத்தில் செல்பவர் அதன் கீழிருந்து சென்றார். (அந்த அளவுக்கு அந்த எலும்பு பெரியதாக இருந்தது.)

**ஹதீஸ் 5494** ஜாபிர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் எங்களில் வாகனப் படைவீரர்களான முன்னாறு பேரை (ஒரு புனிதப் போருக்கு) அனுப்பினார்கள். எங்கள் (படைப் பிரிவின் தலைவராக) அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்(ரலி) இருந்தார்கள். நாங்கள் குறைஷியரின் ஒரு வணிகக் குழுவை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். அப்போது எங்களுக்குக் கடும்பசி ஏற்பட்டது. (உணவு ஏதும் இல்லாததால்) கருவேலமரத்தின் இலைகளை நாங்கள் சாப்பிட்டோம். அதன் காரணமாக (எங்கள் படைக்கு)கருவேல இலைப் படை (ஜைஷுல் கபத்') என்று பெயர் சூட்டப்பட்டது. அப்போதுஅம்பர் என்றழைக்கப்படும் பெரிய (திமிங்கல) மீன் ஒன்று கடற்கரையில் ஒதுங்கியது. அதை நாங்கள் அரை மாதம் வரை சாப்பிட்டோம். எங்கள் மேனிகள் செழுமையடையும் அளவிற்கு நாங்கள் அதன் கொழுப்பை எடுத்துப் பூசிக்கொண்டோம். அப்போது அபூ உபைதா(ரலி) அதன் விலா எலும்புகளில் ஒன்றையெடுத்து (பூமியில்) நட்டு வைக்க, அதன் கீழே வாகனத்தில் ஏறி ஒருவர் சென்றார். எங்களிடையே இருந்த ஒருவர் பசி கடுமையாக வாட்டியபோது மூன்று ஒட்டகங்களை அறுத்தார். மறுபடியும் இன்னும் மூன்று ஒட்டகங்களை அறுத்தார். பிறகு அவரை (அப்படி அறுக்க வேண்டாமென) அபூ உபைதா(ரலி) தடுத்துவிட்டார்கள்.

## வெட்டுக்கிளிகளை உண்பது

**ஹதீஸ் 5495.** இப்னு அபீ அவ்ஃபா(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன்ஏழு அல்லதுஆறு புனிதப் போர்களில் கலந்து கொண்டோம். நபி(ஸல்) அவர்களுடன் நாங்களும் வெட்டுக்கிளிகளைச் சாப்பிட்டு வந்தோம்.

சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) முதலானோர் கூறுகிறார்கள்:

மற்றோர் அறிவிப்பில்,நபி(ஸல்) அவர்களுடன் ஏழு புனிதப் போர்களில் கலந்துகொண்டோம்' என (ஆறா, ஏழா என்ற சந்தேகமின்றி) இப்னு அபீ அவ்ஃபா(ரலி) கூறினார்.

## (அக்னி ஆராதனை செய்யும்) மஜூஸி'களின் பாத்திரங்களைப் பயன்படுத்துவதும் செத்த பிராணிகள் குறித்த நிலையும்.

**ஹதீஸ் 5496.** அபூ ஸஅலபா அல்குஷனீ(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் வேதம் வழங்கப் பெற்றவர்களின் நாட்டில் வசிக்கிறோம். எனவே, அவர்களின் பாத்திரங்களில் உண்கிறோம். மேலும், வேட்டைப் பிராணிகள் நிறைந்த ஒரு நாட்டில் நாங்கள் வசிக்கிறோம். நான் என்னுடைய வில்லாலும் வேட்டையாடுவேன் பயிற்சியளிக்கப்பட்ட என்னுடைய நாயை அனுப்பியும் நான் வேட்டையாடுவேன் பயிற்சியளிக்கப்படாத என்னுடைய நாயின் மூலமாகவும் வேட்டையாடுவேன்' என்று சொன்னேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,வேதம் வழங்கப் பெற்றவர்களின் நாட்டில் வசிப்பதாக நீங்கள் சொன்னதைப் பொறுத்த வரை (அதன் சட்டம் என்னவெனில்), மாற்று கிடைத்தபோதே தவிர, (வேறு எப்போதும்) அவர்களின் பாத்திரங்களில் நீங்கள் சாப்பிடாதீர்கள். மாற்று கிடைக்கவில்லையென்றால், அவர்களின் பாத்திரங்களை (நன்கு) கழுவிவிட்டு அவற்றில் சாப்பிடுங்கள். நீங்கள் வேட்டைப் பிராணிகள் நிறைந்த ஒரு நாட்டில் இருப்பதாகக் சொன்னதைப் பொறுத்த வரை (அதன் சட்டம் என்னவென்றால்,) நீங்கள் உங்கள் வில்லால் வேட்டையாடியதை அல்லாஹ்வின் பெயர் சொல்லிச் சாப்பிட்டுக்கொள்ளுங்கள். அல்லாஹ்வின் பெயர் கூறி நீங்கள் அனுப்பிய பயிற்சியளிக்கப்பட்ட உங்கள் நாயின் மூலம் நீங்கள் வேட்டையாடியதை உண்ணலாம். ஆனால், பயிற்சியளிக்கப்படாத உங்கள் நாயின் மூலம் நீங்கள் வேட்டையாடியது அறுப்பதற்கு ஏதுவாக (உயிருள்ள நிலையில்) உங்களுக்குக் கிடைத்திருந்தால் அதை (அறுத்து) நீங்கள் உண்ணலாம்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5497. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) கூறினார்

கைபரை வெற்றிகொண்ட அன்ற மாலையில் மக்கள் நெருப்பு மூட்டினார்கள். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் இந்த நெருப்பை எதற்காக மூட்டினீர்கள்? என்று கேட்டார்கள். மக்கள், நாட்டுக் கழுதைகளின் இறைச்சிகளை சமைப்பதற்காக' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,அந்த அடுப்புகளில் இருப்பவற்றைக் கொட்டிவிட்டு, அவற்றின் பாத்திரங்களை உடைத்து விடுங்கள்' என்று கூறினார்கள். அப்போது மக்களிடையே இருந்த ஒருவர் எழுந்து,பாத்திரங்களில் இருப்பவற்றைக் கொட்டிவிட்டு அவற்றை நாங்கள் கழுவி(ப் பயன்படுத்தி)க் கொள்ளலாமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,அவ்வாறே ஆகட்டும்' என்று கூறினார்கள்.

## அறுக்கப்படும் பிராணியை அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுப்பதும், நினைவிருந்தும் அல்லாஹ்வின் பெயரைச் சொல்லாமல்விட்டுவிடுவதும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

பிராணியை அறுக்கும்போது (இறை நம்பிக்கையாளர்) ஒருவர் மறந்துபோய் அல்லாஹ்வின் பெயரைச் சொல்லவில்லையென்றால் குற்றமாகாது.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வின் பெயர் சொல்லப்படாத பிராணியின் இறைச்சியை உண்ணாதீர்கள். அது (-அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கப்படாத பிராணியின் இறைச்சியை உண்பது-) பாவச் செயலாகும். (திருக்குர்ஆன் 06:121)

மறந்துவிட்டவன் பாவி எனக் குறிப்பிடப்படமாட்டான்.

(தொடர்ந்து) அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக ஷைத்தான்கள் தங்கள் நண்பர்களை உங்களுடன் (இது தொடர்பாக வீண்) தர்க்கம் செய்யுமாறு தூண்டுகிறார்கள். நீங்கள் அவர்களுக்கு வழிப்பட்டால், நிச்சயமாக நீங்களும் (அவர்களைப் போன்றே) இணைவைப்போர்தாம். (திருக்குர்ஆன் 06:121)20

ஹதீஸ் 5498. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் துல்ஹு லைஃபாவில் இருந்தோம். அப்போது மக்களுக்குப் பசி ஏற்பட்டது. (இந்நிலையில்) எங்களுக்குச் சில ஒட்டகமும் ஆடுகளும் (போர்ச் செல்வத்திலிருந்து) கிடைத்தன. அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்களின் பின் வரிசையில் இருந்தார்கள். எனவே, மக்கள் அவரசப்பட்டு (அவற்றைப் பங்கிடுவதற்கு முன்பாகவே அறுத்துப்) பாத்திரங்களை (அடுப்புகளில்) ஏற்றி (சமைக்கத் தொடங்கி)விட்டார்கள். (இதை அறிந்த) நபி(ஸல்) அவர்கள் மக்களிடம் வந்துசேர்ந்து, பாத்திரங்களைக் கவிழ்க்கும்படி உத்தரவிட அவ்வாறே அவை கவிழ்க்கப்பட்(டு அவற்றிலிருந்த இறைச்சிகள் வெளியே கொட்டப்பட்)டன. பிறகு நபி(ஸல்) அவர்கள் அவற்றைப் பங்கிட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் பத்து ஆடுகளை ஓர் ஒட்டகத்திற்குச் சமமாக்கினார்கள். அப்போது அவற்றிலிருந்து ஓர் ஒட்டகம் மிரண்டு ஓடிவிட்டது. மக்களிடம் குதிரைகள் குறைந்த எண்ணிக்கையில் இருந்தன. மக்கள் (ஓடிப்போன) அந்த ஒட்டகத்தைத் தேடிச் சென்றார்கள். அது (அவர்களுக்க அகப்படாமல்) அவர்களைக் களைப்படையச் செய்துவிட்டது. (நபித் தோழர்களில்) ஒருவர் அந்த ஒட்டகத்தைக் குறிவைத்து ஓர் அம்பை எய்தார். அல்லாஹ் அதை (ஓடவிடாமல்) தடுத்து நிறுத்திவிட்டான். அப்போது நபி(ஸல்) அவர்கள்,வன விலங்குகளில் கட்டுக்கடங்காதவை இருப்பதைப் போன்றே இந்தப் பிராணிகளிலும் கட்டுக்கடங்காதவை சில உள்ளன. இவற்றில் உங்களை மீறிச் செல்பவற்றை இவ்வாறே (அம்பெய்து நிற்கச்) செய்யுங்கள்' என்று கூறினார்கள்.

நான்(ஒட்டகத்தை அறுக்க வாட்களை இன்று நாங்கள் பயன்படுத்திவிட்டால் அதன் கூர்முனை சேதமடைந்து) நாளை எங்களிடம் வாட்களே இல்லாத நிலையில் எதிரியை நாங்கள் சந்திக்க நேரிடுமோ என்றுஅஞ்சுகிறோம் அல்லதுஉத்தேசிக்கிறோம் எனவே, நாங்கள் (கூரான) மூங்கில்களால் (ஒட்டகங்களை) அறுக்கலாமா? என்று கேட்டேன்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இரத்ததைச் சிந்தச் செய்கிற எந்த ஆயுதத்தால் அறுக்கப்பட்டிருந்தாலும் (பிராணி அறுக்கப்படும் போது) அதன் மீது அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டிருக்கும் பட்சத்தில், அதை நீங்கள் உண்ணலாம். பல்லையும் நகத்தையும் (கொண்டு அறுப்பதைத்) தவிர. இதைப் பற்றி (இந்த இரண்டாலும் ஏன் அறுக்கலாகாது என்பதற்கான காரணத்தை) நான் உங்களுக்குத் தெரிவிக்கிறேன். பற்களோ எலும்பாகும். நகங்களோ அபிசீனிய (எத்தியோப்பிய)ர்களின் கத்திகளாகும்' என்று கூறினார்கள்.

## பலிபீடங்கள் மற்றும் சிலைகளுக்காக அறுக்கப்பட்டவை.

ஹதீஸ் 5499. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தமக்கு வேத அறிவிப்பு ('வஹீ') அருளப்படுவதற்கு முன்பு (மக்கா அரும்லுள்ள) கீழ்பல்தஹில் ஸைத் இப்னு அம்ர் இப்னு நுஃபைல் அவர்களைச் சந்தித்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தமக்கு முன் வைக்கப்பட்ட குறைஷியரின்) பயண உணவு ஒன்றை ஸைத் இப்னு அம்ர் இப்னு நுஃபைல் அவர்களுக்கு முன் வைத்தார்கள். அதில் (பலிபீடங்களில் அறுக்கப்பட்டவற்றின்) இறைச்சி இருந்தது. எனவே, அதிலிருந்து உண்ண ஸைத் அவர்கள் மறுத்துவிட்டார்கள். பிறகு ஸைத் (உணவைப் பரிமாறிய குறைஷியரிடம்),நீங்கள் உங்கள் (சிலைகளுக்குப் பலியிடும்) பலிபீடக் கற்களில் வைத்து அறுப்பவற்றை உண்ணமாட்டேன். (அறுக்கும்போது) அல்லாஹ்வின் பெயர் எதன் மீது கூறப்பட்டதோ அதைத் தவிர வேறெதையும் உண்ணமாட்டேன்' என்று கூறினார்கள்.

## "அவர் (தன்னுடைய குர்பானிப் பிராணியை) அல்லாஹ்வின் பெயர் கூறி அறுக்கட்டும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 5500. ஜு ன்தப் இப்னு சுஃப்யான் அல்பஜலீ(ரலி) கூறினார்

ஒரு (ஹஜ்ஜு ப் பெரு) நாளின்போது (தொழுகை முடிந்த பிறகு) நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தியாகப் பிராணிகளை அறுத்துக் குர்பானி கொடுத்தோம். (அன்று) சிலர் தங்களின் தியாகப் பிராணியை தொழுகைக்கு முன்பாகவே அறுத்துவிட்டனர். (தொழுகையிலிருந்து)

திரும்பிய நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்கு முன்னதாகவே அவர்கள்குர்பானி கொடுத்துவிட்டிருப்பதைக் கண்டபோது, தொழுகைக்கு முன் அறுத்துவிட்டவர் அதற்கு பதிலாக வேறொன்றை அறுக்கட்டும். தொழும் வரை அறுத்திருக்காதவர் அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கட்டும்' என்று கூறினார்கள்.

## (கூர்மையான) மூங்கில் கழி, வெள்ளைக் கல், இரும்பு ஆகியவற்றால் அறுக்கப்பட்டவை.

ஹதீஸ் 5501. அப்துர் ரஹ்மான் இப்னு கஅப் இப்னு மாலிக் (ரஹ்) கூறினார்

என் தந்தை கஅப் இப்னு மாலிக் (ரலி) அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் (பின்வருமாறு) தெரிவித்தார்கள்: எங்கள் பணிப்பெண் ஒருவர்சல்உ எனுமிடத்தில் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தபோது தம் ஆடுகளில் ஒன்று சாகும் நிலையில் இருப்பதைப் பார்த்தார். உடனே ஒரு கல்லை (கூர்மையாக) உடைத்து அதன் மூலம் அந்த ஆட்டை அறுத்துவிட்டார். (விவரம் அறிந்த) நான் என் வீட்டாரிடம், நபி (ஸல்) அவர்களிடம் சென்று இதைப் பற்றி நான் கேட்கும் வரை அல்லதுநபி (ஸல்) அவர்களிடம் ஆளனுப்பி இது குறித்துக் கேட்கும் வரை (இதைச்) சாப்பிடாதீர்கள்' என்று சொன்னேன்.

பிறகுநான் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன் அல்லதுஅவர்களிடம் ஆளனுப்பி வைத்தேன்'. அப்போது நபி (ஸல்) அவர்கள் அதைச் சாப்பிடுமாறு உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 5502. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) கூறினார்

கஅப் இப்னு மாலிக் (ரலி) அவர்களின் ஆடுகளை அவர்களின் அடிமைப் பெண் ஒருவர் மதீனாவின் கடைவீதிக்கு அருகில்சல்உ எனும் இடத்திலுள்ள சிறிய மலையொன்றில் மேய்த்துக் கொண்டிருந்தார். அப்போது ஆடு ஒன்று காயமடைந்தது. உடனே அப்பெண் கல் ஒன்றை (கூர்மையாக) உடைத்து அதனால் அந்த ஆட்டை அறுத்தார். மக்கள் நபி (ஸல்)அவர்களிடம் இதைக் கூறி (இதை உண்ணலாமா என்று கேட்ட)னர். நபி (ஸல்) அவர்கள் அதை உண்ணும்படி அவர்களுக்கு உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 5503. ராஃபிஉ இப்னு கதீஜ் (ரலி) கூறினார்

நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! எங்களிடம் (கூரான) கத்திகள் இல்லையே' என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், இரத்ததைச் சிந்தக்கூடியது எதுவானாலும் அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டு (அதனால் அறுக்கப்பட்டு)விட்டால் அதை நீங்கள் உண்ணலாம். நகத்தாலும் பல்லினாலும் (அறுக்கப்பட்டதைத்) தவிர. நகங்களோ அபிசீனியர்களின் கத்திகளாகும். பல்லோ எலும்பாகும். (நபி (ஸல்) அவர்கள் பங்கிட்டுக் கொடுத்திருந்த) ஒட்டகம் ஒன்று வெருண்டோடியது. அதை ஒருவர் (அம்பெய்து) தடுத்து நிறுத்தினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் வன விலங்குகளுக்கடையே கட்டுக்கடங்காதவை சில இருப்பதைப் போன்றே இந்த ஒட்டகங்களுக்கு இடையேயும் கட்டுக்கடங்காதவை சில உண்டு. எனவே, அவற்றில் உங்களை மீறிச் செல்பவற்றை இவ்வாறே (தடுத்து நிறுத்தச்) செய்யுங்கள்' என்று கூறினார்கள்.

## (சுதந்தரமான) பெண் மற்றும் அடிமைப் பெண் அறுத்த பிராணி.

ஹதீஸ் 5504. கஅப் இப்னு மாலிக் (ரலி) கூறினார்

ஒரு பெண் ஓர் ஆட்டைக் (கூர்மையான) கல் ஒன்றினால் அறுத்தார். அது குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அவர்கள் அதை உண்ணும்படி உத்தரவிட்டார்கள்.

மற்றோர் அறிவிப்பில், கஅப் (ரலி) அவர்களுக்குரிய அடிமைப் பெண் ஒருவர் (இவ்விதம் செய்தார்)' என அன்சாரிகளில் ஒருவர் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் தெரிவித்தார் என்று கூறப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5505. முஆத் இப்னு ஸஅத்(ரலி) அல்லது ஸஅத் இப்னு முஆத்(ரலி) கூறினார்

கஅப் இப்னு மாலிக்(ரலி) அவர்களின் அடிமைப் பெண் ஒருவர்சல்உ எனும் மலைப் பகுதியில் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தார். அவற்றில் ஓர் ஆடு காயமுற்றது. உடனே அதைப் பிடித்து (கூர்மையான) கல் ஒன்றால் அப்பெண் அறுத்தார். (இது குறித்து) நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு அவர்கள்அதை நீங்கள் உண்ணலாம்' என்று கூறினார்கள்.

## பல், எலும்பு, நகம் ஆகியவற்றால் (பிராணிகளை) அறுக்கலாகாது.

ஹதீஸ் 5506. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரத்தத்தை வடியச் செய்யும் (கூரிய ஆயுதம்) எதுவாயினும் அ(தனால் அறுக்கப்பட்ட)தை உண்ணுங்கள் பல் மற்றும் நகம் (ஆகியவற்றால் அறுக்கப்பட்டதைத்) தவிர.

என ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

## கிராமவாசிகள் முதலானோரால் அறுக்கப்பட்டவை.

ஹதீஸ் 5507. ஆயிஷா(ரலி) கூறினார்

ஒரு கூட்டத்தார் நபி(ஸல்) அவர்களிடம்,(கிராமத்திலிருந்து) சிலர் எங்களிடம் இறைச்சி கொண்டுவருகிறார்கள். (அதை அறுக்கும் போது) அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டதா, இல்லையா என்று எங்களுக்குத் தெரியாது. (இந்நிலையில் நாங்கள் அதை உண்ணலாமா?)' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் அதன் மீது அல்லாஹ்வின் பெயர் சொல்லி அதை உண்ணுங்கள்' என்று பதில் கூறினார்கள்.

கேள்வி கேட்ட கூட்டத்தார் இறைமறுப்பை அப்போதுதான் கைவிட்டுப் புதிதாக இஸ்லாத்தைத் தழுவியிருந்தார்கள்.

இதே ஹதீஸ் வேறொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## வேதக்காரர்கள் அறுத்த பிராணிகளையும் அவற்றின் கொழுப்பையும் உண்ணலாம். அவர்கள் பகைநாட்டினராயினும், மற்றவர்களாயினும் சரியே.

அல்லாஹ் கூறினான்:

இன்று உங்களுக்குத் தூய்மையான பொருள்கள் அனைத்தும் அனுமதிக்கப்பட்டவையாக (ஹலாலாக) ஆக்கப்பட்டுள்ளன. வேதம் வழங்கப் பெற்றவர்களின் உணவு உங்களுக்கும், உங்கள் உணவு அவர்களுக்கும் அனுமதிக்கப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 05:05)

ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்: அரபுக் கிறிஸ்தவர்கள் அறுத்த பிராணிகளை உண்பது தவறன்று. அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரால் அவை அறுக்கப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டால் அதை உண்ணவேண்டாம். அப்படி கேள்விப்படவில்லையென்றால் அல்லாஹ் அதை நமக்கு அனுமதித்துள்ளான். அவன் அவர்களின் இறைமறுப்பை அறிந்தும் உள்ளான். அலீ(ரலி) அவர்களைக் குறித்தும் இவ்வாறே (அவர்கள் கூறினார்கள் என) அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹஸன் அல்பஸரீ(ரஹ்) அவர்களும் இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) அவர்களும்,விருத்த சேதனம் (சுன்னத்) செய்யப்படாதவரால் அறுக்கப்பட்ட பிராணியை உண்பதில் தவறில்லை' என்று கூறுகிறார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி),(திருக்குர்ஆன் 05:5 வது வசனத்திலுள்ள)அவர்களின் உணவு என்பது அவர்களால் அறுக்கப்பட்ட பிராணிகளைக் குறிக்கும்' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 5508. அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல்(ரலி) கூறினார்

நாங்கள் கைபர் கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தோம். அப்போது ஒருவர் கொழுப்பு நிரம்பிய தோல் பை ஒன்றை எறிந்தார். அதை எடுக்க நான் பாய்ந்து சென்றேன். அப்போது நான் திரும்பிப் பார்க்க, அங்கே நபி(ஸல்) அவர்கள் (நின்று கொண்டு) இருந்தார்கள். (என் ஆசை அவர்களுக்குத் தெரிந்துவிட்டால்) அவர்களைக் கண்டு நான் வெட்கமடைந்தேன்.

## வீட்டுப் பிராணிகளில் (கட்டுக்கடங்கால்) வெருண்டோடக்கூடியவையும் காட்டு விலங்குகளாகவே கருதப்படும்.

இதை (-கட்டுங்கடங்காத வீட்டுப் பிராணிகளை தாக்கிக் காயப்படுத்துவதை-) இப்னு மஸ்வூத்(ரலி) அனுமதித்துள்ளார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: உன் கைவசமுள்ள பிராணிகளில் உன்னைத் தோற்கவைப்பது வேட்டைப் பிராணி போன்றதாகும். கிணற்றில் விழுந்துவிட்ட ஒட்டகத்தை உன்னால் முடிந்த விதத்தில் மீட்டு, அதை அறுத்து உண்ணலாம்.

அலீ(ரலி), இப்னு உமர்(ரலி), ஆயிஷா(ரலி) ஆகியோரும் இதே கருத்தைக் கொண்டுள்ளனர்.

ஹதீஸ் 5509. ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) கூறினார்

நான் (துல் ஹுலைஃபாவில் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தபோது)இறைத்தூதர் அவர்களே! (நம்மிடம் உள்ள கத்திகளால் ஒட்டகங்களை இன்று அறுத்துவிட்டால் அவற்றின் முனை மழுங்கி) நம்மிடம் கத்திகளே இல்லாத நிலையில் நாளை நாம் எதிரியைச் சந்திக்க நேருமே!என்று சொன்னேன். அப்போது அவர்கள்,விரைவாக அல்லதுதாமதமின்றி (எதைக் கொண்டாவது அறுத்திடுங்கள்) இரத்தத்தை சிந்தச் செய்யும் (ஆயுதம்) எதுவாயினும் அதைக் கொண்டு அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்(டு அறுக்கப்பட்)டிருந்தால் அதை நீங்கள் உண்ணலாம். பல்லாலும் நகத்தாலும் அறுக்கப்பட்டதைத் தவிர! அவற்றைக் குறித்து உங்களுக்கு இதோ கூறுகிறேன்: பல்லோ எலும்பாகும் நகங்களோ அபிசீனியர்களின் கத்திகளாகும்' என்று கூறினார்கள்.

(அப்போது) நாங்கள் போர்ச் செல்வமாக ஒட்டகத்தையும் ஆட்டையும் பெற்றோம். அவற்றிலிருந்து ஒட்டகம் ஒன்று வெருண்டோடியது. அதன் மீது ஒருவர் ஓர் அம்பை எய்து அதை (ஓடவிடாமல்) அவர் தடுத்து (நிறுத்தி)விட்டார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,வன விலங்குகளில் கட்டுக்கடங்காதவை சில இருப்பதைப் போன்றே இந்த ஒட்டகங்களிலும் கட்டுக் கடங்காதவை உண்டு. இவற்றில் உங்களை மீறிச் செல்பவற்றை இவ்வாறே (அம்பெய்து தடுத்து நிறுத்தச்) செய்யுங்கள்' என்று கூறினார்கள்.

## நஹ்ரும் (ஒட்டகத்தின் கழுத்து நரம்பை அறுப்பதும்), தப்ஹு ம் (மற்றப் பிராணிகளின் குரல் வளைகளை அறுப்பதும்).

இப்னு ஜு ரைஜ்(ரஹ்) கூறினார்:

அதாஉ(ரஹ்),குரல்வளையை அறுப்பதும் (தப்ஹ்), கழுத்து நரம்பை அறுப்பதும் (நஹ்ர்) அதன்னுடையன் இடத்தில் (-பிராணிகளில்-) தான் செய்யப்படவேண்டும்' என்று கூறினார்கள்: நான்,குரல்வளையை அறுக்கவேண்டிய பிராணியின் கழுத்து நரம்பை அறுத்தால் போதுமா? என்று கேட்டேன்.ஆம். (போதும். கழுத்து நரம்பை அறுக்கவேண்டிய) பசுமாடு தொடர்பாக அல்லாஹ் குரல்வளையை அறுப்பது எனக் (குர்ஆனில்) குறிப்பிட்டுள்ளான். எனவே, கழுத்து நரம்பை அறுக்கவேண்டிய பிராணியின் குரல்வளையை அறுத்தாலும் செல்லும். இருப்பினும், அதன் கழுத்து நரம்பை அறுப்பதே எனக்கு விருப்பமானதாகும்.தப்ஹ் என்பது (குரல்வளையை ஒட்டி இரண்டு பக்கங்களிலும் உள்ள) இரண்டு பெரிய நரம்புகளைத் துண்டிப்பதாகும்' என்று கூறினார்கள்.

நான்,அந்தப் பெரிய நரம்புகளையும் தாண்டி (பின்) கழுத்து எலும்பைத் துண்டிக்கலாமா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,நான் அப்படிக் கருதவில்லை. நாஃபிஉ(ரஹ்) என்னிடம்இப்னு

உமர்(ரலி) கழுத்து எலும்பைத் துண்டிப்பதைத் தடை செய்துள்ளார்கள். மேலும், அவர்கள் கருத்தெலும்புக்கு முன்புள்ள பகுதி வரைத் துண்டித்து, அது இறக்கும் வரை அப்படியேவிட்டுவிட வேண்டும் என்று கூறினார்கள் என்று கூறினார்கள்' என்று பதிலளித்தார்கள்.

அல்லாஹ் கூறினான்:

இன்னும் (இதையும் நினைவு கூருக:) மூஸா தம் சமூகத்தாரிடம்,நீங்கள் ஒரு பசு மாட்டை அறுக்கவேண்டும் ('தப்ஹ் செய்ய வேண்டும்) என்று நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்கு ஆணையிடுகிறான்' என்று சொன்னபோது... மனமில்லாமலேயே அதை அவர்கள் அறுத்தார்கள் (திருக்குர்ஆன் 02:67-71)

ஸயீத் இப்னு ஜு பைர்(ரஹ்) கூறினார்:

'ஃதகாத் (அறுத்தல்) என்பது குரல் வளையையும் கழுத்து நரம்பையும் அறுப்பதாகும் என்று இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

இப்னு உமர்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி) மற்றும் அனஸ்(ரலி) ஆகியோர்அறுக்கும்போது ஒருவர் தலையை (முற்றாகத்) துண்டித்துவிட்டாலும் பரவாயில்லை. (அந்தப் பிராணியை உண்ணலாம்)' என்று கூறியுள்ளனர்.

ஹதீஸ் 5510. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் ஒரு குதிரையை (அதன் கழுத்து நரம்பை) அறுத்து ('நஹ்ர் செய்து) அதை உண்டோம்.

ஹதீஸ் 5511. அஸ்மா(ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் மதீனாவில் இருந்தபோது குதிரையொன்றை (அதன் குரல் வளையை) அறுத்து ('தப்ஹ் செய்து) அதை உண்டோம்.

ஹதீஸ் 5512. அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) கூறினார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் குதிரையொன்றை (அதன் கழுத்து நரம்புகளை) அறுத்து ('நஹ்ர் செய்து) அதை உண்டோம்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

## உயிருள்ள பிராணியின் அங்கங்களைச் சிதைப்பதும், அதைக் கட்டிவைத்து அம்பெய்து கொல்வதும், பறவையைக் கூண்டில் அடைத்து வைத்து அம்பெய்து கொல்வதும் விரும்பத்தகாத செயல்களாகும்.

ஹதீஸ் 5513. ஹிஷாம் இப்னு ஸைத்(ரஹ்) கூறினார்

நான் (ஒரு முறை என் பாட்டனார்) அனஸ்(ரலி) அவர்களுடன் (பஸராவின் ஆட்சியரான) ஹகம் இப்னு அய்யூபிடம் சென்றேன். அங்கு சிலசிறுவர்கள் அல்லதுஇளைஞர்கள் கோழியொன்றைக் கட்டி வைத்து அதன் மீது அம்பெய்து கொண்டிருந்ததை அனஸ்(ரலி)விலங்குகளைக் கட்டிவைத்து அம்பெய்து கொல்வதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5514. ஸயீத் இப்னு அம்ர்(ரஹ்) கூறினார்

இப்னு உமர்(ரலி) (என் தந்தையின் சகோதரர்) யஹ்யா இப்னு ஸயீத்(ரஹ்) அவர்களிடம் வந்தார்கள். அங்கு யஹ்யாவின் மக்களில் ஒரு சிறுவன் கோழியொன்றைக் கட்டிவைத்து அதன் மீது அம்பெய்து கொண்டிருந்தான். இப்னு உமர்(ரலி) அந்தக் கோழியை நோக்கிச் சென்று அதை அவிழ்த்துவிட்டார்கள். பிறகு அந்தக் கோழியையும் அந்தச் சிறுவனையும் தம்முடன் அழைத்துக்கொண்டு (யஹ்யா இப்னு ஸயீத் அவர்களிடம்) சென்று,இந்தப் பறவையை அம்பெய்து

கொல்வதற்காகக் கட்டிவைக்க வேண்டாமென்று உங்கள் சிறுவனைக் கண்டித்து வையுங்கள். ஏனெனில், ஒரு விலங்கையோ (பறவை போன்ற) வேறெதையுமோ கொல்வதற்காகக் கட்டி வைக்க வேண்டாமென்று நபி(ஸல்) அவர்கள் தடை விதித்ததை கேட்டுள்ளேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5515. ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) கூறினார்

நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது நாங்கள்இளைஞர்கள் சிலரை அல்லதுமக்கள் சிலரைக் கடந்து சென்றோம். அவர்கள் கோழியொன்றைக் கட்டிவைத்து அதன் மீது அம்பெய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் இப்னு உமர்(ரலி) அவர்களைக் கண்டவுடன் அதை அப்படியேவிட்டுவிட்டு கலைந்து சென்றுவிட்டனர். இப்னு உமர்(ரலி),இதைச் செய்தது யார்? இவ்வாறு செய்பவர்களை நபி(ஸல்) அவர்கள் சபித்தார்கள்' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் வேறு அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இப்னு உமர்(ரலி) கூறினார்

பிராணிகளின் அங்கங்களைச் சிதைப்பவனை நபி(ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

இதையே நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5516. அப்துல்லாஹ் இப்னு யஸீத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் பிறர் பொருளை அபகரிப்பதையும் (பிராணிகள் மற்றும் மனிதர்களின்) அங்கங்களைச் சிதைப்பதையும் தடை செய்தார்கள்.

## கோழி இறைச்சி

ஹதீஸ் 5517. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் கோழி (இறைச்சி) உண்பதை பார்த்தேன்.

இதை ஸஹ்கம் அல்ஜர்மீ(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 5518. ஸஹ்தம் இப்னு முளர்ரிப் அல்ஜர்மீ(ரஹ்) கூறினார்

நாங்கள் அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அவர்களிடம் இருந்து கொண்டிருந்தோம். ஜாம் கூட்டத்தைச் சேர்ந்த எங்களக்கும் இந்த (அல்அரீ) கூட்டத்தாருக்குமிடையே சகோதரத்துவ உறவு (நட்பு) இருந்தது. அப்போது கோழி இறைச்சியுடன் உணவு கொண்டு வரப்பட்டது. மக்களிடையே சிவப்பான மனிதர் ஒருவர் அமர்ந்திருந்தார். (அவரை உணவு உண்ண அபூ மூஸா(ரலி) அழைத்தார்கள்.) ஆனால், அவர் உணவை நெருங்கவில்லை. அப்போது அபூ மூஸா(ரலி),அருகில் வாருங்கள் (வந்து சாப்பிடுங்கள்). இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இதைச் சாப்பிட நான் கண்டுள்ளேன்' என்று கூறினார்கள்.

அதற்கு அம்மனிதர்,இந்தக் கோழி (இனம், அசுத்தம்) எதையோ தின்பதை பார்த்தேன். அது எனக்கு அருவருப்பை உண்டாக்கவேஇதை இனிமேல் உண்ணமாட்டேன் என்று சத்தியம் செய்து விட்டேன்' என்று கூறினார்.

அதற்கு அபூ மூஸா(ரலி)அருகில் வாருங்கள் உங்களுக்கு (விவரமாக)த் தெரிவிக்கிறேன்' என்று கூறி(விட்டுப் பின் வருமாறு சொன்)னார்கள்: நான் நபி(ஸல்) அவர்களிடம் (என்) அஷ்அரீ குலத்தார் சிலருடன் சென்றேன். அப்போது அவர்கள் சினத்துடன் இருந்தார்கள். தர்ம ஒட்டகங்களை அவர்கள் பங்கிட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போது எங்களை(யும் எங்கள் பயணச் சுமைகளையும்) சுமந்து செல்ல (ஒட்டகங்கள் ஏற்பாடு) செய்யும்படி அவர்களிடம் நாங்கள் வேண்டினோம். அப்போது அவர்கள்உங்களைச் சுமந்து செல்ல ஒட்டகங்கள் தர மாட்டேன்' என்று சத்தியம் செய்தார்கள். மேலும்,உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் (தற்போது கைவசம்) இல்லை' என்று கூறினார்கள்.

(சிறிது நேரத்திற்குப்) பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் போரில் கிடைத்த சில ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டன. உடனே (எங்களைக் குறித்து)அஷ்அரீ குலத்தைச் சேர்ந்தவர்கள் எங்கே? அஷ்அரீ குலத்தைச் சேர்ந்தவர்கள் எங்கே? என்று (இரண்டு முறை) கேட்டுவிட்டு, (நாங்கள் வந்தபோது) எங்களுக்கு வெள்ளைத் திமில்கள் கொண்ட ஐந்து ஒட்டக மந்தைகளை வழங்கினார்கள்.

நாங்கள் சிறிது நேரமே (அங்கு) இருந்திப்போம். அப்போது நான் என் தோழர்களிடம், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நாம் ஏறிச் செல்ல ஒட்டகம் தரமாட்டேன் என்று செய்த) தம் சத்தியத்தை மறந்துவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நாம் இறைத்தூதர்(ஸல்) அவர்களை, அவர்கள் செய்த சத்தியத்திலிருந்து கவனத்தைத் திருப்பியிருந்தால் நாம் ஒருபோதும் வெற்றியடைய மாட்டோம்' என்று கூறிவிட்டு, நபி(ஸல்) அவர்களிடம் நாங்கள் திரும்பி வந்தோம். அப்போது நாங்கள் திரும்பி வந்தோம். அப்போது நாங்கள், இறைத்தூதர் அவர்களே! நாங்கள் ஏறிச் செல்வதற்காகத் தங்களிடம் ஒட்டகம் கேட்டோம். அப்போது தாங்கள், எங்களை ஏற்றிச் செல்லும் ஒட்டகம் தரமாட்டேன் என்று சத்தியம் செய்தீர்கள். (ஆனால், பிறகு போரில் கிடைத்த ஒட்டகங்களை எங்களுக்குத் தந்தீர்கள்.) எனவே, நீங்கள் உங்களின் சத்தியத்தை மறந்துவிட்டீர்கள் என்று நாங்கள் எண்ணினோம்' என்று சொன்னோம்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வே உங்களை ஒட்டகத்தில் ஏற்றி அனுப்பிடச் செய்தான். அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் நாடினால், நான் இனி எந்த ஒன்றுக்காகவும் சத்தியம் செய்து, பிறகு அது அல்லாததை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் சிறந்ததையே செய்வேன் சத்தியத்தை முறித்து அதற்காகப் பரிகாரமும் செய்துவிடுவேன்' என்று கூறினார்கள்.

## குதிரை இறைச்சி

ஹதீஸ் 5519. அஸ்மா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் நாங்கள் குதிரையொன்றை அறுத்து உண்டோம்.

என ஃபாத்திமா பின்த் முன்திர்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 5520. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

கைபர் போரின்போது நபி(ஸல்) அவர்கள் (நாட்டுக்) கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமெனத் தடை செய்தார்கள். குதிரையின் இறைச்சியை உண்ண அனுமதியளித்தார்கள்.

என முஹம்மத் இப்னு அலீ(ரஹ்) அறிவித்தார்.

## நாட்டுக் கழுதை இறைச்சி

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5521. இப்னு உமர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணக்கூடாதெனத் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5522. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ணவேண்டாமெனத் தடை செய்தார்கள்.

இதே ஹதீஸ் மற்ற அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5523. அலீ(ரலி) கூறினார்

கைபர் போர் நடந்த ஆண்டில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இனி(த் தவணை முறைத் திருமணமான)முத்ஆ செய்யக்கூடாது என்றும், நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமென்றும் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5524. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது (நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை) உண்ணவேண்டாமென்று தடைசெய்தார்கள். குதிரைகளின் இறைச்சியை உண்ண அனுமதியளித்தார்கள்.

ஹதீஸ் 5525, ஹதீஸ் 5526 பராஉ(ரலி) அவர்களும் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களும் கூறினார்கள்

நபி(ஸல்) அவர்கள் (நாட்டுக்) கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமெனத் தடை செய்தார்கள்.

ஹதீஸ் 5527. அபூ ஸ அலபா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நாட்டுக் கழுதைகளின் இறைச்சிக்குத் தடை விதித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்

நபி(ஸல்) அவர்கள், (வன) விலங்குகளில் கோரைப் பற்கள் உடைய எதையும் உண்ண வேண்டாமெனத் தடைசெய்தார்கள்.

ஹதீஸ் 5528. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

(கைபர் போரின்போது) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து,கழுதைகள் உண்ணப்பட்டன' என்று கூறினார். பிறகு ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,கழுதைகள் உண்ணப்பட்டுவிட்டன' என்று கூறினார். மீண்டும் ஒருவர் வந்து,கழுதை இறைச்சி (உண்டு) தீர்க்கப்பட்டுவிட்டது' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் பொது அறிவிப்புச் செய்பவர் ஒருவருக்கு (மக்களிடையே அறிவிப்புச் செய்யும்படி) கட்டளையிட, அவரும் மக்களிடையே,அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்களை நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்ண வேண்டாமெனத் தடை செய்கிறார்கள். ஏனெனில், அவை அசுத்தமானவையாகும்' என்று பொது அறிவித்தார். உடனே இறைச்சி வெந்து கொதித்துக்கொண்டிருந்த பாத்திரங்கள் கவிழ்க்கப்பட்டு (அதிலிருந்த இறைச்சி கொட்டப்பட்டு)விட்டது.

ஹதீஸ் 5529. அம்ர் இப்னு தீனார்(ரஹ்) கூறினார்

நான் ஜாபிர் இப்னு ஸைத்(ரஹ்) அவர்களிடம்இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நாட்டுக் கழுதைகளை உண்ணக் கூடாதெனத் தடை செய்திருப்பதாக (மக்கள்) கருதுகிறார்களே' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஹகம் இப்னு அம்ர் அல்கிஃபாரீ(ரலி) பஸராவில் வைத்து எம்மிடம் இதைச் சொல்லிவந்தார்கள். ஆனால், (கல்விக்) கடலான இப்னு அப்பாஸ்(ரலி) அதை மறுத்து, (நபியே! இவர்களிடம்) கூறுங்கள்: எனக்கு அருளப்பெற்ற வேத அறிவிப்பில் (வஹீயில்), உண்பவர்களுக்கு எந்த உணவும் தடை செய்யப்பட்டதாக நான் காணவில்லை செத்த பிராணியையும் சிந்தப்பட்ட இரத்தத்தையும் பன்றி இறைச்சியையும் தவிர. நிச்சயம் இவை அசுத்தமாகும்' எனும் (திருக்குர்ஆன் 06:145 வது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## விலங்குகளில் கோரைப் பற்கள் உள்ளவற்றை உண்பது.

ஹதீஸ் 5530. அபூ ஸஅலபா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (வன) விலங்குகளில் கோரைப் பற்கள் உள்ள எதையும் உண்ணக் கூடாதெனத் தடை விதித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## செத்த பிராணியின் தோல்

ஹதீஸ் 5531. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செத்த ஆடு ஒன்று கிடந்த வழியாகச் சென்றார்கள். அப்போதுஇதன் தோலால் நீங்கள் பயனடையக் கூடாதா? என்று கேட்டார்கள். மக்கள்இது செத்துப்போனதாயிற்றே!என்று கேட்க, அதற்கு அவர்கள்,இதை உண்பது தான் தடை செய்யப்பட்டுள்ளது' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5532. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செத்துப்போன பெட்டை வெள்ளாடு ஒன்று கிடந்த வழியாகச் சென்றார்கள். அப்போதுஇதன் தோலால் பயன் அடைவதால் இதன் உரிமையாளர் மீது குற்றம் ஏதுமில்லை' என்று கூறினார்கள்.

## கஸ்தூரி

ஹதீஸ் 5533. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் (அறப்போரில்) காயப்படுத்தப்பட்டவர் தம் காயத்தில் இரத்தம் வழிய, மறுமை நாளில் (இறைவன் முன்னால்) வருவார். அவரின் (காயத்திலிருந்து வழியும் திரவத்தின்) நிறம் இரத்த(ச் சிவப்பு) நிறமாயிருக்கும் (அதன்) மணமோ கஸ்தூரி மணமாயிருக்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5534. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல நண்பன் மற்றும் கெட்ட நண்பனின் நிலையானது கஸ்தூரியைச் சுமக்கிறவனின் நிலையையும், (உலைக் களத்தில்) உலை ஊதுகிறவனின் நிலையையும் ஒத்திருக்கிறது. கஸ்தூரியைச் சுமப்பவன் ஒன்று அதை உனக்கு அன்பளிப்பாக வழங்கலாம். அல்லது நீ அவனிடமிருந்து (அதை விலைக்கு) வாங்கிக் கொள்ளலாம். அல்லது அதிலிருந்து நீ நறுமணத்தையேனும் பெறலாம். ஆனால் உலை ஊதுபவனோ ஒன்று உன்னுடைய ஆடையை எரித்துக் கரித்துவிடுவான் அல்லது (அவனிடமிருந்து) நீ துர்வாடையையாவது அடைந்தே தீருவாய். என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## முயல்

ஹதீஸ் 5535. நாங்கள்மர்ருழ் ழஹ்ரான் எனுமிடத்தில் இருந்தபோது முயல் ஒன்றைச் துரத்திச் சென்றோம். மக்கள் அதைப்பிடிக்க முயன்று களைத்துவிட்டனர். நான் அதைப்பிடித்து (என் வளர்ப்புத் தந்தை) அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம் கொடுத்தேன். அவர்கள் அதனை அறுத்துஅதன் இரண்டு பின் சப்பைகளையும் அல்லதுஅதன் இரண்டு தொடைகளையும் (அன்பளிப்பாக) நபி(ஸல்) அவர்களுக்கு அனுப்பிவைத்தார்கள். அதை நபி(ஸல்) அவர்கள் ஏற்றார்கள்.

## உடும்பு

ஹதீஸ் 5536. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உடும்பை நான் உண்ணவுமாட்டேன் அதை (உண்ண வேண்டாமென) நான் தடை செய்யவுமாட்டேன்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5537. காலித் இப்னு வலீத்(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (அன்னாரின் துணைவியாரும் என் சிறிய தாயாருமான) மைமூனா(ரலி) அவர்களின் இல்லத்திற்குச் சென்றேன். அப்போது பொரிக்கப்பட்ட உடும்புக் கறி கொண்டு வரப்பட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் கரத்தை அந்த உடும்பை நோக்கி நீட்ட (அங்கிருந்த) பெண்களில் ஒருவர், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எதைச் சாப்பிடப்போகிறார்கள் என்பதை அவர்களுக்கு (முன்பே) தெரிவித்துவிடுங்கள்' என்று கூறினார்.

அப்போது, இது உடும்பு, இறைத்தூதர் அவர்களே!என்று (அங்கிருந்தவர்கள்) கூறினார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் கரத்தை (உடும்பைவிட்டு) எடுத்துவிட்டார்கள்.

அப்போது நான், உடும்பு தடை செய்யப்பட்டதா, இறைத்தூதர் அவர்களே? என்று கேட்டேன். அதற்கவர்கள், இல்லை (தடை செய்யப்பட்டதன்று). ஆயினும், அது என் சமுதாயத்தாரின் பூமியில் இல்லை. எனவே, என் மனம் அதை விரும்பவில்லை' என்று பதிலளித்தார்கள்.

நான் அதை (என் பக்கம்) இழுத்து வைத்துச் சாப்பிட்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னைப்) பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

## உறைந்த அல்லது உருகிய நெய்யில் எலி விழுந்துவிட்டால்...?

ஹதீஸ் 5538. மைமூனா(ரலி) கூறினார்

(ஒரு முறை) எலி ஒன்று நெய்யில் விழுந்து இறந்துவிட்டது. (அந்த நெய்யை உண்ணலாமா? என்று) அது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள், (உடயே) அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் (எடுத்து) எறிந்துவிட்டு அ(தில் மீதியுள்ள)தை உண்ணுங்கள்' என்று பதிலளித்தார்கள். 5

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

இந்த ஹதீஸை ஸுஹ்ரீ(ரஹ்) உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்களிடமிருந்தே அறிவித்தார்கள். ஸுஹ்ரீயிடமிருந்து நான் இந்த ஹதீஸைப் பலமுறை செவியுற்றுள்ளேன்.

ஹதீஸ் 5539. யூனுஸ் இப்னு யஸீத்(ரஹ்) கூறினார்

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம், எலி போன்ற உயிரினம் உறைந்த அல்லது உறையாத எண்ணெய் மற்றும் நெய் ஆகியவற்றில் விழுந்து இறந்துவிட்டால் (அப்பொருளை உண்ணலாமா?) என்பது குறித்து வினவப்பட்டது. அவர்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நெய்யில் (விழுந்து) இறந்துவிட்ட எலியையும் அதையொட்டி இருந்த நெய்யையும் (உடனே எடுத்து) எறியும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவை (எடுத்து) எறியப்பட்டன. பிறகு (அந்த மீதி நெய்) உண்ணப்பட்டது' என்று உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அறிவித்துள்ள ஹதீஸ் குறித்து எங்களுக்குச் செய்தி எட்டியது' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5540. மைமூனா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களிடம் நெய்யில் விழுந்து (செத்து)விட்ட எலி குறித்து கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்(உடனே) அந்த எலியையும் அதைச் சுற்றியுள்ள நெய்யையும் (எடுத்து) எறிந்துவிட்டு (மீதி நெய்யை) உண்ணுங்கள்' என்று பதிலளித்தார்கள்.

## பிராணிகளின் முகத்தில் அடையாளமிடல்.

ஹதீஸ் 5541. சாலிம்(ரஹ்) கூறினார்

இப்னு உமர்(ரலி) பிராணியின் முகத்தில் அடையாளமிடுவதை வெறுத்தார்கள். மேலும் அவர்கள், பிராணிகளை அடிப்பதற்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்' என்றும் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் (பிராணிகளின்) முகத்தில் அடிப்பதற்கு..! என வந்துள்ளது.

ஹதீஸ் 5542. அனஸ்(ரலி) கூறினார்

நான் என் (தாய்வழிச்) சகோதரன் ஒருவனை நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றேன். நபியவர்கள் இனிப்புப் பொருளைமென்று (குழந்தையாயிருந்த) அவனுடைய வாயிலிடுவதற்காக அவனை நான் கொண்டு சென்றபோது அவர்கள் தங்களின் (ஆட்டுத்) தொழுவம் ஒன்றில் இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஓர் ஆட்டிற்கு அதன் காதுகளில் அடையாளம் இட்டுக்கொண்டிருந்தைக் கண்டேன்.

## ஒரு கூட்டத்தாருக்குக் கிடைத்த போர்ச் செல்வத்தில் ஓர் ஆட்டையோ, ஒட்டகத்தையோ அவர்களில் ஒருவர் மற்றவரின் அனுமதியின்றி அறுத்துவிட்டால் அதை உண்ணலாகாது.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து ரா∴பிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்துள்ள (பின்வரும்) ஹதீஸ் இதற்கு ஆதாரமாகும்.

தாவூஸ்(ரஹ்) அவர்களும் இக்ரிமா(ரஹ்) அவர்களும் திருடன் (திருடிக்கொண்டு வந்து) அறுத்த பிராணியைக் குறித்துக் கூறும்போது, அதை எறிந்துவிடுங்கள்' என்று கூறினர்.

ஹதீஸ் 5543. ரா∴பிஉ இப்னு கதீஜ்(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களிடம், (இறைத்தூதர் அவர்களே! நாம் உணவுக்காக ஒட்டகங்களை அறுக்க நம் வாட்களை இன்று பயன்படுத்திவிட்டால் அவற்றின் கூர் மழுங்கி) நாளை நம்மிடம் (கூரான) வாட்களே இல்லாத நிலையில் எதிரியைச் சந்திக்க வேண்டிவருமே' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இரத்தத்தைச் சிந்தச் செய்கிற எந்த ஆயுதத்தால் அறுக்கப்பட்டிருந்தாலும் (அறுக்கும்போது) அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டிருந்தால் (அதை) உண்ணுங்கள். ஆனால், அது பல்லாலோ நகத்தாலோ மட்டும் அறுக்கப்பட்டிருக்கக் கூடாது. அது (ஏன் கூடாது என்பது) பற்றி இதோ நான் உங்களக்குக் கூறுகிறேன்: பல்லோ எலும்பாகும் நகமோ அபிசீனியர்களின் கத்தியாகும்' என்று பதிலளித்தார்கள்.

மக்களில் அவசரப்பட்ட சிலர் (வேகமாக) முந்திச் சென்று போர்ச் செல்வங்களை எடுத்தார்கள். நபி(ஸல்) அவர்களோ மக்களின் பின்வரிசையில் இருந்தார்கள். (போர்ச் செல்வமாகக் கிடைத்த பிராணிகளைப் பெற்ற) அந்த மக்கள் சமையல் பாத்திரங்களை (அடுப்புகளின் மீது) வைத்து (சமைக்கத் தொடங்கி)விட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் (பங்கிட்டுத் தருவதற்கு முன்பே இப்படி அவர்கள் செய்ததால்) அந்தப் பாத்திரங்களைக் கவிழ்த்து (அவற்றில் இருப்பவற்றைக் கொட்டி) விடும்படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவை கவிழ்க்கப்பட்டன.

(பின்னர்) நபி(ஸல்) அவர்கள் மக்களிடையே (அச்செல்வங்களை) பங்கிட்டார்கள். அப்போது ஓர் ஒட்டகத்திற்குப் பத்து ஆடுகளைச் சமமாக்கினார்கள். பிறகு (பங்கு வைக்கப்பட்ட) ஒட்டகம் ஒன்ற முன் வரிசையிலிருந்த மக்களிடையே இருந்து வெருண்டோடியது. அவர்களிடம் அப்போது (அதைப் பிடித்து வர) குதிரை எதுவும் இருக்கவில்லை. அப்போது ஒருவர் அதை நோக்கி ஓர் அம்பை எய்தார். அல்லாஹ் அதைத் தடுத்து நிறுத்திவிட்டான். அப்போது நபி(ஸல்) அவர்கள், வன விலங்குகளில் கட்டுக்கடங்காதவை இருப்பதைப் போன்றே இந்தப் பிராணிகளிடையேயும் கட்டுக் கடங்காதவை உள்ளன. எனவே, இவற்றில் இப்படிக் கட்டுக்கடங்காமல் வெருண்டோடும் பிராணியை இதைப் போன்றே (அம்பெய்து தடுத்து நிறுத்தச்) செய்யுங்கள்' என்று கூறினார்கள்.

## ஒரு கூட்டத்தாருக்குரிய ஒட்டகம் வெருண்டோடிட அவர்களில் ஒருவர் நன்மையை நாடி அதன் மீது அம்பெய்து அதைக் கொன்றுவிட்டால் அ(தை உண்ப)து செல்லும்.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து ரா∴பிஉ(ரலி) அறிவித்துள்ள (பின்வரும்) ஹதீஸ் இதற்கு ஆதாரமாகும்.

ஹதீஸ் 5544. ரா∴பிஉ இப்னு கதீஜ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களுடன் நாங்கள் ஒரு பயணத்தில் இருந்தோம். அப்போது ஒட்டகக் கூட்டத்திலிருந்து ஓர் ஒட்டகம் வெருண்டோடியது. அப்போது ஒருவர் அம்புகளை அதன் மீது எய்து அதைத் தடுத்து நிறுத்தினார். பிறகு நபி(ஸல்) அவர்கள்வனவிலங்குகளில் கட்டுக்கடங்காதவை இருப்பதைப் போன்றே இவற்றிலும் கட்டுக் கடங்காதவை உள்ளன. எனவே, இவற்றில் எது உங்களை மீறிச் செல்கிறதோ அதை இவ்வாறே (அம்பெய்து தடுத்து நிறுத்தச்) செய்யுங்கள்' என்று கூறினார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் புனிதப் போர்களிலும் பயணங்களிலும் இருப்போம். அப்போது நாங்கள் பிராணிகளை அறுக்க விரும்புவோம். (எங்களிடம்) கத்தி இருக்காது. (அப்போது நாங்கள் என்ன செய்ய வேண்டும்?)' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,இரத்ததைச் சிந்தச் செய்யும் எதுவாயினும் அதைக்கொண்டு விரைவாக அறுத்திடுங்கள். (அதன் மீது) அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டிருக்கும் பட்சத்தில் (அதைச்) சாப்பிடுங்கள். பல்லாலும் நகத்தாலும் அறுக்கப்பட்டதைத் தவிர. ஏனெனில், பல் எலும்பாகும்: நகம் அபிசீனியர்களின் கத்தியாகும்' என்று பதிலளித்தார்கள்.

## நிர்ப்பந்திற்குள்ளானவன் (செத்தவற்றை) உண்பது.

அல்லாஹ் கூறினான்:

நம்பிக்கையாளர்களே! நாம் உங்களுக்கு அளித்துள்ளவற்றில் தூய்மையானவற்றையே உண்ணுங்கள் நீங்கள் அல்லாஹ்வையே வணங்குபவர்களாக இருப்பீர்களாயின், அவனுக்கு நன்றி செலுத்தி வாருங்கள்.

(தானாகச்) செத்த பிராணி, உதிரம், பன்றியிறைச்சி, அல்லாஹ் அல்லாதவருக்காக அறுக்கப்பட்ட பிராணி ஆகியவற்றையே உங்களுக்கு அல்லாஹ் தடைசெய்துள்ளான். ஆயினும், எவரேனும் விருப்பமில்லாமலும் வரம்பு மீறாமலும் (உண்ண) நிர்ப்பந்திக்கப்பட்டால், அவரின் மீது எந்தக் குற்றமும் இல்லை. (திருக்குர்ஆன் 02:172, 173)

அல்லாஹ் கூறினான்:

ஆனால், உங்களில் எவரேனும் பாவம் செய்யும் நாட்டமின்றி, பசிக் கொடுமையினால் நிர்ப்பந்திக்கப்பட்டு (விலக்கப்பட்டவற்றைப் புசித்து)விட்டால் (அது குற்றமாகாது) (திருக்குர்ஆன் 05:03)

அல்லாஹ் கூறினான்:

(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் அல்லாஹ்வின் வசனங்களை நம்புவோராக இருப்பின் அல்லாஹ்வின் பெயர் கூறப்பட(டு அறுக்கப்பட்)டவற்றையே புசியுங்கள்.

அல்லாஹ்வின் பெயர் கூறப்பட(டு அறுக்கப்பட்)டவற்றை நீங்கள் சாப்பிடாமலிருக்க என்ன (தடை) இருக்கிறது? நீங்கள் நிர்பந்திக்கப்பட்டலான்றிச் சாப்பிட உங்களுக்கு விலக்கப்பட்டவை எவை என்பதை அல்லாஹ் விவரித்துக் கூறியுள்ளான். ஆனால், பெரும்பாலோர், அறியாமையின் காரணமாகத் தங்களின் மன இச்சைகளின் பிரகாரம் (மனிதர்களை) வழிகெடுக்கிறார்கள் வரம்பு மீறிச் செல்பவர்களைத் நிச்சயமாக உம்முடைய இறைவன் நன்கறிவான் (திருக்குர்ஆன் 06:118, 119)

ஸஹீஹுல் புஹாாி பாகம் 4 அத்தியாயம் 72 (உண்பதற்காக) அறுக்கப்படும் பிராணிகளும் வேட்டைப் பிராணிகளும்

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) கூறுக: (தாமாகச்) செத்தவை, வடியும் இரத்தம், பன்றி மாமிசம் ஆகியவற்றைத் தவிர உண்பவர்கள் புசிக்கக் கூடியவற்றில் எதுவும் தடுக்கப்பட்டதாக எனக்கு அறிவிக்கப்பட்டதில் நான் காணவில்லை ஏனெனில், நிச்சயமாக இவை அசுத்தமாகும். அல்லது அல்லாஹ், அல்லாதவற்றின் பெயர் சொல்லி அறுக்கப்பட்டது பாவமாயிருப்பதனால் (அதுவும் தடுக்கப்பட்டுள்ளது). ஆனால், எவரேனும் நிர்ப்பந்திக்கப்பட்டு, வரம்பு மீறாமலும் பாவம் செய்ய நினைக்காமலும் புசித்துவிட்டால் (அது குற்றமாகாது ஏனெனில்) நிச்சயமாக உங்களுடைய இறைவன் மிக்க மன்னிப்போனாகவும், பெருங் கருணையுடையோனாகவும் இருக்கிறான் (திருக்குர்ஆன் 06:145)

அல்லாஹ் கூறினான்:

(நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ் உங்களுக்கு அளித்துள்ளவற்றிலிருந்து அனுமதிக்கப்பட்ட நல்லவற்றையே நீங்கள் புசியுங்கள் நீங்கள் அல்லாஹ்வையே வழிபடுகிறவர்களாக இருப்பின் அவனுடைய அருட்கொடைக்கு நன்றி செலுத்துங்கள்.

(நீங்கள் புசிக்கக் கூடாது என்று) உங்களுக்கு அவன் விலக்கியிருப்பவையெல்லாம்: தானே செத்ததும், இரத்தமும், பன்றியிறைச்சியும், எதன் மீது அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர் கூறி அறுக்கப்பட்டதோ அதுவுமேயாகும். ஆனால், எவரேனும் வரம்பு மீற வேண்டுமென்று (எண்ணம்) இல்லாமலும், பாவம் செய்யும் விருப்பமுமில்லாமலும் நிர்ப்பந்திக்கப்பட்(டு அவற்றைப் புசித்துவிட்)டால் (அது குற்றமாகாது. ஏனெனில்) நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாகவும், கருணை உடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 16:114, 115)

# அத்தியாயம் 73 குர்பானி (தியாக)ப் பிராணிகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## குர்பானி கொடுப்பது நபிவழியாகும்.

இப்னு உமர்(ரலி),அது நபி வழியும் (மக்களால்) அறியப்பட்ட ஒரு நடை முறையுமாகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5545. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்

(ஈதுல் அள்ஹா பெருநாள் உரையில்) நபி(ஸல்) அவர்கள்,இன்றைய தினம் நாம் முதலாவதாகச் செய்ய வேண்டியது யாதெனில், முதலில் நாம் (பெருநாள் தொழுகை) தொழுவோம் பிறகு (தொழுகையிலிருந்து திரும்பிச் சென்று குர்பானிப்பிராணிகளை அறுப்போம். இதை செய்கிறவர் நம்முடைய வழியைப் பின்பற்றியவராவார். (பெருநாள் தொழுகைக்கு) முன்பே (குர்பானிப் பிராணியை) அறுக்கிறவருக்கு அது, தம் குடும்பத்தாருக்காக முன்கூட்டியே தயார் செய்த (சாதாரண) இறைச்சியாகவே அமையும் அது (குர்பானி) வழிபாட்டில் எதிலும் சேராது' என்று கூறினார்கள்.

உடனே (தொழுகைக்கு முன்பு அறுத்து விட்டிருந்த) அபூ புர்தா இப்னு நியார்(ரலி) எழுந்து,(இறைத்தூதர் அவர்களே!) என்னிடம் ஒரு வயதுடைய (வெள்ளாட்டு) குட்டி ஒன்று இருக்கிறது' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்அதை அறுத்திடுவீராக! உமக்குப் பிறகு வேறெவருக்கும் அது செல்லாது' என்று கூறினார்கள்.

"(பெருநாள்) தொழுகைக்குப் பின்னால் அறுக்கிறவரின் (குர்பானி) வழிபாடு பூர்த்தியாகி விடும் மேலும், அவர் முஸ்லிம்களின் வழி முறையைப் பின்பற்றியவராவார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என மற்றோர் அறிவிப்பில் உள்ளது.

இதையும் பராஉ(ரலி) அவர்களே அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5546. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்(பெருநாள்) தொழுகைக்கு முன்னால் (பிராணியை) அறுக்கிறவர் தம(து சொந்த செலவு)க்காகவே அறுத்தவராவார். தொழுகைக்குப் பின்னால் அறுக்கிறவரின் (குர்பானி) வழிபாடு பூர்த்தியாகி விடும் மேலும், அவர் முஸ்லிம்களின் வழிமுறையைப் பின்பற்றியவராவார்' என்று கூறினார்கள்.

## குர்பானிப் பிராணிகளை மக்களிடையே தலைவர் பங்கிடுவது.

ஹதீஸ் 5547. உக்பா இப்னு ஆமிர் அல்ஜுஹைனீ(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களிடையே குர்பானிப் பிராணிகளைப் பங்கிட்டார்கள். அப்போது எனக்கு (என்னுடைய பங்காக) ஒரு வயது பூர்த்தியான வெள்ளாட்டுக் குட்டி ஒன்று கிடைத்தது நான்,இறைத்தூதர் அவர்களே! ஒரு வயதுடைய வெள்ளாடுதான் எனக்குக் கிடைத்தது' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்அதையே நீங்கள் குர்பானி கொடுங்கள்' என்று கூறினார்கள்.

## பயணி மற்றும் பெண்களுக்குக் குர்பானி உண்டா?

ஹதீஸ் 5548. ஆயிஷா(ரலி) கூறினார்

(நபி(ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்குச் சென்றிருந்தபோது) நான் மக்காவினுள் நுழையும் முன்சரிஃப் எனுமிடத்தில் எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்த நிலையில் நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான் அழுதுகொண்டிருந்தேன். நபி(ஸல்) அவர்கள்உனக்கென்ன ஆயிற்று? உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று கேட்டார்கள்.

நான்,ஆம்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்இ(ந்த மாதவிடாயான)து, பெண்களுக்கு அல்லாஹ் எழுதிவிட்ட விதியாகும். எனவே, ஹஜ் செய்பவர் நிறைவேற்றும் வழிபாடுகள் அனைத்தையும் நீயும் நிறைவேற்று. இறை இல்லத்தை (புனித கஅபாவை)ச் சுற்றி வருவதைத் தவிர' என்று கூறினார்கள்.

நாங்கள் மினாவில் இருந்தபோது மாட்டிறைச்சி என்னிடம் கொண்டு வரப்பட்டது. நான்,இது என்ன? என்று கேட்டேன். மக்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , தம் துணைவியருக்காக மாடுகளை அறுத்துக் குர்பானி கொடுத்தார்கள்' என்று பதிலளித்தார்கள்.

## ஹஜ் பெருநாளில் இறைச்சியை விரும்பி உண்ணுதல்.

ஹதீஸ் 5549. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

'ஈதுல் அள்ஹா பெருநாளில் நபி(ஸல்) அவர்கள்(பெருநாள்) தொழுகைக்கு முன்பே குர்பானி கொடுத்துவிட்டவர் மறுபடியும் குர்பானி கொடுக்கப்படும்' என்று கூறினார்கள்.

அப்போது ஒருவர் (அபூ புர்தா) எழுந்து,இறைத்தூதர் அவர்களே! இது, இறைச்சி விரும்பி உண்ணப்படும் நாள்' என்று கூறி, தம் (வீட்டார் மற்றும்) அண்டை வீட்டார் (உடைய தேவை) பற்றி(யும் அதனாலேயே தாம் தொழுகைக்கு முன்பே அறுத்தது பற்றியும்) குறிப்பிட்டார். மேலும், தம்மிடம் ஒரு வயது பூர்த்தியான வெள்ளாடு இருப்பதாகவும், அது இறைச்சி ஆடுகள் இரண்டைவிடச் சிறந்தது என்றும் (அதை இப்போது குர்பானி கொடுக்கலாமா என்றும்) கேட்டார். நபி(ஸல்) அவர்கள் அவருக்கு அனுமதியளித்தார்கள். இந்த அனுமதி அவரல்லாதவருக்கும் பொருந்துமா? அல்லது பொருந்தாதா? என்று எனக்குத் தெரியாது. பிறகு நபி(ஸல்) அவர்கள் இரண்டு செம்மறியாட்டுக் கடாக்கள் பக்கம் சென்று அவ்விரண்டையும் அறுத்தார்கள். மக்கள் ஒரு சிறு ஆட்டு மந்தைக்குச் சென்று (அதிலிருந்த) ஆடுகளைத் தமக்குள்ள பிரித்துக் கொண்ட (பின் குர்பானி கொடுத்த)னர்.

## துல்ஹஜ் பத்தாவது நாள் மட்டுமே குர்பானி கொடுக்கவேண்டும் என்போரின் கூற்று.

ஹதீஸ் 5550. அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (துல்ஹஜ் 10ஆம் நாள் மக்காவில் ஆற்றிய உரையில்),வானங்களையும் பூமியையும் அல்லாஹ் படைத்த நாளில் இருந்த (பழைய) நிலைக்குக் காலம் திரும்பிவிட்டது. ஆண்டு என்பது பன்னிரண்டு மாதங்களாகும். அவற்றில் நான்கு மாதங்கள் புனிதமானவை. (அவற்றில்) மூன்று மாதங்கள் தொடர்ந்து வரக்கூடியவை. அவை துல்கஅதா, துல்ஹிஜ்ஜா மற்றும் முஹர்ரம் ஆகியனவாகும். (மற்றொன்று) ஜு மாதா (அல்ஆம்ரா)வுக்கும் ஷஅபான் மாதத்திற்கும் இடையிலுள்ளமுளர் குலத்தாரின் ரஜப் மாதமாகும்' என்று கூறிவிட்டு,இது எந்த மாதம்? என்று கேட்டார்கள்.

நாங்கள்,அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்' என்று பதிலளித்தோம். அம்மாதத்திற்கு அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்துவிட்டு,இது துல்ஹிஜ்ஜா மாதம் அல்லவா? என்று கேட்டார்கள். நாங்கள்,ஆம்' என்று சொன்னோம்.இது எந்த நகரம்? என்றும் கேட்டார்கள். அதற்கு நாங்கள்,அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்' என்று சொன்னோம். அப்போதும் அவர்கள் இந்நகரத்திற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவுக்கு மௌனமாக இருந்துவிட்டுஇது (புனித) நகரமல்லவா? என்று கேட்டார்கள். நாங்கள்,ஆம்' என்றோம்.

அடுத்துஇது எந்த நாள்? என்று கேட்டார்கள். நாங்கள்அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்' என்றோம். அப்போதும் அந்த நாளுக்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என நாங்கள்

எண்ணும் அளவுக்கு அவர்கள் மௌனமாக இருந்துவிட்டு, இதுகுர்பானி கொடுக்கும் (நஹ்ருடைய) நாளல்லவா? என்று கேட்டார்கள். நாங்கள்ஆம் என்றோம்.

(பின்னர் பின்வருமாறு) கூறினார்கள்: உங்களின் இந்த(ப் புனித) மாதத்தில் உங்களின் இந்த(ப் புனித) நகரத்தில், உங்களின் இந்த நாள் புனிதம் பெற்றிருப்பதைப் போன்றே உங்கள் உயிர், உடைமை, மானம் ஆகியனவும் உங்களுக்குப் புனிதமானவை ஆகும். நீங்கள் (மறுமையில்) உங்களுடைய இறைவனைச் சந்திப்பீர்கள். அப்போது அவன் உங்களிடம் உங்கள் வினைகள் குறித்து விசாரிப்பான். அறிந்துகொள்ளுங்கள்: எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக்கொள்கிற வழிகேடர்களாய் நீங்கள் மாறிவிடாதீர்கள்.

இதோ இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு (என் கட்டளைகளை)த் தெரிவித்து விடுங்கள். ஏனெனில், இச்செய்தியை (நேரடியாக)க் கேட்டவரை விட அவர் யாரிடம் தெரிவிக்கிறாரோ அவர்களில் சிலர் இதை நன்கு கற்பவராயிருக்கலாம்.

-(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) இதை அறிவிக்கும்போது, நபி(ஸல்) அவர்கள் உண்மையே கூறினார்கள்' என்று கூறுவார்கள்.

பிறகுநான் தெரிவித்துவிட்டேனா? நான் தெரிவித்துவிட்டேனா? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

## (பெருநாள்) தொழும் திடலிலேயே குர்பானி கொடுப்பது.

ஹதீஸ் 5551. நா:பிஉ (ரஹ்) கூறினார்

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அந்த அறுக்குமிடத்திலேயே, அதாவது நபி(ஸல்) அவர்கள் அறுத்த இடத்திலேயே தம் குர்பானிப் பிராணிகளை அறுத்துவந்தார்கள்.

ஹதீஸ் 5552. இப்னு உமர்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பெருநாள்) தொழும் திடலிலேயே குர்பானிப் பிராணிகளை அறுப்பவர்களாக இருந்தார்கள்.

## கொம்புகள் உள்ள இரண்டு செம்மறியாட்டுக் கடாக்களை நபி(ஸல்) அவர்கள் குர்பானி கொடுத்தது.

அவையிரண்டும் கொழுத்தவை என்று (மற்றோர் அறிவிப்பில்) கூறப்படுகிறது.

உமாமா இப்னு ஸஹ்ல்(ரலி) கூறினார்:

நாங்கள் மதீனாவில் குர்பானிப் பிராணிகளை (நன்றாகத் தீனிபோட்டு) கொழுக்க வைத்துவந்தோம். முஸ்லிம்கள் அனைவருமே (பொதுவாகக் குர்பானிப் பிராணிகளை) கொழுக்க வைத்துவந்தார்கள்.

ஹதீஸ் 5553. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (ஈதுல் அள்ஹா பெருநாள் தினத்தில்) இரண்டு செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்து வந்தார்கள். நானும் இரண்டு செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்துவந்தேன்.

ஹதீஸ் 5554. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கொம்புகள் உள்ள இரண்டு கறுப்பு வெள்ளை செம்மறியாட்டுக கடாக்கள் பக்கம் சென்று தம் கரத்தால் அவற்றை அறுத்தார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5555. உக்பா இப்னு ஆமிர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களிடையே குர்பானிப் பிராணிகளாகப் பங்கிடும் படி ஓர் ஆட்டு மந்தையை என்னிடம் அளித்தார்கள். (அவ்வாறே நானும் பங்கிட்டேன். இறுதியில்) வெள்ளாட்டுக் குட்டி ஒன்று மீதி இருந்தது. அதை நான் நபி(ஸல்) அவர்களிடம் சொன்னேன். அவர்கள், நீங்கள் அதைக் குர்பானி கொடுத்து விடுங்கள்' என்று கூறினார்கள்.

## "ஒரு வயதுடைய வெள்ளாட்டைக் குர்பானி கொடுப்பீராக! உமக்குப் பிறகு வேறெவருக்கும் அது செல்லாது' எனும் நபிமொழி.

ஹதீஸ் 5556. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்

அபூ புர்தா என்றழைக்கப்பட்டு வந்த என் தாய் மாமன் ஒருவர் (பெருநாள்) தொழுகைக்கு முன்பே குர்பானி கொடுத்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரிடம், உம்முடைய ஆடு இறைச்சி ஆடுதான். (குர்பானி ஆடன்று)' என்று கூறினார்கள். அபூ புர்தா(ரலி), இறைத்தூதர் அவர்களே! என்னிடம் வீட்டில் வளர்க்கப்பட்ட ஒரு வயதுடைய வெள்ளாடு ஒன்று உள்ளது. (அதை நான் குர்பானி கொடுக்கலாமா?)' என்று வினவினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அதை அறுத்து (குர்பானி) கொடுங்கள். (ஆனால்,) இது மற்றவருக்குப் பொருந்தாது' என்று சொல்லிவிட்டு, தொழுகைக்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுப்பவர், தமக்காகவே (அதை) அறுக்கிறார். தொழுகைக்குப் பிறகு (அதை) அறுப்பவரின் வழிபாடு முழுமையடைந்துவிட்டது. அவர் முஸ்லிம்களின் வழிமுறையைப் பின்பற்றிவிட்டார்' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் இன்னும் பலர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

அறிவிப்பாளர் ஷஅபீ (ரஹ்) கூறினார்:

"என்னிடம் ஒரு வயதுடைய பால்குடி மறவாத பெட்டை வெள்ளாட்டுக் குட்டி உள்ளது' என அபூ புர்தா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 5557. பராஉ(ரலி) கூறினார்

அபூ புர்தா(ரலி) (பெருநாள்) தொழுகைக்கு முன்பே (குர்பானி பிராணியை) அறுத்துவிட்டார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் அவரிடம்அதற்கு பதிலாக வேறொன்றை அறுப்பீராக!என்று கூறினார்கள். அதற்கு அபூ புர்தா(ரலி), என்னிடம் ஒரு வயதுடைய வெள்ளாடு ஒன்றைத் தவிர வேறொன்றுமில்லை (அதை நான் குர்பானி கொடுக்கலாமா?)' என்று வினவினார்கள்.

அறிவிப்பாளர் ஷு அபா(ரஹ்) கூறினார்:அது இரண்டு வயது பூர்த்தியான ஆட்டைவிடச் சிறந்தது' என்று அபூ புர்தா(ரலி) சொன்னதாக (எனக்கு அறிவிக்கப்பட்டது என்று) எண்ணுகிறேன். நபி(ஸல்) அவர்கள், இதையே அதற்கு பதிலாக அறுத்துக்கொள்ளுங்கள். உங்களுக்குப் பிறகு வேறெவருக்கும் அது செல்லாது' என்று கூறினார்கள்.

இது பற்றிய அனஸ்(ரலி) அவர்களின் அறிவிப்பில், என்னிடம் ஒரு வயதுடைய பெட்டை வெள்ளாட்டைத் தவிர வேறொன்றுமில்லை' என்று அபூ புர்தா(ரலி) கூறினார் என உள்ளது.

## குர்பானிப் பிராணிகளைத் தம் கையால் அறுப்பது.

ஹதீஸ் 5558. அனஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் இரண்டு கறுப்பு வெள்ளை செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்தார்கள். அவர்கள் தங்களின் பாதத்தை அவற்றின் பக்கவாட்டின் மீது வைத்துக்கொண்டு அல்லாஹ்வின்பெயர் கூறி, தக்பீர் (அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெரியவன் என்று) சொல்லி அவற்றைத் தம் கையால் அறுத்ததை பார்த்தேன்.

## பிறருடைய குர்பானிப் பிராணியை அறுப்பது.

இப்னு உமர்(ரலி) அவர்களுக்கு அவர்களின் ஒட்டகத்தை அறுப்பதற்கு ஒருவர் உதவினார். அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) தம் புதல்வியருக்கு அவர்கள் கரங்களாலேயே அறுக்கும்படி கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 5559. ஆயிஷா(ரலி) கூறினார்

(நபி(ஸல்) அவர்களுடன் நான் ஹஜ்ஜு க்குச் சென்றிருந்தபோது)சரிஃப் எனுமிடத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். நான் அப்போது அழுதுகொண்டிருந்தேன். அவர்கள்,உனக்கென்ன ஆயிற்று? உனக்கு மாதவிடாய் ஏற்பட்டுவிட்டதா? என்று கேட்டார்கள். நான்,ஆம் என்றேன். அவர்கள், இ(ந்த மாதவிடாயான)து, பெண்களுக்கு அல்லாஹ் எழுதிவிட்ட விதியாகும். ஹஜ் செய்பவர் நிறைவேற்றும் வழிபாடுகள் அனைத்தையும் நீயும் நிறைவேற்று. ஆனால், இறையில்லத்தை (புனித கஅபாவை)ச் சுற்றி வராதே' என்று கூறினார்கள். மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் துணைவியருக்காக மாடுகளை அறுத்துக் குர்பானி கொடுத்தார்கள்.

## (பெருநாள்) தொழுகைக்குப் பிறகு (குர்பானிப் பிராணிகளை) அறுப்பது.

ஹதீஸ் 5560. பராஉ(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (ஈதுல் அள்ஹா பெநாளில்) உரையாற்றியதை கேட்டேன். அவர்கள் (தம் உரையில்)நாம் இன்றைய தினம் செய்யும் முதல் வேலை (பெருநாள் தொழுகை) தொழுதுவிட்டுத் திரும்பிச் சென்று குர்பானிப் பிராணிகளை அறுப்பதாகவே இருக்கவேண்டும். இதை செய்கிறவர் நம்முடைய வழியைப் பின்பற்றியவராவார். (பெருநாள்) தொழுகைக்கு முன்பே (பிராணியை) அறுக்கிறவர் தம் குடும்பத்தாருக்காக முன்கூட்டியே தயார் செய்த (சாதாரண) இறைச்சியாகவே அது அமையும் அது (குர்பானி) வழிபாட்டில் எதிலும் சேராது' என்று கூறினார்கள்.

அப்போது அபூ புர்தா(ரலி),இறைத்தூதர் அவர்களே! நான் தொழுவதற்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுத்து விட்டேன். என்னிடம் இரண்டு வயது பூர்த்தியான ஓர் ஆட்டைவிடச் சிறந்த ஒரு வயது பூர்த்தியான (வெள்ளாட்டுக் குட்டி) ஒன்று உள்ளது. (அதை நான் அறுக்கலாமா?)' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்முதலில் அறுத்ததற்கு பதிலாக இதையே அறுத்து விடுவீராக! ஆனால், உங்களுக்குப் பிறகு வேறெவருக்கும்அது செல்லாது அல்லதுநிறைவேறாது என்று பதிலளித்தார்கள்.

## (பெருநாள்) தொழுகைக்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுத்துவிட்டவர் (தொழுகை முடிந்த பின்) மீண்டும் (வேறொன்றை) அறுக்கவேண்டும்.

ஹதீஸ் 5561. அனஸ்(ரலி) கூறினார்

(ஈதுல் அள்ஹா பெருநாளில்) நபி(ஸல்) அவர்கள்,(பெருநாள்) தொழுகைக்கு முன்பே குர்பானி கொடுத்துவிட்டவர் மறுபடியும் குர்பானி கொடுக்கட்டும்' என்று கூறினார்கள். அப்போது ஒருவர்,இது, இறைச்சி விரும்பி உண்ணப்படும் நாள்' என்று சொல்லிவிட்டு, தம் (வீட்டார் மற்றும்) அண்டை வீட்டாரின் தேவை பற்றி(யும் அதனாலேயே தாம் தொழுகைக்கு முன்பு அறுத்தது பற்றியும்) குறிப்பிட்டார். நபி(ஸல்) அவர்கள் அவர் சொன்ன காரணத்தை ஏற்றதைப் போல் இருந்தது. அந்த மனிதர்,என்னிடம் இரண்டு (இறைச்சி) ஆடுகளைவிடச் சிறந்த ஒரு வயது பூர்த்தியான வெள்ளாடு ஒன்று உள்ளது. (அதை இப்போது குர்பானி கொடுக்கலாமா?)' என்று கேட்க, நபி(ஸல்) அவர்களும் அவருககு அனுமதியளித்தார்கள்.

அந்த அனுமதி மற்றவர்களுக்கும் பொருந்துமா? அல்லது இல்லையா என்று எனக்குத் தெரியாது. -பிறகு நபி(ஸல்) அவர்கள் இரண்டு செம்மறியாட்டுக் கடாக்கள் பக்கம் சென்று

அவற்றை அறுத்தார்கள். பிறகு மக்கள் ஒரு சிறு ஆட்டு மந்தைக்குச் சென்று அவற்றை அறுத்தார்கள்.

ஹதீஸ் 5562. ஜுன்தப் இப்னு சுஃப்யான் அல்பஜலீ (ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் நஹ்ருடைய (துல்ஹஜ் 10 வது) நாளில் இருந்தேன். அப்போது அவர்கள், (பெருநாள்) தொழுவதற்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுத்துவிட்டவர் அதனிடத்தில் (அதற்கு பதிலாக) வேறொன்றை (தொழுகைக்கப் பின்) அறுக்கட்டும். அறுக்காமல் இருப்பவர் (தொழுகை முடிந்தவுடன்) அறுக்கட்டும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5563. பராஉ (ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு (ஈதுல் அள்ஹா பெரு)நாளில் தொழுதுவிட்டு, நம்முடைய தொழுகையைத் தொழுது (அதில்) நம்முடைய (தொழும் திசையான) கிப்லாவை முன்னோக்கியவர் எவரும் (தொழுகை முடித்துத்) திரும்பும் வரை (குர்பானிப் பிராணியை) அறுக்க வேண்டாம்' என்று கூறினார்கள். உடனே அபூ புர்தா(ரலி) எழுந்து, இறைத்தூதர் அவர்களே! நான் (தொழுகைக்க முன்பே அறுத்து) அதைச் செய்துவிட்டேனே? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், அது நீங்கள் அவசரப்பட்டு (அறுத்து)விட்ட பொருளாகும்' என்று கூறினார்கள். அதற்கு அவர்கள்என்னிடம் இரண்டு வயது பூர்த்தியான இரண்டு ஆடுகளைவிடச் சிறந்த ஒரு வயது பூர்த்தியான வெள்ளாட்டுக் குட்டி ஒன்று உள்ளது. நான் அதை அறுக்கலாமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், சரி (நீங்கள் அறுக்கலாம்). பிறகு உங்களைத் தவிர வேறெவருக்கும் அது செல்லாது' என்று கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஆமிர் ஷஅபீ (ரஹ்), அதுவே (அவர் தொழுகைக்கு முன்பும், தொழுகைக்குப் பின்பும் கொடுத்த) அவரின் இரண்டு குர்பானிகளில் சிறந்ததாகும்' எனக் கூறுகிறார்கள்.

## அறுக்கப்படும் பிராணியின் பக்கவாட்டில் கால் வைத்(து மிதி)த்துக் கொள்வது.

ஹதீஸ் 5564. அனஸ் (ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் கொம்பு உள்ள இரண்டு கறுப்பு வெள்ளை செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்துவந்தார்கள். அப்போது தம் காலை அவற்றின் பக்கவாட்டில் வைத்துக்கொண்டு தம் கரத்தால் அவற்றை அறுப்பார்கள்.

## பிராணியை அறுக்கும்போது தக்பீர் ('அல்லாஹ் அக்பர் - அலலாஹ் மிகப் பெரியவன் என்று) கூறுவது.

ஹதீஸ் 5565. அனஸ் (ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் கொம்பு உள்ள இரண்டு கறுப்பு வெள்ளை செம்மறியாட்டுக் கடாக்களைக் குர்பானி கொடுத்தார்கள். அவ்விரண்டையும் தம் கரத்தால் அறுத்தார்கள். (அப்போது) அல்லாஹ்வின் பெயர் ('பிஸ்மில்லாஹ்') கூறினார்கள். தக்பீரும் ('அல்லாஹு அக்பர்') கூறினார்கள். மேலும், தம் காலை அவற்றின் பக்கவாட்டில் வைத்(துக் கொண்டு அறுத்)தார்கள்.

## ஒருவர் தம் தியாகப் பிராணியை (ஹஜ்ஜில்) அறுப்பதற்காக அனுப்பி வைப்பதால் அவரின் மீது எந்தத் தடையும் விதிக்கப்படாது.

ஹதீஸ் 5566. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ (ரஹ்) கூறினார்

நான் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, இறைநம்பிக்கையாளர்களின் அன்னையே! ஒருவர் தம் தியாகப் பிராணியை கஅபாவிற்கு (வேறொருவர் மூலம்) அனுப்பிவிட்டு (தம்) ஊரில் உட்கார்ந்துகொள்கிறார். தம் அந்த ஒட்டகத்திற்கு (அது தியாகப் பிராணி என்பதைக் காட்டும் அடையாளமாக) கழுத்தில் மாலை கட்டித் தொங்கவிடப்பட வேண்டுமென்றும் சொல்லி அனுப்புகிறார். அந்த நாளிலிருந்து மக்கள் (ஹாஜிகள்) இஹ்ராமிலிருந்து விடுபடும் நாள் வரை தாமும் இஹ்ராம் கட்டியவராகவே நடந்து கொள்கிறார் (என்றால் அவருக்கான சட்டம் என்ன?)' என்று கேட்டேன்.

அப்போது ஆயிஷா (ரலி) (ஆச்சரியப்பட்டு) திரைக்குப் பின்னாலிருந்து கை தட்டுவதை கேட்டேன். (தொடர்ந்து) அவர்கள், நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் தியாகப் பிராணிகளுடைய கழுத்து மாலைகளைக் கோத்துவந்தேன். நபி (ஸல்) அவர்கள் தங்களின் (இந்தத்) தியாகப் பிராணிகளை (ஹஜ் பருவத்தில்) கஅபாவிற்கு அனுப்புவார்கள். எனினும், அவர்களின் குடும்பத்திலிருந்த மற்ற ஆண்களுக்கு அனுமதிக்கப்பட்டவற்றில் எதுவுமே மக்கள் (ஹஜ்ஜிலிருந்து) திரும்பும் வரை அவர்களுக்குத் தடை செய்யப்பட்டதாக இருக்கவில்லை' என்று கூறினார்கள்.

## குர்பானிப் பிராணிகளின் இறைச்சிகளில் உண்ணத் தக்கவையும், சேமிக்கத் தக்கவையும்.

ஹதீஸ் 5567. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) கூறினார்

நாங்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் தியாகப் பிராணிகளின் இறைச்சியை (குர்பானிக்கறியை) மதீனாவுக்குச் செல்லும்போது பயண உணவாக எடுத்துச் செல்வோம்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் (ரஹ்), (தம் அறிவிப்புகளில்தியாகப் பிராணிகளின் இறைச்சி என்பதைக் குறிக்க மேற்கண்ட ஹதீஸின் மூலத்தில் இடம்பெற்றுள்ளலுஹூ முல் அளாஹீ எனும் சொல்லுக்கு பதிலாக) லுஹூ முல் ஹத்யி எனும் சொல்லை ஒன்றுக்கும் மேற்பட்ட முறைகள் கையாண்டுள்ளார்கள்.

ஹதீஸ் 5568. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) கூறினார்

நான் (ஒரு பயணத்தில் இருந்ததால் அப்போது நான்) ஊரில் இருக்கவில்லை. பிறகு (பயணத்திலிருந்து திரும்பி) வந்தேன். (சாப்பிடும்போது) என் முன்னே இறைச்சி வைக்கப்பட்டது. அதை வைத்தவர்இது எங்கள் குர்பானிப் பிராணிகளின் இறைச்சி' என்று கூறினார். நான், இதை எடுத்து விடுங்கள். நான் இதை உண்ண மாட்டேன்' என்று சொன்னேன். பிறகு எழுந்து புறப்பட்டு என் சகோதரர் அபூ கத்தாதா (ரலி) அவர்களிடம் சென்றேன். அபூ கத்தாதா (ரலி), அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களின் தாய் வழிச் சகோதரராகவும் பத்ருப்போரில் பங்கெடுத்தவராகவும் இருந்தார்கள். நான் நடந்ததை அவர்களிடம் கூற, அவர்கள்நீங்கள் பயணம் சென்ற பின் மறு உத்தரவு பிறந்தது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5569. ஸலமா இப்னு அக்வஃ (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள், உங்களில் குர்பானிப் பிராணியை அறுக்கிறவர் (அறுத்ததிலிருந்து) மூன்று நாள்களுக்குப் பின் (அதிலிருந்து எதுவும் அவரின் வீட்டில் எஞ்சியிருக்கும் நிலையில்) காலைப் பொழுதை அடைய வேண்டாம்' என்று கூறினார்கள். அடுத்த ஆண்டு வந்தபோது, மக்கள்இறைத்தூதர் அவர்களே! சென்ற ஆண்டு செய்ததைப் போன்றே (இந்த ஆண்டும்) நாங்கள் செய்ய வேண்டுமா? என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள்நீங்களும் அதிலிருந்து உண்டு (மற்றவர்களுக்கும்) உண்ணக் கொடுங்கள். சேமித்து வைத்துக்கொள்ளுங்கள். ஏனென்றால், கடந்த ஆண்டில் மக்களுக்கு (பஞ்சத்தால்) சிரமம் ஏற்பட்டிருந்தது. எனவே, நீங்கள் அந்தச் சிரமத்தைப் போக்க (அவர்களுக்கு) உதவ வேண்டும் என்று விரும்பினேன்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5570. ஆயிஷா(ரலி) கூறினார்

நாங்கள் குர்பானி இறைச்சிக்கு உப்புத் தடவி அதை எடுத்துக்கொண்டு மதீனாவில் நபி(ஸல்) அவர்களிடம் செல்வோம். அவர்கள்மூன்று நாள்களுக்கு மேல் (குர்பானி இறைச்சியை) உண்ணாதீர்கள்' என்று கூறினார்கள். அவர்கள் இப்படிச் சொன்னது அதை உண்ணக் கூடாது எனக் கட்டாயப்படுத்துவதற்கல்ல மாறாக, அவர்கள் (அவ்வாண்டு பஞ்சத்தில் பீடிக்கப்பட்டிருந்த ஏழைகளுக்கு வசதியுள்ளவர்கள்), அதிலிருந்து உணவளிக்க வேண்டுமென்று விரும்பினார்கள். (அவர்களின் எண்ணத்தை) அல்லாஹ்வே மிக அறிந்தவன்.

ஹதீஸ் 5571. அபூ உபைத் ஸஅத் இப்னு உபைத்(ரஹ்) கூறினார்

நான் ஈதுல் அள்ஹா பெருநாள் தொழுகையில் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்களுடன் கலந்து கொண்டேன். அவர்கள் குத்பா- உரை நிகழ்த்தினார்கள். அப்போதுமக்களே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இந்த இரண்டு பெருநாள்களிலும் நோன்பு நோற்கக் கூடாது என உங்களுக்குத் தடை விதித்துள்ளார்கள். இவ்விரண்டில் ஒன்றுஉங்கள் நோன்பிலிருந்து நீங்கள் விடுபடும் நோன்புப் பெருநாள் ஆகும். மற்றொன்றோநீங்கள் குர்பானிப் பிராணிகளின் இறைச்சியை உண்ணும் (ஈதுல் அள்ஹா) பெருநாள் ஆகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5572. அபூ உபைத்(ரஹ்) (தொடர்ந்து) கூறினார்

பின்னர் நான் உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களுடன் ஒரு பெருநாள் தொழுகையில் கலந்து கொண்டேன். அன்று வெள்ளிக்கிழமையாக இருந்தது. அவர்கள் குத்பா - உரை நிகழ்த்தும் முன்பே தொழுதுவிட்டுப் பிறகு உரை (குத்பா) நிகழ்த்தினார்கள். அப்போது,மக்களே! இது எத்தகைய நாளென்றால், இதில் உங்களுக்கு (ஈதுல் அள்ஹா, வெள்ளிக்கிழமை ஆகிய) இரண்டு பெருநாள்கள் ஒன்றுசேர்ந்து (ம்டைத்து) உள்ளன. எனவே, புறநகர்ப் பகுதிகளைச் சேர்ந்தவர்களில் ஜு முஆவை (வெள்ளிக் கிழமைத் தொழுகையை) எதிர்பார்த்துக் காத்திருக்க விரும்புகிறவர் எதிர்பார்த்துக் காத்திருக்கட்டும். (அவர்களில்) தம் இல்லத்துக்குத் திரும்பிச் செல்ல வேண்டுமென்று விரும்புகிறவருக்கு (அவ்வாறே திரும்பிச் சென்றுவிட) நான் அனுமதியளித்துவிட்டேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5573. அபூ உபைத்(ரஹ்) (தொடர்ந்து) கூறினார்

பிறகு நான் அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்துகொண்டேன். அவர்கள் குத்பா-உரை நிகழ்த்தும் முன்பே தொழுதார்கள். பிறகு மக்களுக்கு உரை (குத்பா) நிகழ்த்தினார்கள். அப்போதுஇறைத்தூதர்(ஸல்) அவர்கள் மூன்று நாள்களுக்கு மேலாக உங்கள் குர்பானி இறைச்சிகளை நீங்கள் உண்பதற்குத் தடை விதித்துள்ளார்கள்' என்று கூறினார்கள்.

இதைப் போன்றே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5574. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்பானி இறைச்சிகளை மூன்று நாள்களுக்கு (மட்டும்) உண்ணுங்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(இந்த ஹதீஸின்படி செயல்படும் வகையில்) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) மினாவிலிருந்து புறப்படும்போது குர்பானிப் பிராணிகளின் இறைச்சி(யைத் தவிர்ப்பதற்)காக (ரொட்டியை) எண்ணெய் தொட்டு உண்டுவந்தார்கள்.

## அத்தியாயம் 74 குடிபானங்கள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

“நம்பிக்கை கொண்டோரே! மதுபானம், சூதாட்டம், பலிபீடங்கள், குறிபார்க்கும் அம்புகள் ஆகியன ஷைத்தானின் அருவருக்கத்தக்க செயல்களில் அடங்கும். எனவே, நீங்கள் இவற்றைத் தவிர்த்துக் கொள்ளுங்கள். அதனால் நீங்கள் வெற்றியடைவீர்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 05:90 வது) இறைவசனம்.

ஹதீஸ் 5575. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உலகில் மது அருந்திவிட்ட பிறகு (அதைக் கைவிட்டு) அதற்காகப் பாவமன்னிப்புக் கோராதவன் மறுமையில் (சொர்க்கத்தின்) மதுவை அருந்தும் பேற்றை இழந்துவிடுவான்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5576. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஜெரூசலத்திற்கு அழைத்துச் செல்லப்பட்ட (இஸ்ரா மற்றும் விண்ணுலகப் பயண) இரவில் அவர்களிடம் (ஒன்றில்) மதுவும் (மற்றொன்றில்) பாலும் இருந்த இரண்டு கிண்ணங்கள் கொண்டு வரப்பட்டன. அவர்கள் அவ்விரண்டையும் பார்த்துவிட்டுப் பால் கிண்ணத்தை எடுத்தார்கள். அப்போது (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள்இயற்கை மரபில் உங்களைச் செலுத்திய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். நீங்கள் மதுக் கிண்ணத்தை எடுத்திருந்தால் உங்கள் சமுதாயமே வழி தவறிப் போயிருக்கும்‘ என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5577. அனஸ்(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து ஒரு செய்தியை (ஹதீஸை)க் கேட்டுள்ளேன். அதை என்னைத் தவிர வேறு யாரும் உங்களுக்கு அறிவிக்கமாட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறியாமை வெளிப்படுவதும், கல்வி குறைந்து போவதும், விபசாரம் வெளிப்படையாக நடப்பதும், மது அருந்தப்படுவதும், ஐம்பது பெண்களுக்கு ஒரேயோர் ஆண் நிர்வாகியாக இருப்பான் எனும் அளவுக்கு ஆண்கள் குறைந்து பெண்கள் மிகுந்துவிடுவதும் மறுமைநாளின் அடையாளங்களில் அடங்கும்.

ஹதீஸ் 5578. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரம் புரிகிறவன் விபசாரம் புரியும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி அதைச் செய்யமாட்டான். (அது அருந்துகிறவன்) மது அருந்தும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி மது அருந்தமாட்டான். திருடன் திருடும்போது இறைநம்பிக்யாளனாக இருந்தபடி திருட மாட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்.

அப்துல் மலிக் இப்னு அபீ பக்ர்(ரஹ்) இந்த ஹதீஸை அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து (தம் தந்தை) அபூ பக்ர் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) தமக்கு அறிவித்து வந்ததாகக் கூறினார்கள். மேலும், அப்துல் மலிக்(ரஹ்)(என் தந்தை) அபூ பக்ர்(ரஹ்) இந்த (ஹதீஸில் இடம் பெற்றுள்ள (மூன்று) விஷயங்களுடன் (நான்காவதாக),(மக்களின்) மதிப்புமிக்க செல்வத்தை, மக்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக்கொண்டிருக்கக் கொள்ளைடியப்பவன் அதைக் கொள்ளையடிக்கும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிக்க

மாட்டான்‘ என்பதையும் (நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக) சேர்த்து அறிவித்தார்கள்‘ என்று கூறினார்கள்.

## திராட்சை முதலானவற்றிலிருந்து தயாரிக்கப்படும் மது.

ஹதீஸ் 5579. இப்னு உமர்(ரலி) கூறினார்

(திராட்சையினால் தயாரிக்கப்படும்) மது மதீனாவில் சிறிதும் இல்லாதிருந்த நிலையில் அது தடைசெய்யப்பட்டது.

இதை நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 5580. அனஸ்(ரலி) கூறினார்

மது எங்களுக்குத் தடை செய்யப்பட்டது. அது தடை செய்யப்பட்டபோது மதீனாவில் திராட்சையினால் தயாரிக்கப்படும் மது சிறிதளவே எங்களுக்குக் கிடைத்துவந்தது. எங்கள் மதுபானங்களில் பெரும்பலானவை நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்களாலும் பேரீச்சங் கனிகளாலும் ஆனவையாகும்.

ஹதீஸ் 5581. இப்னு உமர்(ரலி) கூறினார்

(என் தந்தை) உமர்(ரலி) சொற்பொழிவு மேடையின் மீது நின்று (இறைவனைப் போற்றிப் புகழ்ந்து பின்)ஐந்து வகைப் பொருட்களினால் மது தயாரிக்கப்பட்டுவந்த நிலையில் மதுவிலக்கு வந்தது. அவையாவன: திராட்சை, பேரீச்சம் பழம், தேன், கோதுமை, வாற்கோதுமை. ஆக, அறிவுக்குத் திரையிடுவதெல்லாம் மதுவேயாகும்‘ என்று கூறினார்கள்.

## நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங்காயிலிருந்தும் பேரீச்சங் கனியிலிருந்தும் மது தயாரிக்கப்பட்டுவந்த நிலையில் மது விலக்கு வந்தது.

ஹதீஸ் 5582. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

அபூ உபைதா(ரலி), அபூ தல்ஹா(ரலி) மற்றும் உபை இப்னு கஅப்(ரலி) ஆகியோருக்கு நிறம் மாறிய பேரீச்சங் காய்களாலும் பேரீச்சங் கனிகளாலும் தயாரித்த மதுவை நான் ஊற்றிக் கொடுத்துக்கொண்டிருந்தேன். அப்போது அவர்களிடம் ஒருவர் வந்து,மது தடை செய்யப்பட்டுவிட்டது‘ என்று கூறினார். உடனே அபூ தல்ஹா(ரலி),எழுந்திரு, அனஸே! இவற்றைக் கொட்டிவிடு‘ என்று கூறினார்கள். நான் அவற்றைக் கொட்டிவிட்டேன்.

ஹதீஸ் 5583. அனஸ்(ரலி) கூறினார்

நான் (எங்கள் உறவினர்) குடும்பத்தாரிடையே நின்று என் தந்தையின் சகோதரர்களுக்கு நிறம் மாறிய பேரீச்சங் காய்களால் ஆன மதுவை ஊற்றின் கொண்டிருந்தன். நான் அவர்களில் (வயதில்) சிறியவனாயிருந்தேன். அப்போதுமது தடை செய்யப்பட்டுவிட்டது‘ என்று சொல்லப்பட்டது. உடனே (என் உறவினர்கள்)அதைக் கவிழ்த்து (கொட்டி) விடு‘ என்று கூறினார்கள். அவ்வாறே நான் கவிழ்த்து(க் கொட்டி)விட்டேன்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் இப்னு தர்கான் அல்பஸரீ(ரஹ்) கூறினார்:

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்அவர்களின் மது எத்தயைது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,பேரீச்ச செங்காயிலிருந்தும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காயிலிருந்தும் தயாரிக்கப்பட்டதாகும்‘ என்று கூறினார்கள். அப்போது அபூ பக்ர் இப்னு அனஸ்(ரஹ்),(அதாவது) அதுவே அவர்களின் மதுபானமாக இருந்தது‘ என்று கூறினார்கள். அனஸ்(ரலி) அதை மறுக்கவில்லை.

என் தோழர்களில் ஒருவர் கூறுகிறார்: அனஸ்(ரலி)அதுதான் அவர்களின் அன்றைய மதுபானமாக இருந்தது‘ என்று சொல்ல கேட்டிருக்கிறேன்.

ஹதீஸ் 5584. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

அன்றைய தினம் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காயிலிருந்தும், பேரீச்சம் பழத்திலிருந்தும் தயாரிக்கப்பட்டது தான் மதுபானமாகும். என்றிருந்த நிலையில் மது தடை செய்யப்பட்டது.

## தேனிலிருந்து தயாரிக்கப்படும் மதுவே பித்உ எனப்படும்.

மஅன் இப்னு ஈசா(ரஹ்) கூறினார்:

நான் மாலிக் இப்னு அனஸ்(ரஹ்) அவர்களிடம், உலர்ந்த திராட்சையினால் தயாரிக்கப்படும் மது பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள்,அது போதையூட்டவில்லையென்றால் அதனால் குற்றமில்லை' என்று பதிலளித்தார்கள்.

அப்துல் அஸீஸ் இப்னு முஹம்மத் அத்தராவர்தீ(ரஹ்) கூறினார்:

நாங்கள் (இந்த வகை மது குறித்து மதீனா அறிஞர்களிடம்) கேட்டோம். அதற்கு அவர்கள்,அது போதை தராது என்றிருந்தால் அதனால் குற்றமில்லை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5585. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்பித்உ (தேனிலிருந்து தயாரிக்கப்படும் மது) பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,போதை தரும் பானம் ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டதாகும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5586. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்பித்உ குறித்துக் கேட்கப்பட்டது. அது தேனால் தயாரிக்கப்படும் மதுவாகும். யமன் வாசிகள் அதை அருந்திவந்தார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,போதை தரும் (மது)பானம் ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டதேயாகும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5587. இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,(மது ஊறவைக்கப்படும் பாத்திரங்களான) சுரைக்காய் குடுவையிலும், தார் பூசப்பட்ட பீப்பாயிலும் (பேரீச்சம் பழச்சாற்றை அல்லது திராட்சைப்) பழச்சாற்றை ஊற்றி வைக்காதீர்கள்' என்று சொன்னதாக அனஸ்(ரலி) எனக்கு அறிவித்தார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) இவ்விரண்டுடன் மண் சாடியையும் பேரீச்சம் மரத்தின் அடிப் பாகத்தைக் குடைந்து தயாரித்த மரப் பானையையும் சேர்த்து அறிவித்துவந்தார்கள்.

## 'மது என்பது அறிவுக்குத் திரையிடும் பானம் என்பது பற்றி வந்துள்ளவை.

ஹதீஸ் 5588. இப்னு உமர்(ரலி) கூறினார்

(என் தந்தை) உமர்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடையில் (மிம்பர்) இருந்தபடி உரை நிகழ்த்தினார்கள். அப்போது கூறினார்கள்.

மது ஐந்து வகைப் பொருட்களால் தயாரிக்கப்பட்டுவந்த நிலையில் மதுவிலக்கு வந்தது. திராட்சை, பேரீச்சம் பழம், கோதுமை, வாற்கோதுமை மற்றும் தேன் ஆகியனவே அந்தப் பொருள்கள் ஆகும். மது என்பது அறிவுக்குத் தரையிடக் கூடியதாகும். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மூன்று விஷயங்கள் குறித்துத் தெளிவானதொரு முடிவை நமக்கு எடுத்துரைத்துவிட்டு நம்மைப் பிரிந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும் என நான் விரும்பியதுண்டு:

1. ஒருவரின் சொத்தில் (அவருக்குப் பெற்றோரோ, மக்களோ இல்லாமல் சகோதரன் இருக்கும்போது) அவரின் பாட்டனாருக்கு எவ்வளவு பங்கு கிடைக்கும்?

2. கலாலா என்றால் என்ன?

3. வட்டியின் சில வகைகள் குறித்த சட்டம்

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஹய்யான் அத்தைமீ (ரஹ்) கூறினார்:

நான் ஆமிர் இப்னு ஷஅபீ (ரஹ்) அவர்களிடம், அபூ அம்ரே! சிந்து சமவெளியில் அரிசியினால் தயாரிக்கப்படும் ஒரு வகை (மது)பானம் உள்ளதே? (அதன் சட்டம் என்ன?)' என்று கேட்டேன். அவர்கள், அதுநபி (ஸல்) அவர்களின் காலத்தில் அல்லது உமர் (ரலி) அவர்களின் காலத்தில் இருந்ததில்லை' என்று பதிலளித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில் (ஐந்து வகைப் பொருட்களில் முதலாவதாக)திராட்சை என்பதற்கு பதிலாகஉலர்ந்த திராட்சை என்று வந்துள்ளது.

ஹதீஸ் 5589. உமர் (ரலி) கூறினார்

மது ஐந்து பொருட்களிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

அவை: 1. உலர்ந்த திராட்சை 2. பேரீச்சம் பழம் 3. கோதுமை 4. வாற்கோதுமை, 5. தேன்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## மதுவை அனுமதிக்கப்பட்டதாகக் கருதுகிறவன் குறித்தும், அதற்கு மாற்றுப் பெயர் சூட்டுகிறவன் குறித்தும் வந்துள்ளவை.

ஹதீஸ் 5590. அப்துர் ரஹ்மான் இப்னு ஃகன்கி அல்அஷ்அரீ (ரஹ்) கூறினார்

'அபூ ஆமிர் (ரலி) அல்லதுஅபூ மாலிக் அல்அஷ்அரீ (ரலி) என்னிடம் கூறினார்கள் - அல்லாஹ்வின் மீதாணையாக அவர்கள் என்னிடம் பொய் சொல்லவில்லை. (அவர்கள் கூறினார்)

நான் நபி (ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டேன்:

என் சமுதாயத்தாரில் சில கூட்டத்தார் தோன்றுவார்கள். அவர்கள் விபசாரம் (புரிவது), (ஆண்கள்) பட்டுத் துணி (அணிவது), மது (அருந்துவது), இசைக் கருவிகள் (இசைப்பது) ஆகியவற்றை அனுமதிக்கப்பட்டவையாகக் கருதுவார்கள். இன்னும் சில கூட்டத்தார் மலை உச்சியில் தங்குவார்கள். அவர்களின் ஆடுகளை இடையன் (காலையில் மேய்த்துவிட்டு) மாலையில் அவர்களிடம் ஓட்டிச் செல்வான். அவர்களிடம் தன் தேவைக்காக ஏழை (உதவி கேட்டுச்) செல்வான். அப்போது அவர்கள், நாளை எங்களிடம் வா' என்று சொல்வார்கள். (ஆனால்) அல்லாஹ் இரவோடு இரவாக அவர்களின் மீது மலையைக் கவிழ்த்து அவர்க(ளில் அதிகமானவர்க)ளை அழித்துவிடுவான். (எஞ்சிய) மற்றவர்களைக் குரங்குகளாகவும் பன்றிகளாகவும் மறுமை நாள் வரை உருமாற்றிவிடுவான்.

## கல், செம்பு, மரம் உள்ளிட்ட பாத்திரங்களில் பழச்சாறுகளை ஊறவைப்பது.

ஹதீஸ் 5591. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) கூறினார்

அபூ உஸைத் அஸ்ஸாஇதீ (ரலி) வந்து இறைத்தூதர் (ஸல்) அவர்களைத் தம் திருமணத்திற்கு அழைத்தார்கள். அப்போது மணப்பெண்ணாயிருந்த அவர்களின் துணைவியாரே நபி (ஸல்) அவர்களுக்குப் பணிவிடை செய்பவராக இருந்தார்.

அவர் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு என்ன புகட்டினார் தெரியுமா?

அவர் கல் (அல்லது மரப்) பாத்திரத்தில் நபி (ஸல்) அவர்களுக்காகப் பேரீச்சம் பழங்களை இரவிலேயே ஊறவைத்திருந்தார். (மணவிருந்து உண்ட பின் நபியவர்களுக்கு அந்தப் பழச்சாற்றை அவர் புகட்டினார்.)

## பாத்திரங்கள் மற்றும் தோல் பைகளில் (பானங்களை ஊற்றிவைக்கத்) தடைவிதித்த பின் நபி (ஸல்) அவர்கள் அதற்கு அனுமதியளித்தது.

ஹதீஸ் 5592. ஜாபிர் (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சில வகைப் பாத்திரங்களுக்கு (அவற்றில் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமென)த் தடை விதித்தார்கள். அப்போது (மதீனாவாசிகளான) அன்சாரிகள்அவை எங்களுக்குத் தேவைப்படுகின்றனவே!என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள், அப்படியென்றால் தடை இல்லை. (அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்)' என்று சொல்லிவிட்டார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அவர்களின் ஓர் அறிவிப்பில், நபி (ஸல்) அவர்கள் (சில வகைப்) பாத்திரங்களைப் பயன்படுத்த வேண்டாமென்று தடை விதித்த போது. !என்று வந்துள்ளது.

ஹதீஸ் 5593. அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் தோலால் ஆன நீர்ப்பாத்திரங்க(ளைத் தவிர மற்றவைக)ளுக்குத் தடை விதித்தபோது, மக்கள் அனைவருமே தோல் பாத்திரங்களைப் பெற்றிருப்பதில்லையே' என்று சொல்லப்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள், தார் பூசப்படாத சுட்ட களிமண் பாத்திரத்தைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதியளித்தார்கள்.

ஹதீஸ் 5594. அலீ (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் சுரைக்காய் குடுவையையும், தார் பூசப்பட்ட பாத்திரத்தையும் பயன்படுத்த வேண்டாமெனத் தடை செய்தார்கள்.

...இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர்வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5595. இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) கூறினார்

நான் அஸ்வத் இப்னு யஸீத் (ரஹ்) அவர்களிடம்எந்தப் பாத்திரத்தில் பானங்களை ஊற்றிவைப்பது விரும்பத்தகாதது என இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் நீங்கள் வினவியதுண்டா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம் (வினவினேன்). இறை நம்பிக்கையாளர்களின் அன்னையே! எந்தப் பாத்திரத்தில் பானங்களை ஊற்றிவைப்பதை நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நபி (ஸல்) அவர்கள் தம் வீட்டாரான எங்களை சுரைக்காய் குடுவையிலும் தார் பூசப்பட்ட பாத்திரத்திலும் பானங்களை ஊற்றிவைக்க வேண்டாமெனத் தடை செய்தார்கள்' என்று பதிலளித்தார்கள்.

(அறிவிப்பாளர் இப்ராஹீம் (ரஹ்) கூறினார்:) சுட்ட களிமண் பாத்திரத்தையும் மண்சாடியையும் ஆயிஷா (ரலி) அவர்ள் குறிப்பிடவில்லையா? என கேட்டேன். அதற்கு அஸ்வத் (ரஹ்) நான் கேட்டதைத்தான் உங்களுக்கு அறிவிக்கிறேன். நான் கேட்காத ஒன்றை உங்களுக்கு அறிவிக்க வேண்டுமா? என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5596. சுலைமான் இப்னு அபீ சுலைமான் அஷ்ஷைபானீ (ரஹ்) கூறினார்

"நபி (ஸல்) அவர்கள் பச்சை நிற சுட்ட களிமண் பாத்திரத்தைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை விதித்தார்கள்' என்று அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) சொல்ல கேட்டேன். அப்போதுவெண்ணிற களிமண் பாத்திரத்தில் நாங்கள் அருந்தலாமா? என்று வினவினேன். அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) இல்லை. (அதுவும் கூடாது)' என்று கூறினார்கள். 20

## போதையூட்டக் கூடியதாக மாறாத வரை பேரீச்சம் பழ ஊறலை அருந்தலாம்.

ஹதீஸ் 5597. ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) கூறினார்

அபூ உஸைத் அஸ்ஸாஇதீ (ரலி) நபி (ஸல்) அவர்களைத் தம் திருமணத்திற்கு அழைத்தார்கள். அன்று மணப்பெண்ணாக இருந்த அபூ உஸைதின் துணைவியாரே அவர்களுக்குப் பணிவிடை புரிபவராக இருந்தார். அவர், நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்காக என்ன

ஊறவைத்திருந்தேன் என்று உங்களுக்குத் தெரியுமா? நான் அவர்களுக்காகப் பேரீச்சம் பழங்களை கல் (அல்லது மரப்) பாத்திரத்தில் இரவிலேயே ஊறவைத்தேன். (நபியவர்கள் உணவு உண்டபின் அந்த ஊறலை அவர்களுக்குப் புகட்டினேன்)' என்று கூறினார்.

## 'பாதக் எனும் பானமும், போதை தரும் அனைத்துப் பானங்களுக்கும் தடை விதிப்போரின் கூற்றும்.

மூன்றில் (இரண்டு பங்கு குறைந்து) ஒரு பங்கு இருக்கும் அளவுக்குச் சுண்டக் காய்ச்சப்பட்ட திராட்சைப் பழச்சாற்றை ('திலா') அருந்தலாம் என உமர் இப்னு கத்தாப், அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ், முஆத் இப்னு ஜபல்(ரலி) ஆகியோர் கருதினர்.

பராஉ இப்னு ஆஸிப், அபூ ஜு ஹைஃபா(ரலி) ஆகியோர் சரி பாதியளவுக்குச் சுண்டக்காய்ச்சப்பட்ட திரட்சைப் பழச்சாற்றை அருந்தியுள்ளனர். காய்ச்சப்படாத (பச்சைப்) பழச்சாற்றை அருந்தலாம் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

உமர்(ரலி) உபைதுல்லாஹ்விடமிருந்து ஒரு பானத்தின் நெடி வரக் கண்டேன். அது குறித்து விசாரிப்பேன். அது போதை தருவதாக இருந்தால் அவருக்குக் கசையடி கொடுப்பேன்.

ஹதீஸ் 5598. அபுல் ஜு வைரியா(ரஹ்) கூறினார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,பாதக் எனும் பானம் குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள்,(இவர்கள் மதுவுக்கு)பாதக் எனும் புதுப பெயரைச் சூட்டுவதற்கு முன்பே (மது அனைத்தும் தடை செய்யப்பட்டதாகும் என) முஹம்மத்(ஸல்) அவர்கள் தெரிவித்துவிட்டார்கள். எனவே, போதையூட்டும் எதுவாயினும் அது தடை செய்யப்பட்டதுதான்' என்று பதிலளித்தார்கள்.

நான்,(பாதக் எனும் கெட்டியாகக் காய்ச்சப்பட்ட திராட்சைப் பழச்சாறு) அனுமதிக்கப்பட்ட நல்ல பானமாயிற்றே!என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அனுமதிக்கப்பட்ட நல்ல பொருளுக்கு அப்பால் தடை செய்யப்பட்ட கெட்ட பொருளைத் தவிர வேறெதுவும் இல்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5599 ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் இனிப்புப் பண்டத்தையும் தேனையும் விரும்பிவந்தார்கள்.

## நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்களையும் (கனிந்த) பேரீச்ச பழங்களையும் கலந்(து ஊற வைத்)தால் போதை தரும் என்றிருப்பின் அவ்வாறு கலக்கலாகாது என்றும், இரண்டு குழம்புகளை ஒரே குழம்பாகக் கலக்கலாகாது என்றும் கருதுவோரின் கூற்று.

ஹதீஸ் 5600. அனஸ்(ரலி) கூறினார்

நான் அபூ தல்ஹா, அபூ துஜானா, சுஹைல் இப்னு பய்ளா(ரலி) ஆகியோருக்கு நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்கள் மற்றும் (கனிந்த) பேரீச்சம் பழங்கள் ஆகியவற்றின் கலப்பு ஊறலை ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தேன். அப்போது மது தடை செய்யப்பட்டது. உடனே நான் அதை எறிந்துவிட்டேன். நான் அவர்களுக்கு மது ஊற்றிக் கொடுப்பவனாகவும் அவர்களில் வயதில் சிறியவனாகவும் இருந்தேன். நாங்கள் அந்தக் கலவையை அன்று மதுவாகவே கருதினோம்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 5601. ஜாபிர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் உலர்ந்த திராட்சையையும் பேரீச்சம் பழத்தையும் கலந்து ஊறவைக்க வேண்டாமென்றும், நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காய்களையும் பேரீச்சக் செங்காய்களையும் கலந்து ஊற வைக்க வேண்டாமென்றும் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5602. அபூ கத்தாதா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச பழத்தையும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காயையும் ஒன்று சேர்(த்து ஊற வை)ப்பதையும், பேரீச்சம் பழத்தையும் உலர்ந்த திரட்சையையும் ஒன்று சேர்(த்து ஊற வை)ப்பதையும் தடை செய்தார்கள். (வேண்டுமானால்) அவை ஒவ்வொன்றையும் தனித் தனியாக ஊற வைக்கலாம் (என அனுமதியளித்தார்கள்).

## பால் அருந்துவது

வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக உங்களுக்கு (ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற) கால்நடைகளிலும் (தக்க) படிப்பினை இருக்கிறது் அவற்றின் வயிற்றிலுள்ள சாணத்திற்கும் இரத்தத்திற்கும் இடையிலிருந்து கலப்பற்ற பாலை உங்களுக்கு நாம் புகட்டுகிறோம். (அது) அருந்துவோருக்கு இனிமையானதாகும். (திருக்குர்ஆன் 16:66)

ஹதீஸ் 5603. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பைத்துல் மக்திஸிற்கு) அழைத்துச் செல்லப்பட்ட இரவில் அவர்களிடம் பால் கிண்ணமும், மதுக் கிண்ணமும் கொண்டுவரப்பட்டன.

ஹதீஸ் 5604. உம்முல் ஃபள்ல்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அரஃபாவில் தங்கியிருந்தபோது)அரஃபா (துல்ஹஜ் 9ஆம்) நாளில் நோன்பு நோற்றுள்ளார்களா (இல்லையா) என மக்கள் சந்தேகப்பட்டார்கள். எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பால் நிரம்பிய பாத்திரம் பாத்திரம் ஒன்றைக் கொடுத்தனுப்பினேன். (அதை) அவர்கள் அருந்தினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹுமைதீ(ரஹ்) கூறினார்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) சில வேளைகளில்இறைத்தூதர்(ஸல்) அவர்கள்அரஃபா நாளில் நோன்பு நோற்றிருக்கிறார்களா (இல்லையா) என்று மக்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. எனவே, உம்முல் ஃபள்ல்(ரலி) நபி(ஸல்) அவர்களுக்கு (ஒரு கிண்ணத்தில் பாலை) அனுப்பிவைத்தார்கள்' என்று ("உம்முல் பள்ல்(ரலி) அவர்களிடமிருந்து இதைத் தாம் கேட்டதாகச் சொல்லாமல்) நேரடியாக அறிவித்ததுண்டு. அவர்களிடம்,இது (அறிவிப்பாளர் தொடரில் முறிவு ஏற்படாத) மவ்ஸூலா(ன ஹதீஸா)? அல்லது (அறிவிப்பாளர்தொடரில் இடைமுறிவு ஏற்பட்டுள்ள) முர்ஸலா(ன ஹதீஸா)? என்று கேட்கப்பட்டால்,இதை உம்முல் ஃபள்ல்(ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கிறேன். (எனவே, இதுமவ்ஸூல் தான்)' என்று பதிலளிப்பார்கள்.

ஹதீஸ் 5605. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

அபூ ஹுமைத் அப்துர்ரஹ்மான் அஸ்ஸாஇதீ(ரலி)அந்நகீஉ (எனும் கால்நடை பராமரிப்பு மையத்தில்) இருந்து ஒரு கோப்பைப் பால் கொண்டுவந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்இதன் மீது ஒரு குச்சியைக் குறுக்காக வைத்தாவது இதை நீங்கள் மூடிக் கொண்டுவந்திருக்கக் கூடாதா? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5606. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

அன்சாரிகளில் ஒருவரான அபூ ஹு மைத்(ரலி)அந்நகீஉ எனும் இடத்திலிருந்து பால் நிரம்பிய பாத்திரம் ஒன்றைக் கொண்டுவந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,இதன் மீது ஒரு குச்சியை குறுக்காக வைத்தாவது இதை நீங்கள் மூடிக்கொண்டு வந்திருக்கக் கூடாதா? என்று அவரிடம் கேட்டார்கள்.

இந்த ஹதீஸ் ஜாபிர்(ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5607. பராஉ (ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம்முடன் அபூ பக்ர்(ரலி) அவர்களை அழைத்துக்கொண்டு மக்காவிலிருந்து (மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து) வந்தார்கள். (அப்போது நடந்த ஒரு நிகழ்ச்சியை) அபூ பக்ர்(ரலி) கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாகத்துடன் இருந்தபோது நாங்கள் ஓர் ஆட்டிடையனைக் கடந்து சென்றோம். அப்போது நான் (ஆட்டிலிருந்து) ஒரு கிண்ணத்தில் சிறிதுப் பால் கறந்(து நபியவர்களுக்குக் கொடுத்)தேன். நான் திருப்தியடையும் வரை அதை நபி(ஸல்) அவர்கள் பருகினார்கள். (எங்களைப் பிடிக்க) சுராக்கா இப்னு ஜு உஷு ம் ஒரு குதிரையில் எங்களை நோக்கி வந்தார். எனவே, நபி(ஸல்) அவர்கள் அவருக்கெதிராகப் பிரார்த்தனை புரிந்தார்கள். அப்போது சுராக்கா தனக்கெதிராகப் பிரார்த்திக்க வேண்டாமென்றும், தான் திரும்பச் சென்றுவிடுவதாகவும் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டுக்கொண்டார். நபி(ஸல்) அவர்கள் அவ்வாறே செய்தார்கள்.

ஹதீஸ் 5608. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பாலுக்காக) இரவல் தரப்பட்ட அதிகம் பால் தருகிற ஒட்டகமும், (பாலுக்காக) இரவல் தரப்பட்ட அதிகம் பால் தருகிற ஆடும் தான் தர்மங்களிலேயே சிறந்ததாகும். (அதிலிருந்து) காலையில் ஒரு கிண்ணத்திலும், மாலையிலும் ஒரு கிண்ணத்தில் நீ பால் கறந்து கொள்ளலாம்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5609. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பால் அருந்திவிட்டு வாய் கொப்பளித்தார்கள். அப்போது,இதில் (பாலில்) கொழுப்பு இருக்கிறது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5610. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ('மிஅராஜ் எனும் விண்ணுலகப் பயணத்தின்போது வான் எல்லையிலுள்ள இலந்தை மரமான)சித்ரத்துல் முன்தஹா எனும் இடத்திற்குக் கொண்டு செல்லப்பட்டேன். அங்கு நான்கு நதிகள் (ஓடிக் கொண்டு) இருந்தன. இரண்டு நதிகள் வெளியேயும், இரண்டு நதிகள் உள்ளேயும் (ஓடிக் கொண்டு) இருந்தன. வெளியே இருக்கும் இரண்டு நதிகள் நீல் மற்றும் யூப்ரடீஸ் நதிகளாகும். உள்ளே இருக்கும் இரண்டு நதிகள் சொர்க்கத்திலுள்ள (ஸல்ஸபீல், கவ்ஸர் ஆகிய) இரண்டு நதிகளாகும். அப்போது என்னிடம் மூன்று கிண்ணங்கள் கொண்டு வரப்பட்டன. பால் கிண்ணம், தேன் கிண்ணம், மதுக் கிண்ணம் ஆகியன தாம் அவை. நான் பால் இருந்த கிண்ணத்தை எடுத்து (அதை) அருந்தினேன். அப்போது என்னிடம்,நீங்களும் உங்கள் சமுதாயத்தாரும் இயற்கை மரபை அடைந்துள்ளீர்கள்' என்று சொல்லப்பட்டது.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான கத்தாதா(ரஹ்) அவர்களிடமிருந்து ஹிஷாம், ஸயீத், ஹம்மாம்(ரஹ்) ஆகியோர் (சொர்க்கத்து) நதிகள் குறித்து மேற்கண்டபடி அறிவித்தார்கள். (ஆனால்,) மூன்று கிண்ணங்கள் பற்றி அவர்கள் (தம் அறிவிப்பில்) குறிப்பிடவில்லை.

## சுவை நீரைத் தேடுவது

ஹதீஸ் 5611. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

மதீனா அன்சாரிகளிலேயே அபூ தல்ஹா ஸைத் இப்னு ஸஹ்ல்(ரலி) ஏராளமான பேரீச்ச மரங்களுடைய (பெரும்) செல்வராக இருந்தார். அவரின் செல்வங்களில்பைருஹா எனும் தோட்டமே அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது. அது (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு எதிரில் இருந்தது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அத்தோட்டத்திற்குச் சென்று அங்குள்ள நல்ல (சுவை) நீரை அருந்துவது வழக்கம். நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து தானம் செய்யாதவரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 03:92 வது) வசனம் அருளப்பெற்றதும் அபூ தல்ஹா(ரலி) எழுந்து, இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்நீங்கள் விரும்புகிறவற்றிலிருந்து தானம் செய்யாத வரை ஒருபோதும் நீங்கள் (நிறைவான) பலனை அடையமாட்டீர்கள் எனக் கூறுகிறான். என் செல்வங்களில் எனக்கு மிகவும் விருப்பமானதுபைருஹா (எனும் இந்தத் தோட்டமே) ஆகும். (இனி) அது அல்லாஹ்வுக்காக (நான் வழங்கும்) தர்மமாகும். அதற்கான நன்மையையும், அது (மறுமையில் எனக்குரிய) சேமிப்பாக இருப்பதையும் நான் அல்லாஹ்விடம் எதிர் பார்க்கிறேன். எனவே, இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் தங்களுக்குக் காட்டியுள்ள வழியில் அதைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்‘ என்று கூறினார்கள்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நல்லது. அது(மறுமையில் இலாபம் தரும் செல்வம்தானே!அல்லது(அழிந்து) போய்விடும் செல்வம்தானே! என்று கூறினார்கள் - அறிவிப்பாளர் அப்துல்லாஹ் இப்னு மஸ்லமா (இவ்வாறு) சந்தேகத்துடன் அறிவித்தார்.

(தொடர்ந்து நபி(ஸல்) அவர்கள், தர்மம் செய்வது குறித்து) நீங்கள் கூறியதை நான் செவியேற்றேன். அதை உங்கள் நெருங்கிய உறவினர்களிடையே (தானமாக) வழங்குவதையே நான் (பொறுத்தமாகக்) கருதுகிறேன்‘ என்று கூறினார்கள்.

அதற்கு அபூ தல்ஹா(ரலி), (அவ்வாறே) செய்கிறேன், இறைத்தூதர் அவர்களே! எனக் கூறிவிட்டுத் தம் நெருங்கிய உறவினர்களுக்கும், தம் தந்தையின் சகோதரர் மக்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார்கள்.

இஸ்மாயீல் இப்னு அபீ உவைஸ்(ரஹ்) அவர்களும் யஹ்யா இப்னு யஹ்யா(ரஹ்) அவர்களும்(அழிந்து) போய்விடும் செல்வம் தானே! என்றே அறிவித்தார்கள்.

## பாலில் தண்ணீர் கலந்து அருந்துவது

ஹதீஸ் 5612. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கள் வீட்டுக் வந்திருந்தபோது அவர்கள் பால் அருந்தியதை பார்த்திருக்கிறேன். அப்போது நான் ஓர் ஆட்டிலிருந்து பால் கறந்து இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காகக் கிணற்றிலிருந்து (நீர் எடுத்துக்) கலந்தேன். அவர்கள் (பால்) கிண்ணத்தை வாங்கி அருந்தினார்கள். அவர்களின் இடப் பக்கத்தில் அபூ பக்ர்(ரலி) அவர்களும் வலப்பக்கத்தில் கிராமவாசி ஒருவரும் அமர்திருந்தனர். (தாம் அருந்திய) பாலின் மிச்சத்தை அந்தக் கிராமவாசிக்குக் கொடுத்துவிட்டு, வலப்பக்கத்தில் இருப்பவருக்கும், அடுத்து (அவருக்கு) வலப் பக்கத்தில் இருப்பவருக்கும் (கொடுங்கள்)‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5613. ஜாபிர்பின் அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம் தோழர் ஒருவர் (அபூ பக்ர்) உடன் ஓர் அன்சாரியிடம் சென்றார்கள். நபி(ஸல்) அவர்கள் அந்த அன்சாரியிடம், உங்களிடம் இன்று இரவு தோல் பையில் (ஊற்றி) வைக்கப்பட்ட தண்ணீர் இருந்தால் (அதை எங்களுக்குப் புகட்டுங்கள்). இல்லையென்றால் நாங்கள் (இந்தத் தொட்டியில்) வாய் வைத்துக் குடித்துக் கொள்வோம்‘ என்று கூறினார்கள்.

அப்போது அந்த அன்சாரி தம் தோட்டத்திற்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார். அவர்இறைத்தூதர் அவர்களே! என்னிடம் இரவிலேயே (தோல் பையில் ஊற்றி) வைத்த தண்ணீர் உள்ளது. பந்தலுக்கு வாருங்கள்' என்று கூறி இருவரையும் அழைத்துச் சென்றார்.

அங்கு கிண்ணமொன்றில் தண்ணீர் ஊற்றிப் பிறகு அதன் மீது தம்விட்டு ஆட்டிலிருந்து (பால்) கறந்து ஊற்றினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அதை) அருந்தினார்கள். பிறகு அவர்களுடன் வந்த அந்த நண்பரும் (அபூ பக்ர்) அருந்தினார்.

## இனிப்புச் சாறு, தேன் ஆகியவற்றை அருந்துவது.

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்:

(கடுமையான தாகம் போன்ற) நெருக்கடி நிலையில் கூட மனிதனின் சிறுநீரை அருந்துவது அனுமதிக்கப்பட்டதன்று. ஏனெனில், அது அசுத்தமாகும்.

மேன்மைமிக்க அல்லாஹ் கூறினான்:

உங்களுக்குத் தூய்மையான (நல்ல) பொருள்கள் (மட்டுமே) அனுமதிக்கப்பட்டுள்ளன. (திருக்குர்ஆன் 05:04)

இப்னு மஸ்வூத்(ரலி) மது பற்றிக் குறிப்பிடுகையில்,அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துள்ள பொருட்களில் உங்களின் நலத்தை அவன் அமைக்கவில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5614. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் இனிப்புப் பொருட்களையும் தேனையும் விரும்பிவந்தார்கள்.

## நின்றுகொண்டு நீர் அருந்துவது

ஹதீஸ் 5615. நஸ்ஸால் இப்னு சப்ரா(ரஹ்) கூறினார்

அலீ(ரலி) (கூஃபா நகர் பள்ளிவாசலின்) விசாலமான முற்றத்தின் வாசலில் இருந்தபோது அவர்களிடம் தண்ணீர் கொண்டுவரப்பட்டது. (அதை) அவர்கள் நின்று கொண்டே அருந்தினார்கள்.

பிறகுமக்களில் சிலர் நின்றுகொண்டு அருந்துவதை வெறுக்கிறார்கள். ஆனால், (இப்போது) நான் செய்ததை நீங்கள் பார்த்தைப் போன்றே நபி(ஸல்) அவர்கள் செய்ததை பார்த்தேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5616. நஸ்ஸால் இப்னு சப்ரா(ரஹ்) கூறினார்

(ஒரு முறை) அலீ(ரலி) தம் (ஆட்சியின் போது) லுஹ்ர் தொழுகையைத் தொழுதுவிட்டு கூஃபா நகர(ப் பள்ளிவாசல்) முற்றத்தில் மக்களின் தேவைகளைக் கவனிப்பதற்காக அமர்ந்தார்கள். அதற்குள் அஸ்ர் தொழுகை வந்துவிட்டது. பிறகு தண்ணீர் கொண்டுவரப்பட்டபோது அவர்கள் (அதை) அருந்திவிட்டுத் தம் முகத்தையும் தம் இரண்டு கைகளையும் கழுவினார்கள். - அறிவிப்பாளர் ஆதம் இப்னு அபீ இல்யாஸ்(ரஹ்), தலை மற்றும் கால்களையும் குறிப்பிட்டார்கள். பிறகு எழுந்த அதன் மீதத்தை நின்றுகொண்டு பருகினார்கள். பிறகு,மக்கள் சிலர் நின்றுகொண்டு (நீர்) அருந்துவதை வெறுக்கிறார்கள். நபி(ஸல்) அவர்களோ நான் செய்ததைப் போன்று செய்தார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5617. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் நின்றுகொண்டுஸம்ஸம் கிணற்றிலிருந்து (நீர்) பருகினார்கள்.

## ஒட்டகத்தின் மீது இருந்துகொண்டு (நீர்) பருகுவது.

ஹதீஸ் 5618. உம்முல் ஃபள்ல் பின்த் அல்ஹாரிஸ்(ரலி) கூறினார்

(அர:ஃபா தினமான துல்ஹஜ் 9ஆம் நாளில்) நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பால் கிண்ணம் ஒன்றை அனுப்பினேன். அவர்கள் அர:ஃபா நாளின் அந்த மாலை நேரத்தில் (அர:ஃபா பெருவெளியில்) நின்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களின் கரத்தால் (அக்கிண்ணத்தை (எடுத்து அதைப் பருகினார்கள்.

மாலிக்(ரஹ்) அபுந்நள்ர் சாலிம்(ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் தம் அறிவிப்பில்ஒட்டகத்தின் மீது இருந்தபடி (பருகினார்கள்)' என்று அதிகப்படியாக குறிப்பிட்டுள்ளார்கள்.

## (பானம் பரிமாறப்படும்போது அதை) அருந்துவதில் வலப் பக்கத்தில் இருப்பவர், அடுத்து (அவருக்கு) வலப் பக்கத்தில் இருப்பவர் (என்ற வரிசையில்) முன்னுரிமை பெறுவர்.

ஹதீஸ் 5619. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தண்ணீர் கலந்த பால் கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்களுக்கு வலப்பக்கம் கிராமவாசி ஒருவரும் இடப்பக்கம் அபூ பக்ர்(ரலி) அவர்களும் இருந்தனர். நபி(ஸல்) அவர்கள் (அந்தப் பாலை) பரும்விட்டுப் பிறகு (மிச்சத்தை) அந்தக் கிராமவாசிக்குக் கொடுத்துவிட்டார்கள். மேலும்,வலப் பக்கம் இருப்பவருக்கும், அடுத்து (அவருக்கு) வலப்பக்கத்தில் இருப்பவருக்கும் (கொடுங்கள்)' என்று கூறினார்கள்.

## ஒருவர் (தமக்கு இடப்பக்கமுள்ள வயதில்) மூத்தவருக்குப் பருகக் கொடுக்கத் தம் வலப் பக்கம் உள்ள (வயதில் சிறிய)வரிடம் அனுமதி கேட்க வேண்டுமா?

ஹதீஸ் 5620. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் பானமொன்று கொண்டுவரப்பட்டது. அவர்கள் அதை அருந்தினார்கள். அப்போது அவர்களின் வலப்பக்கம் சிறுவர் ஒருவரும், இடப்பக்கம் முதியவர்களும் அமர்ந்திருந்தனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் அந்தச் சிறுவரிடம்,(இந்தப் பானத்தை முதியவர்களான) இவர்களுக்கு அளிக்க எனக்கு நீ அனுமதியளிப்பாயா? என்று கேட்டார்கள். அதற்கு அச்சிறுவர்,அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர் அவர்களே! தங்களிடமிருந்து எனக்குக் கிடைக்கும் இந்தப் பேற்றை (வேறு) எவருக்காகவும் நான்விட்டுத் தரமாட்டேன்' என்று பதில் கூறினார். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதை அச்சிறுவரின் கையில் வைத்துவிட்டார்கள்.

## தொட்டியில் வாய் வைத்துப் பருகுவது

ஹதீஸ் 5621. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம் தோழர் ஒருவர் (அபூ பக்ர்) உடன் அன்சாரி ஒருவரிடம் (அவரின் தோட்டத்திற்குச்) சென்றார்கள். நபி(ஸல்) அவர்களும் அவர்கள் தம் தோழரும் (அந்த அன்சாரிக்கு)சலாம் (முகமன்) கூறினர். அந்த அன்சாரி பதில் சலாம் சொல்லிவிட்டு,இறைத்தூதர் அவர்களே! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். இது வெப்பமான வேளை!என்றார். அப்போது அவர் தம் தோட்டத்தில் நீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார். நபி(ஸல்) அவர்கள்,இரவில் தோல் பையில் (ஊற்றி) வைத்த தண்ணீர் உம்மிடம் இருந்தால் (எங்களுக்குத் தாருங்கள்). இல்லாவிட்டால் நாங்கள் (இரைத்து ஊற்றப்பட்டுள்ள இந்த நீரைத் தொட்டியில்) வாய்வைத்துக் குடித்துக்கொள்கிறோம்' என்று கூறினார்கள்.

(தம்) தோட்டத்திற்கு நீர் பாய்ச்சிக் கொண்டிருந்த அந்த அன்சாரி,இறைத்தூதர் அவர்களேஸ இரவில் தோல் பையில் (ஊற்றி) வைக்கப்பட்ட தண்ணீர் என்னிடம் உள்ளது' என்று கூறியபடி பந்தலை நோக்கி நடந்தார். பின்னர் அவர் கிண்ணமொன்றில் தண்ணீர் ஊற்றிப் பிறகு அதன்

மீது தம் வீட்டு ஆட்டிலிருந்து பால் கறந்து (அதில் கலந்து)விட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் (அதைப்) பருகினார்கள்.

பிறகு மறுபடியும் அவர் கொண்டு வந்தார். (அதை) நபி(ஸல்) அவர்களுடன் வந்திருந்த மனிதர் பருகினார்.

## சிறியோர், பெரியோருக்குப் பணிவிடை செய்வது.

ஹதீஸ் 5622. அனஸ்(ரலி) கூறினார்

நான் (எங்கள் உறவினர்) குடும்பத்தாரிடையே நின்று என் தந்தையின் சகோதரர்களுக்கு நிறம் மாறிய பேரீச்சங்க காய்களால் ஆன மதுவை ஊற்றிக் கொண்டிருந்தேன். நான் அவர்களில் (வயதில்) சிறியவனாக இருந்தேன். அப்போதுமது தடைசெய்யப்பட்டுவிட்டது' என்று சொல்லப்பட்டது. உடனே (என் உறவினர்கள்)' அதைக் கவிழ்த்து (கொட்டி)விடு' என்று கூறினார்கள். அவ்வாறே நாங்கள் கவிழ்த்து(க கொட்டி) விட்டோம்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் இப்னு தர்கான் அல்பஸரீ(ரஹ்) கூறினார்:

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்,அவர்களின் மது எத்தகையது? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,பேரீச்சச் செங்காயிலிருந்தும் நன்கு கனியாத நிறம் மாறிய பேரீச்சங் காயிலிருந்தும் தயாரிக்கப்பட்டதாகும்' என்று கூறினார்கள். அப்போது அபூ பக்ர் இப்னு அனஸ்(ரஹ்),(அதாவது) அதுவே அவர்களின் மதுபானமாக இருந்தது' என்று கூறினார்கள். அனஸ்(ரலி) அதை மறுக்கவில்லை.

என் தோழர்களில் ஒருவர் கூறினார்: அனஸ்(ரலி),அதுதான் அவர்களின் அன்றைய மதுபானமாக இருந்தது' என்று சொல்ல கேட்டிருக்கிறேன்.

## பாத்திரத்தை மூடிவைத்தல்

ஹதீஸ் 5623. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'இரவின் இருள் படரத் தொடங்கிவிட்டால் அல்லதுஅந்திப் பொழுதாம்விட்டால் உங்கள் குழந்தைகளை (வெளியே திரியவிடாமல்) தடுத்துவிடுங்கள். ஏனெனில், ஷைத்தான்கள் அப்போதுதான் (பூமியெங்கும்) பரவுகின்றன. இரவு வேளையில் சிறிது நேரம் கழிந்துவிட்டால் அவர்களை (வெளியே செல்ல)விட்டுவிடுங்கள். மேலும், (இரவு நேரத்தில்) கதவுகளைத் தாழிட்டுவிடுங்கள். (அப்போது) அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். ஏனெனில், ஷைத்தான் மூடப்பட்ட எந்தக் கதவையும் திறப்பதில்லை. உங்கள் தண்ணீர் பையி(ன் வாயி)னைச் சுருக்கிட்டு மூடிவிடுங்கள். (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். உங்களுடைய பாத்திரங்களை மூடிவையுங்கள். (அப்போதும்) அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். (அவற்றை முழுவதும் மூட இயலாவிட்டாலும்) அவற்றின் மீது எதையாவது குறுக்காக வைத்தேனும் மூடிவிடுங்கள். உங்கள் விளக்குகளை அணைத்துவிடுங்கள்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5624. ஜாபிர்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நீங்கள் உறங்(கப் போ)கும்போது விளக்குகளை அணைத்துவிடுங்கள். கதவுகளைத் தாழிட்டுவிடுங்கள். தண்ணீர் பைகளைச் சுருக்கிட்டு மூடிவிடுங்கள். உணவையும் பானத்தையும் மூடிவையுங்கள்' என்று கூறினார்கள். அதன் மீது ஒரு குச்சியை குறுக்காக வைத்தாவது (மூடிவையுங்கள்) என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக எண்ணுகிறேன்.

## தண்ணீர் தோல் பைகளை வெளிப்பக்கமாகச் சுருட்டிவிட்டு அதில் வாய் வைத்து அருந்துவது.

ஹதீஸ் 5625. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் தோல் பைகளைஇக்தினாஸ் செய்ய வேண்டாமெனத் தடை விதித்தார்கள். அதாவது அவற்றின் வாய்ப் பகுதியை வெளிப்பக்கமாகச் சுருட்டிவிட்டு அதிலிருந்து நீர் பருகுவதைத் தடை செய்தார்கள்.

ஹதீஸ் 5626. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தண்ணீர் தோல் பைகளைஇக்தினாஸ் செய்ய வேண்டாமெனத் தடை விதிப்பதை கேட்டுள்ளேன்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்) கூறினார்.

“இக்தினாஸ் என்றால், தோல் பைகளின் வாய்ப் பகுதியி(னை வெளிப்பக்கமாகச் சுருட்டிவிட்டு அதி)லிருந்து பருகுவதாகும்‘ என மஅமர் (ரஹ்) அவர்களோ, மற்றவர்களோ அறிவித்தார்கள்.

## தண்ணீர் தோல் பையின் வாயிலிருந்து குடிப்பது.

ஹதீஸ் 5627. அய்யூப் (ரஹ்) கூறினார்

இக்ரிமா (ரஹ்) எங்களிடம்அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்த சிறுசிறு விஷயங்களை உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா? (என்று கேட்டுவிட்டு)இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தோலால் ஆன தண்ணீர்ப் பையின் வாயிலிருந்து தண்ணீர் குடிக்க வேண்டாம் என்றும், ஒருவர் தம் அண்டைவீட்டார் தம் வீட்டுச் சுவரில் (உத்திரம் முதலிய) மரக் கட்டையைப் பதிப்பதைத் தடுக்க வேண்டாம் என்றும் தடை விதித்தார்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5628. அபூ ஹு ரைரா (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் தண்ணீர் தோல் பையின் வாய்ப் பகுதியிலிருந்து (தண்ணீர் அருந்த வேண்டாமெனத் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5629. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் தண்ணீர் தோல் பையின் வாயிலிருந்து (தண்ணீர்) குடிக்க வேண்டாமெனத் தடை விதித்தார்கள்.

## (பருகும்) பாத்திரத்தில் மூச்சு விடலாகாது.

ஹதீஸ் 5630. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் (ஏதேனும்) பருகும்போது பாத்திரத்தில் மூச்சு விட வேண்டாம். நீங்கள் சிறுநீர் கழிக்கும்போது உங்கள் பிறவி உறுப்பை வலக்கையால் தொடவேண்டாம். நீங்கள் சுத்தம் செய்யும்போது வலக் கையால் சுத்தம் செய்ய வேண்டாம்.

என அபூ கத்தாதா (ரலி) அறிவித்தார்.

## இரண்டு அல்லது மூன்று முறை மூச்சுவிட்டுப் பருகுவது.

ஹதீஸ் 5631. ஸு மாமா இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) கூறினார்

(என் பாட்டனார்) அனஸ் (ரலி) பாத்திரத்தில் (பருகும்போது) இரண்டு அல்லது மூன்று முறை மூச்சுவிட்டு(ப் பருகி) வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் மூன்று முறை மூச்சுவிட்டு(ப் பரும்) வந்ததாகக் கூறினார்கள்.

## தங்கப் பாத்திரத்தில் பருகுதல்

ஹதீஸ் 5632. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா (ரஹ்) கூறினார்

ஹு தைஃபா இப்னு யமான்(ரலி) (இராக்கில் உள்ள)அல்மதாயின் (தைஃபூன்) நகரத்தில் இருந்தார்கள். அப்போது பருகுவதற்குத் தண்ணீர் கேட்டார்கள். உடனே (மஜூ லியான) ஊர்த் தலைவர் வெள்ளிப் பாத்திரம் (ஒன்றில் தண்ணீர்) கொண்டு வந்தார். ஹு தைஃபா(ரலி) அதை அவரின் மீது வீசியெறிந்துவிட்டு, (அங்கிருந்தவர்களிடம்)நான் இவரை(ப் பலமுறை தடுத்தும் இவர் (வெள்ளிப் பாத்திரத்தைத்) தவிர்த்துக் கொள்ளாததால் தான் நான் இதை அவரின் மீது வீசியெறிந்தேன். நபி(ஸல்) அவர்கள் சாதாரணப் பட்டையோ அலங்காரப் பட்டையோ அணியக் கூடாதென்றும் தங்கம் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களில் பருக வேண்டாமென்றும் தடை விதித்தார்கள். மேலும், அவர்கள்,அவை இம்மையிலும் (இறைமறுப்பாளர்களான) அவர்களுக்கும், மறுமையில் (இறை நம்பிக்கையாளர்களான) உங்களுக்கும் உரியனவாகும்' என்று கூறினார்கள் எனத் தெரிவித்தார்கள்.

## வெள்ளிப் பாத்திரங்கள்

ஹதீஸ் 5633. இப்னு அபீ லைலா(ரஹ்) கூறினார்

நாங்கள் ஹு தைஃபா(ரலி) அவர்களுடன் புறப்பட்டோம். அவர்கள்,தங்கம் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களில் பருகாதீர்கள். (ஆண்கள்) சாதாரணப் பட்டையும் அலங்காரப் பட்டையும் அணியாதீர்கள். ஏனெனில், அவை இம்மையில் (இறை மறுப்பாளர்களான) அவர்களுக்கம், மறுமையில் (இறைநம்பிக்யாளர்களான) உங்களுக்கும் உரியனவாகும். 52 என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 5634. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வெள்ளி (அல்லது தங்க)ப் பாத்திரத்தில் அருந்துகிறவன் தன்னுடைய வயிற்றில் மிடறுமிடறாக நரக நெருப்பையே விழுங்குகிறான்.

இதை நபி(ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5635. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏழு விஷயங்களைக் கடைப்பிடிக்கும்படி) எங்களுக்குக் கட்டளையிட்டு ஏழு விஷயங்களை எங்களுக்குத் தடை செய்தார்கள். நோயாளிடம் நலம் விசாரிக்கும்படியும், ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்லும் படியும், தும்மியவ(ர் அல்ஹம்துலில்லாஹ் -எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே என்று கூறுகையில் அவ)ருக்கு (யர்ஹமுகல்லாஹ் அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக என்று) பதில் சொல்லும்படியும், விருந்து அழைப்பை ஏற்றுக்கொள்ளும்படியும், சலாம் எனும் முகமனைப் பரப்பும்படியும், அநீதியிழைக்கப்பட்டவருக்கு உதவும்படியும், சத்தியம் செய்தவர் (அதை) நிறைவேற்ற உதவும்படியும் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

மேலும், (ஆண்கள்) தங்க மோதிரங்களை அணிய வேண்டாமென்றும், (யாரும்) வெள்ளிப் பாத்திரத்தில் நீர் அருந்த வேண்டாமென்றும், மென்பட்டுத் திண்டு (மீஸரா), பட்டு கலந்த (எம்ப்திய) பஞ்சாடை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமென்றும், சாதாரணப் பட்டு, அலங்காரப் பட்டு, தடித்தப்பட்டு ஆகியவற்றை அணிய வேண்டாமென்றும் எங்களுக்குத் தடை விதித்தார்கள்.

## கிண்ணங்களில் அருந்துவது

ஹதீஸ் 5636. உம்முல் ஃபள்ல்(ரலி) கூறியாவது:

(ஹஜ்ஜின்போது) நபி(ஸல்) அவர்கள்அரஃபா (துல்ஹஜ்9ஆம்) நாளில் நோன்பு நோற்றிருந்தார்களா என மக்கள் சந்தேகப்பட்டனர். எனவே, அவர்களிடம் பால் கிண்ணம் ஒன்று அனுப்பிவைக்கப்பட்டது. அதை நபி(ஸல்) அவர்கள் பருகினார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் கிண்ணத்திலும் அவர்களின் பாத்திரங்களிலும் அருந்துவது.

அபூ புர்தா ஆமிர்(ரஹ்) கூறினார்

என்னிடம் அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி)நபி(ஸல்) அவர்கள் பருகிய கிண்ணத்தில் உங்களுக்கு நான் பருகத் தரட்டுமா' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5637. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களிடம் ஓர் அரபுப் பெண்ணைப் பற்றிக் கூறப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணை (மணம் புரிந்து கொள்ள) அழைத்து வரும்படி அபூ உஸைத் அஸ்ஸாஇதீ(ரலி) அவர்களுக்கு உத்தரவிட, அவர் அப்பெண்ணை அழைத்து வர ஆளனுப்பினார். அவ்வாறே அந்தப் பெண் வந்துபனு சாஇதா குலத்தாரின் கோட்டை ஒன்றில் தங்கினார். நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு அப்பெண்மணியிடம் வந்து, அவர் (தங்கியிருந்த) இடத்தில் நுழைய அங்கே அந்தப் பெண் தலையைக் கவிழ்த்தபடி (அமர்ந்து) இருந்தார். நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம் (தம்மை மணந்துகொள்ள சம்மதம் கேட்டுப்) பேசியபோது அவள்,உங்களிடமிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று சொன்னாள். நபி(ஸல்) அவர்கள்என்னிடமிருந்து உனக்குப் பாதுகாப்பு அளித்துவிட்டேன்' என்று கூறினார்கள். அப்போது மக்கள் (அந்தப் பெண்ணிடம்),இவர்கள் யார் என்று உனக்குத் தெரியுமா? என்று கேட்க, அவள்தெரியாது' என்று பதிலளித்தாள். மக்கள்,இவர்கள் தாம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உன்னைப் பெண் பேசுவதற்காக வந்தார்கள்' என்று கூறினார்கள். அந்தப் பெண்அவர்களை மணந்து கொள்ளும் நற்பேற்றை நான் இழந்து துர்பாக்கியவாதியாகி விட்டேனே' என்று (வருத்தத்துடன்) கூறினாள்.

நபி(ஸல்) அவர்களும் அவர்களின் தோழர்களும் முன்னே சென்றுபனு சாஇதா குலத்தாரின் சமுதாயக் கூடத்தில் அமர்ந்தார்கள். பிறகுஎங்களுக்குப் பருக (ஏதேனும்) கொடுங்கள். சஹ்லே!என்று கூறினார்கள். எனவே, நான் அவர்களுக்காக இந்தக் கிண்ணத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்று அதில் அவர்களுக்குப் புகட்டினேன்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஹாஸிம்(ரஹ்) கூறினார்:

ஸஹ்ல்(ரலி) அந்தக் கிண்ணத்தை எங்களுக்காக வெளியே எடுக்க அதில் நாங்கள் பருகினோம். பிறகு உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அதைத் தமக்கு அன்பளிப்பாகத் தரும்படி கேட்க, ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அதை அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்கிவிட்டார்கள்.

ஹதீஸ் 5638. ஆஸிம் அல்அஹ்வல்(ரஹ்) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களின் கிண்ணம் ஒன்றை அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் கண்டேன். அது பிளந்து விட்டிருந்தது. அதை அவர்கள் வெள்ளியால் ஒட்டவைத்தார்கள். அது ஒரு வகை சவுக்கு மரத்தால் செய்யப்பட்ட அகலமான உயர்ரகக் கிண்ணமாகும். அனஸ்(ரலி),நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இந்தக் கிண்ணத்தில் இத்தனை இத்தனை முறைகளைவிட அதிகமாகப் பருகக் கொடுத்துள்ளேன்' என்று கூறினார்கள்.

முஹம்மத் இப்னு சீரின்(ரஹ்) கூறினார்.

அந்தக் கிண்ணத்தில் இரும்பு வளையம் ஒன்றிருந்தது. அனஸ்(ரலி) அதனிடத்தில் தங்க வளையம் அல்லது வெள்ளி வளையம் ஒன்றை வைக்க விரும்பினார்கள். அப்போது அபூ தல்ஹா(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்த எதையும் நீங்கள் மாற்றாதீர்கள்' என்று (அனஸ்(ரலி) அவர்களிடம்) கூற, அனஸ்(ரலி) அதை (மாற்றாமல்)விட்டுவிட்டார்கள்.

## வளம் (பரக்கத்) மிக்கத் தண்ணீரும் அதை அருந்துவதும்.

ஹதீஸ் 5639. ஜாபிர்(ரலி) கூறினார்

நான் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தபோது அஸ்ர் தொழுகை நேரம் வந்துவிட்டது. அப்போது மிச்சமிருந்த சிறிதுத் தண்ணீரைத் தவிர வேறு தண்ணீர் எதுவும் எங்களிடம் இருக்கவில்லை. அது ஒரு பாத்திரத்தில் ஊற்றப்பட்டு நபி(ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அதில் தம் கையை நுழைத்துத் தம் விரல்களை விரித்தார்கள். பிறகு அவர்கள்,அங்கசுத்தி (உளூ) செய்பவர்களே! தண்ணீரிடம் வாருங்கள். இந்த வளம் (பரக்கத்) அல்லாஹ்விடமிருந்தே கிடைத்ததாகும்' என அழைத்தார்கள். அவர்களின் விரல்களுக்கிடையே இருந்து தண்ணீர் பீறிட்டுப் பாய்வதை கண்டேன் மக்கள் (அதில்) அங்க சத்தி செய்து அதை அருந்தவும் செய்தார்கள். நான் அதை வயிறு நிரம்ப அருந்துவதில் குறை வைக்கவில்லை. ஏனெனில், அது வளம் (பரக்கத்) மிக்கது என நான் அறிந்திருந்தேன்.

அறிவிப்பாளர் சாலிம்(ரஹ்) கூறினார்:

நான் ஜாபிர்(ரலி) அவர்களிடம்,நீங்கள் அன்றைய தினம் எத்தனை பேர் இருந்தீர்கள்? என்று கேட்க,நாங்கள் ஆயிரத்து நானாறு பேர் இருந்தோம்' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. அவற்றில் ஒன்றில் ஜாபிர்(ரலி),நாங்கள் ஆயிரத்து ஐநூறு பேர் இருந்தோம்' என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது

# அத்தியாயம் 75 நோயாளிகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## நோய் (பாவங்களுக்கு) ஒரு பரிகாரம் என்பது குறித்து வந்துள்ளவை.

அல்லாஹ் கூறினான்:

ஒரு தீமையைப் புரிகிறவர் அதற்குரிய தண்டனை வழங்கப்பெறுவார். (திருக்குர்ஆன் 04:123)2

ஹதீஸ் 5640 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உள்பட அவருக்கு நேரிடும் துன்பம் எதுவாயினும் அதற்கு பதிலாக அல்லாஹ் அவரின் பாவங்களை மன்னிக்காமல் இருப்பதில்லை.

இதை நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5641 ஹதீஸ் 5642 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிமைத் தைக்கும் முள் உள்பட அவருக்கு நேரிடும் துன்பம், நோய், துக்கம், கவலை, தொல்லை, மனவேதனை ஆகிய எதுவாயினும் அதற்கு பதிலாக அவரின் பாவங்களிலிருந்து சிலவற்றை அல்லாஹ் மன்னிக்காமல் இருப்பதில்லை.

இதை அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5643. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளரின் நிலை, இளம் தளிர்ப் பயிருக்கு ஒப்பானாதாகும். அதைக் காற்று ஒரு முறை சாய்த்து, மறுமுறை நிமிர்ந்து நிற்கச் செய்யும். நயவஞ்சகனின் நிலை தேவதாரு மரத்திற்கு ஒப்பானதாகும். அது ஒரேயடியாக வேரோடு சாயும் வரை (தலை சாயாமல்) நிமிர்ந்து நிற்கும்.

இதை கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார். இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5644. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளரின் நிலையானது, இளம் பயிர் போன்றதாகும். காற்றடிக்கும்போது அதைக் காற்று (தன் திசையில்) சாய்த்துவிடும். காற்று நின்றுவிட்டால், அது நேராக நிற்கும். சோதனையின்போது (இறை நம்பிக்கையாளரின் நிலையும் அவ்வாறே). தீயவன், உறுதியாக நிமிர்ந்து நிற்கும் தேவதொரு மரத்தைப் போன்றவன். அல்லாஹ், தான் நாடும்போது அதை (ஒரேடியாக) உடைத்து (சாய்த்து) விடுகிறான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5645. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யாருக்கு அல்லாஹ் நன்மையை நாடுகிறானோ அவரை (சத்திய) சோதனைக்கு உள்ளாக்குகிறான். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கடுமையான நோய்

ஹதீஸ் 5646 ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களை விடக் கடுமையாக நோய்வாய்ப்பட்ட வேறெவரையும் நான் கண்டதில்லை.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5647. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டுக் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்றேன். தாங்கள் கடும் நோயால் சிரமப்படுகிறீர்களே (இறைத்தூதர் அவர்களே!), தங்களுக்கு இதனால் இரண்டு (மடங்கு) நன்மைகள் கிடைக்கும் என்பதாலா? என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள், ஆம் எந்தவொரு முஸ்லிமுக்கு எந்தத் துன்பம் நேர்ந்தாலும் அதற்கு பதிலாக, மரத்தின் இலைகள் உதிர்வதைப் போன்று அவரின் பாவங்களை அல்லாஹ் உதிரச் செய்யாமல் இருப்பதில்லை' என்று கூறினார்கள்.

## மக்களிலேயே கடுமையான (சத்திய) சோதனைக்குள்ளானோர் இறைத்தூதர்கள் ஆவர். அடுத்து (அவர்களைப் போன்ற) சிறந்தவர்கள். பிறகு (அவர்களைப் போன்ற) சிறந்தவர்கள்.

ஹதீஸ் 5648. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது அவர்களிடம் நான் சென்றேன். இறைத்தூதர் அவர்களே! தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக்கொண்டிருக்கிறீர்களே! என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், ஆம் உங்களில் இரண்டு மனிதர்கள் காய்ச்சலால் அடைகிற துன்பத்தை (ஒரே மனிதனாகிய) நான் அடைகிறேன்' என்று கூறினார்கள்.

நான், (இந்தத் துன்பத்தின் காரணமாகத்) தங்களுக்கு இரண்டு (மடங்கு) நற்பலன்கள் கிடைக்கும் என்பதாக இதற்குக் காரணம்? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், ஆம் அது அப்படித்தான். ஒரு முஸ்லிமைத்தைக்கும் ஒரு முள்ளாயினும், அதற்கு மேலான துன்பம் எதுவாயினும் அதற்கு பதிலாக, மரம் தன் இலைகளை உதிர்த்துவிடுவதைப் போன்று அவரின் பாவங்களை அல்லாஹ் (உதிரச் செய்து) மன்னிக்காமல் விடுவதில்லை' என்று கூறினார்கள்.

## நோயாளியை(ச் சந்தித்து) உடல் நலம் விசாரிப்பது அவசியமாகும்.

ஹதீஸ் 5649. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பசித்தவருக்கு உணவளியுங்கள் நோயாளியை(ச் சந்தித்து) உடல் நலம் விசாரியுங்கள் (போர்க்) கைதியை (எதிரியிடமிருந்து விடுவியுங்கள்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5650. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களுக்கு ஏழு விஷயங்களைக் (கடை பிடிக்கும்படி) கட்டளையிட்டு ஏழு விஷயங்களைத் தடை செய்தார்கள்: (ஆண்கள்) தங்கமோதிரம், சாதாரணப்பட்டு, அலங்காரப் பட்டு தடித்தப்பட்டு ஆகியவற்றை அணிய வேண்டாமென்றும், பட்டு கலந்த (எம்ப்திய) பஞ்சாடை, மென்பட்டுத் திண்டு (மீஸரா) ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமென்றும் எங்களுக்குத் தடை விதித்தார்கள். ஜனாஸாக்களைப் பின்தொடர்ந்து செல்லும் படியும் நோயாளியை நலம் விசாரிக்கும் படியும் சலாமைப் பரப்பும்படியும் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

## மயக்கமுற்றவரை நலம் விசாரிப்பது.

ஹதீஸ் 5651. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

நான் கடுமையாக நோய் வாய்ப்பட்டிருந்தேன். என்னை உடல் நலம் விசாரிக்க நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் நடந்தே என்னிடம் வந்தார்கள். அப்போது நான் மயக்கம் அடைந்திருக்கக் கண்டார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் அங்கசுத்தி (உளூ) செய்துவிட்டு அங்கசுத்தி செய்த தண்ணீரை என் மீது ஊற்றினார்கள். உடனே நான் மயக்கம் தெளிந்(து கண் விழித்)தேன். அங்கே (என் முன்னே) நபி(ஸல்) அவர்கள் இருந்தார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! என் செல்வத்தை நான் என்ன செய்ய வேண்டும்? என் செல்வத்தில் விஷயத்தில் என்ன முடிவு செய்ய வேண்டும்? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் எனக்கு பதிலேதும் கூறவில்லை. இறுதியில் வாரிசுரிமைச் சட்டம் தொடர்பான இறைவசனம் அருளப்பட்டது.

## வலிப்பு நோயால் பாதிக்கப்பட்டவருக்குரிய சிறப்பு.

ஹதீஸ் 5652. அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்

இப்னு அப்பாஸ்(ரலி) என்னிடம்,சொர்க்கவாசியான ஒரு பெண்மணியை உங்களுக்குக் காட்டட்டுமா? என்று கேட்டார்கள். நான்,ஆம் (காட்டுங்கள்)‘ என்று சொன்னேன். அவர்கள், இந்தக் கறுப்பு நிறப் பெண்மணிதாம் அவர். இவர் (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் வந்து,நான் வலிப்பு நோயால் (அடிக்கடிப்) பாதிக்கப்படுகிறேன். அப்போது என் (உடலிலிருந்து ஆடை விலகி) உடல் திறந்து கொள்கிறது. எனவே, எனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்,நீ நினைத்தால் பொறுமையாக இருக்கலாம். (இதற்கு பதிலாக) உனக்கு சொர்க்கம் கிடைக்கும். நீ விரும்பினால் உனக்குக் குணமளிக்கும்படி அல்லாஹ்விடம் நான் பிரார்த்திக்கிறேன்‘ என்று கூறினார்கள். இந்தப் பெண்மணி,நான் பொறுமையாகவே இருந்துவிடுகிறேன். ஆனால், (வலிப்பு வரும்போது ஆடை விலகி) என் உடல் திறந்துகொள்கிறது. அப்படித் திறந்து கொள்ளாமல் இருக்க அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘ என்று கூறினார். அவ்வாறே நபி(ஸல்) அவர்கள் இப்பெண்ணுக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.

...அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) கூறினார்

நான் உம்மு ஸு ஃபரைப் பார்த்தேன். அவர் தாம் கஅபாவின் திரை மீது (சாய்ந்த படி அமர்ந்து) உள்ள கறுப்பான உயரமான இப்பெண் ஆவார்.

## கண்பார்வை இழந்தவருக்குரிய சிறப்பு

ஹதீஸ் 5653. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்: நான் என் அடியானை, அவனுடைய பிரியத்திற்குரிய இரண்டு பொருட்களை(ப் பறித்து)க் கொண்டு சோதித்து, அவன் பொறுமை காப்பானேயானால், அவற்றுக்கு பதிலாக சொர்க்கத்தை நான் அவனுக்கு வழங்குவேன்.

(‘அவனுடைய பிரியத்திற்குரிய இரண்டு பொருள்கள் என்பது) அவரின் இரண்டு கண்களைக் குறிக்கும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## பெண்கள், (நோயுற்ற) ஆண்களை நலம் விசாரிப்பது.

உம்முத் தர்தா(ரலி) (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலைத் சேர்ந்த அன்சாரிகளில் ஒருவரை (அவர் நோய்வாய்ப்பட்டிருந்தபோது) நலம் விசாரிக்கச் சென்றார்கள்.

ஹதீஸ் 5654. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து) மதீனாவுக்கு வந்தபோது அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கும் பிலால்(ரலி) அவர்களுக்கும் காய்ச்சல் கண்டிருந்தது. அவ்விருவரிடமும் நான் சென்று,என் தந்தையே! எப்படியிருக்கிறீர்கள்? பிலால் அவர்களே எப்படியிருக்கிறீர்கள்? என்று (நலம்) விசாரிப்பேன். அபூ பக்ர்(ரலி) தமக்குக் காய்ச்சல் காணும்போது (பின்வரும் கவிதையைக்) கூறுவார்கள்.

காலை

வாழ்த்துக் கூறப்பெற்ற

நிலையில்

ஒவ்வொரு மனிதனும்

தம் குடும்பத்தாரோடு

காலைப் பொழுதை அடைகிறான்..

(ஆனால், )

மரணம் - அவன் செருப்பு வாரைவிட

மிக அருகில் இருக்கிறது (என்பது

அவனுக்குத் தெரிவதில்லை).

பிலால்(ரலி) காய்ச்சல்விட்டதும்,

‘இத்கிர் (நறுமணப்) புல்லும்

‘ஜலீல் கூரைப் புல்லும்

என்னைச் சூழ்ந்திருக்க...

(மக்காவின்) பள்ளத்தாக்கில்

ஓர் இராப் பொழுதையேனும்

நான் கழிப்பேனா...?

‘மிஜன்னா எனும்

(மக்காவின் இனிப்புச் சுனை) நீரை

ஒரு நாள் ஒரு பொழுதாவது

நான் பருகுவேனா...?

(மக்கா நகரின்)

ஷாமா, த∴பீல் மலைகள்

(இனி எப்போதேனும்)

எனக்குத் தென்படுமா...?

என்று (கவிதை) கூறுவார்கள்.

உடனே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, (அவர்கள் இருவருடைய நிலையைத்) தெரிவித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,இறைவா! நாங்கள் மக்காவை நேசித்தது போல், அல்லது அதைவிட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்குவாயாக! இறைவா! மேலும் இவ்வூரை ஆரோக்கியமானதாகவும் ஆக்குவாயாக! அதன் (அளவைகளான)ஸாஉ‘,முத்(து) ஆகியவற்றில் (-எங்கள் உணவில்) எங்களுக்கு நீ

சுபிட்சத்தை வழங்குவாயாக! இங்குள்ள காய்ச்சலை இடம் பெயரச் செய்து அதைஜு ஹ்ஃபா எனுமிடத்தில் (குடி) அமர்த்திவிடுவாயாக' என்று பிரார்த்தனை செய்தார்கள்.

## குழந்தைகளை நலம் விசாரித்தல்

ஹதீஸ் 5655. உஸாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களின் புதல்வியார் (ஸைனப்(ரலி) அவர்கள் தங்களின் மகள் (அல்லது மகன்) இறக்கும் தறுவாயில் இருப்பதாகவும், எனவே அங்கு வந்து சேர வேண்டும் என்றும் நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி அனுப்பினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களுடன் நானும் ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களும் இருந்தோம். உபை இப்னு கஅப்(ரலி) அவர்களும் இருந்ததாகவே நாங்கள் கருதுகிறோம். உடனே நபி(ஸல்) அவர்கள் தம் புதல்விக்கு சலாம் (முகமன்) சொல்லி அனுப்பியதோடு,அல்லாஹ் எடுத்துக் கொண்டதும் கொடுத்ததும் அவனுக்கே உரியது. ஒவ்வொன்றுக்கும் அவனிடம் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு. எனவே, நன்மையை எதிர்பார்ப்பாயாக் பொறுமையைக் கைக்கொள்வாயாக எனக் கூறியனுப்பினார்கள். அப்போது அவர்களின் புதல்வியார் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு (கண்டிப்பாக வரவேண்டுமென மீண்டும்) கூறியனுப்பினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் எழுந்தார்கள். நாங்களும் அவர்களுடன் எழுந்தோம்.

(தம் புதல்வியின் வீட்டுக்குச் சென்ற) நபி(ஸல்) அவர்களின் மடியில் சுவாசிக்க முடியாமல் மூச்சுத் திணறிக்கொண்டிருந்த குழந்தை கிடத்தப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்களின் இரண்டு கண்களும் நீர் சொரிந்தன. உடனே அவர்களிடம் ஸஅத் இப்னு உபாதா(ரலி)இறைத்தூதர் அவர்களே! என்ன இது? (அழுகிறீர்களே!)' என்று கேட்டார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,இது அல்லாஹ் தன் அடியார்களில் தான் நாடியவர்களின் உள்ளங்களில் அமைத்துள்ள இரக்க உணர்வாகும். அல்லாஹ் தன் அடியார்களில் இரக்கமுடையவருக்கே இரக்கம் காட்டுகிறான்' என்று கூறினார்கள்.

## கிராமவாசிகளை நலம் விசாரித்தல்

ஹதீஸ் 5656 இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (நோயுற்றிருந்த) ஒரு கிராமவாசியிடம், அவரை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒரு நோயாளியிடம் உடல் நலம் விசாரிக்கச் சென்றால் அந்த நோயாளியிடம்,கவலைப் படவேண்டாம். இறைவன் நாடினால், (இது உங்கள் பாவத்தை நீக்கி உங்களைத்) தூய்மைப்படுத்திவிடும்' என்று கூறுவார்கள். (தம் அந்த வழக்கப்படி நபி(ஸல்) அவர்கள் கிராமவாசியிடம் கூறியபோது) அந்தக் கிராமவாசி,நான் தூய்மை பெற்று விடுவேன் என்றா சொன்னீர்கள்! (சாத்தியம்) கிடையாது. இதுவோ வயது முதிர்ந்த பெரியவரைப் பீடிக்கிற சூடாகித் தம்க்கிற காய்ச்சலாகும். இது அவரை மண்ணறைகளைச் சந்திக்க வைக்கும்' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால் ஆம் (அவ்வாறே நடக்கும்)' என்று கூறினார்கள்.

## இறைவனுக்கு இணைவைப்போரை(ச் சந்தித்து) உடல் நலம் விசாரித்தல்.

ஹதீஸ் 5657. அனஸ்(ரலி) கூறினார்

யூதர்களின் அடிமையொருவர் நபி(ஸல்) அவர்களுக்கு ஊழியம் செய்துவந்தார். அவர் நோயுற்றுவிட்டார். அவரை உடல் நலம் விசாரிக்கச் சென்ற நபி(ஸல்) அவர்கள்இஸ்லாத்தை ஏற்றுக் கொள்' என்று கூறினார்கள். அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்டார்.

முஸய்யப் இப்னு ஹஸ்ன்(ரலி) கூறினார்

(தம் பெரிய தந்தை) அபூ தாலிப் அவர்களுக்கு மரண வேதனை வந்தபோது நபி(ஸல்) அவர்கள் அவரிடம் சென்றார்கள்.

## நோயாளி ஒருவரை நலம் விசாரிக்க வந்த இடத்தில் தொழுகை நேரம் வந்துவிட, வந்தவர்களுக்கு நோயாளி கூட்டுத் தொழுகை நடத்துவது.

ஹதீஸ் 5658. ஆயிஷா (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் நோயுற்றிருந்தபோது அவர்களை உடல் நலம் விசாரிப்பதற்காகச் சிலர் வந்தனர். (அப்போது தொழுகை நேரம் வந்துவிடவே) நபி (ஸல்) அவர்கள் உட்கார்ந்தபடியே அவர்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். மக்களோ நின்றபடி தொழலாயினர். அப்போது நபி (ஸல்) அவர்கள்உட்காருங்கள் என்று மக்களுக்கு சைகை செய்தார்கள். தொழுகை முடிந்தபோது, (தொழுகையை முன்நின்று நடத்தும்) இமாம் பின்பற்றப்பட வேண்டியவராவார். எனவே, அவர் (தொழுகையில்) குனிந்தால் நீங்களும் குனி(ந்துருகூஉ செய்)யுங்கள். அவர் (தம் தலையை) உயர்த்தினால் நீங்களும் (தலையை) உயர்த்துங்கள். அவர் அமர்ந்து தொழுதால் நீங்களும் அமர்ந்தே தொழுங்கள்' என்று கூறினார்கள்.

ஹுமைதி (ரஹ்) கூறினார்: இந்த ஹதீஸ் கூறப்பட்டுள்ள சட்டம் மாற்றப்பட்டுவிட்டது. ஏனெனில், நபி (ஸல்) அவர்கள் கடைசியாகத் தொழுதபோது மக்கள் அவர்கள் பின்னால் நின்று கொண்டு தொழ, அவர்கள் மட்டும் உட்கார்ந்து தொழு(வித்)தார்கள்.

## நோயாளி மீது (ஆறுதலுக்காகக்) கை வைப்பது.

ஹதீஸ் 5659. ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) கூறினார்

நான் மக்காவில் கடுமையாக நோய்வாய்ப்பட்டிருந்தேன். நபி (ஸல்) அவர்கள் என்னை உடல் நலம் விசாரிப்பதற்காக என்னிடம் வந்தார்கள். நான், அல்லாஹ்வின் நபியே! நான் செல்வத்தைவிட்டுச் செல்கிறேன். (ஆனால்,) ஒரேயொரு மகளைத்தான் நான் (என் வாரிசாக)விட்டுச் செல்கிறேன். எனவே, என் செல்வத்தில் இரண்டிலொரு பங்கை (தானம் செய்யும்படி) மரணம் சாசனம் செய்துவிட்டு (வாரிசான என் மகளுக்கு) மூன்றிலொரு பங்கை மட்டும்விட்டுச் செல்லட்டுமா? என்று கேட்டேன்.

நபி (ஸல்) அவர்கள், வேண்டாம்' என்று கூறினார்கள். நான், பாதியை மரண சாசனம் செய்துவிட்டுப் பாதியை (என் மகளுக்கு)விட்டுச் செல்லட்டுமா? என்று கேட்டேன். அதற்கும் நபி (ஸல்) அவர்கள், வேண்டாம்' என்று கூறினார்கள். நான், அப்படியென்றால் மூன்றிலொரு பங்கு (தானம் செய்யும்படி) மரண சாசனம் செய்துவிட்டு இரண்டிலொரு பங்கை அவளுக்காகவிட்டுச் செல்லட்டுமா? என்று கேட்டேன். நபி (ஸல) அவர்கள், மூன்றிலொரு பங்கா? மூன்றிலொரு பங்கே அதிகம்தான்' என்று கூறினார்கள்.

பிறகு தம் கையை என் நெற்றியின் மீது வைத்துப் பிறகு அதை என் வயிற்றின் மீதும் என் முகத்தின் மீதும் தடவினார்கள். பின்னர், இறைவா! ஸஅதுக்குக் குணமளிப்பாயாக. அவரின் ஹிஜ்ரத்தை முழுமைப்படுத்துவாயாக!என்று பிரார்த்தித்தார்கள். அவர்களின் (கரத்தின்) குளிர்ச்சியை என் ஈரலில் இப்போதும் கூட நான் உணர்வதைப் போன்று இருக்கிறது.

ஹதீஸ் 5660. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக்கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்று அவர்களை என் கையால் தொட்டு, இறைத்தூதர் அவர்களே! தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ,ஆம் உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று நான் (ஒருவனே) அடைகிறேன்' என்று கூறினார்கள்.

நான், (இந்தத் துன்பத்தின் மூலம்) தங்களுக்கு இரண்டு (மடங்கு) நன்மைகள் கிடைக்கும் என்பதாக இதற்குக் காரணம்? என்று கேட்டேன். இறைத்தூதர் (ஸல்) அவர்கள்ஆம் என்று கூறிவிட்டுப் பிறகு, ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும், அது அல்லாத வேறு துன்பமாயினும்

(அதற்கு ஈடாக), மரம் தன் இலைகளை உதிர்த்துவிடுவதைப் போன்று அவரின் பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் விடுவதில்லை' என்று கூறினார்கள்.

## (உடல் நலம் விசாரிக்கும்போது) நோயாளியிடம் சொல்ல வேண்டியதும் (அதற்கு) அவர் அளிக்க வேண்டிய பதிலும்.

ஹதீஸ் 5661. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களுக்கு நோய் கண்டிருந்தபோது அவர்களிடம் நான் சென்று அவர்களை(ப் பரிவோடு) தொட்டேன். அவர்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது நான்,தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களே! (இந்தத் துன்பத்தின் காரணமாக) தங்களுக்கு இரண்டு (மடங்கு) நன்மைகள் உண்டுதானே! எனக் கேட்டேன்.

நபி(ஸல்) அவர்கள்,ஆம். ஒரு முஸ்லிமுக்கு எந்தத் துன்பம் நேர்ந்தாலும் (அதற்கு ஈடாக), மரத்தின் இலைகள் உதிர்வதைப் போன்று அவரின் தவறுகள் அவரைவிட்டு உதிராமல் இருப்பதில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5662. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நோயுற்றிருந்த கிராமவாசி) ஒருவரை ஒடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,கவலைப்பட வேண்டாம். இறைவன் நாடினால் (இது உங்கள் பாவத்தைக் கழுவி உங்களைத்) தூய்மைப்படுத்திவிடும்' என்று கூறினார்கள். அதற்கு அந்த மனிதர்,நான் தூய்மை பெற்றுவிடுவேனா? இது நடக்கப் போவது) இல்லை. இதுவோ வயது முதிர்ந்த பெரியவரைப் பீடிக்கிற சூடாகித் தம்க்கிற காய்ச்சல் ஆகும். இது அ(ம் முதிய)வரை மண்ணறைகளைச் சந்திக்கவைக்கும் வரை (ஓயாது)' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால், ஆம் (நீர் நினைத்தது போன்றே நடக்கும்)' என்று கூறினார்கள்.

## பயணம் செய்தபடியும், நடந்து சென்ற படியும், மற்றவரின் பின்னால் வாகனத்தில் அமர்ந்தபடியும் நோயாளியை உடல் நலம் விசாரித்தல்.

ஹதீஸ் 5663. உஸாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் கழுதையொன்றில் சேணம் விரித்து, அதன் மீது ஃபதக் நகர் முரட்டுத் துணி விரித்து, அதன் மீது அமர்ந்து தமக்குப் பின்னால் என்னை அமர்த்திக் கொண்டு (நோய்வாய்ப்பட்டிருந்த) ஸஅத்பின் உபாதா(ரலி) அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். இது பத்ருப் போருக்கு முன்னால் நடந்தது. அப்போது ஓர் அவையைக் கடந்து சென்றார்கள். அதில் (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல் இருந்தார் - அவர் தம்மை முஸ்லிம் என்று காட்டிக் கொள்ளும் முன் இது நடந்தது. அந்த அவையில் முஸ்லிம்கள், சிலை வணங்கிகளாக இணை வைப்பாளர்கள், யூதர்கள் ஆகிய பல்வேறு வகுப்பாரும் இருந்தனர். அதே அவையில் (கவிஞர்) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்களும் இருந்தார்கள்.

(எங்கள்) வாகனப் பிராணியி(ன் காலடியி)லிருந்து கிளம்பிய புழுதி அந்த அவையைச் சூழ்ந்தபோது (நயவஞ்சகர்) அப்துல்லாஹ் இப்னு உபை தம் மேல் துண்டால் தம் மூக்கைப் பொத்திக் கொண்டார். பிறகு,எங்களின் மீது புழுதி கிளப்பாதீர்' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் சலாம் (முகமன்) கூறினார்கள். (தம் வாகனத்தை) நிறுத்தி இறங்கி, அல்லாஹ்வின் (மார்க்கத்தின்) பால் அவர்களை அழைத்தார்கள். மேலும், அவர்களுக்குக் குர்ஆனை ஓதிக்காட்டினார்கள். இதைக் கேட்ட அப்துல்லாஹ் இப்னு உபை (நபி(ஸல்) அவர்களை நோக்கி)மனிதரே! நீர் கூறுகிற விஷயம் உண்மையாயிருப்பின், அதைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை. (ஆனால்,) அதை எங்களுடைய (இது போன்ற) அவையில் (வந்து)

சொல்லி எங்களுக்குத் தொல்லை தராதீர். உங்கள் இருப்பிடத்திற்குச் செல்லுங்கள். உம்மிடம் வருபவர்களிடம் (அதை) எடுத்துச் சொல்லுங்கள்' என்றார்.

(அங்கிருந்த) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி),ஆம். இறைத்தூதர் அவர்களே! அதை நம் அவைகளுக்கு வந்து எங்களுக்கு எடுத்துரையுங்கள். ஏனெனில், நாங்கள் அதை விரும்புகிறோம்' என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட முஸ்லிம்களும் இணைவைப்பாளர்களும் யூதர்களும் (ஒருவரையொருவர்) ஏசத் தொடங்கி பரஸ்பரம் தாக்கிக் கொள்ளும் அளவுக்குச் சென்றுவிட்டனர்.

அப்போது நபி(ஸல்) அவர்கள், மௌனமாகும் வரை மக்களை அமைதிப்படுத்திக்கொண்டேயிருந்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்திலேறி (உடல் நலமில்லாமல் இருந்த) ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடம் சென்று,சஅதே! அபூ ஹுபாப் - அப்துல்லாஹ் இப்னு உபை சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா? (அவர் இன்னின்னவாறு கூறினார்)' என்றார்கள்.

ஸஅத் இப்னு உபாதா(ரலி),இறைத்தூதர் அவர்களே! அவரை மன்னித்துவிட்டுவிடுங்கள். தங்களுக்கு அல்லாஹ் வழங்கிய (மார்க்கத்)தை வழங்கிவிட்டான். (தாங்கள் மதீனா வருவதற்கு முன்பு) இந்நகர வாசிகள் அப்துல்லாஹ்வுக்குக் கீரிடம் அணிவித்து அவரைத் தலைவராக்க முடிவு செய்திருந்தார்கள். (இந்நிலையில்) அல்லாஹ் தங்களுக்கு அளித்த சத்திய(மார்க்க)த்தின் மூலம் அ(ப்பதவியான)து மறுக்கப்பட்டபோது அதைக் கண்டு அவர் ஆத்திரமடைந்துள்ளார். இதுவே தாங்கள் பார்த்தபடி அவர் நடந்து கொண்டதற்குக் காரணம்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5664. ஜாபிர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (நான் நோயுற்றிருந்த போது) என்னை உடல் நலம் விசாரிக்க வந்தார்கள். அப்போது அவர்கள் கோவேறு கழுதையின் மீது பயணம் செய்தபடியும் வரவில்லை. குதிரையின் மீது பயணம் செய்தபடியும் வரவில்லை. (மாறாக, நடந்தே வந்தார்கள்.)

## நோயாளி நான் நோய்வாய்ப்பட்டுள்ளேன்' என்றோஎன் தலை(வலி)யே' என்றோஎனக்கு நோய் அதிகரித்து விட்டது' என்றோ கூறலாம்.

(இறைத்தூதர்) அய்யூப்(அலை) அவர்கள் கூறினார்கள்:

எனக்கு (நோயினால்) துன்பம் நேர்ந்திருக்கிறது. (இறைவா! அதை அகற்றிடுவாயாக!) நீ கருணையாளர்களிலெல்லாம் அதிகக் கருணையாளன் ஆவாய் (திருக்குர்ஆன் 21:83)

ஹதீஸ் 5665. கஅப் இப்னு உஜ்ரா(ரலி) கூறினார்

(உம்ராவுக்காக இஹ்ராம் கட்டியிருந்த சமயம் ஹுதைபிய்யாவில்) நான் (சமையல் பாத்திரத்தின் கீழிருந்து தீ மூட்டிக் கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். அப்போது,(கஅபே!) உங்கள் தலையிலுள்ள பேன்கள் உங்களுக்குத் தொந்தரவு தருகின்றனவா? என்று கேட்டார்கள். நான்,ஆம்' என்று சொன்னேன். உடனே நபி(ஸல்) அவர்கள் நாவிதரை அழைத்தார்கள். நாவிதர் என்னுடைய தலை முடியை மழித்தார்.

பிறகு என்னை (இஹ்ராமுடைய நிலையில் தலை மழித்துக் கொண்டதற்காக)ப பரிகாரம் செய்யும்படி நபியவாகள் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 5666. காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர் அஸ்ஸித்தீக்(ரஹ்) கூறினார்

(ஒருமுறை கடுமையான தலைவலியினால் சிரமப்பட்ட) ஆயிஷா(ரலி),என் தலை(வலி)யே!என்று சொல்ல, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , நான் உயிரோடிருக்கும் போதே உனக்கு அது (-இறப்பு-) ஏற்பட்டுவிட்டால் உனக்காக நான் (அல்லாஹ்விடம்) பாவமன்னிப்புக் கோரி உனக்காக (மறுமை நலன் கோரி) பிரார்த்திப்பேன்' என்று கூறினார்கள். ஆயிஷா(ரலி),அந்தோ!

அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (விரைவில்) இறந்து போய்விடுவதையே நீங்கள் விரும்புகிறீர்கள் என்று எண்ணுகிறேன். நான் இறந்துவிட்டால் அந்த நாளின் இறுதியிலேயே (என்னுடைய இல்லம் சென்று) நீங்கள் உங்களுடைய (மற்ற) துணைவியரில் ஒருவருடன் மணவறை காண்பீர்கள். (என்னை மறந்து விடுவீர்கள்)' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் (புன்னகைத்துவிட்டு)இல்லை (உனக்கு ஒன்றும் ஆகாது) நான்தான் (இப்போது)என் தலை(வலி)யே! என்று சொல்ல வேண்டியுள்ளது. (உண்மையில் உன் மீதும் உன் குடும்பத்தார் மீதும் அதிக மதிப்பு வைத்துள்ளேன். எனவேதான் உன் தந்தை) அபூ பக்ருக்கும் அவரின் புதல்வருக்கும் ஆளனுப்பி (வரவழைத்து எனக்குப் பின் என் பிரதிநியாகச் செயல்படும்படி) அறிவித்து விட விரும்பினேன். (தாம் விரும்பியவரை கலீஃபா என) யாரும் சொல்லிவிடவோ, (தாமே கலீஃபாவாக ஆகவேண்டும் என) எவரும் ஆசைப்பட்டுவிடவோ கூடாது என்பதற்காகவே (இவ்வாறு விரும்பினேன்). ஆனால், பின்னர் (அபூ பக்ரைத் தவிர வேறொருவரைப் பிரதிநிதியாக்க) அல்லாஹ் அனுமதிக்கமாட்டான் இறைநம்பிக்கையாளர்களும் (அதை) ஏற்கமாட்டார்கள் என (எனக்கு நானே) சொல்லிக்கொண்டேன். (எனவேதான் அறிவிக்கவில்லை)' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5667. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் காய்ச்சல் கண்டு சிரமப்பட்டுக்கொண்டிருந்தபோது அவர்களிடம் நான் சென்று அவர்களை(ப் பரிவோடு) தொட்டேன். அப்போது நான்,தாங்கள் கடும் காய்ச்சலால் சிரமப்படுகிறீர்களே!என்றேன். நபி(ஸல்) அவர்கள்,ஆம் உங்களில் இருவர் காய்ச்சலால் அடையும் துன்பத்தைப் போன்று (நான் ஒருவனே அடைகிறேன்)' என்றார்கள். நான்(இத்துன்பத்தின் காரணமாக) உங்களுக்கு இரண்டு (மடங்கு) நன்மைகள் கிடைக்குமா? என்று கேட்டேன்.

நபி(ஸல்) அவர்கள்,ஆம். ஒரு முஸ்லிமுக்கு ஏற்படும் நோயாயினும், அது அல்லாத வேறு துன்பமாயினும் (அதற்கு ஈடாக), மரம் தன் இலைகளை உதிர்த்துவிடுவதைப் போன்று அவரின் பாவங்களை அல்லாஹ் உதிர்க்காமல் இருப்பதில்லை' என்றார்கள்.

ஹதீஸ் 5668. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) கூறினார்

'விடைபெறும் ஹஜ்ஜின்போது மிகக் கடுமையாக நோயுற்றிருந்த என்னை உடல் நலம் விசாரிப்பதற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள்.

அப்போது நான்,(இதோ) தாங்கள் காண்கிறீர்களே இந்த நோய் என்னைப் பீடித்துவிட்டது. நான் ஒரு செல்வந்தன். (நான் இறந்துவிட்டால்) என் ஒரே மகள் தவிர வேறெவரும் என(து சொத்து)க்கு வாரிசாக மாட்டார்கள். எனவே என்னுடைய செல்வத்தில் மூன்றில் இரண்டு பங்கை தானம் செய்து விடட்டுமா? என்று கேட்டேன்.

நபி(ஸல்) அவர்கள்,வேண்டாம்' என்று கூறினார்கள்.

நான்(என்னுடைய செல்வத்தில்) பாதியை (யாவது தானம் செய்யட்டுமா)? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள் (அப்போதும்) வேண்டாம் என்று கூறினார்கள்.

நான் மூன்றிலொரு பங்கை(யாவது தானம் செய்துவிடட்டுமா)? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,(மூன்றிலொரு பங்கா?) மூன்றிலொரு பங்கே அதிகம் தான். நீங்கள் உங்கள் வாரிசுகளைத் தன்னிறைவுடையவர்களாகவிட்டுச் செல்வது, அவர்களை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாகவிட்டுச் செல்வதைவிடச் சிறந்ததாகும். நீங்கள் இறைவனின் திருப்தி கருதிச் செய்யும் (தான தர்மம், குடும்பச்) செலவு எதுவாயினும் அதற்காக உங்களுக்கு நற்பலன் அளிக்கப்படாமல் இருப்பதில்லை. அது நீங்கள் உங்கள் மனைவியின் வாயில் ஊட்டும் (ஒரு கவளம்) உணவாயினும் சரியே (அதற்கும் நற்பலன் உண்டு)' என்று கூறினார்கள்.

## 'என்னிடமிருந்து எழுந்திருத்துவிடுங்கள் என்று நோயாளி சொல்வது.

ஹதீஸ் 5669. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வீட்டில் உமர் இப்னு கத்தாப்(ரலி) உட்பட மக்கள் பலரும் இருக்க, நபியவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், வாருங்கள். நான் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் (ஒருபோதும்) வழி தவறமாட்டீர்கள்' என்று கூறினார்கள். அப்போது உமர்(ரலி), நபி(ஸல்) அவர்களுக்கு (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது (அவர்களை எழுதித் தருமாறு தொந்தரவு செய்யாதீர்கள்.) உங்களிடம் தான் குர்ஆன் இருக்கிறதே. (நபியவர்களுக்கு அருளப்பெற்ற அந்த) இறைவேதமே நமக்குப் போதும்' என்று கூறினார்கள்.

உடனே அங்கு வீட்டிலிருந்தோர் கருத்து வேறுபட்டு சச்சரவிட்டுக் கொண்டார்கள். அவர்களில் சிலர், (நபியவர்கள் கேட்ட எழுது பொருளை அவர்களிடம்) கொண்டுவந்து கொடுங்கள். உங்களக்கு ஒரு மடலை அவர்கள் எழுதுவார்கள். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறி(ச் சென்றி)ட மாட்டீர்கள்' என்று கூறினார்கள். வேறு சிலர் உமர்(ரலி) கூறியதையே கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் அருகில் மக்களின் கூச்சலும் சச்சரவு மிகுந்தபோது, (என்னிடமிருந்து) எழுந்திருத்துவிடுங்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்:

(இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு) இப்னு அப்பாஸ்(ரலி), மக்கள் கருத்து வேறுபட்டு கூச்சலிட்டுக் கொண்டதனால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் (எழுதித் தர நினைத்த) மடலுக்கும் இடையே குறுக்கீடு ஏற்பட்டது தான் சோதனையிலும் பெரும் சோதனையாகும்' என்று கூறிவந்தார்கள்.

(நலம் பெற) பிரார்த்தனை செய்யும்படி நோயுற்றக் குழந்தையை (நல்லவர்களிடம்) கொண்டு செல்வது.

ஹதீஸ் 5670. சாயிப் இப்னு யஸீத்(ரலி) கூறினார்

(நான் குழந்தையாயிருந்த போது) என்னை என் தாயாரின் சகோதரி இறைத்தூதர்(ஸல) அவர்களிடம் கொண்டு சென்று, இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகன் (பாதங்களில்) நோய் கண்டுள்ளான்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் என் தலையை வருடிக் கொடுத்து என் சுபிட்சத்திற்காகப் பிரார்த்தித்தார்கள். பிறகு, அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். அவர்கள் அங்சுத்தி செய்து மிச்சம் வைத்த தண்ணீலிருந்து நான்சிறிது பருகிறேன். அவர்களின் முதுகுக்குப் பின்னால் நான் நின்றுகொண்டு அவர்களின் இரண்டு தோள்களுக்கிடையில் இருந்த நபித்துவ முத்திரையைப் பார்த்தேன். அது மணவறைத் திரையில் பொருத்தப்படுகிற பித்தானைப் போன்றிருந்தது.

## நோயாளி மரணத்தை விரும்புவது (கூடாது).

ஹதீஸ் 5671. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் எவரும் தமக்கு நேர்ந்த எந்தத் துன்பத்தின் காரணத்தினாலும் மரணத்தை விரும்பிட வேண்டாம். அவ்வாறு அவர் ஏதேனும் செய்தேயாகவேண்டும் என்றிருந்தால், இறைவா! (நான்) உயிர் வாழ்வது எனக்கு நன்மையாக இருப்பின், என்னை உயிர் வாழச் செய்வாயாக! நான் இறந்து போய்விடுவதே எனக்கு நன்மையாக இருப்பின் எனக்கு இறப்பைத் தருவாயாக!என்று கேட்கட்டும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5672. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) கூறினார்

நாங்கள் கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றோம். (கடும் வயிற்று வலிக்கு சிகிச்சை பெறுவதற்காகத் தம் வயிற்றில்) அவர்கள் ஏழு முறை சூடு போட்டிருந்தார்கள். அப்போது அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள: முன்சென்றுவிட்ட எம் தோழர்கள் தம(து நன்மைகளு)க்கு இவ்வுலகம் எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்தி விடாத நலையில் (சிரமத்துடன் வாழ்ந்து) மறைந்துவிட்டார்கள். (ஆனால், அவர்களுக்குப் பின்) நாங்கள் (வீடு கட்ட) மண்ணுக்குச் செலவழிப்பதைப் தவிர வேறு தேவையே இல்லாத அளவுக்கு(ச் செல்வத்தை)ப் பெற்றுள்ளோம். நபி(ஸல்) அவர்கள் மரணத்தை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்திருக்காவிட்டால் அதை வேண்டி நான் பிரார்த்தனை புரிந்திருப்பேன். (அந்த அளவுக்கு இப்போது நான் நோயினால் சிரமப்படுகிறேன்.)

மற்றொரு முறை நாங்கள் கப்பாப்(ரலி) அவர்களிடம் சென்றிருந்தோம். அப்போது தம் (வீட்டுச்) சுவரைக் கட்டிக்கொண்டிருந்த அவர்கள்ஒரு முஸ்லிம், தாம் செய்கிற எல்லாச் செலவினங்களுக்காகவும் பிரதிபலன் அளிக்கப்படுவார் (தேவைக்கு அதிகமாக வீடுகட்ட) இந்த மண்ணில் அவர் செய்கிற செலவைத் தவிர' என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 5673.** அபூ ஹு ரைரா(ரலி) அவாக்ள் கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,எவரையும் அவரின் நற்செயல் சொர்க்கத்தில் ஒருபோதும் நுழைவிக்காது'( மாறாக, அல்லாஹ்வின் தனிபெரும் கருணையாலேயே எவரும் சொர்க்க புகமுடியும்)' என்று கூறினார்கள்.

மக்கள்,தங்களையுமா (தங்களின் நற்செயல் சொர்க்கத்தில் நுழைவிப்பதில்லை), இறைத்தூதர் அவர்களே? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,(ஆம்) என்னையும் தான் அல்லாஹ் (தன்னுடைய) கருணையாலும் அருளாளலும் என்னை அரவணைத்துக் கொண்டால் தவிர' என்று கூறிவிட்டு,எனவே, நீங்கள் நேர்மையோடு (நடு நிலையாகச்) செயல்பாடுங்கள். நிதானமாக நடந்துகொள்ளுங்கள். உங்களில் எவரும் மரணத்தை விரும்பிட வேண்டாம். ஒன்று அவர் நல்லவராக இருப்பார் அவர்(உயிர் வாழ்வதன் மூலம்) நன்மையை அதிகமாக்கிக் கொள்ளலாம். அல்லது அவர் தீயவராக இருப்பார் அவர் (உயிர் வாழ்வதால்) மனம் திருந்தக்கூடும்' என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 5674.** ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (இறப்பதற்கு முன்பு) என் மீது சாய்ந்தபடி,இறைவா! எனக்கு மன்னிப்பளிப்பாயாக. எனக்குக் கருணை புரிவாயாக. மிக்க மேலான தோழர்களுடன் (சொர்க்கத்தில்) என்னைச் சேர்த்தருள்வாயாக' என்று பிரார்த்திப்பதை செவியுற்றேன்.

## உடல் நலம் விசாரிக்கச் சென்றவர் நோயாளிக்காகப் பிரார்த்திப்பது.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் (நான் நோயுற்றிருந்தபோது என்னை உடல் நலம் விசாரிக்க வந்து),இறைவா! ஸஅதுக்கு (நோயிலிருந்து) குணமளிப்பாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

**ஹதீஸ் 5675.** ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்ஒரு நோயாளியிடம் (உடல் நலம் விசாரிக்கச்) சென்றால் அல்லதுநோயாளி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டால் அவர்கள்,அத்ஹிபில் பாஸ் ரப்பந் நாஸ் இஷ்ஃபி, வ அன்த்தஷ் ஷாஃபி, லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக்க, ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்' என்று பிரார்த்திப்பார்கள்.

(பொருள்: மனிதர்களைப் படைத்துப் பராமரிப்பவனே! நோயைப் போக்கி அறவே நோயில்லாதவாறு குணமளிப்பாயாக. நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தை தவிர வேறு நிவாரணம் இல்லை.)

மற்றோர் அறிவிப்பில்நோயாளி நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டால்' என்றும், இன்னோர் அறிவிப்பில்,நபி(ஸல்) அவர்கள் ஒரு நோயாளியிடம் சென்றால்' என்றும் இடம்பெற்றுள்ளது.

## நோயாளியை உடல் நலம் விசாரிக்கச் செல்பவர் (அங்கு) உளூ (அங்கசுத்தி) செய்வது.

ஹதீஸ் 5676. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் நான் நோய்வாய்ப்பட்டிருந்தபோது என்னிடம் வந்து அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். பின்னர்(அங்கசுத்தி செய்த நீரை) என் மீது ஊற்றினார்கள் அல்லதுஇவர் மேல் (இந்த நீரை) ஊற்றுங்கள் என்று கூறினார்கள் (அவ்வாறு ஊற்றிய) உடன் நான் மயக்கத்திலிருந்து தெளிந்தேன். அப்போது நான்,இறைத்தூதர் அவர்களே! நேரடி ஆண் வாரிசுகள் அல்லாதவர்கள் தாம் எனக்கு வாரிசாகிறார்கள். (இந்நிலையில்) சொத்துப் பங்கீடு எவ்வாறு அமையும்? என்று கேட்டேன். அப்போதுதான் பாகப் பிரிவினைச் சட்டம் குறித்த வசனம் அருளப்பெற்றது.

## கொள்ளை நோய் மற்றும் காய்ச்சல் ஆகியவற்றை நீக்கும்படி பிரார்த்தனை செய்வது.

ஹதீஸ் 5677. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து மதீனாவுக்கு) வந்தபோது அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கும் பிலால்(ரலி) அவர்களுக்கும் காய்ச்சல் கண்டிருந்தது. அவ்விருவரிடமும் நான் சென்று,என் தந்தையே! எப்படியிருக்கிறீர்கள்? பிலால் அவர்களே! எப்படியிருக்கிறீர்கள்? என்று (நலம்) விசாரித்தேன். அபூ பக்ர்(ரலி) தமக்குக் காய்ச்சல் காணும்போது (பின்வரும் கவிதையைக்) கூறுவார்கள்:

காலை

வாழ்த்துக் கூறப்பெற்ற

நிலையில்

ஒவ்வொரு மனிதனும்

தம் குடும்பத்தாரோடு

காலைப் பொழுதை அடைகிறான்..

(ஆனால்,)

மரணம் - அவன் செருப்பு வாரைவிட

மிக அருகில் இருக்கிறது (என்பது - அவனுக்குத் தெரிவதில்லை).

பிலால்(ரலி) காய்ச்சல்விட்டதும் வேதனைக்குரல் எழுப்பி,

'இத்கிர் (நறுமணப்) புல்லும்

'ஜலீல் கூரைப் புல்லும்

என்னைச் சூழ்ந்திருக்க..

(மக்காவின்) பள்ளத்தாக்கில்

ஓர் இராப் பொழுதையேனும்

நான் கழிப்பேனா?...

'மிஜன்னா எனும்

(மக்காவின் இனிப்புச் சுனை) நீரை

ஒரு நாள் ஒரு பொழுதாவது

நான் பருகுவேனா...?

(மக்கா நகரின்)

ஷாமா, த∴பீல் மலைகள்

(இனி எப்போதேனும்)

எனக்குத் தென்படுமா...?

என்று (கவிதை) கூறுவார்கள்.

உடனே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து (அவர்கள் இருவருடைய நிலையைத்) தெரிவித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,இறைவா! நாங்கள் மக்காவை நேசித்தது போல், அல்லது அதைவிட அதிகமாக மதீனாவை எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்குவாயாக! மேலும் இவ்வூரை ஆரோக்கியமானதாகவும் ஆக்குவாயாக! இதன் (அளவைகளான)ஸாஉ',முத்(து) ஆகியவற்றில் (-எங்கள் உணவில்) எங்களுக்கு நீ சுபிட்சத்தை வழங்குவாயாக! இங்குள்ள காய்ச்சலை இடம் பெயரச் செய்து அதைஜு ஹ்∴பா எனுமிடத்தில் (குடி) அமர்த்திவிடுவாயாக' என்று பிரார்த்தனை செய்தார்கள்.

# அத்தியாயம் 76 மருத்துவம்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## அல்லாஹ் எந்த நோயையும் அதற்குரிய நிவாரணியை அருளாமல் இறக்குவதில்லை.

ஹதீஸ் 5678. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் எந் நோயையும் அதற்குரிய நிவாரணியை அருளாமல் இறக்குவதில்லை.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஆண், பெண்ணுக்கு பெண், ஆணுக்கும் சிகிச்சையளிக்கலாமா?

ஹதீஸ் 5679. ருபய்யிஉ பின்த் முஅவ்வித் இப்னி அஃப்ரா(ரலி) கூறினார்

நாங்கள் (மகளிர்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் புனிதப் போரில் கலந்து கொண்டோம். (போரின்போது) மக்களுக்கு தண்ணீர் புகட்டிக்கொண்டும் அவர்களுக்குப் பணிவிடைகள் புரிந்துகொண்டும், கொல்லப்பட்டவர்களையும் காயமுற்றவர்க(ளுக்கு மருந்திட்டு அவர்க)ளையும் மதீனாவுக்கு எடுத்துச் சென்று கொண்டும் இருந்தோம்.

## மூன்றில் நிவாரணம் உண்டு

ஹதீஸ் 5680. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்மூன்றில் (நோய்க்கு) நிவாரணம் உண்டு. தேன் அருந்துவது, இரத்தம் வெளியேற்றும் கருவியால் (உடலில் கீறுவது, தீயால் சூடிட்டிக்கொள்வது ஆகியனவே அந்த மூன்றுமாகும். (ஆனால்,) தீயால் சூடிட்டுக் கொள்ள வேண்டாமென என் சமுதாயத்தாருக்கு நான் தடை விதிக்கிறேன்' என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்,தேனிலும் இரத்தம் வெளியேற்றுவதிலும் நிவாரணம் உள்ளது' என வந்துள்ளது.

ஹதீஸ் 5681. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூன்றில் (நோய்க்கு) நிவாரணம் உண்டு. இரத்தம் வெளியேற்றும் கருவியால் (உடலில்) கீறுவது, தேன் அருந்துவது, நெருப்பால் சூடிட்டுக் கொள்வது ஆகியனவே அந்த மூன்றும். (இருப்பினும்,) நான் என் சமுதாயத்தாருக்கு நெருப்பால் சூடிட்டுக் கொள்ள வேண்டாமெனத் தடை விதிக்கிறேன்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## தேனால் சிகிச்சையளிப்பதும், தேனில் மக்களுக்கு நிவாரணம் உள்ளது' எனும் (திருக்குர்ஆன் 16:69 வது) இறைவசனமும்.

ஹதீஸ் 5682. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் இனிப்புப் பொருட்களையும் தேனையும் விரும்பி(ச் சாப்பிட்டு) வந்தார்கள்.

ஹதீஸ் 5683. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்கள் மருந்துகளில் ஒன்றில் நன்மை ஏதேனும்இருப்பதாயிருந்தால் அல்லதுஇருக்கிறதென்றால் நோயின் தன்மைக்கு ஏற்றபடி இரத்தம் உறிஞ்சும் கருவியால் (உடலில்) கீறுவது, அல்லது

தேன் அருந்துவது, அல்லது நெருப்பால் சூடிடுவதில் தான் அது உள்ளது. (ஆயினும்,) சூடிடுவதை நான் விரும்பவில்லை.

என ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5684. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) கூறினார்

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்துஎன் சகோதரர் வயிற்று வலியால் சிரமப்படுகிறார்' என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், அவருக்குத் தேன் ஊட்டுங்கள்' என்று கூறினார்கள். பிறகு இரண்டாம் முறையாக அவர் வந்தி (ருந்துதேன் ஊட்டியதில் வயிற்றுப் போக்குதான் ஏற்பட்டது' என்று கூறி) டவே, மீண்டும் நபி (ஸல்) அவர்கள், அவருக்குத் தேன் ஊட்டுங்கள்' என்று கூறினார்கள். பிறகு மூன்றாம் முறையாக அவர் வர நபி (ஸல்) அவர்கள் அப்போதும், அவருக்குத் தேன் ஊட்டுங்கள்' என்று கூறினார்கள். பிறகு (நான்காம் முறை அவர் வந்து), (தாங்கள் சொன்னதையே) நான் செய்தேன். (ஆனால், குணமாகவில்லை)' என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் (தேனில் நிவாரணம் இருப்பதாகக் குர்ஆனில்) அல்லாஹ் உண்மையே கூறியுள்ளான் உங்கள் சகோதரரின் வயிறுதான் பொய் சொல்கிறது: அவருக்குத் தேன் ஊட்டுங்கள்' என்று கூறினார்கள். அம்மனிதர், மீண்டும் தம் சகோதரருக்குத் தேன் ஊட்டினார். அதையடுத்து அவர் குணமடைந்தார்.

## ஒட்டகப் பாலால் சிகிச்சையளிப்பது

ஹதீஸ் 5685. அனஸ் (ரலி) கூறினார்

(மதீனா வந்தஉக்ல் மற்றும்உரைனா குலத்து) மக்கள் சிலருக்கு நோய் ஏற்பட்டது. அவர்கள், இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு அடைக்கலம் அளித்து உணவும் அளியுங்கள்' என்று கேட்டனர். (அவ்வாறே அவர்களுக்கு அடைக்கலம் தந்து உணவும் அளிக்கப்பட்டது. பசிப் பிணி நீங்கி) அவர்கள் நலம் பெற்றபோதுமதீனா (வின் தட்ப வெப்பநிலை) எங்களுக்கு ஒத்து வரவில்லை' என்று கூறினர். அவர்களை நபி (ஸல்) அவர்கள் பாறைகள் நிறைந்தஅல்ஹர்ரா எனும் இடத்தில் தம் ஒட்டகங்கள் சிலவற்றுடன் தங்கச் செய்து, இவற்றின் பாலை அருந்துங்கள்' என்று கூறினார்கள். அவர்கள் குணமடைந்தபோது நபி (ஸல்) அவர்களின் (ஒட்டக) மேய்ப்பாளரைக் கொன்றுவிட்டு அவர்களின் ஒட்டகங்களை இழுத்துச் சென்றுவிட்டனர். எனவே, நபி (ஸல்) அவர்கள், அந்த ஆட்களைப் பின்தொடர்ந்து செல்லும்படி (ஒரு படைப்பிரிவை) அனுப்பி (அவர்களைப் பிடித்து வரச் செய்து கொடுஞ்செயல்கள் புரிந்த) அவர்களின் கால்களையும் கைகளையும் துண்டித்து அவர்களின் கண்களில் சூடிட்டார்கள். அவர்களில் ஒருவர் இறக்கும் வரை தன்னுடைய நாவால் தரையை நக்கியபடி இருந்ததை பார்த்தேன்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சல்லாம் இப்னு மிஸ்கீன் (ரஹ்) கூறினார்

அனஸ் (ரலி) அவர்களிடம் ஹஜ்ஜாஜ் இப்னு யூசுஃப்நபி (ஸல்) அவர்கள் வழங்கிய தண்டனைகளிலேயே கடுமையான தண்டனை எது என்று எனக்குத் தெரிவியுங்கள் எனக் கேட்டதாகவும், அப்போது இந்த ஹதீஸை அவரிடம் அனஸ் (ரலி) தெரிவித்ததாகவும் எனக்குத் தகவல் எட்டியது. ஹஸன் அல்பஸரீ (ரஹ்) அவர்களுக்கு இச்செய்தி கிடைத்தபோது (ஹஜ்ஜாஜ் இதைத் தமக்குச் சாதமாக்கிச் கொள்வார் என்பதால்) அவருக்கு இதை அனஸ் (ரலி) தெரிவிக்காமல் இருந்திருக்க வேண்டுமென விரும்பினேன்' என்று கூறினார்கள்.

## ஒட்டகத்தின் சிறுநீரால் சிகிச்சையளிப்பது

ஹதீஸ் 5686. அனஸ் (ரலி) கூறினார்

('உரைனா குலத்தைச் சேர்ந்த) மக்கள் சிலர், மதீனாவின் தட்ப வெப்ப நிலை தங்களுக்கு ஒத்துவரவில்லை என்று கருதினர். எனவே, நபி (ஸல்) அவர்கள் அந்த மக்களைத் தம் ஒட்டக மேய்ப்பரிடம் சென்று அந்த ஒட்டகங்களின் பாலையும் சிறுநீரையும் குடிக்கும்படி பணித்தார்கள்.

(அதன்படி) அவர்கள் அந்த ஒட்டக மேய்ப்பரிடம் சென்று ஒட்டகங்களின் பாலையும் அவற்றின் சிறு நீரையும் குடித்தார்கள். அவர்களுக்கு உடல் நலம் ஏற்பட்டதும் ஒட்டக மேய்ப்பரைக் கொன்றுவிட்டு ஒட்டகங்களை ஓட்டிச் சென்றுவிட்டனர். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. அவர்களைத் தேடி(ப் பிடித்து) வர (ஆட்களை) அனுப்பி வைத்தார்கள் நபி(ஸல்) அவர்கள் அவர்கள் பிடித்துக் கொண்டு வரப்பட்டனர். அவர்களின் கைகளையும் கால்களையும் நபி(ஸல்) அவர்கள் துண்டித்தார்கள். அவர்களின் கண்களில் சூடிட்டார்கள்.

கத்தாதா(ரஹ்) கூறினார்: முஹம்மத் இப்னு சீரின்(ரஹ்),இது, (கொலை, கொள்ளைக்கான) தண்டனைச் சட்டங்கள் அருளப்பெறுவதற்கு முன்னால் நடந்த சம்பவம்‘ என்று கூறினார்கள்.

## கருஞ்சீரகம்

ஹதீஸ் 5687. காலித் இப்னு ஸஅத்(ரஹ்) கூறினார்

எங்களுடன் ஃகாலிப் இப்னு அப்ஜர்(ரலி) இருக்க நாங்கள் (பயணம்) புறப்பட்டோம். வழியில் ஃகாலிப்(ரலி) நோய்வாய்ப்பட்டார்கள். அவர்கள் நோயாளியாக இருக்கும் நிலையிலேயே மதீனாவுக்குச் சென்றோம். ஃகாலிப்(ரலி) அவர்களை இப்னு அபீ அ(த்)தீக்(ரலி) உடல் நலம் விசாரிக்க வந்தார்கள்.

அப்போது அவர்கள் எங்களிடம் (பின்வருமாறு) கூறினார்கள்: இந்தச் சின்னஞ்சிறு கறுப்பு வித்தை (கருஞ்சீரகத்தை) நீங்கள் பயன்படுத்துங்கள். இதிலிருந்து ஐந்து அல்லது ஆறு வித்துகளை எடுத்துத் தூளாக்கி (எண்ணெய் பிழிந்து) அவரின் மூக்கில் இந்தப் பக்கத்திலும் அந்தப் பக்கத்திலும் (அதன்) எண்ணெய்ச் சொட்டுகளை விடுங்கள். ஏனெனில், ஆயிஷா(ரலி) என்னிடம்,நபி(ஸல்) அவர்கள் இந்தக் கருஞ்சீரகம் எல்லா நோய்க்கும் நிவாரணமாகும்சாமை‘த் தவிர என்று கூறியதை கேட்டிருக்கிறேன்‘ எனத் தெரிவித்தார்கள். நான்,சாம் என்றால் என்ன? என்று அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்மரணம்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5688. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்கருஞ்சீரக விதையில்சாமைத் தவிர மற்ற எல்லா நோய்களுக்கும் நிவாரணம் உள்ளது‘ என்று கூறினார்கள்.

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) கூறினார்கள்:

‘சாம் என்றால்மரணம் என்று பொருள்.அல்ஹப்பத்துஸ் ஸவ்தா என்றால், (பாரசீகத்தில்)ஷூனீஸ் (கருஞ்சீரகம்) என்று பொருள்.

## நோயாளிக்குத் தல்பீனா (பால் பாயசம்) தயாரித்துக் கொடுப்பது.

ஹதீஸ் 5689. உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) கூறினார்

(என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) நோயாளிக்கும், இறந்தவரை எண்ணி வருந்துபவருக்கும்தல்பீனா (பால் பாயசம்) தயாரித்துக் கொடுக்கும்படி பணித்துவந்தார்கள். மேலும்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,தல்பீனா நோயாளியின் உள்ளத்திற்கு ஆறுதல் அளிக்கும். கவலைகளில் சிலவற்றைப் போக்கும் என்று கூறக் கேட்டுள்ளேன்‘ என்பார்கள்.11

ஹதீஸ் 5690. உர்வா(ரஹ்) கூறினார்

ஆயிஷா(ரலி), தல்பீனா (பால் பாயசம்) தயாரிக்கும்படி பணிப்பார்கள். மேலும்,அது (நோயாளிக்கு) வெறுப்பூட்டக் கூடியது; (ஆனால் அவருக்குப்) பயனளிக்கக் கூடியது‘ என்று சொல்வார்கள்.

## மூக்கில் (சொட்டு) மருந்திடல்

ஹதீஸ் 5691. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் குருதி உறிஞ்சி எடுத்தார்கள். குருதி உறிஞ்சி எடுப்பவருக்கு அவரின் ஊதியத்தைக் கொடுத்தார்கள். மேலும், தம் மூக்கில் (சொட்டு) மருந்திட்டுக்கொண்டார்கள்.

## வெண்கோஷ்டம் மற்றும் செய்கோஷ்டம் ஆகியவற்றால் வாசனை பிடிப்பது.

(கோஷ்டம் என்பதைக் குறிக்க மூலத்தில் ஆளப்பட்டுள்ள)குஸ்த் எனும் சொல் (ஃகுஸ்த், குஸ்த்) என இருமுறைகளிலும் ஆளப்படுகிறதுகாஃபூர் (கற்பூரம்) எனும் சொல் (காஃபூர், ஃகாஃபூர்) என இரண்டு முறைகளிலும் ஆளப்படுவதைப் போன்று (வானம் அகற்றப்படும்போது எனும் 81:11 வது குர்ஆன் வசனத்தின் மூலத்தில்குஷிதத் எனும் சொல்லை (குசிதத், ஃகுஷிதத்) என இரண்டு முறைகளிலும் ஓதப்பட்டுள்ளது. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) (ஃகுஷிதத்) என ஓதினார்கள்.

ஹதீஸ் 5692. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் இந்த இந்திய (கோஷ்ட)க் குச்சியை அவசியம் பயன்படுத்துங்கள். ஏனெனில், அதில் ஏழு நிவாரணங்கள் உள்ளன. அடிநாக்கு அழற்சிக்காக அதை(த் தூளாக்கி எண்ணெயில் குழைத்து) மூக்கில் சொட்டு மருந்தாக இடப்படும். (மார்புத் தசைவாதத்தால் ஏற்படும்) விலா வலிக்காக அதை வாயின் ஒரு பக்கத்தில் சொட்டு மருந்தாகக் கொடுக்கப்படும்.

என உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5693. உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன்(ரலி) கூறினார்

நான் (பாலைத் தவிர) வேறு (திட) உணவு சாப்பிடாத என்னுடைய ஆண் குழந்தையுடன் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். (அவர்கள் குழந்தையைத் தம் மடியில் உட்கார வைத்தார்கள்.) அப்போது குழந்தை அவர்களின் மீது சிறுநீர் கழித்துவிட்டது. உடனே தண்ணீர் கொண்டுவரச் சொல்லி (சிறுநீர்பட்ட) அந்த இடத்தில் தெளித்தார்கள்.

## (குருதி உறிஞ்சு கருவி மூலம்) எந்த நேரத்தில் குருதி உறிஞ்சி எடுக்கலாம்?

அபூ மூஸா(ரலி) இரவில் குருதி உறிஞ்சி எடுத்துள்ளார்கள்.

ஹதீஸ் 5694. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்றிருந்த நிலையில் குருதி உறிஞ்சி எடுத்தார்கள்.

## பயணத்திலும் இஹ்ராமுடைய நிலையிலும் குருதி உறிஞ்சி எடுப்பது.

இதை(ப் பற்றி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அப்துல்லாஹ் இப்னு புஹைனா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5695. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்இஹ்ராம் கட்டியிருந்த நிலையில் குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள்.

## நோயின் காரணத்தால் குருதி உறிஞ்சி எடுப்பது.

ஹதீஸ் 5696. அபூ உபைதா ஹுமைத் அத்தவீல்(ரஹ்) கூறினார்

அனஸ்(ரலி) அவர்களிடம் குருதி உறிஞ்சி வாங்குபவருக்குக் கூலி கொடுப்பது குறித்துக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குருதி உறிஞ்சி எடுத்துள்ளார்கள். அவர்களுக்கு அபூ தய்பா என்பவர் குருதி உறிஞ்சி வாங்கினார். நபி(ஸல்) அவர்கள் அவருக்கு(க் கூலியாக) இரண்டுஸாஉ உணவு கொடுத்தார்கள். மேலும், அபூ தய்பாவின் எசமானர்களுடன் நபி(ஸல்) அவர்கள் பேசியதையடுத்து (அவர்களுக்கு அவர் செலுத்த வேண்டிய வரியை) அவர்கள் குறைத்தார்கள்.

மேலும், நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் எவற்றால் சிகிச்சை பெறுகிறீர்களோ அவற்றிலெல்லாம் சிறந்தது குருதி உறிஞ்சி எடுப்பதும், வெண்கோஷ்டமும்தான். மேலும், உங்கள் குழந்தைகளை

(அவர்களின்) அடிநாக்கு அழற்சியைப் போக்க (தொண்டையில்) குத்தித் துன்புறுத்தாதீர்கள். நீங்கள் அவசியம் கோஷ்டத்தைப் பயன்படுத்துங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5697. ஆஸிம் இப்னு உமர் இப்னி கத்தாதா (ரஹ்) கூறினார்

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) முகன்னஉ இப்னு சினான் (ரஹ்) அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். பிறகு, நீங்கள் குருதி உறிஞ்சி எடுத்துக்கொள்ளாதவரை நான் (திரும்பிச்) செல்லமாட்டேன். ஏனெனில், இறைத்தூதர் (ஸல்) அவர்கள்அதில் நிவாரணம் உள்ளது என்று சொல்வதை கேட்டுள்ளேன் என்று கூறினார்கள்.

## தலையில் குருதி உறிஞ்சி எடுப்பது

ஹதீஸ் 5698. அப்துல்லாஹ் இப்னு புஹைனா (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மக்கா செல்லும் சாலையிலுள்ளலஹ்யீ ஜமல் எனும் இடத்தில் வைத்துத் தம் தலையின் நடுவே குருதி உறிஞ்சி எடுத்தார்கள். அப்போது அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்தார்கள்.

ஹதீஸ் 5699. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் தலையில் குருதி உறிஞ்சி எடுத்தார்கள்.

## ஒற்றைத் தலைவலி மற்றும் பொதுவான தலைவலிக்காகக் குருதி உறிஞ்சி எடுப்பது.

ஹதீஸ் 5700. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்

நபி (ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்த நிலையில் தமக்கேற்பட்ட (ஒற்றைத் தலை) வலியின் காரணத்தால் ஒரு நீர் நிலையின் அருகில் தம் தலையில் குருதி உறிஞ்சி எடுத்தார்கள். இந்த நீர்நிலைலஹ்யு ஜமல் என்றழைக்கப்பட்டு வந்தது.

ஹதீஸ் 5701. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தமக்கேற்பட்ட ஒற்றைத் தலைவலியின் காரணத்தால் தம் தலையில் குருதி உறிஞ்சி எடுத்துக்கொண்டார்கள். அப்போது அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்தார்கள்.

ஹதீஸ் 5702. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்கள் மருந்துகளில் ஏதேனும் ஒன்றில் நன்மையேதும் இருக்குமானால் தேன் அருந்துவது, அல்லது குருதி உறிஞ்சும் கருவியால் (உடம்பில்) கீறுவது, அல்லது நெருப்பால் சூடிட்டுக் கொள்வதில் தான் அது இருக்கும். (ஆயினும்,) நான் சூடிட்டுக் கொள்வதை விரும்பவில்லை.

என ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

## (நோய்த்) தொல்லையின் காரணத்தால் தலைமுடியை மழித்துக்கொள்வது.

ஹதீஸ் 5703. கஅப் இப்னு உஜ்ரா (ரலி) கூறினார்

ஹுதைபிய்யா நிகழ்ச்சியின்போது நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான் அடுப்பின் கீழே தீ மூட்டிக் கொண்டிருந்தேன். பேன்கள் என் தலையிலிருந்து உதிர்ந்துகொண்டிருந்தன. நபி (ஸல்) அவர்கள் (என்னிடம்), உங்கள் (தலையிலுள்ள) பேன்கள் உங்களைத் தொந்தரவு செய்கின்றனவா? என்று கேட்டார்கள். நான், ஆம்' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், அப்படியென்றால் தலைமழித்துக் கொண்டு (இஹ்ராமின் விதியை மீறியதற்குப் பரிகாரமாக) மூன்று நாள்கள் நோன்பு நோறுங்கள் அல்லது ஆறு பேருக்கு உணவளியுங்கள் அல்லது ஒரு தியாகப் பிராணியை அறுத்து (குர்பானி) கொடுங்கள்' என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அய்யூப்(ரஹ்) கூறினார்:இவற்றில் எதை முதலில் குறிப்பிட்டார்கள்‘ என்று எனக்குத் தெரியவில்லை.

## (மருத்துவ சிகிச்சைக்காக) சூடிட்டுக் கொள்வது அல்லது பிறருக்குச் சூடிடுவது. மேலும், சூடிட்டுக் கொள்ளாமல் இருப்பதன் சிறப்பு.

ஹதீஸ் 5704. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்கள் மருந்துகளில் ஏதேனும் ஒன்றில் நன்மை ஏதும் இருக்குமானால் குருதி உறிஞ்சும் கருவியால் (உடம்பில்) கீறுவது, அல்லது நெருப்பால் சூடிட்டுக் கொள்வதில் தான் அது இருக்கும். ஆயினும், நான் சூடிட்டுக் கொள்வதை விரும்பவில்லை.

என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5705. ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) கூறினார்

இம்ரான் இப்னு ஹு ஸைன்(ரலி)கண்ணேறு, அல்லது விஷக்கடி தவிர வேறெதற்காகவும் ஓதிப்பார்த்த(லி)ல் (சிறப்பு) கிடையாது‘ என்று கூறினார்கள்.

(அறிவிப்பாளர் ஹு ஸைன் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) கூறினார்:)

நான் இதை ஸயீத் இப்னு ஜு பைர்(ரஹ்) அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது அவர்கள் தமக்கு இப்னு அப்பாஸ்(ரலி) (பின்வருமாறு) அறிவித்தார்கள். என்று கூறினார்கள்.

(ஒரு நாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: (மிஅராஜ் எனும் விண்ணுலகப் பயணத்தின்போது) எனக்குப் பல சமுதாயத்தார் எடுத்துக் காட்டப்பட்டனர். அப்போது இறைத்தூதர்களில் ஓரிருவருடன் (அவர்களின் சமுதாயத்தாரில் பத்துக்குட்பட்ட) ஒரு சிறு கூட்டமே கடந்து செல்லலாயினர். ஓர் இறைத்தூதர் தம்முடன் ஒருவருமில்லாத நிலையில் கடந்து சென்றார். பின்னர் எனக்கு ஒரு பெரும் கூட்டம் காட்டப்பட்டது. நான்,இது எந்தச் சமுதாயம்? இது என் சமுதாயமா? என்று கேட்டேன். அப்போது,அல்ல. இது (இறைத் தூதர்) மூஸாவும் அவரின் சமுதாயமும்‘ என்று எனக்குச் சொல்லப்பட்டது. 28 அப்போதுஅடிவானத்தைப் பாருங்கள்‘ என்று என்னிடம் கூறப்பட்டது. அங்கு அடி வானத்தையே அடைந்திருந்த ஏராளமான மக்கள் திரளை பார்த்தேன். பிறகு என்னிடம்,அடிவானங்களில் இங்கும் இங்கும் பாருங்கள்‘ எனச் சொல்லப்பட்டது. அப்போது நான் அடிவானங்களை அடைத்திருந்த ஏராளமான மக்கள் திரளைக் கண்டேன். இது உங்கள் சமுதாயம். விசாரணையின்றி சொர்க்கம் செல்லும் எழுபதாயிரம் பேரும் இவர்களில் அடங்குவர்‘ என்று எனக்குச் சொல்லப்பட்டது.

(விசாரணையின்றி சொர்க்கம் செல்லும் அந்த எழுபதாயிரம் பேர் யார் என்பதை) தோழர்களுக்கு விளக்காமலேயே நபி(ஸல்) அவர்கள் (தம் வீட்டுக்குள்) நுழைந்துவிட்டார்கள். (அது தொடர்பாக) மக்கள் விவாதிக்கத் தொடங்கினார்கள். நாம் தாம் அவர்கள். (ஏனெனில்,) நாமே அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டு அவனுடைய தூதரைப் பின்பற்றினோம் அல்லது நம் பிள்ளைகள் தாம் அவர்கள். (ஏனெனில்) அவர்கள் இஸ்லாத்தில் பிறந்தவர்கள். நாமோ அறியாமைக் காலத்தில் பிறந்தோம்‘ என்று கூறினார்கள். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. எனவே, அவர்கள் புறப்பட்டு வந்து,(விசாரணையின்றி சொர்க்கம் செல்லவுள்ள) அவர்கள் யாரெனில், அவர்கள் ஓதிப்பார்க்கமாட்டார்கள் பறவைகளை வைத்து சகுனம் பார்க்க மாட்டார்கள் (நோய்க்காக) சூடிட்டுக் கொள்ளமாட்டார்கள். தம் இறைவனையே சார்ந்திருப்பார்கள்‘ என்று கூறினார்கள். அப்போது உக்காஷா இப்னு மிஹ்ஸன்(ரலி) எழுந்து,அவர்களில் நானும் ஒருவனா? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,ஆம்‘ என்று பதிலளித்தார்கள். மற்றொருவர் எழுந்து நின்று,அவர்களில் நானும் ஒருவனா? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்இவ்விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திக்கொண்டுவிட்டார்‘ என்று கூறினார்கள்.

## கண்நோய்க்காக அஞ்சனக்கல் மற்றும் அஞ்சனத்தைப் பயன்படுத்துதல்.

இது குறித்து உம்மு அ(த்)திய்யா(ரலி) வழியாக அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 5706. உம்மு ஸலமா(ரலி) கூறினார்

ஒரு பெண்ணின் கணவர் இறந்துவிட்டார். (அதற்காகஇத்தா இருக்கும்போது) அப்பெண்ணுக்குக் கண்வலி ஏற்பட்டது. அப்பெண்ணைப் பற்றி மக்கள் நபி(ஸல்) அவர்களிடம் குறிப்பிட்டு, அவளுடைய கண் பழுதாம்விடும் அபயாமிருப்பதால் அவள் (கண்ணில் சிகிச்சைக்காக) அஞ்சனம் தீட்டிக் கொள்ளலாமா? என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், (அறியாமைக் காலத்தில்) உங்களில் ஒருத்தி (தன் கணவன் இறந்தபின்)மோசமான ஆடையணிந்தவளாக தன் வீட்டில் தங்கியிருப்பாள் அல்லதுமோசமான வீட்டில் சாதாரண ஆடை அணிந்தவளாக (ஆண்டு முழுவதும்) தங்கியிருப்பாள் (ஓராண்டு கழிந்தபின் அவ்வழியாக) ஏதேனும் ஒரு நாய் கடந்து சென்றால் அதன் மீது ஒட்டகச் சாணத்தை வீசியெறிவாள். (அந்த அவலம் இப்போது இல்லை.) எனவே, அவள் நான்கு மாதம் பத்து நாள்கள் (கழியும்வரை) அஞ்சனம் இடவேண்டாம். என்று பதில் கூறினார்கள்.

## தொழுநோய்

ஹதீஸ் 5707. அல்லாஹ்வின் துதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தொற்றுநோய் என்பது கிடையாது. பறவைகளைக்கொண்டு சகுனம் பார்ப்பதும் ஆந்தையால் சகுனம் பார்ப்பதும் கிடையாது. ஸ..பர் மாதம் பீடை என்பதும் கிடையாது. சிங்கத்திடமிருந்து நீ எப்படி வெருண்டோடுவாயோ அப்படி தொழுநோயாளியிடமிருந்து வெருண்டோடு.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## ‘மன்னு கண்ணுக்கு நிவாரணம் ஆகும்.

ஹதீஸ் 5708. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சமையல் காளான்மன்னு வகையைச் சேர்ந்தது ஆகும். அதன் சாறு கண்ணுக்கு நிவாரணமாகும்.

என ஸயீத் இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

ஷு அபா இப்னு ஹஜ்ஜாஜ்(ரஹ்) கூறினார்:

இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக ஹகம் இப்னு உ(த்)தைபா(ரஹ்) எனக்கு இந்த ஹதீஸை அறிவித்தார்கள். அவர்கள் இந்த ஹதீஸை அறிவித்தபோது தான் அப்துல் மலிக் இப்னு உமைர்(ரஹ்) அவர்களிடம் நான் கேட்டிருந்த (இந்த ஹதீஸ் எனக்கு உறுதியானது.) இந்த ஹதீஸை நிராகரிக்காத நிலைக்கு வந்தேன்.

## வாயில் ஊற்றப்படும் மருந்து

ஹதீஸ் 5709, ஹதீஸ் 5710, ஹதீஸ் 5711 இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் ஆயிஷா(ரலி) அவர்களும் கூறினார்கள்

நபி(ஸல்) அவர்கள் இறந்துவிட்ட நிலையில் அவர்களை அபூ பக்ர்(ரலி) முத்தமிட்டார்கள்.

ஹதீஸ் 5712. ஆயிஷா(ரலி) கூறினார்

நாங்கள் நபி(ஸல்) அவர்கள் நோயுற்று (மயக்கமடைந்து) இருந்தபோது அவர்களின் வாய் ஓரத்தில் மருந்தூற்றினோம். உடனே அவர்கள் மருந்து ஊற்ற வேண்டாம் என்று எங்களுக்கு சைகை செய்யலானார்கள்.

“நோயாளி மருந்தை வெறுப்பது போன்றே (நபி அவர்களும் வெறுக்கிறார்கள் ஊற்றவேண்டாமெனத் தடை செய்யவில்லை)‘ என்று நாங்கள் சொல்லிக் கொண்டோம்.

அவர்கள் மயக்கத்திலிருந்து (முழுமையாகத்) தெளிந்தபோதுஎன் வாயில் மருந்து ஊற்றவேண்டாமென்று நான் உங்களைத் தடுக்கவில்லையா? என்று கேட்டார்கள். நாங்கள்,ஆம். ஆனால், நோயாளி மருந்தை வெறுப்பது போன்றுதான் (நீங்களும் வெறுக்கிறீர்கள் என நினைத்தோம்)' என்று கூறினோம். நபி(ஸல்) அவர்கள்,நான் பார்த்துகொண்டிருக்கும்போதே ஒருவர் பாக்கியில்லாமல் வீட்டிலுள்ள அனைவரின் வாயிலும் மருந்தூற்றப்பட வேண்டும். அப்பாஸ் அவர்களைத் தவிர. ஏனெனில், (வாயில் மருந்து ஊற்றும்போது) உங்களுடன் அவர் இருக்கவில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5713. உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன்(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னுடைய ஆண் குழந்தையை அழைத்துச் சென்றேன். (அவனுக்கு ஏற்பட்டிருந்த) அடிநாக்கு அழற்சியைப் போக்க (அக்கால முறைப்படி) தொண்டையில் திரியைத் திணித்து விரலால் அழுத்தியிருந்தேன். (இதைக் கண்ணுற்ற) நபி(ஸல்) அவர்கள் இந்த சிகிச்சை முறையால் உங்கள் குழந்தைகளை (அடி நாக்கைக் குத்தி) ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இந்த இந்திய (கோஷ்ட)க் குச்சியை அவசியம் பயன்படுத்துங்கள். அதில் ஏழு (நோய்களுக்கு) நிவாரணங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று (மார்புத்தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலியாகும். அடிநாக்கு அழற்சிக்காக அதை(த் தூளாக்கி எண்ணெயில் குழைத்து) மூக்கில் சொட்டு மருந்தாக இடப்படும். விலா வலிக்காக அதை வாயின் ஒரு பக்கத்தில் சொட்டு மருந்தாகக் கொடுக்கப்படும்' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் (ஏழில்) இரண்டை (மட்டும்) நமக்கு விவரித்தார்கள். (மீதி) ஐந்தை விவரிக்கவில்லை' என ஸு ஹ்ரீ(ரஹ்) கூற கேட்டேன்.

அறிவிப்பாளர் அலீ இப்னு மதீனீ(ரஹ்) கூறினார்:

சுஃப்யான்(ரஹ்), குழந்தையின் அண்ணத்தை விரலால் அழுத்துவது குறித்து விவரிக்கையில், தம் விரலை மேல்வாயின் உட்புறத்தில் நுழைத்து அழுத்திக் காட்டினார்கள். (இதுதான் நோக்கமே தவிர, மூலத்தில்இஃலாக் எனும் சொல் இடம் பெற்றிருப்பதற்காகத்) தொண்டையில் எதையும் மாட்டுவது நோக்கமாகாது.

ஹதீஸ் 5714. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கடுமையாக நோய்வாய்ப்பட்டு அவர்களுக்கு வேதனை அதிகரித்தபோது, என் வீட்டில் தங்கி சிகிச்சையும் பராமரிப்பும் பெற்றிட, தம் (மற்ற) துணைவியரிடம் அனுமதி கேட்டார்கள். அவர்களும் நபி(ஸல்) அவர்களுக்கு அனுமதியளித்தார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் தம் கால்கள் பூமியில் இழுபட, அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் மற்றொரு மனிதருக்கும் இடையே தொங்கியபடி (என்னுடைய வீட்டிற்குப்) புறப்பட்டார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உபைதுல்லாஹ்(ரஹ்) கூறினார்: நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் இச்செய்தியைத் தெரிவித்தேன். அவர்கள்,ஆயிஷா(ரலி) பெயர் குறிப்பிடாத அந்த வேறொரு மனிதர் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? என்று நான் கேட்க, நான்இல்லை (தெரியாது)' என்று சொன்னேன். அவர்கள்,அவர் அலீ(ரலி) தாம்' என்று கூறினார்கள். (தொடர்ந்து) ஆயிஷா(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் என் வீட்டிற்கு வந்து நோய் கடுமையாகிவிட்டபோதுவாய்ப் பகுதி அவிழ்க்கப்படாத ஏழு தோல் பைகளிலிருந்து (நீரை) என் மீது ஊற்றுங்கள். மக்களுக்கு நான் இறுதியுபதேசம் செய்யக்கூடும்' என்று கூறினார்கள். நாங்கள் நபி(ஸல்) அவர்களின் (இன்னொரு) துணைவியாரான ஹஃப்ஸா(ரலி) அவர்களுக்குச் சொந்தமான துணி அலசும் பாத்திரத்தில் அவர்களை அமரச் செய்து, அவர்களின் மீது அந்தத் தோல் பைகளிலிருந்து (நீரை) ஊற்றலானோம். அவர்கள் இறுதியில் எங்களை நோக்கி,(சொன்னபடி) செய்துவிட்டீர்கள்

போதும்)‘ என்று சைகை காட்டலானார்கள். பிறகு மக்களை நோக்கி (பள்ளிவாசலுக்குப்) புறப்பட்டுச் சென்று மக்களுக்கு தொழுகை நடத்தி உரையும் நிகழ்த்தினார்கள்.

## அடிநாக்கு அழற்சி

ஹதீஸ் 5715. உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்

குஸைமா குலத்துஅசத் கிளையைச் சேர்ந்த உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் அல் அசதிய்யா(ரலி), நபி(ஸல்) அவர்களிடம் நம்பிக்கைப் பிரமாணம் செய்திருந்த ஆரம்பக் கால முஹாஜிர் (நாடு துறந்த) பெண்களில் ஒருவராவார். அவர் உக்காஷா இப்னு மிஹ்ஸான்(ரலி) அவர்களின் சகோதரி ஆவார். அவர் கூறினார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னுடைய ஆண் குழந்தையைக் கொண்டு சென்றேன். (அவனுக்கு ஏற்பட்டிருந்த) அடிநாக்கு அழற்சியைப் போக்க (அக்கால முறைப்படி) தொண்டையில் திரியைத் திணித்து விரலால் அழுத்தியிருந்தேன். (இதைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள்இந்த சிகிச்சை முறையால் உங்கள் குழந்தைகளை (அடிநாக்கைக் குத்தி) ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இந்த இந்திய (கோஷ்ட)க் குச்சியை அவசியம் பயன்படுத்துங்கள். ஏனெனில், அதில் ஏழு (நோய்களுக்கு) நிவாரணங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று (மார்புத் தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலியாகும்‘ என்று கூறினார்கள்.

‘குஸ்த் எனும் கோஷ்டமேஇந்தியக் குச்சி எனப்படுகிறது.

## வயிற்றுப் போக்கு மருந்து

ஹதீஸ் 5716, அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து,என் சகோரருக்குத் தொடர்ந்து வயிற்றுப் போக்கு இருந்து வருகிறது‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், அவருக்குத் தேன் ஊட்டுங்கள்‘ என்று கூறினார்கள். அவ்வாறே அவரும் தம் சகோதரருக்குத் தேன் ஊட்டினார். பிறகு அவர் வந்து,என் சகோதரருக்குத் தேன் ஊட்டினேன் ஆனால், அது அவருக்கு வயிற்றுப் போக்கை அதிகமாக்கவே செய்தது எனக் கூறினார். நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ் உண்மை சொன்னான். உன் சகோதரரின் வயிறுதான் பொய் பேசியது‘ என்று பதில் கூறினார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## ‘ஸஃபர் எனும் வயிற்று நோய் ஒரு தொற்று நோயன்று.

ஹதீஸ் 5717. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்தொற்று நோய் கிடையாது.ஸஃபர் தொற்று நோயன்று ஆந்தையால் சகுனம் பார்ப்பதும் கிடையாது‘ என்று கூறினார்கள்.

அப்போது கிராமவாசியொருவர்,இறைத்தூதர் அவர்களே! (பாலை) மணலில் மான்களைப் போன்று (ஆரோக்கியத்துடன் துள்ளித் திரியும்) என் ஒட்டகங்களிடம் சிரங்கு பிடித்த ஒட்டகம் வந்து அவற்றிற்கிடையே கலந்து அவற்றையும் சிரங்கு பிடித்தவையாக ஆக்கிவிடுகின்றனவே! அவற்றின் நிலையென்ன (தொற்று நோயில்லையா)? என்று கேட்டார்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால் முதல் (முதலில் சிரங்கு பிடித்த) ஒட்டகத்திற்கு (அந்த நோயைத்) தொற்றச் செய்தது யார்? என்று திருப்பிக் கேட்டார்கள்.

## (மார்புத் தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலி.

ஹதீஸ் 5718. உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) கூறினார்

உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன்(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் நம்பிக்கைப் பிரமாணம் செய்திருந்த ஆரம்பக் கால முஹாஜிர் (நாடு துறந்த) பெண்களில் ஒருவராவார். இவர் உக்காஷா இப்னு மிஹ்ஸன்(ரலி) அவர்களின் சகோதரி ஆவார். அவர் கூறினார்:

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னுடைய ஆண் குழந்தையைக் கொண்டு சென்றேன். (அவனுக்கு ஏற்பட்டிருந்த) அடிநாக்கு அழற்சியைப் போக்க (அக்கால முறைப்படி) தொண்டையில் திரியைத் திணித்து விரலால் அழுத்தியிருந்தேன். (இதைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள்அல்லாஹ்வை அஞ்சுங்கள். இந்த சிகிச்சை முறையால் உங்கள் குழந்தைகளை (அடி நாக்கைக் குத்தி) ஏன் துன்புறுத்துகிறீர்கள்? இந்த இந்திய (கோஷ்ட)க் குச்சியை அவசியம் பயன்படுத்துங்கள். ஏனெனில், அதில் ஏழு (நோய்களுக்கு) நிவாரணங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று (மார்புத் தசை வாதத்தால் ஏற்படும்) விலா வலியாகும்' என்று கூறினார்கள். இந்தியக் குச்சி எனப்துகுஸ்த் எனும் செய்கோஷ்டத்தைக் குறிக்கிறது.

ஹதீஸ் 5719, ஹதீஸ் 5720, ஹதீஸ் 5721 ஹம்மாத் இப்னு ஸைத்(ரஹ்) கூறினார்

அய்யூப்(ரஹ்) அவர்களுக்கு அபூ கிலாபா(ரஹ்) அவர்களின் (ஹதீஸ் தொகுப்பு) நூல்கள் வாசித்துக் காட்டப்பட்டன. அவற்றில் அய்யூப்(ரஹ்) (அபூ கிலாபா(ரஹ்) அவர்களிடமிருந்து) அறிவித்த ஹதீஸ்களும் இருந்தன. அய்யூப்(ரஹ்) அவர்களுக்கு (முன்பே) வாசித்துக் காட்டப்பட்ட ஹதீஸ்களும் இருந்தன. அந்த நூலில் (பின்வரும்) இந்த ஹதீஸு ம் இடம் பெற்றிருந்தது.

அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

அபூ தல்ஹா(ரலி) அவர்களும் அனஸ் இப்னு நள்ர்(ரலி) அவர்களும் எனக்கு (மார்புத் தசை வாதத்தால் ஏற்பட்ட விலா வலிக்காக) சூடிட்டார்கள். அபூ தல்ஹா(ரலி) தம் கையால் எனக்குச் சூடிட்டார்கள்.

அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு வீட்டாருக்கு விஷக் கடிக்காகவும், காது வலிக்காகவும் ஓதிப்பார்க்க அனுமதியளித்தார்கள்.

அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

(மார்புத் தசை வாதத்தால் ஏற்பட்ட) விலா வலிக்காக எனக்குச் சூடிடப்பட்டது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உயிரோடியிருந்தார்கள். அந்த நேரத்தில் அபூ தல்ஹா(ரலி), அனஸ் இப்னு நள்ர்(ரலி), ஸைத் இப்னு ஸாபித்(ரலி) ஆகியோர் என்னுடன் இருந்தனர். அபூ தல்ஹா(ரலி)தாம் எனக்குச் சூடிட்டார்கள்.

## இரத்தம் வழிவகை நிறுத்த பாயை எரி(த்து அதன் சாம்பலை வை)ப்பது.

ஹதீஸ் 5722. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) கூறினார்

(உஹுது துப் போரில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தலைக் கவசம் அவர்களின் தலையில் வைத்தே உடை(த்து நொறு)க்கப்பட்டது. அவர்களின் முகத்தில் இரத்தம் வழிந்தது. அவர்களின் (முன் வாய்ப்பற்களில் கீழ் வரிசையில் வலப்புற)பல் ஒன்று உடைக்கப்பட்டது. அப்போது அலீ(ரலி) தம் கேடயத்தில் தண்ணீர் எடுத்து வந்த போய்க் கொண்டு இருந்தார்கள். ஃபாத்திமா(ரலி) நபி(ஸல்) அவர்களின் முகத்திலிருந்த இரத்தத்தைக் கழுவிவிட்டுக் கொண்டிருந்தார்கள். இரத்தம் தண்ணீரையும் மீறி அதிகமாகக் கொட்டுவதைக் கண்ட ஃபாத்திமா(ரலி) பாய் ஒன்றை எடுத்து அதை எரித்து (அது சாம்பலானதும்) அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காயத்தின் மீது அழுத்தி வைத்தார்கள். உடனே இரத்தம் (வழிவது) நின்றுவிட்டது.

## காய்ச்சல் நரகத்தின் வெப்பக் காற்றினால் உண்டாவதாகும்.

ஹதீஸ் 5723. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

காய்ச்சல் நரகத்தின் வெப்பக் காற்றினால் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரால் (குளிர்வித்துத்) தணியுங்கள்.

அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) கூறினார்கள்.

இந்த ஹதீஸை அறிவித்த அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) (இறைவா!) எங்களைவிட்டு நரகத்தின் வேதனையை நீக்குவாயாக' என்று பிரார்த்தித்துவந்தார்கள்.

ஹதீஸ் 5724. ஃபாத்திமா பின்த் முன்திர்(ரஹ்) கூறினார்

அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) காய்ச்சலால் பீடிக்கப்பட்ட பெண் தம்மிடம் கொண்டு வரப்பட்டால் அவளுக்காக பிரார்த்தனை புரிந்துவிட்டு தண்ணீரை எடுத்து அவளுடைய ஆடையின் உட்பகுதியில் தெளிப்பார்கள். மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் காய்ச்சலைத் தண்ணீரால் தணிக்கும்படி எங்களுக்குக் கட்டளையிட்டுவந்தார்கள்' என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 5725. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

காய்ச்சல் நரகத்தின் வெப்பக் காற்றினால் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரால் (குளிர்வித்துத்) தணியுங்கள்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5726. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

காய்ச்சல் நரகத்தின் வெப்பக் காற்றினால் உண்டாகிறது. எனவே, அதைத் தண்ணீரால் தணியுங்கள்.

என ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அறிவித்தார்.

## தம(து உடல் நலத்து)க்கு ஒவ்வாத இடத்திலிருந்து ஒருவர் வெளியேறிவிடுவது.

ஹதீஸ் 5727. அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்

'உக்ல் மற்றும்உரைனா குலங்களைச் சேர்ந்த சிலர் (ஹிஜ்ரி ஆறாமாண்டு) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, தாம் இஸ்லாத்தை ஏற்பதாகத் தெரிவித்தனர். மேலும், அல்லாஹ்வின் நபியே! நாங்கள் பால் தரும் கால்நடைகள் வைத்திருப்பவர்கள் நாங்கள் விளைநிலங்கள் உடையவர்கள் அல்லர்' என்று கூறி மதீனா(வின் தட்ப வெப்பம்) தமக்கு ஒத்துக் கொள்ளவில்லை எனக் கருதினர்.

எனவே, அவர்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பத்துக்குட்பட்ட) ஒட்டகங்களையும் ஒரு மேய்ப்பரையும் அவர்களு(டைய உபயோகத்து)க்காக வழங்கிடும்படி உத்தரவிட்டார்கள். மேலும், அவர்கள் குணமடைவதற்காக (மதீனாவுக்கு) வெளியே சென்று (தங்கி) அந்த ஒட்டகங்களின் பாலையும் சிறுநீரையும் குடிக்கும்படி பணித்தார்கள். அவ்வாறே அவர்கள் சென்றனர். (அவற்றின் பாலை அருந்தி நிவாரணமும் பெற்றனர்.) இறுதியில் அவர்கள்அல்ஹர்ரா எனும் இடத்தின் பக்கம் சென்றபோது இஸ்லாத்திலிருந்து விலகி இறைமறுப்பாளர்களாக (மதம்) மாறிவிட்டனர். அத்துடன் (நில்லாது), இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அனுப்பிவைத்த மேய்ப்பாளரைக் கொன்றுவிட்டு, ஒட்டகங்களைத் தம்முடன் ஓட்டிச் சென்றுவிட்டனர். நபி(ஸல்) அவர்களுக்கு இந்த விஷயம் எட்டியதும் (கொடுஞ் செயல் புரிந்த) அவர்களைப் பின்தொடர்ந்து (அவர்களைத் தேடிப் பிடித்து வர) ஆள் அனுப்பினார்கள். அவர்களைத் தண்டிக்கும் படி உத்தரவிட அவ்வாறே (மக்கள்) அவர்களின் கண்களில் சூடிட்டு, அவர்களின் கை(கால்)களைத் துண்டித்துவிட்டார்கள். அவர்கள்அல்ஹர்ரா (எனும் பாறைகள் நிறைந்த) பகுதியின் ஒரு மூலையில் அப்படியே விடப்பட்டு அதே நிலையில் இறந்துபோய்விட்டார்கள்.

## கொள்ளைநோய் பற்றிய குறிப்பு

ஹதீஸ் 5728. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் ஊரில் கொள்ளைநோய் இருப்பதாக நீங்கள் செவியுற்றால் அங்கு நீங்கள் செல்லாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும்போது அங்கு கொள்ளைநோய் ஏற்பட்டால் அந்த ஊரிலிருந்து வெளியேறாதீர்கள்.

“இதை உஸாமா இப்னு ஸைத்(ரலி) (என் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம் அறிவிக்க கேட்டேன்‘ என்று இப்ராஹீம் இப்னு ஸஅத்(ரஹ்) கூறினார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹபீப் இப்னு அபீ ஸாபித்(ரஹ்) கூறினார்:

நான் இப்ராஹீம் இப்னு அத்(ரஹ்) அவர்களிடம், உஸாமா(ரலி) (உங்கள் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம் இதை அறிவித்தபோது நீங்கள் கேட்டீர்களா? ஸஅத்(ரலி) அதை மறுக்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம் (ஸஅத்(ரலி) அதை மறுக்கவில்லை)‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5729. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

உமர் இப்னு கத்தாப்(ரலி) ஷாம் நாட்டை நோக்கி (மக்களின் நிலையை ஆராய்வதற்காக)ப் புறப்பட்டார்கள். சர்.்க் எனும் இடத்தை அடைந்தபோது (மாகாண) படைத் தளபதிகளான அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்(ரலி) அவர்களும் அவர்களின் நண்பர்களும் உமர்(ரலி) அவர்களைச் சந்தித்து ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியுள்ளது என்று தெரிவித்தார்கள். அதற்கு உமர்(ரலி)ஆரம்பக் கால முஹாஜிர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்‘ என்று சொல்ல அவர்களை நான் (உமர்(ரலி) அவர்களிடம்) அழைத்து வந்தேன். அவர்களிடம் ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியுள்ளது என்று தெரிவித்து (அங்கு போகலாமா? மதீனாவுக்கே திரும்பிச் சென்றுவிடலாமா? என்று) ஆலோசனை கேட்டார்கள். இது தொடர்பாக முஹாஜிர்களிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது.

அவர்களில் சிலர், நாம் ஒரு நோக்கத்திற்காகப் புறப்பட்டுவிட்டோம். அதிலிருந்து பின்வாங்குவதை நாங்கள் பொறுத்தமாகக் கருதவில்லை‘ என்று கூறினார்கள். வேறு சிலர், உங்களுடன் மற்ற மக்களும் நபித்தோழர்களும் உள்ளனர். அவர்களையெல்லாம் இந்தக் கொள்ளைநோயில் தள்ளி விடுவதை நாங்கள் சரியென்று கருதவில்லை‘ என்று கூறினார்கள்.

அப்போது உமர்(ரலி), நீங்கள் போகலாம்‘ என்று சொல்லிவிட்டுப்பிறகு, என்னிடம் (மதீனாவாசிகளான) அன்சாரிகளை அழைத்து வந்தார்கள்‘ என்று சொல்ல நான் அவர்களை அழைத்து வந்தேன். அவர்களிடம் உமர்(ரலி) ஆலோசனை கலந்தார்கள். அவர்களும் முஹாஜிர்களின் வழியிலேயே சென்று அவர்களைப் போன்றே கருத்து வேறுபட்டார்கள்.

அப்போதும் உமர்(ரலி), நீங்கள் போகலாம்‘ என்று சொல்லிவிட்டுப் பிறகு, மக்கா வெற்றிகொள்ளப்பட்ட ஆண்டில் (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்து வந்த குறைஷிப் பெரியவர்களில் இங்கு உள்ளவர்களை என்னிடம் அழைத்துவாருங்கள்‘ என்று சொல்ல நான் அவர்களை அழைத்து வந்தேன். அவர்களில் எந்த இருவருக்கிடையேயும் கருத்து வேறுபாடு எழவில்லை. அவர்கள் (அனைவரும்), மக்களுடன் நீங்கள் திரும்பி விட வேண்டும் அவர்களை இந்தக் கொள்ளைநோயில் தள்ளிவிடக் கூடாது எனக் கருதுகிறோம்‘ என்றனர்.

எனவே, உமர்(ரலி) மக்களிடையேநான் காலையில் (என்) வாகனத்தில் (மதீனா) புறப்படவிருக்கிறேன் நீங்களும் வாகனத்தில் புறப்படுங்கள்‘ என்று அறிவித்தார்கள். அப்போது அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்(ரலி), அல்லாஹ்வின் விதியிலிருந்து வெருண்டோடுவதற்காகவா (ஊர் திரும்புகிறீர்கள்)? என்று கேட்க, உமர்(ரலி), அபூ உபைதா! இதை உங்களைத் தவிர வேறேவரேனும் சொல்லியிருந்தால் நான் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டேன். ஆம் நாம் அல்லாஹ்வின் ஒரு விதியிலிருந்து இன்னொரு விதியின் பக்கமே வெருண்டோடுகிறோம்.

உங்களிடம் ஓர் ஒட்டகம் இருந்து, அது ஒரு பக்கம் செழிப்பானதாகவும் மறுபக்கம் வறண்டதாகவும் உள்ள இரண்டு கரைகள் கொண்ட ஒரு பள்ளத்தாக்கில் இறங்கிவிட்டால், செழிப்பான கரையில் நீங்கள் அதை மேய்த்தாலும் அல்லாஹ்வின் விதிப்படி தான் அதை நீங்கள் மேய்க்கிறீர்கள். வறண்ட கரையில் அதை நீங்கள் மேய்த்தாலும் அல்லாஹ்வின் விதிப்படிதான் நீங்கள் மேய்க்கிறீர்கள், அல்லவா? என்று கேட்டார்கள்.

அப்போது தம் தேவையொன்றுக்காக வெளியே சென்றிருந்த அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) (அங்கு) வந்தார்கள். அவர்கள்,இது தொடர்பாக என்னிடம் ஒரு விளக்கம் உள்ளது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,ஓர் ஊரில் கொள்ளை நோய் பரவியிருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால் அந்த ஊருக்கு நீங்களாகச் செல்லாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும்போது அங்கு கொள்ளைநோய் பரவினால் அதிலிருந்து வெருண்டோடுவதற்காக (அவ்வூரைவிட்டு) வெளியேறாதீர்கள் என்று சொல்ல கேட்டேன்' என்று கூறினார்கள்.

உடனே உமர்(ரலி), (தம் முடிவு நபி(ஸல்) அவர்களின் வழி காட்டுதலுக்கேற்பவே அமைந்திடச் செய்ததற்காக) அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டுத் திரும்பிச் சென்றார்கள்.

ஹதீஸ் 5730. அப்துல்லாஹ் இப்னு ஆமிர்(ரலி) கூறினார்

உமர்(ரலி) ஷாம் நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். சர்ஃக் எனுமிடத்தை அவர்கள் அடைந்தபோது ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக அவர்களுக்குச் செய்தி எட்டியது. அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), ஓர் ஊரில் கொள்ளை நோய் பரவினால் அதிலிருந்து வெருண்டோடுவதற்காக (அவ்வூரைவிட்டு) வெளியேறாதீர்கள் என்று சொல்ல கேட்டேன்' என்று கூறினார்கள்.

உடனே உமர்(ரலி), (தம் முடிவு நபி(ஸல்) அவர்களின் வழி காட்டுதலுக்கேற்பவே அமைந்திடச் செய்ததற்காக) அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டுத் திரும்பிச் சென்றார்கள்.

ஹதீஸ் 5730. அப்துல்லாஹ் இப்னு ஆமிர்(ரலி) கூறினார்

உமர்(ரலி) ஷாம் நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். சர்ஃக் எனுமிடத்தை அவர்கள் அடைந்தபோது ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக அவர்களுக்குச் செய்தி எட்டியது. அப்போது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி),ஓர் ஊரில் கொள்ளை நோய் பரவியிருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால் அங்கு நீங்களாகப் போகாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும்போது அங்கு கொள்ளைநோய் பரவிவிட்டால் அதிலிருந்து வெருண்டோடுவதற்காக (அவ்வூரைவிட்டு) நீங்கள் வெளியேறாதீர்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என உமர்(ரலி) அவர்களிடம் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 5731. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மதீனாவில் மஸீஹ் (தஜ்ஜால்) நுழைய மாட்டான் கொள்ளைநோயும் நுழையாது.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5732. ஹஃப்ஸா பின்த் சீரின்(ரஹ்) கூறினார்

அனஸ் இப்னு மாலிக்(ரலி) என்னிடம்,(உன் சகோதரரான) யஹ்யா இப்னு சீரின் எதனால் இறந்தார்? என்று கேட்டார்கள். நான்,கொள்ளைநோயால் இறந்தார்' என்று பதிலளித்தேன். அவர்கள்,கொள்ளைநோய் (மரணம்), ஒவ்வொரு முஸ்லிமுக்கும் வீரமரணமாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 5733. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வயிற்றுப் போக்கால் இறப்பவர் உயிர்த் தியாகி (ஷஹீத்) ஆவார் கொள்ளை நோயால் இறப்பவரும் உயிர்த்தியாகி ஆவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கொள்ளைநோயின்போது பொறுமை காப்பவருக்குக் கிடைக்கும் நன்மை.

ஹதீஸ் 5734. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) கூறினார்

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொள்ளைநோய் குறித்துக் கேட்டேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்: அதுதான் நாடியவர்களின் மீது அல்லாஹ் அனுப்பும் வேதனையாக இருந்தது. (ஆனால், இப்போது) அதை இறைநம்பிக்கையாளர்களுக்கு அல்லாஹ் கருணையாக ஆக்கிவிட்டான். எனவே, (இறைவனின்) அடியார் ஒருவர் கொள்ளைநோய் பரவும்போது தமக்கு அல்லாஹ் எழுதிய விதிப்படியே அல்லாமல் எந்த நோயும் தம்மைத் தீண்டாது என உறுதி பூண்டவராகத் தம் ஊரிலேயே பொறுமையுடன் (நிலை குலையாமல்) இருப்பாராயின் அவருக்கு உயிர்த் தியாகிக்குக் கிடைக்கும் அதைப் போன்ற நன்மை (மறுமையில்) கிடைக்கும்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## (பொதுவாக) குர்ஆன், (குறிப்பாக) பாதுகாப்புக் கோரும் அத்தியாயங்களால் ஓதிப்பார்ப்பது.

ஹதீஸ் 5735. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள், தாம் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது (குர்ஆனில் உள்ள) பாதுகாப்புக் கோரும் (இறுதி மூன்று) அத்தியாயங்களை ஓதித் தம் மீதே ஊதிக்கொள்வார்கள். அவர்களுக்கு நோய் கடுமையானபோது நானே அவற்றை ஓதி அவர்களின் மீது ஊதிக்கொண்டும் அவர்களின் கையாலேயே (அவர்களின் மீது) தடவியபடியும் இருந்தேன். அவர்களின் சுரத்தின் சுபிட்சம் (பரக்கத்) கருதி இவ்வாறு செய்தேன்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) மஅமர் இப்னு ராஷித்(ரஹ்) கூறினார்:

நான் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்கள் எப்படி (ஓதி) ஊதுவார்கள்? என்று கேட்டேன். அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் தம் இருகரங்களின் மீதும் ஊதிப் பிறகு அவற்றால் தம் முகத்தில் தடவிவந்தார்கள்' என்று பதிலளித்தார்கள்.

## 'அல்ஃபாத்திஹா அத்தியாயத்தைக் கொண்டு ஓதிப்பார்ப்பது.

இது பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்துள்ளதாகக் கூறப்படுகிறது.

ஹதீஸ் 5736. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களின் தோழர்களில் சிலர் (ஒரு பயணத்தின் போது) ஓர் அரபுக் குலத்தாரிடம் சென்றார்கள். அவர்களுக்கு அக்குலத்தார் விருந்தளிக்க முன்வரவில்லை. இந்நிலையில் அக்குலத்தாரின் தலைவனுக்குத் தேள் கொட்டிவிட்டது. அப்போது அக்குலத்தார் (நபித் தோழர்களிடம் வந்து)உங்களிடம் (இதற்கு) மருந்து ஏதும் உள்ளதா? அல்லது ஓதிப்பார்ப்பவர் எவரும் இருக்கிறாரா? என்று கேட்டனர். அதற்கு நபித்தோழர்கள்,நீங்கள் எங்களுக்கு விருந்தளிக்க முன் வரவில்லை. எனவே, நீங்கள் எங்களுக்கு (ஒரு) குறிப்பிட்ட கூலியைத் தந்தாலே தவிர (வெறுமனே) உங்களுக்கு நாங்கள் ஓதிப் பார்க்கமாட்டோம்' என்று கூறினர்.

உடனே, நபித்தோழர்களுக்காக அக்குலத்தார் (முப்பது ஆடுகள் கொண்ட) ஓர் ஆட்டு மந்தையைக் கூலியாக நிர்ணயித்தார்கள். நபித்தோழர்களில் ஒருவர் (எழுந்து சென்று)குர்ஆனின் அன்னை எனப்படும்அல்ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதித் தம் எச்சிலைக் கூட்டி (கடிபட்ட இடத்தில்) உமிழ்ந்தார். உடனே அவர் வலி நீங்கி குணமடைந்தார். (பேசியபடி) அவர்கள் ஆடுகளைக் கொண்டுவந்(து கொடுத்)தனர். நபித்தோழர்கள்,நபி(ஸல்) அவர்களிடம் (அனுமதி)

கேட்காதவரை இதை நாம் எடுத்துக் கொள்ளக்கூடாது' என்று (தமக்குள்) பேசிக்கொண்டு அவ்வாறே நபி(ஸல்) அவர்களிடம் (வந்து அனுமதி) கேட்டனர். நபி(ஸல்) அவர்கள் சிரித்துவிட்டுஅல்ஃபாத்திஹா அத்தியாயம் ஓதிப்பார்க்கத் தகுந்தது என்று உமக்கு எப்படித் தெரியும்? அந்த ஆடுகளை எடுத்துக் கொள்ளுங்கள் எனக்கும் அதில் ஒரு பங்கு கொடுங்கள்' என்று கூறினார்கள்.

## ஓதிப் பார்ப்பதற்காக ஆட்டு மந்தையை (ஊதியமாகத் தரும்படி) நிபந்தனையிடுவது.

ஹதீஸ் 5737. இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

(ஒரு பயணத்தின்போது) நபித்தோழர்களில் சிலர் ஒரு நீர் நிலையைக் கடந்து சென்றார்கள். அங்கு தங்கியிருந்த மக்களிடையே (தேளின்) விஷக்கடிக்கு ஆளான ஒருவர் இருந்தார். அப்போது அந்த நீர் நிலையில் தங்கியிருந்தவர்களில் ஒருவர் நபித்தோழர்களிடம் வந்து,உங்களிடையே ஓதிப் பார்ப்பவர் எவரேனும் இருக்கிறாரா? இந்த நீர் நிலையில் தங்கியிருப்பவர்க(ளான எங்க)ளிடையே (தேளின்) விஷக்கடிக்கு ஆளான ஒருவர் இருக்கிறார்' என்று கூறினார். உடனே நபித்தோழர்களில் ஒருவர் சென்று குர்ஆனின்அல்ஃபாத்திஹா அத்தியாயத்தைச் சில ஆடுகளை கூலியாகத் தரவேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் ஓதினார். உடனே விஷக்கடிக்கு ஆளானவர் குணமடைந்தார். ஓதிப்பார்த்தவர் அந்த ஆடுகளைத் தம் நண்பர்களிடம் கொண்டு வந்தார். அவர்கள் அதை (ஓதிப் பார்த்ததற்காகக் கூலி பெற்றதை) வெறுத்தார்கள். மேலும்,அல்லாஹ்வின் வேதத்திற்காக நீர் கூலி வாங்கினீர்? என்று கேட்டார்கள். இறுதியில் மதீனா சென்று,இறைத்தூதர் அவர்களே! இவர் அல்லாஹ்வின் வேதத்தை ஓதியதற்குக் கூலி வாங்கிக்கொண்டார்' என்று கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நீங்கள் ஊதியம் பெற்றிட மிகவும் தகுதி வாய்ந்தது அல்லாஹ்வின் வேதமேயாகும்' என்று கூறினார்கள்.

## கண்ணேறுக்கு ஓதிப்பார்ப்பது

ஹதீஸ் 5738. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கண்ணேறுவி(ன் தீயவிளைவி)லிருந்து விடுபட ஓதிப்பார்த்துக் கொள்ளும்படிகட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 5739. உம்மு ஸலமா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் என் வீட்டில் ஒரு சிறுமியைப் பார்த்தார்கள். அவளுடைய முகத்தில் கருஞ்சிவப்பான படர்தாமரை ஒன்று இருந்தது. நபி(ஸல்) அவர்கள்,இவளுக்கு ஓதிப்பாருங்கள். ஏனெனில், இவள் மீது கண்ணேறுபட்டிருக்கிறது' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஸு பைதி(ரஹ்) அவர்களிடமிருந்தும் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக இதே ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

## கண்ணேறு உண்மையே

ஹதீஸ் 5740. அபூ ஹு ரைரா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள்,கண்ணேறு (ஏற்படுவது) உண்மையே' என்று கூறினார்கள். மேலும், பச்சைகுத்துவதைத் தடை செய்தார்கள்.

## பாம்புக்கடி மற்றும் தேள் கடிக்கு ஓதிப் பார்ப்பது.

ஹதீஸ் 5741. அஸ்வத் இப்னு யஸீத் அந்நகஈ(ரஹ்) கூறினார்

ஆயிஷா(ரலி) அவர்களிடம், விஷக் கடிக்கு ஓதிப்பார்ப்பது குறித்துக் கேட்டேன். அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் ஒவ்வொரு விஷ உயிரினத்தின் கடியிலிருந்தும் (நிவாரணம் பெற்றிட) ஓதிப்பார்ப்பதற்கு அனுமதியளித்தார்கள்' என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் ஓதிப்பார்த்தது

ஹதீஸ் 5742 அப்துல் அஸீஸ் இப்னு ஸு ஹைப்(ரஹ்) கூறினார்

நானும் ஸாபித் இப்னு அஸ்லம் அல்புனானீ(ரஹ்) அவர்களும் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் சென்றோம். ஸாபித்(ரஹ்)அபூ ஹம்ஸாவே! நான் நோய் வாய்ப்பட்டுள்ளேன்' என்று சொல்ல, அனஸ்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எதனால் ஓதிப்பார்த்தார்களோ அதனால் உங்களுக்கும் நான் ஓதிப் பார்க்கட்டுமா? என்று கேட்டார்கள். ஸாபித்(ரஹ்),சரி (அவ்வாறே ஓதிப்பாருங்கள்)' என்று சொல்ல, அனஸ்(ரலி),அல்லாஹும்ம ரப்பன்னாஸ்! முத்ஹிபல் ப∴ஸி, இஷ்∴பி அன்த்தஷ் ஷா∴பீ, லா ஷா∴பிய இல்லா அன்த்த, ஷி∴பா அன்லா யு∴காதிரு சகமன் என்று கூறி ஓதிப் பார்த்தார்கள். (பொருள்: இறைவா! மக்களை இரட்சிப்பவனே! துன்பத்தைப் போக்குபவனே! குணமளிப்பாயாக! நீயே குணமளிப்பவன். உன்னைத் தவிர குணமளிப்பவர் வேறு எவருமில்லை. அறவே நோய் இல்லாதவாறு குணமளிப்பாயாக.)

ஹதீஸ் 5743. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியார் ஒருவருக்காக (நோயிலிருந்து) பாதுகாப்புக் கோரிவந்தார்கள். தம் வலக் கரத்தால் (வலியுண்டான இடத்தைப் பரிவுடன்) வருடிக் கொடுத்து,அல்லாஹும்ம ரப்பன்னாஸ்! அத்ஹிபில் ப∴ஸ், வஷ்∴பிஹி. வ அன்த்தஷ் ஷா∴பி லா ஷி∴பாஅ இல்லா ஷி∴பாஉக. ஷி∴பாஅன் லா யு∴காதிரு சகமன்' என்று பிரார்த்தித்தார்கள். (பொருள்: இறைவா! மக்களை இரட்சிப்பவனே! துன்பத்தைப் போக்கி இவருக்குக் குணமளித்திடுவாயாக! நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணமில்லை. நோய் அறவே இல்லாதவாறு குணமளிப்பாயாக!)

இதைப் போன்றே ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5744. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இம்ஸஹில் ப∴ஸ், ரப்பன்னாஸ்! பியதிகஷ் ஷி∴பாஉ. லா காஷி∴ப லஹு இல்லா அன்த்த' என்று கூறி ஓதிப்பார்த்து வந்தார்கள். (பொருள்: மக்களை இரட்சிப்பவனே! துன்பத்தைத் துடைப்பாயாக! நிவாரணம் உன் கரத்தில்தான் உள்ளது. உன்னைத் தவிர துன்பத்தை நீக்குபவர் வேறு எவரும் இல்லை.)

ஹதீஸ் 5745. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் நோயாளிக்காக,பிஸ்மில்லாஹி துர்பத்து அர்ளினா பிரீகத்தி பஅளினா யுஷ்∴பா சகீமுனா பிஇத்னி ரப்பினா' என்று கூறுவார்கள். (பொருள்: அல்லாஹ்வின் பெயரால்... எங்களில் சிலரின் உமிழ் நீரோடு எம்முடைய இந்த பூமியின் மண் (இணைந்தால் அது) எங்கள் இறைவனின் ஆணையின்பேரில் எங்களில் நோயுற்று இருப்பவரைக் குணப்படுத்தும்.)72

ஹதீஸ் 5746. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஓதிப்பார்க்கும்போதுபிஸ்மில்லாஹி. துர்பத்து அர்ளினா வரீகத்து பஅளினா யுஷ்∴பா சகீமுனா பிஇத்னி ரப்பினா' என்று கூறுவார்கள். (பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயரால்... எங்கள் பூமியின் மண்ணும் எங்களில் சிலரின் உமிழ் நீரும் (கலந்தால்) எங்கள் இறைவனின் ஆணையின் பேரில் எங்களில் உள்ள நோயாளியைக் குணப்படுத்தும்.)

## ஓதிப்பார்க்கும்போது வாயால் ஊதுவது

ஹதீஸ் 5747. அபூ ஸலமா(ரஹ்) கூறினார்

"(நல்ல) கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். (கெட்ட) கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். எனவே, நீங்கள் வெறுக்கிற ஒரு விஷயத்தைக் (கனவில்) கண்டால் கண் விழிக்கும்போது மூன்று முறை (இடப் பக்கமாகத்) துப்பி, அதன் தீங்கிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரினால் அது அவருக்கு தீங்கிழைக்காது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ கத்தாதா(ரலி) சொல்ல செவியுற்றேன். இந்த ஹதீஸை நான் கேட்(டு அறிந்துவிட்)ட காரணத்தால் மலையை விடச் சுமையான ஒரு கனவை நான் கண்டாலும் கூட அதைப் பொருட்படுத்துவதில்லை.

ஹதீஸ் 5748. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் படுக்கைக்குச் சென்றால் குல்ஹுவல்லாஹு அஹத், குல்அஊது பிரப்பில் ஃபலக், குல் அஊது பிரப்பின்னாஸ் ஆகிய பாதுகாப்புக் கோரும் (112, 113, 114) அத்தியாயங்கள் மூன்றையும் ஓதித் தம் உள்ளங்கைகளில் ஊதி அவற்றால் தம் முகத்தையும், தம் இரண்டு கரங்கள் உடலில் எங்கெல்லாம் படுமோ அந்த இடங்களையும் தடவிக் கொள்வார்கள். அவர்கள் நோயுற்றபோது நான் அவர்களுக்கு அதைச் செய்து விடும்படி என்னைப் பணிப்பார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) யூனுஸ்(ரஹ்) கூறினார்:

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) தம் படுக்கைக்குச் செல்லும்போது இவ்வாறு செய்வதை நான் பார்த்து வந்தேன்.

ஹதீஸ் 5749 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் ஒரு குழுவினர் பயணமொன்றை மேற்கொண்டார்கள். அவர்கள் பயணம் செய்து (வழியில்) அரபுக் குலங்களில் ஒரு குலத்தார் (தங்கியிருந்த இடத்துக்கு) அருகில் தங்கினார்கள். நபித் தோழர்கள் அக்குலத்தாரிடம் தமக்கு விருந்தளிக்கும்படி கேட்க அவர்களுக்கு அக்குலத்தார் விருந்தளிக்க மறுத்துவிட்டார்கள். பின்னர், அந்தக் குலத்தாரின் தலைவனைத் தேள் கொட்டிவிட்டது. எனவே, அவனுக்காக அ(க் குலத்த)வர்கள் எல்லா முயற்சிகளையும் செய்து பர்த்தனர் எந்த முயற்சியும் பலன் அளிக்கவில்லை. அப்போது அவர்களில் சிலர், இதோ! இங்கே நமக்கருகில் தங்கியிருக்கும் கூட்டத்தாரிடம் நீங்கள் சென்றால் அவர்களிடம் (இதற்கு) ஏதேனும் (மருந்து) இருக்கலாம்!என்று கூறினர். அவ்வாறே அவர்களும் நபித்தோழர்களிடம் வந்து, கூட்டத்தாரே! எங்கள் தலைவரைத் தேள் கொட்டிவிட்டது! அவருக்காக அனைத்து முயற்சிகளையும் செய்தோம் எதுவுமே அவருக்குப் பயன் அளிக்கவில்லை. உங்களில் எவரிடமாவது (மருந்து) ஏதேனும் இருக்கிறதா? என்று கேட்டனர்.

அப்போது நபித்தோழர்களில் ஒருவர், ஆம்! அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் ஓதிப் பார்க்கிறேன் என்றாலும், அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் உங்களிடம் விருந்து கேட்டு நீங்கள் விருந்து அளிக்காததால் எங்களுக்கென்று ஒரு கூலியை நீங்கள் தராமல் ஓதிப்பார்க்க முடியாது!என்றார். அவர்கள் (முப்பது ஆடுகள் கொண்ட) ஓர்ஆட்டு மந்தையை அளிப்பதாகப் பேசி ஒப்பந்தம் செய்தனர். அந்த நபித்தோழர், தேளால் கொட்டப்பட்டவர் மீதுஅல்ஹம்துலில்லாஹி ரப்பில் ஆலமீன்.. என்று ஓதி (இலேசாக) உமிழ்ந்தார். உடனே பாதிக்கப்பட்டவர் கட்டுகளிலிருந்து அவிழ்த்து விடப்பட்டவர் போல் நடக்க ஆரம்பித்தார். எந்த வேதனையும் அவரிடம் தென்படவில்லை. பிறகு அவர்கள் பேசிய கூலியை முழுமையாகக் கொடுத்தார்கள். இதைப் பங்குவையுங்கள்!என்று (நபித் தோழர்) ஒருவர் கூறியபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று நடந்ததைக் கூறி, அவர்கள் என்ன கட்டளையிடுகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் அவ்வாறு செய்யக் கூடாது!என்று ஓதிப்பார்த்தவர் கூறினார். நபி(ஸல்) அவர்களிடம் நபித்தோழர்கள் வந்து நடந்ததைக்

கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்அது (அல்ஹம்து அத்தியாயம்) ஓதிப்பார்க்கத் தக்கது என்று உமக்கு எப்படித் தெரியும்? என்று கேட்டுவிட்டு,நீங்கள் செய்தது சரிதான் அந்த ஆடுகளை உங்களுக்கிடையே பங்கிட்டுக் கொள்ளுங்கள்! உங்களுடன் எனக்கும் ஒரு பங்கை ஒதுக்குங்கள்!என்று கூறினார்கள்.

## ஓதிப் பார்த்தவர் தம் வலக் கரத்தால் வலியுள்ள இடத்தைத் தடவுதல்.

ஹதீஸ் 5750. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஒருவருக்காகப் பாதுகாப்புக் கோரித் தம் வலக் கையால் அவரை தடவிக் கொடுத்து,அத்ஹிபில் பஃஸ், ரப்பன்னாஸ்! வஷ்ஃபி அன்த்தஷ் ஷாஃபி, லா ஷிஃபாஅ இல்லா ஷிஃபாஉக - ஷிஃபாஅன் லா யுஃகாதிரு சகமன்' என்று கூறுவார்கள். (பொருள்: மக்களை இரட்சிப்பவனே! துன்பத்தைப் போக்குவாயாக! குணப்படுத்துவாயாக! நீயே குணமளிப்பவன். உன் நிவாரணத்தைத் தவிர வேறு நிவாரணம் இல்லை. நோய் சிறிதும் இல்லாதவாறு குணப்படுத்திடுவாயாக.)

இதைப் போன்றே ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஆணுக்குப் பெண் ஓதிப் பார்ப்பது

ஹதீஸ் 5751. ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது (குர்ஆனில் உள்ள) பாதுகாப்புக் கோரும் (இறுதி மூன்று) அத்தியாயங்களை ஓதித் தம் (உடல்) மீதே ஊதிக்கொள்வார்கள். அவர்களுக்கு நோய் கடுமையானபோது நான் அவற்றை ஓதி அவர்களின் மீது ஊதிக் கொண்டும் அவர்களின் கையின் சுபிட்சம் (பரக்கத்) கருதி அதைக்கொண்டே (அவர்களின் மேனியை) தடவிக் கொடுததுக் கொண்டும் இருந்தேன்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான மஅமர் இப்னு ராஷித்(ரஹ்) கூறினார்: நான் இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்கள் எப்படி (ஓதி) ஊதிவந்தார்கள்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் தம் இரண்டு கைகளின் மீதும் ஊதிப் பிறகு அவ்விரண்டினாலும் தம் முகத்தின் மீது தடவிக்கொள்வார்கள்' என்று பதிலளித்தார்கள்.

## ஓதிப்பார்க்காமலிருப்பவர்

ஹதீஸ் 5752 இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் எங்களிடம் வந்து (பின்வருமாறு) கூறினார்கள்: (விண்ணுலகப் பயணத்தின்போது) பல சமுதாயத்தார் எனக்கு எடுத்துக் காட்டப்பட்டனர். அப்போது தம்முடன் ஒரேயொரு மனிதர் மட்டுமிருந்த இறைத்தூதரும், இரண்டு மனிதர்கள் மட்டுமே தம்முடனிருந்த இறைத்தூதரும், (பத்துப் பேர்களுக்குட்பட்ட) ஒரு சிறுகூட்டம் மட்டுமே தம்முடன் இருந்த இறைத்தூதரும், தம்முடன் ஒருவருமில்லாத இறைத்தூதரும் கடந்து செல்லத் தொடங்கினர். அடிவானத்தை அடைத்திருந்த ஒரு பெரும் கூட்டத்தை கண்டேன். அது என் சமுதாயமாக இருக்கும் என எதிர் பார்த்தேன். அப்போது,இது (இறைத்தூதர்) மூஸாவும் அவரின் சமுதாயமும்' என்று எனக்குச் சொல்லப்பட்டது. பிறகு என்னிடம்,பாருங்கள்' என்று சொல்லப்பட்டது. அப்போது அடிவானத்தை அடைத்திருந்த (ஒரு பெரும்) மக்கள் திரளை பார்த்தேன். மீண்டும் என்னிடம்,இங்கும் இங்கும் பாருங்கள்' என்று சொல்லப்பட்டது. அப்போது நான் அடிவானத்தை அடைத்திருந்த ஏராளமான மக்கள் திரளைக் கண்டேன். அப்போது,இது உங்கள் சமுதாயம். விசாரணையின்றி சொர்க்கம் செல்லும் எழுபதாயிரம் பேரும் இவர்களில் அடங்குவர்' என்று சொல்லப்பட்டது.

(விசாரணையின்றி சொர்க்கம் செல்லும் அந்த எழுபதாயிரம் பேர் யார் என்பதை) நபி(ஸல்) அவர்கள் விளக்கிக் கூறாத நிலையிலேயே மக்கள் கலைந்து சென்றுவிட்டனர். பின்னர் நபித்தோழர்கள் (சிலர் மட்டும் இது தொடர்பாகத்) தமக்கிடையே விவாதித்துக் கொண்டார்கள். சிலர்நாமோ இறைவனுக்கு இணை கற்பிக்கும் கொள்கையில் (நம் குடும்பங்கள்) இருந்த நிலையில், பிறந்தோம். ஆயினம், பின்னர் நாம் அல்லாஹ்வின் மீது அவனுடைய தூதர் மீதுமநம்பிக்கை கொண்டோம். எனவே, (இஸ்லாத்தில் பிறந்த) நம் பிள்ளைகளே அந்த எழுபதாயிரம் பேர் ஆவர்' என்று கூறினார்கள். இச்செய்தி நபி(ஸல்)அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், (விசாரணையின்றி சொர்க்கம் செல்லவுள்ள) அவர்கள் யாரெனில், அவர்கள் பறவை சகுனம் பார்க்கமாட்டார்கள் (நோய்க்காக) சூடிட்டுக்கொள்ள மாட்டார்கள் ஓதிப்பார்க்கமாட்டார்கள். தம் இறைவனையே சார்ந்திருப்பார்கள்' என்று கூறினார்கள். அப்போது உக்காஷா இப்னு மிஹ்ஸன்(ரலி) எழுந்து,அவர்களில் நானும் ஒருவனா? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,ஆம்' என்று பதிலளித்தார்கள். வேறொருவர் எழுந்து நின்று,அவர்களில் நானும் ஒருவனா? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,இவ்விஷயத்தில் உக்காஷா உங்களை முந்திக் கொண்டுவிட்டார்' என்று கூறினார்கள்.

## பறவை சகுனம் பார்ப்பது (கூடாது)

**ஹதீஸ் 5753.** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொற்றுநோய் கிடையாது பறவை சகுனமும் கிடையாது. அபசகுனம் (இருக்க வேண்டுமென்றால்) மனைவி, வீடு, வாகனம் ஆகிய மூன்றில்தான் இருக்கும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

**ஹதீஸ் 5754.** அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்பறவை சகுனம் என்பது கிடையாது. சகுனங்களில் சிறந்தது நற்குறியே ஆகும்' என்று கூறினார்கள். மக்கள்,நற்குறி என்பதென்ன? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அது நீங்கள் செவியுறும் நல்ல (மங்கலகரமான) சொல்லாகும்' என்று பதிலளித்தார்கள்.

## நற்குறி

**ஹதீஸ் 5755.** அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,பறவை சகுனம் ஏதும் கிடையாது. சகுனங்களில் சிறந்தது நற்குறியாகும்' என்று கூறினார்கள். மக்கள்,நற்குறி என்பது என்ன இறைத்தூதர் அவர்களே? என்று கேட்டார்கள் அதற்கு அவர்கள்,நீங்கள் செவியுறுகிற நல்ல (மங்கலகரமான) சொல்தான்' என்று பதிலளித்தார்கள்.

**ஹதீஸ் 5756.** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொற்றுநோய் கிடையாது. பறவை சகுனம் ஏதும் கிடையாது. நற்குறி எனக்கு மகிழ்ச்சியுண்டாக்கும். நல்ல (மங்கலகரமான) சொல் தான் அது.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## ஆந்தை சகுனம் கிடையாது.

**ஹதீஸ் 5757** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொற்றுநோய் கிடையாது. பறவை சகுனம் ஏதும் கிடையாது. ஆந்தை சகுனம் ஏதும் கிடையாது. ஸஃபர் மாதம் பீடை என்பதும் கிடையாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சோதிடம்

ஹதீஸ் 5758. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்ஹுதைல் குலத்துப் பெண் இருவரின் (வழக்கு) தொடர்பாகத் தீர்ப்பளித்தார்கள். அவர்கள் இருவரும் சண்டையிட்டுக் கொண்டார்கள். அப்போது அவர்களில் ஒருத்தி மற்றொருத்தியின் மீது ஒரு கல்லை எறிய அது அவளுடைய வயிற்றில் பட்டுவிட்டது. கர்ப்பிணியாயிருந்த அவளுடைய வயிற்றில் இருந்த சிசுவை அவள் கொன்றுவிட்டாள். எனவே, நபி(ஸல்) அவர்களிடம் மக்கள் இந்த வழக்கைக் கொண்டு வந்தனர். நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணின் வயிற்றிலிருந்த சிசுக்காக ஓர் ஆண் அடிமையை, அல்லது பெண் அடிமையை உயிரீட்டுத் தொகையாகத் தரவேண்டும் என்று தீர்ப்பளித்தார்கள். அப்போது குற்றம் புரிந்த அப்பெண்ணின் காப்பாளர்(கணவர்), உண்ணவோ பருகவோ, மொழியாவோ அழவோ முடியாத ஒரு சிசுக்காக நான் எப்படி அபராதம் செலுத்துவது இறைத்தூதர் அவர்களே! இதைப் போன்றவை தள்ளுபடி செய்யப்பட வேண்டுமல்லவா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,இவர் (சாதுர்யமாகவும் அடுக்கு மொழியிலும் பேசுவதில்) குறிகாரர்களின் சகோதரர்களில் ஒருவர்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5759. அபூ ஹுரைரா(ரலி) கூறினார்

(ஹுதைல் குலத்து) இரண்டு பெண்களில் ஒருத்தி மற்றொருத்தியைக் கல்லால் அடித்து அப்பெண்ணின் கருவில் இருந்த சிசுவைக் கொன்றுவிட்டாள். நபி(ஸல்) அவர்கள் இந்த வழக்கில் உயிரீட்டுத் தொகையாக ஓர் ஆண் அடிமையை, அல்லது ஒரு பெண் அடிமையைத் தரவேண்டும் என்று தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 5760. ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , தன் தாயின் வயிற்றிலிருக்கும்போதே கொல்லப்பட்டுவிட்ட ஒரு சிசுவின் விஷயத்தில் ஓர் ஆண்அடிமையை, அல்லது பெண் அடிமையை உயிரீட்டுத் தொகையாக வழங்க வேண்டுமென்று தீர்ப்பளித்தார்கள். எவருக்கு எதிராக இத்தீர்ப்பு அளிக்கப்பட்டதோ அவர் (அந்தப் பெண்ணின் கணவர்),உண்ணவோ பருகவோ மொழியவோ அழவோ முடியாத ஒன்றுக்காக நான் எப்படி அபராதம் செலுத்துவது? இதைப் போன்றவை தள்ளுபடி செய்யப்படவேண்டுமல்லவா? என்று கேட்டார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இவர் (வார்த்தை ஜாலத்தில்) குறிகாரர்களின் சகோதரர்களில் ஒருவர்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5761. அபூ மஸ்வூத்(ரலி) கூறினார்

நாய் விற்ற காசு, விபசாரியின் வருமானம், சோதிடனின் தட்சிணை ஆகியவற்றுக்கு நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5762. ஆயிஷா(ரலி) கூறினார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சிலர் சோதிடர்களைப் பற்றிக் கேட்டார்கள். அ(வர்களின் கருத்)து (பொருட்படுத்தத் தக்க) ஒன்றுமில்லை என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,இறைத்தூதர் அவர்களே! இந்தச் சோதிடர்கள் சிலவேளைகளில் எங்களக்கு ஒன்றை அறிவிக்க, அது உண்மையாகி விடுகிறதே (அது எப்படி?)' என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,அந்த உண்மையான சொல் ஜின்னிடமிருந்து சோதிடன் எடுத்துக் கொண்டதாகும். அது தன் (சோதிட) நண்பனின் காதில் அதைப் போட அதனுடன் அவர்கள் நூறு பொய்களைக் கலந்து விடுவார்கள்' என்று பதிலளித்தார்கள்.

அறிவிப்பாளர் அலீ இப்னு அல்மதீனீ(ரஹ்) கூறினார்:

(இந்த ஹதீஸில்)அந்த உண்மையான சொல் எனத் தொடங்கும் இறுதித் தொடரை அறிவிப்பாளர் அப்துர் ரஸ்ஸாக் கின் ஹம்மாம்(ரஹ்) நபியவர்களின் சொல்லாக (முதலில்) கூறவில்லை. பிறகு, அது நபியவர்களின் சொல்லே என அவர் கூறினார் என்று எனக்குத் தகவல் கிடைத்தது.

## சூனியம்

அல்லாஹ் கூறினான்:

அவர்கள் (-யூதர்கள்-) சுலைமானுடைய ஆட்சியி(ன் காலத்தி)ல் ஷைத்தான்கள் (கற்பனை செய்து) கூறியவற்றையே பின்பற்றினர். (உண்மையில்) சுலைமான் நிராகரித்தவர் அல்லர் ஆனால் ஷைத்தான்கள் தாம் நிராகரித்தனர். மக்களுக்குச் சூனியத்தையும், பாபிலோனில் இருந்த ஹாரூத், மாரூத் என்ற இரண்டு வானவர்களுக்கு வழங்கப்பட்டதையும் கற்பித்து வந்தனர். (உண்மையில்) அவ்விருவரும்நாங்கள் ஒரு சோதனையாகவே இருக்கிறோம். (இதைக் கற்பதன் மூலம்) நீங்கள் நிராகரிப்பவராம்விடாதீர்கள்' என்று கூறும் வரை எவருக்கும் (சூனியத்தைக்) கற்பிக்கவில்லை. இறுதியாக, அவர்கள் கணவனுக்கும் மனைவிக்கும் இடையே பிளவை உண்டு பண்ணக்கூடிய (சூனியத்)தை அவ்விருவரிடமிருந்து தெரிந்து கொண்டார்கள். அல்லாஹ்வின் நாட்டமின்றி இ(ந்தச் சூனியத்)தைக் கொண்டு எவருக்கும் அவர்கள் தீங்கிழைத்து விட முடியாது. தங்களுக்குப் பலனளிக்காத, தீங்கு தருகிறவற்றையே அவர்கள் கற்றுக் கொள்கிறார்கள். இ(ந்தச் சூனியத்)தை விலைக்கு வாங்கிக் கொள்பவனுக்கு மறுமையில் எந்தப் பேறும் இல்லை என்பதை அவர்கள் உறுதியாக அறிந்தே இருந்தனர். (திருக்குர்ஆன் 02:102)

அல்லாஹ் கூறினான்:

சூனியக்காரன் எங்கு சென்றாலும் வெற்றி பெறமாட்டான். (திருக்குர்ஆன் 20:69)

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் நன்கு பார்த்துக் கொண்டே (அவருடைய) சூனியத்தின் பக்கம் வருகிறீர்களா? (திருக்குர்ஆன் 21:03)

அல்லாஹ் கூறினான்:

அவர்களின் கயிறுகளும் அவர்களின் தடிகளும் அவர்களின் சூனியத்தால் (பாம்புகளாம்) நெளிந்தோடுவது போல் அவருக்குத் தோன்றியது (திருக்குர்ஆன் 20:66)

அல்லாஹ் கூறினான்:

(நபியே! கூறுக:) இன்னும், முடிச்சுகளில் (மந்திரித்து) ஊதும் பெண்களின் தீங்கைவிட்டும் (பாதுகாப்புக் கோருகிறேன்) (திருக்குர்ஆன் 113:04) இவ்வசனத்திலுள்ளஊதும் பெண்கள் (நஃப்பாஸாத்) என்பது சூனியக்காரிகளைக் குறிக்கும். (திருக்குர்ஆன் 23:89 வது வசனத்தின் மூலத்திலுள்ள)துஸ்ஹரூன் எனும் சொல்லுக்குக்கண்மூடியவர்களாக என்று பொருள்.

ஹதீஸ் 5763. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குபனூஸு ரைக் குலத்தைச் சேர்ந்த லபீத் இப்னு அஃஸம் என்பான் சூனியம் செய்தான். இதையடுத்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாம் செய்திராத ஒன்றைத் தாம் செய்து கொண்டிருந்ததாகப் பிரமையூட்டப்பட்டார்கள். இறுதியில், அவர்கள்ஒரு நாள் அல்லதுஓரிரவு என்னிடம் வந்தார்கள். ஆயினும், அவர்கள் (என் மீது கவனம் செலுத்தாமல்) தொடர்ந்து பிரார்த்தனை செய்து கொண்டேயிருந்தார்கள்.

பிறகு (என்னிடம் கூறினார்கள்:) ஆயிஷா! (விஷயம்) தெரியுமா? எந்த(ச் சூனியம்) விஷயத்தில் தெளிவைத் தரும்படி இறைவனிடம் நான் கேட்டுக் கொண்டிருந்தேனோ அந்த விஷயத்தில் அவன் எனக்குத் தெளிவை அளித்துவிட்டான். (கனவில்) என்னிடம் (வானவர்) இரண்டு பேர் வந்தனர். அவ்விருவரில் ஒருவர் என் தலைமாட்டிலும் இன்னொருவர் என் கால்மாட்டிலும்

அமர்ந்து கொண்டனர். அவ்விருவரில் ஒருவர் தம் தோழரிடம்,இந்த மனிதரின் நோய் என்ன? என்று கேட்டார். அத்தோழர்,இவருக்குச் சூனியம் வைக்கப்பட்டுள்ளது' என்று சொல்ல, முதலாமவர்இவருக்குச் சூனியம் வைத்தவர் யார்? என்று கேட்டார். தோழர்,லபீத் இப்னு அஃஸம் (எனும் யூதன்)' என்று பதிலளித்தார். அவர்,எதில் வைத்திருக்கிறான்? என்று கேட்க, சீப்பிலும், சிக்கு முடியிலும், ஆண் பேரீச்சம் பாளையின் உறையிலும்' என்று பதிலளித்தார். அவர்,அது எங்கே இருக்கிறது? என்று கேட்க, மற்றவர்,(பனு ஸுரைக் குலத்தாரின் தோட்டத்திலுள்ள)தர்வான் எனும் கிணற்றில்' என்று பதிலளித்தார். இதைச் சொல்லி முடித்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் அந்தக் கிணற்றுக்குச் சென்று (பாளை உறையை வெளியே எடுத்துவிட்டுத் திரும்பி) வந்து,ஆயிஷா! அதன் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போல் உள்ளது அதன் பேரீச்ச மரங்களின் தலைகள் ஷைத்தானின் தலைகளைப் போன்று உள்ளன' என்று கூறினார்கள்.

நான்,இறைத்தூதர் அவர்களே! அ(ந்தப் பாளை உறைக்குள் இருப்ப)தைத் தாங்கள் வெளியே எடுக்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,அல்லாஹ் எனக்கு (அதன் பாதிப்பிலிருந்து) குணமளித்துக் காப்பாற்றிவிட்டான். அதை வெளியே எடுப்பதன் மூலம் மக்களிடையே (சூனியக் கலை பரவக் காரணமாம்) குழப்பத்தைக் கிளப்பிவிடுவதை நான் வெறுத்தேன் (எனவேதான் அதை நான் வெளியே எடுக்கவில்லை)' என்று கூறினார்கள். பிறகு அந்தக் கிணற்றைக் தூர்த்துவிடும்படி அவர்கள் கட்டளையிட அவ்வாறே அது தூர்க்கப்பட்டது.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

அறிவிப்பாளர் ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) அவர்களின் ஓர் அறிவிப்பில், (சீப்பிலும் சிக்கு முடியிலும் என்பதற்கு பதிலாக)சீப்பிலும் சணல் நாரிலும் என்று காணப்படுகிறது. தலையை வாரும்போது கழியும் முடிக்கேமுஷாதத் (சிக்கு முடி) எனப்படும். சணலை நூற்கும்போது வெளிவரும் நாருக்கேமுஷாகத் (சணல் நார்) எனப்படும்

## இணைவைப்பும் சூனியமும் பேரழிவை உண்டாக்கும் பெரும்பாவங்களில் அடங்கும்.

ஹதீஸ் 5764. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பேரழிவை உண்டாக்கும் பெரும் பாவங்களைத் தவிர்த்துவிடுங்கள். (இறைவனுக்கு) இணைவைப்பதும் சூனியம் செய்வதும் அவற்றில் அடங்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

சூனியத்தையும் அதற்குப் பயன்படுத்தப்பட்ட பொருளையும்) அகற்றலாமா?

கத்தாதா(ரஹ்) கூறினார்:சூனியம் செய்யப்பட்ட ஒரு மனிதரைவிட்டுச் சூனிய முடிச்சை அவிழ்க்கலாமா? தன் மனைவியுடன் கூட முடியாதபடி தடுக்கப்பட்ட ஒரு மனிதரின் மந்திரக் கட்டை விடுவிக்கலாமா? என்று நான் ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அவர்கள்,அதனால் குற்றமில்லை இப்படிச் செய்பவர்கள் (சூனியத்தை) குணப்படுத்தவே விரும்புகிறார்கள். (மக்களுக்குப்) பயனளிக்கக் கூடிய எதற்கும் (மார்க்கத்தில்) தடை விதிக்கப்படவில்லை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5765. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் சூனியம் செய்யப்பட்டது. அதையடுத்து அவர்கள் தம் துணைவியரிடம் செல்லாமலேயே அவர்களிடம் சென்று வருவதாக நினைக்கலானார்கள்.

-அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்: அவ்வாறிருந்தால் அது சூனியத்திலேயே கடுமையானதாகும்.

(ஒரு நாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஆயிஷா! (விஷயம்) தெரியுமா? நான் எந்த விஷயத்தில் அல்லாஹ்விடம் தெளிவைத் தரும்படி கேட்டுக் கொண்டிருந்தேனோ, அந்த விஷயத்தில் அல்லாஹ் எனக்குத் தெளிவை வழங்கிவிட்டான். (கனவில் வானவர்கள்) இரண்டு பேர் என்னிடம் வந்து, ஒருவர் என் தலைமாட்டிலும் இன்னொருவர் என் கால்மாட்டிலும் அமர்ந்து கொண்டனர். என் தலைமாட்டில் இருந்தவர் மற்றொருவரிடம், இந்த மனிதரின் நிலையென்ன? என்று கேட்டார். மற்றவர், யூதர்களின் நட்புக்குலமானபனு ஸு ரைக் குலத்தைச் சேர்ந்த லபீத் இப்னு அஃஸம் என்பவர். இவர் நயவஞ்சகராக இருந்தார்' என்று பதிலளித்தார். அவர், எதில் (சூனியம் வைக்கப்பட்டுள்ளது?)' என்று கேட்க, மற்றவர், சீப்பிலும் சிக்கு முடியிலும்' என்று பதிலளித்தார். அவர்எங்கே (சூனியம் வைக்கப்பட்டுள்ளது)? என்று கேட்க, மற்றவர், ஆண் பேரீச்சம் பாளையின் உறையில்தர்வான் குலத்தாரின் கிணற்றிலுள்ள கல் ஒன்றின் அடியில் வைக்கப்பட்டுள்ளது' என்று பதிலளித்தார்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் அந்தக் கிணற்றுக்குச் சென்று அ(ந்தப் பாளை உறை)தனை வெளியே எடுத்தார்கள். பிறகு (என்னிடம் திரும்பி வந்த) நபி(ஸல்) அவர்கள், இதுதான் எனக்குக் (கனவில்) காட்டப்பட்ட கிணறு. இதன் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்று (கலங்கலாக) உள்ளது. இதன் பேரீச்ச மரங்கள் ஷைத்தான்களின் தலைகளைப் போன்று உள்ளன' என்று சொல்லிவிட்டுப் பிறகுஅந்தப் பேரீச்சம் பாளை உறை வெளியே எடுக்கப்பட்டது' என்றும் கூறினார்கள்.

நான், தாங்கள் (பாளை உறையை) ஏன் உடைத்துக காட்டக் கூடாது? எனக் கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ் எனக்கு (இந்த சூனியத்திலிருந்து) நிவாரணம் அளித்துவிட்டான். (சூனியப் பொருளைத் திறந்துகாட்டி) மக்களில் எவரையும் குழப்பத்தில் ஆழ்த்த நான் விரும்பவில்லை' என்று சொல்லிவிட்டார்கள்.

## சூனியம்

ஹதீஸ் 5766 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது. இதையடுத்து தாம் செய்யாத ஒன்றைச் செய்வது போன்ற பிரமை அவர்களுக்கு ஏற்பட்டது. இறுதியில் ஒரு நாள் அவர்கள் என்னிடம் இருந்தபோது அல்லாஹ்விடம் (உதவி கோரிப்) பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தார்கள். பிறகு என்னிடம், ஆயிஷா (விஷயம்) தெரியுமா? எந்த விஷயத்தில் தெளிவளிக்கும்படி அல்லாஹ்விடம் நான் கேட்டுக்கொண்டிருந்தேனோ அந்த விஷயத்தில் அவன் எனக்குக் தெளிவளித்துவிட்டான்' என்று கூறினார்கள்.

நான், என்ன அது, இறைத்தூதர் அவர்களே!என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(கனவில்) என்னிடம் (வானவர்கள்) இருவர் வந்தனர். அவர்களில் ஒருவர் என்னுடைய தலைமாட்டிலும் இன்னொருவர் என்னுடைய கால்மாட்டிலும் அமர்ந்தனர். பிறகு அவர்களில் ஒருவர் மற்றவரிடம், இந்த மனிதரின் நோய் என்ன? என்று கேட்க, மற்றவர், இவருக்குச் சூனியம் செய்யப்பட்டுள்ளது என்று பதிலளித்தார். முதலாமவர், இவருக்கு யார் சூனியம் வைத்தார்? என்று கேட்க, மற்றவர், பனு ஸு ரைக் குலத்தைச் சேர்ந்த லபீத் இப்னு அஃஸம் எனும் யூதன்' என்று பதிலளித்தார். முதலாமவர், எதில் சூனியம் வைக்கப்பட்டுள்ளது? என்று கேட்க, அடுத்தவர், சீப்பிலும் சிக்குமுடியிலும் ஆண்பேரீச்சம் பாளையின் உறையிலும்' என்று கூறினார். முதலாமவர், அது எங்கே வைக்கப்பட்டுள்ளது? என்று கேட்க, அடுத்தவர், தூஅர்வான் குலத்தாரின் கிணற்றில்' என்று பதிலளித்தார்.

எனவே, நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்கள் சிலருடன் அந்தக் கிணற்றுக்குச் சென்று அதைக் கூர்ந்து கவனித்தார்கள். சுற்றிலும் பேரீச்ச மரங்கள் இருந்தன. (சூனியப் பொருள் கட்டைக் கிணற்றிலிருந்து வெளியே எடுத்தார்கள்.)

பிறகு ஆயிஷா(ரலி) அவர்களிடம் வந்து,அந்தக் கிணற்றின் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்ற (கலங்கலாக) இருந்தது. அதன் பேரீச்ச மரங்கள் ஷைத்தானின் தலைகளைப் போன்று இருந்தன‘ என்று கூறினார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! அந்தக் கட்டைத் தாங்கள் திறந்(து பார்த்)தீர்களா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,இல்லை எனக்கோ அல்லாஹ் ஆரோக்கியமளித்து குணப்படுத்திவிட்டான். அதைத் திறந்து காட்டினால் மக்கள் குழப்பமடைந்துவிடுவார்களோ என அஞ்சினேன்‘ என்று கூறினார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்களின் ஆணையின் பேரில் அக்கிணறு தூர்க்கப்பட்டது.

## சில சொற்பொழிவுகளில் ஈர்ப்பு உள்ளது.

ஹதீஸ் 5767. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

இரண்டு மனிதாகள் (மதீனாவுக்குக்) கிழக்கிலிருந்து வந்து உரையாற்றினார்கள். அவ்விருவரின் (சொல்லெழில் மிக்க) சொற்பொழிவைக் கேட்டு மக்கள் வியந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்சில சொற்பொழிவில் கவர்ச்சி உள்ளது அல்லதுசொற்பொழிவுகளில் சில கவர்ச்சியாகும்‘ என்று கூறினார்கள்.

## சூனியத்திற்கு அஜ்வா எனும் (அடர்த்தியான உயர் ரகப்) பேரீச்சம் பழத்தை மருந்தாகப் பயன்படுத்துவது.

ஹதீஸ் 5768. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தினந்தோறும் காலையில் சிலஅஜ்வா ரகப் பேரீச்சம் பழங்களை (வெறும் வயிற்றில்) சாப்பிடுகிறவருக்கு எந்த விஷமும் எந்தச் சூனியமும் அன்று இரவு வரை இடரளிக்காது.

என ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் அலீ இப்னு மதீனீ(ரஹ்) அல்லாத மற்றவர்கள்ஏழு பேரீச்சம் பழங்களை‘ என்று (எண்ணிக்கைக் குறிப்புடன்) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5769. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

காலையில் (வெறும் வயிற்றில்) ஏழுஅஜ்வா (ரகப்) பேரீச்சம் பழங்களை உண்ணுகிறவருக்கு அன்று எந்த விஷமோ, எந்தச் சூனியமோ இடரளிக்காது.

என ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

## ஆந்தை குறித்து (மூட) நம்பிக்கை கூடாது.

ஹதீஸ் 5770. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்தொற்று நோய் கிடையாது; ஸஃபரும் கிடையாது; (இறந்தவரின் எலும்பு ஆந்தையாக மாறிப் பறப்பதாகக் கருதும்) ஆந்தை பற்றிய நம்பிக்கையும் உண்மையல்ல‘ என்று கூறினார்கள்.

அப்போது கிராமவாசி ஒருவர்,இறைத்தூதர் அவர்களே! (பாலை) மணலில் மான்களைப் போன்று (ஆரோக்கியமாக) இருந்த ஒட்டகங்களுக்கிடையே சிரங்கு பிடித்த ஒட்டகம் கலந்து அவற்றையும் சிரங்கு பிடித்தவையாக ஆக்கிவிடுகின்றனவே? என்று கேட்டதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,முதல் ஒட்டகத்திற்கு (அதை)த் தொற்றச் செய்தது யார்? என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

ஹதீஸ் 5771. (மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர்) அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி அவ்ஃப்(ரஹ்) அறிவித்தார்

“நபி(ஸல்) அவர்கள்,வியாதிபிடித்த ஒட்டகம் வைத்திருப்பவர் ஆரோக்கியமான ஒட்டகம் வைத்திருப்பவரிடம் தன் ஒட்டகத்தைக் கொண்டு செல்லவேண்டாம்‘ என்று கூறினார்கள் என

அபூ ஹுரைரா(ரலி) அறிவிப்பதை பின்பு செவியுற்றேன். அபூ ஹுரைரா(ரலி) முந்தைய ஹதீஸை (தாம் அறிவிக்கவில்லையென்று) மறுத்தார்கள். நாங்கள்,தொற்று நோய் கிடையாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என நீங்கள் அறிவிக்கவில்லையா? என்று கேட்டோம். அவர்கள் (தாம் கூறவில்லையென்று மறுத்துக் கோபத்துடன்) அபிசீனிய மொழியில் ஏதோ பேசினார்கள். இதைத் தவிர (தாம் அறிவித்த) வேறெந்த ஹதீஸையும் அவர்கள் மறந்து நான் பார்த்ததில்லை.

## தொற்று நோய் கிடையாது.

ஹதீஸ் 5772. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொற்று நோய் கிடையாது; பறவை சகுனம் கிடையாது; சகுனம் பார்ப்பது (இருக்க முடியுமென்றால்) மூன்று விஷயங்களில்தாம் குதிரையிலும் மனைவியிலும் வீட்டிலும் தாம்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5773. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தொற்று நோய் கிடையாது

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5774. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வியாதி பிடித்த ஒட்டகத்தை ஆரோக்கியமான ஒட்டகத்திடம் கொண்டு செல்லாதீர்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5775. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,தொற்றுநோய் கிடையாது' என்று கூறினார்கள். உடனே கிராமவாசி ஒருவர் எழுந்து,(பாலை) மணலில் மான்களைப் போன்று ஆரோக்கியமாக இருந்து கொண்டிருக்கும் ஒட்டகங்களிடம் சிரங்கு பிடித்த ஒட்டகம் வந்து (கலந்து) அவற்றுக்கும் சிரங்கு பிடிக்கச் செய்து விடுகிறதே, இது பற்றி தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,அப்படியானால் முதல் ஒட்டகத்திற்குத் தொற்றச் செய்தது யார்? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5776. அனஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்,தொற்று நோய் கிடையாது; பறவை சகுனம் கிடையாது. ஆனால், நற்குறி எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது' என்று கூறினார்கள். மக்கள்,நற்குறி என்றால் என்ன? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,(மங்கலகரமான) நல்ல சொல்' என்று பதிலளித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் நஞ்சூட்டப்பட்டது பற்றிய குறிப்பு.

இது பற்றி ஆயிஷா(ரலி) நபி(ஸல்) அவர்கள் குறித்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 5777. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(ஹிஜ்ரீ -7ஆம் ஆண்டில்) கைபர் வெற்றி கொள்ளப்பட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு விஷயம் தடவப்பட்ட ஆடு ஒன்று அன்பளிப்பாகத் தரப்பட்டது. (விஷயம் தெரிந்தவுடன்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இங்குள்ள யூதர்களை ஒன்று திரட்டி என்னிடம் கொண்டு வாருங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே அவர்கள் ஒன்று திரட்டப்பட்டு நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டார்கள்.

அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நான் உங்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்கப்போகிறேன். நீங்கள் என்னிடம் அதைப் பற்றி உண்மை சொல்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அந்த யூதர்கள்சரி (உண்மையைச் சொல்கிறோம்), அபுல்காசிம் (முஹம்மது(ஸல்) அவர்களே!என்று பதிலளித்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்உங்கள் தந்தை யார்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,எங்கள் தந்தை இன்னார்' என்று பதிலளித்தார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,பொய் சொன்னீர்கள். மாறாக, உங்கள் தந்தை இன்னார்தாம்' என்று கூறினார்கள். யூதர்கள்,நீங்கள் உண்மை சொன்னீர்கள் நல்லதையும் சொன்னீர்கள்' என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள்,நான் ஒரு விஷயத்தைப் பற்றி உங்களிடம் கேட்டால் அதைப் பற்றி நீங்கள் என்னிடம் உண்மை சொல்வீர்களா? என்று (மறுபடியும்) கேட்டார்கள். அதற்கவர்கள்,சரி, அபுல் காசிமே! இனி நாங்கள் பொய் சொன்னால் எங்கள் தந்தை விஷயத்தில் நாங்கள் பொய் சொன்னதை நீங்கள் அறிந்ததைப் போன்றே இதையும் அறிந்து கொள்வீர்கள்' என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நரகவாசிகள் யார்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,நாங்கள் அந்த நரகத்தில் சில காலம் மட்டுமே இருப்போம். பிறகு எங்களுக்கு பதிலாக அதில் நீங்கள் புகுவீர்கள்' என்று பதிலளித்தார்கள்.

(இதைக் கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் யூதர்களிடம்,அதில் நீங்கள் தாம் இழிவடைவீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் அதில் உங்களுக்கு பதிலாக ஒருபோதும் புகமாட்டோம்' என்று கூறிவிட்டுப் பிறகு அவர்களிடம்,நான் (இன்னும்) ஒரு விஷயத்தைப் பற்றி உங்களிடம் கேட்டால் நீங்கள் என்னிடம் உண்மை சொல்வீர்களா? என்று கேட்டார்கள். யூதர்கள்,சரி' என்று கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இந்த ஆட்டில் நீங்கள் விஷயம் கலந்திருக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அவர்கள்,ஆம் (கலந்திருக்கிறோம்)' என்று பதிலளித்தார்கள். அப்போது நபி(ஸல்)அவர்கள்,ஏன் இப்படிச் செய்தீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கவர்கள்,நீங்கள் பொய்யராக இருந்(து, விஷத்தின் மூலம் இறந்)தால் நாங்கள் ஆனந்தமடைவோம். நிங்கள் இறைத்தூதராக இருந்தால் உங்களுக்கு அ(ந்த விஷமான)து தீங்களிக்காது' என்று பதிலளித்தார்கள்.

## விஷம், ஆபத்தான பொருள், அசுத்தமான பொருள் ஆகியவற்றால் சிகிச்சை அளிப்பதும், விஷயம் அருந்துவதும்.

ஹதீஸ் 5778. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மலையின் மீதிருந்து கீழே குதித்து தற்கொலை செய்துகொள்கிறவர் நரக நெருப்பில் (தள்ளப்பட்டு மேலிருந்து கீழே) என்றைக்கும் நிரந்தரமாக குதித்துக் கொண்டேயிருப்பர். விஷம் குடித்து தற்கொலை செய்துகொள்கிறவர் தம் விஷத்தைக் கையில் வைத்திருந்தபடி நரக நெருப்பில் என்றென்றும் நிரந்தரமாக குடித்துக் கொண்டேயிருப்பார். ஒரு கூரிய ஆயுதத்தால் தற்கொலை செய்து கொள்கிறவரின் கூராயுதத்தை அவர் தம் கையில் வைத்துக்கொண்டு நரக நெருப்பில் தம் வயிற்றில் தாமே என்றென்றும் நிரந்தரமாக அதனால் குத்திக் கொண்டேயிருப்பார்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5779. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஒவ்வொரு நாளும்) காலையில் ஏழுஅஜ்வா (ரகப்) பேரீச்சம் பழங்களை உண்ணுகிறவருக்கு அன்று எந்த விஷமோ சூனியமோ இடரளிக்காது.

என ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

## கழுதைப் பால்

ஹதீஸ் 5780. அபூ ஸஅலபா அல்குஷனீ (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் விலங்குகளில் கோரைப் பற்கள் உள்ளவற்றை உண்ண வேண்டாமெனத் தடைசெய்தார்கள். 1

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்), நான் ஷாம் நாட்டிற்கு வரும்வரை இந்த ஹதீஸை செவியுற்றதில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5781. மற்றோர் அறிவிப்பில் லைஸ் இப்னு ஸஅத் (ரஹ்) அதிகப்படியாக அறிவித்திருப்பதாவது:

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரலி) கூறினார்:

நான் அபூ இத்ரீஸ் அல்கவ்லானீ (ரஹ்) அவாகளிடம், கழுதைப் பாலில் நாங்கள் அங்கசுத்தி (உளூ) செய்யலாமா? அல்லது அதைப் பருகலாமா? அல்லது விலங்குகளின் பித்த நீரை, அல்லது ஒட்டகத்தின் சிறுநீரை அருந்தலாமா? என்று கேட்டேன். அவர்கள், முஸ்லிம்கள் ஒட்டகத்தின் சிறுநீரால் சிகிச்சை பெற்றுவந்தார்கள். அதில் தவறேதும் இருப்பதாக அவர்கள் கருதவில்லை. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (நாட்டுக்) கழுதையின் இறைச்சியை உண்ண வேண்டாமென்று தடை விதித்ததாகச் செய்தி எமக்கு எட்டியுள்ளது. ஆனால், அவற்றின் பாலை அருந்துங்கள் என்றோ அருந்தாதீர்கள் என்றோ எந்தக் கட்டளையும் அல்லது தடை உத்தரவும் நமக்கு எட்டவில்லை' என்று கூறினார்கள்.

விலங்குகளின் பித்த நீரைப் பொறுத்த வரை இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) கூறினார்.

"இறைத்தூதர் (ஸல்) அவர்கள் விலங்குகளின் கோரைப் பற்கள் உள்ள எதையும் உண்ண வேண்டாமெனத் தடை செய்தார்கள்' என்று அபூ ஸஅலபா அல்குஷனீ (ரலி) கூறினார் என அபூ இத்ரீஸ் அல்கவ்லானீ (ரஹ்) என்னிடம் தெரிவித்தார்கள்.

## பாத்திரத்தில் ஈ விழுந்துவிட்டால்...

ஹதீஸ் 5782. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்கள் பாத்திரத்தில் ஈ விழுந்துவிட்டால் அதை முழுவதுமாக அமிழ்த்தி எடுங்கள். பிறகு அதை எடுத்தெறிந்துவிடுங்கள். ஏனெனில், அதன் இரண்டு இறக்கைகளில் ஒன்றில் நோய் இருக்கிறது. இன்னொன்றில் நிவாரணம் இருக்கிறது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

# அத்தியாயம் 77 ஆடை அணிகலன்கள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## (திருக்குர்ஆன் 07:32 வது) இறைவசனம்.

“(நபியே!) நீர் கேட்பீராக: அல்லாஹ் தன் அடியார்களுக்காக அளித்திருக்கும் (ஆடை) அலங்காரத்தையும், உணவு வகைகளில் தூய்மையானவற்றையும் தடுத்தது யார்? எனும் (திருக்குர்ஆன் 07:32 வது) இறைவசனம்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உண்ணுங்கள் பருகுங்கள் உடுத்துங்கள் தானம் செய்யுங்கள். (ஆனால்,) விரயம் செய்யாதீர்கள் தற்பெருமை கொள்ளாதீர்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

விரயம் அல்லது தற்பெருமை ஆகிய இரண்டும் உன்னை அண்டாத வரை நீ விரும்பியதை உண்ணலாம் நீ விரும்பியதை உடுத்தலாம்.

ஹதீஸ் 5783. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன்னுடைய ஆடையைத் (தரையில் படும்படி) தற்பெருமையுடன் இழுத்துக்கொண்டு சென்றவனை அல்லாஹ் (மறுமையில்) ஏறெடுத்தும் பார்க்கமாட்டான்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## தற்பெருமையின்றி ஒருவர் தம் கீழங்கியை இழுத்துச் செல்வது.

ஹதீஸ் 5784. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்,யார் தன்னுடைய ஆடையைப் பெருமையுடன் (தரையில் படும்படி) இழுத்துக் கொண்டு செல்கிறரோ அவரை மறுமையில் அல்லாஹ் ஏறெடுத்தும் பார்க்கமாட்டான்‘ என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி),இறைத்தூதர் அவர்களே! நான் கவனமாக இல்லாவிட்டால் என்னுடைய கீழங்கியின் இரண்டு பக்கங்களில் ஒன்று கீழே சரிந்து விழுகிறது‘ என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்நீங்கள் தற்பெருமையுடன் அப்படிச் செய்பவரல்லர்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5785. அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்

நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் இருந்தபோது சூரியம்ரகணம் ஏற்பட்டது. உடனே நபி(ஸல்) அவர்கள் அவரசத்துடன் எழுந்து தம் ஆடையை இழுத்துக்கொண்டு பள்ளிவாசலுக்குச் சென்றார்கள். (பள்ளிவாசலில் இருந்து சென்றுவிட்ட) மக்கள் அனைவரும் திரும்பி வந்தனர். நபி(ஸல்) அவர்கள் சூரியம்ரகணம் விலகும்வரை இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு நபி(ஸல்) எங்களை நோக்கி,சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுகளில் இரண்டு சான்றுகளாகும். அவற்றில் (கிரகணங்களில்) ஏதேனும் ஒன்றை நீங்கள் கண்டால் அல்லாஹ்வைத் தொழுது அதை அகற்றும் வரை அவனிடம் பிரார்த்தியுங்கள்‘ என்று கூறினார்கள்.

## ஆடையை வரிந்து கட்டுவது

ஹதீஸ் 5786. அபூ ஜு ஹைஃபா(ரலி) அறிவித்தார்

பிலால்(ரலி) (இரும்புப் பிடி போட்ட) ஒரு கைத்தடியைக் கொண்டு வந்து அதை (பூமியில் தடுப்பாக) நட்டு வைத்துப் பிறகு, தொழுகைக்குஇகாமத் சொல்வதை கண்டேன். அப்போது

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆடையை வரிந்து கட்டிக் கொண்டு (தம் அறையிலிருந்து) வெளியே வந்ததை பார்த்தேன். நபி(ஸல்) அவர்கள் கைத்தடி நடப்பட்டிருந்த திசையை நோக்கி (நின்று) இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். மக்களும் (வாகனப்) பிராணிகளும் கைத்தடிக்கு அப்பால் நபி(ஸல்) அவர்களுக்கு முன் நடந்து செல்வதை பார்த்தேன்.

## கணுக்கால்களுக்குக் கீழே தொங்கும் ஆடை நரகம் செல்லும்.

ஹதீஸ் 5787. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கணுக்கால்களுக்குக் கீழே தொங்கும் (வகையில்) கீழங்கி(யை அணிகிறவர்) நரகத்தில் (புகுவார்).

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தற்பெருமையினால் ஆடையை(த் தரையில் படும்படி) இழுத்துச் செல்வது.

ஹதீஸ் 5788. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கர்வத்தோடு தன்னுடைய கீழாடையை(த் தரையில் படும்படி) இழுத்துச் சென்றவனை மறுமை நாளில் அல்லாஹ் ஏறெடுத்தும் பார்க்கமாட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5789நபி(ஸல்) அவர்கள் அல்லதுஅபுல் காசிம்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(முற்காலத்தில்) ஒரு மனிதன் (தனக்குப் பிடித்த) ஓர் ஆடையை அணிந்துகொண்டு நன்கு தலைவாரிக் கொண்டு தற்பெருமையுடன் நடந்து சென்று கொண்டிருந்தான். திடீரென அவனை அல்லாஹ் பூமிக்குள் புதையச் செய்துவிட்டான். அவன் மறுமை நாள் வரை (அவ்வாறே பூமிக்குள்) குலுங்கிய படி அழுந்திச் சென்று கொண்டேயிருப்பான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5790. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முற்காலத்தில்) ஒருவர் தம் கீழங்கியை (தற்பெருமையுடன் தரையில்) இழுத்துக்கொண்டு சென்று கொண்டிருந்தபோது அவரை பூமியில் புதைந்து போகும் படி செய்யப்பட்டது. அவர் அப்படியே (தம் உடல்) குலுங்கியபடி மறுமை நாள் வரை பூமியினுள் அழுந்திச் சென்று கொண்டேயிருப்பார்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஜரீர் இப்னு ஸைத்(ரஹ்) கூறினார்

நான் சாலீம் இப்னு அப்தில்லாஹ் இப்னி உமர்(ரஹ்) அவர்களுடன் அவர்களின் வீட்டு வாசலருகே அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள்,அபூ ஹுரைரா(ரலி) நபி(ஸல்) அவர்களிடம் மேற்சொன்ன ஹதீஸைப் போன்று கேட்டதாகக் கூறியதை நான் செவியேற்றேன்' என்றார்கள்.

ஹதீஸ் 5791. ஷுஅபா இப்னு ஹஜ்ஜாஜ்(ரஹ்) அறிவித்தார்

நான் முஹாரிப் இப்னு திஸார்(ரஹ்) அவர்களைக் குதிரையொன்றின் மீது சென்று கொண்டிருந்தபோது சந்தித்தேன். அவர்கள் (கூஃபாவில்) தாம் தீர்ப்பளிக்கும் இடத்திற்குச் சென்றுகொண்டிருந்தார்கள். நான் அவர்களிடம் (மேற்கண்ட) இந்த ஹதீஸைக் குறித்துக் கேட்டேன். அவர்கள் எனக்கு(ப் பின்வருமாறு) அறிவித்தார்கள்.

"தற்பெருமையின் காரணத்தால் தம் ஆடையை(த் தரையில்படும்படி) இழுத்துக் கொண்டு செல்கிறவரை அல்லாஹ் மறுமை நாளில் ஏறெடுத்தும் பார்க்க மாட்டான்' என்று கூறினார்கள்

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) சொல்லக் கேட்டேன். அப்போது நான் முஹாரிப்(ரஹ்) அவர்களிடம்,தம் கீழங்கியை‘ என்று அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) தம் அறிவிப்பில் கூறினார்களா? என்று வினவினேன். அதற்க அவர்கள்,கீழங்கி‘ என்றோ,(முழு நீளச்) சட்டை என்றோ அன்னார் குறிப்பிட்டுச் சொல்லவில்லை‘ என்று பதிலளித்தார்கள்.

இதே ஹதீஸ் வேறு பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## குஞ்சம் வைத்த கீழங்கி

இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்), அபூ பக்ர் இப்னு முஹம்மத்(ரஹ்), ஹம்ஸா இப்னு அபீ உசைத்(ரஹ்), முஆவியா இப்னு அப்தில்லாஹ் இப்னி ஜஅஃபர்(ரஹ்) ஆகியோர் குஞ்சம் வைத்த ஆடைகளை அணிந்தார்கள் என்று கூறப்படுகிறது.

ஹதீஸ் 5792. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (என் தந்தை) அபூ பக்ர்(ரலி), இருக்க நான் (அங்கு) அமர்ந்திருந்தபோது ரிஃபாஆ அல்குறழீ(ரலி) அவர்களின் துணைவியார் வந்தார். அவர்,இறைத்தூதர் அவர்களே! நான் ரிஃபாஆ அவர்களின் மனைவியாக இருந்தேன். அவர் என்னை ஒட்டுமொத்தமாக மணவிலக்குச் செய்துவிட்டார். எனவே, நான் அவருக்குப் பிறகு அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர் அவர்களை மணமுடித்துக் கொண்டேன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவருடன் (இன உறுப்பு என்று) இருப்பது இந்த (முகத்திரையின்) குஞ்சத்தைப் போன்றது தான், இறைத்தூதர் அவர்களே!என்று சொல்லிவிட்டுத் தம் முகத்திரையின் குஞ்சத்தை எடுத்துக் காட்டினார்.

காலித் இப்னு ஸயீத் இப்னு ஆஸ்(ரலி) இச்சொல்லை வாசலில் நின்ற படி கேட்டுக் கொண்டிருந்தார்கள். காலித் இப்னு ஸயீத்(ரலி) உள்ளே வர அனுமதியளிக்கப்படவில்லை. அப்போது காலித் அவர்கள்,அபூ பக்ரே! இவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் பம்ரங்கமாக இப்படிப் பேசக்கூடாது என்று நீங்கள் தடுக்கக்கூடாதா? என்று (வெளியிலிருந்தவாறே) கேட்டார்கள். ஆனால், அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புன்னகைத்ததற்கு மேலாக வேறொன்றும் செய்யவில்லை. அப்பெண்ணிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நீ (உன் பழைய கணவர்) ரிஃபாஆவிடமே திரும்பச் செல்ல விரும்புகிறாய் போலும். (உன் இரண்டாம் கணவரான) இவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும், நீ அவரிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும் அது முடியாது‘ என்று கூறினார்கள். பிறகு (இவ்விஷயத்தில்) இதுவே (சட்ட) வழிமுறையாகிவிட்டது.

## மேல்துண்டுகள்

“கிராமவாசி ஒருவர் நபி(ஸல்) அவர்களின் மேல்துண்டை(ப் பிடித்து) இழுத்தார்‘ என்று அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 5793. அலீ(ரலி) அறிவித்தார்

...பிறகு நபி(ஸல்) அவர்கள் தங்களின் மேல் துண்டைக் கொண்டுவரச் சொல்லி அதை அணிந்தார்கள். பிறகு நானும் ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களும் பின்தொடர, நபி(ஸல்) அவர்கள் நடந்து சென்றார்கள். அவர்கள் ஹம்ஸா(ரலி) இருந்த வீட்டிற்குச் சென்று (உள்ளே செல்ல) அனுமதி கேட்டார்கள். அங்கு இருந்தவர்களுக்கு இவர்களுக்கு அனுமதி வழங்கினார்கள்.

## (முழு நீளச்) சட்டை அணிதல்

(இறைத்தூதர்) யூசுஃப் (அலை) அவர்கள் கூறியதை எடுத்துரைக்கும்போது அல்லாஹ் கூறினான்:

என்னுடைய இந்த (முழு நீள)ச் சட்டையை நீங்கள் எடுத்துச் சென்று, என் தந்தையாரின் முகத்தில் போடுங்கள் அவருக்குக் கண் பார்வை வந்துவிடும் (என்று யூசுஃப் கூறினார்). (திருக்குர்ஆன் 12:93)

ஹதீஸ் 5794. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

"இறைத்தூதர் அவர்களே! இஹ்ராம் கட்டியவர் எந்த ஆடையை அணிய வேண்டும்? என்று ஒருவர் கேட்டார். நபி(ஸல்) அவர்கள், இஹ்ராம் கட்டியவர் (முழு நீளச்) சட்டை அணியமாட்டார் முழுக்கால் சட்டை அணியமாட்டார் முக்காடுள்ள மேலங்கியும் அணியமாட்டார். காலுறைகளும் (மோஸாக்களும்) அணியமாட்டார். அவருக்குக் காலணிகள் கிடைக்காவிட்டால் அவர் காலுறை (மோஸாக்)களைக் கணுக்கால்களுக்குக் கீழே இருக்குமபடி அணிந்து கொள்ளட்டும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5795. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்

(நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு உபையின் பிரேதம் மண்ணறைக்குள் வைக்கப்பட்ட பிறகு நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். அவரை வெளியே எடுக்கும்படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவர் வெளியே எடுக்கப்பட்டு நபி(ஸல்) அவர்களின் முழங்கால்களின் மீது வைக்கப்பட்டார். நபி(ஸல்) அவர்கள் தங்களின் உமிழ் நீரை அவரின் மீது உமிழ்ந்து தம் (முழுநீளச்) சட்டையை அவருக்கு அணிவித்தார்கள். (இதன் காரணத்தை) அல்லாஹ் அறிவான்.

ஹதீஸ் 5796. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு உபை இறந்துவிட்டபோது அவரின் புதல்வர் (அப்துல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரலி)) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே தங்களின் (முழு நீளச்) சட்டையை என்னிடம் கொடுங்கள். அதில் நான் அவருக்குக்கஃபன் (பிரேத ஆடை) அணிவிப்பேன். மேலும், அவருக்காகத் தாங்கள் தொழவைத்து பாவமன்னிப்புக் கோரிப் பிரார்த்தியுங்கள்' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் அவரிடம் தம் (முழுநீளச்) சட்டையை வழங்கி (அவருக்குச் செய்ய வேண்டிய இறுதிப்) பணிகளை நீங்கள் முடித்துவிட்டால் எனக்குத் தெரிவியுங்கள்' என்று கூறினார்கள். அவ்வாறே அவர் (தம் தந்தையின் இறுதிப் பணிகளை முடித்தவுடன் நபி(ஸல்) அவர்களுக்குத் தெரிவித்தார்.

உடனே நபி(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு உபைக்காக (ஜனாஸாத் தொழுகை) தொழுதிட வந்தார்கள். அப்போது உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களை இழுத்துநயவஞ்சகர்களுக்குத் தொழவைக்கக் கூடாது என்று அல்லாஹ் தங்களுக்குத் தடை விதிக்கவில்லையா? என்று கேட்டுவிட்டு, நீங்கள் (நயவஞ்சகர்களான) அவர்களுக்காக பாவமன்னிப்புக் கோருங்கள் அல்லது கோராமலிருங்கள். (இரண்டும் ஒன்று தான். ஏனெனில்,) அவர்களுக்காக நீங்கள் எழுபது முறை பாவமன்னிப்புக் கோரினாலும் சரி, அல்லாஹ் அவர்களை ஒருபோதும் மன்னிக்கமாட்டான்' என அல்லாஹ் கூறினான் என்று கூறினார்கள். உடனேநயவஞ்சகர்களில் இறந்துவிட்டவர் எவருக்காகவும் ஒருபோதும் (நபியே!) தொழுகை நடத்தாதீர். அவர்களின் மண்ணறையருகே நிற்கவும் வேண்டாம்' எனும் (திருக்குர்ஆன் 09:84 வது) இறைவசனம் அருளப் பெற்றது. இதையடுத்து நயவஞ்சகர்களுக்கு (ஜனாஸா) தொழுகை நடத்துவதை நபியவர்கள் கைவிட்டார்கள்.

## நெஞ்சுப் பகுதியில் சட்டைக் கழுத்து அமைந்திருப்பது.

ஹதீஸ் 5797. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செலவே செய்யாத) கஞ்சனுக்கும் தர்மம் செய்பவனுக்கும் (பின்வருமாறு) உதாரணம் கூறினார்கள்: அவர்களின் நிலையானது, இரும்பாலான நீளங்கிகள்

அணிந்த இரண்டு மனிதர்களின் நிலை போன்றதாகும். அவர்களின் கைகள் அவர்களின் மார்பேகுதி கழுத்தெலும்புகளோடும் பிணைக்கப்பட்டுள்ளன. தர்மம் செய்பவர், ஒன்றைத் தர்மம் செய்யும்போதெல்லாம் அவரின் நீளங்கி விரிந்து, விரல் நுனிகளையும் மறைத்து, (அதற்கப்பால்) அவரின் பாதத் சுவடுகளைக் கூட(த் தொட்டு) அழித்துவிடுகிறது. (ஆனால்,) கஞ்சனோ அவனுடைய நீளங்கி அவனை அழுத்தி, அதன் ஒவ்வொரு வளையமும் மற்றதின் இடத்தைப் பிடித்துவிடுகிறது.

அபூ ஹு ரைரா(ரலி) கூறினார்:

(இதைக் கூறியபோது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் விரலால் தம் சட்டைக் கழுத்தை (நெருக்கி) இவ்வாறு சுட்டிக் காட்டினார்கள். மேலும்,அவன் தன்னுடைய நீளங்கியை விரிவுபடுத்த முயலும்போது நீ பார்த்தால் (வியப்படைவாய் ஏனெனில்) அது விரியாது' என்றும் கூறினார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

மற்றுமோர் அறிவிப்பில் ('இரண்டு நீளங்கிகள் என்பதற்கு பதிலாக)இரண்டு கவசங்கள் என வந்துள்ளது.

## சட்டைக் கை குறுகலான நீளங்கியை (ஜு ப்பா) பயணத்தில் அணிவது.

ஹதீஸ் 5798. மு:கீரா இப்னு ஷு அபா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஒரு பயணத்தின் போது) தம் இயற்கைத் தேவையை நிறைவேற்றச் சென்றுவிட்டுத் திரும்பி வந்தார்கள். நான் தண்ணீருடன் அவர்களை எதிர்கொண்டேன். பிறகு அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். அப்போது அவர்கள் ஷாம் நாட்டு நீளங்கி (ஜு ப்பா) அணிந்திருந்தார்கள்.

அப்போது அவர்கள் வாய்கொப்பளித்து நாசிக்குத் தண்ணீர் செலுத்திவிட்டுத் தம் முகத்தைக் கழுவினார்கள். பின்னர் தம் இரண்டு கைகளையும் சட்டைக் கைகளிலிருந்து வெளியே எடுக்கப் போனார்கள். ஆனால், சட்டைக் கைகள் குறுகலாக இருந்தன. எனவே, தம் இருகைகளையும் அவர்கள் நீளங்கியின் கீழிருந்து வெளியே எடுத்து அவற்றைக் கழுவிக் கொண்டார்கள். மேலும், தலையை (ஈரக் கையால்மஸ்ஹ் செய்து) தடவினார்கள். ('மோஸா எனும்) காலுறையையும் (ஈரக் கையால்) தடவினார்கள்.

## புனிதப் போரின்போது கம்பளி நீளங்கி (ஜு ப்பா) அணிவது.

ஹதீஸ் 5799. மு:கீரா இப்னு ஷு அபா(ரலி) அறிவித்தார்

நான் ஒரு பயணத்தின் ஓரிரவு நபி(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அப்போது அவர்கள்,உம்மிடம் தண்ணீர் இருக்கிறதா? என்று கேட்டார்கள். நான்,ஆம் (இருக்கிறது)' என்று பதிலளித்தேன். உடனே அவர்கள் தங்களின் வாகனத்திலிருந்து இறங்கி இரவின் இருளில் என் பார்வையிலிருந்து மறையும் அளவுக்கு நடந்தார்கள். (இயற்கைத் தேவையை முடித்த) பிறகு அவர்கள் வந்தார்கள். நான் குவளை நீரை அவர்களின் மீது ஊற்றினேன். அவர்கள் தங்களின் முகத்தையும் இரண்டு கைகளையும் கழுவினார்கள். அப்போது கம்பளி நீளங்கி அணிந்திருந்தார்கள். இதனால் அங்கியிலிருந்து தம் முழங்கைகளை வெளியே எடுக்க அவர்களால் இயலவில்லை. எனவே, அவற்றை அங்கியின் கீழிருந்து வெளியே எடுத்துக் கழுவினார்கள். பிறகு தம் தலையை (ஈரக் கையால்) தடவி (மஸ்ஹ் செய்திடலா)னார்கள். பிறகு நான் அவர்களின் (மோஸா எனும்) காலுறைகள் இரண்டையும் கழற்ற முனைந்தேன். அதற்கு அவர்கள்,அவற்றைவிட்டுவிடுவீராக. ஏனெனில், நான் (என் கால்கள்) இரண்டையும் தூய்மையான நிலையிலேயே (காலுறைகளுக்குள்) நுழைத்திருந்தேன்' என்று சொல்லி, (ஈரக்கையால் அவற்றைத்) தடவி (மஸஹ் செய்து) கொண்டார்கள்.

## (‘கபா எனும்) வெளிப்புற மேலங்கியும் (‘ஃபர்ரூஜ் எனும்) நீண்ட பட்டு உடுப்பும்.

இந்தப் பட்டு உடுப்பேகபா ஆகும். பின்பக்கம் திறப்பு உள்ள அங்கிக்கேஃபர்ரூஜ் என்று சொல்லப்படுவதுண்டு.

ஹதீஸ் 5800. மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (‘கபா எனும்) மேலங்கிகளை(த் தம் தோழர்களுக்கு)ப் பங்கிட்டார்கள். (ஆனால், என் தந்தை) மக்ரமா(ரலி) அவர்களுக்கு எதையும் கொடுக்கவில்லை. எனவே, மக்ரமா(ரலி) (என்னிடம்),அன்பு மகனே! இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னை அழைத்துச் செல்‘ என்று சொல்ல, நான் அவர்களை அழைத்துச் சென்றேன். (அங்கு சென்று சேர்ந்ததும்)நீ உள்ளே போய் நபி(ஸல்) அவர்களை என்னிடம் அழைத்து வா‘ என்று கூறினார்கள். நான் அவ்வாறே மக்ரமா(ரலி) அவர்களிடம் வரும்படி நபி(ஸல்) அவர்கள் மக்ரமா(ரலி) அவர்களிடம் புறப்பட்டு வந்தார்கள். அப்போது அவர்களிடம் அந்த அங்கிகளில் ஒன்று இருந்தது. மேலும், நபியவர்கள்உங்களுக்காக இதை எடுத்து வைத்தேன்‘ என்று கூறினார்கள். மக்ரமா(ரலி) அந்த அங்கியைக் கூர்ந்து பார்த்துவிட்டு,மக்ரமா திருப்தி அடைந்துவிட்டான்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5801 உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்

(ஆண்கள் பட்டு அணிவது தடை செய்யப்படுவதற்கு முன்பு) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (‘ஃபர்ரூஜ் எனும்) நீண்ட பட்டு உடுப்பு ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அதை அவர்கள் அணிந்தார்கள். பிறகு அதை அணிந்தபடியே (மஃக்ரிப் தொழுகை) தொழுதார்கள். பிறகு (தொழுதுவிட்டுத்) திரும்பியதும் அதை வெறுப்பவர்கள் போன்று பலமாக (உருவிக்) கழற்றினார்கள். பிறகு,இது இறையச்சமுடையவர்களுக்கு உகந்ததன்று‘ எனக் கூறினார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## முக்காடுள்ள மேலங்கி (புர்னுஸ்)

ஹதீஸ் 5802. சுலைமான் இப்னு தர்கான் அத்தைமீ(ரஹ்) கூறினார்

அனஸ்(ரலி) மீது முக்காடுள்ள மேலங்கி (புர்னுஸ்) ஒன்றை கண்டேன். அது மஞ்சள் நிறத்தில் கம்பளி கலந்தபட்டால் ஆனதாக இருந்தது.

ஹதீஸ் 5803. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்

ஒருவர்,இறைத்தூதர் அவர்களே! இஹ்ராம் கட்டியிருப்பவர் எந்த ஆடையை அணிய வேண்டும்? என்று கேட்டார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,(முழுநீளச்) சட்டைகள், தலைப்பாகைகள், முழுக்கால் சட்டைகள், முக்காடுள்ள மேலங்கிகள் (புர்னுஸ்), காலுறைகள் (மோஸாக்கள்) ஆகியவற்றை அணியாதீர்கள். காலணிகள் கிடைக்காதவர் மட்டும் காலுறைகள் (மோஸாக்கள்) அணிந்து கொள்ளட்டும். ஆனால், காலுறை இரண்டும் கணுக்கால்களுக்குக் கீழே இருக்கும்படி கத்தரித்து (அணிந்து) கொள்ளட்டும். குங்குமப்பூச் சாயம் மற்றும்வர்ஸ் என்னும் வாசனைச் செடியின் சாயம் தோய்க்கப்பட்ட ஆடைகளை அணியாதீர்கள்‘ என்று கூறினார்கள்.

## முழுக்கால் சட்டை

ஹதீஸ் 5804 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இஹ்ராம் கட்டியவர்களில்) கீழங்கி கிடைக்காதவர் முழுக்கால் சட்டை அணிந்து கொள்ளட்டும் காலணிகள் கிடைக்காதவர் காலுறைகளை (மோஸாக்களை) அணிந்து கொள்ளட்டும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5805. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

ஒருவர் எழுந்து,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் இஹ்ராம் கட்டியிருக்கும்போது எந்த ஆடைய அணிய வேண்டும் என்று தாங்கள் உத்தரவிடுகிறீர்கள்? என்று கேட்டார்.

நபி(ஸல்) அவர்கள், (முழு நீளச்) சட்டை, முழுக்கால் சட்டை, தலைப்பாகைகள், முக்காடுள்ள மேலங்கிகள், (‘மோஸா எனும்) காலுறைகள் ஆகியவற்றை அணியாதீர்கள். ஒருவரிடம் காலணிகள் இல்லையென்றால் அவர் மட்டும் காலுறைகளை (மோஸாக்களை) கணுக்கால்களுக்குக் கீழ் இருக்கும்படி அணிந்துகொள்ளட்டும். குங்குமப்பூச் சாயம் மற்றும்வர்ஸ் எனும் வாசனைச் செடியின் சாயம் தேய்க்கப்பட்ட ஆடைகளை அணியாதீர்கள்‘ என்று கூறினார்கள்.

## தலைப்பாகைகள்

ஹதீஸ் 5806 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இஹ்ராம் கட்டியவர் சட்டை அணிய மாட்டார் தலைப்பாகையையும் முழுக்கால் சட்டையையும் முக்காடுள்ள மேலங்கியையும், அணியமாட்டார். குங்குமப்பூச் சாயம் மற்றும்வர்ஸ் எனும் வாசனைச் செடியின் சாயம் தோய்க்கப்பட்ட ஆடையையும் (மோஸாக்கள் எனும்) காலுறைகளையும் அணியமாட்டார் காலணிகள் கிடைக்கவில்லையெனில் அவர் (மேலிருந்து) கணுக்கால்களுக்குக் கீழே காலுறை (மோஸா) இருக்கும் படி கத்தரித்து (அணிந்து) கொள்ளட்டும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## (தலையையும் முகத்தின் பெரும் பகுதியையும் மறைக்கும்) முக்காடு அணிதல்.

இப்னு அப்பாஸ்(ரலி)அவர்கள் கூறினார்கள்:

நபி(ஸல்) அவர்கள் (நோய் வாய்ப்பட்டிருந்தபோது வீட்டிலிருந்து பள்ளி வாசலுக்குப்) புறப்பட்டார்கள். அப்போது அவர்களின் மீது ஒரு கறுப்புக்கட்டு (தலையில்) இருந்தது.

அனஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் தங்களின் தலையில் ஒரு சால்வையின் ஓரத்தைக் கட்டியிருந்தார்கள்.

ஹதீஸ் 5807. ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(மக்காவிலிருந்த) முஸ்லிம்களில் சிலர் அபிசீனியாவுக்கு நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றார்கள். (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) (மதீனாவுக்கு) ஹிஜ்ரத் செய்ய ஆயத்தமானார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,சற்று பொறுங்கள். ஏனெனில், மக்கள் (இறைவனிடமிருந்து) அனுமதி வழங்கப்படுவதை எதிர்பார்க்கிறேன்‘ என்று கூறினார்கள்.

அதற்கு அபூ பக்ர்(ரலி),என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! அனுமதியை(த் தான்) எதிர்பார்க்கிறீர்களா? என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்ஆம்‘ என்று பதிலளித்தார்கள். எனவே, அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களுடன் சேர்ந்து ஹிஜ்ரத் செய்ய வேண்டுமென்பதற்காகத் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார்கள். மேலும், (இந்தப் பயணத்திற்காகவே) தம்மிடம் இருந்த இரண்டு வாகன (ஒட்டக)ங்களுக்கு நான்கு மாதம் கருவேலந் தழையைத் தீனியாகப் போட்டு (வளர்த்து) வந்தார்கள்.

(தொடர்ந்து) ஆயிஷா(ரலி) கூறினார்:

நாங்கள் ஒருமுறை நண்பகல் நேரத்தின் மத்தியில் எங்கள் வீட்டில் அமர்ந்து கொண்டிருந்தபோது அபூ பக்ர்(ரலி) அவர்களிடம்,இதோ! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தலையில் முக்காடிட்டபடி நம்மை நோக்கி - நம்மிடம் வருகை தந்திராத நேரத்தில் - வந்து

கொண்டிருக்கிறார்கள்' என்று ஒருவர் கூறினார். அப்போது அபூ பக்ர்(ரலி),(இறைத்தூதர் அவர்களே!) தங்களுக்கு என் தந்தையும் தாயும் அர்ப்பணமாகட்டும்! அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்களை ஏதோ ஒரு (முக்கியமான) விஷயம் தான் இந்த நேரத்தில் இங்கே வரச் செய்திருக்க வேண்டும்' என்று கூறினார்கள். அதற்குள் நபி(ஸல்) அவர்கள் வந்து (உள்ளே வர) அனுமதி கேட்டார்கள். அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களுக்கு அனுமதி வழங்க அவர்களும் உள்ளே வந்தார்கள் உள்ளே நுழையும்போது நபி(ஸல்) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம்,உங்களிடம் இருப்பவர்களை வெளியே அனுப்புங்கள்' என்று சொல்ல, அபூ பக்ர்(ரலி),இங்கிருப்பவர்கள் உங்கள் (துணைவி யாருடைய) குடும்பத்தினர் தாம் என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும், இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,எனக்கு (ஹிஜ்ரத்) புறப்பட அனுமதியளிக்கப்பட்டுவிட்டது' என்று கூறினார்கள். அபூ பக்ர்(ரலி),அப்படியென்றால் தங்களுடன் நானும் வர விரும்புகிறேன். என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும் இறைத்தூதர் அவர்களே!என்று சொல்லி, நபி(ஸல்) அவர்கள்,சரி' என்று கூறினார்கள். உடனே அபூ பக்ர்(ரலி),என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். இந்த என் இரண்டு வாகன (ஒட்டக)ங்களில் ஒன்றைத் தாங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,விலைக்கு வாங்கிக் கொள்கிறேன்' என்று கூறினார்கள்.

ஆயிஷா(ரலி) கூறினார்: அவர்கள் இருவருக்காகவும் வேண்டிப் பயண ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்து முடித்தோம். இருவருக்கும் ஒரு தோல் பையில் பயண உணவை வைத்தோம். (என் சகோதரி) அஸ்மா பின்த் அபீ பக்ர் தன் இடுப்புச் கச்சிலிருந்து ஒரு துண்டைக் கிழித்து அந்தத் தோல் பையின் வாயில் வைத்துக் காட்டினார். இதனால் தான்இரண்டு கச்சுடையாள் ('தாத்துந் நிதாக்கைன்') என்று அவர் பெயர் சூட்டப்பட்டார். பிறகு நபி(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும்ஸவ்ர் எனும் மலையிலுள்ள ஒரு குகையை அடைந்தார்கள். அங்கு நபி(ஸல்) அவர்கள் மூன்று இரவுகள் தங்கினார்கள். அவர்களுடன் (என் சகோதரர்) அப்துல்லாஹ் இப்னு அபீ பக்ரும் இரவில் தங்கியிருப்பார். அப்துல்லாஹ் சமயோசித அறிவு படைத்த, புத்திக் கூர்மையுள்ள இளைஞராக இருந்தார். அவர் அவ்விருவரிடமிருந்தும் (வைகறைக்கு முந்திய)ஸஹ்ர் நேரத்தில் (விடை பெற்றுப்) புறப்பட்டு விடுவார். இரவு (மக்காவில்) தங்கியிருந்த வரைப் போன்று குறைஷிகளுடன் காலையில் இருப்பார். அவர்கள் இருவருக்கெதிரான (குறைஷியரின்) சூழ்ச்சிகள் எதுவாயினும் அதைக் கேட்டு நினைவில் இருத்திக்கொண்டு இருள் கலக்கும் நேரத்தில் அவர்களிடம் அதைக்கொண்டு செல்வார்.

அவர்கள் இருவருக்காகவும் பாலை அன்பளிப்பாகக் கறந்து கொள்ள இரவல் கொடுக்கப்பட்ட ஆடொன்றை அபூ பக்ர்(ரலி) அவர்களின் (முன்னாள்) அடிமையான ஆமிர் இப்னு ஃபுஹைரா அவர்கள் மேய்த்து வந்தார்கள். அவர் இரவின் சிறிது நேரம் கழிந்தவுடன் அதனை அவர்கள் இருவரிடமும் ஓட்டி வருவார். அந்தப் பாலிலேயே இருவரும் இரவைக் கழிப்பார்கள். அந்த ஆட்டை ஆமிர் இப்னு ஃபுஹைரா இரவின் இருள் இருக்கும் போதே விரட்டிச் சென்றுவிடுவார். இதை (அவ்விருவரும் அக்குகையில் தங்கியிருந்த) மூன்று இரவுகளில் ஒவ்வோர் இரவிலகி அவர் செய்து வந்தார்.

## இரும்புத்தொப்பி

ஹதீஸ் 5808 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மக்கா வெற்றி கொள்ளப்பட்ட ஆண்டில் தம் தலையில் இரும்புத் தொப்பி அணிந்தபடி மக்காவினுள் நுழைந்தார்கள்.

சால்வைகள், (பருத்தியாலான) யமன் நாட்டு சால்வை மற்றும் மேல்போர்வை.

கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (மக்காவில் இருந்தபோது இணைவைப்பவர்களால் நாங்கள் அடைந்து வந்த துன்பங்கள் குறித்து) நபி(ஸல்) அவர்களிடம் முறையிட்டோம். அப்போது நபியவர்கள் (கஅபாவின் நிழலில்) தம் சால்வை ஒன்றைத் தலையணையாக வைத்துச் சாய்ந்து கொண்டிருந்தார்கள்.

ஹதீஸ் 5809 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடித்த விளிம்புகளைக் கொண்டநஜ்ரான் நாட்டு சால்வையொன்றை போர்த்தியிருக்க நான் அவர்களின் நடந்து சென்று கொண்டிருந்தேன். அப்போது அவர்களை கிராமவாசியொருவர் கண்டு அவர்களின் சால்வையால் அவர்களைக் கடுமையாக இழுத்தார். எந்த அளவிற்கென்றால், அவர் கடுமையாக இழுத்த காரணத்தால் சால்வை விளிம்பின் அடையாளம் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோளின் ஒரு பக்கத்தில் பதிந்திருப்பதைக் கண்டேன். பிறகு அந்தக் கிராமவாசி,முஹம்மதே! உங்களிடமிருக்கும் இறைவனின் செல்வத்திலிருந்து எனக்கும் கொடுக்கும்படி கட்டளையிடுங்கள்‘ என்றார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவர் பக்கம் திரும்பிச் சிரித்தார்கள். அவருக்குக் கொடுக்கும்படி உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 5810 அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

“ஒரு பெண்மணிபுர்தா (சால்வை) ஒன்றைக் கொண்டு வந்து,இறைத்தூதர் அவர்களே! நான் இதை என் கையால் நெய்தேன். இதைத் தாங்கள் அணிவதற்காக வழங்குகிறேன் என்றார்‘ என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்கள் கூறிவிட்டு,புர்தா என்றால் என்ன என்று தெரியுமா? எனக் கேட்டார்கள். (அங்கிருந்தவர்கள்தெரியும் என்று சொல்ல,)ஆம் அது கரை வைத்து நெய்யப்பட்ட போர்வை‘ என ஸஹ்ல்(ரலி) கூறினார். (பின்னர் தொடர்ந்து அவர்கள் சொன்னார்கள்:) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அது தமக்குத் தேவையென்று கருதி அதை வாங்கினார்கள். பிறகு, அதை கீழங்கியாக அணிந்து கொண்டு நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது மக்களில் ஒருவர் அதைத்தொட்டுப் பார்த்து (அதன் அழகை ரசித்தவராக)இறைத்தூதர் அவர்களே! எனக்கு இதை அணியக் கொடுங்கள்‘ என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்,சரி‘ என்றார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ் நாடிய (நேரம்)வரை அந்த அவையில் அமர்ந்திருந்துவிட்டு (தம் வீட்டுக்கு)த் திரும்பினார்கள். பிறகு அந்தச் சால்வையை மடித்து அந்த மனிதருக்குக் கொடுத்தனுப்பினார்கள். மக்கள்,நீ செய்தது சரியல்ல. நபி(ஸல்) அவர்கள் தம்மிடம் கேட்பவரை (வெறுங்கையோடுத்) திருப்பி அனுப்புவதில்லை என்று தெரிந்துகொண்டே அவர்களிடம் (ஏன்) இதைக் கேட்டாய்‘ என்றார்கள். அதற்கு அந்த மனிதர்,அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இதைக் கேட்டதெல்லாம் நான் இறக்கும் நாளில் என் (உடலில் அணிவிக்கப்படும்) கஃபனாக இது இருக்கட்டும் என்பதற்காகத்தான்‘ என்றார். அவ்வாறே அது அவருக்குக் கஃபனாக ஆயிற்று.

ஹதீஸ் 5811 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டம் சந்திரன் பிரகாசிப்பது போல் முகங்கள் பிராகாசித்தபடி சொர்க்கத்துக்குள் நுழைவார்கள் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். உடனே உக்காஷா இப்னு மிஹ்ஸன் அல்அசதீ(ரலி) அவர்கள் தம் மீதிருந்த கோடுபோட்ட வண்ணப் போர்வையை உயர்த்தியவாறு எழுந்து,இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘ என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்,இறைவா! இவரையும் அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக‘ என்று பிரார்த்தனை செய்தார்கள். பிறகு அன்சாரிகளில் ஒருவர் எழுந்து,இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘ என்றார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உக்காஷா உம்மை முந்திக் கொண்டுவிட்டார்‘ என்றார்கள்.

ஹதீஸ் 5812 கத்தாதா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அனஸ் (ரலி) அவர்களிடம், எந்த ஆடை நபி (ஸல்) அவர்களுக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது? என்று கேட்டேன். அவர்கள், (பருத்தியாலான) யமன் நாட்டுச் சால்வை' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5813 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

அணிவதற்கு (பருத்தியாலான) யமன் நாட்டுச் சால்வையே நபி (ஸல்) அவர்களுக்கு மிகவும் பிரியமான ஆடையாக இருந்தது.

ஹதீஸ் 5814 அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அறிவித்தார்.

"இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இறந்தபோது அவர்களின் உடல் (பருத்தியாலான) யமன் நாட்டுப் போர்வையால் போர்த்தி மூடப்பட்டது' என்று நபி (ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா (ரலி) அவர்கள் எனக்கு அறிவித்தார்கள்.

## கெட்டியான ஆடைகளும் (சதுர வடிவிலான) கறுப்புக்கம்பளி ஆடைகளும்.

ஹதீஸ் 5815 ஹதீஸ் 5816 ஆயிஷா (ரலி) அவர்களும் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் அறிவித்தார்கள்:

இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு (நோய் அதிகமாம்) இறப்பு நெருங்கிவிட்டபோது அவர்கள் தங்களின் கறுப்புக் கம்பளி ஆடையைத் தம் முகத்தின் மீது போட்டுக் கொள்ளலானார்கள். அவர்களுக்கு மூச்சுத் திணறல் ஏற்படும்போது தம் முகத்திலிருந்து அதை அகற்றிவிடுவார்கள். அவர்கள் அதே நிலையில் இருந்துகொண்டேயூதர்களின் மீதும் கிறிஸ்தவர்களின் மீதும் அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும். அவர்கள் தம் இறைத்தூதர்களின் அடக்கத் தலங்களை வணக்கத் தலங்களாக ஆக்கினார்கள்' என்று அவர்கள் செய்ததை (ப் போன்று நீங்களும் செய்துவிடக் கூடாது என அதைக்) குறித்து எச்சரித்தார்கள்.

ஹதீஸ் 5817 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் வேலைப்பாடு மிக்க (சதுரமான) கறுப்புக் கம்பளி ஆடை ஒன்றை அணிந்துகொண்டு தொழுதார்கள். பிறகு அதன் வேலைப்பாடுகளைக் கூர்ந்து கவனித்தார்கள். (தொழுது முடித்து) சலாம் கொடுத்தவுடன், என்னுடைய இந்த கறுப்புக் கம்பளி ஆடையை (இதை எனக்கு அன்பளித்த) அபூ ஜஹ்மிடம் கொண்டு செல்லுங்கள். ஏனெனில், சற்று முன்பு அது தொழுகையிலிருந்து என் கவனத்தைத் திருப்பிவிட்டது. அபூ ஜஹ்மின் (மற்றொரு) சாதாரண ஆடையை என்னிடம் கொண்டு வாருங்கள்' என்று கூறினார்கள்.

-அவர் அதீ இப்னு கஅப் குலத்தைச் சேர்ந்த அபூ ஜஹ்கி இப்னு ஹு தைஃபா இப்னி ஃகானிம் என்பவராவார்.

ஹதீஸ் 5818 அபூ புர்தா (ரலி) அறிவித்தார்.

ஆயிஷா (ரலி) அவர்கள் எங்களிடம் (ஒட்டுப்போட்ட) கெட்டியான ஆடை ஒன்றையும் கெட்டியான கீழங்கியொன்றையும் எடுத்துக்காட்டி, இந்த இரண்டையும் அணிந்திருந்த நிலையில்தான் நபி (ஸல்) அவர்களின் உயிர் பிரிந்தது' என்றார்கள்.

## ஒரேயொரு துணியை உடலில் சுற்றிக் கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு, மற்றொரு தோள் பகுதியைத் திறந்த நிலையில்விட்டு விடுவது (இஷ்திமாலுஸ் ஸம்மாஉ).

ஹதீஸ் 5819 அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள்முலாமஸா மற்றும்முனாபதா ஆகிய வியாபாரம் முறைகளுக்குத் தடை விதித்தார்கள். 37 ஃபஜ்ருக்குப் பிறகு சூரியன் உயரும் வரை தொழுவது, அஸ்ருக்குப் பிறகு

சூரியன் மறையும் வரை தொழுவது ஆகிய இரண்டு (நஃபில்) தொழுகைக்கும் நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். மர்ம உறுப்பு வானுக்குத் தெரியும்படி ஒரே ஆடையை (முழங்காலில்) சுற்றிக்கொண்டு இரண்டு முழங்கால்களையும் நட்டு வைத்துக் கொண்டு (அவற்றைக் கைகளால் கட்டியபடி) உட்கார்வதற்கும் (இஹ்திபா) தடை விதித்தார்கள். ஒரே துணியை உடலில் சுற்றிக்கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு மற்றொரு தோளைத் திறந்த நிலையில்விட்டு விடுவதற்கும் (இஷ்திமாலுஸ் ஸம்மாஉ) தடை விதித்தார்கள்.

ஹதீஸ் 5820 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆடை அணியும் முறைகள் இரண்டையும், வியாபார முறைகள் இரண்டையும் தடை செய்தார்கள்.

வியாபாரத்தில்முலாமஸா மற்றும்முனாபஃதா ஆகிய முறைகளைத் தடை செய்தார்கள். முலாமஸா என்றால், இரவிலோ பகலிலோ (ஒரு பொருளை வாங்கும்) ஒருவர் (விற்கும்) மற்றொருவரின் துணியைத் தம் கரத்தால் தொடுவதாகும். (அவ்வாறு தொட்டுவிட்டாலே வியாபாரம் உறுதியாகி விடும் என்ற நிபந்தனையின் பேரில்) அதைத் தொட்டதோடு முடித்துக்கொண்டு விரித்துப் பார்க்காமலேயே வாங்குவதாகும்.

'முனாபதா என்பது, ஒருவர் மற்றொரு வரை நோக்கித் தம் துணியை எறிய அந்த மற்றவர் இவரை நோக்கித் தம் துணியை எறிய (துணியைப் பிரித்துப்) பார்க்காமலும் பரஸ்பர திருப்தி இல்லாமலும் இருவருக்குமிடையிலான வியாபார (ஒப்பந்த)மாக அதுவே ஆம்விடுவதாகும்.

ஆடை அணியும் முறைகள் இரண்டும் வருமாறு:

1. இஷ்திமாலுஸ் ஸம்மாஉ. அதாவது ஒருவர் ஒரே துணியைத் தம் தோள்களில் ஒன்றில் போட்டுக்கொள்ள அவரின் உடலின் இரண்டு பக்கங்களில் ஒன்று துணியின்றி வெளியே தெரிவதாகும்.

2. இஹ்திபா அதாவது ஒரே துணியால் (தம் முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக்கொண்டு மர்ம உறுப்பு வெளியே தெரிய (அதைத் துணியால் மறைக்காமல்) அமர்ந்திருப்பதாகும்.

## ஒரே துணியைப் போர்த்திக்கொண்டு (முழங்கால்களைக் கட்டியபடி) அமர்வது (இஹ்திபா).

ஹதீஸ் 5821 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரண்டு விதமாக ஆடை அணிவதைத் தடை செய்தார்கள். மர்ம உறுப்பு வெளியே தெரியும்படி ஒருவர் ஒரே துணியால் (தம் முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக் கொண்டு அமர்ந்திருப்பதையும் (இஹ்திபா), ஒரே துணியை (இரண்டு தோள்களில் ஒன்றில்) சுற்றிக்கொண்டு ஒரு பக்கம் துணியில்லாமல் இருப்பதையும் (இஷ்திமால்) தடை செய்தார்கள். (வியாபார முறைகளில்) முலாமஸாவையும், முனாபதாவையும் தடை செய்தார்கள்.

ஹதீஸ் 5822. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஒரே துணியை உடலில் சுற்றிக்கொண்டு, அதன் ஒரு மூலையை ஒரு தோளில் போட்டுக்கொண்டு, மற்றொரு தோள் பகுதியைத் திறந்தவாறுவிட்டுவிடுவதையும் (இஷ்திமாலுஸ் ஸம்மாஉ), ஒரே துணியால் (தம் முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக்கொண்டு மர்ம உறுப்பு வெளியே தெரியுமாறு (குத்துக்காலிட்டு) அமர்வதையும் (இஹ்திபா) நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

## கறுப்பு நிறக் கம்பளி ஆடை

ஹதீஸ் 5823 உம்மு காலித் பின்த் காலித்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஆடைகள் சில கொண்டு வரப்பட்டன. அவற்றில் சிறிய கறுப்பு நிறக் கம்பளியாடை ஒன்றும் இருந்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,இதை நாம் யாருக்கு அணிவிக்கப் போகிறோம் என்று நீங்கள் கருதுகிறீர்கள்? என்று கேட்டார்கள். மக்கள் (பதில் வறாமல்) மௌனமாக இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,உம்மு காலிதை என்னிடம் கொண்டு வாருங்கள்' என்று சொல்ல, அவ்வாறே (சிறுமியாக இருந்த) நான் தூக்கிக் கொண்டு வரப்பட்டேன். உடனே நபி(ஸல்) அவர்கள் தங்களின் கரத்தால் அந்த ஆடையை எடுத்து எனக்கு அணிவித்தார்கள். மேலும்,(இந்த ஆடையை) நீ (பழையதாக்கிக்) கிழித்து நைந்து போகச் செய்துவிடு' என்று கூறிவிட்டு,உம்மு காலிதே! இதுசனாஹ் (அழகாயிருக்கிறது)' என்றார்கள்.

(நபி(ஸல்) அவர்கள் கூறிய)சனாஹ் எனும் சொல், அபிசீனிய மொழிச் சொல்லாகும்.

அந்த ஆடையில் பச்சை நிறத்தில் அல்லது மஞ்சள் நிறத்தில் வேலைப்பாடு செய்யப்பட்டிருந்தது.

ஹதீஸ் 5824 அனஸ்(ரலி) அறிவித்தார்.

(என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களுக்குக் குழந்தை பிறந்தபோது என்னிடம் அவர்கள்அனஸே! இந்தக் குழந்தையை நன்கு கவனித்துக்கொள் நபி(ஸல்) அவர்கள் (இனிப்புப் பொருளை) மென்று இவனுடைய வாயிலிடுவதற்காக இவனை நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துச் செல்லும்வரை இவன் எதையும் சாப்பிட்டுவிட வேண்டாம்' என்றார்கள். அவ்வாறே நான் அவனை நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துச் சென்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்தில்ஹு ரைஸ் (அல்லதுஜவ்ன்') குலத்தார் தயாரித்த கறுப்பு நிறக் கம்பளி மேலங்கியை அணிந்துகொண்டு மக்கா வெற்றியின்போது தம்மிடம் வந்த தம் வாகன (ஒட்டக)த்திற்கு அடையாளமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

## பச்சை நிற ஆடைகள்

ஹதீஸ் 5825 இக்ரிமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ரிஃபாஆ அல்குறழீ(ரலி) அவர்கள் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட, அந்தப் பெண்ணை அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர் அல்குறழீ(ரலி) அவர்கள் மணந்தார்கள். (பிறகு நடந்தவற்றை) ஆயிஷா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

(ஒரு முறை) அந்தப் பெண்மணி பச்சை நிற முகத்திரை அணிந்துகொண்டு என்னிடம் (வந்து தம் கணவர் அப்துர் ரஹ்மான் தம்மை துன்புறுத்துவதாக) முறையிட்டார். தம் கணவர் தம்மை அடித்ததால் தம் மேனியில் (கன்றியிருந்த) பச்சை நிற அடையாளத்தை எனக்குக் காட்டினார்.

-(இக்ரிமா கூறுகிறார்:) பெண்கள் ஒருவருக்கொருவர் உதவுவது வழக்கம் தானே?) அந்த வழக்கப்படி

(நபி(ஸல்) அவர்கள் வந்தபோது,இறைத்தூதர் அவர்களே!) நான் (ஆயிஷா) இறைநம்பிக்கையுடைய பெண்கள் சந்திக்கும் துன்பத்தைப் போன்று எங்கும் பார்த்ததில்லை. இவருடைய மேனி (இவருடைய கணவர் அப்துர் ரஹ்மான் அடித்ததால் கன்றிப்போய்) இவரின் (பச்சை நிற முகத்திரைத்) துணியைவிடக் கடுமையான பச்சை நிறமுடையதாக உள்ளது' என்று சொன்னேன். (இதற்கிடையில்) அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர்(ரலி) அவர்கள் தம் மனைவி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று தம்மைப் பற்றி முறையிட்டார் என்று கேள்விப்பட்டார். எனவே, மற்றொரு மனைவியின் மூலமாகத் தமக்குப் பிறந்த இரண்டு மகன்களைத் தம்முடன் அழைத்து வந்தார்.

அப்பெண்மணி, (இறைத்தூதர் அவர்களே!) அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இவருக்கு எந்தக் குறையும் வைக்கவில்லை. ஆனால், (தாம்பத்திய சுகத்தில்) இவரிடமிருந்து இதைவிட அதிகமாக ஒன்றும் என்னைத் திருப்திப்படுத்த முடியவில்லை' என்று கூறி, தம் ஆடையின்

முந்தானைக் குஞ்சத்தை எடுத்துக் காட்டினார். அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர்,பொய் சொன்னாள், அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர் அவர்களே! (தாம்பத்திய உறவின்போது) பதனிடப்பட்ட தோலை உதறியெடுப்பதைப் போன்று நான் இவளை (முழுமையாக அனுபவித்து) உதறியெடுத்துவிடுவேன். எனினும், இவள்தான் ரிஃபாஆவை (மீண்டும் மணந்து கொள்ள) விரும்பி எனக்குக் கீழ்ப்படிய மறுக்கிறாள்' என்றார். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அப்படி(ரிஃபாஆவை மீண்டும் நீ மணந்து கொள்ள விரும்பினா)யானால், (உன் இரண்டாம் கணவரான) இவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரை அ(ந்த முதல் கண)வருக்கு நீஅனுமதிக்கப்பட்டவள் அல்லதுஏற்றவள் நீஅனுமதிக்கப்பட்டவள் அல்லதுஏற்றவள் அல்லள்' என்றார்கள். அப்துர் ரஹ்மான் அவர்களுடன் இருந்த அவர்களின் இரண்டு மகன்களையும் நபி(ஸல்) அவர்கள் பார்த்தார்கள்.இவர்கள் உங்கள் புதல்வர்களா? என்று (அப்துர் ரஹ்மான் அவர்களிடம்) கேட்டார்கள். அவர்,ஆம்' என்றார். நபி(ஸல்) அவர்கள்,இவரைப் பற்றியா நீ இப்படிச் சொல்கிறாய்? அல்லாஹ்வின் மீதாணையாக! ஒரு காக்கை மற்றொரு காக்கைக்கு ஒப்பாக இருப்பதை விடவும் அதிகமாக இந்தப் புதல்வர்கள் இவரை ஒத்திருக்கின்றனர்' என்றார்கள்.

## வெண்ணிற ஆடைகள்

ஹதீஸ் 5826 ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

உஹுத் போரின்போது நான் நபி(ஸல்) அவர்களின் வலப் பக்கமும் இடப்பக்கமும் வெண்ணிற ஆடைகள் அணிந்த இரண்டு மனிதர்களைப் பார்த்தேன். அதற்கு முன்பும் அவர்களை நான் பார்த்ததில்லை அதற்குப் பின்பும் அவர்களை நான் பார்க்கவில்லை. 47

ஹதீஸ் 5827 அபூ தர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் வெள்ளை ஆடை அணிந்தபடி உறங்கிக் கொண்டிருந்தபோது நான் அவர்களிடம் சென்றேன். பிறகு அவர்கள் விழித்துக்கொண்டபோது (மீண்டும்) அவர்களிடம் சென்றேன். அப்போது,லா இலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை) என்று சொல்லி, பிறகு அதே நம்பிக்கையில் இறந்துவிடும் மனிதர் எவராயினும், அவர் சொர்க்கம் புகுந்தே தீருவார்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். நான்,அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரி (சொர்க்கம் புகுந்தே தீருவார்)' என்றார்கள். நான் (மீண்டும்)அவர் விபசார புரிந்தாலும் திருடினாலுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரி (சொர்க்கம் புகுந்தே தீருவார்)' என்றார்கள். நான் (மூன்றாவது முறையாக)அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரி (சொர்க்கம் புகுந்தே தீருவார்). அபூ தர்ரின் மூக்கு மண்ணைக் கவ்வட்டும்! (அதாவது நீர் இதை விரும்பாவிட்டாலும் சரியே)' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் அபுல் அஸ்வத் அத்துஅலீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

அபூ தர்(ரலி) அவர்கள் இதை அறிவிக்கும்போதுஅபூ தர்ரின் மூக்கு மண்ணைக் கவ்வினாலும் சரியே' என்று கூறிவந்தார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்.

(விபசாரம், திருடு போன்ற குற்றம் புரிந்த ஒருவர் இறக்கும்போதோ அதற்கு முன்போ மனம் வருந்தி பாவமன்னிப்புக் கோரிலாஇலாஹா இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை)' என்று சொல்லியிருந்தால்தான் அவருக்கு இவ்வாறு மன்னிப்பு அளிக்கப்படும்.

## ஆண்கள் பட்டாடை அணிவதும் பட்டில் பயன்படுத்த அனுமதிக்கப்பட்ட அளவும்.

ஹதீஸ் 5828 அபூ உஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் உத்பா இப்னு ஃபர்கத் (ரலி) அவர்களுடன் (ஈரானிலுள்ள) ஆதர்பைஜானில் இருந்தபோது எங்களிடம் உமர் (ரலி) அவர்களின் கடிதம் வந்தது. (அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பட்டு அணிவதை (ஆண்களுக்கு)த் தடை செய்தார்கள் இந்த அளவைத் தவிர. (இதைக் கூறியபோது) பெருவிரலை அடுத்துள்ள (சுட்டுவிரல், நடுவிரல் ஆகிய) இரண்டு விரல்களால் நபி (ஸல்) அவர்கள் சைகை செய்தார்கள்.

அறிவிப்பாளர் அபூ உஸ்மான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நாங்கள் அறிந்த வரை (அவர்கள் குறிப்பிட்டஇந்த அளவு என்பது, ஆடைகளின் கரைகளில் செய்யப்படும்) வேலைப்பாட்டைக் குறிக்கிறது.

ஹதீஸ் 5829 அபூ உஸ்மான் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் (ஈரானிலுள்ள) ஆதர்பைஜானில் இருந்தபோது உமர் (ரலி) அவர்கள் எங்களுக்கு,நபி (ஸல்) அவர்கள் பட்டு அணிவதை (ஆண்களுக்கு)த் தடை செய்தார்கள் இந்த அளவைத் தவிர. மேலும், (அந்த அளவை விவரிக்கும் வகையில்) தம் இரண்டு விரல்களை வரிசைப்படுத்திக் காட்டினார்கள்' என்று கடிதம் எழுதினார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுஹைர் (ரஹ்) அவர்கள் (இதை அறிவிக்கையில்) நடுவிரலையும் சுட்டு விரலையும் உயர்த்திக் காட்டினார்கள்.

ஹதீஸ் 5830 அபூ உஸ்மான் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் உத்பா இப்னு ஃபர்கத் (ரலி) அவர்களுடன் (ஆதர்பைஜானில்) இருந்தோம். அப்போது அவர்களுக்கு கடிதம் எழுதினார்கள்.

(நபி (ஸல்) அவர்கள்,இம்மையில் (ஆண்கள்) பட்டு அணிந்தால் மறுமையில் அதிலிருந்து சிறிதளவும் அணியவே முடியாது' என்றார்கள்.

...மற்றோர் அறிவிப்பில்,அபூ உஸ்மான் (ரஹ்) அவர்கள் தங்களின் சுட்டுவிரலாலும் நடுவிரலாலும் சைகை செய்தார்கள்' என்று அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

ஹதீஸ் 5831 அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஹுதைஃபா (ரலி) அவர்கள் (இராக்கில் உள்ள) மதாயின் (தைஃபூன்) நகரில் இருந்தார்கள். அப்போது அவர்கள் குடிக்கத் தண்ணீர் கேட்டார்கள். உடனே (மஜூஸியான) ஊர்த் தலைவர் ஒரு வெள்ளிப் பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்தார். ஹுதைஃபா (ரலி) அவர்கள் அதை அவரின் மீது வீசியெறிந்துவிட்டு, (அங்கிருந்தவர்களிடம்)நான் இவரை(ப் பல முறை) தடுத்தும் இவர் (வெள்ளிப் பாத்திரத்தைத்) தவிர்க்காத காரணத்தால் தான் நான் இதை அவரின் மீது வீசியெறிந்தேன். இறைத்தூதர் (ஸல்) அவர்கள்,தங்கம், வெள்ளி, சாதாரணப்பட்டு, அலங்காரப்பட்டு ஆகிய இவையெல்லாம் இம்மையில் (இறை மறுப்பாளர்களான) அவர்களுக்கும், மறுமையில் (இறைநம்பிக்கையாளர்களான) உங்களுக்கும் உரியனவாகும்' என்றார்கள்' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 5832 ஷுஅபா இப்னு ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல் அஸீஸ் இப்னு ஸுஹைப் (ரஹ்) அவர்கள்,நான் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் சொல்லக் கேட்டேன்' என்று (பின்வரும் ஹதீஸை) அறிவிக்கலானார்கள். உடனே நான்,நபி (ஸல்) அவர்களிடமிருந்தா? என்று கேட்க, அதற்கு அவர்கள் உறுதியான தொனியில், (ஆம்) நபி (ஸல்) அவர்களிடமிருந்துதான்' என்று கூறிவிட்டு, (ஆண்களில்) இம்மையில்

பட்(டா)டை அணிகிறவர் மறுமையில் ஒருபோதும் அதை அணியமாட்டார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனறார்கள்.

ஹதீஸ் 5833 ஸாபித் அல்புனானீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு ஸு பைர்(ரலி) அவர்கள் உரை நிகழ்த்துகையில்முஹம்மத்(ஸல்) அவர்கள்,(ஆண்களில்) இம்மையில் பட்(டா)டை அணிகிறவர் மறுமையில் அதை அணியமாட்டார் என்றார்கள்' எனக் கூறக் கேட்டேன்.

ஹதீஸ் 5834 அப்துல்லாஹ் இப்னு ஸு பைர் அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,(ஆண்களில்) இம்மையில் பட்(டா)டை அணிகிறவர் மறுமையில் அதை அணியமாட்டார்' என்று கூறினார்கள் என உமர்(ரலி) அவர்கள் சொல்ல கேட்டேன்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இப்னு ஸு பைர்(ரலி) அவர்கள் வாயிலாகவே அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5835 இம்ரான் இப்னு ஹித்தான்(ரஹ்) அவர்கள் கூறினார்:

நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் பட்(டா)டை குறித்துக் கேட்டேன். அவர்கள்,இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (சென்று) கேளுங்கள்' என்றார்கள். நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (சென்று) கேட்டேன். அவர்கள்,இப்னு உமர்(ரலி) அவர்களைக் கேளுங்கள்' என்று கூற நான் இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்டேன்.

அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: அபூ ஹஃப்ஸ், அதாவது உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள்,மறுமையில் யாருக்கு எந்தப் பங்குமில்லையோ அவர்தாம் இம்மையில் பட்(டா)டை அணிவார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னார்கள் என எனக்கு அறிவித்தார்கள்.

(இதைக் கேட்ட) நான்,உண்மையே சொன்னார் அபூ ஹஃப்ஸ்(ரலி) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மீது பொய்யுரைக்கவில்லை' என்று சொன்னேன்.

இதே ஹதீஸ், இம்ரான் இப்னு ஹித்தான்(ரஹ்) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## பட்டாடையை அணியாமல் தொட்டுப் பார்ப்பது.

இது குறித்து நபி(ஸல்) அவர்களிடமிருந்து அனஸ்(ரலி) அவர்களின் அறிவிப்பொன்று உள்ளது.

ஹதீஸ் 5836 பராஉ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்குப் பட்டாடையொன்று அன்பளிப்பாக வழங்கப்பட்டது. நாங்கள் அதைத் தொட்டு அதன் (மென்மை மற்றும் தரம்) காரணமாக வியக்கலானோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்,இதைக் கண்டு நீங்கள் வியக்கின்றீர்களா? என்று கேட்க நாங்கள்,ஆம்' என்றோம். நபி(ஸல்) அவர்கள்சொர்க்கத்தில் ஸஅத் இப்னு முஆத் அவர்களுக்குக் கிடைக்கவிருக்கும் கைக்குட்டைகள் இதைவிடச் சிறந்தவை ஆகும்' என்றார்கள்.

## பட்டுத் துணியை விரிப்பாகப் பயன்படுத்துதல்.

அபீ தா இப்னு அம்ர் அஸ்ஸல்மானீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பட்டை விரிப்பாகப் பயன்படுத்தவது, அதை அணிவதைப் போன்று (தடை செய்யப்பட்டது) தான்.

ஹதீஸ் 5837 ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பொன் மற்றும் வெள்ளிப் பாத்திரங்களில் பருக வேண்டாமென்றும், அவற்றில் உண்ண வேண்டாமென்றும், (ஆண்கள்) சாதாரண பட்டையும் அலங்கார பட்டையும் அணிய வேண்டாமென்றும், பட்டின் மீது அமர வேண்டாமென்றும் எங்களுக்குத் தடை விதித்தார்கள்.

## ‘கஸ் வகைப் பட்டு அணிவது

அபூ புர்தா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

நான் அலீ (ரலி) அவர்களிடம்கஸ் வகைத் துணி என்றால் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், அது ஷாம் (சிரியா) நாட்டிலிருந்தோ எம்ப்திலிருந்தோ எங்களுக்கு வந்து கொண்டிருந்த ஒரு வகைத் துணியாகும். அதில் விலா எலும்புகளைப் போன்று வரி வரியாகக் கோடுகள் இருக்கும் அதில் பட்டும் கலந்திருக்கும். நாரத்தையைப் போன்ற (தடித்த வளைந்த) கோடுகள் அதில் இருக்கும். மீஸரா என்பது, பெண்கள் தம் கணவர்களுக்காக மென்பட்டுத் திண்டுகளைப் போன்று தயாரித்து வந்த விரிப்புகளாகும்‘ என்று பதிலளித்தார்கள்.

ஜரீர் இப்னு அப்தில்ஹமீத் (ரஹ்) அவர்கள் யஸீத் (ரஹ்) அவர்களிடமிருந்து அறிவிக்கும் ஹதீஸில் (பின்வருமாறு) காணப்படுகிறது:கஸ் வகைத் துணி என்பது விலா எலும்புகளைப் போன்று வரி வரியாகக் கோடுகள் போடப்பட்ட எம்ப்திலிருந்து கொண்டு வரப்படுகிற ஒரு வகைத் துணியாகும். அதில் பட்டு கலந்திருக்கும் . மீஸரா என்பது விலங்குகளின் தோல்களாகும்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய) நான் கூறுகிறேன்:

‘மீஸரா தொடர்பாக ஆஸிம் (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள (மேற்கண்ட) கருத்தே அதிகமான அறிவிப்பாளர்தொடர்களில் வந்துள்ளதாகும் (யஸீத் அவர்கள் கூறியுள்ள விலங்குகளின் தோல் என்பதை விடச்) சரியானதும் ஆகும்.

ஹதீஸ் 5838 பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் சிவப்பு மென்பட்டு விரிப்புகளையு (‘மீஸரா), கஸ் வகைப்பட்டுத் துணியையும் எங்களுக்குத் தடை செய்தார்கள்.

## சொறி சிரங்குக்காக ஆண்கள் பட்டு அணிய அனுமதிக்கப்படுவர்.

ஹதீஸ் 5839 அனஸ் (ரலி) அறிவித்தார்.

ஸு பைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களுக்கும் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களுக்கும் ஏற்பட்டிருந்த சொறி சிரங்கின் காரணத்தால் பட்டாடை அணிந்துகொள்ள அவர்கள் இருவருக்கும் நபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.

## பெண்களுக்குப் பட்டாடை (அனுமதிக்கப்படும்).

ஹதீஸ் 5840 அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் கோடுபோட்ட பட்டு அங்கியொன்றை எனக்கு வழங்கினார்கள். நான் அதை அணிந்துகொண்டு வெளியே புறப்பட்டேன். அப்போது அவர்களின் முகத்தில் கோபக் குறியை கண்டேன். எனவே, அதைப் பல துண்டுகளாக்கி எங்கள் (வீட்டுப்) பெண்களிடையே பங்கிட்டு விட்டேன்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5841 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) உமர் (ரலி) அவர்கள் கோடு போட்ட பட்டு அங்கி ஒன்று விற்கப்படுவதைக் கண்டார்கள். உடனே, இறைத்தூதர் அவர்களே! இதைத் தாங்கள் வாங்கிக் கொண்டால், தங்களிடம் தூதுக் குழுக்கள் வரும்போதும் வெள்ளிக்கிழமையின் போதும் அணிந்து கொள்ளலாமே‘ என்றார்கள். நபி (ஸல்) அவர்கள் அதன் பிறகு உமர் (ரலி) அவர்களுக்கு, அவர்கள் அணிந்து கொள்வதற்கு ஏற்றாற் போன்று கோடு போட்ட பட்டு அங்கி ஒன்றை அனுப்பி வைத்தார்கள். எனவே உமர் (ரலி) அவர்கள், (இறைத்தூதர் அவர்களே!) இது பற்றித் தாங்கள் சொன்னதை நான் கேட்டிருக்க (இப்போது) இதை எனக்கே அணியக் கொடுத்துள்ளீர்களே!என்று வினவ, நபி (ஸல்) அவர்கள், அதை நான் உங்களுக்கு அனுப்பி

வைத்து அதை நீங்கள் விற்றுக் கொள்ளவோ (பெண்களுக்கு) அணியத் தரவோதான்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5842 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் புதல்வியார் உம்மு குல்ஸூம்(ரலி) அவர்கள் கோடுகள் போட்ட பட்டு சால்வையொன்றை அணிந்திருந்ததை கண்டேன்.

## நபி(ஸல்) அவர்கள் தங்களின் வசதிக்கேற்ப பயன்படுத்தி வந்த ஆடைகளும் விரிப்புகளும்.

ஹதீஸ் 5843 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்களுக்கெதிராக (அவர்களைச் சங்கடப்படுத்தும் வகையில்) கூடிப் பேசிச் செயல்பட்ட அந்த இரண்டு துணைவியர் யார்? என உமர்(ரலி) அவர்களிடம் கேட்க வேண்டுமென ஒரு வருட காலமாக நான் (நினைத்துக்கொண்டு) இருந்தேன். ஆயினும், உமர்(ரலி) அவர்கள் மேல் (மரியாதை கலந்த) அச்சம் கொள்ளலானேன். இவ்வாறிருக்கையில் (ஹஜ்ஜு க்கு வந்த) உமர்(ரலி) அவர்கள் ஒரு நாள் ('மர்ருழ் ழஹ்ரான் எனும்) ஓரிடத்தில் தங்கினார்கள். அப்போது (தம் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக) அராக் (மிஸ்வாக்) மரத்தடிக்குச் சென்றார்கள். அவர்கள் (தம் தேவையை முடித்துக் கொண்டு) வந்தபோது அவர்களிடம் நான் அது பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆயிஷாவும் ஹஃப்ஸாவுமே (அந்த இரண்டு துணைவியார்)' என்று பதிலளித்துவிட்டு (பின்வருமாறு) கூறினார்கள்.

அறியாமைக் காலத்தில் நாங்கள் பெண்களை ஒரு பொருட்டாகவே மதித்ததில்லை. இஸ்லாம் வந்து, அல்லாஹ் பெண்களைக் குறித்து (அவர்களின் உரிமைகளையும் கடமைகளையும் பேணுமாறு தன்னுடைய வேதத்தில்) குறிப்பிட்டபோது தான் பெண்களுக்கு எங்களின் மீதுள்ள உரிமையை அறிந்துகொண்டோம். ஆயினும், எங்கள் விவகாரங்கள் எதிலும் தலையிட பெண்களை நாங்கள் அனுமதிக்கவில்லை.

(இந்நிலையில் ஒருநாள்) எனக்கும் என் மனைவிக்குமிடையே (காரசாரமான) வாக்குவாதம் ஏற்பட்டது. அப்போது அவர் என்னைக் கடுமையாகப் பேசிவிட்டார். உடனே நான்நீ அங்கேயே (உன் இடத்திலேயே) இரு! (என் விஷயத்தில் தலையிடாதே)' என அவரிடம் சொன்னேன். அவர்என்னிடம் தான் நீங்கள் இவ்வாறு பேசுகிறீர்கள். (ஆனால்,) உங்கள் புதல்வி (ஹஃப்ஸாவோ தம் துணைவர்) நபி(ஸல்) அவர்களை (எதிர்த்துப் பேசி) மனவேதனைக்குள்ளாக்கியுள்ளார்' என்றார். உடனே நான் (என் புதல்வி) ஹஃப்ஸாவிடம் சென்று,அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறுசெய்ய வேண்டாமென உன்னை எச்சரிக்கிறேன்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்களை மன வேதனைக்குள்ளாக்கிய விஷயத்தில் முதலில் நேராக ஹஃப்ஸாவிடமே சென்றேன். அடுத்து (நபி(ஸல்) அவர்களின் இன்னொரு துணைவியாரும் என் உறவினருமான) உம்மு ஸலமாவிடம் சென்று (ஹஃப்ஸாவோ தம் துணைவர்) நபி(ஸல்) அவர்களை (எதிர்த்துப் பேசி) மன வேதனைக்குள்ளாக்கியுள்ளார்' என்றார். உடனே நான் (என் புதல்வி) ஹஃப்ஸாவிடம் சென்று,அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்ய வேண்டாமென உன்னை எச்சரிக்கிறேன். என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்களை மன வேதனைக்குள்ளாக்கிய விஷயத்தில் முதலில் நேராக ஹஃப்ஸாவிடமே சென்றேன். அடுத்து (நபி(ஸல்) அவர்களின் இன்னொரு துணைவியாரும் என் உறவினருமான) உம்மு ஸலமாவிடம் சென்று (ஹஃப்ஸாவிடம் சொன்னது போன்றே) கூறினேன். உடனே அவர்,உமரே! உம்மைக் கண்டு நான் வியப்புறுகிறேன். எங்கள் விவகாரங்கள் அனைத்திலும் நீங்கள் தலையிட்டுவிட்டு, இறுதியில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்களின் துணைவியருக்கும் இடையிலான விவகாரத்தையும் கூட நீங்கள்விட்டுவைக்கவில்லை' என்று கூறி (என்னை) மடக்கிவிட்டார்.

மேலும், அன்சாரிகளில் (எனக்கு நண்பர்) ஒருவர் இருந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அவையில் அவர் இல்லாமல் போய் நான் அங்கு இருந்தால் அங்கு நடப்பதை நான் அவருக்குத் தெரிவிப்பேன். (இதைப் போன்றே) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அவையில் நான் இல்லாமல் அவர் இருந்தால் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கிடைக்கும் தகவல்களை அவர் எனக்குத் தெரிவிப்பார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களைச் சுற்றியிருந்த (அரசர்கள் மற்றும் குலத்தலை)வர்கள் அனைவரும் அவர்களுடன் சுமூக உறவை ஏற்படுத்திக்கொண்டிருந்தனர். (அன்றைய) ஷாம் நாட்டின்ஃகஸ்ஸான் அரசன் ஒருவனைத் தவிர வேறு யாரும் (பகைமை கொண்டு) இருக்கவில்லை. அவன் (எங்களின் மீது போர் தொடுக்க) வரலாம் என நாங்கள் அச்சம் கொண்டிருந்தோம். (இந்நிலையில் ஒருநாள்) அந்த அன்சாரி (நண்பர்) திடீரென்று வந்துஒரு சம்பவம் நடந்துவிட்டது' என்றார். நான்என்ன அது? ஃகஸ்ஸானிய(மன்ன)ன் (படையெடுத்து) வந்துவிட்டானா? என்று அவரிடம் கேட்டேன். அதற்கு அவர்,அதைவிட மிகப்பெரிய சம்பவம் நடந்துவிட்டது. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் துணைவியரை மணவிலக்குச் செய்துவிட்டார்கள்' என்றார். உடனே நான் (புறப்பட்டு) வந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்களின் துணைவியர் அனைவரின் அறைகளிலிருந்தும் அழுகைச் சத்தம் வந்து கொண்டிருந்தது. நபி(ஸல்) அவர்களோ தம் மாடியறைக்கு ஏறி விட்டிருந்தார்கள். மாடியின் தலைவாசலில் பணியாளர் (ரபாஹ்) அமர்ந்துகொண்டிருந்தார்.

நான் அவரிடம் வந்து,எனக்காக (அல்லாஹ்வின் தூதரிடம் செல்ல) அனுமதி கேள்' என்றேன். (அவரும் உள்ளே சென்று அனுமதி கேட்க) நபி(ஸல்) அவர்கள் எனக்கு அனுமதியளித்தார்கள். நான் (படியிலேறி அறைக்குள்) சென்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஓர் (ஈச்சம்) பாயில் (படுத்து) இருந்தார்கள். அந்தப் பாய் அவர்களின் விலாவில் சுவடு பதித்திருந்தது.

அவர்களின் தலைக்குக் கீழே ஈச்ச நார்கள் நிரப்பட்ட தோல் தலையணை ஒன்றிருந்தது. அங்கு (அவர்களின் தலை மாட்டில்) பதனிடப்படாத தோல்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. (கால்மாட்டில்) கருவேல இலைகள் இருந்தன. அப்போது ஹஃப்ஸா, உம்மு ஸலமா ஆகியோரிடம் நான் கூறியதையும், நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துச் சொன்னேன். அதைக் கேட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிரித்துவிட்டார்கள். (அந்த மாடியறையில்) நபி(ஸல்) அவர்கள் இருபத்தொன்பது நாள்கள் (தங்கி) இருந்தார்கள். பிறகு (அங்கிருந்து) இறங்கினார்கள்.

ஹதீஸ் 5844 உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு நாள்) இரவு (திடீரென) விழித்தெழுந்துவணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. இன்றிரவு இறக்கிவைக்கப்பட்ட சோதனைகள் தாம் என்ன? (இன்றிரவு) இறக்கிவைக்கப்பட்ட கருவூலங்கள்தாம் என்ன! (என் துணைவியரில்) இந்த அறைகளில் (உறங்கிக் கொண்டு) உள்ளோரை எழுப்பி உணர்வூட்டுகிறவர் யார்? இவ்வுலகில் ஆடை அணிந்திருக்கும் எத்துணையோ பெண்கள், மறுமை நாளில் (துணியே கிடைக்காமல்) நிர்வாணமாய் இருப்பார்கள்' என்று கூறினார்கள்.

## புத்தாடை அணிந்தவருக்காகச் செய்யப்படும் பிரார்த்தனை

ஹதீஸ் 5845 உம்மு காலித் பின்த் காலித்(ரலி) கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஆடைகள் சில கொண்டு வரப்பட்டன. அவற்றில் கறுப்பு நிறக் கம்பளியாடை ஒன்றும் இருந்தது. அவர்கள்,இந்த ஆடையை நாம் யாருக்கு அணிவிப்போம் என்று நீங்கள் கருதுகிறீர்கள்? என்று கேட்க, மக்கள் (பதில் பேசாமல்) மௌனமாக இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,உம்மு காலிதை என்னிடம் கொண்டு வாருங்கள்' என்று உத்தரவிட்டார்கள். உடனே (சிறுமியாக இருந்த) நான் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப்பட்டேன். உடனே அவர்கள் அந்த ஆடையைத் தம் கையால் எனக்கு அணிவித்து,(இதை நீ உடுத்தி

பழையதாக்கிக்) கிழித்து நைந்து போகச் செய்துவிடு' என்று இருமுறை சொன்னார்கள். பிறகு அந்த ஆடையின் வேலைப்பாட்டைக் கவனித்துப் பார்க்கலானார்கள். பிறகு என் பக்கம் தம் கையால் சைகை காட்டி,உம்மு காலிதே! இதுசனா (அழகாயிருக்கிறது)' என்று சொல்லலானார்கள்.

நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டசனா எனும் அபிசீனியச் கொல்லுக்குஅழகு என்று பொருள்.

அறிவிப்பாளர் இஸ்ஹாக் இப்னு ஸயீத்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த ஆடையை உம்மு காலித்(ரலி) அவர்கள் அணிந்திருந்தைப் பார்த்ததாக எங்கள் குடும்பப் பெண் ஒருவர் என்னிடம் தெரிவித்தார்.

## ஆண்கள் (தங்களின் மேனியில்) குங்குமப் பூச் சாயமிட்டுக் கொள்வது தடை செய்யப்பட்டதாகும்.

ஹதீஸ் 5846 அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஆண்கள் (தங்களின் மேனியில்) குங்குமப் பூச் சாயமிட்டுக் கொள்வதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்.

## குங்குமப்பூச் சாயம் இடப்பட்ட ஆடை

ஹதீஸ் 5847 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

'இஹ்ராம் கட்டியவர்வர்ஸ் எனும் வாசனைச் செடியின் சாயம், அல்லது குங்குமப்பூச் சாயம் இடப்பட்ட ஆடையை அணியக் கூடாது என்று நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

## சிவப்பு ஆடை

ஹதீஸ் 5848 பராஉ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (அதிக உயரமாகவுமில்லாமல் குட்டையாகவும் இல்லாமல்) நடுத்தர உயரமுள்ளவர்களாய் இருந்தர்கள். நான் அவர்களைச் சிவப்பு நிற அங்கி ஒன்றில் பார்த்திருக்கிறேன். அதைவிட அழகான (அங்கி) எதையும் நான் பார்த்ததில்லை.

## சிவப்பு நிற மென்பட்டுத் திண்டு (மீஸரா)

ஹதீஸ் 5849 பராஉ(ரலி) அறிவித்தார்.

நோயாளியை நலம் விசாரிப்பது,ஜனாஸா'வைப் பின்தொடர்ந்து செல்வது, தும்மியவ(ர் அல்ஹம்துலில்லாஹ் - எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே என்று கூறுகையில் அவ)ருக்கு (யர்முகல்லாஹ் - அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக என்று) பதில் கூறுவது உள்ளிட்ட ஏழு விஷயங்களைக் கடைப்பிடிக்கும் எங்களுக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். சாதாரணப் பட்டு, அலங்காரப் பட்டு,கஸ் எனும் பட்டு கலந்த (எம்ப்தியப்) பஞ்சாடை, தடித்த பட்டு, மென்பட்டுத் திண்டுகள் (மீஸரா) உள்ளிட்ட ஏழு பொருட்களைப் பயன்படுத்தக் கூடாது என்றும் எங்களுக்குத் தடை விதித்தார்கள்.

## (முடி அகற்றப்பட்ட) தோல் காலணிகளும் மற்றவைகளும்

ஹதீஸ் 5850 ஸயீத் அபூ மஸ்லமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்கள் தம் காலணிகளுடன் தொழுதுவந்தார்களா? என்று கேட்டேன். அவர்கள்,ஆம் (தொழுது வந்தார்கள்)' என்றார்கள்.

ஹதீஸ் 5851 உபைத் இப்னு ஜு ரைஜ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்,நீங்கள் நான்கு விஷயங்களைச் செய்வதை பார்த்தேன். உங்கள் தோழர்களில் வேறெவரும் அவற்றைச் செய்வதை நான் பார்க்கவில்லை' என்று கூறினேன். அவர்கள்அவை யாவை? இப்னு ஜு ரைஜே! எனக் கேட்டார்கள். நான்(கஅபாவைச் சுற்றி வரும்போது) அதன் மூலைகளில்ஹஜருல் அஸ்வத் மற்றும்ருக்னுல் யமானி ஆகிய) இரண்டு மூலைகளை மட்டுமே நீங்கள் தொடக் கண்டேன். மேலும், (முடி அகற்றப்பட்ட) தோல் காலணிகளை நீங்கள் அணிவதை கண்டேன். நீங்கள் (உங்கள் ஆடைக்கு) மஞ்சள் சாயமிடுவதைக் கண்டேன். மேலும், நீங்கள் சாயமிடுவதைக் கண்டேன். மேலும், நீங்கள் மக்காவில் இருக்கும்போது மக்கள் (துல்ஹஜ் மாத) பிறை பார்த்தவுடன்இஹ்ராம் கட்டினாலும் நீங்கள் மட்டும் (துல்ஹஜ்) எட்டாவது நாள் வரும்வரை இஹ்ராம் கட்டாமலிருப்பதை கண்டேன் (இவற்றுக்கெல்லாம் என்ன காரணம்?)' என்று கேட்டேன்.

அதற்கு அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்: கஅபாவின் மூலைகளைப் பொறுத்தவரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹஜருல் அஸ்வத், ருக்னுல் யமானீ ஆகிய) இரண்டு மூலைகளை மட்டுமே தொட்டதை பார்த்தேன். (எனவேதான் நானும் அப்படிச் செய்கிறேன்.) (முடி அகற்றப்பட்ட) செருப்புகளைப் பொறுத்தவரை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முடியில்லாத காலணிகளை அணிவதை அதனுடன் அங்கசுத்தி (உளூ) செய்வதையும் பார்த்திருக்கிறேன். எனவே, நானும் அவற்றை அணிவதை விரும்புகிறேன். மஞ்சள் நிறமோ, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதனால் (தம் ஆடைக்குச்) சாயமிடுவதை பார்த்திருக்கிறேன். எனவே, நானும் அதனால் (என் ஆடைக்குச்) சாயமிடுவதை விரும்புகிறேன். (துல்ஹஜ் எட்டாம் நாள்) இஹ்ராம் கட்டுவதோ, இறைத்தூதர்(ஸல்) எட்டாம் நாள்) பயணத்திற்குத் தயாராம் நிற்கும் வரை இஹ்ராம் கட்டி நான் பார்த்ததில்லை.

ஹதீஸ் 5852 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இஹ்ராம் கட்டியவர் குங்குமப்பூச் சாயம் அல்லதுவர்ஸ் எனும் வாசனைச் செடியின் சாயம் இடப்பட்ட ஆடையை அணியக் கூடாது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். மேலும்,(இஹ்ராம் கட்டியிருக்கும் போது) காலணிகள் கிடைக்காதவர், (மோஸாக்கள் எனும்) காலுறைகளை அணியட்டும் காலுறைகளைக் கணுக்கால்களுக்குக் கீழே இருக்கும்படி கத்தரித்து (அணிந்து) கொள்ளட்டும்' என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

ஹதீஸ் 5853 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

(இஹ்ராமின் போது) கீழங்கி இல்லாதவர் முழுக்கால் சட்டை அணிந்து கொள்ளட்டும். காலணிகள் இல்லாதவர் (மோஸாக்கள் எனும்) காலுறைகளை அணிந்து கொள்ளட்டும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## முதலில் வலது கால் காலணியை அணிய வேண்டும்.

ஹதீஸ் 5854 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தாம் அங்கசுத்தி (உளூ) செய்யும் போதும், தலைவாரிக் கொள்ளும் போதும், காலணி அணிந்துகொள்ளும் போதும் வலப் பக்கத்திலிருந்து தொடங்குவதையே விரும்பிவந்தார்கள்.

## முதலில் இடது கால் காலணியைக் கழற்ற வேண்டும்.

ஹதீஸ் 5855 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் காலணி அணியும்போது முதலில் வலது காலில் அணியுங்கள் அதைக் கழற்றும்போது முதலில் இடது காலில் இருந்து கழற்றுங்கள். வலது காலே அணிவதில் முதலாவதாகவும், கழற்றுவதில் இறுதியாகவும் இருக்கட்டும்!

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## ஒரேயொரு காலணியில் நடக்கலாகாது.

ஹதீஸ் 5856 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் ஒரேயொரு காலணியில் நடக்க வேண்டாம். ஒன்று, இரண்டு காலணிகளையும் ஒரு சேரக் கழற்றிவிடுங்கள் அல்லது இரண்டையும் ஒரு சேர அணிந்து கொள்ளுங்கள்.

## ஒரு காலணியில் இரண்டு வார்களும் இருக்கலாம் ஒரே வாரும் இருக்கலாம்.

ஹதீஸ் 5857 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் காலணிக்கு இரண்டு வார்கள் இருந்தன.

ஹதீஸ் 5858 ஈசா இப்னு தஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் இரண்டு வார்கள் கொண்ட இரண்டு காலணிகளை எங்களுக்குக் காட்டினார்கள்.

(பின்னர் இது குறித்துக் கூறுகையில்) ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள், இதுதான் நபி (ஸல்) அவர்களின் காலணியாகும்' என்றார்கள்.

## பதனிடப்பட்ட தோலால் ஆன சிவப்பு நிறக் கூடாரம்.

ஹதீஸ் 5859 நபி (ஸல்) அவர்கள் பதனிடப்பட்ட தோலால் ஆன ஒரு சிவப்புக் கூடாரத்தில் இருந்தபோது நான் அவர்களிடம் சென்றேன். பிலால் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் அங்கசுத்தி (உளூ) செய்த தண்ணீரை எடுத்ததை பார்த்தேன். மக்கள் அந்தத் தண்ணீருக்காகப் போட்டியிட்டனர். அதில் சிறிது கிடைக்கப் பெற்றவர் அதைத் (தம் மேனியில்) தடவினார். அதிலிருந்து சிறிதும் கிடைக்கப் பெறாதவர் தம் தோழர் கையிலிருந்த ஈரத்தை எடுத்து (தடவி)க் கொண்டார்.

ஹதீஸ் 5860 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் அன்சாரிகளுக்கு ஆளனுப்பி அவர்களைப் பதனிடப்பட்ட தோல் கூடாரத்தில் ஒன்று திரட்டினார்கள்.

## பாய் முதலானவற்றின் மீது அமர்வது.

ஹதீஸ் 5861 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (ரமளான் மாதத்தில்) இரவு நேரத்தில் ஒரு பாயை அறை போல் ஆக்கிக்கொண்டு (அதில்) தொழுவார்கள். அதைப் பகல் நேரத்தில் (கீழே) விரித்துக் கொண்டு அதன் மீது அமர்வார்கள்.

மக்கள் நபி (ஸல்) அவர்களை நோக்கி வந்து அவர்களுடன் சேர்ந்து தொழுவார்கள். இறுதியில் (இவ்வாறு இரவில் வந்து தொழும்) மக்கள் (எண்ணிக்கை) அதிகமாம் விடவே, நபி (ஸல்) அவர்கள் மக்களை நோக்கி, மக்களே! உங்களால் இயன்ற (நற்) செயல்களையே செய்துவாருங்கள். ஏனெனில், நீங்கள் சலிப்படையாத வரை அல்லாஹ்வும் சலிப்படைய மாட்டான். அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான (நற்) செயல் யாதெனில், குறைவாக இருந்தாலும் நிலையாக இருப்பதேயாகும்' என்றார்கள்.

## தங்கப்பித்தான் பொருத்தப்பட்ட ஆடை

ஹதீஸ் 5862 மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) மக்ரமா(ரலி) அவர்கள் என்னிடம்,என் அன்பு மகனே! நபி(ஸல்) அவர்களிடம் மேலங்கிகள் சில வந்திருப்பதாகவும் அவற்றை அவர்கள் (மக்களிடையே) பங்கிட்டுக் கொண்டிருப்பதாகவும் எனக்குச் செய்தி எட்டியுள்ளது. எனவே, எம்மை அவர்களிடம் அழைத்துச் செல்' என்றார்கள். அவ்வாறே நாங்கள் சென்று நபி(ஸல்) அவர்களை, அவர்களின் வீட்டில் கண்டோம். அப்போது என் தந்தை மக்ரமா(ரலி) அவர்கள் என்னிடம்,என் அருமை மகனே! எனக்காக நபி(ஸல்) அவர்களைக் கூப்பிடு' என்றார்கள். அதை மரியாதைக் குறைவாகக் கருதிய நான்,உங்களுக்காக நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களைக் கூப்பிடுவதா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,என் அன்பு மகனே! (நபி-ஸல்) அவர்கள் சர்வாதிகாரி அல்லர்' என்று சொல்ல, நான் நபி(ஸல்) அவர்களைக் கூப்பிட்டேன். அப்போது அவர்கள் தங்கப் பித்தான் பொருத்தப்பட்ட அலங்காரப்பட்டு மேலங்கியொன்றை எடுத்துக் கொண்டு வந்து,மக்ரமாவே! இதை உங்களுக்காக நான் எடுத்து வைத்தேன்' என்று சொல்லி மக்ரமாவிடம் அதைக் கொடுத்தார்கள்.

## தங்க மோதிரங்கள்

ஹதீஸ் 5863 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

'தங்க மோதிரம் அல்லதுதங்க வளையம்', சாதாரணப் பட்டு, தடித்தப்பட்டு அலங்காரப்பட்டு, சிவப்பு மென்பட்டுத் திண்டு (மீஸரா), பட்டு கலந்த (எம்ப்திய) பஞ்சாடை, வெள்ளிப் பாத்திரம் ஆகிய ஏழு பொருட்களைப் பயன்படுத்தக்கூடாது என்று நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்தார்கள். மேலும், நோயாளிகளை நலம் விசாரிப்பது,ஜனாஸா'வைப் பின்தொடர்ந்து செல்வது, தும்மியவ(ர் அல்ஹம்துலில்லாஹ் எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே என்று கூறுகையில் அவ)ருக்கு (யர்ஹமுகல்லாஹ் அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக என்று) பதில் சொல்வது, சலாமுக்கு பதிலுரைப்பது, விருந்து அழைப்பை ஏற்பது, சத்தியம் செய்தவர் (அதை) நிறைவேற்ற உதவிடுவது மற்றும் அநீதியிழைக்கப்பட்டவருக்கு உதவிபுரிவது ஆகிய ஏழு (நற்)செயல்களைக் கடைப்பிடிக்கும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 5864 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்க மோதிரத்தை அணியவேண்டாமென்று (ஆண்களுக்குத்) தடைவிதித்தார்கள்.

இதுமற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5865 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்க மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். அதன் குமிழைத் தம் உள்ளங்கையை ஒட்டியவாறு (உள் பக்கமாக அமையும்படி) வைத்துக்கொண்டார்கள். (இதைக் கண்ட) மக்களும் (அதைப் போன்று) மோதிரம் செய்து (அணிந்து) கொண்டார்கள். (இதைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள் தங்களின் தங்க மோதிரத்தை(க் கழற்றி) எறிந்துவிட்டு வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள்.

## வெள்ளிமோதிரம்

ஹதீஸ் 5866 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்தங்கமோதிரம் அல்லதுவெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். அதன் குமிழைத் தம் உள்ளங்கையை ஒட்டியவாறு (உள்பக்கமாக அமையும்படி) வைத்தார்கள். அதில்முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (இறைத்தூதர் முஹம்மது) என்று (இலச்சினை) பொறித்தார்கள். மக்களும் அதைத் தயாரித்து (அணிந்து) கொண்டிருப்பதை

நபி(ஸல்) அவர்கள் கண்டபோது தம் மோதிரத்தை(க் கழற்றி) எறிந்துவிட்டு,நான் இதை இனி ஒருபோதும் அணியமாட்டேன்' என்றார்கள். பிறகு வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். மக்களும் வெள்ளி மோதிரங்களை அணியலானார்கள்.

நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்கள் அந்த மோதிரத்தை அணிந்துகொண்டார்கள். பிறகு (அதை) உமர்(ரலி) அவர்களும், பிறகு உஸ்மான்(ரலி) அவர்களும் அணிந்தார்கள். இறுதியில் உஸ்மான்(ரலி) அவர்களிடமிருந்து அதுஅரீஸ் எனும் கிணற்றில் (தவறி) விழுந்துவிட்டது.

ஹதீஸ் 5867 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்கமோதிரம் ஒன்றை அணிந்துகொண்டிருந்தார்கள். பிறகு அதை(க் கழற்றி) எறிந்துவிட்டு,நான் இதை இனி ஒருபோதும் அணிய மாட்டேன்' என்றார்கள். மக்களும் தங்களின் (தங்க) மோதிரங்களை(க் கழற்றி) எறிந்துவிட்டார்கள்.

ஹதீஸ் 5868 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒருநாள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கையில் வெள்ளிமோதிரம் ஒன்றை கண்டேன். பிறகு மக்கள், (அதைப்போன்று) வெள்ளி மோதிரங்களைச் செய்து (அணிந்து) கொண்டார்கள்.

எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (முதலில் அணிந்திருந்த) தம் (தங்க) மோதிரத்தை(க் கழற்றி) எறிந்தார்கள். பின்னர் மக்களும் தம் (தங்க) மோதிரங்களை(க் கழற்றி) எறிந்துவிட்டனர்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## மோதிரக் (கல் பதிக்கும்) குமிழ்

ஹதீஸ் 5869 ஹுமைத் இத்தவீல்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ்(ரலி) அவர்களிடம்,நபி(ஸல்) அவர்கள் மோதிரம் எதையேனும் தயாரித்(து அணிந்)திருந்தார்களா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவில் இஷாத் தொழுகையைப் பாதி இரவு வரை தாமதப்படுத்தினார்கள். (பின்னர் தொழுகை நடத்தினார்கள்.) பிறகு அவர்கள் எங்களை நோக்கித் திரும்பினார்கள். இப்போதும் நான் அவர்களின் (கல்) மோதிரம் மின்னுவதைப் பார்ப்பது போன்றுள்ளது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,மக்கள் தொழுதுவிட்டு உறங்கிவிட்டார்கள். (ஆனால், நீங்கள் இவ்வளவு நேரம் காத்திருந்து தொழுதிருக்கிறீர்கள்.) நீங்கள் ஒரு தொழுகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் வரை அந்தத் தொழுகையிலேயே உள்ளீர்கள். (அது வரை அதன் நன்மை உங்களுக்குக் கிடைத்துக் கொண்டேயிருக்கும்)' என்றார்கள்.

ஹதீஸ் 5870 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் மோதிரம் வெள்ளியால் ஆனதாக இருந்தது. அதன் (கல் பதிக்கும்) குமிழும் வெள்ளியில் ஆனதாகவே இருந்தது.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## இரும்பு மோதிரம்

ஹதீஸ் 5871 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,என்னைத் தங்களுக்கு அன்பளிப்பாக வழங்கிட (-மஹ்ரின்றி என்னைத் தாங்கள் மணந்துகொள்ள-)வே வந்துள்ளேன்' என்று சொல்லிவிட்டு நீண்ட நேரம் நின்றிருந்தார். நபி(ஸல்) அவர்கள் அவரைப் பார்த்துவிட்டுக் பார்வையைத் தாழ்த்திக் கொண்டார்கள்.

அவர் நீண்ட நேரமாக நின்றுகொண்டிருப்பதைக் கண்ட ஒருவர்(இறைத்தூதர் அவர்களே!) இவர் தங்களுக்குத் தேவையில்லையென்றால் எனக்கு இவரை மணமுடித்துத் தாருங்கள் என்றார். நபி(ஸல்) அவர்கள்இவருக்கு மஹ்ராக - மணக் கொடையாகக் கொடுக்க உம்மிடம் ஏதேனும் உள்ளதா? என்றார். நபி(ஸல்) அவர்கள்,(ஏதேனும் கிடைக்குமா என்று) பார்' என்றார்கள். அந்த மனிதர் (எங்கோ) போய்விட்டுத் திரும்பிவந்து,அல்லாஹ்வின் மீதாணையாக! ஏதும் கிடைக்கவில்லை' என்றார். நபி(ஸல்) அவர்கள்,போய்த் தேடுங்கள். இரும்பு மோதிரமாக இருந்தாலும் சரியே' என்று சொல்ல, அந்த மனிதர் போய்விட்டுத் திரும்பி வந்து,இல்லை, அல்லாஹ்வின் மீதாணையாக! ஓர் இரும்பு மோதிரம் கூடக் கிடைக்கவில்லை' என்றார்.

அவர் கீழங்கி அணிந்திருந்தார். அவருக்கு மேல்துண்டு கூட இருக்கவில்லை. அந்த மனிதர்,என்னுடைய கீழங்கியை அவளுக்கு நான் மணக் கொடையாக வழங்குகிறேன்' என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,உம்முடைய கீழங்கியா? அதை இவள் அணிந்தால் அதிலிருந்து உம் மீது ஏதும் இருக்காது. அதை நீர் அணிந்துகொண்டால் அதிலிருந்து இவள் மீது ஏதும் இருக்காது' என்றார்கள். உடனே அம்மனிதர் சற்று ஒதுங்கி அமர்ந்துகொண்டார். பிறகு அவர் திரும்பிச் செல்வதை நபி(ஸல்) அவர்கள் பார்த்தபோது அவரை அழைத்து வரச்சொல்ல அவரும் அழைத்து வரப்பட்டார். நபி(ஸல்) அவர்கள்,உம்முடன் குர்ஆனில் என்ன (அத்தியாயங்கள் மனப்பாடமாக) உள்ளது? என்று கேட்க, அவர் இன்னின்ன அத்தியாயங்கள் என்று சில அத்தியாயங்களை எண்ணிக் கூறினார். நபி(ஸல்) அவர்கள்,உம்முடன் உள்ள குர்ஆன் அத்தியாயங்களுக்காக இப்பெண்ணை உமக்குத் திருமணம் செய்து வைத்தேன்' என்றார்கள்.

## மோதிரத்தில் இலச்சினை (சின்னம்) பதித்தல்

ஹதீஸ் 5872 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அரபியரல்லாதவர்களான (ரோம் நாட்டைச் சேர்ந்த)ஒரு குழுவினருக்கு அல்லதுமக்களில் சிலருக்கு'க் கடிதம் எழுத விரும்பினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களிடம்,அரபியரல்லாதோர் முத்திரையுள்ள கடிதத்தையோ ஏற்றுக் கொள்வார்கள்' என்று சொல்லப்பட்டது. உடனே நபி(ஸல்) அவர்கள் ஒரு வெள்ளி மோதிரத்தைச் செய்து அதில்முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (இறைத்தூதர் முஹம்மது) என்று இலச்சினை பொறித்தார்கள். இப்போதும் நான்நபி(ஸல்) அவர்களின் விரலில் அல்லதுஅவர்களின் கையில் அந்த மோதிரம் மின்னியதைப் பார்ப்பது போன்றுள்ளது.

ஹதீஸ் 5873 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். அது (அவர்களின் வாழ்நாளில்) அவர்களின் கையில் இருந்தது. பிறகு, அபூ பக்ர்(ரலி) அவர்களின் கையில் இருந்தது. பிறகு, உமர்(ரலி) அவர்களின் கையில் இருந்தது. பிறகு, உஸ்மான்(ரலி) அவர்களின் கையில் இருந்தது. இறுதியில் அதுஅரீஸ் எனும் கிணற்றில் (தவறி) விழுந்துவிட்டது. அதில் பொறிக்கப்பட்டிருந்த இலச்சினைமுஹம்மதுர் ரசூலுல்லாஹ் (இறைத்தூதர் முஹம்மது) என்றிருந்தது.

## சுண்டு விரலில் மோதிரம் அணிதல்

ஹதீஸ் 5874 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மோதிரம் ஒன்றை தயார் செய்து,நாம் மோதிரம் ஒன்றை தயார் செய்துள்ளோம். அதில் ('முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என்ற) இலச்சினை ஒன்றைப் பொறித்துள்ளோம். எனவே, அதைப் போன்று வேறெவரும் இலச்சினை பொறிக்க வேண்டாம்' என்றார்கள். நபி(ஸல்) அவர்களின் சுண்டுவிரலில் அது மின்னியதை இப்போதும் நான் (என் மனத்திரையில்) பார்க்கிறேன்.

## முத்திரை பதிப்பதற்காக, அல்லது வேதக்காரர்கள் முதலானோருக்கு மடல் வரைவதற்காக மோதிரம் தயாரித்(து அணி)தல்.

ஹதீஸ் 5875 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பைஸாந்திய) ரோமர்களுக்குக் கடிதம் எழுத விரும்பியபோது அவர்களிடம்,தங்கள் கடிதம் முத்திரையிடப்படாமலிருந்தால் அதை ரோமர்கள் ஒருபோதும் படிக்கமாட்டார்கள்' என்று கூறப்பட்டது.

எனவே, நபி(ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைத் தயார் செய்தார்கள். அதில்முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (இறைத்தூதர் முஹம்மது) என்று இலச்சினை பொறிக்கப்பட்டிருந்தது. நான் அவர்களின் கையில் (பிரகாசித்த) அதன் வெண்மையை (இப்போதும்) பார்ப்பது போன்று உள்ளது.

## மோதிரக் குமிழை உள்ளங்கைப் பக்கமாக வைத்து அணிந்துகொள்வது.

ஹதீஸ் 5876 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்க மோதிரம் ஒன்றைச் செய்து, அதன் குமிழைத் தம் உள்ளங்கைப் பக்கமாக வைத்து அணிந்தார்கள். மக்களும் (அவ்வாறே) தங்க மோதிரங்களைச் செய்தனர். (இதற்கிடையில் ஒருநாள்) நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையில் (மிம்பரில்) ஏறி, அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு,நான் அதைச் செய்திருந்தேன். ஆனால் அதை நான் இனி அணியமாட்டேன்' என்று கூறிவிட்டு அதை(க் கழற்றி) எறிந்துவிட்டார்கள். மக்களும் எறிந்துவிட்டனர்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஜுவைரிய்யா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

அறிவிப்பாளர் நாஃபிஉ(ரஹ்) அவர்கள் (நபி(ஸல்) அவர்கள் மோதிரத்தைத்) தம் வலக் கையில் அணிந்துகொண்டார்கள்' என்று சொன்னதாகவே எண்ணுகிறேன்.

## "என்னுடைய மோதிரத்தின் இலச்சினை போன்று வேறு யாரும் இலச்சினை பொறிக்க வேண்டாம்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 5877 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றைச் செய்து, அதில்முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (இறைத்தூதர் முஹம்மது) என்று இலச்சினை பொறித்தார்கள். மேலும்,நான் வெள்ளி மோதிரம் ஒன்றைச் செய்து, அதில்முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என இலச்சினை பொறித்துள்ளேன். எனவே, வேறு யாரும் அதைப் போன்று இலச்சினை பொறிக்க வேண்டாம்' என்று கூறினார்கள்.

## மோதிரத்தில் மூன்று வரிகளில் இலச்சினை பொறிக்கலாமா?

ஹதீஸ் 5878 அனஸ்(ரலி) அறிவித்தார்.

அபூ பக்ர்(ரலி) அவர்கள் கலீஃபா (ஆட்சித் தலைவராக) ஆக்கப்பட்டபோது அவர்கள் (ஸகாத்தின் அளவை விளக்கி) எனக்குக் கடிதம் எழுதினார்கள். அப்போது (அதில் காணப்பட்ட) மோதிர (முத்திரையின்) இலச்சினை மூன்று வரிகள் கொண்டதாயிருந்தது. முஹம்மது என்பது ஒரு வரியிலும்,ரசூல் என்பது ஒரு வரியிலும்,அல்லாஹ் என்பது ஒரு வரியிலும் இருந்தது.

ஹதீஸ் 5879 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் மோதிரம் (அவர்களின் வாழ்நாளில்) அவர்களின் கரத்திலேயே இருந்தது. அவர்களுக்குப் பின் அபூ பக்ர்(ரலி) அவர்களின் (ஆட்சிக் காலத்தில் அபூ பக்ரின்) கரத்தில் இருந்தது. அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பின் உமர்(ரலி) அவர்களின் (ஆட்சிக் காலத்தில் உமரின்) கரத்தில் இருந்தது. உஸ்மான்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலம் வந்தபோது அவர்கள் (ஒருமுறை) அரீஸ் எனும் கிணற்றின் (விளிம்பின்) மீது அமர்ந்திருந்தபோது (ஏதோ சிந்தனையில் தம்மையறியாமல்) மோதிரத்தைக் கழற்றுவதும் அணிவதுமாக இருந்தார்கள். அப்போது அது (தவறி கிணற்றுக்குள்) விழுந்துவிட்டது. (அதைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக) உஸ்மான்(ரலி) அவர்களுடன் நாங்கள் மூன்று நாள்கள் (அங்கு) போய்வந்து கொண்டிருந்தோம். பிறகு, கிணற்று நீரை இரைத்து(த் தூர்வாரி)ப் பார்த்தார்கள். அப்போதும் அது எங்களுக்குக் கிடைக்கவில்லை.

## பெண்கள் மோதிரம் அணிவது

ஆயிஷா(ரலி) அவர்கள் தங்க மோதிரங்களை அணிந்திருந்தார்கள்.

ஹதீஸ் 5880 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் (நோன்புப்) பெருநாளி(ன் தொழுகையி)ல் கலந்து கொண்டேன். அவர்கள் (அன்று) உரையாற்றுவதற்கு முன்பாகத் தொழுதார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

“பிறகு பெண்கள் பகுதிக்கு வந்து தர்மம் செய்யும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். உடனே பெண்கள் (தம்) மெட்டிகளையும் மோதிரங்களையும் (கழற்றி) பிலால்(ரலி) அவர்களின் துணியில் போடலானார்கள்‘ என்று இப்னு வஹ்ப்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் அதிகப்படியாக இடம்பெற்றுள்ளது.

## பெண்கள் கழுத்தணிகளையும் நறுமண மாலைகளையும் அணிதல்.

இது (சந்தன மாலை போன்ற) நறுமண மாலைகளைக் குறிக்கும்.

ஹதீஸ் 5881 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பெருநாளில் (தொழுகைத் திடலுக்குப்) புறப்பட்டுவந்து இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். அதற்கு முன்பும் பின்பும் (தொழுகை எதுவும்) தொழவில்லை. பிறகு பெண்களிடம் வந்து தர்மம் செய்யும்படி அவர்களுக்கு உத்தரவிட்டார்கள். உடனே பெண்கள் தங்கள் காதணிகளையும் நறுமண மாலைகளையும் (கழற்றி) தர்மமாகத் தந்தார்கள்.

## கழுத்து மாலைகளை இரவல் வாங்குதல்

ஹதீஸ் 5882 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(என்னிடமிருந்து) அஸ்மா(ரலி) அவர்களின் மாலையொன்று (பனு முஸ்தலிக் போரிலிருந்து திரும்பும் வழியில்) தொலைந்து போய்விட்டது. நபி(ஸல்) அவர்கள் அதைத் தேடும்படி சிலரை அனுப்பிவைத்தார்கள். (தேடிச் சென்றபோது) தொழுகை நேரம் வந்துவிட்டது. அவர்களிடம் அங்கசுத்தி (உளூ) செய்யத் தண்ணீர் இல்லை. (அந்த இடத்தில்) அவர்களுக்குத் தண்ணீர் கிடைக்கவுமில்லை. அங்கசுத்தி (உளூ) செய்யாமலேயே அவர்கள் தொழுதார்கள். இந்த விஷயத்தை அவர்கள் (திரும்பி வந்து) நபி(ஸல்) அவர்களிடம் சொன்னார்கள். அப்போது அல்லாஹ்தயம்மும் (செய்து கொள்ள அனுமதி வழங்கும்) வசனத்தை அருளினான்.

இப்னு நுமைர்(ரஹ்) அவர்கள் அறிவிக்கும் ஓர் அறிவிப்பில்,அந்தக் கழுத்து மாலையை நான் (என் சகோதரி) அஸ்மாவிடமிருந்து இரவல் வாங்கியிருந்தேன்‘ என்று ஆயிஷா(ரலி) அறிவித்தார் என அதிகப்படியாக இடம் பெற்றுள்ளது.

## பெண்கள் கம்மல் அணிவது

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தர்மம் செய்யும்படி பெண்களுக்குக் கட்டளையிட்டார்கள். உடனே அவர்கள் தங்கள் காதுகளையும் கழுத்துகளையும் நோக்கி (அவற்றிலுள்ள நகைகளைக் கழற்றித் தர கைகளைக் கொண்டு) சென்றதை கண்டேன்.

ஹதீஸ் 5883 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(நோன்புப்) பெருநாளில் நபி(ஸல்) அவர்கள் இரண்டு ரக்அத்துகள் தொழுதார்கள். அதற்கு முன்பும் சரி அதற்குப் பின்பும் சரி அவர்கள் (கூடுதலாக) எதையும் தொழவில்லை. பிறகு பிலால்(ரலி) அவர்களுடன் பெண்களிடம் (மகளிர் பகுதிக்கு) வந்து தர்மம் செய்யும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். உடனே, ஒரு பெண் தன்னுடைய கம்மலை(க் கழற்றி)ப் போடலானார்.

## குழந்தைகளுக்கான நறுமண மாலைகள்

ஹதீஸ் 5884 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நான் மதீனா கடைவீதிகளில் ஒன்றில் ('பனு கைனுகா கடைவீதியில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தேன். அவர்கள் (ஃபாத்திமா(ரலி) அவர்களின் வீட்டுக்குச்) செல்லவே நானும் (அவர்களுடன்) சென்றேன். (வீட்டுக்கு வந்ததும்,)பொடிப் பையன் எங்கே? என்று மும்முறை கேட்டார்கள். பிறகுஅலீயின் மகன் ஹசனைக் கூப்பிடுங்கள்' என்றார்கள். அப்போது அலீ(ரலி) அவர்களின் புதல்வர் ஹஸன்(ரலி) அவர்கள் கழுத்தில் நறுமண மாலை ஒன்றை அணிந்தபடி நடந்து வந்தார்கள். அவர்களைக் கண்டதும் நபி(ஸல்) அவர்கள் இப்படித் தம் கையை விரித்தபடி அவரை நோக்கிச் சென்றார்கள். ஹஸன்(ரலி) அவர்களும் இவ்வாறு தம் கையை விரித்த படி (நபி(ஸல்) அவர்களை அணைத்திட) அவர்களை நோக்கி வந்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் ஹஸன்(ரலி) அவர்களை அணைத்துக்கொண்டு,இறைவா! நான் இவரை நேசிக்கிறேன். நீயும் இவரையும் இவரை நேசிப்பவர்களையும் நேசிப்பாயாக!என்று பிரார்த்தனை செய்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்படிப் பிரார்த்தனை செய்த பிறகு அலீயின் புதல்வர் ஹஸன்(ரலி) அவர்களை விட வேறெவரும் எனக்கு அதிகப் பிரியமானவராக இருக்கவில்லை.

## பெண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் ஆண்களும் ஆண்களைப் போன்று ஒப்பனை செய்துகொள்ளும் பெண்களும்.

ஹதீஸ் 5885 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆண்களில் பெண்களைப் போன்று ஒப்பனை செய்துகொள்பவர்களையும், பெண்களில் ஆண்களைப் போல் ஒப்பனை செய்து கொள்பவர்களையும் சபித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## பெண்களைப் போன்று நடந்துகொள்பவர்(களான அலி)களை வீட்டிலிருந்து வெளியேற்றுதல்.

ஹதீஸ் 5886 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பெண்களைப் போன்று ஒப்பனை செய்துகொள்ளும் ஆண்களையும், ஆண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் பெண்களையும் சபித்தார்கள். மேலும்,அவர்க(ளில் அலிக)ளை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றுங்கள்' என்றார்கள்.

அவ்வாறே நபி(ஸல்) அவர்கள் இன்னாரை வெளியேற்றினார்கள். உமர்(ரலி) அவர்கள் இன்னாரை வெளியேற்றினார்கள்.

ஹதீஸ் 5887 (நபியவர்களுடைய துணைவியார் உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

என் வீட்டில் (ஆணுமல்லாத பெண்ணுமல்லாத)அலி ஒருவர் இருந்தபோது நபி(ஸல்) அவர்களும் அங்கு இருந்தார்கள். அப்போது அந்த அலி, என் சகோதரர் அப்துல்லாஹ் இப்னு அபீ உமய்யாவிடம்அப்துல்லாஹ்வே! நாளை உங்களுக்கு தாயிஃப் நகரத்தின் மீது அல்லாஹ் வெற்றியளித்தால் ஃகைலானின் மகளை உனக்கு நான் காட்டுகிறேன். (அவளை மணந்துகொள்.) ஏனெனில், அவள் முன்பக்கம் நாலு (சதைமடிப்புகளுட)னும், பின்பக்கம் எட்டு(சதை மடிப்புகளு)டனும் வருவாள்' என்றார். உடனே நபி(ஸல்) அவர்கள்,(அலிகளான) இவர்கள் உங்களிடம் ஒருபோதும் வரவேண்டாம்' என்றார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

அவளுடைய வயிற்றுச் சதையின் நான்கு மடிப்புகளின் காரணத்தால்முன்பக்கம் நான்கு மடிப்புகளுடன் காட்சி தருகிறாள்' என்று அந்த அலி சொன்னார். அந்த நான்கு மடிப்புகளின் ஓரங்கள் இரண்டு புறங்களிலும் சேர்ந்து பின்புறம் எட்டு ஓரங்களாக காட்சி தருவதால்பின்பக்கம் எட்டு மடிப்புகளுடன் காட்சி தருகிறாள்' என்று கூறினார்.

'தரஃப் (ஓரம்) எனும் சொல் ஆண்பாலாயினும், அது வெளிப்படையாகக் குறிப்பிடாததால்அர்பஉ (நான்கு),ஸமான் (எட்டு) ஆகிய எண்கள் (இலக்கண விதிக்கு மாறாக) ஆண்பாலாகவே (மூலத்தில்) குறிப்பிடப்பட்டுள்ளன.

## மீசையைக் கத்தரிப்பது

இப்னு உமர்(ரலி) அவர்கள் தங்களின் சருமத்தின் வெண்மை தெரிகிற அளவிற்குத் தம் மீசையை ஒட்ட நறுக்குவது வழக்கம். மீசைக்கும் தாடிக்கும் இடையிலுள்ள (குறுந்தாடி) முடிகளை அகற்றிவிடுவார்கள்.

ஹதீஸ் 5888. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மீசையைக் கத்தரிப்பது இயற்கை மரபில் அடங்கும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5889 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விருத்தசேதனம் செய்வது, மர்ம உறுப்பின் முடியைக் களந்திட சவரக் கத்தியை உபயோகிப்பது, அக்குள் முடிகளை அகற்றுவது, நகங்களை வெட்டிக் கொள்வது, மீசையைக் கத்தரித்துக் கொள்வது ஆகிய இந்த ஐந்து விஷயங்களும் இயற்கை மரபுகளில் அடங்கும்

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## நகங்களை வெட்டுதல்

ஹதீஸ் 5890 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மர்ம உறுப்பின் முடிகளைக் களைவது, நகங்களை வெட்டுவது, மீசையைக் கத்தரிப்பது ஆகியன இயற்கை மரபுகளில் அடங்கும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5891 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இயற்கை மரபுகள் ஐந்தாகும். விருத்தசேதனம் செய்துகொள்வது, மர்ம உறுப்பின் முடிகளைக் களைந்து கொள்வதற்கக சவரக் கத்தியை உபயோகிப்பது, மீசையைக் கத்தரிப்பது, நகங்களை வெட்டுவது, அக்குள் முடிகளை அகற்றுவது ஆகியவை தாம் அவை.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5892 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இணைவைப்பாளர்களுக்கு மாறு செய்யுங்கள்: தாடிகளை வளரவிடுங்கள். மீசையை ஒட்ட நறுக்குங்கள்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான நா∴பிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இப்னு உமர் (ரலி) அவர்கள் ஹஜ் அல்லது உம்ராச் செய்தால் தம் தாடியைப் பிடிப்பதுப் பார்ப்பார்கள். (ஒரு பிடிக்கு) மேலதிகமாக உள்ளதை (கத்தரித்து) எடுத்து விடுவார்கள்.

## தாடிகளை அப்படியே வளரவிடுதல்

(திருக்குர்ஆன் 07:95 வது இறைவசனத்தின் மூலத்திலுள்ள) அ∴பவ் எனும் சொல்லுக்குஅவர்கள் பெருகினார்கள் அவர்களின் செல்வங்களும் பெருகின என்று பொருள்.

ஹதீஸ் 5893 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மீசையை நன்கு ஒட்டக் கத்தரியுங்கள். தாடியை வளரவிடுங்கள்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## நரை பற்றிய குறிப்பு

ஹதீஸ் 5894 முஹம்மத் இப்னு சீரின் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அனஸ் (ரலி) அவர்களிடம், நபி (ஸல்) அவர்கள் (தம் நரை முடிக்குச்) சாயம் பூசியதுண்டா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்குச் சிறிதளவே நரை ஏற்பட்டிருந்தது' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5895 ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ் (ரலி) அவர்களிடம், நபி (ஸல்) அவர்கள் (தம் நரை முடிக்குச்) சாயம் பூசியதுண்டா? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், நபி (ஸல்) அவர்களுக்குச் சாயம் பூசுகிற அளவிற்கு நரைக்கவில்லை. அவர்களின் தாடியிலிருந்த வெள்ளை முடிகளை நான் நினைத்திருந்தால் எண்ணிக் கணக்கெடுத்திருக்க முடியும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5896 உஸ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி மவ்ஹப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஸலமா (ரலி) அவர்களிடம் என்னை என் குடும்பத்தார் ஒரு தண்ணீர்ப் பாத்திரத்தைக் கொடுத்து அனுப்பிவைத்தார்கள். (உம்மு ஸலமா ஒரு சிமிழைக் கொண்டுவந்தார்கள்.) அது வெள்ளியால் ஆனதாக இருந்தது. அதில் நபி (ஸல்) அவர்களின் முடிகளில் ஒரு முடி இருந்தது. (பொதுவாக யாரேனும்) ஒருவருக்கு கண்ணேறு அல்லது நோய் ஏற்பட்டால், அவர் தம் நீர் பாத்திரத்தை உம்மு ஸலமா (ரலி) அவர்களிடம் அனுப்பி வைப்பார். (அவர்கள் தம்மிடமிருந்த நபியவர்களின் முடியைத் தண்ணீருக்குள் முக்கி அனுப்புவார்கள். அதை நோயாளி குடிப்பார்.) நான் அந்தச் சிமிழை எட்டிப் பார்த்தேன். (அதில்) சில சிவப்பு முடிகளைக் கண்டேன்.

அறிவிப்பாளர் இஸ்ராயீல் இப்னு யூனுஸ் (ரஹ்) அவர்கள், (சிமிழின் அளவைக் காட்டும் விதத்தில்) தம் மூன்று விரல்களை மடித்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 5897 உஸ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி மவ்ஹப்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் உம்மு ஸலமா(ரலி) அவர்களிடம் சென்றேன். அவர்கள் நபி(ஸல்) அவர்களின் முடிகளிலிருந்து சாயமிடப்பட்ட ஒரு முடியை எங்களிடம் எடுத்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 5898 உஸ்மான் இப்னு அப்தில்லாஹ் இப்னி மவ்ஹப்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உம்மு ஸலமா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் முடியை சிவப்பானதாக எனக்குக் காட்டினார்கள்.

## (நரை முடிக்குச்) சாயமிடுதல்

ஹதீஸ் 5899 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யூதர்களும் கிறிஸ்தவர்களும் (முடிகளுக்குச்) சாயமிடுவதில்லை எனவே, நீங்கள் (முடிகளுக்குச் சாயமிட்டு) அவர்களுக்கு மாறு செய்தார்கள்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## சுருள் முடி

ஹதீஸ் 5900 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளிப்படையாகத் தெரியும் அளவிற்கு அதிக உயரமானவர்களாகவும் இல்லை குட்டையானவர்களாகவும் இல்லை. சுத்த வெள்ளை நிறம் உடையவர்களாகவும் இல்லை மாநிறயம் கொண்டவர்களாகவும் இல்லை கடும் சுருள் முடியுடையவர்களாகவும் இல்லை (தொங்கலான) படிந்த முடியுடையவர்களாகவும் இல்லை. (மாறாக, இவற்றில் நடுநிலையாளராக இருந்தார்கள்.) நாற்பது வயதின் தொடக்கத்தில் அல்லாஹ் அவர்களைத் தன் தூதராக நியமித்தான். அதன் பிறகு, அவர்கள் மக்கா நகரில் (வஹீ அதன் பிறகு, அவர்கள் மக்கா நகரில் (வஹீ நின்றுபோன மூன்று ஆண்டுகள் நீங்கலாக) பத்து ஆண்டுகளும் மதீனா நகரில் பத்து ஆண்டுகளும் தங்கியிருந்தார்கள். அவர்களின் தலையிலும் தாடியிலும் இருபது வெள்ளை முடிகள் கூட இல்லாத நிலையில் அல்லாஹ் அவர்களை இறக்கச் செய்தான்.

ஹதீஸ் 5901 பராஉ(ரலி) அறிவித்தார்.

சிவப்பு நிற ஆடையில் நபி(ஸல்) அவர்களை விட அழகானவராக வேறெவரையும் நான் பார்க்கவில்லை.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

மாலிக் இப்னு இஸ்மாயீல்(ரஹ்) அவர்களிடமிருந்து என் தோழர்களில் ஒருவர்,நபி(ஸல்) அவர்களின் தலைமுடி (நீண்டு வளர்ந்திருக்கும் சமயத்தில்) அவர்களின் தோள்களைத் தொட்டுக்கொண்டிருந்தது' என்று அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ இஸ்ஹாக் அம்ர் இப்னு அப்தில்லாஹ் அஸ்ஸபீஈ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த ஹதீஸை பராஉ(ரலி) அவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட முறைகள் அறிவிப்பதை கேட்டிருக்கிறேன். இதை அறிவிக்கும் போதெல்லாம் அவர்கள் சிரிக்காமல் இருந்ததில்லை. அபூ இஸ்ஹாக்(ரஹ்) அவர்களிடமிருந்து ஷு அபா இப்னு ஹஜ்ஜாஜ்(ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள ஹதீஸில்,நபி(ஸல்) அவர்களின் (தலை) முடி அவர்களின் காதின் சோணையை எட்டும் அளவிற்கு இருந்தது' என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 5902 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இன்றிரவு (இறையில்லம்) கஅபாவின் அருகே எனக்கு(க் கனவில்) என்னைக் காட்டப்பட்டது. அப்போது மனிதர்களில் மாநிறத்தில் நீ பார்த்ததிலேயே மிக அழகான மாநிறமுடைய மனிதர் ஒருவரைக் கண்டேன். தோள்வரை நீண்ட முடிகளில் நீ பார்த்தவற்றிலேயே மிக அழகான முடி அவருக்கு இருந்தது. அதை அவர் வாரிவிட்டிருந்தார். அதிலிருந்து தண்ணீர் கொட்டிக் கொண்டிருந்தது. அவர்இரண்டு மனிதர்களின் மீது சாய்ந்தபடி அல்லதுஇரண்டு மனிதர்களின் தோள்களின் மீது சாய்ந்தபடி இறையில்லத்தைச் சுற்றி வந்து கொண்டிருந்தார். நான்,யார் இவர்? என்று கேட்டேன். மர்யமின் குமாரர் மஸீஹ் (ஈசா)' என்று பதிலளிக்கப்பட்டது. அப்போது அங்கே கடும் சுருள் முடி கொண்ட, வலக் கண் குருடான மனிதன் ஒருவன் இருந்தான். அவனுக்கிருந்த கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருந்தது. நான்,யார் இவன்? என்று கேட்டேன். மஸீஹு த் தஜ்ஜால்' என்று பதிலளிக்கப்பட்டது.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5903 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் (தலை) முடி அவர்களின் தோள்களில் பட்டுக் கொண்டிருந்தது.

ஹதீஸ் 5904 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் (தலை) முடி அவர்களின் தோள்களைத் தொட்டுக் கொண்டிருந்தது.

ஹதீஸ் 5905 கத்தாதா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் (தலை) முடி பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள்,இறைத்தூதர் (ஸல்) அவர்களின் (தலை) முடி அலையலையானதாக இருந்தது. படிந்த முடியாகவும் இல்லை சுருள் முடியாகவும் இல்லை அவர்களின் காது மடல்களுக்கும் அவர்களின் தோளுக்கும் இடையே தொங்கிக் கொண்டிருந்தது' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 5906 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பருத்த கைகள் உடையவர்களாக இருந்தார்கள். அவர்களுக்குப் பின் அவர்களைப் போன்று (வேறு யாரையும்) நான் பார்க்கவில்லை. நபி (ஸல்) அவர்களின் (தலை) முடி அலையலையானதாக இருந்தது. படிந்ததாகவும் இல்லை சுருள் முடியாகவும் இல்லை.

ஹதீஸ் 5907 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பருத்த கைகளும் பருத்த பாதங்களும் உடையவர்களாகவும், முகம் அழகானவர்களாகவும் இருந்தார்கள். நான் அவர்களுக்கு முன்போ அவர்களுக்குப் பின்போ அவர்களைப் போன்று (வேறு யாரையும்) பார்க்கவில்லை. அவர்களின் உள்ளங்கைகள் விசாலமானவையாக இருந்தன.

ஹதீஸ் 5908 ஹதீஸ் 5909 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அல்லது அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பருத்த பாதங்களை உடையவர்களாகவும் அழகிய முகம் கொண்டவர்களாகவும் இருந்தார்கள். அவர்களுக்குப் பிறகு அவர்களைப் போல் (வேறெவரையும்) நான் பார்க்கவில்லை.

ஹதீஸ் 5910 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் உறுதியான பாதங்களும் (உறுதியான) உள்ளங்கைகளும் உடையவர்களாக இருந்தார்கள்.

ஹதீஸ் 5911, ஹதீஸ் 5912 அனஸ்(ரலி), அல்லது ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பருத்த உள்ளங்கைகளும் பருத்த பாதங்களும் உடையவர்களாக இருந்தார்கள். அவர்களுக்குப் பின் அவர்களைப் போன்றவர் எவரையும் நான் பார்க்கவில்லை.

ஹதீஸ் 5913 முஜாஹித்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது மக்கள் தஜ்ஜாலைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர்,அவனுடைய இரண்டு கண்களுக்குமிடையேகா∴பிர் (இறை மறுப்பாளன்) என எழுதப்பட்டிருக்கும்' என்றார். இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்,நான் இவ்வாறு கேள்விப்படடதில்லை. ஆனால், நபி(ஸல்) அவர்கள், (இறைத்தூதர்) இப்ராஹீம்(அலை) அவர்கள் (எத்தகைய) உருவ அமைப்பில் இருந்தார் என்று அறிய வேண்டுமென்றால் உங்கள் தோழரை (என்னைப்) பாருங்கள். மூஸா(அலை) அவர்கள் எத்தகையவர் என்றால்) அவர்கள் பழுப்பு நிறமுடையவர்கள் சுருள் முடி கொண்டவர்கள் ஈச்ச மர நாரினால் மூக்கணாங்க கயிறு இடப்பட்ட சிவப்பு ஒட்டகம் ஒன்றின் மீது பயணம் செய்தபடி இருப்பார்கள். அவர்கள் (ஹஜ் செய்ய)தல்பியா கூறியபடி ('அல்அஸ்ரக் எனும்) பள்ளத்தாக்கில் இறங்கியபோது (அவர்களைக் கண்டேன். அந்தக் காட்சியை) நான் (இப்போதும்) பார்ப்பது போன்று உள்ளது' என்றார்கள் எனத் தெரிவித்தார்கள்.

## தலைமுடியைக் களிம்பு தடவிப் படிய வைத்தல் (தல்பீத்).

ஹதீஸ் 5914 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) உமர்(ரலி) அவர்கள், (தலையில்) சடை வளர்த்திருப்பவர் (ஹஜ்ஜின் முடிவில் தலை முடியை) மழித்துக் கொள்ளட்டும். (சடை வளர்ப்பதன் மூலம்) களிம்பு தடவித் தலை முடியைப் படிய வைப்பர்களுக்கு ஒப்பாம் விட வேண்டாம்' என்று சொல்ல கேட்டேன்.

(இதை அறிவிப்பாளரான சாலிம் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.)

(என் தந்தை) இப்னு உமர்(ரலி) அவர்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் தலை முடியைக் களிம்பு தடவிப் படிய வைத்துக் கொண்டதை பார்த்தேன்' என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 5915 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹஜ்ஜு க்காக இஹ்ராம் கட்டியபோது) தலை முடியைக் களிம்பு தடவிப் படியவைத்தவர்களாக,லப்பைக்க, அல்லாஹு ம்ம லப்பைக்க, லா ஷரீ(க்)க, ல(க்)க லப்பைக்க, இன்னல் ஹம்த வந்நிஅமத்த ல(க்)க வல்முல்(க்)க, லா ஷரீ(க்)க லக்க' என்று கூற கேட்டேன். இந்த வார்த்தைகளை விட அதிகமாக அவர்கள் எதையும் கூறவில்லை. (பொருள்: இதோ, உன் அழைப்பை ஏற்று வந்து விட்டேன். இறைவா! உனக்கே நான் கீழ்ப்படிகிறேன். இணையில்லாதோனே! உனக்கே எல்லாப் புகழும். அருட்கொடையும் ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு இணையாணவர் எவருமில்லை).

ஹதீஸ் 5916 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஹ∴ப்ஸா(ரலி) அறிவித்தார்.

நான் ('விடைபெறும்') ஹஜ்ஜின்போது நபி(ஸல்) அவர்களிடம்),இறைத்தூதர் அவர்களே! மக்களில் நிலை என்ன? நீங்கள் உங்கள் உம்ராவின் இஹ்ராமிலிருந்து இன்னும் விடுபடாமலிருக்க அவர்கள் உம்ராவின் இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிட்டார்களே!என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,நான் என் தலைக்குக் களிம்பு தடவிப் படியவைத்து விட்டேன். மேலும், என் தியாக (குர்பானி)ப் பிராணிக்கு (அடையாள) மாலை தொங்கவிட்டு விட்டேன் எனவே, நான் (ஹஜ் செய்து, அந்தப் பிராணியை) அறுக்கும் வரை இஹ்ராமிலிருந்து விடுபட மாட்டேன்' என்று பதிலளித்தார்கள்.

## தலை முடியில் வகிடு எடுத்தல்

ஹதீஸ் 5917 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) எந்த விஷயத்தில் தமக்கு (இறைக்) கட்டளை ஏதும் இடப்படவில்லையோ அந்த விஷயங்களில் வேதக் காரர்களுடன் ஒத்துப்போவதை விரும்பி வந்தார்கள். வேதக்காரர்கள் தங்களின் தலை முடியை (வகிடெடுத்து வாரிவிடாமல் நெற்றியில்) தொங்கவிட்டுவந்தார்கள். இணைவைப்பாளர்கள் தங்கள் தலை(முடி)களை வகிடு எடுத்துப் பிரித்துவந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் (முதலில்) முன் தலைமுடியை (நெற்றியில்) தொங்கவிட்டு வந்தார்கள். பிறகு அதை (வகிடெத்து)ப் பிரித்தார்கள்.

ஹதீஸ் 5918 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டியிருந்தபோது அவர்களின் தலை வகிடுகளில் (அவர்கள் இஹ்ராம் கட்டுவதற்கு முன் பூசியிருந்த) நறுமணப் பொருள் மின்னியதை (இப்போதும்) நான் பார்ப்பதைப் போன்றுள்ளது.

அப்துல்லாஹ் இப்னு ரஜாஉ(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்நபி(ஸல்) அவர்களின் வகிட்டில்' என்று (ஒருமையாக) வந்துள்ளது.

## தொங்கும் முடிகள்

ஹதீஸ் 5919 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(நபி(ஸல்) அவர்களின் துணைவியானரான) என் சிறிய தாயார் மைமூனா பின்த் ஹாரிஸ்(ரலி) அவர்களின் இல்லத்தில் நான் ஓரிரவு தங்கினேன். அந்த இரவில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மைமூனா(ரலி) அவர்களிடம் தங்கியிருந்தார்கள். இரவில் ('தஹஜ்ஜு த் தொழுகை) தொழுவதற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து நின்றார்கள்.

நான் (எழுந்து) அவர்களுக்கு இடப் பக்கமாக(ப் போய்) நின்றேன். உடனே நபி(ஸல்) அவர்கள் என் தொங்கும் முடியைப் பிடித்துத் தம் வலப் பக்கத்தில் என்னை நிறுத்திக் கொண்டார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. அபூ பிஷ்ர்(ரஹ்) அவர்களின் இந்த அறிவிப்பில்,என் தொங்கும் முடியைப் பிடித்து அல்லதுஎன் தலையைப் பிடித்து என்று (ஐயப்பாட்டுடன்) இடம் பெற்றுள்ளது.

## தலைமுடியில் சிறிதளவு மழித்துவிட்டு சிறிதளவு மழிக்காமல்விட்டுவிடுவது (குடுமி வைப்பது.)

ஹதீஸ் 5920. நாஃபிஉ(ரஹ்) அறிவித்தார்

இப்னு உமர்(ரலி),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் குடுமி ('கஸஉ') வைத்துக் கொள்ளக் கூடாதெனத் தடை விதித்ததை நான் செவியேற்றேன்' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் உபைதுல்லாஹ் இப்னு ஹஃப்ஸ்(ரஹ்) கூறினார்.

நான், உமர் இப்னு நாஃபிஉ(ரஹ்) அவர்களிடம்கஸஉ (குடுமி) என்றால் என்ன? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஒருவர் சிறுவனின் தலை முடியை மழிக்கும்போது (சிறிது மழித்துவிட்டு), இங்கு அங்குமாக (சிற்சில இடங்களில் மட்டும்) முடியை (மழிக்காமல்) அப்படியேவிட்டுவிடுவதாகும்' என்று கூறி, தம் நெற்றி முடி மற்றும் தலையின் இரண்டு பக்கங்களையும் எங்களிடம் கட்டிக் காட்டினார்கள்.

உபைதுல்லாஹ்(ரஹ்) அவர்களிடம்,சிறுமி, சிறுவன் இருவருக்கும் இதே சட்டம் தானா? என்று கேட்கப்பட்டது? அவர்கள்எனக்குத் தெரியாது. ஆனால், உமர் இப்னு நாஃபிஉ(ரஹ்)சிறுவன் என்று (மட்டும்) தான் கூறினார்கள்' என பதிலளித்துவிட்டு,இது தொடர்பாக உமர் இப்னு நாஃபிஉ(ரஹ்) அவர்களிடம் திரும்பத் திரும்ப நான் கேட்டதற்கு அவர்கள்,சிறுவனுக்கு நெற்றியின்

இருபக்க முடிகளையும் பிடறி முடிகளையும் அப்படியேவிட்டுவிடுவதால் எந்தத் தவறும் இல்லை. ஆனால், கஸஉ என்பது அவனுடைய தலையில் முடி எதுவும் இல்லாதிருக்க அவனுடைய நெற்றியில் மட்டும் முடியை அப்படியேவிட்டுவிடுவதாகும். (இதுதான் கூடாது). இவ்வாறே தலையின் ஒரு பக்கம் மட்டும் முடியை மழித்து மறுபக்கம் அப்படியேவிட்டு விடுவதும் கூடாது' என்று கூறினார்கள் எனத் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 5921 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தலைமுடியில் ஒரு பகுதியை மழித்துவிட்டு, மற்றொரு பகுதியை மழிக்காமல்விட்டு விடுவதைத் தடை செய்தார்கள்.

## மனைவி தன் கரங்களால் கணவனுக்கு நறுமணம் பூசுவது.

ஹதீஸ் 5922 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள்இஹ்ராம் கட்டியபோது நான் அவர்களுக்கு என் கையால் நறுமணம் பூசிவிட்டேன். மேலும், (இஹ்ராமிலிருந்து அவர்கள் விடுபட்டபோதும்)மினா'வில் வைத்து (அங்கிருந்து) அவர்கள் (தவா∴புஸ் ஸியாரத் செய்ய) புறப்படுவதற்கு முன்பாக அவர்களுக்கு நறுமணம் பூசினேன்.

## தலைக்கும் தாடிக்கும் நறுமணம் பூசுவது.

ஹதீஸ் 5923 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு, அவர்களிடம் இருந்தவற்றிலேயே நல்ல மணமுடைய வாசனைப் பொருளை நான் பூசிவந்தேன். எந்த அளவிற்கென்றால் அந்த நறுமணப் பொருளின் மினுமினுப்பை அவர்களின் தலையிலும் அவர்களின் தாடியிலும் என்னால் காணமுடிந்தது.

## சீப்பினால் தலை வாருதல்

ஹதீஸ் 5924 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

ஒருவர் ஒரு துவாரத்தின் வழியாக நபி(ஸல்) அவர்களின் வீட்டினுள் எட்டிப் பார்த்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் ஈர்வலிச் சீப்பால் தம் தலையைக் கோதிக் கொண்டிருந்தார்கள். (அவர் எட்டிப் பார்த்தையறிந்த) நபி(ஸல்) அவர்கள்,நீ பார்த்துக் கொண்டிருக்கிறாய் என்று எனக்கு (முன்பே) தெரிந்திருந்தால் இந்த ஈர்வலியைக் கொண்டே உன் கண்ணைக் குத்தியிருப்பேன். (வீட்டுக்குள், நுழைய) அனுமதி கேட்க வேண்டும் என்று சட்டமாக்கப்பட்டதே பார்வைகள் (வரம்பு மீறி வீட்டிலிருப்பவர்களின் மீது விழக் கூடும் என்ற) காரணத்தினால் தான்' என்று கூறினார்கள்.

## மாதவிடாய் ஏற்பட்ட பெண் தன் கணவருக்குத் தலை வாரிவிடுவது.

ஹதீஸ் 5925 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தலையை நான் வாரிவிட்டிருக்கிறேன்.

இதே ஹதீஸ் ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## தலை வாருவதும், அதை வலப் பக்கத்திலிருந்து ஆரம்பிப்பதும்.

ஹதீஸ் 5926 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தலைவாரிக் கொள்ளும்போதும் சரி, அவர்கள் அங்கசுத்தி (உளூ) செய்யும்போதும் சரி இயன்ற வரை வலப் பக்கத்திலிருந்து தொடங்குவதே அவர்களுக்கு விருப்பமானதாக இருந்தது.

## கஸ்தூரி பற்றிய குறிப்பு

ஹதீஸ் 5927 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(அல்லாஹ் கூறினான்:) ஆதமின் மகனுடைய (மனிதனுடைய) செயல் ஒவ்வொன்றும் அவனுக்கு உரியது; நோன்பைத் தவிர! ஏனெனில், அது எனக்குரியது. அதற்கு (நான் விரும்பிய அளவிற்கு) நானே பிரதிபலன் அளிக்கிறேன்.

(மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:)

நோன்பாளியின் வாய் வாடையானது, கஸ்தூரியின் வாசனையை விட அல்லாஹ்விடம் நறுமணமிக்கதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5928 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் இஹ்ராம் கட்டியபோது நான் அவர்களுக்கு என்னிடமிருந்ததிலேயே மிக நல்ல வாசனைப் பொருளைப் பூசிவந்தேன்.

## நறுமணப் பொருளை மறுக்காமல் ஏற்றுக் கொள்வது.

ஹதீஸ் 5929 ஸுமாமா இப்னு அப்தில்லாஹ் இப்னி அனஸ்(ரஹ்) அறிவித்தார்

அனஸ்(ரலி) (தமக்கு அன்பளிப்பாகத் தரப்படும்) நறுமணப் பொருளை மறக்காமல் ஏற்றுக்கொள்வார்கள். மேலும், அவர்கள்நபி(ஸல்) அவர்கள் (தமக்கு அன்பளிப்பாக அளிக்கப்பட்ட) நறுமணப் பொருளை மறுத்ததில்லை' என்று கூறினார்கள்.

## ('தரீரா எனும்) வாசனைத் தூள்

ஹதீஸ் 5930 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹஜ்ஜத்துல் வதா)விடைபெறும் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டியபோதும் இஹ்ராமிலிருந்து விடுபட்டபோதும் நான் என் இரண்டு கைகளால் அவர்களுக்கு ('தரீரா எனும்) வாசனைத் தூளைப் பூசிவிட்டேன்.

## அழகிற்காகப் பல்வரிசையை அரத்தல் தேய்த்துப் பிரித்துக்கொள்ளும் பெண்கள்.

ஹதீஸ் 5931 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

பச்சை குத்திவிடும், பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை அகற்றக் கேட்டுக் கொள்ளும் பெண்கள், அழகிற்காக அரத்தால் தேய்த்துப் பல்வரிசையைப் பிரித்துக் கொள்ளும் பெண்கள், (மொத்தத்தில்) இறைவன் அளித்த உருவத்தை மாற்றிக் கொள்ள முயலும் பெண்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்! நபி(ஸல்) அவர்கள் யாரைச் சபித்தார்களோ அவர்களை நான் ஏன் சபிக்கக் கூடாது? அல்லாஹ்வின் வேதத்திலும் அது உள்ளதே!இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுத்தாரோ அதை எடுத்துக்கொள்ளுங்கள். அவர் எதிலிருந்து உங்களைத் தடுத்தாரோ அதிலிருந்து நீங்கி விலகியிருங்கள்' (என்பதே அந்த (திருக்குர்ஆன் 59:7 வது) வசனம்).

## ஒட்டுமுடி (முடியாலான சவுரி) வைத்துக் கொள்வது.

ஹதீஸ் 5932 ஹுமைத் இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி அவ்ஃப் (ரஹ்) அறிவித்தார்

முஆவியா இப்னு அபீ சுஃப்யான் (ரலி) ஹஜ் செய்த ஆண்டில் சொற்பொழிவு மேடையின் மீது நின்றுகொண்டு (மெய்க்) காவலர் ஒருவரது கையிலிருந்த முடிக்கற்றை (சவுரி முடி) ஒன்றை எடுத்துக் காட்டி, (மதீனாவாசிகளே!) உங்கள் (மார்க்க) அறிஞர்கள் எங்கே? இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இது போன்றதைத் தடை செய்து, பனூஇஸ்ராயீல் சமுதாயத்தார் அழிந்து போனதெல்லாம் அவர்களின் பெண்கள் இதைப் பயன்படுத்தியபோது தான் என்று சொல்ல கேட்டேன்' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 5933 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒட்டுமுடி வைத்துவிடும் பெண்கள், ஒட்டுமுடி வைத்துக்கொள்ளும் பெண்கள், பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள் ஆகியோரை அல்லாஹ் சபிக்கிறான். (தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துகிறான்.)

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5934 ஆயிஷா (ரலி) அறிவித்தார்

அன்சாரிப் பெண்ணொருவர் மணம் புரிந்துகொண்டார். பிறகு அவர் நோயுற்று விட அதன் காரணத்தால் அவரின் தலைமுடி கொட்டிவிட்டது. எனவே, அவரின் உறவினர்கள் அவருக்கு ஒட்டு முடிவைக்க விரும்பி நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், ஒட்டு முடி வைத்துவிடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும் அல்லாஹ் சபிக்கிறான். (தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துகிறான்") என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 5935 அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்

ஒரு பெண் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, நான் என் மகளுக்கு மணமுடித்துவைத்தேன். பிறகு அவள் (தட்டம்மையால்) நோயுற்றுவிட அதன் காரணத்தால் அவளுடைய தலை முடி கொட்டிவிட்டது. அவளுடைய கணவரோ (அவளை அழகுபடுத்தும்படி) என்னைத் தூண்டுகிறார். எனவே, அவளுடைய தலையில் நான் ஒட்டுமுடி வைத்துவிடட்டுமா? என்று கேட்டார். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஒட்டுமுடி வைத்து விடுபவளையும், ஒட்டுமுடி வைத்துக் கொள்பவளையும் சபித்தார்கள்.

ஹதீஸ் 5936 அஸ்மா பின்த் அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்கள் ஒட்டுமுடி வைத்து விடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும் ('அல்லாஹ் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்தட்டும் என்று) சபித்தார்கள்.

ஹதீஸ் 5937 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒட்டு முடி வைத்துவிடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும் பச்சை குத்திவிடுபவளையும் பச்சை குத்திக்கொள்பவளையும் அல்லாஹ் சபிக்கிறான். (தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துகிறான்.)

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்கள் நாஃபிஉ (ரஹ்), பல் ஈறுகளிலும் பச்சை குத்தப்படுவதுண்டு' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5938 ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) அறிவித்தார்

முஆவியா(ரலி) மதீனாவுக்கு இறுதியாக வந்தார்கள். அப்போது எங்களுக்கு உரையாற்றினார்கள். மேலும், முடிக்கற்றை ஒன்றை (கையில்) எடுத்து,இந்த ஒட்டுமுடி வைத்துக்கொள்ளும் செயலை யூதர்களைத் தவிர வேறெவரும் செய்வதை நான் பார்த்ததில்லை. நபி(ஸல்) அவர்கள் இதை போலி ('ஸூ ர்') என அழைத்தார்கள்' என்று ஒட்டுமுடி வைப்பதைக் குறிப்பிட்டுக் கூறினார்கள்.

## (அழகிற்காக) முகத்தின் முடியை நீக்கிக் கொள்ளும் பெண்கள்.

ஹதீஸ் 5939 அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) பச்சைகுத்திவிடும் பெண்களையும் முகத்தில் முளைத்திருக்கும் முடிகளை நீக்கிக் கொள்ளும் பெண்களையும் அழகிற்காக பல்வரிசையை அரத்தால் தேய்த்துப் பிரித்துக்கொள்ளும் பெண்களையும் (மொத்தத்தில்) அல்லாஹ் படைத்த உருவ அமைப்பை மாற்றும் பெண்களை சபித்தார்கள். (இதைக் கேள்விப்பட்ட) உம்மு யஅகூப் என்ற பெண்,என்ன இது (இவ்வாறெல்லாம் சபித்தீர்களாமே)? என்று கேட்டதற்கு அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி),அல்லாஹ்வின் வேதத்தில் சபிக்கப்பட்டு உள்ளவர்களையும் நான் ஏன் சபிக்கப்பட்டு உள்ளவர்களையும் நான் ஏன் சபிக்கக் கூடாது? என்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பெண்,அல்லாஹ்வின் மீதாணையாக! (குர்ஆன் பிரதியில்) இரண்டு அட்டைகளுக்கிடையிலுள்ள அனைத்தையும் நான் ஓதியுள்ளேன். (நீங்கள் குறிப்பிட்ட) அதை நான் அதில் காணவில்லையே!என்று கேட்டதற்கு அவர்கள்,அல்லாஹ்வின் மீதாணையாக! நீ குர்ஆனை(ச் சரியாக) ஓதியிருந்தால் அதில் நான் கூறியதைக் கண்டிருப்பாய்:இறைத்தூதர் எதை உங்களுக்குக் கொடுத்தாரோ, அதைப் பெற்றுக்கொள்ளுங்கள். அவர் எதிலிருந்து உங்களைத் தடுத்தாரோ அதிலிருந்து நீங்கள் விலகி இருங்கள்' (எனும் 59:7 வது வசனமே அது) என்று பதிலளித்தார்கள்.

## ஒட்டுமுடி வைத்துக்கொள்ளும் பெண்

ஹதீஸ் 5940 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒட்டுமுடி வைத்து விடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும் பச்சை குத்திவிடுபவளையும் பச்சை குத்திக் கொள்பவளையும் சபித்தார்கள்.

ஹதீஸ் 5941 அஸ்மா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி,இறைத்தூதர் அவர்களே! என் மகளுக்குத் தட்டம்மை நோய் ஏற்பட்டு அதன் காரணத்தால் அவளுடைய தலைமுடி கொட்டிவிட்டது. அவளை நான் மணமுடித்துக் கொடுத்திருக்கிறேன். அவளுடைய தலை முடியுடன் ஒட்டுமுடி வைக்கலாமா? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஒட்டுமுடி வைத்துவிடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக் கொள்பவளையும் அல்லாஹ் சபிக்கிறான். (தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துகிறான்)' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5942 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

பச்சை குத்துபவளையும் பச்சை குத்திக்கொள்பவளையும் ஒட்டுமுடி வைத்து விடுபவளையும் ஒட்டு முடி வைத்துக் கொள்பவளையும் நபி(ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

ஹதீஸ் 5943 அல்கமா(ரஹ்) அறிவித்தார்

"பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்திலுள்ள முடிகளை அகற்றிக்கொள்ளும் பெண்கள், அழகிற்காகப் பல்வரிசையை அரத்தால் தேய்த்துக்கொள்ளும் பெண்கள், (மொத்தத்தில்) அல்லாஹ்வின் (இயற்கையான) படைப்பை மாற்றிக்கொள்ளும் பெண்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்!என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)

கூறிவிட்டு,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் யாரைச் சபித்தார்களோ அவர்களை நான் ஏன் சபிக்கக் கூடாது? இச்செயல் அல்லாஹ்வின் வேதத்திலும் சபிக்கப்பட்டதே' என்று கூறினார்கள்.

## பச்சை குத்திவிடும் பெண்

ஹதீஸ் 5944 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்கண்ணேறு (திருஷ்டிபடுவது) உண்மைதான்' என்று கூறினார்கள். மேலும், பச்சை குத்துவதைத் தடை செய்தார்கள்.

...இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 5945 அவ்ன் இப்னு அபீ ஜு ஹை:.பா(ரஹ்) அறிவித்தார்

என் தந்தை (அபூ ஜு ஹை:.பா(ரலி) குருதி உறிஞ்சி எடுக்கும் அடிமை ஒருவரை விலைக்கு வாங்கி, அவரின் குருதி உறிஞ்சி கருவிகளை உடைத்தபோது) அவர்களை நான் கண்டடேன். அப்போது அவர்கள் கூறினார்கள்: நபி(ஸல்) அவர்கள் இரத்தத்தின் விலையையும், நாய் விற்ற காசையும் (பெறக் கூடாதெனத்) தடை செய்தார்கள். மேலும், வட்டி உண்பவனையும் அதை உண்ணக் கொடுப்பவனையும், பச்சை குத்திவிடுபவளையும் பச்சை குத்திக் கொள்பவளையும் (சபித்தார்கள். )

## பச்சை குத்திக்கொள்ளும் பெண்

ஹதீஸ் 5946 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

பச்சை குத்தும் பெண்ணொருத்தி உமர்(ரலி) அவர்களிடம் கொண்டுவரப்பட்டாள். அப்போது உமர்(ரலி),அல்லாஹ்வின் பொருட்டால் உங்களிடம் கேட்கிறேன்: பச்சை குத்துவதைப் பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து (ஏதேனும்) செவியுற்றவர் (எவரேனும் உங்களில்) இருக்கிறாரா? என்று (எங்களிடம்) கேட்டார்கள். நான் எழுந்து,இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! நான் செவியுற்றிருக்கிறேன்' என்று சொன்னேன். அதற்கு அவர்கள்,என்ன செவியுற்றீர்கள்? என்று கேட்க, (பெண்களே! பிறருக்குப்) பச்சை குத்திவிடாதீர்கள் நீங்களும் பச்சை குத்திக்கொள்ளாதீர்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் சொல்ல செவியுற்றேன் எனக் கூறினேன்.

ஹதீஸ் 5947 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒட்டுமுடி வைத்து விடுபவளையும் ஒட்டுமுடி வைத்துக்கொள்பவளையும், பச்சை குத்திவிடுபவளையும் பச்சை குத்திக் கொள்பவளையும் சபித்தார்கள்.

ஹதீஸ் 5948 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

பச்சை குத்திவிடும் பெண்கள், பச்சை குத்திக்கொள்ளும் பெண்கள், முகத்தின் முடியை அகற்றிக்கொள்ளும் பெண்கள், அழகிற்காகப் பல்வரிசையை அரத்தால் தேய்த்துப் பிரித்துக்கொள்ளும் பெண்கள், (மொத்தத்தில்) அல்லாஹ்வின் (இயல்பான) படைப்பை மாற்றிக்கொள்ளும் பெண்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் யாரைச் சபித்தார்களோ அவர்களை நான் ஏன் சபிக்கக்கூடாது? இச்செயல் அல்லாஹ்வின் வேதத்திலும் சபிக்கப்பட்டுள்ளது.

## உருவப்படங்கள்

ஹதீஸ் 5949 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாயும் (சிலைகள் முதலான) உருவப் படங்களும் உள்ள வீட்டில் (இறைக் கருணையைக் கொண்டுவரும்) வானவர்கள் நுழையமாட்டார்கள்.

என அபூ தல்ஹா(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## உருவங்களைப் படைப்போருக்கு மறுமை நாளில் கிடைக்கும் வேதனை.

ஹதீஸ் 5950 முஸ்லிம் இப்னு ஸுபைஹ்(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அவர்களுடன் யஸார் இப்னு நுமைர்(ரஹ்) அவர்களின் இல்லத்தில் இருந்தோம். அப்போது யஸார்(ரஹ்) அவர்களின் வீட்டுத் திண்ணையில் சில சிலைகள் இருப்பதை மஸ்ரூக்(ரஹ்) கண்டார்கள்.

உடனேஅல்லாஹ்விடம் மறுமை நாளில் மிகக் கடுமையான வேதனைக்கு உள்ளாவோர் உருவங்களைப் படைப்போர் தாம்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதைத் தாம் செவியேற்றதாக அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) கூற கேட்டேன்' என்று மஸ்ரூக்(ரஹ்) கூறினார்கள்.

ஹதீஸ் 5951 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இந்த உருவங்களைப் படைப்போர் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்கள். அவர்களிடம்,நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் (பார்க்கலாம்)' என (இடித்து)க் கூறப்படும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## உருவப் படங்களைச் சிதைத்தல்

ஹதீஸ் 5952 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தங்களின் வீட்டில் சிலுவை போன்ற உருவங்கள் உள்ள எந்தப் பொருளையும் சிதைக்காமல்விட்டுவைத்ததில்லை.

ஹதீஸ் 5953 அபூ ஸுர்ஆ இப்னு அம்ர் இப்னி ஜரீர்(ரஹ்) கூறினார்

நான் அபூ ஹுரைரா(ரலி) அவர்களுடன் மதீனாவில் ஒரு வீட்டினுள் நுழைந்தேன். அதன் மேல் தளத்தில் உருவப் படங்களை வரைவபவர் ஒருவர் உருவங்களை வரைந்து கொண்டிருந்தார். அப்போது அபூ ஹுரைரா(ரலி),என் படைப்பைப் போன்று படைக்க எண்ணுபவனை விட அக்கிரமக்காரன் வேறு யார் இருக்கமுடியும்? அவர்கள் ஒரு தானிய விதையையாவது படைத்துக் காட்டட்டும். ஓர் அணுவையாவது படைத்துக் காட்டட்டும் என்று (அல்லாஹ் கூறுவதாக) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொல்ல கேட்டேன்' என்றார்கள். பிறகு (அங்கசுத்தி செய்வதற்காகத்) தண்ணீருள்ள பாத்திரம் ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி தம் இருகைகளையும் அக்குள் வரை கழுவினார்கள். நான்,அபூ ஹுரைரா அவர்களே! இது (அக்குள் வரை கையைக் கழுவுவது), அல்லாஹ்வின் தூதரிடமிருந்து நீங்கள் செவியுற்ற விஷயமா? எனக் கேட்க, அவர்கள்,(அங்கசுத்தி செய்யப்படும் உடலுறுப்புகள் மறுமையில் வெண்மையாகும்போது அக்குள்வரை) வெண்மை பரவும்' (என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்) என்றார்கள்.

## காலால் மிதிபடும் உருவப் படங்கள்

ஹதீஸ் 5954 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து (தபூக் அல்லது கைபரிலிருந்து மதீனா) வந்தார்கள். அப்போது உருவச் சித்திரங்கள் பொறித்த என்னுடைய திரைச் சீலையொன்றால் நான் என்னுடைய அலமாரியை மறைத்திருந்தேன். அதை அல்லாஹவின் தூதர்(ஸல்) அவர்கள் பார்த்தபோது அதைக் கிழித்துவிட்டு,மறுமை நாளில் மக்களிலேயே மிகக் கடுமையான வேதனைக்குள்ளாவோர் அல்லாஹ்வின் படைப்புக்கு ஒப்பாகப் படை(க்க நினை)ப்பவர்கள்தாம்' என்று கூறினார்கள்.

பிறகு நாங்கள் அந்தத் திரைச் சீலையை ஒரு தலையணை(இருக்கை)யாக, அல்லது இரண்டு தலையணை(இருக்கை)களாக ஆக்கிக் கொண்டோம். 1

ஹதீஸ் 5955 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு பயணத்திலிருந்து வந்தார்கள். நான் குஞ்சம் வைத்த கெட்டித் திரைச் சீலையொன்றை (வீட்டில்) தொங்க விட்டிருந்தேன். அதில் உருவச் சித்திரங்கள் இருந்தன. நபி(ஸல்) அவர்கள் அதைக் கழற்றி விடும்படி என்னைப் பணித்தார்கள். எனவே, நான் அதைக் கழற்றிவிட்டேன்.

ஹதீஸ் 5956 (மேலும், ஆயிஷா(ரலி) கூறினார்)

நானும் நபி(ஸல்) அவர்களும் ஒரே பாத்திரத்திலிருந்து (அள்ளி, ஒன்றாகக்) குளித்து வந்தோம்.

## உருவப் படங்களின் மீது அமர்வதைக் கூட வெறுத்தவர்கள்.

ஹதீஸ் 5957 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான் (உயிரினங்களின்) உருவப்படங்கள் உள்ள திண்டு ஒன்றை வாங்கினேன். நபி(ஸல்) அவர்கள் (வீட்டின்) கதவருகே வந்து நின்றார்கள். ஆனால், உள்ளே வரவில்லை. (இதைக் கண்டு திடுக்குற்ற) நான்,நான் செய்த பாவத்திற்காக அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி மீளுகிறேன்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,இந்தத் திண்டு என்ன? என்று கேட்டார்கள். நான்,இதன் மீது நீங்கள் அமர்வதற்காகவும் இதைத் தலையணையாக நீங்கள் பயன்படுத்திக் கொள்வதற்காகவும் நான் வாங்கினேன்' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,இந்த உருவங்களைப் படைப்போர் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்கள். அவர்களிடம்,நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் (பார்க்கலாம்)' என்று சொல்லப்படும். மேலும், (உயிரினங்களின்) உருவப் படம் உள்ள வீட்டில் (இறைக் கருணையைக் கொண்டு வரும்) வானவர்கள் நுழைய மாட்டார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5958 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உயிரினங்களின்) உருவப் படம் உள்ள வீட்டில் (இறைக் கருணையைக் கொண்டு வரும்) வானவர்கள் நுழையமாட்டார்கள்.

இதை இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர் அபூ தல்ஹா(ரலி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) புஸ்ர் இப்னு ஸயீத்(ரஹ்) கூறினார்.

(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த) ஸைத் இப்னு காலித்(ரலி), பின்னர் நோய்வாய்ப்பட்டபோது நாங்கள் அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றோம். அப்போது அவர்களின் வீட்டுக் கதவில் உருவப்படம் உள்ள திரையொன்று தொங்கிக் கொண்டிருந்தது. நான் (உடனிருந்த) நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான மைமூனா(ரலி) அவர்களின் வளர்ப்பு மகன் உபைதுல்லாஹ் இப்னு அஸ்வத் அல்கவ்லானீ(ரஹ்) அவர்களிடம்,உருவப் படங்களைப் பற்றி முன்பு ஒரு நாள் ஸைத்(ரலி) நமக்கு (ஒரு ஹதீஸ்) அறிவிக்கவில்லையா? என்று கேட்டேன். உடனே உபைதுல்லாஹ்(ரஹ்),துணியில் வரையப்பட்ட (உயிரற்றவையின் படத்)தைத் தவிர என்று அவர்கள் சொன்னதை நீங்கள் கேட்கவில்லையா? என்று கேட்டார்கள்.

இந்த ஹதீஸ் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## உருவப் படங்கள் உள்ள இடத்தில் தொழுவது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 5959 அனஸ்(ரலி) அறிவித்தார்

ஆயிஷா(ரலி) அவர்களிடம் உருவச் சித்திரங்கள் பொறித்த திரைச் சீலை ஒன்று இருந்தது. அதனால் வீட்டின் ஒரு பகுதி(யிலிருந்த அலமாரி)யை அவர்கள் மறைத்திருங்கள். (அதை நோக்கித் தொழுத) நபி(ஸல்) அவர்கள்,இதை அகற்றிவிடு. ஏனெனில், இதிலுள்ள உருவப்படங்கள் என் தொழுகையில் என்னிடம் குறுக்கிட்டுக் கொண்டேயிருக்கின்றன' என்று கூறினார்கள்.

## உருவப் படம் உள்ள வீட்டில் வானவர்கள் நுழையமாட்டார்கள்.

ஹதீஸ் 5960 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள் (ஒரு குறிப்பிட்ட நேரத்தில் வருவதாக) வாக்களித்திருந்தார்கள். ஆனால், அவரின் வருகை தாமதப்பட்டது. இதையடுத்து நபி(ஸல்) அவர்களுக்குத் கவலை உண்டானது. அப்போது, நபி(ஸல்) அவர்கள் வெளியே புறப்பட ஜிப்ரீல்(அலை) அவர்களைச் சந்தித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் தாம் அடைந்த கவலையை ஜிப்ரீல்(அலை) அவர்களிடம் (தெரிவித்து) முறையிட்டார்கள். அதற்கு அவர்கள்,(வானவர்களாகிய) நாங்கள் உருவப் படமும் நாயும் உள்ள வீட்டில் நுழையமாட்டோம்' என்று கூறினார்கள்.

## உருவப் படமுள்ள வீட்டுக்குள் செல்லாமலிருப்பது.

ஹதீஸ் 5961 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான் உருவப்படங்கள் உள்ள திணடு ஒன்றை விலைக்கு வாங்கினேன். அதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பார்த்தபோது வீட்டுக்குள் நுழையாமல் வாசலிலேயே நின்றுவிட்டார்கள். அவர்களின் முகத்தில் வெறுப்புத் தெரிந்தது. நான்,இறைத்தூதர் அவர்களே! நான் அல்லாஹ்விடமும் அல்லாஹ்வின் தூதரிடமும் மன்னிப்புக் கோருகிறேன். நான் என்ன குற்றம் செய்தேன்? என்று கேட்டேன்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,என்ன திண்டு அது? என்று கேட்டார்கள். நான்,நீங்கள் அமர்ந்துகொள்வதற்காகவும் தலையணையாகப் பயன்படுத்திக்கொள்வதற்காகவும் தான் இதை வாங்கினேன்' என்று சொன்னேன்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இந்த உருவங்களை வரைந்தவர்கள் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார்கள். அவர்களிடம்,நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் (பார்க்கலாம்)' என்று சொல்லப்படும் எனக் கூறினார்கள்.

மேலும், உருவப் படங்கள் இருக்கும் வீட்டினுள் (இறைக் கருணையை கொண்டு வரும்) வானவர்கள் நுழையமாட்டார்கள்' என்றும் கூறினார்கள்.

## உருவப் படம் வரைவோரைச் சபித்தல்

ஹதீஸ் 5962 அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்

நான் குருதி உறிஞ்சியெடுக்கும் அடிமை ஒருவரை (விலைக்கு) வாங்கினேன். (அவரின் குருதி உறிஞ்சி கருவிகளை உடைத்து விட்டேன். ஏனெனில்,) நபி(ஸல்) அவர்கள், இரத்தத்தின் விலையையும் நாய்விற்ற காசையும் விபசாரியின் சம்பாத்தியத்தையும் (ஏற்கக் கூடாதென்று) தடை செய்தார்கள். மேலும், வட்டி (வாங்கி) உண்பவனையும் வட்டி உண்ணக் கொடுப்பவனையும் பச்சை குத்திவிடுபவளையும் பச்சை குத்திக்கொள்பவளையும் உருவப் படங்களை வரைகிறவனையும் சபித்தார்கள்.

உருவப் படம் வரைகிறவன் மறுமை நாளில் அந்த உருவத்தினுள் உயிரை ஊதும்படி கட்டளையிடப்படுவான். ஆனால், அவனால் அது முடியாது.

ஹதீஸ் 5963 நள்ர் இப்னு அனஸ் இப்னி மாலிக்(ரஹ்) அறிவித்தார்

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் இருந்தேன். அவர்களிடம் மக்கள் விளக்கம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். (பொதுவாக) தம்மிடம் (விளக்க) கேட்கப்படாத வரை நபி(ஸல்) அவர்கள் சொன்னதாக இப்னு அப்பாஸ்(ரலி) (எதையும்) கூற மாட்டார்கள்.

அப்போது (ஒருவர் கேட்ட கேள்விக்குப் பதிலளிக்கும் வகையில்) இப்னு அப்பாஸ்(ரலி),உலகில் ஓர் உருவப் படத்தை வரைகிறவர் மறுமை நாளில் அந்த உருவத்தினுள் உயிரை ஊதும்படி பணிக்கப்படுவார். ஆனால், அவரால் ஊத முடியாது' என்று முஹம்மத்(ஸல்) அவர்கள் சொல்ல கேட்டேன்' எனக் கூறினார்கள்.

## வாகனத்தில் ஒருவர் தமக்குப் பின்னால் மற்றொருவரை அமர்த்திக் கொள்வது

ஹதீஸ் 5964 உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , கழுதை வாகனத்தில் சேணம் விரித்து, அதன் மீது∴பதக் நகர் முரட்டுத் துணி விரித்து அதன் மீது அமர்ந்து பயணம் செய்தார்கள். தமக்குப் பின்னால் என்னை அமர்த்திக் கொண்டார்கள்.

## ஒரே வாகனப் பிராணியின் மீது மூன்று பேர் பயணம் செய்வது.

ஹதீஸ் 5965 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(மக்கா வெற்றியின்போது) நபி(ஸல்) அவர்கள் மக்காவுக்கு வந்த சமயம் அவர்களை அப்துல் முத்தலிபின் குடும்பத்துச் சிறுவர்கள் வரவேற்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (அந்தச் சிறுவர்களில்) ஒருவரைத் தமக்கு முன்னாலும் மற்றொருவரைத் தமக்குப் பின்னாலும் (தம் ஒட்டகத்தில்) அமர்த்திக் கொண்டார்கள்.

## வாகனப் பிராணியின் உரிமையாளர் பிறரைத் தமக்கு முன்னால் (வாகனத்தில்) ஏற்றிக் கொள்வது.

(அறிஞர்களில்) சிலர் கூறினர்: வாகனத்தின் உரிமையாளரே அதன் முற்பகுதியில் அமர அதிக உரிமையுடையவராவார் அவர் தம்முடன் அமர்பவருக்கு முற்பகுதியில் உட்கார அனுமதியளித்தால் அவர் உட்காரலாம்.

ஹதீஸ் 5966 அய்யூப்(ரஹ்) அறிவித்தார்

இக்ரிமா(ரஹ்) முன்னிலையில்,(வாகனப் பிராணியின் மீது மூவர் அமர்ந்து செல்லக்கூடாது அவ்வாறு அமர்ந்து செல்லும்) அந்த மூவரில் தீயவர் யார்? என்பது குறித்துப் பேசப்பட்டது. அப்போது இக்ரிமா(ரஹ்),இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்கா வெற்றியின்போது மக்காவுக்கு) வந்தார்கள். (அவர்களை வரவேற்ற சிறுவர்களில் அப்பாஸ்(ரலி) அவர்களின் புதல்வர்களான)குஸம்(ரலி) அவர்களைத் தமக்கு முன்னாலும், ∴பள்ல்(ரலி) அவர்களைத் தமக்குப் பின்னாலும் அல்லது∴பள்ல்(ரலி) அவர்களைத் தமக்கு முன்னாலும், குஸம்(ரலி) அவர்களைத் தமக்குப் பின்னாலும் நபி(ஸல்) அவர்கள் (வாகனத்தில்) ஏற்றினார்கள். என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். இந்த மூவரில் (நபி, குஸம், ∴பள்ல்)யார் தீயவர்? அல்லதுயார் நல்லவர்? என்று கூறமுடியுமா? என்று கேட்டார்கள்.

## (வாகனத்தில்) ஒருவருக்குப் பின்னால் ஒருவர் அமர்வது.

ஹதீஸ் 5967 முஆத் இப்னு ஜபல்(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் (வாகனத்தில்) இருந்துகொண்டிருந்தேன். எனக்கும் அவர்களுக்குமிடையே (ஒட்டகச்) சேணத்துடன் இணைந்த சாய்வுக் கட்டை தான் இருந்தது.

(அவ்வளவு நெருக்கத்தில் வந்து கொண்டிருந்தேன்.) அப்போது நபி(ஸல்) அவர்கள், முஆதே! என்று அழைத்தார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)' என்றேன். பிறகு சிறிது தூரம் சென்றபின், முஆதே' என்று (மீண்டும்) அழைத்தார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியச் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)' என்றேன். சிறிது தூரம் சென்றபின் (மீண்டும்) முஆதே! என்றார்கள். (அப்போதும்) நான்இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)' என்றேன்.

நபி(ஸல்) அவர்கள், மக்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா? என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள், மக்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்னவென்றால், அவர்கள் அவனையே வணங்கிட வேண்டும். அவனுக்கு எதனையும் (எவரையும்) இணைகற்பிக்கக் கூடாது என்பதாகும்' என்றார்கள்.

இன்னும் சிறிது தூரம் சென்ற பின் முஆத் இப்னு ஜபலே' என்று அழைத்தார்கள். நான், இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (சொல்லுங்கள்)' என்று பதில் கூறினேன். அவர்கள், அவ்வாறு (அல்லாஹ்வையே வணங்கி அவனுக்கு இணை வைக்காமல்) செயல்பட்டுவரும் மக்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா? என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்' என்றேன். நபி(ஸல்) அவர்கள், (இத்தகைய) மக்களை அவன் (மறுமையில்) வேதனைப்படுத்தாமல் இருப்பது தான் மக்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமையாகும்' என்று கூறினார்கள்.

## (வாகனத்தில்) நெருங்கிய உறவுக்கார ஆணுக்குப் பின்னால் பெண் அமர்ந்து கொள்வது.

ஹதீஸ் 5968 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் கைபரிலிருந்து (மதீனாவை) நோக்கிப் புறப்பட்டோம். அபூ தல்ஹா(ரலி) சென்று கொண்டிருக்க, அவர்களுக்குப் பின்னால் நான் (வாகனத்தில்) அமர்ந்துகொண்டிருந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பின்னால் (அவர்களின் வாகனத்தில்) அவர்களின் துணைவியரில் ஒருவர் (ஸஃபிய்யா) அமர்ந்து கொண்டிருந்தார். அப்போது (நபியவர்களின்) ஒட்டகம் இடறிவிழுந்தது. நான்(அந்த ஒட்டகத்தில்) பெண் இருக்கிறாரே! என்று சொன்னேன். பிறகு நான் (என் வாகனத்திலிருந்து) இறங்கியதும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இவர் உங்கள் அன்னை' என்று கூறினார்கள். பிறகு நான் சேணத்தைக் கட்டினேன். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இவர் உங்கள் அன்னை' என்று கூறினார்கள். பிறகு, நான் சேணத்தைக் கட்டினேன். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஏறிக் கொண்டு) பயணம் செய்யலானார்கள்.

மதீனாவைநெருங்கியபோது அல்லதுபார்த்தபோது நபி(ஸல்) அவர்கள்பாவமன்னிப்புக் கோரி மீண்டவர்களாக, எங்கள் இறைவனை வணங்கியவர்களாக, (அவனைப் போற்றிப்) புகழ்ந்தவர்களாக (நாங்கள் திரும்பிக் கொண்டிருக்கிறோம்)' என்று கூறினார்கள்.

## மல்லாந்து படுப்பதும், ஒரு காலை மற்றொரு கால் மீது வைத்துக்கொள்வதும்.

ஹதீஸ் 5969 அப்துல்லாஹ் இப்னு ஸைத் அல் அன்சாரி(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தம்மிரு கால்களில் ஒன்றை மற்றொன்றின் மீது தூக்கி வைத்தவர்களாகப் பள்ளிவாசலில் (மல்லாந்து) படுத்திருப்பதை பார்த்தேன்.

# அத்தியாயம் 78 நற்பண்புகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## (பெற்றோர் மற்றும் உறவினர்களுக்கு) நன்மை செய்வதும் உறவைப் பேணி வாழ்வதும்.

அல்லாஹ் கூறினான்:

தன் தாய் தந்தையருக்கு நன்மை செய்யும் படி மனிதனுக்கு நாம் அறிவுறுத்தியுள்ளோம். (திருக்குர்ஆன் 29:08)

ஹதீஸ் 5970 வலீத் இப்னு அய்ஸார்(ரஹ்) அறிவித்தார்

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களின் இல்லத்தைச் சுட்டிக் காட்டியவாறு அபூ அம்ர் அஷ்ஷைபானீ(ரஹ்), (இதோ!) இந்த வீட்டுக்காரர் (பின்வருமாறு) எனக்குத் தெரிவித்தார்கள்' என்று கூறினார்கள்:

நான் நபி(ஸல்) அவர்களிடம்கண்ணியமும் மகத்துவமும் வாய்ந்த அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான செயல் (அமல்) எது? என்று கேட்டேன். அவர்கள் தொழுகையை அதற்குரிய நேரத்தில் நிறைவேற்றுவது' என்றார்கள். பிறகு எது? என்று கேட்டேன். தாய் தந்தையருக்கு நன்மை செய்வது' என்றார்கள். (நான் தொடர்ந்து)பிறகு எது? என்றேன். அவர்கள், இறைவழியில் அறப்போரிடுதல்' என்று பதிலளித்தார்கள். இவற்றை (மட்டுமே) என்னிடம் நபி(ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள். இன்னும் அதிகமாக (இது குறித்து) நான் அவர்களிடம் கேட்டிருந்தால் எனக்கு இன்னும் நிறைய பதிலளித்திருப்பார்கள்.

## அழகிய முறையில் உறவாடுவதற்கு மிகவும் அருகதை உள்ளவர் யார்?

ஹதீஸ் 5971 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, இறைத்தூதர் அவர்களே! நான் அழகிய முறையில் உறவாடுவதற்கு மிகவும் அருகதையானவர் யார்? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், உன் தாய்' என்றார்கள். அவர், பிறகு யார்? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், உன் தாய்' என்றார்கள். அவர், பிறகு யார்? என்றார். உன் தாய்' என்றார்கள். அவர், பிறகு யார்? என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள், பிறகு, உன் தந்தை' என்றார்கள்.

இதே ஹதீஸ் இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## பெற்றோரின் அனுமதியுடனேயே அறப்போர் புரியவேண்டும்.

ஹதீஸ் 5972 அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம், நான் (இந்த) அறப்போரில் கலந்து கொள்ளட்டுமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், உனக்குத் தாய் தந்தை இருக்கின்றனரா? என்று கேட்டார்கள். அவர், ஆம் (இருக்கிறார்கள்)' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், (அவ்வாறாயின் திரும்பிச் சென்று) அவர்கள் இருவருக்காகவும் பாடுபடு' என்றார்கள்.

## எவரும் தம் பெற்றோரை ஏசக் கூடாது.

ஹதீஸ் 5973 அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்

**“ஒருவர் தம் தாய் தந்தையரை சபிப்பது பெரும் பாவங்களில் உள்ளதாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போதுஇறைத்தூதர் அவர்களே! ஒருவர் தம் தாய் தந்தையரை எவ்வாறு சபிப்பார்? என்று கேட்கப்பட்டது.**

நபி(ஸல்) அவர்கள்,ஒருவர் இன்னொருவரின் தந்தையை ஏசுவார். உடனே (பதிலுக்கு) அவர் இவருடைய தந்தையையும் தாயையும் ஏசுவார் (ஆக, தம் தாய் தந்தையர் ஏசப்பட இவரே காரணமாகிறார்)‘ என்றார்கள்.

## பெற்றோருக்கு நன்மை செய்தவரின் பிரார்த்தனை (துஆ) ஏற்கப்படுவது.

ஹதீஸ் 5974 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில்) மூன்று பேர் நடந்து சென்று கொண்டிருந்தபோது (திடீரென்று) மழை பிடித்துக் கொண்டது. எனவே, அவர்கள் (ஒதுங்குவதற்காக) ஒரு மலைக் குகையை நோக்கிப் போனார்கள். (அவர்கள் உள்ளே நுழைந்த) உடனே மலையிலிருந்து உருண்டு வந்த ஒரு பாறை அவர்களின் குகை வாசலை அடைத்துக் கொண்டது. (வெளியேற முடியாமல் திணறிய) அவர்கள் (மூவரும்) அப்போது தமக்குள்,நாம் (வேறெவருடைய திருப்திக்காகவுமின்றி) அல்லாஹ்வுக்காக (என்று தூய்மையான முறையில்) செய்த நற்செயல்களை நினைத்துப் பார்த்து, அவற்றை முன்வைத்து அல்லாஹ்விடம் பிரார்த்திப்போம். அவன் இ(ப் பாறை)தனை (நம்மைவிட்டு) அகற்றிவிடக் கூடும்‘ என்று பேசிக்கொண்டனர்.

எனவே, அவர்களில் ஒருவர் இவ்விதம் (இறைவனிடம்) வேண்டினார்.

இறைவா! எனக்கு முதிர்ந்த வயதுடைய தாய் தந்தையர் இருந்தனர். எனக்குச் சிறு குழந்தைகளும் உண்டு. நான் இவர்களைப் பராமரிப்பதற்காக ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தேன். மாலையில் அவர்களிடம் நான் திரும்பி வந்த பின் ஆட்டின் பாலைக் கறந்து கொண்டு வந்து என் குழந்தைகளுக்கு ஊட்டுவதற்கு முன்பாக என் தாய் தந்தையருக்கு முதலில் ஊட்டுவேன். (ஒரு நாள்) இலை தழைகளைத் தேடியபடி வெகு தூரம் சென்று விட்டேன். அதனால் அந்திப் பொழுதிலேயே (வீட்டுக்கு) வர முடிந்தது. அப்போது (என் தாய் தந்தை) இருவரும் உறங்கிவிட்டிருக்கக் கண்டேன். உடனே எப்போதும் போன்று பால் கறந்து, பால் செம்புடன் வந்தேன். பெற்றோரைத் தூக்கத்திலிருந்து எழுப்பிட மனமில்லாமல் அவர்கள் இருவருடைய தலைமாட்டில் நின்றுகொண்டேன். அவர்கள் இருவருக்கும் முன் குழந்தைகளுக்கு முதலில் ஊட்டுவதையும் நான் விரும்பவில்லை. என் குழந்தைகளோ என்னுடைய காலருகில் (பசியால்) கதறிக்கொண்டிருந்தனர். இதே நிலையில் நானும் அவர்களும் இருக்க, வைகறை வந்துவிட்டது. (இறைவா!) நான் இச்செயலை உன்னுடைய திருப்தியை நாடியே செய்தேன் என்று நீ கருதியிருந்தால் எங்களுக்கு இந்தப் பாறையைச் சற்றே நகர்த்திடுவாயாக! அதன் வழியாக நாங்கள் ஆகாயத்தைப் பார்த்துக்கொள்வோம்.

அவ்வாறே அல்லாஹ் அவர்களுக்குச் சற்றே நகர்த்திக்கொடுத்தான். அதன் வழியாக அவர்கள் ஆகாயத்தைப் பார்த்தான்.

இரண்டாமவர் (பின்வருமாறு) வேண்டினார்.

இறைவா! எனக்கு என் தந்தையின் சகோதரருடைய புதல்வி ஒருத்தி இருந்தாள். பெண்களை ஆண்கள் நேசிப்பதிலேயே மிகவும் ஆழமாக அவளை நான் நேசித்தேன். (ஒரு நாள்) அவளிடம் அவளைக் கேட்டேன். நான் அவளிடம் நூறு பொற்காசுகள் கொண்டு வந்தால் தவிர (எனக்கு இணங்க முடியாதென) அவள் மறுத்துவிட்டாள். நான் முயற்சிசெய்து, (அந்த) நூறு பொற்காசுகளைச் சேகரித்தேன். நான் அதனுடன் சென்று அவளைச் சந்தித்து, அவளுடைய இரண்டு கால்களுக்கிடையே அமர்ந்தபோது அவள்அல்லாஹ்வின் அடியானே! அல்லாஹ்வுக்கு அஞ்சிடு! முத்திரையை அதற்குரிய (சட்ட பூர்வ) உரிமை(யான திருமணம்) இன்றித் திறக்காதே‘ என்று சொன்னாள். உடனே நான் அவளைவிட்டுவிட்டு எழுந்துவிட்டேன். (இறைவா!) இதை

உன் திருப்தியைப் பெற விரும்பியே நான் செய்ததாக நீ கருதினால், இந்தப் பாறையை எங்களுக்காக (இன்னும் சற்று) நகர்த்திடுவாயாக!

அவ்வாறே (அல்லாஹ்) அவர்களுக்கு (இன்னும்) சற்றே நகர்த்திக்கொடுத்தான்.

மற்றொருவர் (பின்வருமாறு) வேண்டினார்:

இறைவா! நான் ஒரு∴பரக் அளவு நெல்லைக் கூலியாக நிர்ணயித்து கூலியாள் ஒருவரை (பணிக்கு) அமர்த்தினேன். அவர் தம் வேலை முடிந்தவுடன்,என்னுடைய உரிமையை (கூலியை)க் கொடு‘ என்று கேட்டார். நான் (நிர்ணயித்தபடி) அவரின் உரிமையை (கூலியை) அவர் முன் வைத்தேன். அதை அவர் பெற்றுக்கொள்ளாமல் (என்னிடமே)விட்டுவிட்(டுச் சென்று விட்)டார். பின்னர் நான் அதை (நிலத்தில் விதைத்து) தொடர்ந்து விவசாயம் செய்து வந்தேன். அதி(ல் கிடைத்த வருவாயி)லிருந்து பல மாடுகளையும் அவற்றுக்கான இடையர்களையும் நான் சேகரித்துவிட்டேன். பின்னர் (ஒருநாள்) அவர் என்னிடம் வந்து,அல்லாஹ்வுக்கு அஞ்சிடு! எனக்கு அநியாயம் புரியாதே! என்னுடைய உரிமையை என்னிடம் கொடுத்துவிடு‘ என்று கூறினார்.

அதற்கு நான்,அந்த மாடுகளிடமும் அவற்றின் இடையர்களிடமும் நீ செல்! (அவை உனக்கே உரியவை)‘ என்று சொன்னேன். அதற்கு அம்மனிதர்,அல்லாஹ்வுக்கு அஞ்சிடு! என்னைப் பரிகாசம் செய்யாதே!என்று கூறினார். நான்,உன்னை நான் பரிகாசம் செய்யவில்லை. இந்த மாடுகளையும் இடையர்களையும் நீயே எடுத்துக்கொள்‘ என்று சொன்னேன். அவர் அவற்றைப் பிடித்தபடி நடந்தார். (இறைவா!) நான் இந்த(நற்) செயலை உன் திருப்தியைப் பெற விரும்பியே செய்ததாக நீ கருதியிருந்தால் மீதமுள்ள அடைப்பையும் நீ அகற்றிடுவாயாக!

அவ்வாறே அல்லாஹ் அப்பாறையை அவர்களைவிட்டு (முழுமையாக) அகற்றிவிட்டான்.

## பெற்றோரைப் புண்படுத்துவதும் பெரும் பாவங்களில் ஒன்றாகும்.

இது குறித்து இப்னு உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

**ஹதீஸ் 5975** இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அன்னையரைப் புண்படுத்தவது, (அடுத்தவருக்குத் தரவேண்டியதைத்) தர மறுப்பது, (அடுத்தவருக்கு உரியதைத்) தருமாறு கேட்பது, பெண் சிசுக்களை உயிருடன் புதைப்பது ஆகியவற்றை அல்லாஹ் தடை செய்துள்ளான். மேலும், (தேவையின்றி) அதிகமாகப் பேசுவது, அதிகமாகக் (கேள்வி, அல்லது யாசகம்) கேட்பது, செல்வத்தை வீணாக்குவது ஆகியவற்றை அல்லாஹ் வெறுத்துள்ளான்.

என முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

**ஹதீஸ் 5976** அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்பெரும் பாவங்களிலேயே மிகப் பெரும் பாவங்களை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று மூன்று முறை கேட்டார்கள். நாங்கள்,ஆம், இறைத்தூதர் அவர்களே! (அறிவியுங்கள்)‘ என்று கூறினோம். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வுக்கு இணை வைப்பதும், பெற்றோரைப் புண்படுத்துவதும்‘ என்று சொல்லிவிட்டு சாய்ந்து கொண்டிருந்த அவர்கள் எழுந்து அமர்ந்து,அறிந்து கொள்ளுங்கள்: பொய் பேசுவதும் பொய் சாட்சியமும் (மிகப் பெரும் பாவம்தான்) பொய் பேசுவதும் பொய் சாட்சியமும் (மிகப் பெரும் பாவம்தான்)‘ என்று கூறினார்கள். இதை அவர்கள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள். (இதைக் கண்ட) நான்அவர்கள் நிறுத்திக்கொள்ளக் கூடாதா? என்றேன்.

**ஹதீஸ் 5977** அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்பெரும்பாவங்கள் தொடர்பாகக் குறிப்பிட்டார்கள் அல்லதுஅவர்களிடம் பெரும் பாவங்கள் பற்றிக் கேட்கப்பட்டது‘. அப்போது நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, கொலை செய்வது, பெற்றோரைப் புண்படுத்துவது ஆகியன (பெரும்பாவங்களாகும்)‘ என்று கூறிவிட்டு,பெரும்பாவங்களிலேயே மிகப் பெரும் பாவத்தை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று கேட்டார்கள்.பொய் பேசுவது அல்லதுபொய் சாட்சியம் (மிகப் பெரும் பாவமாகும்)‘ என்று கூறினார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா இப்னு ஹஜ்ஜாஜ்(ரஹ்) கூறினார்:

‘பொய் சாட்சியம் என்றே நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள் என்றே நான் அநேகமாகக் கருதுகிறேன்.

## (இறைவனுக்கு) இணைவைக்கும் பெற்றோராயினும் அவர்களின் உறவையும் பேணி வாழ்வது.

ஹதீஸ் 5978 அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் என் தாயார் ஆசையாக என்னிடம் வந்தார். (அப்போது அவர் இணைவைப்பவராக இருந்தார்.) நான் நபி(ஸல்) அவர்களிடம்(என் தாயார் வந்துள்ளார்.) அவருடன் உறவைப் பேணிக்கொள்ளட்டுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,ஆம்‘ என்று கூறினார்கள்.

“எனவே, அஸ்மாவின் தாயார் தொடர்பாக,மார்க்க (விஷய)த்தில் உங்களிடம் போரிடாமலும், உங்கள் இல்லங்களிலிருந்து உங்களை வெளியேற்றாமலும் இருந்தார்களே அவர்களுக்கு நீங்கள் நன்மை செய்வதையும், அல்லாஹ் தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துவோரை நேசிக்கிறான்‘ எனும் (திருக்குர்ஆன் 60:8 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்‘ என (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) கூறினார்.

## கணவன் உள்ள ஒரு பெண் தன் தாயுடன் உறவைப் பேணி வாழ்வது.

ஹதீஸ் 5979 அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்களுடன் குறைஷியர் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டிருந்த காலத்தில் இணைவைப்பவராக இருந்த என் தாயார் தம் தந்தையுடன் (என்னைப் பார்க்க) வந்தார். நான்,என் தாயார் என்னிடம் ஆசையுடன் வந்துள்ளார் நான் அவருடன் உறவு கொண்டாடலாமா? என்று நபி(ஸல்) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,ஆம். நீ உன் தாயின் உறவைப் பேணி நடந்துகொள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5980 அபூ சுஃப்யான்(ரலி) அறிவித்தார்

(பைஸாந்திய மன்னர்) ஹெராக்ளியஸ் (வணிகர்களாகச் சென்றிருந்த மக்காவைச் சேர்ந்தவர்களிடையே இருந்த) என்னை அழைத்து வரச் சொல்லி ஆளனுப்பினார். (நான் அவரிடம் சென்றேன்.) அப்போது ஹெராக்ளியஸ்,அவர் (நபி(ஸல்) அவர்கள்) உங்களுக்கு என்னதான் போதிக்கிறார்? என்று கேட்டார். நான்,தொழுகை, தர்மம், கற்பொழுக்கம், உறவைப் பேணி வாழ்வது ஆகியப் பண்புகளை எங்களுக்குக் கட்டளையிடுகிறார்‘ என்று பதிலளித்தேன்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## (இறைவனுக்கு) இணைவைக்கும் சகோதரனுடனும் உறவைப் பேணி வாழ்வது.

ஹதீஸ் 5981 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

(என் தந்தை) உமர்(ரலி) கோடுபோட்ட பட்டு அங்கி ஒன்று விற்கப்படுவதைக் கண்டு,இறைத்தூதர் அவர்களே! இதைத் தாங்கள் வாங்கி வெள்ளிக்கிழமையிலும், தூதுக் குழுக்கள் தங்களிடம் வரும் போதும் அணிந்துகொள்ளுங்கள்' என்று கூறினார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,எ(ந்த ஆட)வருக்கு (மறுமையில்) எந்த நற்பேறும் இல்லையோ அவர்தாம் இதை (இம்மையில்) அணிவார்' என்று கூறினார்கள். பிறகு அதே பட்டு அங்கிகளில் சில நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டன. (அவற்றிலிருந்து) ஓர் அங்கியை நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களுக்குக் கொடுத்தனுப்பினார்கள். உமர்(ரலி),நான் இதை எப்படி அணிய முடியும்? இந்தப் பட்டாடை தொடர்பாகத் தாங்கள் முன்பு வேறு விதமாகச் சொன்னீர்களே? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,இதை நீங்கள் அணிந்துகொள்ள நான் உங்களுக்குத் தரவில்லை. மாறாக, இதை நீங்கள் விற்றுவிடலாம் (பெண்களுக்கோ, மற்ற மதத்தாருக்கோ) அணிவிக்கலாம் என்பதற்காகவே வழங்கினேன்' என்று கூறினார்கள்.

எனவே, உமர்(ரலி) அதை மக்காவாசியான தம் சகோதரர் ஒருவருக்குக் கொடுத்தனுப்பினார்கள். அப்போது அவர் முஸ்லிமாயிருக்கவில்லை.

## உறவைப் பேணி வாழ்வதன் சிறப்பு

ஹதீஸ் 5982 அபூ அய்யூப் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! என்னைச் சொர்க்கத்தில் சேர்க்கும் ஒரு (நற்) செயலை எனக்குத் தெரிவியுங்கள்' என்று வினவப்பட்டது.

ஹதீஸ் 5983 அபூ அய்யூப் அல்அன்சாரி(ரலி) கூறியாதாவது:

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,இறைத்தூதர் அவர்களே! என்னைச் சொர்க்கத்தில் சேர்க்கும் ஒரு (நற்) செயலை எனக்குக் கூறுங்கள்' என்று (அவசரமாகக்) கேட்டார். அப்போது மக்கள்,இவருக்கென்ன நேர்ந்தது? இவருக்கென்ன நேர்ந்தது? என்று கூறினார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,அவருக்கு ஏதேனும் (அவசரத்) தேவை இருக்கலாம்' என்று (மக்களை நோக்கிச்) சொல்லிவிட்டு (அந்த மனிதரை நோக்கி),நீர் அல்லாஹ்வை வணங்க வேண்டும் அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது (கடமையான) தொழுகையையும் (கடமையான) ஸகாத்தையும் நிறைவேற்றவேண்டும். உறவைப் பேணி வாழ வேண்டும்' என்று கூறிவிட்டு,உம்முடைய வாகனத்தை (உம்முடைய வீடு நோக்கி) செலுத்துவீராக' என்று கூறினார்கள்.அம்மனிதர் (அப்போது) தம் வாகனத்தில் அமர்ந்திருந்தார் போலும்.

## உறவை முறிக்கும் பாவத்திற்கான தண்டனை

ஹதீஸ் 5984 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உறவை முறித்து வாழ்பவன் சொர்க்கத்தில் நுழையமாட்டான்.

என ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

## உறவைப் பேணி வாழ்வதால் வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கித் தரப்படும்.

ஹதீஸ் 5985 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தம் வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கப்படுவதும் வாழ்நாள் நீட்டிக்கப்படுவதும் யாருக்கு மகிழ்ச்சி அளிக்குமோ அவர் தம் உறவைப் பேணி வாழட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5986 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தம் வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கப்படுவதையும் வாழ்நாள் நீட்டிக்கப்படுவதையும் விரும்புகிறவர் தம் உறவைப் பேணி வாழட்டும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

## உறவைப் பேணி வாழ்பவருடன் அல்லாஹ்வும் உறவுபாராட்டுகிறான்.

ஹதீஸ் 5987 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்பினங்களை படைத்து முடித்தபோது உறவானது (எழுந்து இறைவனின் அரியாசனத்தின் கால்களைப் பற்றிக்கொண்டு)உறவுகளைத் துண்டிப்பதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோரியே இப்படி நிற்கிறேன்' என்று கூறி(மன்றாடி)யது.

அல்லாஹ்,ஆம். உன்னை (உறவை)ப் பேணி நடந்து கொள்பவனுடன் நானும் நல்ல முறையில் நடந்துகெள்வேன் என்பதும், உன்னைத் துண்டித்துவிடுபவனை நானும் துண்டித்துவிடுவேன் என்பதும் உனக்குத் திருப்தியளிக்கவில்லையா? என்று கேட்டான். அதற்கு உறவு,ஆம் (திருப்தியே) என் இறைவா!என்று கூறியது. அல்லாஹ்,இது உனக்காக நடக்கும்' என்று சொன்னான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,நீங்கள் விரும்பினால்(நயவஞ்சகர்களே!) நீங்கள் (போருக்கு வராமல்) பின்வாங்கிக் கொண்டு பூமியில் குழப்பம் விளைவிக்கவும் உங்கள் உறவுகளைத் துண்டித்துவிடவும் முனைகிறீர்களா? எனும் (திருக்குர்ஆன் 47:22 வது) வசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்' என்று கூறினார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5988 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உறவு (ரஹிம்) என்பது, அளவிலா அருளாளன் (ரஹ்மான்) இடமிருந்து வந்த (அருட்கொடை) கிளையாகும். எனவே, இறைவன் (உறவை நோக்கி)உன்னோடு ஒட்டி வாழ்பவனுடன் நானும் உறவுபாராட்டுவேன். உன்னை முறித்துக் கொள்பவனை நானும் முறித்துக்கொள்வேன்' என்று கூறினான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 5989 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உறவு (இறையருளின்) ஒரு கிளையாகும். எனவே,அதனுடன் ஒட்டி வாழ்வோருடன் நானும் உறவு பாராட்டுவேன். அதை முறித்துக் கொள்கிறவரை நானும் முறித்துக் கொள்வேன்' (என்று உறவைப் படைத்தபோது இறைவன் சொன்னான்).

என்று நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## உறவைப் பசுமையாக்க வேண்டும்.

ஹதீஸ் 5990 அம்ர் இப்னு ஆஸ்(ரலி) அறிவித்தார்

இன்னாரின் தந்தையின் குடும்பத்தார் என் நேசர்கள் அல்லர் என் நேசர்கள் யாரெனில், அல்லாஹ்வும் நல்ல இறை நம்பிக்கையாளர்களும்தாம்' என்று நபி(ஸல்) அவர்கள் ஒளிவு மறைவின்றி பகிரங்கமாகவே கூறினார்கள்.

"முஹம்மத் இப்னு ஜஅஃபர்(ரஹ்) அவர்களின் (மூல நூல்) பிரதியொன்றில்இன்னார் எனும் (சொல் உள்ள) இடம் (நிரப்பப்படாமல்) வெற்றிடமாக உள்ளது' என அறிவிப்பாளர் அம்ர் இப்னு அப்பாஸ்(ரஹ்) கூறினார்.

அம்ர் இப்னு ஆஸ்(ரலி) அவர்களின் வழியாக வரும் அன்பஸா இப்னு அப்தில் வாஹித்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில், நபி(ஸல்) அவர்கள்,ஆயினும் அறிவிப்பில், நபி(ஸல்) அவர்கள்,ஆயினும் அவர்களுடன் எனக்கு இரத்த உறவு உண்டு. அதை நான் (காய்ந்து போகவிடாமல்)

பசுமையாக்குவேன்' என்று கூறினார்கள் என அதிகபட்சமாக இடம்பெற்றுள்ளது. அதாவது, அவர்களின் உறவைப் பேணி நடந்துகொள்வேன்' என்றார்கள்.

## பதிலுக்கு பதில் உறவு கொண்டாடுபவர் உறவைப் பேணுகிறவர் அல்லர்.

ஹதீஸ் 5991 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

பதிலுக்கு பதில் உறவாடுகிறவர் (உண்மையில்) உறவைப் பேணுகிறவர் அல்லர் மாறாக உறவு முறிந்தாலும் அந்த உறவுடன் இணைகிறவரே உறவைப் பேணுபவராவார்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்களில் சிலர் இதை அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அவர்களின் பொன்மொழி என்றும், வேறு சிலர் நபி (ஸல்) அவர்களின் பொன்மொழி என்றும் கூறுகிறார்கள்.

## (இறைவனுக்கு) இணைவைப்பவராக இருந்தபோது உறவைப் பேணிய ஒருவர் இஸ்லாத்தை ஏற்றால் (அதற்கான நன்மை இப்போது கிடைக்குமா)?

ஹதீஸ் 5992 ஹகீம் இப்னு ஹிஸாம் (ரலி) அறிவித்தார்

நான், இறைத்தூதர் அவர்களே! நான் (இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பு) அறியாமைக் காலத்தில் உறவைப் பேணுதல், அடிமைகளை விடுதலை செய்தல், தானதர்மம் செய்தல் ஆகிய நற்செயல்களைப் புரிந்துள்ளேன். அவற்றுக்கு (மறுமையில்) எனக்கு நற்பலன் ஏதும் உண்டா? கூறுங்கள்!என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ,நீர் முன்னர் செய்த நற்செயல் (களுக்குரிய நற்பலன்) களுடனேயே இஸ்லாத்தைத் தழுவியுள்ளீர்' என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## பிறருடைய பெண் குழந்தைத் தம்முடன் விளையாட ஒருவர் அனுமதிப்பதும், அவளை முத்தமிடுவதும் அவளுடன் நகைச்சுவையாகப் பேசுவதும்.

ஹதீஸ் 5993 உம்மு காலித் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் நான் என் தந்தையுடன் மஞ்சள் நிறச் சட்டை ஒன்றை அணிந்துகொண்டு சென்றேன். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ,(இது) நன்றாயிருக்கிறதே! (இது) நன்றாயிருக்கிறதே!என்று (என் சட்டை குறித்துச்) கூறினார்கள். நான் (நபி (ஸல்) அவர்களின் இரண்டு புஜங்களுக்கிடையே இருந்த) நபித்துவ முத்திரையில் விளையாடத் தொடங்கினேன். உடனே, என் தந்தை என்னை அதட்டினார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ,(குழந்தைதானே!) அவளை (விளையாட) விடுவீராக!என்று கூறினார்கள். பிறகு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ,(இந்தச் சட்டையை) நீ (பழையதாக்கிக்) கிழித்து நைந்து போகச் செய்துவிடு. பிறகும் (அதைக்) கிழித்து நைந்துபோகச் செய்துவிடு. மீண்டும் அதை (பழையதாக்கிக்) கிழித்து நைந்து போகச் செய்துவிடு' என்று (என்னுடைய நீண்ட ஆயுளுக்காகப் பிரார்த்தித்துக்) கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல்லாஹ் இப்னு முபாரக் (ரஹ்), (அந்தச் சட்டை நிறம் மாறி பழுப்பேறி மக்கள்) பேசும் அளவிற்கு உம்மு காலித் (ரலி) நெடுங்காலம் வாழ்ந்தார்கள்' என்று கூறுகிறார்கள்.

## (ஒருவர் தம்) குழந்தைகளின் மீது அன்பு காட்டுவதும் அவர்களை முத்தமிட்டு அணைத்துக் கொள்வதும்.

நபி (ஸல்) அவர்கள் (தம் குழந்தை) இப்ராஹீமைத் தூக்கி (உச்சி) முகர்ந்து முத்தமிட்டார்கள்.

இதை அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து ஸாபித் இப்னு அஸ்லம்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 5994 அப்துர் ரஹ்மான் இப்னு அபீ நுஅம்(ரஹ்) அறிவித்தார்

நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் இருந்தேன். அப்போது ஒருவர் அவர்களிடம், (இஹ்ராம் கட்டியவர்) கொசுக்களைக் கொன்றுவிட்டால் பரிகாரம் என்ன? என்று கேட்டார். அப்போது அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி),நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? என்ற கேட்டார்கள். அவர்,நான் இராக்வாசி' என்று பதிலளித்தார். அதற்கு அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) (தம்மருகில் இருந்தவர்களிடம்),இவரைப் பாருங்கள். கொசுக்களைக் கொன்றால் பரிகாரம் என்ன? என்று இவர் என்னிடம் கேட்கிறார். ஆனால், (இராக்வாசிகளான) இவர்களோ நபி(ஸல்) அவர்களின் (புதல்வி ஃபாத்திமா(ரலி) அவர்களின்) புதல்வரைக் கொன்றுவிட்டார்கள். (ஆனால்) நபி(ஸல்) அவர்கள்,(ஹஸன் ஹுசைன் ஆகிய) அவர்கள் இருவரும் உலகின் இரண்டு துளசி மலர்கள் ஆவர்' என்று (பாராட்டிக்) கூறக் கேட்டேன்' என்று கூறினார்கள். 23

ஹதீஸ் 5995 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்

என்னிடம் ஏதேனும் (தரும்படி) கேட்டு ஒரு பெண்மணி வந்தார். அவருடன் இரண்டு பெண் குழந்தைகள் இருந்தனர். அப்போது ஒரே ஒரு பேரீச்சம் பழத்தை தவிர வேறெதுவும் அவருக்கு என்னிடம் கிடைக்கவில்லை. எனவே, நான் அதை அவருக்குக் கொடுத்தேன். உடனே அதனை அவர் இரண்டாகப் பிட்டு குழந்தைகள் இருவருக்கும் பங்கிட்டுக் கொடுத்தார்கள். பிறகு அப்பெண்மணி எழுந்து சென்றார். பின்னர் நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். அவர்களிடம் இது பற்றி நான் சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,யார் இந்தப் பெண் குழந்தைகளில் ஒன்றுக்குப் பொறுப்பேற்று நன்மை புரிவாரோ அவருக்கு அந்தக் குழந்தைகள் நரகத்திலிருந்து தடுக்கும் திரையாக இருப்பார்கள்' என்றார்கள்.

ஹதீஸ் 5996 அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் தங்களின் தோளின் மீது (சிறுமி) உமாமா பின்த் அபில் ஆஸை அமர்த்திய வண்ணம் எங்களிடையே வந்து அப்படியே (எங்களுக்க இமாமாக நின்று) தொழுகை நடத்தினார்கள். அவர்கள் ருகூஉ செய்யும்போது உமாமாவைக் கீழிறக்கிவிட்டார்கள். (சஜ்தாலிருந்து நிலைக்கு) உயரும்போது அவரை மீண்டும் (தோளில்) ஏற்றினார்கள்.

ஹதீஸ் 5997 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் பேரரான) ஹஸன் இப்னு அலீயை முத்தமிட்டார்கள். அப்போது அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்த அக்ரஉ இப்னு ஹாபிஸ் அத்தமீமீ(ரலி),எனக்குப் பத்துக் குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவரைக் கூட நான் முத்தமிட்டதில்லை' என்றார். அவரை ஏறெடுத்துப் பார்த்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள்அன்பு காட்டாதவர் அன்பு காட்டப்படமாட்டார்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 5998 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஒரு கிராமவாசி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,நீங்கள் சிறு குழந்தைகளை முத்தமிடுகிறீர்களா? நாங்களெல்லாம் அவர்களை முத்தமிடுவதில்லை' என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ் உம்முடைய இதயத்திலிருந்து அன்பைக் கழற்றிவிட்ட பின்னர் உமக்காக நான் என்ன செய்ய முடியும்? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 5999 உமர் இப்னு கத்தாப்(ரலி) அறிவித்தார்

(ஹவாஸின் குலத்தைச் சேர்ந்த) கைதிகள் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அவர்களிடையே இருந்த ஒரு பெண்ணின் மார்பில் பால் சுரந்தது. அவள் பாலூட்டுவதற்காக(த் தன் குழந்தையைத் தேடினாள்). குழந்தை கிடைக்கவில்லை. எனவே), கைதிகளில் எந்தக் குழந்தையைக் கண்டாலும், அதை (வாரி) எடுத்து(ப் பாலூட்டினாள். தன் குழந்தை

கிடைத்தவுடன் அதை எடுத்து)த் தன் வயிற்றோடு அணைத்துப் பாலூட்டலானாள். அப்போதுஎங்களிடம் நபி(ஸல்) அவர்கள்,இந்தப் பெண் தன் குழந்தையை தீயில் எறிவாளா? சொல்லுங்கள்!என்றார்கள். நாங்கள்,இல்லை, எந்நிலையிலும் அவளால் எறிய முடியாது‘ என்று சொன்னோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,இந்தக் குழந்தையின் மீது இவளுக்குள்ள அன்பைவிட அல்லாஹ் தன் அடியார்களின் மீது மிகவும் அன்பு வைத்துள்ளான்‘ என்று கூறினார்கள்.

## அல்லாஹ் அன்பை நூறு பாகங்களாகப் பங்கிட்டான்.

ஹதீஸ் 6000 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் அன்பை நூறாகப் பங்கிட்டான். அதில் தொண்ணூற்று ஒன்பது பங்கைத் தன்னிடம் வைத்துக்கொண்டான். (மீதமிருக்கும்) ஒன்றையே பூமியில் இறக்கினான். இந்த ஒரு பங்கினால் தான் படைப்பினங்கள் பரஸ்பரம் பாசம் காட்டுகின்றன. எந்த அளவிற்கென்றால், மிதித்துவிடுவோமோ என்ற அச்சத்தினால் குதிரை தன்னுடைய குட்டியைவிட்டுக் கால்குளம்பைத் தூக்கிக் கொள்கிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## உணவளிக்க வேண்டுமே என அஞ்சி ஒருவர் தம் குழந்தையையே கொலை செய்வது (கொடிய) பாவமாகும்).

ஹதீஸ் 6001 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

நான்,இறைத்தூதர் அவர்களே! பாவங்களிலேயே மிகப் பெரியது எது? என்று கேட்டேன்.உன்னைப் படைத்த, இறைவனுக்கே நீ இணைகற்பிப்பது ஆகும்‘ என்று பதிலளித்தார்கள்.பிறகு எது? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதை நீயே கொலை செய்வது‘ என்று கூறினார்கள். நான்,பிறகு எது? என்றேன்.உன் அண்டை வீட்டுக்காரனின் மனைவியுடன் நீ விபசாரம் புரிவது‘ என்றார்கள். நபி(ஸல்) அவர்களின் இக்கூற்றை மெய்ப்பிக்கும் வகையில்,அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைக்கமாட்டார்கள்‘ என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 25:68 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

## சிறு குழந்தையை மடியில் வைத்தல்

ஹதீஸ் 6002 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஒரு சிறு குழந்தையைத் தன்னுடைய மடியில் வைத்து இனிப்புப் பொருளை மென்று அதன் வாயிலிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களின் மீது அந்தக் குழந்தை சிறுநீர் கழித்துவிட்டது. எனவே, அவர்கள் தண்ணீர் கொண்டு வரச்சொல்லி அதன் மீது ஊற்றச் செய்தார்கள்.

## தொடையின் மீது சிறு குழந்தையை வைத்துக்கொள்வது.

ஹதீஸ் 6003 (நபி(ஸல்) அவர்களின் வளர்ப்புப் பேரரான) உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (சிறுவனாக இருந்த) என்னைப் பிடித்துத் தம் ஒரு தொடையின் மீதும் (தம் சொந்தப் பேரரான) ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்களைப் பிடித்து தம் இன்னொரு தொடையின் மீதும் அமர்த்திக்கொண்டு பிறகு எங்கள் இருவரையும்

கட்டியணைத்தவாறு, இறைவா! இவர்கள் இருவர் மீதும் நான் அன்பு செலுத்துகிறேன். நீயும் இவர்களின் மீது அன்பு செலுத்துவாயாக!என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுலைமான் இப்னு தர்கான் அத்தைமீ (ரஹ்) கூறினார்:

(நான் இந்த ஹதீஸை அபூ உஸ்மான் அந்நஹ்தீ (ரஹ்) அவர்களிடமிருந்து அபூ தமீமா இப்னு முஜாலித் (ரஹ்) வாயிலாகக் கேட்டேனா? அல்லது நேரடியாக அபூ உஸ்மானிடமே கேட்டேனா? என) இந்த ஹதீஸ் விஷயத்தில் எனக்குக் சந்தேகம் இருந்தது. இந்நிலையில் இத்தனை முறை இதை அறிவித்துவிட்டோமே என்று (மனத்துக்குள்) சொல்லிக்கொண்டேன். பின்னர் (எடுத்துப்) பார்த்தபோது அபூ உஸ்மானிடமிருந்து (நேரடியாக) நான் கேட்டவற்றில் இதுவும் பதிவு செய்யப்பட்டிருந்ததைக் கண்டேன்.

## (பழைய உறவை) மதித்து நடப்பது இறைநம்பிக்கையின் ஓர் அம்சமாகும்.

ஹதீஸ் 6004 ஆயிஷா (ரலி) அறிவித்தார்

கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் ரோஷம் கொண்டதைப் போல் நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் வேறெவரின் மீதும் நான் ரோஷம் கொண்டதில்லை. ஏனெனில், கதீஜா (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் (அடிக்கடி) நினைவுகூர்வதை நான் கேட்டுவந்தேன்.

-என்னை நபி (ஸல்) அவர்கள் மணம் புரிந்துகொள்வதற்கு மூன்று ஆண்டுகளுக்கு முன்பே கதீஜா இறந்துவிட்டிருந்தார்.

மேலும், முத்துமாளிகை ஒன்று சொர்க்கத்தில் கதீஜாவுக்குக் கிடைக்கவுள்ளது என்று அவர்களுக்கு நற்செய்தி சொல்லும் படி நபி (ஸல்) அவர்களுக்கு அவர்களின் இறைவன் கட்டளையிட்டிருந்தான். இன்னும் நபி (ஸல்) அவர்கள் ஆட்டை அறுத்து (அதன் இறைச்சியில்) சிறிதளவை கதீஜா (ரலி) அவர்களின் தோழியரிடையே அன்பளிப்பாகப் பங்கிட்டுவிடுவார்கள். 28

## அநாதையை வளர்ப்பவரின் சிறப்பு

ஹதீஸ் 6005 ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்

'நானும் அநாதையின் காப்பாளரும் சொர்க்கத்தில் இப்படி இருப்போம் என்று கூறியபடி நபி (ஸல்) அவர்கள் தங்களின் சுட்டு விரலாலும் நபி (ஸல்) விரலாலும் (சற்றே இடைவெளிவிட்ட) சைகை செய்தார்கள்.

## கணவனை இழந்த கைம்பெண்களுக்காகப் பாடுபடுபவர்.

ஹதீஸ் 6006 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

கணவனை இழந்த கைம்பெண்ணுக்காகவும் ஏழைக்காகவும் பாடுபடுகிறவர்இறைவழியில் அறப்போர் புரிபவரைப் போன்றவராவார் அல்லதுஇரவில் நின்று வணங்கி பகலில் நோன்பு நோற்பவர் போன்றவராவார்.

இதை ஸஃப்வான் இப்னு சுலைம் (ரஹ்) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## ஏழைகளுக்காகப் பாடுபடுபவர்

ஹதீஸ் 6007 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

கணவனை இழந்த கைம்பெண்ணுக்காகவும் ஏழைக்காகவும் பாடுபடுபவர்இறைவழியில் அறப்போர் புரிபவரைப் போன்றவராவார்.'

அப்துல்லாஹ் அல்கஅனபீ (ரஹ்) கூறினார்.

அல்லதுசோர்ந்துவிடாமல் இரவு முழுவதும் நின்று வணங்கி பகல் முழுவதும் விடாது நோன்பு நோற்பவர் போன்றவராவார் என்று (இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என) மாலிக்(ரஹ்) அறிவித்தார் என்றே கருதுகிறேன்.

## மனிதர்களிடமும் மிருகங்களிடமும் அன்பு காட்டுவது.

ஹதீஸ் 6008 அபூ சுலைமான் மாலிக் இப்னு ஹு வைரிஸ்(ரலி) அறிவித்தார்

(பனு லைஸ் தூதுக் குழுவில்) சம வயதுடைய இளைஞர்களான நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்தோம். அவர்களுடன் இருபது நாள்கள் தங்கினோம். நாங்கள் எங்கள் குடும்பத்தினரிடம் (திரும்பிச்) செல்ல ஆசைப்படுவதை அறிந்த நபி(ஸல்) அவர்கள் (ஊரில்) நாங்கள்விட்டுவந்த எங்கள் குடும்பத்தாரைப் பற்றி விசாரித்தார்கள். நாங்கள் அவர்களைப் பற்றித் தெரிவித்தோம்.

-நபி(ஸல்) அவர்கள் நல்ல தோழராகவும் இரக்க குணமுடையவர்களாகவும் இருந்தார்கள்.

எனவே, நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் உங்கள் குடும்பத்தினரிடம் திரும்பிச் சென்று அவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுங்கள். அவர்களை (கடமையானவற்றைச் செய்யுமாறு) பணியுங்கள். என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள். தொழுகை நேரம் வந்ததும் உங்களில் ஒருவர் பாங்கு (தொழுகை அறிவிப்புச்) சொல்லட்டும் பிறகு உங்களில் (வயதில்) மூத்தவர் உங்களுக்குத் தொழுகை நடத்தட்டும்' என்றார்கள்.

ஹதீஸ் 6009 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

"ஒருவர் ஒரு பாதையில் நடந்து சென்று கொண்டிருந்தபோது அவருக்குக் கடுமையானத் தாகம் ஏற்பட்டது. அவர் (வழியில்) ஒரு கிணற்றைக் கண்டார். உடனே அதில் இறங்கித் தண்ணீர் குடித்தார். பிறகு (ம்ணற்றைவிட்டு) அவர் வெளியே வந்தார். அப்போது நாய் ஒன்று தாகத்தால் (தவித்து) நாக்கைத் தொங்கவிட்டபடி ஈரமண்ணை நக்கிக் கொண்டிருப்பதைக் கண்டார். அந்த மனிதர் (தம் மனத்திற்குள்)எனக்கு ஏற்பட்டதைப் போன்ற (அ)தே (கடுமையான தாகம்) இந்த நாய்க்கும் ஏற்பட்டிருக்கிறது போலும்' என்று சொல்லிக்கொண்டார். உடனே (மீண்டும்) அக்கிணற்றில் இறங்கித் (தண்ணீரைத் தோலால் ஆன) தன்னுடைய காலுறையில் நிரப்பிக்கொண்டு அதைத் தம் வாயால் கவ்வியபடி (மேலேறி வந்து) அந்த நாய்க்குப் புகட்டினார். அல்லாஹ் இதற்கு நன்றியாக அவரை (அவரின் பாவங்களை) மன்னித்தான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (இதைச் செவியேற்ற) மக்கள்,இறைத்தூதர் அவர்களே! மிருகங்களுக்கு உதவும் விஷயத்திலும் எங்களுக்கு (மறுமையில்) நற்பலன் கிடைக்குமா? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(ஆம்:) உயிருடைய பிராணி ஒவ்வொன்றின் விஷயத்திலும் (அதற்கு உதவும்பட்சத்தில் மறுமையில்) அதற்கான நற்பலன் கிடைக்கும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6010 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தொழுகையில் நின்றார்கள். அவர்களுடன் நாங்கள் நின்றோம். அப்போது தொழுகையில் ஈடுபட்டிருந்த ஒரு கிராமவாசி,இறைவா! எனக்கும் முஹம்மது அவர்களுக்கும் (மட்டும்) அருள் புரிவாயாக! எங்களுடன் வேறு யாருக்கும் அருள் புரியாதே!என்று பிரார்த்தித்தார். (தொழுது முடித்து) நபி(ஸல்) அவர்கள் சலாம் கொடுத்தபோது அந்தக் கிராமவாசியிடம்,விசாலமானதை, அதாவது இறைவனின் அருளை நீ குறுக்கிவிட்டாயே!என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6011 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவருக்கொருவர் கருணைபுரிவதிலும், அன்பு செலுத்துவதிலும், இரக்கம் காட்டுவதிலும் (உண்மையான) இறைநம்பிக்கையாளர்களை ஓர் உடலைப் போன்று நீ காண்பாய். (உடலின்)

ஓர் உறுப்பு சுகவீனமடைந்தால் அதனுடன் மற்ற உறுப்புகளும் (சேர்ந்து கொண்டு) உறங்காமல் விழித்துக் கொண்டிருக்கின்றன. அத்துடன் (உடல் முழுதும்) காய்ச்சலும் கண்டுவிடுகிறது.

இதை நுஅமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6012 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிம் மரம் ஒன்றை நட்டு அதிலிருந்து ஒரு மனிதனோ அல்லது (மற்ற) உயிரினமோ உண்டால் (அதன் காரணத்தால்) ஒரு தர்மம் செய்ததற்கான பிரதிபலன் அவருக்குக் கிடைக்காமல் இருப்பதில்லை.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6013 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(படைப்பினங்களின் மீது) கருணை காட்டாதவர் (படைத்தவனால்) கருணை காட்டப்படமாட்டார்.

என ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

## அண்டைவீட்டார் குறித்த அறிவுரை

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வையே வழிபடுங்கள் அவனுடன் எதனையும் இணைவைக்காதீர்கள். மேலும், தாய் தந்தையருக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், உறவினரான அண்டை வீட்டாருக்கும், உறவினரல்லாத அண்டை வீட்டாருக்கும், (பயணம், தொழில் போன்றவற்றில்) கூட்டாளியாக இருப்போருக்கும், வழிப்போக்கர்களுக்கும், உங்களிடமுள்ள அடிமைகளுக்கும் (அன்புடன்) நன்மை செய்யுங்கள் நிச்சயமாக அல்லாஹ் கர்வமும் தற்பெருமையும் உடையோராக இருப்பவர்களை நேசிப்பதில்லை. (திருக்குர்ஆன் 04:36)

ஹதீஸ் 6014 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அண்டை வீட்டார் குறித்து என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் அறிவுறுத்திக்கொண்டேயிருந்தார். எந்த அளவிற்கென்றால், (எங்கே) அண்டை வீட்டாரை எனக்கு வாரிசாக்கி விடுவாரோ என்று கூட நான் எண்ணினேன்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6015 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அண்டை வீட்டார் குறித்து என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் (அவ்வப்போது) அறிவுறுத்திக் கொண்டேயிருந்தார். எந்த அளவிற்கென்றால், (எங்கே) அண்டை வீட்டாரை எனக்கு வாரிசாக்கிவிடுவாரோ என்று கூட நான் எண்ணினேன்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## எவனுடைய நாசவேலைகளிலிருந்து அவனுடைய அண்டை வீட்டாருக்குப் பாதுகாப்பு உணர்வு ஏற்படவில்லையோ அவனுடைய பாவத்தின் நிலை.

('நாசவேலைகள் என்பதைக் குறிக்க மூலத்தில் ஆளப்பட்டுள்ளபவாயிக் எனும் சொல்லில் இருந்து பிறந்ததும், 42:34 வது இறைவசனத்தின் மூலத்தில் உள்ளதுமான)யூபிக்ஹு' ன்ன எனும் சொல்லுக்குஅவற்றை அழித்துவிடுவான் என்று பொருள். (திருக்குர்ஆன் 18:52 வது வசனத்தின் மூலத்திலுள்ள)மவ்விகன் எனும் சொல்லுக்குநாசம் என்று பொருள்.

ஹதீஸ் 6016 அபூ ஷு ரைஹ்(ரலி) அறிவித்தார்

“அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன். அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன். அல்லாஹ்வின் மீதாணையாக அவன் இறைநம்பிக்கையாளன் அல்லன்‘ என்று (மூன்று முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அவன் யார்? இறைத்தூதர் அவர்களே! என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்எவனுடைய நாசவேலைகளிலிருந்து அவனுடைய அண்டை வீட்டார் பாதுகாப்பு உணர்வைப் பெறவில்லையோ அவன்தான்‘ என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## எந்தப் பெண்ணும் தன் அண்டை வீட்டுக்காரிக்குத் தான் அளிக்கும் சிறிய அன்பளிப்பைக் கூட அற்பமாகக் கருதவேண்டாம்.

ஹதீஸ் 6017 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

“முஸ்லிம் பெண்களே! (உங்களில்) எந்தப் பெண்ணும் தன் அண்டை வீட்டுக்காரிக்கு ஓர் ஆட்டின் கால் குளம்பை (அன்பளிப்பாக) அளித்தாலும் அதை அற்பமாகக் கருத வேண்டாம்‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறுவார்கள்.

## அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் அண்டை வீட்டாருக்குத் தொல்லை தரவேண்டாம்.

ஹதீஸ் 6018 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் அண்டை வீட்டாருக்குத் தொல்லை தரவேண்டாம். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய் மூடி இருக்கட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6019 அபூ ஷுரைஹ் அல்அதவீ(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் பேசியபோது என் காதுகளால் கேட்டேன் என் கண்களால் பார்த்தேன். அப்போது அவர்கள், அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் அண்டை வீட்டாரைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தாளிக்குத் தம் கொடையைக் கண்ணியமாக வழங்கட்டும்‘ என்று கூறினார்கள். அப்போது, இறைத்தூதர் அவர்களே! அவரின் கொடை என்ன? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், (அவரின் கொடை) ஒரு பகல் ஓர் இரவு (உபசரிப்பது) ஆகும். விருந்துபசாரம் மூன்று தினங்களாகும். அதற்கு மேல் (அளிக்கும் உணவும் உபசரிப்பும்) அவருக்குத் தர்மமாக அமையும். மேலும், அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய் மூடி இருக்கட்டும்‘ என்று கூறினார்கள்.

## வீட்டு வாசலின் நெருக்கத்தை வைத்து அண்டை வீட்டா(ரில் யாரு)க்கு முன்னுரிமை அளிப்பது (என்பதைத் தீர்மானிப்பது).

ஹதீஸ் 6020 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

நான், இறைத்தூதர் அவர்களே! எனக்கு இரண்டு அண்டை வீட்டார் உள்ளனர். அவர்களில் யாருக்கு நான் அன்பளிப்புச் செய்வது? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், இருவரில் யாருடைய வீட்டு வாசல் உனக்கு நெருக்கமாக இருக்கிறதோ அவருக்கு‘ என்று பதிலளித்தார்கள்.

## நற்செயல்கள் அனைத்தும் தர்மமே

ஹதீஸ் 6021. எல்லா நற்செயலும் தர்மமே என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6022 அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

“தர்மம் செய்வது எல்லா முஸ்லிமின் மீதும் கடமையாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள்,(தர்மம் செய்ய ஏதும்) கிடைக்கவில்லையானால்? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,தம் இரண்டு கைகளால் உழைத்துத் தாமும் பயனடைவார் தர்மம் செய்(து பிறரையும் பயனடையச் செய்)வார்‘ என்று கூறினார்கள். மக்கள்,அவருக்கு (உழைக்க உடலில்) தெம்பு இல்லையானால் அல்லதுஅதை அவர் செய்யாவிட்டால் (என்ன செய்வது?)‘ என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள்,பாதிக்கப்பட்ட தேவையாளிக்கு அவர் உதவட்டும்‘ என்றார்கள். மக்கள்,(இதை இயலாமையாலோ சோம்பலினாலோ) அவர் செய்யவில்லையானால் (என்ன செய்வது?)‘ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அப்போது அவர்நல்லதை அல்லது நற்செயலை‘(ச் செய்யும்படி பிறரை) அவர் ஏவட்டும் என்றார்கள்.(இதையும்) அவர் செய்யாவிட்டால்? என்று கேட்டதற்கு, நபி(ஸல்) அவர்கள்,அவர் தீங்கு செய்யாமல் இருக்கட்டும். அதுவே அவருக்கு தர்மம் ஆகும்‘ என்றார்கள்.

## இன்சொல்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இன் சொல்லும் தர்மமாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6023 அதீ இப்னு ஹாத்திம்(ரலி) கூறினார்

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் நரகத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது அதனைவிட்டு அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரினார்கள். அப்போது தம் முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள்.

பிறகும் நரகத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போதும் அதனைவிட்டு அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரினார்கள். அப்போதும் தம் முகத்தைத் திருப்பினார்கள்.

பிறகு,பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டைத் தர்மம் செய்தேனும் நரகத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதுவும் இல்லையானால் இன் கொலைக் கொண்டாவது (காப்பாற்றிக் கொள்ளுங்கள்)‘ என்றார்கள்.

அறிவிப்பாளர் ஷுஅபா(ரஹ்)(நபியவர்கள் நரகத்தைப் பற்றி) இரண்டு முறை (குறிப்பிட்டார்கள்) என்பதில் சந்தேகமில்லை. (மூன்றாவது முறை குறிப்பிட்டார்களா என்பதில் தான் சந்தேகம் உள்ளது)‘ என்று கூறினார்கள்.

## எல்லா விஷயங்களிலும் நளினத்தைக் கையாளுதல்.

ஹதீஸ் 6024 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) கூறினார்

யூதர்களில் ஒரு குழுவினர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,அஸ்ஸாமு அலைக்கும் (-உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்று (சற்றே மாற்றி சலாம்) கூறினர். அவர்கள் கூறியதைப் புரிந்துகொண்ட நான் அவர்களுக்குவ அலைக்கும் அஸ்ஸலாமு வல்லஅனா (-அவ்வாறே உங்களின் மீது மரணமும் சாபமும் உண்டாகட்டும்)‘ என்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,ஆயிஷா! நிதானம்! எல்லா விஷயங்களிலும் நளினத்தைக் கையாளுவதையே அல்லாஹ் விரும்புகிறான்‘ என்று கூறினார்கள். அப்போது நான்,இறைத்தூதர் அவர்களே! அவர்கள் சொன்னதை நீங்கள் கேட்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு

நபி(ஸல்) அவர்கள்,நான்தான்வ அலைக்கும் (அவ்வாறே உங்களுக்கு உண்டாகட்டும்) என்று சொல்லிவிட்டேனே! (அதை நீ கவனிக்கவில்லையா?)' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6025 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

ஒரு கிராமவாசி பள்ளிவாசலினுள் சிறுநீர் கழித்தார். அவரை நோக்கி நபித் தோழர்கள் (வேகத்துடன்) எழுந்தனர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்(அவர் சிறுநீர் கழிப்பதை) இடை மறிக்காதீர்' என்று கூறிவிட்டுப் பிறகு ஒரு வாளியில் தண்ணீர் கொண்டு வரக் கூறினார்கள். பிறகு (தண்ணீர் கொண்டு வரப்பட்டு) அது சிறுநீர் மீது ஊற்றப்பட்டது.

## இறைநம்பிக்கையாளர்கள் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பது.

ஹதீஸ் 6026 அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்

"இறைநம்பிக்கையாளர்கள் ஒருவருக்கொருவர் (ஒத்துழைக்கும் விஷயத்தில்) ஒரு கட்டடத்தைப் போன்றவர்கள் ஆவர். கட்டடத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு வலு சேர்க்கிறது என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். பிறகு தம் கை விரல்களை ஒன்றோடொன்று கோத்துக் காண்பித்தார்கள்.

ஹதீஸ் 6027 (ஒரு சமயம்) நபி(ஸல்) அவர்கள் அமர்ந்து கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர்யாசித்தபடி அல்லதுஒரு தேவை நிமித்தமாக வந்தார். நபி(ஸல்) அவர்கள் எங்களை நோக்கி(இவருக்காக என்னிடம்) பரிந்துரையுங்கள். அதனால் உங்களுக்கும் நற்பலன் அளிக்கப்படும். அல்லாஹ், தான் நாடியதை தன்னுடைய தூதரின் நாவினால் நிறைவேற்றுவானாக' என்றார்கள்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

## (திருக்குர்ஆன் 04:85 வது) இறைவசனம்.

"யாரேனும் ஒரு நன்மையான செயலுக்குப் பரிந்துரைத்தால் அதன் நன்மையில் ஒரு பங்கு அவருக்கும் உண்டு. (அவ்வாறே) யாரேனும் ஒரு தீய செயலுக்குப் பரிந்துரைத்தால், அதன் குற்றத்தில் அவருக்கும் ஒரு பங்குண்டு. அல்லாஹ் எல்லா பொருட்களையும் கண்காணிப்பவனாக இருக்கிறான்' எனும் (திருக்குர்ஆன் 04:85 வது) இறைவசனம்.

(இந்த வசனத்தின் மூலத்திலுள்ள)ம்ஃப்ல்' எனும் சொல்லுக்குப்பங்கு என்று பொருள்.

"ம்ஃப்லைனி என்பதற்கு அபிசீனிய மொழியில்இரண்டு பலன்கள் என்று பொருள்' என அபூ மூஸா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6028 அபூ மூஸா(ரலி) அறிவித்தார்

'யாசகர் அல்லதுதேவையுடையவர் எவரேனும் நபி(ஸல்) அவர்களிடம் வந்தால் நபியவர்கள் (தம் தோழர்களை நோக்கி,இவருக்காக என்னிடம்) பரிந்துரை செய்யுங்கள். அதனால் உங்களுக்கும் நற்பலன் வழங்கப்படும் அல்லாஹ் தன் தூதருடைய நாவினால் தான் நாடியதை நிறைவேற்றுவானாக' என்று கூறுவார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் இயற்கையாகவோ, செயற்கையாகவோ அருவருப்பாகப் பேசும் பழக்கமுடையவராக இருக்கவில்லை.

ஹதீஸ் 6029 மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

முஆவியா(ரலி) அவர்களுடன் (இராக்கிலுள்ள) கூஃபா நகருக்கு வந்திருந்த அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களிடம் நாங்கள் சென்றோம். அப்போது அவர்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்களை நினைவுகூர்ந்து,அவர்கள் இயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக இருக்கவில்லை செயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக இருக்கவில்லை' என்று

கூறிவிட்டு,நற்குணமுடையவரே உங்களில் மிகவும் சிறந்தவர் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும் கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 6030 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

யூதர்கள் (சிலர்) நபி(ஸல்) அவர்களிடம் வந்து அஸ்ஸாமு அலைக்கும் (உங்களுக்கு மரணம் நேரட்டும்) என்று (முகமன்) கூறினர். உடனே நான்,(அது) உங்களுக்கு நேரட்டும். மேலும், அல்லாஹ் தன்னுடைய கருணையிலிருந்து உங்களை அப்புறப்படுத்தி உங்களின் மீது அல்லாஹ் கோபம் கொள்ளட்டும்' என்று (அவர்களுக்கு பதில்) சொன்னேன். (அப்போது) நபி(ஸல்) அவர்கள்,ஆயிஷா! நிதானம்! (எதிலும்) நளினமாக நடந்துகொள். மேலும், வன்மையுடன் நடந்துகொள்வதிலிருந்தும் அருவருப்பாகப் பேசுவதிலிருந்தும் உன்னை எச்சரிக்கிறேன்' என்று கூறினார்கள். அப்போது நான்,அவர்கள் சொன்னதை நீங்கள் செவியேற்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நான் (அவர்களுக்கு அளித்த பதிலை) நீ கேட்கவில்லையா? ('அஸ்ஸாமு எனும் சொல்லைத் தவிர்த்துவ அலைக்கும் - அவ்வாறே உங்களின் மீது உண்டாகட்டும் என்று) அவர்களுக்கு பதிலளித்துவிட்டேன். அவர்களுக்காக நான் செய்த பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும். எனக்காக அவர்கள் செய்த பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்படாது' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6031 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் ஏசுபவராகவோ, கெட்ட வார்த்தைகள் பேசுபவராகவோ சாபமிடுபவராகவோ இருக்கவில்லை. எங்களில் ஒருவரைக் கண்டிக்கும்போது கூடஅவருக்கென்ன நேர்ந்தது? அவரின் நெற்றி மண்ணில் படட்டும்' என்றே கூறுவார்கள்.

ஹதீஸ் 6032 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் (வீட்டுக்குள் வர) அனுமதி கேட்டார். அவரைக் கண்ட நபி(ஸல்) அவர்கள்,இவர் அந்தக் கூட்டத்தாரிலேயே மிகவும் தீயவர்' என்று (என்னிடம்) கூறினார்கள். அவர் வந்து அமர்ந்தபோது அவரிடம் நபி(ஸல்) அவர்கள் மலர்ந்த முகத்துடன் இதமாக நடந்து கொண்டார்கள். அந்த மனிதர் (எழுந்து) சென்றதும் நான் (நபி(ஸல்) அவர்களிடம்)இறைத்தூதர் அவர்களே! அந்த மனிதரைக் கண்டதும் தாங்கள் இவ்வாறு இவ்வாறு சொன்னீர்கள். பிறகு அவரிடம் மலர்ந்த முகத்துடன் இதமாக நடந்து கொண்டீர்களே' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,ஆயிஷா! நான் கடுமையாக நடந்து கொண்டதை நீ எப்போதாவது கண்டுள்ளாயா? எவரின் தீங்கை அஞ்சி மக்கள் (அவருடன் இயல்பாகப் பழகாமல்)விட்டு விடுகிறார்களோ அவரே மறுமை நாளில் அல்லாஹ்விடம் அந்தஸ்தில் மிகவும் மோசமானவராவார்' என்று கூறினார்கள்.

## நற்பண்பும், தயாளகுணமும், வெறுக்கப்பட்ட கருமித்தனமும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் மனிதர்களிலேயே அதிகம் வாரி வழங்குபவர்களாக இருந்தார்கள். ரமளான் மாதத்தில் இன்னும் அதிகமதிகம் வாரி வழங்குவார்கள்.

அபூ தர்(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் இறைத்தூதராக நியமிக்கப்பட்ட செய்தி எனக்கு எட்டியபோது நான் என் சகோதரரிடம்,இந்த (மக்கா) பள்ளத்தாக்கிற்கு நீ பயணம் மேற்கொண்டு, அவரின் சொல்லை செவியேற்பாயாக' என்று கூறினேன். அவர் (சென்றுவிட்டு) திரும்பிவந்து,அவர் நற்குணங்களை(க் கடைப்பிடிக்கும்படி) ஏவக் கண்டேன்' என்றார்.

ஹதீஸ் 6033 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (குணத்தாலும் தோற்றத்தாலும்) மக்களிலேயே மிகவும் அழகானவர்களாகவும் மக்களிலேயே அதிகக் கொடை குணம் கொண்டவர்களாகவும் மக்களிலேயே அதிக வீரமுடையவர்களாகவும் இருந்தார்கள்.

(ஒரு முறை) மதீனாவாசிகள் இரவு நேரத்தில் (எதிரிகள் படையெடுத்து வருவதாகக் கேள்விப்பட்டு) பீதியடைந்தார்கள். சப்தம் வந்த திசையை நோக்கி மக்கள் நடந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்களை எதிர்கொண்டார்கள். சப்தம் வந்த திசையை நோக்கி மக்களுக்கு முன்பே நபி(ஸல்) அவர்கள் சென்றுவிட்டிருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் கழுத்தில் வாளைத் தொங்கவிட்டபடி அபூ தல்ஹா(ரலி) அவர்களின் சேணம் பூட்டப்படாத வெற்றுடலான குதிரையின் மீது அமர்ந்தவண்ணம்,பீதியடையாதீர்கள். பீதியடையாதீர்கள்' என்று (மக்களைப் பார்த்துச்) கூறினார்கள். பிறகு,(தங்கு தடையின்றி) ஓடும் கடலாக இந்தக் குதிரை (தங்கு தடையின்றி) ஓடும் கடல் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6034 முஹம்மத் இப்னு முன்கதிர்(ரஹ்) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்களிடம் எது கேட்கப்பட்டாலும் ஒருபோதும் அவர்கள்இல்லை என்று சொன்னதில்லை என ஜாபிர்(ரலி) கூறக் கேட்டேன்.

ஹதீஸ் 6035 மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அவர்கள் எங்களிடம் பேசினார்கள். அப்போது அவர்கள்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக இருக்கவில்லை் செயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக இருக்கவில்லை. மேலும், நபி(ஸல்) அவர்கள்,நற்குணமுடையவரே உங்களில் சிறந்தவர் என்று கூறுவார்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6036 அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார்(ரஹ்) அறிவித்தார்

"ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம்புர்தா (சால்வை) ஒன்றைக் கொண்டு வந்தார்' என்று ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறிவிட்டு,புர்தா என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? என மக்களிடம் கேட்டார்கள். அப்போது மக்கள்,அது சால்வை' என்றனர். அப்போது ஸஹ்ல்(ரலி),அது கரை வைத்து நெய்யப்பட்ட சால்வையாகும்' என்று கூறினார்கள். (தொடர்ந்து கூறினார்கள்:) அப்போது அந்தப் பெண்மணி,இதனை நான் உங்களுக்கு அணிவிக்க(வே நெய்து) உள்ளேன் இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார். அது தேவையாயிருந்ததால் நபி(ஸல்) அவர்கள் அதைப் பெற்றுக்கொண்டார்கள். பிறகு அவர்கள் அதை அணிந்(து கொண்டு வந்)தபோது நபித்தோழர்களில் ஒருவர் அதைப் பார்த்துவிட்டு,இறைத்தூதர் அவர்களே! இது மிகவும் அழகாயிருக்கிறதே! இதை எனக்கு அணிவித்துவிடுங்களேன்' என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்சரி' என்று கூறிவிட்டு அவர்கள் (அதைக் கழற்றுவதற்காக) எழுந்து சென்றுவிட்டபோது, அந்தத் தோழரிடம் அவரின் நண்பர்கள்நீர் செய்தது அழகல்ல நபி(ஸல்) அவர்களுக்கு அது தேவைப்பட்டதால் தான் அதைப் பெற்றுக்கொண்டார்கள். தம்மிடம் (உள்ள) ஏதேனும் ஒன்று கேட்கப்பட்டால் அதை அவர்கள் கொடுக்காமல் இருக்கமாட்டார்கள் என்று தெரிந்து கொண்டே நீர் அவர்களிடம் அதைக் கேட்டு விட்டீரே' என்று கூறி அவரைக் கண்டித்தனர். அதற்கு அவர்நபி(ஸல்) அவர்கள் அதை அணிந்ததால் ஏற்பட்ட சுபிட்சத்தை (பரக்கத்தை) அதில் எதிர்பார்த்தேன் நான் (இறக்கும் போது) அதில் கஃபனிடப்படலாம் (என்று எண்ணியே அதை கேட்டேன்)' என்று கூறினார்.

ஹதீஸ் 6037 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,(இறுதிக் காலத்தில் மக்களின் ஆயுட்)காலம் குறும்விடும் நற்செயல் குறைந்துவிடும் (பேராசையின் விளைவாக மக்களின் (மனங்களில்) கருமித்தனம் உருவாக்கப்படும்ஹர்ஜ் பெரும்விடும்' என்று கூறினார்கள்.

மக்கள்,ஹர்ஜ் என்றால் என்ன? என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள்,கொலை கொலை' என்று (இரண்டு முறை) கூறினார்கள்.

ஹதீஸ் 6038 அனஸ்(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பத்து ஆண்டுகள் சேவகம் புரிந்தேன். (மனம் வேதனைப்படும்படி) என்னைச்சீ' என்றோ,(இதை) ஏன் செய்தாய்' என்றோ,நீ (இப்படிச்) செய்திருக்கக் கூடாதா? என்றோ அவர்கள் சொன்னதில்லை.

## ஒருவர் தம் குடும்பத்தாரிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

ஹதீஸ் 6039 அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அறிவித்தார்

"தம் வீட்டாரிடம் இருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் என்ன செய்வார்கள்? என்று நான் (அன்னை) ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அவர்கள்,தம் வீட்டாருக்காக (வீட்டு) வேலைகளை நபி(ஸல்) அவர்கள் செய்துவந்தார்கள். தொழுகை (நேரம்) வந்துவிட்டால் தொழுகைக்காக எழுந்து (சென்று) விடுவார்கள்' என்று பதிலளித்தார்கள்.

## அன்பு அல்லாஹ்விடமிருந்தே ஆரம்பமாகிறது.

ஹதீஸ் 6040 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடியாரை அல்லாஹ் நேசிக்கும் பொழுது (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்களை அவன் அழைத்துஅல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். எனவே நீங்களும் அவரை நேசியுங்கள்' என்று கூறுவான். எனவே, அவரை ஜிப்ரீலும் நேசித்துவிட்டு விண்ணகத்தில் வசிப்பவர்களை அழைத்துஅல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். நீங்களும் அவரை நேசியுங்கள்' என்று ஜிப்ரீல் அறிவிப்பார். உடனே விண்ணகத்தாரும் அவரை நேசிப்பார்கள். பிறகு அவருக்குப் பூமியில் வசிப்பவர்களிடமும் அங்கீகாரம் அளிக்கப்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வுக்காக நேசம் கொள்வது

ஹதீஸ் 6041 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மூன்று தன்மைகள் அமையப்பெறாத) எவரும் இறைநம்பிக்கையின் சுவையை உணரமாட்டார். (அவை:)

1. ஒருவரை நேசிப்பதானால் அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது.

2. இறைமறுப்பிலிருந்து அல்லாஹ் காப்பாற்றிய பின் மீண்டும் அதற்குத் திரும்புவதைவிட நெருப்பில் வீசப்படுவதையே விரும்புவது.

3. அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் மற்றெதையும் விட அவருக்கு அதிக நேசத்திற்குரியோராக வது.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## (திருக்குர்ஆன் 49:11 வது) இறைவசனம்.

இறைநம்பிக்கையாளர்களே! ஒரு சமூகத்தார் மற்றொரு சமூகத்தாரைப் பரிகாசம் செய்ய வேண்டாம். ஏனெனில், (பரிகசிக்கப்படுவோர்), அவர்களை விட மேலானவர்களாக இருக்கலாம்' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 49:11 வது) இறைவசனம்.

ஹதீஸ் 6042 அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி) அறிவித்தார்

உடலில் இருந்து வெளியேறும் ஒன்(றான வாயுக் காற்)றைக் கேட்டு எவரும் சிரிப்பதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். மேலும், (பெண்கள் தொடர்பாக)நீங்கள் உங்கள்

மனைவியை ஏன் காளையை அடிப்பது போல் அடிக்கிறீர்கள்? பிறகு நீங்களே அவளை (இரவில்) அணைத்துக் கொள்ள வேண்டிவருமே!என்றும் கூறினார்கள்.

ஹிஷாம் இப்னு உர்வா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்அடிமையை அடிப்பது போல் (ஏன் அடிக்கிறீர்கள்?)' என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 6043 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மினாவில் (தங்கியிருந்தபோதுதுல்ஹஜ் பத்தாம் நாள் உரையாற்றுகையில்)மக்களே! இது என்ன நாள் தெரியுமா? என்று கேட்டார்கள். மக்கள்,அல்லாஹ்வும் அவனுடைய தூதரும்தான் நன்கு அறிந்தவர்கள்' என்றனர். நபி(ஸல்) அவர்கள்,இது புனித நாள்' என்று கூறினார்கள்.

(பிறகு)இது எந்த நகரம் தெரியுமா? என்று கேட்டார்கள். மக்கள்,அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்' என்றனர். நபி(ஸல்) அவர்கள்,இது புனித நகரம்' என்று கூறினார்கள். (பிறகு)இது என்ன மாதம் தெரியுமா? என்று கேட்டார்கள். மக்கள்,அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்' என்றனர். நபி(ஸல்) அவர்கள்,இது புனித மாதம்' என்று கூறிவிட்டு,நிச்சயமாக உங்களுடைய இந்த மாதத்தில் உங்களடைய இந்த நகரத்தில் உங்களுடைய இந்த நாள் எவ்வாறு புனிதம் பெற்றுள்ளதோ அவ்வாறே உங்களின் உயிர்களும் உடைமைகளும் மானமும் உங்களுக்குப் புனிதமானவையாகும்' என்று கூறினார்கள்.

## ஏசுவதற்கும் சபிப்பதற்கும் விதிக்கப்பட்டுள்ள தடை.

ஹதீஸ் 6044 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

ஒரு முஸ்லிமை ஏசுவது பாவமாகும். அவனுடன் போரிடுவது (அல்லது கொலை செய்வது), இறைமறுப்பு (போன்ற பாவச் செயல்) ஆகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6045 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் மற்றவரைபாவி என்றோ,இறைமறுப்பாளன் என்றோ அழைத்தால் அவர் (உண்மையில்) அவ்வாறு (பாவியாக, இறைமறுப்பாளனாக) இல்லையாயின் அவர் சொன்ன சொல் சொன்னவரை நோக்கியே திரும்பிவிடுகிறது.

என அபூ தர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6046 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

கெட்ட வார்த்தைகள் பேசுபவராகவோ சாபமிடுபவராகவோ ஏசுபவராகவோ இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இருக்கவில்லை. (ஒருவரைக்) கண்டிக்கும்போது கூடஅவருக்கென்ன நேர்ந்தது? அவரின் நெற்றி மண்ணில் படட்டும்' என்றே கூறுவார்கள்.

ஹதீஸ் 6047 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது சத்தியம் செய்கிறவர், தாம் சொன்னதைப் போன்றே ஆகிவிடுகிறார். தனக்கு உடைமையில்லாத ஒன்றில் நேர்ச்சை செய்வது(ம், அந்த நேர்ச்சையை நிறைவேற்றுவதும்) எந்த மனிதனுக்கும் தகாது. எதன் மூலம் தம்மைத்தாமே தற்கொலை செய்துகொள்ளும் ஒருவர் அதன் மூலம் மறுமை நாளில் வேதனை செய்யப்படுவார். ஓர் இறைநம்பிக்கையாளரை ஒருவர் சபிப்பது அவரைக் கொலை செய்வது போன்றதாகும். இறைநம்பிக்கையாளர் ஒருவரை இறைமறுப்பாளர் என்று அவதூறு சொல்வதும் அவரைக் கொலை செய்வது போன்றதேயாகும்.

இதை அந்த மரத்தினடியில் (பைஅத்துர் ரிள்வான்) உறுதிமொழி அளித்தவர்களில் ஒருவரான ஸாபித் இப்னு ளஹ்ஹாக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6048 சுலைமான் இப்னு ஸுரத்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் அருகில் இரண்டு பேர் ஒருவரையொருவர் ஏசிக்கொண்டனர். அவர்களில் ஒருவருக்கு மிகக் கடுமையான கோபம் ஏற்பட்டு அவரின் முகம் புடைத்து, நிறம் மாறிவிட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்,எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை இவர் சொல்வாராயின் இவருக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய (கோபமான)து போய்விடும்' என்று கூறினார்கள். (இதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களில்) ஒருவர் (கோபத்திலிருந்த) அந்த மனிதரை நோக்கி நடந்து நபி(ஸல்) அவர்கள் கூறியதை எடுத்துக்கூறிஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரு' என்றார். அதற்கு அம்மனிதர்(கலைப்படும்படி) பிணி ஏதேனும் எனக்கு ஏற்பட்டுவிட்டதாக நினைக்கிறீரா? நான் என்ன பைத்தியக்காரானா? (உம்முடைய வேலையைக் கவனிக்கச்) செல்!என்றார்.

ஹதீஸ் 6049 உபாதா இப்னு ஸாமித்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ரமளானில் வரும்) லைலத்துல் கத்ர் (கண்ணியமிக்க இரவு) பற்றி (அது ரமளான் மாதத்தில் எந்த இரவு என்று) மக்களுக்குத் தெரிவிப்பதற்காக (தம் வீட்டிலிருந்து) புறப்பட்டார்கள். அப்போது இரண்டு முஸ்லிம்கள் சச்சரவு செய்துகொண்டிருந்தார்கள். (இதைக் கண்ணுற்ற) நபி(ஸல்) அவர்கள்,லைலத்துல் கத்ர் பற்றி உங்களுக்குத் தெரிவிப்பதற்காக நான் (வீட்டிலிருந்து) புறப்பட்டேன். அப்போது இன்னாரும் இன்னாரும் தமக்குள் சச்சரவு செய்து கொண்டிருந்தனர். எனவே, அது (என் நினைவிலிருந்து) அகற்றப்பட்டுவிட்டது. அதுவும் உங்களுக்கு ஒரு நன்மையாகவே இருக்கலாம். எனவே, (ரமளான் மாதத்தின் இருபத்து) ஒன்பதாவது, (இருபத்து) ஏழாவது, (இருபத்து) ஐந்தாவது இரவுகளில் அதனைத் தேடிக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6050 மஃரூர் இப்னு சுவைத்(ரஹ்) அறிவித்தார்

நான் அபூ தர் அல் கிஃபாரீ(ரலி) (அவர்களை மதீனாவுக்கருகில் உள்ளரபதா எனுமிடத்தில் சந்தித்தேன். அப்போது) அவர்களின் மீது ஒரு மேலங்கியும், அவர்களின் அடிமையின் மீது (அதே மாதிரியான) ஒரு மேலங்கியும் இருக்கக் கண்டேன். நான் (அவர்களிடம்),(அடிமை அணிந்திருக்கும்) இதை நீங்கள் வாங்கி (கீழங்கியாக) அணிந்தால் (உங்களுக்கு) ஒரு ஜோடி ஆடையாக இருக்குமே! இவருககு வேறோர் ஆடையைக் கொடுத்துவிடலாமே' என்று கூறினார். அப்போது அபூ பக்ர்(ரலி) கூறினார்.

எனக்கும் ஒரு மனிதருக்கும் இடையே வாய்த் தகராறு ஏற்பட்டது. அம்மனிதரின் தாய் அரபியல்லாதவராவார். எனவே, நான் அவரின் தாயைக் குறிப்பிட்டு (இழிவாக)ப் பேசிவிட்டேன். உடனே அம்மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் என்னைப் பற்றி முறையிட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,நீர் இன்னாரை ஏசினீரா? என்று கேட்டார்கள். நான்,ஆம்' என்று சொன்னேன்.அவரின் தாயைக் குறிப்பிட்டு (இழிவாக)ப் பேசினீரா? என்று கேட்டார்கள். நான் (அதற்கும்)ஆம்' என்று பதிலளித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,நீர் அறியாமைக் காலத்துச் கலாசாரம் உள்ள மனிதராகவே இருக்கிறீர்' என்று கூறினார்கள். நான்,வயோதிகத்தை அடைந்துவிட்ட இந்தக் காலகட்டத்திலுமா? (அறியாமைக் கால குணம் கொண்டவனாய் உள்ளேன்?)' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,ஆம்' என்று கூறிவிட்டு,(பணியாளர்களான) அவர்கள் உங்கள் சகோதரர்கள் ஆவர். அவர்களை அல்லாஹ் உங்கள் ஆதிக்கத்தின் கீழ் வைத்துள்ளான். எனவே, யாருடைய ஆதிக்கத்தின் கீழ் அவரின் சகோதரரை அல்லாஹ் வைத்துள்ளானோ அவர் தம் சகோதரருக்குத் தாம் உண்பதிலிருந்து உணவளிக்கட்டும். தாம் அணிவதிலிருந்து அவருக்கு அணியத் தரட்டும். அவரின் சக்திக்கு மீறிய பணியை அவருக்குக் கொடுத்து அவரைச் சிரமப்படுத்த வேண்டாம். அவ்வாறு அவரின் சக்திக்கு மீறிய பணியை அவருக்குக் கொடுத்தால் அவருக்குத் தாமும் ஒத்துழைக்கட்டும்' என்று கூறினார்கள்.

## நெட்டையானவர், குட்டையானவர் என்றெல்லாம் (ஒருவரைப் புனைபெயரில்) மக்கள் அறிமுகப்படுத்துவது.

“இரண்டு கைக்காரர்‘ என்ன சொல்கிறார்? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.

ஒரு மனிதரைக் கொச்சைப்படுத்தும் நோக்கமில்லாமல் கூறப்படும் எந்தப் (புனை) பெயரும் அனுமதிக்கப்பட்டதே.

ஹதீஸ் 6051 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்

(ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு (நான்கு ரக்அத் தொழுகையான) லுஹ்ர் தொழுகையை (மறந்து) இரண்டு ரக்அத்களாகத் தொழுகை நடத்திவிட்டு சலாம் கொடுத்துவிட்டார்கள்.

பிறகு எழுந்து பள்ளிவாசலின் தாழ்வாரத்திலிருந்த (பேரீச்சங்) கட்டையினை நோக்கிச் சென்று அதன் மீது தம் கையை வைத்து (நின்று) கொண்டார்கள். அன்று (பள்ளிவாசலில் இருந்த) மக்களில் அபூ பக்ர்(ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் இருந்தனர். ஆனால், அவர்கள் இருவரும் நபி(ஸல்) அவர்களிடம் (அது குறித்துப்) பேச அஞ்சினர். மக்களில் சிலர் வேகமாக வெளியேறிச் செல்லலாயினர். அப்போது அவர்கள்(தொழுகை(யின் ரக்அத்) குறைந்துவிட்டதா? என்று பேசிக்கொண்டனர். மக்களில் (‘ம்ர்பாக் எனும் இயற்பெயருடைய) ஒருவரும் இருந்தார். அவரை நபி(ஸல்) அவர்கள்இரண்டு கைக்காரர் (துல் யதைன்) என்று அழைப்பது வழக்கம். அவர்,அல்லாஹ்வின் நபியே! தாங்கள் மறந்து விட்டீர்களா? அல்லது தொழுகை(யின் ரக்அத்) குறைந்துவிட்டதா? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,(என் எண்ணப் படி) நான் மறக்கவுமில்லை. தொழுகை குறைந்துவிடவுமில்லை‘ என்று கூறினார்கள். அவர்,இல்லை தாங்கள் மறந்துவிட்டீர்கள், இறைத்தூதர் அவர்களே!என்று கூறினார்.இரண்டு கைக்காரர் (துல்யதைன்) சொல்வது உண்மையா? என (மக்களிடம்) நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். (மக்களும் உண்மையே என்று தெரிவித்தனர்.) பிறகு நபி(ஸல்) அவர்கள் எழுந்து இன்னும் இரண்டு ரக்அத்கள் தொழுகை நடத்திசலாம் கொடுத்தார்கள். பிறகு தக்பீர் (‘அல்லாஹு அக்பர் -அல்லாஹ் மிகப் பெரியவன் எனக்) கூறிமுன்பு செய்ததைப் போன்று அல்லதுஅதை விடவும் நீண்ட (மறதிக்கான) சிரவணக்கம் (சஜ்தா) செய்தார்கள். பின்னர் (சிரவணக்கத்திலிருந்து) எழுந்துதக்பீர் கூறினார்கள். பின்னர் மீண்டும்முன்பு செய்ததைப் போன்று அல்லதுஅதைவிட நீளமாக சிரவணக்கம் செய்தார்கள். பின்னர் தலையை உயர்த்திதக்பீர் கூறினார்கள்.

## புறம் பேசுதல்

“(இறை நம்பிக்கையாளர்களே!) உங்களில் சிலர் சிலரைப் பற்றிப் புறம்பேச வேண்டாம். உங்களில் எவரேனும் ஒருவர் தம் இறந்த சகோதரனின் மாமிசத்தைப் புசிக்க விரும்புவாரா? (இல்லை!) அதனை நீங்கள் வெறுப்பீர்கள். மேலும், நீங்கள் பாவத்திலிருந்து மீள்வதை அல்லாஹ் ஏற்றுக்கொள்பவன் மிக்க கருணையாளன்‘ எனும் (திருக்குர்ஆன் 49:12 வது) இறைவசனம்.

ஹதீஸ் 6052 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரண்டு மண்ணறைகளை (கப்றுகளை)க் கடந்து சென்றார்கள். அப்போது(மண்ணறைகளிலுள்ள) இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஆனால் மிகப்பெரும் (பாவச்) செயலுக்காக (இவர்கள்) இருவரும் வேதனை செய்யப்படவில்லை. இதோ! இவர் (தம் வாழ்நாளில்) சிறுநீர் கழிக்கும்போது (தம் வாழ்நாளில்) சிறுநீர் கழிக்கும்போது (தம் உடலை) மறைக்கமாட்டார். இதோ! இவர் (மக்களிடையே) கோள் சொல்லி (புறம்பேசி)த் திரிந்து கொண்டிருந்தார்‘ என்று கூறினார்கள்.

பிறகு பச்சைப் பேரீச்ச மட்டையொன்றைக் கொண்டுவரச் சொல்லி அதை இரண்டாகப் பிளந்து இவர் (மண்ணறை) மீது ஒன்றையும் அவர் (மண்ணறை) மீது ஒன்றையும் நாட்டார்கள். பிறகு, இவ்விரண்டின் ஈரம் உலராதவரை இவர்களின் வேதனை குறைக்கப்படலாம்' என்று கூறினார்கள்.

## அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது பற்றி நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6053 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அன்சாரிகளின் கிளைக் குடும்பங்களில் சிறந்தது பனுநஜ்ஜார் குடும்பமாகும்.

என அபூ உசைத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

## குழப்பவாதிகள் மற்றும் சந்தேகத்திற்கிடமானவர்கள் குறித்து (மற்றவர்களை எச்சரிக்க) குறை கூறுவது அனுமதிக்கப்பட்டதே!

ஹதீஸ் 6054 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஒருவர் (எங்கள் வீட்டுக்குள் வர) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள், அவரை உள்ளே வரச் சொல்லுங்கள். அந்தக் கூட்டத்தாரிலேயே (இவர்) மோசமானவர்' என்று (அவரைப் பற்றிச்) கூறினார்கள். (வீட்டுக்கு) உள்ளே அவர் வந்தபோது, (எல்லாரிடமும் பேசுவது போல்) அவரிட(மு)ம் கனிவாகவே பேசினார்கள். (அவர் பேசிவிட்டு எழுந்து சென்றதும்) நான், இறைத்தூதர் அவர்களே! நீங்கள் (அவரைக் கண்டதும்) ஒன்று சொன்னீர்கள் பிறகு அவரிடமே கனிவாகப் பேசினீர்களே? என்று கேட்டேன். (அப்போது) நபி(ஸல்) அவர்கள், ஆயிஷா! மக்கள் எவரின் அவருவருப்பான பேச்சுகளிலிருந்து (தங்களைத்) தற்காத்துக் கொள்ள அவரைவிட்டு ஒதுங்கிறார்களோ அவரே மக்களில் தீயவராவார். (அருவருப்பான பேச்சுகள் பேசும் அவர் குறித்து மற்றவர்களை எச்சரிக்கை செய்யவே அவரைப் பற்றி அவ்வாறு சொன்னேன்)' என்றார்கள்.

## கோள் சொல்வது பெரும்பவாங்களில் ஒன்றாகும்.

ஹதீஸ் 6055 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவின் தோட்டம் ஒன்றிலிருந்து புறப்பட்டு வந்து கொண்டிருந்தபோது தம் மண்ணறைகளில் (கப்றுகளில்) வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருந்த இரண்டு மனிதர்களின் (கூக்) குரலைச் செவியுற்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்(இவர்கள்) இருவரும் (மண்ணறைக்குள்) வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். ஒரு மாபெரும் (பாவச்) செயலுக்காக இவர்கள் வேதனை செய்யப்படவில்லை. ஆனாலும், அது ஒரு (வகையில்) பெரிய (பாவச்) செயல்தான். இவர்களில் ஒருவர் சிறுநீர் கழிக்கும்போது (தம் உடலை) மறைக்கமாட்டார். இன்னொருவர் (மக்களிடையே) கோள் சொல்லித் திரிந்துகொண்டிருந்தார்' என்று கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி அதைஇரண்டு துண்டாக அல்லதுஇரண்டாகப் பிளந்து ஒரு துண்டை இவரின் மண்ணறையிலும் மற்றொரு துண்டை இவரின் மண்ணறையிலும் (ஊன்றி) வைத்தார்கள். அப்போதுஇவ்விரண்டின் ஈரம் உலராத வரை இவர்களின் வேதனை குறைக்கப்படலாம்' என்று கூறினார்கள்.

கோள் சொல்வதன் தீமை

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) குறை கூறித் திரிகிறான், கோள் சொல்லி அலைகிற (எவருக்கும் நீங்கள் இணங்கிவிடாதீர்கள்.) (திருக்குர்ஆன் 68:11)

மேலும் அல்லாஹ் கூறினான்:

குறை சொல்லிக் கொண்டும் புறம் பேசிக் கொண்டும் திரிகிற எவருக்கும் கேடுதான். (திருக்குர்ஆன் 104:01)

(இதன் மூலத்தில் உள்ள ஹு மஸத், லுமஸத் ஆகியவற்றின் வினைச்சொற்களான) யஹ்மிஸு , யல்மிஸு ஆகிய சொற்களுக்கும்யஈபு எனும் சொல்லுக்கும் பொருள் ஒன்றே. (குறை கூறுதல்.)

ஹதீஸ் 6056 ஹம்மாம் இப்னு ஹாரிஸ்(ரஹ்) அறிவித்தார்

நாங்கள் ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்களிடம்(இங்குள்ள) ஒருவர் (நமக்கிடையே நடக்கும்) உரையாடல்களை (கலீஃபா) உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்களிடம் போய்ச் சொல்கிறார்‘ என்று கூறப்பட்டது.

அப்போது ஹு தைஃபா(ரலி)கோள் சொல்கிறவன் சொர்க்கம் செல்லமாட்டான்‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூற கேட்டுள்ளேன் என்று கூறினார்கள்.

## “பொய் பேசுவதிலிருந்து தவிர்ந்து கொள்ளுங்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 22:30 வது) இறைவசனம்.

ஹதீஸ் 6057 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பொய்யான பேச்சையும் பொய்யான நடவடிக்கைகளையும் (நோன்பைப் பற்றிய) அறியாமையையும் கைவிடாதவர் (நோன்பின் போது) தம் உணவையும் பானத்தையும் (வெறுமனே) கைவிடுவதில் அல்லாஹ்வுக்கு எந்தத் தேவையுமில்லை.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் அஹ்மத் இப்னு யூனுஸ்(ரஹ்) கூறினார்:

(இந்த ஹதீஸை எனக்கு அறிவித்த இப்னு அபீ திஃப்(ரஹ்)) இதன் அறிவிப்பாளர் தொடரை (விளக்கவில்லை. அவையில் இருந்த) ஒருவர் (அதை) எனக்கு விளக்கினார்.

## இரட்டை முகத்தான் பற்றிக் கூறப்பட்டவை

ஹதீஸ் 6058 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் அல்லாஹ்விடம் மனிதர்களிலேயே மிகவும் மோசமானவனாக இரட்டை முகத்தானைக் காண்பீர். அவன் இவர்களிடம் செல்லும்போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும்போது இன்னொரு முகத்துடனும் செல்கிறான்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## தம் நண்பரைப் பற்றிப் பேசப்படும் தகவலை அவருக்குத் தெரிவித்(து அவரை விழிப்படையச் செய்)தல்.

ஹதீஸ் 6059 இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹு னைன் போரில் கிடைத்த செல்வங்களைப்) பங்கிட்டார்கள். அப்போது அன்சாரிகளில், ஒருவர்,அல்லாஹ்வின் மீதாணையாக! இதில் முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடவில்லை‘ என்று (மனத்தாங்கலுடன்) பேசினார். எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று அவர்களிடம் (அம்மனிதர் கூறியதைச்) சொன்னேன். (அதைக் கேட்ட) உடனே அவர்களின் முகம் (கோபத்தினால் நிறம்) மாறிவிட்டது. (தொடர்ந்து) அவர்கள், (இறைத்தூதர்) மூஸாவுக்கு அல்லாஹ் கருணை

புரிவானாக! அவர்கள் இதைவிட அதிக மனவேதனைக்கு ஆளாக்கப்பட்டார்கள். ஆயினும் சகித்துக்கொண்டார்கள்' என்று கூறினார்கள்.

## (யாரையும் அளவு கடந்து) புகழ்வது வெறுக்கப்படட செயலாகும்.

ஹதீஸ் 6060 அபூ மூஸா (ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள், ஒருவர் இன்னொரு மனிதரை அளவு கடந்து புகழ்ந்து கொண்டிருப்பதைச் செவியுற்றார்கள். அப்போது அவர்கள், அந்த மனிதரின் முதுகைஅழித்துவிட்டீர்கள் அல்லதுஒடித்து விட்டீர்கள் என்று (கடிந்து) கூறினார்கள்.

ஹதீஸ் 6061 அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ் (ரலி) அறிவித்தார்

ஒரு மனிதரைப் பற்றி நபி(ஸல்) அவர்கள் அருகில் பேசப்பட்டது. அப்போது ஒருவர் அவரைப் பற்றிப் புகழ்ந்துரைத்தார். உடனே நபி(ஸல்) அவர்கள், உனக்குக் கேடுதான். உம் தோழரின் கழுத்தை நீர் துண்டித்து விட்டீரே!என்று பல முறை கூறினார்கள். பிறகு, உங்களில் ஒருவர் (தம் சகோதரரைப்) புகழ்ந்தேயாக வேண்டும் என்றிருந்தால், (அவர் குறித்து) நான் இன்னின்ன விதமாக எண்ணுகிறேன் என்று (மட்டும்) அவர் கூறட்டும். அதுவும் அவர் அவ்வாறு இருப்பதாகச் கருதினால் மட்டுமே கூறட்டும். அல்லாஹ்வே அவரைக் குறித்து விசாரணை (செய்து முடிவு) செய்பவன் ஆவான். அல்லாஹ்வை முந்திக் கொண்டு யாரையும் தூய்மையானவர் என்று (யாரும்) கூற வேண்டாம்.

காலித் இப்னு மஹ்ரான் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில், (நபி(ஸல்) அவர்கள் தம் முன் புகழ்ந்தவரைப் பார்த்து) உனக்கு அழிவுதான்' என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

## ஒருவர் தம் சகோதரர் குறித்து தாம் அறிந்தவற்றைக் கூறிப் புகழ்வது.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) கூறினார்.

(யூத அறிஞராயிருந்து முஸ்லிமான) அப்துல்லாஹ் இப்னு சலாம் (ரலி) அவர்களைத் தவிர பூமியின் மீது நடக்கிற வேறெவரைக் குறித்தும்இவர் சொர்க்கவாசி என்று நபி(ஸல்) அவர்கள் கூற நான் கேட்டதில்லை.

ஹதீஸ் 6062 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கீழங்கி குறித்து (ஆடையைப் பெருமையுடன் தரையில் படும்படி இழுத்துச் செல்கிறவரை மறுமையில் அல்லாஹ் ஏறெடுத்தும் பார்க்கமாட்டான் என்று) குறிப்பிட்டபோது அபூ பக்ர் (ரலி), இறைத்தூதர் அவர்களே! என் கீழங்கியின் இரண்டு பக்கங்களில் ஒன்று (இடுப்பில் நிற்காமல் கீழே) விழுந்துவிடுகிறதே!என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், நீங்கள் (தற்பெருமையுடன் கீழங்கியைத் தொங்க விடும்) அவர்களில் உள்ளவர் அல்லர்' என்று கூறினார்கள்.

## (திருக்குர்ஆன் 16:90 வது) இறைவசனம்.

"நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும், நன்மை செய்யுமாறும், உறவினர்களுக்குக் கொடுத்து உதவுமாறும் (உங்களை) ஏவுகிறான். அன்றியும் மானக்கேடான செயல்கள், பாவங்கள், அக்கிரமங்கள் ஆகியவற்றைச் செய்வதற்குத் தடை விதிக்கிறான். நீங்கள் நினைவு கூர்ந்து சிந்திப்பதற்காக அவன் உங்களுக்கு நல்லுபதேசம் செய்கிறான்' எனும் (திருக்குர்ஆன் 16:90 வது) இறைவசனம்.

"(மனிதர்களே!) உங்களுடைய அக்கிரமங்கள் எல்லாம் உங்களுக்கே கேடாக முடியும்' எனும் (திருக்குர்ஆன் 10:23 வது) இறைவசனம்.

"அதன்பின்னர் அவனுக்குக் கொடுமை இழைக்கப்படுமானால் நிச்சயமாக அல்லாஹ் அவனுக்கு உதவுவான்' எனும் (திருக்குர்ஆன் 22:60 வது) இறைவசனம்.

மேலும், முஸ்லிமுக்கெதிராகவோ இறைமறுப்பாளருக்கெதிராகவோ வன்மத்தைத் தூண்டாமல் இருப்பது.

ஹதீஸ் 6063 ஆயிஷா (ரலி) அறிவித்தார்

நபி (ஸல்) அவர்களுக்கு (சூனியம் செய்யப்பட்டதால்) அவர்கள் இன்னின்னவாறு நடந்துகொண்டார்கள். அவர்கள் தம் வீட்டாரிடம் செல்லாமலேயே சென்றுவந்துவிட்டதாகப் பிரமையூட்டப்பட்டார்கள். அவர்கள் ஒரு நாள் என்னிடம், ஆயிஷா! நான் எந்த விவகாரத்தில் தெளிவைத் தரும்படி அல்லாஹ்விடம் கேட்டுக்கொண்டிருந்தேனோ அதில் அவன் எனக்குத் தெளிவை அளித்துவிட்டான். (நான் உறங்கிக் கொண்டிருந்தபோது கனவில் வானவர்கள்) இரண்டு பேர் என்னிடம் வந்தனர். அவர்களில் ஒருவர் என் கால்மாட்டிலும் மற்றவர் என்னுடைய தலைமாட்டிலும் அமர்ந்தனர். அப்போது என் கால்மாட்டில் அமர்ந்திருந்தவர் என் தலைமாட்டில் அமர்ந்திருந்தவரிடம் (என்னைக் காட்டி), இந்த மனிதரின் நிலை என்ன? என்று கேட்க, மற்றவர், இவருக்குச் சூனியம் வைக்கப்பட்டுள்ளது' என்று பதிலளித்தார். முதலாமவர், இவருக்குச் சூனியம் வைத்தவர் யார்? என்றுகேட்க, மற்றவர், லபீத் இப்னு அஃஸம் என்று பதிலளித்தார். முதலாமவர், எதில் (சூனியம் வைக்கப்பட்டுள்ளது)? என்று கேட்க, மற்றவர், ஆண் பேரீச்சம் பாளையின் உறை, (தலைவாரும்) சீப்பு, சிக்குமுடி ஆகியவற்றில் (சூனியம்) செய்யப்பட்டுதர்வான் (குலத்தாரின்) கிணற்றில் ஒரு பாறைக்கடியில் வைக்கப்பட்டுள்ளது' என்று பதிலளித்தார்.

எனவே, நபி (ஸல்) அவர்கள் (தம் தோழர்கள் சிலருடன் அந்தக் கிணற்றுக்கு) வந்து (பார்த்துவிட்டு), இந்தக் கிணறுதான் எனக்குக் (கனவில்) காட்டப்பட்டது. அந்தக் கிணற்றினைச் சுற்றியிருந்த பேரீச்சம் மரங்களின் தலைகள் ஷைத்தான்களின் தலைகளைப் போன்றிருந்தன. அந்தக் கிணற்றின் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்றிருந்தது' என்று கூறினார்கள்.

நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட அது வெளியே எடுக்கப்பட்டது. நான், இறைத்தூதர் அவர்களே! அ(ந்தப் பாளை உறை)தனைப் பிரித்துப் பார்க்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்அல்லாஹ் என்னைக் குணப்படுத்திவிட்டான். நானோ (அதைப் பிரித்துக் காட்டுவதால்) மக்களுக்கெதிராகத் வன்மத்தைத் தூண்டி விடுவதை அஞ்சுகிறேன்' என்று கூறினார்கள்.

(நபி (ஸல்) அவர்களுக்குச் சூனியம் வைத்த) லபீத் இப்னு அஃஸம், பனு ஸு ரைக் குலத்தாரிலுள்ள ஒருவன் ஆவான். (அவன்) யூதர்களின் நட்புக் குலத்தவன் ஆவான்.

## பொறாமையும் பிணக்கும் தடை செய்யப்பட்டவையாகும்.

அல்லாஹ் கூறினான்:

பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது உண்டாகும் தீங்கிலிருந்து (பாதுகாப்புக் கோருகிறேன் என்று கூறுக). (திருக்குர்ஆன் 113:05)

ஹதீஸ் 6064 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஆதாரமில்லாமல் பிறரை) சந்தேகப்படுவது குறித்து உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், சந்தேகம் கொள்வது மிகப் பெரிய பொய்யாகும். (பிறரின் குறையைத்) துருவித் துருவி ஆராயாதீர்கள். ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு பாராட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6065 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவருக்கொருவர் கோபம் கொள்ளாதீர்கள். பொறாமை கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு பாராட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள். எந்தவொரு முஸ்லிமும் தம் சகோதரருடன் மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## 49:12 வது இறைவசனம்

இறைநம்பிக்கையாளர்களே! பெரும்பாலான சந்தேகங்களிலிருந்து தவிர்ந்து கொள்ளுங்கள். ஏனெனில், சந்தேகங்களில் சில பாவமாகும். மேலும், (பிறர் குறைகளை) நீங்கள் துருவித் துருவி ஆராய்ந்து கொண்டிராதீர்கள் (எனும் 49:12 வது இறைவசனம்).

ஹதீஸ் 6066 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஆதாரமில்லாமல் பிறரை) சந்தேம்ப்பது குறித்து உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், சந்தேகம் கொள்வது பெரும் பொய்யாகும். (பிறரின் குறையைத்) துருவித் துருவி ஆராயாதீர்கள். (பிறரை அதிக விலை கொடுத்து வாங்கவைப்பதற்காக விற்பனைப் பொருளின்) விலையை ஏற்றிக் கேட்காதீர்கள். ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அனுமதிக்கப்பட்ட சந்தேகம்

ஹதீஸ் 6067 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

“இன்னாரும் இன்னாரும் நம்முடைய மார்க்கத்தில் எதையும் அறிந்ததாக நான் கருதவில்லை‘ என்று (இருவரைப் பற்றி) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) லைஸ்(ரஹ்) கூறினார்: அவர்கள் இருவரும் நயவஞ்சகர்களாய் இருந்தனர்.

ஹதீஸ் 6068 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

ஒருநாள் நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்து,ஆயிஷா! இன்னாரும் இன்னாரும் நாம் எந்த மார்க்கத்தில் இருக்கிறோமோ அதை அறிந்திருப்பவர்களாக நான் கருதவில்லை‘ என்று கூறினார்கள்.

## இறைநம்பிக்கையாளர் தாம் புரிந்துவிட்ட பாவங்களை (பம்ரங்கப்படுத்தாமல்) மறைப்பது.

ஹதீஸ் 6069 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாரில் (பாவம் செய்த) அனைவரும் (இறைவனால்) மன்னிக்கப்படுவர் (தம் பாவங்களைத்) தாமே பம்ரங்கப்படுத்துகிறவர்களைத் தவிர ஒருவர் இரவில் ஒரு (பாவச்) செயல் புரிந்துவிட்டுப் பிறகு காலையானதும் அல்லாஹ் அவனுடைய பாவத்தை (பிறருக்குத் தெரியாமல்) மறைத்துவிட்டிருக்க,இன்னாரே! நேற்றிரவு நான் (பாவங்களில்) இன்னின்னதைச் செய்தேன்‘ என்று அவனே கூறுவது பம்ரங்கப்படுத்துவதில் அடங்கும். (அவன் செய்த பாவத்தை) இரவில் (பிறருக்குத் தெரியாமல்) இறைவன் மறைத்துவிட்டான். (ஆனால்,) இறைவன் மறைத்ததைக் காலையில் அந்த மனிதன் தானே வெளிச்சமாக்கி விடுகிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6070 ஸஃப்வான் இப்னு முஹ்ரிஸ் அல்மாஸினீ(ரஹ்) அறிவித்தார்

ஒருவர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்,(மறுமை நாளில் அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடியார்களுக்குமிடையே நடைபெறும்) இரகசிய உரையாடல் குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து என்ன செவியுற்றீர்கள்? என்று கேட்டதற்கு இப்னு உமர்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:

“உங்களில் ஒருவர் தம் இறைவனை நெருங்குவார். எந்த அளவிற்கென்றால் இறைவன் தன் திரையை அவரின் மீது போட்டு (அவரை மறைத்து) விடுவான். அப்போது இறைவன்,நீ (உலகத்தில்) இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா? என்று கேட்பான். அதற்கு அவர்,ஆம் என்பார். இறைவன் (மீண்டும்)இன்னின்ன (பாவச்) சயல்களைச் செய்தாயா? என்று கேட்பான். அப்போதும் அவர்,ஆம் என்று கூறி (தம் பாவச்) செயல்களை ஒப்புக் கொள்வார். பிறகு அவன்,இவற்றையெல்லாம் உலகில் நான் (பிறருக்குத் தெரியாமல்) மறைத்(திருந்)தேன். இன்று உனக்கு அவற்றை மன்னித்துவிடுகிறேன் என்று கூறுவான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## அகங்காரம்

முஜாஹித்(ரஹ்) கூறினார்:

(திருக்குர்ஆன் 22:9 வது வசனத்தின் மூலத்திலுள்ள)ஸானிய இத்ஃபிஹி எனும் சொல்லுக்கஅகங்காரம் கொண்டவனாக என்று பொருள். இத்ஃபிஹி எனும் சொற்றொடருக்குஅவனுடைய பிடரியில் என்று பொருள்.

ஹதீஸ் 6071 ஹாரிஸா இப்னு வஹ்ப்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை),சொர்க்கவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா? அவர்கள் (மக்களின் பார்வையில்) பலவீனமானவர்கள் பிணவானவர்கள். (ஆனால்,) அவர்கள் அல்லாஹ்வீன் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால், அல்லாஹ் அதை (அவ்வாறே) நிறைவேற்றிவைப்பான். (இதைப் போன்றே,) நரகவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா? அவர்கள் இரக்கமற்றவர்கள் அகம்பாவம் கொண்டவர்கள் பெருமை பிடித்தவர்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6072 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

மதீனாவாசிகளின் (சாதாரண) அடிமைப் பெண்களில் ஒருத்தி கூட இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கையைப் பற்றிய வண்ணம் (தன் வாழ்க்கைத் தேவை நிமித்தமாக) தான் நாடிய இடத்திற்கு அவர்களை அழைத்துச் செல்ல முடியும். (அந்த அளவிற்கு மிக எளிமையானவர்களாகவும் நபி(ஸல்) அவர்கள் திகழ்ந்தார்கள்.)

## (மனஸ்தாபம் கொண்டு) பேசாமல் இருப்பதும், தம் சகோதரிடம் மூன்று நாள்களுக்கு மேல் ஒருவர் பேசாமல் இருப்பது அனுதிக்கப்பட்டதன்று என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியதும்.

ஹதீஸ் 6073, ஹதீஸ் 6074, ஹதீஸ் 6075 நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அவர்களின் தாய்வழிச் சகோதரர் ஹாரிஸ் அவர்களின் புதல்வரான அவ்ஃப் இப்னு மாலிக் இப்னி துஃபைல்(ரஹ்) கூறினார்

ஆயிஷா(ரலி) (தம் வீடு ஒன்றை)விற்றது தொடர்பாக அல்லதுநன்கொடையாக வழங்கியது தொடர்பாக (அவர்களின் சகோதரி அஸ்மாவின் புதல்வர்) அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) (அதிருப்தியடைந்து)அல்லாஹ்வின் மீதாணையாக! ஆயிஷா (தம் முடிவைக்) கைவிடவேண்டும். அல்லது தான் அவரைத் தடுத்து நிறுத்துவேன்‘ என்று கூறினார்கள் என ஆயிஷா(ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது.

அதற்கு ஆயிஷா(ரலி) (தம் வீடு ஒன்றை)விற்றது தொடர்பாக அல்லதுநன்கொடையாக வழங்கியது தொடர்பாக (அவர்களின் சகோதரி அஸ்மாவின் புதல்வர்) அப்துல்லாஹ் இப்னு ஸு பைர்(ரலி) (அதிருப்தியடைந்து)அல்லாஹ்வின் மீதாணையாக! ஆயிஷா (தம் முடிவைக்) கைவிடவேண்டும். அல்லது நான் அவரைத் தடுத்து நிறுத்துவேன்' என்று கூறினார்கள் என ஆயிஷா(ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது.

அதற்கு ஆயிஷா(ரலி),அவரா இப்படிக் கூறினார்? என்று கேட்டார்கள். மக்கள்,ஆம்' என்றனர். அப்போது ஆயிஷா(ரலி),இனி நான் இப்னு ஸு பைரிடம் ஒருபோதும் பேசமாட்டேன் என அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுச் சத்தியம் செய்கிறேன்' என்று கூறிவிட்டார்கள். நீண்ட நாள்கள் பேச்சு வார்த்தை நின்றுபோனபோது ஆயிஷா(ரலி) அவர்களிடம் (தமக்காகப்) பரிந்து பேசுமாறு (முஹாஜிர்களை) இப்னு ஸு பைர்(ரலி) கேட்டுக்கொண்டார்கள். (அவ்வாறே அவர்கள் பரிந்து பேசியபோது) ஆயிஷா(ரலி),முடியாது. அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் விஷயத்தில் ஒருபோதும் நான் (எவருடைய) பரிந்துரையையும் ஏற்றுக்கொள்ளவுமாட்டேன். என் சத்தியத்தை நான் முறித்துக் கொள்ளவுமாட்டேன்' என்று கூறிவிட்டார்கள்.

ஆயிஷா(ரலி) இப்னு ஸு பைர் அவர்களிடம் பேச்சை நிறுத்தி நீண்ட நாள்களாம்விட்டபோது பனு ஸு ஹ்ரா குலத்தைச் சேர்ந்த மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அஸ்வத் இப்னி அப்தி யகூஸ்(ரலி) ஆகிய இருவரிடமும் இப்னு ஸு பைர்(ரலி),அல்லாஹ்வை முன்வைத்து உங்கள் இருவரிடமும நான் வேண்டுகிறேன். என்னை (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம் அழைத்துச் செல்லக்கூடாதா? என் உறவை முறித்துக் கொள்வதாக அவர்கள் செய்துள்ள சத்தியம் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டதல்லவே!என்று கூறினார்கள். எனவே, மிஸ்வர்(ரலி) அவர்களும் அப்துர் ரஹ்மான்(ரலி) அவர்களும் தம் மேலங்கிகளை அணிந்துகொண்டு இப்னு ஸு பைர்(ரலி) அவர்களுடன் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றார்கள்.

(அங்கு சென்ற) உடனேஅஸ்ஸலாமு அலைக்கி வ ரஹ்மத்துலலாஹி வ பரகாதுஹு என்று சலாம் சொல்லிவிட்டு,நாங்கள் உள்ளே வரலாமா? என்று அனுமதி கேட்டனர். அதற்கு ஆயிஷா(ரலி),உள்ளே வாருங்கள்' என்று அனுமதி வழங்கினார்கள். அப்போது அவர்கள் (மூவரும்)நாங்கள் அனைவரும் உள்ளே வரலாமா? என்று கேட்டனர். ஆயிஷா(ரலி),ஆம் அனைவரும் உள்ளே வாருங்கள்' என்று அவர்கள் இருவருடனும் இப்னு ஸு பைர்(ரலி) இருப்பதை அறிந்து கொள்ளாமலேயே கூறினார்கள்.

அவர்கள் மூவரும் உள்ளே நுழைந்ததும், இப்னு ஸு பைர்(ரலி) (தம் சிறிய தாயாரான ஆயிஷா இருந்த) திரைக்குள் நுழைந்து அவர்களைத் தழுவிக்கொண்டு அவர்களிடம் முறையிட்டு அழத் தொடங்கினார்கள். மிஸ்வர்(ரலி) அவர்களும் அப்துர்ரஹ்மான்(ரலி) அவர்களும் (வெளியே இருந்தபடி) இப்னு ஸு பைர்(ரலி) அவர்களிடம் பேசியே தீரவேண்டும் என்றும் அவருக்காகத் தாங்கள் செய்யும் பரிந்துரையை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் ஆயிஷா(ரலி) அவர்களிடம் வேண்டிக் கொண்டிருந்தனர். மேலும், அவர்கள் இருவரும்,ஒரு முஸ்லிம் தம் சகோதரிடம் மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று என்று நபி(ஸல்) அவர்கள் தடை விதித்துள்ளதை தாங்கள் அறிந்தே உள்ளீர்கள்' என்று கூறினார்கள். ஆயிஷா(ரலி) அவர்களிடம் (உறவைப் பேணுவதன் சிறப்பு குறித்து) கசப்பூட்டியும் அவர்கள் அதிகமாகப் பேசியபோது (தாம் செய்த சத்தியத்தைப் பற்றி) அவர்கள் இருவருக்கும் நினைவூட்டியவாறு ஆயிஷா(ரலி) அழலானார்கள்.

மேலும், (நான் அவரிடம் பேசமாட்டேன் என) சத்தியம் செய்து விட்டேன். சத்தியம் மிகவும் கடுமையானதாகும்' என்று (அவர்கள் இருவரிடமும் திரும்பக் திரும்பக்) கூறிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஆயிஷா(ரலி) இருவரும் (தங்கள் கருத்தை) வலியுறுத்திக்கொண்டேயிருந்தனர். இறுதியில் ஆயிஷா(ரலி) (தம் சகோதரியின் புதல்வர்) இப்னு ஸு பைரிடம் பேசிவிட்டார்கள். தம் சத்தியத்தை முறித்துவிட்டதற்குப் பரிகாரமாக நாற்பது அடிமைகளை விடுதலை செய்தார்கள். அதற்குப் பிறகும் கூடத் தம் சத்தியத்தை நினைவுகூர்ந்து தம் முகத்திரை நனையுமளவிற்கு அவர்கள் அழுவார்கள்.

ஹதீஸ் 6076 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவருக்கொருவர் கோபம் கொள்ளாதீர்கள். பொறாமை கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள். ஒரு முஸ்லிம் தம் சகோதரருடன் (மனஸ்தாபம் கொண்டு) மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6077 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தம் சகோதரரிடம் (மனஸ்தாபம் கொண்டு) மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று. அவர்கள் இருவரும் சந்தித்து ஒருவரைவிட்டு ஒருவர் முகத்தைத் திருப்பிக்கொள்வர். (இவ்வாறு செய்யலாகாது.) ஸலாமை முதலில் தொடங்குகிறவர்தாம் இவர்கள் இருவரில் சிறந்தவராவார்.

என அபூ அய்யூப் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

## (இறை நெறிக்கு) மாறு செய்பவருடன் பேசாமல் இருக்கலாம்.

நான் (மற்றும் இரண்டு நண்பர்கள் தக்கக் காரணமின்றி தபூக் போரில்) நபி(ஸல்) அவர்களுடன் கலந்துகொள்ளாமல் பின்வாங்கியபோது,எங்களுடன் பேச வேண்டாமென்று நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம்களுக்குத் தடை விதித்தார்கள்' என கஅப் இப்னு மாலிக்(ரலி) கூறினார். (இவ்வாறு) ஐம்பது நாள்கள் (பேசாமலிருந்தார்கள்) என்றும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 6078 ஆயிஷா(ரலி) அறிவித்தார்

(என்னிடம்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ,உன்னுடைய கோபத்தையும் உன்னுடைய திருப்தியையும் நான் நன்றாக அறிவேன்' என்று கூறினார்கள். அதற்கு நான்,அதை எவ்வாறு தாங்கள் அறிந்துகொள்வீர்கள்? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்டேன். அதற்கவர்கள்,நீ திருப்தியுடன் இருக்கும்போது (பேசினால்),ஆம் முஹம்மதுடைய அதிபதி மீது சத்தியமாக என்று கூறுவாய். நீ கோபமாய் இருக்கும்போது (பேசினால்),இல்லை இப்ராஹீம்(அலை) அவர்களின் அதிபதி மீது சத்தியமாக என்று கூறுவாய்' என்று கூறினார்கள். நான்,ஆம் (உண்மைதான்). நான் தங்களின் பெயரைத் தான் கோபித்துக் கொள்வேன் (தங்களின் மீதுன்று)' என்று கூறினேன்.

## ஒருவர் தம் தோழரை ஒவ்வொரு நாளும் (ஒரு முறை) சந்திப்பாரா? அல்லது காலை மாலை (இரண்டு முறை) சந்திப்பாரா?

ஹதீஸ் 6079 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்

என் பெற்றோர் (அபூ பக்ர் - உம்மு ரூமான்) எனக்கு விவரம் தெரிந்தது முதல் (இஸ்லாமிய) மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்களாகவே இருந்தார்கள். பகலின் இரண்டு ஓரங்களான காலையிலும் மாலையிலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வருகை தராமல் (மக்காவில்) எந்த நாளும் எங்களுக்குக் கழிந்ததில்லை. நாங்கள் ஒரு நாள் உச்சிப்பொழுதின்போது அபூ பக்ர்(ரலி) அவர்களின் வீட்டில் அமர்ந்துகொண்டிருந்தோம். அப்போது ஒருவர் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம்,இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நம்மிடம் வருகை தராத நேரத்தில் (வழக்கத்திற்கு மாறாக) இதோ வந்து கொண்டிருக்கிறார்கள்' என்று கூறினார். (அதற்கு) அபூ பக்ர்(ரலி) ஏதோ (முக்கிய) விவகாரம் தான் நபியவர்களை இந்த நேரத்தில் (இங்கு) வரச்செய்திருக்கிறது' என்று கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள், (ஹிஜ்ரத்) புறப்பட்டுச் செல்ல எனக்கு (இறைவனிடமிருந்து) அனுமதி வழங்கப்பட்டுவிட்டது' என்றார்கள்.

## சந்திப்பு

ஒருவர் ஒரு கூட்டத்தாரைச் சந்தித்து அவர்களிடம் (சிறிதேனும்) உணவு உண்பது நபி(ஸல்) அவர்கள் காலத்தில் சல்மான் அல்ஃபார்சீ(ரலி) அவர்கள் அபுத்தர்தா(ரலி) அவர்களைச் சந்தித்து அவரிடம் உணவருந்தினார்கள்.

ஹதீஸ் 6080. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அன்சாரிகளில் ஒரு குடும்பத்தாரைச் சந்தித்துவிட்டு அவர்களிடம் உணவருந்தினார்கள். பிறகு அவர்கள் புறப்பட விரும்பியபோது வீட்டில் உள்ள ஓர் இடத்தை ஒதுக்கித் தரும்படி பணித்தார்கள். எனவே, நபியவர்களுக்காகப் பாய் விரிக்கப்பட்டுத் தண்ணீர் தெளிக்கப்பட்டது. அதன் மீது நபியவர்கள் தொழுதார்கள். அக்குடும்பத்தினருக்காகப் பிரார்த்தனையும் புரிந்தார்கள்.

## (தம்மைச் சந்திக்கவரும்) தூதுக் குழுவினர்களுக்காக ஒருவர் தம்மை (ஆடையணிகலன்களால்) அலங்கரித்துக் கொள்வது.

ஹதீஸ் 6081. யஹ்யா இப்னு அபீ இஸ்ஹாக் அல் ஹள்ரமீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

சாலிம் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் என்னிடம், அல்இஸ்தப்ரக் என்றால் என்ன? என்று கேட்டார்கள். நான், கெட்டியான முரட்டுப் பட்டு' என்று பதிலளித்தேன். அப்போது அவர்கள், (என் தந்தை) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறக்கேட்டுள்ளேன் என்றார்கள் (என் தந்தை) உமர்(ரலி) அவர்கள் ஒருவரின் மீது கெட்டியான பட்டு அங்கி ஒன்றைக் கண்டார்கள். அதை (அவரிடமிருந்து வாங்கி) நபி(ஸல்) அவர்களிடம் கொண்டுவந்துஇறைத்தூதர் அவர்களே! இதைத் தாங்கள் விலைக்கு வாங்கி மக்களின் தூதுக் குழு தங்களிடம் வரும்பொழுது இதைத் தாங்கள் அணிந்து கொள்ளுங்கள்' என்றார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள், (மறுமைப்) பேறற்ற (ஆட)வர்களே (இது போன்ற) பட்டை (இம்மையில்) அணிந்துகொள்வார்கள்' என்றார்கள்.

இது நடந்து சில நாள்கள் கழிந்த பிறகு (ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் உமர்(ரலி) அவர்களுக்கு ஒரு பட்டு அங்கியை கொடுத்தனுப்பினார்கள். உடனே அதை எடுத்துக் கொண்டு உமர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, இதை எனக்குத் தாங்கள் கொடுத்தனுப்பியுள்ளீர்கள். (ஆனால்) இது போன்ற (பட்டு அங்கி) விஷயத்தில் தாங்கள் வேறு விதமாகக் கூறினீர்களே? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், (இதை விற்று) இதன் மூலம் (வருவாயாகக் கிடைக்கும்) செல்வத்தை நீங்கள் அடைந்துகொள்ளும் பொருட்டே இதை உங்களுக்கு நான் கொடுத்தனுப்பினேன்' என்றார்கள்.

இந்த நபி மொழியின் காரணமாகவே இப்னு உமர்(ரலி) அவர்கள் ஆடையில் வேலைப்பாடு செய்யப்படுவதை வெறுப்பவர்களாக இருந்தார்கள்.

## (ஒப்பந்த அடிப்படையில் இருவருக்கிடையே) சகோதரத்துவத்தையும் (குலங்களிடையே) நட்புறவையும் ஏற்படுத்துவது.

அபூ ஜு ஹைஃபா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்கள் சல்மான் அல் ஃபார்சீ(ரலி) அவர்களுக்கும் அபுத்தர்தா(ரலி) அவர்களுக்கும் இடையே சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நாங்கள் மதீனா வந்தபோது எனக்கும் ஸஅத் இப்னு ரபீஉ (ரலி) அவர்களுக்கும் இடையே நபி (ஸல்) அவர்கள் சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள்.

ஹதீஸ் 6082. அனஸ் (ரலி) அறிவித்தார்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் (மதீனாவாசிகளான) எங்களிடம் (ஹிஜ்ரத் செய்து) வந்தபோது அவர்களுக்கும் ஸஅத் இப்னு ரபீஉ (ரலி) அவர்களுக்குமிடையே நபி (ஸல்) அவர்கள் சகோதரத்துவத்தை ஏற்படுத்தினார்கள். பிறகு (அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் மணமுடித்துக் கொண்டபோது அவரிடம்) ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா (மணவிருந்து) கொடுங்கள் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6083. ஆஸிம் இப்னு சுலைமான் அல் அஹ்வல் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம்இஸ்லாத்தில் (மனிதர்களாக ஏற்படுத்திக் கொள்கிற ஒப்பந்த) நட்புறவு முறை இல்லை என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் எனத் தங்களுக்குச் செய்தி கிடைத்தா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், நபி (ஸல்) அவர்கள் என்னுடைய வீட்டில் வைத்து குறைஷி (முஹாஜிர்) களுக்கும் (மதீனா) அன்சாரிகளுக்கும் இடையே நட்புறவு முறையே ஏற்படுத்தியிருந்தார்களே!என்றார்கள்.

## புன்னகையும் சிரிப்பும்

ஃபாத்திமா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் என்னிடம் இரகசியமாக (ஒன்றை)ச் சொன்னார்கள். உடனே நான் சிரித்தேன்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நிச்சயமாக அல்லாஹ்வே சிரிக்க வைக்கிறான் அழச் செய்கிறான்.

ஹதீஸ் 6084. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ரிஃபாஆ அல்குறழீ (ரலி) அவர்கள் தம் துணைவியாரை ஒட்டுமொத்த மணவிலக்குச் செய்துவிட்டார்கள். அவருக்குப் பிறகு அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர் (ரலி) அவர்கள் அவரை மணந்தார்கள். அப்போது அவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! நான் ரிஃபாஆ அவர்களிடம் (மனைவியாக) இருந்தேன். என்னை அவர் மூன்று தலாக்குகளில் இறுதித் தலாக் சொல்லிவிட்டார். அவருக்குப் பிறகு என்னை அப்துர் ரஹ்மான் இப்னு ஸபீர் மணந்தார். அல்லாஹ்வின் மீதாணையாக! இரண்டாம் கணவரான) இவருக்கு (இனஉறுப்பு என்று) இருப்பதெல்லாம் இதோ இந்த (முகத்திரையின்) குஞ்சத்தைப் போன்றுதான்‘ என்று கூறி தம் முகத்திரையின் குஞ்சத்தைப் பிடித்துக் காட்டினார். (அப்போது) அபூ பக்ர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தார்கள். காலித் இப்னு ஸயீத் இப்னு ஆஸ் (ரலி) அவர்கள் அந்த அறையின் வாசலில் அனுமதிக்காக (காத்துக்கொண்டு) அமர்ந்திருந்தார்கள். காலித் அவர்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களை அழைத்து, அபூ பக்ரே! இறைத்தூதர் (ஸல்) அவர்களின் முன்னிலையில் பகிரங்கமாக இப்படிப் பேசக்கூடாதென இவரை நீங்கள் கண்டிக்கக் கூடாதென? என்று கேட்கலானார்கள். (ஆனால்) இறைத்தூதர் (ஸல்) அவர்களோ புன்னகை செய்ததைவிடக் கூடுதலாக (வேறெதும்) செய்யவில்லை.

பிறகு நபி (ஸல்) அவர்கள் (அப்பெண்ணிடம்), நீ (முதல் கணவர்) ரிஃபாஆவிடமே திரும்பச் செல்ல விரும்புகிறாய் போலும், நீ (உன் இரண்டாம் கணவரான) இவரிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும், இவர் உன்னிடம் (தாம்பத்திய) இன்பத்தை அனுபவிக்கும் வரையிலும் அது முடியாது‘ என்றார்கள்.

ஹதீஸ் 6085. ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வீட்டுக்குள் வர) அவர்களிடம் உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள் அனுமதி கேட்டார்கள். அப்போது நபியவர்களிடம் (அவர்களின் துணைவியரான) குறைஷிப் பெண்கள் (குடும்பச் செலவுத் தொகையை) அதிகமாக்கித் தரும்படி குரலை உயர்த்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். உமர்(ரலி) அவர்கள் அனுமதி கேட்டபோது அப்பெண்கள் அவசர அவசரமாகத் தங்கள் பர்தாக்களை அணிந்(தபடி எழுந்)து கொண்டனர். நபி(ஸல்) அவர்கள் அனுமதி கொடுத்த உடன் உமர்(ரலி) அவர்கள் உள்ளே வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது உமர்(ரலி) அவர்கள்இறைத்தூதர் அவர்களே! தங்களை அல்லாஹ் (வாழ்நாள் முழுதும்) சிரித்தபடி (மகிழ்ச்சியாக) இருக்கச் செய்வானாக! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்என்னிடமிருந்த இந்தப் பெண்களைக் கண்டு நான் வியப்படைகிறேன். (என்னிடம் சகஜமாக அமர்ந்திருந்த இவர்கள்) உங்கள் குரலைக் கேட்டவுடன் அவசர அவசரமாகப் பர்தா அணிந்துகொண்(டு உள்ளே சென்று விட்)டார்களே!என்றார்கள். அதற்கு உமர்(ரலி) அவர்கள், இவர்கள் (எனக்கு அஞ்சுவதை விட) அதிகமாக அஞ்சத் தாங்கள் தாம் தகுதியுடையவர்கள், இறைத்தூதர் அவர்களே! என்று கூறிவிட்டுப் பிறகு அப்பெண்களை நோக்கி, தமக்குத் தாமே பகைவர்களாகி விட்ட பெண்களே! அல்லாஹ்வின் தூதருக்கு அஞ்சாமல் எனக்கா நீங்கள் அஞ்சுகின்றீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அந்தப் பெண்கள், அல்லாஹ்வின் தூதருன் ஒப்பிடும்போது நீங்கள் கடின சித்தமுடையவராகவும் கடுமை காட்டக் கூடியவராகவும் இருக்கின்றீர்கள்' என்று பதிலளித்தார்கள்.

(அப்போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அது இருக்கட்டும் கத்தாபின் புதல்வரே! என் உயிர் யார் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! நீங்கள் ஓர் அகன்ற பாதையில் சென்று கொண்டிருக்கையில் உங்களை ஷைத்தான் எதிர்கொண்டால் உங்களுடைய பாதையல்லாத வேறு பாதையில் தான் அவன் செல்வான்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6086. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாயிஃபில் (அதனை முற்றுகையிட்ட படி) இருந்துகொண்டிருந்தபோது, இறைவன் நாடினால் நாம் நாளை (மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்' என்றார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களில் சிலர், தாயிஃபை வெற்றி கொள்ளும் வரை நாங்கள் (திரும்பச் செல்ல மாட்டோம்) இங்கேயே இருப்போம்' என்று கூறினார்கள். (அவர்களின் தயக்கத்தைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள், முற்பகலிலேயே போர் புரியுங்கள்' என்றார்கள். அவ்வாறே எதிரிகளுடன் அவர்கள் கடுமையாகப் போர் புரிந்ததில் அவர்களுக்கு அதிகமான காயங்கள் ஏற்பட்டன.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், இறைவன் நாடினால் நாளை நாம் (மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்' என்றார்கள். நபித்தோழர்கள் இப்போது (ஏதும் பதிலளிக்காமல் அதை ஆதரிக்கும் வகையில்) அமைதியாக இருந்தார்கள். இதைக் கண்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.

ஹதீஸ் 6087. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, நான் அழிந்துவிட்டேன் நான் ரமளான் மாதத்தில் (நோன்பு நோற்றுக் கொண்டு) என் மனைவியுடன் புணர்ந்துவிட்டேன்' என்றார். நபி(ஸல்) அவர்கள், இதற்குப் பரிகாரமாக) ஓர் அடிமையை விடுதலை செய்வீராக' என்றார்கள். அவர், என்னிடம் அடிமை இல்லை' என்றார். நபி(ஸல்) அவர்கள், அவ்வாறாயின் தொடர்ந்து இரண்டு மாதம் நோன்பு நோற்பீராக' என்றார்கள். அவர், எனக்கு சக்தியில்லை' என்றார். நபி(ஸல்) அவர்கள், அவ்வாறாயின் அறுபது ஏழைகளுக்கு உணவளிப்பீராக' என்று கூறினார்கள். அவர், என்னிடம் ஏதுமில்லை' என்றார் அப்போது நபி(ஸல்) அவர்களிடம்அரக் கொண்டு வரப்பட்டது. அதில் பேரீச்சம்பழம் இருந்தது.

அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்ராஹீம் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:அரக் என்பது (15ஸாஉ பிடிக்கும்) ஒரு முகத்தலளவை ஆகும்.

அப்போது நபி(ஸல்) அவர்கள்,கேள்வி கேட்டவர் எங்கே? என்று கேட்க, அவர் வந்தார். அவரிடம்)இதைப் பெற்று தர்மம் செய்வீராக!என்றார்கள். அந்த மனிதர்என்னை விட ஏழையாக இருப்போருக்கா நான் தர்மம் செய்வது? கருங்கற்கள் நிறைந்த (மதினாவின்) இரண்டு மலைகளுக்கு இடைப்பட்ட பகுதியில் எங்களை விடப் பரம ஏழையான குடும்பத்தார் யாருமில்லை' என்றார். (இகை் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள். (பிறகு)அவ்வாறாயின் நீங்களே (அதற்கு உரியவர்கள்)' என்றார்கள்.

ஹதீஸ் 6088. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நடந்து கொண்டிருந்தேன். அப்போது அவர்கள் தடித்த கரை கொண்ட நஜ்ரான் நாட்டு சால்வை ஒன்றைப் போர்த்தியிருந்தார்கள். அப்போது கிராமவாசி ஒருவர் அவர்களை நெருங்கி அந்தச் சால்வையால் (அவர்களை) வேகமாக இழுத்தார். அந்தக் கிராமவாசி வேகமாக இழுத்ததால் சால்வையின் ஓரப்பகுதி நபி(ஸல்) அவர்களின் தோள்பட்டையில் அடையாளம் பதித்துவிட்டிருந்ததை கண்டேன். பிறகு அவர்,முஹம்மதே! உங்களிடமுள்ள அல்லாஹ்வின் செல்வத்திலிருந்து எனக்குக் கொடுக்கும்படி கட்டளையிடுங்கள்' என்றார்.

உடனே நபி(ஸல்) அவர்கள் அவரைத் திரும்பிப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பிறகு அவருக்குக் கொடுக்கும்படி ஆணையிட்டார்கள்.

ஹதீஸ் 6089. ஜரீர் இப்னு அப்தில்லாஹ் அல்பஜலீ(ரலி) அறிவித்தார்.

நான் இஸ்லாத்தை தழுவியதிலிருந்த நான் நபியவர்களைச் சந்திக்க அனுமதி கேட்ட எந்தச் சமயத்திலும்) நபி(ஸல்) அவர்கள் என்னைத் தடுத்ததில்லை புன்முறுவலுடன் (சிரத்தவர்களாகவே) அல்லாமல் வேறுவிதமாக அவர்கள் என் முகத்தைப் பார்த்ததில்லை.

இதைக் கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 6090. என்னால் குதிரையில் சரியாக அமர முடியவில்லை' என்று நபி(ஸல்) அவர்களிடம் நான் முறையிட்டேன். அவர்களை என் நெஞ்சில் தம் கரத்தால் அடித்து,இறைவா! இவரை உறுதிப்படுத்துவாயாக. இவரை நேர்வழி காட்டுபவராகவும் நேர்வழியில் செலுத்தப் பெற்றவராகவும் ஆக்குவாயாக' என்று பிரார்த்தனை செய்தார்கள்.

ஹதீஸ் 6091. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

உம்மு சுலைம்(ரலி) அவர்கள் (நபி(ஸல்) அவர்களிடம்)இறைத்தூதர் அவர்களே! சத்தியத்தைக் கூற அல்லாஹ் வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்குத் தூக்கத்தில் ஸ்கலிதம் ஏற்பட்டால் அவளின் மீது குளிப்பு கடமையாகுமா? என்ற கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஆம் அவள் (மதன) நீரைப் பார்த்தால் (குளிப்பது அவளின் மீது கடமைதான்.)' என்று பதிலளித்தார்கள். இதைக் கேட்டு நான் சிரித்தவாறு,பெண்ணுக்குக் கூடவா தூக்க ஸ்கலிதம் ஏற்படும்? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,பிறகு எவ்வாறு குழந்தை (தாயின்) சாயலில் பிறக்கிறது? என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6092. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களை நான் ஒருபோதும் ஒரேயடியாகத் தம் உள்நாக்குத் தெரியும் அளவுக்குச் சிாக்கக் கண்டதில்லை. அவர்கள் (பெரும்பாலும்) புன்னகைப்பவர்களாகவே இருந்தார்கள்.

ஹதீஸ் 6093. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவில் வெள்ளிக்கிழமை (ஜு முஆ நாளில்) உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது (கிராமவாசி) ஒருவர் வந்து,(இறைத்தூதர் அவர்களே! மழை பொய்ந்துவிட்டது. (எங்களுக்கு) மழை வேண்டிய உங்களுடைய இறைவனிடம் பிரார்த்தனை புரியுங்கள்' என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வானத்தை (அண்ணாந்து) பார்த்தார்கள். (அதில் மழை) மேகம் ஏதும் இருக்கவில்லை. அப்போது நபி(ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்தித்தார்கள். உடனே மேகம் ஒன்றொடொன்று திரள ஆரம்பித்தது. பிறகு மழை பொழிந்தது. இதையடுத்து மதீனாவின் நீர்வழிகள் (எல்லாம் நிரம்பி) வழிந்தோடின. இடையறாமல் அடுத்த ஜு முஆ வரை அம்மழை நீடித்தது.

பிறகுஅந்த மனிதர் அல்லதுவேறொரு மனிதர் எழுந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் (ஜு முஆ) உரை நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள். அவர்,(தொடர்) மழையினால் நாங்கள் மூழ்கிக் கொண்டிருக்கிறோம். எங்களைவிட்டு மழையை நிறுத்துமாறு உங்களுடைய இறைவனிடம் பிரார்த்தியுங்கள்' என்றார். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள் சிரித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வே! எங்கள் சுற்றுப்புறங்களில் (உள்ள மானாவாரி நிலங்கள், நீர்நிலைக்கு ஆகியவற்றுக்கு இம்மழையைப் பொழியச் செய்வாயாக!) எங்களுக்குப் பாதகமாக இதை நீ ஆக்கிவிடாதே! என்று இரண்டு அல்லது மூன்று முறைப் பிரார்த்தித்தார்கள். அந்த(த் திரண்ட) மேகம் மதீனாவிலிருந்து (விலகி) வலப் பக்கமாகவும் இடப்பக்கமாகவும் பிரிந்து சென்றது. மதீனாவைச் சுற்றி மழை பொழிகிறது. ஆனால் மதீனாவுக்குள் சிறிதும் பெய்யவில்லை. தன்னுடன் தூதரின் மதிப்பையும் அவர்களின் பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்பட்டதையும் இறைவன் மக்களுக்கு (நேரடியாகக்) காட்டினான்.

"இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள் மேலும், வாய்மையாளர்களுடன் இருங்கள்' எனும் (திருக்குர்ஆன் 09:119 வது ) இறைவசனமும், பொய் தடை செய்யப்பட்டிருப்பதும்.

ஹதீஸ் 6094. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உண்மை, நிச்சயமாக நன்மைக்கு வழிகாட்டும், நன்மையானது நிச்சயம் சொர்க்கத்திற்கு வழிகாட்டும். ஒருவர் உண்மை பேசிக்கொண்டே இருப்பார். இறுதியில் அவர்வாய்மையாளர் (சித்தீக் எனும் பெயருக்கு உரியவர்) ஆம்விடுவார். (இதைப் போன்றே) பொய் நிச்சயமாகத் தீமைக்கு வழிவகுக்கும் தீமை நரகத்திற்கு வழிவகுக்கும். ஒருவர் பொய் பேசிக் கொண்டேயிருப்பார். இறுதியில் அவர் அல்லாஹ்விடம்பெரும் பொய்யர் எனப் பதிவு செய்யப்பட்டுவிடுவார்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6095. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்று. பேசினால் பொய் சொல்வான் வாக்களித்தால் மாறு செய்வான் அவனை நம்பி எதையும் ஒப்படைத்தால் (அதில் மோசடி செய்வான்)

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6096. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் இன்றிரவு (கனவில்) இருவரைப் பார்த்தேன். அவர்கள் என்னிடம் வந்து (என்னைப் பல இடங்களுக்கும் அழைத்துச் சென்று பல காட்சிகளைக் காட்டினார்கள். அவற்றில் ஒன்றுக்கு விளக்கமளிக்கையில்)தாடை சிதைக்கப்பட்ட நிலையில், நீங்கள் பார்த்தீர்களே அவர் பெரும் பொய்யர். அவர் பொய் பேச, அத அவரிடமிருந்து பரவி உலகம் முழுவதையும் அடையும். எனவே, (நீங்கள் பார்த்த) அந்தத் தண்டனை அவருக்கு மறுமை நாள் வரை கொடுக்கப்படும். என்று கூறினார்கள்.

என சமுரா இப்னு ஜு ன்தப்(ரலி) அறிவித்தார்.

## நன்னடத்தை

ஹதீஸ் 6097. ஹுதைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அசைவு(நடை), தோற்றம் (உடை), நடத்தை(பாவனை) ஆகிய அனைத்திலும் மக்களிலேயே மிகவும் ஒப்பானவர். அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அவர்கள் தாம். (இப்னு உம்மி அப்த் எனப்படும் அவர்கள்) தம் இல்லத்திலிருந்து புறப்பட்டது முதல் வீடு திரும்பும் வரை (அவ்வாறு இருப்பார்கள்) தம் வீட்டாருடன் தனியாக இருக்கும்போது அவர்கள் எவ்வாறு நடந்துகொள்வார்கள் என்று எங்களுக்குத் தெரியாது.

(அறிவிப்பாளர்) இஸ்ஹாக் இப்னு இப்ராஹீம்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

நான் அபூ உசாமா(ரஹ்) அவர்களிடம்இந்த ஹதீஸை அஃமஷ்(ரஹ்) அவர்கள் தங்களுக்கு அறிவித்தார்கள்? என்று கேட்டேன். (அதற்கு அவர்கள்ஆம் என்றார்கள்.)

ஹதீஸ் 6098. தாரிக் இப்னு ஷிஹாப்(ரஹ்) அவர்கள் கூறினார்:

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அவர்கள்,உரையில் சிறந்தது அல்லாஹ்வின் வேதம் (குர்ஆன்) ஆகும். நடத்தையில் சிறந்தது முஹம்மத்(ஸல்) அவர்களின் நடத்தையாகும்' என்று கூறினார்கள்.

## மனவேதனையின்போது பொறுமை காப்பது.

அல்லாஹ் கூறினான்:

பொறுமையாளர்கள் தங்களின் பிரதிபலனை கணக்கின்றியே பெறுவார்கள். (திருக்குர்ஆன் 39:10)

ஹதீஸ் 6099. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனவேதனைக்குள்ளாகக்கும் செய்தி கேட்டும் (உடனே தண்டித்துவிடாமல்) மிகவும் பொறுமை காப்பவர் அல்லாஹ்வை விட வேறுயாருமில்லை அல்லதுஏதுமில்லை மனிதர்கள் (சிலர்) அவனுக்குக் குழந்தை இருப்பதாகக் கூறுகின்றனர். (இது அவனோ அவர்களுக்கு உடல் நலத்தையும் உணவு வளத்தையும் வழங்கிக் கொண்டிருக்கிறான்.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6100. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஹுனைன் போரில் கிடைத்த செல்வங்களை) வழக்கமாகப் பங்கிடுவதைப் போன்று பங்கிட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர்,அல்லாஹ்வின் மீதாணையாக! இது அல்லாஹ்வின் திருப்தி நாடப்படாத பங்கீடாகும்' என்று (அதிரப்தியுடன்) கூறினார்.

நான்,நிச்சயம் (இதைப் பற்றி) நபி(ஸல்) அவர்களிடம் சொல்வேன்' என்று கூறிவிட்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களிடையே இருந்தார்கள். நபி(ஸல்) அவர்களிடம் இதை இரகசியமாகச் சொன்னேன். அது நபி(ஸல்) அவர்களுக்கு மனவருத்தத்தை அளித்தது. அவர்களின் முகமே (நிறம்) மாறிவிட்டது. (அந்த அளவிற்கு) அவர்கள் கோபமடைந்தார்கள். இதையடுத்து நான் அவர்களிடம் (அது பற்றித்) தெரிவிக்காமல் இருந்திருக்கலாமே என்று நினைத்தேன். பிறகு நபி(ஸல்) அவர்கள்,(இறைத்தூதர்) மூஸா இதைவிட அதிகமாக மன வேதனைக்கு ஆளாக்கப்பட்டார். இருப்பினும் (பொறுமையுடன்) அவர் சகித்துக் கொண்டார்' என்றார்கள்.

## மக்களை நேருக்கு நேர் கண்டிக்(கத் தயங்கி முகத்தை முறிக்)காமலிருப்பது.

ஹதீஸ் 6101. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒன்றைச் செய்தார்கள். (மற்றவர்களுக்கும்) அதைச் செய்ய அனுமதி அளித்தார்கள். அப்போது ஒரு கூட்டத்தார் அதைச் செய்வதிலிருந்து தவிர்த்துகொண்டனர். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது (மக்களிடையே) உரையாற்றினார்கள். அப்போது அல்லாஹ்வைப் புகழ்ந்துவிட்டு, சிலருக்கு என்ன நேர்ந்தது? நான் செய்கிற ஒன்றைச் செய்வதிலிருந்து தவிர்த்துகொள்கிறார்களாமே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களைவிட அல்லாஹ்வை மிகவும் அறிந்தவன் அவனை மிகவும் அஞ்சி நடப்பவன் ஆவேன்‘ என்றார்கள்.

(சம்பந்தப்பட்டவர்களை நேரடியாகக் கண்டிக்கவில்லை.)

ஹதீஸ் 6102. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் திரைக்குள் இருக்கும் கன்னிப் பெண்ணைவிடவும் அதிக வெட்கமுடையவர்களாயிருந்தார்கள். தாம் விரும்பாத ஒன்றை அவர்கள் பார்த்துவிட்டால், அந்த வெறுப்பினை அவர்களின் முகத்திலிருந்தே நாங்கள் அறிந்துவிடுவோம்.

## தகுந்த காரணமின்றி தம் சகோதரரை இறைமறுப்பாளர் என்று கூறுகிறவர், அவர் தாம் அப்படி ஆவார்.

ஹதீஸ் 6103. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தம் (முஸ்லிம்) சகோதரரை நோக்கிகா∴பிரே! (இறைமறுப்பாளனே!) என்று கூறினால் நிச்சயம் அவர்களிருவரில் ஒருவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6104. ஒருவர் தம் (முஸ்லிம்) சகோதரரைப் பார்த்து கா∴பிரே! (இறைமறுப்பாளனே!) என்று அழைத்தால் அவர்கள் இருவரில் ஒரவர் அச்சொல்லுக்கு உரியவராகத் திரும்புவார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6105. இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது பொய்ச் சத்தியம் செய்கிறவர் தாம் சொன்னதைப் போன்றே ஆம்விடுகிறார் எதன் மூலம் ஒருவர் தம்மைத் தற்கொலை செய்து கொள்கிறாரோ அதன் மூலம் அவர் நரக நெருப்பில் வேதனை செய்யப்படுவார். இறைநம்பிக்கையாளரை சபிப்பது அவரைக் கொலை செய்வதைப் போன்றதாகும். இறைநம்பிக்கையாளர் ஒருவரை இறைமறுப்பாளர் என்று ஒருவர் அவதூறு சொல்வதுவும் அவரைக் கொலை செய்வதைப் போன்றதாகும்.

## தகுந்த காரணத்தினாலோ அறியாமையினாலோ அவ்வாறு (முஸ்லிமை இறைமறுப்பாளர் என்று) கூறியவர் கா∴பிராம் விடுவதில்லை எனக் கருதுவோரின் கூற்று.

உமர்(ரலி) அவர்கள், ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ(ரலி) அவர்களைப் பார்த்து, (அவர் முஸ்லிம்களின் இரகசியங்களை எதிரிகளுக்குத் தெரிவித்துக் கடிதம் எழுதிய போது) இவர் நயவஞ்சகர்‘ என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், (ஹாத்திப் பத்ருப் போரில் பங்கெடுத்தவர். எனவோ, உமரே!) உமக்கென்ன தெரியும்? ஒரு வேளை அல்லாஹ், பத்ருப் போரில் பங்கேற்றவர் மன்னித்துவிட்டேன் என்று கூறிவிட்டிருக்கலாம்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6106. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களுடன் தொழுதுவிட்டுப் பிறகு தம் (பனு ஸலமா) கூட்டத்தாரிடம் சென்று அவர்களுக்கு (நபி(ஸல்) அவர்களுடன் தொழுத) அதே தொழுகையைத் தொழுகை நடத்துவது வழக்கம். (ஒரு முறை அவர் இஷாத் தொழுகை நடத்தும்போது) அவர்களுக்கு (நீண்ட அத்தியாயமான)அல்பகரா எனும் (2 வது) அத்தியாயத்தை ஓதினார். அப்போது ஒருவர் (தனியாக விலகிச் சென்று) விரைவாகத் தொழுது(விட்டுத் தம் பணியைக் கவனிக்கச் சென்று)விட்டார். இச்செய்தி முஆத்(ரலி) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள்,அவர் ஒரு நயவஞ்சகர் (முனா∴பிக்)‘ என்றார்கள். அந்த மனிதருக்கு இச்செய்தி எட்டியதும் அவர் நபி(ஸல்) அவர்களிடம் சென்று,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் உழைக்கும் வர்க்கத்தினர். எங்கள் ஒட்டகங்களின் மூலம் நீர்ப் பாய்ச்சுவோம். இந்நிலையில் முஆ அவர்கள் நேற்றிரவு எங்களக்குத் தொழுகை நடத்தியபோது (நீண்ட அத்தியாயமான) அல்பகராவை ஓதினார்கள். எனவே, நான் (விலகித் தனியாகச் சென்று) விரைவாகத் தொழுதேன். இதனால் அவர் என்னை நயவஞ்சகன் என்று சொன்னாராம்‘ என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் (முஆத்(ரலி) அவர்களிடம்),முஆதே! (நீரென்ன) குழப்பவாதியா? என்று மூன்று முறை கேட்டார்கள். மேலும்,(நீர் இமாமாக நிற்கும் போது) ஸப்பிஹிஸ்ம ரப்பிக்க, வஷ்ஷம்ஸி வளுஹாஹா போன்ற (சற்று சிறிய) அத்தியாயங்களை ஓதும்!என்றும் சொன்னார்கள்.

ஹதீஸ் 6107. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் யார் சத்தியம் செய்யும்போது (அறியாமைக் கால தெய்வச் சிலைகளான)லாத்‘தின் மீதும்உஸ்ஸா‘வின் மீதும் சத்தியமாக என்று கூறிவிட்டாரோ அவர் (அதற்கு பரிகாரமாக)லாயிலாஹ இல்லல்லாஹு (வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை) என்று சொல்லட்டும். தம் நண்பரிடம்,வா! சூது விளையாடுவோம் என்று கூறுகிறவர் (அதற்குப் பரிகாரமாக எதையேனும்) தர்மம் செய்யட்டும். என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6108. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள் பயணிகள் சிலரிடையே இருந்து கொண்டிருந்தபோது அவர்களை அடைந்தேன். அப்போது உமர்(ரலி) அவர்கள் தம் தந்தையின் மீது சத்தியம் செய்தார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களை அழைத்து,அறிந்து கொள்ளுங்கள்! உங்கள் தந்தையர் மீது சத்தியம் செய்வதை அல்லாஹ் உங்களுக்குத் தடை செய்துவிட்டான். சத்தியம் செய்யமுற்படுபவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும். அல்லது மௌனமாக இருந்துவிடட்டும் என்று கூறினார்கள்.

## இறை ஆணை(மீறப்பட்டது)க்காகக் கோபப்படுவதும் கடுமையாக நடந்து கொள்வதும் அனுமதிக்கப்பட்டதே.

அல்லாஹ் கூறினான்: நபியே! (உங்களுடன் போரிடும் இந்த) இறைமறுப்பாளர்களுடனும் நயவஞ்சகர்களுடனும் நீங்களும் போரிடுங்கள் அவர்களிடம் கண்டிப்புடன் நடந்து கொள்ளுங்கள். (திருக்குர்ஆன் 66:09)

ஹதீஸ் 6109. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு பயணத்தை முடித்துக் கொண்டு) என்னிடம் வந்தார்கள். என் வீட்டில் உருவப் படங்கள் உள்ள திரைச் சீலை ஒன்றிருந்தது. (அதைக் கண்ட) நபி(ஸல்) அவர்களின் முகம் (கோபத்தினால்) நிறமாறிவிட்டது. பிறகு அவர்கள் அந்தத் திரையை எடுத்துக் கிழித்துவிட்டார்கள். மேலும் அவர்கள்,மறுமை நாளில் மக்களிலேயே மிகக் கடினமான வேதனைக்குள்ளாவோரில் இந்த உருவப் படங்களை வரைகிறவர்களும் அடங்குவர்‘ என்றார்கள்.

ஹதீஸ் 6110. அபூ மஸ்ஊத் உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து.இறைத்தூதர் அவர்களே!) இன்ன மனிதர் எங்களுக்குத் தொழுகையை நீட்டுவதால் நான் அதிகாலை(க் கூட்டு)த் தொழுகைக்கு (ஃபஜ்ருடைய ஜமாஅத்திற்கு)ச் செல்வதில்லை' என்று கூறினார். இதைக் கேட்டதும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஆற்றிய உரையின்போது முன் எப்போதும் இல்லாத அளவுக்குக் கடிமையாகக் கோபம் கொண்டதை கண்டேன். அப்போது அவர்கள்,மக்களே! (வணக்க வழிபாடுகளில்) வெறுப்பை ஏற்படுத்துகிறவர்களும் உங்களில் உள்ளனர். உங்களில் யாரேனும் மக்களுக்கு (தலைமையேற்றுத்) தொழுகை நடத்தினால் அவர் சுருக்கமாகத் தொழுகை நடத்தட்டும். ஏனெனில், மக்களில் நோயாளிகளும் முதியோரும் அலுவல் உடையோரும் இருக்கின்றனர்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6111. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) தொழுது கொண்டிருக்கையில் பள்ளிவாசலின் கிப்லாத் திசையில் (சுவரில் உமிழப் பட்டிருந்த) சளியைக் கண்டார்கள். அதனால் கோபமடைந்த அவர்கள் அதை (மட்டை ஒன்றினால்) தம் கரத்தாலேயே சுரண்டிவிட்டார்கள். பிறகு,நீங்கள் தொழுகையில் இருக்கும்போது இறைவன் உங்கள் எதிரே இருக்கிறான். எனவே, எவரும் தொழுகையில் இருக்கும்போது தம் முகத்துக்கு எதிரே உமிழ வேண்டாம்' என்றார்கள்.

ஹதீஸ் 6112. ஸைத் இப்னு காலித் அல்ஜுஹனீ(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் (சாலையில்) கண்டெடுக்கும் பொருளைப் பற்றிக் கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஒரு வருட காலத்திற்கு அதைப் பற்றி அறிவிப்புச் செய்! பிறகு, அதன் முடிச்சையும் அதன் பை(உறை)யையும் பாதுகாத்து வைத்திரு! பிறகு (யாரும் உரிமை கோராவிட்டால்) நீயே அதனைச் செலவழித்துக் கொள்! பின்னர் அதன் உரிமையாளர் உன்னிடம் (அதன் அடையாளத்தைக் கூறியபடி) வந்தால் அவரிடம் அதை ஒப்படைத்து விடு!என்றார்கள்.

அந்த மனிதர்,இறைத்தூதர் அவர்களே! வழிதவறி (நம்மிடம் வந்து சேர்ந்து)விட்ட ஆட்டை என்ன செய்வது? என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,அதை நீ பிடித்துக் கொள். ஏனெனில், அது உனக்கு உரியது அல்லது உன் சகோதரருக்கு உரியது அல்லது ஓநாய்க்குரியது' என்றார்கள். அந்த மனிதர்,இறைத்தூதர் அவர்களே! வழிதவறி வந்த ஒட்டகத்தை என்ன செய்வது? என்று கேட்டார். (இதை அவர் கேட்ட) உடன் கோபத்தால் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இரண்டு கன்னங்களும் சிவந்துவிட்டன அல்லதுஅவர்களின் முகம் சிவந்துவிட்டது'. பிறகுஉனக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? அதை அதன் எசமான் சந்திக்கும் வரை (நடப்பதற்கு) அதன் குளம்பும் (குடிப்பதற்கு) அதன் தண்ணீர் பையும் அதனிடம் உள்ளதே!என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6113. ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ரமளான் மாதத்தின் ஓர் இரவில்) பாயினால் ஒரு சிறிய அறையை (பள்ளிவாசலில்) அமைத்துக் கொண்டு அதில் தொழுவதற்காகப் புறப்பட்டார்கள். அந்த இடத்தைத் தேடி (நபித்தோழர்களில்) சிலரும் வந்து நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றித் தொழலாயினர். பிறகு அடுத்த நாள் இரவும் வந்து கூடினர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தோழர்களிடம் வராமல் தாமதப்படுத்தினார்கள். எனவே, தோழர்கள் தங்களின் குரலை எழுப்பி (சப்தமிட்ட)னர். (நபியவர்களுக்கு நினைவூட்ட அவர்களின் வீட்டுக்) கதவின் மீது சிறு கற்களை எறிந்தனர்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கோபத்துடன் அவர்களை நோக்கி வந்து, (இத்தொழுகையில் கலந்துகொள்ளும்) உங்களுடைய இச்செய்ல தொடர்ந்து கொண்டே போகிறது. (இத்தொழுகை) உங்களின் மீது கடமையாக்கப்பட்டுவிடுமோ என்று நான் எண்ணி (அஞ்சி)னேன். (எனவேதான் இன்று நான் உங்களிடம் வரவில்லை.) எனவே, உங்கள்

இல்லங்களிலேயே (கூடுதலான ந..பில்) தொழுகையைத் தொழுதுவாருங்கள். கடமையாக்கப்பட்ட தொழுகை தவிர மற்ற தொழுகைகளை ஒருவர் தம் வீட்டிலேயே நிறைவேற்றுவது தான் சிறந்ததாகும்' என்றார்கள்.

## கோபத்தைத் தவிர்த்தல்

அல்லாஹ் கூறினான்:

(இறைவனையே முற்றிலும் நம்பியிருப்போர் எத்தகையோரெனில்,) அவர்கள் பெரும்பாவங்களையும் மானக்கேடான செயல்களையும் தவிர்த்துவிடுவார்கள். தாம் கோபத்திற்குள்ளாகும்போது மன்னித்து விடுவார்கள். (திருக்குர்ஆன் 42:37)

மேலும், அல்லாஹ் கூறினான்:

(பயபக்தியாளர்கள் எத்தகையோரெனில்,) அவர்கள் இன்பத்திலும் துன்பத்திலும் தானம் செய்வார்கள். சினத்தை விழுங்கக் கூடியவர்கள். மனிதர்களுக்கு மன்னிப்பும் அளிப்பவர்கள். (இத்தகைய) நல்லவர்களை அல்லாஹ் நேசிக்கிறான். (திருக்குர்ஆன் 03:134)

ஹதீஸ் 6114. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களைத் தன்னுடைய பலத்தால் அதிகமாக அடித்து வீழ்த்துபவன் வீரன் அல்லன் உண்மையில் வீரன் என்பவன், கோபத்தின்போது தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்பவனே ஆவான்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6115. சுலைமான் இப்னு ஸு ரத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அருகில் இரண்டு பேர் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டார்கள். அப்போது நாங்கள் நபி(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்துகொண்டிருந்தோம். அவர்களில் ஒருவரின் முகம் சிவந்து விட்டிருக்கக் கோபத்துடன் தம் தோழரைத் திட்டிக் கொண்டிருந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,எனக்கு ஒரு (பிரார்த்தனை) வார்த்தை தெரியும். அதை இவர் சொல்வராயின் இவருக்கு ஏற்பட்டுள்ள கோபம் போய்விடும்.அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம் (சபிக்கப்பட்ட ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறேன்) என்பதே அச்சொல்லாகும்' என்று கூறினார்கள். எனவே, மக்கள் அம்மனிதரிடம், நபி(ஸல்) அவர்கள் சொல்வதை நீர் செவியேற்கவில்லையா? என்று கூறினார். அந்த மனிதர்,நான் பைத்தியக்காரன் அல்லன்' என்றார்.

ஹதீஸ் 6116. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,எனக்கு அறிவுரை கூறுங்கள்' என்றார். நபி(ஸல்) அவர்கள்,கோபத்தைக் கைவிடு' என்று (அறிவுரை) கூறினார்கள். அவர் ("அறிவுரை கூறுங்கள்' எனப்) பல முறை கேட்டபோதும் நபி(ஸல்) அவர்கள்கோபத்தைக் கைவிடு' என்றே சொன்னார்கள்.

## நாணம்

ஹதீஸ் 6117. அபுஸ் ஸவ்வார் அல்அதவீ(ரஹ்) அவர்கள் கூறினார்:

இம்ரான் இப்னு ஹு ஸைன்(ரலி) அவர்கள்,நாணம் நன்மையே தரும்' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள் என்று கூறினார்கள். அப்போது புஷைர் இப்னு கஅப்(ரஹ்) அவர்கள்,நாணத்தில் தான் கம்பீரம் உண்டு நாணத்தில் தான் மன அமைதி உண்டு எனத் தத்துவ(ப் புத்தக)த்தில் எழுதப்பட்டுள்ளது' என்று கூறினார். அப்போது அவரிடம் இம்ரான்(ரலி) அவர்கள்நான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (கூறியது) பற்றி உங்களுக்குச் சொல்லிக்

கொண்டிருக்கிறேன். நீங்கள் உங்கள் ஏட்டில் உள்ளவை குறித்து சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே! என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6118. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (அன்சாரிகளில்) ஒருவரைக் கடந்து சென்றார்கள். அவர் வெட்கப்படுவது தொடர்பாகத் தம் சகோதரரைக் கண்டித்துக் கொண்டிருந்தார். நீ (அதிகமாக) வெட்கப்படுகிறாய். (இதனால் உனக்கு வரவேண்டிய நன்மைகள் பாதிக்கப்படுகின்றன.) வெட்கத்தால் உனக்கு நஷ்டம் தான்' என்பது போல் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அவரைவிட்டுவிடு! நாணம் இறை நம்பிக்கையில் அடங்கும்' என்றார்கள்.

ஹதீஸ் 6119. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் திரைக்குள் இருக்கும் கன்னிப் பெண்ணைவிடவும் அதிகக் கூச்ச சுபாவம் உள்ளவர்களாய் இருந்தார்கள். இதை அப்துல்லாஹ் இப்னு அபீ உத்பா(ரஹ்) அறிவித்தார்.

## நாணம் இல்லையெயல் நாடியதைச் செய்து கொள்.

ஹதீஸ் 6120. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் முந்தைய இறைத்தூதர்களின் (முது) மொழிகளிலிருந்து அடைந்து கொண்ட ஒன்றுதான். உனக்கு நாணம் இல்லையேல் நாடியதைச் செய்துகொள்' என்பதும்.

என அபூ மஸ்ஊத் உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

## மார்க்க உண்மைகளைக் கேட்டறிவதற்கு வெட்கப்படலாகாது

ஹதீஸ் 6121. உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

உம்மு சுலைம்(ரலி) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! சத்தியத்தைச் சொல்ல அல்லாஹ் வெட்கப்படுவதில்லை. ஒரு பெண்ணுக்குத் தூக்கத்தில் ஸ்கலிதம் ஏற்பட்டால் அவளின் மீது குளிப்புக் கடமையாகுமா? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், ஆம், அவள் (மதன) நீரைப் பார்த்தால் (குளிப்பு அவளின் மீது கடமைதான்)' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6122. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"இறைநம்பிக்கையாளரின் நிலை பசுமையான ஒரு மரத்தைப் போன்றதாகும். அதன் இலை உதிர்வதில்லை (அதன் இலைகள் ஒன்றோடொன்று உராய்வதில்லை' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். அப்போது மக்கள், அது இன்ன மரம் அது இன்ன மரம் என்று கூறினார். அது பேரீச்சமரம் தான் என்று நான் கூற நினைத்தேன். நான் இளவயதுக்காரனாக இருந்ததால் வெட்கப்பட்(டுக் கொண்டு சொல்லாமல் இருந்து விட்)டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், அது பேரீச்ச மரம்' என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதைப் போன்றே அறிவிக்கப்பட்டுள்ளது. அதில் இப்னு உமர்(ரலி) அவர்கள், நான் அது குறித்து என் தந்தை உமர்(ரலி) அவர்களிடம் எடுத்துரைத்தேன். அப்போது அவர்கள், நீ அதைச் சொல்லியிருந்தால் அது எனக்கு இன்ன இன்னவற்றை விட உகப்பானதாய் இருந்திருக்கும்' என்று கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 6123. ஸாபித் அல்புனானீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

"ஒரு பெண்மணி நபி(ஸல்) அவர்களிடம் வந்து தன்னை மணந்துகொள்ளுமாறு கூறினார். அப்போது அந்தப் பெண் (மணந்துகொள்ள) தங்களுக்கு நான் தேவையா? என்று கேட்டார். என அனஸ்(ரலி) கூறினார். அப்போது அனஸ்(ரலி) அவர்களின் புதல்வியார்என்ன

வெட்கங்கெட்டதனம்!என்று (ஆச்சரியத்துடன்) கேட்டதற்கு அனஸ்(ரலி) அவர்கள்அல்லாஹ்வின் தூதரிடம் தன்னை மணந்து கொள்ளும்படி கோரிய அந்தப் பெண் உன்னைவிடச் சிறந்தவராவார்' என்றார்கள்

## "(மக்களிடம்) எளிதாக நடந்து கொள்ளுங்கள் சிரமப்படுத்தாதீர்கள்' எனும் நபிமொழி.

நபி(ஸல்) அவர்கள் மக்களுக்கு எளிதையும் சுலபத்தையும் விரும்பி வந்தார்கள்.

ஹதீஸ் 6124. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னையும் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களையும் ('விடைபெறும் ஹஜ்ஜு க்க முன்பு யமன் நாட்டுக்கு) அனுப்பியபோது எங்கள் இருவரிடமும்,மார்க்க விஷயங்களில் மக்களிடம்) எளிதாக நடந்து கொள்ளுங்கள். (மக்களைச்) சிரமப்படுத்தாதீர்கள். நற்செய்தி(களை அதிகம்) கூறுங்கள். (எச்சரிக்கை செய்யும்போது கூட) வெறுப்பேற்றி விடாதீர்கள். (தீர்ப்பளிக்கும் போது) ஒத்த கருத்துடன் நடந்து கொள்ளுங்கள் (பிளவு பட்டுவிடாதீர்கள்)' என்றார்கள்.

நான்,இறைத்தூதர் அவர்களே! எங்கள் (பிறந்தகமான) யமன் நாட்டில் தேனில்அல்பித்உ எனப்படும் ஒரு வகை பானமும் வாற்கோதுமையில்மிஸ்ர் என்று கூறப்படும் ஒரு வகை பானமும் தயாரிக்கப்படுகிறது (அவற்றின் சட்டம் என்ன?)' என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,போதை தரக்கூடிய ஒவ்வொன்றும் தடைசெய்யப்பட்டதாகும்!என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6125. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மார்க்க விஷயங்களில்) எளிதாக நடந்து கொள்ளுங்கள் (மக்களைச்) சிரப்படுத்தாதீர்கள் ஆறுதலாக நடந்து கொள்ளுங்கள் வெறுப்பேற்றிவிடாதீர்கள்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6126. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இரண்டு விஷயங்களில் விரும்பியதைத் தேர்வு செய்து கொள்ளும்படி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கூறப்பெற்றால் அவர்கள் அவ்விரண்டில் இலேசானதையே அது பாவமான விஷயமாக இல்லாதிருக்கம் பட்சத்தில் எப்போதும் தேர்வு செய்வார்கள். அது பாவமான விஷயமாக இருந்தால் அதிலிருந்து (விலகி) வெகு தொலைவில் நிற்பார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தமக்காக எதிலும் (யாரையும்) ஒரு பேதும் பழிவாங்கியதில்லை இறைவனின் புனித(ச் சட்ட)ம் ஏதும் சீர்குலைக்கப்பட்டு, அதற்கு பதிலாக அல்லாஹ்வின் சார்பாகத் தண்டிக்க வேண்டுமென்று இருந்தலே தவிர (அப்போது மட்டும் பழிவாங்குவார்கள்.)

ஹதீஸ் 6127. அஸ்ரக் இப்னு கைஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் (ஈரானிலுள்ள)அஹ்வாஸ் எனுமிடத்திலிருக்கும் ஓர் ஆற்றங் கரையில் இருந்து கொண்டிருந்தோம். அதில் தண்ணீர் வற்றிப் போயிருந்தது. அப்போது அபூ பர்ஸா அல் அஸ்லமீ(ரலி) அவர்கள் குதிரை யொன்றில் வந்து (இறங்கி) அந்தக் குதிரையை அவிழ்த்துவிட்டத் தொழுதார்கள். அப்போது அந்தக் குதிரை நடக்கலாயிற்று. உடனே அபூ பர்ஸா(ரலி) அவர்கள் தங்களின் தொழுகையைவிட்டுவிட்டு குதிரையைப் பின்தொடர்ந்து சென்று, அதை அடைத்து பிடித்தார்கள். பிறகு வந்து தம் தொழுகையை நிறைவு செய்தார்கள்.

எங்களிடையே (மாறுபட்ட) சிந்தனை கொண்ட (காரிஜிய்யாக்களில்) ஒருவர் இருந்தார். அவர்,ஒரு குதிரைக்காகத் தம் தொழுகையையேவிட்டுவிட்ட இந்த முதியவரைப் பாருங்கள்' என்று கூறியவாறு (சபித்தவராக) முன்னோக்கி வந்தார். உடனே அபூ பர்ஸா(ரலி) அவர்கள் அவரைப் பார்த்து,நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பிரிந்ததிலிருந்து என்னுடன் யாரும் (இவ்வளவு) கடுமையாக நடந்து கொண்டதில்லை. என்னுடைய இல்லம் தொலைவில்

உள்ளது. நான் (என்னுடைய குதிரையை)விட்டுவிட்டு தொழுது கொண்டிருந்தால் (அது எங்காவது போய்விடும். பிறகு) நான் என்விட்டாரிடம் இரவு வரை போய்ச் சேர முடியாது' என்று கூறினார்கள். மேலும், தாம் நபி(ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டிருந்ததாகவும் அப்போது நபி(ஸல்) அவர்கள் (எதிலும்) எளிதாக நடந்து கொண்டதாகவும் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 6128. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒரு கிராமவாசி மஸ்ஜிது(ந் நபவீ பள்ளி வாசலு)க்குள் சிறுநீர் கழித்துவிட்டார். அவரைத் தாக்குவதற்காக அவரை நோக்கி மக்கள் குதித்தெழுந்தனர். அப்போது மக்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அவரைவிட்டுவிடுங்கள் அவர் கழித்த சிறுநீர் மீது ஒரு வாளித் தண்ணீரை ஊற்றி விடுங்கள். (எப்போதும்) நளினமாக நடந்து கொள்ளவே நீங்கள் அனுப்பப்பட்டுள்ளீர்கள். கடினமாக நடந்து கொள்ள நீங்கள் அனுப்பப்படவில்லை' என்று கூறினார்கள்.

## மக்களுடன் மலர்ச்சியாகப் பழகுவதும் குடும்பத்தாருடன் நயமாக நடந்து கொள்வதும்.

இப்னு மஸ்ஊத்(ரலி) கூறினார்: மக்களுடன் (இனிமையாகப்) பழக் (அதே நேரத்தில்) உன் மார்க்கத்தைக் காயப்படுத்தி விடாதே.

ஹதீஸ் 6129. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுடன் (இனிமையாகப்) பழகுவார்கள். எந்த அளவிற்கென்றால், சிறுவனாக இருந்த என் தம்பியிடம்அபூ உமைரே! பகுதி உன்னுடைய சின்னக் குருவி (புள்புள்) என்ன ஆயிற்று? என்று கூடக் கேட்பார்கள்.

ஹதீஸ் 6130. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் (சிறுமியாக இருந்தபோது) பொம்மைகள் வைத்து விளையாடுவேன். எனக்குச் சில தோழியர் இருந்தனர். அவர்கள் என்னுடன் விளையாடிக் கொண்டிருப்பார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வீட்டுக்குள் நுழைந்தால் அவர்களைக் கண்டதும் தோழியர் (பயந்து கொண்டு) திரைக்குள் ஒளிந்து கொள்வார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தோழியரை என்னிடம் அனுப்பி வைப்பார்கள். தோழிகள் என்னுடன் (சேர்ந்து) விளையாடுவார்கள்.

## மக்களுடன் கனிவாகப் பேசுவது

“சிலருக்கு முன்னால் நாங்கள் (மனித நேய அடிப்படையில்) சிரித்துப் பேசுவோம். ஆனால், (அவர்களின் தீய செயல்களால்) அவர்களை எங்கள் மனம் சபித்துக் கொண்டிருக்கும்' என அபுத்தர்தா(ரலி) கூறினார் எனச் சொல்லப்படுகிறது.

ஹதீஸ் 6131. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் (எங்கள் வீட்டுக்குள் நுழைய) நபி(ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள்அவருக்கு (உள்ளே வர) அனுமதி கொடுங்கள் (இவர்) அந்தக் கூட்டத்தாரிலேயே (மிக) மோசமானவர்' என்றார்கள். (வீட்டுக்குள்) அவர் வந்தபோது (எல்லாரிடமும் பேசுவது போல்) அவரிடமும் கனிவாகப் பேசினார்கள். (அவர் சென்றதும்) நான்,இறைத்தூதர் அவர்களே அந்த மனிதரைப் பற்றித் தாங்கள் ஒன்று சொன்னீர்கள். பிறகு அவரிடமே கனிவாகப் பேசினீர்களே? என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,ஆயிஷா! மக்கள் யாருடைய அருவருப்பான பேச்சுகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காக அவரிடமிருந்து ஒதுங்குகிறார்களோ அவரே இறைவனிடம் அந்தஸ்தில் மிகவும் மோசமானவர்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6132. அப்துல்லாஹ் இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்குத் தங்கப் பித்தான்கள் கொண்ட பட்டு அங்கிகள் சில அன்பளிப்பாக வழங்கப்பட்டன. அவற்றை அவர்கள் தம் தோழர்கள் சிலரிடையே பங்கிட்டார்கள். அவற்றிலிருந்து ஒன்றை மக்ரமா இப்னு நவ்ஃபல்(ரலி) அவர்களுக்காகத் தனியே எடுத்த வைத்தார்கள். மக்ரமா(ரலி) அவர்கள் வந்தபோது நபி(ஸல்) அவர்கள் (அந்த அங்கியுடன் வந்து)உங்களுக்கக நான் இதை எடுத்து வைத்தேன்' என்றார்கள்.

அய்யூப்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,அந்த ஆடையை எடுத்துவந்து அவரிடம் காட்டியவாறு' என்றும்,மக்ரமா(ரலி) அவர்களின் சுபாவத்தில் சிறிது (கடுமை) இருந்தது' என்றும் கூறப்பெற்றுள்ளது.

ஹாத்திம் இப்னு வர்தான்(ரஹ்) அவர்கள் வழியாக வரும் அறிவிப்பில்,நபி(ஸல்) அவர்களிடம் சில அங்கிகள் வந்தன' என்று மிஸ்வர்(ரலி) அவர்களிடமிருந்தே (அறிவிப்பாளர் தொடர் முறிவுறாமல் முத்தஸிலாக) அறிவிக்கப்பட்டுள்ளது.

## இறை நம்பிக்கையாளர் ஒரே புற்றில் இரண்டு முறை தீண்டப்படமாட்டார்.

முஆவியா(ரலி) அவர்கள்,அனுபவசாலியே அறிவாளியாவார்' என்றார்கள்.

ஹதீஸ் 6133. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர் ஒரே புறத்தில் இரண்டு முறை தீண்டப்படமாட்டார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## விருந்தினருக்குச் செய்ய வேண்டிய கடமை

ஹதீஸ் 6134. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம் வந்து,நீர் இரவெல்லாம் நின்று வணங்குவதாகவும் பகலெல்லாம் நோன்பு நோற்பதாகவும் எனக்குத் தெரிவிக்கப்பட்டதே! (அது உண்மைதானா?) என்று கேட்டார்கள். நான்,ஆம்' என்று பதிலளித்தேன். (அதற்கு) நபி(ஸல்) அவர்கள்,அவ்வாறு செய்யாதீர்! (சிறிது நேரம்) தொழுவீராக! (சிறிது நேரம்) உறங்குவீராக! (சில நாள்கள்) நோன்பு நோற்பீராக! (சில நாள்கள் நோன்பைவிட்டுவிடுவீராக! ஏனெனில், உம்முடைய உடலுக்கச் செய்ய வேண்டிய கடமையும் உமக்கு உண்டு உம்முடைய கண்ணிற்குச் செய்ய வேண்டிய கடமையும் உமக்கு உண்டு உம் விருந்தினருக்குச் செய்ய வேண்டிய கடமையும் உமக்கு உண்டு உம் துணைவிக்குச் செய் வேண்டிய கடமையும் உமக்கு உண்டு. உம்முடைய வயது நீளக்கூடும். (அப்போது உம்மால் தொடர் நோன்பும் தொடர் வழிபகுதி சாத்தியப் படாமல் போகலாம். எனவே) ஒவ்வொரு மாதமும் (ஏதேனும்) மூன்று நாள்கள் நோன்பு நோற்பது உமக்குப் போதுமானதாகும். ஏனெனில், ஒவ்வொரு நற்செயலுக்கும் பிரதியாக அது போன்ற பத்து மடங்கு (நற்பலன்)கள் உண்டு. (இதன்படி மாதத்தில்) மூன்று நாள்கள் நோன்பு நோற்பது மாதம் முழுவதும் நோற்றதற்குச் சமமாகும்.) எனவே, இது காலமெல்லாம் நோற்றதாக அமையும்' என்று கூறினார்கள்.

ஆனால், நான் சிரமத்தை வலிந்து ஏற்றுக் கொண்டேன் அதனால் என் மீது சிரமம் சுமத்தப்பட்டது. நான்(இறைத்தூதர் அவர்களே!) இதற்கு மேலும் என்னால் முடியும்' என்றேன். நபி(ஸல்) அவர்கள்,அவ்வாறாயின் வாரத்திற்கு மூன்று நோன்பு நோற்றுக் கொள்க' என்றார்கள். நான் (மறுபடியும்) சிரமத்தை வலிந்து ஏற்றுக் கொண்டேன். அதனால் என் மீது சிரமம் சுமத்தப்பட்டது. இதற்கு மேலும் என்னால் முடியும் (இறைத்தூதர் அவர்களே!)' என்றேன். நபி(ஸல்) அவர்கள்,அவ்வாறாயின் இறைத்தூதர் தாவூத் அவர்கள் நோற்றவாறு நோன்பு நோற்றுக் கொள்வீராக' என்றார்கள். இறைத் தூதர் தாவூத் அவர்களின் நோன்பு எது? என்று

கேட்டேன். (ஒரு நாள்விட்டு ஒரு நாள் நோற்பதால்) ஆண்டில் பாதி நாள்கள் நோற்பதாகும்' என்று பதிலளித்தார்கள்.

## விருந்தினரைக் கண்ணியப்படுத்துவதும் தாமே அவர்களுக்குப் பணிவிடை செய்வதும்.

அல்லாஹ் கூறினான்:

இப்ராஹீமின் கண்ணியம் மிக்க விருந்தினர்களின் செய்தி உமக்கு வந்ததா?

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்

'விருந்தினர் என்பதை (அரபியில்)ஸவ்ர் என்றும், ளைஃப் என்றும் கூறுவர். வேர்ச் சொல்லான இது ஒருமை, பன்மை அனைத்துக்கும் பொருந்தும், ரிழா (திருப்தி)அத்ல் (நீதி) ஆகிய சொற்களைப் போல் ஃகவ்ர் (வற்றுதல்) எனும் சொல், ஆண்பால், (மாஉ-தண்ணீர்), பெண்பால் (பிஃர்-ம்ணறு) ஒருமை, இருமை, பன்மை ஆகிய அனைத்து நிலைகளுக்கும் பொருந்தும்.

ஹதீஸ் 6135. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும். விருந்தினருக்கு அளிக்கும் கொடை என்பது, ஒரு பகல் ஓர் இரவு (உபசரிப்பது) ஆகும். விருந்துபசாரம் மூன்று தினங்களாகும். அதற்கு மேலுள்ள (உபசரிப்பான)து தர்மமாக அமையும் (உபசரிக்கும்) அவரைச் சிரமப்படுத்தும் அளவுக்கு அவரிடம் தங்குவது விருந்தாளிக்கு அனுமதிக்கப்பட்டதன்று.

என அபூ ஹுுரைஹ் குவைலித் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில், அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் நல்லதைப் பேசட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும்' என்று அதிகபட்சமாக இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 6136. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் அண்டை வீட்டாருக்குத் தொல்லை தர வேண்டாம். அல்லாய்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும்.

என அபூ ஹுுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6137. உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள்இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எங்களை ஒரு சமூகத்தாரிடம் அனுப்பி வைக்கிறீர்கள். நாங்களும் (அங்கு) சென்று அவர்களிடம் தங்குகிறோம். ஆனால், அவர்கள் எங்களை உபசரிகக மறுக்கின்றனர்கள். அவ்வாறெனில், அது குறித்து தாங்கள் என்ன கருதுகின்றீர்கள்? என்று கேட்டோம். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம், நீங்கள் ஒரு சமூகத்தாரிடம் செல்ல, அவர்கள் விருந்தினர்களுக்கு வேண்டிய வசதிகளை உங்களுக்குச் சய்து தர ஏற்பாடு செய்தால் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். அவர்கள் அப்படிச் செய்யவில்லையென்றால் அவர்களிடமிருந்து விருந்தினர்களான உங்களுக்குத் தேவையான விருந்தினர் உரிமையை (நீங்களே) எடுத்துக் கொள்ளுங்கள்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6138. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் இரத்தபந்த உறவுகளைப் பேணி வாழட்டும். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

## விருந்தினருக்காக உணவு தயாரிப்பதும் அவர்களுக்காகச் சிரமமெடுத்துக் கொள்வதும்.

ஹதீஸ் 6139. அபூ ஜு ஹைஃபா (ரலி) அறிவித்தார்.

சல்மான் அல்ஃபார்சீ (ரலி) அவர்களையும் அபுத்தர்தா (ரலி) அவர்களையும் நபி (ஸல்) அவர்கள் (ஒப்பந்தச்) சகோதரர்களாக ஆக்கினார்கள். எனவே, சல்மான் (ரலி) அவர்கள் அபுதர்தா (ரலி) அவர்களை (அவரின் இல்லத்திற்குச் சென்று) சந்தித்தார்கள். அப்போது (அபுத்தர்தாவின் துணைவியார்) உம்முத் தர்தா (ரலி) அவர்களை அழுக்கடைந்த ஆடையுடன் சல்மான் கண்டார்கள். அப்போது சல்மான் (ரலி) அவர்கள், உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். அதற்கு உம்முத் தர்தா, உங்கள் சகோதரர் அபுத்தர்தாவிற்கு உலகமே தேவையில்லை போலும்' என்றார். பிறகு, அபுத்தர்தா (ரலி) அவர்கள் வந்து சல்மான் (ரலி) அவர்களுக்காக உணவு தயார் செய்தார்கள். பிறகுசல்மானே! நீங்கள் சாப்பிடுங்கள்! நான் (நஃபில்) நோன்பு நோற்றுள்ளேன்' என்றார்கள். அபுத்தர்தா அதற்கு சல்மான் (ரலி) அவர்கள், நீங்கள் சாப்பிடாத வரை நான் சாப்பிடமாட்டேன்' என்றார்கள். எனவே, (சல்மானுடன்) அபுத்தர்தா (ரலி) அவர்கள் (இரவுத் தொழுகைக்காக) நிற்கப் போனார்கள்.

அப்போது சல்மான் (ரலி) அவர்கள், தூங்குங்கள்' என்றார்கள். எனவே, அபுத்தர்தா (ரலி) அவர்கள் தூங்கிவிட்டார்கள். பிறகு, தொழுவதற்காக எழுந்தார்கள். அப்போதும் சல்மான் (ரலி) அவர்கள், தூங்குங்கள்' என்றார்கள்.

இரவின் கடைசி நேரம் ஆனதும் சல்மான் (ரலி) அவர்கள்இப்போது எழுங்கள்' என்றார்கள். பிறகு அவர்கள் இருவரும் தொழுதார்கள். அப்போது சல்மான் (ரலி) அவர்கள் அபுத்தர்தா (ரலி) அவர்களிடம், உங்களுடைய இறைவனுக்காகச் செய்ய வேண்டிய கடமைகள் உங்களுக்கு உள்ளன. மேலும், உங்கள் உடலுக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உங்களுக்கு உள்ளன. உங்கள் குடும்பத்தாருக்குச் செய்ய வேண்டிய கடமைகளும் உங்களுக்கு உள்ளன. எனவே, ஒவ்வொருவருக்கும் அவரவருக்குச் சேர வேண்டிய உரிமைகளை வழங்குங்கள்' என்று கூறினார்கள். பின்னர் அபுத்தர்தா (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் சென்று (சல்மான் அவர்கள் தமக்குச் சொன்னதை) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள், சல்மான் உண்மையே சொன்னார்' என்றார்கள்.

அபூ ஜு ஹைஃபா வஹ்புஸ் ஸு வாஈ (ரலி) அவர்களுக்குவஹ்புல் கைர் என்றும் பெயர் சொல்லப்படுகிறது.

## விருந்தினரிடம் கோபத்தையும் பதற்றத்தையும் வெளிப்படுத்துவது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 6140. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர் (ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் (மூன்று பேர் கொண்ட) ஒரு குழுவினர் விருந்தினராக வந்தார்கள். அப்போது அபூ பக்ர் (ரலி) அவர்கள் என்னிடம், உன் விருந்திரைக் கவனித்துக் கொள். நான் நபி (ஸல்) அவர்களிடம் செல்கிறேன். நான் வருவதற்கு முன் அவகளை விருந்துண்ணச் செய்துவிடு' என்று கூறினார்கள். நான் சென்று, எங்களிடமிருந்த உணவை அவர்களிடம் கொண்டு வந்து, உண்ணுங்கள்!என்றேன். அதற்கு அவர்கள், வீட்டுக்காரர் எங்கே? என்று கேட்டனர். நான் அவர்களிடம், நீங்கள் உண்ணுங்கள்' என்றேன். அவர்கள்வீட்டுக்காரர் வரும் வரை நாங்கள் சாப்பிட மாட்டோம்' என்று கூறினர்.

அதற்குநான் அளிக்கும் விருந்தை ஏற்று உண்ணுங்கள். ஏனெனில், நீங்கள் உண்ணாத நிலையில் என் தந்தை வந்துவிட்டால் அவர்கள் நம்மைக் கண்டிப்பார்கள்' என்றேன். ஆனால், அவர்கள் (சாப்பிட) மறுத்துவிட்டார்கள். மேலும், அபூ பக்ர் (ரலி) அவர்கள் வந்தால் என் மீது

கோபப்படுவார்கள் என்பதை நான் புரிந்து கொண்டேன். என் தந்தை வந்தபோது நான் அவர்களிடமிருந்து விலகி (ஒளிந்து) கொண்டேன். அவர்கள்விருந்தாளிகளுக்கு) என்ன செய்தீர்கள்? என (வீட்டாரிடம்) கேட்டார்கள். அவர்கள் நடந்ததைத் தெரிவித்தார்கள். அப்போது என் தந்தை,அப்துர் ரஹ்மானே!என்று கூப்பிட்டார்கள். நான் (பயத்தினால் பதிலளிக்காமல்) மௌனமாயிருந்தேன். பிறகுஅப்துர் ரஹ்மானே!என்று (மீண்டும்) கூப்பிட்டார்கள். நான் (அப்போதும்) மௌனமாயிருந்தேன். பிறகு (மூன்றாம் முறை)அறிவில்லாதவனே! உன் (இறைவன்) மீது சத்தியம் செய்கிறேன். என் குரல் உனக்குக் கேட்குமானால் நீ வந்ததாக வேண்டும்' என்றார்கள். உடனே நான் வெளியே வந்தேன்.தங்கள் விருந்தினரிடமே கேளுங்கள்' என்றேன். அப்போது விருந்தினர்,அவர் எங்களிடம் உணவைக் கொண்டு வந்தார். (நாங்கள் தாம் ஏற்றுக் கொள்ளவில்லை)' என்றனர். என் தந்தை,என்னைத்தானே எதிர்பார்த்தீர்கள்? அல்லாஹ்வின் மீதானையாக! (இவ்வளவு தாமதத்திற்குக் காரணமாம்விட்ட) நான் இன்றிரவு சாப்பிடப் போவதில்லை' என்றார்கள். மற்றவர்களோஅல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் சாப்பிடாத வரை நாங்களும் சாப்பிட மாட்டோம்' என்று கூறினர். அபூ பக்ர்(ரலி) அவர்கள்,இன்றிரவைப் போன்று ஒரு தர்மசங்கடமான இரவை நான் கண்டதில்லை' என்று கூறிவிட்டு,உங்களுக்கு என்ன கேடு' எங்கள் விருந்தை ஏன் நீங்கள் ஏற்க மறுக்கிறீர்கள்? (அப்துர் ரஹ்மானே!) உன் உணவைக் கொண்டு வா!என்றார்கள். நான் கொண்டு வந்தேன். அதில் என் தந்தை தம் கையை வைத்துஅல்லாஹ்வின் திருப்பெயரால் (ஆரம்பம்) (நான் உண்ண மாட்டேன் எனச் சத்தியம் செய்த) முதல் நிலை ஷைத்தானினால் விளைந்தது' என்றார்கள். பிறகு அவர்களும் சாப்பிட்டார்கள். விருந்தினரும் சாப்பிட்டனர்.

## விருந்தாளி தம் தோழரிடம் நீங்கள் சாப்பிடாதவரை நானும் சாப்பிடமாட்டேன்' என்று கூறுவது.

இது தொடர்பாக நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஜுஹைஃபா(ரலி) அவர்கள அறிவிக்கம் ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6141. அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்கள்தம் விருந்தாளியுடன் அல்லதுதம் விருந்தினருடன் (எங்கள் வீட்டிற்கு) வந்தார்கள்.

பிறகு மாலையில் (இஷாத் தொழும் வரை) நபி(ஸல்) அவர்களிடம் இருந்தார்கள். பிறகு அவர்கள் (திரும்பி) வந்தபோது என் தாயார் (உம்மு ரூமான்)இன்றிரவு தங்கள்விருந்தாளியை அல்லதுவிருந்தினரை இங்கேயே (காத்து) இருக்கும்படி செய்து விட்டீர்களே!என்று கேட்டார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள்,அவர்களுக்கு நீ இரவு சாப்பாடு கொடுக்கவில்லையா? என்று கேட்டார்கள். அதற்கு என் தாயார்நான்இவரிடம் அல்லதுஇவர்களிடம் சப்பிடச் சொன்னேன். ஆனால்,இவர் அல்லதுஇவர்களிடம் சாப்பிடச் சொன்னேன். ஆனால்இவர் அல்லதுஇவர்கள் (சாப்பிட) மறுத்துவிட்டனர்' என்று கூறினார்கள். இதனால் (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்கள் கோபமடைந்தார்கள் ஏசினார்கள்உன் மூக்கறுந்து போக' என (என்னை)த் திட்டினார்கள். மேலும், தாம் சாப்பிடப்போவதில்லை எனச் சத்தியம் செய்தார்கள். நான் ஒளிந்து கொண்டேன். அப்போது அவர்கள்,அறிவில்லாதவனே!என்று (என்னை) அழைத்தார்கள்.என் தந்தை சப்பிடாமல் தாமும் சாப்பிடப் போவதில்லை என்று என் தாயாரும் சத்தியம் செய்தார்கள். என் தந்தை சாப்பிடாதவரை தாங்களும் சாப்பிடப்போவதில்லை எனவிருந்தாளி அல்லதுவிருந்தாளிகளும் சத்தியம் செய்தனர். அப்போது (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்கள்இந்த நிலை ஷைத்தானால் ஏற்பட்டுவிட்டது போலும்' என்று கூறிவிட்டு உணவு கொண்டு வரச்சொல்லி தாமும் சாப்பிட்டார்கள். விருந்தினரும் சாப்பிட்டனர்.

அவர்கள் ஒவ்வொரு கவளம் உணவு எடுக்கும் போதும் அதன் கீழ் பகுதியிலிருந்து (உணவு) அதிகமாம்க் கொண்டே இருந்தது. அப்போது என் தந்தை அபூ பக்ர்(ரலி) அவர்கள் (என்

தாயாரிடம்),பனு ஃபிராஸ் குலத்தவளே! இது என்ன (பெருக்கம்)? என்று கேட்டார்கள். என் கண் குளிர்ச்சியின் மீது சத்தியமாக! நாம் சாப்பிடுவதற்கு முன்னால் இருந்ததை விட இப்போது (மும்மடங்கு) கூடுதலாக உள்ளதே!என்று கூறினார்கள். பிறகு அனைவரும் சாப்பிட்டோம். அந்த உணவை நபி(ஸல்) அவர்களுக்கும் கொடுத்தனுப்பினார்கள். நபி(ஸல்) அவர்களும் அதைச் சாப்பிட்டார்கள்.

## வயதில் மூத்தவருக்கு மரியாதை செய்வதும், வயதல் மூத்தவரே முதலில் பேசவும் கேள்வி கேட்கவும் தொடங்குவதும்.

ஹதீஸ் 6142,ஹதீஸ் 6143 ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அவர்களும் ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அவர்களும் கூறினார்கள்:

அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களும் முஹய்யிஸா இப்னு மஸ்ஊத்(ரலி) அவர்களும் (பேரீச்சம் பழம் கொள்முதல் செய்வதற்காகச் சென்ற தம் தோழர்களைத் தேடி) கைபருக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் இருவரும் பேரிச்சந் தோப்புக்குள் பிரிந்துவிட்டனர். பின்னர் அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்கள் கொல்லப்பட்டார்கள். எனவே, (கொல்லப்பட்டவரின் சகோதரரான) அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களும் ஹு வய்யிஸா இப்னு மஸ்ஊத்(ரலி) முஹய்யிஸா இப்னு மஸ்ஊத்(ரலி) ஆகியோரும் நபி(ஸல்) அவர்களிம் வந்து (கொல்லப்பட்ட) தங்கள் நண்பரைக் குறித்துப் பேசினார்கள். அப்போது அப்துர் ரஹ்மானே (பேச்சைத்) தொடங்கினார். அவர் அந்த மூவரில் வயதில் சிறியவராக இருந்தார். எனவே நபி(ஸல்) அவர்கள்(வயதில்) மூத்தவரை முதலில் பேசவிடு' என்றார்கள்.

-யஹ்யா இப்னு ஸயீத் அல்அன்சாரி(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,வயதில் பெரியவர், பேசும் பொறுப்பை ஏற்கட்டும்' என்று இடம் பெற்றுள்ளது.

எனவே, (வயதில் மூத்தவர்களான) ஹு வய்யிஸாவும் முஹய்யிஸாவும் தம் (கொல்லப்பட்ட) நண்பர் குறித்துப் பேசினர். அப்போது நபி(ஸல்) அவர்கள்,(யூதர்களே ஐம்பது பேர் சத்தியம் (கஸாமத்) செய்வதன் மூலம்உங்களில் கொல்லப்பட்டவர் அல்லதுஉங்கள் நண்பரின் உயிரீட்டுத் தொகையை நீங்கள் பெற்றுக் கொள்கிறீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் கண்ணால் காணாத விஷயமாயிற்றே! (எவ்வாறு நாங்கள் சத்தியம் செய்வது?)' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,அப்படியானால், (பிரதிவாதிகளான) யூதர்களில் ஐம்பது பேர் (தாங்கள் கொலை செய்யவில்லை என்று) சத்தியம் செய்து உங்களை(ச் சத்தியம் செய்வதிலிருந்து) விடுவிக்க வேண்டும்' என்று கூறினார்கள். அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! (யூதர்கள்) இறைமறுப்பாளர்களான கூட்டமாயிற்றே! (அவர்களின் சத்தியத்தை எப்படி ஏற்க முடியும்?)' என்று கேட்டார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களே (கொல்லப்பட்டவருக்கான உயிரீட்டுத் தொகையைக்) கொல்லப்பட்டவரின் உறவினர்களுக்குத் தம் சார்பாக வழங்கினார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

(நபி(ஸல்) அவர்கள் ஈட்டுத் தொகையாக வழங்கிய) அந்த ஒட்டகங்களில் ஒன்றை கண்டேன். அது அவர்களின் ஒட்டகத் தொழுவத்திற்குள் நுழைந்தது. அது தன்னுடைய காலால் என்னை உதைத்துவிட்டது.

யஹ்யா இப்னு ஸயீத்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,ராஃபிஉ இப்னு கதீஜ்(ரலி) அவர்களுடன் (தாமும் அந்த ஒட்டகத்தைக் கண்டதாக) ஸஹ்ல்(ரலி) கூறினார் எனவே எண்ணுகிறேன்' என்று இடம் பெற்றுள்ளது.

புஷைர் இப்னு யஸார்(ரஹ்) அவர்களிடமிருந்து யஹ்யா(ரஹ்) அவர்கள் வழியாக வந்துள்ள மற்றோர் அறிவிப்பில் ஸஹ்ல்(ரலி) அவர்கள் மட்டும் இதை அறிவித்ததாகக் கூறப்பட்டுள்ளது. (ராஃபிஉ இப்னு கதீஜ் ரலி) அவர்களைப் பற்றிக் கூறப்படவில்லை.

ஹதீஸ் 6144. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,ஒரு மரத்தைப் பற்றி எனக்குக் கூறுங்கள். அதன் நிலை ஒரு முஸ்லிமின் நிலைக்குச் சமமாகும். அந்த மரம் தன் அதிபதியின் ஆணைக்கேற்ப எல்லா நேரங்களிலும் கனி தருகிறது. அதன் இலை உதிர்வதில்லை. (அது எந்த மரம்?)' என்று கேட்டார்கள். என் மனத்தில் அது பேரீச்சம் மரம் தான் என்று தோன்றியது. ஆயினும், (அதைப் பற்றிப்) பேச நான் விரும்பவில்லை. அங்கு (மூத்தவர்களான) அபூ பக்ர்(ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் (ஏதும் பேசாமல்) இருந்தார்கள். அவர்கள் பேசாமலிருக்கவே , நபி(ஸல்) அவர்கள்,அது பேரீச்ச மரம் தான்' என்றார்கள். நான் என் தந்தை(உமர்(ரலி) அவர்களுடன் வெளியில் வந்தபோது,தந்தையே! அது பேரீச்ச மரம்தான் என்று என் மனத்தில் தோன்றியது' என்றேன். அவர்கள், ஏன் அதை நபி(ஸல்) அவர்களிடம் நீ சொல்லவில்லை? நீ அதைச் சொல்லியிருந்தால் இன்ன இன்னதை விட எனக்கு மிகவும் விருப்பமனாதாய் இருந்திருக்குமே! என்றார்கள். தாங்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் பேசாமல் இருந்ததைக் கண்டதாலேயே நான் (அது குறித்துப் பேச) விரும்பவில்லை' என்றேன்.

## கவிதை, யாப்பிலக்கணப் பாடல் (ரஜஸ்), ஒட்டகப் பாட்டு (ஹு தா:ஃ) ஆகியவற்றில் அனுமதிக்கப்பட்டதும் வெறுக்கப்பட்டதும்.

அல்லாஹ் கூறினான்:

இன்னும் அந்தக் கவிஞர்கள் (எத்தகையோரென்றால்), அவர்களை வழிகேடர்கள் தாம் பின்பற்றுகிறார்கள். நிச்சயமாக அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் (பாதையிலும்) அலைந்து திரிவதை (நபியே!) நீங்கள் பார்க்கவில்லையா? இன்னும் நிச்சயமாக, தாங்கள் செய்யாததை(ச் செய்ததாக) அவர்கள் சொல்கிறார்கள். ஆனால், யார் இறைநம்பிக்கை கொண்டு, நற்செயல்கள் செய்து அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூர்ந்து தங்களுக்கு (வசைப்பாடல் மூலம்) அநீதியிழைக்கப்பட்ட பின்னர் (அதற்குப்) பதிலடி தருகிறார்களோ அவர்களைத் தவிர, அநீதியிழைத்தவர்கள், தாம் எந்த நிலைக்கு ஆளாவார்கள் என்பதை விரைவில் அறிந்து கொள்வார்கள். (திருக்குர்ஆன் 26: 224 - 227)

(திருக்குர்ஆன் 26: 225 வது வசனத்திலுள்ள)அவர்கள் ஒவ்வொரு பள்ளத்தாக்கிலும் அலைந்து திரிகிறார்கள்' என்பதற்குஎல்லா வீண் வேலைகளிலும் அவர்கள் மூழ்குவார்கள் என்று பொருள்' என இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் விவரித்தார்கள்.

ஹதீஸ் 6145. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நிச்சயமாகக் கவிதையிலும் ஞானம் (ஹிக்மத்) உண்டு.

என உபை இப்னு கஅப்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6146. ஜு ன்தப் இப்னு சு:ஃப்யான்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு போரின் போது) நடந்து கொண்டிருக்கையில் அவர்களுக்குக் (காலில்) கல் பட்டுவிட்டது. இதனால் அவர்களின் (கால்) விரலில் (காயமேற்பட்டு) இரத்தம் சொட்டியது. அப்போது அவர்கள்,

"நீ சொட்டுகிற ஒரு விரல்தானே!

நீ பட்டதெல்லாம் இறைவழியில் தானே!"

என்று (ஈரடிச் சீர் பாடல் போன்ற வடிவில்) கூறினார்கள்.

ஹதீஸ் 6147. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கவிஞர் சொன்ன சொற்களிலேயே மிக உண்மையான சொல், (கவிஞர்) லபீத் இப்னு ரபீஆ சொன்ன ("அறிக! அல்லாஹ்வைத் தவிர உள்ள பொருள்கள் அனைத்துமே அழியக்

கூடியவையே' எனும் சொல்தான். (கவிஞர்) உமய்யா இப்னு அபிஸ் ஸல்த் (தம் கவிதையின் கருத்துகளால்) இஸ்லாத்தை ஏற்கும் அளவிற்கு வந்துவிட்டார்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6148. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கிப் (போருக்காகப்) புறப்பட்டோம். இரவு நேரத்தில் நாங்கள் சொன்று கொண்டிருந்தபோது மக்களிடையேயிருந்த ஒருவர், (என் தந்தையின் சகோதரர்) ஆமிர் இப்னு அக்வஃ(ரலி) அவர்களிடம்,உங்கள் கவிதைகளில் சிலதை(ப் பாடி) எங்களைச் செவியுறச் செய்யமாட்டீர்களா? என்று கூறினார்.

ஆமிர்(ரலி) அவர்கள் கவிஞராக இருந்தார்கள். அவர்கள் (தம் வாகனத்திலிருந்து) இறங்கி மக்களுக்காகப் (பின்வரும் யாப்பு வகைக் கவிதையைப்) பாடி அவர்களின் ஒட்டகங்களை விரைந்தோடச் செய்தார்கள்.

“இறைவா! நீ இல்லையென்றால் நாங்கள் நேர்வழி பெற்றிருக்கமாட்டோம் தர்மம் செய்திருக்கவுமாட்டோம் தொழுதிருக்கவுமாட்டோம். உனக்காக (எங்களை) அர்ப்பணம் செய்கிறோம் உன் வழியைப் பின்பற்றும் வரை எங்களை மன்னிப்பாயாக! நாங்கள் (போர்க்களத்தில் எதிரியைச்) சந்திக்கும்போது எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! எங்களின் மீது அமைதியைப் பொழிவாயாக! (அறவழியில் செல்ல) நாங்கள் அழைக்கப்பட்டால் நாங்கள் (தயாராக) வந்துவிடுவோம். எங்களிடம் மக்கள் (அபயக்) குரல் எழுப்பினால் (உதவிக்கு வருவோம்)' என்று பாடிக் கொண்டிருந்தார்கள். (வழக்கம் போன்று பாடலைக் கேட்டு ஒட்டகங்கள் விரைந்தோடலாயின.)

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,யார் இந்த ஒட்டகவோட்டி? என்று கேட்டார்கள். மக்கள்,ஆமிர் இப்னு அக்வஃ' என்று பதிலளித்தனர். அப்போது,அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக! என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (இந்தப் பிரார்த்தனையின் பொருள் புரிந்த) ஒருவர்,இறைத்தூதரே! (ஆமிருக்கு வீர மரணமும் அதையடுத்து சொர்க்கமும்) உறுதியாகிவிட்டது. அவர் (நீண்ட காலம் உயிர் வாழ்வதன்) மூலம் எங்களுக்குப் பயன் கிடைக்க (பிரார்த்தனை) செய்யக்கூடாதா? என்று கேட்டார்.

பிறகு, நாங்கள் கைபருக்கு வந்து கைபர் வாசிகளை முற்றுகையிட்டோம். அப்போது எங்களுக்குக் கடுமையான பசி ஏற்பட்டது. அதன் பிறகு (யூதர்களான) அவர்களுக்கெதிராக அல்லாஹ் (எங்களுக்கு) வெற்றியளித்தான். அவர்கள் வெற்றி கொள்ளப்பட்ட அன்றைய மாலை நேரத்தில் மக்கள் (ஆங்காங்கே) அதிகமாக நெருப்பு மூட்டினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,இது என்ன நெருப்பு? எதற்காக (இதை மூட்டியிருக்கிறீர்கள்? என்று கேட்டார்கள்.இறைச்சி சமைப்பதற்காக' என்று மக்கள் பதிலளித்தனர்.

“எந்த இறைச்சி? என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள்.நாட்டுக் கழுதைகளின் இறைச்சி' என்று மக்கள் கூறினர். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,அவற்றைக் கொட்டிவிட்டு அந்தப் பாத்திரங்களை உடைத்துவிடுங்கள்' என்று கூறினார்கள். அப்போது ஒருவர்,இறைச்சிகளைக் கொட்டிவிட்டு அதன் பாத்திரங்களை நாங்கள் கழுவி (வைத்து)க் கொள்ளலாமா? என்று கேட்டார்.அப்படியே ஆகட்டும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(அன்றைய தினம் போருக்காக) மக்கள் அணிவகுத்து நின்றபோது (என் தந்தையின் சகோதரர்) ஆமிர்(ரலி) அவர்களின் வாள் குட்டையானதாக இருந்தது. (அதனால்) அவர்கள் குனிந்து, ஒரு யூதனை வெட்டப் போனபோது அன்னாரின் வாளின் மேற்பகுதி அன்னாரின் முழங்காலையே திருப்பித் தாக்கிவிட்டது. அதனால் அவர்கள் இறந்துவிட்டார்கள். (கைபரை வென்று, மதீனா நோக்கி) மக்கள் திரும்பியபோது (நிகழ்ந்தவற்றை) ஸலமா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

(கவலையினால்) நிறம் மாறிப்போயிருந்த என்னைப் பார்த்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உங்களுக்கு என்ன நேர்ந்தது? என்று கேட்டார்கள். அதற்கு நான்,என் தந்தையும்

என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். (என் தந்தையின் சகோதரர்) ஆமிர் அவர்களின் நற்செயல்கள் அழிந்துவிட்டன. (அவர் தம் வாளினால் தம்மைத் தாமே குத்திக் கொண்டு தற்கொலை செய்தார்) என மக்கள் கூறுகிறார்கள்' என்று சொன்னேன். அதற்கு (நபி(ஸல்) அவர்கள்யார் இதைச் சொன்னவர்? என்று கேட்டார்கள். இதை இன்னாரும் இன்னாரும் உசைத் இப்னு ஹு ளர் அல் அன்சாரி அவர்களும் கூறினர்' என்றேன். (இதை கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், இதைக் கூறியவர் உண்மைக்குப் புறம்பாகக் கூறிவிட்டார். ஆமிருக்கு நிச்சயமாக (நற்செயல் புரிந்த நன்மை, புனிதப் போரில் பங்குகொண்ட நன்மையென) இரண்டு நன்மைகள் உண்டு' என்று கூறியவாறு தம்மிரு விரல்களையும் அவர்கள் இணைத்துக் காட்டினார்கள். (தொடர்ந்து) அவர் துன்பங்களைத் தாங்கினார். (இறைவழியில்) புனிதப் போரும் புரிந்தார். (துன்பங்களைத் தாங்கியதுடன் அறவழியில் போரும் புரிந்த) இவரைப் போன்ற அரபிகள் பூமியின் பிறப்பது அரிது' என்றார்கள்.

ஹதீஸ் 6149. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு பயணத்தில்) தம் துணைவியர் சிலரிடம் சென்றார்கள். (அவர்கள் ஒட்டகத்தில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களும் அத்துணைவியருடன் இருந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (ஒட்டகவோட்டியிடம்) உமக்கு நாசம்தான். அன்ஜஷா! நிதானமாக ஓட்டிச் செல்! (ஒட்டகச் சிவிகைக்குள் இருக்கும்) கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்து விடாதே!என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ கிலாபா(ரஹ்) அவர்கள் (தம்முடன் இந்த இராக்கியரிடம்) கூறினார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் ஒரு வார்த்தை கூறினார்கள். உங்களில் ஒருவர் அதைச் சொல்லியிருந்தால் (இங்கிதம் தெரியாத நீங்கள்) அதற்காக அவரை(க் கேலி செய்து) விளையாடியிருப்பீர்கள். நிதானமாக ஓட்டிச் செல். கண்ணாடிக் குடுவைகளை உடைத்துவிடாதே' என்பது தான் அந்த வார்த்தை.

## இணைவைப்பாளர்களைத் தாக்கிப் பாடுதல்

ஹதீஸ் 6150. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இணைவைப்பாளர்களைத் தாக்கி வசைக் கவி பாட (கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், குறைஷியரான அவர்களுடன் பின்னிப் பிணைந்துள்ள) என் வமிசப் பரம்பரையை என்ன செய்வாய்? என்று கேட்டார்கள். அதற்கு ஹஸ்ஸான்(ரலி) அவர்கள், குழைத்த மாவிலிருந்து முடியை உருவியெடுப்பது போன்று தங்களை(யும் தங்கள் வமிச் பரம்பரையையும் வசையிலிருந்து) உருவியெடுத்துவிடுவேன்' என்ற பதிலளித்தார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான உர்வா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம் ஹஸ்ஸான் இப்னு ஸாபித்(ரலி) அவர்களை (அவதூறு பரப்புவதில் சம்பந்தப்பட்டதால்) ஏசிக் கொண்டே போனேன். அப்போது அவர்கள், அவரை ஏசாதே! ஏனெனில், அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காக (இணைவைப்பவர்களைத் தாக்கி) பதிலடி கொடுத்துக் கொண்டிருந்தார்' என்றார்கள்.

ஹதீஸ் 6151. ஹைஸம் இப்னு அபீ சினான்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அபூ ஹு ரைரா(ரலி) அவர்கள் தங்களின் பேச்சுக்கிடையே நபி(ஸல்) அவர்களப் பற்றிக் குடிப்பிட்டார்கள். அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்கள தவறானவற்றைக் கூறுபவர் அல்லர். (நபி(ஸல்) அவர்களைப் பராட்டிய பின்வருமாறு) அவர் பாடினார் என்றார்கள்:

எங்களிடையே இறைத்தூதர் இருக்கிறார்கள். வைகறை பொழுது புலரும் நேரத்தில் அவர்கள் இறைவேதத்தை ஓதுகிறார்கள் குருட்டுத்தனத்தில் இருந்த எங்களுக்கு அவர்கள் நேர்வழி காண்பித்தார்கள். அவர்கள் கூறியது நிச்சயம் நிகழும் என எங்கள் உள்ளங்கள் உறுதியாக நம்புகின்றன். இரவில் இணைவைப்பாளர்கள் படுக்கையில் அழுந்திக் கிடக்கும்போது இவர்கள் படுக்கையிலுருந்து எழுந்து தொழுவார்கள்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6152. அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான் இப்னி அவ்..ப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(கவிஞர்) ஹஸ்ஸான் இப்னு ஸாபித் அல் அன்சாரி (ரலி) அவர்கள் அபூ ஹு ரைரா (ரலி) அவர்களிடம், அபூ ஹு ரைரா! இறைத்தூதர் சார்பாக (எதிரிகளுக்குக் கவிதைகளின் மூலம்) பதிலடி கொடுப்பீராக. இறைவா! தூய ஆன்மா (ஜிபிரீல்) மூலம் ஹஸ்ஸானை வலுப்படுத்துவாயாக! என்று கூறியதை நீங்கள் செவியுற்றீர்கள் அல்லவா? என்று விவரம் கேட்டார்கள்.

அதற்கு அபூ ஹு ரைரா (ரலி) அவர்கள், ஆம்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6153. பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (பனுகுறைழா போரின்போது, கவிஞர்) ஹஸ்ஸான் (ரலி) அவர்களிடம், எதிரிகளுக்கு (பதிலடியாக) வசைக் கவிதை பாடுங்கள். (வானவர்) ஜிப்ரீல் உங்களுடன் (துணையாக) இருப்பார்' என்று கூறினார்கள்.

## இறை தியானம், கல்வி, இறை வேதம் ஆகியவற்றிலிருந்து கவனத்தைத் திசை திருப்பும் அளவுக்கு மனிதன் மீது கவிதையின் ஆக்கிரமிப்பு இருப்பது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 6154. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவரின் வயிறு கவிதையால் நிரம்பியிருப்பதவிடச் சீழ் சலத்தால் நிரம்பியிருப்பது நன்று.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6155. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு மனிதரின் வயிற்றில் புரையோடும் அளவுக்குச் சீழ் சலம் நிரம்பியிருப்பது, அது கவிதையால் நிரம்பியிருப்பதை விட மேலானதாகும்.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

## 'உன் வலக்கை மண்ணைக் கவ்வட்டும் அல்லாஹ் (அவளுடைய கழுத்தை) அறுக்கட்டும்', அவளுக்குத் தொண்டை வலி வரட்டும் ஆகிய வார்த்தைகளை நபி (ஸல்) அவர்கள் (செல்லமாகப்) பயன்படுத்தியது.

ஹதீஸ் 6156. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

பர்தா தொடர்பான வசனம் அருளப்பெற்ற பிறகு, என் வீட்டினுள் வர அபுல் குஐஸின் சகோதரர் அ..ப்லஹ் (ரலி) அவர்கள் அனுமதி கோரினார்கள். அப்போது நான்அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்கும் வரை ( உள்ளே வர) அனுமதிக்க மாட்டேன். ஏனெனில், அபுல் குஐஸின் சகோதரர் (அ..ப்லஹ்) எனக்குப் பாலூட்டியவர் அல்லர். மாறாக, அபுல்குஐஸ் அவர்களின் மனைவியே எனக்குப் பாலூட்டினார்' என்றேன். பின்னர் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான், இறைத்தூதர் அவர்களே! இந்த மனிதர் எனக்குப் பாலுட்டியவர் அல்லர். மறாக, இவருடைய (சகோதரரின்) மனைவியே

எனக்குப் பாலூட்டினார்‘ என்றேன். நபி(ஸல்) அவர்கள்,அவருக்கு (உள்ளே வர) அனுமதி கொடு! ஏனெனில், அவர் உன் (பால்குடித்) தந்தையின் சகோதரர் தாம். உன் வலக்கை மண்ணைக் கவ்வட்டும்‘ என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உர்வா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

இதனால்தான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்கள்,இரத்த உறவினால் மணமுடிக்கத் தடை செய்யப்பட்டவர்களைப் பால்குடி உறவினாலும் மணமுடிக்கத் தடை செய்யுங்கள்‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6157. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஹஜ்ஜை முடித்துக் கொண்டு மக்காவிலிருந்து) புறப்பட விரும்பினார்கள். அப்போது (தம் துணைவியரான) ஸஃபிய்யா(ரலி) அவர்கள் தங்களின் கூடார வாசலில் சோர்வாகவும் கவலையாகவும் இருக்கக் கண்டார்கள். ஏனெனில், அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்டிருந்தது.

அப்போது நபி(ஸல்) அவர்கள் குறைஷியரின் வழக்கில் (செல்லமாகச் ஏசப்படும் வார்த்தையில்) அல்லாஹ் உன்னை அறுக்கட்டும்! நீ எம்மை (மக்காவிலிருந்து புறப்படவிடாமல்) தடுத்துவிட்டாய்‘ என்று கூறினார்கள். பிறகு,நஹ்ருடைய (துல்ஹஜ் 10 வது) நாளில் நீ (கஅபாவைச்) சுற்றி வந்தாயா? என்று கேட்டார்கள். ஸஃபிய்யா(ரலி) அவர்கள்,ஆம்‘ என்றார்கள்.அப்படியானால் (உன் ஹஜ் பூர்த்தியாகிவிட்டது) நீ புறப்படு‘ என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

## ‘அவ்வாறு கருதப்படுகிறது (ஸஅமூ) என்பது (போன்ற வார்த்தைகள்) தொடர்பாக வந்துள்ளவை.

ஹதீஸ் 6158. உம்மு ஹானீ பின்த் அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்.

‘மக்கா வெற்றி ஆண்டில் நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் குளித்துக்கொண்டிருக்க, அவர்களை அவர்களின் புதல்வி ஃபாத்திமா(ரலி) அவர்கள் மறைத்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். அப்போது நான் அவர்களுக்கு சலாம் (முகமன்) சொன்னேன். உடனே நபி(ஸல்) அவர்கள்,யார் அது? என்று கேட்டார்கள்.நான் உம்மு ஹானீ பின்த் அபீ தாலிப் (வந்திருக்கிறேன்)‘ என்று பதிலளித்தேன். உடனே நபி(ஸல்) அவர்கள்,உம்மு ஹானீயே வருக! எனக்கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் குளித்து முடித்தவுடன் ஒரே ஆடையை (தம் உடலில்) சுற்றிக் கொண்டவர்களாக எழுந்து நின்று எட்டு ரக்அத்கள் தொழுதார்கள். தொழுது முடித்ததும்,இறைத்தூதர் அவர்களே! என் சகோதரர் (அலீ இப்னு அபீ தாலிப்) நான் அடைக்கலம் அளித்திருக்கும் ஹுபைராவின் இன்ன மகனைக் கொலை செய்யப்போவதாகக் கருதுகிறார்‘ என்று கூறினேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உம்மு ஹானீயே! நீ அடைக்கலம் அளித்தவருக்கு நாங்களும் அடைக்கலம் அளித்துவிட்டோம்‘ என்று கூறினார்கள்.

உம்மு ஹானீ(ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

(நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்ற) அந்த நேரம் முற்பகல் (ளுஹா) ஆகும்.

## ‘உனக்குக் கேடுதான்: (வைலக்க) என்று கூறுவது தொடர்பாக வந்துள்ளவை.

ஹதீஸ் 6159. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் தம் குர்பானி ஒட்டகத்தை இழுத்துக் கொண்டு (நடந்து) செல்வதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள்,அதில் ஏறிச் செல்லுங்கள்‘ என்றார்கள். அதற்கவ்இிது குர்பானி ஒட்டகமாயிற்றே? என்றார். நபி(ஸல்) அவர்கள், (பரவாயில்லை) அதில் ஏறிச்

செல்லும்!என்றார்கள். (மீண்டும்) அவர், இது குர்பானி ஒட்டகமாயிற்றே! என்றதும்அதில் ஏறிச் செல்க. உமக்குக் கேடுதான். ('வைலக்க') என்றார்கள்.

ஹதீஸ் 6160. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஒருவர் தம் குர்பானி ஒட்டகத்தை இழுத்துக்கொண்டு (நடந்து) செல்வதைக் கண்ட இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அவரிடம், அதில் ஏறிச் செல்லுங்கள்!என்றார்கள். அவர், இது குர்பானி ஒட்டகமாயிற்றே, இறைத்தூதர் அவர்களே? என்றார். நபி (ஸல்) அவர்கள், இரண்டாவது முறையில் அல்லதுமூன்றாவது முறையில்'இதில் ஏறிச் செல்லும்! உமக்குக் கேடுதான்' என்றார்கள்.

ஹதீஸ் 6161. அனஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அவர்களுடன் அவர்களின் கறுப்பு நிற அடிமையான அன்ஜஷா எனப்படுபவரும் இருந்தார். அவர் பாட்டிப்பாடி (ஒட்டகத்தை விரைந்தோடச் செய்து) கொண்டிருந்தார். அவரிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள், உமக்கு நாசம்தான் (வைஹக்க). அன்ஜஷா! நிதானம்! (ஒட்டகத்தின் மேலுள்ள) கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்துவிடாதே!என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6162. அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் இன்னொரு மனிதரைப் பற்றிப் புகழ்ந்து பேசினார். அப்போது நபி (ஸல்) அவர்கள்உனக்குக் கேடுதான் (வைலக்க!) உன் சகோதரரின் கழுத்தைத் துண்டித்துவிட்டாயே!என மூன்று முறை கூறிவிட்டு, உங்களில் ஒருவர் (தம் சகோதரரைப்) புகழ்ந்தேயாக நான் (இவ்வாறு) எண்ணுகிறேன் என்று (மட்டும்) அவர் கூறட்டும். அதுவும் அவர் (அவ்வாறு இருக்கிறார் என) அறிந்தால் அல்லாஹ்வே அவரைக் குறித்து விசாரணை அல்லாஹ்வை முந்திக் கொண்டு யாரையும் தூய்மையானவர் என்று கூறமாட்டேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6163. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (ஹவாஸின்) போரில் கிடைத்த செல்வங்களை ஒரு நாள் பங்கிட்டுக் கொண்டிருந்தபோது பனு தமீம் குலத்தை குலத்தைச் சேர்ந்த, துல்குவைஸிரா எனும் மனிதர், இறைத்தூதர் அவர்களே! நீதியுடன் நடந்துகொள்ள வில்லையென்றால் வேறு யார்தாம் நீதியுடன் நடந்துகொள்வார்கள்? என்று கூறினார்கள். உடனே (அங்கிருந்த) உமர் (ரலி) அவர்கள், இவரின் கழுத்தைக் கொய்ய என்னை அனுமதியுங்கள் (இறைத்தூதர் அவர்களே!)' என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், இல்லை, (இவரைவிட்டுவிடுங்கள்). நிச்சயமாக இவருக்குத் தோழர்கள் சிலர் இருக்கின்றனர். அவர்களின் தொழுகையுடன் உங்களுடைய நோன்பையும் அற்பமானவையாகக் கருதுவீராக. (அந்த அளவுக்கு) அவர்களின் வழிபாடு அதிகமாக இருக்கும். ஆயினும்) வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபக்கம்) வெளிப்பட்டுச் சென்று விடுவதை போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் சென்றுவிடுவார்கள். (அந்தப் பிராணியின் உடலைத் துளைத்து வெளிவந்தற்கான அடையாளம் ஏதும் இருக்கிறதா என்று அறிய) அம்பின் முனை பார்க்கப்படும். அதில் (அடையாளம்) எதுவும் காணக் கிடக்காது.

பிறகு (அம்பில்) அதன் (முனையைப் பொருத்தப் பயன்படும்) நாணைப் பார்க்கப்படும். அதிலும் (அடையாளம்) எதுவும் காணக் கிடைக்காது. பிறகு அம்பின் (அடிப்பாகக்) குச்சியைப் பார்க்கப்படும் அதிலும் எதுவும் காணக் கிடைக்காது. பிறகு, அம்பின் இறகைப் பார்க்கப்படும். அதிலும் (அடையாளம்) எதுவும் கிடைக்காது. அ(ம்பான)து, சானத்தையும் இரத்தத்தையும் (அவை தன் மீது படாதவாறு) முந்தியிருக்கும். அவர்கள் மக்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் கிளம்புவார்கள். அவர்களின் அடையாளம் ஒரு (கறுப்பு நிற) மனிதராவார். அவரின்

இரண்டு (புறக்) கைகளில் ஒன்றுபெண்ணின் கொங்கை போன்றிருக்கும் அல்லதுதுடிக்கம் இறைச்சித்துண்டு போன்றிருக்கும்“ என்றார்கள்.

நான் நிச்சயமாக இந்த நபிமொழியை நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன். என்று சாட்சியம் அளிக்கிறேன். மேலும் அந்தக் கூட்டத்தாருடன் அலீ(ரலி) அவர்கள் போரிட்டபோது அலீ(ரலி) அவர்களுடன் நானும் இருந்தேன். (அந்தப் போரில்) கொல்லப்பட்டவர்களிடையே (நபி(ஸல்) அவர்கள் இனங்காட்டிய) அந்த மனிதரைத் தேடிக் (கண்டுபிடித்துக்) கொண்டு வரப்பட்டது. நபி(ஸல்) அவர்களின் வர்ணனையின்படியே அவர் இருந்தார் என்றும் நான் சாட்சியம் அளிக்கிறேன்.

ஹதீஸ் 6164. அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,நான் அழிந்துவிட்டேன், இறைத்தூதர் அவர்களே!என்றார். நபி(ஸல்) அவர்கள்,நான் ரமளான் மாதத்தில் (நோன்பு நோற்றுக் கொண்டு) என் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்,இதற்குப் பரிகாரமாக) ஓர் அடிமையை விடுதலை செய்வீராக!என்றார்கள் அவர், (அதற்கான வசதி) என்னிடம் இல்லையே!என்றார். நபி(ஸல்) அவர்கள்,அவ்வாறாயின், தொடர்ந்து இரண்டு மாதம் நோன்பு நோற்பீராக!என்றார்கள். அவர் என்னால் இயலாது‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்,அவ்வாறாயின், (அறுபது) ஏழைகளுக்கு உணவளிப்பீராக!என்றார்கள். அவர்(அதற்கான வசதி) என்னிடம் இல்லை‘ என்றார்.

அப்போது நபி(ஸல்) அவர்களிடம் (15 ஸாஉ கொள்ளளவு பிடிக்கும் அளவையான)அரக் ஒன்று கொண்டுவரப்பட்டது. (அதில் பேரீச்சம் பழங்கள் இருந்தன.) (அதில் பேரீச்சம் பழங்கள் இருந்தன) உடனே நபி(ஸல்) அவர்கள்,இதைப் பெற்று தர்மம் செய்வீராக!என்றார்கள். அதற்கு அந்த மனிதர்,இறைத்தூதர் அவர்களே! என் குடும்பத்தார் அல்லாதோருக்கா (இதை நான் தர்மம் செய்ய)? என் உயிர் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! மதீனா எனும் கூடாரத்தின் இரண்டு மருங்கிலும் என்னை விடத் தேவையானோர் யாருமில்லை‘ என்றார். (இதைக் கேட்ட) உடனே நபி(ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்துவிட்டு(இதோ) இதைப் பெற்றுக் கொள்வீராக!என்றார்கள்.

முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) அவர்கள் வழியாக வரும் மற்றோர் அறிவிப்பில்(‘வைஹக்க என்பதற்கு பதிலாக)வைலக்க (உனக்குக் கேடுதான்) என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 6165. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

கிராமவாசி ஒருவர்,இறைத்தூதர் அவர்களே! நாடு துறந்து (ஹிஜ்ரத்) செல்வது பற்றி எனக்குத் தெரிவியுங்கள்‘ என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,உனக்கு நாசம்தான் (வைஹக்க!) ஹிஜ்ரத்தின் நிலை மிகவும் கடினமானது. உன்னிடம் ஒட்டகம் ஏதேனும் இருக்கின்றதா? என்று கேட்டார்கள். அவர்,ஆம் இருக்கின்றது)‘ என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள்,ஒட்டகத்துக்குரிய ஸகாத்தை நீ கொடுத்து வருகிறாயா? என்று கேட்டார்கள். அவர்,ஆம்‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்,அப்படியென்றால் நீ கடலுக்கு அப்பால் சென்று கூட வேலை செய்(து வாழலாம்.) அல்லாஹ் உன் நற்செயல்(களின் பிரதிபலன்க) ளிலிருந்து எதையும் குறைக்கமாட்டான்‘ என்றார்கள்.

ஹதீஸ் 6166. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (தம்விடைபெறும் ஹஜ் உரையில்)உங்களுக்குக் கேடுதான் (வைலக்கும்)‘ அல்லதுஉங்களுக்கு அழிவுதான் (வைஹக்கும்)‘. எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டிமாய்த்துக் கொள்ளும் இறை மறுப்பாளர்களான நீங்கள் மாறிவிடாதீர்கள்‘ என்று கூறினார்கள்.

ஷு அபா இப்னு ஹஜ்ஜாஜ் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில், வைஹக்கும் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

முஹம்மத் இப்னு ஸைத் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில், வைலக்கும் அல்லதுவைஹக்கும் என்று இடம் பெற்றுள்ளது.

முஹம்மத் இப்னு ஸைத் (ரஹ்) அவர்களின் அறிவிப்பில்வைலக்கும் அல்லதுவைஹக்கும் என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 6167. அனஸ் (ரலி) அறிவித்தார்.

கிராமவாசிகளில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! மறுமை நாள் எப்போதும் சம்பவிக்கும்? என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், உனக்கென்ன கேடு! அதற்காக நீ என்ன முயற்சி செய்துள்ளாய்? என்று கேட்டார்கள். அவர்நான் அதற்காக (ஏதும்) முன்முயற்சி செய்யவில்லை. ஆயினும், நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறேன்‘ என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், (அப்படியானால்,) நீ யாரை நேசிக்கிறாயோ அவர்களுடன் (மறுமையில்) இருப்பாய்!என்றார்கள். உடனே நாங்கள், நாங்களும் அவ்வாறுதானா? என்று கேட்டோம். நபி (ஸல்) அவர்கள், ஆம்‘ என்றார்கள். (இதைக் கேட்டு) அன்று நாங்கள் மிகவும் மகிழ்ந்தோம்.

-அப்போது முஃகீரா இப்னு ஷு அபா (ரலி) அவர்களின் அடிமை (எங்களைக்) கடந்து சென்றார்கள். அவர் என் வயதொத்த (சிறு)வராக இருந்தார்.

“இவர் உயிர் வாழ்ந்தால், இவரை முதுமை அடைவதற்கு முன்பே மறுமை சம்பவிக்கும் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அதாவது அவ்வளவு நெருக்கத்தில் மறுமை நாளை எதிர்பார்க்கலாம்.)

இந்த ஹதீஸை ஷு அபா (ரஹ்) அவர்கள் கத்தாதா (ரஹ்) அவர்கள் வழியாக அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து சுருக்கமாக அறிவித்தார்கள்.

## வலிவும் மகத்துவமும் மிக்க அல்லாஹ்வை நேசிப்பதன் அடையாளம்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) நீர் கூறுக: நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாய் இருந்தால், என்னைப் பின்பற்றுங்கள் அல்லாஹ் உங்களை நேசிப்பான் மேலும், உங்கள் பாவங்களையும் உங்களுக்காக மன்னிப்பான் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், கருணை உடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 03:31)

ஹதீஸ் 6168. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதன் யார் மீது அன்பு கொண்டுள்ளானோ அவர்களுடன் தான் இருப்பான்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6169. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, இறைத்தூதர் அவர்களே! ஒருவர் (நன்) மக்களை நேசிக்கிறார். ஆனால், (செயல்பாட்டிலும் சிறப்பிலும்) அவர்களை அவர் எட்டவில்லை. அவர் விஷயத்தில் தாங்கள் என்ன கூறுகின்றீர்கள்? என்று கேட்டதற்கு நபி (ஸல்) அவர்கள், மனிதன் யார் மீது அன்பு கொண்டுள்ளானோ அவர்களுடன் தான் இருப்பான்‘ என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6170. அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

“(இறைத்தூதர் அவர்களே!) ஒருவர் (நன்) மக்களை நேசிக்கிறார். ஆனால், (செயல்பாட்டிலும் சிறப்பிலும்) அவர்களை அவர் எட்டவில்லை. (இவரைக் குறித்துத் தாங்கள் என்ன கருதுகின்றீர்கள்?)‘ என்று நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,மனிதன் யார் மீது அன்புவைத்துள்ளானோ அவர்களுடன் தான் இருப்பான்‘ என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 6171. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,மறுமை நாள் எப்போது வரும்? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,அதற்காக என்ன முன்முயற்சி செய்துள்ளாய்? என்று கேட்டார்கள். அவர்,அதற்காக நான் அதிகமான தொழுகையையோ, நோன்பையோ தான தர்மங்களையோ முன் ஏற்பாடாகச் செய்து வைக்கவில்லை. ஆயினும், நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறேன்‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்,நீ யாரை நேசிக்கிறாயோ அவருடன் (மறுமையில்) இருப்பாய்‘ என்று கூறினார்கள்.

## ஒருவர் மற்றொருவரிடம் விலகிப்போ என்று கூறுவது.

ஹதீஸ் 6172. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(தன்னை இறைத்தூதர் என வாதிட்டு வந்த) இப்னு ஸய்யாத் (எனும் யூதச் சிறுவன்) இடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உனக்காக ஒன்றை நான் (மனத்தில்) மறைத்து வைத்துள்ளேன். அது என்ன (சொல்)? என்றார்கள். அவன்,அத்துக்‘ (‘அத்துகான் எனும் 44 வது அத்தியாயம்) என்றான். நபி(ஸல்) அவர்கள்,தூர விலகிப்போ‘ என்றார்கள்.

ஹதீஸ் 6173. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களோடு உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள் (தன்னை இறைத்தூதர் என்று வாதிட்டுக் கொண்டிருந்த) இப்னு ஸய்யாத் (எனும் யூதச் சிறுவனை) நோக்கி நபித் தோழர்கள் சிலருடன் நடந்தார்கள்.பனு மஃகாலா குலத்தாரின் மாளிகைகளுக்கருகே சிறுவர்களுடன் இப்னு ஸய்யாத் விளையாடிக் கொண்டிருக்கக் கண்டார்கள். அப்போது இப்னு ஸய்யாத் பருவ வயதை நெருங்கிவிட்டிருந்தான். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் கரத்தால் அவனுடைய முதுகில் தட்டும் வரை அவன் (இவர்கள் வந்தருப்பதை) உணர வில்லை. பிறகு நபி(ஸல்) அவர்கள்,நான் இறைத்தூதர்தாம் என்று நீ உறுதி கூறுகிறாயா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்களை (ஏறெடுத்து)ப் பார்த்துவிட்டு இப்னு ஸய்யாத்,“நீங்கள் (எழுதப் படிக்கத் தெரியாத மக்களான) உம்மீகளின் தூதர் என்று நான் உறுதி கூறுகிறேன்‘ என்றான்.

பிறகு இப்னு ஸய்யாத் (நபி(ஸல்) அவர்களிடம்),நான் அல்லாஹ்வின் தூதன் என்று (என்னை ஏற்று) உறுதி கூறுகின்றீர்களா? என்று கேட்டான். உடனே நபி(ஸல்) அவர்கள் அவனைத் தள்ளிவிட்டுவிட்டு,நான் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர்களின் மீதும் நம்பிக்கை கொண்டேன்‘ என்று கூறினார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாதிடம்(உன்னிடம்) நீ என்ன காண்கிறாய்? என்று கேட்டார்கள். அதற்கு இப்னு ஸய்யாத் என்னிடம்,மெய்யான செய்திகளும் பொய்யான செய்திகளும் (மனத்தில் தோன்றும் ஓர் உதிப்பாய்) வருகின்றன‘ என்று சொன்னான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,உனக்கு இப்பிரச்சினையில் (ஷைத்தானால் மெய்யும் பொய்யும் கலந்து) குழப்பம் ஏற்படுத்தப்பட்டுள்ளது‘ என்று கூறிவிட்டு,நான் (உன்னைச் சோதிப்பதற்காக) ஒன்றை மனத்தில் மறைத்துவைத்துள்ளேன். (அது என்னவென்று சொல்!)‘ என்று கேட்டார்கள்.அது அத்துக் (அத்துதான் எனும் 44 வது அத்தியாயம்)‘ என்று பதிலளித்தான். உடனே நபி(ஸல்) அவர்கள்தூர விலகிப்போ நீ உன் எல்லையைத் தாண்டிவிட முடியாது‘ என்றார்கள். (அங்கிருந்த) உமர்(ரலி) அவர்கள்,இவனைக் கொல்ல எனக்கு

அனுமதியளிப்பீர்களா? இவனுடைய கழுத்தைக் கொய்துவிடுகிறேன்‘ என்று கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,இவன் அவனாக (தஜ்ஜாலாக) இருந்தால் இவனைக் கொல்லும் பொறுப்பு உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. இவன் அவனில்லையென்றால் இவனைக் கொல்வதால் உங்களுக்கு நன்மையேதும் இல்லை‘ என்றார்கள்.

ஹதீஸ் 6174. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

அதற்குப் பின் (இன்னொரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்களும் உபை இப்னு கஅப்(ரலி) அவர்களும் இப்னு ஸய்யாத் இருந்த பேரீச்சந் தோட்டத்தை நோக்கி நடந்தனர். (தோட்டத்திற்குள்) நுழைந்தவுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இப்னு ஸய்யாத் தம்மைப் பார்த்து விடுவதற்கு முன்னால் அவனிடமிருந்து அவனுடைய பேச்சு எதையாவது கேட்டுவிடவேண்டுமென்று திட்டமிட்டபடி பேரீச்ச மரங்களின் அடிப் பகுதிகளுக்கிடையே தம்மை மறைத்துக்கொண்டு நடக்கலானார்கள். அப்போது இப்னு ஸய்யாத் தன்னுடைய படுக்கையில் குஞ்சம் வைத்த போர்வைக்குள் எதையோ முனுமுனுத்தபடி படுத்திருந்தான். நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களின் தண்டுகளுக்கிடையே தம்மை மறைத்துக் கொண்டு வருவதைக் கண்ட இப்னு ஸய்யாதின் தாய் இப்னு ஸய்யாதிடம்,ஸாஃபியே! இது இப்னு ஸய்யாதின் பெயராகும் - என்றழைத்து,இதோ! முஹம்மது (வருகிறார்)‘ என்று கூறினாள். உடனே இப்னு ஸய்யாத் (சுதாரித்துக் கொண்டு தானிருந்த நிலையிலிருந்து) விலகிக் கொண்டான். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்அவள் அவனை அப்படியே விட்டிருந்தால் அவன் (தன்னுடைய உண்மை நிலையை) வெளியிட்டிருப்பான்‘ என்றார்கள்.

ஹதீஸ் 6175. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுக்கே உரிய பெருமைகளால் புகழ்ந்த பிறகு,(மகா பொய்யன்) தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போதுஅவனைக் குறித்து உங்களை எச்சரிக்கிறேன். எந்த இறைத்தூதரும் அவனைக் குறித்து தம் சமூகத்தாரை எச்சரிக்காமலிருந்ததில்லை. (இறைத்தூதர்) நூஹ் அவர்கள் அவனைக் குறித்துத் தம் சமூகத்தாரை எச்சரித்திருக்கிறார்கள். அவனைப் பற்றி (இதுவரை) எந்த இறைத்தூதரும் தம் சமூகத்தாருக்குக் கூறாத ஓர் அடையாளத்தை உங்களுக்கு நான் கூறுகிறேன்: அவன் ஒற்றைக் கண்ணன். ஆனால், அல்லாஹ ஒற்றை கண்ணன் அல்லன் என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும்‘ என்றார்கள். 196

அபூ அப்தில்லாஹ் (புகாரீயாகிய) நான் கூறுகிறேன்:

(‘விலகிப்போ எனும் பொருள் கொண்டஇக்ஸஃ எனும் சொல்லின் இறந்தகால வினைச் சொல்லான)கஸஃத்துல் கல்ப எனும் சொல்லுக்குநாயை தூர விரட்டினேன்‘ என்று பொருள். காஸிஊன் என்பதற்குவிரட்டப்பட்டவர்கள் என்று பொருள்.

## ‘நல்வரவு (மர்ஹபா) கூறல்

ஆயிஷா(ரலி) கூறினார்: நபி(ஸல்) அவர்கள் (தம் புதல்வி ஃபாத்திமாவைக் கண்டதும்)என் புதல்விக்கு நல்வரவு‘ என்று கூறினார்கள். 198 உம்மு ஹானீ(ரலி) கூறினார்: நான் (என் ஒன்றுவிட்ட சகோதரரான) நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள்,உம்மு ஹானீக்கு நல்வரவு!என்று கூறி (வரவேற்கலா)னார்கள்.

ஹதீஸ் 6176. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழு நபி(ஸல்) அவர்களிடம் வந்தபோது,இழிவுக்குள்ளாகாமலும் மனவருத்தத்திற்குள்ளாகாமலும் வருகை புரிந்த தூதுக் குழுவினரே! உங்கள் வரவு நல்வரவாகட்டும்!என்று (வாழ்த்துக்) கூறினார்கள். அப்போது அக்குழுவினர்இறைத்தூதர் அவர்களே! நாங்கள் ரபீஆ குலத்தைச் சேர்ந்த ஒரு கூட்டத்தாராவோம். எங்களுக்கும் உங்களுக்கும் இடையே (இறை மறுப்பாளர்களான) முளர்

குலத்தார் (தடையாக) உள்ளனர். (போர் தடை செய்யப்பட்ட) புனித மாதங்களில் தவிர (வேறு மாதத்தில்) தங்களிடம் நாங்கள் வந்து சேர முடிவதில்லை. எனவே (வாய்மையையும் பொய்மையையும் பாகுபடுத்தும்) சில தீர்க்கமான விஷயங்களை எங்களுக்குக் கட்டளையிடுங்கள். அத(னைக் கடைப்பிடிப்பத)ன் மூலம் நாங்கள் சொர்க்கம் சொல்வோம். எங்களுக்குப் பின்னால் உள்ள (இங்கு வர முடியாமல் தங்கிவிட்ட)வர்களுக்கு அறிவிப்போம்' என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நான்கு (விஷயங்களைக் கட்டளையிடுகிறேன்). நான்கு (விஷயங்களைத் தடை செய்கிறேன்). தொழுகையை நிலை நிறுத்துங்கள். ஸகாத்தைச் சொல்லுங்கள். ரமளான் மாதத்தில் நோன்பு நோறுங்கள். உங்களுக்குக் கிடைக்கு போர்ச் செல்வத்திலிருந்து ஐந்திலொரு பங்கை (குமுஸ்) கொடுத்து விடுங்கள்.

மேலும், (மது ஊற்றி வைக்கப்படும் பாத்திரங்களான) சுரைக்காய்க் குடுவை மண் சாடி பேரீச்ச மரத்தின் பீப்பாய் தார் பூசப்பட்ட பாத்திரம் ஆகியவற்றில் நீங்கள் பருகாதீர்கள்' என்றார்கள்.

## (மறுமையில்) மனிதர்கள் தம் தந்தையர் பெயருடன் (இணைத்து) அழைக்கப்படுவர்.

ஹதீஸ் 6177. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மோசடி செய்பவனுக்கு மறுமை நாளில் (அவனுடைய மோசடியை வெளிச்சமிட்டுக் காட்டும் முகமாக அடையாளக்) கொடி ஒன்று நட்டப்பட்டுஇது இன்னாருடைய மகன் இன்னோரின் மோசடி (யைக் குறிக்கும் கொடி)' என்று கூறப்படும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6178. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மோசடி செய்பவனுக்கு மறுமை நாளில் (அவனுடைய மோசடியை வெளிச்சமிட்டுக் காட்டும் முகமாக அடையாளக்) கொடி ஒன்று நட்டப்படும். அப்போதுஇது இன்னார் மகன் இன்னாரின் மோசடி(யைக் குறிக்கும் கொடி)' என்று கூறப்படும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## (மனக் குழப்பத்திலுள்ள) ஒருவர் ('என் மனம் அசுத்தமாகி விட்டது எனும் பொருள் பொதிந்த) கபுஸத் நஃப்ஸீ எனும் சொல்லைக் கூற வேண்டாம்.

ஹதீஸ் 6179. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் (மனக் குழப்பத்திலிருக்கும்) யாரும் ('என் மனம் அசுத்தமாம்விட்டது எனும் பொருள் பொதிந்த)கபுஸத் நஃப்ஸீ எனும் சொல்லைக் கூற வேண்டாம். மாறாக, ('என் மனம் கனத்துவிட்டது எனும் பொருள் கொண்ட)லம்சத் நஃப்ஸீ எனும் சொல்லையே கூறட்டும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6180. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் (மனக் குழப்பத்திலிருக்கும்) யாரும் ('என் மனம் அசுத்தமாம்விட்டது எனும் பொருள் பொதிந்த)கபுஸத் நஃப்ஸீ எனும் சொல்லை ஆள வேண்டாம். மாறாக, ('என் மனம் கனத்துவிட்டது எனும் பொருள் தரும்)லம்சத் நஃப்ஸீ எனும் சொல்லையே ஆளட்டும்.

என ஸஹ்ல் இப்னு ஹு னைஃப்(ரலி) அறிவித்தார்.

## காலத்தை ஏசாதீர்கள்.

ஹதீஸ் 6181. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்: ஆதமின் மகன் (மனிதன்) காலத்தை ஏசுகிறான். நானே காலம் (படைத்தவன்). என் கையில் தான் இரவுபகல் (இயக்கம்) உள்ளது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6182. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

திராட்சையை (‘கண்ணியமானது எனும் பொருள் கொண்ட)அல்கர்ம் என்று பெயரிட்டழைக்காதீர்கள். மோசமான காலமே! என்று (காலத்தை ஏசிக்) கூறாதீர்கள். ஏனெனில், அல்லாஹ்வே காலம் (படைத்தவன்).

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## “கண்ணியத்திற்குரியது (‘அல்கர்ம்‘) இறைநம்பிக்கையாளரின் இதயமே‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: உண்மையில் திவாலானவன் யாரெனில் மறுமைநாளில் திவாலாகுபவனேயாவான்.

மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: கோபம் வரும்போது தன்னை அடக்கிக் கொள்பவனே (உண்மையில்) வீரன் ஆவான்.

மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஆட்சியதிகாரம் அல்லாஹ்விற்கே உரியது.

இவ்வாறு ஆட்சியதிகாரத்தின் எல்லையை நபியவர்கள் இறைவனுடன் முற்றுப்பெறச் செய்துள்ள அதே வேளையில் அரசர்கள் குறித்துப் பின்வருமாறு அல்லாஹ் கூறினான்:

அரசர்கள் ஒரு நகரத்துக்குள் (படையெடுத்து) நுழைவார்களானால், நிச்சயமாக அதனை அவர்கள் அழித்துவிடுகிறார்கள். (திருக்குர்ஆன் 27:34)205

ஹதீஸ் 6183. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் (திராட்சைப் பழத்திற்கு)அல்கர்ம் (கண்ணியமானது) என்று சொல்கின்றனர். உண்மையில் இறைநம்பிக்கையாளரின் இதயமேஅல்கர்ம் (கண்ணியத்திற்குரியது) ஆகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## “என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்‘ என்று சொல்வது.

இது தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6184. அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் தவிர வேறெவருக்கும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் தாய் தந்தையரை அர்ப்பணிப்பதாகக் கூறியதை நான் கேட்டதில்லை. (ஸஅத் அவர்களிடம்) நபி(ஸல்) அவர்கள்,அம்பெய்யுங்கள். உங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகாட்டும்‘ என்று கூறியதைக் கேட்டேன். இது உஹுதுப் போர் நாளில் நடைபெற்றதாகவே எண்ணுகிறேன்.

## “அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்‘ என்று கூறுவது.

அபூ பக்ர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,எங்கள் தந்தையரும் எங்கள் அன்னையரும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்‘ என்றார்கள்.

ஹதீஸ் 6185. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நானும் அபூ தல்ஹா(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களுடன் (கைபரிலிருந்து மதீனாவை) முன்னோக்கிச் சென்றுகொண்டிருந்தோம். நபி(ஸல்) அவர்கள் தம்முடனிருந்த (தம் துணைவியாரான) ஸஃபிய்யா(ரலி) அவர்களைத் தம் வாகனத்தில் பின்னால் அமர்த்தியிருந்தார்கள். (சிறிது தூரம் கடந்து) பாதையில் ஓரிடத்தில் நாங்கள் சென்று கொண்டிருந்தபோது (நபியவர்களின்) அந்த ஒட்டகம் இடறி விழுந்தது. நபி(ஸல்) அவர்களும் அவர்களின் துணைவியாரும் கீழே வீழ்த்தப்பட்டனர். அபூ தல்ஹா(ரலி) அவர்கள் தங்களின் ஒட்டகத்திலிருந்து தாவிக் குதித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,அல்லாஹ்வின் நபியே! என்னை அல்லாஹ் தங்களுக்கு அர்ப்பணமாக்குவானாக! தங்களுக்கு (காயம்) ஏதும் ஏற்பட்டதா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,இல்லை ஆயினும், நீ இந்தப் பெண்ணைக் கவனி!என்று கூறினார்கள். உடனே அபூ தல்ஹா(ரலி) அவர்கள் தங்களின் துணியைத் தம் முகத்தில் போட்டு (மூடி)க் கொண்டு (அன்னை) ஸஃபிய்யா(ரலி) அவர்கள் இருந்த திசையை நோக்கி நடந்து சென்று அவர்களின் மீது அத்துணியைப் போட்டார்கள். உடனே அப்பெண்மணி (ஸஃபிய்யா(ரலி) எழுந்துகொண்டார்கள். பிறகு அபூ தல்ஹா(ரலி) அவர்கள் (நபி(ஸல்) மற்றும் அன்னை ஸஃபிய்யா(ரலி) ஆகிய) அவர்கள் இருவருக்காகவும் அவர்களின் சிவிகையைக் கட்டி (சீராக்கி)னார்கள். அவர்கள் இருவரும் அதில் ஏறிக் கொண்டனர். பிறகு நாங்கள் அனைவரும் பயணப்பட்டுமதீனாவின் புறநகர் அனைவரும் பயணப்பட்டுமதீனாவின் புறநகர் பகுதிக்கு வந்தபோது அல்லதுமதீனாவை நெருங்கியபோது நபி(ஸல்) அவர்கள்,பாவமன்னிப்புக் கோரி மீண்டவர்களாக, எங்கள் இறைவனுக்குப் பணிந்தவர்களாக, (அவனைப் போற்றிப்) புகழ்ந்தவர்களாக (நாங்கள் திரும்பிக் கொண்டிருக்கிறோம்)' என்று கூறினார்கள். மதீனாவிற்குள் நுழையும் வரை இவ்வாறு கூறிக்கொண்டேயிருந்தார்கள்.

## அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான பெயர்.

ஹதீஸ் 6186. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

எங்களில் ஒருவருக்கு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு அவர்காசிம் என்று பெயர் சூட்டினார். நாங்கள் (அவரிடம்),உம்மை நாங்கள் அபுல் காசிம் (காசிமின் தந்தை) என்ற குறிப்புப் பெயரால் அழைத்து, மேன்மைப்படுத்திடமாட்டோம். (நபியவர்களுக்குஅபுல் காசிம் எனும் பெயர் இருப்பதே காரணம்)' என்று சொன்னோம். எனவே, அவர் நபி(ஸல்) அவர்களிடம் (சென்று, இதைத்) தெரிவித்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,உம்முடைய மகனுக்கு அப்துர் ரஹ்மான் எனப் பெயர் சூட்டுக!என்று கூறினார்கள்.

## "என் பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள் என் குறிப்புப் பெயரைச் சூட்டிக் கொள்ளாதீர்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

இதை அனஸ்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6187. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

எங்களில் ஒருவருக்கு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு அவர்காசிம் என்று பெயர் சூட்டினார். அப்போது மக்கள்நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் (இது குறித்துத் தீர்ப்பு) கேட்கும் வரை (குழந்தையின் தந்தையான) அவரை,அபுல் காசிம் (காசிமின் தந்தை) என்ற குறிப்புப் பெயரால் அழைக்கமாட்டோம்' என்று கூறினர். (அவ்வாறே நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டோம்.) அப்போது நபி(ஸல்) அவர்கள்,என் பெயரைச் சூட்டிக் கொள்ளுங்கள் ஆனால், என்னுடைய ('அபுல் காசிம் எனும்) குறிப்புப் பெயரை நீங்கள் சூட்டிக்கொள்ளாதீர்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6188. அபுல் காசிம் (முஹம்மத் -ஸல்) அவர்கள் கூறினார்கள்:

என் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால் என்னுடைய (அபுல் காசிம் எனும்) குறிப்புப் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளாதீர்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6189. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

எங்களில் ஒருவருக்கு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு அவர்காசிம் என்று பெயர் சூட்டினார். அப்போது மக்கள், உம்மை நாங்கள்அபுல் காசிம் (காசிமின் தந்தை) என்று குறிப்புப் பெயரால் அழைத்து உமக்கு மகிழ்ச்சியூட்டமாட்டோம்' என்று கூறினர். எனவே, அவர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று அதைத் தெரிவித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், உங்கள் மகனுக்கு அப்துர் ரஹ்மான் என்று பெயர் சூட்டுங்கள்' என்றார்கள்.

## 'அல்ஹஸ்ஷ்ன் (முரடு) எனும் பெயர்

ஹதீஸ் 6190. முஸய்யப் இப்னு ஹஸ்ணன் (ரலி) அறிவித்தார்.

என் தந்தை (ஹஸ்ணன் இப்னு அபீ வஹ்ப் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், உங்கள் பெயரென்ன? என்று கேட்டார்கள். அவர்கள், ஹஸ்ணன்' (முரடு) என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், (இல்லை) நீங்கள் (இனிமேல்) ஸஹ்ல் (மென்மை)' என்றார்கள். அவர், என் தந்தை சூட்டிய பெயரை நான் மாற்றிக் கொள்ளமாட்டேன்' என்றார். அதற்குப் பின்னர் எங்கள் குடும்பத்தாரிடையே (அவர்களின் குண நலன்களில்) முரட்டுத்தனம் நீடித்தது.

இதை ஸயீத் இப்னு முஸய்யப் (ரஹ்) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

## ஒரு பெயரை அதைவிடச் சிறந்த பெயராக மாற்றியமைப்பது.

ஹதீஸ் 6191. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அறிவித்தார்.

அபூ உசைத் மாலிக் இப்னு ரபீஆ (ரலி) அவர்களின் புதல்வர்முன்திர் என்பவர் பிறந்தவுடன் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள், அக்குழந்தையைத் தம் மடியில் வைத்தார்கள். அப்போது (குழந்தையின் தந்தை) அபூ உசைத் (ரலி) அவர்களும் அமர்ந்திருந்தார்கள். (திடீரென) நபி (ஸல்) அவர்களுக்கு முன்னால் நடந்த (சம்பவம்) ஒன்றினால் அவர்களின் கவனம் (வேறு பக்கம்) திரும்பியது. உடனே அபூ உசைத் (ரலி) அவர்கள் தம் புதல்வரை நபியவர்களின் மடியிலிருந்து எடுத்துவிடுமாறு கூற, அவ்வாறே (குழந்தை) தூக்கப்பட்டது. (சிறிது நேரத்தில்) தன்னிலைக்குத் திரும்பிய நபி (ஸல்) அவர்கள்அந்த குழந்தை எங்கே? என்று கேட்டார்கள். அதற்கு அபூ உசைத் (ரலி) அவர்கள், இறைத்தூதர் அவர்களே! குழந்தையை (வீட்டுக்கு) அனுப்பிவிட்டோம்' என்று கூறினார். அக்குழந்தையின் பெயரென்ன? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்க, இன்னது என (தம் மகனுக்கு வைக்கப்பட்ட பெயரை) அபூ உசைத் கூறினார்கள். (அப்பெயர் பிடிக்காததால்) நபி (ஸல்) அவர்கள்அல்ல் (இனிமேல்) அவர் பெயர்முன்திர் (எச்சரிப்பவர்) ஆகும்' என்று கூறினார்கள். எனவே, அன்று அவருக்கு நபி (ஸல்) அவர்கள் தாம்முன்திர் எனப் பெயர் சூட்டினார்கள்.

ஹதீஸ் 6192. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஸைனப் (ரலி) அவர்களுக்கு (முதலில்) பர்ரா (நல்லவள்) என்ற பெயர் இருந்தது. அப்போதுஅவர் தம்மைத் தாமே பரிசுத்தப்படுத்திக் கொள்கிறார்' என்று (மக்களால்) சொல்லப்பட்டது. எனவே, அவருக்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள்ஸைனப் என்று பெயர் சூட்டினார்கள்.

ஹதீஸ் 6193. ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

என் பாட்டனார் (ஹஸ்ணன்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,உங்கள் பெயரென்ன? என்று கேட்டார்கள். அவர் ஹஸ்ணன்(முரடு) என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்இல்லை நீங்கள் (இனிமேல்)ஸஹ்ல் (மென்மை)' என்றார்கள். அவர்,என் தந்தை எனக்குச் சூட்டிய பெயரை நான் மாற்றமாட்டேன்' என்றார்.

அதற்குப் பின்னர் எங்கள் குடும்பத்தாரிடையே (அவர்களின் குணநலன்களில்) முரட்டுத்தனம் நீடித்தது.

## இறைத்தூதர்களின் பெயர்களைச் சூட்டுவது.

“நபி(ஸல்) அவர்கள் தம் புதல்வர் இப்ராஹீமை முத்தமிட்டார்கள்' என்று அனஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6194. இஸ்மாயீல் இப்னு காலித் அல்பஜலீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான், இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்களிடம்,தாங்கள் நபி(ஸல்) அவர்களின் புதல்வர் இப்ராஹீம்(ரலி) அவர்களைப் பார்த்தீர்களா? என்று கேட்டேன். அதற்கவர்கள்,(ஆம், பார்த்திருக்கிறேன். எனினும்,) அவர் சிறு வயதிலேயே இறந்துவிட்டார். முஹம்மத்(ஸல்) அவர்களுக்குப் பின்னால் இறைத்தூதர் ஒருவர் இருப்பார் என (இறைவனால்) தீர்மானிக்கப்பட்டிருந்தால், நபி(ஸல்) அவர்களின் புதல்வர் (இப்ராஹீம் (ரலி) உயிர் வாழ்ந்திருப்பார். ஆனால், முஹம்மத்(ஸல்) அவர்களுக்குப் பின்னால் எந்த இறைத்தூதரும் இல்லை (என்பதே இறைவனின் முடிவாகும்.)

ஹதீஸ் 6195. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

(தம் புதல்வர்) இப்ராஹீம்(ரலி) அவர்கள் இறந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,இவருக்குப் பாலூட்டக் கூடிய செவிலித் தாய் சொர்க்கத்தில் இருக்கிறார்' என்றார்கள்.

ஹதீஸ் 6196. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல் அன்சாரி(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்என் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால், ('அபுல் காசிம் எனும்) என் குறிப்புப் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளாதீர்கள். ஏனெனில், நானே உங்களிடையே பங்கீடு செய்பவன் (காசிம்) ஆவேன்' என்று கூறினார்கள்.

என அனஸ்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6197. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளுங்கள். ஆனால், என்னுடைய ('அபுல் காசிம் எனும்) குறிப்புப் பெயரை நீங்கள் சூட்டிக் கொள்ளாதீர்கள். என்னைக் கனவில் கண்டவர் உண்மையில் என்னைத்தான் கண்டார். ஏனெனில், ஷைத்தான் என் உருவத்தில் காட்சியளிக்க முடியாது. என் மீது வேண்டுமென்றே பொய் சொல்கிறவர் தம் இருப்பிடத்தை நரகத்தில் ஆக்கிக்கொள்ளட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6198. அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

எனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தையை நான் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு சென்றேன். அப்போது அக்குழந்தைக்கு நபி(ஸல்) அவர்கள்இப்ராஹீம் என்று பெயர் சூட்டி பேரீச்சம் பழத்தை மென்று குழந்தையின் வாயிலிட்டார்கள். அவனுக்காக சுபிட்சம் வேண்டிப் பிரார்த்தனையும் புரிந்துவிட்டு என்னிடம் அவனைத் தந்தார்கள்.

அக்குழந்தையே அபூ மூஸா(ரலி) அவர்களின் மூத்த குழந்தையாகும்.

ஹதீஸ் 6199. முஃகீரா ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

(நபி(ஸல்) அவர்களின் புதல்வர்) இப்ராஹீம்(ரலி) அவர்கள் இறந்த அன்று சூரிய கிரகணம் ஏற்பட்டது.

இதே ஹதீஸை அபூ பக்ரா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள். 226

## ‘வலீத் எனப் பெயர் சூட்டுவது

ஹதீஸ் 6200. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை தொழுகையில்) நபி(ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து தலையை உயர்த்தி (‘குனூத் எனும் சிறப்புப் பிரார்த்தனையில் பின்வருமாறு) கூறினார்கள்:

இறைவா! வலீத் இப்னு அல்வலீத், ஸலமா இப்னு ஹிஷாம், அய்யாஷ் இப்னு அபீ ரபீஆ ஆகியோரையும் மக்காவிலுள்ள ஒடுக்கப்பட்ட இறைநம்பிக்கையாளர்களையும் நீ காப்பாற்றுவாயாக! இறைவா! (கடும் பகை) கொண்ட முளர் குல்த்தார் மீது உன்னுடைய பிடியை இறுக்குவாயாக! இறைவா! (உன் தூதர்) யூசுஃபின் காலத்தில் ஏற்பட்ட பஞ்சம் நிறைந்த ஆண்டுகளைப் போல் இவர்களுக்கும் பஞ்ச ஆண்டுகளை ஏற்படுத்துவாயாக!

## நண்பரின் பெயரில் சில எழுத்துக்களைக் குறைத்து (சுருக்கமாக) அழைப்பது.

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி(ஸல்) அவர்கள் என்னைஅபூ ஹிர்! என அழைத்தார்கள்.

ஹதீஸ் 6201. நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ஆயிஷ்! இதோ (வானவர்) ஜிப்ரீல் உனக்கு சலாம் உரைக்கிறார்‘ என்றார்கள். நான், (சலாமுக்க பதில் கூறும் முகமாக)வ அலைஹிஸ் ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹ் (அவரின் மீதும் இறைசாந்தி பொழியட்டும். மேலும், அல்லாஹ்வின் கருணையும் பொழியட்டும்) என்று கூறினேன். மேலும், நாங்கள் பார்க்க முடியாதவற்றை (நபி) அவர்கள் பார்க்கிறார்கள்‘ என்றும் ஆயிஷா(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6202. அனஸ்(ரலி) அறிவித்தார்.

(ஒரு பயணத்தில் என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்கள் பயணப் பொருட்களுடன் (அவற்றின் காவலராக) இருந்தார்கள். நபி(ஸல்) அவர்களின் அடிமையானஅன்ஜஷா (நபியவர்களுடைய) துணைவியரின் ஒட்டகங்களைப் பாட்டுப் பாடி ஓடச் செய்து கொண்டிருந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள், அன்ஜஷ்! நிதானமாக ஓட்டிச் செல்! (ஒட்டகச் சிவிகைக்குள் இருக்கும்) கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்துவிடாதே!என்றார்கள்.

## சிறுவனுக்குக் குறிப்புப் பெயர் சூட்டுவதும் குழந்தை பிறப்பதற்கு முன்பே ஒருவருக்குக் குறிப்புப் பெயர் சூட்டுவதும் (செல்லும்.)

ஹதீஸ் 6203. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மக்களிலேயே மிகவும் நற்குணமுடையவராக விளங்கினார்கள். எனக்குஅபூ உமைர் என்றழைக்கப்பட்ட ஒரு தம்பி இருந்தார்கள். அப்போது அவர் பால்குடி மறக்கவைக்கப்பட்ட பருவத்தில் இருந்தார் என்றே எண்ணுகிறேன். நபி(ஸல்) அவர்கள் (எம் விட்டிற்கு வந்தால்), அபூ உமைரே! பகுதி உன் சின்னக்குருவி என்ன செய்கிறது? என்று கேட்பார்கள். அவன் அப்பறவையுடன் விளையாடிக் கொண்டிருப்பான். சில வேளை நபி(ஸல்) அவர்கள் எங்கள் வீட்டில் இருக்கும்போது தொழுகைக்குத் தயாராகி விடுவார்கள். தாம் அமர்ந்திருக்கும் விரிப்பைச் சுத்தம் செய்திடுமாறு உத்தரவிடுவார்கள். அவ்வாறே அது கூட்டிச் சுத்தம் செய்யப்பட்டு தண்ணீர் தெளிக்கப்படும். பிறகு அதன் மீது நிற்பார்கள். நாங்களும்

அவர்களுக்குப் பின்னால் நிற்போம். அப்போது அவர்கள் எங்களுக்குத் தொழுகை நடத்துவார்கள்.

## ஒருவருக்கு வேறு குறிப்புப் பெயர் இருக்கவே அபூ தூரப் (மண்ணின் தந்தை) எனும் குறிப்புப் பெயர் சூட்டுவது.

ஹதீஸ் 6204. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

அலீ(ரலி) அவர்களுக்குஅபூ துராப் (மண்ணின் தந்தை) எனும் குறிப்புப் பெயரே மிகவும் பிரியமானதாக இருந்தது. மேலும், அப்பெயர் சொல்லி தாம் அழைக்கப்படுவதையே அவர்கள் விரும்பினார்கள். அவர்களுக்குஅபூ துராப் என்று நபி(ஸல்) அவர்களே பெயர் சூட்டினார்கள். (அப்பெயர் அவர்களுக்கு சூட்டப்பட்டதற்கான காரணம்:) ஒரு நாள் அலீ(ரலி) அவர்கள் (தம் துணைவியாரான) ஃபாத்திமா(ரலி) அவர்களின் மீது (ஏதோ காரணத்திற்காகக்) கோப்பட்டு வெளியேறிச் சென்று பள்ளிவாசலில் ஒரு சுவரில் சாய்ந்து படுத்துக்கொண்டார்கள். அவர்களைத் (தேடியவாறு) பின்தொடர்ந்து நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது ஒருவர்,அவர் இதோ பள்ளிவாசலில் சுவரில் சாய்ந்து படுத்திருக்கிறார்' என்று கூறினார். எனவே, அலீ(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். (படுத்திருந்தால்) அலீ(ரலி) அவர்களின் முதுகில் நிறைய மண் படிந்திருந்தது. நபி(ஸல்) அவர்கள் அலீயின் முதுகிலிருந்த மண்ணைத் துடைத்தவாறேஅபுதுராபே! (மண்ணின் தந்தையே! எழுந்து) அமருங்கள்' என்று கூறினார்கள்.

## அல்லாஹ்வின் கோபத்திற்குரிய பெயர்

ஹதீஸ் 6205. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் அல்லாஹ்விடம் மிகவும் அருவருப்பான பெயர், (உலகில்) ஒருவர் தமக்குமன்னாதி மன்னன் (மலிக்குல் அம்லாக்) என்று பெயர் சூட்டிக் கொண்டதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6206. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்விடம் மிகவும் கேவலமான பெயர், (உலகில்) ஒரு மனிதன் தனக்குமன்னாதி மன்னன் (மலிக்குல் அம்லாக்) என்று பெயர் சூட்டிக்கொண்டதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,பெயர்களில் மிகவும் கேவலமானது.!என்றும், வேறு சிலர் ('மலிக்குல் அம்லாக் என்பதற்குப் பாரசீக மொழியில்) ஷாஹான் ஷாஹ் (அரசர்களுக்கு அரசன்) என்று விளக்கம் கூறினர்' என்றும் வந்துள்ளது.

## இணைவைப்பாளரின் குறிப்புப் பெயர்

மிஸ்வர்(ரலி) கூறினார்: நபி(ஸல்) அவர்கள்,அபூ தாலிப் அவர்களின் புதல்வர் (அலீ, என் மகள் ஃபாத்திமாவை மணவிலக்குச் செய்துவிட) விரும்பினாலே தவிர!என்று கூறக் கேட்டேன்.

ஹதீஸ் 6207. உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்ஃபதக் நகர் முரட்டுத் துணி விரிக்கப்பட்ட கழுதையொன்றின் மீது அமர்ந்து, தமக்குப் பின்னால் என்னை அமர்த்திக்கொண்டு ஹாரிஸ் இப்னு கஸ்ரஜ் குலத்தாரிடையே (உடல் நலம் குன்றி) இருந்த ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். இது பத்ருப் போர் நிகழ்ச்சிக்கு முன்னால் நடந்தது. நாங்கள் இருவரும் பயணப்பட்டு ஓர் அவையைக் கடந்து சென்றோம். அந்த அவையில் (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு சலூல் இருந்தார். அவர் தம்மை முஸ்லிம் என்று காட்டிக் கொள்வதற்கு முன் இது நடந்தது. அந்த அவையில் முஸ்லிம்கள், சிலை வணங்கும்

இணைவைப்பாளர்கள், யூதர்கள் ஆகிய பல்வேறு பிரிவினரும் இருந்தனர். முஸ்லிம்களில் (கவிஞர்) அப்துல்லாஹ் இப்னு ராவாஹா(ரலி) அவர்கள் இருந்தார்கள். (எங்கள்) வாகனப் பிராணியின் (காலடிப்) புழுதி அந்த அவையைச் சூழ்ந்துகொண்டபோது (நயவஞ்சகர்) அப்துல்லாஹ் இப்னு உபை தம் மேல் துண்டால் தம் மூக்கைப் பொத்திக்கொண்டு,எங்களின் மீது புழுதியைக் கிளப்பாதீர்கள்' என்றார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அ(ந்த அவையில் இருந்த)வர்களுக்கு சலாம் சொன்னார்கள். பிறகு தம் வாகனத்தை நிறுத்தி இறங்கி அவர்களை அல்லாஹ்வின் (மார்க்கத்தின்) பால் அழைத்தார்கள். மேலும், அவர்களுக்குக் குர்ஆனை ஓதிக் காட்டினார்கள்.

இதைக் கேட்ட அப்துல்லாஹ் இப்னு உபை (இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி,)மனிதரே! நீர் கூறுகிற விஷயம் உண்மையாயிருப்பின், அதைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை. (ஆனாலும்,) அதை எங்களுடைய (இது போன்ற) அவைகளில் கூறி எங்களுக்குத் தொல்லை தராதீர். உம்மிடம் வருவோரிடம் (இதை) எடுத்துரையுங்கள்' என்றார். (இதைக் கேட்ட அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்கள்,ஆம். இறைத்தூதர் அவர்களே! (இதை) எங்கள் அவைகளில் வெளிப்படுத்துங்கள். ஏனெனில், நாங்கள் அதை விரும்புகிறோம்' என்றார்கள். இதையொட்டி முஸ்லிம்களும், இணை வைப்பாளர்களும், யூதர்களும் (ஒருவரையொருவர்) ஏசத் தொடங்கி தாக்கிக் கொள்ளும் அளவுக்குச் சென்றார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கள் அனைவரும் மௌனமாகும் வரை அமைதிப்படுத்திக்கொண்டேயிருந்தார்கள்.

பிறகு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் வாகனத்திலேறிப் பயணத்தைத் தொடர்ந்து ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடம் சென்று,சஅதே! அபூ ஹுபாப் (அப்துல்லாஹ் இப்னு உபை) சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா? அவர் இப்படி இப்படிச் சொன்னார்' என்று அப்துல்லாஹ் இப்னு உபை சொன்னதைக் கூறினார்கள். (இதைக் கேட்ட) ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். அவரை மன்னித்துவிடுங்கள். தங்களுக்கு வேதத்தை அருளியவன் மீது சத்தியமாக! இந்த (மதீனா) நகரவாசிகள் (அப்துல்லாஹ் இப்னு உபை எனும்) அவருக்குக் கிரீடம் அணிவித்து அவருக்கு முடி சூட்டிட முடிவு செய்துவிட்டிருந்த நேரத்தில் அல்லாஹ் தங்களின் மீது அருளிய சத்திய (மார்க்க)த்தைக் கொண்டு வந்தான். அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய இந்த சத்திய(மார்க்க)த்தின் மூலம் அல்லாஹ்வே (இந்த நகரத்தாரின்) அந்த முடிவை நிராகரித்துவிட்டதைக் கண்ட அவர் ஆத்திரப்பட்டார். அதுதான் தாங்கள் பார்த்தபடி அவர் நடந்து கொண்டதற்குக் காரணம்' என்று கூறினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ்வை மன்னித்தார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவர்கள் தாம் தோழர்களும் அல்லாஹ்வின் ஆணைக்கேற்ப இணைவைப்பாளர்களையும் வேதக்காரர்களையும் மன்னித்துவிடுபவர்களாகவும், (அவர்களின்) தொல்லைகளை சகித்துக் கொள்பவர்களாகவும் இருந்தனர். அல்லாஹ் கூறினான்:

(இறை நம்பிக்கையாளர்களே!) உங்களுடைய செல்வங்களிலும் உங்களுடைய உயிர்களிலும் நிச்சயமாக நீங்கள் சோதிக்கப்படுவீர்கள். மேலும், உங்களுக்கு முன் வேதம் அருளப்பட்டவர்களிடமிருந்தும் இணை வைத்தோரிடமிருந்தும் ஏராளமான நிந்தனைகளை நிச்சயம் நீங்கள் கேட்பீர்கள். (அப்போதெல்லாம்) நீங்கள் பொறுமை காத்துத் தீமையிலிருந்து விலகி நடந்தால் அதுதான் உறுதிமிக்க செயல்களில் ஒன்றாகும். (திருக்குர்ஆன் 03:186)

மேலும் அல்லாஹ் கூறினான்:

(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் இறை நம்பிக்கை கொண்டதற்குப் பின் உங்களை நிராகரிப்பவர்களாக மாற்றிவிட வேண்டும் என்று வேதக்காரர்களில் பலர் விரும்புகின்றனர். (இது) அவர்களுக்கு உண்மை தெளிவாகிவிட்ட பின்னர் அவர்களில் உள்ளத்துள் எழுந்த பொறாமையினாலேயாகி. ஆயினும், அல்லாஹ் தன் ஆணையைப் பிறப்பிக்கும் வரை (அவர்களை)

நீங்கள் மன்னித்துவிட்டு விடுங்கள். திண்ணமாக, அல்லாஹ் அனைத்தின் மீதும் பேராற்றல் உள்ளவன். (திருக்குர்ஆன் 02:109)

'அவர்களை மன்னித்துவிட்டுவிட வேண்டும் என்பதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்அவர்களின் விஷயத்தில் (திட்டவட்டமான நடவடிக்கையெடுக்கும் படி) ஆணை இறைவனிடமிருந்து தமக்கு வரும் வரை அவர்களை மன்னித்துவிட்டு விடவேண்டும் என்பதையே விளக்கமாகக் கண்டார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பத்ருப் போர் புரிந்தபோது (அவர்களுடன் போரிட்ட) குறைஷித் தலைவர்களையும் இறைமறுப்பாளர்களின் தலைவர்களையும் பத்ரில் அவர்களின் மூலம் அல்லாஹ் அழித்தான். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அவர்கள் தாம் தோழர்களும் வெற்றிவாகை சூடியவர்களாக, போர்ச் செல்வங்களைப் பெற்றவர்களாக(ப் பத்ரிலிருந்து) திரும்பினார்கள். அவர்களுடன் குறைஷித் தலைவர்கள் மற்றும் இறை மறுப்பாளர்களின் தலைவர்கள் ஆகியோர் சிறைக் கைதிகளாக வந்தனர். அப்போது (அப்துல்லாஹ்) இப்னு உபை இப்னி சலூலும், அவருடன் இருந்த சிலை வணங்கும் இணைவைப்பாளர்களும்,(இஸ்லாம் எனும்) இந்த விஷயம் மேலோங்கிவிட்டது. எனவே, அல்லாஹ்வின் தூதரிடம், இஸ்லாத்தை ஏற்பதாக உறுதி மொழி அளித்துவிடுங்கள்' என்று கூறி, (வெளித் தோற்றத்தில்) இஸ்லாத்தை ஏற்றனர்.

ஹதீஸ் 6208. அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப்(ரலி) அறிவித்தார்.

நான்,இறைத்தூதர் அவர்களே! அபூ தாலிப் (அப்து மனா..ப்) அவர்களுக்கு ஏதேனும் (பிரதி) உபாகரம் செய்தீர்களா? ஏனெனில், தங்களை அவர் பாதுகாப்பவராகவும் தங்களுக்காக (தங்கள் எதிரிகளின் மீது) கோபப்படுபவராகவும் இருந்தாரே!என்று கேட்டேன்.

நபி(ஸல்) அவர்கள்,ஆம் அவர் இப்போது (கணுக்கால் வரை தீண்டும்) சிறிதளவு நரக நெருப்பிலேயே உள்ளார். நான் இல்லையானால் அவர் நரகின் அடித்தளத்திற்குச் சென்றிருப்பார்' என்று கூறினார்கள்.

## சிலேடையாகப் பேசுவது பொய் ஆகாது.

அனஸ்(ரலி) கூறினார்:

அபூ தல்ஹா(ரலி) அவர்களின் புதல்வர் ஒருவர் (நோயுற்றிருந்து) இறந்துவிட்டார். (இது தெரியாமல்) அபூ தல்ஹா(ரலி) அவர்கள் (தம் துணைவியாரிடம்),பையன் எவ்வாறிருக்கிறான்? என்று கேட்டார்கள். அதற்கு (அவர்களின் துணைவியார்) உம்மு சுலைம்(ரலி) அவர்கள்,அவனுடைய மூச்சு அமைதியாக உள்ளது. அவன் (நன்கு) ஓய்வெடுத்துக் கொண்டுவிட்டான் என்றே நம்புகிறேன்' என்று பதிலளித்தார். அபூ தல்ஹா(ரலி) அவர்கள் தம் மனைவி கூறியது உண்மைதான் என்று எண்ணிக் கொண்டார்கள்.

ஹதீஸ் 6209. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அப்போது பாட்டுப்பாடி ஒட்டக மோட்டுபவர் ஒருவர் (அன்ஜஷா என்பவர்) பாடினார். அப்போது (அவரிடம்) நபி(ஸல்) அவர்கள்,அன்ஜஷா! உனக்குக் கேடுதான்! மெல்லப்போ. கண்ணாடிக் குடுவைகளை (பெண்களை) உடைத்து விடாதே!என்றார்கள்.

ஹதீஸ் 6210. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு பயணத்தில் இருந்தார்கள். அப்போதுஅன்ஜஷா என்றழைக்கப்பட்ட ஓர் அடிமை பாட்டுப் பாடி (ஒட்டகத்திலிருந்த) பெண்களை அழைத்துச் சென்றுகொண்டிருந்தார். அப்போது அவரிடம் நபி(ஸல்) அவர்கள்,அன்ஜஷா' நிதானமாக ஓட்டிச்செல். கண்ணாடிக் குடுவைகளை அதாவது பெண்களை உடைத்துவிடாதே' என்றார்கள்.

ஹதீஸ் 6211. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்குஅன்ஜஷா என்றழைக்கப்பட்டபாட்டுப்பாடி ஒட்டகமோட்டுபவர் ஒருவர் இருந்தார். அவர் அழகிய குரல் வளம் கொண்டவராக இருந்தார். (அவர் ஒரு முறை ஒட்டகத்தில் பெண்கள் இருக்க பாடிக்கொண்டிருந்த போது) அவரிடம் நபி(ஸல்) அவர்கள், அன்ஜஷா! நிதானம்! கண்ணாடிக் குடுவைகளை உடைத்துவிடாதே!என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) கத்தாதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: மென்மையான பெண்களைக் கருத்தில் கொண்டே நபி(ஸல்) அவர்கள் (கண்ணாடிக் குடுவைகள் என்று சிலேடையாகக்) கூறினார்கள்.

ஹதீஸ் 6212. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை எதிரிகள் படையெடுத்து வருவதாக) மதீனாவில் பீதி நிலவியது. உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அபூ தல்ஹா(ரலி) அவர்களின் குதிரை ஒன்றில் ஏறி (விவரமறிந்து வரத் துணிவுடன்) புறப்பட்டார்கள். (திரும்பி வந்து)(பீதி ஏற்படுத்தும்) எதையும் நாம் இந்தக் குதிரையைக் கண்டோம்' என்றார்கள்.

## இருக்கும் ஒன்றை இல்லை என்று கூறுவது: அது சரியில்லை என்பதைக் குறிக்க.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் இரண்டு மண்ணறைகளைக் காட்டி(இவற்றில் அடக்கம் செய்யப்பட்டுள்ள) இவர்கள் இருவரும் பெரிய பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை (இருப்பினும்) அதுவும் பெரிய பாவம் தான்' என்றார்கள்.

ஹதீஸ் 6213. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சோதிடர்கள் குறித்துச் சிலர் கேட்டனர். அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்சோதிடர்கள் (பொருட்படுத்தத் தக்க) ஒரு பொருளே அல்ல' என்று பதிலளித்தார்கள். அவர்கள், இறைத்தூதர் அவர்களே! அவ்வாறாயின், சோதிடர்கள் சில வேளைகளில் ஒன்றைப் பற்றி அறிவிக்க அது உண்மையாகி விடுகிறதே (அது எப்படி?)' என்று வினவினர். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அந்த உண்மையான வார்த்தைகளை ஜின் (வானவரிடமிருந்து) ஒட்டுக் கேட்டு வந்து தம் (சோதிட) நண்பனின் காதில் சேவல் கொக்கரிப்பது போல் போட்டு விடுகிறது. சோதிடர்கள் அதனுடன் நூற்றுக்கும் அதிகமான பொய்களைக் கலந்து விடுகின்றனர்' என்று கூறினார்கள்.

## வானத்தை அண்ணாந்து பார்த்தல்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) ஒட்டகத்தை அவர்கள் கவனிக்க வேண்டாமா? அது எவ்வாறு படைக்கப்பட்டிருக்கின்றது என்று. மேலும், வானத்தை (அவர்கள் பார்க்க வேண்டாமா?) அது எவ்வாறு உயர்த்தப்பட்டிருக்கின்றது என்று. (திருக்குர்ஆன் 88:17, 18)

ஆயிஷா(ரலி) கூறினார்

நபி(ஸல்) அவர்கள் அண்ணாந்து வானத்தைப் பார்த்தார்கள்.

ஹதீஸ் 6214. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிறகு (சுமார் மூன்று வருடம்) எனக்கு வேத அறிவிப்பு வருவது நின்று போய்விட்டது. இதற்கிடையில் (ஒரு நாள்) நான் நடந்து போய்க் கொண்டிருந்தேன். அப்போது வானிலிருந்து ஒரு குரலைக் கேட்டேன். உடனே வானத்தை அண்ணாந்து பார்த்தேன். அங்கு ஹிரா (குகையில்) என்னிடம் வந்த அதே வானவர் (ஜிப்ரீல்) வானத்துக்கும் பூமிக்குமிடையே ஓர் ஆசனத்தில் அமர்ந்துகொண்டிருந்தார்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6215. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(ஒரு நாள்) நான் (என் சிறிய தாயார்) மைமூனா(ரலி) அவர்களின் வீட்டில் இரவு தங்கினேன். அவர்களிடம் நபி(ஸல்) அவர்களும் இருந்தார்கள். இரவின் இறுதி மூன்றிலொரு பகுதி அல்லதுஅதில் சிறிது நேரம் ஆனபோது நபி(ஸல்) அவர்கள் (படுக்கையிலிருந்து எழுந்து) அமர்ந்து வானத்தைப் பார்த்தவாறுநிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியின் படைப்(பு அமைப்)பிலும், இரவு - பகல் மாறி, மாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல சான்றுகள் உள்ளன‘ எனும் (திருக்குர்ஆன் 03:190 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

## (ஆழ்ந்த யோசனையில் உள்ள) ஒருவர் நீரிலும் களிமண்ணிலும் குச்சியால் தட்டுவது.

ஹதீஸ் 6216. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் மதீனாவின் தோட்டங்களில் ஒன்றில் இருந்தேன். நபி(ஸல்) அவர்களின் கையில் தடி ஒன்று இருந்தது. (ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்த) அவர்கள் அந்தத் தடியால் நீருக்கும் களிமண்ணுக்கும் இடையே (தரையில்) அடித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர் வந்து (வாயிற் கதவைத்) திறக்கும்படி கேட்டார். நபி(ஸல்) அவர்கள், அவருக்காகத் திறந்துவிடுங்கள் அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்லுங்கள்‘ என்றார்கள். நான் சென்றேன். அங்கே அபூ பக்ர்(ரலி) அவர்கள் இருந்தார்கள். அவர்களுக்காக (வாயிற்கதவைத்) திறந்தேன். அவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்கவிருப்பதாக (நபி(ஸல்) அவர்கள் கூறிய) நற்செய்தியைத் தெரிவித்தேன். பிறகு ஒருவர் வந்து (கதவைத்) திறக்கும்படி கோரினார். (நான் நபியவர்களிடம் அனுமதி கேட்க) நபி(ஸல்) அவர்கள், அவருக்குத் திறந்துவிடுங்கள் அவருக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கிறது என்று நற்செய்தி சொல்லுங்கள்‘ என்றார்கள். அங்கு உமர்(ரலி) அவர்கள் இருந்தார்கள். அவர்களுக்காக(க் கதவைத்) திறந்து அவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்க விருப்பதாக (நபி(ஸல்) அவர்கள் கூறிய) நற்செய்யைத் தெரிவித்தேன். பிறகு ஒருவர் (கதவைத்) திறக்கும்படி கோரினார். (நான் நபியவர்களிடம் சென்று அனுமதி கேட்க) சாய்ந்து கொண்டிருந்த நபி(ஸல்) அவர்கள் (நேராக நிமிர்ந்து) அமர்ந்து(அவருக்கும் திறந்து விடுங்கள் அவருக்கு நேரவிருக்கும் ஒரு துன்பத்தையடுத்து சொர்க்கம் அவருக்குக் கிடைக்கவிருக்கிறது என்று அவருக்கு நற்செய்தி சொல்லுங்கள்‘ என்றார்கள். நானும் சென்றேன். (கதவைத் திறந்தேன்.) அங்கு உஸ்மான்(ரலி) அவர்கள் இருந்தார்கள். அவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்கவிருக்கும் நற்செய்தியைத் தெரிவித்து, நபி(ஸல்) அவர்கள் கூறியதையும் தெரிவித்தேன். அவர்கள்(எனக்கு நேரவிருக்கும் அந்தத் துன்பத்தின் போது) அல்லாஹ்வே (பொறுமையைத் தந்து) உதவி புரிபவன் ஆவான்‘ என்றார்கள்.

## (ஆழ்ந்த சிந்தனையில் உள்ள) ஒருவர் தம் கையிலுள்ள பொருளால் நிலத்தைக் கீறுவது.

ஹதீஸ் 6217 அலீ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (‘பகீஉல் ஃகர்கத் எனும் பொது மையவாடியில்) ஒரு ஜனாஸாவில் கலந்து கொண்டோம். அப்போது அவர்கள் ஒரு தடியால் தரையைக் கீறிய வண்ணம் (ஆழ்ந்த சிந்தனையில்) இருந்தார்கள். பின்னர், தம் இருப்பிடம் சொர்க்கமா அல்லது நரகமா எனத் தீர்மானிக்கப்படாத ஒருவரும் உங்களில் இல்லை‘ என்று கூறினார்கள்.

அப்போது மக்கள் (சிலர்), நாங்கள் (இதையே) நம்பி (நல்லறங்கள் செய்யாமல்) இருந்துவிடமாட்டோமா? என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார் பொல்லார்) எல்லாருக்கும் (அவரவர் செல்லும் வழி) எளிதாக்கப்பட்டுள்ளது‘ என்று

கூறிவிட்டு(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்ப்பிக்கிறவர் சுலபமான வழியில் செல்ல நாம் வகை செய்வோம்' எனும் (திருக்குர்ஆன் 92:5-7 ஆகிய) வசனங்களை ஓதிக் காட்டினார்கள்.

## ஆச்சரியம் மேலிடும்போது இறைவனைப் பெருமைப்படுத்துவதும் துதிப்பதும்.

ஹதீஸ் 6218 (ஒரு நாள் இரவில்) நபி(ஸல்) அவர்கள் (திடீரென) விழித்தெழுந்து (பிரமிப்புடன்),சுப்ஹானல்லாஹ்! (அல்லாஹ் தூயவன். இன்றிரவு) இறக்கிவைக்கப்பட்ட கருவூலங்கள் தாம் என்ன? (இன்றிரவு) இறக்கி வைக்கப்பட்ட குழப்பங்கள் தாம் என்ன? இந்த அறைகளில் உள்ள பெண்களை எழுப்பிவிடுகிறவர் யார்? தம் துணைவியர் குறித்தே இவ்வாறு கூறினார்கள். அவர்கள் (அல்லாஹ்வைத்) தொழட்டும்! ஏனெனில், இவ்வுலகில் உடையணிந்திருக்கும் எத்தனையோ பெண்கள் மறுமையில் நிர்வாணமானவர்களாய் இருப்பார்கள்' என்று கூறினார்கள்.

உமர்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் நபி(ஸல்) அவர்களிடம்,தங்கள் துணைவியரை மணவிலக்குச் செய்துவிட்டீர்களா? என்று (ஒரு சந்தர்ப்பத்தில்) கேட்டேன். அவர்கள்,இல்லை' என்று பதிலளித்தார்கள். நான் (ஆச்சரியப்பட்டவாறு)அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று சொன்னேன்

ஹதீஸ் 6219 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஸஃபிய்யா பின்த் ஹுயை(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ரமளான் மாதத்தின் இறுதிப் பத்து நாள்களில் (மஸ்ஜிதுந்நபவீ) பள்ளிவாசலில்இஃதிகாஃப் இருந்து கொண்டிருந்தபோது அவர்களைச் சந்திப்பதற்காக நான் (பள்ளி வாசலுக்குச்) சென்றேன். (அந்த) இரவில் சிறிது நேரம் பேசிவிட்டு நான் திரும்பிச் செல்ல எழுந்தபோது, என்னை அனுப்பி வைப்பதற்காக என்னுடன் நபி(ஸல்) அவர்களும் எழுந்தார்கள். நான் நபி(ஸல்) அவர்களின் (மற்றொரு) துணைவியாரான உம்மு ஸலமா(ரலி) அவர்களின் இல்லத்தை ஒட்டியிருந்த பள்ளிவாசலின் வாயில் அருகில் வந்தபோது அன்சாரிகளில் இருவர் எங்களைக் கடந்து சென்றனர். அவர்கள் இருவரும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சலாம் கூறிவிட்டுப் போய்க் கொண்டேயிருந்தனர். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இருவரையும் பார்த்து,சற்று பொறுங்கள்! (என்னுடன் இருக்கும்) இந்தப் பெண் ஸஃபிய்யா பின்த் ஹுயை தான்' என்றார்கள். அந்த இருவரும் (வியப்புடன்)சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்), இறைத்தூதர் அவர்களே!என்றனர். நபி(ஸல்) அவர்கள் சொன்ன வார்த்தை அவர்கள் இருவருக்கும் பளுவாக இருந்தது. நபி(ஸல்) அவர்கள்ஷைத்தான் ஆதமின் மகனின் (மனிதனின்) இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் (சந்தேகம் அல்லது தீய எண்ணம் எதையாவது) அவன் போட்டு விடுவானோ என்று நான் அஞ்சினேன்' என்றார்கள்.

## கல்சுண்டு விளையாட்டு ('கத்ஃப்') தடை

ஹதீஸ் 6220. அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல்(ரலி) அறிவித்தார்.

கல்சுண்டு விளையாட்டிற்கு ('கத்ஃப்') நபி(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். மேலும் நபி(ஸல்) அவர்கள்,அது வேட்டைப் பிராணியையும் கொல்லாது; எதிரியையும் வீழ்த்தாது. மாறாக, அது கண்ணைப் பறித்து விடும் பல்லை உடைத்துவிடும்' என்றார்கள்.

## தும்மியவர் அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொல்வது.

ஹதீஸ் 6221. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கருகில் இரண்டு மனிதர்கள் தும்மினர். அப்போது அவர்களில் ஒருவருக்கு நபி(ஸல்) அவர்கள் ('யர்ஹமுகல்லாஹ் - அல்லாஹ் உமக்குக் கருணைபுரிவானாக என்று)

மறுமொழி கூறினார்கள். மற்றொருவருககு மறுமொழி கூறவில்லை. அப்போது அவர்களிடம் (இது குறித்துக்) கேட்கப்பட்டது. அதற்கவர்கள், இவர் (தும்மியவுடன்)அல்ஹம்துலில்லாஹ் என்று இறைவனைப் புகழ்ந்தார். அவர், அல்ஹம்து லில்லாஹ் என்று இறைவனைப் புகழவில்லை. (எனவே, இவருக்கு மறுமொழி பகர்ந்தேன். அவருக்கு மறுமொழி பகரவில்லை)' என்று பதிலளித்தார்கள்.

## தும்மியவர் ('அல்ஹம்துலில்லாஹ் என்று) அல்லாஹ்வைப் புகழ்ந்தால், அவருக்கு ('யர்ஹமுகல்லாஹ் - அல்லாஹ் உமக்குக் கருணைபுரிவானாக என்று) மறுமொழி கூறுவது.

இது குறித்து அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 6222. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஏழு விஷயங்களைக் கடைப்பிடிக்கும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். ஏழு செயல்களைச் செய்ய வேண்டாமென எங்களுக்குத் தடைவிதித்தார்கள்.

எங்களுக்குக் கட்டளையிட்ட ஏழு விஷயங்கள் இவைதாம்:

1. நோயாளிகளை நலம் விசாரிப்பது.

2. ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்வது.

3. தும்மிய(வர்அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று கூறினால் அ)வருக்கு ('அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக என்று) மறுமொழி கூறுவது.

4. விருந்து அழைப்பை ஏற்றுக் கொள்வது.

5. சலாமுக்கு (முகமனுக்கு) பதில் உரைப்பது

6. அநீதியிழைக்கப்பட்டவருக்கு உதவுவது.

7. சத்தியம் செய்தவர் அதை நிறைவேற்ற உதவுவது.

(ஆண்களாகிய) எங்களுக்கு அவர்கள் தடை செய்த ஏழு விஷயங்கள் இவைதாம்:

1. தங்கமோதிரம் அணிவது அல்லதுதங்க வளையம் அணிவது 2. சாதாரணப் பட்டு அணிவது. 3. அலங்காரப் பட்டு அணிவது. 4. மென்பட்டு அணிவது 5. மென்பட்டுத் திண்டு பயன்படுத்துவது.

## தும்மல் விரும்பத்தக்கது கொட்டாவி விரும்பத்தகாதது.

ஹதீஸ் 6223. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் தும்மலை விரும்புகிறான் கொட்டாவியை வெறுக்கிறான். எனவே, ஒருவர் தும்மியவுடன்அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொன்னால், அதைக் கேட்கும் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் அவருக்கு ('யர்ஹமுக்கல்லாஹ் - அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும் என்று) மறுமொழி கூறுவது அவசியமாகும். ஆனால், கொட்டாவி ஷைத்தானிடமிருந்து வருவதாகும். உங்களில் எவரேனும் கொட்டாவிவிட்டால் முடிந்தவரை அதைக் கட்டுப்படுத்தட்டும். ஏனெனில், யாரேனும் (கட்டுப்படுத்தாமல்)ஹா என்று (கொட்டாவியால்) சப்தமிட்டால் ஷைத்தான் சிரிக்கிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தும்மிய(வர் அல்லாஹ்வைப் புகழ்ந்தால் அவ)ருக்கு எவ்வாறு மறுமொழி கூற வேண்டும்?

ஹதீஸ் 6224. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் தும்மினல்,அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொல்லுங்கள். (இதைக் கேட்கும்)உங்கள் சகோதரர் அல்லதுநண்பர் யர்ஹமுக்கல்லாஹ் (அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும்) என்று சொல்லட்டும். அவர் உங்களுக்காகயர்ஹமுக்கல்லாஹ் என்ற சொன்னால், நீங்கள் (அவருக்காக)யஹ்தீக்குமுல்லாஹ் வ யுஸ்லிஹ் பாலக்கும் (அல்லாஹ் உங்களுக்கு நல்வழி காட்டட்டும்! உங்கள் நிலையைச் சீராக்கட்டும்) என்று சொல்லுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

தும்மியவர்அல்ஹம்துலில்லாஹ் (-எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொல்லவில்லையானால், அவருக்கு ("யர்ஹமுக்காஹ் - அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும்' என்று) மறுமொழி சொல்லத் தேவையில்லை.

ஹதீஸ் 6225. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களுக்கருகில் இருவர் தும்மினர். அப்போது அவர்களில் ஒருவருக்கு நபி(ஸல்) அவர்கள் ('அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக என) மறுமொழி கூறினார்கள். இன்னொருவருக்கு மறுமொழி கூறவில்லை. அப்போது அந்த மனிதர்,இறைத்தூதர் அவர்களே! இவருக்கு மறு மொழி கூறினீர்கள். எனக்கு மறுமொழி கூறவில்லையே!என்று கேட்டதற்கு நபி(ஸல்) அவர்கள்,இவர் (தும்மியவுடன்) ('அல்ஹம்துலில்லாஹ் என்று) இறைவனைப் புகழ்ந்தார். நீர் ('அல்ஹம்துலில்லாஹ் என்று கூறி) இறைவனைப் புகழவில்லை. (எனவே, இவருக்கு மறுமொழி பகர்ந்தேன். உமக்கு மறுமொழி பகரவில்லை)' என்று பதிலளித்தார்கள்.

## கொட்டாவி வரும்போது வாயில் கையை வைத்துக் (கட்டுப்படுத்திக்) கொள்ளவேண்டும்.

ஹதீஸ் 6226. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் தும்மலை விரும்புகிறான். கொட்டாவியை வெறுக்கிறான். எனவே, ஒருவர் தும்மியவுடன்அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொன்னால், அதைக் கேட்கும் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் அவருக்கு ('அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரிவானாக என) மறுமொழி கூறுவது அவசியமாகும். ஆனால், கொட்டாவி ஷைத்தானிடமிருந்து வருவதாகும். எனவே, உங்களில் எவரேனும் கொட்டாவிவிட்டால் முடிந்தவரை அதைக் கட்டப்படுத்தட்டும். ஏனெனில், உங்களில் ஒருவர் (கட்டுப்படுத்தாமல்ஹா என்று சப்தமிட்டுக்) கொட்டாவிவிட்டால் அதைப் பார்த்து ஷைத்தான் சிரிக்கிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

# அத்தியாயம் 79 (வீட்டுக்குள் நுழைய) அனுமதி கோருதல்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## சலாமைத் தொடங்குதல்

ஹதீஸ் 6227 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (முதல் மனிதர்) ஆதமை அவருக்கே உரிய (அழகிய) உருவத்தில் படைத்தான். அப்போது அவர்களின் உயரம் அறுபது முழங்களாக இருந்தது. அவர்களைப் படைத்தபோது,நீங்கள் சென்று, அங்கு அமர்ந்துகொண்டிருக்கும் வானவர்களுக்கு சலாம் (முகமன்) கூறுங்கள். அவர்கள் உங்களுக்குக் கூறும் (பதில்) வாழ்த்தைக் கேட்டுக் கொள்ளுங்கள். ஏனெனில், அதுதான் உங்களின் முகமனும் உங்கள் சந்ததிகளின் முகமனும் ஆகும்' என்று இறைவன் சொன்னான். அவ்வாறே ஆதம்(அலை) அவர்கள் (வானவர்களிடம் சென்று),அஸ்ஸலாமு அலைக்கும்' (உங்களுக்கு சாந்தி நிலவட்டும்) என்று (முகமன்) சொன்னார்கள். சாந்தியும் இறைவனின் கருணையும் (உங்களின் மீது நிலவட்டும்)' என்று வானவர்கள் பதில் கூறினார்கள். அவர்கள் (தங்கள் பதிலில்)இறைவனின் கருணையும் என்பதை அதிகப்படியாகச் சொன்னார்கள். எனவே, (மறுமை நாளில்) சொர்க்கத்தில் நுழைபவர்கள் ஒவ்வொருவரும் ஆதம்(அலை) அவர்களின் உருவத்தில் தான் நுழைவார்கள். ஆதம் (அலை) அவர்களின் காலத்திலிருந்து இன்று வரை (மனிதப்) படைப்புகள் (உருவத்திலும் அழம்லும்) குறைந்து கொண்டேவருகின்றன.

என அபூ ஹுுரைரா(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! உங்கள் வீடுகளல்லாத (வேறு) வீடுகளில், அ(வ்வீட்டிலுள்ள)வர்களிடம் அனுமதி பெற்று, அவர்களுக்கு சலாம் (முகமன்) சொல்லாத வரை (அவற்றினுள்) பிரவேசிக்காதீர்கள். (அவ்வாறு நடப்பதே) உங்களுக்கு நன்மையாகும் நீங்கள் நற்போதனை பெறுவதற்காக (இது உங்களுக்குக் கூறப்படுகிறது).

அதில் நீங்கள் யாரையும் காணாவிட்டால், உங்களுக்கு அனுமதி கொடுக்கப்படும் வரை அதில் பிரவேசிக்காதீர்கள் அன்றியும்,திரும்பிப் போய்விடுங்கள் என்று உங்களுக்குச் சொல்லப்பட்டால், அவ்வாறே திரும்பி விடுங்கள். அதுவே உங்களுக்கு மிகவும் பரிசுத்தமானதாகும் மேலும், அல்லாஹ் நீங்கள் செய்வதை நன்கறிபவன்.

(யாரும்) வசிக்காத வீடுகளில் உங்களுடைய பொருள்கள் இருந்தால், அவற்றில் நீங்கள் பிரவேசிப்பது உங்களின் மீது குற்றமாகாது மேலும், அல்லாஹ் நீங்கள் பம்ரங்கமாய்ச் செய்வதையும் நீங்கள் மறைத்துவைப்பதையும் நன்கறிவான். (திருக்குர்ஆன் 24:27-29)

-ஸயீத் இப்னு அபில்ஹஸன்(ரஹ்) அவர்கள் (தம் சகோதரர்) ஹஸன் அல்பஸரீ(ரஹ்) அவர்களிடம்,அந்நியப் பெண்கள் தங்கள் நெஞ்சுப் பகுதியையும் தம் தலைகளையும் திறந்தவண்ணம் இருக்கிறார்கள்' என்றார்கள். அதற்கு ஹஸன் அல்பஸரீ(ரஹ்) அவர்கள்,அப்பெண்களை(ப் பார்க்காதே. அவர்களை)விட்டு உன் பார்வையைத் திருப்பிக்கொள். (ஏனெனில்,) அல்லாஹ் (குர்ஆனில்),(நபியே!) இறை நம்பிக்கையுடைய ஆண்களுக்கு, அவர்கள் தங்கள் பார்வையைத் தாழ்த்திக் கொள்ளுமாறும் தங்கள் கற்பைப் பாதுகாத்துக் கொள்ளுமாறும் கூறுங்கள். இது அவர்களைத் தூய்மையாக்கி வைக்கும் (திருக்குர்ஆன் 24:30) என்று கூறுகிறான்' என்றார்கள்.

“அவர்களுக்கு எதுவெல்லாம் அனுமதிக்கப்படவில்லையோ அதிலிருந்து தங்கள் கற்பபை அவர்கள் பேணிக்காத்திட வேண்டும்‘ என கத்தாதா(ரஹ்) அவர்கள் விளக்கமளித்தார்கள்.

மேலும், அல்லாஹ் கூறினான்:

இன்னும் இறைநம்பிக்கையுடைய பெண்களுக்கு (நபியே!) நீர் கூறும்: அவர்கள் தங்கள் பார்வையைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும் தங்கள் கற்பைப் பேணிக் காத்துக் கொள்ளவேண்டும். (திருக்குர்ஆன் 24:31)

(திருக்குர்ஆன் 40:19 வது வசனத்திலுள்ள)கண்கள் செய்யும் சூதுகள் என்பதுஎவற்றைப் பார்க்கக் கூடாதோ அவற்றை(க் கள்ளத் தனமாக)ப் பார்ப்பதைக் குறிக்கிறது.

ஸு ஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: பருவ வயதை அடையாத பெண்களி(ன் உறுப்புகளி)ல் எதைப் பார்ப்பது பாலுணர்வைத் தூண்டுமோ அதைப் பார்ப்பது முறையல்ல. அவள் சிறுமியாக இருந்தாலும் சரியே!

அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அவர்கள்,மக்காவில் விற்கப்படும் அடிமைப் பெண்களைப் பார்ப்பதும் வெறுக்கத்தக்க செயலாகும். (அவளை விலை கொடுத்து வாங்கும் எண்ணம் இருந்தாலே தவிர!என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6228. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(‘விடைபெறும் ஹஜ்ஜின்போது) அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் (என் சகோதரர்) ஃபள்ல் இப்னு அப்பாஸைத் தமக்குப் பின்னால் வாகனத்தில் அமர்த்திக் கொண்டார்கள். ஃபள்ல் மிகவும் அழகானவராயிருந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்களுக்கு மார்க்க விளக்கம் அளிப்பதற்காகத் தம் வாகனத்தை நிறுத்தியிருந்தார்கள். (அப்போது)கஸ்அம் குலத்தைச் சேர்ந்த அழகான பெண்ணொருத்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் மார்க்க விளக்கம் கேட்டு வந்தார். அப்போது ஃபள்ல் அப்பெண்ணைக் கூர்ந்து நோக்கலானார். அந்தப் பெண்ணின் அழகு அவருக்கு ஆச்சரியத்தை ஊட்டியது. நபி(ஸல்) அவர்கள் திரும்பிப் பார்த்தபோது ஃபள்ல் அப்பெண்ணைக் கூர்ந்து பார்ப்பதைக் கண்டார்கள். உடனே ஃபள்லின் முகவாயைத் தம் கரத்தால் பிடித்து அப்பெண்ணைப் பார்க்கவிடாமல் அவரின் முகத்தைத் திருப்பிவிட்டார்கள்.

அப்போது அப்பெண்,இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் தன் அடியார்களின் மீது விதித்துள்ள ஹஜ், என் தந்தையின் மீது கடமையாயிற்று. அவரோ வயது முதிந்தவர் வாகனத்தில் அவரால் சரியாக அமர இயலாது. எனவே, நான் அவர் சார்பாக ஹஜ் செய்தால் அது நிறைவேறுமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,ஆம் (நிறைவேறும்)‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6229 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் சாலைகளில் அமர்வதைத் தவிர்த்து விடுங்கள்‘ என்று கூறினார்கள். அப்போது மக்கள்,இறைத்தூதர் அவர்களே! நாங்கள் அங்கு அமராமல் இருக்க இயலாது. அங்கு (அமர்ந்துதான் பல விஷயங்களை) நாங்கள் அங்கு அமராமல் இருக்க இயலாது. அங்கு (அமர்ந்துதான் பல விஷயங்களை) நாங்கள் பேசிக்கொள்கிறோம்‘ என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,(அங்கு) நீங்கள் அமர்ந்துதான் ஆகவேண்டும் என்றிருந்தால், சாலைக்கு அதன் உரிமையைக் கொடுத்து விடுங்கள்‘ என்று கூறினார்கள். மக்கள்,சாலையின் உரிமை என்ன? இறைத்தூதர் அவர்களே!என்று வினவினர். நபி(ஸல்) அவர்கள்,(அந்நியப் பெண்களைப் பார்க்காமல்) பார்வையைத் தாழ்த்திக் கொள்வதும், (பாதசாரிகளுக்குச் சொல்லாலோ செயலாலோ) துன்பம் தராமலிருப்பதும், சலாமுக்கு பதிலுரைப்பதும், நன்மை புரியும் படி கட்டளையிடுவதும், தீமையிலிருந்து தடுப்பதும் (அதன் உரிமைகள்) ஆகும்‘ என்று பதிலளித்தார்கள்.

## ‘அஸ்ஸலாம் என்பது அல்லாஹ்வின் பெயர்களில் ஒன்றாகும்.

அல்லாஹ் கூறினான்:

உங்களுக்கு சலாம் (முகமன்) கூறப்படும் பொழுது, அதற்குப் பிரதியாக அதைவிட அழகான (வார்த்தைகளைக் கொண்டு) சலாம் கூறுங்கள் அல்லது அதையே திருப்பிக் கூறுங்கள். (திருக்குர்ஆன் 04:86)8

ஹதீஸ் 6230. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (அவர்களைப் பின்பற்றித்) தொழும்போதுஅஸ்ஸலாமு அலல்லாஹி கப்ல இபாதிஹி, அஸ்ஸலாமு அலா ஜிப்ரீல, அஸ்ஸலாமு அலா மீகாயீல, அஸ்ஸலாமு அலா ஃபுலானின் வ ஃபுலானின் (அடியார்களுக்கு முன் அல்லாஹ்வுக்கு முகமன் உண்டாகட்டும். (வானவர்) ஜிப்ரீல் மீது சாந்தி உண்டாகட்டும். இன்னார் இன்னார் மீது சாந்தி உண்டாகட்டும்) என்ற கூறிவந்தோம். நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் எங்களை நோக்கித் திரும்பி,நிச்சயமாக அல்லாஹ்வேஸலாம் (சாந்தியளிப்பவன்) ஆக இருக்கிறான். எனவே, உங்களில் ஒருவர் தொழுகையின் இருப்பில் இருக்கும்போதுஅத்தஹிய்யாத்து லில்லாஹி, வஸ்ஸலவாத்து, வத்தய்யிபாத்து அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு வ ரஹ்மதுல்லாஹி வ பரகாத்துஹு , அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன (சொல், செயல், பொருள் சார்ந்த எல்லாக் காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்களின் மீது சாந்தியும் அல்லாஹ்வின் அருளும் சுபிட்சமும் ஏற்படட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் அனைவர் மீதும் சாந்தி உண்டாகட்டும்) என்று கூறட்டும். இதை நீங்கள் கூறினாலே வானம் மற்றும் பூமியில் உள்ள அனைத்து நல்லடியார்களுக்கும் சலாம் கூறினார்கள் என அமையும். அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று நான் உறுதி கூறுகிறேன். மேலும், முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் உறுதி கூறுகிறேன்) என்றும் கூறட்டும். பிறகு, தாம் நாடிய பிரார்த்தனையை ஓதிக்கொள்ளலாம்' என்றார்கள்.

## சிறு குழுவினர் பெருங் குழுவினருக்கு (முதலில்) சலாம் சொல்வது.

ஹதீஸ் 6231 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சிறியவர் பெரியவருக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், சிறு குழுவினர் பெருங் குழுவினருக்கும் (முதலில்) சலாம் (முகமன்) சொல்லட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கு (முதலில்) சலாம் சொல்வது.

ஹதீஸ் 6232 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், சிறு குழுவினர் பெருங் குழுவினருக்கும் (முதலில்) சலாம் சொல்லட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கு (முதலில்) சலாம் சொல்வது.

ஹதீஸ் 6233 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வாகனத்தில் செல்பவர் நடந்து செல்பவருக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், சிறு குழுவினர் பெருங் குழுவினருக்கும் (முதலில்) சலாம் சொல்லட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சிறியவர் பெரியவருக்கு (முதலில்) சலாம் சொல்வது.

ஹதீஸ் 6234 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சிறியவர் பெரியவருக்கும், நடந்து செல்பவர் அமர்ந்திருப்பவருக்கும், சிறு குழுவினர் பெருங் குழுவினருக்கும் (முதலில்) சலாம் சொல்லட்டும்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

## (மக்களிடையே) சலாமைப் பரப்புவது

ஹதீஸ் 6235 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஏழு விஷயங்களைக் கடைப்பிடிக்கும்படி எங்களுக்குக் கட்டளையிட்டார்கள். (அவையாவன:)

1. நோயாளிகளை நலம் விசாரிப்பது. 2. ஜனாஸாக்களைப் பின்தொடர்ந்து செல்வது. 3. தும்மியவர்அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று சொன்னால் அவருக்காகயர்ஹமுக்கல்லாஹ் (அல்லாஹ் உங்களுக்குக் கருணை புரியட்டும்) என்று மறுமொழி கூறுவது. 4. நலிந்தவருக்கு உதவுவது. 5. அநீதியிழைக்கப்பட்டவருக்கு ஒத்தாசை செய்வது. 6. (மக்களிடையே) சலாமைப் பரப்புவது. 7. சத்தியம் செய்தவர் அதை நிறைவேற்ற உதவுவது.

(பின்வருவனவற்றைச் செய்யக் கூடாதென) தடைசெய்தார்கள்.

1. வெள்ளிப் பாத்திரத்தில் பருகுவது. 2. (ஆண்கள்) தங்கமோதிரம் அணிவது. 3. மென்பட்டுத் திண்டில் அமர்வது. 4. சாதாரணப் பட்டு அணிவது. 5. அலங்காரப் பட்டு அணிவது. 6. எகிப்திய பட்டு அணிவது. 7. தடித்த பட்டு அணிவது.

## அறிமுகமானவருக்கு அறிமுகமில்லாதவருக்கும் சலாம் சொல்வது.

ஹதீஸ் 6236. அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்,இஸ்லாமி(யப் பண்புகளி)ல் மிகவும் சிறந்தது எது? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,(பசித்தவருக்கு) உணவளிப்பதும், உமக்கு அறிமுகமானவருக்கும் உமக்கு அறிமுகமற்றவருக்கும் சலாம் சொல்வதுமாகும்' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6237 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிம் தம் சகோதரரிடம் (மனஸ்தாபம் கொண்டு) மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று. அவர்கள் இருவரும் சந்தித்து இவரைவிட்டும் அவரும், அவரைவிட்டு இவரும் முகம் திருப்பிக்கொள்வர். (இவ்விதம் செய்யலாகாது.) இவர்கள் இருவரில் சலாமை முதலில் சொல்பவரே சிறந்தவராவார்.

என அபூ அய்யூப் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இதை நான் இப்னு ஷிஹாப் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) அவர்களிடமிருந்து மூன்று முறை செவியேற்றுள்ளேன்.

## பர்தா குறித்து வசனம் (அருளப்பெறுதல்).

ஹதீஸ் 6238. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவைத் துறந்து) மதீனாவுக்கு வந்தபோது எனக்குப் பத்து வயது. இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாழ்வி(ன் இறுதிப் பகுதியி)ல் பத்தாண்டு காலம் நான் அவர்களுக்குச் சேவகம் செய்தேன். பர்தா தொடர்பான வசனம் அருளப்பெற்றது குறித்து

மகக்ளில் நானே மிகவும் அறிந்தவனாயிருந்தேன். அது குறித்து உபை இப்னு கஅப்(ரலி) அவர்கள் என்னிடம் கேட்டு(த் தெரிந்து) உள்ளார்கள்.

(அன்னை) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மணந்து தாம்பத்திய உறவைத் தொடங்கிய சந்தர்ப்பத்தில்தான் (இந்த வசனம்) ஆரம்பமாக அருளப்பெற்றது. நபி(ஸல்) அவர்கள் ஸைனபின் மணாளராக இருந்தபோது (வலீமா - மணவிருந்துக்காக) மக்களை அழைத்தார்கள். மக்கள் வந்து சாப்பிட்டுவிட்டு வெளியேறினர். அவர்களில் ஒரு குழுவினர் மட்டும் (எழுந்து செல்லாமல்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகிலேயே நீண்ட நேரம் இருந்தனர். அவர்கள் வெறியேறட்டும் என்பதற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளியேறினார்கள். நானும் அவர்களுடன் வெளியேறினேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நடக்க, நானும் அவர்களுடன் நடந்தேன். இறுதியில் ஆயிஷா(ரலி) அவர்களின் அறையின் நிலைப்படிக்கு வந்தார்கள். பிறகு அக்குழுவினர் வெளியேறிப்பார்கள் என்று எண்ணியவாறு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஸைனப் அவர்களின் இல்லத்திற்குத்) திரும்பினார்கள். நானும் அவர்களுடன் திரும்பினேன். ஸைனப்(ரலி) அவர்களிடம் வந்தபோது அந்தக் குழுவினர் கலைந்து செல்லாமல் அங்கேயே அமர்ந்து கொண்டிருந்தார்கள். இதைக் கண்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மீண்டும்) திரும்பி வந்தார்கள். நானும் அவர்களுடன் திரும்பினேன். (இப்போதும்) ஆயிஷா(ரலி) அவர்களின் அறையின் நிலைப்படிக்கு வந்தார்கள். அக்குழுவினர் வெளியேறியிருப்பார்கள் என்று நினைத்துக் கொண்டு மீண்டும் திரும்பினார்கள். நானும் அவர்களுடன் திரும்பினேன். அப்போது அந்தக் குழுவினர் வெளியேறிச் சென்று விட்டிருந்தனர். அப்போதுதான் பர்தா தொடர்பான (திருக்குர்ஆன் 33:53 வது) இறைவசனம் அருளப்பெற்றது. உடனே எனக்கும் தமக்குமிடையே நபி(ஸல்) அவர்கள் திரையிட்டார்கள்.

ஹதீஸ் 6239 அனஸ் இப்னு மாலிக் அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை மணமுடித்துக்கொண்டபோது மக்கள் வந்து (வலீமா - மணவிருந்து) உண்டுவிட்டு, பிறகு (எழுந்து செல்லாமல் அங்கேயே) அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நபி(ஸல்) அவர்கள் எழுவதற்குத் தயாராவதைப் போன்று காட்டலானார்கள். ஆனால், மக்கள் எழுந்தபாடில்லை. இதைக் கண்டபோது நபி(ஸல்) அவர்கள் எழுந்து சென்றார்கள். நபி(ஸல்) அவர்கள் எழுந்து சென்றபோது மக்களில் சிலரும் எழுந்து சென்றனர். மற்றவர்கள் அமர்ந்து கொண்டிருந்தார்கள். (வெளியில் சென்றுவிட்டு) நபி(ஸல்) அவர்கள் (வீட்டுக்குள்) நுழைய வந்தபோது அந்தச் சில பேர் (அப்போதும்) அமர்ந்துகொண்டேயிருந்தார்கள். (சிறிது நேரத்திற்குப்) பிறகு அவர்களும் எழுந்து நடந்தார்கள். (மீண்டும் வெளியில் சென்றிருந்த) நபி(ஸல்) அவர்களிடம் நான் (சென்று அந்தச் சிலர் எழுந்து சென்றுவிட்டதைத்) தெரிவித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் வந்து (வீட்டுக்குள்) நுழைந்தார்கள். (அவர்களுடன்) நானும் நுழையப் போனேன். அப்போதுதான் எனக்கும் தமக்குமிடையே நபி(ஸல்) அவர்கள் (ஹிஜாப்) திரையிட்டார்கள்.

மேலும், உயர்ந்தவனான அல்லாஹ்இறைநம்பிக்கையாளர்களே! நபியின் இல்லங்களில் (அழைப்பின்றி) நுழையாதீர்கள். அவ்வாறு (நபியின் இல்லத்தில் நடக்கும்) விருந்துக்காக உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டாலும், அப்போதும் கூட உணவு தயாராவதை எதிர்பார்த்து (அங்கே காத்து) இராதீர்கள். மாறாக, (உணவு தயார் வாருங்கள் என) நீங்கள் அழைக்கப்படும்போது நுழையுங்கள். சாப்பிட்டு முடிந்ததும் கலைந்து சென்றுவிடுங்கள். பேசிக் கொண்டிருப்பதில் ஆர்வமாய் இருந்துவிடாதீர்கள். நிச்சயமாக உங்களின் இச்செயல் நபிக்கு வேதனை அளிக்கின்றது. ஆயினும், இதனை உங்களிடம் கூற அவர் வெட்கப்படுகிறார். ஆனால், அல்லாஹ்வோ சத்தியத்தைக் கூற வெட்கப்படுவதில்லை‘ எனும் (திருக்குர்ஆன் 33:53 வது) வசனத்தை அருளினான்.

அபூ அப்தில்லாஹ் (புகாரீயாகிய நான்) கூறுகிறேன்:

**‘விருந்தளிப்பவர் (அவையிலிருந்து) எழுவதற்கும் வெளியே செல்வதற்கும் விருந்தாளிகளிடம் அனுமதி கேட்க வேண்டியதில்லை என்றும், விருந்தாளிகள் எழுந்து செல்லட்டும் என்ற நோக்கில் தாம் எழுந்து போகத் தயாராவது போல் காட்டலாம் என்றும் இந்த ஹதீஸிலிருந்து (நமக்கு) மார்க்கச் சட்டம் கிடைக்கிறது.**

ஹதீஸ் 6240 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம், தங்கள் துணைவியரை பர்தா அணியச் சொல்லுங்கள். (அதுவே அவர்களுக்குப் பாதுகாப்பு)‘ என்று கூறுவார்கள். ஆனால், (அப்போது) நபி(ஸல்) அவர்கள் (ஒன்றும்) செய்யவில்லை. நபி(ஸல்) அவர்களின் துணைவியரான நாங்கள் ஒவ்வொரு நாள் இரவிலகி (இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காக ஊருக்கு ஒதுக்குப் புறத்திலுள்ள திறந்த வெளியான)மனாஸிஉ எனுமிடத்திற்குச் செல்வோம்.

(ஒரு நாள் நபியவர்களின் துணைவியார்) சவ்தா பின்த் ஸம்ஆ(ரலி) அவர்கள் (அங்கு செல்ல) வெளியேறினார்கள். அவர் உயரமான பெண்ணாயிருந்தார். அப்போது ஓர் அவையில் அமர்ந்திருந்த உமர்(ரலி) அவர்கள் அவரைப் பார்த்து, சவ்தாவே! தங்களை நாம் அடையாளம் கண்டுகொண்டோம்‘ என்று பர்தா சட்டம் அருளப்பெற வேண்டுமென்ற பேரார்வத்தில் கூறினார்கள். பிறகு, அல்லாஹ் பர்தா தொடர்பான வசனத்தை அருளினான்.

## (பார்க்கக் கூடாததைப்) பார்க்க நேரும் என்பதாலேயே (வீட்டுக்குள் நுழைய) அனுமதி கோருதல் (சட்டமாக்கப்பட்டது).

ஹதீஸ் 6241 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் அறைகளில் ஒன்றினுள் ஒரு துவாரத்தின் வழியாக ஒருவர் எட்டிப்பார்த்தார். நபி(ஸல்) அவர்களுடன் ஈர்வலிச் சீப்பு ஒன்று இருந்தது. அதனால் தம் தலையை அவர்கள் மோதிக் கொண்டிருந்தார்கள். (அவர் எட்டிப் பார்த்ததைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள், நீ (துவாரத்தின் வழியாகப்) பார்க்கிறாய் என்பதை நான் (முன்பே) அறிந்திருந்தால் இந்தச் சீப்பினால் உன் கண்ணில் குத்தியிருப்பேன். (அடுத்தவர் வீட்டுப் பெண்களைப்) பார்க்க நேரிடும் என்பதற்காகவே அனுமதி கேட்பது சட்டமாக்கப்பட்டது‘ என்றார்கள்.

ஹதீஸ் 6242. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களின் அறைகளில் ஒன்றின் வழியாக எட்டிப் பார்த்தார். (இதைக் கண்ட) நபி(ஸல்) அவர்கள் நீளமான அம்பின்கூர்முனையுடன் அல்லதுகூர்முனைகளுடன் அவருக்குத் தெரியாமல் அவரை நோக்கிச் சென்று (அவரின் கண்ணில்) குத்தப்போனதை இப்போதும் நான் பார்ப்பது போன்று உள்ளது.

## மர்ம உறுப்பு அல்லாத (மற்ற) உறுப்புகளின் விபசாரம்.

ஹதீஸ் 6243 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரத்தில் மனிதனுக்குள் பங்கை இறைவன் எழுதியுள்ளான். அதை மனிதன் அடைந்தே தீருவான். (மர்ம உறுப்பின் விபசாரம் மட்டுமல்ல கண்ணும் நாவும் கூட விபசாரம் செய்கின்றன.) கண் செய்யும் விபசாரம் (தவறான) பார்வையாகும். நாவு செய்யும் விபசாரம் (பாலுணர்வைத் தூண்டும்) பேச்சாகும். மனம் ஏங்குகிறது இச்சை கொள்கிறது. மர்ம உறுப்பு இவை அனைத்தையும் உண்மையாக்குகிறது. அல்லது பொய்யாக்குகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ளதை விடச் சிறு பாவங்களுக்கு எடுத்துக்காட்டாக வேறெதையும் நான் காணவில்லை.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## மும்முறை சலாம் சொல்லி அனுமதி கோருவது.

ஹதீஸ் 6244 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (சபையோருக்கு, அல்லது அயலார் வீட்டுக்குள் நுழைய அனுமதி கேட்டு) சலாம் கூறினால் மூன்று முறை சலாம் கூறுவார்கள். ஏதாவது ஒரு வார்த்தை பேசினால் (மக்கள் நன்கு விளங்கிக் கொள்வதற்காக) அதனை மூன்று முறை திரும்பச் சொல்வார்கள். 20

ஹதீஸ் 6245. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நான் அன்சாரிகளின் அவையொன்றில் அமர்ந்திருந்தேன். அப்போது பதற்றமடைந்தவரைப் போன்று அபூ மூஸா(ரலி) அவர்கள் வந்து, நான் உமர்(ரலி) அவர்களிடம் (அவர்களின் வீட்டினுள் நுழைய) மூன்று முறை அனுமதி கேட்டேன். ஆனால், எனக்கு அனுமதியளிக்கப்படவில்லை. எனவே, நான் திரும்பிவிட்டேன். பின்பு உமர்(ரலி) அவர்கள் (உங்களை நான் வரச்சொல்லி இருந்தேனே) ஏன் நீங்கள் வரவில்லை' என்று (என்னிடம்) கேட்டார்கள். அதற்கு நான், (தங்களிடம்) மூன்று முறை அனுமதி கேட்டேன். ஆனால் எனக்கு அனுமதியளிக்கப்படவில்லை. எனவே, நான் திரும்பி வந்துவிட்டேன். (ஏனெனில்,) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்உங்களில் ஒருவர் மூன்று முறை அனுமதி கேட்டும் அவருக்கு அனுமதி வழங்கப்படாவிட்டால் அவர் திரும்பிவிடட்டும் என்று கூறினார்கள்' என்றேன். அதற்கு உமர்(ரலி) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! இ(வ்வாறு நபியவர்கள் கூறினார்கள் என்ப)தற்கு நீங்கள் சாட்சியைக் கொண்டு வரவேண்டும் என்றார்கள். இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்றவர் யாரேனும் உங்களில் உள்ளாரா? என்று கேட்டார்கள்.

அதற்கு (அங்கிருந்த) உபை இப்னு கஅப்(ரலி) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! மக்களில் மிகச் சிறியவரே உங்களுடன் (இப்போது சாட்சியம் சொல்ல) வருவார்' என்றார்கள். அங்கு நான்தான் மக்களில் சிறியவனாக இருந்தேன். எனவே, நான் அபூ மூஸா(ரலி) அவர்களுடன் சென்றுநபி(ஸல்) அவர்கள் அவ்வாறு சொன்னார்கள்' என்று உமர்(ரலி) அவர்களிடம் தெரிவித்தேன்"

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## (முன்பே) அழைக்கப்பட்ட ஒருவர் வந்தால் அவரும் அனுமதி கோர வேண்டுமா?

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அவரை அழைத்ததே அவருக்கு அனுமதிதான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6246 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் (அவர்களின் இல்லத்திற்குள்) நுழைந்தேன். அங்கு அவர்கள் ஒரு பாத்திரத்தில் பால் இருக்கக் கண்டார்கள். உடனே (என்னிடம்)அபூ ஹிர்! திண்ணை வாசிகளிடம் சென்று, அவர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்' என்றார்கள்.

எனவே, நான் அவர்களிடம் சென்று அவர்களை அழைத்தேன். அவர்களும் (அழைப்பை ஏற்று) வந்து (இறைத்தூதர்(ஸல்) அவர்களின்) இல்லத்தினுள் நுழைய அனுமதி கேட்டார்கள். அப்போது அவர்களுக்கு அனுமதியளிக்கப்பட்டது. பிறகு அவர்கள் நுழைந்தனர்.

## சிறுவர்களுக்கு சலாம் சொல்வது

ஹதீஸ் 6247 ஸாபித் அல்புனானீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஒரு முறை) அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் சிறுவர்களைக் கடந்து சென்றபோது அவர்களுக்கு சலாம் சொன்னார்கள். மேலும்,நபி (ஸல்) அவர்கள் இவ்வாறுதான் செய்துவந்தார்கள்' என்று கூறினார்கள்.

## பெண்களுக்கு ஆண்களும், ஆண்களுக்குப் பெண்களும் சலாம் கூறுவது.

ஹதீஸ் 6248 அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார் (ரஹ்) அவர்கள் கூறினார்:

"நாங்கள் வெள்ளிக்கிழமை அன்று (மிகவும்) மகிழ்ச்சியாக இருப்போம்' என்று ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) கூறினார். நான்,ஏன்? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்எங்களுக்கு ஒரு மூதாட்டி இருந்தார். அவர் மதீனாவிலுள்ளபுளாஆ எனும் பேரீச்சந்தோட்டத்திற்கு ஆளனுப்பி, (அங்கு பயிராகும்) தண்டுக் கிரையின் தண்டுகளைக் கொண்டுவரச் செய்து, அதை ஒரு பாத்திரத்தில் இடுவார். அத்துடன் சிறிது வாற்கோதுமையை அரைத்து அதில் இடுவார். நாங்கள் ஜு முஆத் தொழுதுவிட்டுத் திரும்பிவந்து அந்த மூதாட்டிக்கு சலாம் சொல்வோம். அப்போது அவர் அந்த உணவை எங்கள் முன் வைப்பார். அதன் காரணத்தினால் தான் நாங்கள் (வெள்ளிக் கிழமை) மகிழ்ச்சியோடு இருப்போம். ஜு முஆவிற்குப் பின்னர் நாங்கள் மதிய ஓய்வு எடுப்போம் காலை உணவையும் உட்கொள்வோம்.

ஹதீஸ் 6249 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

(ஒரு நாள்) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்)ஆயிஷா! இதோ (வானவர்) ஜிப்ரீல் உனக்கு சலாம் உரைக்கிறார்' என்றார்கள். நான்,வ அலைஹிஸ் ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி (அவரின் மீதும் சாந்தியும் இறைவனின் கருணையும் பொழியட்டும்) என்று (பதில் சலாம்) சொல்லிவிட்டு,நாங்கள் பார்க்காதவற்றை நீங்கள் பார்க்கிறீர்கள் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சொன்னேன்.

மற்றோர் அறிவிப்பில்,வ பரகாத்துஹு (இறைவன் வழங்கும் சுபிட்சமும்) என்று (கூடுதலாக) ஆயிஷா (ரலி) கூறினார் எனக் காணப்படுகிறது.

இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## (கதவைத் தட்டுபவரிடம் வீட்டுக்காரர்) யார் அது? என்று கேட்க, அவர் நானே' என்று கூறுவது.

ஹதீஸ் 6250 ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

என் தந்தை (ஒரு யூதருக்குக்) கொடுக்க வேண்டியிருந்த ஒரு கடன் விஷயமாக நபி (ஸல்) அவர்களிடம் நான் சென்று கதவைத் தட்டினேன். அப்போது அவர்கள்,யார் அது? என்று கேட்டார்கள்.

அதற்கு நான்,நான்தான்' என்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள்,நான் நான் என்றால்...? என அதை விரும்பாதவர்களைப் போன்று கூறினார்கள்.

## பதில் (சலாம்) சொல்பவர், அலைக்கஸ் ஸலாம் என்று சொல்வது.

"வ அலைஹிஸ் ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி வ பரக்காத்துஹு ' என்று ஆயிஷா (ரலி) கூறினார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஆதம் (அலை) அவர்களுக்கு வானவர்கள்அஸ்ஸலாமு அலைக்க வ ரஹ்மத்துல்லாஹ் என்று பதில் (சலாம்) சொன்னார்கள்.

ஹதீஸ் 6251 அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஒருவர் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் நுழைந்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலின் ஓர் ஓரத்தில் அமர்ந்திருந்தார்கள். (பள்ளி வாசலுக்குள் நுழைந்த) அவர் தொழுதார். பிறகு அவர் (நபி(ஸல்) அவர்களிடம்) வந்து அவர்களுக்கு சலாம் சொன்னார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்வ அலைக்கஸ் ஸலாம் திரும்பச் சென்று தொழு! ஏனெனில், நீ (முறையாகத்) தொழவில்லை' என்றார்கள். எனவே, அவர் திரும்பிச் சென்று தொழுதார். பிறகு வந்து நபி(ஸல்) அவர்களுக்கு சலாம் சொன்னார். அப்போதும் அவர்கள்வ அலைக்கஸ் ஸலாம். திரும்பச் சென்று தொழு! ஏனெனில், நீ (முறையாகத்) தொழவில்லை' என்றார்கள். இரண்டாம் முறையிலோ, அதற்குப் பின்போ அவர்இறைத்தூதர் அவர்களே! எனக்கு (தொழுகை முறையை)க் கற்றுத் தாருங்கள்' என்றார்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நீ தொழநினைத்தால் (முதலில்) பரிபூரணமாக அங்கசுத்தி ('உளூ') செய்! பிறகு கிப்லாவை முன்னோக்கிஅல்லாஹு அக்பர் என்று சொல். பிறகு குர்ஆனில் உனக்குத் தெரிந்ததை ஓதிக்கொள்! பிறகு (குனிந்து)ருகூஉ செய் அதில் (சற்று நேரம்) நிலைகொள். பின்னர் தலையை உயர்த்தி நேராக நில். பிறகு சிரவணக்கம் (சஜ்தா) செய் அதில் (சற்று நேரம்) நிலைகொள். பின்னர் தலையை உயர்த்தி (சற்று நேரம்) நன்றாக அமர்ந்திரு. பிறகு (மீண்டும்) சிரவணக்கம் செய் அதில் (சற்று நேரம்) நிலை கொள். பின்னர் எழுந்து நன்றாக அமர்ந்திரு. பிறகு இதே (நடை) முறையை உன் தொழுகை முழுவதிலும் கடைப்பிடி' என்றார்கள்.

இறுதியில் ('எழுந்து நன்றாக அமர்ந்திரு என்பதற்கு பதிலாக) அபூ உசாமா(ரஹ்) அவர்கள்(அடுத்த ரக்அத்துக்காக) எழுந்து நேராக நில் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6252 அபூ ஹு ரைரா(ரலி) அவர்கள் கூறியாவது:

நபி(ஸல்) அவர்கள்,பிறகு நீ தலையை உயர்த்தி (சற்று நேரம்) நிலையாக அமர்ந்திரு' என்றார்கள்.

## "இன்னார் உங்களுக்கு சலாம் சொல்கிறார்' என்று ஒருவர் சொன்னால்...

ஹதீஸ் 6253 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு நாள்) என்னிடம்,(இதோ வானவர்) ஜிப்ரீல் உனக்க சலாம் உரைக்கிறார்' என்றார்கள். நான்,வ அலைஹிஸ்ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி' (அவரின் மீதும் இறை சாந்தியும் அவனுடைய கருணையும் பொழியட்டும்) என்று (பதில் சலாம்) சொன்னேன்.

## முஸ்லிம்களும் இணைவைப்போரும் கலந்திருக்கும் அவையில் சலாம் சொல்வது.

ஹதீஸ் 6254 உஸாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் கழுதையொன்றில் சேணம் விரித்து, அதில்ஃபதக் நகர் முரட்டுத் துணி விரித்து, அதில் அமர்ந்தவாறு பயணமானார்கள். என்னைத் தமக்குப் பின்னால் அமர்த்திக் கொண்டார்கள். இப்னு கஸ்ரஜ் குலத்தாரிடையே (உடல் நலமில்லாமல்) இருந்த ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். - இது பத்ருப் போர் நிகழ்ச்சிக்கு முன்னால் நடந்தது. அப்போது நபி(ஸல்) அவர்கள் ஓர் அவையைக் கடந்து சென்றார்கள். அந்த அவையில் முஸ்லிம்களும் சிலை வணங்கிகளான இணைவைப்போரும் யூதர்களும் கலந்து இருந்தார்கள். அவர்களிடையே (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூலும் இருந்தார். அதே அவையில் (கவிஞர்) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்களும் இருந்தார்கள். (எங்கள்) வாகனப் பிராணியின் (காலடிப்) புழுதி அந்த அவையைச் சூழ்ந்தபோது அப்துல்லாஹ் இப்னு உபை தம் மேல் துண்டால் தம் மூக்கைப் பொத்திக்கொண்டு,எங்களின் மீது புழுதியைக் கிளப்பாதீர்கள்' என்றார்.

நபி(ஸல்) அவர்கள் அந்த அவையோருக்கு சலாம் சொன்னார்கள். பிறகு, தம் வாகனத்தை நிறுத்தி இறங்கி, அவர்களை அல்லாஹ்வின் (மார்க்கத்தின்) பால் அழைத்தார்கள். அவர்களுக்குக் குர்ஆன் (வசனங்களை) ஓதியும் காட்டினார்கள். அப்போது அப்துல்லாஹ் இப்னு உபை இப்னி சலூல்,மனிதரே! நீர் கூறுகிற விஷயம் உண்மையாயிருப்பின், அதைவிடச் சிறந்தது வேறொன்றுமில்லை. (ஆனாலும்,) அதை எங்களுடைய (இது போன்ற) அவைகளில் கூறி எங்களுக்குத் தொல்லை கொடுக்காதீர். உம்முடைய இருப்பிடத்திற்குச் செல்லும். எங்களில் யார் உம்மிடம் வருகிறார்களோ அவர்களுக்கு (இதை) எடுத்துச் சொல்லும்' என்றார்.

(இதைக் கேட்ட) அப்துல்லாஹ் இப்னு ரவாஹா(ரலி) அவர்கள்,(ஆம். இறைத்தூதர் அவர்களே! இதை) எங்கள் அவைகளில் வெளிப்படுத்துங்கள். ஏனெனில், நாங்கள் அதை விரும்புகிறோம்' என்றார்கள். இதையடுத்து முஸ்லிம்களும் இணைவைப்போரும் யூதர்களும் ஒருவரையொருவர் ஏசிக்கொண்டே ஒருவர் மீதொருவர் பாய்ந்து (தாக்கிக்) கொள்ள முனைந்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் மக்கள் அனைவரும் மௌனமாகும் வரை அவர்களை அமைதிப்படுத்திக் கொண்டேயிருந்தார்கள். (அமைதி ஏற்பட்ட) பிறகு தம் வாகனத்திலேறி (உடல் நலமில்லாமல் இருந்த) ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடம் சென்று,சஅதே! அபூ ஹுபாப் சொன்னதை நீங்கள் செவியுறவில்லையா? என்று கூறி,அப்துல்லாஹ் இப்னு உபை இப்படி இப்படிக் கூறினார்' என்று தெரிவித்தார்கள்.

அதற்கு ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்கள்,அவரை மன்னித்துவிட்டு விடுங்கள், இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த (மதீனா) நகர வாசிகள் அவருக்குக் கிரீடம் அணிவித்து அவருக்கு முடி சூட்டிட முடிவு செய்திருந்த நிலையில் தான் அல்லாஹ் தங்களுக்கு இ(ந்த மார்க்கத்)தை வழங்கினான். அல்லாஹ் தங்களுக்கு வழங்கிய சத்தியத்தின் மூலம் அவர்களின் முடிவை அவன் நிராகரித்தபோது அதனால் அவர் பொருமினார். அதுதான் தாங்கள் பார்த்தபடி அவர் நடந்து கொண்டதற்குக் காரணம்' என்று கூறினார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் அப்துல்லாஹ்வை மன்னித்தார்கள்.

## பாவம் செய் ஒருவன், பாவமன்னிப்புக் கோரி (திருந்தி)விட்டான் என்பது தெளிவாகும் வரை அவனுக்கு சலாம் சொல்லாமலும், அவனுடைய சலாமுக்கு பதில் சொல்லாமலும் இருப்பது (சரியா?) ஒரு பாவி பாவமன்னிப்புக் கோரி (திருந்தி)விட்டான் என்பது எப்போது தெளிவாகும்.?

அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள்,மது அருந்துவோருக்கு சலாம் சொல்லாதீர்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6255 அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அவர்கள் கூறினார்:

(என் தந்தை) கஅப் இப்னு மாலிக்(ரலி) அவர்கள், தாம் தபூக் போரில் கலந்து கொள்ளாமல் பின்வாங்கியது குறித்துக் கூறுகையில் (பின்வருமாறு) தெரிவித்தார்கள்.

எங்களிடம் (யாரும்) பேசக் கூடாதென நபி(ஸல்) அவர்கள் (முஸ்லிம்களுக்குத்) தடை விதித்துவிட்டார்கள். நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் செல்வேன். அவர்களுக்கு சலாம் சொல்லிவிட்டு எனக்கு பதில் சலாம் சொல்வதற்காக அவர்கள் தம் உதடுகளை அசைக்கிறார்களா இல்லையா என்று எனக்கு நானே கேட்டுக்கொள்வேன்.

இறுதியாக ஐம்பது நாள்கள் பூர்த்தியாயின. நபி(ஸல்) அவர்கள் (அன்றைய) பஜ்ருத் தொழுகையை முடித்தபோது எங்களின் பாவ மன்னிப்பு வேண்டுதலை அல்லாஹ் ஏற்றுக் கொண்டதாக அறிவித்தார்கள்.

## இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் பிற மதத்தார் சொல்லும் சலாமிற்கு எவ்வாறு பதிலளிக்க வேண்டும்?

ஹதீஸ் 6256 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

யூதர்களில் ஒரு குழுவினர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்துஅஸ்ஸாமு அலைக்க (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்று (முகமன்) கூறினர். வ அலைக்குமுஸ்ஸாமு வல்லஅனா' (அவ்வாறே உங்களுக்கு மரணமும் சாபமும் உண்டாகட்டும்) என்று சொன்னேன். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ஆயிஷா! நிதானம்! அனைத்துச் செயல்களிலும் நளினத்தைக் கையாள்வதையே அல்லாஹ் விரும்புகிறான்' என்றார்கள். உடனே நான், இறைத்தூதர் அவர்களே! அவர்கள் சொன்னதைத் தாங்கள் செவியுறவில்லையா? என்று கேட்டேன் அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள், நான் ('அஸ்ஸாமு எனும் சொல்லைத் தவிர்த்து) வ அலைக்கும் (அவ்வாறே உங்களுக்கு நேரட்டும்) என பதிலளித்துவிட்டேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6257 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

யூதர்கள் உங்களுக்கு சலாம் சொன்னால் அவர்களில் சிலர்அஸ்ஸாமு அலைக்க (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்றே கூறுவர். எனவே, (அவர்களுக்கு பதிலாக) வ அலைக்க (அவ்வாறே உனக்கு உண்டாகட்டும்) என்று சொல்.

இதை அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6258. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

வேதக்காரர்கள் உங்களுக்கு சலாம் சொன்னால்வ அலைக்கும் (அவ்வாறே உங்களுக்கு நேரட்டும்) என்று (பதில்) கூறுங்கள்.

இதை அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

## முஸ்லிம்க(ளின் இரகசியங்க)ளைக் காட்டிக் கொடுப்பதற்காக எழுதப்பட்ட கடிதத்தை, விவரம் தெரிந்துகொள்வதற்காக (இடை மறித்துப்) பார்வையிடுதல்.

ஹதீஸ் 6259 அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் குதிரை வீரர்களான என்னையும் ஸு பைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களையும் அபூ மர்ஸத் கினாஸ் இப்னு ஹு ஸைன் அல்ஃகனவீ (ரலி) அவர்களையும், நீங்கள்ரவ்ளத்து காக் எனும் இடம் வரை செல்லுங்கள் ஏனெனில், அங்கு (ஒட்டகப் பல்லக்கில்) இணைவைப்பாளர்களில் ஒருத்தி இருப்பாள். இணைவைப்பாளர்க(ளின் தலைவர்க)ளுக்கு ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ அனுப்பியுள்ள (நம்முடைய இரகசியத் திட்டங்களைத் தெரிவிக்கும்) கடிதம் ஒன்று அவளிடம் இருக்கும். (அவளிடமிருந்து அக்கடிதத்தைக் கைப்பற்றி வாருங்கள்)' என்று கூறி அனுப்பினார்கள்.

(நாங்கள் புறப்பட்டுச் சென்றோம்.) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் குறிப்பிட்ட இடத்தில் அந்தப் பெண் தன்னுடைய ஒட்டகத்தில் சென்று கொண்டிருக்க அவளை நாங்கள் சென்றடைந்தோம். உன்னிடம் உள்ள கடிதம் எங்கே? (அதை எடு)' என்று கேட்டோம். அவள், என்னிடம் கடிதம் ஏதுமில்லை' என்று பதிலளித்தாள். அவளிருந்த ஒட்டகத்தை நாங்கள் படுக்க வைத்து அதன் பல்லக்கினுள் (அந்தக் கடிதத்தைத்) தேடினோம். (கடிதம்) ஏதும் கிடைக்கவில்லை. என் நண்பர்கள் இருவரும்கடிதம் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லையே!என்றார்கள்.

நான் (அவளிடம்), இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பொய் சொல்லமாட்டார்கள் என்று நான் உறுதியாக அறிந்துள்ளேன். எவன் மீது சத்தியம் செய்யப்படுமோ அ(ந்த இறை)வன் மீதாணையாக! ஒன்று நீயாகக் கடிதத்தை எடு(த்துக் கொடு) அல்லது உன்னை (சோதனையிடுவதற்காக உன்னுடைய ஆடையை) நான் கழற்ற வேண்டியிருக்கும்' என்று

சொன்னேன். நான் விடாப்பிடியாக இருப்பதைக் கண்ட அவள், (கூந்தல் நீண்டு தொங்கும்) தன்னுடைய இடுப்புப் பகுதிக்குத் தன்னுடைய கையைக் கொண்டு சென்றாள். அவள் ஒரு துணியை இடுப்பில் கட்டியிருந்தாள். (அங்கிருந்து) அந்தக் கடிதத்தை வெளியே எடுத்தாள்.

அந்தக் கடிதத்துடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கி நடந்தோம். (கடிதம் கண்ட நபி(ஸல்) அவர்கள் ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ(ரலி) அவர்களை நோக்கி,)ஏன் இப்படிச் செய்தீர்கள்? என்று கேட்டார்கள். அவர்,அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் விசுவாசமுள்ளவனாக நடந்து கொள்வதைத் தவிர வேறெதுவும் எனக்கு நோக்கமில்லை. நான் (என்னுடைய மார்க்கத்தை) மாற்றிக் கொள்ளவுமில்லை வேறு மதத்தைத் தேடவுமில்லை. இணைவைப்பாளர்(களுக்கு நான் செய்யும் இந்த உதவியால் அவர்)களிடம் எனக்கு ஒரு செல்வாக்கு ஏற்பட்டு, அதன் மூலம் அல்லாஹ் (மக்காவிலிருக்கும்) என் மனைவி மக்களையும் என்னுடைய செல்வத்தையும் பாதுகாக்கவேண்டும் என்றே நான் நினைத்தேன். தங்கள் (முஹாஜிர்) தோழர்கள் அனைவருக்குமே அவர்களின் மனைவி மக்களையும் அவர்களின் செல்வத்தையும் எவரின் மூலமாக அல்லாஹ் பாதுகாப்பானோ அத்தகைய உறவினர்கள் மக்காவில் உள்ளனர்‘ என்று கூறினார்.

(இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,இவர் உண்மை சொன்னார். இவரைப் பற்றி நல்லதையே கூறுங்கள்‘ என்று (தம் தோழர்களிடம்) கூறினார்கள்.

அப்போது உமர் இப்னு கத்தாப்(ரலி) அவர்கள்,இவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார். என்னை விடுங்கள் இவரின் கழுத்தைக் கொய்துவிடுகிறேன்‘ என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,உமரே! உமக்கென்ன தெரியும்? பத்ருப் போரில் பங்கெடுத்தவர்களிடம் அல்லாஹ்,நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள் உங்களுக்கு சொர்க்கம் உறுதியாகிவிட்டது என்று கூறிவிட்டிருக்கலாம் அல்லாவா? என்றார்கள்.

இதைக்கேட்ட உமர்(ரலி) அவர்களின் கண்கள் கண்ணீர் உகுத்தன. மேலும்,அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்‘ என்று கூறினார்கள்.

## வேதக்காரர்களுக்கு எவ்வாறு கடிதம் எழுத வேண்டும்?

ஹதீஸ் 6260 அபூ சுஃப்யான்(ரலி) அறிவித்தார்.

நான் ஷாம் நாட்டில் வியாபாரம் செய்வதற்காகச் சென்றிருந்த குறைஷியர் சிலருடன் இருந்தபோது (அந்நாட்டு மன்னர்) ஹெராக்ளியஸ் என்னை அழைத்து வரும்படி ஆளனுப்பினார். எனவே, அவரிடம் நாங்கள் சென்றோம். பிறகு, அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கடிதத்தைக் கொண்டுவரச் சொன்னார். அப்போது அது வாசிக்கப்பட்டது. அதில் (பின்வருமாறு) எழுதப்பட்டிருந்தது:

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம். (அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் பெயரால்...) அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமான முஹம்மத் ரோம பைஸாந்திய மன்னர் ஹெராக்ளியஸிற்கு எழுதிக் கொண்டது. அஸ்ஸலாமு அலா மனித் தபஅல் ஹு தா. (நேர்வழியைப் பின்தொடர்ந்தோருக்குச் சாந்தி உண்டாகட்டும்.) பின்னர்...

## கடிதத்தில் யாருடைய பெயரை முதலில் குறிப்பிட வேண்டும்?

ஹதீஸ் 6261 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு முறை) இஸ்ரவேலர்களிடையே வாழ்ந்த ஒரு மனிதரைப் பற்றிக் குறிப்பிட்டார்கள்.அவர் ஒரு மரக்கட்டையை எடுத்து அதைக் குடைந்து அதற்குள் ஆயிரம் பொற்காசுகளையும் (தமக்குக் கடன் கொடுத்த) தம் நண்பருக்கு ஒரு கடிதத்தையும் உள்ளே வைத்(துக் கடலில் அனுப்பி வைத்)தார்‘ என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில் நபி(ஸல்) அவர்கள், (இஸ்ரவேலரான) அவர் ஒரு மரக்கட்டையைத் துளையிட்டு அதன் நடுவே அந்தப் பணத்தை வைத்தார். மேலும், தம் நண்பருக்குஇன்னாரிடமிருந்து இன்னாருக்கு என ஒரு கடிதம் எழுதி (அதையும் உள்ளே வைத்துக் கடலில் அனுப்பி)னார்' என்று குறிப்பிட்டதாக அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

## "உங்கள் தலைவரை நோக்கி எழு(ந்து செல்லு)ங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6262 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்களின் தீர்ப்பை ஏற்பதாக ஒப்புக்கொண்டு (யூதர்களான)பனு குறைழா குலத்தார் (கைபர் கோட்டையிலிருந்து) இறங்கி வந்தனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்களுக்கு ஆளனுப்பிட ஸஅத் அவர்கள் (வாகனத்தில் அமர்ந்தபடி) வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், உங்கள் தலைவரை அல்லதுஉங்களில் சிறந்தவரை நோக்கி எழுந்திரு(த்துச் சென்று அவரை வாகனத்திலிருந்து இறக்கிவிடு)ங்கள்' என்று (அன்சாரிகளை நோக்கிச்) சொன்னார்கள்.

ஸஅத் இப்னு முஆத்(ரலி) அவர்கள் (வந்து) நபி(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்தபோது, (சஅதே!) இவர்கள் உங்கள் தீர்ப்பின் மீது (இசைவு தெரிவித்து) இறங்கி வந்திருக்கிறார்கள். (நீங்கள் என்ன தீர்ப்பளிக்கப் போகிறீர்கள்?)' என்றார்கள்.

ஸஅத்(ரலி) அவர்கள், இவர்களில் போரிடும் வலிமை கொண்டவர்கள் கொல்லப்படவேண்டும். இவர்களுடைய பெண்களும் குழந்தைகளும் கைது செய்யப்பட வேண்டும் என நான் தீர்ப்பளிக்கிறேன்' என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள், அரசன் எவ்வாறு தீர்ப்பளிப்பானோ அவ்வாறு நீங்கள் தீர்ப்பளித்துவிட்டீர்கள்' என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில், உங்கள் தீர்ப்பின் மீது (இசைவு தெரிவித்து) இறங்கி வந்துள்ளார்கள்' என்பது வரை இடம் பெற்றுள்ளது.

## கரம் பற்றுதல் (முஸா∴பாஹா)

இப்னு மஸ்வூத்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் எனக்கு (தொழுகையின் இருப்பில் ஓதப்படும்) தஷஹ்ஹுத் (த் எனும் அத்தஹிய்யாத்)தைக் கற்றுக் கொடுத்தார்கள். அப்போது என் உள்ளங்கை அவர்களின் உள்ளங்கைகளுக்கு இடையே இருந்தது. 43

கஅப் இப்னு மாலிக்(ரலி) கூறினார்:

(நான் தபூக் போரில் பங்கேற்காமல் இருந்த விவகாரத்தில் எனக்கு மன்னிப்பளித்து இறைவசனம் அருளப்பெற்ற பின்) நான் (மஸ்ஜிதுந்நபவீ) பள்ளிவாசலுக்குள் நுழைந்தேன். அங்கே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இருந்தார்கள். அப்போது தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) அவர்கள் விரைந்தோடி வந்து என் கரத்தைப் பற்றி எனக்கு வாழ்த்துச் சொன்னார்கள்.

ஹதீஸ் 6263 கத்தாதா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்முஸா∴பஹா (கரம் பற்றி வாழ்த்துத் தெரிவிக்கும் வழக்கம்) நபித்தோழர்களிடையே இருந்ததா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ஆம் (இருந்தது)' என்றார்கள்.

ஹதீஸ் 6264 அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஒருமுறை) நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள் உமர்பின் கத்தாப்(ரலி) அவர்களின் கரத்தைப் பற்றி இருந்தார்கள்.

## இரண்டு கரங்களைப் பற்றுவது

ஹம்மாத் இப்னு ஸைத்(ரஹ்) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு முபாரக்(ரஹ்) அவர்களின் இரண்டு கரங்களைப் பற்றி முஸா∴பஹா செய்தார்கள்.

ஹதீஸ் 6265 இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இரண்டு கைகளுக்கிடையே என் கை இருந்த நிலையில், குர்ஆனின் அத்தியாயத்தைக் கற்றுத்தருவதைப் போன்று (தொழுகையின் இருப்பில் ஓதப்படும்) தஷஹ்ஹு (த் எனும் அத்தஹிய்யாத்)தை எனக்கு அவர்கள் கற்றுத்தந்தார்கள். (அது பின்வருமாறு:) அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து, அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு வரஹ்மத்துல்லாஹி வ பரக்காத்துஹு , அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் அஷ்ஹது அல் லா இலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு (அனைத்துக் காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்களின் மீது சாந்தியும் அல்லாஹ்வின் அருளும் சுபிட்சமும் நிலவட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்களின் மீதும் சாந்தி நிலவட்டுமாக! வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறெருவமில்லை என்று நான் உறுதி கூறுகிறேன். மேலும், முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாராகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்றும் நான் உறுதி கூறுகிறேன்).

நபி(ஸல்) அவர்கள் எங்களிடையே (உயிரோடு) இருந்தவரை இவ்வாறு ('அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு - நபியே உங்களின் மீது சாந்தி நிலவட்டும் என்று முன்னிலைப்படுத்தி) சொல்லிவந்தோம். அவர்கள் (உயிர்) கைப்பற்றப்பட்டபோது நாங்கள்அஸ்ஸலாமு அலந் நபிய்யி (நபி(ஸல்) அவர்களின் மீது சாந்தி நிலவட்டும்) என்று (படர்க்கையாகக்) கூறலானோம்.

## ஆலிங்கனம் (முஆனகா) செய்வதும்நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்? என (குசலம்) விசாரிப்பதும். 48

ஹதீஸ் 6266 அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எந்த நோயில் இறந்தார்களோ அந்த நோயின்போது (அவர்களை உடல் நலம் விசாரித்துவிட்டு) அவர்களிடமிருந்து அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்கள் வெளியேறி வந்தார்கள். அப்போது மக்கள்,அபூ ஹசனே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படியுள்ளார்கள்? என்று (கவலையுடன்) விசாரிக்க, அதற்குஅவர்கள் அல்லாஹ்வின் மாட்சிமையால் நலமடைந்துவிட்டார்கள்' என்று அலீ(ரலி) அவர்கள் பதிலளித்தார்கள்.

அப்போது அலீ(ரலி) அவர்களின் கையைப் பிடித்துக்கொண்ட அப்பாஸ்(ரலி) அவர்கள், (மரணக் களையை) நபி(ஸல்) அவர்களிடம் நீர் காணவில்லையா? அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் மூன்று நாள்களுக்குப் பிறகு (பிறரின்) அதிகாரத்திற்குப் பணிந்தவராக ஆகி விடப் போகிறீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் இந்த நோயின் காரணத்தால் விரைவில் இறந்துவிடப் போகிறார்கள் என்றே கருதுகிறேன். அப்துல் முத்தலிபின் மக்களுடைய முகங்களில் மரணக் களை(இருந்தால் அ)தனை நான் அடையாளம் அறிந்துகொள்வேன். எனவே, எங்களை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அழைத்துச் செல்லுங்கள். (அவர்கள் இறந்த பிறகு) இந்த ஆட்சி அதிகாரம் யாரிடமிருக்கும் என்று அவர்களிடம் கேட்டுக்கொள்வோம். நம்மிடம்தான் இருக்கும் என்றால், அதை நாம் அறிந்து கொள்ளலாம். அது பிறரிடம் இருக்கும் என்றால், (அவர்களிடம் (அதைக் குறித்து நாம் கோருவோம். அவர்கள் (தமக்குப் பின் பிரதிநிதி யார் என்பது பற்றி) இறுதியுபதேசம் செய்யலாம்'

என்றார்கள். அதற்கு அலீ (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! நாம் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் அ(வர்களின் பிரதிநிதியாக ஆட்சி செய்யும் அதிகாரத்)தைக் கேட்டு, நபி (ஸல்) அவர்கள் நமக்கு அதைத் தர மறுத்துவிட்டால், (அவர்களுக்குப் பிறகு) மக்கள் ஒருபோதும் நமக்கு அதைத் தரமாட்டார்கள். உறுதியாக! நான் அதை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் ஒருபோதும் கேட்க மாட்டேன்' என்று பதிலளித்தார்கள்.

## (அழைப்பவருக்கு) இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் என்று பதிலளிப்பது.

ஹதீஸ் 6267. முஆத் இப்னு ஜபல் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் (ஒரு வாகனத்தில்) அமர்ந்திருந்தேன். அப்போது அவர்கள், முஆதே! என்று அழைத்தார்கள். நான், இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)' என்று சொன்னேன். பிறகு இதைப் போன்றே மூன்று முறை அழைத்துவிட்டு, மக்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்று நீ அறிவாயாக? என்று கேட்டார்கள். நான், இல்லை (எனக்குத் தெரியாது)' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், மக்களின் மீது அல்லாஹ்வுக்கு உள்ள உரிமை என்னவென்றால், மக்கள் அவனையே வணங்கிடவேண்டும். அவனுக்கு எதனையும் (எவரையும்) இணைவைக்கக் கூடாது' என்றார்கள். பிறகு சிறிது தூரம் சென்றபின்முஆதே! என்று அழைத்தார்கள். நான், இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)' என்று சொன்னேன். அவ்வாறு செயல்படும் மக்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன தெரியுமா? அவர்களை அவன் (மறுமையில்) வேதனை செய்யாமல் இருப்பதுதான்' என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6268 ஸைத் இப்னு வஹ்ப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அல்லாஹ்வின் மீதாணையாக! (மதீனாவிற்கு அரும்லுள்ள) ரபதா எனும் இடத்தில் அபூ தர் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களுடன் (பாறைகள் நிறைந்த) மதீனாவின் ஹர்ராப் பகுதியில் இஷா (இரவு) நேரத்தில் நடந்து சென்று கொண்டிருந்தபோது உஹுத் தலை எங்களை எதிர்கொண்டது. அப்போது நபி (ஸல்) அவர்கள், அபூ தர்ரே! (இந்த) உஹுத் தலை எனக்காகத் தங்கமாக மாறி, அதிலிருந்து ஒரேயொரு தீனார் (பொற்காசு) என்னிடம் இருந்தாலும் அதை, அல்லாஹ்வின் அடியார்களிடையே இப்படி இப்படியெல்லாம் செலவிடாமல்ஓர் இரவு அல்லதுமூன்று இரவுகள் கழிந்து செல்வதைக் கூட நான் விரும்பமாட்டேன் கடனை அடைப்பதற்காக நான் எடுத்து வைக்கிற தீனாரைத் தவிர' என்றார்கள். -(இந்த இடத்தில் அபூ தர்) தம் கையால் (வல, இட, முன் ஆகிய பக்கங்களில்) சைகை செய்து காட்டினார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள், அபூ தர்ரே! என்று அழைத்தார்கள். நான், இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்) இறைத்தூதர் அவர்களே! என்றேன்.

நபி (ஸல்) அவர்கள், (இம்மையில் செல்வம்) அதிகமானவர்களே, (மறுமையில் நற்பலன்) குறைந்தவர்கள். இப்படி இப்படியெல்லாம் (தம் செல்வத்தை இறையடியார்களிடையே) செலவிட்டவர்களைத் தவிர! என்றார்கள். பிறகு என்னிடம் நபி (ஸல்) அவர்கள், அபூ தர்! நான் திரும்பி வரும் வரை இந்த இடத்திலேயே இருங்கள் என்று கூறிவிட்டு நடந்து என்னைவிட்டு (சிறிது தூரம் சென்று) மறைந்துவிட்டார்கள். அப்போது ஒரு குரலைக் கேட்டேன். இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு ஏதும் நேர்ந்துவிட்டதோ என்று நான் அஞ்சினேன். நான் (குரல் வந்த திசையை நோக்கிப்) போகலாம் என எண்ணினேன். பிறகு, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (என்னிடம்), இந்த இடத்திலேயே இருங்கள் என்று சொன்னது நினைவுக்கு வரவே அங்கேயே இருந்துவிட்டேன்.

(நபி (ஸல்) அவர்கள் திரும்பி வந்ததும்,) இறைத்தூதர் அவர்களே! ஏதோ குரலை கேட்டேன். உங்களுக்கு ஏதும் நேர்ந்துவிட்டதோ என்று நான் அஞ்சினேன். (அங்கு வரலாம் என்று

எண்ணினேன்.) பிறகு உங்களின் சொல்லை நினைவு கூர்ந்தேன். எனவே, (இங்கேயே) இருந்துவிட்டேன்' என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,அது (வானவர்) ஜிப்ரீல் (அவர்களின் குரல் தான்). அவர் என்னிடம் வந்துஎன் சமுதாயத்தாரில் இறைவனுக்கு எதனையும் இணைவைக்காமல் (வாழ்ந்து) மரணம் அடைகிறவர் சொர்க்கம் புகுவார் என்று தெரிவித்தார் என்றார்கள்.

நான்,இறைத்தூதர் அவர்களே! அவர் விபசாரம் புரிந்தாலுமா? அவர் திருடினாலுமா (சொர்க்கம் புகுவார்)? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,(ஆம்) விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் (சொர்க்கம் புகுவார்)' என்று பதிலளித்தார்கள்.

வேறு சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதைப் போன்றே ஹதீஸ் வந்துள்ளது. அஃமஷ்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்மூன்று நாள்களுக்கு மேல் அந்தப் பொற்காசு (என்னிடம்) தங்கியிருப்பதை நான் விரும்பமாட்டேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இடம் பெற்றுள்ளது.

## ஒருவரை, அவர் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து எழுப்பிவிடக் கூடாது.

ஹதீஸ் 6269 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் இன்னொரு மனிதரை, அவர் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து எழுப்பிவிட்டு, பிறகு இவர் அந்த இடத்தில் அமர வேண்டாம்.

இதை இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## (திருக்குர்ஆன் 58:11 வது) இறைவசனம்.

"இறைநம்பிக்கையாளர்களே! சபைகளில்நகர்ந்து இடம் கொடுங்கள்' என்று உங்களுக்குச் சொல்லப்பட்டால், நகர்ந்து இடம் கொடுங்கள் அல்லாஹ் உங்களுக்கு இடம் கொடுப்பான். மேலும், (சபையிலிருந்து) கலைந்து சென்றுவிடுங்கள் என்று கூறப்பட்டால், அவ்வாறே கலைந்து விடுங்கள் எனும் (திருக்குர்ஆன் 58:11 வது) இறைவசனம்.

ஹதீஸ் 6270 இப்னு உமர்(ரலி) கூறினார்:

ஒருவர், அவர் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து எழுப்பிவிடப்பட்டு, அந்த இடத்தில் மற்றொருவர் அமர்வதை நபி(ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். இதற்கு மாறாக,நகர்ந்து உட்கார்ந்து மற்றவர்களுக்கும் இடம் கொடுங்கள்' என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறினார்:)

ஒருவர் தம் இடத்திலிருந்து எழுந்து கொண்டு, அந்த இடத்தில் (மற்றவரை) உட்காரவைப்பதை இப்னு உமர்(ரலி) அவர்கள் வெறுத்தார்கள்.

## தம்(முடன் இருக்கும்) நண்பர்களிடம் சொல்லிக்கொள்ளாமலேயே ஒருவர் தம் இடத்திலிருந்தோ வீட்டிலிருந்தோ எழுந்திருப்பது. அல்லது மக்கள் எழுந்து செல்லட்டும் என்பதற்காகத் தாம் எழுந்து செல்லத் தயாராவது.

ஹதீஸ் 6271 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களை மணந்துகொண்டபோது மக்களை (வலீமா - மணவிருந்துக்காக) அழைத்தார்கள். மக்கள் (வந்து) சாப்பிட்ட பின் பேசிக்கொண்டு (அங்கேயே) அமர்ந்துவிட்டனர். (அவர்கள் எழுந்து செல்லட்டும் என்ற எண்ணத்தில்) நபி(ஸல்) அவர்கள் தாம் எழுந்து போகத் தயாராக இருப்பதைப் போன்று காட்டலானார்கள். ஆனால், மக்கள் எழவில்லை. இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் எழுந்து (சென்று)விட்டார்கள். அவர்கள் எழுந்தபோது மக்களில் சிலரும் அவர்களுடன் எழுந்து (சென்று)விட்டனர். ஆனால், மூன்று பேர் மட்டும் எழாமல் எஞ்சி இருந்தனர். நபி(ஸல்)

அவர்கள் வீட்டுக்குள் நுழைய வந்தபோது அந்த மூவரும் அமர்ந்துகொண்டேயிருந்தார்கள். (எனவே நபி அவர்கள் தங்களின் வீட்டுக்குள் நுழையவில்லை.)

பிறகு, அந்த மூவரும் எழுந்து நடக்கலாயினர். உடனே நான் வந்து நபி(ஸல்) அவர்களிடம் அந்த மூவரும் சென்றுவிட்ட விவரத்தைத் தெரிவித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் வந்து வீட்டுக்குள் நுழைந்தார்கள். நானும் வீட்டுக்குள் நுழையப் போனபோது நபி(ஸல்) அவர்கள் எனக்கும் தமக்கும் இடையே திரையிட்டுவிட்டார்கள். மேலும், அல்லாஹ் (பர்தா தொடர்பான 33:53 வது) வசனத்தை அருளினான்.

முழங்காலில் கையைக் கட்டிக்கொண்டு குத்துக்காலிட்டு அமர்தல். இதுவே ('அல்இஹ்திபா அல்லது)குர்ஃபுஸா எனப்படும்).

ஹதீஸ் 6272 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இறையில்லம்) கஅபாவின் முற்றத்தில் தம் கையை (முழங்காலில்) கட்டிக்கொண்டு குத்துக்காலிட்டு இவ்வாறு அமர்ந்திருந்ததைக் கண்டேன்.

## நண்பர்களுக்கு முன்னால் சாய்ந்து அமர்வது

கப்பாப்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் கஅபாவின் நிழலில் ஒரு சால்வையைத் தலையணையாக வைத்துச் சாய்ந்திருந்தார்கள். நான்(எதிரிகளின் கொடுமைகளிலிருந்து எம்மைக் காக்குமாறு) அல்லாஹ்விடம் தாங்கள் பிரார்த்திக் கூடாதா? என்று கேட்டேன். உடனே அவர்கள் (நேராக எழுந்து) அமர்ந்தார்கள்.

ஹதீஸ் 6273. அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,பெரும்பாவங்களிலேயே மிகப் பெரிய பாவங்களை உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா? என்று கேட்டார்கள். மக்கள்,ஆம் (தெரிவியுங்கள்), அல்லாஹ்வின் தூதரே' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹ்வுக்கு இணைவைப்பதும், பெற்றோரைப் புண்படுத்துவதும் ஆகும்' என்றார்கள்.

ஹதீஸ் 6274. பின்னர் சாய்ந்து கொண்டிருந்த அவர்கள் எழுந்து அமர்ந்து,அறிந்து கொள்ளுங்கள் பொய் பேசுவதும் (மிகப் பெரிம் பாவம்தான்)' என்று கூறினார்கள். இதை அவர்கள் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள். (இதைக் கண்ட) நாங்கள்அவர்கள் நிறுத்தமாட்டார்களா? என்றோம்.

## ஏதேனும் ஒரு காரணத்திற்காக, அல்லது நோக்கத்திற்காக விரைவாக நடந்து செல்வது.

ஹதீஸ் 6275. உக்பா இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்அஸர் தொழுகையைத் தொழுகை நடத்திவிட்டு உடனே (வழக்கத்திற்கு மாறாக) விரைவாகச் சென்று வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

## கட்டில்

ஹதீஸ் 6276. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கட்டிலின் நடுவில் தொழுவார்கள். நான் அவர்களுக்கும் கிப்லாவிற்கும் இடையே படுத்துக் கொண்டிருப்பேன். அப்போது எனக்கு ஏதேனும் தேவை ஏற்படும். எழுந்து அவர்களுக்கு முன்னே செல்ல விரும்பாமல் மெல்லத் தவழ்ந்தபடி செல்வேன்.

## (சாய்ந்து கொள்வதற்காக) ஒருவருக்குத் தலையணை வைக்கப்படுதல்.

**ஹதீஸ் 6277.** அபூ கிலாபா அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அபுல்மலீஹ் (ரஹ்) அவர்கள் (என்னிடம்), நான் உங்கள் தந்தை ஸைத் (ரஹ்) அவர்களுடன் அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் எங்களிடம் கூறினார்கள்.

நான் (அதிகமாக) நோன்பு நோற்பது குறித்து நபி (ஸல்) அவர்களிடம் கூறப்பட்டது. எனவே, (ஒரு நாள்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான் (அவர்கள் சாய்ந்து கொள்வதற்காக) பேரீச்ச நாறினால் நிரப்பப்பட்ட தலையணையொன்றை வைத்தேன். ஆனால், அவர்கள் தரையின் மீதே அமர்ந்தார்கள். தலையணை எனக்கும் அவர்களுக்கும் இடையே இருந்தது. அப்போது அவர்கள் என்னிடம்,ஒவ்வொரு மாதத்திலும் மூன்று நாள்கள் (நோன்பு நோற்றால்) உமக்குப் போதுமே' என்று கூறினார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! (நான் அதைவிட அதிக நாள்கள் நோன்பு நோற்க சக்தி பெற்றுள்ளேன்)' என்றேன். அவர்கள்,ஐந்து நாள்கள் (நோற்றுக் கொள்க)' என்றார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! (அதை விட அதிக நாள் நோன்பு நோற்க சக்தி பெற்றுள்ளேன்)' என்று சொன்னேன். அவர்கள், (மாதம் ஒன்றுக்கு)' என்றார்கள். நான் (மீண்டும்),இறைத்தூதர் அவர்களே! (இன்னும் அதிக நாள் நோற்க முடியும்)' என்று சொன்னேன். அவர்கள்,பதினோரு நாள்கள் (நோன்பு நோற்றால்) உமக்குப் போதுமே' என்றேன். அவர்கள்,ஐந்து நாள்கள் (நோற்றுக் கொள்க)' என்றார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! (இன்னும் அதிக நாள் நோற்க முடியும்)' என்று சொன்னேன். அவர்கள்,பதினொரு நாள்கள் (நோன்பு நோற்றுக் கொள்க)' என்றார்கள். நான்,இறைத்தூதர் அவர்களே! (அதை விட அதிக நான் நோன்பு நோற்கும் சக்தி பெற்றுள்ளேன்)' என்று சொன்னேன்.

அதற்கு அவர்கள் (இறைத்தூதர்) தாவூத் அவர்களின் நோன்பை விட மேலான நோன்பில்லை. (அது) ஒரு நாள் நோன்பு நோற்பது் ஒரு நாள் நோன்பில்லாமல் இருப்பது எனச் சரிபாதிக் காலம் ஆகும் என்றார்கள்.

**ஹதீஸ் 6278.** அல்கமா இப்னு கைஸ் அந்நகஈ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் ஷாம் நாட்டிற்குச் சென்றேன். அங்கு பள்ளிவாசலுக்குள் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டு,இறைவா! எனக்கு ஒரு (நல்ல) நண்பரை தந்தருள்வாயாக!என்று பிரார்த்திதேன். பிறகு (நபித்தோழர்) அபுத்தர்தா (ரலி) அவர்களிடம் (சென்று) அமர்ந்து கொண்டேன். அபுத்தர்தா (ரலி) அவர்கள்,நீங்கள் எந்த ஊர்க்காரர்? என்று கேட்டார்கள். நான்,கூஃபாவாசி என்று சொன்னேன். அபுத்தர்தா (ரலி) அவர்கள், (நபி (ஸல்) அவர்கள் அறிவித்த) வேறெவருக்கும் தெரியாத (நயவஞ்சகர்கள் தொடர்பான) இரகசியங்களை அறிந்தவர் உங்களிடையே இல்லையா? என்று ஹு தைஃபா (ரலி) அவர்களைக் கருத்தில் கொண்டு கேட்டார்கள். (தொடர்ந்து) அவர்கள்,தன் தூதரின் நாவால் யாரை ஷைத்தானிடமிருந்து அல்லாஹ் காப்பாற்றினானோ அவர் உங்களிடையே இல்லையா? என்று அம்மார் (ரலி) அவாகளைக் கருத்தில்காண்டு கேட்டார்கள். (நபி (ஸல்) அவர்களின் பல்துலக்கும்) மிஸ்வாக் குச்சியையும் தலையணையையும் சுமந்து சென்றவர் உங்களிடையே இல்லையா? என்று இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களைக் கருத்தில் கொண்டு கேட்டார்கள்.

(அவற்றுக்கெல்லாம் நான்ஆம் என பதிலளித்தேன். பிறகு), அபுத்தர்தா (ரலி) அவர்கள்,அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள்,வல்லய்லீ இதா யஃக்ஷா எனும் (அல்லைல் அத்தியாயத்தின்) வசனங்களை எப்படி ஓதிக் கொண்டிருந்தார்கள்? என்று கேட்டார்கள். வத்தகரி வல்உன்ஸா' என்று ('வமா கலக்க எனும் சொற்றொடர் இல்லாமல்தான் ஓதுவார்கள் என) நான் பதிலளித்தேன். அப்போது அபுத்தர்தா (ரலி) அவர்கள், (ஷாம் நாட்டினரான) இவர்கள் நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட இந்த ஓதல் முறை விஷயத்தில் என்னைக் குழப்பப்பார்க்கிறார்கள்' என்றார்கள்.

## ஜு முஆ (தொழுகை)க்குப் பின்னால் மதிய ஓய்வெடுப்பது.

ஹதீஸ் 6279. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (வெள்ளிக்கிழமை) ஜு முஆத் தொழுகைக்குப் பின்னால் தான் மதிய ஓய்வு எடுப்போம் காலை உணவு உட்கொள்ளும்.

## பள்ளிவாசலில் மதிய ஓய்வெடுப்பது

ஹதீஸ் 6280. ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

(தம் பெயர்களில்)அபூ துராப் (மண்ணின் தந்தை) எனும் பெயரைவிட வேறெந்தப் பெயரும் அலீ(ரலி) அவர்களுக்கு விருப்பமானதாக இருக்கவில்லை. அப்பெயர் கூறி அழைக்கப்படும்போது அவர்கள் (மிகவும்) மகிழ்வார்கள். (ஒரு நாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் புதல்வி) ஃபாத்திமா(ரலி) அவர்களின் இல்லத்திற்கு வந்தார்கள். அப்போது அலீ அவர்களை வீட்டில் காணவில்லை. எனவே, நபி அவர்கள்உன் பெரிய தந்தையின் புதல்வர் (உன் கணவர்) எங்கே? என்று கேட்டார்கள். அதற்கு ஃபாத்திமா(ரலி) அவர்கள்,எனக்கும் அவருக்குமிடையே ஒரு சின்ன பிரச்சினை ஏற்பட்டுவிட்டது. எனவே, அவர் கோபித்துக் கொண்டு என்னிடம் மதிய ஓய்வெடுத்துக் கொள்ளாமல் வெளியே சென்றார் என்று பதிலளித்தார்கள்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம்,அவர் எங்கே என்று பார்' என்றார்கள். அவர் (சென்று தேடிவிட்டு) வந்து,இறைத்தூதர் அவர்களே! அவர் பள்ளிவாசலில் உறங்கி கொண்டிருக்கிறார்' என்றார். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலுக்கு) வந்தார்கள். அப்போது அலீ(ரலி) அவர்கள் தங்களின் மேனியிலிருந்து மேல் துண்டு கீழே விழுந்து கிடக்க, உடம்பில் மண் படிந்த நிலையில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அந்த மண்ணை அவர்களின் உடலிலிருந்து துடைத்துக் கொண்டேஅபூ துராப்! (மண்ணின் தந்தையே!) எழுங்கள். அபூ துராபே ! எழுங்கள்' என்று (இரண்டு முறை) கூறினார்கள்.

## ஒரு கூட்டத்தாரைச் சந்திக்கச் சென்ற இடத்தில் மதிய ஓய்வெடுப்பது.

ஹதீஸ் 6281. அனஸ்(ரலி) அறிவித்தார்.

(என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்காக (அவர்கள் மதிய ஓய்வெடுக்கும் பொருட்டு) தோல் விரிப்பு ஒன்றை விரிப்பார்கள். அந்த விரிப்பில் நபி(ஸல்) அவர்கள் மதிய ஓய்வெடுப்பார்கள். நபி(ஸல்) அவர்கள் உறங்கிவிட்டால் அவர்களின் (உடலிலிருந்து வழிகின்ற) வியர்வைத் துளிகளையும் (ஏற்கனவே தம்மிடமுள்ள) நபியவர்களின் தலைமுடியையும் எடுத்து ஒரு கண்ணாடிக் குடுவையில் சேகரிப்பார்கள். பிறகு அதனை வாசனைப் பொருளில் வைப்பார்கள். வாசனைப் பொருளில் வைப்பார்கள். (இதையெல்லாம்) நபி(ஸல்) அவர்கள் உறங்கும்போதே (செய்து முடிப்பார்கள்)

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸு மாமா இப்னு அப்தில்லாஹ் இப்னி அனஸ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

(என் பாட்டனார்) அனஸ்(ரலி) அவர்களுக்கு மரண வேளை நெருங்கியபோது தம் கஃபன் துணியில் பூசப்படும் நறுமணத்தில் இந்த நறுமணத்தையும் சேர்த்துக் கொள்ளுமாறு என்னிடம் இறுதி விருப்பம் தெரிவித்தார்கள். அவ்வாறே அவர்களின் கஃபனில் பூசப்பட்ட நறுமணத்துடன் இதுவும் சேர்க்கப்பட்டது.

ஹதீஸ் 6282, ஹதீஸ் 6283 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மதீனாவிற்கு அரும்லுள்ள)குபா எனுமிடத்திற்குச் சென்றால் (தம் பால்குடி சிற்றன்னையான) உம்மு ஹராம் பின்த் மில்ஹான்(ரலி) அவர்களின் வீட்டுக்குச் செல்வது வழக்கம். (அவ்வாறு செல்லும்போது) உம்மு ஹராம்(ரலி) அவர்கள் நபி(ஸல்)

அவர்களுக்கு உணவளிப்பார்கள். உம்மு ஹராம்(ரலி) அவர்கள் உபாதா இப்னு ஸாமித்(ரலி) அவர்களின் துணைவியாராவார். அவ்வாறே ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் உம்மு ஹராம்(ரலி) அவர்களிடம் சென்றபோது அவர்களுக்கு உம்மு ஹராம் உணவளித்தார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அங்கு) உறங்கினார்கள். பிறகு எழுந்து சிரித்தார்கள். உடனே உம்மு ஹராம்(ரலி) அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! ஏன் சிரிக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,என் சமுதாயத்தாரில் சிலர் இறைவழியில் இந்தக் கடல் மீது பயணம் செய்யும் புனிதப் போராளிகளாக எனக்குக் காட்டப்பட்டனர். அவர்கள் கட்டில்களில் வீற்றிருக்கும்மன்னர் களாக அல்லதுமன்னர்களைப் போன்று இருந்தார்கள். என்று கூறினார்கள். உடனே,என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்ற உம்மு ஹராம்(ரலி) கூறினார். அவ்வாறே நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். பிறகு தம் தலையை வைத்து உறங்கினார்கள். பின்னர் விழித்துச் சிரித்தார்கள். அப்போதும்இறைத்தூதர் அவர்களே! ஏன் சிரிக்கிறீர்கள்? என உம்மு ஹராம் கேட்க, முன்போன்றே நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். அப்போது, என்னையும் அவர்களில் ஒருவராக ஆக்கும்படி அல்லாஹ்விடம் வேண்டுங்கள் என உம்மு ஹராம் கேட்டுக் கொண்டார்கள் என உம்மு ஹராம் கேட்டுக் கொண்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,நீங்கள் (கடல் பயணம் செய்து அறப்போருக்கு) முதலாவதாகச் செல்பவர்களில் ஒருவராக விளங்குவீர்கள்' என்றார்கள்.

அவ்வாறே உம்மு ஹராம்(ரலி) அவர்கள் முஆவியா(ரலி) அவர்களின் (ஆட்சிக்) காலத்தில் (அறப்போருக்காக) கடல் பயணம் மேற்கொண்டார்கள். கடலிலிருந்து அவர்கள் புறப்பட்டபோது தம் வாகனப் பிராணியிலிருந்து விழுந்து இறந்துவிட்டார்கள்.

## எப்படி வசதியோ அப்படி அமர்வது

ஹதீஸ் 6284. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஆடை அணியும் முறைகள் இரண்டையும் வியாபார முறைகள் இரண்டையும் தடை செய்தார்கள். (முறையே) அந்த நான்குமாவன:

1. இஷ்திமாலுஸ் ஸம்மாஉ (ஒருவர் ஒரே துணியைத் தம் தோள்களில் ஒன்றில் போட்டுக் கொள்ள, அவரின் உடலின் இரண்டு பக்கங்களில் ஒன்று துணியின்றி வெளியே தெரிவது.)

2. இஹ்திபா, அதாவது ஒரே துணியால் (முதுகையும் முழங்கால்களையும்) போர்த்திக் கொண்டு மர்ம உறுப்பு வெளியே தெரிய அமர்வது.

3. முலாமஸா. (அதாவது ஒரு துணியைத் தொட்டுவிட்டாலே அதை விலைக்கு வாங்கியே ஆக வேண்டும்.)

4. முனாபதா. (ஒருவரின் மீது ஒருவர் துணியைத் தூக்கி எறிந்தாலே அதை விலைக்கு வாங்கியே ஆகவேண்டும்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## பலர் இருக்கும்போது இரகசியம் பேசுவதும், ஒருவர் சொன்ன இரகசியத்தை (அவர் இருக்கும்வரை) வெளியிடாதிருந்துவிட்டு அவர் இறந்த பிறகு வெளியிடுவதும்.

ஹதீஸ் 6285. ஹதீஸ் 6286 இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் துணைவியர்களான எங்களில் ஒருவர் கூட விடுபடாமல் நாங்கள் அனைவரும் (நபி(ஸல்) அவர்களின் இறப்பு நெருங்கிக் கொண்டிருந்தபோது) அவர்கள் அருகில் இருந்துகொண்டிருந்தோம். அப்போது (நபியவர்களின் புதல்வியார்) ஃபாத்திமா(ரலி) நடந்துவந்தார். அல்லாஹ்வின் மீதாணையாக! அவரின் நடை நபி(ஸல்) அவர்களின் நடைக்கு ஒத்ததாகவே இருந்தது. ஃபாத்திமாவைக் கண்டபோது நபி(ஸல்) அவர்கள்,என் மகளே!

வருக!என்று வாழ்த்தி வரவேற்றார்கள். பிறகு அவரை தம்வலப் பக்கத்தில் அல்லதுஇடப் பக்கத்தில் அமர்த்திக்கொண்டு அவரிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார்கள். அதைக் கேட்டபோது ஃபாத்திமா பலமாக அழுதார். அவரின் துக்கத்தைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் இரண்டாவது முறையாக அவரிடம் ஏதோ, இரகசியம் சொன்னார்கள். அப்போது அவர் சிரித்தார்.

அப்போது நான் நபி(ஸல்) அவர்களின் துணைவியரிடையே இருந்துகொண்டு ஃபாத்திமாவிடம், எங்களைவிட்டுவிட்டு உங்களிடம் மட்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இரகசியம் சொன்னார்கள். பிறகு நீங்கள் அழுதீர்களே!என்று கூறிவிட்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்தவுடன் அவர்கள் கூறிய அந்த இரகசியம் குறித்து ஃபாத்திமாவிடம் கேட்டேன். அதற்கு ஃபாத்திமா அவர்கள், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தபோது ஃபாத்திமா அவர்களிடம் நான், உங்களின் மீது எனக்குள்ள உரிமையை முன்வைத்துக் கேட்கிறேன். அந்த இரகசியம் என்ன என்று நீங்கள் சொல்லியே ஆக வேண்டும்' என்றேன். ஃபாத்திமா, சரி. இப்போது (அதைத் தெரிவிக்கிறேன்)' என்று கூறிவிட்டு (பின்வருமாறு) தெரிவித்தார்.

முதலாவது முறை என்னிடம் நபி(ஸல்) அவர்கள் இரகசியம் சொன்னபோது (பின் வருமாறு) சொன்னார்கள்: எனக்கு (வானவர்) ஜிப்ரீல் ஒவ்வோர் ஆண்டும் ஒரு முறை குர்ஆனை ஓதிக்காட்டி நினைவூட்டுவார். ஆனால், அவர் இந்த ஆண்டு இரண்டு முறை அதனை ஓதிக் காட்டினார். (இதிலிருந்து) என் இறப்பு நெருங்கிவிட்டதாகவே கருதுகிறேன். எனவே, நீ அல்லாஹ்வை அஞ்சிக்கொள். பொறுமையுடன் இரு. நான் உனக்கு முன்னால் நல்லபடி (இவ்வுலகைவிட்டு) சென்றுவிடுவேன்.

எனவேதான், உங்களுக்கு முன்னிலையில் அவ்வாறு அழுதேன். என்னுடைய பதற்றத்தைக் கண்டபோது நபி(ஸல்) அவர்கள் இரண்டாவது முறையாக, ஃபாத்திமா!இறை நம்பிக்கையுள்ள பெண்களுக்கு அல்லதுஇந்தச் சமுதாயத்தின் பெண்களுக்கு அல்லதுஇந்தச் சமுதாயத்தின் பெண்களுக்கு தலைவியாக இருக்க நீ விரும்பவில்லையா? என்று இரகசியமாகக் கேட்டார்கள். (எனவே, நான் மகிழ்ந்து சிரித்தேன்.)

## மல்லாந்து படுப்பது

ஹதீஸ் 6287 அப்துல்லாஹ் இப்னு ஸைத் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் கால் மீது கால் வைத்து மல்லாந்து படுத்திருக்கக் கண்டேன்.

## (மூவர் இருக்கும்போது) மூன்றாமவரைவிட்டுவிட்டு இருவர் மட்டும் இரகசியம் பேசலாகாது.

அல்லாஹ் கூறினான்.

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் இரகசியம் பேசிக்கொண்டால் பாவத்திற்காகவும், வரம்பு மீறுவதற்காகவும் (நம்) தூதருக்கு மாறு செய்வதற்காகவும் இரகசியம் பேசாதீர்கள் ஆனால், நன்மை செய்வதற்காகவும் பயபக்தியுடன் இருப்பதற்காகவும் இரகசியம் பேசிக்கொள்ளுங்கள்.

இறைநம்பிக்கை கொண்டவர்களைக் கவலையடைச் செய்வதற்காக ஷைத்தானினால் ஏற்பட்டதே இந்த இரகசிய ஆலோசனை ஆகும். ஆனால், அவனால் அல்லாஹ்வின் ஆணையின்றி (அவர்களுக்கு) எத்தீங்கும் அளித்திட முடியாது. எனவே, இறை நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்கட்டும்! (திருக்குர்ஆன் 58:9, 10)

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் (நம்) தூதருடன் தனிமையில் பேசுவதாயின், அவ்வாறு பேசுவதற்கு முன் ஏதேனும் தர்மம் செய்யுங்கள். இது உங்களுக்கு நன்மையாகவும்,

(உள்ளத்திற்குத்) தூய்மையாகவும் இருக்கும். ஆனால், (தர்மம் செய்வதற்கு) நீங்கள் வசதி பெற்றிராவிடில் நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்பவன் மிக்க கிருபையுடையவன். நீங்கள் தனிமையில் உரையாடுவதற்கு முன்னால் தான தர்மங்கள் செய்ய வேண்டியிருக்குமே என்று அஞ்சுகிறீர்களா? அப்படி நீங்கள் செய்ய(இயல)வில்லையெனில் (அதற்காக பாவமன்னிப்புக்கோரும்) உங்களை அல்லாஹ் மன்னிக்கிறான் எனவே, தொழுகையை (முறைப்படி) நிலைநிறுத்துங்கள் இன்னும், ஸகாத்தும் கொடுத்து வாருங்கள் மேலும், அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் வழிப்படுங்கள் அன்றியும் நீங்கள் செய்கிறவற்றையெல்லாம் அல்லாஹ் நன்கு அறிகிறான். (திருக்குர்ஆன் 58:12, 13)

ஹதீஸ் 6288 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் மூவர் இருக்கும்போது மூன்றாமவரைவிட்டுவிட்டு இருவர் மட்டும் இரகசியம் பேசவேண்டாம்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## இரகசியம் காத்தல்

ஹதீஸ் 6289 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

என்னிடம் நபி(ஸல்) அவர்கள் ஓர் இரகசியம் சொன்னார்கள். அவர்களின் இறப்புக்குப் பிறகும் கூட ஒருவரிடமும் அதை நான் தெரிவிக்கவில்லை. என்னிடம் (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்கள் அது குறித்துக் கேட்டார்கள். அதை நான் அவருக்கும் தெரிவிக்கவில்லை.

## மூன்று பேரை விட அதிகமானோர் இருக்கும்போது (இருவர்) இரகசியம் பேசுவதும் உரையாடுவதும் தவறாகாது.

ஹதீஸ் 6290 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் மூன்று பேர் இருக்கும்போது மூன்றாமவரைவிட்டுவிட்டு இரண்டு பேர் மட்டும் இரகசியம் பேச வேண்டாம் நீங்கள் மூவரும் மக்களுடன் கலக்கும் வரை! ஏனெனில், (அவ்வாறு மூன்று பேர் இருக்கும்போது இருவர் மட்டும் பேசுவது) மூன்றாமவரை வருத்தமடையச் செய்யும். 68

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6291. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் (ஹு னைன் போரில் கிடைத்த செல்வங்களைப்) பங்கிட்டார்கள். அப்போது அன்சாரிகளில் ஒருவர், இது அல்லாஹ்வின் திருப்தி நாடப்படாத பங்கீடாகும்' என்று (அதிருப்தியுடன்) கூறினார். நான், இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (இது குறித்துத் தெரிவிக்க) நிச்சயம் நான் செல்வேன்' என்று கூறிவிட்டு (அவ்வாறே) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் மக்கள் மன்றத்தில் இருந்தார்கள். அவர்களிடம் நான் (இது பற்றி) இரகசியமாகச் சொன்னேன். (அதைக் கேட்டபோது) தம் முகம் சிவக்கும் அளவுக்கு அவர்கள் கோபமடைந்தார்கள். பிறகு, (இறைத்தூதர்) மூஸாவின் மீது அல்லாஹ்வின் கருணை உண்டாகட்டும். இதை விட அதிகமாக அவர் புண்படுத்தப்பட்டார். இருப்பினும், பொறுமையு(டன் சகித்துக்) கொண்டார்' என்றார்கள்.

## (நண்பருடன்) நீண்ட நேரம் தனியாக உரையாடுவது.

(திருக்குர்ஆன் 17:47 வது இறைவசனத்தின் மூலத்திலுள்ள)நஜ்வா (இரகசிய ஆலோசனை) எனும் வேர்ச்சொல்லுக்கு, யத்தனாஜவ்ன (இரகசிய ஆலோசனை செய்கிறார்கள்) எனும் வினைச் சொல்லின் பொருளாகும்.

ஹதீஸ் 6292. அனஸ்(ரலி) அறிவித்தார்.

(தொழுகைக்காக) இகாமத் சொல்லப்பட்டுவிட்டது. அப்போது ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் ஏதோ தனியாக உரையாடிக் கொண்டிருந்தார். அவர் உரையாடிக் கொண்டிருந்ததில் நபித்தோழர்கள் உறங்கிவிட்டனர். பிறகு நபி(ஸல்) அவர்கள் (பேசி முடித்து) எழுந்து வந்து தெரிவித்தார்கள்.

## உறங்கச் செல்லும்போது வீட்டிலுள்ள (அடுப்பு மற்றும் விளக்கின்) நெருப்பை (அணைக்காமல்)விட்டுவிடலாகாது.

ஹதீஸ் 6293 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் உறங்கச் செல்லும்போது உங்கள் வீட்டிலுள்ள நெருப்பை (அணைக்காமல்)விட்டுவிடாதீர்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6294 அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

மதீனாவில் இரவு நேரத்தில் ஒரு வீட்டில் தீ விபத்து ஏற்பட்டது. அதில் வீட்டுக்காரர்களும் இருந்தனர்.

அவர்களின் நிலை குறித்து நபி(ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோதுநிச்சயமாக இந்த நெருப்பு உங்களுக்கு ஆபத்தானது ஆகும். எனவே, நீங்கள் உறங்கச் செல்லும்போது நெருப்பை அணைத்து விடுங்கள்‘ என்றார்கள்.

ஹதீஸ் 6295 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இரவில் உறங்கச் செல்லும்போது) பாத்திரங்களை மூடிவையுங்கள். கதவுகளைத் தாழிட்டுக் கொள்ளுங்கள். விளக்குகளை அணைத்துவிடுங்கள். ஏனெனில், தீங்கிழைக்கக் கூடிய(எலியான)து (விளக்கின்) திரியை (வாயால்) கவ்வி இழுத்துச் சென்று வீட்டிலிருப்பவர்களை எரித்துவிடக்கூடும்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

## இரவில் கதவுகளைத் தாழிடுதல்

ஹதீஸ் 6296 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவில் நீங்கள் தூங்கும்போது விளக்குகளை அணைத்துவிடுங்கள். கதவுகளைத் தாழிட்டுக் கொள்ளுங்கள். தண்ணீர்ப் பைகளை சுருக்கிட்டு மூடிவிடுங்கள். உணவையும் பானத்தையும் மூடிவையுங்கள்.

என ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹம்மாம்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

“குச்சியை (குறுக்காக) வைத்தேனும் உணவையும் பானத்தையும் மூடிவையுங்கள்‘ என்று (இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என) அறிவிப்பாளர் அதாஉ(ரஹ்) அவர்கள் சொன்னதாக எண்ணுகிறேன்.

## அக்குள் முடியை அகற்றுவதும், வயதாக பின் விருத்தசேதனம் (கத்னா) செய்து கொள்வதும்.

ஹதீஸ் 6297 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்களின் வழிமுறையான) இயற்கை மரபுகள் ஐந்தாகும். 1. விருத்தசேதனம் செய்வது. 2. மர்ம உறுப்பின் முடிகளைக் களைய சவரக் கத்தியை உபயோகிப்பது 3. அக்குள் முடிகளை அகற்றுவது. 4. மீசையைக் கத்தரிப்பது. 5. நகங்களை வெட்டுவது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6298 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்) இப்ராஹீம் (அலை) அவர்கள் எண்பது வயதிக்குப் பிறகு விருத்தசேதனம் செய்துகொண்டார்கள். அவர்கள்கதூம் (எனும் வாய்ச்சியின்) மூலமாக விருத்தசேதனம் செய்துகொண்டார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

'கத்தூம் என்பது (சிரியாவிலுள்ள) ஓர் இடத்தின் பெயராகும் என (அறிவிப்பாளர்) அபுஸ் ஸினாத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். (இதன்படிகத்தூம் எனுமிடத்தில் விருத்த சேதனம் செய்துகொண்டார்கள்) எனப் பொருள் வரும்.)

ஹதீஸ் 6299 ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம், நபி (ஸல்) அவர்கள் (உயிர்) கைப்பற்றப்பட்டபோது தாங்கள் எவ்வாறிருந்தீர்கள்? என்று வினவப்பட்டது. அதற்கு அவர்கள், நான் அப்போது விருத்தசேதனம் செய்தவனாயிருந்தேன்' என்று பதிலளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்.

பருவ வயதை நெருங்கிய பிறகே (அன்றைய) மக்கள் விருத்தசேதனம் செய்வது வழக்கம்.

ஹதீஸ் 6300 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நான் விருத்தசேதனம் செய்தவனாக இருந்தபோது நபி (ஸல்) அவர்கள் உயிர் கைப்பற்றப்பட்டது.

## 'அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிவதிலிருந்து திசைதிருப்பக்கூடிய ஒவ்வொரு விஷயமும் வீணானதே என்பது குறித்தும், ஒருவர் தம் நண்பரிடம் வா. சூதாடுவோம் என அழைப்பது குறித்தும்.

அல்லாஹ் கூறினான்:

மனிதர்களில் சிலர் இருக்கிறார்கள். அவர்கள் அறிவில்லாமல் வீணான பேச்சுகளை விலைக்கு வாங்கி, (அவற்றால் மக்களை) அல்லாஹ்வின் பாதையிலிருந்து மாற்றி விடவும், அல்லாஹ்வின் பாதையைப் பரிகாசமாக்கிக்கொள்ளவும் முயல்கிறார்கள். இத்தகையோருக்கு இழிவுதரும் வேதனை தான் உண்டு. (திருக்குர்ஆன் 31:06)

ஹதீஸ் 6301 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் யார் சத்தியம் செய்யும்போது (அறியாமைக்கால தெய்வச் சிலைகளான) லாத்'தின் மீதும்உஸ்ஸா'வின் மீதும் சத்தியமாக என்று கூறிவிட்டாரோ அவர் (அதற்குப் பரிகாரமாக) லாயிலாஹ இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று சொல்லட்டும். தம் நண்பனிடம், வா சூதாடுவோம்' என்று கூறியவர் (அதற்குப் பரிகாரமாக எதையேனும்) தர்மம் செய்யட்டும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## கட்டடங்கள் தொடர்பாக வந்துள்ளவை

அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

“ஆடுகளை (அல்லது கறுப்பு நிற ஒட்டகங்களை) மேய்க்கும் இடையர்கள் உயரமான கட்டடங்களைக் கட்டி பெருமையடித்துக் கொள்வது மறுமை நாளின் அடையாளங்களில் ஒன்றாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6302 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்

நான் நபி(ஸல்) அவர்கள் காலத்தில் மழையிலிருந்து என்னைக் காக்கின்ற, வெயிலிருந்து எனக்கு நிழல் தருகிற ஒரு வீட்டை நானே என் கரத்தால் கட்டியதை (இப்போதும்) நினைத்துப் பார்க்கிறேன். அந்த வீட்டைக் கட்ட அல்லாஹ்வின் படைப்புகளில் யாரும் எனக்கு உதவவில்லை.

ஹதீஸ் 6303 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ்வின் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் (உயிர்) கைப்பற்றப்பட்டது. முதல் ஒரு செங்கல்லின் மீது இன்னொரு செங்கல்லை நான் வைத்ததுமில்லை எந்த பேரீச்ச மரத்தையும் நான் நட்டதுமில்லை.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் இது குறித்து இப்னு உமர்(ரலி) அவர்களின் குடும்பத்தார் சிலரிடம் கூறினேன். அதற்கு அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் வீடு கட்டினார்‘ என்று கூறினார்கள்.

நான், தாம் வீடு கட்டுவதற்கு முன்னர் இவ்வாறு அவர்கள் சொல்லியிருக்கக்கூடும்‘ என்றேன்.

# அத்தியாயம் 80 பிரார்த்தனைகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ் கூறினான்:

என்னிடமே நீங்கள் பிரார்த்தியுங்கள் நான் உங்(கள் பிரார்த்தனை)களுக்கு பதிலளிக்கிறேன் யார் என்னை வரிபடாமல் பெருமையடித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் சிறுமையடைந்தவர்களாக நரகத்தில் நுழைவார்கள். (திருக்குர்ஆன் 40:60)

## ஒவ்வோர் இறைத் தூதருக்கும் அங்கீகரிக்கப்பட்ட ஒரு பிரார்த்தனை உண்டு.

ஹதீஸ் 6304 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வோர் இறைத்தூதருக்கும் அவர் (தம் சமுதாயத்தாருக்காகப்) பிரார்த்தித்துக் கொள்ள அங்கீகரிக்கப்பட்ட பிரார்த்தனை ஒன்று (வழங்கப்பட்டு) உள்ளது. நான் என்னுடைய பிரார்த்தனையை, மறுமையில் என் சமுதாயத்தாருக்குப் பரிந்துரை செய்வதற்காகப் பத்திரப்படுத்தவே விரும்புகிறேன்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6305 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'ஒவ்வோர் இறைத்தூதரும் ஒரு (பிரத்தியேக) வேண்டுதல் செய்துவிட்டனர் அல்லதுஒவ்வோர் இறைத்தூதருக்கும் (தம் சமுதாயத்தார் தொடர்பாக) ஒரு (விசேஷப் பிரார்த்தனை உண்டு அதனை அவர்கள் (இம்மையிலேயே) கேட்டுவிட்டனர். அது ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது. நான் என்னுடைய பிரார்த்தனையை, மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்காகப் பரிந்துரை செய்ய வைத்துள்ளேன்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## பாவமன்னிப்புக் கோரலில் சிறந்தது

அல்லாஹ் கூறினான்:

(நூஹ் கூறினார்:) நீங்கள் உங்களுடைய இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள் நிச்சயமாக அவன் மிகவும் மன்னிப்பவன். (அப்படிச் செய்வீர்களாயின்) அவன் உங்களின் மீது தொடர்ந்து மழையை அனுப்புவான். அவன் செல்வங்களையும், புதல்வர்களையும் அளித்து உங்களுக்கு உதவுவான் இன்னும், உங்களுக்காகத் தோட்டங்களை உண்டாக்குவான் உங்களுக்காக ஆறுகளையும் (பெருக்கெடுத்து) ஓடுமாறு செய்வான். (திருக்குர்ஆன் 71:10-12)

அல்லாஹ் கூறினான்:

(இறையச்சம் உடையோரான) அவர்கள் (பிறர் விஷயத்தில்) ஏதேனும் ஒரு குற்றம் புரிந்துவிட்டாலோ, தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டாலோ (அந்த நிமிடமே மனம் வருந்தி) அல்லாஹ்வை நினைத்துத் தம் பாவங்களுக்காக மன்னிப்புக் கோருவார்கள். அல்லாஹ்வையன்றி பாவங்களை மன்னிப்பவர் யார்? இன்னும் அவர்கள் அறிந்துகொண்டே, தாம் செய்த(த)வற்றில் நிலைத்திருக்கமாட்டார்கள். (திருக்குர்ஆன் 03:135)

ஹதீஸ் 6306 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"அல்லாஹு ம்ம! அன்த்த ரப்பீ. லா இலாஹ இல்லா அன்த்த. கல்க்த்தனீ. வ அன அப்துக்க. வ அன அலா அஹ்திக்க, வ வஅதிக்க மஸ்ததஅத்து. அஊது பிக்க மின் ஷர்ரி மா ஸனஅத்து. அபூ உ லக்க பி நிஅமத்திக்க அலய்ய, வ அபூ உ லக்க பி தன்பீ. ஃபஃக்பிர்லீ. ஃபஇன்னஹு லா யஃக்பிருத் துனூப இல்லா அன்த்த' என்று ஒருவர் கூறுவதே தலைசிறந்த பாவமன்னிப்புக்

கோரலாகும். (பொருள்: அல்லாஹ்! நீயே என் அதிபதி. உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீயே என்னைப் படைத்தாய். நான் உன் அடிமை நான் உனக்குச் செய்து கொடுத்த உறுதி மொழியையும் வாக்குறுதியையும் என்னால் இயன்ற வரை நிறைவேற்றியுள்ளேன். நான் செய்தவற்றின் தீமைகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். நீ எனக்கு அருட் கொடைகளை வழங்கியுள்ளாய் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். மேலும், நான் பாவங்கள் புரிந்துள்ளதையும் உன்னிடம் (மறைக்காமல்) ஒப்புக்கொள்கிறேன். எனவே, என்னை மன்னிப்பாயாக! ஏனெனில், பாவத்தை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறெவரும் இல்லை.)

இந்தப் பிரார்த்தனையை நம்பிக்கையோடும் தூய்மையான எண்ணத்தோடும் பகலில் கூறிவிட்டு அதே நாளில் மாலை நேரத்திற்கு முன்பாக இறப்பவர் சொர்க்கவாசிகளில் ஒருவராக இருப்பார். இதை நம்பிக்கையோடும் தூய்மையான எண்ணத்தோடும் இரவில் கூறிவிட்டுக் காலை நேரத்திற்கு முன்பே இறந்துவிடுகிறவரும் சொர்க்கவாசிகளில் ஒருவராக இருப்பார்.

என ஷத்தாத் இப்னு அவ்ஸ்(ரலி) அறிவித்தார்.

## பகலிலும் இரவிலகி நபி(ஸல்) அவர்கள் கேட்ட பாவமன்னிப்புக் கோரல் (உடைய அளவு).

ஹதீஸ் 6307 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஒரு நாளில் எழுபது முறைக்கு மேல்அஸ்தஃக் ஃபிருல்லாஹ வ அதூபு இலைஹி என்று கூறுகிறேன் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.

(பொருள்: நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி அவன் பக்கமே திரும்புகிறேன்.)

## பாவத்தைக் கைவிட்டு இறைவன் பக்கம் திரும்புவது (தவ்பா)

கத்தாதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (திருக்குர்ஆன் 66:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)தவ்பத்தந் நஸூஹா எனும் சொற்றொடருக்குஉண்மையான முறையில் தூய்மையான எண்ணத்தோடு (மனப்பூர்வமாகப் பாவத்திலிருந்து விலகி) அல்லாஹ்வின் பக்கம் திரும்புதல் என்று பொருள்.

ஹதீஸ் 6308 ஹாரிஸ் இப்னு சுவைத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் எங்களுக்கு இரண்டு ஹதீஸ்களை அறிவித்தார்கள். அவற்றில் ஒன்றை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனக் குறிப்பிட்டார்கள். மற்றொன்றைக் தாமாகக் கூறினார்கள். (அவையாவன:)

1. இறைநம்பிக்கையாளர் தம் பாவங்களை மலைகளைப் போன்று (பாரமாகக்) கருதுவார். அவர் ஒரு மலை அடிவாரத்தில் உட்கார்ந்திருப்பதைப் போன்றும், அந்த மலைத் தம் மீது விழுந்துவிடுமோ என அஞ்சுபவரைப் போன்றும் அவர் இருப்பார். ஆனால், பாவியோ தன் பாவங்களைத் தன்னுடைய மூக்கின் மேல் பறந்து செல்லும் ஈயைப் போன்று (அற்பமாகக்) காண்பான் - இதைக் கூறியபோது இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் தங்களின் மூக்குக்கு மேலே (ஈயை) விரட்டுவது போன்று தம் கையால் சைகை செய்தார்கள்.

பிறகு அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் (பின்வருமாறு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனச்) சொன்னார்கள்:

2. ஒரு மனிதன் (பயணத்தினிடையே) ஓய்வெடுக்க ஓரிடத்தில் இறங்கினான். அந்த இடத்தில் அவனுக்கு (உணவோ தண்ணீரோ கிடைக்காது என்பதால்) ஆபத்து (காத்து) இருந்தது. அவனுடைய உணவும் பானமும் வைக்கப்பட்டிருந்த அவனுடைய வாகனப் பிராணியும் அவனுடன் இருந்தது. அப்போது அவன் தலையைக் கீழேவைத்து ஒரு (குட்டித்) தூக்கம் தூங்கி எழுந்தான். அப்போது அவனுடைய வாகனப் பிராணி (தப்பி ஓடிப்) போயிருந்தது. (எனவே

அவன் அதைத் தேடிப் புறப்பட்டான்.) அப்போது அவனுக்குக்கடுமையான வெப்பமும் தாகமும் அல்லதுஅல்லாஹ் நாடிய (கஷ்டம்) ஒன்று ஏற்பட்டது. அவன்,நான் முன்பிருந்த அதே இடத்திற்குத் திரும்பிச் செல்கிறேன்' என்று கூறியவாறு (அங்கு) திரும்பிச் சென்றான். பிறகு ஒரு (குட்டித்) தூக்கம் தூங்கினான். பிறகு தன் தலையை உயர்த்தினான். அப்போது தப்பிப்போன தன்னுடைய பிராணி தன்னருகில் இருப்பதைக் கண்டான். (இப்போது அவன் எந்த அளவுக்கு மகிழ்வான்!) அந்த மனிதன் மகிழ்ச்சி அடைவதைவிடத் தன் அடியான் தவ்பா - பாவமன்னிப்புக் கோரித் தன்னிடம் திரும்புவதால் அல்லாஹ் அதிகம் மகிழ்கிறான்.

இன்னும் சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6309 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் வறண்ட பாலைநிலத்தில் தொலைத்துவிட்ட தன்னுடைய ஒட்டகத்தை (எதிர்பாராதவிதமாக)க் கண்டுபிடிக்கும்போது, அவருக்கு ஏற்படும் மகிழ்ச்சியைவிடத் தன் அடியான் தவ்பா - பாவமன்னிப்புப் கோரி தன்னிடம் திரும்புவதில் அல்லாஹ் அதிகம் மகிழ்ச்சி அடைகிறான்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

இன்னோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

## வலப் பக்கத்தின் மீது ஒருக்களித்து படுப்பது

ஹதீஸ் 6310 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இரவில் பதினோரு ரக்அத்கள் தொழுவது வழக்கம். ஃபஜ்ர் (வைகறை) உதயமாம்விட்டால் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் (ஃபஜ்ருடைய சுன்னத்) தொழுவார்கள்.

பிறகு பாங்கு சொல்பவர் வந்து தம்மை அழைக்கும் வரை தம் வலப் பக்கத்தின் மீது ஒருக்களித்துப் படுத்திருப்பார்கள். 6

## அங்க சுத்தி (உளூ) செய்துகொண்டு இரவில் உறங்குவது.

ஹதீஸ் 6311 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீ உன் படுக்கைக்குச் செல்லும்போது தொழுகைக்காக அங்கசுத்தி (உளூ) செய்வது போன்று அங்கசுத்தி செய்துகொள். பிறகு உன் வலப்பக்கத்தின் மீது சாய்ந்து படு. பிறகு,அல்லாஹும் ம்ம அஸ்லகித்து நஃப்ஸீ இலைக்க. வ ஃபவ்வளத்து அம்ரீ இலைக்க. வ அல்ஜஃத்து ழஹ்ரீ இலைக்க. ரஃக்பத்தன் வ ரஹ்பத்தன் இலைக்க. லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க்க இல்லா இலைக்க. ஆமன்த்து பி கித்தாபிக்கல்லதீ அன்ஸல்த்த வபி நபிய்யிக்கல்லதீ அர்சல்த்த' என்று ஓதிக்கொள். (பொருள்: இறைவா! உனக்கு நான் கீழ்ப்படிந்தேன். காரியம் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்தேன். என் விவகாரங்கள் அனைத்திலும் உன்னையே சார்ந்திருக்கிறேன். உன் மீதுள்ள ஆவலிலும் அச்சத்திலும் தான் (இவற்றை செய்தேன்). உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடமில்லை. நீ அருளிய உன்னுடைய வேதத்தையும், நீ அனுப்பி வைத்த உன்னுடைய நபியையும் நான் நம்பினேன். (இவ்வாறு நீ பிரார்த்தனை செய்துவிட்டு உறங்கி அன்றைய இரவில் நீ இறந்துவிட்டால் (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் இறந்தவனாவாய். இந்தப் பிரார்த்தனையை (இரவின்) இறுதிப்பேச்சாக ஆக்கிக்கொள்.

இந்த நபிமொழியின் அறிவிப்பாளரான பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

"நான் இவற்றைத் திரும்ப ஓதிக்காட்டுகிறேன்' என்று நபி(ஸல்) அவர்களிடம் கூறிவிட்டு ஓதிக் காட்டலானேன். ('நீ அனுப்பிய உன் நபியையும் நான் நம்பினேன் என்பதற்கு பதிலாக)நீ

அனுப்பிய உன் ரசூலையும் நான் நம்பினேன் என்று நான் சொல்லிவிட்டேன். உடனே நபி(ஸல்) அவர்கள், இல்லைநீ அனுப்பிய உன் நபியை நம்பினேன் என்று சொல்' என (எனக்குத் திருத்தி)ச் சொன்னார்கள்.

## உறங்கச் செல்லும்போது ஓத வேண்டியது

ஹதீஸ் 6312 ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் படுக்கைக்குச் செல்லும்போது, பிஸ்மிக்க அமூத்து வ அஹ்யா' ( (இறைவா!) உன் பெயர் கூறியே இறக்கிறேன் உயிர் வாழவும் செய்கிறேன்) என்று கூறுவார்கள். (உறக்கத்திலிருந்து) எழும்போதுஅல்ஹம்து லில்லாஹில்தீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வ இலைஹிந் நுஷூர்' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் எங்களை இறக்கச் செய்த பின்னர் எங்களுக்கு உயிரூட்டினான். மேலும், (மண்ணறையிலிருந்து வெளியேறி) அவனிடமே செல்லவேண்டியுள்ளது) என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 6313 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒருவருக்கு அறிவுரை கூறினார்கள். அப்போதுநீ படுக்கைக்குச் செல்ல நினைத்தால், அல்லாஹு ம்ம அஸ்லகித்து நஃப்ஸீ இலைக்க. வ ஃபவ்வளத்து அம்ரீ இலைக்க. வ வஜ்ஜஹ்த்து வஜ்ஹீ இலைக்க. வ அல்ஜஃத்து ழஹ்ரீ இலைக்க, ரஃக்பத்தன் வ ரஹ்பத்தன் இலைக்க. லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க்க இல்லா இலைக்க. ஆமன்த்து பி கித்தாபிக்கல்லதீ அன்ஸல்த்த, வபி நபிய்யக்கல்லதீ அர்சல்த்த' என்று ஓதிக்கொள். (பொருள்: இறைவா! உனக்கு நான் அடிபணிந்தேன். என்னுடைய காரியம் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்தேன். என்னுடைய முகத்தை உன்னை நோக்கித் திருப்பினேன். என் விவகாரங்கள் அனைத்திலும் உன்னை சார்ந்திருக்கிறேன். உன் மீதுள்ள ஆவலாலும் (அதே நேரத்தில்) உன் மீதுள்ள அச்சத்தாலும் (இதை நான் செய்கிறேன்.) உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடமில்லை நீ அருளிய உன்னுடைய வேதத்தையும் நீ அனுப்பி வைத்த உன்னுடைய நபியையும் நான் நம்பினேன்) (இவ்வாறு பிரார்த்தனை செய்து நீ உறங்கி அன்றைய இரவில்) நீ இறந்துவிட்டால், (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் இறந்தவனாவாய்' என்றார்கள்.

## வலக் கன்னத்திற்குக் கீழே வலக் கையை வைத்(து உறங்கு)தல்.

ஹதீஸ் 6314 ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6314 ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இரவில் படுக்கைக்கு உறங்கச் சென்ற பின்னால் தம் (வலக்) கையைத் தம் (வலக்) கன்னத்திற்குக் கீழே வைத்துக் கொள்வார்கள். பிறகு, அல்லாஹு ம்ம பிஸ்மிக்க அமூத்து வ அஹ்யா' (இறைவா! உன் பெயர் கூறியே இறக்கிறேன் உயிர் வாழவும் செய்கிறேன்) என்று கூறுவார்கள். உறக்கத்திலிருந்து எழும்போதுஅல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வஇலைஹிந் நுஷூர்' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் எங்களை இறக்கச் செய்த பின்னர் எங்களுக்கு உயிரூட்டினான். மேலும், (மண்ணறையிலிருந்து வெளியேறி) அவனிடமே செல்லவேண்டியுள்ளது) என்று கூறுவார்கள்.

## வலப் பக்கத்தில் சாய்ந்து உறங்குவது

ஹதீஸ் 6315 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் படுக்கைக்குச் சென்றால், வலப் பக்கத்தில் சாய்ந்து உறங்குவார்கள். பிறகு, அல்லாஹு ம்ம அஸ்லமத்து நஃப்ஸீ இலைக்க, வ வஜ்ஜஹ்த்து வஜ்ஸீ இலைக்க. வ ஃபவ்வள்த்து அம்ரீ இலைக்க. வ அல்ஜஃத்து ழஹ்ரி இலைக்க, ரஃக்பத்தன் வ ரஹ்பத்தன் இலைக்க. லா மல்ஜஅ வலா மன்ஜா மின்க்க இல்லா இலைக்க. ஆமன்த்து பி

கித்தாபிக்கல்லதீ அன் ஸல்த்த. வபி நபிய்யிக்கல்லதீ அர்சல்த்த' என்று ஓதுவார்கள். (பொருள்: இறைவா! உனக்கு நான் அடிபணிந்தேன். என்னுடைய முகத்தை உன்னை நோக்கித் திரும்பினேன். என்னுடைய காரியம் அனைத்தையும் உன்னிடம் ஒப்படைத்தேன். என் விவகாரங்கள் அனைத்திலும் உன்னையே சார்ந்திருக்கிறேன். உன் மீதுள்ள ஆவலாலும் (அதே நேரத்தில்) உன் மீதுள்ள அச்சத்தாலும் (இதை நான் செய்கிறேன்). உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடமில்லை. நீ அருளிய உன் வேதத்தையும், நீ அனுப்பிவைத்த உன் நபியையும் நான் நம்பினேன்) மேலும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்இவற்றைக் கூறிவிட்டு அன்னைறய இரவே இறந்துவிடுகிறவர் (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் இறந்தவராவார்' என்று கூறினார்கள்.

## இரவில் (இடையே) விழிக்கும்போது ஓத வேண்டியது.

ஹதீஸ் 6316. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நான் (என் சிறிய தாயாரும் நபியவர்களின் துணைவியாருமான) மைமூனா(ரலி) அவர்களிடம் (அவர்கள் இல்லத்தில்) இரவில் தங்கியிருந்தேன். நபி(ஸல்) அவர்கள் (இரவில்) எழுந்து தம் இயற்கைக் கடனை நிறைவேற்றச் சென்றார்கள். (பிறகு வந்து) தம் முகத்தையும் கைகளையும் கழுவினார்கள். பிறகு உறங்கினார்கள். பின்னர் எழுந்து தண்ணீர் பையை நோக்கிச் சென்று அதன் (சுருக்கிக்) கயிற்றை அவிழ்த்தார்கள். பின்னர் (ஒன்றுக்கும்) அதிகமான முறைகள் உறுப்புகளைக் கழுவிடாமல், நடுநிலையாக அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். அதை நிறைவாகச் செய்தார்கள்.

பிறகு தொழுதார்கள். நானும் (மெல்ல) எழுந்தேன். நான் அவர்களை நோட்டமிட்டுக் கொண்டிருப்பதை அவர்கள் காண்பது எனக்கு விருப்பமில்லாததால் மெதுவாக எழுந்து அங்கசுத்தி செய்தேன். அப்போது அவர்கள் தொழுவதற்காக நின்றார்கள். நான் அவர்களின் இடப்பக்கத்தில் நின்றேன். உடனே அவர்கள் என் காதைப்பிடித்துச் சுற்றி அப்படியே என்னைத் தம் வலப் பக்கத்திற்குக் கொண்டுவந்தார்கள் பிறகு (தொழத் தொடங்கி) பதிமூன்று ரக்அத்களுடன் தம் தொழுகையை முடித்துக் கொண்டார்கள். பின்னர் குறட்டைவிட்டபடி உறங்கினார்கள். (பொதுவாக) அவர்கள் உறங்கும்போது குறட்டை விடுவார்கள். அப்போது அவர்களை பிலால்(ரலி) அவர்கள் தொழுகைக்காக அழைத்தார்கள். எனவே, அவர்கள் (எழுந்து புதிதாக) அங்கசுத்தி செய்யாமலேயே தொழுதார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் பிரார்த்தனையில் (பின்வருமாறு) கூறிக் கொண்டிருந்தார்கள். அல்லாஹும் ம்மஜ்அல் ஃபீ கல்பீ நூரன். வ ஃபீ பஸரீ நூரன். வ ஃபீ ஸம்ஈ நூரன். வ அன் யமீனீ நூரன். வ அன் யஸாரீ நூரன். வ ஃபவ்க்கீ நூரன். வ தஹ்த்தீ நூரன். வ அமாமீ நூரன். வ கல்ஃபீ நூரன். வஜ்அல் லீ நூரன். (பொருள்: இறைவா! என் இதயத்தில் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் வலப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. என் இடப்பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக. எனக்கு (எல்லாத் திசையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக.)

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) குறைப்(ரலி) கூறினார்.

(உடல் எனும்) பேழையிலுள்ள வேறு ஏழு பொருட்களிலும் ஒளியை ஏற்படித்திடுமாறு நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். அப்பாஸ்(ரலி) அவர்களின் புதல்வர்களில் ஒருவரைச் சந்தித்தபோது அவற்றை எனக்கு அன்னார் அறிவித்தார்கள். என் நரம்பிலும் என் சதையிலும் என் இரத்தத்திலும் என் ரோமத்திலும் என் சருமத்திலும் (ஒளியை ஏற்படுத்துவாயாக.) இவ்வாறு கூறிவிட்டு, மேலும் (மனம் மற்றும் நாவு ஆகிய) இரண்டையும் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 6317. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார். நபி(ஸல்) அவர்கள் தஹஜ்ஜுத் (எனும் இரவுத் தொழுகை) தொழுவதற்காக இரவில் எழுந்ததும் (பின்வருமாறு) பிரார்த்தனை செய்வார்கள்:

அல்லாஹும்ம! லக்கல் ஹம்து, அன்த்த நூருஸ் ஸமாவாத்தி, வல் அர்ளி, வமன் ஃபீஹின்ன. வ லக்கல் ஹம்து. அன்த்த கய்யிமுஸ் ஸமாவாத்தி வல் அர்ளி வ மன்ஃபீஹின்ன வ லக்கல் ஹம்து. அன்த்தல் ஹக்கு. வ வஅதுக்க ஹக்குன். வ வல்ஜன்னத்து ஹக்குன். வந்நாரு ஹக்குன். வஸ்ஸாஅத்து ஹக்குன். வந் நபிய்யூன ஹக்குன். வ முஹம்மதுன் ஹக்குன். அல்லாஹும்ம! லக்க அஸ்லம்த்து. வ அலைக்க தவக்கல்த்து. வபிக்க ஆமன்த்து. வ இலைக்க அனப்த்து. வ பிக்க காஸம்த்து. வ இலைக்க ஹாக்கம்த்து. ஃபஃபக்ஃபிர்லீ மா கத்தம்த்து, வமா அக்கர்த்து, வமா அஸ்ரர்த்து, வமா அஃலன்த்து, அன்த்தல் முகத்திமு, வ அன்த்தல் முஅக்கிரு. லா இலாஹ இல்லா அன்த்த அல்லது லா இலாஹ ஃகைருக்க.

(பொருள்: இறைவா! உனக்கே புகழ் அனைத்தும். நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றி உள்ளவர்களின் ஒளி ஆவாய். உனக்கே புகழ் அனைத்தும். வானங்கள், பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களை நிர்வகிப்பவன் நீயே! உனக்கே புகழ் அனைத்தும், நீ உண்மையானவன். உன் வாக்கு உண்மையானது. உன்னுடைய கூற்று உண்மை. உன்னுடைய தரிசனம் உண்மை. சொர்க்கம் உண்மை. நரகம் உண்மை. மறுமைநாள் உண்மை நரகம் உண்மை. நபிமார்கள் உண்மையானவர்கள். முஹம்மத்(ஸல்) அவர்கள் உண்மையானவர்கள். இறைவா! உனக்கே அடிபணிந்தேன். உன்னையே சார்ந்துள்ளேன். உன் மீது நம்பிக்கை கொண்டுள்ளேன். உன்னிடமே திரும்புகிறேன். உன் சான்றுகளைக் கொண்டே வழக்காடுவேன். உன்னிடம் நீதி கேட்பேன். எனவே நான் முந்திச் செய்த, பிந்திச் செய்கின்ற, இரகசியமாகச் செய்த, பம்ரங்கமாகச் செய்த பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பாயாக. நீயே (என்னை மறுமையில்) முதலில் எழுப்புகிறவன். நீயே (என்னை இம்மையில்) இறுதியில் அனுப்பியவன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை அல்லதுஉன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை.)

## உறங்கப் போகும்போது அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்றும் சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ்தூயவன்) என்றும் கூறுவது.

ஹதீஸ் 6318. அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்.

(என் துணைவியார்) ஃபாத்திமா அவர்கள் (மாவு அரைக்கும்) திரிகை சுற்றியதால் தம் கையில் ஏற்பட்ட காய்ப்பு குறித்து (என்னிடம்) முறையிட்டார். இது தொடர்பாக நபியவர்களிடம் தெரிவிக்கும் படி கூறினேன். ன எனவே, ஒரு பணியாளரை (தமக்குத் தரும்படி) கேட்க நபி(ஸல்) அவர்களிடம் ஃபாத்திமா சென்றார்கள். ஆனால் நபி(ஸல்) அவர்கள் அப்போது வீட்டில் இல்லாததால் ஆயிஷா(ரலி) அவர்களிடம் அது பற்றிக் கூறி(விட்டுத் திரும்பலா)னார்கள். நபி(ஸல்) அவர்கள் வந்தவுடன் அவர்களிடம் ஆயிஷா(ரலி) அவர்கள் விஷயத்தை தெரிவித்தார்கள்.

உடனே நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது நாங்கள் படுக்கைக்குச் சென்றுவிட்டிருந்தோம். (அவர்களைக் கண்டவுடன்) நான் எழுந்திருக்க முற்பட்டேன். உடனே நபி(ஸல்) அவர்கள், (எழுந்திருக்க வேண்டாம்) அந்த இடத்திலேயே இருங்கள்' என்று கூறிவிட்டு எங்களுக்கு நடுவில் வந்து அமர்ந்தார்கள். அப்போது (என்னைத் தொட்டுக் கொண்டிருந்த) அவர்களின் பாதங்களின் குளிர்ச்சியை என்னுடைய நெஞ்சின் மீது உணர்ந்தேன். (அந்த அளவுக்கு நெருக்கமாக அமர்ந்திருந்தார்கள்.)பணியாளரைவிட உங்களிருவருக்கும் (பயனளிக்கும்) சிறந்த ஒன்றை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? நீங்கள் இருவரும்படுக்கைக்குச் சென்றதும் அல்லதுவிரிப்புக்குச் சென்றதும் அல்லாஹு அக்பர் (அல்லாஹ் பெரியவன்) என்று முப்பத்து நான்கு முறையும், சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) என்று முப்பத்து மூன்று முறையும், அல்ஹம்து லில்லாஹ் (புகழ் யாவும்

அல்லாஹ்வுக்கே) என்று முப்பத்து மூன்று முறையும் சொல்லுங்கள். இது பணியாளைவிட உங்கள் இருவருக்கும் சிறந்ததாகும். என்றார்கள்.

இப்னு சீரின் (ரஹ்) அவர்கள்சுப்ஹானல்லாஹ் என முப்பத்து நான்கு முறை கூற வேண்டும்' என்று அறிவித்தார்கள்.

## உறங்கப் போகும்போது இறைவனிடம் பாதுகாப்புக் கோருவதும் (குர்ஆன் அத்தியாயங்களை) ஓதுவதும்.

ஹதீஸ் 6319. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் படுக்கைக்குச் சென்றால் இறைப் பாதுகாப்புக் கோரும் (112, 113, 114 ஆகிய மூன்று) அத்தியாயங்களை தம் மேனியில் தடவிக் கொள்வார்கள்.

ஹதீஸ் 6320. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் படுக்கைக்குச் சென்றால் உங்கள் கீழங்கியின் ஓரத்தால் விரிப்பைத் தட்டி விடுங்கள். ஏனெனில், அதில் என்ன (விஷ ஜந்து) ஒளிந்திருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாது. பிறகு (பின்வருமாறு) பிரார்த்தியுங்கள்:

பிஸ்மிக்க ரப்பீ வளஅத்து ஜன்பீ. வ பிக்க அர்∴பஉஹு இன் அம்ஸக்த்த ந∴ப்ஸீ ∴பர்ஹம்ஹா வ இன் அர்ஸல்த் தஹா ∴பஹ்∴பழ்ஹா பிமா தஹ்∴பழு பிஹி இபாதக்கஸ் ஸாலிஹீன்.

(பொருள்: என் அதிபதியே! உன் பெயரால் என் விலாவை (தரையில்) வைத்தேன். உன் உதவியாலேயே (மீண்டும்) எழுவேன். என் உயிரை நீ கைப்பற்றிக் கொண்டால், அதற்கு நீ கருணை புரிவாயாக. அதை நீ (கைப்பற்றாமல்) விட்டுவிட்டால், உன் நல்லடியார்களை எதன் மூலம் பாதுகாப்பாயோ அதன் மூலம் என் உயிரையும் காத்திடுவாயாக)

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த நபிமொழி வந்துள்ளது.

## நள்ளிரவில் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6321. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

சுபிட்சமும் உயர்வும் உடைய நம் இறைவன் ஒவ்வோர் இரவும் கீழ் வானிற்கு இறங்கி இரவின் இறுதி மூன்றிலொரு பகுதி இருக்கும்போது, என்னிடம் யாரேனும் பிரார்த்தித்தால் அவரின் பிரார்த்தனையைநான் அங்கிகரிக்கிறேன். என்னிடம் யாரேனும் கேட்டால் பாவமன்னிப்புக் கோரினால் அவரை நான் மன்னிக்கிறேன்' என்று கூறிகிறான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## கழிவறைக்குச் செல்லும்போது ஓத வேண்டிய பிரார்த்தனை

ஹதீஸ் 6322. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் கழிவறைக்குள் நுழையும்போதுஅல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் குப்ஸி வல் கபாயிஸி' என்று கூறுவார்கள்.

(பொருள்: இறைவா! ஆண் பெண் ஷைத்தான்களின் தீங்கிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)

## அதிகாலையில் ஓத வேண்டிய பிரார்த்தனை

ஹதீஸ் 6323. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"அல்லாஹும்ம அன்த்த ரப்பீ. ல இலாஹ இல்லா அன்த்த. கலக்த்தனீ. வ அன அப்துக்க. வ அன அலா அஹ்திக்க வ வஅதிக்க மஸ்ததஅத்து, அபூ உ லக்க பி நிஅமத்திக்க, வ அபூ உ லக்க பி தன்பீ. ஃபஃபக்ஃபிர்லீ. ஃபஇன்னஹு லா யஃக் ஃபிருத் துனப இல்லா அன்த்த. அஊது பிக்க மின் ஷர்ரி ஸனஅத்து' என்பதே தலைசிறந்த பாவமன்னிப்புக் கோரல் ஆகும்.

(பொருள்: அல்லாஹ்! நீயே என் அதிபதி. உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. நீயே என்னைப் படைத்தாய். நான் உன் அடிமையாவேன். நான் உனக்குச் செய்து கொடுத்த உறுதி மொழியையும் வாக்குறுதியையும் என்னால் இயன்ற வரை நிறைவேற்றியுள்ளேன். நீ (எனக்கு) அருட்கொடைகளை வழங்கியுள்ளாய் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். நான் பாவங்கள் புரிந்துள்ளதையும் உன்னிடம் (மறைக்காமல்) ஒப்புக் கொள்கிறேன். எனவே, என்னை மன்னிப்பாயாக! ஏனெனில், பாவத்தை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை. நான் செய்தவற்றின் தீமைகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.

மாலை நேரத்தில் ஒருவர் இதைச் சொல்லிவிட்டு (அன்று மாலையே) அவர் இறந்தால் அவர் (சொர்க்கம் செல்வார் அல்லது சொர்க்கவாசியாவார் காலை நேரத்தில் ஒருவர் (இதைச்) சொல்லிவிட்டு அன்று பகலிலேயே இறந்தால் அதே போன்றுதான் (அவரும் சொர்க்கம் செல்வார்)

என ஷத்தாத் இப்னு அவ்ஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6324. ஹு தைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் உறங்க விரும்பினால்பிஸ்மிக்கல்லாஹும்ம அமூத்து வ அஹ்யா (இறைவா! உன் பெயர் கூறியே இறக்கிறேன் உயிர் வாழவும் செய்கிறேன்)' என்று கூறுவார்கள். உறக்கத்திலிருந்து எழுகிறபோது,அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வ இலைஹிந் நுஷூ ர் (அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவன் எங்களை இறக்கச் செய்த பின்னர் எங்களுக்கு உயிரூட்டினான். மேலும், (மண்ணறையிலிருந்து வெளியேறி) அவனிடமே செல்ல வேண்டியுள்ளது.) என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 6325. அபூ தர் அல்கிஃபாரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் படுக்கைக்குச் செல்லும்போதுஅல்லாஹும்ம பிஸ்மிக்க அமூத்து வ அஹ்யா (இறைவா! உன் பெயர் கூறியே இறக்கிறேன். உயிர் வாழவும் செய்கிறேன்)' என்று கூறுவார்கள். (உறக்கத் திலிருந்து விழிக்கும்போது,அல்ஹம்து லில்லாஹில் லதீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வ இலைஹிந் நூஷூ ர் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் எங்களை இறக்கச் செய்து பின்னர் எங்களுக்கு உயிரூட்டினான். மேலும், (மண்ணறையிலிருந்து வெளியேறி) அவனிடமே செல்ல வேண்டியுள்ளது.) என்று கூறுவார்கள்.

## தொழுகையில் ஓதும் பிரார்த்தனை:

ஹதீஸ் 6326. அபூ பக்ர் அஸ்ஸித்தீக்(ரலி) அறிவித்தார்.

"தொழுகையில் (இறுதி அமர்வில்) நான் ஓதவேண்டிய ஒரு பிரார்த்தனையை எனக்குக் கற்றுத் தாருங்கள்' என்று நபி(ஸல்) அவர்களிடம் கேட்டேன். அப்போதுஅல்லாஹும்ம இன்னீ ழலகித்து நஃப்ஸீ ழுல்மன் கஸீரன். வலா யஃக்ஃபிருத் துனப இல்லா அன்த்த. ஃபஃக்ஃபிர்லீ மஃஹ்பிரத்தம் மின் இந்திக்க வர்ஹம்னீ. இன்னக்க அன்த்தல் ஃகஃபூருர் ரஹீம்' என்று கூறுங்கள் என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். (பொருள்: இறைவா! எனக்கு நானே அதிகமாக அநீதி இழைத்துக் கொண்டேன். உன்னைத் தவிர வேறெவராலும் பாவங்களை மன்னிக்க முடியாது. எனவே, உன்னிடமிருந்து எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! மேலும், எனக்குக் கருணை புரிவாயாக! நிச்சயமாக நீ மன்னிப்பவனும் கருணையாளனுமாவாய்.)

ஹதீஸ் 6327. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

“மேலும், உங்கள் தொழுகையில் உங்கள் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம். மிகவும் தாழ்த்தவும் வேண்டாம். இவ்விரண்டிற்கும் இடையில் ஒரு மத்தியமான வழியைக் கடைப்பிடியுங்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 17:110 வது) வசனம் பிரார்த்தனை (துஆ ஓதுவது) குறித்தே அருளப்பெற்றது.

ஹதீஸ் 6328. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் தொழுகையில் (அமர்வில்)அஸ்ஸலாமு அலல்லாஹ், அஸ்ஸலாமு அலா∴புலான்‘ (அல்லாஹ்வுக்கு சாந்தியுண்டாகட்டும் இன்னாருக்கு சாந்தியுண்டாகட்டும்) என்று கூறிவந்தோம். இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் எங்களிடம்,‘நிச்சயமாக அல்லாஹ்வேசலாம் (சாந்தியளிப்பவன்) ஆவான். எனவே, நீங்கள் தொழுகையில் (இருப்பில்) அமர்ந்தால்,அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ் ஸலாவாத்து வத்தய்யிப் பாத்து. அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந் நபிய்யு வரஹ்மத்துல்லாஹி வபரக் காத்துஹு அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் (சொல், செயல், பொருள் சார்ந்த எல்லாக் காணிக்கைகளும் வணக்கங்களும் பாராட்டுகளும் அல்லாஹ்வுக்கே உரியன. நபியே! உங்களின் மீது சாந்தியும் அல்லாஹ்வின் அருளும் சுபிட்சமும் உண்டாகட்டுமாக! எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்களின் மீதும் சாந்தி உண்டாகட்டும்)‘ என்று கூறுங்கள். இவ்வாறு நீங்கள் கூறினாலே வானம் பூமியிலுள்ள அனைத்து நல்லடியார்களுக்கும் சலாம் கூறினார்கள் எனம். மேலும்,அஷ்ஹது அல்லாயிலாஹ இல்லால்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்று நான் உறுதி கூறுகிறேன். மேலும், முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார்கள் என்றும் நான் உறுதி கூறுகிறேன்)‘ என்றும் கூறுங்கள். பிறகு உங்களுக்கு விருப்பமான இறைத் துதிகளைக் கூறலாம்‘ என்றார்கள்.

## தொழுகைக்குப் பின்னால் ஓதும் பிரார்த்தனை.

ஹதீஸ் 6329. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

மக்கள் (சிலர்),இறைத்தூதர் அவர்களே! வசதி படைத்தோர் (உயர்) அந்தஸ்துகளையும் (சொர்க்கத்தின்) நிலையான இன்பங்களையும் (தட்டிக்) கொண்டு போய்விடுகின்றனர்‘ என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்,அது எவ்வாறு? என்று கேட்டார்கள். (ஏழைகளாகிய) நாங்கள் தொழுவதைப் போன்றே அவர்களும் தொழுகின்றனர். (அறவழியில்) நாங்கள் போரிடுவதைப் போன்றே அவர்களும் போரிடுகின்றனர். தங்களின் அதிகப்படியான செல்வங்களை (நல்வழியில்) செலவிடுகின்றனர். ஆனால், (அவ்வாறு செலவிட) எங்களிடம் பொருள்களேதும் இல்லையே? என்று கூறினர். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,நான் உங்களுக்கு ஒன்றைத் தெரிவிக்கட்டுமா? (அதை நீங்கள் செயல்படுத்திவந்தால் இந்தச் சமுதாயத்தில்) உங்களை பின்னால் வருபவர்களையும் நீங்கள் எட்டிவிடுவீர்கள். இதைப் போன்று செய்தால் தவிர, வேறு எவரும் நீங்கள் செய்ததற்கு நிகராகச் செய்திட முடியாது. (அது யாதெனில்) நீங்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் பத்துமுறைசுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்) என்றும், பத்து முறைஅல்ஹம்து லில்லாஹ் எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்றும், பத்து முறைஅல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகவும் பெரியவன்) என்றும் கூறுங்கள்‘ என்றார்கள்.

இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6330. மு∴கீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான வர்ராத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

மு∴கீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்கள் முஆவியா இப்னு அபீ சு∴ப்யான்(ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள். (அதில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்கள்:) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் சலாம் கொடுத்தவுடன் (பின்வருமாறு) கூறுவார்கள்.

லா இலாஹ இல்லால்லாஹு வஹ்தஹு . லா ஷரீக்க லஹு லஹு ல் முல்க்கு. வ லஹு ல் ஹம்து. வஹ்வ அலா குல்லி ஷையின் கதீர். அல்லாஹு ம்ம லா மானிஅ லிமா அஉதைத்த வலா முஉத்திய லிமா மனஅத்த வலா யன்ஃபஉ தல்ஜத்தி மின்கல் ஜத்.

(பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன். எவனுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது. எல்லாப் புகழும் அவனுக்கே உரியது. அவன் அனைத்திலும் மீதும் ஆற்றலுள்ளவன். இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவர் யாருமில்லை. எச்செல்வரின் செல்வமும் அவருக்கு உன்னிடம் பயன் அளிக்காது. )

இன்னும் சில அறிவிப்பாளர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

## “மேலும், அவர்களுக்காக (நல்லருள் வேண்டி)ப் பிரார்த்தியுங்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 09:103 வது) இறைவசனமும், ஒருவர் தமக்காக அல்லாமல் தம் சகோதரருகாகப் பிரார்த்திப்பதும்.

அபூ மூஸா அல்அஷ்ரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி (ஸல்) அவர்கள், இறைவா! அபூ ஆமிர் உபைதுக்கு மன்னிப்பு அளிப்பாயாக! இறைவா! அப்தில்லாஹ் இப்னு கைஸின் பாவத்தை மன்னிப்பாயாக‘ என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6331. ஸலமா இப்னு அக்வஃ (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கி (போருக்காகப்) புறப்பட்டுச சென்றோம். அப்போது மக்களில் ஒருவர், (என் தந்தையின் சகோதரரிடம்), ஆமிரே! உங்கள் கவிதைகளில் சிலவற்றை (ப் பாடி) எங்களுக்குக் கேட்கச் செய்யமாட்டீர்களா? என்று கூறினார். உடனே (கவிஞர்) ஆமிர் (ரலி) அவர்கள் (தம் வாகனத்திலிருந்து) இறங்கி மக்களுக்காக (பின்வரும் யாப்பு வகைக் கவிதைகளைப்) பாடி அவர்களின் ஒட்டகங்களை விரைந்தோடச் செய்தார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் இல்லையென்றால் நாங்கள் நேர்வழி பெற்றிருக்கமாட்டோம்‘ என்று (தொடங்கும் பாடல்களைப்) பாடினார்கள்.

அறிவிப்பாளர் யஹ்யா இப்னு ஸயீத் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். யஸீத் இப்னு அபீ உபைத் (ரஹ்) அவர்கள் இஃதல்லாத மற்றொரு கவிதையையும் குறிப்பிட்டார்கள் ஆனால், நான் அதை மனனம் செய்யவில்லை.

அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், யார் இந்த ஒட்டகவோட்டி? என்று கேட்டார்கள். மக்கள், ஆமிர் இப்னு அக்வஃ‘ என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக!என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக!என்று கூறினார்கள். (இந்தப் பிரார்த்தனையின் பொருள் புரிந்த) மக்களில் ஒருவர், இறைத்தூதர் அவர்களே! அவர் (நீண்ட காலம் உயிர் வாழ்வதன்) மூலம் எங்களுக்குப் பயன் கிடைக்க (பிரார்த்தனை) செய்யக் கூடாதா? என்று கேட்டார். பிறகு மக்கள் அணிவகுத்து நின்று எதிரிகளுடன் போரிட்டனர். அப்போது தம் வாளின் மேற்பகுதியினாலேயே (முழங்காலில்) காயமேற்பட்டு ஆமிர் (ரலி) அவர்கள் இறந்தார்கள்.

(கைபர் வெற்றிகொள்ளப்பட்ட அன்று) மாலையில் மக்கள் அதிகமான நெருப்புகளை (ஆங்காங்கே) மூட்டியிருந்தார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், இது என்ன நெருப்பு? எதற்காக இதை மூட்டியிருக்கிறீர்கள்? என்று கேட்டார்கள். நாட்டுக் கழுதைகளின் இறைச்சியைச் சமைப்பதற்காக‘ என்று மக்கள் பதிலளித்தார்கள். உடனே இறைத்தூதர் (ஸல்) அவர்கள், பாத்திரங்களில் உள்ளவற்றைக் கொட்டிவிட்டு அந்தப் பாத்திரங்களை உடைத்து விடுங்கள்‘ என்று கூறினார்கள்.

ஒருவர், இறைத்தூதர் அவர்களே! பாத்திரங்களில் உள்ளவற்றைக் கொட்டிவிட்டுப் பாத்திரங்களைக் கழுவி(வைத்து)க் கொள்ளலாமா? என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், அப்படியே ஆகட்டும்‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6332. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்.

யாரேனும் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் ஸகாத் பொருளைக் கொண்டு வந்தால்இறைவா! இன்னாரு(க்கும் அவரு)டைய குடும்பத்தாருக்கும் கருணை புரிவாயாக!என்று நபி(ஸல்) அவர்கள் பிரார்த்திப்பது வழக்கம். என் தந்தை (அபூ அவ்ஃபா(ரலி) அவர்கள்) தம் ஸகாத்தை நபி(ஸல்) அவர்கள், இறைவா! அபூ அவ்ஃபாவு(க்கும் அவரு)டைய குடும்பத்தாருக்கும் கருணை புரிவாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6333. ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், என்னிடம், துல்கலஸாவின் கவலையிலிருந்து என்னை நீங்கள் விடுவிக்கமாட்டீர்களா? என்று கேட்டார்கள். துல்கலஸா என்பது, (அறியாமைக் காலத்திலிருந்து) ஒரு பலிபீடமாகும். அதனை மக்கள் வழிபட்டு வந்தனர். அதுயமன் நாட்டு கஅபா என அழைக்கப்பட்டுவந்தது. நான், இறைத்தூதர் அவர்களே! குதிரையில் நான் சரியாக உட்கார முடியாதவனாக இருக்கிறேன்‘ என்று கூறினேன். உடனே நபி(ஸல்) அவர்கள் என் நெஞ்சில் அடித்துவிட்டு, இறைவா! இவரை உறுதிப்படுத்துவாயாக. இது வரை நேர்வழி காட்டுபவராகவும் நேர்வழியில் செலுத்தப்பட்டவராகவும் ஆக்குவாயாக‘ என்று பிரார்த்தித்தார்கள்.

இதையடுத்து என் சமுதாயத்தாரானஅஹ்மஸ் குலத்தாரில் ஐம்பது பேருடன் நான் (துல்கலஸா நோக்கிப்) புறப்பட்டேன்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அலீ இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினருடன் நான் நடந்தேன்‘ என்று சுஃப்யான்(ரஹ்) அவர்கள் சில நேரங்களில் அறிவித்தார்கள்:

பிறகு, நான்துல்கலஸா சென்று அந்த பலிபீடத்தை எரித்துவிட்டேன். பின்னர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து, இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! அ(ந்தப் பலிபீடத்)தைச் சிரங்கு பிடித்த ஒட்டகத்தைப் போன்று ஆக்கிவிட்டுத்தான் தங்களிடம் நான் வந்துள்ளேன்‘ என்று சொன்னேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், (என்)அஹ்மஸ் குலத்தாருக்காகவும் அவர்களின் குதிரைகளுக்காகவும் (வளர்ச்சி) வேண்டிப் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6334. அனஸ்(ரலி) கூறினார்:

(என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம், அனஸ் தங்களின் சேவகர். (அவருக்காகப் பிரார்த்தியுங்கள்)‘ என்றார்கள். நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வே, அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்குவாயாக! அவருக்கு நீ வழங்கியவற்றில் வளத்தை அளிப்பாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6335. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

பள்ளிவாசலில் ஒருவர் குர்ஆன் ஓதிக்கொண்டிருப்பதைச் செவியுற்ற நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ் அவருக்குக் கருணை புரிவானாக! இன்ன இன்ன அத்தியாயங்களில் நான் மறந்தவிட்டிருந்த இன்ன இன்ன வசனங்களை அவர் எனக்கு நினைவுபடுத்திவிட்டார்‘ என்றார்கள்.

ஹதீஸ் 6336. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

(ஒரு நாள்)நபி(ஸல்) அவர்கள் (ஹுனைன் போரில் கிடைத்த செல்வங்களைப்) பங்கிட்டார்கள். அப்போது ஒருவர், நிச்சயமாக இது அல்லாஹ்வின் திருப்தி நாடப்படாத பங்கீடாகும்‘ என்று (அதிருப்தியுடன்) அறிவித்தார். (அதை) நான் நபி(ஸல்) அவர்களிடம்

தெரிவித்தேன். (அதைக் கேட்ட போது) நபி(ஸல்) அவர்கள் கோபமடைந்தார்கள். அவர்களின் முகத்தில் நான் அக்கோபத்தைக் கண்டேன். (அப்போது) அவர்கள்,(இறைத்தூதர்) மூஸா அவர்களுக்கு அல்லாஹ் கருணை புரிவானாக! இதைவிட அதிகமாக அவர்கள் புண்படுத்தப் பட்டார்கள். இருப்பினும், சகித்துக் கொண்டார்கள்' என்றார்கள்.

## எதுகை மோனையுடன் (அலங்கார ஒலி நயத்துடன்) பிரார்த்திப்பது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 6337. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

வாரத்தில் ஒரு முறை மக்களுக்கு உரை நிகழ்த்துங்கள். (அது போதாது எனக் கருதி) அதற்கு நீங்கள் மறுத்தால் (வாரத்தில்) இரண்டு முறை உரை நிகழ்த்துங்கள். அதை விட அதிகமாகப் போனால் மூன்று முறை உரை நிகழ்த்துங்கள். (அதை விட அதிகமாகப் போய்) இந்தக் குர்ஆன் மீது மக்களுக்குச் சடைவை ஏற்படுத்திவிடாதீர்கள்.

மக்கள் எதையோ பேசிக் கொண்டிருக்கும்போது நீங்கள் அவர்களிடம் சென்று உரையாற்ற, அதையடுத்து அவர்களின் பேச்சு தடைபட்டுவிட, அதனால், அவர்களை நீங்கள் சோர்வடையச் செய்கிற நிலையில் உங்களை நான் காணக் கூடாது. மாறாக, நீங்கள் (அப்போது) மௌனமாக இருங்கள். அவர்களாக விரும்பி உங்களைக் கேட்டுக் கொண்டால் அவர்களிடையே உரையாற்றுங்கள். எதுகைமோனையுடன் பிரார்த்திப்பதைக் கவனமாக இருந்து தவிர்த்து விடுங்கள். ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்களும் நபித்தோழர்களும் இவ்வாறு செய்வதிலிருந்து தவிர்ந்திருக்கவே நான் கண்டுள்ளேன்.

## கேட்பதை வலியுறுத்திக் கேட்க வேண்டும். (இது, இறைவனை நிர்பந்திப்பதாகாது.) ஏனெனில், அவனை யாராலும் நிர்ப்பந்திக்க முடியாது.

ஹதீஸ் 6338. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் பிரார்த்தித்தால் வலியுறுத்திக் கேளுங்கள். அல்லாஹ்வே! நீ நினைத்தால் எனக்கு வழங்கு' என்று சொல்ல வேண்டாம். (வலியுறுத்திக் கேட்பது இறைவனை நிர்ப்பந்திப்பதாகாது.) ஏனெனில், அவனை நிர்பந்திப்பவர் யாருமில்லை.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6339. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் இறைவா! நீ நினைத்தால் என்னை மன்னிப்பாயாக. இறைவா! நீ நினைத்தால் என் மீது அருள்புரிவாயாக' என்று பிரார்த்திக்க வேண்டாம். மாறாக, கேட்பதை வலியுறுத்திக் கேளுங்கள். (இது, இறைவனைக் கட்டாயப்படுத்துவதாகாது.) ஏனெனில், அவனைக் கட்டாயப்படுத்துபவர் யாருமில்லை.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அவசரப்படாத வரையில் அடியானின் பிரார்த்தனை ஏற்கப்படும்.

ஹதீஸ் 6340. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"நான் பிரார்த்தித்தேன். ஆனால், என் பிரார்த்தனை ஏற்கப்படவில்லை' என்று கூறி நீங்கள் அவசரப்படாத வரையில் உங்கள் பிரார்த்தனை ஏற்கப்படும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பிரார்த்திக்கும்போது கைகளை உயர்த்துவது.

அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) கூறினார்:

(என் தந்தையின் சகோதரர் அபூ ஆமிர் கொல்லப்பட்ட சமயம்) நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். பிறகு தம் இரண்டு கைகளையும் உயர்த்தினார்கள். அப்போது அவர்களின் அக்குள்களின் வெண்மையை கண்டேன்.

இப்னு உமர் (ரலி) கூறினார்:

நபி (ஸல்) அவர்கள் தம் இரண்டு கைகளையும் உயர்த்தியவாறு, இறைவா! காலித் செய்த தவற்றுக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என உன்னிடம் அறிவிக்கிறேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6341. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்தித்த போது) அவர்களின் அக்குள்களின் வெண்மையை நான் காணும் அளவுக்கத் தம் இரண்டு கைகளையும் உயர்த்தினார்கள்.

## கிப்லாவை முன்னோக்காமல் பிரார்த்திப்பது

ஹதீஸ் 6342. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (ஒரு) வெள்ளிக் கிழமையன்று உரை நிகழ்த்திக் கொண்டிருந்தபோது ஒருவர் எழுந்து, இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு மழை பொழியச் செய்யுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்றார். நபி (ஸல்) அவர்களின் பிரார்த்தனைக்குப் பின்) மேகமூட்டம் உண்டாம் மழை பொழிந்தது. எந்த அளவிற்கென்றால், அந்த மனிதரால் தம் வீட்டுக்குப் போய்ச் சேர முடியவில்லை. அடுத்த வெள்ளிக்கிழமை வரை மழை நீடித்தது. (அந்த வெள்ளிக்கிழமை) அதே மனிதர் அல்லதுவேறொருவர் எழுந்து, மழையை வேறு பக்கம் திருப்பிவிடுமாறு அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள். (கன மழையினால்) நாங்கள் நீரில் மூழ்கிவிட்டோம்' என்று கூறினார். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், இறைவா! (இந்த மழையை) எங்கள் சுற்றுவட்டாரங்களுக்குத் திருப்பிவிடுவாயாக! எங்களுக்குப் பாதகமாக இதை ஆக்கிவிடாதே' என்று பிரார்த்தித்தார்கள். அந்த மேகம் கலைந்து மதீனாவின் சுற்றுப் புறங்களுக்குச் சென்றது மதினாவாசிகளுக்கு மழை பொழியவில்லை. அந்த மேகம் கலைந்து மதீனாவின் சுற்றுப் புறங்களுக்குச் சென்றது. மதீனாவாசிகளுக்கு மழை பொழியவில்லை.

## கிப்லாவை முன்னோக்கியவாறு பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6343. அப்துல்லாஹ் இப்னு யஸீத் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மழை வேண்டிப் பிரார்த்திக்க இந்தத் தொழுகைத் திடலுக்குப் புறப்பட்டார்கள். (இங்கு வந்து) மழை வேண்டிப் பிரார்த்தித்தார்கள். பிறகு கிப்லாவை முன்னோக்கி, தம் மேல்துண்டை (இடம் வலமாக) மாற்றிப் போட்டார்கள்.

## நபி (ஸல்) அவர்கள் தம் சேவகரின் நீண்ட ஆயுளுக்காகவும் நிறைந்த செல்வத்திற்காகவும் பிரார்த்தித்தது.

ஹதீஸ் 6344. அனஸ் (ரலி) அறிவித்தார்.

என் தாயார் (உம்மு சுலைம்) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், இறைத்தூதர் அவர்களே! தங்களின் சேவகர் அனஸு க்காகப் பிரார்த்தியுங்கள்' என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வே! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்குவாயாக! அவருக்கு நீ வழங்கியுள்ள (ஆயுள் முதலான) வற்றில் வளம் சேர்ப்பாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

## துன்பம் நேரும்போது பிரார்த்திப்பது

ஹதீஸ் 6345. இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் துன்பம் நேரும்போதுலா இலாஹ இல்லல்லாஹு ல் அழீமுல் ஹலீம். லா இலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமாவாத்தி வல்அர்ளி வ ரப்புல் அர்ஷில் அழீம்' என்று பிரார்த்திப்பார்கள். (பொருள்: கண்ணியம் வாய்ந்தோனும் பொறுமை மிக்கோனுமாகிய அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை. வானங்கள் மற்றும் பூமியின் அதிபதியும் மாபெரும் அரியாசனத்தின் அதிபதியுமான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை.)

ஹதீஸ் 6346. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் துன்பம் நேரும்போது,லா இலாஹ இல்லல்லாஹு ல் அழீமுல் ஹலீம். லா இலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அழீம். லா இலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமாவாத்தி வ ரப்புல் அர்ளி வரப்புல் அர்ஷில் கரீம்' என்று ஓதுவார்கள். (பொருள்: கண்ணியமிக்கோனும் பொறுமை மிக்கோனுமாகிய அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை. மாபெரும் அரியாசனத்தின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை. வானங்கள் மற்றும் பூமியின் அதிபதியும் சிறப்பான அரியாசனத்தின் அதிபதியுமான அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் யாரும் இல்லை.)

## தாங்க முடியாத சோதனையிலிருந்து பாதுகாப்புக் கோருவது.

ஹதீஸ் 6347. அபூ ஹு ரைரா(ரலி) அவர்கள் கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தாங்கமுடியாத சோதனை, அழிவில் வீழ்வது, விதியின் கேடு, எதிரிகளால் ஏற்படும் மன உளைச்சல் ஆகியவற்றிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோரிவந்தார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சு∴ப்யான்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த அறிவிப்பில் மூன்று மட்டுமே உள்ளது. நான்தான் ஒன்றை அதிகபட்சமாக அறிவித்துள்ளேன். இவற்றில் அது எதுவென எனக்குத் தெரியவில்லை. (மறந்துவிட்டேன்.)

## "இறைவா! உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்திடுவாயாக)' என்று நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தது.

ஹதீஸ் 6348. ஆயிஷா(ரலி) அவர்கள் ஆரோக்கியமானவர்களாக இருந்தபோது,சொர்க்கத்தில் தம் இருப்பிடத்தைப் பார்த்துவிட்டுப் பிறகு (இன்னும் சில காலம் உயிர் வாழ்வதற்கு) வாய்ப்பு வழங்கப்படாத வரையில் எந்த இறைத்தூத(ரின் உயி)ரும் கைப்பற்றப்படவில்லை' என்று கூறுபவர்களாயிருந்தார்கள்.

பின்னர் அவர்களின் தலை என்னுடைய மடிமீதிருக்க அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது அவர்கள் சிறிது நேரம் மயக்கமுற்றார்கள். பிறகு அவர்களின் மயக்கம் தெளிந்தபோது வீட்டின் கூரையை நோக்கி அவர்களின் பார்வை நிலைகுத்தி நின்றது. பின்னர்இறைவா! (சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)' என்று பிரார்த்தித்தார்கள். அப்போது நான்அப்படியானால், நம்முடன் இருப்பதை அவர்கள் விரும்பவில்லை. (மறுமை வாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டார்கள்.)' என்று (மனத்திற்குள்) சொல்லிக் கொண்டேன். மேலும், அவர்கள் ஆரோக்கியமாக இருந்தபோது (இறைத்தூதர்களுக்கு வாய்ப்பளிக்கப்படும் என்று) அவர்கள் நமக்கு அறிவித்த செய்தி இதுதான் என நான்புரிந்து கொண்டேன். இறைவா! உயர்ந்த நண்பர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)' என்பதே நபி(ஸல்) அவர்கள் பேசிய கடைசி வார்த்தையாக இருந்தது.

இதை அறிஞர்கள் பலருக்கு முன்னால் ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்), உர்வா இப்னு ஸு பைர்(ரஹ்) ஆகியோர் அறிவித்தனர்.

## வாழ்வையும் சாவையும் வேண்டிப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6349. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்களிடம் (அவர்களை உடல் நலம் விசாரிக்கச்) சென்றேன். அவர்கள் (கடும் வயிற்று வலிக்குச் சிகிச்சை பெறுவதற்காகத் தம் வயிற்றில்) ஏழு முறை சூடுபோட்டிருந்தார்கள். அப்போது அவர்கள்மரணத்தை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டாமென நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்திராவிட்டால் மரணத்தை வேண்டி நான் பிரார்த்தனை செய்திருப்பேன்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6350. கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்களிடம் (அவர்களை உடல் நலம் விசாரிக்கச்) சென்றேன். அவர்கள் (கடும் வயிற்று வலிக்குச் சிகிச்சை பெறுவதற்காகத்) தம் வயிற்றில் ஏழு முறை சூடுபோட்டிருந்தார்கள். அப்போதுமரணத்தை வேண்டிப் பிரார்த்திக்க வேண்டாமென நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குத் தடை விதித்திராவிட்டால் நான் மரணத்தை வேண்டிப் பிரார்த்தித்திருப்பேன்' என்று அவர்கள் கூறியதைச் செவியேற்றேன்.

ஹதீஸ் 6351. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் எவரும் தமக்க நேர்ந்த ஒரு துன்பத்தின் காரணத்தினால் மரணத்தை விரும்ப வேண்டாம். அவ்வாறு மரணத்தை விரும்பித்தான் ஆகவேண்டும் என்றிருந்தால்,இறைவா! (நான்) உயிர்வாழ்வது எனக்கு நன்மையாக இருப்பின், என்னை உயிர்வாழச் செய்வாயாக! நான் இறந்துவிடுவதே எனக்கு நன்மையாக இருப்பின், எனக்கு இறப்பைத் தருவாயாக!என்று கேட்கட்டும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## சிறுவர்களுக்காகச் சுபிட்சம் (பரக்கத்) வேண்டிப் பிரார்த்திப்பதும் அவர்களின் தலையை (அன்புடன்) தடவிக் கொடுப்பதும்.

அபூ மூஸா(ரலி) கூறினார்.

எனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்காகச் சுபிட்சம் வேண்டி நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6352. சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

(சிறுவனாயிருந்த) என்னை என் தாயாரின் சகோதரி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டுசென்று,இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகனுக்கு (பாதங்களில்) நோய் கண்டுள்ளது' என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் (அன்புடன்) என் தலையை வருடிக் கொடுத்து என் சுபிட்சத்திற்காகப் பிரார்த்தித்தார்கள். பின்னர் அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். அவர்கள் அங்கசுத்தி செய்து மிச்சம் வைத்த தண்ணீரிலிருந்து சிறிது பருமினேன். பிறகு நான் அவர்களின் முதுகுக்குப் பின்னே நின்று கொண்டு அவர்களின் இரண்டு தோள்களுக்கிடையே இருந்த நபித்துவ முத்திரையைப் பார்த்தேன். அது மணவறைத் திரையில் பொருத்தப்படும் பித்தானைப் போன்றிருந்தது.

ஹதீஸ் 6353. அபூ அக்கீல் ஸு ஹ்றா இப்னு மஅபத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

என் பாட்டனார் அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அவர்கள்சந்தையிலிருந்து) அல்லதுசந்தைக்கு என்னை அழைத்துச் சென்று உணவுப் பொருள் வாங்குவார்கள். அப்போது அப்துல்லாஹ் இப்னு ஸு பைர்(ரலி) அவர்களும், அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களும் அன்னாரைச் சந்தித்துஎங்களையும் (உணவு வியாபாரத்தில் கூட்டுச் சேர்த்துக் கொள்ளுங்கள். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள் உங்களுக்காகச் சுபிட்சம் வேண்டிப் பிரார்த்தித்துள்ளார்கள்' என் பாட்டனாரும் அவர்களையும் கூட்டுச் சேர்த்துக் கொள்வார்கள். சில வேளைகளில் ஒரு

முழு ஒட்டகம் (சுமக்கும் அளவுக்கு உணவுப் பொருள்கள்) அப்படியே அவர்களுக்கு (இலாபமாக)க் கிடைக்கும். அதை (தம்) வீட்டிற்கு அனுப்பி வைப்பார்கள்.

ஹதீஸ் 6354. முஹ்மூத் இப்னு ரபீஉ (ரலி) அறிவித்தார்.

நான் (நான்கு அல்லது ஐந்து வயது) சிறுவனாக இருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கள் வீட்டுக் கிணற்றிலிருந்து (தண்ணீரை எடுத்துத் தம் வாயில் வைத்து) என் முகத்தில் (பரக்கத்திற்காக) உமிழ்ந்தார்கள்.

இதை இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 6355. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் குழந்தைகள் கொண்டு வரப்படுவதுண்டு. அப்போது குழந்தைகளுக்காக நபி(ஸல்) அவர்கள் பிரார்த்திப்பார்கள். அவர்களிடம் ஓர் ஆண் குழந்தை கொண்டுவரப்பட்டது. அக்குழந்தை அவர்களின் ஆடையில் சிறுநீர் கழித்துவிட்டது. அப்போது (சிறிது) தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அதைச் சிறுநீர் பட்ட இடத்தில் தெளித்தார்கள். (அதிகமாகத் தண்ணீர் ஊற்றி) அதனைக் கழுவவில்லை.

ஹதீஸ் 6356. முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு ஸஅலபா இப்னி ஸுஐர் (ரலி) அவர்கள் (சிறுவராக இருந்தபோது மக்கா வெற்றி ஆண்டில் அவர்கள்) உடைய கண்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அன்போடு) தடவிக் கொடுத்தார்கள். அன்னார், ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் ஒரு ரக்அத்வித்ர் தொழுததைத் தாம் பார்த்ததாகக் கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களுக்காக ஸலவாத் ஓதிப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6357. அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிலைலா (ரஹ்) அவர்கள் கூறினார்:

கஅப் இப்னு உஜ்ரா (ரலி) அவர்கள் என்னைச் சந்தித்து, உங்களுக்கு ஓர் அன்பளிப்பை வழங்கட்டுமா? என்று கேட்டுவிட்டு (பின்வருமாறு) கூறினார்கள்.

(ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் எங்களிடையே வந்தபோது நாங்கள்இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு எவ்வாறு நாங்கள்சலாம் உரைக்க வேண்டும் என்பதை அறிந்துள்ளோம். ஆனால், தங்களின் மீது நாங்கள் எவ்வாறுஸலவாத் கூறவேண்டும்? என்று கேட்டோம். நபி(ஸல்) அவர்கள், அல்லாஹும் ம்ம ஸல்லி அலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும் ம்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்‘ என்று கூறுங்கள் என்றார்கள்.

(பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களின் குடும்பத்தாருக்கு நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத்(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் தம் குடும்பத்தாருக்கும் கருணை புரிந்திடுவாயாக! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம்(அலை) அவர்களின் குடும்பத்தாருக்கு நீ சுபிட்சத்தை வழங்கியதைப் போன்று முஹம்மத்(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் தம் குடும்பத்தாருக்கும் சுபிட்சம் வழங்கிடுவாயாக! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய்.)

ஹதீஸ் 6358. அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

நாங்கள், இறைத்தூதர் அவர்களே! இது தங்களின் மீது சலாம் கூறும் முறையாகும். (தொழுகையில் ஓதப்படும்அத்தஹிய்யாத் மூலம் இதை நாங்கள் அறிவோம்.) ஆனால், நாங்கள் (தங்களுக்கு)ஸலவாத் சொல்வது எப்படி? என்று கேட்டோம். நபி(ஸல்) அவர்கள், அல்லாஹும் ம்ம ஸல்லி அலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும் ம்ம பாரிக் அலா

முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த அலா ஆலி இப்ராஹீம' என்று கூறுங்கள் என்றார்கள்.

பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களின் மீது அருள் புரிந்ததைப் போன்று உன் அடியாரும் உன் தூதருமான முஹம்மத்(ஸல்) அவர்களின் மீதும் அருள் புரிவாயாக! இப்ராஹீம்(அலை) அவர்களுக்கும் அவர்களின் குடும்பத்தாருக்கும் நீ சுபிட்சம் வழங்கியதைப் போன்று முஹம்மத்(ஸல்) அவர்களுக்கும் முஹம்மத்(ஸல்) அவர்களின் குடும்பத்தாருக்கும் நீ சுபிட்சம் வழங்கிடுவாயாக!)

## நபி(ஸல்) அவர்கள் அல்லாத மற்றவர்களுக்காக ஸலவாத் கூறலாமா?

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) அவர்களுக்காகஸலவாத் கூறும்! (பிரார்த்தனை செய்வீராக!) நிச்சயமாக உங்களுடைய பிரார்த்தனை அவர்களுக்கு ஆறுதல் அளிக்கும். (திருக்குர்ஆன் 09:103)

ஹதீஸ் 6359. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அறிவித்தார்.

யாரேனும் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் ஸகாத் பொருளைக் கொண்டு வந்தால் நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹும்ம ஸல்லி அலைஹி (இறைவா! இவருக்குக் கருணை புரிவாயாக)' என்று பிரார்த்திப்பது வழக்கம். (அவ்வாறு) என் தந்தை அபூ அவ்ஃபா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் தம் ஸகாத் பொருளைக் கொண்டுவந்தபோது,அல்லாஹும்ம ஸல்லி அலா ஆலி அபீ அவ்ஃபா (இறைவா! அபூ அவ்ஃபாவின் குடும்பத்தாருக்குக் கருணை புரிவாயாக)' என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6360. அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

நாங்கள்,அல்லாஹ்வின்தூதரே! தங்களின் மீது நாங்கள் எப்படிஸலவாத் சொல்ல வேண்டும்? என்று கேட்டோம். நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லைத்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத். அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த அலா ஆலி இப்ராஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்' என்று கூறுங்கள் என்றார்கள்.

(பொருள்: இறைவா! இப்ராஹீம் (அலை) அவர்களின் குடும்பத்தாருக்கு நீ கருணை புரிந்ததைப் போன்று முஹம்மத்(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் தம் குடும்பத்தாருக்கும் கருணை புரிந்திடுவாயாக! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய். இறைவா! இப்ராஹீம்(அலை) அவர்களின் குடும்பத்தாருக்கு நீ சுபிட்சத்தை வழங்கியதைப் போன்று முஹம்மத்(ஸல்) அவர்களுக்கும் அவர்கள் தம் குடும்பத்தாருக்கும் சுபிட்சம் வழங்கிடுவாயாக! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய். )

## "இறைவா என்னால் எவரேனும் மனவேதனை அடைந்திருந்தால் அதை அவருக்குப் பாவப் பரிகாரமாகவும் அருளாகவும் மாற்றிவிடுவாயாக' என்று நபி(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தது.

ஹதீஸ் 6361. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,இறைவா! நான் எந்த இறைநம்பிக்கையாளரையாவது (கடிந்து கொண்டு) ஏசியிருந்தால், அதையே மறுமை நாளில் உன்னிடம் அவருக்கு நெருக்கத்தை ஏற்படுத்தும் அம்சமாக மாற்றிவிடுவாயாக!என்று கூறியதை செவியுற்றேன்.

இதை ஸயீத் இப்னு முசய்யப்(ரஹ்) அறிவித்தார்.

## சோதனைகளிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்

ஹதீஸ் 6362. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபித்தோழர்கள் (சிலர்) இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம், (அவர்களுக்குப் பிடிக்காத) சில விஷயங்கள் குறித்து வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருந்தனர். இதனால் கோபமடைந்த நபி (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி, (நான் அறிகிறவற்றை நீங்கள் அறிந்தால் குறைவாகச் சிரிப்பீர்கள் அதிகமாக அழுவீர்கள்.) இன்று நீங்கள் என்னிடம் எதைப் பற்றிக் கேட்டாலும் அதைப் பற்றி நான் உங்களுக்குத் தெளிவு படுத்தாமல் இருக்கப்போவதில்லை' என்றார்கள். அப்போது நான் வலப் பக்கமும் இடப் பக்கமும் திரும்பிப் பார்க்கத் தலைப்பட்டபோது அங்கிருந்த ஒவ்வொரு வரும் தம்தம் ஆடையால் தம் தலைகளைச் சுற்றிப் போர்த்தியவாறு அழுதுகொண்டிருந்தார்கள்.

இந்நிலையில் ஒருவர் தம் தந்தையல்லாத மற்றொருவரின் மகன் என தாம் அழைக்கப்படுவது குறித்துச் சிலருடன் வாக்குவாதம் செய்து கொண்டிருந்தார். அப்போது அவர், இறைத்தூதர் அவர்களே! என் தந்தை யார்? என்று கேட்டார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ஹு தா.்பா (தாம் உன் தந்தை)' என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்களின் சாந்த முகத்தில் கோபத்தின் ரேகை படர்வதைக் கண்ட) உமர் (ரலி) அவர்கள், நாங்கள் அல்லாஹ்வை இறைவனாகவும், இஸ்லாமை மார்க்கமாகவும், முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைத்தூதராகவும் மனநிறைவுடன் ஏற்றுக் கொண்டோம். சோதனைகளிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்' என்று கூறலானார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், நன்மையிலும் தீமையிலும் இன்றைய தினத்தைப் போன்று எந்த நாளையும் நான் ஒருபோதும் கண்டதில்லை. எனக்கு சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்டன. அவற்றை (மிஹ்ராபின்) இந்த சுவருக்கு அப்பால் கண்டேன்' என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹிஷாம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.)

இந்த நபிமொழியை அறிவிக்கும்போது கத்தாதா (ரஹ்) அவர்கள்இறைநம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைப் பற்றி (அவசியமில்லாமல்) கேட்டுக் கொண்டிராதீர்கள். (ஏனெனில்) அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்படுமானால், உங்களுக்கு மனவருத்ததை ஏற்படுத்தும்' எனும் (திருக்குர்ஆன் 05:101 வது) இறைவசனத்தைக் குறிப்பிடுவார்கள்.

## மனிதர்களின் அடக்கு முறையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6363. அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) அபூ தல்ஹா (ரலி) அவர்களிடம், உங்கள் சிறுவர்களில் ஒரு சிறுவனை எனக்குப் பணிவிடை புரிவதற்காகத் தேடி (அழைத்து) வாருங்கள். (நான் கைபருக்குப் புறப்பட வேண்டும்)' என்று கூறினார்கள் எனவே, அபூ தல்ஹா (ரலி) அவர்கள் என்னை வாகனத்தில் தமக்குப் பின்னால் அமர்த்திக் கொண்டு (கைபரை நோக்கிப்) புறப்பட்டார்கள்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (வழியில்) தங்கும்போதெல்லாம் அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள், அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் ஹம்மி, வல்ஹஸனி, வல் அஜ்ஸி, வல்கஸலி, வல்புக்லி, வல்ஜு ப்னி, வ ளலஇத் தைனி, வ ்கலபத்திர் ரிஜால்' என்று அதிகமாகப் பிரார்த்திப்பதை செவிமடுத்துவந்தேன். (பொருள்: இறைவா! (வருங்காலத்தைப் பற்றியக்) கவலையிலிருந்தும், (நடந்து முடிந்துவிட்டவை பற்றிய) துக்கத்திலிருந்தும், இயலாமையிலிருந்தும், சோம்பலிலிருந்தும கஞ்சத்தனத்திலிருந்தும், கோழைத்தனத்திலிருந்தும், கடன் சுமையிலிருந்தும், பிற மனிதர்களின் அடக்கு முறைகளிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)

கைபரிலிருந்து (மதீனாவுக்குத்) திரும்பும் வரை அவர்களுக்கு நான் பணிவிடைகள் புரிந்து கொண்டிருந்தேன். (அப்போரில் கிடைத்த போர்ச் செல்வங்களில் தமக்கரிய பங்கிற்காக)

ஸ∴பிய்யா பின்த் ஹு யை அவர்களைப் பெற்று (மணந்து) கொண்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம்மைச் சுற்றி ஒரு துணியைக் கட்டியதை நான் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு அதில் தமக்குப் பின்னால் ஸ∴பிய்யா(ரலி) அவர்களை அமர்த்திக் கொண்டார்கள். (அந்தப் பயணத்தில்) நாங்கள்சத்துஸ் ஸஹ்பா எனுமிடத்தை அடைந்தபோது ஒரு தோல் விரிப்பில் (பேரீச்சம்பழம், பாலாடை, நெய் ஆகியவற்றைக் கலந்து)ஹைஸ் எனும் பலகாரத்தைத் தயாரித்தார்கள். பிறகு (மணவிருந்துக்கு மக்களை அழைப்பதற்காக) என்னை அனுப்பி வைத்தார்கள். எனவே, நான் மக்களை அழைத்தேன். அவர்களும் (வந்து வலீமா விருந்து) உண்டனர். அதுதான் ஸ∴பிய்யா(ரலி) அவர்களுடன் நபி(ஸல்) அவர்கள் தாம்பத்திய உறவைத் தொடங்கிய நிகழ்ச்சியாக அமைந்தது.

பின்னர் நபி(ஸல்) அவர்கள் (மதீனா நோக்கி) வந்து கொண்டிருந்தபோதுஉஹு த் மலை அவர்களுக்குத் தென்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்இந்த சிறிய மலை நம்மை நேசிக்கின்றது. நாமும் அதனை நேசிக்கிறோம் என்றார்கள். பிறகு மதீனாவைப் பார்த்தபோது,இறைவா! இப்ராஹீம்(அலை) அவர்கள் மக்காவைப் புனித(நகர)மாக அறிவித்ததைப் போன்று இந்த இரண்டு மலைகளுக்கிடையே உள்ள பகுதியைப் புனித(நகர)மாக அறிவிக்கிறேன். இறைவா! மதீனாவாசிகளின் (அளவைகளான)முத்(து) மற்றும்ஸாஉ ஆகியவற்றில் நீ வளத்தை ஏற்படுத்துவாயாக என்று பிரார்த்தித்தார்கள்.

## மண்ணறையின் (கப்றின்) வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6364. உம்மு காலித் பின்த் காலித்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மண்ணறையின் வேதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவதை செவியுற்றேன்.

(இதன் அறிவிப்பாளர்களின் ஒருவரான) மூஸா இப்னு உக்பா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். நபி(ஸல்) அவர்களிடமிருந்து உம்மு காலித்(ரலி) அவர்களைத் தவிர வேறெருவரும் இந்த நபிமொழியைக் கூற நான் கேட்டதில்லை.

ஹதீஸ் 6365. முஸ்அப் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் தந்தை) ஸஅத் இப்னு ஆபீ வாக்காஸ்(ரலி) அவர்கள் ஐந்து விஷயங்களிலிருந்து பாதுகாப்புக் கோரும்படி கூறி, நபி(ஸல்) அவர்கள் அந்த ஐந்து விஷயங்களையும் குறிப்பிட்டு அவற்றிலிருந்து பாதுகாப்புக் கோருமாறு கட்டளையிட்டுவந்தார்கள் என்று கூறுவார்கள். (அவை:) அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் புக்லி, வ அஊது பிக்க மினல் ஜு ப்னி, வ அஊது பிக்க அக் உறத்த இலா அர்தலில் உமுரி, வ அஊ பிக்க மிக் ∴பித்னத்தித் துன்யா, வ அஊது பிக்க மின் அதாபில் கப்ற்.

(இறைவா! உன்னிடம் நான் கருமித்தனத்திலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். கோழைத் தனத்திலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். தள்ளாத வயதுக்கு நான் தள்ளப்படுவதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக்கோருகிறேன். இம்மையின் சோதனையிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், மண்ணறையின் வேதனையிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்)' இம்மையின் சோதனையென்பது தஜ்ஜாலின் சோதனையைக் குறிக்கிறது.

ஹதீஸ் 6366. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

மதீனா யூத மூதாட்டிகளில் இருவர் என்னிடம் வந்து (பேசிக் கொண்டிருந்தபோது)மண்ணறை வாசிகள் மண்ணறைகளில் வேதனை செய்யப்படுகின்றனர் என்று கூறினர். அவர்கள் கூறியதை நம்புவது எனக்குச் சரியாகப் படவில்லை. பிறகு அவர்கள் இருவரும் வெளியேறிவிட்டனர். நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான்,இறைத்தூதர் அவர்களே! இரண்டு

மூதாட்டிகள் (என்னிடம் வந்து இப்படி இப்படிச் சொன்னார்கள்) என்று அவர்களிடம் தெரிவித்தேன்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள், இருவரும் உண்மையே சொன்னார்கள். (மண்ணறையிலிருக்கும் பாவிகள்) கடுமையாக வேதனை செய்யப்படுகிறார்கள். அந்த வேதனை(யால் அவதியுறும் அவர்களின் அலறல்)தனை எல்லா மிருகங்களும் செவியேற்கின்றன' என்றார்கள். அதற்குப் பின் நபி(ஸல்) அவர்கள் எல்லாத் தொழுகைகளிலும் மண்ணறையின் வேதனையிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோராமல் இருந்ததில்லை.

## வாழ்வு மற்றும் சாவின் சோதனைகளிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6367. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் அஜ்ஸி, வல்கஸலி, வல்ஜுப்னி, வல்ஹரம். வ அஊது பிக்க மின் அதாபில் கப்ற். வ அஊது பிக்க மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மாமத்' என்று பிரார்த்தித்து வந்தார்கள்.

(பொருள்: இறைவா! இயலாமையிலிருந்தும் சோம்பலிருந்தும் கோழைத் தனத்திலிருந்தும் தள்ளாமையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். இன்னும் வாழ்வின் சோதனையிலிருந்தும் இறப்பின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.

## பாவத்திலிருந்தும் கடனிலிருந்தும் (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6368. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக்க மினல் கஸலி வல்ஹரமி வல்மஃஸமி வல் மஃக்ரமி, வ மின் ஃபித்னத்தில் கப்றி வ அதாபில் கப்றி, வ மின் ஃபித்னத்திந் நாரி வஅதாபிந் நாரி, வ மின் ஷர்ரி ஃபித்னத்தில் ஃம்னா. வ அஊது பிக்க மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால், அல்லாஹும்மஃக்ஸில் அன்னீ கத்தாயாய பி மாயிஸ் ஸல்ஜி வல்பரத். வ நக்கி கல்பீ மினல் கத்தாயா கமா நக்கைத்தஸ் ஸவ்பல் அப்யள மினத் தனஸ். வ பாஇத் பைனீ வ பைன கத்தாயாய கமா பாஅத்த பைனல் மஷ்ரிக்கி வல் மஃக்ரிப்' என்று பிரார்த்தித்து வந்தார்கள்.

(பொருள்: இறைவா! உன்னிடம் நான் சோம்பலிலிருந்தும், தள்ளாமையிலிருந்தும் பாவத்திலிருந்தும், கடனிலிருந்தும், மண்ணறையின் சோதனையிலிருந்தும், அதன் வேதனையிலிருந்தும், நரகத்தின் சோதனையிலிருந்தும், அதன் வேதனையிலிருந்தும், செல்வத்தின் தீமைகளிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், நான் உன்னிடம் வறுமையின் சோதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளை என்னிலிருந்து கழுவுவாயாக! மேலும், அழுக்கிலிருந்து வெண்மையான ஆடையை நீ தூய்மைப் படுத்துவதைப் போன்று தவறுகளிலிருந்து என் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நீ ஏற்படுத்திய இடைவெளியைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ இடைவெளியை ஏற்படுத்துவாயாக)

## கோழைத்தனத்திலிருந்தும் சோம்பலிருந்தும் (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவது.

ஹதீஸ் 6369. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹு ம்ம இன்னீ அஊது பின்ன மினல் ஹம்மி, வல்ஹஸனி, வல்அஜ்ஸி, வல்கஸலி, வல்ஜு ப்னி, வல்புக்லி, வளஇத் தைனி, வ ஃகலபத்திர் ரிஜால்' எனப் பிரார்த்தித்து வந்தார்கள்.

(பொருள்: இறைவா! கவலையிலிருந்தும் துக்கத்திலிருந்தும் இயலாமையிலிருந்தும் சோம்பலிருந்தும் கோழைத் தனத்திலிருந்தும் கருமித்தனத்திலிருந்தும் கடன் சுமையிலிருந்தும் மனிதர்களின் அடக்குமுறைகளிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.

## கருமித்தனத்திலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

கருமித்தனம் என்பதைபுக்ல் மற்றும்பகல் என (இரண்டு முறைகளிலும்) கூறலாம். இது சொல் வடிவத்தில் ஹு ஸ்ன் மற்றும் ஹஸன் (கவலை) போன்றுள்ளது.

ஹதீஸ் 6370. முஸ்அப் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் இந்த ஐந்து விஷயங்களிலிருந்தும் பாதுகாப்புக் கோருமாறு கூறி, அவற்றை நபி(ஸல்) அவர்கள் தெரிவித்ததாகக் கூறுவார்கள். (அவை:) அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் புக்லி, வ அஊது பிக்க மினல் ஜு ப்னி, வ அஊது பிக்க அன் உறத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க மின் ஃபித்னத்தித் துன்யா, வ அஊது பிக்க மின் அதாபில் கப்ற். (பொருள்: இறைவா! உன்னிடம் நான் கருமித் தனத்திலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். கோழைத்தனத்திலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். தள்ளாத வயதுக்கு நான் தள்ளப்படுவதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். இம்மையின் சோதனையிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)

## தள்ளாத வயதிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

'தள்ளாமை என்பதைஅர்தல் என்பர். இதற்குத்தாழ்ந்தது என்று பொருள்.

ஹதீஸ் 6371. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பின்வருவனவற்றிலிருந்து அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரிவந்தார்கள்: அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் கஸலி, வ அஊது பிக்க மினல் ஜு ப்னி, வ அஊது பிக்க மினல் ஹரமி, வ அஊது பிக்க மினல் புக்ல்.

பொருள்: இறைவா! சோம்பலிலிருந்து நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். கோழைத்தனத்திலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். தள்ளாமையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். கருமித்தனத் திலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.

## கொள்ளைநோய் முதலான நோய்களை அகற்றுமாறு பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6372. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,இறைவா! மக்கா நகரை எங்கள் நேசத்திற்குரியதாக நீ ஆக்கியதைப் போன்று மதீனாவையும் எங்கள் நேசத்திற்குரியதாக ஆக்குவாயாக! இங்குள்ள காய்ச்சலைஜு ஹ்ஃபா எனும் பகுதிக்கு நீ இடம்பெயரச் செய்திடுவாயாக! இறைவா! (எங்களுடைய அளவைகளான) ஸாஉ, முத்(து) ஆகியவற்றில் (அதாவது எங்கள் உணவில்) எங்களுக்கு நீ செழிப்பை (பரக்கத்) ஏற்படுத்துவாயாக' என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6373. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

'விடைபெறும் ஹஜ்ஜின்போது நோயுற்றிருந்த என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நலம் விசாரிக்க வந்தார்கள். அந்த நோயினால் நான் இறப்பின் விளிம்புக்கே சென்றுவிட்டிருந்தேன். (நபி(ஸல்) அவர்களிடம்) நான்,இறைத்தூதர் அவர்களே! தாங்கள் காண்கிற இ(ந்த

நோயான)து எனக்கு வந்திருக்கிறது. இ(ந்த நோயான)து எனக்கு வந்திருக்கிறது. நான் ஒரு செல்வ(ந்த)ன் என் ஒரேயொரு மகளைத் தவிர வேறெவரும் என(து சொத்து)க்கு வாரிசாக வரமாட்டார்கள். எனவே, நான் என் செல்வத்தில் மூன்றில் இரண்டு பங்கை தர்மம் செய்து விடட்டுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,(அந்த அளவு) வேண்டாம்' என்றார்கள். நான்,அப்படியென்றால் அதில் பாதியை தர்மம் செய்துவிடட்டுமா? என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், (மூன்றிலொரு பங்கு போதும் என்று கூறிவிட்டு,)மூன்றிலொரு பங்கே அதிகம்தான். (சஅதே!) நீங்கள் உங்கள் வாரிசுகளை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாகவிட்டுச் செல்வதைவிடத் தன்னிறைவு டையவர்களாகவிட்டுச் செல்வதே சிறந்ததாகும். நீங்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடிச் செலவழிக்கிற எதுவாயினும் அதற்குரிய பலன் உங்களுக்கு அளிக்கப்பட்டே தீரும். உங்கள் மனைவியின் வாயில் ஊட்டும் (ஒரு கவளம்) உணவாயினும் சரியே' என்றார்கள்.

நான்,இறைத்தூதர் அவர்களே! (அனைவரும் மதீனா சென்றுவிட்ட பிறகு) நான் மட்டும் (இங்கே மக்காவில்) என் தோழர்களைவிட்டுப் பின்தங்கிவிடுவேனா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,(சஅதே!) நீங்கள் (இங்கு) தங்கியிருந்து அல்லாஹ்வின் திருப்தியை நாடி நீங்கள் புரியும் நற்செயல் எதுவாயினும் அதன் மூலம் உங்களுக்கு அந்தஸ்தும் உயர்வும் அதிகமாகவே செய்யும். சில சமுதாயத்தார் உங்களால் பயனடைவதற்காகவும் வேறு சிலர் இழப்புக்குள்ளாவதற்காகவும் (உங்கள் ஆயுள் நீட்டிக்கப்பட்டு இங்கேயே) நீங்கள் பின்தங்கி விடக்கூடும்' என்று சொல்லிவிட்டுஇறைவா! என் தோழர்கள் ஹிஜ்ரத்தை முழுமையாக நிறைவேற்றும்படி செய்வாயாக! அவர்களைத் தம் கால்சுவடுகளின் வழியே (பழைய அறியாமைக் கால நிலைக்குத்) திருப்பியனுப்பிவிடாதே' எ-ன்று பிரார்த்தித்தார்கள். மேலும்,ஆனால், ஸஅத் இப்னு கவ்லா தான் பாவம்' என்றார்கள்.

ஸஅத் இப்னு கவ்லா(ரலி) அவர்கள் மக்காவிலேயே இறந்துவிட்டதற்காக அனுதாபம் தெரிவிக்கும் விதத்திலேயே நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள்.

## தள்ளாத வயது, இம்மைச் சோதனை, நரகத்தின் சோதனை ஆகியவற்றிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6374. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எந்த வார்த்தைகளால் பாதுகாப்புக் கோரிவந்தார்களோ அவற்றைக் கூறி நீங்களும் பாதுகாப்புக் கோருங்கள். (அவை:) அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் ஜு ப்னி, வ அஊது பிக்க மினல் புக்லி, வ அஊது பிக்க மின் அன் உறத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க மின் ஃபித்னத்தித் துன்யா, வ அதாபில் கப்ற்.

(பொருள்: இறைவா! கோழைத்தனத்திலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். கருமித்தனத்திலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். நான் தள்ளாத வயதுக்குத் தள்ளப்படுவதிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், இம்மையின் சோதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.

ஹதீஸ் 6375. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் கஸலி, வல்ஹரமி, வல்மஃக்ரமி, வல்மஃஸம். அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மின் அதாபிந் நாரி, வ ஃபித்னத்திந் நாரி, வ ஃபித்னத்தில் கப்றி, வ அதாபில் கப்றி, வ ஷர்ரி ஃபித்னத்தில் ஃம்னா, வ ஷர்ரி ஃபித்னத்தில் ஃபக்ரி, வ மின் ஷர்ரி ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால், அல்லாஹு ம்மஃக்ஸில் கத்தாயாய பி மாயிஸ் ஸல்ஜி வல்பரத். வ நக்கி கல்பீ மினல் கத்தாயா கமா யுனக்கஸ் ஸவ்புல் அப்யளு மினத் தனஸ். வபாஇத் பைனீ வ பைன கத்தாயாய கமா பாஅத்த பைனல் மஷரிக்கீ வல்மஃக்ரிப்' என்று பிரார்த்தித்து வந்தார்கள்.

(பொருள்: இறைவா! உன்னிடம் நான் சோம்பலிலிருந்தும் தள்ளாமையிலிருந்தும் கடனிலிலிருந்தும் பாவத்திலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! உன்னிடம் நரகத்தின் வேதனை, நரகத்தின் சோதனை, மண்ணறையின் சோதனை, மண்ணறையின் வேதனை, செல்வத்தின் தீமை, வறுமையின் தீமை, (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் தீமை ஆகியவற்றிலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன்.

இறைவா! பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என்னிலிருந்தும் என் தவறுகளைக் கழுவிடுவாயாக!மேலும், வெண்மையான ஆடை அழுக்கிலிருந்து தூய்மைப்படுத்தப் படுவதைப் போன்று என் உள்ளத்தைத் தவறுகளிலிருந்து தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையே நீ ஏற்படுத்திய இடைவெளியைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ இடைவெளியை ஏற்படுத்துவாயாக!.)“

## செல்வத்தினால் ஏற்படும் சோதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6376 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பின்வருவனவற்றிலிருந்து அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரி வந்தார்கள்: அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மின் ஃபித்னத்திந் நாரி, வ மின் அதாபிந் நார். வ அஊது பிக்க மின் பித்னத்தில் ஃம்னா. வ அஊது பிக்க மின் ஃபித்னத்தில் ஃபக்ர். வ அஊது பிக்க மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால்.

பொருள்: இறைவா! நரகத்தின் சோதனை யிலிருந்தும் நரகத்தின் வேதனயிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மண்ணறையின் சோதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். செல்வத்தின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். வறுமையின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். வறுமையின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும் (பெருங் குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.)

## வறுமையினால் ஏற்படும் சோதனையிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6377. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பிரார்த்திப்பவர்களாய் இருந்தார்கள் அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மின் ஃபித்னத்திந் நாரி, வ அதாபிந் நாரி, வ ஃபித்னத்தில் கப்றிஇ வ அதாபில் கப்றி, வ ஷர்ரி ஃபித்னத்தில் ஃபக்ர், அல்லாஹு ம்ம மஸீஹித் தஜ்ஜால், அல்லாஹு ம்மஃக் ஸில் கல்பீ பி மாயிஸ் ஸல்ஜி வல்பரத். வ நக்கி கல்பீ மினல் கத்தாயா கமாநக்கைத்தஸ் ஸவ்பல் அப்யள மினத் தனஸ். வ பாஇத் பைனீ வ பைன கத்தாயாய கமா பாஅத்த பைனல் மிஷ்ரிக்கி வல் மஃக்ரிப். அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் கஸலி, வல்மஃஸமி, வல்மஃக்ரம்.

(பொருள்: இறைவா! உன்னிடம் நான் நரகத்தின் சோதனையிலிருந்தும், நரகத்தின் வேதனையிலிருந்தும், மண்ணறையின் சோதனையிலிருந்தும், மண்ணறையின் வேதனையிலிருந்தும், செல்வச் சோதனையின் தீமையிலிருந்தும், வறுமைச் சோதனையின் தீமையிலிருந்தும், வறுமைச் சோதனையின் தீமையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! உன்னிடம் நான் (மகாபொய்யன்) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். இறைவா! பனிக்கட்டியின் நீராலும் ஆலங்கட்டியின் நீராலும் என் உள்ளத்தைக் கழுவிடுவாயாக! அழுக்கிலிருந்து வெண்மையான ஆடையை நீ தூய்மைப்படுத்துவதைப் போன்று தவறுகளிலிருந்து என் உள்ளத்தை நீ தூய்மைப்படுத்துவாயாக! மேலும், கிழக்கிற்கும் மேற்கிற்கும்இடையே நீ ஏற்படுத்திய இடைவெளியைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்கும் இடையே நீ

இடைவெளியை ஏற்படுத்துவாயாக! இறைவா! உன்னிடம் நான் சோம்பலிலிருந்தும், பாவத்திலிருந்தும் கடனிலிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.

## சுபிட்சத்துடன் செல்வம் பெரும்டப் பிரர்த்திப்பது.

ஹதீஸ் 6378, ஹதீஸ் 6379 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள்,இறைத்தூதர் அவர்களே! அனஸ் தங்களின் சேவகராவார். அவருக்காகப் பிரார்த்தியுங்கள்' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,இறைவா! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்கிடுவாயாக! அனஸு க்கு நீ வழங்கிய(எல்லா) வற்றிலும் சுபிட்சத்தை ஏற்படுத்துவாயாக' என்று பிரார்த்தித்தார்கள்.

இதைக் போன்றே அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடமிருந்து ஹிஷாம் இப்னு ஸைத்(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

## சுபிட்சத்துடன் குழந்தைகள் பெருகிடப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6380, ஹதீஸ் 6381 அனஸ்(ரலி) அறிவித்தார்.

(என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,அனஸ் தங்களின் சேவகர், (அவருக்காகப் பிரார்த்தியுங்கள்)' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,இறைவா! அனஸின் செல்வத்தையும் குழந்தைகளையும் அதிகமாக்கிடுவாயாக! அவருக்கு நீ வழங்கியவற்றில் சுபிட்சத்தை ஏற்படுத்துவாயாக' என்று பிரார்த்தித்தார்கள்.

## (இரண்டில்) நல்லதைத் தேர்ந்தெடுக்க ஓதும் பிரார்த்தனை

ஹதீஸ் 6382. ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு எல்லா விஷயங்களிலும் நல்லதைத் தேர்ந்தெடுக்கப் பிரார்த்திக்கும் முறையை (இஸ்திகாராவை) குர்ஆனின் அத்தியாயங்களைக் கற்றுத் தருவதைப் போன்று கற்றுத் தருபவர்களாய் இருந்தார்கள்.

(அந்த முறையாவது): நீங்கள் ஒன்றைச் செய்ய நினைத்தால் கூடுதலான (நஃபிலான) இரண்டு ரக்அத்கள் தொழுது கொள்ளுங்கள். பிறகு அல்லாஹ்விடம்,அல்லாஹு ம்ம இன்னீ அஸ்தகீருக்க பி இல்மிக்க, வ அஸ்தக்திருக்க பி குத்ரத்திக்க, வ அஸ்அலுக்க மின் ஃபழ்லிக்கல் அழீம். ஃபஇன்னக்க தக்திரு வலா அக்திரு. வதுஅலமு வலா அஉலமுஇ வஅன்த்த அல்லாமுல் ஃகுயூப். அல்லாஹு ம்ம இன்குன்த்த தஅலமு அன்ன ஹாதல் அம்ர் கைருன்லீஃபீ தீனி, வமஆஷீ, வ ஆம்பத்தி அம்ரீ ஃ ஃபீ ஆஜிலி அம்ரீ வஆஜிலிஹிஃ ஃபக்துர்ஹு லீ. வ இன் குன்த்த தஅலமு அன்ன ஹாதல் அம்ர் ஷர்ருன் லீ ஃபீ தீனீ, வ மஆஷீ, வ ஆஜிலிஹி'ஃ ஃபஸ்ரிஃப்ஹு அன்னீ, வஸ்ரிஃபினீ அன்ஹு , வக்துர் லி யல் கைர கான, ஸு ம்ம ரள்ளினீ பிஹி' என்று பிரார்த்தித்து,உங்கள் தேவை இன்னதெனக் குறிப்பிடுங்கள்' என்று கூறினார்கள்.

(பொருள்: இறைவா! நீ அறிந்துள்ள படி (எது எனக்கு) நன்மை(யோ அ)தனை ஆற்றலால் எனக்கு ஆற்றல் உண்டாக வேண்டுமென உன்னிடம் கோருகிறேன். உன்னுடைய மாபெரும் அருளைக் கோருகிறேன். ஏனெனில்,நீயே ஆற்றல் மிக்கவன் எனக்கோ எந்த ஆற்றலும் கிடையாது. நீயே நன்கறிந்தவன் எனக்கோ எந்த அறிவும் கிடையாது. நீயே மறைவானவற்றை நன்கறிந்தவன். இறைவா! இந்தக் காரியம் எனக்குஎன் மார்க்கத்திலும் என் வாழ்க்கையிலும் என் காரியத்தின் முடிவிலகி அல்லதுஎன் இம்மை வாழ்விலகி மறுமை வாழ்விலகி நன்மையானதாக இருக்குமென நீ அறிந்திருந்தால் அதைச் சாதிப்பதற்குரிய ஆற்றலை எனக்கு வழங்குவாயாக! இந்தக் காரியம் எனக்குஎன் மார்க்கத்திலும் வாழ்க்கையிலும் தீமையானதென நீ அறிந்திருந்தால் இக்காரியத்தை என்னைவிட்டுத் திருப்பிவிடுவாயாக! என்னையும்

இக்காரியத்தைவிட்டுத் திருப்பிவிடுவாயாக. நன்மை எங்கிருந்தாலும் அதை அடைவதற்குரிய ஆற்றலை எனக்கு வழங்குவாயாக! பிறகு அதில் எனக்குத் திருப்தியை அளித்திடுவாயாக.)

## அங்கசுத்தி (உளூ) செய்துவிட்டு (தம் தோழருக்காக நபி(ஸல்) அவர்கள்) பிரார்த்தித்தது.

ஹதீஸ் 6383. அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். பிறகு தம் இரண்டு கரங்களையும் உயர்த்தி,இறைவா! அபூ ஆமிர் உபைதுக்கு நீ மன்னிப்பளிப்பாயாக! மறுமை நாளில் மனிதர்களில் பலரையும் விட (அந்தஸ்தில்) உயர்ந்தவராக அவரை ஆக்கிடுவாயாக' என்று பிரார்த்தித்தார்கள். அப்போது அவர்களின் அக்குள்கள் இரண்டின் வெண்மையையும் பார்த்தேன்

## கணவாயில் ஏறும்போது ஓதும் பிரார்த்தனை

ஹதீஸ் 6384. அபூ மூஸா அப்துல்லாஹ் இப்னு கைஸ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (கைபர்) பயணத்தில் இருந்தோம். நாங்கள் மேடான பகுதியில் ஏறும்போதுஅல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று (சப்தமிட்டுக்) கூறலானோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்,மக்களே! உங்களைக் கட்டுப் படுத்திக் கொள்ளுங்கள் (அவசரப்படாதீர்கள். மென்மையாக, மெல்லக் கூறுங்கள்!) ஏனெனில், நீங்கள் காது கேட்காதவனையோ, இங்கு இல்லாதவனையோ அழைப்பதில்லை. மாறாக, செவியுறுவோனையும் பார்ப்பவனையுமே அழைக்கின்றீர்கள்' என்றார்கள். பிறகு என்னிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தார்கள். அப்போது நான் (மனதுக்குள்)லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்' (அல்லாஹ்வின் உதவியில்லாமல் பாவங்களிலிருந்து விலகிச் செல்லவோ (நல்லறங்கள்) புரிய ஆற்றல் பெறவோ மனிதனால் முடியாது) என்று கூறிக்கொண்டிருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,அப்துல்லாஹ் இப்னு கைஸே! லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் என்று சொல்வீராக!ஏனெனில், அது சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலமாகும் அல்லதுஉனக்கு ஒரு வார்த்தையை நான் அறிவித்துத் தரட்டுமா? அது சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலமாகும்' என்று கூறியவாறு (அந்த வார்த்தை) லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ் (என்பதாகும்)' என்பதாகும். என்றார்கள்.

## பள்ளத்தாக்கில் இறங்கும்போதுஓதும் பிரார்த்தனை

இது குறித்து ஜாபிர்(ரலி) அவர்கள் அறிவித்துள்ள ஹதீஸ் வந்துள்ளது.

## பயணம் புறப்பட விரும்பும்போது, அல்லது பயணத்திலிருந்து திரும்பும்போது ஓதும் பிரார்த்தனை

இது குறித்து அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து யஹ்யா இப்னு அபீ இஸ்ஹாக்(ரஹ்)அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6385. அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் புனிதப் போரிலிருந்து, அல்லது ஹஜ்ஜிலிருந்து, அல்லது உம்ராவிலிருந்து திரும்பும்போது ஒவ்வொரு மேடான பகுதியில் ஏறும்போதெல்லாம் மூன்று முறைஅல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று சொல்வார்கள். பிறகு (பின்வருமாறு) கூறுவார்கள். லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்க லஹு , லஹு ல்முல்க்கு வலஹு ல் ஹம்து வஹ்வ அலா குல்லி ஷைஇன் கதீர். ஆயிபூன தாயிபூன ஆபிதூன லிரப்பினா ஹாமிதூன, ஸதக்கல்லாஹு வஅதஹு வ நஸர அப்தஹு வஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹ். (பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையாக எவரும் இல்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கே புகழனைத்தும்

உரியது. அவன் எல்லாவற்றின் மீதும் ஆற்றல் பெற்றவன். நாங்கள் பாவமன்னிப்புக் கோரி மீண்டவர்களாகவும், எங்கள் இறைவனை வணங்கியவர்களாகவும் (அவனைப் போற்றிப்) புகழ்ந்தவர்களாகவும் (திரும்புகிறோம்.) அல்லாஹ் தன் வாக்குறுதியை மெய்ப்படுத்திவிட்டான் தன் அடியாருக்கு உதவினான் தன்னந் தனியாகக் குலங்கள் அனைத்தையும் தோற்கடித்துவிட்டான்.)

## மணமகனுக்காகப் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6386. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களின் (ஆடை) மீது (வாசனைத் திரவியத்தின்) மஞ்சள் நிற அடையாளத்தை நபி(ஸல்) அவர்கள் கண்டபோதுவிஷயம் என்ன? அல்லதுஎன்ன(இது)? என்று கேட்டார்கள். அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள், ஒரு பேரீச்சங்கொட்டை எடையளவு தங்கத்தை (மஹ்ராக)க் கொடுத்து ஒரு பெண்ணை நான் மணமுடித்துக் கொண்டேன்' என்று பதிலளித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள்,பாரகல்லாஹு லக்க' (அல்லாஹ் உங்களுக்கு சுபிட்சத்தை வழங்குவானாக!) என்று பிரார்த்தித்துவிட்டு,ஓர் ஆட்டையாவது (அறுத்து) வலீமா-மணவிருந்து அளியுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6387. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

என் தந்தை (உஹுது துப் போரில்) இறந்துவிட்டார்கள். (இறக்கும்போது)ஏழு அல்லதுஒன்பது பெண் மக்களைவிட்டுச் சென்றார்கள். எனவே, (அவர்களைப் பராமரிப்பதற்கேற்ப) நான் (ஒரு கன்னிகழிந்த பெண்ணை) மணந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்)ஜாபிரே! மணமுடித்துக் கொண்டாயாமே? என்று கேட்டார்கள். நான்ஆம்' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள்,கன்னிப் பெண்ணையா? அல்லது கன்னி கழிந்த பெண்ணையா? (யாரை மணந்தாய்?)' என்று கேட்டார்கள். நான்,கன்னி கழிந்த பெண்ணைத்தான்' என்று சொன்னேன்.கன்னிப் பெண்ணை மணந்துஅவளோடு நீயும் உன்னோடு அவளுமாக கூடிக்குலாவி மகிழ்ந்திருக்கலாமே! அல்லதுநீ அவளுக்கும் அவள் உனக்கும் மகிழ்வூட்டலாமே! என்று கேட்டார்கள்.

நான்,என் தந்தை ஏழு அல்லது ஒன்பது பெண்மக்களைவிட்டுவிட்டு இறந்துவிட்டார்கள். அந்தப் பெண்மக்களைப் போன்று (இளவயதுப்) பெண்ணை (மணந்து) அவர்களிடம் அழைத்துச் செல்வதை நான் விரும்பவில்லை. எனவே, அவர்களைப் பராமரிக்கும் (தகுதியுள்ள கன்னிகழிந்த ஒரு) பெண்ணை நான் மணமுடித்துக் கொண்டேன்' என்று கூறினேன். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,பாரக்கல்லாஹு அலைக்க (அவ்வாறாயின் அல்லாஹ் உங்கள் மீது அருள்வளம் பொழிவானாக) என்று பிரார்த்தித்தார்கள்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) மற்றும் முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸு ஹ்ரீ(ரஹ்) ஆகியோரின் அறிவிப்பில்பாரக்கல்லாஹு அலைக்க' என்பது இடம்பெறவில்லை.

## மனைவியிடம் (தாம்பத்திய உறவு கொள்ளச்) செல்லும்போது ஓத வேண்டிய பிரார்த்தனை.

ஹதீஸ் 6388. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவுகொள்ள விரும்பும்போது,பிஸ்மில்லாஹி, அல்லாஹு ம்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான் வ ஜன்னிபிஷ் ஷைத்தான மா ரஸக்த்தனா (அல்லாஹ்வின் திருப்பெயரால்... இறைவா! எங்களைவிட்டு ஷைத்தானை விலக்கிவைப்பாயாக! எங்களுக்கு நீ வழங்கும் குழந்தைச் செல்வத்தைவிட்டும் ஷைத்தானை விலக்கிவைப்பாயாக) என்று பிரார்த்தித்து, அந்த உறவினால் அந்தத் தம்பதியருக்கு விதிக்கப்பட்டபடி குழந்தை பிறந்தால், அக்குழந்தைக்கு ஒருபோதும் ஷைத்தான் தீங்கிழைப்பதில்லை.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## “எங்கள் இறைவா! இம்மையிலும் எங்களுக்கு நன்மை அருள்வாயாக! என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6389. அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்ரப்பனா ஆத்தினா ஃபித் துன்யா ஹஸனத்தன் வ ஃபில் ஆம்ரத்தி ஹஸனத்தன் வக்கினா அதாபந் நார்‘ என்றே அதிகமாகப் பிரார்த்தித்துவந்தார்கள். (பொருள்: எங்கள் இறைவா! எங்களுக்கு இம்மையிலும் நன்மை அருள்வாயாக் மறுமையிலும் நன்மை அருள்வாயாக. நரகத்தின் வேதனையிலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக

## இம்மையின் சோதனைகளிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருதல்.

ஹதீஸ் 6390. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

எழுத்து கற்பிக்கப்படுவதைப் போன்று இந்த (பிரார்த்தனை)ச் சொற்களை நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குக் கற்பித்துவந்தார்கள். (அவை) அல்லாஹு ம்ம இன்னீ அஊது பிக்க மினல் புக்லி, வ அஊது பிக்க மினல் ஜு ப்னி, வ அஊது பிக்க மின் அன் நுறத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க, மின் ஃபித்னத்தித் துன்யா, வ அதாபில் கப்ற். (பொருள்: இறைவா! உன்னிடம் நான் கஞ்சத்தனத்திலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். உன்னிடம் நான் கோழைத்தனத்திலிருந்தும் பாதுகாப்புக்கோருகிறேன். நாங்கள் தள்ளாடும் வயதுக்குத் தள்ளப்படுவதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். இம்மையின் சோதனையிலிருந்தும் மண்ணறையின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்.

ஹதீஸ் 6391. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது. இதையடுத்து தாம் செய்யாத ஒன்றைத் தாம் செய்துவிட்டதாக இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிரமையூட்டப்பட்டது.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு நாள்) தம் இறைவனிடம் பிரார்த்தித்த பிறகு (என்னிடம்), (ஆயிஷா!) தெரியுமா? எந்த விஷயத்தில் தெளிவைத் தரும்படி நான் இறைவனிடம் கேட்டுக் கொண்டிருந்தேனோ அந்த விஷயத்தில் அவன் எனக்குத் தெளிவை அளித்துவிட்டான்‘ என்று கூறினார்கள். அதற்கு நான், அது என்ன? இறைத்தூதர் அவர்களே!என்று கேட்டேன். அப்போது (பின்வருமாறு) கூறினார்கள்.

(கனவில்) என்னிடம் (வானவர்கள்) இரண்டு பேர் வந்தனர். அவர்களில் ஒருவர் என் தலைமாட்டிலும் மற்றொருவர் என் கால்மாட்டிலும் அமர்ந்து கொண்டனர். அவர்களில் ஒருவர் தம் தோழரிடம், இந்த மனிதரின் நோய் என்ன? என்று கேட்டதற்கு அவரின் தோழர், இவருக்குச் சூனியம் வைக்கப்பட்டுள்ளது‘ என்று பதிலளிக்க முதலாமவர், இவருக்குச் சூனியம் வைத்தது யார்? என்று வினவியதற்குலபீத் இப்னு அஃஸம் என்று தோழர் பதிலளித்தார். அவன் எதில் (சூனியம் வைத்தான்)? என்று கேட்க, சீப்பிலும் சிக்கு முடியிலும், பேரீச்சம் பாளையின் உறையிலும்‘ என்று பதிலளித்தார். அவர், அது எங்கே உள்ளது? என்று கேட்க, மற்றவர், தர்வானில் உள்ளது‘ என்றார்.

‘தர்வான் என்பது பனுஸு ரைக் குலத்தாரிடையேயிருந்த ஒரு கிணறாகும்.

பிறகு அங்கு சென்று (பார்வையிட்டு)விட்டு என்னிடம் வந்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் மீதாணையாக! அக்கிணற்றின் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்றுள்ளது. அதன் பேரீச்சம் மரங்கள் சாத்தானின் தலையைப் போன்று இருந்தன‘ என்று குறிப்பிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வந்து என்னிடம் அக்கிணற்றைப் பற்றித் தெரிவித்தபோது நான், இறைத்தூதர் அவர்களே! அ(ந்தப் பாளை உறைக்குள்ள இருப்ப)தைத் தாங்கள் வெளியில் எடுக்கவில்லையா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்“எனக்கோ

அல்லாஹ் (அதன் பாதிப்பிலிருந்து) நிவாரணமளித்துவிட்டான். (அதை வெளியே எடுப்பதன் மூலம்) மக்களிடையே (சூனியக் கலை பரவக் காரணமாம்) குழப்பத்தைக் கிளப்பிவிடுவதை நான் வெறுத்தேன் (எனவேதான் அதை வெளியே எடுக்கவில்லை)' என்றார்கள்.

ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் வழியாக வரும் ஓர் அறிவிப்பில், நபி (ஸல்) அவர்களுக்குச் சூனியம் செய்யப்பட்டது. நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள் பிரார்த்தித்தார்கள். (திரும்பத் திரும்பப் பிரார்த்தித்தார்கள்)' என்று கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

## (கொடுஞ் செயல் புரிந்த) இணை வைப்பாளருக்கெதிரான பிரார்த்தனை.

"நபி (ஸல்) அவர்கள், இறைவா! யூசுஃப் (அலை) அவர்களின் காலத்துப் பஞ்சம் நிறைந்த ஏழு ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் ஏழு ஆண்டுகளை அளித்து இவர்களுக்கெதிராக எனக்கு உதவுவாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

மேலும், இறைவா! (கொடியவன்) அபூ ஜஹ்லை நீயே கவனித்துக் கொள்வாயாக!என்றும் பிரார்த்தித்தார்கள்.

என இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் தொழுகையில்இறைவா! இன்னான் இன்னானை நீ உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக' என்று பிரார்த்தித்தார்கள். அப்போது அல்லாஹ், (நபியே!) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை!எனும் (திருக்குர்ஆன் 03:128 வது) வசனத்தை அருளினான்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6392. அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அறிவித்தார்.

(அகழ்ப் போரின்போது ஒன்று திரண்டு தாக்க வந்து) எதிரணியினருக்கெதிராக இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். அப்போது, அல்லாஹும்ம முன்ஸிலல் கித்தாபி, சரீஅல் ஹிஸாபி, அஹ்ஸிமில் அஹ்ஸாப, அஹ்ஸிம்ஹும் வ ஸல்ஸில்ஹும்' என்று கூறினார்கள். (பொருள்: இறைவா! வேதம் அருளியவனே! விரைவாகக் கணக்கு வாங்குபவனே! (சத்திய நெறியை வேரறுக்கப் பல குலங்களிலிருந்து ஒன்று திரண்டு வந்துள்ள) இந்த கூட்டத்தாரைத் தோற்கடிப்பாயாக! இவர்களைத் தோல்வியுறச் செய்து நடுக்கத்திற்குள்ளாக்குவாயாக!)

ஹதீஸ் 6393. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையின் இறுதி ரக்அத்தில்சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ் (தன்னைப் புகழ்ந்தவரின் புகழுரையை அல்லாஹ் செவியேற்றான்) என்று கூறிய பிறகுகுனூத் (சிறப்பு துஆ) ஓதினார்கள். அதில், இறைவா! அய்யாஷ் இப்னு அபீ ரபீஆவைக் காப்பாற்றுவாயாக! இறைவா! வலீத் இப்னு வலீதைக் காப்பாற்றுவாயாக! இறைவா! ஸலமா இப்னு ஹிஷாமைக் காப்பாற்றுவாயாக! இறைவா! இறை நம்பிக்கையாளர்களில் ஒடுக்கப்பட்டவர்களைக் காப்பாற்றுவாயாக! இறைவா! முளர் குலத்தாரின் மீது உன்னுடைய பிடியை இறுக்குவாயாக! இறைவா! யூசுஃப் (அலை) அவர்களின் காலத்துப் பஞ்சம் நிறைந்த (ஏழு) ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் சில ஆண்டுகளை அளிப்பாயாக!என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 6394. அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு படைப் பிரிவை (நஜ்தை நோக்கி மார்க்கப் பிரசாரத்திற்காக) அனுப்பி வைத்தார்கள். அவர்களுக்குகுர்ரா (குர்ஆன் அறிஞர்கள்) என்று கூறப்படும். அவர்கள் அனைவரும் கொல்லப்பட்டனர். இவர்களுக்காக நபி (ஸல்) அவர்கள் கவலைப் பட்டதைப் போன்று வேறெதற்காகவும் அவர்கள் கவலைப்பட்டதை நான் பார்த்ததில்லை. எனவே, ஒரு மாதம் ஃபஜ்ர் தொழுகையில்குனூத் (எனும் சிறப்பு துஆ) ஓதிப் பிரார்த்தித்தார்கள்.

மேலும், உஸய்யா குலத்தினர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்துவிட்டனர்' என்றும் சொன்னார்கள்.

ஹதீஸ் 6395. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

யூதர்கள் நபி (ஸல்) அவர்களுக்குஅஸ்ஸாமு அலைக்க (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்று சற்றே மாற்றி முகமன் கூறிவந்தார்கள். அவர்கள் கூறியதைப் புரிந்துகொண்ட நான், அலைக்குமுஸ் ஸாமு வல்ல அனா (மரணமும் சாபமும் உண்டாகட்டும்)' என்று பதில் கூறினேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், ஆயிஷா! நிதானம்! எல்லா விஷயங்களிலும் நளினத்தைக் கையாள்வதையே அல்லாஹ் விரும்புகிறான்' என்றார்கள். அதற்கு நான்இறைத்தூதர் அவர்களே! அவர்கள் சொல்வதை நீங்கள் செவியுறவில்லையா? என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், அ(வர்கள் சொன்ன)தையே அவர்களுக்கு நான் பதிலாகக் கூறியதை நீ செவியுறவில்லையா? நான்வ அலைக்கும் (அவ்வாறே உங்களுக்கு ஆகட்டும்) என்று (நளினமாய்) குறிப்பிட்டேனே? என்றார்கள்.

ஹதீஸ் 6396. அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்.

அகழ்ப் போரின்போது நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது அவர்கள், எதிரிகளுடைய புதை குழிகளையும் அவர்களின் வீடுகளையும் அல்லாஹ் நெருப்பால் நிரப்புவானாக! அவர்கள், சூரியன் மறையும் வரை நடுத் தொழுகையிலிருந்து நம்முடைய கவனத்தைத் திருப்பிவிட்டார்கள் என்று கூறினார்கள். அஸ்ர் தொழுகையே நடுத் தொழுகையாகும்.

## இணை வைப்பாளர்களுக்காகப் பிரார்த்திப்பது

ஹதீஸ் 6397. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

(தவ்ஸ் குலத்தைச் சேர்ந்த) துஃபைல் இப்னு அம்ர் (ரலி) அவர்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின்தூதரே! தவ்ஸ் குலத்தார் (இறைவனுக்கு) மாறு செய்து (இஸ்லாத்தை ஏற்க) மறுத்துவிட்டனர். அவர்களுக்கெதிராகத் தாங்கள் பிரார்த்தியுங்கள்' என்று கேட்டுக் கொண்டார்கள். அவ்வாறே அவர்களுக்கெதிராக நபி (ஸல்) அவர்கள் பிரார்த்திப்பார்கள் என்று மக்களும் எண்ணினர். (ஆனால்) நபி (ஸல்) அவர்கள், இறைவா! தவ்ஸ் குலத்தாரை நேர்வழியில் செலுத்துவாயாக! அவர்களை (எம்மிடம்) கொண்டுவந்துவிடுவாயாக' என்று (நல்வழி வேண்டிப்) பிரார்த்தித்தார்கள்.

## "இறைவா! நான் முன்னால் செய்த பாவங்களையும், பின்னால் செய்த பாவங்களையும் மன்னித்திடுவாயாக! என்று நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தது.

ஹதீஸ் 6398. அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு பிரார்த்திப்பது வழக்கம்: ரப்பிஃக்ஃபிர் லீ கத்தீஅத்தீ, வ ஜஹ்லீ, வ இஸ்ராஃபி ஃபீ அம்ரீ குல்லிஹி, வமா அன்த்த அஉலமு பிஹி மின்னீ, அல்லாஹும் ம்மஃக்ஃபிர்லீ கத்தாயாய, வ அம்தீ, வ ஜஹ்லீ, வ ஜத்தீ வ குல்லு தாலிக்க இந்தீ. அல்லாஹும் ம்ம ஃக்ஃபிர் லீ மா கத்தகித்து, வ மா அஉலன்த்து, அன்த்தல் முகத்திமு, வ அன்த்தல் முஅக்கிரு, வ அன்த்த அலா குல்லி ஷையின் கதீர்.

(பொருள்: என் இறைவா! என் குற்றங்களையும், என் அறியாமையையும், என் செயல்கள் அனைத்திலும் நான் மேற்கொண்ட விரயத்தையும் மன்னித்திடுவாயாக. மேலும், என்னை விட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னித்திடுவாயாக. இறைவா! நான் தவறுதலாகச் செய்ததையும், வேண்டுமென்றே செய்ததையும், அறியாமல் செய்ததையும், அறிந்து செய்ததையும் மன்னித்திடுவாயாக. இவை யாவும் என்னிடம் இல்லாமலில்லை. இறைவா! நான்

முன்னால் செய்ததையும், பின்னால் செய்ததையும், இரகசியமாகச் செய்ததையும் பம்ரங்கமாகச் செய்ததையும் மன்னித்திடுவாயாக. நீயே முன்னேற்றம் அடையச் செய்பவன். பின்னடைவு ஏற்படச் செய்பவனும் நீயே! நீ அனைத்தின் மீதும் ஆற்றல் பெற்றவன்.

இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த நபிமொழி வந்துள்ளது.

ஹதீஸ் 6399. அபூ மூஸா அல் அஷ்அரீ (ரஹ்) அவர்கள்கூறினார்:

நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பிரார்த்தித்துவந்தார்கள். அல்லாஹும்ம ஃக்ஃபிர் லீ கத்தீஅத்தீ, வ ஜஹ்லீ, வ இஸ்ராஃபீ ஃபீ அம்ரீ, வமா அன்த்த அஉலமு பிஹி மின்னீ, அல்லாஹும்ம ஃக்ஃபிர் லீ ஹஸ்லீ, வ ஜித்தீ, வ கத்தயீ, வ அம்தீ, வ குல்லு தாலிக்க இந்தீ. (பொருள்: இறைவா! என் குற்றங்களையும் என் அறியாமையையும், என் செயல்களில் நான் மேற்கண்ட விரயத்யையும், மேலும், என்னை விட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னித்திடுவாயாக! இறைவா! நான் விளையாட்டாகச் செய்ததையும், வினையாகச் செய்ததையும், தவறுதலாகச் செய்ததையும், வேண்டுமென்றேச் செய்ததையும் மன்னித்திடுவாயாக! இவை யாவும் என்னிடம் இல்லாமலில்லை.)

## வெள்ளிக்கிழமையன்று (துஆ ஏற்கப்படும்) அந்த நேரத்தில் பிரார்த்திப்பது.

ஹதீஸ் 6400. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

அபுல்காசிம் நபி (ஸல்) அவர்கள், வெள்ளிக்கிழமையன்று ஒரு நேரம் உண்டு. சரியாக அந்த நேரத்தில் ஒரு முஸ்லிம் தொழுகையில் நின்று அல்லாஹ்விடம் எதையேனும் கேட்டால் அதை அவருக்கு அல்லாஹ் கொடுக்காமல் இருப்பதில்லை என்று கூறினார்கள். அந்த நேரம் மிகவும் குறைவான நேரம் என்பதைத் தம் கையால் சைகை செய்து காட்டினார்கள்.

## ‘‘யூதர்களின் விஷயத்தில் நாம் செய்யும் பிரார்த்தனை ஏற்கப்படும். எம்முடைய விஷயத்தில் அவர்கள் செய்யும் பிரார்த்தனை ஏற்கப்படாது‘ என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது:

ஹதீஸ் 6401 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

யூதர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்துஅஸ்ஸாமு அலைக்க (உங்களுக்கு மரணம் உண்டாகட்டும்) என்று (சற்றே மாற்றி முகமன்) கூறினார்கள் நபி (ஸல்) அவர்கள், வ அலைக்கும் (அவ்வாறே உங்களுக்கு நேரட்டும்) என்று பதிலளித்தார்கள். உடனே, நான் (வேகப்பட்டவளாக) அஸ்ஸாமு அலைக்கும், வ லஅனக்கமுல்லாஹு , வஃகளிப அலைக்கும்‘ (உங்களுக்கு மரணம் நேரட்டும். இறைவனின் சாபம் உங்களுக்கு ஏற்படட்டும். உங்களின் மீது அவனுடைய கோபம் உண்டாகட்டும்) என்று பதிலளித்தேன்.

அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ஆயிஷா! நிதானம்! நளினத்தைக் கடைப்பிடிப்பாயாக!வன்மையாக நடந்து கொள்வதிலிருந்து அல்லதுஅருவருப்பாகப் பேசுவதிலிருந்து உன்னை எச்சரிக்கிறேன்‘ என்று கூறினார்கள். நான், அவர்கள் சொன்னதை தாங்கள் செவியுறவில்லையா? என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், நான் (பதில்) சொன்னதை நீ செவியுறவில்லையா? என்று (திருப்பி என்னிடம் கேட்டுவிட்டு), அவர்களுக்கு நான் பதில் (முகமன்) கூறிவிட்டேன். அவர்களின் விஷயத்தில் நான் செய்த பிரார்த்தனை (இறைவனிடம்) அங்கீகரிக்கப்படும். என் விஷயத்தில் அவர்கள் புரிந்த பிரார்த்தனை அங்கீகரிக்கப்படாது‘ என்றார்கள்.

## ‘ஆமீன் (‘இறைவா!) ஏற்றுக்கொள்வாயாக என்று) கூறுவது.

ஹதீஸ் 6402 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இமாம்ஆமீன் கூறும்போது நீங்களும்ஆமீன் கூறுங்கள். ஏனெனில், வானவர்களும் ஆமீன் கூறுகின்றனர். யார் கூறும் ஆமீன் வானவர்கள் கூறும் ஆமீனுடன் ஒத்திருக்கிறதோ அவரின் முன்சென்ற பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

## "லாயிலாஹ இல்லால்லாஹ்' ('அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று) கூறுவதன் சிறப்பு.

ஹதீஸ் 6403 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"லாயிலாஹ இல்லல்லாஹு , வஹ்தஹு , லா ஷரீக்க லஹு , லஹு ல் முல்க்கு, வலஹு ல் ஹம்து. வஹ்வ அலா குல்லி ஷையின் கதீர் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை. அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது. அவனுக்கு புகழ் அனைத்தும் உரியது. அவன் எல்லாவற்றின் மீதும் வலிமையுள்ளவன்)' என்று ஒரு நாளில் நூறு முறை சொல்கிறவருக்கு, அது பத்து அடிமைகளை விடுதலை செய்ததற்குச் சமாமா(க நற்பலன் பெற்றுக்கொடுப்பதா)கும். மேலும், அவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படும். அவரின் கணக்கிலிருந்து (அவர் செய்த) நூறு தவறுகள் அழிக்கப்படும். மேலும், அந்த நாளின் மாலை நேரம் வரும் வரை ஷைத்தானிலிருந்து (பாதுகாக்கும்) அரணாகவும் அது அவருக்கு இருக்கும். மேலும், அவர் புரிந்த இந்த நற்செயலைவிடச் சிறந்ததை வேறு யாரும் செய்திட முடியாது் ஒருவர் இதைவிட அதிகமான (முறை இதை ஓதினால், அல்லது மிக முக்கியமான) ஒரு நற்செயல் புரிந்தாலே தவிர!

என அபூ ஹு ரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6404 அம்ர் இப்னு மைமூன் (ரஹ்) அவர்கள் கூறியாதாவது:

(மேற்கண்ட வாக்கியங்களை) பத்து முறை ஓதுகிறவர், இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததியினரில் ஒருவரை விடுதலை செய்ததைப் போன்றவராவார். (என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்).

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உமர் இப்னு அபீ ஸாயிதா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இதே நபிமொழி இன்னோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. நான் இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ரபீஉ இப்னு குஸைம் (ரஹ்) அவர்களிடம், இதை யாரிடமிருந்து தாங்கள் செவியுற்றீர்கள்? என்று கேட்டேன். அதற்கவர்கள், அம்ர் இப்னு மைமூன் (ரஹ்) அவர்களிடமிருந்து (இதைச் செவியுற்றேன்)' என்றார்கள். எனவே, நான் அம்ர் இப்னு மைமூன் (ரஹ்) அவர்களிடம் சென்று, இதை யாரிடமிருந்து தாங்கள் செவியுற்றீர்கள்? என்று கேட்டேன். அதற்கவர்கள், இப்னு அபீ லைலா (ரஹ்) அவர்களிடமிருந்து (செவியுற்றேன்)' என்றார்கள். எனவே, நான் இப்னு அபீ லைலா (ரஹ்) அவர்களிடம் சென்று, இதை யாரிடமிருந்து தாங்கள் செவியுற்றீர்களா? என்று கேட்டேன். அதற்கவர்கள், இதை நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக அபூ அய்யூப் அல்அன்சாரி (ரலி) அவர்களிடமிருந்து (செவியுற்றேன்)' என்றார்கள்.

இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த நபிமொழி வந்துள்ளது.

அபூ அய்யூப் (ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில், இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததிகளில் ஓர் அடிமையை விடுதலை செய்தவரைப் போன்றவராவார் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என வந்துள்ளது.

## 'சுப்ஹானல்லாஹ் ('அல்லாஹ் தூயவன் என்று) கூறுவதன் சிறப்பு.

ஹதீஸ் 6405 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

‘சுப்ஹானல்லாஹ் வபி ஹம்திஹி (அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து துதிக்கிறேன்) என்று யார் ஒரு நாளில் நூறு முறை சொல்வாரோ அவரின் தவறுகள் அழிக்கப்பட்டுவிடுகின்றன. அவை கடலின் நுரை போன்று (மிகுதியாக) இருந்தாலும் சரியே!

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6406 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு வாக்கியங்கள் நாவுக்கு எளிதானவையாகும். (நன்மை தீமை நிறுக்கப்படும். தராசில் கனமானவையாகும். அளவற்ற அருளாளின் பிரியத்திற்குரியவையுமாகும். (அவை:) சுப்ஹானல்லாஹில் அழீம், சுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி.

(பொருள்: கண்ணியமிக்க அல்லாஹ்வைத் துதிக்கிறேன் அவனைப் போற்றிப் புகழ்ந்து துதி செய்கிறேன்.)

## அல்லாஹ்வை நினைவு கூர்ந்து போற்றுவதன் சிறப்பு.

ஹதீஸ் 6407 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தம் இறைவனை நினைவு கூர்ந்து போற்றுகிறவரின் நிலை உயிருள்ளவரின் நிலைக்கும், தம் இறைவனை நினைவு கூர்ந்து போற்றாதவரின் நிலை உயிரற்றவரின் நிலைக்கு ஒத்திருக்கிறது.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6408 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்விடம் சில வானவர்கள் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து போற்றுவோரைத் தேடியவண்ணம் தெருக்களில் சுற்றி வருகின்றனர். அல்லாஹ்வை நினைவு கூர்ந்து போற்றிக்கொண்டிருக்கும் ஒரு குழுவினரை அவர்கள் கண்டால்உங்கள் தேவையைப் பூர்த்தி செய்ய வாருங்கள்‘ என்று அவர்கள் (தம்மில்) ஒருவரை ஒருவர் அழைக்கின்றனர். பின்னர் அந்த வானவர்கள் அல்லாஹ்வைப் போற்றுகிறவர்களைத் தம் இறக்கைகளால் முதல் வானம் வரை சூழ்ந்து கொள்கின்றனர். அப்போது அவ்வானவர்களிடம் அவர்களின் இறைவன்என் அடியார்கள் என்ன கூறுகின்றனர்? என்று கேட்கிறான். அவ்வானவர்களை விட அவனே தம் அடியார்களை நன்கறிந்தவனாவன் என்று கூறி துதிக்கின்றனர். உன்னைப் பெருமைப்படுத்திக்கொண்டும், உன்னைப் புகழ்ந்துகொண்டும், உன்னைப் போற்றிக் கொண்டும் இருக்கின்றர்‘ என்று வானவர்கள் கூறுகின்றனர்.

அதற்கு இறைவன்,அவர்கள் என்னைப் பார்த்திருக்கிறார்களா? என்று கேட்பான். அதற்கு வானவர்கள்,இல்லை உன் மீதாணையாக! அவர்கள் உன்னைப் பார்த்ததில்லை‘ என்று பதிலளிப்பார்கள். அதற்கு இறைவன்,என்னைப் பார்த்திருந்தால் எப்படியிருப்பார்கள்? என்று கேட்பான். வானவர்கள்,உன்னை அவர்கள் பார்த்திருந்தால் இன்னும் அதிகமாக உன்னை வழிபடுவார்கள் இன்னும் கூடுதலாக உன்னைப் போற்றிப் புகழ்ந்து துதிப்பார்கள்‘ என்று பதிலளிப்பார்கள். அதற்கு இறைவன்,என்னிடம் அவர்கள் என்ன வேண்டுகிறார்கள்? என்று (தனக்குத் தெரியாதது போன்று) கேட்பான். வானவர்கள்,அவர்கள் உன்னிடம் சொர்க்கத்தைக் கேட்கின்றனர்‘ என்பார்கள். அதற்கு இறைவன்,அவர்கள் அதைப் பார்த்ததுண்டா? என்று கேட்பான். அதற்கு வானவர்கள்,இல்லை உன் மீதாணையாக! அதிபதியே! அவர்கள் அதனைப் பார்த்ததில்லை‘ என்பர். அதற்கு இறைவன்,அவ்வாறாயின் அதனை அவர்கள் பார்த்திருந்தால் அவர்கள் நிலை எப்படியிருக்கும்? என்று கேட்பான். வானவர்கள்,சொர்க்கத்தை அவர்கள் பார்த்திருந்தால் இன்னும் அதிகமாக அதன் மீது ஆசைகொண்டு, அதிக வேட்கையுடன் தீவிரமாக அதைத் தேடுவார்கள்‘ என்று பதிலளிப்பார்கள்.

இறைவன்,அவர்கள் எதிலிருந்து (என்னிடம்) பாதுகாப்புக் கோருகின்றனர்? என்று வினவுவான். வானவர்கள்,நரகத்திலிருந்து (பாதுகாப்புக் கோருகின்றனர்)‘ என்று பதிலளிப்பார். இறைவன்,அதனை அவர்கள் பார்த்திருக்கிறார்களா? என்று கேட்பான். வானவர்கள்,இல்லை

உன் மீதாணையாக! அதனை அவர்கள் பார்த்தில்லை' என்பர். அதற்கு இறைவன்,அவ்வாறாயின் அவர்கள் அதைப் பார்த்திருந்தால் அவர்கள் நிலை என்னவாக இருந்திருக்கும்? என்று கேட்பான் வானவர்கள்,நரகத்தை அவர்கள் பார்த்திருந்தால் நிச்சயம் அதிலிருந்து கடுமையாக வெருண்டோடுபவர்களாகவும் அதனை மிகவும் அஞ்சுபவர்களாகவும் இருப்பார்கள்' என்பர். அப்போது இறைவன்,எனவே (வானவர்களே!) அவர்களை நான் மன்னித்து விட்டேன் என்பதற்கு உங்களை நான் சாட்சிகளாக ஆக்குகிறேன்' என்று கூறுவான்.

அந்த வானவர்களிடையே உள்ள ஒரு வானவர்,(அந்தக் குழுவினரிடையே அமர்ந்திருந்த) இன்ன மனிதன், உன்னைப் போற்றுகிற அவர்களில் உள்ளவன் அல்லன். அவன் ஏதோ தேவை நிமித்தமாகவே அங்கு வந்தான்' என்பார். அதற்கு இறைவன்,அவர்கள் ஒன்றாக அமர்ந்துள்ள நண்பர்கள். அவர்களுடன் வந்து அமர்ந்த ஒருவன் அவர்களால் (பாக்கியம் பெறுவானே தவிர,) பாக்கியமற்றவனாக ஆகமாட்டான்' என்று கூறுவான்.

என அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

இன்னும் சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த நபிமொழி வந்துள்ளது.

## "லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹ்' என்று கூறுவது.

ஹதீஸ் 6409 அபூ மூஸா அப்தில்லாஹ் இப்னு கைஸ் அல் அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

(நாங்கள் கைபர் பயணத்தில் இருந்த போது) நபி(ஸல்) அவர்கள் ஒருகுன்றில் அல்லதுமேட்டில் ஏறலானார்கள். அதன் மீது ஏறியபோது ஒருவர் உரத்த குரலில்லாயிலாஹ இல்லல்லாஹு , வல்லாஹு அக்பர்' (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று முழங்கினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் கோவேறு கழுதையில் இருந்தபடி,(மெதுவாகக் கூறுங்கள்.) ஏனெனில், நீங்கள் காது கேளாதவனையோ இங்கு இல்லாதவனையோ அழைப்பதில்லை' என்று கூறினார்கள். பிறகு,அபூ மூஸா! அல்லதுஅப்துல்லாஹ்! (என்று என்னைக் கூப்பிட்டு)சொர்க்கத்தின் கருவூலமான ஒரு வார்த்தையை உமக்கு நான் அறிவித்துத் தரட்டுமா? என்று கேட்டார்கள். நான்,ஆம் (அறிவித்துத்தாருங்கள்)' என்று கூறினேன். நபி(ஸல்) அவர்கள்,(அந்த வார்த்தை:) லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹ் (அல்லாஹ்வின் உதவியன்றி பாவங்களிலிருந்து விலகிச் செல்லவோ, நல்லறங்கள் புரிய வலிமை பெறவோ மனிதனால் இயலாது)' என்றார்கள்.

## அல்லாஹ்விற்கு 99 திருநாமங்கள் உண்டு.

ஹதீஸ் 6410 அபூ ஹு ரைரா(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ்விற்கு தொண்ணூற்று ஒன்பது நூற்றுக்கு ஒன்று குறைவான - பெயர்கள் உண்டு. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் யாரும் சொர்க்கம் நுழையாமல் இருப்பதில்லை. அல்லாஹ் ஒற்றையானவன். ஒற்றைப்படையையே அவன் விரும்புகிறான் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## விட்டுவிட்டு அறிவுரை வழங்குதல்

ஹதீஸ் 6411 அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களை (அவர்களின் அறிவுரையைக் கேட்பதற்காக) எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்தோம். அப்போது யஸீத் இப்னு முஆவியா வந்தார். அப்போது நான்,(யஸீத் அவர்களே!) நீங்கள் அமரவில்லையா? என்று கேட்டேன். யஸீத்,இல்லை. நான் உள்ளே சென்று உங்கள் தோழரை (இப்னு மஸ்வூதை) அழைத்து வருகிறேன். அவர் வராவிட்டால், நான் வந்து (உங்களுடன்) அமர்ந்து கொள்கிறேன்' என்று கூறினார். (பிறகு உள்ளே சென்றார்.) அதன்பின் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் யஸீதின் கையைப் பிடித்தவராக வெளியே வந்து எங்களிடையே நின்று,நீங்கள் இங்கு இருக்கும்

விஷயம் எனக்குத் தெரிவிக்கப்பட்டது. ஆயினும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நாங்கள் சலிப்படைவதை விரும்பாமல் (சந்தர்ப்ப சூழ்நிலைகளைக் கவனித்து)விட்டுவிட்டு எங்களுக்கு அறிவுரை கூறிவந்தார்கள். இதுவே உங்களிடையே (அறிவுரை கூற) வரவிடாமல் என்னைத் தடுக்கின்றது' என்றார்கள்.

# ஸஹீஹுல் புஹாரி

## பாகம் - 7

### *DAYA ISLAMIC MEDIA PERIYAKULAM*



# பாகம்: 7

## அத்தியாயம் 81 நெகிழ்வூட்டும் அறவுரைகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

### ஆரோக்கியம் மற்றும் ஓய்வு குறித்தும் மறுமையின் வாழ்வைத் தவிர வேறு (நிலையான) வாழ்வில்லை என்பது குறித்தும் வந்துள்ளவை.

ஹதீஸ் 6412. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்களில் அதிகமானோர் இரண்டு அருட் செல்வங்களின் விஷயத்தில் (ஏமாற்றப்பட்டு) இழப்புக்குள்ளாகிவிடுகின்றனர். 1. ஆரோக்கியம். 2. ஓய்வு

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6413 அனஸ்(ரலி) அறிவித்தார்.

(அகழ்ப் போருக்காக அகழ் தோண்டிக் கொண்டிருந்த போது) நபி(ஸல்) அவர்கள்'இறைவா! மறுமை வாழ்க்கையைத் தவிர வேறு (நிலையான) வாழ்க்கை இல்லை எனவே, அன்சாரிகளையும் முஹாஜிர்களையும் (அந்த நிலையான மறுமை வாழ்விற்காக) செம்மைப்படுத்துவாயாக!"என்று (பாடியபடி) சொன்னார்கள்.

ஹதீஸ் 6414 ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாயிதீ(ரலி) அறிவித்தார்.

அகழ்ப் போரின்போது நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அவர்கள் அகழ் தோண்டிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் மண் சுமந்து எடுத்து வந்து கொண்டிருந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களைப் பார்த்துவிட்டு,'இறைவா! மறுமையின் வாழ்க்கையைத் தவிர வேறு (நிரந்தரமான) வாழ்க்கை இல்லை எனவே, (அதற்காக உழைக்கும்) அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் மன்னிப்பு வழங்குவாயாக!"என்று (பாடியபடி) கூறினார்கள்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

### மறுமையுடன் ஒப்பிடுகையில் இம்மையின் நிலை.

அல்லாஹ் கூறினான்:

(மனிதர்களே!) அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக இவ்வுலக வாழ்க்கையெல்லாம் வீண்விளையாட்டும் வேடிக்கையும் அலங்காரமும் தான். அன்றி (அது) உங்களுக்கிடையில் வீண் பொறாமையேற்படுத்துவதாகவும், பொருட்களிலும் சந்ததிகளிலும் போட்டியேற்படுத்துவதாகவும் தான் இருக்கிறது. (இதன் நிலையானது:) ஒரு மழையின் நிலையை ஒத்திருக்கிறது. அதன் (உதவியால் முளைத்த) பயிர் (நன்கு வளர்ந்து) விவசாயிகளை மகிழ்வித்துக் கொண்டிருந்தது. பின்னர் அது உலர்ந்து மஞ்சள் நிறத்தில் மாறி விடுவதை நீர் காண்கின்றீர். பின்னர் அது சருகுகளாம்விடுகின்றது. (இம்மை வாழ்வும் அவ்வாறே.) மறுமையிலோ (அவர்களில் பலருக்கு) கொடிய வேதனையும் (சிலருக்கு) அல்லாஹ்வின் மன்னிப்பும் திருப்பொருத்தமும் கிடைக்கின்றன. எனவே, இந்த (உலக) அற்ப வாழ்வு ஏமாற்றுகிற (அற்ப) இன்பமேயன்றி வேறில்லை. (திருக்குர்ஆன் 57:20)

ஹதீஸ் 6415 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

“சொர்க்கத்தில் ஒரு சாட்டை வைக்கும் அளவு இடம் (கிடைப்பது), உலகத்தையும் அதிலிருப்பவற்றையும் விடச் சிறந்ததாகும். காலையில் சிறிது நேரம் அல்லது மாலையில் சிறிது நேரம் இறைவழியில் (போருக்குச்) செல்வது உலகத்தையும் அதிலிருப்பவற்றையும் விடச் சிறந்ததாகும்“ என்று நபி(ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.

## “உலகத்தில் நீ அந்நியனைப் போன்று இரு அல்லது வழிப்போக்கனைப் போன்று இரு‘ என்ற நபிமொழி.

ஹதீஸ் 6416 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தோளைப் பிடித்துக் கொண்டு’உலகத்தில் நீ அந்நியனைப் போன்று, அல்லது வழிப் போக்கனைப் போன்று இரு‘‘ என்றார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)

“நீ மாலை நேரத்தை அடைந்தால் காலைவேளையை எதிர்பார்க்காதே! நீ காலை வேளையை அடைந்தால் மாலை நேரத்தை எதிர்பார்க்காதே! நீ நோய்வாய்ப்படும் நாளுக்காக உன்னுடைய ஆரோக்கியத்தில் சிறி(து நேரத்)தைச் செலவிடு. உன்னுடைய இறப்பு(க் குப் பிந்திய நாளு)க்காக உன்னுடைய வாழ்நாளில் சிறி(து நேரத்)தைச் செலவிடு‘‘ என்று இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறுவார்கள்.

## எதிர்பார்ப்புகளும் அவை அளவு கடந்து போவதும்.

அல்லாஹ் கூறினான்:

ஒவ்வோர் ஆத்மாவும் இறப்பை சுவைத்தே தீரும். மேலும், உங்களுடைய (வினைகளுக்கான) பிரதிபலன்கள் மறுமை நாளில் தான் நிறைவாகக் கொடுக்கப்படும். எனவே, (அந்நாளில் நரக) நெருப்பிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டுச் சொர்க்கத்தில் அனுமதிக்கப்படுபவரே வெற்றி பெற்றார். இந்த (உலக) அற்ப வாழ்வு ஏமாற்றுகிற (அற்ப) இன்பமேயன்றி வேறில்லை. (திருக்குர்ஆன் 03:185)

(நபியே!) அவர்கள் (நன்கு) புசித்துக் கொண்டும் சுகம் அனுபவித்துக் கொண்டும் இருக்க (தற்போது) நீர் அவர்களைவிட்டுவிடுக. (அவர்களின் வீண்) எதிர்பார்ப்புகள் (மறுமையை) அவர்களுக்கு மறக்கடித்துவிட்டன. (இதன் பலனைப்) பின்னர் அவர்கள் நன்கறிந்து கொள்வார்கள். (திருக்குர்ஆன் 15:03)

அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) கூறினார்: இவ்வுலகம் பின்னோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. மறுமை முன்னோக்கி வந்து கொண்டிருக்கிறது. இந்த இரண்டில் ஒவ்வொன்றுக்கும் புதல்வர்கள் உள்ளனர். எனவே, நீங்கள் மறுமையின் புதல்வர்களாயிருங்கள். இன்று வினை உண்டு. விசாரணை இல்லை. நாளை விசாரணை உண்டு. ஆனால், வினை இல்லை.

ஹதீஸ் 6417 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை) நபி(ஸல்) அவர்கள் (நிலத்தில்) ஒரு சதுரக் கட்டம் வரைந்தார்கள். பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்:

(நடுவிலுள்ள மையப் புள்ளியான) இதுதான் மனிதன். இந்தச் சதுரம் தான் அவனைச்’சூழ்ந்துள்ள’ அல்லது’சூழ்ந்து கொண்டுவிட்ட’ வாழ்நாளாகும். (நடுவிலிருந்து) வெளியே செல்லும் கோடுதான் அவனுடைய எதிர்பார்ப்புகளாகும். இதோ இந்தச் சிறிய கோடுகள்

(மனிதனை வந்தடையும்) சோதனைகளாகும். (சோதனைகளில்) ஒன்றிலிருந்து அவன் தப்பிவிட்டாலும் மற்றொன்று அவனைத் தீண்டவே செய்யும். (இடையில் ஏற்படும் சோதனைகளான) இவற்றிலிருந்து அவன் தப்பிவிட்டாலும் இ(யற்கை மரணமான)து அவனைத் தீண்டவே செய்யும்.

ஹதீஸ் 6418 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (முந்தைய ஹதீஸில் உள்ளபடி) சில கோடுகள் வரைந்தார்கள். பிறகு'(சதுரத்தின் நடுவிலுள்ள கோட்டைக் காட்டி) இதுதான் (மனிதனின்) எதிர்பார்ப்புகள் (என்றும், சதுரத்தைக் காட்டி) இதுதான் அவனுடைய ஆயுள் (என்றும் கூறிவிட்டு,) இவ்வாறு அவன் (எதிர்பார்ப்புகளில்) இருந்து கொண்டிருக்கும்போது அரும்லுள்ள (மரணம் - ஆயுள் முடிவு எனும்) கோடு அவனை வந்தடைகிறது" என்று கூறினார்கள்.

## ஒருவர் அறுபது வயதை அடைந்தால் அதற்கு மேல் அவர் வாழ்நாள் குறித்து கூறும் சாக்குப் போக்குகளை அல்லாஹ் ஏற்பதில்லை.

ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றனான்:

சிந்தித்து உணரக்கூடியவன் சிந்திப்பதற்கு வேண்டிய நீண்ட ஆயுளை உங்களுக்கு நாம் கொடுக்கவில்லையா? இன்னும் எச்சரிக்கை செய்பவரும் உங்களிடம் வந்துதனே இருந்தார்! (என்று அல்லாஹ் கேட்பான்). (திருக்குர்ஆன் 35:37)

ஹதீஸ் 6419 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு மனிதனின் வயது அறுபது ஆண்டுகளை எட்டும் வரை வாழ்நாளைத் தள்ளிப் போட்ட பிறகு அவன் (ஆயுள் விஷயத்தில்) கூறும் சாக்குப்போக்குகளை அல்லாஹ் ஏற்றுக் கொள்வதில்லை.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6420 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

முதியவரின் மனம் கூட இரண்டு விஷயங்களில் இளமையாகவே இருந்துவரும்.

1. இம்மை வாழ்வின் (-செல்வத்தின்) மீதுள்ள பிரியம்.

2. நீண்டநாள் வாழவேண்டும் என்ற ஆசை.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6421 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதன் (வளர்ந்து) பெரியவனாக ஆக அவனுடன் இரண்டு ஆசைகளும் வளர்கின்றன:

1. பொருளாசை.

2. நீண்ட நாள் வாழ வேண்டும் என்ற ஆசை.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## இறைதிருப்தியை நாடிச் செய்யப்படும் நல்லறம்.

இது குறித்து ஸஅத்(ரலி) அவர்களின் அறிவிப்பில் வந்துள்ளது.

ஹதீஸ் 6422 முஹ்மூத் இப்னு ரபீஉ (ரலி) அறிவித்தார்.

(நான் சிறுவனாக இருந்தபோது எங்கள் வீட்டுக்கு வந்த) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எங்கள் வீட்டிலிருந்து வாளி ஒன்றில் (கிணற்று) நீர் எடுத்து (தம் வாயில் ஊற்றி பரக்கத்திற்காக என் மீது) உமிழ்ந்தது எனக்கு நினைவுண்டு.

இதை இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 6423 (தொடர்ந்து) முஹ்மூத் இப்னு ரபீஉ (ரலி) அறிவித்தார்.

இத்பான் இப்னு மாலிக் அல்அன்சாரி (ரலி) அவர்கள் (பின்வருமாறு) சொல்ல கேட்டேன்.

(ஒருநாள்) அதிகாலையில் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் வந்திருந்தபோது 'அல்லாஹ்வின் திருப்தியை நாடி 'லா இலாஹ இல்லலல்லாஹ்' (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை) என்று கூறியவாறு மறுமை நாளில் ஓர் அடியார் வந்தால் அவரின் மீது நரகத்தை அல்லாஹ் தடை செய்யாமல் இருப்பதில்லை" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6424 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்: இறைநம்பிக்கையுள்ள என் அடியார், அவருக்குப் பிரியமான ஒருவரின் உயிரை நான் கைப்பற்றிவிடும்போது நன்மையை நாடிப் பொறுமை காத்தால், சொர்க்கமே அவருக்கு நான் வழங்கும் பிரதிபலனாக இருக்கும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## இவ்வுலக வாழ்வின் செழுமை குறித்தும், அதை அடைவதற்காக (ப் போட்டி போட்டுக் கொண்டு) அதீத ஆர்வம் காட்டுவது குறித்தும் வந்துள்ள எச்சரிக்கை.

ஹதீஸ் 6425 மிஸ்வர் இப்னு மக்ரமா (ரலி) அறிவித்தார்.

பனு ஆமிர் இப்னு லுஅய் குலத்தாரின் ஒப்பந்த நண்பரும் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் பத்ருப் போரில் பங்கெடுத்தவருமான அம்ர் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ் (ரலி) அவர்களை, ஜிஸ்யா (காப்பு) வரி வசூலித்துக் கொண்டு வரும்படி பஹ்ரைனுக்கு அனுப்பினார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (அக்னி ஆராதனையாளர்களான) பஹ்ரைன்வாசிகளுடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டு அவர்களுக்கு அலா இப்னு அல்ஹள்ரமீ (ரலி) அவர்களைத் தலைவராக ஆக்கியிருந்தார்கள். அபூ உபைதா (ரலி) அவர்கள் (வரி வசூலித்துக்கொண்டு) பஹ்ரைனிலிருந்து நிதியுடன் (மதீனாவுக்கு) வந்தார்கள். அபூ உபைதா (ரலி) அவர்கள் வந்துவிட்டதைக் கேள்விப்பட்ட அன்சாரிகள் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் செல்ல, அது சரியான ஃபஜ்ருத் தொழுகையின் நேரமாக அமைந்துவிட்டது. அல்லாஹ்வின் தூதருடன் அன்சாரிகள் தொழுகையை நிறைவேற்றினார்கள். தொழுகை முடிந்து நபி (ஸல்) அவர்கள் திரும்ப, அன்சாரிகள் தங்கள் எண்ணத்தை சைகையால் வெளியிட்டனர். (ஆர்வத்துடன் இருந்த) அவர்களைக் கண்டதும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் புன்னகைத்துவிட்டு 'அபூ உபைதா வந்துவிட்டார் அவர் ஏதோ கொண்டு வந்திருக்கிறார் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் என நான் நினைக்கிறேன்" என்றார்கள். அன்சாரிகள் 'ஆம், இறைத்தூதர் அவர்களே!" என்று பதிலளித்தார்கள். 'அவ்வாறாயின் ஒரு நற்செய்தி. உங்களுக்கு

மகிழ்வைத் தரும் நிகழ்ச்சி நடக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கலாம்‘‘ என்று கூறிவிட்டு’அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களுக்கு வறுமை ஏற்பட்டுவிடும் என்று நான் அஞ்சவில்லை. ஆயினும், உங்களுக்கு முன்னிருந்தவர்களுக்கு உலகச் செல்வம் தாராளமாகக் கொடுக்கப்பட்டதைப் போன்று உங்களுக்கும் தாராளமாகக் கொடுக்கப்பட்டு, அதற்காக அவர்கள் ஒருவருக்கொருவர் போட்டியிட்டதைப் போன்று நீங்களும் போட்டியிட, அது (மறுமையின் எண்ணத்திலிருந்து) அவர்களின் கவனத்தைத் திருப்பிவிட்டதைப் போன்று உங்களின் கவனத்தையும் அ(ந்த உலகாசையான)து திருப்பிவிடுமோ என்றே நான் அஞ்சுகிறேன்’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6426 உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

ஒருநாள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து இறந்தவர்களுக்காகத் தொழுகை நடத்துவதைப் போன்று உஹுதுப் போர் உயிர்த் தியாகிகளுக்காகத் தொழவைத்தார்கள். பிறகு சொற்பொழிவு (மிம்பர்) மேடைக்குத் திரும்பிவந்து’உங்களுக்காக நிச்சயம் நான் (மறுமையில்) காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சியும் ஆவேன். மேலும், அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இப்போது (‘அல்கவ்ஸர்’ எனும்) என்னுடைய தடாகத்தைக் காண்கிறேன். எனக்கு’பூமியின் கருவூலத் திறவுகோல்கள்’ அல்லது’பூமியின் திறவுகோல்கள்’ வழங்கப்பட்டுள்ளன. அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்குப் பின்னால் நீங்கள் (இறைவனுக்கு) இணை வைப்போராக மாறிவிடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை. ஆனால், உலகத்திற்காக நீங்கள் ஒருவருக்கொருவர் போட்டியிட்டு (மோதி)க்கொள்வீர்களோ என்றே அஞ்சுகிறேன்‘‘ என்றார்கள். 18

ஹதீஸ் 6427 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

(ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (சொற்பொழிவு மேடையில் அமர்ந்து)’இறைவன் உங்களுக்காக வெளிக் கொணரும் பூமியின் வளங்களைத் தான் உங்களின் விஷயத்தில் நான் அதிகம் அஞ்சுகிறேன்‘‘ என்றார்கள்.’பூமியின் வளங்கள் எவை?’ என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்’(கனிமப் பொருள்கள், ஆடை அணிகலன்கள், பயிர் வகைகள் ஆகிய இவ்வுலகக் கவர்ச்சிப் பொருள்கள் (தாம் அவை)‘‘ என்று பதிலளித்தார்கள். அப்போது ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்’(செல்வம் எனும்) நன்மை தீமையை உருவாக்குமா?’ என்று வினவியதற்கு (பதிலளிக்காமல்) நபி(ஸல்) அவர்கள் மௌனமாக இருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்படுகிறதோ என்று நாங்கள் நினைத்தோம். பிறகு, தம் நெற்றியைத் துடைக்கலானார்கள். பின்னர்’கேள்வி கேட்டவர் எங்கே?’ என்று வினவினார்கள். அம்மனிதர்’(இதோ) நான் (இங்கிருக்கிறேன்)‘‘ என்று கூறினார். (அவர் கேள்வி கேட்டதையடுத்து மக்களுக்குப் பயனளிக்கும்) அந்த பதில் வெளிப்பட்டதற்காக அவரை நாங்கள் மெச்சினோம்.

நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: நன்மையால் நன்மையே விளையும் இந்த (உலகின்) செல்வம் பசுமையானதும் இனிமையானதுமாகும். வாய்க்கால் மூலம் விளைகிற (பயிர்கள்) ஒவ்வொன்றும் (கால்நடைகளை,) வயிறு புடைக்கத் தின்னவைத்துக் கொன்று விடுகின்றன் அல்லது கொல்லும் அளவுக்குச் சென்றுவிடுகின்றன. பசுமையான புல்லைத் தின்னும் கால்நடைகளைத் தவிர. (அவை மடிவதில்லை. ஏனெனில்,) அவை (புல்லைத்) தின்று வயிறு நிரம்பிவிடும்போது சூரியனை நோக்கி(ப் படுத்து)க் கொண்டு அசை போடுகின்றன. (இதனால் நன்கு சீரணமாம்) சாணமும் சிறுநீரும் வெளியேறுகின்றன. பின்னர் (வயிறு காலியானவுடன்) மறுபடியும் சென்று மேய்கின்றன.

இந்த (உலகின்) செல்வம் இனிமையானதாகும். இதை உரிய முறையில் சம்பாதித்து உரிய முறையில் செலவிடுகிறவருக்கு அது நல்லுதவியாக அமையும். இதை முறையற்ற வழிகளில் சம்பாதிக்கிறவர் உண்டும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவராவார்.

ஹதீஸ் 6428 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் (-மக்களில்) சிறந்தவர்கள் என் தலைமுறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள்.

-இதன் அறிவிப்பாளரான இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அவர்கள்' இதற்குப் பிறகு இரண்டாவது அல்லது மூன்றாவது தலை முறையினரை நபி(ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்களா என்று எனக்குத் தெரியாது'' என்று கூறினார்கள்.

(தொடர்ந்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்)

இவர்களுக்குப் பின் ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்கள் சாட்சியமளிக்க தாமாக முன்வருவார்கள். ஆனால், சாட்சியம் அளிக்கும் படி அவர்களை யாரும் கோரமாட்டார்கள். அவர்கள் நம்பிக்கை மோசடி செய்வார்கள். அவர்களை நம்பி எதையும் ஒப்படைக்கப்படாது. அவர்கள் நேர்த்திக்கடன் செய்வார்கள். ஆனால், அதை நிறைவேற்றமாட்டார்கள். (அதிகமாக உண்டு குடித்ததால்) பருமன் (தொந்தி) விழும் நிலை அவர்களிடையே தோன்றும்.

என இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6429 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களில் சிறந்தவர்கள் என் தலைமுறையினர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். இவர்களுக்குப் பிறகு சில சமுதாயத்தார் வருவர். அவர்களின் சாட்சியம் அவர்களின் சத்தியங்களையும் அவர்களின் சத்தியங்கள் அவர்களின் சாட்சியத்தையும் முந்திக் கொள்ளும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6430 கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்கள் (கடும் வயிற்று வலிக்கு சிகிச்சை பெறுவதற்காகத்) தம் வயிற்றில் ஏழு முறை சூடுபோட்டிருந்தார்கள். அப்போது அவர்கள் (பின்வருமாறு) கூறக் கேட்டேன்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மரணத்தை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்திருக்காவிட்டால் மரணத்தை தடை விதித்திருக்காவிட்டால் மரணத்தை வேண்டி நான் பிரார்த்தனை புரிந்திருப்பேன். முஹம்மத்(ஸல்) அவர்களின் தோழர்கள் பலர் தம(து நன்மைகளு)க்கு இவ்வுலக வாழ்க்கை எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்திடாத நிலையில் (வாழ்ந்து) மறைந்துவிட்டார்கள். (ஆனால், அவர்களுக்குப் பின்) நாங்கள் (வீடு கட்ட) மண்ணுக்குச் செலவழிப்பதைத் தவிர வேறு தேவையே இல்லாத அளவுக்கு இவ்வுலக(ச் செல்வ)த்தைப் பெற்றுள்ளோம்.

ஹதீஸ் 6431 கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் (ஒருமுறை) கப்பாப்(ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள் தங்களின் (வீட்டுச்) சுவர் ஒன்றை எழுப்பிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் கூறினார்கள்: மறைந்துவிட்ட எம் தோழர்(கள் புரிந்த நன்மை)களை இவ்வுலக வார்க்கை எந்த வகையிலும் பாதித்துவிடவில்லை. (ஆனால்,) அவர்களுக்குப் பிறகு நாங்கள் (நிறைய) செல்வத்தைப்

பெற்றுள்ளோம். (வீடு கட்டத் தேவைப்படும்) மண்ணைத் தவிர, அதைச் செலவழிக்க வேறு துறை எதையும் நாங்கள் காணவில்லை.

ஹதீஸ் 6432 கப்பாப் இப்னு அரத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தாயகம் துறந்து (மதீனாவுக்கு ஹிஜ்ரத்) சென்றோம்.

## (திருக்குர்ஆன் 35:56) வசனங்கள்.

“மனிதர்களே! நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்குறுதி உண்மையானதாகும். எனவே, இவ்வுலக வாழ்க்கை (ஒருபோதும்) உங்களை மயக்கிவிட வேண்டாம். (ஷைத்தானாகிய) மாயக்காரனும் அல்லாஹ்வைப் பற்றி உங்களை மயக்கி விட வேண்டாம். நிச்சயமாக ஷைத்தான் உங்களுக்கு விரோதியாக இருக்கிறான். எனவே, அவனை நீங்களும் விரோதியாகவே கருதுங்கள். அவன் (தனக்கு வழிப்பட்ட) தன் கூட்டத்தாரை அழைப்பதெல்லாம் அவர்கள் நரகவாசிகளாக வதுற்காகவே!”எனும் (திருக்குர்ஆன் 35:56) வசனங்கள்.

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'சஈர்' (நரகம்) என்பதன் பன்மை'சுஉர்' என்பதாகும். முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: மாயக்காரன் (ஃகரூர்) என்பது ஷைத்தானைக் குறிக்கிறது.

ஹதீஸ் 6433 ஹும்ரான் இப்னு அபான்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(மதீனாவிலுள்ள)'மகாயித்' எனுமிடத்தில் அமர்ந்திருந்த உஸ்மான்(ரலி) அவர்களிடம் நான் தண்ணீருடன் சென்றேன். அப்போது அவர்கள் பரிபூரணமாக அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். பிறகு'நபி(ஸல்) அவர்கள் இந்த இடத்தில் பரிபூரணமாக அங்கசுத்தி செய்யக் கண்டேன்‘ என்று கூறிவிட்டு,'யார் இதைப் போன்று (முழுமையாக) அங்கசுத்தி செய்து, பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்அத்கள் தொழுதுவிட்டுப் பிறகு அமருவாரோ அவர் அதற்கு முன்செய்த பாவங்கள் மன்னிக்கப்பட்டுவிடுகின்றன' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“(ஆனால், இதைக் கொண்டு) ஏமாந்து (பாவங்களில் மூழ்கி) விடாதீர்கள்‘‘ என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றார்கள்

## நல்லோர்களின் மறைவு

(‘மறைவு' என்பதைக் குறிக்க மூலத்தில்'தஹாப்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது. இதையே சற்று மாற்றி)'திஹாப்' என்று சொன்னால்'மழை' என்று பொருள்.

ஹதீஸ் 6434 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்லவர்களில் முதன்மையானவர்கள் முதலாவதாகவும் அவர்களுக்கு அடுத்த (படித்தரத்திலுள்ள)வர்கள் அடுத்ததாகவும் (இவ்வுலகைவிட்டுப்) போய்விடுவார்கள். (இவ்வாறு நல்லவர்கள் மறைந்த பின் இப்புவியில்)'மட்டமான வாற்கோதுமை போன்ற‘, அல்லது'மட்டமான பேரீச்சம் பழம் போன்ற' தரம் வாய்ந்த மக்களே எஞ்சியிருப்பார்கள். அவர்களை அல்லாஹ் சற்றும் பொருட்படுத்தமாட்டான்.

என மிர்தாஸ் இப்னு மாலிக் அல் அஸ்லமீ(ரலி) அறிவித்தார்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்: (‘மட்டம்' என்பதைக் குறிக்க மூலத்தில்)'ஹுஃபாலத்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது. இதற்கு'ஹுஸாலத்' என்றும் கூறப்படும்.

## அஞ்சப்பட வேண்டிய செல்வத்தின் சோதனை.

அல்லாஹ் கூறினான்:

உங்கள் செல்வங்களும் உங்கள் மக்களும் (உங்களுக்குச்) சோதனைதான். அல்லாஹ்விடமே மகத்தான பிரதிபலன் உள்ளது.

ஹதீஸ் 6435. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பொற்காசு, வெள்ளிக்காசு, குஞ்சம் உள்ள (ஆடம்பர) ஆடை, சதுரக் கம்பளி ஆடை ஆகியவற்றுக்கு அடிமையாகிவிட்டவன் துர்பாக்கியவான் ஆவான். அவனுக்கு (செல்வம்) வழங்கப்பட்டால் திருப்தியடைவான். (செல்வம்) வழங்கப்படாவிட்டால் அதிருப்தியடைவான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6436. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதமின் மகனக்கு (மனிதனுக்கு) இரண்டு நீரோடைகள் (நிறைய) செல்வம் இருந்தாலும் மூன்றாவதையும் அவன் தேடுவான். ஆதமின் மகனுடைய வயிற்றை மண்ணை (மரணத்தை)த் தவிர வேறெதுவும் நிரப்பாது. (பாவங்களிலிருந்து) பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6437. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) ஒரு நீரோடை நிறைய செல்வம் இருந்தாலும் அதனுடன் அதைப் போன்ற மற்றொரு நீரோடை இருக்க வேண்டும் என்றே அவன் விரும்புவான். ஆதமின் மகனுடைய கண்ணை மண்ணை (மரணத்தை)த் தவிர வேறெதுவும் நிரப்பாது. மேலும், (பாவங்களிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த ஹதீஸை அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்கள் (மக்காவிலுள்ள) சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தவாறு கூறக் கேட்டுள்ளேன்.

ஹதீஸ் 6438. அப்பாஸ் இப்னு ஸஹ்ல் இப்னி ஸஅத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்கள் மக்காவில் சொற்பொழிவு மேடையில் (மிம்பரில்) உரையாற்றும்போது சொல்லக் கேட்டேன். மக்களே! நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: ஆதமின் மகனுக்கு (மனிதனுக்கு) ஒரு நீரோடை நிறைய பொன் வழங்கப்பட்டாலும் அதனுடன் இரண்டாவது நீரோடை கிடைக்க வேண்டுமென்று அவன் விரும்புவான். இரண்டாவது நீரோடை அவனுக்கு வழங்கப்பட்டால் அதனுடன்மூன்றாவது கிடைக்க வேண்டுமென்று வயிற்றை மண்ணை (மரணத்தை)த் தவிர வேறெதுவும் மூடாது. மேலும், (மேற்கண்ட பேராசை போன்ற பாவங்களிலிருந்து திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

ஹதீஸ் 6439. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதமின் மகனுக்கு (-மனிதனுக்கு)த் தங்கத்தாலான ஒரு நீரோடை இருந்தால் தனக்கு இரண்டு நீரோடைகள் இருக்க வேண்டுமென்று அவன் ஆசைப்படுவான். அவனுடைய வாயை மண்ணை (-

மரணத்தை)த் தவிர வேறேதுவும் நிரப்பாது. மேலும், (இது போன்ற பேராசையிலிருந்து) திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டுவிட்டவரின் கோரிக்கையை அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6440 உபை இப்னு கஅப்(ரலி) அறிவித்தார்.

இ(ந்த ஹதீஸான)து குர்ஆனிலுள்ள ஒரு வசனம் என்றே நாங்கள் கருதிவந்தோம். 'செல்வத்தைப் பெருக்கும் ஆசை உங்களைத் திசை திருப்பிவிட்டது" எனும் (திருக்குர்ஆன் 102:1 வது) வசனம் அருளப்பெறும் வரை.

## "இச்செல்வம் பசுமையானதும் இனிமையானதுமாகும்" எனும் நபிமொழி.

அல்லாஹ் கூறினான்:

பெண்கள், ஆண் மக்கள், பொன் மற்றும் வெள்ளியாலான பெருங்குவியல்கள், அடையாளமிடப்பட்ட (உயர் ரகக்) குதிரைகள், (ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய) கால்நடைகள், வேளாண் நிலங்கள் ஆகியவற்றின் மீது ஆசைகொள்வது மனிதர்களுக்கு அழகாக்கப்பட்டுள்ளது. (உண்மையில்)'இவை (யாவும் நிலையற்ற) இவ்வுலக வாழ்க்கையின் (அற்ப) இன்பங்கள் ஆகும். (திருக்குர்ஆன் 03:14)

(இந்த வசனம் தொடர்பாக) உமர்(ரலி) கூறினார்: இறைவா! எங்களுக்காக எதை நீ அலங்கரித்துள்ளாயோ அதைக் கொண்டு நாங்கள் மகிழ்ச்சி அடைவதைத் தவிர எங்களுக்கு வேறு வழியில்லை. (ஆனால்,) இறைவா! இச்செல்வங்களை அவற்றுக்குரிய வழியில் நான் செல்வழிக்க (நீ அருள் புரிய) வேண்டுமென்று உன்னிடம் கோருகிறேன்.

ஹதீஸ் 6441 ஹகீம் இப்னு ஹிஸாம்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் (தர்மம்) கேட்டேன். அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். பிறகும் நான் அவர்களிடம் கேட்டேன். அவர்கள் எனக்குக் கொடுத்தார்கள். மீண்டும் அவர்களிடம் கேட்டேன். எனக்குக் கொடுத்தார்கள். பிறகு'இச்செல்வம்' அல்லது'என்னிடம் நபி(ஸல்) அவர்கள் ஹகீமே! இச்செல்வம்' பசுமையானதும் இனிமையானதும் ஆகும். இதை(ப் பேராசையின்றி) நல்ல எண்ணத்துடன் பெறுகிறவருக்கு அதில் சுபிட்சம் வழங்கப்படும். மனத்தை அலையவிட்டு(ப் பேராசையுடன்) இதை எடுத்துக் கொள்கிறவருக்கு அதில் சுபிட்சம் வழங்கப்படுவதில்லை. அவர் உண்ட பின்பும் வயிறு நிரம்பாதவரைப் போன்றவராவார். மேல் கைதான் கீழ்க் கையைவிடச் சிறந்ததாகும்" என்றார்கள்.

## ஒருவர் தம் செல்வத்திலிருந்து எதை (அறவழியில்) செலவிட்டாரோ அதுதான் அவருக்குரிய (நன்மை பயக்கும்) செல்வமாகும்.

ஹதீஸ் 6442 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள்'உங்களில் யாருக்காவது தம் செல்வத்தை விடத் தம் வாரிசுகளின் செல்வம் விருப்பமானதாக இருக்குமா?' என்று கேட்டார்கள். தோழர்கள்'இறைத்தூதர் அவர்களே! எங்கள் அனைவருக்குமே (வாரிசுகளின் செல்வத்தை விட) எங்களின் செல்வமே விருப்பமானதாகும்" என்று பதிலளித்தார்கள். 'அவ்வாறாயின், ஒருவர் (இறப்பதற்கு முன் அறவழியில்) செலவிட்டதே அவரின் செல்வமாகும். (இறக்கும் போது) விட்டுச்

செல்வது அவரின் வாரிசுகளின் செல்வமாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## (இம்மையில் செல்வம்) அதிகம் உள்ளவர்களே (மறுமையில் நன்மை) குறைந்தவர்கள் ஆவர்.

அல்லாஹ் கூறினான்:

யார் இவ்வுலக வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் (மட்டும்) விரும்புகிறார்களோ அவர்களின் செயல்க(ளுக்குரிய பலன்க)ளை இம்மையிலே நிறைவாக நாம் வழங்கிவிடுவோம். அதில் அவர்கள் குறை வைக்கப்பட மாட்டார்கள். (ஆனால்,) இத்தகையோருக்கு மறுமையில் நரக நெருப்பைத் தவிர வேறொன்றும் கிடைக்காது. இம்மையில் அவர்கள் செய்தவை எல்லாம் அழிந்துபோகும் அவர்கள் செய்து கொண்டிருந்தவை எல்லாம் வீணாம்ப் போகும். (திருக்குர்ஆன் 11:15, 16)

ஹதீஸ் 6443 அபூ தர்(ரலி) அறிவித்தார்.

ஒருநாள் இரவு நான் (வீட்டிலிருந்து) வெளியேறினேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தனியாக நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அவர்களுடன் யாரும் இருக்கவில்லை. (அந்தச் சமயத்தில்) அவர்களுடன் எவரும் வருவதை அவர்கள் விரும்பமாட்டார்கள் என்று நான் எண்ணினேன். எனவே, நான் நிலா (ஒளிபடாத) நிழலில் நடக்கலானேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னைத் திரும்பிப் பார்த்து'யார் அது?' என்று கேட்டார்கள். நான்'அபூ தர். அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்" என்றேன். நபி(ஸல்) அவர்கள்'அபூ தர்ரே! (இங்கே) வாருங்கள்!"என்றார்கள்.

நான் அவர்களுடன் சிறிது நேரம் நடந்தேன். அப்போது அவர்கள்'(இம்மையில் செல்வம்) அதிகம் உள்ளவர்களே மறுமை நாளில் (நற்பலன்) குறைந்தவர்கள் ஆவர் ஒரு சிலரைத் தவிர, அவர்களுக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கினான். அதை அவர்கள் தம் வலப் பக்கமும் இடப் பக்கமும் தம் முன் பக்கமும் பின் பக்கமும் வாரி வழங்கி அச்செல்வத்தால் நன்மை புரிகிறார்கள். (இவர்களைத் தவிர)" என்றார்கள். இன்னும் சிறிது நேரம் நான் அவர்களுடன் நடந்தேன். அப்போது அவர்கள் என்னிடம்'இங்கேயே அமர்ந்திருங்கள்" என்று கூறி, சுற்றிலும் கற்கள் இருந்த ஒரு சம வெளியில் என்னை அமரச் செய்தார்கள்.'நான் உங்களிடம் திரும்பி வரும் வரை இங்கேயே அமர்ந்திருங்கள்" என என்னிடம் சொல்லிவிட்டு, (பாறைகள் நிறைந்த) ஹர்ராப் பகுதியில் நடந்து சென்றார்கள்.

பிறகு அவர்களை நான் காணமுடியவில்லை. நீண்ட நேரம் அங்கேயே இருந்தார்கள். வெகு நேரமாம்யும் என்னிடம் அவர்கள் வரவில்லை. பிறகு அவர்கள் முன்னோக்கி வந்து கொண்டே'அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலும் சரியே!"என்று கூறுவதைக் கேட்டேன். அவர்கள் வந்தபோது என்னால் பொறுமையாக இருக்க முடியாமல்'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் என்னைத் தங்களுக்கு அர்ப்பணமாக்கட்டும்! ஹர்ராப் பகுதியில் தாங்கள் யாரிடம் பேசினீர்கள்? தங்களுக்கு யாரும் எந்தப் பதிலும் அளிப்பதை நான் கேட்கவில்லையே?' என்று வினவினேன்.

நபி(ஸல்) அவர்கள்'அது (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள் தாம். அவர் ஹர்ராப் பகுதியில் என் முன் தோன்றி,'(ஏக இறைவனாகிய) அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்காத நிலையில் இறப்பவர் சொர்க்கம் செல்வார் என உங்கள் சமுதாயத்தாருக்கு நற்செய்தி கூறுங்கள்"

என்றார். நான்'ஜிப்ரீலே! அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலுமா (சொர்க்கம் புகுவார்)?' என்று கேட்டேன். அவர்'ஆம்' என்றார். நான்'அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலுமா?' என்று (மீண்டும்) கேட்டேன். அவர்'ஆம்' என்றார். நான்'அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலுமா?' என்று கேட்டேன். அவர்'ஆம்' என்றார்.

வேறு சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

இதே ஹதீஸ் அபுத்தர்தா(ரலி) அவர்களாலும் அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனால், அது (அறிவிப்பாளர் தொடர் முறிந்த)'முர்சல்' ஆகும். அபூ தர்(ரலி) அவர்களின் அறிவிப்பே சரியானதாகும்.

அபுத்தர்தா(ரலி) அவர்களின் அறிவிப்பில்'லா இலாஹ இல்லல்லாஹ்‘ (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை) என்று கூறி இறந்தால்‘ என்று காணப்படுகிறது.

## ‘இந்த உஹுத் மலை அளவுக்கு என்னிடம் தங்கம் இருந்தாலும் அது எனக்கு மகிழ்ச்சி அளிக்காது... என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6444 அபூ தர் அல்ஃம்ஃபாரீ(ரலி) அறிவித்தார்.

நான் (இரவு நேரத்தில்) நபி(ஸல்) அவர்களுடன் மதீனாவின் (பாறைகள் நிறைந்த) ஹர்ராப் பகுதியில் நடந்து சென்று கொண்டிருந்தபோது உஹுத் மலை எங்களை எதிர்கொண்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்'அபூ தர்ரே!' என்று அழைத்தார்கள். நான்'இதோ! காத்திருக்கிறேன் கூறுங்கள் இறைத்தூதர் அவர்களே!"என்றேன். நபி(ஸல்) அவர்கள்'இந்த உஹுத் மலை அளவுக்கு என்னிடம் தங்கம் இருந்து, அதிலிருந்து ஒரேயொரு பொற்காசு என்னிடம் (எஞ்சி) இருந்தாலும் அதை அல்லாஹ்வின் அடியார்களிடையே இப்படி இப்படியெல்லாம் செலவிடாமல் மூன்று இரவுகள் கழிந்து செல்வதுகூட எனக்கு மகிழ்ச்சியளிக்காது. கடனை அடைப்பதற்காக நான் எடுத்துவைக்கும் சில பொற்காசுகளைத் தவிர!"என்று கூறி, தம் வலப் பக்கமும் இடப்பக்கமும் பின் பக்கமும் சைகை செய்தார்கள்.

பிறகு (சிறிது தூரம்) நடந்துவிட்டு'(இம்மையில் செல்வம்) அதிகம் உள்ளவர்களே மறுமை நாளில் (நற்பலன்) குறைந்தவர்கள் ஆவர் இப்படி இப்படியெல்லாம் (இறைவழியில் தம் செல்வத்தைச்) செலவிட்டவர்களைத் தவிர‘ என்று கூறி, தம் வலப் பக்கமும் இடப்பக்கமும் பின் பக்கமும் சைகை செய்தார்கள்.'(ஆனால்,) இத்தகையவர்கள் சொற்பமானவர்களே‘ என்றும் கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் என்னிடம்'நான் வரும்வரை இந்த இடத்திலேயே இருங்கள்‘ என்று கூறிவிட்டு, இரவு இருளில் நடந்து சென்று மறைந்துவிட்டார்கள். அப்போது உரத்த குரல் ஒன்றை நான் கேட்டு நபி(ஸல்) அவர்களை யாரோ ஏதோ செய்துவிட்டார்கள் என்று அஞ்சினேன். அவர்களிடம் செல்லலாம் என்று நினைத்தேன். (ஆனால்,) என்னிடம் நபி(ஸல்) அவர்கள்'நான் வரும்வரை இங்கேயே இருங்கள்‘ என்று சொன்னது என் நினைவுக்கு வந்தது. எனவே, அவர்கள் என்னிடம் வரும் வரை அங்கேயே இருந்தேன். (அவர்கள் வந்ததும்)'இறைத்தூதர் அவர்களே! ஏதோ ஒரு குரலைக் கேட்டு நான் பயந்துவிட்டேன்‘ என்று கூறி, (நான் நினைத்தது பற்றியும்) அவர்களிடம் எடுத்துச் சொன்னேன்.

அப்போது நபி(ஸல்) அவர்கள்'அதை நீங்கள் செவியுற்றீர்களா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்' என்றேன். அது (வானவர்) ஜிப்ரீல்தாம். அவர் என்னிடம் வந்து'உங்கள் சமுதாயத்தாரில் (ஏக இறைவனாம்) அல்லாஹ்வுக்கு எதனையும் இணைவைக்காமல் (வாழ்ந்து) மரணமடைகிறவர்

சொர்க்கம் புகுவார்‘‘ என்றார். நான் (ஜிப்ரீலிடம்)’அவர் விபசாரம் புரிந்தாலும் திருடினாலுமா (சொர்க்கம் புகுவார்)?’ என்று கேட்டேன். அவர்’(ஆம்) விபசாரம் புரிந்தாலும் திருடினாலும் சரியே (சொர்க்கம் புகுவார்)‘‘ என்று பதிலளித்தார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6445 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உஹுத் தலை அளவிற்கு என்னிடம் தங்கம் இருந்தாலும் அதிலிருந்து சிறிது என்னிடம் (எஞ்சி) இருக்கும் நிலையில் என் மீது மூன்று நாள்கள் கழிவதுகூட எனக்கு மகிழ்ச்சி அளிக்காது கடனை அடைப்பதற்காக நான் (அதிலிருந்து) எடுத்து வைக்கும் சிறிதளவு (தங்கத்தைத்) தவிர.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## போதுமென்ற மனமே (உண்மையான) செல்வம்.

அல்லாஹ் கூறினான்:

நாம் அவர்களுக்கு அதிகமான செல்வத்தையும் ஆண் மக்களையும் அளித்திருப்பது குறித்து (அது நன்மைக்கென) அவர்கள் எண்ணுகின்றனரா? (திருக்குர்ஆன் 23:55-63)

(திருக்குர்ஆன் 23:63 வது வசனத்தின் விளக்கவுரையில்) இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: இதுவரை அவர்கள் செய்யாத, கட்டாயம் செய்தே தீர வேண்டிய (வேறு பல தீய) செயல்களும் உள்ளன.

ஹதீஸ் 6446 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(வாழ்க்கை) வசதிகள் அதிகமாக இருப்பது செல்வமன்று மாறாகப் போதுமென்ற மனமே (உண்மையான) செல்வமாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஏழ்மையின் சிறப்பு

ஹதீஸ் 6447 ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாயிதீ(ரலி) அறிவித்தார்.

(செல்வமும் செல்வாக்கும் பெற்ற) ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கருகில் நடந்து சென்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம்மருகில் அமர்ந்திருந்த ஒருவரிடம்’இவரைப் பற்றி நீங்கள் என்ன கருகின்றீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அவர்’மக்களில் இவர் ஒரு பிரமுகராவார். அல்லாஹ்வின் மீதாணையாக! இவர் பெண் கேட்டால் இவருக்கு மணமுடித்து வைக்கவும், இவர் பரிந்துரைத்தால் அது ஏற்கப்படவும் தகுதியான மனிதர்‘‘ என்று பதிலளித்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (சற்று நேரம்) அமைதியாக இருந்தார்கள். பின்பு மற்றொரு மனிதர் (அவ்வழியாகச்) சென்றார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (முதலில் கேட்ட அதே நண்பரிடம்)’இவரைக் குறித்து நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?’ என்று கேட்டார்கள். அதற்கு அவர்’இறைத்தூதர் அவர்களே! இவர் ஏழை முஸ்லிம்களில் ஒருவராவார். இவர் பெண் கேட்டால் மணமுடித்து வைக்கப்படாமலும் இவர் பரிந்து பேசினால் ஏற்றுக் கொள்ளப்படாமலும் இவர் பேசினால் செவிதாழ்த்தப்படாமலும் இருக்கத் தகுதியானவர்‘‘ என்று பதிலளித்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்’அவரைப் போன்ற (செல்)வர்கள். இந்தப் பூமி நிரம்ப இருந்தாலும் (அவர்கள் அனைவரையும் விட) இந்த ஏழையே மேலானவர்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6448 அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(உடல் நலமில்லாதிருந்த) கப்பாப் இப்னு அரத்(ரலி) அவர்களை நாங்கள் நலம் விசாரிக்கச் சென்றோம். அப்போது அவர்கள் கூறினார்கள்.

நாங்கள் அல்லாஹ்வின் திருப்தியை நாடியவர்களாக நபி(ஸல்) அவர்களுடன் (தாயகம் துறந்து) ஹிஜ்ரத் செய்தோம். எங்களுக்கு (அதற்கான) பிரதிபலன் அளிப்பது உயர்ந்தோனான அல்லாஹ்வின் பொறுப்பாம்விட்டது. எங்களில் சிலர் தமக்குரிய பிரதிபலனில் எதையுமே (இவ்வுலகத்தில்) அனுபவிக்காமல் சென்றுவிட்டனர். அத்தகையவர்களில் ஒருவர்தாம் முஸ்அப்பின் உமைர்(ரலி) அவர்கள். அவர் உஹுதுப் போர் நாளில் கொல்லப்பட்டார். அவர் கோடு போட்ட வண்ணத் துணி ஒன்றை மட்டுமேவிட்டுச்சென்றார். (அதன் மூலம் அவருக்குக்'கஃபன்' அணிவிக்க) அவரின் தலையை நாங்கள் மறைத்தபோது அவரின் கால்கள் வெளியே தெரிந்தன. அவரின் கால்களை நாங்கள் மறைத்தபோது அவரின் தலை வெளியே தெரிந்தது. எனவே, அவரின் தலையை (அத்துணியால்) மறைத்துவிட்டு அவரின் கால்களின் மீது'இத்கிர்' புல்லையிடுமாறு நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு உத்தரவிட்டார்கள். (ஹிஜ்ரத் செய்ததற்கான இவ்வுலகப்) பலன் கனிந்து அதைப் பறித்து (சுவைத்து)க் கொண்டிருப்பவர்களும் எங்களில் உள்ளனர்.

ஹதீஸ் 6449 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (மிஅராஜ் - விண்ணுலகப் பயணத்தின் போது) சொர்க்கத்தை எட்டிப் பார்த்தேன். அங்கு குடியிருப்போரில் அதிகமானவர்களாக ஏழைகளையே கண்டேன். நரகத்தையும் எட்டிப் பார்த்தேன். அதில் குடியிருப்போரி அதிகமானவர்களாகப் பெண்களையே கண்டேன்.

என இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6450 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இறக்கும் வரை உணவு மேசையில் (அமர்ந்து) உணவருந்தியதில்லை இறக்கும் வரை மிருதுவான ரொட்டியை அவர்கள் சாப்பிட்டதில்லை.

ஹதீஸ் 6451 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

என் (வீட்டு) நிலைப் பேழையிலிருந்த சிறிது வாற்கோதுமையைத் தவிர, உயிருள்ளவர் உண்ணக்கூடிய பொருள் எதுவும் என் (வீட்டு) நிலைப்பேழையில் இல்லாத நிலையில்தான் நபி(ஸல்) அவர்கள் இறந்தார்கள். அதிலிருந்து எடுத்து நீண்ட காலம் நான் உண்டேன். பிறகு, அதை நான் அளந்தேன். அதனால் (சிறிது காலத்திற்குப் பின்) அது தீர்ந்து போய்விட்டது. 41

## நபி(ஸல்) அவர்கள் மற்றும் நபித் தோழர்களின் பிழைப்பு எவ்வாறு இருந்தது என்பது குறித்தும், அவர்கள் இவ்வுலம்(ன் இன்பங்களி)லிருந்து விலகியிருந்தது குறித்தும்.

ஹதீஸ் 6452 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

எவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லையோ அத்தகைய அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் (கடும்) பசியினால் என் வயிற்றைத் தரையில் வைத்து அழுத்திக்கொண்டு படுத்திருக்கிறேன். மேலும், (கடும்) பசியினால் வயிற்றில் நான் கல்லை வைத்துக் கட்டிக் கொண்டதுமுண்டு. ஒரு நாள் நான் நபி(ஸல்) அவர்களும் தோழர்களும் (பள்ளிவாசலுக்குச்) செல்லும் பாதையில் அமர்ந்துகொண்டேன். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்கள் (என்னைக்) கடந்து சென்றார்கள். உடனே நான் இறைவேதத்திலுள்ள ஒரு வசனத்தைப் பற்றி அவர்களிடம்

கேட்டேன். என் வயிற்றை அவர்கள் நிரப்புவார்கள் என்பதற்காகவே (அது குறித்து) அவர்களிடம் கேட்டேன். அவர்கள் கடந்து சென்றார்கள் (என் பசி நீங்க எதுவும்) அவர்கள் செய்யவில்லை. பிறகு உமர்(ரலி) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். உடனே நான் அவர்களிடமும் இறைவேதத்திலுள்ள ஒரு வசனம் குறித்துக் கேட்டேன். அவர்கள் என் வயிற்றை நிரப்புவார்கள் என்பதற்காகவே (அது குறித்து) அவர்களிடம் கேட்டேன். அவர்களும் (என் பசியைப் போக்க) ஒன்றும் செய்யாமல் போய்விட்டார்கள்.

பிறகு அபுல்காசிம் (நபி-ஸல்) அவர்கள் என்னைக் கடந்து சென்றார்கள். என்னைக் கண்டு, எனக்கு ஏற்பட்டுள்ள (பசி) நிலையையும் என் முகமாற்றத்தையும் அவர்கள் புரிந்துகொண்டு புன்னகைத்தார்கள். பிறகு,'அபூ ஹிர்ரே! (அபூ ஹுரைராவே!) என்று அழைத்தார்கள். நான்'இதோ காத்திருக்கிறேன் இறைத்தூதர் அவர்களே!"என்றேன்.'(என்னைப்) பின்தொடர்ந்து வா!"என்று சொல்லிவிட்டு நடந்தார்கள். நான் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றேன். நபி(ஸல்) அவர்கள் (தம் இல்லத்தில்) நுழைந்தார்கள். நான் (உள்ளே செல்ல) அனுமதி கோர, எனக்கு அனுமதியளித்தார்கள். நான் உள்ளே சென்றேன். அப்போது (வீட்டில்) ஒரு கோப்பையில் பாலைக் கண்டார்கள். உடனே (தம் துணைவியாரிடம்)'இந்தப் பால் எங்கிருந்து வந்தது?' என்று கேட்டார்கள். அவர்கள்'இன்ன'ஆண்' அல்லது'பெண்' தங்களுக்கு இதை அன்பளிப்பாக வழங்கியுள்ளார்'' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்'அபூ ஹுர்' என அழைத்தார்கள். நான்'இதோ வந்துவிட்டேன் இறைத்தூதர் அவர்களே!"என்றேன்.'திண்ணைவாசிகளிடம் சென்று என்னிடம் அவர்களை அழைத்துவாருங்கள்'' என்றார்கள்.

திண்ணைவாசிகள் (அஸ்ஹாபுஸ் ஸுஃப்பா) இஸ்லாத்தின் விருந்தினர்கள் ஆவர். அவர்கள் புகலிடம் தேட அவர்களுக்குக் குடும்பமோ செல்வமோ கிடையாது. வேறு யாரிடமும் செல்லவுமாட்டார்கள். நபி(ஸல்) அவர்களிடம் ஏதேனும் தானப்பொருள்கள் வந்தால் அதனை இவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் அனுப்பிவிடுவார்கள். அதிலிருந்து தாம் எதையும் எடுத்துக் கொள்ளமாட்டார்கள். தம்மிடம் ஏதேனும் அன்பளிப்புப் பொருள்கள் வந்தால் இவர்களைத் தம்மிடம் அழைத்துவரும்படி ஆளனுப்பிவிடுவார்கள். (அவர்கள் வந்தவுடன்) அவர்களுடன் சேர்ந்து தாமும் உண்பார்கள்.

இப்போது நபி(ஸல்) அவர்கள் (திண்ணைவாசிகளை அழைத்துவரச்) சொன்னதால் எனக்குக் கவலைதான் ஏற்பட்டது.'(இருப்பதோ சிறிதளவு பால்.) திண்ணைவாசிகளுக்கு இந்தப் பால் எம்மாத்திரம்? இதைச் சிறிதளவு பரும் என்னை ஆசுவாசப்படுத்திக் கொள்வதற்கு நானே பொருத்தமானவன். திண்னை வாசிகள் வந்தால், நபியவர்கள் எனக்கு உத்தரவிட, நானே அவர்களுக்குக் கொடுத்துவிட்டு (இறுதியில்) எனக்கு இந்தப் பாலில் ஒன்றும் கிடைக்காமல் போகலாம். இருப்பினும், அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியாமல் இருக்க இயலாது'' என (மனத்துக்குள்) சொல்லிக் கொண்டேன்.

பிறகு, நான் திண்ணைவாசிகளிடம் சென்று அவர்களை அழைத்தேன். அவர்களும் (அழைப்பை ஏற்று) வந்து (வீட்டுக்குள் நுழைய) அனுமதி கோரினார்கள். நபி(ஸல்) அவர்கள் திண்ணைவாசிகளுக்கு அனுமதி வழங்கினார்கள். அவர்கள் அந்த வீட்டில் ஆங்காங்கே இடம்பிடித்து அமரலானார்கள். நபி(ஸல்) அவர்கள்'அபூ ஹிர்' என அழைத்தார்கள். நான்'இதோ காத்திருக்கிறேன் கூறுங்கள் இறைத்தூதர் அவர்களே!"என்றேன். நபி(ஸல்) அவர்கள்'இதை எடுத்து இவர்களுக்குக் கொடுங்கள்'' என்றார்கள். நான் அந்தக் கோப்பையை எடுத்து ஒரு மனிதருக்குக் கொடுத்தேன். அவர் தாகம் தணியும் வரை குடித்தார். பிறகு அவர் என்னிடம்

அந்தக் கோப்பையைத் திருப்பித் தந்தார். நான் அதை இன்னொரு மனிதரிடம் கொடுத்தேன். அவரும் தாகம் தீரும் வரை குடித்துவிட்டுக் கோப்பையை என்னிடம் தந்தார். பிறகு இன்னொருவர் தாகம் தீரும் வரை குடித்தார். பிறகு என்னிடம் அதைத் திருப்பித் தந்தார். இறுதியில் நான் நபி(ஸல்) அவர்களிடம் அதைக் கொண்டு சென்றேன். அப்போது மக்கள் அனைவரும் தாகம் தணிந்திருந்தினர். நபி(ஸல்) அவர்கள் அந்தக் கோப்பையை வாங்கித் தம் கையில் வைத்துக்கொண்டு என்னைக் கூர்ந்துப் பார்த்துப் புன்னகைத்தார்கள். பிறகு'அபூ ஹிர்!' என்று அழைத்தார்கள். நான்'இதோ காத்திருக்கிறேன் கூறுங்கள் இறைத்தூதர் அவர்களே!"என்று சொன்னேன். அதற்கவர்கள்'நானும் நீங்களும் (மட்டும் தான்) எஞ்சியுள்ளோம் (அப்படித்தானே?)'' என்று கேட்டார்கள். நான்'இறைத்தூதர் அவர்களே! (ஆம்.) உண்மைதான்'' என்றேன். நபி(ஸல்) அவர்கள்'உட்கார்ந்து (இதைப் பருகுங்கள்'' என்றார்கள். நான் உட்கார்ந்து பரும்னேன்.'இன்னும் பருகுங்கள்'' என்றார்கள். பரும்னேன். இவ்வாறு அவர்கள்'பருகுங்கள்' என்று சொல்லிக்கொண்டேயிருக்க, நான் பரும்க்கொண்டேயிருந்தேன். இறுதியில்'இல்லை சத்திய (மார்க்க)த்தைக் கொண்டு தங்களை அனுப்பிவைத்த (இறை)வன் மீது ஆணையாக! இனிப் பருகுவதற்கு வழியே இல்லை'' என்றேன். நபி(ஸல்) அவர்கள்'(சரி) அதை எனக்குக் காட்டுங்கள்'' என்றார்கள். எனவே, நான் அவர்களிடம் அந்தக் கோப்பைக் கொடுத்தேன். உடனே அவர்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து அவனுடைய (திருப்)பெயர் கூறி எஞ்சியதைப் பருகினார்கள்.

ஹதீஸ் 6453. ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

இறைவழியில் அம்பெய்த அரபுகளில் நானே முதல் ஆள் ஆவேன். எங்களுக்குக் கருவேல மரத்தின் இலைகளையும் இந்த நாணற்புல்லையும் தவிர உணவு எதுவும் இல்லாதிருக்கும் நிலையில் புனிதப் போரில் நாங்கள் ஈடுபட்ட (காலத்)தைக் கண்கூடாகக் கண்டுள்ளேன். நாங்கள் ஆடுகள் கெட்டிச் சாணம் இடுவதைப் போல் ஒன்றோடொன்று ஒட்டாமல் மலம் கழித்துவந்தோம். பிறகு (கூஃபாவாசிகளான) பனு அசத் குலத்தார் (நான் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்று என்னுடைய) பனு அசத் குலத்தார் (நான் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்னைக் குறை கூறலானார்கள். அப்படியானால் நான் (இதுவரை) செய்துவந்த வழிபாடு வீணாம் நான் இழப்புக்குள்ளாகிவிட்டேன் (போலும் என வருந்தினேன்).

ஹதீஸ் 6454. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

முஹம்மத்(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்ததிலிருந்து அவர்கள் இறக்கும் வரை அவர்களின் குடும்பத்தார் கோதுமை உணவைத் தொடர்ந்து மூன்று நாள்கள் வயிறு நிரம்ப உண்டதில்லை.

ஹதீஸ் 6455. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

முஹம்மத்(ஸல்) அவர்களின் குடும்பத்தார் ஒரு நாளில் இரண்டு முறை உணவு உண்டால் அதில் ஒன்று (வெறும்) பேரீச்சம் பழமாகவே இருக்கும்.

ஹதீஸ் 6456. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

பேரீச்சம் நாறினால் நிரப்பப்பட்ட பதனிடப்பட்ட தோலே இறைத்தூதர்(ஸல்) அவர்களின் படுக்கை விரிப்பாக இருந்தது.

ஹதீஸ் 6457. கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் சென்று வருவோம். (அவர்களுடன் அவர்களுக்காக ரொட்டி தயாரிப்பவர் ஒருவரும் இருப்பார். (ஒரு நாள்) அனஸ்(ரலி) அவர்கள்'சாப்பிடுங்கள் (ஆனால்) நான் அறிந்த மட்டில் நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை மிருதுவான ரொட்டியை அவர்கள் பார்த்ததில்லை. வெந்நீரால் முடி களையப்பட்டு தோலுடன் சமைக்கப்பட்ட ஆட்டை அவர்கள் தங்களின் கண்ணாலும் ஒருபோதும் கண்டதில்லை" என்றார்கள்.

ஹதீஸ் 6458. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் குடும்பத்தாரகிய) நாங்கள் (சமைப்பதற்காக அடுப்பில்) நெருப்பு பற்றவைக்காமலேயே ஒரு மாதகாலம் கூட எங்களுக்குக் கழிந்திருக்கிறது. அப்போதெல்லாம் (வெறும்) பேரீச்சம் பழமும் நீரும்தான் (எங்கள் உணவாகும்) (எப்போதாவது) சிறிது இறைச்சி எங்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டால் தவிர.

ஹதீஸ் 6459. உர்வா இப்னு ஸுபைர்(ரலி) அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்கள் என்னிடம்'நான் சகோதரி (அஸ்மாவின்) மகனே! நாங்கள் பிறை பார்ப்போம். இரண்டு மாதங்களில் (ஆனால்,) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (துணைவியர்) இல்லங்களில் (சமைப்பதற்காக அடுப்பில்) நெருப்பு பற்றவைப்பதற்காக அடுப்பில்) நெருப்பு பற்றவைக்கப்பட்டிராது" என்று கூறினார்கள். அதற்கு நான்'(அப்படியானால்) நீங்கள் எப்படி வாழ்க்கை நடத்தினீர்கள்?' என்று கேட்டேன். (அதற்கு) அவர்கள் கறுப்புப் பொருட்களான பேரீச்சம் பழமும் நீரும்தான் (அப்போது எங்கள் உணவு) இருப்பினும், அன்சாரிகளில் சிலர் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அண்டைவீட்டாராக, இருந்தனர். அவர்களிடம் (இலவசமாகப் பால் கறந்து கொள்வதற்கான) இரவல் ஒட்டகங்கள் இருந்தன. (அவற்றிலிருந்து பால் கறந்து) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தம் இல்லங்களிலிருந்து அவர்கள் கொடுத்தனுப்புவார்கள். அந்தப் பாலை நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு அருந்தக் கொடுப்பார்கள்.

ஹதீஸ் 6460. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

"அல்லாஹ்வே! முஹம்மதின் குடும்பத்தாருக்கு(ப் பசிக்கு) உணவு வழங்குவாயாக!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள்.

## நற்செயல்கள் புரிவதில் நடுநிலைப் போக்கும் நீடித்த நிலையும் (விரும்பத்தக்கவை ஆகும்.)

ஹதீஸ் 6461. மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அறிவித்தார்.

"நபி(ஸல்) அவர்களுக்கு மிகவும் விருப்பமான செயலாக இருந்தது எது?' என்று ஆயிஷா(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கவர்கள்'நிரந்தரமாய்ச் செய்யப்படும் செயல்" என்று விடையளித்தார்கள். '(இரவில்) நபி(ஸல்) அவர்கள் (தொழுகைக்காக) எப்போது எழுவார்கள்?' என்று கேட்டேன். அவர்கள்'சேவல் கூவும்போது (நடுநிசி நேரம்) எழு(ந்து தொழுவார்கள்) என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 6462. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நிரந்தரமாக(த் தொடர்ந்து) செய்யும் நற்செயலே இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மிகவும் விருப்பமான செயலாக இருந்தது.

ஹதீஸ் 6463. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ‘உங்களில் யாரையும் அவரின் நற்செயல் ஒருபோதும் காப்பாற்றாது. (மாறாக, அல்லாஹ்வின் தனிப் பெரும் கருணையாலேயே எவரும் காப்பாற்றப்படுவார்)‘‘ என்று கூறினார்கள். மக்கள்’அல்லாஹ்வின் தூதரே! தங்களையுமா (தங்களின் நற்செயல் காப்பாற்றாது?)‘‘ என்று வினவினார்கள். நபி(ஸல்) அவர்கள்’(ஆம்) என்னையும்தான் அரவணைத்துக் கொண்டால் தவிர‘‘ என்று கூறிவிட்டு, ‘(எனவே, நேர்மையோடு (நடுநிலையாகச்) செயல்படுங்கள். நிதானமாக நடந்து கொள்ளுங்கள். (வரம்பு மீறிவிடாதீர்கள்.) காலையிலும், மாலையிலும், இரவில் சிறிது நேரமும் நற்செயல் புரியுங்கள். (எதிலும்) நடுநிலை (தவறாதீர்கள்) நடுநிலை(யைக் கடைபிடியுங்கள்.) (இவ்வாறு செய்தால் இலட்சியத்தை) நீங்கள் அடைவீர்கள்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6464. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நேர்மையோடு (நடுநிலையாகச்) செயல்படுங்கள். நிதானமாகச் செயல்படுங்கள். (வரம்பு மீறிவிடாதீர்கள்) அறிந்து கொள்ளுங்கள். உங்களில் யாரையும் அவரின் நற்செயல் சொர்க்கத்தில் ஒருபோதும் நுழைவிக்காது. (மாறாக, அல்லாஹ்வின் தனிப்பெரும் கருணையாலேயே எவரும் சொர்க்கம் புகமுடியும். நற்செயல்களில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானது. (எண்ணிக்கையில்) மிகவும் குறைவாக இருந்தாலும், (தொடர்ந்து செய்யப்படும்) நிலையான நற்செயலே ஆகும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6465. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

“நற்செயல்களில் அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமானது எது?’ என்று நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கு அவர்கள்’(எண்ணிக்கையில்) குறைவாக இருந்தாலும், (தொடர்ந்து செய்யப்படும்) நிலையான நற்செயலே‘‘ என்று விடையளித்தார்கள். மேலும், ‘நற்செயல்கள் புரிவதில் இயன்றவரை அதன் எல்லையைத் தொடமுயலுங்கள்‘‘ என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 6466. அல்கமா இப்னு கைஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா(ரலி) அவர்களிடம்’நபி(ஸல்) அவர்களின் வழிபாடு எவ்வாறிருந்தது? (வழிபாட்டுக்காக என்று ) குறிப்பிட்ட நாள்கள் எதையும் ஒதுக்கிக் கொண்டிருந்தார்களா? என்று கேட்டேன். அதற்கு அவர்கள்’இல்லை. அவர்களின் (எந்த வணக்க வழிபாடு)ம் நிரந்தரமானதாகவே இருந்தது‘‘ என்று கூறிவிட்டு, ‘நபி(ஸல்) அவர்களால் செய்ய முடிந்ததைப் போன்று உங்களில் எவரால் செய்ய முடியும்?’ என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6467. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்’வணக்க வழிபாடுகளிலும் நற்செயல்கள் புரிவதிலும்) நேர்மையோடு (நடுநிலையாகச்) செயல்படுங்கள். நிதானமாக நடந்து கொள்ளுங்கள். (வரம்பு மீறாதீர்கள். நற்செயல் சிறிதே ஆயினும் அதற்குரிய பிரதிபலன் இறைவனிடம் கிடைக்கும் என்ற) நற்செயல் சொர்க்கத்தில் நுழைவித்துவிடாது‘‘ என்று கூறினார்கள். மக்கள்’தங்களையுமா? இறைத்தூதர் அவர்களே!”என்று வினவினார்கள். என்னையும் தான் அல்லாஹ் மன்னிப்பாலும் கருணையாலும் என்னை அரவணைத்துக் கொண்டால் தவிர,‘‘ என்றார்கள்.

ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து வந்துள்ள மற்றோர் அறிவிப்பில்’நேர்மையோடு செயல்படுங்கள் நற்செய்தி பெறுங்கள்‘‘ என்று இடம் பெற்றுள்ளது.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

நேர்மை அல்லது நடுநிலை என்பதற்கு'வாய்மை' என்று இங்கு பொருளாகும். இதை (அரபியில்)'சதீத்' மற்றும்'சதாத்' என்பர்.

ஹதீஸ் 6468. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு நாள் எங்களுக்கு (லுஹர்) தொழுகையை தொழ வைத்துவிட்டுப் பிறகு சொற்பொழிவு மேடையில் (மிம்பரில்) ஏறி கிப்லாத் திசையில் தம் கையால் சைகை செய்தவாறு கூறினார்கள்:

நான் உங்களுக்குத் தொழுகை நடத்திக் கொண்டிருந்தபோது இந்த முன் சுவற்றில் சொர்க்கம் மற்றும் நரகத்தின் காட்சி எனக்குக் காட்டப்பட்டது. நன்மை தீமை(களின் விளைவு)களை இன்று கண்டதைப் போன்று என்றும் நான் கண்டதில்லை. நன்மை தீமைகளின் விளைவுகளை இன்று கண்டதைப் போன்று என்றுமே நான் கண்டதில்லை (என்று பல முறை கூறினார்கள்.)

## (இறைவன் வழங்கும் தண்டனை குறித்து) அச்சம் கொள்ளும் அதே நேரத்தில் (அவனுடைய அருள் மீது) நம்பிக்கையும் வைத்தல்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

வேதக்காரர்களே! நீங்கள் தவ்ராத், இன்ஜீல் மற்றும் உங்களுடைய இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பெற்ற (குர்ஆன் உள்ளிட்ட இதர வேதங்கள் ஆகிய)வற்றை முழுமையாகச் செயல்படுத்தாத வரை நீங்கள் எந்த அடிப்படையிலும் இல்லை என (நபியே!) கூறிவிடுக'' எனும் (திருக்குர்ஆன் 05: 68 வது) வசனத்தை விட எனக்குக் கடுமையானது குர்ஆனில் வேறெதுவுமில்லை.

ஹதீஸ் 6469. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் அன்பையும் கருணையையும் படைத்தபோது அதனை நூறு வகைகளாக அமைத்தான். அவற்றில் தொண்ணூற்று ஒன்பது வகைகளைத் தன்னிடமே வைத்துக் கொண்டான். (மீதியுள்ள) ஒரு வகையை மட்டுமே தன் படைப்புகள் அனைத்துக்கும் வழங்கினான். எனவே, இறைமறுப்பாளன் அல்லாஹ்வின் கருணை முழுவதையும் அறிந்தால், சொர்க்கத்தின் மீது அவநம்பிக்கை கொள்ளமாட்டான். (இதைப்போன்றே) இறைநம்பிக்கையாளர் அல்லாஹ் வழங்கும் வேதனை முழுவதையும் அறிந்தால் நரகத்தைப் பற்றிய அச்சமில்லாமல் இருக்க மாட்டார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வால் தடைசெய்யப்பட்டவை விஷயத்தில் மேற்கொள்ள வேண்டிய மனக்கட்டுபாடு.

அல்லாஹ் கூறினான்:

(நபியே! கூறுக) பொறுமைசாலிகளுக்கு, அவர்களின் பிரதிபலன் கணக்கின்றி நிறைவாக வழங்கப்படும்.

உமர்(ரலி) கூறினார். நாங்கள் பொறுமையின் காரணத்தாலேயே சிறந்த வாழ்க்கையைக் கண்டோம்.

ஹதீஸ் 6470. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் சிலர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (பசிக்கு உணவும் செலவுக்குப் பணமும்) கேட்டார்கள். அவ்வாறு கேட்ட யாருக்குமே நபி(ஸல்) அவர்கள் கொடுக்காமல் இருக்கவில்லை.

இறுதியாக, நபியவர்களிடம் இருந்த அனைத்தும் தீர்ந்துவிட்டது. தம் கரங்களால் செலவிட்டு எல்லாப் பொருட்களும் தீர்ந்து போன பின்பு அந்த அன்சாரிகளிடம் நபி(ஸல்) அவர்கள்'என்னிடம் உள்ள எச்செல்வத்தையும் உங்களுக்கு வழங்காமல் நான் சேமித்து வைக்கப் போவதில்லை. (இருப்பினும்) சுயமரியாதையோடு நடப்பவரை அல்லாஹ் சுயமரியாதையுடன் வாழச் செய்வான். (இன்னல்களைச்) சம்ப்பவருக்கு அல்லாஹ் மேலும் சம்ப்புத் தன்மையை வழங்குவான். பிறரிடம் தேவையாகாமல் (தன்னிறைவுடன்) இருப்பவரை அல்லாஹ் தன்னிறைவு உள்ளவராக ஆக்குவான். பொறுமையைக் காட்டிலும் மேலான விசாலமானதோர் அருட்கொடை (வேறெதும்) உங்களுக்கு வழங்கப்படவில்லை'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6471. முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தம் பாதங்கள் வீங்கும் அளவுக்கு அல்லது புடைக்கும் அளவுக்கு நின்று தொழுவார்கள். இது பற்றி அவர்களிடம் கேட்கப்படும்போது'நான் நன்றியுள்ள அடியானாக இருக்க வேண்டாமா?' என்று கேட்பார்கள்.

"அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கை கொண்டிருக்கிறவருக்கு அல்லாஹ்வே போதுமானவன்" (எனும் 65:3 வது இறைவசனம்.)

அதாவது மனிதர்களுக்கு ஏற்படும் எல்லா நெருக்கடியான நிலைகளிலும் அல்லாஹ்வே போதுமானவன் என ரபீஉ இப்னு குஸைம்(ரஹ்) அவர்கள் (விளக்கம்) கூறினார்கள்.

ஹதீஸ் 6472. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் விசாரணை ஏதுமின்றி சொர்க்கம் செல்வார்கள். அவர்கள் யாரெனில், ஓதிப்பார்க்க மாட்டார்கள். பறவை சகுனம் பார்க்கமாட்டார்கள். தம் இறைவ(ன் மீது முழு நம்பிக்கை கொண்டு அவ)னையே சார்ந்திருப்பார்கள்.

(இவ்வாறு) சொல்லப்பட்டது. (இவ்வாறு) அவர் சொன்னார் என்றெல்லாம் (ஊர்ஜிதமாகாத தகவல்களைக்) கூறுவது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 6473. முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களின் எழுத்தரான வர்ராத்(ரஹ்) கூறினார்:

முஆவியா(ரலி) அவர்கள் முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களுக்கு (ஒரு கடிதம்) எழுதியிருந்தார்கள். அதில்,'இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து தாங்கள் செவியேற்ற ஹதீஸ் ஒன்றை எனக்கு எழுதியனுப்புங்கள்'' என்று குறிப்பிட்டிருந்தார்கள். அப்போது முஃகீரா(ரலி) அவர்கள் (பின்வருமாறு) எழுதினார்கள்:

நபி(ஸல்) அவர்கள் தொழுது முடித்தவுடன், வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு நிகரானோர் எவருமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது எல்லாப் புகழும் அவனுக்கே சொந்தம். அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் உள்ளவன்'' என்று கூறுவார்கள்.

மேலும், நபி(ஸல்) அவர்கள்,'இவ்வாறு சொல்லப்பட்டது (இவ்வாறு அவர் சொன்னார் என்று (ஊர்ஜிதமில்லாதவற்றை, அல்லது தேவைக்கதிகமாகப் பேசுவது, அதிகமாக கேள்வி, அல்லது யாசகம் கேட்பது, செல்வத்தை வீணாக்குவது, (அடுத்தவருக்குத் தரவேண்டியதைத்) தரமறுப்பது, (அடுத்தவருக்கு உரியதைத்) தருமாறு கோருவது, அன்னையரைப் புண்படுத்துவது, பெண் சிசுக்களை உயிருடன் புதைப்பது ஆகியவற்றுக்குத் தடை விதித்துவந்தார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## நாவைப் பேணிக் காத்தல்.

( இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்)

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும். அல்லாஹ் கூறினான்:

மனிதன் எச்சொல்லை மொழிந்தாலும் அதைக் கண்காணித்துப் பதிவு செய்யக்கூடிய(வான)வர் அதனுடன் இல்லாமலிருப்பதில்லை.

ஹதீஸ் 6474. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தம் இரண்டு தாடைகளுக்கு இடையே உள்ளத(ான நாவி)ற்கும், தம் இரண்டு கால்களுக்கு இடையே உள்ளத(ான மர்ம உறுப்பி)ற்கும் என்னிடம் உத்தரவாதம் அளிப்பவருககு நான் சொர்க்கத்திற்கு உத்தரவாதம் அளிக்கிறேன்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6475. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும் அல்லது வாய் மூடி இருக்கட்டும் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் அண்டை வீட்டாருக்குத் தொல்லை தர வேண்டாம். அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தாளியைக் கண்ணியப்படுத்தட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6476. அபூ ஷுரைஹ் அல்அதவீ அல்குஸாஈ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறியதை என் காதுகள் செவியேற்றன் என் உள்ளம் அதை மனனமிட்டது. விருந்துபசாரம் மூன்று நாள்களாகும். (அவற்றில்)'அவரின் கொடையும் அடங்கும் அப்போது அவரின் கொடை என்ன?' என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,'(அவரின் கொடை) ஒரு பகல் ஓர் இரவு (உபசரிப்பு) ஆகும்'' என்று கூறிவிட்டு,'அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டவர் தம் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும். மேலும், அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும் அல்லது வாய்மூடி இருக்கட்டும்'' என்றார்கள்.

ஹதீஸ் 6477. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடியார் பின்விளைவைப் பற்றி யோசிக்காமல் ஒன்றைப் பேசிவிடுகிறார். அதன் காரணமாக அவர் (இரு) கிழக்குத் திசைகளுக்கிடையே உள்ள தொலைவைவிட அதிகமான தூரத்தில் நரகத்தில் விழுகிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6478. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடியார் அல்லாஹ்வின் திருப்திக்குரிய ஒரு வார்த்தையை சர்வசாதாரணமாக (அதன் பலனைப் பற்றிப் பெரிதாக யோசிக்காமல்) பேசுகிறார். அதன் காரணமாக அல்லாஹ் அவரின் அந்தஸ்துகளை உயர்த்திவிடுகிறான். ஓர் அடியார் அல்லாஹ்வின் கோபத்துக்குரிய ஒரு வார்த்தையை சர்வசாதாரணமாக (அதன் பின்விளைவைப் பற்றி யோசிக்காமல்) பேசுகிறார். அதன் காரணமாக அவர் நரகத்தில் போய் விழுகிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வைப் பற்றிய அச்சத்தால் அழுவது.

ஹதீஸ் 6479. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தன்னுடைய நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத மறுமை நாளில்) ஏழு போருக்கு அல்லாஹ் தன்னுடைய (அரியாசத்தின்) நிழலில் அடைக்கலம் அளிக்கிறான். (தனிமையில்) அல்லாஹ்வை நினைவு கூர்ந்து (அவனுடைய அச்சத்தால்) கண்ணீர் வடிப்பவர் (அவர்களில் ஒருவராவார்.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வுக்கு அஞ்சுவது:

ஹதீஸ் 6480. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன்னால் வாழ்ந்த (பனு இஸ்ராயீல் மக்களில்) ஒருவர் தம் செய்து வந்த (குற்றச்) செயல் குறித்து அஞ்சியவராக இறந்துவிட்டால் என்னை(க் கரித்துச் சாம்பலை) எடுத்து சூறாவளிக் காற்று வீசும் காலத்தில் கடலில் தூவிவிடுங்கள்'' என்று கூறினார். (அவர் இறந்தவுடன்) அவரை அவ்வாறே அவரின் வீட்டாரும் செய்தனர். அல்லாஹ் (காற்றோடு கலந்துவிட்ட) அவரின் உடலை ஒன்று திரட்டிய பின்'நீ இவ்வாறு செய்யததற்குக் காரணம் என்ன?' என்று கேட்டான். அவர்'உன்னைப் பற்றிய அச்சமே என்னை இவ்வாறு செய்யத் தூண்டியது'' என்று பதிலளித்தார். எனவே, அல்லாஹ் அவரை மன்னித்துவிட்டான்.

என ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6481. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்'முன் சென்ற' அல்லது'உங்களுக்கு முன் வாழ்ந்த' ஒரு மனிதரைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அல்லாஹ் அவருக்குச் செல்வத்தையும் குழந்தைகளையும் வழங்கியிருந்தான். அவருக்கு இறப்பு நெருங்கியபோது அவர் தம் மக்களிடம்'உங்களுக்கு நான் எப்படிப்பட்ட தந்தையாக இருந்தேன்?' என்று கேட்டார். அவர்கள்'சிறந்த தந்தையாக இருந்தீர்கள்'' என்று பதில் கூறினர். அவர் தமக்காக அல்லாஹ்விடம் எந்த நன்மையும் சேமித்திருக்கவில்லை. அல்லாஹ்வின் முன்னிலையில் தாம் சென்றால் தம்மை அவன் வேதனை செய்துவிடுவான் என அவர் அஞ்சினார். எனவே, (அவர் தம் மக்களிடம்'நன்றாகக் கவனியுங்கள். நான் இறந்துவிட்டால் என்னைப் பொசுக்கிவிடுங்கள். நான் (வெந்து) கரியாக மாறிவிட்டால் என்னைப்'பொடிப் பொடியாக்கிவிடுங்கள்'. அல்லது'துகள் துகளாக்கிவிடுங்கள்'. பிறகு சூறாவளிக் காற்று வீசும் நாளில் காற்றில் என்னைத் தூவிவிடுங்கள்'' என்று கூறிதாம் கூறியபடி செய்ய வேண்டுமென அவர்களிடம் அவர் உறுதிமொழியும் வாங்கினார்.

என் இறைவன் மீதானையாக அவ்வாறே அவர்களும் செய்தனர். அப்போது அல்லாஹ்'(பழையபடி முழு மனிதனாக) ஆகிவிடு!"என்று கூறினான். உடனே (அந்த) மனிதர் (உயிர்பெற்று) எழுந்தார். (அவரிடம்) அல்லாஹ்'என் அடியானே! இவ்வாறு நீ செய்யக் காரணமென்ன?' என்று கேட்டான். அந்த மனிதர் உன்னைக் குறித்த அச்சமே என்னை இவ்வாறு செய்யத் தூண்டியது'' என்று பதிலளித்தார். (இறுதியில்) அவர் அடைந்தது இறையருளைத்தான்.

அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்:

நான் அபூ உஸ்மான்(ரஹ்) அவர்களிடம் இதை அறிவித்தேன். அப்போது அவர்கள்'சல்மான் ஃபார்சி(ரலி) அவர்கள் இதைப் போன்றே கூற கேட்டேன். ஆனால் (காற்றில்) என்னைத் தூவிவிடுங்கள் எனுமிடத்தில்)'கடலில் என்னைத் தூவிவிடுங்கள்' என்றோ, வேறுவிதமாகவோ கூடுதலாக அறிவித்தார்கள்" என்று கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## பாவங்களை விட்டொழிதல்.

ஹதீஸ் 6482. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்கும் என்னை அல்லாஹ் எ(ந்த மார்க்கத்)தைக் கொண்டு அனுப்பியுள்ளானோ அதற்கும் எடுத்துக்காட்டாகிறது. ஒரு மனிதரின் நிலையைப் போன்றதாகும். அவர் ஒரு சமூகத்தாரிடம் சென்று'நான் (இன்ன பெரும்) படையை என் கண்களால் பார்த்தேன். (எந்நேரமும் அப்படை உங்களைத் தாக்கலாம். அதை எதிர்கொள்ளும் ஆற்றல் உங்களிடம் இல்லை.) நான்,'நிர்வாணமாக (ஓடி வந்து) எச்சரிக்கை செய்ப(வனைப்) போன்றவன் ஆவேன். எனவே, (ஓடுங்கள்) தப்பித்துக் கொள்ளுங்கள். தப்பித்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார். அப்போது ஒரு பிரிவினர் அவருக்குக் கீழ்ப்படிந்து இரவோடு இரவாக மெல்ல வெளியேறித் தப்பிவிட்டனர். ஆனால், இன்னொரு பிரிவினர் அவரை நம்பமறுத்தனர். பிறகு அதிகாலையில் அப்படையினர் வந்து அவர்களைத் தாக்கிப் பூண்டோடு அழித்தனர்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6483. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய நிலையும் மக்களின் நிலையும் ஒரு மனிதரின் நிலைக்கு ஒத்திருக்கிறது. அவர் தீ மூட்டினார். அவரைச் சுற்றிலும் அது ஒளிவீசியபோது விட்டில் பூச்சிகளும் நெருப்பில் விழும் இதரப் பூச்சிகளும் அந்தத் தீயில் விழலாயின. அந்த மனிதரோ அவற்றை (தீயில் விழாமல்) தடுத்துக் கொண்டிருந்தார். (ஆனால்,) அவை அவரையும் மீறி தீயில் விழுகின்றன. (இவ்வாறுதான்) நரகத்(தில் விழுவதிலிருந்து (உங்களைத்) தடுக்க உங்கள் இடுப்புகளை நான் பிடித்துக் கொண்டிருக்கிறேன். (ஆனால்,) நீங்களோ (என்னையும் மீறி) நரகத்தில் நுழைந்து கொண்டிருக்கிறீர்கள்."

ஹதீஸ் 6484. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவருடைய நாவு மற்றும் கையி(ன் தொல்லைகளி)லிருந்து பிற முஸ்லிம்கள் (உண்மையான) முஸ்லிம் ஆவார். அல்லாஹ் தடுத்தவற்றிலிருந்து விலகியவரே (உண்மையான) முஹாஜிர் (துறந்தவர்) ஆவார்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## "நான் அறிவதை நீங்கள் அறிவீர்காளயின் நிச்சயம் குறைவாகச் சிரிப்பிர்கள். அதிகமாக அழுவீர்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6485. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் அறிவதை நீங்கள் அறிவீர்களாயின் நிச்சயம் குறைவாகச் சிரிப்பீர்கள். அதிகமாக அழுவீர்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6486. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் அறிவதை நீங்கள் அறிவீர்களாயின் நிச்சயம் குறைவாகச் சிரிப்பீர்கள் அதிகமாக அழுவீர்கள்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

## மன இச்சைகளால் நரகம் மூடப்பட்டுள்ளது.

ஹதீஸ் 6487. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மன இச்சைகளால் நரகம் மூடப்பட்டுள்ளது. சிரமங்களால் சொர்க்கம் மூடப்பட்டுள்ளது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சொர்க்கம் உங்களின் செருப்பு வாரைவிட மிக அருகில் உள்ளது. நரகமும் அதைப்போன்றுதான்.

ஹதீஸ் 6488. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கம் உங்களின் செருப்பு வாரைவிட உங்களுக்கு மிக அருகில் உள்ளது. நரகமும் அதைபோன்றே (மிக அருகில் உள்ளது.)

என அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6489. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

“அறிக! அல்லாஹ்வைத் தவிர உள்ள பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியவையே‘‘ எனும் பாடல்தான் கவிஞர்கள் சொன்ன வரிகளிலேயே மிக உண்மையானதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (செல்வத்தில்) தன்னைவிடக் கீழ் நிலையில் இருப்பவரை (மனிதன்) பார்க்கட்டும் தன்னை விட மேல் நிலையில் இருப்பவரைப் பார்க்க வேண்டாம்.

ஹதீஸ் 6490. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

செல்வத்திலும் தோற்றத்திலும் தம்மை விட மேலான ஒருவரை உங்களில் கண்டால், உடனே (அவற்றில்) தம்மைவிடக் கீழனாவர்களை அவர் (நினைத்துப்) பார்க்கட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## நன்மை அல்லது தீமை செய்ய எண்ணுவது.

ஹதீஸ் 6491. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் தம் இறைவனைப் பற்றி அறிவிக்கையில் (பின்வருமாறு) கூறினார்கள்:

அல்லாஹ் நன்மைகளையும் தீமைகளையும் (அவை இன்னின்னவை என நிர்ணயித்து) எழுதிவிட்டான். பிறகு அதனை விவரித்தான். அதாவது ஒருவர் ஒரு நன்மை செய்யவேண்டும் என (மனத்தில்) எண்ணிவிட்டாலே அதைச் செயல்படுத்தாவிட்டாலும் அவருக்காகத் தன்னிடம் அதை ஒரு முழு நன்மையாக அல்லாஹ் பதிவு செய்கிறான். அதை அவர் எண்ணியதுடன் செயல்படுத்தியும்விட்டால், அந்த ஒரு நன்மையைத் தன்னிடம் பத்து நன்மைகளாக, எழு நூறு மடங்காக, இன்னும் அதிகமாக அல்லாஹ் பதிவு செய்கிறான். ஆனால் ஒருவர் ஒரு தீமை செய்ய எண்ணி, (அல்லாஹ்வுக்கு அஞ்சி) அதைச் செய்யாமல் கைவிட்டால், அதற்காக

அவருக்குத் தன்னிடம் ஒரு முழு நன்மையை அல்லாஹ் எழுதுகிறான். எண்ணியபடி அந்தத் தீமையை அவர் செய்து முடித்துவிட்டாலோ, அதற்காக ஒரேயொரு குற்றத்தையே அல்லாஹ் எழுதுகிறான்.

## மலிவான பாவங்களையும் தவிர்த்தல்

ஹதீஸ் 6492. அனஸ்(ரலி) அறிவித்தார். நீங்கள் சில (பாவச்) செயல்களைப் புரிகிறீர்கள். அவை உங்கள் பார்வையில் முடியைவிட மிக மெலிதாகத் தோன்றுகின்றன. (ஆனால்,) அவற்றை நாங்கள் நபி(ஸல்) அவர்களின் காலத்தில்'மூபிகாத்' என்றே கருதிவந்தோம்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்.

'மூபிகாத்' என்றால்'பேரழிவை ஏற்படுத்துபவை' என்று பொருள்.

## முடிவுகளைப் பொறுத்தே செயல்கள் தீர்மானிக்கப்படுவதும் முடிவுகள் குறித்து அஞ்சுவதும்.

ஹதீஸ் 6493. ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

(கைபர் போரின் போது) நபி(ஸல்) அவர்கள் (யூத) இணைவைப்பாளர்களிடம் போரிட்டுக் கொண்டிருந்த (குஸ்மான் என்றழைக்கப்பட்ட) ஒரு மனிதரைப் பார்த்தார்கள். அவர் எதிரிகளுக்கு பதிலடி கொடுப்பதில் முஸ்லிம்களிலேயே மகத்தான (பங்காற்றுப)வராக இருந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்'நரகவாசிகளில் ஒருவரைப் பார்க்க விரும்புகிறவர் இவரைப் பார்த்துக் கொள்ளலாம்") என்று (குஸ்மான் எனும் அந்த மனிதரைக் குறித்துக்) கூறினார்கள். (அவரைப் பற்றி நபியவர்கள் ஏன் அவ்வாறு கூறினார்கள் என்று அறிந்து கொள்வதற்காக) உடனே அவரை இன்னொரு மனிதர் பின்தொடர்ந்தார். (குஸ்மான் என்ற) அந்த மனிதரோ (எதிரிகளுடன் கடுமையாகப்) போராடிக் கொண்டு இருந்தார். இறுதியில் அந்த மனிதர் (எதிரிகளால் கடுமையாகக்) காயப்படுத்தப்பட்டார். அதனால் அவர் அவசரமாக இறந்துவிட விரும்பி, தன்னுடைய வாளின் (கீழ்ப் பகுதியைப் பூமியில் நட்டு வைத்து, (கீழ்ப் பகுதியைப் பூமியில் நட்டு வைத்து, அதன்) கூரான பகுதியைத் தம் மார்புகளுக்கிடையே வைத்து, அந்த வாளின் மீது உடலை அழுத்திக் கொண்டு தற்கொலை செய்து) கொண்டார். வாள் அவரின் தோள்களுக்கிடையே இருந்து வெளியேறியது.

அப்போது நபி(ஸல்) அவர்கள்'ஓர் அடியார் மக்களின் பார்வையில் சொர்க்கவாசிகளின் நற்செயலைச் செய்து வருவார். ஆனால், (உண்மையில்) அவர் நரகவாசிகளில் ஒருவராக இருப்பார். (இதைப் போன்றே) ஓர் அடியார் மக்களின் பார்வையில் நரகவாசிகளின் (தீய) செயலைச் செய்துவருவார். (உண்மையில்) அவர் சொர்க்கவாசிகளில் ஒருவராக இருப்பார். இறுதி முடிவுகளைக் கொண்டே செயல்கள் தீர்மானிக்கப்படுகின்றன" என்றார்கள்.

## தீய நண்பர்களைவிடத் தனிமையே சுகமானது

ஹதீஸ் 6494. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஒரு கிராமவாசி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர் அவர்களே! மக்களில் சிறந்தவர் யார்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'இறைவழியில்) தம் உடலாலும் பொருளாலும் போராடுகிறவர். (அடுத்துச் சிறந்தவர்) மலைக் கணவாய்களில் ஒன்றில் தம் இறைவனை

வணங்கிக் கொண்டு மக்களுக்குத் தம்மால் தீங்கு நேராமல் தவிர்ந்து வாழ்கிறவர்‘‘ என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6495. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களுக்கு ஒரு காலம் வரும். அப்போது ஒரு முஸ்லிமான மனிதரின் செல்வங்களிலேயே ஆடுதான் சிறந்ததாக இருக்கும். குழப்பங்களிலிருந்து தம் மார்க்க (விசுவாச)த்தைக் காப்பாற்றிக் கொள்ள அந்த ஆட்டை ஓட்டிக் கொண்டு அவர் மலை உச்சிக்கும், மழைத் துளிகள் விழும் (கணவாய்கள், பள்ளத்தாக்குகள் போன்ற) இடங்களுக்கும் சென்று வாழ்வார்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## நம்பகத் தன்மை (மக்களிடமிருந்து) அகன்று விடல்.

ஹதீஸ் 6496. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு கிராமவாசியிடம்),‘நம்பகத்தன்மை பாழ்படுத்தப்பட்டால் மறுமைநாளை நீ எதிர்பார்க்கலாம்!”என்று கூறினார்கள். அவர்’இறைத்தூதர் அவர்களே! அது எவ்வாறு பாழ்ப்படுத்தப்படும்?’ என்று கேட்டதற்கு’(ஆட்சியதிகாரம், நீதி நிர்வாகம் போன்ற) எந்தப் பொறுப்பும் அதற்கத் தகுதியற்றவர்களிடம் ஒப்படைக்கப்படும்போது மறுமை நாளை எதிர்ப்பார்த்துக் கொள்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6497. ஹுதைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களுக்கு (நம்பகத்தன்மை தொடர்பாக) இரண்டு செய்திகளைக் கூறினார்கள். அவற்றில் ஒன்றை நான் (என் வாழ்நாளிலேயே) பார்த்துவிட்டேன். மற்றொன்றை எதிர்பார்த்திருக்கிறேன்.

ஒரு செய்தி யாதெனில், (இயற்கையாகவே) மனிதர்களின் ஆழ்மனதில் (‘அமானத்’ எனும்) நம்பகத்தன்மை இடம் பிடித்தது. பின்னர் அவர்கள் குர்ஆனிலிருந்தும் (அதை) அறிந்து கொண்டார்கள். பிறகு (என்னுடைய வழியான) சுன்னாவிலிருந்தும் (அதை)அறிந்து கொண்டார்கள். (நபியவர்கள் கூறிய இதை நான் பார்த்துவிட்டேன்.)

இரண்டாவது செய்தி, நம்பகத்தன்மை அகற்றப்படுவது தொடர்பானதாகும். மனிதன் ஒரு முறை உறங்குவான். (உறக்கத்திலேயே) அவனுடைய உள்ளத்திலிருந்து நம்பகத்தன்மை (சிறிது) கைப்பற்றப்படும். அதையடுத்து அ(து அகற்றப்பட்ட)தன் அடையாளம் சிறு (கரும்) புள்ளி அளவுக்கு (அவனில்) தங்கிவிடும். பிறகு மீண்டும் ஒரு முறை அவன் உறங்குவான். அப்போது (மறுபடியும்) அது கைப்பற்றப்படும். இம்முறை அ(து அகற்றப்பட்ட) தன் அடையாளம் (கடின உழைப்பால் கையில் ஏற்படும்) காய்ப்பு அளவுக்கு (அவனில்) நிலைத்துவிடும். (இவ்வாறு முதலில்’நம்பகத் தன்மை’ எனும் ஒளி உள்ளத்தில் ஏற்றப்பட்டுப் பிறகு சிறிது சிறிதாக அது அணைக்கப்படுவதானது) காலில் தீக்கங்களை உருட்டிவிட்டு, அதனால் கால் கொப்பளித்து உப்பிவிடுவதைப் போன்றதாகும். பார்வையில் அது உப்பிப் பெரிதாகத் தெரியுமேதவிர, அதனுள் ஒன்றும் இருக்காது.

பின்னர் காலையில் மக்கள் தங்களிடையே கொடுக்கல் வாங்கல் செய்து கொள்வார்கள். (ஆனால், அவர்களில்) யாருமே நம்பிக்கையைக் காப்பாற்ற எத்தனிக்கமாட்டார்கள். இன்னாருடைய மக்களில் நம்பிக்கையான ஒருவர் இருக்கிறார் என்று (தேடிக் கண்டுபிடித்து) சொல்லப்படும் (அளவுக்கு நம்பிக்கையாளர்கள் அரிதாம்விடுவார்கள். மேலும், ஒருவரைப்

பற்றி, 'அவரின் அறிவுதான் என்ன? அவரின் விவேகம்தான் என்ன? அவரின் வீரம்தான் என்ன?' என்று (சிலாகித்துக்) கூறப்படும். ஆனால், அந்த மனிதருடைய இதயத்தில் கடுகளவு கூட நம்பிக்கை இருக்காது.

(அறிவிப்பாளர்: ஹுதைஃபா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) என் மீது ஒரு காலம் வந்திருந்தது. அக்காலத்தில் நான் உங்களில் யாரிடம் கொடுக்கல் வாங்கல் செய்கிறேன் என்று பொருட்படுத்தியதில்லை. (ஏனெனில்,) முஸ்லிமாக இருந்தால், இஸ்லாம் (என்னுடைய பொருளை அவரிடமிருந்து) என்னிடம் திருப்பித் தந்துவிடும். கிறிஸ்தவராக இருந்தால் அவருக்கான அதிகாரி என்னுடைய பொருளை அவரிடமிருந்து எனக்கு மீட்டுத் தந்துவிடுவார். ஆனால், இன்றோ நான் இன்னார், இன்னாரிடம் மட்டுமே கொடுக்கல் வாங்கல் செய்கிறேன்.

ஹதீஸ் 6498. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்கள் (பொதி சுமக்கும்) நூறு ஒட்டகங்கள் போன்றவர்கள். அவற்றில் பயணத்திற்குப் பயன்படும் ஒட்டகத்தை நீ காண்பது அரிது.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## முகஸ்துதியும் விளம்பரமும்.

ஹதீஸ் 6499. ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுக்கு அருகில் சென்றேன். அப்போது அவர்கள்'விளம்பரத்திற்காக நற்செயல் புரிகிறவர் (உடைய நோக்கம்) பற்றி அல்லாஹ் (மறுமை நாளில்) விளம்பரப்படுத்துவான். முகஸ்துதிக்காக நற்செயல் புரிகிறவரை அல்லாஹ் (மறுமை நாளில்) அம்பலப்படுத்துவான்'' என்று கூறியதைக் கேட்டேன்.

அறிவிப்பாளர் ஸலமா இப்னு குஹைல்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

இந்த ஹதீஸை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஜுன்துப்(ரலி) அவர்கள் தவிர வேறு யாரிடமும் நான் கேட்டதில்லை.

## இறைவனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதற்காக மனதுடன் போராடுவது.

ஹதீஸ் 6500 முஆத் இப்னு ஜபல்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நான் நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் ஒரு வாகனத்தில் அமர்ந்து கொண்டிருந்தேன். எனக்கும் நபிகளாருக்கும் இடையே (ஒட்டகச்) சேணத்துடன் இணைந்த சாய்வுக் கட்டை தவிர வேறெதுவும் இருக்கவில்லை. (அந்த அளவுக்கு நெருக்கத்தில் நான் இருந்தேன்.) அப்போது நபி(ஸல்) அவர்கள்'முஆதே!' என்று அழைத்தார்கள். நான்'இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)'' என்றேன். பிறகு சிறிது தூரம் சென்ற பின்னர் மீண்டும்'முஆதே!' என்றார்கள். நான்'இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)'' என்றேன். பிறகு சிறிது தூரம் சென்றதும் மீண்டும்'முஆதே இப்னு ஜபலே!' என அழைத்தார்கள். நான் (அப்போதும்)'இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன் (கூறுங்கள்)'' என்று பதிலளித்தேன். நபி(ஸல்) அவர்கள்'அடியார்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்பதை நீர் அறிவீரா!"என்று கேட்டார்கள். நான்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்'அடியார்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்னவென்றால், அவர்கள் அவனையே வணங்கிட வேண்டும் அவனுக்கு எதனையும் (எவரையும்) இணை வைக்கக்

கூடாது" என்று கூறினார்கள். பிறகு சிறிது தூரம் சென்ற பின்னர் 'முஆத் இப்னு ஜபலே!' என்று அழைத்தார்கள். நான் 'இறைத்தூதர் அவர்களே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கூறுங்கள்)" என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள் 'அடியார்கள் அதை நிறைவேற்றினால் அவர்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன தெரியுமா?' என்று கேட்டார்கள். நான் 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்" என்று சொன்னேன். 'அடியார்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்னவென்றால், அவர்களை அவன் (மறுமையில்) வேதனைப்படுத்தாமல் இருப்பதாகும்" என்றார்கள்.

## பணிவு

ஹதீஸ் 6501 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் 'அள்பா' என்று அழைக்கப்பட்ட ஒட்டகம் ஒன்று இருந்தது. அது பந்தயத்தில் எவராலும் வெல்ல முடியாத (அளவுக்கு விரைவாக ஓடக்கூடிய)தாக இருந்தது. (ஒரு பயணத்தின் போது) கிராமவாசி ஒருவர் தம் (ஆறு வயதுக்குட்பட்ட) வாட்டசாட்டமான ஒட்டகத்தின் மீது வந்து நபிகளாரின் அந்த ஒட்டகத்தை முந்திச் சென்றார். இது முஸ்லிம்களுக்கு மிகுந்த மன வேதனையை அளித்தது. முஸ்லிம்கள் 'அள்பா பின்னுக்குத் தள்ளப்பட்டுவிட்டது" என்று கூறினர். (இதை அறிந்த) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'உலகில் உயர்ந்துவிடுகிற எந்தப் பொருளாயினும் நிச்சயமாக (ஒரு நாள்) அதைக் கீழே கொண்டுவருவதே அல்லாஹ்வின் நியதியாகும்" என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாக வந்துள்ளது.

ஹதீஸ் 6502 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்:

எவன் என் நேசரை பகைத்துக் கொண்டானோ அவனுடன் நான் போர் பிரகடனம் செய்கிறேன். எனக்கு விருப்பமான செயல்களில் நான் கடமையாக்கிய ஒன்றை விட வேறு எதன் மூலமும் என் அடியான் என்னுடன் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்வதில்லை. என் அடியான் கூடுதலான (நஃபிலான) வணக்கங்களால் என் பக்கம் நெருங்கி வந்து கொண்டேயிருப்பான். இறுதியில் அவனை நேசித்துவிடும்போது அவன் கேட்கிற செவியாக, அவன் பார்க்கிற கண்ணாக, அவன் பற்றுகிற கையாக, அவன் நடக்கிற காலாக நான் ஆகிவிடுவேன். அவன் என்னிடம் கேட்டால் நான் நிச்சயம் தருவேன். என்னிடம் அவன் பாதுகாப்புக் கோரினால் நிச்சயம் நான் அவனுக்குப் பாதுகாப்பு அளிப்பேன். ஓர் இறைநம்பிக்கையாளனின் உயிரைக் கைப்பற்றுவதில் நான் தயக்கம் காட்டுவதைப் போன்று, நான் செய்யும் எச்செயலிலும் தயக்கம் காட்டுவதில்லை. அவனோ மரணத்தை வெறுக்கிறான். நானும் (மரணத்தின் மூலம்) அவனுக்குக் கஷ்டம் தருவதை வெறுக்கிறேன். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## "நானும் மறுமை நாளும் இந்த (-சுட்டுவிரல், நடுவிரல் ஆகிய) இரண்டையும் போன்று (நெருக்கமாக) அனுப்பப்பட்டுள்ளோம்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

அல்லாஹ் கூறினான்:

மறுமை (சம்பவிக்கும்) நிகழ்ச்சியானது, கண் இமைப்பதைப் போன்று, அல்லது (அதைவிடவும்) விரைவானதுதான். அல்லாஹ் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுள்ளவன். (திருக்குர்ஆன் 16:77)

ஹதீஸ் 6503 ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள்'நானும் மறுமை நாளும் இப்படி அனுப்பப்பட்டுள்ளோம்'' என்று கூறி, தம் இரண்டு விரல்களையும் (-சுட்டுவிரல், நடுவிரல் இரண்டையும்) நீட்டியவாறு சைகை செய்தார்கள்.

ஹதீஸ் 6504 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நானும் மறுமை நாளும் இதோ இந்த (சுட்டுவிரல், நடுவிரல் ஆகிய) இரண்டையும் போன்று (நெருக்கமாக) அனுப்பப்பட்டுள்ளோம்.

என அனஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6505 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நானும் மறுமை நாளும் இதோ இந்த (சுட்டுவிரல், நடுவிரல் ஆகிய) இரண்டு விரல்களைப் போன்று (நெருக்கமாக) அனுப்பப்பட்டுள்ளோம்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 6506 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மேற்கிலிருந்து சூரியன் உதயமாகாத வரை மறுமை நாள் வராது. அவ்வாறு அது மேற்கிலிருந்து உதயமாகும்போது அதைப் பார்த்துவிட்டு மக்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக இறைநம்பிக்கை கொள்வார்கள். ஆனால், முன்பே இறைநம்பிக்கை கொண்டிராத, அல்லது இறைநம்பிக்கை கொண்டிருந்தாலும் நன்மையேதும் செய்திராத எந்த மனிதருக்கும் அந்த நேரத்தில் கொள்ளும் நம்பிக்கை பயனளிக்காது.

இரண்டு பேர் (விற்பனைக்காத்) துணிகளை விரித்து (ப் பார்த்து) க் கொண்டிருப்பார்கள். அதனை அவர்கள் விற்பனை செய்திருக்கவுமாட்டார்கள் சுருட்டிக்கூட வைத்திருக்க மாட்டார்கள். அதற்குள் மறுமை சம்பவித்துவிடும். மேலும், ஒருவர் மடிகனத்த தம் ஒட்டகத்தி (ல் பால் கறந்து அப்போது தா) ன் பாலுடன் (வீடு) திரும்பியிருப்பார் இன்னும் அதைப் பருமக் கூட இருக்கமாட்டார். அதற்குள் மறுமை சம்பவித்து விடும். ஒருவர் தம் நீர் தொட்டியை (அப்போதுதான்) கல்வைத்துப் பூசியிருப்பார் இன்னும் அதில் நீர் இறைத்திருக்கமாட்டார். அதற்குள் மறுமை சம்பவித்து விடும். உங்களில் ஒருவர் தம் உணவை (அப்போதுதான்) வாயருகில் கொண்டு சென்றிருப்பார் அதை உண்டிருக்க மாட்டார். அதற்குள் மறுமை சம்பவித்து விடும். என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வை தரிசிக்க விரும்புகிறவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான்.

ஹதீஸ் 6507 உபாதா இப்னு அஸ்ஸாமித் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள்'அல்லாஹ்வை தரிசிக்க விரும்புகிறவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். அல்லாஹ்வை தரிசிப்பதை வெறுக்கிறவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்'' என்று கூறினார்கள். அப்போது'ஆயிஷா (ரலி) அவர்கள்' அல்லது'நபி (ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர்''நாங்கள் மரணத்தை வெறுக்கிறோம்'' என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள்'(அல்லாஹ்வின் தரிசனம் என்பதற்குப் பொருள்) அதுவல்ல. மாறாக, இறைநம்பிக்கையாளருக்கு இறப்பு நேரம் வரும்போது, அவரைப் பற்றி அல்லாஹ் திருப்தி

அடைந்திருப்பதாகவும் அவரைக் கௌரவிப்பதாகவும் அவருக்கு நற்செய்தி கூறப்படும். அப்போது இறப்புக்குப் பின்னால் உள்ள (மறுமை) வாழ்வைவிட விருப்பமானதாக வேறெதுவும் அவருக்கு இராது. எனவே, அவர் அல்லாஹ்வை தரிசிக்க விரும்புவார். அல்லாஹ்வும் அவரைச் சந்தி(த்து உபசரி)க்க விரும்புவான். இறைமறுப்பாளனுக்கு மரணவேளை வரும்போது, அல்லாஹ் வழங்கும் வேதனை குறித்தும் தண்டனை குறித்தும் அவனுக்கு அறிவிக்கப்படும். அப்போது மரணத்திற்குப் பின்னால் உள்ள (மறுமை) வாழ்வை விட வெறுப்பானதாக வேறெதுவும் அவனுக்கு இராது. எனவே, அவன் அல்லாஹ்வை தரிசிப்பதை வெறுப்பான் அல்லாஹ்வும் அவனைச் சந்தி(த்து அருள் பாலி)ப்பதை வெறுப்பான்'' என்று (விளக்கம்) சொன்னார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6508. 'அல்லாஹ்வை தரிசிக்க விரும்புகிறவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். எவர் அல்லாஹ்வை தரிசிப்பதை வெறுக்கிறவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6509 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஆரோக்கியமானவர்களாய் இருந்தபோது, 'சொர்க்கத்தில் தம் இருப்பிடத்தைப் பார்த்து, பிறகு (இன்னும் சில காலம் உயிர் வாழ்வதற்கு) வாய்ப்பளிக்கப்படாத வரை எந்த இறைத்தூத(ரின் உயி)ரும் கைப்பற்றப்படவில்லை'' என்று கூறுவார்கள். பிறகு அவர்களுக்கு நோய் கண்டு, தம் தலையை என்னுடைய மடி மீது வைத்திருந்த நிலையில் சிறிது நேரம் மயக்கமுற்றார்கள். பிறகு மயக்கம் தெளிந்தபோது வீட்டின் கூரையை நோக்கி அவர்களின் பார்வை நிலை குத்தி நின்றது. பிறகு, 'இறைவா! (சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)'' என்றார்கள்.

நான், 'அவர்கள் இப்போது நம்முடன் இருப்பதைத் தேர்ந்தெடுக்கவில்லை (மறுமைப் பெருவாழ்வைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுவிட்டார்கள்)'' என்று (மனதுக்குள்) கூறிக்கொண்டேன். (அவர்கள் ஆரோக்கியமாக இருந்தபோது 'இறைத்தூதர்கள் இறக்கும் முன் இம்மை மறுமை இரண்டிலொன்றைத் தேர்வு செய்துகொள்ள வாய்ப்பளிக்கப்படுவார்கள்' என்று) நம்மிடம் அவர்கள் கூறிய சொல் இதுதான் என அறிந்து கொண்டேன். நபி(ஸல்) அவர்கள் பேசிய கடைசி வார்த்தை, 'இறைவா! உயர்ந்த தோழர்களுடன் (என்னையும் சேர்த்தருள்)' என்பதாகவே இருந்தது.

இதை அறிஞர்கள் பலர் இருந்த அவையில் உர்வா இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) ஆகியோர் அறிவித்தனர்.

## மரணத்தின் வேதனைகள்

ஹதீஸ் 6510 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(நோய் வாய்ப்பட்டிருந்த) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்னால் 'தோல் பாத்திரம் ஒன்று' அல்லது 'பெரிய மரக்குவளையொன்று' இருந்தது. அதில் தண்ணீரும் இருந்தது. அவர்கள் தம் இரண்டு கைகளையும் அந்தத் தண்ணீருக்குள் நுழைத்து முகத்தில் தடவிக் கொண்டே 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை. நிச்சயமாக மரணத்தின்போது பல வேதனைகள் உண்டு'' என்று கூறினார்கள்.

பிறகு தம் கையை உயர்த்தியவாறு '(இறைவா! சொர்க்கத்தில்) உயர்ந்த தோழர்களுடன் (என்னைச் சேர்த்தருள்)'' எனப் பிரார்த்திக்கலானார்கள். இறுதியில், அவர்களின் உயிர் கைப்பற்றப்பட, அவர்களின் கரம் சரிந்தது.

அபூ அப்தில்லாஹ் (புகாரி ஆகிய நான்) கூறுகிறேன்:

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள) 'உல்பா' என்பது மரப் பாத்திரத்தையும், 'ரக்வா' என்பது தோல் பாத்திரத்தையும் குறிக்கும்.

ஹதீஸ் 6511 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

கடின சுபாவம் படைத்த கிராமவாசிகள் சிலர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து 'மறுமை நாள் எப்போது?' என்று கேட்பார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் அவர்களிலேயே வயதில் சிறியவரான ஒருவரை நோக்கி 'இவர் உயிர் வாழ்ந்தால், இவரை முதுமை அடைவதற்கு முன்பே உங்களின் மீது மறுமை சம்பவித்து விடும்'' என்று கூறுவார்கள்.

இங்கு 'மறுமை' (ஸாஅத்) என்பது மரணத்தைக் குறிக்கும் என (அறிவிப்பாளர்) ஹிஷாம் இப்னு உர்வா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6512 அபூ கத்தாதா இப்னு ரிப்ஈ அல்அன்சாரி (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களைக் கடந்து ஒரு ஜனாஸா (பிரேதம்) கொண்டு செல்லப்பட்டது. அப்போது அவர்கள் '(இவர்) ஓய்வு பெற்றவராவார் அல்லது (பிறருக்கு) ஓய்வு அளித்தவராவார்'' என்றார்கள். மக்கள் 'இறைத்தூதர் அவர்களே! ஓய்வு பெற்றவர் அல்லது ஓய்வு அளித்தவர் என்றால் என்ன?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள் 'இறை நம்பிக்கை கொண்ட அடியார் (இறக்கும் போது) இவ்வுலகத்தின் துன்பத்திலிருந்தும் தொல்லையிலிருந்தும் ஓய்வுபெற்று இறையருளை நோக்கிச் செல்கிறார். பாவியான அடியான் (இறக்கும்போது) அவனி(ன் தொல்லைகளி)டமிருந்து மற்ற அடியார்கள், (நாடு) நகரங்கள், மரங்கள் மற்றும் கால்நடைகள் ஆகியன ஓய்வு (பெற்று நிம்மதி) பெறுகின்றன'' என்றார்கள்.

ஹதீஸ் 6513 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இவர்) ஓய்வு பெற்றவர் அல்லது (பிறருக்கு) ஓய்வு அளித்தவராவார். இறைநம்பிக்கையாளர் (இறக்கும்போது, இவ்வுலகத் துன்பங்களிலிருந்து) ஓய்வு பெறுகிறார்.

என அபூ கத்தாதா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6514 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறந்தவரை மூன்று பொருள்கள் பின்தொடர்ந்து செல்கின்றன. (அவற்றில்) இரண்டு திரும்பிவிடுகின்றன. ஒன்று மட்டுமே அவருடன் தங்கிவிடுகிறது. அவரை அவரின் குடும்பமும் செல்வமும் அவர் செய்த செயல்களும் பின்தொடர்ந்து செல்கின்றன. (அவற்றில்) அவரின் குடும்பமும் செல்வமும் திரும்பிவிடுகின்றன. அவரின் செயல்கள் மட்டுமே அவருடன் தங்கிவிடும்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6515 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் இறந்துவிட்டால் (மறுமையில்) அவர் (தங்கப்போகும்) இருப்பிடம் காலையிலும் மாலையிலும் அவருக்கு எடுத்துக் காட்டப்படும். (அது) ஒன்று நரகமாயிருக்கும்

அல்லது சொர்க்கமாயிருக்கும். அப்போது'இதுதான் உன் இருப்பிடம். இறுதியில் இங்கு தான் நீ அனுப்பப்படுவாய்'' என்று கூறப்படும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6516 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறந்தோரை ஏசாதீர்கள். ஏனெனில், அவர்கள் தாம் செய்த (நன்மை, தீமை, ஆகிய)வற்றின் பால் சென்று சேர்ந்துவிட்டார்கள்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## எக்காளம் ஊதப்படுதல்

முஜாஹித்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

(திருக்குர்ஆன் 39:68 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸ்ஸூர்' என்பது'எக்காளம்' வடிவிலுள்ள ஓர் ஊது குழலாகும். (திருக்குர்ஆன் 37:19 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஸஜ்ரத்' என்பதற்கு'பெரும் சப்தம்' என்று பொருள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். (திருக்குர்ஆன் 74:8 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அந்நாக்கூர்' எனும் சொல்லுக்கு'எக்காளம்' என்று பொருள். (திருக்குர்ஆன் 79:6 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அர்ராஜிஃபா (நில நடுக்கம்) என்பது முதலாவது எக்காளத்தையும், (திருக்குர்ஆன் 79:7 வது வசனத்திலுள்ள)'அர்ராதிஃபா' (தொடர்ந்து வருவது) என்பது இரண்டாவது எக்காளத்தையும் குறிக்கும்.

ஹதீஸ் 6517. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இரண்டு பேர் சச்சரவிட்டுக் கொண்டனர். அவர்களில் ஒருவர் முஸ்லிம் மற்றொருவர் யூதர். அந்த முஸ்லிம் (தாம் செய்த ஒரு சத்தியத்தின் போது)'அம்லத்தார் அனைவரையும் விட மூஸா(அலை) அவர்களை (சிறந்தவராக)த் தேர்ந்தெடுத்துக் கொண்டவன் மீதாணையாக! என்று கூறினார். இதைக் கேட்ட அந்த முஸ்லிம் கோபமடைந்து அந்த யூதரின் முகத்தில் அறைந்துவிட்டார். உடனே அந்த யூதர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று தன்னுடைய நடவடிக்கையையும் அந்த முஸ்லிமின் நடவடிக்கையையும் தெரிவித்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'மூஸா(அலை) அவர்களைச் விடச் சிறந்தவராக என்னை ஆக்காதீர்கள். ஏனெனில், (மறுமை நாளில் எக்காளம் ஊதப்படும். அப்போது) மக்கள் மூர்ச்சையுற்று (கீழே) விழுந்துவிடுவார்கள். அப்போது நான்தான் மயக்கம் தெளிந்து எழுபவர்களில் முதல் ஆளாக இருப்பேன். அந்த நேரத்தில் மூஸா(அலை) அவர்கள் இறைவனது அரியணையின் ஓர் ஓரத்தைப் பிடித்துக்கொண்டிருப்பார்கள். மூஸா எனக்கு முன்பே மயக்கம் தெளிந்து (எழுந்து)விட்டாரா? அல்லது மூர்ச்சையடைந்து விழுவதிலிருந்து அல்லாஹ் விதிவிலக்களித்தவர்களில் ஒருவராய் அவர் இருந்தாரா? என்று எனக்குத் தெரியாது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6518 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூர்ச்சையடைந்து விழும் (மறுமை) நாளில் மக்கள் மூர்ச்சையடைந்து (கீழே) விழுந்துவிடுவார்கள். நான்தான் (மயக்கம் தெளிந்து) எழுபவர்களில் முதல் ஆளாக இருப்பேன். அந்த நேரத்தில் மூஸா(அலை) அவர்கள் இறைவனது அரியணையின் ஓர் ஓரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள். அவர் மூர்ச்சையுற்று விழுந்தவர்களில் ஒருவரா என்று எனக்குத் தெரியாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதை நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

## மறுமை நாளில் அல்லாஹ் பூமியைக் கைப்பற்றிக் கொள்வான்.

இது குறித்து இப்னு உமர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6519 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (மறுமை நாளில்) பூமியைத் தன்னுடைய கைப்பிடிக்குள் அடக்கிக் கொள்வான் வானத்தைத் தன்னுடைய வலக் கரத்தில் சுருட்டிக் கொள்வான் பிறகு'நானே அரசன் பூமியின் அரசர்கள் எங்கே?' என்று கேட்பான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6520 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்'மறுமை நாளில் இந்த பூமி (அடுப்பில் இருக்கும்) ஒரு ரொட்டியைப் போன்று (சமதளமாக) மாறிவிடும். பயணத்திலுள்ள உங்களில் ஒருவர் தம் ரொட்டியை (அடுப்பிலிருந்து எடுத்துக் கையில் வைத்து)ப் புரட்டுவதைப் போன்று, சர்வ வல்லமை படைத்த (இறை)வன் பூமியைத் தன்னுடைய கரத்தால் புரட்டிப்போடுவான். (அதையே) சொர்க்கவாசிகளுக்கு விருந்தாக்குவான்'' என்று கூறினார்கள்.

அப்போது யூதர்களில் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'அபுல் காசிமே! அளவற்ற அருளாளன் உங்களுக்கு சுபிட்சம் அளிக்கட்டும். மறுமை நாளில் சொர்க்கவாசிகளின் விருந்துணவு என்னவென்று உங்களுக்கு நான் தெரிவிக்கட்டுமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'சரி' என்றார்கள். அவர் நபி(ஸல்) அவர்கள் சொன்னதைப் போன்றே'மறுமை நாளில் இந்த பூமி ஒரேயொரு ரொட்டியைப் போன்று இருக்கும்'' என்று கூறினார். அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களைக் கூர்ந்து பார்த்துவிட்டு, தம் கடைவாய்ப் பற்கள் தெரிய சிரித்தார்கள். பிறகு'உங்களுக்கு சொர்க்கவாசிகளின் குழம்பு எது எனத் தெரிவிக்கட்டுமா?' என்று அந்த யூதர் கேட்டுவிட்டு அவர்களின் குழம்பு'பாலாம்' மற்றும்'நூன்' என்றார். மக்கள்'இது என்ன?' என்று கேட்டார்கள். அந்த யூதர்'(அவை) காளைமாடும் மீனும் ஆகும். அந்த இரண்டின் ஈரல்களுடன் ஒட்டிக் கொண்டிருக்கும் தனித் துண்டை (மட்டுமே சொர்க்கவாசிகளில்) எழுபதாயிரம் பேர் புசிப்பார்கள்'' என்று கூறினார்.

ஹதீஸ் 6521 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(உமியோ தவிடோ கலக்காத) சுத்தமான மாவினாலான ரொட்டியைப் போன்று தூய வெண்மையான (சம) தளத்தின் மீது மறுமை நாளில் மனிதர்கள் ஒன்று திரட்டப்படுவார்கள்.

இதன் அறிவிப்பாளரான ஸஹ்ல்(ரலி) அவர்கள், அல்லது மற்றொருவர்'அந்த பூமியில் (மலை, மடுவு, காடு, வீடு என) எந்த அடையாளமும் யாருக்கும் இருக்காது'' என்று (கூடுதலாக) அறிவித்தார்கள்.

## (மறுமையில் மக்கள்) ஒன்றுதிரட்டப்படுவது எப்படி?

ஹதீஸ் 6522 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமை நாள் ஏற்படுவதற்கு சற்று முன் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி) மக்கள் மூன்று பிரிவினராக ஒன்று திரட்டப்படுவார்கள். (அதில் முதல் பிரிவினர்) அச்சத்துடனும் ஆர்வத்துடனும் செல்வார்கள். (இரண்டாவது பிரிவினர்) (வாகனப் பற்றாக்குறையினால் தாமதித்துப் பின்னர்)

ஒரே ஒட்டகத்தின் மீது இரண்டு பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது மூன்று பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது நான்கு பேராக, ஒரே ஒட்டகத்தின் மீது பத்துப் போராகச் செல்வார்கள்.

அவர்களில் எஞ்சியவர்(களே மூன்றாவது பிரிவினராவர். அவர்)களை (பூமியில் ஏற்படும் ஒரு பெரும்) தீ (விபத்து) ஒன்றுதிரட்டும். அவர்கள் மதிய ஓய்வெடுக்கும்போதும், இரவில் ஓய்வெடுக்கும் போதும், காலை நேரத்தை அடையும்போதும், மாலை நேரத்தை அடையும் போதும் (இப்படி எல்லா நேரங்களிலும்) அந்தத் தீ அவர்களுடனேயே இருக்கும்.

ஹதீஸ் 6523 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒருவர்'இறைத்தூதர் அவர்களே! (திருக்குர்ஆன் 25:43 வது இறைவசனத்தின்படி மறுமை நாளில்) இறைமறுப்பாளன் தன்னுடைய முகத்தால் (நடத்தி) இழுத்துச் செல்லப்படுவது எப்படி?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'இம்மையில் அவனை இரண்டு கால்களால் நடக்கச் செய்த (இறை)வனுக்கு, மறுமைநாளில் அவனை அவனுடைய முகத்தால் நடக்கச் செய்திட முடியாதா?' என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

(இதை அறிவித்த) கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) அவர்கள்'ஆம். (முடியும்). எங்கள் இறைவனின் வலிமையின் மீதாணையாக!"என்றார்கள்.

ஹதீஸ் 6524 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, காலால் நடந்தவர்களாக, விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக (பிறந்த மேனியுடன்) அல்லாஹ்வைச் சந்திப்பீர்கள்.

"இது நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கேட்ட (பிரபலமான) ஹதீஸ்களில் ஒன்றென நாங்கள் கருதுகிறோம்' என்று சுஃப்யான்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6525 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையின் (மிம்பர்) மீது இருந்தபடி'நிச்சயமாக நீங்கள் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக அல்லாஹ்வைச் சந்திப்பீர்கள்' என்று உரையில் குறிப்பிட்டதை கேட்டேன்.

ஹதீஸ் 6526 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் எங்களிடையே நின்றபடி உரையாற்றினார்கள். அப்போது (பின்வருமாறு) கூறினார்கள்: (மறுமை நாளில்) நீங்கள் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்தசேதனம் செய்யப்படாதவர்களாக ஒன்று திரட்டப்படுவீர்கள். அல்லாஹ் கூறினான்: முதன் முதலாக அவர்களை நாம் படைத்ததைப் போன்றே (அந்நாளில்) அவர்களை மீண்டும் படைப்போம். இது நம் மீது (பொறுப்பாம்விட்ட) வாக்குறுதியாகும். இதை நாம் நிச்சயம் செய்வோம். (திருக்குர்ஆன் 21:104)

மறுமை நாளில் படைப்பினங்களிலேயே முதன் முதலாக ஆடையணிவிக்கப்படுவர் இப்ராஹீம்(அலை) அவர்கள் ஆவார்கள். மேலும், என் சமுதாயத்தாரில் சில பேர் இடப் பக்கமாக (நரகம் நோக்கி)க் கொண்டு செல்லப்படுவார்கள். அப்போது நான்'என் இறைவா! (இவர்கள்) என் தோழர்களில் சிலர்' என்பேன். அப்போது அல்லாஹ்'இவர்கள் உங்களு(டைய இறப்பு)க்குப் பின் (மார்க்கத்தில்) என்னவெல்லாம் புதிது புதிதாக உருவாக்கினார்கள் என்று உங்களுக்குத் தெரியாது' என்பான்.

அப்போது நான், நல்லடியார் (நபி ஈசா(அலை) அவர்கள்) சொன்னதைப் போன்று'நான் அவர்களுடன் இருந்தவரை அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். நீ என்னைத் திரும்ப அழைத்துக்கொண்டபோது நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய்'' (திருக்குர்ஆன் 05:117) என்று சொல்வேன்.

அப்போது'இவர்கள் தம் குதிகால் (சுவடு)களின் வழியே மார்க்கத்திலிருந்து வெளியேறிக் கொண்டேயிருந்தார்கள்'' என்று கூறப்படும்.

ஹதீஸ் 6527 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

"நீங்கள் மறுமைநாளில் செருப்பணியாதவர்களாக, நிர்வாணமானவர்களாக, விருத்த சேதனம் செய்யப்படாதவர்களாக ஒன்று திரட்டப்படுவீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உடனே நான்'இறைத்தூதர் அவர்களே! (நிர்வாணமான) ஆண்களும் பெண்களும் சிலரை சிலர் பார்ப்பார்களே?' என்று கேட்டேன்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்'அந்த எண்ணம் அவர்களுக்கு ஏற்படாத அளவுக்கு (அங்குள்ள) நிலைமை மிகக் கடுமையானதாக இருக்கும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6528 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (சுமார் நாற்பது பேர்) நபி(ஸல்) அவர்களுடன் ஒரு (தோல்) கூடாரத்தினுள் இருந்து கொண்டிருந்தோம். அப்போது அவர்கள்'சொர்க்கவாசிகளில் நான்கில் ஒரு பகுதியினராக இருக்க நீங்கள் விரும்புகின்றீர்களா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம்' என்று சொன்னோம். நபி(ஸல்) அவர்கள்'சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பகுதியினராக நீங்கள் இருக்க வேண்டுமென விரும்புகின்றீர்களா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம்' என்று சொன்னோம். அவர்கள்'சொர்க்கவாசிகளில் பாதிப் பேராக நீங்கள் இருக்க வேண்டுமென விரும்புகின்றீர்களா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம்' என்று சொன்னோம். அவர்கள்'சொர்க்கவாசிகளில் பாதிப் பேராக நீங்கள் இருக்க வேண்டும் என்று விரும்புகின்றீர்களா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம்' என்று சொன்னோம். நபி(ஸல்) அவர்கள்'முஹம்மதின் உயிர் எவனுடைய கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் பாதிப் பேராக (என் சமுதாயத்தாரான) நீங்கள் இருக்க வேண்டும் என நான் எதிர்பார்க்கிறேன். அதற்குக் காரணம், சொர்க்கத்தில் முஸ்லிமானவரைத் தவிர வேறெவரும் நுழைய முடியாது. இணை வைப்பவர்களை ஒப்பிடும்போது நீங்கள் கறுப்புக் காளை மாட்டின் தோலில் உள்ள வெள்ளை முடியைப் போன்றுதான் அல்லது சிவப்புக் காளை மாட்டிலுள்ள கறுப்பு முடியைப் போன்றுதான் இருக்கிறீர்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 6529 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

மறுமை நாளில் முதன் முதலில் அழைக்கப்படுபவர் (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களாவார்கள். அப்போது அவர்கள் முன் அவர்களின் சந்ததிகள் இருப்பார்கள். சந்ததிகளிடம்'இவர் தாம் உங்கள் தந்தை ஆதம்'' என்று கூறப்படும். உடனே ஆதம் (அலை) அவர்கள் (இறைவனின் அழைப்பை ஏற்று,'இறைவா!) எத்தனை பேரை (அவ்வாறு) பிரிக்க வேண்டும்?' என்று கேட்பார்கள். அதற்கு இறைவன்,'ஒவ்வொரு நூறு பேரிலிருந்தும் தொண்ணூற்று ஒன்பது பேரைத் தனியாகப் பிரித்திடுங்கள்'' என்று கூறுவான் என்று நபி(ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள்.

உடனே மக்கள்'இறைத்தூதர் அவர்களே! எங்களில் ஒவ்வொரு நூறு பேரிலும் தொண்ணூற்று ஒன்பது பேர் (நரகத்திற்கெனப் பிரித்து) எடுக்கப்பட்டால் எங்களில் (சொர்க்கத்திற்கென) யார்தான் மிஞ்சுவார்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்'மற்ற சமுதாயங்களுக்கிடையே என் சமுதாயத்தார் கறுப்புக் காளை மாட்டிலுள்ள வெள்ளை முடியைப் போன்றவர்கள் ஆவார்கள்'' என்று கூறினார்கள்.

## "நிச்சயமாக, மறுமை நாளின் அதிர்ச்சியானது, (திகிலை உண்டாக்கும்) பயங்கரமான நிகழ்ச்சியாகும்' எனும் (திருக்குர்ஆன் 22:1 வது) வசனத் தொடர்.

(திருக்குர்ஆன் 53:54 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'அஸி∴பத்தில் ஆஸி∴பா' (நெருங்கி வர வேண்டியது வந்துவிட்டது) என்பதற்கு'மறுமை நாள் நெருங்கிவிட்டது'' என்று பொருள்.

ஹதீஸ் 6530 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமை நாளில்) அல்லாஹ் (ஆதி மனிதரை நோக்கி)'ஆதமே!' என்று அழைப்பான். அதற்கு அவர்கள்'(இறைவா!) இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறேன். (கட்டளையிடு.) நலம் அனைத்தும் உன் கரங்களில் தான்'' என்று கூறுவார்கள்.

அப்போது அல்லாஹ்'(உங்கள் சந்ததிகளில்) நரகத்திற்குச் செல்லவிருப்பவர்களை (மற்றவர்களிலிருந்து) தனியாகப் பிரித்திடுங்கள்'' என்று கூறுவான். ஆதம் (அலை) அவர்கள்'எத்தனை நரகவாசிகளை?' என்று கேட்பார்கள். அதற்கு அவன்'ஓவ்வோர் ஆயிரம் பேரிலிருந்தும் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேரை (தனியாகப் பிரித்திடுங்கள்)'' என்று பதிலளிப்பான். (அப்போதுள்ள பயங்கர சூழ்நிலையின் காரணத்தால்) பாலகன் கூட நரைத்து (மூப்படைந்து) விடுகின்ற, கர்ப்பம் கொண்ட ஒவ்வொரு பெண்ணும் கர்ப்பத்தை(ப் பீதியின் காரணத்தால் அரைகுறையாக)ப் பிரசவித்து விடுகிற நேரம் இதுதான். மக்களை (அச்சத்தால்) போதையுற்றவர்களாக நீங்கள் காண்பீர்கள். ஆனால், அவர்கள் (உண்மையிலேயே மதுவால்) போதையுற்றிருக்கமாட்டார்கள். மாறாக, அல்லாஹ்வின் வேதனை கடுமையானதாகும்.

இவ்வாறு நபியவர்கள் கூறியது மக்களுக்குச் சிரமமாக இருந்தது. எனவே, அவர்கள்'இறைத்தூதர் அவர்களே! (ஒவ்வோர் ஆயிரத்திலும் நரகத்திற்குச் செல்லாமல் எஞ்சியிருக்கும்) அந்த ஒரு நபர் எங்களில் யார்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்'(பயப்படாதீர்கள்) நற்செய்தி பெறுங்கள். ய∴ஜூஜ் ம∴ஜூஜ் கூட்டத்தாரில் ஆயிரம் பேர் என்றால், உங்களில் ஒருவர் (நரகத்திற்குச் செல்ல தனியாக பிரிக்கப்பட்டோரில்) இருப்பார்'' என்று கூறிவிட்டுப் பிறகு,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! நீங்கள் சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பங்கினராக இருக்கவேண்டும் என்று நான் பேராவல் கொள்கிறேன்'' என்று கூறினார்கள். உடனே நாங்கள் அல்லாஹ்வைப் புகழ்ந்து தக்பீர் (அல்லாஹு அக்பர்) முழக்கமிட்டோம். பிறகு, நபி(ஸல்) அவர்கள்'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! நீங்கள் சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக இருக்கவேண்டுமென நான் பேராவல் கொள்கிறேன். மற்ற சமுதாயங்களோடு ஒப்பிடுகையில் நீங்கள் கறுப்புக் காளை மாட்டின் தோலிலுள்ள வெள்ளை முடியைப் போன்று, அல்லது கழுதையின் காலிலுள்ள வெள்ளை சொட்டையைப் போன்று இருக்கிறீர்கள்'' என்றார்கள்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் கூறினான்:

மகத்தான ஒரு நாளில் நிச்சயமாக அவர்கள் (உயிர் கொடுத்து) எழுப்பப்படுவார்கள் என்பதை அவர்கள் நம்பவில்லையா? அந்நாளில் அம்லத்தாரின் அதிபதி முன் மக்களெல்லாம் (விசாரணைக்காக) நிற்பார்கள். (திருக்குர்ஆன் 83:4-6)

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்: 'அவர்களிடையே இருந்த தொடர்புகள் யாவும் (மறுமையில்) அறுந்து விடும்'' எனும் (திருக்குர்ஆன் 02:166 வது) வசனத்திலுள்ள 'தொடர்புகள்' என்பது, இம்மையிலுள்ள உறவுகளைக் குறிக்கும்.

ஹதீஸ் 6531 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

''அந்நாளில் அம்லத்தாரின் அதிபதி முன் மக்களெல்லாம் (விசாரணைக்காக) நிற்பார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 83:6 வது) வசனம் தொடர்பாக நபி (ஸல்) அவர்கள் கூறுகையில் 'அன்று தம் இரண்டு காதுகளின் பாதி வரை தேங்கி நிற்கும் தம் வேர்வையில் அவர்களில் ஒருவர் நிற்பார்'' என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 6532 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமைநாளில் மனிதர்களுக்கு (அவர்களின் தலைக்கருகில் நெருங்கி வரும் சூரியனால்) வியர்வை ஏற்படும். அவர்களின் வியர்வை தரையினுள் எழுபது முழம் வரை சென்று, (தரைக்கு மேல்) அவர்களின் வாயை அடைந்து, இறுதியில் அவர்களின் காதையும் அடையும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## மறுமைநாளில் பழிதீர்க்கப்படுதல்

மறுமை நாளுக்கு 'அல்ஹாக்கா' ('நிச்சயமானது') என்றொரு பெயருண்டு. ஏனெனில், அந்நாளில் பிரதிபலன் கிடைப்பதும், உண்மைகள் (வெளிச்சத்திற்கு) வருவதும் நிச்சயமாகும். 'அல்ஹாக்கா' மற்றும் 'அல்ஹக்கா' (உண்மையானது) ஆகிய இரண்டுக்கும் பொருள் ஒன்றே. (இதன்றி) 'அல்காரிஆ' (திடுக்கிடச் செய்யக்கூடியது), 'அல்ஃகாஷியா' (சூழ்ந்து கொள்ளக்கூடியது), 'அஸ்ஸாக்கா' (பெருஞ்சப்தம்) ஆகிய பெயர்களும் அதற்கு உண்டு. 'அத்தஃகாபுன்' (இழப்புக்குள்ளாக்குதல்) எனும் பெயரும் உண்டு. அன்று சொர்க்கவாசிகள், நரகவாசிகளை இழப்புக்குள்ளாக்குவர்.

ஹதீஸ் 6533 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் மனிதர்களுக்கிடையே முதன் முதலில் தீர்ப்பளிக்கப்படுவது (உலகில் சிந்தப்பட்ட) இரத்தங்கள் (கொலைகள்) குறித்துதான்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6534 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தம் சகோதரருக்கு அநீதி ஏதேனும் இழைத்திருந்தால் (அவருடன் சமரசம் செய்து) அதிலிருந்து அவர் (இவ்வுலகிலேயே) தம்மை விடுவித்துக் கொள்ளட்டும். ஏனெனில், அங்கு (மறுமையில் ஈட்டுத் தொகை கொடுக்க) பொற்காசோ, வெள்ளிக்காசோ இருக்காது. இவர் தம் சகோதரருக்கு (இழைத்த அநீதிக்கு ஈடாக) இவருடைய நன்மைகளிலிருந்து (தேவையானவற்றை) எடு(த்துக் கொடு)க்கப்படும். இவரிடம் நன்மைகளே இல்லை என்றால், (அநீதிக்குள்ளான) சகோதரனின் பாவங்களிலிருந்து (விம்தாசாரப்படி) எடுத்து இவர் மீது சுமத்தப்(படும். இந்நிலை ஏற்)படுவதற்கு முன்பே (இம்மையில் சமரசம் செய்து கொள்ளட்டும்).

என அபூ ஹுரைர (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6535 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர்கள் நரகத்தி(ன் பாலத்தி)லிருந்து தப்பி வரும்போது சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையிலுள்ள ஒரு பாலத்தில் தடுத்து நிறுத்தப்படுவார்கள். அங்கு உலகில் (வாழ்ந்த போது) அவர்களுக்கிடையே நடந்த அநீதிகளுக்காகச் சிலரிடமிருந்து சிலர் கணக்குத் தீர்த்துக் கொள்வார்கள். இறுதியில் அவர்கள் (மாசு) நீங்கித் தூய்மையாகிவிடும்போது சொர்க்கத்தில் நுழைய அவர்களுக்கு அனுமதி வழங்கப்படும். முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! அவர்கள் சொர்க்கத்தில் உள்ள தம் வசிப்பிடத்தை, உலகத்திலிருந்த அவர்களின் இல்லத்தைவிட எளிதாக அடையாளம் கண்டுகொள்வார்கள்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) யஸீத் இப்னு ஸுரைஉ(ரஹ்) அவர்கள்'(இவ்வுலகில் ஒருவரின் மீது ஒருவர் கொண்டிருந்த) குரோதத்தை அவர்களின் இதயங்களிலிருந்து அகற்றிவிடுவோம்" எனும் (திருக்குர்ஆன் 07:43 வது) வசனத்தை ஓதிவிட்டு, (அதற்கு விளக்கமாக) இந்த ஹதீஸை அறிவித்தார்கள்.

## துருவித்துருவி விசாரிக்கப்படுபவர் வேதனையில் அகப்படுவார்.

ஹதீஸ் 6536. '(மறுமையில்) துருவித்துருவி விசாரிக்கப்படுபவர் வேதனை செய்யப்படுவார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். நான்'அல்லாஹ் (தன் வேதத்தில்)'வலக் கரத்தில் தம் வினைப் பதிவுச் சீட்டு வழங்கப்பட்டவரிடம் எளிய முறையில் கணக்கு வாங்கப்படும்' (திருக்குர்ஆன் 84:08) என்றல்லவா கூறுகிறான்?' எனக் கேட்டதற்கு,'இது (கேள்வி கணக்கு தொடர்பானது அன்று மாறாக, மனிதர்களின் நன்மை, தீமை பட்டியலை அவர்களுக்கு முன்னால்) சமர்ப்பிக்கப்படுதலாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்."118 என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

மேற்கண்ட ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6537 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'மறுமை நாளில் விசாரணை செய்யப்படும் எவரும் அழிந்தேபோய் விடுவார்" என்று கூறினார்கள். அப்போது நான்'இறைத்தூதர் அவர்களே! எவருடைய வினைப் பதிவுச் சீட்டு அவரின் வலக் கரத்தில் வழங்கப்படுமோ அவரிடம் எளிய முறையில் கணக்கு வாங்கப்படும்' என்றல்லவா அல்லாஹ் கூறினான்?' (திருக்குர்ஆன் 84:08) என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'இது (கேள்வி கணக்கு தொடர்பானது அன்று மாறாக, மனிதர்களின் நன்மை தீமைகளின் பட்டியலை அவர்களுக்கு முன்) சமர்ப்பிக்கப்படுவது தான். மறுமையில் துருவித்துருவி விசாரணை செய்யப்படும் எவரும் வேதனை செய்யப்படாமலிருப்பதில்லை" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6538 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

மறுமை நாளில் இறை மறுப்பாளன் (விசாரணைக்காகக்) கொண்டுவரப்பட்டு'உனக்கு பூமி நிரம்பத் தங்கம் சொந்தமாக இருந்தால் நீ அவற்றைப் பிணைத் தொகையாகத் தர(வும் அதன் மூலம் நரக வேதனையிலிருந்து விடுதலை பெறவும்) நீ முன்வருவாயல்லவா?' என்று அவனிடம் கேட்கப்படும். அதற்கு அவன்'ஆம்' என்று பதிலளிப்பான். அப்போது'இதைவிட சுலபமான ஒன்றே

(-அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காமலிருப்பதையே) உன்னிடம் கோரப்பட்டிருந்தது. (ஆனால், அதை நீ ஏற்கவில்லை)‘‘ என்று கூறப்படும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறி வந்தார்கள்.

ஹதீஸ் 6539 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் மறுமை நாளில் உங்களில் ஒவ்வொருவருடனும் (தனித்தனியாகப்) பேசாமலிருப்பதில்லை. அப்போது அல்லாஹ்வுக்கும் உங்களில் ஒருவருக்கும் இடையே மொழிபெயர்ப்பாளர் எவரும் இருக்கமாட்டார். பிறகு அவர் கூர்ந்து பார்ப்பார். தமக்கு முன்புறம் எதையும் அவர் காணமாட்டார். பிறகு தம(து முகத்து)க்கு எதிரே பார்ப்பார். அப்போது அவரை (நரக) நெருப்புதான் வரவேற்கும். எனவே, முடிந்தால் பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் நரகத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

என அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6540 அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள்’நரகத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறிவிட்டுப் பிறகு (நரகத்தைப் பார்த்து அஞ்சுவதைப் போன்று) முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். பிறகு (மீண்டும்)’நரகத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்‘‘ என்று கூறிவிட்டுப் பிறகு, (நரகத்தைக் கண்டு அஞ்சுவதைப் போன்று) தம் முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். அவர்கள் நரகத்தையே பார்க்கிறார்களோ என்று நாங்கள் எண்ணும் அளவுக்கு மூன்று முறை (இவ்வாறு) செய்தார்கள். பிறகு’பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் உங்களை நரகத்திலிருந்து காப்பாற்றிக் கொள்ளுங்கள். அதுவும் இல்லாதவர் இன்சொல்லைக் கொண்டேனும் நரகத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளட்டும்‘‘ என்று கூறினார்கள்.

## விசாரணையில்லாமல் எழுபதாயிரம் பேர் சொர்க்கத்தில் நுழைவார்கள்.

ஹதீஸ் 6541 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: (விண்ணுலகப் பயணத்தின் போது) பல சமுதாயத்தார் எனக்கு எடுத்துக் காட்டப்பட்டனர். அப்போது ஓர் இறைத் தூதருடன் (கணிசமான எண்ணிக்கையிலிருந்த) ஒரு கூட்டம் கடந்து சென்றது. மற்றோர் இறைத்தூதருடன் சில பேர் கடந்து சென்றனர். மற்றோர் இறைத்தூதருடன் பத்துப் பேரும், இன்னோர் இறைத்தூதருடன் பத்துப் பேரும், இன்னோர் இறைத்தூதருடன் ஐந்து பேரும் கடந்து சென்றனர். பிறிதோர் இறைத்தூதர் தனியாகச் சென்றார். அப்போது ஒரு மிகப் பெரிய கூட்டத்தைக் கண்டேன். நான்’(வானவர்) ஜிப்ரீலே! இவர்கள் என் சமுதாயத்தினரா?’ என்று கேட்டேன். ஜிப்ரீல்,‘இல்லை. மாறாக, அடிவானத்தைப் பாருங்கள்‘‘ என்றார். உடனே பார்த்தேன். அங்கே மிகப் பெரும் மக்கள் திரள் இருக்கக் கண்டேன். ஜிப்ரீல்’இவர்கள் தாம் உங்கள் சமுதாயத்தார். இவர்களின் முன்னிலையில் இருக்கும் இந்த எழுபதாயிரம் பேருக்கு விசாரணையுமில்லை. வேதனையுமில்லை‘‘ என்று கூறினார். நான்’ஏன்?’ என்று கேட்டேன். அதற்கு ஜிப்ரீல்,‘இவர்கள் (நோய்க்காக) சூடிட்டுக் கொள்ளாதவர்களாகவும், ஓதிப்பார்க்காதவர்களாகவும், பறவை சகுனம் பார்க்காதவர்களாகவும், தங்கள் இறைவன் மீதே முழு நம்பிக்கை வைத்தவர்களாகவும் இருந்தார்கள்‘‘ என்று கூறினார்.

உடனே நபி(ஸல்) அவர்களை நோக்கி உக்காஷா இப்னு மிஹ்ஸன்(ரலி) அவர்கள் எழுந்து (வந்து)'அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்'அல்லாஹ்வே! இவரை அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக!' எனப் பிரார்த்தித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களை நோக்கி இன்னொரு மனிதர் எழுந்து (வந்து)'அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்'இந்த விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6542 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'என் சமுதாயத்தாரில் எழுபதாயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டம், பௌர்ணமி இரவில் சந்திரன் பிரகாசிப்பதைப் போன்று முகங்கள் பிராகாசித்தபடி (விசாரணையின்றி சொர்க்கத்துக்குள்) நுழைவார்கள்‘‘ என்று கூறினார்கள். உடனே உக்காஷா இப்னு மிஹ்ஸன் அல்அசதீ(ரலி) அவர்கள் தம் மீதிருந்த கோடுபோட்ட சால்வையை உயர்த்தியவாறு எழுந்து'இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘‘ என்றார். நபி(ஸல்) அவர்கள்'அல்லாஹ்வே! இவரையும் அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக!"என்று பிரார்த்தனை செய்தார்கள். பிறகு அன்சாரிகளில் ஒருவர் எழுந்து'இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்' என்றார். நபி(ஸல்) அவர்கள்'அல்லாஹ்வே! இவரையும் அவர்களில் ஒருவராக ஆக்குவாயாக!"என்று பிரார்த்தனை செய்தார்கள். பிறகு அன்சாரிகளில் ஒருவர் எழுந்து'இறைத்தூதர் அவர்களே! அவர்களில் ஒருவனாக என்னையும் ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘‘ என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'இந்த விஷயத்தில் உக்காஷா உம்மை முந்திவிட்டார்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6543 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நிச்சயமாக என் சமுதாயத்தாரில்'எழுபதாயிரம் பேர்' அல்லது'ஏழு லட்சம் பேர்' ஒருவரையொருவர் பற்றிக்கொண்டு ஒரே சீரா (விசாரணையின்றி) சொர்க்கத்தில் நுழைவார்கள். அவர்களில் முதலாமவரும் இறுதியானவரும் (ஒரே நேரத்தில்) சொர்க்கத்தில் நுழையும் அளவுக்கு (ஓரணியில்) செல்வார்கள். மேலும், அவர்களின் முகங்கள் பௌர்ணமி இரவில் முழு நிலவு பிரகாசிப்பதைப் போன்று பிரகாசிக்கும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6544 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கவாசிகள் சொர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைவார்கள். பிறகு ஓர் அறிவிப்பாளர் அவர்களிடையே எழுந்து'நரகவாசிகளே! இனி மரணம் இல்லை. சொர்க்கவாசிகளே! மரணம் இல்லை இது நிரந்தரம்‘‘ என்று அறிவிப்பார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6545. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கவாசிகளிடம்'(இது) நிரந்தரம் (இனி) மரணம் இல்லை‘‘ என்றும், நரகவாசிகளிடம்'(இது) நிரந்தரம் மரணம் (இனி) இல்லை‘‘ என்று சொல்லப்படும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சொர்க்கம், நரகம் ஆகியவற்றின் நிலை

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் சொர்க்கவாசிகள் உண்ணும் முதலாவது உணவு, மீன் ஈரலில் ஒட்டிக் கொண்டிருக்கும் தனித் துண்டாகும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

(திருக்குர்ஆன் 09: 72 வது இறைவசனத்தின் மூலத்திலுள்ள)'அத்ன்' எனும் சொல்லுக்கு'நிலையானது' என்று பொருள். (அதன் வினைச் சொல்லான)'அதன்த்து பி அர்ளின்' எனும் வாக்கியத்திற்கு'நான் ஒரு நாட்டில் நிலையாகத் தங்கினேன்'' என்று பொருள். இதிலிருந்தே'மஅதின் (சுரங்கம்) எனும் சொல் பிறந்தது. மேலும்,'மஅதினி ஸித்க்' என்றால்'உண்மையின் பிறப்பிடம்' என்று பொருள்.

ஹதீஸ் 6546 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (விண்ணுலகப் பயணத்தின் போது) சொர்க்கத்தை எட்டிப் பார்த்தேன். அங்கு குடியிருப்போரில் அதிகமானவர்களாக ஏழைகளையே கண்டேன். நரகத்தையும் எட்டிப் பார்த்தேன். அதில் குடியிருப்போரில் அதிகமானவர்களாகப் பெண்களையே கண்டேன்.

என இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6547 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் சொர்க்கத்தின் வாசலில் நின்றிருந்தேன். அதில் நுழைபவர்களில் பெரும் பாலானோர் ஏழைகளாகவே இருந்தார்கள். தனவந்தர்கள் (கேள்வி கணக்கிற்காக சொர்க்கத்தில் நுழைந்துவிடாமல்) தடுத்து நிறுத்தப்பட்டிருந்தனர். ஆனால், நரகவாசிகளை நரகத்திற்குக் கொண்டு செல்லுமாறு ஆணையிடப்பட்டிருந்தது. நான் நரகத்தின் வாசலில் நின்றிருந்தேன். அதில் நுழைபவர்களில் பெரும்பாலானோர் பெண்களாகவே இருந்தார்கள்.

என உசாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6548 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கவாசிகள் சொர்க்கத்திற்கும், நரகவாசிகள் நரகத்திற்கும் சென்று சேர்ந்த பிறகு'மரணம்' (ஓர் ஆட்டின் உருவத்தில்) கொண்டு வரப்பட்டு, சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே நிறுத்தப்படும். பின்னர் அது அறுக்கப்படும். பிறகு அறிவிப்பாளர் ஒருவர்'சொர்க்கவாசிகளே! (இனி) மரணம் என்பதே கிடையாது நரகவாசிகளே! (இனி) மரணம் என்பதே கிடையாது'' என அறிவிப்பார். அப்போது சொர்க்கவாசிகளுக்கு மகிழ்ச்சிக்கு மேல் மகிழ்ச்சி அதிகமாகும். நரகவாசிகளுக்குக் கவலைக்கு மேல் கவலை அதிகமாகும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6549 அல்லாஹ் (மறுமையில்) சொர்க்கவாசிகளை நோக்கி சொர்க்கவாசிகளே என்று அழைப்பான். அதற்கு அவர்கள் எங்கள் அதிபதியே இதோ கீர்ப்படியக் காத்திருக்கிறோம் என்று பதிலளிப்பார்கள். அப்போது அல்லாஹ் திருப்தி அடைந்தீர்களா, என்று கேட்பான். அதற்கு அவர்கள் உன் படைப்புகளில் யாருக்கும் நீ வழங்கியிராத (அருட்செல்வங்கள் இன்பங்கள் ஆகிய)வற்றை எங்களுக்கு நீ வழங்கியுள்ளபோது நாங்கள் திருப்தி அடையாமல் இருப்போமா, என்று கூறுவார்கள். அப்போது அல்லாஹ் அதைவிடவும் சிறந்த ஒன்றை உங்களுக்கு நான் வழங்கப்போகிறேன் என்பான். அவர்கள் அதிபதியே அதைவிடச் சிறந்தது எது, என்று கேட்பார்கள். அதற்கு அல்லாஹ் உங்கள் மீது என் திருப்தியை அருளுகிறேன். இனி

ஒருபோதும் உங்கள் மீது கோபப்படமாட்டேன் என்று கூறுவான். இதை அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 6550 இளைஞராயிருந்த ஹாரிஜா பின் சுராக்கா அல் அன்சாரி (ரலி) அவர்கள் பத்ருப் போரில் கொல்லப்பட்டார்கள். அப்பால் அவர்களின் தாயார் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே (என் மகன்) ஹாரிஜாவுக்கு என்னிடமுள்ள அந்தஸ்தைத் தாங்கள் அறிந்துள்ளீர்கள். (இப்போது) ஹாரிஜாவுக்கு என்னிடமுள்ள அந்தஸ்தைத் தாங்கள் அறிந்துள்ளீர்கள். (இப்போது) ஹாரிஜா சொர்க்கத்தில் இருந்தால் நான் நன்மையை நாடி பொறுமை காப்பேன். இதுவன்றி நிலைமை வேறாக இருப்பின் நான் என்ன செய்வேன் என்பதைத் தாங்களே ஊகிக்கலாம் என்று கூறினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அடப்பாவமே இழப்பால் துடிக்கிறாயோ அதுவென்ன சொர்க்கம் ஒன்றுதான் உள்ளதா, சொர்க்கங்க(ளின் படித்தரங்க)ள் நிறைய உள்ளன. (உன் மகன்) ஹாரிஜா (உயர்ந்த சொர்க்கமான) ஜன்னத்துல் பிர்தவ்ஸ் எனும் சொர்க்கத்தில் இருக்கிறார் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6551. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(நரகத்தில்) இறைமறுப்பாளனின் இரண்டு தோள் புஜங்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாகப் பயணிப்பவர் மூன்று நாள்கள் கடக்கும் தூரமாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6552 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. அதன் நிழலில் பயணிப்பவர் நூறு ஆண்டுகள் பயணித்தாலும் அதைக் கடந்து செல்ல முடியாது.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6553 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கத்தில் ஒரு மரம் உள்ளது. (அதன் நிழலில்) விரைந்து செல்லும் கட்டான உடலுள்ள உயர் ரகக் குதிரை நூறாண்டுகள் பயணித்தாலும் அதைக் கடக்க முடியாது.

என அபூ ஸயீத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6554 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நிச்சயமாக என் சமுதாயத்தாரில்'எழுபதாயிரம் பேர்' அல்லது'ஏழு லட்சம் பேர்' (விசாரணையின்றி) சொர்க்கத்தில் நுழைவார்கள்.

அறிவிப்பாளர் அபூ ஹாஸிம்(ரஹ்) அவர்களுக்கு இந்த இரண்டில் எது என்று (உறுதியாகத்) தெரியவில்லை.

அவர்களில் ஒருவரை ஒருவர் பற்றிக் கொண்டு ஒரே சீராக நுழைவார்கள். அவர்களில் கடைசி நபர் நுழையாத வரை முதல் நபர் நுழையமாட்டார். (அனைவரும் ஓரணியில் நுழைவர்.) அவர்களின் முகங்கள் பௌர்ணமி இரவில் (பிரகாசிக்கும்) முழு நிலவின் வடிவத்தில் இருக்கும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6555 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கவாசி(களில் கீழ்த்தட்டில் இருப்பவர்)களை (மேல்) அறை(களில் உள்ளவர்)களை, வானில் நீங்கள் நட்சத்திரங்களைப் பார்ப்பதைப் போன்று (ஆர்வத்துடன்) பார்ப்பார்கள்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6556 அபூ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் இந்த ஹதீஸை நுஅமான் இப்னு அபீ அய்யாஷ்(ரஹ்) அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அவர்கள் கூறினார்கள்: இந்த ஹதீஸை அபூ ஸயீத்(ரலி) அவர்கள் அறிவித்துவிட்டு அதில்'ம்ழக்கு அடிவானில் (தோன்றி), மேற்கு அடிவானில் மறையும் நட்சத்திரத்தைப் பார்ப்பதைப் போன்று' எனக் கூடுதலாக அறிவித்ததை நான் உறுதியாகக் கேட்டேன்.

ஹதீஸ் 6557 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் நரகவாசிகளிலேயே மிக இலேசான வேதனை அளிக்கப்படுபவரிடம்'பூமியிலிருக்கும் பொருள்களெல்லாம் உனக்கே சொந்தம் என்றிருந்தால் நீ அவற்றை பிணைத் தொகையாகத் தர(வும் அதன் மூலம் இந்த வேதனையிலிருந்து விடுதலை பெறவும்) நீ முன்வருவாய் அல்லவா?' என்று அல்லாஹ் கேட்பான். அதற்கு அவர்'ஆம்' என்று பதிலளிப்பார். அப்போது அல்லாஹ்'நீ (மனிதர்களின் தந்தை) ஆதமின் முதுகந்தண்டில் (அணுவாக) இருந்தபோது இதை விட இலேசான ஒன்றை எனக்கு எதையும் இணை கற்பிக்கலாகாது என்பதைத்தான் உன்னிடமிருந்து எதிர்பார்த்தேன். ஆனால் (பூமிக்கு உன்னை அனுப்பியபோது) எனக்கு இணை கற்பிப்பப்பதைத் தவிர வேறெதற்கும் நீ ஒப்புக் கொள்ளவில்லையே!"என்று கூறுவான்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6558 ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,'பரிந்துரையால் (நரகவாசிகளில் சிலர்) நரகத்திலிருந்து வெளியேறுவார்கள். அப்போது அவர்கள்'ஸஅரீர்' போன்று இருப்பார்கள்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர் ஹம்மாத் இப்னு ஸைத்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான்'ஸஆரீர்' என்றால் என்ன? என்று அறிவிப்பாளர் அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்களிடம் கேட்டேன். அன்னார்'வெள்ளரிப் பிஞ்சுகள்' என்று பதிலளித்தார்கள். அன்னாருக்குப் பல் விழுந்துவிட்டிருந்தது. (இதனால்'ஷஆரீர்' என்பதை'ஸஆரீர்'என்று உச்சரித்தார்கள்.) மேலும்,'பரிந்துரையால் (சிலர்) நரகத்திலிருந்து வெளியேறுவர்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன் என்று ஜாபிர்(ரலி) அவர்கள் உங்களிடம் கூறினார்களா? என அம்ர் இப்னு தீனார் அவர்களிடம் வினவினேன். அவர்கள்'ஆம்' என்றார்கள்.

ஹதீஸ் 6559 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சிலர் (நரக நெருப்பு தீண்டியதால்) தம் சருமத்தின் நிறம் மாறிய பின் நரகத்திலிருந்து வெளியேறி, சொர்க்கத்துக்குள் நுழைவார்கள். அவர்களை சொர்க்கவாசிகள்'ஜஹன்னா மிய்யூன்' (நரக விடுதலை பெற்றோர்) எனப் பெயரிட்டு அழைப்பார்கள்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6560 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமை நாளில் விசாரணை முடிந்த பின்) சொர்க்கவாசிகள் சொர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைந்துவிட்ட பின் அல்லாஹ்'எவருடைய உள்ளத்தில் கடுகளவு ஈமான் எனும் இறைநம்பிக்கை உள்ளதோ அவரை (நரகத்திலிருந்து) வெளியேற்றிவிடுங்கள்'' என்று கூறுவான். உடனே அவர்கள் கருகிய நிலையில் வெளியேறுவார்கள். அப்போது அவர்கள் கரிக்

கட்டைகளாகக் காட்சியளிப்பார்கள். பின்னர் அவர்கள்'நஹ்ருல் ஹயாத்' எனும் (ஜீவ) நதியில் போடப்படுவார்கள். உடனே அவர்கள்'சேற்று வெள்ளத்தில்' அல்லது'வெள்ளத்தின் கறுப்புக் களி மண்ணில்' விதை முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) நிறம் மாறி விடுவார்கள். அந்த வித்து (விலிருந்து வரும் புற்பூண்டுகள்) மஞ்சள் நிறத்தில் (பார்ப்பதற்கு அழகாகவும், காற்றில்) அசைந்தாடியதாக(வும்) முளைப்பதை நீங்கள் கண்டதில்லையா?

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6561 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் நரகவாசிகளிலேயே மிகவும் இலேசாக வேதனை செய்யப்படுபவர் ஒரு மனிதராவார். அவரின் உள்ளங்கால்களின் நடுவில் (நரக) நெருப்புக் கங்கு வைக்கப்படும். அதனால் அவரின் மூளை கொதிக்கும்.

என நுஅமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6562 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் நரகவாசிகளிலேயே மிகவும் இலேசாக வேதனை செய்யப்படுபவர் ஒரு மனிதராவார். அவரின் உள்ளங்கால்களின் நடுவில் இரண்டு நெருப்புக் கங்குகள் வைக்கப்படும். (அடுப்பில் வைக்கப்பட்டுள்ள) செம்புப் பாத்திரம் (அல்லது) பன்னீர் பாத்திரம் கொதிப்பதைப் போன்று அவற்றால் அவரின் மூளை கொதிக்கும்.

என நுஅமான் இப்னு பஷீர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6563 அதீ இப்னு ஹாத்திம்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் நரகத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். (அப்போது நரகத்தைப் பார்த்து அஞ்சுவதைப் போன்று) தம் முகத்தைத் திருப்பிக் கொண்டு நரகத்திலிருந்து பாதுகாப்புக் கோரினார்கள். பிறகு (மீண்டும்) நரகத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போதும் தம் முகத்தைத் திருப்பிக் கொண்டு, நரகத்திலிருந்து பாதுகாப்புக் கோரினார்கள். பின்னர்'பேரீச்சம் பழத்தின் ஒரு துண்டை தர்மம் செய்தேனும் நரகத்திலிருந்து தப்பித்துக் கொள்ளுங்கள். அதுவும் இல்லாதவர் இன்சொல்லைக் கொண்டேனும் (தப்பித்துக் கொள்ளுங்கள்)‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6564 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் அவர்களின் பெரிய தந்தை அபூ தாலிப் அவர்களைப் பற்றிக் கூறப்பட்டது. அப்போது அவர்கள்,'அவருக்கு என் பரிந்துரை மறுமை நாளில் பயனளிக்கக் கூடும் (அதனால்) நரக நெருப்பு அவரின் (முழு உடலையும் தீண்டாமல்) கணுக்கால்கள் வரை மட்டுமே தீண்டும்படி ஆக்கப்படலாம். (ஆனால்) அதனால் அவரின் மூளையின் மூலப்பகுதி (தகித்துக்) கொதிக்கும்‘‘ என்று சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 6565 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் மறுமை நாளில் மக்களை ஒன்று கூட்டுவான். அப்போது அவர்கள்'(அதி பயங்கரமான) இந்த இடத்திலிருந்து நம்மை விடுவிக்க நம் இறைவனிடம் பரிந்துரைக்கும்படி (யாரையாவது) நாம் கேட்டுக்கொண்டால் நன்றாயிருக்குமே!”என்று கூறியவாறு (ஆதி மனிதரும் ஆதித் தூதருமான) ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள். அவரிடம்'அல்லாஹ் தன்னுடைய கையால் உங்களைப் படைத்தான். தன்(னால் படைக்கப்பட்ட) உயிரை உங்கள் உடலுக்குள்

ஊதினான். மேலும், தன் வானவர்களுக்கு அவன் கட்டளையிட, அவர்கள் உங்களுக்குச் சிரம் பணிந்தனர். எனவே, (இந்தத் துன்ப நிலையிலிருந்து எங்களை விடுவிக்கும்படி) எங்களுக்காக நம் இறைவனிடத்தில் பரிந்துரை செய்யுங்கள்" என்று கூறுவார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள்'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறியவாறு, (உலகில்) தாம் புரிந்தவற்றை அவர்கள் நினைவுகூருவார்கள். பிறகு'நீங்கள் (எனக்குப் பின்) முதல் தூதராக இறைவன் அனுப்பிவைத்த நபி நூஹ் அவர்களிடம் செல்லுங்கள்" என்று கூறுவார்கள். உடனே மக்கள் நூஹ் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அன்னாரும்'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறி, (உலகில்) தாம் புரிந்தவற்றை நினைவுகூர்ந்து'அல்லாஹ் தன்னுடைய உற்ற நண்பராக்கிக் கொண்ட (நபி) இப்ராஹீமிடம் நீங்கள் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள்.

உடனே மக்கள் அன்னாரிடம் செல்ல, அவர்களும்'(நீங்களும் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறியவாறு, தாம் புரிந்த தவற்றை நினைவு கூருவார்கள். பிறகு'அல்லாஹ் உரையாடிய (நபி) மூஸாவிடம் செல்லுங்கள்" என்று கூறிவிடுவார்கள். உடனே மக்கள் அன்னாரிடம் செல்ல, அவர்களும்'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை" என்று கூறியவாறு தாம் புரிந்த தவற்றை அவர்கள்நினைவு கூர்ந்தபடி'நபி(ஸல்) ஈசாவிடம் செல்லுங்கள்!"என்று கூறிவிடுவார்கள். உடனே மக்கள் அன்னாரிடம் செல்வார்கள். அப்போது அவர்கள்'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை. நீங்கள் இறுதி நபியான முஹம்மத்(ஸல்) அவர்களிடம் செல்லுங்கள். ஏனெனில், அவர் முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்டவர்" என்று கூறுவார்கள்.

உடனே மக்கள் என்னிடம் வருவார்கள். அப்போது நான் என் இறைவனிடத்தில் அனுமதி கேட்பேன். அவனை நான் கண்டதும் சிரம்பணிந்தவனாக சஜ்தாவில் விழுந்து விடுவேன். அவன் நாடிய நேரம் வரை (நான் விரும்பியதைக் கோர) என்னைவிட்டுவிடுவான். பிறகு (இறைவன் தரப்பிலிருந்து)'உங்கள் தலையை உயர்த்துங்கள். கேளுங்கள் உங்களுக்குக் கொடுக்கப்படும். சொல்லுங்கள் செவியேற்கப்படும். பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்" என்று என்னிடம் கூறப்படும். உடனே நான் என்னுடைய தலையை உயர்த்தி இறைவன் எனக்குக் கற்றுத்தரும் புகழ் மொழிகளைக் கூறி அவனைப் புகழ்வேன். பிறகு, நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன் (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு அவர்களை நான் நரகத்திலிருந்து வெளியேற்றி சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். பிறகு மீண்டும் நான் இறைவனிடம் சென்று சிரம் பணிந்தவனாக சஜ்தாவில் விழுவேன். அதைப் போன்றே மூன்றாம் முறை அல்லது நான்காம் முறை செய்வேன். இறுதியாகக் குர்ஆன் தடுத்துவிட்டவர்(களான நிரந்தர நரகம் விதிக்கப்பட்ட இறைமறுப்பாளர்கள் மற்றும் நயவஞ்சகர்)களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் எஞ்சியிருக்கமாட்டார்கள்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான கத்தாதா இப்னு திஆமா(ரஹ்) அவர்கள்,'குர்ஆன் தடுத்துவிட்டவர்களைத் தவிர' என்பதற்கு விளக்கமாக,'நிரந்தர நரகம் கட்டாயமாம்விட்டவர்களைத் தவிர' என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 6566 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இந்த) முஹம்மதின் பரிந்துரையால் ஒரு கூட்டம் நரகத்திலிருந்து வெளியேறி சொர்க்கம் செல்வார்கள். அவர்கள்'ஜஹன்னமிய்யூன்' (நரக விடுதலை பெற்றோர்) என்று பெயரிட்டு அழைக்கப்படுவார்கள்.

என இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6567 அனஸ் (ரலி) அறிவித்தார்.

ஹாரிஸா இப்னு சுராக்கா அல்அன்சாரி (ரலி) அவர்கள் பத்ருப் போரில் யாரோ எறிந்த அம்பு தாக்கி இறந்தார்கள். இந்நிலையில் அவரின் தாயார் இறைத்தூதர் அவர்களே! (என் மகன்) ஹாரிஸாவுக்கு என் இதயத்தில் உள்ள இடத்தைத் தாங்கள் அறிவீர்கள். அவர் (இப்போது) சொர்க்கத்தில் இருந்தால் அவருக்காக நான் அழப்போவதில்லை. அவ்வாறில்லையேல், நான் என்ன செய்வேன் என்பதைத் தாங்கள் பார்க்கத்தான் போகிறீர்கள்" என்று கூறினார். அப்போது அவரிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள்'இழப்பால் துடிக்கிறாயா? அதுவென்ன, சொர்க்கம் ஒன்றுதான் உள்ளதா? சொர்க்கங்களின் படித்தரங்)கள் நிறைய உள்ளன. உன் மகன்'ஃபிர்தவ்ஸ்' எனும் உயர்ந்த சொர்க்கத்தில் உள்ளார்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6568. மேலும், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இறைவழியில் காலையில் சிறிது நேரம், அல்லது மாலையில் சிறிது நேரம் (போர் புரியச்) செல்வது இந்த உலகத்தையும் அதிலுள்ள செல்வங்களையும் விடச் சிறந்தது ஆகும். உங்களில் ஒருவருக்குச் சொர்க்கத்தில் ஒரு வில் அளவுக்கு, அல்லது ஒரு பாதம் வைக்கும் அளவுக்கு இடம் கிடைப்பது இந்த உலகத்தையும் அதிலுள்ள செல்வங்களையும் விடச் சிறந்தது ஆகும். சொர்க்கத்து மங்கையரில் ஒருவர் பூமியில் தோன்றினால், வானத்துக்கும் பூமிக்கும் இடையே உள்ள பகுதிகளெல்லாம் ஒளிரும். மேலும், அப்பகுதிகள் அனைத்திலும் நறுமணம் கமழும். அந்த மங்கையின் முகத்திரை (மட்டுமே) இந்த உலகத்தையும் அதிலுள்ள செல்வங்களைவிட மேலானதாகும்.

ஹதீஸ் 6569 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(சொர்க்கவாசிகளில்) எவரும், (உலக வாழ்வில்) தாம் பாவம் புரிந்திருந்தால் நரகத்தில் தம் இருப்பிடம் எதுவாக இருந்திருக்கும் என்று காட்டப்படாமல் சொர்க்கத்தில் நுழையமாட்டார். அவர் அதிகமாக (மம்ழ்ச்சியடைந்து இறைவனுக்கு) நன்றி செலுத்துவதற்காகவே (இவ்வாறு காட்டப்படும்). (நரகவாசிகளில்) எவரும், (உலக வாழ்வில்) தாம் நன்மை புரிந்திருந்தால் சொர்க்கத்தில் தம் இருப்பிடம் எதுவாக இருந்திருக்கும் என்று காட்டப்படாமல் நரகத்தில் நுழையமாட்டார். இது அவருக்கு (பெரும்) துயரமாக அமையவேண்டும் என்பதற்காகவே (காட்டப்படுகிறது. )

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6570 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நான்'இறைத்தூதர் அவர்களே! மறுமை நாளில் மக்களிலேயே தங்களின் பரிந்துரை மூலம் நற்பேறு பெறுகிறவர் யார்?' என்று கேட்டேன்.

அதற்கு அவர்கள்'அபூ ஹுரைராவே! என்னைப் பற்றிய செய்திகளின் மீது உமக்கிருக்கும் பேராவல் எனக்குத் தெரியும். எனவே, இச்செய்தியைப் பற்றியும் உமக்கு முன்னர் வேறு யாரும் நிச்சயமாகக் கேட்கமாட்டார்கள் என்று நான் எண்ணியிருந்தேன். மறுமை நாளில் மக்கள் அனைவரிலும் என் பரிந்துரை மூலம் நற்பேறு பெறுகிறவர் யாரெனில், உளப்பூர்வமாக

தூய்மையான எண்ணத்துடன்'லா இலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் இல்லை) என்று சொன்னாரே அவர் தாம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6571 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (சொர்க்கவாசிகள் மற்றும் நரகவாசிகளின் நிலை குறித்துப் பின்வருமாறு) கூறினார்கள்: நரகவாசிகளில் இறுதியாக நரகத்திலிருந்து வெளியேறுபவர் யார் என்பதையும், சொர்க்கவாசிகளில் இறுதியாகச் சொர்க்கத்தில் நுழைபவர் யார் என்பதையும் நான் நன்கறிவேன். நரகத்திலிருந்து தவழ்ந்தபடி வெளியேறுகிற ஒரு மனிதரே அவர் அவரிடம் அல்லாஹ்'நீ போய் சொர்க்கத்தில் நுழைந்துகொள்'' என்பான். அவர் சொர்க்கத்திற்குச் செல்வார். அது நிரம்பியிருப்பதைப் போன்று அவருக்குத் தோன்றும் உடனே அவர் திரும்பி வந்து'என் இறைவா! அது நிரம்பியிருக்கக் கண்டேன்'' என்று கூறுவார். அதற்கு அல்லாஹ்'நீ சென்று சொர்க்கத்தில் நுழைந்துகொள்'' என்று (மீண்டும்) சொல்வான். அவர் சொர்க்கத்திற்குச் செல்வார். அது நிரம்பியிருப்பதைப் போன்று அவருக்குத் தோன்றும். எனவே, அவர் திரும்பி வந்து'என் இறைவா! அது நிரம்பியிருக்கக் கண்டேன்'' என்று கூறுவார். அதற்கு அவன்'நீ சென்று சொர்க்கத்தில் நுழைந்து கொள். ஏனெனில், உலகம் மற்றும் அதைப் போன்ற பத்து மடங்கு' அல்லது'உலகத்தைப் போன்று பத்து மடங்கு' (இடம் சொர்க்கத்தில்) உனக்கு உண்டு'' என்று சொல்வான். அதற்கு அவர்'அரசனாகிய நீ என்னைப் பரிகாசம் செய்கிறாயா?' அல்லது'என்னை நகைக்கிறாயா?' என்று கேட்பார்.

(இதைக் கூறியபோது) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்ததை பார்த்தேன்.

அறிவிப்பாளர்களில் ஒருவர் கூறுகிறார்: இவரே சொர்க்கவாசிகளில் குறைந்த அந்தஸ்து உடையவராவார் என்று கூறப்பட்டுவந்தது.

ஹதீஸ் 6572 அப்பாஸ் இப்னு அப்தில் முத்தலிப் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களிடம்'அபூ தாலிப் அவர்களுக்கு ஏதேனும் நீங்கள் (பிரதி) உபகாரம் செய்தீர்களா?' என்று கேடேன்.

## 'அஸ்ஸிராத் என்பது நரகத்தின் பாலமாகும்.

ஹதீஸ் 6573 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

மக்களில் சிலர்'இறைத்தூதர் அவர்களே! மறுமையில் நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா?' என்று (நபி (ஸல்) அவர்களிடம்) கேட்டார்கள். அப்போது நபி அவர்கள்'மேகம் மறைக்காத சூரியனைக் காண்பதில் உங்களுக்குச் சிரமம் உண்டா?' என்று கேட்டார்கள். மக்கள்'இல்லை இறைத்தூதர் அவர்களே!"என்று பதிலளித்தார்கள். நபி (ஸல்) அவர்கள்'பௌர்ணமி இரவில் மேகம் மறைக்காத முழு நிலவைக் காண்பதில் உங்களுக்குச் சிரமம் உண்டா?' என்று கேட்டார்கள். மக்கள்'(சிரமம்) இல்லை இறைத்தூதர் அவர்களே!"என்று பதிலளித்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இவ்வாறுதான் மறுமை நாளில் உங்களுடைய இறைவனை நீங்கள் காண்பீர்கள். அல்லாஹ் மனிதர்களை (மறுமை மன்றத்தில்) ஒன்று கூட்டி'(உலகத்தில்) யார் எதை வணங்கிக் கொண்டிருந்தார்களோ அதைப் பின்தொடர்ந்து செல்லட்டும்'' என்பான். எனவே, சூரியனை வணங்கிக் கொண்டிருந்தவர்கள் (சூரியனைப்) பின்தொடர்ந்து செல்வார்கள். சந்திரனை வணங்கிக் கொண்டிருந்தவர்கள்

(சூரியனைப்) பின்தொடர்ந்து செல்வார்கள். ஷைத்தான்களை வணங்கிக் கொண்டிருந்தவர்கள் (அவற்றைப்) பின்பற்றிச் செல்வார்கள்.

இறுதியில் இந்தச் சமுதாயத்தார் மட்டும் எஞ்சியிருப்பார்கள். அவர்களிடையே நயவஞ்சகர்களும் இருப்பார்கள். அப்போது இறைவன், அவர்கள் அறியாத தோற்றத்தில் அவர்களிடம் வந்து'நானே உங்களுடைய இறைவன்'' என்பான். உடனே அவர்கள் உன்னிடமிருந்து அல்லாஹ்விடம் நாங்கள் பாதுகாப்புக் கோருகிறோம். எங்கள் இறைவன் எங்களிடம் வரும் வரை நாங்கள் இங்கேயே இருப்போம். எங்கள் இறைவன் எங்களிடம் வந்தால் அவனை நாங்கள் அறிந்து கொண்வோம்'' என்பர். அப்போது இறைவன் அவர்கள் அறிந்த தோற்றத்தில் அவர்களிடம் வந்து'நானே உங்களுடைய இறைவன்'' என்பான். அதற்கு அவர்கள்'நீயே எங்கள் இறைவன்'' என்று கூறிவிட்டு அவனைப் பின்தொடர்ந்து செல்வார்கள். அங்கு நரகத்தின் மீது பாலம் அமைக்கப்படும்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: நானே (அந்தப் பாலத்தைக்) கடப்பவர்களில் முதல் ஆளாக இருப்பேன். அப்போதைய நிலையில் இறைத்தூதர்கள் அனைவரின் பிரார்த்தனையும்'அல்லாஹ்வே! காப்பாற்று காப்பாற்று' என்பதாகவே இருக்கும். அந்தக் காலத்தில் கொக்கிகள் மாட்டப்பட்டிருக்கும். அவை கருவேல மரத்தின் முற்களைப் போன்றிருக்கும்.'கருவேல மர முள்ளை நீங்கள் பார்த்ததில்லையா?' என்று கேட்டார்கள். மக்கள்'ஆம் (பார்த்திருக்கிறோம்) இறைத்தூதர் அவர்களே!"என்று பதிலளித்தார்கள்.

(தொடர்ந்து) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அந்தக் கொக்கிகள் கருவேல மரத்தின் முள்ளைப் போன்று இருக்கும். ஆயினும், அதன் பருமனை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். அப்போது அந்தக் கொக்கிகள் மக்களை அவர்களின் செயல்களுக்கேற்ப கவ்விப் பிடிக்கும். அவர்களில் (இறை மறுப்பு உள்ளிட்ட) தன் (தீய) செயல்களால் அழிந்து போனவரும் இருப்பார். (இறைநம்பிக்கை இருந்தாலும் பாவம் செய்த காரணத்தால்) மூர்ச்சையாகிப் பிறகு பிழைத்துக கொள்பவரும் இருப்பார். இறுதியாக இறைவன், தன் அடியார்களிடையே தீர்ப்பு வழங்கி முடித்த பின், வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை என்று உறுதி கூறியவர்களில் தான் நாடிய சிலலை நரகத்திலிருந்து வெளியேற்ற விரும்புவான். அப்போது அவர்களை வெளியேற்றுமாறு வானவர்களுக்கு ஆணையிடுவான். வானவர்கள் அவர்களை சஜ்தாவின் (சிரவணக்கத்தின்) அடையாளங்களை வைத்து இனம் கண்டு கொள்வார்கள். (ஏனெனில்,) அல்லாஹ் நரகத்திற்கு, மனிதனை அவனிலுள்ள சஜ்தாவின் அடையாளத்தில் தீண்டக் கூடாதெனத் தடை விதித்துள்ளான். எனவே, வானவர்கள் அவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுவார்கள்.

அப்போது அவர்கள் (நரக நெருப்பில) கரிக்கப்பட்டிருப்பார்கள். எனவே, அவர்களின் மீது'மாஉல் ஹயாத்' எனப்படும். (ஜீவ) நீர் ஊற்றப்படும். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) நிறம் மாறி விடுவார்கள். அவர்களில் தம் முகத்தால் நரகத்தை முன்னோக்கிக் கொண்டிருக்கும் ஒருவர் மட்டும் எஞ்சுவார். அவர்'என் இறைவா! நரகத்தின் (வெப்பக்) காற்றால் எனக்கு மூச்சடைக்கிறது. அதன் ஜுவாலை என்னைக் கரித்துவிட்டது. எனவே, நரகத்தைவிட்டு என் முகத்தை (வேறு பக்கம்) திருப்பி விடுவாயாக!"என்று அல்லாஹ்விடம் பிரார்த்தித்துக் கொண்டேயிருப்பார். அப்பேது அல்லாஹ்'(உன் கோரிக்கையை ஏற்று) இதை நான் உனக்கு வழங்கிவிட்டால் வேறொரு கோரிக்கையையும் நீ முன் வைக்கலாம் அல்லவா?' என்று கேட்பான். அதற்கு அவர்'இல்லை உன் கண்ணியத்தின் மீதாணையாக! வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்'' என்பார். எனவே, இறைவன்

அவரின் முகத்தை நரகத்தைவிட்டு (வேறு பக்கம்) திருப்பி விடுவான். அதற்குப் பிறகு'என் இறைவா! சொர்க்கத்தின் வாசல் அருகே என்னைக் கொண்டு செல்வாயாக!"என்பவர் அவர். அதற்கு இறைவன்'வேறெதையும் உன்னிடம் கேட்கமாட்டேன் என்று நீ கூறவில்லையா? மனிதா! உனக்குக் கேடுதான். உன்னுடைய ஏமாற்று வேலைதான் என்ன!"என்பான். ஆனால், அவர் தொடர்ந்து வேண்டிக்கொண்டே இருப்பார். அப்போது இறைவன்'நீ கேட்டதை உனக்கு நான் கொடுத்தால் இன்னொன்றையும் நீ என்னிடம் கேட்கக்கூடும்" என்பான். அதற்கு அவர்'இல்லை உன் கண்ணியத்தின் மீதாணையாக! இதுவல்லாத வேறெதையும் உன்னிடம் கேட்கமாட்டேன்" என்று சொல்லிவிட்டு, வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையம் அவர் இறைவனிடம் வழங்குவார்.

இதையடுத்து இறைவன் அவரை சொர்க்கத்தின் வாசல் அருகே கொண்டு செல்வான். சொர்க்கத்திற்குள் இருப்பவற்றைக் காணும்போது அல்லாஹ் நாடிய நேரம் வரை மௌனமாக இருப்பார். பிறகு'இறைவா! என்னை சொர்க்கத்திற்கு அனுப்புவாயாக!"என்று கூறுவார் பின்னர் இறைவன்'வேறெதையும் உன்னிடம் கேட்கமாட்டேன் என்று நீ சொல்லவில்லையா? மனிதா! உனக்குக் கேடுதான் உன்னுடைய ஏமாற்று வேலை தான் என்ன!"என்று கேட்பான். அதற்கு'என் இறைவா! என்னை உன் படைப்புகளிலேயே நற்கதியற்றவனாக ஆக்கிவிடாதே!"என்று இறைவன் சிரிக்கும் வரை பிரார்த்திக்கொண்டே இருப்பார். அவரைக் கண்டு இறைவன் சிரித்துவிடும்போது சொர்க்கத்தில் நுழைய அவருக்கு இறைவன் அனுமதி வழங்கிடுவான். சொர்க்கத்திற்குள் அவர் நுழைந்த பின்,'நீ (விரும்பிய) இன்னதை ஆசைப்படலாம்" என்று சொல்லப்படும். அவ்வாறே அவரும் ஆசைப்படுவார். பிறகு (மீண்டும்)'நீ (விரும்பிய) இன்னதை ஆசைப்படலாம்" என்று சொல்லப்படும். அவ்வாறே அவரும் ஆசைகள் முழுதும் முற்றுப் பெறும் வரை ஆசைப்பட்டு (தன் விருப்பங்களைத் தெரிவித்து)க் கொண்டே இருப்பார். அப்போது இறைவன்'இது உனக்குக் கிடைக்கும் இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்பான்.

அறிவிப்பாளர் அபூ ஹுரைரா(ரலி) கூறினார்: இந்த மனிதர்தாம் சொர்க்கத்தில் நுழையும் இறுதி மனிதராவார்.

ஹதீஸ் 6574 அதாஉ இப்னு யஸீத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(மேற்கண்ட ஹதீஸை) அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் (அறிவித்தபோது, அவர்கள்) உடன் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களும் அமர்ந்திருந்தார்கள். அன்னார் இந்த ஹதீஸ் தொடர்பாக எந்த மாற்றத்தையும் தெரிவிக்கவில்லை. ஆனால்,'இது உனக்குக் கிடைக்கும் இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்று கூறியபோது தான், அபூ ஸயீத்(ரலி) அவர்கள்'இதுவும் இதைப் போன்று பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்" என்றார்கள். அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்'இதைப் போன்று இன்னொரு மடங்கு" என்றே நான் மனனமிட்டுள்ளேன் என்று கூறினார்கள்.

## ("அல்கவ்ஸர் எனும்) நீர்த் தொட்டி

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு'அல்கவ்ஸர்' (எனும் அற்புத நீர்த் தடாகத்தை) வழங்கியுள்ளோம். (திருக்குர்ஆன் 108:01)

அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். நபி (ஸல்) அவர்கள்'(அல்கவ்ஸர்) தடாகத்தின் அருகில் என்னைச் சந்திக்கும் வரை நீங்கள் பொறுமையுடனிருங்கள்'' என்று (அன்சாரிகளிடம்) சொன்னார்கள்.

ஹதீஸ் 6575 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

''நான் உங்களுக்கு முன்பே ('அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6576 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உங்களுக்கு முன்பே ('அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன். அப்போது உங்களில் சலர் என்னுடன் இருப்பதாகக் காட்டப்படுவார்கள். பின்னர் என்னிடமிருந்து அவர்கள் விலக்கிவைக்கப்படுவார்கள். உடனே நான்'இறைவா! (இவர்கள்) என் தோழர்களாயிற்றே!"என்பேன். அப்போது'இவர்கள் உங்களுக்குப் பின்னால் (புதிது புதிதாக) என்னென்ன உருவாக்கினார்கள் என்று உங்களுக்குத் தெரியாது' எனக் கூறப்படும்.

இதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6577 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமை நாளில் என்னுடைய'அல்கவ்ஸர்' எனும்) தடாகம் உங்களுக்கு முன்னால் இருக்கும். (அதன் விசாலமானது, அன்றைய ஷாம் நாட்டின்)'ஜர்பா' மற்றும்'அத்ருஹ்' ஆகிய இடங்களுக்கிடையேயான தூரமாகும்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6578 ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(திருக்குர்ஆன் 108:1 வது வசனத்திலுள்ள)'அல்கவ்ஸர்' தொடர்பாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகையில்,'அது நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிய அனைத்து நன்மைகளையும் குறிக்கும்'' என்று தெரிவித்தார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ பிஷ்ர் ஜஅஃபர் இப்னு அபீ வஹ்ஷிய்யா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) அவர்களிடம்'சிலர்'அல்கவ்ஸர்' என்பது சொர்க்கத்திலுள்ள ஒரு நதியாகும் என்று கூறுகின்றனரே!"என்று கேட்டேன். அதற்கு ஸயீத் (ரஹ்) அவர்கள்'நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் அருளிய (அளவற்ற) நன்மைகளில் சொர்க்கத்திலுள்ள அந்த நதியும் அடங்கும்'' என்றார்கள்.

ஹதீஸ் 6579 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

('அல்கவ்ஸர்' எனும்) என் தடாகம் ஒரு மாத காலப் பயணத் தொலைதூரம் (பரப்பளவு) கொண்டதாகும். அதன் நீர் பாலை விட வெண்மையானது. அதன் மணம் கஸ்தூரியை விட

நறுமணம் வாய்ந்தது. அதன் கூஜாக்கள் விண்மீன்கள் போன்றவை. யார் அதன் நீரை அருந்துகிறார்களோ அவர்கள் ஒருபோதும் தாகமடையமாட்டார்கள்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6580 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் தடாகத்தின் (பரப்பு) அளவு யமனிலுள்ள'ஸன்ஆ' நகரத்திற்கும் (ஷாம் நாட்டை ஒட்டியிருந்த)'அய்லா' நகரத்திற்கும் இடையேயான (தொலை தூரத்)தைப் போன்றதாகும். மேலும், அதில் விண்மீன்களின் எண்ணிக்கையைப் போன்று (கணக்கிடலங்கா) கோப்பைகள் (வைக்கப்பட்டு) இருக்கும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6581 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (விண்ணுலகப் பயணத்தின்போது) சொர்க்கத்தில் பயணம் செய்தேன். அப்போது அங்கு ஓர் ஆறு இருந்தது. அதன் இரண்டு மருங்கிலும் துளையுள்ள முத்துக் கலசங்கள் காணப்பட்டன. அப்போது நான்'(வானவர்) ஜிப்ரீலே! இது என்ன?' என்று கேட்டேன். அவர்'இதுதான் உங்களுடைய இறைவன் உங்களுக்கு (சிறப்பாக) வழங்கிய அல்கவ்ஸர்'' என்றார். 'அதன் மண்' அல்லது'அதன் வாசனை' நறுமணமிக்க கஸ்தூரியாகும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

'வாசனை' யா(தீப்)?'மண்ணா' (தீன்)? என்பதில் அறிவிப்பாளர் ஹுத்பா இப்னு காலித்(ரஹ்) அவர்கள் சந்தேகம் தெரிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 6582 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமையில்) என் தோழர்களில் சிலர் (அல்கவ்ஸர்) தடாகத்தினருகில் என்னிடம் வருவார்கள். நான் அவர்களை அடையாளம் கண்டுகொள்ளும்போது என்னைவிட்டு அவர்கள் விலக்கிவைக்கப்படுவார்கள். அப்போது நான்'(இவர்கள்) என் தோழர்களாயிற்றே!"என்பேன். அதற்கு இறைவன்'உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) என்னென்ன உருவாக்கினார்கள் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்'' என்பான்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6583 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உங்களுக்கு முன்பே'அல்கவ்ஸர்' தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன். யாருக்கு என்னிடம் வர முடிகிறதோ அவர் (அந்தத் தடாகத்தின் நீரை) அருந்துவார். (அதை) அருந்துகிறவருக்கு இனி ஒருபோதும் தாகமே ஏற்படாது. (இந்நிலையில்) என்னிடம் சிலர் வருவாாகள். அவர்களை நான் அறிந்துகொள்வேன். என்னையும் அவர்கள் அறிந்துகொள்வார்கள். பிறகு எனக்கும் அவர்களுக்கும் இடையே தடுப்பு ஏற்படுத்தப்படும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6584 (அறிவிப்பாளர்) அபூ ஹாஸிம் ஸலமா இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

(நான் இந்த ஹதீஸை அறிவித்தபோது) நான் கூறுவதை செவியேற்றுக் கொண்டிருந்த நுஅமான் இப்னு அபீ அய்யாஷ்(ரஹ்) அவர்கள்'இவ்வாறுதான் ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி)

அவர்களிடமிருந்து நீங்கள் செவியேற்றீர்களா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்' என்று சொன்னேன். அதற்கவர்கள் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் இதைவிட அதிகபட்சமாக அறிவிப்பதை கேட்டுள்ளேன்"'(இறைவா!) இவர்கள் என்னைச் சேர்ந்தவர்கள்' என்று நான் கூறுவேன். அதற்கு'உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியதை நீங்கள் அறியமாட்டீர்கள்' என்று சொல்லப்படும். உடனே நான்'எனக்குப் பின்னால் (தம் மார்க்கத்தை) மாற்றிவிட்டவர்களை இறைவன் தன் கருணையிருந்து அப்புறப்படுத்துவானாக! அவர்களை இறைவன் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக!"என்று (இரண்டு முறை) கூறுவேன்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: (இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)'சுஹ்கன்' (அப்புறப்படுத்துவது) என்பதற்கு தொலைவு, தூரம் என்று பொருள்.

ஹதீஸ் 6585 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் என் தோழர்களில் ஒரு குழுவினர் என்னிடம் வருவார்கள். அப்போது அவர்கள் (அல்கவ்ஸர்) தடாகத்தைவிட்டு ஒதுக்கப்படுவார்கள். உடனே நான்'இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்' என்பேன். அதற்கு இறைவன்'உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியது குறித்து உங்களுக்குத் தெரியாது. இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே (தங்கள் பழைய மதத்திற்குத்) திரும்பிச் சென்றார்கள்' என்று சொல்வான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6586 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமைநாளில் என் தோழர்களில் சிலர் என்னிடம் ('அல்கவ்ஸர்') தடாகத்திற்கு வருவார்கள். அப்போது அவர்கள் (அல்கவ்ஸர்) தடாகத்தைவிட்டு விரட்டப்படுவார்கள். உடனே நான்'இறைவா! (இவர்கள்) என் தோழர்கள்' என்பேன். அதற்கு இறைவன்'உங்களுக்குப் பின்னால் இவர்கள் (புதிது புதிதாக) உருவாக்கியது குறித்து உங்களுக்குத் தெரியாது. இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே (தங்கள் பழைய மதத்திற்குத்) திரும்பிச் சென்றார்கள்' என்று சொல்வான்.

இதை நபித்தோழர்கள் சிலரிடமிருந்து ஸயீத் இப்னு முசய்யப்(ரஹ்) அறிவித்தார்.

அறிவிப்பாளர் ஷுஐப் இப்னு அபீ ஹம்ஸா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,'அவர்கள் (அல்கவ்ஸர் தடாகத்திலிருந்து) ஒதுக்கப்படுவார்கள்' என்றும், அறிவிப்பாளர் உகைல் இப்னு காலித்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்'விரட்டப்படுவார்கள்' என்றும் இடம் பெற்றுள்ளது.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6587 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உறங்கிக்கொண்டிருந்தேன். அபபோது (கனவில்) நான் (அல்கவ்ஸர் தடாகத்தினருகில்) நின்றுகொண்டிருக்கிறேன். அப்போது ஒரு குழுவினரை நான் அடையாளம் கண்டுகொள்கிறேன். எனக்கும் அவர்களுக்குமிடையே ஒரு(வான)வர் தோன்றி (அந்தக் குழுவினரை நோக்கி),'வாருங்கள்' என்று அழைக்கிறார். உடனே நான் (அவரிடம்)'எங்கே (இவர்களை அழைக்கிறீர்கள்)?' என்றேன். அவர்'அல்லாஹ்வின் மீதாணையாக! நரகத்திற்கு' என்றார். நான்'இவர்கள் என்ன செய்தார்கள்?' என்றேன். அவர்'உங்களுக்குப் பின்னால் இவர்கள் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே மதம் மாறிச் சென்றார்கள்' என்றார். பிறகு மற்றொரு குழுவினரையும் நான் அடையாளம் கண்டு கொள்கிறேன். எனக்கும் அவர்களுக்குமிடையே ஒரு

(வான)வர் தோன்றி,'வாருங்கள்' என (அவர்களிடம்) கூறுகிறார். நான்'(இவர்களை) எங்கே (அழைக்கிறீர்கள்)?' என்றேன். அவர்'அல்லாஹ்வின் மீதாணையாக! நரகத்திற்குத்தான்'' என்றார். நான்'இவர்கள் என்ன செய்தார்கள்?' என்று கேட்டேன். அவர்'இவர்கள் உங்களுக்குப் பின்னால் திரும்பிப் பார்க்காமல் வந்த வழியே மதம் மாறிப் போய்விட்டார்கள்'' என்று பதிலளித்தார். அவர்களில் காணாமல் போன ஒட்டகத்தைப் போன்று ஒரு சிலரைத் தவிர வேறெவரும் தப்பித்துக் கொள்வார்கள் என நான் கருதவில்லை.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6588 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய இல்லத்திற்கும் என்னுடைய மிம்பருக்கும் (சொற்பொழிவு மேடை) இடைப்பட்ட பகுதியானது, சொர்க்கத்துப் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும். என்னுடைய மிம்பர் என்னுடைய (அல்கவ்ஸர்) தடாகத்தின் மீது அமைந்துள்ளது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6588 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னுடைய இல்லத்திற்கும் என்னுடைய மிம்பருக்கும் (சொற்பொழிவு மேடை) இடைப்பட்ட பகுதியானது, சொர்க்கத்துப் பூங்காக்களில் ஒரு பூங்காவாகும். என்னுடைய மிம்பர் என்னுடைய (அல்கவ்ஸர்) தடாகத்தின் மீது அமைந்துள்ளது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6589 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உங்களுக்கு முன்பே ('அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன்.

என (ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6590 உக்பா இப்னு ஆமிர்(ரலி) அறிவித்தார்.

ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து இறந்தவர்களுக்காகத் தொழுகை நடத்துவதைப் போன்று உஹுதுப் போர் உயிர்த் தியாகிகளுக்காகத் தொழுதார்கள். பிறகு சொற்பொழிவு மேடைக்கு (மிம்பர்) வந்து'உங்களுக்காக நிச்சயம் நான் (மறுமையில்) காத்திருப்பேன். உங்களுக்கு நான் சாட்சியும் ஆவேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இப்போது ('அல்கவ்ஸர்' எனும்) என்னுடைய தடாகத்தைக் காண்கிறேன். மேலும், எனக்கு'பூமியின் கருவூலத் திறவுகோல்கள்' அல்லது'பூமியின் திறவுகோல்கள்' கொடுக்கப்பட்டுள்ளன. அல்லாஹ்வின் மீதாணையாக! எனக்குப் பின்னால் நீங்கள் (இறைவனுக்கு) இணைவைப்பவர்களாக ஆகிவிடுவீர்களோ என்று நான் அஞ்சவில்லை. ஆனால், உலகச் செல்வங்களுக்காக நீங்கள் ஒருவரோடுவர் போட்டியிட்டு (மோதி)க் கொள்வீர்களோ என்றே அஞ்சுகிறேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6591 ஹாரிஸா இப்னு வஹ்ப்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் ('அல்கவ்ஸர்') எனும் தடாகத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது'(அதன் பரப்பளவானது,) மதீனாவுக்கும் (யமனிலுள்ள)'ஸன்ஆ' நகரத்துக்கும் இடையேயான தூரமாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6592 ஹாரிஸா(ரலி) அவர்கள் (மேற்கண்ட ஹதீஸில் கூடுதலாகக்) அறிவித்தார்.

‘‘(‘அல்கவ்ஸர்’ எனும்) என்னுடைய தடாக(த்தின் விசால)மானது, (யமனிலுள்ள)’ஸன்ஆ‘விற்கும் மதீனாவிற்கும் இடையேயான தூரமாகும்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன். என்று சொன்னேன். அப்போது முஸ்தவ்ரித் இப்னு ஷத்தாத்(ரலி) அவர்கள் என்னிடம்’அதன் கோப்பைகள் குறித்து நபி(ஸல்) அவர்கள் கூறியதை நீங்கள் கேட்கவில்லையா?’ என்று வினவினார்கள். நான்’இல்லை’ என்றேன். அதற்கு அவர்கள்’(அல்கவ்ஸர்) தடாகத்தில் வைக்கப்பட்டுள்ள கோப்பைகள் நட்சத்திரங்களைப் போன்று காணப்படும்‘‘ என (நபி(ஸல்) அவர்கள் தெரிவித்ததாக)ச் சொன்னார்கள்.

ஹதீஸ் 6593 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (‘அல்கவ்ஸர்‘) தடாகத்தின் அருகில் இருந்தவாறு உங்களில் யார் என்னிடம் வருகிறார்கள் என்பதை உற்றுப்பார்த்துக் கொண்டிருப்பேன். அப்போது என்னை நெருங்கவிடாமல் சிலர் பிடிக்கப்படுவார்கள். உடனே நான்’இறைவா! (இவர்கள்) என்னைச் சேர்ந்தவர்கள் என் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள்‘‘ என்பேன். அதற்கு’உங்களுக்குப் பின்னால் இவர்கள் செய்ததை நீங்கள் அறிவீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! இவர்கள் தங்கள் குதிகால்களின் மீது (தம் பழைய மதத்திற்கே) திரும்பச் சென்று கொண்டேயிருந்தார்கள்‘‘ என்று கூறப்படும்.

இதை அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அவர்கள்’அல்லாஹ்வே! நாங்கள் எங்கள் குதிகால்களின் மீது (தம் பழைய மதத்திற்கே) திரும்பச் சென்று கொண்டேயிருந்தார்கள்‘‘ என்று கூறப்படும்.

இதை அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அவர்கள்’அல்லாஹ்வே! நாங்கள் எங்கள் குதிகால்களின் மீது திரும்பிச் செல்வதிலிருந்தும், நாங்கள் எங்கள் மார்க்கம் தொடர்பாகக் குழப்பத்தில் ஆழ்த்தப்படுவதிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறோம்‘‘ என்று பிரார்த்திப்பார்கள்.

# அத்தியாயம் 82 (தலை)விதி

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

ஹதீஸ் 6594 உண்மையே பேசியவரும் உண்மையே அறிவிக்கப்பட்டவருமான இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உங்களில் ஒருவர் தம் தாயின் வயிற்றில் நாற்பது நாள்கள் (கருவாக) சேமிக்கப்படுகிறார். பிறகு அதைப் போன்றே (40 நாள்கள்) அந்தக் கரு (அட்டை போன்று கருப்பையின் கவரைப் பற்றிப் பிடித்துத் தொங்கும்) ஒரு கருக் கட்டியாக மாறுகிறது. பிறகு அதைப் போன்றே (மேலும் 40 நாள்கள் மெல்லப்பட்ட சக்கை போன்ற) ஒரு சதைப் பிண்டமாக மாறிவிடுகிறது.

பிறகு (அதனிடம்) அல்லாஹ் ஒரு வானவரை அனுப்புகிறான். அவர் நான்கு விஷயங்களை எழுதுமாறு பணிக்கப்படுகிறார். அந்த மனிதனின் வாழ்வாதாரம், வாழ்நாள், (செயல்பாடு), அவன் துர்பாக்கியசாலியா அல்லது நற்பாக்கியசாலியா (ஆகியவை எழுதப்படும்). பிறகு அவனுள் உயிர் ஊதப்படும். இதனால் தான் அல்லாஹ்வின் மீதாணையாக!'உங்களில் ஒருவர்', அல்லது'ஒருவர்' நரகவாசிகளின் (தீய) செயலைச் செய்துகொண்டே செல்வார். இறுதியில் அவருக்கும் நரகத்திற்கும் இடையே'விரிந்த இரண்டு கைகளின் நீட்டளவு' அல்லது'ஒரு முழம்' இடைவெளி தான் இருக்கும் அதற்குள் அவரின் விதி அவரை முந்திக்கொள்ள, அவர் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்து அதன் விளைவாகச் சொர்க்கத்தில் புகுந்துவிடுவார்.

(இதைப் போன்றே) ஒருவர் சொர்க்கவாசிகளின் (நற்) செயலைச் செய்துகொண்டே செல்வார். இறுதியில் அவருக்கும் சொர்க்கத்திற்கும் இடையே'ஒரு முழம்' அல்லது'இரண்டு முழங்கள்' இடைவெளி தான் இருக்கும் அதற்குள் விதி அவரை முந்திக்கொள்ள, அவர் நரகவாசிகளின் செயலைச் செய்து அதன் காரணத்தால் நரகத்தினுள் புகுந்துவிடுவார்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஆதம் இப்னு அபீ இயாஸ்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில் (ஒரு முழமா இரண்டு முழங்களா? என்பதில் சந்தேகம் இல்லாமல்) ஒரு முழம் என்றே (தீர்மானமாக) இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 6595 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ், (தாயின்) கருவறையில் ஒரு வானவரை நியமிக்கிறான். அவர்,'இறைவா! (இது ஒரு துளி) விந்து. இறைவா! (இது பற்றித் தொங்கும்) கருக்கட்டி இறைவா! (இது மெல்லப்பட்ட சக்கை போன்ற) சதைத் துண்டு'' என்று கூறிக் கொண்டிருப்பார். அதன் படைப்பை முழுமையாக்கிட அல்லாஹ் விரும்பும்போது'இறைவா! இது ஆணா? அல்லது பெண்ணா? துர்பாக்கியம் உடையதா? அல்லது நற்பாக்கியம் பெற்றதா? (இதன்) வாழ்வாதாரம் எவ்வளவு? ஆயுள் எவ்வளவு?' என்று வானவர் கேட்பார். அவ்வாறே இவையனைத்தும் அல்லாஹ்வால் நிர்ணயிக்கப்பட்டு,) அது தன் தாயின் வயிற்றில் இருக்கும்போதே எழுதப்படும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## இறைவனின் தீர்மானத்தை எழுதிய பேனா(வின் மை) உலர்ந்துவிட்டது.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) எவன் தன்னுடைய (சரீர மற்றும் மனோ) இச்சையைத் தன்னுடைய தெய்வமாக ஆக்கிக் கொண்டானோ, அவனை நீர் பார்த்தீரா? மேலும், அறிந்தே அல்லாஹ் அவனை வழிகேட்டில்விட்டுவிட்டான். (திருக்குர்ஆன் 45:23)

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

என்னிடம் நபி(ஸல்) அவர்கள்'நீர் (வாழ்க்கையில்) சந்திக்கவிருக்கிற அனைத்தையும் (ஏற்கெனவே எழுதியாயிற்று. அவற்றை) எழுதிய எழுதுகோலும் கூடக் காய்ந்துவிட்டது'' என்றார்கள்.

(திருக்குர்ஆன் 23:61 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'லஹா சாபிகூன்' (அந்த நன்மைகளின் பக்கம் முந்தக்கூடியவர்கள்) என்பதற்கு'(விதியின்படி) அவர்களுக்கு நற்கதி முந்திவிட்டது'' என்று பொருள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6596 இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

ஒருவர்'இறைத்தூதர் அவர்களே! சொர்க்கவாசிகள் யார்? நரகவாசிகள் யார்? என்று (முன்பே அல்லாஹ்வுக்குத்) தெரியுமா?' எனக் கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'ஆம் (தெரியும்)'' என்றார்கள்.

அவர்'அவ்வாறாயின் ஏன் நற்செயல் புரிகிறவர்கள் நற்செயல் புரியவேண்டும்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'ஒவ்வொருவரும்'எ(தை அடைவ)தற்காகப் படைக்கப்பட்டார்களோ' அல்லது'எ(தை அடைவ)தற்கு வாய்ப்பளிக்கப்பட்டார்களோ' அதற்காகச் செயல்படுகிறார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

## அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் அறிவான்.

ஹதீஸ் 6597. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இணைவைப்போரின் குழந்தைகள் (இறந்துவிட்டால் அவர்களின் முடிவு யாது? என்பது) பற்றி நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. அதற்கவர்கள்,'அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கறிவான்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6598 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இணைவைப்போரின் குழந்தைகள் (இறந்துவிட்டால் அவர்களின் முடிவு யாது? என்பது) குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கவர்கள்'அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கறிவான்'' என்று விடையளித்தார்கள்.

ஹதீஸ் 6599 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

''எல்லாக் குழந்தைகளும் இயற்கையி(ன் மார்க்கத்தி)ல்தான் பிறக்கின்றன. அவர்களின் பெற்றோர்கள் தாம் அவர்களை (இயற்கை மார்க்கத்தைவிட்டுத் திருப்பி) யூதர்களாகவோ கிறிஸ்தவர்களாகவோ ஆக்கிவிடுகின்றனர். ஒரு விலங்கு (முழு வளர்ச்சி பெற்ற விலங்கைப்) பெற்றெடுப்பதைப் போன்றுதான் (இது). நீங்களே அதன் நாக்கு, மூக்கு போன்ற உறுப்புகளை வெட்டிச் சேதப்படுத்தாத வரை நாக்கு மற்றும் மூக்கு வெட்டப்பட்ட நிலையில் அது பிறப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறனார்கள்.

ஹதீஸ் 6600 மக்கள்'அல்லாஹ்வின் தூரே! சிறிய வயதில் ஒருவர் இறந்துவிட்டால் அவரின் நிலை (என்ன என்பது) பற்றி என்ன கூறுகிறீர்கள்?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அவர்கள் (உயிருடன் வாழ்ந்தால்) எவ்வாறு செயல்பட்டிருப்பார்கள் என்பதை அல்லாஹ் நன்கு அறிவான்'' என்றார்கள்.

அல்லாஹ்வின் கட்டளை (முன்பே) தீர்மானிக்கப் பெற்ற விதியாக இருக்கின்றது. (திருக்குர்ஆன் 33:38)

ஹதீஸ் 6601 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு பெண், மற்றொரு பெண்ணின் பாத்தி(ரம் எனும் வாழ்வாதா)ரத்தைக் காலி செய்(துவிட்டு, அதைத் தன்னுடையாக்கிக்கொள்)வதற்காக அவளை மணவிலக்குச் செய்திடுமாறு (தன் மணாளரிடம்) கோர வேண்டாம். (மாறாக, அந்த நிபந்தனையின்றி) அவள் மணம் புரிந்துகொள்ளட்டும். ஏனெனில், அவளுக்கென விதிக்கப்பட்டது அவளுக்கே கிடைக்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6602 உசாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்கள் அருகில் இருந்துகொண்டிருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்களின் புதல்வியார் ஒருவரின் தூதுவர் நபி அவர்களிடம் வந்தார். அப்போது ஸஅத் இப்னு உபாதா(ரலி), உபை இப்னு கஅப்(ரலி), முஆத் இப்னு ஜபல்(ரலி) ஆகியோர் நபி அவர்களுடன் இருந்தனர். அந்தப் புதல்வியாரின் மகன் உயிருக்காகப் போராடிக் கொண்டிருப்பதாகத் தூதுவர் தெரிவித்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்'அல்லாஹ் எடுத்துக்கொண்டதும் கொடுத்ததும் அவனுக்கே உரியது. ஒவ்வொன்றுக்கும் ஒரு தவணை உண்டு. எனவே, பொறுமையைக் கடைப்பிடித்து நன்மையை எதிர்பார்ப்பாயாக'' என்று தம் புதல்விக்குச் சொல்லி அனுப்பினார்கள்.

ஹதீஸ் 6603 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தபோது அன்சாரிகளில் ஒருவர் வந்து, இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கு (பெண்) போர்க் கைதிகள் கிடைக்கின்றனர். அவர்களை (விற்று) காசாக்கிக்கொள்ள நாங்கள் விரும்புவதால் (அவர்களுடன் உடலுறவு கொள்ளும்போது) புணர்ச்சி இடைமுறிப்பு (அஸ்ல்) செய்துகொள்வது குறித்துத் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று கேட்டதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்படியா நீங்கள் செய்கிறீர்கள்? இதைச் செய்யாமலிருந்தால் உங்களின் மீது தவறேதுமில்லையே? ஏனெனில், உருவாக வேண்டுமென்று அல்லாஹ் விதித்துள்ள எந்த உயிரும் கட்டாயம் உருவாகியே தீரும்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6604. ஹுதைபா அல்யமான்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) எங்களிடையே நபி(ஸல்) அவர்கள் உரையாற்றினார்கள். அந்த உரையில், மறுமை ஏற்படும் வரையிலான எந்தத் தகவலையும் அவர்கள் குறிப்பிடாமல் விடவில்லை. அதனை அறிந்தவர்கள் அறிந்து கொண்டார்கள். அதனை அறியாதவர்கள் அறியாமலானார்கள். (அதில்) ஏதேனும் ஒன்றை நான் மறந்துவிட்டிருந்தாலும் அதை (நேரில்) காணும்போது அறிந்துகொள்வேன். தம்மைவிட்டு மறைந்துவிட்ட ஒருவரை (மீண்டும்) பார்க்கும்போது அவரை ஒருவர் அடையாளம் கண்டுகொள்வதைப் போன்று.

ஹதீஸ் 6605 அலீ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (பகீஉல்ஃகர்கத் எனும் பொது மையவாடியில் ஜனாஸா ஒன்றில் கலந்து கொள்வதற்காக) அமர்ந்திருந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்

தம்மிடமிருந்த ஒரு குச்சியால் தரையைக் குத்திக் கீறியபடி (ஆழ்ந்த யோசனையில்) இருந்தார்கள். பின்னர்'சொர்க்கம் அல்லது நரகத்திலுள்ள தம் இருபபிடம் எழுதப்பட்டிராத எவரும் உங்களில் இல்லை'' என்றார்கள்.

அப்போது மக்களில் ஒருவர்'அவ்வாறாயின் (ஏற்கெனவே எழுதப்பட்டுவிட்ட விதியை நம்பிக் கொண்டு நல்லறங்கள் ஏதும் புரியாமல்) நாங்கள் இருந்து விடமாட்டோமா? இறைத்தூதர் அவர்களே!"என்று கேட்டார்.

நபி(ஸல்) அவர்கள்'இல்லை நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) அனைவருக்கும் (அவரவர் செல்லும் வழி) எளிதாக்கப்பட்டுள்ளது'' என்று கூறிவிட்டு பிறகு'(இறைவழியில் வழங்கி (இறைவனை) அஞ்சி வாழ்ந்து, நல்லறங்களை மெய்யாக்குகிறவர் சுலபமான வழியில் செல்ல நாம் வகை செய்வோம்'' எனும் (திருக்குர்ஆன் 92:5-7) வசனங்களை ஓதிக் காட்டினார்கள். 14

## முடிவுகளைப் பொறுத்தே செயல்கள் தீர்மானிக்கப்படுகின்றன.

ஹதீஸ் 6606 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நாங்கள் கைபர் போரில் கலந்து கொண்டோம். அப்போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடன் இருந்தவர்களில், தம்மை முஸ்லிம் என்று சொல்லிக்கொண்ட ஒருவரைப் பற்றி'இவர் நரகவாசிகளில் ஒருவர்'' என்று கூறினார்கள்.

போரிடும் நேரம் வந்தபோது அந்த மனிதர் மிகக் கடுமையாகப் போரிட்டார். அப்போது அவருக்கு நிறைய காயங்கள் ஏற்பட்டு அவரை உட்காரவைத்துவிட்டன. அப்போது நபித்தோழர்களில் ஒருவர் வந்து'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எவரைக் குறித்து'அவர் நரகவாசி என்று சொன்னீர்களோ அவர் இறைவழியில் கடுமையாகப் போரிட்டு அதிகமான காயங்கள் அடைந்துள்ளார்'' என்று கூறினார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள்'அவர் நரகவாசிகளில் ஒருவர் தாம்'' என்றே கூறினார்கள்.

அப்போது முஸ்லிம்களில் சிலர் (நபி(ஸல்) அவர்களின் இச்சொல் குறித்து) சந்தேகப்படும் அளவுக்குப் போய்விட்டார்கள். நிலைமை இவ்வாறு இருக்கும்போது, அந்த மனிதர் காயத்தின் வேதனையை உணரலானார். உடனே அவர் தம் கையை அம்புக் கூட்டுக்குள் நுழைத்து அதிலிருந்து ஓர் அம்பை உருவி அதன் மூலம் தற்கொலை செய்துகொண்டார். உடனே முஸ்லிம்களில் சிலர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் விரைந்து வந்து'இறைத்தூதர் அவர்களே! தங்களின் அறிவிப்பை அல்லாஹ் உண்மையாக்கிவிட்டான். இன்ன மனிதர் தற்கொலை செய்து தம்மை மாய்த்துக் கொண்டார். (அதனால் அவர் நரகவாசிகளில் ஒருவராகி விட்டார்)'' என்று கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'பிலாலே! எழுந்து சென்று'இறை நம்பிக்கையாளர் தவிர வேறெவரும் சொர்க்கத்தில் நுழைய முடியாது. மேலும் அல்லாஹ் இந்த மார்க்கத்திற்குப் பாவியான மனிதனின் மூலமாகவும் வலுவூட்டுகிறான்' என்று (மக்களிடையே) அறிவிப்புச் செய்யுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6607 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களுடன் பங்கெடுத்த (கைபர்) போரில், எதிரிகளுக்கு பதிலடி கொடுப்பதில் முஸ்லிம்களிலேயே மகத்தான (பங்காற்றுப)வராக இருந்த ஒருவரைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள்'நரகவாசிகளில் ஒருவரைப் பார்க்க விரும்புகிறவர் இவரைப் பார்த்துக்கொள்ளலாம்'' என்று கூறினார்கள். (அவரைப் பற்றி நபியவர்கள் ஏன் அவ்வாறு குறிப்பட்டார்கள் என்பதை அறிய) மக்களில் ஒருவர் அவரைப் பின்தொடர்ந்து சென்றார். அந்த

மனிதரோ இணைவைப்பாளர்களை எதர்த்து எல்லாரையும் விடக் கடுமையாகப் போராடும் அதே நிலையில் இருந்தார். இறுதியில் அவர் (எதிரிகளால் கடுமையாகக்) காயப்படுத்தப்பட்டார். அதனால் அவர் அவசரமாக இறந்துவிட விரும்பி, தம் வாளின் கூரான பகுதியைத் தம் மார்புகளுக்கிடையே வைத்து (அழுத்தி)க் கொண்டார். வாள் அவரின் தோள்களுக்கிடையே இருந்து வெளியேறியது.

(பின்தொடர்ந்து சென்ற) அந்த மனிதர் நபி(ஸல்) அவர்களை நோக்கி விரைந்து வந்து'தாங்கள் இறைத்தூதர்தாம் என்று நான் உறுதி கூறுகிறேன்'' என்றார்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்'என்ன விஷயம்?' என்று கேட்டார்கள். அவர்'தாங்கள் எவரைக் குறித்து நரகவாசிகளில் ஒருவரை பார்க்க விரும்புகிறவர் இவரைப் பார்த்துக் கொள்ளட்டும் என்று குறிப்பிட்டீர்களோ அவர் முஸ்லிம்களுக்காகப் போராடுவதில் மகத்தான (பங்காற்றுப)வராகத் திகழ்ந்தார். (தாங்கள் அவரைப் பற்றி நரகவாசி என்று குறிப்பிட்டிருப்பதால்) அவர் இதே (தியாக) நிலையில் இறக்கப்போவதில்லை என்று நான் அறிந்தேன். அவர் (எதிரிகளால் கடுமையாகக்) காயப்படுத்தப்பட்டபோது அவரசமாக இறந்துவிட விரும்பி தற்கொலை செய்தார்'' என்றார். அப்போதுதான் நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: ஓர் அடியார் நரகவாசிகளின் செயல்களைச் செய்துவருவார். ஆனால், (இறுதியில்) அவர் சொர்க்கவாசகளில் ஒருவராகிவிடுவார். இன்னொருவர் சொர்க்கவாசிகளின் செயலைச் செய்துவருவார். ஆனால், (இறுதியில்) அவர் நரகவாசிகளில் ஒருவராகிவிடுவார். இறுதி முடிவுகளைப் பொறுத்தே செயல்கள் தீர்மானிக்கப்படுகின்றன.

## நேர்த்திக்கடன் மனிதனை விதிக்கே கொண்டு செல்கிறது.

ஹதீஸ் 6608 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் நேர்த்திக்கடன் செய்ய வேண்டாமென்று தடை விதித்தார்கள். மேலும்,'நேர்த்திக்கடன் (விதியிலுள்ள) எதையும் மாற்றிவிடாது. நேர்த்திக் கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம்) வெளிக்கொணரப்படுகிறது (அவ்வளவு தான்)'' என்றார்கள்.

ஹதீஸ் 6609 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(அல்லாஹ் கூறினான்:) நேர்த்திக் கடனானது, நான் விதியில் எழுதியிராத எந்தவொன்றையும் மனிதனிடம் கொண்டு வந்துவிடாது. மாறாக, விதிதான் அவனை (நேர்த்திக்கடன் பக்கம்) கொண்டு செல்கிறது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வத்தை) வெளிக்கொணர்வதென நான் (முன்பே) விதியில் எழுதிவிட்டேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்

ஹதீஸ் 6610 அபூ மூஸா அப்துல்லாஹ் இப்னு கைஸ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் ஒரு போரில் (கைபரில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நாங்கள் ஒரு மேட்டின் மீது ஏறும்போதும் ஒரு கணவாயில் இறங்கும்போதும் உரத்த குரலில்'அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப் பெரியவன்) என்று கூறலானோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்கள் அருகில் வந்து'மக்களே! உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள். (மென்மையாக மெதுவாகக் கூறுங்கள்.) ஏனெனில், நீங்கள் காது கேட்காதவனையோ இங்கு இல்லாதவனையோ அழைப்பதில்லை. நன்கு செவியேற்பவனையும் (எல்லாரையும்) பார்ப்பவனையுமே அழைக்கின்றீர்கள்'' என்று கூறிவிட்டு, (என்னைப்

பார்த்து)'அப்துல்லாஹ் இப்னு கைஸே! சொர்க்கத்தின் கருவூலங்களிலுள்ள ஒரு வார்த்தையை உமக்கு நான் அறிவிக்கட்டுமா? (அது)'லா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹ்தான் என்றார்கள்.

## (பாவங்களிலிருந்து) அல்லாஹ்வால் பாதுகாக்கப்பெற்றவரே மாசற்றவராவார்.

(திருக்குர்ஆன் 11:43 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'ஆஸிம்' (பாதுகாப்பாளர்) என்பதற்குத் தடுக்கக் கூடியவர்' என்று பொருள்.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

(திருக்குர்ஆன் 75:36 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'கதன்' (வீணாக) என்பதற்கு'வழிகேட்டில் உழன்று கொண்டு சத்தியத்தைப் புறக்கணிப்பது என்று பொருள்.

(திருக்குர்ஆன் 09:10 வது வசனத்தின் மூலத்திலுள்ள தஸ்ஸாஹா' (பாவத்தில் புதைத்தான்) என்பதற்கு'வழிகேட்டில் மூழ்கடித்தான்' என்று பொருள்.

ஹதீஸ் 6611 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இப்புவியின் ஆட்சிக்கு இறைவனுடைய) பிரதிநிதியாக ஆக்கப்படும் எவருக்கும் இரண்டு நெருக்கமான ஆலோசகர்கள் இருக்கவே செய்வார்கள். ஓர் ஆலோசகர், அவரை நன்மை செய்யும்படி ஏவி அதற்குத் தூண்டு கோலாக இருப்பார். அல்லாஹ் (குற்றங்களிலிருந்து) யாரை பாதுகாத்தானோ அவரே மாசற்றவராக இருப்பார்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நாம் எந்த ஊர்காரர்களை அழித்துவிட்டோமோ அவர்கள் நிச்சயமாக (உலகிற்கு)த் திரும்பமாட்டார்கள் என்பது விதியாகிவிட்டது. (திருக்குர்ஆன் 21:95)

மேலும், நூஹ்வுக்கு வஹீ (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டது (முன்னர்) இறைநம்பிக்கை கொண்டவர்களைத் தவிர, (இனி) உம்முடைய சமூகத்தாரில் நிச்சயமாக எவரும் நம்பிக்கை கொள்ளமாட்டார்கள் எனவே, அவர்கள் செய்வதைப் பற்றி நீர் கவலைப்படாதீர். (திருக்குர்ஆன் 11:36)

“நிச்சயமாக, நீ அவர்களைவிட்டு வைப்பாயானால், உன் அடியார்களை அவர்கள் வழிகெடுத்துவிடுவார்கள் அன்றியும், பாவிகளையும், இறைமறுப்பாளர்களையும் அன்றி (வேறெவரையும் குழந்தையாக) அவர்கள் பெற்றெடுக்கமாட்டார்கள்‘‘ என்று நூஹ் கூறினார். (திருக்குர்ஆன் 71:27)

(திருக்குர்ஆன் 21:95 வது வசனத்தின் மூலத்திலுள்ள'ஹராமுன்' எனும் சொல்'ஹிர்முன்' என்றும் ஓதப்பட்டுள்ளது. அந்த)'ஹிர்ம்' என்பதற்கு அபிசீனிய மொழியில்'உறுதியாகிவிட்டது' என்று பொருள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6612 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரத்தில் மனிதனுக்குள்ள பங்கை இறைவன் எழுதியுள்ளான். அதை மனிதன் அடைந்தே தீருவான். (மர்ம உறுப்பின் விபசாரம் மட்டுமல்ல கண்ணும் நாவும் கூட விபசாரம் செய்கின்றன.) கண் செய்யும் விபசாரம் (தவறான) பார்வையாகும். நாவு செய்யும் விபசாரம் (பாலுணர்வைத் தூண்டும்) பேச்சாகும். மனம் ஏங்குகிறது இச்சை கொள்கிறது. மர்ம உறுப்பு இவை அனைத்தையும் உண்மையாக்குகிறது. அல்லது பொய்யாக்குகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளரான இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த ஹதீஸை விடச் சிறுபாவங்களுக்கு எடுத்துக்காட்டாக வேறெதையும் நான் காணவில்லை.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## (நபியே!) உங்களுக்கு நாம் காண்பித்த (இக்)காட்சியையும், சபிக்கப்பட்ட (கள்ளி) மரத்தை (அது மறுமையில் பாவிகளுக்கு உணவாகும் என) குர்ஆனில் நாம் கூறியிருப்பதையும் இந்த மக்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம் (எனும் 17:60 வது வசனத் தொடர்).

ஹதீஸ் 6613. இக்ரிமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

"(நபியே!) உங்களுக்கு நாம் காண்பித்த (இக்) காட்சியையும், சபிக்கப்பட்ட மரத்தை (அது மறுமையில் பாவிகளுக்கு உணவாகும் என) குர்ஆனில் நாம் கூறியிருப்பதையும் இந்த மக்களுக்கு ஒரு சோதனையாகவே ஆக்கியுள்ளோம்" எனும் (திருக்குர்ஆன் 17:60 வது) வசனம் தொடர்பாக இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்: இது, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்காவிலிருந்து) பைத்துல் மக்திஸிற்கு அழைத்துச் செல்லப்பட்ட இரவில் அன்னாருக்குக் காட்டப்பட்ட கண்கூடான காட்சியைக் குறிக்கிறது. குர்ஆனில் சபிக்கப்பட்ட மரம்' என்பது'சப்பாத்திக் கள்ளி' மரத்தைக் குறிக்கிறது.

## அல்லாஹ்வின் அருகில் ஆதம்(அலை) அவர்களும் மூஸா(அலை) அவர்களும் தர்க்கம் செய்தார்கள்.

ஹதீஸ் 6614 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்களான) ஆதம்(அலை) அவர்களும் மூஸா(அலை) அவர்களும் தர்க்கம் செய்தார்கள். ஆதம்(அலை) அவர்களிடம் மூஸா(அலை) அவர்கள்'ஆதம் அவர்களே! எங்கள் தந்தையான நீங்கள் (உங்கள் பாவத்தின் காரணத்தால்) எங்களை இழப்புக்குள்ளாக்கி விட்டீர்கள் சொர்க்கத்திலிருந்து எங்களை வெளியேற்றி விட்டீர்கள்" என்றார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள்'மூஸாவே! அல்லாஹ் தன்னுடன் உரையாடுவதற்கு உம்மையே தேர்ந்தெடுத்தான் அவன் தன் கரத்தால் (வல்லமையால்) உமக்காக (தவ்ராத் எனும் (வேதத்தை) வரைந்தான். (இத்தகைய நீங்கள், அல்லாஹ் என்னைப் படைப்பதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே என் மீது அவன் விதித்துவிட்ட ஒரு விஷயத்திற்காக என்னைப் பழிக்கின்றீர்களா?' என்று கேட்டார்கள். (இந்த பதில் மூலம்) மூஸா (அலை) அவர்களை ஆதம்(அலை) அவர்கள் தோற்கடித்துவிட்டார்கள் தோற்கடித்துவிட்டார்கள் என மூன்று முறை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## அல்லாஹ் கொடுப்பதைத் தடுப்பவர் யாருமில்லை.

ஹதீஸ் 6615 முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அவர்களின் அடிமையான வர்ராத்(ரஹ்) அறிவித்தார்.

முஆவியா(ரலி) அவர்கள், முஃகீரா(ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதி, நபி(ஸல்) அவர்கள் தொழுகைக்குப் பின் ஓதிய துஆக்களில் நீங்கள் செவியேற்றதை எனக்கு எழுதி அனுப்புங்கள் என்று குறிப்பிட்டிருந்தார்கள். அப்போது (பின்வருமாறு பதில்) எழுதுமாறு முஃகீரா(ரலி) அவர்கள்

என்னிடம் கூறினார்கள்: தொழுகைக்குப் பின் நபி(ஸல்) அவர்கள்'லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்க லஹு அல்லாஹும்ம லா மானிஅ லிமா அஉதைத்த வ லா முஉத்திய லிமா மன உத்த வலா யன்:பஉ தல்ஜத்தி மின்கல் ஜத்" என்று கூறுவதை கேட்டேன். (பொருள்: வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணையானவன் எவனுமில்லை. இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவர் யாருமில்லை. நீ தடுப்பதைக் கொடுப்பவர் யாருமில்லை. எச்செல்வரின் செல்வமும் அவருக்கு உன்னிடம் பயன் (ஏதும்) அளிக்காது.)

இப்னு ஜுரைஜ்(ரஹ்) அவர்கள் கூறினார்:

இதை வர்ராத்(ரஹ்) அவர்கள் தமக்குத் தெரிவித்ததாக அப்தா இப்னு அபீ லுபாபா(ரஹ்) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள். பின்னர் தாம் முஆவியா(ரலி) அவர்களிடம் சென்றதாகவும், அப்போது முஆவியா(ரலி) அவர்கள் இந்த துஆவை ஓதும்படி மக்களுக்குக் கட்டளையிட்டதைக் கண்டதாகவும் அப்தா கூறினார்கள்.

## அழிவில் வீழ்வதிலிருந்தும் விதியின் கேட்டிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருவது.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) நீர் சொல்வீராக: விடியலின் இறைவனிடம், அவன் படைத்துள்ளவற்றின் தீங்கிலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன். (திருக்குர்ஆன் 113:1,2)

ஹதீஸ் 6616 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் அல்லாஹ்விடம் தாங்கமுடியாத சோதனை, அழிவில் வீழ்வது, விதியின் கேடு, எதிரிகளால் ஏற்படும் மன உளைச்சல் ஆகியவற்றிலிருந்து பாதுகாப்புக் கோருங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ் மனிதனையும் அவனுடைய உள்ளத்தையும் சூழ்ந்து நிற்கிறான்.

ஹதீஸ் 6617 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (சத்தியம் செய்வதாக இருந்தால்)'இல்லை. உள்ளங்களைப் புரட்டக்கூடியவன் மீதாணையாக!"என்றே பெரும்பாலும் சத்தியம் செய்வார்கள்.

ஹதீஸ் 6618 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இப்னு ஸய்யாதிடம் நபி(ஸல்) அவர்கள்'நான் (உன்னைச் சோதிப்பதற்காக) ஒன்றை மனத்தில் மறைத்துவைத்துள்ளேன். (அது என்னவென்று சொல்)" என்று கேட்டார்கள். (அப்போது நபி(ஸல்) அவர்கள்'அத்துகான்' எனும் 44 வது அத்தியாயத்தின் 10 வது வசனத்தை மனத்திற்குள் நினைத்துக் கொண்டார்கள்.) அதற்கு இப்னு ஸய்யாத்'(அது)'அத்துக்' என்றான். உடனே நபி(ஸல்) அவர்கள்'தூர விலகிப்போ! நீ உன் எல்லையைத் தாண்டிவிட முடியாது" என்றார்கள். (அருகிலிருந்த) உமர்(ரலி) அவர்கள்'இறைத்தூதர் அவர்களே! இவனைக் கொன்றுவிட எனக்கு அனுமதியளியுங்கள்" என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'இவனைவிட்டுவிடுங்கள். இவன் அவனாக (தஜ்ஜாலாக) இருந்தால் இவனை நீங்கள் கொல்ல முடியாது. (ஏனெனில், இவனைக் கொல்ல வேறொருவர்- நபி ஈசா-வருவார் என்பது இறைவனின் ஏற்பாடு.) இவன் அவனாக இல்லையாயின் இவனைக் கொல்வதில் உங்களுக்கு எந்த நன்மையும் இல்லை" என்று கூறினார்கள்.

## “அல்லாஹ் எழுதியதைத் தவிர (வேறு ஒன்றும்) எங்களை ஒருபோதும் அணுகாது‘ என்று (நபியே!) நீர் கூறுக (எனும் 9:51 வது இறைவசனம்).

‘அல்லாஹ் எழுதியது’ என்பது விதியைக் குறிக்கும்.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்:

(திருக்குர்ஆன் 37:162 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’பி ஃபாத்தினீன்’ எனும் சொல்லுக்கு’அல்லாஹ் யாரை நரகத்தில் நுழைவார்கள் என்று எழுதிவிட்டானோ அவர்களைத் தவிர வேறெதையும் நீங்கள் வழிகெடுத்து விடமுடியாது‘‘ என்று பொருள்.

(திருக்குர்ஆன் 87:3 வது வசனத்திலுள்ள)’அவனே விதியை நிர்ணயித்தான். வழியையும் காட்டினான்‘‘ என்பதற்கு’மனிதர்களின் நற்கதியையும் துர்பாக்கியத்தையும் விதியாக்கினான். கால்நடைகளுக்கு அவற்றின் மேய்ச்சல் நிலங்களைக் காட்டினான்‘‘ என்று பொருள்.

ஹதீஸ் 6619 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொள்ளைநோய் குறித்துக் கேட்டேன். அதற்கவர்கள்’அதுதான் நாடியவர்களின் மீது அல்லாஹ் அனுப்புகிற வேதனையாக இருந்தது. பிறகு அதை இறைநம்பிக்கையாளர்களுக்க அல்லாஹ் கருணையாக ஆக்கிவிட்டான். எனவே, அந்த நோய் (பரவி) உள்ள ஓர் ஊரில் ஓர் அடியார், தமக்கு அல்லாஹ் எழுதிய விதிப்படியே தவிர எந்த நோயும் தம்மைத் தீண்டாது என உறுதி பூண்டவராகப் பொறுமையோடும் நன்மையை எதிர்பார்த்தும் அந்த ஊரிலிருந்து வெளியேறாமல் அங்கேயே தங்கியிருந்தால் உயிர்த் தியாகிக்குக் கிடைக்கும் நன்மையைப் போன்று அவருக்கும் கிடைக்கும்‘‘ என்று பதிலளித்தார்கள்.

## அல்லாஹ் எங்களுக்கு நேர்வழி காட்டியிராவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்கவேமாட்டோம்‘ என்று அவர்கள் கூறுவார்கள் (எனும் 7:43 வது இறைவசனம்).

மேலும், அல்லாஹ் கூறினான்:

அல்லது’அல்லாஹ் எனக்கு நேர் வழியை அறிவித்திருந்தால், நானும் பயபக்தியாளர்களில் ஒருவனாம் இருப்பேனே!”என்று எவரும் கூறாமல் இருப்பதற்காகவும் (உங்களுடைய இறைவனால் உங்களுக்கு அருளப்பெற்ற நல்லவற்றைப் பின்பற்றுங்கள்). (திருக்குர்ஆன் 39:57)

ஹதீஸ் 6620 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

அகழ்ப்போரின்போது நபி(ஸல்) அவர்கள் எங்களுடன் மண்ணைச் சுமந்து எடுத்துச் சென்று கொண்டிருப்பதை கண்டேன். அப்போது அவர்கள் (இவ்வாறு பாடிய வண்ணம்) கூறிக் கொண்டிருந்தார்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்கமாட்டோம். நோன்பு நோற்றிருக்கமாட்டோம். தொழுதிருக்கவுமாட்டோம்.

நாங்கள் பகைவர்களைச் சந்திக்கும்போது எங்களின் மீது அமைதியை இறக்கியருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக! இணைவைப்போர் எங்களின் மீது அட்டூழியம் புரிந்துவிட்டார்கள். இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால் அதற்கு நாங்கள் இடம் தரமாட்டோம்.

## அத்தியாயம் 83 சத்தியங்களும் நேர்த்திக்கடன்களும்

அளவற்ற அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் செய்த வீணான சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களுக்குத் தண்டனை வழங்குவதில்லை. ஆயினும், நீங்கள் உறுதிப்பாட்டுடன் செய்த சத்தியங்களுக்காக (அவற்றை நீங்கள் முறித்துவிட்டால்) உங்களை அவன் நிச்சயம் கண்டிப்பான். (முறித்துவிட்ட) சத்தியத்திற்கான குற்றப் பரிகாரம் (இதுதான்): நீங்கள் உங்கள் குடும்பத்தாருக்கு அளிக்கிற உணவுகளில் நடுத்தரமான வகையிலிருந்து பத்து ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும். அல்லது அவர்களுக்கு ஆடைகள் வழங்க வேண்டும். அல்லது ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். ஆனால், (இவற்றில் எதற்கும்) சக்தி பெறாதோர் மூன்று நாள்கள் நோன்பு நோற்கவேண்டும். நீங்கள் செய்த சத்தியங்களை முறித்துவிட்டால் இதுதான் அவற்றுக்குரிய குற்றப் பரிகாரமாகும். எனவே, உங்கள் சத்தியங்களை (முறித்துவிடாமல்) பேணுங்கள். இவ்வாறு தன்னுடைய சட்டத் திட்டங்களை அல்லாஹ் உங்களுக்குத் தெளிவாக்குகிறான் நீங்கள் நன்றி செலுத்துவோராய் திகழக்கூடும் என்பதற்காக! (திருக்குர்ஆன் 05:89)

ஹதீஸ் 6621 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) அபூ பக்ர் (ரலி) அவர்கள் சத்தியத்தை முறித்ததற்காக பரிகார(ம் தொடர்பான வசன)த்தை அல்லாஹ் அருளும் வரை (தாம் செய்த) எந்தச் சத்தியத்தையும் முறிக்காமலிருந்துவந்தார்கள். மேலும் அவர்கள், 'நான் ஒரு சத்தியத்தைச் செய்து, அதன்பின்னர் (அதைக் கைவிட்டு) மற்ற (ஒன்றைத் தேர்ந்தெடுப்ப)தே அதைவிடச் சிறந்தது என்று நான் கருதினால் நன்மை எதுவோ அதையே செய்வேன். சத்தியத்தை முறித்ததற்கான பரிகாரத்தையும் செய்துவிடுவேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6622 அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்), 'அப்துர் ரஹ்மான் இப்னு சமுராவே! ஆட்சிப் பொறுப்பை நீயாக (ஆசைப்பட்டு)க் கேட்காதே! ஏனெனில், (நீ) கேட்டதால் அது உனக்கு அளிக்கப்பட்டால் அதோடு நீ (தனிமையில்) விடப்படுவாய். (இறைவின் உதவி கிட்டாது.) கேட்காமல் அது உனக்கு அளிக்கப்பட்டால் அது தொடர்பாக உனக்கு (இறைவனின்) உதவி அளிக்கப்படும். நீ ஒரு சத்தியம் செய்து, அது அல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாக நீ கருதினால் உன்னுடைய சத்தியத்(தை முறித்துவிட்டு முறித்த)துக்கான பரிகாரத்தைச் செய்துவிடு. சிறந்தது எதுவோ அதைச் செயல்படுத்து'' என்றார்கள்.

ஹதீஸ் 6623 அபூ மூஸா அல் அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

நான் (என்) அஷ்அரீ குலத்தாரில் ஒரு குழுவினருடன் நபி(ஸல்) அவர்களிடம் சென்று, (எங்களையும் எங்கள் பயணச் சுமைகளையும்) சுமந்து செல்ல (ஒட்டகங்கள் ஏற்பாடு) செய்யும்படி கேட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை (ஒட்டகத்தில்) ஏற்றியனுப்ப முடியாது. ஏனெனில், உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் (தற்போது கைவசம்) இல்லை'' என்றார்கள். பிறகு அல்லாஹ் நாடிய நேரம் வரை நாங்கள் (அங்கேயே) இருந்தோம். பின்பு நபியவர்களிடம் வெள்ளைத் திமில்கள் கொண்ட மூன்று ஒட்டக மந்தைகள் கொண்டுவரப்பட்டன. எனவே, அவற்றின் மீது எங்களை ஏற்றி அனுப்பினார்கள். நாங்கள் (அங்கிருந்து விடைபெற்றுச்)

சென்றுகொண்டிருந்தபோது நாங்கள் எங்களுக்குள்' அல்லது'எங்களில் சிலர்',‘அல்லாஹ்வின் மீதாணையாக! (நபி(ஸல்) அவர்கள் தரமாட்டேனென்று சத்தியம் செய்த பிறகு இவற்றை நாம் வாங்கிச் சென்றால் இவற்றில்) நமக்கு வளம் (பரக்கத்) ஏற்படாது. நபி(ஸல்) அவர்களிடம் நம்மைச் சுமந்து செல்ல (ஒட்டகங்கள் ஏற்பாடு) செய்யும்படி கேட்டோம். அவ்வாறு நம்மை ஏற்றியனுப்பத் தம்மால் இயலாது என நபியவர்கள் சத்தியம் செய்து கூறினார்கள். பிறகு, நாம் ஏறிச்செல்ல ஒட்டகங்கள் வழங்கினார்கள். எனவே, நபி(ஸல்) அவர்களிடம் நாம் மீண்டும் சென்று அவர்கள் செய்த சத்தியத்தை) அவர்களுக்கு நினைவுபடுத்துவோம்'' என்று சொல்லிக் கொண்டோம். அவ்வாறே நபி அவர்களிடம் சென்றோம். (அவர்கள் செய்த சத்தியத்தை நினைவுபடுத்தினோம்.) அப்போது அவர்கள்,'நான் உங்களை ஒட்டகத்தில் ஏற்றி அனுப்பவில்லை, மாறாக, அல்லாஹ்தான் உங்களை (அதில்) ஏற்றி அனுப்பினான். அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் நாடினால், இனிமேல் நான் ஏதேனும் ஒரு சத்தியம் செய்து, பிறகு அதுவல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும் பட்சத்தில்'சத்திய முறிவுக்காகப் பரிகாரம் செய்துவிட்டு, அந்தச் சிறந்ததையே செய்வேன்' அல்லது'சிறந்ததையே செய்துவிட்டு, சத்திய முறிவுக்காகப் பரிகாரம் செய்துவிடுவேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6624 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாம்தாம் மறுமை நாளில் (காலத்தால்) பிந்தியவர்களாகவும் (அந்தஸ்தால்) முந்தியவர்களாகவும் இருப்போம்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6625 மேலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் மீதாணையாக! (உங்களில் ஒருவர் தம் குடும்பத்தார் (துன்புறும் வகையில் அவர்கள்) தொடர்பாகத் தாம் செய்த சயத்தியத்தில் பிடிவாதமாக இருப்பது, (அந்தச் சத்தியத்தை முறித்துவிட்டு) அதற்காக அவரின் மீது அல்லாஹ் கடமையாக்கியுள்ள பரிகாரத்தைச் செய்வதைவிடப் பெரும் பாவமாகும்.

ஹதீஸ் 6626. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் தம் குடும்பத்தார் (துன்புறும் வகையில் அவர்கள்) தொடர்பாகத் தாம் செய்த சத்தியத்தில் பிடிவாதமாக இருப்பது, அவர் செய்யும் பெரும் பாவமாகும். (எனவே,) அவர் (சத்தியத்தை முறித்து) நன்மை செய்யட்டும்! - அதாவது பரிகாரம் செய்யட்டும்!

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (சத்தியம் செய்யும் போது) வ அய்முல்லாஹி என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6627 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், உசாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தளபதியாக்கி ஒரு படைப்பிரிவை அனுப்பினார்கள். மக்களில் சிலர் உசாமா அவர்களின் தலைமையைக் குறை கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து, (இப்போது) இவரின் தலைமையை நீங்கள் குறை கூறுகிறீர்கள் என்றால் (இது ஒன்றும் புதிதல்ல!) இதற்கு முன்பு (மூத்தா போரின் போது) இவருடைய தந்தையின் (ஸைத் அவர்களின்) தலைமையையும் தான் நீங்கள் குறை கூறிக் கொண்டிருந்தீர்கள். வஅய்முல்லாஹி (அல்லாஹ்வின் மீதாணையாக!) அவர் (ஸைத்) தலைமைப் பொறுப்புக்குத் தகுதியுடையவராகவே இருந்தார். மேலும், அவர் மக்களிலேயே

எனக்கு மிகவும் விருப்பமானவராகவும் இருந்தார். மக்களிலேயே (அவரின் புதல்வரான) இவர் (உசாமா) என் அன்புக்குரியவராவார்‘‘ என்றார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் எவ்வாறு சத்தியம் செய்தார்கள்?

ஸஅத் இப்னு அவர்கள் (சத்தியம் செய்யும் போது),‘என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக!”என்று கூறினார்கள்.

அபூ கத்தாதா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அபூ பக்ர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம், (ஹுனைன் போரின்போது)’லா ஹல்லாஹி இதன்’ (இல்லை. அல்லாஹ்வின் மீதாணையாக!) என்றார்கள்.

(பெரும்பாலும் சத்தியம் செய்யும்போது)’வல்லாஹி‘,‘பில்லாஹி‘‘தல்லாஹி’ என்று சொல்லப்படுவதுண்டு.

ஹதீஸ் 6628 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

“இல்லை. உள்ளங்களைப் புரட்டுபவன் மீதாணையாக!”என்பது நபி(ஸல்) அவர்கள் சத்தி(யம் செய்யும்போது அதிகமாகப் பயன்படுத்தும் வாக்கி)யமாக இருந்தது.

ஹதீஸ் 6629 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தற்போதுள்ள பைஸாந்திய மன்னர்) சீசர் மாண்டுவிட்டால் அவருக்குப் பின் வேறொரு சீசர் வரமாட்டார். (தற்போதுள்ள பாரசீக மன்னர்) கிஸ்ரா (குஸ்ரு) மாண்டுவிட்டால் அவருக்குப் பின் வேறொரு கிஸ்ரா வரமாட்டார். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! (சீசர் மற்றும் கிஸ்ரா) இருவருடைய கருவூலங்களும் நிச்சயம் இறைவழியில் செலவழிக்கப்படும்.

என ஜாபிர் இப்னு சமுரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6630 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தற்போதுள்ள பைஸாந்திய மன்னர்) சீசர் மாண்டுவிட்டால் அவருக்குப் பின் வேறொரு சீசர் வரமாட்டார். (தற்போதுள்ள பாரசீக மன்னர்) கிஸ்ரா (குஸ்ரு) மாண்டுவிட்டால் அவருக்குப் பின் வேறொரு கிஸ்ரா வரமாட்டார். இந்த முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! (சீசர் மற்றும் கிஸ்ரா) இருவருடைய கருவூலங்களும் நிச்சயமாக இறைவழியில் செலவழிக்கப்படும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6631 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

முஹம்மதின் சமுதாயமே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அறிவதையெல்லாம் நீங்கள் அறிவீர்களாயின் நிச்சயம் அதிகமாக அழுவீர்கள் குறைவாகவே சிரிப்பீர்கள்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6632 அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்.

இரண்டு பேர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தனர். அவர்களில் ஒருவர்,‘எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்‘‘ என்று கூறினார். அவர்கள் இருவரில் விவரம் தெரிந்தவரான மற்றொருவர்’ஆம். இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டப்படி எங்களுக்கிடையே தீர்ப்பளியுங்கள்! என்னைப் பேச அனுமதியுங்கள்‘‘ என்றார்.

நபி(ஸல்) அவர்கள், 'பேசுங்கள்'' என்றார்கள். அந்த மனிதர், 'என் மகன் இவரிடம்'அஸீஃப்' ஆக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். 'அஸீஃப் என்பதற்குக்'கூலியாள்' என்று பொருள் என மாலிக்(ரஹ்) அவர்கள் கூறினார்கள். (அப்போது) இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். எனவே, மக்கள் என்னிடம், 'உன் மகனுக்குக் நல்லெறி தண்டனை உண்டு'' என்று கூறினர். ஆனால், நான் அவனுக்காக நூறு ஒட்டகங்களையும் ஓர் அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் அறிஞர்களிடம் (இது குறித்துக்) கேட்டேன். அவர்கள், '(திருமணமாகாத நிலையில் விபசாரம் புரிந்துவிட்ட) என் மகனுக்கு நூறு கசையடிகள் கொடுக்க வேண்டும் என்றும், ஓராண்டுக் காலத்திற்கு அவனை நாடு கடத்த வேண்டும் என்றும், கல்லெறி தண்டனை (விபசாரம் புரிந்த) அவரின் மனைவிக்குத்தான் என்றும் தெரிவித்தார்கள்'' என்றார்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்:'உங்கள் ஆடுகளும் அடிமைப் பெண்ணும் உங்களிடமே திருப்பித் தரப்படும்'' என்று கூறிவிட்டு, அவரின் மகனுக்கு நூறு கசையடிகள் வழங்கச் செய்து ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தவும் செய்தார்கள். மேலும், உனைஸ் அல்அஸ்லமீ(ரலி) அவர்கள் அந்த நபரின் மனைவியிடம் சென்று, அவள் குற்றத்தை ஒப்புக்கொண்டால் அவளுக்குக் கல்லடி தண்டனை வழங்கிடுமாறு உத்தரவிடப்பட்டார்கள். அவ்வாறே, (உனைஸ் அப்பெண்ணிடம் சென்றார்.) அவள் குற்றத்தை ஒப்புக்கொண்டார். எனவே, அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்கினார்.

ஹதீஸ் 6633 அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்.

இரண்டு பேர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தனர். அவர்களில் ஒருவர், 'எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார். அவர்கள் இருவரில் விவரம் தெரிந்தவரான மற்றொருவர்'ஆம். இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டப்படி எங்களுக்கிடையே தீர்ப்பளியுங்கள்! என்னைப் பேச அனுமதியுங்கள்'' என்றார். நபி(ஸல்) அவர்கள், 'பேசுங்கள்'' என்றார்கள். அந்த மனிதர், 'என் மகன் இவரிடம்'அஸீஃப்' ஆக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். 'அஸீஃப் என்பதற்குக்'கூலியாள்' என்று பொருள் என மாலிக்(ரஹ்) அவர்கள் கூறினார்கள். (அப்போது) இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். எனவே, மக்கள் என்னிடம், 'உன் மகனுக்குக் நல்லெறி தண்டனை உண்டு'' என்று கூறினர். ஆனால், நான் அவனுக்காக நூறு ஒட்டகங்களையும் ஓர் அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் அறிஞர்களிடம் (இது குறித்துக்) கேட்டேன். அவர்கள், '(திருமணமாகாத நிலையில் விபசாரம் புரிந்துவிட்ட) என் மகனுக்கு நூறு கசையடிகள் கொடுக்க வேண்டும் என்றும், ஓராண்டுக் காலத்திற்கு அவனை நாடு கடத்த வேண்டும் என்றும், கல்லெறி தண்டனை (விபசாரம் புரிந்த) அவரின் மனைவிக்குத்தான் என்றும் தெரிவித்தார்கள்'' என்றார்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்:'உங்கள் ஆடுகளும் அடிமைப் பெண்ணும் உங்களிடமே திருப்பித் தரப்படும்'' என்று கூறிவிட்டு, அவரின் மகனுக்கு நூறு கசையடிகள் வழங்கச் செய்து ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தவும் செய்தார்கள். மேலும், உனைஸ் அல்அஸ்லமீ(ரலி) அவர்கள் அந்த நபரின் மனைவியிடம் சென்று, அவள் குற்றத்தை ஒப்புக்கொண்டால் அவளுக்குக் கல்லடி தண்டனை

வழங்கிடுமாறு உத்தரவிடப்பட்டார்கள். அவ்வாறே, (உனைஸ் அப்பெண்ணிடம் சென்றார்.) அவள் குற்றத்தை ஒப்புக்கொண்டார். எனவே, அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்கினார்.

ஹதீஸ் 6634 அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்.

இரண்டு பேர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தனர். அவர்களில் ஒருவர், 'எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார். அவர்கள் இருவரில் விவரம் தெரிந்தவரான மற்றொருவர்'ஆம். இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டப்படி எங்களுக்கிடையே தீர்ப்பளியுங்கள்! என்னைப் பேச அனுமதியுங்கள்'' என்றார். நபி(ஸல்) அவர்கள், 'பேசுங்கள்'' என்றார்கள். அந்த மனிதர், 'என் மகன் இவரிடம்'அஸீ∴ப்' ஆக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். 'அஸீ∴ப் என்பதற்குக்'கூலியாள்' என்று பொருள் என மாலிக்(ரஹ்) அவர்கள் கூறினார்கள். (அப்போது) இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். எனவே, மக்கள் என்னிடம், 'உன் மகனுக்குக் நல்லெறி தண்டனை உண்டு'' என்று கூறினர். ஆனால், நான் அவனுக்காக நூறு ஒட்டகங்களையும் ஓர் அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் அறிஞர்களிடம் (இது குறித்துக்) கேட்டேன். அவர்கள், '(திருமணமாகாத நிலையில் விபசாரம் புரிந்துவிட்ட) என் மகனுக்கு நூறு கசையடிகள் கொடுக்க வேண்டும் என்றும், ஓராண்டுக் காலத்திற்கு அவனை நாடு கடத்த வேண்டும் என்றும், கல்லெறி தண்டனை (விபசாரம் புரிந்த) அவரின் மனைவிக்குத்தான் என்றும் தெரிவித்தார்கள்'' என்றார்.

அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்:'உங்கள் ஆடுகளும் அடிமைப் பெண்ணும் உங்களிடமே திருப்பித் தரப்படும்'' என்று கூறிவிட்டு, அவரின் மகனுக்கு நூறு கசையடிகள் வழங்கச் செய்து ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தவும் செய்தார்கள். மேலும், உனைஸ் அல்அஸ்லமீ(ரலி) அவர்கள் அந்த நபரின் மனைவியிடம் சென்று, அவள் குற்றத்தை ஒப்புக்கொண்டால் அவளுக்குக் கல்லடி தண்டனை வழங்கிடுமாறு உத்தரவிடப்பட்டார்கள். அவ்வாறே, (உனைஸ் அப்பெண்ணிடம் சென்றார்.) அவள் குற்றத்தை ஒப்புக்கொண்டார். எனவே, அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்கினார்.

ஹதீஸ் 6635 அபூ பக்ரா நு∴பைஉ இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (தம் தோழர்களிடம்)'பனு தமீம், பனு ஆமிர் இப்னு ஸஅஸஉ, பனு ∴கத∴பான், பனு அசத் ஆகிய (பிரபல அரபுக்) குலத்தாரைவிட (முதலில் இஸ்லாத்தைத் தழுவிய) அஸ்லம், ∴ம்∴பார், முஸைனா, ஜுஹைனா ஆகிய குலத்தார் சிறந்தோரென்றால், (முதலில் கூறிய பிரபலமான) அந்தக் குலத்தார் நஷ்டமும் இழப்பும் அடைந்தவர்கள்தாமே!"என்று கேட்டார்கள். தோழர்கள்'ஆம்' என்றனர். அப்போது நபி(ஸல்) அவர்கள்'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! (அஸ்லம் முதலான) இவர்கள் (பனு தமீம் முதலான) அவர்களைவிட(ப் பல மடங்கு) சிறந்தவர்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6636 அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ அவர்கள் அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ('அஸ்த்' எனும் குலத்தைச் சேர்ந்த) ஒருவரை ('ஸகாத்' வசூலிக்கும்) அதிகாரியாக நியமித்தார்கள். அந்த அதிகாரி தம் பணியை முடித்துக்கொண்டு நபியவர்களிடம் திரும்பி வந்து, 'இறைத்தூதர் அவர்களே! இது உங்களுக்குரியது இது எனக்கு

அன்பளிப்பாக வழங்கப்பட்டது‘‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் அவரிடம்,‘உம் தந்தையின் வீட்டில் அல்லது தாயின் வீட்டில் உட்கார்ந்து கொண்டு உமக்கு அன்பளிப்பு வழங்கப்படுகிறதோ இல்லையா என்று பாரும்!”என்று கூறினார்கள்.

பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மாலை தொழுகைக்குப் பிறகு எழுந்து நின்று, ஏகத்துவ உறுதிமொழி கூறி இறைவனை அவனுக்குரிய பண்புகளைக் கூறி போற்றிப் புகழ்ந்த பிறகு (பின்வருமாறு) கூறினார்கள்: பின்னர், அந்த அதிகாரிக்கு என்ன ஆயிற்று? அவரை நாம் (ஸகாத் வசூலிக்க) அதிகாரியாக நியமித்தோம். அவரோ நம்மிடம் வந்து’இது உங்கள் அதிகாரத்திற்குட்பட்டது. இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது‘‘ என்று கூறுகிறார். அவர் தம் தந்தையின் வீட்டில் அல்லது தாயின் வீட்டில் உட்கார்ந்து கொண்டு, தமக்கு அன்பளிப்பு வழங்கப்படுகிறதா இல்லையா என்று பார்க்கட்டுமே! (இந்த) முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்களில் யாரேனும் அந்த(ப் பொதுச்) சொத்திலிருந்து முறை கேடாக எதைப் பெற்றாலும் அதை அவர் மறுமை நாளில் தம் பிடரியில் சுமந்து கொண்டு நிச்சயம் வருவார். அது ஒட்டகமாக இருந்தால் அது கனைத்துக் கொண்டிருக்கும் நிலையில் அதைக் கொண்டு வருவார் அது பசுவாக இருந்தால் அது கத்திக் கொண்டிருக்கும் நிலையில் அதைக் கொண்டு வருவார் அது ஆடாக இருந்தால் அது கத்திக்கொண்டிருக்கும் நிலையில் அதைக் கொண்டு வருவார்‘‘ என்று கூறிவிட்டு’(இறைவா! உன்னுடைய செய்தியை மக்களிடம்) நான் சேர்த்துவிட்டேன்‘‘ என்று கூறினார்கள்.

அபூ ஹுமைத்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் அக்குள்களின் வெண்மையை நாங்கள் நன்கு பார்க்கும் அளவிற்குத் தம் கையை உயர்த்தினார்கள்.

இந்த ஹதீஸை என்னுடன் ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்றார்கள். (வேண்டுமானால்,) அவரிடம் நீங்கள் கேட்டுப்பாருங்கள்.

ஹதீஸ் 6637 அபுல்காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்கள் கூறினார்கள்:

முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! நான் அறிவதையெல்லாம் நீங்கள் அறிவீர்களாயின் நிச்சயம் அதிகமாக அழுவீர்கள் குறைவாகவே சிரிப்பீர்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6638 அபூ தர்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் போய்ச் சேர்ந்தேன். அப்போது அவர்கள் (இறையில்லம்) கஅபாவின் நிழலில் இருந்தவாறு,‘கஅபாவின் அதிபதி மீது சத்தியமாக! அவர்கள் நஷ்டவாளிகள். கஅபாவின் அதிபதி மீது சத்தியமாக அவர்கள் நஷ்டவாளிக்‘‘ என்று சொல்லத் தொடங்கினார்கள். நான்,‘என் நிலை என்ன? என் தொடர்பாக அவர்களுக்கு ஏதேனும் காட்டப்படுகிறதா? (அப்படியானால்) என் நிலை என்னாவது?’ என்று (மனத்துக்குள்) சொல்லிக்கொண்டே அவர்கள் அருகில் அமர்ந்தேன். அப்போது நபியவர்கள்’என்னால் பேசாமலிருக்க இயலவில்லை. அல்லாஹ் நாடிய ஏதோ ஒன்று என்னைச் சூழ்ந்து கொண்டது‘‘ என்று கூறினார்கள். உடனே நான்’என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். அவர்கள் யார், இறைத்தூதர் அவர்களே?’ என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,‘அதிகச் செல்வம் படைத்தவர்கள். ஆனால் (நல்வழியில் செல்வத்தைச் செலவிட்ட) சிலரைத் தவிர‘‘

என்று கூறியவாறு இவ்வாறு இவ்வாறு இவ்வாறு (என்று தம் பக்கம் வலப் பக்கம் இடப் பக்கம்) கைகளால் சைகை செய்தார்கள்.

ஹதீஸ் 6639 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்) சுலைமான்(அலை) அவர்கள் (ஒரு முறை),'நான் இன்றிரவு (என்னுடைய) தொண்ணூறு துணைவியரிடமும் சென்று வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் இறைவழியில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்கள்'' என்று கூறினார்கள். அப்போது அன்னாருடைய தோழர்களில் ஒருவர்'இன்ஷாஅல்லாஹ்'' (அல்லாஹ் நாடினால்) என்று (சேர்த்துச்) சொல்லுங்கள்'' என்று கூறினார். (ஆனால்,) சுலைமான்(அலை) அவர்கள்'இன்ஷா அல்லாஹ்' என்று கூறவில்லை. (மறந்துவிட்டார்கள்.) மேலும், தம் துணைவியர் அனைவரிடமும் சென்றார்கள். அவர்களில் ஒரேயொரு மனைவியைத் தவிர வேறெவரும் கர்ப்பமடையவில்லை. அந்த ஒருவரும் ஒரு புஜமுடைய அரை மனிதரைத் தாம் பெற்றெடுத்தார். (இந்த) முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! அவர்,'இன்ஷா அல்லாஹ்' என்று கூறியிருந்தால், (அந்த தொண்ணூறு துணைவியரும் கர்ப்பதியாகி பிள்ளைகள் பெற்று, அப்பிள்ளைகள் அனைவரும் இறைவழியில் அறப்போர் புரிகிற (குதிரை) வீரர்களாய் ஆகியிருப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6640. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பட்டுத் துணி ஒன்று அன்பளிப்பாக வழங்கப்பெற்றது. மக்கள் அதன் அழகையும் மிருதுவையும் கண்டு வியந்து ஒருவரிடமிருந்து ஒருவர் வாங்கிப் பார்க்கலாயினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்களைப் பார்த்து)'இதைக் கண்டு நீங்கள் வியப்படைகின்றீர்களா?' என்று கேட்டார்கள். மக்கள்,'ஆம் இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! ஸஅத்(பின் முஆத்) அவர்களுக்கு சொர்க்கத்தில் கிடைக்கவிருக்கும் கைக்குட்டைகள் இதைவிடச் சிறந்தவை'' என்று கூறினார்கள்.

அபூ இஸ்ஹாக்(ரஹ்) அவர்களிடமிருந்து ஷுஅபா(ரஹ்) மற்றும் இஸ்ராயீல்(ரஹ்) ஆகியோர் அறிவித்துள்ள ஹதீஸில்'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக' என்பது இடம் பெறவில்லை.

ஹதீஸ் 6641 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(அபூ சுப்யான்(ரலி) அவர்களின் துணைவியார்)'ஹிந்த் பின்த் உத்பா இப்னு ரபீஆ'(ரலி) அவர்கள்'இறைத்தூதர் அவர்களே! இந்தப் பூமியின் மேலுள்ள (அரபு) வீட்டார்களிலேயே உங்களுடைய வீட்டார் இழிவடைவதே (இதற்கு முன்பு) எனக்கு விருப்பமானதாய் இருந்தது. பிறகு எல்லா வீட்டார்களிலும் உங்களுடைய வீட்டார் கண்ணியடைவதே இன்று எனக்கு விருப்பமானதாய் மாறிவிட்டது'' என்று கூறினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! (உன்னுடைய இந்த விருப்பம்) இன்னும் (அதிகமாகும்)'' என்று கூறினார்கள்.

அவர்'இறைத்தூதர் அவர்களே! (என் கணவர்) அபூ சுஃப்யான் கருமியான மனிதராவார். அவருக்குரிய (செல்வத்)திலிருந்து (எங்கள் பிள்ளைகளுக்கு) நான் உணவளிப்பது என் மீது

குற்றமாகுமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'நியாயமான அளவிற்கு எடுத்தால் குற்றமாகாது'' என்று பதிலளித்தார்கள்.

'வீட்டார்கள் என்பதைக் குறிக்கப் பன்மையை (அக்பாஉ) பயன்படுத்தினார்களா? ஒருமையை (கிபாஉ) பயன்படுத்தினார்களா? என்பதில் அறிவிப்பாளர் யஹ்யா இப்னு புகைர்(ரஹ்) அவர்கள் சந்தேகம் தெரிவித்துள்ளார்கள்.

ஹதீஸ் 6642 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஒரு முறை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் முதுகை யமன் நாட்டுத்தோல் கூடாரமொன்றில் சாய்த்தபடி இருந்தபோது தம் தோழர்களிடம்,'சொர்க்க வாசிகளில் நான்கில் ஒரு பகுதியினராக நீங்கள் இருக்க வேண்டுமென விரும்புகின்றீர்களா?' என்று கேட்டார்கள். தோழர்கள்'ஆம்' என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள்,'சொர்க்கவாசிகளில் மூன்றில் ஒரு பகுதியினராக நீங்கள் இருக்க வேண்டுமென விரும்பமாட்டீர்களா?' என்று கேட்டார்கள். தோழர்கள்,'ஆம்' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,'(இந்த) முஹம்மதின் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! சொர்க்கவாசிகளில் பாதிப்பேராக நீங்கள் இருப்பீர்கள் என்றே நான் எதிர்பார்க்கிறேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6643. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஒருவர்'குல் ஹுவல்லாஹு அஹத்' எனும் (112 வது குர்ஆன்) அத்தியாயத்தைத் திரும்பத் திரும்ப ஓதிக் கொண்டிருப்பதை மற்றொரு மனிதர் செவியுற்றார். அந்த மனிதர் விடிந்ததும் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து அதைப் பற்றிக் கூறினார். அந்தச் சிறிய அத்தியாயத்தை(த் திரும்பச் திரும்ப அவர் ஓதியதை) இவர் சாதாரணமாக மதிப்பிட்டதைப் போன்றிருந்தது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! அந்த அத்தியாயம் குர்ஆனின் மூன்றில் ஒரு பங்கிற்கு நிகரானதாகும்'' என்றார்கள்.

ஹதீஸ் 6644 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தொழுகையில்) ருகூவையும் (குனிதலையும்) சஜ்தாவையும் (சிரவணக்கத்தையும்) பரிபூரணமாகச் செய்யுங்கள். ஏனெனில், என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! நீங்கள் ருகூஉ செய்யும்போது சஜ்தா செய்யும் போதும் என் முதுகுக்குப் பின்னால் உங்களை நான் பார்க்கிறேன்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6645 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் தம் குழந்தைகளுடன் அன்சாரிப் பெண்மணி ஒருவர் வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'என்னுயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! (அன்சாரிகளான) நீங்கள் மக்களிலேயே என் பேரன்பிற்குரியவர்கள்'' என்று மூன்று முறை கூறினார்கள்.

## உங்கள் தந்தையர் பெயரால் சத்தியம் செய்ய வேண்டாம்.

ஹதீஸ் 6646 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் தங்களின் வாகனத்தில் பயணம் செய்த படி தம் தந்தை பெயரால் சத்தியம் செய்து கொண்டிருந்தபோது அவர்களை இறைத்தூதர்(ஸல்)

அவர்கள் சென்றடைந்தார்கள். மேலும்,'அறிந்து கொள்ளுங்கள்: உங்கள் தந்தையர் பெயரால் சத்தியம் செய்ய வேண்டாமென அல்லாஹ் உங்களுக்குத் தடை விதிக்கிறான். (எனவே) சத்தியம் செய்பவர் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்யட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும்'' என்றார்கள்.

ஹதீஸ் 6647 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) உமர்(ரலி) கூறினார்: என்னிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'உங்களின் தந்தையர் பெயரால் நீங்கள் சத்தியம் செய்ய வேண்டாமென அல்லாஹ் உங்களுக்குத் தடை விதிக்கிறான்'' என்றார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் கூறக் கேட்டது முதல் நானாகப் பேசும் போதும் சரி பிறரின் பேச்சை எடுத்துரைக்கும்போதும் சரி நான் தந்தை பெயரால் சத்தியம் செய்ததில்லை.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ('பிறரின் பேச்சை எடுத்துரைத்தல் என்பதைக் குறிக்க மூலத்தில் இடம் பெற்றுள்ள'ஆஸிர்' எனும் சொல்லின் இனத்திலுள்ளதும், 46:4 வது வசனத்தின் மூலத்தில் இடம் பெற்றுள்ளதுமான)'அஸாரதின் மின் இல்மின்' எனும் சொற்றொருடருக்கு'ஞானத்தை அறிவித்தல்' என்று பொருள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

இன்னோர் அறிவிப்பில், உமர்(ரலி) அவர்கள் (இவ்விதம்) சத்தியம் செய்வதை நபி(ஸல்) அவர்களே செவியுற்றார்கள் என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 6648 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்கள் தந்தையர் பெயரால் சத்தியம் செய்யாதீர்கள்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6649 ஸஹ்தம் இப்னு முளர்ரிப் அல்ஜர்மீ(ரஹ்) அறிவித்தார்.

(குளாஆ குலத்தைச் சேர்ந்த) இந்த (எங்கள்) ஜர்ம் கோத்திரத்தாருக்கும் (யமன் நாட்டவர்களான) அஷ்அரீ குலத்தாருக்குமிடையே நட்புறவும் சகோதரத்துவமும் இருந்துவந்தது. (ஒரு முறை) நாங்கள் அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அபூ மூஸா(ரலி) அவர்களுக்கு அருகில் உணவு வைக்கப்பட்டது. அதில் கோழி இறைச்சி இருந்தது. அபூ மூஸா(ரலி) அவர்களுக்குப் பக்கத்தில் பனு தைம்' குலத்தைச் சேர்ந்த சிவப்பான மனிதர் ஒருவர் இருந்தார். அவர் அடிமைகளில் ஒருவரைப் போன்று காணப்பட்டார். அபூ மூஸா(ரலி) அவர்கள் அந்த மனிதரையும் உணவு உண்ண அழைத்தார்கள். அதற்கு அந்த மனிதர்,'இந்தக் கோழி (இனம், அசுத்தம்) ஒன்றைத் தின்பதை கண்டேன். அது எனக்கு அருவருப்பை உண்டாக்கவே இதை இனிமேல் உண்ணமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டேன்'' என்றார். (இதைக் கேட்ட) அபூ மூஸா(ரலி) அவர்கள்,'எழுந்து (இங்கே) வாருங்கள்! இதைப் பற்றி உங்களுக்கு நான் (நபிகளாரின் சமூகத்தில் நடந்த ஒரு சம்பவத்தை) அறிவிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கூறலானார்கள்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (என்) அஷ்அரீ குலத்தார் சிலருடன் எங்களை(யும் எங்கள் பயணச் சுமைகளையும்) சுமந்து செல்ல ஒட்டகங்கள் தரும்படி கேட்டுச் சென்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் இல்லாத நிலையில் உங்களை

நான் (ஒட்டகத்தில்) ஏற்றி அனுப்பமாட்டேன்'' என்று கூறினார்கள். (எனவே நாங்கள் திரும்பிச் சென்றுவிட்டோம்.)

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் போரில் கிடைத்த (ஃகனீமத் ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டன. உடனே,'அஷ்அரீ குலத்தார் எங்கே?' என எங்களைக் குறித்து கேட்டுவிட்டு, எங்களுக்கு வெள்ளைத் திமில்கள் கொண்ட ஐந்து ஒட்டக மந்தைகளை வழங்குமாறு உத்தரவிட்டார்கள். நாங்கள் (அவர்களிடமிருந்து அதைப் பெற்றுக் கொண்டு) சென்று கொண்டிருந்தபோது (நாங்கள் எங்களுக்குள்)'நாம் என்ன காரியம் செய்துவிட்டோம்! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நமக்கு (வாகன) ஒட்டகங்கள் வழங்கப் போவதில்லையென சத்தியம் செய்தார்கள் அவர்களிடம் (அதற்கான) ஒட்டகங்களும் இருக்கவில்லை. பிறகு (என்ன நடந்தோ!) நமக்கு ஒட்டகங்களை வழங்கினார்கள். (ஒரு வேளை) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சத்தியத்தை நாம் மறக்கும்படி செய்து விட்டோமா! (அப்படிச் செய்தால்) அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நாம் ஒருபோதும் வெற்றியடையப் போவதில்லை'' என்று பேசிக் கொண்டோம். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்றோம். அவர்களிடம்,'நாங்கள் தங்களிடம் எங்களை(யும் எங்கள் பயணச் சுமைகளையும்) ஏற்றிச் செல்ல ஒட்டகங்கள் கேட்டு முதலில்) வந்தபோது எங்களுக்கு ஒட்டகங்கள் தரப்போவதில்லையெனத் தாங்கள் சத்தியம் செய்தீர்கள். தங்களிடம் எங்களை ஏற்றியனுப்ப(த் தேவையான) ஒட்டகங்களும் இருக்கவில்லை. (பிறகு எங்களுக்கு ஒட்டகங்கள் தரும்படி மறதியாகச் சொல்லிவிட்டீர்களோ?)'' என்று கேட்டோம்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நான் உங்களை ஏற்றிச் செல்ல ஒட்டகங்கள் வழங்கவில்லை. மாறாக, அல்லாஹ்தான் உங்களை ஏற்றிச் செல்ல ஒட்டகங்கள் வழங்கினான். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (பொதுவாக) நான் எந்த ஒன்றுக்காகவும் சத்தியம் செய்து, பிறகு அது அல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும் பட்சத்தில் சிறந்ததையே செய்வேன் சத்தியத்தை முறித்து அதற்காகப் பரிகாரமும் செய்வேன்'' என்று கூறினார்கள்.

## லாத், உஸ்ஸா உள்ளிட்ட (பொய்த் தெய்வச்) சிலைகள் பெயரால் சத்தியம் செய்யலாகாது.

ஹதீஸ் 6650 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

யார் சத்தியம் செய்யும்போது (அறியாமைக் கால தெய்வச் சிலைகளான)'லாத்தின் மீது சத்தியமாக! உஸ்ஸாவின் மது சத்தியமாக! என்று கூறிவிட்டாரோ அவர் (இந்தப் பாவத்திற்குப் பரிகாரமாக)'லா இலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குத் தகுதியானவர் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை) என்று சொல்லட்டும்! தம் நண்பரிடம்,'வா சூதாடலாம்'' என்று கூறியவர் (எதையேனும்) தர்மம் செய்யட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## சத்தியம் செய்யும்படி கோரப்படாத போதும் சத்தியம் செய்தல்.

ஹதீஸ் 6651. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்க மோதிரம் ஒன்றைத் தயாரித்து அணிந்து கொண்டிருந்தார்கள். அதன் குமிழைத் தம் உள்ளங்கை பக்கமாக அமையும்படி வைத்தார்கள். (இதைக் கண்ட) மக்களும் (அதைப் போன்ற) மோதிரங்களைத் தயார் செய்தனர். பிறகு நபி(ஸல்) அவர்கள், சொற்பொழிவு மேடையில் (மிம்பரில்) அமர்ந்து அந்த மோதிரத்தைக்

கழறறிவிட்டு,'நான் இந்த மோதிரத்தை உள்ளங்கைப் பக்கமாக அதன் குமிழ் அமையும்படி அணிந்து கொண்டிருந்தேன்'' என்று வறி, அதை எறிந்துவிட்டார்கள். பிறகு,'அல்லாஹ்வின் மீதாணையாக! இதை ஒருபோதும் நான் அணியமாட்டேன்'' என்று கூறினார்கள். உடனே மக்களும் தங்களின் மோதிரங்களை(க் கழற்றி) எறிந்தனர்.

## இஸ்லாம் அல்லாத வேறொரு மார்க்கத்தின் பெயரால் சத்தியம் செய்வது.

"யார்'லாத்' மற்றும்'உஸ்ஸா' ஆகியவற்றின் பெயரால் சத்தியம் செய்தாரோ, அவர்'லா இலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று கூறட்டும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஆனால், இவ்வாறு) சத்தியம் செய்தவரை இறைமறுப்பின் பக்கம் நபியவர்கள் சேர்க்கவில்லை.

ஹதீஸ் 6652. 'இஸ்லாம் அல்லாத மார்க்கத்தின் மீது சத்தியம் செய்கிறவர் தாம் சொன்னதைப் போன்றே ஆகிவிடுகிறார். எதன் மூலம் ஒருவர் தம்மைத் தற்கொலை செய்துகொள்கிறாரோ அதன் மூலம் அவர் நரக நெருப்பில் வேதனை செய்யப்படுவார். ஓர் இறைநம்பிக்கையாளரை சபிப்பது அவரைக் கொலை செய்வதைப் போன்றதாகும். இறைநம்பிக்கையாளர் ஒருவரை இறைமறுப்பாளர் என்று ஒருவர் அவதூறு சொல்வதும் அவரைக் கொலை செய்வதைப் போன்றதாகும்' இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என ஸாபித் இப்னு ளஹ்ஹாக்(ரலி) அறிவித்தார்.

## 'அல்லாஹ்வும் நீயும் நாடினால் என்று கூறலாகாது. அல்லாஹ்வால், பிறகு உன்னால் என்று கூறலாமா?

ஹதீஸ் 6653 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பனு இஸ்ராயீல் மக்களில் (தொழு நோயாளி, வழுக்கைத் தலையர், குருடர் ஆகிய) மூவரைச் சோதிக்க அல்லாஹ் நாடினான். எனவே, அவன் வானவர் ஒருவரை அனுப்பினான். அவர் (அம்மூவரில் ஒருவரான) தொழுநோயாளியிடம் வந்து,'பயணத்தில் என் வாழ்வாதாரம் அறுபட்டுவிட்டது (செலவுக்குப் பணம் தீர்ந்து போய்விட்டது) இன்று எனக்கு உதவிக்கான வழிவகை அல்லாஹ்வையும் பிறகு உம்மையும் தவிர வேறெவருமில்லை'' என்று கூறினார்.

இதை அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்துவிட்டு, இந்த ஹதீஸை முழுமையாகக் கூறினார்கள்.

## "தங்களிடம் ஏதேனும் சான்று வருமாயின் அதை நிச்சயமாக நாங்கள் நம்புவோம் என்று அவர்கள் பலமாகச் சத்தியம் செய்தார்கள்' எனும் (திருக்குர்ஆன் 06:109 வது) இறைவசனம்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்கள்'இறைத்தூதர் அவர்களே!'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இக்கனவுக்குச் (சொன்ன விளக்கத்தில் நான்) செய்த தவறென்ன என்பதைத் தாங்கள் எனக்குத் தெரிவிக்க வேண்டும்'' என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள்'(இதற்காகவெல்லாம்) சத்தியம் செய்யாதீர்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 6654. பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

சத்தியம் செய்தவர் (அதை) நிறைவேற்ற உதவும்படி நபி(ஸல்) அவர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர் வழியாக வந்துள்ளது.

ஹதீஸ் 6655 உசாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் புதல்வியார் ஒருவர் (ஸைனப் (ரலி) தம் மகன் (அல்லது மகள்) இறக்கும் தருவாயில் இருப்பதாகவும், எனவே அங்கு வந்து சேர வேண்டும் என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் செய்தி அனுப்பினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நானும், ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களும்,'என் தந்தை (ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களும்' அல்லது'உபை இப்னு கஅப்(ரலி) அவர்களும்' இருந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் புதல்வியாருக்கு) சலாம் கூறி அனுப்பியதோடு'அல்லாஹ் எடுத்துக்கொண்டதும் கொடுத்ததும் அவனுக்கே உரியது. ஒவ்வொன்றுக்கும் அவனிடம் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு. எனவே, பொறுமையைக் கைக்கொண்டு நன்மையை எதிர்பார்ப்பீராக!"என்றும் சொல்லியனுப்பினார்கள். அப்போது அவர்களின் புதல்வியார் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு (கண்டிப்பாகத் தம்மிடம் வரவேண்டுமென)க் கூறியனுப்பினார். உடனே நபி(ஸல்) அவர்கள் எழுந்தார்கள். நாங்களும் அவர்களுடன் எழுந்தோம்.

(புதல்வியின் வீட்டுக்குள் நுழைந்த) நபியவர்கள் (அங்கு) அமர்ந்தார்கள். அப்போது அவர்களிடம் குழந்தை தரப்பட்டது. குழந்தையைத் தம் மடியில் படுக்க வைத்தார்கள். குழந்தை சுவாசிக்க முடியாமல் மூச்சுத் திணறிக் கொண்டிருந்தது. (இதைக் கண்ணுற்ற) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன. அப்போது ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! என்ன இது (அழுகிறீர்களே)?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'இது அல்லாஹ் தன் அடியார்களில் தான் நாடியவர்களின் உள்ளங்களில் அமைத்துள்ள இரக்க உணர்வாகும். திண்ணமாக, அல்லாஹ் தன் அடியார்களில் இரக்கமுடையவருக்கே இரக்கம் காட்டுகிறான்'' என்றார்கள்.

ஹதீஸ் 6656. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிமுடைய மக்களில் மூவர் (பருவ வயதுக்கு முன்பே) இறந்தால், (தந்தையான) அவரை நரகம் தீண்டாது ('உங்களில் யாரும் நரகத்தைக் கடக்காமல் செல்ல முடியாது' என்று அல்லாஹ் செய்துள்ள) சத்தியத்தைச் செயல்படுத்துவதற்காக (நரகத்தின் வழியே செல்வதை)த் தவிர. என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6657. ஹாரிஸா இப்னு வஹ்ப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை பின்வருமாறு) கூறக் கேட்டேன். சொர்க்கவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அவர்கள் (மக்களின் பார்வையில்) பலவீனமானவர்கள் பணிவானவர்கள் (ஆனால்) அவர்கள் அல்லாஹ்வின் மேல் ஆணையிட்டு (எதையேனும்) கூறுவார்களானால், அல்லாஹ் அதை (அவ்வாறே) நிறைவேற்றிவைப்பான். (இதைப்போன்றே) நிறைவேற்றிவைப்பான். (இதைப் போன்றே) நரகவாசிகள் யார் என்று உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? அவர்கள் உண்டு கொழுத்தவர்கள் இரக்கமற்றவர்கள் பெருமை அடிப்பவர்கள் ஆவர்.

## நான் அல்லாஹ்வை சாட்சியாக்குகிறேன் என்றோ,நான் அல்லாஹ்வை சாட்சியாக்கினேன் என்றோ ஒருவர் கூறினால் (அது சத்தியமாகுமா)?

ஹதீஸ் 6658. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம், 'மக்களில் சிறந்தவர் யார்?' என்று வினவப்பட்டது. நபி(ஸல்) அவர்கள், '(மக்களில் சிறந்தவர்கள்,) என் தலைமுறையினர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள் பிறகு ஒரு கூட்டத்தார் வருவார்கள். அவர்களின் சாட்சியம் அவர்களின் சத்தியத்தையும் அவர்களின் சத்தியம் அவர்களின் சாட்சியத்தையும் முந்திக் கொள்ளும்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) அவர்கள் 'சிறுவர்களான எங்களை எங்கள் சான்றோர்கள் (நபித்தோழர்கள்) 'அஷ்ஹது பில்லாஹ்' (அல்லாஹ்வின் பெயரால் நான் சாட்சியம் அளிக்கிறேன்) என்றோ 'அல்லாஹ்வுடன் செய்த ஒப்பந்தப்படி' என்றோ கூறுவதைத் தடுத்துவந்தார்கள்.

## 'அல்லாஹ்விற்கு நான் அளித்த வாக்குறுதியின் பெயரால் என்று கூறுவது.

ஹதீஸ் 6659. அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், 'ஒரு முஸ்லிமின் அல்லது 'தம் சகோதரனின் செல்வத்தைப் பறித்துக் கொள்வதற்காக (ஒரு பிரமாண வாக்குமூலத்தின்போது துணிவுடன்) பொய்ச் சத்தியம் செய்பவர், அல்லாஹ் அவரின் மீது கோபம் கொண்டிருக்கும் நிலையில்தான் அவனை (மறுமையில்) சந்திப்பார்'' என்று கூறினார்கள். அப்போது அ(ந்தக் கருத்)தை உறுதிப்படுத்தும் விதத்தில் அல்லாஹ், 'அல்லாஹ்வின் ('அஹ்து' எனும்) உடன் படிக்கைக்கும் தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:77 வது) வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 6660. சுலைமான் இப்னு மிஹ்ரான்(ரஹ்) அறிவித்தார்.

(மேற்கண்ட ஹதீஸை அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அவர்கள் மக்களிடம் சொல்லிக் கொண்டிருந்தபோது) அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) அவர்கள் உங்களிடம் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்?' என்று கேட்டார்கள். மக்கள் அன்னாரிடம் (விஷயத்தைக்) கூறினார்கள். அப்போது அஷ்அஸ்(ரலி) அவர்கள், 'எனக்கும் என் தோழர் ஒருவருக்குமிடையே இருந்த ஒரு கிணறு தொடர்பாக எங்களின் விஷயத்தில் அருளப்பெற்றதே இந்த வசனமாகும்'' என்றார்கள்.

## அல்லாஹ்வின் கண்ணியம், அவனுடைய பண்புகள் மற்றும் அவனுடைய உரைகள் பெயரால் சத்தியம் செய்வது (செல்லும்.)

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்கள் 'இறைவா! உன் கண்ணியத்தின் மீது சத்தியமாக! பாதுகாப்புக் கோருகிறேன்'' என்று கூறுவார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(மறுமையில் நரகத்திலிருந்து இறை நம்பிக்கை உள்ள அனைவரும் வெளியேற்றப்பட்ட பிறகு) சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே ஒருவர் மட்டும் (நரகத்தை முன்னோக்கியவராக) எஞ்சியிருப்பார். அவர் 'என் இறைவா! நரகத்தைவிட்டு என் முகத்தை (வேறு பக்கம்) திருப்பிவிடுவாயாக! உன் கண்ணியத்தின் மீதாணையாக! வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்'' என்று கூறுவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(அந்த மனிதரைப் பார்த்து) அல்லாஹ், 'இதுவும் உனக்குக் கிடைக்கும் இன்னும் இதைப் போன்று பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும்'' என்று கூறுவான்.

என அபூ ஸயீத் (ரலி) அறிவித்தார்.

(இறைத்தூதர்) அய்யூப் (அலை) அவர்கள், '(இறைவா! ) உன் கண்ணியத்தின் மீதாணையாக! உன் அருள் வளத்தைவிட்டு நான் தேவையற்றவன் அல்லன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6661. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(நரகவாசிகள் நரகத்தின் போடப்படுவார்கள். நரகம் வயிறு நிரம்பாத காரணத்தால்) 'இன்னம் அதிகம் இருக்கிறதா?' என்று கேட்டுக் கொண்டேயிருக்கும். இறுதியில் கண்ணியத்தின் அதிபதி (யான இறைவன்) தம் பாதத்தை அதில் வைப்பான். அப்போது அது 'போதும்! போதும்! உன் கண்ணியத்தின் மீதாணையாக!" என்று கூறும். நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## 'அல்லாஹ்வின் நித்தியத்தின் மீதாணையாக என்று ஒருவர் சொல்வது.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார். (திருக்குர்ஆன் 15:72 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'ல அம்ருக' எனும் சொல்லுக்கு 'உம்முடைய வாழ்நாள் மீதாணையாக! என்று பொருள்.

ஹதீஸ் 6662. இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறினார்:

உர்வா இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு முஸய்யப், அல்கமா இப்னு வக்காஸ், உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் (ரஹ் அலைஹிம்) ஆகியோர், நபி (ஸல்) அவர்களின் துணைவியரான ஆயிஷா (ரலி) அவர்கள் குறித்து அவதூறு கூறியவர்கள் என்ன சொன்னார்கள் என்பது பற்றியும், (அவதூறு கற்பித்தவர்கள் சொன்னவற்றிலிருந்து) ஆயிஷா (ரலி) அவர்கள் தூய்மையானவர்களென இறைவன் (தன்னுடைய வேதத்தில்) அறிவித்தது பற்றியும் கூற கேட்டேன். அவர்கள் (நால்வரில்) ஒவ்வொருவரும் இந்த சம்பவத்தில் ஆளுக்கொரு பகுதியினை அறிவித்தனர். அதில் (பின்வருமாறு உள்ளது:) அப்போது நபி (ஸல்) அவர்கள் எழுந்து, (நயவஞ்சகர்களின் தலைவன்) அப்துல்லாஹ் இப்னு உபைக்கு எதிராக உதவி கோரினார்கள். உசைத் இப்னு ஹுளைர் (ரலி) அவர்கள் எழுந்து ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களிடம் 'அல்லாஹ்வின் நித்தியத்தின் மீதாணையாக! அவனை நாங்கள் கொன்றே தீருவோம்'' என்று கூறினார்கள்.

## (யோசனையின்றி) நீங்கள் செய்யும் வீணான சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களுக்கு தண்டனை அளிக்கமாட்டான் ஆனால், நீங்கள் (நன்கு அறிந்து) உளப்பூர்வமாக செய்தவற்றுக்காகவே உங்களுக்கு தண்டனை அளிப்பான். அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் நிதானமானவனும் ஆவான். (திருக்குர்ஆன் 02:225)

ஹதீஸ் 6663. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

"இறைநம்பிக்கையாளர்களே!) நீங்கள் செய்யும் வீணான சத்தியங்களக்காக அல்லாஹ் உங்களுக்குத் தண்டனை அளிக்கமாட்டான்'' எனும் (திருக்குர்ஆன் 02:225 வது) இறைவசனம் 'லா வல்லாஹி' (இல்லை அல்லாஹ்வின் மீதாணையாக!) என்றும், 'பலா வல்லாஹி)

(ஆம் அல்லாஹ்வின் மீதாணையாக!) என்றும் (பொருள் கருதாமல் பழக்கத்தின் காரணமாகச் சத்தியம் செய்யும் சொற்களைக்) கூறுபவர் தொடர்பாக அருளப்பெற்றது.

## மறந்து சத்தியத்தை முறித்துவிட்டால்...?

அல்லாஹ் கூறினான்:

நீங்கள் தவறுதலாகச் செய்துவிட்ட வற்றில் உங்களின் மீது குற்றமில்லை. மாறாக, மனம் விரும்பி வேண்டுமென்றே செய்தது தான் குற்றமாகும். (திருக்குர்ஆன் 33:05)

மேலும் அல்லாஹ் கூறினான்

“நான் மறந்துவிட்டதற்காக என்னைத் தண்டித்துவிடாதீர்கள்‘‘ என அவர் (மூஸா) கூறினார். (திருக்குர்ஆன் 18:73)

ஹதீஸ் 6664. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாரின் உள்ளங்களில் ஊசலாடும் தீய எண்ணங்களை, அவர்கள் அதன்படி செயல்படாத வரை, அல்லது அதை (வெளிப்படுத்தி)ப் பேசாத வரை அல்லாஹ் (அவற்றுக்குத் தண்டனை வழங்குவதில்லை) மன்னித்துவிடுகிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6665. அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி ஆஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் நஹ்ருடைய (துல்ஹஜ் பத்தாம்) நாளில் (தம் ஒட்டகத்தின் மேல் இருந்தவாறு) உரை நிகழ்த்திக் கொண்டிருக்கையில் அவர்களை நோக்கி ஒருவர் எழுந்து,'நான் (ஹஜ்ஜில்) இன்னின்னதற்கு முன் இன்னின்னது (ஷைத்தானுக்குக் கல் எறிவதற்கு முன் பலியிடல், பலியிடலுக்கு முன் தலைமுடி களைதல்) என்று நினைத்துக் கொண்டிருந்தேன். இறைத்தூதர் அவர்களே!”என்று கூறினார். பிறகு மற்றொருவர் எழுந்து,'இறைத்தூதர் அவர்களே! (முடி களைதல், பலியிடல், கல்லெறிதல் ஆகிய இம்மூன்றையும் நான் இன்னின்னவாறு நினைத்துக் கொண்டிருந்தேன்‘‘ என்றார்கள். இவை அனைவருக்குமே நபி(ஸல்) அவர்கள்'(அவ்வாறே) செய்யுங்கள். (முன் பின்னாகச் செய்வதில்) குற்றமில்லை‘‘ என்றே பதிலளித்தார்கள். அன்று கேட்கப்பட்ட (இத்தகைய) கேள்விகள் அனைத்துக்கும்'(அப்படியே செய்யுங்கள் (அப்படியே செய்யுங்கள். (அதனால்) குற்றமில்லை‘‘ என்றே நபியவர்கள் விடையளித்தார்கள்.

ஹதீஸ் 6666. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(துல்ஹஜ் 10ஆம் நாளில் மினாவில் இருந்தபோது) நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர்,'கல்லெறிவதற்கு முன்பே நான் (தவா∴பில் ஸியாரா) சுற்றி வந்துவிட்டேன்‘‘ என்று கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை‘‘ என்றார்கள். மற்றொருவர்,'பலியிடுவதற்கு முன்பே தலை முடி களைந்துவிட்டேன்‘‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்'குற்றமில்லை‘‘ என்றார்கள். இன்னொருவர்,'கல்லெறிந்தற்கு முன்பே பலியிட்டுவிட்டேன்‘‘ என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,'குற்றமில்லை‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6667. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு வந்து தொழுதுஸவட்டு, பள்ளிவாசலின் ஒரு மூலையில் (அமர்ந்து) இருந்த இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவரிடம்'திரும்பச் சென்று தொழுவீராக! ஏனென்றால் நீர் (முறையாகத்) தொழவில்லை'' என்று கூறினார்கள்.

அந்த மனிதர் திரும்பிச் சென்று (முன்பு தொழுததைப் போன்றே) தொழுதுவிட்டு வந்து (நபிகளாருக்கு) சலாம் சொன்னார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள்,'வ அலைக்க'' (அவ்வாறே உம்மீதும் சாந்தி உண்டாகுக! என பதில் சலாம் கூறிவிட்டு)'திரும்பச் சென்று தொழுவீராக! நீர் (முறையாகத்) தொழவில்லை'' என்று கூறினார்கள்.

(இவ்வாறு மூன்று முறை நடந்தது) மூன்றாவது முறையில் அந்த மனிதர்,'அவ்வாறாயின் எனக்கு (தொழுகை முறையை)க் கற்றுத் தாருங்கள்!"என்று கேட்டார்.

''நீர் தொழ நினைத்தால் (முதலில்) பரிபூரணமாக அங்கசுத்தி (உளூ) செய்வீராக! பிறகு கிப்லா (இறையில்லம் கஅபாவின் திசையை) முன்னோக்கி (நின்று)'அல்லாஹு அக்பர்' என்று கூறும்! பிறகு குர்ஆனில் உமக்குத் தெரிந்ததை ஓதும்! பிறகு (குனிந்து)'ருகூஉ' செய்வீராக! அதில் (சற்று நேரம்) நிலைகொள்வீராக! பின்னர் ருகூவிலிருந்து தலையை உயர்த்தி நேராக நிற்பீராக! பிறகு சிரவணக்கம் (சஜ்தா) செய்து, அதில் (சற்றுநேரம்) நிலைகொள்வீராக! பிறகு தலையை உயர்த்தி (சற்று நேரம்) நன்றாக அமர்வீராக! பின்னர் (மீண்டும்) சிரவணக்கம் செய்து, அதில் (சற்று நேரம்) நிலைகொள்வீராக! பிறகு எழுந்து நேராக நிற்பீராக! இவ்வாறே உம்முடைய தொழுகை முழுவதிலும் செய்துவருவீராக!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6668. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போர் நாளில் (ஆரம்பத்தில்) இணைவைப்பாளர்கள் அப்பட்டமாகத் தோற்கடிக்கப்பட்டனர். அது அவர்களில் (வெளிப்படையாகவே) தெரிந்தது. அப்போது இப்லீஸ்,'அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களைக் கவனியுங்கள்'' என்று கூச்சலிட்டான். உடனே முஸ்லிம்களில் முன் அணியினர் (எதிரிகள் என்றெண்ணி), பின் அணியினரை நோக்கித் திரும்பிச் செல்ல, பின் அணியினருடன் (மோதலேற்பட்டுப்) போரிட்டுக் கொண்டனர். அப்போது ஹுதைஃபா இப்னு அல்யமான்(ரலி) அவர்கள், தம் தந்தை அங்கே (முஸ்லிம்களின் தாக்குதலுக்கு ஆளாக) இருப்பதைக் கண்டார். உடனே,'(அவர்) என் தந்தை! என் தந்தை!"என்று (சப்தமிட்டுக்) கூறினார். அல்லாஹ்வின் மீதாணையாக! அவரைக் கொன்ற பின்புதான் அவர்கள் (அவரைவிட்டு) நகர்ந்தார்கள். அப்போது ஹுதைஃபா(ரலி) அவர்கள்,'(என் தந்தையைத் தவறுதலாகக் கொன்றுவிட்ட) உங்களை அல்லாஹ் மன்னிப்பானாக!"என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் மீதாணையாக! ஹுதைஃபா(ரலி) அவர்கள் மன்னித்தால் (அன்னாருடைய வாழ்க்கையில்) அவர்கள் அல்லாஹ்வைச் சந்திக்கும் வரை நல்ல பலன் இருந்துகொண்டேயிருந்தது.

ஹதீஸ் 6669. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நோன்பு நோற்றிருக்கும் ஒருவர் மறதியாகச் சாப்பிட்டுவிட்டால் அவர் தம் நோன்பை நிறைவு செய்யட்டும்! ஏனெனில், அல்லாஹ்வே அவரை உண்ணவும் பருகவும் செய்தான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6670 அப்துல்லாஹ் இப்னு புஹைனா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஒரு முறை) எங்களுக்குத் தொழுகை நடத்தினார்கள். (அத் தொழுகையில்) இரண்டு ரக்அத்தை முடித்தபோது (அத்தஹிய்யாத்தில்) அமராமல் (மூன்றாவது ரக்அத்திற்காக மறதியாக) எழுந்து தொழுகையைத் தொடர்ந்தார்கள். தொழுகை முடியும் தருவாயில் நபி(ஸல்) அவர்கள்'சலாம்' கொடுப்பதை மக்கள் எதிர்ப்பார்த்திருந்தபோது (இருபபிலேயே) சலாம் கொடுப்பதற்கு முன்பாக தக்பீர் கூறி சஜ்தா செய்தார்கள். பிறகு (முதல் சஜ்தாவிலிருந்து) தலையைத் தூக்கி மீண்டும் தக்பீர் கூறி (இரண்டாவது) சஜ்தா செய்து பின்னர் தலையை உயர்த்தி சலாம் கொடுத்தார்கள்.

ஹதீஸ் 6671 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள் மக்களுக்கு லுஹ்ர் தொழுகையை தொழுகை நடத்தினார்கள். அப்போது'(ஐந்து ரக்அத்களாக) அதிகமாக்கி அல்லது'(மூன்று ரக்அத்களாகக்) குறைத்துத்' தொழுகை நடத்தினார்கள். -அறிவிப்பாளர்களில் ஒருவரான மன்சூர்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த இடத்தில் சந்தேகத்துடன் அறிவித்தது இப்ராஹீம்(ரஹ்) அவர்களா? அல்லது அல்கமா(ரஹ்) அவர்களா என்று எனக்குத் தெரியாது - (தொழுகை முடிந்த பின்),'இறைத்தூதர் அவர்களே! தொழுகை(யின் ரக்அத் எண்ணிக்கை) குறைந்துவிட்டதா? அல்லது தாங்கள் மறந்துவிட்டீர்களா?' அல்லது தாங்கள் மறந்துவிட்டீர்களா?' என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,'என்ன அது?' என்று கேட்டார்கள். மக்கள்,'இப்படி இப்படி நீங்கள் தொழுகை நடத்தினீர்கள்'' என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் மக்களுடன் சேர்ந்து இரண்டு சஜ்தாச் செய்தார்கள். பிறகு,'இந்த இரண்டு சஜ்தாக்கள், தம் தொழுகையில் அதிகப்படுத்திவிட்டோமா அல்லது குறைத்துவிட்டோமா என்று (உறுதியாகத்) தெரியாதவர் செய்ய வேண்டியவையாகும் (முதலில்) யோசித்து முடிவு செய்ய வேண்டும். பிறகு எஞ்சியுள்ள (ரக்அத்)தை பூர்த்தி செய்ய வேண்டும். அதற்குப் பிறகு (மறதிக்காக) இரண்டு சஜ்தாக்கள் செய்ய வேண்டும்'' என்றார்கள்.

ஹதீஸ் 6672 உபை இப்னு கஅப்(ரலி) அறிவித்தார்.

"நான் மறந்துபோனதற்காக என்னை தண்டிக்காதீர்கள். என் விஷயத்தில் நீங்கள் கடுமையாக நடந்து கொள்ளாதீர்கள்'' என்று (களிரிடம் மூஸா) கூறினார்'' எனும் (திருக்குர்ஆன் 18:73 வது) வசனத்(தின் விளக்கத்)தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'முதல் முறையில் மூஸா(அலை) அவர்கள் பொறுமையிழந்து மறதியினால் ஆகும்'' என்றார்கள்.

ஹதீஸ் 6673 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

எங்களிடம் விருந்தாளி ஒருவர் வந்திருந்தார். எனவே, நான் என் வீட்டாரிடம் (ஹஜ்ஜுப் பெருநாள் தொழுகையை முடித்துக் கொண்டு) நான் திரும்பி வருவதற்குள் விருந்தாளி சாப்பிடுவதற்காக (குர்பானிப் பிராணியை) அறுத்திடுமாறு கட்டளையிட்டேன். அதன்படி அவர்கள் (பெருநாள்) தொழுகைக்கு முன்பாகவே (குர்பானிப் பிராணியை) அறுத்துவிட்டார்கள். பிறகு இது குறித்து நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் மறுபடியும் (வேறொரு) குர்பானிப் பிராணியை அறுத்திடுமாறு எனக்கு உத்தரவிட்டார்கள். அதற்கு நான்,'இறைத்தூதர் அவர்களே! ஒரு வயதுடைய பால்குடி மறவாத பெட்டை வெள்ளாட்டுக் குட்டி என்னிடம் உள்ளது. அது இரண்டு இறைச்சி ஆடுகளை விடச் சிறந்தது (அதை நான் குர்பானி கொடுக்கலாமா?)'' என்று கேட்டேன். (நபியவர்கள் எனக்கு) அனுமதியளித்தார்கள்.)

அறிவிப்பாளர் அப்துல்லாஹ் இப்னு அவ்ன்(ரஹ்) அவர்கள், ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்களின் அறிவிப்பை இத்துடன் நிறுத்திவிட்டு, முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) அவர்கள் (அனஸ்(ரலி)

அவர்களிடமிருந்து) அறிவித்துள்ள இதே போன்ற ஹதீஸை அறிவித்தார்கள். பிறகு இத்துடன் நிறுத்திவிட்டு, 'பராஉ (ரலி) அவர்கள் அல்லாத மற்றவர்களுக்கும் இச்சலுகை பொருந்துமா? இல்லையா? என்று எனக்குத் தெரியாது'' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6674 ஜுன்தப் (ரலி) அறிவித்தார்.

நான் (ஹஜ்ஜுப்) பெருநாள் தினத்தில் நபி (ஸல்) அவர்களுடன் தொழுகையில் கலந்து கொண்டேன். (தொழுகை முடிந்த) பிறகு அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். அதில்'யார் தொழுகைக்கு முன் (குர்பானிப் பிராணியை) அறுத்துவிட்டாரோ அவர் அதற்கு மாற்றாக மற்றொன்றை (தொழுகைக்குப் பிறகு) அறுக்கட்டும். யார் அறுத்திருக்கவில்லையோ அவர் அல்லாஹ்வின் பெயர் கூறி (தொழுகைக்குப் பிறகு) அறுக்கட்டும்'' என்று கூறினார்கள்.

## பொய்ச் சத்தியம்

நீங்கள் உங்களுடைய சத்தியங்களை உங்களுக்கிடையே துரோகத்திற்குக் கருவியாக்கி விடாதீர்கள். (அவ்வாறு செய்தால்) நிலை பெற்ற பின் (உங்களின்) பாதம் சரிந்துவிடும். மேலும், நீங்கள் அல்லாஹ்வின் பாதையிலிருந்து (மக்களைத்) தடுத்த காரணத்தால் (இம்மையில்) துன்பத்தைத் அனுபவிப்பீர்கள் (மறுமையிலும்) உங்களுக்குக் கடுமையான வேதனை உண்டு. (திருக்குர்ஆன் 16:94)

(இவ்வசனத்தின் மூலத்திலுள்ள)'தகல்' (துரோகம்) எனும் சொல்லுக்குச் சூழ்ச்சி, வஞ்சகம் என்று பொருள்.

ஹதீஸ் 6675 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவனுக்கு இணைகற்பிப்பது, தாய் தந்தையரை புண்படுத்துவதும், கொலை செய்வது, பொய்ச் சத்தியம் செய்வது ஆகியன பெரும் பாவங்களாகும்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும் தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை. மேலும், மறுமை நாளில் அவர்களிடம் அல்லாஹ் பேசவுமாட்டான் அவர்களைப் பார்க்கவுமாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான். இன்னும் அவர்களுக்குத் துன்பம் தரும் வேதனை உண்டு. (திருக்குர்ஆன் 03:77)

மேலும், அல்லாஹ் கூறினான்:

நீங்கள் நன்மைகள் புரிவதற்கும், தீமையிலிருந்து உங்களைக் காத்துக்கொள்வதற்கும், மக்களிடையே சமாதானம் செய்வதற்கும் தடையாக, நீங்கள் செய்யும் சத்தியங்களுக்கு அல்லாஹ்வை (க் கருவி) ஆக்கி விட வேண்டாம். அல்லாஹ் மிகச் செவியுறுவோனும். நன்கு அறிவோனுமாவான். (திருக்குர்ஆன் 02:224)

மேலும், அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வின் உடன்படிக்கையை அற்பவிலைக்கு விற்றுவிடாதீர்கள். நீங்கள் அறிந்தவர்களாக இருப்பின், அல்லாஹ்விடம் எது உள்ளதோ அதுதான் உங்களுக்கு மேலானதாக இருக்கும். (திருக்குர்ஆன் 16:95)

நீங்கள் அல்லாஹ்வின் பெயரால் செய்யும் உடன்படிக்கையை நிறைவேற்றுங்கள். அல்லாஹ்வைப் பொறுப்பாளியாக்கி, நீங்கள் செய்யும் சத்தியங்களை உறுதிப்படுத்திய பின்னர், அவற்றை நீங்கள் முறித்துவிடாதீர்கள். (திருக்குர்ஆன் 16:91)

ஹதீஸ் 6676 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'ஒரு முஸ்லிமான மனிதரின் செல்வத்தைப் பறித்துக் கொள்வதற்காக திட்டமிட்டு, (பொய்ச்) சத்தியம் செய்கிறவரின் மீது அல்லாஹ் கோபம் கொண்டிருக்கும் நிலையிலேயே அவனை (மறுமையில்) அவர் சந்திப்பார்'' என்று கூறினார்கள். அப்போது அ(ந்தக் கருத்)தை உறுதிப்படுத்தும் விதமாக அல்லாஹ், 'அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும் தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறார்களே அத்தகையோருக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:77 வது) வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 6677 (மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர் அபூ வாயில்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

பின்னர் அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) அவர்கள் அங்கு வந்து, 'அபூ அப்திர்ரஹ்மான் (அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்) உங்களுக்கு என்ன அறிவித்தார்?' என்று கேட்டார்கள். 'இப்படி இப்படி'' என மக்கள் கூறினார்கள்.

அப்போது அஷ்அஸ் இப்னு கைஸ்(ரலி) கூறினார்: (அவர் அறிவித்தது உண்மைதான்.) இந்த வசனம் என் தொடர்பாகவே அருளப்பெற்றது. என் தந்தையின் சகோதரர் மகன் ஒருவரின் நிலத்தில் எனக்கொரு கிணறு இருந்தது. (அக்கிணறு தொடர்பாக எனக்கும் ஒரு யூதருக்குமிடையே தகராறு ஏற்பட்டது.) எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்(து விஷயத்தைத் தெரிவித்)தேன். அப்போது அவர்கள்'(ஒன்று) உன்னுடைய சாட்சி அல்லது (பிரதிவாதியான) அவரின் சத்தியம்'' என்று கூறினார்கள். (உடனே) நான்'அப்படியானால், அந்த யூதர் (தயங்காமல்) அது தொடர்பாக(ப் பொய்)ச் சத்தியம் செய்துவிடுவாரே, இறைத்தூதர் அவர்களே!"என்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஒரு முஸ்லிமான மனிதரின் சொத்தை (அநியாயமாக)ப் பறித்துக் கொள்வதற்காக பொய்ச் சத்தியம் செய்கிறவரின் மீது அல்லாஹ் கோபம் கொண்ட நிலையில் தான் (மறுமையில்) அவனை அவர் சந்திப்பார்'' என்று கூறினார்கள்.

## தமக்கு உடைமையில்லாத ஒன்றில் சத்தியம் செய்வதும், பாவத்துக்காகச் சத்தியம் செய்வதும், கோபமாக இருக்கையில் சத்தியம் செய்வதும்.

ஹதீஸ் 6678 அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

என் (அஷ்அரீ குலத்துத்) தோழர்கள் எங்களை ஏற்றியனுப்ப வாகன ஒட்டகம் கேட்கும்படி நபி(ஸல்) அவர்களிடம் என்னை அனுப்பி வைத்தனர். (நான் சென்று அவர்களிடம் ஒட்டகம் கேட்டேன்) அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை நான் எதன் மீதும் ஏற்றியனுப்ப இயலாது'' என்று கூறினார்கள். அந்த நேரம் அவர்கள் கோபமாய் இருந்தார்கள். பிறகு நான் அவர்களிடம் சென்றபோது, நீங்கள் உங்கள் நண்பர்களிடம் சென்று, 'அல்லாஹ்' அல்லது'இறைத்தூதர்' உங்களை ஏற்றியனுப்ப வாகனம் வழங்குவார்கள் என்று சொல்லுங்கள் என்றார்கள்.

ஹதீஸ் 6679 இப்னு ஷிஹாப் (முஹம்மத் இப்னு முஸ்லிம்) அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உர்வா இப்னு ஸுபைர், ஸயீத் இப்னு முஸய்யப், அல்கமா இப்னு வக்காஸ், உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் இப்னி உத்பா (ரஹ் - அலைஹிம்) ஆகியோர், நபி(ஸல்) அவர்களின் துணைவியாரான ஆயிஷா(ரலி) அவர்கள் குறித்து அவதூறு கூறியவர்கள் என்ன சொன்னார்கள் என்பது பற்றியும், அவதூறு கற்பித்தவர்கள் சொன்னவற்றிலிருந்து ஆயிஷா(ரலி) அவர்கள் தூய்மையானவர்கள் என இறைவன் (தன்னுடைய வேதத்தில்) அறிவித்தது பற்றியும் கூற கேட்டேன். அவர்கள் (நால்வரில்) ஒவ்வொரு வரும் இச்சம்பவம் பற்றி ஆளுக்கொரு பகுதியினை அறிவித்தனர். (அதில் பின்வருமாறு உள்ளது:)

அப்போது அல்லாஹ், '(ஆயிஷாவின் மீது) அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர்தாம்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 24:11-20) பத்து வசனங்களை அருளினான். (ஆயிஷா(ரலி) கூறினார்:) என் குற்றமற்ற நிலையைத் தெளிவுபடுத்தி அல்லாஹ் இதை அருளினான். (என் தந்தை) அபூ பக்ர் அஸ்ஸித்தீக்(ரலி) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! (என் புதல்வி) ஆயிஷா குறித்து (அவதூறு) கூறிய பின்பு ஒருபோதும் நான் மிஸ்தஹுக்காக எதையும் செலவிடமாட்டேன்'' என்று (சத்தியமிட்டுக்) கூறினார்கள். -மிஸ்தஹ் இப்னு உஸாஸா தம் உறவினர் என்பதால் அவருக்காக அபூ பக்ர்(ரலி) அவர்கள் செலவிட்டு வந்தார்கள். -அப்போது அல்லாஹ், 'உங்களில் செல்வம் மற்றும் தயாளகுணம் படைத்தோர் (தங்கள்) உறவினர்களுக்கு (எதுவும்) கொடுக்கமாட்டேன் என்று சத்தியம் செய்ய வேண்டாம்'' எனும் (திருக்குர்ஆன் 24:22 வது) வசனத்தை அருளினான்.

அபூ பக்ர்(ரலி) அவர்கள், 'ஆம் அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் எனக்கு மன்னிப்பளிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்'' என்று கூறிவிட்டு, மிஸ்தஹ் அவர்களுக்கு ஏற்கெனவே தாம் செலவிட்டு வந்ததைத் திரும்பவும் தொடரலானார்கள். மேலும், 'அல்லாஹ்வின் மீதாணையாக! அவருக்கு(ச் செய்யும் இந்த உதவியை) ஒருபோதும் நான் நிறுத்தமாட்டேன்'' என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 6680 ஸஹ்தம் இப்னு முளர்ரிப்(ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் கூறினார்கள்:

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (என்) அஷ்அரீ குலத்தார் சிலருடன் சென்றேன். அப்போது அவர்கள் (ஏதோ) கோபத்தில் இருந்தார்கள். அன்னாரிடம் நாங்கள் (எங்கள் பயணத்திற்குத் தேவையான) வாகனங்களைக் கோரினோம். அப்போது அவர்கள், எங்களுக்கு வாகனங்கள் தரமாட்டேன் என்று சத்தியமிட்டுச் சொன்னார்கள். பிறகு (எங்களுக்கு வாகன ஒட்டகங்களைத் தந்துவிட்டு)'அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் நாடினால், நான் இனி எந்த ஒன்றுக்காகவும் சத்தியம் செய்து, பிறகு அது அல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில், சிறந்ததையே செய்வேன் சத்தியத்தை முறித்ததற்காகப் பரிகாரமும் செய்வேன்'' என்றார்கள்.

ஒருவர் அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று நாள் பேசமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டுப் பிறகு தொழுதார் அல்லது (குர்ஆன்) ஓதினார் அல்லது சுப்ஹானல்லாஹ் என்றார் அல்லது அல்லாஹு அக்பர்' என்றார் அல்லது அல்ஹம்துலில்லாஹ் என்றார் அல்லது லாயிலாஹ இல்லல்லாஹ் என்றார் என்றால், அவர் எண்ணப்படியே அமையும்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பேச்சில் சிறந்தது நான்காகும்:

1. சுப்ஹனால்லஹ் (அல்லாஹ் தூயவன்.)

2. அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே.) 3. லா இல்லாஹ் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை.) 4. அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்)

அபூ சுஃப்யான்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்கள் (பைஸாந்தியப் பேரரசர்) ஹெராக்ளியஸிற்கு எழுதிய கடிதத்தில்,'(வேதக்காரர்களே!) எங்களுக்கும் உங்களுக்கும் இடையிலான பொதுவான ஒரு விஷயத்திற்கு வாருங்கள்'' என்று எழுதினார்கள்.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

## இறையுணர்வூட்டும் பேச்சு என்பது, லாயிலாஹ இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்பதாகும்.

ஹதீஸ் 6681 முஸய்யப் இப்னு ஹஸ்ன்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் பெரிய தந்தை) அபூ தாலிப் அவர்களுக்கு மரண வேளை நெருங்கியபோது அவரிடம் வந்து,'லா இலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று சொல்லுங்கள். இச்சொல்லை (நீங்கள் சொல்லிவிட்டால் அதை) வைத்து (மறுமையில் நரகத்திலிருந்து விடுதலை கேட்டு) உங்களுக்காக அல்லாஹ்விடம் நான் வாதாடுவேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6682 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு வாக்கியங்கள் நாவுக்கு எளிதானவை ஆகும் (நன்மை, தீமை நிறுக்கப்படும்) தராசில் கனமானவை ஆகும் அளவற்ற அருளாளனின் பிரியத்திற்குரியவை ஆகும். (அவை:) சுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹீ சுப்ஹானல்லாஹில் அழீம்.

(பொருள்: அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து துதிசெய்கிறேன் கண்ணியமிக்க அல்லாஹ்வைத் துதிக்கிறேன்.)

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6683 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு கருத்தை) ஒரு வாக்கியத்தில் சொல்ல, நான் (அதே கருத்தை) வேறொரு வாக்கியத்தில் சொன்னேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அல்லாஹ்வுக்கு இணை கற்பித்தவராக மரணிக்கிறவர் நரகத்தில் நுழைவிக்கப்படுவார்'' என்றார்கள். நான் மற்றொரு வார்த்தையில், அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காதவராக மரணிக்கிறவர் சொர்க்கத்தில் புகுத்தப்படுவார்'' என்று சொன்னேன்.

## ஒருவர், தம் வீட்டாரிடம் ஒரு மாதம் செல்லமாட்டேன் என்று சத்தியம் செய்து அந்த மாதம் இருபத்தொன்பது நாள்களாய் அமைந்துவிட்டால்...?

ஹதீஸ் 6684 அனஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் துணைவியரை (ஒரு மாத காலம்) நெருங்க மாட்டேன் எனச் சத்தியம் செய்திருந்தார்கள். அவர்களின் காலில் சுளுக்கு ஏற்பட்டிருந்தது. அப்போது அவர்கள் மாடியறை ஒன்றில் இருபத்தொன்பது நாள்கள் தங்கியிருந்தார்கள். பின்னர் அவர்கள் இறங்கி வந்தபோது மக்கள்,'இறைத்தூதர் அவர்களே! ஒரு மாத காலம் (தங்கள் துணைவியரை) நெருங்க மாட்டேன் எனச் சத்தியம் செய்திருந்தீர்களே? (ஆனால், இருபத்தொன்பதாம் நாளில் வந்துவிட்டீர்களே?)'' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'மாதம் என்பது இருபத்தொன்பது நாள்களாகவும் இருக்கலாம்'' என்றார்கள்.

ஊறவைக்கப்பட்ட பழச் சாற்றை (நபீத்) அருந்தமாட்டேன் என்று சத்தியம் செய்த ஒருவர், சுண்டக் காய்ச்சப்பட்ட திராட்சை சாற்றையோ, பேரீச்சச் செங்காய் ஊறலையோ, திராட்சைப் பிழிவையோ அருந்திவிட்டால், சிலரின் கூற்றுப்படி அவர் சத்தியத்தை முறித்தவராகமாட்டார். (ஏனெனில்,) அவர்களின் கருத்துப்படி இவை'நபீதி'ல் சேரா.

ஹதீஸ் 6685 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்

நபித்தோழர் அபூ உசைத் அஸ்ஸாஇதீ(ரலி) அவர்கள் தங்களின் திருமணத்திற்கு நபி(ஸல்) அவர்களை அழைத்தார்கள். அப்போது மணப்பெண்ணே (விருந்துக்கு வந்த) மக்களுக்குப் பணிவிடை செய்பவராக இருந்தார்.

மக்களே! மணப்பெண் நபி(ஸல்) அவர்களுக்கு என்ன புகட்டினார் என்று உங்களுக்குத் தெரியுமா? அவர் கல் (அல்லது மரப்) பாத்திரத்தில் நபி(ஸல்) அவர்களுக்காகப் பேரீச்சம் பழங்களை இரவிலேயே ஊறவைத்திருந்தார். காலையில் நபி அவர்களுக்கு அதை அவர் புகட்டினார்.

ஹதீஸ் 6686 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் சவ்தா(ரலி) அறிவித்தார்.

எங்களுக்குரிய ஆடு ஒன்று இறந்துவிட்டது. அதன் தோலை நாங்கள் பதனிட்டோம். பிறகு அதில் நாங்கள் பழரசத்தை ஊற்றி வைத்து வந்தோம். இறுதியில் அது (இற்றுப்போன) துருத்தியாக மாறிவிட்டது.

## தொடுகறியுடன் சாப்பிடமாட்டேன் என்று சத்தியம் செய்த ஒருவர், ரொட்டியுடன் பேரீச்சம் பழத்தைச் சாப்பிட்டால்...? மேலும் எதுவெல்லாம் தொடுகறியாகும்?

ஹதீஸ் 6687 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

முஹம்மத்(ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் சென்று சேரும் வரை அவர்களின் குடும்பத்தார் மூன்று நாள்கள் தொடர்ச்சியாகக் குழம்புடன் வெள்ளைக் கோதுமை ரொட்டியை வயிறு நிரம்பச் சாப்பிட்டதில்லை.

இதன் அறிவிப்பாளரான ஆபிஸ் இப்னு ரபீஆ(ரஹ்) அவர்களின் மற்றோர் அறிவிப்பில், தாம் ஆயிஷா(ரலி) அவர்களிடம் இது குறித்துக் கேட்டபோது அவர்கள் இதைத் தெரிவித்ததாக இடம் பெற்றுள்ளது

ஹதீஸ் 6688 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

அபூ தல்ஹா(ரலி) அவர்கள் (தம் துணைவியார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களிடம்,'நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் குரலை பலவீனமானதாகக் கேட்டேன். அதில் நான் (அவர்களுக்கிருக்கும்) பசியைப் புரிந்து கொண்டேன். உன்னிடம் (உணவு) ஏதாவது இருக்கிறதா?' என்று கேட்டார்கள். அதற்கு உம்மு சுலைம்(ரலி) அவர்கள்,'ஆம் (இருக்கிறது)''

என்று கூறிவிட்டு, வாற்கோதுமை ரொட்டித் துண்டுகள் சிலவற்றை எடுத்தார்கள். பிறகு அவர்கள் தங்களின் முகத்திரை ஒன்றை எடுத்து அதன் ஒரு பகுதியில் அந்த ரொட்டியைச் சுருட்டி (என்னிடம் கொடுத்து) என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். நான் (அதையெடுத்துக் கொண்டு) சென்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பள்ளிவாசலில் கண்டேன். அன்னாருடன் மக்களும் இருந்தனர். நான் அவர்களுக்கு முன் நின்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'உன்னை அபூ தல்ஹா அனுப்பினாரா?' என்று கேட்டார்கள். அதற்கு நான், 'ஆம்'' என்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடனிருந்தவர்களிடம், 'எழுந்திருங்கள்!"என்றார்கள். மக்கள் (எழுந்து) நடந்தார்கள். நான் அவர்களுக்கு முன்னால் நடந்தேன்.

இறுதியில் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம் வந்து (நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் வந்து கொண்டிருக்கும்) விவரத்தைத் தெரிவித்தேன். உடனே அபூ தல்ஹா(ரலி) அவர்கள் (என் தாயாரிடம்)'உம்மு சுலைமே! இறைத்தூதர்(ஸல்) அவர்களும் மக்களும் வந்திருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு வேண்டிய உணவு நம்மிடம் இல்லையே!"என்றார்கள். உம்மு சுலைம்(ரலி) அவர்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அறிந்தவர்கள்'' என்று கூறினார்கள். உடனே அபூ தல்ஹா(ரலி) அவர்கள் (தாமே நபி(ஸல்) அவர்களை முன் சென்று வரவேற்பதற்காக) நடந்து சென்று இறைத்தூதர்(ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடன் அபூ தல்ஹா(ரலி) அவர்கள் இருக்க வீட்டுக்குள் நுழைந்தார்கள். பிறகு'உம்மு சுலைமே! உம்மிடம் இருப்பதைக் கொண்டு வா!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொன்னார்கள். உடனே உம்மு சுலைம்(ரலி) அவர்கள் அந்த ரொட்டியைக் கொண்டு வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அதைத் துண்டு துண்டாகப் பிய்க்கும்படி) உத்தரவிட, அவ்வாறே அது பிய்க்கப்பட்டது. உம்மு சுலைம்(ரலி) அவர்கள், தம்மிடமிருந்த தோல் பையிலிருந்து வெண்ணெய் எடுத்துப் பிழிந்து அதை உருக்கினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறைவன் நாடிய (பிஸ்மில்லாஹ் மற்றும் இதர பிரார்த்தனை வரிகள் சில)வற்றைச் சொன்னார்கள்.

பிறகு, 'பத்துப் பேருக்கு (உள்ளேவர) அனுமதியளியுங்கள்'' என்று (அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம்) சொன்னார்கள். அவ்வாறே அவர்களுக்கு அபூ தல்ஹா(ரலி) அவர்கள் அனுமதியளித்தார்கள். பிறகு அவர்கள் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு'பத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதியளியுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அபூ தல்ஹா(ரலி) அவர்கள் அனுமதியளித்தார்கள். அவர்களும் வயிறு நிரம்ப உண்டுவிட்டு வெளியேறினார்கள். பின்னர், இன்னும் பத்துப் பேருக்கு அனுமதியளியுங்கள் என்றார்கள். அபூ தல்ஹா(ரலி) அவர்களும் அனுமதியளித்தார்கள். (இவ்வாறு வந்திருந்த) மக்கள் அனைவரும் வயிறு நிரம்பும் வரை உண்டார்கள். அப்படி உண்ட மக்கள் எழுபது அல்லது எண்பது பேர் ஆவர்.

## சத்தியங்களில் எண்ணம் (தான் கருத்தில் கொள்ளப்படும்.)

ஹதீஸ் 6689 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியதே கிடைக்கிறது. எனவே, எவருடைய ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (திருப்திப்படுத்துவதை) நோக்கமாகக் கொண்டு அமைகிறதோ, அவரின் ஹிஜ்ரத்(தின் பலனும் அவ்வாறே) அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் அமையும். எவருடைய ஹிஜ்ரத் அவர் அடைய விரும்பும் உலக (ஆதாய)த்தை,

அல்லது அவர் மணக்க விரும்பும் பெண்ணை நோக்கமாகக் கொண்டுள்ளதோ, அவரின் ஹிஜ்ரத்(தின் பலனும்) அதுவாகத்தான் இருக்கும்.

என உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அறிவித்தார்.

## நேர்த்திக்கடன் மற்றும் பாவமன்னிப்புக்காக ஒருவர் தம் செல்வத்தை அன்பளிப்பாக வழங்கினால் (செல்லுமா?)

ஹதீஸ் 6690. கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(தபூக் போருக்குச் செல்லாமல் பின் தங்கிவிட்ட மூவரான எங்களைக் குறித்து) அல்லாஹ்'போருக்குச் செல்லாமல் பின்தங்கிவிட்ட மூவர்" என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 09:118 வது) வசனத்தை அருளினான்.

நான்'(இறைத்தூதர் அவர்களே!) என்னுடைய பாவம் மன்னிக்கப்பட்டதற்காக என் செல்வமனைத்தையும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் (அவர்கள் விரும்பும் வழியில் செலவிட்டுக் கொள்வதற்காக) தர்மமாகத் தந்துவிடுகிறேன்" என்று சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'உங்கள் செல்வத்தில் ஒரு பகுதியை உங்களுக்காக வைத்துக்கொள்ளுங்கள். அதுவே உங்களுக்கு நல்லது" என்று கூறினார்கள்.

இதை, கஅப்(ரலி) அவர்கள் (தம் இறுதிக் காலத்தில்) கண் பார்வை இழந்துவிட்டபோது அன்னாரைக் கைப்பிடித்து அழைத்துச் செல்பவராயிருந்த அன்னாரின் புதல்வர் அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அறிவித்தார்.

## ஒருவர் ஓர் உணவை(த் தமக்குத் தாமே) தடை விதித்துக் கொள்வது.

அல்லாஹ் கூறினான்:

நபியே! உங்களுடைய துணைவியரின் திருப்தியை எதிர்பார்த்து, அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்துள்ள ஒன்றை நீங்கள் ஏன் விலக்கிக் கொள்கிறீர்கள்? அல்லாஹ் பெரும் மன்னிப்பாளனாகவும் கருணைமிக்கவனாகவும் இருக்கிறான். அல்லாஹ் நீங்கள் செய்யும் சத்தியத்தி(ன் கட்டுப்பாட்டி)லிருந்து விடுபடுவதற்கான வழியை உங்களுக்கு நிர்ணயித்துள்ளான். (திருக்குர்ஆன் 66:1,2)

மேலும், அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்த நல்லவற்றை நீங்களே தடை செய்து கொள்ளாதீர்கள். (திருக்குர்ஆன் 05:87)

ஹதீஸ் 6691 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியார்) ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களிடம் (நீண்ட நேரம்) தங்கியிருந்து அவர் வீட்டில் தேன் அருந்துவது வழக்கம். (இது பிடிக்காமல் நபியவர்களுடைய துணைவியரான) நானும் ஹஃப்ஸாவும் எங்களுக்குள், நபி(ஸல்) அவர்கள் (ஸைனபின் வீட்டிற்குச் சென்றுவிட்டு) நம்மில் யாரிடம் முதலில் வந்தாலும்'தங்களிடமிருந்து கருவேலம் பிசினின் துர்வாடை வருகிறதே! பிசின் சாப்பிட்டீர்களா?' என்று கூற வேண்டும் எனக் கூடிப் பேசி முடிவு செய்துகொண்டோம்.

எங்கள் இருவரில் ஒருவரிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தபோது முன்பு பேசிவைத்திருந்தபடி கூறினோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'இல்லை. ஸைனப் பின்த் ஜஹ்ஷிடம் (அவரின் வீட்டில்) தேன் அருந்தினேன். ஆனால், இனி ஒருபோதும் நான் இவ்வாறு செய்ய மாட்டேன்"

என்று கூறிவிட்டார்கள். அப்போது,'நபியே! அல்லாஹ் உங்களுக்கு அனுமதித்துள்ள ஒன்றை நீங்கள் ஏன் விலக்கிக் கொள்கிறீர்கள்?' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 66:1 வது) வசனம் அருளப்பெற்றது. (திருக்குர்ஆன் 66:4 வது வசனத்தில்)'நீங்கள் இருவரும் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரினால்..!"என்பது ஆயிஷா(ரலி) அவர்களையும் ஹஃப்ஸா(ரலி) அவர்களையும் குறிக்கிறது. (திருக்குர்ஆன் 66:3 வது வசனத்தில்)'நபி தம் துணைவியரில் ஒருவரிடம் ஒரு விஷயத்தை இரகசியமாகச் சொல்லியிருந்தார்'' என்பது,'இல்லை நான் தேன்தான் அருந்தினேன்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதைக் குறிக்கிறது.

ஹிஷாம் இப்னு யூசுஃப்(ரஹ்) அவர்களிடமிருந்து இப்ராஹீம் இப்னு மூஸா(ரஹ்) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில்,'நபி(ஸல்) அவர்கள், இனிமேல் நான் ஒருபோதும் இவ்வாறு செய்யமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டேன். இதை யாரிடமும் தெரிவித்துவிடாதே!"என்று கூறினார்கள் என இடம்பெற்றுள்ளது.

## நேர்த்திக்கடனை நிறைவேற்றுதல்

அல்லாஹ் கூறினான்:

அவர்கள் (-நல்லவர்கள்) நேர்த்திக் கடனை நிறைவேற்றுவார்கள். (திருக்குர்ஆன் 76:07)

ஹதீஸ் 6692 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நேர்த்திக்கடன் செய்ய வேண்டாமென அவர்களுக்குத் தடை விதிக்கப்படவில்லையா? நபி(ஸல்) அவர்கள்'நேர்த்திக்கடன், (விதியில்) எதையும் துரிதப்படுத்தவும் செய்யாது தாமதப்படுத்தவும் செய்யாது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம் ஏழைக்கு) வெளிக்கொணரப்படுகிறது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6693 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் நேர்த்திக்கடன் செய்ய வேண்டாமெனத் தடை விதித்தார்கள். மேலும்,'நேர்த்திக்கடன் (விதியில்) எதையும் மாற்றிவிடாது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து (செல்வம்) வெளிக் கொணரப்படுகிறது (அவ்வளவுதான்)'' என்றார்கள்.

ஹதீஸ் 6694 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நேர்த்திக்கடனானது, விதியில் எழுதப்படாத எந்தவொன்றையும் மனிதனிடம் கொண்டு வந்துவிடாது. மாறாக, அவனுக்கு எழுதப்பட்ட விதியின் பக்கமே நேர்த்திக்கடன் அவனைக் கொண்டு செல்கிறது. நேர்த்திக்கடன் மூலம் கஞ்சனிடமிருந்து இறைவன் (செல்வத்தை) வெளிக்கொணர்கிறான். இதற்கு முன் எந்தக் காரணத்திற்காக (ஏழைக்கு) அவன் வழங்காமல் இருந்தானோ அதே காரணத்திற்காக (இப்போது) வழங்கத் தொடங்கிவிடுகிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## நேர்த்திக்கடன் நிறைவேற்றாதவர் பாவியாவார்.

ஹதீஸ் 6695 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் சிறந்தவர்கள் என் தலை முறையினர் ஆவர். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். பிறகு அவர்களை அடுத்து வருபவர்கள். -இதன் அறிவிப்பாளரான இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அவர்கள்'நபி(ஸல்) அவர்கள் தங்களின் தலைமுறையினரைக் குறிப்பிட்ட பின்னர்

இரண்டு தலைமுறையினரைக் கூறினார்களா? மூன்று தலைமுறையினரைக் கூறினார்களா? என்று எனக்குத் தெரியாது. என்று கூறினார்கள்.

(தொடர்ந்து இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:)

பிறகு ஒரு சமுதாயத்தார் வருவார்கள். அவர்கள் நேர்ந்து கொள்வார்கள். ஆனால் அதை நிறைவேற்றமாட்டார்கள் நம்பிக்கை மோசடி செய்வார்கள். அவர்களை நம்பி எதையும் ஒப்படைக்கப்படாது. அவர்கள் தாமாகவே சாட்சியமளிக்க முன்வருவார்கள். ஆனால், சாட்சியம் அளிக்கும்படி அவர்களை யாரும் கேட்கமாட்டார்கள். அவர்களிடையே பருமனாயிருக்கும் (தொந்தி விழும்) நிலை தோன்றும்.

என இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) அறிவித்தார்.

## இறைவனுக்கு வழிப்படுவதில் தான் நேர்த்திக்கடன்.

நீங்கள் எந்த வகையில் செலவு செய்தாலும், அல்லது எந்த வகை நேர்த்திக்கடன் செய்தாலும் நிச்சயமாக அதனை அல்லாஹ் அறிவான். அநீதி இழைப்போருக்கு உதவியாளர் எவரும் இலர். (திருக்குர்ஆன் 02:270)

ஹதீஸ் 6696 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வுக்கு வழிப்படுவதாக ஒருவர் நேர்ந்து கொண்டால் (அதை நிறைவேற்றும் (முகமாக) அவனுக்கு அவர் வழிப்படட்டும்! அல்லாஹ்வுக்கு மாறு செய்வதாக ஒருவர் நேர்ந்துகொண்டால் (அதை நிறைவேற்றுவதற்காக) அவனுக்கு அவர் மாறு செய்திட வேண்டாம்.

என ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

## அறியாமைக் காலத்தில் ஒருவர் நான் எந்த மனிதனுடனும் பேசமாட்டேன் என்று நேர்ந்து கொண்டார் அல்லது சத்தியம் செய்தார். பிறகு அவர் முஸ்லிமாம்விட்டால் (அவற்றை நிறைவேற்றுவது அவரின் மீது கடமையா?)

ஹதீஸ் 6697 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

(என் தந்தை) உமர் (ரலி) அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! மஸ்ஜிதுல் ஹராம் (புனிதப்) பள்ளிவாசலில் ஓர் இரவு 'இஃதிகாஃப்' இருப்பதாக அறியாமைக் காலத்தில் நேர்ந்துகொண்டேன். (இப்போது அதை நிறைவேற்ற வேண்டுமா?)'' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் 'உங்களின் நேர்த்திக்கடனை நிறைவேற்றுங்கள்'' என்றார்கள்.

## நேர்த்திக்கடன் உள்ள நிலையில் ஒருவர் இறந்துவிட்டால் (அவருக்காக மற்றவர்கள் அதை நிறைவேற்ற வேண்டுமா?)

(மதீனாவிற்கு அருமிலுள்ள) குபா பள்ளிவாசலில் தொழுவதாக நேர்ந்துகொண்டுவிட்டு, அதை நிறைவேற்றுவதற்கு முன்பே இறந்துவிட்)ட தாய்க்காகத் தொழுதிடுமாறு அவரின் புதல்விக்கு இப்னு உமர் (ரலி) அவர்கள் கட்டளையிட்டார்கள்.

இதைப் போன்றே இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6698. அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு உபாதா அல் அன்சாரி (ரலி) அவர்கள், நேர்ந்துகொண்டு அதை நிறைவேற்றுவதற்கு முன்பே இறந்துவிட்ட தம் தாயின் நேர்த்திக்கடன் குறித்து நபி (ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அவர் தம் தாயாருக்காக

நேர்த்திக்கடனை நிறைவேற்றிடுமாறு தீர்ப்பளித்தார்கள். அதுவே பின்னர் வழிமுறையாக ஆகிவிட்டது.

ஹதீஸ் 6699 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

(உக்பா இப்னு ஆமிர் என்றழைக்கப்பட்ட) ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, '(இறைத்தூதர் அவர்களே!) என் சகோதரி ஹஜ் செய்வதாக நேர்ந்துகொண்டு (அதை நிறைவேற்றாமல் இறந்துவிட்டார்'' என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'உன் சகோதரிக்குக் கடன் இருந்தால் நீ தானே அதை நிறைவேற்றுவாய்?' என்று கேட்டார்கள். அவர், 'ஆம் (நானே நிறைவேற்றுவேன்)'' என்றார். நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் கடனை நிறைவேற்று! கடன்கள் நிறைவேற்றப்பட அவனே அதிக உரிமை படைத்தவன்'' என்றார்கள்.

## தமக்கு உடைமையில்லாத ஒன்றிலும் பாவச் செயலிலும் ஒருவர் நேர்ந்துகொள்வது (கூடாது.)

ஹதீஸ் 6700 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வுக்கு வழிப்படுவதாக ஒருவர் நேர்ந்துகொண்டால் (அதை நிறைவேற்றும் முகமாக) அவனுக்கு அவர் வழிப்படட்டும்! அல்லாஹ்வுக்கு மாறுசெய்வதாக ஒருவர் நேர்ந்துகொண்டால் (அதை நிறைவேற்றுவதற்காக) அவனுக்கு அவர் மாறு செய்திட வேண்டாம்.

என ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6701 அனஸ் (ரலி) அறிவித்தார்.

“இ(ந்த முதிய)வர் தம்மை (இவ்விதம்) வேதனை செய்து கொள்வது அல்லாஹ்வுக்குத் தேவையற்றது' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அ(ந்த முதிய)வர் தம் இரண்டு புதல்வர்களுக்கிடையே (தொங்கியபடி கால்கள் பூமியில் இழுபட) நடந்துவந்ததை நபி (ஸல்) அவக்ள் பார்(த்துவிட்டு, விவரம் கேட்க, 'நேர்த்திக்கடன்' என்று மக்கள் கூறியபோது தான் மேற்கண்டவாறு தெரிவி)த்தார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6702 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் (ஒட்டகத்தின்) 'மூக்கணாங்கயிறை' அல்லது 'வேறொரு பொருளைத்' தம் கையில் கட்டிக்கொண்டு (புனித) கஅபாவைச் சுற்றிக் கொண்டிருந்ததை நபி (ஸல்) அவர்கள் பார்த்தார்கள். உடனே அதைத் துண்டித்துவிட்டார்கள்.

ஹதீஸ் 6703. இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்:

நபி (ஸல்) அவர்கள் (புனித) கஅபாவைச் சுற்றி வந்துகொண்டிருந்தபோது ஒரு மனிதரைக் கடந்துசென்றார்கள். அவர் இன்னொரு மனிதரை மூக்கணாங்கயிறிட்டு இழுத்துச் சென்றுகொண்டிருந்தார். உடனே தம் கரத்தால் அக்கயிற்றைத் துண்டித்துவிட்ட நபி (ஸல்) அவர்கள், இவரைக் கையைப் பிடித்து அழைத்துச் செல்க என உத்தரவிட்டார்கள்.

ஹதீஸ் 6704 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (வெள்ளிக்கிழமை) உரை நிகழத்திக்கொண்டிருந்தபோது ஒருவர் (வெயிலில்) நின்றுகொண்டிருப்பதைக் கண்டார்கள். அவர் குறித்து (மக்களிடம்) கேட்டார்கள். மக்கள், '(இவர் பெயர்) அபூ இஸ்ராயீல். இவர், நின்று கொண்டே இருப்பேன் உட்காரமாட்டேன்

என்றும், நிழலில் ஒதுங்கமாட்டேன் (வெயிலில் தான் இருப்பேன்) என்றும், (யாரிடமும்) பேசமாட்டேன் நோன்பு நோற்பேன் என்றும் நேர்ந்துகொண்டுள்ளார்‘‘ என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள், ‘அவருக்கு உத்தரவிடுங்கள்: அவர் பேசட்டும். நிழல் பெறட்டும். உட்காரட்டும் நோன்பை (மட்டும்) நிறைவு செய்யட்டும்‘‘ என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

## குறிப்பிட்ட சில தினங்கள் நோன்பு நோற்பதாக ஒருவர் நேர்ந்துகொள்ள, ஏதேச்சையாக அது ஹஜ்ஜு ப் பெருநாளாகவோ அல்லது நோன்புப் பெருநாளாகவோ அமைந்துவிட்டால் (என்ன செய்வது?)

ஹதீஸ் 6705 ஹகீம் இப்னு அபீ ஹுர்ரா அல் அஸ்லமீ(ரஹ்) அறிவித்தார்.

ஒருவர்’வருகிற எல்லா நாள்களிலும் நோன்பு நோற்பேன்‘‘ என நேர்ந்திருக்க, ஏதேச்சையாக அது ஹஜ்ஜுப் பெரு நாளாகவோ அல்லது நோன்புப் பெருநாளாகவோ அமைந்துவிட்டால் (என்ன செய்வது?) என்று இப்னு உமர்(ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், ‘இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உங்களுக்கோர் அழகிய முன்மாதிரி உள்ளது‘‘ என்று கூறிவிட்டு, ‘நபி(ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாளில் நோன்புப் பெருநாளில் நோன்பு நோற்பவர்களாக இருக்கவுமில்லை இரண்டு பெருநாள்களில் நோன்பு நோற்பதை (அனுமதிக்கப்பட்டதாக) அவர்கள் கருதவுமில்லை‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 6706 ஸியாத் இப்னு ஜுபைர்(ரஹ்) அறிவித்தார்.

நான் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் இருந்தேன். அப்போது அவர்களிடம் ஒருவர், ‘நான் வாழ்நாள் முழுவதும் ஒவ்வொரு’செவ்வாய் கிழமையும்’ அல்லது’புதன் கிழமையும்’ நோன்பு நோற்க நேர்ந்து கொண்டுள்ளேன். ஆனால், ஏதேச்சையாக இந்த நாள் ஹஜ்ஜுப் பெருநாளாக அமைந்துவிட்டது (நான் என்ன செய்வது?)‘‘ என்று கேட்டதற்கு இப்னு உமர்(ரலி) அவர்கள், ‘அல்லாஹ்வோ நேர்த்திக்கடனை நிறைவேற்றுமாறு கட்டளையிட்டுள்ளான். (அதே நேரத்தில்) ஹஜ்ஜுப் பெருநாளில் நோன்பு நோற்கக் கூடாதென (இறைத்தூதர் மூலம்) நமக்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது‘‘ என்று பதிலளித்தார்கள். அந்த மனிதர் திரும்பவும் (அதே கேள்வியைக்) கேட்டதற்கு இப்னு உமர்(ரலி) அவர்கள் முன்பு போன்றே பதிலளித்தார்கள் கூடுதலாக எதுவும் கூறவில்லை.

## (ஒருவர் தம் செல்வம் தொடர்பாகச் செய்த) சத்தியம் மற்றும் நேர்த்திக்கடனில் நிலம், ஆடு, பயிர், உபயோகப் பொருள்கள் ஆகியன அடங்குமா?

இப்னு உமர்(ரலி) கூறினார்:

(என் தந்தை) உமர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்’நான் ஒரு செல்வத்தை (‘ஸம்ஃக்’ எனும் பேரீச்சந் தோட்டத்தை) அடைந்துள்ளேன். இதைவிட உயர்ந்ததொரு செல்வத்தை ஒருபோதும் அடைந்ததில்லை. (அதை நான் தர்மம் செய்ய விரும்புகிறேன்)‘‘ என்று கூறினார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்’நீங்கள் விரும்பினால் அந்த நிலத்தை நீங்களே வைத்துக் கொண்டு அதன் விளைச்சலை தர்மம் செய்துவிடுங்கள்‘‘ என்று கூறினார்கள்.

அபூ தல்ஹா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்'என் செல்வங்களில் எனக்கு மிகவும் விருப்பமானது'பைருஹா' எனும் தோட்டமே'' என்று (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலுக்கு எதிரில் இருந்த தம் தோட்டம் குறித்துக் கூறினார்கள். 1

ஹதீஸ் 6707 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன்'கைபர்' தினத்தன்று (வெற்றி கண்டு) புறப்பட்டோம்ட. நாங்கள் (அந்தப் போரில்) பொன்னையோ வெள்ளியையோ போர்ச் செல்வமாகப் பெறவில்லை. (அவையல்லா கால்நடைச்) செல்வங்கள், ஆடைகள், உபயோகப் பொருள்கள் ஆகியவற்றையே பெற்றோம். 'பனுள்ளுபைப்' எனும் குலத்தாரில் ரிஃபாஆ இப்னு ஸைத் என்ற ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு'மித்அம்' எனப்படும் ஓர் அடிமையை அன்பளிப்பாக வழங்கினார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'வாதில் குரா' எனும் இடத்தை நோக்கிச் சென்று, அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தபோது'மித்அம்' என்ற அந்த அடிமை இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சிவிகையை (ஒட்டகத்திலிருந்து) இறக்கிக்கொண்டிருந்தார். அப்போது எங்கிருந்தோ வந்த அம்பு ஒன்று மித்அமை(த் தாக்கி)க் கொன்றுவிட்டது. இதைக் கண்ட மக்கள்'அவருக்குச் சொர்க்கம் கிடைத்துவிட்டது வாழ்த்துக்கள்'' என்றனர். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அப்படிச் சொல்லாதீர்கள். என்னுயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! போர்ச் செல்வங்கள் பங்கிடப்படும் முன்பே அவற்றிலிருந்து கைபர் அன்று அவர் எடுத்துக்கொண்டுவிட்ட போர்வை அவரின் மீது நரக நெருப்பாக எரிந்து கொண்டிருக்கிறது'' என்று கூறினார்கள். இதை மக்கள் செவியேற்றபோது, ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம்'ஒரு செருப்பு வாரை' அல்லது'இரண்டு வார்களைக்' கொண்டு வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள்'(இதைத் திருப்பித் தராமல் இருந்திருந்தால் இது சாதாரண செருப்பு வாராக இருந்திராது. மாறாக,)'நெருப்பு வாராக' அல்லது'இரண்டு நெருப்பு வார்களாக' மாறியிருக்கும்'' என்று கூறினார்கள்.

## அத்தியாயம் 84 சத்திய (முறிவுக்கான) பரிகாரங்கள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

### (திருக்குர்ஆன் 02:196 வது) இறைவசனமும் அது அருளப் பெற்றபோது நபி(ஸல்) அவர்கள் இட்ட கட்டளையும்.

"அதன் பரிகாரமாவாது உங்கள் குடும்பத்தாருக்கு நீங்கள் அளிக்கும் உணவில் நடுத்தரமான உணவைப் பத்து ஏழைகளுக்கு அளித்திடவேண்டும் அல்லது ஓர் அடிமையை விடுதலை செய்திட வேண்டும். (இதில் எதற்குமே சக்தி) பெறாவிட்டால் மூன்று நாள்கள் நோன்பு நோற்றிடவேண்டும்" எனும் (திருக்குர்ஆன் 05:89 வது) இறைவசனமும், 'நோன்பு நோற்றல், அல்லது தர்மம் செய்தல், அல்லது பலியிடல் (ஹஜ்ஜில் பலியிடுவதற்கு முன்பே தலைமுடி களைவதற்குப்) பரிகாரமாகும்" எனும் (திருக்குர்ஆன் 02:196 வது) இறைவசனம் அருளப் பெற்றபோது நபி(ஸல்) அவர்கள் இட்ட கட்டளையும்.

இப்னு அப்பாஸ்(ரலி), அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்), இக்ரிமா(ரஹ்) ஆகியோர்'(மேற்கண்ட வசனங்களைப் போன்று) குர்ஆனில்'அல்லது', 'அல்லது' என எங்கெல்லாம் வந்துள்ளதோ அங்கெல்லாம் சம்பந்தப்பட்டவருக்கு (அங்கு குறிப்பிடப்பட்டவற்றில் ஒன்றைக் தேர்ந்தெடுக்க) விருப்ப உரிமை உண்டு என்று கூறியுள்ளனர். நபி(ஸல்) அவர்கள் (ஹஜ்ஜில் தலைமுடி களைந்ததற்கான) பரிகாரம் தொடர்பாக கஅப் இப்னு உஜ்ரா(ரலி) அவர்களுக்கு விருப்ப உரிமை அளித்தார்கள்.

ஹதீஸ் 6708 கஅப் இப்னு உஜ்ரா(ரலி) அறிவித்தார்.

நான் (ஹஜ்ஜின்போது) நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது அவர்கள்'அருகில் வா!"என்று அழைத்தார்கள். எனவே, நான் அவர்கள் அருகில் சென்றேன். அப்போது அவர்கள்'உம்முடைய (தலையிலுள்ள) பேன்கள் உமக்குத் துன்பம் தருகின்றனவா?' என்று கேட்டார்கள். நான்'ஆம்' என்றேன். அவர்கள்'நோன்பு நோற்றல், அல்லது தர்மம் செய்தல், அல்லது பலியிடல் பரிகாரமாகும்" (திருக்குர்ஆன் 02:196) என்றார்கள்.

அய்யூப்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நோன்பு என்பது மூன்று நாள்கள் நோன்பு நோற்பதையும், பலியிடல் என்பது ஓர் ஆட்டைக் குர்பானி கொடுப்பதையும், தர்மம் என்பது ஆறு ஏழைகளுக்கு உணவளிப்பதையும் குறிக்கும்.

### செல்வரின் மீதும் ஏழையின் மீதும் எப்போது பரிகாரம் கடமையாகும்?

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் உங்களுடைய சத்தியங்களை (தக்க பரிகாரங்களுடன்) முறித்துக்கொள்வதை உங்களுக்கு அனுமதித்திருக்கிறான். அல்லாஹ்வோ உங்கள் எஜமானன். அவன் நன்கறிந்தவன் ஞானம் மிக்கவன். (திருக்குர்ஆன் 66:02)

ஹதீஸ் 6709 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து'இறைத்தூதர் அவர்களே! நான் அழிந்து விட்டேன்" என்றார். நபி(ஸல்) அவர்கள்'உமக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள். 'நான் ரமளானில் (நோன்பு வைத்துக்கொண்டே) என் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்" என்று அவர் சொன்னார். நபி(ஸல்) அவர்கள்'ஓர் அடிமையை விடுதலை செய்ய உம்மால் முடியுமா?'

என்று கேட்டார்கள். அவர்'இல்லை' என்றார்.'தொடர்ந்து இரண்டு மாதங்கள் நோன்பு நோற்க உம்மால் முடியுமா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர்'இல்லை'' என்றார்.'அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உம்மால் முடியுமா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்க, அதற்கும் அவர்'இல்லை'' என்றார். நபி(ஸல்) அவர்கள்'அமர்வீராக!"என்றார்கள். அவரும் அமர்ந்தார்.

பின்னர் நபி(ஸல்) அதவர்களிடம் பேரீச்சம் பழம் நிறைந்த'அரக்' ஒன்று கொண்டுவரப்பட்டது.

-'அரக்' என்பது பெரிய கூடை ஆகும்.

அப்போது நபி(ஸல்) அவர்கள்'இதைப் பெற்று தர்மம் செய்வீராக!"என்று கூறினார்கள். அம்மனிதர்'(இறைத்தூதர் அவர்களே!) என்னைவிட ஏழையாக இருப்போருக்காக (நான் தர்மம் செய்ய வேண்டும்)?' என்று கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள். பிறகு'இதை உம்முடைய குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுத்து விடுவீராக!"என்றார்கள்.

## பரிகாரத்தை நிறைவேற்றுவதற்காக ஏழைக்கு உதவுதல்

**ஹதீஸ் 6710** அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து'(இறைத்தூதர் அவர்களே!) நான் அழிந்து விட்டேன்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்'என்ன அது?' என்று கேட்டார்கள்.'நான் ரமளானில் (நோன்பு வைத்துக் கொண்டே) என் மனைவியைப் புணர்ந்துவிட்டேன்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்'(விடுதலை செய்வதற்கு) ஓர் அடிமை உம்மிடம் இருக்கிறாரா?' என்று கேட்டார்கள். அவர்'இல்லை'' என்றார்.'தொடர்ந்து இரண்டு மாதங்கள் நோன்பு நோற்க உமக்கு சக்தி இருக்கிறதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர்'இல்லை'' என்றார்.'அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உமக்கு சக்தியிருக்கிறதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர்'இல்லை'' என்றார். பின்னர் அன்சாரிகளில் ஒருவர்'அரக்' ஒன்றைக் கொண்டு வந்தார். -'அரக்' என்பது பேரீச்சம் பழம் உள்ள கூடை ஆகும். -அப்போது நபி(ஸல்) அவர்கள்'இதைக் கொண்டு சென்று தர்மம் செய்வீராக!"என்று கூறினார்கள். அதற்கு அம்மனிதர்'இறைத்தூதர் அவர்களே! எங்களை விட ஏழையாக இருப்போருக்கா (நான் தர்மம் செய்ய வேண்டும்)? மதீனாவின் (பாறைகள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் எங்களைவிடப் பரம ஏழை வீட்டார் யாருமில்லை!"என்று கூறினார். பிறகு'நீ போய் இதை உம் குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுப்பீராக!' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## (சத்திய முறிவுக்கான) பரிகாரத்திற்காகப் பத்து ஏழைகளுக்கு (உணவு) அளிக்கும்போது அவர்கள் நெருங்கிய உறவினர்களாகவோ தூரத்து உறவினர்களாகவோ இருக்கலாம்.

**ஹதீஸ் 6711** அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து'(இறைத்தூதர் அவர்களே!) நான் அழிந்துவிட்டேன்!"என்றார். நபி(ஸல்) அவர்கள்'உமக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டார்கள்.'நான் ரமளானில் (நோன்பு வைத்துக் கொண்டே) என் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்டேன்'' என்று அவர் சொன்னார். நபி(ஸல்) அவர்கள்'ஓர் அடிமையை விடுதலை செய்யும் வசதியைப் பெற்றுள்ளீரா?' என்று கேட்டார்கள். அவர்'இல்லை''

என்றார். 'தொடர்ந்து இரண்டு மாதம் நோன்பு நோற்க உமக்கு சக்தி இருக்கிறதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் 'இல்லை'' என்றார். 'அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உமக்கு சக்தியிருக்கிறதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கும் அவர் 'என்னால் இயலாது'' என்றார். பின்னர் நபி(ஸல்) அவர்களிடம் பேரீச்சம் பழம் உள்ள கூடை ஒன்று கொண்டு வரப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள் 'இதை எடுத்துச் சென்று தர்மம் செய்வீராக!" என்று கூறினார்கள். அப்போது அம்மனிதர், 'என்னை விட ஏழையாக இருப்போருக்கா (நான் தர்மம் செய்யவேண்டும்)? மதீனாவின் (பாறைகள் நிறைந்த) இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் எங்களை விடப் பரம ஏழைகள் யாருமில்லை'' என்று கூறினார். பிறகு நபி(ஸல்) அவர்கள் 'இதை எடுத்துச் சென்று உம்முடைய குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுத்துவிடுவீராக!" என்றார்கள்.

## மதீனாவின் ஸாஉ'ம் நபி(ஸல்) அவர்கள் (காலத்து) முத்'தும் அதன் வளமும் வாழையடி வாழையாக மதீனாவாசிகள் கடைப்பிடித்து வந்ததும்.

ஹதீஸ் 6712 சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் 'ஸாஉ' என்பது, இன்றைக்கு (நடைமுறையிலிருக்கும்) உங்களின் 'முத்'தில் ஒரு 'முத்'தும் மூன்றில் ஒரு பாகமும் (1 1/3) கொண்டதாக இருந்தது. பின்னர் உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்களின் காலத்தில் இதன் அளவு அதிகமாக்கப்பட்டது.

ஹதீஸ் 6713 நாஃபிஉ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் ரமளான் மாத (ஸதகத்துல் ஃபித்ர்) தர்மத்தை ஆரம்ப(க் கால) 'முத்'தான நபி(ஸல்) அவர்களின் 'முத்'தைக் கொண்டே வழங்கி வந்தார்கள். மேலும், சத்திய (முறிவுக்கான) பரிகாரத்தையும் நபி(ஸல்) அவர்களின் 'முத்'தைக் கொண்டே வழங்கிவந்தார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ குதைபா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

மாலிக் இப்னு அனஸ்(ரஹ்) அவர்கள், '(மதீனாவில் வழக்கிலுள்ள) எங்களின் 'முத்'தே (ஹிஷாம் உருவாக்கிய) உங்களின் 'முத்'தை விட (அளவில் சிறியதானாலும் வளத்தில்) பெரியதாகும். நபி(ஸல்) அவர்களின் (காலத்தில் இருந்த மதீனா) 'முத்'தில் தவிர வேறொன்றில் சிறப்பு இருப்பதாக நாங்கள் கருதவில்லை'' என்று கூறினார்கள். மேலும், அவர்கள் என்னிடம் 'ஓர் ஆட்சியாளர் உங்களிடம் வந்து நபி(ஸல) அவர்களின் 'முத' தைவிட (அளவில்) சிறியதொரு 'முத்'தை நிர்ணயித்தால், நீங்கள் எந்த அளவையைக் கொண்டு (ரமளான் தர்மம், பரிகாரம் ஆகியவற்றை) வழங்குவீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு நான் 'நபி(ஸல்) அவர்களின் 'முத்'தைக் கொண்டே வழங்குவோம்'' என்று கூறினேன். அவர்கள் 'பார்த்தீர்களா? (இறுதியில்) விஷயம் நபி(ஸல்) அவர்களின் 'முத்'துக்கே வந்துசேர்கிறது'' என்றார்கள்.

ஹதீஸ் 6714 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'இறைவா! (மதீனாவாசிகளான) இவர்களுக்கு இவர்களின் அளவைகளான 'ஸாஉ' மற்றும் 'முத்' ஆகியவற்றில் வளம் சேர்ப்பாயாக'' என்று பிரார்த்தித்தார்கள்.

## சிறந்த அடிமை யார்?

அல்லாஹ் கூறினான்:

அல்லது ஓர் அடிமையை விடுதலை செய்திட வேண்டும். (திருக்குர்ஆன் 05:89)

ஹதீஸ் 6715. 'ஒரு முஸ்லிமான அடிமையை விடுதலை செய்கிறவருக்கு (விடுதலை செய்யப்பட்ட) அந்த முஸ்லிமின் ஒவ்வொரு உறுப்புக்கும் பகரமாக ஓர் உறுப்பை நரகத்திலிருந்து அல்லாஹ் விடுதலை செய்வான். அவரின் மர்ம உறுப்புக்கு பதிலாக இவருடைய மர்ம உறுப்பையும் விடுதலை செய்வான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## 'முதப்பர் (பின் விடுதலை அளிக்கப்பட்ட அடிமை),உம்முல் வலத் (எசமானின் குழந்தைக்குத் தாயான அடிமைப் பெண்), முகாதப் (விடுதலைப் பத்திரம் எழுதித் தரப்பட்ட அடிமை) ஆகியோரை பரிகாரத்திற்காக விடுதலை செய்வதும் விபசாரத்தில் பிறந்த (அடிமைக்) குழந்தையை விடுதலை செய்வதும்.

தாவூஸ் இப்னு கைசான்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: முதப்பர், உம்முல் வலத் ஆகியோரை (பரிகாரத்திற்காக) விடுதலை செய்வது செல்லும்.

ஹதீஸ் 6716 ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் ஒருவர் தம் அடிமை ஒருவனைத் தம் இறப்புக்குப் பின் விடுதலை பெற்றவனாவான் என்று அறிவித்திருந்தார். ஆனால், அவரிடம் அந்த அடிமையைத் தவிர வேறு செல்வம் எதுவுமிருக்கவில்லை. இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது'என்னிடமிருந்து இவனை (விலைக்கு) வாங்குபவர் யார்?' என்று கேட்டார்கள். அப்போது அவனை நுஐம் இப்னு நஹ்ஹாம்(ரலி) அவர்கள் எண்ணூறு திர்ஹங்களுக்கு (வெள்ளிக் காசுகளுக்கு) வாங்கினார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அம்ர் இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள்'அவன் (எம்பது நாட்டு) கிப்தீ அடிமையாவான். அவன் (விற்கப்பட்ட) முதல் ஆண்டிலேயே இறந்துவிட்டான்'' என்றும் கூறக் கேட்டேன்.

## தமக்கும் இன்னொருவருக்கும் சொந்தமான ஓர் அடிமையை (குற்றப் பரிகாரத்திற்காக) ஒருவர் விடுதலை செய்தால்...?

குற்றப் பரிகாரத்திற்காக ஓர் அடிமையை விடுதலை செய்தால், அந்த அடிமையின் வாரிசுரிமை யாருக்குக் கிடைக்கும்?

ஹதீஸ் 6717 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(அடிமையாயிருந்த) பரீராவை நான் விலைக்கு வாங்க விரும்பினேன். ஆனால், அவருக்கு வாரிசாகும் உரிமை தங்களுக்கே இருக்க வேண்டுமென அவரின் எசமான்கள் முன் நிபந்தனை விதித்தார்கள். எனவே, இது தொடர்பாக நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அவர்கள்'பரீராவை விலைக்கு வாங்கி (விடுதலை செய்து) விடு! ஏனெனில், விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை சொந்தம்'' என்றார்கள்.

## சத்தியத்தின்போது இன்ஷா அல்லாஹ் கூறுதல்.

ஹதீஸ் 6718 அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

நான் (என்) அஷ்அரீ குலத்தாரில் ஒரு குழுவினருடன் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று (எங்களையும் எங்கள் பயணச் சுமைகளையும்) சுமந்து செல்ல (ஒட்டகங்கள் ஏற்பாடு) செய்யும்படி கேட்டேன். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை (ஒட்டகத்தில்) ஏற்றியனுப்ப முடியாது. ஏனெனில், உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் (தற்போது கைவசம்) இல்லை'' என்றார்கள். பிறகு அல்லாஹ் நாடிய நேரம் வரை நாங்கள் (அங்கேயே) இருந்தோம். பின்பு சில ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டன. அவற்றில் மூன்று ஒட்டக மந்தைகளை எங்களுக்கு வழங்கும்படி ஆணையிட்டார்கள். (அவற்றில் ஏறி) நாங்கள் சென்றபோது, எங்களில் சிலர் சிலரிடம், 'அல்லாஹ்வின் மீதாணையாக! (நபி (ஸல்) அவர்கள் தரமாட்டேனென்று சத்தியம் செய்த பிறகு இவற்றை நாம் வாங்கிச் சென்றால் இவற்றில்) நமக்கு வளம் (பரக்கத்) ஏற்படாதே! நபி (ஸல்) அவர்களிடம் நம்மைச் சுமந்து செல்ல ஒட்டகங்கள் ஏற்பாடு செய்யும்படி கேட்டோம். அவ்வாறு நம்மை ஏற்றியனுப்பத் தம்மால் இயலாது என நபியவர்கள் சத்தியம் செய்து கூறினார்கள். பிறகு, நாம் ஏறிச் செல்ல ஒட்டகங்கள் வழங்கினார்கள்'' என்று கூறினார்கள். எனவே, நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் (திரும்பவும்) சென்று, அவர்களுக்கு அதை நினைவுபடுத்தினோம். அப்போது அவர்கள், 'நான் உங்களை ஒட்டகத்தில் ஏற்றி அனுப்பவில்லை மாறாக, அல்லாஹ்தான் உங்களை (அதில்) ஏற்றி அனுப்பினான். அல்லாஹ்வின் மீதாணையாக! அவன் நாடினால், நான் இனிமேல் ஏதேனும் ஒரு சத்தியம் செய்து, பிறகு அதுவல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் சிறந்ததையே செய்வேன் சத்தியத்தை முறித்ததற்காகப் பரிகாரம் செய்துவிடுவேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6719 (மேற்கண்ட ஹதீஸில்) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இனிமேல் நான் ஏதேனும் ஒரு சத்தியம் செய்து, அதுவல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில், 'சத்திய முறிவுக்காகப் பரிகாரம் செய்துவிட்டு அந்தச் சிறந்ததையே செய்வேன்' அல்லது 'சிறந்ததையே செய்துவிட்டுப் பரிகாரம் செய்துவிடுவேன்"

இதை ஹம்மாத் இப்னு ஸைத் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 6720 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

(இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:) (இறைத்தூதர்) சுலைமான் (அலை) அவர்கள் (ஒரு முறை), 'நான் இன்றிரவு (என்னுடைய) தொண்ணூறு துணைவியரிடமும் சென்று (தாம்பத்திய உறவு கொண்டு) வருவேன். அவர்களில் ஒவ்வொருவரும் இறைவழியில் அறப்போர் புரியும் (குதிரை) வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்கள்'' என்று கூறினார்கள். அப்போது அவர்களின் தோழர் ஒருவர், அவர் ஒரு வானவர் என அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். 'இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) என்று சொல்லுங்கள்' எனக் கூறினார். சுலைமான் (அலை) அவர்கள் இன்ஷா அல்லாஹ்' என்று கூற மறந்துவிட்டார்கள் தம் துணைவியரிடம் சென்று வந்தார்கள். ஆனால், அவர்களின் துணைவியரில் ஒரே ஒருவரைத் தவிர வேறெவரும் கர்ப்பமடையவில்லை. அந்த ஒருவரும் ஒரு புஜமுடைய அரை மனிதரையே பெற்றெடுத்தார். (நபி) சுலைமான் (அலை) அவர்கள் 'இன்ஷா அல்லாஹ்' (அல்லாஹ் நாடினால்) என்று கூறியிருந்தால் சத்தியத்தை அடையாமல் இருந்திருக்கமாட்டார்கள். தம் தேவையைப் பூர்த்தி செய்திருப்பார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## சத்தியத்தை முறிப்பதற்கு முன்பும் முறித்த பின்பும் பரிகாரம் செய்வது

ஹதீஸ் 6721 ஸஹ்தம் இப்னு முளர்ரிப் அல்ஜர்மீ (ரஹ்) அறிவித்தார்.

நாங்கள் அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அவர்களிடம் இருந்தோம். ஜர்ம் குலத்தாரான எங்களுக்கும் இந்த (அஷ்அரீ) குலத்தாருக்கும் இடையே நட்புறவும் ஒத்துழைப்பும் இருந்தது. அப்போது (அபூ மூஸா அவர்களுக்கு) உணவு கொண்டு வரப்பட்டது. அந்த உணவில் கோழி இறைச்சி இருந்தது. அங்கு பனு தைமுல்லாஹ் குலத்தைச் சேர்ந்த சிவப்பு மனிதர் ஒருவர் இருந்தார். அவர் ஓர் அடிமையைப் போன்று காணப்பட்டார். அவர் (உணவின் பக்கம்) நெருங்கவில்லை. எனவே, அவரிடம் அபூ மூஸா'அருகில் வாருங்கள். ஏனெனில், இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கோழி இறைச்சி உண்பதை பார்த்திருக்கிறேன்'' என்றார்கள். அதற்கு அவர்'இந்தக் கோழி (இனம்) நான் அருவருப்பாகக் கருதும் ஒன்றைத் தின்னப் பார்த்தேன். உடனே ஒருபோதும் இதை உண்ணமாட்டேன் என்று சத்தியம் செய்துவிட்டேன்'' என்றார். அப்போது அபூ மூஸா (ரலி) அவர்கள்'அருகில் வாருங்கள். அது குறித்து உங்களுக்குத் தெரிவிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு (ப் பின்வருமாறு) கூறலானார்கள்.

நாங்கள் அஷ்அரீ குலத்தார் சிலர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றோம். அப்போது அவர்கள் தர்ம ஒட்டகங்களில் சிலவற்றை பங்கிட்டுக் கொண்டிருந்தார்கள். நான் (எங்களைச்) சுமந்து செல்ல ஒட்டகங்கள் தருமாறு அவர்களிடம் கேட்டேன். அப்போது நபியவர்கள் கோபமாக இருந்தார்கள் என்று அறிவிப்பாளர் கூறினார்கள் எனவே கருதுகிறேன் என அய்யூப் (ரஹ்) அவர்கள் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை (ஒட்டகத்தில்) ஏற்றியனுப்ப முடியாது. ஏனெனில், உங்களை ஏற்றியனுப்பத் தேவையான (வாகன) ஒட்டகங்கள் என்னிடம் (தற்போது கைவசம்) இல்லை'' என்றார்கள். எனவே, நாங்கள் சென்று விட்டோம். பிறகு, இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் போரில் கிடைத்த ஒட்டகங்கள் கொண்டு வரப்பட்டன. உடனே'இந்த அஷ்அரீகள் எங்கே? இந்த அஷ்அரீகள் எங்கே?' என்று வினவப்பட்டது. இதையடுத்து நாங்கள் (நபியவர்களிடம்) சென்றோம். அப்போது வெள்ளைத் திமில்கள் கொண்ட ஐந்து ஒட்டக மந்தைகளை எங்களுக்கு வழங்கும்படி உத்தரவிட்டார்கள். (அவற்றைப் பெற்றுக்கொண்டு) விரைவாக நாங்கள் புறப்பட்டோம்.

அப்போது நான் என் தோழர்களிடம்'நாம் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று நாம் ஏறிச்செல்ல வாகனம் கேட்டோம். அவ்வாறு நம்மை ஏற்றியனுப்ப இயலாது என அவர்கள் சத்தியம் செய்தார்கள். பிறகு நம்மை அழைத்து ஏற்றியனுப்பினார்கள். எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தாம் செய்த சத்தியத்தை மறந்துவிட்டார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தாம் செய்த சத்தியத்தை மறக்கும்படி நாம் செய்திருந்தால் ஒருபோதும் நாம் வெற்றியடையமாட்டோம். எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் திரும்பச் சென்று, அவர்கள் செய்த சத்தியத்தை அவர்களுக்கு நாம் நினைவுபடுத்துவோம்'' என்று கூறினேன். எனவே, நாங்கள் திரும்பச் சென்று, இறைத்தூதர் அவர்களே! நாங்கள் ஒட்டகம் கேட்டுத் தங்களிடம் வந்தோம். எங்களுக்குத் தரமுடியாது எனத் தாங்கள் சத்தியம் செய்தீர்கள். பிறகு எங்களை (அழைத்து) ஒட்டகங்களில் ஏற்றியனுப்பினீர்கள். எனவே, தாங்கள் செய்த சத்தியத்தை மறந்துவிட்டீர்களென நாங்கள்'எண்ணுகிறோம்' அல்லது'அறிகிறோம்' என்று கூறினோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள்'செல்லுங்கள். நான் உங்களை ஒட்டகத்தில் ஏற்றியனுப்பவில்லை. மாறாக, அல்லாஹ்தான் உங்களை அதில் ஏற்றியனுப்பினான். அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்

நாடினால், இனிமேல் நான் எந்த ஒன்றுக்காகவும் சத்தியம் செய்து, பிறகு அது அல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாகக் கருதும்பட்சத்தில் அந்தச் சிறந்ததையே செய்வேன். சத்திய முறிவுக்காகப் பரிகாரம் செய்துவிடுவேன்'' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் வேறு பல அறிவிப்பாளர் தொடர்களிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 6722 அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னிடம்)'ஆட்சிப் பொறுப்பை நீயாக (விரும்பிக்) கேட்காதே! ஏனெனில், நீ கேட்காமல் அது உனக்கு வழங்கப்பட்டால், அது தொடர்பாக உனக்கு (இறைவனது) உதவி அளிக்கப்படும். (நீ) கேட்டதால் அது உனக்கு வழங்கப்பட்டால் அதோடு நீ (தனிமையில்) விடப்படுவாய். (இறைவனது உதவி கிட்டாது.) நீ ஒரு சத்தியம் செய்து, அதுவல்லாத வேறொன்றை அதைவிடச் செய்துவிட்டு, உன்னுடைய சத்தியத்(தை முறித்த)துக்கான பரிகாரத்தைச் செய்து விடு'' என்று கூறினார்கள்.

இதே ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

# அத்தியாயம் 85 பாகப் பிரிவினைச் சட்டங்கள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ் கூறினான்:

உங்கள் மக்களில் ஓர் ஆணுக்கு, இரண்டு பெண்களுக்குக் கிடைக்கும் பங்கு போன்றது கிடைக்கும் என்று அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான் பெண்மக்கள் மட்டும் இருந்து அவர்கள் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டிருந்தால் அவர்களுக்கு, இறந்தவர்விட்டுச் சென்றதில் மூன்றில் இரண்டு பாகம் கிடைக்கும். ஆனால், ஒரே பெண்ணாக இருந்தால் அவளுக்கு(ச் சொத்தில்) பாதி கிடைக்கும்.

இறந்தவருக்குப் பிள்ளை இருக்குமானால் இறந்தவர்விட்டுச் சென்றதில் ஆறில் ஒரு பாகம் (அவருடைய) பெற்றோர் ஒவ்வொருவருக்கும் உண்டு. ஆனால், இறந்தவருக்குப் பிள்ளை இல்லாதிருந்து பெற்றோர் மட்டுமே வாரிசாக இருந்தால் அவரின் தாய்க்கு மூன்றில் ஒரு பாகம் (மீதி தந்தைக்கு) உரியதாகும். அப்போது இறந்தவருக்குச் சகோதரர்கள் இருந்தால் அவரின் தாய்க்கு ஆறில் ஒரு பாகம்தான் (மீதி தந்தைக்குச்) சேரும். (இவ்வாறு பிரித்துக் கொடுப்பது) அவர் செய்துள்ள மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னர்தான்.

உங்களுடைய பெற்றோர் மற்றும் மக்கள் ஆகியோரில் யார் நன்மை பயப்பதில் உங்களுக்கு நெருக்கமானவர்கள் என்று நீங்கள் அறியமாட்டீர்கள் (ஆகையால்,) அல்லாஹ்விடமிருந்து வந்த கட்டளை(யான இந்தப் பாகப் பிரிவினைச் சட்டத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்). நிச்சயமாக அல்லாஹ் (யாவற்றையும்) நன்கறிந்தவனாகவும் மிக்க ஞானமுடையவனாகவும் இருக்கிறான்.

மேலும், உங்கள் மனைவியர்விட்டுச் சென்ற (சொத்)தில் அவர்களுக்குப் பிள்ளை இல்லாதிருந்தால் உங்களுக்குப் பாதி பாகம் உண்டு அவர்களுக்குப் பிள்ளை இருந்தால் அவர்கள்விட்டுச் சென்றதிலிருந்து உங்களுக்குக் கால் பாகம்தான். (இதுவும்) அவர்கள் செய்திருக்கிற மரண சாசனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னர்தான்.

தவிர உங்களுக்குப் பிள்ளை இல்லாதிருப்பின், நீங்கள்விட்டுச் சென்ற (சொத்)தில் நான்கில் ஒரு பாகம் உங்கள் மனைவியருக்குக் கிடைக்கும். உங்களுக்குப் பிள்ளை இருந்தால் நீங்கள்விட்டுச் சென்ற(சொத்)தில் எட்டில் ஒரு பாகம் உங்கள் மனைவியருக்குக் கிடைக்கும். (இதுவும்) நீங்கள் செய்திருக்கும் மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னரேதான்.

(தந்தை, பாட்டன் போன்ற மூலவாரிசுகளோ அல்லது பிள்ளை, பேரன் போன்ற கிளை வாரிசுகளோ) யாரும் இல்லாத ஓர் ஆணோ அல்லது ஒரு பெண்ணோ -இவர்களுக்கு ஒரு சகோதரனோ அல்லது சகோதரியோ இருந்தால் - அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஆறில் ஒரு பாகம் உண்டு ஆனால், இதற்கு அதிகமாக இருந்தால் அவர்கள் மூன்றில் ஒரு பாகத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். (இதுவும்) அவர்களின் மரண சாசனமும் கடனும் நிறைவேற்றப்பட்ட பின்னர்தான் ஆயினும் மரண சாசனத்தைக் கொண்டு வாரிசுகள்) எவருக்கும் நஷ்டம் ஏற்படக் கூடாது (இது) அல்லாஹ்வினால் விதிக்கப்பட்டதாகும். அல்லாஹ் (யாவற்றையும்) நன்கறிந்தவனாகவும், மிக்க பொறுமையுடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:11, 12)

ஹதீஸ் 6723 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

நான் (ஒரு முறை) நோய்வாய்ப்பட்டேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் என்னை உடல் நலம் விசாரிக்க நடந்தே வந்தனர். என்னிடம் அவர்கள் வந்தபோது நான் மயக்கமுற்றிருந்தேன். பின்னர் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். பிறகு அந்தத் தண்ணீரை என் மீது ஊற்றினார்கள். உடனே நான் மயக்கம் தெளிந்(து கண்விழித்)தேன். அப்போது நான், 'இறைத்தூதர் அவர்களே! என் செல்வத்தை நான் என்ன செய்ய வேண்டும்? என் செல்வத்தின் விஷயத்தில் நான் என்ன முடிவு செய்ய வேண்டும்?' என்று கேட்டேன். அப்போது அவர்கள் எனக்கு பதிலேதும் கூறவில்லை. முடிவில் வாரிசுரிமை தொடர்பான (மேற்கண்ட வசனம்) இறங்கிற்று.

## பாகப் பிரிவினை (கல்வி)யைக் கற்பித்தல்

உக்பா இப்னு ஆமிர்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

யூகத்தின் அடிப்படையில் பேசக்கூடியவர்கள் தோன்றுவதற்கு முன் (அடிப்படையுள்ள பாகப் பிரிவினை போன்ற) கல்வியைக் கற்றுக் கொள்ளுங்கள்.

ஹதீஸ் 6724 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(அடிப்படையில்லாமல் பிறர் மீது சந்தேகம் கொள்வது குறித்து உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், இவ்வாறு சந்தேகம் கொள்வது மாபெரும் பொய்யாகும். (மற்றவர்களின் குறைகளை) துருவித் துருவி ஆராயாதீர்கள். ஒட்டுக் கேட்காதீர்கள். ஒருவரின் மீது ஒருவர் கோபம் கொள்ளாதீர்கள் பிணங்கிக் கொள்ளாதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு பாராட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## "(இறைத்தூதர்களாகிய) எங்களுக்கு எவரும் (சொத்தில்) வாரிசாவதில்லை. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தர்மமே' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 6725 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(நபி(ஸல்) அவர்களின் காலத்திற்குப் பின்) ஃபாத்திமா(ரலி) அவர்களும் அப்பாஸ்(ரலி) அவர்களும் (கலீஃபா) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் சென்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து தங்களுக்குச் சேர வேண்டிய சொத்தைக் கேட்டனர். அப்போது அவர்களிருவரும்'ஃபதக்' பகுதியிலிருந்து தம் நிலத்தையும் கைபரில் தமக்குக் கிடைத்த பங்கையுமே அவ்வாறு கோரினர்.

ஹதீஸ் 6726 அவர்கள் இருவரிடமும் அபூ பக்ர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '(இறைத்தூதர்களாகிய) எங்களுக்கு எவரும் (சொத்தில்) வாரிசாவதில்லை. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தர்மம் செய்யப்பட வேண்டியவையாகும். இச்செல்வத்திலிருந்து தான் முஹம்மதின் குடும்பத்தினர் உண்பார்கள் என்று சொல்லக் கேட்டுள்ளேன்" என்று கூறிவிட்டு, 'அல்லாஹ்வின் மீதாணையாக! இச்செல்வத்தின் விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எவ்வாறு செயல்படக் கண்டேனோ அதில் எதையும் கைவிடாமல் நானும் அவ்வாறே செயல்படுவேன்" என்று பதிலளித்தார்கள். இதனால் கோபித்துக் கொண்டு ஃபாத்திமா(ரலி) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் தாம் இறக்கும் வரை பேசவில்லை.

ஹதீஸ் 6727 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்களான) எங்களுக்கு யாரும் (சொத்தில்) வாரிசாவதில்லை. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தர்மமே.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6728 முஹம்மத் இப்னு ஜுபைர் இப்னி முத்யிம்(ரஹ்) அவர்கள் கூறினார்:

நான் மாலிக் இப்னு அவ்ஸ் இப்னி அல் ஹதஸான்(ரலி) அவர்களிடம் சென்று (ஃபதக் தொடர்பான நிகழ்ச்சி குறித்துக்) கேட்டேன். அவர்கள் கூறினார்கள்:

நான் உமர்(ரலி) அவர்களிடம் சென்று அவர்களின் அறைக்குள் நுழைந்தேன். அப்போது உமர்(ரலி) அவர்களின் மெய்க்காவலர்'யர்ஃபஉ' என்பவர் அவர்களிடம் வந்து,'உஸ்மான்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), ஸுபைர் இப்னு அவ்வாம்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோர் தங்களைச் சந்திக்கத் தங்களுக்கு இசைவு உண்டா?' என்று கேட்டார். உமர்(ரலி) அவர்கள்,'ஆம்' என்று கூறி, அவர்களுக்கு அனுமதியளித்தார்கள். (சற்று நேரத்திற்குப்) பிறகு யர்ஃபஉ (வந்து),'அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் சந்திப்பதில் தங்களுக்கு இசைவு உண்டா?' என்று கேட்டார்.'ஆம்' என்றார்கள். (அனுமதிக்குப் பின் அவர்கள் இருவரும் உள்ளே வந்தனர்).

அப்பாஸ்(ரலி) அவர்கள்,'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! எனக்கும் இவருக்கும் (-அலீக்கும்) இடையே (இச்சொத்துத் தொடர்பாகத்) தீர்ப்பளியுங்கள்'' என்றார்கள்.

உமர்(ரலி) அவர்கள்,'வானமும் பூமியும் எந்த அல்லாஹ்வின் கட்டளையால் நிலை பெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் கேட்கிறேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'(இறைத்தூதர்களான) எங்களுக்கு எவரும் (சொத்தில்) வாரிசாகமாட்டார். நாங்கள்விட்டுச் செல்வதெல்லாம் தர்மமே'' என்று தம்மைக் குறித்துக் கூறியதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு (அங்கிருந்த) அந்தக் குழுவினர்,'நபியவர்கள் அவ்வாறு சொல்லத்தான் செய்தார்கள்'' என்று பதிலளித்தனர். உமர்(ரலி) அவர்கள், அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கி,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்வாறு சொன்னதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அவ்விருவரும்,'(ஆம்) அவ்வாறு சொல்லியிருக்கிறார்கள்'' என்று பதிலளித்தனர்.

உமர்(ரலி) அவர்கள்,'அவ்வாறெனில், உங்களிடம் இந்த விஷயம் குறித்துப் பேசுகிறேன்: (போரிடாமல் கிடைத்த) இந்த (ஃபய்உ)ச் செல்வத்திலிருந்து சிறிதைத் தன் தூதருக்கு உரியதாக அல்லாஹ் ஆக்கினான். அவர்களைத் தவிர வேறெவருக்கும் அவன் அதை வழங்கவில்லை'' என்று கூறிவிட்டு,'அல்லாஹ் எச்செல்வத்தை (எதிரிகளான) அவர்களின் பிடியிலிருந்து விடுவித்துத் தன் தூதரிடம் திருப்பிக் கொடுத்தானோ அச்செல்வம் உங்கள் குதிரைகளையும் ஒட்டகங்களையும் (அறப்போரிடுவதற்காக) நீங்கள் ஓட்டிச் சென்றதால் கிடைத்ததன்று. மாறாக அல்லாஹ், தான் நாடுகிறவர்களின் மீது தன்னுடைய தூதர்களுக்கு அதிகாரம் வழங்குகிறான். மேலும், அல்லாஹ் அனைத்தின் மீதும் பேராற்றல் உள்ளவனாக இருக்கிறான்'' எனும் (திருக்குர்ஆன் 59:6 வது) இறைவசனத்தை ஓதினார்கள்.

தொடர்ந்து,'எனவே, இது இறைத் தூதருக்கென ஒதுக்கப்பட்ட செல்வமாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைவிட்டுவிட்டு அதை அவர்கள் தமக்காகச் சேகரித்துக் கொள்ளவில்லை அதை உங்களை விடப் பெரிதாகக் கருதவுமில்லை. உங்களுக்கு அதைக் கொடுத்தார்கள் உங்களிடையே அதைப் பரவலாகப் பங்கிட்டார்கள். இறுதியில் அதிலிருந்து இச்செல்வம் மட்டுமே

எஞ்சியது. நபி(ஸல்) அவர்கள் இச்செல்வத்திலிருந்து தம் வீட்டாரின் வருடாந்திர செலவை அவர்களுக்குக் கொடுத்து வந்தார்கள். அப்படிக் கொடுத்த பிறகு எஞ்சியதை எடுத்து, அல்லாஹ்வின் (பாதையில் செலவிடும்) செல்வத்தை எந்த இனங்களில் செலவிடுவார்களோ அவற்றில் செலவிடுவார்கள். இவ்வாறே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் வாழ்நாளில் செயல்பட்டுவந்தார்கள்!" (இவ்வளவும் சொல்லிவிட்டு, அக்குழுவினரை நோக்கி) 'அல்லாஹ்வின் பொருட்டால் உங்களை கேட்கிறேன்: இதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'ஆம்' (அறிவோம்) என்று பதிலளித்தனர். பிறகு, அலீ(ரலி) அவர்களிடமும் அப்பாஸ்(ரலி) அவர்களிடமும்?' உங்கள் இருவரையும் அல்லாஹ்வின் பொருட்டால் கேட்கிறேன்: நீங்கள் இதை அறிவீர்களா?' என்று வினவினார்கள். அவர்கள் இருவரும், 'ஆம்' (அறிவோம்) என்று பதிலளித்தனர்.

(தொடர்ந்து), 'பிறகு அல்லாஹ் தன் தூதரை அழைத்துக் கொண்டான். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்கள், 'நான் அல்லாஹ்வின் தூதருடைய (ஆட்சிக்குப்) பிரதிநிதியாவேன்'' என்று கூறி, அ(ந்தச் செல்வத்)தைத் தம் கைவசம் எடுத்தார்கள். அது விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செயல்பட்டதைப் போன்றே தாமும் செயல்பட்டார்கள். பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்களையும் அல்லாஹ் அழைத்துக் கொண்டான். அப்போது நான், 'நான் அல்லாஹ்வின் தூதருடைய பிரதிநிதியின் பிரதிநிதியாவேன்'' என்று கூறி, அதை (என் ஆட்சிக் காலத்தில்) இரண்டு ஆண்டுகளுக்கு என் கைவசம் எடுத்துக் கொண்டு, இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் நடந்துகொண்ட முறைப்படி செயல்பட்டு வந்தேன். பிறகு நீங்கள் இருவரும் என்னிடம் வந்தீர்கள் (பேசினீர்கள்). உங்கள் இருவரின் கோரிக்கையும் ஒன்றாகவே இருந்தது உங்கள் இருவரின் விஷயமும் ஒன்றாகவே இருந்தது.

(அப்பாஸ்(ரலி) அவர்களே!) நீங்கள் என்னிடம் உங்கள் சகோதரரின் புதல்வர் (-நபி) இடமிருந்து உங்களுக்குச் சேர வேண்டிய (வாரிசுப்) பங்கைக் கேட்டபடி வந்தீர்கள். அவரும் (-அலீயும்) தம் துணைவியாருக்கு அவரின் தந்தையிடமிருந்து கிடைக்க வேண்டிய (வாரிசுப்) பங்கைக் கேட்டபடி என்னிடம் வந்தார். அப்போது நான் (உங்கள் இருவரிடமும்,)' (நபிகளார் செயல்பட்டபடி செயல்படவேண்டும் எனும் நிபந்தனையின் பேரில்) நீங்கள் இருவரும் விரும்பினால் உங்கள் இருவரிடமும் அதைக் கொடுத்து விடுகிறேன்'' என்று சொன்னேன். (இப்போது) அதன்றி வேறொரு தீர்ப்பை நீங்கள் என்னிடமிருந்து கோருகின்றீர்களா? எவனுடைய அனுமதியுடன் வானமும் பூமியும் நிலை பெற்றுள்ளனவோ அவன் மீது சத்தியமாக! நான் அச்செல்வம் தொடர்பாக இதைத் தவிர வேறெந்தத் தீர்ப்பையும் இறுதிநாள் வரை அளிக்கமாட்டேன். உங்கள் இருவராலும் அதைப் பராமரிக்க முடியவில்லை என்றால் என்னிடம் அதை ஒப்படைத்துவிடுங்கள். அதை உங்களுக்கு பதிலாக நானே பராமரித்துக் கொள்வேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6729 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் வாரிசுகள் ஒரு தீனாரைக் கூட (வாரிசுப்) பங்காகப் பெறமாட்டார்கள். என் துணைவியருக்கான வாழ்க்கைச் செலவும் என் (பிரதிநிதி மற்றும்) ஊழியரின் ஊதியமும் போக நான்விட்டுச் செல்பவையெல்லாம் தர்மமேயாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6730 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தபோது அவர்களின் துணைவியர் உஸ்மான்(ரலி) அவர்களை (என் தந்தை கலீஃபா) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்து, (அல்லாஹ்வின் தூதரிடமிருந்து) தங்களுக்குச் சேர வேண்டிய சொத்தை அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் கேட்க விரும்பினர். அப்போது நான் (அவர்களைப் பார்த்து),'(இறைத்தூதர்களான) எங்களுக்கு எவரும் (சொத்தில்) வாரிசாக முடியாது. நாங்கள்விட்டுச் செல்பவையெல்லாம் தர்மமே' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொல்லவில்லையா?' என்று கேட்டேன்.

## “ஒருவர் ஒரு செல்வத்தைவிட்டுச் சென்றால் அது அவரின் குடும்பத்தாருக்குரியதாகும்‘ எனும் நபிமொழி.

ஹதீஸ் 6731. இறைநம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உயிர்களை விட நானே நெருக்கமான (உரிமையுடைய)வனாவேன். எனவே, தம் மீது கடன் இருக்கும் நிலையில் அதனை அடைப்பதற்கான ஒன்றையும்விட்டுச் செல்லாமல் இறந்துவிடுபவரின் கடனை அடைப்பது என்னுடைய பொறுப்பாகும். (இறக்கும் போது) ஒரு செல்வத்தைவிட்டுச் ஒருவர் விட்டுச் செல்வாராயின் அது அவரின் வாரிசுகளுக்குரியதாகும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தாய், தந்தையிடமிருந்து ஒருவருக்குக் கிடைக்கும் சொத்துரிமை.

ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்:

ஓர் ஆண் அல்லது பெண், ஒரு புதல்வியைவிட்டுச் சென்றால் (அவர்களின் சொத்திலிருந்து) அவளுக்குச் சரிபாதி (பங்கு) கிடைக்கும். பெண்மக்கள் இருவராகவோ அல்லது அதைவிடக் கூடுதலாகவோ இருந்தால் அவர்களுக்கு மூன்றில் இரண்டு பாகங்கள் கிடைக்கும். பெண் மக்களுடன் ஆணும் இருந்தால் அவர்களுடன் சொத்தில் பங்காளியாகும் நபருக்குச் சேர வேண்டிய பாகத்தை முதலில் கொடுத்துவிட்டுப் பிறகு எஞ்சியுள்ளவற்றை'ஓர் ஆணின் பங்கு இரண்டு பெண்ணின் பங்கிற்குச் சமமானது' என்ற விம்தத்தில் அவர்களிடையே பம்ர்ந்தளிக்கப்படும்.

ஹதீஸ் 6732 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பாகப் பிரிவினை தொடர்பாகக் குர்ஆனில் நிர்ணயிக்கப்பெற்றுள்ள) பாகங்களை (முதலில்) அவற்றுக்கு உரியவர்களிடம் சேர்த்துவிடுங்கள். பிறகு எஞ்சியிருப்பது (இறந்தவரின்) மிக நெருக்கமான (உறவினரான) ஆணுக்கு உரியதாகும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## புதல்வியருக்கு(ப் பெற்றோரிடமிருந்து) கிடைக்கும் சொத்துரிமை.

ஹதீஸ் 6733 ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

(‘விடைபெறும்' ஹஜ்ஜின்போது) மக்காவில் நான் கடுமையாக நோய்வாய்ப்பட்டு மரணத்தை எதிர்நோக்கியிருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னை நலம் விசாரிக்க வந்தார்கள். அப்போது நான்,'இறைத்தூதர் அவர்களே! என்னிடம் ஏராளமான செல்வங்கள் உள்ளன. என் ஒரு மகளைத் தவிர வேறு வாரிசுகள் யாரும் எனக்கில்லை. எனவே, என்னுடைய செல்வத்தில் மூன்றில் இரண்டு பங்கை நான் தர்மம் செய்துவிடட்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'வேண்டாம்' என்றார்கள்.'அவ்வாறாயின் பாதியை தர்மம் செய்யட்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், வேண்டாம் என்றார்கள்.'அவ்வாறாயின் பாதியை தர்மம்

செய்யட்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'வேண்டாம்' என்றார்கள். 'மூன்றிலொரு பங்கை தர்மம் செய்யட்டுமா?)'' என்று கேட்டேன். நபியவர்கள், 'மூன்றிலொரு பங்கு கூட அதிகம்தான். நீங்கள் உங்கள் பிள்ளைகளை மக்களிடம் கையேந்தும் ஏழைகளாகவிட்டுச் செல்வதைவிடத் தன்னிறைவு உடையவர்களாகவிட்டுச் செல்வதே சாலச்சிறந்ததாகும். (நல்ல நோக்கத்தில்) நீங்கள் செய்கிற ஒவ்வொரு செலவுக்கும் உங்களுக்கு நிச்சயம் நற்பலன் வழங்கப்படும் நீங்கள் உங்கள் மனைவியின் வாயில் ஊட்டுகிற ஒரு கவளம் உணவாயினும் சரி! (அதற்கும் நற்பலன் உண்டு)'' என்றார்கள். உடனே நான், 'இறைத்தூதர் அவர்களே! (ஹஜ் முடிந்து என் தோழர்கள் அனைவரும் மதீனா செல்வார்கள்.) நான் மட்டும் என் ஹிஜ்ரத் பூமி(யான மதீனாவு)க்குச் செல்லாமல் (மக்காவிலேயே) தங்கிவிடுவேனா?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நான் (மதீனா) சென்ற பிறகு நீங்கள் இங்கேயே தங்கியிருந்து, அல்லாஹ்வின் திருப்தியை நாடி எந்த நல்லறம் புரிந்தாலும் அதன் மூலம் உங்கள் உயர்வும் அந்தஸ்தும் அதிகமாகவே செய்யும். நான் (மதீனா) சென்ற பிறகு, உங்களின் மூலம் சிலர் நன்மையடைவதற்காகவும் மற்ற சிலர் துன்பம் அடைவதற்காகவும் நீங்கள் இங்கேயே தங்கவைக்கப்படலாம். ஆனால், பாவம், ஸஅத் இப்னு கவ்லா! (அவரின் ஆசை நிறைவேறவில்லை)'' என்று மக்காவிலேயே இறந்துவிட்ட ஸஅத் இப்னு கவ்லா(ரலி) அவர்களுக்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அனுதபாம் தெரிவித்தார்கள்.

இதன் அறிவிப்பார்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். ஸஅத் இப்னு கவ்லா(ரலி) அவர்கள் ஆமிர் இப்னு லுஅய் குலத்தைச் சேர்ந்தவராவார்.

ஹதீஸ் 6734. அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்கள் யமன் நாட்டுக்கு எங்களின் போதகராகவும் ஆட்சியாளராகவும் வந்தார்கள். அன்னாரிடம் நாங்கள், தம் மகளையும் சகோதரியையும்விட்டுவிட்டு இறந்த ஒருவரைக் குறித்து (பாகப் பிரிவினை தொடர்பாக)க் கேட்டோம். அப்போது அவர்கள் (மொத்தச் சொத்தில்) மகளுக்குப் பாதியும் சகோதரிக்கு (மீதி)ப் பாதியும் அளிக்கும்படி கூறினார்கள்.

## (இறந்தவருக்கு) மகன் (உயிருடன்) இல்லாதபோது மகனின் மகனுக்கு (பேரனுக்கு)க் கிடைக்கும் சொத்துரிமை.

ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

(இறந்தவருக்கு) ஆண் மக்கள் (உயிருடன்) இல்லாதபோது, அவர்களின் குழந்தைகள் பேரன்கள், சொந்தக்) குழந்தைகளின் அந்தஸ்தைப் பெறுவர். பேரக் குழந்தைகளில் (-மகனுடைய மக்களில்) ஆண்கள் சொந்த ஆண் மக்களைப் போன்றும், அவர்களில் பெண்கள் சொந்த பெண் மக்களைப் போன்றும் ஆவர். அவர்கள் வாரிசுரிமை பெறுவதைப் போன்றே இவர்களும் வாரிசுரிமை பெறுவார்கள். அவர்கள் (இருக்கும்போது மற்ற வாரிசுகளில் யார் யாரை வாரிசுரிமை பெறாமல்) தடுப்பார்களோ (அவர்களையெல்லாம்) இவர்களும் தடுப்பார்கள். மகன் (உயிருடன்) இருக்கும்போது மகனுடைய மக்கள் வாரிசுரிமை பெறமாட்டார்கள்.

ஹதீஸ் 6735 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பாகப்பிரிவினை தொடர்பாகக் குர்ஆனில் நிர்ணயிக்கப்பெற்றுள்ள) பாகங்களை (முதலில்) அவற்றுக்கு உரியவர்களிடம் சேர்த்துவிடுங்கள். பிறகு எஞ்சியிருப்பது இறந்தவரின்) மிக நெருக்கமான (உறவினரான) ஆணுக்கு உரியதாகும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## (இறந்தவருக்கு) மகள் இருக்கும்போது மகனுடைய மகளுக்கு (பேத்திக்கு)க் கிடைக்கும் சொத்துரிமை.

ஹதீஸ் 6736 ஹுஸைல் இப்னு ஷுரஹ்பீல்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அபூ மூஸா(ரலி) அவர்களிடம், (இறந்த ஒருவருக்கு) மகள், மகனுடைய மகள், சகோதரி ஆகியோர் (இருந்தால், அவர்களுக்குக் கிடைக்கும் சொத்துரிமை) குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள்'மகளுக்கு (மொத்தச் சொத்தில்) பாதியும் சகோதரிக்கு (மீதி)ப் பாதியும் கிடையாது)'' என்று கூறிவிட்டு,'(வேண்டுமானால்,) இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் சென்று (கேட்டுப்) பாருங்கள். அன்னாரும் என் (கருத்தி)னையே பிரதிபலிப்பார்கள்'' என்றார்கள். எனவே, இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம் (சென்று) அபூ மூஸா(ரலி) அவர்களின் கூற்றைத் தெரிவித்து (இது குறித்து விளக்கம்) கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,'இவ்வாறு (மகனின் மகளுக்கு சொத்தில் பங்கு இல்லை என்று) நானும் சொன்னால் நிச்சயம் நான் வழிதவறியவனாம்விடுவேன் நான் நேர்வழியடைந்தவர்களில் ஒருவனாக இருக்கமாட்டேன். இந்த விஷயத்தில் நபி(ஸல்) அவர்கள் அளித்த தீர்ப்பையே நானும் அளிக்கிறேன்: மகளுக்குப் பாதியும் மகனின் மகளுக்கு ஆறில் ஒரு பாகமும் வழங்கப்படவேண்டும். அப்போதுதான் மூன்றில் இரண்டு பாகங்கள் நிறைவாகும். எஞ்சியிருப்பது சகோதரிக்கு உரியதாகும்'' என்றார்கள். பின்னர் அபூ மூஸா(ரலி) அவர்களிடம் சென்று இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் சொன்னதைத் தெரிவித்தோம். அப்போது,'இந்தப் பேரறிஞர் (இப்னு மஸ்வூத்(ரலி) உங்களிடையே இருக்கும் வரை என்னிடம் (விளக்கம்) கேட்காதீர்கள்'' என்று (புகழ்ந்து) சொன்னார்கள்.

## (இறந்தவருக்குத்) தந்தையும் சகோதரர்களும் இருக்கும்போது பாட்டனாருக்குரிய சொத்துரிமை.

அபூ பக்ர்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி), அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) ஆகியோர்'பாட்டனார் தந்தை(யைப் போன்றவர்) ஆவார்'' என்று கூறினர். (அதற்கு ஆதாரமாக) இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்'ஆதமின் மக்களே!"எனும் (திருக்குர்ஆன் 07:26 வது) வசனத் தொடரையும்'நான் என் தந்தையரான இப்ராஹீம், இஸ்ஹாக், யஅகூப் ஆகியோரின் மார்க்கத்தையே பின்பற்றுகிறேன் (என்று யூசுஃப் கூறினார்)'' எனும் (திருக்குர்ஆன் 12:38 வது) வசனத் தொடரையும் ஓதினார்கள்.

அபூ பக்ர்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் நபித்தோழர்கள் நிறைந்திருந்தும் அவர்களில் யாரும் அபூ பக்ர்(ரலி) அவர்களு(டைய இக்கருத்துக்)கு மாறுபடவில்லை.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: எனக்கு (மகன் இல்லாத போது) என் மகனுடைய மகன் (பேரன்) தான் வாரிசாவானே தவிர சகோதரர்கள் அல்லர். (அப்படியிருக்கும் போது) என் பேரனுக்கு (அவனுடைய தந்தை இல்லாதபோது பாட்டனாகிய) நான் ஏன் வாரிசாக முடியாது?

(இது தொடர்பாக) உமர்(ரலி) அலீ(ரலி), இப்னு மஸ்வூத்(ரலி), ஸைத் இப்னு ஸாபித்(ரலி) ஆகியோரிடமிருந்து பல்வேறு கருத்துகள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

ஹதீஸ் 6737 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பாகப் பிரிவினை தொடர்பாகக் குர்ஆனில் நிர்ணயிக்கப்பெற்றுள்ள) பாகங்களை (முதலில்) அவற்றுக்கு உரியவர்களிடம் சேர்த்துவிடுங்கள். பிறகு எஞ்சியிருப்பது (இறந்தவரின்) மிக நெருக்கமான (உறவினரான) ஆணுக்கு உரியதாகும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6738 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், இந்தச் சமுதாயத்தில் யாரையேனும் நான் உற்ற நண்பராக ஆக்கிக்கொள்வதாயிருந்தால் அவரையே ஆக்கிக் கொண்டிருப்பேன். என்றாலும், இஸ்லாமிய சகோதரத்துவமே (எல்லா உறவுகளையும்விடச்)'சிறந்தது' அல்லது'நல்லது' என்று யார் விஷயத்தில் கூறினார்களோ (அந்த அபூ பக்ர்(ரலி) அவர்கள் தாம், (சொத்துரிமை பெறுவதில்) பாட்டனாரை'தந்தையின் இடத்தில் வைத்தார்கள்' அல்லது'தந்தை' எனத் தீர்ப்பளித்தார்கள்.

## (இறந்த பெண்ணுக்குக்) குழந்தை உள்ளிட்ட வாரிசுகள் இருக்கும்போது கணவனுக்குக் கிடைக்கும் சொத்துரிமை.

ஹதீஸ் 6739 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(இறந்தவர்விட்டுச் சென்ற) செல்வம் (அவருடைய) குழந்தைகளுக்கு (மட்டுமே) உரியதாக இருந்தது. பெற்றோருக்கு(ப் பங்கு கிடைக்க வேண்டுமெனில் இறந்தவர்) மரண சாசனம் செய்திருக்க வேண்டும் என்றிருந்தது. இதில் அல்லாஹ் தான் நாடியதை மாற்றியமைத்து,'ஓர் ஆணுக்கு இரண்டு பெண்களின் பங்கு' என்ற விம்தத்தை ஏற்படுத்தினான். பெற்றோரில் ஒவ்வொருவருக்கும் ஆறில் ஒரு பாகம் என்று நிர்ணயித்தான். (குழந்தை இருக்கும்போது) மனைவிக்கு எட்டில் ஒரு பாகமும் (குழந்தை இல்லாதபோது) நான்கில் ஒரு பாகமும் நிர்ணயித்தான். (குழந்தை இல்லாதபோது) கணவனுக்குச் சரிபாதியும் (குழந்தை இருக்கும்போது) நான்கில் ஒரு பாகமும் நிர்ணயித்தான்.

## (இறந்தவருக்குக்) குழந்தை உள்ளிட்ட வாரிசுகள் இருக்கும்போது மனைவி, (அல்லது) கணவனுக்குக் கிடைக்கும் சொத்துரிமை.

ஹதீஸ் 6740. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

'பனு லிஹ்யான்' குலத்தைச் சேர்ந்த (கர்ப்பிணி) பெண் ஒருத்தியின் (வயிற்றிலிருந்த) சிசு, (மற்றொரு பெண் அடித்ததால்) இறந்து பிறந்தது. அதற்கு நஷ்ட ஈடாக ஓர் ஆண் அடிமையை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை வழங்கிட வேண்டுமென இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள். பின்னர், நஷ்டஈடு வழங்கும்படி நபியவர்கள் தீர்ப்பளித்த அந்த(க் குற்றவாளி)ப் பெண் இறந்துவிட்டார். எனவே, (அவர் சார்பாக) அவரின் தந்தைவழி உறவினர்கள் (அஸபாக்கள்) நஷ்ட ஈடு வழங்கிட வேண்டுமென்றும், அவரின் சொத்து அவரின் ஆண் மக்களுக்கும் கணவருக்கும் உரியதென்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

## (இறந்தவருக்குப்) புதல்வியர் இருக்கும்போது மீதியைப் பெறும் சகோதரிகளின் சொத்துரிமை.

ஹதீஸ் 6741 அஸ்வத் இப்னு யஸீத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் (யமன் நாட்டுக்கு வந்த) முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்கள்,'(சொத்தில்) பாதி இறந்தவரின்) மகளுக்கும் (மீதிப்) பாதி சகோதரிக்கும் உரியது' என்று தீர்ப்பளித்தார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான சுலைமான் இப்னு மிஹ்ரான் அல்அஃமஷ்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்'முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்கள் எங்களிடையே (மேற்கண்டவாறு)

தீர்ப்பளித்தார்கள்‘‘ என்று காணப்படுகின்றது. ’இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில்’ என்ற குறிப்பு இடம் பெறவில்லை.

ஹதீஸ் 6742 ஹுஸைல் இப்னு ஷுரஹ்பீல்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள்’(மகனின் மகளுக்குக் கிடைக்க வேண்டிய) இச்சொத்து விஷயத்தில்’நபி(ஸல்) அவர்கள் அளித்த தீர்ப்பையே அளிக்கிறேன்’ அல்லது’இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்‘‘ என்று சொல்லிவிட்டு’(இறந்தவரின் சொத்தில்) மகளுக்குப் பாதியும் மகனின் மகளுக்கு ஆறில் ஒரு பாகமும் கிடைக்கும் எஞ்சியது சகோதரிக்கு உரியதாகும்‘‘ என்று (தீர்ப்புக்) கூறினார்கள்.

## சகோதர சகோதரிகளுக்குக் கிடைக்கும் சொத்துரிமை.

ஹதீஸ் 6743 ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

நான் நோய்வாய்ப்பட்டிருந்தபோது (என்னை நலம் விசாரிப்பதற்காக) நபி(ஸல்) அவர்கள் என் வீட்டுக்கு வந்தார்கள். அங்கசுத்தி (உளூ) செய்வதற்காகத் தண்ணீர் கேட்டு வாங்கி அங்கசுத்தி செய்தார்கள். பிறகு தாம் அங்கசுத்தி செய்த தண்ணீரை என் மீது தெளிந்துவிட்டது. அப்போது நான்,‘இறைத்தூதர் அவர்களே! எனக்குச் சகோதரிகள் மட்டுமே இருக்கின்றனர். (என் சொத்துகள் யாருக்குச் சேர வேண்டும்?)‘‘ என்று கேட்டேன். அப்போதுதான் பாகப் பிரிவினை தொடர்பான வசனம் அருளப்பெற்றது.

## 4:176 வது இறைவசனம்

(நபியே!)’கலாலா’ (-அதாவது மூலவாரிசுகளோ கிளைவாரிசுகளோ இல்லாத நிலை-) குறித்து உம்மிடம் அவர்கள் தீர்ப்புக் கேட்கிறார்கள். (அவர்களிடம்) கூறுக:’கலாலா’ தொடர்பாக அல்லாஹ் உங்களுக்கு (இவ்வாறு) தீர்ப்பளிக்கிறான்: குழந்தை இல்லாத ஒருவன் இறந்து, அவனுக்கு ஒரு சகோதரி (மட்டும்) இருந்தால், அவளுக்கு அவன்விட்டுச்சென்ற(சொத்)தில் மூன்றில் இரண்டு பாகம் கிடைக்கும். சகோதர சகோதரிகளாகப் பலர் இருந்தால் அவர்களில் இரண்டு பெண்களின் பங்குக்குச் சமமான (பங்கான)து ஓர் ஆணுக்குக் கிடைக்கும். நீங்கள் வழி தவறாமல் இருப்பதற்காகவே அல்லாஹ் உங்களுக்கு (இவ்விதிகளை) விளக்கிக் கூறுகிறான் அல்லாஹ் யாவற்றையும் நன்கு அறிந்தவனாக இருக்கிறான் (எனும் 4:176 வது இறைவசனம்).

ஹதீஸ் 6744 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

(நபி(ஸல்) அவர்களுக்கு) இறுதியாக அருளப்பெற்ற (பாகப்பிரிவினை தொடர்பான) வசனம்,‘அந்நிஸா’ அத்தியாயத்தின் இறுதி வசனமான’(நபியே!)’கலாலா’ குறித்து உம்மிடம் அவர்கள் தீர்ப்புக் கேட்கிறார்கள்‘‘ என்று தொடங்கும் வசனமாகும்.

## (இறந்த ஒரு பெண்ணுக்குத்) தந்தையின் சகோதரர் புதல்வர்கள் இருவர் உள்ளனர். அவர்களில் ஒருவர் (அவளுடைய) தாய் வழிச் சகோதரராவார். மற்றொருவர் (அவளுடைய) கணவராவார். (இவர்களிடையே அவள்விட்டுச் சென்ற சொத்தை எவ்வாறு பங்கிட வேண்டும்?)

‘‘கணவருக்கு (அவளுடைய சொத்தில்) பாதியும், தாய் வழிச் சகோதரருக்கு ஆறில் ஒரு பாகமும் கிடைக்கும். எஞ்சியிருப்பது அவர்கள் இருவரிடையே சரி பாதியாகப் பங்கிடப்படும்‘‘ என்று அலீ(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6745. இறைநம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உயிரைவிட நானே நெருக்கமான (உரிமையுடைய)வனாவேன். எனவே, செல்வத்தைவிட்டுவிட்டு இறந்தவரின் செல்வம் (அவருடைய) தந்தை வழியிலுள்ள நெருங்கிய உறவினர்களுக்குரியதாகும். (குடும்பம் மற்றும் கடன் போன்ற) சுமைகள், சொத்தில்லா குழந்தைகள் ஆகியவற்றைவிட்டுச் செல்கிறவருக்கு நான் பொறுப்பாளியாவேன். அவருக்காக என்னை அழைக்கலாம் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6746 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பாகப் பிரிவினை தொடர்பாகக் குர்ஆன் நிர்ணயித்துள்ள) பாகங்களை (முதலில்) அவற்றுக்கு உரியவர்களிடம் சேர்த்து விடுங்கள். பாகம் நிர்ணயிக்கப்பட்டவர்கள் எடுத்தது போக எஞ்சியிருப்பது (இறந்தவரின்) மிக நெருக்கமான (உறவினரான) ஆணுக்கு உரியதாகும்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## இரத்த பந்துக்கள்

ஹதீஸ் 6747 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

"தாய் தந்தையரும் நெருங்கிய உறவினரும்விட்டுச் சென்ற(சொத்)திலிருந்து (பங்கு பெறுகின்ற) வாரிசுக்காரர்களை நாம் ஒவ்வொருவருக்கும் நிர்ணயித்துள்ளோம். நீங்கள் யாருடன் உடன்படிக்கை செய்துள்ளீர்களோ அவர்களுக்கும் அவர்களின் பங்கை அளித்துவிடுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 04:33 வது) வசனத்தின் விளக்கமாவது:

முஹாஜிர்கள் மதீனாவுக்கு வந்தபோது, அன்சாரி (ஒருவர் இறந்துவிட்டால் அவரு)க்கு அவரின் உறவினர்கள் (-தவுல் அர்ஹாம்) அன்றி (அவருடைய) முஹாஜிர் (நண்பரே) வாரிசாம்வந்தார். நபி(ஸல்) அவர்கள் முஹாஜிர்களுக்கும் அன்சாரிகளுக்கும் இடையே (இஸ்லாமிய) சகோதரத்துவத்தை ஏற்படுத்தியிருந்ததே இதற்குக் காரணம். (பின்னர்) இந்த வசனத்தின் முதல் தொடர் இறங்கியபோது, அது இரண்டாவது தொடரை மாறிவிட்டது.

## சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்த பெண் (தன் பிள்ளைகளிடமிருந்து) வாரிசுரிமை பெறுவது.

ஹதீஸ் 6748 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் ஒருவர் தம் மனைவிக்கு எதிராக சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தார். மேலும், அவர் அவளுடைய குழந்தையைத் தம்தல்ல என்றார். எனவே, அவ்விருவரையும் நபி(ஸல்) அவர்கள் பிரித்து வைத்தார்கள் குழந்தையை மனைவியிடம் சேர்த்தார்கள். 37

பெண் யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியதாகும். அவள் அடிமைப் பெண்ணாயிருப்பினும், சுதந்திரம் பெற்றவளாய் இருப்பினும் சரியே!38

ஹதீஸ் 6749 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உத்பா இப்னு அபீ வக்காஸ் தம் சகோதரர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம்'ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகன் எனக்குப் பிறந்தவன். எனவே, அவனை நீ பிடித்து வைத்துக் கொள்' என்று உறுதிமொழி வாங்கியிருந்தார். மக்கா வெற்றி

ஆண்டின்போது ஸஅத்(ரலி) அவர்கள் அவனைப் பிடித்தார்கள். மேலும், அவர்கள்,'இவன் என் சகோதரரின் மகன். என் சகோதரர் இவனைக் கைப்பற்றும்படி என்னிடம் உறுதிமொழி வாங்கியுள்ளார்'' என்றார்கள். அப்போது ஸம்ஆவின் புதல்வர் அப்து(ரலி) அவர்கள் எழுந்து, இவன் என் சகோதரன் என் தந்தையின் அடிமைப் பெண்ணுடைய மகன். அவரின் படுக்கையில் (அதாவது அவரின் அதிகாரத்தில் இவனுடைய தாய் இருந்தபோது) பிறந்தவன்'' என்று கூறினார்கள். எனவே, இருவரும் நபி(ஸல்) அவர்களிடம் (தீர்ப்புக் கேட்டு) சென்றனர். ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! இவன் என் சகோதரருடைய மகன். அவர் இவனைக் கைப்பற்றிக் கொள்ளும்படி என்னிடம் உறுதிமொழி வாங்கியிருந்தார்'' என்று கூற, ஸம்ஆவின் புதல்வர் அப்து(ரலி) அவர்கள்,'(இவன்) என் சகோதரன். என் தந்தையின் அடிமைப் பெண்ணுக்குப் பிறந்தவன். அவரின் படுக்கையில் (அவரின் அதிகாரத்தில் இவனுடைய தாய் இருந்தபோது) பிறந்தவன்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அப்து இப்னு ஸம்ஆவே! இவன் உனக்கே உரியவன். ஏனெனில், (சட்டப்படி) தாய் யாருடைய அதிகாரத்தில் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியதாகும். விபசாரம் செய்தவனுக்கு இழப்பே உரியது'' என்று கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் (தம் துணைவியும்) ஸம்ஆவின் புதல்வி(யுமான) சவ்தா(ரலி) அவர்களிடம்,'இவனிடமிருந்து நீ உன்னைத் திரையிட்டு மறைத்துக்கொள்!"என்றார்கள். சாயலில் அவன் உத்பாவைப் போன்று இருந்ததை நபியவர்கள் பார்த்ததே இதற்குக் காரணம். அதன் பிறகு அந்த மனிதர் இறக்கும்வரை அவரை சவ்தா(ரலி) அவர்கள் பார்க்கவில்லை.

ஹதீஸ் 6750 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தாய் (பெண்) யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியதாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (அடிமையாயிருந்த ஒருவருக்கு) வாரிசாகும் தகுதி அவரை விடுதலை செய்தவருக்கே உண்டு என்பது பற்றியும், கண்டெடுக்கப்பட்ட குழந்தைக்கு வாரிசு யார் என்பது பற்றியும்.

"கண்டெடுக்கப்பட்ட குழந்தை அடிமையாகாது'' என உமர்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 6751 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(அடிமைப் பெண்ணாயிருந்த) பரீராவை நான் விலைக்கு வாங்க விரும்பினேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அவளை விலைக்கு வாங்கிக் கொள். ஏனெனில், (அடிமையை) விடுதலை செய்தவருக்கே (அந்த அடிமையின் சொத்தில்) வாரிசுரிமை உண்டு'' என்றார்கள். மேலும், பரீராவுக்கு ஓர் ஆடு அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள்'அந்த ஆடு பரீராவுக்கு தர்மமாகும். (பரீராவிடமிருந்து நமக்கு அது அன்பளிப்பாகும்'' என்றார்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான ஹகம் இப்னு உதைபா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: பரீராவின் கணவர் (முஃகீஸ்) சுதந்திரம் பெற்றவராக இருந்தார்.

ஹகம் அவர்களின் இந்த அறிவிப்பு'முர்சல்' (அறிவிப்பாளர்தொடரில் நபித் தோழர் விடுபட்டது) ஆகும்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்,'முஃகீஸை நான் அடிமையாகவே கண்டேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6752 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(அடிமையாயிருந்த ஒருவருக்கு) வாரிசாகும் தகுதி (அவரை) விடுதலை செய்தவருக்கே உண்டு. என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## ‘உன் மீது யாருக்கும் வாரிசுரிமை கிடையாது என்ற நிபந்தனையின் பேரில் விடுதலை செய்யப்பட்ட அடிமைக்கு (-சாயிபா), வாரிசு யார்?

ஹதீஸ் 6753 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

‘உன் மீது யாருக்கும் வாரிசுரிமை கிடையாது’ என்ற நிபந்தனையின் பேரில் அடிமைகளை முஸ்லிம்கள் விடுதலை செய்வதில்லை. அறியாமைக் காலத்தவர்தாம் அவ்வாறு விடுதலை செய்துவந்தனர்.

ஹதீஸ் 6754 அஸ்வத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்கள் (அடிமைப் பெண்ணாயிருந்த) பரீராவை விடுதலை செய்வதற்காக விலைக்கு வாங்க விரும்பினார்கள். பரீராவின் எசமானார்கள்’பரீராவின் வாரிசுரிமை தங்களுக்கே இருக்கவேண்டும்’ என நிபந்தனையிட்டார்கள். எனவே, ஆயிஷா(ரலி) அவர்கள்,‘இறைத்தூதர் அவர்களே! விடுதலை செய்வதற்காக நான் பரீராவை விலைக்கு வாங்க விரும்பினேன். பரீராவின் எசமானர்களோ அவளுடைய வாரிசுரிமை தங்களுக்கே உரியது என்று நிபந்தனையிடுகிறார்கள்‘‘ என்றார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘(பரீராவை) விலைக்கு வாங்கி) விடுதலை செய்! ஏனெனில், (பொதுவாக) விடுதலை செய்தவருக்கே (அடிமையின் சொத்தில்) வாரிசுரிமை உண்டு‘‘ அல்லது’விலையைக் கொடுத்துவிடு‘‘ என்றார்கள். எனவே, ஆயிஷா(ரலி) அவர்கள் பரீராவை விலைக்கு வாங்கி விடுதலை செய்தார்கள். (தொடர்ந்து கணவர் முஃகீஸுடன் சேர்ந்து வாழ, அல்லது திருமண உறவை முறித்துக்கொள்ள) பரீராவிற்கு விருப்ப உரிமை அளிக்கப்பட்டது. அப்போது பரீரா தன்னுடைய விருப்பத்திற்கேற்ப தனித்து) வாழ்வதையே தேர்ந்தெடுத்துக் கொண்டதுடன்,‘இவ்வளவு இவ்வளவு செல்வம்) எனக்குக் கொடுக்கப்பட்டாலும் நான் அவருடன் இருக்கமாட்டேன்‘‘ என்று சொல்லிவிட்டார்.

அறிவிப்பாளர் அஸ்வத்(ரஹ்) அவர்கள்’பரீராவின் கணவர் (முஃகீஸ்) சுதந்திர மனிதராக இருந்தார்‘‘ என்றார்கள்.

(அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்:) அஸ்வத்(ரஹ்) அவர்களின் இந்த அறிவிப்பு’முன்கதிஃ’ (அறிவிப்பாளர் தொடரில் தொடர்பு அறுந்தது) ஆகும். இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்’முஃகீஸை நான் அடிமையாகவே கண்டேன்‘‘ என்று கூறியதே சரியானதாகும்.

## விடுதலை செய்த எசமானர்களின் உறவிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளும் அடிமை பாவி ஆவான்.

ஹதீஸ் 6755 யஸீத் இப்னு ஷரீக் அத்தைமீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அலீ(ரலி) அவர்கள்,‘நாங்கள் ஓதி வருகிற அல்லாஹ்வின் வேதத்தையும் (நபியவர்களிடமிருந்து கிடைக்கப்பெற்ற) இந்த ஏட்டையும் தவிர (எழுத்து வடிவிலான மார்க்கச் சட்டம்) வேறெதுவும் (நபியின் குடும்பத்தாரான) எங்களிடம் இல்லை‘‘ என்று கூறிவிட்டு, அந்த ஏட்டை வெளியே எடுத்தார்கள். அதில் காயங்களுக்கான தண்டனை குறித்தும் (உயிரீட்டிற்காகவும் ஸகாத்தாகவும் வழங்கப்படும்) ஒட்டகங்களின் வயது குறித்தும் எழுதப்பட்டிருந்தன. மேலும், அதில் (பின்வருமாறு குறிப்பிடப்பட்டு) இருந்தது: மதீனா நகரம்’அய்ர்’ எனும் மலையிலிருந்து’ஸவ்ர்’ மலை வரை புனிதமானதாகும். அதில் யார் (மார்க்கத்தின் பெயரால்)

புதிதாக ஒன்றை உருவாக்குகிறானே, (அவ்வாறு) புதிதாக ஒன்றை உருவாக்குகிறவனுக்கு அடைக்கலம் அளிக்கிறானோ அவன் மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவன் புரிந்த கடமையான வழிபாடோ கூடுதலான வழிபாடோ எதுவுமே அவனிடமிருந்து ஏற்கப்படாது. தன்னை விடுதலை செய்த எசமானர்களின் அனுமதியின்றி வேறு யாரையேனும் வாரிசுகளாக ஆக்கிக் கொள்ளும் அடிமை மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவன் புரிந்த கடமையான மற்றும் கூடுதலான வழிபாடுகள் எதுவும் அவனிடமிருந்து ஏற்கப்படாது. முஸ்லிம்களின் எவர் அடைக்கலம் கொடுத்தாலும் அது ஒன்றேயாகும். (மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகும்.) அவர்களில் கீழ்நிலையில் உள்ளவர்கள் கூட அடைக்கலம் தர முன்வரலாம் ஒரு முஸ்லிம் கொடுத்த அடைக்கலத்தை எவரேனும் முறித்தால் அவன் முது அல்லாஹ்வின் சாபமும் வானர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவன் செய்த கடமையான வழிபாடு உபரியான வழிபாடு மற்றும் எதுவுமே மறுமை நாளில் ஏற்றுக் கொள்ளப்படக்கூடாது.

ஹதீஸ் 6756. இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்இ'(முன்னாள் அடிமையின் சொத்திற்கு) வாரிசாகும் உரிமையை விற்கபதற்கும் அதை அன்பளிப்புச் செய்வதற்கும் தடை விதித்தார்கள்.

## ஒருவரின் உதவியால் மற்றொருபவர் இஸ்லாத்தை ஏற்றால் (இவருக்கு அவர் வாரிசாவாரா?

(இஸ்லாத்தை ஏற்க உதவிய) அவருக்கு வாரிசுரிமை இல்லை என்றே ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்கள்'விடுதலை செய்தவருக்கே (அடிமையின் சொத்தில்) வாரிசுரிமை உண்டு‘‘ என்றே கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனத் தமீமுத்தரீ(ரலி) கூறினார்: (இஸ்லாத்தை ஏற்க உதவியாக இருந்த ) அவரே இவருடைய வாழ்விலும் சாவிலும் மனிதர்களிலேயே மிகவும் நெருக்கமான (உரிமையுடைய) வராவார்.

(புகாரியாகிய நான் கூறுகிறேன்:) இது சரியான ஹதீஸா என்பதில் கருத்துவேறுபாடு காணப்படுகிறது.

ஹதீஸ் 6757 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா(ரலி) அவர்கள் (பரீரா எனும்) ஓர் அடிமைப் பெண்ணை விலைக்கு வாதங்கி விடுதலை செய்ய விரும்பினார்கள். பரீராவின் எசமானர்களோ'பரீராவின் வாரிசுரிமை எங்களுக்கே வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் அவளை நாங்கள் உங்களுக்கு விற்கிறோம்‘‘ என்று கூறினார். எனவே,ஆயிஷா(ரலி) அவர்கள் இதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'(அதற்காக) நீ விடுதலை செய்யாமல் இருந்துவிடாதே! விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியது‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6758 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான் பரீராவை விலைக்கு வாங்க விரும்பினேன். அப்போது பரீராவின் எசமானர்கள் அவளுடைய வாரிசுரிமை தங்களுக்கே உரியது என்று நிபந்தனை விதித்தார்கள். நான் இது குறித்து நபி(ஸல்) அவர்களிடன் சொன்னேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அவளை நீ விடுதலை செய்!

ஏனெனில், வெள்ளியைக் கொடுத்(து விலைக்கு வாங்கி விடுதலை செய்)தவருக்கே வாரிசுரிமை உரியது" என்றார்கள். எனவே, நான் பரீராவை (விலைக்கு வாங்கி) விடுதலை செய்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பரீராவை அழைத்து, அவள் தன்னுடைய கணவரிடமிருந்து (பிரிந்துவிட) விருப்ப உரிமையளித்தார்கள். அப்போது பரீரா,'அவர் எனக்கு இவ்வளவு இவ்வளவு (செல்வம்) தந்தாலும் நான் அவருடன் சேர்ந்து வாழமாட்டேன்" என்று கூறி தனித்து வாழ்வதையே தேர்ந்தெடுத்தார்.

என அஸ்வத்(ரஹ்) அறிவித்தார்.

## (தம்மால் விடுதலையான அடிமைக்கு) வாரிசாகும் உரிமை பெண்களுக்கும் உண்டு.

ஹதீஸ் 6759 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(அடிமைப் பெண்ணாயிருந்த) பரீராவை விலைக்கு வாங்க ஆயிஷா(ரலி) அவர்கள் விரும்பினார்கள். அப்போது அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்'பரீராவின் எசமானர்கள் வாரிசுரிமை தங்களுக்கே இருக்க வேண்டும் என்று நிபத்னையிடுகின்றனர்" என்றார்கள். அதற்கு நபி(ஸல்)அவர்கள்"அவளை வாங்கி (விடுதலை செய்து) விடு! ஏனென்றால், விடுதலை செய்தவருக்கே வாரிசுரிமை உரியது" என்றார்கள்.

ஹதீஸ் 6760 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வெள்ளியை(க் கிரயமாக)க் கொடுத்து (விலைக்கு வாங்கி, விடுதலை எனும்) பேருபகாரம் செய்தவருக்கே (அடிமைக்கு) வாரிசாகும் உரிமை உண்டு.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## ஒரு கூட்டத்தாரால் விடுதலை செய்யப் பட்ட அடிமை அவர்களைச் சேர்ந்தவனே. ஒரு கூட்டத்தாரின் சகோதரி மகன் அவர்களைச் சேர்ந்தவனே!

ஹதீஸ் 6761 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

'ஒரு கூட்டத்தாரால் விடுதலை செய்யப் பட்ட அடிமை அவர்களில் உள்ளவனே' என்றோ,'இதைப் போன்றோ'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6762 ஒரு கூட்டத்தாரின் சகோதரி மகன் அவர்களில் உள்ளவன் அல்லது அவர்களிலேயே உள்ளவன் ஆவான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## (எதிரிகளால்) சிறை பிடிக்கப்பட்டவரின் வாரிசுரிமை.

(பிரபல நீதிபதி) ஷுரைஹ் இப்னு ஹாரிஸ்(ரஹ்) அவர்கள், எதிரிகளின் கையில் சிறைக் கைதியாய் உள்ளவருக்கு வாரிசுரிமை அளித்துவந்தார்கள். மேலும்,'(மற்றவர்களை விட) அவருக்குத்தான் அ(ந்தச் சொத்)து மிகவும் தேவை" என்று கூறுவார்கள்.

உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

சிறைக் கைதியின் மரண சாசனம், அடிமை விடுதலை, தன்னுடைய செல்வத்தில் அவன் மேற்கொள்ளும் இதரப் பொருளாதார நடவடிக்கைகள் ஆகியவற்றை, அவன் மதம் மாறாமல் இருக்கும்வரை அனுமதியுங்கள். ஏனெனில், அது அவனுடைய செல்வம் அதில், தான் விரும்பியவாறு அவன் செயல்படலாம்.

ஹதீஸ் 6763 நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(இறந்துவிட்ட) ஒருவர் ஒரு செல்வத்தைவிட்டுச்சென்றால் அது அவரின் வாரிசுகளுக்குரியதாகும். ஒருவர் (தம்மைத் தவிர வேறு திக்கற்ற) தம் மனைவி மற்றும் மக்களைவிட்டுச்சென்றால் அவர்களைப் பராமரிப்பது (மக்கள் தலைவரான) எம்முடைய பொறுப்பாகும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## ஒரு முஸ்லிம் இறைமறுப்பாளருக்கோ, ஓர் இறைமறுப்பாளர் ஒரு முஸ்லிமுக்கோ வாரிசாகமாட்டர்.

(முஸ்லிமான தந்தை இறந்தபோது) இறைமறுப்பாளராக இருந்த ஒருவர் சொத்து பங்கிடுவதற்கு முன்பு முஸ்லிமானாலும் அவருக்கு வாரிசுரிமை கிடையாது.

ஹதீஸ் 6764. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிம் இறைமறுப்பாளருக்கு வாரிசாக மாட்டார். ஓர் இறைமறுப்பாளர் முஸ்லிமுக்கு வாரிசாகமாட்டார்.

என உசாமா இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

## கிறிஸ்துவ அடிமை மற்றும் பின்விடுதலை அளிக்கப்பட்ட (முகாதப்) கிறிஸ்துவ அடிமை ஆகியோருக்கு வாரிசாகும் உரிமை யாருக்கு உண்டு என்பது பற்றியும், (தமக்குப் பிறந்த குழந்தையை) தமதல்ல என்று மறுப்பவருக்குரிய பாவம் பற்றியும்:

## (ஒருவர் மற்றொருவரை) சகோதரன் என்றோ, சகோதரன் மகன் என்றோ வாதிடுவது.

ஹதீஸ் 6765. ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு அபீ வாக்கஸ் (ரலி) அவர்களும் அப்து இப்னு ஸம்ஆ (ரலி) அவர்களும் ஒரு சிறுவன் (யாருடைய மகன் என்பது) ஸஅத் (ரலி) அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! இவன் என் சகோதரர் உத்பா இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களின் மகன், இவன் தம் மகன் (எனவே இவனைப் பிடித்து வர வேண்டும்) என்று அவர் என்னிடம் உறுதிமொழி வாங்கியிருந்தார். இவனுடைய சாயலை (நீங்களே) பாருங்கள்!"என்று கூறினார்கள்.

அப்து இப்னு ஸம்ஆ (ரலி) அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! இவன் என் சகோதரன், என் தந்தையின் படுக்கையில் அவரின் அடிமைப் பெண்ணுக்குப் பிறந்தவன்"எ ன்று சொன்னார்.

எனவே, இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சிறுவனின் சாயலைப் பார்த்தார்கள். உத்பாவின் சாயல் வெளிப்படையாக அமைந்திருககக் கண்டார்கள்.

இருப்பினும், 'அப்து இப்னு ஸம்ஆவே! இவன் உனக்கே உரியவன். ஏனெனில், (சட்டப்படி) தாய் யாருடைய அதிகாரத்தின் கீழ் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியதாகும். விபசாரம் செய்தவனுக்கு இழப்பே உரியது" என்று கூறிவிட்டு (த் தம் துணைவியரிடம்), 'சவ்தா பின்த் ஸம்ஆவே! இவனிடமிருந்து உன்னைத் திரையிட்டு மறைத்துக் கொள்!"என்றார்கள்.

அதற்குப் பறிகு அந்த மனிதர் சவ்தா (ரலி) அவர்களை நேரடியாகப் பார்க்கவில்லை.

## வேறொருவரை தன் தந்தை என வாதிடுகிறவன்.

ஹதீஸ் 6766 ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

"தம் தந்தை அல்லாத ஒருவரை அவர் தம் தந்தை அல்ல என்று தெரிந்து கொண்டே - தந்தை என்று வாதிடுகிறவரின் மீது சொர்க்கம் தடை செய்யப்பட்டதாம் விடும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறக் கேட்டேன்.

ஹதீஸ் 6767 (மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர்) உபூஉஸ்மான் அந்நஹ்தீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த ஹதீஸை நான் அபூ பக்ரா(ரலி) அவர்களிடம் குறிப்பிட்டேன். அப்போது அவர்கள்'இதை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து என் காதுகள் செவியேற்றன் என் இதயம் மனனமிட்டுக் கொண்டது" என்றார்கள்.

ஹதீஸ் 6768. 'உங்கள் தந்தையரை நீங்கள் வெறுக்காதீர்கள். தம் தந்தையை வெறுத்து (வேறு யாரோ ஒருவரை தம் தந்தை என்று கூறி) விடுகிறவர் நன்றி கொன்றவராவார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஒரு பெண் தன் மகன் என (ஒருவனை) வாதிட்டால்...

ஹதீஸ் 6769 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தாவூத்(அலை) அவர்களின் காலத்தில்) இரண்டு பெண்கள் வாழ்ந்தார்கள். அவர்களுடன் அவர்களின் புதல்வர்களும் இருந்தனர். (ஒருநாள்) ஓநாய் ஒன்று அவ்விருவரின் புதல்வர்களில் ஒருவனைக் கொண்டு சென்றுவிட்டது. அவர்களில் ஒருத்தி தன் தோழியிடம்,'உன் மகனைத்தான் ஓநாய் கொண்டு சென்றுவிட்டது" என்று கூற, அதற்கு மற்றவள்,'உன் மகனைத்தான் ஓநாய் கொண்டு சென்றுவிட்டது" என்று சொன்னாள். எனவே, இருவரும் தாவூத்(அலை) அவர்களிடம் தீர்ப்புக் கேட்டுச் சென்றார்கள். தாவூத்(அலை) அவர்கள் அவ்விரு பெண்களில் மூத்தவளுக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்கள். (இந்தத் தீர்ப்பின் மீது கருத்து வேறுபட்ட) அப்பெண்கள் இருவரும் தாவூத்(அலை) அவர்களின் புதல்வர் சுலைமான் (அலை) அவர்களிடம் (தீர்ப்புக் கேட்க) புறப்பட்டுச் சென்றார்கள். அன்னாரிடம் விஷயத்தைத் தெரிவித்தார்கள். அப்போது சுலைமான் (அலை) அவர்கள்,'என்னிடம் ஒரு கத்தியைக் கொண்டு வாருங்கள். நான் உங்களிருவருக்குமிடையே (மீதமுள்ள ஒரு மகனை ஆளுக்குப் பாதியாக) பிளந்து (பங்கிட்டு) விடுகிறேன்" என்று கூறினார்கள். உடனே இளையவள்'அவ்வாறு செய்துவிடாதீர்கள். அல்லாஹ் உங்களுக்கு கருணை புரியட்டும். இவன் என் மகன்" என்று (பதறிப்போய்) கூறினாள். எனவே, சுலைமான்(அலை) அவர்கள்'அந்தக் குழந்தை இளையவளுக்கே உரியது' என்று தீர்ப்பளித்தார்கள்.

இதை அறிவித்த அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அன்றுதான் (கத்திக்கு)'சிக்கீன்' எனும் சொல்லை. (நபியவர்களின் வாயிலாக)ச் செவியுற்றேன். (கத்தியைக் குறிக்க)'முத்யா' என்னும் சொல்லைத் தான் நாங்கள் பயன்படுத்தி வந்தோம்" என்று கூறினார்கள்.

## அங்க அடையாளங்களைக் கொணடு தந்தை - பிள்ளையைக் கண்டறியும் நிபுணர்.

ஹதீஸ் 6770 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் நெற்றிக் கோடுகள் மின்னும் வண்ணம் மகிழ்ச்சியுடன் என்னிடம் வந்து,'உனக்குத் தெரியுமா? சற்றுமுன (அங்க அடையாளங்களைக் கொண்டு தந்தை - பிள்ளையைக் கண்டறியும்) முஜஸ்ஸிஸ், (என் வளர்ப்பு மகன்) ஸைத் இப்னு ஹாரிஸாவையும் (அவரின் புதல்வர்) உஸாமா இப்னு ஸைதையும் (அவர்கள் படுத்திருந்தபோது அவர்களின் பாதங்களைப்) பார்த்துவிட்டு'இந்தப் பாதங்களில் ஒன்று மற்றொன்றிலிருந்து உருவானது' என்றார்'' என்றார்கள்.

ஹதீஸ் 6771 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஒரு நாள் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மகிழ்ச்சியுடன் என்னிடம் வந்து,'ஆயிஷா! முஜஸ்ஸிஸ் அல்முத்லிஜீ என்னிடம் வந்தார். அப்போது உசாமாவும் (அவரின் தந்தை) ஜைத்கி ஒரு துணியைப் போர்த்தி(க் கொண்டு படுத்து) இருப்பதைக் கண்டார். அவர்களிருவரும் தம் தலையை மூடியிருந்தனர் (ஆனால்,) அவர்களின் பாதகங்கள் வெளியே தெரிந்தன. அப்போது முஜஸ்ஸிஸ்'இந்தப் பாதங்கள் ஒன்று மற்றொன்றிலிருந்து உருவானவை' என்றார்'' என்றார்கள்.

# அத்தியாயம் 86 குற்றவியல் தண்டனைகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## தண்டனைக்குரிய குற்றங்கள் பற்றிய எச்சரிக்கை

## விபச்சாரமும் குடியும்

(இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என) இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

ஒருவர் விபசாரம் புரியும்போது, இறை நம்பிக்கையின் (ஈமான்) ஒளி அவரிடமிருந்து அகற்றப்படுகிறது.

ஹதீஸ் 6772 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரம் புரிகிறவன் விபசாரம் புரியும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி அதைச் செய்யமாட்டான். (மது அருந்துகிறவன்) மது அருந்தும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி மது அருந்தமாட்டான். திருடன் திருடும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி திருடமாட்டான். (மக்களின் மதிப்புமிக்க) செல்வத்தை, மக்கள் தம் விழிகளை உயர்த்திப் பார்த்துக் கொண்டிருக்கக் கொள்ளையடிப்பவன் இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி கொள்ளையடிக்கமாட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. ஆனால், அதில் கொள்ளையடிப்பது பற்றிக் கூறப்படவில்லை.

## மது அருந்துபவனை அடிப்பது குறித்து வந்துள்ளவை.

ஹதீஸ் 6773. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

மது அருந்திய குற்றத்திற்குத் தண்டனையாகப் பேரீச்ச மட்டையாலும் காலணியாலும் அடுத்திடும்படி நபி(ஸல) அவர்கள் உத்தரவிட்டார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள் (தம் ஆட்சிக் காலத்தில்) நாற்பது சாட்டையடிகள் வழங்க உத்தரவிட்டார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

## வீட்டுக்குள்ளேயே தண்டனையை நிறைவேற்ற உத்தரவிடுவது.

ஹதீஸ் 6774 உக்பா இப்னு அல்ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

குடி போதையிலிருந்து'நுஐமான்' என்பவர், அல்லது'அவரின் புதல்வர்' நபி(ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டபோது அவரை அடிக்கும்படி வீட்டிலிருந்தவர்களுக்கு உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவர்களும் (காலணியாலும் பேரீச்ச மட்டையாலும்) அவரை அடித்தார்கள். அவரைக் காலணியால் அடித்தவர்களில் நானும் ஒருவனாவேன்.

## பேரீச்ச மட்டையாலும் காலணியாலும் (குடிகாரரை) அடித்தல்.

ஹதீஸ் 6775 உக்பா இப்னு அல்ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

போதையிலிருந்து'நுஐமான்' என்பவர், அல்லது'அவரின் புதல்வர்' நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டபோது அவர்கள் (மிகவும்) வேதனைப்பட்டார்கள். மேலும், அவரை அடிக்கும்படி

வீட்டிலிருந்தவர்களுக்கு உத்தரவிட்டார்கள். எனவே, அவர்கள் பேரீச்ச மட்டையாலும் காலணியாலும் அவரை அடித்தார்கள். அவரை அடித்தவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன்.

ஹதீஸ் 6776 அனஸ் (ரலி) அறிவித்தார்.

மது அருந்திய குற்றத்திற்குத் தண்டனையாக பேரீச்ச மட்டையாலும் காலணியாலும் அடித்திடும்படி நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அபூ பக்ர் (ரலி) அவர்கள் (தம் ஆட்சிக் காலத்தில்) நாற்பது சாட்டையடிகள் கொடுத்(திட உத்தரவு பிறப்பித்)தார்கள்.

ஹதீஸ் 6777. அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

மது அருந்திய ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டபோது அவர்கள் 'இவரை அடியுங்கள்'' என்றார்கள். எங்களில் சிலர் கையால் அடித்தனர். சிலர் காலணியால் அடித்தனர். இன்னும் சிலர் (முறுக்கப்பட்ட) தம் துணியால் அடித்தனர். (தண்டனை முடிந்து அவர்) திரும்பியபோது மக்களில் சிலர், அல்லாஹ் உம்மைக் கேவலப்படுத்துவானாக!" என்று கூறி (சாபமிட்ட)னர். நபி (ஸல்) அவர்கள், 'இவ்வாறு கூறி, இவருக்கெதிராக ஷைத்தானுக்கு ஒத்தாசை செய்யாதீர்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 6778 அலீபின் அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்.

நான் தண்டனை நிறைவேற்றியதால் எவரேனும் இறந்தால் (அதற்காக) நான் கவலை அடையப் போவதில்லை குடிகாரரைத் தவிர! ஏனெனில், (தண்டனை வழங்கப்பட்டதால்) குடிகாரர் இறந்தால் அவருக்காக நான் உயிரீட்டுத் தொகை வழங்கிடுவேன். இதற்குக் காரணம், (மது அருந்தியவனுக்குத் தண்டனையாக) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (குறிப்பிட்ட எதையும்) வழிமுறையாக்கவில்லை.

ஹதீஸ் 6779 சாயிப் இப்னு யஸீத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்திலும், அபூ பக்ர் (ரலி) அவர்களின் ஆட்சியிலும், உமர் (ரலி) அவர்களின் ஆட்சியின் தொடக்கத்திலும் எங்களிடம் மது அருந்தியவர் கொண்டுவரப்பட்டால் அவரை நாங்கள் கையாலும் காலணியாலும் மேலங்கியாலும் அடிப்போம்.

உமர் (ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தின் இறுதியில் (குடிகாரருக்கு) நாற்பது சாட்டையடி வழங்கிடுமாறு அன்னார் உத்தரவிட்டார்கள். (மது அருந்தும் விஷயத்தில்) மக்கள் அத்துமீறி நடந்துகொண்டு கட்டுப்பட மறுத்தபோது (குடிகாரருக்கு) அன்னார் எண்பது சாட்டையடி வழங்கினார்கள்.

## குடிகாரனை சபிப்பது வெறுக்கப்பட்டதாகும். மேலும், அவன் மார்க்கத்திலிருந்து வெளியேறியவன் அல்லன்.

ஹதீஸ் 6780 உமர் இப்னு அல்கத்தாப் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் 'அப்துல்லாஹ்' என்றொருவர் இருந்தார். அவர் 'ஹிமார்' (கழுதை) என்ற புனைப்பெயரில் அழைக்கப்பட்டுவந்தார். அவர் இறைத்தூதர் (ஸல்) அவர்களை சிரிக்கவைப்பார். மது அருந்தியதற்காக அவரை நபி (ஸல்) அவர்கள் அடித்துள்ளார்கள். (போதையிலிருந்த) அவர் ஒரு நாள் (நபி (ஸல்) அவர்களிடம்) கொண்டு வரப்பட்டார். அவரை அடிக்கும்படி நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவர் அடிக்கப்பட்டார். அப்போது (அங்கிருந்த) மக்களில் ஒருவர், 'இறைவா! இவர் மீது உன் சாபம் ஏற்படட்டும்! இவர் (குடித்ததற்காக) எத்தனை முறை கொண்டு வரப்பட்டுள்ளார்!" என்று கூறினார். அப்போது

நபி(ஸல்) அவர்கள், 'இவரை சபிக்காதீர்கள். ஏனெனில், அல்லாஹ்வின் மீதாணையாக! இவர் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறார் என்றே நான் அறிந்துள்ளேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6781 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

போதையிலிருந்த ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டுவரப்பட்டார். அப்போது அவர்கள் அவரை அடிக்குமாறு உத்தரவிட்டார்கள். எனவே, எங்களில் சிலர் அவரைக் கையால் அடித்தார்கள். இன்னும் சிலர் காலணியால் அடித்தார்கள். மற்றும் சிலர் (முறுக்கேற்றப்பட்ட) துணியால் அடித்தார்கள். (தண்டனை முடிந்து) அவர் திரும்பியபோது ஒருவர் (அவரைப் பார்த்து), 'அவருக்கென்ன நேர்ந்தது? அல்லாஹ் அவரைக் கேவலப்படுத்தட்டும்'' என்றார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'உங்கள் சகோதருக்கு எதிராக ஷைத்தானுக்கு ஒத்துழைப்புச் செய்து விடாதீர்கள்'' என்றார்கள்.

## திருடன் திருடுகிறபோது...

ஹதீஸ் 6782 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரம் புரிகிறவன் விபசாரம் புரிகிறபோது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி அதைச் செய்யமாட்டான். திருடன் திருடும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி திருடமாட்டான்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## திருடனைப் பெயர் குறிப்பிடாமல் (பொதுவாக) சபித்தல்

ஹதீஸ் 6783 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் சாபம் திருடன் மீது ஏற்படட்டும்! அவன் (விலை மதிப்புள்ள) தலைக்கவசத்தைத் திருடுகிறான் அதனால் அவனுடைய கை வெட்டப்படுகிறது. (விலை மலிவான) கயிற்றையும் அவன் திருடுகிறான் அதனாலும் அவனுடைய கை துண்டிக்கப்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அஃமஷ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

'தலைக்கவசம்' என்பது இரும்பாலான தலைக்கவசத்தையும் 'கயிறு' என்பது ஒரு சில திர்ஹம்கள் (வெள்ளிக்காசுகள்) பெறுமானமுள்ள கயிற்றையும் குறிக்கும் என்று (இதன் அறிவிப்பாளர்கள்) கருதுகிறார்கள்.

## தண்டனைகள் (குற்றங்களுக்கான) பரிகாரமாகும்.

ஹதீஸ் 6784 உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஒரு நாள்) நபி(ஸல்) அவர்களுடன் ஓர் அவையில் இருந்தோம். அப்போது அவர்கள், 'அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிப்பதில்லை திருடுவதில்லை விபசாரம் செய்வதில்லை என்று என்னிடம் உறுதிமொழி கூறுங்கள்'' என்று கூறி, இது தொடர்பான (திருக்குர்ஆன் 60:12 வது) வசனத்தை முழுவதும் ஓதினார்கள். மேலும், இந்த உறுதிமொழியை உங்களில் நிறைவேற்றுகிறவருக்குரிய பிரதிபலன் இறைவனிடம் உண்டு. மேற்கூறப்பட்ட (குற்றங்களில்) எதையேனும் ஒருவர் செய்து அதற்காக அவர் இவ்வுலகில் தண்டிக்கப்பட்டால் அது அவருக்குப் பரிகாரமாம்விடும். மேற்கூறப்பட்டவற்றில் எதையேனும் ஒருவர் செய்து, பின்னர் அல்லாஹ் அதனை (யாருக்கும் தெரியாமல்) மறைத்துவிட்டால் (அவர் அல்லாஹ்வின் பொறுப்பில்

இருக்கிறார்.) அவன் நாடினால் அவரை மன்னிப்பான் அவன் நாடினால் அவரைத் தண்டிப்பான்‘‘ என்றார்கள்.

ஓர் இறைநம்பிக்கையாளர் குற்றவியல் தண்டனைக்காகவோ (மனித) உரிமை (மீறலு)க்காவோ தவிர, (வேறு எந்தக் காரணங்களுக்காகவும் வேதனை அனுபவிப்பதிலிருந்து) காக்கப்படவேண்டும்.

ஹதீஸ் 6785 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'விடைபெறும்' ஹஜ்ஜின்போது (ஆற்றிய உரையில்),‘மிகவும் புனிதம் வாய்ந்த மாதம் எதுவென்று உங்களுக்குத் தெரியும்?' என்று கேட்டார்கள். மக்கள்,‘இதோ இந்த (துல்ஹஜ்) மாதம்தான்‘‘ என்று பதிலளித்தார்கள். (தொடர்ந்து) நபி(ஸல்) அவர்கள்,‘மிகவும் புனிதம் வாய்ந்த நகரம் எதுவென்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். மக்கள்,‘இதோ இந்த ஊர்'(மக்கா‘) தான்‘‘ என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,‘மிகவும் புனிதம் வாய்ந்த நாள் எதுவென்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். மக்கள்,‘இதோ இந்த (துல்ஹஜ் பத்தாம்) நாள் தான்‘‘ என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,‘உங்களுடைய இந்த நகரத்தில் உங்களுடைய இந்த மாதத்தில் உங்களுடைய இந்த நாள் எவ்வளவு புனிதமானதோ அதைப் போன்றே அல்லாஹ் உங்கள் உயிர், உடைமை, மானம் ஆகியவற்றைப் புனிதமாக்கியுள்ளான்‘‘ என்று கூறிவிட்டு,‘நான் உங்களிடம் (இறைச் செய்திகள் அனைத்தையும்) சேர்த்துவிட்டேனா?' என்று மூன்று முறை கேட்டார்கள். ஒவ்வொரு முறையும் மக்கள்,‘ஆம்‘‘ என்று நபி(ஸல்) அவர்களுக்கு பதிலளித்தனர். பிறகு,‘உங்களுக்கு அழிவுதான்‘‘ அல்லது'உங்களுக்குக் கேடுதான்‘! எனக்குப் பின்னால் ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் இறைமறுப்பாளர்கள் நீங்கள் மாறிவிடவேண்டாம்‘‘ என்றார்கள்.

## குற்றவியல் தண்டனைகளை நிலை நாட்டுவதும், இறைவனின் புனிதச் சட்டங்கள் சீர்குலைக்கப்படும்போது நடவடிக்கை எடுப்பதும்.

ஹதீஸ் 6786 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(பொதுவாக) இரண்டு விஷயங்களில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் படி நபி(ஸல்) அவர்களிடம் கூறப்பெற்றால் அவர்கள் அவ்விரண்டில் இலேசானதையே -அது பாவமான விஷயமாக இல்லாதிருக்கும் பட்சத்தில் எப்போதும் தேர்வு செய்வார்கள். அது பாவமான விஷயமாயிருந்தால் அதிலிருந்து வெகு தொலைவில் (விலகி) நிற்பார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! தக்கிழைக்கப்பட்ட (கொடுமைகளில்) எதற்காகவும் தமக்கென என்று எவரையும் எப்போதும் அவர்கள் பழிவாங்கியதில்லை அல்லாஹ்வின் புனித(ச் சட்ட)ங்கள் சீர்குலைக்கப்பட்டு, (அதற்காக) அல்லாஹ்வின் சார்பாகப் பழிவாங்க வேண்டுமென்று இருந்தால் தவிர.

## உயர்ந்தவர் தாழ்ந்தவர் அனைவர் மீதும் தண்டனையை நடைமுறைப்படுதததுவது.

ஹதீஸ் 6787 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(‘மக்ஸூமி' குலத்தைச் சேர்ந்த) ஒரு பெண் (திருடியபோது) தண்டனையிலிருந்து விலக்கு அளிப்பது) தொடர்பாக உசாமா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசினார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள்,'உங்களுக்கு முன்னால் வாழ்ந்த மக்கள் தாழ்ந்தவர்களின் மீது தண்டனையை நிறைவேற்றுவார்கள். உயர்ந்தவர்களைவிட்டு விடுவார்கள். எனவேதான் அவர்கள் அழிந்துபோயினர். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! (என் புதல்வி) ஃபாத்திமாவே இ(ந்தக் குற்றத்)தைச் செய்திருந்தாலும் அவரின் கையையும் நான் துண்டித்திருப்பேன்'' என்றார்கள்.

## ஆட்சியாளரிடம் வழக்கு சென்றுவிட்டால் தண்டனை(யைக் கைவிடுவது) தொடர்பாகப் பரிந்துரைப்பது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 6788 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

'மக்ஸூமி' குலத்தைச் சேர்ந்த ஒரு பெண் திருடிவிட்டாள் என்ற செய்தி குறைஷியருக்குக் கவலையளித்தது. அப்போது அவர்கள்'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் செல்லப் பிள்ளையான உசாமாவைத் தவிர வேறு யார் துணிந்து (அந்தப் பெண்ணுக்காகப் பரிந்து) பேச முடியும்?' என்றார்கள். அவ்வாறே உசாமா(ரலி) அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (பரிந்து) பேசினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் தண்டனைகளில் ஒன்றின் விஷயத்திலா (அதை நிறைவேற்றாமல்விட்டுவிடுமாறு) நீ பரிந்துரைக்கிறாய்?' என்று கேட்டுவிட்டுப் பிறகு எழுந்து நின்று (பின்வருமாறு) உரையாற்றினார்கள்:

மக்களே! உங்களுக்கு முன்னால் வாழ்ந்த (பனு இஸ்ராயீல்) மக்கள் வழிகெட்டுப் போனதற்குக் காரணமே, (அவர்களிடையே உள்ள) உயர் குலத்தார் திருடிவிட்டால் அவர்கள் அவரை (தண்டிக்காமல்)விட்டு விடுவார்கள். அவர்களிலுள்ள பலவீனர்கள் திருடிவிட்டால் அவர்களின் மீது தண்டனையை நடைமுறைப்படுத்துவார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! (இந்த) முஹம்மதின் மகர்களிடம் (பரிந்து) பேசினார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் தண்டனைகளில் ஒன்றின் விஷயத்திலா (அதை நிறைவேற்றாமல்விட்டுவிடுமாறு) நீ துண்டித்து விடுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 05:38 வது) வசனத் தொடரும், 13 எந்த அளவு திருடினால் (கை) வெட்ட வேண்டும்? என்பது பற்றியும்.

அலீ(ரலி) அவர்கள் (திருட்டுக் குற்றத்திற்காக) முன் கையை (மணிக்கட்டுவரை) துண்டித்தார்கள்.

திருடிவிட்ட ஒரு பெண்ணின் (வலக் கரத்தைவிட்டுவிட்டு) இடக்கரம் துண்டிக்கப்பட்டது. இது குறித்து கத்தாதா(ரஹ்) அவர்கள்'அவ்வளவுதான். (இனி வலக்கரம் துண்டிக்கப்படாது)'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6789 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கால் தீனார்(பொற் காசு), அல்லது அதற்கு மேல் திருடியதற்காகக் கை வெட்டப்படும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6790 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கால் தீனாரை (பொற் காசு) திருடியவரின் கை வெட்டப்படும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6791 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கால் தீனாருக்காக (பொற் காசுக்காக அதைத் திருடியவரின்) கை வெட்டப்படும்.

என ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6792 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் 'தோல் கேடயம்' அல்லது 'தோல் கவசத்தின்' விலை (மதிப்புள்ள பொருளு)க்காகவே தவிர, திருடனின் கை துண்டிக்கப்பட்டதில்லை.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6793 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

(நபி (ஸல்) அவர்களின் காலத்தில்) 'தோல் கேடயம்' அல்லது 'தோல் கவசத்தை' விடத் தாழ்ந்த பொருளுக்காகத் திருடனின் கரம் துண்டிக்கப்பட்டிருக்கவில்லை. இவை ஒவ்வொன்றும் விலை மதிப்புள்ளதாகும்.

இன்னும் சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் முர்சலாக (தொடர் முறிந்ததாக) வந்துள்ளது.

ஹதீஸ் 6794 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் 'தோல் கவசம்' அல்லது 'தோல் கேடயத்தின்' விலையை விடத் தாழ்ந்த (விலையுள்ள) பொருளுக்காகத் திருடனின் கரம் துண்டிக்கப்பட்டதில்லை. இவை ஒவ்வொன்றும் விலை மதிப்புடையதாகும்.

ஹதீஸ் 6795 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மூன்று திர்ஹங்கள் (வெள்ளிக் காசுகள்) விலைமதிப்புள்ள தோல் கேடயத்திற்காக (அதைத் திருடியவரின் கரத்தை)த் துண்டித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) நாஃபிஉ (ரஹ்) அவர்கள் (ஸமனுஹு என்பதற்கு பதில்) 'கீமத்துஹு' என அறிவித்தார்கள் என்று லைஸ் (ரஹ்) அவர்கள் கூறினார்கள். (இரண்டுக்கும் பொருள்: விலை)

ஹதீஸ் 6796. இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மூன்று திர்ஹங்கள் (வெள்ளிக்காசுகள்) விலைமதிப்புள்ள தோல் கேடயத்திற்காக (அதைத் திருடியவரின் கரத்தை)த் துண்டித்தார்கள்.

ஹதீஸ் 6797 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மூன்று திர்ஹங்கள் (வெள்ளிக் காசுகள்) விலை மதிப்புள்ள தோல் கேடயத்திற்காக (அதைத் திருடியவரின் கரத்தை)த் துண்டித்தார்கள்.

ஹதீஸ் 6798 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள், மூன்று திர்ஹங்கள் (வெள்ளிக் காசுகள்) விலை மதிப்புள்ள தோல் கேடயத்திற்காகத் திருடனின் கையைத் துண்டித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அறிவிப்பாளர் நாஃபிஉ (ரஹ்) அவர்கள் (ஸமனுஹு என்பதற்கு பதிலாக) 'கீமத்துஹு' (அதன் விலை) என அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6799 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் சாபம் திருடன் மீது உண்டாகட்டும்! அவன் (விலை மதிப்புள்ள) தலைக் கவசத்தைக் திருடுகிறான் அதற்காக அவனுடைய கை துண்டிக்கப்படுகிறது. (விலை மலிவான) கயிற்றையும் அவன் திருடுகிறான் அதற்காகவும் அவனுடைய கை துண்டிக்கப்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## திருடனின் பாவமன்னிப்புக் கோரிக்கை

ஹதீஸ் 6800 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(திருட்டுக் குற்றம் புரிந்துவிட்ட'மக்ஸூமி' குலத்தைச் சேர்ந்த ஃபாத்திமா பின்த் அஸ்வத் என்ற) ஒரு பெண்ணின் கையை நபி(ஸல்) அவர்கள் வெட்டச் செய்தார்கள். அதன் பிறகு, அவள் (எங்களிடம்) வந்து கொண்டிருந்தாள். அப்போது நான் அவளுடைய தேவையை நபி(ஸல்) அவர்களின் கவனத்திற்குக் கொண்டுசெல்வேன். அவள் அழகிய முறையில் பாவமன்னிப்புக் கோரி(த் திருந்தி)யிருந்தாள்.

ஹதீஸ் 6801 உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அறிவித்தார்.

நான் (பத்துப் பேருக்கும் குறைவான) ஒரு குழுவினருடன் (சென்று) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வுக்கு நீங்கள் எதையும் இணை கற்பிப்பதில்லை திருடுவதில்லை குழந்தைகளைக் கொல்வதில்லை உங்களிடையே அவதூறு கற்பித்து அதைப் பரப்புவதில்லை எந்த நற்செயலிலும் எனக்கு மாறு செய்வதில்லை'' என்று நான் உங்களிடம் உறுதிமொழி வாங்குகிறேன். உங்களில் (இவற்றை) நிறைவேற்றுகிறவரின் பிரதிபலன் அல்லாஹ்விடம் உள்ளது. மேற்கூறப்பட்ட (குற்றங்களான இ)வற்றில் எதையேனும் ஒருவர் செய்து, (அதற்காக) அவர் இவ்வுலகில் தண்டிக்கப்பட்டால் அதுவே அவருக்குப் பரிகாரமாகவும் அவரைத் தூய்மையாக்கக் கூடியதாகவும் ஆகிவிடும். (அவற்றில் எதையேனும் ஒருவர் செய்து பின்னர்) அல்லாஹ் அதனை (யாருக்கும் தெரியாமல்) மறைத்துவிட்டால் அவர் அல்லாஹ்வின் பொறுப்பில் விடப்படுவார் அல்லாஹ் நாடினால் அவரைத் தண்டிப்பான்: அவன் நாடினால் அவரை மன்னிப்பான் என்று கூறினார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

கை வெட்டப்பட்டதற்குப் பின் திருடன் பாவமன்னிப்புக்கோரி மனம் திருந்திவிட்டால் அவனுடைய சாட்சியம் ஏற்றுக்கொள்ளப்படும். அவ்வாறே குற்றவியல் தண்டனைகள் பெற்ற அனைவரும் அதைச் செய்தவர்கள் பாவமன்னிப்புக் கோரி திருந்திவிட்டால் அவர்களின் சாட்சியம் ஏற்றுக் கொள்ளப்படும்.

## இறைமறுப்பாளர்கள் மற்றும் மதம் மாறியோரில் வன்முறையாளர்கள்.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எதிராகப் போர் தொடுத்து, பூமியில் கலகம் விளைவித்துக் கொண்டிருப்போரின் தண்டனை இதுதான்: அவர்கள் கொல்லப்பட வேண்டும். அல்லது துக்கிலடப்படவேண்டும். அல்லது மாறுகை, மாறுகால் வெட்டப்படவேண்டும். அல்லது நாடு கடத்தப்படவேண்டும். (திருக்குர்ஆன் 05:33)20

ஹதீஸ் 6802 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

'உக்ல்' குலத்தைச் சேர்ந்த சிலர் நபி(ஸல்) அவர்களிடம் (மதீனாவிற்கு) வந்து, இஸ்லாத்தைத் தழுவினர். மதீனாவின் தட்பவெப்பம் அவர்களுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. எனவே, அவர்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (முஸ்லிம்களின் பொதுச் சொத்தான) தர்ம ஒட்டகங்களிடம் சென்று அவற்றின் பாலையும் சிறுநீரையும் அருந்துமாறு பணித்தார்கள். அவ்வாறே அவர்களும் செய்து உடல் நலமும் பெற்றனர். பிறகு அவர்கள் மதம் மாறியதோடல்லாமல், அந்த ஒட்டகங்களின் மேய்ப்பரை கொலையும் செய்துவிட்டு ஒட்டகங்களை ஓட்டிச் சென்றுவிட்டனர். எனவே, (அவர்களைப் பிடித்துவருமாறு) அவர்களுக்குப் பின்னால் நபி(ஸல்) அவர்கள் ஆளனுப்பினார்கள். அவர்கள் பிடித்துவரப்பட்டு, அவர்களின் கைகளையும் கால்களையும் வெட்டி, (மேய்ப்பவரின் கண்களைத் தோண்டி எடுத்த) அவர்களின் கண்களைத் தோண்டி எடுக்கும்படி உத்தரவிட்டார்கள். பிறகு, அவர்களின் காயங்களுக்கு மருந்திடாமல் அந்த நிலையிலேயே சாகும் வரைவிட்டுவிடச் செய்தார்கள்.

## மதம் மாறி வன்முறையில் ஈடுபட்டோரின் காயங்களுக்கு மருந்திடாமல் அவர்கள் மாண்டுபோகும் வரை நபி(ஸல்) அவர்கள் அப்படியேவிட்டுவிட்டார்கள்.

ஹதீஸ் 6803 அனஸ்(ரலி) அறிவித்தார்.

உரைனா குலத்தாரின் கை கால்களை நபி(ஸல்) அவர்கள் வெட்டச் செய்தார்கள். அவர்கள் இறக்கும் வரை அவர்களின் காயங்களுக்கு நபி(ஸல்) அவர்கள் மருந்திடவில்லை.

## மதம் மாறி வன்முறையில் ஈடுபட்டோருக்கு அவர்கள் சாகும்வரை தண்ணீர் தரப்படவில்லை.

ஹதீஸ் 6804 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(ஹிஜ்ரி ஆறாம் ஆண்டு) உக்ல் குலத்தாரில் (பத்துக்கும் குறைவான) சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து (மஸ்ஜிதுந் நபவீ பள்ளிவாசலில் ஏழைகள் மற்றும் அகதிகளின் சாவடியாக அமைந்திருந்த) திண்ணையில் தங்கி இருந்தார்கள். அப்போது அவர்களுக்கு மதீனாவின் தட்பவெப்பநிலை ஒத்துக்கொள்ளவில்லை. எனவே, அவர்கள்'இறைத்தூதர் அவர்களே! எங்களுக்குச் சிறிது (ஒட்டகப்) பால் கிடைக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூறினார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வின் தூதரின் (பொறுப்பிலிருக்கும்) ஒட்டகங்களை நீங்கள் சென்றடைவதைத் தவிர (வேறு வழி இருப்பதாக) நான் காணவில்லை'' என்று கூறினார்கள். எனவே, அவர்கள் அந்த ஒட்டகங்களிடம் சென்று அவற்றின் பாலையும் சிறுநீரையும் அருந்தி நலமும் உடல் வளமும் பெற்றனர். பிறகு (அந்த ஒட்டகங்களின்) மேய்ப்பரைக் கொலை செய்துவிட்டு ஒட்டக மந்தையை ஓட்டிச் சென்றுவிட்டனர். அப்போது இரைந்து சப்தமிட்டபடி ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்(து நடந்ததைத் தெரிவித்)தார். உடனே நபி(ஸல்) அவர்கள்'உக்ல்' குலத்தாரைப் பின்தொடர்ந்து சென்று அவர்களைப் பிடித்து வருவதற்காகச் சிலரை அனுப்பி வைத்தார்கள். பகல் பொழுது உச்சிக்கு வருவதற்குள் அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் பிடித்துக் கொண்டுவரப்பட்டார்கள். அப்போது ஆணிகளை பழுக்கக் காய்ச்சி கண் இமைகளின் ஓரங்களில் சூடிடுமாறு பணித்தார்கள். அவர்களின் கைகளையும் கால்களையும் வெட்டச் செய்து அவர்களின் காயங்களுக்கு மருந்திடாமல் அப்படியேவிட்டுவிடச் செய்தார்கள். பிறகு, மதீனாவின் புறநகரிலிருந்த'ஹர்ரா'ப் பகுதியில் அவர்கள் போடப்பட்டார்கள். அவர்கள் குடிப்பதற்கு நீர் கேட்டுக் கொண்டிருந்தனர். இறக்கும்வரை அவர்களுக்குக் குடிப்பதற்கு நீர் தரப்படவில்லை.

(அறிவிப்பாளர்) அபூ கிலாபா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: அவர்கள் திருடினார்கள் கொலை செய்தார்கள் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எதிராக வன்முறையில் ஈடுபட்டார்கள்.

## வன்முறையாளர்களின் கண்களில் நபி(ஸல்) அவர்கள் சூடிடச் செய்தது.

ஹதீஸ் 6805 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

'உக்ல்' அல்லது'உரைனா' (குலத்தாரில் பத்துப்பேருக்கும் குறைவான) சிலர் மதீனா வந்தனர். அப்போது (அவர்கள் வயிற்று உபாதையால் பாதிக்கப்பட்டனர். எனவே) நபி(ஸல்) அவர்கள் பால் தரும் ஒட்டகங்களிடம் சென்று அவற்றின் பாலையும் சிறுநீரையும் அருந்துமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவர்கள் (சென்று அவற்றின் பாலையும் சிறுநீரையும்) அருந்தி நிவாரணம் பெற்றனர். பிறகு அவர்கள் மேய்ப்பரைக் கொலை செய்துவிட்டு அந்த ஒட்டகங்களை ஓட்டிச் சென்றுவிட்டனர். அதிகாலையில் இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே அவர்களைப் பின்தொடர்ந்து அவர்களைத் தேடி ஆட்களை அனுப்பிவைத்தார்கள். சூரியன் உச்சியை அடைவதற்குள் அவர்கள் (நபி(ஸல்) அவர்களிடம்) கொண்டுவரப்பட்டார்கள். அப்போது அவர்களின் கை கால்களைத் தரித்து அவர்களின் கண்களில் சூடிடுமாறு உத்தரவிட்டார்கள். அவ்வாறே செய்யப்பட்டது. பிறகு, அவர்கள் ஹர்ராப் பகுதியில் எறியப்பட்டனர். அவர்கள் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டும் வழங்கப்படவில்லை.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ கிலாபா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்த (உக்ல்) குலத்தார் திருடினார்கள் கொலை செய்தார்கள் இறைநம்பிக்கை கொண்ட பின் நிராகரித்துவிட்டார்கள். அல்லாஹ்வுக்கம் அவனுடைய தூதருக்கும் எதிராக வன்செயல்களில் ஈடுபட்டார்கள். (எனவேதான் கொடுஞ் செயல் புரிந்த அவர்களுக்கு இத்தகைய தண்டனை வழங்கப்பட்டது. )

## மானக்கேடான செயல்களைக் கைவிட்டவரின் சிறப்பு.

ஹதீஸ் 6806 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் தன்னுடைய (அரியணையின்) நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத மறுமை நாளில் தன்னுடைய நிழலில் ஏழு பேருக்கு நிழல் அளிப்பான்:

1. நீதிமிக்க ஆட்சியாளர்.

2. இறை வணக்கத்திலேயே வளர்ந்த இளைஞன்.

3. தனிமையில் அல்லாஹ்வை நினைத்து (அவனுடைய அச்சத்தில்) கண்ணீர் சிந்திய மனிதன்.

4. பள்ளிவாசலுடன் (எப்போதும்) தொடர்பு வைத்துக்கொள்ளும் இதயமுடையவர்.

5. இறைவழியில் நட்புகொண்ட இருவர்.

6. அந்தஸ்தும் அழகும் உடைய ஒரு பெண் தம்மை தவறு செய்ய அழைத்தபோது'நான் அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறேன்' என்று கூறியவர்.

7. தம் இடக் கரம் செய்த தர்மத்தை வலக் கரம் கூட அறியாத வகையில் இரகசியமாக தர்மம் செய்தவர்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6807. 'தம் இரண்டு கால்களுக்கிடையே உள்ளத(ான மர்ம உறுப்பி)ற்கும், தம் இரண்டு தாடைகளுக்கிடையே உள்ளத(ான நாவி)ற்கும் என்னிடம் உத்தரவாதம் அளிப்பவருக்காக நான்

சொர்க்கத்திற்கு உத்தரவாதம் அளிக்கிறேன் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

## விபசாரம் புரிவோருக்கு நேரும் பாவம்

அல்லாஹ் கூறினான்:

(இறைவனின் உண்மையான அடியார்கள்) விபசாரம் செய்யமாட்டார்கள். (திருக்குர்ஆன் 25:68)

விபச்சாரத்தின் அருகில் கூட நெருங்காதீர்கள். திண்ணமாக! அது மானங்கெட்ட செயலாகவும் மிகத் தீய வழியாகவும் இருக்கிறது (திருக்குர்ஆன் 17:32)

ஹதீஸ் 6808 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

எனக்குப் பின்னர் வேறு எவரும் உங்களுக்கு அறிவிக்க முடியாத நபிமொழி ஒன்றை (இப்போது) நான் உங்களுக்கு அறிவிக்கப்போகிறேன். நபி(ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்: கல்வி அகற்றப்படுவதும் அறியாமை வெளிப்படுவதும் மது (அதிகமாக) அருந்தப்படுவதும் விபசாரம் பம்ரங்கமாக நடைபெறுவதும் ஐம்பது பெண்களுக்கு ஒரே ஆண் நிர்வாகியாக இருப்பான் எனும் அளவுக்கு ஆண்கள் (எண்ணிக்கை) குறைந்து பெண்கள் (எண்ணிக்கையில்) அதிகமாவதும்'மறுமை நாளில் அடையாளங்களில் உள்ளதாகும் அல்லது'இவை ஏற்படாத வரை மறுமை ஏற்படாது'.

ஹதீஸ் 6809 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அடியான் விபசாரம் புரியும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்து கொண்டு விபசாரம் புரியமாட்டான். அவன் திருடுகிறபோது இறைநம்பிக்கையாளனாக இருந்துகொண்டு திருடமாட்டான். மது அருந்தும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்துகொண்டு மது அருந்தமாட்டான். மேலும் அவன் இறைநம்பிக்கையாளனாக இருந்துகொண்டு கொலை செய்யமாட்டான்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார். (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இக்ரிமா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

"இத்தகைய அடியானிடமிருந்து எவ்வாறு இறைநம்பிக்கை கழற்றப்படும்?' என்று நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள்'இவ்வாறுதான்' என்று தம் விரல்களை ஒன்றோடொன்று கோத்துக் காட்டிவிட்டு அவற்றை(ப் பிரித்து) வெளியிலெடுத்தார்கள்.'அவன் மனம் திருந்தி பாவமன்னிப்புக் கோரி மீண்டால் அந்த இறைநம்பிக்கை அவனிடம் திரும்பவும் வந்து விடுகிறது'' என்று கூறியவாறு தம் விரல்களை மீண்டும் கோத்துக் காட்டினார்கள்.

ஹதீஸ் 6810 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

விபசாரம் புரிகிறவன் விபசாரம் புரியும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி விபசாரம் புரிவதில்லை. (திருடன்) திருடும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி திருடுவதில்லை. (மது அருந்துபவன்) மது அருந்தும்போது இறைநம்பிக்கையாளனாக இருந்தபடி மது அருந்துவதில்லை. மனம் வருந்தி பாவமன்னிப்புக் கோருதல் பின்னர்தான் ஏற்படுகிறது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6811 நான்,'இறைத்தூதர் அவர்களே! மிகப் பெரிய பாவம் எது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கே நீ இணை கற்பிப்பதாகும்'' என்று சொன்னாக்ள்.'பிறகு, எது (பெரிய பாவம்)?' என்று கேட்டேன். அவர்கள்,'உன்

குழந்தை உன்னுடன் அமர்ந்து உன் உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என்பதற்காக அதை நீயே கொலை செய்வதாகும்‘‘ என்றார்கள். நான்,‘பிறகு எது?’ என்று கேட்டேன்.’உன் அண்டை வீட்டாரின் மனைவியுடன் நீ விபசாரம் புரிவதாகும்‘‘ என்றார்கள்.

இதே ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

அறிவிப்பாளர் அம்ர் இப்னு அலீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த ஹதீஸை அப்துர் ரஹ்மான் இப்னு மஹ்தீ (ரஹ்) அவர்களிடம் குறிப்பிட்டேன். அன்னார் (அறிவிப்பாளர் தொடரில் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களுக்கும் அபூ வாயில் (ரஹ்) அவர்களுக்கும் இடையே அபூ மைசரா (ரஹ்) அவர்கள் இடம்பெறாத) அறிவிப்பாளர்தொடரைவிட்டுவிடுக!விட்டுவிடுக! என்று கூறினார்கள்.

## திருமணமானவ(ர் விபசாரம் புரிந்தால் அவ)ருக்குக் கல்லெறி தண்டனை (ரஜ்கி) வழங்குதல்.

ஹஸன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

ஒருவன் தன் சகோதரியுடன் தவறான உறவுகொண்டுவிட்டால் அவனுக்கு (அந்நிய பெண்களுடன்) விபசாரம் புரிந்தவனுக்குரிய தண்டனையே வழங்கப்படும்.

ஹதீஸ் 6812 ஆமிர் அஷ்ஷஅபீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(விபசாரம் புரிந்துவிட்ட ஒரு பெண்ணுக்கு மக்கள் கூடும்) வெள்ளிக் கிழமை (ஜுமுஆ) அன்று கல்லெறி தண்டனையை நிறைவேற்றியபோது அலீ (ரலி) அவர்கள்,‘இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வழிமுறைப்படியே நான் இவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்கினேன்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6813 அபூ இஸ்ஹாக் சுலைமான் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அவர்களிடம்’இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கல்லெறி தண்டனை வழங்கினார்களா?’ என்று கேட்டேன். அவர்கள்,‘ஆம்’ (வழங்கினார்கள்) என்று பதிலளித்தார்கள். நான்,‘(குர்ஆனின் 24 வது அத்தியாயமான)’அந்நூர்’ அத்தியாயம் அருளப்படுவதற்கு முன்பா அல்லது அதற்குப் பின்பா (எப்போது கல்லெறி தண்டனை வழங்கினார்கள்)?’ என்று கேட்டேன். அவர்கள்’எனக்குத் தெரியாது‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 6814 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

‘பனு அஸ்லம்’ குலத்தைச் சேர்ந்த (மாஇஸ் இப்னு மாலிக் என்றழைக்கப்பட்ட) ஒருவர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து,‘நான் விபசாரம் புரிந்து விட்டேன்‘‘ என்றார். மேலும், நான்கு முறை தமக்கெதிராகத் தாமே சாட்சியம் (ஒப்புதல் வாக்குமூலம்) அளித்தார். எனவே, அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றும்படி இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவு பிறப்பித்தார்கள். அவர் திருமணமானவராக இருந்தார்.

## (விபசாரம் புரிந்துவிட்ட) பைத்தியக்காரன் மற்றும் பைத்தியக்காரிக்கு (அவர்கள் திருமணமானவர்களாக இருந்தாலும்) கல்லெறி தண்டனை வழங்கப்படாது.

உமர் (ரலி) அவர்களிடம் அலீ (ரலி) அவர்கள்,‘பைத்தியக்காரன் தெளிவடையும் வரையிலும் சிறுவன் பருவ வயதை அடையும் வரையிலும் சிறுவன் பருவ வயதை அடையும் வரையிலும் தூங்குபவன் விழிக்கும் வரையிலும் அவர்களிடமிருந்து பேனா உயர்த்தப்பட்டுவிட்டது (-

தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது) என்று தங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6815 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்தபோது ஒருவர் வந்து அவர்களை அழைத்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் விபசாரம் புரிந்துவிட்டேன்'' என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் தங்களின் முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். அவர் திரும்பத் திரும்ப அதையே நான்கு முறை சொல்லித் தமக்கெதிராகத் தாமே ஒப்புதல் வாக்குமூலம் அளித்தபோது அவரை அழைத்து நபி (ஸல்) அவர்கள், 'உமக்குப் பைத்தியமா?' என்று கேட்டார்கள். அவர், '(எனக்குப் பைத்தியம்) இல்லை'' என்றார். நபி (ஸல்) அவர்கள், 'உமக்குத் திருமணமாம்விட்டதா?' என்று கேட்டார்கள். அவர், 'ஆம் (திருமணமாம்விட்டது)'' என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'இவரைக் கொண்டு சென்று கல்லெறி தண்டனை நிறைவேற்றுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 6816 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கியவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். அப்போது அவரை (மதீனாவில் பெருநாள்) தொழுகைத் திடலில் வைத்து நாங்கள் கல்லெறிந்தோம். கற்கள் அவரின் மீது விழுந்தபோது (வலி தாங்க முடியாமல்) அவர் வெருண்டோட ஆரம்பித்தார். அவரை நாங்கள் (விரட்டிச் சென்று பாறைகள் நிறைந்த) அல்ஹர்ராப் பகுதியில் பிடித்து அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றினோம்.

## விபசாரம் செய்வதனுக்கு இழப்புதான்.

ஹதீஸ் 6817 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களும் ஸம்ஆவின் புதல்வரும் (ஓர் அடிமைப் பெண்ணின் மகன் யாருக்குச் சொந்தம் என்பது தொடர்பாகச்) சர்ச்சையிட்டுக் கொண்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அப்து இப்னு ஸம்ஆவே! அவன் உனக்கே உரியவன். தாய் யாருடைய அதிகாரத்தில் இருந்தபோது குழந்தை பெற்றெடுத்தாளோ அவருக்கே குழந்தை சொந்தமாகும்'' என்று கூறிவிட்டு, (தம் துணைவியாரான சவ்தா அவர்களிடம்) 'சவ்தா! ஸம்ஆவின் அடிமைப் பெண்ணின் மகனைவிட்டு நீ உன்னைத் திரையிட்டு மறைத்துக்கொள்!"என்றார்கள்.

(அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்:) லைஸ் இப்னு ஸஅத் (ரஹ்) அவர்களிடமிருந்து குதைபா (ரஹ்) அவர்கள், 'விபசாரம் புரிந்தவனுக்கு இழப்பு (தண்டனை)தான்'' என்பதையும் அதிகப்படியாக எமக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6818 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு தாய் எவருடைய அதிகாரத்தில் இருந்தபோது குழந்தை பெற்றெடுத்தாளோ அவருக்கே குழந்தை உரியது. விபசாரம் புரிந்தவனுக்கு இழப்பு (தண்டனை)தான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## (மஸ்ஜிதுந் நபவீ அருகிலிருந்த) பலாத் எனுமிடத்தில் கல்லெறி தண்டனை நிறைவேற்றுதல்.

ஹதீஸ் 6819 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஒரு யூத ஆணும் ஒரு யூதப் பெண்ணும் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டனர். அவர்கள் இருவரும் மானக்கேடான செயல் (விபசாரம்) புரிந்து விட்டிருந்தனர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'உங்களுடைய வேதத்தில் (இவர்களுக்கு) என்ன (தண்டனை) காணப்படுகிறது?' என்று கேட்டார்கள். அதற்கு அந்த (இடத்திலிருந்த) யூதர்கள், 'எங்கள் (மத) அறிஞர்கள், (விபசாரம் புரிந்தவர்களை) முகத்தில் கரி பூசி, முழங் கால்களைப் பிடித்தபடி குனிந்து நிற்கச் செய்யவேண்டும் என்ற தண்டனையை உருவாக்கியுள்ளனர்'' என்றார்கள். (அப்போது அருகில் இருந்த முன்னாள் யூத அறிஞரான) அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்கள், 'தவ்ராத்தைக் கொண்டுவரும்படி அவர்களிடம் கூறுங்கள், இறைத்தூதர் அவர்களே!" என்று கூறினார்கள். அவ்வாறே 'தவ்ராத்' கொண்டு வரப்பட்டபோது, யூதர்களில் ஒருவர் (அதில் பதிவாயிருந்த) கல்லெறி தண்டனை ('ரஜ்கி') பற்றிய வசனத்தின் மீது தம் கையை வைத்(து அந்த வசனத்தை'யாருக்கும் தெரியாதபடி மறைத்)தார். மேலும், அதற்கு முன் பின்னிருந்த வசனங்களை வாசித்துக் காட்டலானார்.

அப்போது அவரிடம் அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்கள், 'உன் கையை எடு!" என்றார்கள். அவர் தம் கையை எடுத்தபோது, அதில் கல்லெறி தண்டனை பற்றிய வசனம் அவரின் கைக்குக் கீழே இருந்தது. எனவே, (அவர்கள் இருவருக்கும் தவ்ராத் வேதத்தில் உள்ளபடி) கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். அப்போது அவர்கள் இருவருக்கம் 'பலாத்' எனும் இடத்தில் வைத்து கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது. (அவர்களின் மீது கல் விழுந்தபோது) அந்த யூதர் அவளின் மீது (கல்படாமல் தடுப்பதற்காகக்) கவிழ்ந்து படுத்துக் கொண்டதை பார்த்தேன்.

## (பெருநாள்) தொழுகைத் திடலில் கல்லெறி தண்டனை நிறைவேற்றுதல்.

ஹதீஸ் 6820 ஜாபிர்(ரலி) அறிவித்தார்.

பனுஅஸ்லம் குலத்தைச் சேர்ந்த ஒருவர் (மாஇஸ் இப்னு மாலிக்) நபி(ஸல்) அவர்களிடம் வந்து தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக ஒப்புதல் வாக்குமூலம் அளித்தார். அப்போது நபி(ஸல) அவர்கள் அவரை வட்டுத் தம் முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். இறுதியாக அவர் நான்கு முறை தமக்கெதிராகத் தாமே சாட்சியம்அளித்தார். அப்போது அவரிடம் நபி(ஸல) அவர்கள், 'உமக்குப் பைத்தியமாக?' என்று கேட்டார்கள். அவர், 'ஆம்' என்றார். எனவே நபி(ஸல்) அவர்கள், அவருக்கத் தண்டனை வழங்குமாறு உத்தரவிட பெருநாள் தொழுகைத் திடல் (முஸல்லா) அருகில் அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள் அவரைக் குறித்து நல்லதைக் கூறியதோடு அவருக்காக இறுதித் தொழுகை (ஜனாஸா) தொழவைத்தார்கள்.

அறிவிப்பாளர்களான யூனுஸ் இப்னு யஸீத்(ரஹ்), இப்னு ஜுரைஜ்(ரஹ்) ஆகியோர்'அவருக்கு (ஜனாஸா) தொழவைத்தார்கள்'' என்பதைக் கூறவில்லை.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய என்) இடம்'நபி(ஸல்) அவர்கள் அவருக்குத் தொழவைத்தார்கள் என்ற தகவல் சரியானதா?' என வினவப்பட்டது. '(ஆம்) அறிவிப்பாளர் மஅமர்(ரஹ்) அவர்கள் அவ்வாறே அறிவித்தார்கள்'' என்று பதிலளித்தேன். 'மஅமர் அல்லாதோர் அவ்வாறு அறிவித்துள்ளனரா?' என்று கேட்கப்பட்டது. 'இல்லை' என்று கூறினேன்.

## குற்றவியல் தண்டனைக்குரியதல்லாத பாவம் ஒன்றை ஒருவர் செய்துவிட்டு அது குறித்து (ஆட்சித்) தலைவரிடம் தெரிவித்தால்...?

அவர் பாவமன்னிப்புக் கோரி மனம் திருந்திய பின்னால் அவர் ஆட்சித் தலைவரிடம் மார்க்கத் தீர்ப்பு கேட்டுவந்தால் அவருக்கு எந்தத் தண்டனையும் கிடையாது.

அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அவர்கள்,'இத்தகைய மனிதருக்கு நபி(ஸல்) அவர்கள் தண்டனை வழங்கவில்லை'' என்றார்கள்.

இப்னு ஜுரைஜ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ரமளான் மாதத்தில் (பகல் நேரத்தில்) தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்ட ஒரு மனிதரை நபி(ஸல்) அவர்கள் தண்டிக்கவில்லை. மேலும், (இஹ்ராம் கட்டிய நிலையில்) மான் வேட்டையாடிய (கபீஸா என்ப)வரை உமர்(ரலி) அவர்கள் தண்டிக்கவில்லை.

மேலும், இந்தத் தலைப்பை ஒட்டி நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6821. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஒருவர் ரமளான் மாதத்தில் (நோன்பு வைத்துக்கொண்டு) தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டுவிட்டு (இது குறித்து) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் மார்க்கத் தீர்ப்புக் கேட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இதற்குப் பரிகாரமாக விடுதலை செய்ய உன்னிடம் ஓர்அடிமை உண்டா?' என்று கேட்டார்கள். அவர்,'இல்லை' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'இரண்டு மாதங்கள் உம்மால் நோன்பு நோற்க முடியுமா?' என்று கேட்டார்கள். அவர்,'இல்லை (இயலாது)'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அவ்வாறாயின் அறுபது ஏழைகளுக்கு உணவளிப்பீராக!"என்றார்கள்.

ஹதீஸ் 6822 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ரமளான் மாதத்தில் மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் இருந்துகொண்டிருந்த நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து,'நான் கரிந்து போனேன்'' என்றார். நபி(ஸல) அவர்கள்,'எதனால் அப்படி?' என்று கேட்டார்கள். அவர்,'நான் ரமளான் மாதத்தில் (நோன்பு வைத்துக்கொண்டு) என் மனைவியைப் புணந்துவிட்டேன்'' என்றார். அவரை நோக்கி நபி(ஸல்) அவர்கள்,'தர்மம் செய்!"என்றார்கள். அவர்,'(தர்மம் செய்ய) என்னிடம் ஏதுமில்லை'' என்று கூறிவிட்டு, (அப்படியே) அமர்ந்துகொண்டார். அப்போது நபி(ஸல்) அவர்களிடம் ஒருவர் தம் கழுதையை ஓட்டிக்கொண்டு வந்தார். அவரிடம் உணவு இருந்தது.

-(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துர் ரஹ்மான் இப்னு காசிம்(ரஹ்) அவர்கள்'நபி(ஸல்) அவர்களிடம் அவர் கொண்டு வந்த உணவு என்ன? என்பது எனக்குத் தெரியாது'' என்றார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள்,'கரிந்து போனவர் எங்கே?' என்று கேட்டார்கள். அவர்,'இதோ நான் இங்குதான் இருக்கிறேன்'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'இதை வாங்கிக் கொண்டுபோய் தர்மம் செய்!"என்றார்கள். அவர்,'என்னைவிடத் தேவையானவருக்கா? என் குடும்பத்தாருக்கு உணவே இல்லை'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'அப்படியானால், அவர்களுக்கே உண்ணக்கொடு'' என்றார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்: முந்தைய ஹதீஸ் இதைவிடத் தெளிவாக உள்ளது. (அதில்) 'உம் வீட்டாருக்கே உண்ணக்கொடு'' என்றே நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## ஒருவர் (தாம் செய்த குற்றத்தைத்) தெளிவாகக் குறிப்பிடாமல் தண்டனையை நிறைவேற்றுமாறு முன்மொழிந்தால், (ஆட்சித்) தலைவர் அவரின் குற்றத்தை (துருவிக் கேட்காமல்) மறைத்திடலாமா?

ஹதீஸ் 6823 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்கள் அருகில் இருந்து கொண்டிருந்தேன். அப்போது ஒருமனிதர் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றை செய்துவிட்டேன். எனவே, என் மீது தண்டனையை நிறைவேற்றுங்கள்'' என்றார். அவர் செய்த குற்றம் குறித்து அவரிடம் நபி(ஸல்) அவர்கள் ஏதும் விசாரிக்கவில்லை. பிறகு, தொழுகை நேரம் வந்தபோது அவர் நபி(ஸல்) அவர்களுடன் தொழுதார். நபி(ஸல்) அவர்கள் தொழுகையை முடித்தபோது அவர்களை நோக்கி அந்த மனிதர் எழுந்து வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் தண்டனைக்குரிய குற்றமொன்றைச் செய்துவிட்டேன். எனவே, அல்லாஹ்வின் வேதத்தி(லுள்ள தண்டனையி)னை எனக்கு நிறைவேற்றுங்கள்'' என்றார். நபி(ஸல்) அவர்கள், 'எம்முடன் சேர்ந்து நீர் தொழுதீர் அல்லவா?' என்று கேட்டார்கள். அவர், 'ஆம் (தொழுதேன்)'' என்றார். நபி(ஸல்) அவர்கள், 'அவ்வாறாயின் அல்லாஹ் 'உம்முடைய பாவத்தை' அல்லது உமக்குரிய தண்டனையை' மன்னித்துவிட்டான்'' என்றார்கள்.

## (தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக) ஒப்புதல் வாக்குமூலம் அளிப்பவரிடம் (அவளை) நீ தொட்டிருக்கக் கூடும்' என்றோ, அவளை நோக்கி (கண்ணால் அல்லது கையால்) சைகை செய்திருக்கக்கூடும்' என்றோ (ஆட்சித்) தலைவர் சொல்லாமா?

ஹதீஸ் 6824 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

மாஇஸ் இப்னு மாலிக் அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்(து தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக வாக்குமூலம் அளித்)தபோது, அவரிடம் நபி(ஸல்) அவர்கள், '(அவளை) நீர் முத்தமிட்டிருக்கலாம்! அல்லது (கண்ணாலோ கையாலோ) சைகை செய்திரக்கலாம்! அல்லது (ஆசையுடன்) பார்த்திருக்கலாம்!"என்றார்கள். அவர், '(அவ்வாறெல்லாம்) இல்லை இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், சாடைமாடையாகக் கேட்காமல்'அவளுடன் நீர் உடலுறவு கொண்டீரா?' என்று (வெளிப்படையாகவே) கேட்டார்கள். அவர், 'ஆம்' என்று கூறினார். அப்போதுதான் அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கும்படி நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

## (தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக) ஒப்புதல் வாக்குமூலம் அளிப்பவரிடம் உனக்குத் திருமணமாம்விட்டதா? என்று (ஆட்சித்) தலைவர் கேட்பது.

ஹதீஸ் 6825 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்தபோது ஒருவர் வந்து அவர்களை அழைத்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் விபசாரம் புரிந்துவிட்டேன்'' என்று தம்மைக் குறித்தே கூறினார். உடனே அவர் நபி(ஸல்) அவர்கள் தங்களின் முகத்தைத் திருப்பிக்கொண்டிருந்த

பகுதிக்கு வந்து'இறைத்தூதர் அவர்களே! நான் விபசாரம் புரிந்துவிட்டேன்'' என்றார். (மீண்டும்) அவரைவிட்டு நபி(ஸல்) அவர்கள் முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள். அவர் (திரும்பவும்) நபி(ஸல்) அவர்கள் முகத்தைத் திருப்பிக்கொண்ட பக்கம் வந்தார். (இவ்வாறு) அவர் (தாம் விபசாரம் புரிந்துவிட்டதாக) தமக்கெதிராகத் தாமே நான்கு முறை சாட்சியம் அளித்தபோது அவரை நபி(ஸல்) அவர்கள் அழைத்து,'உமக்குப் பைத்தியமா?' என்று கேட்டார்கள். அவர்,'இல்லை, இறைத்தூதர் அவர்களே!"என்றார். தொடர்ந்து நபி(ஸல்) அவர்கள்,'உமக்குத் திருமணம் ஆகிவிட்டதா?' என்று கேட்டார்கள். அவர்,'ஆம்' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'இவரைக் கொண்டுசென்று, இவருக்குக் கல்லெறி தண்டனை வழங்குங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6826 இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஜாபிர்(ரலி) அவர்களிடமிருந்து செவியுற்ற ஒருவர் (ஜாபிர் கூறினார்கள் எனக்) தெரிவித்தார். அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கியவர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். அப்போது அவரை (பெருநாள்) தொழுகைத் திடலில் வைத்து நாங்கள் கல்லெறிந்தோம். அவரின் மீது கல் விழத் தொடங்கியதும். (வலி தாங்காமல்) அவர் வேகமாக குதித்தோடினார். அவரை நாங்கள் (பாறைகள் நிறைந்த) அல்ஹர்ராப் பகுதியில் பிடித்து கல்லெறி தண்டனை நிறைவேற்றினோம்.

## விபசார(க் குற்ற)த்தை ஒப்புக்கொள்ளல்

ஹதீஸ் 6827, ஹதீஸ் 6828 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித் அல்ஜுஹனீ(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (மஸ்ஜிந் நபவீ பள்ளிவாசலில்) இருந்தோம். அப்போது (கிராமவாசி) ஒருவர் எழுந்து,'அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்கிறேன்: தாங்கள் அல்லாஹ்வின் சட்டத்தின்படியே எங்களிடையே தீர்ப்பளிக்க வேண்டும்'' என்றார். அப்போது அவரைவிட விளக்கமுடையவராக இருந்த அவரின் எதிரி எழுந்து,'(ஆம்) எங்களிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்!"என்று கூறினார். (பின்னர் அந்தக் கிராமவாசி)'என்னைப் பேச அனுமதியுங்கள்'' என்று கேட்டுக்கொள்ள நபி(ஸல்) அவர்கள்,'பேசு!"என்றார்கள். அவர்,'என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தான். அப்போது இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். (என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்றுவிட வேண்டும் என்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது.) எனவே, நான் (இந்தத் தண்டனையிலிருந்து என் மகனைக் காப்பாற்றுவதற்காக) அதற்கு பதில் நூறு ஆடுகளையும் ஓர் அடிமையையும் பிணைத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் சில அறிஞர்களிடம் விசாரித்தபோது என் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டு காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனையாகத் தரப்படவேண்டும் என்றும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி தண்டனை (ரஜ்கி) வழங்கப்படவேண்டும் என்றும் என்னிடம் அவர்கள் தெரிவித்தார்கள்'' என்று கூறினார். இதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்கிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்: நூறு ஆடுகளும் அடிமையும் உன்னிடமே திருப்பித் தரப்படவேண்டும். உன் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலம் நாடு கடத்தும் தண்டனையும் வழங்கப்படவேண்டும்'' என்று கூறிவிட்டு, அருகிலிருந்த உனைஸ்(ரலி) அவர்களை நோக்கி,'உனைஸ்! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று அவள் (விபசாரக் குற்றத்தை) ஒப்புக் கொண்டால் அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்குங்கள்!"என்றார்கள்.

அவ்வாறே உனைஸ் அவர்கள் அவளிடம் செல்ல, அவளும் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டாள். எனவே, அவளுக்கு உனைஸ் கல்லெறி தண்டனை நிறைவேற்றினார்கள்.

அறிவிப்பாளர் அலீ இப்னு அப்தில்லாஹ் அல்மதீனி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நான் சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அவர்களிடம் என் மகனுக்குக் கல்லெறி தண்டனை உண்டு என அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள் என்று அவர் கூறவில்லையா?' எனக் கேட்டேன். அவர்கள்'இது தொடர்பாக எனக்குச் சந்தேகம் உள்ளது. எனவே, சில வேளைகளில் அதை அறிவிக்கிறேன். சில வேளைகளில் மௌனமாம் விடுகிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6829 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

உமர் (ரலி) கூறினார்: காலப் போக்கில் மக்களில் சிலர்'இறை வேதத்தில் கல்லெறி (ரஜ்கி) தண்டனை காணப்படவில்லையே?' என்று கூறி, இறைவன் அருளிய கடமை ஒன்றைக் கைவிடுவதன் மூலம் வழிதவறி விடுவார்களோ என நான் அஞ்சுகிறேன். அறிந்துகொள்ளுங்கள்: திருமணமான ஒருவர் விபசாரம் புரிந்து, அதற்கு சாட்சி இருந்தாலோ, கர்ப்பம் உண்டானாலோ, ஒப்புதல் வாக்கு மூலம் அளித்தாலோ அவருக்குக் கல்லெறி தண்டனை உண்டு என்பது நிச்சயமாகும்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:'அறிந்து கொள்ளுங்கள்! இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கல்லெறி தண்டனை நிறைவேற்றினார்கள். அவர்களுக்குப் பின் நாங்களும் அதனை நிறைவேற்றினோம்'' (என்றும் உமர் (ரலி) கூறினார்). இவ்வாறுதான் நான் மனனமிட்டுள்ளேன்.

## விபசாரத்தால் கர்ப்பமுற்ற பெண் முடித்தவளாக இருக்கும்போது கல்லெறி தண்டனை வழங்குதல்.

ஹதீஸ் 6830 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நான் முஹாஜிர்களில் சிலருக்குக் குர்ஆனை ஓதிக் கொடுத்துவந்தேன். அவர்களில் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களும் ஒருவராவார். (இந்நிலையில் ஒரு நாள்) நான்'மினா' பெருவெளியில் அவரின் முகாமில் இருந்து கொண்டிருந்தபோது அவர் உமர் இப்னு அல்கத்தாப் (ரலி) அவர்களிடம் இருந்துவிட்டு என்னிடம் திரும்பிவந்தார். இது உமர் (ரலி) அவர்கள் செய்த இறுதி ஹஜ்ஜின்போது (ஹிஜ்ரி 23ஆம் ஆண்டு) நடந்தது.

(திரும்பி வந்த) அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: உங்களுக்குத் தெரியுமா? இன்று ஒருவர் இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் (கலீஃபா உமர் (ரலி) அவர்களிடம் சென்று,'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! உமர் அவர்கள் இறந்துவிட்டிருந்தால் இன்னாருக்கு நான் வாக்களிப்புப் பிரமாணம் செய்து கொடுத்திருப்பேன். அல்லாஹ்வின் மீதாணையாக! (முதல் கலீஃபா) அபூ பக்ர் (ரலி) அவர்களின் வாக்களிப்புப் பிரமாணம் அவசரக் கோலமாக நடைபெற்று முடிந்தது என்று கூறிய இன்னாரைப் பற்றி நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார். இதைக் கேட்ட உமர் (ரலி) அவர்கள் கோபப்பட்டார்கள். பிறகு,'இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) இன்று மாலை நான் மக்கள் முன் நின்று, தங்களுக்கு சம்பந்தமில்லாத விஷயங்களில் தலையீடு செய்ய நினைக்கும் இவர்களை எச்சரிக்கை செய்யப் போகிறேன்'' என்றார்கள். உடனே நான்,'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! அவ்வாறு செய்யாதீர்கள். ஏனெனில், ஹஜ் பருவ காலத்தில் (நல்லவர்களுடன்) விவரமற்ற மக்களும் தரம் தாழ்ந்தோறும் குழுமுகின்றனர். நீங்கள் (உரையாற்றுவதற்காக) மக்கள் முன் நிற்கும்போது அவர்கள்தாம் உங்களுக்கருகே மிகுதியாக இருப்பர். நீங்கள்

எழுந்து நின்று ஏதோ ஒன்றைச் சொல்ல, அதற்கு உரிய பொருள் தந்து முறையாக விளங்காமல் அவரவர் (மனம்போன போக்கில்) தவறாகப் புரிந்துகொள்வார்களோ என நான் அஞ்சுகிறேன். எனவே, நீங்கள் மதீனா சென்று சேரும் வரை பொறுமையாயிருங்கள். ஏனெனில், மதீனாதான் ஹிஜ்ரத் மற்றும் நபிவழி பூமியாகும். நீங்கள் (அங்கு சென்று) மார்க்க ஞானம் உடையவர்களையும் பிரமுகர்களையும் தனியாகச் சந்தித்து நீங்கள் சொல்ல வேண்டியதை அழுத்தம் திருத்தமாகச் சொன்னால், அறிவுபடைத்தோர் உங்கள் கூற்றை அறிந்து அதற்கு உரிய இடமளிப்பார்'' என்று சொன்னேன். அதற்கு உமர்(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) நான் மதீனா சென்ற பின் முதலாவது கூட்டத்திலேயே இதைப் பற்றிப் பேசப் போகிறேன்'' என்றார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: அவ்வாறே நாங்கள் துல்ஹஜ் மாதத்தின் பிந்திய பகுதியில் மதீனா வந்து சேர்ந்தோம். வெள்ளிக்கிழமை (ஜுமுஆ நாள்) அன்று சூரியன் நடுவானிலிருந்து சாய்ந்தபோது (பள்ளிவாசலை நோக்கி) நான் விரைந்தேன். அப்போது'ஸயீத் இப்னு ஸைத் இப்னி அம்ர் இப்னி நுஃபைல்'(ரலி) அவர்களை சொற்பொழிவு மேடையின் (மிம்பர்) ஓர் ஓரத்தில் சாய்ந்து அமர்ந்திருக்கக் கண்டேன். உடனே நான் அவர் அருகில் என் முட்டுக்கால் அவரின் முட்டுக்காலைத் தொட்டுக் கொண்டிருக்கும் வண்ணம் அமர்ந்துகொண்டேன். சிறிது நேரம் தான் கழிந்திருக்கும் அதற்கும் உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் (சொற்பொழிவு மேடையை நோக்கி) வந்தார்கள். அவர்கள் வருவதைக் கண்ட நான்'ஸயீத் இப்னு ஸைத் இப்னி அம்ர் இப்னி நுஃபைல்'(ரலி) அவர்களிடம்,'உமர்(ரலி) அவர்கள் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தப்பட்ட நாளிலிருந்து (இந்த நேரம் வரை எப்போதுமே) சொல்லியிராத ஒன்றை இன்று மாலை சொல்ல இருக்கிறார்கள்'' என்று கூறினேன். அதற்கு ஸயீத் அவர்கள்'அப்படியெல்லாம் எதையும் உமர் கூறுவதற்கில்லை'' என்று கூறி என்னிடம் மறுத்தார்கள்.

அப்போது உமர்(ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது அமர்ந்தார்கள். பாங்கு சொல்பவர் பாங்கு சொல்லி மௌனமானதும் உமர்(ரலி) அவர்கள் எழுந்து இறைவனை அவனுக்குத் தகுதியான பண்புகளைக் கூறி புகழ்ந்தார்கள். பிறகு,'நான் (இன்று) எதைச் சொல்ல வேண்டுமென்று ஏற்படுத்தப்பட்டுள்ளதோ அதை நான் உங்களுக்குச் சொல்லவிருக்கிறேன். இது என் இறப்புக்கு சமீபத்திய பேச்சாக இருக்கக்கூடும் (உறுதியாக) எனக்குத் தெரியாது. இதை (கேட்டு) விளங்கி நினைவில் நிறுத்திக் கொள்கிறவர் தம் வாகனம் செல்லும் இடங்களிலெல்லாம் இதை எடுத்துரைக்கட்டும்! இதை(ச் சரியாக) விளங்க முடியாது என அஞ்சுகிற (அவர் மட்டுமல்ல வேறு) யாரும் என் மீது பொய்யுரைப்பதை நான் அனுமதிக்கமாட்டேன்'' (என்று கூறிவிட்டுப் பின்வருமாறு பேசினார்கள்:)

நிச்சயமாக அல்லாஹ், முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பினான். மேலும், அவர்களுக்கு குர்ஆன் எனும்) வேதத்தையும் அருளினான். அல்லாஹ் அருளிய (வேதத்)தில் கல்லெறி தண்டனை (ரஜ்கி) குறித்த வசனம் இருந்தது. அதை நாங்கள் ஓதியிருக்கிறோம். அதைப் புரிந்து மனனமிட்டுமிருக்கிறோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மண முடித்தவர் விபச்சாரம் புரிந்தால் அவருக்குக்) கல்லெறி தண்டனை (ரஜ்கி) நிறைவேற்றியுள்ளார்கள். அவர்களுக்குப் பிறகு நாங்களும் அந்தத் தண்டனையை நிறைவேற்றியுள்ளோம். காலப்போக்கில் மக்களில் சிலர்'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைவேதத்தில் கல்லெறி தண்டனை குறித்த வசனத்தை நாங்கள் காணவில்லை' என்று கூறி, இறைவன் அருளிய கடமை ஒன்றைக் கைவிடுவதன் மூலம் வழி தவறிவிடுவார்களோ என நான் அஞ்சுகிறேன். மணமுடித்த ஆணோ, பெண்ணோ விபசாரம் புரிந்து அதற்கு சாட்சி இருந்தாலோ,

கர்ப்பம் உண்டானாலோ, ஒப்புதல் வாக்குமூலம் அளித்தாலோ அவருக்குக் கல்லெறி தண்டனை உண்டு என்பது இறை வேதத்தில் உள்ளதாகும். பிறகு, நாங்கள் ஓதிவந்த இறைவேதத்தில் இதையும் ஓதி வந்தோம்: உங்களுடைய (உண்மையான) தந்தையரைப் புறக்கணித்து (விட்டு வேறொரு வரை தந்தையாக்கிவிடவேண்டாம். அவ்வாறு உங்கள் தந்தையரைப் புறக்கணிப்பது நன்றி சொல்லலாகும்.

அறிந்துகொள்ளுங்கள்: இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'மர்யமின் புதல்வர் ஈசா எல்லை மீறிப் புகழப்பட்டதைப் போன்று என்னை நீங்கள் எல்லை மீறிப் புகழாதீர்கள். மாறாக, (என்னைக் குறித்து நான்) அல்லாஹ்வின் அடிமை என்றும் அவனுடைய தூதர் என்றும் சொல்லுங்கள்' என்று கூறினார்கள்.

மேலும், உங்களில் ஒருவர், 'அல்லாஹ்வின் மீதாணையாக! உமர் இறந்துவிட்டிருந்தால் இன்னாருக்கு நான் வாக்களிப்புப் பிரமாணம் செய்து கொடுத்திருப்பேன்' என்று கூறுகூதாக எனக்குச் செய்தி எட்டியது. '(கலீஃபா) அபூ பக்ர் (ரலி) அவர்களின் வாக்களிப்புப் பிரமாணம் அவசரக் கோலமாகத்தான் நடைபெற்று முடிந்தது' என்று கூறி எந்த மனிதரும் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ள வேண்டாம். ஆம்! அது எப்படி (அனைவரிடமும் ஆலோசிக்காமல் அவசரமாக)த்தான் நடந்தது. ஆனால், அதன் தீமைகளிலிருந்து அல்லாஹ் (நம்மைப்) பாதுக்காத்துவிட்டான். உங்களில் ஒட்டகங்களில் அதிகமாகப் பயணிக்கும் (-அரபுகள்) எவரும் (மூப்பிலும் மேன்மையிலும்) அபூ பக்ர் (ரலி) அவர்களைப் போன்று இல்லை. 44 முஸ்லிம்களின் (சம்மதம் மற்றும்) ஆலோசனையின் ஒரு மனிதருக்கு வாக்களிப்புப் பிரமாணம் செய்து கொடுக்கிறவரும் அவர் யாருக்கு வாக்களித்தாரோ அவரும் ஏற்கப்பட மாட்டார்கள். எச்சரிக்கை! அவ்விருவரும் கொல்லப்படவும் செய்யலாம்.

மேலும், அல்லாஹ் தன் தூதரை இறக்கச் செய்தபோது நம்மிடையே நடந்த சம்பவங்களில் ஒன்று: அன்சாரிகள் நமக்கு மாறாக பனுசாஇதா சமுதாயக் கூடத்தில் அனைவரும் ஒன்று திரண்டனர். (ஆனால், முஹாஜிர்களான) அலீ (ரலி), ஸுபைர் (ரலி) ஆகியோரும் அவர்களுடன் வேறு சிலரும் நமக்கு மாறுபட்ட நிலையை மேற்கொண்டனர். (நம்முடன் அந்த அரங்கிற்கு அவர்கள் வரவில்லை.) முஹாஜிர்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களிடம் போய் ஒன்று கூடினர். நான் அபூ பக்ர் (ரலி) அவர்களிடம், 'அபூ பக்ர் அவர்களே! நம் சகோதரர்களான அன்சாரிகளிடம் நாம் செல்வோம்'' என்று கூறிவிட்டு, அவர்களை நாடிச் சென்றோம்.

அன்சாரிகளை நாங்கள் நெருங்கியபோது அவர்களில் இரண்டு நல்ல மனிதர்கள் எங்களைச் சந்தித்தனர். அவர்களிருவரும் (அன்சாரி) மக்கள் (தங்களில் ஒருவரான ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்களுக்கு வாக்களிப்பதென) ஒரு மனதாக முடிவு செய்திருப்பது குறித்து தெரிவித்துவிட்டு, 'முஹாஜிர்களே! நீங்கள் எங்கே செல்கிறீர்கள்?' என்று கேட்டனர். அதற்கு நாங்கள், 'எங்கள் சகோதரர்களான அன்சாரிகளை நோக்கிச் செல்கிறோம்'' என்றோம். அதற்கு அவர்கள் இருவரும், 'அவர்களை நீங்கள் நெருங்க வேண்டாம். உங்கள் நிலையை நீங்கள் (இங்கேயே) தீர்மானித்துக்கொள்ளுங்கள். (அதுவரை பொறுமையைக் கடைபிடியுங்கள்)'' என்றார்கள். உடனே நான், 'அல்லாஹ்வின் மீதாணையாக! கட்டாயம் நாங்கள் அவர்களிடம் செல்லத்தான் போகிறோம்'' என்று கூறிவிட்டு நடந்தோம். பனுசாஇதா சமுதாயக் கூடத்திலிருந்த அன்சாரிகளிடம் சென்றோம்.

அங்கு அவர்களின் நடுவே போர்வை போர்த்திய மனிதர் ஒருவர் இருந்தார். நான், 'இவர் யார்?' என்று கேட்டேன். மக்கள், 'இவர் தாம் ஸஅத் இப்னு உபாதா?' என்று பதிலளித்தனர். 'அவருக்கென்ன நேர்ந்துள்ளது?' என்று கேட்டேன். மக்கள், 'அவருக்குக் குளிர்

காய்ச்சல் ஏற்பட்டுள்ளது'' என்று கூறினர். நாங்கள் சிறிது நேரம் அமர்ந்திருந்தபோது அன்சாரிகளின் பேச்சாளர் ஏகத்துவ உறுதிமொழி கூறி இறைவனுக்குத் தகுதியான பண்புகளைச் சொல்லிப் புகழ்ந்துவிட்டு,'பின்னர், நாங்கள் (-அன்சாரிகள்) இறைவனுடைய (மார்க்கத்தின்) உதவியாளர்கள் இஸ்லாத்தின் துருப்புகள். (அன்சாரிகளை ஒப்பிடும்போது) முஹாஜிர்களே! நீங்கள் சொற்பமானோர் தாம். உங்கள் கூட்டத்திலிருந்து சிலர் இரவோடிரவாக (மதீனா) வந்துசேர்ந்தார்கள். (இன்றோ) அவர்கள் எங்கள் பூர்வீகத்தைவிட்டுமே எங்களைப் பிரித்துவிடவும், ஆட்சியதிகாரத்திலிருந்து எங்களை வெளியேற்றிவிடவும் எண்ணுகின்றனர்'' என்று கூறினார்.

(உமர்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) அன்சாரிகளின் பேச்சாளர் பேசி முடித்து அமைதியானபோது நான் பேச நினைத்தேன். மேலும், நான் எனக்குப் பிடித்த ஓர் உரையை அழகாகத் தயாரித்து வைத்திருந்தேன். அதனை அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு முன்பே எடுத்துரைத்துவிடவேண்டும் என்றும், (அன்சாரிகளின் பேச்சால்) அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு ஏற்பட்டிருந்த உஷ்ணத்தில் சிறிதளவையேனும் தணித்திடவேண்டும் என்றும் விரும்பினேன். நான் பேச முற்பட்டபோது அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'நிதானத்தைக் கையாளுங்கள்'' என்றார்கள். எனவே, நான் (அபூ பக்ர் அவர்களுக்கு மாறுசெய்து) அவர்களுக்குக் கோபத்தை உண்டாக்க விரும்பவில்லை.

இதையடுத்து அபூ பக்ர்(ரலி) அவர்கள் பேசினார்கள். அன்னார் என்னைவிடப் பொறுமைசாலியாகவும் நிதானமிக்கவராகவும் இருந்தார்கள். நான் எனக்குப் பிடித்த வகையில் அழகுபடத் தயாரித்து வைத்திருந்த உரையில் எதையும்விட்டுவிடாமல் அதைப் போன்று அல்லது அதைவிடவும் சிறப்பாகத் தயக்கமின்றி (தங்குதடையின்றி) அன்னார் பேசி முடித்தார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள் (தம் உரையில்) குறிப்பிட்டார்கள். (அன்சாரிகளே!) உங்களைப் பற்றி நீங்கள் குறிப்பிட்ட (குண) நலன்களுக்கு நீங்கள் உரியவர்களே. (ஆனால்,) இந்த ஆட்சியதிகாரம் என்பது (காலங்காலமாக) இந்தக் குறைஷிக் குலத்தாருக்கே அறியப்பட்டுவருகிறது. அவர்கள்தாம் அரபுகளிலேயே சிறந்த பாரம்பரியத்தையும் சிறந்த ஊரையும் (மக்கா) சேர்ந்தவர்கள். நான் உங்களுக்காக இந்த இருவரில் ஒருவரை திருப்திப்படுகிறேன். இவர்களில் நீங்கள் விரும்பிய ஒருவருக்கு வாக்களி(த்து ஆட்சித் தலைவராகத் தேர்வு செய்)யுங்கள். இவ்வாறு கூறிவிட்டு, என் கையையும் அங்கு அமர்ந்திருந்த அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்(ரலி) அவர்களின் கையையும் அங்கு அமர்ந்திருந்த அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்(ரலி) அவர்களின் கையையும் பற்றினார்கள். (இறுதியாக அவர்கள் கூறிய) இந்த வார்த்தையைத் தவிர அபூ பக்ர்(ரலி) அவர்கள் கூறிய வேறெதையும் நான் வெறுக்கவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! அபூ பக்ர்(ரலி) அவர்கள் போன்ற தகுதியுள்ளவர்) இருக்கும் ஒரு சமுதாயத்திற்கு நான் ஆட்சித் தலைவராகஆவதைவிட, நான் எந்தப் பாவமும் செய்யாமலேயே (மக்கள்) முன் கொண்டு வரப்பட்டு என் கழுத்து வெட்டப்படுவதையே விரும்பினேன். (இன்று வரை இதுவே என் நிலையாகும். இதற்கு மாற்றமாக) தற்போது எனக்கு ஏற்படாத ஓர் எண்ணத்தை மரணிக்கும்போது என் மனம் எனக்கு ஊட்டினால் அது வேறு விஷயம்.

அப்போது அன்சாரிகளில் ஒருவர்'நான் சிரங்கு பிடித்த ஒட்டகம் சொறிந்து கொள்வதற்கான மரக்கொம்பு ஆவேன் முட்டுக் கொடுக்கப்பட்ட பேரீச்சமரம் ஆவேன். (அதாவது பிரச்சினையைத் தீர்ப்பவன் ஆவேன். நான் ஒரு நல்ல யோசனை கூறுகிறேன்: அன்சாரிகளான) எங்களில் ஒரு தலைவர் குறைஷி குலத்தாரே! உங்களில் ஒரு தலைவர்'' என்றார்.

அப்போது கூச்சல் அதிகரித்தது. குரல்கள் உயர்ந்தன. பிளவு ஏற்பட்டுவிடுமோ என்று நான் அஞ்சினேன். எனவே,'அபூ பக்ர் அவர்களே! உங்கள் கையை நீட்டுங்கள். (உங்களிடம்

வாக்களிப்புப் பிரமாணம் செய்கிறேன்)‘‘ என்று நான் சொன்னேன். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்கள் தங்களின் கரத்தை நீட்டினார்கள். உடனே நான் அவர்களுக்கு (நீங்கள் தாம் ஆட்சித் தலைவர். உங்களுக்கு நாங்கள் கட்டுப்பட்டு நடப்போமென) வாக்குப் பிரமாணம் செய்து கொடுத்தேன். (அவ்வாறே) முஹாஜிர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு வாக்குப் பிரமாணம் செய்தனர். பிறகு, அவர்களுக்கு அன்சாரிகளும் வாக்குப் பிரமாணம் செய்து கொடுத்தனர். நாங்கள் ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்களிடம் (அன்னாரைச் சமாதானப்படுத்துவதற்காக) விரைந்து சென்றோம். அப்போது அன்சாரிகளில் ஒருவர்,‘நீங்கள் ஸஅத் இப்னு உபாதா அவர்களை (நம்ப வைத்து)க் கொன்றுவிட்டீர்கள்‘‘ என்றார்.

உடனே நான்,‘அல்லாஹ்தான் ஸஅத் இப்னு உபாதவைக் கொன்றான் (நாங்களல்ல)‘‘ என்று கூறினேன். 45 மேலும், அல்லாஹ்வின் மீதாணையாக! (இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறந்தபோது) நாங்கள் சந்தித்த பிரச்சினைகளில் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு வாக்களிப்புப் பிரமாணம் செய்து கொடுத்ததை விட மிகவும் சிக்கலான பிரச்சினை வேறெதையும் நாங்கள் கண்டதில்லை. வாக்களிப்புப் பிரமாணம் நடைபெறாத நிலையில் நாங்கள் அந்த மக்களிடமிருந்து வெளியேறிச் சென்றால் நாங்கள் சென்றதற்குப் பிறகு, தங்களில் ஒருவருக்கு அவர்கள் வாக்களிப்புப் பிரமாணம் செய்து கொடுத்துவிடுவார்கள். அப்போது ஒன்று, நாங்கள் திருப்தியில்லாமலேயே அவர்களுக்கு வாக்களிப்புப் பிராமணம் செய்து கொடுக்க வேண்டி வரும். அல்லது அவர்களுக்கு மாறாக நாங்கள் செயல்பட நேரும். அப்போது குழப்பம் உருவாகும் என்று நாங்கள் அஞ்சினோம்.

ஆக, முஸ்லிம்களின் (சம்மதம் மற்றும்) ஆலோசனையின்றி ஒருவருக்கு வாக்களிக்கிறவரும், அவர் யாருக்கு வாக்களித்தாரோ அவரும் ஏற்கப்படமாட்டார்கள் எச்சரிக்கை! அவ்விருவரும் கொல்லப்படவும் செய்யலாம்.

## திருமணமாகாத இருவர் (விபசாரம் புரிந்துவிட்டால்) அவர்களுக்கு (நூறு) சாட்டையடிகளும் நாடுகடத்தலும் தண்டனையாக வழங்கப்படும்.

அல்லாஹ் கூறினான்:

விபசாரம் செய்த பெண், விபசாரம் செய்த ஆண்டு ஆகிய இருவரில் ஒவ்வொருவருக்கும் நூறு சாட்டையடி வழங்குங்கள். மெய்யாகவே, நீங்கள் அல்லாஹ்வின் மீதும், உறுதி நாள் மீதும் நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால், அல்லாஹ்வின் சட்டத்(தை நிறைவேற்று)தில், அவ்விருவர் மீதும் உங்களுக்கு இரக்கம் ஏற்பட்டுவிட வேண்டாம் இன்னும் அவ்விருவரின் வேதனையையும் இறைநம்பிக்கையாளர்களில் ஒரு கூட்டத்தார் நேரில்) பார்க்கட்டும்.

விபசாரம் செய்த ஆண் ஒரு விபசாரியையோ அல்லது இணைவைப்பவளையோ தவிர வேறு யாரையும் மணமுடிக்க மாட்டான். விபசாரியை, விபசாரம் செய்த ஓர் ஆண், அல்லது இணைவைப்பாளன் தவிர வேறு யாரும் மணமுடிக்கமாட்டர். இறைநம்பிக்கையாளர்களுக்கு இது தடை செய்யப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 24:2,3)

(இந்த வசனத்திலுள்ள)’இரக்கம் ஏற்பட்டுவிடக் கூடாது’ என்பதற்கு இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் தண்டனைகளை நிலைநாட்டும் விஷயத்தில் இரக்கம் ஏற்பட்டு விடக் கூடாது’ என்று (விளக்கம்) கூறினார்கள்.

ஹதீஸ் 6831 ஸைத் இப்னு காலித் அல்ஜுஹைனீ(ரலி) அறிவித்தார்.

மணமுடிக்காத நிலையில் விபசாரம் புரிந்துவிட்டவருக்கு நூறு கசையடிகள் கொடுத்து, அவரை ஓராண்டு காலம் நாடு கடத்தவேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட கேட்டுள்ளேன்.

ஹதீஸ் 6832 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்களும் நாடு கடத்தும் தண்டனையை நடைமுறைப்படுத்தினார்கள். பிறகு, அதுவே வழிமுறையாக நீடித்தது.

ஹதீஸ் 6833 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

மணமுடிக்காத நிலையில் விபசாரம் புரிந்துவிட்டவருக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (நூறு சாட்டையடி) தண்டனைகொடுத்து அவரை ஓராண்டுக் காலம் நாடு கடத்துமாறு தீர்ப்பளித்தார்கள்.

## பாவங்கள் புரிவோரையும் (ஆணுமல்லாத பெண்ணுமல்லாத) அலிகளையும் (வீடுகளிலிருந்து) வெளியேற்றுவது.

ஹதீஸ் 6834 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பெண்களைப் போன்று ஒப்பனை செய்துகொள்ளும் ஆண்களையும், ஆண்களைப் போன்று ஒப்பனை செய்து கொள்ளும் பெண்களையும் சபித்தார்கள். மேலும், 'அவர்க(ளில் அலிக)ளை உங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றுங்கள்!" என்றும் சொன்னார்கள். அவ்வாறே நபியவர்கள் இன்னாரை வெறியேற்றினார்கள் உமர்(ரலி) அவர்களும் இன்னாரை வெளியேற்றினார்கள்.

## ஆட்சித்தலைவர், தாம் இருக்கும் இடத்தில் வெளியே தண்டனையை நிறைவேற்றுமாறு அடுத்தவருக்கு உத்தரவிடுவது.

ஹதீஸ் 6835, ஹதீஸ் 6836 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித்(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

கிராமவாசிகளில் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது நபி(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில்) அமர்ந்திருந்தார்கள். அவர், 'இறைத்தூதர் அவர்களே! (எங்கள் விவகாரத்தில்) அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார். அவரின் எதிரி (பிரதிவாதி) எழுந்து, 'அவர் சொல்வது உண்மைதான், இறைத்தூதர் அவர்களே! அவருக்கு அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளியுங்கள்'' என்றார். (பின்னர் கிராமவாசி,)'என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தபோது இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். (அதற்குத் தண்டனையாக) என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்றுவிடவேண்டும் என்று என்னிடம் மக்கள் தெரிவித்தார்கள். எனவே, நான் (இந்தத் தண்டனையிலிருந்து அவனைக் காப்பாற்றும் நோக்கில்) அதற்கு பதிலாக நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் அறிஞர்களிடம் விசாரித்தபோது, என் மகனுக்கு நூறு சாட்டையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனையாக வழங்கப்படவேண்டும் என்று என்னிடம் கூறினர்'' என்றார். இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், 'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்: ஆடுகளும் அடிமைப் பெண்ணும் உம்மிடமே திருப்பித் தரப்படவேண்டும். உம்முடைய மகனுக்கு (திருமணமாகாததால்) நூறு கசையடிகளும் ஓராண்டுக்கு காலம் நாடு கடத்தும் தண்டனையும் தரப்படவேண்டும்'' என்று கூறிவிட்டு, அருகிலிருந்த உனைஸ்(ரலி) அவர்களை நோக்கி, 'உனைஸ்! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று (அவள் விபசாரக் குற்றத்தை ஒப்புக் கொண்டால்) அவளுக்கு

(அங்கேயே) கல்லெறி தண்டனை வழங்குங்கள்‘‘ என்று தீர்ப்புக் கூறினார்கள். அவ்வாறே உனைஸ்(ரலி) அவர்கள் சென்று (குற்றத்தை ஒப்புக்கொண்ட) அவளுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றினார்கள்.

## (திருக்குர்ஆன் 04:25 வது) இறைவசனம்

“உங்களில் யாருக்கு இறைநம்பிக்கையுள்ள சுதந்திரமான பெண்களை மணந்துகொள்ள சக்தியில்லையோ, அவர்கள் இறைநம்பிக்கையுள்ள அடிமைப் பெண்களில் தமக்கு உடைமையானவர்களை (மணந்துகொள்ளலாம்) அல்லாஹ் உங்களின் இறைநம்பிக்கையை நன்கறிவான். உங்களில் சிலர் மற்றச் சிலரிலிருந்து வந்தவர்கள்தாம். எனவே, அவர்களை அவர்களின் உரிமையாளர்களின் அனுமதியின்பேரில் மணந்துகொள்ளுங்கள். அவர்களுக்குரிய மணக்கொடையை முறைப்படி கொடுத்து விடுங்கள். அப்பெண்கள் பரிசுத்தமானவர்களாகவும், விபசாரம் செய்யாதவர்களாகவும், கள்ள நட்புக் கொள்ளாதவர்களாகவும் இருக்க வேண்டும். முறைப்படி அவர்கள் திருமணம் செய்த பின் மானக் கேடாக நடந்துகொண்டால், மணமுடித்துக் கொண்ட சுதந்தரமான பெண்களின் மீது விதிக்கப்படும் தண்டனையில் பாதியே அவர்களுக்கு விதிக்கப்பெறும். தவிர, உங்களில் பாவத்தில் ஈடுபட்டுவிடுவோம் என அஞ்சுகிறவருக்கே இச்சட்டம். எனினும், நீங்கள் பொறுமையாக இருப்பது உங்களுக்கு மிகவும் நல்லதாகும். இன்னும் அல்லாஹ் மன்னிப்போனாகவும், மிக்க கருணையுடையோனாகவும் இருக்கிறான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 04:25 வது) இறைவசனம்.

## அடிமைப்பெண் விபசாரம் செய்தால் (சட்டம் என்ன)?

ஹதீஸ் 6837, ஹதீஸ் 6838 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித்(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

“ஓர் அடிமைப் பெண் கற்பைக் காக்காமல் விபசாரம் செய்தால்... (அவளுக்கு என்ன தண்டனை வழங்கப்பட வேண்டும்)?’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், ‘அவள் விபசாரம் செய்தால் அவளை சாட்டையால் அடியுங்கள். அதற்குப் பிறகும் விபசாரம் செய்தால் (திரும்பவும்) சாட்டையால் அடியுங்கள். மறுபடியும் அவள் விபசாரம் செய்தால் (மறுபடியும்) சாட்டையால் அடியுங்கள். அவள் மீண்டும் விபசாரம் செய்தால் அவளை ஒரு முடிக்கற்றைக்காவது விற்றுவிடுங்கள்‘‘ என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள், ‘(அவளை விற்றுவிடவேண்டும் என்பது) மூன்றாவது முறைக்குப் பிறகா? அல்லது நான்காவது முறைக்குப் பிறகா?’ என்று எனக்குத் தெரியாது எனக் கூறினார்கள்.

## அடிமைப்பெண் விபசாரம் செய்தால் அவளிடம் கடுமையாக நடந்து கொள்ளலாகாது அவளை நாடுகடத்தலாகாது.

ஹதீஸ் 6839 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடிமைப் பெண் விபசாரம் செய்து அது வெளிப்பட்டால், அவளுக்கு (எசமான்) கசையடி வழங்கட்டும் (அதற்கு மேல் அவளிடம்) கடுமை காட்ட வேண்டாம். பிறகு, (மறுபடியும்) அவள் விபசாரம் செய்தால் அவளுக்குக் கசையடி கொடுக்கட்டும் (அவளிடம்) கடுமை காட்ட வேண்டாம். மூன்றாம் முறையும் அவள் விபசாரம் செய்தால் அவளை ஒரு முடிக்கற்றைக்காவது விற்றுவிடட்டும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் பிற மதத்தார் திருமணமான பின் விபசாரம் செய்து ஆட்சித் தலைவர் முன் நிறுத்தப்பட்டால் சட்டம் என்ன?

ஹதீஸ் 6840 அபூ இஸ்ஹாக் சுலைமான் அஷ்ஷைபானீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அவர்களிடம் கல்லெறி தண்டனை (ரஜ்கி) குறித்துக் கேட்டேன். அதற்கு அவர்கள், 'நபி (ஸல்) அவர்கள் கல்லெறி தண்டனை வழங்கினார்கள:ஏ என்றார்கள். நான் (குர்ஆனின் 24 வது அத்தியாயமான) 'அந்நூர்' அத்தியாயம் அருளப்படுவதற்கு முன்பா? அல்லது அதற்கு பின்பா (எப்போது கல்லெறி தண்டனை வழங்கினார்கள்)?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'எனக்குத் தெரியாது' என்று பதிலளித்தார்கள்.

இன்னும் சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது. சிலருடைய அறிவிப்பில் ('அந்நூர் அத்தியாயம்' என்பதற்கு பதிலாக) 'அல்மாயிதா அத்தியாயம்' என்று இடம் பெற்றுள்ளது. (அந்நூர் அத்தியாயம் எனும்) முதல் அறிவிப்பே சரியானதாகும்.

ஹதீஸ் 6841 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் யூதர்கள் வந்து யூதர்களில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் விபசாரம் செய்துவிட்டதாகக் கூறினார்கள். அப்போது அவர்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'நீங்கள் கல்லெறி தண்டனை (ரஜ்கி) குறித்து 'தவ்ராத்' வேதத்தில் என்ன காண்கிறீர்கள்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், விபசாரம் செய்தவர்களை நாங்கள் கேவலப்படுத்திட வேண்டும் என்றும், அவர்களுக்குச் சாட்டையடி வழங்கப்படவேண்டும் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது என்று பதிலளித்தார்கள்.

(அப்போது யூத மத அறிஞராயிருந்து இஸ்லாத்தை தழுவிய) அப்துல்லாஹ் இப்னு சலாம் (ரலி) அவர்கள், 'நீங்கள் பொய் கூறுகிறீர்கள். கல்லெறி தண்டனை (ரஜ்கி) உண்டு என்று தவ்ராத்தில் கூறப்பட்டுள்ளது' என்றார்கள். அப்போது அவர்கள் தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை விரித்தார்கள். அவர்களில் ஒருவர் கல்லெறி தண்டனை பற்றிக் கூறும் வசனத்தின் மீது தன்னுடைய கையை வைத்து (மறைத்து)க் கொண்டு அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனத்தை வாசித்தார். அவரிடம் அப்துல்லாஹ் இப்னு சலாம் (ரலி) அவர்கள், 'உன் கையை எடு!" என்று சொல்ல, அவர் தன்னுடைய கையை எடுத்தார். அப்போது அங்கே கல்லெறி தண்டனை குறித்த வசனம் இருந்தது.

யூதர்கள், 'இவர் (-அப்துல்லாஹ் இப்னு சலாம்) உண்மையே சொன்னார், முஹம்மதே! தவ்ராத்தில் கல்லெறி தண்டனை குறித்த வசனம் இருக்கிறது' என்றார்கள். உடனே (விபசாரம் புரிந்த) அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கிடுமாறு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அவ்வாறே அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது. அப்போது அந்த ஆண் அப்பெண்ணைக் கல்லடியிலிருந்து காப்பதற்காக அவளின் மீது கவிழ்ந்து மறைத்துக் கொள்வதை பார்த்தேன்.

## ஒருவர் நீதிபதியிடமும் பொதுமக்களிடமும் தம் மனைவி மீதோ, மற்றவரின் மனைவி மீதோ விபசாரக் குற்றம் சாட்டினால், அவளுக்கு ஆளனுப்பி அந்தக் குற்றச்சாட்டு குறித்து நீதிபதி விசாரணை செய்யவேண்டுமா?

ஹதீஸ் 6842 ஹதீஸ் 6843 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித்(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

இரண்டு பேர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு வழக்கைக் கொண்டு வந்தனர். அவர்களில் ஒருவர், '(நபியே!) அல்லாஹ்வின் சட்டப்படி எங்களிடையே தீர்ப்பளியுங்கள்'' என்றார். அவரைவிட விளக்கமுடையவராயிருந்த மற்றவர், 'ஆம், இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார். (பின்னர் கிராமவாசியான முதல் நபர்)'என்னைப் பேச அனுமதியுங்கள்'' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'பேசு'' என்றார்கள். அவர், 'என் மகன், இதோ இவரிடம் கூலிக்காரனாக இருந்தான். அப்போது இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். என் மகனைக் கல்லால் அடித்துக் கொன்றுவிட வேண்டும் என்று என்னிடம் மக்கள் கூறினர். நான் (இந்த தண்டனையிலிருந்து என் மகனைக் காப்பாற்றுவதற்காக) அதற்கு பதில் நூற ஆடுகளையும் என்னுடைய அடிமைப் பெண்ணையும் பிணைத் தொகையை வழங்கினேன். பிறகு நான் அறிஞர்களிடம் விசாரித்தபோது என் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனையாகத் தரப்படவேண்டும் என்றும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி தண்டனை வழங்கப்படவேண்டும் என்றும் என்னிடம் அவர்கள் தெரிவித்தனர்'' என்றார்.

இதைக்கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்: உம்முடைய ஆடுகளும் உம்முடைய அடிமைப் பெண்ணும் உம்மிடமே திருப்பித் தரப்படவேண்டும்'' என்று கூறிவிட்டு, அவரின் மகனுக்கு (திருமணமாகாததால்) நூறு கசையடிகள் வழங்கினார்கள். ஓராண்டுக் காலத்திற்கு அவரின் மகனை நாடு கடத்தினார்கள். (அருகிலிருந்த) உனைஸ் அல்அஸ்லமீ(ரலி) அவர்களிடம், 'அந்த மற்றொரு மனிதரின் மனைவியிடம் சென்று அவள் (தன் குற்றத்தை) ஒப்புக்கொண்டால் அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்குங்கள்!"என்று கூறினார்கள். அவ்வாறே உனைஸ்(ரலி) அவர்கள் அவளிடம் சென்று விசாரணை செய்தபோது அவளும் (தன்னுடைய குற்றத்தை) ஒப்புக்கொண்டாள். எனவே அவளுக்கு உனைஸ்(ரலி) அவர்கள் கல்லெறி தண்டனை வழங்கினார்கள்.

## ஆட்சியாளர் (அனுமதி) இல்லாமல் ஒருவர் தம் குடும்பத்தாருக்கோ மற்றவர்களுக்கோ பாடம் புகட்டுதல்

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒருவர் தாம் தொழுது கொண்டிருக்கும்போது, தமக்குக் குறுக்கே மற்றொருவர் நடந்துசெல்ல முனைந்தால், அவரைத் தடுத்து நிறுத்தட்டும். அதற்கு அவர் மறுத்தால் அவருடன் போராடட்டும்.

இதை அறிவிக்கும் அபூ ஸயீத்(ரலி) அவர்கள் (தம் வாழ்க்கையில்) இதைக் கடைப்பிடித்தார்கள்.

ஹதீஸ் 6844 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பனு முஸ்தலிக் போரிலிருந்து திரும்பும் வழியில்) தம் தலையை என் மடி மீது வைத்துக் கொண்டிருந்தபோது (என் தந்தை) அபூ பக்ர்(ரலி) அவர்கள் (எனக்கருகில் வந்து), 'இறைத்தூதர்(ஸல்) அவர்களையும் மக்களையும் தண்ணீரில்லாத இடத்தில் தடுத்து (தங்கவைத்து)விட்டாயே!' எனக் கடிந்துகொண்டார்கள். அப்போது அவர்கள் தங்களின் கையால் என் இடுப்பில் குத்த ஆரம்பித்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தலை என் மடிமீது இருந்த காரணத்தாலேயே நான் அசையாது இருந்தேன். அப்போது அல்லாஹ்'தயம்மும்' உடைய வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 6845 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

(என் கழுத்தாணியை நான் தொலைத்துவிட்டதால் அந்தப் பயணத்தைத் தொடர முடியாமல் நீர் நிலைகள் இல்லாத ஓரிடத்தில் நாங்கள் தங்கநேரிட்டபோது என் தந்தை) அபூ பக்ர் (ரலி) அவர்கள் வந்து என்னை வேகமாக ஓர் அடி அடித்தார்கள். மேலும், 'ஒரு கழுத்தணிக்காக மக்களை (செல்ல விடாமல்) தடுத்துவிட்டாயே!" என்று கூறினார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என் மடிமீது தலைவைத்துக் கொண்டிருந்தால் நான் அசையாதிருந்தேன். அபூ பக்ர் (ரலி) அவர்கள் (என்னை அடித்த அடியில்) எனக்கு ஏற்பட்ட வலியினால் எனக்கு மரணம் வந்துவிட்டதைப் போன்று இருந்தது... (தொடர்ந்து) முந்தைய ஹதீஸைப் போன்றே அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஒருவர் தம் மனைவியுடன் அந்நிய ஆடவர் (தவறான உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டு அவரைக் கொன்றுவிட்டால் (என்ன சட்டம்)?

ஹதீஸ் 6846 முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள், 'என் மனைவியுடன் ஓர் ஆண் (தவறான உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால், என் வாளின் கூர்மையான பகுதியாலேயே நிச்சயம் நான் அவனை வெட்டுவேன்'' என்று கூறினார்கள். இச்செய்தி நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அப்போது நபி (ஸல்) அவர்கள், 'ஸஅத் அவர்களின் ரோஷத்தைக் கண்டு நீங்கள் வியப்படைகின்றீர்களா? நான் சஅதைவிட ரோஷக்காரன் அல்லாஹ் என்னைவிட ரோஷக்காரன்'' என்றார்கள்.

## குறிப்பால் உணர்த்துவது தொடர்பாக வந்தவை.

ஹதீஸ் 6847 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் கிராமவாசி ஒருவர் வந்து 'இறைத்தூதர் அவர்களே! (வெள்ளை நிறமுடைய எனக்கு) என் மனைவி கறுப்பான ஆண் குழந்தையொன்றை பெற்றெடுத்துள்ளாள். (அவன் எப்படி எனக்குப் பிறந்தவனாக இருக்க முடியும்?)'' என்று (சாடையாகக்) கேட்டதற்கு நபி (ஸல்) அவர்கள் 'உன்னிடம் ஒட்டகம் ஏதேனும் உள்ளதா?' என்று கேட்டார்கள். அதற்கவர், 'ஆம்' என்றார். 'அவற்றின் நிறம் என்ன?' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் 'சிவப்பு'' என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், 'உன் ஒட்டகங்களுக்கிடையே சாம்பல் நிற ஒட்டகம் இருக்கின்றதா?' என்று கேட்டார்கள். அவர் 'ஆம்' என்றார். நபி (ஸல்) அவர்கள், '(தன்னுடைய தாயிடம் இல்லாத) அந்த நிறம் அதற்கு மட்டும் எவ்வாறு வந்தது?' என்று கேட்டார்கள். அவர், 'அதன் (தந்தையான) ஆண் ஒட்டகத்தின் பரம்பரையிலிருந்து வந்திருக்கலாம் என கருதுகிறேன்'' என்று பதிலளித்தார். நபி (ஸல்) அவர்கள், 'உன்னுடைய இந்த மகனும் உன் பரம்பரையிலுள்ள (மூதாதையரின்) நிறத்தினைக் கொண்டிருக்கக்கூடும்'' என்றார்கள்.

## கண்டிப்பதற்காகவும் பகுதி புகட்டுவதற்காகவும் எத்தனை முறை அடிக்கலாம்?

ஹதீஸ் 6848 அபூ புர்தா (ரலி) அறிவித்தார்.

"அல்லாஹ் விதியாக்கியுள்ள (குற்றவியல்) தண்டனைகளில் ஒன்றில் தவிர வேறு எதற்காகவும் பத்து சாட்டையடிகளுக்கு மேல் வழங்கப்படலாகாது'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறுவார்கள்.

ஹதீஸ் 6849 அப்துர் ரஹ்மான் இப்னு ஜாபிர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியேற்ற (நபித்தோழர்) ஒருவர் கூறினார்:

“அல்லாஹ் விதியாக்கியுள்ள (குற்றவியல்) தண்டனைகளில் ஒன்றில் தவிர வேறு எந்த (சாதரண) குற்றத்திற்காகவும் பத்து அடிகளுக்கு மேலான தண்டனை கிடையாது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6850 அபூ புர்தா அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

“அல்லாஹ் விதியாக்கியுள்ள (குற்றவியல்) தண்டனைகளில் ஒன்றில் தவிர வேறு எதற்காகவும் பத்து சாட்டையடிகளுக்கும் மேல் வழங்காதீர்கள்‘‘ என்று நபி(ஸல்) அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.

ஹதீஸ் 6851 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(சூரியன் மறைந்தபின் துறக்காமல்) தொடர் நோன்பு நோற்க வேண்டாமென்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள். அப்போது முஸ்லிம்களில் சிலர்'அவ்வாறாயின், நீங்கள் தொடர் நோன்பு நோற்கின்றீர்களே, இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'உங்களில் என்னைப் போன்றவர் யார் இருக்கிறார்? எனக்கு என் இறைவன் உணவும் பானமும் அளிக்கிற நிலையில் நான் இரவைக் கழிக்கிறேன்‘‘ என்றார்கள். தொடர் நோன்பிலிருந்து விலகிக் கொள்ள மக்கள் மறுத்தபோது ஒரு நாள் தொடர் நோன்பு நோற்க அவர்களை அனுமதித்தார்கள். பிறகு, அடுத்த நாளும் (தொடர் நோன்பு நோற்க) அனுமதித்தார்கள். பின்னர் (அடுத்த மாதத்தின்) பிறையை மக்கள் கண்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள்'இம்மாதம் இன்னும் தாமதமாக முடிந்திருந்தால் (உங்களால் இயலாத அளவுக்குத் தொடர் நோன்பை) இன்னும் உங்களுக்கு நான் அதிகப்படுத்தியிருப்பேன்‘‘ என்று மக்கள் தொடர் நோன்பிலிருந்து விலகிக் கொள்ள மக்கள் மறுத்தபோது ஒரு நாள் தொடர் நோன்பு நோற்க அவர்களை அனுமதித்தார்கள். பிறகு, அடுத்த நாளும் (தொடர் நோன்பு நோற்க) அனுமதித்தார்கள். பின்னர் (அடுத்த மாதத்தின்) பிறையை மக்கள் கண்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள்'இம்மாதம் இன்னும் தாமதமாக முடிந்திருந்தால் (உங்களால் இயலாத அளவுக்குத் தொடர் நோன்பை) இன்னும் உங்களுக்கு நான் அதிகப்படுத்தியிருப்பேன்‘‘ என்று மக்கள் தொடர் நோன்பிலிருந்து விலகிக்கொள்ள மறுத்ததைக் கண்டிக்கும் விதத்தில் - கூறினார்கள்.

இதே ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 6852 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் (நிறுக்கப்படாமல், அளக்கப்படாமல்) குத்துமதிப்பாக உணவுப் பொருட்களை வாங்கிக் கொண்டிருந்த மக்கள், அவற்றை(க் கைப்பற்றி) தம் இருப்பிடங்களுக்குக் கொண்டு போய்ச் சேர்க்காமல் அதே இடத்தில் விற்றதற்காக அடிக்கப்பட்டனர்.

ஹதீஸ் 6853 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தமக்கிழைக்கப்பட்ட (கொடுமைகளில்) எதற்காகவும் தமக்கென ஒருபோதும் எவரையும் பழிவாங்கியதில்லை அல்லாஹ்வின் புனித(ச் சட்ட)ங்கள் சீர்குலைக்கப்பட்டு, (அதற்காக அல்லாஹ்வின் சார்பாகப் பழிவாங்க வேண்டுமென்று இருந்தால் தவிர!

## மானக்கேடான செயலையும் குற்றச் சாட்டையும் சந்தேகத்தையும் ஒருவர் சாட்சி இல்லாமல் வெளியிடுவது.

ஹதீஸ் 6854 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

அந்தத் தம்பதியர் இருவரும் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்த இடத்தில் நானும் இருந்தேன். -அப்போது எனக்குப் பதினைந்து வயது நபி(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் பிரிந்து கொள்ள உத்தரவிட்டார்கள். அப்போது அந்தப் பெண்ணின் கணவர்,'இவளை நான் என்னிடமே (மனைவியாக) வைத்துக் கொண்டிருந்தால் நான் இவள் மீது சொன்ன குற்றச்சாட்டு பொய்யாகிவிடும்'' என்று கூறி (மணவிலக்கு அளித்து)விட்டார்.

சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:)'அவள் இப்படி இப்படி (உருவம் கொண்ட) குழந்தையைப் பெற்றெடுத்தால் அவளுடைய கணவன் சொன்னது உண்மை. அவள் இப்படி இப்படி அரணையைப் போன்ற குழந்தையைப் பெற்றெடுத்தால் அவள் கணவன் சொன்னது பொய்'' என்று ஸுஹ்ரீ(ரஹ்) அவர்களிடமிருந்து நான் மனனமிட்டுள்ளேன்.

பிறகு,'அந்தப் பெண் அருவருக்கப்பட்ட தோற்றத்தில் குழந்தையைப் பெற்றெடுத்தாள்' என்றும் அவர்கள் கூறக் கேட்டுள்ளேன்.

ஹதீஸ் 6855 காசிம் இப்னு முஹம்மத்(ஸல்) அவர்கள் அறிவித்தார்.

பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்துகொண்ட அந்தத் தம்பதியர் குறித்து இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார். அப்போது அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத்(ரஹ்) அவர்கள்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'நான் சாட்சியில்லாமல் (ஒருவருக்குக்) கல்லெறி தண்டனை நிறைவேற்றுபவனாயிருந்தால் இதோ இவளுக்கு நிறைவேற்றியிருப்பேன்' என்று கூறியது இந்தப் பெண் தொடர்பாகத்தானா?' என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்,'இல்லை அவள் தகாத உறவில் ஈடுபட்டாள் எனப் பம்ரங்கமாகப் பேசப்பட்டு வந்த பெண் ஆவாள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6856 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

சாப அழைப்புப் பிரமாணம் (நடை முறையில் வருவதற்கு முன் ஒரு நாள் மனைவி மீது கணவன் விபசாரக் குற்றம் சாட்டுவது) தொடர்பாக நபி(ஸல்) அவர்கள் அருகில் பேசப்பட்டது. அப்போது ஆஸிம் இப்னு அதீ(ரலி) அவக்ள் அது தொடர்பாக ஏதோ (ஆக்ரோஷமாகப்) பேசிவிட்டுத் திரும்பிச் சென்றார்கள். (சிறிது நேரத்தில்) ஆஸிம்(ரலி) அவர்களின் குலத்தைச் சேர்ந்த ஒருவர் அவர்களிடம் சென்று, தம் மனைவியுடன் (அந்நிய) ஆடவன் ஒருவன் (தகாத உறவு கொண்டு) இருந்ததைத் தாம் கண்டதாகச் சொன்னார். அதற்கு ஆஸிம்(ரலி) அவர்கள்,'நான் (ஆக்ரோஷமாகப்) பேசியதாலேயே இப்படி (என் குலத்தாரிடையே நடந்து) நானே சோதிக்கப்பட்டுள்ளேன்'' என்றார்கள். எனவே, ஆஸிம்(ரலி) அவர்கள் அவரை அழைத்துக்கொண்டு நபி(ஸல்) அவர்களிடம் சென்று அவரின் மனைவியின் நடத்தை குறித்துத் தெரிவித்தார்கள்.

-(உவைமிர் என்ற) அந்த மனிதர் நல்ல மஞ்சள் நிறம் உடையவராகவும், சதைப் பிடிப்புக் குறைவானவராகவும், நீண்ட முடிகளைக் கொண்டவராகவும் இருந்தார். தம் மனைவியுடன் இருக்கக் கண்டதாக அவர் வாதிட்ட அந்த அந்நிய மனிதரோ, மாநிறம் உடையவராகவும் உடல் பருத்து அதிக சதைப்பிடிப்பு உள்ளவராகவும் இருந்தார்.

(இந்தக் குற்றச்சாட்டைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! (இந்தப் பிரச்சினையில் ஒரு) தெளிவைத் தருவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள். பிறகு, தம் மனைவியுடன் கண்டதாக அவர் குறிப்பிட்ட அந்த (அந்நிய) ஆடவரின் சாயலில் அவள் குழந்தை பெற்றெடுத்தாள். (அதற்கு முன்பே) இந்தத் தம்பதியரை நபி(ஸல்) அவக்ள் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்ய வைத்தார்கள்.

(இந்த ஹதீஸ் கூறப்பட்ட) அவையில் இருந்த ஒருவர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம்,'சாட்சி இல்லாமலேயே ஒருவருக்கு நான் கல்லெறி தண்டனை அளிப்பவனாயிருந்தால் இவளுக்கு அளித்திருப்பேன்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னது (உவைமிருடைய மனைவியான) இந்தப் பெண் குறித்தா? என்று கேட்டதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்,'இல்லை (அவன் வேறொரு பெண்ணாவாள்.) அந்தப் பெண் இஸ்லாத்தில் இருந்துகொண்டே தகாத உறவுகொண்டுவந்தாள் எனப் பரவலாகப் பேசப்பட்டவள். (ஆனால், அவள் குற்றத்தை ஒப்புக் கொள்ளவில்லை தகுந்த சாட்சியும் இல்லை. அவள் குறித்தே நபியவர்கள் இவ்வாறு குறிப்பிட்டார்கள்.)'' என்று பதிலளித்தார்கள்.

## பத்தினிப் பெண்களின் மீது அவதூறு கூறுவது

(அல்லாஹ் கூறினான்:)

யார் கற்புள்ள பெண்களின் மீது அவதூறு கூறி (அதை நிரூபிக்க) நான்கு சாட்சிகளைக் கொண்டு வரவில்லையோ, அவர்களுக்கு நீங்கள் எண்பது சாட்டையடி வழங்குங்கள் பின்னர் அவர்களின் சாட்சியத்தை ஒருபோதும் ஏற்றுக்கொள்ளாதீர்கள் நிச்சயமாக அவர்கள் தாம் தீயவர்கள். எனினும், (இவர்களில்) இதற்குப் பின்னர் பாவமன்னிப்புக்கோரி தங்களைத் திருத்திக்கொள்கிறவர்களை அல்லாஹ் மன்னிப்பவனாகவும், கிருபை செய்பவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 24:45)

(மேலும், அல்லாஹ் கூறினான்:)

யார் இறைநம்பிக்கையுடைய ஒழுக்கமுள்ள பேதைப் பெண்களின் மீது அவதூறு கூறுகிறார்களோ, அவர்கள் நிச்சயமாக இம்மையிலும் மறுமையிலும் சபிக்கப்பட்டவர்கள் இன்னும் அவர்களுக்குக் கடுமையான வேதனையுமுண்டு. (திருக்குர்ஆன் 24:23)

ஹதீஸ் 6857 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,'பேரழிவை ஏற்படுத்தும் ஏழு பெரும் பாவங்களைத் தவிர்த்து விடுங்கள்'' என்று கூறினார்கள். மக்கள்,'இறைத்தூதர் அவர்களே! அவை யாவை?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பது, சூனியம் செய்வது, முறையின்றி கொல்லக் கூடாதென அல்லாஹ் புனிதப்படுத்திய உயிரைக் கொல்வது, வட்டியைப் புசிப்பது, அநாதைகளின் செல்வத்தை உண்பது, போரின்போது புறமுதுகிட்டு ஓடுவது, இறைநம்பிக்கை கொண்ட அப்பாவிகளான பத்தினிப் பெண்களின் மீது அவதூறு கூறுவது ஆகியவையே (அந்தப் பெரும்பாவங்கள்)'' என்று கூறினார்கள்.

## அடிமைகளின் மீது அவதூறு கூறுதல்

ஹதீஸ் 6858. 'நிராபராதியான தம் அடிமையின் மீது (விபசார) அவதூறு கூறியவருக்கு மறுமை நாளில் சாட்டையடி வழங்கப்படும். அவர் சொன்னதைப் போன்று அந்த அடிமை இருந்தால் தவிர!' என்று அபுல் காசிம் (இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வழக்கு நடைபெறும் இடத்தில் இல்லாத ஒருவரின் மீது ஆட்சித் தலைவருடைய உத்தரவின் பேரில் மற்றொரு மனிதர் தண்டனையை நிறைவேற்றலாமா?

இவ்வாறு உமர்(ரலி) அவர்கள் உத்தரவிட்டுள்ளார்கள்.

ஹதீஸ் 6859 ஹதீஸ் 6860 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித் அல்ஜுஹனீ(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

(கிராமவாசி) ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து'அல்லாஹ்வை முன்வைத்துக் கேட்கிறேன்: நீங்கள் அல்லாஹ்வின் சட்டப்படியே எங்களிடையே தீர்ப்பளிக்கவேண்டும்'' என்றார். அப்போது அவரைவிட விளக்கமுடையவராக இருந்த அவரின் எதிரி (பிரதிவாதி) எழுந்து'அவர் சொல்வது உண்மைதான் எங்களிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார். (பின்னர் அக்கிராமவாசி)'என்னைப் பேச அனுமதியுங்கள் இறைத்தூதர் அவர்களே!"என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,'பேசு!"என்று கூறினார்கள். அவர்,'என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தான். அப்போது இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். (என் மகனுக்குக் கல்லெறி தண்டனை வழங்கிட வேண்டும் என்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது.) எனவே, நான் (இந்தத் தண்டனையிலிருந்து என் மகனைக் காப்பாற்றுவதற்காக) அதற்கு பதில் நூறு ஆடுகளையும் ஓர் அடிமையையும் பிணைத் தொகையாக வழங்கினேன். பிறகு அறிஞர்கள் சிலரிடம் நான் விசாரித்தபோது, என் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனை என்றும், இந்த மனிதரின் மனைவிக்குக் கல்லெறி தண்டனை (ரஜ்கி) வழங்கப்படவேண்டும் என்றும் என்னிடம் தெரிவித்தார்கள்'' என்று கூறினார்.

இதைக்கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்கள் இருவருக்கிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்: நூறு ஆடுகளும் அடிமையும் உம்மிடமே திருப்பித் தரப்பட வேண்டும். உம்முடைய மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலம் நாடு கடத்தும் தண்டனையும் வழங்கப்பட வேண்டும்'' என்று கூறிவிட்டு, அருகிலிருந்த உனைஸ்(ரலி) அவர்களை நோக்கி'உனைஸே! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று கேளுங்கள். அவள் (விபசாரக் குற்றத்தை) ஒப்புக்கொண்டால் அவளுக்குக் கல்லெறி தண்டனை கொடுங்கள்'' என்றார்கள். அவ்வாறே (உனைஸ்(ரலி) அவர்கள் அவளிடம் சென்று விசாரிக்க) அவளும் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டாள். எனவே, உனைஸ் அவர்கள் அவளுக்குக் கல்லெறி தண்டனை வழங்கினார்கள்.

## அத்தியாயம் 87 இழப்பீடுகள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

**“யார் ஓர் இறைநம்பிக்கையாளரை வேண்டுமென்றே கொலை செய்கிறானோ அவனுக்கு உரிய தண்டனை நரகமே ஆகும்‘ எனும் (திருக்குர்ஆன் 04:93 வது) இறைவசனம்.**

ஹதீஸ் 6861 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் (நபியவர்களிடம்), ‘இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்விடம் எந்தப் பாவம் மிகவும் பெரியது?’ என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ‘அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணை கற்பிப்பதாகும்‘‘ என்று கூறினார்கள். அந்த மனிதர், ‘பிறகு எது (மிகப் பெரும் பாவம்)?’ என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ‘அடுத்து உன் குழந்தை உன்னுடன் (அமர்ந்து உன்னுடைய உணவைப் பங்குபோட்டு) உண்ணும் என அஞ்சி அதை நீ கொலை செய்வதாகும்‘‘ என்றார்கள். அந்த மனிதர், ‘பிறகு எது?’ என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ‘உன் அண்டை வீட்டானின் மனைவியுடன் நீ விபசாரம் புரிவதாகும்‘‘ என்று கூறினார்கள். அப்போது இதை மெய்ப்பிக்கும் வகையில் வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், ‘அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்த தெய்வத்தையும் அழைக்கமாட்டார்கள் மேலும், அல்லாஹ் தடைவிதித்துள்ள எந்த உயிரையும் நியாயமின்றி அவர்கள் கொலை செய்யமாட்டார்கள் விபசாரமும் செய்யமாட்டார்கள். யாரேனும் இச்செயல்களைப் புரிந்தால் அவன் (தன் பாவத்திற்கான) தண்டனையை அடைந்தே தீருவான்‘‘ எனும் (திருக்குர்ஆன் 25:68 வது) வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 6862 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

புனிதம் வாய்ந்ததாகக் கருதப்படும் (மனித) உயிர் எதனையும் கொலைசெய்யாமல் இருக்கும் வரை ஓர் இறைநம்பிக்கையாளர் தம் மார்க்கத்தின் தாராள குணத்தைக் கண்டவண்ணமிருப்பார்.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6863 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

புனிதமிக்கதாகக் கருதப்படும் (மனித) உயிரை (மார்க்க ரீதியான) அனுமதியின்றி கொலை செய்வதானது, விழுந்தால் வெளிவர முடியாத நாசப் படுகுழிகளில் ஒன்றாகும்.

என ஸயீத் இப்னு அம்ர் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 6864 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமை நாளில் மனித உரிமைகள் தொடர்பான வழக்குகளில்) முதல்முதலாக மனிதர்களிடையே வழங்கப்படும் தீர்ப்பு, கொலைகள் தொடர்பானதாகத் தான் இருக்கும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6865 உபைதுல்லாஹ் இப்னு அதீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

பனு ஸுஹ்ரா குலத்தாரின் ஒப்பந்த நண்பரும் நபி (ஸல்) அவர்களுடன் பத்ருப் போரில் பங்கெடுத்தவருமான மிக்தாத் இப்னு அம்ர் அல்கிந்தீ (ரலி) அவர்கள் (நபி (ஸல்) அவர்களிடம், )’இறைத்தூதர் அவர்களே! இறைமறுப்பாளன் ஒருவனை நான் சந்தித்து நாங்கள்

இருவரும் சண்டையிட்டோம். அப்போது அவன் என்னுடைய கை ஒன்றை வாளால் வெட்டித் துண்டித்துவிட்டான். பிறகு அவன் (என்னைவிட்டுப்போய்) ஒரு மரத்தில் அபயம் தேடி (ஒளிந்து) கொண்டு அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்(து இஸ்லாத்தில் இணைந்)தேன்" என்று சொன்னான். அவன் இதைச் சொன்னதற்குப் பிறகு நான் அவனைக் கொல்லலாமா?' என்று கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், (வேண்டாம்) அவனைக் கொல்லலாம் அல்லவா?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அவனை நீ கொல்லாதே! அவ்வாறு நீ அவனைக் கொன்றுவிட்டால் அவனைக் கொல்வதற்கு முன்பு நீயிருந்த (குற்றமற்ற) நிலைக்கு அவன் வந்துவிடுவான். இந்த வார்த்தையைச் சொல்வதற்கு முன்பு அவனிருந்த (குற்றவாளி எனும்) நிலைக்கு நீ சென்றுவிடுவாய்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6866. இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மிக்தாத்(ரலி) அவர்களிடம், 'இறைமறுப்பாளர்களான சமூகத்தாரிடையே தம் இறைநம்பிக்கையை (மனத்திற்குள்) மறைத்து வைத்துக் கொண்டிருந்த ஒருவர் தம் இறைநம்பிக்கையை வெளிப்படுத்தும் தருவாயில் அவரை நீர் கொன்றுவிட்டீரே! அவ்வாறாயின், இதற்கு முன்னர் நீரும் இவ்வாறுதானே மக்காவில் உம்முடைய இறைநம்பிக்கையை (மனத்தில்) மறைத்து வைத்துக்கொண்டிருந்தீர்?' என்று கேட்டார்கள்.

## "ஓர் உயிரை வாழவைப்பவன் மக்கள் அனைவரையும் வாழவைப்பவனைப் போன்றவனாவான்' எனும் (திருக்குர்ஆன் 05:32 வது) இறைவசனம்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

(அதாவது) முறையின்றி ஓர் உயிரைக் கொலை செய்வதிலிருந்து விலகிக் கொள்கிறவர் மனிதர்கள் அனைவரையும் வாழவைத்தவரைப் போன்றவராவார்.

ஹதீஸ் 6867 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உலகில் அநியாயமாக ஒரு கொலை நடைபெறும்போது அந்தக் கொலையின் பாவத்தில் (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களின் முதலாவது மகனுக்கும் ஒரு பங்கு இருக்கவே செய்யும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6868 ('விடைபெறும்' ஹஜ்ஜின்போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றொருவரின் பிடரியை வெட்டிக் கொள்ளும் இறைமறுப்பாளர்களாக மாறி விடாதீர்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6869 ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்'விடைபெறும்' ஹஜ்ஜின்போது (மக்களுக்கு உரையாற்றுகையில்) என்னிடம், 'மக்களை மௌனமாக இருக்கச் சொல்லுங்கள்" என்று கூறினார்கள். (அமைதி திரும்பிய பின்னர்)'எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றொருவரின் பிடரியை வெட்டிக்கொள்ளும் இறைமறுப்பாளர்களாக மாறிவிடாதீர்கள் (ஒற்றுமையுடன் இருங்கள்)" என்றார்கள்.

இந்த ஹதீஸை, நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ பக்ரா(ரலி) இப்னு அப்பாஸ்(ரலி) ஆகியோரும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6870 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவனுக்கு இணைகற்பிப்பதும்'தாய் தந்தையரைப் புண்படுத்துவதும்' அல்லது பொய்ச் சத்தியம் செய்வதும்' பெரும் பாவங்களாகும்.

மற்றோர் அறிவிப்பில்,'இறைவனுக்கு இணைகற்பிப்பதும் பொய்ச் சத்தியம் செய்வதும்'தாய் தந்தையரைப் புண்படுத்துவதும்' அல்லது'மனிதனைக் கொலை செய்வதும்' பெரும் பாவங்களாகும்'' என்று வந்துள்ளது.

இந்த ஹதீஸை அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

(மேற்காணும் இரண்டு அறிவிப்புகளில் இவற்றின் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஷுஅபா(ரஹ்) அவர்களே ஐயப்பாட்டுடன் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6871 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவனுக்கு இணை கற்பிப்பதும், மனிதனைக் கொலை செய்வதும், தாய் தந்தையரைப் புண்படுத்துவதும்,'பொய் கூறுவதும்' அல்லது'பொய்ச் சாட்சியம் சொல்வதும்' பாவங்களிலேயே மிகப் பெரும் பாவங்களாகும்.

இதன் அறிவிப்பாளரான அனஸ்(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில்'பெரும் பாவங்கள்' என்று வந்துள்ளது.

ஹதீஸ் 6872 உசாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

எங்களை இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஜுஹைனா' குலத்தைச் சேர்ந்த'ஹுரக்கா' எனும் கூட்டத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள். அதிகாலைப் பொழுதில் அவர்களிடம் சென்றடைந்தோம். (அவர்களுடன் நடந்த சண்டையில்) அவர்களை நாங்கள் தோற்கடித்தோம். அப்போது நானும் அன்சாரிகளில் ஒருவரும் அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த ஒரு மனிதரிடம் போய்ச் சேர்ந்து அவரை நாங்கள் சுற்றி வளைத்துக் கொண்டோம். அப்போது அவர்'லாயிலாஹ இல்லல்லாஹ்'' (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்றார். எனவே, அவரைவிட்டு அந்த அன்சாரி (நண்பர்) ஒதுங்கி கொண்டார். ஆனால், நான் என் ஈட்டியை அவரின் மீது பாய்ச்சி அவரைக் கொன்றுவிட்டேன். நாங்கள் (மதீனா) வந்து சேர்ந்தபோது இந்த விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. அப்போது நபி(ஸல்) அவர்கள் என்னிடம்,'உசாமா!'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று அவர் சொன்னதற்குப் பிறகுமா அவரை நீங்கள் கொன்றீர்கள்?' என்று கேட்டார்கள். நான்'அவர் உயிரைப் காத்துக்கொள்ளவே (அவ்வாறு கூறினார்)'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'லாயிலாஹ இல்லல்லாஹ் என்று அவர் சொன்னதற்குப் பிறகுமா அவரை நீங்கள் கொன்றீர்கள்?' என்று திரும்பத் திரும்ப (அதிருப்தியுடன்) என்னிடம் கேட்டுக் கொண்டேயிருந்தார்கள். எந்த அளவிற்கென்றால், அதற்கு முன்னால் நான் இஸ்லாத்தைத் தழுவாமல் (இந்நிகழ்ச்சி) நடந்த பின்னால் இஸ்லாத்தைத் தழுவி) இருந்தால் நன்றாயிருக்குமே! என்று ஆசைப்பட்டேன்.

ஹதீஸ் 6873 உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அறிவித்தார்.

''அல்லாஹ்விற்கு நாங்கள் எதனையும் இணை கற்பிக்கமாட்டோம்: திருடமாட்டோம் விபசாரம் செய்யமாட்டோம் அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ள எந்த உயிரையும் கொலை செய்யமாட்டோம் கொள்ளையடிக்கமாட்டோம் (எந்த நற்செயலிலும் உங்களுக்கு) மாறு செய்யமாட்டோம் (இவற்றை நாங்கள் செய்யாமல்விட்டுவிட்டால்) எங்களுக்கு சொர்க்கம் உண்டு. இவற்றில் ஏதேனும் ஒன்றை நாங்கள் செய்தால் அதன் முடிவு அல்லாஹ்விடம் உள்ளது' என்று

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழிப் பிரமாணம் செய்துகொடுத்த தலைவர்களில் நானும் ஒருவனாவேன்.

ஹதீஸ் 6874 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நமக்கெதிராக எவன் ஆயுதம் ஏந்துகிறானோ அவன் நம்மைச் சார்ந்தவனல்லன்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ மூஸா(ரலி) அவர்களும் இதை அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6875 அஹ்னஃப் இப்னு கைஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் (ஜமல் போரில்) இந்த மனிதருக்கு (அலீ(ரலி) அவர்களுக்கு) உதவுவதற்காக (காலதாமதமாக)ப் போய்க் கொண்டிருந்தேன். அப்போது அபூ பக்ரா(ரலி) அவர்கள் என்னைச் சந்தித்து,'எங்கே செல்கிறீர்கள்?' என்று கேட்டார்கள்.'நான் இந்த மனிதருக்கு உதவச் சொல்கிறேன்'' என்றேன்.

அதற்கு அவர்கள் கூறினார்கள்:'நீங்கள் திரும்பிச் சென்று விடுங்கள். ஏனெனில், (ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள்,'இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் சண்டையிட்டால் அதில் கொன்றவர், கொல்லப்பட்டவர் ஆகிய இருவருமே நரகத்திற்கே செல்வார்கள்'' என்றார்கள். அப்போது நான்,'இறைத்தூதர் அவர்களே! இவரோ கொலை செய்தவர். (நரகத்திற்குச் செல்வது சரி!) கொல்லப்பட்டவரின் நிலை என்ன? (அவர் ஏன் நரகம் செல்ல வேண்டும்?)' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அவரைக் கொல்ல வேண்டுமென்று இவர் பேராசை கொண்டிருந்தாரே!"என்று கூறினார்கள்.

## (திருக்குர்ஆன் 02:178 வது) இறைவசனம்.

"இறைநம்பிக்கை கொண்டோரே! கொலை செய்யப்பட்டவர்களுக்காகப் பழிவாங்குவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது. சுதந்திர மனிதன் சுதந்திர மனிதனுக்கு பதிலாகவும், அடிமை அடிமைக்கு பதிலாகவும், பெண் பெண்ணுக்கு பதிலாகவும் (பழிவாங்கப்படுவர். கொலை செய்த) எவனுக்கேனும் (பாதிக்கப்பட்ட சகோதரனா(கிய கொலையுண்டவனின் வாரிசுகளா)ல் ஏதேனும் மன்னிப்பு அளிக்கப்பட்டால், நியதியைப் பின்பற்றி நன்முறையில் அவனிடம் (இழப்பீட்டுத் தொகையை) நிறைவேற்றிட வேண்டும். இது, உங்களுடைய இறைவனிடமிருந்து கிடைத்த சலுகையும் கருணையுமாகும். இதன் பின்னரும் எவரேனும் வரம்பு மீறினால் அவருக்குத் துன்பமிகு வேதனை உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 02:178 வது) இறைவசனம்.

## ஒப்புதல் வாக்குமூலம் அளிக்கும் வரை கொலையாளியிடம் (ஆட்சித் தலைவர்) விசாரணை செய்வதும், குற்றவியல் தண்டனைகளில் ஒப்புதல் வாக்குமூலம் அளிப்பதும்.

ஹதீஸ் 6876 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒரு யூதன் ஒரு சிறுமியின் தலையை இரண்டு கற்களுக்கிடையே வைத்து நசுக்கிவிட்டான். அச்சிறுமியிடம்,'உன்னை இப்படிச் செய்தவர் யார்? இன்னாரா? இன்னாரா?' என்று (ஒவ்வொரு பெயராகச் சொல்லிக்) கேட்கப்பட்டது. இறுதியில் அந்த யூதனுடைய பெயர் சொல்லப்பட்டது. (அச்சிறுமி'ஆம்' என்று ஒப்புக்கொண்டாள்.) எனவே, அந்த யூதன் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டான். அவன் தன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொள்ளும் வரை அவனிடம்

விசாரித்துக் கொண்டே இருந்தார்கள். (அவன் ஒப்புக் கொண்டவுடன்) அவனுடைய தலை கல்லால் நசுக்கப்பட்டது.

## கல் அல்லது தடியால் (தாக்கித்) கொலை செய்தால்..?

ஹதீஸ் 6877 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

மதீனாவில் வெள்ளி நகை அணிந்து கொண்டு ஒரு சிறுமி (வீட்டிலிருந்து) புறப்பட்டாள். அப்போது அவளின் மீது யூதன் ஒருவன் கல் எறிந்தான். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த அந்தச் சிறுமி நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டாள். அவளிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இன்னார் உன்னைத் தாக்கினாரா?' என்று கேட்டார்கள். அவள் (இல்லை என்று) தலையால் சைகை செய்தாள். மீண்டும் அவர்கள்,'இன்னார் உன்னைத் தாக்கினாரா?' என்று கேட்டார்கள். அவள் அப்போதும் (இல்லை என்று) சைகை செய்தாள். தொடர்ந்து (மூன்றாம் முறையாக) அவளிடம் அவர்கள்'இன்னாரா உன்னைத் தாக்கினார்?' என்று கேட்டபோது அவள் (ஆம் என்று கூறும் விதமாக) தலையை கீழ் நோக்கித் தாழ்த்தி சைகை செய்தாள். எனவே, அந்த யூதனை அழைத்து வருமாறு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அவனை அழைத்துவந்து விசாரித்தபோது அவன் குற்றத்தை ஒப்புக் கொண்டான்.) எனவே, இரண்டு கற்களுக்கிடையில் வைத்து அவ(னது தலையி)னை நசுக்கிக் கொல்லுமாறு நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

## (திருக்குர்ஆன் 05:45 வது) இறைவசனம்.

"அவர்களுக்கு நாம் அ(ந்த வேதத்)தில், உயிருக்கு உயிர் கண்ணுக்குக் கண், மூக்குக்கு மூக்கு, காதுக்குக் காது, பல்லுக்குப் பல் ஆகவும் காயங்களுக்கு(ச் சமமான காயங்களாகவும்) நிச்சயமாகப் பழி வாங்கப்படும் என்று விதித்திருந்தோம். எனினும், ஒருவர் (பழி வாங்குவதை) தர்மமாகவிட்டுவிட்டால், அது அவரின் பாவங்களுக்குப் பரிகாரமாகும். யார் அல்லாஹ் அருளிய (வேதக் கட்டளைப்)படி தீர்ப்பு வழங்கவில்லையோ நிச்சயமாக அவர்கள் அநியாயக்காரர்களே!"எனும் (திருக்குர்ஆன் 05:45 வது) இறைவசனம்.

ஹதீஸ் 6878 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவருமில்லை. நான் அல்லாஹ்வின் தூதராவேன்' என உறுதி மொழி கூறிய முஸ்லிமான எந்த மனிதரையும் மூன்று காரணங்களில் ஒன்றை முன்னிட்டே தவிர வேறெதற்காகவும் கொலை செய்ய அனுமதி இல்லை.

(அவை:) 1. ஒரு மனிதரைக் கொலை செய்ததற்கு பதிலாகக் கொலை செய்வது. 2. திருமணமானவன் விபசாரம் செய்வது. 3.'ஜமாஅத்' எனும் சமூகக் கூட்டமைப்பைக் கைவிட்டு, மார்க்கத்திலிருந்தே வெளியேறி விடுவது.

## (கல்லால் அடித்துக் கொலை செய்தவனுக்குக்) கல்லால் அடித்து மரண தண்டனை நிறைவேற்றுவது.

ஹதீஸ் 6879 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒரு யூதன் ஒரு சிறுமியின் வெள்ளி நகைக்காக அந்தச் சிறுமியைக் கல்லால் (நசுக்கிக்) தாக்கினான். அவளுடைய உயிர் ஊசலாடிக் கொண்டிருந்த நிலையில் நபி(ஸல்) அவர்களிடம் அச்சிறுமி கொண்டு வரப்பட்டாள். அப்போது (அவளிடம்) நபி(ஸல்) அவர்கள்,'இன்னாரா

உன்னைத் தாக்கினார்?' என்று கேட்டார்கள். அவள்'இல்லை' என்று தலையால் சைகை செய்தாள். பிறகு இரண்டாவது முறை (வேறொரு நபர் குறித்து) நபி(ஸல்) அவர்கள் கேட்டபோது அப்போதும்'இல்லை' என்று தலையால் சைகை செய்தாள். மூன்றாம் முறை நபி(ஸல்) அவர்கள் (கொலையாளியின் பெயர் கூறி) அவளிடம் கேட்டபோது அவள்'ஆம்' என்று தலையால் சைகை செய்தாள். எனவே, இரண்டு கற்களுக்கிடையில் (அவன் தலையை வைத்து நசுக்கி) அவனைக் கொல்லுமாறு நபி(ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.

## கொல்லப்பட்டவரின் உறவினர்களுக்கு (இழப்பீடு பெறுதல், அல்லது பழிவாங்குதல் ஆகிய) இரண்டு யோசனையில் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் உரிமை உண்டு.

ஹதீஸ் 6880 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அறியாமைக் காலத்தில் தங்கள் குலத்தாரில் ஒருவரைக் கொலை செய்ததற்கு பதிலாக மக்கா வெற்றி ஆண்டில்'பனுலைஸ்' குலத்தாரில் ஒருவரை குஸாஆ குலத்தார் கொலை செய்தனர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து (உரையாற்றுகையில் பின்வருமாறு) கூறினார்கள்:

இந்த(ப் புனித) மக்கா நகரைவிட்டு யானைப் படையை அல்லாஹ் தடுத்து நிறுத்தினான். மேலும், மக்காவாசிகளின் மீது அல்லாஹ் தன் தூதருக்கும் நம்பிக்கையாளருக்கும் ஆதிக்கம் அளித்தான். எச்சரிக்கை! மக்காவில் யுத்தம் செய்வது எனக்கு முன்னர் யாருக்கும் அனுமதிக்கப்பட்டதில்லை. எனக்குப் பின்னரும் எவருக்கும் அனுமதிக்கப்படப் போவதில்லை. நினைவில் கொள்க! எனக்குக்கூட பகலில் சிறிது நேரம் யுத்தம் புரியவே அனுமதிக்கப்பட்டிருந்தது. எச்சரிக்கை! சந்தேகத்திற்கிடமின்றி (இங்கு) போரிடுதல் இந்த நிமிடத்திலிருந்து (முற்றாகத்) தடை செய்யப்பட்டுவிட்டது. எனவே, இந்நகரின் முட்செடி பிடுங்கப்படக்கூடாது. இதன் மரம் வெட்டப்படக் கூடாது. இங்கே தவறி விழும் பொருட்களை (அவற்றைப் பற்றி) மக்களுக்கு அறிவிப்புச் செய்பவரைத் தவிர (பொருளுக்கு உரிமையற்றவர் யாரும்) எடுக்கக் கூடாது. ஒருவர் கொலை செய்யப்பட்டால் அவரின் உறவினர்கள் இழப்பீடு பெறுதல், அல்லது பழிவாங்குதல் ஆகிய இரண்டு யோசனைகளில் சிறந்ததை அவர்கள் தேர்வு செய்யலாம்'' என்று கூறினார்கள்.

அப்போது யமன்வாசிகளில்'அபூ ஷாத்து' என்றழைக்கப்பட்ட ஒருவர் எழுந்து, இறைத்தூதர் அவர்களே! (இந்த உரையை) எனக்கு எழுதித் தரச்சொல்லுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இவருக்கு (என் உரையை) எழுதிக்கொடுங்கள்'' என்றார்கள். அப்போது குறைஷியரில் ஒருவர்,'இறைத்தூதர் அவர்களே! (மக்காவின் செடிகொடிகளை வெட்டக்கூடாது என்பதிலிருந்து வாசனைத் தாவரமானது)'இத்கிர்' புல்லிற்கு விலக்கு அளியுங்கள். ஏனென்றால், நாங்கள் அதை எங்கள் வீடுகளி(ன் கூரைகளி)லும் எங்கள் மண்ணறைகளிலும் தான் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம்'' என்றார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'இத்கிர் புல்லைத் தவிர!"என்றார்கள்.

அபூ நுஐம்(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்'யானைப்படை என்பதற்கு பதிலாக,'கொலை செய்வதை' என்று இடம் பெற்றுள்ளது எனச் சிலர் அறிவித்துள்ளனர்.

உபைதுல்லாஹ் இப்னு மூஸா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்'கொலையுண்டவரின் குடும்பத்தார் (சார்பாக) பழிவாங்கல்' என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 6881 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

பனூ இஸ்ராயீல்களிடையே (கொலை நடந்துவிட்டால்) பழிக்குப்பழி (ம்ஸாஸ்) வாங்குதல் (நடைமுறையில்) இருந்தது ஆனால், இழப்பீடு (பெற்றுக் கொண்டு கொலையாளியை மன்னித்துவீடும் சட்டம் நடைமுறையில்) இருக்கவில்லை. எனவேதான், அல்லாஹ் (தன்னுடைய வேதத்தில்) இந்தச் சமுதாயத்தை நோக்கி'இறைநம்பிக்கை கொண்டோரே! கொலை செய்யப்பட்டவர்களுக்காகப் பழிவாங்குவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது. சுதந்திர மனிதன் சுதந்திர மனிதனுக்கு பதிலாகவும், அடிமை அடிமைக்கு பதிலாகவும், பெண் பெண்ணுக்கு பதிலாகவுமே (பழிவாங்கப்படுபவர் கொலை செய்த) எவனுக்கேனும் (பாதிக்கப்பட்ட) சகோதரனா(கிய கொலையுண்டவனின் வாரிசுகளா)ல் ஏதேனும் மன்னிப்பு அளிக்கப்பட்டால், நியதியைப் பின்பற்றி நன்முறையில் அவனிடம் (இழப்பீட்டுத் தொகையை) நிறைவேற்றிட வேண்டும். இது, உங்களுடைய இறைவனிடமிருந்து கிடைத்த சலுகையும் கருணையுமாகும். இதன் பின்னரும் எவரேனும் வரம்பு மீறினால் அவருக்குத் துன்பமிகு வேதனை உண்டு'' (திருக்குர்ஆன் 02:178) என்று கூறுகிறான்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:'மன்னிப்பு அளித்தல்' ('அஃப்வ்') என்பது, வேண்டுமென்றே செய்த கொலைக்கு உயிரீட்டுத் தொகையை ஏற்பதைக் குறிக்கும். நியதியைப் பேணி நல்ல முறையில் அதைக் கொலையாளி செலுத்திட வேண்டும்.

## நியாயமின்றி ஒரு மனிதனைக் கொலை செய்யத் தூண்டுவது.

ஹதீஸ் 6882 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்களிலேயே அல்லாஹ்வின் (கடுமையான) கோபத்திற்கு ஆளானோர் மூவர் ஆவர். 1. (மக்கா) புனித எல்லைக்குள் பெரும் பாவம் புரிகிறவன். 2. இஸ்லாத்தில் இருந்துகொண்டு அறியாமைக் காலக் கலாசாரத்தை விரும்புகிறவன். 3. ஒரு மனிதனின் இரத்தத்தைச் சிந்தச் செய்வதற்காக நியாயமின்றி அவனைக் கொலை செய்யத் தூண்டுகிறவன்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

## தவறுதலாக நிகழ்ந்துவிட்ட கொலைக்குப் பின் (கொல்லப்பட்டவரின் உறவினர்கள் கொலையாளியை) மன்னித்துவிடுவது.

ஹதீஸ் 6883. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போரின் (தொடக்கத்தின்)போது இணைவைப்பாளர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். பின்னர் மக்களிடையே இப்லீஸ் புகுந்து),'அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களைக் கவனியுங்கள்'' என்று கூவினான். எனவே, முஸ்லிம்களில் முன் அணியினர் பின் அணியினரை நோக்கித் திரும்பி (அவர்களைத் தாக்கத் தொடங்கி)னர். அப்போது முஸ்லிம்கள் அல்யமான்(ரலி) அவர்களைக் கொன்றுவிட்டனர். உடனே (அவரின் புதல்வர்) ஹுதைஃபா(ரலி) அவர்கள்'என் தந்தை என் தந்தை'' என்று கூறினார். (ஆயினும் எதிரி என்று நினைத்து) அவரின் தந்தையை மக்கள் கொன்றுவிட்டனர். அப்போது ஹுதைஃபா(ரலி) அவர்கள்,'அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!"என்று (கொலை செய்தவர்களை நோக்கிக்) கூறினார்கள். தோல்வியுற்றவர்(களான இணைவைப்பாளர்)களில் சிலர் தாயிஃப் நகருக்குச் சென்றுவிட்டனர்.

இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர்களில் வந்துள்ளது.

அல்லாஹ் கூறினான்:

தவறாக அன்றி, ஓர் இறைநம்பிக்கையாளர் மற்றோர் இறைநம்பிக்கையாளரைக் கொலை செய்வது அனுமதிக்கப்பட்டதன்று. அவ்வாறு தவறாக எவரேனும் ஓர் இறைநம்பிக்கையாளரைக் கொலை செய்தால் இறைநம்பிக்கை கொண்ட ஓர் அடிமையை விடுதலை செய்வதும் கொல்லப்பட்டவரின் குடும்பத்தாருக்கு இழப்பீடு வழங்குவதும் அதற்குப் பரிகாரமாகும் அவரின் குடும்பத்தார் (அதை மன்னித்து) தர்மமாகவிட்டுவிட்டால் தவிர - அதாவது கொலையுண்டவர் உங்களுடைய எதிரி சமூகத்தைச் சேர்ந்த இறைநம்பிக்கையாளராக இருந்தால் அப்போது இறைநம்பிக்கை கொண்ட ஓர் அடிமையை விடுதலை செய்யவேண்டும். (இழப்பீடு செலுத்த வேண்டியதில்லை). கொலையுண்டவர் உங்களுடன் (சமாதான) உடன்படிக்கை செய்துகொண்ட சமூகத்தைச் சேர்ந்தவராக இருப்பின், அவரின் குடும்பத்தாருக்கு இழப்பீடு வழங்குவதுடன் இறைநம்பிக்கை கொண்ட ஓர் அடிமையை விடுதலையும் செய்ய வேண்டும். இவ்வாறு (அடிமையை விடுதலை) செய்ய இயலாதபோது, அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரும் பொருட்டு தொடர்ச்சியாக இரண்டு மாதங்கள் நோன்பு நோற்றிடவேண்டும். அல்லாஹ் நன்கறிந்தவனாக விவேகமிக்கவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:92)

## ஒருவர் தாம் கொலை செய்ததாக ஒரே முறை வாக்குமூலம் அளித்தாலும் அதைக் கொண்டே அவர் (பதிலுக்குக்) கொல்லப்படுவார்.

ஹதீஸ் 6884 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒரு யூதன் ஒரு சிறுமியின் தலையை இரண்டு கற்களுக்கிடையே வைத்து நசுக்கிவிட்டான். அச்சிறுமியிடம், 'உன்னை இப்படிச் செய்தவர் யார்? இன்னாரா? இன்னாரா?' என்று (ஒவ்வொரு பெயராகச் சொல்லிக்) கேட்கப்பட்டது. இறுதியில் அந்த யூதனுடைய பெயர் சொல்லப்பட்டவுடன் அச்சிறுமி ஆம் அவன்தான்' என்று) தலையால் சைகை செய்தாள். எனவே, அந்த யூதன் (நபி(ஸல்) அவர்களிடம்) கொண்டுவரப்பட்டான். (அவனிடம் விசாரிக்கப்பட்டபோது) அவன் (குற்றத்தை) ஒப்புக் கொண்டான். எனவே, நபி(ஸல்) அவர்கள் அவனுடைய தலையைக் கல்லால் நசுக்கும்படி உத்தரவிட அவ்வாறே அவனுடைய தலை கல்லால் நசுக்கப்பட்டது.

ஹம்மாம் இப்னு யஹ்யா(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்'இரண்டு கற்களால் (நசுக்கப்பட்டது)" என இடம் பெற்றுள்ளது.

## பெண்ணைத் கொன்றதக்குத் தண்டனையாக ஆண் கொல்லப்படல்.

ஹதீஸ் 6885 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒரு சிறுமியை, அவளுடைய வெள்ளி நகைக்காக கொலை செய்த (ஆண்) யூதன் ஒருவனைக் கொலை செய்திடுமாறு நபி(ஸல்) அவர்கள் ஆணையிட்டார்கள்.

## ஆண்களாயினும் பெண்களாயினும் காயங்களுக்கும் தண்டனை உண்டு.

பெண்ணைக் கொன்றதற்குத் தண்டனையாக ஆண் கொல்லப்படுவான் என்றே அறிஞர்கள் கூறுகிறார்கள்.

"ஆணைக் கொன்றதற்குத் தண்டனையாகப் பெண் பழிவாங்கப்படுவாள். இது வேண்டுமென்றே நடந்த எல்லாக் கொலைகளுக்கும், கொலையைவிடக் குறைவான காயங்களுக்கும் பொருந்தும்" என உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) கூறினார் என அறிவிக்கப்பட்டுள்ளது. உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்), இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) ஆகியோரும் இவ்வாறே கூறியுள்ளனர். அபுஸ்ஸினாத்(ரஹ்) அவர்கள் தம் தோழர்களிடமிருந்து இதையே அறிவித்தார்கள்.

ருபய்யிஉ பின்த் நள்ர் (ரலி) அவர்களின் சகோதரி ஓர் ஆணைக் காயப்படுத்திவிட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள்'(இதற்கும்) பழிவாங்கல் உண்டு'' என்றார்கள்.

ஹதீஸ் 6886 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது (மயக்கமடைந்தார்கள். அப்போது) அவர்களின் வாய் ஓரத்தில் நாங்கள் மருந்தூற்றினோம். உடனே அவர்கள், 'என்னுடைய வாயில் மருந்தூற்றாதீர்கள்'' என்று (சைகையால்) கூறினார்கள். அப்போது நாங்கள் 'நோயாளி மருந்தை வெறுப்பதைப் போன்றுதான் (நபியவர்களும் வெறுக்கிறார்கள். ஊற்ற வேண்டாமெனத் தடை செய்யவில்லை)'' என்று சொல்லிக் கொண்டோம். அவர்களின் மயக்கம் (முழுமையாகத்) தெளிந்தபோது '(என் வாயில் மருந்தூற்றவேண்டாம் என்று நான் தடுத்தும் நீங்கள் கேட்காததற்குப் பகரமாக) உங்களில் ஒருவர் பாக்கியில்லாமல் (இந்த வீட்டிலுள்ள) அனைவர் வாயிலும் மருந்தூற்றப்பட வேண்டும்'' என்று கூறிவிட்டு, 'ஆனால் அப்பாஸ் அவர்களைத் தவிர! ஏனெனில், மருந்தூற்றும்போது உங்களுடன் அவர் கலந்து கொள்ளவில்லை'' என்று கூறினார்கள்.

## ஒருவர் ஆட்சியாளரிடம் (வழக்கைக் கொண்டு) செல்லாமல் தம் உரிமையைத் தாமே மீட்டெடுப்பதும் (தம் உறவினருக்காகத்) தாமே பழிவாங்குவதும்.

ஹதீஸ் 6887 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாமே (காலத்தால்) பிந்தியவர்களும் மறுமை நாளில் (அந்தஸ்தால்) முந்தியவர்களும் ஆவோம்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6888 மேற்சொன்ன அதே அறிவிப்பாளர் தொடரில் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உங்கள் அனுமதியின்றி ஒருவர் உங்கள் வீட்டுக்குள் எட்டிப் பார்த்தபோது அவரின் மீது நீங்கள் சிறு கல்லைச் சுண்டி எறிய, அது அவரின் கண்ணைப் பறித்துவிட்டால் உங்களின் மீது எந்தக் குற்றமும் இல்லை.

ஹதீஸ் 6889 யஹ்யா இப்னு ஸயீத் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

"ஒருவர் நபி (ஸல்) அவர்களின் இல்லத்திற்குள் (ஒரு துவாரம் வழியாக) எட்டிப் பார்த்தார். அப்போது அவரை நோக்கி நபி (ஸல்) அவர்கள் நீளமான அம்பின் கூர்மையான பகுதியை நேராகக் கொண்டு சென்றார்கள்'' என்று ஹுமைத் (ரஹ்) அவர்கள் கூறினார்கள். அப்போது நான் 'இதை உங்களுக்கு அறிவித்தவர் யார்?' என்று கேட்டேன். அதற்கு ஹுமைத் (ரஹ்) அவர்கள், 'அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் தாம் ( அறிவித்தார்கள்)'' என்று பதிலளித்தார்கள்.

## ஒருவர் நெரிசலில் சிக்கி இறந்துவிட்டால் அல்லது கொல்லப்பட்டால்...?

ஹதீஸ் 6890 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

உஹுதுப் போர் நாளில் (ஆரம்பத்தில்) இணைவைப்பாளர்கள் தோற்கடிக்கப்பட்டாக்ள். அப்போது இப்லீஸ், 'அல்லாஹ்வின் அடியார்களே! உங்களுக்குப் பின்னால் இருப்பவர்களைக் கவனியுங்கள்!"என்று கத்தினான். உடனே முஸ்லிம்களில் முன் அணிப் படையினர் திரும்பிச் சென்று (எதிரிகள் தாம் பின்னால் இருக்கிறார்கள் என்று நினைத்துக்கொண்டு) பின் அணிப்படையினருடன் மோதினார்கள். அப்போது அங்கு (தமக்கு அருகேயிருந்த) தம் தந்தை

அல்யமான் (ரலி) அவர்கள் (முன்னணிப் படையினரிடம்) சிக்கிக் கொண்டதை ஹுதைஃபா (ரலி) அவர்கள் பார்த்துவிட்டு, 'அல்லாஹ்வின் அடியார்களே! (அவர்) என் தந்தை! என் தந்தை" என்று (உரத்த குரலில்) கூறினார்கள். ஆனால், அல்லாஹ்வின் மீதாணையாக! அவரைக் கொன்ற பின்பே (அவரைவிட்டு) அவர்கள் விலகினார்கள். ஹுதைஃபா (ரலி) அவர்கள் 'அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!" என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள். ஹுதைஃபா (ரலி) அவர்கள் மன்னித்தால் அவர்கள் இறைவனை அடையும் வரை (அவர்களின் வாழ்க்கையில் நல்ல பலன் இருந்துகொண்டேயிருந்தது.

## ஒருவர் தவறுதலாகத் தம்மைத் தாமே கொலை செய்துகொண்டால் அவருக்காக இழப்பீடு கிடையாது.

ஹதீஸ் 6891 ஸலமா இப்னு அக்வஃ (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் கைபரை நோக்கிப் (போருக்காகப்) புறப்பட்டோம். அப்போது மக்களில் ஒருவர் (என் தந்தையின் சகோதரிடம்) 'ஆமிரே! உங்கள் கவிதைகளில் சிலவற்றை (ப் பாடி) எங்களைச் செவியுறச் செய்யமாட்டீர்களா?' என்று கூறினார். எனவே, ஆமிர் (ரலி) அவர்கள் (சில கவிதைகளைப் பாடி) மக்களின் ஒட்டகங்களை விரைந்தோடச் செய்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'இந்த ஒட்டகவோட்டி யார்?' என்று கேட்டார்கள். 'ஆமிர் இப்னு அக்வஃ" என்று மக்கள் பதிலளித்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள் 'அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக!" என்று கூறினார்கள். (அந்தப் பிரார்த்தனையின் பொருளைப் புரிந்து கொண்ட) மக்கள், 'அவர் (நீண்ட காலம் உயிர் வாழ்வதன்) மூலம் எங்களுக்குப் பயன் கிடைக்க (பிரார்த்தனை) செய்யக் கூடாதா (இறைத்தூதர் அவர்களே!)?' என்று கேட்டார்கள். அவர் அன்றைய இரவின் காலையில் (தம் முழங்காலில் தம் வாளாலேயே) தாக்கப்பட்டு இறந்தார். அப்போது மக்கள், 'ஆமிரின் நற்செயல்கள் அழிந்துவிட்டன அவர் (தம் வாளால் தம்மைத் தாமே குத்திக்கொண்டு) தற்கொலை செய்துகொண்டார்" என்று பேசினார். (கைபரிலிருந்து) நான் திரும்பியபோது 'ஆமிரின் நற்செயல்கள் அழிந்துபோயின" என்று மக்கள் பேசிக்கொண்டனர். எனவே, நான் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, 'இறைத்தூதர் அவர்களே! என் தந்தையும் என் தாயும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! (என் தந்தையின் சகோதரர்) ஆமிர் (ரலி) அவர்களின் (நற்செயல்கள் புரிந்த நன்மை, அறப்போர் புரிந்த நன்மை ஆகிய) இரண்டு நன்மைகள் உண்டு. அவர் துன்பங்களைத் தாங்கினார் (இறை வழியில்) அறப்போரும் புரிந்தார். அவர் பெற்ற நற்பலனை விட அதிகமான நற்பலனைப் பெற்றுத்தரும் (வீர) மரணம் எது?' என்று கேட்டார்கள்.

## ஒருவர் மற்றவர் (கரம்)தனைக் கடிக்க, கடித்தவரின் முன்பற்கள் விழுந்துவிட்டால்...?

ஹதீஸ் 6892 இம்ரான் இப்னு ஹுஸைன் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் மற்றொரு மனிதரின் கையைக் கடித்தார். அப்போது (கடிபட்டவர்) தம் கையை அவரின் வாயிலிருந்து இழுத்தார். இதனால் கடித்தவரின் முன் பற்கள் இரண்டு விழுந்துவிட்டன. இதையொட்டி அவர்கள் இருவரும் நபி (ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டுவந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'உங்களில் ஒருவர் தம் சகோதரனின் கையைக் கடா ஒட்டகம் கடிப்பதைப் போன்று கடிப்பாரா? (அவர் கடித்துக் கொண்டிருக்கும் வரை அவன் தன்னுடைய

கையை அப்படியே வைத்துக் கொண்டிருப்பானா? பல்லிழந்த) உமக்கு இழப்பீட்டுத் தொகை கிடையாது'' என்றார்கள்.

ஹதீஸ் 6893 யஃலா இப்னு உமய்யா(ரலி) அறிவித்தார்.

நான் (தபூக்) போருக்குப் புறப்பட்டுச் சென்றேன். அப்போது ஒருவர் (இன்னொருவரைக்) கடித்தார். கடிபட்ட மனிதர் (தம் கையை விடுவிக்கும் போது) கடித்தவரின் முன்பல்லைக் கழற்றிவிட்டார். அப்போது நபி(ஸல்) அவர்கள் இதற்கு இழப்பீடு தரத் தேவையில்லை என்று தீர்ப்பளித்தார்கள்.

## பல்லுக்குப் பல்

ஹதீஸ் 6894 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(என் பாட்டனார்) நள்ர் அவர்களின் புதல்வி (ருபய்யிஉ பின்த் நள்ர்) ஓர் இளம் பெண்ணின் கன்னத்தில் அறைந்து அவளுடைய முன்பல்லை உடைத்துவிட்டார். எனவே, அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் (வழக்கைக் கொண்டு) வந்தார்கள். அப்போது நபியவர்கள் பழிவாங்கிடுமாறு உத்தரவிட்டார்கள்.

## விரல்களுக்கான இழப்பீடுகள் (சமமானவையா? மாறுபட்டவையா?)

ஹதீஸ் 6895 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இதோ இந்த மோதிர விரலும் கட்டை விரலும் (இழப்பீட்டில்) சமமானவையே.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இதைப் போன்றே நபி(ஸல்) அவர்களிடம் தாம் செவியேற்றதாக இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அறிவித்துள்ள ஒரு ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக வந்துள்ளது.

## ஒரு மனிதரை ஒரு கூட்டமே சேர்ந்து கொலை செய்துவிட்டாலோ காயப்படுத்திவிட்டாலோ அவர்கள் அனைவருமே தண்டிக்கப்படுவார்களா? பழிவாங்கப்படுவார்களா?

முதர்ரிஃப்(ரஹ்) அவர்கள் கூறினார்:

ஒருவர் திருடிவிட்டார் என இரண்டு பேர் சாட்சியம் அளித்தனர். எனவே, அலீ(ரலி) அவர்கள் (குற்றம் சாட்டப்பட்ட) அவரின் கையை வெட்டும்படி உத்தரவிட்டார்கள். பிறகு வேறொரு மனிதரை (சாட்சியம் அளித்த) அவ்விருவரும் அழைத்துவந்து'(இவர் தாம் திருடியவர் முதலில்) நாங்கள் கூறியது தவறு'' என்றனர். அப்போது அலீ(ரலி) அவர்கள் (முதல் மனிதருக்கெதிராக) அவர்கள் கூறிய சாட்சியத்தைச் செல்லாததாகக்கினார்கள். மேலும், அந்த முதல் நபருக்காக அவர்கள் இருவரிடமும் இழப்பீடும் பெறப்பட்டது. அத்துடன், 'நீங்கள் இருவரும் திட்டமிட்டே (இவ்வாறு பொய்ச் சாட்சியம்) கூறினீர்கள் என்று நான் அறிந்திருந்தால் உங்கள் இருவரின் கைகளையும் வெட்டியிருப்பேன்'' என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 6896 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஒரு சிறுவன் வஞ்சித்துக் கொல்லப்பட்டான். அப்போது உமர்(ரலி) அவர்கள், 'இந்தக் கொலையில் (யமனிலுள்ள) ஸன்ஆ வாசிகள் அனைவரும் பங்கெடுத்துக் கொண்டிருந்தாலும் அவர்கள் அனைவரையும் நான் (பதிலுக்குக்) கொல்வேன்'' என்றார்கள்.

ஹகீம் அஸ்ஸன்ஆனி(ரஹ்) அவர்களின் அறிவிப்பில்,'நான்கு பேர் (சேர்ந்து) ஒரு சிறுவனைக் கொன்றுவிட்டனர். அப்போது உமர்(ரலி) அவர்கள் இவ்வாறு கூறினார்கள்'' என்று வந்துள்ளது.

கன்னத்தில் ஓர் அறைவிட்ட குற்றத்திற்காக அபூ பக்ர்(ரலி) அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அலீ(ரலி), சுவைத் இப்னு முகர்ரின்(ரலி) ஆகியோர் பழிவாங்கும்படி தீர்ப்பளித்தனர்.

சாட்டையால் ஓர் அடி அடித்த குற்றத்திற்காக உமர்(ரலி) அவர்கள் பழிவாங்கிடச் செய்தார்கள். மூன்று சாட்டையடிகளுக்காக அலீ(ரலி) அவர்கள் பழிவாங்கிடச் செய்தார்கள்.

(நீதிபதி) ஷுரைஹ்(ரஹ்) அவர்கள் சாட்டையடிக்கும் பிறாண்டி காயப்படுத்தியதற்கும் பழிக்குப்பழி தண்டனை வழங்குமாறு தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 6897 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (கடைசிக் காலத்தில்) நோய் வாய்ப்பட்டிருந்தபோது (அரை மயக்கத்தில் இருந்தார்கள். அப்போது) நாங்கள் அவர்களின் வாய் ஓரத்தில் மருந்தூற்றினோம். என் வாயில் மருந்தூற்றாதீர்கள் என்று அவர்கள் சைகை செய்யலானார்கள்.'நோயாளி மருந்தை வெறுப்பதைப் போன்றுதான் (நபியவர்களும் வெறுக்கிறார்கள். ஊற்றவேண்டாம் என்று தடை செய்யவில்லை)' என்று நாங்கள் கூறிக்கொண்டோம் அவர்களின் மயக்கம் (முழுமையாகத்) தெளிந்தபோது'' என் வாயில் மருந்தூற்ற வேண்டாம் என்று உங்களை நான் தடுக்கவில்லையா?' என்று கேட்டார்கள். நாங்கள்'மருந்து உட்கொள்ளப் பிடிக்காமலேயே (அவ்வாறு சைகை செய்தீர்கள்)'' என்று சொன்னோம்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'(நான் தடுத்தும் கேட்காததற்கு பதிலாக) உங்களில் ஒருவர் பாக்கியில்லாமல் அனைவர் வாயிலும் நான் பார்த்துக் கொண்டிருக்க மருந்தூற்றப்பட வேண்டும்'' என்று கூறிவிட்டு,'ஆனால், அப்பாஸ் அவர்களைத் தவிர! ஏனெனில் (மருந்தூற்றும் போது) அவர் உங்களுடன் கலந்து கொள்ளவில்லை'' என்று கூறினார்கள்.

## 'அல்கஸாமா எனும் சத்தியம்

அஷ்அஸ் இப்னு கைஸ்(ரஹ்) அவர்கள் கூறினார்:

நபி(ஸல்) அவர்கள்,'(வாதியான) உம்முடைய இரண்டு சாட்சிகள் தேவை. அல்லது (பிரதிவாதியான) அவரின் சத்தியம் தேவை'' என்றார்கள்.

இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: முஆவியா(ரலி) அவர்கள்'அல்கஸாமா' சத்தியத்தை ஏற்றுப் பழி வாங்கும்படி உத்தரவிடவில்லை.

உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்கள், தாம் பஸ்ரா நகருக்கு ஆளுநராக நியமித்திருந்த ஆதி இப்னு அர்தாத் அவர்களுக்கு, நெய் வியபாரிகளின் வீடுகளில் ஒன்றுக்கு அருகில் கொலை செய்யப்பட்டுக் கிடந்த ஒருவர் தொடர்பாக(ப் பின்வருமாறு) கடிதம் எழுதினார்கள்: கொல்லப்பட்டவரின் நண்பர்கள் சாட்சியத்தைக் கொண்டு வந்தால் சரி. அவ்வாறில்லையாயின், (சாட்சியில்லாமல்) நீங்கள் தீர்ப்பளித்து) மக்களுக்கு அநீதியிழைத்துவிடாதீர்கள். இதைப் போன்ற வழக்குகளில் மறுமை நாள்வரை (சரியான) தீர்ப்பு வழங்க முடியாது.

ஹதீஸ் 6898 ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அறிவித்தார்.

என் குலத்தாரில் சிலர் கைபர் நோக்கிச் சென்றார்கள். அங்கே அவர்கள் தனித் தனியாகப் பிரிந்துவிட்டார்கள். அவர்களில் ஒருவர் கொல்லப்பட்டுக் கிடக்கக் கண்டனர். அவர் கிடந்த இடத்தில் இருந்த (யூத) மக்களிடம் அவர்கள்,'எங்கள் நண்பரை நீங்கள் (அநியாயமாகக்)

கொன்றுவிட்டீர்கள்'' என்று கூறினர். (அந்த யூத) மக்கள்'நாங்கள் (அவரைக்) கொல்லவுமில்லை. (அவரைக்) கொலை செய்தவர் யார் என எங்களுக்குத் தெரியவுமில்லை'' என்று கூறினர். எனவே (கைபர் சென்ற) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் கைபருக்குச் சென்றோம். அங்கு எங்களில் ஒருவர் கொல்லப்பட்டுக் கிடக்கக் கண்டோம்'' என்று கூறினர்.

அப்போது (பேச்சைத் துவங்கிய அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களை நோக்கி (நபி(ஸல்) அவர்கள்,'பெரியவர்களைப் பேசவிடு! பெரியவர்களைப் பேசவிடு!"என்று கூறினார்கள். பிறகு (கொல்லப்பட்டவர்களின் நண்பர்களைப் பார்த்து) நபி(ஸல்) அவர்கள்,'அவரைக் கொலை செய்தவர் யார் என்பதற்குச் சாட்சி கொண்டுவாருங்கள்!"என்று கூறினார்கள். அவர்கள்,'எங்களிடம் சாட்சியில்லை'' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள்,'அவ்வாறாயின் (யூதர்களான) அவர்கள் சத்தியம் செய்யட்டும்'' என்றார்கள். அதற்கு (கொல்லப்பட்டவரின் நண்பர்களான) அவர்கள்,'யூதர்களின் சத்தியத்தை நம்பி) ஏற்றுக் கொள்ளமாட்டோம்'' என்று கூறினர்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கொலையுண்டவரின் உயிரிழப்பை வீணாக்க விரும்பாமல் தாமே நூறு தர்ம ஒட்டகங்களை இழப்பீட்டுத் தொகையாக வழங்கினார்கள்.

ஹதீஸ் 6899. அபூ கிலாபா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(கலீஃபா) உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்கள் ஒரு நாள் மக்களிடம் பேசுவதற்காகத் தம் ஆசனத்தை எடுத்து வெளியே வைத்தார்கள். பிறகு மக்களுக்கு அனுமதி அளித்திட மக்கள் உள்ளே வந்தனர். பின்னர் (அவர்களிடம்)'அல்கஸாமா சத்தியம் குறித்து நீங்கள் என்ன கூறுகின்றீர்கள்?' என்று கேட்டார்கள். மக்கள்,'அல்கஸாமா மூலம் பழிவாங்கிடல் உண்டு என்றே கருதுகிறோம். கலீஃபாக்கள் அதைக் கொண்டு பழிவாங்கியுள்ளனர்'' என்று கூறினர். உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்கள் மக்களின் பார்வையில் நான் படும் வகையில் என்னை நிறுத்திவைத்து என்னிடம்,'அபூ கிலாபா அவர்களே! (இது குறித்து) நீங்கள் என்ன சொல்கின்றீர்கள்?' என்று கேட்டார்கள். உடனே நான்,'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! உங்களிடம் படைத் தளபதி (களான ஆளுநர்)களும் அரபுத் தலைவர்களும் உள்ளனர். இவர்களில் ஐம்பது பேர் திமஷ்க் (டமாஸ்கஸ்) நகரிலுள்ள திருமணமான ஒருவர் குறித்து அவரைப் பார்க்காமலேயே அவர் விபசாரம் புரிந்துவிட்டதாகச் சாட்சியம் அளித்தால் அவருக்கு நீங்கள் கல்லெறி தண்டனை வழங்கிவிடுவீர்களா, சொல்லுங்கள்?' என்று கேட்டேன். உமர்(ரஹ்) அவர்கள்'இல்லை'' என்றார்கள். நான்,'இவர்களில் ஐம்பது பேர் ஹிம்ஸ் (சிரியா) நாட்டிலுள்ள ஒருவர் திருடிவிட்டார் என்று அவரைப் பார்க்காமலேயே அவருக்கெதிராகச் சாட்சியம் அளித்தால் அவரின் கையை நீங்கள் துண்டித்துவிடுவீர்களா, சொல்லுங்கள்!"என்று கேட்டேன். உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்கள்,'இல்லை'' என்றார்கள். நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல) அவர்கள் மூன்று காரணங்களில் ஒன்றுக்காகவே தவிர எவரையும் கொல்லுமாறு உத்தரவிட்டதில்லை'' என்று கூறினேன். (அந்த மூன்று காரணங்கள் வருமாறு:)

1. மன இச்சையின் பேரில் (அநியாயமாகப் படு) கொலை செய்தவர். 2. திருமணமான பின்னர் விபசாரம் புரிந்த மனிதர். 3. அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எதிராகப் போர் புரியத் துணிந்து இஸ்லாத்திலிருந்து (வெளியேறி இறை மறுப்பிற்குத்) திரும்பிச் சென்றுவிட்ட மனிதர்.

அப்போது மக்கள், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சில திருடர்க(ளின் கை கால்க)ளைத் துண்டித்துக் கண்களில் சூடிட்டுப் பிறகு அவர்களை வெயிலில் தூக்கி எறிந்தார்கள் என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் அறிவிக்கவில்லையா?' என்று கேட்டார்கள். உடனே நான், 'உங்களுக்கு அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களின் அறிவிப்பைக் கூறுகிறேன்" என்று சொல்லிவிட்டு அனஸ்(ரலி) அவர்கள் கூறியதை(ப் பின்வருமாறு) தெரிவித்தேன்.

'உக்ல்' எனும் குலத்தைச் சேர்ந்த எட்டுப் பேர் கொண்ட குழு ஒன்று இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து இஸ்லாத்தை ஏற்று உறுதிமொழி வழங்கினர். அப்போது (மதீனா) பூமியின் தட்பவெப்பம் அவர்களுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. எனவே, அவர்களின் உடல்நலம் பாதித்தது. எனவே, இது குறித்து அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முறையிட்டனர். அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள், 'நீங்கள் நம் மேய்ப்பாளர் உடன் சென்று அவரிடமுள்ள (முஸ்லிம்களுக்குச் சொந்தமான) ஒட்டகங்களின் பாலையும் சிறுநீரையும் அருந்தலாமே!"என்று (யோசனை) கூறினார்கள். உக்ல் குலத்தார், 'சரி' என்று சொல்லிவிட்டு அங்கு சென்றனர். அந்த ஒட்டகங்களின் பாலையும் சிறுநீரையும் அருந்தி உடல் நலம் தேறினர். பிறகு அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் அறிவிப்பாளரைக் கொலை செய்துவிட்டு அந்த ஒட்டகங்களை ஓட்டிச் சென்றுவிட்டனர். இச்செய்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே (அவர்களைப் பிடித்துவருமாறு) அவர்களைப் பின்தொடர்ந்து ஆட்களை அனுப்பி வைத்தார்கள். எனவே, அவர்கள் பிடிக்கப்பட்டு (இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம்) கொண்டு வரப்பட்டனர். அப்போது அவர்களின் கைகளையும் கால்களையும் வெட்டுமாறும் அவர்களின் கண்களில் சூடிடுமாறும் உத்தரவிட்டார்கள். பிறகு அவர்கள் இறக்கும் வரை அவர்களை வெயிலில் தூக்கி எறிந்தார்கள்.

நான், 'இந்த உக்ல் குலத்தார் செய்ததை விடக் கொடிய செயல் வேறேது? அவர்கள் இஸ்லாத்திற்கு (இறை மறுப்பிற்கு) திரும்பிச் சென்றார்கள் கொலை செய்தார்கள் கொள்ளையடித்தார்கள்" என்று சொன்னேன். அப்போது அன்பஸா இப்னு ஸயீத்(ரஹ்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! இன்று (உம்மிடம் இதைச் செவியேற்றது) போல் ஒருபோதும் நான் செவியேற்றதில்லை" என்று கூறினார்கள். உடனே நான், 'அன்பஸா! என் செய்தியை நீங்கள் மறுக்கின்றீர்களா?' என்று கேட்டேன். அவர், 'இல்லை (நான் மறுக்கவில்லை). மாறாக, இச்செய்தியை நீங்கள் உள்ளபடி கூறினீர்கள்" என்று கூறிவிட்டு, 'அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த (ஷாம்) மாகாணத்தாரிடையே இந்த மூதறிஞர் வாழ்ந்துகொண்டிருக்கும் வரை மக்கள் நன்மையில் நீடிப்பர்" என்று (என்னைக் குறித்துக்) கூறினார்கள்.

நான், 'இந்த (கஸாமா) விஷயம் தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து முன்மாதிரி கிடைத்துள்ளது" என்றேன். (அதாவது) அன்சாரிகளில் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து அவர்களிடம் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களில் ஒருவர் (மட்டும் முன்பே கைபர் செல்வதற்காக) வெளியேறினார். (அங்கு) அவர் கொல்லப்பட்டார். பிறகு அவருக்குப் பின்னால் மற்றவர்களும் புறப்பட்டுச் சென்றனர். அங்கு அவர்கள் தம் தோழா இரத்த (வெள்ள)த்தில் மிதப்பதைக் கண்டனர். உடனே அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் திரும்பிவந்து, 'இறைத்தூதர் அவர்களே! எங்களுடன் பேசிக்கொண்டிருந்த எங்கள் நண்பர் எங்களிடமிருந்து புறப்பட்டுச் சென்றார். நாங்கள் சென்று பார்த்தபோது அவர் இரத்த(வெள்ள)த்தில் மிதக்கிறார்" என்று கூறினர். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளியேறிச் சென்று, 'இவரை யார் கொலை செய்திருப்பார் என்று நீங்கள் கருதுகின்றீர்கள்?'

என்று கேட்டார்கள். மக்கள், 'யூதர்கள்தாம் இவரைக் கொலை செய்தீர்கள்?' என்று கேட்டார்கள். அவர்கள், 'இல்லை'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள் (வாதிகளான அன்சாரிகளை நோக்கி)'யூதர்களில் ஐம்பது பேர்'நாங்கள் அவரைக் கொலை செய்வதை நீங்கள் விரும்புகின்றீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'எங்கள் அனைவரையும் கொலை செய்துவிட்டு (தாங்கள் கொலை செய்யவில்லையென) சத்தியம் செய்யக்கூட யூதர்கள் தயங்க மாட்டார்கள்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள் (முஸ்லிம்களைப் பார்த்து), 'உங்களில் ஐம்பது பேர் (யூதர்களே! கொலையாளிகள் என்ற) சத்தியம் செய்வதன் மூலம் இழப்பீட்டுத் தொகைக்கு உரிமை பெறுகிறீர்களா?' என்று கேட்டார்கள். மக்கள், 'நாங்கள் சத்தியம் செய்வதற்கு தயாராக) இல்லை'' என்று பதிலளித்தனர். எனவே, கொல்லப்பட்டவருக்காக நபி(ஸல்) அவர்களே தம் தரப்பிலிருந்து இழப்பீட்டுத் தொகை வழங்கினார்கள்.

(அறிவிப்பாளர் அபூ கிலாபா(ரஹ்) அவர்கள் தொடர்ந்து கூறுகிறார்கள்:) மேலும், நான் (பின்வருமாறும்) கூறினேன்: ஹுதைல் குலத்தார் அறியாமைக் காலத்தில் தாம் நட்புறவு ஒப்பந்தம் செய்திருந்த ஒருவனிடம் ஒப்பந்த முறிவுப் பிரகடனத்தை வெளியிட்டனர். எனவே, அந்த ஒப்பந்த முறிவுக்குள்ளானவன் (மக்காவிலுள்ள)'பத்ஹா' எனுமிடத்திலிருந்த யமன் நாட்டைச் சேர்ந்த ஒரு குடும்பத்தை இரவு நேரத்தில் தாக்கிக் கொள்ளையடிக்க முற்பட்டான். அப்போது அவர்களில் ஒருவர் அவனைக் கண்டு விழித்துக்கொண்டு அவனை நோக்கி வாளை வீசி அவனைக் கொன்றுவிட்டார். உடனே ஹுதைல் குலத்தார் வந்து அந்த யமன்வாசியைப் பிடித்துக் கொண்டனர். பின்னர் ஹஜ் காலத்தில் அவரை (கலீஃபா) உமர்(ரலி) அவர்களிடம் கொண்டு வந்து நிறுத்தி'இவர் எங்கள் (ஒப்பந்த) நண்பரைக் கொன்றுவிட்டார்'' என்று கூறினர். அதற்கு அந்த யமன்வாசி, '(நான் திருடனைத்தான் கொலை செய்தேன்.) ஹுதைல் குலத்தார் அவனுடனான ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டுவிட்டனர்'' என்று கூறினார். உடனே உமர்(ரலி) அவர்கள், 'ஹுதைல் குலத்தாரில் ஐம்பது பேர்'(நாங்கள்) அவருடனான ஒப்பந்தத்தை முறித்துக்கொள்ளவில்லை' எனச் சத்தியம் செய்யட்டும்'' என்றார்கள். எனவே, அவர்களில் நாற்பத்தொன்பது பேர், (நாங்கள் அந்த மனிதருடனான ஒப்பந்தத்தை முறிக்கவில்லை என்று பொய்ச்) சத்தியம் செய்தனர். அப்போது ஹுதைல் குலத்தாரில் ஒருவர் ஷாம் நாட்டிலிருந்து வந்தார். (ஐம்பதாவது நபராக) அவரையும் சத்தியம் செய்திடுமாறு ஹுதைல் குலத்தார் கோரினர். ஆனால், அவர் தம் சத்தியத்திற்கு பதிலாக ஆயிரம் திர்ஹங்களை அவர்களிடம் வழங்கினார். (சத்தியம் செய்வதிலிருந்து விலகிக் கொண்டார்.) இதையடுத்து அவரின் இடத்தில் மற்றொருவரை அவர்கள் சேர்த்துக் கொண்டதுடன், அந்த (ஐம்பதாவது) நபரைக் கொலையுண்டவரின் சகோதரரிடம் ஒப்படைத்துவிட்டனர். அவரின் கை இவரின் கையுடன் பிணைக்கப்பட்டது.

பின்னர் அவர்களிருவரும் சத்தியம் செய்த ஐம்பது (49) பேரும் புறப்பட்டார்கள். அவர்கள் (மக்காவிற்கு அரும்லுள்ள)'நக்லா' எனுமிடத்தை அடைந்தபோது மழை பிடித்துக் கொண்டது. எனவே, அவர்கள் அங்கிருந்த ஒரு மலையின் குகைக்குள் நுழைந்து கொண்டார்கள். அப்போது அந்தக் குகை (பொய்ச் சத்தியம் செய்த) அந்த ஐம்பது பேர் மீது இடிந்து விழுந்து அவர்கள் அனைவரும் மாண்டு போயினர். (கைகோத்து விடப்பட்ட) அந்த இரண்டு நண்பர்களும் தப்பித்துக் கொண்டனர். அப்போது அவர்களை ஒரு கல் தொடர்ந்து வந்து கொலையுண்டவருடைய சகோதரரின் காலை முறித்துவிட்டது. பிறகு அவர் ஓராண்டு காலம் வாழ்ந்து பிறது மரணித்தார்.

(தொடர்ந்து அபூ கிலாபா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)

அப்துல் மலிக் இப்னு மர்வான் அல்கஸாமை‘வைக் கொண்டு ஒருவரை பழிவாங்கிடுமாறு ஆணையிட்டார். பிறகு தம் செயல் குறித்து அவர் வருந்தினார். எனவே, சத்தியம் செய்த ஐம்பது பேரின் பெயர்களை (படை வீரர்களின்) பெயர் பதிவேட்டிலிருந்து நீக்கியதுடன் அவர்களை ஷாம் நாட்டிற்கு நாடு கடத்தவும் செய்தார்.

## ஒருவர் மற்றவர்களின் வீட்டுக்குள் (அவர்களின் அனுமதியில்லாமல்) எட்டிப் பார்க்க, அவர்கள் அவரின் கண்ணைப் பழுதாக்கிவிட்டால் அவருக்காக இழப்பீடு கிடையாது.

ஹதீஸ் 6900 அனஸ் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி (ஸல்) அவர்களின் அறைகளில் ஒன்றின் வழியாக எட்டிப் பார்த்தார். (இதைக் கண்ட) நபி (ஸல்) அவர்கள் நீளமான அம்பின்’கூர்முனையால்’ அல்லது’கூர்முனைகளால்’ அவருக்குத் தெரியாமல் அவரைக் குத்துவதற்காகச் சென்றார்கள்.

ஹதீஸ் 6901 ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ (ரலி) அறிவித்தார்.

ஒருவர் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் (அறையின்) கதவிடுக்கில் எட்டிப் பார்த்தார். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் (இரும்பாலான) ஈர்வலிச் சீப்பொன்று இருந்தது அதனால் தம் தலையை அவர்கள் கோதிக் கொண்டிருந்தார்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அவரைப் பார்த்தபோது’என்னை நீ பார்க்கிறாய் என்று நான் (முன்பே) அறிந்திருந்தால், இந்தச் சீப்பினால் உன் கண்ணைக் குத்தியிருப்பேன். (அடுத்தவர் வீட்டுப் பெண்களைப்) பார்க்க நேரிடும் என்பதற்காகவே அனுமதி கேட்பது சட்ட மாக்கப்பட்டது‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6902 அபுல் காசிம் (முஹம்மத்-ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உன் அனுமதியின்றி ஒருவர் உன்னை எட்டிப் பார்த்தபோது அவரின் மீது நீ சிறு கல்லைச் சுண்டி எறிய, அது அவரின் கண்ணைப் பறித்துவிட்டால் உன் மீது எந்தக் குற்றமுமில்லை.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## இழப்பீடு வழங்க வேண்டியோர்

ஹதீஸ் 6903 அபூ ஜுஹைஃபா (ரலி) அறிவித்தார்.

நான் அலீ (ரலி) அவர்களிடம் (நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தினராகிய) உங்களிடம் குர்ஆனில் இல்லாத ஏதேனும் (செய்தி) உள்ளதா?’ என்று கேட்டேன்.

-அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அவர்கள் சில வேளைகளில்’மக்களிடம் இல்லாத ஏதேனும் ஒன்று உங்களிடம் உள்ளதா?’ என்று அபூ ஜுஹைஃபா (ரலி) அவர்கள் கேட்டார்கள் என அறிவித்தார்கள்.

அதற்கு அலீ (ரலி) அவர்கள், ‘வித்துக்களைப் பிளந்தவனும் உயிரினங்களை உருவாக்கியவனுமான அல்லாஹ்வின் மீது சத்தியமாக! குர்ஆனில் இருப்பதைத் தவிர வேறெதுவும் (நபியின் குடும்பத்தாராகிய) எங்களிடம் இல்லை இறைவேதத்தில் ஒரு மனிதருக்கு வழங்கப்படும் விளக்கத்தையும் இந்த ஏட்டில் உள்ளவற்றையும் தவிர‘‘ என்று கூறினார்கள். நான், ‘இந்த ஏட்டில் என்ன இருக்கிறது?’ என்று கேட்டேன். அதற்கு அவர்கள், ‘இழப்பீடு (தொடர்பான விளக்கங்கள்), போர்க் கைதியை விடுவித்தல், இறைமறுப்பாளனுக்காக ஒரு முஸ்லிம் கொல்லப்படக்கூடாது ஆகிய விஷயங்கள் இதிலுள்ளன‘‘ என்றார்கள். 47

## பெண்ணின் வயிற்றிலுள்ள சிசு

**ஹதீஸ் 6904** அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹுதைல் குலத்தைச் சேர்ந்த இரண்டு பெண்களில் ஒருத்தி மற்றொருத்தியின் மீது (வயிற்றில்) கல்லை எறிய, (வயிற்றிலிருந்த) சிசு இறந்த பிறந்தது. அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அந்த சிசுவுக்காக ஓர் ஆண் அடிமையை அல்லது ஓர் அடிமைப் பெண்ணை (இழப்பீடாக) வழங்கிடுமாறு தீர்ப்பளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

**ஹதீஸ் 6905** முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

ஒரு (கர்ப்பிணிப்) பெண்ணை (அடித்துக்) குறைப் பிரசவம் ஏற்படவைத்தால் (அதற்குப் பரிகாரம்) என்ன என்பது குறித்து உமர் (ரலி) அவர்கள் மக்களிடம் ஆலோசனை கேட்டார்கள். அப்போது நான், 'நபி (ஸல்) அவர்கள் ஓர் ஆண் அடிமையை அல்லது ஓர் அடிமைப் பெண்ணை அந்த சிசுவுக்காக (இழப்பீடாக) வழங்கிடுமாறு தீர்ப்பளித்தார்கள்'' என்றேன்.

**ஹதீஸ் 6906** உமர் (ரலி) அவர்கள், '(நீங்கள் கூறிய) இதற்கு உம்முடன் சாட்சியம் அளிப்பவரை அழைத்து வாருங்கள்'' என்றார்கள். அப்போது முஹம்மத் இப்னு மஸ்லமா (ரலி) அவர்கள், அவ்வாறு நபி (ஸல) அவர்கள் தீர்ப்பளித்தபோது தாம் அங்கு இருந்ததாக சாட்சியம் அளித்தார்கள்.

**ஹதீஸ் 6907** உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உமர் (ரலி) அவர்கள், (வயிற்றிலேயே கொல்லப்பட்டு) விழுந்த கரு தொடர்பாக நபி (ஸல்) அவர்கள் அளித்த தீர்ப்பைச் செவியேற்ற மக்களைச் சாட்சியம் அளிக்குமாறு கூறினார்கள். அப்போது முஃகீரா (ரலி) அவர்கள், 'இத்தகையை சிசுவிற்காக ஓர் ஆண் அடிமையை அல்லது ஓர் அடிமைப் பெண்ணை (இழப்பீடாக) வழங்குமாறு நபி (ஸல்) அவர்கள் தீர்ப்பளிக்க கேட்டுள்ளேன்'' என்றார்கள். உமர் (ரலி) அவர்கள்'இதற்கு உங்களுடன் சாட்சியம் அளிப்பவரை அழைத்து வாருங்கள்'' என்றார்கள். அப்போது முஹம்மத் இப்னு மஸ்லமா (ரலி) அவர்கள், 'நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு தீர்ப்பளித்ததற்கு நான் சாட்சி'' என்று கூறினார்கள்.

**ஹதீஸ் 6908** முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

ஒரு (கர்ப்பிணிப்) பெண்ணை (அடித்துக்) குறைப் பிரசவம் ஏற்படுத்துவது குறித்து உமர் (ரலி) அவர்கள் மக்களிடம் ஆலோசனை கேட்டார்கள். தொடர்ந்து மேற்கண்ட (ஹதீஸ் 6905 வது) ஹதீஸைப் போன்று அறிவித்தார்கள்.

## பெண்ணின் (வயிற்றில் வளரும்) சிசு (கொல்லப்படுவது) குறித்தும், (கொல்லப்பட்ட) பெண்ணிற்கான) இழப்பீட்டுத் தொகை (கொலை செய்வதளின்) தந்தையின் மீதே கடமையாகும் என்பது குறித்தும்.

**ஹதீஸ் 6909** அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

'பனு லிஹ்யான்' குலத்தைச் சேர்ந்த (கர்ப்பிணி) பெண் ஒருத்தியின் சிசு (மற்றொரு பெண் அடித்ததால் இறந்து பிறந்தது. அது) தொடர்பாக இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஓர் ஆண் அடிமையை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை (நஷ்ட ஈடாக) வழங்க வேண்டுமென்று தீர்ப்பளித்தார்கள். பின்னர் நஷ்ட ஈடு வழங்கும்படி நபியவர்கள் தீர்ப்பளித்த அந்த (க் குற்றவாளி)ப் பெண் இறந்துவிட்டாள். எனவே, (அவள் சார்பாக) அவளுடைய தந்தைவழி

உறவினர்கள் (அஸபா) நஷ்ட ஈடு வழங்கிட வேண்டுமென்றும், அவளுடைய சொத்து அவளுடைய ஆண் மக்களுக்கும் கணவருக்கும் உரியதென்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 6910 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹுதைல் குலத்தைச் சேர்ந்த இரண்டு பெண்கள் சண்டையிட்டுக்கொண்டனர். அவர்களில் ஒருத்தி மற்றொருத்தி மீது கல் எறிந்து அவளையும் அவளுடைய வயிற்றிலிருந்து சிசுவையும் கொன்றுவிட்டாள். எனவே, மக்கள் நபி(ஸல்) அவர்களிடம் வழக்கைக் கொண்டுவந்தனர்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் அவளுடைய சிசுவிற்கான இழப்பீடாக ஓர் ஆண் அடிமை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை வழங்கிட வேண்டும் என்றும், (கொல்லப்பட்ட) அந்தப் பெண்ணிற்கான இழப்பீட்டுத் தொகை கொலை செய்த பெண்ணின் தந்தை வழி உறவினர்களின் மீது கடமையாகுமென்றும் தீர்ப்பளித்தார்கள்.

## ஓர் அடிமையை, அல்லது (அடிமையல்லாத) சிறுவனை உதவியாளராக வைத்துக் கொள்ளல்.

(நபி(ஸல்) அவர்களின் துணைவியார்) உம்மு ஸலமா(ரலி) அவர்கள் ஆரம்பப் பள்ளி ஆசிரியருக்கு ஆளனுப்பி, கம்பளியைப் பிரித்தெடுப்பதற்காகச் சில சிறுவர்களை அனுப்பிவையுங்கள் அடிமையல்லாத எவரையும் என்னிடம் அனுப்பிவிடாதீர்கள் என்று கேட்டுக்கொண்டார்கள் எனக் கூறப்படுகிறது.

ஹதீஸ் 6911 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனாவுக்கு வந்தபோது அபூ தல்ஹா(ரலி) அவர்கள் என்னுடைய கையைப் பிடித்து அழைத்துச் சென்று,'இறைத்தூதர் அவர்களே! அனஸ் புத்திசாலிப் பையன். அவன் தங்களுக்குப் பணிவிடை செய்யட்டும்'' என்றார்கள். அதன்படி நான் நபி(ஸல்) அவர்கள் ஊரிலிருக்கும்போதும் பயணத்தில் இருக்கும்போது அவர்களுக்குப் பணிவிடை செய்துவந்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் செய்த எதைப் பற்றியும்'இதை ஏன் நீ இப்படிச் செய்தாய்?' என்றோ, நான் செய்யாத எதைப் பற்றியும்'இதை ஏன் நீ இப்படிச் செய்யவில்லை?' என்றோ நபியவர்கள் என்னிடம் கேட்டதில்லை.

## சுரங்க(விப)த்திற்கு இழப்பீடு இல்லை கிணற்று (விபத்து)க்கும் இழப்பீடு இல்லை.

ஹதீஸ் 6912 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வாயில்லாப் பிராணிகளால் சேதம் ஏற்பட்டால் இழப்பீடு கிடையாது. கிணற்று(விபத்து)க்கும் இழப்பீடு கிடையாது. சுரங்க(விப)த்திற்கும் இழப்பீடு கிடையாது. புதையலில் ஐந்தில் ஒரு பங்கு (ஸகாத்தாக) வசூலிக்கப்படும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## வாயில்லாப் பிராணிகளால் ஏற்படும் சேதத்திற்கு இழப்பீடு கிடையாது.

இப்னு சீரின்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

வாகனப் பிராணி ஒன்று தம் காலால் (யாரையேனும்) எட்டி உதைத்துவிட்டால் (ஓட்டுநர்) அதற்குப் பொறுப்பாளி அல்லர் கடிவாளத்தைச் சுரண்டியதால் (பிராணி எட்டி உதைத்து) சேதம் ஏற்படின் (ஓட்டுநர்) பொறுப்பாளி ஆவார் என்பது முன்னோர்களின் தீர்ப்பாகும்.

ஹம்மாத் இப்னு அபீ சுலைமான்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

வாகனப் பிராணி எட்டி உதைத்துவிட்டால் (ஓட்டுநர்) பொறுப்பாளியாக்கப்படமாட்டார். யாரேனும் அதைக் குத்தி (அதனால் அது மிரண்டு உதைத்து)விட்டால் தவிர! (அப்போது குத்தியவன் பொறுப்பாளியாக்கப்படுவான்.)

ஷுரைஹ் இப்னு ஹாரிஸ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

வாகனப் பிராணி பதிலுக்கு பதில் தாக்கினால் அதற்கு யாரும் பொறுப்பல்ல. அதாவது அதை ஒருவர் அடிக்க, அது (பதிலுக்குத்) தன்னுடைய காலால் தாக்கியது. (அப்போது யாரும் பொறுப்பாளியாக்கப்படமாட்டார்.)

ஹகம் இப்னு உதைபா(ரஹ்) அவர்களும் ஹம்மாத் இப்னு அபீ சுலைமான்(ரஹ்) அவர்களும் கூறுகிறார்கள்: வாடகைக்கு அமர்த்தப்பட்ட கூலியாள் கழுதையை ஓட்டிச் செல்லும்போது அதன் மேல் இருந்த பெண் கீழே விழுந்துவிட்டால் அதற்கு அவன் பொறுப்பல்ல.

ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

ஒருவன் ஒரு வாகனப் பிராணியை (அதிக நேரம்) ஓட்டிச் சென்று, அதனால் அது களைப்படைந்து (யாரையேனும்) காயப்படுத்திவிட்டால் (ஓட்டியவன்) பொறுப்பாளி ஆவான். அவன் பிராணிக்குப் பின்னால் இருந்துகொண்டு (அதைத் துன்புறுத்தாமல்) தானாகச் செல்லவிட்டிருந்தால், அப்போது அவன் பொறுப்பாளி அல்லன்.

ஹதீஸ் 6913 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வாயில்லாப் பிராணிகளால் சேதம் நேர்ந்தால் இழப்பீடு இல்லை. கிணற்று (விபத்து)க்கும் இழப்பீடு இல்லை. சுரங்க (விப)த்துக்கும் இழப்பீடு இல்லை. புதையலில் ஐந்தில் ஒரு பங்கு (ஸகாத்தாக) வசூலிக்கப்படும்.

## இஸ்லாமிய அரசின் கீழ் வாழும் முஸ்லிமல்லாத குடிமகனைக் குற்றமேயின்றி கொலை செய்வதிலுள்ள பாவம்.

ஹதீஸ் 6914 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இஸ்லாமிய அரசுடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொண்டு அதன் கீழ் வாழ்ந்துவரும்) ஓர் ஒப்பந்தக் குடிமகனை (அநியாயமாக)க் கொலை செய்பவன் சொர்க்கத்தின் வாடையைக்கூட நுகர மாட்டான். சொர்க்கத்தின் நறுமணமோ நாற்பதாண்டுப் பயணத் தொலைவிலிருந்தே வீசிக் கொண்டிருக்கும்.

என அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

## இறைமறுப்பாளனுக்கு பதிலாக முஸ்லிம் கொல்லப்படமாட்டான்.

ஹதீஸ் 6915 அபூ ஜுஹைஃபா(ரலி) அறிவித்தார்.

நான் அலீ(ரலி) அவர்களிடம்,'(நபிகளாரின் குடும்பத்தாராகிய) உங்களிடம் குர்ஆனில் இல்லாத ஏதேனும் (செய்தி) உள்ளதா?' என்று கேட்டேன்.

-அறிவிப்பாளர் சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் சில வேளைகளில்'மக்களிடம் இல்லாத ஏதேனும் ஒன்று உங்களிடம் உள்ளதா?' என்று அபூ ஜுஹைஃபா(ரலி) அவர்கள் கேட்டார்கள் என அறிவித்தார்கள்.

அதற்கு அலீ (ரலி) அவர்கள், 'வித்துக்களைப் பிளந்தவனும் உயிரினங்களை உருவாக்கியவனுமான அல்லாஹ்வின் மீதாணையாக! குர்ஆனில் உள்ளதைத் தவிர வேறெதுவும் (நபிகளாரின் குடும்பத்தாராகிய) எங்களிடம் இல்லை இறைவேதத்தில் ஒருவருக்கு அளிக்கப்படும் விளக்கத்தையும் இந்த ஏட்டில் உள்ளவற்றையும் தவிர" என்று பதிலளித்தார்கள். நான் 'இந்த ஏட்டில் என்ன இருக்கிறது?' என்று கேட்டேன். அலீ (ரலி) அவர்கள், 'இழப்பீடு (தொடர்பான விளக்கங்கள்), போர்க் கைதியை விடுவித்தல், இறைமறுப்பாளனுக்காக ஒரு முஸ்லிம் கொல்லப்படக்கூடாது ஆகிய விஷயங்கள் இதிலுள்ளது" என்று பதிலளித்தார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

## கோபத்தில் ஒரு முஸ்லிம் ஒரு யூதனின் கன்னத்தில் அடித்தால்...?

இது குறித்து நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6916 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைத்தூதர்களில் சிலர் சிலரைவிட உயர்ந்தவர்கள் என்று சொல்லாதீர்கள்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6917 அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

யூதர்களில் ஒருவர் முகத்தில் அடி வாங்கிக் கொண்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தார். அவர், 'முஹம்மதே! உங்கள் அன்சாரித் தோழர் ஒருவர் என் முகத்தில் அறைந்துவிட்டார்" என்று கூறினார். நபி (ஸல்) அவர்கள், 'அவரைக் கூப்பிடுங்கள்" என்றார்கள். அவ்வாறே அவரை அழைத் (து வந்) தார்கள். (அவரிடம்) 'இவரை முகத்தில் அறைந்தீரா?' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர், 'இறைத்தூதர் அவர்களே! நான் யூதர்களைக் கடந்துசென்றேன். அப்போது இவர் 'மனிதர்கள் அனைவரையும் விட மூஸாவைத் தேர்ந்தேடுத்தவன் மீது சத்தியமாக' என்று கூறக் கேட்டேன். உடனே நான், 'முஹம்மத் (ஸல்) அவர்களை விடவுமா? என வினவினேன். அப்போது எனக்குக் கோபம் ஏற்பட்டு இவரை அறைந்து விட்டேன்" என்றார். நபி (ஸல்) அவர்கள் 'இறைத்தூதர்களிடையே என்னைச் சிறந்தவன் என்று சொல்லாதீர்கள். ஏனெனில், மக்கள் மறுமை நாளில் மூர்ச்சையடைந்து விடுவார்கள். மூர்ச்சை தெளி (ந்து எழு) பவர்களில் நானே முதல் ஆளாக இருப்பேன். அப்போது நான் மூஸா (அலை) அவர்களுக்கு அருகே இருப்பேன். அவர்கள் இறை அரியாசனத்தின் கால்களில் ஒன்றைப் பிடித்தபடி (நின்றுகொண்டு) இருப்பார்கள். அவர்கள் எனக்கு முன்பே மூர்ச்சை தெளிந்து (எழுந்து) விட்டார்களா? அல்லது 'தூர்' (சினாய்) மலையில் (இறைவனைச் சந்தித்த போது) அவர்கள் அடைந்த மூர்ச்சைக்குப் பகரமாக (இப்போது மூர்ச்சையாக்கப்படாமல்) விட்டுவிடப்பட்டார்களா? என்று எனக்குத் தெரியாது" என்று கூறினார்கள்.

# அத்தியாயம் 88 இஸ்லாத்திலிருந்து வெளியேறியார் மற்றும் சத்தியத்தின் விரோதிகளை மனமாற்றம் காணச்செய்வதும் அவர்களுடன் போரிடுவதும்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## அல்லாஹ்வுக்கு இணைவைப்பவன் அடையும் பாவமும், இம்மையிலும் மறுமையிலும் அவனுக்குரிய தண்டனையும்.

அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக (இறைவனுக்கு) இணைவைத்தல் மிகப்பெரும் அநியாயமாகும். (திருக்குர்ஆன் 31:13)2

அல்லாஹ் கூறினான்:

நீர் (இறைவனுக்கு) இணைவைத்தால், உம் நன்மைகள் (யாவும்) அழிந்து, நஷ்டவாளர்களில் ஒருவராகிவிடுவீர். (திருக்குர்ஆன் 39:65)

ஹதீஸ் 6918 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

"யார் இறைநம்பிக்கை கொண்டு பிறகு தம் நம்பிக்கையுடன் அநீதியைக் கலந்திடவில்லையோ அவர்களுக்கே உண்மையில் அமைதி உண்டு. மேலும், அவர்களே நேர்வழி அடைந்தவர்கள் ஆவர்" எனும் (திருக்குர்ஆன் 06:82 வது) இறைவசனம் அருளப்பெற்றபோது நபித்தோழர்களுக்கு அது சிரமமாக இருந்தது. மேலும், அவர்கள்'எங்களில் யார்தாம் தம் நம்பிக்கையுடன் அநீதியைக் கலக்கவில்லை?' என்று கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அநீதி என்பதற்குப் பொருள் அதுவன்று. (அது இணைவைப்பையே குறிக்கிறது.) நிச்சயமாக இணைவைப்பதே மிகப் பெரும் அநியாயமாகும் என்று (அறிஞர்) லுக்மான் கூறியதை(க் குர்ஆனில் 31:33 வது வசனத்தில்) நீங்கள் செவியுறவில்லையா?3

ஹதீஸ் 6919 அபூ பக்ரா(ரலி) அறிவித்தார்.

"அல்லாஹ்வுக்கு இணைவைப்பது, பெற்றோரைப் புண்படுத்துவது, பொய் சாட்சியம் கூறுவது, பொய் சாட்சியம் கூறுவது, பொய் சாட்சியம் கூறுவது, அல்லது'பொய் பேசுவது' ஆகியன பெரும்பாவங்களிலேயே மிகப் பெரும் பாவங்களாகும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

'பொய் சாட்சி' என்பதை நபி(ஸல்) அவர்கள் திரும்பத் திரும்பத் சொல்லிக் கொண்டேயிருந்தார்கள்.

(இதைக் கண்ட) நாங்கள்'அவர்கள் நிறுத்திக் கொள்ளலாமே!"என்று கூறினோம்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 6920 அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

ஒரு கிராமவாசி நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர்(ஸல்) தூதரே! பெரும் பாவங்கள் எவை?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'இறைவனுக்கு இணை கற்பிப்பது" என்றார்கள். அவர்,'பிறகு எது?' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'பிறகு தாய் தந்தையரைப் புண்படுத்துவது"

என்றார்கள். அவர்,'பிறகு எது?' எனக் கேட்க நபி(ஸல்) அவர்கள்,'பொய்ச் சத்தியம் என்றால் என்ன?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'பொய் சொல்லி ஒரு முஸ்லிமான மனிதரின் செல்வத்தைக் கைப்பற்றுவதற்காகச் சத்தியம் செய்வது'' என்றார்கள்.

ஹதீஸ் 6921. 'இறைத்தூதர் அவர்களே!'நாங்கள் அறியாமைக் காலத்தில் செய்த(த)வற்றிற்காக (மறுமையில்) தண்டிக்கப்படுவோமா?' என ஒருவர் கேட்டதற்கு,'இஸ்லாத்தில் இணைந்து நன்மை புரிகிறவர் அறியாமைக் காலத்தில் செய்த தவறுகளுக்காகத் தண்டிக்கப்படமாட்டார். இஸ்லாத்தில் இணைந்த பிறகு (மீண்டும் இறைமறுப்பு எனும்) தீமையைப் புரிகிறவர் (அறியாமைக் காலத்தில் செய்த) முந்திய தவறுகளுக்காகவும், (இஸ்லாத்தை ஏற்றபின் செய்த இந்தப்) பிந்திய தவறுகளுக்காகவும் தண்டிக்கப்படுவார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## இஸ்லாத்தைவிட்டு வெளியேறிய ஆண், இஸ்லாத்தைவிட்டு வெளியேறிய பெண் இருவரின் சட்டமும் (ஒன்றா? வேறா? என்பது குறித்தும்) அவர்களை மனமாற்றம் காணச் செய்வது (குறித்து)ம்.

இப்னு உமர்(ரலி), ஸுஹ்ரீ(ரஹ்) மற்றும் இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) ஆகியோர்'இஸ்லாத்திலிருந்து வெளியேறிய பெண்ணுக்கும் மரண தண்டனை விதிக்கப்படும்'' என்று கூறினர்.

அல்லாஹ் கூறினான்:

(அல்லாஹ்வை) நம்பிக்கை கொண்டு, இந்தத் தூதர் உண்மையானவர்தாம் என்று சாட்சியமும் அளித்த பிறகும், தெளிவான சான்றுகள் தம்மிடம் வந்துவிட்ட பிறகும் மறுத்துவிட்ட மக்களை அல்லாஹ் எப்படி நேர்வழியில் செலுத்துவான்? அல்லாஹ் (இத்தகைய) அக்கிரமக்கார சமூகத்தாரை நேரான வழியில் செலுத்தமாட்டான். இவர்களின் மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மனிதர்களின் சாபமும் உண்டு என்பதே இவர்களுக்குரிய கூலியாகும். இ(ந்தச் சாபத்)திலேயே அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவர். இவ்வேதனை அவர்களுக்குக் குறைக்கப்படமாட்டாது. அவர்களுக்கு அவகாசமும் அளிக்கப்படமாட்டாது. ஆயினும், இதற்குப் பிறகு யார் பாவமன்னிப்புக் கோரி, தம்மைச் சீர்திருத்திக் கொண்டார்களோ, அத்தகையவர்களை நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், (அவர்களுக்கு) மிக்க அருள் புரிபவனாகவும் இருக்கிறான். நிச்சயமாக யார் இறைநம்பிக்கை கொண்ட பின் மறுத்துவிட்டு, அப்பால் (இறக்கும்வரை) இறைமறுப்பை அதிகமாக்கிக் கொண்டே சென்றனரோ, அவர்களின் (உதட்டளவிலான) பாவமன்னிப்புக் கோரிக்கை ஒருபோதும் ஏற்கப்படமாட்டாது. இவர்கள்தாம் வழிகேடர்கள். (திருக்குர்ஆன் 03:86-90)

நம்பிக்கையாளர்களே! நீங்கள் வேதம் வழங்கப்பட்டவர்களில் எந்தப் பிரிவினருக்காவது வழிபட்டுவிடுவீர்களாயின், நீங்கள் நம்பிக்கை கொண்ட பிறகு உங்களை அவர்கள் நிராகரிப்பவர்களாகத் திருப்பிவிடுவார்கள். (திருக்குர்ஆன் 03:100)

நிச்சயமாக யார் இறைநம்பிக்கை கொண்டு, பின்னர் நிராகரித்து, பின்னர் இறைநம்பிக்கை கொண்டு, பின்னர் நிராகரித்து, பின்னர் அந்த நிராகரிப்பை அதிகரித்துக் கொண்டனரோ, அவர்களை அல்லாஹ் மன்னிப்பவனாகவும் இல்லை மேலும் அவர்களை (நேர்) வழியில் செலுத்துபவனாகவும் இல்லை (திருக்குர்ஆன் 04:137)

நம்பிக்கையாளர்களே! உங்களில் எவரேனும் தம் மார்க்கத்தில் வெளியேறிவிட்டால் (அல்லாஹ்வுக்கு அதனால் நஷ்டமில்லை) அப்பொழுது அல்லாஹ் வேறு ஒரு கூட்டத்தைக் கொண்டு வருவான் அவர்களை அவன் நேசிப்பான் அவர்களும் அவனை நேசிப்பார்கள் அவர்கள்

ஸஹீஹுல் புஹாரி பாகம் 7 அத்தியாயம் 88 இஸ்லாத்திலிருந்து வெளியேறியார் மற்றும் சத்தியத்தின் விரோதிகளை மனமாற்றம் காணச்செய்வதும் அவர்களுடன் போரிடுவதும்

இறைநம்பிக்கையாளர்களிடம் பணிவாக நடந்து கொள்வார்கள் இறைமறுப்பாளர்களிடம் கடுமையாக இருப்பார்கள். (திருக்குர்ஆன் 05:54)

இறைநம்பிக்கை கொண்ட பிறகு கட்டாயத்திற்குள்ளாம், தம் உள்ளம் இறைநம்பிக்கையில் (சலனமின்றி) அமைதியுடன் இருக்கும் நிலையில் இறைமறுப்பை வெளியிடுகிறவரைத் தவிர (அதாவது அவரின் மீது குற்றமில்லை). ஆனால், மன நிறைவுடன் இறைமறுப்பை ஏற்கிறவர்களின் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகும் இன்னும் அவர்களுக்குக் கொடிய வேதனையும் உண்டு. நிச்சயமாக அவர்கள் மறுமையைவிட இவ்வுலக வாழ்க்கையையே அதிகமாக நேசிக்கிறார்கள் மேலும், நிச்சயமாக அல்லாஹ் (தன்னை) மறுக்கும் கூட்டத்தாரை நேர்வழியில் செலுத்தமாட்டான். இத்தகையோருடைய இதயங்கள், செவிப்புலன், பார்வைகள் ஆகியவற்றின் மீது அல்லாஹ் முத்திரையிட்டுவிட்டான். இவர்கள்தாம் (தம் இறுதி முடிவு பற்றி) அலட்சியமாயிருப்பவர்கள். சந்தேகமின்றி, இவர்கள் மறுமையில் முற்றிலும் நஷ்டமடைவார்கள். (திருக்குர்ஆன் 16:106-109)

அவர்களுக்கு (மட்டும்) சக்தி இருந்தால், உங்களை உங்களின் மார்க்கத்திலிருந்து திருப்பும்வரை உங்களுடன் அவர்கள் பெயரிட்டுக் கொண்டே இருப்பார்கள். (அப்படி) உங்களில் எவரேனும் தம் மார்க்கத்திலிருந்து திரும்பி இறைமறுப்பாளரான நிலையில் இறந்துவிட்டால் அவரின் நற்செயல்கள் இம்மையிலும் மறுமையிலும் அழிந்துபோகும். இவர்கள் நரகவாசிகள்தாம். அதில் என்றென்றும் தங்கியிருப்பார்கள். (திருக்குர்ஆன் 02:217)

ஹதீஸ் 6922 இக்ரிமா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அலீ (ரலி) அவர்களிடம், இஸ்லாத்திலிருந்து வெளியேறிய (துடன் இஸ்லாத்திற்கும் அரசுக்கும் விரோதமாகச் செயல்பட்ட) சிலர் கொண்டு வரப்பட்டனர். அவர்களை அலீ (ரலி) அவர்கள் எரித்து (விடுமாறு உத்தர)விட்டார்கள். இச்செய்தி இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், 'நானாக இருந்திருந்தால் அவர்களை எரித்திருக்கமாட்டேன். ஏனெனில், நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் அளிக்கிற (நெருப்பின்) வேதனையை அளித்து (எவரையும்) தண்டிக்காதீர்கள்' என்று கூறினார்கள். மாறாக, நபி (ஸல்) அவர்கள், 'தம் மார்க்கத்தை மாற்றிக் கொள்கிறவருக்கு மரணதண்டனை அளியுங்கள்' என்று சொன்னதற்கேற்ப நான் அவர்களுக்கு மரணதண்டனை அளித்திருப்பேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 6923 அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

நான் ஒரு முறை நபி (ஸல்) அவர்களை நோக்கிச் சென்றேன். என்னுடன் (என்) அஷ்அரீ குலத்தைச் சேர்ந்த இருவரும் இருந்தனர். அவர்களில் ஒருவர் என் வலப்பக்கத்திலும் இன்னொருவர் என் இடப்பக்கத்திலும் இருந்தனர். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பல் துலக்கிக் கொண்டிருந்தார்கள். (என்னுடன் வந்த) அவ்விருவரும் (நபி (ஸல்) அவர்களிடம் ஏதேனும் அரசாங்கப் பதவி அளிக்குமாறு) கோரினர். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அபூ மூஸாவே' அல்லது 'அப்துல்லாஹ் இப்னு கைஸே!' என்றார்கள். நான், 'சத்திய (மார்க்க)த்துடன் தங்களை அனுப்பியவன் மீதாணையாக! இவர்கள் இருவரும் தம் மனத்தில் இருந்ததை என்னிடம் தெரிவிக்கவுமில்லை இவர்கள் பதவி கேட்பார்கள் என்று எனக்குத் தெரியவும் செய்யாது'' என்று சொன்னேன். அப்போது நபி (ஸல்) அவர்களின் இதழுக்குக் கீழ் துருத்திக் கொண்டிருந்த பல்துலக்கும் குச்சியினை இப்போதும் கூட நான் பார்ப்பதைப் போன்றுள்ளது. நபி (ஸல்) அவர்கள், 'பதவியை விரும்புகிறவருக்கு நாம் பதவி' கொடுப்பதில்லை' அல்லது 'ஒருபோதும் கொடுக்க மாட்டோம்'. எனவே, 'அபூ மூஸாவே' அல்லது அப்துல்லாஹ் இப்னு கைஸே' நீங்கள் யமன் நாட்டிற்கு (ஆளுனராக)ச் செல்லுங்கள்'' என்றார்கள்.

ஸஹீஹுல் புஹாரி பாகம் 7 அத்தியாயம் 88 இஸ்லாத்திலிருந்து வெளியேறியார் மற்றும் சத்தியத்தின் விரோதிகளை மனமாற்றம் காணச்செய்வதும் அவர்களுடன் போரிடுவதும்

(அவ்வாறே அபூ மூஸா(ரலி) அவர்கள் யமன் நாட்டிற்குச் சென்றார்கள்.) பிறகு அபூ மூஸா அவர்களைப் பின்தொடர்ந்து முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களை (யமன் நாட்டுக்கு) நபியவர்கள் அனுப்பிவைத்தார்கள். முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்கள் அபூ மூஸா(ரலி) அவர்களிடம் சென்றபோது அவர்களைக் கண்ணியப்படுத்தும் விதமாக) அவர்களுக்கு தலையணை ஒன்றை அபூ மூஸா(ரலி) அவர்கள் எடுத்து வைத்து'வாகனத்திலிருந்து இறங்குங்கள் (இதில் அமருங்கள்)'' என்றார்கள். அப்போது அபூ மூஸா(ரலி) அவர்களின் அருகில் ஒருவர் கட்டப்பட்டிருப்பதைக் கண்டு,'இவர் யார்?' என்று முஆத்(ரலி) அவர்கள் கேட்டார்கள். அபூ மூஸா(ரலி) அவர்கள்'இவர் யூதராயிருந்து இஸ்லாத்தைத் தழுவினார். அதற்குப் பிறகு (இஸ்லாத்தைவிட்டுவெளியேறி) யூதராம்விட்டார்'' என்றார்கள். (மீண்டும் அபூ மூஸா(ரலி) அவர்கள் முஆத்(ரலி) அவர்களிடம்)'அமருங்கள்'' என்று கூறினார்கள். அதற்கு முஆத்(ரலி) அவர்கள்,'இல்லை. அல்லாஹ்வுடையவும் அவனுடைய தூதருடையவும் தீர்ப்புப்படி இவருக்கு மரணதண்டனை அளிக்கப்படாத வரை (நான் அமரமாட்டேன்)'' என்று மூன்று முறை சொன்னார்கள். எனே, அவருக்கு மரண தண்டனையளிக்கும் படி (அபூ மூஸா(ரலி) அவர்கள் உத்தரவிட அவ்வாறே அவர் கொல்லப்பட்டார்.

பிறகு அவர்கள் இருவரும் இரவில் நின்று வணங்குவது குறித்து பேசிக்கொண்டனர். அப்போது அவர்களில் ஒருவர் (முஆத்(ரலி) அவர்கள்)'நான் இரவில் சிறிது நேரம்) நின்று வணங்குகிறேன். (சிறிது நேரம்) உறங்குகிறேன். நின்று வணங்குவதற்கு நான் பிரதிபலனை எதிர்பார்ப்பதைப் போன்றே என் உறக்கத்திற்கும் நான் பிரதிபலனை எதிர்பார்க்கிறேன்'' என்றார்கள்.

## மார்க்கத்தின் கட்டாயக் கடமைகளை ஏற்க மறுப்போருக்கு மரண தண்டனை வழங்குவதும், அவர்கள் மார்க்கத்திலிருந்து வெளியேறியவர்கள் என்று தீர்மானிப்பதும்

ஹதீஸ் 6924 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இவ்வுலகைவிட்டுப் பிரிந்து, அபூ பக்ர்(ரலி) அவர்கள் கலீஃபாவாக ஆக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் அரபுகளில் சிலர் இறைமறுப்பாளர்களாய் மாறினர். (அவர்களின் மீது போர் தொடுக்கப்போவதாக அபூ பக்ர்(ரலி) கூறினார்.) அப்போது உமர்(ரலி) அவர்கள்,'அபூ பக்ர் அவர்களே! மக்களுடன் நீங்கள் எவ்வாறு போரிட முடியும்? இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'வணக்கத்திற்குரியவர் அல்லாஹுவைத் தவிர வேறெவருமில்லை என்று மக்கள் கூறும்வரை அவர்களுடன் போரிடுமாறு எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. வணக்கத்திற்குரியவர் அல்லாஹுவைத் தவிர வேறெவருமில்லை எனக் கூறுகிறவர் தகுந்த காரணம் இருந்தால் தவிர தன் உயிருக்கும் செல்வத்திற்கும் பாதுகாப்புப் பெறுவார். அவரின் (அந்தரங்க எண்ணங்கள் மற்றும் நடவடிக்கைகளுக்குரிய) விசாரணை அல்லாஹ்விடம் உள்ளது என்று கூறினார்களே?' என்று கேட்டார்கள்.

ஹதீஸ் 6925 அதற்கு அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! தொழுகைக்கும் ஸகாத்திற்கும் இடையே பாகுபாடு காட்டுபவர்களுடன் நான் நிச்சயம் போரிடுவேன். ஏனெனில், ஸகாத் என்பது பொருளாதாரக் கடமையாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (ஸகாத்தாக) வழங்கி வந்த ஓர் ஒட்டகக் குட்டியை மக்கள் என்னிடம் தர மறுத்தாலும் அதற்காக அவர்களுடன் நான் போர் புரிவேன்'' என்று கூறினார்கள்.

இதைக் கேட்ட உமர்(ரலி) அவர்கள்'அல்லாஹ்வின் மீதாணையாக! (ஸகாத் கொடுக்க மறுத்தவர்களின் மீது) போர் தொடுக்கும் (முடிவை எடுக்கும்) படி அபூ பக்ர்(ரலி) அவர்களின் இதயத்தை அல்லாஹ் விரிவாக்கிவிட்டான் என்பதைத் தவிர வேறெதையும் அப்போது நான் காணவில்லை. அதுதான் சரி(யான முடிவு) என்பதை நான் அறிந்துகொண்டேன்'' என்று கூறினார்கள்.

## இஸ்லாமிய அரசின்கீழ் வாழும் பிற மதத்தாரோ மற்றவர்களோ நபி(ஸல்) அவர்களை ஏசும் வகையில் அஸ்ஸாமு அலைக்கும் (உங்களுக்கு மரணம் நேரட்டும்) என்பதைப் போன்ற வார்த்தைகளை சாடைமாடையாகக் கூறினால்...?

ஹதீஸ் 6926 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஒரு யூதன் இறைத்தூதர்(ஸல்) அவர்களைக் கடந்து சென்றபோது,'அஸ்ஸாமு அலைக்க' (உமக்கு மரணம் நேரட்டும்) எனக் கூறினான். அதற்கு (பதிலாக) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'வ அலைக்க' (அவ்வாறே உனக்கு உண்டாகட்டும்) என்றார்கள். பின்னர் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்களை நோக்கி),'அவன் என்ன சொல்கிறான் என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டுவிட்டு,'அவன்'அஸ்ஸாமு அலைக்க' (உங்களுக்கு மரணம் நேரட்டும்) என்று சொன்னான்'' என்றார்கள். மக்கள்,'இறைத்தூதர் அவர்களே! அவனை நாங்கள் கொல்ல வேண்டாமா?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'வேண்டாம். வேதக்காரர்கள் உங்களுக்கு சலாம் சொன்னால் (அதற்கு பதிலாக) நீங்கள்'வ அலைக்கும்' (அவ்வாறே உங்களுக்கு உண்டாகட்டும்) என்று சொல்லிவிடுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 6927 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

யூதர்களில் ஒரு குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து அனுமதி கேட்டு'அஸ்ஸாமு அலைக்க' (உமக்கு மரணம் உண்டாகட்டும்) என்று (சற்றே மாற்றி சாபமிட்டு முகமன்) கூறினர். உடனே நான்'வ அலைக்கும் அஸ்ஸாமு வல்லஅனா' அவ்வாறே உங்களுக்கு மரணமும் சாபமும் ஏற்படட்டும்) என்று பதில் (முகமன்) சொன்னேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'ஆயிஷா! (நிதானம்!) அல்லாஹ் நளினமானவன். எல்லாக் காரியங்களிலும் நளினத்தைக் கையாள்வதையே அவன் விரும்புகிறான்'' என்று கூறினார்கள். நான்'அவர்கள் சொன்னதை நீங்கள் செவியேற்கவில்லையா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'நானே'வ அலைக்கும்' (அவ்வாறே உங்களுக்கு உண்டாகட்டும்) என்று (நளினமாகச்) சொல்லி விட்டேனே (அதை நீ கவனிக்கவில்லையா?)'' என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

ஹதீஸ் 6928 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு யூதர்கள் சலாம் (முகமன்) சொன்னால்'ஸாமுன் அலைக்க'' (உங்களுக்கு மரணம் நேரட்டும்) என்றே கூறுவர். எனவே, (அவர்களுக்கு பதில் சலாமாக)'அலைக்க'' (அவ்வாறே உங்களுக்கு உண்டாகட்டும்) என்று நீங்கள் சொல்லிவிடுங்கள்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6929 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

(முற்கால) இறைத்தூதர்களில் ஒருவரின் நிலையை நபி(ஸல்) அவர்கள் எடுத்துரைத்துக் கொண்டிருப்பதை நான் இப்போதும் பார்ப்பதைப் போன்றுள்ளது. அந்த இறைத்தூதரை அவரின் சமுதாயத்தார் அடித்து அவரை இரத்தத்தில் தோய்த்துவிட்டார்கள். அப்போது அவர் தம் முகத்திலிருந்து இரத்தத்தைத் துடைத்தபடி'இறைவா! என் சமுதாயத்தாரை மன்னித்து விடு! ஏனெனில், அவர்கள் அறியாதவர்களாயிருந்தார்கள்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## காரிஜிய்யா மற்றும் முல்ஹிதீன் ஆகியோருக்கெதிரான ஆதாரங்களை நிலைநாட்டிய பின் அவர்களுக்கு மரண தண்டனை வழங்குவது.

அல்லாஹ் கூறினான்:

எந்தவொரு சமுதாயத்திற்கும் அல்லாஹ் நேர்வழி காட்டிய பின் அவர்கள் தவிர்ந்து கொள்ள வேண்டியவற்றை அவர்களுக்குத் தெளிவுபடுத்தாத வரை அவர்களை அவன் வழிதவறச் செய்வதில்லை. நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருள்களையும் நன்கறிந்தவன். (திருக்குர்ஆன் 09:115)

இப்னு உமர்(ரலி) அவர்கள் காரிஜிய்யாக்களை அல்லாஹ்வின் படைப்புகளிலேயே மிகவும் தீயவர்கள் என்று கருதி வந்தார்கள். மேலும்,'இறைமறுப்பாளர்கள் தொடர்பாக அருளப்பெற்ற இறைவசனங்களை இறைநம்பிக்கையாளர்களின் மீது திணிக்கும் அளவுக்கு இவர்கள் சென்றார்கள்'' என்றும் சொன்னார்கள்.

ஹதீஸ் 6930 அலீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி நான் உங்களுக்கு அறிவிக்கிறேன் என்றால், (உண்மையில் அவர்கள் சொன்னதையே அறிவிக்கிறேன். ஏனெனில்,) நான் வானத்திலிருந்து கீழே விழுந்து விடுவது, நபி அவர்களின் மீது புனைந்து சொல்வதைவிட எனக்கு விருப்பமானதாகும். எனக்கும் உங்களுக்கும் இடையே உள்ள (போர் போன்ற) ஒரு விவகாரம் தொடர்பாக நான் உங்களிடம் பேசினால், போர் என்பது சூழ்ச்சியே (என்பதை நினைவில் கொள்ளுங்கள்). இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: இறுதிக் காலத்தில் ஒரு கூட்டத்தார் வருவார்கள். அவர்கள் குறைந்த வயதுடைய இளைஞர்களாயிருப்பார்கள். முதிர்ச்சியுற்ற புத்தியுடையவர்களாயிருப்பார்கள். பூமியிலேயே மிகச் சிறந்த சொல்லை (குர்ஆன் வசனங்களை) எடுத்துச் சொல்வார்கள். வேட்டைப் பிராணியி(ன் உடலி)லிருந்து (வேடன் எய்த) அம்பு (அதன் மறுபுறமாக) வெளிப்பட்டுச் சென்றுவிடுவதைப் போன்று அவர்கள் இஸ்லாத்திலிருந்து வெளியேறிச் சென்றுவிடுவார்கள். அவர்களின் இறைநம்பிக்கை அவர்களின் தொண்டைக் குழிகளைத் தாண்டிச் செல்லாது. அவர்களை நீங்கள் எங்கு கண்டாலும் உயிரோடுவிடாதீர்கள். ஏனெனில், அவர்களை அழிப்பது, அதைச் செய்தவர்களுக்கு மறுமைநாளில் நற்பலனாக அமையும்.

ஹதீஸ் 6931 அபூ ஸலமா(ரஹ்) மற்றும் அதாஉ இப்னு யஸார்(ரஹ்) ஆகியோர் அறிவித்தார்கள்:

நாங்கள் இருவரும் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களிடம் சென்று'ஹரூரிய்யாக் கூட்டத்தார் (காரிஜிய்யாக்கள்) பற்றி நபி(ஸல்) அவர்களிடமிருந்து ஏதேனும் செவியேற்றுள்ளீர்களா?' என்று கேட்டோம். அதற்கு அவர்கள் ஹரூரிய்யாக்கள் என்றால் யாரென்று எனக்குத் தெரியாது. (ஆனால்,) நபி(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறக் கேட்டுள்ளேன் என்றார்கள்:

இந்தச் சமுதாயத்திற்கிடையே ஒரு கூட்டத்தார் கிளம்புவர். -(சமுதாயத்திற்கிடையே என்று கூறினார்களே தவிர,) இந்தச் சமுதாயத்திலிருந்து என்று கூறவில்லை- அவர்களின் தொழுகையுடன் உங்களின் தொழுகையை நீங்கள் ஒப்பிட்டுப் பார்த்து உங்களுடைய தொழுகையை அற்பமானதாகக் கருதுவீர்கள். (அந்த அளவிற்கு அவர்களின் வழிபாடு கலை கட்டியிருக்கும்.) அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின்'தொண்டையை' அல்லது'தொண்டைக் குழியை'த் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் தைக்கின்ற) அம்பு (உடலின்) மறுபுறம் வெளிப்பாட்டு) சென்றுவிடுவதைப் போன்று இந்த மார்க்கத்தைவிட்டு அவர்கள் வெளியேறிவிடுவார்கள். அம்பெய்தவர் அந்த அம்பைப் அதன் முனையைப் அதன் (முனையைப் பொருத்தப்பயன்படும்) நாணைப் பார்ப்பார். அவர் (இவ்வாறு) சந்தேகப்பட்டு நாண் பொருத்தப்படும் இடம் வரை, அவற்றில் இரத்தம் ஏதேனும் பட்டுள்ளதா? என்று பார்ப்பார். (ஆனால், எந்த அடையாளமும் இராது.)

ஹதீஸ் 6932 முஹம்மத் இப்னு ஸைத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் பாட்டனார்) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் ஹரூரிய்யாக்கள் ('காரிஜிய்யாக்கள்') குறித்துக் கூறியபோது,'(வில்லில் இருந்து புறப்பட்ட) அம்பு வேட்டைப் பிராணியின் உடலில் இருந்து வெளியேறுவதைப் போன்று இவர்கள் இஸ்லாத்தைவிட்டும் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் செல்வார்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்'' என்று கூறினார்கள்.

## (இதயங்களிடையே) நெருக்கத்தை ஏற்படுத்தவும் தம்மைவிட்டு மக்கள் விலகிச் சென்றுவிடக் கூடாது என்பதற்காகவும் காரிஜிய்யாக்களைக் கூட ஒருவர் கொல்லாமல்விட்டுவிடுவது.

ஹதீஸ் 6933 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

(அலீ(ரலி) அவர்கள் யமன் நாட்டிலிருந்து அனுப்பியிருந்த தங்கக் கட்டியை) நபி(ஸல்) அவர்கள் (மக்களில் சிலருக்குப்) பங்கிட்டுக் கொண்டிருந்தபோது பனு தமீம் குலத்தைச் சேர்ந்த'அப்துல்லாஹ் இப்னு தில் குவைஸிரா' என்பவர் வந்து,'இறைத்தூதர் அவர்களே! நீதியுடன் நடந்துகொள்ளுங்கள்'' என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'உனக்குக் கேடுதான். (இறைத்தூதராகிய) நானே நீதியுடன் நடந்துகொள்ளாவிட்டால் வேறு யார் தாம் நீதியுடன் நடந்துகொள்ளப் போகிறார்கள்?' என்று கேட்டார்கள். (அப்போது அங்கிருந்த) உமர்(ரலி) அவர்கள்,'என்னை விடுங்கள் இவர் கழுத்தை நான் வெட்டிவிடுகிறேன்'' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'இவரை விட்டு விடுங்கள். இவருக்குத் தோழர்கள் சிலர் உள்ளனர். அவர்களின் தொழுகையுடன் உங்களுடைய தொழுகையையும் அவர்களின் நோன்புடன் உங்களுடைய நோன்பையும் ஒப்பிட்டுப் பார்த்து உங்களின் தொழுகையையும் உங்களின் நோன்பையும் அற்பமானவையாகக் கருதுவீர்கள். வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைக்கின்ற) அம்பு (உடலின் மறுபுறம்) வெளிப்பட்டுச் சென்று விடுவதைப் போன்று மார்க்கத்திலிருந்து அவர்கள் வெளியேறிச் சென்றுவிடுவார்கள். (அந்தப் பிராணியின் உடலைத் துளைத்து வெளிவந்ததற்கான அடையாளம் எதுவும் இருக்கின்றதா? என்று) அம்பின் இறகு கூர்ந்து பார்க்கப்படும். அதில் (அடையாளம்) எதுவும் காணக் கிடைக்காது. பிறகு அம்பின் முனை பார்க்கப்படும். அதிலும் எதுவும் காணக்கிடைக்காது. பிறகு அம்பின் நாண் பார்க்கப்படும். அதிலும் எதுவும் காணக் கிடைக்காது. பிறகு அம்பின் (அடிப்பாகக்) குச்சி பார்க்கப்படும். அதிலும் எதுவும் காணப்படாது. அம்பானது, சாணத்தையும் இரத்தத்தையும் (அவை தன் மீது படாதவாறு) முந்திக் கொண்டிருக்கும். அவர்களின் அடையாளம் ஒரு (கறுப்பு

நிற) மனிதராவார். அவரின்'இரண்டு கரங்களில்' அல்லது'இரண்டு மார்பகங்களில்' ஒன்று'பெண்ணின் கொங்கை போன்று' அல்லது'துடிக்கும் இறைச்சித் துண்டு போன்று' இருக்கும். அவர்கள் மக்களிடையே பிரிவினை ஏற்படும் வேளையில் புறப்படுவார்கள்'' என்றார்கள்.

நான் இந்த நபிமொழியை நபி(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டேன் என்று உறுதி அளிக்கிறேன். மேலும், அந்தக் கூட்டத்தாரை (நஹ்ரான் எனுமிடத்தில்) அலீ(ரலி) அவர்கள் கொன்றார்கள். அப்போது நானும் அலீ(ரலி) அவர்களுடன் இருந்தேன். அந்த மனிதன் அலீ(ரலி) அவர்கள் முன்னிலையில்) கொண்டு வரப்பட்டான். நபி(ஸல்) அவர்கள் அறிவித்த வர்ணனையின்படியே அவன் இருந்தான். அவன் விஷயத்தில் தான் 9:58 வது இறைவசனம் அருளப்பெற்றது என்றும் உறுதி கூறுகிறேன்.

ஹதீஸ் 6934 யுசைர் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

நான் ஸஹ்ல் இப்னு ஹுனைஃப்(ரலி) அவர்களிடம்,'காரிஜிய்யாக் கூட்டத்தார் குறித்து நபி(ஸல்) அவர்கள் கூற ஏதேனும் கேட்டுள்ளீர்கள்'' என்று கேட்டேன். அதற்கு அன்னார், நபி(ஸல்) அவர்கள் இராக் நாட்டின் திசையில் தம் கையை நீட்டியவாறு இப்படிக் கூறினார்கள் என்றார்கள்: இங்கிருந்து ஒரு கூட்டத்தார் புறப்படுவார்கள். அவர்கள் குர்ஆன் ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் கழுத்தெலும்பை (தொண்டைக் குழியை)த் தாண்டிச் செல்லாது. வேட்டைப் பிராணியைவிட்டு (அதன் உடலைத் துளைத்த) அம்பு (உடலின் மறுபுறம்) வெளியேறிச் செல்வதைப் போன்று இஸ்லாத்திலிருந்து அவர்கள் (சுவடே தெரியாமல்) வெளியேறிச் சென்றுவிடுவார்கள்.

## ''ஒரே வாதத்தை முன் வைத்து இரண்டு குழுவினர் தம்மிடையே போரிட்டுக் கொள்ளாத வரை (உலக) முடிவு நாள் வராது' எனும் நபிமொழி

ஹதீஸ் 6935 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரே வாதத்தை முன்வைக்கும் இரண்டு குழுவினர் தம்மிடையே போரிட்டுக் கொள்ளாத வரை உலக முடிவுநாள் வராது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (தம் செயலுக்குத்) தகுந்த விளக்கம் அளிப்போர் குறித்து வந்துள்ளவை.

ஹதீஸ் 6936 உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வாழ்நாளில் ஹிஷாம் இப்னு ஹகீம்(ரலி) அவர்கள்'அல்ஃபுர்கான்' எனும் (குர்ஆன்) அத்தியாயத்தை (தொழுகையில்) ஓதுவதை செவியுற்றேன். அவரின் ஓதலை நான் செவிதாழ்த்திக் கேட்டபோது, எனக்கு இறைத்தூதர்(ஸல்) ஓதிக் காண்பிக்காத பல (வட்டார) மொழி வழக்குகளில் அதை அவர் ஓதிக் கொண்டிருந்தார். உடனே தொழுகையில் வைத்தே அவரை நான் தண்டிக்க முனைந்தேன். பிறகு (யோசித்து) அவர் (தொழுகையை முடித்து) சலாம் கொடுக்கும் வரை காத்திருந்தேன். (அவர் தொழுது முடித்த) பிறகு'அவரின் மேல் துண்டை' அல்லது'என்னுடைய மேல் துண்டைக்' கழுத்தில் போட்டுப் பிடித்து,'இந்த அத்தியாயத்தை உமக்கு ஓதிக் காண்பித்தது யார்?' என்று கேட்டேன். அவர்'இதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாம் எனக்கு ஓதிக் காண்பித்தார்கள்'' என்று பதிலளித்தார்.'நீர் பொய் சொல்லிவிட்டீர். அல்லாஹ்வின் மீதாணையாக! நீர் ஓதிய இந்த அத்தியாயத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (வேறு விதமாக) எனக்கு ஓதிக் காட்டினார்கள்'' என்றேன்.

பிறகு அவரை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இழுத்துக் கொண்டு சென்று'இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எனக்கு ஓதிக்காட்டாத பல (வட்டார) மொழி வழக்குகளில்'அல்ஃபுர்கான்' அத்தியாயத்தை இவர் ஓதக் கேட்டேன். தாங்கள் எனக்கு'அல்ஃபுர்கான்' அத்தியாயத்தை (வேறு விதமாக)ச் சொல்லிக் கொடுத்தீர்கள்'' என்று கூறினேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'உமரே! இவரை விடுங்கள்'' என்று கூறிவிட்டு,'ஹிஷாமே! நீங்கள் ஓதுங்கள்!"என்றார்கள். அவர் என்னிடம் ஓதியதைப் போன்றே நபி(ஸல்) அவர்களுக்கு முன்னாலும் ஓதிக் காட்டினார். (இதைக் கேட்ட) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது'' என்று கூறினார்கள். பிறகு (என்னை நோக்கி)'உமரே! நீங்கள் ஓதுங்கள்'' என்றார்கள். நான் ஓதினேன். (அதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்'இப்படித்தான் (இந்த அத்தியாயம்) அருளப்பெற்றது. நிச்சயமாக இந்தக் குர்ஆன், (ஓதுவதற்கான) ஏழு முறைகளில் அருளப்பட்டிருக்கின்றது. எனவே, உங்களுக்கு அதில் எது சுலபமானதோ அதை ஓதிக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6937 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

''யார் இறைநம்பிக்கை கொண்டு பிறகு தம் நம்பிக்கையுடன் அநீதியைக் கலந்திடவில்லையோ அவர்களுக்கே உண்மையில் அமைதி உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 06:82 வது) இறைவசனம் அருளப்பெற்றபோது நபித்தோழர்களுக்கு அது சிரமமாக இருந்தது. மேலும், அவர்கள்'எங்களில் யார் தாம் தமக்குத்தாமே அநீதியிழைக்காதவர்?' என்று கூறினர். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'அநீதி என்பதற்கு நீங்கள் நினைக்கிற அர்த்தமில்லை. லுக்மான் அவர்கள் தம் புதல்வருக்குக் கூறியதைப் போன்றே இங்கு பொருள்கொள்ளவேண்டும்.'என் அருமை மகனே! அல்லாஹ்வுக்கு இணைகற்பிக்காதே! நிச்சயமாக! இணை கற்பிப்பதே மிகப்பெரும் அநீதியாகும்'' என்று கூறினார். (திருக்குர்ஆன் 31:13)

ஹதீஸ் 6938 இத்பான் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னுடைய இல்லத்தில் தொழுமிடம்) அமைத்துக் கொடுப்பதற்காக) என்னிடம் (நண்)பகலில் வந்தார்கள். (அப்பகுதி மக்களில் கணிசமானோர் அங்கு குழுமிவிட்டனர்.) அப்போது ஒருவர்,'மாலிக் இப்னு துக்ஷுன் எங்கே? (அவர் மட்டும் நபியவர்களைச் சந்திக்க வரவில்லையே!)'' என்று கேட்டதற்கு எங்களில் ஒருவர்,'மாலிக் இப்னு துக்ஷுன் ஒரு முனாஃபிக் (நயவஞ்சகர்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்காதவர் (எனவேதான் அவர் நபியைக் காண இங்கு வரவில்லை)'' என்று கூறினார். அதைக் கேட்ட நபிஸல்) அவர்கள்,'அவர் அல்லாஹ்வின் திருப்தியை நாடி'லா இலாஹ இல்லல்லாஹ்' (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை) என்று கூறுவதை நீங்கள் செவியேற்கவில்லையா?' என்று கேட்டார்கள். அந்த மனிதர்,'ஆம்' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'மறுமை நாளில் எந்த அடியார்'லாயிலாஹ இல்லல்லாஹ்' எனும் (ஏகத்துவ) வாக்கியத்துடன் செல்கிறவரின் மீது இறைவன் நரகத்தை தடை செய்யாதிருப்பதில்லை'' என்றார்கள்.

ஹதீஸ் 6939 ஸஅத் இப்னு உபைதா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(உஸ்மான்(ரலி) அவர்களின் ஆதரவாளர்களில் ஒருவரான) அபூ அப்திர் ரஹ்மான் அவர்கள் (அலீ(ரலி) அவர்களின் ஆதரவாளர்களில் ஒருவரான) ஹிப்பான் இப்னு அதிய்யா அவர்களிடம் சர்ச்சையிட்டுக் கொண்டு,'உங்கள் தோழர் அலீ அவர்களுக்கு இரத்தம் சிந்தச் செய்யும்

துணிவைக் கொடுத்து எது? என்று நான் உறுதிபட அறிவேன்'' என்று கூறினார்கள். ஹிப்பான் அவர்கள், 'தந்தையற்றுப் போவாய்! (அலீ அவர்களுக்குத் துணிவைத் தந்த) அந்த விஷயம் எது?' என்று கேட்டார்கள். அபூ அப்திர்ரஹ்மான் அவர்கள், 'அது ஒரு சம்பவம். அதனை அலீ (ரலி) அவர்களே கூற கேட்டுள்ளேன்'' என்றார்கள். ஹிப்பான் அவர்கள், 'என்ன சம்பவம் அது?' என்று கேட்க, (பின்வருமாறு) அபூ அப்திர்ரஹ்மான் அவர்கள் கூறினார்கள்:

(அலீ (ரலி) கூறினார்:)

குதிரை வீரர்களான என்னையும் ஸுபைர் இப்னு அவ்வாம் (ரலி) அவர்களையும் அபூ மர்ஸத் (ரலி) அவர்களையும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'நீங்கள் 'ரவ்ளத்து ஹாஜ்' எனும் இடம் வரை செல்லுங்கள். -இவ்வாறு 'ஹாஜ்' என்றே அபூ அவானா (ரஹ்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஸலமா கூறுகிறார்கள். (மற்ற அறிவிப்புகளில் 'ரவ்ளத்து காக்' என வந்துள்ளது) அங்கு ஒரு பெண் இருப்பாள். அவளிடம் ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ (மக்காவிலிருக்கும்) இணை வைப்பாளர்களுக்கு எழுதிய (நம்முடைய இரகசிய திட்டங்களைத் தெரிவிக்கும்) கடிதம் ஒன்றிருக்கும். அதை (அவளிடமிருந்து கைப்பற்றி) என்னிடம் கொண்டு வாருங்கள்'' என்று கூறி அனுப்பினார்கள். உடனே நாங்கள் எங்கள் குதிரைகளின் மீதேறிச் சென்றோம். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் குறிப்பிட்ட அந்த இடத்தில் தன்னுடைய ஒட்டகம் ஒன்றின் மீது அவள் செல்வதைக் கண்டோம். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (மக்காவை வெற்றி கொள்வதற்காக) மக்காவாசிகளை நோக்கிப் புறப்படவிருப்பது தொடர்பாக ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ (அக்கடிதத்தில்) மக்காவாசிகளுக்கு எழுதியிருந்தார். நாங்கள் (அவளிடம்), 'உன்னிடம் உள்ள அந்தக் கடிதம் எங்கே?' என்று கேட்டோம். அவள், 'என்னிடம் கடிதம் எதுவுமில்லை'' என்று சொன்னாள். உடனே நாங்கள் அவள் அமர்ந்திருந்த அந்த ஒட்டகத்தை மண்டியிடச் செய்து அவளிருந்த சிவிகைக்குள் (கடிதத்தைத்) தேடினோம். (அதில்) எதுவும் கிடைக்கவில்லை. அப்போது என் சகாக்கள் இருவரும் 'இவளிடம் எந்தக் கடிதத்தையும் நம்மால் காணமுடியவில்லையே'' என்றார்கள். நான், 'இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பொய் சொல்லமாட்டார்கள் என்று திட்டவட்டமாக நாம் அறிந்துள்ளோம்'' என்று கூறிவிட்டு, சத்தியம் செய்வதற்கு தகுதிபெற்ற (இறை)வன் மீது ஆணையிட்டு, 'ஒன்று நீயாக அதை வெளியே எடுக்க வேண்டும். அல்லது நான் உன்னை (சோதனையிடுவதற்காக உன்னுடைய ஆடையைக்) கழற்ற வேண்டியிருக்கும்'' என்று சொன்னேன். இதைக் கேட்ட அவள் தன்னுடைய இடுப்பை நோக்கி(த் தன்னுடைய கையை)க் கொண்டு சென்றாள். அவள் (இடுப்பில்) ஒரு துணி கட்டியிருந்தாள். (அதற்குள்ளேயிருந்து) அந்தக் கடிதத்தை வெளியே எடுத்தாள். அந்தக் கடிதத்தை நாங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் கொண்டு வந்தோம். (பிறகு அதை நான் நபி (ஸல்) அவர்களுக்குப் படித்துக் காட்டினேன்.)

அப்போது உமர் (ரலி) அவர்கள், ''இறைத்தூதர் அவர்களே! ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார். என்னை விடுங்கள் அவரின் கழுத்தைக் கொய்துவிடுகிறேன்'' என்றார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'ஹாத்திபே! ஏன் இப்படிச் செய்தீர்கள்?' என்று கேட்டார்கள். ஹாத்திப் இப்னு அபீ பல்த்தஆ, 'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நம்பிக்கை கொள்ளாமலிருக்க எனக்கு என்ன நேர்ந்துவிட்டது? (நான் இறைநம்பிக்கையைக் கைவிட்டுவிடவில்லை.) மாறாக, மக்காவாசிகளுக்கு நான் உபகாரம் ஏதேனும் செய்து அதற்குப் பரிகாரமாக அவர்கள் (அங்குள்ள பலவீனமான) என் உறவினர்களையும் என் செல்வங்களையும் காப்பாற்ற வேண்டுமென்று விரும்பினேன் தங்களின்

ஸஹீஹுல் புஹாரி பாகம் 7 அத்தியாயம் 88 இஸ்லாத்திலிருந்து வெளியேறியார் மற்றும் சத்தியத்தின் விரோதிகளை மனமாற்றம் காணச்செய்வதும் அவர்களுடன் போரிடுவதும்

(முஹாஜிர்) தோழர்கள் அனைவருக்குமே அவர்களின் குடும்பத்தாரையும் செல்வத்தையும் எவரின் மூலமாக அல்லாஹ் பாதுகாப்பானோ அத்தகைய உறவினர்கள் அங்கு உள்ளனர்'' என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள், 'இவர் உண்மை பேசினார். இவர் குறித்து நல்லதையே சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். உமர்(ரலி) அவர்கள் மீண்டும்'இறைத்தூதர் அவர்களே! இவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார். என்னை விடுங்கள் இவரின் கழுத்தைக் கொய்துவிடுகிறேன்'' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள், 'இவர் பத்ருப் போரில் கலந்துகொண்டவர் இல்லையா? உங்களுக்கு என்ன தெரியும்? ஒருவேளை அல்லாஹ் பத்ருப்போரில் பங்கெடுத்தவர்களிடம்'நீங்கள் விரும்பியதைச் செய்துகொள்ளுங்கள். சொர்க்கத்தை உங்களுக்கு நான் உறுதியாக்கிவிட்டேன்' என்று கூறிவிட்டிருக்கலாம்'' என்றார்கள்.

இதைக்கேட்ட உமர்(ரலி) அவர்களின் கண்கள் கண்ணீரில் மூழ்கின. அப்போது உமர்(ரலி) அவர்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்றார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்: (அந்த இடத்தின் பெயர்)'ரவ்ளத்து காக்' என்பதே சரியான தகவலாகும்.

ஆயினும், 'ரவ்ளத்து ஹாஜ்' என்றே அபூ அவானா கூறுகிறார். இது திரிபாகும். இது ஓர் இடத்தின் பெயராகும். ஹுஷைம் இப்னு பஷீர்(ரஹ்) அவர்கள்'காக்' என்றே குறிப்பிடுகிறார்கள்.

## அத்தியாயம் 89 (குற்றங்கள் புரியுமாறு) நிர்ப்பந்திக்கப்படுதல்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கை கொண்ட பிறகு கட்டாயத்திற்குள்ளாம், தம் உள்ளம் இறைநம்பிக்கையில் (சலனமின்றி) அமைதியுடன் இருக்கும் நிலையில் இறைமறுப்பை வெளியிடுகிறவரைத் தவிர (அதாவது அவரின் மீது குற்றமில்லை). ஆனால், யார் மன நிறைவுடன் இறைமறுப்பை ஏற்கிறவர்களின் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகும். இன்னும் அவர்களுக்குக் கொடிய வேதனையும் உண்டு. (திருக்குர்ஆன் 16:106)

மேலும், அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்கள் (தங்களைப் போன்ற) இறைநம்பிக்கையாளர்களை விடுத்து மற்ற மறுப்பாளர்களை(த் தம்) உற்ற நண்பர்களாக ஆக்கிக் கொள்ள வேண்டாம். அவர்களி(ன் தொல்லைகளி)லிருந்து தம்மைத் தற்காத்துக் கொள்வதற்காகவே தவிர. எவரேனும் அவ்வாறு செய்தால், அல்லாஹ்வின் பொறுப்பில் அவர்கள் இலர். (திருக்குர்ஆன் 03:28)

(அல்லாஹ்வின் ஆணையை நிறைவேற்றாது) தமக்குத் தாமே அநீதி இழைத்தவர்களின் உயிரை வானவர்கள் கைப்பற்றும்போது'நீங்கள் எந்த நிலையில் இருந்தீர்கள்?' என்று கேட்பார்கள். (அதற்கவர்கள்)'நாங்கள் பூமியில் (கொடுமையை எதிர்க்க முடியா) பலவீனர்களாக இருந்தோம்'' என்று கூறுவார்கள்.'அல்லாஹ்வின் பூமி விசாலமானதாக இல்லையா? அதில் (ஹிஜ்ரத் செய்து) நீங்கள் நாடு கடந்து போயிருக்கக் கூடாதா?' என (வானவர்கள்) கேட்பார்கள். எனவே, இத்தகையோர் ஒதுங்குமிடம் நரகம் தான் சென்றடையும் இடங்களில் அது மிகக் கெட்டதாகும். (ஆனால்) ஆண்களிலும், பெண்களிலும், சிறுவர்களிலும் பலவீனமானவர்களைத் தவிர. ஏனெனில், இவர்கள் எவ்வித உபாயமும் தெரியாதவர்கள் (வெளியேறிச் செல்ல) வழியும் அறியாதவர்கள். அத்தகையோரை அல்லாஹ் மன்னிக்கப் போதுமானவன். ஏனெனில், அல்லாஹ் மிகவும் மன்னிப்பவனாகவும், (பிழைகளை) மறைப்பவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:97-99)

பலவீனமான ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோரைக் காப்பதற்காக இறைவழியில் போர் புரியாதிருக்க உங்களுக்கு என்ன காரணம் உள்ளது? அவர்களோ,'எங்கள் இறைவா! அக்கிரமக்காரர்கள் உள்ள இந்த ஊரைவிட்டு எங்களை வெளியேற்றிவிடுவாயாக! எங்களுக்கு உன்னிடமிருந்து பாதுகாவலரை அளித்திடுவாயாக! மேலும், எங்களுக்கு உன்னிடமிருந்து உதவியாளரையும் அளித்திடுவாயாக!"என்று பிரார்த்திக்கிறார்கள். (திருக்குர்ஆன் 04:75)

(இவ்வசனங்களில்,) அல்லாஹ் கட்டளையிட்ட ஒன்றைக் கைவிடுவதைத் தவிர வேறு வழியில்லா பலவீனர்களை தான் மன்னிப்பதாக அல்லாஹ் தெரிவிக்கிறான். நிர்ப்பந்தத்திற்குள்ளாக்கப்பட்டவரும் பலவீனராகத்தான் இருப்பார். (நிர்ப்பந்திப்போரால்) அவருக்கு இடப்பட்ட கட்டளையை நிறைவேற்றுவதைத் தவிர அவருக்கு வேறு வழி கிடையாது. ஹஸன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள்,'(எதிரிகளிடமிருந்து) தற்காத்துக் கொள்வதென்பது மறுமைநாள் வரை இருக்கிற ஓர் அம்சமாகும்'' என்று கூறினார்கள்.

திருடர்களின் நிர்ப்பந்தத்தால் தம் மனைவியை மணவிலக்குச் செய்துவிட்ட ஒருவர் குறித்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகையில்,'(மணவிலக்கு) எதுவும் நிகழாது'' என்று கூறினார்கள்.

இக்கருத்தையே இப்னு உமர்(ரலி), இப்னு ஸுபைர்(ரலி), ஷஅபீ (ரஹ்) மற்றும் ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) ஆகியோரும் கூறியுள்ளனர்.

மேலும்,'எண்ணத்தைப் பொறுத்தே செயல்கள் அமைகின்றன'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6940 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ஒரு முறை) தொழுகையில்,'இறைவா! அய்யாஷ் இப்னு அபீ ரபீஆ, ஸலமா இப்னு ஹிஷாம், வலீத் இப்னு வலீத் ஆகியோரைக் காப்பாற்றுவாயாக! இறைவா! (மக்காவிலுள்ள) ஒடுக்கப்பட்ட இறைநம்பிக்கையாளர்களையும் நீ காப்பாற்றுவாயாக! இறைவா! (கடும் பகை கொண்ட) முளர் குலத்தார் மீது உன்னுடைய பிடியை இறுக்குவாயாக! யூசுஃப் (அலை) அவர்கள் காலத்தில் நீ அனுப்பிய (பஞ்சமான) ஆண்டுகளைப் போன்று இவர்களுக்கும் (பஞ்சம் நிறைந்த) ஆண்டுகளை அனுப்புவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.

## இறைமறுப்பை விட அடி, உயிரிழப்பு, அவமானம் ஆகியவற்றை ஒருவர் ஏற்பது.

ஹதீஸ் 6941 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எவரிடம் மூன்று தன்மைகள் இருக்கின்றனவோ அவர் ஈமான் எனும் இறைநம்பிக்கையின் சுவையை அடைவார். (அவை:) 1. அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் அவருக்கு மற்ற எல்லாவற்றையும் விட அதிக நேசத்திற்குரியோராவது. 2. ஒருவரை நேசிப்பதானால் அல்லாஹ்வுக்காகவே நேசிப்பது. 3. தாம் நெருப்பில் வீசப்படுவதை வெறுப்பதைப் போன்று இறைமறுப்பிற்குத் திரும்புவதை அவர் வெறுப்பது.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6942 கைஸ் இப்னு அபீ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(கூஃபா பள்ளிவாசலொன்றில் கூடியிருந்த மக்களிடம்) ஸயீத் இப்னு ஸைத்(ரலி) கூறினார்: நான் இஸ்லாத்தை ஏற்றதற்காக உமர் அவர்கள் என்னைக் கட்டி வைத்(து தண்டித்)த (அனுபவத்)தை நான் கண்டுள்ளேன். உஸ்மான்(ரலி) அவர்களுக்கு நீங்கள் செய்த (துரோகத்)தைக் கண்டு (மனம் தாளாமல்)'உஹுத்' மலை தகர்ந்து போனால் அதுவும் சரியானதே!

ஹதீஸ் 6943 கப்பாப் இப்னு அல்அரத்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கஅபாவின் நிழலில் தம் சால்வை ஒன்றைத் தலையணையாக வைத்துச் சாய்த்துக் கொண்டிருந்தபோது அவர்களிடம், (இஸ்லாத்தின் எதிரிகள் எங்களுக்கிழைக்கும் கொடுமைகளை) நாங்கள் முறையிட்டபடி'எங்களுக்காக இறைவனிடம் நீங்கள் உதவி கோரமாட்டீர்களா? எங்களுக்காகப் பிரார்த்திக்கமாட்டீர்களா?' என்று கேட்டோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'உங்களுக்கு முன்னிருந்தவர்களிடையே (ஓரிறைக் கொள்கையை ஏற்று இறைத்தூதரை நம்பிய) ஒருவர் பிடிக்கப்பட்டு, அவருக்காக மண்ணில் குழி தோண்டப்பட்டு, அவர் அதில் நிறுத்தப்படுவார். பின்னர் ரம்பம் கொண்டுவரப்பட்டு அவரின் தலையில் வைக்கப்பட்டு, அது இரண்டு பாதியாகப் பிளக்கப்படும். (பழுக்கக் காய்ச்சிய) இரும்புச் சீப்புகளால் அவர் (மேனி) கோதப்பட, அது அவரின் தசையையும் எலும்பையும் கடந்து சென்றுவிடும். ஆயினும் அ(ந்தக் கொடுமையான)து, அவரை (அவர் ஏற்றுக் கொண்ட) அவரின் மார்க்கத்திலிருந்து பிறழச் செய்யவில்லை. அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த (இஸ்லாத்தின்) விவகாரம் முழுமைப்படுத்தப்படுவது உறுதி. எந்த அளவிற்கென்றால் வானத்தில் பயணம் செய்யும்

ஒருவர் (யமனிலுள்ள)'ஸன்ஆவிலிருந்து'ஹள்ரமவ்த்' வரை பயணம் செல்வார். (வழியில்) அல்லாஹ்வையும் தவிர வேறெதற்கும் (வேறெவருக்கும்) அவர் அஞ்சமாட்டார். ஆயினும், (தோழர்களே!), நீங்கள் தாம் (கொடுமை தாளாமல் பொறுமை குன்றி) அவசரப்படுகின்றீர்கள்'' என்றார்கள்.

## பொருளாதார காரணங்களுக்காகவோ மற்ற காரணங்களுக்காகவோ ஒருவர் தம் சொத்துக்களை விரும்பியோ விரும்பாமலோ விற்க வேண்டிய கட்டாயம் நேர்வது.

ஹதீஸ் 6944 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் பள்ளிவாசலில் இருந்து கொண்டிருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்து,'யூதர்களை நோக்கிச் செல்லுங்கள்'' என்று கூறினார்கள். உடனே நாங்கள் அவர்களுடன் புறப்பட்டுச் சென்று'பைத்துல் மித்ராஸ்' எனுமிடத்தை அடைந்தோம். அங்கு நபி(ஸல்) அவர்கள் நின்றுகொண்டு,'யூதர்களே! இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். (இவ்வுலம்லும் மறு உலம்லும்) நீங்கள் சாந்தி அடைவீர்கள்'' என்று அவர்களுக்கு அழைப்புவிடுத்தார்கள். அதைக் கேட்ட யூதர்கள்,'அபுல் காசிமே! நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டீர்கள்'' என்று கூறினார்கள்.'இ(ந்த ஒப்புதல் வாக்குமூலத்)தைத்தான் நான் எதிர்பார்க்கிறேன்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டுப் பிறகு மீண்டும் (இஸ்லாத்தை ஏற்க அழைப்பு விடுத்து) அவ்வாறே கூறினார்கள். அப்போதும் யூதர்கள்,'அபுல் காசிமே! நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டீர்கள்'' என்று கூறினர். பிறகு மூன்றாம் முறையும் (அவ்வாறே) நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு,'பூமி அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது என்பதை அறிந்துகொள்ளுங்கள். நான் உங்களை (இந்த ஊரிலிருந்து) நாடு கடத்திட விரும்புகிறேன். உங்களில் யார் தம் (அசையாச்) சொத்துக்கு பதிலாக ஏதேனும் (விலையைப்) பெற்றால் அச்சொத்தை அவர் விற்றுவிடட்டும். இல்லையேல், பூமியானது அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது என்பதை நீங்கள் அறிந்து கொள்ளுங்கள்'' என்றார்கள்.

## நிர்ப்பந்தத்திற்கு உள்ளாக்கப்பட்டவரின் திருமணம் செல்லாது.

அல்லாஹ் கூறினான்:

தங்களின் கற்பைப் பேணிக் காக்க விரும்பும் உங்கள் அடிமைப் பெண்களை அற்பமான உலக வாழ்க்கை வசதிகளை நாடி, விபசாரத்திற்கு (அவர்களை) நிர்ப்பந்திக்காதீர்கள் அப்படி எவரேனும் அந்தப் பெண்களை நிர்ப்பந்தித்தால் அவர்கள் நிர்பந்திக்கப்பட்ட பின் நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாகவும் கிருபையுடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 24:33)

ஹதீஸ் 6945 கன்ஸா பின்த் கிதாம் அல் அன்சாரிய்யா(ரலி) அறிவித்தார்.

கன்னி கழிந்த பெண்ணாயிருந்த என்னை என் தந்தை (ஒருவருக்கு) மணமுடித்து வைத்தார்கள். எனக்கு அதில் விருப்பமில்லை. எனவே, நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். (என் தந்தை முடித்துவைத்த) அத்திருமணத்தை நபி(ஸல்) அவர்கள் ரத்துச் செய்தார்கள்.

ஹதீஸ் 6946 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நான்,'இறைத்தூதர் அவர்களே! பெண்களிடம் அவர்களின் திருமணம் தொடர்பாக யோசனை கேட்கப்படவேண்டுமா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'ஆம்' என்றார்கள்.

நான், 'அவ்வாறாயின் கன்னிப் பெண்ணிடம் யோசனை கேட்கப்படும்போது அவள் வெட்கப்பட்டுக்கொண்டு மௌனமாக இருப்பாளே?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'அவளுடைய மௌனமே சம்மதமாகும்'' என்றார்கள்.

## நிர்ப்பந்தத்தின் பேரில் ஒருவர் ஓர் அடிமையை அன்பளிப்புச் செய்யவோ அல்லது விற்கவோ செய்தால் அது செல்லாது.

(இதுவே அனைவரின் கருத்தாகும். ஆனால்,) சிலர் இவ்வாறு கூறிவிட்டு (பின்வருமாறு) கூறுகிறார்கள்: (இவ்வாறு நிர்ப்பந்திக்கப்பட்டவரிடமிருந்து) வாங்கியவர் தாம் வாங்கிய அந்த அடிமை விஷயத்தில் ஏதேனும் நேர்த்திக்கடன் செய்வதாக எண்ணினாலோ, அவ்வாறே அந்த அடிமைக்குப்'பின்விடுதலை' அளித்தாலோ அவரின் எண்ணப்படி அது செல்லும்.

ஹதீஸ் 6947 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் ஒருவர் (தமக்குச் சொந்தமான) ஓர் அடிமையை தம் ஆயுட்காலத்திற்குப் பிறகு விடுதலை செய்து விடுவதாக அறிவித்தார். அப்போது அவரிடம் அந்த அடிமையைத் தவிர வேறெந்தச் செல்வமும் இருக்கவில்லை. இந்த விஷயம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எட்டியது. அவர்கள், 'இந்த அடிமையை என்னிடமிருந்து விலைக்கு வாங்குபவர் யார்?' என்று கேட்டார்கள். அப்போது அவனை நுஐம் இப்னு நஹ்ஹாம்(ரலி) அவர்கள் எண்ணூறு வெள்ளிக் காசுகள் (திர்ஹம்) கொடுத்து விலைக்கு வாங்கினார்கள். அந்த கிப்தீ(எம்பது) அடிமை (விற்கப்பட்ட) முதல் ஆண்டிலேயே இறந்துவிட்டான்.

## விதவைப் பெண்களை பலவந்தமாக மணப்பதும்), நிர்ப்பந்தங்களில் அடங்கும்.

(நிர்ப்பந்தம் என்பதைக் குறிக்க) இக்ராஹ், குர்ஹ், கர்ஹ் ஆகிய சொற்கள் (பயன்படுத்தப்படுகின்றன. இவை) அனைத்துக்கும் பொருள் ஒன்றே.

ஹதீஸ் 6948 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

(அறியாமைக் காலத்தில்) ஒருவர் இறந்துவிட்டால் அவரின் வாரிசுகளே அவரின் மனைவியின் மீது அதிக உரிமை உடையவர்களே இருந்துவந்தனர். அவர்களில் சிலர் விரும்பினால் அவளைத் தாமே மணந்துகொள்ளவும் செய்வார்கள் நினைத்தால் (வேறெவருக்காது) அவளை மணமுடித்துக் கொடுத்துவிடுவார்கள். நினைத்தால் மணமுடித்தக் கொடுக்க(ாமல் அப்படியேவிட்டுவிடுவார்கள் வாழ அனுமதிக்க)மாட்டார்கள். ஆக, அவளுடைய வீட்டாரைவிட (இறந்துவிட்ட கணவனின் வாரிசுகளான) அவர்கள் தாம் அவளின் மீது அதிக உரிமையுடையவர்களாக இருந்தார்கள்.

அப்போதுதான் இது தொடர்பாக'இறைநம்பிக்கையாளர்களே! (விதவைப்) பெண்களை நீங்கள் பலவந்தமாக அடைவது அனுமதிக்கப்பட்டதன்று'' எனும் (திருக்குர்ஆன் 04:19 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

## ஒரு பெண் விபசாரம் செய்ய நிர்ப்பந்திக்கப்பட்டால் (அதாவது கற்பழிக்கப்பட்டால்) அவளுக்குத் தண்டனை கிடையாது.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

எவரேனும் அந்தப் பெண்களை (விபசாரத்திற்காக) நிர்ப்பந்தித்தால் அவர்கள் நிர்ப்பந்திக்கப்பட்ட பின் நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாகவும் கிருபையுடையவனாகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 24:33)

ஹதீஸ் 6949 ஸ∴பிய்யா பின்த் அபீ உபைத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் கணவருடைய தந்தை கலீ∴பா உமர்(ரலி) அவர்களின் காலத்தில்) அரசாங்க அடிமைகளில் ஒருவன் (ஆட்சியாளர் அதிகாரத்திற்குட்பட்ட) குமுஸ் நிதியிலுள்ள ஓர் அடிமைப் பெண்ணை பலவந்தப்படுத்தி கற்பழித்துவிட்டான். எனவே, உமர்(ரலி) அவர்கள் அவனுக்கு (ஐம்பது) கசையடி கொடுத்து (ஆறு மாத காலத்திற்கு) அவனை நாடு கடத்தவும் செய்தார்கள். ஆனால், அந்த அடிமையினால் பலவந்தப்படுத்தப்பட்டாள் என்பதால் அந்த அடிமைப் பெண்ணுக்கு அவர்கள் கசையடி தண்டனை வழங்கவில்லை.

அடிமையல்லாத ஒருவன் கற்பழித்துவிட்ட கன்னியான அடிமைப் பெண் குறித்து ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: கன்னி கழியாதிருந்த அந்த அடிமைப் பெண்ணுக்குரிய விலையை நீதிபதி நிர்ணயி(த்து கன்னி கழிந்ததால் ஏற்பட்ட இழப்பீட்டைக் கற்பழித்தவனிடமிருந்து வசூலி)ப்பார். மேலும், கற்பழித்த) அவனுக்குக் கசையடி தண்டனை வழங்கப்படும். ஆனால், கன்னி கழிந்த அடிமைப் பெண்ணுக்கு இழப்பீடு ஏதும் வழங்க வேண்டுமென்று அறிஞர்களின் தீர்ப்புகளில் காணப்படவில்லை. ஆயினும், அவளைக் கற்பழித்தவனுக்குத் தண்டனை உண்டு.

ஹதீஸ் 6950 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்) இப்ராஹீம்(அலை) அவர்கள் தம் துணைவியாரான சாரா அவர்களுடன் தம் தாயகத்தைத் துறந்து சென்றார்கள்.'மன்னன் ஒருவன்' அல்லது கொடுங்கோலன் ஒருவன்' இருந்த ஓர் ஊருக்குள் அவர்கள் இருவரும் நுழைந்தார்கள். (இச்செய்தியறிந்த) அவன் இப்ராஹீம்(அலை) அவர்களிடம் ஆளனுப்பி'(உம்முடனிருக்கும்) அப்பெண்ணை என்னிடம் அனுப்பிவை'' என்று கூறினான். (இப்ராஹீம்(அலை) அவர்களும் (வேறு வழியின்றி) அவ்வாறே சாரா அவர்களை அனுப்பிவைத்தார்கள். அவன் (தவறான எண்ணத்துடன்) சாரா அவர்களை நோக்கி எழுந்து வந்தான். சாரா அவர்கள் எழுந்து அங்கசுத்தி (உளூ) செய்து, தொழுதுவிட்டு,'அல்லாஹ்வே நான் உன்னையும் உன்னுடைய தூதரையும் நம்பிக்கை கொண்டிரு(ப்பது உண்மையாக இரு)ந்தால் இந்த நிராகரிப்பாளன் என்னை ஆட்கொள்ள விடாதே'' என்று பிரார்த்தித்தார்கள். உடனே அவன் கீழே விழுந்து (வலிப்பினால்) கால்களால் உதைத்துக் கொண்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## தம் நண்பருக்கு உயிர்ச் சேதமோ உடல் சேதமோ ஏற்படுமென ஒருவர் அஞ்சும்போது இவர் என் சகோதரர் தாம் என்று சத்தியம் செய்(து காப்பாற்று)வது.

அவ்வாறே நிர்ப்பந்திக்கப்படும் ஒவ்வொருவரும் அஞ்சும்போது காப்பாற்றலாம். ஏனெனில், ஒரு முஸ்லிம் தம் சகோதர முஸ்லிமை அக்கிரமக்காரனைவிட்டுக் காப்பதும், அவனுக்காகப் போராடுவதும், (தக்க சமயத்தில் காலை வாரிவிடுவதன் மூலம்) அவனுக்குத் துரோகம் இழைக்காமலிருப்பதும் அவசியமாகும். அவ்வாறு அநீதி இழைக்கப்பட்டவனைக் காப்பதற்காக ஒருவர் போராடி(யதில் அக்கிரமக்காரன் கொல்லப்படுவானா)னால் அவரின் மீது பழிவாங்கல் தண்டனை கிடையாது.

ஒரு முஸ்லிமிடம்,'நீ இந்த மதுவை அருந்தவேண்டும் அல்லது இந்த செத்தப் பிராணியின் மாமிசத்தை நீ புசிக்க வேண்டும் அல்லது உன்னுடைய அடிமையை நீ விற்கவேண்டும் அல்லது (இன்னாருக்கு) நீ கடன் கொடுக்க வேண்டியுள்ளது என ஒப்புக் கொள்ள வேண்டும் அல்லது

(இன்னாருக்கு) நீ கட்டாயம் அன்பளிப்பு வழங்க வேண்டும் அல்லது நீ செய்த ஒப்பந்தம் ஒன்றை முறித்துக் கொண்டதாக அறிவிக்கவேண்டும். இல்லையேல், உன் தந்தையை அல்லது உன் இஸ்லாமியச் சகோதரனை நாங்கள் கொன்று விடுவோம்'' என்பன போன்ற மிரட்டல் விடப்பட்டால் மேற்சொன்னவற்றை அவர் செய்வது செல்லும். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள்,'ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான்'' என்று கூறினார்கள்.

ஒரு முஸ்லிமிடம்,'நீ இந்த மதுவை அருந்த வேண்டும் அல்லது இந்த செத்த பிராணியின் மாமிசத்தை நீ புசிக்கவேண்டும். இல்லையேல், உன் மகனை அல்லது உன் தந்தையை அல்லது மணமுடிக்கத் தகாத (உன்) நெருங்கிய உறவினரை நாங்கள் கொலை செய்துவிடுவோம்' என்று (அக்கிரமக்காரனால் மிரட்டிக்) கூறப்பட்டால் மேற்சொன்னவற்றைச் செய்வதற்கு அவருக்கு அனுமதியில்லை. ஏனெனில், இவர் நிர்ப்பந்தத்திற்குள்ளக்கப்பட்டவர் அல்லர் என்று சிலர் கூறுகின்றனர். அதே சமயம், ஒருவரிடம்'இந்த அடிமையை நீ விற்றுவிடு அல்லது இன்னாருக்கு) நீ கடன் தர வேண்டியுள்ளதென ஒப்புக்கொள் அல்லது (இன்னாருக்கு) அன்பளிப்பு வழங்கு. இல்லையேல், உன் தந்தையை அல்லது உன் மகனை நாங்கள் கொன்றுவிடுவோம்'' என (அக்கிரமக்காரர்களால்) கூறப்பட்டால் (சொன்னபடி) அவ்வாறே செய்வது அவருக்கு அவசியமாகும் என்பது தான் அவமானம். ஆயினும், பொறுத்தமான மரபுப்படி இந்த வியாபாரமும் அன்பளிப்பும் இதில் நடந்த எல்லா ஒப்பந்தங்களும் செல்லாமல் போய்விடும் என்றும் கூறுகிறார்கள். இதன் மூலம், முதலில் கூறிய தங்களின் கருத்துக்குத் தாங்களே முரண்படுகிறார்கள். அது மட்டுமின்றி, குர்ஆன் மற்றும் ஹதீஸின் ஆதாரமின்றி மணமுடிக்கத் தகாத இரத்த பந்த உறவினர்களுக்கும் இதர உறவினர்களுக்கும் இடையே வேறுபகுதி காட்டுகின்றனர்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இப்ராஹீம்(அலை) அவர்கள் தம் துணைவியாரைப் பார்த்து (கொடுங்கோல் மன்னனுக்கு முன்னால்)'இவள் என் சகோதரி'' என்று கூறினார்கள். இது ('கொள்கைச் சகோதரி' என்ற) மார்க்க அடிப்படையில் கூறப்பட்டதாகும்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

சத்தியம் செய்யும்படி கூறுபவன் அக்கிரமக்காரனாயிருந்தால் சத்தியம் செய்தவரின் எண்ணத்தைப் பொறுத்தே அது அமையும் சத்தியம் செய்யும்படி கூறுபவன் அக்கிரமத்திற்குள்ளானவனாயிருந்தால் அப்போது சத்தியம் செய்யும்படி கூறியவனின் எண்ணத்தைப் பொறுத்தே அது அமையும்.

ஹதீஸ் 6951 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு அநீதியிழைக்கவுமாட்டான்: அவனை (பிறரின் அநீதிக்கு ஆளாகும்படி) கைவிட்டுவிடவுமாட்டான். தன் சகோதரனின் தேவையை நிறைவு செய்வதில் ஈடுபடுகிறவரின் தேவையை நிறைவு செய்வதில் அல்லாஹ்வும் ஈடுபடுகிறான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6952 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'உன் சகோதரன் அக்கிரமக்காரனாக இருக்கும் நிலையிலும் அக்கிரமத்துக்குள்ளானவனாக இருக்கும் நிலையிலும் அவனுக்கு நீ உதவி செய்''

என்றார்கள். அப்போது ஒருவர், இறைத்தூதர் அவர்களே! அக்கிரமத்திற்குள்ளானவனுக்கு நான் உதவுவேன். (அதுதான்.) அக்கிரமக்காரனுக்கு எப்படி நான் உதவுவேன்? கூறுங்கள்!"என்றார். நபி(ஸல்) அவர்கள், 'அவனை அக்கிரமம் செய்ய விடாமல் நீ தடுப்பாயாக! இதுவே நீ அக்கிரமக்காரனுக்குச் செய்யும் உதவியாகும்'' என்றார்கள்.

# அத்தியாயம் 90 தந்திரங்கள்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## தந்திரங்களைக் கைவிடல்

ஒரு மனிதருக்கு சத்தியம் முதலியவற்றில் அவர் எண்ணுவதே அவருக்கக்கிட்டும்.

ஹதீஸ் 6953 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்களே! எண்ணத்தைப் பொருத்தே செயல்கள் அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியதே கிடைக்கிறது. எனவே, எவருடைய ஹிஜ்ரத் (நாடு துறத்தல்) அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (திருப்திப்படுத்துவதை) நோக்கமாகக் கொண்டு அமைகிறதோ, அவரின் ஹிஜ்ரத்(தின் பலனும் அவ்வாறே) அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் அமையும். தாம் அடைய விரும்பும் உலக(ஆதாய)த்திற்காக, அல்லது தாம் மணக்க விரும்பும் பெண்ணுக்காக ஹிஜ்ரத் செய்கிறவருடைய ஹிஜ்ரத்(தின் பலனும்) அதுவாகவே இருக்கும்.

இதை உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் சொற்பொழிவாற்றும்போது அறிவித்தார்கள்.

## தொழுகை விஷயத்தில் தந்திரம் செய்தல்

ஹதீஸ் 6954 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு சிறுதுடக்கு ஏற்பட்டால் நீங்கள் அங்கசுத்தி (உளூ) செய்து கொள்ளாத வரை உங்கள் தொழுகையை அல்லாஹ் ஏற்கமாட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## ஸகாத்(தைக் கொடுக்காமல் தப்பிக்கும் நோக்கத்)தில் தந்திரம் செய்வதோ, ஸகாத் கொடுப்பதற்கு அஞ்சி, ஒன்று சேர்ந்திருப்பவற்றைப் பிரிப்பதோ பிரிந்தவற்றை ஒன்று சேர்ப்பதோ கூடாது.

ஹதீஸ் 6955 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (அல்லாஹ்வின் ஆணைப்படி) கடமையாக்கிய ஸகாத்தைப் பற்றி எனக்கு அபூ பக்ர்(ரலி) அவர்கள் (கடிதம்) எழுதியபோது, 'ஸகாத் கொடுப்பதற்கு அஞ்சி, பிரிந்தவற்றை ஒன்று சேர்ப்பதும் ஒன்று சேர்ந்தவற்றைப் பிரிப்பதும் கூடாது" என்று குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 6956 தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(நஜ்துப் பகுதியைச் சேர்ந்த) கிராமவாசி ஒருவர் தலைவிரி கோலத்துடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் என் மீது கடமையாக்கியுள்ள தொழுகை பற்றிக் கூறுங்கள்" என்றார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், '(நாளொன்றுக்கு) ஐவேளை தொழுகைகள் (உன் மீது கடமையாகும்) நீயாக விரும்பிக் கூடுதலாக ஏதேனும் தொழுது கொண்டால் தவிர" என்றார்கள். அவர், 'அல்லாஹ் என் மீது கடமையாக்கியுள்ள நோன்பு பற்றிக் கூறுங்கள்" என்றார். நபி(ஸல்) அவர்கள், 'ரமளான் மாதம் முழுவதும் நீ நோன்பு நோற்பது உன் மீது கடமையாகும்) நீயாக விரும்பிக் கூடுதலாக ஏதேனும் நோன்பு நோற்றால்

தவிர'' என்றார்கள். தொடர்ந்து அவர், அல்லாஹ் என் மீது கடமையாக்கியுள்ள ஸகாத் பற்றிக் கூறுங்கள்'' என்றார். அப்போது நபி(ஸல்) அவர்கள் (ஸகாத் உள்பட) இஸ்லாமிய சன்மார்க்க நெறிகளை அவருக்குத் தெரிவித்தார்கள். அவர்,'உங்களைக் கண்ணியப்படுத்திய(இறை)வன் மீது சத்தியமாக! நான் (இவற்றில்) எதனையும் கூடுதலாகச் செய்யமாட்டேன். அல்லாஹ் என் மீது கடமையாக்கியுள்ளவற்றில் எதனையும் நான் குறைக்கவுமாட்டேன்'' என்று கூறிவிட்டுத் திரும்பிச் செல்லலா)னார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இவர் (தாம் கூறியபடி) உண்மையாக நடந்தால்'வெற்றியடைவார்' அல்லது இவர் (கூறியபடி) உண்மையாக நடந்தால் சொர்க்கத்தில் நுழைவார்' என்று கூறினார்கள்.

அறிஞர்களில் சிலர் கூறுகிறார்கள்:

நூற்று இருபது ஒட்டகங்கள் இருந்தால் மூன்று வயதுடைய இரண்டு ஒட்டகங்கள் ஸகாத்தாக வழங்கவேண்டும். இந்நிலையில் ஒருவர் ஸகாத் கொடுக்காமல் தப்பிப்பதற்காக அந்த (120) ஒட்டகங்களையும் (ஓராண்டு பூர்த்தியாவதற்கு ஓரிரு நாள்கள் இருக்கையில்) வேண்டுமென்றே அறுத்துவிட்டாலோ, அன்பளிப்பாக வழங்கிவிட்டாலோ, வேறு தந்திரங்களைக் கையாண்டாலோ அவரின் மீது (ஸகாத்) கடமையாகாது.

ஹதீஸ் 6957 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஸகாத் கொடுக்காமல் பூட்டிவைத்துப் பாதுகாக்கப்பட்ட) உங்கள் கருவூலம் மறுமை நாளில் கொடிய விஷமுள்ள பாம்பாக மாறும். அதனைக் கண்டு அதன் உரிமையாளரான நீங்கள் வெருண்டோடுவீர்கள். ஆனால், அது உங்களைத் துரத்திக்கொண்டே வந்து'நான்தான் உன்னுடைய கருவூலம்'' என்று சொல்லும். அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் உங்கள் கையை விரித்து அதன் வாய்க்குள் நுழைக்கும் வரை அது உங்களைத் துரத்திக் கொண்டே வரும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6958 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒட்டகங்களின் உரிமையாளர் அவற்றுக்கான கடமையை (ஸகாத்தை) நிறைவேற்றவில்லையானால் மறுமை நாளில் அவை அவரின் மீது ஏவிவிடப்படும். அவை தம் கால் குளம்புகளால் அவரின் முகத்தில் மிதிக்கும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

சிலர் கூறுகிறார்கள்: ஒருவரிடம் ஒட்டகங்கள் இருந்தன. அவற்றுக்குத் தாம் ஸகாத் கொடுக்க வேண்டிவந்துவிடும் என்று அஞ்சிய அவர், (ஓராண்டு பூர்த்தியாவதற்கு) ஒருநாள் முன்பாக அந்த ஒட்டகங்களை அதே அளவு ஒட்டகங்களுக்கு, அல்லது ஆடுகளுக்கு, அல்லது மாடுகளுக்கு, அல்லது திர்ஹங்களுக்கு பதிலாக விற்றுவிட்டார். தந்திரமாக ஸகாத்திலிருந்து தப்பிப்பதற்காக இவ்வாறு அவர் செய்தால் அவரின் மீது (ஸகாத்) எதுவும் கடமையாகாது. (ஏனெனில், பழையதை விற்றுப் புதிதாக வாங்கப்பட்ட பொருள் கைக்கு வந்து ஓராண்டு கழிந்த பின்பே அதற்கு ஸகாத் கடமையாகும்.) இவ்வாறு கூறும் இவர்கள்'ஓராண்டு பூர்த்தியாவதற்கு ஒரு நாள் அல்லது ஓராண்டிற்கு முன்பே தம் ஒட்டகங்களுக்கான ஸகாத்தை அவர் கொடுத்தால் அது செல்லும்'' என்றும் கூறுகிறார்கள்.

ஹதீஸ் 6959 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஸஅத்பின் உபாதா அல்அன்சாரி(ரலி) அவர்கள், நேர்ந்து கொண்டுவிட்டு அதை நிறைவேற்றுவதற்கு முன்பே இறந்துபோய்விட்ட தம் தாயாரின் நேர்த்திக்கடன் குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'அவருக்காக நீங்கள் அந்த நேர்த்திக்கடனை நிறைவேற்றுங்கள்'' என்றார்கள்.

''(ஒருவருக்குரிய) ஒட்டகங்களின் எண்ணிக்கை இருபதாகி விட்டால் அதற்காக நான்கு ஆடுகள் (அவர் ஸகாத்) கொடுக்க வேண்டும். ஆனால், அவர் ஸகாத்தை இல்லாமல் செய்வதற்காகத் தந்திரமாகத் தப்பித்துக்கொள்ளும் வகையில் ஓராண்டு முழுமையடைவதற்கு முன்பே அந்த ஒட்டகங்களை அன்பளிப்பாக வழங்கிவிட்டாலோ, விற்றுவிட்டாலோ அவரின் மீது (ஸகாத்) ஏதும் கடமையாகாது. அவ்வாறே அவற்றை(ச் செலவு) அழித்துவிட்டு அவர் இறந்தாலும் அவரின் (இந்தச்) சொத்தில் (ஸகாத்) ஏதும் கடமையாகாது'' என்று சிலர் கூறுகிறார்கள்.

## திருமண விஷயத்தில் தந்திரம் செய்தல்

ஹதீஸ் 6960 உபைதுல்லாஹ் அல்உமரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நாஃபிஉ(ரஹ்) அவர்கள்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஷிஃகார் முறைத் திருமணத்தை தடை செய்தார்கள்'' என்று அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார் என்று என்னிடம் தெரிவித்தார்கள். உடனே நான் நாஃபிஉ அவர்களிடம்,'ஷிஃகார் (முறைத் திருமணம்) என்றால் என்ன?' என்று கேட்டேன். அவர்கள்,'ஒருவர் மணக்கொடை (மஹ்ர்) ஏதுமில்லாமல் இன்னொருவரின் மகளை மணந்துகொண்டு (அதற்கு பதிலாக) அவருக்குத் தன் மகளை மணமுடித்து வைப்பதாகும். அவ்வாறே மணக்கொடை ஏதுமில்லாமல் ஒருவர் மற்றொருவரின் சகோதரியை மணந்து (அதற்கு பதிலாக) அவருக்குத் தன் சகோதரியை மணமுடித்து வைப்பதாகும்'' என்று பதிலளித்தார்கள்.

சிலர் கூறுகிறார்கள்: ஒருவர் தந்திரம் செய்து'ஷிஃகார்' முறைப்படித் திருமணம் செய்துகொண்டால் அத்திருமணம் செல்லும் ஆனால், (அதில் விதிக்கப்பட்ட) முன் நிபந்தனை செல்லாது. அதே நேரத்தில், தவணை முறைத் திருமணம் (அல்முத்ஆ) செல்லாது (அதில் விதிக்கப்படும்) முன் நிபந்தனையும் செல்லாது.

## வேறு சிலரோ, தவணை முறைத் திருமணமும் ஷிஃகார் முறைத் திருமணமும் செல்லும் ஆனால், (அவற்றில் விதிக்கப்படும்) முன்நிபந்தனை செல்லாது' என்று கூறுகின்றனர்.

ஹதீஸ் 6961 முஹம்மத் இப்னு அலீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

தவணை முறைத் திருமணம் (நிகாஹுல் முத்ஆ) புரிவதில் தவறில்லை என்று இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கருதுவதாக (என் தந்தை) அலீ(ரலி) அவர்களிடம் கூறப்பட்டபோது,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கைபர் போரின்போது தவணை முறைத் திருமணத்திற்கும் நாட்டுக் கழுதைகளின் இறைச்சியை உண்பதற்கும் தடைவிதித்தார்கள்'' என்று கூறினார்கள்.

''ஒருவர் தந்திரமாகத் தவணை முறைத்திருமணம் செய்தால் அத்திருமணம் செல்லாது'' என்று சிலர் கூறினர்.

வேறு சிலரோ,'அந்தத் திருமணம் செல்லும் ஆனால் (அதில் விதிக்கப்பட்ட) முன் நிபந்தனை செல்லாது'' என்று கூறினர்.

## வியாபாரங்களில் தந்திரம் செய்வது விரும்பத் தகாததாகும். மேலும் (தேவைக்கதிமாக) எஞ்சியுள்ள தண்ணீரைத் தடுக்கலாகாது. அவ்வாறு தடுத்தால் (அதைச் சுற்றி முளைத்துள்ள) புற்பூண்டுகளை (மேயவிடாமல் கால்நடைகளை)த் தடுத்ததாகி விடும்.

ஹதீஸ் 6962. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(தேவைக்கு மேல்) எஞ்சியுள்ள தண்ணீரைத் தடுக்கலாகாது. (அவ்வாறு தடுத்தால், அதைச் சுற்றியுள்ள) புற்பூண்டுகளை (மேயவிடாமல் கால்நடைகளை)த் தடுத்தாம்விடும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (வாங்கும் நோக்கமின்றி) விலையை உயர்த்திவிடுவது அருவருக்கத் தக்கதாகும்.

ஹதீஸ் 6963 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(வாங்கும் நோக்கமின்றி விலையை உயர்த்திவிடுவதற்காக ஏலம் மற்றும் பிற பேரங்களின் போது) விலையை அதிகமாகக் கேட்பதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தடை விதித்தார்கள்.

## வியாபாரங்களில் மோசடி செய்வது தடை செய்யப்பட்டுள்ளது.

அய்யூப்(ரஹ்) அவர்கள் கூறினார்:

மக்கள், மனிதனை ஏமாற்றுவதைப் போன்றே இறைவனையும் ஏமாற்ற விழைகின்றனர். அவர்கள் (ஒளிவுமறைவில்லாமல்) பம்ரங்கமாக (உரிய விலையை விட அதிகத் தொகை கேட்டு) விஷயத்திற்கு வருவார்களானால், அது எனக்கு எளிதானதாக அமையும். (அதை விடுத்து எதற்காக அவர்கள் மோசடி செய்யவேண்டும்?)

ஹதீஸ் 6964 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் தாம் வியாபாரங்களில் ஏமாற்றப்படுவதாகக் கூறினார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நீ வியாபாரத்தின்போது 'ஏமாற்றுதல் கூடாது' என்று கூறிவிடு'' என்றார்கள்.

## தாம் (மணந்து கொள்ள) ஆசைப்பட்ட அநாதைப் பெண் விஷயத்தில் (அவளுடைய) காப்பாளர் தந்திரங்கள் மேற்கொள்வதும் அவளுக்குரிய மணக்கொடையை முழுமையாக வழங்காமல் இருப்பதும் தடை செய்யப்பட்டுள்ளது.

ஹதீஸ் 6965 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் (என் சிறிய தாயார்) ஆயிஷா(ரலி) அவர்களிடம் 'அநாதை(ப் பெண்களைத் திருமணம் செய்து அவர்)களிடம் நீங்கள் நீதியோடு நடந்துகொள்ள முடியாது என்று நீங்கள் அஞ்சினால் உங்களுக்கு விருப்பமான (வேறு) பெண்களை மணந்துகொள்ளுங்கள்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 04:3 வது) இறைவசனம் குறித்துக் கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: அநாதைப் பெண் ஒருத்தி தன் காப்பாளரின் பாதுகாப்பில் இருந்துவருவாள். அவர் அப்பெண்ணின் செல்வத்தையும் அழகையும் கண்டு ஆசைப்பட்டு அவளைப் போன்ற பெண்களுக்கு வழங்கப்பட்டுவரும் மணக் கொடையைவிட மிகக் குறைந்த அளவு மணக்கொடை (மஹ்ர்) கொடுத்து அவளை மணந்துகொள்ள விரும்புவார்.

அப்போதுதான், முழுமையான மணக்கொடை (மஹ்ர்) கொடுத்து அப்பெண்களுக்கு நீங்கள் நீதி செலுத்தாதவரை அவர்களை நீங்கள் மணமுடிக்கக் கூடாது என அவர்களுக்குத் தடை விதிக்கப்பட்டது. அதன் பின்னரும் மக்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இது குறித்துத் தீர்ப்புக் கேட்டனர். அப்போதுதான்'(நபியே! மக்கள்) உம்மிடம் பெண்கள் பற்றி தீர்ப்பு வழங்கும்படி கேட்கிறார்கள்'' என்று தொடங்களும் (திருக்குர்ஆன் 04:127 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான்.

தொடர்ந்து அறிவிப்பாளர் இந்த ஹதீஸின் முழுத் தொடரையும் கூறினார்.

## (தந்திரம் செய்து) அடிமைப் பெண்ணை அபகரித்தல்.

ஒருவர் (அடுத்தவருக்குச் சொன்தமான) ஓர் அடிமைப் பெண்ணை அபகரித்துக் கொண்டார். பின்னர் அவள் இறந்துவிட்டதாக அவர் கருதியதால், இறந்த அடிமைப் பெண்ணுக்கான விலையை (அடிமையின் உரிமையாளரிடம்) வழங்கிட வேண்டுமெனத் தீர்ப்பு வழங்கப்பட்டது. பின்னர் அவளை அவளுடைய உரிமையாளர் (உயிருடன்) கண்டார் எனில், அவள் உரிமையாளருக்கே உரியவன் ஆவாள். அவர் (தாம் பெற்ற) அந்த விலைத் தொகையைத் திருப்பிச் செலுத்திவிடுவார். அத்தொகை (அடிமைப் பெண்ணுக்குரிய) கிரயம் என்று (கருதி அவள் விற்கப்பட்டுவிட்டதாக) எடுத்துக் கொள்ளலாகாது.

ஆனால், சிலர்,'அந்த அடிமைப் பெண் அபகரித்தவருக்கே உரியவள் ஏனெனில், உரிமையாளர் (அபகரித்தவரிடமிருந்து உரிய) தொகையைப் பெற்றுக்கொண்டுவிட்டார்'' என்று கூறுகிறார்கள். ஆனால், இது ஒரு விதத் தந்திரமாகும். அடுத்தவருக்குச் சொந்தமான அடிமைப் பெண்ணை ஒருவர் விரும்பலாம் உரிமையாளர் அவளை விற்பதற்கு முன்பராதபோது, அவளை அபகரித்துக் கொண்டுவிட்டு, அவள் இறந்தாள் என்று காரணம் காட்டி, அவளுக்குரிய கிரயத்தை உரிமையாளர் ஏற்க வேண்டிய கட்டாயத்தை உருவாக்கலாம். இதன் மூலம் அபகரித்தவனுக்கே தாரளமாக அடுத்தவரின் அடிமைப் பெண் கிடைக்கும் நிலை உருவாகும்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்கள் கடமைகள் உங்களுக்குப் புனிதமானவை ஆகும். மோசடி செய்கிற ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் ஒரு (அடையாளக்) கொடி இருக்கும்.

ஹதீஸ் 6966 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மோசடி செய்பவன் ஒவ்வொருவனுக்கும் மறுமை நாளில் கொடி ஒன்று உண்டு. அதைக் கொண்டு அந்த மோசடிக்காரன் அடையாளம் காணப்படுவான்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6967 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ஒரு மனிதனே! என்னிடம் நீங்கள் உங்கள் வழக்குகளைக் கொண்டுவருகின்றீர்கள். உங்களில் ஒருவர் மற்றொருவரை விடத் தன்னுடைய ஆதாரத்தை எடுத்துவைப்பதில் வாக்கு சாதுர்யம் மிக்கவராக இருக்கக்கூடும். மேலும், நான் (அந்தச் சாதுர்யமானவரிடமிருந்து) செவியேற்பதற்கேற்ப அவருக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கிறேன். எனவே, (எவருடைய சொல்லை வைத்து) அவரின் சகோதரனின் உரிமையில் சிறிதை (அவருக்குரியது) என்று (உண்மை நிலை அறியாமல்) தீர்ப்பளித்து விடுகிறேனோ அவர் அதை எடுத்துக் கொள்ள வேண்டாம். ஏனெனில், அவருக்கு நான் நரக நெருப்பின் ஒரு துண்டைத்தான் பெயர்த்துக் கொடுக்கிறேன்.

என உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

## திருமணத்தில் பொய்சாட்சியம் கூறுவது

ஹதீஸ் 6968 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள், 'கன்னிப் பெண்ணிடம் அனுமதி கோரப்படாத வரை அவளுக்கு மணமுடித்து வைக்கலாகாது. கன்னி கழிந்த பெண்ணிடம் (வெளிப்படையான) உத்தரவு பெறாதவரை அவளுக்கு மணமுடித்து வைக்கலாகாது'' என்று கூறினார்கள். அப்போது, 'இறைத்தூதர் அவர்களே! எப்படி கன்னியின் அனுமதி(யைத் தெரிந்துகொள்வது)?' என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள்'அவள் மௌனம் சாதிப்பதே (அவள் சம்மதிக்கிறாள் என்பதற்கு அடையாளமாகும்)'' என்றார்கள்.

ஆனால், சிலர் கூறுகின்றனர்: ஒரு கன்னிப் பெண்ணிடம் அனுமதியும் கோராமல், (முறைப்படி) அவள் திருமணமும் செய்து கொள்ளப்படாமல் இருக்கும்போது, ஒருவர் தந்திரமாக இரண்டு பொய்சாட்சிகளைக் கொண்டு வந்து நிறுத்தி அவளை அவளுடைய இசைவுடன் தாம் மணந்ததாக வாதிட்டார் நீதிபதியும் (அதை உண்மை என்று நம்பி) அவளுடைய திருமணத்தை உறுதிப்படுத்தினார். இந்தச் சாட்சியம் பொய் என்று அந்தக் கணவனுக்கு (நன்கு) தெரியும். இந்நிலையில் அவளுடன் அவன் தாம்பத்திய உறவு கொள்வதில் தவறில்லை. இது செல்லத் தகுந்த திருமணமே.

ஹதீஸ் 6969 காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஜஅ..பர் (ரஹ்) அவர்களின் மக்களில் ஒரு பெண்மணி, தன்னைத் தன் காப்பாளர் தனக்குப் பிடிக்காத ஒருவருக்கு மணமுடித்து வைக்கப்போகிறார் என அஞ்சினார். எனவே, அப்பெண்மணி ஜாரியா என்பவரின் (யஸீதுடைய) புதல்வர்களான அப்துர் ரஹ்மான் (ரஹ்), முஜம்மிஉ (ரஹ்) ஆகிய இரண்டு அன்சாரிப் பெரியவர்களிடம் ஆளனுப்பி வைத்தார். அவர்கள் இருவரும், '(பெண்களே!) அஞ்சாதீர்கள். ஏனெனில், கிதாம் என்பவரின் புதல்வியான கன்ஸாவை அவரின் தந்தை அவருக்குப் பிடிக்காத ஒருவருக்கு மணமுடித்து வைத்தார். (இது குறித்து அப்பெண்மணி முறையிட்ட போது) நபி (ஸல்) அவர்கள் அத்திருமணத்தை ரத்துச் செய்தார்கள்'' என்று கூறியனுப்பினார்கள்.

அறிவிப்பாளர் சு..ப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அப்துர் ரஹ்மான் இப்னு காசிம் (ரஹ்) அவர்கள் தம் தந்தை காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர் (ரஹ்) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை அறிவித்ததை நான் செவியேற்றேன்.

ஹதீஸ் 6970 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'கன்னி கழிந்த பெண்ணிடம் (வெளிப்படையான) உத்தரவு பெறாத வரை அவளுக்கு மணமுடித்து வைக்கலாகாது. கன்னிப் பெண்ணிடம் அனுமதி கோரப்படாத வரை அவளுக்கு மணமுடித்து வைக்கலாகாது'' என்று கூறினார்கள். மக்கள், 'எப்படி கன்னியின் அனுமதி(யைத் தெரிந்து கொள்வது)?' என்று கேட்டனர். நபி (ஸல்) அவர்கள், 'அவள் மௌனமாயிருப்பதே (அதற்கு அடையாளமாகும்)'' என்றார்கள்.

ஆனால், சிலர் கூறுகின்றனர்: இரண்டு பொய் சாட்சிகளை வைத்துக் கொண்டு ஒருவர், கன்னி கழிந்த பெண்ணின் உத்தரவுப்படி அவளைத் தாம் மணமுடித்துக் கொண்டதாகக் கூறி தந்திரம் செய்தார். (இவ்வழக்கை விசாரித்த நீதிபதியும்) அவளை அவர் மணமுடித்துக கொண்டதாக உறுதி செய்தார். ஆனால், அவளைத் தான் ஒருபோதும் மணமுடிக்கவில்லையென்று அந்தக் கணவனுக்கு (நன்கு) தெரியும். இப்போது இத்திருமணம் அவனுக்கு செல்லும். அவளுடன் அவன் தங்கியிருப்பதில் குற்றமில்லை.

ஹதீஸ் 6971. ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

“(திருமண விஷயத்தில்) கன்னிப் பெண்ணிடம் அனுமதி கோரவேண்டும்’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். நான்,‘கன்னிப் பெண் (வெளிப்படையாகத் தன் சம்மதத்தைத் தெரிவிக்க) வெட்கப்படுவாளே?’ என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,‘அவளுடைய மௌனமே அவளுடைய அனுமதி“‘ என்றார்கள்.

சிலர் கூறுகின்றனர்: ஒருவர் ஓர் அனாதைச் சிறுமியை, அல்லது கன்னிப் பெண்ணை மணமுடிக்க விரும்பினார். ஆனால், அவள் மறுத்துவிட்டாள். இந்நிலையில், அவர் தந்திரமாக இரண்டு பொய்சாட்சிகளை அழைத்து வந்து, தாம் அவளை மணமுடித்துக் கொண்டதாகத் தெரிவித்தார். பின்னர் அந்த அநாதைச் சிறுமி பருவம் எய்தினாள் (அந்தத் திருமணத்தை) ஏற்றும் கொண்டாள். நீதிபதியோ பொய் சாட்சியத்தை ஏற்றார். ஆனால், அது பொய் என்று அந்தக் கணவனுக்கு (நன்றாகவே) தெரியும். இந்நிலையில் (அவளுடன்) தாம்பத்திய உறவு கொள்ள அவனுக்கு அனுமதி உண்டு.

## கணவனிடமும் சக்களத்திகளிடமும் ஒரு பெண் தந்திரம் செய்வது விரும்பத் தகுந்தது அல்ல என்பதும், இது தொடர்பாக நபி(ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்ற இறை வசனமும்.

ஹதீஸ் 6972 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இனிப்பு தேனும் விருப்பமானவையாக இருந்தன. நபி(ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையை முடித்ததும் தம் துணைவியரிடம் வந்து பகல்பொழுதைக் கழிப்பார்கள் அவர்களுடன் நெருக்கமாக இருப்பார்கள். இவ்வாறு (ஒரு நாள்) ஹஃப்ஸா(ரலி) அவர்களிடம் சென்ற நபியவர்கள் வழக்கத்திற்கு மாறாக அதிக நேரம் இருந்துவிட்டார்கள். அது குறித்து நான் விசாரித்தேன். அப்போது ஹஃப்ஸாவின் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண் அவருக்கு (தாயிஃப் நகர சுத்த)த் தேன் உள்ள ஒரு தோல்பையை அன்பளிப்பாக வழங்கினாள் என்றும், அதிலிருந்து தயாரித்த பானத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஹஃப்ஸா புகட்டினார் என்றும் என்னிடம் கூறப்பட்டது. உடனே நான்’அல்லாஹ்வின் மீதாணையாக! இதை நிறுத்துவதற்காக இதோ ஒரு தந்திரம் செய்வோம்“‘ என்று கூறிக்கொண்டு, (நபியவர்களின் துணைவியரில் ஒருவரான) சவ்தா(ரலி) அவர்களிடம் அதைப் பற்றிக் கூறி,‘நபி(ஸல்) அவர்கள் உங்களிடம் வரும்போது உங்களை நெருங்குவார்கள். அப்போது, இறைத்தூதர் அவர்களே! கருவேலம் பிசின் சாப்பிட்டீர்களா? என்று கேளுங்கள்.’இல்லை’ என்று நபியவர்கள் கூறுவார்கள். உடனே இது என்ன வாடை? என்று அவர்களிடம் கேளுங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்மிடமிருந்து (துர்) வாடை வீசுவதைக் கடுமையாகக் கருதுவார்கள். எனவே,‘எனக்கு ஹஃப்ஸா தேன் பானம் புகட்டினார்’ என்று கூறுவார்கள். உடனே நீங்கள்’இதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (தேனை உறிஞ்சி)விட்டு வந்திருக்கலாம். (எனவேதான் வாடை வருகிறது)’ என்று சொல்லுங்கள். நானும் இவ்வாறே சொல்வேன். ஸஃபிய்யாவே! நீங்களும் இவ்வாறே சொல்லுங்கள் என்று (மற்றொரு துணைவியாரான ஸஃபிய்யாவிடமும்) சொன்னேன்.

நபி(ஸல்) அவர்கள் சவ்தா(ரலி) அவர்களிடம் சென்றபோது (நான் சொன்னபடி செய்துவிட்டு) சவ்தா (என்னிடம்) கூறினார்கள்: எவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவனுமில்லையோ அத்தகைய (இறை)வன் மீதாணையாக! நபி(ஸல்) அவர்கள் என் வீட்டு வாசலில் இருந்தபோது உங்களுக்கு பயந்து நீங்கள் என்னிடம் சொன்னபடி நபியவர்களிடம் சொல்ல விரைந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னை) நெருங்கியதும் அவர்களிடம்,‘இறைத்தூதர் அவர்களே!

தாங்கள் கருவேலம் பிசினைச் சாப்பிட்டீர்களா?' என்று கேட்டேன். அவர்கள் 'இல்லை'' என்று பதிலளித்தார்கள். 'அப்படியானால், (இது என்ன வாடை?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'ஹஃப்ஸா எனக்குத் தேன் பானம் புகட்டினார்'' என்றார்கள். நான், 'அதன் தேனீக்கள் கருவேல மரத்தில் அமர்ந்து (தேன் உறிஞ்சி)விட்டு வந்திருக்கலாம் (எனவேதான் தேனில் வாடை ஏற்பட்டுவிட்டது போலும்)'' என்று சொன்னேன்.

(தொடர்ந்து ஆயிஷா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) என்னிடம் நபி(ஸல்) அவர்கள் வந்தபோது அதைப் போன்றே நானும் சொன்னேன். ஸஃபிய்யாவிடம் நபி(ஸல்) அவர்கள் சென்றபோது அவரும் அதைப் போன்றே தெரிவித்தார். பிறகு (மறுநாள்) நபி(ஸல்) அவர்கள் ஹஃப்ஸாவிடம் சென்றபோது நபியவர்களிடம் அவர், 'இறைத்தூதர் அவர்களே! அருந்துவதற்கு தங்களுக்குச் சிறிது தேன் தரட்டுமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'அது எனக்குத் தேவையில்லை'' என்று கூறினார்கள்.

(இது குறித்து) சவ்தா(ரலி) அவர்கள், 'அல்லாஹ் தூயவன்! நபி(ஸல்) அவர்களை அதை அருந்தவிடாமல் நாம் தடுத்து விட்டோமே!"என்று (வருத்தத்துடன்) கூறுவார்கள். நான் அவரிடம், 'சும்மா இருங்கள்! (விஷயம் பரவிவிடப்போகிறது)'' என்று சொல்வேன்.

## கொள்ளை நோயிலிருந்து வெருண்டோடுவதற்காகத் தந்திரம் செய்வது விரும்பத்தக்கதன்று.

ஹதீஸ் 6973 அப்துல்லாஹ் இப்னு ஆமிர் இப்னி ரபீஆ(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் (நாட்டு மக்களின் நிலவரம் அறிய) ஷாம் நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். 'சர்ஃக்' எனுமிடத்திற்கு அவர்கள் வந்தபோது ஷாம் நாட்டில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக அவர்களுக்குச் செய்தி கிடைத்தது. அப்போது அவர்களிடம் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள், 'ஓர் ஊரில் கொள்ளைநோய் பரவியிருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால் அங்கு நீங்கள் (வலியப்) போகாதீர்கள். நீங்கள் ஓர் ஊரில் இருக்கும்போது கொள்ளைநோய் பரவிவிட்டால் அதிலிருந்து வெருண்டோடுவதற்காக (அவ்வூரைவிட்டு) வெளியேறாதீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் எனத் தெரிவித்தார்கள். எனவே, உமர்(ரலி) அவர்கள் சர்ஃகிலிருந்து (மதீனாவிற்குத்) திரும்பிவிட்டார்கள்.

சாலிம் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

உமர்(ரலி) அவர்கள் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடமிருந்து ஹதீஸைச் செவியுற்றதால்தான் சர்ஃக்கிலிருந்து திரும்பிவிட்டார்கள்.

ஹதீஸ் 6974 ஆமிர் இப்னு ஸஅத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் தந்தை) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம் உசாமா இப்னு ஸைத்(ரலி) கூறினார்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கொள்ளைநோய் பற்றிக் குறிப்பிட்டபோது, 'அது (இறைவன் வழங்கும்) வேதனையாகும். அதன் மூலம் (அட்டூழியங்கள் புரிந்த) சில சமுதாயத்தார் வேதனைக்குள்ளாக்கப்பட்டனர். பிறகு அதில் சிறிதளவு (இன்றளவும்) எஞ்சியுள்ளது. எனவே, அது அவ்வப்போது வந்துபோகும். ஒரு பகுதியில் அது இருப்பதாக நீங்கள் கேள்விப்பட்டால் அங்கே நீங்கள் செல்லாதீர்கள். அது பரவியிருக்கும் பகுதியில் நீங்கள் இருந்தால் அதிலிருந்து தப்பியோட முனைந்தவர்களாக (அங்கிருந்து) வெளியேறாதீர்கள்'' என்றார்கள்.

## அன்பளிப்பு மற்றும் விலைகோள் உரிமை (ஷுஃப்ஆ) ஆகியவற்றில் தந்திரம் செய்வது.

“ஒருவர் (இன்னொருவருக்கு) ஆயிரம் வெள்ளிக் காசுகளை, அல்லது அதை விட அதிகமான காசுகளை அன்பளிப்பாக வழங்கினார். அவை அவரிடம் பல ஆண்டுகள் இருந்து வந்தன. பின்னர் அன்பளிப்பு வழங்கியவர் (அன்பளிப்பு பெற்றவரிடம் சமரசம் செய்து) அந்த வெள்ளிக் காசுகளைத் தந்திரமாகத் திரும்பப் பெற்றார். இந்நிலையில், இந்த இருவரில் எவர் மீதும் ஸகாத் கடமையாகாது‘‘ என்று சிலர் கூறுகின்றனர்.

ஆனால், இவ்வாறு கூறுகிறவர்கள், அன்பளிப்பு தொடர்பாக (அதைத் திரும்பப் பெறாதீர்கள் என்று கூறிய) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மாறு செய்வதுடன், (பொருள் கைமாறுவதன் மூலம்) ஸகாத் கடமையாவதையும் நீக்கிவிடுகிறார்கள்.

ஹதீஸ் 6975 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தன் அன்பளிப்புப் பொருளை திரும்பப் பெற்றுக் கொள்பவன் தான் வாந்தி எடுத்ததைத் தானே திரும்பத் தின்கிற நாயைப் போன்றவன் ஆவான். (இதைப் போன்ற) இழிகுணம் நமக்கு முறையன்று.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6976 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

பிரிக்கப்படாத ஒவ்வொரு (அசையாச்) சொத்தில் தான், பங்காளிக்கே விற்கவேண்டும் என்ற விலைகோள் உரிமையை (ஷுஃப்ஆ) நபி(ஸல்) அவர்கள் ஏற்படுத்தினார்கள். எல்லைகள் வகுக்கப்பட்டு பாதைகள் குறிக்கப்பட்டால் பங்காளிக்குத்தான் விற்கவேண்டும் என்ற (கட்டாய) நிலையில்லை.

சிலர், ‘(பங்காளிக்கு இருப்பதைப் போன்றே அண்டை வீட்டாருக்கும் விலைகோள் (ஷுஃப்ஆ) உரிமை உண்டு‘‘ என்று கூறுகின்றனர். பிறகு இவ்விதியை உறுதிப்படுத்த விரும்பிய அவர்கள், (முன்னுக்குப் பின் முரணாக ஒரு கட்டத்தில்) இதே விதியைச் செல்லாததாக்கி விடுகிறார்கள். (அதன் விவரமாவது:) ஒருவர் ஒரு வீட்டை (முழுவதும்) வாங்க விரும்பினார். ஆனால், அண்டை வீட்டான் விலைகோள் (ஷுஃப்ஆ) உரிமை கோரக்கூடும் என அஞ்சினார். எனவே, (அந்த வீட்டின்) நூறு பங்குகளில் (பிரிக்கப்படாத) ஒரு பங்கை (மட்டும் முதலில்) விலைக்கு வாங்கினார். (இதையடுத்து அவர் வீட்டு உரிமையாளருக்குப் பங்காளியாகி விடுகிறார்.) பிறகு மீதிப் பங்குகளையும் விலைக்கு வாங்கினார். (இப்போது அண்டை வீட்டானுக்கு விலைகோள் உரிமை இல்லாமல் போய்விடும். ஏனெனில், அவர் வாங்கிய) முதலாவது பங்கில் மட்டும்தான் அண்டை வீட்டானுக்கு விலைகோள் உரிமை இருந்தது. (அதை அவன் பயன்படுத்தத் தவறிவிட்டான்.) வீட்டின் மீதியுள்ள பங்குகளில் அவனுக்கு அந்த உரிமை கிடையாது. (பங்காளிக்கே அந்த உரிமை உண்டு.) இவ்வாறு அவர் தந்திரம் செய்ய அவருக்கு உரிமை உண்டு என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 6977 அம்ர் இப்னு ஷரீத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அவர்கள் வந்து என் தோள்மீது தம் கையை வைத்து, (என் மாமா) ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களிடம் (அழைக்க,) நானும் அன்னாருடன் சென்றேன். அப்போது (நபி(ஸல்) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட முன்னாள் அடிமையான) அபூ ராஃபிஉ(ரலி) அவர்கள் மிஸ்வர்(ரலி) அவர்களிடம், ‘என் வீட்டிலுள்ள ஓர் அறையை என்னிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ளுமாறு ஸஅத் அவர்களுக்கு நீங்கள் யோசனை கூற

மாட்டீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு ஸஅத்(ரலி) அவர்கள், 'நான் (வாங்குவதாக இருந்தால்) அவருக்கு (பொற்காசுகளில்) நானூறைவிட அதிகமாகத் தரமாட்டேன் அதையும் பல தவணைகளில் தான் தர முடியும்'' என்று கூறினார்கள். அபூ ராஃபிஉ(ரலி) அவர்கள், '(இந்த வீட்டை விலைக்குக் கேட்டு) எனக்கு ரொக்கமாக ஐநூறு (வெள்ளி அல்லது பொற்காசுகள்) தரப்பட்டது. ஆனால், அதற்கு நான் சம்மதிக்கவில்லை. 'அண்மையில் இருப்பதால் அண்டை வீட்டாரே அதிக உரிமைபடைத்தவராவார்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை மட்டும் நான் கேட்டிராவிட்டால், இந்த வீட்டை உங்களுக்கு நான் 'விற்க' அல்லது 'கொடுக்க' முன்வந்திருக்கமாட்டேன்'' என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அலீ இப்னு அல்மதீனீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)

(எனக்கு இதை அறிவித்த) சுஃப்யான்(ரஹ்) அவர்களிடம் நான் 'மஅமர்(ரஹ்) அவர்கள் இவ்வாறு (இந்த அறிவிப்பாளர் தொடரில்) கூறவில்லையே?' என்று கேட்டேன். சுஃப்யான் அவர்கள், 'ஆனால், மஅமர்(ரஹ்) அவர்கள் எனக்கு இவ்வாறே கூறினார்கள்'' என்றார்கள்.

சிலர் கூறுகிறார்கள்: ஒருவர் (அண்டை வீட்டாருக்குரிய) விலைகோள் உரிமையை மறுக்க எண்ணினால், தந்திரம் செய்து, அதை இல்லாமல் ஆக்கிவிடலாம். அதாவது விற்பவர் வாங்கும் எண்ணத்தில் உள்ளவருக்கு அந்த வீட்டை அன்பளிப்பாக வழங்கிட வேண்டும். அத்துடன் அதற்கு எல்லைகளை வகுத்து அவரிடம் ஒப்படைத்து விட வேண்டும். வாங்கியவர் (முன்பே பேரம் பேசாமல்) அதற்கு பதிலாக ஆயிரம் வெள்ளிக் காசுகளை வழங்கிடவேண்டும். இவ்வாறு செய்தால் (அன்பளிப்பு என்பது வாரிசுரிமை என்பதால்) விலைகோள் உரிமை கோர அதில் எவருக்கும் அதிகாரம் கிடையாது.

ஹதீஸ் 6978 அபூ ராஃபிஉ(ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் என்னிடம் (என்னுடைய) வீட்டை நானூறு பொற் காசுகளுக்குப் பகரமாக விலை பேசினார்கள். அப்போது நான் 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அண்மையில் இருப்பதால் அண்டைவீட்டாரே அதிக உரிமை படைத்தவராவார்'' என்று கூறியதை நான் செவியேற்றிராவிட்டால் (இந்த வீட்டை) உங்களுக்கு நான் வழங்கியிருக்கமாட்டேன்'' என்று சொன்னேன்.

''வீட்டின் ஒரு பகுதியை விலைக்கு வாங்கிய ஒருவர் (அதன் மீதுள்ள) விலை கோள் உரிமையைத் தடுக்க விரும்பினால் பருவமடையாத தம் மகனுக்கு அன்பளிப்பாக வழங்கிடலாம். (அன்பளிப்பாகத்தான் அது வழங்கப்பட்டது என்பதை உறுதி செய்வதற்காகச்) சத்தியம் செய்ய வேண்டிய பொறுப்பு (சிறுவனான) அவனுக்குக் கிடையாது'' என்று சிலர் கூறுகிறார்கள்.

## தமக்கு அன்பளிப்புகள் வழங்கப்பட வேண்டுமென்பதற்காக அதிகாரி தந்திரம் செய்வது (விரும்பத் தக்கதன்று).

ஹதீஸ் 6979 அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பனு சுலைம் குலத்தாரின் ஸதாக்களை வசூலிக்கும் அதிகாரியாக இப்னுல் லுத்பிய்யா என்றழைக்கப்பட்ட ஒருவரை நியமித்தார்கள். அவர் (ஸகாத் வசூலித்துக் கொண்டு) வந்தபோது அவரிடம் நபி(ஸல்) அவர்கள் கணக்குக் கேட்டார்கள். அவர், 'இது உங்களுக்குரியது இது (எனக்கு) அன்பளிப்பாக வழங்கப்பட்டது'' என்று கூறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நீர் சொல்வது உண்மையானால் உம் தந்தை வீட்டில், அல்லது தாய் வீட்டில் உட்கார்ந்திரும்! உம்மிடம் அன்பளிப்புகள் வருகின்றனவா பார்ப்போம்'' என்று

கூறினார்கள். பிறகு எங்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது இறைவனைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, அல்லாஹ் என்னைப் பொறுப்பாளியாக்கிய ஒரு பணிக்காக உங்களில் ஒருவரை நான் அதிகாரியாக்க, அவர் சென்றுவிட்டு வந்து இது உங்களுக்குரியது இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது' என்று சொல்கிறார். அவர் தம் தகப்பன் வீட்டில் அல்லது தாய் வீட்டில் உட்கார்ந்திருந்தால் அவருக்கு அந்த அன்பளிப்புகள் வந்து சேருமா? அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களில் எவரும் உரிமையின்றி (முறைகேடாக) எந்த ஒன்றை அடைந்து கொண்டாலும் மறுமை நாளில் அதை (தம் தோளில்) சுமந்த வண்ணமே அல்லாஹ்வை அவர் சந்திப்பார். இந்த வகையில் கனைத்துக் கொண்டிருக்கும் ஒட்டகத்தையோ, கத்திக் கொண்டிருக்கும் பசுவையோ ஆட்டையோ (தம் தோளில்) சுமந்து கொண்டு அல்லாஹ்வைச் சந்திக்கும் எவரையும் நான் உறுதியாக அறிவேன்'' என்று கூறினார்கள்.

பிறகு, தம் அக்குளின் வெண்மை தெரியும் அளவிற்குத் தம் இரண்டு கைகளையும் உயர்த்தி, 'இறைவா! (உன் கட்டளையை) நான் எடுத்துரைத்துவிட்டேன் அல்லவா?' என்று நபியவர்கள் கூறியதை என் கண்ணால் கண்டேன் என் காதால் கேட்டேன்.

ஹதீஸ் 6980 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அண்மையில் இருப்பதால் அண்டை வீட்டாரே அதிக உரிமை படைத்தவராவார்.

என அபூ ரா..பிஉ (ரலி) அறிவித்தார்.

சிலர் கூறுகின்றனர்.

ஒருவர் ஒரு வீட்டை இருபதாயிரம் வெள்ளிக் காசுகள் கொடுத்து வாங்க விரும்பினார். அவர் (அண்டை வீட்டாருக்குரிய விலைகோள் உரிமையைச் செயலிழக்கச் செய்யப் பின்வருமாறு) தந்திரம் செய்வதில் தவறில்லை. அதாவது இருபதாயிரம் வெள்ளிக் காசுகள் விலைபேசி வீட்டை அவர் வாங்கிக் கொள்வார். ஆனால், விற்றவரிடம் 9,999 வெள்ளிக் காசுகளையும், இருபதாயிரத்தில் மீதியுள்ள (10,001) வெள்ளிக் காசுகளுக்கு பதிலாக ஒரு பொற் காசையும் அவர் ரொக்கமாகச் செலுத்துவார். இந்நிலையில், விலைகோள் உரிமை கோருபவர் தம் உரிமையைக் கோரினால், (பேசப்பட்டுவிட்ட) இருபதாயிரம் வெள்ளிக் காசுகளைக் கொடுத்து வீட்டை எடுத்துக் கொள்ளலாம். இல்லையேல், அந்த வீட்டின் மீது அவருக்கு எந்த அதிகாரமும் கிடையாது.

மேலும், இந்த நிலையில், அது வேறொருவருக்குச் சொந்தமான வீடு என்று தெரியவந்தால், விலைக்கு வாங்கியவர் விற்றவரிடம் செலுத்திய தொகையை மட்டுமே திரும்பப் பெறுவார். அது 9,999 வெள்ளிக் காசுகளும் ஒரு பொற் காசுமாகும். ஏனெனில், விற்கப்பட்ட பொருள் வேறொருவருக்குச் சொந்தமானது என்று தெரியவரும்போது, ஏற்கெனவே விற்றவரும் வாங்கியவரும் செய்த (10,001 வெள்ளிக் காசுகளுக்கு பதிலாக) ஒரு பொற்காசு என்ற நாணயமாற்று ஒப்பந்தம் முறிந்துவிடும்.

அதே நேரத்தில், விலைக்கு வாங்கியவர் அந்த வீட்டில் குறைபாடு உள்ளதைக் கண்டார் ஆனால், வீடு மற்றவருக்குச் சொந்தமானது என உரிமை கோரப்படவில்லை. அப்போது, இருபதாயிரம் வெள்ளிக் காசுகளைப் பெற்றதை உரியவரிடம் திருப்பிக் கொடுத்துவிடுவார். (இது முன்னுக்குப் பின் முரணாகும். ஏனெனில், இவர் செலுத்தியதோ 9,999 வெள்ளிக்காசுகளும் ஒரேயொரு பொற்காசும் தாம். திரும்பப் பெறுவதோ இருபதாயிரம் வெள்ளிக்காசுகள்.)

அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்:

இவ்வாறு கூறும் இவர்கள் முஸ்லிம்களிடையே மோசடி நடைபெறுவதை அனுமதிக்கின்றனர். ஆனால், நபி(ஸல்) அவர்களோ,'முஸ்லிமின் வியாபாரத்தில் எந்தக் குறையோ, தீங்கோ, மோசடியோ இராது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 6981 அம்ர் இப்னு ஷரீத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அபூ ராஃபிஉ(ரலி) அவர்களிடம் ஸஅத் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் ஒரு வீட்டை நானூறு பொற்காசுகளுக்கு விலைபேசினார்கள். (வீட்டின் உரிமையாளர்) அபூ ராஃபிஉ(ரலி) அவர்கள்'அண்மையில் இருப்பதால் அண்டைவீட்டாரே அதிக உரிமை படைத்தவராவார்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியேற்றிராவிட்டால் உங்களுக்கு நான் (இந்த வீட்டை) வழங்கியிருக்கமாட்டேன் என்றார்கள்.

# அத்தியாயம் 91 கனவுக்கு விளக்கமளித்தல்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஆரம்பத்தில் அருளப்பெற்ற இறை அறிவிப்பு (வஹீ) உண்மைக் கனவாவே இருந்தது.

ஹதீஸ் 6982 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஆரம்பமாக வந்த இறை அறிவிப்பானது தூக்கத்தில் கண்ட உண்மைக் கனவாகவே இருந்தது. அப்போது அவர்கள் எந்தக் கனவு கண்டாலும் அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போன்று (தெளிவானதாகவே) இருந்தது. பிறகு அவர்கள் ஹிரா (மலைக்) குகைக்குச் சென்று அங்கே பல நாள்கள் (தனிமையில் தங்கியிருந்து) வணக்க வழிபாடுகளில் ஈடுபடலானார்கள். அந்த நாள்களுக்கான உணவைத் தம்முடன் எடுத்துச் செல்வார்கள். பிறகு (அந்த உணவு தீர்ந்ததும் தம் துணைவியாரான) கதீஜாவிடம் திரும்பி வருவார்கள். அதைப் போன்றே பல நாள்களுக்குரிய உணவை கதீஜா அவர்கள் தயார் செய்து கொடுப்பார்கள். இந்த நிலை ஹிரா குகையில் அவர்களுக்குச் சத்திய(வேத)ம் திடீரென்று (ஒருநாள்) வரும்வரை நீடித்தது. (அன்று) வானவர் (ஜிப்ரீல்) அவர்கள் அந்தக் குகைக்கு வந்து நபி(ஸல்) அவர்களிடம்,'ஓதும்' என்றார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'நான் ஓதத் தெரிந்தவனில்லையே'' என்று அவருக்கு பதிலளித்தார்கள்.

(அப்போது நடந்த சம்பவத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பின்வருமாறு விளக்கினார்கள்:)

அவர் என்னைப் பிடித்து என்னால் தாங்கிக் கொள்ள முடியாத அளவிற்கு இறுகக் கட்டியணைத்தார். பிறகு என்னைவிட்டுவிட்டு'ஓதும்'' என்றார். அப்போதும்'நான் ஓதத் தெரிந்தவன் இல்லையே'' என்றேன். இரண்டாவது முறையும் அவர் என்னைப் பிடித்து என்னால் தாங்க முடியாத அளவிற்கு இறுகக் கட்டி அணைத்து முடியாத அளவிற்கு இறுகக் கட்டி அணைத்து பின்னர் என்னைவிட்டுவிட்டு,'ஓதும்'' என்றார். அப்போதும்,'நான் ஓதத் தெரிந்தவனில்லையே'' என்றேன். அவர் என்னை மூன்றாவது முறையும் என்னால் தாங்க இயலாத அளவிற்கு இறுகக் கட்டி அணைத்து பின்னர் என்னைவிட்டுவிட்டு'படைத்த உம்முடைய இறைவனின் (திருப்) பெயரால் ஓதும்.!"என்று தொடங்கும் (96 வது அத்தியாயத்தின்) வசனங்களை'மனிதன் அறியாதவற்றையெல்லாம் அவனுக்குக் கற்பித்தான்'' என்பது வரை (திருக்குர்ஆன் 96:1-5) ஓதினார்.

(தொடர்ந்து ஆயிஷா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

பிறகு கழுத்தின் சதைகள் (அச்சத்தால்) படபடக்க அந்த வசனங்களுடன் (தம் துணைவியார்) கதீஜாவிடம் திரும்பி வந்து,'எனக்குப் போர்த்திவிடுங்கள் எனக்குப் போர்த்தி விடுங்கள்'' என்று நபியவர்கள் சொன்னார்கள். அவ்வாறே அவர்களும் போர்த்திவிட அச்சம் அவர்களைவிட்டகன்றது. அப்போது,'கதீஜா! எனக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டுவிட்டு நடந்தவற்றை கதீஜா அவர்களிடம் தெரிவித்தபடி தமக்கு ஏதும் நேர்ந்துவிடுமோ என்று தாம் அஞ்சுவதாகவும் கூறினார்கள்.

அப்போது கதீஜா(ரலி) அவர்கள்,'அப்படியொன்றும் ஆகாது. நீங்கள் ஆறுதல் அடையுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களை ஒருபோதும் அல்லாஹ் இழிவுபடுத்தமாட்டான். (ஏனெனில்) தாங்கள் உறவுகளைப் பேணி நடந்துகொள்கிறீர்கள் உண்மையே பேசுகிறீர்கள்

(சிரமப்படுவோரின்) பாரத்தைச் சுமக்கிறீர்கள் விருந்தினர்களை உபசரிக்கிறீர்கள் சத்திய சோதனைகளில் (ஆட்பட்டோருக்கு) உதவுகிறீர்கள்'' என்றார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களை அழைத்துக்கொண்டு தம் தந்தையின் சகோதரரான நவ்ஃபல் என்பவரின் புதல்வர்'வரக்கா'விடம் கதீஜா சென்றார்கள். நவ்ஃபல், அசத் என்பவரின் புதல்வரும் அசத், அப்துல் உஸ்ஸாவின் புதல்வரும் அப்துல் உஸ்ஸா, குஸை என்பவரின் புதல்வரும் ஆவர்.

'வரக்கா' அறியாமைக் காலத்திலேயே கிறிஸ்தவ சமயத்தைத் தழுவியவராக இருந்தார். மேலும், அவர் அரபி மொழியில் எழுதத் தெரிந்தவராகவும் இன்ஜீல் வேதத்தை(ஹீப்ரு மொழியிலிருந்து) அரபி மொழியில் அல்லாஹ் நாடிய அளவுக்கு எழுதுபவராகவும் கண்பார்வை இழந்த முதியவராகவும் இருந்தார்.

அவரிடம் கதீஜா அவர்கள்,'என் தந்தையின் சகோதரர் புதல்வரே! உங்களுடைய சகோதரரின் புதல்வர் (முஹம்மத்) கூறுவதைக் கேளுங்கள்'' என்றார்கள். அப்போது வரக்கா நபி(ஸல்) அவர்களிடம்'என் சகோதரர் புதல்வரே! நீர் என்ன கண்டீர்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் தாம் பார்த்தவற்றை அவரிடம் தெரிவித்தார்கள். (அதைக் கேட்ட) வரக்கா, நபி(ஸல்) அவர்களிடம்'(நீர் கண்ட) இவர்தாம் (இறைத் தூதர்) மூஸாவிடம் (இறைவனால்) அனுப்பப் பெற்ற வானவர் (ஜிப்ரீல்) ஆவார்'' என்று கூறிவிட்டு'உம்முடைய சமூகத்தார் உம்மை உம்முடைய நாட்டிலிருந்து வெளியேற்றும் சமயத்தில் நான் உயிருடன் திடகாத்திரமான இளைஞனாக இருந்தால் நன்றாயிருக்குமே!"என்று கூறினார்.

இதைக் கேட்ட இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மக்கள் என்னை வெளியேற்றவா செய்வார்கள்?' என்று (வியப்புடன்) கேட்டார்கள். அதற்கு வரக்கா அவர்கள்'ஆம். நீங்கள் பெற்றுள்ள (உண்மையான வேதம் போன்ற)தைப் பெற்ற எவரும் மக்களால் பகைத்துக் கொள்ளப்படாமல் இருந்ததில்லை. உம்முடைய (பிரசாரம் பரவுகின்ற) நாளில் நான் (உயிருடன்) இருந்தால் உமக்குப் பலமான உதவி புரிவேன்'' என்று பதிலளித்தார்.

அதன் பின்னர் வரக்கா நீண்ட நாள் வாழாமல் இறந்துவிட்டார். (இந்த முதலாவது வேத அறிவிப்போடு) சிறிது காலம் வேத அறிவிப்பு தடைபட்டது. அதனால் நபி(ஸல்) அவர்கள் கவலையடைந்தார்கள். நமக்குக் கிடைத்த தகவலின்படி எந்த அளவுக்கு அவர்கள் மனம் உடைந்துபோனார்கள் என்றால், மலைச் சிகரங்களிலிருந்து கீழே விழ பல முறை முனைந்தார்கள். அவ்வாறு கீழே விழுந்துவிடலாமென்று ஏதாவது மலை உச்சிக்குச் செல்லும்போதெல்லாம் அவர்களுக்கு முன்னால் (வானவர்) ஜிப்ரீல்(அலை) அவர்கள் தோன்றி,'முஹம்மதே! நீங்கள் உண்மையாகவே, இறைத்தூதர்தாம்'' என்று கூறுவார்கள். இதைக் கேட்கும்போது நபி(ஸல்) அவர்களின் மனப் பதற்றம் அடங்கிவிடும். உடனே (மலை உச்சியிலிருந்து) திரும்பிவந்து விடுவார்கள். வேத அறிவிப்பு தடைபடுவது தொடர்ந்து நீண்டுசெல்லும்போது மறுபடியும் அவ்வாறே சிகரங்களை நோக்கிச் செல்வார்கள். அப்போதும் அவர்கள் முன்னிலையில் (வானவர்) ஜிப்ரீல் தோன்றி முன்போன்றே கூறுவார்கள்.

(இந்த ஹதீஸின் துவக்கத்தில் இடம் பெற்றுள்ள'ஃபலகுஸ் ஸுப்ஹ்' (அதிகாலைப் பொழுதின் விடியல்) என்பதைப் போன்றே குர்ஆனில் 6:96 வது) வசனத்தில் இடம் பெற்றுள்ள)'ஃபாலிகுல் இஸ்பாஹ்' (என்பதிலுள்ள'இஸ்பாஹ்') எனும் சொல்லுக்குப் பகலில் சூரிய வெளிச்சம் இரவில் நிலா வெளிச்சம்' என்று பொருளாகும் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

## நல்லோரின் கனவு

அல்லாஹ் கூறினான்:

நிச்சயமாக அல்லாஹ் தன் தூதருக்கு (அவர் கண்ட) கனவை நனவாக்கிவிட்டான் அல்லாஹ் நாடினால், நிச்சயமாக நீங்கள் மஸ்ஜிதுல் ஹராமில் அச்சமற்றவர்களாகவும் தலையை மழித்துக் கொண்டவர்களாகவும் (அல்லது) கத்தரித்துக் கொண்டவர்களாகவும் நுழைவீர்கள். (அப்போது எவருக்கும்) நீங்கள் பயப்படமாட்டீர்கள். ஏனெனில், நீங்கள் அறியாதிருப்பதை அவன் அறிகிறான். (அதன் பின்னர்) இதையன்றி நெருக்கமானதொரு வெற்றியையும் (உங்களுக்கு) அமைத்துக் கொடுத்தான். (திருக்குர்ஆன் 48:27)

ஹதீஸ் 6983 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல மனிதர் காணும் நல்ல (உண்மையான) கனவு, நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.

என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

## கனவு அல்லாஹ்வாலேயே தோன்றுகிறது.

ஹதீஸ் 6984 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல (உண்மையான) கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். கெட்ட (பொய்யான) கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும்.

என அபூ கத்தாதா அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6985 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தமக்கு விருப்பமான கனவொன்றைக் கண்டால், அது அல்லாஹ்விடமிருந்தே வந்தது (என்று தெரிந்து), அதற்காக அவர் அல்லாஹ்வைப் போற்றட்டும். அதை (தமக்கு விருப்பமானவர்களிடம் மட்டும்) தெரிவிக்கட்டும். அதற்கு மாறாகத் தமக்கு விருப்பமில்லாத கனவு கண்டால், அது ஷைத்தானிடமிருந்தே வந்தது (என அறிந்து), அதன் தீங்கிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரட்டும். அதைப் பற்றி யாரிடமும் கூற வேண்டாம். ஏனெனில், அப்போது அக்கனவு அவருக்கு எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்திட முடியாது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## நல்ல (உண்மையான) கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.

ஹதீஸ் 6986 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல (உண்மையான) கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும் கெட்ட (பொய்க்) கனவுகள் ஷைத்தானிடமிருந்து வருவதாகும். எனவே, ஒருவர் கெட்ட கனவு கண்டால் அதன் தீங்கிலிருந்து (அல்லாஹ்விடம்) அவர் பாதுகாப்புக் கோரட்டும். தம் இடப் பக்கத்தில் துப்பட்டும். ஏனெனில், அப்போது அவருக்கு அது எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்திட முடியாது.

என அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இதே ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 6987 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர் காணும் (நல்ல உண்மையான) கனவு, நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.

என உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6988 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர் காணும் (நல்ல உண்மையான) கனவு, நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாக அனஸ்(ரலி) அவர்களிடமிருந்தும் வந்துள்ளது.

ஹதீஸ் 6989 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல (உண்மையான) கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நற்செய்தி (கூறும் கனவு)கள்

ஹதீஸ் 6990. அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நற்செய்தி கூறுகின்றவை ('முபஷ்ஷிராத்') தவிர, நபித்துவத்தில் வேறெதுவும் எஞ்சியிருக்கவில்லை'' என்று கூற கேட்டேன். அப்போது மக்கள் 'நற்செய்தி கூறுகின்றவை (முபஷ்ஷிராத்) என்றால் என்ன?' என்று வினவினர். நபி(ஸல்) அவர்கள் 'நல்ல (உண்மையான) கனவு'' என்று விடையளித்தார்கள்.

## (இறைத்தூதர்) யூசுஃப்(அலை) அவர்கள் கண்ட கனவு.

அல்லாஹ் கூறினான்:

யூசுஃப் தம் தந்தையாரிடம், 'என் அருமைத் தந்தையே! பதினோரு நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும் - (இவை யாவும்) எனக்குச் சிரம்பணிவதை மெய்யாகவே (கனவில்) கண்டேன்'' என்று கூறிய பொழுது, 'என் அருமை மகனே! உன்னுடைய கனவைப் பற்றி உன் சகோதரர்களிடம் எடுத்துரைக்க வேண்டாம் (அவ்வாறு செய்தால்) அவர்கள், உனக்கு (எதிராக) சதி செய்வார்கள் ஏனெனில், (அவ்வாறு சதி செய்யத் தூண்டும்) ஷைத்தான், நிச்சயமாக மனிதனுக்குப் பகிரங்க விரோதியாக இருக்கிறான்.

இவ்வாறே உம் இறைவன் உம்மைத் தேர்ந்தெடுத்து கனவுகளின் விளக்கத்தை உமக்குக் கற்றுக் கொடுத்து அவனுடைய அருளை உம்மீதும், யஅகூபின் சந்ததியார் மீதும் முழுமையாகச் சொரிவான். இதற்கு முன்னர் உம்முடைய மூதாதையராகிய இப்ராஹீம், இஸ்ஹாக் ஆகியோர் மீதும் தன் அருளை அவன் முழுமையாகச் சொரிந்ததைப் போன்று. நிச்சயமாக உம் இறைவன் யாவற்றையும் நன்கறிந்தோனும், மிக்க ஞானமுடையோனுமாய் இருக்கிறான். (திருக்குர்ஆன் 12:4-6)

மேலும், அல்லாஹ் கூறினான்:

இன்னும், அவர் தம் தாய் தந்தையரை அரியாசனத்தின் மீது உயர்த்தி (அமர்த்தி)னார் அவர்கள் (எல்லோரும்) அவருக்கு (மரியாதை செலுத்தியவர்களாகச்) சிரம் பணிந்து வீழ்ந்தனர் அப்போது அவர் (தம் தந்தையை நோக்கி), 'என் தந்தையே! இதுதான் முன்பு நான் கண்ட கனவின் விளக்கமாகும் அதை என் இறைவன் மெய்ப்பித்தான். மேலும், அவன் என்னைச் சிறைச்சாலையிலிருந்து வெளியாக்கியதுடன் எனக்கும் என் சகோதரர்களுக்குமிடையே

ஷைத்தான் பிரிவினையை உண்டாக்கிவிட்ட பின்னர் உங்களைக் கிராமத்திலிருந்து கொண்டு வந்ததன் மூலம் அவன் நிச்சயமாக எனக்குப் பேருபகாரம் செய்துள்ளான். நிச்சயமாக என் இறைவன், தான் நாடியவற்றை மிக நுணுக்கமாகச் செய்கிறவன் நிச்சயமாக அவன் (யாவற்றையும்) நன்கறிந்தவன் மிக்க ஞானமுள்ளவன்‘‘ என்று கூறினார்.

“என் இறைவா! நிச்சயமாக நீ எனக்கு அரசாட்சியைத் தந்து, கனவுகளின் விளக்கங்களையும் எனக்குக் கற்றுத்தந்தாய். வானங்களையும் பூமியையும் படைத்தவனே! இம்மையிலும் மறுமையிலும் நீயே என் பாதுகாவலன் முஸ்லிமாகவே என்னை நீ கைப்பற்றிக் கொள்வாயாக! இன்னும் நல்லடியார் கூட்டத்தில் என்னைச் சேர்த்திடுவாயாக!”(என்று அவர் பிரார்த்தித்தார்.) (திருக்குர்ஆன் 12:100, 101)

(அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்:)

(திருக்குர்ஆன் 12:101 வது வசனத்தின் மூலத்தில் இடம்பெற்றுள்ள)’ஃபாத்திர்’ (படைத்தவன்) எனும் சொல்லும் அல்பதீஉ, அல்முப்திஉ, அல்பாரிஉ, அல்காலிக் ஆகிய சொற்களும் ஒரே பொருள் கொண்டவை ஆகும். (மேலும், 12:100 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’பத்வு’ எனும் சொல்லுக்குக்’கிராமம்’ என்று பொருள்.

## (இறைத்தூதர்) இப்ராஹீம்(அலை) அவர்கள் கண்ட கனவு.

அல்லாஹ் கூறினான்:

பின்னர் இஸ்மாயீல் (தம் தந்தை) இப்ராஹீமுடன் நடக்கும் பருவத்தை அடைந்தபோது,‘என்னருமை மகனே! நான் உன்னை அறுத்துப் பலியிடுவதாகக் கனவு கண்டேன். இதைப் பற்றி உம்முடைய கருத்து என்ன என்பதைச் சிந்திப்பீராக!”என்று இப்ராஹீம் கூறினார். அதற்கு இஸ்மாயீல்,‘என்னருமைத் தந்தையே! உங்களுக்கு இடப்பெற்ற கட்டளையை நிறைவேற்றுங்கள். அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளர்களில் ஒருவனாகக் காண்பீர்கள்‘‘ என்று பதிலளித்தார். எனவே, அவ்விருவரும் (இறைவன் கட்டளைக்கு) முற்றிலும் இணங்கி, (இப்ராஹீம்) இஸ்மாயீலைப் பலியிட முகம் குப்புறக் கிடத்தியபோது, நாம் அவரை அழைத்து,‘இப்ராஹீம்! உறுதியாகவே நீர் (கண்ட) கனவை மெய்ப்படுத்தினீர். நிச்சயமாக நன்மை செய்வோருக்கு நாம் இவ்வாறே நற்பலன் அளிக்கிறோம்!”என்று கூறினோம். (திருக்குர்ஆன் 37:102-105)

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

(திருக்குர்ஆன் 37:103 வது வசனத்திலுள்ள மூலத்திலுள்ள)’அஸ்லமா’ என்பதற்கு’(இப்ராஹீம் இஸ்மாயீல் ஆகிய) இருவரும் இறைவனின் கட்டளைக்கு இணங்கினர்’ என்று பொருள். ’மேலும்,‘வதல்லஹு‘ என்பதற்கு,‘இப்ராஹீம் (அலை) அவர்கள் இஸ்மாயீலை (அறுத்துப் பலியிட) முகங் குப்புறக் கிடத்தினார்கள்‘‘ என்று பொருள்.

## பலர் காணும் கனவு ஒத்திருப்பது

ஹதீஸ் 6991 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(நபித் தோழர்களில்) சிலருக்கு’லைலத்துல் கத்ர்’ (எனும் மகத்துவமிக்க) இரவு (ரமளான் மாதத்தில்) கடைசி ஏழுநாள்களில் தேடிக் கொள்ளுங்கள்‘‘ என்றார்கள்.

## சிறைக் கைதிகள், குழப்பவாதிகள் மற்றும் இணைவைப்போர் காணும் கனவு.

அல்லாஹ் கூறினான்:

(நம் தூதர்) யூசுஃபுடன் இரண்டு இளைஞர்களும் சிறைக்குள் நுழைந்தனர். அவ்விருவரில் ஒருவர், 'நான் திராட்சை மது பிழிவதாக ஒரு கனவு கண்டேன்'' என்று கூறினார். மற்றவர், 'நான் என் தலைமீது ரொட்டியைச் சுமப்பதாகவும், அதிலிருந்து பறவைகள் தின்று கொண்டிருப்பதாகவும் கன்று கண்டேன்'' என்று கூறினார். (பின் இருவரும்' யூசுஃபே!) எங்களுக்கு இவற்றின் விளக்கத்தை அறிவிப்பீராக் மெய்யாக நாங்கள் உம்மை (ஞானமிக்க) நல்ல மனிதர்களில் ஒருவராகக் காண்கிறோம்'' (என்று கூறினார்கள்).

அதற்கு அவர் கூறினார்: (இங்கு) உங்களிருவருக்கும் வழங்கப்படும் உணவு உங்களிடம் வ(ந்து சே)ருவதற்கு முன்பே உங்களின் கனவின் விளக்கத்தை உங்களுக்கு அறிவித்துவிடுவேன். என் இறைவன் எனக்குக் கற்றுக்கொடுத்துள்ள அறிவுகளில் இதுவும் ஒன்றாகும். அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்ளாதவர்களும், மறுமையை நிராகரிப்பவர்களுமான சமூகத்தாரின் மார்க்கத்தை நான் நிச்சயமாகவிட்டுவிட்டேன். நான் என் மூதாதையர்களான இப்ராஹீம், இஸ்ஹாக், யஅகூப் ஆகியோரின் மார்க்கத்தைப் பின்பற்றுகிறேன். அல்லாஹ்வுக்கு எதையும் நாங்கள் இணைவைப்பது எங்களுக்குத் தகுமானதன்று. இது எங்களின் மீதும் (இதர) மக்களின் மீதும் அல்லாஹ் புரிந்த அருளாகும். எனினும், மனிதர்களில் பெரும்பாலோர் (அல்லாஹ்வுக்கு) நன்றி செலுத்துவதில்லை.

என்னுடைய சிறைத் தோழர்களே! வெவ்வேறான பல தெய்வங்கள் சிறந்தவையா? அல்லது (யாவரையும்) அடக்கி ஆளுகிற ஏக இறைவனாகிய அல்லாஹ் சிறந்தவனா? அவனையன்றி நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவை யாவும் நீங்களும் உங்கள் மூதாதையரும் வைத்துக் கொண்ட (வெறும் கற்பனைப்) பெயர்களேயன்றி வேறில்லை. அவற்றுக்கு அல்லாஹ் யாதொரு ஆதாரத்தையும் இறக்கிவைக்கவில்லை. (ஆட்சி செலுத்தும்) அதிகாரம் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் இல்லை. அவனையன்றி (வேறு எவரையும்) நீங்கள் வணங்கக் கூடாது என்று அவன் (உங்களுக்குக்) கட்டளையிட்டிருக்கிறான். இதுவே நேரான மார்க்கமாகும். ஆனால், மனிதர்களில் பெரும்பாலோர் இதனை அறிந்துகொள்வதில்லை.

என்னுடைய சிறைத் தோழர்களே! (உங்கள் கனவுகளுக்கான விளக்கம் இதுதான்:) உங்களில் ஒருவர் தம் எசமானுக்கு (எம்ப்து அரசனுக்கு மறுபடியும்) திராட்சை மதுவைப் புகட்டிக் கொண்டிருப்பார் மற்றவரோ சிலுவையில் அறையப்பட்டு, அவர் தலையிலிருந்து பறவைகள் கொத்தித் தின்னும். நீங்கள் எந்த விஷயம் தீர்மானிக்கப்பட்டுவிட்டது. அவ்விருவரில் யார் விடுதலை அடைவார் என்று யூசுஃப் கருதினாரோ அவரிடம், 'என்னைப் பற்றி உம் எசமானிடம் (எம்ப்து அரசனிடம்) கூறும்!" என்றார். ஆனால், (சிறையிலிருந்து விடுதலையாகிய) அவர் தம் எசமானிடம் (யூசுஃபைப் பற்றிக்) கூறவிடாமல் ஷைத்தான் அவரை மறதியிலாழ்த்திவிட்டான். எனவே, யூசுஃப் சிறைக்கூடத்தில் (பின்னும்) சில ஆண்டுகள் இருக்க வேண்டியவரானார்.

''(இந்நிலையில்) ஒருநாள் எம்ப்து) அரசன், நான் (கனவில்) ஏழு கொழுத்த பசுக்களை, ஏழு மெலிந்த பசுக்கள் தின்றுகொண்டிருப்பதையும், ஏழு பசுமையான கதிர்களையும், வேறு (ஏழு) காய்ந்து (சாவியாகிவிட்ட) கதிர்களையும் கண்டேன். பிரதானிகளே! நீங்கள் கனவுக்கு விளக்கம் கூறக்கூடியவர்களாக இருந்தால், என்னுடைய (இக்)கனவின் பலனை எனக்கு அறிவியுங்கள்'' என்று கூறினார்.

''(இவை) குழப்பமான கனவுகளாகும். இத்தகைய கனவுகளுக்கான விளக்கங்களை நாங்கள் அறிந்தவர்கள் அல்லர்'' என்று அவர்கள் கூறினார்கள்.

அவ்விருவரில் (சிறையிலிருந்து) விடுதலையடைந்திருந்தவர், நீண்ட காலத்திற்குப் பின்னர், (யூசுஃபை) நினைவு கூர்ந்து' இக்கனவின் விளக்கத்தை நான் உங்களுக்கு அறிவிப்பேன் என்னை

(யூசுஃபிடம்) அனுப்பிவையுங்கள்‘‘ என்றார். (சிறையில் யூசுஃபைக் கண்ட) அவர்,‘யூசுஃபே! உண்மையாளரே! ஏழு கொழுத்த பசுக்களை, ஏழு மெலிந்த பசுக்கள் தின்றுகொண்டிருப்பதையும் பசுமையான ஏழு கதிர்களையும் வேறு (ஏழு) காய்ந்த கதிர்களையும் (கனவில் கண்டால் அக்கனவுக்குப் பலன் என்ன என்பதை) எங்களுக்கு அறிவிப்பீராக. மக்கள் அறிந்துகொள்வதற்காக அவர்களிடம் நான் திரும்பிச் செல்ல வேண்டியிருக்கிறது‘‘ (என்று கூறினார்).

அதற்கு யூசுஃப் கூறினார்: நீங்கள் தொடர்ந்து ஏழு ஆண்டுகளுக்கு (அமோகமாக) விவசாயம் செய்வீர்கள். பிறகு நீங்கள் அறுவடை செய்வதில் நீங்கள் உண்பதற்கு வேண்டிய ஒரு சிறிய அளவைத் தவிர, மீதியை அதற்குரிய கதிர்களிலேயேவிட்டுவையுங்கள். பின்னர் அதற்கப்பால் கடினமான ஏழு (பஞ்ச) ஆண்டுகள் வரும். அந்தப் பஞ்சமான ஆண்டுகளுக்கான நீங்கள் முன்பே பத்திரப்படுத்தி வைத்துள்ளதில் சொற்பமானதைத் தவிர மற்றதை அந்தப் பஞ்ச ஆண்டுகள் தின்றுவிடும்.

பின்னர் அதற்கப்பால் ஓராண்டு வரும். அதில் மக்களுக்கு நல்ல மழை பெய்யும் அதில் (விளைவு கனிகளிலிருந்து) அவர்கள் பழரசங்கள் பிழி(ந்து உட்கொண்டு சுகமாக வாழ்)வார்கள்.

(இவ்விவரம் அரசருக்கு அறிவிக்கப்பட்டதும்).’அவருக்கு என்னிடம் அழைத்து வாருங்கள்‘‘ என்று அரசர் கூறினார். (அவருடைய) தூதர் யூசுஃபிடம் வந்தபோது அவர்,‘நீர் உம் எசமானிடம் திரும்பிச் சென்று, தம் கைகளை வெட்டிக்கொண்ட பெண்களின் உண்மை நிலை என்ன? என்று அவரிடம் கேளும். நிச்சயமாக என் இறைவன் அப்பெண்களின் சதியை நன்கு அறிந்தவனாக இருக்கிறான்‘‘ என்று கூறினார். (திருக்குர்ஆன் 12:36-50)

(திருக்குர்ஆன் 12:45 வது வசனத்தின் மூலத்திலுள்ள)’இத்தகர’ எனும் சொல்’ஃதகர்த்து (நினைவு கூர்ந்தேன்) எனும் சொல்லின்’இஃப்தஅல்’ வாய்பாட்டில் அமைந்ததாகும்.’உம்மத்’ எனும் சொல்லுக்கு’பல்லாண்டு’ என்று பொருள். இதே சொல் மற்றோர் ஓதும் முறையில்’அமஹ்’ என்றும் ஓதப்பட்டுள்ளது. (இதன்படி) இதற்கு’மறதி’ என்று பொருள் வரும்.

ஹதீஸ் 6992 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத்தூதர்) யூசுஃப்(அலை) அவர்கள் (சிறையில்) கழித்த காலம் அளவிற்கு நான் சிறையில் காலம் கழித்திருந்து, பிறகு (அவரிடம் வந்ததைப் போன்றே) என்னை (விடுதலை செய்ய) அழைப்பவர் என்னிடம் வந்திருந்தால் நான் அதை ஏற்றுக்கொண்டிருப்பேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கனவில் நபி(ஸல்) அவர்களைக் காண்பது.

ஹதீஸ் 6993.’கனவில் என்னை காண்கிறவர் விழிப்பிலும் என்னைக் காண்பார். (ஏனெனில்) ஷைத்தான் என் உருவத்தில் காட்சியளிக்கமாட்டான். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

‘‘நபி(ஸல்) அவர்களுக்குரிய தோற்றத்தில் (அவர்களின் அங்க லட்சணங்களுடன்) அவர்களைக் கண்டால்தான் (நபி(ஸல்) அவர்களைக் கனவு கண்டதாகக் கருதப்படும்)‘‘ என்று இப்னு சீரீன்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 6994 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

கனவில் யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் என்னையே கண்டார். ஏனெனில், ஷைத்தான் என் உருவத்தில் காட்சியளிக்கமாட்டான். மேலும், இறைநம்பிக்கையாளர் காணும் (உண்மையான) நல்ல கனவு, நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6995 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல (உண்மையான) கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். கெட்ட (பொய்யான) கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். எனவே, எவரேனும் தாம் விரும்பாத (தீய கனவு) ஒன்றைக் கண்டால் அவர் தம் இடப் பக்கத்தில் மூன்று முறை துப்பட்டும் ஷைத்தானிடமிருந்து (காக்குமாறு அல்லாஹ்விடம்) அவர் பாதுகாப்புக் கோரட்டும். ஏனெனில், (இப்படிச் செய்தால்) அவருக்கு அது எந்தத் தீங்கும் இழைத்திட இயலாது. மேலும், ஷைத்தான் என் உருவத்தில் காட்சி தரமாட்டான்.

என அபூ கத்தத்தா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 6996 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(கனவில்) யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் நிஜத்தையே கண்டார்.

என அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்.

இது மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 6997 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(கனவில்) யார் என்னைக் கண்டாரோ நிச்சயமாக அவர் நிஜத்தையே கண்டார். ஏனெனில், ஷைத்தான் என் உருவத்தில் (காட்சியளிப்பவனாக) இருக்கமாட்டான்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## இரவில் காணும் கனவு

இது குறித்து சமுரா(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 6998 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்கு (ஒருங்கிணைந்த பொருள்கள் கொண்ட) சொற்களின் திறவுகோல்கள் வழங்கப்பட்டுள்ளன. (எதிரிகளுக்கு என்னைப் பற்றி (மதிப்பும்) அச்ச(மு)ம் ஏற்படுத்தப்பட்டு எனக்கு வெற்றி அளிக்கப்பட்டுள்ளது. நேற்றிரவு நான் உறங்கிக் கொண்டிருக்கையில் (கனவில்) பூமியின் கருவூலங்களுடைய திறவுகோல்கள் கொண்டுவரப்பட்டு என் கையில் வைக்கப்பட்டன.

இதை அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்துவிட்டு,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சென்றார்கள். நீங்கள் அந்தக் கருவூலங்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுசென்று (அனுபவித்துக்) கொண்டிருக்கிறீர்கள்" என்றார்கள்.

ஹதீஸ் 6999 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இன்றிரவு (இறையில்லம்) கஅபாவின் அருகே எனக்கு(க் கனவில்) என்னைக் காட்டப்பட்டது. அப்போது மனிதர்களில் மா நிறத்தில் நீ பார்த்ததிலேயே மிக அழகான மா நிறமுடைய மனிதர் ஒருவரைக் கண்டேன். தோள் வரை நீண்டுள்ள முடிகளில் நீ பார்த்தவற்றிலேயே மிக அழகான தலை முடி அவருக்கு இருந்தது அந்த முடியை அவர் (படிய) வாரிவிட்டிருந்தார் அதிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது.'இரண்டு மனிதர்களின் மீது' அல்லது'இரண்டு மனிதர்களின்

தோள்களின் மீது' சாய்ந்தபடி அவர் கஅபாவைச் சுற்றிவந்துகொண்டிருந்தார். அப்போது நான்,'இவர் யார்?' என்று கேட்டேன். அதற்கு,'(இவர் தாம்) மர்யமின் குமாரர் மஸீஹ் (ஈசா)'' என்று பதிலளிக்கப்பட்டது. அப்போது நான் நிறைய சுருள்முடி கொண்ட வலக் கண்ட குருடான ஒரு மனிதனையும் பார்த்தேன். அவனுடைய கண் ஒரே குலையில் துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருந்தது. அப்போது நான்,'யார் இவர்?' என்று கேட்டேன். அதற்கு'இவன்தான் தஜ்ஜால் எனும் மஸீஹ்'' என்று பதிலளிக்கப்பட்டது.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7000 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள்,'இன்றிரவு எனக்குக் கனவு ஒன்று காட்டப்பட்டது..!"என்று கூறினார்கள். தொடர்ந்து அறிவிப்பாளர் முழு ஹதீஸையும் அறிவித்தார்.

இதே ஹதீஸ் இன்னும் பல அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

ஓர் அறிவிப்பில், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அல்லது அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிப்பதாக வந்துள்ளது.

மஅமர் இப்னு ராஷித் (ரஹ்) அவர்கள் முதலில் இந்த ஹதீஸை (இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என) அறிவிக்காமல் இருந்தார்கள் பின்புதான் அறிவிக்கலானார்கள்.

## பகலில் காணும் கனவு

இப்னு சீரின் (ரஹ்) அவர்கள்,'பகலில் காணும் கனவும் இரவில் காணும் கனவைப் போன்றது தான்'' என்று கூறினார்கள்.

என இப்னு அவ்ன் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 7001 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு அருகிலுள்ள'குபா'வுக்குச் சென்றால் தம் பால்குடி சிற்றன்னையான) உம்மு ஹராம் பின்த் மில்ஹான் (ரலி) அவர்களின் வீட்டிற்குச் செல்வது வழக்கம். அவர் உபாதா இப்னு அஸ்ஸாமித் (ரலி) அவர்களின் துணைவியாராவார். அவ்வாறே ஒரு நாள் (பகலில்) நபி (ஸல்) அவர்கள் உம்மு ஹராம் (ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்றபோது அவர் நபி (ஸல்) அவர்களுக்கு உணவளித்த பின் அவர்களுக்கு பேன் பார்த்து விடலானார். அப்போது நபி (ஸல்) அவர்கள் உறங்கிவிட்டார்கள். பிறகு சிரித்தபடி விழித்தார்கள்.

ஹதீஸ் 7002 தொடர்ந்து உம்மு ஹராம் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அப்போது நான்,'இறைத்தூதர் அவர்களே! ஏன் சிரிக்கிறீர்கள்?' என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள்,'என் சமுதாயத்தாரில் சிலர் இறைவழியில் இந்தக் கடலின் மத்தியில் பயணம் செய்யும் புனிதப் போராளிகளாக எனக்குக் காட்டப்பட்டனர். அவர்கள் கட்டில்களில் வீற்றிருக்கும்'மன்னர்களாக' அல்லது'மன்னர்களைப் போன்று' இருந்தார்கள்'' என்று கூறினார்கள். உடனே நான்,'இறைத்தூதர் அவர்களே! என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும் படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்'' என்று சொன்னேன். அப்போது எனக்காக இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்தார்கள். பிறகு (மீண்டும்) தம் தலையைக் கீழே வைத்து (உறங்கி) விட்டுப் பிறகு சிரித்தபடி விழித்தெழுந்தார்கள். அப்போதும் நான்,'ஏன் சிரிக்கிறீர்கள், இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள்,'என் சமுதாயத்தாரில் சிலர் இறைவழியில்

புனிதப்போர் புரிபவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள்‘‘ என்று முன்புபோன்றே பதிலளித்தார்கள். அதைக் கேட்டு நான், ‘இறைத்தூதர் அவர்களே! என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்‘‘ என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள்’நீங்கள் (கடல் பயணம் செய்து அறப்போருக்கு) முதலாவதாகச் செல்பவர்களில் ஒருவராக இருப்பீர்கள்‘‘ என்று கூறினார்கள். (நபி (ஸல்) அவர்கள் கூறியபடியே) உம்மு ஹராம் (ரலி) அவர்கள் முஆவியா இப்னு அபீ சுஃப்யான் (ரலி) அவர்களின் (ஆட்சிக்) காலத்தில் கடல் பயணம் மேற்கொண்டார்கள். பின்பு அவர்கள் கடலிலிருந்து புறப்பட்டபோது தம் வாகனத்திலிருந்து கீழே விழுந்து இறந்துவிட்டார்கள்.

## பெண்கள் காணும் கனவு

ஹதீஸ் 7003 இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழிப் பிரமாணம் செய்திருந்த அன்சாரிப் பெண்மணியான உம்முல் அலா (ரலி) அறிவித்தார்.

(நாடு துறந்து மதீனா வந்தடைந்த) முஹாஜிர்களுக்காக (அவர்களில் யார் யாருடைய வீட்டில் தங்குவது என்பதை முடிவு செய்ய) அன்சாரிகள் சீட்டுக் குலுக்கிப் போட்டார்கள். அப்போது உஸ்மான் இப்னு மழ்வூன் (ரலி) அவர்கள் எங்கள் பொறுப்பில் வந்தார்கள். (அதன்படி) அவரை நாங்கள் எங்கள் வீட்டில் தங்கவைத்தோம். பிறகு அவர் நோயுற்று அந்த நோயிலேயே இறந்தும் போனார். அவரின் உடல் குளிப்பாட்டப்பட்டு அவரின் ஆடையிலேயே கஃபனிடப்பட்டதும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அங்கு வந்தார்கள். அப்போது நான் உஸ்மான் அவர்களை நோக்கி), ‘சாயிபின் தந்தையே! உம்மீது இறையருள் பொழியட்டும். அல்லாஹ் உம்மைக் கண்ணியப்படுத்திவிட்டான் என்பதற்கு நான் சாட்சியம் அளிக்கிறேன்‘‘ என்று கூறினேன். உடனே இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ‘அவரை அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ளான் என்பது உனக்கு எப்படித் தெரியும்?’ என்று கேட்டார்கள். அதற்கு நான், ‘என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும், இறைத்தூதர் அவர்களே! அவ்வாறாயின் யாரைத்தான் அல்லாஹ் கண்ணியப்படுத்துவான்?’ என்று கேட்டேன். அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள், ‘இவர் இறந்துவிட்டார். அல்லாஹ்வின் மீதாணையாக! இவருக்கு நான் நன்மையையே எதிர்பார்க்கிறேன். மேலும், அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதராக இருந்தும் என்னிடம் (மறுமையில்) எவ்வாறு நடந்துகொள்ளப்படும் என்பது எனக்குத் தெரியாது‘‘ என்றார்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! அதற்குப் பிறகு நான் யாரையும் தூய்மையானவர் என்று ஒருபோதும் கூறுவதேயில்லை.

ஹதீஸ் 7004 மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாக வந்துள்ள மேற்கண்ட ஹதீஸில் ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் பின்வருமாறு அறிவித்தார்கள்.

“மேலும் இவரிடம் (மறுமையில்) எவ்வாறு நடந்துகொள்ளப்படும் என்பதும் எனக்குத் தெரியாது’ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

உம்முல் அலா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

(இதைக்கேட்ட) நான் மிகவும் கவலைப்பட்டவாறே உறங்கிவிட்டேன். அப்போது (கனவில்) உஸ்மான் அவர்களுக்காக ஓர் ஆறு ஓடிக்கொண்டிருக்கக் கண்டேன். எனவே இது குறித்து நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தபோது, ‘அது அவரின் நற்செயல்‘‘ என்று (விளக்கம்) கூறினார்கள்.

## கெட்ட (பொய்க்) கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும்.

எனவே, ஒருவர் அத்தகைய கனவைக் கண்டால் தம் இடப் பக்கத்தில் துப்பிவிட்டு (அதன் தீய விளைவிலிருந்து) அவர் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரட்டும்.

ஹதீஸ் 7005 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல (உண்மையான) கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும் கெட்ட (பொய்க்) கனவு ஷைத்தானிடமிருந்து வருவதாகும். எனவே, உங்களில் எவரேனும் தாம் விரும்பாத தீய கனவு கண்டால் உடனே அவர் தம் இடப் பக்கத்தில் துப்பட்டும். ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்பும் கோரட்டும். அப்போது அவருக்கு அது எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்திட இயலாது.

இதை நபித்தோழர்களில் ஒருவரும் நபி (ஸல்) அவர்களின் குதிரைப் படை வீரர்களில் ஒருவருமான அபூ கத்தாதா (ரலி) அறிவித்தார்.

## கனவில் பாலைக் கண்டால்...?

ஹதீஸ் 7006 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) ஒரு பால்கோப்பை என்னிடம் கொண்டு வரப்பட்டது. நான் அதிலிருந்து பாலை (தாகம் தீருமளவுக்கு) அருந்தினேன். இறுதியில் அது என்னுடைய நகக்கண்கள் வழியே வெளியேறி வருவதைக் கண்டேன். பின்னர் மீதியை உமர் இப்னு அல்கத்தாபுக்குக் கொடுத்தேன்'' என்று கூறினார்கள்.

அப்போது மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! அந்தப் பாலுக்கு என்ன விளக்கம் கண்டீர்கள்?' என்று வினவினர். நபி (ஸல்) அவர்கள், 'அறிவு' என்று பதிலளித்தார்கள்.

## உறுப்புகள், அல்லது நகக்கண்கள் வழியாகப் பால் வழிந்தோடுவதைப் போன்று கனவு கண்டால்...?

ஹதீஸ் 7007 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) ஒரு பால்கோப்பை என்னிடம் கொண்டு வரப்பட்டது. நான் அதிலிருந்து காலை (தாகம் தீருமளவுக்கு) அருந்தினேன். இறுதியில், அது என் உறுப்புகள் வழியே வெளியேறி வருவதைக் கண்டேன். பின்னர் மீதியை உமர் இப்னு அல்கத்தாபுக்குக் கொடுத்தேன்'' என்று கூறினார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்களைச் சுற்றிக் குழுமியிருந்த மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! அந்தப் பாலுக்கு என்ன விளக்கம் கண்டீர்கள்?' என்று வினவினர். நபி (ஸல்) அவர்கள், 'அறிவு' என்று பதிலளித்தார்கள்.

## கனவில் சட்டையைக் காண்பது.

ஹதீஸ் 7008 அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை), 'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) மக்கள் (பலவிதமான) சட்டைகளை அணிந்தவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள். அவற்றில் (அவர்களின்) மார்பை எட்டக் கூடியவையும் இருந்தன. அவற்றில் (அவர்களின்) மார்பை எட்டாதவையும் இருந்தன. உமர் இப்னு அல்கத்தாப் (தரையில்) இழுத்துக்கொண்டே செல்லும் அளவிற்கு (முழுநீளச்) சட்டையொன்றை அணிந்தவராக என்னைக் கடந்துசென்றார்' என்று இறைத்தூதர் (ஸல்)

அவர்கள் சொன்னார்கள். மக்கள், '(இதற்கு) தாங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், '(அந்தச் சட்டைகள்) அவர்களின் மார்க்கத்தை (மார்க்க உணர்வையும் செயல்பாடுகளையும்) குறிக்கும்' என்று விளக்கம் காண்பதாக) பதிலளித்தார்கள்.

## கனவில் சட்டையை (தரையில்) இழுத்துச் செல்வதைப் போன்று காண்பது.

**ஹதீஸ் 7009** அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) மக்கள் (பலவிதமான) சட்டைகளை அணிந்தவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள். அவற்றில் (அவர்களின் மார்பை எட்டக்கூடியவையும் இருந்தன. அவற்றில் (அவர்களின் மார்பை எட்டாதவையும் இருந்தன. உமர் இப்னு அல்கத்தாப்(தரையில்) இழுத்துக் கொண்டே செல்லும் அளவிற்கு (நீளமான) சட்டையொன்றை அணிந்தவராக எனக்குக் காட்டப்பட்டார்' என்றார்கள். மக்கள், '(இதற்கு) தாங்கள் என்ன விளக்கம் கண்டீர்கள், இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள், '(அந்தச் சட்டைகள்) அவர்களின் மார்க்கத்தை (மார்க்க உணர்வையும் செயல்பாடுகளையும் குறிக்கும்' என்று (விளக்கம் காண்பதாக) பதிலளித்தார்கள்.

## கனவில் பச்சை நிறம் மற்றும் பசுமையான பூங்காவைக் காண்பது.

**ஹதீஸ் 7010** கைஸ் இப்னு உபாத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் (மதீனா பள்ளிவாசலில்) ஓர் அவையில் அமர்ந்திருந்தேன். அதில் ஸஅத் இப்னு மாலிக்(ரலி) அவர்களும் இப்னு உமர்(ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்கள் (எங்களைக்) கடந்து சென்றார்கள். (அன்னாரைக் கண்ட) மக்கள், 'இவர் சொர்க்கவாசிகளில் ஒருவர்' என்று கூறினர். இதைக் கேட்ட நான் அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்களிடம்'(தங்களைக் குறித்து) மக்கள் இப்படி இப்படிக் கூறினர்' என்று சொன்னேன்.

(அதற்கு) அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்கள், 'அல்லாஹ் தூயவன். தமக்குத் தெரியாத ஒன்றைக் குறித்து அவர்கள் கூறுவது முறையல்ல. (மக்கள் இவ்வாறு பேசிக் கொள்வதற்குக் காரணம், நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) நான் கண்ட கனவுதான். (அதில்) பசுமையான பூங்கா ஒன்றில் தூண் நடப்பட்டு இருந்தது. அத்தூணின் மேற்பகுதியில் பிடியொன்று காணப்பட்டது. அதன் கீழ் பகுதியில் சிறிய பணியாள் ஒருவர் இருந்தார். அப்போது (என்னிடம்)'இதில் ஏறுங்கள்' என்று சொல்லப்பட்டது. உடனே நான் (அதில்) ஏறி அந்தப் பிடிப்பை பற்றினேன். பிறகு நான் இக்கனவு குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்கள் முன்னிலையில் விவரித்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ்(பின் சலாம்), (இறை நம்பிக்கை எனும்) பலமான பிடியைப் பற்றியவராக இறப்பார்' என்றார்கள்.

## கனவில் ஒரு பெண்ணை (முக்காட்டை) விலக்கிப் பார்ப்பது.

**ஹதீஸ் 7011** ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னிடம்) கூறினார்கள்: நான் உன்னை (மணந்து கொள்வதற்கு முன்னால்) இரண்டு முறை கனவில் கண்டுள்ளேன். அதில் ஒருவர் (உடைய தோற்றத்திலிருந்து வானவர்) உன்னைப் பட்டுத்துணி ஒன்றில் சுமந்து செல்கிறார். அப்போது அவர்'இவர் உங்கள் (வருங்கால) மனைவி' என்றார். உடனே நான் அந்தப் பட்டுத துணியை

விலக்கிப் பார்த்தேன். அது நீதான். அப்போது நான் (மனத்திற்குள்)'இக்கனவு அல்லாஹ்விடமிருந்து வந்ததாயின், இதை அவன் நனவாக்குவான்'' என்று சொல்லிக் கொண்டேன்.

## கனவில் பட்டுத் துணியைக் காண்பது

ஹதீஸ் 7012 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னிடம்) கூறினார்கள்: உன்னை நான் மணமுடிப்பதற்கு முன்னால் இரண்டு முறை கனவில் கண்டேன். (முதல் முறை) வானவர் பட்டுத் துணி ஒன்றில் உன்னைச் சுமந்து கொண்டிருப்பதைக் கண்டேன். அப்போது நான்அவரிடம்,'(அந்தத் துணியை) விலக்குங்கள்'' என்று சொன்னேன். அவர் விலக்கினார். அது நீதான். அப்போது நான் (மனத்திற்குள்)'இக்கனவு அல்லாஹ்விடமிருந்து வந்ததாயின் இதை அவன் நனவாக்குவான்'' என்று சொல்லிக்கொண்டேன். பிறகு (இரண்டாம் முறையாக) உன்னை வானவர் பட்டுத் துணி ஒன்றில் சுமந்து கொண்டிருப்பதைக் (கனவில்) கண்டேன். அப்போது நான்'(இத்துணியை) நீக்குங்கள்'' என்றேன். அவர் நீக்கினார். அது நீதான். அப்போதும் நான் (மனத்திற்குள்)'இக்கனவு அல்லாஹ்விடமிருந்து வந்ததாயின், இதை அவன் நனவாக்குவான்'' என்று சொல்லிக் கொண்டேன்.

## கனவில் சாவிகள் கையில் இருப்பதாகக் காண்பது

ஹதீஸ் 7013 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ஒருங்கிணைந்த பொருள்கள் கொண்ட வார்த்தைகள் வழங்கப்பட்டு அனுப்பப்பட்டுள்ளேன். (எதிரிகளுக்கு என்னைப் பற்றிய மதிப்பும்) அச்ச(மு)ம் ஏற்படுத்தப்பட்டு எனக்கு வெற்றி அளிக்கப்பட்டுள்ளது. நான் (நேற்றிரவு) உறங்கிக் கொண்டிருக்கையில் பூமியின் கருவூலங்களுடைய திறவுகோல்கள் என்னிடம் கொண்டு வரப்பட்டு என் கையில் வைக்கப்பட்டன.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:'ஒருங்கிணைந்த பொருள்கள் கொண்ட வார்த்தைகள்' (ஜவாமிஉல் கலிம்) என்பதற்கு விளக்கமாவது: நபி(ஸல்) அவர்களின் காலத்திற்கு முன்னால் ஏடுகளில் (நீளமான வார்த்தைகளால்) எழுதப்பட்டு வந்த பெரும் பெரும் கருத்துக்களை(யும் தத்துவங்களையும்) ஓரிரு வார்த்தைகளில் ஒருங்கிணைத்து (இரத்தினச் சுருக்கமாக)ப் பேசுகிற ஆற்றலை நபியவர்களுக்கு அல்லாஹ் வழங்கியிருந்தான் - என எனக்குச் செய்தி எட்டியது.

## கனவில் பிடி, வளையம் ஆகியவற்றைப் பற்றுவதாகக் காண்பது

ஹதீஸ் 7014 அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அறிவித்தார்.

நான் பூங்காவொன்றில் இருப்பதைப் போன்று (கனவு) கண்டேன். அந்தப் பூங்காவின் நடுவே (இரும்புத்) தூண் இருந்தது. அந்தத் தூணின் மேற்பகுதியில் பிடி ஒன்றும் இருந்தது. அப்போது என்னிடம்'இதில் ஏறுங்கள்'' என்று சொல்லப்பட்டது. நான்'என்னால் இயலாதே'' என்று சொன்னேன். அப்போது என்னிடம் பணியாள். ஒருவர் வந்து என் ஆடையை (பின்னாலிருந்து) உயர்த்திவிட்டார். உடனே நான் (அதில்) ஏறி (அதன் மேற்பகுதியிலிருந்த) பிடியைப் பலமாகப் பற்றிக் கொண்டேன். நான் அதைப் பற்றிய நிலையில் இருக்கும்போதே (உறக்கத்திலிருந்து) விழித்துவிட்டேன். நபி(ஸல்) அவர்களிடம் இது குறித்து நான் விவரித்தபோது,'அந்தப் பூங்கா

இஸ்லாம் எனும் பூங்காவாகும். அந்த தூண் இஸ்லாம் என்னும் (பலமான) தூணாகும். அந்தப் பிடி (இறை நம்பிக்கையெனும்) பலமான பிடியாகும். (ஆக,) நீங்கள் இறக்கும் வரை இஸ்லாத்தைப் பலமாகப் பற்றியவராகவே இருப்பீர்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் (அந்தக் கனவிற்கான விளக்கத்தைக்) கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் வந்துள்ளது.

## கனவில் தலையணைக்குக் கீழே பெரிய கூடாரத்தின் தூண் இருப்பதைப் போன்று காண்பது.

கனவில் கெட்டியான பட்டைக் காண்பதும், சொர்க்கத்தில் நுழைவதைப் போன்று காண்பதும்.

ஹதீஸ் 7015 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

(நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) நான் கண்ட கனவில், என்னுடைய கையில் ஒரு பட்டுத் துணி இருப்பதைப் போன்றும், அதை நான் சொர்க்கத்தில் ஓரிடத்தில் எறியும்போதெல்லாம் அது என்னை அந்த இடத்திற்குத் தூக்கிக் கொண்டு பறந்ததைப் போன்றும் பார்த்தேன். இது குறித்து நான் (என் சகோதரி) ஹஃப்ஸாவிடம் எடுத்துரைத்தேன்.

ஹதீஸ் 7016 அது குறித்து ஹஃப்ஸா, நபி(ஸல்) அவர்களிடம் விவரித்தபோது நபி(ஸல்) அவர்கள்,'உன் சகோதரர் நல்ல மனிதர்' அல்லது'அப்துல்லாஹ் நல்ல மனிதர்' என்று கூறினார்கள்.

## கனவில் விலங்கிடப்படுவதைப் போன்று காண்பது.

ஹதீஸ் 7017 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமையின் அடையாளங்களில் ஒன்றாகக்) காலம் சுருங்கும்போது இறை நம்பிக்கையாளர் காணும் கனவு பொய்யாகப் போவதில்லை. இறைநம்பிக்கையாளர் காணும் கனவு நபித்துவத்தின் நாற்பத்தாறு பாகங்களில் ஒன்றாகும். நபித்துவத்தில் அடங்கிய எந்த அம்சமும் பொய்யாகாது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இந்தச் சமுதாயத்தார் காணும் கனவுகள் (எல்லாம்) உண்மை என்றே கூறுகிறேன். கனவுகள் மூன்று வகைப்படும் என்று கூறப்படுவதுண்டு. 1. மன பிரமை (விழிப்பு நிலைக் கனவுகள்) 2. ஷைத்தானின் அச்சுறுத்தல். 3. அல்லாஹ்விடமிருந்து வரும் நற்செய்தி. எனவே, தாம் விரும்பாத கனவொன்றை எவரேனும் கண்டால் அதைப் பற்றி எவரிடமும் விவரிக்கவேண்டாம். மாறாக, எழுந்து அவர் (இறைவனைத்) தொழட்டும்.

தொடர்ந்து முஹம்மத் இப்னு சீரின்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

கழுத்தில் மாட்டப்படும் விலங்கைக் கனவில் காண்பது வெறுக்கப்பட்டுவந்தது. (ஏனெனில், அது நரகவாசிகளின் அடையாளமாகும்.) ஆனால், (கால்) விலங்கைக் காண்பது அவர்களுக்கு விருப்பமானதாக இருந்தது. அது மார்க்கத்தில் நிலைத்திருப்பதைக் குறிக்கும் என்று (விளக்கம்) கூறப்பட்டது.

மேற்கண்ட ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது. அதன் அறிவிப்பாளர்களில் சிலர் (இப்னு சீரீன் அறிவித்த) மேற்கண்ட தகவல்கள் அனைத்தையும்

ஹதீஸுடன் சேர்த்துவிட்டுள்ளனர். ஆனாலும், அவ்ஃப்(ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள (இங்கு ஆரம்பத்தில் இடம் பெற்றுள்ள) அறிவிப்பே தெளிவானதாகும்.

யூனுஸ் இப்னு உபைத்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (கால்) விலங்கு குறித்த ஹதீஸ் நபி(ஸல்) அவர்கள் கூறியது என்றே கருதுகிறேன்.

அபூ அப்தில்லாஹ் புகாரியாகிய நான் கூறுகிறேன்:

கழுத்தில் பூட்டப்படும் விலங்குகளுக்கே'அஃக்லால்' எனப்படும்.

## கனவில் நீரோட்டத்தைக் காண்பது

ஹதீஸ் 7018 இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழிப் பிரமாணம் அளித்திருந்த அன்சாரிப் பெண்களில் ஒருவரான உம்முல் அலா(ரலி) அறிவித்தார்.

(நாடு துறந்து மதீனா வந்தடைந்த) முஹாஜிர்கள் (யார் எவருடைய வீட்டில் தங்குவ(என்பதை முடிவு செய்வ)தற்காக அன்சாரிகள் சீட்டுக்குலுக்கிப் போட்டபோது உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) அவர்கள் எங்கள் பொறுப்பில் வந்தார்கள். அப்பால் அவர் நோய்வாய்ப்பட்டார். அவருக்குச் சிகிச்சை அளித்தோம். இறுதியில் அவர் இறந்தார். பிறகு நாங்கள் அவரை (நீராட்டி) அவரின் ஆடையிலேயே கஃபனிட்டோம். இந்த நேரத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அப்போது நான், (உஸ்மானை நோக்கி)'சாயிபின் தந்தையே! உம்மீது இறையருள் பொழியட்டும் அல்லாஹ் உம்மைக் கண்ணியப்படுத்திவிட்டான் என்பதற்கு நான் சாட்சியம் அளிக்கிறேன்'' என்று சொன்னேன். (இதைக் கேட்ட) நபி(ஸல்) அவர்கள்,'(அவரை அல்லாஹ் கண்ணியப்படுத்தியுள்ளான் என்பது) உனக்கெப்படித் தெரியும்?' என்று கேட்டார்கள். நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! (இது பற்றி) எனக்குத் தெரியாது'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'(உஸ்மான் இப்னு மழ்வூன்) இறந்துவிட்டார். அல்லாஹ்விடமிருந்து அவருக்கு நான் நன்மையையே எதிர்பார்க்கிறேன். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அல்லாஹ்வின் தூதராயிருந்தும் என்னிடம் (மறுமையில்) எவ்வாறு நடந்து கொள்ளப்படும் என்பதோ, உங்களிடம் எவ்வாறு நடந்துகொள்ளப்படும் என்பதோ எனக்கே தெரியாது'' என்றார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அதற்குப் பிறகு நான் யாரையும் தூய்மையானவர் என்று கூறுவதேயில்லை.

பிறகு உஸ்மான் இப்னு மழ்வூன்(ரலி) அவர்களுக்குரிய நீருற்று ஒன்று ஓடுவதை நான் (கனவில்) கண்டேன். எனவே, நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து அதைப் பற்றிச் சொன்னபோது நபி(ஸல்) அவர்கள்'அது (வாழ்நாளில் அவர் புரிந்த) நற்செயல். அது (இன்று) அவருக்காக(ப் பெருக்கெடுத்து) ஓடுகிறது'' என்றார்கள்.

## கனவில் கிணற்றிலிருந்து நீர் இறைப்பதைப் போன்றும் தாகம் தீர மக்கள் அதை அருந்துவதைப் போன்றும் காண்பது.

இது தொடர்பாக நபி(ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7019 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (கனவில்) ஒரு கிணற்றிலிருந்து நீர் இறைத்துக் கொண்டிருந்தேன். அப்போது அபூ பக்ரும் உமரும் வந்தார்கள். (நான் நீர் இறைத்து முடித்த பின்) அபூ பக்ர் அவர்கள் வாளியை எடுத்து'ஒரு வாளி நீரை' அல்லது'இரண்டு வாளிகள் நீரை' இறைத்தார்கள். அவர் இறைத்தபோது (சற்று) சோர்வு தென்பட்டது. அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளிப்பானாக! பிறகு அபூ பக்ர் கரத்திலிருந்து உமர் அவர்கள் அதை எடுத்துக்கொள்ள, அது அவரின் கையில்

பெரியதொரு வாளியாக மாறியது. (அவர் வலுவுடன் பல வாளிகள் தண்ணீர் இறைத்தார்.) மக்களில் அவரைப் போன்று சீராகவும் உறுதியாகவும் செயல்படக் கூடிய புத்திசாலியான (அபூ ர்வத்) தலைவர் ஒருவரை நான் கண்டதில்லை. மக்கள் (தாகம் தீரத் தாங்களும் அருந்தி தங்கள் ஒட்டகங்களுக்கும் நீர் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கும் அளவுக்கு அவர் நீர் இறைத்தார்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## கனவில் கிணற்றிலிருந்து சோர்வுடன் ஓரிரு வாளிகள் நீர் இறைப்பதைப் போன்று காண்பது.

ஹதீஸ் 7020 அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோர் (ஆட்சிக் காலம்) தொடர்பாக நபி(ஸல்) அவர்கள் கண்ட கனவு குறித்து அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(ஒரு கிணற்றைச் சுற்றி) மக்கள் திரள்வதை நான் (கனவில்) கண்டேன். அப்போது அபூ பக்ர் அவர்கள் எழுந்து'ஒரு வாளி நீரை' அல்லது'இரண்டு வாளிகள் நீரை' இறைத்தார்கள். அவர் இறைத்தபோது சற்று சோர்வு தென்பட்டது. அல்லாஹ் அவருக்கு மன்னிப்பு அளிப்பானாக! பிறகு உமர் இப்னு அல்கத்தாப் எழுந்தார். (அந்த வாளியை அபூ பக்ர் அவர்களின் கையிலிருந்து எடுத்துக்கொண்டார். அவரின் கையில்) அது பெரியதொரு வாளியாக மாறியது. மனிதர்களில் அவரைப் போன்று சீராகவும் உறுதியாகவும் செயல்படக் கூடிய (அபூ ர்வத் தலைவர்) ஒருவரை நான் கண்டதில்லை. மக்கள் (தாகம் தீரத் தாங்களும் நீரருந்தி தங்கள் ஒட்டகங்களுக்கும் புகட்டி, நீர் நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கும் அளவிற்கு அவர் நீர் இறைத்தார்.

ஹதீஸ் 7021 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என்னை, வாளி தொங்கிக் கொண்டிருந்த ஒரு கிணற்றின் அருகே கண்டேன். அதிலிருந்து அல்லாஹ் நாடிய அளவிற்கு(த் தண்ணீர்) இறைத்தேன். பிறகு அபூ குஹாஃபா அவர்களின் புதல்வர் (அபூ பக்ர் அவர்கள்) அதை எடுத்துக்கொண்டு அந்தக் கிணற்றிலிருந்து'ஒரு வாளி நீரை' அல்லது'இரண்டு வாளிகள் நீரை' இறைத்தார். அவர் (சிறிது நேரம்) இறைத்தபோது சோர்வு தென்பட்டது. அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளிப்பானாக! பிறகு அது மிகப்பெரிய வாளியாக மாறிவிட்டது. அப்போது அதை கத்தாபின் புதல்வர் உமர் எடுத்துக்கொண்டார் உமர் இறைத்ததைப் போன்று இறைக்கிற (வலிமை மிக்க) ஒரு புத்திசாலியான (அபூ ர்வத்) தலைவர் ஒருவரை மக்களில் நான் பார்த்ததில்லை. மக்கள் (தாகம் தீரத் தாங்களும் நீரருந்தி, தம் ஒட்டகங்களுக்கும் புகட்டி, நீர்நிலையருகே அவற்றின்) ஓய்விடத்தில் கட்டிவைக்கும் அளவிற்கு அவர் நீர் இறைத்தார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## கனவில் ஓய்வெடுப்பதை போன்று காண்பது

ஹதீஸ் 7022 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உறங்கிக் கொண்டிருக்கையில் (கனவில்) ஒரு நீர்த் தடாகத்தின் அருகில் இருந்து கொண்டு மக்களுக்கு நான் நீர் புகட்டிக் கொண்டிருக்கக் கண்டேன். அப்போது அபூ பக்ர் அவர்கள் என்னிடம் வந்து எனக்கு ஓய்வளிப்பதற்காக என் கரத்திலிருந்த அந்த வாளியை வாங்கி இரண்டு வாளிகள் தண்ணீர் இறைத்தார். அவர் இறைத்தபோது (சற்று) சோர்வு

தென்பட்டது. அல்லாஹ் அவருக்கு மன்னிப்பளிப்பானாக! பிறகு கத்தாபின் புதல்வர் (உமர்) வந்தார். அவர் அபூ பக்ர் அவர்களிடமிருந்து (அந்த வாளியை) எடுத்துக்கொண்டு மக்கள் (தாகம் தீரத் தாங்களும் அருந்தி தங்கள் ஒட்டகங்களுக்கும் புகட்டிவிட்டுத்) திரும்பிச் செல்லும் வரை இறைத்துக்கொண்டேயிருந்தார். அப்போதும் தடாகத்தில் நீர் பொங்கிக் கொண்டிருந்தது.

என அபூ ஹுரைர(ரலி) அறிவித்தார்.

## கனவில் அரண்மனையைக் காண்பது

ஹதீஸ் 7023 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்திருந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என்னைச் சொர்க்கத்தில் கண்டேன். அங்கு ஓர் அரண்மனைக்கு அருகில் ஒரு பெண் அங்கசுத்தி (உளூ) செய்துகொண்டிருந்தாள். நான், (வானவர்களிடம்)'இந்த அரண்மனை யாருக்குரியது?' என்றேன். அதற்கவர்கள், 'உமருக்குரியது'' என்றார்கள். அப்போது (அதனுள் நுழைந்து பார்க்க எண்ணினேன். ஆனால்,) எனக்கு உமரின் ரோஷம் நினைவுக்கு வரவே (அதனுள் நுழையாமல்) திரும்பி வந்து விட்டேன்'' என்றார்கள்.

இதைக் கேட்ட உமர்(ரலி) அவர்கள் (ஆனந்தத்தால்) அழுதுவிட்டு'இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும். தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன்!"என்றார்கள்.

ஹதீஸ் 7024 அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'நான் (கனவில்) சொர்க்கத்திற்குள் நுழைந்து தங்கத்தாலான ஓர் அரண்மனையைக் கண்டேன். அப்போது நான் இந்த அரண்மனை யாருக்குரியது, என்று (வானவர்களிடம்) கேட்டேன். அதற்கு அவர்கள் குறைஷியரிலுள்ள (உமர் பின் அல்கத்தாப் எனும்) ஒரு மனிதருக்குரியது என்று பதிலளித்தார்கள். கத்தாபின் புதல்வரே உமது ரோஷத்தைக் குறித்து நான் அறிந்து வைத்திருந்ததே அதற்குள் நுழையவிடாமல் என்னைத் தடுத்துவிட்டது என்றார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள் தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன் அல்லாஹ்வின் தூதரே என்று சோன்னார்கள்.

## கனவில் அங்கசுத்தி (உழூ) செய்வதைப் போன்று காண்பது

ஹதீஸ் 7025 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஒருநாள்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருகில் அமர்ந்திருந்தோம். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என்னைச் சொர்க்கத்தில் கண்டேன். அங்கு ஓர் அரண்மனைக்கு அருகில் ஒரு பெண் அங்கசுத்தி (உளூ) செய்துகொண்டிருந்தாள். நான், (வானவர்களிடம்)'இந்த அரண்மனை யாருக்குரியது?' என்றேன். அதற்கவர்கள், 'உமருக்குரியது'' என்றார்கள். அப்போது (அதனுள் நுழைந்து பார்க்க எண்ணினேன். ஆனால்,) எனக்கு உமரின் ரோஷம் நினைவுக்கு வரவே (அதனுள் நுழையாமல்) திரும்பி வந்து விட்டேன்'' என்றார்கள்.

இதைக் கேட்ட உமர்(ரலி) அவர்கள் (ஆனந்தத்தால்) அழுதுவிட்டு'இறைத்தூதர் அவர்களே! தங்களுக்கு என் தந்தையும் என் தாயும் அர்ப்பணமாகட்டும். தங்களிடமா நான் ரோஷம் காட்டுவேன்!"என்றார்கள்.

## கனவில் (புனித) கஅபாவைச் சுற்றுவதைப் போன்று காண்பது.

ஹதீஸ் 7026 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஒருநாள்) நான் தூங்கிக் கொண்டிருக்கையில் (கனவில்) நான் கஅபாவைச் சுற்றிவந்து கொண்டிருக்கக் கண்டேன். அப்போது மாநிறமான தலைமுடி படிந்து தொங்கிக் கொண்டிருந்த ஒருவர் தம் தலையிலிருந்து நீர் சொட்டிக் கொண்டிருக்க இரண்டு மனிதர்களுக்கிடையே (சாய்ந்தவராக கஅபாவைச் சுற்றிக்கொண்டு) இருந்தார். அப்போது நான்,'இவர் யார்?' என்று கேட்டேன்.'மர்யமின் மகன் (ஈசா)'' என பதிலளித்தனர். பிறகு நான் திரும்பிப் பார்த்த படியே சென்றபோது, அங்கு சிவப்பான, உடல் பருமனான, சுருட்டைத் தலை முடியுள்ள வலக் கண் குருடான மனிதன் ஒருவன் இருந்தான். அவனுடைய கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருந்தது. நான்,'இவன் யார்?' என்று கேட்டேன்.'இவன்தான் தஜ்ஜால்'' என்று பதிலளித்தனர். (தோற்றத்தில்) மக்களிலேயே அவனுக்கு மிகவும் ஒப்பானவன் இப்னு கத்தன்தான். இப்னு கத்தன் குஸாஆ குலத்தின் பனுல் முஸ்தலிக் குடும்பத்திலுள்ள ஒரு மனிதன் ஆவான்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## (ஒருவர் தாம் அருந்திய பாலின்) மீதியைப் பிறருக்கு வழங்குவதைப் போன்று கனவு கண்டால்...?

ஹதீஸ் 7027 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் தூங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) பால்கோப்பை ஒன்று என்னிடம் கொண்டுவரப்பட்டது. நான் அதிலிருந்த பாலை அருந்த அது (என் நகத்தின் ஊடே வெளியேறி) ஓடக் கண்டேன். பிறகு மீதியை உமருக்குக் கொடுத்தேன்.

(அப்போது) மக்கள்,'இறைத்தூதர் அவர்களே! அந்தப் பாலுக்கு என்ன விளக்கம் கண்டீர்கள்?' என்று வினவினர். நபி(ஸல்) அவர்கள்,'அறிவு' என்று பதிலளித்தார்கள்.

## கனவில் அச்சம் அகன்று பாதுகாப்பு உணர்வு ஏற்படுதல்

ஹதீஸ் 7028 இப்னு உமர்(ரலி) அவர்களின் தோழர்களில் சிலர் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் கனவு கண்டால் அதை நபி(ஸல்) அவர்களிடம் எடுத்துரைப்பது வழக்கம். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அல்லாஹ் நாடிய (விளக்கத்)தைக் (கனவுக்குக்) கூறுவார்கள். நான் திருமணம் செய்து கொள்வதற்கு முன்னல் இளம் வயது வாலிபனாய் இருந்த சமயம் பள்ளிவாசலே என் வீடாய் இருந்தது. (அங்கு தான் உறங்குவேன்.) அப்போது நான் மனத்துக்குள்ளே'உனக்கு ஏதேனும் நன்மை நடப்பதாயிருந்தால் இவர்களைப் போன்று நீயும் (கனவு) கண்டிருப்பாய்'' என்று சொல்லிக் கொள்வதுண்டு. ஒரு (நாள்) இரவு நான் உறங்கப்போனபோது,'அல்லாஹ்வே! என் விஷயத்தில் நீ ஏதேனும் நன்மையை அறிந்திருந்தால் எனக்கும் கனவைக் காட்டு'' என்று பிரார்த்தித்தேன். நான் அவ்வாறே (உறக்கத்தில்) இருந்தபோது (கனவில்) இரண்டு வானவர்கள் என்னிடம் வந்தனர். அவர்கள் ஒவ்வொருவருடைய கையிலும் முனை வளைந்த இரும்புத் தடி ஒன்று இருந்தது. அவர்கள் இருவரும் என்னை நரகத்திற்கு அழைத்துச் சென்றனர். நான் அவர்கள் இருவரிடையே இருந்து

கொண்டு அல்லாஹ்விடம், 'அல்லாஹ்வே! நரகத்தைவிட்டு உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்'' என்று இறைஞ்சிக் கொண்டிருந்தேன்.

பிறகு தம் கையில் இரும்புத் தடி இருக்க இன்னொரு வானவர் என்னைச் சந்திக்கக் கண்டேன். அவர் (என்னிடம்) 'இனி ஒருபோதும் நீங்கள் பீதியடையமாட்டீர்கள் நீங்கள் அதிகமாகத் தொழுதால் நீங்கள் நல்ல மனிதர் தாம்'' என்றார். அப்போது அந்த வானவர்கள் (இருவரும்) என்னை நரகத்தின் விளிம்பில் கொண்டுபோய் நிறுத்தினர். கிணற்றின் சுற்றுச் சுவரைப் போன்று அதற்கு சுற்றுச் சுவர் எழுப்பப்பட்டிருந்தது. கிணற்றின் இரண்டு பக்கவாட்டிலுமுள்ள கல் தூண்களைப் போன்று தூண்கள் அதற்கும் இருந்தன. ஒவ்வோர் இரண்டு தூண்களுக்கும் இடையே ஒரு வானவர் இருந்தார். அவரின் கையில் முனை வளைந்த ஓர் இரும்புத் தடி இருந்தது. அந்த நரகத்தில் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு தலைகீழாகத் தொங்கவிடப்பட்டிருந்த பல மனிதர்களை கண்டேன். அதில் (எனக்கு அறிமுகமான) குறைஷியர் சிலரை நான் கண்டுகொண்டேன். பிறகு அவ்வானவர்கள் (சொர்க்கவாசிகளின் வழித்தடமான) வலப்பக்கத்தில் என்னைக் கொண்டுசென்றார்கள்.

ஹதீஸ் 7029 (தொடர்ந்து) இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: (நான் உறங்கி எழுந்ததும்) இதை (என் சகோதரியும் நபி (ஸல்) அவர்களின் துணைவியாருமான) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் விவரித்துச் சொன்னேன். ஹஃப்ஸா (ரலி) அவர்கள் அதை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் விவரித்தார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'அப்துல்லாஹ் நல்ல மனிதர்தாம் (இரவின் ஒரு பகுதியில் தொழுபவராயிருந்தால்)'' என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

இதைக்கேட்ட பின் இப்னு உமர் (ரலி) அவர்கள் (இரவில்) அதிகமாகத் தொழுது கொண்டேயிருந்தார்கள்.

## கனவில் வலப் பக்கமாகக்கொண்டு செல்லப்படுவதைப் போன்று காண்பது.

ஹதீஸ் 7030 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களின் காலத்தில் நான் மணமாகாத இளைஞனாக இருந்தேன். அப்போது நான் பள்ளிவாசலில் தான் இரவில் தங்குவேன். (நபித்தோழர்களில்) யாரேனும் கனவு கண்டால் (காலையில்) அதை நபி (ஸல்) அவர்களிடம் எடுத்துரைப்பது வழக்கம். (ஒரு நாள்) நான், 'அல்லாஹ்வே! உன்னிடம் எனக்கு நன்மை ஏதேனும் இருக்குமானால் எனக்கு ஒரு கனவைக் காட்டுவாயாக! அதற்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு விளக்கம் கூறவேண்டும்'' என்று பிரார்த்தித்துவிட்டு உறங்கினேன். அப்போது (கனவில்) என்னிடம் இருவானவர்கள் வந்து அவர்களிருவரும் என்னை அழைத்துக்கொண்டு போவதைக் கண்டேன். அப்போது அவர்கள் இருவரையும் மற்றொரு வானவர் சந்தித்தார். அப்போது அவர் என்னிடம், 'இனி எப்போதும் நீங்கள் பீதியடையமாட்டீர்கள். நீங்கள் நல்ல மனிதர்'' என்றார். பிறகு அவர்கள் இருவரும் என்னை நரகத்தை நோக்கி அழைத்துச் சென்றனர். கிணற்றின் சுற்றுச்சுவர் போன்று அதற்கு சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டடிருந்தது. அப்போது அதில் மனிதர்கள் பலர் இருந்தனர். அவர்களில் எனக்குத் தெரிந்த சிலரும் இருந்தார்கள். பிறகு அவர்கள் இருவரும் (சொர்க்கவாசிகளின் வழித்தடமான) வலப் பக்கத்திற்கு என்னைக் கொண்டு போனார்கள். விடிந்ததும் அதை நான் (என் சகோதரியும் நபி (ஸல்) அவர்களின் துணைவியருமான) ஹஃப்ஸா (ரலி) அவர்களிடம் சொன்னேன்.

ஹதீஸ் 7031 ஹஃப்ஸா (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களிடம் அதை விவரித்தபோது அவர்கள், 'அப்துல்லாஹ் (இப்னு உமர்) நல்ல மனிதர் தாம் இரவின் ஒரு பகுதியில் தொழுதால் (நன்றாயிருக்கும்)'' என்றார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இதைக் கேட்ட பின் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் இரவில் அதிகமாகத் தொழக்கூடியவராயிருந்தார்கள்.

## உறக்கத்தில் கோப்பையைக் காண்பது

ஹதீஸ் 7032 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

“நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) ஒரு பால்கோப்பை என்னிடம் கொண்டுவரப்பட்டது. நான் அதிலிருந்த பாலை அருந்தினேன். பின்னர் அதன் மீதியை கத்தாபின் புதல்வர் உமருக்குக் கொடுத்தேன்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! பாலுக்கு என்ன விளக்கம் கண்டீர்கள்?' என்று வினவினர். நபி (ஸல்) அவர்கள் 'அறிவு' என்று பதிலளித்தார்கள்.

## (பறக்காத) ஒன்று பறப்பதைப் போன்று கனவு கண்டால்...?

ஹதீஸ் 7033 உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எடுத்துரைத்த அவர்களின் கனவைப் பற்றி நான் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டேன்.

ஹதீஸ் 7034 அப்போது அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள் என என்னிடம் கூறப்பட்டது: நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என் கைகளில் தங்கத்தலான இரண்டு காப்புகள் வைக்கப்பட்டன. நான் அவ்விரண்டையும் கண்டு அதிர்ச்சிக்குள்ளாக்கப்பட்டதுடன் அவற்றை வெறுக்கவும் செய்தேன். உடனே (அவற்றை ஊதிவிட) எனக்கு அனுமதியளிக்கப்பட்டது. நான் அவ்விரண்டையும் ஊத, அவை பறந்து போய்விட்டன. அவ்விரண்டும் (இனி வரவிருக்கும்) இரண்டு பெரும் பொய்யர்களைக் குறிப்பதாக அதற்கு விளக்கமும் கண்டேன்.

அறிவிப்பாளர் உபைத்துல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

அவ்விருவரில் ஒருவன் யமன் நாட்டில் ஃபைரோஸ் என்பவரால் கொல்லப்பட்ட '(அஸ்வத்) அல்அன்ஸீ' ஆவான் மற்றொருவன் முசைலிமா ஆவான்.

## (கனவில்) காளைமாடு அறுக்கப்படுவதாகக் கண்டால்...?

ஹதீஸ் 7035 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் மக்கா நகரைத் துறந்து அங்கிருந்து பேரீச்சந் தோட்டங்கள் நிறைந்த ஒரு பூமிக்குச் செல்வதாகக் கனவு கண்டேன். அந்த பூமியமாமாகவோ அல்லது ஹஜராகவோ இருக்கும் என்றே நான் எண்ணினேன். ஆனால், (நான் கண்ட) அந்த நகரம் யஸ்ரிப் -மதீனா ஆகிவிட்டது. மேலும், அந்தக் கனவில் சில காளை மாடுகளைப் பார்த்தேன். (அவை அறுக்கப்பட்டன.) உஹுதுப் போர் நாளில் (கொல்லப்பட்டவர்களுக்கு) அல்லாஹ் அளித்த அந்தஸ்து (அவர்கள் இந்த உலகில் இருந்த நிலையைவிட அவர்களுக்குச்) சிறந்ததாகும்.

எனவே, (அந்த மாடுகள்) உஹுதுப் போரின்போது கொல்லப்பட்ட இறைநம்பிக்கையாளர்களைக் குறிப்பவையாகும். நன்மை என்பது அல்லாஹ் நமக்குக் கொணர்ந்த நன்மையும் (இரண்டாம்) பத்ருப்போருக்குப் பிறகு அல்லாஹ் நமக்களித்த நம்முடைய வாய்மைக்கான பரிசும் (கைபர், மக்கா வெற்றிகளும்) ஆகும்.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

## கனவில் (வாயால்) ஊதுவதைப் போன்று காண்பது

ஹதீஸ் 7036 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாமே (காலத்தால்) பிந்தியவர்களும் மறுமை அந்தஸ்தால்) முந்தியவர்களும் ஆவோம்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7037 மேலும் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) பூமியின் கருவூலங்கள் என்னிடம் கொண்டு வரப்பட்டன. அப்போது என் கைகளில் தங்கத்தாலான இரண்டு காப்புகள் வைக்கப்பட்டன. அவ்விரண்டும் எனக்கு சுமையாக அமைந்ததுடன் மனவேதனையும் அளித்தன. அப்போது அவற்றை ஊதிவிடுமாறு (இறைவனின் தரப்பிலிருந்து) எனக்கு அறிவிக்கப்பட்டது. அவ்வாறே நான் ஊத, அவையிரண்டும் பறந்து போய்விட்டன. அவ்விரண்டு (காப்புகளு)ம் நான் இருக்கும் போதே தோன்றியுள்ள ஸன்ஆவாசியும் யமாமாவாசியுமான இரண்டு பெரும் பொய்யர்களைக் குறிப்பதாக விளக்கம் கண்டேன்.

## கனவில் ஒரு பொருளை ஒரு மூலையிலிருந்து மாற்றி மற்றவர்களிடம் வைப்பதைப் போன்று கண்டால்...?

ஹதீஸ் 7038 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தலைவிரி கோலத்துடன் கறுப்பு நிறப்பெண்ணொருத்தி மதீனாவிலிருந்து வெளியேறி அங்கிருந்து'மஹ்யஆ' சென்று தங்குவதைப் போன்று நான் (கனவு) கண்டேன். மதீனாவின் பெருநோய்கள் மஹ்யஆவுக்கு இடம் பெயரச் செய்யப்பட்டுவிட்டது என்று நான் (அதற்கு) விளக்கம் கண்டேன். 'மஹ்யஆ' என்பது'அல்ஜுஹ்ஃபா' எனும் இடமாகும்.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## (கனவில்) கறுப்பு நிறப் பெண்ணைக் காண்பது

ஹதீஸ் 7039 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தலைவிரி கோலத்துடன் கறுப்பு நிறப் பெண்ணோருத்தி மதீனாவிலிருந்து வெளியேறி அங்கிருந்து மஹ்யஆ சென்று தங்குவதைப் போன்று நான் (கனவு) கண்டேன். மதீனாவின் பெரு நோய்கள் மஹ்யஆவுக்கு இடம் பெயரச் செய்யப்பட்டு விட்டது என்று அதற்கு நான் விளக்கம் கண்டேன். மஹ்யஆவே அல் ஜுஹ்பா எனுமிடமாகும். இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் 7040 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தலைவிரி கோலத்துடன் கறுப்பு நிறப் பெண்ணோருத்தி மதீனாவிலிருந்து வெளியேறி அங்கிருந்து மஹ்யஆ சென்று தங்குவதைப் போன்று நான் (கனவு) கண்டேன். மதீனாவின் பெரு நோய்கள் மஹ்யஆவுக்கு இடம் பெயரச் செய்யப்பட்டு விட்டது என்று அதற்கு நான் விளக்கம் கண்டேன்.

மஹ்யஆவே அல் ஜுஹ்பா எனுமிடமாகும். இதை அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## கனவில் வாளை அசைப்பதைப் போன்று கண்டால்...?

ஹதீஸ் 7041 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் கனவில் (என்) வாள் ஒன்றை அசைக்க அதன் முனை முறிந்துவிட்டதாகக் கண்டேன். அது உஹுதுப் போரின்போது இறைநம்பிக்கையாளர்களுக்கு ஏற்பட்ட இழப்பைக் குறித்தது. பிறகு (அதே கனவில்) மற்றொரு முறை அந்த வாளை நான் அசைக்க, அது முன்பிருந்ததை விட மிக அழகாக மாறிவிட்டது. அது அல்லாஹ் (அதே உஹுதுப் போரில்) கொணர்ந்த உறுதிப்பாட்டையும் (சிதறி ஓடிய) முஸ்லிம்கள் மீண்டும் ஒன்று திரண்டதையும் குறித்தது.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## கனவு குறித்து பொய்யுரைப்பது

ஹதீஸ் 7042. 'ஒருவர் தாம் காணாத கனவைக் கண்டதாக திட்டமிட்டு சொன்னால், அவர் (மறுமையில்) இரண்டு வாற்கோதுமைகளை (ஒன்றுடன் ஒன்றைச் சேர்த்து) முடிச்சுப் பேகுதிபடி நிர்ப்பந்திக்கப்படுவார். ஆனால், அவரால் ஒருபோதும் (அப்படிச்) செய்ய முடியாது. (அவருக்கு அளிக்கப்படும் வேதனையும் நிற்காது.)'தாம் கேட்பதை மக்கள் விரும்பாத நிலையில்' அல்லது'தம்மைக் கண்டு மக்கள் வெருண்டோடும் நிலையில்'அவர்களின் உரையாடலைக் காது தாழ்த்தி (ஒட்டு)க் கேட்கிறவரின் காதில் மறுமை நாளில் ஈயம் உருக்கி ஊற்றப்படும். (உயிரினத்தின்) உருவப் படத்தை வரைகிறவர் அதற்கு உயிர் கொடுக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டு வேதனை செய்யப்படுவார். ஆனால், அவரால் உயிர் கொடுக்க முடியாது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ள மற்றோர் அறிவிப்பில்'தம் கனவு குறித்து பொய் சொல்கிறவர்..!"என்று வந்துள்ளது.

அபூ ஹுரைரா(ரலி) அவர்களின் மற்றோர் அறிவிப்பில்'உருவப்படம் வரைகிறவர்... கனவு கண்டதாக(ப் பொய்) சொல்கிறவர்... (மக்களின் பேச்சுகளை) செவிதாழ்த்திக் கேட்பவர்..!"என்று இடம் பெற்றுள்ளது.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் வாயிலாக அறிவிக்கப்பட்டுள்ள அறிவிப்பில்,'செவிதாழ்த்திக் கேட்கிறவர்... கனவு கண்டதாக(ப் பொய்) சொல்கிறவர்... (உயிரினத்தின்) உருவப்படம் வரைகிறவர்..!"என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 7043. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தம் கண் காணாத ஒன்றை அது கண்டதாகக் கூறுவது மாபெரும் பொய்களில் ஒன்றாகும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## தாம் விரும்பாத ஒன்றை (கனவில்) ஒருவர் கண்டால் (யாரிடமும்) அதை அவர் தெரிவிக்க வேண்டாம். அதைக் குறித்து (எவரிடமும்) பேசவும் வேண்டாம்.

ஹதீஸ் 7044 அபூ ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் பல கனவுகளைக் கண்டு அதனால் உடல்நலம் பாதிக்கப்பட்டு வந்தேன். இறுதியில் அபூ கத்தாதா(ரலி) அவர்கள் (இவ்வாறு) கூற கேட்டேன்: நானும் பல கனவுகளைக் கண்டு உடல் நலம் பாதிக்கப்பட்டுவந்தேன். இறுதியில் நபி(ஸல்) அவர்கள்,'நல்ல கனவு அல்லாஹ்விடமிருந்து வருவதாகும். எனவே, உங்களில் ஒருவர் தாம் விரும்புகிற கனவொன்றைக் கண்டால் தம் நேசத்துக் குரியவரைத் தவிர வேறெவரிடமும் அதைப் பற்றித் தெரிவிக்க வேண்டாம். மேலும், அவர் தாம் விரும்பாததைக் கண்டால் அந்த கனவின் தீமையிலிருந்தும் ஷைத்தானின் தீங்கிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரி (தம் இடப் பக்கத்தில்) மூன்று முறை துப்பட்டும். அந்தக் கனவைப் பற்றி எவரிடமும் தெரிவிக்க வேண்டாம். (அவ்வாறு செய்தால்) அது அவருக்கு எந்தப் பாதிப்பையும் ஒருபோதும் ஏற்படுத்திட முடியாது'' என்று கூறியதைக் கேட்டேன்.

ஹதீஸ் 7045 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தமக்கு விருப்பமான கனவொன்றைக் கண்டால் அது அல்லாஹ்விடமிருந்து வந்தது (என அறிந்து), அதற்காக அல்லாஹ்வை அவர் போற்றட்டும்! அதை (தமக்கு விருப்பமானவர்களிடம் மட்டும்) தெரிவிக்கட்டும்! அதற்கு மாறாகத் தமக்கு விருப்பமில்லாத கனவு கண்டால், அது ஷைத்தானிடமிருந்தே வந்தது (என அறிந்து), அதன் தீங்கிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரட்டும் அதைப் பற்றி யாரிடமும் கூற வேண்டாம். ஏனெனில், அப்போது அக்கனவு அவருக்கு எந்தப் பாதிப்பையும் ஏற்படுத்திட முடியாது.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

கனவுக்கு விளக்கம் அளித்த முதல் நபர் தவறாக விளக்கம் சொன்னாலும் அதுதான் விளக்கம் என்பதை ஏற்க முடியாது.

ஹதீஸ் 7046 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'(இறைத்தூதர் அவர்களே!) நான் நேற்றிரவு கனவில் மேகம் ஒன்றைக் கண்டேன். அந்த மேகத்திலிருந்து நெய்யும் தேனும் சொட்டிக்கொண்டிருந்தன. உடனே மக்கள் தங்கள் கைகளை நீட்டி அவற்றைப் பிடித்துக்கொண்டிருக்கக் கண்டேன். (அவர்களில்) அதிகம் பிடித்தவர்களும் உண்டு குறைவாகப் பிடித்தவர்களும் உண்டு. அப்போது ஒரு கயிறு பூமியிலிருந்து வானம் வரைப் போய்ச் சேர்ந்தது. அப்போது (இறைத்தூதர் அவர்களே!) நீங்கள் அந்தக் கயிற்றைப் பற்றிக் கொண்டு மேலே சென்றார். பிறகு (நான்காவதாக) இன்னொரு மனிதர் (வந்து) அதைப் பற்றிக்கொள்ள அந்தக் கயிறு அறுந்து (விழுந்து)விட்டது. பிறகு (மீண்டும்) அக்கயிறு (வானத்துடன்) இணைக்கப்பட்டது'' என்றார்.

அப்போது (அங்கிருந்த) அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். அல்லாஹ்வின் மீதாணையாக! இந்தக் கனவிற்கு விளக்கம் அளிக்க என்னை அனுமதிக்க வேண்டும்'' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்'(சரி) இதற்கு விளக்கம் சொல்லுங்கள்'' என்றார்கள்.

அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'அந்த மேகம் தான் இஸ்லாமாகும். (மேகத்திலிருந்து) சொட்டிக் கொண்டிருந்த தேனும் நெய்யும் குர்ஆனாகும். அதன் இனிமை சொட்டிக் கொண்டிருக்கிறது. குர்ஆனிலிருந்து அதிகம் பெற்றவர்களும் உள்ளனர் குறைவாகப் பெற்றவர்களும் உள்ளனர். வானிலிருந்து பூமிவரை நீண்டு செல்லும் அந்தக் கயிறானது, நீங்கள் இருந்து வருகிற

சத்திய(மார்க்க)மாகும். அதை நீங்கள் பற்றுகிறீர்கள். அல்லாஹ் உங்களை (வானளவிற்கு) உயர்த்திவிடுகிறான். பிறகு உங்களுக்குப் பின்னால் இன்னொரு மனிதர் அதைப் பற்றுகிறார். அதன் மூலம் அவரும் உயர்ந்துவிடுகிறார். அதன் பின்னர் இன்னொரு மனிதர் அதைப் பற்றிக் கொண்டு அதன் மூலம் உயர்ந்துவிடுகிறார். அதன் பின்னர் இன்னொரு மனிதர் அதைப் பற்றிக் கொண்டு அதன் மூலம் உயர்ந்துவிடுகிறார். அதை (நான்காவதாக) மற்றொருவர் பற்றுகிறார். (ஆனால்) அது அவரோடு அறுந்துவிடுகிறது. பின்னர் அவருக்காக அக்கயிறு இணைக்கப்படுகிறது. அதன் மூலம் அவரும் உயர்ந்து விடுகிறார்'' என்று கூறிவிட்டு,'இறைத்தூதர் அவர்களே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். (நான் சொன்ன விளக்கம்) சரியா? அல்லது தவறா?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'சிலவற்றைச் சரியாகச் சொன்னீர்கள் சிலவற்றைத் தவறாகச் சொல்லிவிட்டீர்கள்'' என்றார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் தவறாகக் கூறியதைத் தாங்கள் எனக்குத் தெரிவிக்கவேண்டும்'' என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்'(இனி) சத்தியம் செய்து கேட்காதீர்கள் (நான் சொல்லப்போவதில்லை)'' என்றார்கள்.

## அதிகாலைத் தொழுகைக்கப் பின் கனவுக்கு விளக்கமளித்தல்

ஹதீஸ் 7047 சமுரா இப்னு ஜுன்தப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பெரும்பாலும் தம் தோழர்களிடம்'உங்களில் யாரும் (இன்றிரவு) கனவு கண்டீர்களா?' என்று கேட்பது வழக்கம். அப்போதெல்லாம், அல்லாஹ் யாரை நாடினானோ அவர் (தாம் கண்ட கனவை) அல்லாஹ்வின் தூதரிடம் எடுத்துரைப்பார். (அதற்கு அல்லாஹ்வின் தூதரும் விளக்கமளிப்பார்கள். ஒரு(நாள்) அதிகாலை நேரம் (ஃபஜ்ருத் தொழுகைக்குப் பின்) நபி(ஸல்) அவர்கள் எங்களிடம் (பின்வருமாறு) கூறினார்கள்:

இன்றிரவு (கனவில்) இரண்டு (வான)வர் என்னிடம் வந்து என்னை எழுப்பி,'நடங்கள்'' என்றனர். நான் அவர்கள் இருவருடன் நடக்கலானேன். நாங்கள் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டிருந்த ஒரு மனிதரிடம் சென்றோம். அங்கு அவரின் தலைமாட்டில் இரும்பாலான கொக்கியுடன் ஒருவர் நின்றிருந்தார். அவர் (படுத்திருந்தவருடைய) முகத்தின் ஒருபக்கமாகச் சென்று கொக்கியால் அவரின் முகவாயைப் பிடரி வரை கிழித்தார் (அவ்வாறே) அவரின் மூக்குத் துவாரத்தையும் கண்ணையும் பிடரி வரை கிழித்தார். - அல்லது பிளந்தார் - பிறகு அவர் (படுத்திருந்தவரின்) மற்றொரு பக்கம் சென்று முதல் பக்கத்தில் செய்ததைப் போன்றே செய்தார். இந்தப் பக்கத்தில் செய்து முடிப்பதற்குள் அந்தப் பக்கம் பழையபடி ஒழுங்காக ஆகிவிடுகிறது. பிறகு அந்தப் பக்கத்திற்குச் செல்கிறார். ஆரம்பத்தில் செய்ததைப் போன்றே (திரும்பத் திரும்பச்) செய்கிறார். நான்,'அல்லாஹ் தூயவன்! இவர்கள் இருவரும் யார்?' என்று கேட்டேன். அவ்விரு(வான)வரும் என்னிடம், செல்லுங்கள், செல்லுங்கள்'' என்றனர்.

அப்படியே நாங்கள் நடந்து அடுப்பு போன்று (மேல் பகுதி குறுகலாகவும் கீழ்ப்பகுதி விசாலமாகவும்) இருந்த (பொந்து) ஒன்றின் அருகில் வந்தோம். அதனுள்ளிருந்து (மனிதர்களின்) கூச்சலும் ஆரவாரமும் கேட்டது. உடனே நாங்கள் அதற்குள்ளே எட்டிப் பார்த்தோம். அங்கு ஆண்களும் பெண்களும் நிர்வாணமாக இருந்தார்கள். அங்கு அவர்களுக்குக் கீழேயிருந்து நெருப்பு ஜுவாலை ஒன்று (மேலே) வருகிறது. அந்த ஜுவாலை அவர்களை அடையும்போது அவர்கள் ஓலமிடுகிறார்கள்.

நான் (என்னுடன் வந்த) அவ்விரு(வான)வரிடம்,'இவர்கள் யார்?' என்று கேட்டேன். அவர்கள்,'செல்லுங்கள், செல்லுங்கள்'' என்று என்னிடம் கூறினர்.

அப்படியே நாங்கள் நடந்து ஓர் ஆற்றின் அருகே சென்றோம். அது இரத்தத்தைப் போன்று சிவப்பாக இருந்தது. அந்த ஆற்றில் ஒருவந் நீந்திக் கொண்டிருந்தான். ஆற்றின் கரையில் தமக்கருகே நிறைய கற்களைக் குவித்துவைத்தபடி ஒருவர் இருக்கிறார். அந்த நீச்சல்காரன் நீந்தி நீந்தி, கற்களைக் குவித்துவைத்துக் கொண்டிருக்கும் மனிதரிடம் (கரைக்குச்) சென்று அவருக்கு முன்னால் தம் வாயைத் திறக்கிறான். உடனே (கரையில் நிற்பவர்) அவனுடைய வாயில் கற்களைப் போடுகிறார். உடனே அவன் நீந்தியபடி (திரும்பிச்) சென்றுவிட்டு மீண்டும் அவரை நோக்கி வருகிறான். அவரிடம் அவன் திரும்பி வரும்போதெல்லாம் தன்னுடைய வாயை அவன் திறந்து காட்ட அவர் அவன் வாயில் கற்களைப் போட்டுக் கொண்டிருக்கிறார். (அவன் திரும்பி பழைய இடத்திற்கே தள்ளப்படுகிறான். இப்படியே தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.) நான் அவ்விரு(வான)வரிடமும்,'இவ்விருவரும் யார்?' என்று கேட்டேன். அவர்கள், என்னிடம்,'செல்லுங்கள், செல்லுங்கள்'' என்று கூறினார்கள்.

நாங்கள் அப்படியே நடந்து ஓர் அசிங்கமான தோற்றம் கொண்ட மனிதர் ஒருவரிடம் சென்றோம். அவர் நீ காணுகிற மனிதர்களிலேயே மிகவும் அருவருப்பான தோற்றமுடையவர் போன்று காணப்பட்டார். அங்கு அவர் தமக்கு அருகே நெருப்பை மூட்டி அதைச் சுற்றி வந்துகொண்டிருந்தார். நான் அவ்விருவரிடமும்,'இவர் யார்?' என்று கேட்டேன். அவர்கள் என்னிடம்,'செல்லுங்கள், செல்லுங்கள்'' என்று கூறினர்.

அப்படியே நடங்கள் அடர்ந்துயர்ந்த பசுமையான ஒரு பூங்காவிற்குச் சென்றோம். அதில் வசந்த காலத்தின் எல்லா வண்ணப் பூக்களும் காணப்பட்டன. அந்தப் பூங்காவிற்கு நடுவில் உயரமான மனிதர் ஒருவர் இருந்தார். வான் நோக்கி உயர்ந்திருந்தால் அவரின் தலையை என்னால் (எளிதில்) பார்க்க முடியவில்லை. அந்த மனிதரைச் சுற்றி நான் ஒருபோதும் கண்டிராத அளவிற்கு ஏராளமான சிறுவர்கள் இருந்தார்கள். நான் அவ்விருவரிடமும்,'இந்த (உயரமான) மனிதர் யார்? இந்தச் சிறுவர்கள் யார்?' என்று கேட்டேன். அவர்கள் என்னிடம்,'செல்லுங்கள், செல்லுங்கள்' எனக் கூறிவிடவே நடந்து ஒரு பெரும் பூங்காவுக்கு வந்தோம். அதைவிட பெரிய அழகான பூங்காவை நான் ஒருபோதும் கண்டதில்லை. (அதில் ஒரு பெரிய மரமும் இருந்தது.) அவ்விருவரும் என்னிடம்,'அதில் ஏறுங்கள்'' என்றனர். அப்படியே அதில் நாங்கள் ஏறி தங்கம் மற்றும் வெள்ளி செங்கற்களால் கட்டப்பட்டிருந்த ஒரு நகரத்திற்கு வந்தோம். அந்த நகரத்தின் தலை வாயிலை அடைந்து (அதைத்) திறக்குமாறு கூறினோம். உடனே எங்களுக்காக அது திறக்கப்பட்டது. நாங்கள் அதில் நுழைந்தோம். அங்கு நீ காணகிறவற்றிலேயே மிகவும் அழகான பாதித் தோற்றமும் நீ காணுகிறவற்றிலேயே மிகவும் அருவருப்பான (மறு) பாதித் தோற்றமும் கொண்ட சில மனிதர்கள் எங்களை எதிர்கொண்டனர். அவர்களைப் பார்த்து (என்னுடன் வந்த) அவ்விருவரும், செல்லுங்கள் (சென்று) அந்த நதியில் குதியுங்கள்'' என்றனர். அங்கு குறுக்கே ஒரு நதி பாய்ந்து கொண்டிருந்தது. அதன் நீர் தூய வெண்ணிறத்தில் காணப்பட்டது. எனவே, அவர்கள் சென்று அதில் விழுந்து (குளித்துவிட்டு) தங்களிடமிருந்து அந்த அசூசை நீங்கி விட்டிருந்த நிலையில் மிகவும் பொலிவான வடிவத்திற்கு மாறியவர்களாக எங்களிடம் திரும்பிவந்தனர்.

அவ்விருவரும் என்னிடம்,'இது (-இந்த நகரம்) தான்'அத்ன்' எனும் (நிலையான) சொர்க்கமாகும். இதுவே உங்கள் ஓய்விடமாகும்'' என்றார். நான் பார்வையை உயர்த்தி மேலே பார்த்தபோது அங்கு வெண் மேகத்தைப் போன்ற மாளிகையொன்றைக் கண்டேன். அவ்விருவரும்

என்னிடம்,'இது உங்கள் இருப்பிடம்'' என்றனர். நான் அவர்களிடம்,'உங்கள் இருவருக்கும் அல்லாஹ் சுபிட்சம் வழங்கட்டும்! என்னை விடுங்கள். நான் இதில் நுழைந்து கொள்கிறேன்'' என்றேன். அவ்விருவரும்,'இப்போது முடியாது நீங்கள் (மறுமையில்) அதில் நுழையத்தான் போகிறீர்கள்'' என்றனர்.

நான் அவ்விருவரிடமும்,'நேற்றிரவு முதல் நான் பல விந்தைகளைக் கண்டுள்ளேன். நான் கண்ட இவைதாம் என்ன?' என்றேன். அதற்கு அவர்கள் என்னிடம்,'(நீங்கள் கண்ட காட்சிகளின் விவரங்களை) உங்களுக்கு நாங்கள் தெரிவிக்கிறோம்.

கல்லால் தலை நசுக்கப்பட்டுக்கொண்டிருந்த மனிதருக்கு அருகில் முதலில் நீங்கள் சென்றீர்களே! அந்த மனிதன் குர்ஆனை (மனனம் செய்து) எடுத்துக்கொண்டுவிட்டுப் பிறகு அதை (மறந்து)விட்டவன் ஆவான். மேலும், அவன் கடமையாக்கப்பட்ட தொழுகைகளை நிறைவேற்றாமல் தூங்கிவிட்டவனும் ஆவான். (அடுத்து) தன்னுடைய முகவாய், மூக்குத் துவாரம், கண் ஆகியவற்றை பிடரிவரை கிழிக்கப்பட்டுக்கொண்டிருந்த மனிதனுக்கு அருகில் நீங்கள் சென்றீர்களே! அந்த மனிதன் அதிகாலையில் தம் வீட்டிலிருந்து புறப்பட்டு ஒரு பொய்யைச் சொல்ல அது (பல்வேறு வழிகளில்) உலகம் முழுவதும் போய்ச் சேரும்.

அடுப்பு போன்ற கட்டடம் ஒன்றில் நிர்வாணமாகக் கிடந்த ஆண்களும் பெண்களும் விபசாரம் புரிந்த ஆண்களும் விபசாரம் புரிந்த பெண்களுமாவர். ஆற்றில் நீந்திக்கொண்டும் (கரையை நெருங்கும்போது வாயில்) கல் போடப்பட்டுக் கொண்டும் இருந்த ஒரு மனிதனுக்கு அருகே நீங்கள் சென்றீர்களே! அவன் வட்டி வாங்கித் தின்றவன் ஆவான். நெருப்பை மூட்டி அதைச் சுற்றி வந்து கொண்டிருந்த அருவருப்பான தோற்றத்திலிருந்த அந்த மனிதர் நரகத்தின் காவலரான மாலிக் ஆவார்.

அந்தப் பூங்காவிலிருந்த உயரமான மனிதர் (இறைத்தூதர்) இப்ராஹீம்(அலை) அவர்களாவார். அவர்களைச் சுற்றியிருந்த சிறுவர்கள் இயற்கை மரபில் (இஸ்லாத்தில்) இறந்துவிட்ட சிறுவர்கள் ஆவர்.

இதை நபி(ஸல்) அவர்கள் கூறியபோது முஸ்லிம்களில் சிலர்,'இறைத்தூதர் அவர்களே! இணைவைப்பாளர்களின் குழந்தைகளும் (அந்தப் பூங்காவில் இருந்த குழந்தைகளில் அடங்குவார்களா?)'' என்று கேட்டனர். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'(ஆம்) இணைவைப்பாளர்களுடைய குழந்தைகளும் தாம்'' என்று பதிலளித்தார்கள். 66

(தொடர்ந்து என்னுடன் வந்த அவ்விருவரும் கூறுகையில்,) ஒரு பாதி அழகாகவும் மறுபாதி அசிங்கமாகவும் காட்சியளித்த மக்கள், நல்லறங்களுடன் தீமைகளையும் கலந்துவிட்டவர்களாவர் (பின்னர்) அவர்களை அல்லாஹ் மன்னித்துவிட்டான் (என்று கூறின

## அத்தியாயம் 92 குழப்பங்கள் (சோதனைகள்)

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

### "நீங்கள் ஒரு வேதனை குறித்து எச்சரிக்கையாக இருங்கள். அது (வரும்போது) உங்களில் அநீதியிழைத்தவர்களை மட்டும் தாக்குவதில்லை' எனும் (திருக்குர்ஆன் 08:25 வது) இறைவசனம் தொடர்பாக வந்துள்ள செய்திகளும் நபி(ஸல்) அவர்கள் முன்னெச்சரிக்கை செய்து வந்த குழப்பங்களும்.

ஹதீஸ் 7048 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (மறுமை நாளில்'அல்கவ்ஸர்' எனும்) என்னுடைய தடாகத்தின் அருகே இருந்தவாறு என்னிடம் வருகிறவர்களை எதிர்பார்த்துக் காத்திருப்பேன். அப்போது என்னை நெருங்கிவிடாமல் சிலர் பிடிக்கப்படுவார்கள். அப்போது நான்'(இவர்கள்) என் சமுதாயத்தார்" என்பேன். அதற்கு'உங்களுக்குத் தெரியாது. (நீங்கள் உலகைவிட்டுப் பிரிந்த பின்னால்) இவர்கள் வந்தவழியே அப்படியே திரும்பிச் சென்றார்கள்" என்று கூறப்படும்.

இதை அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார். இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான இப்னு அபீ முலைக்கா(ரஹ்) அவர்கள்'அல்லாஹ்வே! நாங்கள் எங்கள் குதிகால்களின் மீது திரும்பிச் செல்வதிலிருந்தும், நாங்கள் குழப்பத்தில் ஆழ்த்தப்படுவதிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறோம்" என்று பிரார்த்திப்பார்கள்.

ஹதீஸ் 7049 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உங்களுக்கு முன்பே (மறுமை நாளில்'அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன். அப்போது உங்களில் சிலர் என்னிடம் கொண்டுவரப்படுவார்கள். நான் அவர்களுக்கு (தடாகத்திலிருந்து தண்ணீர்) வழங்க முற்படும்போது அவர்கள் என்னிடமிருந்து விலக்கிவைக்கப்படுவார்கள். உடனே நான்,'என் இறைவா! இவர்கள் என் தோழர்கள்" என்று கூறுவேன். அதற்கு அல்லாஹ்,'இவர்கள் உமக்குப் பின்னால் (புதிது புதிதாக) என்னென்ன (குழப்பங்களை) உருவாக்கினார்கள் என்று உமக்குத் தெரியாது" என்று கூறுவான்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7050, ஹதீஸ் 7051 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் (மறுமை நாளில்) உங்களுக்கு முன்பே ('அல்கவ்ஸர்') தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன். அங்கு யாருக்கு வர முடிகிறதோ அவர் அதை அருந்துவார். அதை அருந்துகிறவருக்கு அதன் பிறகு ஒருபோதும் தாகமே ஏற்படாது. (இந்நிலையில்) என்னிடம் சிலர் வருவார்கள் அவர்களை அறிவேன் அவர்களும் என்னை அறிந்துகொள்வார்கள். பிறகு எனக்கும் அவர்களுக்கும் இடையே தடுப்பு ஏற்படுத்தப்படும்.

என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அபூ ஹாஸிம்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் இந்த ஹதீஸை மக்களுக்கு அறிவித்துக் கொண்டிருந்தபோது நுஃமான் இப்னு அபீ அய்யாஷ் (ரஹ்) அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். பிறகு, 'நீங்கள் இவ்வாறுதான் ஸஹ்ல் (ரலி) அவர்களிடமிருந்து செவியேற்றீர்களா?' என்று வினவினார்கள். நான், 'ஆம்'' என்று சொன்னேன். அதற்கு அவர்கள், 'அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் இதை அறிவித்ததற்கு நான் சாட்சி. அவர்கள் தங்களின் அறிவிப்பில் அதிகப்படியாக (பின்வருமாறு) குறிப்பிட்டார்கள்:'அவர்கள் என்னைச் சார்ந்தவர்கள் தாம்'' என்று நபியவர்கள் கூறியதற்கு, 'உங்களுக்குப் பிறகு என்னவெல்லாம் புதிதாக உண்டாக்கினார்கள் என்று எங்களுக்குத் தெரியாது'' என்று சொல்லப்படும். உடனே நான், 'எனக்குப் பிறகு (தம் மார்க்கத்தை) மாற்றிவிட்டவர்களை இறைவன் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அப்புறப்படுத்துவானாக!"என்று சொல்வேன்.

## "எனக்குப் பிறகு நீங்கள் வெறுக்கிற பல விஷயங்களைக் காண்பீர்கள்' என்று (அன்சாரிகளிடம்) நபி (ஸல்) அவர்கள் கூறியது.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(அன்சாரிகளே!) என்னை (மறுமையில்'அல்கவ்ஸர்') தடாகத்தின் அருகே சந்திக்கும் வரை (நிலைகுலையாது) பொறுமையுடன் இருங்கள்.

என அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7052 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (அன்சாரிகளான) எங்களிடம்'எனக்குப் பிறகு (ஆட்சியதிகாரத்தில் உங்களைவிடப் பிறருக்கு) முன்னுரிமை வழங்கப்படுவதையும், நீங்கள் வெறுக்கிற சில விஷயங்களையும், பார்ப்பீர்கள்'' என்றார்கள். மக்கள், 'அப்போது நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் கட்டளையிடுகிறீர்கள், இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள், '(ஆட்சியாளர்களான) அவர்களுக்கு அவர்களின் உரிமையை வழங்கிவிடுங்கள் உங்கள் உரிமையை அல்லாஹ்விடம் கேளுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7053. 'தம் (ஆட்சித்) தலைவரிடமிருந்து (மார்க்க விஷயத்தில் குறை) எதையேனும் (கண்டு அதை) வெறுப்பவர் பொறுமையாக இருக்கட்டும். ஏனெனில், ஆட்சியாள(ருக்குக் கட்டுப்படாமல் அவ)ரிடமிருந்து ஒரு சாண் அளவு வெளியேறுகிறவர் அஞ்ஞான கால மரணத்தை எய்துவார் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7054. 'தம் (ஆட்சித்) தலைவரிடமிருந்து மார்க்க விஷயத்தில்) தமக்குப் பிடிக்காத (குறை) ஒன்றைக் காண்கிறவர் அதைப் பொறுத்துக் கொள்ளட்டும்! ஏனெனில், ஒருவர் (இஸ்லாமியக்) கட்டமைப்பிலிருந்து பிரிந்து, (அதே நிலையில்) இறந்துவிட்டால் அஞ்ஞான கால மரணத்தையே அவர் சந்திப்பார்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7055 ஜுனாதா இப்னு அபீ உமய்யா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உபாதா இப்னு அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது நாங்கள் அன்னாரிடம் (நலம் விசாரிக்கச்) சென்றோம். நாங்கள், 'அல்லாஹ் உங்களுக்குக் குணமளிக்கட்டும். நபி (ஸல்) அவர்களிடமிருந்து நீங்கள் கேட்ட ஒரு ஹதீஸை (செய்தியை எங்களுக்கு) அறிவியுங்கள் அதனால் அல்லாஹ் உங்களுக்கு நற்பலன் அளிப்பான்'' என்று சொன்னோம்.

அதற்கு உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அவர்கள்,'நபி(ஸல்) அவர்கள் எங்களை அழைத்தார்கள். நாங்கள் அவர்களிடம் (சென்று இஸ்லாத்தில் நிலைத்திருப்பதாக) உறுதிமொழி அளித்தோம்'' என்றார்கள்.

ஹதீஸ் 7056'நாங்கள் உற்சாகமாயிருக்கும் போதும் சோர்ந்திருக்கும்போதும் வசதியாயிருக்கும் போதும் சிரமத்திலிருக்கும் போதும் எங்களை விடப் பிறருக்கு முன்னுரிமை வழங்கப்படும் போதும்கூட (ஆட்சித் தலைவரின் கட்டளையை)ச் செவியேற்று (அவருக்குக்) கீழ்ப்படிந்து நடப்போம் ஆட்சியதிகாரத்திலிருப்பவர்களுடன் நாங்கள் சண்டையிடமாட்டோம் எந்த விஷயம் பம்ரங்கமான இறைமறுப்பு என்பதற்கு அல்லாஹ்விடமிருந்து எங்களுக்கு ஆதாரம் கிடைத்துள்ளதோ அத்தகைய விஷயத்தை ஆட்சியாளரிடம் நாங்கள் கண்டாலே தவிர'' என்று எங்களிடம் நபி(ஸல்) அவர்கள் உறுதிமொழி வாங்கியதும் அவர்கள் எங்களிடம் பெற்ற பிரமாணங்களில் அடங்கும்.

ஹதீஸ் 7057 உசைத் இப்னு ஹுளைர்(ரலி) அறிவித்தார்.

(அன்சாரிகளில்) ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'இன்னாரை நீங்கள் அதிகாரியாக நியமித்தீர்கள் என்னை நீங்கள் அதிகாரியாக நியமிக்கவில்லையே?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'எனக்குப் பிறகு (உங்களைவிட) மற்றவர்களுக்கு (ஆட்சியதிகாரத்தில்) முன்னுரிமை அளிக்கப்படுவதை நீங்கள் காண்பீர்கள். எனவே, (மறுமையில்) என்னைச் சந்திக்கும் வரை நீங்கள் பொறுத்திருங்கள்'' என்றார்கள்.

## "என் சமுதாயத்தாரின் அழிவு விவரமில்லாத இளைஞர்களின் கரங்களில் தான் உள்ளது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7058 நான் மதீனாவில் நபி(ஸல்) அவர்களின் பள்ளிவாசலில் அபூ ஹுரைரா(ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தேன். அப்போது எங்களுடன் மர்வான் இப்னு ஹகமும் இருந்தார். அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்'உண்மையாளரும் உண்மையே அறிவிக்கப்பட்டவருமான நபி(ஸல்) அவர்கள்,'என் சமுதாயத்தாரின் அழிவு குறைஷி இளைஞர்களின் கரங்களில் தான் உள்ளது' என்று சொல்ல கேட்டேன்'' என்றார்கள். அப்போது மர்வான்,'இந்த இளைஞர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்'' என்றார். உடனே அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்'நான் நினைத்தால் (அந்த இளைஞர்கள்) இன்னாரின் மக்கள், இன்னாரின் மக்கள் என்று (குறிப்பிட்டுச்) சொல்ல முடியும்'' என்று கூறினார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான அம்ர் இப்னு யஹ்யா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:)

நான் என் பாட்டனார் ஸயீத் இப்னு அம்ர் இப்னி ஸயீத் அல்உமவீ(ரஹ்) அவர்களுடன்'பனுமர்வான்' குலத்தாரிடம் அவர்கள் ஷாம் நாட்டிற்கு அதிபர்களான வேளையில் சென்றிருந்தேன். அவர்கள் இளம் வாலிபர்களாக இருப்பதைப் பார்த்துவிட்டு எங்களிடம்,'இவர்கள் (அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் குறிப்பிட்ட) அந்த இளைஞர்களாக இருக்கலாம்'' என்று என் பாட்டனார் கூறினார்கள். நாங்கள்,'நீங்கள்தாம் (இது பற்றி எங்களைவிட) அதிகமாக அறிந்தவர்கள்'' என்று கூறினோம்.

## "நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணத்தால் அரபுகளுக்குக் கேடு நேரவிருக்கின்றது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7059 ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அறிவித்தார்.

(ஒருநாள்) நபி(ஸல்) அவர்கள் தூக்கத்திலிருந்து முகம் சிவந்த நிலையில் (பின்வருமாறு) கூறியபடியே எழுந்தார்கள்: வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை. நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணமாக அரபுகளுக்குக் கேடுதான். இன்று யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இந்த அளவிற்குத் திறக்கப்பட்டுள்ளது.

-அறிவிப்பாளர் சுஃப்யான் (ரஹ்) அவர்கள் ('இந்த அளவிற்கு' என்று கூறியபோது, தம் கை விரல்களால் அரபி எண் வடிவில்) 90 அல்லது 100 என்று மடித்துக் காட்டினார்கள்.

அப்போது 'நல்லவர்கள் நம்மிடையே இருக்கும் போதுமா நமக்கு அழிவு ஏற்படும்?' என்று வினவப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'ஆம். தீமை பெருத்துவிட்டால்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7060 உசாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் மதீனாவின் கோட்டைகளில் ஒன்றின் மீது ஏறிக்கொண்டு நோட்டமிட்டபடி,) 'நான் பார்க்கிறவற்றை நீங்கள் பார்க்கிறீர்களா?' என்று கேட்க மக்கள், 'இல்லை'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'நான் மழைத்துளிகள் விழுவதைப் போன்று உங்கள் வீடுகள் நெடுகிலும் குழப்பங்கள் விளையப் போவதைப் பார்க்கிறேன்'' என்றார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

## குழப்பங்கள் தோன்றுதல்

ஹதீஸ் 7061 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் '(மறுமை நாள் நெருங்கும்போது) காலம் சுருங்கிவிடும் செயல்பாடு (அமல்) குறைந்துபோய்விடும் மக்களின் உள்ளங்களில் (பேராசையின் விளைவாக) கஞ்சத்தனம் உருவாக்கப்பட்டு விடும். குழப்பங்கள் தோன்றும். 'ஹர்ஜ்' பெரும்விடும்'' என்று கூறினார்கள். மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! அது என்ன (ஹர்ஜ்)?' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், 'கொலை, கொலை'' என்று பதிலளித்தார்கள்.

இதே ஹதீஸை அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து வேறு சில அறிவிப்பாளர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7062, ஹதீஸ் 7063 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளுக்கு முன் ஒரு காலக்கட்டம் வரும். அப்போது அறியாமை நிலவும் கல்வி அகற்றப்பட்டுவிடும் 'ஹர்ஜ்' பெரும்விடும். 'ஹர்ஜ்' என்பது கொலையாகும்.

இதை அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களும் அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7064 அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஒரு முறை) அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களும் அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அவர்களும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அபூ மூஸா(ரலி) அவர்கள் 'மறுமை நாளுக்கு முன்பு ஒரு காலக்கட்டம் வரும். அப்போது கல்வி அகற்றப்பட்டுவிடும் அறியாமை நிலவும் 'ஹர்ஜ்' பெரும்விடும். 'ஹர்ஜ்' என்பது கொலையாகும் என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'' எனத் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 7065 அபூ வாயில்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அபூ மூஸா(ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன். அப்போது அபூ மூஸா(ரலி) அவர்கள், 'நான் நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு சொல்லக் கேட்டேன். மேலும், 'ஹர்ஜ்' எனும் சொல்லுக்கு அபிசீனிய மொழியில் 'கொலை' என்று பொருள்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 7066 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளுக்கு முன்பாகக் கொலைகள் மலிந்த ஒரு காலக்கட்டம் வரும். அப்போது கல்வி மறைந்துபோய் அறியாமை வெளிப்படும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

அபூ மூஸா(ரலி) அவர்கள், ''ஹர்ஜ்' என்பது அபிசீனிய மொழியில் கொலையைக் குறிக்கும்'' என்று கூறுகிறார்கள்.

ஹதீஸ் 7067 அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நான் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களிடம், 'கொலைகள் மலிந்த காலம் வரும் என்று மேற்கண்டவாறு நபி(ஸல்) அவர்கள் கூறிய காலத்தை நீங்கள் அறிவீர்கள்'' என்றேன். அப்போது அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அவர்கள் (கூடுதலாகப் பின்வருமாறு) சொன்னார்கள்: யார் உயிரோடு இருக்கும்போது அவர்களை மறுமைநாள் வந்தடைகிறதோ அவர்கள் தாம் மக்களிலேயே தீயோர் ஆவர் என்று நபி(ஸல்) அவர்கள் சொல்ல கேட்டிருக்கிறேன்.

## பின்னால் வரும் காலம் முன்னால் சென்ற காலத்தைவிட மோசமாகவே இருக்கும்.

ஹதீஸ் 7068 ஸுபைர் இப்னு அதீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடம் சென்று (ஆளுநர்) ஹஜ்ஜாஜ் மூலம் நாங்கள் அனுபவித்துவரும் கொடுமைகள் குறித்து முறையிட்டோம். அதற்கு அவர்கள், 'நீங்கள் உங்களுடைய இறைவனைச் சந்திக்கும் வரை பொறுமையோடு இருங்கள். ஏனெனில், உங்களிடம் ஒரு காலம் வந்தால், அதற்குப் பின்வரும் காலம் அதைவிட மோசமானதாகவே இருக்கும்'' என்று கூறிவிட்டு, 'இதை நான் உங்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7069 நபி(ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

ஒரு(நாள்) இரவில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (திடீரென) பதற்றத்துடன் விழித்தெழுந்து'அல்லாஹ் தூயவன்! (இன்றிரவு) அல்லாஹ் இறக்கிவைத்த கருவூலங்கள் தாம் என்ன! (இன்றிரவு) இறக்கி வைக்கப்பட்ட குழப்பங்கள் தாம் என்ன! -தம் துணைவியரை மனத்தில் கொண்டு - இந்த அறைகளிலுள்ள பெண்களை எழுப்பி விடுகிறவர் யார்? அவர்கள் (அல்லாஹ்வைத்) தொழட்டும்! ஏனெனில், இவ்வுலகில் உடையணிந்திருக்கும் எத்தனையோ பெண்கள் மறுவுலகில் நிர்வாணிகளாய் இருப்பார்கள்'' என்று கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

## “நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்‘ எனும் நபிமொழி.

ஹதீஸ் 7070 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்.

என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7071 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நமக்கெதிராக ஆயுதம் ஏந்தியவர் நம்மைச் சார்ந்தவர் அல்லர்.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7072 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் உங்கள் சகோதரரை நோக்கி ஆயுதத்தைக் காட்டி சைகை செய்யவேண்டாம். ஏனெனில், உங்களுக்குத் தெரியாமலேயே ஷைத்தான் உங்கள் கையிலிருந்து அதைப் பிடுங்கி (சகோதரர் மீது தாக்குதல் நடத்தி) விடக்கூடும். அதனால் நீங்கள் நரகத்தில் வீழ்ந்துவிடக் கூடும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7073 சுஃப்யான் இப்னு உயைனா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அம்ர் இப்னு தீனார் (ரஹ்) அவர்களிடம்’அபூ முஹம்மதே! (மஸ்ஜிதுந்நபவீ) பள்ளிவாசலில் ஒருவர் அம்புகளுடன் நடந்துசென்றார் அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள்’அம்புகளின் முனைகளைப் பிடித்து (மறைத்து)க்கொள்’ என்று அவரிடம் கூறினார்கள் என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் சொல்ல நீங்கள் கேட்டீர்களா?’ என்று வினவினேன். அதற்கு அம்ர் (ரஹ்) அவர்கள்’ஆம்’ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7074 ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் பள்ளிவாசலில் அம்புகள் சிலவற்றை அவற்றின் முனைகள் வெளியே தெரியுமாறு எடுத்துச் சென்றார். நபி (ஸல்) அவர்கள் அவற்றின் முனைகளைப் பிடித்து (மறைத்து)க் கொண்டு எந்த முஸ்லிமையும் கீறிவிடாதபடி செல்லுமாறு அவருக்குக் கட்டளையிட்டார்கள்.

ஹதீஸ் 7075 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தம்முடன் அம்பை எடுத்துக்கொண்டு நம்முடைய பள்ளிவாசலில் அல்லது நம்முடைய கடைவீதியில் நடந்து சென்றால், அவர்’அவற்றின் முனைகளை (மறைத்து)ப் பிடித்துக்கொள்ளட்டும்’ அல்லது’தம் கைக்குள் (அதன் முனையை) மூடிவைத்துக் கொள்ளட்டும்‘. அவற்றில் எதுவும் முஸ்லிம்களில் யாரையும் கீறிவிடக் கூடாது.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

## “எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றவரின் பிடரியை வெட்டிக் கொள்கிற நிராகரிப்பாளர்களாய் மாறிவிட வேண்டாம்‘ என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7076 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிமை ஏசுவது பாவச் செயலாகும். அவனுடன் போரிடுவது (அல்லது கொலை செய்வது) இறைமறுப்பு (போன்ற குற்றச்செயல்) ஆகும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7077 நபி (ஸல்) அவர்கள் ('விடைபெறும்' ஹஜ்ஜின்போது) கூறினார்கள்:

எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றவரின் பிடரியை வெட்டிக்கொள்ளும் நிராகரிப்பாளர்களாய் மாறிவிடாதீர்கள்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7078 அபூ பக்ரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (துல்ஹஜ் 10ஆம் நாளில் மக்காவில்) மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள். அப்போது இது எந்த நாள் என்பது உங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்டார்கள். மக்கள்'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்" என்று கூறினார்கள். அந்த நாளுக்கு அவர்கள் வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணினோம். (அந்த அளவிற்கு மௌனமாக இருந்தார்கள்.) பிறகு'இது நஹ்ர் உடைய (துல்ஹஜ் 10ஆம்) நாள் அல்லவா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம், இறைத்தூதர் அவர்களே!"என்று சொன்னோம். நபியவர்கள்,'இது எந்த ஊர்?' இது புனித நகரமல்லவா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம், இறைத்தூதர் அவர்களே" என்று சொன்னோம். நபியவர்கள்,'இது எந்த ஊர்? இது புனித நகரமல்லவா?' என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம், இறைத்தூதர் அவர்களே!"என்று சொன்னோம். நபி (ஸல்) அவர்கள்,'அவ்வாறாயின் (புனிதம் வாய்ந்த) உங்களின் இந்த நகரத்தில் உங்களுடைய (புனிதமான) இந்த மாதத்தில் இந்த நாள் எவ்வளவு புநிதமானதோ அந்த அளவுக்கு உங்கள் உயிர்களும் உங்கள் செல்வங்களும் உங்களின் மானமும் உங்கள் உடல்களும் உங்களுக்குப் புனிதமானவையே" என்று கூறிவிட்டு,'(நான் வாழ்ந்த இதுகாலம்வரை உங்களிடம் இறைச்செய்திகள் அனைத்தையும்) தெரிவித்துவிட்டேனா?' எனக் கேட்டார்கள். நாங்கள்,'ஆம் (தெரிவித்து விட்டீர்கள்)" என்று பதிலளித்தோம். பிறகு நபி (ஸல்) அவர்கள்'இறைவா! நீயே சாட்சி!"என்றார்கள்.

பிறகு (மக்களிடம்),'இங்கு வந்திருப்பவர்கள் வராதவர்களுக்கு அறிவித்துவிடுங்கள். ஏனெனில், இச்செய்தியை(ப் பிறருக்கு)த் தெரிவிப்பவர்களில் எத்தனையோ பேர், தம்மைவிட அதை நன்கு நினைவிலிருத்திக் கொள்பவரிடம் தெரிவிக்கலாம்" என்று கூறினார்கள்.

(இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் இப்னு சீரீன் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்) நபி (ஸல்) அவர்கள் கூறியபடியே நடந்தது. (நினைவாற்றல் குறைந்தவர்கள் தம்மைவிடச் சிறந்த நினைவாற்றல் உள்ளோரிடம் அவற்றைத் தெரிவித்தார்கள்.)

மேலும், நபி (ஸல்) அவர்கள்,'எனக்குப் பின்னால் ஒருவரையொருவர் பிடரியில் வெட்டி மாய்த்துக் கொள்ளும் நிராகரிப்பாளர்களாய் நீங்கள் மாறிவிட வேண்டாம்" என்றும் (அன்றைய உரையில்) குறிப்பிட்டார்கள்.

அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல்ஹள்ரமீ (ரஹ்) அவர்கள் ஜாரியா இப்னு குதாமா என்பவரால் (உயிருடன்) கொளுத்தப்பட்ட நாளில் (ஜாரியா தம் ஆட்களிடம்),'அபூ பக்ரா (ரலி) அவர்களை ஏறிப் பாருங்கள் (அவர் நமக்கு ஆதரவாளரா என்பதைக் கண்டுவாருங்கள்)" என்றார். அப்போது மக்கள்'இதோ அபூ பக்ரா (ரலி) அவர்கள் உம்மைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்" என்று கூறினர்.

அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ரா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (என் தந்தை) அபூ பக்ரா(ரலி) அவர்கள்'மக்கள் என்னிடம் (என்னைத் தாக்க) வந்தால் அப்போது (நான் அவர்களைத் தடுக்க) ஒரு மூங்கில் குச்சியைக் கூட எடுக்கமாட்டேன்'' என்றார்கள் என என் தயார் என்னிடம் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 7079 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்குப் பின்னர், உங்களில் ஒருவர் மற்றவரின் பிடரியை வெட்டிக்கொள்ளும் நிராகரிப்பாளர்களாய் மாறிவிடாதீர்கள்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7080 ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

'விடைபெறும்' ஹஜ்ஜின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மக்களை மௌனம் காக்கச் சொல்லுங்கள்'' என்று சொல்லிவிட்டு (மக்கள் மௌனமான) பின்னர்,'எனக்குப் பின்னால் உங்களில் ஒருவர் மற்றவரின் பிடரியை வெட்டிக் கொள்ளும் நிராகரிப்பாளர்களாய் மாறிவிடாதீர்கள்'' என்றார்கள்.

## (விரைவில்) சில குழப்பங்கள் தோன்றும், அப்போது அமர்ந்திருப்பவன் நிற்பவனை விடச் சிறந்தவன் ஆவான்.

ஹதீஸ் 7081. 'விரைவில் குழப்பங்கள் சில தோன்றும். அப்போது அவற்றுக்கிடையே (மௌனமாம்) அமர்ந்திருப்பவன் (அவற்றுக்காக) எழுந்து நிற்பவனைவிடவும், அவற்றுக்கிடையே எழுந்து நிற்பவன் நடப்பவனை விடவும், அவற்றுக்கிடையே நடப்பவன் (அவற்றை நோக்கி) ஓடுபவனைவிடவும் சிறந்தவன் ஆவான். அதில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறவரை அவை அழிக்க முற்படும். அப்போது ஒரு புகலிடத்தையோ, காப்பிடத்தையோ பெறுகிறவர் அதன் வாயிலாகத் தம்மைத் தற்காத்துக் கொள்ளட்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7082. 'விரைவில் சில குழப்பங்கள் தோன்றும். அவற்றுக்கிடையே (மௌனமாக) அமர்ந்திருப்பவன் (அவற்றை நோக்கி) எழுந்து நிற்பவனைவிடச் சிறந்தவன் ஆவான். எழுந்து நிற்பவன் (அவற்றை நோக்கி) நடப்பவனைவிடச் சிறந்தவன் ஆவான். அவற்றுக்கிடையே நடப்பவன் (அவற்றை நோக்கி) ஓடுபவனை விடச் சிறந்தவன் ஆவான். அதில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறவரை அவை அழிக்க முற்படும். அப்போது ஒரு புகலிடத்தையோ காப்பிடத்தையோ யார் பெறுகிறாரோ அவர் அதன் வாயிலாகத் தம்மைத் தற்காத்துக் கொள்ளட்டும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இரண்டு முஸ்லிம்கள் வாட்களால் சந்தித்துக் கொண்டால்...

ஹதீஸ் 7083 (அலீ(ரலி) அவர்களின் காலத்தில் உள்நாட்டு அரசியல்) குழப்பம் தோன்றிய காலக்கட்டத்தில் நான் என்னுடைய ஆயுதத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டேன். அப்போது என்னை அபூ பக்ரா(ரலி) அவர்கள் எதிர்கொண்டு'எங்கே செல்கிறீர்கள்?' என்று கேட்டார்கள்.

நான்,'இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தந்தையின் சகோதரர் மகன் (அலீ(ரலி) அவர்களுக்கு உதவிட விரும்புகிறேன்'' என்று கூறினேன்.

அதற்கு அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இரண்டு முஸ்லிம்கள் தம் வாட்களால் ஒருவரையொருவர் எதிர்கொண்டால் (சண்டையிட்டு மடிந்தால்) அவர்கள் இருவருமே நரகவாசிகள்'' ஆவர் என்றார்கள்.

அப்போது (அவர்களிடம்), 'இவர் கொலைகாரர் (தண்டனை பெறுவது சரிதான்.) ஆனால், கொல்லப்பட்டவரின் நிலை என்ன? (அவர் எப்படி நரகவாசியாவார்?)'' என்று கேட்கப்பட்டது.

நபி(ஸல்) அவர்கள், 'கொல்லப்பட்ட வரும் தம் தோழரைக் கொல்லவேண்டும் என்ற எண்ணத்துடன் தான் இருந்தார்'' என்று பதிலளித்தார்கள்.

இதே ஹதீஸ் வேறு பல அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

## ஒரு கூட்டமைப்பு இல்லாதபோது (எழும் பிரச்சினைகளில்) எவ்வாறு நடந்து கொள்வது?

ஹதீஸ் 7084 ஹுதைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் மக்கள் நன்மையைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நான் நபியவர்களிடம் தீமையைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தேன். அது என்னைத் தீண்டிவிடுமோ என்று அஞ்சியமே காரணம். நான், 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் அறியாமைக் கால மாச்சரியத்திலும் தீமையிலும் மூழ்கிக் கிடந்தோம். அப்போது அல்லாஹ் (இஸ்லாம் எனும்) இந்த நன்மையை எங்களிடம் கொண்டுவந்தான். இந்த நன்மைக்குப் பிறகு ஒரு தீமை (குழப்பம்) இருக்கின்றதா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'ஆம் (இருக்கின்றது)'' என்று பதிலளித்தார்கள். நான், 'அந்தத் தீமைக்குப் பிறகு நன்மை ஏதும் இருக்கின்றதா?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'ஆம். ஆனால், அதில் சற்று கலங்கலான நிலை (குழப்பம்) இருக்கும்'' என்று பதிலளிக்க நான், 'அந்தக் கலங்கலான நிலை என்ன?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஒரு கூட்டத்தார் என்னுடைய நேர்வழியில்லாத ஒன்றைக் கொண்டு பிறருக்கு வழிகாட்டுவார்கள். அவர்களில் நன்மையையும் நீ காண்பாய் தீமையையும் நீ காண்பாய்'' என்று பதிலளித்தார்கள். நான், 'அந்த நன்மைக்குப் பிறகு ஒரு தீமை உண்டா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஆம் நரகத்தின் வாசல்களுக்கு (வருமாறு) அழைப்பவர்கள் சிலர் தோன்றுவார்கள். அவர்களின் அழைப்பை ஏற்பவனை நரகத்தில் அவர்கள் எறிந்துவிடுவார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

நான், 'இறைத்தூதர் அவர்களே! அவர்களின் அடையாளங்க)ளை எங்களுக்குத் தெரிவியுங்கள்'' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள், 'அவர்கள் நம் இனத்தைச் சேர்ந்தவர்களாகவேயிருப்பார்கள் நம் மொழிகளையே பேசுவார்கள்'' என்று பதிலளித்தார்கள். நான், 'இந்த (மனிதர்களைச் சந்திக்கும்) நிலையை அடைந்தால் என்ன (செய்ய வேண்டுமென்று) எனக்குக் கட்டளையிடுகின்றீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள், 'நீ முஸ்லிம்களின் ஜமாஅத்தை (கூட்டமைப்பை)யும் அவர்களின் தலைவரையும் (இறுகப்) பற்றிக் கொள்'' என்று பதிலளித்தார்கள். அதற்கு நான், 'அவர்களுக்கு ஒரு கூட்டமைப்போ ஒரு தலைவரோ இல்லை (பல பிரிவுகளாகப் பிரிந்து கிடக்கிறார்கள்) என்றால் (என்ன செய்வது)?' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள், 'அந்தப் பிரிவுகள் அனைத்தையும்விட்டு (விலகி) ஒதுங்கிவிடு ஒரு மரத்தின் வேர் பாகத்தை பற்களால் நீ கவ்விப் பிடித்திருக்க நேர்ந்து, அதே நிலையில் மரணம் உன்னைத் தழுவிக் கொண்டாலும் சரி (எந்தப் பிரிவினரோடும் சேர்ந்துவிடாதே)'' என்று பதிலளித்தார்கள்.

## குழப்பவாதிகள் மற்றும் அநியாயக்காரர்களின் எண்ணிக்கையை அதிகரி(த்துக் காட்டக் காரணமாக இரு)ப்பது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 7085 அபுல் அஸ்வத் முஹம்மத் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

மதீனாவாசிகள் ஒரு படைப் பிரிவை அனுப்பிட வேண்டும் எனக் கட்டாயப்படுத்தப்பட்டனர். அதில் என் பெயரும் பதிவு செய்யப்பட்டது. அப்போது நான் (இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களின் முன்னாள் அடிமையான) இக்ரிமா(ரஹ்) அவர்களைச் சந்தித்தேன். அவர்களிடம் இது குறித்துத் தெரிவித்தேன். அவர்கள் என்னை வன்மையாகத் தடுத்தார்கள். பிறகு தமக்கு இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் (பின்வருமாறு) அறிவித்ததாகத் தெரிவித்தார்கள்.

(நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) சில முஸ்லிம்கள் இணைவைப்பாளர்களுடன் இருந்தனர். அவர்கள் (பத்ருப் போரில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கெதிராக இணைவைப்பாளர்களின் கூட்டத்தை அதிகப்படுத்தி(க் காட்டக் காரணமாக இருந்த)னர். (முஸ்லிம்கள் அணியிலிருந்து அவர்களை நோக்கி) எய்ப்படும் அம்பு செல்லும். அது அவர்களில் ஒருவரைத் தாக்கிக் கொன்றுவிடும். அல்லது (வாளால்) அடிவாங்கிப் பலியாவார். (இது தொடர்பாகவே) அல்லாஹ், 'தமக்குத்தாமே அநீதி இழைத்துக் கொண்டிருந்தவர்களின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும் போது..!"எனும் (திருக்குர்ஆன் 04:97 வது) வசனத்தை அருளினான்.

## ஒரு முஸ்லிம் தரம் தாழ்ந்த மக்களிடையே வாழநேரிடும்போது (எப்படி நடந்து கொள்ள வேண்டும்?)

ஹதீஸ் 7086 ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களுக்கு (நம்பகத்தன்மை தொடர்பாக) இரண்டு செய்திகள் கூறினார்கள். அவற்றில் ஒன்றை நான் (என் வாழ்நாளிலேயே) பார்த்து விட்டேன். மற்றொன்றை எதிர்பார்த்திருக்கிறேன்.

ஒரு செய்தி யாதெனில், (இயற்கையாகவே) மனிதர்களின் ஆழ்மனதில் ('அமானத்' எனும்) நம்பகத்தன்மை இடம்பிடித்தது. பின்னர் அவர்கள் குர்ஆனிலிருந்தும் (அதை) அறிந்து கொண்டார்கள். பிறகு (என்னுடைய வழியான) சுன்னாவிலிருக்கும் (அதை) அறிந்து கொண்டார்கள். (நபியவர்கள் கூறிய இதை நான் பார்த்துவிட்டேன்.)

இரண்டாவது செய்தி, நம்பகத்தன்மை அகற்றப்படுவது தொடர்பானதாகும். மனிதன் ஒருமுறை உறங்குவான். (உறக்கத்திலேயே) அவனுடைய உள்ளத்திலிருந்து நம்பகத்தன்மை (சிறிது) கைப்பற்றப்படும். அதையடுத்து அ(து அகற்றப்பட்ட) தன் அடையாளம் சிறு (கரும்) புள்ளி அளவுக்கு (அவனில்) தங்கிவிடும். பிறகு மீண்டும் ஒருமுறை அவன் உறங்குவான். அப்போது (மறுபடியும்) அது கைப்பற்றப்படும். இம்முறை அ(து அகற்றப்பட்ட)தன் அடையாளம் (கடின உழைப்பால் கையில் ஏற்படும்) காய்ப்பு அளவுக்கு (அவனில்) நிலைத்துவிடும். (இவ்வாறு முதலில்'நம்பகத்தன்மை' எனும் ஒளி உள்ளத்தில் ஏற்றப்பட்டுப் பிறகு சிறிது சிறிதாக அது அணைக்கப்படுவதானது) காலில் தீக்கங்கை உருட்டிவிட்டு, அதனால் கால் கொப்பளித்து உப்பி விடுவதைப் போன்றதாகும். பார்வையில் அது உப்பி பெரிதாகத் தெரியுமே தவிர, அதனுள் ஒன்றும் இராது.

பின்னர் காலையில் மக்கள் தங்களிடையே கொடுக்கல் வாங்கல் செய்துகொள்வார்கள். (ஆனால், அவர்களில்) யாருமே நம்பிக்கையைக் காப்பாற்ற எத்தனிக்கமாட்டார்கள். இன்னாருடைய மக்களில் நம்பிக்கையான ஒருவர் இருக்கிறார் என்று (தேடிக் கண்டுபிடித்து) சொல்லப்படும். (அளவுக்கு நம்பிக்கையாளர் அரிதாம்விடுவார்கள்). மேலும், ஒருவரைப்

பற்றி'அவரின் அறிவுதான் என்ன! அவரின் விவேகம் தான் என்ன! அவரின் வீரம் என்ன!"என்று (சிலாகித்துக்) கூறப்படும். ஆனால், அந்த மனிதரின் இதயத்தில் கடுகளவு கூட நம்பிக்கை (ஈமான்) இராது.

(அறிவிப்பாளர் ஹுதைஃபா(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:) என் மீது ஒரு காலம் வந்திருந்தது. அக்காலத்தில் நான் உங்களில் யாரிடம் கொடுக்கல் வாங்கல் செய்கிறேன் என்று பொருட்படுத்தியதில்லை. ஏனெனில், முஸ்லிமாக இருந்தால் இஸ்லாம் (என்னுடைய பொருளை அவரிடமிருந்து) என்னிடம் திருப்பித் தந்துவிடும். கிறிஸ்தவராயிருந்தால் அவருக்கான அதிகாரி என்னிடம் (என்னுடைய பொருளை) மீட்டுத் தந்துவிடுவார். ஆனால், இன்றோ நான் இன்னார் இன்னாரிடம் மட்டுமே கொடுக்கல் வாங்கல் செய்கிறேன்.

## குழப்பம் ஏற்பட்டுள்ளபோது கிராமத்திற்குக் குடிபெயர்தல்

ஹதீஸ் 7087 ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

நான் (ஒருமுறை ஹிஜாஸ் மாகாண ஆளுநர்) ஹஜ்ஜாஜ் இப்னு யூசுஃபிடம் சென்றேன். அவர்'இப்னுல் அக்வஃ! நீங்கள் (மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்த பின் அங்கிருந்து) உங்கள் குதிகால்களின் வழியே (கிராமத்திற்குத்) திரும்பிச் சென்றதன் மூலம் கிராமவாசியாக மாறிவிட்டீர்களா?' என்று கேட்டார். நான்,'இல்லை ஆயினும், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கிராமத்தில் வசிக்க எனக்கு அனுமதியளித்துள்ளார்கள்" என்று சொன்னேன்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) யஸீத் இப்னு அபீ உபைத்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்கள் கொல்லப்பட்டபோது ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்கள் கொல்லப்பட்டபோது ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்கள் (மதீனாவிலிருந்து) வெளியேறி'ரபதா' என்னுமிடத்திற்குச் சென்று அங்கு ஒரு பெண்ணை மணந்தார்கள். அப்பெண் மூலம் அவர்களுக்குப் பல குழந்தைகள் பிறந்தன. அங்கேயே வசித்துவந்த ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்கள், தாம் இறப்பதற்குச் சில நாள்கள் முன்புதான் (அங்கிருந்து திரும்பி வந்து) மதீனாவில் தங்கினார்கள்.

ஹதீஸ் 7088 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு முஸ்லிமின் செல்வங்களிலேயே ஆடு ஒன்றுதான் சிறந்த செல்வமாக மாறக்(கூடிய காலம் வரக்)கூடும். குழப்பங்களிலிருந்து தம் மார்க்க (விசுவாசத்)தைக் காப்பாற்றிக் கொள்ள அந்த ஆட்டை ஓட்டிக்கொண்டு அவர் மலை உச்சிக்கும் மழைதுளிகள் விழும் (கணவாய்கள், பள்ளத்தாக்குகள் போன்ற) இடங்களுக்கும் சென்று வாழ்வார்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

## குழப்பங்களிலிருந்து (இறைவனிடம்) பாதுகாப்புக் கோருவது.

ஹதீஸ் 7089 அனஸ்(ரலி) அறிவித்தார்.

நபித்தோழர்கள் (சிலர்) நபி(ஸல்) அவர்களிடம் (அவர்களுக்குப் பிடிக்காத) சில விஷயங்கள் குறித்து வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் சொற்பொழிவு மேடையின் மீதேறி,'(இன்று) நீங்கள் என்னிடம் எதைப் பற்றிக் கேட்டாலும் அதைப்பற்றி நான் உங்களுக்குத் தெளிவுபடுத்தாமல் இருக்கப் போவதில்லை" என்று (கோபத்துடன்) கூறினார்கள். உடனே நான் வலப் பக்கமும் இடப்பக்கமும் திரும்பிப் பார்க்கத் தலைப்பட்டபோது அங்கிருந்த ஒவ்வொருவரும் தம் ஆடையால் தலையைச் சுற்றிப் போர்த்தியவாறு அழுதுகொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர் பேசத் தொடங்கினார். அம்மனிதர்

(பிறருடன்) சண்டை சச்சரவு செய்யும்போது அவரின் தந்தையல்லாத மற்றொருவரின் மகன் என அழைக்கப்பட்டு வந்தார். எனவே அவர், 'அல்லாஹ்வின் நபியே! என் தந்தை யார்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'உன் தந்தை ஹுதாஃபா'' என்றார்கள்.

பிறகு உமர்(ரலி) அவர்கள்'நாங்கள் அல்லாஹ்வை இறைவனாகவும், இஸ்லாமை மார்க்கமாகவும், முஹம்மத்(ஸல்) அவர்களை இறைத்தூதராகவும் மனநிறைவுடன் ஏற்றுக் கொண்டோம். குழப்பங்களின் தீங்கிலிருந்து (எங்களை) பாதுகாக்கும்படி அல்லாஹ்விடம் கோருகிறோம்'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'நன்மையிலும் தீமையிலும் இன்றைய தினத்தைப் போன்று எந்த நாளையும் ஒருபோதும் நான் கண்டதில்லை. எனக்கு (இன்று) சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்டன. அவற்றை (மிஹ்ராபின்) இந்தச் சுவருக்கு அப்பால் கண்டேன்'' என்றார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) கத்தாதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இந்த நபிமொழி, 'இறைநம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைக் குறித்துக் கேட்காதீர்கள். அவை உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு மன வருத்தத்தை ஏற்படுத்தும்'' எனும் (திருக்குர்ஆன் 05:101 வது) இறைவசனத்தை ஓதும்போது நினைவு கூரப்படுவது வழக்கம்.

ஹதீஸ் 7090 கத்தாதா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ்(ரலி) அவர்கள் மக்களுக்கு நபி(ஸல்) அவர்களின் இந்த ஹதீஸை அறிவித்துவிட்டுப் (பின்வருமாறு) கூறினார்கள். அப்போது (அங்கிருந்த) ஒவ்வொருவரும் (நபியவர்களின் கோபத்தைக் கண்டு அஞ்சி) தம் ஆடையால் தலையைச் சுற்றிப் போர்த்தியவாறு அழுது கொண்டிருந்தார்கள். மேலும், குழப்பங்களின் தீங்கிலிருந்து பாதுகாப்புக் கோருகிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்'.

ஹதீஸ் 7091 கத்தாதா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (கேட்டு) மக்களுக்கு இந்த ஹதீஸை அறிவித்தார்கள். மேலும், 'குழப்பங்களின் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோரியவர்களாக'' என்றும் கூறினார்கள்.

## ''குழப்பம் கிழக்கிலிருந்து தோன்றும்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7092 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடையின் அருகில் நின்றுகொண்டு, (ம்ழக்குத் திசையைக் சுட்டிக் காட்டி)'குழப்பம் இங்குதான் தோன்றும் குழப்பம் இங்குதான் தோன்றும். 'ஷைத்தானின் கொம்பு' அல்லது'சூரியனின் கொம்பு' உதயமாகும் இடத்திலிருந்து' என்றார்கள்.

ஹதீஸ் 7093 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கிழக்கை நோக்கியபடி, 'அறிந்து கொள்ளுங்கள்! குழப்பம், ஷைத்தானின் கொம்பு உதயமாகும் இந்த இடத்திலிருந்து தோன்றும்'' என்று சொல்ல கேட்டேன்.

ஹதீஸ் 7094 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! எங்கள் ஷாம் நாட்டில் எங்களுக்கு சுபிட்சத்தை வழங்குவாயாக! இறைவா! எங்கள் யமன் நாட்டில் எங்களுக்கு சுபிட்சத்தை வழங்குவாயாக!"என்றார்கள்.

மக்கள், '(இராக் திசையில் அமைந்த) எங்கள் 'நஜ்த்' பகுதியிலும் (சுபிட்சம் வழங்கும்படி பிரார்த்தியுங்கள்)" என்று கேட்க, (மீண்டும்) நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! எங்கள் ஷாம் நாட்டில் சுபிட்சத்தை வழங்குவாயாக! எங்கள் யமன் நாட்டில் சுபிட்சத்தை வழங்குவாயாக!" என்றே பிரார்த்தித்தார்கள். மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! எங்கள் 'நஜ்த்' பகுதியிலும் (சுபிட்சம் வழங்கும்படி பிரார்த்தியுங்களேன்)" என்று (மீண்டும்) கேட்டனர். அப்போது நபி(ஸல்) அவர்கள், - மூன்றாவது முறையில் என்று நினைக்கிறேன் - அங்கு தான் நில நடுக்கங்களும் குழப்பங்களும் தோன்றும் அங்குதான் ஷைத்தானின் கொம்பு உதயமாகும் என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7095 ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் (மக்காவில் அரசியல் குழப்பம் நடந்து கொண்டிருந்தபோது) எங்களிடம் (ஒருநாள்) வந்தார்கள். அன்னார் எங்களுக்கு ஒரு நல்ல ஹதீஸை எடுத்துரைக்க வேண்டுமென நாங்கள் எதிர்பார்த்தோம். இதற்கிடையில் ஒருவர் அவர்களை நோக்கி விரைந்து சென்று, 'அபூ அப்திர் ரஹ்மானே! குழப்பத்தின்போது போர்புரிவது பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள். அல்லாஹ்வோ, 'குழப்பம் நீங்கும் வரை போரிடுங்கள்" என்று (திருக்குர்ஆன் 08:39 வது வசனத்தில்) கூறுகிறானோ!' எனக் கேட்டார்.

அதற்கு அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள், 'தாயற்றுப் போவாய்! (இந்த வசனத்தில் கூறப்பட்டுள்ள) 'குழப்பம்' என்னவென்று உனக்குத் தெரியுமா? முஹம்மத்(ஸல்) அவர்கள் இணைவைப்பாளர்களுடன் தாம் போரிட்டார்கள். இணைவைப்பாளர்களின் மார்க்கத்தில் இருப்பதுதான் குழப்பமே. ஆனால், (இன்று) ஆட்சியதிகாரத்திற்காக நீங்கள் (போரிட்டுக் கொள்வதைப் போன்று அது இருக்கவில்லை" என்று பதிலளித்தார்கள்.

## கடல் அலைபோன்று அடுக்கடுக்காய் வரும் குழப்பங்கள்.

கலஃப் இப்னு ஹவ்ஷப்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: குழப்பங்கள் தலைதூக்கும்போது (கவிஞர்) இம்ரஉல் கைஸ் உடைய இப்பாடல்களை மக்கள் விருப்பமுடன் மேற்கோள்காட்டுவது வழக்கம்.

போர் மூளும்போது,

அது ஓர் இளம் பெண்.

தன் கவர்ச்சியால்

பேதைகளை மயக்க

அவள் ஓடிவருகிறாள்.

போர்மூண்டு,

அதன் சுவாலைகள்

கொழுந்து விட்டெரியும் போது

எவரும் மணக்க முன்வராத

கிழட்டுப் பெண்ணாய்

அவள் ஓடிப்போகிறாள்.

கறுப்பு வெள்ளை முடி உடையவளாய்

ார்க்க சகிக்காத நிறத்தவளாய்

முத்தவோ முகரவோ முடியாதவளாய்

உருக்குலைந்தவளாய் போய்விடுகிறாள்.

ஹதீஸ் 7096 ஹுதைஃபா இப்னு அல்யமான் (ரலி) அறிவித்தார்.

நாங்கள் (ஒரு முறை கலீஃபா) உமர் (ரலி) அவர்கள் அருகில் அமர்ந்திருந்தபோது அவர்கள், 'உங்களில் யார் இனி தலை தூக்கவிருக்கும் (ஃபித்னா) குழப்பத்தைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் சொன்னதை நினைவில் வைத்திருக்கிறார்?' என்று கேட்டார்கள். நான், 'ஒரு மனிதன் தன் குடும்பத்தார் விஷயத்தில் (அவர்களின் மீது அளவு கடந்த பாசத்தை வைத்திருப்பதன் மூலமும்), தன்னுடைய செல்வம் விஷயத்தில் (அது இறைவனைப் பணிந்து வாழும் வாழ்க்கையிலிருந்து திசைதிருப்புதன் மூலமும்,) தன் அண்டை வீட்டார் விஷயத்தில் (அவர்களின் உரிமைகளில் குறைவைப்பதன் மூலமும்) ஃபித்னாவில் (-சோதனையில்) ஆழ்த்தப்படும்போது தொழுகை, தர்மம், நன்மை புரியும்படி கட்டளையிட்டு, தீமையிலிருந்து தடுத்தல் ஆகியன அதற்கான பரிகாரமாக அமையும்'' என்று (நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள் எனக்) கூறினேன். உமர் (ரலி) அவர்கள், 'நான் (சோதனை எனும் பொருள் கொண்ட ஃபித்னாவான) இதைப் பற்றிக் கேட்கவில்லை. கடல் அலையைப் போன்று அடுக்கடுக்காக ஏற்படக்கூடிய (நபியவர்களால் முன்னறிவிக்கப்பட்ட குழப்பம் எனும் பொருள் கொண்ட ஃபித்னா)வைப் பற்றியே கேட்கிறேன்'' என்றார்கள். நான், 'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. (உங்கள் ஆட்சியில் அவற்றில் ஏதும் தலைதூக்கப் போவதில்லை.) உங்களுக்கும் அதற்குமிடையே மூடப்பட்ட கதவொன்று உள்ளது'' என்று கூறினேன். உமர் (ரலி) அவர்கள், 'அந்தக் கதவு உடைக்கப்படுமா? அல்லது திறக்கப்படுமா?' என்று கேட்டார்கள். நான், 'இல்லை அது உடைக்கப்படும்'' என்று பதிலளித்தேன். அதற்கு உமர் (ரலி) அவர்கள், 'அப்படியானால் அது ஒருபோதும் மூடவேபடாது'' என்றார்கள். நான், 'ஆம் (சரிதான்)'' என்று சொன்னேன்.

(அறிவிப்பாளர் அபூ வாயில் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)

நாங்கள் ஹுதைஃபா (ரலி) அவர்களிடம், 'உமர் (ரலி) அவர்கள் அந்தக் கதவு எதுவென்று அறிந்திருந்தார்களா?' என்று கேட்டோம். ஹுதைஃபா (ரலி) அவர்கள், 'ஆம். பகலுக்கு முன் இரவு உண்டு என்பதை அறிவதைப் போன்று உமர் (ரலி) அவர்கள் அதை அறிந்திருந்தார்கள். ஏனெனில், பொய்கள் கலவாத செய்தியையே நான் அவருக்கு அறிவித்திருந்தேன்'' என்று பதிலளித்தார்கள். அந்தக் கதவு எதுவென்று ஹுதைஃபா (ரலி) அவர்களிடம் கேட்க நாங்கள் அஞ்சினோம். எனவே, அவர்களிடம் மஸ்ரூக் இப்னு அஜ்தஃ (ரஹ்) அவர்களைக் கேட்கச் சொன்னோம். அவர் அந்தக் கதவு எது என்று கேட்டதற்கு ஹுதைஃபா (ரலி) அவர்கள், 'உமர் (ரலி) அவர்கள்தாம் அந்தக் கதவு'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7097 அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் மதீனாவின் தோட்டங்களில் ஒன்றுக்குத் தம் இயற்கைக் கடனை நிறைவேற்றுவதற்காகச் சென்றார்கள். அவர்களுக்குப் பின்னாலேயே நான் சென்றேன். இறுதியில் (குபாவிற்கு அருகிலுள்ள 'பிஃரு அரீஸ்' எனும்) தோட்டத்திற்குள் நபி (ஸல்) அவர்கள் சென்றபோது நான் அதன் தலை வாசலில் அமர்ந்துகொண்டேன். நபியவர்கள் எனக்குக் கட்டளையிடாமலேயே 'இன்றைய தினம் நான் அவர்களின் வாயிற் காவலனாக இருப்பேன்'' என்று கூறிக்கொண்டேன். நபி (ஸல்) அவர்கள் சென்று தம் இயற்கைக் கடனை நிறைவேற்றிவிட்டு

(அங்கிருந்த) கிணற்றின் சுற்றுச் சுவரில் தம் கால்கள் இரண்டையும் திறந்து கிணற்றுக்குள் தொங்கவிட்டபடி அமர்ந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்கள் வந்து நபியவர்களிடம் செல்ல அன்னாரின் அனுமதி கேட்கும்படி சொன்னார்கள். நான், 'உங்களுக்காக நான் (நபியவர்களிடம்) அனுமதி கேட்கும் வரை நீங்கள் அப்படியே (இங்கே) இருங்கள்'' என்று கூறினேன். அவ்வாறே அவர்கள் (அவ்வாசலில்) நின்றுகொள்ள, நான் நபியவர்களிடம் சென்று, 'இறைத்தூதர் அவர்களே! (இதோ!) அபூ பக்ர்(ரலி) அவர்கள் (வந்து) அவர்கள், 'அவருக்கு அனுமதி அளியுங்கள். மேலும், அவர் சொர்க்கவாசி என்று நற்செய்தி கூறுங்கள்'' என்றார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு வலப்பக்கத்தில் வந்து தம் கால்கள் இரண்டையும் திறந்து கிணற்றுக்குள் அவற்றை தொங்கவிட்டபடி அமர்ந்துகொண்டார்கள். பிறகு உமர்(ரலி) அவர்கள் வந்தார்கள். அப்போது நான், 'இங்கேயே இருங்கள். உங்களுக்காக நான் நபி(ஸல்) அவர்களிடம் உள்ளே வர அனுமதி கேட்கிறேன்'' என்று கூறினேன். (நான் அவர்களுக்காக அனுமதி கேட்டபோது) நபி(ஸல்) அவர்கள், 'அவருக்கு அனுமதி அளியுங்கள் அவர் சொர்க்கவாசி என்று அவருக்கு நற்செய்தி சொல்லுங்கள்'' என்று (என்னிடம்) கூறினார்கள். உமர்(ரலி) அவர்கள் (உள்ளே) வந்து, நபி(ஸல்) அவர்களுக்கு இடப்பக்கம் தம் கால்களைத் திறந்து அந்தக் கிணற்றுக்குள் தொங்கவிட்டபடி அமர்ந்தார்கள். அந்தச் சுவர் நிரம்பிவிட்டது. அதில் (இனி யாரும்) அமர்வதற்கு இடம் இருக்கவில்லை.

பிறகு உஸ்மான்(ரலி) அவர்கள் வந்தார்கள். நான், 'நீங்கள் இங்கேயே இருங்கள் உங்களுக்காக நான் நபி(ஸல்) அவர்களிடம் அனுமதி கேட்க வருகிறேன்'' என்று சொன்னேன். (நான் உள்ளே சென்றபோது) நபி(ஸல்) அவர்கள், 'அவருக்கு அனுமதி அளியுங்கள் அவர் சொர்க்கவாசி என்று அவருக்கு நற்செய்தி கூறுங்கள். அத்துடன் அவருக்கு நேரவிருக்கும் சோதனையையும் கூறுங்கள்'' என்றார்கள். (அவ்வாறே நான் அனுமதி வழங்கி நற்செய்தி தெரிவித்தேன்.) உஸ்மான்(ரலி) அவர்கள் உள்ளே வந்து, ஏற்கெனவே அமர்ந்திருந்தவர்களுடன் அமர இடம் இல்லாததால் திரும்பிச் சென்று அவர்களுக்கு எதிரிலிருந்த அக்கிணற்றின் மற்றொரு சுற்றுச் சுவரில் தம் கால்களைத் திறந்து அவற்றை கிணற்றில் தொங்கவிட்டபடி அமர்ந்தார்கள்.

என் சகோதரர் ஒருவரை எதிர்பார்த்த படி அவர் (அங்கு) வர வேண்டும் என்று நான் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கலானேன்.

அறிவிப்பாளர் ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: நான், '(நபி(ஸல்) அவர்களும், அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி) ஆகியோரும் அடுத்தடுத்து அமர்ந்திருந்த இந்த நிலையும் அவர்களுக்கு எதிரே உஸ்மான்(ரலி) அவர்கள் அமர்ந்திருந்த நிலையும் தற்போது) அவர்களின் கப்றுகள் (மண்ணறைகள்) இங்கு ஒரே இடத்தில் அமைந்திருக்கும் நிலையையும் உஸ்மான்(ரலி) அவர்கள் பிரிந்து (ஜன்னத்துல் பகீஉ மையவாடிக்கு) சென்றுவிட்ட நிலையையும் குறிப்பதாக விளக்கம் கண்டேன்.

ஹதீஸ் 7098. அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உசாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களிடம், 'நீங்கள் இவரிடம் (உஸ்மான்(ரலி) அவர்களிடம் இந்த அரசியல் குழப்பங்கள் தொடர்பாகப்) பேசக் கூடாதா? (அவர்கள் உங்களுக்கு நெருக்கமானவர்கள் ஆயிற்றே!)'' என்று கேட்கப்பட்டது. அதற்கு உசாமா(ரலி) அவர்கள், 'நான் அவர்களிடம் (அரசியல் குழப்பம் குறித்துப் பேசுவதாயிருந்தால், கலகத்திற்குக்) கதவைத் திறந்து விடாமலேயே அவர்களிடம் (இரகசியமாகப்) பேசுகிறேன். (ஏனெனில், குழப்பத்தின்) கதவைத் திறக்கும் முதல் ஆள் நானாக இருக்க விரும்பவில்லை. மேலும், ஒருவர் இரண்டு

பேருக்குத் தலைவராக (ஆணையிடும் அதிகாரத்தில்) இருப்பதானால் அவரை'மக்களில் நீங்கள்தாம் சிறந்தவர்' என்று நான் சொல்லமாட்டேன். (அதுவும்) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து (ஒரு விஷயத்தை) நான் செவியுற்ற பிறகு (அவ்வாறு நான் சொல்லமாட்டேன்). இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: (மறுமை நாளில்) ஒருவர் கொண்டுவரப்பட்டு அவர் நரகத்தில் வீசப்படுவார். கழுதை தன்னுடைய செக்கைச் சுற்றி வருவதைப் போன்று அவர் நரகில் சுற்றிவருவார். அப்போது நரகவாசிகள் அவரைச் சுற்றி ஒன்றுகூடி,'இன்னாரே (உமக்கேன் இந்த நிலை?) நீர் (உலக வாழ்வின் போது) நற்செயல் புரியும்படி (மக்களுக்கு) கட்டளையிட்டு, தீமை புரிய வேண்டாம் என (அவர்களைத்) தடுத்துக் கொண்டிருக்(கும்) நற்பணி செய்து கொண்டிருக்)கவில்லையா?' என்று கேட்பார்கள். அதற்கு அந்த மனிதர்,'நற்செயல் புரியும்படி (மக்களுக்கு) நான் கட்டளையிட்டேன் ஆனால், அந்த நற்செயலை நான் செய்யவில்லை. தீமை புரிய வேண்டாம் என்று (மக்களை) நான் தடுத்தேன் ஆனால், அந்தத் தீமையை நானே செய்துவந்தேன்'' என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 7099 அபூ பக்ரா நுஃபைஉ இப்னு ஹாரிஸ்(ரலி) அறிவித்தார்.

ஜமல் போர் சமயத்தில் (ஆயிஷா(ரலி) அவர்களின் ஆதரவாளர்களுடன் சேர்ந்து கொண்டு நான் போரிட முற்பட்டபோது, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றிருந்த) ஒரு சொல் மூலம் அல்லாஹ் எனக்குப் பயனளித்தான்.

பாரசீகர்கள் கிஸ்ராவின் மகளைத் தங்களுக்கு அரசியாக்கிவிட்டார்கள் எனும் செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது, அவர்கள்'தம் விவகாரத்தை ஒரு பெண்ணிடம் (முழுமையாக) ஒப்படைத்த சமுதாயம் ஒருபோதும் வெல்லாது'' என்றார்கள். (இதுதான் எனக்குப் பயனளித்த நபி(ஸல்) அவர்களின் சொல்.)

ஹதீஸ் 7100 அபூ மர்யம் அப்துல்லாஹ் இப்னு ஸியாத் அல்அசதீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஜமல் போரின்போது) தல்ஹா(ரலி), ஸுபைர்(ரலி), ஆயிஷா(ரலி) ஆகியோர் (இராக்கிலுள்ள)'பஸ்ரா'வுக்குச் சென்றபோது அலீ(ரலி) அவர்கள், அம்மார் இப்னு யாசிர்(ரலி) அவர்களையும் ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்களையும் (மக்களைத் திரட்டுமாறு கூஃபாவுக்கு) அனுப்பிவைத்தார்கள். அவர்கள் இருவரும் எங்களிடம் கூஃபாவுக்கு வந்து சொற்பொழிவு மேடையில் (மிம்பர்) ஏறினர். ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடையில் அதன்மேல் தளத்தில் இருந்தார்கள். அம்மார்(ரலி) அவர்கள் ஹஸன்(ரலி) அவர்களுக்குக் கீழே நின்றிருந்தார்கள். நாங்கள் அவர்களிடம் ஒன்றுதிரண்டோம்.

அப்போது அம்மார்(ரலி) அவர்கள்,'ஆயிஷா(ரலி) அவர்கள் பஸ்ராவுக்குச் சென்றார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்கள் இவ்வுலம்லும் மறுமையிலும் உங்கள் நபியின் துணைவியாராவார்கள். (அதில் எந்தச் சந்தேகமும் இல்லை.) ஆனால், சுபிட்சமும் உயர்வும் உடைய அல்லாஹ், நீங்கள் அவனுக்குப் கீழ்ப்படிகிறீர்களா? அல்லது ஆயிஷாவுக்குக் கீழ்ப்படிகிறீர்களா? என்று (வெளிப்படையாக) அறிந்துகொள்வதற்காக உங்களைச் சோதிக்கிறான்'' என்று சொல்லக் கேட்டேன்.

ஹதீஸ் 7101. அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அம்மார் இப்னு யாசிர்(ரலி) அவர்கள் கூஃபாவின் (பள்ளிவாசல்) மிம்பரில் நின்று ஆயிஷா(ரலி) அவர்களைப் பற்றியும் (தம் ஆதரவாளர்களுடன் பஸ்ராவுக்கு) அவர்கள் மேற்கொண்ட பயணம் பற்றியும் குறிப்பிட்டுவிட்டு,'ஆயிஷா(ரலி) அவர்கள், இந்த உலம்லும் மறுமையிலும் உங்கள்

நபியின் துணைவியாராவார்கள். ஆனால் அவர் மூலம் நீங்கள் சோதனைக்குள்ளாக்கப் பட்டுள்ளீர்கள்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7102, ஹதீஸ் 7103, ஹதீஸ் 7104 அபூ வாயில் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஜமல் போரின்போது பஸ்ராவுக்குச் செல்லுமாறு) மக்களைத் தூண்டும்படி கூஃபாவாசிகளிடம் அம்மார் (ரலி) அவர்களை அலீ (ரலி) அவர்கள் அனுப்பியிருந்தார்கள். அப்போது அம்மாரைச் சந்திக்க அபூ மூஸா (ரலி) அவர்களும் அபூ மஸ்ஊத் (ரலி) அவர்களும் வந்தார்கள். அவர்களிருவரும் (அம்மாரிடம்) ’(ஆயிஷாவை எதிர்க்கும்) இந்த விஷயத்தில் நீங்கள் காட்டும் தீவிரத்தைத் தான் இஸ்லாத்தை ஏற்றதிலிருந்து நீங்கள் செய்தவற்றிலேயே எங்களுக்கு அறவே பிடிக்காத செயலாக நாங்கள் கருதுகிறோம்‘‘ என்றார்கள். அப்போது அம்மார் (ரலி) அவர்கள், ‘(அலீ (ரலி) அவர்களுடன் சேர்ந்து ஆயிஷா (ரலி) அவர்களுடன் சேர்ந்து ஆயிஷா (ரலி) அவர்களை எதிர்க்காமல்) இந்த விஷயத்தில் நீங்கள் காட்டும் தாமதத்தைத்தான் இஸ்லாத்தை ஏற்றதிலிருந்து நீங்கள் இருவரும் செய்தவற்றிலேயே எனக்கு அறவே பிடிக்காத செயலாக கருதுகிறேன்‘‘ என்றார்கள். பின்னர் அபூ மஸ்ஊத் (ரலி) அவர்கள் மற்ற இருவருக்கும் ஆளுக்கொரு அங்கியை மற்ற இருவருக்கும் ஆளுக்கொடு அங்கியை அணிவித்தார்கள். பிறகு அவர்கள் அனைவரும் பள்ளிவாசலுக்குச் சென்றார்கள்.

ஹதீஸ் 7105, ஹதீஸ் 7106, ஹதீஸ் 7107 அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அபூ மஸ்ஊத் (ரலி), அபூ மூஸா (ரலி) அம்மார் (ரலி) ஆகியோருடன் அமர்ந்திருந்தேன். அப்போது அபூ மஸ்ஊத் (ரலி) அவர்கள் (அம்மார் (ரலி) அவர்களிடம்) ’இப்போரில் உங்கள் (அணியிலுள்ள) தோழர்களில் யாரைப் பற்றி வேண்டுமானாலும் நான் நினைத்தால் குறை கூற முடியும் உங்களைத் தவிர நீங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டதிலிருந்து (ஆயிஷா (ரலி) அவர்களை எதிர்க்கும்) இந்த விஷயத்தில் நீங்கள் காட்டும் தீவிரத்தைப் போன்று வேறு எந்தப் பெருங் குறையையும் உங்களிடம் நான் காணவில்லை‘‘ என்றார்கள். அதற்கு அம்மார் (ரலி) அவர்கள், ‘அபூ மஸ்ஊத் அவர்களே! நீங்களும் உங்களுடைய இந்தத் தோழரும் நபி (ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டதிலிருந்து (ஆயிஷா (ரலி) அவர்களை எதிர்க்கும்) இந்த விஷயத்தில் நீங்களிருவரும் காட்டும் தாமதத்தைப் போன்று வேறு எந்தப் பெருங் குறையையும் உங்களிடம் நான் காணவில்லை‘‘ என்றார்கள்.

வசதியானவராய் இருந்த அபூ மஸ்ஊத் (ரலி) அவர்கள் அப்போது ’பணியாளரே! இரண்டு அங்கிகளைக் கொண்டுவா! என்று உத்தரவிட்டு, (அவை கொண்டுவரப்பட்டவுடன் அவ்விரண்டில் ஒன்றை அபூ மூஸா (ரலி) அவர்களுக்கும் மற்றொன்றை அம்மார் (ரலி) அவர்களுக்கும் கொடுத்தார்கள். பிறகு, ‘இதை அணிந்து கொண்டு இருவரும் ஜுமுஆ தொழுகைக்குச் செல்லுங்கள்‘‘ என்றார்கள்.

## அல்லாஹ் ஒரு சமுதாயத்தாருக்கு வேதனை வழங்கும்போது...

ஹதீஸ் 7108. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒரு சமுதாயத்தின் மீது அல்லாஹ் வேதனையை இறக்கும்போது அதிலுள்ளவர்கள் அனைவரையும் அந்த வேதனை தாக்கும் பிறகு அவர்கள் தம் செயல்களுக்கு (மறுமையில்) எழுப்பப்படுவார்கள்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## (தம் பேரர்) ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்கள் குறித்து நபி(ஸல்) அவர்கள் கூறியது:

என்னுடைய இந்த (புதல்வியில்) புதல்வர் தலைவராவார். இவர் மூலம் இரண்டு முஸ்லீம் குழுவினருக்கிடையில் அல்லாஹ் சமாதானம் செய்து வைக்கக் கூடும்.

ஹதீஸ் 7109. சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(அபூ ஜஅஃபர்) மன்சூர் ஆட்சிக் காலத்தில் இராக்கிலுள்ள) கூஃபாவில் அபூ மூஸா(ரஹ்) அவர்களை சந்தித்தேன். அன்னார் (கூஃபாவின் நீதிபதியான) அப்துல்லாஹ் இப்னு ஷுப்ருமா(ரஹ்) அவர்களிடம் வந்திருக்கிறார்கள். அபூ மூஸா(ரஹ்) அவர்கள்'என்னை (கூஃபாவின் ஆளுநர்) ஈசா இப்னு மூஸாவிடம் அழைத்துச் செல்லுங்கள். அவருக்கு நான் உபதேசம் செய்ய வேண்டும்'' என்று இப்னு ஷுப்ருமா விஷயத்தில் (ஏதும் செய்துவிடுவார் என்று) இப்னு ஷுப்ருமா பயந்துவிட்டார் போலும் அதனால் (அபூ மூஸாவின் கோரிக்கையை ஏற்று) அவர் செயல்படவில்லை. பின்னர் ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்கள் (பின்வருமாறு) அறிவித்ததாக அபூ மூஸா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

ஹஸன் இப்னு அலீ(ரலி) அவர்கள் பெரும் படையணிகளுடன் முஆவியா(ரலி) அவர்களை நோக்கிப் பயணமானார்கள். (இதை அறிந்த முஆவியா(ரலி) அவர்களின் ஆலோசகர்) அம்ர் இப்னு அல்ஆஸ்(ரலி) அவர்கள் முஆவியா(ரலி) அவர்களிடம், 'தன் எதிரணியைப் புறமுதுகிட்டு ஓடச் செய்யாத வரையில் பின்வாங்காத பெரும் படையணியை நான் பார்க்கிறேன்'' என்று குறிப்பிட்டார்கள். முஆவியா(ரலி) அவர்கள், '(அவர்கள் கொல்லப்பட்டால்) முஸ்லிம்களின் (வருங்கலாச்) சந்ததிகளுக்கு (பொறுப்பேற்க) யார் இருக்கிறார்கள்?' என்று கேட்க, அம்ர் இப்னு அல்ஆஸ்(ரலி) அவர்கள், 'நான் (இருக்கிறேன்)'' என்று பதிலளித்தார்கள். அப்போது அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்களும்ம அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா(ரலி) அவர்களும், 'நாங்கள் ஹஸன்(ரலி) அவர்களைச் சந்தித்து அவர்களிடம் சமாதானம் செய்துகொள்ளும் படி கூறுகிறோம்'' என்றார்கள்.

தொடர்ந்து ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்கள் (சொற்பொழிவு மேடை மீது நின்று) உரையாற்றிக் கொண்டிருந்தபோது ஹஸன்(ரலி) அவர்கள் வந்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள், 'என்னுடைய இந்த (புதல்வியின்) புதல்வர் தலைவராவார். முஸ்லிம்களின் இரண்டு குழுவினரிடையே இவர் வாயிலாக அல்லாஹ் சமாதானம் செய்துவைப்பான்'' என்று கூறினார்கள் என அபூ பக்ரா(ரலி) அவர்கள் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 7110. உசாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அடிமையான ஹர்மலா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உசாமா(ரலி) அவர்கள் என்னை அலீ(ரலி) அவர்களிடம் அனுப்பி, 'இப்போது அவர் (அலீ(ரலி) உன்னிடம் உம் தோழர் (உசாமா, ஜமல் மற்றும் ஸிஃப்பீன் போர்களில் எனக்கு ஆதரவளிக்காமல்) பின்தங்கியதற்குக் காரணம் என்ன? என்று கேட்பார். நீங்கள் சிங்கத்தின் தாடைக்குள் இருந்தாலும் உங்களுடன் இருப்பதையே நான் விரும்புவேன் ஆனால், (முஸ்லிம்களிடையே நடக்கும்) இந்தச் சண்டையில் எனக்கு உடன்பாடில்லை என்று நான் சொன்னார்கள். (நானும் அவ்வாறே அலீ(ரலி) அவர்கள் (போர்ச் செல்வத்திலிருந்து) எனக்கு எதுவும் கொடுக்கவில்லை. எனவே, நான் ஹஸன்(ரலி), ஹுசைன்(ரலி) மற்றும் அப்துல்லாஹ்

இப்னு ஜஅஃபர்(ரலி) ஆகியோருடம் சென்றேன். அவர்கள் என்னுடைய வாகனத்தில் அது (தாங்க முடிந்த அளவிற்கு) எனக்காக (அன்பளிப்புப் பொருள்களை) ஏற்றியனுப்பினார்கள்.

## ஒருவர் ஒரு கூட்டத்தாரிடம் ஒன்றைச் சொல்லிவிட்டுப் பிறகு வெளியே சென்று அதற்கு மாறாகப் பேசினால்...?

ஹதீஸ் 7111. நாபிஉ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

மதீனாவாசிகள் யஸீத் இப்னு முஆவியாவுக்க அளித்த விசுவாசப் பிரமாணத்தை விலக்கிக் கொண்டபோது, இப்னு உமர்(ரலி) அவர்கள் தம் அபிமானிகளையும் தம் மக்களையும் ஒன்று திரட்டி,'மோசடி (நம்பிக்கைத் துரோகம்) செய்பவன் ஒவ்வொருவருக்கும் (உலகில்) அவன் செய்த மோசடியை வெளிச்சமிட்டு காட்டுவதற்காக வெளிச்சமிட்டுக் காட்டுவதற்காக மறுமைநாளில் கொடியொன்று நடப்படும் என்று நபி(ஸல்) அவர்கள் சொல்லக் கேட்டுள்ளேன். அல்லாஹ் மற்றும் அவரின் தூதர் வழிமுறைப்படி நாம் மனிதருக்கு (யஸீதுக்கு) விசுவாசப் பிராமணம் செய்துகொடுத்துள்ளோம். அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் வழிமுறைப்படி ஒரு மனிதருக்கு விசுவாசப்பிரமாணம் செய்துகொடுத்துள்ளோம். அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் வழிமுறைப்படி ஒரு மனிதருக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்துவிட்டுப் பிறகு அவருக்கே எதிராகப் போரிடுவதை விடப் பெரிய மோசடி எதையும் நான் அறியவில்லை. (என் சகாக்களான) உங்களில் எவரும் யஸீதுக்கு செய்து கொடுத்த விசுவாசப் பிராமணத்தை விலக்கிக் கொண்டதாகவோ, இந்த ஆட்சியதிகாரத்தில் வேறெவருக்காவது விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்ததாகவோ நான் அறிந்தால், அதுவே அவருக்கும் எனக்கும் இடையே உள்ள உறவை துண்டிக்கக் கூடியதாக இருக்கும்'' என்றார்கள்.

ஹதீஸ் 7112 அபுல் மின்ஹால் இப்னு சலாமா (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு ஸியாத் (பஸ்ராவிலிருந்து வெளியேறி ஷாம் நாட்டுக்கு வர, அங்கு) மர்வான் இப்னி ஹகம் ஷாம் நாட்டில் (ம்ளர்ச்சியை ஆரம்பித்து) இருந்தபோது, மேலும் (அதே நேரத்தில்) மக்காவில் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரலி) அவர்களும் பஸ்ராவில் காரிஜிய்யாக்களும் கிளர்ச்சியில் அபூ பர்ஸா அல்அஸ்லமீ(ரலி) அவர்களிடம் சென்றேன். அன்னார் பேரீச்சங் கழியாலான உப்பரிகை ஒன்றில் அமர்ந்திருக்க அவர்களின் இல்லத்தினுள் நுழைந்து அவர்களிடம் நாங்கள் அமர்ந்துகொண்டோம். அப்போது என் தந்தை (ஸலமா) அபூ பர்ஸா(ரலி) அவர்களுடன் தகவல் பரிமாறிக் கொள்ளும் எண்ணத்தில் பேசத் தொடங்கினார்கள்.'அபூ பர்ஸா! மக்கள் எந்த விஷயத்தில் சிக்கிக் கொண்டுவிட்டார்கள் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா?' என்று என் தந்தை கேட்டார்கள். அப்போது அபூ பர்ஸா(ரலி) அவர்கள் பேசி நான் கேட்ட முதல் விஷயம் அவர்கள் பேசி நான் கேட்ட முதல் விஷயம் இதுதான். (அன்னார் கூறினார்கள்:) குறைஷிக் குடும்பங்கள் சிலவற்றின் மீது நான் கோபம் கொண்டவனாய் மாறியதற்கு அல்லாஹ்விடம் நற்பலனை எதிர்பார்க்கிறேன். (குறைஷியரிடம் கூறினேன்:) அரபுகளே! நீங்கள் இழிவு, பொருளாதாரக் குறைவு மற்றும் வழிகேடு ஆகிய (மோசமான) நிலைகளில் இருந்தீர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அல்லாஹ், இஸ்லாத்தின் மூலமாகவும் முஹம்மத்(ஸல்) அவர்கள் மூலமாகவும் உங்களைக் காப்பாற்றினான். அதன் விளைவாக நீங்கள் காண்கிற இந்த (கண்ணியம், வளமிக்க வாழ்வு, நேர்வழி ஆகிய நல்ல) நிலைகளை அடைந்தீர்கள். இந்த உலக(மோக)ம் எத்தகையதென்றால், உங்களுக்கிடையே அது சீர்கேட்டை(யும் குழப்பத்தையும்) விளைவித்துவிட்டது. ஷாம் நாட்டிலிருக்கிறவர் (மர்வான் இப்னி ஹகம்), அல்லாஹ்வின் மீதாணையாக! உலக (ஆதாய)த்திற்காகவே போரிடுகிறார். இங்கு பஸ்ராவில்) உங்கள் முன்னே இருக்கிறார்களே அவர்களும் (காரிஜிய்யாக்கள்), அல்லாஹ்வின் மீதாணையாக! உலக (ஆதாய)த்திற்காகவே போரிடுகிறார்கள். மக்காவில்

இருக்கிறாரே அவரும் (அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்) உலக (ஆதாய)த்திற்காகவே போரிடுகிறார்.

ஹதீஸ் 7113 ஹுதைஃபா இப்னு அல்யமான் (ரலி) அறிவித்தார்.

இன்றிருக்கும் நயவஞ்சகர்கள் நபி (ஸல்) அவர்களின் காலத்திலிருந்த நயவஞ்சகர்களை விட மோசமானவர்கள் ஆவர். (ஏனெனில்) அன்று அவர்கள் இரகசியமாகச் செயல்பட்டு வந்தார்கள். இன்றோ இவர்கள் பம்ரங்கமாகச் செயல்படுகிறார்கள்.

ஹதீஸ் 7114 ஹுதைஃபா இப்னு அல்யமான் (ரலி) அறிவித்தார்.

நயவஞ்சகம் என்பதெல்லாம் (மக்கள் சிலரிடம்) நபி (ஸல்) அவர்களின் காலத்தில் தான் இருந்தது. இன்றோ, இறைநம்பிக்கைக்குப் பின் இறைமறுப்பு மட்டுமே உள்ளது.

## மண்ணறை (கப்று) வாசிகளைக் கண்டு (உயிர்வாழ்வோர்) பொறாமைப்படும் நிலை உருவாகாத வரை மறுமை நாள் வராது.

ஹதீஸ் 7115 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒருவர் மற்றொரு மனிதரின் மண்ணறையை (கப்ரை)க் கடந்து செல்லும்போது, 'அந்தோ! நான் இவரின் இடத்தில் (மண்ணறைக்குள்) இருக்கக் கூடாதா?' என்று (ஏக்கத்துடன்) சொல்லும் காலம் வராத வரை மறுமை நாள் வராது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## சிலைகள் வணங்கப்படும் அளவிற்குக் காலம் மாறிவிடும்.

ஹதீஸ் 7116 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தவ்ஸ் குலப்பெண்களின் புட்டங்கள் 'துல்கலஸா' கடவுள் சிலையைச் சுற்றி அசையாத வரை மறுமை நாள் வராது. 'துல்கலஸா' என்பது அறியாமைக் காலத்தில் தவ்ஸ் குலத்தார் வழிபட்டு வந்த ஒரு சிலையாகும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7117 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

'கஹ்தான்' குலத்திலிருந்து ஒருவர் தோன்றி, தம் கைத்தடியால் மக்களை ஓட்டிச் செல்லாத வரை மறுமை நாள் வராது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## நெருப்பு கிளம்புவது

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மறுமை நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம், மக்களைக் கிழக்கிலிருந்து (விரட்டியபடி) மேற்கு நோக்கி ஒன்று திரட்டிச் செல்லும் ஒரு நெருப்பேயாகும்.

என அனஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7118 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஹிஜாஸ் பகுதியிலிருந்து ஒரு நெருப்பு கிளம்பி, (ஷாம் நாட்டின்) புஸ்ரா (ஹவ்ரான்) எனும் ஊரிலுள்ள ஒட்டகங்களின் பிடரிகளைப் பிரகாசிக்கச் செய்யாத வரை மறுமை நாள் வராது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7119 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மேற்காசியாவில் பாயும்) யூப்ரட்டீஸ் நதியானது தங்கப் புதையல் ஒன்றை வெளிப்படுத்த உள்ளது. அப்போது அங்கிருப்பவர்கள் அதிலிருந்து எதையும் எடுத்து விட வேண்டாம்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உக்பா இப்னு காலித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த ஹதீஸ் மற்றொரு வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனால், அதில் 'தங்க மலை ஒன்றை வெளிப்படுத்தவுள்ளது'' என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 7120 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இப்போதே) தானதர்மம் செய்து கொள்ளுங்கள். ஏனெனில், மக்களுக்கு ஒரு காலம் வரும் அப்போது ஒருவர் தம் தர்மப் பொருளை எடுத்துக்கொண்டு (அதைப் பெறுபவரைத் தேடி) நடந்து செல்வார். ஆனால், அதை ஏற்பவர் எவரையும் காணமாட்டார்.

என ஹாரிஸா இப்னு வஹ்ப் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7121. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இருபெரும் குழுக்களிடையே பெரும் போர் ஏற்பட்டு அவை ஒன்றோடொன்று சண்டையிட்டுக் கொள்ளாத வரை மறுமை நாள் வராது. அவ்விரு குழுக்கள் முன்வைக்கும் மாதமும் ஒன்றாகவே இருக்கும். மேலும், ஏறத்தாழ முப்பது பெரும் பொய்யர்களான தஜ்ஜால்கள் (உலகில்) தோன்றாத வரை மறுமை நாள் வராது. அவர்களில் ஒவ்வொருவனும் தன்னை இறைத்தூதர் என்று வாதிடுவான். மேலும், (கல்வியாளர்களின் மறைவால்) கல்வி கைப்பற்றப்பட்டு, நில நடுக்கங்கள் அதிகமாம், காலம் சுருங்கி, குழப்பங்கள் தோன்றி, கொலை பெருகாத வரை மறுமைநாள் வராது. மேலும், உங்களிடையே செல்வம் பெரும்க் கொழிக்காத வரை மறுமைநாள் வராது. அப்போது செல்வன் தன்னுடைய தர்மத்தை ஏற்பவர் யாரேனும் கிடைக்கமாட்டாரா? என்று கவலைப்படுவான். அவன் அதை எடுத்து ஒருவருக்குக் கொடுக்கமுனையும்போது, இது தமக்குத் தேவையில்லை என்று அவர் சொல்லி விடுவார். மேலும், மக்கள் கட்டடங்களை (போட்டி போட்டுக்கொண்டு) உயரமாகக் கட்டாத வரை மறுமை நாள் வராது. மேலும், ஒரு மனிதன் மற்றொரு மனிதனின் மண்ணறையைக் கடந்துசெல்லும்போது, 'அந்தோ! நான் இவனுடைய இடத்தில் (மண்ணறைக்குள்) இருக்கக் கூடாதா?' என்று (ஏக்கத்துடன்) கூறாத வரை மறுமை நாள் வராது. சூரியன் மேற்குத் திசையிலிருந்து உதயமாகாத வரை மறுமைநாள் வராது. அவ்வாறு உதயமாகும்போது அதைக்கானும் மக்கள் அனைவரும் இறைநம்பிக்கை கொள்வார்கள். ஆனால், அதற்கு முன்பே இறைநம்பிக்கை கொள்ளாத, அல்லது இறை நம்பிக்கை கொண்டும் (அதை மெய்ப்பிக்கும் வகையில்) நற்செயல் எதுவும் புரியாத எந்த மனிதனும் அப்போது நம்பிக்கை கொள்வது அவனுக்குப் பயனளிக்காத நேரமாக அது இருக்கும்.

இரண்டு பேர் தங்களுக்கு முன்னே தங்கள் துணிகளை (வியாபாரத்திற்காக) விரித்து வைப்பார்கள். அந்தத் துணியை வியாபாரம் செய்திருக்கவுமாட்டார்கள் அதைச் சுருட்டி வைத்திருக்கவுமாட்டார்கள் அதற்குள் மறுமை நாள் வந்து விடும். ஒருவர் தம் ஒட்டகத்தின் பாலைக் (கறந்து எடுத்துக்) கொண்டு அப்போதுதான் திரும்பியிருப்பார் அதை அவர் அருந்தியிருக்கவுமாட்டார். அதற்குள் மறுமை நாள் வந்துவிடும். ஒருவர் தம் தடாகத்தை அப்போதுதான் செப்பனிட்டிருப்பார் அதிலிருந்து அவர் (தம் கால்நடைகளுக்கு) நீர்

புகட்டியிருக்கவுமாட்டார். அதற்குள் மறுமை நாள் வந்துவிடும். ஒருவர்த மது உணவைத் தம் வாயருகே கொண்டு சென்றிருப்பார் ஆனால், இன்னும் அதைச் சாப்பிட்டிருக்கமாட்டார் அதற்குள் மறுமைநாள் வந்துவிடும். (அந்த அளவுக்குத் திடீரென உலக அழிவுநாள் ஏற்படும்.)

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## தஜ்ஜால் பற்றிய குறிப்பு

ஹதீஸ் 7122 முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் தஜ்ஜாலைக் குறித்து நான் வினவியதைவிட அதிகமாக வேறெவரும் வினவியதில்லை. மேலும், அவர்கள் என்னிடம், 'அவனால் உமக்கென்ன தீங்கு?' என்று கேட்டார்கள். நான், '(அச்சம் தான்.) ஏனெனில், தஜ்ஜாலுடன் மலையளவு ரொட்டியும் நதியளவு நீரும் இருக்கும் என்று மக்கள் கூறுகிறார்கள்'' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், 'இது என்ன (பிரமாதம்)? (அவன் மூலம் அல்லாஹ் எதையெல்லாம் காட்ட விருக்கிறானோ) அதைவிட இது அல்லாஹ்வுக்கு மிகவும் சுலபமானதே'' என்றார்கள்.

ஹதீஸ் 7123 நாஃபிஉ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு உமர் (ரலி) அவர்கள், '(தஜ்ஜால்) (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்று வலக் கண் குருடானவனாக இருப்பான்'' என்றார்கள்.

இதை அவர்கள் நபி (ஸல்) அவர்களிடமிருந்து கேட்டுச் சொன்னதாகவே கருதுகிறேன். 58

ஹதீஸ் 7124 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

தஜ்ஜால் வருவான் வந்து மதீனாவின் ஓர் ஓரத்தில் இறங்குவான். பிறகு மதீனா மும்முறை குலுங்கும். உடனே ஒவ்வோர் இறைமறுப்பாளனும் நயவஞ்சகனும் அவனை நோக்கிப் புறப்படுவார்கள்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7125 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மஸீஹுத் தஜ்ஜாலைக் குறித்த அச்சம் மதீனாவிற்குள் நுழையாது. அந்த நாளில் மதீனாவுக்கு ஏழு நுழைவாயில்கள் இருக்கம். ஒவ்வொரு நுழைவாயிலின் மீதும் இரண்டு வானவர்கள் (காவல் காப்பதற்காக நியமிக்கப்பட்டு) இருப்பார்கள்.

என அபூ பக்ரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7126 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மதீனாவிற்குள் மஸீஹுத் தஜ்ஜால் குறித்த அச்சம் புகாது. அந்நாளில் மதீனாவிற்கு ஏழு நுழைவாயில்கள் இருக்கும். ஒவ்வொரு நுழைவாயிலும் இரண்டு வானவர்கள் (காவல் காப்பதற்காக நியமிக்கப்பட்டு) இருப்பார்கள்.

என அபூ பக்ரா (ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெற்றிருப்பவர்களில் ஒருவரான இப்ராஹீம் இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் (இராக்கிலுள்ள) பஸ்ரா சென்றேன். (அங்கு) அபூ பக்ரா (ரலி) அவர்கள் இந்த ஹதீஸை எனக்கு அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7127 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களிடையே எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்ப போற்றிய பின் தஜ்ஜாலைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது'நான் உங்களை அவனைப் பற்றி அச்சுறுத்தி எச்சரிக்கிறேன். இறைத்தூதர் எவரும் அவனைக் குறித்து தம் சமுதாயத்தாரை எச்சரிக்காமல் இருந்ததில்லை. ஆயினும், எந்த இறைத்தூதரும் அவனைக் குறித்து தம் சமுதாயத்தாருக்குத் தெரிவிக்காத ஒரு தகவலை நான் உங்களுக்குச் சொல்வேன்: அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான் நிச்சயமாக அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7128 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஒரு நாள்) நான் உறங்கிக் கொண்டிருந்தபோது நான் கஅபாவைச் சுற்றிவந்து கொண்டிருப்பதாக (கனவில்) கண்டேன். அப்போது மாநிறமான படிந்த தலை முடியுடைய மனிதர் ஒருவரின் தலையிலிருந்து'தண்ணீர் சொட்டிக் கொண்டிருக்க' அல்லது'சிந்திக் கொண்டிருக்க'க் கண்டேன்.'இவர் யார்?' என்று கேட்டேன்.'மர்யமின் மகன் (ஈசா)'' என்றார்கள். பிறகு நான் திரும்பிப் பார்த்தபடியே சென்றபோது (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சை போன்று ஒரு கண் குருடான, சுருட்டைத் தலைமுடியுடைய, சிவப்பான, பருமனான மனிதன் ஒருவன் அங்கிருந்தான்.'இவன்தான் தஜ்ஜால்,'மக்களில் இவனுக்கு உருவ அமைப்பில் ஒப்பானவன்'இப்னு கத்தன்' எனும் குஸாஆ குலத்து மனிதன் ஆவான்'' என்றார்கள்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7129 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் தொழுகையில் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோருவதை கேட்டிருக்கிறேன்.

ஹதீஸ் 7130 ஹுதைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

தஜ்ஜாலைப் பற்றி நபி(ஸல்) அவர்கள் குறிப்பிடும்போது,'அவனுடன் நீரும் நெருப்பும் இருக்கும். அவனுடன் உள்ள நெருப்பு (உண்மையில்) குளிர்ந்த நீராகவும், அவனுடன் உள்ள நீர் (உண்மையில்) நெருப்பாகவும் இருக்கும்'' என்றார்கள்.

அபூ மஸ்வூத்(ரலி) அவர்களும்,'நான் இந்த ஹதீஸை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றிருக்கிறேன்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7131 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவனால் அனுப்பி வைக்கப்பெற்ற எந்த ஓர் இறைத்தூதரும் தம் சமுதாயத்தாரை பெரும் பொய்யனான ஒற்றைக் கண்ணன் (தஜ்ஜால்) குறித்து எச்சரிக்காமல் இருந்ததில்லை. அறிந்துகொள்ளுங்கள்: அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான். (ஆனால்,) நிச்சயமாக, உங்களுடைய இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்லன். அந்தப் பொய்யனுடைய இரண்டு கண்களுக்கிடையே'காஃபிர்' (இறை மறுப்பாளன்) என்று எழுதப்பட்டிருக்கும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

இதே கருத்தில் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களும் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அறிவித்துள்ளனர்.

## தஜ்ஜால் மதீனாவிற்குள் நுழையமாட்டான்.

ஹதீஸ் 7132 அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்:

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு நாள் தஜ்ஜாலைக் குறித்து நீண்ட ஹதீஸ் ஒன்றை அறிவித்தார்கள். அவனைப் பற்றி எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் அறிவித்த இவற்றில் இவையும் அடங்கும்:

மதீனாவின் தெருக்களில் நுழைவது தடை செய்யப்பட்டிருக்கும் நிலையில் தஜ்ஜால் வருவான். மதீனாவையடுத்து (ஷாம் நாட்டுத் திசையில்) உள்ள உவர் நிலம் ஒன்றில் அவன் தங்குவான். அந்த நாளில்'மக்களிலேயே சிறந்தவரான ஒருவர்' அல்லது'மக்களிலேயே சிறந்தவர்களில் ஒருவர்' அவனிடம் புறப்பட்டுச் சென்று,'எவனுடைய செய்தியை இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு முன்னறிவிப்புச் செய்தார்களோ அந்த தஜ்ஜால் நீதான் என்று நான் உறுதிகூறுகிறேன்'' என்று கூறுவார். அப்போது தஜ்ஜால்,'நான் இவரைக் கொன்று பிறகு உயிராக்கிவிட்டால் அப்போதுமா (நான் இறைவன் தான் எனும்) விஷயத்தில் சந்தேகம் கொள்வீர்கள்?' என்று (தம்முடன் உள்ளவர்களிடம்) கேட்பான். மக்கள்'இல்லை'' என்று பதிலளிப்பார்கள். உடனே அவன் அம்மனிதரைக் கொன்று பிறகு உயிராக்கிவிடுவான். உடனே, அந்த மனிதர்,'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் இன்று உன்னை அறிந்துகொண்டதை விட நன்றாக வேறு எப்போதும் அறிந்து கொண்டதில்லை'' என்று சொல்வார். உடனே தஜ்ஜால் அந்த மனிதரைக் கொன்றுவிட விரும்புவான். ஆனால், அவரின் மீது அவனுக்கு ஆதிக்கம் வழங்கப்படாது.

ஹதீஸ் 7133 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மதீனாவின் தெருக்களில் வானவர்கள் (காவலுக்கு) இருப்பார்கள். அதில் கொள்ளை நோய் நுழையாது தஜ்ஜாலும் நுழைய மாட்டான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7134 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மதீனா நகருக்கு தஜ்ஜால் வருவான். அதை வானவர்கள் காவல் காத்துக் கொண்டிருப்பதைக் கண்பான். எனவே, அதை தஜ்ஜால் நெருங்கமாட்டான் அல்லாஹ் நாடினால் கொள்ளைநோயும் அணுகாது.

என அனஸ் (ரலி) அறிவித்தார்

## யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தார்

ஹதீஸ் 7135 ஸைனப் பின்த் ஜஹ்ஷ் (ரலி) அறிவித்தார்.

ஒரு நாள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் நடுக்கத்துடன் என்னிடம் வந்து,'வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை நெருங்கிவிட்ட ஒரு தீமையின் காரணத்தால் அரபுகளுக்குக் கேடு நேரவிருக்கிறது. யஃஜூஜ், மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவரிலிருந்து இந்த அளவிற்கு இன்று திறக்கப்பட்டுள்ளது'' என்று சொல்லி, தம் கட்டை விரலையும் அதற்கடுத்த விரலையும் வளையமிட்டுக் காட்டினார்கள். நான்,'இறைத்தூதர் அவர்களே! எங்களிடையே நல்லவர்கள் இருக்க, நாங்கள் அழிந்துபோவோமா?' என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,'ஆம் தீமை பெருகிவிடும்போது'' என்றார்கள்.

ஹதீஸ் 7136 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

யஃஜூஜ் மற்றும் மஃஜூஜ் கூட்டத்தாரின் தடுப்புச் சுவர் இந்த அளவிற்குத் திறக்கப்படுகின்றது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான வுஹைப் இப்னு காலித் (ரஹ்) அவர்கள் (அரபு எண்) தொண்ணூறு என்பதைப் போன்று (விரல்களை) மடித்துக் காட்டினார்கள்.

## அத்தியாயம் 93 நீதியும் நிர்வாகமும்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

**"அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள் உங்களில் பொறுப்பு(ம் அதிகாரமும்) உடையோருக்கும் கீழ்ப்படியுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 04:59 வது) இறைவசனம்.**

ஹதீஸ் 7137 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்குக் கீழ்ப்படிந்தவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தவராவார். எனக்கு மாறு செய்தவர் அல்லாஹ்வுக்கு மாறு செய்தவராவார். என்னால் நியமிக்கப்பட்ட தலைவருக்குக் கீழ்ப்படிந்தவர் எனக்குக் கீழ்ப்படிந்தவராவார். என்னால் நியமிக்கப்பட்ட தலைவருக்கு மாறு செய்தவர் எனக்கு மாறு செய்தவராவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7138 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நினைவில் கொள்க! நீங்கள் ஒவ்வொரு வரும் பொறுப்பாளியே. உங்களில் ஒவ்வொருவரும் தத்தம் பொறுப்பிலுள்ளவை பற்றி (மறுமையில்) விசாரிக்கப்படுவீர்கள். ஆட்சித் தலைவர் மக்களின் பொறுப்பாளராவார். அவர் தம் குடிமக்கள் குறித்து விசாரிக்கப்படுவார். ஆண், தன் குடும்பத்தாருக்குப் பொறுப்பாளன் ஆவான். அவன், தன் பொறுப்புக்குட்பட்டவர்கள் குறித்து விசாரிக்கப்படுவான். பெண், தன் கணவனின் வீட்டாருக்கும், அவனுடைய குழந்தைக்கும் பொறுப்பாளி ஆவாள். அவள் அவர்கள் குறித்து விசாரிக்கப்படுவாள். ஒருவரின் பணியாள் தன் எசமானின் செல்வத்திற்குப் பொறுப்பாளியாவான். அவன் அது குறித்து விசாரிக்கப்படுவான். நினைவில் கொள்க! உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளியே! உங்களில் ஒவ்வொருவரும் தத்தம் பொறுப்புக்குட்பட்டவை குறித்து விசாரிக்கப்படுவீர்கள்.

**ஆட்சித் தலைவர்கள் குறைஷியராய் இருப்பார்கள்.**

ஹதீஸ் 7139 முஹம்மத் இப்னு ஜுபைர் இப்னி முத்யிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் குறைஷியரின் தூதுக் குழுவில் ஒருவனாக முஆவியா(ரலி) அவர்களிடம் இருந்தபோது அவர்களுக்கு, அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள், 'விரைவில் கஹ்தான் குலத்திலிருந்து அரசர் ஒருவர் தோன்றுவார்' என்று அறிவிப்பதாகச் செய்தி எட்டியது. உடனே அவர்கள் கோபம் கொண்டு எழுந்து நின்று அல்லாஹ்வை அவனுடைய தகுதிக்கேற்ப போற்றிப் புகழ்ந்துவிட்டுக் கூறினார்கள்.

இறைவனை துதித்த பின் கூறுகிறேன்: உங்களில் சில பேர் அல்லாஹ்வின் வேதத்திலும் இல்லாத, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து அறிவிக்கவும் படாத செய்திகளைச் சொல்கிறார்கள் என்று எனக்குத் தகவல் கிடைத்துள்ளது. அவர்கள் உங்களிடையேயுள்ள அறிவீனர்கள் ஆவர். நீங்கள் உங்களை வழிதவறச் செய்துகிற வெற்று நம்பிக்கைகளை வளர்த்துக்கொள்ள வேண்டாமென உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள்'குறைஷியரிடையே தான் இந்த ஆட்சி அதிகாரம் இருந்துவரும். அவர்களைப் பகைத்துக் கொள்ளும் எவரையும் அல்லாஹ் முகம் குப்புறக் கவிழ்க்காமல் விடமாட்டான். அவர்கள் மார்க்கத்தை நிலைநாட்டிவரும் வரை இந்நிலை நீடிக்கும்'' என்றார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 7140 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இந்த ஆட்சியதிகாரம் குறைஷியரிடையே தான் இருந்துவரும் அவர்களில் இருவர் எஞ்சியிருக்கும் வரை.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

## இறைச்சட்டத்தின்படி தீர்ப்பளிப்பவருக்குக் கிடைக்கும் பிரதிபலன்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்.

அல்லாஹ் அருளிய (வேதச் சட்டத்)தின் படி தீர்ப்பளிக்காதவர்களே பாவிகள். (திருக்குர்ஆன் 05:47)

ஹதீஸ் 7141 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு பண்புகளில் தவிர வேறு எதிலும் பொறாமை கொள்ளாகாது. ஒருவர் தமக்கு இறைவன் அளித்த செல்வத்தை அறப்பணியில் அர்ப்பணித்தல். மற்றொருவர் தமக்கு இறைவன் அளித்த ஞானத்தால் (மக்களின் பிரச்சினைகளுக்குத்) அதைக் கற்பித்துக்கொண்டும் இருத்தல்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

## இறைவனுக்கு மாறு செய்வதாக அமையாத வரை ஆட்சித் தலைவரின் சொல்லைக் கேட்டுக் கீழ்ப்படிவது (அவசியமாகும்).

ஹதீஸ் 7142 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உலர்ந்த திராட்சை போன்ற (சுருங்கிய) தலையுடைய அபிசீனிய (கறுப்பு நிற) அடிமையொருவர் உங்களுக்குத் தலைவராக ஆக்கப்பட்டாலும் (அவரின் சொல்லைக்) கேளுங்கள் (அவருக்குக்) கீழ்ப்படியுங்கள்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7143 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

தம் (ஆட்சித்) தலைவரிடம் (மார்க்க விஷயத்தில் குறை) எதையேனும் கண்டு அதை வெறுப்பவர் பொறுமையைக் கடைப்பிடிக்கட்டும். ஏனெனில், ஒருவர் (இஸ்லாமியக்) கட்டமைப்பிலிருந்து ஒரு சாண் அளவுக்குப் பிரிந்து இறந்தாலும் அவர் அறியாமைக் கால மரணத்தையே தழுவுகிறார்.

என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7144 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைவனுக்கு) மாறு செய்யும்படி கட்டளையிடப்படாத வரை, ஒரு முஸ்லிம் தமக்கு விருப்பமான விஷயத்திலும் விருப்பமில்லாத விஷயத்திலும் (தலைமையின் கட்டளையைச்) செவியேற்பதும் (அதற்குக்) கீழ்ப்படிவது கடமையாகும். (இறைவனுக்கு) மாறு செய்யும்படி கட்டளையிடப்பட்டால் (அதைச்) செவியேற்பதோ (அதற்குக்) கட்டுப்படுவதோ கூடாது.

ஹதீஸ் 7145 அலீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு படைப்பிரிவை அனுப்பி, அவர்களுக்கு அன்சாரிகளில் ஒருவரைத் தளபதியாக்கி, அவருக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படி படைவீரர்களுக்கு உத்தரவிட்டார்கள். அந்த

அன்சாரி (ஒரு கட்டத்தில்) படைவீரர்களின் மீது கோபம் கொண்டு, 'நீங்கள் எனக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடவில்லையா?' என்று கேட்டார். அவர்கள், 'ஆம்'' என்றனர். அவர், 'விறகைச் சேகரித்து நெருப்பை மூட்டி அதில் புகுந்து விடும்படி உங்களுக்கு நான் உத்தரவிடுகிறேன்'' என்றார். அவ்வாறே அவர்கள் விறகைச் சேகரித்து நெப்பை மூட்டினர். அதில் நுழைய நினைத்தபோது ஒருவரையொருவர் பார்த்தபடி நின்று கொண்டனர். அவர்களில் ஒருவர், '(நரக) நெருப்பிலிருந்து தப்பிக்கத்தானே நாம் நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றினோம் அவ்வாறிருக்க, அதில் நாம் நுழைய வேண்டுமா?' என்று கேட்டார். இதற்கிடையே நெருப்பும் அணைந்தது அவரின் கோபமும் தணிந்தது. பிறகு நபி(ஸல்) அவர்களிடம் இச்செய்தி தெரிவிக்கப்பட்டது. அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அதில் மட்டும் அவர்கள் புகுந்திருந்தால் அதிலிருந்து ஒருபோதும் வெளியேறிருக்கமாட்டார்கள் கீழ்ப்படிதல் என்பதெல்லாம் நன்மையில் தான்'' என்றார்கள்.

## ஆட்சியதிகாரத்தை (விரும்பிக்) கேட்காதவருக்கு (அது வழங்கப்பட்டால்) அதற்காக அல்லாஹ் உதவுவான்.

ஹதீஸ் 7146 அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்), 'அப்துர் ரஹ்மானே! ஆட்சிக் பொறுப்பை (நீங்களாக)க் கேட்காதீர்கள். ஏனெனில், நீங்கள் கேட்டு அது உங்களுக்கு அளிக்கப்பட்டால் அதோடு நீங்கள் (தனியாக) விடப்படுவீர்கள். கேட்காமல் உங்களுக்கு அது அளிக்கப்பட்டால் அது தொடர்பாக உங்களுக்கு (அல்லாஹ்வின்) உதவி கிடைக்கும். நீங்கள் ஒரு சத்தியம் செய்து, அது அல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாக நீங்கள் கருதினால் உங்களின் சத்தியத்(தை முறித்துவிட்டு முறித்த)தற்கான பரிகாரத்தைச் செய்துவிடுங்கள். சிறந்தது எதுவோ அதைச் செயல்படுத்துங்கள்'' என்றார்கள்.

## ஆட்சியதிகாரத்தைக் கேட்டுப் பெறுபவர் அதோடு (தனியாக) விடப்படுவார்.

ஹதீஸ் 7147 அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (என்னிடம்), 'அப்துர் ரஹ்மான் இப்னு சமுரா! ஆட்சித் தலைமையை (நீங்களாக)க் கேட்காதீர்கள். கேட்டு அது உங்களுக்குக் கொடுக்கப்பட்டால் அதோடு (தனியாக) விடப்படுவீர்கள். (இறையுதவி உங்களுக்குக் கிடைக்காது. நீங்களாகக்) கேட்காமல் அது உங்களுக்குக் கொடுக்கப்பட்டால் அது தொடர்பாக உங்களுக்கு (இறைவனின்) உதவி கிடைக்கும். நீங்கள் ஒரு சத்தியம் செய்து, அது அல்லாத வேறொன்றை அதைவிடச் சிறந்ததாக நீங்கள் கருதினால், சிறந்தது எதுவோ அதைச் செய்துவிட்டு, உங்களின் சத்தியத்(தை முறித்த)தற்காகப் பரிகாரம் செய்துவிடுங்கள்'' என்று கூறினார்கள்.

## ஆட்சியதிகாரத்தை அடைய ஆசைப்படுவது வெறுக்கப்பட்டதாகும்.

ஹதீஸ் 7148 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் ஆட்சிப் பதவியை அடைய பேராசைப்படுகின்றீர்கள். ஆனால், மறுமை நாளில் அதற்காக வருத்தப்படுவீர்கள். பாலூட்டுபவை (தாம் சுகங்)களிலேயே பதவி(ப் பால்) தான் இன்பமானது. பாலை மறக்க வைப்ப(தன் துன்பத்)திலேயே பதவி(ப் பாலை நிறுத்துவது)தான் மோசமானது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 7149 அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அறிவித்தார்.

நானும் என் சமுதாயத்தாரில் இரண்டு பேரும் நபி (ஸல்) அவர்களிடம் சென்றோம். (என்னுடன் வந்த) அவ்விருவரில் ஒருவர், 'எங்களுக்குப் பதவி தாருங்கள், இறைத்தூதர் அவர்களே!" என்று கேட்டார். மற்றொருவரும் அவ்வாறே கேட்டார்.

நபி (ஸல்) அவர்கள், 'கேட்பவருக்கும் ஆசைப்படுபவருக்கும் நாம் இதை (-பதவியை) வழங்கமாட்டோம்'' என்றார்கள்.

## குடிமக்களின் பொறுப்பு அளிக்கப்பெற்ற ஒருவர், அவர்களுக்கு நலம் நாடவில்லை என்றால்...?

ஹதீஸ் 7150 ஹஸன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(நபித் தோழர்) மஅகில் இப்னு யஸார் (ரலி) அவர்கள் இறப்பதற்கு முன் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அன்னாரை (ச் சந்தித்து) நலம் விசாரிப்பதற்காக (அன்றைய பஸ்ரா நகர ஆட்சியர்) உபைதுல்லாஹ் இப்னு ஸியாத் சென்றார். அவரிடம் மஅகில் (ரலி) அவர்கள் 'நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து கேட்ட செய்தி ஒன்றை உமக்கு அறிவிக்கிறேன். நபி (ஸல்) அவர்கள், 'ஓர் அடியானுக்குக் குடிமக்களின் பொறுப்பை அல்லாஹ் வழங்கியிருக்க, அவன் அவர்களின் நலனைக் காக்கத் தவறினால், சொர்க்கத்தின் வாடையைக் கூட அவன் பெறமாட்டான்' என்று சொல்ல கேட்டேன்'' எனக் கூறினார்கள்.

ஹதீஸ் 7151 ஹஸன் அல்பஸ்ரீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் மஅகில் இப்னு யஸார் (ரலி) அவர்களை நலம் விசாரிக்கச் சென்றோம். அப்போது (பஸ்ராவின் ஆட்சியர்) உபைதுல்லாஹ் இப்னு ஸியாத் உள்ளே வந்தார். அவரிடம் மஅகில் (ரலி) அவர்கள், இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்ற செய்தி ஒன்றை உமக்கு அறிவிக்கிறேன் என்று சொல்லிவிட்டு (ப் பின்வருமாறு) கூறினார்கள்: 'முஸ்லிம் குடிமக்களின் நிர்வாகப் பொறுப்பை ஏற்கும் ஒருவர் அவர்களுக்கு மோசடி செய்த நிலையில் இறந்துவிடுவாரானால், சொர்க்கத்தை அவருக்கு அல்லாஹ் தடை செய்துவிடுகிறான்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## (மக்களை) சிரமப்படுத்துகிறவரை அல்லாஹ் சிரமத்திற்குள்ளாக்குவான்.

ஹதீஸ் 7152 தரீஃப் அபீ தமீமா இப்னு முஜாலித் அல்ஹுஜைமீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அவர்கள், ஸஃப்வான் இப்னு முஹ்ரிஸ் (ரஹ்) அவர்களுக்கும் அவர்களின் தோழர்களுக்கும் உபதேசம் செய்துகொண்டிருந்த இடத்தில் நான் இருந்தேன். அப்போது ஸஃப்வானும் அவர்களின் தோழர்களும், 'நீங்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து (ஹதீஸ்) எதையேனும் செவியுற்றீர்களா?' என்று கேட்க ஜுன்தப் (ரலி) அவர்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூற கேட்டேன் என்றார்கள்:

விளம்பரத்திற்காக நற்செயல் புரிகிறவரை (அவரின் நோக்கத்தை) அல்லாஹ் மறுமைநாளில் விளம்பரப்படுத்துவான் 15 (மக்களைச்) சிரமப்படுத்துகிறவரை அல்லாஹ் மறுமைநாளில் சிரமத்திற்குள்ளாக்குவான்.

அப்போது நண்பர்கள்'எங்களுக்கு உபதேசம் செய்யுங்கள்'' என்று கேட்க, ஜுன்தப்(ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: (இறந்த பிறகு) மனிதனின் உறுப்புகளிலேயே முதல்முதலாக (அழும்) துர்நாற்றமெடுப்பது அவனுடைய வயிறுதான். எனவே, (அனுமதிக்கப்பட்ட) நல்ல உணவை மட்டுமே உண்ண சக்திபடைத்தவர் அவ்வாறே செய்யட்டும். (அநியாயமாகத்) தம்மால் சிந்தப்பட்ட கையளவு இரத்தம், தாம் சொர்க்கம் செல்வதிலிருந்து தடுக்காமல் இருக்கும்படி செய்ய முடிந்தவர் அவ்வாறே செய்யட்டும்.

(ஃபர்பரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)

நான் அபூ அப்தில்லாஹ் (புகாரீ - ரஹ் அவர்களிடம்,'நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன் என்று சொல்பவர் யார்? ஜுன்தப்(ரலி) அவர்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆம் ஜுன்தப்(ரலி) அவர்கள் தாம்'' என்று பதிலளித்தார்கள்.

## சாலையில் தீர்ப்பு வழங்குவதும் மார்க்க விளக்கம் அளிப்பதும்.

(நீதிபதி) யஹ்யா இப்னு யஅமர்(ரஹ்) அவர்கள் சாலையில் தீர்ப்பளித்தார்கள். ஷஅபீ (ரஹ்) அவர்கள் தங்களின் வீட்டின் வாசலில் தீர்ப்பளித்தார்கள்.

ஹதீஸ் 7153 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நானும் நபி(ஸல்) அவர்களும் பள்ளிவாசலிலிருந்து புறப்பட்டுக்கொண்டிருந்தபோது பள்ளிவாசலின் முற்றத்தருகே எங்களை ஒருவர் சந்தித்து,'இறைத்தூதர் அவர்களே! மறுமைநாள் எப்போது வரும்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'நீ அதற்காக என்ன முன்னேற்பாடு செய்து வைத்திருக்கிறாய்?' என்று கேட்டார்கள். உடனே அம்மனிதர் அடங்கிப் போனவரைப் போன்று காணப்பட்டார். பிறகு,'இறைத்தூதர் அவர்களே! நான் அதற்கு முன்னேற்பாடாகப் பெரிய அளவில் நோன்போ தொழுகையோ தானதர்மங்களோ செய்துவைத்திருக்கவில்லை. ஆயினும், நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நேசிக்கிறேன்'' என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள்,'நீ யாரை நேசிக்கிறாயோ அவருடன் (மறுமையில்) இருப்பாய்'' என்று கூறினார்கள்.

## நபி(ஸல்) அவர்களுக்கு வாயிற்காவலர் இருந்ததில்லை.

ஹதீஸ் 7154 ஸாபித் அல்புனானீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் தம் வீட்டாரில் ஒரு பெண்மணியிடம்,'இன்ன பெண்ணை உனக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். அப்பெண்மணி,'ஆம் (தெரியும்)'' என்று கூறினார். அனஸ்(ரலி) கூறினார்: அவள் ஒரு மண்ணறை அருகே அழுதுகொண்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் அவளைக் கடந்து சென்றார்கள். அப்போது,'அல்லாஹ்வுக்கு அஞ்சிக்கொள்! பொறுமையாக இரு'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். அப்பெண்,'என்னைவிட்டு விலகிச் செல்வீராக. எனக்கேற்பட்ட துன்பம் உமக்கேற்படவில்லை. (எனவேதான் இப்படிப் பேசுகிறீர்)'' என்று சொன்னாள். நபி(ஸல்) அவர்கள் (பேசாமல்) அவளைக் கடந்து சென்றார்கள். அப்போது ஒருவர் அவ்வழியே சென்றார். அவர்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உன்னிடம் என்ன சொன்னார்கள்?' என்று கேட்டார். அப்பெண்,'எனக்கு அவர் யாரென்றும் தெரியாது' எனக் கூறினாள். அம்மனிதர்,'அவர்கள்தாம் இறைத்தூதர்(ஸல்)'' என்று சொல்ல அவள், நபி(ஸல்) அவர்களின் வீட்டு வாசலுக்குச் சென்றாள். அங்கு அவள் வாயிற்காவலர் யாரையும் காணவில்லை. எனவே அவள்,'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் யாரென்று நான் அறியவில்லை'' என்று சொன்னாள். நபி(ஸல்) அவர்கள்,'பொறுமை என்பது துன்பம் ஏற்பட்ட முதல் கட்டத்தில் கைக்கொள்வதேயாகும்'' என்றார்கள்.

## நீதிபதி தமக்கு மேலுள்ள ஆட்சியாளரின் (சிறப்பு) அனுமதி பெறாமலேயே உரிய குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்கலாம்.

ஹதீஸ் 7155 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(அன்சாரிகளில் ஒருவரான) கைஸ் இப்னு ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு முன்னால் (அவர்களின் அவையில்) ஆட்சித் தலைவருக்கு ஒரு காவல்துறை அதிகாரியைப் போன்று செயல்பட்டு வந்தார்கள்.

ஹதீஸ் 7156 அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் என்னை (யமன் நாட்டிற்கு நீதி மற்றும் நிர்வாக அதிகாரியாக) அனுப்பினார்கள். என்னைத் தொடர்ந்து முஆத்(ரலி) அவர்களையும் அனுப்பி வைத்தார்கள்.

ஹதீஸ் 7157 (தொடர்ந்து) அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

(யூதராயிருந்த) ஒருவர் இஸ்லாத்தை ஏற்ற பின்பு யூதராக மாறிவிட்டார். அந்த மனிதர் என்னிடம் இருந்தபோது முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்கள் வந்தார்கள். 'இவருக்கு என்ன?' என்று முஆத் கேட்டார்கள். நான், 'இவர் இஸ்லாத்தை ஏற்ற பிறகு யூதராகி விட்டார்'' என்று சொன்னேன். முஆத்(ரலி) அவர்கள், 'நான் இவருக்கு மரண தண்டனை அளிக்காதவரை அமரமாட்டேன். இதுதான் அல்லாஹ் மற்றும் அவனுடைய தூதரின் தீர்ப்பாகும்'' என்றார்கள்.

## நீதிபதி கோபமாக இருக்கும்போது தீர்ப்போ மார்க்க விளக்கமோ அளிக்கலாமா?

ஹதீஸ் 7158 அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ரா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(என் தந்தை) அபூ பக்ரா(ரலி) அவர்கள் தம் புதல்(வரும் என் சகோதரருமான உபைதுல்லாஹ் என்ப)வருக்குக் கடிதம் எழுதினார்கள். -அவர் (ஈரான் - ஆப்கன் எல்லையிலிருந்த) சிஜிஸ்தான் பகுதியில் (நீதிபதியாக) இருந்தார். 'நீ கோபமாக இருக்கும்போது இருவரிடையே தீர்ப்பளிக்க வேண்டாம். ஏனெனில், நபி(ஸல்) அவர்கள், நீதிபதி எவரும் கோபமாக இருக்கும்போது இருவருக்கிடையே தீர்ப்பளிக்கவேண்டாம் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்'' (என்று அக்கடிதத்தில் எழுதினார்கள்).

ஹதீஸ் 7159 அபூ மஸ்வூத் அல்அன்சாரி(ரலி) அறிவித்தார்.

ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! இன்ன மனிதர் தொழுகையை எங்களுக்கு நீண்ட நேரம் தொழுகை நடத்துவதால் அதிகாலை(க் கூட்டு)த் தொழுகைக்கு வராமல் நான் தாமதித்துவிடுகிறேன்'' என்றார். நபி(ஸல்) அவர்கள் அன்று ஆற்றிய உரையின்போது கோபப்பட்டதைவிடக் கடுமையாகக் கோபப்பட்டு நான் ஒருபோதும் கண்டதில்லை. பிறகு அவர்கள், 'மக்களே! (வணக்க வழிபாடுகளில்) வெறுப்பூட்டுபவர்களும் உங்களில் உள்ளனர். எனவே, உங்களில் யார் மக்களுக்குத் தொழுகை நடத்தினாலும் அவர் சுருக்கமாகத் தொழுகை நடத்தட்டும். ஏனெனில், மக்களில் முதியோரும் பலவீனரும் அலுவல் உடையோரும் உள்ளனர்'' என்றார்கள்.

ஹதீஸ் 7160 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

என் மனைவி மாதவிடாயில் இருந்தபோது, அவளை நான் மணவிலக்கு (தலாக்) செய்துவிட்டேன். இதை (என் தந்தை) உமர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் சொல்லிவிட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அது குறித்துக் கோபமடைந்தார்கள். பிறகு,'அவர் தம் மனைவியைத் திரும்ப அழைத்துக்கொள்ளட்டும். பின்னர் அவள் மாதவிடாயிலிருந்து தூய்மையடைந்து, அடுத்து மீண்டும் அவளுக்கு மாதவிடாய் ஏற்பட்டுப் பின்னர் அதிலிருந்து அவள் தூய்மையடையும் வரை அவளைத் தம்மிடமே வைத்திருக்கட்டும். பிறகு அவளை மணவிலக்குச் செய்தே தீர வேண்டும் என்று அவருக்குத் தோன்றினால் அவளை மணவிலக்குச் செய்துவிடட்டும்'' என்றார்கள்.

## மக்களின் உரிமைகள் தொடர்பாக நீதிபதி தம் சொந்த அறிவால் தீர்ப்பளித்து செல்லும் ஆனால், சந்தேகமும் அவதூறும் கிளம்பும் என்ற அச்சம் அவருக்கு இருக்கலாகாது.

நபி(ஸல்) அவர்கள், ஹிந்த் பின்த் உத்பா(ரலி) அவர்களிடம் கூறியதைப் போன்று: உனக்கும் உன் குழந்தைக்கும் போதுமானதை நியாமான அளவுக்கு நீ எடுத்துக்கொள்.

(மக்களிடையே) பிரபலமாக உள்ள விஷயங்களில் தான் இது செல்லும்.

ஹதீஸ் 7161 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) ஹிந்த் பின்த் உத்பா இப்னு ரபீஆ(ரலி) அவர்கள் வந்து,'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்) பூமியின் முதுகுமிலுள்ள வேறெந்த வீட்டார் இழிவடைவதையும் விட உங்கள் வீட்டார் இழிவடைதே எனக்கு மிகவும் விருப்பமானதாக இருந்து வந்தது. (நான் இஸ்லாத்தை ஏற்ற பிறகு) இன்று பூமியின் முதுகும்லுள்ள வேறெந்த வீட்டார் கண்ணியம் அடைவதையும் விட உங்கள் வீட்டார் கண்ணியம் அடைவதே எனக்கு மிகவும் விருப்பமானதாக மாறிவிட்டது'' என்று கூறிவிட்டுப் பிறகு,'(என் கணவர்) அபூ சுஃப்யான் கருமியான மனிதர். அவருக்கரிய (செல்வத்)திலிருந்து (அவருக்குத் தெரியாமல்) எங்கள் குழந்தைகளுக்கு நான் உணவளித்தால் அது என்மீது குற்றமாகுமா?' என்று கேட்டார் நபி(ஸல்) அவர்கள் அவரிடம்,'நியாயமான அளவுக்கு (எடுத்து) அவர்களுக்கு உண்ணக் கொடுப்பதால் உன் மீது குற்றமேதும் வராது'' என்று பதிலளித்தார்கள்.

## முத்திரையிடப் பெற்ற கடிதத்திற்கு (அது இன்னாரின் கடிதம் தான் என்று) சாட்சியமளிப்பதும், அதில் எது செல்லும்? அல்லது செல்லாது? என்பதும், ஆட்சியாளர் தம் அதிகாரிகளுக்கு எழுதும் கடிதமும், ஒரு நீதிபதி மற்றொரு நீதிபதிக்கு எழுதும் கடிதமும்.

(அறிஞர் பெரு) மக்களில் சிலர்,'குற்றவியல் தண்டனைச் சட்டங்கள் தவிர மற்ற விஷயங்களில் (நீதிபதிக்கு ஆலோசனை கூறி) ஆட்சியாளர் கடிதம் எழுதலாம்'' என்று கூறினர். பிறகு அவர்களே,'தவறுதலாக நடந்துவிடும் கொலை விஷயத்தில் மட்டுமே இப்படி ஆலோசனை கூறி ஆட்சியாளர் நீதிபதிக்குக்) கடிதம் எழுதுவது செல்லும்'' என்று கூறுகிறார்கள். ஏனெனில், இது அவர்களைப் பொறுத்த வரை (இழப்பீடு வழங்கவேண்டிய) பொருள் சம்பந்தப்பட்ட விஷயம்தான். (ஆனால், இந்தக் கருத்து தவறானதாகும்.) ஏனென்றால், இது பொருள் சம்பந்தப்பட்ட பிரச்சினையாக மாறுவதெல்லாம் கொலை நிரூபணமான பின்புதான். எனவே, (ஆரம்பக் கட்டத்தில்,) தவறுதலாக நடந்த கொலையானாலும் வேண்டுமென்றே செய்யப்பட்ட கொலையானாலும் இரண்டும் ஒன்றே.

உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் குற்றவியல் தண்டனைகள் தொடர்பாகத் தம் ஆளுநருக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள்.

உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் குற்றவியல் தண்டனைகள் தொடர்பாகத் தம் ஆளுநருக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள். உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்களும் உடைக்கப்பட்ட ஒரு பல் தொடர்பான வழக்கில் (தனி மனிதரின் சாட்சியத்தை ஏற்கலாம் என்று) தம் ஆளுநருக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள்.

இப்ராஹீம் அந்நகஈ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: ஒரு நீதிபதி மற்றொரு நீதிபதிக்கு (ஆலோசனைகள் கூறி) கடிதம் எழுதுவது செல்லும் எந்த நீதிபதிக்குக் கடிதம் எழுதப்பட்டதோ அவர் கடிதத்தையும் முத்திரையையும் (உண்மையானவை என) அறிந்திருந்தால் மட்டுமே செல்லும். ஷஅபீ (ரஹ்) அவர்கள் நீதிபதியிடமிருந்து கடிதத்தில் உள்ளவற்றை செயல்படுத்திவந்தார்கள். இப்னு உமர்(ரலி) அவர்களிடமிருந்து இவ்வாறே அறிவிக்கப்படுகின்றது.

முஆவியா இப்னு அப்தில் கரீம் அஸ்ஸகஃபீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் பஸ்ரா நீதிபதி அப்துல் மலிக் இப்னு யஅலா(ரஹ்) அவர்களையும், இயாஸ் இப்னு முஆவியா(ரஹ்), ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்), ஸுமாமா இப்னு அப்தில்லாஹ் இப்னி அனஸ்(ரஹ்), பிலால் இப்னு அபீ புர்தா(ரஹ்), அப்துல்லாஹ் இப்னு புரைதா அல்அஸ்லமீ(ரஹ்), ஆமிர் இப்னு அபீ தா(ரஹ்), அப்பாத் இப்னு மன்ஸூர்(ரஹ்) ஆகியோரைத் கண்டுள்ளேன். அவர்கள்'சாட்சிகள் ஆஜராகாமலேயே நீதிபதிகளின் கடிதங்களை (விசாரணை முடிவுகளை) ஆதாரமாகக் கொள்ளலாம்' என அனுமதித்துள்ளனர்.'இக்கடிதம் போலியானது' என யாருக்கெதிராகக் கடிதம் வந்தோ அவர் (-எதிரி) கூறினால்,'அதிலிருந்து வெளியேறும் வழியைப் பார்' என்று அவரிடம் சொல்லப்படும். இப்னு அபீ லைலா(ரஹ்) அவர்களும் சவ்வார் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்களும்தாம் முதன்முதலில் நீதிபதியின் கடிதத்திற்கு (-இது நீதிபதியின் கடிதம்தான் என்பதற்கு) ஆதாரத்தைக் கேட்டவர்களாவர்.

உபைதுல்லாஹ் இப்னு முஹ்ரிஸ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: பஸ்ரா நீதிபதியான மூஸா இப்னு அனஸ்(ரஹ்) அவர்களிடமிருந்து கடிதமொன்றைக் கொண்டுவந்தேன். நான் அன்னாரிடம் எனக்குக் கூஃபாவில் உள்ள இன்னார் இவ்வளவு தர வேண்டியுள்ளது என்று ஆதாராம் சமர்ப்பித்திருந்தேன். நான் அ(ந்தக் கடிதத்)தை (கூஃபா நீதிபதி) காசிம் இப்னு அப்திர் ரஹ்மான்(ரஹ்) அவர்களிடம் கொண்டு சென்றேன். அதை அவர்கள் செல்லுமென ஏற்றார்கள்.

ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்களும் அபூ கிலாபா(ரஹ்) அவர்களும், ஒருவர் எழுதிய மரண சாசனத்தில் என்ன உள்ளது என்பதை அறியாமல் அதற்கு சாட்சியம் அளிப்பதை வெறுத்தார்கள். ஏனெனில், அதில் தவறு நடந்திருக்க இடமுண்டு அது அவருக்குத் தெரியாது. நபி(ஸல்) அவர்கள் கைபர்வாசிகளுக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள். அதில்'(உங்கள் பகுதியில் கொல்லப்பட்ட) உங்களுடைய தோழ(ர் அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல் என்பவ)ருக்காக இழப்பீடு வழங்கவேண்டும் அல்லது போருக்குத் தயாராக வேண்டும் என்று எழுதியிருந்தார்கள்.

திரைக்கப்பாலுள்ள பெண்ணுக்கெதிராக சாட்சியம் அளிப்பது குறித்து ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறும்போது'அவளை நீ அறிந்திருந்தால் சாட்சியம் அளிக்கலாம் இல்லையேல் அளிக்க வேண்டாம்'' என்றார்கள்.

ஹதீஸ் 7162. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பைஸாந்திய) ரோமர்களுக்குக் கடிதம் எழுதவிரும்பியபோது மக்கள்,'ரோமர்கள் முத்திரையிடப்பட்ட கடிதத்தை மட்டுமே படிப்பார்கள்'' என்றார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றை தயாரித்துக் கொண்டார்கள். அதன் மின்னும்

வெண்மையை நான் (இன்னும்) பார்ப்பதைப் போன்றுள்ளது. அதில் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (இறைத்தூதர் முஹம்மத்) என இலச்சினை பொறிக்கப்பட்டிருந்தது.

## நீதிபதியாகும் தகுதியை ஒருவர் எப்போது பெறுகிறார்?

ஹஸன் அல்பஸரீ (ரஹ்) அவர்கள், 'நீதிபதிகள் மன இச்சையைப் பின்பற்றக் கூடாது மக்களுக்கு அஞ்சக் கூடாது தன் வசனங்களை அற்ப விலைக்கு விற்கக் கூடாது என அவர்களிடம் அல்லாஹ் உறுதிமொழி வாங்கியுள்ளான்'' என்று கூறிவிட்டு 'தாவுதே! உங்களை நாம் பூமியில் பிரதிநிதியாக ஆக்கியுள்ளோம். எனவே, மக்களுக்கிடையே (நேர்மையாக) சத்தியத் தீர்ப்பு வழங்குங்கள். மன இச்சையைப் பின்பற்றாதீர்கள். அது உங்களை இறைவழியிலிருந்து தவறச் செய்து விடும். இறைவழியிலிருந்து தவறிச் செல்பவர்களுக்கு, அவர்கள் கணக்கு வாங்கும் நாளை மறந்துவிட்ட காரணத்தால் கடுமையான வேதனை உண்டு'' எனும் (திருக்குர்ஆன் 38:26 வது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

மேலும், நிச்சயமாக நாம்தாம் 'தவ்ராத்'தையும் அருளினோம் அதில் நேர்வழியும் பேரொளியும் இருந்தன் (அல்லாஹ்வுக்கு) முற்றிலும் வழிப்பட்ட நபிமார்கள், யூதர்களுக்கு அதைக்கொண்டே தீர்ப்பளித்து வந்தார்கள். இறைபக்தியாளர்களும் அறிஞர்களும் - அவர்கள் அல்லாஹ்வின் வேதத்தைப் பாதுகாக்கக் கட்டளையிடப்பட்டவர்கள் என்பதாலும், இன்னும் அவ்வேதத்திற்குச் சாட்சிகளாக அவர்கள் இருந்தாலும் - அவர்கள் அதைக்கொண்டே தீர்ப்பளித்து வந்தார்கள். (இறை நம்பிக்கையாளர்களே!) நீங்கள் மனிதர்களுக்கு அஞ்சாதீர்கள் எனக்கே அஞ்சுங்கள். என்னுடைய வசனங்களை அற்பக் கிரயத்திற்கு விற்றுவிடாதீர்கள். அல்லாஹ் அருளிய (வேதத்)தைக் கொண்டு தீர்ப்பளிக்காதவர்களே இறைமறுப்பாளர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 05:44 வது) வசனத்தையும் ஓதிக் காட்டினார்கள்.

மேலும், 'இன்னும் தாவூதும் சுலைமானும் (பற்றி நினைவு கூர்வீராக!) வேளாண்மை நிலத்தில் அவர்களின் சமூகத்தாரின் ஆடுகள் இரவில் இறங்கி மேய்ந்தபோது, அதைப் பற்றி அவ்விருவரும் தீர்ப்பளித்தனர். அவர்களின் தீர்ப்பை நாம் கவனித்துக் கொண்டிருந்தோம். அப்போது, நாம் சுலைமானுக்கு அதை (-தீர்ப்பளிப்பதன் முறையைப்) புரியவைத்தோம். (அவ்விருவரில்) ஒவ்வொருவருக்கும் (தீர்ப்பளிக்கும்) ஞானத்தையும் அறிவையும் வழங்கினோம்'' எனும் (திருக்குர்ஆன் 21:78,79) வசனங்களையும் ஓதிக் காட்டினார்கள்.

(இந்த வசனத்தில்) அல்லாஹ் சுலைமான் (அலை) அவர்களைப் புகழ்ந்துள்ளான். தாவூத் (அலை) அவர்களைப் பழிக்கவில்லை. இந்த இருவரின் விவகாரத்தையும் அல்லாஹ் எடுத்துரைத்திருக்காவிட்டால், நீதிபதிகள் அழிந்துபோவதைத்தான் நான் பார்த்திருப்பேன். ஏனெனில், அல்லாஹ் ஒருவரை (சுலைமான் (அலை) அவர்களை) அவரின் அறிவுக்காகப் பாராட்டியுள்ளான். மற்றொரு வரை (தாவூத் (அலை) அவர்களை) அவரின் ஆராய்ச்சிக்காக மன்னித்திருக்கிறான்.

முஸாஹிம் இப்னு ஸுஃபைர் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: உமர் இப்னு அப்தில் அஸீஸ் (ரஹ்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள்: ஒரு நீதிபதி ஐந்து பண்புகளில் எந்த ஒன்றைத் தவறவிட்டாலும் அது அவருக்குக் களங்கமாகும். அவையாவன: அவர் (விஷயங்களை நன்கு புரிந்துகொள்ளும்) விளக்கமுள்ளவராகவும் (பழிவாங்கும் எண்ணமில்லாத) சம்ப்புத் தன்மையுடையவராகவும், (விலக்கப்பட்டவற்றிலிருந்து விலகி) மார்க்கநெறி காப்பவராகவும், (எடுக்கும் முடிவில்) உறுதியானவராகவும், கல்விமானாகவும், கல்வியறிவைப் பெருக்கிக் கொள்ள அதிகம் கேள்வி கேட்பவராகவும் இருக்கவேண்டும்.

## ஆட்சியாளர்கள், நீதிபதிகள் மற்றும் அரசு அதிகாரிகள் ஆகியோருக்கான ஊதியம்.

நீதிபதி ஷுரைஹ் (ரஹ்) அவர்கள் (நீதிமன்றத்தில்) தீர்ப்பு வழங்கும் தம் பணிக்காக ஊதியம் பெற்றுவந்தார்கள்.

ஆயிஷா (ரலி) கூறினார்: அநாதையின் காப்பாளர் தம் வேலைப்பளுவுக்கேற்ப அநாதையின் செல்வத்திலிருந்து உண்ணலாம். அபூ பக்ர் (ரலி) அவர்களும் உமர் (ரலி) அவர்களும் (நிர்வாகப் பணிக்காக அரசு நிதியிலிருந்து ஊதியம் பெற்று) உண்டார்கள்.

ஹதீஸ் 7163 அப்துல்லாஹ் இப்னு சஅதீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் உமர் (ரலி) அவர்களிடம் அவர்களின் ஆட்சிக்காலத்தின்போது சென்றேன். அப்போது அவர்கள் என்னிடம், 'நீங்கள் மக்கள் (நலப்) பணிகள் சிலவற்றுக்குப் பொறுப்பேற்றிருப்பதாகவும், அதற்காக ஊதியம் தரப்பட்டால் அதை நீங்கள் வெறுப்பதாகவும் எனக்குத் தகவல் வந்ததே! (உண்மைதானா?)'' என்று கேட்டார்கள். அதற்கு நான் 'ஆம்' என்றேன். உமர் (ரலி) அவர்கள், 'நீங்கள் எந்த நோக்கத்தில் இப்படிச் செய்கிறீர்கள்?' என்று கேட்க, நான், 'என்னிடம் பல குதிரைகளும் பல அடிமைகளும் உள்ளனர். நான் நல்ல நிலையில் தான் இருக்கிறேன். எனவே, என் ஊதியம் முஸ்லிம்களுக்கு தர்மமாக இருக்கட்டும் என்று விரும்புகிறேன்'' என்று பதிலளித்தேன். உமர் (ரலி) கூறினார்: அப்படிச் செய்யாதீர்கள். ஏனென்றால், நீங்கள் விரும்பியபடியே நானும் விரும்பிவந்தேன். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு (மக்கள் நல நிதியிலிருந்து) நன்கொடை வழங்குவார்கள். நான், 'என்னை விட அதிகத் தேவை உடையோருக்கு இதைக் கொடுங்கள்'' என்று சொல்லிவந்தேன். இறுதியில் ஒரு முறை நபி (ஸல்) அவர்கள், (நன்கொடைப்) பொருள் ஒன்றை எனக்கு அளித்தபோது, நான், 'என்னைவிட அதிகத் தேவை உடையோருக்கு இதை வழங்குங்கள்'' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், '(முதலில்) இதை வழங்குங்கள்'' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், '(முதலில்) இதை வாங்கி உங்களுக்கு உடைமையாக்கிக் கொள்ளுங்கள். பிறகு, (தேவைப்படவில்லையென்றால்,) தர்மம் செய்துவிடுங்கள். இச்செல்வத்திலிருந்து எது நீங்கள் எதிர்பார்க்காமலும் நீங்களாகக் கேட்காமலும் உங்களுக்கு வந்தோ அதை (மறுக்காமல்) வாங்கிக் கொள்ளுங்கள். அப்படி எதுவும் வரவில்லையென்றால் நீங்களாக அதைத் தேடிச் செல்லாதீர்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7164. உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் எனக்கு நன்கொடை வழங்குவார்கள். அப்போது நான், 'என்னை விட அதிகமாகத் தேவை உள்ளவருக்கு இதைக் கொடுத்துவிடுங்கள்'' என்று சொல்வேன். ஒரு முறை எனக்கு (நன்கொடைப்) பெருநாள் ஒன்றை அவர்கள் வழங்கியபோது, நான், 'என்னை விட அதிகமாக இது யாருக்குத் தேவைப்படுகிறதோ அவருக்கு இதைக் கொடுத்துவிடுங்கள்'' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், '(முதலில்) நீங்கள் இதை வாங்கி, உங்களுக்கு உடைமையாக்கிக் கொள்ளுங்கள். பிறகு (உங்களுக்குத் தேவைப்படாவிட்டால்) தர்மம் செய்துவிடுங்கள். நீங்கள் ஆசைப்பட்டு எதிர்பார்க்காமலும் நீங்களாகக் கேட்காமலும் இச்செல்வத்திலிருந்து உங்களுக்கு (தானாக) வரும் எதுவாயினும் அதை நீங்கள் வாங்கிக் கொள்ளுங்கள். அப்படி வராவிட்டால் அதன் பின்னே நீங்களாகச் செல்லாதீர்கள்'' என்றார்கள்.

## பள்ளிவாசலில் தீர்ப்புக் கூறுவதும் (தம்பதியரை) சாப அழைப்புப் பிரமாணம் ('லிஆன்') செய்யவைப்பதும்.

உமர்(ரலி) அவர்கள் (ஒரு தம்பதியரை) நபி(ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகே சாப அழைப்புப் பிரமாணம் ('லிஆன்') செய்யச் சொன்னார்கள். (நீதிபதி) ஷுரைஹ்(ரஹ்), யஹ்யா இப்னு யஅமர்(ரஹ்) ஆகியோர் பள்ளிவாசலில் தீர்ப்பளித்துள்ளார்கள். (ஆளுநர்) மர்வான் இப்னி ஹகம், ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்கள் சத்தியம் செய்ய வேண்டும் என்று சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகே தீர்ப்பளித்தார்கள்.

ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்களும் சுராரா இப்னு அவ்..பா(ரஹ்) அவர்களும் மஸ்ஜிதுக்கு வெளியே முற்றத்தில் வைத்துத் தீர்ப்பளித்துள்ளார்கள்.

ஹதீஸ் 7165 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

ஒரு தம்பதியர் (பள்ளிவாசலில்) சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்த நேரத்தில் நான் அங்கிருந்தேன். அப்போது நான் பதினைந்து வயதுடையவனாக இருந்தேன். அவ்விருவரும் (மணபந்தத்திலிருந்து) பிரித்துவைக்கப்பட்டார்கள்.

ஹதீஸ் 7166. பனு சாஇதா குலத்தைச் சேர்ந்த ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் ஒருவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'ஒரு மனிதன் தன் மனைவியுடன் வேறொரு (அந்நிய) ஆடவன் (தகாத உறவுகொண்ட நிலையில்) இருக்கக் கண்டால், அவனை இவன் கொன்று விடலாமா? நீங்கள் என்ன சொல்கின்றீர்கள்?' என்று கேட்டார். பிறகு (இறைகட்டளைக்கேற்பக் கணவன், மனைவி) இருவரும் பள்ளிவாசலிலேயே சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தார்கள். அப்போது நானும் அங்கிருந்தேன்.

## பள்ளிவாசலில் தீர்ப்பளிப்பவர் தண்டனை (வழங்கும் முடிவு)க்கு வந்தால் பள்ளிவாசலுக்கு வெளியே தண்டனை நிறைவேற்றப்பட வேண்டுமென உத்தரவிட வேண்டும்.

உமர்(ரலி) அவர்கள் (பள்ளிவாசலில் வைத்து தண்டனை வழங்கப்பட்ட கைதி குறித்து)'அவரைப் பள்ளிவாசலிலிருந்து வெளியேற்றி தண்டனை நிறைவேற்)றுங்கள்'' என்றார்கள்.

அலீ(ரலி) அவர்கள் குறித்தும் இவ்வாறே அறிவிக்கப்படுகிறது.

ஹதீஸ் 7167 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் இருந்தபோது ஒருவர் அவர்களிடம் வந்து அவர்களை அழைத்து, இறைத்தூதர் அவர்களே! நான் விபசாரம் புரிந்துவிட்டேன்'' என்றார். நபி(ஸல்) அவர்கள் அவரிடமிருந்து தம் முகத்தைத் திருப்பினார்கள். (இவ்வாறு) அவர் தமக்கெதிராக நான்கு முறை சாட்சியம் அளித்தபோது,'உனக்குப் பைத்தியமா?' என்று கேட்டார்கள். அவர்,'இல்லை'' என்றார். நபி(ஸல்) அவர்கள்,'இவரை (பள்ளிவாசலில் இருந்து வெளியே) கொண்டு சென்று கல்லெறி தண்டனை நிறைவேற்றுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7168 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(மதீனாவில் பெருநாள்) தொழுகைத் திடலில் வைத்து அவருக்குக் கல்லெறி தண்டனை வழங்கியவர்களில் நானும் ஒருவனாவேன்.

கல்லெறி தண்டனை தொடர்பாக நபி(ஸல்) அவர்கள் அறிவித்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## (வழக்கின் போது) தலைவர் எதிரிகளுக்கு அறிவுரை கூறுவது.

ஹதீஸ் 7169 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ஒரு மனிதன்தான். நீங்கள் என்னிடம் உங்கள் வழக்குகளைக் கொண்டு வருகிறீர்கள். உங்களில் ஒருவர் மற்றொருவரை விடத் தம் ஆதாரத்தை எடுத்துவைப்பதில் வாக்கு சாதுரியமிக்கவராக இருக்கலாம். நான் கேட்பதை வைத்து அதற்கேற்ப தீர்ப்பு வழங்கிவிடுவேன். எவருக்கு நான் அவரின் சகோதரரின் உரிமையில் சிறிதை (உண்மை நிலை அறியாமல் வாதங்களை வைத்து) கொடுக்க வேண்டுமென்று தீர்ப்பளித்து விடுகிறேனோ அதை அவர் எடுத்துக்கொள்ள வேண்டாம். ஏனெனில், அப்போது நான் அவருக்குப் பெயர்த்துக் கொடுப்பதெல்லாம் நரக நெருப்பின் ஒரு துண்டைத்தான்.

என உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

## ஒருவர் நீதிபதி பதவி வம்க்கும்போது, அல்லது அதற்கு முன்பு தமக்குக் கிடைத்த சாட்சியத்தை வைத்து (வாதி, பிரதிவாதி இருவரில்) ஒருவருக்குச் சாதகமாகத் தாமே தீர்ப்பளிக்கலாமா? (அல்லது மற்றொரு நீதிபதியிடம் அந்த சாட்சியத்தை அளிக்க வேண்டுமா?)

(கூஃபா நகர) நீதிபதி ஷுரைஹ்(ரஹ்) அவர்களிடம் ஒருவர் (தமக்காக) சாட்சியம் அளிக்குமாறு வேண்டினார். அதற்கு அன்னார் நீ ஆட்சியரிடம் (வழக்கைக் கொண்டு) செல். நான் (அங்கு வந்து) உனக்காக சாட்சியம் அளிக்கிறேன்‘‘ என்றார்கள்.

இக்ரிமா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

உமர்(ரலி) அவர்கள் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம்,‘ஒருவன் விபசாரம் புரிவதையோ திருடுவதையோ நீங்கள் ஆட்சியராயிருக்கும் நிலையில் கண்டால் என்ன செய்வீர்கள்? (உங்கள் சாட்சியத்தை வைத்தே தண்டனை வழங்கிடுவீர்களா?)‘‘ என்று கேட்டார்கள். (அதற்கு, அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள், இல்லை என்னுடன் மற்றொருவரும் சாட்சிமளிக்காதவரை தண்டனை வழங்கமாட்டேன்‘‘ என்றார்கள்.) உமர்(ரலி) அவர்கள்,‘அப்படியானால் (ஆட்சியாளராக இருக்கும்) உங்கள் சாட்சியமும் முஸ்லிம்களில் ஒருவரின் சாட்சியமாக மதிக்கப்படும் (அப்படித்தானே!)‘‘ என்று கேட்க அவர்கள்,‘உண்மைதான்‘‘ என்றார்கள். உமர்(ரலி) அவர்கள்’உமர் இறைவேதத்தில் (இல்லாத ஒன்றைச்) சேர்த்துவிட்டார் என்று மக்கள் பேசுவார்கள் எனும் அச்சம் இல்லாவிட்டால்’ரஜ்கி’ (கல்லெறி தண்டனை) தொடர்பான வசனத்தை நான் என் கையாலேயே (குர்ஆன் பிரதியில்) எழுதியிருப்பேன்‘‘ என்று கூறினார்கள்.

மாஇஸ் இப்னு அல்அஸ்லமீ(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் (வந்து) தாம் விபசாரம் புரிந்ததாக நான்கு முறை ஒப்புதல் வாக்குமூலம் அளித்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் (மாஇஸ் திருமணமானவராக இருந்ததால்) அவருக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றுமாறு உத்தரவிட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் அப்போது தம்மிடமிருந்தவர்கள் எவரையும் (மாஇஸ் விபசாரம் செய்ததற்கு) சாட்சியாக ஆக்கியதாகச் சொல்லப்படவில்லை.

ஹம்மாத் இப்னு அபீ சுலைமான்(ரஹ்) அவர்கள், 'ஒருவன் தான் விபச்சாரம் புரிந்ததாக நீதிபதியிடம் ஒரேயொரு முறை ஒப்புதல் வாக்குமூலம் அளித்தாலும் அவனுக்குக் கல்லெறி தண்டனை வழங்கப்படும்'' என்று கூறுகிறார்கள்.

ஆனால், ஹகம் இப்னு உதைபா(ரஹ்) அவர்கள், 'நான்கு முறை வாக்குமூலம் அளித்தால் தான் கல்லெறி தண்டனை வழங்கப்படும்'' என்கிறார்கள்.

ஹதீஸ் 7170 அபூ கத்தாதா(ரலி) அறிவித்தார்.

ஹுனைன் போரின்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், '(போரில் எதிரி) ஒருவரைக் கொன்றதற்கான ஆதாரம் எவரிடம் இருக்கிறதோ அவருக்கே அந்த எதிரியின் உடலிலிருந்து எடுத்த பொருள்கள் உரியவை'' என்று கூறினார்கள். உடனே நான் (என்னால்) கொல்லப்பட்டவரை நானே கொன்றேன் என்பதற்கு ஆதாரம் தேடுவதற்காக எழுந்தேன். எனக்காக சாட்சியம் சொல்பவர் எவரையும் நான் காணவில்லை. எனவே, நான் உட்கார்ந்து கொண்டேன். பிறகு ஏதோ தோன்ற, இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நான் (போரில் எதிரி ஒருவனைக்) கொன்றதைச் சொன்னேன். உடனே நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தவர்களில் ஒருவர், '(இவரால் கொல்லப்பட்டதாக) இவர் சொல்கிற அந்த மனிதரின் ஆயுதம் என்னிடம் இருக்கின்றது. நானே இதை எடுத்துக்கொள்ள அவரிடம் இருந்து (எனக்கு) இசைவு பெற்றுத் தாருங்கள்'' என்றார்.

அப்போது (அங்கிருந்த) அபூ பக்ர்(ரலி) அவர்கள், 'அப்படி முடியாது. (கொல்லப்பட்டவரின்) அந்த உடைமைகளை, அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய தூதருக்காகவும் போரிடுகின்ற, அல்லாஹ்வின் சிங்கங்களில் ஒரு சிங்கத்தைவிட்டுவிட்டு, குறைஷியரின் (பலவீனமான) ஒரு குஞ்சுப் பறவைக்கு அதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கொடுக்கமாட்டார்கள்'' என்றார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து எனக்கு அந்தப் பொருளைக் கொடுத்தார்கள். நான் அதை விற்கு பேரீச்சந் தோட்டம் ஒன்றை விலைக்கு வாங்கினேன். அதுதான் நான் இஸ்லாத்திற்கு வந்த பின் தேடிக்கொண்ட முதல் சொத்தாக அமைந்தது.

மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹிஜாஸ் அறிஞர்கள் கூறுகிறார்கள்: நீதிபதி தாம் அறிந்ததை (மட்டும்) வைத்துத் தீர்ப்பளிக்கலாகாது. அவர் தம் பதவிக்காலத்தில் அதற்கு சாட்சியாக இருந்தாலும் சரி! அதற்கு முன்பே சாட்சியாக இருந்தாலும் சரி! (அவரின் மீது களங்கம் கற்பிக்க இடமுண்டு என்பதே இதற்குக் காரணம்.) நீதிமன்றத்தில் பிரதிவாதி ஆஜராம் மற்றவரின் உரிமை குறித்து நீதிபதியிடம் வாக்குமூலம் அளித்தாலும், இரண்டு சாட்சிகளை அழைத்து அவரின் வாக்குமூலத்தின்போது ஆஜர்படுத்தாத வரை அவருக்கெதிராகத் தீர்ப்பளிக்கலாகாது என அந்த அறிஞர்களில் சிலர் கூறியுள்ளனர்.

இராக்வாசிகளில் சிலர் கூறுகின்றனர்: நீதிமன்றத்தில் நீதிபதி கேட்ட, அல்லது பார்த்த ஒன்றை (ஆதாரமாக) வைத்து அவர் தீர்ப்பளிக்கலாம். நீதிமன்றமல்லா மற்ற இடங்களில் (தாம் கேட்ட அல்லது பார்த்த) ஒன்றை வைத்து அவர் தீர்ப்பளிக்கலாகாது பிரதிவாதி வாக்குமூலம் அளிக்கும்போது இரண்டு சாட்சிகளை ஆஜர்படுத்தினால் தவிர.

இராக்வாசிகளில் இன்னும் சிலர், 'அல்ல! (வாதியின் வாக்குமூலத்தை வைத்தே) நீதிபதி தீர்ப்பளிக்கலாம். ஏனெனில், அவர் (நீதிபதி) நம்புதற்குரிய ஒருவராவார் சாட்சியத்தால் நோக்கமே உண்மையை அறிவதுதான். நீதிபதி தீர்ப்பளிப்பார் மற்ற பிரசினைகளில் (அவ்வாறு தாம் அறிந்ததை வைத்து, சாட்சிகள் இல்லாமல்) தீர்ப்பளிக்க மாட்டார்'' என்று கூறுகின்றனர்.

காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: வேறு யாரும் அறியாத, தாம் (மட்டும்) அறிந்திருக்கும் ஒன்றை வைத்துத் தீர்ப்பளிப்பது நீதிபதிக்கு முறையாகாது. பிறரின் சாட்சியத்தைவிட அவர் அறிந்திருப்பது பலமானதாக இருக்கலாம். ஆனாலும், இதன் மூலம் முஸ்லிம்களிடையே தம்மை அவர் தவறான எண்ணத்திற்கு உட்படுத்திக் கொள்வதும், முஸ்லிம்களைச் சந்தேகத்தில் ஆட்படுத்துவதும் நேரலாம். நபி(ஸல்) அவர்கள், பிறர் சந்தேகப்படும் வகையில் நடப்பதை வெறுத்துள்ளார்கள். அதனால்தான், (தம்மைப் பள்ளிவாசலில் சந்தித்துவிட்டுச் சென்ற தம் துணைவியாரை இருவர் பார்த்தபோது)'இவர் ஸஃபிய்யா தாம் (வேறு யாருமல்லர்)' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 7171 அலீ இப்னு ஹுசைன்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் (அவர்கள் பள்ளிவாசலில் இஃதிகாஃபில் இருந்தபோது அவர்களின் துணைவியார்) ஸஃபிய்யா பின்த் ஹுயை(ரலி) அவர்கள் வந்தார்கள். அவர்கள் திரும்பிச் சென்றபோது நபி(ஸல்) அவர்களும் ஸஃபிய்யாவுடன் (சிறிது தூரம் நடந்து) சென்றார்கள். அப்போது அன்சாரிகளில் இருவர் அவர்களைக் கடந்து சென்றனர். உடனே நபி(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் அழைத்து,'(இவர் (வேறு யாருமல்லர். என் துணைவி) ஸஃபிய்யாதாம்'' என்றார்கள். உடனே அவ்விருவரும் அல்லாஹ் தூயவன் (உங்களின் மீதா சந்தேகப்படுவோம்)'' என்று கேட்டனர். நபி(ஸல்) அவர்கள்,'மனிதனின் இரத்த நாளங்களில் எல்லாம் ஷைத்தான் ஊடுருவியுள்ளான்'' என்றார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## ஆட்சித் தலைவர் இரண்டு ஆட்சியர்களை ஒரே இடத்திற்கு அனுப்பும்போது அவ்விருவரும் இணக்கத்தோடு நடந்து கொள்ளும்படியும் பிணங்கிக் கொள்ளாமல் இருக்கும்படியும் கட்டளையிடுவது.

ஹதீஸ் 7172 அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் என்னையும் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களையும் யமன் நாட்டுக்கு அனுப்பிவைத்தார்கள். அப்போது,'(மார்க்க விஷயத்தில் மக்களிடம்) எளிதாக நடந்துகொள்ளுங்கள் (மக்களைச்) சிரமப்படுத்திவிடாதீர்கள் நற்செய்தி(களை அதிகம்) கூறுங்கள் (எச்சரிக்கை செய்யும்போது கூட) வெறுப்பேற்றிவிடாதீர்கள். (தீர்ப்பளிக்கும் போது) இணக்கமாக நடந்துகொள்ளுங்கள்'' என்றார்கள். அப்போது நான்,'எங்கள் (யமன்) நாட்டில்'பித்உ' எனும் (மது) பானம் (தேனில்) தயாரிக்கப்படுகிறதே!"என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'போதை தரும் ஒவ்வொன்றும் தடை செய்யப்பட்டதாகும்'' என்றார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## ஆட்சியாளர் (வலீமா - மண) விருந்தழைப்பை ஏற்பது

(கலீஃபா) உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்கள் முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களின் அடிமையின் விருந்தழைப்பை ஏற்றுச் சென்றார்கள்.

ஹதீஸ் 7173 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(போர்க்) கைதியை (எதிரியிடமிருந்து) விடுவியுங்கள் (விருந்துக்கு) அழைப்பவருக்கு (அவரின் அழைப்பை ஏற்று) பதிலளியுங்கள்.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

## அதிகாரிகள் பெறும் அன்பளிப்புகள்

ஹதீஸ் 7174. அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பனுஸஅத் குலத்தாரில் ஒருவரை ஸகாத் வசூலிக்கும் அதிகாரியாக நியமித்தார்கள். அவர் இப்னுல் உதபிய்யா (அல்லது இப்னுல் லுதபிய்யா) என்று அழைக்கப்பட்டார். அவர் (ஸகாத் வசூலித்துக்கொண்டு) வந்தபோது,'இது உங்களுக்குரியது இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது'' என்றார். உடனே நபி(ஸல்) அவர்கள் (எழுந்து) சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது நின்று, அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்த பின்னர்,'நாம் அனுப்பும் அதிகாரியின் நிலை என்ன? அவர் (பணியை முடித்துத் திரும்பி) வந்து,'இது உமக்குரியது இது எனக்குரியது' என்று கூறுகிறாரே! அவர் (மட்டும்) தம் தந்தை அல்லது தாயின் வீட்டில் உட்கார்ந்து பார்க்கட்டுமே! அவருக்கு அன்பளிப்பு வழங்கப்படுகிறதா? இல்லையா? என்று தெரியும். என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! அவர் கொண்டுவரும் (அன்பளிப்பு) எதுவாயினும் அதைத் தம் கழுத்தில் சுமந்தபடிதான் மறுமைநாளில் வருவார். அந்த அன்பளிப்பு ஒட்டகமாக இருந்தால் அது கனைத்துக் கொண்டிருக்கும் அது மாடாயிருந்தால் அல்லது ஆடாயிருந்தால் கத்திக்கொண்டிருக்கும்'' என்றார்கள். பிறகு, அவர்களின் அக்குள்களின் வெண்மையை நாங்கள் பார்க்கும் அளவுக்குத் தம் கைகளை உயர்த்தி,'நான் எடுத்துரைத்துவிட்டேனா?' என்று மும்முறை கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் அபூ ஹுமைத்(ரலி) அவர்கள் கூறியிருப்பதாவது:

இதை நான் என் கண்ணால் கண்டேன் காதால் கேட்டேன். (சந்தேகமிருப்பின்) ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அவர்களிடம் கேட்டுப் பாருங்கள். அவருடன் என்னுடன் இதைக் கேட்டார்.

## அடிமையாயிருந்து விடுதலையடைந்தவர்களை நீதிபதிகளாக்குவதும் அதிகாரிகளாக்குவதும்.

ஹதீஸ் 7175 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

அபூ ஹுதை∴பாவின் அடிமையாயிருந்த ஸலீம்(ரலி) அவர்கள் முதலாவதாக ஹிஜ்ரத் செய்தவர்களுக்கும் நபித்தோழர்களுக்கும்'குபா' பள்ளிவாசலில் தலைமை தாங்கித் தொழுகை நடத்தினார்கள். அந்த நபித்தோழர்களில் அபூ பக்ர்(ரலி), உமர்(ரலி), அபூ ஸலமா(ரலி), ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி), ஆமிர் இப்னு ரபீஆ(ரலி) ஆகியோரும் அடங்குவர்.

## சமூகத் தலைவர்கள் (அல்உர∴பா)

ஹதீஸ் 7176, ஹதீஸ் 7177 மர்வான் இப்னு ஹகம் மற்றும் மிஸ்வர் இப்னு உக்ரமா(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

ஹாவாஸின் குலத்தாரின் போர்க் கைதிகளை விடுதலை செய்வது தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்களுடனிருந்தவர்களுக்கும் முஸ்லிம்கள் அனுமதியளித்தபோது,'உங்களில் யார் போர்க் கைதிகளை விடுவிக்க) சம்மதம் தெரிவிக்கிறார் யார் சம்மதம் தெரிவிக்கவில்லை என்று எனக்குத் தெரியாது. எனவே, நீங்கள் திரும்பிச் செல்லுங்கள். உங்கள் சமூகத் தலைவர்கள் உங்களின் முடிவை எங்களிடம் வந்து தெரிவிக்கட்டும்'' என்று கூறினார்கள்.

உடனே மக்கள் திரும்பிச் சென்றார்கள். அவர்களிடம் அவர்களின் சமூகத் தலைவர்களை பேசி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் திரும்பிவந்து மக்கள் மனப்பூர்வமாக சம்மதித்துவிட்டார்கள் என்று தெரிவித்தார்கள்.

## மன்னரை முன்னால் புகழ்வதும் பின்னால் இகழ்வதும் வெறுக்கப்பட்ட செயலாகும்.

ஹதீஸ் 7178 முஹம்மத் இப்னு ஸைத் இப்னி அப்தில்லாஹ் இப்னி உமர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

மக்கள் சிலர் (எங்கள் பாட்டனார்) அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்,'நாங்கள் எங்கள் மன்னர்களிடம் செல்கிறோம். அவர்களிடமிருந்து வெளியேறியதும் (அவர்களைப் பற்றி) நாங்கள் என்ன பேசிக் கொள்வோமோ அதற்கு நேர் மாறானதையே அவர்களுக்கு (முன்னிலையில்) நாங்கள் கூறுவோம்'' என்றார்கள். அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள்,'இப்படி (முன்னால் ஒன்று பின்னால் ஒன்று பேசுவதை (நபி(ஸல்) அவர்களின் காலத்தில்) நாங்கள் நயவஞ்சகமாகக் கருதிவந்தோம்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7179 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்களிலேயே மிகவும் மோசமானவன் இரட்டை முகத்தான் ஆவான். அவன் இவர்களிடம் செல்லும்போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும்போது இன்னொரு முகத்துடனும் செல்கிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## (நீதிபதி முன்) ஆஜராகாதவருக்குக்கெதிராகத் தீர்ப்பளிப்பது

ஹதீஸ் 7180 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

(ஒருமுறை) ஹிந்த் பின்த் உத்பா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,'(என் கணவர்) அபூ சுஃப்யான் கருமித்தனம் உள்ள ஒருவர். நான் (செலவுக்காக) அவரின் பணத்திலிருந்து (அவருக்குத் தெரியாமல்) எடுத்துக்கொள்ள வேண்டியுள்ளது. (அப்படிச் செய்ய எனக்கு அனுமதியுண்டா?)'' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'உனக்கும் உன் குழந்தைக்கும் போதுமான அளவிற்கு நியாயமான முறையில் எடுத்துக்கொள்'' என்றார்கள்.

## அடுத்தவருக்குரிய உரிமை (தொடர்பான வழக்கில், அது) தமக்குரியதென (வெளிப்படை ஆதாரங்களை வைத்து)த் தீர்ப்பளிக்கப்பட்டுவிட்டாலும் அதை எவரும் பெற வேண்டாம். ஏனெனில், நீதிபதியின் தீர்ப்பு தடை செய்யப்பட்டதை அனுமதிக்கப்பட்டதாகவோ, அனுமதிக்கப்பட்டதைத் தடை செய்யப்பட்டதாகவோ மாற்றிவிடாது.

ஹதீஸ் 7181. நபி(ஸல்) அவர்கள் துணைவியார் உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் அறைவாசலில் (நின்று) சிலர் சப்தமிட்டுத் தகராறு செய்து கொள்வதைக் கேட்டார்கள். எனவே, வெளியேவந்து அவர்களிடம் சென்று,'நான் மனிதன்தான். என்னிடம் வழக்காடுபவர் வருகிறார். (அவரின் அந்தரங்க நிலை எனக்குத் தெரியாது.) உங்களில் ஒருவர் மற்றவரைவிட வாக்கு சாதுர்யம் மிக்கவராக இருக்கலாம். அவர் உண்மையே பேசுகிறார் என்றெண்ணி நான் அவருக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்துவிடுகிறேன். எனவே, அடுத்த முஸ்லிமுக்குரிய உரிமையை (உண்மை தெரியாமல்) யாருக்குரியதென நான் தீர்ப்பளித்துவிடுகிறனோ (அவர் அதைப் பெறவேண்டாம். ஏனெனில்,) அதுவெல்லாம் நரக நெருப்பின் ஒரு துண்டுதான். (இதைநினைவில் கொண்டு விரும்பினால், அதை அவர் எடுத்துக்கொள்ளட்டும் அல்லதுவிட்டுவிடட்டும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7182 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

உத்பான இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் தம் சகோதரர் ஸஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்களிடம், 'ஸம்ஆவின் அடிமைப் பெண்ணுடைய மகன் எனக்குப் பிறந்தவன். அவனைப் பிடித்து உன்னிடம் வைத்துக் கொள்'' என்று உறுதிமொழி வாங்கியிருந்தார். மக்கா வெற்றி ஆண்டில் ஸஅத் (ரலி) அவர்கள் அவனைப் பிடித்துவைத்துக் கொண்டு' (இவன்) என் சகோதரர் மகன். இவன் விஷயத்தில் என் சகோதரர் (இவனைப் பிடித்துவருமாறு) என்னிடம் உறுதிமொழி வாங்கியிருந்தார்'' என்றார்கள். அப்போது அப்து இப்னு ஸம்ஆ (ரலி) அவர்கள் சஅதை நோக்கி எழுந்து, '(இவன்) என் சகோதரன். என் தந்தையின் அடிமைப் பெண்ணுடைய மகன். இவன் (உடைய தாய்) என் தந்தையின் அதிகாரத்திலிருந்தபோது பிறந்தவன்'' என்று கூறினார். எனவே, இருவரும் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் ஒருவர் பின் ஒருவராக (தீர்ப்புக் கேட்டுச்) சென்றர். ஸஅத் (ரலி) அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! (இவன்) விஷயத்தில் (இவனைப் பிடித்துவருமாறு) என்னிடம் உறுதிமொழி வாங்கியிருந்தார்'' என்று கூற, அப்து இப்னு ஸம்ஆ (ரலி) அவர்கள், '(இவன்) என் சகோதரன். என் தந்தையின் அடிமைப் பெண்ணுக்குப் பிறந்தவன் அவரின் ஆதிக்கத்தில் (இவனுடைய தாய் இருந்தபோது) பிறந்தவன்'' என்றார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'அப்து இப்னு ஸம்ஆவே! அவன் உனக்கே உரியவன்'' என்று (தீர்ப்புக்) கூறிவிட்டுப் பிறகு'தாந் யாருடைய ஆதிக்கத்தில் இருக்கிறாளோ அவருக்கே குழந்தை உரியதாகும். விபசாரம் செய்தவனுக்கு இழப்புத்தான் உரியது'' என்றார்கள்.

பிறகு (தம் துணைவியும்) ஸம்ஆவின் புதல்வியுமான சவ்தா (ரலி) அவர்களிடம், 'இவனிடமிருந்து நீ உன்னைத் திரையிட்டு (மறைத்து)க்கொள்'' என்று கூறினார்கள். சாயலில் அவன் உத்பாவைப் போன்றே இருக்கக் கண்டால்தான் நபியவர்கள் இப்படிக் கூறினார்கள். அந்த மனிதர், தாம் இறக்கும்வரை சவ்தா (ரலி) அவர்களைப் பார்க்கவில்லை.

## கிணறு முதலானவை தொடர்பான தீர்ப்பு

ஹதீஸ் 7183. 'ஒரு சொத்தை அபகரிப்பதற்காக திட்டமிட்டு பொய்ச் சத்தியம் செய்கிறவரின் மீது அல்லாஹ் கோபம் கொண்ட நிலையில் தவிர வேறுவிதமாக அவனை அவர் சந்திக்கமாட்டார்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறியபோது 'அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும் தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறர்களுக்கு நிச்சயமாக மறுமையில் எந்த நற்பேறுமில்லை'' எனும் (திருக்குர்ஆன் 03:77 வது) வசனத்தை அல்லாஹ் அருளினான். என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7184 மேற்கண்ட ஹதீஸின் அறிவிப்பாளர் அபூ வாயில் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் எங்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது அஷ்அஸ்பின் கைஸ் (ரலி) அவர்கள் (அங்கு) வந்து (பின்வருமாறு) கூறினார்கள்: இந்த இறைவசனம் என் விஷயத்திலும் ஒரு கிணறு தொடர்பாக நான் வழக்கு தொடுத்திருந்த ஒருவர் விஷயத்திலும் தான் இறங்கிற்று. அப்போது நபி (ஸல்) அவர்கள் 'உன்னிடம் ஆதாரம் எதுவும் இருக்கிறதா?' என்று (என்னிடம்) கேட்டார்கள். நான் 'இல்லை' என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள் 'அப்படியென்றால் (பிரதிவாதியான) அவர் சத்தியம் செய்ய வேண்டியதுதான்' என்று சொல்ல, நான் 'அவர் (தயங்காமல்) சத்தியம் செய்துவிடுவார்' என்று சொன்னேன். அப்போதுதான் இந்த (திருக்குர்ஆன் 03:77 வது) வசனம் அருளப்பெற்றது.

## அதிகமான செல்வம் தொடர்பாகவும் குறைவான செல்வம் தொடர்பாகவும் தீர்ப்பளிக்கலாம்.

(கூஃபாவின் நீதிபதி) அப்துல்லாஹ் இப்னு ஷுப்ருமா(ரஹ்) அவர்கள் கூறினார்:

தீர்ப்பு என்பது குறைவான செல்வம், அதிகமான செல்வம் இரண்டிலும் ஒன்றுதான்.

ஹதீஸ் 7185 உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தங்களின் (அறையின்) வாசலில் சிலர் கூச்சலிட்டுத் தகராறு செய்துகொள்வதைக் கேட்டார்கள். உடனே வெளியே வந்து அவர்களிடம் சென்று,'நான் மனிதன் தான். வழக்காடுபவர்கள் என்னிடம் வருகிறார்கள். இப்படி வருபவர்களில் சிலர் சிலரைவிட வாக்கு சாதுர்யமிக்கவர்களாக இருக்கக்கூடும். அதன் காரணத்தால் அவர் உண்மையே சொல்வதாக எண்ணி நான் அவருக்குத் சாதகமாகத் தீர்ப்பளித்துவிடுகிறேன். (உண்மை தெரியாமல் வாதப்பிரதிவாதத்தை வைத்து) ஒரு முஸ்லிமின் உரிமை வேறொருவருக்கு உரியதென்று நான் தீர்ப்பளித்தால் அது நரக நெருப்பின் துண்டேயாகும். (இதை நினைவில் கொண்டு விரும்பினால்) அதை அவர் எடுத்துக் கொள்ளட்டும் (இல்லையேல்) அதைவிட்டு விடட்டும்.

## ஆட்சித் தலைவரே மக்களுக்கு அவர்களின் செல்வங்களையும் அசையாச் சொத்துக்களையும் விற்றுக்கொடுப்பது.

நபி(ஸல்) அவர்கள் (குறைஷியரான) நுஐம் இப்னு நஹ்ஹாம்(ரலி) அவர்களால் பின்விடுதலை அளிக்கப்பட்ட ஓர் அடிமையை (-முதப்பரை அவருக்காக) விற்றுக்கொடுத்தார்கள்.

ஹதீஸ் 7186 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

தம் தோழர்களில் ஒருவர்'என் ஆயுட்காலத்திற்குப் பிறகு நீ விடுதலையாவாய்' என்று தம் அடிமையிடம் சொல்லிவிட்டதாக நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது. அத்தோழருக்கு அந்த அடிமையைத் தவிர வேறு செல்வம் எதுவும் இருக்கவில்லை.

எனவே, நபி(ஸல்) அவர்கள் அந்த அடிமையை எண்ணூறு திர்ஹங்களுக்கு விற்று, அந்தத் தொகையை அத்தோழருக்குக் கொடுத்தனுப்பினார்கள்.

## ஆட்சியாளர்கள் தொடர்பாக, அறியாத ஒருவர் கூறும் குறைகளைப் பொருட்படுத்த வேண்டியதில்லை.

ஹதீஸ் 7187 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் இறுதிக் காலத்தில்) உசாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களைத் தளபதியாக்கி ஒரு படைப் பிரிவை அனுப்பிவைத்தார்கள். அப்போது உசாமாவின் தலைமை குறித்து (அவர் வயதில் சிறியவர் என்று) குறை கூறப்பட்டது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இவரின் தலைமை குறித்து இப்போது நீங்கள் குறை கூறுகின்றீர்கள் என்றால், (இது என்றும் புதிதல்ல.) இதற்கு முன்பு (மூத்தா போரின் போது) இவருடைய தந்தையின் தலைமையையும் தான். நீங்கள் குறை கூறிக் கொண்டிருந்தீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! அவர் தலைமைக்குத் தகுதியானவராகவே இருந்தார். மேலும், அவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவராகவும் இருந்தார். அவருக்குப் பின் (அவரின் புதல்வரான) இவர் மக்களிலேயே எனக்கு மிகவும் பிரியமானவராவார்'' என்றார்கள்.

## கடுமையாக சச்சரவு செய்பவன்

அதாவது தகராறு செய்வதையே வழக்கமாகக் கொண்டிருப்பவன் எப்போதும் சச்சரவிட்டுக் கொண்டிருப்பவன். (மூலத்திலுள்ள'அலத்து' என்பதன் வேர்ச் சொல்லான)'லுத்து' என்பதற்குக்'கோணல்' (நேர்மை தவறுதல்) என்ற பொருளும் உண்டு.

ஹதீஸ் 7188 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்விடம் மனிதர்களிலேயே மிகவும் வெறுப்புக்குரியவன், (எதற்கெடுத்தாலும்) கடுமையாகச் சச்சரவு செய்பவனே ஆவான்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## அநீதியாகவோ அறிஞர்களின் முடிவுக்கு மாறாகவோ நீதிபதி தீர்ப்பளித்தால், அது செல்லாது.

ஹதீஸ் 7189 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், காலித் இப்னு வலீத்(ரலி) அவர்களை பனு ஜதீமா குலத்தாரிடம் (இஸ்லாத்தை எடுத்துக்கூறி அவர்களை அழைப்பதற்காக) அனுப்பினார்கள். அவர்களுக்கு'அஸ்லம்னா' ('நாங்கள் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டோம்') என்று திருத்தமாகச் சொல்லவரவில்லை. எனவே, அவர்கள்,'ஸபஃனா''ஸபஃனா' ('நாங்கள் மதம் மாறி விட்டோம். நாங்கள் மதம் மாறிவிட்டோம்') என்றார்கள். உடனே, காலித்(ரலி) அவர்கள் அம்மக்களைக் கொல்லவும் சிறைப்பிடிக்கவும் தொடங்கினார்கள். மேலும், எங்களில் ஒவ்வொருவரிடமும் அவரவரால் கைது செய்யப்பட்டவரை ஒப்படைத்தார்கள். மேலும், எங்களில் ஒவ்வொருவரும் தம்மிடமுள்ள கைதியைக் கொன்றுவிடும்படி உத்தரவிட்டார்கள். நான்,'அல்லாஹ்வின் மீதாணையாக! என்னிடமுள்ள கைதியைக் கொல்லமாட்டேன். என் தோழர்களில் எவரும் தம்மிடமுள்ள கைதியைக் கொல்லமாட்டார்'' என்று சொன்னேன். இதை நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் (சென்று) தெரிவித்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இறைவா!'காலித் இப்னு வலீத்' செய்த(த)வற்றுக்கும் எனக்கும் தொடர்பில்லையென்று உன்னிடம் தெரிவித்துக்கொள்கிறேன்'' என்று இருமுறை சொன்னார்கள்.

## (சண்டையிட்டுக்கொள்ளும்) சமுதாயத்தாரிடையே நல்லிணக்கம் ஏற்படுத்துவதற்காக அவர்களிடம் ஆட்சித் தலைவர் செல்வது.

ஹதீஸ் 7190 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

பனு அம்ர் இப்னு அவஃப்) குலத்தாரிடையே மோதல் ஏற்பட்டிருந்த விவரம் நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியபோது லுஹ்ருத் தொழுகையை நடத்திவிட்டு அவர்களிடையே நல்லிணக்கத்தை உருவாக்குவதற்காகச் சென்றார்கள். இதற்கிடையே அஸ்ருத் தொழுகையின் நேரம் வந்துவிடவே பிலால்(ரலி) அவர்கள் தொழுகை அறிவிப்பு (பாங்கு) கொடுத்தார்கள். பிறகு இகாமத் சொல்லிவிட்டு (நபியவர்கள் வெளியே சென்றுவிட்டதால்) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம் (தொழுகை நடத்துமாறு) கூறினார்கள். எனவே, அபூ பக்ர் (தொழுகை நடத்த) முன்னின்றார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள் தொழுகையில் (இமாமாக) இருந்தபோது நபி(ஸல்) அவர்கள் (திரும்பி) வந்துவிட்டார்கள். (தொழுகை அணிகளை) விலக்கிக்கொண்டு வந்து (இமாமாக நின்று தொழுகை நடத்திக் கொண்டிருந்த) அபூ பக்ர்(ரலி) அவர்களுக்குப் பின்னாலுள்ள (முதல்) அணியில் நபி(ஸல்) அவர்கள் நின்றார்கள். இதைக் கண்ட மக்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு நினைவூட்டுவதற்காக) கைத் தட்டினார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள் தொழுகத் தொடங்கிவிட்டால் அதை முடிக்கும் வரை திரும்பிப் பார்க்கவே மாட்டார்கள்.

ஆனால், மக்கள் நிறுத்தாமல் கைதட்டிக் கொண்டிருக்கக் கண்டபோது அபூ பக்ர்(ரலி) அவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். தமக்குப் பின்னால் நபி(ஸல்) அவர்களைக் கண்டார்கள். நபி(ஸல்) அவர்கள் (அபூ பக்ர்(ரலி) அவர்களை நோக்கி) அங்கேயே நின்று தொழுகையைத் தொடருமாறு (தம் கையால்) சைகை செய்தார்கள். இதோ இவ்வாறுதான் தம் கரத்தால் சைகை செய்தார்கள். அபூ பக்ர்(ரலி) அவர்கள் அங்கேயே சிறிது நேரம் இருந்து, நபி(ஸல்) அவர்கள் (தம்மைத் தொழுகை நடத்துமாறு) கூறியமைக்காக இறைவனைப் போற்றிப் புகழ்ந்தார்கள். பிறகு திரும்பாமல் அப்படியே பின்னோக்கி (முதல் அணிக்கு) நடந்தார்கள். இதைக் கண்ட நபி(ஸல்) அவர்கள் முன்னே சென்று மக்களுக்குத் தொழுகை நடத்தினார்கள்.

தொழுது முடிந்ததும்,'அபூ பக்ரே! நான் உங்களுக்கு சைகை செய்தும் நீங்கள் தொழுகையைத் தொடராமல் இருந்ததற்குக் காரணம் என்ன?' என்று கேட்டார்கள்.'நபி(ஸல்) அவர்களுக்கே தலைமை தாங்கித் தொழுகை நடத்தும் தகுதி அபூ குஹா∴பாவின் மகனுக்கு (எனக்கு) இல்லை" என்று அபூ பக்ர்(ரலி) கூறினார். பிறகு நபி(ஸல்) அவர்கள் மக்களிடம்,'(தொழுகையில்) உங்களுக்கு சந்தேகம் ஏற்படுமானால் ஆண்களாயிருந்தால், அவர்கள்'சுப்ஹானல்லாஹ்' (அல்லாஹ் தூயவன்) என்று சொல்லட்டும். பெண்களாயிருந்தால், (இமாமின் கவனத்தை ஈர்ப்பதற்காகத்) கைத் தட்டட்டும்!"என்றார்கள்.

## (தீர்ப்பு எழுதும்) எழுத்தர் நாணயமானவராகவும் விழிப்புள்ளவராகவும் இருத்தல் நன்று.

ஹதீஸ் 7191 (வேத அறிவிப்பை எழுதியோரில் ஒருவரான) ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

யமாமா(போரில்) வீரர்கள் கொல்லப்பட்டபோது அபூ பக்ர்(ரலி) அவர்கள் (என்னை அழைத்து வரும்படி) ஆளனுப்பினார்கள். (நான் சென்றேன்.) அங்கே அவர்களுடன் உமர்(ரலி) அவர்களும் இருந்தார்கள். அப்போது அபூ பக்ர்(ரலி) கூறினார்: உமர்(ரலி) அவர்கள் என்னிடம் வந்து, இந்த யமாமா போர், குர்ஆன் அறிஞர்கள் பலரைப் பலிகொண்டது. (இறைமறுப்பாளர்களுடன் போர் நடக்கும்) எல்லா இடங்களிலும் குர்ஆன் அறிஞர்கள் பலர் கொல்லப்பட்டு அதனால் குர்ஆனில் பெரும்பகுதி (அந்த நெஞ்சங்களுடன் அழிந்து) போய்விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். எனவே, (கலீ∴பாவான) நீங்கள் குர்ஆனைத் திரட்டுமாறு ஆணையிட வேண்டுமென கருதுகிறேன்" என்று கூறினார்கள். அதற்கு நான்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்யாத ஒன்றை நான் எப்படிச் செய்ய முடியும்?' என்று (உமர்(ரலி) அவர்களிடம்) கேட்டேன். அதற்கு உமர்(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இது நன்மை(யான பணி) தான்" என்று கூறினார்கள். இது விஷயமாக தொடர்ந்து உமர்(ரலி) அவர்கள் என்னிடம் வலியுறுத்திக்கொண்டேயிருந்தார்கள். முடிவில், உமர்(ரலி) அவர்கள் மனதை அல்லாஹ் எதற்காக விரிவாக்கினானோ அதற்காக என் மனத்தையும் அவன் விரிவாக்கினான் எது விஷயத்தில் உமர்(ரலி) அவர்கள் கருதியதையே நானும் (பொறுத்தமானதாகக்) கண்டேன்.

பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்கள் (என்னிடம்),'நீங்கள் புத்திசாலியான இளைஞர் உங்களை நாங்கள் (எந்த விதத்திலும்) சந்தேகப்பட்டதில்லை. நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்காக வஹீ (இறைச்செய்தி) (வேத அறிவிப்பை) எழுதக்கூடியவராயிருந்தீர்கள். எனவே, (தனித்தனி பிரதிகளில் பல்வேறு நபித்தோழர்களிடம் இருக்கும்) குர்ஆன் வசனங்களைத் தேடி (ஒரே பிரதியில்) ஒன்றுதிரட்டுங்கள்" என்றார்கள்.

அல்லாஹ்வின் மீதாணையாக! மலைகளில் ஒன்றை நகர்த்த வேண்டுமென என்னை அவர்கள் பணிந்திருந்தாலும் கூட அது எனக்குப் பளுவாக இருந்திருக்காது. குர்ஆனை ஒன்று திரட்டும்படி

எனக்கு அவர்கள் கட்டளையிட்டது. அதைவிட எனக்குப் பளுவாக இருந்தது. நான்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செய்யாத ஒன்றை நீங்கள் இருவரும் எப்படிச் செய்யப் போகிறீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! இது நன்மை(யான பணி) தான்'' என்றார்கள். இதையே என்னிடம் அன்னார் தொடர்ந்து வலியுறுத்திக்கொண்டிருந்தார்கள். முடிவில் எதற்காக அபூ பக்ர் மற்றும் உமர்(ரலி) ஆகியோரின் மனத்தை அல்லாஹ் விரிவாக்கினானோ அதற்காக என் மனத்தையும் அல்லாஹ் விரிவாக்கினான். அவர்கள் இருவரும் கருதியதையே நானும் (பொறுத்தமானதாகக்) கருதினேன்.

எனவே, நான் (மக்களின் கரங்களிலிருந்து குர்ஆன் (சுவடிகளைத்) தேடினேன். அகலமான பேரீச்சமட்டைகள், துண்டுத் தோல்கள் ஓடுகள் மற்றும் (குர்ஆனை மனனம் செய்திருந்த) மனிதர்களின் நெஞ்சங்கள் ஆகியவற்றிலிருந்து குர்ஆன் வசனங்களைத் திரட்டினேன். அப்போது நான் அத்தவ்பா எனும் (9 வது) அத்தியாத்தின் இறுதி அல்லது'அபூ குஸைமா'(ரலி) அவர்களிடம் இருக்கக் கண்டேன். அதை நான் அதற்குரிய அத்தியாயத்தில் சேர்த்தேன்.'உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கிறார்'' என்று தொடங்கும் (திருக்குர்ஆன் 09:128 வது) வசனமே அந்த வசனமாகும்.

(என் வாயிலாகத் திரட்டிக் தொகுக்கப் பெற்ற) குர்ஆன் பிரதிகள் (கலீஃபா) அபூ பக்ர்(ரலி) அவர்களிடம், அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை அவர்களின் வாழ்நாள் முழுக்க இருந்துவந்தது. பிறகு (கலீஃபா) உமர்(ரலி) அவர்களிடம் அவர்களை அல்லாஹ் இறக்கச் செய்யும் வரை அவர்களின் வாழ்நாள் முழுக்க இருந்துவந்தது. பிறகு (நபிகளாரின் துணைவியரான) ஹஃப்ஸா பின்த் உமர்(ரலி) அவர்களிடம் இருந்துவந்தது.

முஹம்மத் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்கள்,'இந்த ஹதீஸின் (மூலத்திலுள்ள)'லிகஃப்' எனும் சொல்லுக்கு'ஓடு' என்று பொருள் எனக் கூறினார்கள்.

## ஆட்சித் தலைவர் ஆளுநர்களுக்கும், நீதிபதி சட்ட ஒழுங்கு அதிகாரிகளுக்கும் கடிதம் எழுதுவது.

ஹதீஸ் 7192 ஸஹ்ல் இப்னு அபீ ஹஸ்மா(ரலி) அவர்களும் அவர்களின் சமூகத்தைச் சேர்ந்த சில பிரமுகர்களும் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களும் முஹய்யிஸா இப்னு மஸ்வூத்(ரலி) அவர்களும் தங்களக்கு ஏற்பட்டிருந்த கடுமையான வறுமையின் காரணத்தால் (பேரீச்சங் கனிகள் பறிப்பதற்காக) கைபரை நோக்கிப் புறப்பட்டனர். (வழியில் இருவரும் பிரிந்துவிட்டனர்.) அப்போது'அப்துல்லாஹ் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்கள் கொல்லப்பட்டு ஒரு'குழியில் அல்லது'நீர்நிலையில்' போடப்பட்டுவிட்டார்'' என்ற செய்தி முஹய்யிஸா(ரலி) அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. எனவே, முஹய்யிஸா(ரலி) அவர்கள் (அப்பகுதி மக்களான) யூதர்களிடம் சென்று,'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள்தாம் அவரைக் கொன்று விட்டீர்கள்'' என்று கூறினார்கள். அதற்கு யூதர்கள்,'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவரை நாங்கள் கொல்லவில்லை'' என்றார்கள்.

பிறகு முஹய்யிஸா(ரலி) அவர்கள் தம் சமூகத்தாரிடம் சென்று (அதைப்பற்றி) அவர்களிடம் சொன்னார்கள். பின்னர் அவரும் அவரின் சகோதரர் ஹுவய்யிஸா(ரலி) அவர்களும் - இவர் வயதில் மூத்தவர் (கொல்லப்பட்டவரின் சகோதரரான) அப்துர் ரஹ்மான் இப்னு ஸஹ்ல்(ரலி) அவர்களும் (இறைத்தூதர்(ஸல்) அவர்களை) நோக்கி வந்தனர். உடனே கைபரில் (இறந்தவருடன்) இருந்த முஹய்யிஸா(ரலி) அவர்கள் (முந்திக்கொண்டு அல்லாஹ்வின்

தூதரிடம்) பேசப்போனார். அப்போது நபி(ஸல்) அவர்கள், முஹய்யிஸா(ரலி) அவர்களிடம், 'வயதில் மூத்தவரை (முதலில்) பேசவிடு என்றார்கள். எனவே, ஹுவய்யிஸா(ரலி) அவர்கள் பேசினார்கள். பிறகு (இளையவரான) முஹய்யிஸா(ரலி) அவர்கள் பேசினார்கள்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'ஒன்று உங்களுடைய நண்பருக்கான இழப்பீட்டுத் தொகையை அவர்கள் (யூதர்கள்) வழங்கட்டும் அல்லது (எம்முடன் போரிட) அவர்கள் போர் பிரகடனம் செய்யட்டும்'' என்று கூறினார்கள். பிறகு இ(ந்தக் கருத்)தைக் குறிப்பிட்டு யூதர்களுக்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கடிதம் எழுதினார்கள். 'நாங்கள் அவரைக் கொல்லவில்லை'' என்று (யூதர்கள் தரப்பிலிருந்து பதில் கடிதம்) எழுதப்பட்டது. அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஹுவய்யிஸா(ரலி), முஹய்யிஸா(ரலி) மற்றும் அப்துர் ரஹ்மான் இப்னு சஹ்ல(ரலி) ஆகியோரிடம், '(யூதர்கள் தாம் கொலை செய்தார்கள் என்று) நீங்கள் சத்தியம் செய்துவிட்டு, உங்கள் நண்பருக்கான உயிரீட்டுத் தொகையைப் பெறுகிறீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் 'இல்லை (நாங்கள் சத்தியம் செய்யமாட்டோம்)'' என்று கூறினர். நபி(ஸல்) அவர்கள், 'அவ்வாறாயின் (தாங்கள் அவரைக் கொல்லவில்லை என்று) யூதர்கள் உங்களிடம் சத்தியம் செய்யட்டுமா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் (மூவரும்), 'யூதர்கள் முஸ்லிம்கள் இல்லையே! (பொய்ச் சத்தியம் செய்யவும் அவர்கள் தயங்கமாட்டார்களே)'' என்று கூறினர். எனவே, கொல்லப்பட்டவருக்கான இழப்பீடாக நூறு ஒட்டகங்களை நபி(ஸல்) அவர்களே தம் தரப்பிலிருந்து வழங்கினார்கள். இறுதியில் (அவர்கள் கூடியிருந்த) அந்த வீட்டுக்குள் அந்த ஒட்டகங்கள் கொண்டுவரப்பட்டன. அப்போது அதில் ஓர் ஒட்டகம் என்னை மிதித்துவிட்டது.

## (குடிமக்களின்) பணிகளைக் கவனிப்பதற்காக ஒருவரை மட்டும் தனியாக ஆட்சியாளர் அனுப்பலாமா?

ஹதீஸ் 7193, ஹதீஸ் 7194 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித் அல்ஜுஹனீ(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

கிராமவாசி ஒருவர் (நபியவர்களிடம்) வந்து, 'இறைத்தூதர் அவர்களே! எங்களிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்றார். அவரின் எதிரி (பிரதிவாதி) எழுந்து, 'இவர் சொல்வது உண்மைதான் எங்களிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார். அந்தக் கிராமவாசி 'என் மகன் இவரிடம் வேலைக்காரனாக இருந்தான். அப்போது அவன் இவருடைய மனைவியுடன் விபசாரம் செய்துவிட்டான். (அதற்குத் தண்டனையாக) 'உன் மகனைக் கல்லால் அடித்துக் கொல்ல வேண்டும்'' என்று என்னிடம் மக்கள் சொன்னார்கள். எனவே, நான் (இந்த தண்டனையிலிருந்து அவனைக் காப்பாற்றுவதற்காக) அதற்கு பதில் நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் ஈட்டுத் தொகையாக வழங்கினேன். பிறகு நான் அறிஞர்களிடம் விசாரித்தபோது, 'என் மகனுக்கு நூறு சாட்டையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தலும் தான் தண்டனையாகத் தரப்படவேண்டும்'' என்று கூறினார்'' என்றார்.

இதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள், 'உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிக்கிறேன்: அந்த அடிமைப் பெண்ணும் (நூறு) ஆடுகளும் உம்மிடமே திருப்பித் தரப்பட வேண்டும். உம்முடைய மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டுக் காலத்திற்கு நாடு கடத்தும் தண்டனையும் தரப்படவேண்டும்'' என்று கூறிவிட்டு, (தமக்கருகிலிருந்த அஸ்லம் குலத்தாரான உனைஸ்(ரலி) அவர்களைப் பார்த்து) 'உனைஸே! நீங்கள் இந்த மனிதரின் மனைவியிடம் சென்று, (அவள் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டால்,) அவளுக்குக் கல்லெறி

தண்டனை வழங்குங்கள்‘‘ என்றார்கள். அவ்வாறே உனைஸ்(ரலி) அவர்கள் அப்பெண்ணிடம் சென்று (குற்றத்தை ஒப்புக்கொண்ட) அவளுக்குக் கல்லெறி தண்டனை நிறைவேற்றினார்கள்.

## ஆட்சியாளர்களுக்கு மொழிபெயர்த்துக் கூறுவதும், ஒரே மொழிபெயர்ப்பாளர் போதுமா? என்பதும்.

ஹதீஸ் 7195 ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள், யூதர்களின் (ஹீப்ரு அல்லது சிரியாக மொழி) எழுத்து வடிவைக் கற்றுக்கொள்ளும்படி எனக்குக் கட்டளையிட்டார்கள். அவ்வாறே கற்றுக்கொண்டு, நபி(ஸல்) அவர்கள் (யூதர்களுக்கு) அனுப்பும் கடிதங்களை நான் எழுதிவந்தேன் யூதர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு எழுதும் கடிதங்களை நபி(ஸல்) அவர்களுக்குப் படித்துக் காட்டி வந்தேன்.

உமர்(ரலி) அவர்கள் தம்மிடம் அலீ(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) மற்றும் உஸ்மான்(ரலி) ஆகியோர் இருக்க, (மொழி பெயர்ப்பாளர் அப்துர்ரஹ்மான் இப்னு ஹாத்திப்(ரலி) அவர்களிடம்),‘இந்த(க் கர்ப்பிணி)ப் பெண் என்ன சொல்கிறாள்?’ என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்,‘இவள் தன்னை இந்நிலைக்கு ஆளாக்கியவனைப் பற்றி உங்களுக்குத் தெரிவிக்கிறாள்‘‘ என்றார்கள்.

அபூ ஜம்ரா(ரலி) அவர்கள்,‘நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களுக்கும் அவர்களிடம் தீர்ப்பு கேட்டுவரும்) மக்களுக்கும் இடையே மொழிபெயர்ப்பாளராக இருந்துவந்தேன்‘‘ என்று கூறுகிறார்கள்.

சிலர்,‘ஆட்சியாளர் மற்றும் நீதிபதிக்கு இரண்டு மொழிபெயர்ப்பாளர்கள் தேவை ஒருவர் போதாது)‘‘ என்று கூறுகின்றனர்.

ஹதீஸ் 7196 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அபூ சுஃப்யான் இப்னு ஹர்ப்(ரலி) கூறினார்: (ரோம் நாட்டு மன்னர்) ஹெராக்ளியஸ், நான் குறைஷி வணிகக் குழு ஒன்றில் இருந்தபோது எனக்கு ஆளனுப்பி அழைத்துவரச் செய்துவிட்டு, தம் மொழிப்பெயர்ப்பாளரை நோக்கி,‘நான் இவரிடம் (சில கேள்விகள்) கேட்பேன் இவர் பதில் கூறும்போது பொய் சொன்னால் இவர் பொய் சொல்கிறார் என்று தெரிவித்துவிட வேண்டும் என இவருடைய நண்பர்களிடம் கூறிவிடு‘‘ என்றார். பிறகு முழு ஹதீஸையும் சொன்னார். (இறுதியில்) அவர் தம் மொழிபெயர்ப்பாளரிடம்,‘நீர் சொல்வது உண்மையாயிருந்தால் என்னுடை இவ்விரு பாதங்கள் இருக்கும் இடத்திற்கு விரைவில் அவர்(முஹம்மத்) அதிபராம்விடுவார் என அவரிடம் சொல்‘‘ என்றார்.

## ஆட்சித் தலைவர் தம் அதிகாரிகளிடம் கணக்குக் கேட்பது.

ஹதீஸ் 7197 அபூ ஹுமைத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இப்னுல் லுதபிய்யா (அல்லது இப்னுல் உதபிய்யா(ரலி) அவர்களை பனு சுலைம் குலத்தாரின் ஸகாத் பொருட்களை வசூலிக்கும் அதிகாரியாக நியமித்தார்கள். (அவர் பனுசுலைம் குலத்தாரிடம் சென்று ஸகாத் பொருட்களை வசூலித்துக் கொண்டு) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தபோது அவரிடம் நபி(ஸல்) அவர்கள் கணக்குக் கேட்டார்கள். அப்போது இப்னுல் லுதபிய்யா(ரலி) அவர்கள்,‘இது உங்களுக்காக உள்ளது இது எனக்கு வழங்கப்பட்ட அன்பளிப்பு‘‘ என்றார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘நீங்கள் (உங்களின் வாதத்தில்) உண்மையாளராக இருந்தால் நீங்கள் உங்கள் தந்தையின் வீட்டிலும்

தாயின் வீட்டிலும் உட்கார்ந்து கொண்டு உங்களைத் தேடி அன்பளிப்பு வருகிறதா பாருங்கள்'' என்றார்கள். பிறகு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து நின்று மக்களுக்கு உரையாற்றினார்கள். அல்லாஹ்வைப் புகழ்ந்து போற்றிவிட்டு, 'இறைவனைப் போற்றிய பின் கூறுகிறேன்: அல்லாஹ் என்னிடம் ஒப்படைத்துள்ள பணிகளில் சிலவற்றுக்கு உங்களில் சிலரை நான் அதிகாரிகளாக நியமிக்கிறேன். ஆனால், அவர் (போய்விட்டு) வந்து இது உங்களுக்கு இது எனக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது என்று கூறுகிறாரே! அவர் வாய்மையான வராயிருந்தால் தம் தந்தையின் வீட்டிலும் தாயின் வீட்டிலும் உட்கார்ந்துகொண்டு தம்மைத் தேடி அன்பளிப்பு வருகின்றதா? என்று பார்க்கட்டுமே! அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் யாரும் அதிலிருந்து எதையும் முறையின்றி எடுக்கக் கூடாது அப்படி எடுப்பவர் மறுமைநாளில் அதைச் சுமந்தபடியே அல்லாஹ்விடம் வருவார். அறிக! (அன்று) அல்லாஹ்விடம் கத்தும் ஒட்டகத்துடனும் மாட்டுடனும் ஆட்டுடனும் ஒருவர் வருவதை நிச்சயம் அறிவேன்'' என்றார்கள்.

பின்னர், நாங்கள் நபியவர்களுடைய அக்குள்களின் வெண்மையைப் பார்க்கும் அளவிற்குத் தம் இரண்டு கைகளையும் உயர்த்தி, '(இறைவா!) நான் எடுத்துரைத்துவிட்டேனா?' என்று (வானை அண்ணாந்து நோக்கிக்) கேட்டார்கள்.

## ஆட்சித் தலைவருக்கு நெருக்கமானவர்களும் அவர்களின் ஆலோசர்களும்.

(திருக்குர்ஆன் 03:118 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'பித்தானா' (நெருக்கமானோர்) என்பதற்கு 'அந்தரங்க நண்பர்கள்' என்று பொருள்.

ஹதீஸ் 7198 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் ஓர் இறைத்தூதரை அனுப்பினாலும் சரி, ஒருவரை (ஆட்சிக்கு)ப் பிரதிநிதியாக ஆக்கினாலும் சரி அவர்களுக்கு இரண்டு நெருக்கமான ஆலோசகர்கள் அவசியம் இருப்பார்கள். ஓர் ஆலோசகர், அவரை நன்மை செய்யும்படி ஏவி அதற்குத் தூண்டுகோலாக இருப்பார். மற்றோர் ஆலோசகர், அவரைத் தீமை புரியும்படி ஏவி அதற்குத் தூண்டுகோலாக இருப்பார். அல்லாஹ் (குற்றங்களிலிருந்து) யாரைப் பாதுகாத்தானோ அவரே மாசற்றவராக இருப்பார்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் வேறு பல அறிவிப்பாளர் தொடர்கள் வரியாகவும் வந்துள்ளது.

## ஆட்சித் தலைவர் மக்களிடம் பெறும் விசுவாசப் பிரமாண (வாசக)ம் எவ்வாறு அமையவேண்டும்?

ஹதீஸ் 7199 உபாதா இப்னு அஸ்ஸாமித் (ரலி) அறிவித்தார்.

இன்பத்திலும் துன்பத்திலும் (கட்டளையைச்) செவியேற்றுக் கீழ்ப்படிந்து நடப்போம் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் நாங்கள் விசுவாசப் பிரமாணம் (பைஅத்) செய்தோம்.

ஹதீஸ் 7200 உபாதா இப்னு அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் (தொடர்ந்து) அறிவித்தார்.

நாங்கள் ஆட்சியதிகாரத்தில் இருப்பவர்களுடன் சண்டையிட மாட்டோம் என்றும், நாங்கள் எங்கிருந்தாலும் அல்லாஹ்வின் விஷயத்தில் பழிப்பவர்களின் பழிப்புரைக்கு அஞ்சாமல் 'உண்மையே கடைப்பிடிப்போம்' அல்லது 'உண்மையே பேசுவோம்' என்றும் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் உறுதிமொழி அளித்தோம்.

ஹதீஸ் 7201 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (அகழ் வெட்டும் பணியைப் பார்வையிடுவதற்காகக்) குளிர்ந்த காலைப் பொழுதில் வெளியே சென்றார்கள். அப்போது முஹாஜிர்களும் அன்சாரிகளும் அகழ் தோண்டிக் கொண்டிருந்தார்கள்.

(அதைக் கண்ணுற்ற) நபி(ஸல்) அவர்கள், 'இறைவா! (நிலையான) நன்மை என்பது மறுமை (வாழ்வின்) நன்மையே. எனவே, அன்சாரிகளுக்கும் முஹாஜிர்களுக்கும் மன்னிப்பு வழங்குவாயாக!" என்று (பாடிய படி) சொன்னார்கள்.

இதற்கு பதிலளிக்கும் விதத்தில் நபித்தோழர்கள், 'நாங்கள் வாழும் காலமெல்லாம் அறப்போர் புரிவோம் என முஹம்மத்(ஸல்) அவர்களிடம் உறுதிமொழி வழங்கியுள்ளோம்'' என்று கூறினர்.

ஹதீஸ் 7202 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (அவர்களின் கட்டளைகளைச்) செவியேற்றுக் கீழ்ப்படிந்து நடப்போம் என உறுதிமொழி (பைஅத்) அளிக்கும்போது அவர்கள், 'உங்களால் முடிந்த விஷயங்களில்'' என்று சொல்வது வழக்கம்.

ஹதீஸ் 7203 அப்துல்லாஹ் இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல் மாலிக் இப்னு மர்வான் அவர்களிடம், (அவருக்கு விசுவாசப் பிரமாணம் செய்வதற்காக) மக்கள் ஒன்றுகூடிய இடத்தில் நான் இப்னு உமர்(ரலி) அவர்களைப் பார்த்தேன். அன்னார், 'நான் அல்லாஹ் வகுத்த நெறிமுறையின்படியும் அவனுடைய தூதர் காட்டிய வழிமுறையின்படியும், அல்லாஹ்வின் அடியாரும் இறைநம்பிக்கையாளர்களின் தலைவருமான அப்துல் மலிக் இப்னு மர்வானின் கட்டளைகளை என்னால் இயன்றவரை செவியேற்றுக் கீழ்ப்படிந்து நடப்பேன் என உறுதி அளிக்கிறேன் என் மக்களும் இதைப் போன்றே உறுதி அளித்துள்ளனர்'' என்று எழுதித் தந்தார்கள்.

ஹதீஸ் 7204 ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் நான் (அவர்களின் கட்டளையைச்) செவியேற்று அதற்குத் கீழ்ப்படிந்து நடப்பேன் என்று உறுதிமொழியளித்தேன். அப்போது'என்னால் இயன்ற விஷயங்களில்' என்றும்'முஸ்லிம்களில் ஒவ்வொருவருக்கும் நன்மையே நாடுவேன்' என்றும் சேர்த்துச் சொல்லும்படி என்னிடம் அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் 7205. அப்துல்லாஹ் இப்னு தீனார்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல் மலிக் இப்னு மர்வானுக்கு மக்கள் விசுவாசப் பிரமாணம் (பைஅத்) செய்து கொடுத்தபோது அவருக்கு அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்கள் இவ்வாறு கடிதம் எழுதினார்கள்: அல்லாஹ்வின் அடியாரும் இறைநம்பிக்கையாளர்களின் தலைவருமான அப்துல் மலிக் இப்னு மர்வானுக்கு... நான் அல்லாஹ் வகுத்த நெறிமுறைப்படியும், அவனுடைய தூதர் காட்டிய வழியின்படியும், அல்லாஹ்வின் அடியாரும் இறைநம்பிக்கையாளர்களின் தலைவருமான அப்துல மலிக்கின் கட்டளைகளை என்னால் இயன்றவரை செவியேற்றுக் கீழ்ப்படிந்து நடப்பேன் என்று உறுதி அளிக்கிறேன். என் மக்களும் இவ்வாறு உறுதியளித்துள்ளனர்.

ஹதீஸ் 7206 யஸீத் இப்னு அபீ உபைத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அவர்களிடம் நான், 'எந்த விஷயத்திற்காக நீங்கள் நபி(ஸல்) அவர்களிடம் ஹுதைபிய்யா நாளில் உறுதி மொழி அளித்தீர்கள்?' என்று கேட்டேன். அதற்கு

அவர்கள், '(இறைவழியில்) உயிர் நீக்கத் தயாராக இருப்பதாக உறுதிமொழி அளித்தோம்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7207 மிஸ்வர் இப்னு மக்ரமா(ரலி) அறிவித்தார்.

உமர்(ரலி) அவர்கள் (தமக்குப் பின் ஆட்சித் தலைவரைத் தேர்ந்தெடுத்திடும்) பொறுப்பை ஒப்படைத்திருந்த (ஆறு பேர் கொண்ட) குழுவினர் ஒன்றுகூடி தமக்குள் கலந்தாலோசித்தனர். 67 அவர்களிடம் அக்குழுவில் இடம்பெற்றிருந்த) அப்துர்ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள், 'நான் இந்த ஆட்சியதிகாரத்திற்காக உங்களுடன் போட்டியிடக்கூடியவன் அல்லன். ஆயினும், நீங்கள் விரும்பினால் உங்களிலிருந்தே ஒருவரை நான் உங்களுக்கு (ஆட்சித் தலைவராக)த் தேர்ந்தெடுக்கிறேன்'' என்றார்கள். எனவே, குழுவினர் அந்தப் பணியை அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் ஒப்படைத்தார்கள். இவ்வாறு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் ஒப்படைத்தார்கள். இவ்வாறு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களிடம் ஒப்படைத்தார்கள். இவ்வாறு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப(ரலி) அவர்கள் வசம் தங்கள் விவகாரத்தை அவர்கள் ஒப்படைத்துவிட்டபோது மக்கள் அப்துர்ரஹ்மான்(ரலி) அவர்களையே மொய்க்கத் தொடங்கிவிட்டனர். எந்த அளவிற்கென்றால், மக்களில் எவருமே அக்குழுவினரைப் பின்தொடர்ந்ததாகவோ அவர்கள் பின்னே சென்றதாகவோ நான் காணவில்லை. அந்த நாள்களில் அவரிடம் மட்டுமே மக்கள் ஆலோசனை கலந்தபடி அவரையே சுற்றிவரத் தொடங்கிவிட்டனர். எந்த நாள் காலையில் நாங்கள் உஸ்மான்(ரலி) அவர்களுக்கு விசுவாசப் பிரமாணம் (பைஅத்) செய்து அளித்தோமோ அன்றைய இரவு சிறிது நேரம் தூங்கிய பிறகு அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள் வந்து திடீரென என் வீட்டுக் கதவைத் தட்டினார்கள்.

நான் விழித்துக்கொண்டேன். என்னிடம் அவர்கள், 'நீங்களோ உறங்குகிறீர்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! இன்றிரவு என்னைப் பெரிய அளவில் தூக்கம் தழுவவில்லை. நீங்கள் போய் ஸுபைர் இப்னு அவ்வாமையும் ஸஅத் இப்னு அபீ வக்காஸையும் அழைத்து வாருங்கள்'' என்று சொல்ல, நான் போய் அவர்களை அப்துர்ரஹ்மான் அவர்களிடம் அழைத்துவந்தேன். பிறகு அவ்விருவருடன் கலந்தாலோசித்துவிட்டு என்னை அழைத்து, 'அலீ(ரலி) அவர்களை என்னிடம் அழைத்துவருக'' என்றார்கள். அவ்வாறே நான் அலீ(ரலி) அவர்களை அழைத்துவர, அவர்களிடம் நடுநிசிவரை ஆலோசனை செய்தார்கள். பிறகு அலீ(ரலி) அவர்கள் (ஆட்சிப் பொறுப்பேற்க) ஆவல் கொண்டவர்களாக அப்துர் ரஹ்மான்(ரலி) அவர்களிடமிருந்து எழுந்தார்கள். அலீ(ரலி) அவர்களிடமிருந்து ஏதேனும் பிரச்சினை வருமோ என அப்துர் ரஹ்மான் அஞ்சியிருந்தார்கள். பிறகு, 'உஸ்மான்(ரலி) அவர்களை என்னிடம் அழைத்துவருக'' என்றார்கள். நானும் அவ்வாறே நான் அலீ(ரலி) அவர்களை அழைத்துவர, அவர்களிடம் நடுநிசிவரை ஆலோசனை செய்தார்கள். பிறகு அலீ(ரலி) அவர்கள் (ஆட்சிப் பொறுப்பேற்க) ஆவல் கொண்டவர்களாக அப்துர் ரஹ்மான்(ரலி) அவர்களிடமிருந்து எழுந்தார்கள். அலீ(ரலி) அவர்களிடமிருந்து ஏதேனும் பிரச்சினை வருமோ என அப்துர் ரஹ்மான் அஞ்சியிருந்தார்கள். பிறகு, 'உஸ்மான்(ரலி) அவர்களை என்னிடம் அழைத்துவருக'' என்றார்கள். நானும் அவ்வாறே உஸ்மான்(ரலி) அவர்களை அழைத்துவர, அவர்களிடமும் ஆலோசனை செய்தார்கள். இறுதியில், சுப்ஹுத் தொழுகைக்கு பாங்கு சொன்னவர் சொல்ல அவ்விருவரும் கலைந்தனர். அப்துர் ரஹ்மான்(ரலி) அவர்கள் மக்களுக்கு சுப்ஹுத் தொழுகை நடத்திய பின்னர் அந்த ஆலோசனைக் குழுவினர் சொற்பொழிவு மேடை (மிம்பர்) அருகே ஒன்று கூடினார்கள். பின்னர் முஹாஜிர்கள் மற்றும் அன்சாரிகளில் அங்கு வந்திருந்தவர்களிடமும் மாகாணங்களின் ஆளுநர்களிடமும் ஆளனுப்பினார்கள். அந்த ஆளுநர்கள் (மக்கா வந்து) அந்த ஹஜ்ஜில் உமர்(ரலி) அவர்களுடன்

கலந்து கொண்டிருந்(துவிட்டு மதீனா வந்திருந்)தனர்.68 அவர்கள் ஒன்றுகூடியபோது அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள் ஏகத்துவ உறுதிமொழியைக் கூறிவிட்டுப் பிறகு,'இறைவனைத் துதித்த பின் கூறுகிறேன்: அலீ(ரலி) அவர்களே! நான் மக்களின் கருத்தை ஆராய்ந்து பார்த்தேன். அவர்கள் உஸ்மானுக்குச் சமமாக எவரையும் கருதுவதாக எனக்குத் தெரியவில்லை. எனவே, உங்கள் உள்ளத்தில் (என் மீது) வருத்தம் ஏதும் கொள்ளவேண்டாம்'' என்று கூறினார்கள்.

பிறகு (உஸ்மான்(ரலி) அவர்களை நோக்கி),'அல்லாஹ் வகுத்த வழிமுறைப்படியும் அவனுடைய தூதரின் நடைமுறைப்படியும் அவர்களுக்குப் பின்னுள்ள கலீஃபாக்கள் இருவரின் நடைமுறைகளின் படியும் உங்களுக்கு உறுதிமொழி அளிக்கிறேன்'' என்று கூறினார்கள். இப்படி அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள் விசுவாசப் பிரமாணம் செய்ய முஹாஜிர்கள், அன்சாரிகள், மாகாண ஆளுநர்கள், முஸ்லிம்கள் என்று மக்கள் அனைவரும் (உஸ்மான்(ரலி) அவர்களுக்கு) விசுவாசப் பிரமாணம் செய்தனர்.

## (ஒரே சமயத்தில்) இரண்டு முறை விசுவாசப் பிரமாணம் செய்வது.

ஹதீஸ் 7208. ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் அந்த மரத்தினடியில் (பைஅத்துர் ரிள்வான்) உறுதி மொழி அளித்தோம். அப்போது அவர்கள் என்னிடம்,'ஸலமாவே! நீங்கள் உறுதிமொழி அளிக்கவில்லையா?' என்று கேட்டார்கள். நான்,'இறைத்தூதர் அவர்களே! முதல் முறையிலேயே நான் உறுதிமொழி அளித்து விட்டேன்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'இரண்டாவது முறையும் உறுதிமொழி அளியுங்கள்'' என்றார்கள்.

## கிராமவாசிகளின் விசுவாசப் பிரமாணம் (பைஅத்).

ஹதீஸ் 7209 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

கிராமவாசி ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதாக விசுவாசப் பிரமாணம் செய்தார். பின்னர் அவருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது. உடனே அந்தக் கிராமவாசி,'என் விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை விடுவித்து விடுங்கள்'' என்றார். நபி(ஸல்) அவர்கள் (அதை ஏற்க) மறுத்துவிட்டார்கள். பிறகு மீண்டும் வந்து'என்னுடைய விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை நீக்கிவிடுங்கள்'' என்றார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள் மறுத்துவிட்டார்கள். எனவே, அந்த மனிதர் (மதீனாவிலிருந்து) வெளியேறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மதீனா, கொல்லனின் உலை போன்றதாகும். அது தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றிவிட்டு நல்லவர்களைத் தூய்மைப்படுத்தும்'' என்றார்கள்.

## சிறுவர்களின் விசுவாசப் பிரமாணம் (பைஅத்)

ஹதீஸ் 7210 நபி(ஸல்) அவர்களின் காலத்தில் வாழ்ந்த அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அறிவித்தார்.

என் தாயார் ஸைனப் பின்த் ஹுமைத்(ரலி) அவர்கள் (நான் சிறுவனாயிருந்த போது) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்னைக் கொண்டு சென்றார்கள். அப்போது அவர்,'இறைத்தூதர் அவர்களே! இவனிடம் உறுதிப் பிரமாணம் வாங்குங்கள்'' என்று கூற, நபி(ஸல்) அவர்கள்,'இவன் சிறுவனாயிற்றே'' என்று சொல்லிவிட்டு, (அன்போடு) என் தலையை வருடிக்கொடுத்து எனக்காகப் பிரார்த்தனை செய்தார்கள்.

(அறிவிப்பாளர் ஸுஹ்ரா இப்னு மஅபத்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:)

என் பாட்டனார் அப்துல்லாஹ் இப்னு ஹிஷாம்(ரலி) அவர்கள் ஒரேயொரு ஆட்டை அறுத்துத் தம் குடும்பத்தார் அனைவருக்காகவும் குர்பானி கொடுத்துவந்தார்கள்.

## விசுவாசப் பிரமாணம் (பைஅத்) அளித்துவிட்டுப் பின்னர் அதை விலக்கிக் கொள்வது.

ஹதீஸ் 7211 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

கிராமவாசி ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதாக விசுவாசப் பிரமாணம் செய்தார். பின்னர் அவருக்கு மதீனாவில் காய்ச்சல் கண்டது. உடனே அந்தக் கிராமவாசி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர் அவர்களே! என் விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை நீக்கிவிடுங்கள்'' என்றார். நபி(ஸல்) அவர்கள் (அதை ஏற்க) மறுத்துவிட்டார்கள். பிறகு அவர் (மீண்டும்) வந்து'இறைத்தூதர் அவர்களே! என் பிரமாணத்திலிருந்து என்னை நீக்கிவிடுங்கள்'' என்றார். நபி(ஸல்) அவர்கள் மறுத்துவிட்டார்கள். பிறகு (மூன்றாம் முறையாக) அவர் நபியவர்களிடம் வந்து'இறைத்தூதர் அவர்களே! என் பிரமாணத்திலிருந்து என்னை நீக்கிவிடுங்கள்'' என்றார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள் மறுத்துவிட்டார்கள்.

எனவே, அந்தக் கிராமவாசி (மதீனாவிலிருந்து) வெளியேறினார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மதீனா, கொல்லனின் உலை போன்றதேயாகும். அது தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றிவிட்டு நல்லவர்களைத் தூய்மைப்படுத்துகின்றது'' என்றார்கள்.

## உலகாதாயத்திற்காக மட்டுமே ஒருவருக்கு விசுவாசப் பிரமாணம் (பைஅத்) செய்தல்.

ஹதீஸ் 7212 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மூன்றுபேரிடம் அல்லாஹ் மறுமை நாளில் பேசவுமாட்டான் அவர்களைத் தூய்மைப்படுத்தவுமாட்டான். அவர்களுக்குத் துன்பமிக்க வேதனையும் உண்டு.

ஒருவன், (மக்களின் பயணப்) பாதையில் தேவைக்கு மிஞ்சிய தண்ணீரை வைத்திருந்தும் வழிப்போக்கர்கள் அதைப் பயன்படுத்தவிடாமல் தடுத்துவிட்டவன் ஆவான்.

இன்னொருவன் (ஆட்சித்) தலைவரிடம் தன்னுடைய உலக ஆதாயத்திற்காகவே விசுவாசப் பிராமணம் செய்துகொண்டவன். தான் விரும்பியதை அவர் கொடுத்தால் அவருக்கு விசுவாசமாக நடப்பான் இல்லையென்றால் அவருக்கு விசுவாசகமா நடக்கமாட்டான்.

மற்றொருவன் அஸ்ர் நேரத்திற்குப் பிறகு தன்னுடைய வியாபாரப் பொருளை மற்றொருவரிடம் விற்பதற்காக,'இந்தப் பொருள் இன்ன (அதிக) விலை கொடுக்கப்(பட்டு வாங்கப்)பட்டது'' என்று அவ்வாறு கொடுக்கப்படாமலேயே (பொய்ச்) சத்தியம் செய்து, அதை உண்மையென நம்பவைத்து (தன் வாடிக்கையாளர்) அதை எடுத்துக்கொள்ளச் செய்தவன் ஆவான்.

## பெண்களின் விசுவாசப் பிரமாணம் (பைஅத்)

இது தொடர்பாக நபி(ஸல்) அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7213 உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் ஓர் அவையில் இருந்தபோது எங்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்கமாட்டீர்கள் திருடமாட்டீர்கள் விபசாரம் புரியமாட்டீர்கள் உங்கள் குழந்தைகளை (வறுமைக்கு அஞ்சி)க் கொல்லமாட்டீர்கள் நீங்கள் எவர் மீதும் அவதூறை இட்டுக்கட்டி உங்களிடையே பரப்பமாட்டீர்கள் நன்மையான காரியத்தில் (தலைவருக்கு) மாறு செய்யமாட்டீர்கள் என்று எனக்கு உறுதிமொழி அளியுங்கள். உங்களில் (இந்த உறுதிமொழிக்கேற்ப நடந்து) அதை நிறைவேற்றுகிறவருக்கு நற்பலன் அளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாகும். இந்தக் குற்றங்களில் ஏதேனுமொன்றை ஒருவர் செய்து உலகிலேயே அதற்காக அவர் தண்டிக்கப்பட்டால் அந்தத் தண்டனையே அவரின் (குற்றத்திற்குப்) பரிகாரமாக ஆகிவிடும். அதில் ஏதேனுமொன்றை ஒருவர் செய்து அல்லாஹ் அதை (உலகில்) மறைத்துவிட்டால் அவரின் விவகாரம் அல்லாஹ்விடம் ஒப்படைக்கப்பட்டதாகும். அவன் நாடினால் அவரை தண்டிப்பான். நாடினால் அவரை மன்னிப்பான்.

எனவே, நாங்கள் நபி(ஸல்) அவர்களிடம் அதன்படி உறுதிமொழி அளித்தோம்.

ஹதீஸ் 7214 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் பெண்களிடம்'நபியே! இறைநம்பிக்கைக் கொண்ட பெண்கள் உங்களிடம் அல்லாஹ்வுக்கு எதையும் இணைவைக்கமாட்டார்கள் திருடமாட்டார்கள் தங்கள் குழந்தைகளைக் கொலை செய்யமாட்டார்கள் தாங்களாக அவதூறு இட்டுக்கட்டி பரப்பமாட்டார்கள் நற்செயலில் உங்களுக்கு மாறுசெய்யமாட்டார்கள் என்று உறுதிமொழி அளித்தால் அவர்களிடம் உறுதிமொழி வாங்குங்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 60:12 வது) இறைவசனத்தை ஓதி வாய்மொழியாக விசுவாசப் பிரமாணம் வாங்குவார்கள். (கையால் தொட்டு வாங்கமாட்டார்கள்.) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கை, அவர்களுக்குச் சொந்தமான பெண்களை (-துணைவியரை)த் தவிர வேறெந்த பெண்ணின் கையையும் தொட்டதில்லை.

ஹதீஸ் 7215 உம்மு அத்திய்யா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் நாங்கள் (-பெண்கள்) உறுதிமொழி (பைஅத்) அளித்தோம். அப்போது அவர்கள் எங்களுக்கு இந்த (திருக்குர்ஆன் 60:12 வது) இறைவசனத்தை ஓதிக்காட்டினார்கள். ஒப்பாரிவைக்கக் கூடாதென்று எங்களுக்குத் தடை விதித்தார்கள். அப்போது எங்களில் ஒரு பெண் (விசுவாசப் பிரமாணம் செய்யும் வகையில் சைகை செய்வதற்காக நீட்டிய) தன்னுடைய கையைப் பின்வாங்கிக் கொண்டு இன்ன பெண் எனக்கு (என் துக்கத்தில் உடனிருந்து ஒப்பாரிவைத்து) உதவினாள். எனவே, நான் அவளுக்குப் பிரதியுபகாரம் செய்ய (அவளுடன் சேர்ந்து ஒப்பாரிவைக்க) விரும்புகிறேன்‘‘ என்று சொன்னாள். நபி(ஸல்) அவர்கள் ஏதும் கூறவில்லை. அவள் சென்றுவிட்டுப் பிறகு திரும்பி வந்(து உறுதிமொழி அளித்)தாள். (ஒப்பாரி வைக்கமாட்டோம் என்று உறுதிமொழியளித்தவர்களில்) உம்முசுலைம், உம்முல் அலா ஆகியோரும் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களின் துணைவியாரான'பின்த் அபீ சப்ராவும்' அல்லது'பின்த் அபீ சப்ராவும் முஆத்(ரலி) அவர்களின் துணைவியாரும்' தவிர வேறெவரும் தம் வாக்குறுதியை நிறைவேற்றவில்லை.

## அளித்த உறுதிமொழியை முறிப்பது.

உயர்ந்தோன் அல்லாஹ் கூறினான்:

(நபியே!) உங்களிடம் உறுதிப்பிரமாணம் செய்தவர்கள் (உண்மையில்) அல்லாஹ்விடமே உறுதிப் பிரமாணம் செய்கிறார்கள். அல்லாஹ்வின் கரம் அவர்களின் கரத்தின் மீது உள்ளது. உறுதிப் பிரமாணத்தை முறிப்பவர் தமக்கெதிராகவே அதை முறித்துக் கொள்கிறார். அல்லாஹ்விடம்

செய்துகொண்ட ஒப்பந்தத்தை நிறைவேற்றுபவருக்கு அல்லாஹ் மகத்தான பிரதிபலனை விரைவில் வழங்குவான். (திருக்குர்ஆன் 48:10)

ஹதீஸ் 7216 ஜாபிர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு கிராமவாசி வந்து, '(இறைத்தூதர் அவர்களே! இஸ்லாத்தை ஏற்கும் விசுவாசப் பிரமாணத்தை என்னிடமிருந்து பெறுங்கள்' என்று கோரினார். நபி (ஸல்) அவர்களும் அவரிடம் இஸ்லாத்தை ஏற்கும் விசுவாசப் பிரமாணத்தைப் பெற்றார்கள். பிறகு அவர் அடுத்த நாள் காய்ச்சலுடன் வந்து, '(என் விசுவாசப் பிரமாணத்திலிருந்து) என்னை விடுவித்துவிடுங்கள்' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் (விடுவிக்க) மறுத்துவிட்டார்கள்.

அவர் திரும்பிச் சென்றபோது, 'மதீனா நகரம் கொல்லன் உலை போன்றதாகும் அது தன்னிலுள்ள தீயவர்களை (சோதனைகளின் மூலம்) வெளியேற்றி நல்லவர்களைத் தூய்மைப்படுத்துகின்றது' என்றார்கள்.

## ஆட்சித் தலைவர் (தமக்குப் பிறகு ஓர் ஆட்சித் தலைவரையோ, அவரைத் தேர்ந்தெடுக்கும் ஒரு குழுவையோ) நியமிப்பது.

ஹதீஸ் 7217 காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர் அஸ்ஸித்தீக் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(நபி (ஸல்) அவர்கள் தம் இறுதி நாள்களில் நோயுற்றிருந்தபோது) ஆயிஷா (ரலி) அவர்கள், 'அந்தோ! என் தலை (வலி) யே!"என்று (தமக்கு ஏற்பட்ட தலைவலியின் கடுமையால்) சொல்ல, இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'நான் உயிரோடிருக்கும் போதே உனக்கு அது (-இறப்பு-) ஏற்பட்டால் உனக்காக நான் (அல்லாஹ்விடம்) பாவமன்னிப்புக் கோரி உனக்காகப் பிரார்த்திப்பேன்' என்றார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள், 'அந்தோ! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (விரைவில்) இறந்து போக வேண்டுமென்றே நீங்கள் விருப்பப்படுவதாக எண்ணுகிறேன். நான் இறந்து போய்விட்டால் அந்த நாளின் இறுதியிலேயே (என்னுடைய இல்லம் சென்று) நீங்கள் உங்களுடைய (மற்ற) துணைவியரில் ஒருவருடன் மணவறை காண்பீர்கள் (என்னை மறந்துவிடுவீர்கள்)' என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், (புன்னகைத்துவிட்டு), 'இல்லை (உனக்கு ஒன்றும் ஆகாது) நான்தான் (இப்போது) என் தலை (வலி) யே! என்று சொல்ல வேண்டியுள்ளது. (உண்மையில் உன்மீதும் உன் குடும்பத்தார் மீதும் நான் அதிக மதிப்பு வைத்துள்ளேன். அதனாலேயே உன் தந்தை) அபூ பக்ருக்கும் அவரின் புதல்வருக்கும் ஆளனுப்பி (வரவழைத்து எனக்குப் பின் என் பிரதிநிதியாக) அறிவித்துவிட விரும்பினேன். (தாம் விரும்பியவரை கலீஃபா என) யாரும் சொல்லிவிடவோ, (தாமே கலீஃபாவாக ஆக வேண்டும் என) எவரும் ஆசைப்படவோ கூடாது என்பதற்காகவே (இவ்வாறு அறிவிக்க விரும்பினேன்). ஆனால், பின்னர் (அபூ பக்ரைத் தவிர வேறொருவரைப் பிரதிநிதியாக்க) அல்லாஹ் அனுமதிக்க மாட்டான் இறைநம்பிக்கையாளர்களும் (அதை) ஏற்கமாட்டார்கள் என (எனக்கு நானே) சொல்லிக் கொண்டேன். (எனவேதான் அறிவிக்கவில்லை)' என்றார்கள்.

ஹதீஸ் 7218 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

உமர் (ரலி) அவர்களிடம் (அன்னார் தாக்கப்பட்டபோது) 'நீங்கள் உங்களுக்குப் பின் யாரையாவது உங்கள் பிரதிநிதியாக (ஆட்சித் தலைவராக) நியமிக்கக் கூடாதா?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 'நான் எவரையேனும் எனக்குப் பின் ஆட்சித் தலைவராக நியமித்தால் (அது தவறாகாது) ஏனென்றால், (எனக்கு முன்பு) என்னைவிடச் சிறந்தவரான அபூ பக்ர் (ரலி) அவர்கள் அவ்வாறு ஆட்சித் தலைவரை (என்னை) நியமித்துச் சென்றிருக்கிறார்கள். (எவரையும்

ஆட்சித் தலைவராக நியமிக்காமல்) அப்படியே நான்விட்டுவிட்டாலும் (அதுவும் தவறாகாது) ஏனெனில், என்னைவிடச் சிறந்தவர்களான இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவ்விதம் தான் (யாரையும் நியமிக்காமல்)விட்டுச் சென்றிருக்கிறார்கள்‘‘ என்றார்கள். உடனே நபித்தோழர்கள் உமர்(ரலி) அவர்களைப் பாராட்டினார்கள். அப்போது உமர்(ரலி) அவர்கள்,‘(என் கருத்து) பிடித்தோ பிடிக்காமலோ (என்னை நீங்கள் பாராட்டுகிறீர்கள். நான் வகித்த இந்தப் பதவி இறைவனிடம்) எனக்குச் சாதகமாகவும் வேண்டாம் பாதகமாகவும் வேண்டாம் சரிக்குச் சமமாக அமைந்த நிலையில் இதிலிருந்து நான் தப்பித்தாலே போதும் என்றே விரும்புகிறேன். நான் உயிரோடு இருக்கும்போது (தான் பதவியைச் சுமந்தேன் என்றால், எனக்குப் பின் ஒருவரை நியமிப்பதன் மூல)ம் இறந்த பிறகும் இதைச் சுமக்க நான் தயாராயில்லை‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7219 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இறந்த நாளுக்கு மறுநாள் (அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு பனு சாஇதா மண்டபத்தில் பிரமுகர்கள் வாக்களித்து’பைஅத்’ செய்த பிறகு பள்ளிவாசல் வந்து) சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது அமர்ந்தபடி உமர்(ரலி) அவர்கள் ஆற்றிய இரண்டாம் உரையை நான் செவியேற்றேன். உமர்(ரலி) அவர்கள் ஏகத்துவ உறுதிமொழி கூறினார்கள். (அப்போது) அபூ பக்ர்(ரலி) அவர்கள் ஏதும் பேசாமல் மௌனமாயிருந்தார்கள். உமர்(ரலி) கூறினார்: நமக்கெல்லாம் இறுதியாகத்தான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறப்பார்கள் அதுவரை உயிர் வாழ்வார்கள் என்றே நான் எதிர்பார்த்திருந்தேன். ஆனால், முஹம்மத்(ஸல்) அவர்கள் இறந்துவிட்டார்கள் என்றாலும், மேலான அல்லாஹ் நீங்கள் நல்வழியில் செல்ல உங்களிடையே (குர்ஆன் எனும்) ஒர் ஒளியை அமைத்துள்ளான் முஹம்மத்(ஸல்) அவர்களுக்கு அதன் மூலமே அல்லாஹ் நேர்வழி காண்பித்தான். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழரும் (ஸவ்ர் மலைக்குகையில் இருந்த) இரண்டு பேரில் இரண்டாமவருமான அபூ பக்ர்(ரலி) அவர்களே உங்களின் (ஆட்சியதிகார) விவகாரங்களுக்கு மக்களிலேயே மிகவும் தகுதி வாய்ந்தவர்க ஆவார்கள். எனவே, அன்னாரிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்து) விசுவாசப் பிரமாணம் செய்து கொடுங்கள்.

நபித்தோழர்களில் ஒரு சாரார் அதற்கு முன்பே பனு சாஇதா மண்டபத்தில் அபூ பக்ர்(ரலி) அவர்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்துவிட்டிருந்தார்கள். ஆனால், பொதுமக்களின் விசுவாசப் பிரமாணம் (இரண்டாம் நாள்) சொற்பொழிவு மேடையில் வைத்தே நடந்தது.

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸில்,‘அன்றைய தினம் உமர்(ரலி) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களிடம், சொற்பொழிவு மேடையில் ஏறுங்கள் என்று வற்புறுத்திக் கொண்டே இருந்தார்கள் இறுதியில், அபூ பக்ர்(ரலி) அவர்கள் சொற்பொழிவு மேடையில் ஏற, அவர்களுக்குப் பொதுமக்கள் விசுவாசப் பிரமாணம் செய்தார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7220 ஜுபைர் இப்னு முத்இம்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பெண் வந்தார். அவர் நபி(ஸல்) அவர்களிடம் ஒரு விஷயம் குறித்துப் பேசினார். நபி(ஸல்) அவர்கள் மறுபடியும் தம்மிடம் வருமாறு அவளுக்குக் கட்டளையிட்டார்கள். அவள்,‘இறைத்தூதர் அவர்களே! சொல்லுங்கள். நான் வந்து உங்களைக் காணவில்லையென்றால்...? என்று -தான் வருவதற்குள் நபி(ஸல்) அவர்கள் இறந்துவிட்டால் என்ன செய்வது என்ற கருத்தில் - கேட்டாள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் நீ என்னைக் காணவில்லை என்றால் அபூ பக்ரிடம் செல்‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7221 தாரிக் இப்னு ஷிஹாப்(ரலி) அறிவித்தார்.

(கலீஃபா) அபூ பக்ர்(ரலி) அவர்கள்'புஸாகா' எனும் குலத்தாரின் தூதுக் குழுவிடம்'உங்களை மன்னிப்பதற்கான காரணம் ஒன்றை இறைத்தூதரின் பிரதிநிதி(யான என)க்கும் முஹாஜிர்களுக்கும் அல்லாஹ் காட்டும் வரை நீங்கள் ஒட்டகங்களின் வால்களைப் பின்தொடர்ந்து (நாடோடிகளாகச்) சென்று கொண்டிருங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7222, ஹதீஸ் 7223 ஜாபிர் இப்னு சமுரா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்கள்,'பன்னிரண்டு ஆட்சித் தலைவர்கள் வருவார்கள்'' என்று சொல்ல கேட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள், நான் (சரிவரக்) கேட்காத ஒரு சொல்லையும் சொன்னார்கள். (அது என்னவென்று விசாரித்த போது) என் தந்தை (சமுரா (ரலி) அவர்கள்,'அவர்கள் அனைவரும் குறைஷியராக இருப்பார்கள்'' என்று (நபி(ஸல்) அவர்கள்) சொன்னார்கள் எனக் கூறினார்கள்.

## (வெளிப்படையாகத்) தெரிந்துகொண்ட பிறகு சச்சரவு செய்வோரையும் சந்தேகத்திற்குரியோரையும் வீட்டிலிருந்து வெளியேற்றுவது.

அபூ பக்ர்(ரலி) அவர்களின் சகோதரி (அபூ பக்ர்(ரலி) அவர்கள் இறந்துவிட்டதற்காக) ஒப்பாரி வைத்தபோது அவரை உமர்(ரலி) அவர்கள் (வீட்டைவிட்டு) வெளியேற்றினார்கள்.

ஹதீஸ் 7224 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! விறகுகளைக் கொண்டு வந்து கள்ளிகளாக உடைக்கும்படி நான் உத்தரவு பிறப்பித்துவிட்டு, பின்னர் தொழுகைக்காக அறிவிப்புச் செய்யும்படி ஆணையிட்டு, பின்னர் மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி ஒருவருக்குக் கட்டளையிட்டுவிட்டு, (கூட்டுத் தொழுகைக்கு வராமல் இருக்கும்) மனிதர்களைத் தேடிச் சென்று, அவர்களின் வீடுகளை அவர்களுடன் சேர்த்து எரித்துவிட வேண்டுமென நான் எண்ணியதுண்டு. என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! உங்களில் ஒருவருக்கு சதைத் திரட்சியுள்ள ஓர் எலும்போ அல்லது ஆட்டின் இரண்டு குளம்புகளுக்கிடையேயுள்ள இறைச்சித் துண்டுகளோ கிடைக்கும் என்றிருந்தாலும் கூட அவர்'இஷா' தொழுகையில் கலந்து கொள்வார்.

முஹம்மத் இப்னு சுலைமான்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)'மிர்மாத்' என்பது ஆட்டின் குளம்புகளுக்கிடையே உள்ள இறைச்சியைக் குறிக்கும். இது (வாய்பாட்டில்)'மின்ஸாத்' மற்றும்'மீஸாத்' போன்றதாகும். இதிலுள்ள'மீம்' எனும் எழுத்துக்கு'இகர' அடையாளம் ('கஸர்') உண்டு.

## தலைவர் குற்றவாளிகளையும் பாவிகளையும் தன்னுடன் பேசுவது, தன்னைச் சந்திப்பது போன்றவற்றிலிருந்து தடை செய்யலாமா?

ஹதீஸ் 7225 கஅப் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் தபூக் போருக்குச் செல்லாமல் பின்தங்கிவிட்டபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், எங்களுடன் பேச வேண்டாம் என்று முஸ்லிம்களுக்குத் தடை விதித்தார்கள். இந்த நிலையிலேயே நாங்கள் ஐம்பது நாள்கள் இருந்தோம். பிறகு அல்லாஹ் நாள்கள் இருந்தோம். பிறகு அல்லாஹ் எங்களை மன்னித்த செய்தியை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.

கஅப் இப்னு மாலிக்(ரலி), அவர்களிடமிருந்து அவர்களின் புதல்வர்களில் ஒருவரான அப்துல்லாஹ் இப்னு கஅப்(ரஹ்) அவர்கள் இதை அறிவித்தார்கள். அன்னார் தாம் தம் தந்தை கஅப்(ரலி) அவர்கள் (முதுமையடைந்து) கண்பார்வை இழந்துவிட்டபோது அவர்களின் கையைப் பிடித்து அழைத்துச் செல்பவர்களாக இருந்தார்கள்.

# அத்தியாயம் 94 எதிர்பார்ப்பு

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

## எதிர்பார்ப்பு குறித்து வந்துள்ளவையும், (இறைவழியில்) உயிர்த்தியாகம் செய்வதை எதிர்பார்ப்பதும்.

ஹதீஸ் 7226 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! என்னுடன் (அறப்போரில்) கலந்து கொள்ளாமல் பின்தங்கிவிடுவதைப் பலரும் விரும்பமாட்டார்கள் (அதே நேரத்தில்) அவர்கள் அனைவரையும் ஏற்றிச் செல்வதற்கு என்னிடம் வாகன வசதி கிடையாது. இந்நிலை மட்டும் இல்லாதிருப்பின், நான் (எந்தப் போரிலும்) கலந்து கொள்ளாமல் பின்தங்கியிருக்கமாட்டேன். (ஒன்றுவிடாமல் அனைத்திலும் கலந்து கொண்டிருப்பேன்.) நான் அல்லாஹவின் பாதையில் கொல்லப்பட்டுப் பிறகு உயிர் கொடுக்கப்பட்டு, மீண்டும் கொல்லப்பட்டு மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு, மீண்டும் கொல்லப்பட்டு மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு, மறுபடியும் கொல்லப்படுவதையே விரும்புகிறேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7227 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! நான் இறைவழியில் போரிட்டுக் கொல்லப்பட்டுப் பிறகு உயிர் கொடுக்கப்பட்டுப், பிறகு கொல்லப்பட்டு மீண்டும் உயிர் கொடுக்கப்பட்டு, மறுபடியும் கொல்லப்படுவதையே விரும்புகிறேன்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அஃரஜ்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்: அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் இச்சொற்களை மும்முறை கூறினார்கள் என்பதற்கு நான் அல்லாஹ்வை முன் வைத்து சாட்சியம் கூறுகிறேன்.

## நன்மையை எதிர்பார்த்தல்

“உஹுத் மலை அளவிற்கு என்னிடம் தங்கம் இருந்தாலும்.!”என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7228 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னிடம் உஹுத் மலை அளவிற்குத் தங்கம் இருந்தாலும், அதிலிருந்து ஒரு பொற்காசு என்னிடம் (எஞ்சி) இருந்து அதைப் பெற்றுக்கொள்பவரை நான் அடையும் நிலையில் மூன்று நாள்கள் கழிவதைக்கூட நான் விரும்பமாட்டேன் கடனை அடைப்பதற்காக நான் (அதிலிருந்து) எடுத்துவைக்கும் சிறிதளவு (தங்கத்தைத்) தவிர.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## “பின்னால் நான் அறிந்ததை முன்பே அறிந்திருந்தால்..! என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7229 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் பின்னால் அறிந்ததை முன்பே அறிந்திருந்தால் (என்னுடன்) குர்பானிப் பிராணியைக் கொண்டு வந்திருக்கமாட்டேன் மேலும், மக்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டபோதே நானும் (இஹ்ராமிலிருந்து) விடுபட்டிருப்பேன்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7230 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(‘விடைபெறும்’ ஹஜ்ஜின்போது) நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இருந்தோம். அப்போது நாங்கள் ஹஜ்ஜுக்காக (இஹ்ராம் கட்டி)'தல்பியா' சொன்னோம். துல்ஹஜ் மாதம் நான்காம் நாள் நாங்கள் மக்கா வந்தோம். அப்போது நபி(ஸல்) அவர்கள்'இறையில்லம் கஅபாவையும் ஸஃபா - மர்வாவையும் சுற்றி (தவாஃபும் சஃயும் செய்து)விட்டு, தம்முடன் குர்பானிப் பிராணி கொண்டு வந்தவர்களைத் தவிர மற்றவர்கள் அந்த ஹஜ்ஜை உம்ராவாக ஆக்கி, இஹ்ராமிலிருந்து விடுபட்டுக் கொள்ளுமாறு உத்தரவிட்டார்கள். நபி(ஸல்) அவர்களையும் தல்ஹா(ரலி) அவர்களையும் தவிர எங்களில் வேறு எவரிடமும் குர்பானிப் பிராணி இருக்கவில்லை. அலீ(ரலி) அவர்கள் குர்பானிப் பிராணியுடன் யமன் நாட்டிலிருந்து வந்தார்கள். 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஹஜ் -உம்ரா ஆகிய இரண்டில்) எதற்காக இஹ்ராம் கட்டினார்களோ அதற்காக நானும் இஹ்ராம் கட்டினேன்‘‘ என அவர்கள் கூறினார்கள். அப்போது மக்கள் (சிலர்),‘தாம்பத்திய உறவு கொண்ட கையோடு நாங்கள்'மினா‘விற்குச் செல்ல வேண்டுமா?’ என்று கேட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘(ஹஜ் பருவத்தில் உம்ரா செய்யலாம் என) நான் இப்போது அறிந்ததை முன்கூட்டியே அறிந்திருந்தால் (பலியிட) குர்பானிப் பிராணி கொண்டு வந்திருக்கமாட்டேன் நான் என்னுடன் குர்பானிப் பிராணியை கொண்டு வந்திருக்காவிடில் இஹ்ராமிலிருந்து நான் விடுபட்டிருப்பேன்‘‘ என்று கூறினார்கள்.

(இதையடுத்து) ஜம்ரத்துல் அகபாவில் நபி(ஸல்) அவர்கள் கல்லெறிந்து கொண்டிருக்கையில் அவர்களை சுராக்கா இப்னு மாலிக்(ரலி) அவர்கள் சந்தித்து,‘இறைத்தூதர் அவர்களே! இ(வ்வாறு ஹஜ்ஜை உம்ராவாக மாற்றிக் கொள்வ)து, எங்களுக்கு மட்டும் உரியதா? (எல்லாத் தலைமுறையினருக்கும் பொதுவானதா)‘‘ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,‘இல்லை! எல்லாக் காலத்து (மக்களு)க்கும் உரியது‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஆயிஷா(ரலி) அவர்கள் மாதவிடாயோடு மக்காவிற்கு நபி(ஸல்) அவர்களுடன் வந்திருந்தார்கள். 'ஹஜ்ஜுக் கிரியைகள் அனைத்தையும் செய்யலாம் ஆனால் மாதவிடாயிலிருந்து தூய்மையடையும் வரை இறையில்லத்தைச் சுற்றிவரக் கூடாது தொழக் கூடாது‘‘ என்று ஆயிஷாவுக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். நபியவர்களும் மக்களும்'பத்ஹா' எனும் இடத்தில் தங்கியபோது ஆயிஷா(ரலி) அவர்கள்,‘இறைத்தூதர் அவர்களே! நீங்கள் (எல்லோரும்) ஹஜ்ஜையும் உம்ராவையும் நிறைவேற்றிச் செல்ல நான் ஹஜ்ஜை மட்டும் நிறைவேற்றிச் செல்வதா?’ என்று (மனக் குறையுடன்) கேட்டார்கள். எனவே, நபி(ஸல்) அவர்கள் அப்துர் ரஹ்மான் இப்னு அபீ பக்ர்(ரலி) அவர்களை(த் தம் சகோதரி) ஆயிஷா(ரலி) அவர்களுடன்'தன்யீம்' என்ற இடத்திற்குச் செல்லுமாறு கட்டளையிட்டார்கள். அப்போது ஆயிஷா(ரலி) அவர்கள் (அங்கு சென்று உம்ராவிற்காக இஹ்ராம் கட்டிக் கொண்டு) துல்ஹஜ மாதத்தில் ஹஜ் நாள்கள் கழிந்த பின் ஓர் உம்ராவை நிறைவேற்றினார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் இன்னின்னவாறு இருக்கக் கூடாதா? என்று (ஆதங்கப்பட்டுச்) சொன்னது.

ஹதீஸ் 7231 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (மதீனாவுக்கு வந்த புதிதில்) ஓர் இரவில் கண் விழித்திருந்தார்கள். பின்னர் (ஒருநாள்),'என்னை இரவில் காவல் காப்பதற்கு என் தோழர்களில் ஏற்ற ஒருவர் வேண்டுமே?' என்று கூறினார்கள், அப்போது நாங்கள் ஆயுதத்தின் ஓசையைக் கேட்டோம். நபி(ஸல்) அவர்கள்'யார் அங்கே?' என்று கேட்டார்கள். வந்தவர்,'நானே ஸஅத், இறைத்தூதர் அவர்களே! தங்களைக் காவல் காப்பதற்காக வந்தேன்'' என்று கூறினார்.

பிறகு நபி(ஸல்) அவர்கள், நாங்கள் அவர்களின் குறட்டைச் சப்தத்தை கேட்குமளவிற்கு (நிம்மதியாக) உறங்கினார்கள்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

பிலால்(ரலி) அவர்கள் (மதீனாவில் காய்ச்சல் கண்டு நிவாரணமடைந்தபோது,)

'இத்கிர்' (நறுமணப்) புல்லும்

'ஜலீல்' (கூரைப்) புல்லும்

என்னைச் சூழ்ந்திருக்க..

(மக்காவின்) பள்ளத்தாக்கில்

ஓர் இராப் பொழுதையேனும் நான் கழிப்பேனா?'

என்ற கவிதையைக் கூறினார்கள். அதை நான் நபி(ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன் என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## குர்ஆனையும் கல்வியறிவையும் பெறுவதற்கு ஆசைப்படுவது.

ஹதீஸ் 7232 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு விஷயங்களைத் தவிர வேறெதற்காகவும் பொறாமைப்படலாகாது: 1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் குர்ஆனின் அறிவை வழங்கினான். அவர் அதைக் காலையும் மாலையும் ஓதி வருகிறார். (இதைக் கண்ட) மற்றொருவர்,'இவருக்குக் கொடுக்கப்பட்டதைப் போன்று எனக்கும் கொடுக்கப்பட்டிருந்தால் போன்று எனக்கும் கொடுக்கப்பட்டிருந்தால் இவர் செய்வதைப் போன்று நானும் செய்திருப்பேன்'' என்று (ஆதங்கத்துடன்) சொல்கிறார்.

2. மற்றொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கினான். அவர் அதை உரிய வழியில் செலவிடுகிறார். (இதைக் காணும்) மற்றொருவர்'இவருக்குக் கொடுக்கப்பட்டதைப் போன்று எனக்கும் கொடுக்கப்பட்டிருந்தால் இவர் செய்வதைப் போன்று நானும் செய்திருப்பேன்'' என்று (ஆதங்கத்துடன்) சொல்கிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

...ஜரீர் இப்னு அப்தில் ஹமீத்(ரஹ்) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை குதைபா(ரஹ்) அவர்களும் அறிவித்தார்கள்.

## விரும்பத்தகாத எதிர்ப்பு

அல்லாஹ் கூறினான்:

மேலும், எதன் மூலம் உங்களில் சிலரை வேறு சிலரைவிட அல்லாஹ் மேன்மையாக்கியிருக்கிறானோ, அதனை (அடைய வேண்டுமென்று) பேராசை கொள்ளாதீர்கள். ஆண்களுக்கு, அவர்கள் தேடியவற்றில் உரிய பங்குண்டு (அவ்வாறே) பெண்களுக்கும், அவர்கள் தேடியவற்றில் உரிய பங்குண்டு. எனவே, அல்லாஹ்விடம் அவனுடைய அருளைக் கேளுங்கள்

நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்களையும் நன்கு அறிந்தவனாக இருக்கிறான். (திருக்குர்ஆன் 04:32)

ஹதீஸ் 7233 அனஸ் (ரலி) அறிவித்தார்.

"இறப்பை (எதிர்பார்த்து) ஆசைப்படாதீர்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியேற்றிருக்காவிட்டால் (இறப்பின் மீது) ஆசைகொண்டிருப்பேன்.

என நள்ர் இப்னு அனஸ் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 7234 கைஸ் இப்னு அபீ ஹாஸிம் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் கப்பாப் இப்னு அல்அரத் (ரலி) அவர்களை உடல் நலம் விசாரிக்கச் சென்றோம். (கடும் வயிற்றுவலிக்கு சிகிச்சை பெறுவதற்காகத் தம் வயிற்றில்) அவர்கள் ஏழு முறை சூடுபோட்டிருந்தார்கள். அப்போது அவர்கள்'இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மரணத்தை வேண்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டாமென எங்களுக்குத் தடை விதித்திருக்காவிட்டால் அதை வேண்டி நான் பிரார்த்தனை புரிந்திருப்பேன்' என்றார்கள்.

ஹதீஸ் 7235 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் எவரும் மரணத்தை விரும்ப வேண்டாம். ஒன்று அவர் நல்லவராக இருப்பார் (அவர் உயிர்வாழ்வதன் மூலம் நன்மையை) அவர் அதிகமாக்கிக் கொள்ளலாம். அல்லது அவர் தீயவராக இருப்பார் அவர் (உயிர் வாழ்வதால்) மனம் திருந்தக்கூடும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## "அல்லாஹ் இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழியடைந்திருக்கமாட்டோம்' என்று ஒருவர் சொல்வது.

ஹதீஸ் 7236 பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்.

அகழ்ப்போரின்போது எங்களுடன் நபி (ஸல்) அவர்களும் மண்ணைச் சுமந்து எடுத்துவந்தார்கள். அவர்கள் (சுமந்து வந்த) மண் அவர்களின் வயிற்றின் வெண்மையை மறைத்திருந்ததை பார்த்தேன். அப்போது அவர்கள், '(இறைவா!) நீ இல்லாவிட்டால் நாங்கள் நேர்வழி அடைந்திருக்கமாட்டோம்.

நாங்கள் தர்மம் செய்யதிருக்கவுமாட்டோம்

தொழுதிருக்கவுமாட்டோம்.

எனவே, எங்களின் மீது அமைதியை இறக்கியருள்வாயாக!

'இவர்கள்' அல்லது'(குறைஷித்) தலைவர்கள்' எங்களின் மீது அக்கிரமம் புரிந்துவிட்டார்கள்.

இவர்கள் எங்களைச் சோதனையில் ஆழ்த்த விரும்பினால்

அதற்கு நாங்கள் இடமளிக்கமாட்டோம்"

என்று (இறுதி வரியைக்) குரலை உயர்த்தி (பாடல் நடையில்) கூறினார்கள்.

## எதிரியை (போர்க் களத்தில்) சந்திக்க ஆசைப்படுவது விரும்பத் தக்கதன்று.

இது தொடர்பாக நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் ஹதீஸ் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7237 உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களிடம் எழுத்தராகப் பணிபுரிந்தவரும் அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அடிமையுமான அபுந் நள்ர் சாலிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உமர் இப்னு உபைதில்லாஹ்(ரஹ்) அவர்களுக்கு அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா(ரலி) அவர்கள் கடிதம் எழுதியிருந்தார்கள். நான் அதை (அவர்களுக்கு)ப் படித்துக் காட்டினேன். அதில், 'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், எதிரிகளை(ப் போர்க் களத்தில்) சந்திக்க ஆசைப்படாதீர்கள். அல்லாஹ்விடம் (போர் அழிவுகளிலிருந்து) பாதுகாப்புக் கோருங்கள். என்றார்கள்'' என்றிருந்தது.

## (இப்படிச் செய்திருந்தால் நன்றாயிருந்திருக்கும் என்பதைச் சுட்டும்) லவ் எனும் (வியங்கோள் இடைச்) சொல்லைப் பயன்படுத்துவது எந்த அளவிற்குச் செல்லும்?

அல்லாஹ் கூறினான்:'உங்களைத் தடுக்கும் அளவிற்கு எனக்கு பலம் இருந்திருக்குமானால் (தடுத்திருப்பேன்)'' என்று (நபி) லூத் கூறினார். (திருக்குர்ஆன் 11:80)

ஹதீஸ் 7238 காசிம் இப்னு முஹம்மத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் சாப அழைப்புப் பிரமாணம் ('லிஆன்' செய்த ஒரு தம்பதியரைக் பற்றிக் குறிப்பிட்டார்கள். உடனே அப்துல்லாஹ் இப்னு ஷத்தாத்(ரஹ்) அவர்கள், 'நான் சாட்சி இல்லாமலேயே ஒரு பெண்ணுக்குக் கல்லெறி தண்டனை அளிப்பவனாயிருந்தால் (இவளுக்கு அளித்திருப்பேன்)' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியது இந்தப் பெண் குறித்தா? என்று கேட்டார்கள். அதற்கு இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள், 'இல்லை அவள் வெளிப்படையாகவே தவறு செய்து வந்தவள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7239 அதாஉ இப்னு அபீ ரபாஹ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையை (எப்போதும் தொழும் நேரத்தைவிட)த் தாமதப்படுத்தினார்கள். அப்போது உமர்(ரலி) அவர்கள் வந்து, 'தொழுகைக்கு வாருங்கள், இறைத்தூதர் அவர்களே! பெண்களும் குழந்தைகளும் உறங்கிவிட்டார்கள்'' என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் தங்களின் தலையில் நீர் சொட்டிக் கொண்டிருக்க வெளியே வந்து, 'என் சமுதாயத்தாருக்கு' அல்லது'மக்களுக்கு' சிரமம் ஏற்படும் என்று நான் கருதியிராவிட்டால், (இஷா) தொழுகையை இந்த (இருள் கப்பிய) நேரத்தில்தான் தொழவேண்டும் என்று அவர்களுக்கு நான் உத்தரவிட்டிருப்பேன்'' என்று கூறினார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் இந்த (இஷா)த் தொழுகையைத் தாமதப்படுத்தினார்கள். அப்போது உமர்(ரலி) அவர்கள் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! பெண்களும் குழந்தைகளும் தூங்கிவிட்டார்கள்'' என்று சொல்ல, நபி(ஸல்) அவர்கள் தங்களின் விலாவிலிருந்து வழியும் தண்ணீரைத் துடைத்தபடி, 'என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்படும் என்று நான் கருதியிராவிட்டால், (இஷாத் தொழுகைக்கு) இதுதான் சரியான நேரம் (என்று சொல்லியிருப்பேன்)'' என்றார்கள்.

அதாஉ (ரஹ்) அவர்கள் அறிவித்ததாக அம்ர் இப்னு தீனார் (ரஹ்) அவர்களின் அறிவிப்பு ஒன்றும் உள்ளது. அதன் அறிவிப்பாளர் தொடரில் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இடம் பெறவில்லை.

இதே ஹதீஸ் சிற்சில வாசக மாற்றங்களுடன் வேறு சில அறிவிப்பாளர்தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 7240 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாருக்குச் சிரமம் ஏற்படும் என்று நான் கருதியிராவிட்டால், (எல்லாத் தொழுகைகளிலும் கட்டாயமாகப்) பல்துலக்கும்படி (மிஸ்வாக் செய்யும்படி) மக்களுக்கு நான் கட்டளையிட்டிருப்பேன்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7241 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (ரமளான்) மாதக் கடைசியில் தொடர்நோன்பு நோற்றார்கள். (இதைக் கண்டு) மக்கள் சிலரும் தொடர் நோன்பு நோற்றார்கள். இந்த விஷயம் நபி (ஸல்) அவர்களுக்கு எட்டியபோது அவர்கள், 'எனக்கு (மட்டும்) இந்த மாதம் (எத்தனை நாள்கள்) நீட்டிக்கப்பட்டாலும் என்னால் தொடர் நோன்பு நோற்க முடியும். அப்போது (என்னைப் பார்த்து தொடர்நோப்பு நோற்று, வணக்க வழிபாடுகளில்) மிதமிஞ்சி ஈடுபடுபடுவர்கள் தங்களின் போக்கைக் கைவிட வேண்டியது வரும். நான், உங்களைப் போன்றவன் அல்லன். எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் கொடுக்கும் நிலையில் நான் உள்ளேன்'' என்றார்கள்.

இதே ஹதீஸ் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்தே மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 7242 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'உங்களில் யார் என்னைப் போல் இருக்கிறார்? எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் கொடுக்கிற நிலையில் நான் உள்ளேன்'' என்று பதிலளித்தார்கள். மக்கள் (தொடர் நோன்பைக்) கைவிட மறுத்தபோது அவர்களுடன் சேர்ந்து ஒரு நாளும் அதன் பிறகு ஒரு நாளும் நபியவர்கள் தொடர்நோன்பு நோற்றார்கள். அதற்குள் (அடுத்த) மாதப் பிறையைக் கண்டார்கள். அப்போது'பிறை இன்னும் தள்ளிப்போயிருந்தால், உங்களை இன்னும் (தொடர் நோன்பை) அதிகமாக்க வைத்திருப்பேன்'' என்று அவர்களைக் கண்டிப்பவர்களைப் போன்று சொன்னார்கள்.

ஹதீஸ் 7243 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நான் (ஒரு முறை) நபி (ஸல்) அவர்களிடம், (புனித கஅபாவை ஒட்டியுள்ள ஹத்தீம் எனும்) வளைந்த கவரைப் பற்றி, 'இது கஅபாவில் சேர்ந்ததா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'ஆம்'' என்று பதிலளித்தார்கள். நான், 'அப்படியானால் கஅபாவுடன் இதை அவர்கள் இணைக்காததற்குக் காரணமென்ன?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'உன் (குறைஷி) சமூகத்தாருக்குப் பொருளாதாரப் பற்றாக்குறை ஏற்பட்டிருந்தது'' என்று பதிலளித்தார்கள். நான், 'கஅபாவின் வாயிலை (க் கீழிறக்கி) பூமியுடன் சேர்ந்தாற்போன்று ஆக்கியிருப்பேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7244 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஹிஜ்ரத் (மார்க்கத்திற்காகப் பிறந்தகத்தைத் துறந்து செல்வது) மட்டும் நடைபெறாமல் இருந்திருந்தால் நான் அன்சாரிகளில் ஒருவனாயிருந்திருப்பேன். மக்கள் ஒரு பள்ளத்தாக்கிலும் அன்சாரிகள்'வேறொரு பள்ளத்தாக்கிலும்' அல்லது'மலைக் கணவாயிலும்' நடந்து சென்றால் நான் அன்சாரிகளின்'பள்ளத்தாக்கு' அல்லது'கணவாயில்' தான் நடந்து செல்வேன்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7245 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஹிஜ்ரத் மட்டும் நடந்திராவிட்டால் நான் அன்சாரிகளில் ஒருவனாயிருந்திருப்பேன். மக்கள் ஒரு'பள்ளத்தாக்கில்' அல்லது'கணவாயில்' நடந்து சென்றால் நான் அன்சாரிகளின் பள்ளத்தாக்கிலும் கணவாயிலும்தான் நடந்து செல்வேன்.

என அப்துல்லாஹ் இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## அத்தியாயம் 95 தனிநபர் தரும் தகவல்கள் (கபருல் வாஹித்)

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

### தொழுகை அறிவிப்பு (பாங்கு), தொழுகை, நோன்பு, பாகப் பிரிவினை மற்றும் இதரச் சட்டங்கள் ஆகியவற்றில் வாய்மையான ஒருவரின் செய்தியை அனுமதிப்பது தொடர்பாக வந்துள்ளவை.

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களில் ஒவ்வொரு குழுவினரிலிருந்தும் சிலர் புறப்பட்டுச் சென்று, மார்க்கத்தைக் கற்றுக் திரும்பிவந்து, தம் சமூகத்தாருக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்ய வேண்டாமா? இதைக் கொண்டே அவர்கள் தங்களை(த் தீமையிலிருந்து) பாதுகாத்துக் கொள்வார்கள். (திருக்குர்ஆன் 09:122)3

ஒரு தனிமனிதர் கூட'சிலர்' (தாயிஃபத்) என அழைக்கப்படுவதுண்டு. 'இறைநம்பிக்கையாளர்களில் இரண்டு குழுவினர் சண்டையிட்டால் அவர்களிடையே சமாதானம் செய்துவையுங்கள்" என அல்லாஹ் கூறினான் (திருக்குர்ஆன் 49:09) (இங்கு'குழுவினர்' என்பதைக் குறிக்க'தாயிஃபத்' எனும் சொல் மூலத்தில் ஆளப்பட்டுள்ளது.) இரண்டு தனி நபர்கள் சண்டையிட்டுக்கொள்வதும் இவ்வசனத்தின் பொருளில் அடங்கும்.

மேலும், அல்லாஹ் கூறினான்: இறை நம்பிக்கையாளர்களே! தீயவன் எவனும் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால், அதைத் தீர்க்கமாக விசாரித்துக் கொள்ளுங்கள் (திருக்குர்ஆன் 49:06)

(தனிநபர் தகவலுக்கு மரியாதை இல்லாயானால்,) நபி(ஸல்) அவர்கள் தம் தளபதிகளை ஒருவர் பின் ஒருவராக(த் தனியே) எப்படி அனுப்பியிருக்க முடியும்? அவர்களில் ஒருவர் மறந்து (தவறிழைத்து)விட்டாலும் (மற்றொருவர் நினைவூட்டுவதன் மூலம்) நபிவழிக்கு அவர் திருப்பப்பட்டு விடுவார் (என்பதாலேயே முந்தியவருக்குப் பின்னால் பிந்தியவரை நபியவர்கள் அனுப்பினார்கள்.)

ஹதீஸ் 7246 மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ்(ரலி) அறிவித்தார்.

ஒத்த வயதுடைய இளைஞர்கள் பலர் நபி(ஸல்) அவர்களிடம் சென்றோம். நபி(ஸல்) அவர்களிடம் நாங்கள் இருபது நாள்கள் தங்கினோம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மென்மையானவர்களாக இருந்தார்கள். நாங்கள் எங்கள் வீட்டாரிடம் செல்ல ஆசைப்படுவதாக அவர்கள் எண்ணியபோது நாங்கள் எங்களுக்குப் பின்னேவிட்டு வந்தவர்களை (எங்கள் மனைவி மக்களை)ப் பற்றி எங்களிடம் விசாரித்தார்கள். நாங்கள் அவர்களுக்கு விவரித்தோம். நபி(ஸல்) அவர்கள், 'உங்கள் வீட்டாரிடம் நீங்கள் திரும்பிச் செல்லுங்கள் அவர்களிடையே தங்கி அவர்களுக்கு (மார்க்கத்தை)க் கற்பியுங்கள். அவர்களுக்கு (கடமைகளை நிறைவேற்றும்படியும் விலக்கப்பட்டவற்றைத் தவிர்க்கும்படியும்) கட்டளையிடுங்கள்" என்றார்கள். மேலும், 'என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள். தொழுகை நேரம் வந்துவிட்டால் உங்களில் ஒருவர் உங்களுக்குத் தொழுகை அறிவிப்பு (பாங்கு) கொடுக்கட்டும் உங்களில் பெரியவர் உங்களுக்குத் தலைமை தாங்கித் தொழுகை நடத்தட்டும்" என்றார்கள்.

இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் பல விஷயங்களைக் கூறினார்கள். அவற்றில் சிலவற்றை நான் நினைவில் வைத்துள்ளேன். சிலவற்றை நினைவில் வைக்கவில்லை.

ஹதீஸ் 7247 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் (நோன்பின் போது) சஹ்ர் உணவு உண்பதிலிருந்து பிலாலின் தொழுகை அறிவிப்பு (பாங்கு) உங்களைத் தடுத்துவிட வேண்டாம். ஏனெனில், இரவில் அவர் தொழுகை அறிவிப்புச் செய்வது' அல்லது'அவர் அழைப்பது' உங்களில் (இரவுத்) தொழுகையில் ஈடுபட்டிருப்போர் திரும்புவதற்காகவும் உறங்குவோருக்கு விழிப்பூட்டுவதற்காகவும் தான். ஃபஜ்ர் (நேரம்) என்பது இவ்வாறு (அகலவாட்டில் அடிவானில் மட்டும்) தென்படும் வெளிச்சமன்று. (நீளவாட்டில் எல்லாத் திசைகளிலும் பரவிவரும் வெளிச்சமே ஃபஜ்ருக்கு அடையாளமாகும்.)

அறிவிப்பாளர் யஹ்யா இப்னு ஸயீத் அல்கத்தான்(ரஹ்) அவர்கள் தம் இரண்டு கைகளையும் ஒன்று சேர்த்து, இவ்வாறு வெளிப்படுத்தி, தம் இரண்டு சுட்டு விரல்களையும் நீட்டிக் காட்டினார்கள்.

ஹதீஸ் 7248 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

பிலால் (ரமளான் மாதத்தின்) இரவில் முன்னறிவிப்புக்காகப் பாங்கு) அழைப்புக் கொடுப்பார். எனவே, அப்துல்லாஹ் இப்னு உம்மி மக்தூம் (ஃபஜ்ர் தொழுகைக்கு) அழைக்கிற வரை உண்ணுங்கள் பருகுங்கள். என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7249 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

(ஒரு நாள்) நபி(ஸல்) அவர்கள் லுஹ்ர் தொழுகையை எங்களுக்கு ஐந்து ரக்அத்களாகத் தொழுகை நடத்தினார்கள். அப்போது அவர்களிடம்,'தொழுகையின் (ரக்அத்) அதிகரிக்கப்பட்டுவிட்டதா?' என்று கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள்,'என்ன அது?' என்று (வியப்புடன்) கேட்டார்கள். மக்கள்,'ஐந்து ரக்அத்கள் தொழுதுவிட்டீர்களே?' என்று கூறினார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் சலாம் கொடுத்த பின்பு (மறதிக்குரிய) சிரவணக்கங்கள் (சஜ்தா சஹ்வு) இரண்டு முறை செய்தார்கள்.

ஹதீஸ் 7250 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (லுஹ்ர் அல்லது அஸ்ர் தொழுகையில்) இரண்டு ரக்அத்கள் தொழுதவுடன் (சலாம் கொடுத்துத்) திரும்பிவிட்டார்கள். உடனே துல்யதைன்(ரலி) அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! தொழுகையின் ரக்அத் குறைக்கப்பட்டுவிட்டதா?' என்று கேட்டார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் (மக்களை நோக்கி),'துல்யதைன் கூறுவது உண்மையா?' என்று கேட்டார்கள். மக்கள்,'ஆம்'' என்றார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எழுந்து பிந்திய இரண்டு ரக்அத்களைத் தொழுதுவிட்டு சலாம் கொடுத்தார்கள். பிறகு,'அல்லாஹு அக்பர்'' என்று சொல்லித் தம் (வழக்கமான) சஜ்தாவைப் போன்று சஜ்தாச் செய்துவிட்டு பிறகு தலையை உயர்த்தினார்கள்.

ஹதீஸ் 7251 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

மக்கள்'குபா' எனுமிடத்தில் தொழுகையில் இருந்தபோது ஒருவர் வந்து,'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் சென்ற இரவு குர்ஆன் (வசனம் ஒன்று) அருளப்பட்டுள்ளது. (மக்காவிலுள்ள இறையில்லம்) கஅபாவை (தொழுகையில்) முன்னோக்கும் படி அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. எனவே, (மக்களேஸ) கஅபாவையே நீங்களும் முன்னோக்கித் தொழுங்கள்'' என்றார். அப்போது மக்களின் முகம் (மஸ்ஜிதுல் அக்ஸா அமைந்திருந்த) ஷாம் நாட்டை நோக்கியிருந்தது. (இந்த அறிவிப்பைக் கேட்ட) உடனே அவர்கள் அப்படியே சுற்றி கஅபாவை நோக்கித் திரும்பினார்கள்.

ஹதீஸ் 7252 பராஉ இப்னு ஆஸிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனா நகருக்கு வந்தபோது பைத்துல் மக்தீஸ் (நகரிலுள்ள மஸ்ஜிதுல் அக்ஸா இறையில்லத்தை) நோக்கி பதினாறு அல்லது பதினேழு மாதங்கள் தொழுதார்கள். (தொழுகையில்) கஅபாவை நோக்கி முகம் திருப்புவதையே அவர்கள் விரும்பிவந்தார்கள். எனவே, அல்லாஹ்'(நபியே!) உம்முடைய முகம் (அடிக்கடி) வானத்தின் பக்கம் திரும்புவதை நாம் காண்கிறோம் எனவே, நீர் விரும்பும் கிப்லா(வாகிய கஅபா)வின் பக்கம் (இதோ) உம்மைத் திடமாக திருப்பி விடுகிறோம்'' எனும் (திருக்குர்ஆன் 02:144 வது) வசனத்தை அருளினான். இவ்விதம் (தொழுகையிலிருந்தபோதே) கஅபாவை நோக்கி முகம் திருப்பப்பட்டார்கள். அந்த அஸ்ர்தொழுகையில் நபி(ஸல்) அவர்களுடன் ஒருவர் தொழுதார். அவர் (பள்ளிவாசலிலிருந்து) வெளியேறி அன்சாரிகளில் ஒரு குலத்தாரைக் கடந்து சென்றபோது,'நபி(ஸல்) அவர்களுடன் தாம் தொழுததாகவும், (தொழுகையிலேயே) அவர்கள் முகம் கஅபாவை நோக்கித் திருப்பப்பட்டதாகவும் தாம் சாட்சியம் அளிப்பதாகச் சொன்னார். உடனே அம்மக்கள் அஸ்ர் தொழுகையில் ருகூஉ செய்து கொண்டிருந்த நிலையில் அப்படியே கஅபாவை நோக்கித் திரும்பினார்கள்.

ஹதீஸ் 7253 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நான் அபூ தல்ஹா அல்அன்சாரி(ரலி), அபூ உபைதா இப்னு அல்ஜர்ராஹ்(ரலி), உபை இப்னு கஅப்(ரலி) ஆகியோருககு பேரீச்சங்காய்களால் தயாரித்த மதுவை ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தேன். அது பேரீச்சங்கனியாலும் தயாரிக்கப்பட்டு வந்தது. அப்போது ஒருவர் வந்து,'மது தடை செய்யப்பட்டுவிட்டது'' என்றார். உடனே அபூ தல்ஹா(ரலி) அவர்கள்,'அனஸே! எழுந்து சென்று இந்த மண் பாத்திரங்கள் உடைத்தெறியும்'' என்றார்கள். நான் எழுந்து சென்று (மது ஊற்றிவைக்கும்) எங்களுடைய சாடியொன்றை எடுத்து அதன் அடிப்பாகத்தில் அடித்தேன். அது உடைந்தது.

ஹதீஸ் 7254 ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் நஜ்ரான்வாசிகளிடம்'நம்பகத்தன்மையில் முறையோடு நடந்து கொள்ளும் நம்பிக்கையாளர் ஒருவரை நிச்சயம் நான் உங்களுடன் அனுப்புவேன்'' என்றார்கள். இதைக் கேட்ட நபித்தோழர்கள் (ஒவ்வொருவரும்) நபியவர்களின் அழைப்பை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அபூ உபைதா(ரலி) அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.

ஹதீஸ் 7255 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வொரு சமுதாயத்தாருக்கும் (அவர்களின்) சம்பிக்கைக்குப் பாத்திரமானவர் ஒருவர் உண்டு. (என்னுடைய) இந்தச் சமுதாயத்தாரின் நம்பிக்கைக்குரியவர் அபூ உபைதா ஆவார்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7256 உமர்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிகளில் (எனக்கு) ஒருவர் (நண்பராக) இருந்தார். அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இல்லாதபோது, நான் அங்கு செல்வேன் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கிடைக்கும் செய்திகளை(ச் சேகரித்து) அவரிடம் கொண்டு செல்வேன். நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் இல்லாதபோது அவர் (அங்கு) செல்வார் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கிடைக்கும் செய்திகளை அவர் என்னிடம் கொண்டு வருவார்.

ஹதீஸ் 7257 அலீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு படைப்பிரிவை அனுப்பி அவர்களுக்கு (அன்சாரிகளில்) ஒருவரைத் தளபதியாக்கினார்கள். அவர் (ஒரு கட்டத்தில் படைவீரர்களின் மீது கோபம் கொண்டு) நெருப்பை மூட்டி,'இதில் நுழையுங்கள்'' என்றார். அவர்கள் அதில் நுழைய முனைந்தார்கள். (படையிலிருந்த) மற்றவர்கள்,'நாம் இந்த (நரக) நெருப்பிலிருந்து தப்பிக்கத்தானே (இஸ்லாத்திற்கு) வந்தோம்'' என்று கூறினர். எனவே, இதை அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் கூறினார்கள். நெருப்பில் புக முனைந்தோர் குறித்து,'அவர்கள் அதில் புகுந்திருந்தால் மறுமைநாள் வரை அதிலேயே இருந்திருப்பார்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள். மற்றவர்களிடம்,'அல்லாஹ்வுக்கு மாறுசெய்வதில் கீழ்ப்படிதல் கிடையாது கீழ்ப்படிதல் என்பதெல்லாம் நன்மையில்தான்'' என்றார்கள்.

ஹதீஸ் 7258 ஹதீஸ் 7259 உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் இப்னி உத்பா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் இரண்டு பேர் ஒரு வழக்கைக் கொண்டு வந்தததாக அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் ஸைத் இப்னு காலித்(ரலி) அவர்களும் என்னிடம் தெரிவித்தார்கள்.

ஹதீஸ் 7260 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இருந்தபோது கிராமவாசிகளில் ஒருவர் எழுந்து நின்று,'இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டப்படி எனக்குத் தீர்ப்பளியுங்கள்'' என்றார். உடனே அவரின் எதிரி (பிரதிவாதி) எழுந்து,'இவர் சொல்வது உண்மையே் இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டப்படியே அவருக்குத் தீர்ப்பளியுங்கள். எனக்கு (என் தரப்பு நியாயத்தை எடுத்துச்சொல்ல) அனுமதியளியுங்கள்'' என்றார். உடனே அவரின் எதிரி (பிரதிவாதி) எழுந்து,'இவர் சொல்வது உண்மையே் இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ்வின் சட்டப்படியே அவருக்குத் தீர்ப்பளியுங்கள். எனக்கு (என் தரப்பு நியாயத்தை எடுத்துச் சொல்ல) அனுமதியளியுங்கள்'' என்றார். அவரிடம் நபி(ஸல்) அவர்கள்,'சரி சொல்'' என்றார்கள். (இதற்கிடையில் அந்தக் கிரமாவாசி,)'என் மகன் இவரிடம் கூலிக்கு வேலை செய்து வந்தான். இவருடைய மனைவியுடன் அவன் விபசாரம் புரிந்துவிட்டான். அப்போது மக்கள் என் மகனுக்குக் கல்லெறி தண்டனை உண்டு என என்னிடம் தெரிவித்தனர். எனவே, நான் அதற்கு பதிலாக நூறு ஆடுகளையும் ஓர் அடிமைப் பெண்ணையும் ஈடாக வழங்கினேன். பிறகு அறிஞர்களிடம் கேட்டேன். அவர்கள், இவருடைய மனைவியைக் கல்லெறிந்து கொல்ல வேண்டும் என்றும், என் மகனுக்கு நூறு சாட்டையடிகளும் ஓராண்டு நாடு கடத்தலும் தான் (தண்டனை) என்றும் தெரிவித்தார்கள்'' என்று கூறினார்.

நபி(ஸல்) அவர்கள்,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! நான் உங்கள் இருவரிடையே அல்லாஹ்வின் சட்டப்படி தீர்ப்பளிக்கிறேன்:

''அடிமைப் பெண்ணையும் ஆடுகளையும் திருப்பிக் கொடுத்துவிடுங்கள். உம் மகனுக்கு நூறு கசையடிகளும் ஓராண்டு நாடு கடத்தும் தண்டனையும் வழங்கப்படவேண்டும்'' என்று கூறிவிட்டு, அஸ்லம் குலத்து மனிதர் ஒருவரை நோக்கி'உனைஸே! நீங்கள் இவருடைய மனைவியிடம் செல்லுங்கள். அவள் (விபசாரம் புரிந்தது உண்மைதான் என) ஒப்புக்கொண்டால் அவளைக் கல்லெறிந்து கொன்றுவிடுங்கள்'' என்றார்கள்.

அவ்வாறே உனைஸ்(ரலி) அவர்கள் அவளிடம் சென்றார்கள். அவள் (குற்றத்தை) ஒப்புக் கொள்ளவே அவளைக் கல்லெறிந்து கொன்றார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் ஸுபைர் இப்னு அல்அவ்வாம்(ரலி) அவர்களை மட்டும் தனியாக ஒற்றராக அனுப்பிவைத்தது.

ஹதீஸ் 7261 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அக்ழ்ப்போர் நாளில் (எதிரிகளை வேவு பார்க்கச் செல்வதற்காக) மக்களை அழைத்தார்கள். ஸுபைர் இப்னு அல்அவ்வாம்(ரலி) அவர்கள் முன்வந்தார்கள். பிறகும் மக்களை அழைத்தார்கள். ஸுபைர்(ரலி) அவர்களே மீண்டும் முன்வந்தார்கள். பிறகு மீண்டும் மக்களை அழைத்தார்கள். ஸுபைர்(ரலி) அவர்களே (மறுபடியும்) முன் வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'இறைத்தூதர்கள் ஒவ்வொருவருக்கும் சிறப்பு உதவியாளர் ஒருவர் உண்டு. என்னுடைய சிறப்பு உதவியாளர் ஸுபைராவார்'' என்றார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் இந்த ஹதீஸை இப்னுல் முன்கதிர்(ரஹ்) அவர்களிடமிருந்து மனனம் செய்தேன். அன்னாரிடம் அய்யூப்(ரஹ்) அவர்கள்'அபூ பக்ரே! இவர்களுக்கு ஜாபிர்(ரலி) அவர்களின் ஹதீஸ்களை அறிவியுங்கள் ஏனெனில் ஜாபிரிடமிருந்து நீங்கள் ஹதீஸ் அறிவிப்பது இவர்களைப் பரவசப்படுத்தும்'' என்று கூறினார்கள். உடனே அதே இடத்தில்'நான் ஜாபிர்(ரலி) அவர்களிடம் செவியேற்றேன் ஜாபிர்(ரலி) அவர்களிடம் செவியேற்றேன்'' என்று கூறி தொடர்ந்து பல ஹதீஸ்களை அன்னார் அறிவித்தார்கள்.

(மற்றோர் அறிவிப்பாளரான) அலீ இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: நான் சுப்யான்(ரஹ்) அவர்களிடம்'ஸவ்ரீ(ரஹ்) அவர்கள்'குறைழா போர் நாளில்' என்று கூறினார்களே!"என்று கேட்டேன். அதற்கு அவர்கள்'நீங்கள் அமர்ந்திருந்தபோது அன்னார்'அகழ்ப்போர் நாளில்' என்று கூறியதை நான் (நன்கு) நினைவில் வைத்துள்ளேன்'' என்றார்கள். மேலும், சுஃப்யான்(ரஹ்) அவர்கள்'இரண்டும் ஒரே நாள்தானே!"என்று கூறிவிட்டுப் புன்னகை செய்தார்கள்.

## ''இறைத்தூதரின் வீடுகளில் உங்களுக்கு அனுமதியளிக்கப்பட்டால் தவிர நுழையாதீர்கள்' எனும் (திருக்குர்ஆன் 33:53 வது) இறைவசனம்.

(உள்ளே செல்ல) ஒருவர் அனுமதியளித்தாலும் உள்ளே செல்லலாம்.

ஹதீஸ் 7262 அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்தினுள் சென்றார்கள். (அதன்) வாயிற்கதவைப் பாதுகாக்கும்படி எனக்குக் கட்டளையிட்டார்கள். அப்போது ஒருவர் அனுமதி கேட்டு வந்தார். நபி(ஸல்) அவர்கள்,'அவருக்கு அனுமதி அளியுங்கள். அவருக்கு சொர்க்கம் உண்டு என்று நற்செய்தி கூறுங்கள்'' என்றார்கள். அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்கள் தாம். பிறகு உமர்(ரலி) அவர்கள் வந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள்,'அவருக்கு அனுமதி அளியுங்கள் அவருக்கு சொர்க்கம் உண்டு என நற்செய்தியும் கூறுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7263 உமர்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் மாடியறை ஒன்றில் இருந்து கொண்டிருந்தபோது நான் (அவர்களிடம்) சென்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கறுப்பு நிற அடிமை ஒருவர் ஏணியின் மேற்படியில் இருந்தார். நான்'இதோ உமர் இப்னு அல்கத்தாப் வந்திருக்கிறார் என்று சொல்'' என்றேன். (அவ்வாறே அவர் சொல்ல) எனக்கு அனுமதியளித்தார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் ஒருவர் பின் ஒருவராக அனுப்பி வைத்த தலைவர்களும் தூதுவர்களும்.

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்கள் திஹ்யா அல்கல்பீ(ரலி) அவர்களிடம் தம் கடிதத்தைக் கொடுத்து (பைஸாந்திய மன்னர்) சீசரிடம் ஒப்படைத்து விடும்படி புஸ்ராவின் அதிபரிடம் கொடுத்துவிட்டு வருமாறு அனுப்பிவைத்தார்கள்.

ஹதீஸ் 7264 அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பாரசீக மன்னர் குஸ்ரூ எனும்) கிஸ்ராவுக்குத் தாம் எழுதிய கடிதத்தை (அப்துல்லாஹ் இப்னு ஹுதைஃபா(ரலி) அவர்களிடம் கொடுத்து) பஹ்ரைன் அதிபரிடம் சேர்த்திடுமாறும், பஹ்ரைன் அதிபர் அதைக் கிஸ்ராவிடம் ஒப்படைப்பார் என்றும் கட்டளையிட்டு அனுப்பினார்கள். கிஸ்ரா அதைப் படித்தபோது (கோபம் கொண்டு அதைத் துண்டுத் துண்டாகக் கிழித்துவிட்டார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) இப்னு ஷிஹாப் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

“எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'கிஸ்ரா' ஆட்சியாளர்கள் முற்றாகச் சிதறடிக்கப்பட வேண்டுமென அவர்களுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்“ என ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்) அவர்கள் கூறினார்கள் என எண்ணுகிறேன்.

ஹதீஸ் 7265 ஸலமா இப்னு அல்அக்வஃ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அஸ்லம் குலத்தாரில் ஒருவரிடம், 'உம்முடைய குலத்தாரிடையே' அல்லது 'மக்களிடையே' முஹர்ரம் பத்தாம் நாள் (ஆஷூரா) அன்று, '(காலையில்) சாப்பிட்டுவிட்டவர் தன்னுடைய நாளில் எஞ்சியிருப்பதை (நோன்பாக) நிறைவு செய்யட்டும் சாப்பிடாமலிருப்பவர் (அப்படியே) நோன்பு நோற்கட்டும் என்று அறிவிப்புச் செய்க‘ என்றார்கள்.

## நபி(ஸல்) அவர்கள் அரபு தூதுக் குழுக்களிடம், உங்களுக்குப் பின்னால் (ஊரில்) இருப்பவர்களுக்கு எடுத்துரையுங்கள்‘ என்று உபதேசம் செய்தது.

இது தொடர்பாக மாலிக் இப்னு அல்ஹுவைரிஸ்(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7266 அபூ ஜம்ரா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் என்னைக் கட்டிலின் மீது (தம்முடன்) அமரச் செய்து (தாம் கூறும் ஹதீஸ்களை மக்களுக்கு மொழிபெயர்த்துக் கூறுமாறு சொல்லி வந்தார்கள். (ஒரு முறை பின்வருமாறு) கூறினார்கள்: அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்தபோது 'தூதுக் குழுவினர் யார்?' என்று நபியவர்கள் கேட்க, '(நாங்கள்) 'ரபீஆ' குலத்தார்‘ என்று தூதுக் குழுவினர் பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள், 'இழிவுக்குள்ளாகாமலும் மனவருத்தத்திற்குள்ளாகாமலும் வருகை புரிந்த 'தூதுக் குழுவினரே!' அல்லது 'சமூகத்தாரே!' வருக‘ என்று (வாழ்த்துக்) கூறினார்கள். அப்போது அக்குழுவினர் 'இறைத்தூதர் அவர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் இடையே 'முளர்' குலத்து இறைமறுப்பாளர்கள் (தடையாக) உள்ளனர். எனவே, எந்தக் கட்டளைகளைச் செயல்படுத்தினால் நாங்கள் சொர்க்கம் செல்லவும் எங்களுக்குப் பின்னால் உள்ள (இங்கு வர முடியாமல் போன)வர்களுக்குத் தெரிவிக்கவும் ஏதுவாக இருக்குமோ அத்தகைய கட்டளைகளில் (முக்கியமான) சிலவற்றை

எங்களுக்குச் சொல்லுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார்கள். அப்போது அவர்கள் குடிபானங்கள் பற்றியும் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டார்கள்.

எனவே, அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் நான்கு விஷயங்களைத் தடை செய்தார்கள். நான்கு விஷயங்களைக் கட்டளையிட்டார்கள். 1. அல்லாஹ்வின் மீது நம்பிக்கைகொள்ளுமாறு அவர்களுக்குக் கட்டளையிட்டுவிட்டு, 'இறைநம்பிக்கை என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க, அத்தூதுக் குழுவினர், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்'' என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள், 'வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை அவன் தனித்தவன் அவனுக்கு இணையேதுமில்லை என்றும், முஹம்மத் இறைத்தூதராவார்கள் என்றும் உறுதி கூறுவதுதான் (இறை நம்பிக்கை என்பது)'' என்று கூறினார்கள். 2. தொழுகையை நிலை நிறுத்துவது. 3. ஸகாத் வழங்குவது - ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பது என்றும் அவர்கள் கூறினார்கள் எனவே கருதுகிறேன். 4. போர்ச் செல்வங்களில் ஐந்திலொரு பங்கை நீங்கள் (அரசு கருவூலத்திற்குச்) செலுத்துவது.

(மது ஊற்றிவைக்கப்படும் பாத்திரங்களான) சுரைக்காய் குடுவை, மண் சாடி, தார் பூசப்பட்ட பாத்திரம், (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்படும்) மரப் பீப்பாய் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டாமெனத் தடை விதித்தார்கள். மேலும்'இவற்றை மனதில் வைத்துக் கொள்ளுங்கள் உங்களுக்குப் பின்னால் இருப்போரிடம் இதைத் தெரிவித்து விடுங்கள்'' என்றும் கூறினார்கள்.

## தனியான ஒரு பெண் அளிக்கும் தகவல் (ஆதாரமாகுமா?)

ஹதீஸ் 7267 தவ்பா இப்னு கைசான் அல் அம்பரீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

என்னிடம் ஷஅபீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து (பிறர் சொல்லக்கேட்டு நிறைய) ஹதீஸ்களை அறிவிப்பதைப் பார்த்தீர்களா? நான் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் ஏறத்தாழ இரண்டு அல்து ஒன்றரை ஆண்டுகள் அமர்ந்து ஹதீஸ்களைக் கற்று)ள்ளேன். ஆனால், அவர்கள் நபி(ஸல்) அவர்களிடமிருந்து அதைத் தவிர வேறெதையும் அறிவித்து நான் கேட்டதில்லை.

ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்கள் உள்ளிட்ட நபித்தோழர்களில் சிலர் ஓர் இறைச்சியை உண்ணச் சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களின் துணைவியரில் ஒருவர், அது உடும்பு இறைச்சி என்று அவர்களை அழைத்துச் சொன்னார்கள். உடனே அவர்கள் (அதை உண்ணுவதை) நிறுத்திவிட்டார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'சாப்பிடுங்கள்' அல்லது'உண்ணுங்கள்'. ஏனெனில், அது, 'அனுமதிக்கப்பட்டதாகும்' அல்லது, 'அதனால் குற்றமில்லை' - அறிவிப்பாளர் தவ்பா(ரஹ்) அவர்கள் இந்த இடத்தில் ஐயப்பாட்டுடன் அறிவித்தார்கள் - ஆயினும், அது என் (பரிச்சியமான) உணவு அல்ல'' என்றார்கள்.

## அத்தியாயம் 96 இறைவேதத்தையும் நபிவழியையும் கடைப்பிடித்தல்

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்...

ஹதீஸ் 7268 தாரிக் இப்னு ஷிஹாப் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

யூதர்களில் ஒருவர் உமர் (ரலி) அவர்களிடம், 'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே!' இன்று உங்களின் மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கிவிட்டேன். என்னுடைய அருட்கொடையையும் உங்களின் மீது நான் நிறைவு செய்துவிட்டேன். இன்னும் உங்களுக்காக இஸ்லாத்தை மார்க்கமாக அங்கீகரித்துவிட்டேன்' எனும் இந்த (திருக்குர்ஆன் 05:3 வது) இறைவசனம் எங்களுக்கு அருளப்பட்டிருந்தால் நாங்கள் (வசனம் அருளப்பட்ட) அந்த நாளை பண்டிகை நாளாக ஆக்கிக்கெண்டிருப்போம்'' என்றார். அப்போது உமர் (ரலி) அவர்கள், 'இந்த வசனம் எந்த நாளில் இறங்கியது என்பதை அறிவேன். இது அர∴பா (துல்ஹஜ் 9ஆம்) நாள் வெள்ளிக்கிழமையன்று அருளப்பெற்றது'' என்றார்கள்.

ஹதீஸ் 7269 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

(நபி (ஸல்) அவர்கள் இறந்த) மறுநாள் முஸ்லிம்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களுக்கு (அவர்களை கலீ∴பாவாக ஏற்று) விசுவாசப் பிரமாணம் (பைஅத்) செய்து கொடுத்தபோது உமர் (ரலி) அவர்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது அமர்ந்தார்கள். அபூ பக்ர் (ரலி) அவர்களுக்கு முன்பாக ஏகத்துவ உறுதிமொழியைக் கூறினார்கள். பிறகு 'இறைவனைப் போற்றிப் புகழ்ந்த பின் (கூறுகிறேன்:) உங்களிடம் (உலகில்) உள்ள (செல்வத்)தைவிட (மறுமையில்) தன்னிடம் இருப்பதையே தன் தூதருக்கு (வழங்கிட) அல்லாஹ் தேர்ந்தெடுத்தான். அல்லாஹ் எந்த வேதத்தைக்கொண்டு உங்கள் தூதரை வழி நடத்தினானோ அதை நீங்கள் பற்றிக் கொள்ளுங்கள் நேர்வழி பெறுவீர்கள். ஏனெனில், அல்லாஹ் தன் தூதரை நேர் வழியில் செலுத்தியதெல்லாம் அந்த வேதத்தின் வாயிலாகத்தான்'' என்றார்கள்.

ஹதீஸ் 7270 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் என்னைத் தம்முடன் அணைத்துக் கொண்டு, 'இறைவா! இவருக்கு வேதத்தைக் கற்றுக்கொடுப்பாயாக'' என்றுசொன்னார்கள்.

ஹதீஸ் 7271 அபூ பர்ஸா அல்அஸ்லமீ (ரலி) அறிவித்தார்.

அல்லாஹ் உங்களை இஸ்லாத்தின் வாயிலாகவும் முஹம்மத் (ஸல்) அவர்கள் வாயிலாகவும் 'தன்னிறைவு கொள்ளச் செய்தான்' அல்லது 'உயர்வாக்கினான்'.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்: இவ்விடத்தில் 'தன்னிறைவு கொள்ளச் செய்தான்' என்றே இடம்பெற்றுள்ளது. ஆனால், 'உயர்வாக்கினான்' என்றே இருக்கவேண்டும். இதே தலைப்பிலுள்ள என்னுடைய தனி நூலின் மூலத்தில் காண்க.

ஹதீஸ் 7272 அப்துல்லாஹ் இப்னு தீனார் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அப்துல் மலிக் இப்னு மர்வான் அவர்களுக்கு விசுவாசப் பிரமாணம் செய்து (பின்வருமாறு) எழுதினார்கள்: நான் அல்லாஹ் வகுத்த நெறிமுறைப்படியும் அவனுடைய தூதர் காட்டிய வழிமுறைப்படியும் என்னால் இயன்றவரை உங்கள் கட்டளைகளைச் செவியேற்றுக் கீழ்ப்படிந்து நடப்பேன் என உறுதி அளிக்கிறேன்.

## “நான் ஒருங்கிணைந்த பொருள்கள் கொண்ட வார்த்தைகள் வழங்கப்பட்டு அனுப்பப் பெற்றுள்ளேன்” என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7273 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் ஒருங்கிணைந்த பொருள்கள் கொண்ட வார்த்தைகள் வழங்கப் பெற்று அனுப்பப்பட்டுள்ளேன். (எதிரிகளுக்கு என்னைப் பற்றியும் மதிப்பும்) அச்ச(மு)ம் ஏற்படுத்தப்பட்டு எனக்கு வெற்றி அளிக்கப்பட்டுள்ளது. (நேற்றிரவு) நான் உறங்கிக் கொண்டிருக்கையில் (கனவில்) பூமியின் கருவூலங்களுடைய திறவுகோல்கள் கொண்டுவரப்பட்டு என்னுடைய கையில் வைக்கப்பெற்றதை கண்டேன்.

இந்த ஹதீஸை அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்துவிட்டு,‘இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சென்றார்கள் நீங்கள் அவற்றை இயன்றவாறெல்லாம் அனுபவித்துக் கொண்டிருக்கின்றீர்கள்‘‘ அல்லது’நீங்கள் அவற்றைப் பரும்க் கொண்டிருக்கின்றீர்கள்‘‘ என்று, அல்லது அதைப் போன்றதொரு வார்த்தையைக் கூறினார்கள்.

ஹதீஸ் 7274 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வோர் இறைத்தூதருக்கும் சில அற்புதங்கள் வழங்கப்பட்டே இருந்தன. அவற்றைக் காணும் மக்கள்’நம்பியே ஆகவேண்டிய’ அல்லது’பாதுகாப்புப் பெற்றே தீர வேண்டிய’ நிலை இருந்தது. எனக்கு வழங்கப்பெற்ற அற்புதமெல்லாம், அல்லாஹ் எனக்கு அருளிய வேத அறிவிப்பு (வஹீ) தான். எனவே, நபிமார்களிலேயே மறுமைநாளில், பின்பற்றுவோர் அதிகமுள்ள நபியாக நானே இருப்பேன் என எதிர்பார்க்கிறேன். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (வாழ்வும் வாக்குமான) நடைமுறைகளை ஏற்று நடப்பது.

அல்லாஹ் கூறினான்: (இறைவா!) எங்களை இறையச்சமுடையோருக்கு முன்னோடிகளாக ஆக்குவாயாக! (என்று அந்த நல்லடியார்கள் கூறுவார்கள்.) (திருக்குர்ஆன் 25:74)

அதாவது நாங்கள் எங்களுக்கு முன் இருந்த (நல்ல)வர்களைப் பின்பற்றியும், எங்களுக்குப் பின்வருவோர் எங்களைப் பின்பற்றியும் நடக்கிற சான்றோர்களாக எங்களை ஆக்கிடுவாயாக!

இப்னு அவ்ன்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

நான் மூன்று விஷயங்கள் எனக்கும் என் சகோதரர்களுக்கும் விரும்புகிறேன்: 1. இந்த நபிவழியை அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும் அதைப் பற்றி (அறிந்திட) நிறைய கேள்விகள் கேட்க வேண்டும். 2. இந்தக் குர்ஆனை அவர்கள் விளங்கி அதைப் பற்றி (இன்னும் அறிந்திட) மக்களிடம் நிறையக் கேள்விகள் கேட்க வேண்டும். 3. மக்களுக்கு நன்மையே நாட வேண்டும்.

ஹதீஸ் 7275 அபூ வாயில் ஷகீக் இப்னு ஸலமா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இந்தப் (புனித கஅபா) பள்ளிவாசலில் நான் ஷைபா இப்னு உஸ்மான்(ரஹ்) அவர்களின் அருகில் அமர்ந்தேன். அவர்கள் சொன்னார்கள். உமர்(ரலி) அவர்கள் என்னுடன் நீங்கள் அமர்ந்திருக்கும் இதே இடத்தில் அமர்ந்திருந்தார்கள். அப்போது அவர்கள்,‘நான் தங்கம் மற்றும் வெள்ளி எதையும் மக்களிடையே பங்கிடாமல் கஅபாவில்விட்டுவைக்கலாகாது என விரும்பினேன்‘‘ என்று கூறினார்கள். நான்,‘உங்களால் அப்படிச் செய்ய முடியாது‘‘ என்று கூறினேன். அவர்கள்,‘ஏன் முடியாது?’ என்று கேட்டார்கள். நான்,‘உங்கள் தோழர்கள் (நபி(ஸல்), அபூ

பக்ர்(ரலி) ஆகிய) இருவரும் அப்படிச் செய்யவில்லையே‘‘ என்று சொன்னேன். உமர்(ரலி) அவர்கள், ‘அவ்விருவரும் பின்பற்றப்பட வேண்டியவர்கள்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 7276 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இயற்கையாகவே) மனிதர்களின் ஆழ்மனதில் (‘அமானத்’ எனும்) நம்பகத் தன்மை வானிலிருந்துவந்து இடம் பிடித்தது. (அதற்கேற்ப) குர்ஆனும் அருளப்பெற்றது. குர்ஆனை மக்கள் படித்தார்கள். (அதிலிருந்து அதை அறிந்து கொண்டார்கள்.) மேலும், என்னுடைய வழிமுறையிலிருந்தும் (அதை) அறிந்து கொண்டார்கள்.

என ஹுதைஃபா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7277 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

உரைகளில் சிறந்தது அல்லாஹ்வின் வேதம் (குர்ஆன்) ஆகும். நடத்தைகளில் சிறந்தது முஹம்மத்(ஸல்) அவர்களின் நடத்தையாகும். செயல்களில் தீயவை (மார்க்கத்தின் பெயரால்) புதிதாய் உண்டாக்கப்படுபவை ஆகும். உங்களுக்கு வாக்களிக்கப்பட்டுள்ள (மறுமை நாளான)து வந்தே தீரும். உங்களால் (இறைவனைத்) தோற்கடிக்க முடியாது.

என முர்ரா அல்ஹமதானீ(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 7278, ஹதீஸ் 7279 அபூ ஹுரைரா(ரலி) மற்றும் ஸைத் இப்னு காலித்(ரலி) ஆகியோர் அறிவித்தார்கள்:

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் நாங்கள் இருந்தோம். அப்போது (வழக்கைக் கொண்டு வந்த இருவரிடம்)’உங்கள் இருவருக்குமிடையே நான் அல்லாஹ்வின் சட்டப்படியே தீர்ப்பளிப்பேன்‘‘ என்று நபியவர்கள் சொன்னார்கள்.

ஹதீஸ் 7280 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், ‘என் சமுதாயத்தார் அனைவரும் சொர்க்கம் செல்வார்கள் ஏற்க மறுத்தவரைத் தவிர‘‘ என்று கூறினார்கள். மக்கள், ‘இறைத்தூதர் அவர்களே! ஏற்க மறுத்தவர் யார்?’ என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள், ‘எனக்குக் கீழ்ப்படிந்தவர் சொர்க்கம் புகுவார் எனக்கு மாறு செய்தவர் (சத்தியத்தை) ஏற்க மறுத்தவராவார்‘‘ என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7281 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(ஒருநாள்) நபி(ஸல்) அவர்கள் உறங்கிக் கொண்டிருந்தபோது அவர்களிடம் சில வானவர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவர்’இவர் உறங்கிக் கொண்டிருக்கிறார்‘‘ என்றார். அதற்கு மற்றொருவர்’கண்தான் உறங்குகிறது உள்ளம் விழித்திருக்கிறது‘‘ என்று கூறினார். பின்னர் அவர்கள்’உங்களுடைய இந்த நண்பருக்கு ஓர் உவமை உண்டு இவருக்கு அந்த உவமையை எடுத்துரையுங்கள்‘‘ என்று பேசிக்கொண்டார்கள். அப்போது அவர்களில் ஒருவர்’இவர் உறங்குகிறாரே!”என்றார். மற்றொருவர்’கண் உறங்கினாலும் உள்ளம் விழித்திருக்கிறது‘‘ என்றார். பின்னர் அவர்கள்’இவரின் நிலை ஒரு மனிதரின் நிலைக்கு ஒத்திருக்கிறது. அவர் ஒரு வீட்டைக் கட்டினார். அவ்வீட்டில் விருந்துக்கு ஏற்பாடு செய்தார். (மக்களை) அழைப்பதற்காக ஓர் ஆளை அனுப்பினார். அழைப்பாளியின் அழைப்பை ஏற்று வந்தவர் வீட்டினுள் சென்றார் விருந்துண்டார். அழைப்பை ஏற்காதவர் வீட்டிற்குள் நுழையவுமில்லை விருந்துண்ணவுமில்லை‘‘ என்று கூறினார்கள்.

பின்னர் அவர்கள், 'இந்த உவமையை அவருக்கு விளக்கிக் கூறுங்கள் அவர் புரிந்து கொள்ளட்டும்'' என்றார்கள். அப்போது அவர்களில் ஒருவர் 'இவர் உறங்குகிறாரே!" என்று சொல்ல, மற்றொருவர் 'கண் தான் தூங்குகிறது உள்ளம் விழித்திருக்கிறது'' என்றார். அதைத் தொடர்ந்து 'அந்த வீடுதான் சொர்க்கம் அழைப்பாளி முஹம்மத் (ஸல்) அவர்கள் முஹம்மத் (ஸல்) அவர்களுக்குக் கீழ்ப்படிந்தவர் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்துவிட்டார் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு மாறு செய்தவர் அல்லாஹ்வுக்கு மாறு செய்துவிட்டார். முஹம்மத் (ஸல்) அவர்கள் மக்களை (நல்லவர் - கெட்டவர் என)ப் பகுத்துக் காட்டிவிட்டார்கள்'' என்று விளக்கமளித்தார்கள்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடரில் ஜாபிர் (ரலி) அவர்கள் '(ஒரு நாள்) நபி (ஸல்) அவர்கள் எங்களிடம் வெளியேறிவந்து (இந்த நிகழ்ச்சியைத் தெரிவித்தார்கள்)'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7282 ஹுதைஃபா (ரலி) அறிவித்தார்.

இறைவேதத்தை (யும் நபிவழியையும்) கற்றறிந்த மக்களே! நீங்கள் (அதில்) உறுதியோடு இருங்கள். அவ்வாறு இருந்தால் நீங்கள் (எல்லா வகையிலும்) அதிகமாக முன்னுக்கு கொண்டு கொல்லப்படுவீர்கள். (அந்த நேர்பாதையை விடுத்து) வலப் பக்கமோ இடப்பக்கமோ (திசை மாறிச்) சென்றீர்களானால், வெகுதூரம் வழிதவறிச் சென்றுவிடுவீர்கள்.

இதை ஹம்மாம் இப்னு அல்ஹாரிஸ் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 7283 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

எனக்கும் என்னை அல்லாஹ் எ(ந்த மார்க்கத்)தைக் கொண்டு அனுப்பியுள்ளானோ அதற்கும் எடுத்துக்காட்டாகிறது, ஒரு மனிதரின் நிலையைப் போன்றதாகும். அவர் ஒரு சமூகத்தாரிடம் சென்று 'நான் (இன்ன பெரும்) படையை என் கண்களால் பார்த்தேன். (எந்நேரமும் அப்படை உங்களைத் தாக்கலாம். அதை எதிர்கொள்ளும் ஆற்றல் உங்களிடம் இல்லை.) நான், நிர்வாணமாக (ஓடிவந்து எச்சரிக்கை செய்ப(வனைப் போன்ற)வன். எனவே தப்பித்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினார். அப்போது அவரின் சமூகத்தாரில் ஒரு பிரிவினர் அவருக்குக் கீழ்ப்படிந்து இரவோடு இரவாக மெல்ல நடந்து தப்பிவிட்டனர். அவரை நம்ப மறுத்தனர் தம் இடத்திலேயே தங்கிவிட்டனர். எனவே, அதிகாலையில் அப்படையினர் வந்து அவர்களைத் தாக்கிப் பூண்டோடு அழித்தனர். இதுதான் எனக்குக் கீழ்ப்படிந்து, நான் கொண்டு வந்த (மார்க்கத்)தைப் பின்பற்றி நடந்தவருக்கும், எனக்கு மாறு செய்து, நான் கொண்டுவந்த சத்தியத்தை ஏற்க மறுத்தவருக்கும் உதாரணமாகும்.

என அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7284, ஹதீஸ் 7285 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் இறந்து அவர்களுக்குப் பின் அபூ பக்ர் (ரலி) அவர்கள் கலீஃபாவாக (ஆட்சித் தலைவராக) ஆக்கப்பட்டபோது அரபுகளில் சிலர் (ஸகாத் வழங்க மறுத்தன் மூலம்) இறைமறுப்பாளர்களாய் மாறினர். (அவர்களின் மீது போர் தொடுக்கப் போவதாக அபூ பக்ர் அறிவித்தார்கள்.) அப்போது உமர் (ரலி) அவர்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களிடம், 'இந்த மக்களுடன் நீங்கள் எவ்வாறு போரிட முடியும்? இறைத்தூதர் (ஸல்) அவர்கள், அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் வணக்கத்திற்குரியவர் அல்லர் என்று சொல்லும் வரை மக்களுடன் போர் புரியும் படி எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் வணக்கத்திற்குரியவர் அல்லர் என்று சொல்லும்வரை மக்களுடன் போர் புரியும் படி எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் வணக்கத்திற்குரியவர் அல்லர் என்று சொன்னவர் தகுந்த

காரணம் இருந்தால் தவிர, தன்னுடைய செல்வத்திற்கும் உயிருக்கும் என்னிடம் பாதுகாப்பு பெறுவார். அவரின் (அந்தரங்கம் குறித்த) விசாரணை அல்லாஹ்விடம் உள்ளது என்று கூறினார்களே!' எனக் கேட்டார்கள். அதற்கு அபூ பக்ர்(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! தொழுகையையும் ஸகாத்தையும் வேறுபடுத்திப் பார்ப்பவர்களுடன் நான் போர் புரிந்தே தீருவேன். ஏனெனில், ஸகாத் என்பது பொருளாதாரக் கடமையாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் செலுத்திவந்த ஒரு கயிற்றை இவர்கள் இப்போது என்னிடம் செலுத்த மறுத்தாலும் அதை மறுத்ததற்காக அவர்களுடன் போர் புரிவேன்'' என்றார்கள். இதைக் கேட்ட உமர்(ரலி) அவர்கள்,'அல்லாஹ்வின் மீதாணையாக! (ஸகாத் வழங்க மறுத்தவர்களின் மீது) போர் தொடுக்கும் (முடிவை எடுக்கும்) படி அபூ பக்ர்(ரலி) அவர்களின் இதயத்தை அல்லாஹ் விரிவாக்கிவிட்டான் என்பதைத் தவிர வேறெதையும் அப்போது நான் காணவில்லை. அதுவே சரி(யான முடிவு) என்பதை நான் அறிந்துகொண்டேன்'' என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில், (கயிறு என்பதற்க பதிலாக)'ஒட்டகக் குட்டி' என வந்துள்ளது. அதுவே சரியானதாகும்.

ஹதீஸ் 7286 அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

உயைனா இப்னு ஹிஸ்ன் இப்னி ஹுதைஃபா இப்னு பத்ர்(ரலி) அவர்கள் (மதீனாவுக்கு) வந்து தம் சகோதரருடைய புதல்வர் ஹுர்ரு இப்னு கைஸ் இப்னி ஹிஸ்ன்(ரலி) அவர்களிடம் தங்கினார்கள். உமர்(ரலி) அவர்கள் தம் அருகே (தமக்கு நெருக்கமாக) வைத்துக் கொள்பவர்களில் ஒருவராக ஹுர்ரு இப்னு கைஸ்(ரலி) அவர்கள் இருந்தார்கள். முதியவர்களோ இளைஞர்களோ யாராயினும் (குர்ஆனையும் ஹதீஸையும்) கற்றறிந்தவர்களே உமர்(ரலி) அவர்களின் அவையோராகவும் ஆலோசகர்களாகவும் இருந்தனர். எனவே, உயைனா(ரலி) அவர்கள் தம் சகோதரருடைய புதல்வரிடம்,'என் சகோதரர் மகனே! இந்தத் தலைவர் (உமர்(ரலி) அவர்களிடம் உனக்கு செல்வாக்கு உள்ளதா? அப்படி இருந்தால் நான் அவரிடம் செல்ல எனக்காக நீ அனுமதி பெற்றுத் தா'' என்று கேட்டார்கள். அதற்கு அவர்,'உமர்(ரலி) அவர்களிடம் செல்ல உங்களுக்காக நான் அனுமதி கோருகிறேன்'' என்றார். அவ்வாறே உயைனாவுக்காக ஹுர்ரு இப்னு கைஸ் அனுமதி கேட்டார்கள்.

உயைனா(ரலி) அவர்கள் உள்ளே சென்றவுடன்,'கத்தாபின் புதல்வரே! அல்லாஹ்வின் மீதாணையாக! நீங்கள் எங்களுக்கு அதிகமாக வழங்குவதில்லை எங்களிடையே நீங்கள் நீதியுடன் தீர்ப்பளிப்பதில்லை'' என்றார். உடனே உமர்(ரலி) அவர்கள் கோபமடைந்து அவரை அடிக்க முன்வந்தார்கள். அப்போது ஹுர்ரு அவர்கள்,'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! அல்லாஹ், தன் தூதர்(ஸல்) அவர்களுக்கு'(நபியே!) மன்னிக்கும் போக்கை மேற்கொள்வீராக நன்மை புரியுமாறு ஏவுவீராக. அறிவீனர்களைப் புறக்கணிப்பீராக' (திருக்குர்ஆன் 07:199) என்று கூறியுள்ளான். இவர் அறிவீனர்களில் ஒருவராவார்'' என்றார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! ஹுர்ரு அவர்கள் இந்த வசனத்தை உமர்(ரலி) அவர்களுக்கு ஓதி காட்டியபோது உமர் அதை மீறவில்லை. (பொதுவாகவே) உமர் இறைவேதத்திற்கு மிகவும் கட்டுப்படுபவர்களாய் இருந்தார்கள்.

ஹதீஸ் 7287 அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி) அறிவித்தார்.

(ஒரு முறை) சூரிய கிரகணம் ஏற்பட்டபோது நான் (என் சகோதரி) ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றேன். அப்போது மக்கள் நின்று (ம்ரகணத் தொழுகை) தொழுது கொண்டிருந்தார்கள்.

(அவர்களுடன்) ஆயிஷாவும் நின்று தொழுது கொண்டிருந்தார்கள். நான்'மக்களுக்கு என்ன நேர்ந்தது?' என்று கேட்டேன். அதற்கு ஆயிஷா(ரலி) அவர்கள் தங்களின் கையால் வானத்தைக் காட்டி சைகை செய்து'சுப்ஹானல்லாஹ் (அல்லாஹ் தூயவன்)'' என்று கூறினார்கள். நான்'ஏதேனும் அடையாளமா?' என்று கேட்டேன்.'ஆம்'' என்பதைப் போன்று ஆயிஷா(ரலி) அவர்கள் தங்களின் தலையால் சைகை செய்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும், அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு(ப் பின்வருமாறு) கூறினார்கள்: நான் இதுவரை காணாத யாவற்றையும் - சொர்க்கம், நரகம் உள்பட அனைத்தையும் இதோ இந்த இடத்தில் (தொழுகையில் இருந்தபோது) கண்டேன். மேலும், நீங்கள் தஜ்ஜாலின் சோதனைக்கு நெருக்கமான அளவிற்கு மண்ணறைகளில் சோதிக்கப்படுவீர்கள் என்று எனக்கு வஹீ (இறைச்செய்தி) (இறை அறிவிப்பு) அறிவிக்கப்பட்டது. (மண்ணறையில் தம்மிடம் கேள்வி கேட்கும் வானவரிடம்), இறைநம்பிக்கையாளர் ஒருவர் அல்லது'முஸ்லிம்''(இவர்கள்) முஹம்மத்(ஸல்) அஆவார்கள். அன்னார் தெளிவான சான்றுகளை எங்களிடம் கொண்டு வந்தார்கள். நாங்கள் (அவர்களின் அழைப்பை) ஏற்று நம்பிக்கை கொண்டோம்' என்று பதிலளிப்பார். அப்போது,'(தம் நற்செயல்களால் பயனடைந்த) நல்லவராக நீர் உறங்குவீராக! நீர் உறுதி(யான நம்பிக்கை) கொண்டிருந்தவர் என்று நாம் அறிவோம்' என்று (அவரிடம்) சொல்லப்படும்.'நயவஞ்சகர்' அல்லது'சந்தேகங் கொண்டவர்' மண்ணறைக்கு வரும் வானவரின் கேள்விகளுக்கு),'மக்கள் எதையோ சொன்னார்கள் அதையே நானும் சொன்னேன். (மற்றபடி வேறொன்றும்) எனக்குத் தெரியாது'' என்று கூறுவார்.

ஹதீஸ் 7288 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் எதை (செய்யுங்கள் என்றோ, செய்ய வேண்டாமென்றோ ஒன்றும் கூறாமல்) உங்களு(டைய முடிவு)க்குவிட்டுவிட்டேனோ அதை(ப் பற்றி எதுவும் கேட்காமல்) நீங்களும்விட்டுவிடுங்கள். உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களை அழித்ததெல்லாம் அவர்கள் தங்கள் இறைத்தூதர்களிடம் (அதிகமாகக்) கேள்வி கேட்டதும் அவர்களுடன் கருத்து வேறுபட்டதும் தான். ஒன்றைச் செய்ய வேண்டாமென உங்களுக்கு நான் தடை விதித்தால் அதிலிருந்து நீங்கள் தவிர்ந்து கொள்ளுங்கள். ஒன்றைச் செய்யுமாறு உங்களுக்கு நான் கட்டளையிட்டால் அதை உங்களால் முடிந்த அளவிற்குச் செய்யுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அதிகமாகக் கேள்விகள் கேட்பதும் தனக்குத் தேவையில்லாததை வலிந்து செய்வதும் விரும்பத் தகாததாகும்.

அல்லாஹ் கூறினான்:

இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் சில விஷயங்களைப் பற்றி (துருவித் துருவிக்) கேட்காதீர்கள் (ஏனெனில்,) அவை உங்களிடம் வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு மன வருத்தத்தை ஏற்படுத்தும். (திருக்குர்ஆன் 05:101)

ஹதீஸ் 7289.'தடை விதிக்கப்படாத ஒன்றைப் பற்றிக் கேள்வி ஒருவர் கேட்டு, அவர் கேள்வி கேட்ட காரணத்தாலேயே அது தடை செய்யப்பட்டு விடுமானால் அவர்தாம் முஸ்லிம்களிலேயே பெருங்குற்றம் புரிந்தவராவார் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7290 ஸைத் இப்னு ஸாபித்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (ரமளான் மாதத்தில்) பள்ளிவாசலில் பாயினால் அறை அமைத்துக் கொண்டு அதில் சில இரவுகள் (இரவுத் தொழுகை) தொழுதார்கள். அதனால் மக்கள் அவர்கள் பின்னே திரண்டு (தொழத் தொடங்கி)விட்டார்கள். ஒரு நாள் நபி(ஸல்) அவர்களின் குரலை மக்களால் கேட்க முடியவில்லை. எனவே, நபி அவர்கள் (வீட்டினுள்) உறங்கிவிட்டார்கள் போலும் என்று மக்கள் நினைத்துக்கொண்டனர். எனவே, அவர்களில் சிலர் நபி(ஸல்) அவர்கள் தங்களிடம் வெளியேறி வருவதற்காக கனைக்கலானார்கள். எனவே (மறுநாள்) நபி(ஸல்) அவர்கள்,'(ஒவ்வொரு நாளும் என்னைப் பின்தொடர்ந்து இரவுத் தொழுகையைத் தொழுகின்ற) உங்கள் செயலை நான் கண்டுவந்தேன். உங்களின் மீது (ரமளானின் இரவுத் தொழுகையான) அது கடமையாக்கப்பட்டுவிடுமோ என்று நான் அஞ்சும் அளவிற்கு உங்களுடைய அச்செயல் தொடர்ந்து கொண்டே இருந்தது. நீங்கள் தொழுது (இரவுத்) தொழுகை உங்களின் மீது கடமையாக ஆக்கப்பட்டால் உங்களால் அதை நிறைவேற்ற முடியாது. எனவே, மக்களே! நீங்கள் (இரவுத் தொழுகையை) உங்கள் வீடுகளிலேயே தொழுங்கள். ஏனெனில், ஒரு மனிதனின் தொழுகைகளில் சிறந்தது அவன் தன்னுடைய வீட்டில் தொழுவது தான் கடமையான தொழுகையைத் தவிர'' என்றார்கள்.

ஹதீஸ் 7291 அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிடிக்காத சில விஷயங்கள் குறித்து அவர்களிடம் வினவப்பட்டது. இவ்வாறு மக்கள் அவர்களிடம் அதிகமாகக் கேள்விகள் கேட்டபோது நபி அவர்கள் கோபமடைந்து,'(நீங்கள் விரும்பிய எதைப் பற்றி வேண்டுமானாலும்) என்னிடம் கேளுங்கள்'' என்றார்கள். உடனே ஒருவர் எழுந்து,'இறைத்தூதர் அவர்களே! என் தந்தை யார்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'ஹுதாஃபாதாம் உன் தந்தை'' என்றார்கள். பிறகு மற்றொருவர் எழுந்து,'இறைத்தூதர் அவர்களே! என் தந்தை யார்?' என்று கேட்க, நபி(ஸல்) அவர்கள்'ஷைபா வால் விடுதலை செய்யப்பட்ட சாலிம்தாம் உன் தந்தை'' என்றார்கள். (இக்கேள்விகளால்) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் முகத்தில் தென்பட்ட கோபக் குறியை உமர்(ரலி) அவர்கள் கண்டபோது,'நாங்கள் கண்ணியமும் மகத்துவமும் மிக்க அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறோம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7292. முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களின் எழுத்தரான வர்ராத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

முஆவியா(ரலி) அவர்கள், முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதி,'நீங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டதை எனக்கு எழுதி அனுப்புங்கள்'' என்று குறிப்பிட்டிருந்தார்கள். அப்போது முஃகீரா(ரலி) அவர்கள் பின்வருமாறு முஆவியா(ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினார்கள். நபி(ஸல்) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னாலும், அல்லாஹுவைத் தவிர வணக்கத்திற்குரியவர் எவருமில்லை அவன் தனித்தவன் அவனுக்கு இணையானவர் எவருமில்லை அவனுக்கே ஆட்சியதிகாரம் உரியது புகழனைத்தும் அவனுக்கே உரியது அவன் எல்லாவற்றின் மீதும் ஆற்றலுடையவன். இறைவா! நீ கொடுப்பதைத் தடுப்பவர் யாருமில்லை. நீ தடுப்பதைக் கொடுப்பவர் யாருமில்லை. எச்செல்வரின் செல்வமும் உன்னிடம் பயன் (ஏதும்) அளிக்காது'' என்று பிரார்த்தனை செய்து வந்தார்கள்.

மேலும், முஆவியா(ரலி) அவர்களுக்கு முஃகீரா(ரலி) அவர்கள் எழுதினார்கள்: நபி(ஸல்) அவர்கள், (இவ்வாறு) சொல்லப்பட்டது (இவ்வாறு) அவர் சொன்னார் என்று (ஊர்ஜிதமில்லாதவற்றைப்) பேசுவது, அதிகமாகக் கேள்வி கேட்பது, செல்வத்தை வீணாக்குவது, அன்னையரைப் புண்படுத்துவது, பெண் சிசுக்களை உயிருடன் புதைப்பது,

(அடுததவருக்குரியதைத்) தர மறுப்பது, (அடுத்தவருக்குரியதைத் தனக்குத்) தருமாறு கோருவது ஆகியவற்றுக்குத் தடை விதித்து வந்தார்கள்.

ஹதீஸ் 7293 அனஸ் (ரலி) அறிவித்தார்.

உமர் (ரலி) அவர்களிடம் நாங்கள் இருந்தோம். அப்போது அவர்கள், 'வீண் சிரமம் எடுத்துக்கொள்ளக் கூடாது என எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது'' என்றார்கள்.

ஹதீஸ் 7294 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

(ஒரு நாள்) சூரியன் (நடுவானிலிருந்து) சாய்ந்தபோது நபி (ஸல்) அவர்கள் (தம் இல்லத்திலிருந்து) வெளியே வந்து லுஹ்ர் தொழுகை தொழுகை நடத்தினார்கள், (தொழுகை முடிந்து) சலாம் கொடுத்த பிறகு சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதேறி உலக முடிவு நாள் பற்றிக் குறிப்பிட்டார்கள். அந்த நாளில் பயங்கரமான சம்பவங்கள் பல நிகழும் என்றும் குறிப்பிட்டார்கள். பிறகு, 'எதைப் பற்றியேனும் எவரேனும் கேட்க விரும்பினால் (என்னிடம்) அவர் கேட்கலாம். அல்லாஹ்வின் மீதாணையாக! இந்த இடத்தில் நான் இருக்கும்வரை நீங்கள் எதைப் பற்றிக் கேட்டாலும் அதைப் பற்றி உங்களுக்கு நான் தெரிவிக்காமலிருக்கமாட்டேன்'' என்றும் சொன்னார்கள். அப்போது மக்களின் அழுகை அதிகமாயிற்று. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் 'கேளுங்கள் என்னிடம்'' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒருவர் நபி (ஸல்) அவர்களை நோக்கி எழுந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் எங்கு செல்வேன் (சொர்க்கத்திற்கா? அல்லது நரகத்திற்கா)?' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள் 'நரகத்திற்கு'' என்று பதிலளித்தார்கள். அப்போது அப்துல்லாஹ் இப்னு ஹுதைஃபா (ரலி) அவர்கள் எழுந்து, 'என் தந்தை யார்? இறைத்தூதர் அவர்களே!" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'உன் தந்தை ஹுதாஃபா'' என்று கூறிவிட்டு, கேளுங்கள் என்னிடம்! கேளுங்கள் என்னிடம்'' எனத் திரும்பத் திரும்பச் சொன்னார்கள். (நபியவர்களின் இந்நிலையைக் கண்ட) உமர் (ரலி) அவர்கள் மண்டியிட்டு அமர்ந்து 'அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாமை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத்தூதர் என்றும் நாங்கள் மனப்பூர்வமாக ஏற்றோம்'' என்று கூறினார்கள். உமர் (ரலி) அவர்கள் இவ்வாறு கூறியபோது மௌனமாக இருந்த இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பின்னர் கூறினார்கள்: என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! சற்று முன் நான் தொழுது கொண்டிருக்கையில் இந்தச் சுவற்றில் எனக்குச் சொர்க்கமும் நரகமும் காட்டப்பட்டன. இந்த நாளைப் போன்று (வேறெந்த நாளிலும்) நல்லதையும் கெட்டதையும் நான் கண்டதேயில்லை'' என்றார்கள்.

ஹதீஸ் 7295 அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஒருவர், 'இறைத்தூதர் அவர்களே! என் தந்தை யார்?' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'இன்னார்தாம் உன் தந்தை'' என்றார்கள். அப்போது, 'இறை நம்பிக்கையாளர்களே! சில விஷயங்களைப் பற்றி (துருவித் துருவி) கேட்காதீர்கள் (ஏனெனில்,) அவை உங்களிடம் வெளிப்படுத்தப்பட்டால் உங்களுக்கு மனவருத்தத்தை ஏற்படுத்தும்'' எனும் (திருக்குர்ஆன் 05:101 வது) இறை வசனம் அருளப்பெற்றது.

ஹதீஸ் 7296 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் (பல புதிரான விஷயங்கள் குறித்து) ஒருவரையொருவர் கேள்விகேட்டுக் கொண்டேயிருப்பார்கள். இறுதியில், 'அனைத்துப் பொருட்களையும் படைத்தவன் அல்லாஹ் இது (சரிதான்). அல்லாஹ்வைப் படைத்தவன் யார்?' என்று கூடக் கேட்பார்கள்.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7297 இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

நான் மதீனாவில் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு வேளாண் பூமியில் இருந்தேன். நபி (ஸல்) அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றின் மீது (கையை) ஊன்றிய படி நின்றிருந்தார்கள். பிறகு நபி (ஸல்) அவர்கள் யூதர்கள் சிலரைக் கடந்து சென்றார்கள். அவர்களில் ஒருவர், 'இவரிடம் உயிரைப் பற்றிக் கேளுங்கள்'' என்றார். மற்றொருவர், 'நீங்கள் அவரிடம் கேட்காதீர்கள் ஏனெனில் நீங்கள் விரும்பாத பதிலை அவர் உங்களுக்குத் சொல்லிவிடக் கூடாது'' என்றார். பின்னர் அவர்கள் (அனைவரும் சேர்ந்து) நபி (ஸல்) அவர்களிடம் எழுந்து சென்று, 'அபுல் காசிமே! உயிரைப் பற்றி எங்களுக்குத் தெரிவியுங்கள்!"என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள் சிறிது நேரம் எழுந்து நின்று கூர்ந்து பார்த்தார்கள். உடனே நான், 'அவர்களுக்கு வஹீ (இறைச்செய்தி) (வேத அறிவிப்பு) அறிவிக்கப்படுகின்றது என்று புரிந்து கொண்டேன். எனவே, வஹீ (இறைச்செய்தி) வருவதற்கு வசதியாக நான் அவர்களைவிட்டு சற்றுப் பின் தள்ளி நின்றேன். பிறகு, நபி (ஸல்) அவர்கள் (தமக்கு அருளப்பெற்ற) 'நபியே! உயிரைப் பற்றி உங்களிடம் அவர்கள் வினவுகிறார்கள். உயிர் என்பது என் இறைவனின் கட்டளையால் உருவானது என்று கூறுங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 17:85 வது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் (சொற்களை மட்டுமின்றி) செயற்களை (யும்) பின்பற்றுதல்.

ஹதீஸ் 7298 இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் பொன் மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டார்கள். மக்களும் பொன் மோதிரங்களைச் செய்து (அணிந்து) கொண்டார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'நான் பொன் மோதிரம் ஒன்றைத் தயாரித்து (அணிந்து) கொண்டேன். (அப்படித்தானே!)'' என்று கூறிவிட்டு, அதை (க் கழற்றி) எறிந்துவிட்டார்கள். மேலும், 'நான் அதை ஒருபோதும் அணியமாட்டேன்'' என்றும் சொன்னார்கள். உடனே, மக்கள் அனைவரும் தங்களின் (பொன்) மோதிரங்களை (க் கழற்றி) எறிந்துவிட்டார்கள்.

## கல்வி (யாளர்களிடையே கருத்து வேறுபாடுள்ள) விஷயங்களில் (ஒரேயடியாய்) மூழ்கிப் போவதும் விதண்டாவாதம் செய்வதும் வெறுக்கப்பட்டதாகும். மார்க்க விஷயங்களிலும் நவீன அனுஷ்டானங்களிலும் வரம்பு மீறிச் செல்வதும் வெறுக்கப்பட்டதாகும்.

உயர்ந்தோன் அல்லாஹ் கூறினான்: வேதக்காரர்களே! உங்களின் மதவிவகாரங்களில் எல்லை மீறிவிடாதீர்கள். இறைவனைப் பற்றி உண்மையைத் தவிர (வேறெதையும்) கூறாதீர்கள். (திருக்குர்ஆன் 04:171)

ஹதீஸ் 7299 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள், 'தொடர் நோன்பு நோற்காதீர்கள்'' என்று கூறினார்கள். மக்கள், 'நீங்கள் தொடர்நோன்பு நோற்கிறீர்களே?' என்று கேட்டனர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'நான்

உங்களைப் போன்றவன் அல்லன். எனக்கு என் இறைவன் உண்ணவும் பருகவும் கொடுக்கிற நிலையில் நான் உள்ளேன்" என்று பதிலளித்தார்கள். இருந்தும், மக்கள் தொடர்நோன்பைக் கைவிடவில்லை. எனவே, அவர்களுடன் சேர்ந்து நபி(ஸல்) அவர்கள்'இரண்டு தினங்கள்' அல்லது'இரண்டு இரவுகள்' தொடர் நோன்பு நோற்றார்கள். பிறகு மக்கள் பிறையைப் பார்த்தனர். நபி(ஸல்) அவர்கள், 'பிறை இன்னும் தள்ளிப்போயிருந்தால், உங்களை இன்னும் (தொடர் நோன்பை) அதிகமாக்கச் செய்திருப்பேன்" என்று மக்களைக் கண்டிப்பதைப் போன்று சொன்னார்கள்.

ஹதீஸ் 7300 யஸீத் இப்னு ஷரீக் அத்தைமீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அலீ(ரலி) அவர்கள் சுட்ட செங்கற்களாலான ஒரு சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது நின்று எங்களுக்கு உரையாற்றினார்கள். அவர்கள் வாள் ஒன்றை வைத்திருந்தார்கள். அதில் ஓர் ஏடு தொங்க விடப்பட்டிருந்தது. அவர்கள் (தம் உரையில்), 'அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ்வின் வேதத்தையும் இந்த ஏட்டையும் தவிர ஓதப்படுகிற நூல் எதுவும் எங்களிடம் இல்லை" என்று கூறிவிட்டு, அதை விரித்துக் காட்டினார்கள். அதில் (உயிரீட்டுத் தொகையாகத் தரப்பட வேண்டிய) ஒட்டகங்களின் வயது விவரங்கள் இருந்தன. மேலும், அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது மதீனா நகரம்'அய்ர்' எனும் மலையிலிருந்து இன்ன (ஸவ்ர்) இடம் வரை புனிதமானதாகும். அதில் யார் (மார்க்கத்தின் பெயரால்) புதிதாக ஒன்றை ஏற்படுத்துகிறானோ அவன் மீது அல்லாஹ்வின் சாபமும் வானவர்கள் மற்றும் அனைத்து மக்களின் சாபமும் உண்டாகும். மேலும், அவன் புரிந்த கடமையான வழிபாட்டையும் கூடுதலாக வழிபாட்டையும் அவனிடமிருந்து கூடுதலான வழிபாட்டையும் அவனிடமிருந்து அல்லாஹ் ஏற்கமாட்டான். முஸ்லிம்களில் யார் அடைக்கலம் அளித்தாலும் அது ஒன்றேயாகும் (மற்ற முஸ்லிம்கள் தரும் அடைக்கலத்திற்குச் சமமானதாகும்). அவர்களில் கீழ்நிலையில் உள்ளவர்கள் கூட அடைக்கலம் அளிக்க முன்வரலாம். ஒரு முஸ்லிம் அளித்த அடைக்கலத்தை யாரேனும் முறித்தால் அவன் மீது அல்லாஹ்வின் சாபமும், வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். அவனிடமிருந்து அவன் செய்த கடமையான வணக்கம், கூடுதலான வணக்கம் எதையுமே அல்லாஹ் ஏற்க மாட்டான். தன்னை விடுதலை செய்த எசமானர்களின் அனுமதியின்றி வேறு யாரையேனும் வாரிசுகளாக ஆக்கிக் கொள்ளும் அடிமையின் மீது அல்லாஹ்வின் சாபமும் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் ஏற்படும். அவன் செய்த கடமையான வணக்கம், கூடுதலான வணக்கம் எதையுமே அல்லாஹ் ஏற்கமாட்டான்.

ஹதீஸ் 7301 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒன்றைச் செய்தார்கள். (மற்றவர்களுக்கும்) அதைச் செய்ய அனுமதியளித்தார்கள். அப்போது சிலர் அதைச் செய்வதிலிருந்து தவிர்ந்து கொண்டனர். இச்செய்தி நபி(ஸல்) அவர்களுக்கு எட்டியது. உடனே அவர்கள் (உரையாற்ற எழுந்து) அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு, 'சிலருக்கு என்னாயிற்று? நான் செய்கிற ஒன்றைச் செய்வதிலிருந்து தவிர்ந்து கொள்கிறார்களாமே! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவர்களைவிட அல்லாஹ்வை மிகவும் அறிந்தவன் அவனை மிகவும் அஞ்சி நடப்பவன் ஆவேன்" என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7302 இப்னு அபீ முலைக்கா(ஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஒரு முறை) நல்லவர்களான அபூ பக்ர்(ரலி) அவர்களும் உமர்(ரலி) அவர்களும் அழிவில் சிக்கிக்கொள்ள இருந்தார்கள். (ஹிஜ்ரீ 9ஆம் ஆண்டு) பனுதமீம் தூதுக்குழுவினர் நபி(ஸல்) அவர்களிடம் (தங்களுக்கு ஒரு தலைவரை நியமிக்கும்படி கோரியவர்களாக) வந்தனர். அப்போது

(அபூ பக்ர், உமர் ஆகிய) அந்த இருவரில் ஒருவர், பனு முஜாஷிஉ குலத்தாரான அக்ரஉ இப்னு ஹாபிஸ் அத்தமீமீ அல்ஹன்ழலீ(ரலி) அவர்களை (தலைவராக நியமிக்கும்படி) சைகை செய்தார் மற்றொருவர், இன்னொருவரை (தலைவராக்கும்படி) சைகை செய்தார். அப்போது அபூ பக்ர்(ரலி) அவர்கள் உமர்(ரலி) அவர்களிடம்,'எனக்கு மாறு செய்வதையே நீங்கள் விரும்புகிறீர்கள்'' என்று சொல்ல, அதற்கு உமர்(ரலி) அவர்கள்'தங்களுக்கு மாறு செய்வது என் நோக்கமன்று'' என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களுக்கு அருகில் அவர்கள் இருவரின் குரல்களும் உயர்ந்தன. அப்போதுதான்,'இறைநம்பிக்கையாளர்களே! உங்கள் குரலை நபியின் குரலுக்கு மேல் உயர்த்தாதீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 49:2 வது) வசனம் முழுமையாக அருளப்பெற்றது.

இப்னு ஸுபைர்(ரலி) கூறினார்: இந்த வசனம் அருளப்பெற்ற பின் உமர்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் எதைப் பேசினாலும் இரகசியம் பேசுபவரைப் போன்று (மெதுவாகத்)தான் பேசுவார்கள் (அவர் என்ன கூறினார் என்பதை) நபி(ஸல்) அவர்கள் அவரிடம் (திரும்ப) விசாரித்தே தெரிந்து கொள்வார்கள்.

இந்த ஹதீஸை தம் பாட்டனார் அபூ பக்ர்(ரலி) அவர்களிடமிருந்து கேட்டு அறிவிப்பதாக இப்னு ஸுபைர்(ரலி) அவர்கள் குறிப்பிடவில்லை.

ஹதீஸ் 7303 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் இறுதி நாள்களில்) நோய்வாய்ப்பட்டிருந்தபோது'மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி அபூ பக்ரிடம் சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். நான்,'நீங்கள் (தொழுகைக்காக) நிற்கும் இடத்தில் (என் தந்தை) அபூ பக்ர் நிற்பார்களானால், (மனம் நெம்ழ்ந்து) அழுது, அவர்கள் ஓதுவது மக்களுக்குக் கேட்காமல் போய்விடும் எனவே, உமர்(ரலி) அவர்களிடம் கூறுங்கள் அவர் தொழுகை நடத்தட்டும்'' என்று சொன்னேன். ஆனால் நபி(ஸல்) அவர்கள்,'அபூ பக்ரிடம் சொல்லுங்கள் மக்களுக்கு அவர் தொழுதுவிக்கட்டும்'' என்று கூறினார்கள். நான் ஹஃப்ஸா(ரலி) அவர்கள் நின்றால் (மனம் நெம்ழ்ந்து) அழுது, அவர்கள் ஓதுவது மக்களுக்குக் கேட்காமல் போய்விடும். எனவே, மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி உமர்(ரலி) அவர்களுக்கு உத்தரவிடுங்கள்' என்று சொல்'' என்றேன். ஹஃப்ஸாவும் அவ்வாறே செய்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'நீங்கள் தாம் யூசுஃப்(அலை) அவர்களின் தோழிகள் (போன்றவர்கள்). எனவே, மக்களுக்குத் தொழுகை நடத்தும்படி அபூ பக்ரிடமே சொல்லுங்கள்'' என்றார்கள். அப்போது ஹஃப்ஸா(ரலி) அவர்கள் என்னிடம்'உன்னால் நான் நன்மை எதையும் கண்டதில்லை'' என்று கூறினார்.

ஹதீஸ் 7304 ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸாஇதீ(ரலி) அறிவித்தார்.

அஜ்லான குலத்தைச் சேர்ந்த உவைமிர்(ரலி) அவர்கள், ஆஸிம் இப்னு அதீ(ரலி) அவர்களிடம் வந்து,'ஒரு மனிதன் தன் மனைவியுடன் வேறொரு (அந்நிய) ஆடவன் (தகாத உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால் அவனை இவன் கொன்று விடலாமா? (அவ்வாறு கொன்றுவிட்டால் பழிவாங்கும் சட்டப்படி) அவனை நீங்கள் கொன்று விடுவீர்களா? எனக்காக (இதைப் பற்றி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேளுங்கள், ஆஸிமே!"என்றார். அவ்வாறே ஆஸிம்(ரலி) அவர்களும் நபியவர்களிடம் கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை. அவற்றை அசிங்கமாகக் கருதினார்கள். எனவே, ஆஸிம்(ரலி) அவர்கள் திரும்பிவந்து உவைமிர்(ரலி) அவர்களிடம்'நபி(ஸல்) அவர்கள் (இத்தகைய) கேள்விகளை விரும்பவில்லை'' என்று தெரிவித்தார்கள். அதற்கு உவைமிர்(ரலி)

அவர்கள், 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் நபி(ஸல்) அவர்களிடம் (இதைப் பற்றி நேரடியாகக் கேட்பதற்காகச்) செல்வேன்'' என்று கூறிவிட்டு நபி(ஸல்) அவர்களிடம் வந்தார். ஆஸிம்(ரலி) வந்துவிட்டுச் சென்றபின் உயர்ந்தோன் அல்லாஹ் குர்ஆன் வசனத்தை அருளியிருந்தான். எனவே, (தம்மிடம் வந்த) உவைமிர்(ரலி) அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள், 'உங்களின் விஷயத்தில் அல்லாஹ் குர்ஆன் (வசனத்தை) அருளிவிட்டான்'' என்று கூறி, தம்பதியர் இருவரையும் அழைத்தார்கள். அவர்கள் இருவரும் வந்து பரஸ்பரம் சாப அழைப்புப் பிரமாணம் (லிஆன்) செய்தார்கள். பிறகு உவைமிர்(ரலி) அவர்கள், '(இதற்குப் பிறகும்) அவளை நான் என்னுடனேயே வைத்துக் கொண்டிருந்தால் நான் பொய் சொன்னதாக ஆகிவிடும், இறைத்தூதர் அவர்களே!"என்று கூறிவிட்டு (விவாக விலக்குச் செய்து) மனைவியிடமிருந்து (தாமாகவே) பிரிந்து கொண்டார்கள். அவ்வாறு அவளைப் பிரிந்துவிடுமாறு அவருக்கு நபி(ஸல்) அவர்கள் கட்டளையிடவில்லை. (அவராகவே அந்த முடிவுக்கு வந்தார்.) பிறகு (இந்தத் தம்பதியரின் சம்பவமே) சாப அழைப்புப் பிரமாணம் செய்வோருக்கான வழிமுறையாகத் தொடர்ந்தது.

மேலும், நபி(ஸல்) அவர்கள், 'இவளைக் கண்காணித்துவாருங்கள் இவள் அரணையைப் போன்று குட்டையான சிவப்பு நிறக் குழந்தையைப் பெற்றெடுத்தால் கணவன் சொன்னது பொய் என்றே நான் கருதுவேன். இவள் கறுப்பு நிறத்தில் விசாலமான கண்கள் கொண்ட பெரிய பிட்டங்களை உடைய குழந்தையைப் பெற்றெடுத்தால் அவளின் மீது உவைமிர் சொன்னது உண்மை என்றே நான் கருதுவேன்'' என்றார்கள். பிறகு விரும்பத்தகாத அந்தத் தோற்றத்திலேயே அவள் குழந்தை பெற்றெடுத்தாள்.

ஹதீஸ் 7305 முஹம்மத் இப்னு ஜுபைர் இப்னி முத்யிம்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் மாலிக் இப்னு அவ்ஸ் இப்னி ஹதஸான்(ரலி) அவர்களிடம் சென்று (ஃபதக் சம்பவம் பற்றிக்) கேட்டேன். அப்போது அவர்கள் கூறினார்கள்:

நான் உமர்(ரலி) அவர்களிடம் சென்று அவர்களின் அறைக்குள் நுழைந்தேன். அப்போது உமர்(ரலி) அவர்களின் மெய்க்காவலர்'யர்ஃபஉ' என்பவர் அவர்களிடம் வந்து, 'உஸ்மான்(ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி), ஸஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) ஆகியோர் (தங்களைச் சந்திக்க) அனுமதி கோருகின்றனர் தங்களுக்கு இசைவு உண்டா?' என்று கேட்டார். உமர்(ரலி) அவர்கள், 'ஆம் (வரச் சொல்லுங்கள்)'' என்று கூறினார்கள். அவர்கள் (அனைவரும்) உள்ளே வந்து சலாம் சொல்லி அமர்ந்தனர். அப்போது (மீண்டும்) யர்ஃபஉ (வந்து), 'அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் சந்திப்பதில் தங்களுக்கு இசைவு உண்டா?' என்று கேட்டார். அவர்கள் இருவருக்கும் அனுமதி அளித்தார்கள். அப்பாஸ்(ரலி) அவர்கள், 'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! எனக்கும் (என்னுடைய) இந்த அக்கிரமக்கார(ப் பங்காள)ருக்கும் இடையே (இச்சொத்து தொடர்பாக) தீர்ப்பளியுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது அவர்கள் இருவரும் கடுஞ்சொற்களைப் பயன்படுத்திக் கொண்டனர். அப்போது (அங்கிருந்த) உஸ்மான்(ரலி) அவர்களும் அவர்தம் தோழர்களும் கொண்ட அந்தக் குழுவினர்'இறை நம்பிக்கையாளர்களின் தலைவரே! இவர்களுக்கிடையே தீர்ப்பளித்து ஒருவரை மற்றவரின் பிடியிலிருந்து விடுவித்துவிடுங்கள்'' என்று கூறினர்.

உமர்(ரலி) அவர்கள், 'சற்று பொறுங்கள். வானமும் பூமியும் எந்த அல்லாஹ்வின் கட்டளையால் நிலைபெற்றிருக்கின்றனவோ அவன் பொருட்டால் கேட்கிறேன்:'இறைத்தூதர்(ஸல்) அவர்க்ள, '(இறைத்தூதர்களான) எங்களுக்கு எவரும் வாரிசாக மாட்டார். நாங்கள்விட்டுச்

செல்வதெல்லாம் தர்மமே' என்று தம்மைக் குறித்துச் சொன்னதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அந்தக் குழுவினர், '(ஆம்) நபியவர்கள் அவ்வாறு சொல்லத்தான் செய்தார்கள்'' என்று பதிலளித்தனர். உமர்(ரலி) அவர்கள், அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கி, 'அல்லாஹ்வின் பொருட்டால் உங்கள் இருவரிடமும் கேட்கிறேன்: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இவ்வாறு சொன்னதை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அவ்விருவரும், 'ஆம் (அவ்வாறு சொல்லியிருக்கிறார்கள்)'' என்று பதிலளித்தனர்.

உமர்(ரலி) அவர்கள், 'அவ்வாறெனில், உங்களிடம் இந்த விஷயத்தைக் குறித்துப் பேசுகிறேன்:'(போரிடாமல் கிடைத்த) இந்த ('ஃபய்உ')ச் செல்வத்திலிருந்து சிறிதைத் தன் தூதருக்கு உரியதாக அல்லாஹ் ஆக்கினான். அவர்களைத் தவிர வேறெவருக்கும் அவன் அதை வழங்கவில்லை'' என்று கூறிவிட்டு, 'அல்லாஹ் எச்செல்வத்தை எதிரிகளின் பிடியிலிருந்து விடுவித்துத் தன் தூதரிடம் திருப்பிக் கொடுத்தானோ அச்செல்வம் உங்கள் குதிரைகளையும் ஒட்டகங்களையும் (அறப்போரிடுவதற்காக) நீங்கள் ஓட்டிச் சென்றதால் கிடைத்ததன்று'' எனும் (திருக்குர்ஆன் 59:6 வது) வசனத்தை ஓதினார்கள். தொடர்ந்து'எனவே, இது இறைத்தூதருக்கென ஒதுக்கப்பட்ட செல்வமாகும். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்களைவிட்டுவிட்டு அதை அவர்கள் தமக்காகச் சேகரித்துக் கொள்ளவில்லை அதை உங்களை விடப் பெரிதாகக் கருதவுமில்லை. அதை உங்களுக்கே கொடுத்தார்கள். உங்களிடையே அதைப் பரவலாகப் பங்கிட்டார்கள். இறுதியில் அதிலிருந்து இச்செல்வம் மட்டுமே எஞ்சியது. நபி(ஸல்) அவர்கள் இச்செல்வத்திலிருந்து தம் வீட்டாரின் வருடாந்திரச் செலவை அவர்களுக்குக் கொடுத்துவந்தார்கள். அப்படிக் கொடுத்த பிறகு எஞ்சியதை எடுத்து அல்லாஹ்வின் (பாதையில் செலவிடும்) செல்வத்தை எந்த இனங்களில் செலவிடுவார்களோ அவற்றில் செலவிடுவார்கள். இவ்வாறே நபி(ஸல்) அவர்கள் தங்களின் வாழ்நாளில் செயல்பட்டுவந்தார்கள். (இவ்வளவும் சொல்லிவிட்டு,)'அல்லாஹ்வின் பொருட்டால் உங்களைக் கேட்கிறேன்: நீங்கள் இதை அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள்'ஆம் (அறிவோம்)'' என்று பதிலளித்தார்கள். பிறகு, அலீ(ரலி) அவர்களிடமும் அப்பாஸ்(ரலி) அவர்களிடமும், 'உங்கள் இருவரையும் அல்லாஹ்வின் பொருட்டால் கேட்கிறேன்: நீங்கள் இதை அறிவீர்களா?' என்று கேட்டார்கள். அவர்கள் இருவரும், 'ஆம் (அறிவோம்)'' என்று பதிலளித்தனர்.

(தொடர்ந்து,)'பிறகு அல்லாஹ் தன் தூதரை அழைத்துக்கொண்டான். அப்போது ('கலீஃபா' பொறுப்பேற்ற) அபூ பக்ர்(ரலி) அவர்கள், 'நான் அல்லாஹ்வின் தூதருடைய (ஆட்சிக்குப்) பிரதிநிதியாவேன்'' என்று கூறி அ(ந்த செல்வத்)தைத் தம் கைவசம் எடுத்தார்கள். அது விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் செயல்பட்டதைப் போன்றே தாமும் செயல்பட்டார்கள். அப்போது நீங்கள் இருவரும் அலீ(ரலி) அவர்களையும் அப்பாஸ்(ரலி) அவர்களையும் நோக்கிச் சொல்கிறார்கள்'அபூ பக்ர் அச்செல்வத்தில் இன்னின்னவாறு செயல்படுகிறார்'' என்று கூறினீர்கள். அல்லாஹ் அறிவான். அபூ பகர்(ரலி) அவர்கள் அது விஷயத்தில் உண்மையே சொன்னார்கள். நல்லதே செய்தார்கள் நேரான முறையில் நடந்து சத்தியத்தையே பின்பற்றினார்கள். பிறகு அபூ பக்ர்(ரலி) அவர்களையும் அல்லாஹ் அழைத்துக்கொண்டான். அப்போது (கலீஃபா பொறுப்பேற்ற) நான், 'இறைத்தூதர்(ஸல்), அ(ச் செல்வத்)தை இரண்டு ஆண்டுகளுக்கு என் கைவசம் எடுத்துக்கொண்டேன். அதில் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் நடந்துகொண்ட முறைப்படி நானும் செயல்பட்டுவந்தேன். பிறகு நீங்கள் இருவரும் என்னிடம் வந்தீர்கள் உங்கள் இருவரின் பேச்சும் (கோரிக்கையும்) ஒன்றாகவே இருந்தது. நீங்கள் இருவரும் ஒன்றுபட்டே இருந்தீர்கள். (அப்பாஸே!) நீங்கள் என்னிடம் உங்கள் சகோதரரின்

புதல்வர் (-நபி) இடமிருந்து உங்களுக்குச் சேர வேண்டிய (வாரிசுப்) பங்கைக் கேட்டபடி வந்தீர்கள். இவரும் (-அலீயும்) தம் துணைவியாருக்கு அவரின் தந்தையிடமிருந்து கிடைக்கவேண்டிய (வாரிசுப்) பங்கைக் கோரியபடி என்னிடம் வந்தார். அதற்கு நான் உங்கள் (இருவரிடமும்,)'நீங்கள் இருவரும் விரும்பினால், அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தமும் அவனுக்களித்த உறுதிமொழியும் உங்கள் பொறுப்பாக இருக்க,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டார்களோ, அபூ பக்ர்(ரலி) அவர்கள் எப்படி அதன் விஷயத்தில் செயல்பட்டர்களோ, நான் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது முதல் அதன் விஷயத்தில் எப்படிச் செயல்பட்டேனோ அதன்படியே நீங்கள் இருவரும் செயல்பட வேண்டும் எனும் நிபந்தனையின் அடிப்படையில் உங்கள் இருவரிடமும் அதைக் கொடுத்து விடுகிறேன் அவ்வாறில்லையாயின் இது விஷயத்தில் நீங்கள் இருவரும் என்னிடம் பேச வேண்டாம்' என்று நான் சொன்னேன். அதற்கு நீங்கள் இருவரும்,'எங்களிடம் அதைக் கொடுத்துவிடுங்கள் அந்த நிபந்தனைகள் படியே (நாங்கள் செயல்படுகிறோம்)' என்று சொன்னீர்கள். அதனடிப்படையிலேயே உங்கள் இருவரிடமும் அந்த நிபந்தனையின்படியே கொடுத்து விட்டேனா?' என்று கேட்டார்கள். இருவரும்'ஆம்' என்றார்கள். உமர்(ரலி) அவர்கள்,'இதைத் தவிர வேறொரு தீர்ப்பை நீங்கள் என்னிடமிருந்து கோருகின்றீர்களா? எவனுடைய அனுமதியுடன் வானமும் பூமியும் நிலை பெற்றுள்ளனவோ அவன் மீது சத்தியமாக! நான் மறுமை வரும்வரை இந்த விஷயத்தில் இதைத் தவிர வேறெந்தத் தீர்ப்பையும் அளிக்கமாட்டேன்! உங்கள் இருவராலும் அதைப் பராமரிக்க முடியவில்லை என்றால் என்னிடம் அதை ஒப்படைத்துவிடுங்கள். உங்களுக்கு பதிலாக நானே அதைப் பராமரித்துக்கொள்கிறேன்'' என்றார்கள்.

## மார்க்கத்தில் புதியவற்றை (பித்அத்தை)ப் புகுத்துவபனுக்குப் புகலிடம் தருவது பாவமாகும்.

இது தொடர்பான ஹதீஸை நபி(ஸல்) அவர்களிடமிருந்து அலீ(ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7306 ஆஸிம் இப்னு சுலைமான் அல்அஹ்வல்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அனஸ்(ரலி) அவர்களிடம்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மதீனாவைப் புனித நகரமாக அறிவித்தார்களா?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள்,'ஆம் இன்ன இடத்திலிருந்து இன்ன இடம் வரை (மதீனா புனிதமானது என்று நபியவர்கள் அறிவித்தார்கள். மேலும், சொன்னார்கள்:) அதன் மரம் (எதுவும்) வெட்டப்படக்கூடாது. அதில் யார் புதிதாக (மார்க்கத்தில் இல்லாத செயல்) ஒன்றை உருவாக்குகிறானோ அவன் மீது அல்லாஹ்வின் சாபமும், வானவர்கள் மற்றும் மக்கள் அனைவரின் சாபமும் உண்டாகட்டும்'' என்று கூறினார்கள் என பதிலளித்தார்கள்.

அனஸ்(ரலி) அவர்கள் வழியாக வரும் மற்றோர் அறிவிப்பில்,'அல்லது புதியவற்றைப் புகுத்துபவனுக்குப் புகலிடம் அளிக்கிறவன் மீது'' என்று வந்துள்ளது.

## (அடிப்படை ஆதாரங்களுக்கு மாறான) சொந்தக் கருத்தும் வலிந்து திணிக்கப்படும்) கணிப்பும் இழிவானவை ஆகும்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) எதைப் பற்றி உங்களுக்கு(த் தீர்க்கமான) ஞானம் இல்லையோ அதைப் பற்றிப் பேச வேண்டாம் (திருக்குர்ஆன் 17:36)

(நூஹே!) நீங்கள் அறியாதவற்றைப் பற்றி என்னிடம் (துருவிக்) கேட்காதீர்கள் (திருக்குர்ஆன் 11:46)

ஹதீஸ் 7307 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல்ஆஸ்(ரலி) அவர்கள் (நாங்கள் இருந்த இடம் வழியாக) எங்களைக் கடந்து ஹஜ் செய்யச் சென்றார்கள். அப்போது அவர்கள் சொல்லக் கேட்டேன்: நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் உங்களுக்குக் கல்வியை வழங்கிய பின் அதை ஒரேயடியாகப் பறித்துக் கொள்ளமாட்டான். மாறாக, கல்விமான்களை அவர்களின் கல்வியுடன் கைப்பற்றிக் கொள்வதன் மூலம் அவர்களிடமிருந்து அதை (சன்னஞ் சன்னமாக)ப் பறித்துக்கொள்வான். பின்னர், அறிவீனர்களே எஞ்சியிருப்பார்கள். அவர்களிடம் மார்க்கத் தீர்ப்புக் கோரப்படும். அவர்களும் தம் சொந்தக் கருத்துப்படி தீர்ப்பளித்து (மக்களை) வழிகெடுப்பார்கள் தாமும் வழிகெட்டுப் போவார்கள்'' என்று கூறக் கேட்டேன்.

பிறகு நான் இந்த ஹதீஸை நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அவர்களிடம் அறிவித்தேன். அதன் பிறகு (ஓர் ஆண்டிலும்) அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அவர்கள் ஹஜ் செய்தார்கள். (அப்போது) ஆயிஷா(ரலி) அவர்கள் என்னிடம்,'என் சகோதரியின் புதல்வரே! அப்துல்லாஹ் இப்னு அம்ர் அவர்களிடம் சென்று, (முன்பு) அவரிடமிருந்து (கேட்டு) நீ அறிவித்த ஹதீஸை எனக்காக அவரிடம் மீண்டும் கேட்டு உறுதிப்படுத்திக்கொள்'' என்றார்கள். அவ்வாறே நான் அவர்களிடம் சென்று கேட்டேன். அவர்கள் முன்பு எனக்கு அறிவித்ததைப் போன்றே இப்போதும் எனக்கு அறிவித்தார்கள். நான் ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்று அதைத் தெரிவித்தேன். அவர்கள் வியப்படைந்து'அல்லாஹ்வின் மீதாணையாக! அப்துல்லாஹ் இப்னு அம்ர் அவர்கள் நன்றாகவே நினைவில் வைத்திருக்கிறார்'' என்றார்கள்.

ஹதீஸ் 7308 அ∴மஷ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் அபூ வாயில்(ரஹ்) அவர்களிடம்,'நீங்கள் ஸி∴ப்பீன் போரில் கலந்து கொண்டீர்களா?' என்று கேட்டேன். அவர்கள்,'ஆம் (கலந்து கொண்டேன்)'' என்று கூறிவிட்டு,'நான் ஸஹ்ல் இப்னு ஹுனை∴ப்(ரலி) அவர்களிடமிருந்து செவியுற்றேன் என (பின்வருமாறு) அறிவித்தார்கள்.

ஸஹ்ல் இப்னு ஹுனை∴ப்(ரலி) கூறினார்: மக்களே! (இந்தப் போரில் கலந்து கொள்ளாததற்காக என் மீது குற்றம் சாட்டாதீர்கள். மாறாக, கலந்து கொள்ள வேண்டும் என்று) உங்கள் மார்க்க விஷயத்தில் நீங்கள் எடுத்துள்ள முடிவையே குறை காணுங்கள். அபூ ஜந்தல் (அபயம் தேடிவந்த) நாளில், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கட்டளையை ஏற்க மறுப்பதற்கு என்னால் முடிந்திருந்தால் ஏற்க மறுத்திருப்பேன். (அன்று) எங்கள் தோள்களில் நாங்கள் எங்கள் வாட்களை (முடக்கி) வைத்துக் கொண்டது எங்களுக்குச் சிரமம் தரக்கூடிய விஷயமான போருக்கு அஞ்சியல்ல. நாங்கள் அறிந்த எளிய விஷயமான சமாதானத்தை அடைய, (முடக்கப்பட்ட) அந்த வாட்களே வழி வகுத்தன. ஆனால், இது (-ஸி∴ப்பீன் சண்டை) வேறு விஷயம். (முஸ்லிம்களுக்கிடையே மூண்டுவிட்ட இந்தப் போரில் ஈடுபடுவது அழிவைத்தான் தரும்.)

அபூ வாயில்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

ஸி∴ப்பீன் போரில் நான் கலந்து கொண்டேன். ஸி∴ப்பீன் போர் ஒரு கெட்ட நிகழ்ச்சி.

வேதஅறிவிப்பு (வஹீ) அருளப்பெறாத ஒரு விஷயம் குறித்துக் கேள்வி கேட்கப்பட்டால் எனக்குத் தெரியாது' என்று நபி(ஸல்) அவர்கள் கூறுவார்கள் அல்லது வேத அறிவிப்பு அருளப்பெறும்வரை எந்த பதிலும் அளிக்கமாட்டார்கள். அவர்கள் (ஒருபோதும்) தம் சொந்தக் கருத்தையோ கணிப்பையோ கூறியதில்லை.

அல்லாஹ் கூறினான்:

(நபியே!) அல்லாஹ் உங்களுக்கு அறிவித்தவற்றைக் கொண்டு மனிதர்களுக்கிடையே நீங்கள் தீர்ப்பளிப்பதற்காகவே உண்மையான இந்த வேதத்தை உங்களுக்கு நாம் அருளினோம். (திருக்குர்ஆன் 04:105)

நபி(ஸல்) அவர்களிடம் உயிர் (ரூஹ்) குறித்து கேட்கப்பட்டது. நபி(ஸல்) அவர்கள் அது பற்றிய வசனம் அருளப்பெறும் வரை (பதில் சொல்லாமல்) மௌனமாயிருந்தார்கள்.

ஹதீஸ் 7309 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நான் நோயுற்றிருந்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களும் அபூ பக்ர்(ரலி) அவர்களும் நடந்தே வந்து என்னை நலம் விசாரித்தார்கள். நான் மூர்ச்சையடைந்து விட்டிருந்த நிலையில் நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அவர்கள் அங்கசுத்தி (உளூ) செய்து, பின்னர் தாம் உளூச் செய்து எஞ்சிய தண்ணீரை என் மீது ஊற்றினார்கள். உடனே நான் மூர்ச்சை தெளிந்தேன். பிறகு,'இறைத்தூதர் அவர்களே! நான் என் செல்வம் தொடர்பாக எப்படி முடிவெடுப்பது? என் செல்வத்தை நான் என்ன செய்வது?' என்று கேட்டேன்.

நபி(ஸல்) அவர்கள், வாரிசுரிமை வசனம் (திருக்குர்ஆன் 04:11) அருளப்பெறும்வரை எந்த பதிலும் அளிக்கவில்லை.

## நபி(ஸல்) அவர்கள் தம் சமுதாய ஆண்கள் மற்றும் பெண்களுக்கு அல்லாஹ் தமக்குக் கற்பித்ததையே போதித்தார்களே தவிர, சொந்தக் கருத்தையோ கணிப்பையோ போதிக்கவில்லை.

ஹதீஸ் 7310 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து,'இறைத்தூதர் அவர்களே! (பெண்கள்) உங்கள் உரைகளை(க் கேட்க முடியாதவாறு) ஆண்களே தட்டிச் சென்றுவிடுகின்றனர். எனவே, நாங்கள் தங்களிடம் வந்து, அல்லாஹ் தங்களுக்குக் கற்றுக் கொடுத்தவற்றிலிருந்து எங்களுக்கு நீங்கள் போதித்திட எங்களுக்கென ஒரு நாளை நீங்களே நிர்ணயித்துவிடுங்கள்" என்று கூறினார். நபி(ஸல்) அவர்கள்,'இன்ன நாளில் இன்ன இடத்தில் நீங்கள் ஒன்று கூடுங்கள்" என்றார்கள். அவ்வாறே (அந்த நாளில் அந்த இடத்தில்) பெண்கள் ஒன்று திரண்டனர். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அப்பெண்களிடம் சென்று, அல்லாஹ் தமக்குக் கற்றுக் கொடுத்தவற்றிலிருந்து அவர்களுக்குப் போதித்தார்கள். பிறகு,'உங்களில், தனக்கு (மரணம் வருவதற்கு) முன்பாக, தன் குழந்தைகளில் மூன்று பேரை இழந்து விடுகிற பெண்ணுக்கு அக்குழந்தைகள் நரகத்திலிருந்து காக்கும் திரையாக மாறிவிடுவார்கள்" என்றார்கள். அப்போது அப்பெண்களில் ஒருவர்,'இறைத்தூதர் அவர்களே! இரண்டு குழந்தைகளை இழந்துவிட்டாலுமா?' என்று கேட்டார். இதை அந்தப் பெண் இரண்டு முறை திரும்பத் திரும்பக் கேட்க,'ஆம் இரண்டு குழந்தைகளை இழந்துவிட்டாலும் தான்" என்று நபி(ஸல்) அவர்கள் மும்முறை பதிலளித்தார்கள்.

## "என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் உண்மைக்கு ஆதரவாகப் போராடிக் கொண்டே இருப்பார்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

(புகாரியாகிய நான் கூறுகிறேன்: அவர்கள் தாம் அறிஞர்(பெரு மக்)கள்.

ஹதீஸ் 7311 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் (உண்மைக்கு) ஆதரவாளர்களாக இருந்து கொண்டே இருப்பார்கள். இறுதியாக, அவர்கள் மேலோங்கியவர்களாக இருக்கும் நிலையிலேயே அவர்களிடம் இறைக் கட்டளை (யான மறுமைநாள்) வரும்.

இதை முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7312 முஆவியா (ரலி) அவர்கள் தங்களின் உரையில் அறிவித்தார்கள்:

நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் எவருக்கு நன்மை நாடுகிறானோ அவரை மார்க்கத்தில் (விளக்கமுடைய) அறிஞராக்குகிறான். நான் பங்கிடுபவன் மட்டுமே. அல்லாஹ்தான் கொடுக்கிறான். இந்த சமுதாயத்தின் நிலை (சத்திய மார்க்கத்தின்படி) செம்மையானதாகவே இருக்கும் 'மறுமை நாள் வரும்வரை' அல்லது 'அல்லாஹ்வின் கட்டளை (உலக முடிவு நாள்) வரும்வரை' என்று சொல்ல கேட்டேன்.

இதை ஹுமைத் (ரஹ்) அறிவித்தார்.

## "... அல்லது உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து உங்களில் சிலர் அளிக்கும் துன்பத்தை வேறு சிலர் சுவைக்கும்படி செய்யவும் அவன் ஆற்றலுள்ளவன்' எனும் (திருக்குர்ஆன் 06:65 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7313 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

"(நபியே!) கூறுக: உங்களுக்கு மேலிருந்தோ உங்கள் கால்களுக்குக் கீழிருந்தோ ஏதேனுமொரு வேதனையை உங்களின் மீது இறக்கவும், அல்லது உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து உங்களில் சிலர் தரும் துன்பத்தை மற்றச் சிலர் சுவைக்கும்படி செய்யவும் அவன் ஆற்றலுள்ளவன்'' எனும் (திருக்குர்ஆன் 06:65 வது) இறைவசனம் இறைத்தூதர் (ஸல்) அவர்களுககு அருளப்பெற்றபோது 'உங்களுக்கு மேலிருந்தோ'' என்பதைக் கேட்டவுடன் '(இறைவா!) உன் சன்னிதானத்தில் பாதுகாப்புக் கோருகிறேன்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். 'உங்கள் கால்களின் கீழிருந்தோ' என்பதைக் கேட்டவுடன் 'உன் சன்னிதானத்தில் பாதுகாப்புக் கோருகிறேன்'' என்றார்கள். 'அல்லது உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து, உங்களில் சிலர் வேறு சிலர் தரும் துன்பத்தைச் சுவைக்கும்படி செய்யவும் அவன் ஆற்றலுள்ளவன்'' என்பதைக் கேட்டவுடன் '(பிரிப்பதும் துன்பத்தைச் சுவைக்கச் செய்வதுமான) இந்த இருவித வேதனைகளும் (முந்தைய வேதனைகளை விட) 'மிக எளிதானவை' அல்லது 'சுலபமானவை' என்றார்கள்.

## விளங்கவேண்டிய ஒன்றை விளங்கியதோடு ஒப்பிடுவது.

கேள்வி கேட்டவர் விளங்கிக்கொள்வதற்காக அந்த இரண்டின் நிலையையும் நபி (ஸல்) அவர்கள் விவரித்துள்ளார்கள்.

ஹதீஸ் 7314 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் ஒரு கிராமவாசி வந்து, '(வெள்ளை நிறத்தவனான எனக்கு) என் மனைவி கறுப்பான மகனைப் பெற்றெடுத்தாள் அவனை நான் (என் மனத்தில்) ஏற்க மறுத்துவிட்டேன்'' என்றார். அதற்கு அவரிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'உன்னிடம் ஒட்டகங்கள் உள்ளனவா?' என்று கேட்டார்கள். அந்தக் கிராமவாசி, 'ஆம்'' என்று பதிலளித்தார்.

நபி(ஸல்) அவர்கள்'அவற்றின் நிறம் என்ன?' என்று கேட்டார்கள். அவர், 'சிவப்பு'' என்றார். 'அவற்றில் சாம்பல் நிற ஒட்டகங்களும் உள்ளனவா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்க, அவர்'(ஆம்) அவற்றில் சாம்பல் நிற ஒட்டகங்கள் இருக்கவே செய்கின்றன'' என்று பதிலளித்தார். '(தாயிடம் இல்லாத) அந்த (சாம்பல்) நிறம் அவற்றுக்கு மட்டும் எவ்வாறு வந்ததென நீ கருதுகிறாய்?' என்று கேட்டார்கள். அந்தக் கிராமவாசி, 'ஆண் ஒட்டகத்தின் பரம்பரை காரணமாக வந்திருக்கலாம், இறைத்தூதர் அவர்களே!"என்றார். நபி(ஸல்) அவர்கள்'(உன்னுடைய) இந்த மகனும் உன் பரம்பரையிலுள்ள (மூதாதையரின்) நிறத்தைக் கொண்டிருக்கக் கூடும்'' என்று கூறி, அவன் தன்னுடையவன் அல்லன் என்று மறுக்க அந்தக் கிராமவாசியை நபி(ஸல்) அவர்கள் அனுமதிக்கவில்லை.

ஹதீஸ் 7315 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்து, 'என் தாயார் ஹஜ் செய்வதற்காக நேர்ச்சை செய்திருந்தார். ஆனால், ஹஜ்ஜை நிறைவேற்றுவதற்குள் அவர் இறந்துவிட்டார். நான் அவர் சார்பாக ஹஜ் செய்யலாமா?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'ஆம் அவர் சார்பாக ஹஜ் செய்'' (எனக் கூறிவிட்டு)'உன் தாயார் மீது கடன் இருந்தால் நீ அதை (அவர் சார்பாக) நிறைவேற்றுவாய் அல்லவா?' என்று கேட்டார்கள். அந்தப் பெண், 'ஆம் (நிறைவேற்றுவேன்)'' என்று பதிலளித்தார். நபி(ஸல்) அவர்கள், 'அப்படியென்றால் (நேர்ச்சையின் மூலம்) அல்லாஹ்வுக்குச் செலுத்த வேண்டியதை நிறைவேற்றுங்கள். ஏனெனில், வாக்கு நிறைவேற்றப்பட்ட அல்லாஹ்வே மிகவும் அருகதையுடையவன்'' என்றார்கள்.

## அல்லாஹ் அருளியுள்ள சட்டங்களுக்கேற்ப நீதிபதிகள் முடிவெடுக்க வேண்டும் என்பது தொடர்பாகவும் கலீஃபாக்கள் ஆலோசனை செய்தது மற்றும் அறிஞர்களிடம் கேள்வி கேட்டது தொடர்பாகவும் வந்துள்ளவை.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் அருளியுள்ள (வேதத்தின்) படி தீர்ப்பளிக்காதவர்களாக அக்கிரமக்காரர்கள் (திருக்குர்ஆன் 05:45)

கல்வி ஞானம் உடைய ஒருவர் தம் ஞானத்திற்கேற்ப தீர்ப்பளித்து, அதை (மக்களுக்கு)க் கற்பித்து, சுயமான கருத்தை வலிந்து திணிக்காதபோது நபி(ஸல்) அவர்களின் பாராட்டுக்குரியவராகிறார்.

ஹதீஸ் 7316 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு பண்புகளில் தவிர வேறு எதிலும் பொறாமை கொள்ளலாகாது. ஒருவர் தமக்கு இறைவன் அளித்த செல்வத்தை அறப்பணியில் அர்ப்பணித்தல் மற்றொருவர் தமக்கு இறைவன் அளித்த ஞானத்தால் (மக்கள் பிரச்சினைகளுக்கு) தீர்ப்பு வழங்கிக் கொண்டும், (பிறருக்கு) அதைக் கற்பித்துக் கொண்டும் இருத்தல்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7317 முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் மக்களிடம் ஒரு பெண்ணுக்குக் குறைப்ப பிரசவம் ஏற்படச் செய்வது குறித்து - அதாவது (கர்ப்பிணிப்) பெண்ணின் வயிற்றின் மீது அடித்து கருவைச் சிதைத்துக் குறைப் பிரசவம் ஏற்படுத்துவது குறித்து - கேட்டார்கள்.

அப்போது'இ(ந்தக் குற்றத்திற்குப் பரிகாரம் என்ன என்ப)து தொடர்பாக உங்களில் யாரேனும் நபி(ஸல்) அவர்களிடம் ஏதும் கேட்டுள்ளீர்களா?' என்று உமர்(ரலி) அவர்கள் வினவினார்கள். 'கேட்டிருக்கிறேன்'' என்று நான் சொன்னேன். உமர்(ரலி) அவர்கள்,'அது என்ன?' என்று கேட்க, நான்'நபி(ஸல்) அவர்கள்,'அந்த சிசுவுக்காக ஓர் ஆண் அடிமையை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை (இழப்பீடாக) வழங்கிட வேண்டும்' என்று சொல்ல கேட்டிருக்கிறேன்'' என்று சொன்னேன். உடனே உமர்(ரலி) அவர்கள்,'நீங்கள் சொன்னதற்கு ஒரு சாட்சியைக் கொண்டுவராத வரை உங்கள் பொறுப்பிலிருந்து நீங்கள் விடுபடமுடியாது'' என்றார்கள்.

ஹதீஸ் 7318 உடனே நான் (சாட்சி கொண்டுவர) வெளியே சென்றேன். முஹம்மது இப்னு மஸ்லமா(ரலி) அவர்களைக் கண்டு அவர்களை அழைத்துக்கொண்டு வந்தேன். அவர்கள் என்னுடன் சேர்ந்து'இதற்கு இழப்பீடாக ஓர் ஆண் அடிமையை, அல்லது ஓர் அடிமைப் பெண்ணை வழங்க வேண்டும்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறத் தாமும் கேட்டதாக சாட்சியம் அளித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

"உங்களுக்கு முன்னிருந்தவர்களின் (தவறான) வழிமுறைகளை (இறுதிக் காலத்தில்) நீங்கள் நிச்சயம் பின்பற்றுவீர்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7319 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,'என் சமுதாயத்தார் தமக்கு முந்தைய சமுதாயங்களின் நடைமுறைகளை சாண் சாணாக, முழம் முழமாக பின்பற்றி நடக்காத வரை மறுமைநாள் வராது'' என்று கூறினார்கள். உடனே,'இறைத்தூதர் அவர்களே! பாரசீகர்கள் மற்றும் ரோமர்கள் போன்றவர்களையா (இந்தச் சமுதாயத்தார் பின்பற்றுவர்)?' என வினவப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அவர்களைத் தவிர (இன்று) மக்களில் வேறு யார் உள்ளனர்?' என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

ஹதீஸ் 7320 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

"உங்களுக்கு முன்னிருந்த (யூதர்கள் மற்றும் கிறிஸ்த)வர்களின் வழிமுறைகளை நீங்கள் சாண் சாணாக, முழம் முழமாகப் பின்பற்றுவீர்கள். எந்த அளவிற்கென்றால், அவர்கள் ஓர் உடும்பின் பொந்துக்குள் நுழைந்தால் கூட நீங்கள் அவர்களைப் பின்பற்றி நுழைவீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். நாங்கள்,'இறைத்தூதர் அவர்களே! (நாங்கள் பின்பற்றக் கூடியவர்கள் என்று) யூதர்களையும் கிறிஸ்தவர்களையுமா (நீங்கள் குறிப்பிடுகிறீர்கள்)?' என்று கேட்டோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'வேறு யாரை?' என்று (திருப்பிக்) கேட்டார்கள்.

## தவறான வழிக்கு இட்டுச் செல்வது, அல்லது தவறான (புதிய) நடைமுறையை உருவாக்குவது குற்றம்.

ஏனெனில் அல்லாஹ் கூறினான்: (இவ்வாறு அவர்கள் கூறுவதன் விளைவாக,) மறுமை நாளில் தங்கள் பாவங்களை முழுமையாகச் சுமப்பதுடன், அறியாமையால் இவர்கள் யார் யாரையெல்லாம் வழிகெடுத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களின் பாவங்களையும் சுமப்பார்கள். (திருக்குர்ஆன் 16:25)

ஹதீஸ் 7321 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அநியாயமாகக் கொல்லப்படும் எந்த (மனித) உயிராயினும் அ(தைக் கொலை செய்த பாவத்)தில் ஆதம்(அலை) அவர்களின் முதல் மகனுக்கும் நிச்சயம் ஒரு பங்கு இருந்தே தீரும்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

அறிவிப்பாளர் ஹுமைத்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அறிவிப்பாளர்களில் ஒருவரான சுஃப்யான் இப்னு உயைனா(ரஹ்) அவர்கள்,'அதன் கொலையி(ன் பாவத்தி)லிருந்து'' என்று சிலவேளை கூறுவார்கள். ஏனெனில், அவர் (-ஆதமின் முதல் மகனான காபீல்) தாம் மனித சமுதாயத்திலேயே முதன் முதலாகக் கொலை செய்து முன்மாதிரியை ஏற்படுத்தியவர்.

## அறிஞர்களின் கருத்தொற்றுமையை வலியுறுத்தி நபி(ஸல்) அவர்கள் கூறியது.

மேலும், மக்கா, மதீனா ஆகிய இரண்டு புனித நகரங்களின் அறிஞர்கள் ஒருமித்தக் கருத்துக் கொண்டுள்ள விஷயங்களும், அவற்றிலுள்ள நபி(ஸல்) அவர்கள், முஹாஜிர்கள், அன்சாரிகள் ஆகியோர் வாழ்ந்த இடங்கள் மற்றும் நபி(ஸல்) அவர்கள் தொழுத இடம், அவர்களின் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மற்றும் மண்ணறை ஆகியவை குறித்த செய்திகளும்.

ஹதீஸ் 7322 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அஸ்ஸலமீ(ரலி) அறிவித்தார்.

கிராமவாசி ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இஸ்லாத்தை ஏற்பதாக விசுவாசப் பிரமாணம் செய்தார். பின்னர் அவருக்கு மதீனாவில் காய்ச்சல் ஏற்பட்டது. எனவே, அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'இறைத்தூதர் அவர்களே! என்னுடைய விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை விடுவித்துவிடுங்கள்'' என்றார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஏற்க) மறுத்துவிட்டார்கள். பிறகு மீண்டும் அவர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'என்னுடைய விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை விடுவித்து விடுங்கள்'' என்றார். மீண்டும் நபி(ஸல்) அவர்கள் மறுத்துவிட்டார்கள். பிறகு அவர் மீண்டும் நபி(ஸல்) அவர்களிடம் வந்து,'என்னுடைய விசுவாசப் பிரமாணத்திலிருந்து என்னை விடுவித்து விடுங்கள்'' என்றார். அப்போதும் நபி(ஸல்) அவர்கள் (ஏற்க) மறுத்துவிட்டார்கள். எனவே, அந்தக் கிராமவாசி (மதீனாவிலிருந்து) கிளம்பிச் சென்றார். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'மதீனா கொல்லனின் உலை போன்றது தன்னிலுள்ள தீயவர்களை வெளியேற்றிவிட்டு நல்லவர்களை அது தூய்மைப்படுத்துகிறது'' என்றார்கள்.

ஹதீஸ் 7323 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நான் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்களுக்குக் குர்ஆனை ஓதிக் கொடுத்துவந்தேன். உமர்(ரலி) அவர்கள் செய்த இறுதி ஹஜ்ஜின்போது மினாவில் அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) அவர்கள் (என்னிடம்),'நீங்கள் இறை நம்பிக்கையாளர்களின் தலைவர் (உமர்(ரலி) அவர்களுடன் இருந்திருக்க வேண்டும். (இன்று) அவர்களிடம் ஒருவர் வந்து,'இறைநம்பிக்கையாளர்களின் தலைவரே! இன்னான்,'இறைநம்பிக்கையர்களின் (இன்றைய) தலைவர் இறந்துவிட்டிருந்தால் இன்னாருக்கு நான் விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத்திருப்பேன்' என்று கூறினான். இதைக் கேட்ட உமர்(ரலி) அவர்கள்,'இன்று மாலையே நான் (மக்கள் முன்) நின்று, தங்களுக்கு சப்தமில்லாத விஷயங்களில் தலையிட நினைக்கும் இவர்களை எச்சரிக்கை செய்யவுள்ளேன்'' என்றார்கள். நான்,'அவ்வாறு செய்யாதீர்கள். ஏனெனில், ஹஜ் பருவத்தில் (நல்லவர்களுடன்) விவரமற்ற மக்களும் குழுமுகின்றனர். அவர்கள் தாம் உங்கள் அவையில் மிகுந்திருப்பர். (நீங்கள் எழுந்து நின்று ஏதோ ஒன்றைச் சொல்ல)

அதற்கு உரிய பொருள் தராமல், ஒவ்வொருவரும் (தம் மனம்போன போக்கில்) அதைத் தவறாகப் புரிந்து கொள்வார்களோ என நான் அஞ்சுகிறேன். எனவே, நீங்கள் ஹிஜ்ரத் மற்றும் நபிவழி பூமியான மதீனா சென்று சேரும் வரைக் காத்திருங்கள். அங்கு இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தோழர்களான முஹாஜிர்களையும் அன்சாரிகளையும் தனியாகச் சந்தி(த்து அவர்களிடம் நீங்கள் தெரிவிக்க வேண்டியதை அழுத்தமாகத் தெரிவி)யுங்கள். அவர்கள் உங்கள் சொல்லை நினைவில் நிறுத்திக் கொண்டு, அதற்குரிய முறையில் அதைப் புரிந்து கொள்வார்கள்' என்று சொன்னேன். அதற்கு உமர்(ரலி) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! நான் மதீனா சென்ற பின் முதலாவது கூட்டத்திலேயே இதைப் பற்றிப் பேசப்போகிறேன்' என்றார்கள்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: அவ்வாறே நாங்கள் மதீனா சென்றடைந்தோம். 'நிச்சயமாக அல்லாஹ் முஹம்மத்(ஸல்) அவர்களை சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பினான். மேலும், அவர்களுக்கு (குர்ஆன் எனும்) வேதத்தையும் அருளினான். அல்லாஹ் அருளிய (வேதத்)தில் கல்லெறி தண்டனை (ரஜ்கி) சம்பந்தமான வசனம் இருந்தது' என உமர்(ரலி) அவர்கள் பேசத் தொடங்கினார்கள்.

ஹதீஸ் 7324 முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நாங்கள் அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்கள் சிவப்புக் களிமண் சாயம் இடப்பட்ட இரண்டு சணல் ஆடைகளை அணிந்திருந்தார்கள். அவர்கள் அப்போது மூக்குச் சிந்திவிட்டு 'அடடா! அபூ ஹுரைரா! சணல் துணியிலேயே மூக்குச் சிந்துகிறாயே! (ஒரு காலத்தில்) நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடை(மிம்பரு)க்கும் ஆயிஷா(ரலி) அவர்களின் அறைக்குமிடையே (பசியால்) மயக்கமடைந்து விழுந்து கிடப்பேன். அங்கு வருபவர் எவரேனும் வந்து நான் பைத்தியக்காரன் என்று நினைத்து என் கழுத்தின் மீது கால் வைப்பார். ஆனால், எனக்குப் பசிதான் (மேலிட்டு) இருக்கும் பைத்தியம் எதுவும் இருக்காது (அந்த அளவிற்கு வறுமையில் இருந்தேன்)' என்றார்கள்.

ஹதீஸ் 7325 அப்துர் ரஹ்மான் இப்னு ஆபிஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம், 'நீங்கள் நபி(ஸல்) அவர்களுடன் பெருநாள் தொழுகையில் கலந்துகொண்டதுண்டா?' என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 'ஆம் (கலந்து கொண்டிருக்கிறேன்). நபி(ஸல்) அவர்களுடன் (சொந்தம் காரணமாக) எனக்கு நெருக்கம் இல்லாதிருந்திரப்பின் சிறுவனாக இருந்த நான் நபியவர்களுடன் (பெருநாள் தொழுகையில்) கலந்து கொண்டிருக்க முடியாது. நபி(ஸல்) அவர்கள் (பெருநாளில் வீட்டில் இருந்து புறப்பட்டு) கஸீர் இப்னு ஸல்த் உடைய வீட்டருகே உள்ள அடையாளமிடப்பட்ட இடத்திற்கு வந்து தொழுகை நடத்தினார்கள். பிறகு உரையாற்றினார்கள். பாங்கு சொல்லவுமில்லை இகாமத் சொல்லவுமில்லை. பிறகு (உரையில்) தர்மம் செய்யும்படி உத்தரவிட்டார்கள். உடனே, பெண்கள் தம் காதுகள் மற்றும் கழுத்துகளின் பக்கம் தம் கைகளைக் கொண்டு சென்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் பிலால்(ரலி) அவர்களுக்குக் கட்டளையிட, அவர்கள் அப்பெண்களிடம் சென்று (அவர்களின் காதணிகளையும் கழுத்தணிகளையும் சேகரித்துக்கொண்டு) நபி(ஸல்) அவர்களிடம் திரும்பிவந்தார்கள்.

ஹதீஸ் 7326 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் 'குபா' பள்ளிவாசலுக்கு நடந்தும் (வாகனத்தில்) பயணம் செய்தும் செல்வது வழக்கம்.

ஹதீஸ் 7327 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்கள் அப்துல்லாஹ் இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்களிடம்,'என்னை (நான் இறந்த பின்) என் தோழிகளுடன் (-நபியவர்களின் இதர துணைவியருடன்) அடக்கம் செய்யுங்கள். நபி(ஸல்) அவர்களுடன் (என்) வீட்டில் அடக்கம் செய்யாதீர்கள். ஏனெனில், நான் (மற்றவர்களால் என் தோழியரை விட) உயர்வாகக் கருதப்படுவதை விரும்பவில்லை'' என்றார்கள்.

ஹதீஸ் 7328 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

உமர்(ரலி) அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம்,'என் தோழர்கள் (முஹம்மத்(ஸல்) அவர்கள், அபூ பக்ர்(ரலி) ஆகிய) இருவருடனும் நான் அடக்கம் செய்யப்பட எனக்கு அனுமதியளியுங்கள்'' என்று கேட்டு ஆளனுப்பினார்கள். ஆயிஷா(ரலி) அவர்கள்,'சரி, அல்லாஹ்வின் மீதாணையாக! (நான் உமரை நபியவர்களின் அருகே அடக்க அனுமதிக்கிறேன்)'' என்றார்கள். ஆனால், (முற்ற தோழர்களில்) எவராவது அவர்களிடம் அதற்காக அனுமதி கேட்டு ஆளனுப்பினால்,'முடியாது அல்லாஹ்வின் மீதாணையாக! அவர்களுடன் வேறெவரையும் அடக்கம் செய்ய நான் அனுமதிக்க மாட்டேன்'' என்று கூறிவிடுவார்கள்.

ஹதீஸ் 7329 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அஸ்ர் தொழுகையை தொழுதுவிட்டு மதீனாவின் (புறநகர்ப் பகுதிகளிலுள்ள) மேட்டுக் கிராமங்களுக்குச் செல்வார்கள். அப்போது சூரியன் (மேற்கே) உயர்ந்தே இருக்கும்.

மற்றோர் அறிவிப்பில்,'அந்த மேட்டுக் கிராமங்களின் தூரம் (மதீனாவிலிருந்து) நான்கு அல்லது மூன்று மைல்களாகும்'' என்று கூறப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7330 சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தின்'ஸாஉ' என்பது, இன்றைக்கு (நடைமுறையிலிருக்கும்) உங்களின்'முத்'தில் ஒரு'முத்'தும் மூன்றில் ஒரு பாகமும் (1 1:3) கொண்டதாக இருந்தது. பின்னர் (உமர் இப்னு அப்தில் அஸீஸ்(ரஹ்) அவர்களின் காலத்தில் தான்) அதன் அளவு அதிகமாக்கப்பட்டது.

ஹதீஸ் 7331 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இறைவா! மதீனாவாசிகளுக்கு அவர்களின் முகத்தலளவையில் வளத்தை அருள்வாயாக! அவர்களின்'ஸாஉ' மற்றும்'முத்'(து) ஆகிய அளவைகளிலும் அவர்களுக்கு வளத்தை அருள்வாயாக!"என்று பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 7332 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

யூதர்கள் நபி(ஸல்) அவர்களிடம் விபசாரம் புரிந்த ஓர் ஆணையும் ஒரு பெண்ணையும் (தீர்ப்புக்காக) அழைத்து வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்குமாறு உத்தரவிட அவ்வாறே அவ்விருவருக்கும் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் சடலங்கள் (ஜனாஸாக்கள்) வைக்கப்படும் இடத்திற்கு அருகே கல்லெறி தண்டனை நிறைவேற்றப்பட்டது.

ஹதீஸ் 7333 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

(ஒரு பயணத்திலிருந்து திரும்பி வரும் போது) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு உஹுத் மலை தென்பட்டது. உடனே,'இந்த மலை நம்மை நேசிக்கின்றது நாமும் இதை நேசிக்கிறோம்.

இறைவா! இப்ராஹீம்(அலை) அவர்கள் மக்கா நகரைப் புனிதமானதென அறிவித்தார்கள். நான் மதீனாவின் இரண்டு மலைகளுக்கு இடையில் இருக்கும் (மதீனா நகர) பூமியைப் புனிதமானதென அறிவிக்கிறேன்‘‘ என்றார்கள்.

“இந்த (உஹுத்) மலை நம்மை நேசிக்கின்றது நாமும் இதை நேசிக்கிறோம்‘‘ என்ற இதே நபிமொழியை ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7334 ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.

(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலின் கிப்லா திசையிலுள்ள சுவருக்கும் சொற்பொழிவு மேடை (மிம்பரு)க்கும் இடையே ஆடு ஒன்று புகுந்து செல்லும் அளவிற்கு இடைவெளி இருந்தது.

ஹதீஸ் 7335 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

என் வீட்டிற்கும் என் சொற்பொழிவு மேடை (மிம்பரு)க்கும் இடையே சொர்க்கத்தின் பூங்காக்களில் ஒரு பூங்கா உள்ளது. என் சொற்பொழிவு மேடை (மிம்பர்) என்னுடைய (கவ்ஸர்) தடாகத்தின் மீதுள்ளது.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7336 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் குதிரைகளுக்கிடையே பந்தயம் வைத்தார்கள். அப்போது அவற்றில் மெலியவைக்கப்பட்ட (பயிற்சியளிக்கப்பட்ட) குதிரைகள் (பந்தயத்தில்) அவிழ்த்துவிடப்பட்டன. அவற்றின் பந்தயத் தொலைவு’ஹஃப்யா’ எனுமிடத்திலிருந்து’ஸனிய்யத்துல் வதாஉ’ மலைக்குன்று வரையாக இருந்தது. மெலியவைக்கப்படாத குதிரைகளும் அவிழ்த்துவிடப்பட்டன. அவற்றின் பந்தயத் தொலைவு’ஸனியத்துல் வதா’ மலைக்குன்றிலிருந்து’பனு ஸுரைக்’ குலத்தாரின் பள்ளிவாசல் வரையாக இருந்தது. மேலும், நானும் (குதிரைகளுடன்) போட்டியில். பங்கெடுத்தவர்களில் ஒருவனாயிருந்தேன்.

ஹதீஸ் 7337 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்தபடி உமர்(ரலி) அவர்கள் கூற கேட்டுள்ளேன்.

இந்த ஹதீஸ் இரண்டு அறிவிப்பாளர் தொடர்கள் வழியாக வந்துள்ளது.

ஹதீஸ் 7338 சாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

உஸ்மான் இப்னு அஃப்பான்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது (நின்று) உரையாற்றிக் கொண்டிருந்ததை செவியுற்றேன்.

ஹதீஸ் 7339 உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்கள் (ஒரு பாத்திரத்தைக் காட்டி),‘இந்தப் பாத்திரம் நானும் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் குளிப்பதற்காக வைக்கப்பட்டு வந்தது. நாங்கள் இருவரும் ஒரு சேர இதில் குளிக்கத் தொடங்குவோம்‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7340 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் அன்சாரிகளுக்கும் குறைஷிகளுக்கும் இடையே மதீனாவில் இருக்கும் என் வீட்டில் வைத்து நட்புறவு முறையை ஏற்படுத்தினார்கள்.

ஹதீஸ் 7341 மேலும், நபி(ஸல்) அவர்கள் ஒரு மாத காலம் (நிராயுதபாணிகளான நபித்தோழர்களை வஞ்சகம் செய்து கொலை செய்த) பனு சுலைம் குலத்தாரின் சில குடும்பங்களுக்கெதிராகப் பிரார்த்தித்தார்கள்.

ஹதீஸ் 7342 அபூ புர்தா(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் மதீனா சென்றிருந்தேன். அங்கு அப்துல்லாஹ் இப்னு சலாம்(ரலி) அவர்கள் என்னைச் சந்தித்தார்கள். அவர்கள் என்னிடம்,'வீட்டிற்குப் போகலாம் (வாருங்கள்). இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அருந்திய ஒரு பாத்திரத்தில் உங்களுக்கு நான் அருந்தக் கொடுப்பேன் மேலும், நபி(ஸல்) அவர்கள் தொழுத பள்ளிவாசலில் நீங்கள் தொழலாம்'' என்றார்கள். எனவே, நான் அவர்களுடன் சென்றேன். அவர்கள் எனக்கு (அரைத்த) மாவு பானத்தை அருந்தக் கொடுத்தார்கள். பேரீச்சம் பழத்தை உண்ணக் கொடுத்தார்கள். அவர்களின் பள்ளிவாசலில் தொழுதேன்.

ஹதீஸ் 7343 உமர்(ரலி) அறிவித்தார்.

''என் இறைவனிடமிருந்து வரக்கூடிய (வான)வர் இன்றிரவு என்னிடம் வந்து, இந்த சுபிட்சம் மிக்க பள்ளத்தாக்கில் தொழுவீராக் ஹஜ்ஜுடன் உம்ராவைச் சேர்த்துவிட்டதாக (ஹஜ்ஜுல் கிரான் செய்வதாக)ச் சொல்வீராக என்று கூறினார்'' என்று நபி(ஸல்) அவர்கள் அகீக் பள்ளத்தாக்கில் இருந்தபோது என்னிடம் கூறினார்கள்.

மற்றோர் அறிவிப்பில்'ஹஜ்ஜில் உம்ராவைச் சேர்ப்பதாக.!"என்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் 7344 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் நஜ்த்வாசிகளுக்கு'கர்ன்' எனுமிடத்தையும், ஷாம் வாசிகளுக்கு'ஜுஹ்ஃபா'வையும் மதீனாவாசிகளுக்கு'துல்ஹுலைஃபா'வையும் இஹ்ராம் கட்டும் எல்லையாக நிர்ணயித்தார்கள்.

இதை நபி(ஸல்) அவர்கள் கூற நான், செவியேற்றேன். மேலும்,'நபி(ஸல்) அவர்கள்,'யலம்லம்' எனுமிடம் யமன்வாசிகளுக்கு (இஹ்ராம் கட்டுவதற்குரிய) இடமாகும்'' என்று கூறினார்கள் என எனக்குத் தகவல் கிடைத்தது. (இந்த ஹதீஸை அறிவிக்கையில் இராக் நாட்டைப் பற்றியும் பேசப்பட்டது. அப்போது இப்னு உமர்(ரலி) அவர்கள், அந்நாளில் இராக் (வாசிகளிடையே முஸ்லிம்கள்) இருக்கவில்லை'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7345 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (பத்னால்வாதியிலுள்ள) துல்ஹுலைஃபாவில் (இரவின் கடைசிநேரத்தில்) ஓய்வெடுக்கும் இடத்தில் (உறங்கிக் கொண்டு) இருந்தபோது அவர்களுக்குக் கனவு காட்டப்பட்டது. அப்போது (கனவில்)'சுபிட்சமிக்க பள்ளத்தாக்கில் நீங்கள் இருக்கின்றீர்கள்'' என்று நபியவர்களிடம் கூறப்பட்டது.

''(அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே!) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை' எனும் (திருக்குர்ஆன் 03:128 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7346 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஃபஜ்ருத் தொழுகையில் கடைசி ரக்அத்தின்போது தம் தலையை ருகூஉவிலிருந்து உயர்த்தி,'அல்லாஹும்ம ரப்பனா வலக்கல் ஹம்து'' (இறைவா! எங்கள் அதிபதியே! உனக்கே புகழனைத்தும்) என்று சொல்லிவிட்டுப் பிறகு,'இறைவா! இன்னாரையும்

இன்னாரையும் உன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவாயாக!"என்று பிரார்த்தித்தார்கள். உடனே கண்ணியமும் மகத்துவமும் பொருந்திய அல்லாஹ், 'அவர்களை அல்லாஹ் மன்னிக்கும் வரை, அல்லது அவர்கள் அக்கிரமக்காரர்களாக இருப்பதால் அவனே அவர்களை வேதனை செய்யும்வரை (அவர்களுக்குத் தண்டனை வழங்குமாறு கூற, நபியே!) உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை" எனும் (திருக்குர்ஆன் 03:128 வது) வசனத்தை அருளினான்.

## "மனிதன் அதிகம் தர்க்கம் செய்பவனாக இருக்கிறான்" எனும் (திருக்குர்ஆன் 18:54 வது) இறைவசனம்.

அல்லாஹ் கூறினான்: வேதக்காரர்களிடம் மிக அழகிய முறையிலன்றி நீங்கள் தர்க்கம் செய்ய வேண்டாம். (திருக்குர்ஆன் 29:46)

ஹதீஸ் 7347 அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், என்னிடமும் தம் புதல்வி ஃபாத்திமா(ரலி) அவர்களிடமும் ஒரு (நாள்) இரவு நேரத்தில் வந்தார்கள். எங்களிடம், 'நீங்கள் (தஹஜ்ஜுத்) தொழவில்லையா?' என்று கேட்டார்கள். நான், 'இறைத்தூதர் அவர்களே! எங்கள் உயிர்களெல்லாம் அல்லாஹ்வின் கரத்தில் தானே இருக்கின்றன! அவன் எங்களை (தூக்கத்திலிருந்து) எழுப்ப நாடினால் எங்களை எழுப்பிவிடுவான்" என்று சொன்னேன். நான் இப்படிச் சொன்னபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு எந்த மறுமொழியும் கூறாமல் திரும்பிச் சென்றார்கள். பிறகு நபி(ஸல்) அவர்கள் திரும்பிச் சென்றபடி தம் தொடையில் தட்டிக்கொண்டே 'மனிதன் அதிகம் தர்க்கம் செய்பவனாக இருக்கிறான்" என்று சொல்லிக் கொண்டிருந்ததை கேட்டேன்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

(இங்கு 'இரவில் வந்தார்கள்' என்பதைக் குறிக்க 'தர(க்)க' எனும் வினைச்சொல் மூலத்தில் ஆளப்பட்டுள்ளது.) இரவில் வரும் எதுவாயினும் அதற்கு 'தாரிக்' என்று சொல்லப்படும். நட்சத்திரத்திற்கும் 'தாரிக்' என்று சொல்வதுண்டு. 'ஸாம்ப்' என்பது 'பிரகாசிக்கச் கூடியது' என்று பொருள்படும். 'உஸ்குப்' (உன் நெருப்பைப் பிரகாசிக்கச் செய்) என்று தீ மூட்டுபவனிடம் சொல்லப்படும்.

ஹதீஸ் 7348 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் இருந்தபோது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் வெளியே வந்து, 'யூதர்களை நோக்கிச் செல்லுங்கள்" என்று கூறினார்கள். நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் புறப்பட்டு (யூதர்களின் வேத பாடசாலையான) 'பைத்துல் மித்ராஸ்' எனும் இடத்திற்குச் சென்றோம். அங்கு நபி(ஸல்) அவர்கள் நின்று கொண்டு 'யூதர்களே! நீங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள் (ஈருலகிலும்) சாந்தி அடைவீர்கள்" என்று அவர்களுக்கு அழைப்பு விடுத்தார்கள். அதற்கு யூதர்கள், 'நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டீர்கள், அபுல் காசிமே!"என்று பதிலளித்தார்கள். உடனே இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இ(ந்த ஒப்புதல் வாக்குமூலத்)தைத் தான் நான் எதிர்பார்க்கிறேன் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளுங்கள் சாந்தி பெறுவீர்கள்" என்றார்கள். அப்போதும் யூதர்கள் 'நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டீர்கள், அபுல் காசிமே!"என்றார்கள். உடனே அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இதைத்தான் எதிர்பார்க்கிறேன்" என்று கூறிவிட்டுப் பிறகு மூன்றாம் முறையாக (முன்பு போன்றே) சொன்னார்கள். பின்னர், 'பூமி அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது. நான் உங்களை இந்த பூமியிலிருந்து நாடு கடத்திட விரும்புகிறேன். உங்களில் தம்

(விலையைப்) பெறுகிறவர் அச்சொத்தை விற்றுவிடட்டும். இல்லையென்றால், பூமி அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியது என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள்'' என்றார்கள்.

## அவ்வாறே உங்களை நடு நிலையான சமுதாயமாக ஆக்கினோம் (எனும் 02:143 வது இறைவசனம்).

"சமுதாயக் கூட்டமைப்பை பற்றிக் கொள்ளுங்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் கட்டளையிட்டது. அந்தக் கூட்டமைப்பு என்பது அறிஞர்களைக் குறிக்கும்.

ஹதீஸ் 7349 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

"மறுமை நாளில் நூஹ்(அலை) அவர்கள் கொண்டு வரப்படுவார்கள். அவர்களிடம், 'நீங்கள் (இறைச் செய்தியை) எடுத்துரைத்துவிட்டீர்களா?' என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், 'ஆம் (எடுத்துரைத்துவிட்டேன்) என் இறைவா!" என்று பதிலளிப்பார்கள். உடனே, அவர்களின் சமுதாயத்தாரிடம், 'இவர் உங்களுக்கு (இறைச் செய்தியை) எடுத்துரைத்தாரா?' என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், 'எங்களை எச்சரிப்பவர் எவருமே வரவில்லையே?' என்று (பொய்) சொல்வார்கள். அப்போது (நூஹ்(அலை) அவர்களிடம்) அல்லாஹ், 'உங்கள் சாட்சிகள் யார்?' என்று கேட்பான். 'முஹம்மத்(ஸல்) அவர்களும் அவர்களின் சமுதாயத்தாரும் தாம் (என் சாட்சிகள்") என்று நூஹ்(அலை) அவர்கள் கூறுவார்கள். அப்போது நீங்கள் கொண்டு வரப்படுவீர்கள் (நூஹ்(அலை) அவர்கள் இறைச்செய்தியை எடுத்துரைத்தார்கள் என்று) நீங்கள் சாட்சியம் அளிப்பீர்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறிவிட்டு 'நீங்கள் மக்களுக்குச் சான்று வழங்குபவர்களாகவும் இறைத்தூதர் உங்களுக்குச் சான்று வழங்குபவர்களாகவும் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக நாம் உங்களை நடுநிலையான சமுதாயமாக ஆக்கியிருக்கிறோம்'' எனும் (திருக்குர்ஆன் 02:143 வது) இறைவசனத்தை ஓதினார்கள். அதிலுள்ள 'வசத்தன்' எனும் சொல்லுக்கு 'நீதி செலுத்தும் சமுதாயம்' (அத்லன்) என்று விளக்கம் அளித்தார்கள்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## அதிகாரியோ ஆட்சியாளரோ சட்ட முடிவெடுக்கும்போது அறியாமையால் தவறிழைத்துவிட்டால் அவரின் தீர்ப்பு ரத்துச் செய்யப்படும்.

ஏனெனில், இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் நம்முடைய (மார்க்கத்தின்) முடிவுப்படி அமையாத ஒரு செயலை ஒருவர் செய்தால் அது நிராகரிக்கப்படும்.

ஹதீஸ் 7350 ஹதீஸ் 7351 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களும் அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் அறிவித்தார்கள்:

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் பனு அதீ அல்அன்சாரி குலத்தைச் சேர்ந்த ஒருவரை கைபர் பகுதியின் அதிகாரியாக அனுப்பிவைத்தார்கள். அவர் சென்று (வரும்போது) உயர் ரகப் பேரீச்சம் பழங்களைக் கொண்டு வந்தார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'கைபரின் பேரீச்சம் பழங்கள் எல்லாமே இப்படித்தான் (உயர் ரகமானதாக) இருக்குமா?' என்று கேட்டார்கள். அவர், 'இல்லை அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர் அவர்களே! நாங்கள் மட்டரகப் பேரீச்சம் பழங்களில் இரண்டு 'ஸாஉ'கள் கொடுத்து ஒரு ஸாஉ (இந்த உயர் ரகப் பேரீச்சம் பழம்) வாங்குவோம்'' என்றார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'இவ்வாறு செய்யாதீர்கள். சரிக்குச் சமமாகவே தவிர (வாங்காதீர்கள்). அல்லது மட்டமான பேரீச்சம் பழங்களை விற்றுவிட்டு, அதன்

தொகைக்கு உயர் ரகப் பேரீச்சம் பழங்களை வாங்குங்கள். இவ்வாறுதான் நிறுக்கப்படும் பொருட்களின் சட்டமும்" என்றார்கள்.

## நீதிபதி ஆய்வு செய்து சட்ட முடிவெடுக்கும்போது அது சரியாக அமைந்தாலும் தவறாம்ப் போனாலும் (அவர் செய்த ஆய்வுக்காக) அவருக்குப் பிரதிபலன் கிடைக்கும்.

ஹதீஸ் 7352 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீதிபதி தீர்ப்பளிப்பதற்காக ஆய்வு செய்து சரியான தீர்ப்பு வழங்குவாராயின் அவருக்கு இரண்டு நன்மைகள் உண்டு. அவர் தீர்ப்பளிப்பதற்காக ஆய்வு செய்து தவறான தீர்ப்பு வழங்குவாராயின் அவருக்கு ஒரு நன்மை உண்டு.

என அம்ர் இப்னு அல்ஆஸ் (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் வாயிலாகவும், அபூ ஸலமா இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் வாயிலாகவும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## "நபி (ஸல்) அவர்களின் சட்டங்கள் (நபித்தோழர்கள்) அனைவருக்கும் தெரிந்திருந்தன' என்று கருதுவோருக்கு எதிரான ஆதாரமும், நபித்தோழர்களில் சிலர் நபியவர்களின் அவைக்கு வராமலும் இஸ்லாமிய விஷயங்களை அறியாமலும் இருந்துள்ளனர் என்பதற்கான ஆதாரமும்.

ஹதீஸ் 7353 உபைத் இப்னு உமைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

(ஒரு முறை) அபூ மூஸா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் உமர் (ரலி) (அவர்கள் ஆட்சித் தலைவராக இருந்தபோது) அவர்களைச் சந்திக்க அனுமதி கேட்டார்கள். உமர் ஏதோ வேலையாக இருப்பதாகத் தோன்றவே அபூ மூஸா திரும்பிச் சென்றார்கள். பின்னர் உமர் (ரலி) அவர்கள், 'நான் அப்துல்லாஹ் இப்னு கைஸ் (அபூ மூஸா (ரலி) அவர்களின் குரலைக் கேட்கவில்லையா? அவருக்கு அனுமதி அளியுங்கள்" என்றார்கள். உடனே அவர்கள் வரவழைக்கப்பட்டார்கள். உமர் (ரலி) அவர்கள், 'நீங்கள் இப்படிச் செய்ததற்கு (-வராமலிருந்ததற்குக்) காரணம் என்ன?' என்று (அவர்களிடம்) கேட்க, அபூ மூஸா (ரலி) அவர்கள், '(மூன்று முறை சலாம் சொல்லியும் சந்திக்க அனுமதி கிடைக்காவிட்டால்) திரும்பிச் சென்றுவிடும்படி தான் நமக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது" என்றார்கள். உமர் (ரலி) அவர்கள், 'இதற்கு ஒரு சான்றை நீங்கள் என்னிடம் கொண்டு வாருங்கள் இல்லையேல் உங்களின் மீது நான் நடவடிக்கை எடுப்பேன்" என்றார்கள். உடனே அபூ மூஸா (ரலி) அவர்கள் (நபியின் இந்தக் கட்டளைக்கு வேறு சாட்சி எவரும் இருக்கிறாரா? என்று அறிவதற்காக) அன்சாரிகளின் ஓர் அவைக்குச் சென்றார்கள். அங்கிருந்தவர்கள், 'எங்களில் (வயதில்) சிறியவர்தாம் இதற்கு சாட்சியமளிப்பார்" என்றனர். அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் எழுந்துவந்து, '(ஆம்) நமக்கு இப்படித்தான் கட்டளையிடப்பட்டுள்ளது" என்றார்கள். அதைக் கேட்ட உமர் (ரலி) அவர்கள், 'நபி (ஸல்) அவர்களின் கட்டளைகளில் இது எனக்குத் தெரியாமல் போய்விட்டதே! கடைவீதிகளில் வியாபாரம் செய்துவந்தது என் கவனத்தைத் திசை திருப்பிவிட்டுள்ளது" என்றார்கள்.

ஹதீஸ் 7354 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

'அபூ ஹுரைரா(ரலி), இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து அதிகமான ஹதீஸ்களை அறிவிக்கிறாரே' என்று நீங்கள் (குறையாகக்) கூறுகின்றீர்கள். (இந்தக் குற்றச் சாட்டு சரியா? தவறா? என்பதை அறிய) அல்லாஹ்விடம் குறித்த நேரம் ஒன்று உண்டு. நான் ஓர் ஏழை மனிதன். நான், என் வயிறு நிரம்பினால் போதும் என்ற திருப்தியுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடனேயே இருந்துவந்தேன். முஹாஜிர்கள் கடைவீதிகளில் வியாபாரம் செய்வதில் கவனமாக இருந்தார்கள். அன்சாரிகள் தம் (வேளாண்) செல்வங்களில் கவனம் செலுத்தி வந்தார்கள். நான் ஒரு நாள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இருந்தபோது அவர்கள், 'நான் என் சொல்லைச் சொல்லி முடிக்கும்வரை தம் மேல்துண்டை விரித்து வைத்திருந்து பிறகு அதைச் சுருட்டி (நெஞ்சோடு சேர்த்து அணைத்து)க் கொள்கிறவர் என்னிடமிருந்து கேட்ட எதையும் ஒருபோதும் மறக்கமாட்டார்'' என்றார்கள். உடனே நான் என் மீதிருந்த மேலாடையை (எடுத்து) விரித்தேன். நபி(ஸல்) அவர்களைச் சத்திய (மார்க்க)த்துடன் அனுப்பி வைத்தவன் மீதாணையாக! நான் நபியவர்களிடமிருந்து கேட்ட எதையும் (அன்றிலிருந்து) மறந்ததில்லை.

## நபி(ஸல்) அவர்கள் (ஒன்றை) எதிர்க்காமல் இருந்தது (அது அங்கீகரிக்கப்பட்டது தான் என்பதற்கு) ஆதாரமாகும் நபியவர்கள் அல்லாத மற்றவர்களுக்கு இது பொருந்தாது.

ஹதீஸ் 7355 முஹம்மத் இப்னு அல்முன்கதிர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அவர்கள் 'இப்னுஸ் ஸய்யாத்தான் தஜ்ஜால்' என்று அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்வதை பார்த்தேன். அப்போது நான், (ஜாபிர்(ரலி) அவர்களிடம்), 'அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கிறீர்களா?' என்று கேட்டேன். அவர்கள், 'நபி(ஸல்) அவர்களிடம் உமர்(ரலி) அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து இதைக் கூறியதை கேட்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் அதை மறுக்கவில்லை'' என்று பதிலளித்தார்கள்.

## ஆதாரங்களின் உள்ளடக்கத்தால் அறியப்படும் சட்டங்கள்.

'ஆதாரங்களின் உள்ளடக்கம்' என்றால் என்ன? அதன் விளக்கம் யாது?

நபி(ஸல்) அவர்கள் குதிரை போன்ற பிராணிகளின் நிலையை எடுத்துரைத்தார்கள். பின்னர் கழுதைகள் குறித்து அவர்களிடம் வினவப்பட்டது. அப்போது 'ஓர் அணுவளவு நன்மை செய்தவர் அத(ன் நற்பல)னைக் கண்டு கொள்வார்'' எனும் (திருக்குர்ஆன் 99:7 வது) இறைவசனத்தை அவர்களுக்குச் சுட்டிக் காட்டினார்கள்.

நபி(ஸல்) அவர்களிடம் உடும்பு (இறைச்சியை உண்ணலாமா? என்பது) பற்றி வினவப்பட்டது. அதற்கு அவர்கள் 'நான் அதை உண்ணவுமாட்டேன் அதை உண்ண வேண்டாமெனத் தடை செய்யவுமாட்டேன்'' என்று கூறினார்கள். (அது மட்டுமின்றி,) நபி(ஸல்) அவர்களின் உணவு விரிப்பில் உடும்பு இறைச்சி (பரிமாறப்பட்டு, மற்றவர்களால்) உண்ணப்பட்டது. இதிலிருந்து இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் உடும்பு இறைச்சி தடை செய்யப்பட்டதால் என்று (சட்ட) ஆதாரம் கூறினார்கள்.

ஹதீஸ் 7356 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குதிரை (வைத்திருப்பது), மூன்று பேருக்கு (மூன்று வகையான விளைவுகளைத் தருவதாகும்): ஒரு மனிதருக்கு (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத் தருவதாகும் மற்றொரு

மனிதருக்குப் (பொருளாதாரப்) பாதுகாப்பளிக்கக் கூடியதாகும் இன்னொரு மனிதருக்குப் பாவச் சுமையாகும்

அதை இறைவழியில் (நற்காரியங்களுக்குப்) பயன்படுத்துவதற்காக, அதைப் பசுமையான'ஒரு வெட்ட வெளியில்' அல்லது'ஒரு தோட்டத்தில்' ஒரு நீண்ட கயிற்றால் கட்டி வைத்துப் பராமரிக்கிற மனிதருக்கு அது (இறைவனிடமிருந்து) நற்பலனைப் பெற்றுத்தரும். அந்தக் குதிரை தன்(னைக் கட்டியிருக்கும்) கயிற்றின் நீளத்திற்கு ஏற்ப எந்த அளவு தொலைவிற்குப்'பசும்புல் வெளியில்' அல்லது'தோட்டத்தில்' மேயுமோ அந்த அளவிற்கு அவருக்கு நன்மைகள் கிடைக்கும். அது தன் கயிற்றை அறுத்துக் கொண்டு ஓரிரு முறை குதித்து (அல்லது ஓரிரண்டு மேடுகளைக் கடந்து) சென்றாலும் அதன் பாதச் சுவடுகளும் கெட்டிச் சாணங்களும் கூட அவருக்கு நன்மையாக மாறும். அந்தக் குதிரை ஓர் ஆற்றைக் கடந்து செல்லும்போது, அதிலிருந்து ஒரு தண்ணீர் குடித்தால், அதற்குத் தண்ணீர் புகட்டும் எண்ணம் (அதன் உரிமையாளரான) அவருக்கு இல்லாமல் இருந்தாலும் அதுவும் அவருக்குரிய நன்மையாகவே ஆகும். ஆக, அது அந்த மனிதருக்கு (இவ்விதம்) நற்பலனைத் தேடித் தருகிறது.

இன்னொருவர், தம் தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும் பிறரிடம் கையேந்துவதிலிருந்து தம்மைத் தற்காத்துக் கொள்ளவும் அதைக் கட்டிவை(த்துப் பராமரி)க்கிறவராவார். மேலும், அதன் பிடரியின் (ஸகாத்தை செலுத்தும்) விஷயத்திலும், (அதனால் தாங்க முடிந்த சுமையை மட்டுமே) அதன் முதுகின் (மீது தூக்கி வைக்கும்) விஷயத்திலும் அல்லாஹ்வின் கட்டளையை (நிறைவேற்றிட) மறக்காதவராவார். இப்படிப்பட்டவருக்கு அது (வறுமையிலிருந்து அவரைக் காக்கும்) திரையாகும். மற்றொருவன், பெருமைக்காகவும் பகட்டுக்காகவும் அதனைக் கட்டிவை(த்துப் பராமரி)க்கிறவன் ஆவான். அதன் காரணமாக அது அவனுக்குப் பாவச் சுமையாக ஆகிவிடுகின்றது.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கழுதைகளைக் குறித்து வினவப்பட்டது. அதற்கு அவர்கள்,'அவற்றைக் குறித்து எந்த கட்டளையையும் அல்லாஹ் எனக்கு அருளவில்லை'அணுவளவு நன்மை செய்தவர் அத(ன் நற்பல)னைக் கண்டுகொள்வார். மேலும், எவன் அணுவளவு தீமை புரிந்திருந்தானோ அவனும் அத(ற்கான தண்ட)னை(யை)க் கண்டு கொள்வான்" எனும் தனித்துவம் வாய்ந்த ஒருங்கிணைந்த இந்த (திருக்குர்ஆன் 99:7,8) வசனங்களைத் தவிர" என்று பதிலளித்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7357 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு பெண்மணி, மாதவிடாய் குறித்து'அதிலிருந்து (தூய்மையாகிக் கொள்ள) நாங்கள் எவ்வாறு குளிக்கவேண்டும்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்'கஸ்தூரி (நறுமணப் பொருள்) தடவப்பட்ட பஞ்சுத் துண்டு ஒன்றை எடுத்து அதனால் (உன் மறைவிடத்தைத் துடைத்துத்) தூய்மைப்படுத்திக்கொள்" என்று பதிலளித்தார்கள்.

அந்தப் பெண்மணி,'இறைத்தூதர் அவர்களே! இதனால் நான் எப்படித் தூய்மைப்படுத்திக் கொள்வேன்?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள்,'தூய்மைப்படுத்திக்கொள்" என்று பதிலளித்தார்கள். அப்பெண்மணி (மீண்டும்,)'அதனால் நான் எப்படித் தூய்மைப்படுத்திக் கொள்வேன், இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள் (மீண்டும்)'அதனால் தூய்மைப்படுத்திக்கொள்" என்று பதிலளித்தார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என்ன சொல்ல விரும்புகிறார்கள் என்பதை நான் புரிந்து கொண்டு அந்தப் பெண்மணியை என் பக்கம் இழுத்து (பஞ்சினால்) எப்படித் தூய்மைப்படுத்த வேண்டும் என) அவளுக்கு நான் கற்றுக்கொடுத்தேன்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7358 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

உம்மு ஹுஃபைத் பின்த் அல் ஹாரிஸ் இப்னி ஹஸ்ன்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு சிறிது நெய், பாலாடைக் கட்டி, சில உடும்புகள் ஆகியவற்றை அன்பளிப்பாக அனுப்பிவைத்தார்கள். (உணவு வேளையில்) உடும்புகளைக் கொண்டு வரும்படி நபி(ஸல்) அவர்கள் கூற, (அவை கொண்டு வரப்பட்டு) நபி(ஸல்) அவர்களின் உணவு விரிப்பில் வைத்து உண்ணப்பட்டன. ஆனால், நபி(ஸல்) அவர்கள் அதை அருவருப்பவர்களைப் போன்று அவற்றை உண்ணாமல்விட்டுவிட்டார்கள். (நெய் மற்றும் பாலாடைக் கட்டியை மட்டும் உண்டார்கள்.) உடும்புகள் தடை செய்யப்பட்டவையாய் இருந்திருந்தால் நபி(ஸல்) அவர்களின் உணவு விரிப்பில் அவை பரிமாறப்பட்டிருக்கமாட்டா. அவற்றை உண்ணும்படி நபியவர்கள் சொல்லியிருக்கவுமாட்டார்கள்.

ஹதீஸ் 7359 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(பச்சை) வெள்ளைப் பூண்டையோ வெங்காயத்தையோ உண்டவர், 'நம்மிடமிருந்து விலகியிருக்கட்டும்' அல்லது 'நம்முடைய பள்ளிவாசலிலிருந்து விலகியிருக்கட்டு' அவர் தம் இல்லத்திலேயே அமர்ந்து கொள்ளட்டும்.

என ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) அப்துல்லாஹ் இப்னு வஹ்ப்(ரலி) கூறினார்:

(ஒரு முறை) நபி(ஸல்) அவர்களிடம் பச்சைக் காய்கறிகளும் கீரைகளும் உள்ள ஒரு தட்டு கொண்டுவரப்பட்டது. அவற்றில் (துர்) வாடை அடிப்பதை நபி(ஸல்) அவர்கள் உணர்ந்தார்கள். எனவே, அவற்றைப்பற்றி விசாரித்தார்கள். அவற்றிலுள்ள கீரைகள் பற்றி அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அப்போது அவர்கள் தம்முடன் இருந்த தோழர்கள் சிலருக்கு அவற்றைக் கொடுக்கும் படி கூறினார்கள். அவ்வாறே கொடுக்கும் படி கூறினார்கள். அவ்வாறே கொடுக்கும் படி கூறினார்கள். அவ்வாறே கொடுத்தார்கள். அவர்கள் அதை உண்ண விரும்பாமலிருப்பதை நபி(ஸல்) அவர்கள் கண்டபோது 'சாப்பிடுங்கள் ஏனெனில், நீங்கள் உரையாடாதவர்களுடன் நான் உரையாட வேண்டியுள்ளது'' என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில், 'காய்கறிகள் கொண்ட ஒரு பாத்திரம் கொண்டு வரப்பட்டது'' என்று இடம்பெற்றுள்ளது. வேறு சில அறிவிப்புகளில் பாத்திரம் பற்றிக் கூறப்படவில்லை.

ஹதீஸ் 7360 ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி) அறிவித்தார்.

அன்சாரிப் பெண்மணி ஒருவர், இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து (தம் தேவைகளில்) ஒன்றைக் குறித்துப் பேசினார். நபி(ஸல்) அவர்கள் அப்பெண்மணிக்கு (பிறகு வருமாறு) உத்தரவிட்டார்கள். அவர், 'நான் (திரும்பவும் வரும்போது) தங்களைக் காணாவிட்டால் என்ன செய்வது, இறைத்தூதர் அவர்களே?' என்று கேட்டார். நபி(ஸல்) அவர்கள், 'என்னைக் காணாவிட்டால் அபூ பக்ரிடம் செல்'' என்று பதிலளித்தார்கள்.

ஹுமைத் (ரஹ்) அவர்கள் தங்களின் அறிவிப்பில், 'நான் திரும்பி வரும்போது தாங்கள் இறந்துவிட்டிருந்தால்' என்பதையே 'தங்களைக் காணாவிட்டால்' என்று அப்பெண்மணி குறிப்பிட்டார் என்று அதிகப்படியாக கூறினார்கள்.

## "வேதக்காரர்களிடம் எதைப் பற்றியும் கேட்காதீர்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7361 ஹுமைத் இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் கூறினார்:

முஆவியா (ரலி) அவர்கள் (ஹஜ்ஜின் போது) மதீனாவில் குறைஷியர் குழு ஒன்றுக்கு ஹதீஸ்களை அறிவித்ததை கேட்டேன். முஆவியா (ரலி) அவர்கள் கஅபுல் அஹ்பார் (ரலி) அவர்களைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அப்போது, 'வேதக்காரர்களிடமிருந்து செய்திகளை அறிவிப்பவர்களிலேயே மிகவும் வாய்மையானவர் கஅப் (ரலி) அவர்கள் தாம். அப்படியிருந்தும் நாங்கள் அன்னாருடைய செய்திகளில் தவறானவை ஏதும் உண்டா? என சோதித்துப் பார்த்துவந்தோம்'' என்றார்கள்.

ஹதீஸ் 7362 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

வேதக்காரர் (களான யூதர்) கள் தவ்ராத் வேதத்தை ஹீப்ரு (எபிரேய) மொழியில் ஓதி, அதை அரபு மொழியில் இஸ்லாமியர்களுக்கு விளக்கியும் வந்தார்கள். அப்போது இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'வேதக்காரர்களை (அவர்கள் சொல்வதெல்லாம் உண்மை என) நம்பவும் வேண்டாம் (பொய் என) மறுக்கவும் வேண்டாம். மாறாக, (முஸ்லிம்களே!) நீங்கள் கூறுங்கள்: நாங்கள் அல்லாஹ்வையும் எங்களுக்கு அருளப் பெற்றதையும் உங்களுக்கு அருளப்பெற்றதையும் நம்புகிறோம்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7363 அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

(மார்க்கம் சம்பந்தப்பட்ட) எந்த விஷயம் குறித்தும் வேதக்காரர்களிடம் நீங்கள் ஏன் கேட்கிறீர்கள், இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு அருளப்பெற்றுள்ள உங்களின் வேதமோ புதியது. கலப்படமில்லாத தூய வேதமாக அதை நீங்கள் ஓதிவருகிறீர்கள். வேதக்காரர்கள் (தமக்கு அருளப்பெற்ற) இறைவேதத்தைத் திரித்து மாற்றம் செய்து, தம் கரங்களால் வேதத்தை (மாற்றி) எழுதிக் கொண்டு, அதன் மூலம் சொற்ப விலையைப் பெறுவதற்காக 'இது இறைவனிடமிருந்து வந்ததே' என்று கூறுகிறார்கள் என அல்லாஹ் உங்களுக்குத் தெரிவித்துள்ளான். உங்களுக்குக் கிடைத்துள்ள (மார்க்க) ஞானம், வேதக்காரர்களிடம் கேட்பதிலிருந்து உங்களைத் தடுக்கவில்லையா? அல்லாஹ்வின் மீதாணையாக! வேதக்காரர்களில் எவரும் உங்களுக்கு அருளப்பெற்ற (வேதத்) தைப் பற்றி உங்களிடம் கேட்பதை நாம் கண்டதில்லையே!

இதை உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) அறிவித்தார்.

## கருத்துமாறுபாடு விரும்பத் தக்கதன்று.

ஹதீஸ் 7364 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களின் உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும் வரை குர்ஆனை ஓதுங்கள்! (அதன் கருத்தை அறிவதில்) உங்களிடையே கருத்து வேறுபாடு எழுந்தால் அ(ந்த இடத்)தைவிட்டு எழுந்து (சென்று) விடுங்கள்.

என ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ் அல்பஜலீ (ரலி) அறிவித்தார்.

அபூ அப்தில்லாஹ் (புகாரியாகிய நான்) கூறுகிறேன்:

இந்த ஹதீஸை அப்துர்ரஹ்மான் இப்னு மஹ்தீ (ரஹ்) அவர்கள் சல்லாம் இப்னு முத்தீஉ (ரஹ்) அவர்களிடமிருந்து செவியுற்றார்கள்.

ஹதீஸ் 7365. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களின் உள்ளங்கள் ஒன்றுபட்டிருக்கும் வரை குர்ஆனை ஓதுங்கள். (அதன் கருத்தை அறிவதில்) உங்களிடையே கருத்து வேறுபாடு எழுந்தால் அ(ந்த இடத்)தைவிட்டு எழுந்து (சென்று) விடுங்கள்.

என ஜுன்துப் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 7366 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கிவிட்டபோது, அவர்களின் இல்லத்தில் உமர் இப்னு அல்கத்தாப் (ரலி) அவர்கள் உள்பட பலர் இருந்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள்'வாருங்கள் உங்களுக்கு நான் ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்" என்றார்கள். உமர் (ரலி) அவர்களை (நோயின்) வேதனை மிகைத்துவிட்டது. (எழுதித் தருமாறு அவர்களை தொந்தரவு செய்யாதீர்கள்.) உங்களிடம் தான் குர்ஆன் இருக்கிறதே! நமக்கு (அந்த) இறைவேதமே போதும்" என்றார்கள். வீட்டிலிருந்தவர்கள் கருத்து வேறுபட்டு சச்சரவிட்டுக் கொண்டார்கள். அவர்களில் சிலர், '(நபியவர்கள் கேட்ட எழுது பொருளை அவர்களிடம்) கொடுங்கள். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் உங்களுக்கு ஒரு மடலை எழுதித் தருவார்கள். அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் வழிதவறமாட்டீர்கள்" என்றார்கள். வேறு சிலர் உமர் (ரலி) அவர்கள் சொன்னதையே சொன்னார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு அருகே மக்களின் கூச்சலும் குழப்பமும் சச்சரவும் மிகுந்தபோது நபி (ஸல்) அவர்கள், 'என்னைவிட்டு எழுந்து செல்லுங்கள்" என்றார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (இந்த ஹதீஸை அறிவித்துவிட்டு), 'மக்கள் கருத்து வேறுபட்டு கூச்சலிட்டுக் கொண்டதால் இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கும் அவர்கள் எழுதித்தர நினைத்த மடலுக்கும் இடையே குறுக்கீடு ஏற்பட்டதுதான் சோதனையிலும் பெரும் சோதனையாகும்" என்று கூறுவார்கள்.

## (ஒன்றைச் செய்ய வேண்டாமென) நபி (ஸல்) அவர்கள் தடை செய்திருப்பது, (மார்க்கத்தில் அது) ஹராம் என்பதற்கு ஆதாரமாகும் (வேறு சான்றுகளின் மூலம்) அது அனுமதிக்கப்பட்டது என அறியப்பட்டால் தவிர. அவ்வாறே நபி (ஸல்) அவர்களின் கட்டளையும் (அது கட்டாயமல்ல என்பதற்கு சான்று இருந்தால் தவிர, அதை மீறுவது ஹராம் ஆகும்).

இதற்கு எடுத்துக்காட்டு: ('விடை பெறும்' ஹஜ்ஜில் நபித்தோழர்கள்) இஹ்ராமிலிருந்து விடுபட்டபோது, 'நீங்கள் உங்களுடைய துணைவியருடன் தாம்பத்திய உறவு கொள்ளுங்கள்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இது கட்டாய உத்தரவல்ல என்றும், மாறாக (இஹ்ராமின்போது இருந்த) தடையை (அதன்பின்னர்) நீக்கினார்கள் (அவ்வளவு தான்) என்றும் ஜாபிர் (ரலி) கூறினார்.

(மற்றோர் எடுத்துக்காட்டு:) ஜனாஸாவைப் பின்தொடர்ந்து செல்லவேண்டாமென (பெண்களாகிய) எங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது. ஆனால், அது கட்டாயத்தடை அல்ல என உம்மு அத்திய்யா (ரலி) கூறினார்.

ஹதீஸ் 7367 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் தம்முடன் இருந்த மக்களிடையே அறிவித்தார்.

('விடைபெறும்' ஹஜ்ஜின்போது) இறைத்தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களான நாங்கள் உம்ராவைச் சேர்க்காமல் ஹஜ்ஜுக்காக மட்டும் இஹ்ராம் கட்டினோம். நபி (ஸல்) அவர்கள் துல்ஹஜ் மாதம் நான்காவது நாள் காலையில் (மக்கா) வந்து சேர்ந்தார்கள். நாங்கள் (உம்ரா முடித்து) வந்தவுடன் இஹ்ராமிலிருந்து விடும்படி எங்களுக்கு உத்தரவிட்ட நபி (ஸல்) அவர்கள், 'இஹ்ராமிலிருந்து விடுபட்டுவிடுங்கள் (உங்கள்) துணைவியருடன் தாம்பத்திய உறவு கொள்ளுங்கள்'' என்றார்கள். ஆனால், அதைக் கட்டாயமாகச் செய்தாக வேண்டும் என்று எங்களுக்குக் கட்டளையிடவில்லை. மாறாக, தாம்பத்திய உறவு கொள்ளலாம் என எங்களுக்கு அனுமதியளித்தார்கள். 'நாம் அர..பாவை அடைய இன்னும் ஐந்து நாட்களே உள்ள நிலையில் நம் துணைவியருடன் நாம் தாம்பத்திய உறவுகொள்ளும்படி நபியவர்கள் நமக்குக் கட்டளையிட்டார்களே! அப்படியானால், நாம் தாம்பத்திய உறவு கொண்ட கையோடா அர..பா செல்ல வேண்டும்?' என்று நாங்கள் பேசிக் கொள்வதாக நபி (ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது.

---'நாம் தாம்பத்திய உறவு கொண்ட கையோடா?' என்று சொல்லும்போது ஜாபிர் (ரலி) அவர்கள், 'இப்படி' என்று சைகை செய்து கை அசைத்தார்கள்.

உடனே இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எழுந்து, 'நானே உங்களில் அல்லாஹ்வுக்கு அதிகம் அஞ்சுபவனும், உங்களில் அதிகம் வாய்மையானவனும், உங்களில் அதிகமாக நற்செயல் புரிபவனும் ஆவேன் என்று நீங்கள் அறிந்துள்ளீர்கள். என்னுடைய குர்பானிப் பிராணி (என்னுடன்) இல்லாமலிருந்தால் உங்களைப் போன்றே நானும் இஹ்ராமிலிருந்து விடுபட்டிருப்பேன். எனவே, நீங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டுக் கொள்ளுங்கள். நான் பின்னால் தெரிந்து கொண்டதை முன்பே அறிந்திருந்தால் குர்பானிப் பிராணியை என்னுடன் கொண்டு வந்திருக்கமாட்டேன்'' என்றார்கள். எனவே, நாங்கள் இஹ்ராமிலிருந்து விடுபட்டோம். நபி (ஸல்) அவர்களின் கட்டளையைச் செவியேற்று கீழ்ப்படிந்தோம்.

ஹதீஸ் 7368 அப்துல்லாஹ் இப்னு முக..ப்பல் அல்முஸனீ (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள், 'ம..க்ரிப்'' தொழுகைக்கு முன்பாக (இரண்டு ரக்அத்கள்) தொழுங்கள்'' என்றார்கள். மூன்றாம் முறையாகச் சொல்லும்போது, அதை மக்கள், (கட்டாயம் பின்பற்றப்பட வேண்டிய) நபிவழியாக எடுத்துக்கொள்வார்கள் என்று அஞ்சி, 'இது விரும்புவோருக்குத் தான்'' என்றார்கள்.

## அல்லாஹ் கூறினான்: அவர்கள் தம் விவகாரங்களை தமக்கிடையே கலந்தாலோசித்து (முடிவு) செய்வார்கள். (திருக்குர்ஆன் 42:38)

அல்லாஹ் கூறினான்: (நபியே!) (முக்கியமான) பிரச்சினைகளில் அவர்களுடன் கலந்தாலோசிப்பீராக. (திருக்குர்ஆன் 03:159)

(ஒரு விஷயத்தில்) தெளிவு ஏற்பட்டு ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்புதான் கலந்தாலோசனை என்பதெல்லாம். அல்லாஹ் கூறினான்: ஓர் உறுதி(யான முடிவு)க்கு நீங்கள் வந்துவிட்டால் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வை(த்துச் செயல்படு)த்திடுவீராக (திருக்குர்ஆன் 03:159).

எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உறுதியான ஒரு முடிவுக்கு வந்துவிட்ட பின், அது தொடர்பாக அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் முந்திக்கொண்டு கருத்துச் சொல்ல எவருக்கும் உரிமை இல்லை.

உஹுதுப் போரின்போது நபி(ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம், 'ஊரிலேயே தங்கியிருந்து (எதிரிகளின் படையை எதிர்) கொள்ளலாமா? அல்லது (பகைவர்களின் படையை எதிர்கொள்ள ஊருக்கு) வெளியே புறப்பட்டுப் போகலாமா?' என்று ஆலோசனை கேட்க அவர்கள், '(ஊருக்கு) வெளியே புறப்பட்டுப் போகலாம்'' என்று நபி(ஸல்) அவர்களிடம் கருத்துத் தெரிவித்தார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள் தங்களின் கவசஆடையை அணிந்துகொண்டு (ஊருக்கு வெளியே செல்ல) உறுதி கொண்டு புறப்பட்டபோது, தோழர்கள்'ஊரிலேயே தங்கி விடுங்கள்'' என்று (மாற்று யோசனை) சொன்னார்கள். ஆனால், உறுதி கொண்டுவிட்ட பின்னால் அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் செவிசாய்க்கவில்லை. மாறாக, நபி(ஸல்) அவர்கள், '(போருக்குப் புறப்படத் தயாராம்) தம் கவச ஆடையை அணிந்து கொண்ட எந்த ஓர் இறைத்தூதருக்கும் அல்லாஹ் தீர்மானிக்கும் வரை அதைக் கீழே வைப்பது முறையாகாது'' என்றார்கள்.

ஆயிஷா(ரலி) அவர்களின் மீது அவதூறு கற்பித்தவர்கள் சொன்ன அபாண்டம் குறித்து அலீ(ரலி) அவர்களிடமும் உசாமா(ரலி) அவர்களிடமும் நபி(ஸல்) அவர்கள் ஆலோசனை கலந்தார்கள். அதைப் பற்றிக் குர்ஆன் வசனம் அருளப்படும் வரை அவர்களிடம் கருத்துக் கேட்டார்கள். குர்ஆன் வசனம் அருளப்பட்டவுடன் அவதூறு கற்பித்தவர்களுக்குச் சாட்டையடி தண்டனை வழங்கினார்கள். ஆலோசனை வழங்கியவர்களின் வாக்குவாதங்களை நபியவர்கள் பொருட்படுத்தவில்லை. அல்லாஹ் தமக்கு கட்டளையிட்டதை வைத்தே தீர்ப்பளித்தார்கள்.

நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் வந்த ஆட்சித் தலைவர்கள் அனுமதிக்கப்பட்ட விஷயங்களில் சுலபமானதொரு முடிவை எடுப்பதற்காக நம்பிக்கைக்குரிய அறிஞர்களிடம் ஆலோசனை கலந்துவந்தார்கள். (ஒரு விஷயம் தொடர்பாக) இறைவேதத்திலோ நபிவழியிலோ தெளிவு கிடைத்த பிறகு, அதைத் தாண்டி வேறு எந்த முடிவுக்கும் செல்லமாட்டார்கள். நபி(ஸல்) அவர்களைப் பின்பற்றியே இவ்வாறு செய்தார்கள்.

அபூ பக்ர்(ரலி) அவர்கள், 'ஸகாத்' வழங்க மறுத்தவர்களுடன் போரிட வேண்டும் என்று கருதினார்கள். அப்போது உமர்(ரலி) அவர்கள்'இறைத்தூதர்(ஸல்) அவர்கள், மக்கள்'லா இலாஹ இல்லல்லாஹ்' (அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமிலர்) என்று சொல்கிற வரை அவர்களுடன் போரிட வேண்டும் என்று எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது அவர்கள், 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்று (மனதார ஏற்றுச்) சொல்லிவிட்டால், தகுந்த காரணம் இருந்தால் தவிர, என்னிடமிருந்து தங்கள் உயிர்களையும் உடைமைகளையும் அவர்கள் பாதுகாத்துக் கொள்வார்கள் அவர்களின் (அந்தரங்கம் பற்றிய) விசாரணை அல்லாஹ்வின் பொறுப்பில் உள்ளது என்று கூறியிருக்க, நீங்கள் எப்படி அவர்களுடன் போரிடுவீர்கள்?' என்று கேட்டார்கள். உடனே அபூ பக்ர்(ரலி) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதாணையாக! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒன்றாகக் கருதிய(தொழுகை மற்றும் ஸகாத்)தை தனித் தனியாக (பிரித்து வெவ்வேறானவை என)க் கருதுகிறவர்களுடன் நான் போரிட்டே தீருவேன்'' என்று கூறினார்கள். பின்னர் உமர்(ரலி) அவர்கள் அபூ பக்ர்(ரலி) அவர்களின் கருத்துடன் ஒத்துப்போய்விட்டார்கள். இந்த விஷயத்தில் அபூ பக்ர்(ரலி) அவர்கள் எவருடைய ஆலோசனையையும் கோரவில்லை. ஏனெனில், தொழுகையையும் ஸகாத்தையும் தனித் தனியாகப் பிரித்து மார்க்கத்தையும் அதன் சட்டங்களையும் மாற்ற விரும்புவோர் விஷயத்தில் நபி(ஸல்) அவர்களின் தீர்ப்பு என்ன என்று

அவர்களுக்குத் தெரிந்திருந்தது. நபி(ஸல்) அவர்கள்'தம் மார்க்கத்தை மாற்றுகிறவருடன் போரிடுங்கள்'' என்று கூறினார்கள்.

உமர்(ரலி) அவர்களின் ஆலோசகர்களாக மார்க்க அறிஞர்களே இருந்தனர். அவர்கள் முந்தியவர்களாயினும் சரி வாலிபர்களாயினும் சரி. மேலும், உமர்(ரலி) அவர்கள் வல்லமையும் மகத்துவமும் உடைய அல்லாஹ்வின் வேதத்திற்கு மிகவும் கட்டுப்பட்டவர்களாய் இருந்தார்கள்.

ஹதீஸ் 7369 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

என் மீது அவதூறு கற்பித்தவர்கள் அந்த அபாண்டத்தைச் சொன்னபோது, அலீ இப்னு அபீ தாலிப்(ரலி) அவர்களையும், உசாமா இப்னு ஸைத்(ரலி) அவர்களையும் (என்னைப் பற்றி) விசாரிப்பதற்காக இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழைத்தார்கள்.

அப்போது வேதஅறிவிப்பு (தாற்காலிகமாக) நின்று போயிருந்தது. தம் குடும்பத்தாரை (-என்னை)ப் பிரிந்துவிடுவது குறித்து அவ்விருவரிடமும் நபியவர்கள் ஆலோசனை கேட்டார்கள். உசாமா அவர்களோ நான் நிரபராதி என தாம் அறிந்துள்ளதை எடுத்துரைத்தார்கள். அலீ அவர்களோ'அல்லாஹ் உங்களுக்கு எந்த நெருக்கடியையும் ஏற்படுத்தவில்லை. ஆயிஷா அல்லாமல் பெண்கள் பலர் உள்ளனர். பணிப் பெண்ணிடம் (-பரீராவிடம்)'நீ சந்தேகப்படும் படி எதையேனும் கண்டாயா?' என்று கேட்டார்கள். அதற்கு பரீரா'குழைத்த மாவை அப்படியே போட்டுவிட்டு ஆயிஷா உறங்கி விடுவார். ஆடு வந்து அதைத் தின்றுவிடும். அத்தகைய (கவனக் குறைவான) இளம் வயது பெண் என்பதற்கு அதிகமாக வேறு (குறை) எதையும் நான் கண்டதில்லை'' என்று கூறினார்.

உடனே நபி(ஸல்) அவர்கள் (பள்ளி வசாலுக்குச் சென்று) சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீது நின்று,'முஸ்லிம்களே! என் வீட்டார் விஷயத்தில் (வதந்தி கிளப்பி) எனக்கு மனவேதனையளித்த ஒரு மனிதனைத் தண்டிக்க எனக்கு உதவிபுரிபவர் யார்? அல்லாஹ்வின் மீதாணையாக! என் மனைவி குறித்து நல்லதையே அறிவேன்'' என்றார்கள். பிறகு நான் குற்றமற்றவள் என்று (இறைவன் அறிவித்ததை) எடுத்துரைத்தார்கள்.

ஹதீஸ் 7370 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், மக்களுக்கு உரையாற்றினார்கள். அப்போது அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்துவிட்டு,'என் வீட்டாரை இகழ்ந்து பேசுகிற சிலரைப் பற்றி நீங்கள் எனக்கு என்ன ஆலோசனை சொல்கின்றீர்கள்? ஒருபோதும் என் வீட்டாரிடம் நான் தீமை எதையும் அறிந்ததில்லை'' என்றார்கள்.

உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

ஆயிஷா(ரலி) அவர்களிடம் விஷயம் தெரிவிக்கப்பட்டபோது அவர்கள்,'இறைத்தூதர் அவர்களே! என் தாய்வீட்டிற்குச் செல்ல எனக்கு அனுமதியளிக்கிறீர்களா? என்று கேட்டார்கள். அவ்வாறே நப(ஸல்) அவர்கள் ஆயிஷாவுக்கு அனுமதியளித்து அவர்களுடன் பணியாளையும் அனுப்பி வைத்தார்கள். அன்சாரிகளில் ஒருவர்,'இறைவன் தூயவன். இப்படி (அவதூறு) பேசுவது நமக்குத் தகாது. இறைவன் தூயவன். இது மாபெரும் அபாண்டம்'' என்றார்.

# அத்தியாயம் 97 ஓரிறைக் கோட்பாடு

அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்..

## ஏகஇறைக் கோட்பாட்டை ஏற்குமாறு நபி(ஸல்) அவர்கள் தம் சமுதாயத்தாரை அழைத்தது தொடர்பாக வந்துள்ளவை.

ஹதீஸ் 7371 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு (நீதி நிர்வாகத்தைக் கவனிக்க) அனுப்பிவைத்தார்கள்.

ஹதீஸ் 7372 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் முஆத் இப்னு ஜபல்(ரலி) அவர்களை யமன் நாட்டுக்கு அனுப்பியபோது அவர்களிடம்,'நீங்கள் வேதம் வழங்கப்பெற்ற ஒரு சமுதாயத்தாரிடம் செல்கின்றீர்கள். எனவே, அவர்களுக்கு முதலாவதாக, அல்லாஹ் ஒருவன் எனும் (ஏக இறைக்) கொள்கையை ஏற்கும்படி அழைப்புக் கொடுங்கள். அதை அவர்கள் புரிந்து (ஏற்றுக்) கொண்டால், தினந்தோறும் ஐந்து நேரத் தொழுகைகளை அவர்களின் மீது அல்லாஹ் கடமையாக்கியுள்ளான் என்று அவர்களிடம் தெரிவியுங்கள். அவர்கள் (அதை ஏற்று) தொழவும் செய்தால் அவர்களிடையேயுள்ள செல்வர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டு அவர்களிடையேயுள்ள ஏழைகளுக்குச் செலுத்தப்படுகிற ஸகாத்தை அவர்களின் செல்வங்களில் அல்லாஹ் கடமையாக்கியுள்ளான் என்று அவர்களிடம் தெரிவியுங்கள். அதையும் அவர்கள் ஒப்புக்கொண்டால் அவர்களிடமிருந்து (ஸகாத்தை) வசூலித்துக் கொள்ளுங்கள். (ஆனால்,) மக்களின் செல்வங்களில் சிறந்தவற்றைத் தவிர்த்திடுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7373 முஆத் இப்னு ஜபல்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (என்னிடம்),'முஆதே! அடியார்களின் மீது அல்லாஹ்வுக்குள்ள உரிமை என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். நான்,'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'அவர்கள் அவனையே வணங்குவதும் அவனுக்கு எதையும் இணைவைக்காமலிருப்பதும் ஆகும். (அவ்வாறு அவர்கள் செய்தால்) அவர்களுக்கு அல்லாஹ்வின் மீதுள்ள உரிமை என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க, நான்,'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'அவர்களை அவன் (மறுமையில்) வேதனை செய்யாமலிருப்பது தான்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7374 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஒருவர்,'குல் ஹுவல்லாஹு அஹத்' ('நபியே! கூறுக: அல்லாஹ் ஒருவனே') எனும் (112 வது) அத்தியாயத்தைத் திரும்பத் திரும்ப ஓதிக் கொண்டிருந்ததை ஒருவர் செவிமடுத்தார். விடிந்ததும் அம்மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் சென்று அதைப் பற்றிக் கூறினார். அம்மனிதர் (பேசி விதம்) அந்த அத்தியாயத்தை(த் திரும்பத் திரும்ப ஓதியதை)க் குறைத்து மதிப்பிட்டதைப் போன்றிருந்தது.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'என் உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! அந்த அத்தியாயம் குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதிக்குச் சமமானது'' என்றார்கள்.

இதே ஹதீஸ் கத்தாதா இப்னு நுஅமான் (ரலி) அவர்கள் வாயிலாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7375 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரை படைப்பிரிவொன்றுக்குத் தளபதியாக்கி அனுப்பினார்கள். அவர், தம் தொழுகையில் தம் தோழர்களில் (குர்ஆன் வசனங்களை) ஓதி (தொழுகை நடத்தி) வந்தார் (ஒவ்வொரு முறையும்) ஓதி முடிக்கும்போது 'குல் ஹுவல்லாஹு அஹத்' எனும் (112 வது) அத்தியாயத்துடன் முடிப்பார். அப்படையினர் திரும்பி வந்தபோது நபி (ஸல்) அவர்களிடம் இதைப் பற்றி தெரிவித்தனர். அப்போது நபி (ஸல்) அவர்கள், 'எதற்காக இப்படிச் செய்கிறார் என்று அவரிடமே கேளுங்கள்'' என்று கூற, அவர்களும் அவரிடம் கேட்டனர். அவர், 'ஏனெனில், அந்த அத்தியாயம் பேரருளாளனின் (ஏகத்துவப்) பண்புகளை எடுத்துரைக்கின்றது. நான் அதை (அதிகமாக) ஓதுவதை விரும்புகிறேன்'' என்றார். (இதைக் கேள்விப்பட்ட) நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் அவரை நேசிக்கிறான் என்று அவருக்குத் தெரிவியுங்கள்'' என்று கூறினார்கள்.

"(நபியே!) கூறுங்கள்: அவனை அல்லாஹ் என்று நீங்கள் அழையுங்கள் அல்லது அர்ரஹ்மான் (பேரருளான்) என்று அழையுங்கள். எப்படி நீங்கள் அழைத்தாலும் அழகிய திருப்பெயர்கள் அவனுக்கே உரியனவாகும்' எனும் (திருக்குர்ஆன் 17:110 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7376 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனிதர்களின் மீது கருணைகாட்டாதவனுக்கு அல்லாஹ் கருணைகாட்டமாட்டான்.

என ஜரீர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7377 உசாமா இப்னு ஸைத் (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்களின் புதல்வியரில் ஒருவரின் (ஸைனப் (ரலி) அவர்களின்) தூதுவர் அங்கு வந்தார். ஸைனப் உடைய புதல்வர் இறக்கும் தறுவாயில் இருப்பதாகச் சொல்லி, ஸைனப் அழைப்பதாகத் தெரிவித்தார். நபி (ஸல்) அவர்கள், 'நீ ஸைனபிடம் சென்று, 'அல்லாஹ் எடுத்துக்கொண்டதும் அவனுக்குரியதே! அவன் கொடுத்ததும் அவனுக்குரியது தான். ஒவ்வொன்றுக்கும் அவனிடம் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு. எனவே, (அல்லாஹ்விடம் அதற்கான) நன்மையை எதிர்பார்த்து பொறுமையாக இருக்கச் சொல்'' என்று சொல்லி அனுப்பினார்கள். ஆனால், அவர்களின் புதல்வியார், (அல்லாஹ்வின் மீது) ஆணையிட்டுக் கண்டிப்பாக வரவேண்டுமெனச் சொல்லி தம் தூதுவரை மீண்டும் அனுப்பிவைத்தார். உடனே நபி (ஸல்) அவர்கள் (தம் புதல்வியின் வீட்டுக்குச் செல்ல) எழுந்தார்கள். அவர்களுடன் சேர்ந்து ஸஅத் இப்னு உபாதா (ரலி), முஆத் இப்னு ஜபல் (ரலி) ஆகியோரும் எழுந்தனர். (அங்கு சென்றவுடன்) நபி (ஸல்) அவர்களிடம் அக்குழநதை தரப்பட்டது. அப்போது தோல் பைக்குள் உள்ள காற்றைப் போன்று அது (சுவாசிக்க முடியாமல்) மூச்சுத் திணறிக் கொண்டிருந்தது. அதைக் கண்ட நபி (ஸல்) அவர்களின் கண்கள் நீரைச் சொரிந்தன. அப்போது ஸஅத் (ரலி) அவர்கள், 'இறைத்தூதர் அவர்களே! என்ன இது? (அழுகிறீர்களே!)'' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், 'இது அல்லாஹ் தன் அடியார்களில் உள்ளங்களில் (இயல்பாகவே) வைத்துள்ள இரக்க உணர்வாகும் அல்லாஹ் தன் அடியார்களில் இரக்கமுடையவர்களுக்கே இரக்கம் காட்டுவான்'' என்றார்கள்.

## “அல்லாஹ்தான் உணவளிப்பவன் வலிமையுள்ளவன் உறுதியானவன்‘ எனும் (திருக்குர்ஆன் 51:58 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7378 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மனவேதனைக்குள்ளாக்கும் செய்தி கேட்டும் (உடனே தண்டித்துவிடாமல்) மிகவும் பொறுமை காப்பவர் அல்லாஹ்வை விட வேறு யாருமில்லை. மனிதர்கள் (சிலர்) அவனுக்குக் குழந்தை இருப்பதாகக் கூறுகிறார்கள். அதன் பிறகும் அவர்களுக்கு உடல் நலத்தையும் உணவு வளத்தையும் அவன் வழங்கிக் கொண்டிருக்கிறான்.

என அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

## “அல்லாஹ் மறைவானவற்றை அறிபவன் (தான் அறிந்துள்ள) மறைவான விஷயங்களை அவன் எவருக்கும் வெளிப்படுத்தமாட்டான்‘ எனும் (திருக்குர்ஆன் 72:26 வது) இறைவசனம்.

நிச்சயமாக மறுமை (நாள் எப்போது சம்பவிக்கும் என்பது) பற்றிய அறிவு அல்லாஹ்விடமே உள்ளது (திருக்குர்ஆன் 31:34)

இ(ந்த வேதத்)தைத் தான் அறிந்துள்ளதற்கேற்பவே அல்லாஹ் அருளினான். (திருக்குர்ஆன் 04:166)

அவன் அறியாமல் எந்தப் பெண்ணும் கருத்தரிப்பதுமில்லை பிரசவிப்பதுமில்லை. (திருக்குர்ஆன் 35:11)

மறுமை நாள் பற்றிய அறிவு அவனிடமே விடப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 41:47)

யஹ்யா இப்னு ஸியாத் அல்ஃபர்ராஉ(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

(அல்லாஹ்வின் பெயர்களில் ஒன்றான)’அழ்ழாஹிர்’ (வெளிப்படையானவன்) என்பதற்கு’தன்னுடைய அறிவால் ஒவ்வொரு பொருளையும் வெளிப்படையாக அறிபவன்‘‘ என்று பொருள். (மற்றொரு பெயரான)’அல்பாத்தின்’ (அந்தரங்கமானவன்) என்பதற்கு’தன்னுடைய அறிவால் ஒவ்வொரு பொருளையும் அகமியமாக அறிபவன்‘‘ என்று பொருள்.

ஹதீஸ் 7379 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறைவானவற்றின் திறவுகோல்கள் ஐந்தாகும். அவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். (பெண்களின்) கருவறைகளில் ஏற்படும் குறைவை(யும் கூடுதலையும்) அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். நாளை என்ன நடக்கும் என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் அறியமாட்டார்கள். மழை எப்போது வரும் என்பதையும் அல்லாஹ்வைத் தவிர வேறெவரும் (உறுதியாக) அறியமாட்டார்கள். எந்த உயிரும் தான் எந்த இடத்தில் இறக்கும் என்பதை அறியாது அல்லாஹ் தான் அதை அறிவான். மறுமைநாள் எப்போது வரும் என்பது அல்லாஹ்வைத் தவிர வேறெவருக்கும் தெரியாது.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7380 மஸ்ரூக் இப்னு அஜ்தஉ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்கள்,‘முஹம்மத்(ஸல்) அவர்கள் தம் இறைவனை (நேரில்) பார்த்தார்கள் என்று உங்களிடம் அறிவிக்கிறவர் பொய் சொல்லிவிட்டார். இறைவனோ’கண்பார்வைகள் அவனை எட்ட முடியாது’ என்று கூறுகிறான் (திருக்குர்ஆன் 06:103). மேலும், முஹம்மத்(ஸல்) அவர்கள்

மறைவானவற்றை அறிவார்கள் என உங்களிடம் அறிவிக்கிறவரும் பொய் சொல்லிவிட்டார். இறைவனோ 'அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் மறைவானவற்றை அறியமாட்டார்' என்று கூறுகிறான் (திருக்குர்ஆன் 27:65)'' என்றார்கள்.

## ''அமைதியளிப்பவன் (அஸ்ஸலாம்) அபயம் தருபவன் (அல்முஃமின்)' எனும் (திருக்குர்ஆன் 59:23 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7381 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் தொழும்போது, 'அஸ்ஸலாமு அலல்லாஹ்' (அல்லாஹ்வின் மீது சாந்தி உண்டாகட்டும்) என்று (அத்தஹிய்யாத் அமர்வில்) சொல்லிவந்தோம். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வே சாந்தி அளிப்பவன் (அஸ்ஸலாம்). (எனவே, இப்படிச் சொல்லாதீர்கள்.) மாறாக, '(சொல், செயல், பொருள் சார்ந்த) எல்லாக் காணிக்கைகளும் வணக்கங்களும் அவனுக்கே உரியன. நபியே! உங்களின் மீது சாந்தியும் அல்லாஹ்வின் கருணையும் அவனுடைய சுபிட்சமும் ஏற்படட்டும். எங்களின் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் (அனைவர்) மீதும் சாந்தி உண்டாகட்டும். அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவரும் இல்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் அவனுடைய தூதருமாவார்கள் என்றும் நான் உறுதி கூறுகிறேன்'' எனக் கூறுங்கள் என்றார்கள்.

## '(அவனே) மனிதர்களின் அரசன் (மலிக்கிந்நாஸ்) எனும் (திருக்குர்ஆன் 114:2 வது) இறைவசனம்.

இது குறித்து நபி (ஸல்) அவர்களிடமிருந்து இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7382 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ், மறுமை நாளில் பூமியைத் தன்னுடைய கைப்பிடிக்குள் அடக்கிக் கொள்வான் வானத்தைத் தன்னுடைய வலக் கரத்தில் சுருட்டிக் கொள்வான் பிறகு 'நானே அரசன் பூமியின் அரசர்கள் எங்கே?' என்று கேட்பான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

அல்லாஹ் கூறினான்:

அவன் கண்ணியமிக்கவன் ஞானமிக்கவன் (திருக்குர்ஆன் 29:42)

கண்ணியத்தின் அதிபதியான உங்களுடைய இறைவன் அவர்கள் கூறும் (தரக் குறைவான) பண்புகளைவிட்டு மிகவும் தூயவன் (திருக்குர்ஆன் 37:180)

கண்ணியம் என்பது அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் இறைநம்பிக்கையாளர்களுக்குமே உரியது. (திருக்குர்ஆன் 63:08)

அல்லாஹ்வின் கண்ணியம் மற்றும் அவனுடைய பண்புகள் பெயரால் சத்தியம் செய்வது (செல்லும்).

நபி (ஸல்) அவர்கள், '(மறுமை நாளில்) நரகம், போதும்! போதும்! உன் கண்ணியத்தின் மீதாணையாக! என்று சொல்லும்'' எனக் கூறினார்கள்:

என அனஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(மறுமையில் நரகத்திலிருந்து இறை நம்பிக்கை உள்ள அனைவரும் வெளியேற்றப்பட்ட பிறகு) சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே ஒருவர் மட்டும் (நரகத்திற்கும் இடையே ஒருவர் மட்டும் (நரகத்தை முன்னோக்கியவராக) எஞ்சியிருப்பார். அவர்தாம் நரகவாசிகளிலேயே இறுதியாக சொர்க்கம் செல்பவராவார். அவர், 'என் இறைவா! என் முகத்தை நரகத்தைவிட்டு வேறு பக்கம் திருப்பிவிடுவாயாக! உன் கண்ணியத்தின் மீதாணையாக! நான் உன்னிடம் வேறெதையும் கேட்கமாட்டேன்'' என்று சொல்வார்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) கூறினார்:

வலிமையும் கண்ணியமும் பொருந்திய அல்லாஹ், 'உனக்கு இதுவும் இதைப் போன்று பத்துமடங்கும் கிடைக்கும்'' என்று கூறுவான் என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தெரிவித்தார்கள்.

(இறைத் தூதர்) அய்யூப் (அலை) அவர்கள் '(இறைவா!) உன் கண்ணியத்தின் மீது சத்தியமாக! உன்னுடைய அருள்வளத்தைவிட்டு நான் தேவையற்றவன் அல்லன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7383 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) பிரார்த்தனை செய்துவந்தார்கள்: (இறைவா!) உன் கண்ணியத்தின் பெயரால் பாதுகாப்புக் கோருகிறேன். உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை. ஜின் இனத்தாரும் மனித குலத்தாரும் இறந்துவிடுவார்கள் (ஆனால்,) நீ இறக்கமாட்டாய்.

ஹதீஸ் 7384 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(நரகவாசிகள்) நரகத்தில் போடப்பட்டுக் கொண்டேயிருப்பார்கள். அப்போது நரகம், 'இன்னும் அதிகம் இருக்கிறதா?' என்று கேட்கும் இறுதியில் அம்லங்களின் அதிபதி (யான அல்லாஹ்,) நரகத்தில் தன்னுடைய பாதத்தை வைப்பான். உடனே நரகத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் ஒட்டிக் கொள்ளும் பிறகு, 'போதும் போதும். உன் கண்ணியத்தின் மீதும், உன் கொடையின் மீதும் சத்தியமாக!"என்று கூறும். சொர்க்கத்தில் இடம் மீதி இருந்து கொண்டேயிருக்கும். இறுதியில், சொர்க்கத்திற்கென அல்லாஹ் புதியவர்களைப் படைத்து, சொர்க்கத்தில் மீதியுள்ள இடத்தில் அவர்களைக் குடியமர்த்துவான்.

என அனஸ் (ரலி) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் மூன்று வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

## "அவனே வானங்களையும் பூமியையும் உண்மை(க்கு எடுத்துக்காட்டாக அமையும் வகை)யில் படைத்தான்' எனும் (திருக்குர்ஆன் 06:73 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7385 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் இரவு நேரத்தில் (தொழுவதற்காக எழும்போது பின்வருமாறு) பிரார்த்திப்பார்கள். இறைவா! உனக்கே புகழனைத்தும். நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றில்

உள்ளவர்களின் இறைவன் ஆவாய். உனக்கே புகழனைத்தும். நீ வானங்கள் மற்றும் பூமியின் ஒளியாவாய். உன் சொல் உண்மை உன் வாக்குறுதி உண்மை (மறுமையில்) உன் தரிசனம் உண்மை சொர்க்கம் உண்மை நரகம் உண்மை மறுமைநாள் உண்மையானது. இறைவா! உனக்கே நான் அடிபணிந்தேன் உன் மீதே நம்பிக்கை கொண்டேன் உன்னையே சார்ந்துள்ளேன். உன்னிடமே திரும்புகிறேன் உன் சான்றுகளைக் கொண்டே வழக்காடுவேன் உன்னிடமே நீதி கேட்பேன். எனவே, நான் முந்திச் செய்த, பிந்திச் செய்கின்ற, இரகசியமாகச் செய்த, பம்ரங்கமாகச் செய்த பாவங்கள் அனைத்தையும் மன்னித்தருள்வாயாக! நீயே என் இறைவன். உன்னைத் தவிர எனக்கு வேறெவரும் இறைவன் இல்லை.

ஸாபித் இப்னு முஹம்மத்(ஸல்) அவர்கள் கூறினார்:

சுஃப்யான் அஸ்ஸவ்ரீ(ரஹ்) அவர்கள் இதை நமக்கு அறிவித்துவிட்டு,'நீ உண்மை உன் சொல் உண்மை'' என்றார்கள்.

## அல்லாஹ் செவியேற்பவனாகவும் பார்ப்பவனாகவும் இருக்கிறான் (எனும் 4:134 வது இறைவசனம்).

ஆயிஷா(ரலி) கூறினார்:

ஒலிகள் அனைத்தையும் (துல்லியமாகக்) கேட்கிற அளவிற்கு விசாலமான செவியாற்றல் உள்ள அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். (நபியவர்களிடம் தன் கணவன் குறித்து முறையிட்டுக் கொண்டிருந்த ஒரு பெண் தொடர்பாக) நபி(ஸல்) அவர்களுக்கு உயர்ந்தோன் அல்லாஹ்'(நபியே!) தன் துணைவன் குறித்து உம்மிடம் முறையிட்டுக் கொண்டிருந்த அவளுடைய சொல்லை அல்லாஹ் செவிமடுத்துவிட்டான்'' எனும் (திருக்குர்ஆன் 58:1 வது) வசனத்தை அருளினான்.

ஹதீஸ் 7386 அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் (கைபர்) பயணத்தில் இருந்தோம். அப்போது நாங்கள் மேட்டில் ஏறும்போது'அல்லாஹு அக்பர்' (அல்லாஹ் மிகப்பெரியவன்) என்று (உரக்கச்) சொல்லிவந்தோம். நபி(ஸல்) அவர்கள்,'உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள் (மெல்லக் கூறுங்கள்). ஏனெனில், நீங்கள் காது கேட்காதவனையோ, இங்கு இல்லாதவனையோ அழைப்பதில்லை. மாறாக, அருகிலிருந்து செவியேற்பவனையும் பார்ப்பவனையுமே அழைக்கின்றீர்கள்'' என்றார்கள். பிறகு நான் என் மனத்திற்குள்'லா ஹவ்ல வ லா குவ்வ(த்)த இல்லா பில்லாஹ்'' (அல்லாஹ்வின் உதவியின்றி பாவங்களிலிருந்து விலகிடவும் முடியாது நல்லறங்கள் புரிய ஆற்றல் பெறவும் முடியாது) என்று சொல்லிக் கொண்டிருந்தபோது, நபி(ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள்.'அப்துல்லாஹ் இப்னு கையேஸ!'லா ஹவ்ல வ லா குவ்வ(த்)த இல்லா பில்லாஹ்' என்று சொல்லுங்கள். ஏனெனில் அது,'சொர்க்கத்தின் கருவூலங்களில் ஒரு கருவூலமாகும்' என்றோ,'அதைப் பற்றி நான் அறிவிக்கட்டுமா?' என்றோ சொன்னார்கள்.

ஹதீஸ் 7387 ஹதீஸ் 7388 அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்.

அபூ பக்ர் அஸ்ஸித்தீக்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,'இறைத்தூதர் அவர்களே! தொழுகையில் (இறுதி அமர்வில்) நான் ஓத வேண்டிய ஒரு பிரார்த்தனையை எனக்குக் கற்றுத் தாருங்கள்'' என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'இறைவா! எனக்கு நானே அதிகமாக அநீதியிழைத்துக் கொண்டேன். உன்னைத் தவிர பாவங்களை எவரும் மன்னிக்கமாட்டார்.

எனவே, எனக்கு உன் தரப்பிலிருந்து (பாவ) மன்னிப்பை வழங்குவாயாக. நீயே அதிகம் மன்னிப்பவனாகவும் கருணைபுரிபவனாகவும் இருக்கிறாய்!"என்று கூறுங்கள் என்றார்கள்.

ஹதீஸ் 7389 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னை அழைத்து,'(நபியே!) உங்கள் சமுதாயத்தாரின் சொல்லையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் செவிமடுத்தான்" என்றார்கள்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

## "(நபியே!) அவனே ஆற்றல்மிக்கவன் என்று சொல்லுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 06:65 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7390 ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அஸ்ஸலமீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள், தம் தோழர்களுக்கு எல்லா விஷயங்களிலும் நல்லதைத் தேர்ந்தெடுக்கப் பிரார்த்திக்கும் முறையை (இஸ்திகாராவை), குர்ஆனின் அத்தியாயத்தைக் கற்றுக் கொடுப்பதைப் போன்று கற்றுக் கொடுத்து வந்தார்கள். அவர்கள் கூறுவார்கள்: உங்களில் ஒருவர் ஒன்றைச் செய்ய நினைத்தால், கூடுதலான (நஃபிலான) இரண்டு ரக்அத்கள் தொழுது கொள்ளட்டும். பின்னர்'இறைவா! நீ அறிந்துள்ளபடி (எது எனக்கு) நன்மை(யோ அ)தனை உன்னிடம் கோருகிறேன். உன்னுடைய ஆற்றலால் எனக்கு ஆற்றல் உண்டாக வேண்டுமென உன்னிடம் கோருகிறேன். உன் அருளைக் கோருகிறேன். ஏனெனில், நீயே ஆற்றல்மிக்கவன் எனக்கோ எந்த ஆற்றலும் கிடையாது. நீயே நன்கறிந்தவன் எனக்கோ எந்த அறிவும் கிடையாது. நீயே மறைவானவற்றை நன்கறிந்தவன். இறைவா! இந்தக் காரியம் -(தான் தொடங்கப் போகும்) அந்தக் காரியம் இன்னதெனக் குறிப்பிட்டு எனக்கு'என் இம்மை வாழ்விலும் மறுமை வாழ்விலும்' அல்லது'என் மார்க்கத்திலும் என் வாழ்க்கையிலும் என் காரியத்தின் முடிவிலும்' நன்மை பயக்கும் என நீ அறிந்திருந்தால் அதைச் சாதிப்பதற்குரிய ஆற்றலை எனக்கு வழங்கி, அதை சுலபமாக்கித் தருவாயாக! பிறகு அதில் எனக்கு சுபிட்சம் அளித்திடுவாயாக! இறைவா! இந்தக் காரியம் எனக்கு'என் மார்க்கத்திலும் வாழ்க்கையிலும் என் காரியத்தின் முடிவிலும்' அல்லது'என் இம்மை வாழ்விலும் மறுமை வாழ்விலும்' தீமை பயக்கும் என நீ அறிந்திருந்தால் இந்தக் காரியத்தைவிட்டு என்னைத் திருப்பிவிடுவாயாக! நன்மை எங்கிருந்தாலும் அதை அடைவதற்குரிய ஆற்றலை எனக்கு வழங்கி, அதில் எனக்குத் திருப்தி அளித்திடுவாயாக!"என்று பிரார்த்திக்கட்டும்.

## உள்ளங்களைப் புரட்டக்கூடியவன்

அல்லாஹ் கூறினான்:

நாம் அவர்களின் உள்ளங்களையும் அவர்களின் பார்வைகளையும் புரட்டுகிறோம். (திருக்குர்ஆன் 06:110)

ஹதீஸ் 7391 அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் சத்தியம் செய்யும்போது அதிகமாகப் பயன்படுத்திய வாக்கியம்'இல்லை உள்ளங்களைப் புரட்டுபவன் மீதாணையாக!"என்பதாகவே இருந்தது.

## அல்லாஹ்வுக்கு தொண்ணூற்றொன்பது பெயர்கள் உள்ளன.

(அவற்றில் ஒன்றான)'துல் ஜலால்' என்பதற்கு'மகத்துவமிக்கவன்' என்று பொருள். (மற்றொரு பெயரான)'அல்பர்ரு' என்பதற்கு'மென்மையானவன்' என்று பொருள் என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.

ஹதீஸ் 7392 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

நிச்சயமாக அல்லாஹ்விற்கு தொண்ணூற்று ஒன்பது - நூற்றுக்கு ஒன்று குறைவான - பெயர்கள் உள்ளன. அவற்றை (நம்பிக்கை கொண்டு) மனனமிட்டவர் சொர்க்கத்தில் நுழைவார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

(இந்த ஹதீஸின் மூலத்திலுள்ள)'அஹ்ஸா' எனும் சொல்லுக்கு'மனனமிடல்' என்று பொருள்.

## அல்லாஹ்வின் திருப்பெயர்களைச் சொல்லி பிரார்த்திப்பதும் பாதுகாப்புக் கோருவதும்.

ஹதீஸ் 7393 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் படுக்கைக்குச் சென்றால் உங்கள் ஆடையின் ஓரத்தால் மூன்று முறை விரிப்பைத் தட்டிவிடுங்கள். மேலும் (பின்வருமாறு) பிரார்த்தியுங்கள்: என் அதிபதியே! உன் பெயரால் நான் என் விலாவை (தரையில்) வைத்தேன். உன் உதவியாலேயே (மீண்டும்) எழுவேன். என் உயிரை நீ கைப்பற்றிக் கொண்டால் அதற்கு நீ மன்னிப்பு அளிப்பாயாக. அதை நீ (கைப்பற்றாமல்)விட்டுவிட்டால், உன் நல்லடியார்களை நீ எதன் மூலம் பாதுகாப்பாயோ அதன் மூலம் என் உயிரையும் காத்திடுவாயாக.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இன்னும் சில அறிவிப்பாளர்தொடர் வழியாகவும் இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹதீஸ் 7394 ஹுதைஃபா இப்னு அல்யமான்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் படுக்கைக்குச் செல்லும்போது,'அல்லாஹும்ம பிஸ்மிக்க அமூத்து வ அஹ்யா'' (அல்லாஹ்வே! உன் பெயர் கூறியே நான் இறக்கிறேன் உயிர் வாழவும் செய்கிறேன்) என்று கூறுவார்கள். காலையில் (எழும்போது)'அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வ இலைஹிந் நுஷூர்'' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் எங்களை இறக்கச் செய்த பின்னர் எங்களுக்கு உயிரூட்டினான். மேலும் (மண்ணறையிலிருந்து வெளியேறி) அவனிடமே செல்ல வேண்டியதுள்ளது) என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 7395 அபூ தர் அல்கிஃபாரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இரவில் படுக்கைக்குச் செல்லும்போது'பிஸ்மிக்க நமூத்து வ நஹ்யா'' (அல்லாஹ்வே! உன் பெயர் கூறியே நாங்கள் இறக்கிறோம் உயிர் வாழவும் செய்கிறோம்) என்று கூறுவார்கள். (உறக்கத்திலிருந்து) விழித்தெழும்போது'அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஅத மா அமாத்தனா வ இலைஹிந் நுஷூர்'' (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவன் எங்களை இறக்கச் செய்த பின்னர் எங்களுக்கு உயிரூட்டினான். மேலும் (மண்ணறையிலிருந்து வெளியேறி) அவனிடமே செல்ல வேண்டியுள்ளது) என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 7396 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒருவர் தம் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொள்ள விரும்பும்போது,'பிஸ்மில்லாஹி, அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வ ஜன்னிபிஷ் ஷைத்தான் மா ரஸக்த்தனா''

(அல்லாஹ்வின் திருப்பெயரால்... இறைவா! எங்களைவிட்டு ஷைத்தானை விலக்கிவைப்பாயாக!) எங்களுக்கு நீ வழங்கும் குழந்தைச் செல்வத்தைவிட்டும் ஷைத்தானை விலக்கிவைப்பாயாக!) என்று பிரார்த்தித்து, அந்த உறவில் அத்தம்பதியருக்கு விதிக்கப்பட்டபடி குழந்தை பிறந்தால், அக்குழந்தைக்கு ஒருபோதும் ஷைத்தான் தீங்கிழைப்பதில்லை.

என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7397 அதீ இப்னு ஹாத்திம் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களிடம்'நான் பயிற்சியளிக்கப்பட்ட என்னுடைய நாயை (வேட்டைக்காக) அனுப்புகிறேன். (அது வேட்டியடையாடிக் கொண்டு வருகிறவற்றை நான் உண்ணலாமா?)'' என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'நீங்கள் பயிற்சியளிக்கப்பட்ட உங்களின் நாயை (வேட்டைக்காக) அனுப்பிவைக்கும்போது அல்லாஹ்வின் பெயரைக் கூறியிருந்தால் அது (உங்களுக்காக வேட்டையாடிக்) கவ்விப்பிடித்தவற்றை நீங்கள் சாப்பிடுங்கள். நீங்கள் இறகு இல்லாத அம்பை எய்து, அது (தன்னுடைய முனையால்) தைத்துக் கொன்றதையும் சாப்பிடுங்கள்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7398 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

மக்கள், 'இறைத்தூதர் அவர்களே! இங்கு இப்போதுதான் இணைவைப்பிலிருந்து விலகி (இஸ்லாத்தை ஏற்று) வந்த சில சமுதாயத்தார் உள்ளனர். அவர்கள் எங்களிடம் இறைச்சி கொண்டு வருகிறார்கள். அவர்கள் பிராணிகளை அறுக்கும்போது அல்லாஹ்வின் பெயர் கூறுகிறார்களா, இல்லையா என்று எங்களுக்குத் தெரியாது. (இந்நிலையில் அதைச் சாப்பிடலாமா)?' என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், 'நீங்கள் (அதன் மீது) அல்லாஹ்வின் பெயரைச் சொல்லி உண்ணுங்கள்'' என்று பதில் சொன்னார்கள்.

இதே ஹதீஸை மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7399 அனஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் இரண்டு செம்மறி ஆட்டுக்கிடாக்களை அல்லாஹ்வின் பெயர் ('பிஸ்மில்லாஹ்') சொல்லியும், அல்லாஹு மிகப்பெரியவன் என்று (தக்பீர்) சொல்லியும் குர்பானி கொடுத்தார்கள்.

ஹதீஸ் 7400 ஜுன்தப் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களுடன் நஹ்ருடைய (துல்ஹஜ் 10ஆம்) நாளில் இருந்தேன். அவர்கள் (பெருநாள் தொழுகை) தொழுதுவிட்டு உரையாற்றினார்கள். அப்போது அவர்கள், 'தொழுவதற்கு முன்பே (குர்பானிப் பிராணியை) அறுத்துவிட்டவர் அதற்குப் பகரமாக மற்றொரு பிராணியை அறுக்கட்டும். (தொழுது முடிக்கும்வரை) அறுக்காமலிருப்பர் (தொழுகைக்குப் பின்) அல்லாஹ்வின் பெயர் சொல்லி அறுக்கட்டும்'' என்றார்கள்.

ஹதீஸ் 7401 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் உங்கள் தந்தையர் பெயர் சொல்லி சத்தியம் செய்ய வேண்டாம் சத்தியம் செய்ய வேண்டாம். சத்தியம் செய்பவர் அல்லாஹ்வின் பெயர் கூறியே சத்தியம் செய்யட்டும்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ்வின் உள்ளமை, அவனுடைய பண்புகள் மற்றும் பெயர்கள் தொடர்பாகக் கூறப்பட்டுள்ளவை.

குபைப் (ரலி) அவர்கள், 'என்னுடைய இந்த உயிர்த்தியாகம் அல்லாஹ்வின் உள்ளமைக்காகத்தான்'' என்று கூறி, அல்லாஹ்வின் பெயரால் உள்ளமையைக் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் 7402 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் பத்துப்பே(ர் கொண்ட உளவுப்படையின)ரை (ஓரிடத்திற்கு) அனுப்பிவைத்தார்கள். அவர்களில் அன்சாரியான குபைப் (ரலி) அவர்களும் இருந்தார்கள். (உளவுப்படையினரின் வருகையை அறிந்து ஹுதைல் எனும் கூட்டத்தார் பின்தொடர்ந்து வந்து சிலரைக் கொன்றுவிட்டு, சிலரை சிறைபிடித்தார்கள். குபைப் மக்காவில் பனுல் ஹாரிஸ் எனும் கூட்டத்தாரிடம் விற்கப்பட்டார்.) அவர்கள் குபைப் (ரலி) அவர்களைக் கொலை செய்வதற்காக ஒன்று திரண்டபோது குபைப் (ரலி) அவர்கள் தங்களின் மறைவிடத்து முடிகளை மழித்துக் கொள்வதற்காக ஹாரிஸின் மகளிடம் சவரக்கத்தி ஒன்றை இரவல் வாங்கினார்கள். அவர்கள் அவரைக் கொல்வதற்காக (மக்காவின்) புனித எல்லைக்கு வெளியே சென்றபோது குபைப் (ரலி) அவர்கள், 'நான் முஸ்லிமாகக் கொல்லப்படும் இந்த வேளையில் எதைப் பற்றியும் நான் பொருட்படுத்துவதாக இல்லை. நான் எந்தப் பகுதியில் கொல்லப்பட்டாலும் அது அல்லாஹ்வுக்காகத்தான் (என்பதை எண்ணிப் பெருமிதம் அடைகிறேன்). நான் கொல்லப்படுவது எல்லாம் அல்லாஹ்வின் உள்ளமைக்காகத்தான். அவன் நினைத்தால் துண்டிக்கப்பட்ட என் உறுப்புகளின் இணைப்புகளின் மீது அருள்வளத்தைப் பொழிவான்'' என்று பாடினார்கள். பின்னர், ஹாரிஸின் மகன், குபைப் (ரலி) அவர்களைக் கொன்றுவிட்டான். குபைப் (ரலி) அவர்கள் மற்றும் அவர்களின் தோழர்களின் செய்தியை அவர்கள் கொல்லப்பட்ட அன்றே நபி (ஸல்) அவர்கள் (இறை அறிவிப்பின் வாயிலாக அறிந்து) தம் தோழர்களுக்குத் தெரிவித்தார்கள்.

"அல்லாஹ் தன்னைக் குறித்து உங்களை எச்சரிக்கிறான்' எனும் (திருக்குர்ஆன் 03:28 வது) இறைவசனம்.

மேலும், அல்லாஹ் கூறினான்: (இறைவா!) என் உள்ளத்தில் உள்ளதை நீ அறிவாய் (ஆனால்,) உன் உள்ளத்தில் உள்ளதை நான் அறியேன் (என்று ஈசா கூறினார்). (திருக்குர்ஆன் 05:116)

ஹதீஸ் 7403 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வை விட அதிக ரோஷம் உள்ளவர் வேறெவரும் இல்லை. எனவே நான் அவன் ஆபாசங்களுக்குத் தடை விதித்துள்ளான். அல்லாஹ்வைவிட மிகவும் விரும்புகிறவர் வேறெவருமில்லர்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7404. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்புகளை படைத்தபோது (தன்னுடைய) அரியாசனத்தின் மீது வைக்கப்பட்டிருந்த தன்னுடைய பதிவேட்டில், 'என் கருணை என் கோபத்தை வென்றுவிட்டது'' என்று (கருணையைத்) தனக்கு.த்தானே விதியாக்கிக் கொள்ளும் வகையில் எழுதினான்.

இதைஅபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7405. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உயர்ந்தோன் அல்லாஹ் கூறினான்:

என் அடியான் என்னைப் பற்றி என்ன நினைக்கிறானோ அதற்கேற்ப அவனிடம் நான் நடந்துகொள்வேன். அவன் என்னை நினைவு கூரும்போது நான் அவனுடன் இருப்பேன். அவன் என்னைத் தன் உள்ளத்தில் நினைவுகூர்ந்தால் நானும் அவனை என் உள்ளத்தில்

நினைவுகூருவேன். அவன் ஓர் அவையோர் மத்தியில் என்னை நினைவு கூர்ந்தால் அவர்களைவிடச் சிறந்த ஓர் அவையினரிடம் அவனை நான் நினைவு கூருவேன். அவன் ஒரு சாண் அளவுக்கு என்னை நெருங்கினால் நான் ஒரு முழுமளவுக்கு அவனை நெருங்குவேன். அவன் ஒரு முழம் அளவுக்கு என்னை நெருங்கினால் நான் (வலதும் இடதுமாக விரித்த) இரண்டு கைகளின் நீள அளவுக்கு அவனை நெருங்குவேன். அவன் என்னை நோக்கி நடந்து வந்தால் நான் அவனை நோக்கி ஓடிச் செல்வேன்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## “அவனுடைய (திரு) முகத்தைத் தவிர அனைத்துமே அழியக்கூடியவைதாம்‘ எனும் (திருக்குர்ஆன் 28:88 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7406. ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அறிவித்தார்.

“(நபியே!) கூறுக: உங்களுக்கு மேலிருந்தோ, உங்கள் கால்களுக்குக் கீழிருந்தோ ஏதோனுமொரு வேதனையை உங்களின் மீது இறக்கவும், அல்லது உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து உங்களில் சிலர் தரும் துன்பத்தை வேறு சிலர் அனுபவிக்கும்படி செய்யவும் அவன் ஆற்றலுள்ளவன்‘‘ எனும் (திருக்குர்ஆன் 06:65 வது) இறைவசனம் அருளப்பெற்றபோது, ‘உங்களுக்கு மேலிருந்து‘‘ என்பதைக் கேட்டவுடன்’(இறைவா!) உன் (திரு) முகத்தால் பாதுகாப்புக் கோருகிறேன்’ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அல்லது உங்கள் கால்களுக்குக் கீழிலிருந்து‘‘ என்பதைக் கேட்டவுடனும்’(இறைவா!) உன் இரு) முகத்தால் பாதுகாப்புக் கோருகிறேன்‘‘ என்றார்கள். ’உங்களைப் பல்வேறு குழுக்களாகப் பிரித்து..!”என்பதைக் கேட்டவுடன்’இது (முந்தைய வேதனைகளை கூட) மிக எளிதானது’ என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## “(மூஸா!) நீர் என் கண் முன்னே வளர்க்கப்படுவதற்காக உம் மீது அன்பைப் பொழிந்தேன்‘ எனும் (திருக்குர்ஆன் 20:39 வது) இறைவசனம்.

## “அது (நூஹ் உடைய மரக்கலம்) நம் கண் முன்னே (மிதந்து) சென்று கொண்டிருந்தது‘ எனும் (திருக்குர்ஆன் 54:14 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7407. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் தஜ்ஜால் பற்றிக் குறிப்பிடப்பட்டது. அப்போது அவர்கள், ‘அல்லாஹ்வை நீங்கள் அறியாதவர்கள் அல்லர். நிச்சயமாக அல்லாஹ் ஒற்றைக் கண்ணன் அல்லன்‘‘ என்று கூறிவிட்டு, தம் கரத்தால் தம் கண்ணைச் சுட்டிக் காட்டினார்கள். மேலும், ‘மஸீஹுத் தஜ்ஜால் கண் (ஒரே குலையில்) துருத்திக் கொண்டிருக்கும் திராட்சையைப் போன்றிருக்கும்‘‘ என்றும் கூறினார்கள்.

ஹதீஸ் 7408. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவனால் அனுப்பிவைக்கப் பெற்ற எந்த ஓர் இறைத்தூதரும் தம் சமுதாயத்தாரை மகா பொய்யான ஒற்றைக் கண்ணன் (தஜ்ஜால்) குறித்து எச்சரிக்காமல் இருந்ததில்லை. (நினைவிற் கொள்க!) அவன் ஒற்றைக் கண்ணன் ஆவான். ஆனால் உங்களுடைய இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்லன். அந்தப் பொய்யனின் இரண்டு கண்களுக்கிடையே’கா∴‘பிர்’ (இறை மறுப்பாளன்) என்று எழுதப்பட்டிருக்கும்.

என அனஸ் (ரலி) அறிவித்தார்.

## “அ(ந்த இறைவனே படைப்பவனும் தோற்றுவிப்பவனும் உருவமளிப்பவனும் ஆவான்‘ எனும் (திருக்குர்ஆன் 59:24 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7409. அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

பனுல் முஸ்தலிக் போரின்போது பெண் போர்க் கைதிகள் சிலர் எங்களுக்குக்க கிடைத்தனர். அவர்களுடன் கருவுற்று விடக் கூடாதென்றும் நாங்கள் விரும்பினோம். எனவே, புணர்ச்சி இடை முறிப்பு'அஸல்“‘ செய்து கொள்வது குறித்து நபி(ஸல்) அவர்களிடம் கேட்டோம். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘இதைச் செய்யாமலிருப்பதால் உங்களுக்கு எந்தத் தீங்கும் நேர்ந்துவிடப் போவதில்லை ஏனெனில், அல்லாஹ் மறுமை நாள்வரை நான் படைக்கவிருப்பவற்றை எழுதி முடித்துவிட்டான்“‘ என்றார்கள்.

மற்றோர் அறிவிப்பில் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்:'படைக்கப்பட உள்ள எந்த உயிரையும் அல்லாஹ் படைத்தே தீருவான்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

## “நான் என் கரங்களால் படைத்தவருக்கு சிரம் பணியவிடாமல் உன்னைத் தடுத்தது எது? எனும் (திருக்குர்ஆன் 38:75 வது இறைவசனம்)

ஹதீஸ் 7410. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(ஆதி முதல் அந்தம் வரை வாழ்ந்த) இறைநம்பிக்கையாளர்கள் அனைவரையும் அப்படியே மறுமை நாளில் அல்லாஹ் ஒன்று திரட்டுவான். அப்போது அவர்கள்'(நமக்கு ஏற்பட்டுள்ள) இந்த(ச் சோதனையான)க் கட்டத்திலிருந்து நம்மை விடுவிக்க நாம் (யார் மூலமாவது) நம் இறைவனிடம் மன்றாடினால் (மிகவும் நன்றாயிருக்கும்)“‘ என்று பேசிக் கொள்வார்கள். பிறகு அவர்கள் ஆதம் (அலை) அவர்களே! மக்களை(ச் சூழ்ந்துள்ள இக்கட்டான சூழ்நிலையை) நீங்கள் காணவில்லையா? அல்லாஹ் தன் கையால் உங்களைப் படைத்தான். தன்னுடைய வானவர்களை உங்களுக்குச் சிரம்பணியச் செய்தான். மேலும், உங்களுக்கு எல்லாப் பொருள்களின் பெயர்களையும் கற்றுத் தந்தான். (எனவே) இந்த(ச் சோதனையான)க் கட்டத்திலிருந்து எங்களை விடுவிப்பதற்காக உங்களுடைய இறைவனிடத்தில் எங்களுக்காகப் பரிந்து பேசுங்கள்“‘ என்று சொல்வார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள்,‘(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை“‘ என்று கூறிவிட்டுத் தாம் புரிந்த தவற்றை மக்களிடம் கூறுவார்கள்.'(எனவே, நீங்கள் நூஹ்(அலை) அவர்களிடம் செல்லுங்கள். ஏனென்றால், அவர் (எனக்குப் பின்) பூமியிலுள்ளவர்களுக்கு அல்லாஹ் அனுப்பி வைத்த (முக்கிய) தூதர்களில் முதலாமவராவார்“‘ என்று கூறுவார்கள்.

உடனே, இறைநம்பிக்கையாளர்கள் நூஹ் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அன்னாரும்,‘(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை“‘ என்று கூறிவிட்டுத் தாம் புரிந்த தவற்றை அவர்களிடம் கூறுவார்கள். பிறகு,‘நீங்கள் அளவற்ற அருளாள(ன் இறைவ)னின் உற்ற நண்பர் இப்ராஹீம்(அலை) அவர்களிடம் செல்லுங்கள்“‘ என்று சொல்வார்கள். உடனே இறைநம்பிக்கையாளர்கள் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவர்களும்,‘(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை“‘ என்று கூறிவிட்டுத் தாம் புரிந்த தவறுகளை மக்களிடம்ம செல்வார்கள். அப்போது அவர்களும்,‘(நீங்கள் நினைக்கும்) அந்த நிலையில் நான் இல்லை“‘ எனவே, நீங்கள் அடியாரான முஹம்மத்(ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்“‘ என்று சொல்வார்கள்.

உடனே இறைநம்பிக்கையாளர்கள் என்னிடம் வருவார்கள். அப்போது நான் என்னுடைய இறைவனிடத்தில் (பரித்துரை செய்ய) அனுமதி கேட்பதற்காகச் செல்வேன். அதற்கான அனுமதி எனக்கு வழங்கப்படும். என் இறைவனை நான் காணும்போது அவனுக்கு (சிரம்பணிந்து) சஜ்தாவில் விழுவேன். தான் நாடிய வரை அல்லாஹ் (அப்படியே) என்னை (சிரவணக்கத்தில்)விட்டுவிடுவான். பிறகு (இறைவனின் தரப்பிலிருந்து,'முஹம்மதே! தலையை உயர்த்துங்கள் சொல்லுங்கள் செவியேற்கப்படும் கேளுங்கள் உங்களுக்குத் தரப்படும் பரிந்ரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்'' என்று என்னிடம் சொல்லப்படும். அப்போது நான் என் இறைவனை அவன் எனக்குக் கற்றுத்தந்த புகழ் மொழிகளைக் கூறி போற்றுவேன். பிறகு நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன்,'(நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு நான் அவர்களை சொர்க்கத்தில் அனுப்பிவைப்பேன். பின்னர் மீண்டும் நான் (இறைவனிடம்) செல்வேன். என் இறைவனைக் காணும்போது நான் (முன்போன்றே, சிரம் பணிந்து) சஜ்தாவில் விழுவேன். அப்போது அல்லாஹ் தாம் நாடிய வரை என்னை (அப்படியே சிர வணக்கத்தில்)விட்டுவிடுவான். பிறகு (இறைவனின் தரப்பிலிருந்து)'முஹம்மதே! தலையை உயர்த்துங்கள். சொல்லுங்கள் செவியேற்கப்படும். கேளுங்கள் அது உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள். உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்'' என்று சொல்லப்படும். அப்போது நான் என் இறைவனை அவன் எனக்குக் கற்றுத்தந்த புகழ் மொழிகளை கூறி போற்றிவேன். பிறகு நான் பரிந்துரை செய்வேன். அப்போதும் இறைவன், (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பிறகு (அவர்களுக்காகப் பரிந்துபேசி) அவர்களை நான் சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். பிறகு (அவர்களுக்காகப் பரிந்துபேசி) அவர்களை நான் சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன்.. பிறகு (மூன்றாம்) முறையாக நான் (இறைவனிடம்) செல்வேன். (நான்காம் முறையாக இறைவனிடம்) செல்வேன். அப்போது நான்,'என் இறைவா! குர்ஆன் தடுத்துவிட்ட, நிரந்தர நரகம் கட்டாயமாம்விட்ட(வர்களான இறை மறுப்பாளர்கள், நயவஞ்சகர்)களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் மிஞ்சவில்லை'' என்று சொல்வேன்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

யார்'லாயிலாஹ இல்லல்லாஹ்'' (அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை) என்று கூறியதுடன் அவரின் உள்ளத்தில் ஓர் வாற்கோதுமை எடையளவு நன்மையிருக்குமோ அவர் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவார். பிறகு யார்'லாயிலாஹ இல்லல்லாஹ்'' என்று கூறியதுடன் அவரின் உள்ளத்தில் மணிக் கோதுமையின் உடையளவு நன்மை இருக்குமோ அவரும் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவார். பிறகு யார்'லாயிலாஹ இல்லல்லாஹ்'' என்று கூறியதுடன், அவரின் உள்ளத்தில் கடுகின் எடையளவு நன்மை இருக்குமோ அவரும் நரகத்திலிருந்து வெளியேற்றப்படுவார்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7411. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் கரம் நிரம்பியுள்ளது. வாரி வழங்குவதால் அது வற்றிப் போய்விடுவதில்லை. இரவும் பகலும் (மழை மேகத்தைப் போல் அது தன் அருள மழையைப் பொழிந்து கொண்டேயிருக்கிறது. வானங்களையும் பூமியையும் அவன் படைத்தது முதல் அவன் வழங்கியவை அவனுடைய கரத்திலுள்ள (செல்வத்)தை வற்றச் செய்து விடவில்லை என்பதைப் பார்த்தீர்களா? வானங்களையும் பூமியையும் படைப்பதற்கு (முன்னர்) அவனுடைய அரியாசனம்

(அர்ஷ்), நீரின் மீது இருந்தது. அவனுடைய இன்னொரு கரத்தில் தராசு உள்ளது. அவனே (அதைத்) தாழ்த்துகிறான் அவனே உயர்த்துகிறான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7412 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் மறுமைநாளில் பூமியைத் தன்னுடைய கைப்பிடிக்குள் அடக்கிக் கொள்வான். வானங்கள் அவனுடைய வலக்கரத்தில் இருக்கும். பிறகு 'நானே அரசன்!" என்று சொல்வான்.

என இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடரிலும் வந்துள்ளது.

ஹதீஸ் 7413 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (மறுமை நாளில்) பூமியைத் தன் கைப்பிடிக்குள் அடக்கிக்கொள்வான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் இப்னு உமர் (ரலி) அவர்கள் வாயிலாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7414 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஒரு யூதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து 'முஹம்மதே! அல்லாஹ் (மறுமை நாளில்) வானங்களை ஒருவிரலின் மீதும் பூமிகளை ஒருவிரலின் மீதும் மலைகளை ஒரு விரலின் மீதும் மரத்தை ஒரு விரலின் மீதும் (இதர) படைப்புகளை ஒரு விரலின் மீதும் நிறுத்திக்கொண்டு, 'நானே அரசன்' என்று கூறுவான்'' என்றார்.

(இதைக் கேட்ட) இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் வெளியே தெரியச் சிரித்துவிட்டு, 'அவர்கள் அல்லாஹ்வை எப்படி மதிக்க வேண்டுமோ அப்படி மதிக்கவில்லை'' எனும் (யூதர்களைப் பற்றிய 6:91 வது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

மற்றோர் அறிவிப்பில் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார்:

இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'இந்த யூதரின் சொல்லைக் கேட்டு வியப்படைந்து, அதை உறுதிப்படுத்தும் வகையில் சிரித்தார்கள். "

ஹதீஸ் 7415 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) கூறினார்:

வேதக்காரர்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, 'அபுல் காசிமே! (மறுமையில்) அல்லாஹ் வானங்களை ஒரு விரலின் மீதும் பூமிகளை ஒரு விரலின் மீதும் மரத்தையும் ஈர மண்ணையும் ஒரு விரலின் மீதும், (இதர) படைப்புகளை ஒரு விரலின் மீதும் (நிறுத்தி) வைத்துக்கொண்டு, 'நானே அரசன் நானே அரசன்' எனக் கூறுவான்'' என்றார்.

(இதைக் கேட்ட) நபி (ஸல்) அவர்கள் தங்களின் கடைவாய்ப் பற்கள் தெரியச் சிரித்துவிட்டு, 'அவர்கள் அல்லாஹ்வை எப்படி மதிக்கவேண்டுமோ அப்படி மதிக்கவில்லை'' எனும் (யூதர்களைப் பற்றிய 6:91 வது) வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

## 'அல்லாஹ்வைவிடவும் ரோஷமுள்ளவர் எவருமில்லை என்று நபி (ஸல்) அவர்கள் கூறியது.

இந்த ஹதீஸை முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அவர்களிடமிருந்து அப்துல் மலிக் இப்னு உமைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்கள்.

ஹதீஸ் 7416 முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

ஸஅத் இப்னு உபாதா (ரலி) அவர்கள், 'என் மனைவியுடன் ஓர் ஆண் (தவறான உறவு கொண்ட நிலையில்) இருக்கக் கண்டால் வாளின் முனையாலேயே அவனை நான் வெட்டுவேன்'' என்று சொல்ல, இச்செய்தி இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு எட்டியது. அப்போது அவர்கள், 'ஸஅத் அவர்களின் ரோஷத்தைக் கண்டு நீங்கள் வியக்கின்றீர்களா? அல்லாஹ்வின் மீதாணையாக! நான் அவரைவிட அதிக ரோஷமுள்ளவன் அல்லாஹ் தன் ரோஷமுள்ளவன். அல்லாஹ் தன் ரோஷத்தின் காரணத்தால்தான் வெளிப்படையான மற்றும் மறைவான மானக்கேடான செயல்கள் (ஆபாசங்கள்) அனைத்தையும் தடைசெய்துவிட்டான். (திருந்துவதற்கு வாய்ப்பளித்து) விட்டுப்பிடிப்பதை மிகவும் விரும்புகிறவர் அல்லாஹ்வை விட வேறெவரும் இல்லை. எனவேதான் நற்செய்தி சொல்பவர்களையும் எச்சரிக்கை செய்பவர்களையும் அல்லாஹ் அனுப்பிவைத்தான். அல்லாஹ்வை விட மிகவும் புகழை விரும்புகிறவர் வேறெவருமில்லை. எனவேதான் அல்லாஹ் சொர்க்கத்தை அளிப்பதாக வாக்களித்துள்ளான்.

"(நபியே!) சாட்சியத்தில் மிகவும்பெரியது எது? எனக் கேளும். அல்லாஹ்வே எனக்கும் உங்களுக்கும் இடையே சாட்சி ஆவான் எனக் கூறும்' (எனும் 6:19 வது இறைவசனம்).

இந்த வசனத்தில் அல்லாஹ் தன்னை ஒரு பொருள் (ஷைஉ) என்று குறிப்பிடுகிறான்.

நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் உரையான குர்ஆனைப் பற்றி ஒரு பொருள் (ஷைஉ) என்று குறிப்பிட்டார்கள்.

அல்லாஹ் கூறினான்: அவனுடைய (திரு) முகத்தைத் தவிர அனைத்துமே அழியக் கூடியவை தாம். (திருக்குர்ஆன் 28:88) 54

ஹதீஸ் 7417 ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு மனிதரிடம், 'குர்ஆனிலிருந்து உங்களுடன் (மனனமாக) ஏதேனும் ஒன்று (ஷைஉ) இருக்கின்றதா?' என்று கேட்டார்கள். அம்மனிதர் 'ஆம். இன்ன அத்தியாயம், இன்ன அத்தியாயம்'' என்று சில அத்தியாயக்ளைப் பெயர் குறிப்பிட்டுச் சொன்னார்.

அவனுடைய அரியாசனம் (அர்ஷ்) நீரின் மீதிருந்தது (எனும் 11:7 வது இறைவசனம்). அவனே மகத்தான அரியாசனத்தின் (அர்ஷ்) அதிபதி ஆவான் (எனும் 9:129 வது இறைவசனம்).

அபுல் ஆலியா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: 'பின்னர் வானத்தை(ப் படைக்க)க் கருதி, அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்குப்படுத்தினான்'' எனும் (திருக்குர்ஆன் 02:29 வது) வசனத்தின் மூலத்திலுள்ள 'இஸ்தவா' எனும் சொல்லுக்கு 'உயர்ந்தான்' என்று பொருளாகும். 'சவ்வா' என்பதற்குப் 'படைத்தான்' என்று பொருளாகும்.

முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறினார்கள்: பின்னர் அர்ஷின் மீது அமைந்தான் எனும் (திருக்குர்ஆன் 07:54 வது) வசனத்திற்கு 'அர்ஷின் மேலே ஆனான்'' என்று பொருள்.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்: (அவனே அரியாசனத்துக்கு உரியவன் புகழுக்குரியவன் எனும் 85:15 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அல்மஜீத்' எனும் சொல்லுக்கு 'கண்ணியமிக்கவன்' என்று பொருள். (திருக்குர்ஆன் 85:14 வது வசனத்தின் மூலத்திலுள்ள) 'அல்வதூத்' எனும் சொல்லுக்கு, 'அன்பு மிக்கவன்' என்று பொருள்.

ஹதீஸ் 7418 இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்கள் அருகில் இருந்தேன். அப்போது பனுதமீம் குலத்தாரில் சிலர் நபி(ஸல்) அவர்களிடம் வந்தனர். (அவர்களிடம்) நபி(ஸல்) அவர்கள், 'நற்செய்தியை ஏற்றுக்கொள்ளுங்கள், பனுதமீம் குலத்தாரே!"என்றார்கள். அதற்கு அவர்கள், 'எங்களுக்கு நற்செய்தி சொன்னீர்கள். (அது இருக்கட்டும்! தர்மம்) கொடுங்கள்‘‘ என்று கூறினார்கள்: அப்போது யமன் நாட்டு மக்கள் சிலர் (-அஷ்அரீ குலத்தார்) வந்தனர். நபி(ஸல்) அவர்கள், 'யமன் வாசிகளே! நீங்கள் நற்செய்தியை ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில், பனுதமீம் குலத்தார் அதை ஏற்கவில்லை‘‘ என்றார்கள். அதற்கு அவர்கள், 'நாங்கள் (அதை) ஏற்றுக் கொண்டோம் மார்க்கக் கல்வி கற்பதற்காகவும், இந்த உலகம் உண்டானதன் ஆரம்ப நிலை குறித்துத் தங்களிடம் கேட்பதற்காகவுமே நாங்கள் தங்களிடம் வந்தோம்‘‘ என்று கூறினார்கள்:

நபி(ஸல்) அவர்கள், '(ஆதியில்) அல்லாஹ் மட்டுமே இருந்தன் அவனுக்கு முன் (அவனைத் தவிர வேறு) எந்தப் பொருளும் இருக்கவில்லை. (பிறகு படைக்கப்பட்ட) அவனுடைய அரியாசனம் (அர்ஷ்) தண்ணீரின் மீது இருந்தது. பின்னர் வானங்கள் மற்றும் பூமியை அவன் படைத்தான். (லவ்ஹுல் மஹ்ஃபூழ் எனும்) பாதுகாக்கப் பெற்ற பலகையில் (பிரபஞ்சத்தின்) எல்லா விஷயங்களையும் எழுதினான்‘‘ என்றார்கள்.

(அறிவிப்பாளர் கூறுகிறார்:) பின்னர் ஒருவர் என்னிடம் வந்து, 'இம்ரானே! உங்கள் ஒட்டகத்தை (கண்டு) பிடியுங்கள் அது (ஓடிப்) போய்விட்டது‘‘ என்று கூற, நான் அதைத் தேட (எழுந்து) சென்றுவிட்டேன். சென்று பார்த்தால் ஒட்டகத்தைக் காண முடியாதபடி கானல் நீர் தடுத்துவிட்டது. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அது போனால் போகட்டும் என்று கருதி, (ஹதீஸ் முடிவதற்கு முன்) நான் அங்கிருந்து எழுந்து செல்லாமல் இருந்திருக்க வேண்டும் என்று நான் ஆசைப்பட்டேன்.

ஹதீஸ் 7419 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் வலக் கரம் நிரம்பியுள்ளது. வாரிவழங்குவதால் அது வற்றிவிடுவதில்லை. அது இரவிலும் பகலிலும் (அருள் மழையைப்) பொழிந்து கொண்டேயிருக்கிறது. அவன் வானங்கள் மற்றும் பூமியைப் படைத்த (நேரத்)திலிருந்து (இப்போது வரை) அவன் வாரி வழங்கியது எவ்வளவு இருக்கும் சொல்லுங்கள். அதுவும் கூட அவனுடைய வலக்கரத்தில் இருப்பதைக் குறைத்துவிடவில்லை. (வானங்கள் மற்றும் பூமியைப் படைத்தபோது) அவனுடைய அரியாசனம் (அர்ஷ்) தண்ணீரின் மீதிருந்தது. அவனுடைய மற்றொரு கரத்தில்'கொடைப் பொழிவு' அல்லது'கொடைக்குறைவு' உள்ளது. (அதன் வாயிலாக) அவன் (சிலரை) உயர்த்துகிறான் (சிலரைத்) தாழ்த்துகிறான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7420 அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்கள் தம் மனைவியின் போக்கு குறித்து (நபி(ஸல்) அவர்களிடம்) முறையிட வந்தார்கள். நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்துகொள் உன் மனைவியை (மண விலக்குச் செய்துவிடாமல்) மணபந்தத்தில் நீடிக்கச் செய்‘‘ என்று கூறலானார்கள். நபி(ஸல்) அவர்கள் (தம் வாழ்நாளில் குர்ஆன் வசனங்களில்) எதையேனும் மறைப்பவர்களாக இருந்திருந்தால் (பின்வரும் 33:37 வது வசனமான) இதைத்தான் மறைத்திருப்பார்கள். இதன் காரணத்தால் ஸைனப்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் மற்ற துணைவியர் முன்பாக (தமக்குத் தனிச் சிறப்பு இருப்பதாகப்) பெருமை பாராட்டிக்

கொள்வார்கள். 'உங்களை (நபி(ஸல்) அவர்களுக்கு) உங்கள் வீட்டார் மணமுடித்துத்தந்தார்கள். என்னையோ உயர்ந்தவனான அல்லாஹ்வே ஏழுவானங்களுக்கு மேலிருந்து (நபி(ஸல்) அவர்களுக்கு) மணமுடித்துக் கொடுத்தான்'' என்று சொல்வார்கள்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஸாபித் அல்புனானீ(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

''(நபியே!) நீங்கள் (அந்நேரத்தில்) அல்லாஹ் வெளிப்படுத்த நாடியிருந்த விஷயத்தை உங்களின் உள்ளத்தில் மறைத்து வைத்துக் கொண்டீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 33:37 வது) இறைவசனம், (தம்பதியராயிருந்த) ஸைனப்(ரலி) அவர்களுக்கும் ஸைத் இப்னு ஹாரிஸா(ரலி) அவர்களுக்குமிடையே நடந்த பிரச்சினையில் (நபி(ஸல்) அவர்கள் கருத்து தெரிவித்தபோது) தான் அருளப்பெற்றது'' என்று அனஸ்(ரலி) அவர்கள் சொன்னார்கள்.

ஹதீஸ் 7421 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

பர்தா தொடர்பான வசனம் ஸைனப் பின்த் ஜஹ்ஷ்(ரலி) அவர்களின் விஷயத்தில் நான் அருளப்பெற்றது. அன்று நபி(ஸல்) அவர்கள் ஸைனப்(ரலி) அவர்களை மணந்ததற்காக ('வலீமா' விருந்தாக) ரொட்டியையும் இறைச்சியையும் உண்ணக் கொடுத்தார்கள். ஸைனப்(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்களின் மற்ற துணைவியர் முன்பாகப் பெருமை பாராட்டிவந்தார்கள்:'அல்லாஹ் எனக்கு வானத்தில் மணமுடித்து வைத்தான்'' என்று சொல்வார்கள்.

ஹதீஸ் 7422 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (படைப்புகளைப்) படைக்கும் பணியை நிறைவு செய்தபோது தன்னிடமுள்ள அரியாசனத்திற்கு மேலே,'என் கருணை என் கோபத்தை முந்திவிட்டது'' என்று எழுதினான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7423 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் நம்பிக்கை கொண்டு தொழுகையை நிலைநிறுத்தி, ரமளானில் நோன்பும் நோற்ற மனிதரை சொர்க்கத்தில் நுழையச் செய்வது அல்லாஹ்வின் மீது கடமையாகிவிட்டது அவர் இறைவழியில் நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றாலும் சரி அல்லது அவர் பிறந்த பூமியில் உட்கார்ந்து கொண்டாலும் சரி' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் மக்களுக்கு இந்த (நற்) செய்தியை அறிவிக்கலாமா?' என்று (நபித் தோழர்கள்) கேட்டனர். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'சொர்க்கத்தில் நூறு படித்தரங்கள் உள்ளன. அவற்றைத் தன்னுடைய பாதையில் அறப்போர் புரிபவர்களுக்காக (அல்லாஹ்) தயார்படுத்தி வைத்துள்ளான். ஒவ்வொரு இரண்டு படித்தரங்களுக்கிடையே வானத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ளதைப் போன்ற தொலைதூரம் உள்ளது. நீங்கள் அல்லாஹ்விடம் கேட்டால், ஃபிர்தவ்ஸ் எனும் (சொர்க்கத்தின்) படித்தரத்தையே கேளுங்கள் ஏனெனில், அதுவே சொர்க்கத்தின் மிகச் சிறந்த படித்தரமும் மிக உயர்ந்த படித்தரமும் ஆகும். அதற்கு மேலே அளவிலா அருளாள(ன் இறைவ)னின் அரியாசனம் (அர்ஷ்) இருக்கிறது. இன்னும் அ(ந்த படித்தரத்)திலிருந்தே சொர்க்கத்தின் ஆறுகள் பாய்கின்றன என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7424 அபூ தர் அல்ஃகிஃபாரீ(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அமர்ந்திருக்க பள்ளிவாசலினுள் நான் நுழைந்தேன். சூரியன் மறையத் தொடங்கியதும் நபி(ஸல்) அவர்கள்,'அபூ தர்ரே! இது (-சூரியன்) எங்கு செல்கின்றது என்று உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்டார்கள். நான்'அல்லாஹ்வும் அவனுடைய

தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று சொன்னேன். அவர்கள், 'இது இறைவனுக்கு (அவனுடைய அரியாசனத்திற்குக் கீழே) சிரவணக்கம் (சஜ்தா) செய்ய அனுமதி கேட்பதற்காகச் செல்கின்றது. அதற்கு அனுமதி வழங்கப்படும். அதனிடம், 'நீ எங்கிருந்து வந்தாயோ அந்த இடத்திற்கே திரும்பிச் செல்'' என்று சொல்லப்பட்டுவிட்டதைப் போன்று இருக்கும். உடனே அது மறைந்த இடத்திலிருந்து (இறுதி நாளில்) உதயமாகும்'' என்று சொல்லிவிட்டு, 'அதுதான் அது நிலைகொள்ளும் இடமாகும்'' (தாலிக்க முஸ்த்தகர்ருல் லஹா) என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களின் ஓதல் முறைப்படி (திருக்குர்ஆன் 36:38 வது வசனத்தை) ஓதினார்கள்.

ஹதீஸ் 7425 ஸைத் இப்னு ஸாபித் (ரலி) அறிவித்தார்.

அபூ பக்ர் (ரலி) அவர்கள் (தம் ஆட்சிக் காலத்தில் குர்ஆன் வசனங்களை ஒன்று திரட்டும்படி கேட்டு) என்னிடம் ஆளனுப்பினார்கள். எனவே, நான் குர்ஆன் (சுவடிகளைத்) தேடினேன். அப்போது 'அத்தவ்பா' எனும் (9 வது) அத்தியாயத்தின் இறுதிப் பகுதியை அன்சாரியான கிடைக்கப்பெற்றேன். அவரல்லாத வேறொருவரிடமும் அதை நான் காணவில்லை. அந்த இறுதிப் பகுதி, 'உங்களிலிருந்தே ஓர் இறைத்தூதர் உங்களிடம் வந்திருக்கிறார்'' என்பதிலிருந்து அல்பராஅத் வந்திருக்கிறார்'' என்பதிலிருந்து அல்பராஅத் அத்தியாயத்தின் இறுதி (யான 'அவனே மகத்தான அரியாசனத்தின் அதிபதி ஆவான்' என்பது) வரை உள்ளதாகும்.

இதே ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர் தொடர்கள் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 7426 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் துன்பம் நேரும்போது, 'லா இலாஹ இல்லல்லாஹுல் அலீமுல் ஹலீம் லா இலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அழீம் லா இலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமாவாத்தி, வ ரப்புல் அர்ளி, வ ரப்புல் அர்ஷில் கரீம்'' (நன்கறிந்தோனும் பொறுமை மிக்கோனுமாகிய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை மகத்தான அரியாசனத்தின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை வானங்கள் மற்றும் பூமியின் அதிபதியும், சிறப்புக்குரிய அரியாசனத்தின் அதிபதியுமாகிய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை) என்று பிரார்த்தித்து வந்தார்கள்.

ஹதீஸ் 7427 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் மக்கள் மயக்கமடைந்து விடுவார்கள். அப்போது (நான் முதலாவதாக மூர்ச்சை தெளிந்து எழும்போது) மூஸாவின் அருகில் இருப்பேன். அவர் (இறை) அரியாசனத்தின் கால்களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டிருப்பார்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7428 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அப்போது நானே முதலாவதாக (மயக்கம் தெளிவித்து) எழுப்பப்பட்டவனாக இருப்பேன். அப்போது மூஸா (இறை) அரியாசனத்தைப் பிடித்துக்கொண்டிருப்பார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## "வானவர்களும் (ஜிப்ரீல் என்ற) அந்த ஆன்மாவும் அவனிடம் (வானத்திற்கு) ஏறிச் செல்கிறார்கள்' எனும் (திருக்குர்ஆன் 70:4 வது) இறைவசனம்.

புகழ்மிகுந்த அல்லாஹ் கூறினான்:

நற்சொற்கள் அவனை நோக்கியே ஏறிச் செல்கின்றன (திருக்குர்ஆன் 35:10)

இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்:

அபூ தர்(ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் இறைத்தூதராக அனுப்பப்பட்டிருக்கும் செய்தி எட்டியது. உடனே அவர்கள் தம் சகோதரிடம், 'தமக்கு வானத்திலிருந்து (இறைச்) செய்தி வருவதாகக் கருதும் இந்த மனிதரைப் பற்றிய விவரத்தை நீ எனக்காக அறிந்து வா!" என்றார்கள்.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

நற்செயலானது நற்சொல்லை (வானத்திற்கு) உயர்த்துகின்றது. 'துல்மஆரிஜ்' (ஏணிப் படிகளைக் கொண்டவர்கள்) என்பது வானவர்களைக் குறிக்கும். அவர்கள் அல்லாஹ்வை நோக்கி (வானத்தில்) ஏறிச் செல்கின்றனர்.

ஹதீஸ் 7429. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவில் சில வானவர்களும், பலில் சில வானவர்களும் உங்களிடையே அடுத்தடுத்து இறங்கி) வருகிறார்கள். அவர்கள் அஸ்ர் தொழுகையிலும் ஃபஜ்ர் தொழுகையிலும் ஒன்று சேருகிறார்கள். பிறகு உங்களிடையே இரவு தங்கியிருந்தவர்கள் (வானத்திற்கு) ஏறிச் செல்கிறார்கள். அவர்களிடம் அல்லாஹ் 'என் அடியார்களை எந்த நிலையில்விட்டுவிட்டு வந்தீர்கள்?' என்று - உங்களைப் பற்றி அவன் நன்கறிந்த நிலையிலேயே - கேட்கிறான். 'அவர்கள் தொழுது கொண்டிருக்கும் நிலையில் அவர்களைவிட்டுவிட்டு வந்தோம் அவர்கள் தொழுது கொண்டிருக்கும் நிலையிலேயே அவர்களிடம் நாங்கள் சென்றோம்'' என்று வானவர்கள் பதிலளிப்பார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7430 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நல்ல சம்பாத்தியத்தின் வாயிலாக (ஈட்டிய வருமானத்திலிருந்து) ஒரு பேரீச்சம் பழத்திற்குச் சமமான அளவு தர்மம் செய்கிறவரிடமிருந்து அதை அல்லாஹ் தன் வலக் கரத்தால் பெற்று ஏற்றுக் கொள்வான். -அல்லாஹ்வை நோக்கி நல்ல (தூய்மையான)து மட்டுமே மேலே. செல்லும் - பிறகு அதை, உங்களில் ஒருவர் தம் குதிரைக் குட்டியை வளர்ப்பதைப் போன்று மலை அளவிற்கு அல்லாஹ் வளர்த்துப் பெருகச் செய்வான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 7431 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் துன்பம் நேரும்போது இச்சொற்களைக் கூறிப் பிரார்த்தித்துவந்தார்கள்: லா இலாஹ இல்லல்லாஹுல் அழீமுல் ஹலீம் லா இலாஹ இல்லல்லாஹு ரப்புல் அர்ஷில் அழீம் லா இலாஹ இல்லல்லாஹு ரப்புஸ் ஸமாவாத்தி வ ரப்புல் அர்ஷில் கரீம். (மகத்துவமிக்கோனும் பொறுமை மிகுந்தோனுமாகிய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை மகத்தான அரியாசனத்தின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை வானங்களின் அதிபதியும் சிறப்புமிக்க அரியாசனத்தின் அதிபதியுமாகிய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை.)

ஹதீஸ் 7432 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

அலீ(ரலி) அவர்கள் வார்க்கப்படாத சிறிய தங்கக் கட்டி ஒன்றை யமன் நாட்டிலிருந்து நபி(ஸல்) அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அதை நபி(ஸல்) அவர்கள் அக்ரஉ இப்னு ஹாபிஸ் அல்ஹன்ழலீ அல்முஜாஷிஈ(ரலி), உயைனா இப்னு பத்ர் அல்ஃபஸாரீ(ரலி), அல்கமா இப்னு உலாஸா அல் ஆமிரீ அல்கிலாபீ(ரலி), ஸைத் அல்கைல் அத்தாயீ அந்நப்ஹானீ(ரலி) ஆகிய நால்வரிடையே பங்கிட்டார்கள். இதைக் கண்ட குறைஷியரும் அன்சாரிகளும் கோபமடைந்து, நஜ்த்வாசிகளின் தலைவர்களுக்கு இதைக் கொடுக்கிறார்கள் நம்மைவிட்டுவிடுகிறார்களே'' என்று கூறினார்கள்.

(இதையறிந்த) நபி(ஸல்) அவர்கள்,'(புதிதாக இஸ்லாத்தைத் தழுவிய) அவர்களை ஈர்ப்பதற்காகவே இவ்வாறு கொடுத்தேன்'' என்றார்கள். அப்போது கண்கள் பஞ்சடைந்த நெற்றி புடைத்த, அடர்த்தியான தாடி கொண்ட, கன்னங்கள் உப்பிய, தலை முடி மழிக்கப்பட்டிருந்த ஒரு மனிதன் முன்வந்து,'முஹம்மதே! அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்'' என்று சொன்னான். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நான் அல்லாஹ்வுக்கு மாறு செய்தால் வேறு யார் அவனுக்குக் கீழ்ப்படியப் போகிறார்கள்? பூமியிலிருப்பவர்களில் என்னை அவன் நம்பிக்கைகுரியவனாக ஆக்கியுள்ளான் (நான் வானிலிருப்பவர்களின் நம்பிக்கைக்கும் உரியவன்) ஆனால், நீங்கள் என்னை நம்ப மறுக்கின்றீர்களே?' என்று கேட்டார்கள். அப்போது மக்களில் ஒருவர் அவனைக் கொன்றுவிட அனுமதி கேட்டார் - அவர் காலித் இப்னு வலீத்(ரலி) என்றே கருதுகிறேன் - ஆனால், நபி(ஸல்) அவர்கள் அவரைத் தடுத்துவிட்டார்கள்.

அந்த மனிதன் திரும்பிச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள்,'இந்த மனிதனின் பரம்பரையிலிருந்து ஒரு சமுதாயத்தார் தோன்றுவர். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் தொண்டைக் குழிகளைத் தாண்டி (இதயத்திற்குள்) செல்லாது வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (அதன் மீது எய்யப்பட்ட) அம்பு வெளியேறிவிடுவதைப் போன்று அவர்கள் இஸ்லாத்திலிருந்து வெளியேறி விடுவார்கள். இஸ்லாமியர்களையே அவர்கள் கொலை செய்வார்கள் சிலை வணங்கிகளைவிட்டுவிடுவார்கள். நான் அவர்க(ள் வாழும் நாட்க)ளை அடைந்தால்'ஆது' கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நிச்சயம் நான் அழிப்பேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7433 அபூ தர் அல்ஃம்ஃபாரீ(ரலி) அறிவித்தார்.

நான் நபி(ஸல்) அவர்களிடம்'சூரியன், தான் நிலைகொள்ளும் இடத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கின்றது'' எனும் (திருக்குர்ஆன் 36:38 வது) இறைவசனத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள்,'அதன் நிலைகொள்ளும் இடம் அரியாசனத்திற்குக் கீழே உள்ளது'' என்றார்கள்.

''அந்த நாளில் சில முகங்கள் (மம்ழ்ச்சியால்) பூரிப்படைந்திருக்கும். தம் இறைவனை (கூர்ந்து) பார்த்துக் கொண்டிருக்கும்' எனும் (திருக்குர்ஆன் 75:22, 23 ஆகிய) வசனங்கள்.

ஹதீஸ் 7434 ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அப்போது (அந்த) பௌர்ணமி இரவில் அவர்கள் முழுநிலாவைக் கூர்ந்து பார்த்தார்கள்.'இந்த நிலாவை நீங்கள் நெருக்கடியின்றிக் காண்பதைப் போன்றே உங்களுடைய இறைவனையும் (மறுமையில்) காண்பீர்கள். எனவே, சூரியன் உதயமாவதற்கு முன்புள்ள தொழுகையிலும் சூரியன் மறைவதற்கு முன்புள்ள தொழுகையிலும் (உறக்கம் போன்ற) எதற்கும் ஆட்படாமல் இருக்க உங்களால் முடியும்

என்றால் அவ்வாறே செய்யுங்கள் (உங்களுடைய இறைவனை நீங்கள் தரிசிக்கலாம்)‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 7435 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

நீங்கள் உங்களுடைய இறைவனை (மறுமையில்) கண்கூடாகக் காண்பீர்கள்.

என ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7436 ஜரீர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் ஒரு பௌர்ணமி இரவில் எங்களிடம் புறப்பட்டு வந்து'நீங்கள் இந்த முழு நிலாவை நெருக்கடியின்றி காண்பதைப் போன்றே உங்களுடைய இறைவனை மறுமைநாளில் காண்பீர்கள்‘‘ என்றார்கள்.

ஹதீஸ் 7437 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“இறைத்தூதர் அவர்களே! மறுமை நாளில் நாங்கள் எங்கள் இறைவனைக் காண்போமா?' என்று மக்கள் (நபி(ஸல்) அவர்களிடம்) கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'பௌர்ணமி இரவில் முழு நிலாவைக் காண்பதில் உங்களுக்குச் சிரமம் இருக்குமா?' என்று கேட்டார்கள். மக்கள்'இல்லை இறைத்தூதர் அவர்களே!”என்றார்கள். நபி(ஸல்) அவர்கள்,'மேகம் மறைக்காத சூரியனைக் காண்பதில் உங்களுக்குச் சிரமம் இருக்குமா?' என்று கேட்டார்கள். மக்கள்,'இல்லை இறைத்தூதர் அவர்களே!”என்று பதிலளித்தனர். நபி(ஸல்) அவர்கள் சொன்னார்கள்:

இவ்வாறுதான் உங்களுடைய இறைவனை நீங்கள் (மறுமை நாளில்) காண்பீர்கள். அல்லாஹ் மறுமைநாளில் மனிதர்களை ஒன்றுகூட்டி,'(உலகத்தில்) யார் எதை வணங்கிக் கொண்டிருந்தாரோ அவர் அதைப் பின்பற்றிச் செல்லட்டும்‘‘ என்று கூறுவான். எனவே, சூரியனை வணங்கிக் கொண்டிருந்தவர்கள் சூரியனைப் பின்தொடர்வார்கள். சந்திரனை வணங்கிக் கொண்டிருந்தவர்கள் சந்திரனைப் பின்தொடர்வார்கள். ஷைத்தான்களை வழிபட்டு வந்தவர்கள் ஷைத்தான்களைப் பின்தொடர்வார்கள். இறுதியில் இந்தச் சமுதாயத்தார் மட்டும் எஞ்சியருப்பார்கள். அவர்களிடையே'பரிந்துரைப்போர்' அல்லது'நயவஞ்சகர்கள்' இருப்பார்கள். அப்போது அல்லாஹ் அவர்களிடம் (அவர்கள் அறிந்திராத அவர்களிடம் (அவர்கள் அறிந்திராத தோற்றத்தில்) வந்து,'நானே உங்களுடைய இறைவன்‘‘ என்று கூறுவான். அதற்கு அவர்கள்,'எங்கள் இறைவன் எங்களிடம் வரும் வரை நாங்கள் இங்கேயே இருப்போம் நீ எங்கள் இறைவன் அல்லன்). அவன் எங்களிடம் வந்தால் அவனை நாங்கள் அறிந்துகொள்வோம்‘‘ என்று கூறுவர்.

அப்போது அல்லாஹ் அவர்களிடம் அவர்கள் அறிந்து கொள்ளும் தோற்றத்தில் வந்து,'நானே உங்களுடைய இறைவன்‘‘ என்று சொல்வான். அப்போது அவர்கள்,'நீதான் எங்கள் இறைவன்‘‘ என்று கூறியபடி அவனைப் பின்தொடர்வார்கள். அங்கு நரகத்திற்கு மேலே பாலம் அமைக்கப்படும். அப்போது நானும் என் சமுதாயத்தாருமே அ(ந்தப் பாலத்)தை முதல் முதலாகக் கடப்போம். அன்றைய தினம் இறைத் தூதர்கள் மட்டுமே பேசுவார்கள். அப்போது இறைத்தூதர்களின் பிரார்த்தனை'(இறைவா!) காப்பாற்று! காப்பாற்று!”என்பதாகவே இருக்கும். கருவேல மரத்தின் முற்களைப் போன்ற கொக்கிகள் நரகத்தில் மாட்டப்பட்டிருக்கும். கருவேல மரத்தைப் பார்த்திருக்கிறீர்களா?' என்று கேட்டார்கள். மக்கள்,'ஆம், இறைத்தூதர் அவர்களே!' என்று பதிலளித்தனர். அந்தக் கொக்கிகள் கருவேல மர முள்ளைப் போன்றுதானிருக்கும்.

ஆயினும், அதன் பருமனை அல்லாஹ்வைத் தவிர வேறெருவரும் அறியமாட்டார்கள். அந்தக் கொக்கிகள் மக்களை அவர்களின் (தீய) செயல்களுக்கேற்ப கவ்விப் பிடிக்கும். மக்களில் சிலர் தம் செயலினால் அழிந்து விடுவார்கள். இன்னும் சிலர் (கொக்கியின் பிடி தளர்ந்து நரகத்தில்) விழுந்து விடுவார்கள். மற்றச் சிலர் வேறு நிலையில் இருப்பார்கள்.

பிறகு இறைவன் காட்சியளித்து, தன் அடியார்களிடையே தீர்ப்பளித்து முடித்த பின், நரகவாசிகளில் தான் நாடிய சிலரை தன் கருணையால் (நரகத்திலிருந்து) வெளியேற்ற விரும்புவான். எனவே, அல்லாஹ்வுக்கு எதையும் இணைகற்பிக்காமல் வாழ்ந்தவர்களை நரகத்திலிருந்து வெளியேற்றிவிடுமாறு வானவர்களுக்கு அவன் கட்டளையிடுவான். வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை (லா இலாஹ இல்லல்லாஹ்) என உறுதி கூறியவர்களில் யாருக்குத் தான் கருணை புரிய வேண்டுமென நாடுகிறானோ அவர்களை (நரகத்திலிருந்து வெளியேற்றிடுமாறு ஆணையிடுவான்). நரகத்திலிருக்கும் அவர்களை (அவர்கள் செய்த) சஜ்தாவின் (சிரவணக்கத்தின்) அடையாளத்தை வைத்து வானவர்கள் இனங் கண்டுகொள்வார்கள். ஆதமின் மகனின் (-மனிதனின்) சஜ்தா அடையாள(ம் உள்ள இட)த்தைத் தவிர அவனை (முழுமையாக) நரகம் தீண்டும். (ஆனால்,) சஜ்தா அடையாளத்தைத் தீண்டக் கூடாதென நரகத்திற்கு இறைவன் தடை விதித்துள்ளான். எனவே, அவர்கள் அங்கமெல்லாம் கரிந்துவிட்டநிலையில் நரகத்திலிருந்து வெளியேறுவார்கள். அப்போது அவர்களின் மீது ஜீவ நீர் (-மாஉல் ஹயாத்) ஊற்றப்படும். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று (புதுப் பொலிவுடன்) நிறம் மாறிவிடுவார்கள்.

பின்னர் அடியார்களிடையே அல்லாஹ் தீர்ப்பளித்து முடிக்கும்போது நரகத்தை முன்னோக்கியபடி ஒருவர் எஞ்சியிருப்பார். அவர்தாம் சொர்க்கத்தில் நுழையக் காத்திருக்கும் கடைசி நரகவாசியாவார். அவர், 'என் இறைவா! நரகத்தைவிட்டு என் முகத்தை (வேறு பக்கம்) திருப்புவாயாக! அதன் (வெப்பக்) காற்றால் எனக்கு மூச்சடைக்கிறது அதன் ஜுவாலை என்னைக் கரித்துவிட்டது'' என்று கூறுவார். பின்னர் எதைச் சொல்லி அவர் பிரார்த்திக்க வேண்டுமென அல்லாஹ் நாடுவானோ அதைச் சொல்லி அவர் பிரார்த்திப்பார்.

பிறகு அல்லாஹ் (அவரிடம்), 'நீ கேட்பதை நான் கொடுத்தால் இஃதல்லாத வேறொன்றை நீ என்னிடம் கேட்கக்கூடும் அல்லவா?' என்பான். அதற்கு அவர், 'இல்லை. உன் கண்ணியத்தின் மீதாணையாக! இதைத் தவிர வேறெதையும் நான் உன்னிடம் கேட்க மாட்டேன்'' என்று கூறி, இறைவன் நாடிய வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையும் அவர் தம் இறைவனிடம் வழங்குவார். அப்போது அல்லாஹ் நரகத்தைவிட்டு அவரின் முகத்தை (வேறு பக்கம்) திருப்பிவிடுவான். அவர் சொர்க்கத்தை முன்னோக்கி பார்வையைச் செலுத்தும்போது அல்லாஹ் நாடிய நேரம் வரை அவர் அமைதியாக இருப்பார். பிறகு, 'என் இறைவா! சொர்க்கத்தின் வாசல் வரை என்னைக் கொண்டு செல்வாயாக!"என்று கூறுவார். அதற்கு அல்லாஹ் அவரிடம், 'உனக்கு வழங்கப்பட்ட இதைத் தவிர வேறெதையும் ஒருபோதும் என்னிடம் நீ கேட்கமாட்டாய் என உறுதிமொழிகளையும் வாக்குறுதிகளையும் நீ வழங்கவில்லையா? மனிதா! உனக்குக் கேடுதான். உன்னுடைய ஏமாற்று வேலைதான் என்ன?' என்று கூறுவான். அதற்கு அவர், 'இல்லை. உன் கண்ணியத்தின் மீதாணையாக! இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்' எனக் கூறி, அவன் நாடிய வாக்குறுதிகளையும் உறுதிமொழிகளையும் (இறைவனிடம்) வழங்குவார்.

எனவே, அல்லாஹ் அவரை சொர்க்கத்தின் வாசல் வரை கொண்டு செல்வான். சொர்க்க வாசலில் அவர் நிற்கும்போது சொர்க்கவாசல் அவருக்காகத் திறக்கும். அப்போது அவர் அதிலுள்ள உல்லாச சுகங்களைப் பார்த்தவாறு அல்லாஹ் நாடிய வரை அமைதியாக இருப்பார்.

பிறகு,'என் இறைவா! என்னை சொர்க்கத்திற்குள் அனுப்புவாயாக!"என்று கூறுவார். அப்போது அல்லாஹ்,'உனக்கு வழங்கப்பட்டதைத் தவிர வேறெதையும் கேட்கமாட்டேன் என்று கூறி வாக்குறுதிகளையும் உறுதி மொழிகளையும் நீ வழங்கவில்லையா?' என்று கேட்டுவிட்டு,'மனிதா! உனக்குக் கேடுதான். உன்னுடைய ஏமாற்று வேலைதான் என்ன?' என்று கூறுவான்.

அதற்கு அவர்,'என் இறைவா! உன் படைப்புகளிலேயே நற்கதியற்றவனாய் நான் ஆகிவிடக் கூடாது" என்று பிரார்த்தித்துக் கொண்டேயிருப்பார். இறுதியில் அவரைக் கண்டு அல்லாஹ் சிரித்துவிடுவான். அவரைக் கண்டு சிரித்ததும்,'சொர்க்கத்தில் நுழைந்து கொள்" என்று அவரிடம் அல்லாஹ் கூறுவான். சொர்க்கத்திற்குள் அவர் நுழைந்த பின்'நீ (விரும்பிய) அதை ஆசைப்படலாம்" என்று அவரிடம் இறைவன் சொல்வான். அவ்வாறே அவர் ஆசைப்பட்டு தம் இறைவனிடம் கேட்பார். இறுதியில் அல்லாஹ்வே அவருக்கு (ஆசைப்பட வேண்டியவற்றை ஒவ்வொன்றாகச் சொல்லி)'இன்னதை இன்னதை நீ ஆசைப்படு" என்று நினைவுபடுத்துவான். கடைசியில் அந்த மனிதரின் ஆசைகள் எல்லாம் அடங்கும். (அப்போது) அல்லாஹ்,'(நீ கேட்ட) இதுவும் உனக்குக் கிடைக்கும். இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்று சொல்வான்.

ஹதீஸ் 7438 அதாஉ இப்னு யஸீத்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் மேற்கண்ட ஹதீஸை அறிவித்தபோது அவர்களுடன் அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களும் இருந்தார்கள். அன்னார் அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் அறிவித்த இந்த ஹதீஸிற்கு எந்த மறுப்பும் தெரிவிக்கவில்லை. இறுதியில் அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்,'இதுவும் உனக்குக் கிடைக்கும் இதைப் போன்று இன்னொரு மடங்கும் உனக்குக் கிடைக்கும் என்று அல்லாஹ் கூறுவான்: என அறிவித்தபோது தான் அபூ ஸயீத்(ரலி) அவர்கள் (குறுக்கிட்டு,)'இதுவும் இதைப் போன்று பத்து மடங்கும் உனக்குக் கிடைக்கும்" என்றல்லவா ஹதீஸ் இருக்கிறது அபூ ஹுரைராவே!"என்று கேட்டார்கள். அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்,'நான் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து'உனக்கு இதுவும் இதைப் போன்ற இன்னொரு மடங்கும் கிடைக்கும்' என்று கூறினார்கள் எனவே மனனம் செய்துள்ளேன்" என்றார்கள். அதற்கு அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள்,'நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து'இதுவும் இதைப் போன்று பத்து மடங்குகளும் உனக்குக் கிடைக்கும்' என்ற சொல்லையே மனனம் செய்துள்ளேன் என உறுதி கூறுகிறேன்" என்றார்கள். அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்'அந்த மனிதர் தாம் சொர்க்கத்தில் இறுதியாக நுழையும் மனிதராவார்" என்றார்கள்.

ஹதீஸ் 7439 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நாங்கள்,'இறைத்தூதர் அவர்களே! மறுமை நாளில் எங்கள் இறைவனை நாங்கள் காண்போமா?' என்று (நபி(ஸல்) அவர்களிடம்) கேட்டோம். அதற்கு அவர்கள்,'(மேகமூட்டமில்லாது) வானம் தெளிவாக இருக்கையில் சூரியனையும் சந்திரனையும் பார்க்க நீங்கள் (முண்டியத்துக் கொண்டு) சிரமப்படுவீர்களா?' என்று கேட்டார்கள். நாங்கள்,'இல்லை" என்று பதிலளித்தோம். இவ்விரண்டையும் பார்க்க நீங்கள் சிரமப்படாததைப் போன்றே அந்த நாளில் உங்களுடைய இறைவனைக் காணவும் நீங்கள் சிரமப்பட மாட்டீர்கள்" என்று கூறிவிட்டு (பின்வருமாறு) விளக்கினார்கள்.

(மறுமை நாளில்) அழைப்பாளர் ஒருவர்,'ஒவ்வொரு சமுதாயத்தாரும் தாம் வணங்கிக் கொண்டிருந்தவர்களைப் பின்தொடர்ந்து செல்லட்டும்" என்று அழைப்புவிடுப்பார். அப்போது

சிலுவை வணங்கிகள் தங்கள் சிலுவையுடனும், சிலை வணங்கிகள் தங்கள் சிலைகளுடனும், ஒவ்வொரு (பொய்த்) தெய்வ வழிபாட்டார்கள் தத்தம் கடவுள்களுடனும் செல்வார்கள். முடிவில் அல்லாஹ்வை வணங்கிக்கொண்டு நன்மைகளும் புரிந்து கொண்டிருந்த நல்லவர்கள், அல்லது (அல்லாஹ்வையும் வணங்கிக் கொண்டு பாவங்களும் புரிந்து வந்த) பாவிகள், மேலும் வேதக்காரர்களில் மிஞ்சியவர்கள் மட்டுமே எஞ்சியிருப்பர். பின்னர் நரகம் கொணரப்பட்டுக் கானலைப் போன்று அவர்களுக்குக் காட்டப்படும். அப்போது யூதர்களிடம், 'நீங்கள் எதை வணங்கிக் கொண்டிருந்தீர்கள்?' என்று கேட்கப்படும் அதற்கு அவர்கள், 'நாங்கள் அல்லாஹ்வின் மகன் உஸைர் அவர்களை வணங்கிக் கொண்டிருந்தோம்'' என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், 'நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள். அல்லாஹ்வுக்கே மனைவியோ மக்களோ இருக்கவில்லை'' என்று சொல்லப்படும். பிறகு அவர்களிடம், 'இப்போது நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்?' என்று கேட்கப்படும். அதற்கவர்கள், 'எங்களுக்கு (குடிப்பதற்கு நீர்) புகட்டுவாயாக!"என்பார்கள். அப்போது (அவர்களிடம் கானலைப் போன்று நரகம் காட்டப்பட்டு), 'குடியுங்கள்'' என்று கூறப்படும். (அதைக் குடிக்க முனையும்போது) அவர்கள் நரகத்தில் விழுந்து விடுவார்கள். பின்னர் கிறிஸ்தவர்களிடம், 'நீங்கள் எதை வணங்கிக் கொண்டிருந்தீர்கள்? என்று கேட்கப்படும் அதற்கு அவர்கள், 'அல்லாஹ்வின் மகன் மஸீஹை (ஈசாவை) நாங்கள் வணங்கிக் கொண்டிருந்தோம்'' என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம், 'நீங்கள் பொய்யுரைக்கிறீர்கள் அல்லாஹ்வுக்கு மனைவியோ மக்களோ இருக்கவில்லை'' என்று கூறப்பட்ட பின்'நீங்கள் என்ன விரும்புகிறீர்கள்?' என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், 'நீ எங்களுக்கு (நீர்) புகட்டுவதையே நாங்கள் விரும்புகிறோம்'' என்று பதிலளிப்பார்கள். அப்போது அவர்களிடம் (கானலைப் போன்று காட்சி தரும் நரகத்தைக் காட்டி)'குடியுங்கள்!"என்று கூறப்படும். அப்போது நரகத்தில் அவர்களும் விழுந்துவிடுவார்கள்.

இறுதியில் அல்லாஹ்வை வணங்கிக் (கொண்டு நன்மைகளும் புரிந்து) கொண்டிருந்த நல்லோர், அல்லது (அல்லாஹ்வையும் வணங்கிக் கொண்டு பாவங்களும் புரிந்து வந்த) தீயோர் மட்டும் எஞ்சியிருப்பர். அவர்களிடம்'மக்கள் (அனைவரும் தத்தம் தெய்வங்களுக்குப் பின்னால்) சென்றார்களே! நீங்கள் மட்டும் ஏன் இங்கேயே இருந்துகொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்கப்படும். அதற்கு அவர்கள், '(உலகத்தில்) நாங்கள் (வாழ்க்கையின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக) இந்த மக்களிடம் அதிக அளவில் தேவையுள்ளவர்களாக இருந்தும் (அவர்களுடன் ஒட்டி உறவாடிக் கொண்டிராமல்) அவர்களைப் பிரிந்திருந்தோம். (இப்போது மட்டும் அவர்கள் பின்னால் நாங்கள் செல்வோமா?) இங்கு ஓர் அழைப்பாளர்''ஒவ்வொரு சமுதாயத்தாரும் (உலக வாழ்வில்) தாம் வணங்கிக் கொண்டிருந்த அவர்களுடன் சேர்ந்துகொள்ளட்டும் என்று அழைக்கக் கேட்டோம். நாங்கள் (வணங்கிக் கொண்டிருந்த) எங்கள் இறைவனையே நாங்கள் (இத்தருணத்தில்) எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்'' என்று கூறுவார்கள். அப்போது சர்வ வல்லமை படைத்தவ(னான இறைவ)ன், அவனைப் பற்றி அவர்கள் எண்ணி வைத்திருந்த தோற்றம் அல்லாத வேறொரு தோற்றத்தில் அவர்களிடம் முதல் முறையாக வந்து, 'நானே உங்கள் இறைநம்பிக்கையாளர்கள், 'நீயே எங்கள் இறைவன்'' என்று சொல்வார்கள். அப்போது இறைவனிடம் இறைத்தூதர்களைத் தவிர வேறெவரும் பேச மாட்டார்கள். அப்போது, 'அவனை இனங்கண்டுகொள்ள உங்களுக்கும் அவனுக்குமிடையே ஏதேனும் அடையாளம் உண்டா?' என்று (ஒருவர்) கேட்பார். அதற்கு இறை நம்பிக்கையாளர்கள், '(இறைவனி) கால் (பாதம்) தான்'' என்று கூறுவார்கள். உடனே அல்லாஹ் தன்னுடைய காலை வெளிப்படுத்துவான். இறைநம்பிக்கையாளர்கள் யாவரும் அவனுக்கு சிர

வணக்கம் (சஜ்தா) செய்வார்கள். முகஸ்துதிக்காகவும் பாராட்டுக்காகவும் அல்லாஹ்வுக்கு சிரம் பணிந்து (தொழுது) கொண்டிருந்தவர்கள் மட்டுமே அப்போது எஞ்சியிருப்பார்கள் அவர்கள் சிரவணக்கம் செய்ய முற்படுவார்கள். ஆனால், அவர்களின் முதுகு (குனிய முடியாதவாறு) ஒரே பலகையைப் போன்று மாறிவிடும். (அவர்களால் சிரம் வணக்கம் செய்ய முடியாது.)78

பிறகு பாலம் கொண்டு வரப்பட்டு, நரகத்தின் மேலே கொண்டுவைக்கப்படும். (இவ்வாறு நபி(ஸல்) அவர்கள் சொன்னபோது,) நாங்கள்,'இறைத்தூதர் அவர்களே! அது என்ன பாலம்?' என்று கேட்டோம். நபி(ஸல்) அவர்கள்,'அது (கால்கள்) வழுக்குமிடம் சறுக்குமிடம் அதன் மீது இரும்புக் கொக்கிகளும் அகன்ற நீண்ட முற்களும் இருக்கும். அந்த முட்கள் வளைந்திருக்கும்.'நஜ்த்' பகுதியில் முளைக்கும் அவை'கருவேல மர முற்கள்' எனப்படும்'' என்றார்கள். (தொடர்ந்து கூறினார்கள்:) இறைநம்பிக்கையாளர் அந்தப் பாலத்தை கண்சிமிட்டலைப் போன்றும், மின்னலைப் போன்றும், காற்றைப் போன்றும், பந்தயக் குதிரைகள் மற்றும் ஒட்டகங்களைப் போன்றும் (விரைவாகக்) கடந்து விடுவார். எந்தக் காயமுமின்றி தப்பிவிடுவோரும் உண்டு. காயத்துடன் தப்புவோரும் உண்டு. மூர்ச்சையாகி நரக நெருப்பில் விழுவோரும் உண்டு. இறுதியில் அவர்களில் கடைசி ஆள் கடுமையாக இழுத்துச் செல்லப்படுவார். பின்னர், தாம் தப்பித்துவிட்டோம் என்பதை இறைநம்பிக்கையாளர்கள் காணும்போது தம் சகோதரர்களுக்காக சர்வ அதிகாரமும் படைத்த (இறை)வனிடம் அன்று அவர்கள் கடுமையாக மன்றாடுவார்கள். அந்த அளவிற்கு (இம்மையில்) உங்களுக்குத் தெளிவாகிவிட்ட உரிமைக்காகக் கூட நீங்கள் என்னிடம் வலியுறுத்திக் கேட்டிருக்கமாட்டீர்கள். அப்போது அவர்கள்,'எங்கள் இறைவா! (இவர்கள்) எங்களுடன் தொழுது கொண்டிருந்தார்கள் எங்களுடன் நோன்பு நோற்றார்கள் எங்களுடன் (மற்ற) நல்லறங்கள் புரிந்து கொண்டிருந்தார்கள் (எனவே இவர்களை நீ காப்பாற்றுவாயாக)'' என்று வேண்டுவார்கள். அப்போது உயர்ந்தோன் அல்லாஹ்,'நீங்கள் சென்று, எவருடைய உள்ளத்தில் ஒரு பொற்காசு (தீனார்) அளவுக்கு இறைநம்பிக்கை இருக்கக் காண்கின்றீர்களோ அவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள்'' என்று கூறுவான். அவ்வாறே அவர்களும் (நரகவாசிகளிடம்) செல்வார்கள். அவர்களின் முகங்களைக் கரிக்கக் கூடாதென நரகத்திற்கு அல்லாஹ் தடை விதித்துவிடுவான். அப்போது (அந்த நரகவாசிகளில்) சிலர் தம் பாதம் நரகத்திற்குள் மறையும் அளவிற்கு, பாதி கால்கள் மறையும் அளவிற்கு நரம்முள் கிடப்பார்கள். உடனே அவர்கள் தமக்கு அறிமுகமானவர்களை (நரகத்திலிருந்து) வெளியேற்றுவார்கள். பிறகு மீண்டும் (இறைவனிடம்) செல்வார்கள்.'எவருடைய உள்ளத்தில் பாதி பொற்காசு அளவுக்கு இறைநம்பிக்கை உள்ளதெனக் காண்கிறீர்களோ அவர்களையும் வெளியேற்றுங்கள்'' என்பான். அவ்வாறே அவர்கள் தமக்குத் தெரிந்தவர்களை வெளியேற்றிவிட்டு மறுபடியும் (இறைவனிடம்) வருவார்கள். அப்போது அவன்,'எவருடைய உள்ளத்தில் கடுகளவு இறைநம்பிக்கை இருக்கக் கண்டீர்களோ அவர்களையும் (நரகத்திலிருந்து) வெளியேற்றுங்கள்'' என்று சொல்வான். அவ்வாறே அவர்கள் (வந்து) தமக்கு அறிமுகமானவர்களை (அதிலிருந்து) வெளியேற்றுவார்கள்.

இதன் அறிவிப்பாளரான அபூ ஸயீத்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

(இதை) நீங்கள் நம்பாவிட்டால்,'நிச்சயமாக அல்லாஹ் எவருக்கும் அணுவளவு கூட அநீதி இழைக்கமாட்டான். அணுவளவு நன்மை செய்திருந்தாலும் அதை இரட்டிப்பாக்குவான்'' எனும் (திருக்குர்ஆன் 04:40 வது) இறைவசனத்தை ஓதிக்கொள்ளுங்கள்.

இவ்வாறு இறைத்தூதர்கள், வானவர்கள், இறைநம்பிக்கையாளர்கள் ஆகியோர் (தத்தம் தகுதிக்கேற்ப) பரிந்துரை செய்வார்கள். அப்போது சர்வ அதிகாரம் படைத்த (இறை)வன்'(இனி)

என் பரிந்துரை (மட்டுமே) எஞ்சியிருக்கிறது'' என்று கூறிவிட்டு, நரகத்திலிருந்து ஒரு கைப்பிடி அளவு மக்களை அள்ளியெடுத்து அவர்களை வெளியேற்றுவான். அவர்கள் கரிந்து போயிருப்பார்கள். எனவே, சொர்க்க வாசலிலுள்ள ஒரு நதியில் அவர்கள் போடப்படுவார்கள். அதற்கு'ஜீவ நீர்' ('மாஉல் ஹயாத்') என்று பெயர். உடனே அவர்கள் சேற்று வெள்ளத்தில் விதைப் பயிர் முளைப்பதைப் போன்று நதியின் இரண்டு மருங்கிலும் முளைத்து (நிறம் மாறி) விடுவார்கள். பாறையில் ஓரத்திலும் மரத்தின் ஓரத்திலும் இந்தப் பயிரை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதில் வெயில் பக்கமாக இருப்பது பச்சையாகவும், நிழல் பக்கமாக இருப்பது வெள்ளையாகவும் இருக்கும்.

ஆக, இவர்கள் (அந்த நதியிலிருந்து) வெளியேறும்போது முத்தைப் போன்று (புதுப் பொலிவுடன்) வெளியேறுவார்கள். அவர்களின் கழுத்தில் (நரகத்திலிரந்து விடுதலை பெற்றவர்கள் என்பதற்கான) முத்திரை பதிக்கப்படும். பிறகு அவர்கள் சொர்க்கத்தினுள் நுழைவார்கள். அப்போது சொர்க்கவாசிகள் (இவர்களைப் பார்த்து),'இவர்கள் பேரருளாளனால் விடுதலை செய்யப்பட்டவர்கள் இவர்கள் எந்த நற்செயலும் புரியாமல், எந்த நன்மையும் ஏற்கெனவே செய்திராமல் அவனே இவர்களைச் சொர்க்கத்தினுள் பிரவேசிக்கச் செய்தான்'' என்று கூறுவர். பிறகு (அவர்களிடம்) நீங்கள் காண்கிறீர்களே இதுவும் உங்களுக்கு உண்டு இதைப் போன்று இன்னொரு மடங்கும் உங்களுக்கு உண்டு'' என்று (நற்செய்தி) சொல்லப்படும்.

ஹதீஸ் 7440 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமை நாளில் இறைநம்பிக்கையாளர்கள் கவலைப்படும் அளவுக்கு நிறுத்திவைக்கப்படுவார்கள். அப்போது அவர்கள்,'(அதி பயங்கரமான) இந்த இடத்திலிருந்து நம்மை விடுவிக்க நம் இறைவனிடம் பரிந்துரைக்கும் படி (யாரையாவது) நாம் கேட்டுக் கொண்டால் என்ன?' என்று பேசிக் கொள்வார்கள். பிறகு அவர்கள் ஆதம் (அலை) அவர்களிடம் சென்று,'நீங்கள் மனிதர்களின் தந்தை ஆதம் ஆவீர் அல்லாஹ் தன்னுடைய கையால் உங்களைப் படைத்தான் தன்னுடைய சொர்க்கத்தில் உங்களை குடியிருக்கச் செய்தான் தன்னுடைய வானவர்களை உங்களுக்குச் சிரம் பணியச் செய்தான் எல்லாப் பொருட்களின் பெயர்களையும் உங்களுக்கு அவன் கற்பித்தான். (எனவே,) இந்த(ச் சோதனையான) கட்டத்திலிருந்து எங்களை விடுவிப்பதற்காக உங்களுடைய இறைவனிடத்தில் எங்களுக்காகப் பரிந்துரை செய்யுங்கள்'' என்று கோருவர். அதற்கு ஆதம்(அலை) அவர்கள்,'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை'' என்று கூறிவிட்டு, உண்ணக் கூடாதெனத் தடை விதிக்கப்பட்டிருந்த மரத்திலிருந்து புசித்துவிட்டதால் தாம் புரிந்த தவற்றினை அவர்கள் எடுத்துக் கூறுவார்கள்.'(எனக்குப் பின்) பூமியிலுள்ளவர்களுக்கு இறைவனால் நியமிக்கப்பட்ட (முக்கியமான) இறைத்தூதர்களில் முதலாமவரான நூஹ்(அலை) அவர்களிடம் செல்லுங்கள்'' என்று கூறுவார்கள்.

உடனே இறைநம்பிக்கையாளர்கள் நூஹ்(அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அன்னாரும்'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை'' என்று கூறி, அறியாமல் தம் இறைவனிடம் வேண்டியதால் ஏற்பட்ட தம் தவற்றினை அவர்கள் நினைவுகூர்வார்கள். பிறகு,'நீங்கள் பேரருளாள(ன் இறைவ)னின் உற்ற நண்பர் இப்ராஹீம்(அலை) அவர்களிடம் செல்லுங்கள்'' என்று சொல்வார்கள். உடனே இறை நம்பிக்கையாளர்கள் இப்ராஹீம்(அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அவர்களும்,'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை'' என்று சொல்லிவிட்டு, தாம் (உலக வாழ்வில்) சொன்ன மூன்று பொய்களை எடுத்துக்கூறுவார்கள். பிறகு,'நீங்கள் மூஸா(அலை) அவர்களிடம் செல்லுங்கள். அவருக்கு அல்லாஹ் தவ்ராத் (வேதத்)தை வழங்கி, அவருடன் உரையாடி, தன்னுடன் கலந்துரையாடும்

அளவுக்கு நெருக்கம் அளித்த அடியாராவார் அவர்'' என்று சொல்வார்கள். உடனே இறை நம்பிக்கையாளர்கள் மூஸா(அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது அன்னாரும்,'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை'' என்று சொல்லிவிட்டு, (உலகில்) ஒருவரைக் கொலை செய்துவிட்டதால் தாம் செய்த குற்றத்தை எடுத்துக்கூறுவார்கள். பிறகு'நீங்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதருமான, அவனுடைய ஆவியும் வார்த்தையுமான ஈசா(அலை) அவர்களிடம் செல்லுங்கள்'' என்று மூஸா கூறுவார்கள். உடனே இறைநம்பிக்கையாளர்கள் ஈசா(அலை) அவர்களிடம் செல்வார்கள். அவர்களும்'(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை இறைவனால் முன் பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட அடியாரான முஹம்மத்(ஸல்) அவர்களிடம் செல்லுங்கள்'' என்று சொல்வார்கள்.

உடனே இறைநம்பிக்கையாளர்கள் என்னிடம் வருவார்கள். அப்போது நான் என் இறைவனை அவனுடைய இல்ல(மான சொர்க்க)த்தில் சந்திக்க அனுமதி கோருவேன். எனக்கு அதற்கான அனுமதி வழங்கப்படும். நான் என் இறைவனைக் காணும்போது சஜ்தாவில் விழுந்துவிடுவேன். தான் நாடிய வரை அல்லாஹ் என்னை (அப்படியே)விட்டுவிடுவான். பிறகு எவன்,'எழுங்கள், முஹம்மதே! சொல்லுங்கள் செவியேற்கப்படும். பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும். கேளுங்கள் உங்களுக்குத் தரப்படும்'' என்று கூறுவான். அப்போது நான் என்னுடைய தலையை உயர்த்தி இறைவன் எனக்குக் கற்றுத்தரும் புகழ் மொழிகளைக் கூறி என் இறைவனைப் போற்றிப் புகழ்வேன். பிறகு நான் பரிந்துரை செய்வேன். அப்போது இறைவன் (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்யலாம் என்பதை வரையறுத்து) எனக்கு வரம்பு விதிப்பான். பின்னர் நான் (அவனுடைய இல்லத்திலிருந்து) வெளியேறி அவர்களைச் சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன். -கத்தாதா(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:'பின்னர் நான் (அவனுடைய இல்லத்திலிருந்து) புறப்பட்டுச் சென்று (நரகத்திலிருந்து) அவர்களை வெளியேற்றி, சொர்க்கத்திற்குள் அனுப்பிவைப்பேன்'' என்றும் அனஸ்(ரலி) அவர்கள் கூற கேட்டேன்.

-பிறகு மீண்டும் (இரண்டாம் முறையாக) என் இறைவனை அவனுடைய இல்லத்தில் சந்திக்க நான் அனுமதி கோருவேன். எனக்கு அதற்கான அனுமதி வழங்கப்படும். நான் இறைவனைக் காணும்போது சஜ்தாவில் விழுவேன். தான் நாடிய வரை அல்லாஹ் என்னை (அப்படியே)விட்டுவிடுவான். பின்னர்'முஹம்மதே! எழுங்கள். சொல்லுங்கள் செவியேற்கப்படும் பரிந்துரை செய்யுங்கள் ஏற்கப்படும். கேளுங்கள் தரப்படும்'' என்று கூறுவான் அப்போது நான் என்னுடைய தலையைத் தூக்கி, இறைவன் எனக்குக் கற்றுத் தரும் புகழ்மாலைகளைக் கூறி அவனைப் போற்றிப் புகழ்வேன். பின்னர் நான் பரிந்துரைப்பேன். (நான் யார் யாருக்குப் பரிந்துரை செய்ய வேண்டுமென) எனக்கு அவன் வரம்பு விதிப்பான். அப்போது நான் (அவனுடைய இல்லத்திலிருந்து) வெளியேறிச் சென்று அவர்களை சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன்.

''நான் வெளியேறிச் சென்று, அவர்களை நரகத்திலிருந்து வெளியேற்றி சொர்க்கத்திற்கு அனுப்பி வைப்பேன் என்றும் அனஸ்(ரலி) அவர்கள் கூறியதை கேட்டேன்'' என கத்தாதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

பின்னர் மூன்றாம் முறையாக மறுபடியும் என் இறைவனை அவனுடைய இல்லத்தில் சந்திக்க நான் அனுமதி கேட்பேன். எனக்கு அந்த அனுமதி வழங்கப்படும். இறைவனை நான் காணும்போது சிரவணக்கத்தில் விழுவேன். தான் நாடிய வரை (அப்படியே) என்னை அல்லாஹ்விட்டுவிடுவான். பிறகு'முஹம்மதே! எழுங்கள். செய்க் ஏற்கப்படும். கோருக் அது

தரப்படும்'' என இறைவன் கூறுவான். அப்போது நான் எழுந்து, என் இறைவன் எனக்குக் கற்றுத்தரும் புகழ்மாலைகளைக் கூறி அவனைப் போற்றி புகழ்வேன். பின்னர் பரிந்துரைப்பேன். அவன் எனக்கு வரம்பு விதிப்பான். நான் வெளியேறிச் சென்று, அவர்களைச் சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன்.'நான் வெளியேறிச் சென்று அவர்களை நரகத்திலிருந்து வெளியேற்றி சொர்க்கத்திற்கு அனுப்பிவைப்பேன் என்று கூறியதை கேட்டேன்'' என கத்தாதா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

''இறுதியில் குர்ஆன் தடுத்துவிட்ட, அதாவது நிரந்தர நரகம் கட்டாயமாம்விட்டவர்களைத் தவிர வேறு யாரும் நரகத்தில் இருக்கமாட்டார்கள்'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு,'(நபியே!) உம் இறைவன் உம்மை ('மகாமும் முஹ்மூத்' எனும்) உயர் அந்தஸ்துக்கு அனுப்பலாம்'' எனும் (திருக்குர்ஆன் 17:79 வது வசனத்தை) ஓதினார்கள்.

பிறகு இந்த'மகாமும் மஹ்மூத்' எனும் இடம் உங்கள் நபிக்காக வாக்களிக்கப்பட்ட இடமாகும்'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7441 அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அன்சாரிகளிடம் ஆளனுப்பி அவர்களை ஒரு கூடாரத்தினுள் ஒன்றுதிரட்டினார்கள். அவர்களிடம்'அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் (மறுமையில்) நீங்கள் சந்திக்கும் வரை பொறுமையைக் கைக்கொள்ளுங்கள். ஏனெனில், நான் (அந்நாளில்)'கவ்ஸர்' தடாகத்தின் அருகே இருப்பேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7442 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் இரவு நேரத்தில் தஹஜ்ஜுத் தொழுகை தொழும்போது (பின்வருமாறு) பிரார்த்திப்பார்கள்: இறைவா! எங்கள் அதிபதியே! உனக்கே புகழனைத்தும் நீயே வானங்கள் மற்றும் பூமியின் நிர்வாகியாவாய். உனக்கே புகழ் அனைத்தும் நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களின் இறைவன் ஆவாய். உனக்கே புகழனைத்தும் நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களின் ஒளியும் ஆவாய். நீயே உண்மை. உன் சொல் உண்மை. உன் வாக்கு உண்மை. உன் சந்திப்பு உண்மை. சொர்க்கம் உண்மை. நரகம் உண்மை. மறுமை நாள் உண்மை. இறைவா! உனக்கே நான் கீழ்ப்படிந்தேன். உன் மீதே நம்பிக்கை கொண்டேன். உன்னையே சார்ந்துள்ளேன். உன்னிடமே என் வழக்குகளைக் கொண்டு வந்தேன். உன்னிடமே நீதி கேட்பேன். எனவே, நான் முந்திச் செய்த, பிந்திச் செய்கின்ற, இரகசியமாகச் செய்த, பம்ரங்கமாகச் செய்த பாவங்களையும், என்னைவிட எதை நீ நன்கு அறிந்துள்ளாயோ அதையும் மன்னித்தருள்வாயாக. உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவர் வேறெவருமில்லை.

(மேற்கண்ட ஹதீஸில்'நிர்வாம்' என்பதைக் குறிக்க'கய்யிம்' எனும் சொல் ஆளப்பட்டுள்ளது.) வேறு சில அறிவிப்புகளில்'கய்யாகி' மற்றும்'கய்யூம்' ஆகிய சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.'அனைத்தையும் கண்காணிப்பவன்' என்று பொருள்.

உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) அவர்கள் (திருக்குர்ஆன் 02:255 வது வசனத்தின் மூலத்திலுள்ள'அல்கய்யாகி' என ஓதியுள்ளார்கள். இரண்டுமே புகழைக் குறிக்கும் (மிகைச்) சொற்கள் தாம்.

ஹதீஸ் 7443. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களில் ஒவ்வொருவருடனும் அல்லாஹ் (மறுமைநாளில் தனித் தனியாகப்) பேசாமலிருக்கமாட்டான். அப்போது அல்லாஹ்வுக்கும் உங்களுக்கும் இடையே மொழிபெயர்ப்பாளரும் இருக்கமாட்டார் தடுக்கிற திரையும் இருக்காது.

என அதீ இப்னு ஹாத்திம் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7444. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு சொர்க்கங்கள் உண்டு. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருட்களும் வெள்ளியால் ஆனவை. (வேறு) இரண்டு சொர்க்கங்களும் உள்ளன. அவற்றின் பாத்திரங்களும் இதரப் பொருடகளும் பொன்னால் ஆனவையாகும். 'அத்ன்' எனும் சொர்க்கத்தில் இருப்பவர்கள் தங்கள் இறைவனைக் காண்பதற்கு, அவன் மேலுள்ள 'பெருமை' எனும் மேலாடை தவிர வேறெந்தத் தடையும் இராது.

என அபூ மூஸா அப்துல்லாஹ் இப்னு கைஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7445. 'பொய்ச் சத்தியத்தின் மூலம் ஒரு முஸ்லிமின் செல்வத்தைப் பறித்துக் கொள்கிறவரின் மீது அல்லாஹ் கோபம் கொண்ட நிலையிலேயே அவனை அவர் சந்திப்பார்' என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். பிறகு இதை உண்மைப்படுத்துகிற இறைவசனத்தை ஓதினார்கள்: அல்லாஹ்வின் உடன்படிக்கைக்கும் தம் சத்தியங்களுக்கும் பதிலாக அற்ப விலையைப் பெறுகிறவர்களுக்கு மறுமையில் எந்த நற்பேறும் கிடையாது அவர்களிடம் அல்லாஹ் பேச மாட்டான் (திருக்குர்ஆன் 03:77)" என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7446. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் மறுமைநாளில் மூன்று பேரிடம் பேசமாட்டான் அவர்களை ஏறெடுத்துப் பார்க்கவுமாட்டான்.

ஒருவர் (தம்) விற்பனைப் பொருளுக்கு (அதைக் கொள்முதல் செய்தபோது உண்மையில்) தாம் கொடுத்த விலையை விட அதிக விலை கொடுத்ததாகப் பொய்ச் சத்தியம் செய்கிறார். மற்றொருவர், ஒரு முஸ்லிமின் செல்வத்தை அபகரிப்பதற்காக அஸ்ர் தொழுகைக்குப் பிறகு (மக்கள் ஒன்று கூடும் நேரத்தில்) பொய்ச் சத்தியம் செய்கிறார். வேறொருவர், தம் தேவைக்குப் போக மிஞ்சிய தண்ணீரை (வழிப்போக்கருக்குத் தராமல்) தடுக்கிறார். (அவரிடம்) அல்லாஹ் மறுமைநாளில் 'நீ தேடிச் சம்பாதிக்காத பெருளை (-நீரை) நீ தர மறுத்ததைப் போன்று இன்று என் அருளை உனக்கு வழங்க மறுக்கிறேன்" என்று கூறுவான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7447 அபூ பக்ரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் 'வானங்களும் பூமியும் படைக்கப்பட்ட நாளில் இருந்த (பழைய) நிலைக்குக் காலம் திரும்பிவிட்டது. ஆண்டு என்பது பன்னிரண்டு மாதங்களாகும். அவற்றில் நான்கு மாதங்கள் புனிதமானவை. (அவற்றில்) மூன்று மாதங்கள் தொடர்ந்து வரக்கூடியவை. அவை துல்கஅதா, துல்ஹஜ் மற்றும் முஹர்ரம் ஆகியனவாகும். (மற்றொன்று) ஜுமாதல் ஆம்ராவுக்கும் ஷஅபான் மாதத்திற்கும் இடையிலுள்ள 'முள்ர்' குலத்தாரின் ரஜப் மாதமாகும்" என்று கூறிவிட்டு, 'இது எந்த மாதம்?' என்று கேட்டார்கள். நாங்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்" என்றோம். அப்போது அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது துல்ஹஜ் மாதம் அல்லவா?'

என்று கேட்டார்கள். நாங்கள்'ஆம்' என்றோம். 'இது எந்த நரகம்?' என்று கேட்டார்கள். நாங்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்'' என்றோம். அப்போது அவர்கள் அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது (புனித) நகரமல்லவா?' எனக் கேட்க, நாங்கள், 'ஆம்' என்று பதிலளித்தோம். 'இது எந்த நாள்?' என்று அவர்கள் கேட்டார்கள். நாங்கள், 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிவர்'' என்று சொன்னோம். அப்போதும் அவர்கள், அதற்கு வேறு பெயர் சூட்டுவார்களோ என்று நாங்கள் எண்ணுமளவிற்கு மௌனமாக இருந்துவிட்டு, 'இது நஹ்ருடைய (துல்ஹஜ் 10ஆம்) நாள் அல்லவா?' எனக் கேட்டார்கள். நாங்கள், 'ஆம்'' என்றோம்.

(பிறகு,) 'உங்களின் புனிதமிக்க இந்நகரத்தில் உங்களுடைய புனிதமிக்க இம்மாதத்தில் இன்றைய தினம் எந்த அளவு புனிதமானதோ அந்த அளவிற்கு உங்கள் உயிர்களும் உங்கள் உடைமைகளும் - உங்கள் மானமும் - உங்களுக்குப் புனிதமானவையாகும். நீங்கள் (மறுமையில்) உங்களுடைய இறைவனைச் சந்திப்பீர்கள். அப்போது அவன் உங்களிடம் உங்கள் செயல்கள் குறித்து விசாரணை செய்வான். அறிந்து கொள்ளுங்கள்: எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் வழிகேடர்களாக நீங்கள் மாறவிடாதீர்கள். இதோ! இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு (நான் சொன்ன கட்டளைகளை) அறிவித்துவிடுங்கள். ஏனெனில், இச்செய்தி எவரிடம் தெரிவிக்கப்படுகிறதோ அவர், தாம் யாரிடமிருந்து இதைக் கேட்டாரோ அவர்களில் சிலரைவிட (அதாவது தமக்கு இதைச் சொன்னவரைவிட) நன்கு (புரிந்து) பாதுகாப்பவராயிருக்கலாம்'' என்று கூறினார்கள்:

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான முஹம்மத் இப்னு சீரீன்(ரஹ்) அவர்கள் இதை அறிவிக்கும்போது, 'நபி(ஸல்) அவர்கள் உண்மை சொன்னார்கள்'' என்று கூறுவார்கள்.

பிறகு, நபி(ஸல்) அவர்கள்'நான் (உங்களிடம் இறைச்செய்திகள் அனைத்தையும்) சேர்த்துவிட்டேனா? நான் (உங்களிடம் இறைச் செய்திகள் அனைத்தையும்) சேர்த்து விட்டேனா? என்று (இரண்டு முறை) கேட்டார்கள்.

## "நன்மை புரிவோருக்கு அல்லாஹ்வின் அருள் மிக அருகில் உள்ளது" எனும் (திருக்குர்ஆன் 07:56 வது) இறைவசனம் தொடர்பாக வந்துள்ளவை.

ஹதீஸ் 7448 உசாமா இப்னு ஸைத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் ஒரு புதல்வியாரின் மகன், இறக்கும் தறுவாயில் இருந்தார். எனவே, நபி(ஸல்) அவர்கள் தம்மிடம் வந்து சேரும்படி அந்தப் புதல்வியார் சொல்லி அனுப்பினார். அப்போது நபி(ஸல்) அவர்கள், 'அல்லாஹ் எடுத்துக் கொண்டதும் கொடுத்ததும் அவனுக்கே உரியதாகும். ஒவ்வொன்றுக்கும் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு. எனவே, பொறுமையைக் கைக்கொள்வீராக் நன்மையை எதிர்பார்ப்பீராக'' என்று சொல்லியனுப்பினார்கள். (மீண்டும்) அவர் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் (கட்டாயம் தம்மிடம் வர வேண்டுமெனக்) கூறியனுப்பினார். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (தம் புதல்வியின் வீட்டுக்குச் செல்ல) எழுந்தார்கள். நானும், முஆத் இப்னு ஜபர்(ரலி), உபை இப்னு கஅப்(ரலி), உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) ஆகியோரும் அவர்களுடன் எழுந்தோம். நாங்கள் (வீட்டுக்குள்) நுழைந்தவுடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அந்தச் சிறுவரைக் கொடுத்தார்கள். அந்தச் சிறுவரின் மூச்சு (சுவாசிக்க முடியாமல்) நெஞ்சுக்குள் திணறிக் கொண்டிருந்தது.

-அது தோல் துருத்தியைப் போன்று (ஏறி இறங்கிக் கொண்டு) இருந்தது என்று அறிவிப்பாளர் கூறினார்கள் என நான் (அபூ உஸ்மான் அந்நஹ்தீ) எண்ணுகிறேன்.

(இதைக் கண்ணுற்ற) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அழுதார்கள். அப்போது (அங்கிருந்த) ஸஅத் இப்னு உபாதா(ரலி) அவர்கள்,'(இறைத்தூதர் அவர்களே!) நீங்கள் அழுகின்றீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'அல்லாஹ் தன் அடியார்களில் இரக்கமுடையவர்க்கே இரக்கம் காட்டுகிறான்" என்றார்கள்.

ஹதீஸ் 7449 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கமும் நரகமும் தம் இறைவனிடம் வாக்குவாதம் செய்தன. அப்போது சொர்க்கம்,'என் இறைவா! எனக்கென்ன ஆயிற்று? மக்களில் பலவீனர்களும் சாமானியர்களும் தானே எனக்குள் நுழைகிறார்கள்!"என்று கேட்டது. நரகம்'நான் தற்பெருமைக்காரர்களுக்கு மட்டுமே உரியவனாம் விட்டேனே!"என்று முறையிட்டது. அப்போது அல்லாஹ் சொர்க்கத்திடம்,'நீ என்ன கருணை(யின் பரிசு) ஆவாய்" என்று சொன்னான். நரகத்திடம் நீ நான் அளிக்கும் வேதனை ஆவாய். நான் விரும்புகிறவர்களை உன் மூலம் தண்டிக்கிறேன்" என்று சொல்லிவிட்டு -இரண்டையும் நோக்கி - 'உங்கள் ஒவ்வொருவரையும் நிரப்புபவர்கள் (மக்களிடையே) உள்ளனர்" என்று கூறுவான்.

மேலும் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: சொர்க்கம் இருக்கிறதே (அதில் தகுதியானோர் நுழைவார்கள்). அல்லாஹ் தன் படைப்புகளில் யாரும் அநீதி இழைப்பதில்லை. அவன், தான் நாடியவர்களை நரகத்திற்காகப் படைக்கிறான். நரகத்தில் அவர்கள் போடப்படும்போது,'இன்னும் இருக்கிறதா?' என அது மும்முறை கேட்கும். இறுதியில் இறைவன் அதில் தன்னுடைய பாதத்தை வைக்க, அது நிரம்பிவிடும் அதன் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும். போதும் போதும் போதும் என அது கூறும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7450 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மக்கள் சிலர் தாங்கள் செய்த பாவங்களுக்குத் தண்டனையாக நரக நெருப்பினால் தீண்டப்பட்டு, அவர்களின் சருமத்தின் நிறமே மாறிவிடும். பிறகு அல்லாஹ் அவர்களைத் தன் தனிக் கருணையினால் சொர்க்கத்தில் அனுமதிப்பான். அவர்களுக்கு'ஜஹன்னமிய்யூன்' (நரக விடுதலைபெற்றோர்) என்று சொல்லப்படும்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## "அல்லாஹ் (ஈர்ப்பு சக்தியால்) வானங்கள் மற்றும் பூமியை விழாமல் தடுத்து நிறுத்தியிருக்கிறான்' எனும் (திருக்குர்ஆன் 35:41 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7451 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

யூதப் பாதிரியார் ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து,'முஹம்மதே! மறுமைநாளில் அல்லாஹ் வானத்தை ஒரு விரலிலும் பூமியை ஒரு விரலிலும் மலைகளை ஒரு விரலிலும் மரத்தை ஒரு விரலிலும் நதிகளை ஒரு விரலிலும் இதர படைப்புகள் அனைத்தையும் ஒரு விரலிலும் (நிறுத்தி) வைத்துக்கொண்டு தன்னுடைய கரத்தால் (சைகை செய்தவாறு)'நானே அரசன்' எனக் கூறுவான்" என்றார்.

அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிரித்துவிட்டு,'அவர்கள் (யூதர்கள்) அல்லாஹ்வை எப்படி மதிக்க வேண்டுமோ அப்படி மதிக்கவில்லை'' எனும் (திருக்குர்ஆன் 06:91 வது) வசனத்தைக் கூறினார்கள்.

## (இறைவன் வானங்கள் மற்றும் பூமி உள்பட எல்லாப் படைப்புகளையும் படைத்தது தொடர்பாக வந்துள்ளவை.

படைத்தல் என்பது வளமும் உயர்வும் மிக்க இறைவனின் செயலும் அவனுடைய கட்டளையாகும். இறைவன் தன் பண்புகளால், செயலால், கட்டளையால் படைப்போனாகவும் ஆக்குவோனாகவும் இருக்கிறான் அவன் யாராலும் படைக்கப்பட்டவன் அல்லன். அவனுடைய செயலால், கட்டளையால், படைப்பால், ஆக்கத்தால் உருவானவையே எல்லாச் செயல்களும் படைப்புகளும் சிருஷ்டிகளுமாகும்.

ஹதீஸ் 7452 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நான் (என் சிறியது தாயாரும் நபியவர்களின் துணைவியாருமான) மைமூனா(ரலி) அவர்களின் இல்லத்தில், இரவில் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தொழுகை எவ்வாறுள்ளது என்பதைப் பார்ப்பதற்காக (ஒரு நாள்) இரவு தங்கினேன். அப்போது மைமூனா அவர்களிடம் நபி(ஸல்) அவர்கள் தம் துணைவியாருடன் சிறிது நேரம் பேசிவிட்டுத்தூங்கிவிட்டார்கள்.'இரவின் இறுதி மூன்றிலொரு பகுதி வந்தபோது' அல்லது அதன்'ஒரு பகுதி வந்தபோது' அவர்கள் (எழுந்து) அமர்ந்துகொண்டு வானத்தை நோக்கியவாறு'நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமியின் படைப்பிலும் இரவு பகல் மாறி மாறிவருவதிலும் அறிவுடையோருக்குப் பல சான்றுகள் உள்ளன'' எனும் (திருக்குர்ஆன் 03:190 வது) வசனத்தை ஓதினார்கள். பிறகு எழுந்து அங்கசுத்தி (உளூ) செய்தார்கள் பல் துலக்கினார்கள். பிறகு, பதினொன்று ரக்அத்கள் தொழுதார்கள். பின்னர் பிலால்(ரலி) அவர்கள் ஃபஜ்ர் தொழுகைக்கு அழைப்புக் கொடுத்தார்கள். உடனே இரண்டு ரக்அத்கள் (ஃபஜ்ருடைய சுன்னத்) தொழுதுவிட்டுப் புறப்பட்டு பள்ளிவாசலுக்குச் சென்று மக்களுக்கு சுப்ஹு தொழுகை நடத்தினார்கள்.

## "இறைத்தூதர்களான நம் அடியார்களுக்கு (வெற்றி கிடைக்கும் என்ற) நம்முடைய கட்டளை முந்திவிட்டது' எனும் (திருக்குர்ஆன் 37:171 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7453 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்புகளை படைத்தபோது தன்னிடமுள்ள அரியாசனத்தின் (அர்ஷின்) மேலே'என் கருணை என் கோபத்தை முந்திவிட்டது' என்று தன்னிடம் எழுதி வைத்துக் கொண்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7454 உண்மையே பேசியவரும் உண்மையே அறிவிக்கப்பட்டவருமான இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உங்களில் ஒருவரின் கரு தம் தாயின் வயிற்றில் நாற்பது'பகல்' அல்லது'இரவு' சேமிக்கப்படுகிறது. பிறகு அதைப் போன்றே (40 நாள்கள்) அது (அட்டை போன்று கருப்பையின் சுவரைப் பற்றிப் பிடித்துத் தொங்கும்) ஒரு கருக் கட்டியாக மாறுகிறது. பிறகு அதைப் போன்றே (மேலும் 40 நாள்கள் மெல்லப்பட்ட சக்கை போன்ற) ஒரு சதைப் பிண்டமாக மாறுகிறது. பிறகு அதனிடம் ஒரு வானவர் அனுப்பப்படுகிறார். அந்த வானவரும் நான்கு கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன: அவர், (கருவாக இருக்கும்) அந்த மனிதனின் வாழ்வாதாரத்தையும்,

அவனுடைய வாழ்நாளையும், செயல்பாட்டையும், அவன் (இறுதிக் கட்டத்தில்) துர்பாக்கியசாலியா அல்லது நற்பாக்கியசாலியா என்பதையும் (இறைவனின் கட்டளைப்படி) பதிவு செய்கிறார். பிறகு அவனுள் உயிர் ஊதப்படுகிறது. இதனால்தான், உங்களில் ஒருவர் சொர்க்கவாசிகளின் (நற்செயல்களைப் புரிந்துகொண்டே செல்வார். இறுதியில் சொர்க்கத்திற்கும் அவருக்குமிடையே ஒரு முழம் (இடைவெளி) தான் இருக்கும். அதற்குள் அவரின் விதி அவரை முந்திக் கொள்ள அவர் நரகவாசிகளின் செயலைச் செய்து அதன் விளைவாக நரகம் புகுந்து விடுவார். (இதைப் போன்றே) உங்களில் ஒருவர் நரகவாசிகளின் செயலைப் புரிந்து கொண்டே செல்வார். இறுதியில் நரகத்திற்கும் அவருக்குமிடையே ஒரு முழம் இடைவெளி தான் இருக்கும். அதற்குள் அவரின் விதி அவரை முந்திக்கொள்ளும். அவர் சொர்க்கத்திற்குரியவர்களின் (நற்) செயல்களைச் செய்து அதன் விளைவாக சொர்க்கம் புகுவார்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7455 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் (வானவர் ஜிப்ரீல் (அலை) அவர்களிடம்),'ஜிப்ரீலே! நீங்கள் இப்போது எம்மைச் சந்திப்பதைவிட அதிகமாகச் சந்திக்கத் தடையாக இருப்பதென்ன?' என்று கேட்டார்கள். அப்போதுதான், (நபியே!) உங்களுடைய இறைவனின் உத்தரவுபடியே தவிர (வானவர்களாகிய) நாங்கள் இறங்குவதில்லை. எங்களுக்கு முன்னருப்பவையும், பின்னிருப்பவையும் இரண்டுக்குமிடையே இருப்பவையும் அவனுக்குச் சொந்தமானவையே! (இதில் எதையும்) உங்களுடைய இறைவன் மறப்பவன் அல்லன்‘‘ எனும் (திருக்குர்ஆன் 19:64 வது) இறைவசனம் அருளப்பெற்றது.

இதுவே முஹம்மது(ஸல்) அவர்களு(டைய கேள்வி)க்கு பதிலாக அமைந்தது.

ஹதீஸ் 7456 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நான் மதீனாவிலுள்ள ஒரு வேளாண்மை பூமியில் (பேரீச்சந் தோப்பில்) இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் நடந்து (போய்க்) கொண்டிருந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றை ஊன்றியவாறு யூதர்கள் சிலரைக் கடந்து சென்றார்கள். அப்போது அவர்களில் ஒருவர் மற்றொருவரிடம், (நபியவர்களைச் சுட்டிக்காட்டி,)'இவரிடம்'உயிர்' (ரூஹ்) பற்றிக் கேளுங்கள்!"என்றார். இன்னொருவர்,'இவரிடம் கேட்காதீர்கள்! (நாம் விரும்பாத பதிலை அவர் சொல்லிவிடலாம்)‘‘ என்றார்.

பின்னர் அவர்கள் (அனைவரும் சேர்ந்து) நபி(ஸல்) அவர்களிடம்'ரூஹ்' பற்றிக் கேட்டனர். எனவே, நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மட்டையை ஊன்றியவர்களாக எழுந்தார்கள். அப்போது அவர்களுக்குப் பின்னாலிருந்த நான், நபி(ஸல்) அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) வருகிறது என அறிந்துகொண்டேன். பிறகு அவர்கள்,'(நபியே!) உயிரைப் பற்றி அவர்கள் உங்களிடம் கேட்கின்றனர். சொல்லுங்கள் உயிர் என்பது என் இறைவனின் கட்டளையால் உருவானது. உங்களுக்கு ஞானத்தில் சிறிதளவே கொடுக்கப்பட்டுள்ளது‘‘ எனும் (திருக்குர்ஆன் 17:85 வது) வசனத்தைக் கூறினார்கள். அப்போது அந்த யூதர்கள் ஒருவர் மற்றவரிடம்'அவரிடம் கேட்க வேண்டாமென உங்களிடம் முன்பே கூறினோமே!"என்றார்கள்.

ஹதீஸ் 7457 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இறைவழியில் போராடுவதற்காகவும் அவனுடைய வாக்குகளை உண்மையென நிரூபிப்பதற்காகவும் மட்டுமே வெளியே புறப்பட்டு, அவனுடைய பாதையில் போராடியவரை சொர்க்கத்தில் அனுப்புவதற்கு அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளான் அல்லது அவர் பெற்ற நன்மையுடன்,

அல்லது (அந்த நன்மையுடன் சேர்த்து) போரில் கிடைத்த செல்வத்துடன் அவரை வீட்டிற்குத் திரும்பக் கொண்டு வர அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7458 அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! ஒருவர் இன மாச்சரியத்திற்காகப் போரிடுகிறார். ஒருவர் வீரத்தை வெளிக்காட்டப் போரிடுகிறார். இன்னொருவர் பிறருக்குக் காட்டிக் கொள்வதற்காகப் போரிடுகிறார். இவர்களில் இறைவழியில் போரிடுகிறவர் யார்?' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் வாக்கே மேலோங்கியதாய் இருக்க வேண்டும் என்பதற்காகப் போரிடுகிறவரே இறைவழியில் போரிடுபவராவார்" என்று பதிலளித்தார்கள்.

## நாம் ஒரு பொருளை (உருவாக்க) நாடினால் நாம் கூறுவதெல்லாம் ஆகுக என்பது தான். உடனே அது உண்டாம்விடும்' எனும் (திருக்குர்ஆன் 16:40 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7459 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் கட்டளை (யான மறுமை நாள்) வரும் வரை என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர், (உண்மையை எதிர்க்கும்) மக்களின் மீது மேலாண்மை கொண்டவர்களாகவே இருந்து கொண்டிருப்பார்கள்.

என முஃகீரா இப்னு ஷுஅபா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7460 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்வின் கட்டளையை நிலை நிறுத்தும் ஒரு குழுவினர் என் சமுதாயத்தாரிடையே இருந்து கொண்டேயிருப்பர். அவர்களை நம் மறுப்பவர்களும் சரி, அவர்களுக்குத் துரோகம் இழைப்பவர்களும் சரி அவர்களுக்குத் தீங்கு செய்ய முடியாது. இறுதியில் அவர்கள் இதே நிலையில் இருந்து கொண்டிருக்க அல்லாஹ்வின் கட்டளை (மறுமைநாள்) வந்துவிடும்.

இதை முஆவியா (ரலி) அவர்கள் அறிவித்தபோது அங்கிருந்த மாலிக் இப்னு யுகாமிர் (ரஹ்) அவர்கள், 'முஆத் இப்னு ஜபல் (ரலி) அவர்கள், 'இந்தக் குழுவினர் ஷாம் நாட்டில் இருப்பார்கள்' என்று சொல்ல கேட்டேன்" என்று கூற, முஆவியா (ரலி) அவர்கள்'இதோ, இந்த மாலிக்'இந்தக் குழுவனிர் ஷாம் நாட்டிலிருப்பார்கள்' என்று முஆத் அவர்கள் சொன்னதாகக் கூறுகிறார்" என்றார்கள்.

ஹதீஸ் 7461 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் புடைசூழ (தன்னை நபி என வாதிட்ட மகா பொய்யன்) முசைலிமாவுக்கு அருகே நின்றார்கள். அப்போது (தலைமைப் பதவியை உங்களுக்குப் பின் எனக்குத் தர வேண்டும் என அவன் கேட்டான். அதற்கு) நபி (ஸல்) அவர்கள்'நீ இந்தப் பேரீச்ச மட்டையின் துண்டை என்னிடம் கேட்டாலும் நான் அதை உனக்குத் தரமாட்டேன். அல்லாஹ் உன் விஷயத்தில் விதித்துள்ள கட்டளையை உன்னால் தாண்டிச் சென்றுவிட முடியாது. நீ (எனக்குக் கீழ்ப்படிய மறுத்து) முதுகைக் காட்டினால் அல்லாஹ் உன்னை அழித்துவிடுவான்" என்றார்கள்.

ஹதீஸ் 7462 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

நான் நபி (ஸல்) அவர்களுடன் மதீனாவில் உள்ள ஒரு வேளாண் பூமியில் பேரீச்சந் தோட்டத்தில்) நடந்து சென்று கொண்டிருந்தபோது யூதர்கள் சிலரை நாங்கள் கடந்து சென்றோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றை ஊன்றியபடி வந்து கொண்டிருந்தார்கள். அப்போது யூதர்களில் ஒருவர் மற்றொருவரிடம்'அவரிடம் உயிர் (ரூஹ்) பற்றிக் கேளுங்கள்'' என்றார். அதற்கு மற்றவர்'அவரிடம் கேட்காதீர்கள். இது தொடர்பாக நீங்கள் விரும்பாத பதிலை அவர் தந்து விடக் கூடும்'' என்று சொல்ல, மற்றவர்கள்'நாம் அவரிடம் நிச்சயம் கேட்போம்'' என்றார்கள். அப்போது அவர்களில் ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் எழுந்து வந்து)'அபுல் காசிமே! உயிர் (ரூஹ்) என்பதென்ன?' என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் (அவருக்க பதில் எதுவும் சொல்லாமல்) மௌனமாக இருந்தார்கள். நான் நபி (ஸல்) அவர்களுக்கு வேத அறிவிப்பு (வஹீ) அருளப்பெறுகின்றது என்று அறிந்து கொண்டேன். '(நபியே!) உங்களிடம் அவர்கள் உயிர் பற்றிக் கேட்கிறார்கள். உயிர் என்பது என் இறைவனின் கட்டளையால் உருவானது. அவர்களுக்குச் சிறிதளவு ஞானமே வழங்கப்பட்டுள்ளது'' எனும் (திருக்குர்ஆன் 17:85 வது) இறைவசனத்தை எடுத்துரைத்தார்கள்.

அறிவிப்பாளர்களில் ஒருவரான அஃமஷ் (ரஹ்) கூறினார்: ('உங்களுக்கு' சிறிதளவு ஞானமே வழங்கப்பட்டுள்ளது என்பதற்கு பதிலாக)'அவர்களுக்கு' என்றே எங்களின் ஓதலில் உள்ளது.

(திருக்குர்ஆன் 18:109 வது) இறைவசனம்.

(நபியே!) கூறுக: என் இறைவனின் வாக்குகளை எழுதுவதற்குக் கடலே மையாக ஆனாலும் என் இறைவனின் வாக்குகள் வற்றுவதற்கு முன்னால் கடல்வற்றிப் போய்விடும் மேலதிகமாக அதைப் போன்ற (கடல்) ஒன்றை நாம் உதவிக்குக் கொண்டு வந்தாலும் சரியே'' எனும் (திருக்குர்ஆன் 18:109 வது) இறைவசனம்.

மேலும் அல்லாஹ் கூறினான்:

இப்பூமியிலுள்ள மரங்கள் யாவும் எழுதுகோல்களானாலும் கடல் முழுவதும் மையானாலும் அதற்கு மேல் இன்னும் ஏழு கடல்கள் இருந்தாலும் கூட அல்லாஹ்வின் வாக்குகள் (எழுதித்) தீர்ந்து போகமாட்டா. திண்ணமாக, அல்லாஹ் வல்லமைமிக்கவனும் நுண்ணறிவாளனும் ஆவான். (திருக்குர்ஆன் 31:27)

உங்களுடைய இறைவனாகிய அல்லாஹ் வானங்களையும் பூமியையும் ஆறு நாள்களில் படைத்தான். பிறகு, அரியாசனத்தில் (ஆட்சியில்) அமர்ந்தான். அவன் இரவைக் கொண்டு பகலை மூடுகிறான். மேலும், அவ்விரவு பகலை விரைவாகப் பின்தொடர்கிறது. அவனே சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் ஆகியவற்றையும் படைத்தான். அவையனைத்தும் அவனுடைய கட்டளைக்குக் கட்டுப்படுகின்றன. படைக்கும் ஆற்றலும் கட்டளை பிறப்பிக்கும் அதிகாரமும் அவனுக்குரியவையே. அனைத்துலகங்களுக்கும் அதிபதியாகிய அல்லாஹ் வளம் மிக்கவன் ஆவான். (திருக்குர்ஆன் 07:54)

ஹதீஸ் 7463 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைவழியில் போராடுவதற்காகவும் அவனுடைய வாக்குகளை உண்மையென நிரூபிப்பதற்காகவும் மட்டுமே தம் வீட்டைவிட்டுப் புறப்பட்டு, அவனுடைய பாதையில் போராடியவரை சொர்க்கத்தில் அனுப்புவதற்கு அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளான் அல்லது அவர் அடைந்து கொண்ட நன்மையுடன் அல்லது (அந்த நன்மையுடன் சேர்த்து) போரில் கிடைத்த செல்வத்துடன் அவரை வீட்டிற்குத் திரும்பக் கொண்டுவர அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## இறைவனின் நாட்டமும் விருப்பமும்.

அல்லாஹ் கூறினான்:

அல்லாஹ் நாடினாலன்றி (எந்த வொன்றையும்) நீங்கள் நாட மாட்டீர்கள். (திருக்குர்ஆன் 76:30)

(நபியே!) கூறுக:'அல்லாஹ்வே! ஆட்சியதிகாரம் அனைத்துக்கும் அதிபதியே! நீ நாடுகிறவர்களுக்கு ஆட்சியைக் கொடுக்கிறாய்... (திருக்குர்ஆன் 03:26)

(நபியே!) எந்த விஷயத்தைப் பற்றியும் அல்லாஹ் நாடினாலன்றி'நிச்சயமாக நான் நாளை அதைச் செய்பவனாக இருக்கிறேன்'' என்று கூறாதீர்கள். (திருக்குர்ஆன் 18:23)

(நபியே!) நீர் நேசிப்பவர்களையெல்லாம்) நிச்சயமாக நேர்வழியில் செலுத்திவிட உம்மால் முடியாது ஆனால், அல்லாஹ், தான் நாடியவர்களை நேர் வழியில் செலுத்துகிறான் (திருக்குர்ஆன் 28:56).'இந்த வசனம் அபூ தாலிப் அவர்கள் தொடர்பாக அருளப்பெற்றது'' என முஸய்யப் இப்னு ஹஸ்ன் (ரலி) கூறினார்.

அல்லாஹ் உங்களுக்கு இலகுவானதையே விரும்புகிறான். அவன் உங்களுக்குச் சிரமம் தர விரும்பவில்லை. (திருக்குர்ஆன் 02:185)

ஹதீஸ் 7464 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ்விடம் நீங்கள் பிரார்த்தனை புரியும்போது வலியுறுத்திக் கேளுங்கள். நீ விரும்பினால் எனக்குக் கொடு என்று கேட்காதீர்கள். (வலியுறுத்திக் கேட்பது இறைவனை நிர்ப்பந்திப்பதாகாது.) ஏனெனில், அல்லாஹ்வை நிர்பந்திப்பவர் எவருமில்லை.

என அனஸ் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7465 அலீ இப்னு அபீ தாலிப் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடமும் தம் புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர்களிடமும் ஒரு (நாள்) இரவு நேரத்தில் வந்தார்கள். எங்களிடம்'நீங்கள் (தஹஜ்ஜுத்) தொழவில்லையா?' என்று கேட்டார்கள். நான்,'இறைத்தூதர் அவர்களே! எங்கள் உயிர்களெல்லாம் அல்லாஹ்வின் கரத்தில் தானே இருக்கின்றன! அவன் எங்களை (தூக்கத்திலிருந்து) எழுப்ப நாடினால் எங்களை எழுப்பிவிடுவான்'' என்று சொன்னேன்.

நான் இவ்வாறு சொன்னபோது இறைத்தூதர் (ஸல்) அவர்கள் எனக்கு எந்த மறுமொழியும் கூறாமல் திரும்பிச் சென்றார்கள். திரும்பிச் சென்ற நபி (ஸல்) அவர்கள் தங்களின் தொடையில் தட்டிக் கொண்டே'மனிதன் அதிகம் தர்க்கம் செய்பவனாக இருக்கிறான்'' என்று சொல்லிக் கொண்டிருந்ததை கேட்டேன்.

ஹதீஸ் 7466 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் இறைநம்பிக்கையாளர்களின் நிலையானது இளம் பயிர் போன்றதாகும். காற்றடிக்கும் திசையில் அதன் இலை சாயும். காற்று (அடிப்பது) நின்றுவிட்டால் நேராக நிற்கும். இவ்வாறுதான் இறைநம்பிக்கையாளரும் சோதனைகளின்போது அலைக்கழிக்கப்படுகிறார். (எனினும், அவர் பொறுமை காப்பார்.) இறைமறுப்பாளனி நிலையானது உறுதியாக நிமிர்ந்து நிற்கும் தேவதொரு மரத்தைப் போன்றதாகும். தான் நாடும்போது அதை அல்லாஹ் (ஒரேயடியாக) உடைத்து (சாய்த்து) விடுகிறான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7467 அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு மேடை (மிம்பர்) மீதிருந்து உரையாற்றியபோது நீங்கள் (இவ்வுலகில்) வாழ்வது அஸ்ர் தொழுகைக்கும் சூரியன் மறைவதற்கும் இடையிலான (குறுகிய) கால அளவேயாகும். 'தவ்ராத்' வேதக்காரர்களுக்கு அந்த வேதம் வழங்கப்பட்டது. அவர்கள் நண்பகல் வரை அதன்படி செயல்பட்டார்கள் பின்னர் சக்தி இழந்துவிட்டார்கள். (கூலியாக) ஒவ்வொருவருக்கும் ஒரு 'கீராத்' வழங்கப்பெற்றது. பின்னர் 'இன்ஜீல்' வேதக்காரர்களுக்கு அந்த வேதம் வழங்கப்பெற்றது. அவர்கள் அஸ்ர் தொழுகை வரை அதன்படி செயல்பட்டுவிட்டுப் பின்னர் சக்தி இழந்துவிட்டார்கள். (கூலியாக) அவர்களுக்கும் ஒவ்வொரு 'கீராத்' வழங்கப்பெற்றது. நீங்கள் சூரியன் மறையும் வரை அதன்படி செயல்புரிந்தீர்கள். உங்களுக்கு இரண்டிரண்டு கீராத்துகள் (கூலியாக) வழங்கப்பட்டன. (அப்போது) 'தவ்ராத்' வேதக்காரர்கள் 'எங்கள் இறைவா! இவர்கள் வேலை செய்தோ குறைந்த நேரம். கூலியோ அதிகம்!" என்றார்கள். அல்லாஹ், 'நான் உங்களுக்குரிய கூலியில் சிறிதேனும் (குறைத்து) அநீதியிழைத்தேனா?' என்று கேட்க, அவர்கள் 'இல்லை' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ் 'அ(வ்வாறு முஸ்லிம்களுக்கு அதிகமாகக் கொடுத்த)து என் அருளாகும். நான் நாடியவர்களுக்கு அதைத் தருகிறேன்'' என்று சொன்னான்.

ஹதீஸ் 7468 உபாதா இப்னு அஸ்ஸாமித் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் நான் ஒரு குழுவினரோடு உறுதி மொழியளித்தேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) எங்களிடம் உறுதிமொழி வாங்கினார்கள்: நீங்கள் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்கக் கூடாது நீங்கள் திருடக் கூடாது நீங்கள் விபசாரம் செய்யக் கூடாது உங்கள் குழந்தைகளைக் கொல்லக் கூடாது நீங்கள் எவரின் மீதும் அவதூறை இட்டுக்கட்டி உங்களிடையே பரப்பக் கூடாது நல்ல காரியத்தில் நீங்கள் எனக்கு மாறுசெய்யக் கூடாது. உங்களில் இவற்றையெல்லாம் நிறைவேற்றுகிறவருக்குப் பிரதிபலன் அளிப்பது அல்லாஹ்வின் பொறுப்பாகும். இந்தக் குற்றங்களில் ஏதேனும் ஒன்றை ஒருவர் செய்து, அதற்காக அவர் இம்மையிலேயே தண்டிக்கப்பட்டால், அது அவருக்குப் பரிகாரமும் (அவரைத்) தூய்மைப்படுத்தக் கூடியதும் ஆகும். அல்லாஹ் எவருடைய குற்றத்தை மறைத்து விடுகிறானோ அவரின் விவகாரம் அல்லாஹ்விடமே ஒப்படைக்கப்படும். அவன் நாடினால் அவரை வேதனைப்படுத்துவான். நாடினால் அவருக்கு மன்னிப்பளிப்பான்.

ஹதீஸ் 7469 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

(இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:) இறைத்தூதர் சுலைமான் (அலை) அவர்களுக்கு அறுபது துணைவியர் இருந்தார்கள். சுலைமான் அவர்கள் (ஒரு முறை) 'இன்றிரவு நான் என் துணைவியர் அனைவரிடமும் தாம்பத்திய உறவுகொள்ளச் செல்வேன். ஒவ்வொரு துணைவியாரும் கர்ப்பமுற்று இறைவழியில் போரிடுகிற குதிரை வீரனைப் பெற்றெடுக்கட்டும்'' என்று சொல்லிவிட்டுத் தம் துணைவியரிடம் சென்றார்கள். ஆனால், அவர்களில் ஒரேயொரு மனைவிதான் குழந்தை பெற்றெடுத்தார். அவரும் பாதி (உடல் சிதைந்த) குழந்தையைத் தான் பெற்றெடுத்தார். இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: சுலைமான் (அலை) அவர்கள் 'இன்ஷா அல்லாஹ்' (இறைவன் நாடினால்) என்று (சேர்த்துக்) கூறியிருந்தால், அவர்களின் துணைவியரில் ஒவ்வொருவரும் கர்ப்பம் தரித்து, இறைவழியில் போரிடும் குதிரைவீரன் ஒருவனைப் பெற்றெடுத்திருப்பார்.

ஹதீஸ் 7470 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (நோயுற்றிருந்த) கிராமவாசி ஒருவரை உடல் நலம் விசாரிக்கச் சென்றார்கள். 'கவலைப்படாதீர்கள்! (உம்முடைய நோய்) அல்லாஹ் நாடினால் (உங்கள் பாவத்தை நீக்கி உங்களைத்) தூய்மைப்படுத்தும்'' என்றார்கள். அந்தக் கிராமவாசி'தூய்மைப்படுத்துமா? (இல்லை.) மாறாக, வயதான கிழவனைப் பீடிக்கிற கொதிக்கும் காய்ச்சல் ஆகும். அந்தக் காய்ச்சல் இவனை மண்ணறைகளைச் சந்திக்க வைத்துவிடும்'' என்றார். நபி (ஸல்) அவர்கள், 'அப்படியென்றால் சரி (அவ்வாறே ஆகும்)'' என்றார்கள்.

ஹதீஸ் 7471 அபூ கத்தாதா (ரலி) அறிவித்தார்.

ஒரு முறை நாங்கள் தொழுகையைவிட்டு உறங்கிவிட்டபோது நபி (ஸல்) அவர்கள்'அல்லாஹ், தான் நாடியபோது உங்கள் உயிர்களைக் கைப்பற்றி, தான் நாடியபோது அவற்றைத் திருப்பி அனுப்புகிறான்'' என்றார்கள். பிறகு மக்கள் தங்கள் இயற்கைக் கடன்களை நிறைவு செய்து அங்கசுத்தி (உளூ) செய்தார்கள். அதற்குள் சூரியன் உதயமாம் வெளுத்துவிட்டிருந்தது. பிறகு நபி (ஸல்) அவர்கள் எழுந்து (தவறிப் போன ஃபஜ்ர் தொழுகையை மக்களுடன்) தொழுதார்கள்.

ஹதீஸ் 7472 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஒரு முஸ்லிமும் ஒரு யூதரும் ஒருவரையொருவர் திட்டிக் கொண்டனர். அந்த முஸ்லிம்'உலகத்தார் அனைவரை விடவும் முஹம்மத் (ஸல்) அவர்களுக்க மேன்மை அளித்தவன் மீது சத்தியமாக!"என்று ஏதோ ஒரு விஷயத்தில் சத்தியமிட்டுப் பேசினார். அதற்கு அந்த யூதர், 'உலகத்தார் அனைவரை விடவும் மூஸாவுக்கு மேன்மை அளித்தவன் மீது சத்தியமாக!"என்று (பதிலுக்கு) கூறினார்.

அதைக் கேட்டு (கோபம் கொண்ட) அந்த முஸ்லிம் கையை ஓங்கி யூதரின் முகத்தில் அறைந்துவிட்டார். உடனே அந்த யூதர், இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து தமக்கும் அந்த முஸ்லிமுக்கும் இடையே நடந்தவற்றைத் தெரிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (அந்த முஸ்லிமை அழைத்து வரச் சொல்லி)'மூஸாவை விட என்னைச் சிறப்பாக்கி (முதலிடம் தந்து உயர்த்தி) விடாதீர்கள். ஏனெனில், மக்கள் அனைவரும் மறுமை நாளில் மூர்ச்சையாகி விடுவார்கள். நானே முதலாவதாக மயக்கம் தெளிந்து எழுவேன்.

அப்போது மூஸா (அலை) அவர்கள் (அல்லாஹ்வின்) அரியாசனத்தின் ஓரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள். மக்களோடு சேர்ந்து அவரும் மூர்ச்சையாகி, பிறகு எனக்கு முன்பாகவே மயக்கம் தெளிந்து விட்டிருப்பாரா? அல்லது அல்லாஹ் அவருக்கு மட்டும் (மூர்ச்சையடைத் தேவையில்லையென்று) விதிவிலக்கு அளித்திருப்பானா? என்று எனக்குத் தெரியாது'' என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7473 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

மதீனாவிற்கு தஜ்ஜால் வருவான். வானவர்கள் மதீனாவைக் காவல் காத்துக் கொண்டிருப்பதைக் கண்பான். எனவே, தஜ்ஜாலும் கொள்ளைநோயும் அல்லாஹ் நாடினால் மதீனாவை நெருங்க முடியாது.

என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7474 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (தம் சமுதாயத்தாருக்காகப் பிரார்த்திக்குக் கொள்ள அங்கீகரிக்கப்பெற்ற) ஒரு பிரார்த்தனை உண்டு. அல்லாஹ் நாடினால் என் பிரார்த்தனைய மறுமை நாளில் என் சமுதாயத்தாருக்காகப் பரிந்துரைக்க பத்திரப்படுத்திவைக்க விரும்புகிறேன்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7475 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நான் உறங்கிக் கொண்டிருந்தபோது (கனவில்) என்னை நான் ஒரு கிணற்றின் அருகே கண்டேன். (அதிலிருந்து) நான் இறைக்க வேண்டுமென அல்லாஹ் நாடிய அளவிற்கு (த் தண்ணீர்) இறைத்தேன். பிறகு அபூ குஹா∴பாவின் புதல்வர் (அபூ பக்ர் (ரலி) அவர்கள்) அதை (வாளியை) எடுத்துக் கொண்டு (அதிலிருந்து) 'ஒரு வாளி நீரை' அல்லது 'இரண்டு வாளிகள் நீரை' இறைத்தார். அவர் (சிறிது நேரம்) இறைத்தபோது சோர்வு தெரிந்தது. அல்லாஹ் (அவரின் சோர்வை) அவருக்கு மன்னிப்பானாக! பிறகு அதை உமர் எடுத்தார். அப்போது அது மிகப் பெரிய வாளியாக மாறிவிட்டிருந்தது. அவரைப் போன்று சீராகவும் உறுதியாகவும் செயல்படுகிற புத்திசாலியான (அபூ ர்வத்) தலைவர் ஒருவரை மக்களில் நான் பார்த்ததில்லை. மக்கள் (தங்கள் ஒட்டகங்களுக்கு நீர் புகட்டி,) உமர் அவர்களைச் சுற்றிலும் ஒட்டகங்கள் ஓய்வெடுக்கும் அளவிற்கு (அவர் நீர் இறைத்தார்.)

ஹதீஸ் 7476 அபூ மூஸா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் தம்மிடம் 'யாசகம் கேட்பவர்' அல்லது 'தேவையுடையவர்' யாரேனும் வந்தால் (தம் தோழர்களை நோக்கி,) '(இவருக்காக என்னிடம்) பரிந்துரை செய்யுங்கள். அதனால் உங்களுக்கும் நற்பலன் அளிக்கப்படும். அல்லாஹ் தன் தூதரின் நாவால் தான் நாடியதை நிறைவேற்றுகிறான்' என்று கூறுவார்கள்.

ஹதீஸ் 7477 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

'இறைவா! நீ நாடினால் எனக்கு மன்னிப்பளிப்பாயாக! நீ நாடினால் எனக்குக் கருணை புரிவாயாக! நீ நாடினால் எனக்கு வாழ்வாதாரம் அளிப்பாயாக!' என்று நீங்கள் பிரார்த்தனை செய்யாதீர்கள். கேட்பதை அவனிடம் வலியுறுத்திக் கேளுங்கள். தான் விரும்பியதையே அவன் செய்வான். அவனை நிர்ப்பந்தப்படுத்துபவர் எவருமில்லை.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7478 உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

'மூஸா (அலை) (அவர்கள் கல்வி கற்பதற்காக ஓர் அடியாரைத் தேடிச் சென்றதாக அல்லாஹ் குறிப்பிடுகின்ற) அவர்களின் அந்தத் தோழர் யார்? அவர் 'களிர்' அவர்கள் தாமா?' என்பது தொடர்பாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் ஹுர்ரு இப்னு கைஸ் அல் ∴பஸாரிய்யு என்பாரும் கருத்து வேறுபட்டு தர்க்கித்துக் கொண்டார்கள். அப்போது உபை இப்னு கஅப் (ரலி) அவர்கள் அவ்வழியாகச் சென்றார்கள். அன்னாரை இப்னு அப்பாஸ் (ருலி) அவர்கள் அழைத்து, 'நானும் என்னுடைய இந்தத் தோழரும் மூஸா (அலை) அவர்கள் எவரைச் சந்திக்கச் செல்வதற்கு இறைவனிடம் வழி கேட்டார்களோ அந்தத் தோழர் யார் என்பது தொடர்பாகத் தர்க்கித்துக் கொண்டோம். அவரின் நிலைக் குறித்து இறைத்தூதர் (ஸல்) அவர்கள் சொல்ல நீங்கள் கேட்டிருக்கிறீர்களா?' என்று வினவினார்கள். உபை இப்னு கஅப் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) பதிலளித்தார்கள்.

ஆம். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சொல்ல கேட்டிருக்கிறேன்: இஸ்ரவேலர்களில் ஒரு கூட்டத்தாரிடையே மூஸா(அலை) அவர்கள் இருந்தபோது ஒருவர் வந்து'உங்களைவிட அறிந்தவர் எவரும் இருப்பது உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க, மூஸா(அலை) அவர்கள், 'இல்லை (என்னை விட அறிந்தவர் எவரும் இருப்பதாகத் தெரியவில்லை)" என்றார்கள். உடனே மூஸா(அலை) அவர்களுக்கு'இருக்கிறார். அவர்தாம் நம் அடியார்'களிர்' ஆவார்" என்று வஹீ (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டது. அப்போது மூஸா(அலை) அவர்கள் களிர் அவர்களைச் சந்திக்கச் செல்லும் வழியைக் கேட்டார்கள். அப்போது அல்லாஹ் மீன் ஒன்றை அவர்களுக்கு அடையாளமாக ஆக்கினான். அவர்களிடம், 'நீங்கள் எந்த இடத்தில் மீனைத் தொலைக்கிறீர்களோ அந்த இடத்திலிருந்து (வந்த வழியே) திரும்பிச் செல்லுங்கள். அங்கு களிர் அவர்களைச் சந்திப்பீர்கள்" என்று கூறப்பட்டது. அவ்வாறே மூஸா(அலை) அவர்கள் கடலில் மீனின் சுவட்டைப் பின்பற்றியபடியே சென்று கொண்டிருந்தார்கள். அப்போது மூஸா(அலை) அவர்களிடம்'நாம் அந்தப் பாறையின் பக்கம் (ஓய்வெடுக்க) ஒதுங்கினோமே பார்த்தீர்களா? அங்கேதான் நான் மீனை மறந்துவிட்டேன். அதை (உங்களுக்குக்) கூறவிடாமல் ஷைத்தான்தான் எனக்கு மறதியைத் தந்துவிட்டான் அது(அவ்விடத்தில் கடலில் செல்ல) விந்தையான விதத்தில் தன்னுடைய வழியை அமைத்துக் கொண்டது" என்றார். மூஸா(அலை) அவர்கள், 'அதுதான் நாம் தேடி வந்த இடம்" என்று சொல்ல, இருவருமாகத் தாம் வந்த வழியை நோக்கித் திரும்பிச் சென்றார்கள். அங்கே களிர்(அலை) அவர்களைக் கண்டார்கள். (திருக்குர்ஆன் 18:63-65) பிறகு அவ்விருவர் தொடர்பாக அல்லாஹ் எடுத்துரைத்த நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

**ஹதீஸ் 7479** அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்கா வெற்றிக்குப் பின் ஹுனைன் செல்ல (திட்டமிட்டபோது)'அல்லாஹ் நாடினால் நாளை நாம் பனு கினானா பள்ளத்தாக்கின் அருகே தங்குவோம். அந்த இடத்தில் தான் குறைஷியர்'நாங்கள் இறைமறுப்பில் நிலைத்திருப்போம்' என்று சூளுரைத்தார்கள்" என்று முஹஸ்ஸப் பள்ளத்தாக்கைக் கருத்தில் கொண்டு கூறினார்கள்.

**ஹதீஸ் 7480** அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தாயிஃப் நகர மக்களை முற்றுகையிட்டார்கள். ஆனால் அதை அவர்கள் வெற்றிகொள்ளவில்லை. அல்லாஹ் நாடினால் நாளை நாம் (மதீனாவுக்குத்) திரும்பிச் சென்றுவிடுவோம்" என்றார்கள். முஸ்லிம்கள், 'நாம் (கோட்டையை) வெற்றிக்கொள்ளாமலேயே திரும்பிச் செல்வதா?' என்று கேட்டார்கள். உடனே நபி(ஸல்) அவர்கள், 'அப்படியென்றால் (உங்கள் விருப்பம்). முற்பகலிலேயே போருக்குச் செல்லுங்கள்" என்றார்கள். மக்களும் அவ்வாறே போருக்குச் செல்ல அவர்களுக்குக் காயங்கள் பல ஏற்பட்டன. நபி(ஸல்) அவர்களை (அச்சமயம்)'அல்லாஹ் நாடினால் நாளை நாம் (மதீனாவுக்குத்) திரும்பிச் செல்வோம்" என்றார்கள். அது மக்களுக்கு மகிழ்ச்சியூட்டியது போன்றிருந்தது. உடனே நபி(ஸல்) அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள்.

## (திருக்குர்ஆன் 34:23 வது) இறைவசனம்.

"அவன் அனுமதியளித்தவர்களுக்குத் தவிர வேறெவருக்காகவும் அவனிடம் பரிந்துரை செய்வது பயனளிக்காது. (தீர்ப்பு நாளில்) மக்களுடைய உள்ளங்களில் இருந்து அச்சம் அகற்றப்பட்டு விடும்போது (பரிந்துரைப்பவர்களிடம்), 'உங்களுடைய இறைவன் என்ன பதிலுரைத்தான்?' என்று

அவர்கள் கேட்பார்கள். அதற்கு'சரியான பதிலுரைத்துள்ளான். அவன் மிக உயர்ந்தவனாகவும் பெரியவனாகவும் இருக்கிறான்'' என்று கூறுவார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 34:23 வது) இறைவசனம்.

"உங்களுடைய இறைவன் என்ன படைத்தான்'' என்று (அவர்கள் கேட்டதாக) அல்லாஹ் சொல்லவில்லை.

மேலும், புகழுக்குரிய அல்லாஹ் கூறினான்: அவனுடைய அனுமதியின்றி அவனிடம் பரிந்துரைப்பவர் யார்? (திருக்குர்ஆன் 02:255)

இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடமிருந்து மஸ்ரூக் (ரஹ்) அறிவித்தார்.

அல்லாஹ் வஹீயின் மூலம் பேசும்போது வானவர்கள் (அதில்) சிறிது கேட்டு (அதிர்ச்சியாகி) விடுகிறார்கள். பின்னர் அவர்களின் உள்ளங்களிலிருந்து அச்சம் நீக்கப்பட்டு குரல் ஓய்ந்துவிடும்போது, இது (தங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள) சத்தியவாக்கு என்று புரிந்து கொள்வார்கள். மேலும், 'உங்களுடைய இறைவன் என்ன சொன்னான்?' என்று கேட்பார்கள். 'உண்மை சொன்னான்'' என்று மற்றவர்கள் பதிலளிப்பார்கள்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(மறுமை நாளில்) அல்லாஹ் தன் அடியார்களை ஒன்று திரட்டுவான்: அப்போது அவன், அருகில் இருப்பவர் கேட்பதைப் போன்று தொலைவில் இருப்பவரும் கேட்கிற வகையில் உரத்த குரலில் அவர்களை அழைத்து'நானே அரசன் நானே கூலி கொடுப்பவன்'' என்று சொல்வான்.

ஹதீஸ் 7481 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் ஒரு விஷயத்தை வானத்தில் தீர்மானித்துவிட்டால் வானவர்கள் இறைக் கட்டளைக்குப் பணிந்தவர்களாகத் தம் சிறகுகளை அடித்துக்கொள்வார்கள். (அல்லாஹ்வின் அந்தக் கட்டளையை,) பாறை மேல் சங்கிலியை அடிப்பதால் எழும் ஓசையைப் போன்று (வானவர்கள் கேட்பார்கள்)

மற்றோர் அறிவிப்பில் காணப்படுவதாவது: அந்த ஒசை அவர்களைப் போய்ச் சேரும். (அப்போது வானவர்கள் பீதியடைகிறார்கள்.) பின்னர் அவர்களின் இதயங்களிலிருந்து பீதி அகற்றப்படும்போது'உங்களுடைய இறைவன் என்ன சொன்னான்?' என்று வினவுகிறார்கள். 'உண்மையே சொன்னான். அவன் உயர்ந்தவன் பெரியவன்'' என்று கூறுவர்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

இதே ஹதீஸ் வேறு சில அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

இக்ரிமா (ரஹ்) அவர்களின் ஓர் அறிவிப்பில் (பின்வருமாறு) காணப்படுகிறது: மேற்கண்ட (திருக்குர்ஆன் 34:23 வது) வசனத்தின் மூலத்தில்'ஃபுஸ்ஸிஅ' (அச்சம் அகற்றப்படும் போது) என்பதை'ஃபுர்ரிஃக' (அகற்றப்படும் போது) என ஓதினார்கள்.

சுஃப்யான் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.

இதுவே எங்களின் ஓதல் முறையாகும்.

ஹதீஸ் 7482 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ், தன் தூதர் இனியகுரலில் குர்ஆனை ஓதும்போது அதை செவிகொடுத்துக் கேட்பதைப் போன்று வேறு எதையும் அவன் செவிமடுத்துக் கேட்டதில்லை.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார். அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் தோழர் ஒருவர்'இது குரலெடுத்து (இனிமையாகக்) குர்ஆன் ஓதுவதைக் குறிக்கின்றது'' என்கிறார்.

ஹதீஸ் 7483. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ், (மறுமை நாளில் ஆதிமனிதரை நோக்கி), 'ஆதமே!' என்று அழைப்பான். ஆதம் (அலை) அவர்கள், 'இதோ வந்துவிட்டேன் கட்டளையிடு! காத்திருக்கிறேன்'' என்று சொல்வார்கள். அப்போது உரத்த குரலில்'உங்கள் சந்ததியினரிலிருந்து நரகத்திற்கு அனுப்பப்பட்ட இருப்பவர்களை (மற்றவர்களிலிருந்து) தனியாகப் பிரித்திடுமாறு அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான்'' என அறிவிக்கப்படும்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7484 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

கதீஜா (ரலி) அவர்களின் மீது நான் ரோஷப்பட்டதைப் போன்று வேறெந்தப் பெண் மீதும் நான் ரோஷப்பட்டதில்லை. நபி (ஸல்) அவர்களின் இறைவன் கதீஜா அவர்களுக்கு சொர்க்கத்தில் (முத்து) மாளிகை ஒன்று இருப்பதாக நற்செய்தி அறிவிக்கச் சொன்னான்.

இதை உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்.

## இறைவன் (வானவர்) ஜிப்ரீல் அவர்களுடன் பேசுவதும் அவன் வானவர்களை அழைப்பதும்.

மஅமர் இப்னு முஸன்னா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

“(நபியே!) விவேகமும் ஞானமும் மிக்க (இறை)வனிடமிருந்து இந்தக் குர்ஆன் உமக்கு அருளப்பெறுகிறது'' எனும் (திருக்குர்ஆன் 27:6 வது) வசனத்தின் மூலத்திலுள்ள'துலக்கா' எனும் சொல்லுக்குப்'போடப்படுகிறது' என்று பொருள். இதைப் போன்றே, 'ஆதம் தம் இறைவனிடமிருந்து சில வார்த்தைகளைக் கற்றுக் கொண்டார்'' எனும் (திருக்குர்ஆன் 02:37 வது) வசனத்தின் மூலத்திலுள்ள'தலக்கா' எனும் சொல்லுக்கு'அடைந்தார்' என்று பொருள்.

ஹதீஸ் 7485 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உயர்வும் வளமும் மிக்க அல்லாஹ் ஓர் அடியாரை நேசிக்கும்போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்களை அழைத்து, 'அல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். நீங்களும் அவரை நேசியுங்கள்'' என்று கூறுவான். அவ்வாறே ஜிப்ரீல் (அலை) அவர்கள் அவரை நேசிப்பார். பிறகு ஜிப்ரீல் (அலை) அவர்கள் வானத்தில்'அல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். எனவே, நீங்களும் அவரை நேசியுங்கள்'' என்று குரல் கொடுப்பார்கள். அவ்வாறே விண்ணகத்தாரும் அவரை நேசிப்பார்கள். மண்ணகத்தாரிடையேயும் அவருக்கு அங்கீகாரம் வழங்கப்படும்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7486. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரவில் சில வானவர்களும் பகலில் சில வானவர்களும் உங்களிடையே அடுத்தடுத்து வருகிறார்கள். அவர்கள் அஸ்ர் தொழுகையிலும் ஃபஜ்ர் தொழுகையிலும் ஒன்று சேர்கிறார்கள். பிறகு உங்களிடையே இரவு தங்கியிருந்தவர்கள் வானத்திற்கு ஏறிச் செல்வார்கள். அங்கு அவர்களிடம் அல்லாஹ், 'என் அடியார்களை எந்த நிலையில்விட்டுவிட்டு வந்தீர்கள், '' என்று அவர்களைப் பற்றி அவன் நன்கறித்த நிலையிலேயே - கேட்பான். அதற்கு வானவர்கள், 'அவர்கள்

தொழுது கொண்டிருந்த நிலையில் அவர்களைவிட்டுவிட்டு வந்தோம். அவர்கள் தொழுது கொண்டிருந்த நிலையிலேயே அவர்களிடம் சென்றோம்'' என்று பதிலளிப்பார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7487 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

என்னிடம் (வானவர்) ஜிப்ரீல் வந்து அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் இறந்துவிட்டவர் சொர்க்கம் செல்வார் எனும் நற்செய்தியைத் தெரிவித்தார். 'அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலுமா?' என்று நான் கேட்க, ஜிப்ரீல் 'ஆம். அவர் திருடினாலும் விபசாரம் புரிந்தாலும் சரியே'' என்று பதிலளித்தார்கள்.

என அபூ தர் (ரலி) அறிவித்தார்.

"ஆனால், (நபியே!) அல்லாஹ் உங்களுக்கு அருளியவற்றைத் தன் பேரறிவைக் கொண்ட அருளினான் என்பதற்குத் தானே சான்று வழங்குகிறான். வானவர்களும் சாட்சி வழங்குபவர்களாக இருக்கிறார்கள்' எனும் (திருக்குர்ஆன் 04:166 வது) இறைவசனம்.

முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

"அவற்றிற்கிடையே (இறைவனின்) கட்டளை இறங்கிக் கொண்டிருக்கின்றது'' (திருக்குர்ஆன் 65:12) அதாவது ஏழாவது வானத்திற்கும் ஏழாவது பூமிக்கும் இடையே.

ஹதீஸ் 7488 பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் என்னை நோக்கி, 'இன்னாரே! நீங்கள் உங்கள் படுக்கைக்குச் செல்லும்போது 'இறைவா! நான் என்னை உன்னிடம் ஒப்படைக்கிறேன். என் முகத்தை உன்னிடமே திருப்பினேன். என் காரியத்தை உன்னிடமே ஒப்படைத்தேன். என் விவகாரங்கள் அனைத்திலும் உன்னையே சார்ந்திருக்கிறேன். உன் மீதுள்ள ஆவலிலும் அச்சத்திலும் தான் (இவற்றை செய்தேன்.) உன்னிடமிருந்து தப்பிக்கவும் ஒதுங்கிடவும் உன்னைத் தவிர வேறு போக்கிடம் இல்லை. நீ அருளிய உன் வேதத்தையும் நீ அனுப்பி வைத்த உன் தூதரையும் நான் நம்பினேன்' என்று பிரார்த்தியுங்கள். ஏனெனில், (இவ்விதம் பிரார்த்தித்து) அன்றைய இரவில் நீங்கள் இறந்துவிட்டால் (இஸ்லாம் எனும்) இயற்கை மரபில் இறந்தவராவீர்கள். காலையில் (உயிருடன் விழித்து) எழுந்தால் இந்தப் பிரார்த்தனைக்கான நற்பலனைப் பெற்றுக் கொள்வீர்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7489 அப்துல்லாஹ் இப்னு அபீ அவ்ஃபா (ரலி) அறிவித்தார்.

(அரபுக் குலங்கள் அனைத்தும் திரண்டு வந்த அகழ்ப் போரான) 'அஹ்ஸாப்' போர் நாளில் இறைத்தூதர் (ஸல்) அவர்கள், 'இறைவா! வேதம் அருளியவனே! விரைவாகக் கணக்கு வாங்குபவனே! இந்தக் குலங்களைத் தோற்கடிப்பாயாக! அவர்களை நடுக்கத்திற்குள்ளாக்குவாயாக!" என்று பிரார்த்தனை புரிந்தார்கள்.

இந்த ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

ஹதீஸ் 7490 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

"(நபியே!) உங்கள் தொழுகையில் நீங்கள் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம் மிகவும் தாழ்த்தவும் வேண்டாம்'' எனும் (திருக்குர்ஆன் 17:110 வது) இறைவசனம் (பின்வரும்

சூழ்நிலையில்) அருளப்பெற்றது: இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (இஸ்லாத்தின் ஆரம்பக் காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் கருத்தில் கொண்டு) மக்காவில் மறைவாக(த் தொழுது கொண்டு) இருந்தார்கள். (அவ்வாறு தோழர்களுடன் சேர்ந்து தொழும்போது) குரலை உயர்த்(திக் குர்ஆனை ஓ)துவார்கள். அதை இணைவைப்பாளர்கள் கேட்டுவிடும்போது குர்ஆனையும் அதை அருளிய (இறை)வனையும் அதை (மக்கள் முன்) கொண்டு வந்த (நபிய)வர்களையும் ஏசுவார்கள். எனவே, உயர்ந்தோனாகிய அல்லாஹ்'நீங்கள் உங்கள் தொழுகையிலும் இணைவைப்பாளர்களின் காதில் விழும் அளவிற்குக் குரலை உயர்த்தாதீர்கள். அதற்காக உடன் தொழுகின்ற) உங்கள் தோழர்களுக்கே கேட்காதவாறு (ஒரேயடியாய்) குரலைத் தாழ்த்தியும் விடாதீர்கள். அவர்களுக்குக் கேட்டால் தான் உங்களிடமிருந்து அவர்கள் குர்ஆனைக் கற்பார்கள். எனவே, இவ்விரண்டிற்கும் இடையே மிதமான போக்கைக் கையாளுங்கள்" எனக் கட்டளையிட்டான்.

அல்லாஹ் கூறினான்:

அவர்கள் அல்லாஹ்வின் வாக்கை மாற்றிவிட எண்ணுகிறார்கள். (திருக்குர்ஆன் 48:15)

நிச்சயமாக, இது (சத்தியத்தையும் அசத்தியத்தையும்) பிரித்துக் காட்டும் (இறை) வாக்காகும். அதாவது உண்மை வாக்காகும் இது வீண் விளையாட்டு அன்று. (திருக்குர்ஆன் 86:13,14)

ஹதீஸ் 7491 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"ஆதமின் மகன் (மனிதன்) என்னைப் புண்படுத்துகிறான். அவன் காலத்தை ஏசுகிறான். நானே காலம் (படைத்தவன்) ஆவேன். என் கரத்திலேயே அதிகாரமனைத்தும உள்ளது. நானே இரவையும் பகலையும் மாற்றி மாற்றிக் கொண்டுவருகிறேன்" என்று அல்லாஹ் கூறினான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7492 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

'நோன்பு எனக்குரியது. நானே அதற்குப் பிரதிபலன் வழங்குவேன். நோன்பாளி தன் இச்சைகளையும் தன் உணவையும் பானத்தையும் எனக்காகவேவிட்டுவிடுகிறார்' என்று அல்லாஹ் கூறினான். நோன்பு ஒரு கேடயமாகும். நோன்பாளிக்கு இரண்டு மகிழ்ச்சிகள் உள்ளன. நோன்புத் துறக்கம் வேளையில் கிடைக்கிற ஒரு மகிழ்ச்சியும், மறுமையில் தம் இறைவனை அவர் சந்திக்கும் வேளையில் கிடைக்கிற ஒரு மகிழ்ச்சியும் தான் அவை. நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை கஸ்தூரி வாசனையைவிட அல்லாஹ்விடம் மணமிக்கதாகும்.

என அபூ ஹுரைரரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7493 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(இறைத் தூதர்) அய்யூப்(அலை) அவர்கள் திறந்த மேனியுடன் குளித்துக் கொண்டிருந்தபோது தங்கத்தாலான வெட்டுக்கிளியின் கால் அவர்களின் மீது வந்து விழுந்தது. உடனே அவர்கள் தங்களின் ஆடையில் அள்ளத் தொடங்கினார்கள். அப்போது அவர்களின் இறைவன் அவர்களை அழைத்து,'அய்யூப்! நீங்கள் பார்க்கிற இந்தத் தங்கக்கால் உங்களுக்குத் தேவைப்படாத அளவிற்கு உங்களை நான் செல்வராக ஆக்கியிருக்கவில்லையா?' என்று கேட்க, அவர்கள்'ஆம். என் இறைவா! ஆயினும், உன் அருள்வளம் (பரக்கத்) எனக்குத் தேவைப்படுகிறதே!"என்று பதிலளித்தார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7494 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உயர்வும் வளமும் மிக்கவனான நம் இறைவன் ஒவ்வோர் இரவிலும் இரவின் இறுதி மூன்றிலொரு பங்கு இருக்கும்போது கீழ்வானிற்கு இறங்கி வந்து, 'என்னிடம் யாரேனும் பிரார்த்தித்தால் அவரின் பிரார்த்தனையை நான் ஏற்கிறேன். என்னிடம் யாரேனும் கேட்டால் அவருக்கு கொடுக்கிறேன். என்னிடம் யாரேனும் பாவமன்னிப்புக் கோரினால் அவரை நான் மன்னிக்கிறேன்'' என்று கூறுகிறான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7495 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

நாமே (காலத்தால்) பிந்தியவர்களும் மறுமைநாளில் (அந்தஸ்தால்) முந்தியவர்களும் ஆவோம்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7496 இதே அறிவிப்பாளர்தொடர் வழியாக வந்துள்ள மற்றொரு ஹதீஸில் கூறப்பட்டிருப்பதாவது:

"(மனிதா!) நீ (நல்வழியில்) செலவு செய்! உனக்காக நான் செலவுசெய்வேன்'' என அல்லாஹ் கூறினான்.

ஹதீஸ் 7497 அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

(நபி (ஸல்) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள்) 'இதோ கதீஜா உங்களிடம் 'உணவுப் பத்திரத்தை' அல்லது 'பானமுள்ள பாத்திரத்தை' கொண்டு வந்து கொண்டிருக்கிறார். அவருக்கு அவரின் இறைவனிடமிருந்து சலாம் எடுத்துரையுங்கள். கூச்சலோ களைப்போ இல்லாத முத்து மாளிகையொன்று அவருக்கு (சொர்க்கத்தில்) கிடைக்கும் என்று நற்செய்தி அளியுங்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7498 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

"என் நல்லடியார்களுக்காக எந்தக் கண்ணும் பார்த்திராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனிதரின் உள்ளத்திலும் தோன்றியிராத இன்பங்களை சொர்க்கத்தில் நான் தயார்ப்படுத்தி வைத்துள்ளேன்'' என்று அல்லாஹ் கூறினான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7499 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் இரவில் 'தஹஜ்ஜுத் தொழும்போது (பின்வருமாறு) பிரார்த்திப்பார்கள்: இறைவா! உனக்கே புகழனைத்தும். நீயே வானங்கள் மற்றும் பூமியின் ஒளி ஆவாய். உனக்கே புகழனைத்தும். நீயே வானங்கள் மற்றும் பூமியின் நிர்வாகி ஆவாய். உனக்கே புகழனைத்தும். நீயே வானங்கள். பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களின் இறைவன் ஆவாய்! நீயே உண்மை. உன் வாக்குறுதியே உண்மை. உன் சொல்லே சத்தியம். உன் சந்திப்பே உண்மை. சொர்க்கம் உண்மை. நரகம் உண்மை. நபிமார்கள் அனுப்பப்பட்டதும்) உண்மை. மறுமை நாள் (நிகழப்போவது) உண்மை. இறைவா! உனக்கே கீழ்ப்படிந்தேன். உன்னையே நம்பினேன். உன்னையே சார்ந்துள்ளேன். உன் பக்கமே திரும்புகிறேன். உன்னிடமே என் வழக்குகளைக் கொண்டு வந்தேன். உன்னிடம் நீதி கேட்டேன். எனவே, நான் முந்திச் செய்த, பிந்திச்

செய்கின்ற, இரகசியமாகச் செய்த, பம்ரங்கமாகச் செய்த பாவங்கள் அனைத்தையும் மன்னிப்பாயாக! நீயே என் இறைவன் வணக்கத்திற்குரியவர் உன்னைத் தவிர வேறெவருமில்லை.

ஹதீஸ் 7500 ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) அவர்கள் குறித்து அவதூறு கிளப்பியவர்கள் அவர்களின் மீது அவதூறு பேசியபோது, ஆயிஷா(ரலி) அவர்கள் குற்றமற்றவர்கள் என்று கூறி அவர்கள் சொன்ன அவதூறிலிருந்து அவர்களை அல்லாஹ் விடுவித்துவிட்டான். இச்செய்தி குறித்து நான் உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்), ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்), அல்கமா இப்னு அபீ வக்காஸ்(ரஹ்), உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) ஆகியோரிடமிருந்து (பின்வருமாறு) செவியுற்றேன். அவர்கள் ஒவ்வொருவரும் இந்தச் சம்பவத்தின் ஒரு பகுதியை ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து எனக்கு அறிவித்தார்கள்.

...ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் என்னைக் குற்றமற்றவள் என்று அறிவிக்க, ஓதப்படுகிற வேத அறிவிப்பை அருளுவான் என்று நான் நினைத்தும் பார்த்திருக்கவில்லை. ஓதப்படுகிற வசனம் ஒன்றில் என் தொடர்பாக அல்லாஹ் பேசுகிற அளவுக்கு நான் உயர்ந்தவள் அல்லள் என்பதே என் மனத்தில் என்னைப் பற்றிய முடிவாக இருந்தது. மாறாக, என்னைக் குற்றமற்றவள் என அறிவிக்கும் ஒரு கனவை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் உறக்கத்தில் காண்பார்கள் என்றே நான் எதிர்பார்த்திருந்தேன். ஆனால், உயர்ந்தோன் அல்லாஹ் (நான் தூய்மையானவள் என்பது குறித்து)'அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர் தாம்..!"என்று தொடங்கும் (24 வது அத்தியாயத்தின்) பத்து வசனங்களை அருளினான்.

ஹதீஸ் 7501 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (வானவர்களிடம்) கூறுகிறான்: என் அடியான் ஒரு தீமையைச் செய்ய நாடினால் அதை அவன் செய்யாத வரை அவனுக்கெதிராக அதைப் பதிவு செய்யாதீர்கள். அதை அவன் செய்தால் செய்த குற்றத்தை மட்டுமே பதிவு செய்யுங்கள். அதை அவன் எனக்காகவிட்டுவிட்டால் அதை அவனுக்கு ஒரு நன்மையாகப் பதிவு செய்யுங்கள். அவன் ஒரு நன்மை புரிய எண்ணிவிட்டாலே அதைச் செய்யாவிட்டாலும் கூட அவனுக்கு ஒரு நன்மையை எழுதுங்கள். அதை அவன் செய்துவிட்டாலோ அதை அவனுக்கு பத்து நன்மைகளிலிருந்து எழுநூறு நன்மைகளாக எழுதுங்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7502 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்பினங்களைப் படைத்து முடித்தபோது, உறவானது எழுந்து (இறை அரியாசனத்தின் கால்களைப் பற்றிக் கொண்டு) நின்றது. அல்லாஹ்'சற்று பொறு" என்றான். 'உறவுகளைத் துண்டிப்பதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோரியே இப்படி நிற்கிறேன்" என்றது உறவு. உடனே அல்லாஹ்'(உறவே!) உன்னைப் பேணி நடந்து கொள்பவனுடன் நானும் நல்ல முறையில் நடந்து கொள்வேன் உன்னைத் துண்டித்து விடுபவனை நானும் துண்டித்துவிடுவேன் என்பது உனக்குத் திருப்தியளிக்கவில்லையா?' என்று கேட்டான். அதற்கு'ஆம் (திருப்தியே) என் இறைவா!"என்றது உறவு. 'இது உனக்காக நடக்கும்" என்றான் அல்லாஹ்.

(இந்த ஹதீஸை அறிவித்த) பிறகு அபூ ஹுரைரா(ரலி) அவர்கள்'(நயவஞ்சகர்களே!) நீங்கள் (போருக்கு வராமல்) பின்வாங்கிக் கொண்டு பூமியில் குழப்பம் விளைவிக்கவும் உங்கள்

உறவுகளைத் துண்டிக்கவும் முனைகிறீர்களா?' எனும் (திருக்குர்ஆன் 47:22 வது) இறைவசனத்தைக் கூறினார்கள்.

ஹதீஸ் 7503 ஸைத் இப்னு காலித்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களின் காலத்தில் (ஒரு நாள்) மழைபொழிந்தது. அப்போது அவர்கள், 'என் அடியார்களில் என்னை நிராகரிப்பவனும் இருக்கிறான் என்னை நம்புகிறவனும் இருக்கிறான் என்று அல்லாஹ் கூறினான்'' என்றார்கள்.

ஹதீஸ் 7504 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்: என் அடியான் என்னைச் சந்திக்க விரும்பினால் நானும் அவனைச் சந்திக்க விரும்புகிறேன். அவன் என்னைச் சந்திப்பதை வெறுத்தால் நானும் அவனைச் சந்திப்பதை வெறுக்கிறேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7505 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் கூறினான்: என் அடியான் என்னைப் பற்றி என்ன நினைக்கிறானோ அதற்கேற்ப அவனிடம் நான் நடந்து கொள்வேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7506 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

(முந்தைய காலத்தில்) நன்மை எதையும் அறவே செய்யாத ஒருவர்'நான் இறந்துவிட்டால் என்னை எரித்து, அந்தச் சாம்பலில் பாதியைக் கரையிலும் பாதியைக் கடலிலும் தூவிவிடுங்கள். ஏனெனில், இறைவன் மீதாணையாக! என் மீது இறைவனுக்கு சக்தி ஏற்பட்டால், உலக மக்களில் யாவரும் அளிக்காத வேதனையை அவன் எனக்கு அளித்துவிடுவான்'' என்று சொல்லி(விட்டு இறந்து)விட்டார். (அவ்வாறே அவர் உடல் எரிக்கப்பட்டு சாம்பல் தூவப்பட்டது.) பிறகு, அல்லாஹ் கடலுக்கு ஆணையிட்டு அதிலிருந்த அவரின் உடலை ஒன்று திரட்டினான். தரைக்கு ஆணையிட்டு அதிலிருந்தும் அவரின் உடலை ஒன்று திரட்டினான். பிறகு, 'நீ எதற்காக இப்படிச் செய்தாய்?' என்று கேட்டான். அதற்கு அவர், 'உன் அச்சத்தினால் தான். நீ நன்கறிந்தவன்'' என்று சொல்ல, அவரை அல்லாஹ் மன்னித்துவிட்டான்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7507 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஓர் அடியார் ஒருபாவம் செய்துவிட்டார். பிறகு'இறைவா! நான் ஒரு பாவம் செய்து விட்டேன். எனவே, என்னை மன்னித்து விடுவாயாக' என்று பிரார்த்தித்தார். உடனே அவரின் இறைவன். 'என் அடியான் என்கோர் இறைவன் இருக்கிறான் என்றும், அவன் பாவங்களை மன்னிப்பான் (அல்லது) அதற்காகத் தண்டிப்பான் என்றும் அறிந்துள்ளானா? (நன்று) நான் என் அடியானை மன்னித்துவிட்டேன்'' என்று சொன்னான். பிறகு அந்த அடியார் (சிறிது காலம்) அல்லாஹ் நாடிய வரை அப்படியே இருந்தார். பிறகு மீண்டும் ஒரு பாவத்தைச் செய்தார். அப்போது அந்த மனிதர் (மீண்டும்)'என் இறைவா! நான் மற்றொரு பாவம் செய்து விட்டேன். எனவே, என்னை மன்னித்து விடுவாயாக' என்று பிரார்த்தித்தார். உடனே இறைவன் (இம் முறையும்)'என் அடியான் தனக்கோர் இறைவன் இருக்கிறான் என்றும், அவன் பாவங்களை மன்னிப்பான் (அல்லது) அதற்காகத் தண்டிப்பான் என்றும் அறிந்துள்ளானா? (நல்லது.) நான்

என் அடியானை மன்னித்துவிட்டேன்'' என்று சொன்னான். பிறகு அல்லாஹ் நாடிய வரை அந்த மனிதர் அப்படியே (சிறிது காலம்) இருந்தார். பிறகும் (மற்றொரு) பாவம் செய்தார். (இப்போதும் முன்பு போன்றே)'என் இறைவா! நான் இன்னொரு பாவம் செய்து விட்டேன். எனக்காக அதை மன்னித்து விடுவாயாக' என்று பிரார்த்தித்தார். அதற்கு அல்லாஹ்'என் அடியான் தனக்கோர் இறைவன் இருக்கிறான் என்றும், அவன் பாவங்களை மன்னிப்பான் (அல்லது) அதற்காகத் தண்டிப்பான் என்றும் அறிந்துள்ளானா? (அப்படியானால்) நான் என் அடியானை மூன்று முறையும் மன்னித்து விட்டேன். இனி அவன் நாடியதைச் செய்து கொள்ளட்டும்'' என்று சொன்னான்.

ஹதீஸ் 7508 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்'முன் சென்ற' அல்லது'உங்களுக்கு முன் வாழ்ந்த' ஒரு மனிதரைப் பற்றி ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார்கள். அல்லாஹ் அந்த மனிதருக்கு செல்வத்தையும் பிள்ளைகளையும் வழங்கியிருந்தான். அவருக்கு இறப்பு நெருங்கியபோது அவர் தம் மக்களிடம்'நான் உங்களுக்கு எப்படிப்பட்ட தந்தையாக இருந்தேன்?' என்று கேட்க, அவர்கள்'நல்ல தந்தையாக இருந்தீர்கள்'' என்றார்கள். ஆனால், அவரோ தம(து மறுமை)க்காக அல்லாஹ்விடம் எந்த நன்மையையும்'தயார் செய்திருக்கவில்லை'. அல்லது'சேமித்திருக்கவில்லை'. தம் மீது அல்லாஹ்வுக்கு சக்தி ஏற்பட்டால் தம்மை அவன் வேதனை செய்வான் என அவர் அஞ்சினார். எனவே, (அவர் தம் மக்களிடம்)'நன்றாகக் கவனியுங்கள். நான் இறந்துவிட்டால் என்னைப் பொசுக்கிவிடுங்கள். நான் (வெந்து) கரியாக மாறிய பின் என்னைப் பொடிப் பொடியாக்கி, சூறாவளிக் காற்று வீசும் நாளில் காற்றில் என்னைத் தூவிவிடுங்கள்'' என்றார்.

நபி(ஸல்) அவர்கள் தொடர்ந்து கூறினார்கள்: இவ்வாறு அம்மனிதர் தம் மக்களிடம் அதற்கான உறுதிமொழிகளைப் பெற்றுக்கொண்டார். என் இறைவன் மீதாணையாக! (அவர் இறந்தவுடன்) அவர்கள் அவ்வாறே செய்தார்கள். பிறகு அவரின் சாம்பலை சூறாவளிக் காற்று வீசிய ஒரு நாளில் தூவிவிட்டார்கள். அப்போது வல்லவனும் உயர்ந்தவனுமான அல்லாஹ்'(பழையபடி முழு மனிதராக) ஆகிவிடு'' என்று சொல்ல, அந்த மனிதர் (உயிர் பெற்று) எழுந்தார். அல்லாஹ்'என் அடியானே! இவ்வாறு நீ செய்யக் காரணமென்ன?' என்று கேட்டான். அம்மனிதர்'உன் அச்சத்தின் காரணத்தால் தான்'' என்று பதிலளித்தார். அவரை அந்த நேரத்தில் அல்லாஹ்வின் கருணை தான் காப்பாற்றியது.

மற்றோர் அறிவிப்பில்'கடலில் தூவி விடுங்கள்'' என அம்மனிதர் கூறினார் என்று காணப்படுகிறது.

வேறோர் அறிவிப்பில் (இந்த ஹதீஸின் மூலத்தில் இடம் பெற்றுள்ள)'லம் யப்தயிஸ்' எனும் சொல்லுக்கு கத்தாதா(ரஹ்) அவர்கள் சேமித்து வைக்கவில்லை' என்று விளக்கம் தருகிறார்கள்.

## மறுமைநாளில் இறைத்தூதர்களுடனும் மற்றவர்களுடனும் வலிமையும் மகத்துவமும் மிகுந்த இறைவன் உரையாடுவது.

ஹதீஸ் 7509 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

மறுமைநாள் வரும்போது என் சமுதாயத்தாருக்காகப் பரிந்துரை செய்ய எனக்கு அனுமதியளிக்கப்படும். நான்'என் இறைவா! எவருடைய உள்ளத்தில் கடுகளவு (இறைநம்பிக்கை) உள்ளதோ அவர்களை சொர்க்கத்தில் அனுமதிப்பாயாக!"என்று கூறுவேன். அவர்கள் அவ்வாறே சொர்க்கம் செல்வார்கள். பிறகு நான்'எவருடைய உள்ளத்தில் சிறிதளவேனும் (இறைநம்பிக்கை) உள்ளதோ அவர்களை சொர்க்கத்தில் அனுமதிப்பாயாக'' என்று மீண்டும் பிரார்த்திப்பேன்.

இதை அறிவித்த அனஸ் (ரலி) அவர்கள்’இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (‘சிறிதளவேனும்’ என்று கூறியபோது) விரல் நுனியைக் காட்டியதை நான் இப்போதும் பார்ப்பது போன்றுள்ளது‘‘ என்று கூறினார்கள்.

ஹதீஸ் 7510. மஅபத் இப்னு ஹிலால் அல்அனஸீ (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

பஸ்ராவாசிகளில் சிலர் (ஓரிடத்தில்) ஒன்று கூடினோம். பிறகு நாங்கள் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம் சென்றோம். அனஸ் (ரலி) அவர்களிடம் பரிந்துரை (ஷஃபாஅத்) பற்றிய நபிமொழியைக் கேட்பதற்காக எங்களுடன் ஸாபித் அல் புனானீ (ரஹ்) அவர்களையும் அழைத்துச் சென்றோம். அனஸ் (ரலி) அவர்கள் தங்களின் கோட்டையில்’ளுஹா’ தொழுதுகொண்டிருக்கையில் நாங்கள் அவர்களிடம் போய்ச்சேர்ந்தோம். பிறகு நாங்கள் உள்ளே செல்ல அனுமதி கேட்க, எங்களை அவர்கள் (உள்ளே நுழைய) அனுமதித்தார்கள். அப்போது அவர்கள் தங்களின் விரிப்பில் அமர்ந்து கொண்டிருந்தார்கள். நாங்கள் ஸாபித் (ரஹ்) அவர்களிடம்’பரிந்துரை பற்றிய நபிமொழிக்கு முன்னால் வேறு எதைப் பற்றியும் கேட்காதீர்கள்‘‘ என்று சொன்னோம். உடனே ஸாபித் (ரஹ்) அவர்கள், ‘அபூ ஹம்ஸா! (அனஸ்!) இதோ இவர்கள் பஸ்ராவாசிகளான உங்கள் சகோதரர்கள் ஆவர். பரிந்துரை (ஷஃபாஅத்) பற்றிய நபிமொழியை உங்களிடம் கேட்பதற்காக இங்கு வந்திருக்கிறார்கள்‘‘ என்றார்கள். அப்போது அனஸ் (ரலி) கூறினார்:

முஹம்மத் (ஸல்) அவர்கள் எங்களிடம் தெரிவித்தார்கள். (பீதி மிகுந்த) மறுமை நாள் நிகழும்போது மக்கள் சிலர் சிலரோடு அலைமோதுவார்கள். அவர்கள் (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களிடம் சென்று’(இந்தச் சோதனையான கட்டத்திலிருந்து எங்களைக் காக்க) எங்களுக்காக உங்களுடைய இறைவனிடம் பரிந்துரை செய்யுங்கள்‘‘ என்று சொல்வார்கள். அதற்கு ஆதம் (அலை) அவர்கள், ‘அந்தத் தகுதி எனக்கு இல்லை நீங்கள் இப்ராஹீம் (அலை) அவர்களைப் போய் பாருங்கள். ஏனென்றால், அவர் அளவிலா அருளாள (னான இறைவ) னின் உற்ற நண்பராவார்‘‘ என்று கூறுவார்கள். உடனே மக்கள் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது இப்ராஹீம் (அலை) அவர்களும், ‘அந்தத் தகுதி எனக்கு இல்லை நீங்கள் மூஸாவிடம் செல்லுங்கள். ஏனென்றால், அவர் அல்லாஹ்வுடன் உரையாடியவராவார்‘‘ என்று சொல்வார்கள். உடனே, மக்கள் மூஸா (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது மூஸா (அலை) அவர்களும் அதற்கு (த் தகுதியானவன்) நான் அல்லன் நீங்கள் ஈசாவைப் போய் பாருங்கள். ஏனென்றால், அவர் அல்லாஹ்வின் ஆவியும் அவனுடைய வார்த்தையும் ஆவார்‘‘ என்று சொல்வார்கள்.

உடனே, மக்கள் ஈசா (அலை) அவர்களிடம் செல்வார்கள். அப்போது ஈசா (அலை) அவர்கள் அதற்கு (த் தகுதியானவன்) நான் அல்லன் நீங்கள் முஹம்மத் (ஸல்) அவர்களைப் போய் பாருங்கள்‘‘ என்று சொல்வார்கள்.

உடனே, மக்கள் என்னிடம் வருவார்கள். அப்போது நான், ‘நான் அதற்குரியவன் தான்‘‘ என்று சொல்லிவிட்டு, (மக்களுக்காகப் பரிந்துரைக்க) என் இறைவனிடம் அனுமதி கேட்பேன். அப்போது எனக்கு அனுமதியளிக்கப்படும். தற்போது எனக்குத் தோன்றாத புகழ்மாலைகளையெல்லாம் அப்போது நான் இறைவனைப் போற்றிப் புகழும் வகையில் எனக்கு அவன் என்னுடைய எண்ணத்தில் உதயமாக்குவான். அந்தப் புகழ்மாலைகளால் நான் அவனைப் (போற்றிப்) புகழ்வேன். அவனுக்காக (அவன் முன்) நான் சஜ்தாவில் (சிரவணக்கத்தில்) விழுவேன். அப்போது (இறைவனின் தரப்பிலிருந்து), ‘முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள்! சொல்லுங்கள் உங்களுக்காகச் செவியேற்கப்படும். கேளுங்கள் தரப்படும்.

பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்'' என்று சொல்லப்படும். அப்போது நான், 'என் இறைவா! என் சமுதாயம் என் சமுதாயம்' என்பேன். அப்போது, 'செல்லுங்கள் எவருடைய உள்ளத்தில் வாற்கோதுமையின் எடையளவு இறைநம்பிக்கை இருந்தோ அவரை நரகத்திலிருந்து அப்புறப்படுத்துங்கள்'' என்று சொல்லப்படும். எனவே, நான் சென்று அவ்வாறே செய்வேன். பிறகு திரும்பி வந்து, அதே புகழ்மாலைகளைக் கூறி (மீண்டும்) அவனை நான் போற்றிப் புகழ்வேன். பிறகு அவனுக்காக சஜ்தாவில் நான் விழுவேன். அப்போதும். 'முஹம்மதே! தலையை உயர்த்துங்கள்! சொல்லுங்கள் உங்கள் சொல் செவியேற்கப்படும். கேளுங்கள் தரப்படும் பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்'' என்று கூறப்படும். அப்போது நான், 'என் இறைவா! என் சமுதாயம் என் சமுதாயம் என்று சொல்வேன். அப்போது'சொல்லுங்கள் யாருடைய உள்ளத்தில்'அணுவளவு' அல்லது'கடுகளவு' இறை நம்பிக்கை இருந்தோ அவர்களை நரகத்திலிருந்து வெளியேற்றுங்கள்'' என்று சொல்லப்படும்.

நான் சென்று, அவ்வாறே செய்துவிட்டு, மீண்டும் திரும்பி வந்து அதே புகழ்மாலைகளைக் கூறி அவனைப் போற்றிப் புகழ்வேன். பிறகு அவனுக்காக சஜ்தாவில் விழுவேன். அப்போதும், 'முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள் சொல்லுங்கள் உங்கள் சொல் செவியேற்கப்படும். கேளுங்கள் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்'' என்று (இறைவனின் தரப்பிலிருந்து) சொல்லப்படும். அப்போது நான், 'என் இறைவா! என் சமுதாயம் என் சமுதாயம்'' என்பேன். அதற்கு அவன், 'செல்லுங்கள்: எவருடைய உள்ளத்தில் கடுகு மணியை விட மிக மிகச் சிறிய அளவில் இறைநம்பிக்கை இருக்கிறதோ அவரை நரகத்திலிருந்து வெளியேற்றுங்கள்'' என்று சொல்வான். அவ்வாறே நான் சென்று அ(த்தகைய)வரை நரகத்திலிருந்து வெளியேற்றுவேன் (என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அனஸ்(ரலி) அவர்கள் சொன்னார்கள்.)

அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து நாங்கள் விடைபெற்றபோது நான் என் நண்பர்கள் சிலரிடம், '(ஹஜ்ஜாஜ் இப்னு யூசுஃபிடமிருந்து தப்புவதற்காக) அபூ கலீஃபாவின் இல்லத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் ஹஸன் அல்பஸ்ரீ(ரஹ்) அவர்களை நாம் கடந்து சென்றால், அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் நமக்கு அறிவித்த (பரிந்துரை பற்றிய விஷயத்)தை அவர்களிடம் கூறினால் நன்றாயிருக்கும்!"என்று சொன்னேன். அவ்வாறே நாங்கள் ஹஸன்(ரஹ்) அவர்களிடம் சென்று (அனுமதி கேட்கும் முகமாக) சலாம் (முகமன்) சொன்னோம். அவர்கள் எங்களுக்கு அனுமதி அளித்தார்கள். நாங்கள் அவரிடம், 'அபூ சயீதே! உங்கள் சகோதரர் அனஸ் இப்னு மாலிக்(ரலி) அவர்களிடமிருந்து நாங்கள் உங்களிடம் வந்துள்ளோம். பரிந்துரை பற்றி அவர்கள் அறிவித்த ஹதீஸைப் போன்று (வேறு) யாரும் சொல்ல) நாங்கள் கண்டதில்லை'' என்று கூறினோம். அதற்கு ஹஸன்(ரஹ்) அவர்கள், 'அதை என்னிடம் கூறுங்கள்'' என்றார்கள். அந்த நபிமொழியை நாங்கள் அவர்களிடம் சொல்லிக் கொண்டே இந்த இடம் (மூன்றாவது முறை பரிந்துரை செய்ய அனுமதிகோரி நான் என் இறைவனிடம் சென்றேன் என்பது) வரை வந்தபோது ஹஸன்(ரஹ்) அவர்கள், 'இன்னும் சொல்லுங்கள்'' என்றார்கள். அதற்கு நாங்கள்'இதைவிடக் கூடுதலாக எங்களிடம் அனஸ் அவர்கள் கூறவில்லை'' என்று சொன்னோம்.

அதற்கு ஹஸன்(ரஹ்) அவர்கள், 'இருபது ஆண்டுகளுக்கு முன்னால் (நினைவாற்றல் மாறாத) இளமையில் அனஸ் இருந்தபோது (இந்த நபிமொழியை இன்னும் விரிவாக) எனக்கு அறிவித்தார்கள். (அந்தக் கூடுதலான விஷயத்தைக் கூற) அவர்கள் மறந்துவிட்டார்களா? அல்லது நீங்கள் (நபிகளாரின் பரிந்துரை மீது அபரிமிதமான நம்பிக்கை வைத்துக்கொண்டு நல்லறங்களில்) நாட்டமில்லாமல் இருந்துவிடுவீர்கள் என்பதால் கூறவில்லையா? என்று எனக்குத்

தெரியவில்லை‘‘ என்றார்கள். உடனே நாங்கள், ‘அபூ சயீதே! அவ்வாறாயின் அதை நீங்கள் எங்களுக்குச் சொல்லுங்கள்!”என்றோம். (இதைக் கேட்டவுடன்) ஹஸன் (ரஹ்) அவர்கள் சிரித்துவிட்டு, ‘அவசரக்காரனாகவே மனிதன் படைக்கப்பட்டுள்ளான். என்னிடம் அனஸ் (ரலி) அவர்கள் எப்படி இந்த நபிமொழியைக் கூறினார்களோ அதைப் போன்றே உங்களிடம் நான் அந்த நபிமொழியைச் சொல்ல வேண்டும் என்பதற்காகவே நான் இவ்வாறு குறிப்பிட்டேன்‘‘ என்று (சொல்லிவிட்டு, அந்த நபிமொழியின் கூடுதல் விஷயத்தையும்) கூறினார்கள். (நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:)

பிறகு, நான்காம் முறையாக நான் இறைவனிடம் சென்று அதே (புகழ்மாலைகளைக்) கூறி இறைவனைப் போற்றிப் புகழ்வேன். பிறகு அவனுக்காக சஜ்தாவில் விழுவேன். அப்போது, ‘முஹம்மதே! உங்கள் தலையை உயர்த்துங்கள்! சொல்லுங்கள் செவியேற்கப்படும். கேளுங்கள் அது உங்களுக்குத் தரப்படும். பரிந்துரை செய்யுங்கள் உங்கள் பரிந்துரை ஏற்கப்படும்‘‘ என்று (இறைவனின் தரப்பிலிருந்து) சொல்லப்படும். அப்போது நான், ‘என் இறைவா! (உலகில்) லா இலாஹ இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று சொன்னவர்களின் விஷயத்தில் (பரிந்துரை செய்ய) எனக்கு அனுமதி வழங்குவாயாக‘‘ என்று நான் கேட்பேன். அதற்கு இறைவன், என் கண்ணியத்தின் மீதும், மகத்துவத்தின் மீதும், பெருமையின் மீதும் ஆணையாக!’லா இலாஹ இல்லல்லாஹ்’ என்று சொன்னவர்களை நான் நரகத்திலிருந்து நிச்சயமாக வெளியேற்றுவேன்‘‘ என்று சொல்வான்.

ஹதீஸ் 7511 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

சொர்க்கவாசிகளில் இறுதியாக சொர்க்கத்தில் நுழைபவரும், நரகவாசிகளில் இறுதியாக நரகத்திலிருந்து வெளியேறுபவரும் யாரென்றால், தவழ்ந்தபடி வெளியேறுகிற ஒரு மனிதராவார். அப்போது அவரின் இறைவன்’சொர்க்கத்தில் நுழைந்துகொள்’ என்று அவரிடம் சொல்வான். அதற்கு அவர்’என் இறைவா! சொர்க்கம் நிரம்பிவிட்டது’ என்று பதில் சொல்வார். இவ்வாறு அவரிடம் மூன்று முறை இறைவன் சொல்வான். ஒவ்வொரு முறையும் அம்மனிதர் சொர்க்கம் நிரம்பிவிட்டது என்றே அல்லாஹ்விடம் கூறுவார். பின்னர் அல்லாஹ்’உலகத்தைப் போன்று பத்து மடங்கு இடம் (சொர்க்கத்தில்) உனக்குண்டு’ என்று சொல்வான்.

என அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7512. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

(மறுமையில்) உங்களில் ஒவ்வொருவருடனும் அல்லாஹ் உரையாடுவான். அப்போது அவனுக்கும் உங்களுக்குமிடையே மொழிபெயர்ப்பாளர் எவரும் இருக்கமாட்டார். நீங்கள் உங்கள் வலப் பக்கம் பார்ப்பீர்கள். அங்கு நீங்கள் முன்பே செய்து அனுப்பிய செயல்களையே காண்பீர்கள். உங்கள் இடப் பக்கம் பார்ப்பீர்கள். அங்கும் நீங்கள் முன்பே செய்து அனுப்பிய செயல்களையே காண்பீர்கள். உங்கள் முன்னால் பார்ப்பீர்கள். உங்கள் முகத்துக்கு எதிரே நரகத்தையே காண்பீர்கள். எனவே, ஒரு பேரீச்சம் பழத்துண்டை (தர்மமாக)க் கொடுத்தாவது நரகத்திலிருந்து தப்பித்துக் கொள்ளுங்கள்.

என அதீ இப்னு ஹாத்திம் (ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில்’ஒரு நற்சொல்லைக் கொண்டாவது’ என்று காணப்படுகிறது.

ஹதீஸ் 7513 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

யூதப் பாதிரியார் ஒருவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து'மறுமை நாள் ஏற்படும்போது அல்லாஹ் வானங்கள் ஒரு விரலிலும் பூமிகளை ஒரு விரலிலும் தண்ணீரையும் ஈர மண்ணையும் ஒரு விரலிலும் மற்ற படைப்புகளை ஒரு விரலிலும் வைத்துக் கொண்டு பிறகு அவற்றை அசைப்பான். பின்னர்'நானே அரசன் நானே அரசன்' என்று சொல்வான்' எனக் கூறினார். அவர் சொன்னதைக் கேட்டு ஆச்சரியத்தாலும், அதை ஆமோதிக்கும் வகையிலும் நபி(ஸல்) அவர்கள் தம் கடைவாய்ப் பற்கள் வெளியே தெரியும் அளவுக்குச் சிரிப்பதை கண்டேன். பிறகு நபி(ஸல்) அவர்கள்'அல்லாஹ்வை எப்படி மதிக்க வேண்டுமோ அப்படி அவர்கள் மதிக்கவில்லை'' எனும் (திருக்குர்ஆன் 06:91 வது) இறைவசனத்தைக் கூறினார்கள்.

ஹதீஸ் 7514 ஸஃப்வான் இப்னு முஹ்ரிஸ்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஒருவர் இப்னு உமர்(ரலி) அவர்களிடம்'(மறுமைநாளில் அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடியார்களுக்குமிடையே நடக்கும்) இரகசிய உரையாடல் தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் என்ன செவியுற்றீர்கள்?' என்று வினவியதற்கு இப்னு உமர்(ரலி) கூறினார்: உங்களில் ஒருவர் தம் இறைவனை நெருங்குவார். இறைவன் தன்னுடைய திரையை அவரின் மீது கோட்டு (அவரை மறைத்து) விடுவான். பின்னர் (அவரிடம்) இறைவன்'நீ (உலகத்தில்) இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா?' என்று கேட்பான். அவர்'ஆம்' என்பார். இறைவன் (மறுபடியும்) இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா?' என்று கேட்பான். அப்போதும் அவர்'ஆம்' என்று கூறி தம் குற்றத்தை ஒப்புக் கொள்வார்.

பிறகு'நான் (உன் குற்றங்களை) உலகில் மற்றவருக்குத் தெரியாமல்) மறைத்தேன் இன்று நான் அவற்றையெல்லாம் உனக்காக மன்னித்துவிடுகிறேன்'' என்று சொல்வான்.

இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பாளர் தொடர் வழியாகவும் வந்துள்ளது.

## "மூஸாவுடன் அல்லாஹ் (நேரடியாகப்) பேசினான்' எனும் (திருக்குர்ஆன் 04:164 வது) இறைவசனம் தொடர்பாக வந்துள்ளவை.

ஹதீஸ் 7515 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

ஆதம்(அலை) அவர்களும் மூஸா(அலை) அவர்களும் தர்க்கம் செய்துகொண்டார்கள். அப்போது மூஸா(அலை) அவர்கள்'நீங்கள் தாமே உங்கள் சந்ததிகளை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றிய ஆதம்?' என்று கேட்டார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள்,'அல்லாஹ் தன் தூதுச் செய்திகளை அனுப்பவும் தன்னுடன் உரையாடவும் தேர்ந்தெடுத்துக்கொண்ட மூஸா நீங்கள் தாமே! அப்படிப்பட்ட நீங்களா, நான் படைக்கப்படுவதற்கு முன்பே என்மீது விதிக்கப்பட்டுவிட்ட ஒரு விஷயத்திற்காக என்னைக் குறை சொல்கின்றீர்கள்?' என்று கேட்டார்கள். (இந்த பதில் மூலம்) ஆதம் (அலை) அவர்கள் மூஸா(அலை) அவர்களை வென்றுவிட்டார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7516 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இறைநம்பிக்கையாளர்கள் மறுமை நாளில் ஒன்று திரட்டப்படுவார்கள். அப்போது அவர்கள்'(அதிபயங்கரமான) இந்த இடத்திலிருந்து நம்மை விடுவிக்க நாம் இறைவனிடம் பரிந்துரைக்கும்படி (யாரையாவது) நாம் கேட்டுக்கொண்டால் என்ன?' என்று பேசிக்கொள்வார்கள். அதன்படி அவர்கள் ஆதம்(அலை) அவர்களிடம் சென்று அவர்களிடம்'நீங்கள் மனிதர்களின் தந்தை ஆதம் ஆவீர் அல்லாஹ் உங்களைத் தன்னுடைய கரத்தால் படைத்தான். வானவர்களை உங்களுக்குச் சிரம்பணியச் செய்தான். மேலும்,

உங்களுக்கு எல்லாப் பொருள்களின் பெயர்களையும் கற்பித்தான். எனவே, எங்கள் இறைவன் எங்களை (இந்தச் சோதனையிலிருந்து) விடுவிக்க எங்களுக்காக அவனிடம் பரிந்துரை செய்யுங்கள்'' என்று கேட்டுக்கொள்வார்கள். அதற்கு ஆதம்(அலை) அவர்கள், '(நீங்கள் நினைக்கும்) அந்த இடத்தில் நான் இல்லை'' என்று அவர்களிடம் சொல்லி, தம் செய்ததவற்றை அவர்களிடம் எடுத்துரைப்பார்கள்.

இந்த ஹதீஸை அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7517 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கஅபா பள்ளிவாசலிலிருந்து (விண் பயணத்திற்கு) இரவில் அழைத்துச் செல்லப்பட்டது பற்றி அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறினார்:

நபி(ஸல்) அவர்களுக்கு (சட்டங்கள் தொடர்பாக) வேத அறிவிப்பு (வஹீ) வருவதற்கு முன்பு (ஒரு நாள் இரவு) அவர்கள் புனித (கஅபா) பள்ளிவாசலில் உறங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களிடம் (வானவர்கள்) மூன்று பேர் வந்தனர். அவர்களில் முதலாமவர், (அங்கு படுத்திருந்த ஹம்ஸா(ரலி), முஹம்மத்(ஸல்), ஜஅஃபர்(ரலி) ஆகியோரை நோக்கி)'இவர்களில் அவர் (முஹம்மத் - ஸல்) யார்?' என்று கேட்டதற்கு நடுவிலிருந்த(வான)வர்'இவர்களில் (நடுவில் படுத்திருக்கும்) சிறந்தவரே அவர்'' என்று பதிலளித்தார். அப்போது அம்மூவரில் மூன்றாமவர்,'இவர்களில் சிறந்தவரை (விண் பயணத்திற்காக) எடுத்து வாருங்கள்'' என்று கூறினார். அன்றிரவு இவ்வளவு தான் நடந்தது. அடுத்த(நாள்) இரவில் நபி(ஸல்) அவர்கள் தங்களின் உள்ளம் பார்க்கிற நிலையில் (-உறக்க நிலையில்) அம்மூவரும் வந்தபோது தான் அவர்களைக் கண்டார்கள். நபி(ஸல்) அவர்களின் கண் மட்டுமே உறங்கும் அவர்களின் உள்ளம் உறங்குவதில்லை. -இறைத்தூதர்கள் நிலை இவ்வாறுதான் அவர்களின் கண்கள் மட்டுமே உறங்கும் அவர்களின் உள்ளங்கள் உறங்கமாட்டா. பிறகு அந்த வானவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் ஏதும் பேசாமல் அவர்களைத் தூக்கிக் கொண்டுவந்து ஸம்ஸம் கிணற்றின் அருகில் இறக்கினர். அவர்களிடமிருந்து நபி(ஸல்) அவர்களின் பொறுப்பை (வானவர்) ஜிப்ரீல்(அலை) ஏற்றார்கள். 158

அவர் நபி(ஸல்) அவர்களின் காறையெலும்பிலிருந்து நெஞ்சின் நடுப்பகுதி வரை பிளந்து, நெஞ்சிலிருந்தவற்றையும் வயிற்றிலிருந்தவற்றையும் அகற்றினார். பின்னர் தம் கையால் நபியவர்களின் இருதயத்தை ஸம்ஸம் நீரால் கழுவி, அவர்களின் வயிற்றைச் சுத்தப்படுத்தினார். பிறகு தங்கத் தட்டு ஒன்று கொண்டு வரப்பட்டது. அதில் தங்கக் கோப்பை ஒன்று இருந்தது. அது இறைநம்பிக்கையாலும் ஞானத்தாலும் நிரப்பப்பட்டிருந்தது. அதனை நபியவர்களின் இருதயத்திலும் தொண்டை நாளங்களிலும் இட்டு நிரப்பினார் ஜிப்ரீல் பின்னர் இருதயத்தை மூடிவிட்டார். (பிறகு'புராக்' வாகனம் கொண்டு வரப்பட்டு அதில் ஏற்றப்பட்ட நபியவர்கள் பைத்துல் முகத்தஸை அடைந்தார்கள். அங்கிருந்து) நபி(ஸல்) அவர்களை அழைத்துக்கொண்டு அவர் முதல் வானத்திற்கு உயர்ந்தார். அந்த வானத்தின் கதவுகளில் ஒன்றை அவர் தட்டினார். அப்போது அந்த வானத்திலிருந்த (வான)வர்கள்,'யார் அவர்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்,'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார்.'உங்களுடன் வந்திருப்பவர் யார்?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்,'என்னுடனிருப்பவர் முஹம்மத்'' என்று பதிலளித்தார்.'(அவரை அழைத்துவரச் சொல்லி) ஆள் அனுப்பப்பட்டிருந்ததா?' என்று கேட்டனர். அதற்கு ஜிப்ரீல்(அலை)'ஆம்' என்றார்கள்.'அவரின் வரவு நல் வரவாகட்டும்! வாழ்த்துகள்!"என்று கூறினர். நபியவர்களின் வருகையால் வானில் இருபபோர் மகிழ்ச்சியடைகிறார்கள். பூமியில் அல்லாஹ் எதை (நிகழச் செய்ய) நினைக்கிறானோ அதை அவனாக வானவர்களிடம் அறிவிக்காத வரை வானவர்கள் அதை அறிந்து கொள்ளமாட்டார்கள்.

அந்த முதல் வானத்தில் நபி(ஸல்) அவர்கள் (ஆதி மனிதர்) ஆதம்(அலை) அவர்களைக் கண்டார்கள். அப்போது ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம்,'இவர்தாம் உங்கள் தந்தை. இவருக்கு நீங்கள் சலாம் (முகமன்) கூறுங்கள்'' என்றார்கள். அவ்வாறே அவருக்கு நபி(ஸல்) அவர்கள் முகமன் கூற, அதற்கு ஆதம்(அலை) அவர்கள் பதில் (முகமன்) சொல்லிவிட்டு,'அருமை மகனே! வருக! வருக! நீரே நல்ல புதல்வர். (உங்கள் வரவிற்கு) வாழ்த்துக்கள்'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் அந்த முதல் வானத்தில் பாய்ந்தோடும் இரண்டு நதிகளைக் கண்டார்கள். உடனே'ஜிப்ரீலே! இவை எந்த நதிகள்?' என்று கேட்டார்கள். அதற்கு ஜிப்ரீல்(அலை) அவர்கள்,'இவையிரண்டும் நைல் மற்றும் யூப்ரடீஸ் நதியின் மூலங்கள்'' என்று பதிலளித்தார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களை அழைத்துக்கொண்டு அந்த வானத்தில் சென்று கொண்டிருந்தபோது இன்னொரு நதியையும் கண்டார்கள். அதன் மீது முத்துகளாலும் பச்சை மரகதத்தாலும் ஆன மாளிகை ஒன்று இருந்தது. (அந்த நதியில்) நபி(ஸல்) அவர்கள் தங்களின் கையால் அடித்தார்கள். அ(தன் மண்ணான)து உயர்ந்த நறுமணமிக்க கஸ்தூரியாக இருந்தது. நபி(ஸல்) அவர்கள்,'இது என்ன நதி ஜிப்ரீலே?' என்று கேட்டார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள்,'இது உங்களுக்காக உங்களுடைய இறைவன் ஒதுக்க வைத்துள்ள கவ்ஸர் (எனும் நதி) ஆகும்'' என்று பதிலளித்தார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல் இரண்டாம் வானத்திற்கு உயர்ந்தார். அப்போது அவரிடம் முதல் வானத்திலிருந்த வானவர்கள் கேட்டதைப் போன்றே (இந்த வானத்திலிருந்த) வானவர்களும்,'யார் அவர்?' என்று கேட்டனர். அதற்கு ஜிப்ரீல்(அலை) அவர்கள்'ஜிப்ரீல்'' என்று பதிலளித்தார்கள். வானவர்கள்,'உம்முடன் இருப்பவர் யார்?' என்று கேட்டார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள்,'முஹம்மத்(ஸல்) அவர்கள்'' என்று பதிலளித்தார்கள்.'அவருக்கு ஆளனுப்பப்பட்டிருந்ததா?' என்று வானவர்கள் கேட்டார்கள். ஜிப்ரீல்(அலை) அவர்கள்,'ஆம்' என்றார்கள். அப்போது அவ்வானவர்கள்,'அவரின் வரவு நல்வரவாகட்டும்! வாழ்த்துகள்'' என்று கூறினர். பிறகு நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல்(அலை) அவர்கள் மூன்றாம் வானத்திற்கு உயர்ந்தார்கள். அ(வ்வானத்திலிருந்த வான)வர்களும் முதலாவது மற்றும் இரண்டாவது வானதிலிருந்தவர்கள் கூறியதைப் போன்றே கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல்(அலை) அவர்கள் நான்காம் வானத்திற்கு உயர்ந்தார்கள். அங்கிருந்த (வான)வர்களும் அதைப் போன்றே கூறினர். பிறகு நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல்(அலை) அவர்கள் ஐந்தாம் வானிற்கு உயர்ந்தார்கள். அ(ங்கிருந்த வான)வர்களும் அதைப் போன்றே கூறினர். பின்னர் நபியவர்களுடன் ஆறாம் வானிற்கு உயர்ந்தார்கள். அவர்களும் அவ்வாறே கூறினார்கள். பிறகு நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல்(அலை) அவர்கள் ஏழாம் வானிற்கு உயர்ந்தார்கள். அப்போது அங்கிருந்த(வான)வர்களும் அவரிடம் முன்போன்றே கூறினர்.

ஒவ்வொரு வானத்திலும் இறைத்தூதர்கள் இருந்ததாகக் கூறிய நபி(ஸல்) அவர்கள் அவர்களின் பெயர்களையும் குறிப்பிட்டார்கள். இத்ரீஸ்(அலை) அவர்கள் இரண்டாம் வானிலும், ஹாரூன்(அலை) அவர்கள் நான்காம் வானிலும், இன்னொருவர் ஐந்தாம் வானிலும், அவரின் பெயர் நினைவில்லை - இப்ராஹீம்(அலை) அவர்கள் ஆறாம் வானிலும் மூஸா(அலை) அவர்கள், அல்லாஹ்வுடன் உரையாடியவர் என்ற சிறப்பினடிப்படையில் ஏழாம் வானிலும் இருந்ததாக நான் மனனமிட்டுள்ளேன். அப்போது மூஸா(அலை) அவர்கள்,'என் இறைவா! எனக்கு மேலே வேறொருவர் உயர்த்தப்படுவார் என்று நான் எண்ணியிருக்கவில்லை'' என்று கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்களுடன் ஜிபரீல் அதற்கு மேலேயும் ஏறினார். அல்லாஹ்வுக்கு மட்டுமே அதன் நிலை தெரியும். இறுதியாக (வான் எல்லையிலுள்ள இலந்தை மரமான)'சித்ரத்துல்

முன்தஹா'விற்குச் சென்றார்கள். அங்கு சர்வ வல்லமை படைத்தவனும் கண்ணியத்தின் அதிபதியுமான (இறை)வன், வில்லின் இரண்டு முனையளவு அல்லது அதைவிட மிக அருகில் நெருங்கி வந்தான். அப்போது அல்லாஹ் நபி(ஸல்) அவர்களுக்கு அறிவித்தவற்றில், 'நாள் ஒன்றுக்கு ஐம்பது நேரத் தொழுகைகள் உங்கள் சமுதாயத்தார் மீது (கடமையாக்கப்பட்டு) உள்ளது'' என்பதும் அடங்கும். பிறகு நபி(ஸல்) அவர்கள் (அங்கிருந்து) இறங்கி மூஸா(அலை) அவர்களிடம் வந்து சேர்ந்தார்கள். அப்போது நபி(ஸல்) அவர்களைத் தடுத்து நிறுத்திய மூஸா(அலை) அவர்கள், 'முஹம்மதே! உங்களுடைய இறைவன் உங்களிடம் என்ன உறுதிமொழி வாங்கினான்?' என்று கேட்டான்.

நபி(ஸல்) அவர்கள், 'நாள் ஒன்றுக்கு ஐம்பது நேரத் தொழுகைகளை (நான் கட்டாயம் தொழ வேண்டுமென) அவன் என்னிடம் உறுதிமொழி வாங்கினான்'' என்று பதிலளித்தார்கள். மூஸா(அலை) அவர்கள், 'உங்கள் சமுதாயத்தாரால் அதை நிறைவேற்ற முடியாது. எனவே, நீங்கள் திரும்பிச் சென்று, உங்களுடைய இறைவனிடம் உங்களுக்கும் (உங்கள் சமுதாயத்தாரான) அவர்களுக்கும் (தொழுகைகளின் எண்ணிக்கையை) குறைக்குமாறு கேளுங்கள்'' என்று கூறினார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் அது தொடர்பாக ஆலோசனை கேட்பதைப் போன்று ஜிப்ரீல்(அலை) அவர்களைத் திரும்பிப் பார்த்தார்கள்.

'நீர் விரும்பினால் ஆகட்டும்' என்று கூறுவதைப் போன்று ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் சைகை செய்தார்கள்.

எனவே, நபி(ஸல்) அவர்களுடன் ஜிப்ரீல்(அலை) அவர்கள் சர்வ வல்லமை படைத்த(வனான இறைவ)னிடம் உயர்ந்தார்கள். (முதலில் நாம் நின்றிருந்த) அதே இடத்தில் நின்றவாறு நபி(ஸல்) அவர்கள், 'என் இறைவா! எங்களுக்காக (தொழுகைகளின் எண்ணிக்கையை) குறைத்திடுவாயாக! ஏனெனில், என் சமுதாயத்தாரால் இதை நிறைவேற்ற இயலாது'' என்றார்கள். அப்போது அல்லாஹ் அவர்களுக்குப் பத்து தொழுகைகளைக் குறைத்தான்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தார்கள். மீண்டும் அவர்கள் நபி(ஸல்) அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். அவ்வாறே மீண்டும் மீண்டும் நபி(ஸல்) அவர்களை இறைவனிடம் மூஸா(அலை) அவர்கள் திருப்பி அனுப்பிக் கொண்டேயிருந்தார்கள். முடிவில் அந்த (ஐம்பது) தொழுகை (நாள் ஒன்றுக்கு) ஐந்து தொழுகைகளாக மாறியதுழு ஐந்துக்கு வந்த போதும் மூஸா(அலை) அவர்கள் நபி(ஸல்) அவர்களைத் தடுத்து நிறுத்தி, 'முஹம்மதே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் என் சமுதாயத்தாரான பனூஇஸ்ராயீல்களுக்கு இதைவிடக் குறைந்த அளவிலான தொழுகையையே கோரிப்பெற்றேன். ஆனால் அவர்கள் (அதைக் கூட நிறைவேற்றாது) பலவீனமடைந்து கைவிட்டுவிட்டார்கள். உங்கள் சமுதாயத்தாரோ உடலாலும் உள்ளத்தாலும் மேனியாலும் பார்வையாலும் கேள்வியாலும் பலவீனமானவர்கள். எனவே, திரும்பச் சென்று உங்களுக்காக (உங்கள் ஐவேளைத் தொழுகைகளின் எண்ணிக்கையை) குறைத்துக் கேளுங்கள்'' என்று கூறினார்கள்.

ஒவ்வொரு முறையும் நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீல்(அலை) அவர்களிடம் யோசனை பெறுவதற்காக அவர் பக்கம் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரும் அதை வெறுக்கவில்லை. ஐந்தாவது முறை ஜிப்ரீல்(அலை) அவர்கள் நபிகளாரை மேலே அழைத்துச் சென்றபோது நபி(ஸல்) அவர்கள், 'என் இறைவா! என் சமுதாயத்தார் உடலாலும், உள்ளத்தாலும், கேள்வியாலும், பார்வையாலும், மேனியாலும் பலவீனமானவர்கள். எனவே, (தொழுகைகளை) குறைத்திடுவாயாக!"என்று கோரினார்கள். அதற்கு சர்வ வல்லமை படைத்தவ(னான

இறைவ)ன்'முஹம்மதே!"என்று அழைத்தான். அதற்கு'இதோ இறைவா! நான் காத்திருக்கிறேன் கட்டளையிடு" என்று பதிலளித்தார்கள்.

அதற்கு அல்லாஹ், '(ஒரு முறை சொல்லப்பட்ட) சொல் என்னிடம் மாற்றப்படுவதில்லை அதை (-ஐவேளைத் தொழுகையை) நான் உங்களின் மீது'லவ்ஹுல் மஹ்ஃபூல்' எனும் பாதுகாக்கப்பெற்ற பதிவேட்டில் கடமையாக(ப் பதிவு) ஆக்கிவிட்டேன். மேலும், ஒரு நற்செயலுக்குப் பத்து நன்மைகள் உண்டு. எனவே, அவை உங்களுக்கு ஐந்து நேரத் தொழுகைகளாக இருப்பினும், பாதுகாக்கப் பெற்ற பதிவேட்டில் அவை ஐம்பது நேரத் தொழுகைகள் (உடைய நன்மைக்கு நிகர்) ஆகும்" என்று சொன்னான்.

பின்னர் நபி(ஸல்) அவர்கள், மூஸா(அலை) அவர்களிடம் திரும்பி வந்தார்கள். அப்போது'என்ன செய்தீர்?' என்று மூஸா(அலை) அவர்கள் கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள் எங்களுக்கு (ஐம்பதாயிருந்த தொழுகைகளின் எண்ணிக்கையை ஐந்தாக) அவன் குறைத்தான். ஒவ்வொரு நற்செயலுக்கும் அதைப்போன்ற பத்து மடங்கு நன்மைகளை வழங்கினான்" என்றார்கள்.

அதற்கு மூஸா(அலை) அவர்கள், 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இதைவிடக் குறைவான எண்ணிக்கையையே பனு இஸ்ராயீல்களுக்கு நான் (இறைவனிடம்) கோரிப் பெற்றேன். அப்படியிருந்தும் அதைக் கூட அவர்கள் கைவிட்டார்கள். நீங்கள் உங்களுடைய இறைவனிடம் திரும்பிச் சென்று இன்னும் உங்களுக்காகக் குறைக்கும்படி கேளுங்கள்" என்றார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'மூஸாவே! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! திரும்பத் திரும்ப இறைவனிடம் நான் சென்றுவிட்டதனால் (மீண்டும் செல்ல) வெட்கப்படுகிறேன்" என்றார்கள். அப்போது ஜிப்ரீல்(அலை) அவர்கள், '(நபியே!) அல்லாஹ்வின் திருப்பெயரால் (பூமிக்கு) இறங்குங்கள்" என்றார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் விழித்தெழுந்தார்கள் மஸ்ஜிதுல் ஹராம் புனிதப் பள்ளிவாசலில் இருந்தார்கள்.

## சொர்க்கவாசிகளுடன் இறைவன் உரையாடுவது.

ஹதீஸ் 7518 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (மறுமையில்) சொர்க்கவாசிகளை நோக்கி'சொர்க்கவாசிகளே!"என்று அழைப்பான். அவர்கள்'எங்கள் அதிபதியே! இதோ கீழ்ப்படியக் காத்திருக்கிறோம். நன்மை அனைத்தும் உன் கரங்களிலேயே உள்ளது" என்று பதிலளிப்பார்கள். அப்போது அல்லாஹ் நீங்கள் திருப்தியடைந்தீர்களா?' என்று கேட்பான். மக்கள்'எங்கள் அதிபதியே! நாங்கள் திருப்தியடையாமலிருக்க எங்களுக்கு என்ன? நீ உன் படைப்புகளில் எவருக்கும் வழங்கியிராதவற்றை எங்களுக்கு வழங்கியிருக்கிறாயே!"என்று பதிலளிப்பார்கள். அதற்கு அல்லாஹ், 'இதைவிடவும் சிறந்ததை நான் உங்களுக்கு வழங்கட்டுமா?' என்று கேட்பான். சொர்க்கவாசிகள்'எங்கள் அதிபதியே! இதைவிடச் சிறந்தது எது?' என்று கேட்பார்கள். அதற்கு அல்லாஹ்'உங்களின் மீது என் திருப்தியைப் பொழிகிறேன். இனி என்றுமே உங்களின் மீது நான் கோபப்படமாட்டேன்" என்று சொல்வான்.

என அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7519 நபி(ஸல்) அவர்கள், தம்மிடம் கிராமவாசி ஒருவர் இருக்க, ஒரு நாள் (பின்வருமாறு) அறிவித்துக் கொண்டிருந்தார்கள்.

சொர்க்கவாசிகளில் ஒருவர் தம் இறைவனிடம் பயிர், செய்ய அனுமதி கேட்பார். இறைவன், '(இங்கு) நீ விரும்பிய நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கவில்லையா?' என்று கேட்பான். அதற்கு அவர், 'ஆம். எனினும், நான் பயிர் செய்ய விரும்புகிறேன்'' என்று பதிலளிப்பார். உடனே அவர் விரைந்து சென்று விதைகளைத் தூவிவிடுவார். கண் இமைக்கும் நேரத்திற்குள் அது முளைத்து பயிராம் கதிர் முற்றி அறுவடை செய்யப்பட்டு மலை போன்று களத்தில் குவிக்கப்பட்டுவிடும். அப்போது அல்லாஹ், 'ஆதமின் மகனே! எடுத்துக்கொள். ஏனென்றால், எதனாலும் உன் வயிற்றை நிரப்ப முடியாது'' என்று சொல்வான்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த கிராமவாசி உடனே'இறைத்தூதர் அவர்களே! இந்த மனிதர் குறைஷியராகவோ அன்சாரியாகவோ தாம் இருப்பார். ஏனெனில், அவர்கள் தாம் விவசாயிகள். நாங்களோ விவசாயிகள் அல்லர்'' என்றார். இதைக் கேட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் சிரித்தார்கள்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## அல்லாஹ் (தன்னை வழிபடுமாறு) கட்டளையிடுவதன் மூல(மும் அதற்குப் பிரதிபலன் வழங்குவதன் மூலமு)ம் தன் அடியார்களை நினைவுகூர்கிறான்: மன்றாடிப் பிரார்த்திப்பதன் மூலமும் தூதுத்துவத்தை ஏற்றுப் பிரசாரம் செய்வதன் மூலமும் அல்லாஹ்வை அடியார்கள் நினைவு கூர்கின்றனர்.

அல்லாஹ் கூறினான்:

என்னை நீங்கள் நினைவுகூருங்கள். உங்களை நான் நினைவுகூர்கிறேன். (திருக்குர்ஆன் 02:152)

மேலும், (நபியே!) இவர்களுக்கு நூஹுடைய செய்தியை எடுத்துரைப்பீராக! அவர் தம் சமுதாயத்தாரை நோக்கிக் கூறினார்: என் சமுதாயத்தாரே! நான் உங்களிடையே வாழ்வதையும் அல்லாஹ்வின் வசனங்களை (அவ்வப்போது) நான் எடுத்துரைத்து நினைவூட்டிக் கொண்டிருப்பதையும் உங்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை என்றால் அறிந்து ொகள்ளுங்கள்: நான் அல்லாஹ்வையே சார்ந்திருக்கிறேன். நீங்கள் ஏற்படுத்திக் கொண்ட கடவுளர்களின் உதவியைப் பெற்று உங்களுக்கிடையே ஒரு தீர்மானத்திற்கு வாருங்கள். பிறகு அந்தத் தீர்மானம் உங்களுக்குக் கவலையளித்திடாதவாறு பார்த்துக்கொண்டு பின்னர், அதை எனக்கு எதிராகச் செயல்படுத்துங்கள். மேலும், எனக்கு சற்றும் அவகாசம் அளிக்காதீர்கள். நீங்கள் என் நல்லுரையைப் புறக்கணித்தால் (எனக்று ஒன்றும் இழப்பு ஏற்பட்டுவிடாது). நான் உங்களிடம் கூலி எதையும் கேட்கவில்லை. என்னுடைய கூலி அல்லாஹ்விடமே உள்ளது. (எவர் ஏற்றாலும் ஏற்காவிட்டாலும்) நான் இறைவனுக்கு அடிபணிந்து வாழ்பவனாக விளங்கவேண்டும் என்றே கட்டளையிடப்பட்டுள்ளேன். (திருக்குர்ஆன் 10:71,72)

(நபியே!) இணைவைப்பாளர்களில் ஒருவர் உங்களிடம் வந்து அடைக்கலம் கோரினால், அவர் இறைவசனங்களைச் செவியேற்கும் வரை அடைக்கலம் தந்து, பின்னர் அவரைப் பாதுகாப்பான இடத்திற்கு அனுப்பிவையுங்கள் (திருக்குர்ஆன் 09:06)

அதாவது ஒருவர் உங்களிடம் வந்து, நீங்கள் கூறுவதையும் இறைவன் உங்களுக்கு அருளியதையும் செவியேற்று இறைநம்பிக்கை கொண்டால் சரி இல்லையேல், அவரை அவருக்குரிய பாதுகாப்பான இடத்திற்கு அனுப்பிவிடுங்கள். அங்கு அவரிடம் மகத்தான செய்தி -குர்ஆன்- வரும். அவர் இம்மையில் உண்மையே பேசி, அதன்படி செயல்படட்டும் - என முஜாஹித்(ரஹ்) அவர்கள் விளக்கமளித்துள்ளார்கள்.

## “எனவே, அல்லாஹ்வுக்கு இணைகளை ஏற்படுத்தாதீர்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 02:22 வது) இறைவசனமும், அல்லாஹ் மக்களின் செயல்களையும் முயற்சிகளையும் படைப்பது தொடாபாகக் கூறப்பட்டுள்ளவையும்.

அல்லாஹ் கூறினான்:

(நபியே! அவர்களிடம் கேளுங்கள்:) பூமியை இரண்டே நாள்களில் படைத்த (இறை)வனை நிராகரித்து மற்றவர்களை அவனுக்கு இணையாக்குகின்றீர்களா? அவன் தானே அம்ல உலகங்களுக்கும் இறைவன்? (திருக்குர்ஆன் 41:09)

(நபியே!) உங்களுக்கும் உங்களுக்கும் முன் வாழ்ந்தவர்களுக்கும், இறைவனுக்கு இணை வைத்தால் உங்கள் நற்செயல் வீணாம்விடும் மேலும், நீங்கள் இழப்புக்குரியவராய் ஆகிவிடுவீர்கள் எனவே, அல்லாஹ்வையே வணங்கி நன்றிசெலுத்துவோரின் குழுவில் சேர்ந்திருங்கள் என்று வஹீ (இறைச்செய்தி) அறிவிக்கப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 39:65,66)

மேலும், அவர்கள் (-நல்லடியார்கள்) எத்தகையவர்கள் என்றால், அல்லாஹ்வுடன் வேறெந்தக் (கற்பனைக்) கடவுளையும் அழைக்கமாட்டார்கள். (திருக்குர்ஆன் 25:68)

இதற்கு விரிவுரையாக இக்ரிமா(ரஹ்) அவர்கள்,‘அவர்களில் பெரும்பாலோர் அல்லாஹ்வுக்கு இணைகற்பித்தபடியே தான் அவன் மீது நம்பிக்கை கொள்கிறார்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 12:106 வது) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

மேலும்,‘(நபியே!) அவர்களைப் படைத்தவன் யார்? வானங்களையும் பூமியையும் படைத்தவன் யார்? என்று நீங்கள் அவர்களிடம் கேட்டால் அவர்கள்,‘அல்லாஹ்’ என்றே சொல்வார்கள்‘‘ எனும் வசனங்களை (திருக்குர்ஆன் 43:87 31:25) ஓதி, அதுதான் அவர்களின் இறைநம்பிக்கையாகும் அவர்கள் அல்லாஹ் அல்லாதவரை வணங்கிக் கொண்டிருப்பார்கள் என்று கூறினார்கள்.

அல்லாஹ் கூறினான்:

அவனே அனைத்துப் பொருட்களையும் படைத்து, அவற்றுக்கு வேண்டியதை நிர்ணயித்தான். (திருக்குர்ஆன் 25:02)

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

வானவர்கள் உண்மையைக் கொண்டே இறங்குகிறார்கள் (திருக்குர்ஆன் 15:08) அதாவது தூதுத்துவச் செய்தி மற்றும் வேதனையைக் கொண்டு இறங்குகிறார்கள்.

“உண்மையாளர்களிடம் அவர்களின் உண்மை குறித்து இறைவன் விசாரணை செய்யவேண்டும் என்பதற்காக‘‘ எனும் (திருக்குர்ஆன் 33:86 வது) வசனத்திலுள்ள’உண்மையாளர்கள்’ என்பது, அல்லாஹ்வின் செய்தியை எடுத்துரைத்து மக்களிடம் கொண்டு வந்து சேர்க்கும் இறைத்தூதர்களைக் குறிக்கம்.

அல்லாஹ் கூறினான்:

மேலும் நாமே அதைப் பாதுகாப்போம் (திருக்குர்ஆன் 15:09)

“உண்மையைக் கொண்டு வந்தவர்‘‘ (திருக்குர்ஆன் 39:33) அதாவது குர்ஆனைக் கொண்டுவந்தவர். அதை இறைநம்பிக்கையாளர்கள் உண்மை என ஏற்றார்கள். அவர்கள் மறுமைநாளில்’இதுதான் நீ அளித்தது இதன்படியே நான் செயல்பட்டேன்‘‘ என்று கூறுவர்.

ஹதீஸ் 7520 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் நான், 'அல்லாஹ்விடம் மிகப்பெரிய பாவம் எது?' என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, நீ அவனுக்கு இணைவைப்பதாகும்'' என்று பதிலளித்தார்கள். நான், 'நிச்சயமாக அது பெரும்பாவம்தான்'' என்று சொல்லிவிட்டுப் 'பின்னர் எது?' என்று கேட்டேன். நபி (ஸல்) அவர்கள், 'உன் குழந்தை உன்னுடன் உணவு உண்ணும் என்றஞ்சி அதை நீ கொன்றுவிடுவதாகும்'' என்றார்கள். நான், 'பிறகு எது?' என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள், 'பிறகு உன் அண்டை வீட்டாரின் மனைவியுடன் நீ விபசாரம் புரிவதாகும்'' என்று பதிலளித்தார்கள்.

(திருக்குர்ஆன் 41:22 வது) இறைவசனம்.

“(உலகில் நீங்கள் குற்றங்களைச் செய்த போது) உங்களின் காதுகளும் கண்களும் தோல்களும் உங்களுக்குகெதிராகச் சாட்சியம் அளிக்கும் என்பதை அஞ்சிக்கூட (குற்றங்களிலிருந்து) தவிர்ந்து கொள்பவர்களாக நீங்கள் இருக்கவில்லை. மாறாக, நீங்கள் செய்கிற செயல்களில் பெரும்பாலானவற்றை அல்லாஹ்கூட அறியமாட்டான் என்றே நீங்கள் எண்ணியிருந்தீர்கள்'' எனும் (திருக்குர்ஆன் 41:22 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7521 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

(புனித கஅபா) ஆலயத்தின் அருகே 'ஸகஃபீ குலத்தார் இருவரும் குறைஷி ஒருவரும்' அல்லது 'குறைஷியர்' இருவரும் ஸகஃபீ ஒருவரும்' ஒன்று கூடினார்கள். அவர்களுக்கு வயிற்றில் சதை (தொந்தி) அதிகமாகப் போட்டிருந்தது. (ஆனால்,) அவர்களின் உள்ளத்தில் புரிந்துகொள்ளும் ஆற்றல் குறைவாக இருந்தது. அவர்களில் ஒருவர், 'அல்லாஹ் நாம் சொல்வதைக் கேட்கிறான் என்று நீங்கள் கருதுகின்றீர்களா?' என்று கேட்க, மற்றொருவர், 'நாம் உரக்கப் பேசினால் அவன் கேட்பான் நாம் மெதுவாகப் பேசினால் கேட்கமாட்டான்'' என்றார். இன்னொருவர், 'நாம் உரக்கப் பேசும்போது அவன் கேட்கிறான் என்றால், நாம் மெதுவாகப் பேசும்போதும அவன் நிச்சயம் கேட்பான்'' என்றார். அப்போதுதான் உயர்ந்தோனான அல்லாஹ், '(உலகில் நீங்கள் குற்றங்களைச் செய்தபோது) உங்களின் காதுகளும் கண்களும் தோல்களும் உங்களுக்குகெதிராகச் சாட்சியம் அளிக்கும் என்பதை அஞ்சிக்கூட (குற்றங்களிலிருந்து) தவிர்ந்து கொள்பவர்களாக நீங்கள் இருக்கவில்லை'' எனும் (திருக்குர்ஆன் 41:22 வது) வசனத்தை அருளினான்.

“ஒவ்வொரு நாளும் அவன் (-இறைவன்) ஏதேனும் ஒரு பணியில் இருக்கிறான்‘ எனும் (திருக்குர்ஆன் 55:29 வது) இறைவசனம்.

அவர்களின் இறைவனிடமிருந்து அவர்களுக்குப் புதிய நினைவூட்டல் வரும்போதெல்லாம் அதை அவர்கள் விளையாட்டாகவேதான் செவியேற்கிறார்கள். (திருக்குர்ஆன் 21:02)

அதன் பின்னர் அல்லாஹ் ஏதேனும் ஒரு வழியை உருவாக்ககூடும் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். (திருக்குர்ஆன் 65:01)

அதாவது அல்லாஹ் ஒன்றைப் புதிதாக உருவாக்குவதும் படைப்பினங்கள் ஒன்றைப் புதிதாக உண்டாக்குவதும் ஒன்றாகாது. (இரண்டும் வெவ்வேறானவை ஆகும்.) ஏனெனில், அல்லாஹ் கூறினான்: அவனைப் போன்று எப்பொருளும் இல்லை. அவன் செவியேற்பவனாகவும் பார்க்கக்கூடியவானகவும் இருக்கிறான். (திருக்குர்ஆன் 42:11)

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ், தான் நாடுகிறவற்றைத் தன்னுடைய கட்டளையால், உருவாக்குகிறான். அவன் புதிதாகக் கட்டளையிட்டதுதான் நீங்கள் தொழுகையில் பேசக் கூடாது என்பதும்.

ஹதீஸ் 7522 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

அல்லாஹ்வால் அருளப்பெற்ற வேதங்களிலேயே அண்மைக் காலத்தில் (புதிதாக) அருளப்பெற்ற இறைவேதம் (குர்ஆன்) உங்களிடம் இருக்க, (முந்தைய) வேதக்காரர்களிடம் அவர்களின் வேதங்கள் தொடர்பாக நீங்கள் ஏன் கேட்கிறீர்கள்? அ(ந்தப் புதிய வேதத்)தை நீங்கள் கலப்படமின்றி தூய்மையான வடிவில் ஓதிக் கொண்டிருக்கிறீர்கள்.

ஹதீஸ் 7523 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

முஸ்லிம் மக்களே! வேதக்காரர்களிடம் நீங்கள் எதைப் பற்றியும் ஏன் கேட்கிறீர்கள்? உங்கள் நபி(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் அருளியுள்ள வேதம் தான் இறைச்செய்திகளிலேயே புதியதும், கலப்படமில்லாத தூய்மையானதும் ஆகும். வேதக்காரர்களோ இறைவேதங்களை மாற்றி, திரித்து, தம் கரங்களால் எழுதிக்கொண்ட ஏடுகளை அல்லாஹ்விடமிருந்து வந்தவை என, அதன் மூலம் அற்ப விலையைப் பெறுவதற்காகக் கூறுகிறார்கள் என்று அல்லாஹ் உங்களுக்கு அறிவித்துள்ளான். உங்களுக்குக் கிடைத்துள்ள ஞானம், வேதக்காரர்களிடம் கேட்டுத் தெரிவதிலிருந்து உங்களைத் தடுக்கவில்லையா?

(அதே நேரத்தில்) அல்லாஹ்வின் மீதாணையாக! அந்த வேதக்காரர்களில் ஒருவர் கூட உங்களுக்கு அருளப்பெற்றுள்ள (வேதத்)தைப் பற்றிக் கேட்பதை நாம் கண்டதில்லை.

## “(நபியே!) இந்த வஹீயை (-வேத அறிவிப்பை) அவசர அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள்‘ எனும் (திருக்குர்ஆன் 75:16 வது) இறைவசனமும், வஹீ (இறைச்செய்தி) அருளப்பெற்றபோது நபி(ஸல்) அவர்கள் நடந்து கொண்ட விதமும்.

அபூ ஹுரைரா(ரலி) அவர்கள் நபி(ஸல்) அவர்கள் சொன்னதாகக் கூறினார்:

அல்லாஹ் கூறினான்: என் அடியான் என்னை நினைவு கூறும்போதும், (என்னைப் பற்றிப் பேசி) அவனுடைய உதடுகள் அசையும் போதும் நான் அவனுடனேயே இருக்கிறேன்.

ஹதீஸ் 7524 ஸயீத் இப்னு ஜுபைர்(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள்,‘(நபியே!) இந்த வஹீயை அவசரம் அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள்‘‘ எனும் (திருக்குர்ஆன் 75:16 வது) இறைவசனம் குறித்து விளக்கும்போது’நபி(ஸல்) அவர்கள் தமக்கு வஹீ (இறைச்செய்தி) அருளப்பெறும்போது கடும் சிரத்தை எடுத்துக்கொள்வார்கள். (எங்கே வசனங்கள் மறந்துவிடுமோ என்ற அச்சத்தினால்) தம் உதடுகளை அசைத்துக் கொண்டிருப்பார்கள்‘‘ என்று கூறினார்கள்.

-இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் இதைப் பற்றி என்னிடம் அறிவிக்கையில்’இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம் உதடுகளை அசைத்ததைப் போன்று உங்களுக்கு நான் அசைத்துக் காட்டுகிறேன்‘‘ என்று கூறி (தம் உதடுகளை அசைத்துக் காட்டி)னார்கள். இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் அசைத்துக் காட்டியதைக் போன்று நானும் அசைத்துக் காட்டுகிறேன் (பாருங்கள்)-

அப்போதுதான் அல்லாஹ் '(நபியே!) இந்த வஹீயை (வேத அறிவிப்பை) அவரச அவசரமாக மனனம் செய்வதற்காக உங்கள் நாவை அசைக்காதீர்கள். அதை (உங்கள் மனத்தில்) ஒன்றுசேர்த்து, அதை (நீங்கள்) ஓதும்படி செய்வது எம்முடைய பொறுப்பாகும்'' எனும் (திருக்குர்ஆன் 75:16,17) வசனங்களை அருளினான். மேலும், 'நாம் இதை ஓதிவிட்டோமாயின், நீங்கள் ஓதுவதைத் தொடருங்கள்'' எனும் (திருக்குர்ஆன் 75:18) வசனத்தையும் அருளினான். அதாவது அதை நீங்கள் காதுதாழ்த்தி மௌனமாக இருந்து கேளுங்கள். 'பின்னர் உங்களை ஓதச் செய்வது நம்முடைய பொறுப்பாகும். ''

(இதன் பின்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் தம்மிடம் வந்தால் இறைத்தூதர் (ஸல்) அவர்கள் காது தாழ்த்திக் கேட்பார்கள். ஜிப்ரீல் சென்ற பின்னால், அவர் ஓதிக் காட்டியதைப் போன்றே ஓதுவார்கள்.

''மேலும், நீங்கள் இரகசியமாகப் பேசினாலும் சர் வெளிப்படையாகப் பேசினாலும் சரி (அல்லாஹ்வைப் பொறுத்தமட்டில் இரண்டும் சமம்தான்). திண்ணமாக, அவன் இதயங்களில் இருப்பவற்றையும் நன்கறிகிறான். எவன் படைத்திருக்கிறானோ அவன் அறியமாட்டானா என்ன? அவன் நுணுக்கமானவனாகவும் நன்கறிந்தனாகவும் இருக்கிறான்' எனும் (திருக்குர்ஆன் 67:13,14 ஆகிய) இறைவசனங்கள்.

ஹதீஸ் 7525. ஸயீத் இப்னு ஜுபைர் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் '(நபியே!) உங்கள் தொழுகையில். நீங்கள் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம் மிகவும் தாழ்த்தவும் வேண்டாம்'' எனும் (திருக்குர்ஆன் 17:110 வது) வசனம் தொடர்பாக (ப் பின்வருமாறு) கூறினார்கள்: இறைத்தூதர் (ஸல்) அவர்கள் (இஸ்லாத்தின் ஆரம்பக் காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் கருத்தில் கொண்டு) மக்காவில் மறைவாக (த் தொழுது கொண்டு) இருந்தார்கள். தம் தோழர்களுடன் தொழும்போது உரத்த குரலில் குர்ஆனை ஓதுவார்கள். அதை இணைவைப்பாளர்கள கேட்டுவிடும்போது குர்ஆனையும் அதை அருளிய (இறை) வனையும் அதை (மக்கள் முன்) கொண்டுவந்த (நபிய) வர்களையும் ஏசுவார்கள். எனவே, அல்லாஹ் தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு 'நீங்கள் உங்கள் தொழுகையில் குரலை உயர்த்தி ஓதாதீர்கள். ஏனெனில், அதைக் கேட்கும் இணைவைப்பாளர்கள் குாஆனை ஏசுவார்கள். அதற்காக (உடன் தொழுகின்ற) உங்கள் நண்பர்களுக்கே கேட்காத அளவிற்கு (ஒரேயடியாய்) குரலைத் தாழ்த்தவும் வேண்டாம். இரண்டுக்குமிடையே மிதமான போக்கைக் கையாளுங்கள்'' எனக் கட்டளையிட்டான்.

ஹதீஸ் 7526 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

''(நபியே!) உங்கள் தொழுகையில் நீங்கள் குரலை மிகவும் உயர்த்தவும் வேண்டாம். மிகவும் தாழ்த்தவும் வேண்டாம்'' எனும் இந்த (திருக்குர்ஆன் 17:110 வது) வசனம் பிரார்த்தனை (துஆ) தொடர்பாக அருளப்பெற்றது.

இதை உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 7527 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்ஆனை (முறைப்படி) இராகத்துடன் (இனிய குரலில்) ஓதாதவர்கள் நம்மைச் சார்ந்தவர்கள் அல்லர்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில், 'இராகமிட்டு உரத்த குரலில் ஓதாதவர்கள் எனக் கூடுதலாக வந்துள்ளது.

"(இரண்டு பேர் பொறாமைகொள்ளத்தக்கவர்கள்.) அவர்களில் ஒருவர் யாரென்றால், அல்லாஹ் அவருக்குக் குர்ஆனின் ஞானத்தை அருளினான். அவர் அல்லும் பகலும் (அதை ஓதி) அதன்படி செயல்படுகிறார். இதைக் காணும் மற்றொருவர், இவருக்கு வழங்கப்பட்டதைப் போன்று எனக்கும் வழங்கப்படுமாயின் இவரைப் போன்றே நானும் செயல்படுவேனே! என்று கூறுகிறார்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

குர்ஆனை ஓதி அதன்படி செயல்படுவதென்பது, (மற்ற செயல்களைப் போன்றே) அந்த மனிதரின் செயல்தான் என அல்லாஹ் விவரிக்கிறான். அல்லாஹ் கூறினான்: வானங்கள் மற்றும் பூமியைப் படைத்ததும், உங்கள் மொழிகளும் நிறங்களும் வேறுபட்டிருப்பது அவனுடைய சான்றுகளில் அடங்கும். (திருக்குர்ஆன் 30:22)

புகழுயர்ந்த இறைவன் கூறுகிறான்:

நன்மை செய்யுங்கள் நீங்கள் வெற்றியடையலாம். (திருக்குர்ஆன் 22:77)

ஹதீஸ் 7528. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டு விஷயங்களில் தவிர வேறெதற்காகவும் பொறாமைப்படக் கூடாது. 1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் குர்ஆனின் ஞானத்தை வழங்கினான். அதை அவர் அல்லும் பகலும் ஓதி (அதன்படி செயல்பட்டு) வருகிறார். (இதைக்கண்ட) மற்றொருவர், 'இவருக்கு வழங்கப்பட்டதைப் போன்றே எனக்கு வழங்கப்படுமானால் இவரைப் போன்றே நானும் செயல்படுவேனே!" என்று (ஆதங்கத்துடன்) கூறினார். 2. மற்றொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்கினான். அதை அவர் உரிய வழியில் செலவிடுகிறார். (இதைக் காணும்) மற்றொருவர், 'இவருக்கு வழங்கப்பட்ட (செல்வத்)தைப் போன்று எனக்கும் வழங்கப்பட்டால், இவரைப் போன்றே நானும் செயல்படுவேன்'' என்கிறார்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7529. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இரண்டில் தவிர வேறெதிலும் பொறாமை கூடாது. 1. ஒரு மனிதருக்கு அல்லாஹ் குர்ஆன் ஞானத்தை அருள, அவர் அதை அல்லும் பகலும் ஓதி (அதன்படி செயல்பட்டு) வருகிறார். 2. இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் செல்வத்தை வழங்க, அவர் அதை அல்லும் பகலும் தானம் செய்கிறார்.

என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

"இறைத்தூதரே! உங்களுடைய இறைவனிடமிருந்து உங்களக்கு அருளப்பட்டுள்ள (வேதத்)தை (மக்களுக்கு) எடுத்துரையுங்கள். (இந்தப் பணியை) நீங்கள் செய்யாவிட்டால் அவனுடைய தூதை நீங்கள் எடுத்துரைக்கவில்லை என்றாம்விடும்' எனும் (திருக்குர்ஆன் 05:67 வது) இறைவசனம்.

ஸுஹ்ரீ(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ்விடமிருந்து தூது வந்தது அதை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். நாம் அதை ஏற்றுச் செயல்படவேண்டும்.

அல்லாஹ் கூறினான்:

அந்தத் தூதர்கள் தங்கள் இறைவனின் தூதுச் செய்திகளை சேர்த்துவிட்டார்களா என்று அறிந்து கொள்வதற்காக (அவர்களுக்கு முன்பும் பின்பும் பாதுகாவலரை நியமிக்கிறான்). (திருக்குர்ஆன் 72:28)

மேலும், அல்லாஹ் கூறினான்:

(நூஹ் கூறினார்:) நான் என் இறைவனின் தூதையே உங்களுக்குத் தெரிவிக்கிறேன். (திருக்குர்ஆன் 07:62)

கஅப் இப்னு மாலிக்(ரலி) அவர்கள் (தபூக் போரில்) நபி(ஸல்) அவர்களுடன் கலந்து கொள்ளாமல் பின்தங்கிவிட்டபோது அல்லாஹ் கூறினான்.

அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உங்களுடைய செயல்பாடுகளைப் பார்ப்பார்கள். (திருக்குர்ஆன் 09:105)

ஆயிஷா(ரலி) கூறினார்:

அதாவது ஒருவரின் நற்செயல் உங்களுக்கு மகிழ்ச்சி அளித்தால்,'செயல்படுங்கள் அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் இறைநம்பிக்கையாளர்களும் உங்கள் செயலைப் பார்ப்பார்கள்'' என்று சொல்லுங்கள். (பிறரை அவரசப்பட்டுப் பாராட்டுவதன் மூலம்) உங்களை எவரும் குறைத்து மதிப்பிட இடமளித்துவிட வேண்டாம்.

மஅமர்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: (திருக்குர்ஆன் 02:2 வது வசனத்திலுள்ள)'அந்த வேதம்' ('தாலிக்கல் கிதாபு') என்பது இந்தக் குர்ஆனைக் குறிக்கின்றது.'இறையச்சமுடையோருக்கு நேர்வழியாகும்'' என்பதற்குத் தெளிவுரையாகும் வழிகாட்டியாகும் என்று பொருள். இது, (திருக்குர்ஆன் 60:10 வது வசனத்திலுள்ள)'இதுவே அல்லாஹ்வின் தீர்ப்பாகும்'' (தாலிக்கும் ஹுக்முல்லாஹ்) என்பதைப் போன்றே. இவ்வாறு தொலைவைச் சுட்டும் சொற்களால் அண்மையைக் சுட்டுவது குர்ஆனின் மரபுகளில் ஒன்றாகும். (திருக்குர்ஆன் 10:22 வது வசனத்தில்) முன்னிலைக்கு பதிலாகப் படர்க்கை ஆளப்பட்டுள்ளது.

அனஸ்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

நபி(ஸல்) அவர்கள் என் சிறிய தந்தை ஹராம் இப்னு மில்ஹான்(ரலி) அவர்களை அவர்களின் குலத்தாரிடம் அனுப்பினார்கள். அங்கு சென்று ஹராம்(ரலி) அவர்கள் (தம் மக்களிடம்),'நீங்கள் என்னை நம்புவீர்களா? நான் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியனுப்பிய செய்தியை எடுத்துரைக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அவர்களிடம் பேசலானார்கள்.

ஹதீஸ் 7530. முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி) அறிவித்தார்.

நம் இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'நம்மில் (இறைவழியில்) கொல்லப்படுகிறவர் சொர்க்கத்திற்குச் செல்கிறார்'' எனும் தம் இறைவனின் செய்தியை எங்களுக்குத் தெரிவித்தார்கள்.

இதை ஜுபைர் இப்னு ஹய்யா(ரஹ்) அறிவித்தார்.

ஹதீஸ் 7531 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்கள் (தமக்கு அருளப்பெற்ற) வேத அறிவிப்பிலிருந்து எதையும் மறைத்தார்கள் என உங்களிடம் யாரேனும் சொன்னால் அவரை நீங்கள் நம்பாதீர்கள். ஏனெனில், அல்லாஹ்'(எம்) தூதரே! உங்களுடைய இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பெற்ற (வேதத்)தை (மக்களுக்கு) எடுத்துரைத்துவிடுங்கள். அவ்வாறு நீங்கள்

செய்யாவிட்டால் அவனுடைய தூதை நீங்கள் எடுத்துரைக்கவில்லை என்றாம்விடும்'' என்று கூறுகிறான். (திருக்குர்ஆன் 05:67)

இதை மஸ்ரூக் (ரஹ்) அறிவித்தார்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7532 அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

(நபி (ஸல்) அவர்களிடம்)'இறைத்தூதர் அவர்களே! உயர்ந்தோன் அல்லாஹ்விடம் மிகப் பெரிய பாவம் எது?' என்று ஒருவர் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ் உன்னைப் படைத்திருக்க, அவனுக்கு நீ இணைகற்பித்து வணங்குவதாகும்'' என்று பதிலளித்தார்கள். அவர், 'பிறகு எது?' என்று கேட்க, நபி (ஸல்) அவர்கள், 'பிறகு உன் குழந்தை உன்னுடன் உணவு உண்பதை அஞ்சி அதை நீ கொன்றுவிடுவதாகும்'' என்று பதிலளித்தார்கள். அவர், 'பிறகு எது?' என்று கேட்க, நபியவர்கள்'உன் அண்டை வீட்டாரின் மனைவியுடன் நீ விபசாரம் புரிவதாகும்'' என்று பதிலளித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்களின் இந்தக் கூற்றை உறுதிப்படுத்தும் வகையில் அல்லாஹ், 'அவர்கள் அல்லாஹ்வுடன் வேறெந்தத் தெய்வத்தையும் அழைக்கமாட்டார்கள். அல்லாஹ் தடை விதித்துள்ள எந்த உயிரையும் நியாயமின்றி அவர்கள் கொலை செய்யமாட்டார்கள் விபசாரம் செய்ய மாட்டார்கள். யாரேனும் இச்செயலைச் செய்தால் அதற்குரிய தண்டனையைப் பெற்றே தீருவார். மறுமைநாளில் அவருக்கு இரட்டிப்பு வேதனை அளிக்கப்படும்'' எனும் வசனத்தை (திருக்குர்ஆன் 25:68) அருளினான்.

## "(நபியே!) கூறுக: (யூதர்களே!) தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை ஓதிக் காட்டுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 03:59 வது) இறைவசனம்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

'தவ்ராத்' வேதக்காரர்களுக்கு அந்த வேதம் வழங்கப்பெற்றது. அதன்படி அவர்கள் செயல்பட்டார்கள். 'இன்ஜீல்' வேதக்காரர்களுக்கு அந்த வேதம் வழங்கப்பெற்றது. அவர்கள் அதன்படி செயல்பட்டார்கள். உங்களுக்குக் குர்ஆன் வழங்கப்பெற்றது. நீங்கள் அதன்படி செயல்பட்டீர்கள்.

"அதை ஓதவேண்டிய முறைப்படி ஓதுகிறார்கள்'' எனும் (திருக்குர்ஆன் 02:121 வது) வசனத்திற்கு அபூ ரஸீன் (ரஹ்) அவர்கள் விளக்கமளிக்கையில்'அதைப் பின்பற்றி முறையாக அதன்படி செயல்படுவார்கள்'' என்று கூறினார்கள். 'யுத்லா' எனும் சொல்லுக்கு'ஓதப்படுதல்' என்று பொருள். 'ஹஸனுத் திலாவத்' என்றால், குர்ஆனை அழகிய முறையில் ஓதுதல் என்று பொருள். குர்ஆன் மீது (உண்மையான) நம்பிக்கை கொண்டவர்தாம் அதன் சுவையையும் பயனையும் அடைவார். அதை உறுதியோடு நம்பியவர்தாம் உரிய முறையில் அதை சுமப்பார்.

அல்லாஹ் கூறினான்:

தவ்ராத் வேதத்தைச் செயல்படுத்தும் (பொறுப்புச்) சுமை வழங்கப்பட்டு அதை சுமக்கத் தவறியவர்கள் ஏடுகளைச் சுமக்கும் கழுதை போன்றவர்கள். அல்லாஹ்வின் வசனங்களை நம்ப மறுத்துவிட்டவர்களின் நிலை மிகவும் கெட்டது. அக்கிரமக்காரர்களை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துவதில்லை. (திருக்குர்ஆன் 62:05)

நபி (ஸல்) அவர்கள் கீழ்ப்படிதல் (இஸ்லாம்), நம்பிக்கை (ஈமான்), தொழுகை ஆகிய அனைத்தையும்'செயல்' (அமல்) என்றே குறிப்பிட்டார்கள்.

பிலால் (ரலி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் 'நீங்கள் இஸ்லாத்தை ஏற்ற பின் அதிகமான நன்மையை எதிர்பார்த்துச் செய்த நல்லறம் எது?' என்று கேட்டார்கள். அதற்கு பிலால் (ரலி) அவர்கள், 'அதிக நன்மையை எதிர்பார்த்து நான் செயல் நற்செயல் எதுவெனில், நான் அங்கசுத்தி (உளூ) செய்து தூய்மையாகிக் கொள்ளும்போதெல்லாம் (இரண்டு ரக்அத்கள்) தொழுதுகொள்வேன்'' என்று பதில் சொன்னார்கள்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்களிடம், 'நற்செயல்களில் சிறந்தது எது?' என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், 'அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நம்பிக்கை கொள்வதும், பின்னர் ஜிஹாத் எனும் அறப்போரிடுவதும் பின்னர், இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படக்கூடிய ஹஜ்ஜும் ஆகும்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7533 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

உங்களுக்கு முன் சென்ற சமுதாயத்துடன் நீங்கள் வாழும் காலத்தை ஒப்பிடும்போது நீங்கள் (இவ்வுலகில்) வாழ்வது அஸ்ர் தொழுகைக்கும் சூரியன் மறைவதற்கும் இடையிலான (குறுகிய) கால அளவேயாகும். 'தவ்ராத்' வேதக்காரர்களுக்கு அந்த வேதம் வழங்கப்பெற்றது. அவர்கள் நண்பகல் வரை அதன்படி செயல்பட்டார்கள். பின்னர் சக்தி இழந்துவிட்டார்கள். அவர்களுக்கு (க் கூலியாக) ஒவ்வொருவருக்கும் ஒரு 'கீராத்' வழங்கப்பெற்றது. பின்னர் 'இன்ஜீல்' வேதக்காரர்களுக்கு அந்த வேதம் வழங்கப்பெற்றது. அவர்கள் அஸ்ர் தொழுகை வரை அதன்படி செயல்பட்டார்கள். பின்னர் சக்தி இழந்துவிட்டார்கள். அவர்களுக்கு (க் கூலியாக) ஒவ்வொரு 'கீராத்' வழங்கப்பெற்றது.

பிறகு உங்களுக்குக் குர்ஆன் வழங்கப்பெற்றது. நீங்கள் சூரியன் மறையும் வரை அதன்படி செயல்பட்டீர்கள். உங்களுக்கு (க் கூலியாக) இரண்டிரண்டு 'கீராத்'கள் வழங்கப்பட்டன. அப்போது வேதக்காரர்கள், 'இவர்கள் வேலை செய்தோ நம்மைவிடக் குறைந்த நேரம் கூலியோ அதிகம்'' என்று கூறினர். அதற்கு அல்லாஹ், 'நான் உங்களுக்குரிய உரிமை (கூலி) யில் சிறிதேனும் (குறைத்து) அநீதியிழைத்தேனா?' என்று கேட்க, அவர்கள் 'இல்லை' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ், 'அது (-முஸ்லிம்களுக்கு அதிகக் கூலி கொடுத்தது) என் அருளாகும். நான் நாடியவர்களுக்கு அதைத் தருகிறேன்'' என்று சொன்னான்.

## நபி (ஸல்) அவர்கள் தொழுகையை செயல் (அமல்) எனக் குறிப்பிட்டதும், அல் ஃபாத்திஹா அத்தியாயத்தை ஓதாதவருக்குத் தொழுகையே கிடையாது' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதும்.

ஹதீஸ் 7534 இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார்.

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், 'நற்செயல்களில் சிறந்தது எது?' என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், 'தொழுகையை அதற்குரிய நேரத்தில் நிறைவேற்றுவதும், தாய் தந்தையருக்கு நன்மை புரிவதும், பின்னர் இறைவழியில் அறப்போரிடுவதும் ஆகும்'' என்று பதிலளித்தார்கள். 175

இதை அபூ அம்ர் அஷ்ஷைபானீ (ரஹ்) அறிவித்தார்.

## "நிச்சயமாக, மனிதன் பதற்றமிக்கவனாகவே படைக்கப்பட்டிருக்கிறான். அவனுக்குத் துன்பம் நேரும்போது பொறுமை இழந்து விடுகிறான்: நன்மை

## ஏற்படும்போது (அது பிறருக்குக் கிடைக்காதவாறு) தடுத்து விடுகிறான்‘ எனும் (திருக்குர்ஆன் 70:19-21) வசனங்கள்.

ஹதீஸ் 7535 அம்ர் இப்னு தஃக்லிப்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் ஒரு செல்வம் வந்தது. அதை அவர்கள் சிலருக்குக் கொடுத்தார்கள். வேறு சிலருக்குக் கொடுக்கவில்லை. (பங்கு கிடைக்காத) அந்த மற்றவர்கள் தம்மைக் குறைகூறுவதாக நபி(ஸல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது. அப்போது அவர்கள், 'நான் ஒருவருக்குக் கொடுக்கிறேன். மற்றொருவரைவிட்டுவிடுகிறேன். நான் எவருக்குக் கொடுக்கிறேனோ அவரை விட நான் எவரைவிட்டுவிடுகிறானோ அவர் தாம் எனக்கு மிகவும் பிரியமானவராவார். பதற்றமுள்ள மனம் படைத்தோருக்கு கொடுக்கிறேன். இன்னும் சிலருக்கு, அவர்களின் உள்ளத்தில் அல்லாஹ் விதைத்துள்ள நன்மையையும் தன்னிறைவான (போதுமென்ற) பண்பையும் நம்பிக் கொடுக்காமல்விட்டுவிடுகிறேன். அத்தகையை (உயர் பண்புடைய)வர்களில் ஒருவர்தாம் அம்ர் இப்னு தஃக்லிப்‘‘ என்று கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னைப் பற்றி இவ்வாறு (புகழ்ந்து) கூறியதற்கு பதிலாக (விலையுயர்ந்த செல்வமான) சிவப்பு ஒட்டகங்கள் எனக்குக் கிடைப்பதாக இருந்தாலும் நான் அவற்றை விரும்பியிருக்கமாட்டேன்.

## நபி(ஸல்) அவர்கள் தம் இறைவனைப் பற்றிக் குறிப்பிட்டதும் அறிவித்ததும் (ஹதீஸ் குத்ஸீ).

ஹதீஸ் 7536 நபி(ஸல்) அவர்கள் தம் இறைவனிடமிருந்து அறிவித்தார்கள்.

(என்) அடியான் என்னை ஒரு சாண் அளவிற்கு நெருங்கினால் நான் அவனை ஒரு முழம் அளவிற்கு நெருங்குகிறேன். அவன் என்னிடம் ஒரு முழம் அளவிற்கு நெருங்கினால் நான் அவனிடம் (விரித்த) இரண்டு கைகளின் நீள அளவிற்கு நெருங்குகிறேன். அவன் என்னிடம் நடந்துவந்தால் நான் அவனிடம் ஓடிச் செல்கிறேன்.

என அனஸ்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7537 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

“அடியான் என்னிடம் ஒரு சாண் அளவுக்கு நெருங்கினால் நான் அவனிடம் ஒரு முழம் நெருங்குகிறேன். அவன் என்னிடம் ஒரு முழம் நெருங்கினால் நான் அவனிடம் (விரித்த) இரண்டு கைகளின் நீள அளவிற்கு நெருங்குகிறேன்‘‘ என்று அல்லாஹ் கூறுவதாக ஒரு முறை இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதே ஹதீஸ் அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து 'நபி(ஸல்) அவர்கள் தம் இறைவனிடமிருந்து அறிவித்தார்கள்‘‘ என அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7538 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் உங்களுடைய இறைவனிடமிருந்து அறிவித்தார்கள்: இறைவன் கூறுகிறான்: ஒவ்வொரு (தீய) செயலுக்கும் ஒரு பரிகாரம் உண்டு. நோன்பு எனக்காகவே நிறைவேற்றப்படுவதாகும். நானே அதற்குப் பிரதிபலன் வழங்குவேன். நோன்பாளியின் வாயிலிருந்து வீசும் வாடை கஸ்தூரி வாசனையை விட அல்லாஹ்விடம் மணமிக்கதாகும்.

ஹதீஸ் 7539 இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் தம் இறைவனிடமிருந்து அறிவித்துள்ள ஒன்றுதான் இதுவும்:'(இறுதித் தூதரான) நான் (இறைத்தூதர்) யூனுஸ் இப்னு மத்தா அவர்களைவிடவும் சிறந்தவர்' என்று சொல்வது எந்த அடியானுக்கும் தகாது. இவ்வாறு (யூனுஸ்) இப்னு மத்தா - மத்தாவின் புதல்வர் யூனுஸ் என) அவர்களை அவர்களின் தந்தையுடன் இணைத்துக் கூறினார்கள்.

இந்த ஹதீஸ் இரண்டு வழிகளில் அறிவிக்கப்பட்டுள்ளது.

ஹதீஸ் 7540 ஷுஅபா இப்னு அல்ஹஜ்ஜாஜ்(ரஹ்) அவர்கள் கூறினார்:

முஆவியா இப்னு குர்ரா(ரஹ்) அவர்கள்,'அப்துல்லாஹ் இப்னு முகஃப்பல் அல்முஸனீ(ரலி) அவர்கள், மக்கா வெற்றி தினத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தங்களின் ஒட்டகம் ஒன்றின் மீது இருந்தபடி'அல்ஃபத்ஹ் எனும் (48 வது) அத்தியாயத்தை' அல்லது'அல்ஃபத்ஹ் அத்தியாயத்தில் ஒரு பகுதியை' ஓதிக் கொண்டிருக்கக் கண்டேன். அப்போது நபி(ஸல்) அவர்கள்'தர்ஜீஉ' எனும் ஓசை நயத்துடன் (இழுத்து) ஓதிக் கொண்டிருந்தார்கள் என்று எனக்கு அறிவித்தார்கள்' எனக் கூறிவிட்டு, இப்னு முகஃப்பல்(ரலி) அவர்கள் ஓதியதைப் போன்று அப்படியே ஓதிக் காட்டினார்கள்.

பிறகு,'உங்களைச் சுற்றி மக்கள் கூடி விடுவார்கள் எனும் அச்சம் எனக்கில்லாவிட்டால் நபி(ஸல்) அவர்கள் ஓதிய வித்தை இப்னு முகஃப்பல்(ரலி) அவர்கள் ஓசை நயத்துடன் (இழுத்து) ஓதிக் காட்டியதைப் போன்றே நானும் ஓதிக் காட்டியிருப்பேன்'' என்றார்கள். நான், முஆவியா(ரஹ்) அவர்களிடம்,'அவர்கள் ஓசை நயத்துடன் ஓதிய முறை எப்படி?' என்று கேட்க ('ஆ' எனும் இடத்தில்)'ஆ..ஆ..ஆ..' என்று மும்முறை (இழுத்து) அவர்கள் ஓதினார்கள்'' என்றார்கள்.

## தவ்ராத் உள்ளிட்ட இறைவேதங்களுக்கு அரபு மொழியிலும் பிற மொழிகளிலும் (மொழி பெயர்த்து) விளக்கமளிப்பது அனுமதிக்கப்பட்டதாகும்.

ஏனெனில், அல்லாஹ் கூறினான்:

(நபியே!) கூறுக: நீங்கள் (உங்கள் கூற்றில்) உண்மையாளர்களாய் இருந்தால் தவ்ராத்தைக் கொண்டு வந்து அதை ஓதிக் காட்டுங்கள். (திருக்குர்ஆன் 03:93)

ஹதீஸ் 7541 அபூ சுஃப்யான் இப்னு ஹர்ப்(ரலி) அறிவித்தார்.

(ரோமப் பேரரசர்) ஹெராக்ளியஸ் தம் மொழி பெயர்ப்பாளரை அழைத்து வரச் சொன்னார். பின்னர் நபி(ஸல்) அவர்களின் கடிதத்தைக் கொண்டு வரச் சொல்லி அதைப் படி(க்குமாறு ஆணைபிறப்பி)த்தார். (அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:) அளவிலா அருளாளன் நிகரிலா அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்... இது அல்லாஹ்வின் அடியாரும், அவனுடைய தூதருமான முஹம்மதிடமிருந்து மன்னர் ஹெராக்ளியஸுக்கு எங்களுக்கும் உங்களுக்கம் இடையே உள்ள பொதுவான ஒரு விஷயத்திற்கு வாருங்கள்.

ஹதீஸ் 7542 அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

வேதக்காரர்(களான யூதர்)கள் தவ்ராத் வேதத்தை ஹீப்ரு (எபிரேய) மொழியில் ஓதி, அதை அரபு மொழியில் இஸ்லாமியர்களுக்கு விளக்கியும் வந்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் வேதக்காரர்கள் (அவர்கள் சொல்வதெல்லாம் உண்மை என) நம்பவும் வேண்டாம் (பொய் என) மறுக்கவும் வேண்டாம். (மாறாக, முஸ்லிம்களே!) கூறுங்கள்: அல்லாஹ்வையும், எங்களுக்கு அருளப்பட்டதையும், இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஅகூப் ஆகியோருக்கும் யஅகூபின் சந்ததியினருக்கும் அருளப்பட்டதையும் மற்றும் மூஸாவுக்கும்,

ஈசாவுக்கும் வழங்கப்பட்டதையும், மற்றும் நபிமார்கள் அனைவருக்கும், அவர்களின் இறைவனிடமிருந்து வழங்கப்பட்டவை அனைத்தையும் நாங்கள் நம்புகிறோம். (திருக்குர்ஆன் 02:136)

ஹதீஸ் 7543 இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

விபசாரம் செய்துவிட்ட ஒரு யூத ஆணும் ஒரு யூதப் பெண்ணும் நபி(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டனர். நபி(ஸல்) அவர்கள் யூதர்களிடம்,'நீங்கள் விபசாரிகளை என்ன செய்வீர்கள்?' என்று கேட்க, அவர்கள்'இருவரின் முகங்களிலும் கரும்புள்ளியிட்டு இருவரையும் கேவலப்படுத்திவிடுவோம்'' என்று பதிலளித்தார்கள். நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் உண்மையாளர்களாயிருந்தால் தவ்ராத்தைக் கொண்டுவந்து ஓதிக் காட்டுங்கள்'' என்றார்கள். அவ்வாறே அவர்கள் அதை கொண்டுவந்து தாங்கள் விரும்பிய ஓர் (ஒற்றைக் கண்) மனிதரிடம்'ஒற்றைக் கண்ணரே! ஓதும்!"என்று கூறினார்கள். அவர் ஓதிக் கொண்டே சென்றார். அதில் ஓரிடத்தை அடைந்ததும் அந்த இடத்தில் தன்னுடைய கையை வைத்து (மறைத்து)க் கொண்டார். நபி(ஸல்) அவர்கள்,'கையை எடுங்கள்'' என்று கூற அவர் தன்னுடைய கையை எடுத்தார். அப்போது அங்கே கல்லெறி தண்டனை (ரஜ்கி) தொடர்பான வசனம்'பளிச்' சென்று தெரிந்தது. அந்த மனிதர்'முஹம்மதே! இந்த இருவரையும் கல்லால் அடித்துக் கொல்ல வேண்டும். ஆயினும், நாங்கள் அதை எங்களுக்கிடையே பரஸ்பரம் மறைத்துக்கொண்டிருந்தோம்'' என்றார். உடனே நபி(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் கல்லால் அடித்துக் கொல்லும்படி கட்டளையிட, அவ்வாறே அவ்விருவரும் கல்லெறிந்து கொல்லப்பட்டனர். (தண்டனை நிறைவேற்றப்பட்டபோது) அந்த ஆண் அப்பெண்ணின் மீது (கவிழ்ந்து அவளின் மீது) கல் விழாமல் பாதுகாக்க முயல்வதை கண்டேன்.

## "குர்ஆன் அறிஞர், கண்ணியத்திற்குரியோரும் நல்லோ(ருமான வானவ)ர்களுடன் இருப்பார் உங்களின் (இனிய) குரலால் குர்ஆனுக்கு அழகு சேருங்கள்' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியது.

ஹதீஸ் 7544 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ், தன் தூதர் ஒருவர் இனிய குரலில் குர்ஆனை உரக்க ஓதும்போது அதை செவிகொடுத்துக் கேட்டதைப் போன்று, வேறு எதையும் அவன் செவிகொடுத்துக் கேட்டதில்லை.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7545 இப்னு ஷிஹாப் (முஹம்மத் இப்னு முஸ்லிம் அஸ்ஸுஹ்ரீ(ரஹ்)அவர்கள் அறிவித்தார்.

ஆயிஷா(ரலி) அவர்கள் குறித்து அவதூறு கிளப்பியவர்கள் அவர்களின் மீது அவதூறு பேசிய நிகழ்ச்சி தொடர்பாக உர்வா இப்னு ஸுபைர்(ரஹ்), ஸயீத் இப்னு முஸய்யப்(ரஹ்), அல்கமா இப்னு வக்காஸ்(ரஹ்), உபைதுல்லாஹ் இப்னு அப்தில்லாஹ்(ரஹ்) ஆகியோர் என்னிடம் தெரிவித்தனர். அவர்களில் ஒவ்வொருவரும் அந்தச் சம்பவத்தின் ஒரு பகுதியை எனக்கு அறிவித்தார்கள்.

ஆயிஷா(ரலி) கூறினார்: நான் (உடல் நலம் குன்றி) படுக்கையில் கிடந்தேன். நான் குற்றமற்றவள் என்பதையும் அல்லாஹ் என்னைக் குற்றமற்றவள் என்று அறிவிப்பான் என்பதையும் அப்போதே அறிவேன். ஆயினும், அல்லாஹ்வின் மீதாணையாக! அல்லாஹ் என் விஷயத்தில் (என்னைக் களங்கமற்றவள் என்று எடுத்துரைக்க காலங் காலமாக) ஓதப்படுகிற வேத அறிவிப்பு

ஒன்றை அருள்வான் என்று நான் எண்ணிப் பார்க்கவில்லை. ஓதப்படுகிற வசனம் ஒன்றில் என் தொடர்பாக அல்லாஹ் பேசுகிற அளவுக்கு நான் உயர்ந்தவள் அல்லள் என்பதே என் மனத்தில் என்னைப் பற்றிய முடிவாக இருந்தது. ஆனால், வலிவும், மகத்துவமும் மிக்க அல்லாஹ், 'அவதூறு கற்பித்தவர்கள் உங்களில் ஒரு குழுவினர்தாம்'' என்று தொடங்கும் (24 வது அத்தியாயத்தின்) பத்து வசனங்களை அருளினான்.

ஹதீஸ் 7546 பராஉ இப்னு ஆஸிப் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் இஷாத் தொழுகையில் 'வத்தீனி வஸ்ஸைத் தூனி. !"எனும் (95 வது) அத்தியாயத்தை ஓதுவரை கேட்டேன். நபி (ஸல்) அவர்களை விடவும் 'அழகிய குரலுடையவரை' அல்லது 'அழகாக ஓதுபவரை' நான் கண்டதில்லை.

ஹதீஸ் 7547 இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள் (இஸ்லாத்தின் தொடக்க காலத்தில் எதிரிகளின் தொல்லைகளைக் கருத்தில் கொண்டு) மக்காவில் மறைவாக (த் தொழுது கொண்டு) இருந்தார்கள். (தொழுகையில்) தம் குரலை உயர்த்தி (குர்ஆனை ஓதி) வந்தார்கள். இணைவைப்பாளர்கள் கேட்கும்போது குர்ஆனையும், அதை (மக்கள் முன்) கொண்டு வந்த (நபிய) வர்களையும் ஏசுவார்கள். இதனால், அல்லாஹ் தன் தூதருக்கு 'நீங்கள் உங்கள் தொழுகையில் குரலை உயர்த்தவும் வேண்டாம் (ஒரேயடியாய்) தாழ்த்தவும் வேண்டாம்'' (திருக்குர்ஆன் 17:110) எனக் கட்டளையிட்டான்.

ஹதீஸ் 7548 அப்துல்லாஹ் இப்னு அப்திர் ரஹ்மான் (ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

அபூ ஸயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் என்னிடம் 'நீங்கள் ஆடுகளையும் (அவற்றை மேய்த்திட) பாலைவனத்தையும் நேசிப்பதை நான் பார்க்கிறேன். நீங்கள் உங்கள் ஆடுகளுடன்' அல்லது 'உங்கள் பாலைவனத்தில் இருக்கும்போது தொழுகைக்காக பாங்கு இருக்கும்போது தொழுகைக்காக பாங்கு சொன்னால் உங்கள் குரலை உயர்த்தி அழையுங்கள். ஏனெனில், பாங்கு சொல்பவரின் குரலை வழிநெடும்லும் கேட்கிற ஜின்னாக இருந்தாலும் மனிதனாக இருந்தாலும் வேறு எதுவாக இருந்தாலும் அவர்கள் அவருக்காக மறுமைநாளில் நிச்சயம் சாட்சியம் அளிப்பார்கள்'' என்று சொல்லிவிட்டு, 'இதை நான் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடமிருந்து செவியுற்றேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7549 ஆயிஷா (ரலி) அறிவித்தார்.

நபி (ஸல்) அவர்கள், நான் மாதவிடாயுடன் இருந்தபோது என் மடியில் தம் தலையை வைத்தபடி குர்ஆனை ஓதிக் கொண்டிருந்தார்கள்.

## ''குர்ஆனில் (உங்களுக்கு) எது சுலபமானதோ அதை ஓதிக்கொள்ளுங்கள்' எனும் (திருக்குர்ஆன் 73:20 வது) இறைவசனம்.

ஹதீஸ் 7550 உமர் இப்னு அல்கத்தாப் (ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வாழ்நாளில் ஹிஷாம் இப்னு ஹகீம் (ரலி) அவர்கள் அல்ஃபுர்கான் எனும் (25 வது) அத்தியாயத்தை (தொழுகையில்) ஓதுவதை செவியுற்றேன். நான் அவரின் ஓதலை செவிதாழ்த்திக் கேட்டபோது, எனக்கு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் ஓதிக் காண்பிக்காத பல (வட்டார) மொழி வழக்குகளில் அதை அவர் ஓதிக் கொண்டிருந்தார். எனவே, தொழுகையில் வைத்தே அவரைத் தண்டிக்க நான் முனைந்தேன். பிறகு (யோசித்து) அவர் (தொழுது முடித்து) சலாம் கொடுக்கும்வரை பொறுமையாயிருந்தேன். (அவர் சலாம்

கொடுத்தவுடன்) அவரின் மேல்துண்டைக் கழுத்தில் போட்டுப் பிடித்து'நீர் ஓதியபோது நான் செவியுற்ற இந்த அத்தியாயத்தை உமக்கு ஓதிக் காட்டியது யார்?' என்று கேட்டேன். அவர்,'இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தாம் எனக்கு இதை ஓதிக் காட்டினார்கள்'' என்றார். நான்'நீர் சொல்வது பொய். நீர் ஓதியதற்கு மாறாகவே இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எனக்கு ஓதிக் காட்டினார்கள்'' என்று சொல்லி, அவரை இழுத்துக் கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்றேன்.

"இவர் அல்ஃபுர்கான் அத்தியாயத்தை தாங்கள் எனக்கு ஓதிக் காட்டாத வேறு முறைகளின்படி ஓதுவதை செவியுற்றேன்'' என்று சொன்னேன். நபி(ஸல்) அவர்கள்,'அவரை வடுங்கள்'' என்று சொல்லிவிட்டு,'ஹிஷாமே! ஓதுங்கள்!"என்றார்கள்.

நான் செவியுற்ற அதே முறைப்படி அவர் ஓதினார். இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,'இவ்வாறுதான் இந்த அத்தியாயம் அருளப்பெற்ற'' என்று கூறிவிட்டு'உமரே! நீங்கள் ஓதுங்கள்!"என்றார்கள். நானும் நபி(ஸல்) அவர்கள் எனக்கு ஓதிக் காட்டியபடி ஓதினேன்.

அதைக் கேட்ட நபி(ஸல்) அவர்கள்'இவ்வாறுதான் இது அருளப்பெற்றது. இந்தக் குர்ஆன் ஏழு முறைப்படி அருளப்பெற்றது. எனவே, இதிலிருந்து உங்களுக்கு சுலபமானது எதுவோ அதை ஓதிக்கொள்ளுங்கள்'' என்றார்கள்.

"(மக்கள்) நல்லுணர்வு பெறுவதற்காகவே இந்தக் குர்ஆனை நாம் எளிதாக்கியுள்ளோம். எனவே, நல்லுணர்வு பெறுவோர் உண்டா? எனும் (திருக்குர்ஆன் 54:17 வது) இறைவசனம்.

நபி(ஸல்) அவர்கள்,'ஒவ்வொருவரும் எ(தை அடைவ)தற்காகப் படைக்கப்பட்டார்களோ அதற்க வாய்ப்பளிக்கப்படுகிறார்கள்஌ என்று கூறினார்கள்.

ம(த்)தர் அல்வர்ராக்(ரஹ்) அவர்கள்'நல்லுணர்வு பெறுவோர் உண்டா?' என்பதற்குக்'கல்வியைத் தேடுவோர் உண்டா? அவர்களுக்கு உதவி நல்கப்படும்'' என விளக்கமளித்துள்ளார்கள்.

ஹதீஸ் 7551 இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) அறிவித்தார்.

நான்,'இறைத்தூதர் அவர்களே! நற்செயல் புரிபவர்கள் எதற்காக நற்செயல் புரியவேண்டும்? (இன்னார் சொர்க்கவாசி, இன்னார் நரகவாசி என்பது முன்பே தீர்மானிக்கப்பட்டுவிட்டதே?)'' என்று கேட்டேன். நபி(ஸல்) அவர்கள்,'ஒவ்வொருவரும் எ(தை அடைவ)தற்காகப் படைக்கப்பட்டார்களோ அதற்கு வாய்ப்பளிக்கப்படுகிறார்கள்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7552 அலீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஒரு ஜனாஸாவில் (நல்லடக்கத்தில்) பங்கெடுத்தார்கள். அப்போது குச்சியொன்றை எடுத்து தரையில் குத்தலானார்கள். மேலும்,'சொர்க்கத்திலோ நரகத்திலோ தம் இருப்பிடம் எழுதப்பட்டிராத எவருமே உங்களிடையே இல்லை'' என்றார்கள். உடனே மக்கள்'நாங்கள் (இதன் மீதே) நம்பிக்கை கொண்டு (நற்செயல்கள் புரியாமல்) இருந்துவிட மாட்டோமா?' என்று கேட்டார்கள். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'நீங்கள் செயலாற்றுங்கள். (நல்லார், பொல்லார்) எல்லாருக்கும் (அவரவர் செல்லும்வழி) எளிதாக்கப்பட்டுள்ளது'' என்று சொல்லிவிட்டு'(இறைவழியில்) வழங்கி, (இறைவனை) அஞ்சி வாழ்ந்து நல்லறங்களை மெய்ப்பிக்கிறவருக்கு சுலபமான வழியில் செல்ல நாம் வகை செய்வோம்'' எனும் (திருக்குர்ஆன் 92:5-10 ஆகிய) இறைவசனங்களைக் கூறினார்கள்.

## “மாறாக, இது பெருமை மிக்கக் குர்ஆன் ஆகும். இது பாதுகாக்கப் பெற்ற பலகையில் (பதிவாகி) உள்ளது‘ எனும் (திருக்குர்ஆன் 85:21,22ஆகிய) இறைவசனங்கள்.

அல்லாஹ் கூறினான்: தூர் (சினாய்) மலை மீது சத்தியமாக! எழுதப்பெற்ற வேதத்தின் மீதும் சத்தியமாக! (திருக்குர்ஆன் 52:1, 2)

கத்தாதா (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:'எழுதப்பெற்ற' என்பதற்கு'மூல ஏடான மொத்த ஏட்டில் எழுதப்பெற்ற‘' என்று பொருள் 50:18 வது வசனத்தின் பொருளாவது மனிதன் பேசும் எந்தப் பேச்சும் எழுதிப் பதிவு செய்யப்படாமல் இருப்பதில்லை.

இப்னு அப்பாஸ் (ரலி) கூறினார்: நன்மை தீமை அனைத்தும் பதிவு செய்யப்படுகின்றன. (திருக்குர்ஆன் 05:13 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'யுஹர்ரிஃபூன' எனும் சொல்லுக்கு'அகற்றுகிறார்கள்' என்ற பொருள் இருந்தாலும், எந்த இறை வேதத்திலிருந்து அதன் சொல்லை எவராலும் அகற்ற முடியாது. மாறாக, அதற்கு உண்மைக்குப் புறம்பான விளக்கமளிக்கிறார்கள் என்றே பொருளாகும். (திருக்குர்ஆன் 06:156 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'திராசா' என்பதற்கு'ஓதுவது' என்று பொருள். (திருக்குர்ஆன் 69:12 வது வசனத்தின் மூலத்திலுள்ள)'தஇய' எனும் சொல்லுக்குப்'பாதுகாத்தால்' என்று பொருள். 'உங்களுக்கு அச்சமூட்டி எச்சரிப்பதற்காக இந்தக் குர்ஆன் எனக்கு அருளப்பெற்றது‘' எனும் (திருக்குர்ஆன் 06:19 வது) வசனத்தின் பொருளாவது: மக்காவாசிகளுக்கும், இது யார் யாருக்கு எட்டுகிறதோ அவர்களுக்கும் இந்தக் குர்ஆன் ஓர் எச்சரிக்கையாகும்.

ஹதீஸ் 7553 இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் (படைப்புகளைப்) படைக்கும் பணியை நிறைவு செய்தபோது தன்னிடமுளள அரியாசனத்திற்கு மேலே'என் கோபத்தை என் கருணை வென்றுவிட்டது' அல்லது'முந்திவிட்டது' என்றொரு விதியை எழுதினான்.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7554. இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அல்லாஹ் படைப்புகளை படைப்பதற்கு முன்பாக தனக்குத் தானே விதியொன்றை எழுதிக்கொண்டான். 'என் கருணை என் கோபத்தை முந்திவிட்டது' என்பது தான் அந்த விதி. அது அவனிடமுள்ள அரியாசனத்திற்கு மேலேயே எழுதப்பட்டுள்ளது.

என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார்.

## “அல்லாஹ்தான் உங்களையும் நீங்கள் செய்கிறவற்றையும் படைத்தான்‘ எனும் (திருக்குர்ஆன் 37:96 வது) இறைவசனம்.

அல்லாஹ் கூறினான்: ஒவ்வொரு பொருளையும் நாம் ஓர் அளவின்படி (விதியின்படி)யே படைத்துள்ளோம். (திருக்குர்ஆன் 54:49)

(உயிரினங்களின் உருவங்களை) படைப்போரிடம் (மறுமையில்)'நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள்‘' என்று கூறப்படும். 'நிச்சயமாக, உங்களுடைய இறைவனாகிய அல்லாஹ் தான் வானங்களையும் பூமியையும் ஆறே நாள்களில் படைத்தான். பிறகு அரியாசனம் (அர்ஷ்) மீதமர்ந்து (ஆட்சி செய்து) கொண்டுள்ளான். அவனே இரவால் பகலை மூடுகிறான். அது பகலைப் பின்தொடர்ந்து விரைகின்றது. சூரியன், சந்திரன், விண்மீன்கள் ஆகியவற்றைத்

தன்னுடைய கட்டளைக்குக் கட்டுப்படக் கூடியவையாக அமைத்தான். அவனுக்கே ஆக்கமும் ஆட்சியும் உரியது. அம்லத்தாரின் அதிபதியான அல்லாஹ் வளமிக்கவன் ஆவான். (திருக்குர்ஆன் 07:54)

இப்னு உயைனா(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்:

“அறிக, படைக்கும் ஆற்றலும் கட்டளையிடும் அதிகாரமும் அவனுக்குரியன‘‘ எனும் தன்னுடைய சொல்லின் மூலம் படைத்தலும், அதற்காகக் கட்டளையிடுவதும் (இரண்டும் தனிச் தனிச்செயல்தான் என்பதை) வித்தியாசப்படுத்தி அல்லாஹ் தெளிவுபடுத்திவிட்டான். நபி(ஸல்) அவர்கள் இறைநம்பிக்கை (ஈமான்) கொள்வதையும் ஒரு செயல் என்றே குறிப்பிட்டுள்ளார்கள்.

அபூ ஹுரைரா(ரலி) அவர்களும் அபூ தர்(ரலி) அவர்களும் கூறுகிறார்கள்:

நபி(ஸல்) அவர்களிடம்’செயல்களில் சிறந்தது எது?’ என்று கேட்கப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்’அல்லாஹ்வை நம்புவதும் அவனுடைய பாதையில் அறப்போரிடுவதும் ஆகும்‘‘ என்று பதிலளித்தார்கள்.

அல்லாஹ் கூறினான்: அவர்கள் செய்து கொண்டிருந்த நன்மைக்குப் பிரதி பலனாக சொர்க்கத்தில் என்றென்றும் தங்குவார்கள். (திருக்குர்ஆன் 46:14)

நபி(ஸல்) அவர்களிடம் அப்துல் கைஸ் குலத்தார்’எந்தக் கட்டளைகளின்படி செயலாற்றினால் நாங்கள் சொர்க்கம் புக முடியுமோ அத்தகைய கட்டளைகள் சிலவற்றை எங்களுக்கு அளியுங்கள்‘‘ என்று கேட்டார்கள். அப்போது நபி(ஸல்) அவர்கள் இறைநம்பிக்கை கொள்ளும்படியும் அதற்கு சான்று பகரும்படியும் தொழுகையை நிலை நாட்டி, ஸகாத் வழங்கும்படியும் அவர்களுக்குக் கட்டளையிட்டார்கள். இவையனைத்தையுமே’செயல்கள்’ என்றே கருதினார்கள்.

ஹதீஸ் 7555 ஸஹ்தம் இப்னு முளர்ரிப் அல்ஜர்மீ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

ஜர்ம் குலத்தாரைச் சேர்ந்த இந்தக் குடும்பத்தாருக்கும் அஷ்அரீ குலத்துக்குமிடையே நேசமும் சகோதரத்துவ உறவும் இருந்து வந்தது. நாங்கள் அபூ மூஸா அல் அஷ்அரீ(ரலி) அவர்களிடம் இருந்தோம். அப்போது அவர்களுக்குக் கோழி இறைச்சியுடன் உணவு பரிமாறப்பட்டது. அன்னாருடன் பனு தைமுல்லாஹ் குலத்தைச் சேர்ந்த ஒரு மனிதரும் இருந்தார். அவர் விடுதலை செய்யப்பட்ட அடிமைகளில் ஒருவர் போன்றிருந்தார். அவரை அபூ மூஸா(ரலி) அவர்கள் உணவுண்ண அழைத்தார்கள். அப்போது அவர்,‘இந்தக் கோழி (இனம், அசுத்தம்) எதையோ தின்பதைக் கண்டு அதனால் அருவருப்படைந்து அதை உண்ண மாட்டேன் என்று நான் சத்தியம் செய்து விட்டேன்‘‘ என்று கூறினார். அதைக் கேட்ட அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) கூறினார்:

இங்கே வா! நான் உனக்கு இதைப் பற்றி (விவரமாக)த் தெரிவிக்கிறேன். நான் நபி(ஸல்) அவர்களிடம் (என்) அஷ்அரீகுலத்தார் சிலருடன் வாகனம் கேட்டுச் சென்றேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள்,‘அல்லாஹ்வின் மீதாணையாக! நான் உங்களை வாகனம் எதிலும் ஏற்றியனுப்பமாட்டேன். உங்களை ஏற்றியனுப்ப என்னிடம் வாகனம் எதுவுமில்லை‘‘ என்றார்கள். பின்னர் நபி(ஸல்) அவர்களிடம் போரில் கிடைத்த ஒட்டகங்கள் சில கொண்டுவரப்பட்டன. அப்போது நபி(ஸல்) அவர்கள் எங்களைப் பற்றி’அஷ்அரீ குலத்து ஆட்கள் எங்கே?’ என்று கேட்டுவிட்டு,‘வெள்ளைத் திமில்கள் கொண்ட ஐந்து ஒட்டக மந்தைகளை எங்களுக்கு வழங்கும்படி உத்தரவிட்டார்கள். பிறகு நாங்கள் சென்றுவிட்டோம். (என்றாலும்,)’நாம் என்ன காரியம் செய்துவிட்டோம்? இறைத்தூதர்(ஸல்) அவர்கள்,‘நம்மை வாகனத்தில் ஏற்றி அனுப்பமாட்டேன் என்றும், தம்மிடம் நமக்கு வழங்க வாகனம் இல்லை என்றும் சத்தியம்

செய்தார்கள். பிறகு நமக்கு வாகனம் வழங்கிவிட்டார்களே! நாம் இறைத்தூதர்(ஸல்) அவர்களை, அவர்களின் சத்தியத்திலிருந்து கவனத்தைத் திருப்பி விட்டோம். அல்லாஹ்வின் மீதாணையாக! நாம் ஒருபோதும் வெற்றியடையமாட்டோம். பிறகு நபி(ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்று இதைப் பற்றிக் கூறினோம். அதற்கு அவர்கள்'உங்களை நான் (வாகனத்தில்) ஏற்றியனுப்பவில்லை உங்களை அல்லாஹ்வே ஏற்றியனுப்பினான். அல்லாஹ்வின் மீதாணையாக! நான் ஒரு சத்தியம் செய்து அஃதல்லாத வேறொன்று அந்தச் சத்தியத்தைவிடச் சிறந்ததாக எனக்குத் தென்பட்டால் அந்த வேறொன்றையே செய்வேன். சத்தியத்தை முறித்து, அதற்காகப் பரிகாரமும் செய்து விடுவேன்'' என்றார்கள்.

ஹதீஸ் 7556. அபூ ஜம்ரா அள்ளுபஈ(ரஹ்) அவர்கள் அறிவித்தார்.

நான் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்களிடம் (அப்துல் கைஸ் குலத்தாரின் நிகழ்ச்சி பற்றிக்) கேட்டேன். அவர்கள் சொன்னார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அப்துல் கைஸ் குலத்தாரின் தூதுக் குழுவினர் வந்து,'எங்களுக்கும் உங்களுக்குமிடையே'முளர்' குலத்து இணைவைப்பாளர்கள் (தடையாக) உள்ளனர். எனவே, (போர் தடை செய்யப்பட்ட) புனித மாதங்களில் மட்டும் தான் நாங்கள் உங்களை வந்தடைய முடியும். எனவே, சில கட்டளைகளை எங்களுக்கு அளியுங்கள். நாங்கள் அவற்றின் படி செயல்பட்டால் சொர்க்கம் செல்லவும், எங்களுக்குப் பின்னால் இருப்பவர்களை அவற்றின் படி நடக்க நாங்கள் அழைக்கவும் ஏதுவாக இருக்கும். (அத்தகைய கட்டளைகள் சிலவற்றை நீங்கள் எங்களுக்கு இடுங்கள்)'' என்றார்கள்.

நபி(ஸல்) அவர்கள்,'நான் உங்களுக்கு நான் விஷயங்களைக் கட்டளையிடுகிறேன். நான்கு விஷயங்களைத் தடை செய்கிறேன். (நான் கட்டளையிடும் நான்கு விஷயங்கள் இவைதாம்:) அல்லாஹ்வை நம்பிக்கை (ஈமான்) கொள்ளும்படி உங்களுக்கு நான் கட்டளையிடுகிறேன். அல்லாஹ்வை நம்பிக்கை (ஈமான்) கொள்வது என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? லாஇலாஹ இல்லல்லாஹ் (வணக்கத்திற்குரியவர் அல்லாஹ்வைத் தவிர வேறெவருமில்லை) என்று சான்று பகர்வதும் தொழுகையை நிலைநாட்டுவதும் ஸகாத் கொடுப்பதும் போர்ச் செல்வங்களில் ஐந்தில் ஒரு பங்கை (அரசு பொது நிதிக்கு) வழங்குவதும் ஆகும்.

நான் நான்கு விஷயங்களை உங்களுக்குத் தடை செய்கிறேன். (மது பாத்திரங்களான) சுரைக்காய்க் குடுவை, (பேரீச்ச மரத்தின் அடிப்பாகத்தைக் குடைந்து தயாரிக்கப்பட்ட) மரப் பீப்பாய், தார் பூசப்பட்ட பாத்திரங்கள் மற்றும் மண் சாடிகளில் நீங்கள் (எதையும்) அருந்தாதீர்கள்'' என்றார்கள்.

ஹதீஸ் 7557. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இந்த (உயிரினங்களின்) உருவங்களைப் படைப்போர் மறுமைநாளில் வேதனை செய்யப்படுவார்கள். அவர்களிடம்'நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் (பார்க்கலாம்)' என்று சொல்லப்படும்.

என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7558 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

இந்த (உயிரினங்களின்) உருவங்களைப் படைத்தோர் மறுமைநாளில் வேதனை செய்யப்படுவார்கள். அவர்களிடம்'நீங்கள் படைத்தவற்றுக்கு உயிர் கொடுங்கள் (பார்க்கலாம்)' என்று சொல்லப்படும்.

என இப்னு உமர்(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7559 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

வல்லோனும் உயர்ந்தோனுமான அல்லாஹ் கூறினான்:

என் படைப்பைப் போன்று படைக்க எண்ணுபவனை விடப் பெரிய அக்கிரமக்காரன் யார் இருக்க முடியும்? இவர்கள் ஓர் அணுவைப் படைத்துக் காட்டட்டும். அல்லது ஒரு தானிய வித்தையேனும் அல்லது ஒரு வாற்கோதுமையேனும் படைத்துக்காட்டட்டும்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

## பாவிகள் மற்றும் நயவஞ்சகர்கள் குர்ஆன் ஓதுவதும், அவர்களின் ஓதலின் குரல் குரல்வளையைத் தாண்டிச் செல்லாது என்பதும்.

ஹதீஸ் 7560 இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

குர்ஆனை ஓதுகிற இறைநம்பிக்கையாளரின் நிலையானது நாரத்தைப் பழம் போன்றதாகும். அதன் சுவையும் நன்று. அதன் மணமும் நன்று. குர்ஆனை ஓதாத (இறைநம்பிக்கையாளரான ஒரு)வரின் நிலையானது பேரீச்சம் பழத்தைப் போன்றதாகும். அதன் சுவை நன்று (ஆனால்,) அதற்கு மணம் கிடையாது. குர்ஆனை ஓதுகிற பாவியின் நிலை துளசிச் செடியின் நிலையைப் போன்றதாகும். அதன் மணம் நன்று அதன் சுவையோ கசப்பானது. குர்ஆன் ஓதாத பாவியின் நிலை குமட்டிக்காயின் நிலைக்கு ஒத்திருக்கிறது. அதன் சுவையும் கசப்பானது. அதற்கு மணமும் கிடையாது.

என அபூ மூஸா(ரலி) அறிவித்தார்.

ஹதீஸ் 7561 ஆயிஷா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் சிலர் சோதிடர்களைப் பற்றிக் கேட்டனர். நபி(ஸல்) அவர்கள்,'அவர்கள் (பொருட்படுத்தத் தக்க) ஒரு பொருள் அல்லர்'' என்றார்கள். மக்கள்,'இறைத்தூதர் அவர்களே! இந்தச் சோதிடர்கள் (சில வேளைகளில்) ஒன்றை அறிவித்தார்கள் அது உண்மையாகி விடுகிறதே!"என்று கேட்டார்கள். நபி(ஸல்) அவர்கள்,'அந்த உண்மையான சொல் (வானவர்களிடமிருந்து) ஜின் எடுத்துக் கொண்டதாகும். அது தன் (சோதிட) நண்பனின் காதில் கோழி கொக்கரிப்பதைப் போன்று கொக்கரிக்க, அவன் அதனுடன் நூற்றுக்கும் அதிகமான பொய்களைக் கலந்து விடுகிறான்'' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் 7562 அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள்,'ம்ழக்குத் திசையிலிருந்து (-இராக்கிலிருந்து) சிலர் புறப்படுவார்கள். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் நெஞ்செலும்புகளைத் தாண்டிச் செல்லாது. (வேட்டைக்காரனின்) அம்பு வேட்டையாடப்பட்ட பிராணியின் உடலிலிருந்து (மறு பக்கமாக) வெளியேறிவிடுவதைப் போன்று அவர்கள் மார்க்கத்திலிருந்து வெளியேறிவிடுவார்கள். பிறகு அம்பானது வில்லின் நாண் உள்ள பகுதிக்குத் (தானாகத்) திரும்பாத வரை அவர்களும் மார்க்கத்திற்குத் திரும்பி வரவேமாட்டார்கள்'' என்றார்கள்.

''அவர்களின் அடையாளம் என்ன?' என்று வினவப்பட்டது. அதற்கு நபி(ஸல்) அவர்கள்,'மொட்டைபோடுவ(தை ஒரு மரபாகவும் வழிபாடாகவும் கொண்டிருப்ப)து தான் (அவர்களின் அடையாளம்)'' என்று பதில் சொன்னார்கள்.

## "நாம் மறுமைநாளில் நீதித் தராசுகளை வைப்போம்' எனும் (திருக்குர்ஆன் 21:47 வது) இறைவசனம்.

மனிதர்களின் செயல்களும் சொற்களும் (அவற்றில்) நிறுக்கப்படும்.

முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறினார்கள்:'குஸ்தாஸ்' அல்லது'கிஸ்தாஸ்' எனும் சொல்லுக்கு ரோமானியர் மொழியில் நீதி என்று பொருள்.

(மேற்கண்ட வசனத்தின் மூலத்திலுள்ள) கிஸ்த் (நீதி) என்பது'முக்ஸித்', (நீதி செலுத்துபவன்) என்பதன் வேர்ச் சொல்லாகும். ஆனால்,'காஸித்' என்பதற்குக் கொடுங்கோலன்' என்று பொருள்.

ஹதீஸ் 7563. '(இறைவனைத் துதிக்கும்) இரண்டு வாக்கியங்கள் அளவற்ற அருளாளனின் பிரியத்திற்குரியவை நாவுக்கு எளிதானவை நன்மை தீமை நிறுக்கப்படும்) தராசில் கனமானவை ஆகும். (அவை:)

1. சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து துதி செய்கிறேன்).

2. சுப்ஹானல்லாஹில் அழீம் (கண்ணிய மிக்க அல்லாஹ்வைத் துதிக்கிறேன்) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.